# ஆதியாகமம்

## உலகத்தின் தொடக்கம்

### முதல் நாள் - வெளிச்சம்

1 துவக்கத்தில் தேவன் வானத்தையும்
பூமியையும் படைத்தார். 2 பூமியானது
வெறுமையாக இருந்தது; தண்ணீரின்மேல்
இருள் சூழ்ந்திருந்தது. தேவ ஆவியானவர்
அந்தத் தண்ணீரின்மேல் அசைவாடிக்
கொண்டிருந்தார்.* 3 அப்பொழுது தேவன்,
“வெளிச்சம் உண்டாகட்டும்”* என்றார்.
வெளிச்சம் உண்டாயிற்று. 4 தேவன்
வெளிச்சத்தைப் பார்த்தார். அது நல்ல
தென்று அறிந்துகொண்டார். பிறகு தேவன்
வெளிச்சத்தையும் இருளையும் வெவ்
வேறாகப் பிரித்தார். 5 தேவன் வெளிச்சத்
துக்குப் “பகல்” என்று பெயரிட்டார். அவர்
இருளுக்கு “இரவு” என்று பெயரிட்டார்.

மாலையும் காலையும் ஏற்பட்டது. இதுவே முதல் நாளாயிற்று.

### இரண்டாம் நாள் - வானம்

6 பிறகு தேவன், “இரண்டு பாகமாக
தண்ணீர்ப்பகுதி பிரிந்து ஆகாய விரிவு*
உண்டாகக்கடவது!” என்றார். 7 தேவன்
காற்றின் விரிவை உருவாக்கி, தண்ணீரைத்
தனியாகப் பிரித்தார். தண்ணீரில் ஒரு பகுதி
காற்றிற்கு மேலேயும், மறுபகுதி காற்றிற்குக்
கீழேயும் ஆனது. 8 தேவன் காற்றின் விரிவுக்கு
“வானம்” என்று பெயரிட்டார்.

மாலையும் காலையும் ஏற்பட்டது. இது இரண்டாம் நாள் ஆகும்.

### மூன்றாம் நாள் - வறண்ட நிலமும் செடிகொடிகளும்.

9 பிறகு தேவன், “வானத்தின் கீழே உள்ள
தண்ணீரெல்லாம் ஓரிடத்தில் சேர்வதாக,
அதனால் காய்ந்த நிலம் உண்டாகட்டும்”
என்று சொன்னார். அது அவ்வாறே
ஆயிற்று. 10 தேவன் அந்த காய்ந்த நிலத்துக்கு
“பூமி” என்று பெயரிட்டார். ஒன்று சேர்ந்த
தண்ணீருக்கு தேவன் “கடல்” என்று
பெயரிட்டார். தேவன் இது நல்லது என்று
கண்டார்.
11 பிறகு தேவன், “பூமியில் புல்லும்
விதைகளைத் தரும் செடிகளும் கனிதருகிற
மரங்களும் உருவாகட்டும். கனிமரங்கள்
விதைகளை உடைய கனிகளை உருவாக்
கட்டும். ஒவ்வொரு செடி கொடிகளும்
தங்கள் இனத்தை உண்டாக்கக்கடவது.
இவை பூமியிலே வளரட்டும்” என்று
சொன்னார். அவ்வாறே ஆயிற்று. 12 பூமி
புல்லையும் தானியங்களைக் கொடுக்கும்
செடிகளையும் முளைப்பித்தது. பூமி
விதைகளைக்கொண்ட பழங்களைக்
கொடுக்கும் மரங்களை முளைப்பித்தது.
ஒவ்வொரு செடியும் தனக்கேயுரிய இனத்தை
உருவாக்கியது. தேவன் இது நல்லதென்று
கண்டார்.
13 மாலையும் காலையும் ஏற்பட்டது. இது
மூன்றாம் நாளாயிற்று.

### நான்காவது நாள் - சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள்

14 பிறகு தேவன், “வானத்தில் வெளிச்சம்
உண்டாகட்டும், இந்த வெளிச்சமானது
பகலையும் இரவையும் பிரிக்கட்டும். இந்த
வெளிச்சங்கள் காலங்களையும் நாட்க
ளையும் ஆண்டுகளையும் குறிப்பதாக
இருக்கட்டும். 15 இந்த வெளிச்சங்கள் வானத்
திலிருந்து பூமிக்கு ஒளி தரட்டும்” என்றார்.
அது அவ்வாறே ஆயிற்று.
16 தேவன் இரண்டு மகத்தான
ஒளிச்சுடர்களை உண்டுபண்ணினார்.
தேவன் பெரிய ஒளிச்சுடரைப் பகலை
ஆண்டுகொள்ளவும், சிறிய ஒளிச்சுடரை
இரவை ஆண்டுகொள்ளவும் செய்தார்.
நட்சத்திரங்களையும் தேவன் உருவாக்கி
னார். 17 தேவன் இந்த ஒளிச்சுடர்களைப்
பூமிக்கு வெளிச்சம் தரும்படி வானத்தில்

---

**அசைவாடிக் கொண்டிருந்தார்** எபிரெய மொழியின் அர்த்தம் ‘உயரப் பறத்தல்’ அல்லது ‘வேகமாக கீழே பறந்து வருதல்’ ஆகும். ஒரு பறவை தனது கூட்டிலுள்ள தன் குஞ்சுகளை பாதுகாக்க வேகமாக பறப்பதுபோல ஆகும்.

**துவக்கத்தில் … வெளிச்சம் உண்டாகட்டும்** “துவக்கத்தில் தேவன் வானத்தையும், பூமியையும் படைத்தார். அப்பொழுது பூமிக்கு தனி உருவம் இல்லாதிருந்தது. தண்ணீரின்மேல் இருள் சூழ்ந்திருந்தது, தேவ ஆவியானவர் தண்ணீரின்மேல் அசைவாடிக்கொண்டு இருந்தார். அப்பொழுது தேவன் “வெளிச்சம் உண்டாகக் கடவது” என்றார்.

**ஆகாய விரிவு** எபிரெய மொழியின் அர்த்தம் “வட்ட வடிவமான தட்டைப் போல” அல்லது “கட்டிடத்தின் உச்சியைப்போல.”

வைத்தார். [18]இரவையும் பகலையும்
ஆள்வதற்கு இந்த ஒளிச்சுடர்களைத் தேவன்
வானத்தில் ஏற்படுத்தினார். இவை
வெளிச்சத்துக்கும் இருளுக்கும் வேறு
பாட்டை உண்டாக்கிற்று. இது நல்லது என்று
தேவன் கண்டு கொண்டார்.
[19]மாலையும் காலையும் ஏற்பட்டது. இது
நான்காம் நாள்.

### ஐந்தாம் நாள் – மீன்களும் பறவைகளும்

[20]பிறகு தேவன், “தண்ணீரானது திரளான
உயிரினங்களை தோற்றுவிப்பதாக, பூமி
யிலும் வானத்திலும் பறப்பதற்காக
பறவைகள் உருவாகட்டும்” என்றார். [21]பிறகு
தேவன் கடலில் வாழும் பெரிய
உயிரினங்களை உருவாக்கினார். கடலுக்
குள் அலைந்து திரிகிற ஏராளமான
உயிரினங்களைப் படைத்தார். பல்வேறு
வகையான கடல் வாழ் உயிர்களையும்
படைத்தார். வானத்தில் பறந்து திரிகிறதற்கு
பல்வேறுவகைப் பறவைகளையும் படைத்
தார். தேவன் இது நல்லது என்று கண்டார்.
[22]தேவன் அவைகளை ஆசீர்வதித்து,
இனப்பெருக்கம் செய்து, எண்ணிக்கையில்
விருத்தியடைந்து கடல் தண்ணீரை நிரப்
புங்கள், மேலும் பறவைகள் பூமியில்
பெருகட்டும் என்று சொன்னார்.
[23]மாலையும் காலையும் ஏற்பட்டது, இது
ஐந்தாம் நாள் ஆயிற்று.

### ஆறாவது நாள் – மிருகங்களும் மனிதர்களும்

[24]பிறகு தேவன், “பூமியானது, கால்
நடைகள், ஊர்வன, காட்டு மிருகங்கள்
முதலியனவற்றை அதனதன் இனத்திற்கு
ஏற்ப தோற்றுவிப்பதாக” என்றார். அவை
அப்படியே உண்டானது.
[25]இவ்வாறு, தேவன் எல்லாவகையான
மிருகங்களையும் படைத்தார். அவர் காட்டு
மிருகங்களையும், வீட்டு மிருகங்களையும்,
பூமியில் ஊர்ந்து செல்லும் விதவிதமான
உயிரினங்களையும் படைத்தார். இவை
நல்லதென்று தேவன் கண்டு கொண்டார்.
[26]அதன் பிறகு தேவன், “நாம்
மனுக்குலத்தை* நமது சாயலில் உருவாக்கு
வோம். மனிதர்கள் நம்மைப்போலவே
இருப்பார்கள். அவர்கள் கடலில் உள்ள
எல்லா மீன்களையும், வானத்திலுள்ள
பறவைகளையும் ஆண்டுகொள்ளட்டும்.
அவர்கள் பெரிய மிருகங்களையும் தரையில்
ஊரும் உயிரினங்களையும் ஆண்டு
கொள்ளட்டும்” என்று சொன்னார்.
[27]எனவே தேவன் தமது சொந்த
சாயலிலேயே மனுகுலத்தைப் படைத்தார்,
தேவனுடைய சாயலாகவே அவர்களைப்
படைத்தார். தேவன் அவர்களை ஆண்
என்றும் பெண் என்றும் படைத்தார்.
[28]தேவன் அவர்களை ஆசீர்வதித்தார்.
அவர்களிடம், “பிள்ளைகளைப் பெற்று
விருத்தியடையுங்கள், பூமியை நிரப்பி அதை
ஆண்டுகொள்ளுங்கள். கடலில் உள்ள
மீன்களையும் வானத்திலுள்ள பறவை
களையும் ஆண்டுகொள்ளுங்கள். பூமியில்
அலைந்து திரிகின்ற அனைத்து உயிரினங்க
ளையும் ஆண்டுகொள்ளுங்கள்” என்றார்.
[29]மேலும் தேவன், “நான் உங்களுக்குத்
தானியங்களைத் தரும் அனைத்து வகைப்
பயிரினங்களையும், எல்லாவகையான
பழமரங்களையும் தருகிறேன். அந்த மரங்கள்
விதைகளோடு கூடிய கனிகளைத் தரும்.
அந்த விதைகளும் கனிகளும் உங்களுக்கு
உணவாகும். [30]நான் புல் பூண்டுகளை
யெல்லாம் மிருகங்களுக்காகக் கொடுத்
துள்ளேன். புல் பூண்டுகள் அவற்றுக்கு
உணவாக இருக்கும். பூமியில் உள்ள
அனைத்து மிருகங்களும் வானத்திலுள்ள
அனைத்து பறவைகளும், தரையில்
ஊர்கின்ற அனைத்து சிறு உயிரினங்களும்
அவற்றை உணவாகக் கொள்ளும்” என்றார்.
அது அவ்வாறே ஆயிற்று.
[31]தாம் உண்டாக்கிய அனைத்தும் மிக
நன்றாக இருப்பதாக தேவன் கண்டார்.
மாலையும் காலையும் ஏற்பட்டது. இது
ஆறாவது நாளாயிற்று.

### ஏழாவது நாள் – ஓய்வு

## 2

பூமியும் வானமும் அவற்றிலுள்ள யாவும்
படைக்கப்பட்டு முடிந்தது. [2]தேவன்
அனைத்து வேலைகளையும் செய்து
முடித்தார். ஆகையால் ஏழாவது நாள் அவர்
ஓய்வெடுத்தார். [3]தேவன் ஏழாவது நாளை
ஆசீர்வதித்து அதனைப் பரிசுத்த மாக்கினார்.
அவர் அன்றைக்குத் தமது படைப்பு
வேலைகளையெல்லாம் நிறைவு
செய்துவிட்டு ஓய்வெடுத்ததால் அந்த நாள்
சிறப்புக்குரியதாயிற்று.

### மனித குலத்தின் தொடக்கம்

[4]இதுதான் பூமி மற்றும் வானம் தோன்றின
வரலாறாகும். இதுதான் தேவனாகிய கர்த்தர்
வானத்தையும் பூமியையும் படைக்கும்போது,
நடந்தவற்றைப் பற்றிக் கூறும் விபரங்
களாகும். [5]பூமியில் எந்தத் தாவரமும்
இல்லாமல் இருந்தது. வயலிலும் அதுவரை
எதுவும் வளரவில்லை. எந்தப்பகுதியிலும்
எந்தச் செடிகொடிகளும் இல்லை. ஏனெனில்
தேவனாகிய கர்த்தர் இன்னும் மண்ணில்
மழைபெய்யச் செய்யவில்லை. பூமியில்
விவசாயம் செய்ய மனுக்குலம் எதுவும்

---

**மனுக்குலம்** எபிரெய மொழியின் அர்த்தம் “மனிதன்,” அல்லது “மக்கள்” அல்லது “ஆதாம்” என்கின்ற பெயர் ஆகும். “சிவப்பு மண்” அல்லது “பூமி” என்று சொல்லுவது போல தொடர்புடையது ஆகும்.

இல்லை. [6]பூமியிலிருந்து தண்ணீர்* எழும்பி
நிலத்தை நனைத்தது.
[7]பிறகு தேவனாகிய கர்த்தர் பூமியிலிருந்து
மண்ணை எடுத்து மனிதனை உருவாக்கி
னார். அவன் மூக்கில் தன் உயிர் மூச்சினை
தேவனாகிய கர்த்தர் ஊதினார். அதனால்
மனிதன்உயிர்பெற்றான். [8]பிறகு தேவனாகிய
கர்த்தர் கிழக்குப் பகுதியில் ஒரு
தோட்டத்தை அமைத்து அதற்கு ஏதேன்
என்று பெயரிட்டார். தேவனாகிய கர்த்தர்
தாம் உருவாக்கிய மனிதனை அத்
தோட்டத்தில் வைத்தார். [9]தேவனாகிய
கர்த்தர் எல்லாவகையான அழகான
மரங்களையும், உணவுக்கேற்ற கனிதரும்
மரங்களையும் தோட்டத்தில் வளரும்படிச்
செய்தார். அத்தோட்டத்தின் நடுவில்
தேவனாகிய கர்த்தர் ஜீவ மரத்தையும்,
நன்மை மற்றும் தீமை பற்றி அறிவு
தருகிற மரத்தையும் வைத்தார்.
[10]ஏதேன் தோட்டத்தில் தண்ணீர் பாய
ஒரு ஆற்றையும் படைத்தார். அந்த ஆறு
நான்கு சிறு ஆறுகளாகவும் பிரிந்தது.
[11]அந்த முதல் ஆற்றின் பெயர் பைசோன்.
அந்த ஆறு ஆவிலா நாடு முழுவதும்
ஓடிற்று. [12]அந்த நாட்டில் தங்கம் இருந்தது.
அத்தங்கம் நன்றாக இருந்தது. அங்கு
வாசனைப் பொருள்களும்* கோமேதகக்
கல்லும்* இருந்தன. [13]இரண்டாவது ஆற்றின்
பெயர் கீகோன். அது எத்தியோப்பியா*
நாடு முழுவதும் ஓடிற்று. [14]மூன்றாவது
ஆற்றின் பெயர் இதெக்கேல் அது
அசீரியாவுக்கு கிழக்கே பாய்ந்தது. நான்
காவது ஆற்றின் பெயர் ஐபிராத்து.
[15]தேவனாகிய கர்த்தர் மனிதனை ஏதேன்
தோட்டத்தில் வைத்து, அதனைப்
பராமரிக்கவும், காக்கவும் செய்தார்.
[16]தேவனாகிய கர்த்தர் மனிதனிடம், “இந்த
தோட்டத்திலுள்ள எந்த மரத்தின் கனியை
வேண்டுமானாலும் நீ உண்ணலாம்.
[17]ஆனால் நன்மை தீமை பற்றிய அறிவைக்
கொடுக்கக்கூடிய மரத்தின் கனியைமட்டும்
உண்ணக்கூடாது. அதனை உண்டால் நீ
மரணமடைவாய்” என்றார்.

### முதல் பெண்

[18]மேலும் தேவனாகிய கர்த்தர், “ஒரு ஆண்
தனியாக இருப்பது நல்லதல்ல, எனவே
அவனுக்கு உதவியாக அவனைப் போன்று
ஒருதுணையை உருவாக்குவேன்” என்றார்.

[19]தேவனாகிய கர்த்தர் பூமியிலிருந்து
மண்ணை எடுத்து காட்டிலுள்ள அனைத்து
மிருகங்களையும்,வானத்திலுள்ள அனைத்து
பறவைகளையும் படைத்து அவைகளை
மனிதனிடம் கொண்டு வந்தார். அவன்
அவை ஒவ்வொன்றுக்கும் பெயர் வைத்தான்.
[20]மனிதன் வீட்டு மிருகங்களுக்கும், வானில்
பறக்கும் பறவைகளுக்கும், காட்டிலுள்ள
மிருகங்களுக்கும் பெயர் வைத்தான். மனிதன்
எல்லா மிருகங்களையும் பறவைகளையும்
கண்டான். எனினும் அவனுக்கு ஏற்ற
துணை காணவில்லை. [21]எனவே,
தேவனாகிய கர்த்தர் அவனை ஆழ்ந்து தூங்க
வைத்தார். அவன் தூங்கும்போது அவர்
அவனது சரீரத்திலிருந்து ஒரு விலா
எலும்பை எடுத்து, அந்த இடத்தை
சதையால் மூடிவிட்டார். [22]தேவனாகிய
கர்த்தர் அந்த விலா எலும்பை ஒரு
பெண்ணாகப் படைத்து, அந்தப் பெண்ணை
மனிதனிடம் அழைத்து வந்தார்.
[23]அப்பொழுது அவன்,

“இறுதியில் என்னைப்
போலவே ஒருத்தி;
அவளது எலும்பு என்
எலும்பிலிருந்து உருவானவை.
அவளது உடல் எனது
உடலிலிருந்து உருவானது.
அவள் மனிதனிலிருந்து
எடுக்கப்பட்டாள்.
அதனால் அவளை மனுஷி என்று
அழைப்பேன்” என்றான்.

[24]அதனால்தான் மனிதன் தன் தாயையும்
தகப்பனையும் விட்டு மனைவியோடு
சேர்ந்து கொள்ளுகிறான். இதனால் இருவரும்
ஒரே உடலாகி விடுகின்றனர்.
[25]மனிதனும் அவன் மனைவியும்
நிர்வாணமாக இருந்தாலும் அவர்கள்
வெட்கப்படவில்லை.

### பாவத்தின் தொடக்கம்

3 தேவனாகிய கர்த்தரால் படைக்கப்பட்ட
விலங்குகளிலேயே பாம்பானது மிகவும்
தந்திர குணமுள்ளதாயிருந்தது. அது
அவளிடம், “பெண்ணே! தேவன் உங்களிடம்
இத்தோட்டத்தில் உள்ள மரத்தின் பழங்களை
உண்ணக்கூடாது என்று உண்மையில்
கூறினாரா?” என்று கேட்டது.
[2]அந்தப் பெண்ணும் பாம்புக்கு, “இல்லை!
தேவன் அவ்வாறு சொல்லவில்லை. நாங்கள்
இத்தோட்டத்தில் எல்லா மரங்களின்
கனிகளையும் உண்ணலாம். [3]ஆனால்
‘இத்தோட்டத்தின் நடுவிலுள்ள மரத்தின்
கனியை உண்ணக்கூடாது. அம்மரத்தைத்
தொடவும் கூடாது. இதை மீறினால்
மரணமடைவீர்கள்’ என்று சொல்லி
யிருக்கிறார்” எனப் பதில் சொன்னாள்.

---

**தண்ணீர்** அல்லது மூடுபனி.

**வாசனைப் பொருள்** விலையுயர்ந்த “பிதோல்” என்னப்பட்ட நறுமணமுள்ள வாசனை திரவியம்

**கோமேதகக்கல் நீலம்** அல்லது பழுப்பு நிறத் திலுள்ள, விலை மதிப்பான ஒரு கல்.

**எத்தியோப்பியா** ஆப்பிரிக்கா கண்டத்தில் சிவந்த சமுத்திரத்தின் அருகே இருக்கக்கூடிய ஒரு நாடாகும்.

4ஆனால் பாம்போ அவளிடம், "நீங்கள்
மரிக்கமாட்டீர்கள். 5தேவனுக்குத் தெரியும்
நீங்கள் அதன் கனியை உண்டால் உங்கள்
கண்கள் திறக்கப்படும், நன்மை தீமை பற்றிய
அறிவைப் பெறுவீர்கள். நீங்களும்
தேவனைப் போன்று ஆவீர்கள்" என்றது.
6அந்தப் பெண் அந்த மரம் அழகாக
இருப்பதைக் கண்டாள். அதன் கனியும்
உண்பதற்கு ஏற்றதாக இருப்பதை அறிந்தாள்.
அப்பழம் தன்னை அறிவாளியாக்கும்
என்பதை எண்ணி அவள் பரவச
மடைந்தாள். எனவே அவள் அம்மரத்தின்
கனியை எடுத்து உண்டதுடன், அவள் தன்
கணவனுக்கும் அதைக் கொடுத்தாள்.
அவனும் அதை உண்டான்.
7இதனால் அவர்களின் கண்கள் திறந்தன.
அவர்கள் தாங்கள் ஆடையில்லாமல்
நிர்வாணமாக இருப்பதை அறிந்து
கொண்டனர். எனவே அவர்கள் அத்தி
மரத்தின் இலைகளை எடுத்து அவற்றைத்
தைத்து ஆடையாக அணிந்து கொண்டனர்.
8பகலில் குளிர்ச்சியான வேளையில்
தேவனாகிய கர்த்தர் அத்தோட்டத்தில்
உலாவிக் கொண்டிருந்தார். மனிதனும்,
மனுஷியும் அவருடைய சத்தத்தைக் கேட்டுப்
பயந்து தோட்டத்திலிருந்த மரங்களுக்கு
இடையில் தங்களை மறைத்துக்
கொண்டார்கள். 9ஆனால் தேவனாகிய
கர்த்தர் மனிதனை அழைத்து, "நீ எங்கே
இருக்கிறாய்?" என்று கேட்டார்.
10அதற்கு அவன், "நீர் தோட்டத்தில் நடந்து
போவதைக் கண்டேன். எனக்குப் பயமாக
உள்ளது. நான் நிர்வாணமாக இருப்பதால்
மறைந்திருக்கிறேன்" என்றான்.
11அப்பொழுது தேவனாகிய கர்த்தர்
மனிதனிடம், "நீ நிர்வாணமாக இருப்பதாக
யார் உனக்குச் சொன்னது? நீ உண்ண
வேண்டாம் என்று நான் கூறியிருந்த
மரத்தின் கனியை உண்டாயா?" என்று
அவனிடம் கேட்டார்.
12அதற்கு அவன், "எனக்காக உம்மால்
படைக்கப்பட்ட இந்தப் பெண் அந்த மரத்தின்
கனியைக் கொடுத்தாள். நான்
உண்டுவிட்டேன்" என்றான்.
13பிறகு தேவனாகிய கர்த்தர் பெண்
ணிடம், "நீ என்ன காரியத்தைச் செய்தாய்?"
என்று கேட்டார்.
அதற்கு அவள், "பாம்பு என்னை
வஞ்சித்து விட்டது. எனவே நான் பழத்தை
உண்டுவிட்டேன்" என்றாள்.

14எனவே தேவனாகிய கர்த்தர் பாம்பிடம்:
"நீ இந்தத் தீய செயலைச்
செய்தபடியால்,
மற்ற எந்த மிருகத்தை விடவும்
நீ மிகவும் துன்பப்படுவாய்.
நீ உன் வயிற்றாலேயே ஊர்ந்து
திரிவாய்.
வாழ்நாள் முழுவதும் மண்ணைத்
தின்று உயிர்வாழ்வாய்.
15 உனக்கும் பெண்ணுக்கும்
பகையை உண்டாக்குவேன்.
அதோடு உன் பிள்ளைகளுக்கும்
அவள் பிள்ளைகளுக்கும்
பகை உண்டாக்குவேன்.
அவள் பிள்ளையின் காலை
நீ கடிப்பாய்,
அவர் உன் தலையை நசுக்குவார்"
என்று சொன்னார்.

16பிறகு தேவனாகிய கர்த்தர் பெண்
ணிடம்:

"நீ கருவுற்றிருக்கும்போது
உனது வேதனையை
அதிகப்படுத்துவேன்.
அதுபோல் நீ பிரசவிக்கும்போதும்
அதிக வேதனைப்படுவாய்.
உனது ஆசை உன் கணவன்
மேலிருக்கும்.
அவன் உன்னை ஆளுகை
செய்வான்" என்றார்.

17பின்பு தேவனாகிய கர்த்தர் ஆணிடம்:

"அந்தமரத்தின் கனியை
உண்ணக் கூடாது என்று
உனக்கு ஆணையிட்டிருந்தேன்.
ஆனால் நீ உன் மனைவியின்
பேச்சைக் கேட்டு அந்த கனியை
உண்டுவிட்டாய்.
ஆகையால் உன்னிமித்தம்
இந்தப் பூமி சபிக்கப்பட்டிருக்கும்.*
எனவே நீ உயிரோடு இருக்கும்
நாளெல்லாம் மிகுந்த கஷ்டத்துடன்
பூமியின் பலனைப் பெறுவாய்.
18 இந்தப் பூமி உனக்கு முள்ளையும்
களையையும் தரும்.
விளையும் பயிர்களை நீ உண்பாய்.
19 உனது முகம் வேர்வையால்
நிறையும்படி கஷ்டப்பட்டு உழைத்து
உனது உணவை உண்பாய்.
மரிக்கும்வரை நீ கஷ்டப்பட்டு
உழைப்பாய்.
உன்னை மண்ணால்
உருவாக்கினேன்.
நீ மரிக்கும்போது மீண்டும்
மண்ணுக்கே திரும்புவாய்" என்றார்.

20ஆதாம் தன் மனைவிக்கு ஏவாள்*
என்று பெயரிட்டான். ஏனென்றால் அவள்

---

**சாபம்** ஒருவருக்கு கெட்ட காரியங்கள் ஏற்படும்படி கேட்டு கொள்வது.

**ஏவாள்** எபிரெய மொழியில் இந்த பெயரின் அர்த்தம் "வாழ்க்கை" என்பதாகும்.

உயிரோடுள்ள அனைவருக்கும் தாயாக
விளங்குபவள்.
21 தேவனாகிய கர்த்தர் மிருகங்களின்
தோலை ஆடையாக்கி அவனுக்கும்
அவளுக்கும் அணிந்துகொள்ளக் கொடுத்தார்.
22 பின்பு தேவனாகிய கர்த்தர், “இதோ,
நன்மை தீமை அறிந்தவனாக மனிதன் நம்மில்
ஒருவரைப்போல் ஆனான். இப் பொழுது
மனிதன் ஜீவ மரத்தின் பழத்தை எடுத்து
உண்டால் என்றென்றும் உயிருடன்
இருப்பான்” என்றார்.
23 ஆகையால் அவர்களை தேவனாகிய
கர்த்தர் ஏதேன் தோட்டத்தை விட்டு
வெளியேற்றினார். ஆதாம் ஏதேன்
தோட்டத்தை விட்டு வெளியேறி தான்
உருவாக்கப்பட்ட மண்ணிலேயே உழைக்
கும்படி வலியுறுத்தப்பட்டான். 24 தேவனாகிய
கர்த்தர் அவர்களை ஏதேன் தோட்டத்தை
விட்டு துரத்திவிட்டு அதனைப் பாது
காக்க தோட்டத்தின் நுழைவாசலில்
கேருபீன்களை* வைத்தார். அதோடு
தேவனாகிய கர்த்தர் நெருப்பு வாளையும்
வைத்தார். அது மின்னிக்கொண்டு, ஜீவ
மரத்துக்குச் செல்லும் வழியைச் சுற்றிக்
காவல் செய்தது.

## முதல் குடும்பம்

4 ஆதாமும் அவன் மனைவியும் பாலின
உறவு கொண்டனர். அவள் கர்ப்பமுற்று
காயீன்* என்ற ஒரு மகனைப் பெற் றெடுத்து,
நான், “கர்த்தரின் உதவியால் ஒரு
மனிதனைப் பெற்றுள்ளேன்” என்றாள்.
2 அதன் பிறகு ஏவாள் இன்னொரு
மகனைப் பெற்றாள். அவன் காயீனின்
சகோதரனான ஆபேல். ஆபேல் ஒரு
மேய்ப்பனாகவும், காயீன் ஒரு விவசாயியா
கவும் வளர்ந்தனர்.

## முதல் கொலை

3-4 அறுவடைக் காலத்தில் காயீன் தன்
வயலில் விளைந்த தானியங்களைக்
கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டு
போனான். ஆனால் ஆபேல் தன் மந்தை
யிலிருந்து சில சிறந்த ஆடுகளைக் கொண்டு
போனான்.
கர்த்தர் ஆபேலையும், அவன் காணிக்கை
யையும் ஏற்றுக்கொண்டார். 5 ஆனால் கர்த்தர்
காயீனையும் அவன் காணிக்கைகளையும்
ஏற்றுக் கொள்ளவில்லை. இதனால் காயீன்
துக்கமும் கோபமும் கொண்டான். 6 கர்த்தர்
அவனிடம், “ஏன் நீ கோபமாயிருக்கிறாய்?
ஏன் உன் முகத்தில் கவலை தெரிகிறது.
7 நீ நன்மை செய்திருந்தால் எனக்கு
விருப்பமானவனாக இருந்திருப்பாய். நானும்
உன்னை ஏற்றுக் கொண்டிருப்பேன். ஆனால்
நீ தீமை செய்தால் பிறகு அந்தப் பாவம்
உன் வாழ்வில் இருக்கும். உனது பாவம்
உன்னை அடக்கி ஆள விரும்பும். நீயோ
உன் பாவத்தை அடக்கி ஆளவேண்டும்”*
என்றார்.
8 காயீன் தனது சகோதரன் ஆபேலிடம்,
“வயலுக்குப் போவோம்” என்றான்.
அவர்கள் வயலுக்குப் போனார்கள். அங்கே
காயீன் தன் தம்பியைத் தாக்கிக் கொலை
செய்துவிட்டான்.
9 பிறகு கர்த்தர் காயீனிடம், “உனது
சகோதரன் ஆபேல் எங்கே” என்று
கேட்டார்.
அதற்கு அவன், “எனக்குத் தெரியாது.
என் தம்பியைக் காவல் செய்வது என்
வேலையில்லை” என்றான்.
10 அதற்குக் கர்த்தர், “நீ என்ன காரியம்
செய்தாய்? நீ உன் சகோதரனைக்
கொன்றுவிட்டாய். பூமியிலிருந்து அவனது
இரத்தம் என்னைக் கூப்பிடுகிறதே. 11 இப்
பொழுது அவனது இரத்தத்தை உன்
கைகளிலிருந்து வாங்கிக்கொள்ள தன்
வாயைத் திறந்த, இந்தப் பூமியில் நீ
சபிக்கப்பட்டிருப்பாய். 12 கடந்த காலத்தில் நீ
பயிர் செய்தவை நன்றாக விளைந்தன.
ஆனால் இனிமேல் நீ பயிரிடுபவை
விளையாதவாறு இந்தப் பூமி தடை செய்யும்.
இந்தப் பூமியில் நிலையில்லாமல் ஒவ்வொரு
இடமாக அலைந்து கொண்டிருப்பாய்”
என்றார்.
13 பிறகு காயீன், “என்னால் தாங்கிக்
கொள்ள இயலாதவாறு இந்தத் தண்டனை
அதிகமாக இருக்கிறது. 14 எனது பூமியை
விட்டுப் போகுமாறு நீர் என்னை
வற்புறுத்துகின்றீர். நான் உமது பார்வையி
லிருந்து மறைவேன். எனக்கென்று ஒரு வீடு
இருக்காது. பூமியில் ஒவ்வொரு இடமாக
அலையும்படி நிர்பந்தப்படுத்தப்பட்டிருக்கி
றேன். என்னைப் பார்க்கிறவன் எவனும்
என்னைக் கொன்று போடுவானே”
என்றான்.
15 பிறகு கர்த்தர் காயீனிடம், “அவ்வாறு
நடக்குமாறு நான் விடமாட்டேன்.
எவராவது உன்னைக் கொன்றால் நான்
அவர்களை மிகுதியாகத் தண்டிப்பேன்”
என்றார். ஆகையால் கர்த்தர் காயீன் மீது
ஒரு அடையாளம் இட்டார். அதனால்
எவரும் அவனைக் கொல்லமாட்டார்கள்
என்றார்.

---

**கேருபீன்கள்** தேவனுடைய தனிப்பட்ட தூதர்கள். உடன்படிக்கை பெட்டியின் மேலாக சிலைகளாக வடிவமைக்கப்பட்ட தேவதூதர்கள்.

**காயீன்** எபிரெய மொழியில் “உருவாக்கு” அல்லது “வாங்கு” என்று பொருள்படும்.

**நீ ... அடக்கி ஆளவேண்டும்** அல்லது, “நீ நன்மை செய்யாதிருந்தால் பாவம் வாசலண்டையே பதுங்கி இருக்கும். பாவம் உன்னை ஆளுகை செய்ய விரும்பும். ஆனால் நீ அதின்மேல் ஆட்சி செய்யவேண்டும்.”

### காயீன் குடும்பம்

16காயீன் கர்த்தரைவிட்டு விலகிப்போய்
ஏதேனின் கிழக்கிலிருந்த நோத்* என்னும்
தேசத்தில் குடியிருந்தான்.
17காயீன் தன் மனைவியுடன் பாலின
உறவு கொண்டபோது அவள் ஏனோக்
என்னும் பெயருள்ள மகனைப் பெற்றாள்.
காயீன் ஒரு நகரத்தை உருவாக்கி அதற்குத்
தன் மகனின் பெயரை வைத்தான்.
18ஏனோக்குக்கு ஈராத் என்னும் மகன்
பிறந்தான். ஈராத்துக்கு மெகுயவேல் என்ற
மகன் பிறந்தான். மெகுயவேலுக்கு மெத்தூச
வேல் என்ற மகன் பிறந்தான். மெத்தூச
வேலுக்கு லாமேக் என்ற மகன் பிறந்தான்.
19லாமேக் இரண்டு பெண்களை மணந்து
கொண்டான். ஒருத்தியின் பெயர் ஆதாள்,
இன்னொருத்தியின் பெயர் சில்லாள்.
20ஆதாள் யாபாலைப் பெற்றாள். யாபால்
கூடாரத்தில் வாழ்பவர்களுக்கும், மந்தையை
மேய்க்கிறவர்களுக்கும் தந்தை ஆனான்.
21ஆதாளுக்கு யூபால் என்று இன்னொரு
மகன் இருந்தான். அவன் கின்னரக்காரர்
நாகசுரக்காரர் போன்றோருக்குத் தந்தை
ஆனான். 22சில்லாள் துபால்-காயீனைப்
பெற்றாள். அவன் பித்தளை, இரும்பு
முதலியவற்றின் தொழிலாளர் யாவருக்கும்
தந்தை ஆனான். தூபால் காயீனுக்கு, நாமாள்
என்ற சகோதரி இருந்தாள்.
23லாமேக்கு தன் மனைவிகளிடம்,

"ஆதாளே, சில்லாளே
என் பேச்சைக் கேளுங்கள்.
நீங்கள் லாமேக்கின் மனைவியர்.
நான் சொல்வதைக் கவனியுங்கள்.
என்னை ஒருவன் துன்புறுத்தினான்.
அவனை நான் கொன்றேன்.
என்னுடன் இளைஞன் மோதினான்.
எனவே அவனையும் கொன்றேன்.

24 காயீனின் கொலைக்காக
கொடுக்கப்பட்ட தண்டனை
மிகப்பெரியது.
என்னைக் கொல்வதால் கிடைக்கும்
தண்டனையும் மிக அதிகமாகவே
இருக்கும்" என்றான்.

### ஆதாம் - ஏவாளுக்கு புதிய மகன் பிறந்தது

25ஆதாம் ஏவாளோடு பாலின உறவு
கொண்டான். ஏவாள் இன்னொரு மகனைப்
பெற்றாள். அவனுக்குச் சேத்* என்று
பெயரிட்டனர். ஏவாள், "தேவன் எனக்கு
இன்னொரு மகனைக் கொடுத்திருக்கிறார்.
காயீன் ஆபேலைக் கொன்றான். ஆனால்
நான் சேத்தைப் பெற்றேன்" என்றாள்.
26சேத்துக்கும் ஒரு மகன் பிறந்தான்.
அவனுக்கு ஏனோஸ் என்று பெயர்
வைத்தான். அப்பொழுது மனிதர்கள்
கர்த்தரிடத்தில் நம்பிக்கை வைக்க
ஆரம்பித்தனர்.*

### ஆதாமின் குடும்ப வரலாறு

5 இது ஆதாமின் குடும்பத்தைப் பற்றி
கூறுகின்ற பகுதி. தேவன் மனிதரைத்
தம் சாயலிலேயே படைத்தார். 2தேவன்
அவர்களை ஆண் என்றும் பெண் என்றும்
படைத்தார். தேவன் அவர்களைப் படைத்த
அந்நாளிலேயே அவர்களை ஆசீர்வதித்து
அவர்களுக்கு "மனிதர்" என்று
பெயரிட்டார்.
3ஆதாமுக்கு 130 வயது ஆன பிறகு
இன்னொரு மகன் பிறந்தான். அவன்
ஆதாமைப் போலவே இருந்தான். ஆதாம்
அவனுக்குச் சேத் என்று பெயர் வைத்தான்.
4சேத் பிறந்த பிறகும் ஆதாம் 800 ஆண்டுகள்
வாழ்ந்தான். அக்காலத்தில் ஆதாமுக்கு
ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளும்
பிறந்தனர். 5எனவே ஆதாம் மொத்தமாக 930
ஆண்டுகள் வாழ்ந்து, மரணமடைந்தான்.
6சேத்துக்கு 105 வயதானபோது
அவனுக்கு ஏனோஸ் என்ற மகன் பிறந்தான்.
7ஏனோஸ் பிறந்த பிறகு சேத் 807 ஆண்டுகள்
வாழ்ந்தான். அக்காலத்தில் அவனுக்கு
ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளும்
பிறந்தனர். 8சேத் மொத்தம் 912 ஆண்டுகள்
வாழ்ந்து பிறகு மரணமடைந்தான்.
9ஏனோசுக்கு 90 வயதானபோது
அவனுக்குக் கேனான் என்ற மகன்
பிறந்தான். 10கேனான் பிறந்த பிறகு ஏனோஸ்
815 ஆண்டுகள் வாழ்ந்தான். அக்காலத்தில்
அவனுக்கு ஆண்பிள்ளைகளும் பெண்
பிள்ளைகளும் பிறந்தனர். 11ஏனோஸ் 905
ஆண்டுகள் வாழ்ந்து பின்னர் மரண
மடைந்தான்.
12கேனானுக்கு 70 வயதானபோது
அவனுக்கு மகலாலே என்ற மகன் பிறந்தான்.
13மகலாலே பிறந்த பிறகு கேனான் 840
ஆண்டுகள் வாழ்ந்தான். அப்போது
அவனுக்கு ஆண்பிள்ளைகளும் பெண்பிள்
ளைகளும் பிறந்தனர். 14ஆகவே கேனான்
910 ஆண்டுகள் வாழ்ந்து மரணமடைந்தான்.
15மகலாலெயேல் 65 வயதானபோது
அவனுக்கு யாரேத் என்ற மகன் பிறந்தான்.
16யாரேத் பிறந்தபின் மகலாலெயேல் 830
ஆண்டுகள் வாழ்ந்தான். அக்காலத்தில் அவ

---

**நோத்** இந்த பெயரின் அர்த்தம் "அலைகின்ற" எனப் பொருள்படும்.

**சேத்** எபிரெய மொழி அர்த்தம் "கொடு" என்பதாகும்.

**மனிதர்கள் ... ஆரம்பித்தனர்** இலக்கிய வழக்கின்படி, மக்கள் தேவனை யெகோவா என்று அழைக்க ஆரம்பித்தார்கள்.

னுக்கு ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளை
களும் பிறந்தனர். 17மகலாலெயேல் 895
ஆண்டுகள் வாழ்ந்து மரணமடைந்தான்.
18யாரேத்துக்கு 162 வயதானபோது
அவனுக்கு ஏனோக் என்ற மகன் பிறந்தான்.
19ஏனோக் பிறந்த பின் யாரேத் 800
ஆண்டுகள் வாழ்ந்தான். அக்காலத்தில்
அவனுக்கு ஆண்பிள்ளைகளும் பெண்
பிள்ளைகளும் பிறந்தனர். 20யாரேத் மொத்தம்
962 ஆண்டுகள் வாழ்ந்து மரணமடைந்தான்.
21ஏனோக்குக்கு 65 வயதானபோது
அவனுக்கு மெத்தூசலா என்ற மகன்
பிறந்தான். 22மெத்தூசலா பிறந்தபின் ஏனோக்
300 ஆண்டுகள் தேவனோடு வழிநடந்தான்.
அக்காலத்தில் அவன் ஆண்பிள்ளைகளையும்
பெண்பிள்ளைகளையும் பெற்றெடுத்தான்.
23அவன் மொத்தம் 365 ஆண்டுகள்
வாழ்ந்தான். 24ஒரு நாள் ஏனோக் தேவனோடு
நடந்து கொண்டிருக்கும்போதே அவன்
மறைந்து போனான். தேவன் அவனை
எடுத்துக் கொண்டார்.
25மெத்தூசலாவுக்கு 187 வயதானபோது
அவனுக்கு லாமேக் என்ற மகன் பிறந்தான்.
26லாமேக் பிறந்தபின் மெத்தூசலா 782
ஆண்டுகள் வாழ்ந்தான். அக்காலத்தில்
அவனுக்கு ஆண்பிள்ளைகளும் பெண்பிள்
ளைகளும் பிறந்தனர். 27மெத்தூசலா 969
ஆண்டுகள் வாழ்ந்து மரணமடைந்தான்.
28லாமேக்கிற்கு 182 வயதானபோது
அவனுக்கு ஒரு மகன் பிறந்தான். 29அவனுக்கு
நோவா* என்று பெயரிட்டான். அவன்,
“நாம் விவசாயிகளாக பாடுபடுகிறோம்.
ஏனென்றால் தேவன் பூமியைச் சபித்
திருக்கிறார். ஆனால் நோவா, நமக்கு
இளைப்பாறுதலை அளிப்பான்” என்றான்.
30நோவா பிறந்தபின், லாமேக் 595
ஆண்டுகள் வாழ்ந்தான். அக்காலத்தில்
அவன் ஆண்பிள்ளைகளையும் பெண்பிள்ளை
களையும் பெற்றெடுத்தான். 31லாமேக்
மொத்தம் 777 ஆண்டுகள் வாழ்ந்து
மரணமடைந்தான்.
32நோவாவுக்கு 500 வயதானபின்
அவனுக்கு சேம், காம், யாப்பேத் என்னும்
ஆண்பிள்ளைகள் பிறந்தனர்.

## ஜனங்கள் தீயவர்களாக மாறுதல்

6 பூமியில் ஜனங்கள் தொகை பெருக
ஆரம்பித்தது. அவர்களுக்குப் பெண்
பிள்ளைகள் ஏராளமாகப் பிறந்தனர். 2-4தேவ
குமாரர்கள் மானிடப் பெண்களை அதிக
அழகுள்ளவர்கள் எனக் கண்டு, தாங்கள்
விரும்பியபடி பெண்களைத் தேர்ந்தெடுத்து
மணந்து கொண்டனர்.
அப்பெண்களும் பிள்ளைகளைப்
பெற்றனர். அந்நாட்களிலும், அதற்குப்
பிறகும் இராட்சதர்கள்* இருந்தார்கள்.
அவர்கள் பழங்காலத்திலிருந்தே புகழ்பெற்ற
வீரர்களாகவும் இருந்தனர்.*
கர்த்தர், “ஜனங்கள் மனிதப்பிறவிகளே,
அவர்களால் என்றென்றைக்கும் எனது ஆவி
துன்புறும்படி அனுமதிக்கமாட்டேன். அவர்
கள் 120 ஆண்டுகள் வாழும்படி
அனுமதிக்கிறேன்” என்றார்.
5பூமியில் உள்ள மனிதர்கள் அனைவரும்
பெரும் பாவிகளாக இருப்பதைக் கர்த்தர்
அறிந்தார். அவர்கள் எல்லாக் காலத்திலும்
பாவ எண்ணங்களையே கொண்டி
ருப்பதைக் கர்த்தர் பார்த்தார். 6கர்த்தர்
மனிதர்களைப் பூமியில் படைத்ததற்காக
வருத்தப்பட்டார். 7எனவே கர்த்தர், “பூமியில்
நான் படைத்த அனைத்து மனிதர்களையும்,
மிருகங்களையும், ஊர்வனவற்றையும்,
வானத்தில் பறக்கும் பறவைகளையும்
அழிக்கப் போகிறேன். ஏனென்றால் நான்
இவற்றையெல்லாம் படைத்ததற்காக வருத்தப்
படுகிறேன்” என்றார்.
8ஆனால் கர்த்தருக்கு விருப்பமான
வழியில் நடப்பவனாக நோவா என்னும்
ஒரே ஒரு மனிதன் மட்டும் இருந்தான்.

## நோவாவும் பெருவெள்ளமும்

9இது நோவாவின் குடும்பத்தை பற்றிக்
கூறுகின்ற பகுதி. நோவா நேர்மையான
மனிதனாக இருந்தான். அவன் தன்னைச்
சுற்றியுள்ள ஜனங்களில் குற்றமற்றவனாக
இருந்தான். அவன் எப்பொழுதும்
தேவனைப் பின்பற்றி வாழ்ந்தான். 10அவ
னுக்கு சேம், காம், யாப்பேத் எனும்
மூன்று மகன்கள் இருந்தனர்.
11-12தேவன் பூமியைப் பார்த்தார். அது
மனிதர்களால் கெடுக்கப்பட்டிருப்பதை
அறிந்தார். எங்கும் வன்முறை பரவி
யிருந்தது. ஜனங்கள் பாவிகளாகவும்,
கொடூரமானவர்களாகவும் மாறியிருந்தனர்.
அவர்கள் பூமியில் தம் வாழ்க்கையையும்
கெடுத்திருந்தனர்.
13எனவே, தேவன் நோவாவிடம்,
“எல்லோரும் பூமியில் பாவத்தையும்
வன்முறையையும் பரவ வைத்துள்ளனர்.
எனவே நான் எல்லா உயிர்களையும்
அழித்து, அவற்றை பூமியிலிருந்து விலக்கு

---

**நோவா** இளைப்பாறுதல்.

**இராட்சதர்கள்** எபிரெய மொழியின் அர்த்தம் “விழுந்து போன ஜனங்கள்” என்பதாகும். பிற்காலத்தில் இவர்கள் பெரிய குடும்பங்களாகவும், போர்வீரர்களாகவும் திகழ்ந்தனர்.

**அப்பெண்களும் … இருந்தனர்** அல்லது, “இராட்சதர்கள் பூமியில் வாழ்ந்து கொண்டிருந்த பொழுது, தேவகுமாரர்கள் மனுஷ குமாரத்திகளை மணந்தனர். அவர்கள் குழந்தைகளை பெற்ற பொழுது, அவர்களும் பலசாலிகளாயிருந்தார்கள், பிற்காலத்தில் சிறந்த போர் வீரர்களாகவும் திகழ்ந்தனர்.

வேன். 14கோப்பேர் மரத்தைப் பயன்படுத்தி
நீயே ஒரு பெரிய கப்பலைச் செய். அதில்
பல அறைகளை ஏற்படுத்து. உள்ளும்
புறம்புமாகத் தார் பூசிவிடு.
15"கப்பல் 450 அடி நீளமும், 75 அடி
அகலமும், 45 அடி உயரமும் இருக்கட்டும்.
16இதில் 18 அங்குலம் கூரையை விட்டு கீழே
ஒரு ஜன்னல் இருக்கட்டும். கப்பலின்
பக்கவாட்டில் ஒரு கதவு இருக்கட்டும்.
அதில் மேல்தளம், நடுத்தளம், கீழ்த்தளம்
என்று மூன்று தளங்கள் இருக்கட்டும்.
17"நான் உனக்குச் சொல்வதைக்
கவனமாகக் கேள். நான் பூமியில் ஒரு பெரிய
வெள்ளப் பெருக்கை ஏற்படுத்து வேன்.
வானத்துக்குக் கீழேயுள்ள அனைத்து
உயிர்களையும் அழிப்பேன். மண்ணிலுள்ள
அனைத்தும் மரணமடையும். 18ஆனால் நான்
உன்னோடு ஒரு சிறப்பான உடன்
படிக்கையைச் செய்கிறேன். நீயும் உன்
மனைவியும் உன் மகன்களும் மகன்களின்
மனைவிமார்களும் கப்பலுக்குள் போய்
விடுங்கள். 19பூமியிலுள்ள அனைத்து
உயிர்களிலும் ஆண், பெண் என
இணையாகத் தேர்ந்தெடுத்துக்கொள். கப்ப
லில் அவைகள் உயிரோடு இருக்கட்டும்.
20ஒவ்வொரு பறவை இனங்களிலும்
ஒவ்வொரு ஜோடியும், ஒவ்வொரு மிருக
இனங்களிலும் ஒவ்வொரு ஜோடியும், எல்லா
ஊர்வனவற்றிலும் ஒவ்வொரு ஜோடியும்
கண்டுபிடித்து, அவற்றையும் உனது
கப்பலில் உயிரோடு வைத்துக்கொள்.
21எல்லாவகை உணவுப் பொருட்களையும்
கப்பலில் சேமித்து வை. அவ்வுணவு
உங்களுக்கும் மற்ற மிருகங்களுக்கும்
உதவியாக இருக்கட்டும்" என்றார்.
22நோவா தேவன் சொன்னபடி எல்லா
வற்றையும் சரியாகச் செய்து முடித்தான்.

### வெள்ளப் பெருக்கின் தொடக்கம்

7 பிறகு கர்த்தர் நோவாவிடம், "நீ நல்லவன்
என்பதை, எல்லோரும் கெட்டுப்போன
இக்காலத்திலும் கண்டி ருக்கிறேன்.
ஆகையால் உனது குடும்பத்தினரை
அழைத்துக்கொண்டு கப்பலுக்குள் செல்.
2பலிக்குரிய சுத்தமான விலங்குகளில்* ஏழு
ஜோடிகளைத் தேர்ந்தெடுத்துக்கொள். மற்ற
மிருகங்களில் ஒரு ஜோடி போதும்.
இவற்றையெல்லாம் உனது கப்பலுக்குள்
சேர்த்து வை. 3பறவைகளில் ஒவ்வொரு
வகையிலும் ஏழு ஜோடிகளைத்
தேர்ந்தெடுத்துக்கொள். இத னால் மற்ற
இனங்கள் அழிந்தாலும் இவை
நிலைத்திருக்கும். 4இன்றிலிருந்து ஏழு
நாட்களானதும் பூமியில் பெருமழை
பொழியச் செய்வேன். 40 இரவும் 40
பகலுமாக தொடர்ந்து மழைபொழியும்.
உலகில் வாழும் அனைத்து உயிர்களும்
அழிந்துபோகும். என்னால் படைக்கப்பட்ட
அனைத்தும் அழியும்" என்றார். 5நோவா
கர்த்தர் சொன்னபடி எல்லாவற்றையும்
செய்து முடித்தான்.
6மழை பெய்தபோது நோவாவுக்கு 600
வயதாயிருந்தது. 7நோவாவும் அவனது
குடும்பத்தினரும் கப்பலுக்குள் சென்று
வெள்ளத்திலிருந்து உயிர் பிழைத்தனர்.
நோவாவோடு அவனது மனைவியும்
அவனது மகன்களும், மகன்களின்
மனைவியரும் இருந்தனர். 8பலிக்குரிய
மிருகங்களும் மற்ற மிருகங்களும் பறவை
களும் ஊர்வனவும், 9நோவாவோடு
கப்பலுக்குள் கொண்டு வரப்பட்டன. அவை
ஆணும் பெண்ணுமாக ஜோடி ஜோடியாக
தேவனுடைய ஆணையின்படி
தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தன. 10ஏழு
நாட்களானதும் வெள்ளப்பெருக்கு
துவங்கியது. மழை தொடர்ந்து பெய்தது.

11-13இரண்டாவது மாதத்தின் பதினேழா
வது நாள் பூமிக்கடியில் உள்ள ஊற்றுகள்
எல்லாம் திறந்து பீறிட்டுக் கிளம்பின.
அன்று பெருமழையும் சேர்ந்து கொட்ட
ஆரம்பித்தது. அது வானத்தின் ஜன்னல்கள்
திறந்துகொண்டது போன்று இருந்தது.
நாற்பது நாட்கள் இரவும் பகலுமாக மழை
தொடர்ந்து பெய்தது. முதல் நாளே
நோவாவும் அவனது மனைவியும் அவன்
மகன்களான சேம், காம், யாப்பேத்
ஆகியோரும் அவர்களது மனைவிமாரும்
கப்பலுக்குள் சென்றுவிட்டனர். அப்போது
நோவாவுக்கு 600 வயது. 14அவர்களும்
எல்லாவகை மிருகங்களும் கப்பலுக்குள்
இருந்தனர். எல்லா வகை மிருகங்களும்,
எல்லா வகைப் பறவைகளும், எல்லா
வகை ஊர்வனவும் கப்பலுக்குள் இருந்தன.
15இவை எல்லாம் நோவாவோடு
கப்பலுக்குள் சென்றன. அவைகள் எல்லா
மிருக வகைகளிலிருந்தும் ஜோடி,
ஜோடியாக வந்தன. 16இந்த மிருகங்கள்
எல்லாம் இரண்டு இரண்டாக, கப்பலுக்குள்
சென்றன. தேவனுடைய ஆணையின்படியே
அவை கப்பலுக்குள் சென்றன. பிறகு
கர்த்தர் கப்பலின் கதவை அடைத்துவிட்டார்.
17பூமியில் 40 நாட்கள் தொடர்ந்து
வெள்ளம் பெருகியது. அவ்வெள்ளம்
கப்பலைத் தரையிலிருந்து மேல்நோக்கிக்
கிளப்பியது. 18வெள்ளம் தொடர்ந்து ஏறியது.
அதனால் கப்பல் தண்ணீரில் மிதக்க
ஆரம்பித்தது. 19உயரமான மலைகளும்
மூழ்கும்படி வெள்ளம் உயர்ந்தது. 20வெள்ளம்
மலைகளுக்கு மேலும் உயர்ந்தது. அதன்
உயரம் மலைகளுக்கு மேல் 20 அடி
இருந்தது.

---

**சுத்தமான விலங்குகள்** தேவனுக்கு பலி செலுத்தும்
வகையிலான பறவைகள் மற்றும் விலங்குகள்.

21-22உலகில் உள்ள அனைத்து உயிர்களும்
மரித்தன. எல்லா ஆண்களும் பெண்களும்,
எல்லாப் பறவைகளும், எல்லா
மிருகங்களும், எல்லா ஊர்வனவும் மரித்தன.
தரையில் வாழக்கூடிய அனைத்து
உயிர்களும் மரித்துப் போயின. 23இவ்வாறு
தேவன் பூமியை அழித்தார். தேவன் பூமியில்
உயிருள்ள அனைத்தையும் மனிதன், மிருகம்,
ஊர்ந்து செல்லும் பிராணிகள், பறவைகள்
உட்பட எல்லாவற்றையும் பூமியிலிருந்து
முற்றிலுமாய் அழித்தார். நோவாவும்
அவனது குடும்பத்தினரும் அவனோடு
கப்பலிலிருந்த பறவைகளும், மிருகங்களும்
மட்டுமே உயிர் பிழைத்தன. 24வெள்ளமானது
தொடர்ந்து 150 நாட்கள் பூமியில்
பரவியிருந்தது.

## வெள்ளப் பெருக்கின் முடிவு

8 ஆனால் தேவன் நோவாவை
மறக்கவில்லை. தேவன் அவனையும்
அவனது குடும்பத்தினரையும் அவ
னோடுள்ள கப்பலிலுள்ள விலங்குகளையும்
நினைவுகூர்ந்தார். பூமியின்மீது காற்று
வீசுமாறு செய்தார். தண்ணீரெல்லாம்
மறையத் தொடங்கியது.
2வானிலிருந்து பெய்த மழை நின்றது.
3-4பூமியின் மீதிருந்த தண்ணீர் கீழே செல்லத்
துவங்கியது. 150 நாட்கள் ஆனதும் மீண்டும்
கப்பல் பூமியைத் தொடுகிற அளவிற்குக்
குறைந்துபோனது. கப்பல் அரராத் என்ற
மலைமீது அமர்ந்தது. அது ஏழாவது
மாதத்தின் 17வது நாள். 5வெள்ளமானது
மேலும் மேலும் கீழே போயிற்று. பத்தாவது
மாதத்தின் முதல் நாளில் அனைத்து
மலைகளின் மேல்பாகமெல்லாம் தெரிய
ஆரம்பித்தது.
6நாற்பது நாட்களுக்குப் பிறகு நோவா
கப்பலின் ஜன்னலைத் திறந்து, 7ஒரு
காகத்தை வெளியே அனுப்பினான். அது
பூமியிலுள்ள தண்ணீர் வற்றிப்போகும்வரை
போவதும் வருவதுமாக இருந்தது. 8நோவா
ஒரு புறாவையும் வெளியே அனுப்பினான்.
அது தான் தங்கிட ஒரு வறண்ட இடத்தைக்
கண்டுகொள்ளும் என எண்ணினான். இதன்
மூலம் பூமியில் தண்ணீர் வற்றிவிட்டதா
என்பதை அறிந்துகொள்ளலாம் என
நினைத்தான்.
9ஆனால் தண்ணீர் இன்னும் பூமியில்
பரவியிருந்தது. எனவே புறா மீண்டும்
கப்பலுக்கே திரும்பிவந்தது. நோவா
அதனைத் தன் கையை நீட்டிப் பிடித்து
கப்பலுக்குள் சேர்த்துக்கொண்டான்.
10ஏழு நாட்களானதும் நோவா மீண்டும்
புறாவை அனுப்பினான். 11அன்று
மாலையில் அப்புறா மீண்டும் திரும்பி
வந்தது. அதன் வாயில் ஒலிவமரத்தின்
புதிய இலை இருந்தது. இதன் மூலம்
அவன் தண்ணீர் வற்றிவிட்டது என்பதை
அறிந்துக்கொண்டான். 12மேலும் 7 நாட்கள்
ஆனதும் மீண்டும் புறாவை வெளியே
அனுப்பினான். ஆனால் அது திரும்பி
வரவே இல்லை.
13அதன் பிறகு நோவா கப்பலின் கதவைத்
திறந்தான். தரை காய்ந்துபோனதை நோவா
தெரிந்துகொண்டான். இதுதான் அந்த
ஆண்டின் முதல் மாதத்தின் முதல் நாளாக
ஆயிற்று. நோவா 601 வயதுடையவன்
ஆனான். 14இரண்டாவது மாதத்தின் 27வது
நாளில் தரை முழுவதும் நன்றாகக்
காய்ந்துவிட்டது.
15பிறகு தேவன் நோவாவிடம், 16“நீயும்
உன் மனைவியும் உன் மகன்களும்
அவர்களின் மனைவியரும் இப்போது
கப்பலைவிட்டு வெளியே வாருங்கள்.
17உங்களோடுள்ள அனைத்தையும் வெளியே
கொண்டு வாருங்கள். பறவைகள்,
விலங்குகள், ஊர்வன அனைத்தும் மீண்டும்
குட்டிகளும் குஞ்சுகளும் இட்டு பூமியை
நிரப்பட்டும்” என்றார்.
18எனவே நோவா தன் மனைவி,
மகன்கள், மருமகள்கள் ஆகியோரோடு
வெளியே வந்தான். 19கப்பலிலுள்ள
அனைத்து மிருகங்களும் பறவைகளும் ஊர்
வனவும் எல்லா விலங்கினங்களும் கப்பலை
விட்டு ஜோடிகளாக வெளியே வந்தன.
20பிறகு நோவா கர்த்தருக்கு ஓர்
பலிபீடத்தைக் கட்டினான். அவன்
பலிக்குரிய சுத்தமான மிருகங்களையும்,
பறவைகளையும் தேர்ந்தெடுத்து தேவனுக்குப்
பலியிட்டான்.
21கர்த்தர் அதன் வாசனையை முகர்ந்தார்.
அது அவருக்கு விருப்பமாக இருந்தது.
கர்த்தர் தமக்குள், “மனிதர்களைத் தண்டிக்க
நான் மீண்டும் இதுபோன்று பூமியைச்
சபிக்கமாட்டேன். ஜனங்கள் இளமை
முதலாகவே பாவத்தில் இருக்கிறார்கள். நான்
செய்ததுபோல, மீண்டும் ஒருமுறை
உயிர்களை அழிக்கமாட்டேன். 22பூமி
தொடர்ந்து இருக்கும் காலம்வரை நடுவதற்
கென்று ஒரு காலமும், அறுவடைக்கென்று
ஒரு காலமும் இருக்கும். பூமியில் குளிரும்
வெப்பமும், கோடையும் வசந்தமும், இரவும்
பகலும் இருக்கும்” என்றார்.

## புதிய துவக்கம்

9 தேவன் நோவாவையும் அவனது
பிள்ளைகளையும் ஆசீர்வதித்தார். தேவன்
அவர்களிடம், “குழந்தைகளைப் பெற்று,
ஜனங்களால் இப்பூமியை நிரப்புங்கள்.
2பூமியிலுள்ள அனைத்து மிருகங்களும்,
வானத்திலுள்ள அனைத்துப் பறவைகளும்,
தண்ணீரிலுள்ள அனைத்து மீன்களும், பிற
அனைத்து ஊர்வனவும் உங்களைக்கண்டு
அஞ்சும். அவை உங்கள் அதிகாரத்திற்குள்

இருக்கும். 3கடந்த காலத்தில் பச்சையான
தாவரங்களை உங்களுக்கு உணவாகக்
கொடுத்தேன். இப்போது அனைத்து
மிருகங்களும் உங்களுக்கு உணவாகட்டும்.
உலகிலுள்ள அனைத்தும் உங்களுக்காகக்
கொடுக்கப்பட்டிருக்கிறது. 4ஆனால்
உங்களுக்கு ஒரு ஆணை இடுகிறேன்.
இறைச்சியை அதின் உயிராகிய இரத்தத்
துடன் உண்ணாதீர்கள். 5நான் உங்களது
உயிருக்காக உங்களது இரத்தத்தைக்
கேட்பேன். அதாவது ஒரு மனிதனைக்
கொல்லுகிற விலங்கின் இரத்தத்தைக்
கேட்பேன். மேலும் மற்றொரு மனிதனைக்
கொல்லுகிற மனிதனின் இரத்தத்தைக்
கேட்பேன்.

6 “தேவன் மனிதனைத் தமது
சாயலாகவேப் படைத்தார்.
எனவே மற்றவனைக் கொல்லுகிற
எவனும் இன்னொருவரால்
கொல்லப்படவேண்டும்.

7“நோவா, நீயும் உன் மகன்களும்
குழந்தைகளைப் பெற்று, உங்கள்
ஜனங்களால் பூமியை நிரப்புங்கள்” என்றார்.
8பிறகு தேவன் நோவாவிடமும் அவனது
பிள்ளைகளிடமும், 9“நான் உங்களோடும்
உங்களுக்குப் பின்னுள்ள வாரிசுகளோடும்,
10உங்களோடு கப்பலிலே இருந்த
பறவைகளோடும் மிருகங்களோடும் ஊர்வன
வற்றோடும் பூமியில் உள்ள அனைத்து
உயிர்களோடும் எனது உடன்படிக்கையை
ஏற்படுத்திக் கொள்கிறேன். 11வெள்ளப்
பெருக்கால் பூமியில் உள்ள அனைத்து
உயிர்களும் அழிக்கப்பட்டன. ஆனால்
மீண்டும் இதுபோல் நடைபெறாது.
இன்னொரு வெள்ளப்பெருக்கு பூமியில்
உள்ள உயிர்களை அழிக்காது” என்றார்.
12மேலும் தேவன், “உங்களுக்குக் கொடுத்த
வாக்குறுதிக்கு அடையாளமாக ஒன்றை
உங்களுக்குத் தருகிறேன். உன்னோடும்
பூமியில் வாழும் ஒவ்வொரு உயிரோடும்
நான் செய்துகொண்ட உடன்படிக்கைக்கு
அது அத்தாட்சியாக இருக்கும். இந்த
உடன்படிக்கை இனி வரும் எல்லாக்
காலத்துக்கும் உரியதாக இருக்கும். இதுவே
அந்த அத்தாட்சி. 13மேகங்களுக்கு இடையே
ஒரு வானவில்லை உருவாக்கி உள்ளேன்.
எனக்கும் பூமிக்குமான உடன்படிக்கைக்கு
இதுவே அத்தாட்சி. 14பூமிக்கு மேலாய்
மேகங்களைக் கொண்டு வரும்போதெல்லாம்
நீங்கள் அதில் வானவில்லைப் பார்க்கலாம்.
15வானவில்லைப் பார்க்கும்போதெல்லாம்
நான் எனக்கும் உங்களுக்கும் மற்ற
உயிர்களுக்கும் இடையில் ஏற்படுத்திக்
கொண்ட உடன்படிக்கையை நினைத்துக்
கொள்வேன். அந்த உடன்படிக்கை இனி ஒரு
வெள்ளப் பெருக்கு உலகில் தோன்றி
இங்குள்ள உயிர்களை அழிக்காது என்று
கூறுகிறது. 16மேகங்களுக்கிடையில் நான்
வானவில்லைப் பார்க்கும்போதெல்லாம்
எனக்கும் பூமியின் மீதுள்ள அனைத்து
உயிர்களுக்குமிடையிலான நிரந்தரமான
உடன்படிக்கையை நினைத்துக்கொள்வேன்.”
17“நான் பூமியில் உள்ள அனைத்து
உயிர்களோடும் செய்துகொண்ட உடன்
படிக்கைக்கு அத்தாட்சியாக வானவில்
விளங்குகிறது” என்றார்.

### பிரச்சனைகள் மீண்டும் தோன்றுதல்

18நோவாவின் மகன்கள் கப்பலைவிட்டு
வெளியே வந்தனர். அவர்களின் பெயர்
சேம், காம், யாப்பேத் ஆகும். காம்,
கானானின் தந்தை. 19இந்த மூன்று பேரும்
நோவாவின் மகன்கள். பூமியில் உள்ள
அனைத்து ஜனங்களும் அவர்களது
வம்சமேயாகும்.
20நோவா ஒரு விவசாயி ஆனான். அவன்
ஒரு திராட்சைத் தோட்டத்தைப் பயிர்
செய்தான். 21நோவா அதில் திராட்சை
ரசத்தைச் செய்து குடித்தான். அவன்
போதையில் தன் கூடாரத்தில்
ஆடையில்லாமல் விழுந்து கிடந்தான்.
22கானானின் தந்தையான காம் ஆடையற்ற
தனது தந்தையைப் பார்த்து அதைக்
கூடாரத்திற்கு வெளியே இருந்த தன்
சகோதரர்களிடம் சொன்னான். 23சேமும்
யாப்பேத்தும் ஒரு ஆடையை எடுத்து தங்கள்
முதுகின் மேல் போட்டுக்கொண்டு பின்னால்
நடந்து கூடாரத்திற்குள் நுழைந்து அதைத்
தங்கள் தகப்பன்மேல் போட்டார்கள்.
இவ்வாறு தந்தையின் நிர்வாணத்தைப்
பார்க்காமல் தவிர்த்தார்கள்.
24திராட்சைரசத்தைக் குடித்ததினால்
தூங்கிய நோவா எழுந்ததும் தனது இளைய
மகனான காம் செய்தது அவனுக்குத் தெரிய
வந்தது. 25எனவே அவன்,

“கானான் சபிக்கப்பட்டவன்.
அவன் தன் சகோதரர்களுக்கு
அடிமையிலும் அடிமையாக
இருப்பான்” என்றான்.

26மேலும்,

“சேமுடைய தேவனாகிய கர்த்தர்
துதிக்கப்படுவாராக.
கானான் சேமுடைய அடிமையாய்
இருப்பான்.
27 தேவன் யாப்பேத்துக்கு மேலும்
நிலங்களைக் கொடுப்பார்.
தேவன் சேமுடைய கூடாரத்தில்
இருப்பார்.
இவர்களின் அடிமையாகக்
கானான் இருப்பான்” என்றான்.

28வெள்ளப் பெருக்குக்குப் பிறகு நோவா
350 ஆண்டுகள் வாழ்ந்தான். 29அவன்
மொத்தம் 950 ஆண்டுகள் வாழ்ந்து
மரணமடைந்தான்.

### நாடுகளின் வளர்ச்சியும் பரவலும்

10 சேம், காம், யாப்பேத் ஆகியோர்
நோவாவின் மகன்கள். வெள்ளப்
பெருக்குக்குப் பின் இவர்கள் மேலும் பல
பிள்ளைகளுக்குத் தந்தை ஆனார்கள். இங்கே
அவர்களின் பிள்ளைகள் பற்றிய பட்டியல்
கொடுக்கப்பட்டுள்ளது.

### யாப்பேத்தின் சந்ததி

2கோமர், மாகோகு, மாதாய், யாவான்,
தூபால், மேசேக்கு, தீராஸ் ஆகியோர்
யாப்பேத்தின் மகன்கள்.
3அஸ்கினாஸ், ரீப்பாத்து, தொகர்மா
ஆகியோர் கோமரின் மகன்கள்.
4எலீசா, தர்ஷீஸ், கித்தீம், தொதானீம்
ஆகியோர் யாவானின் மகன்கள்.
5மத்தியதரைக் கடல் பகுதியில் வாழ்ந்த
ஜனங்கள் யாப்பேத்தின் வழி வந்தவர்கள்.
ஒவ்வொரு மகனும் தனக்குரிய சொந்த
நிலத்தைப் பெற்றிருந்தான். ஒவ்வொரு
குடும்பமும் பெருகி வெவ்வேறு நாடுகளா
யின. ஒவ்வொரு நாடும் தனக்கென்று ஒரு
தனிமொழியைப் பெற்றது.

### காமின் சந்ததி

6கூஷ்,* மிஸ்ராயீம்,* பூத், கானான்
ஆகியோர் காமின் பிள்ளைகள்.
7சேபா, ஆவிலா, சப்தா, ராமா, சப்திகா,
ஆகியோர் கூஷின் பிள்ளைகள். சேபா,
திதான் ஆகியோர் ராமாவின் பிள்ளைகள்.
8கூஷ் நிம்ரோத்தைப் பெற்றான். நிம்ரோத்
பூமியில் மிக வல்லமை மிக்க வீரன்
ஆனான். 9இவன் கர்த்தருக்கு முன்னால்
பெரிய வேட்டைக்காரனாக இருந்தான்.
இதனால் "கர்த்தருக்கு முன்பாகப் பலத்த
வேட்டைக்காரனான நிம்ரோத்தைப்போல"
என்ற வழக்குச்சொல் உண்டானது.
10நிம்ரோத்தின் அரசாட்சி பாபேலிலிருந்து
ஏரேக், அக்காத், சிநெயார் நாட்டிலுள்ள
கல்னே வரை பரவியிருந்தது. 11நிம்ரோத்
அசீரியாவுக்குப் போனான், அங்கு நினிவே,
ரெகொபோத், காலாகு, ரெசேன் ஆகிய
நகரங்களைக் கட்டினான். 12(ரெசேன்
நகரமானது நினிவேக்கும் காலாகுக்கும்
இடைப்பட்ட பெரிய நகரம்)
13லூதி, அனாமீ, லெகாபீ, நப்தூகீம்,
14பத்ருசீம், பெலிஸ்தர், கஸ்லூ, கப்தொர்
ஆகியோரின் தந்தை மிஸ்ராயீம்.
15கானான் சீதோனின் தந்தையானான்.
இவன் கானானின் மூத்தமகன். கானான்
கேத்துக்கும் தந்தை. கேத் கேத்தியர்களின்
தந்தை ஆனான். 16எபூசியர், எமோரியர்,
கிர்காசியர், 17ஈவியர், அர்க்கீரியர், சீநியர்,
18அர்வாதியர், செமாரியர், காமாத்தியர்,
ஆகியோருக்கும் கானான் தந்தை ஆனான்.
இவனது சந்ததியினர் உலகின் பல
பாகங்களிலும் பரவினர்.
19கானான் தேசத்தில் இருந்தவர்களுக்கு
தம் எல்லையாக சீதோன் முதல் கேரார்
வழியாய்க் காசா மட்டும், அது முதல்
சோதோம், கொமோரா, அத்மா, செபோயிம்
வழியாய் லாசா மட்டும் இருந்தது.
20இவர்கள் அனைவரும் காமுடைய
சந்ததியார்கள். இக்குடும்பத்தினர் அனை
வரும் தங்களுக்கென்று சொந்த மொழியும்
சொந்த பூமியும் உடையவர்களாய்
இருந்தனர். அவர்கள் தனித்தனி நாட்டின
ராயும் ஆயினர்.

### சேமின் சந்ததி

21சேம், யாப்பேத்தின் மூத்த சகோதரன்.
அவனது சந்ததியில் ஒருவனே ஏபேர்.
எபேரே எபிரெய ஜனங்கள் அனை
வருக்கும் தந்தையானான்.*
22ஏலாம், அசூர், அர்பக்சாத், லூத், ஆராம்
ஆகியோர் சேமின் பிள்ளைகள்.
23ஊத்ஸ், கூல், கேத்தெர், மாஸ் ஆகியோர்
ஆராமின் பிள்ளைகள்.
24அர்பக்சாத்தின் மகன் சாலா. சாலாவின்
மகன் ஏபேர். 25ஏபேருக்கு இரு மகன்கள்.
ஒருவன் பேர் பேலேகு.* அவனுடைய
நாட்களில்தான் பூமி பகுக்கப்பட்டது.
யொக்தான் இன்னொரு மகன்.
26அல்மோதாத், சாலேப், அசர்மாவேத்,
யேராகை, 27அதோராம், ஊசால், திக்லா,
28ஓபால், அபிமாவேல், சேபா, 29ஒப்பீர்,
ஆவிலா, யோபா ஆகியோரை யொக்தான்
பிள்ளைகளாகப் பெற்றான். 30இவர்களின்
பகுதிகள் மேசா துவக்கி, கிழக்கேயுள்ள
மலையாகிய செப்பாருக்குப் போகிற
வழிமட்டும் இருந்தது.
31இவர்கள் அனைவரும் சேமுடைய
வாரிசுகள். இவர்கள் அனைவரும் தம்
குடும்பங்கள், மொழிகள், நாடுகள், தேசங்கள்,
வழியாக வரிசைப்படுத்தப்பட்டவர்கள்.
32நோவாவின் பிள்ளைகளால் உருவான
குடும்பப்பட்டியல் இதுதான். இவர்கள்
தங்கள் நாடுகளின்படி வரிசைப்படுத்தப்
பட்டுள்ளனர். வெள்ளப் பெருக்குக்குப் பிறகு
இக்குடும்பங்கள் தோன்றி பூமிமுழுவதும்
பரவினர்.

---

**கூஷ்** "எத்தியோப்பியா" வின் மற்றொரு பெயர்.

**மிஸ்ராயீம்** "எகிப்து" நாட்டின் மற்றொரு பெயர்.

**அவனது சந்ததியில் … தந்தையானான்** சேமுக்கு பிறந்த ஏபேருடைய மகன்களின் தகப்பன்.

**பேலேகு** பேலேகு என்றால் "பிரிவு" என்று அர்த்தம்.

### உலகம் பிரிக்கப்பட்டது

11 வெள்ளப் பெருக்குக்குப் பிறகு முழு
உலகமும் ஒரே மொழியைப் பேசியது.
எல்லா ஜனங்களும் ஒரே விதமாகப்
பேசினர். 2ஜனங்கள் கிழக்கே இருந்து
பயணம் செய்து சிநேயார் நாட்டில் ஒரு
சமவெளியைக் கண்டு அங்கே தங்கினர்.
3ஜனங்கள், "நாம் செங்கற்களைச் செய்து.
நெருப்பில் அவற்றைச் சுடுவோம். அது
பலமுடையதாகும்" என்றனர். எனவே
ஜனங்கள் கற்களைப் பயன்படுத்தாமல்
செங்கற்களைப் பயன்படுத்தி வீடு கட்டினர்.
சாந்துக்கு பதிலாக தாரைப் பயன்படுத்தினர்.
4மேலும் ஜனங்கள், "நமக்காக நாம்
ஒரு நகரத்தை நிர்மாணிக்க வேண்டும்.
ஒரு பெரிய கோபுரத்தை வானத்தை
எட்டுமளவு கட்ட வேண்டும். நாம் புகழ்
பெறுவோம். அது நம்மை ஒன்றுபடுத்தும்.
பூமி எங்கும் பரவிப் போகாமல் இருக்கலாம்"
என்றனர்.
5கர்த்தர் பூமிக்கு இறங்கி வந்து அவர்கள்
நகரத்தையும் கோபுரத்தையும் கட்டுவதைப்
பார்வையிட்டார். 6கர்த்தர், "இந்த ஜனங்கள்
அனைவரும் ஒரே மொழியையே
பேசுகின்றனர். இவர்கள் சேர்ந்து இவ்வேலை
யைச் செய்வதை நான் பார்க்கிறேன்.
இவர்களால் சாதிக்கக் கூடியவற்றின்
துவக்கம்தான் இது. இனி இவர்கள்
செய்யத்திட்டமிட்டுள்ள எதை வேண்டு
மானாலும் செய்யமுடியும். 7எனவே, நாம்
கீழே போய் அவர்களின் மொழியைக்
குழப்பி விடுவோம். பிறகு அவர்கள்
ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள
மாட்டார்கள்" என்று சொன்னார்.
8அவ்வாறே, கர்த்தர் ஜனங்களைப் பூமி
முழுவதும் சிதறிப் போகும்படி செய்தார்.
அதனால் அவர்கள் அந்த நகரத்தைக் கட்டி
முடிக்க முடியாமல் போயிற்று.
9உலகமெங்கும் பேசிய ஒரே மொழியைக்
கர்த்தர் குழப்பிவிட்டபடியால் அந்த
இடத்தை பாபேல்* என்று அழைத்தனர்.
கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து
பூமியெங்கும் பரவிப் போகச்செய்தார்.

### சேம் குடும்பத்தின் வரலாறு

10இது சேமின் குடும்பத்தைப் பற்றி
கூறுகின்ற பகுதி: வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு
இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு சேமுக்கு
100 வயதானபோது அர்பக்சாத் என்னும்
மகன் பிறந்தான். 11அதன் பிறகு அவன்
500 ஆண்டுகள் வாழ்ந்தான். அவனுக்கு
வேறு மகன்களும் மகள்களும் இருந்தனர்.
12அர்பக்சாத்துக்கு 35 வயதானபோது
சாலா என்னும் மகன் பிறந்தான். 13சாலா
பிறந்தபின் அர்பக்சாத் 403 ஆண்டுகள்
வாழ்ந்தான். அப்போது அவனுக்கு வேறு
மகன்களும் மகள்களும் பிறந்தனர்.
14சாலாவுக்கு 30 வயதானபோது ஏபேர்
பிறந்தான். 15ஏபேர் பிறந்தபின் சாலா 403
ஆண்டுகள் வாழ்ந்தான். அப்போது
அவனுக்கு வேறு மகன்களும் மகள்களும்
பிறந்தனர்.
16ஏபேருக்கு 34 வயதானபோது
பேலேகைப் பெற்றான். 17பேலேக் பிறந்த பின்
ஏபேர் 430ஆண்டுகள் வாழ்ந்தான். அப்போது
அவனுக்கு வேறு மகன்களும் மகள்களும்
பிறந்தனர்.
18பேலேக்குக்கு 30 வயதானபோது
அவனது மகன் ரெகூ பிறந்தான். 19ரெகூ
பிறந்தபின் பேலேகு 209 ஆண்டுகள்
உயிர்வாழ்ந்தான். அப்போது அவனுக்கு
வேறு மகன்களும் மகள்களும் பிறந்தனர்.
20ரெகூவுக்கு 32 வயது ஆனதும் அவனது
மகன் செரூகைப் பெற்றான். 21செரூகு
பிறந்தபின் ரெகூ 207 ஆண்டுகள் வாழ்ந்தான்.
அப்போது அவனுக்கு வேறு மகன்களும்
மகள்களும் பிறந்தனர்.
22செரூகுக்கு 30 வயது ஆனதும் நாகோர்
பிறந்தான். 23நாகோர் பிறந்தபின் செரூகு
200 ஆண்டுகள் வாழ்ந்தான். அப்போது
அவனுக்கு வேறு மகன்களும் மகள்களும்
பிறந்தனர்.
24நாகோருக்கு 29 வயது ஆனதும் அவனது
மகன் தேராகைப் பெற்றான். 25தேராகு
பிறந்ததும் நாகோர் 119 ஆண்டுகள்
வாழ்ந்தான். அப்போது அவனுக்கு வேறு
மகன்களும் மகள்களும் பிறந்தனர்.
26தேராகுக்கு 70 வயதானபோது அவனது
மகன்கள் ஆபிராம், நாகோர், ஆரான்
பிறந்தார்கள்.

### தேராகு குடும்பத்தின் வரலாறு

27இது தேராகு குடும்பத்தின் வரலாறு
ஆகும். தேராகு என்பவன் ஆபிராம்,
நாகோர், ஆரான் ஆகியோரின் தந்தை
யானவன். ஆரான் லோத்தின்
தந்தையானவன். 28ஆரான் தனது பிறந்த
நகரமான பாபிலோனியாவில் உள்ள ஊர்
என்ற இடத்தில் மரணமடைந்தான்.
அப்போது அவனது தந்தையான தேராகு
உயிரோடு இருந்தான். 29ஆபிராமும்
நாகோரும் திருமணம் செய்து கொண்டனர்.
ஆபிராமின் மனைவியின் பெயர் சாராய்.
நாகோரின் மனைவியின் பெயர் மில்க்காள்.
இவள் ஆரானுடைய மகள். ஆரான்
மில்க்காளுக்கும் இஸ்காளுக்கும் தந்தை.
30சாராய் பிள்ளைகள் இல்லாமல் மலடியாய்
இருந்தாள்.
31தேராகு தனது குடும்பத்தோடு
பாபிலோனியாவில் உள்ள ஊர் எனும்
இடத்தை விட்டுப் போனான். அவர்கள்

---

**பாபேல்** அல்லது "பாபிலோன்." இதற்கு "குழப்பம்"
என்று அர்த்தம்.

*கானானுக்குப் போகத் திட்டமிட்டனர். தேராகு தனது மகன் ஆபிராமையும் பேரன் லோத்தையும், மருமகள் சாராளையும் தன்னோடு அழைத்துச் சென்றான். அவர்கள் ஆரான் நகரத்துக்குப் போய் அங்கே தங்கிவிட முடிவு செய்தான்.*
*32தேராகு 205 ஆண்டுகள் வாழ்ந்து அங்கேயே மரண மடைந்தான்.*

### தேவன் ஆபிராமை அழைக்கிறார்

12 *கர்த்தர் ஆபிராமிடம்,*

*"நீ உனது ஜனங்களையும்,*
*நாட்டையும், தந்தையின்*
*குடும்பத்தையும் விட்டு வெளியேறி*
*நான் காட்டும் நாட்டுக்குப் போ.*
2 *நான் உன் மூலமாக ஒரு பெரிய*
*தேசத்தை உருவாக்குவேன்.*
*நான் உன்னை ஆசீர்வதிப்பேன்.*
*உனது பெயரைப் புகழ்பெறச்*
*செய்வேன்.*
*ஜனங்கள் மற்றவர்களை ஆசீர்வதிக்க*
*உன் பெயரைப் பயன்படுத்துவர்.*
3 *உன்னை ஆசீர்வதிக்கிற ஜனங்களை*
*நான் ஆசீர்வதிப்பேன்.*
*உன்னைச் சபிப்பவர்களை*
*நான் சபிப்பேன்.*
*நான் உன் மூலம் பூமியிலுள்ள*
*அனைத்து ஜனங்களையும்*
*ஆசீர்வதிப்பேன்" என்றார்.*

### ஆபிராம் கானானுக்குப் போகிறான்

*4எனவே, ஆபிராம் கர்த்தருக்குக் கீழ்ப்படிந்து ஆரானை விட்டுப் போனான். லோத்து அவனோடு சென்றான். அப்போது ஆபிராமுக்கு 75 வயது.*
*5ஆபிராம் ஆரானை விட்டுப் போகும்போது தன் மனைவி சாராயையும், தன் சகோதரனுடைய மகனான லோத்தையும், எல்லா அடிமைகளையும், ஆரானில் அவனுக்குச் சொந்தமான அனைத்தையும் எடுத்துக் கொண்டு போனான். அவர்கள் ஆரானை விட்டுக் கானானை நோக்கிப் பயணம் செய்தனர்.*
*6ஆபிராம் கானான் தேசத்தின் வழியாகப் பயணம் செய்து சீகேம் நகரம் வழியே மோரேயில் இருக்கும் பெரிய மரங்கள் உள்ள இடத்திற்கு வந்தான். அக்காலத்தில் அங்கு கானானியர் வாழ்ந்தனர்.*
*7கர்த்தர் ஆபிராமுக்குக் காட்சியளித்து, "நான் உன் சந்ததிக்கு இத்தேசத்தைக் கொடுப்பேன்" என்றார்.*

*கர்த்தர் காட்சியளித்த இடத்தில் ஆபிரகாம் கர்த்தரைத் தொழுகைசெய்ய ஒரு பலிபீடத்தைக் கட்டினான்.*
*8பின் ஆபிராம் அந்த இடத்தைவிட்டு பெத்தேலுக்குக் கிழக்கே இருக்கும் மலைக் குப் போனான். அங்கு அவன் கூடாரம் போட்டான். பெத்தேல் நகரம் மேற்காக இருந்தது. ஆயீ நகரம் அதற்குக் கிழக்கே இருந்தது. அங்கு ஒரு பலிபீடத்தைக் கர்த்தருக்கு அமைத்து கர்த்தரைத் தொழுது கொண்டான்.*
*9மீண்டும் ஆபிராம் பயணம் செய்து பாலைவனப் பகுதிக்குச் சென்றான்.*

### எகிப்தில் ஆபிராம்

*10அந்நாட்களில் பூமியில் பஞ்சம் ஏற்பட்டது. மழை இல்லாததால் உணவுப் பொருட்களும் விளையாமல் இருந்தது. எனவே ஆபிராம் எகிப்திற்கு பிழைப்பதற்காகப் போனான்.*
*11தன் மனைவி சாராய் மிகவும் அழகாக இருக்கிறாள் என்று எண்ணிய அவன், எகிப்தை நெருங்குவதற்கு முன் சாராயிடம், "நீ வெகு அழகான பெண் என்பது எனக்குத் தெரியும்.*
*12எகிப்தியர்கள் உன்னைப் பார்க்கும்போது அவர்கள், 'இவள் இவனுடைய மனைவி என்று பேசுவார்கள்' பிறகு உன்னை அடைய விரும்பி என்னைக் கொன்று விடுவார்கள்.*
*13அதனால் நான் அவர்களிடம் நீ என் சகோதரி என்று கூறுவேன். பிறகு அவர்கள் என்னைக் கொல்ல மாட்டார்கள். நான் உன் சகோதரன் என்பதால் அவர்கள் என் மீது கருணையோடு இருப்பார்கள். இவ்வகையில் நீ என் உயிரைக் காப்பாற்றலாம்" என்றான்.*
*14எனவே ஆபிராம் எகிப்துக்குப் போனான். அங்குள்ள ஜனங்கள் சாராய் மிகவும் அழகானவளாக இருப்பதைப் பார்த்தனர்.*
*15சில எகிப்தின் தலைவர்களும் அவளைப் பார்த்தனர். அவள் மிகவும் அழகான பெண் என்று அவர்கள் பார்வோனிடம் கூறினர். அவர்கள் அவளைப் பார்வோனுடைய வீட்டிற்கு அழைத்துச்சென்றனர்.*
*16ஆபிராமைச் சாராயின் சகோதரனாக எண்ணிப் பார்வோனும் ஆபிராமிடம் அன்பாக இருந்தான். பார்வோன் அவனுக்கு ஆடுகள், மாடுகள், பெண் வேலையாட்கள், கழுதைகள், ஒட்டகங்கள் என்று பலவற்றைக் கொடுத்தான்.*
*17பார்வோன் ஆபிராமின் மனைவியை எடுத்துக்கொண்டான். எனவே பார்வோனும் அவனது வீட்டில் உள்ளவர்களும் கொடிய வியாதியுறுமாறு கர்த்தர் சபித்துவிட்டார்.*
*18எனவே பார்வோன் ஆபிராமை அழைத்தான். அவன், "நீ எனக்கு மிகக் கெட்ட காரியத்தைச் செய்துள்ளாய்! சாராய் உன் மனைவி என்று சொல்லாமல்,*
*19அவளை உன் சகோதரி என்று ஏன் சொன்னாய்? நான் அவளை எடுத்துக் கொண்டதால் அவள் எனது மனைவியாக இருந்திருப்பாளே. ஆனால் இப்பொழுது உன் மனைவியை உனக்கு நான் திரும்பிக் கொடுக்கிறேன். அவளை அழைத்துகொண்டு போய்விடு" என்றான்.*
*20பிறகு, பார்வோன்*

தன் வீரர்களிடம், ஆபிராமை நாட்டைவிட்டு
வெளியே அனுப்புமாறு கட்டளையிட்டான்.
எனவே, ஆபிராமும் அவனது மனைவியும்
அவர்களுக்குச் சொந்தமானவற்றை எடுத்துக்
கொண்டு அந்த இடத்தை விட்டு
வெளியேறினர்.

## ஆபிராம் கானானுக்குத் திரும்புதல்

13 ஆபிராம் எகிப்தை விட்டு வெளியேறி,
தன் மனைவியோடும் தனக்குரிய
பொருட்களோடும் பாலைவனத்தின்* வழி
யாகப் பயணம் செய்தான். லோத்துவும்
அவனோடு சென்றான். 2ஆபிராம் மிகவும்
செல்வந்தனாக இருந்தான். அவனிடம்
ஏராளமான மிருகங்களும் தங்கமும்
வெள்ளியும் இருந்தன.
3ஆபிராம் தொடர்ந்து பயணம் செய்து
பாலைவனத்தை விட்டுப் பெத்தேலுக்குச்
சென்று, பெத்தேல் நகரத்திற்கும் ஆயி
நகரத்திற்கும் இடையில் உள்ள பகுதியில்
தங்கினான். அது ஏற்கனவே அவனும்
அவன் குடும்பத்தாரும் தங்கிய இடமாகும்.
4இங்குதான் ஆபிராம் பலிபீடம் அமைத்தி
ருந்தான். எனவே, ஆபிராம் கர்த்தரை அந்த
இடத்தில் தொழுதுகொண்டான்.

## ஆபிராமும் லோத்தும் பிரிகிறார்கள்

5இந்த நேரத்தில் லோத்தும் ஆபிராமோடு
பயணம் செய்து கொண்டிருந்தான்.
லோத்துக்கும் நிறைய மிருகங்களும்
கூடாரங்களும் இருந்தன. 6ஆபிராமிடமும்
லோத்திடமும் இருந்த மிருகங்கள் வாழ்கிற
அளவிற்கு அந்த நிலம் அவ்வளவு
போதுமானதாக இல்லை. 7அதோடு
கானானியர்களும் பெரிசியரும் அவர்க
ளுடன் அங்கு வாழ்ந்து வந்தனர். ஆபிராமின்
மேய்ப்பர்களும் லோத்தின் மேய்ப்பர்களும்
தங்களுக்குள் சண்டையிட்டனர்.
8எனவே, ஆபிராம் லோத்திடம்,
“நம்மிருவருக்கும் இடையில் எவ்வித
வாக்குவாதமும் வேண்டாம். உனது
ஆட்களுக்கும் எனது ஆட்களுக்கும் இனிமேல்
எந்த விரோதமும் வேண்டாம். நாம்
சகோதரர்கள். 9நாம் பிரிந்து விடுவோம்.
உனக்கு விருப்பமான எந்த இடத்தையும் நீ
தேர்ந்தெடுத்துக்கொள். நீ இடது பக்கமாகப்
போனால் நான் வலது பக்கமாகப்
போகிறேன். நீ வலது பக்கமாகப் போனால்
நான் இடது பக்கமாகப் போகிறேன்”
என்றான்.
10லோத்து யோர்தான் நதிக்கு அருகான
சமவெளியைப் பார்வையிட்டான். அங்கு
நீர்வளம் இருப்பதைக் கண்டான். (கர்த்தர்
சோதோமையும் கொமோராவையும் அழிப்
பதற்கு முன்பு சோவாருக்குப் போகும்
வழிவரை அது கர்த்தரின் தோட்டம்
போலவும் எகிப்து தேசத்தைப் போலவும்
இருந்தது.) 11எனவே லோத்து யோர்தான்
சமவெளியைத் தேர்ந்தெடுத்தான். இருவரும்
பிரிந்தனர், லோத்து கிழக்கு நோக்கிப்
பயணம் செய்தான். 12ஆபிராம் கானான்
தேசத்தில் தங்கினான். லோத்து
சமவெளிப்பகுதியின் நகரங்களில் தங்கி
னான். லோத்து மேலும் தெற்கு நோக்கி
நகர்ந்து சோதோமில் கூடாரம் அடித்தான்.
13சோதோம் ஜனங்கள் கர்த்தருக்கு எதிராகப்
பாவம் செய்து கொண்டிருந்தனர் என்பதை
அறிந்திருந்தார்.
14லோத்து விலகிப்போனதும் கர்த்தர்
ஆபிராமிடம், “உன்னைச் சுற்றிலும்
வடக்கேயும், தெற்கேயும், கிழக்கேயும், மேற்
கேயும் பார். 15இந்தப் பூமியை நான்
உனக்கும் உன் சந்ததியினருக்கும்
கொடுக்கிறேன். இது என்றென்றும்
உங்களுக்குரியதாக இருக்கும். 16உன்
ஜனங்களை உலகத்தில் உள்ள புழுதியின்
அளவுக்குப் பெருகச் செய்வேன். எவராவது
புழுதியை எண்ண முடியுமானால் அதுவே
உங்கள் தொகையாக இருக்கும். 17எனவே
நாட்டின் நீளமும் அகலமும் எவ்வளவோ
அவ்வளவு தூரம் நட. நான் அவற்றை
உனக்குத் தருவேன்” என்றார்.
18எனவே, ஆபிராம் தனது கூடாரத்தை
எடுத்துக்கொண்டு பெரிய மரங்களிருக்கும்
எபிரோனிலிலுள்ள மம்ரேயின் சமபூமிக்குச்
சென்றான். இங்கு ஆபிராம் கர்த்தரைத்
தொழுதுகொள்ள ஒரு பலிபீடத்தைக்
கட்டினான்.

## லோத்து பிடிக்கப்படுதல்

14 அம்ராப்பேல் சிநெயாரின் அரசன்.
அரியோகு ஏலாசாரின் அரசன்.
கெதர்லாகோமேர் ஏலாமின் அரசன்.
திதியால் கோயம் தேசத்தின் அரசன்.
2இவர்கள் அனைவரும் மற்ற அரசர்களோடு
சண்டையிட்டனர். சோதோமின் அரசனான
பேராவோடும், கொமோராவின் அரசனான
பிர்சாவோடும், அத்மாவின் அரசனான
சிநெயாவோடும், செபோயீமின் அரசனான
செமேபரோடும் பேலாவின் அரசனோடும்
(பேலா சோவார் என்றும் அழைக்கப்
பட்டான்) அவர்கள் போர் செய்தனர்.
3சித்தீம் பள்ளத்தாக்கில் எல்லா
அரசர்களும் தம் படைகளோடு கூடினர்.
(சித்தீம் பள்ளத்தாக்கு இப்போது உப்புக் கடல்
என்று அழைக்கப்படுகிறது.) 4இந்த
அரசர்கள் 12 ஆண்டுகள் கெதர்லா
கோமேருக்குச் சேவைசெய்து 13ஆம்
ஆண்டில் கலகம் செய்தார்கள். 5 14ஆம்
ஆண்டிலே கெதர்லாகோமேரும் அவனோடு
இருந்த அரசர்களும் போருக்கு வந்தனர்.
இவர்கள் அஸ்தரோத்கர்னாயீமிலே இருந்த
ரெப்பாயீமியரையும் காமிலிருந்த சூசிமிய

---

**பாலைவனம்** ‘யூதா’ வில், தென் பகுதியில் உள்ள பாலைவனம்.

ரையும், சாவேகீரியத்தாயீமிலே இருந்த
ஏமியரையும், 6 சேயீர் மலைகளில் இருந்த
ஒசரியரையும் வனாந்தரத்திற்கு அருகிலே
இருந்த எல்பாரான் மட்டும் தோற்கடித்தனர்.
7 அதன்பிறகு அரசன் கெதர்லாகோமேர்
வடதிசையில் காதேஸ் என்னும்
என்மிஸ்பாத்துக்கு வந்து அமலேக்கியரின்
நாடுகளையும் அத்சாத்சோன் தாமாரிலே
இருந்த எமோரியரையும் அழித்து ஒழித்தான்.
8 அப்போது சோதோம், அத்மா,
கொமோரா, செபோயீம், சோவார் என்னும்
பேலா ஆகிய நாடுகளின் அரசர்கள்
புறப்பட்டுப் போனார்கள். இவர்கள் சித்தீம்
பள்ளத்தாக்கிலே, ஏலாமின் அரசனாகிய
கெதர்லாகோமேரோடும், கோயம் அரச
னாகிய திதியாலோடும் சிநெயாரின்
அரசனாகிய அம்ராப்பேலோடும் ஏலாசாரின்
அரசனாகிய அரியோகோடும் யுத்தம்
செய்தார்கள். 9 எனவே நான்கு அரசர்கள்
ஐந்து பேருக்கு எதிராக இருந்தனர்.
10 அந்தச் சித்தீம் பள்ளத்தாக்கு முழுவதும்
தார் நிறைந்த குழிகள் இருந்தன. சோதோம்
கொமோராவின் அரசர்கள் தோற்றோடி
வந்து அதில் விழுந்தார்கள். இன்னும் பலர்
மலைகளுக்கு ஓடிப்போனார்கள்.
11 எனவே, சோதோம் மற்றும்
கொமோராவினருக்கு உரிய பொருட்களை
எல்லாம் அவர்களின் பகைவர்கள் எடுத்துக்
கொண்டனர். அவர்களது அனைத்து
உணவுப் பொருட்களையும், ஆடைகளையும்
எடுத்துக்கொண்டு ஓடினார்கள். ஆபிராமின்
சகோதரனுடைய மகனான லோத்து
சோதாமில் வசித்துக் கொண்டிருந்தான்.
12 அவனையும் எதிரிகள் பிடித்துக்
கொண்டார்கள். மேலும் அவனுடைய
உடமைகள் அனைத்தையும் எடுத்துக்
கொண்டு எதிரிகள் ஓடினார்கள்.
13 பிடிபடாதவர்களில் ஒருவன் எபிரெய
னாகிய ஆபிராமிடம் சென்று நடந்ததைக்
கூறினான். ஆபிராம் மம்ரே என்னும்
எமோரியனுடைய பூமியில் குடியிருந்தான்.
மம்ரே, எஸ்கோல், ஆநேர் ஆகியோர்
ஒருவருக்கு ஒருவர் உதவுவதாக ஒப்பந்தம்
செய்திருந்தனர். அவர்கள் ஆபிராமுக்கு
உதவுவதாகவும் ஒப்பந்தத்தில் கையெழுத்
திட்டிருந்தனர்.

### ஆபிராம் லோத்தை மீட்கிறான்

14 லோத்து கைதுசெய்யப்பட்டதை
ஆபிராம் அறிந்து கொண்டான். அவன்
தனது குடும்பத்தினர் அனைவரையும்
அழைத்தான். அவர்களிடம் 318 பயிற்சி
பெற்ற வீரர்கள் இருந்தனர். அவன்
அவர்களோடு தாண் நகரம் வரை
பகைவர்களைத் துரத்திக் கொண்டு
போனான். 15 அன்று இரவு அவனும்
அவனது வீரர்களும் பகைவரைத் திடீ
ரென்று தாக்கினர். அவர்களைத் தோற்க
டித்து தமஸ்குவின் வடக்கேயுள்ள கோபா
வரை துரத்தினர். 16 பிறகு, பகைவர்கள்
எடுத்துசென்ற அனைத்து பொருட்களையும்
ஆபிராம் மீட்டுக்கொண்டான். பெண்கள்,
வேலைக்காரர்கள், லோத்து, அவனது
பொருட்கள் அனைத்தும் மீட்கப்பட்டன.
17 பிறகு ஆபிராம் கெதர்லாகோமரையும்
அவனோடிருந்த அரசர்களையும் தோற்க
டித்து விட்டு தன் நாட்டுக்குத் திரும்பினான்.
சோதோமின் அரசன் புறப்பட்டு சாவே
பள்ளத்தாக்குக்கு வந்து ஆபிராமை
வரவேற்றான். (இப்போது இப்பள்ளத்தாக்கு
அரசனின் பள்ளத்தாக்கு என்று அழைக்கப்
படுகிறது.)

### மெல்கிசேதேக்

18 சாலேமின் அரசனாகிய மெல்கிசே
தேக்கும் ஆபிராமைச் சந்திக்கப் போனான்.
இவன் உன்னதமான தேவனின் ஆசாரியன்,
இவன் அப்பமும் திராட்சைரசமும் கொண்டு
வந்தான். 19 மெல்கிசேதேக் ஆபிராமை
ஆசீர்வாதம் செய்து,

“ஆபிராமே, வானத்தையும் பூமியையும்
படைத்த உன்னதமான தேவன்
உன்னை ஆசீர்வதிப்பாராக.
20 நாம் உன்னதமான தேவனைப்
போற்றுவோம்.
உன் பகைவர்களை வெல்ல
உனக்குத் தேவன் உதவினார்”
என்றான்.

போரில் கைப்பற்றியவற்றில் பத்தில் ஒரு
பங்கை ஆபிராம் மெல்கிசேதேக்குக் கொடுத்
தான். 21 பிறகு சோதோமின் அரசன்
ஆபிராமிடம், “இவை எல்லாவற்றையும் நீ
உனக்கே வைத்துக் கொள். எனது
ஜனங்களை மட்டும் எனக்குக் கொடு அது
போதும்” என்றான்.
22 ஆனால் ஆபிராமோ சோதோம்
அரசனிடம், “நான் உன்னதமான
தேவனாகிய கர்த்தரிடம் வாக்குப் பண்ணி
யிருக்கிறேன். வானத்தையும் பூமியையும்
படைத்த உன்னதமான தேவனுக்கு முன்பாக
என் கைகள் சுத்தமாயிருக்கிறது.
23 உனக்குரிய எதையும் நான் வைத்திருக்க
மாட்டேன் என்று வாக்குப் பண்ணியிருக்
கிறேன். நான் உனக்குரிய ஒரு நூல்
அல்லது பாதரட்சையின் சிறு
வாரையாகிலும் கூட ஏற்கமாட்டேன். ‘நான்
ஆபிராமைப் பணக்காரன் ஆக்கினேன்’
என்று நீ சொல்வதை நான் விரும்ப
மாட்டேன். 24 என்னுடைய இளைஞர்கள்
உண்பதற்கான உணவை மட்டுமே ஏற்றுக்
கொள்வேன். ஆனால் மற்றவர்களுக்கு
அவர்களின் பங்கினைக் கொடுத்துவிடு. நாம்
போரில் வென்ற பொருட்களையெல்லாம்
எடுத்துக்கொள். சிலவற்றை ஆநேர்,

எஸ்கோல், மம்ரே ஆகியவர்களுக்குக் கொடு.
இவர்கள் எனக்குப் போரில் உதவினார்கள்”
என்றான்.

### ஆபிராமோடு தேவனின் உடன்படிக்கை

15 இவையெல்லாம் நடந்த பிறகு
கர்த்தரின் வார்த்தையானது ஆபிரா
முக்குத் தரிசனத்தில் வந்தது. தேவன்,
“ஆபிராமே, நீ பயப்பட வேண்டாம். நான்
உன்னைப் பாதுகாப்பேன். உனக்குப் பெரிய
பரிசு தருவேன்” என்றார்.
2 ஆனால் ஆபிராமோ, “தேவனாகிய
கர்த்தாவே! நீர் கொடுக்கிற எதுவும் எனக்கு
மகிழ்ச்சியைத் தராது, ஏனென்றால்
எனக்குப் பிள்ளைகள் இல்லை. எனவே
நான் மரித்த பிறகு எனக்குரிய பொருட்கள்
எல்லாம் எனது அடிமையான தமஸ்குவைச்
சேர்ந்த எலியேசருக்கு உரியதாகும்”
என்றான். 3 மேலும் ஆபிராம், “நீர் எனக்கு
மகனைக் கொடுக்கவில்லை. எனவே என்
வீட்டில் பிறக்கும் அடிமைக்கு இந்த சொத்து
முழுவதும் உரிமையாகுமே” என்றான்.
4 கர்த்தர் ஆபிராமிடம், “அந்த அடிமை
உனக்குரியவற்றைப் பெறமாட்டான். உனக்
கொரு மகன் பிறப்பான், அவனே
உனக்குரியவற்றைப் பெற்றுக் கொள்வான்”
என்றார்.
5 பிறகு தேவன் ஆபிராமை வெளியே
அழைத்து வந்து, “வானத்தில் நிறைந்திருக்
கும் ஏராளமான நட்சத்திரங்களைப் பார்,
அவற்றை உன்னால் எண்ணமுடியாது.
வருங்காலத்தில் உன் சந்ததியும் இவ்வாறே
இருக்கும்” என்றார்.
6 ஆபிராம் தேவனை நம்பினான். மேலும்
தேவன் ஆபிராமின் நம்பிக்கையை அவனு
டைய நீதியான காரியமாக எண்ணினார்.
7 தேவன் ஆபிராமிடம், “நானே கர்த்தர்.
உன்னை பாபிலோனியாவிலுள்ள ஊர்
என்னும் பட்டணத்திலிருந்து அழைத்து
வந்தேன். நானே இதைச்செய்தேன். இந்தத்
தேசத்தை உனக்குக் கொடுக்கிறேன். இது
உனக்கே உரியதாகும்” என்றார்.
8 ஆனால் ஆபிராமோ, “கர்த்தராகிய என்
ஆண்டவரே! இந்தத்தேசம் எனக்கு
உரியதாகும் என்று எப்படி உறுதிப்படுத்திக்
கொள்வது?” என்று கேட்டான்.
9 தேவன் ஆபிராமிடம், “நாம் ஒரு
உடன்படிக்கையைச் செய்து கொள்வோம்.
மூன்று ஆண்டுகள் ஆன ஒரு பசுவைக்
கொண்டு வா. அதோடு மூன்று ஆண்டுகள்
ஆன ஆட்டையும், ஆட்டுக் கடாவையும்,
கொண்டு வா. அதோடு ஒரு காட்டுப்
புறாவையும், புறாக்குஞ்சையும் என்னிடம்
கொண்டு வா” என்றார்.
10 ஆபிராம் இவை எல்லாவற்றையும்
தேவனிடம் கொண்டு வந்தான். ஒவ்வொன்
றையும் கொன்று இரண்டு துண்டுகளாக
வெட்டி, பிறகு ஒரு பாதியை இன்னொரு
பாதியோடு சேர்த்தான். பறவைகளை அவன்
அவ்வாறு வெட்டவில்லை. 11 பின்னர், பெரிய
பறவைகள் விலங்குகளின் உடலை உண்ண
கீழே பறந்து வந்தன. ஆபிராம் அவற்றைத்
துரத்தினான்.
12 சூரியன் அஸ்தமிக்கும் நேரம்
நெருங்கியபோது ஆபிராமுக்குத் தூக்கம்
வந்தது. அத்துடன் அச்சுறுத்தும் இருள்
அவனைச் சூழ்ந்துகொண்டது. 13 பிறகு
கர்த்தர் ஆபிராமிடம், “நீ இவ்விஷயங்
களைப்பற்றி அறிய வேண்டும். உனது
சந்ததி தங்களுக்குச் சொந்தமில்லாத
நாட்டிலே அந்நியர்களாக இருப்பார்கள்.
அங்குள்ளவர்கள் அவர்களை 400 ஆண்டு
காலத்துக்கு அடிமைகளாக வைத்திருந்து,
மோசமாக நடத்துவார்கள். 14 ஆனால் நான்
அந்த நாட்டைத் தண்டிப்பேன். உனது
ஜனங்கள் அந்நாட்டை விட்டு பல்வேறு
பொருட்களுடன் வெளியேறுவார்கள்.
15 “நீ நல்ல முதிர் வயதாகும்வரை வாழ்ந்து,
சமாதானமாக மரணமடைவாய். 16 நான்கு
தலைமுறைகளுக்குப்பின் உன் சந்ததியினர்
மீண்டும் இங்கே வருவார்கள். அப்போது
உனது ஜனங்கள் எமோரியரைத்
தோற்கடிப்பார்கள். இது எதிர்காலத்தில்
தான் நடைபெறும், ஏனென்றால் இன்னும்
எமோரியர்கள் தண்டிக்கப்படுகிற அளவிற்கு
மிக மோசமாகக் கெட்டுப்போகவில்லை”
என்றார்.
17 சூரியன் அஸ்தமித்தபின் மேலும்
இருளாயிற்று. மரித்துப்போன மிருகங்கள்
தரையின் மேலேயே கிடந்தன. இரண்டு
துண்டுகளாகக் கிடந்த அவற்றின் உடலி
லிருந்து சூளையின் புகையும் நெருப்பும்
வெளி வந்தன.
18 ஆகையால், அன்று கர்த்தர் ஆபிரா
மோடு ஒரு வாக்குறுதியும், உடன்படிக்கை
யையும் செய்துகொண்டார். கர்த்தர், “நான்
இந்த நாட்டை உன் சந்ததிக்குத் தருவேன்.
எகிப்து நதி முதல் யூப்ரடீஸ் நதி வரையுள்ள
இடத்தைக் கொடுப்பேன். 19 இந்த பூமி
கேனியர், கெனிசியர், கத்மோனியர், 20 ஏத்தி
யர், பெரிசியர், ரெப்பாயீமியர், 21 எமோரியர்,
கானானியர், கிர்காசியர் மற்றும் எபூசிய
ருக்குச் சொந்தமானதாகும்” என்றார்.

### ஆகார் எனும் வேலைக்காரப்பெண்

16 சாராய் ஆபிராமின் மனைவி.
அவளுக்கும் ஆபிராமுக்கும் குழந்தை
இல்லாமல் இருந்தது. சாராய்க்கு ஒரு
எகிப்திய வேலைக்காரப் பெண் இருந்தாள்.
அவள் பெயர் ஆகார். 2 சாராய் ஆபிராமிடம்,
“கர்த்தர் நான் குழந்தை பெற்றுக்கொள்ள
அனுமதிக்கவில்லை. எனவே எனது
வேலைக்காரப் பெண்ணோடு செல்லுங்கள்.
அவளுக்குப் பிறக்கும் குழந்தையை என்

குழந்தைபோல் ஏற்றுக்கொள்வேன்"
என்றாள்.

ஆபிராமும் தன் மனைவி சாராய்
சொன்னபடி கேட்டான். 3இது ஆபிராம்
கானான் நாட்டில் பத்து ஆண்டுகள்
வாழ்ந்தபின் நடந்தது. சாராய் தனது
வேலைக்காரப் பெண்ணை ஆபிராமுக்குக்
கொடுத்தாள். (ஆகார் எகிப்திய வேலைக்
காரப் பெண்)

4ஆபிராமால் ஆகார் கர்ப்பமுற்றாள்.
இதனால் அவளுக்குப் பெருமை ஏற்பட்டது.
அவள் தன்னைத் தன் எஜமானியைவிடச்
சிறந்தவளாக எண்ணினாள். 5ஆனால்
சாராய் ஆபிராமிடம், "இப்பொழுது என்
வேலைக்காரப் பெண் என்னை வெறுக்
கிறாள். இதற்காக நான் உம்மையே குற்றம்
சாட்டுவேன். நான் அவளை உமக்குக்
கொடுத்தேன். அவள் கர்ப்பமுற்றாள். பிறகு
என்னைவிடச் சிறந்தவளாகத் தன்னை
நினைத்துக் கொள்கிறாள். உமக்கும்
எனக்கும் இடையில் கர்த்தரே நியாயந்
தீர்க்கட்டும்" என்றாள்.

6ஆனால் ஆபிராமோ சாராயிடம், "நீ
ஆகாரின் எஜமானி. நீ அவளுக்கு செய்ய
விரும்புவதைச் செய்யலாம்" என்றான்.
எனவே சாராய் ஆகாரைக் கடினமாகத்
தண்டித்தபடியால் அவள் சாராயை விட்டு
ஓடிப்போனாள்.

### இஸ்மவேல் – ஆகாரின் மகன்

7பாலைவனத்தில் சூருக்குப் போகிற
வழியில் இருந்த நீரூற்றினருகில் ஆகாரைக்
கர்த்தருடைய தூதன் கண்டான். 8தூதன்
அவளிடம், "சாராயின் பணிப்பெண்ணாகிய
ஆகாரே. ஏன் இங்கே இருக்கிறாய்? எங்கே
போகிறாய்?" என்று கேட்டான்.

அவளோ, "நான் சாராயிடமிருந்து விலகி
ஓடிக்கொண்டிருக்கிறேன்" என்றாள்.

9அதற்குக் கர்த்தருடைய தூதன், "சாராய்
உனது எஜமானி. வீட்டிற்குத் திரும்பிப்
போய் அவளுக்குக் கீழ்ப்படிந்திரு. 10உன்னிட
மிருந்து ஏராளமான ஜனங்கள் தோன்றுவர்,
அவர்கள் எண்ண முடியாத அளவிற்கு
இருப்பார்கள்" என்றான்.

11மேலும் கர்த்தருடைய தூதன்,

"ஆகார் நீ இப்போது கர்ப்பமாக
இருக்கிறாய்.
உனக்கு ஒரு மகன் பிறப்பான்.
அவனுக்கு இஸ்மவேல்* என்று
பெயரிடு.
ஏனென்றால் நீ மோசமாக நடத்தப்
பட்டதை கர்த்தர் அறிந்திருக்கிறார்.
உன் மகன் உனக்கு உதவுவான்.
12"இஸ்மவேல் காட்டுக் கழுதையைப்
போன்று முரடனாகவும்,
சுதந்திரமானவனாகவும் இருப்பான்.
அவன் ஒவ்வொருவருக்கும்
விரோதமாக இருப்பான்.
ஒவ்வொருவரும் அவனுக்கு
விரோதமாக இருப்பார்கள்.
அவன் ஒவ்வொரு இடமாகச் சுற்றித்
தன் சகோதரர்கள் அருகில்
குடியேறுவான்.
அவர்களுக்கும் அவன் விரோதமாக
இருப்பான்" என்றான்.

13கர்த்தர் ஆகாரிடம் பேசினார், அவள்
அவரிடம், "நீர் என்னைக் காண்கிற தேவன்"
என்று கூறினாள். அவள், "இத்தகைய
இடத்திலும் தேவன் என்னைக் காண்கிறார்,
பொறுப்போடு கவனிக்கிறார். நானும்
தேவனைக் கண்டேன்" என்று நினைத்து
இவ்வாறு சொன்னாள். 14எனவே, அந்த
கிணற்றிற்கு பீர் லகாய் ரோயீ* என்று
பெயரிடப்பட்டது. அது காதேசுக்கும்
பாரேத்துக்கும் இடையில் இருந்தது.

15ஆகார் ஆபிராமுக்கு ஒரு மகனைப்
பெற்றாள். அவனுக்கு ஆபிராம் இஸ்மவேல்
என்று பெயரிட்டான். 16ஆபிராம் ஆகார்
மூலம் இஸ்மவேலைப் பெறும்போது
அவனுக்கு 86 வயது.

### உடன்படிக்கையின் அடையாளமான விருத்தசேதனம்

17 ஆபிராமுக்கு 99 வயதானபோது
கர்த்தர் அவனுக்குக் காட்சி தந்தார்.
அவர், "நான் சர்வவல்லமையுள்ள தேவன்.
எனக்குக் கீழ்ப்படிந்து எனக்கு முன்பாகச்
சரியான வழியில் நட. 2நீ இவற்றைச்
செய்தால், நமக்குள் ஒரு உடன்படிக்கையை
நான் ஏற்படுத்துவேன். உனது ஜனங்களுக்
காக ஒரு பெரிய நாட்டை ஏற்பாடு
செய்வதாக வாக்குறுதி செய்வேன்"
என்றார்.

3தேவனுக்கு முன் ஆபிராம் பணிந்து
வணங்கினான். 4தேவன் அவனிடம், "நான்
உன்னைப் பல நாடுகளின் தந்தை
யாக்குவேன். 5நான் உனது பெயரை
மாற்றுவேன். இப்போது உனது பெயர்
ஆபிராம், இனி உன் பெயர் ஆபிரகாம்.*
நான் உன்னைப் பல நாடுகளுக்குத்
தந்தையாக்கப் போவதால் இந்தப் பெயரை
உனக்கு சூட்டுகிறேன். 6நான் உனக்கு
அநேக சந்ததிகளை கொடுப்பேன்.
உன்னிடமிருந்து புதிய நாடுகள் உருவாகும்.
பல அரசர்கள் உன்னிடமிருந்து எழும்பு
வார்கள். 7நான் உனக்கும் எனக்கும்

---

**இஸ்மவேல்** இப்பெயருக்கு "கர்த்தர் செவி கொடுக்கிறார்" என்று அர்த்தம்.

**பீர் லகாய் ரோயீ** "உயிருடனிருந்து என்னை பார்த்துக் கொண்டிருக்கிறவரின் கிணறு" என்பது அர்த்தம்.

**ஆபிரகாம்** இப்பெயரின் அர்த்தம் "சிறந்த தகப்பன்" அல்லது "நிறைய ஜனங்களின் தகப்பன்" எனப்படும்.

இடையில் ஒரு உடன்படிக்கையை
ஏற்படுத்துவேன். இந்த உடன்படிக்கை
உனக்கு மட்டுமல்லாமல் உனது சந்ததிக்கும்
உரியதாகும். என்றென்றைக்கும் இந்த
உடன்படிக்கை தொடரும். நான் உனக்கும்
உனது சந்ததிக்கும் தேவன். [8]நான் இந்தப்
பூமியை உனக்கும் உன் சந்ததிக்கும்
தருவேன். நீ பரதேசியாய்த் தங்கி வருகிற
கானான் நாடு முழுவதையும் தருவேன்.
என்றென்றைக்கும் இது உனக்கு
உரியதாகும். நான் உனது தேவனா
யிருப்பேன்" என்றார்.

[9]மேலும் தேவன் ஆபிரகாமிடம், "இது
உடன்படிக்கையில் உனது பகுதியாகும்.
நீயும் உனது சந்ததியும் இந்த உடன்படிக்
கையை மனதில் வைத்திருக்க வேண்டும்.
[10]இதுதான் நீ கீழ்ப்படிய வேண்டிய
உடன்படிக்கை. இதுவே உனக்கும் எனக்கும்
இடையேயுள்ள உடன்படிக்கை. இது உனது
சந்ததிகளுக்கெல்லாம் உரியது. உனது
சந்ததியருக்குப் பிறக்கும் ஒவ்வொரு ஆண்
பிள்ளையும் விருத்தசேதனம் செய்து
கொள்ளவேண்டும். [11]"உங்கள் நுனித்தோலின்
மாம்சத்தை விருத்தசேதனம் செய்துகொள்ள
வேண்டும். இதுவே நீங்கள் உடன்படிக்
கைக்குக் கீழ்ப்படிகிறீர்கள் என்பதற்கான
அடையாளம். [12]ஒரு ஆண்குழந்தை பிறந்த
எட்டாவது நாள் அவனுக்கு விருத்தசேதனம்
செய்துவிட வேண்டும். அதுபோலவே
உங்கள் அடிமைகளுக்குப் பிறக்கும்
ஆண்குழந்தைகளுக்கும் விருத்தசேதனம்
செய்யவேண்டும். [13]எனவே உங்கள்
நாட்டிலுள்ள ஒவ்வொரு ஆண்களும்
விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களாக
இருக்க வேண்டும். உங்கள் பிள்ளைகளுக்கு
மட்டுமல்லாமல் உங்கள் அடிமைகளுக்கும்
விருத்தசேதனம் செய்ய வேண்டும்.
[14]இதுதான் உனக்கும் எனக்கும் இடையில்
ஏற்படுத்தப்பட்ட உடன்படிக்கை. விருத்த
சேதனம் செய்யப்படாத எந்த ஆணும்
உங்களிடமிருந்து விலக்கப்படுவான்;
ஏனென்றால் அவன் எனது உடன்படிக்
கையை உடைத்தவனாகிறான்" என்றார்.

### ஈசாக்கு – சத்தியத்திற்குரிய மகன்

[15]தேவன் ஆபிரகாமிடம், "உன் மனைவி
சாராய்* இனிமேல் சாராள்* என்று
அழைக்கப்படுவாள். [16]அவளை நான் ஆசீர்
வதிக்கிறேன். அவள் உனக்கு ஒரு மகனைக்
பெற்றுத்தரும்படி செய்வேன். நீயே அவன்
தந்தை. சாராள் பல நாடுகளுக்குத் தாயாக
இருப்பாள். அவளிடமிருந்து பல அரசர்கள்
வருவார்கள்" என்றார்.

[17]ஆபிரகாம் தன் முகம் தரையில்படும்படி
விழுந்து வணங்கி தேவனுக்கு மரியாதை
செலுத்தினான். எனினும் அவன் தனக்குள்
சிரித்துக்கொண்டே, "எனக்கு 100 வயது
ஆகிறது. என்னால் ஒரு மகன் பிறப்பது
கூடியகாரியமா?. சாராளுக்கோ 90 வயது.
அவள் ஒரு மகனைப்பெறுவது எப்படி?"
என்றான்.

[18]ஆபிரகாம் தேவனிடம், "இஸ்மவேல்
வாழ்ந்து உமக்குச் சேவை செய்வான்
என நம்புகிறேன்" என்றான்.

[19]தேவன், "இல்லை. உன் மனைவி சாராள்
ஒரு மகனைப் பெறுவாள் என்று
சொன்னேன். நீ அவனுக்கு ஈசாக்கு* என்று
பெயரிடுவாய். நான் அவனோடு என்
உடன்படிக்கையை ஏற்படுத்திக் கொள்வேன்.
அந்த உடன்படிக்கையே என்றென்றைக்கும்
அவனுக்கும் அவனது சந்ததிக்கும்
தொடரும்.

[20]"நீ இஸ்மவேலைப்பற்றிச் சொன்னாய்.
நான் அவனையும் ஆசீர்வதிப்பேன்.
அவனுக்கும் நிறைய பிள்ளைகள் இருக்கும்.
அவன் 12 பெரிய தலைவர்களுக்குத்
தந்தையாவான். அவனது குடும்பமே ஒரு
நாடாகும். [21]ஆனால் நான் என்
உடன்படிக்கையை ஈசாக்கிடம் ஏற்படுத்து
வேன். ஈசாக்கு சாராளின் மகனாயிருப்பான்.
அவன் அடுத்த ஆண்டு இதே நேரத்தில்
பிறந்திருப்பான்" என்றார்.

[22]ஆபிரகாமிடம் தேவன் பேசி
முடித்தபிறகு தேவன் அவனை விட்டு
விலகிப் போனார். [23]தேவன் ஆபிரகாமிடம்
அவன் குடும்பத்திலுள்ள ஆண்களும்,
சிறுவர்களும் விருத்தசேதனம் செய்து
கொள்ளவேண்டும் என்று கூறியிருந்தார்.
எனவே, ஆபிரகாம் தனது மகன் இஸ்மவேல்,
மற்றும் அவனுடைய வீட்டில் பிறந்த
அடிமைகளையும், பணம் கொடுத்து
வாங்கிய அடிமைகளையும் கூட்டினான்.
ஆபிரகாமின் வீட்டிலுள்ள ஒவ்வொரு
ஆணும், சிறுவனும் அந்த நாளிலே, தேவன்
ஆபிரகாமிடம் கூறியபடியே விருத்தசேதனம்
செய்யப்பட்டனர்.

[24]ஆபிரகாம் விருத்தசேதனம் செய்யப்
பட்டபோது அவனுக்கு 99 வயது.
[25]அப்போது ஆபிரகாமின் மகன் இஸ்மவே
லுக்கு 13 வயது. [26]ஆபிரகாமும் அவனது
மகனும் அதே நாளில் விருத்தசேதனம்
செய்யப்பட்டனர். [27]அன்று அவனது
குடும்பத்தில் உள்ள அனைவரும்
விருத்தசேதனம் செய்துகொண்டனர். அவன்
வீட்டில் பிறந்த அடிமைகளும், அவன்
வாங்கிய அடிமைகளும் கூட விருத்தசேதனம்
செய்துகொண்டனர்.

---

**சாராய்** அரமேய மொழியில் "இளவரசி" என்று அர்த்தம்

**சாராள்** இந்த எபிரெய பெயரின் பொருள் "இளவரசி" எனப்படும்.

**ஈசாக்கு** இப்பெயரின் பொருள் "அவன் சிரிக்கிறான்" அல்லது "அவன் மகிழ்ச்சியா யிருக்கிறான்."

### மூன்று பார்வையாளர்கள்

18 பிறகு, கர்த்தர் மீண்டும் ஆபிரகாமுக்குக் காட்சியளித்தார். ஆபிரகாம் மம்ரேயிலுள்ள ஓக் மரங்களுக்கு அருகில் வாழ்ந்தான். ஒரு நாள், வெப்பம் அதிகமான நேரத்தில் ஆபிரகாம் தனது கூடாரத்தின் வாசலுக்கருகில் இருந்தான். 2ஆபிரகாம் மேலே ஏறிட்டுப் பார்த்தபோது மூன்றுபேர் அவனுக்கு முன்னால் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். ஆபிரகாம் அவர்களைப் பார்த்ததும் குனிந்து வணங்கினான். 3ஆபிரகாம், “ஐயா, உங்கள் பணியாளாகிய என்னோடு தயவுசெய்து தங்கியிருங்கள். 4உங்கள் பாதங்களைக் கழுவ தண்ணீர் கொண்டு வருகிறேன். நீங்கள் மரங்களுக்கடியில் ஓய்வு கொள்ளுங்கள். 5நான் உங்களுக்கு உணவைக் கொண்டு வருவேன். நீங்கள் விரும்புகிற அளவிற்குச் சாப்பிடலாம். பிறகு உங்களது பயணத்தைத் தொடரலாம்” என்றான்.

அந்த மூன்று மனிதர்களும், “அது நல்லது. நீ சொன்னபடி நாங்கள் செய்கிறோம்” என்றனர்.

6ஆபிரகாம் கூடாரத்திற்கு விரைந்து போனான். அவன் சாராளிடம், “சீக்கிரம் மூன்றுபடி கோதுமை மாவை எடுத்து ரொட்டிகள் தயார் செய்” என்றான். 7பிறகு ஆபிரகாம் தனது தொழுவத்துக்கு ஓடி இளமையான கன்றுக் குட்டியைத் தேர்ந்தெடுத்து. அதனை வேலைக்காரனிடம் கொடுத்தான். அதனை விரைவில் கொன்று உணவு தயாரிக்கும்படி கூறினான். 8ஆபிரகாம் இறைச்சியும், கொஞ்சம் பாலும், வெண்ணெயும் கொண்டு வந்து மூன்று பார்வையாளர்கள் முன்பும் வைத்து அவர்கள் அருகில் பரிமாறுவதற்குத் தயாராக நின்றான். அவர்கள் மரத்தடியில் அமர்ந்து உண்ண ஆரம்பித்தனர்.

9பிறகு அவர்கள் ஆபிரகாமிடம், “உனது மனைவி சாராள் எங்கே?” என்று கேட்டனர்.

அதற்கு ஆபிரகாம், “அவள் அங்கே கூடாரத்தில் இருக்கிறாள்” என்றான்.

10பிறகு கர்த்தர், “நான் மீண்டும் அடுத்த ஆண்டு இதே நேரத்தில் திரும்பி வருவேன். அப்போது உன் மனைவி சாராள் ஒரு மகனோடு இருப்பாள்” என்றார்.

சாராள் கூடாரத்திலிருந்து இவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தாள். 11ஆபிரகாமும் சாராளும் மிகவும் முதியவர்களாக இருந்தனர். சாதாரணமாக பெண்கள் குழந்தை பெறுவதற்கான வயதை சாராள் கடந்திருந்தாள். 12எனவே, சாராள் அவர்கள் சொன்னதை நம்பவில்லை. அவள் தனக்குள், “நானும் முதியவள். என் கணவனும் முதியவர். நான் குழந்தை பெறமுடியாதபடி முதியவளாகி விட்டேன்” என்றாள்.

13கர்த்தர் ஆபிரகாமிடம், “சாராள், குழந்தை பெறமுடியாத அளவுக்கு முதியவளானதாகக் கூறிச் சிரிக்கிறாள். 14கர்த்தருக்கு கடினமான காரியம் ஏதாவது இருக்கிறதா? இல்லை. நான் வசந்த காலத்தில் மீண்டும் வருவேன். அப்போது நான் சொன்னது நடக்கும். உனது மனைவி சாராள் மகனோடு இருப்பாள்” என்றார்.

15ஆனால் சாராளோ, “நான் சிரிக்கவில்லையே” என்றாள். (அவள் அச்சத்தால் இவ்வாறு சொன்னாள்)

ஆனால் கர்த்தரோ, “இல்லை. நீ சொல்வது உண்மையன்று என எனக்குத் தெரியும். நீ சிரித்தாய்” என்றார்.

16பிறகு அந்த மனிதர்கள் எழுந்து சென்றனர். அவர்கள் சோதோம் இருந்த திசை நோக்கிப் போனார்கள். ஆபிரகாமும் அவர்களோடு கொஞ்சம் தூரம் சென்று அவர்களை அனுப்பி வைத்தான்.

### ஆபிரகாம் தேவனோடு பரிந்து பேசுதல்

17கர்த்தர் தனக்குள், “நான் செய்யப்போகிறவற்றை ஆபிரகாமிற்கு மறைக்க மாட்டேன். 18ஆபிரகாம் ஒரு மகத்தான பலமிக்க தேசமாவான். அவனால் பூமியிலுள்ள ஜனங்கள் ஆசீர்வதிக்கப்படுவார்கள். 19நான் ஆபிரகாமோடு சிறந்த உடன்படிக்கை ஒன்றைச் செய்து வைத்திருக்கிறேன். நான் இதைச் செய்ததால் அவன் தன் பிள்ளைகளையும், சந்ததிகளையும் எனது விருப்பப்படி வாழ கட்டளையிடுவான். அவர்கள் நீதியோடும், நேர்மையோடும் வாழும்படி அவர்களுக்குப் போதனை செய்வான் என அறிவேன். கர்த்தராகிய நான் வாக்குறுதியளித்தபடியே அவனுக்குச் செய்வேன்” என்று சொல்லிக் கொண்டார்.

20மேலும் கர்த்தர், “சோதோம், கொமோரா ஜனங்கள் மிகவும் பாவிகள் என்று நான் பலமுறை கேள்விப்பட்டிருக்கிறேன். 21எனவே நான் சோதோமின் உண்மை நிலை என்னவென்று போய்ப் பார்ப்பேன்” என்றார்.

22ஆகையால், அந்த மனிதர்கள் திரும்பி சோதோமை நோக்கி நடக்க ஆரம்பித்தனர். ஆனால் ஆபிரகாம் கர்த்தருக்கு முன்னால் நின்றான். 23பிறகு ஆபிரகாம் கர்த்தரிடம் நெருங்கி வந்து, “கர்த்தாவே! நீர் தீயவர்களை அழிக்கும்போதே நல்லவர்களையும் அழிக்கப்போகிறீரா? 24அந்த நகரத்தில் 50 நல்ல மனிதர்கள் இருந்தால் என்ன செய்வீர்? அழித்து விடுவீரா? உறுதியாக நீர் அந்த 50 நல்ல மனிதர்களுக்காக அந்நகரத்தைக் காப்பாற்றத்தான் வேண்டும். 25உம்மால் உறுதியாக அந்நகரத்தை அழிக்க முடியாது. தீயவர்களை அழிப்பதற்காக அந்த 50 நல்ல

மனிதர்களையும் உம்மால் அழிக்க முடியாது. அவ்வாறு நடந்தால் பிறகு நல்ல மனிதர்களும் தீய மனிதர்களும் ஒரே மாதிரி ஆகிவிடுவார்கள். இருவருமே தண்டிக்கப் பட்டுவிடுவார்கள். பூமி முழுவதற்கும் நீரே நீதிபதி. நீர் நியாயமானவற்றையே செய்வீர் என்று எனக்குத் தெரியும்” என்றான்.

26 பிறகு கர்த்தர், “என்னால் சோதோம் நகரத்தில் நல்லவர்கள் 50 பேரைக் காணமுடியுமானால் நான் அந்த நகரத்தைக் காப்பாற்றுவேன்” என்றார்.

27 பிறகு ஆபிரகாம், “கர்த்தாவே, உம்மோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது நான் வெறும் தூசியாகவும், சாம்பலாகவும் இருக்கிறேன், என்றாலும் இன்னும் ஒரு கேள்வியைக் கேட்க அனுமதியும்.
28 அந்நகரத்தில் 45 நல்ல மனிதர்கள் மட்டுமே இருந்தால் என்ன செய்வீர்? அந்த முழு நகரத்தையுமே அழித்து விடுவீரா?” என்று கேட்டான்.

அதற்கு கர்த்தர், “நான் அங்கு 45 நல்ல மனிதர்களைக் கண்டால் அந்நகரத்தை அழிக்கமாட்டேன்” என்றார்.

29 ஆபிரகாம் மீண்டும் பேசினான். அவன், “நீர் 40 நல்ல மனிதர்களை மட்டும் கண்டால் அப்போது அந்நகரத்தை அழிப்பீரா?” என்று கேட்டான்.

அதற்குக் கர்த்தர், “நான் 40 நல்ல மனிதர்களைக் கண்டால் அந்நகரத்தை அழிக்கமாட்டேன்” என்று சொன்னார்.

30 மேலும் ஆபிரகாம், “கர்த்தாவே தயவுசெய்து என்மீது கோபம் கொள்ளாதிரும். இதையும் கேட்க அனுமதியும். அந்நகரத்தில் 30 நல்ல மனிதர்கள் மட்டும் இருந்தால், அந்நகரத்தை அழித்து விடுவீரா?” என்று கேட்டான்.

அதற்குக் கர்த்தர், “நான் 30 நல்ல மனிதர்களைக் கண்டால் அந்நகரத்தை அழிக்கமாட்டேன்” என்றார்.

31 பிறகு ஆபிரகாம், “கர்த்தாவே மேலும் உம்மிடம் ஒன்று கேட்கலாமா? அந்நகரத்தில் 20 நல்ல மனிதர்கள் மட்டும் இருந்தால் என்ன செய்வீர்?” என்று கேட்டான்.

அதற்குக் கர்த்தர், “நான் அங்கே 20 நல்ல மனிதர்களை மட்டும் கண்டாலும் அந்நகரத்தை அழிக்கமாட்டேன்” என்றார்.

32 மேலும் ஆபிரகாம், “கர்த்தாவே என் மீது கோபம் கொள்ள வேண்டாம். இறுதியாக இன்னொன்றைக் கேட்க அனுமதி தாரும். நீர் அங்கே 10 நல்ல மனிதர்களை மட்டும் கண்டால் என்ன செய்வீர்?” என்று கேட்டான்.

அதற்குக் கர்த்தர், “நான் 10 நல்ல மனிதர்களைக் கண்டாலும் அந்நகரத்தை அழிக்கமாட்டேன்” என்றார்.

33 கர்த்தர் ஆபிரகாமுடன் தன் பேச்சை முடித்துவிட்டுப் போனார். ஆபிரகாமும் தன் வீட்டிற்குத் திரும்பினான்.

### லோத்தின் பார்வையாளர்கள்

19 அன்று மாலையில் இரண்டு தேவ தூதர்கள் சோதோம் நகரத்திற்கு வந்தனர். நகர வாசலில் இருந்துகொண்டு லோத்து தேவதூதர்களைப் பார்த்தான். அவர்கள் நகரத்துக்குப் போகும் பயணிகள் என்று நினைத்தான். அவன் எழுந்து அவர்களிடம் சென்று தரையில் குனிந்து வணங்கினான்.
2 லோத்து அவர்களிடம், “ஐயா, எனது வீட்டிற்கு வாருங்கள். நான் உங்களுக்குச் சேவை செய்வேன். உங்கள் பாதங்களைக் கழுவிக்கொண்டு இரவில் அங்கே தங்கி, நாளை உங்கள் பயணத்தைத் தொடரலாம்” என்றான்.

அதற்குத் தேவதூதர்கள், “இல்லை, நாங்கள் இரவில் வெட்டவெளியில்* தங்குவோம்” என்றனர்.

3 ஆனால் லோத்து தொடர்ந்து தன் வீட்டிற்கு வருமாறு அவர்களை வற்புறுத்தினான். அவர்களும் ஒப்புக் கொண்டு அவனது வீட்டிற்குப் போனார்கள். அவர்களுக்காக அவன் ஆயத்தம் செய்த ரொட்டியை அவர்கள் சாப்பிட்டார்கள்.

4 அன்று மாலை தூங்குவதற்கு முன்னால், லோத்தின் வீட்டிற்கு நகரின் பலபாகங்களில் இருந்தும் இளைஞர், முதியோர்கள் எனப் பலரும் கூடிவந்து வீட்டைச் சுற்றிலும் நின்றுகொண்டு அவனை அழைத்தனர்.
5 அவர்கள், “இன்று இரவு உன் வீட்டிற்கு வந்த இருவரும் எங்கே? அவர்களை வெளியே அழைத்து வா. நாங்கள் அவர்களோடு பாலின உறவு கொள்ள வேண்டும்” என்றனர்.

6 லோத்து வெளியே வந்து வீட்டின் கதவை அடைத்துக் கொண்டான்.
7 லோத்து அவர்களிடம், “நண்பர்களே வேண்டாம். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். இந்தக் கெட்டச் செயல்களைச் செய்ய வேண்டாம்.
8 எனக்கு இரண்டு மகள்கள் இருக்கிறார்கள். அவர்கள் இதுவரை எந்த ஆணையும் அறியாதவர்கள். நான் அவர்களை உங்களுக்குத் தருகிறேன். நீங்கள் அவர்களோடு என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். ஆனால் இந்த மனிதர்களை எதுவும் செய்துவிடாதீர்கள். இவர்கள் என் வீட்டிற்கு வந்திருக்கிறார்கள். நான் அவர்களைப் பாதுகாக்க வேண்டும்” என்றான்.

9 வீட்டைச் சுற்றி நின்றவர்கள், “எங்கள் வழியில் குறுக்கிடாதே” என்று சத்தமிட்டார்கள். பிறகு அவர்கள் தங்களுக்குள்ளேயே, “லோத்து நமது நகரத்திற்கு விருந்தாளியாக வந்தான். இப்போது நாம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்

---

**வெட்டவெளி** நகர வாசலின் அருகேயுள்ள திறந்தவெளி, நகரத்திற்கு வரும் பயனிகள் இங்கே தங்குவார்கள்.

என்று நமக்கே கூறுகிறான்” என்றனர்.
பிறகு அவர்கள் லோத்திடம், “நாங்கள் அந்த
மனிதர்களை விட உனக்கே அதிகக்
கொடுமையைச் செய்வோம்” என்று கூறி
லோத்தை நெருங்கி வந்து, கதவை
உடைப்பதற்கு முயன்றனர்.
10ஆனால் லோத்தின் வீட்டிற்குள் இருந்த
இருவரும் கதவைத் திறந்து லோத்தை
வீட்டிற்குள் இழுத்து கதவை மூடிக்
கொண்டனர். 11பிறகு அவர்கள் கதவுக்கு
வெளியே இருந்த இளைஞர்களும்
முதியவர்களும் தங்கள் பார்வையை
இழக்கும்படி செய்தனர். எனவே,
அவர்களால் கதவு இருக்கும் இடத்தைக்
கண்டுபிடிக்க முடியவில்லை.

## சோதோமிலிருந்து தப்பித்தல்

12அந்த இருவரும் லோத்திடம், “உன்
குடும்பத்திலுள்ளவர்களில் யாராவது இந்த
நகரத்தில் இருக்கிறார்களா? உனக்கு
மருமகன்களோ, மகன்களோ, மகள்களோ
அல்லது வேறு யாராவது இந்நகரத்தில்
இருந்தால் அவர்களை உடனே இந்நகரத்தை
விட்டு விலகச் சொல்ல வேண்டும். 13நாங்கள்
இந்த நகரத்தை அழிக்கப் போகிறோம்.
இந்த நகரம் எவ்வளவு மோசமானது
என்பதைப்பற்றி கர்த்தர் அறிந்தபடியால்
இதனை அழிக்க எங்களை அனுப்பினார்”
என்றார்கள்.
14ஆகவே, லோத்து வெளியே போய்,
தனது மகள்களை மணந்து கொள்வதா
யிருந்த மருமகன்களிடம், “வேகமாக இந்த
நகரத்தை விட்டு வெளியேறுங்கள்.
விரைவில் கர்த்தர் இந்த நகரத்தை அழிக்கப்
போகிறார்” என்றான். அவர்களோ அவன்
வேடிக்கையாகப் பேசுவதாய் எண்ணி
னார்கள்.
15அடுத்த நாள் காலையில் தேவதூதர்கள்
லோத்தை வெளியேற விரைவுபடுத்தினார்
கள். அவர்கள், “இந்நகரம் தண்டிக்கப்படும்.
எனவே, உனது மனைவியையும், இரண்டு
பெண்களையும், இன்னும் உன்னோடு
வருகிறவர்களையும், அழைத்துக்கொண்டு
இந்த இடத்தை விட்டு விலகிப் போ.
அவ்வாறு செய்தால் நீ இந்நகரத்தோடு
அழியாமல் இருப்பாய்” என்றனர்.
16லோத்து குழப்பத்துடன் வேகமாகப்
புறப்படாமல் இருந்தான், எனவே அந்த
இரண்டு தேவதூதர்கள் அவன், அவனது
மனைவி, மகள்கள் ஆகியோரின் கையைப்
பிடித்து அவர்களைப் பாதுகாப்பாக
நகரத்தை விட்டு வெளியே அழைத்துச்
சென்றனர். லோத்தோடும் அவனது
குடும்பத்தோடும் கர்த்தர் மிகவும் கருணை
உடையவராக இருந்தார். 17எனவே, இரு
தேவதூதர்களும் லோத்தையும் அவன்
குடும்பத்தையும் பாதுகாப்பாக நகரத்திற்கு
வெளியே கொண்டு வந்தபின்னர் தூதர்களில்
ஒருவன், “இப்போது உங்கள் உயிரைக்
காப்பாற்றிக்கொள்ள ஓடிப் போங்கள்.
இந்நகரத்தைத் திரும்பிப் பார்க்காதீர்கள்.
இந்தச் சமவெளியில் எங்கும் நிற்காதீர்கள்.
மலைக்குப் போய்ச் சேரும்வரை ஓடுங்கள்.
இடையில் நின்றால் நகரத்தோடு நீங்களும்
அழிந்து போவீர்கள்” என்றான்.
18ஆனால் லோத்து அந்த இருவரிடமும்,
“ஐயா, அவ்வளவு தூரத்துக்கு ஓடும்படி
என்னைக் கட்டாயப்படுத்தாதீர்கள். 19உங்கள்
சேவகனாகிய என் மீது நீங்கள் மிகவும்
இரக்கம் வைத்திருக்கிறீர்கள். என்னைக்
காப்பாற்ற கருணையுடன் இருக்கிறீர்கள்.
ஆனால் மலைவரை என்னால் ஓட
முடியாது. நான் மரித்துப்போய்விட
வாய்ப்புண்டு. 20அருகில் ஒரு சிறிய நகரம்
உள்ளது. என்னை அந்நகரத்திற்கு
ஓடிப்போக விடுங்கள். அந்த அளவுக்கு
என்னால் ஓடி என்னை பாதுகாத்துக்
கொள்ள முடியும்” என்றான்.
21அதற்குத் தேவதூதன், “நல்லது”
அவ்வாறு செய்ய உன்னை அனுமதிக்
கிறேன். நான் அந்நகரத்தை அழிக்க
மாட்டேன். 22ஆனால் அங்கு வேகமாக ஓடு.
அங்கு நீ பாதுகாப்பாகப் போய்ச்
சேரும்வரை சோதோம் நகரத்தை
அழிக்கமாட்டேன்” என்றான். (அந்நகரின்
பெயர் சோவார். ஏனெனில் அது மிகச்
சிறிய நகரம்)

## சோதோமும் கொமோராவும் அழிக்கப்படுதல்

23சூரியன் உதயமானபோது லோத்து
சோவார் நகரத்திற்குள் நுழைந்தான். 24அதே
நேரத்தில் கர்த்தர் சோதோமையும்
கொமோராவையும் அழிக்க ஆரம்பித்தார்.
கர்த்தர் வானத்திலிருந்து நெருப்பையும்
கந்தகத்தையும் அந்நகரின் மேல் விழுமாறு
செய்து, 25அந்த நகரங்களையும் அதன் முழு
சமவெளியையும், அங்கிருந்த செடிக
ளையும், ஜனங்களையும் அழித்துவிட்டார்.
26அவர்கள் ஓடிப்போகும்போது லோத்தின்
மனைவி திரும்பிப் பார்த்தாள். அதனால்
அவள் உப்புத்தூண் ஆனாள்.
27அதே நாள் அதிகாலையில், ஆபிரகாம்
எழுந்து கர்த்தரை தொழுதுகொள்ளும்
இடத்துக்குச் சென்றான். 28அவன் அங்கிருந்து
சோதோம், கொமோரா நகரங் கள் இருக்கும்
திசையையும், அதன் சமவெளியையும்
பார்த்தபோது அங்கிருந்து புகை
எழும்புவதைக் கண்டான். அது பெரிய
நெருப்பினால் ஏற்படும் புகைபோல்
தோன்றியது.
29தேவன் பள்ளத்தாக்கில் உள்ள நகரங்
களை அழித்துவிட்டார். அப்போது அவர்
ஆபிரகாமை நினைத்து, ஆபிரகாமின்

உறவினனான லோத்தை அழிக்காமல்
விட்டார். பள்ளத்தாக்கில் இருக்கும்
நகரங்களுக்குள் லோத்து வாழ்ந்து கொண்டி
ருந்த அவ்விடங்களை அழிக்கும் முன்பு
லோத்தை தேவன் வெளியேற்றினார்.

### லோத்தும் அவனது மகள்களும்

30 சோவாரில் தங்கியிருக்க லோத்துவுக்கு
அச்சமாக இருந்தது. எனவே, அவனும்
அவனது மகள்களும் மலைக்குச் சென்று
அங்கு ஒரு குகையில் வசித்தனர். 31 ஒரு
நாள் மூத்தவள் இளையவளிடம், “உலகில்
எல்லா இடங்களிலும் ஆண்களும்
பெண்களும் மணந்துகொண்டு குடும்பமாக
வாழ்கிறார்கள். ஆனால் நமது தந்தையோ
வயதானவராக உள்ளார். நமக்கு குழந்தை
தர வேறு ஆண்களும் இங்கே இல்லை.
32 எனவே, நாம் தந்தைக்கு மதுவைக்
கொடுக்கலாம். அவர் மயங்கியபின்
அவரோடு பாலின உறவு கொள்ளலாம்.
இப்படியாக நமக்குச் சந்ததி உண்டாக நம்
தந்தையைப் பயன்படுத்திக் கொள்ளலாம்”
என்றாள்.
33 அன்று இரவு இரண்டு பெண்களும்
தந்தைக்கு மதுவைக் கொடுத்து குடிக்க
வைத்தனர். பிறகு மூத்தவள் தந்தையின்
படுக்கைக்குச் சென்று அவரோடு பாலின
உறவு கொண்டாள். லோத்துவுக்குத் தன்
மகள் தன்னோடு படுத்ததும், எழுந்து
போனதும் தெரியவில்லை. அந்த அளவுக்குக்
குடித்திருந்தான்.
34 மறுநாள் மூத்தவள் இளையவளிடம்:
“நேற்று இரவு நான் தந்தையோடு பாலின
உறவு கொண்டேன். இன்று இரவும் அவரை
மீண்டும் குடிக்க வைப்போம். பிறகு நீ
அவரோடு பாலின உறவு கொள்.
இதன்மூலம் நாம் குழந்தை பெற நம்
தந்தையைப் பயன்படுத்திக் கொள்ளலாம். நம்
குடும்பமும் அழியாமல் இருக்கும்” என்றாள்.
35 அதனால் இருவரும் அந்த இரவிலும்
தந்தையை மது குடிக்கும்படி செய்தனர்.
பிறகு இளையவள் தந்தையோடு படுத்து
பாலின உறவு கொண்டாள். லோத்து
மதுவைக் குடித்திருந்தபடியால் அவள்
படுத்ததையும், எழுந்து போனதையும்
அறியாமலிருந்தான்.
36 லோத்தின் இரு மகள்களும் கர்ப்ப
முற்றனர். அவர்களின் தந்தையே அவர்களது
பிள்ளைகளுக்கும் தந்தை. 37 மூத்தவள் ஒரு
ஆண் குழந்தையைப் பெற்றாள். அவள்
அவனுக்கு மோவாப்* என்று பெயர்
வைத்தாள். அவன் மோவாபியருக்கெல்லாம்
தந்தையானான். 38 இளையவளும் ஒரு ஆண்
குழந்தையைப் பெற்றாள். அவனுக்கு அவள்
பென்னம்மி* என்று பெயரிட்டாள். அவன்
அம்மோன் ஜனங்களுக்குத் தந்தை ஆனான்.

### ஆபிரகாம் கேராருக்குப் போகிறான்

20 ஆபிரகாம் அந்த நாட்டைவிட்டுப்
பாலைவனப் பகுதிக்குச் சென்றான்.
அவன் காதேசுக்கும், சூருக்கும் நடுவிலுள்ள
கேராரில் தங்கினான். 2 அவன் கேராரிலே
தங்கி இருந்தபோது தன் மனைவி
சாராளைச் சகோதரி என்று சொன்னான்.
அபிமெலேக்குக் கேராரின் அரசன். அவன்
சாராளை மிகவும் விரும்பினான். எனவே,
வேலைக்காரர்களை அனுப்பி அவளைக்
கொண்டு வருமாறு சொன்னான். 3 ஆனால்
இரவில் தேவன் அபிமெலேக்கின் கனவிலே
பேசி, “நீ மரித்து போவாய். நீ கைப்பற்றிய
பெண் திருமணமானவள்” என்றார்.
4 ஆகையால் அபிமெலேக்குச் சாராளைத்
தொடவில்லை. அவன் தேவனிடம்,
“கர்த்தாவே! நான் குற்றமுடையவன் அல்ல.
ஒன்றும் தெரியாத அப்பாவியை நீர்
கொல்வீரா? 5 ஆபிரகாமே என்னிடம், ‘இவள்
என் சகோதரி’ என்று சொன்னானே!
சாராளும் ஆபிரகாமை ‘இவர் என்
சகோதரன்’ என்று கூறிவிட்டாள். நான்
அப்பாவி. நான் வேண்டுமென்றே இதைச்
செய்யவில்லை என்றான்.
6 தேவன் அவனிடம், “நீ என்ன
மனநிலையில் இதைச் செய்தாய் என்று
எனக்குத் தெரியும். நீ என்ன செய்கிறாய்
என்பதும் உனக்குத் தெரியாது. நீ எனக்கு
எதிராகப் பாவம் செய்யாதபடி நான்
உன்னைக் காப்பாற்றினேன். நீ அவளைத்
தொடாதபடி நானே உன்னைத் தடுத்தேன்.
7 ஆகவே ஆபிரகாமிடம் அவன் மனை
வியைத் திரும்பக் கொடுத்துவிடு. ஆபிரகாம்
ஒரு தீர்க்கதரிசி. அவன் உனக்காக
ஜெபிப்பான். நீ வாழ்வாய். ஆனால் நீ
சாராளை ஆபிரகாமிடம் திரும்பக் கொடுக்
காவிட்டால் நீயும் உன்னைச்
சேர்ந்தவர்களும் மரித்துப்போவீர்கள் என்று
அறிந்துகொள்” என்றார்.
8 எனவே, மறுநாள் அதிகாலையில்,
அபிமெலேக்கு தன் வேலைக்காரர்களை
அழைத்து, நடந்தவைகளைப் பற்றிக் கூறி
னான், அவர்கள் பயந்தார்கள். 9 பிறகு
அபிமெலேக்கு ஆபிரகாமை அழைத்து
அவனிடம்: “நீ ஏன் எங்களுக்கு இதுபோல்
செய்தாய்? உனக்கு எதிராக நான் என்ன
செய்தேன்? அவள் உன் சகோதரி என்று
ஏன் பொய் சொன்னாய்? எனது அரசுக்கு
நீ நிறைய தொந்தரவுகளைக் கொடுத்து
விட்டாய். நீ இவ்வாறு செய்திருக்கக்

---

**மோவாப்** எபிரெய மொழியில், இப்பெயரின் அர்த்தம் “தகப்பனிடத்திலிருந்து” என்பது போலிருக்கிறது.

**பென்னம்மி** எபிரெய மொழியில், இப்பெயரின் அர்த்தம் “என் தகப்பனின் புத்திரன்” அல்லது “என் மக்களின் புத்திரன்” என்பது போலிருக்கிறது.

கூடாது. 10நீ எதற்காகப் பயந்தாய்? ஏன்
இவ்வாறு செய்தாய்” என்று கேட்டான்.
11பிறகு ஆபிரகாம், “நான் பயந்து
விட்டேன், இந்த இடத்தில் உள்ள எவரும்
தேவனை மதிக்க மாட்டார்கள் என்று
நினைத்தேன். சாராளுக்காக என்னை
எவராவது கொன்று விடுவார்களோ என்று
நினைத்தேன். 12அவள் எனது மனைவி,
ஆனால் அவள் என் சகோதரியும் கூட,
அவள் என் தந்தைக்கு மகள். ஆனால் என்
தாய்க்கு மகளல்ல. 13தேவன் என்னை என்
தந்தையின் வீட்டிலிருந்து வெளியே
கொண்டுவந்து என்னைப் பல்வேறு
இடங்களில் அலைந்து திரியும்படி
செய்திருக்கிறார். அப்போதெல்லாம் சாராளி
டம், ‘நாம் எங்கு சென்றாலும் நான் உன்
சகோதரன் என்று சொல்லு’ என்று கேட்டுக்
கொண்டேன்” என்றான்.
14என்ன நடந்தது என்பதை அபிமெ
லேக்கு புரிந்து கொண்டான். எனவே
சாராளைத் திரும்ப ஆபிரகாமிடம் அனுப்பி
விட்டான். அவளுக்குச் சில ஆடுகளையும்
மாடுகளையும் அடிமைகளையும் கொடுத்
தான். 15பிறகு, “உன்னைச் சுற்றிலும் பார்,
இது எனது நிலம். நீ விரும்புகிற எந்த
இடத்திலும் வாழலாம்” என்றான்.
16அவன் சாராளிடம், “நான் உன்
சகோதரன், ஆபிரகாமிடம் 1,000 வெள்ளிக்
காசுகள் கொடுத்தேன். நடந்தவற்றுக்கு
வருத்தம் தெரிவிக்கவே அவ்வாறு செய்
தேன். நான் செய்தது சரியென்று
எல்லோருக்கும் தெரியவேண்டும்” என்றான்.
17-18கர்த்தர், சாராளினிமித்தம்
அபிமெலேக்கின் குடும்பத்தில் எவருக்கும்
குழந்தை இல்லாமல் இருக்கும்படி செய்
திருந்தார். இப்போது ஆபிரகாம் தேவனிடம்
வேண்டிக்கொள்ளவே, தேவன் அபிமெ
லேக்கு, அவன் மனைவி, வேலைக்காரப்
பெண்கள் அனைவரையும் குணப்
படுத்தினார்.

## இறுதியாக, சாராளுக்கு ஒரு குழந்தை

21 கர்த்தர், சாராளுக்குக் கொடுத்திருந்த
வாக்குறுதியை நிறைவேற்றினார்.
2சாராள் கர்ப்பமுற்றாள். ஆபிரகாமின்
வயோதிப காலத்தில் அவனுக்கு ஓர் ஆண்
மகனைப் பெற்றுக் கொடுத்தாள்.
இவையெல்லாம் தேவன் வாக்களித்தபடியே
நடந்தது. 3சாராள் ஒரு மகனைப் பெற்றெடுத்
தாள். ஆபிரகாம் அவனுக்கு ஈசாக்கு என்று
பெயரிட்டான். 4ஈசாக்கு பிறந்து எட்டு நாள்
கழிந்தபோது ஆபிரகாம் அவனுக்கு
விருத்தசேதனம் செய்து வைத்தான்.
தேவனின் ஆணைப்படி இவ்வாறு நடந்தது.
5ஈசாக்கு பிறக்கும்போது அவனது தந்தை
ஆபிரகாமுக்கு 100 வயதாயிருந்தது. 6சாராள்,
“தேவன் என்னை மகிழ்ச்சியடையச்
செய்தார். இதைக் கேள்விப்படும் எவரும்
என்னோடு சேர்ந்து மகிழ்ச்சியடைவார்கள்.
7ஆபிரகாமின் குழந்தையை நான்
பெற்றெடுப்பேன் என்று எவரும் நினைத்
திருக்கமாட்டார்கள். ஆனால் நான் இந்த
வயோதிப காலத்திலும் அவருக்கு ஆண்
பிள்ளையைப் பெற்றுக் கொடுத்தேன்”
என்றாள்.

## வீட்டில் பிரச்சனை

8ஈசாக்கு பால்குடிக்க மறக்கும் நாளில்
ஆபிரகாம் பெரிய விருந்து கொடுத்தான்.
9ஆகார் என்னும் எகிப்திய அடிமைப்பெண்
ஆபிரகாமின் முதல் மகனைப் பெற்றிருந்
தாள். சாராள் அவனைப் பார்த்தாள். அவன்
கேலிச் செய்து கொண்டிருப்பதைக் கண்டு
அவளுக்கு அவன்மேல் எரிச்சல் வந்தது.
10சாராள் ஆபிரகாமிடம், “இந்த அடிமைப்
பெண்ணையும் அவள் மகனையும் வெளியே
தள்ளும். நாம் சாகும்போது நமக்குரிய
அனைத்தையும் ஈசாக்கே பெறவேண்டும்.
அந்த அடிமைப் பெண்ணின் மகன் அதில்
பங்கு போடுவதை நான் விரும்பவில்லை”
என்றாள்.
11இது ஆபிரகாமுக்கு துயரத்தைத் தந்தது.
அவன் தன் மகன் இஸ்மவேலைப் பற்றிக்
கவலைப்பட ஆரம்பித்தான். 12ஆனால்
தேவன் ஆபிரகாமிடம், “அடிமைப் பெண்
ணையும், அவள் மகனையும் பற்றிக்
கவலைப்படாதே, சாராள் விரும்புவது
போலவே செய். ஈசாக்கு ஒருவனே உனது
வாரிசு. 13ஆனால் நான் உனது அடிமைப்
பெண்ணின் மகனையும் ஆசீர்வதிப்பேன்.
அவனும் உன் மகன் என்பதால்
அவனிடமிருந்தும் ஒரு பெரிய தேசத்தை
உருவாக்குவேன்” என்றார்.
14மறுநாள் அதிகாலையில் ஆபிரகாம்
கொஞ்சம் தண்ணீரும், உணவும் எடுத்து
அவற்றை ஆகாரிடம் கொடுத்தான். அவள்
அவற்றை எடுத்துக் கொண்டு தன் மகனோடு
வெளியேறி, பெயெர்செபா பாலைவனத்தில்
அலைந்து திரிந்தாள்.
15கொஞ்ச நேரம் கழிந்ததும் தண்ணீர்
தீர்ந்துபோனதால் குடிப்பதற்கு எதுவும்
இல்லாமல் போயிற்று. எனவே ஆகார் தன்
மகனை ஒரு புதரின் அடியில் விட்டாள்.
16ஆகார் கொஞ்ச தூரம் போய் உட்கார்ந்
தாள். அவள் தன் மகன் தண்ணீர்
இல்லாமலேயே மரித்துப்போவான் என்று
எண்ணினாள். அவன் மரிப்பதை அவள்
பார்க்க விரும்பவில்லை. எனவே அவள்
அங்கே உட்கார்ந்து அழ ஆரம்பித்தாள்.
17சிறுவனின் அழுகையை தேவன்
கேட்டார். தேவதூதன் வானத்திலிருந்து
ஆகாரைக் கூப்பிட்டு: “ஆகாரே! உனக்கு
என்ன நடந்தது? அஞ்ச வேண்டாம், கர்த்தர்
சிறுவனின் அழுகையைக் கேட்டார். 18போய்
சிறுவனுக்கு உதவி செய், அவனது

கையைப் பிடித்து வழிநடத்திச்செல். நான்
அவனை ஏராளமான ஜனங்களுக்குத்
தந்தையாக்குவேன்” என்றார்.
19 பிறகு தேவன், ஆகாரை ஒரு கிணற்றைப்
பார்க்கும்படிச் செய்தார். அவள் அந்த
கிணற்றின் அருகே சென்று, தன் பை நிறைய
தண்ணீரை நிரப்பியதுடன், தன் மகனுக்கும்
குடிக்கக் கொடுத்தாள்.
20 அவன் வளர்ந்து ஆளாகும்வரை தேவன்
அவனோடு இருந்தார். இஸ்மவேல் பாலை
வனத்தில் வாழ்ந்து பெரிய வேட்டைக்காரன்
ஆனான். வில்லைப் பயன்படுத்தத் தெரிந்து
கொண்டான். 21 அவனது தாய்
அவனுக்கொரு மனைவியை எகிப்தில்
கண்டுபிடித்தாள். அவர்கள் பாரான்
பாலைவனத்தில் வாழ்ந்தனர்.

### அபிமெலேக்கோடு ஆபிரகாமின் உடன்படிக்கை

22 இவைகளுக்குப் பின்னர் அபிமெலேக்கும்
பிகோலும் ஆபிரகாமோடு பேசினர். பிகோல்
அபிமெலேக்கின் படைத் தளபதி. அவர்கள்
ஆபிரகாமிடம், “நீ செய்கிற எல்லாவற்றிலும்
தேவன் உன்னோடு இருக்கிறார். 23 எனவே
இப்போது எனக்கு தேவனுக்கு முன்பு ஒரு
வாக்குறுதி கொடு. நீ என்னோடும், என்
பிள்ளைகளோடும் நியாயமாக நடந்து
கொள்வேன் என்றும், நீ என்னோடும், நீ
வாழ்கிற இந்தத் தேசத்தோடும் கருணையாய்
இருப்பேன் என்றும் வாக்குறுதி கொடு.
நான் உன்னோடு கருணையாய் இருப்பது
போன்று நீ என்னோடு கருணையாய்
இருப்பதாக உறுதியளி” என்று கேட்டனர்.
24 ஆபிரகாமோ, “நீங்கள் என்னை
நடத்துவது போன்று நானும் உங்களை
நடத்துவேன்” என்று சொன்னான். 25 பிறகு
ஆபிரகாம் அபிமெலேக்கிடம் அரசனின்
ஆட்கள் அவனது கிணற்றை அபகரித்துக்
கொண்டதாய் முறையிட்டான்.
26 ஆனால் அபிமெலேக்கோ, “யார் இதைச்
செய்தது என்று எனக்குத் தெரியாது, இதற்கு
முன் நீ எனக்கு இதைப்பற்றி
சொல்லவில்லை” என்று கூறினான்.
27 ஆகவே, அபிமெலேக்கும் ஆபிரகாமும்
ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டனர்.
அதன்படி ஆபிரகாம் அரசனுக்குச் சில
ஆடுகளையும் மாடுகளையும் ஒப்பந்தத்தின்
அத்தாட்சியாகக் கொடுத்தான். 28 ஆபிரகாம்
ஏழு பெண் ஆட்டுக்குட்டிகளையும் தனியாக
அபிமெலேக்கு முன்பு நிறுத்தினான்.
29 அபிமெலேக்கு ஆபிரகாமிடம், “ஏன்
இவற்றைத் தனியாக இதுபோல் நிறுத்தி
யிருக்கிறாய்” என்று கேட்டான்.
30 அதற்கு ஆபிரகாம், “என்னிடத்திலிருந்து
நீ இவற்றை ஏற்றுக்கொண்டால், அது நான்
இந்தக் கிணற்றைத் தோண்டியதற்கு
அடையாளமாகும்” என்றான்.
31 அதற்குப் பிறகு அந்தக் கிணறு
பெயெர்செபா* என்று அழைக்கப்பட்டது.
ஒருவருக்கொருவர் ஒப்பந்தம் செய்து
கொண்ட இடம் என்று இதற்குப் பொருள்.
32 இவ்வாறு அபிமெலேக்கும் ஆபிரகாமும்
அந்த இடத்தில் ஒரு ஒப்பந்தம் செய்து
கொண்ட பின்னர் அபிமெலேக்கும் அவனது
படையும் அந்த இடத்தை விட்டு
பெலிஸ்தருடைய நாட்டுக்குத் திரும்பிப்
போனார்கள்.
33 ஆபிரகாம் பெயெர்செபாவில் ஒரு புதிய
மரத்தை நட்டு என்றென்றும் ஜீவிக்கும்
தேவனாகிய கர்த்தரிடம் ஜெபித்தான்.
34 ஆபிரகாம் பெலிஸ்தருடைய நாட்டில் நீண்ட
காலம் தங்கியிருந்தான்.

### ஆபிரகாம், தேவனால் சோதிக்கப்படுதல்

22 இதற்குப் பிறகு, தேவன் ஆபிரகாமின்
விசுவாசத்தைச் சோதிக்க விரும்பி
னார். எனவே தேவன் “ஆபிரகாமே” என்று
அழைத்தார்.
ஆபிரகாமும் “நான் இங்கே இருக்கிறேன்”
என்றான்.
2 தேவன் அவனிடம், “உன்னுடைய
அன்பிற்குரிய, ஒரே மகனான ஈசாக்கை
அழைத்துக்கொண்டு மோரியா தேசத்திற்குச்
செல். அங்கு உன் மகனை எனக்கு
தகன பலியாகக் கொடு. எந்த இடத்தில்
அதைச் செய்ய வேண்டுமென்று நான்
உனக்குச் சொல்வேன்” என்றார்.
3 காலையில் ஆபிரகாம் எழுந்து தனது
கழுதையைத் தயார் செய்தான். ஈசாக்கையும்
இரண்டு வேலைக்காரர்களையும் அழைத்துக்
கொண்டான். பலிக்கு விறகுகளையும்
எடுத்துக் கொண்டான். தேவன் போகச்
சொன்ன இடத்திற்கு அவர்கள் போனார்கள்.
4 அவர்கள் மூன்று நாட்கள் பயணம்
செய்தபின் தொலைவில் தேவன் குறிப்பிட்ட
இடம் தெரிந்தது. 5 ஆபிரகாம் தனது
வேலைக்காரர்களிடம், “கழுதையோடு
நீங்கள் இங்கேயே தங்கியிருங்கள், நானும்
என் மகனும் அவ்விடத்திற்கு தொழுது
கொள்ளப் போகிறோம். பிறகு உங்களிடம்
திரும்பி வருவோம்” என்றான்.
6 பலிக்கான விறகுகளை எடுத்து மகனின்
தோள்மீது வைத்தான். ஆபிரகாம்
கத்தியையும், நெருப்பையும் எடுத்துக்
கொண்டு, அவனும் அவனது மகனும்
சேர்ந்து போனார்கள்.
7 ஈசாக்கு தன் தந்தையைப் பார்த்து,
“அப்பா” என்று அழைத்தான்.
ஆபிரகாமும் “என்ன மகனே” எனக்
கேட்டான்.
ஈசாக்கு அவனிடம், “விறகும், நெருப்பும்

---

**பெயெர்செபா** “உறுதி மொழியின் கிணறு” என்று பொருள்படும்.

நம்மிடம் உள்ளது. பலியிடுவதற்கான
ஆட்டுக்குட்டி எங்கே?” என்று கேட்டான்.
8அதற்கு ஆபிரகாம், “தேவனே தனக்கான
பலிக்குரிய ஆட்டுக்குட்டியைக் கொடுப்பார்
மகனே” என்று பதில் சொன்னான்.

### ஈசாக்கு காப்பாற்றப்படுதல்

ஆபிரகாம் அவனது மகனும் 9தேவன்
போகச்சொன்ன இடத்திற்கு போய்ச்
சேர்ந்தனர். அங்கே ஆபிரகாம் ஒரு
பலிபீடத்தைக் கட்டி அதின்மேல் விறகு களை
அடுக்கினான். பின் தன் மகன் ஈசாக்கைப்
பலிபீடத்தின்மேல் கிடத்தினான். 10பிறகு
ஆபிரகாம் கத்தியை எடுத்து மகனை
வெட்டுவதற்குத் தயாரானான்.
11அப்போது கர்த்தருடைய தூதன்
ஆபிரகாமைத் தடுத்து நிறுத்தி, “ஆபிரகாமே
ஆபிரகாமே” என்று அழைத்தார்.
ஆபிரகாம் “நான் இங்கே இருக்கிறேன்”
என்று பதிலளித்தான்.
12தேவதூதன்: “உனது மகனைக் கொல்ல
வேண்டாம். அவனை எவ்விதத்திலும்
காயப்படுத்த வேண்டாம். நீ தேவனை
மதிப்பவன் என்றும், கீழ்ப்படிபவன்
என்பதையும் நான் தெரிந்து கொண்டேன்.
நீ எனக்காக உன் ஒரே ஒரு மகனையும்
கொல்லத் தயாராக உள்ளாய் என்பதையும்
தெரிந்து கொண்டேன்” என்றார்.
13ஆபிரகாம் தொலைவில் தன் கண்
முன் ஒரு ஆட்டுக் கடாவைக் கண்டான்.
அதன் கொம்புகள் புதரில் சிக்கிக்
கொண்டிருந்தன. ஆபிரகாம் அதனை
விடுவித்து தேவனுக்குப் பலியிட்டான்.
ஆபிரகாமின் மகன் காப்பாற்றப்பட்டான்.
14அதனால் ஆபிரகாம் அந்த இடத்திற்கு
“யேகோவாயீரே”* என்று பெயரிட்டான்.
“கர்த்தருடைய பர்வதத்திலே பார்த்துக்
கொள்ளப்படும்” என்று இன்றைக்கும் கூட
ஜனங்கள் கூறுகின்றனர்.
15கர்த்தருடைய தூதன் இரண்டாவது
முறையும் வானத்திலிருந்து ஆபிரகாமை
அழைத்து, 16“எனக்காக உன் மகனைக்
கொல்லத் தயாராக இருந்தாய், இவன்
உனது ஒரே மகன். இதை எனக்காகச்
செய்தாய். 17கர்த்தராகிய நான் உண்மை
யாகவே உன்னை ஆசீர்வதிப்பேன்.
வானத்தில் உள்ள நட்சத்திரங்களைப்
போன்று நான் உன் சந்ததியைப் பெருகச்
செய்வேன். கடற்கரையிலுள்ள மணலைப்
போன்று எண்ணற்ற வாரிசுகளையும்
தருவேன். உனது ஜனங்கள் தங்கள் பகைவர்
களை வெல்லுவார்கள். 18பூமியிலுள்ள
ஒவ்வொரு நாடும் உனது சந்ததி மூலம்
ஆசீர்வாதத்தைப் பெறும். நீ எனக்குக்
கீழ்ப்படிந்தாய். அதனால் இதை நான்
உனக்குச் செய்வேன்” என்றார்.
19பிறகு, ஆபிரகாம் தன் வேலைக்காரர்கள்
இருக்குமிடத்திற்குச் சென்றான், அவர்கள்
அனைவரும் பெயெர்செபாவுக்குத் திரும்பி
னார்கள். ஆபிரகாம் அங்கேயே
தங்கியிருந்தான்.
20இவை எல்லாம் நடந்து முடிந்த பிறகு
ஆபிரகாமுக்கு ஒரு செய்தி வந்தது. அதில்,
“உனது சகோதரன் நாகோருக்கும் அவனது
மனைவி மில்காளுக்கும் குழந்தைகள்
பிறந்துள்ளனர். 21முதல் மகனின் பெயர்
ஊத்ஸ். இரண்டாவது மகனின் பெயர் பூஸ்.
மூன்றாவது மகனின் பெயர் கேமுவேல்.
இவன் ஆராமின் தந்தை. 22மேலும் கேசேத்,
ஆசோ, பில்தாஸ், இத்லாப், பெத்துவேல்
என்பவர்களும் உள்ளனர். பெத்துவேல்
ரெபெக்காளைப் பெற்றான்” என்று
கூறப்பட்டிருந்தது. 23அந்த எட்டு பேரை
மில்க்காள் ஆபிரகாமுடைய சகோதரனாகிய
நாகோருக்குப் பெற்றாள். நாகோர்
ஆபிரகாமின் சகோதரன். 24ரேயுமாள் என்ற
அவனது வேலைக்காரி தேபா, காகாம்,
தாகாஸ், மாகா என்பவர்களைப் பெற்றாள்.

### சாராளின் மரணம்

23 சாராள் 127 ஆண்டுகள் வாழ்ந்தாள்.
2அவள் கானான் நாட்டில் உள்ள
கீரியாத் அர்பா (எபிரோன்) எனும் நகரத்தில்
மரணமடைந்தாள். ஆபிரகாம் மிகவும்
துக்கப்பட்டு அவளுக்காக அழுதான். 3பிறகு
அவன் மரித்துப்போன மனைவியின்
உடலை விட்டு எழுந்து போய் ஏத்தின்
ஜனங்களோடு பேசினான். 4அவன், “நான்
உங்கள் நாட்டில் தங்கி இருக்கும் ஒரு
பிரயாணி. எனவே என் மனைவியைப்
அடக்கம் செய்ய எனக்கு இடமில்லை.
கொஞ்சம் இடம் தாருங்கள், என்
மனைவியை அடக்கம் செய்ய வேண்டும்”
என்று கேட்டான்.
5ஏத்தின் ஜனங்களோ ஆபிரகாமிடம்,
6“ஐயா எங்களிடமுள்ள மகா தேவனின்
தலைவர்களுள் நீங்களும் ஒருவர். உமது
மனைவியின் பிணத்தை அடக்கம் செய்ய
எங்களிடமுள்ள எந்த நல்ல இடத்தையும் நீர்
எடுத்துக் கொள்ளலாம். எங்களுக்குரிய
கல்லறைகளில் உமக்கு விருப்பமான
எதையும் நீர் பெறமுடியும். உமது மனைவி
யை அங்கே அடக்கம் செய்வதை எங்களில்
எவரும் உம்மைத் தடுக்க மாட்டார்கள்”
என்றனர்.
7ஆபிரகாம் எழுந்து அவர்களைக்
குனிந்து வணங்கினான். 8அவன்
அவர்களிடம், “நீங்கள் உண்மையில் எனக்கு
என் மனைவியை அடக்கம் செய்ய உதவ
விரும்பினால், சோகாருடைய மகனாகிய
எப்பெரோனுக்குச் சொல்லுங்கள். 9நான்
மக்பேலா எனப்படும் குகையை விலைக்கு

---

**யேகோவாயீரே** “கர்த்தர் பார்க்கிறார்” அல்லது “கர்த்தர் கொடுக்கிறார்” என்று அர்த்தம்.

வாங்க விரும்புகிறேன். அது எப்பெரோ
னுக்கு உரியது. அது இந்த வயலின்
இறுதியில் உள்ளது. நான் அவனுக்கு முழு
விலையையும் கொடுத்துவிடுவேன். நீங்கள்
அனைவரும் இதற்குச் சாட்சியாக இருக்க
வேண்டும்” என்றான்.
10 எப்பெரோன் ஏத்தின் ஜனங்களிடையில்
உட்கார்ந்திருந்தான். அவன் ஆபிரகாமிடம்,
11 “இல்லை ஐயா, நான் அந்த நிலத்தையும்
குகையையும் உமக்குத் தருவேன். நீர் உமது
மனைவியை அதில் அடக்கம் செய்யலாம்”
என்றான்.
12 பிறகு ஆபிரகாம் ஏத்தின் ஜனங்களிடம்
குனிந்து வணங்கினான். 13 ஆபிரகாம்
அனைவருக்கும் முன்பாக எப்பெரோனிடம்,
“ஆனால் நான் அதற்குரிய விலையைக்
கொடுப்பேன். என்னுடைய பணத்தை
ஏற்றுக்கொள்ள வேண்டும். அதன் பின் என்
மனைவியை அடக்கம் செய்வேன்”
என்றான்.
14 எப்பெரோன் ஆபிரகாமுக்கு, 15 “ஐயா,
நான் சொல்வதைக் கேளுங்கள். நானூறு
சேக்கல் நிறை வெள்ளி என்பது உங்க
ளுக்கும் எனக்கும் சாதாரணமானது. எனவே
நிலத்தை எடுத்துக் கொண்டு மரித்த உங்கள்
மனைவியை அடக்கம் செய்யுங்கள்”
என்றான்.
16 அதனால் ஆபிரகாம் நானூறு சேக்கல்
நிறை வெள்ளியை எடையிட்டுக்
கொடுத்தான்.
17-18 எனவே, எப்பெரோனுடைய நிலம்
ஆபிரகாமுக்குக் கிடைத்தது. இது மம்ரேவின்
கிழக்குப் பகுதியிலுள்ள மக்பேலாவில்
இருந்தது. ஆபிரகாமுக்கு அந்த நிலமும்
அதிலுள்ள மரங்களும் குகையும் சொந்த
மாயின. அவன் செய்த ஒப்பந்தத்தை அங்கு
அனைத்து ஜனங்களும் கண்டனர். 19 இதற்குப்
பிறகே ஆபிரகாம் தன் மனைவியான
சாராளை மம்ரே அருகிலுள்ள கல்லறையில்
அடக்கம் செய்தான். (இது கானான்
நாட்டிலுள்ள எப்பெரோன்.) 20 இப்படி
ஏத்தின் ஜனங்களிடமிருந்து பெறப்பட்ட நிலம்
ஆபிரகாமுக்கு உரியதாகிக் கல்லறை
பூமியாக உறுதிசெய்யப்பட்டது.

### ஈசாக்குக்கு ஒரு மனைவி

24 ஆபிரகாம் மிகவும் வயோதிபனாக
இருந்தான். அவனையும், அவன்
செய்த காரியங்களையும் கர்த்தர்
ஆசீர்வதித்தார். 2 ஆபிரகாமுக்கு ஒரு
வேலைக்காரன் இருந்தான். அவனே
ஆபிரகாமுக்குச் சொந்தமான எல்லாவற்
றுக்கும் பொறுப்பானவனாக இருந்தான்.
ஒரு நாள் ஆபிரகாம் அவனை அழைத்து,
“எனது தொடையின் கீழ் உன் கைகளை
வை. 3 நான் உன்னிடமிருந்து ஒரு
வாக்குறுதியை வாங்க விரும்புகிறேன்,
வானத்திற்கும் பூமிக்கும் அதிபதியான
தேவனாகிய கர்த்தருக்கு முன்னால் எனக்கு
வாக்குறுதிக் கொடு. கானானி
யர்களிடமிருந்து ஒரு பெண்ணை என் மகன்
மணந்துகொள்ள நீ அனுமதிக்கக் கூடாது.
நாம் இவர்கள் மத்தியில் வாழ்கிறோம்.
எனினும் ஒரு கானான் தேசத்துப்
பெண்ணை, அவன் மணந்து கொள்ளக்
கூடாது. 4 எனது சொந்த ஜனங்கள் இருக்கிற
என் நாட்டிற்குத் திரும்பிப்போ. அங்கு என்
மகன் ஈசாக்குக்கு மணமுடிக்க ஒரு
பெண்ணைப்பார்த்து அவளை இங்கு
அழைத்துக் கொண்டு வா” என்றான்.
5 அதற்கு அந்த வேலைக்காரன், “ஒரு
வேளை அந்தப் பெண் இந்த நாட்டிற்கு
என்னோடு வர மறுக்கலாம். எனவே
உங்கள் மகனையும் என்னோடு நான்
அழைத்துச் செல்லலாமா?” என்று
கேட்டான்.
6 ஆபிரகாம் அவனிடம், “இல்லை என்
மகனை அந்த இடத்திற்கு உன்னோடு
அழைத்துச் செல்லக் கூடாது. 7 வானத்திற்கு
தேவனாகிய கர்த்தர் என்னை என் தாய்
நாட்டிலிருந்து இங்கு அழைத்து வந்துள்ளார்.
அது என் தந்தைக்கும் என் குடும்பத்திற்கும்
தாய்நாடு. ஆனால் கர்த்தர் இந்தப் புதிய
நாடே எனது குடும்பத்தின் தாய்நாடு என்று
வாக்குறுதிச் செய்திருக்கிறார். எனவே
கர்த்தர் தன் தூதனை உனக்கு முன்
அனுப்புவாராக. பெண்ணைத் தேர்ந்தெடுக்க
உனக்கு உதவுவார். 8 ஆனால் அந்தப் பெண்
உன்னோடு இங்கு வர சம்மதிக்காவிட்டால்
உனது வாக்குறுதியிலிருந்து நீ விடுதலை
பெறுகிறாய். ஆனால் என் மகனை மட்டும்
அங்கு அழைத்துக் கொண்டு போகக்
கூடாது” என்று கூறினான்.
9 அதன்படி, அந்த வேலைக்காரன் தன்
எஜமானனின் காலடியில் தன் கையை
வைத்து வாக்குறுதி செய்தான்.

### பெண்ணைத் தேடுதல்

10 ஆபிரகாமின் வேலைக்காரன் பத்து
ஒட்டகங்களோடு அங்கிருந்து புறப்பட்டான்.
அவன் தன்னோடு பலவித அழகான
பரிசுப்பொருட்களையும் எடுத்து சென்றான்.
அவன் நாகோரின் நகரமான மெசொப்
பொத்தாமியாவிற்குச் சென்றான். 11 அவன்
ஊருக்கு வெளியே இருந்த கிணற்றினருகே
வந்தடைந்தான். அது பெண்கள் தண்ணீர்
எடுக்க வரும் மாலை நேரம். அங்கே
ஒட்டகங்களைத் தங்கச் செய்தான்.
12 அவன், “என் எஜமானனின்
தேவனாகிய கர்த்தாவே இன்று அவரது
மகனுக்குப் பெண் தேட உதவி செய்யும்.
என் எஜமானரான ஆபிரகாம் மீது கருணை
காட்டும். 13 நான் இந்தக் கிணற்றருகில்
நின்று கொண்டிருக்கிறேன். நகருக்குள்
இருந்து ஏராளமான இளம் பெண்கள்

தண்ணீரெடுக்க வருகின்றனர். 14ஈசாக்குக்குச்
சரியான பெண் யாரென்று அறிந்துகொள்ள
நான் ஒரு சிறப்பான அடையாளத்துக்காகக்
காத்திருக்கிறேன். அதாவது, நான் ஒரு
பெண்ணிடம், 'குடிக்க உன் குடத்தைச்
சாய்க்க வேண்டும்' என்று சொல்லும்போது
எந்தப் பெண், 'குடி' உன் ஒட்டகங்களுக்கும்
தண்ணீர் தருவேன்' என்று கூறுகிறாளோ
அவளையே ஈசாக்கின் மனைவியாகத்
தேர்ந்தெடுக்க வேண்டும். அப்படி நடந்தால்,
அவளே நீர் ஈசாக்கிற்காக தேர்ந்தெடுத்த
சரியான பெண் என்றும் அதன்பின் நீர்
என் எஜமானன் மீது கருணை காட்டினீர்
என்றும் நம்புவேன்" என்றான்.

## பெண்ணைக் கண்டுபிடித்தல்

15அந்த வேலைக்காரன் இவ்வாறு
பிரார்த்தனை செய்து முடிப்பதற்குள் ஒரு
இளம் பெண் தண்ணீரெடுக்க கிணற்றருகே
வந்தாள். இவள் பெத்துவேலின் மகளாகிய
ரெபெக்காள். பெத்துவேல் நாகோருக்கும்
மில்க்காளுக்கும் பிறந்த மகள். நாகோர்
ஆபிரகாமின் சகோதரன். அவள் தோளில்
குடத்தை வைத்துக்கொண்டு தண்ணீரெடுக்க
வந்தாள். 16அவள் மிகவும் அழகுள்ளவளும்,
புருஷனை அறியாத கன்னிகையுமா
யிருந்தாள். அவள் கிணற்றருகே சென்று
தண்ணீரெடுத்து தன் குடத்தை நிறைத்தாள்.
17வேலைக்காரன் அவளிடம் போய், "நான்
குடிக்கக் கொஞ்சம் தண்ணீரை உன்
குடத்திலிருந்து தா" என்று கேட்டான்.
18உடனே ரெபெக்காள் தோளிலிருந்து
குடத்தை இறக்கி, "இதைக் குடியுங்கள்
ஐயா" என்றாள். 19அவன் குடித்து
முடித்ததும் அவள், "உங்கள் ஒட்டகங்கள்
குடிக்கவும் நான் தண்ணீர் ஊற்றுவேன்"
என்று சொல்லி, 20குடத்திலுள்ள தண்ணீர்
முழுவதையும் ஒட்டகம் குடிக்குமாறு
ஊற்றினாள். பிறகு கிணற்றுக்குப் போய்
மேலும் தண்ணீரெடுத்து வந்து எல்லா
ஒட்டகங்களுக்கும் ஊற்றினாள்.
21வேலைக்காரன் அவளை அமைதியாகக்
கவனித்துக் கொண்டிருந்தான். கர்த்தர்
அவனுக்கு ஒரு பதிலளித்தார் என்பதையும்
அவனது பயணத்தை வெற்றிகரமான
தாக்கினார் என்பதையும் உறுதிப்படுத்த
விரும்பினான். 22ஒட்டகங்கள் தண்ணீர்
குடித்தபின் வேலைக்காரன் அவளுக்கு
அரைச் சேக்கல் எடையுள்ள தங்கக்
காதணியும், பத்து சேக்கல் எடையுள்ள
இரண்டு பொன் கடகங்களையும்
கொடுத்தான். 23அவன் அவளிடம், "உனது
தந்தை யார்? உன் தந்தையின் வீட்டில்
நாங்கள் இரவில் தங்க இடம் உண்டா"
என்று கேட்டான்.
24அதற்கு ரெபெக்காள், "என் தந்தை
பெத்துவேல். அவர் நாகோர் மில்க்காள்
ஆகியோரின் மகன்" என்றாள். 25பிறகு
அவள், "எங்கள் வீட்டில், உங்கள்
ஒட்டகங்களுக்கு உணவும், உங்களுக்குப்
படுக்க இடமும் உண்டு" என்றாள்.
26வேலைக்காரன் பணிந்து கர்த்தரைத்
தொழுதுகொண்டான். 27அவன், "எனது
எஜமான் ஆபிரகாமின் தேவனாகிய கர்த்தர்
ஸ்தோத்தரிக்கப்படுவாராக. அவருக்குக்
கர்த்தர் கருணை காட்டி தமது உண்மையை
நிரூபித்துள்ளார். என் எஜமானனின்
மகனுக்கு ஏற்ற பெண்ணிடம் கர்த்தர்
என்னை வழிநடத்திவிட்டார்" என்றான்.
28பிறகு ரெபெக்காள் ஓடிப்போய் தன்
குடும்பத்தாரிடம் நடந்ததை எல்லாம்
சொன்னாள். 29-30அவளுக்கு ஒரு சகோதரன்
இருந்தான். அவன் பெயர் லாபான். அவள்
சொன்னதையெல்லாம் அவன் கேட்டான்.
அவன் அவளது காதணிகளையும்
கடகங்களையும் பார்த்துவிட்டு கிணற்றருகே
ஓடினான். அங்கு கிணற்றருகில் ஒட்டகங்க
ளையும், வேலையாளையும் கண்டான்.
31அவனிடம், "ஐயா, கர்த்தரால்
ஆசீர்வதிக்கப்பட்டவரே உங்களை எங்கள்
வீட்டிற்கு வரவேற்கிறோம். இங்கே வெளியே
நீங்கள் நின்று கொண்டிருக்க வேண்டாம்.
நீங்கள் இளைப்பாற ஒரு அறையை ஏற்பாடு
செய்துள்ளேன். உங்கள் ஒட்டகங்கள்
தங்கவும் ஏற்பாடு செய்துள்ளேன்" என்றான்.
32ஆபிரகாமின் வேலைக்காரன் அந்த
வீட்டிற்குப் போனான். லாபான் அவனுக்கு
உதவினான். ஒட்டகங்களுக்கு உணவு
கொடுத்தான். பிறகு ஆபிரகாமின் வேலைக்
காரனும் அவனது ஆட்களும் கால்களைக்
கழுவிக்கொள்ளத் தண்ணீர் கொடுத்தான்.
33பிறகு அவனுக்கு உண்ண உணவு
கொடுத்தான். ஆனால் வேலையாள் உண்ண
மறுத்துவிட்டான். "நான் ஏன் வந்திருக்
கிறேன் என்பதைச் சொல்வதற்கு முன்
உண்ணமாட்டேன்" என்றான்.

ஆகையால் லாபான், "பிறகு எங்களுக்குச்
சொல்லும்" என்றான்.

## ரெபெக்காளைப் பெண் கேட்டுப் பேசுதல்

34வேலையாள், "நான் ஆபிரகாமின்
வேலைக்காரன். 35கர்த்தர் எல்லாவகையிலும்
என் எஜமானனை சிறப்பாக ஆசீர்வதித்
திருக்கிறார். என் எஜமானன் பெரிய
மனிதராகி விட்டார். அவருக்கு ஆட்டு
மந்தைகளையும் மாட்டு மந்தைகளையும்
கர்த்தர் கொடுத்திருக்கிறார். அவரிடம்
தங்கமும் வெள்ளியும் உள்ளன. நிறைய
வேலைக்காரர்களும் உள்ளனர். ஒட்டகங்
களும் கழுதைகளும் இருக்கின்றன. 36சாராள்
என் எஜமானனின் மனைவி. அவள் தனது
முதிய வயதில் ஆண் குழந்தையை பெற்றாள்.
எனது எஜமானன் தனக்குரிய அனைத்
தையும் அவனுக்கே கொடுத்திருக்கிறார்.

37என் எஜமானன் என்னை ஒரு வாக்குறுதி
செய்யுமாறு வற்புறுத்தினார். என்
எஜமானன் என்னிடம், 'என் மகன் கானான்
நாட்டுப்பெண்ணை மணந்துகொள்ள நீ
அனுமதிக்கக் கூடாது. நாம் கானானியர்
களுக்கிடையில் வாழ்கிறோம். ஆனால்
இங்குள்ள பெண்ணை என் மகன்
மணந்துகொள்ளக் கூடாது. 38அதனால் எனது
தந்தையின் நாட்டிலுள்ள எனது
குடும்பத்தாரிடம் போய் என் மகனுக்குப்
பெண்ணைத் தேர்ந்தெடுக்க வேண்டும்'
என்று சொன்னார். 39அதற்கு நான், என்
எஜமானிடம் 'ஒரு வேளை அந்தப் பெண்
என்னோடு இங்கு வர மறுப்பாள்' என்றேன்.
40உடனே அவர், 'நான் கர்த்தருக்குச் சேவை
செய்கிறேன். எனவே கர்த்தர் தன் தூதனை
உனக்கு முன்பாக அனுப்பி உனக்கு
உதவுவார். அங்கே எனது குடும்பத்தில் என்
மகனுக்கேற்ற பெண்ணைக் கண்டு
பிடிப்பாய்' என்று கூறினார். 41ஆனால்
அவர்கள் என் மகனுக்குப் பெண் கொடுக்க
மறுத்தால் பிறகு நீ செய்த
வாக்குறுதியிலிருந்து விடுதலை பெறுவாய்'
என்றார்.

42"இன்று அந்தக் கிணற்றருகில் வந்து
'என் எஜமானன் ஆபிரகாமின் தேவனாகிய
கர்த்தாவே! எனது பயணத்தை வெற்றிகர
மாக்கும். 43நான் இந்தக் கிணற்றருகில் ஒரு
இளம் பெண்ணுக்காகக் காத்திருப்பேன்.
அவளிடம் குடிக்க தண்ணீர் கேட்பேன்.
44பொருத்தமான பெண் எனில் சிறப்பான
முறையில் சரியான பதிலைத் தருவாள்.
அவள், "இந்த தண்ணீரைக் குடியுங்கள்.
உங்கள் ஒட்டகங்களுக்கும் தண்ணீர்
கொடுப்பேன்" என்பாள். அதன் மூலம்
இந்தப் பெண்ணே என் எஜமானின்
மகனுக்குக் கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்
பட்டவள் என்று அறிவேன்' என்று
பிரார்த்தனை செய்தேன்.

45"நான் வேண்டுதல்களை முடிக்கும்
முன்னரே ரெபெக்காள் தண்ணீர் எடுப்
பதற்காக கிணற்றுக்கு வந்தாள். அவள்
தோளில் குடத்தோடு வந்து தண்ணீரை
நிரப்பினாள். நான் அவளிடம் குடிக்க
தண்ணீர் கேட்டேன். 46அவள் உடனே
வேகமாகக் குடத்தை இறக்கி எனக்கு
தண்ணீர் ஊற்றினதுடன். 'இந்த தண்ணீரைக்
குடியுங்கள். நான் உங்கள் ஒட்டகங்களுக்கும்
தண்ணீர் கொண்டு வருகிறேன்' என்றாள்.
எனவே நான் தண்ணீரைக் குடித்தேன். பிறகு
அவள் என் ஒட்டகங்களுக்கும் தண்ணீர்
கொடுத்தாள். 47பிறகு நான் 'உனது தந்தை
யார்? என்று கேட்டேன். அதற்கு அவள்,
'என் தந்தை பெத்துவேல், அவர்
நாகோருக்கும் மில்க்காளுக்கும் மகன்'
என்றாள். பிறகு அவளுக்கு நான்
காதணிகளும் கடகங்களும் கொடுத்தேன்.
48பின்னர் நான் குனிந்து கர்த்தருக்கு நன்றி
சொன்னேன். என் எஜமானனாகிய
ஆபிரகாமின் தேவனாகிய கர்த்தரைப்
புகழ்ந்தேன். என்னைச் சரியான வழியில்
நடத்தியதற்காக நான் நன்றி சொன்னேன்.
என் எஜமானனின் சகோதரரது பேத்தி
யையே தேவன் காட்டிவிட்டார். 49இப்போது
சொல்லுங்கள். என் எஜமானன் மீது நீங்கள்
கருணையும் நேசமும் வைத்து உங்கள்
பெண்ணைக் கொடுப்பீர்களா? அல்லது
உங்கள் பெண்ணைக் கொடுக்க மறுப்பீர்
களா? சொல்லுங்கள். பின்னரே நான்
செய்ய வேண்டியதை முடிவு செய்ய
வேண்டும்" என்றான்.

50லாபானும் பெத்துவேலும், "இது
கர்த்தரிடமிருந்து வந்த காரியம் என
உணர்கிறோம். ஆகையால் சொல்வதற்கு
ஏதுமில்லை. 51இதோ ரெபெக்காள்
இருக்கிறாள். அவளை அழைத்துக் கொண்டு
போம். அவள் உமது எஜமானனின் மகனை
மணந்து கொள்ளட்டும். இதுவே கர்த்தரின்
விருப்பம்" என்றனர்.

52ஆபிரகாமின் வேலையாள் இதனைக்
கேட்டு தரையில் விழுந்து கர்த்தரை
வணங்கினான். 53பின்னர் தான் கொண்டு
வந்திருந்த பரிசுப் பொருட்களையெல்லாம்
ரெபெக்காளுக்குக் கொடுத்தான். அவன்
அழகான ஆடைகளையும், பொன்னாலும்
வெள்ளியாலும் ஆன நகைகளையும்
கொடுத்தான். அவன் ரெபெக்காளின் தாய்,
சகோதரன் போன்றவர்களுக்கும் விலை
யுயர்ந்த பரிசுகளைக் கொடுத்தான். 54பிறகு
அவனும் அவனோடு வந்தவர்களும் அங்கே
உண்டு இரவில் உறங்கினர். மறுநாள்
அதிகாலையில் அவர்கள் எழுந்து,
"இப்போது நான் என் எஜமானனிடம்
போக வேண்டும்" என்றனர்.

55ரெபெக்காளின் தாயும் சகோதரனும்,
"இவள் இன்னும் பத்து நாட்கள் எங்களோடு
இருக்கட்டும். பிறகு அவளை அழைத்துப்
போகலாம்" என்றனர்.

56ஆனால் வேலையாளோ, "என்னைக்
காத்திருக்கும்படி செய்யாதீர்கள். கர்த்தர் என்
பயணத்தை வெற்றிகரமாக்கியுள்ளார்.
இப்போது என் எஜமானனிடம் போக
விடுங்கள்" என்றான்.

57"ரெபெக்காளின் தாயும் சகோதரனும்,
நாங்கள் ரெபெக்காளை அழைத்து அவளது
விருப்பத்தை அறியவேண்டும்" என்றனர்
58அவர்கள் அவளை அழைத்து, "இப்போது
இவரோடு போக விரும்புகிறாயா?" என்று
கேட்டனர். "ஆம், நான் போகிறேன்" என்று
அவள் சொன்னாள்.

59எனவே, அவர்கள் அவளை
வேலையாளோடும் ஆட்களோடும் அனுப்ப
அனுமதி கொடுத்தனர். ரெபெக்காளின்
தாதியும் அவளோடு போனாள். 60அவள்
அவர்களை விட்டுப் போகும்போது
அவளை ஆசீர்வதித்து:

“எங்கள் சகோதரியே
லட்சக்கணக்கான ஜனங்களுக்கு நீ
தாயாவாய்.
உனது சந்ததியார் தங்கள் பகைவரை
வெல்லுவார்கள்.
நகரங்களைக் கைப்பற்றுவார்கள்”
என்றனர்.

61 பின் ரெபெக்காளும் அவனது தாதியும்
ஒட்டகத்தின் மீது ஏறி அமர்ந்து வேலை
யாளைப் பின்தொடர்ந்து போனார்கள்.
அவன் அவர்களை அழைத்துக் கொண்டு
போனான்.
62 ஈசாக்கு, பெயர்லகாய்ரோயியை விட்டு
பாலைவனப் பகுதியில் வசித்துக்
கொண்டிருந்தான். 63 ஒரு நாள் மாலை
தியானம் செய்ய அவன் வயலுக்குச்
சென்றான். அப்போது வெகு தூரத்திலிருந்து
ஒட்டகங்கள் வருவதைப் பார்த்தான்.
64 ரெபெக்காளும் ஈசாக்கைப் பார்த்தாள்.
பின் அவள் ஒட்டகத்திலிருந்து இறங்கினாள்.
65 அவள் வேலைக்காரனிடம், “வயலில்
நம்மை சந்திக்க வருகிறாரே அந்த இளைஞன்
யார்?” என்று கேட்டாள்.
அதற்கு அவன், “அவர்தான் என்
எஜமானனின் மகன்” என்று பதில்
சென்னான். அவள் தன் முகத்தைத்
துணியால் மறைத்துக் கொண்டாள்.
66 ஈசாக்கிடம் வேலைக்காரன் நடந்ததை
எல்லாம் விபரமாகச் சொன்னான். 67 பின்
ஈசாக்கு அவளை அழைத்துக் கொண்டு
அவனது தாயான சாராளின் கூடாரத்திற்குப்
போனான். அன்று அவள் அவனது
மனைவியானாள். ஈசாக்கு ரெபெக்காளைப்
பெரிதும் நேசித்தான். அவன் தாயின்
மரணத்தினால் அடைந்த துக்கம் குறைந்து
அமைதியும் ஆறுதலும் பெற்றான்.

## ஆபிரகாமின் குடும்பம்

25 ஆபிரகாம் மீண்டும் திருமணம்
செய்தான். அவனது மனைவியின்
பெயர் கேத்தூராள். 2 கேத்தூராள் சிம்ரான்,
யக்ஷான், மேதான், மீதியான், இஸ்பாக்,
சூவாக் போன்றவர்களைப் பெற்றாள்.
3 யக்ஷான் சேபாவையும், தேதானையும்
பெற்றான். தேதானுடைய சந்ததி அசூரீம்,
லெத்தூசீம், லெயூமீம், என்பவர்கள்.
4 மீதியானுக்கு ஏப்பா, ஏப்பேர், ஆனோக்கு,
அபீதா, எல்தாகா என்ற மகன்கள் பிறந்தனர்.
இவர்கள் அனைவரும் கேத்தூராளின்
பிள்ளைகள். 5-6 ஆபிரகாம் மரிப்பதற்குமுன்,
அவன் தன் வேலைக்காரப் பெண்களின்
பிள்ளைகளுக்குப் பரிசுகளைக் கொடுத்து
கிழக்கு நாடுகளுக்கு ஈசாக்கை விட்டு
அப்பால் அவர்களை அனுப்பி வைத்தான்.
பின் ஆபிரகாம் தனக்குரிய எல்லா
வற்றையும் ஈசாக்குக்கு உரிமையாக்கினான்.
7 ஆபிரகாமுக்கு 175 வயது ஆனது.
8 அதனால் அவன் மெலிந்து பலவீனமாகி
மரணமடைந்தான். அவன் ஒரு நீண்ட
திருப்தியான வாழ்க்கை வாழ்ந்தான். அவன்
தனது பிதாக்களோடு சேர்த்துக் கொள்ளப்
பட்டான். 9 அவனது மகன்களான ஈசாக்கும்
இஸ்மவேலும் அவனை மக்பேலா
குகையிலே அடக்கம் செய்தனர். அந்தக்
குகை எப்பெரோனின் வயலில் இருந்தது.
எப்பெரோன் சோகாரின் மகன். அந்த இடம்
மம்ரேக்குக் கிழக்கே இருந்தது. 10 இந்தக்
குகையைத்தான் ஆபிரகாம் ஏத்தின்
ஜனங்களிடமிருந்து விலைக்கு வாங்கியிருந்
தான். சாராளோடு சேர்த்து ஆபிரகாமை
அடக்கம் செய்து விட்டனர். 11 ஆபிரகாம்
மரித்துப்போனபின் தேவன் ஈசாக்கை
ஆசீர்வதித்தார். ஈசாக்கு தொடர்ந்து
பெயர்லகாய்ரோயியில் வாழ்ந்து வந்தான்.
12 பின்வருவது இஸ்மவேலின் குடும்பப்
பட்டியல்: இஸ்மவேல் ஆபிரகாமுக்கும்
ஆகாருக்கும் பிறந்தவன். (ஆகார் சாராளின்
எகிப்திய பணிப்பெண்.) 13 இஸ்மவேலின்
பிள்ளைகளது பெயராவன: மூத்தமகன்
பெயர் நெபாயோத், பின் கேதார்,
தொடர்ந்து அத்பியேல், மிப்சாம். 14 மிஷ்மா,
தூமா, மாசா, 15 ஆதார், தேமா, யெத்தூர்,
நாபீஸ், கேத்மா என்பவர்கள் பிறந்தார்கள்.
இவை அனைத்தும் இஸ்மவேலின்
ஜனங்களின் பெயர்கள் ஆகும். 16 ஒவ்வொரு
மகனும் தங்கள் குடியிருப்புகளை
நகரங்களாக்கிக் கொண்டனர். பன்னிரண்டு
பிள்ளைகளும் தம் ஜனங்களுடன்
பன்னிரண்டு அரசகுமாரர்களைப் போல
வாழ்ந்தனர். 17 இஸ்மவேல் 137 ஆண்டுகள்
வாழ்ந்தான். பின் அவன் மரித்து தன்
முற்பிதாக்களோடு சேர்த்துக்கொள்ளப்
பட்டான். 18 இஸ்மவேலின் சந்ததிகள்
பாலைவனப் பகுதி முழுவதும் பரவி
குடியேறினார்கள். அப்பகுதி ஆவிலா முதல்
சூர் வரை இருந்தது. சூர் எகிப்துக்கு அருகில்
இருந்தது. அங்கிருந்து அசீரியா வரை
பரவிற்று. இஸ்மவேலின் சந்ததிகள்
அவ்வப்போது அவனுடைய சகோதரர்
களின் ஜனங்களைத் தாக்கினார்கள்.

## ஈசாக்கின் குடும்பம்

19 இது ஈசாக்கின் குடும்ப வரலாறு:
ஈசாக்கு ஆபிரகாமின் மகன். 20 ஈசாக்கிற்கு
40 வயதானபோது அவன் ரெபெக்காளை
மணந்து கொண்டான். ரெபெக்காள் பதான்
அராம் என்னும் ஊரைச் சேர்ந்த
பெத்துவேலின் மகள். லாபானுக்குச்
சகோதரி. 21 ஈசாக்கின் மனைவிக்குப்
பிள்ளைப்பேறு இல்லாமல் இருந்தது.
எனவே, அவன் தன் மனைவிக்காகக்
கர்த்தரிடம் ஜெபித்தான். ஈசாக்கின்

ஜெபத்தைக் கேட்டு, கர்த்தர் ரெபெக்காள்
கர்ப்பமடையச் செய்தார்.
22 அவள் கர்ப்பமாக இருந்தபோது,
கருவிலுள்ள குழந்தைகள் மோதிக்
கொண்டதால் மிகவும் கஷ்டப்பட்டாள். அவள்
கர்த்தரிடம் ஜெபித்து, “ஏன் எனக்கு
இவ்வாறு ஏற்படுகிறது?” என்று கேட்டாள்.
23 அதற்கு கர்த்தர், “உனது கர்ப்பத்தில்
இரண்டு நாடுகள் உள்ளன. இரண்டு
குடும்பங்களின் அரசர்கள் உனக்குப்
பிறப்பார்கள். அவர்கள் பிரிக்கப்பட்டு
ஒருவனைவிட இன்னொருவன் பலவானாக
இருப்பான். மூத்தவன் இளையவனுக்குச்
சேவை செய்வான்” என்றார். 24 சரியான
நேரம் வந்தபோது ரெபெக்காள் இரட்டைக்
குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். 25 முதல்
குழந்தை சிவப்பாக இருந்தது. அவனது
உடல் ரோம அங்கி போர்த்தது போல
இருந்தது. எனவே அவன் ஏசா* என்று
பெயர் பெற்றான். 26 இரண்டாவது குழந்தை
பிறந்தபோது, அவன் ஏசாவின்
குதிங்காலைப் பிடித்துக் கொண்டே
வெளியே வந்தான். எனவே அவனுக்கு
யாக்கோபு* என்று பெயரிட்டனர்.
யாக்கோபும் ஏசாவும் பிறக்கும்போது
ஈசாக்குக்கு 60 வயது.
27 பிள்ளைகள் வளர்ந்தார்கள். ஏசா
திறமைமிக்க வேட்டைக்காரன் ஆனான்.
அவன் எப்போதும் வெளியே அலை
வதிலேயே விருப்பப்பட்டான். ஆனால்
யாக்கோபு அமைதியானவன், தன்
கூடாரத்திலேயே தங்கியிருந்தான். 28 ஈசாக்கு
ஏசாவை நேசித்தான். ஏசா வேட்டையாடிய
மிருகங்களை உண்ண ஈசாக்கு விரும்பி
னான். ஆனால் ரெபெக்காள் யாக்கோபை
நேசித்தாள்.
29 ஒரு முறை ஏசா வேட்டை முடித்து
திரும்பிக் கொண்டிருந்தான். அவன்
சோர்வாகவும் பலவீனமாகவும் இருந்தான்.
யாக்கோபு ஒரு பாத்திரத்தில் கூழ் சமைத்துக்
கொண்டிருந்தான். 30 எனவே ஏசா
யாக்கோபிடம், “நான் பலவீனமாகவும்
பசியாகவும் இருக்கிறேன். எனக்குக்
கொஞ்சம் கூழ் கொடு” என்று கேட்டான்
(இதனாலே அவனுக்கு ஏதோம்* என்றும்
பெயராயிற்று.)
31 ஆனால் யாக்கோபோ, அதற்குப்
பதிலாக: “முதல் மகன் என்ற உரிமையை
இன்று எனக்கு விற்றுவிட வேண்டும்”
என்று கேட்டான்.
32 ஏசாவோ, “நான் பசியால் மரித்துக்
கொண்டிருக்கிறேன். நான் மரித்துப்
போனால் என் தந்தையின் சொத்துக்கள்
எல்லாம் எனக்கு உதவுவதில்லை. எனவே
நான் எனது பங்கை உனக்குத் தருகிறேன்”
என்றான்.
33 ஆனால் யாக்கோபு, “முதலில் உன்
பங்கைத் தருவதாகச் சத்தியம் செய்”
என்றான். ஆகையால் ஏசாவும் சத்தியம்
செய்தான். அவன் மூதாதையர் சொத்தாக
தனக்குக் கிடைக்கவிருந்த பங்கை
யாக்கோபுக்கு விற்று விட்டான். 34 பிறகு
யாக்கோபு ஏசாவுக்கு அப்பத்தையும்
பயற்றங்கூழையும் கொடுத்தான். ஏசா
அவற்றை உண்டு, விலகிப் போனான்.
இவ்வாறு ஏசா தனது பிறப்புரிமையைப்
பற்றி கவலைப்படாமல் இருந்தான்.

### ஈசாக்கு அபிமெலேக்கிடம் பொய் சொல்கிறான்

26 ஒரு முறை பஞ்சம் உண்டாயிற்று.
இது ஆபிரகாம் காலத்தில் ஏற்பட்டது
போல் இருந்தது. எனவே ஈசாக்கு கேரார்
நகருக்குப் போனான். அதனை அபிமெ
லேக்கு ஆண்டு வந்தான். அவன் பெலிஸ்திய
ஜனங்களின் அரசன். 2 கர்த்தர் ஈசாக்கின்
முன்பு தோன்றி, “நீ எகிப்துக்குப் போக
வேண்டாம். நான் எங்கே உன்னை வசிக்கச்
சொல்கிறேனோ அங்கே இரு. 3 நான்
உன்னோடு இருப்பேன். உன்னை
ஆசீர்வதிப்பேன். நான் உனக்கும் உன்
வாரிசுகளுக்கும் இந்தப் பகுதியைத்
தருவேன். உன் தந்தையான ஆபிரகாமுக்குச்
செய்த வாக்கின்படி உனக்குத் தருவேன்.
4 வானத்து நட்சத்திரங்களைப் போன்று உன்
குடும்பத்தைப் பெருகச் செய்வேன். இந்த
நிலப்பகுதிகளையெல்லாம் உன் குடும்பத்
தாருக்கே தருவேன். உன் சந்ததிகள் மூலம்
உலகிலுள்ள அனைத்து நாடுகளையும்
ஆசீர்வதிப்பேன். 5 நான் இவற்றைச்
செய்வேன். ஏனென்றால் உன் தந்தை
எனக்குக் கீழ்ப்படிந்து நான் சொன்னபடி
நடந்தான். எனது ஆணைகள், சட்டங்கள்,
விதிகள் அனைத்துக்கும் ஆபிரகாம்
கீழ்ப்படிந்தான்” என்றார்.

6 ஆகவே, ஈசாக்கு கேராரிலியே
தங்கினான். 7 ஈசாக்கின் மனைவியான
ரெபெக்காள் மிகவும் அழகானவள். அங்குள்
ளவர்கள் அவளைப்பற்றி ஈசாக்கிடம்
கேட்டனர். அதற்கு ஈசாக்கு, அவர்களிடம்
ரெபெக்காள் தன் மனைவி என்று சொல்ல
அஞ்சி “அவள் என் சகோதரி” என்று
சொன்னான். தன்னைக் கொன்று அவளை
அபகரித்துக் கொள்வார்கள் என
எண்ணினான்.

---

**ஏசா** இப்பெயர் “ரோமங்களுள்ளவன்” எனப் பொருள்படும்.

**யாக்கோபு** எபிரெய மொழியில் இப்பெயரின் பொருள் “குதிங்கால்” எனப்படும் அது “பின் தொடருகிறவன்” அல்லது “தந்திரசாலி” எனவும் பொருள்படும்.

**ஏதோம்** “சிவப்பு நிறம்” எனப் பொருள்படும்.

8 ஈசாக்கு அங்கே நீண்ட காலம்
வாழ்ந்தபோது, அபிமெலேக்கு ஒரு நாள்
தன் ஜன்னல் வழியாக ஈசாக்கு ரெபெக்
காளோடு விளையாடுவதைக் கவனித்தான்.
9 அபிமெலேக்கு ஈசாக்கை அழைத்து
அவனிடம், “இவள் உன் மனைவி அல்லவா,
அவள் உன் சகோதரி என்று ஏன் பொய்
சொன்னாய்?” என்று கேட்டான். ஈசாக்கு,
“என்னைக் கொன்று இவளை அபகரித்துக்
கொள்வாயோ என்று பயந்தேன்” என்றான்.
10 “நீ எங்களுக்குத் தீயதைச் செய்து
விட்டாய், ஒருவேளை எங்களில் ஒருவன்
உன் மனைவியோடு பாலின உறவு கொண்
டிருந்தால் பெரிய குற்றம் செய்த பாவத்துக்கு
அவன் ஆளாகி இருக்கக் கூடும்” என்று
அபிமெலேக்கு கூறினான்.
11 ஆகையால் அபிமெலேக்கு அனைவருக்
கும் எச்சரிக்கை விடுத்தான், “இவனையோ
இவன் மனைவியையோ யாரும்
துன்புறுத்தக்கூடாது. அப்படிச் செய்ய
முயல்வோர் கொல்லப்படுவர்” என்றான்.

### ஈசாக்கு செல்வந்தன் ஆகுதல்

12 ஈசாக்கு அங்கேயே நிலங்களில் விதை
விதைத்தான். அவ்வாண்டு அவனுக்கு
பெரும் அறுவடை கிடைத்தது. கர்த்தர்
அவனை ஆசீர்வதித்தார். 13 ஈசாக்கு
செல்வந்தன் ஆனான். தொடர்ந்து அவன்
பெரிய செல்வந்தனாக வளர்ந்து கொண்
டிருந்தான். 14 அவனுக்கு நிறைய
மந்தைகளும், அடிமைகளும் இருந்தனர்.
பெலிஸ்திய ஜனங்கள் அவன்மீது பொறாமை
கொண்டனர். 15 ஆகவே அவர்கள் முற்
காலத்தில் ஆபிரகாமும் அவனது வேலைக்
காரர்களும் தோண்டிய கிணறுகள்
அனைத்தையும் மண்ணால் நிரப்பி
அழித்தனர். 16 அபிமெலேக்கு ஈசாக்கிடம்,
“எங்கள் நாட்டைவிட்டுப் போ. நீ எங்களை
விட பெரும் அதிகாரம் பெற்றிருக்கிறாய்”
என்றான்.
17 எனவே ஈசாக்கு அந்த இடத்தை
விட்டுப் போய், கேராரில் உள்ள சிறு
நதியின் கரையில் குடியேறினான். 18 இதற்கு
ரொம்ப காலத்திற்கு முன்பே ஆபிரகாம்
நிறைய கிணறுகள் தோண்டியிருந்தான்.
ஆபிரகாம் மரித்தபின்பு, பெலிஸ்திய
ஜனங்கள் அவற்றை மண்ணால் தூர்த்து
விட்டனர். அதன் பின்பு ஈசாக்கு மீண்டும்
அக்கிணறுகளைத் தோண்டினான். அவற்
றிற்கு தன் தந்தை இட்ட பெயர்களையே
இட்டான். 19 ஈசாக்கின் வேலைக்காரர்களும்
நதிக்கரையில் ஒரு கிணறு தோண்டினார்கள்.
அதிலிருந்து ஒரு பெரும் ஊற்று வந்தது.
20 ஆனால் அங்கு ஆடு மேய்த்துக்
கொண்டிருந்தவர்கள் வேலைக்காரர்களோடு
வாக்குவாதம் செய்து தண்ணீர் தங்க
ளுடையது என உரிமை கொண்டாடினர்
அதனால் ஈசாக்கு அதற்கு ஏசேக்கு என்று
பெயர் வைத்தான்.
21 பிறகு ஈசாக்கின் வேலைக்காரர்கள்
இன்னொரு கிணற்றைத் தோண்டினர்.
அங்குள்ள ஜனங்கள் அது தொடர்பாகவும்
வாக்குவாதம் செய்தனர். எனவே ஈசாக்கு
அதற்கு சித்னா என்று பெயரிட்டான்.
22 ஈசாக்கு அங்கிருந்து நகர்ந்து போய்
வேறொரு கிணறு தோண்டினான். எவரும்
அதுபற்றி வாதிட வரவில்லை. அதனால்
அதற்கு ரெகொபோத் என்று பெயரிட்டான்.
“இப்போது கர்த்தர் நமக்கென்று ஒரு
இடத்தைக் கொடுத்துவிட்டார். எனவே நாம்
இங்கே செழித்து நாட்டில் பெருகுவோம்”
என்றான்.
23 அங்கிருந்து ஈசாக்கு பெயர்செபாவுக்குப்
போனான். 24 அன்று இரவு கர்த்தர்
அவனோடு பேசி, “நானே உனது தந்தை
ஆபிரகாமின் தேவன், அஞ்சவேண்டாம்.
நான் உன்னோடு இருக்கிறேன். நான்
உன்னை ஆசீர்வதிப்பேன். உன் குடும்பத்தை
பெரிதாக்குவேன். எனது ஊழியனான
ஆபிரகாமுக்காக இதனைச் செய்வேன்”
என்று சொன்னார். 25 எனவே, ஈசாக்கு
அந்த இடத்தில் ஒரு பலிபீடத்தைக் கட்டி
கர்த்தரை தொழுதுக்கொண்டு அங்கேயே
குடியேறினான். அவனது வேலைக்காரர்கள்
அங்கே ஒரு கிணறு தோண்டினர்.

26 அபிமெலேக்கு கேராரிலிருந்து ஈசாக்
கைப் பார்க்க வந்தான். அவன் தன்னோடு
தன் அமைச்சரான அகுசாத்தையும்
அழைத்து வந்தான். மீகோல் எனும்
படைத்தளபதியும் கூட வந்தான்.
27 “என்னை ஏன் பார்க்க வந்தீர்கள்?
இதற்கு முன் என்னை நீங்கள் வெறுத்தீர்கள்.
உங்கள் நாட்டை விட்டு துரத்தினீர்களே”
என்று ஈசாக்கு கேட்டான்.
28 “கர்த்தர் உன்னோடு இருக்கிறார்
என்பதை இப்போது தெரிந்து கொண்டோம்.
நாம் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்.
29 நாங்கள் உன்னைத் துன்புறுத்தவில்லை.
நீயும் எங்களைத் துன்புறுத்தமாட்டாய்
என்று வாக்குறுதி செய். நாங்கள் உன்னைச்
சமாதானத்தோடுதான் வெளியே அனுப்பி
னோம். கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கிறார்
என்பது இப்போது தெளிவாகி விட்டது”
என்றனர்.
30 அதனால் ஈசாக்கு அவர்களுக்கு விருந்து
கொடுத்தான். அவர்கள் நன்றாக உண்டு,
குடித்தனர். 31 மறுநாள் அதிகாலையில்
ஒருவரோடொருவர் வாக்குறுதி செய்து
கொண்டபின், அவர்கள் சமாதானத்தோடு
பிரிந்து போனார்கள்.
32 அன்று, ஈசாக்கின் வேலைக்காரர்கள்
வந்து தாங்கள் தோண்டிய கிணற்றைப்
பற்றிக் கூறினர். “அதில் தண்ணீரைக்
கண்டோம்” என்றனர். 33 அதனால் ஈசாக்கு

*அதற்கு சேபா* என்று பெயரிட்டான். அந்த
நகரமே பெயெர்செபா* என்று இன்றும்
அழைக்கப்படுகிறது.*

### ஏசாவின் மனைவியர்

34 *ஏசாவுக்கு 40 வயது ஆனபோது, அவன்
ஏத்தியரான இரு பெண்களை மணந்து
கொண்டான். ஒருத்தி பெயேரியின் மகளான
யூதித், இன்னொருத்தி ஏலோனுடைய
மகளான பஸ்மாத்.* 35 *இவர்களால் ஈசாக்கும்
ரெபெக்காளும் பாதிக்கப்பட்டனர்.*

### வாரிசு சிக்கல்கள்

27 *ஈசாக்கு வயோதிபன் ஆனான்.
அவனது கண்கள் பலவீனமாகி
அவனால் தெளிவாகப் பார்க்க முடிய
வில்லை. ஒரு நாள் தன் மூத்த மகன்
ஏசாவை அழைத்து "மகனே" என்றான்.
ஏசா "இங்கே இருக்கிறேன்" என்றான்.*
2 *ஈசாக்கு அவனை நோக்கி, "எனக்கு
வயதாகிவிட்டது. விரைவில் நான் செத்துப்
போகலாம்.* 3 *எனவே, உன் வில்லையும்
அம்பையும் எடுத்துக் கொண்டு
வேட்டைக்குப் போ. நான் உண்பதற்காக
ஒரு மிருகத்தைக் கொன்று வா.* 4 *நான்
விரும்புகிற அந்த உணவைத் தயாரித்து
வா. அதை நான் உண்ண வேண்டும்.
மரிப்பதற்கு முன் உன்னை ஆசீர்வதிப்பேன்"
என்றான்.* 5 *எனவே ஏசா வேட்டைக்குப்
போனான்.*

### யாக்கோபு ஈசாக்கை ஏமாற்றியது

*ஈசாக்கு ஏசாவிடம் கூறுவதை
ரெபெக்காள் கேட்டுக் கொண்டிருந்தாள்.*
6 *இதனை அவள் யாக்கோபிடம் கூறினாள்.
"கவனி! உன் தந்தை உன் சகோதரனிடம்
கூறுவதைக் கேட்டேன்.* 7 *அவர் 'நான்
உண்பதற்கு ஒரு மிருகத்தைக் கொன்று,
எனக்கு உணவை சமைத்து வா. நான்
உண்பேன். பிறகு நான் மரிப்பதற்கு முன்
உன்னை ஆசீர்வதிப்பேன்' என்றார்.*
8 *எனவே மகனே நான் சொல்வதைக்
கவனித்து அதன்படி செய்.* 9 *நீ நமது
ஆட்டு மந்தைக்குப் போ. இரண்டு இளம்
ஆட்டுக் குட்டிகளைக் கொண்டு வா. உன்
தந்தை விரும்புவதுபோல நான் சமைத்து
தருவேன்.* 10 *பிறகு அதனை உன் தந்தைக்குக்
கொடு. அவர் உன்னைத் தான் மரிப்பதற்கு
முன்னர் ஆசீர்வதிப்பார்" என்றாள்.*
11 *ஆனால் அவன் தாயிடம், "என்
சகோதரனோ உடல் முழுவதும் முடி
உள்ளவன். நான் அவ்வாறில்லை.* 12 *என்
தந்தை என்னைத் தொட்டுப் பார்த்தால்
நான் ஏசா இல்லை என்பதைத் தெரிந்து
கொள்வார். பின் அவர் என்னை
ஆசீர்வதிக்க மாட்டார்; சபித்து விடுவார்.
நான் ஏமாற்றியதை அறிந்து கொள்வாரே"
என்றான்.*
13 *அதனால் ரெபெக்காள் அவனிடம்,
"ஏதாவது தவறு ஏற்பட்டால் அதற்கான
சாபம் என்மேல் விழட்டும், நீ போய்
எனக்காக இரண்டு ஆட்டுக் குட்டிகளைக்
கொண்டு வா" என்றாள்.*
14 *அதனால் யாக்கோபு வெளியே போய்
இரண்டு ஆட்டுக் குட்டிகளைக் கொண்டு
வந்தான். அவள் அதனை ஈசாக்கு விரும்பும்
வகையில் சிறப்பான முறையில் சமைத்தாள்.*
15 *பின்னர் ரெபெக்காள் ஏசா விரும்பி
அணியும் ஆடைகளை தேர்ந்தெடுத்து யாக்
கோபுக்கு அணிவித்தாள்.* 16 *ஆட்டுத் தோலை
யாக்கோபின் கைகளிலும் கழுத்திலும்
கட்டினாள்.* 17 *பிறகு அவள் மகன்
யாக்கோபிடம் அவள் செய்த ரொட்டியையும்
சுவையான உணவையும் கொடுத்து
அனுப்பி வைத்தாள்.*
18 *யாக்கோபு தந்தையிடம் போய்,
"அப்பா" என்று அழைத்தான். அவன்
தந்தையோ, "மகனே, நீ யார்?" என்று
கேட்டான்.*
19 *யாக்கோபு தன் தந்தையிடம், "நான்
ஏசா, உங்கள் மூத்த மகன். நீங்கள்
சொன்னபடி செய்துள்ளேன். இப்போது
உட்கார்ந்து நான் வேட்டையாடிக் கொண்டு
வந்த இறைச்சியை உண்ணுங்கள். பிறகு
என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள்"
என்றான்.*
20 *ஆனால் ஈசாக்கு தன் மகனிடம்,
"இவ்வளவு வேகமாக நீ எவ்வாறு
வேட்டையாடி மிருகத்தைக் கொன்றாய்?"
என்று கேட்டான். இதற்கு யாக்கோபு
"உங்கள் தேவனாகிய கர்த்தர் விரைவாக
வேட்டையாடி மிருகத்தைக் கொல்ல
எனக்கு உதவினார்" என்று சொன்னான்.*
21 *பிறகு ஈசாக்கு யாக்கோபிடம், "என்
அருகிலே வா. உன்னைத் தொட்டுப் பார்க்க
வேண்டும். அப்போது தான் நீ என்
மகன் ஏசாவா இல்லையா என்று
தெரிந்துகொள்ள முடியும்" என்றான்.*
22 *யாக்கோபு அவனது அருகிலே
போனான். ஈசாக்கு அவனைத் தொட்டுப்
பார்த்துவிட்டு, "உனது சத்தம்
யாக்கோபினுடையதுபோல் உள்ளது.
ஆனால் உனது கைகள் ஏசாவின் கைகள்
போல் முடி நிறைந்ததாய் இருக்கிறது"
என்றான்.* 23 *ஈசாக்கினால் அவனை
யாக்கோபு என்று கண்டுகொள்ள முடிய
வில்லை. எனவே, அவனை ஆசீர்வதித்தான்.*
24 *எனினும் ஈசாக்கு, "உண்மையில் நீ
என்னுடைய மகன் ஏசாதானா?" என்று
கேட்டான். யாக்கோபு, "ஆமாம்" என்று
பதில் சொன்னான்.*

---

**சேபா** *"ஏழு" அல்லது "உறுதி மொழி."*

**பெயர்செபா** *"உறுதி மொழியின் கிணறு" என்று பொருள்படும்.*

### யாக்கோபிற்கு ஆசீர்வாதம்

25பிறகு ஈசாக்கு "அந்த உணவைக்
கொண்டு வா. அதனை உண்டு விட்டு
உன்னை ஆசீர்வதிக்கிறேன்" என்றான்.
எனவே யாக்கோபு உணவைக் கொடுத்தான்.
அவனும் அதை உண்டான். பின் யாக்கோபு
கொஞ்சம் திராட்சைரசத்தைக் கொடுத்தான்.
அதையும் அவன் குடித்தான்.
26பிறகு ஈசாக்கு அவனிடம், "மகனே
அருகில் வந்து என்னை முத்தமிடு"
என்றான். 27எனவே யாக்கோபு அருகிலே
போய் தந்தையை முத்தமிட்டான். ஈசாக்கு
அவனது ஆடையை நுகர்ந்து பார்த்து
அவனை ஏசா என்றே நம்பி ஆசீர்
வதித்தான்.

"என் மகன் கர்த்தரால்
ஆசீர்வதிக்கப்பட்ட வயலைப்
போன்று மணக்கிறான்.
28 கர்த்தர் உனக்கு மிகுதியாக
மழையைத் தரட்டும்.
அதனால் நீ பூமியின் செல்வத்தைப்
பெறுவாய்.
29 எல்லா ஜனங்களும் உனக்குச்
சேவை செய்யட்டும்.
நாடுகள் உனக்கு அடிபணியட்டும்.
உன் சகோதரர்களையும் நீ ஆள்வாய்.
உன் தாயின் மகன்கள் உனக்கு
அடிபணிந்து கீழ்ப்படிவார்கள்.
உன்னைச் சபிக்கிறவர்கள்
சபிக்கப்படுவார்கள்.
உன்னை ஆசீர்வதிப்பவர்கள்
ஆசீர்வதிக்கப்படுவார்கள்"
என்று கூறினான்.

### ஏசாவின் ஆசீர்வாதம்

30ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்து
முடித்தான். யாக்கோபு தந்தையிடமிருந்து
போன உடனேயே ஏசா வேட்டையை
முடித்துவிட்டு உள்ளே வந்தான்.
31தந்தைக்கென வேட்டையாடிய மிருகத்தைச்
சிறப்பாக சமைத்தான். அதனை எடுத்துக்
கொண்டு தந்தையிடம் போனான். "தந்தையே
நான் உங்களின் மகன் எழுந் திருங்கள்.
உங்களுக்காக வேட்டையாடி சமைத்துக்
கொண்டுவந்த உணவை உண்ணுங்கள்.
பிறகு என்னை ஆசீர்வதி யுங்கள்" என்றான்.
32ஆனால் ஈசாக்கோ "நீ யார்" என்று
கேட்டான். "நான்தான் உங்கள் மூத்தமகன்
ஏசா" என்றான்.
33அதனால் ஈசாக்கு அதிர்ச்சியும்
வருத்தமும் அடைந்தான். "நீ வருவதற்கு
முன்னால் இறைச்சி உணவு சமைத்துக்
கொடுத்துவிட்டுப் போனானே அவன் யார்?
நான் அதனை உண்டு அவனை ஆசீர்வாதம்
செய்தேனே. அவன் ஆசீர்வதிக்கப்
பட்டவனாகவும் இருப்பான்" என்றான்.
34ஏசா தந்தையின் வார்த்தைகளைக்
கேட்டான். பிறகு கோபமும் ஆத்திரமும்
அடைந்து அழுதான். தந்தையிடம் "என்னை
யும் ஆசீர்வாதம் செய்யுங்கள்" என்றான்.
35ஈசாக்கு அவனிடம், "உன் தம்பி
என்னை ஏமாற்றிவிட்டான். அவன் வந்து
உனது ஆசீர்வாதத்தை எடுத்துக்கொண்டு
போய்விட்டான்" என்றான்.
36"அவன் பெயரே யாக்கோபு. (தந்திரசாலி
என்றும் பொருள்.) அவனுக்குப் பொருத்த
மான பெயர்தான். அவன் இருமுறை
என்னை ஏமாற்றி இருக்கிறான். முன்பு
முதல் மகன் என்ற உரிமைப் பங்கையும்
அவன் பெற்றுக்கொண்டான். இப்போதோ
எனது ஆசீர்வாதங்களையும் எடுத்துக்
கொண்டானே" என்று புலம்பினான். பிறகு,
"எனக்கென்று ஏதாவது ஆசீர்வாதம் மீதி
இருக்கிறதா" என்று கேட்டான்.
37அதற்கு ஈசாக்கு, "இல்லை. இப்போது
மிகவும் தாமதமாகிவிட்டது. நான் அவனுக்கு
உன் மீது ஆளுகை செலுத்தும்படி
ஆசீர்வதித்துவிட்டேன். அவனது சகோதரர்
கள் அனைவரும் அவனுக்கு வேலை
செய்வார்கள் என்றும் கூறிவிட்டேன்.
ஏராளமான உணவும் திராட்சைரசமும்
பெறுவான் என்றும் ஆசீர்வதித்து விட்
டேன். உனக்கென்று தர எதுவும்
இல்லையே" என்றான்.
38ஆனால் தொடர்ந்து ஏசா தந்தையை
கெஞ்சிக் கொண்டிருந்தான். "அப்பா
உங்களிடம் ஒரு ஆசீர்வாதம்தான் உள்ளதா,
என்னையும் ஆசீர்வதியுங்கள்" என்று
அழுதான்.
39பிறகு ஈசாக்கு:

"நல்ல நிலத்தில் நீ வாழ மாட்டாய்.
அதிக மழை இருக்காது.
40 நீ உன் பட்டயத்தால்தான் வாழ்வாய்.
உன் தம்பிக்கு நீ அடிமையாகவும்
இருக்கவேண்டும்.
ஆனால் விடுதலைக்காகச்
சண்டையிட்டு அவனது கட்டுகளை
உடைத்து விடுவாய்" என்றார்.

41அதற்குப் பின் ஏசா யாக்கோபுக்கு
எதிராக வஞ்சகம் கொண்டான்.
ஏனென்றால் தந்தையின் ஆசீர்வாதத்தை
அவன் பெற்றுள்ளான். "என் தந்தை
விரைவில் மரித்து போவார். அதனால்
நான் சோகமடைவேன். அதற்குப் பின்
நான் யாக்கோபை கொன்று விடுவேன்"
என்று தனக்குள் ஏசா கூறிக்கொண்டான்.
42யாக்கோபை கொல்ல வேண்டும் என்ற
ஏசாவின் திட்டத்தை ரெபெக்காள்
அறிந்துகொண்டாள். அவள் யாக்கோபை
அழைத்து அவனிடம், "உன் சகோதரன் ஏசா
உன்னைக் கொல்லத் திட்டமிடுகிறான்.
43எனவே நான் சொல்கிறபடி நீ செய்.

*ஆரானில் இருக்கிற என் சகோதரன்
லாபானிடம் ஓடிச்சென்று அவனோடு இரு.
44உன் சகோதரனின் கோபம் தீரும்வரை
அங்கேயே இரு. 45கொஞ்சக் காலம் ஆனதும்
உன் சகோதரன் நீ செய்ததை மறந்து
விடுவான். பிறகு உன்னை இங்கு அழைக்க
ஒரு வேலைக்காரனிடம் செய்தியைச்
சொல்லி அனுப்புவேன். ஒரே நாளில் எனது
இரண்டு மகன்களையும் நான் இழக்க
விரும்பவில்லை” என்றாள்.*

*46பிறகு ரெபெக்காள் ஈசாக்கிடம், ‘உமது
மகன் ஏசா ஏத்தியர் பெண்களை
மணந்துகொண்டான். நான் அந்தப் பெண்
களால் பாதிக்கப்பட்டிருக்கிறேன். ஏனெனில்
அவர்கள் நம் இனத்தவர்களல்ல. யாக்கோபும்
இதுபோல் மணம் செய்தால் நான் மரித்துப்
போவேன்” என்றாள்.*

### யாக்கோபு மனைவியைத் தேடுதல்

*28 ஈசாக்கு யாக்கோபை அழைத்து
அவனை ஆசீர்வதித்தான். அவனுக்கு
ஒரு ஆணையிட்டான். “நீ ஒரு கானானியப்
பெண்ணை மனைவியாக்கக் கூடாது.
2எனவே நீ இந்த இடத்தைவிட்டுப் பதான்
ஆராமுக்குப் போ. உன் தாயின் தந்தையான
பெத்துவேல் வீட்டிற்குப்போ. உன் தாயின்
சகோதரனான லாபான் அங்கு வாழ்கிறான்.
அவனது மகள்களில் ஒருத்தியை மணந்து
கொள். 3சர்வ வல்லமையுள்ள தேவன்
உன்னை ஆசீர்வதிப்பார். உனக்கு நிறைய
குழந்தைகள் பிறப்பார்கள். ஒரு பெரிய
தேசத்தின் தந்தையாவாய். 4தேவன்
உன்னையும் உன் குழந்தைகளையும் ஆசீர்
வதிப்பார். ஆபிரகாமையும் அப்படித்தான்
ஆசீர்வதித்தார். நீ வாழ்கிற நாடு உனக்குச்
சொந்தமாகும். தேவன் ஆபிரகாமுக்குக்
கொடுத்த நாடு இது” என்றான்.*

*5ஆகவே ஈசாக்கு யாக்கோபை பதான்
ஆராமுக்கு அனுப்பிவைத்தான். யாக்கோபும்
லாபானிடம் போனான். பெத்துவேல்
லாபானுக்கும் ரெபெக்காளுக்கும் தந்தை.
ரெபெக்காள் ஏசாவுக்கும் யாக்கோபுக்கும்
தாய்.*

*6தன் தந்தை யாக்கோபை ஆசீர்வதித்
ததையும் ஒரு மனைவியைத் தேட
யாக்கோபை பதான் ஆராமுக்கு தன் தந்தை
அனுப்பியதையும், கானானியப் பெண்களை
மணந்துகொள்ளக் கூடாது என்று ஆணை
இட்டதையும் ஏசா அறிந்துகொண்டான்.
7யாக்கோபு தன் தாயும், தந்தையும்
சொன்னதைக்கேட்டு அதற்குக் கீழ்படிந்து
பதான் ஆராமுக்குப் போனதையும்
அறிந்தான். 8இதனால் ஈசாக்கு தம்
பிள்ளைகள் கானானியப் பெண்களை
மணந்துகொள்வதை விரும்பவில்லை என்ப
தையும் தெரிந்து கொண்டான். 9அவனுக்கு
ஏற்கெனவே இரண்டு மனைவியர் இருந்
தனர். ஆனாலும் அவன் இஸ்மவேலிடம்
போய் அவன் மகளாகிய மகலாத்தை
மணந்துக் கொண்டான். இஸ்மவேல்
ஆபிரகாமின் மகன். மகலாத் நெபாயோத்தின்
சகோதரி.*

### பெத்தேல் - தேவனுடைய வீடு

*10யாக்கோபு பெயெர்செபாவை விட்டு
ஆரானுக்குப் போனான். 11அவன்
பயணத்தின்போது சூரியன் மறைந்தது.
அன்றைய இரவு தங்கும்பொருட்டு ஒரு
இடத்துக்குச் சென்றான். அங்கே ஒரு கல்லை
எடுத்து அதை தலைக்கு வைத்துக்கொண்டு
படுத்தான். 12யாக்கோபு ஒரு கனவு
கண்டான். கனவில் வானத்தைத் தொடும்
அளவுக்கு உயரமாய் இருந்த ஒரு ஏணியைக்
கண்டான். தேவதூதர்கள் அதில் ஏறி மேலும்
கீழும் வந்து போய்க் கொண்டி ருந்தனர்.
13கர்த்தர் ஏணியின் அருகில் நின்று
கொண்டிருப்பதையும் கண்டான். கர்த்தர்,
“நானே தேவன். உன் தாத்தாவான
ஆபிரகாமுக்கும் நானே தேவன். நான்
ஈசாக்குக்கும் தேவன். இப்போது நீ
படுத்திருக்கிற பூமியையே உனக்குக்
கொடுப்பேன். இது உனக்கும் உன்
பிள்ளைகளுக்கும் உரியதாகும். 14உனக்கு
எண்ணிறந்த சந்ததிகள் உருவாகுவார்கள்.
பூமியில் உள்ள தூளைப்போன்று அவர்கள்
எண்ணிக்கையில் நிறைந்திருப்பார்கள்.
அவர்கள் கிழக்கிலும் மேற்கிலுமாக வடக்
கிலும் தெற்கிலுமாகப் பரவுவார்கள். உன்ன
ாலும் உன் சந்ததிகளாலும் உலகிலுள்ள
குடும்பங்கள் எல்லாம் ஆசீர்வதிக்கப்படும்.*

*15“நான் உன்னோடு இருக்கிறேன். நீ
போகிற ஒவ்வொரு இடத்திலும் உன்னைக்
காப்பாற்றுவேன். நான் மீண்டும் உன்னை
இங்கே கொண்டு வருவேன். எனது
வாக்குறுதியை முடிக்கும்வரை உன்னை
விட்டு விலகமாட்டேன் என்றார்.*

*16உடனே யாக்கோபு தனது தூக்கத்
திலிருந்து எழுந்தான். “கர்த்தர் இங்கே தான்
இருக்கிறார் என்பதைத் தெரிந்து
கொண்டேன். நான் தூங்கும்வரை இதை
அறிந்து கொள்ளவில்லை” என்றான்.*

*17அவனுக்குப் பயம் வந்தது, “இது
மிகச்சிறந்த இடம். இது தேவனுடைய
வீடு, பரலோகத்தின் வாசல்” என்றான்.*

*18யாக்கோபு அதிகாலையில் எழுந்ததும்.
தலைக்கு வைத்துப்படுத்த கல்லை நிமிர்த்தி
வைத்து, அதன்மேல் எண்ணெய்
ஊற்றினான். இவ்வாறு அவன் அந்தக்
கல்லை நினைவுச் சின்னமாக ஆக்கினான்.
19இந்த நகரத்தின் பெயர் லூஸ். ஆனால்
யாக்கோபு அதற்குப் பெத்தேல்* என்று
பெயரிட்டான்.*

---

**பெத்தேல்** *“தேவனுடைய வீடு” எனப் பொருள் படும்.*

20பின் யாக்கோபு: "தேவன் என்னோடு
இருந்து, எங்கு போனாலும் என்னைத்
தேவன் காப்பற்றுவாரானால், உண்ண
உணவும் அணிய ஆடையும் தேவன்
கொடுப் பாரானால், 21என் தந்தையின்
இடத்துக்குச் சமாதானத்தோடு திரும்பு
வேனேயானால், தேவன் இதையெல்லாம்
செய்வாரானால், கர்த்தர் என் தேவனா
யிருப்பார். 22இந்த இடத்தில் இக்கல்லை
ஞாபகார்த்தக் கல்லாக நிறுத்துவேன்.
தேவனுக்கான பரிசுத்த இடம் இது என்று
அடையாளம் காட்டும். தேவன் எனக்குக்
கொடுக்கும் அனைத்திலும் பத்தில் ஒரு
பங்கை அவருக்கே கொடுப்பேன்" என்று
பொருத்தனை செய்தான்.

### யாக்கோபு ராகேலைச் சந்திக்கிறான்

29 பிறகு யாக்கோபு தன் பயணத்தைத்
தொடர்ந்து, கிழக்கே உள்ள
நாட்டுக்குப் போனான். 2யாக்கோபு
வயல்வெளியில் ஒரு கிணற்றைப் பார்த்தான்.
அக்கிணற்றின் அருகில் மூன்று ஆட்டு
மந்தைகள் மடக்கப்பட்டிருப்பதையும் பார்த்
தான். அக்கிணறுதான் ஆடுகள் தண்ணீர்
குடிக்கும் இடம் ஆகும். கிணற்றின்
வாயானது ஒரு பெரிய கல்லால்
அடைக்கப்பட்டிருந்தது. 3ஆடுகள் எல்லாம்
அங்கு ஒன்று சேர்ந்ததும் மேய்ப்பர்கள்
கிணற்றை மூடியுள்ள பாறையை அகற்றி,
ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டுவார்கள்.
ஆடுகள் வயிறு நிறைய தண்ணீர் குடித்த
பிறகு மேய்ப்பர்கள் அக்கிணற்றைப் பாறை
யால் மூடி வைப்பார்கள்.
4யாக்கோபு அந்த மேய்ப்பர்களிடம்,
"சகோதரர்களே, நீங்கள் எங்கிருந்து
வருகிறீர்கள்?" என்று கேட்டான். மேய்ப்
பர்கள், "நாங்கள் ஆரானிலிருந்து
வருகிறோம்" என்றார்கள்.
5பிறகு யாக்கோபு "உங்களுக்கு
லாபானைத் தெரியுமா? அவர் நாகோரின்
மகன்" என்று கேட்டான். மேய்ப்பர்கள்
"எங்களுக்குத் தெரியும்" என்று பதில்
சொன்னார்கள்.
6"அவர் எப்படி இருக்கிறார்?" என்று
கேட்டான் யாக்கோபு. அதற்கு அவர்கள்
"அவர் நன்றாக இருக்கிறார். அதோ பாரும்
அவரது மகள் ராகேல் ஆட்டு மந்தையோடு
வந்து கொண்டிருக்கிறாள்" என்றார்கள்.
7யாக்கோபு, "சூரியன் அஸ்தமிக்க
இன்னும் பொழுது இருக்கிறதே. ஆடுகளை
இன்னும் கொஞ்சம் மேய்த்து தண்ணீர்
காட்டலாமே! இது ஆடுகளை அடைக்கிற
நேரமில்லையே. தண்ணீர் காட்டிவிட்டு
மீண்டும் அவற்றை, வயல்வெளிக்கு
அனுப்புங்கள்" என்றான்.
8அதற்கு மேய்ப்பர்கள், "எல்லா ஆடுகளும்
சேருமுன்னால் நாங்கள் அவ்வாறு செய்யக்
கூடாது. சேர்ந்த பின்னரே கிணற்றின்
கல்லை அகற்றுவோம் அப்போது எல்லா
ஆடுகளும் தண்ணீர் குடிக்கும்" என்றனர்.
9யாக்கோபு மேய்ப்பர்களோடு பேசிக்
கொண்டிருக்கும்போதே ராகேல் தன்
தந்தையின் ஆடுகளோடு வந்தாள். (அவளது
வேலையே ஆடு மேய்ப்பதுதான்.) 10ராகேல்
லாபானின் மகள். லாபான் யாக்கோபின்
தாயான ரெபெக்காளின் சகோதரன். அவன்
ராகேலைக் கண்டதும் கிணற்றின் மேலுள்ள
கல்லை நகர்த்தி ஆடுகள் தண்ணீர் குடிக்க
உதவினான். 11பிறகு அவன் ராகேலை
முத்தமிட்டு, அழுதான். 12அவன் அவளிடம்,
தான் அவளது தந்தையின் குடும்பத்தி
லிருந்து வந்திருப்பதாகச் சொன்னான். தான்
ரெபெக்காளின் மகன் என்றான். ராகேல்
ஓடிப்போய் தந்தையிடம் கூறினாள்.
13லாபான் தன் சகோதரியின் மகன்
யாக்கோபைப்பற்றிக் கேள்விப்பட்டதும்
அவனைச் சந்திக்க ஓடி வந்தான். அவனை
அணைத்து முத்தமிட்டு வீட்டிற்கு அழைத்துச்
சென்றான். யாக்கோபு நடந்தவற்றை
யெல்லாம் சொன்னான்.
14அப்பொழுது லாபான் "இது ஆச்சரிய
மானது. நீ எனது சொந்தக் குடும்பத்தில்
உள்ளவன்" என்றான். எனவே யாக்கோபு
அங்கு ஒரு மாத காலம் தங்கி இருந்தான்.

### லாபான் யாக்கோபிடம் தந்திரம் செய்கிறான்

15ஒரு நாள் லாபான் யாக்கோபிடம், "நீ
என்னிடம் தொடர்ந்து சம்பளமில்லாமல்
வேலை செய்துகொண்டிருப்பது சரியல்ல.
நீ எனது அடிமையல்ல, உறவினன். நான்
உனக்கு என்ன சம்பளம் தரட்டும்?" என்று
கேட்டான்.
16லாபானுக்கு இரண்டு பெண்கள்
இருந்தனர். மூத்தவள் பெயர் லேயாள்
இளையவள் பெயர் ராகேல்.
17ராகேல் மிக அழகானவள். லேயாளின்
கண்களோ கூச்சம் உடையவை.*
18யாக்கோபு ராகேலை நேசித்தான். எனவே
அவன் லாபானிடம், "உங்கள் மகள்
ராகேலை மணமுடிக்க நீங்கள் அனுமதித்தால்
நான் ஏழு ஆண்டுகள் உங்களுக்காக வேலை
செய்யத் தயார்" என்றான்.
19அதற்கு லாபான், "அவள் வேறு
யாரையாவது மணந்துகொள்வதைவிட
உன்னை மணந்து கொள்வது அவளுக்கு
நல்லது" என்றான்.
20அதனால் யாக்கோபு அங்கு ஏழு
ஆண்டுகள் தங்கி வேலை பார்த்தான்.
ஆனால் அவன் ராகேலை நேசித்ததால்
ஆண்டுகள் வேகமாக முடிந்துவிட்டன.

---

**லேயாளின் கண்களோ கூச்சம் உடையவை** லேயாள் அழகில் குறைந்தவள் என்பது மென்மை யாக கூறப்பட்டிருக்கிறது.

21 ஏழு ஆண்டுகள் ஆனதும் அவன்
லாபானிடம், "ராகேலை எனக்குத்
தாருங்கள். நான் அவளை மணமுடிக்க
வேண்டும். நான் வேலை செய்ய வேண்டிய
காலமும் முடிந்துவிட்டது" என்றான்.
22 அதனால் அந்த இடத்திலுள்ள எல்லா
ஜனங்களுக்கும் லாபான் ஒரு விருந்து
கொடுத்தான். 23 அன்று இரவு அவன் தன்
மூத்த மகள் லேயாளை யாக்கோபிடம்
அழைத்து வந்தான். இருவரும் பாலின உறவு
கொண்டனர். 24 (லாபான் தன்
வேலைக்காரியாகிய சில்பாளை லேயா
ளுக்கு வேலைக்காரியாக ஆக்கி இருந்தான்.)
25 காலையில் எழுந்ததும் யாக்கோபு இரவு
முழுக்க தன்னோடு இருந்தது லேயாள்
என்பதை அறிந்து கொண்டான்.
லாபானிடம் சென்று "என்னை ஏமாற்றி
விட்டீர்கள். நான் ராகேலை மணம்
செய்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே
ஏழு ஆண்டுகள் கடினமாக உழைத்திருக்
கிறேன். ஏன் என்னை ஏமாற்றினீர்கள்?"
என்று கேட்டான்.
26 லாபான், "மூத்தவள் இருக்கும்போது
இளையவளுக்கு மணம் முடிக்க எங்கள்
நாட்டில் அனுமதிக்க மாட்டோம். 27 ஆனால்
திருமணச் சடங்குகளை ஒரு வாரத்திற்குத்
தொடர்ந்தபின் நான் உனக்கு ராகேலையும்
திருமணம் செய்துகொள்ளத் தருவேன்.
ஆனால் நீ இன்னும் ஏழு ஆண்டுகள்
எனக்குப் பணியாற்ற வேண்டும்" என்றான்.
28 எனவே யாக்கோபு அதற்கு
ஒப்புக்கொண்டு ஒரு வாரத்தைக் கழித்தான்.
லாபான் ராகேலை அவனுக்கு
மனைவியாகக் கொடுத்தான். 29 (தனது
வேலைக்காரியான பில்காளை ராகேலுக்கு
வேலைக்காரியாகக் கொடுத்தான்.) 30 யாக்
கோபு ராகேலோடும் பாலின உறவு
கொண்டான். அவன் லேயாளை விட
ராகேலைப் பெரிதும் நேசித்ததால் மேலும்
ஏழு ஆண்டுகள் அங்கு வேலை செய்தான்.

### யாக்கோபின் குடும்பம் பெருகுதல்

31 யாக்கோபு லேயாளை விட ராகேலை
அதிகமாக நேசிப்பதைக் கர்த்தர் கண்டார்.
எனவே லேயாள் மட்டுமே கருத்தரிக்குமாறு
கர்த்தர் செய்தார். ஆனால் ராகேலோ
மலடியாய் இருந்தாள்.
32 லேயாளுக்கு ஓர் மகன் பிறந்தான். அவள்
அவனுக்கு ரூபன்* என்று பெயரிட்டாள்.
"கர்த்தர் நான் படும் தொல்லைகளைக்
கண்டார். என் கணவன் என்னை
நேசிக்காமல் இருந்தார். இப்போது
ஒருவேளை அவர் என்னை நேசிக்கலாம்"
என்று நினைத்தாள்.
33 லேயாள் மீண்டும் கர்ப்பமானாள். அவள்
இன்னொரு மகனைப் பெற்றாள். அவனுக்குச்
சிமியோன்* என்று பெயர் வைத்தாள். "
நான் நேசிக்கப்படாததைக் கண்டு கர்த்தர்
எனக்கு இன்னொரு மகனை கொடுத்தார்"
என்று கூறினாள்.
34 லேயாள் மீண்டும் கர்ப்பமாகி
இன்னொரு ஆண் குழந்தையைப் பெற்றாள்.
அவனுக்கு லேவி* என்று பெயரிட்டாள்.
"இப்பொழுது என் கணவர் என்னை
நிச்சயம் நேசிப்பார். நான் அவருக்கு மூன்று
மகன்களைக்கொடுத்திருக்கிறேன்" என்றாள்.
35 லேயாள் மேலும் ஒரு மகனைப்
பெற்றாள். அவனுக்கு யூதா* என்று
பெயரிட்டாள். அவள், "நான் இப்போது
கர்த்தரைத் துதிப்பேன்" என்றாள். பிறகு
குழந்தை பெறுவது நின்று விட்டது.

30 ராகேல், தன்னால் யாக்கோபுக்குக்
குழந்தைகளைக் கொடுக்க முடியவில்
லையே என்று வருத்தப்பட்டாள். அவளுக்கு
தன் சகோதரி லேயாள் மீது பொறாமை
வந்தது. அவள் யாக்கோபிடம் "எனக்குக்
குழந்தையைக் கொடும் அல்லது நான்
மரித்துப் போவேன்" என்றாள்.
2 அவனுக்கு அவள் மீது கோபம் வந்தது.
அவன், "நான் தேவன் இல்லை. நீ குழந்தை
பெற முடியாததற்குத் தேவனே காரணம்"
என்றான்.
3 பிறகு ராகேல் அவனிடம், "நீர் என்
வேலைக்காரி பில்காளோடு பாலின உறவு
கொண்டால், எனக்காக அவள் ஒரு
குழந்தையைப் பெற்றுத் தருவாள்.* அவள்
மூலம் நான் தாயாக விரும்புகிறேன்"
என்றாள்.
4 பின் தனது வேலைக்காரி பில்காளை
யாக்கோபிற்குக் கொடுத்தாள். அவன்
அவளோடு பாலின உறவு கொண்டான்.
5 பில்காள் கருவுற்று ஒரு ஆண்
பிள்ளையைப் பெற்றாள்.
6 ராகேல் மகிழ்ந்து, "தேவன் என்
பிரார்த்தனையைக் கேட்டு, எனக்கு ஒரு
மகனை கொடுத்தார்" என்று கூறி
அவனுக்குத் தாண்* என்று பெயர்
வைத்தாள்.

---

**ரூபன்** "இதோ, (பார்) ஒரு மகன்" எனப் பொருள்படும்.

**சிமியோன்** "அவர் கேட்கிறார்" எனப் பொருள்படும்.

**லேவி** "கூட இருப்பதற்காக," "ஒன்று சேர்க்கப்பட்ட" அல்லது "நெருக்கி இணைக்கப் பட்ட" எனப் பொருள்படும்.

**யூதா** "அவர் துதிக்கப்பட்டார்" எனப் பொருள்படும்.

**எனக்காக … பெற்றுத் தருவாள்** "அவள் ஒரு பிள்ளையைப் பெற்று என் முழங்காலின் மேல் போடுவாள், அப்பொழுது அவள் மூலமாக நானும் ஒரு குழந்தையைப் பெறுவேன்" என்பது பொருள்.

**தாண்** "யோசிக்க" அல்லது "நியாயந்தீர்க்க" எனப் பொருள்படும்.

[7]பில்காள் மீண்டும் கர்ப்பமுற்று இன்
னொரு மகனைப் பெற்றாள். அவனுக்கு
ராகேல் நப்தலி* என்று பெயரிட்டு, [8]“எனது
சகோதரியோடு போராட நான் கடுமையாக
உழைத்திருக்கிறேன். நான் வென்று
விட்டேன்” என்றாள்.
[9]லேயாள் தனக்கு மேலும் குழந்தை
இல்லாததைக் கவனித்தாள். மேலும் குழந்தை
வேண்டும் என்று தன் வேலைக்காரி
சில்பாளை யாக்கோபுக்குக் கொடுத்தாள்.
[10]பிறகு சில்பாளுக்கும் ஒரு மகன் பிறந்தான்.
[11]“நான் பாக்கியசாலி” என்று லேயாள்
மகிழ்ந்தாள். பின் அவனுக்குக் காத்* என்று
பெயரிட்டாள். [12]சில்பாள் மேலும் ஒரு
மகனைப் பெற்றாள். [13]லேயாள் “நான்
மேலும் மகிழ்ச்சி அடைகிறேன். என்னை
பார்க்கும் பெண்களும் மகிழ்ச்சியுடன்
அழைப்பார்கள்” என்று எண்ணினாள்.
எனவே அவனுக்கு ஆசேர்* என்று
பெயரிட்டாள்.
[14]கோதுமை அறுவடைக் காலத்தில்
ரூபன் வயலுக்குப் போனான். அங்கு சில
புதுவகை மலர்களைக்* கண்டான்.
அதனைப் பறித்துக்கொண்டு தன் தாயான
லேயாளிடம் வந்தான். ராகேல் இதனைப்
பார்த்து, “உன் மகன் கொண்டு வந்த
மலர்களில் சிலவற்றை எனக்குக் கொடு”
என்று கேட்டாள்.
[15]அதற்கு லேயாள், “ஏற்கெனவே என்
கணவனை எடுத்துக் கொண்டிருக்கிறாய்.
இப்போது என் மகன் கொண்டு வந்த
மலர்களையும் எடுக்கப் பார்க்கிறாயா?”
என்று மறுத்தாள். ஆனால் ராகேலோ, “நீ
அந்த மலர்களைக் கொடுத்தால் இன்று
இரவு நீ யாக்கோபோடு பாலின உறவு
கொள்ளலாம்” என்று சொன்னாள்.
[16]யாக்கோபு அன்று இரவு வயலில்
இருந்து திரும்பினான். அவனை லேயாள்
போய் சந்தித்து, “இன்று இரவு நீங்கள்
என்னோடு தூங்க வேண்டும். நான்
அதற்காக என் மகன் கொண்டு வந்த
மலர்களைக் கொடுத்திருக்கிறேன்” என்றாள்.
அவன் அன்று இரவு அவளோடு இருந்தான்.
[17]தேவன் லேயாளை மீண்டும்
கர்ப்பவதியாக அனுமதித்தார். அவள் ஐந்தா
வது மகனைப் பெற்றாள். [18]லேயாள், “நான்
என் கணவனுக்கு வேலைக்காரியை
கொடுத்ததால் தேவன் எனக்குப் பரிசு
கொடுத்திருக்கிறார்” என்று மகிழ்ந்தாள்.
தன் மகனுக்கு இசக்கார்* என்று
பேரிட்டாள்.
[19]லேயாள் மீண்டும் கர்ப்பமாகி ஆறாவது
மகனைப் பெற்றாள். [20]லேயாள் “தேவன்
எனக்கு அற்புதமான பரிசு கொடுத்திருக்
கிறார். இப்போது யாக்கோபு என்னை
நிச்சயம் ஏற்றுக்கொள்வார். நான் அவருக்கு
ஆறு மகன்களைக் கொடுத்திருக்கிறேனே”
என்று மகிழ்ச்சி அடைந்தாள். அவனுக்கு
செபுலோன்* என்று பெயர் வைத்தாள்.
[21]பிறகு அவள் ஒரு மகளைப் பெற்றாள்.
அவளுக்கு தீனாள் என்று பெயர் வைத்தாள்.
[22]பிறகு தேவன் ராகேலின் பிரார்த்தனை
யைக் கேட்டு, அவளும் குழந்தை
பெறுவதற்கான வாய்ப்பைக் கொடுத்தார்.
[23-24]அவள் கர்ப்பமாகி ஒரு மகனைப்
பெற்றாள். “தேவன் எனது அவமானத்தை
அகற்றி ஒரு மகனைத் தந்துவிட்டார்”
என்று மகிழ்ச்சியடைந்தாள். அவள் தன்
மகனுக்கு யோசேப்பு* என்று பெயர்
வைத்தாள்.

### லாபானுடன் யாக்கோபின் தந்திரம்

[25]யோசேப்பு பிறந்த பிறகு யாக்கோபு
லாபானிடம், “இப்போது என்னை என்
சொந்த நாட்டிற்குப் போக அனுமதிக்க
வேண்டும். [26]எனக்கு எனது மனைவி
களையும் குழந்தைகளையும் தாருங்கள். நான்
14 ஆண்டுகளாக அவர்களுக்காக உழைத்
திருக்கிறேன். நான் நன்றாக உழைத்தேன்
என்பதும் உங்களுக்குத் தெரியுமே”
என்றான்.
[27]லாபான், “என்னையும் ஏதாவது
சொல்லவிடு. உன்னால் கர்த்தர் என்னை
ஆசீர்வதித்திருக்கிறார் என்பதை நான்
அறிவேன். [28]நான் உனக்கு என்ன தர
வேண்டும் என்று சொல், நான் தருவேன்”
என்றான்.
[29]“நான் உங்களுக்காகக் கடினமாக
உழைத்ததை நீங்கள் அறிவீர்கள். நான்
கவனித்ததால் உங்கள் மந்தைகள்
பெருகியுள்ளன. [30]நான் வந்து சேர்ந்தபோது
உங்களிடம் குறைவான எண்ணிக்கை
யிலேயே மந்தைகள் இருந்தன. இப்போது
ஏராளமாக உள்ளன. எப்பொழுதும்
உங்களுக்காக ஏதாவது வேலை செய்தேன்.
கர்த்தர் உங்களை ஆசீர்வதித்தார். இப்போது
நான் எனக்காக உழைக்க வேண்டிய காலம்
வந்து விட்டது. நான் சொந்தமாக வீடு
கட்டிக் கொள்ளவேண்டும்” என்றான்.
[31]அதற்கு லாபான், “நான் என்ன தர
வேண்டும்” என்று கூறு எனக் கேட்டான்.

---

**நப்தலி** “எனது போராட்டம்” எனப் பொருள்படும்.

**காத்** “அதிர்ஷ்டம்” அல்லது “பாக்கியம்” எனப் பொருள்படும்.

**ஆசேர்** “மகிழ்ச்சி” அல்லது “ஆசீர்வதிக்கப்பட்ட” எனப் பொருள்படும்.

**புதுவகை மலர்கள்** அல்லது “மாந்தரேக் பூ” எபிரெய மொழியில் “விருப்ப பூ” எனப்படும். இவ்வகைப் பூக்கள் பெண்களுக்கு குழந்தைகளை பெற உதவும் என மக்கள் நினைத்தார்கள்.

**இசக்கார்** “பரிசு” அல்லது “சம்பளம்” எனப் பொருள்படும்.

**செபுலோன்** “துதி” அல்லது “மரியாதை” எனப் பொருள்படும்.

**யோசேப்பு** “இணைக்க” “சேர்க்க” அல்லது “கூட்ட” எனப் பொருள்படும்.

யாக்கோபு அவனிடம், “நீங்கள் எனக்கு
எதுவும் கொடுக்க வேண்டாம். நான் செய்த
வேலைக்கு மட்டும் சம்பளம் கொடுங்கள்.
இந்தக் காரியம் மட்டும் செய்யுங்கள். நான்
திரும்பிப்போய் உங்கள் மந்தையைக்
கவனித்துக் கொள்கிறேன். 32அவற்றில்
புள்ளியும் வரியும் கறுப்பும் உள்ள
செம்மறியாடுகளையும், வரியும் புள்ளியு
முள்ள வெள்ளாடுகளையும் இன்று பிரித்து
விடுகிறேன். ஒவ்வொரு கறுப்பு இன
ஆட்டையும் நான் எடுத்துக் கொள்கிறேன்.
புள்ளியும் வரியும் உடைய ஒவ்வொரு பெண்
ஆட்டையும் எடுத்துக் கொள்கிறேன். இதுவே
என் சம்பளமாய் இருக்கும். 33நான்
நேர்மையானவனாக இருக்கிறேனா
இல்லையா என்பதை எதிர்காலத்தில்
எளிதில் கண்டு கொள்ளலாம். அப்போது
நீங்கள் எனது மந்தையை வந்து காணலாம்.
புள்ளியும் வரியுமில்லாத ஆடுகளைக்
கண்டால் அவை என்னால் திருடப்
பட்டதாகக் கொள்ளலாம்” என்றான்.

34“நான் இதற்கு ஒத்துக்கொள்கிறேன். நீ
கேட்டபடியே தருகிறேன்” என்று லாபான்
கூறினான். 35“அன்று லாபான் புள்ளி உள்ள
ஆட்டுக்கடாக்களையும், ஆடுகளையும்
பிரித்து மறைத்துவிட்டான். கறுப்பு
ஆடுகளையும் தனியாகப் பிரித்து மறைத்
தான். அவற்றைத் தன் மகன்களிடம்
கொடுத்து கவனிக்கும்படி சொன்னான்.
36அவர்கள் புள்ளி ஆடுகளையெல்லாம்
மூன்று நாள் பயண தூரத்திற்குத் தனியாகக்
கொண்டு போனார்கள். மிஞ்சியவற்றை
யாக்கோபு கவனித்துக் கொண்டான்.
புள்ளியோ, வரிகளோ கொண்ட ஆடுகள்
எதுவும் யாக்கோபிடம் இல்லை.
37எனவே அவன் பச்சையாக உள்ள
புன்னை, வாதுமை, அர்மோன் மரக்
கொப்புகளை வெட்டி, இடையிடையே
வெண்மை தோன்றும்படி பட்டையை
உரித்தான். 38அவற்றை அவன் ஆடுகள்
தண்ணீர் குடிக்கும் இடங்களில் போட்டு
வைத்தான். அவை தண்ணீர் குடிக்கும்போது
கடாவும் ஆடும் இணைந்தன. 39ஆடுகள்
அந்தக் கிளைகளுக்கு முன்னால்
இணைந்ததினால் அவை கலப்பு
நிறமுள்ளதும் புள்ளியுள்ளதும் வரியுள்ள
துமான குட்டிகளைப் போட்டன.
40யாக்கோபு மந்தையில் இருந்து
புள்ளிகளும் கறுப்பும் உள்ள ஆடுகளைத்
தனியாகப் பிரித்தான். அவற்றை லாபானின்
ஆட்டிலிருந்து தனிப்படுத்தினான்.
41பலமுள்ள ஆடுகள் இணையும்போது
அவற்றின் கண்களில் படுமாறு மரக்கிளை
களைக் கால்வாய்க் கரையில் போட்டு
வைத்தான். 42ஆனால் பலவீனமுள்ள ஆடுகள்
இணையும்போது போடமாட்டான். அதன்
குட்டிகள் எல்லாம் லாபானுக்கு
உரியதாயிற்று. பலமுள்ள ஆடுகளின்
குட்டிகள் எல்லாம் யாக்கோபுக்கு உரியதா
யிற்று. 43இவ்வாறு யாக்கோபு பெரும்
பணக்காரன் ஆனான். அவனிடம் பெரிய
மந்தை இருந்தது. அதோடு வேலைக்
காரர்களும், ஒட்டகங்களும், கழுதைகளும்
சொந்தமாயின.

## யாக்கோபு பிரிந்து செல்லுதல்

31 ஒரு நாள், லாபானின் மகன்கள்
பேசிக்கொள்வதை யாக்கோபு
கேட்டான். அவர்கள், “நம் தந்தைக்குரிய
அனைத்தையும் யாக்கோபு எடுத்துக்
கொண்டான். அதனால் பணக்காரனாகி
விட்டான். நம் தந்தையிடம் இருந்தே
இச்செல்வத்தை எடுத்துக் கொண்டான்”
என்றனர். 2யாக்கோபு, முன்புபோல் லாபான்
அன்போடு இல்லை என்பதையும் கவனித்
தான். 3கர்த்தர் யாக்கோபிடம், “உனது
சொந்த நாடான, உன் முற்பிதாக்களின்
நாட்டுக்கு திரும்பிப் போ. நான் உன்னோடு
இருப்பேன்” என்றார். 4அதனால் யாக்கோபு
லேயாளிடமும் ராகேலிடமும் தன்னை
மந்தைகள் உள்ள வயலில் சந்திக்குமாறு
கூறினான். 5அங்கு அவர்களிடம், “உங்கள்
தந்தை என்மீது கோபமாய் இருப்பதாகத்
தெரிகிறது. முன்பு என்னிடம் மிகவும்
அன்பாய் இருந்தார். இப்போது அப்படி
இல்லை. 6நான் உங்கள் தந்தைக்காக
எவ்வளவு கடினமாக உழைத்திருக்கிறேன்
என்று உங்கள் இருவருக்குமே தெரியும்.
7ஆனால் உங்கள் தந்தை என்னை
ஏமாற்றிவிட்டார். அவர் என் சம்பளத்தைப்
பத்துமுறை மாற்றிவிட்டார். எனினும்
லாபானின் எல்லாத் தந்திரங்களிலிருந்தும்
தேவன் என்னைக் காப்பாற்றினார்.
8“அவர் ஒருமுறை, ‘புள்ளியுள்ள
ஆடுகளையெல்லாம் நீயே வைத்துக்கொள்’
அதுவே உனக்கு சம்பளம் என்றார். ஆனால்
அப்போது எல்லா ஆடுகளும் புள்ளி
உள்ளவையாக இருந்ததால் எல்லாம்
எனக்கும் உரியதாயிற்று. எனவே இப்
போது, ‘புள்ளி உள்ள ஆடுகள் எல்லாம்
எனக்கு வேண்டும்.’ கலப்பு நிறம் உள்ள
ஆடுகளை நீ வைத்துக் கொள்” என்கிறார்.
இதன் பிறகு எல்லா ஆடுகளும் கலப்புநிறக்
குட்டிகளைப் போட்டன. 9ஆகையால் தேவன்
உங்கள் தந்தையிடமுள்ள ஆடுகளை
யெல்லாம் எடுத்து எனக்குக் கொடுத்து
விட்டார்.
10“ஆடுகள் எல்லாம் இணையும்போது
நான் கனவு கண்டேன். அதில் இணைகிற
ஆண் ஆடுகள் மட்டுமே புள்ளியும் வரியும்
உடையவையாக இருக்கக் கண்டேன்.
11அதோடு கனவில் ‘யாக்கோபே’ என்று
தேவதூதன் ஒருவர் அழைத்தார். ‘நான்
இங்கே இருக்கிறேன்’ என்று பதில்
சொன்னேன்.”

12“தேவதூதன் என்னிடம் ‘பார்,
புள்ளிகளும் வரிகளும் உடைய கடாக்களே
இணைகின்றன. இவற்றை நானே
ஏற்படுத்தினேன், லாபான் உனக்கு எதிராக
செய்யும் எல்லாக் காரியங்களையும் நான்
பார்த்திருக்கிறேன். எல்லா புதிய ஆட்டுக்
குட்டிகளையும் நீ பெறவேண்டும்
என்பதற்காக இதைச் செய்துகொண்டி
ருக்கிறேன். 13நான் பெத்தேலில் உனக்கு
வெளிப்பட்ட அதே தேவன். அங்கு
எனக்குப் பலிபீடம் அமைத்தாய்.
பலிபீடத்தின்மேல் ஒலிவ எண்ணெயை
ஊற்றினாய். அங்கு ஒரு பொருத்தனையும்
செய்தாய். இப்போதும் நீ உன் பிறந்த
நாட்டிற்குப் போகத் தயாராக இருக்க
வேண்டும், என்று சொன்னார்’” என்றான்.
14-15ராகேலும் லேயாளும் யாக்கோபுக்குப்
பதிலளித்தார்கள், “எங்கள் தந்தை மரிக்கும்
பொழுது எங்களுக்குக் கொடுக்க அவரிடம்
ஏதுமில்லை. அவர் எங்களை
அந்நியர்களாகவே நடத்தினார். எங்களை
உங்களுக்கு விற்றுவிட்டார். எங்களுடைய
தாயிருக்க வேண்டிய பணம் முழுவதையும்
அவர் செலவழித்துவிட்டார். 16எனவே
தேவன் எங்கள் தந்தையிடமிருந்து எடுத்த
இந்தச் செல்வமெல்லாம் நமக்கும் நம்
பிள்ளைகளுக்கும் உரியது. எனவே தேவன்
உமக்குச் சொன்னபடி செய்யும்” என்றார்கள்.

17எனவே, யாக்கோபு பயணத்துக்குத்
தயாரானான். தன் மனைவிகளையும்
பிள்ளைகளையும் ஒட்டகத்தில் ஏற்றினான்.
18பின் அவர்கள் அவனது தந்தை இருக்கும்
கானான் தேசத்துக்குப் பயணம் செய்தனர்.
அவர்களுக்கு முன்னால் அவர்களது
மந்தையும் கொண்டு செல்லப்பட்டது. பதான்
அராமிலிருக்கும்போது அவன் வாங்கிய
பொருட்களையெல்லாம் அவன் எடுத்துக்
கொண்டான்.
19அந்த நேரத்தில் லாபான் ஆடுகளுக்கு
மயிர்கத்தரிக்கப் போயிருந்தான். ராகேல்
வீட்டிற்குள்போய் தந்தையினுடைய பொய்த்
தெய்வங்களின் உருவங்களைத் திருடிக்
கொண்டாள்.
20யாக்கோபு தந்திரமாக லாபானிடம் தான்
போவதைப்பற்றிக் கூறாமல் புறப்பட்டுப்
போய்விட்டான். 21யாக்கோபு தன் குடும்பத்
தோடும் தனக்குரியவற்றோடும் வேகமாகச்
சென்று ஐப்பிராத்து ஆற்றைக் கடந்து
கீலேயாத் மலையை நோக்கிப் போனார்கள்.
22மூன்று நாள் ஆனதும் லாபான்
யாக்கோபு ஓடிவிட்டதை அறிந்து
கொண்டான். 23உடனே தன் ஆட்களைச்
சேகரித்துக் கொண்டு யாக்கோபைத்
துரத்திக் கொண்டு போனான். ஏழு நாட்கள்
ஆனபிறகு லாபான் யாக்கோபை கீலேயாத்
மலை நகரம் ஒன்றில் கண்டு பிடித்தான்.
24அன்று இரவு தேவன் லாபானின் கனவில்
தோன்றி, “எச்சரிக்கையாய் இரு. யாக்கோ
பிடம் பேசும் ஒவ்வொரு வார்த்தையையும்
எச்சரிக்கையோடு பேசு” என்றார்.

### திருடப்பட்ட தேவர்களின் உருவங்களைத் தேடுதல்

25மறுநாள் காலையில் லாபான்
யாக்கோபைப் பிடித்தான். யாக்கோபு
மலைமீது தன் கூடாரத்தைப் போட்டி
ருந்தான். எனவே லாபானும் அவனது
ஆட்களும் கீலேயாத்தின் மலை நகரத்தில்
இருந்தனர்.
26லாபான் யாக்கோபிடம் “என்னை ஏன்
ஏமாற்றினாய். ஏன் என் மகள்களைப்
போரில் கைப்பற்றிய பெண்களைப்
போன்று கவர்ந்து கொண்டு போகிறாய்.
27என்னிடம் சொல்லாமல் கூட ஏன்
ஓடிப்போகிறாய்? என்னிடம் நீ சொல்லி
யிருந்தால் உனக்கு ஒரு விருந்து
கொடுத்திருப்பேனே. அவ்விருந்தில் ஆடலும்
பாடலும் இசையும் இருந்திருக்கும். 28நான்
என் மகள்களையும் பேரப்பிள்ளைகளையும்
முத்தமிட்டு வழியனுப்பவும் வாய்ப்பு
கொடுக்கவில்லையே. இதனை நீ முட்டாள்
தனமாகச் செய்துவிட்டாய். 29உன்னைத்
துன்புறுத்தும் அளவுக்கு எனக்கு வல்லமை
இருக்கிறது. ஆனால் நேற்று இரவு கனவில்
உன் தந்தையின் தேவன் என்னிடம் வந்தார்.
உன்னை எந்த விதத்திலும் துன்புறுத்த
வேண்டாம் என்று அவர் என்னை
எச்சரித்துவிட்டார். 30நீ உன் தந்தையின்
வீட்டிற்குத் திரும்பிச்செல்ல விரும்புகிறாய்
என்று அறிகிறேன். அதனால்தான் நீ
விலகிப் போகிறாய். ஆனால் ஏன் என்
தேவர்களைத் திருடிக்கொண்டு போகிறாய்?”
என்று கேட்டான்.
31அதற்கு யாக்கோபு, “நான் எதுவும்
சொல்லாமல் வந்துவிட்டேன். ஏனென்றால்
எனக்குப் பயமாக இருந்தது. ஒரு வேளை
நீங்கள் உங்கள் பெண்களை என்னிடமிருந்து
பிரித்துவிடலாம் என்று நினைத்தேன்.
32ஆனால் நான் உங்கள் தேவர்களைத்
திருடவில்லை. அதைத் திருடியவர்கள்
யாராவது என்னோடு இருந்தால் அவரை
நான் கொல்லுவேன். உங்கள் மனிதர்களே
இதற்குச் சாட்சி. உங்களுக்குரிய எந்தப்
பொருளும் இங்கிருக்கிறதா என்று நீர்
பார்த்து, இருந்தால் எடுத்துக் கொள்ளலாம்”
என்றான். (ராகேல் தன் தந்தையின்
தெய்வங்களின் உருவங்களைத் திருடிக்
கொண்டு வந்தது யாக்கோபுக்குத்
தெரியாது.)
33எனவே, லாபான் யாக்கோபின்
கூடாரத்துக்குள் போய் தேடிப் பார்த்தான்.
பிறகு லேயாளின் கூடாரத்தில் தேடினான்.
இரு அடிமைப் பெண்கள் இருந்த

கூடாரங்களிலும் தேடினான். ஆனால்
திருட்டுப்போன தேவர்களின் சிலைகள்
கிடைக்கவில்லை. பிறகு ராகேலின்
கூடாரத்திற்குள் சென்றான். 34 ராகேல்
அச்சிலைகளை ஒட்டகத்தின் சேணத்திற்குள்
ஒளித்து வைத்து அதன்மேல் உட்கார்ந்
திருந்தாள். லாபான் கூடாரம் முழுவதையும்
பார்த்தான். ஆனால் அவனால் தேவர்களைக்
காண முடியவில்லை.
35 ராகேல் தன் தந்தையிடம், “அப்பா
என்னிடம் கோபப்படாதீர்கள். உங்கள்
முன்னால் என்னால் நிற்க முடியவில்லை.
நான் மாத விலக்காக இருக்கிறேன்” என்று
கூறிவிட்டாள். கூடாரம் எங்கும் தேடிப்
பார்த்தும் தன் தேவர்களின் சிலைகளை
லாபானால் கண்டுபிடிக்க முடியவில்லை.
36 யாக்கோபுக்குக் கோபம் வந்தது. “நான்
செய்த தவறு என்ன? எந்தச் சட்டத்தை
உடைத்து விட்டேன்? எதற்கு என்னைப்
பின்தொடர்ந்து வந்து தடுத்து நிறுத்த
வேண்டும். 37 எனக்குரிய எல்லாவற்றையும்
சோதித்துவிட்டீர். உமக்குரிய பொருள்
இவற்றில் எதுவுமில்லை. இருந்தால் நம்
மனிதர்கள் காணும்படி அதை இங்கே
வையுங்கள். நம் இருவரில் யாரிடம் தவறு
உள்ளது என்று நம் மனிதர்களே
தீர்மானிக்கட்டும். 38 நான் உமக்காக 20
வருடங்கள் உழைத்திருக்கிறேன். அப்போது
எந்தக் குட்டியும் பிறக்கும்போது மரிக்க
வில்லை. எந்தக் கடாவையும் உமது
மந்தையிலிருந்து எடுத்து நான்
உண்டதில்லை. 39 காட்டு மிருகங்களால்
ஏதாவது ஆடுகள் அடிபட்டு மரித்திருக்கு
மானால் அதற்குரிய விலையை நானே
தந்திருக்கிறேன். மரித்த ஆடுகளைக் கொண்டு
வந்து உமக்கு முன் காட்டி இதற்குக்
காரணம் நானில்லை என்று சொன்ன
தில்லை. ஆனால் நானோ பகலிலும்
இரவிலும் திருடப்பட்டேன். 40 பகல் பொழுது
என் பலத்தை எடுத்துக் கொண்டது. இரவு
குளிர் என் கண்களிலிருந்து உறக்கத்தைத்
திருடிக் கொண்டது. 41 ஒரு அடிமையைப்
போன்று 20 வருடங்களாக உமக்காக
உழைத்திருக்கிறேன். முதல் 14 ஆண்டுகளும்
உமது மகள்களை மணந்து கொள்வதற்காக
உழைத்தேன். இறுதி ஆறு ஆண்டுகளும்
உமது மிருகங்களை காப்பாற்றுவதற்கு
உழைத்தேன். இந்நாட்களில் எனது
சம்பளத்தைப் பத்து முறை மாற்றி இருக்கிறீர்.
42 ஆனால் என் முற்பிதாக்களின் தேவனும்,
ஆபிரகாமின் தேவனும் ஈசாக்கின்
பயபக்திக்குரிய* தேவனுமானவர் என்
னோடு இருந்தார். தேவன் என்னோடு
இல்லாமற்போயிருந்தால் நீர் என்னை
ஒன்றும் இல்லாதவனாக ஆக்கி அனுப்பி
இருப்பீர். ஆனால் என் துன்பங்களையும்,
எனது உழைப்பையும் கண்ட தேவன் நேற்று
இரவு நான் நியாயமானவன் என்பதை
நிரூபித்துவிட்டார்” என்றான்.

### யாக்கோபும் லாபானும் செய்த ஒப்பந்தம்

43 லாபான் யாக்கோபிடம், “இந்தப்
பெண்கள் என் மகள்கள். இந்தக் குழந்தைகள்
என்னைச் சேர்ந்தவர்கள். இந்த மிருகங்கள்
எல்லாம் என்னுடையவை. நான் இங்கு
காண்கிற அனைத்தும் என்னுடையவை.
ஆனால் எனது மகள்களுக்கும் அவர்களின்
குழந்தைகளுக்கும் என்னால் தீமை செய்ய
முடியாது. 44 எனவே நான் உன்னோடு ஒரு
ஒப்பந்தம் செய்து கொள்கிறேன். நாம் இங்கே
ஒரு கற்குவியலை அமைத்து அதை நமது
ஒப்பந்தத்திற்கு நினைவு சின்னமாகக்
கருதுவோம்” என்றான்.
45 அதை யாக்கோபும் ஒப்புக்கொண்டு ஒரு
பெரிய கல்லை ஒப்பந்தத்துக்கு
அடையாளமாக நட்டு வைத்தான். 46 மேலும்
கற்களைத் தேடி எடுத்து வந்து குவியலாக்
குங்கள் என தன் ஆட்களிடம் சொன்னான்.
பிறகு அதன் அருகில் இருந்து இருவரும்
உணவு உண்டனர். 47 லாபான் அந்த
இடத்திற்கு ஜெகர்சகதூதா* என்றும்,
யாக்கோபு கலயெத்* என்றும் பேரிட்டனர்.
48 லாபான் யாக்கோபிடம், “இக்கற்குவியல்
நமது ஒப்பந்தத்தை நினைவுபடுத்தும்”
என்றான். இதனால்தான் யாக்கோபு அந்த
இடத்துக்கு கலயெத் என்று பெயரிட்டான்.
49 பிறகு லாபான், “நாம் ஒருவரை ஒருவர்
விட்டுப் பிரிந்திருந்தாலும் கர்த்தர் நம்மைக்
கண்காணிக்கட்டும்” என்றான். எனவே இந்த
இடம் மிஸ்பா* என்றும் அழைக்கப்பட்டது.
50 மேலும் லாபான், “நீ என் பெண்களைத்
துன்புறுத்தினால் தேவன் உன்னைத்
தண்டிப்பார். நீ வேறு பெண்களை மணந்து
கொண்டாலும் தேவன் உன்னைக்
கவனித்துக் கொண்டிருப்பார். 51 நம்
இருவருக்கும் இடையில் இங்கே நான் நட்ட
கற்கள் உள்ளன. இந்த விசேஷ கல்லானது
நம் ஒப்பந்தத்தை நினைவுபடுத்துகிறது. 52 நம்
இருவருக்கும் இடையிலான ஒப்பந்தத்தை
என்றென்றும் ஞாபகப்படுத்தும் இந்தக்
கல்லைத் தாண்டி வந்து நான் உன்னோடு
போரிட மாட்டேன். நீயும் இதைக் கடந்து
வந்து என்னோடு போரிடக் கூடாது.
53 ஆபிரகாமின் தேவனும் நாகோரின்
தேவனும் அவர்களது முற்பிதாக்களின்
தேவனுமானவர், நாம் இந்த ஒப்பந்தத்தை

---

**ஈசாக்கின் பயபக்திக்குரிய** தேவனுடைய பெயர்.

**ஜெகர்சகதூதா** அரமேய மொழியில் “ஒப்பந்தத்தின் பாறைக் குவியல்” எனப் பொருள்படும்.

**கலயெத்** “கிலெயாத்” என்பதின் மற்றொரு பெயர். எபிரெய மொழியில் “ஒப்பந்தத்தின் பாறைக் குவியல்” எனப்படும்.

**மிஸ்பா** “கண்காணிக்கப்படுகிற இடம்” எனப் பொருள்படும்.

உடைத்தால், குற்றவாளி யாரென்று நியாயந்தீர்க்கட்டும்" என்றான்.

யாக்கோபின் தந்தையான ஈசாக்கு தேவனை "பயபக்திக்குரியவர்" என்று அழைத்தார். யாக்கோபு அந்தப் பெயரிலேயே வாக்குறுதி செய்தான். 54பிறகு, யாக்கோபு ஒரு ஆட்டைப் பலியிட்டு மலையில் வழிபாடு செய்தான். தன் மனிதர்களை அழைத்து உணவு உண்ணுமாறு வேண்டினான். உணவு முடிந்தபின் அந்த இரவை மலையின் மேலேயே கழித்தனர். 55மறுநாள் அதிகாலையில், லாபான் எழுந்து தன் மகள்களையும் பேரப்பிள்ளைகளையும் முத்தமிட்டு ஆசீர்வதித்தான். பின் தன் ஊருக்குத் திரும்பிப் போனான்.

## ஏசாவோடு திரும்ப சேருதல்

32 யாக்கோபும் அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டான். வழியில் அவன் தேவதூதர்களைக் கண்டான். 2அவர்களைப் பார்த்ததும் "இதுவே தேவனின் முகாம்" என்று எண்ணினான். அந்த இடத்திற்கு மக்னாயீம்* என்று பேர் வைத்தான்.

3யாக்கோபின் சகோதரனான ஏசா, சேயீர் பகுதியில் வாழ்ந்து வந்தான். அது ஏதோம் நாட்டைச் சேர்ந்தது. யாக்கோபு ஏசாவிடம் தூதுவர்களை அனுப்பினான். 4யாக்கோபு அவர்களிடம், "எனது எஜமானனான ஏசாவிடம் இதைச் சொல்லுங்கள்: 'உங்கள் வேலைக்காரனான யாக்கோபு இந்த நாள்வரை லாபானோடு வாழ்ந்தேன். 5என்னிடம் நிறைய பசுக்களும், கழுதைகளும், ஆடுகளும், ஆண் வேலைக்காரர்களும், பெண் வேலைக்காரர்களும் உள்ளனர். ஐயா நீர் எங்களை ஏற்றுக்கொள்வதற்காகவே இந்தத் தூதுவரை அனுப்பினேன்'" என்றான்.

6தூதுவர்கள் யாக்கோபிடம் திரும்பி வந்து, "நாங்கள் உங்கள் சகோதரர் ஏசாவிடம் சொன்னோம். அவர் உங்களைச் சந்திக்க 400 பேரோடே வருகிறார்" என்றனர்.

7அதனால் யாக்கோபு பயந்தான். தன்னோடு இருந்தவர்களையும் மிருகங்களையும் இரு பிரிவாகப் பிரித்தான். 8"ஏசா வந்து ஒரு பிரிவை அழித்தால் இன்னொரு பிரிவு தப்பி ஓடிப் பிழைத்துக்கொள்ளும்" என்று நினைத்தான்.

9"என் தந்தையாகிய ஆபிரகாமின் தேவனே! என் தந்தையாகிய ஈசாக்கின் தேவனே, கர்த்தாவே, என்னை என் சொந்த நாட்டுக்குத் திரும்பிப் போகுமாறு சொன்னீர். எனக்கு நன்மை செய்வதாகவும் சொன்னீர். 10என் மீது நீர் வைத்த மிகுதியான கருணைக்கும் நன்மைகளுக்கும் நான் தகுதியுடையவனில்லை. நான் யோர்தான் ஆற்றை முதல் முறையாகக் கடந்து சென்றபோது, என்னிடம் எதுவுமில்லை. ஒரு கைத்தடி மட்டுமே இருந்தது. இப்போது என்னிடம் இரு குழுக்களாகப் பிரிக்கும் அளவிற்கு எல்லாம் உள்ளது. 11இப்போது என்னை என் சகோதரனாகிய ஏசாவிட மிருந்து காப்பாற்றும். அவனைக் குறித்து நான் அஞ்சுகிறேன். அவன் வந்து அனைவரையும் கொன்றுவிடுவான். 12கர்த்தாவே 'நான் உனக்கு நன்மை செய்வேன் என்று சொன்னீர். உனது குடும்பத்தையும் ஜனங்களையும் கடற்கரையிலுள்ள மணலைப் போன்று பெருகச் செய்வேன்' என்று சொன்னீர்'" என்று பிரார்த்தித்தான்.

13யாக்கோபு இரவு முழுவதும் அங்கே தங்கி இருந்தான். ஏசாவுக்கு அன்பளிப்பாகக் கொடுக்க சில பொருட்களைத் தயார்செய்து வைத்தான். 14200 வெள்ளாடுகளையும், 20 கடாக்களையும், 200 செம்மறி ஆடுகளையும், 15பால் கொடுக்கும் 30 ஒட்டகங்களையும் அதன் குட்டிகளையும், 40 கடாரிகளையும், 10 காளைகளையும் 20 பெண் கழுதைகளையும், 10 ஆண் கழுதைகளையும் பிரித்தெடுத்தான். 16வேலைக்காரனிடம் ஒவ்வொரு மந்தையையும் தனித்தனியாக ஒப்புவித்து, "எனக்கு முன்னால் போங்கள். ஒவ்வொரு மந்தைக்கும் இடைவெளி இருக்கட்டும்" என்றான். 17யாக்கோபு அவர்களுக்குச் சில ஆணைகளையும் இட்டான். முதல் குழுவிடம், "என் சகோதரன் வந்து, 'யாருடைய மிருகங்கள் இவை? எங்கே போகின்றன? யாருடைய வேலைக்காரர்கள் நீங்கள்' என்று கேட்டால் நீங்கள் 18'இவை உங்கள் அடிமையான யாக்கோபின் மிருகங்கள். எஜமானே இவை உங்களுக்கான பரிசுகள், யாக்கோபும் பின்னால் வந்து கொண்டிருக்கிறார்' என்று சொல்லுங்கள்" என்றான்.

19யாக்கோபு இரண்டாம் வேலைக்காரனுக்கும், மூன்றாம் வேலைக்காரனுக்கும், மற்ற வேலைக்காரர்களுக்கும் இவ்வாறே கட்டளையிட்டான். "நீங்கள் ஏசாவைச் சந்திக்கும்போது. 20இவ்வாறே சொல்ல வேண்டும். 'இவை உங்களுக்கான பரிசுகள். உங்கள் அடிமையான யாக்கோபு பின்னால் வந்து கொண்டிருக்கிறார், என்று சொல்லவேண்டும்" என்றான்.

யாக்கோபு "இவர்களையும் பரிசுகளையும் முதலில் அனுப்பி வைத்தால் என் சகோதரன் ஏசா இவற்றை ஏற்றுக் கொண்டு என்னை மன்னித்து விடலாம்" என்று எண்ணினான். 21எனவே, யாக்கோபு பரிசுகளை அனுப்பிவிட்டு அன்று இரவு கூடாரத்திலேயே தங்கிவிட்டான்.

22பின்னிரவில் எழுந்து அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டான். அவன் தனது

---

**மக்னாயீம்** "இரண்டு முகாம்" எனப் பொருள்படும்.

இரண்டு மனைவிகளையும், இரண்டு
வேலைக்காரிகளையும், பதினொரு குழந்தை
களையும் தன்னோடு அழைத்துக்கொண்டு
ஆற்றைக் கடந்தான். 23முதலில் தன்
குடும்பத்தை ஆற்றைக் கடக்க அனுப்பினான்.
பிறகு தனக்குரிய அனைத்தும் கடக்க
உதவினான்.

### தேவனோடு போராடுதல்

24யாக்கோபு ஆற்றைக் கடந்தவர்களில்
கடைசி நபர். அவன் ஆற்றைக் கடக்குமுன்,
தனியாக நிற்கும்போது தேவதூதனைப்
போன்ற ஒருவர் வந்து அவனோடு
போராடினார். சூரியன் உதயமாகும்வரைக்
கும் அவர் போராடியும், 25அந்த மனிதரை
யாக்கோபு விடுவதாயில்லை. எனவே,
அவர் யாக்கோபின் தொடையைத் தொட்டார்.
அப்போது யாக்கோபின் கால் சுளுக்கிக்
கொண்டது.
26அந்த மனிதர் யாக்கோபிடம், "என்னைப்
போக விடுகிறாயா? சூரியன் உதித்து
விட்டது" என்று கேட்டார். அதற்கு
யாக்கோபு, "நான் உம்மைப் போக
விடமாட்டேன். நீர் என்னை ஆசீர்வதித்தே
ஆக வேண்டும்" என்றான்.
27அந்த மனிதர், "உன் பெயர் என்ன?"
என்று கேட்டார். அவன், "என் பெயர்
யாக்கோபு" என்றான்.
28பிறகு அந்த மனிதர், "உன் பெயர்
இனி யாக்கோபு அல்ல. உன் பெயர்
இஸ்ரவேல்.* நீ தேவனோடும் மனிதரோடும்
போராடி மேற்கொண்டபடியால் நான்
உனக்கு இந்தப் பெயரை வைக்கிறேன்.
உன்னைத் தோற்கடிக்க மனிதர்களால்
முடியாது" என்றார்.
29யாக்கோபு அவரிடம், "உமது பெயரைத்
தயவு செய்து சொல்லும்" என்றான். ஆனால்
அவர், "என் பெயரை ஏன் கேட்கிறாய்?"
என்று கேட்டார். அதே சமயத்தில் அவர்
யாக்கோபை ஆசீர்வதித்தார்
30எனவே, யாக்கோபு அந்த இடத்திற்கு
பெனியேல்* என்று பெயர் வைத்தான்.
"இந்த இடத்தில் நான் தேவனை
முகமுகமாய்ப் பார்த்தேன். உயிர் தப்பிப்
பிழைத்தேன்" என்றான். 31அவன்
பெனியேலைக் கடந்து போகையில் சூரியன்
உதயமாகி விட்டது. அவனது தொடை
சுளுக்கிக் கொண்டதால் நொண்டி நொண்டி
நடந்தான். 32எனவே, இன்னும் இஸ்ரவேல்
ஜனங்கள் தொடைச் சந்து தசையை
உண்பதில்லை. ஏனென்றால் அது தேவன்
யாக்கோபின் தொடைச் சந்து தசையைத்
தொட்ட இடம் ஆகும்.

---

**இஸ்ரவேல்** "தேவனுக்காகப் போராடுகிறான்," "தேவனுடன் போராடுகிறான்" அல்லது "தேவனுடைய போராட்டம்" எனப்படும்.

**பெனியேல்** "தேவனுடைய முகம்" எனப் பொருள்படும்.

### யாக்கோபு தனது தைரியத்தைக் காட்டுதல்

33 யாக்கோபு, ஏசா வருவதைப்
பார்த்தான். அவனோடு 400 ஆட்கள்
வந்தனர். யாக்கோபு தனது குடும்பத்தை
நான்கு குழுக்களாகப் பிரித்தான். லேயாளும்
அவள் குழந்தைகளும் ஒரு குழு. ராகேலும்
யோசேப்பும் இன்னொரு குழு. இரண்டு
வேலைக்காரிகளும் அவர்களின் பிள்ளை
களும் தனித்தனியாக இரண்டு குழுக்கள்.
2யாக்கோபு முதலில் வேலைக்காரிகளையும்
பிள்ளைகளையும் நிற்க வைத்தான். பின்
லேயாளும் அவள் பிள்ளைகளும்.
கடைசியில் ராகேல் மற்றும் யோசேப்பு
இருவரையும் நிற்க வைத்தான்.
3யாக்கோபு ஏசாவிடம் முதலில் போ
னான். அவன் போகும்போதே ஏழுமுறை
தரையில் குனிந்து வணங்கினான்.
4அப்போது ஏசா எதிர்கொண்டு ஓடிவந்து
அவனைத் தழுவிக் கொண்டான். ஏசா
யாக்கோபை கைகளால் கழுத்தில்
அணைத்துக்கொண்டு முத்தமிட்டான். பின்
இருவரும் அழுதனர். 5ஏசா ஏறிட்டுப்
பார்த்து பெண்களையும் குழந்தைகளையும்
கவனித்தான். "இவர்கள் அனைவரும் யார்?"
எனக் கேட்டான்.
யாக்கோபு, "இவர்கள் தேவன் கொடுத்த
என் பிள்ளைகள். தேவன் எனக்கு நன்மை
செய்திருக்கிறார்" என்றான்.
6பிறகு இரு வேலைக்காரிகளும்
குழந்தைகளும் ஏசாவின் அருகில் சென்று
அவன் முன் கீழே குனிந்து வணங்கினார்கள்.
7பிறகு லேயாளும் அவளது பிள்ளைகளும்
போய் பணிந்து வணங்கினார்கள். பின்னர்
ராகேலும் யோசேப்பும் ஏசாவின் அருகில்
சென்று பணிந்து வணங்கினார்கள்.
8ஏசா அவனிடம், "நான் வரும்போது
பார்க்க நேர்ந்த இந்த மனிதர்கள் எல்லாம்
யார்? இந்த மிருகங்கள் எல்லாம் எதற்காக?"
என்று கேட்டான்.
யாக்கோபு, "என்னை நீர் ஏற்றுக்
கொண்டதன் அடையாளமாக இப்பரிசுப்
பொருட்களை ஏற்றுக்கொள்ள வேண்டும்"
என்றான்.
9ஆனால் ஏசாவோ, "எனக்கு நீ பரிசுப்
பொருட்கள் கொடுக்க வேண்டிய தேவை
யில்லை. என்னிடம் போதுமான அளவு
இருக்கிறது" என்றான்.
10அதற்கு யாக்கோபு, "இல்லை. நான்
கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன், என்னை
நீர் உண்மையில் ஏற்றுக்கொள்வதானால்
இப்பொருட்களையும் ஏற்றுக் கொள்ளும்.
உமது முகத்தை மீண்டும் பார்த்ததில் மிகவும்
மகிழ்ச்சி அடைகிறேன். இது தேவனின்
முகத்தைப் பார்ப்பதுபோல் இருக்கிறது.
என்னை நீர் ஏற்றுக்கொண்டதைப் பார்த்து
மிகவும் சந்தோஷப்படுகிறேன். 11ஆகையால்

நான் கொடுக்கும் பரிசுப் பொருட்களையும்
ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறேன்.
தேவன் எனக்கு நிறைய நன்மைகள்
செய்திருக்கிறார். தேவைக்குமேல் என்னிடம்
உள்ளது” என்றான். இவ்வாறு யாக்கோபு
கெஞ்சியதால் ஏசா பரிசுப் பொருட்களை
ஏற்றுக் கொண்டான்.
12 ஏசா “இப்போது உனது பயணத்தைத்
தொடரலாம். நான் உனக்கு முன் வருவேன்”
என்றான்.
13 ஆனால் யாக்கோபோ, “எனது
குழந்தைகள் பலவீனமாய் இருக்கிறார்கள்
என்பது உமக்குத் தெரியும். எனது
மந்தைகளைப் பற்றியும், அவற்றின் இளம்
கன்றுகளைப் பற்றியும் நான் கவனமாக
இருக்க வேண்டும். நான் அவற்றை ஒரு
நாளில் அதிக தூரம் நடக்க வைத்தால்
எல்லா விலங்குகளும் மரித்துப்போகும்.
14 எனவே நீங்கள் போய்க்கொண்டே
இருங்கள், நான் மெதுவாகப் பின் தொடர்ந்து
வருகிறேன். ஆடுமாடுகளும் மற்ற
மிருகங்களும் பாதுகாப்பாக இருக்கும்
வகையில் நான் மெதுவாக வருகிறேன். என்
குழந்தைகள் மிகவும் சோர்ந்து போகாதபடி
மெதுவாக வருகிறேன். நான் உங்களை
சேயீரில் சந்திப்பேன்” என்றான்.
15 எனவே ஏசா, “பிறகு நான் எனது
சில மனிதர்களை உனக்கு உதவியாக விட்டு
விட்டுப் போகிறேன்” என்றான்.
ஆனால் யாக்கோபு, “உம் அன்புக்காக
நன்றி, ஆனால் அது தேவையில்லை”
என்றான். 16 எனவே அன்று ஏசா
சேயீருக்குப் பயணம் புறப்பட்டான்.
17 ஆனால் யாக்கோபோ சுக்கோத்திற்குப்*
பயணம் செய்தான். அங்கே அவன்
தனக்கென்று வீடு கட்டிக்கொண்டதுடன்,
மிருகங்களுக்கும் தொழுவம் அமைத்துக்
கொண்டான். எனவே அந்த இடம் சுக்கோத்
என்று பெயர் பெற்றது.
18 யாக்கோபு தனது பயணத்தைச் சுகமாக
பதான் அராமிலிருந்து கானான் நாட்டிலி
லுள்ள சீகேம் பட்டணத்திற்கு அருகில்
முடித்துவிட்டான். நகரத்திற்கு அருகிலுள்ள
வயலில் தன் கூடாரத்தைப் போட்டான்.
19 யாக்கோபு அந்த வயலைச் சீகேமின்
தந்தையான ஏமோரிடமிருந்து விலைக்கு
வாங்கினான். அவன் அதற்கு 100 வெள்ளிக்
காசுகள் கொடுத்தான். 20 யாக்கோபு
தேவனைத் தொழுதுகொள்ள அங்கே ஒரு
பலிபீடத்தைக் கட்டினான். யாக்கோபு அந்த
இடத்திற்கு “ஏல் எல்லோகே இஸ்ரவேல்”
என்று பெயரிட்டான்.

#### தீனாள் கற்பழிக்கப்படுதல்

34 யாக்கோபுக்கும் லேயாளுக்கும் பிறந்த
மகள் தீனாள். ஒரு நாள் அவள்
அப்பகுதியிலுள்ள பெண்களைப்
பார்ப்பதற்காகச் சென்றாள். 2 ஏமோர் அந்தப்
பகுதியின் அரசன். அவனது மகனான சீகேம்
தீனாளைப் பார்த்தான். அவன் அவளைக்
கடத்திக்கொண்டுபோய் அவளைக்
கற்பழித்தான். 3 பிறகு சீகேம் அவளை
மணந்துகொள்ள விரும்பினான். 4 அவன் தன்
தந்தையிடம் சென்று, “நான் திருமணம்
செய்துகொள்ளும்பொருட்டு இந்தப் பெண்
ணை ஏற்பாடு செய்யுங்கள்” என்றான்.
5 யாக்கோபு தன் மகளுக்கு ஏற்பட்ட
தீய நிலைமையை அறிந்துகொண்டான்.
அப்போது யாக்கோபின் மகன்கள் ஆடு
மேய்ப்பதற்காக வயலுக்கு வெளியே போயி
ருந்தார்கள். அவர்கள் திரும்பி வரும்வரை
எதுவும் செய்ய முடியவில்லை. 6 அப்போது
சீகேமின் தந்தையாகிய ஏமோர்
யாக்கோபோடு பேசுவதற்குப் போனான்.
7 வயலில் யாக்கோபின் மகன்கள்
நடந்ததைப்பற்றிக் கேள்விப்பட்டனர்.
இதினால் அவர்களுக்குக் கடும் கோபம்
வந்தது. நடந்த காரியம் அவர்களுக்கு
அவமானமாக இருந்தது. சீகேம் யாக்கோபின்
மகளைக் கற்பழித்ததால் இஸ்ரவேலுக்கே
அவன் இழிவைகொண்டு வந்தான். அவர்கள்
உடனே வயல்களிலிருந்து திரும்பி
வந்தார்கள்.
8 ஏமோர் அவர்களோடு பேசினான். “என்
மகன் சீகேம் தீனாளைப் பெரிதும்
விரும்புகிறான். அவளை அவன் மணந்து
கொள்ளுமாறு அனுமதியுங்கள். 9 இந்தத்
திருமணம் நமக்குள் ஒரு சிறப்பான ஒப்பந்தம்
உண்டு எனக் காண்பிக்கும். பிறகு உங்கள்
ஆண்கள் எங்கள் பெண்களையும் எங்கள்
ஆண்கள் உங்கள் பெண்களையும் மணந்து
கொள்ளட்டும். 10 நீங்கள் இங்கேயே
எங்களோடு வாழலாம். இந்த நிலத்தை
நீங்கள் எடுத்துக்கொண்டு இங்கேயே
வியாபாரம் செய்யலாம்” என்றான்.
11 சீகேம் யாக்கோபோடும் தீனாளின்
சகோதரர்களோடும் கூட பேசினான்.
“என்னை ஏற்றுக் கொள்ளுங்கள் நீங்கள்
என்ன செய்யச் சொன்னாலும் நான்
உங்களுக்காகச் செய்வேன். 12 உங்களுக்கு
எந்த அன்பளிப்பு வேண்டுமானாலும் நான்
கொடுப்பேன். ஆனால் தீனாளை மணக்க
என்னை அனுமதிக்க வேண்டும்” என்று
கெஞ்சினான்.
13 யாக்கோபின் மகன்களோ சீகேமையும்
அவனது தந்தையையும் வஞ்சிக்க
விரும்பினார்கள். தங்கள் சகோதரிக்கு
அவன் செய்த கேடான காரியத்தை அவர்
களால் மறக்க முடியவில்லை. 14 அதனால்,
“எங்கள் சகோதரியை நீ மணந்துகொள்ள

---

**சுக்கோத்** யோர்தான் ஆற்றிற்கு கிழக்கு பக்கமாக உள்ள நகரம் “தற்காலிகமாக தங்குமிடம்” எனப் பொருள்படும்.

அனுமதிக்க முடியாது. ஏனென்றால் நீ
இன்னும் விருத்தசேதனம் செய்து
கொள்ளவில்லை. அதனால் இந்த மணம்
தவறாகும். 15ஆனால் நீயும் உன்
நகரத்திலுள்ள அனைத்து ஆண்களும்
விருத்தசேதனம் செய்துகொள்ள வேண்டும்.
அப்போது எங்கள் சகோதரியை மணந்து
கொள்ள அனுமதிக்கிறோம். 16பிறகு உங்கள்
ஆண்கள் எங்கள் பெண்களையும் எங்கள்
ஆண்கள் உங்கள் பெண்களையும் மணந்து
கொள்ளலாம். பிறகு நாம் ஒரே ஜனங்கள்
ஆகலாம். 17இல்லாவிட்டால் நாங்கள்
தீனாளை அழைத்துக்கொண்டு போய்
விடுவோம்" என்றனர்.

18இந்த ஒப்பந்தத்தால் ஏமோரும் அவன்
மகன் சீகேமும் மகிழ்ச்சி அடைந்தனர்.
19சீகேம் தீனாளை விரும்பியதால் தீனாளின்
சகோதரர்கள் சொன்னதைச் செய்வதில்
சீகேம் மிக்க மகிழ்ச்சியடைந்தான்.

## பழிவாங்குதல்

சீகேம் அவனது குடும்பத்திலேயே
மதிப்பிற்குரிய மனிதன். 20ஏமோரும் சீகேமும்
நகரத்திற்குள்ளே ஜனங்கள் கூடும்
இடத்திற்குச் சென்று, அவர்களோடு பேசி
னார்கள். 21"இஸ்ரவேல் ஜனங்கள் நம்மோடு
நட்பாக இருக்க விரும்புகின்றனர். நாம்
இந்தப் பூமியில் அவர்களை வாழவிடுவோம்.
அவர்கள் நம்மோடு சமாதானமாய்
இருக்கட்டும். நம் அனைவருக்கும்
போதுமான நிலம் இங்கே உள்ளது.
அவர்களின் பெண்களை நாம் மணந்து
கொள்ளலாம். நமது பெண்களையும்
அவர்களுக்கு மணமுடித்துக் கொடுக்கலாம்.
22ஆனால் நாம் ஒரு காரியம் செய்ய
ஒப்புக்கொள்ள வேண்டும். நமது ஆண்கள்
அனைவரும் விருத்தசேதனம் செய்து
கொள்ள வேண்டும். ஏனென்றால்
அவர்களும் அவ்வாறே செய்திருக்கிறார்கள்.
23நாம் இவ்வாறு செய்தால் நாம் அவர்களின்
ஆடுமாடுகளைப் பெற்று பணக்காரர்களாகி
விடுவோம். எனவே இந்த ஒப்பந்தத்தை
நாம் நிறைவேற்றுவோம். அவர்களும்
நம்மோடு இங்கே தங்கட்டும்" என்றான்.
24அக்கூட்டத்தில் கலந்துகொண்ட அனை
வரும் இதற்கு ஒப்புக் கொண்டனர்.
அப்போது ஒவ்வொரு ஆண் மகனுக்கும்
விருத்தசேதனம் செய்யப்பட்டது.

25மூன்று நாட்கள் ஆனதும்
விருத்தசேதனம் செய்துகொண்ட ஆண்
களுக்குப் புண் ஆறாமல் இருந்தது.
யாக்கோபின் மகன்களில் இருவரான
சிமியோனும் லேவியும், பட்டணத்திலுள்ள
ஆண்களின் நிலையை அறிந்து கொண்டு,
அங்கு போய் ஆண்களை எல்லாம் வெட்டிக்
கொன்றார்கள். 26தீனாளின் சகோதரர்க
ளாகிய சிமியோனும் லேவியும்
ஏமோரையும் சீகேமையும் கொன்றனர்.
பிறகு தீனாளை அழைத்துக்கொண்டு
சீகேமின் வீட்டை விட்டு வெளியேறினர்.
27யாக்கோபின் மகன்கள் நகரத்திற்குள் போய்
அங்குள்ள செல்வங்களையெல்லாம் கொள்
ளையிட்டனர். அவர்கள் தங்கள் சகோ
தரிக்கு ஏற்பட்ட அவமானத்திற்காக
இன்னும் கோபம் தணியாமல் இருந்தனர்.
28அவர்கள் எல்லா மிருகங்களையும்
கொண்டு சென்றதுடன், கழுதைகளையும்
பிறவற்றையும் வயலில் உள்ளவற்றையும்
எடுத்துக்கொண்டனர். 29தீனாளின் சகோத
ரர்கள் சீகேம் ஜனங்களின் அனைத்துப்
பொருட்களையும் எடுத்துக் கொண்டதோடு
அவர்களின் மனைவிமார்களையும் குழந்
தைகளையும் அழைத்துக் கொண்டனர்.

30ஆனால் யாக்கோபு, "நீங்கள் எனக்கு
மிகுதியாகத் தொல்லை கொடுக்கிறீர்கள்.
இந்தப் பகுதியிலுள்ள அனைவரும் என்னை
வெறுப்பார்கள். அனைத்து கானானி
யர்களும் பெரிசியர்களும் எனக்கு எதிராகத்
திரும்புவார்கள். நாம் கொஞ்சம்பேர்தான்
இருக்கிறோம். இங்குள்ள ஜனங்கள் எல்லாம்
கூடி நம்மோடு சண்டைக்கு வந்தால் நாம்
அழிக்கப்பட்டு விடுவோம். நமது ஜனங்கள்
அனைவரும் அழிந்து போவார்கள்" என்று
சிமியோனிடமும் லேவியிடமும் சொன்
னான்.

31ஆனால் அச்சகோதரர்களோ, "எங்கள்
சகோதரியை அவர்கள் ஒரு வேசியைப்
போன்று நடத்தினார்களே. அதை நாங்கள்
அனுமதிக்க முடியுமா? முடியாது. அவர்கள்
எங்கள் சகோதரிக்குத் தீங்கு செய்து
விட்டனர்" என்றார்கள்.

## பெத்தேலில் யாக்கோபு

35 தேவன் யாக்கோபிடம், "பெத்தேல்
நகரத்திற்குப் போய், அங்கே வாசம்
செய். தொழுதுகொள்ள எனக்கொரு
பலிபீடம் கட்டு. நீ உன் சகோதரனாகிய
ஏசாவிற்குப் பயந்து ஓடிப்போனபோது
உனக்குக் காட்சி தந்த தேவனுக்கு அங்கே
ஒரு பலிபீடத்தை அமைத்து அங்கு
தேவனைத் தொழுதுகொள்" என்றார்.

2எனவே, யாக்கோபு தன் குடும்பத்தார்
வேலைக்காரர்கள் அனைவரிடமும், "உங்க
ளிடம் உள்ள மரத்தாலும் உலோகங்களாலும்
செய்யப்பட்ட அந்நிய தெய்வங்களை
யெல்லாம் அழித்துப் போடுங் கள். உங்க
ளைத் தூய்மைப்படுத்திக் கொண்டு,
சுத்தமான ஆடைகளை அணிந்து கொள்ளுங்
கள். 3நாம் இந்த இடத்தைவிட்டு பெத்தே
லுக்குப் போகிறோம். அங்கே எனக்குத்
துன்பத்தில் உதவிய தேவனுக்கு நான்
பலிபீடம் கட்டப் போகிறேன். அந்த தேவன்
நான் எங்கு போனாலும் என்னோடு
இருக்கிறார்" என்றான்.

4எனவே, ஜனங்கள் தம்மிடம் இருந்த
அந்நிய தெய்வங்களையும், தங்கள்

*காதுகளில் அணிந்திருந்த வளையங்களையும் யாக்கோபிடம் கொடுத்தார்கள். அவற்றை சீகேம் நகருக்கருகில் இருந்த ஒரு கர்வாலி மரத்தின் அடியிலே புதைத்துவிட்டான்.*
5 *யாக்கோபும் அவனது மகன்களும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போனபோது, அப்பகுதியில் உள்ள ஜனங்கள் அவர்களைப் பின்தொடர்ந்துபோய் அவர்களைக் கொலைசெய்ய விரும்பினார்கள். ஆனால் தேவனால் ஏற்படுத்தப்பட்ட ஒரு பயம் அவர்களுக்கு ஏற்பட்டபடியால் அவர்கள் யாக்கோபைப் பின்தொடர*
*வில்லை.* 6 *எனவே, யாக்கோபும் அவனைச் சேர்ந்தவர்களும் கானானிலுள்ள லூசை அடைந்தனர். லூஸ் இப்போது பெத்தேல்*
*என்று அழைக்கப்பட்டது.* 7 *யாக்கோபு அவ்விடத்தில் ஒரு பலிபீடத்தைக் கட்டினான். அதற்கு "ஏல் பெத்தேல்" என்று பெயரிட்டான். காரணம் அவன் சகோதரனுக்குப் பயந்து ஓடியபோது தேவன் அந்த இடத்தில்தான் அவனுக்கு முதலில் காட்சியளித்தார்.*
8 *தெபோராள் எனும் ரெபெக்காளின் தாதி அங்கு மரித்துபோனாள். பெத்தேலில் கர்வாலி மரத்தின் அடியில் அவளை அடக்கம் செய்தனர் அந்த இடத்திற்கு அல்லோன்பாகூத்* என்று பெயர் வைத்தனர்.*

### யாக்கோபின் புதிய பெயர்

9 *பதான் அராமிலிருந்து யாக்கோபு திரும்பி வந்தபோது தேவன் மீண்டும் அவனுக்குக் காட்சியளித்தார், தேவன்*
*யாக்கோபை ஆசீர்வதித்தார்.* 10 *தேவன், யாக்கோபிடம், "உன் பெயர் யாக்கோபு. உன்பெயர் இனி யாக்கோபு என அழைக்கப்படாது. உன் பெயர் இஸ்ரவேல் எனப்படும்" என்று கூறி அவனுக்கு 'இஸ்ரவேல்' என்று பெயரிட்டார்.*
11 *தேவன் அவனிடம், "நான் சர்வ வல்லமையுள்ள தேவன். உனக்கு இந்த ஆசீர்வாதத்தைத் தருவேன். நீ நிறைய குழந்தைகளைப் பெற்று ஒரு நாட்டை உருவாக்குவாய். வேறு ஜாதிகளின் கூட்டமும், அரசர்களும் உன்னிடமிருந்து*
*தோன்றுவார்கள்.* 12 *நான் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் சிறந்த இடங்களைக் கொடுத்திருந்தேன். இப்போது அதனை உனக்குக் கொடுக்கிறேன். உனக்குப் பின்னால் வரும் உன் பிள்ளைகளுக்கும் கொடுப்பேன்"*
*என்றார்.* 13 *பிறகு தேவன் அந்த இடத்தை விட்டு எழுந்தருளிப் போனார்.*
14-15 *யாக்கோபு தேவன் தன்னோடு பேசின அந்த இடத்தில் ஒரு ஞாபகக் கல் நிறுத்தி அதில் திராட்சைரசத்தையும் எண்ணெயையும் ஊற்றினான். இது ஒரு சிறப்பான இடம். ஏனென்றால் அதுதான் தேவன் அவனிடம் பேசிய இடம். எனவே யாக்கோபு அதற்கு பெத்தேல் என்று பெயரிட்டான்.*

### ராகேல் மரணமடைதல்

16 *யாக்கோபும் அவனது கூட்டமும் பெத்தேலை விட்டுப் புறப்பட்டது. எப்பிராத்தாவுக்கு வர இன்னும் கொஞ்ச தூரம் இருந்தது. அப்போது ராகேல் பிள்ளை*
*பெற்றாள்.* 17 *ஆனால் பிரசவ வேதனை அதிகமாக இருந்தது. தாதியோ, "பயப்படாதே நீ இன்னொரு குழந்தையையும் பெறுவாய்" என்றாள்.*
18 *ஆனால் அவள் ஆண் குழந்தை பெறும் போதே மரித்துபோனாள். மரிக்கும் முன்னால் தன் மகனுக்குப் பெனோனி* என்று பெயர் சூட்டினாள். ஆனால் யாக்கோபு அவனைப் பென்யமீன்* என்று அழைத்தான்.*
19 *ராகேல் எப்பிராத்தாவுக்குப் போகும் சாலை ஓரத்திலேயே அடக்கம் செய்யப்பட்டாள். (எப்பிராத்தா என்பது பெத்லேகம்*
*ஆகும்)* 20 *யாக்கோபு அதில் ஒரு சிறப்பான கல்தூணை நட்டு ராகேலின் கல்லறையைப் பெருமைப்படுத்தினான், இன்றும் அக்கல்*
*(தூண்) உள்ளது.* 21 *இஸ்ரவேல் (யாக்கோபு) தன் பயணத்தைத் தொடர்ந்தான். ஏதேர் கோபுரத்திற்குத் தென் பகுதியில் கூடாரமிட்டான்.*
22 *இஸ்ரவேல் அங்கு கொஞ்சக்காலமே தங்கினான். அப்போது ரூபன், தன் தந்தையின் வேலைக்காரியான* பில்காளோடு பாலின உறவு கொண்டதை அறிந்து இஸ்ரவேல் கடுங்கோபம் கொண்டான்.*

### இஸ்ரவேலின் குடும்பம்

*யாக்கோபிற்கு (இஸ்ரவேலுக்கு)* 12 *மகன்கள் இருந்தார்கள்.*
23 *ரூபன், சிமியோன், லேவி, யூதா, இசக்கார், செபுலோன் ஆகியோர் யாக்கோபுக்கும் லேயாளுக்கும் முதலில் பிறந்தவர்கள்.*
24 *யோசேப்பும் பென்யமீனும் யாக்கோபுக்கும் ராகேலுக்கும் பிறந்தவர்கள்.*
25 *தாண், நப்தலி ஆகிய இருவரும் யாக்கோபுக்கும் பில்காளுக்கும் பிறந்தவர்கள்.*
26 *காத், ஆசேர் இருவரும் யாக்கோபுக்கும்*
*சில்பாளுக்கும் பிறந்தவர்கள்.* 8 *இவர்கள் அனைவரும் பதான் அராமில் யாக்கோபிற்குப் (இஸ்ரவேலுக்கு) பிறந்தவர்கள்.*
27 *யாக்கோபு தனது தந்தை ஈசாக்கு இருந்த*

---

***அல்லோன்பாகூத்*** *"துக்கத்தின் கர்வாலி மரம்" எனப் பொருள்படும்.*

**பெனோனி** *"என் துக்கத்தின் மகன்" எனப் பொருள்படும்.*

**பென்யமீன்** *"எனது வலது கை (அன்பான) மகன்" எனப் பொருள்படும்.*

***வேலைக்காரி*** *"அடிமைப்பெண்" "ஒருவனுக்கு மனைவிபோல இருப்பாள்."*

கீரியாத் அர்பாவிலிருந்த மம்ரேக்கு
சென்றான். அங்கேதான் ஆபிரகாமும்
வாழ்ந்தான். 28ஈசாக்கு 180 ஆண்டுகள்
வாழ்ந்தான். 29பிறகு ஈசாக்கு பலவீனமாகி
மரித்துப் போனான். அவன் நீண்ட
முழுமையான வாழ்க்கை வாழ்ந்தான்.
ஏசாவும் யாக்கோபும் ஆபிரகாமை அடக்கம்
செய்த இடத்திலேயே ஈசாக்கையும் அடக்கம்
செய்தனர்.

## ஏசாவின் குடும்பம்

36 இது ஏசாவின் குடும்ப வரலாறு.
2ஏசா கானான் நாட்டுப் பெண்களை
மணந்து கொண்டான். அவன் ஏத்தியனான
ஏலோனின் மகளான ஆதாளையும்,
ஏவியனாகிய சிபியோனின் மகளும்
ஆனாகின் மகளுமான அகோலிபாமாளையும்
முதலில் மணந்து கொண்டான். 3இஸ்ம
வேலின் மகளும் நெபாயோத்தின் சகோதரி
யுமான பஸ்மாத்தையும் பிறகு மணந்தான்.
4ஏசாவுக்கும் ஆதாளுக்கும் எலீப்பாஸ் என்ற
மகன் பிறந்தான். பஸ்மாத்துக்கு ரெகுவேல்
என்ற மகன் பிறந்தான். 5அகோலிபா
மாளுக்கு எயூஷ், யாலாம், கோரா என்ற
மூன்று மகன்கள் பிறந்தனர். ஏசாவின்
இந்தப் பிள்ளைகள் கானான் நிலப்
பகுதியிலேயே பிறந்தனர்.
6-8யாக்கோபு மற்றும் ஏசா ஆகியோரின்
குடும்பங்கள் கானான் நாட்டில் வளர்ந்து
மிகப் பெரிதாயின. எனவே ஏசா தன்
சகோதரன் யாக்கோபை விட்டு விலகிப்
போனான். ஏசா தனது மனைவியரை
யும், பிள்ளைகளையும், அடிமைகளையும்,
பசுக்கள் மற்றும் மிருகங்களையும் மற்ற
பொருட்களையும் எடுத்துக் கொண்டு சேயீர்
எனும் மலைப் பகுதிக்குச் சென்றான்.
(ஏசாவுக்கு ஏதோம் என்ற பேரும் உண்டு.
சேயீர்* நாட்டுக்கும் இந்தப் பெயர் உண்டு)
9ஏசா ஏதோம் ஜனங்களுக்குத்
தந்தையானான். சேயீர் எனும் மலைப்
பகுதியில் வாழ்ந்த ஏசா குடும்பத்தினரின்
பெயர்கள் பின் வருமாறு:
10ஏசாவுக்கும் ஆதாவுக்கும் பிறந்த மகன்
எலிப்பாஸ். ஏசாவுக்கும் பஸ்மாத்துக்கும்
பிறந்த மகன் ரெகுவேல்.
11எலிப்பாசுக்கு தேமான், ஓமார்,
செப்போ, கத்தாம், கேனாஸ் எனும் ஐந்து
மகன்கள். 12எலிப்பாசுக்குத் திம்னா என்ற
வேலைக்காரி இருந்தாள். அவளுக்கும்
அவனுக்கும் அமலேக்கு என்ற மகன்
பிறந்தான்.
13ரெகுவேலுக்கு நகாத், செராகு, சம்மா,
மீசா என்று நான்கு மகன்கள்.
இவர்கள் ஏசாவுக்கு பஸ்மாத் மூலம்
வந்த பேரக்குழந்தைகள்.
14ஏசாவின் மூன்றாவது மனைவியான
சிபியோனின் மகள் ஆனாகினின் மகளான
அகோலிபாமாள் எயூஷ், யாலாம், கோராகு
எனும் மகன்களைப் பெற்றாள்.
15ஏசாவின் மகன்களில் கீழ்க்கண்ட
கோத்திரங்கள் தோன்றினர்.
ஏசாவின் மூத்த மகன் எலீப்பாஸ்.
எலீப்பாசிலிருந்து தேமான், ஓமார்,
செப்போ, கேனாஸ், 16கோராகு, கத்தாம்,
அமலேக்கு என்பவர்கள்.
இவர்கள் ஏதோம் நாட்டில் எலீப்பாசின்
சந்ததியும் ஏசாவின் மனைவி வழி வந்த
ஆதாளின் கோத்திரங்கள்.
17ஏசாவின் மகனாகிய ரெகுவேலின்
மகன்களில் நகாத், செராகு, சம்மா, மீசா,
என்பவர்கள் முக்கியமானவர்கள்.
இவர்கள் ஏதோம் நாட்டில் ரெகுவேலின்
சந்ததியும் ஏசாவின் மனைவியாகிய
பஸ்மாத்தின் மகனுமாயிருந்த பிரபுக்கள்.
18ஏசாவின் மனைவியாகிய அகோலி
பாமாளின் மகன்களான எயூஷ், யாலாம்,
கோராகு என்பவர்கள். இவர்கள் ஆனாகின்
மகளும் ஏசாவின் மனைவியுமாகிய
அகோலிபாமாளின் சந்ததியாயிருந்த தலை
வர்கள். 19இவர்கள் எல்லோரும் ஏசாவின்
குடும்பத்திலிருந்து வந்தவர்கள்.
20அந்த நாட்டில் ஏசாவுக்கு முன் வாழ்ந்த
சேயீருக்கு லோத்தான், சோபால்,
சிபியோன், ஆனாகு. 21திஷோன், ஏதசேர்,
திஷான் என்னும் மகன்கள் இருந்தனர்.
இவர்கள் ஏதோம் நாட்டில் சேயீரின்
மகன்களாகிய ஓரியருடைய சந்ததியாயிருந்த
பிரபுக்கள்.
22லோத்தானுக்கு ஓரி, ஏமாம் எனும்
மகன்கள் இருந்தனர். லோத்தானின் சகோதரி
திம்னாள் என்பவள்.
23சோபாலினுக்கு அல்வான், மானகாத்,
ஏபால், செப்போ, ஓனாம் எனும் மகன்கள்
இருந்தனர்.
24சிபியோனுக்கு அயா, ஆனாகு எனும்
மகன்கள் இருந்தனர். ஆனாகு தன்
தகப்பனாகிய சிபியோனின் கழுதைகளைப்
பாலைவனத்தில் மேய்க்கையில் வெந்நீர்
ஊற்றுகளைக் கண்டுபிடித்தான்.
25ஆனாகினுக்கு திஷோன், அகோலி
பாமாள் எனும் பிள்ளைகள் இருந்தனர்.
26திஷோனுக்கு எம்தான், எஸ்பான்,
இத்தரான், கெரான் எனும் மகன்கள்
இருந்தனர்.
27ஏத்சேனுக்கு பில்கான், சகவான்,
அக்கான் என்னும் மகன்கள் இருந்தனர்.
28திஷானுக்கு ஊத்ஸ், அரான், என்னும்
மகன்கள் இருந்தனர்.
29ஓரியரின் சந்ததியிலே லோத்தான்,
சோபால், சிபியோன், ஆனாகு, 30திஷோன்,
ஏத்சேர், திஷான் என்பவர்கள் தலைவர்கள்
ஆனார்கள். இவர்களே சேயீர் நாட்டிலே
தங்கள் பகுதிகளில் இருந்த ஓரியர்
சந்ததியிலே உள்ள பிரபுக்கள். 31அப்பொழுது

---

**சேயீர்** ஏதோமிலுள்ள மலைப் பகுதியான இடம்.

ஏதோமிலே இராஜாக்கள் இருந்தார்கள்.
இஸ்ரவேலுக்கு நீண்ட காலத்திற்கு முன்பே
ஏதோமில் பல மன்னர்கள் இருந்தனர்.
32பேயோர் எனும் அரசனின் மகனாகிய
பேலா ஏதோமில் ஆட்சி செலுத்தி வந்தான்.
அவன் தின்காபா எனும் நகரிலிருந்து
ஆண்டான். 33பேலா மரித்ததும் யோபாப்
அரசன் ஆனான். இவன் போஸ்றாவிலுள்ள
சேராகுவின் மகன். 34யோபாப் மரித்ததும்
ஊசாம் அரசாண்டான். இவன் தேமானிய
நாட்டினன். 35ஊசாம் மரித்ததும் ஆதாத்
அரசாண்டான். இவன் பேதாதின் மகன்.
(ஆதாத் மோவாபிய நாட்டிலே மீதியா
னியரை வெற்றி பெற்றவன்) இவன் ஆவீத்
நாட்டிலிருந்து வந்தவன். 36ஆதாத் மரித்தபின்
சம்லா அரசாண்டான். இவன் மஸ்ரேக்கா
ஊரைச் சார்ந்தவன். 37சம்லா மரித்தபின்
சவுல் அரசாண்டான். இவன் அங்குள்ள
ஆற்றின் அருகிலுள்ள ரெகொபோத் ஊரைச்
சேர்ந்தவன். 38சவுல் மரித்தபின்
பாகால்கானான் அரசாண்டான். இவன்
அக்போருடைய மகன். 39பாகால்கானான்
மரித்தபின் ஆதார் அரசாண்டான். இவன்
பாகு எனும் நகரைச் சேர்ந்தவன். இவனது
மனைவியின் பெயர் மெகேதபேல். இவள்
மத்ரேத் மற்றும் மேசகாவின் மகள்.
40-43ஏசாவே ஏதோமிய குடும்பங்களின்
தந்தை ஆவான். ஏசாவின் வம்சத்தில்
திம்னா, அல்வா, ஏதேத், அகோலிபாமா,
ஏலா, பினோன், கேனாஸ், தேமான், மிப்சர்,
மக்தியேல், ஈராம் எனும் பிரபுக்கள்
இருந்தனர். ஒவ்வொரு குடும்பமும் அந்தந்த
குடும்பப் பெயர்களால் அழைக்கப்படுகிற
பகுதிகளில் வாழ்ந்து வந்தனர்.

### கனவுகாணும் யோசேப்பு

37 கானான் தேசத்திலேயே யாக்கோபு
வாழ்ந்து வந்தான். இதே நாட்டில்தான்
அவனது தந்தையும் வாழ்ந்திருந்தான். 2இது
யாக்கோபின் குடும்ப வரலாறு:
யோசேப்பு ஓர் 17 வயது இளைஞன்.
தன் சகோதரர்களோடு சேர்ந்து ஆடு
மாடுகளைக் கவனித்துக் கொள்வது
அவனது வேலை. பில்காள், சில்பாள்,
ஆகியோரின் மகன்களும் அவனோடு இருந்
தனர் (பில்காளும், சில்பாளும் அவனது
தந்தையின் மனைவிகள்.) யோசேப்பு தன்
சகோதரர்கள் செய்த கெட்ட செயல்களைத்
தந்தையிடம் சொன்னான். 3யோசேப்பு
பிறக்கும்போது இஸ்ரவேலுக்கு மிக முதிய
வயது. எனவே அவன் மற்ற மகன்களைவிட
யோசேப்பைப் பெரிதும் நேசித்தான்.
அவனுக்கென்று ஒரு தனி அங்கியைக்
கொடுத்திருந்தான். அது மிக நீளமான
தாகவும் அழகானதாகவும் இருந்தது.
4யோசேப்பின் சகோதரர்கள், தங்கள் தந்தை
தங்களைவிட யோசேப்பை அதிகமாக
நேசிப்பதாக உணர்ந்தனர். இதனால் அவர்
கள் அவனை வெறுத்தனர். எனவே
அவர்கள் அவனோடு அன்பாகப்
பேசுவதில்லை.
5ஒரு நாள் யோசேப்புக்கு விசேஷமான
கனவு வந்தது. அவன் அதனைச்
சகோதரர்களிடம் சொன்னான். அதனால்
அவர்கள் அவனை மேலும் வெறுத்தனர்.
6யோசேப்பு, "நான் ஒரு கனவு கண்டேன்.
7நாம் எல்லோரும் வயலில் வேலை செய்து
கொண்டிருக்கிறோம். கோதுமை அரிகளைக்
கட்டிக் கொண்டிருக்கிறோம். அப்போது
என்னுடைய கட்டு நிமிர்ந்திருந்தது. உங்கள்
கட்டுக்கள் என் கட்டுக்களைச் சுற்றி வந்து
வணங்கின" என்றான்.
8அவனுடைய சகோதரர்கள், "இதனால்
நீ அரசனாகி எங்களையெல்லாம் ஆளலாம்
என்று நினைக்கிறாயா?" எனக் கேட்டனர்.
அவன் சகோதரர்கள் இக்கனவைப்பற்றி
அறிந்தபிறகு அதிகமாக அவனை
வெறுத்தனர்.
9பிறகு யோசேப்புக்கு இன்னொரு கனவு
வந்தது. அதையும் அவன் அவர்களிடம்
சொன்னான். "நான் இன்னொரு கனவு
கண்டேன். அதில் சூரியனும் சந்திரனும்
பதினொரு நட்சத்திரங்களும் என்னை
வணங்கின" என்றான்.
10அவன் இக்கனவைத் தந்தையிடமும்
சொன்னான். ஆனால் அவனது தந்தை
அவனை விமர்சனம் செய்து, "என்ன
மாதிரியான கனவு இது? நானும் உனது
தாயும் சகோதரர்களும் உன்னை வணங்
குவோம் என நினைக்கிறாயா?" என்று
கேட்டான். 11யோசேப்பின் சகோதரர்கள்
தொடர்ந்து அவன்மீது பொறாமை
கொண்டிருந்தனர், அவன் தந்தையோ அவன்
சொன்னதை மனதிலே வைத்துக்கொண்டு,
அது என்னவாக இருக்கும் என்று
யோசனை செய்தான்.
12ஒரு நாள் யோசேப்பின் சகோதரர்கள்
சீகேமிற்குத் தங்கள் தந்தையின் ஆடுகளை
மேய்க்கப் போனார்கள். 13சில நாட்களான
பின்பு யாக்கோபு யோசேப்பிடம், "சீகேமிற்
குப் போ. அங்கு உன் சகோதரர்கள் ஆடு
மேய்க்கிறார்கள்" என்றான்.
யோசேப்பும், "நான் போகிறேன்" என்று
கூறினான்.
14யாக்கோபு அவனிடம், "போய் உன்
சகோதரர்களும், ஆடுகளும் பத்திரமாக
இருக்கிறார்களா என்று பார்த்து வா"
என்றான். அவனை எபிரோன் சமவெளி
யிலிருந்து சீகேமிற்கு அனுப்பினான்.
15சீகேமிற்குப் போகும்போது யோசேப்பு
வழிதப்பிவிட்டான். ஒரு மனிதன் இவன்
அலைந்து கொண்டிருப்பதைப் பார்த்து,
"யாரை நீ தேடிக் கொண்டிருக்கிறாய்?"
என்று கேட்டான்.
16"நான் என் சகோதரர்களைத் தேடிக்
கொண்டிருக்கிறேன். அவர்கள் மந்தைக

ளோடு எங்கே இருக்கிறார்கள் என்று
சொல்லமுடியுமா?” என்று கேட்டான்.
17அவனோ, “அவர்கள் ஏற்கெனவே
தோத்தானுக்குப் போயிருப்பதாகக் கேள்விப்
பட்டேன்” என்றான். எனவே யோசேப்பும்
தோத்தானுக்குப் போய் சகோதரர்களைக்
கண்டு கொண்டான்.

## அடிமையாக யோசேப்பு விற்கப்படுதல்

18யோசேப்பு தூரத்தில் வரும்போதே
அவனது சகோதர்கள் அவனைப் பார்த்து
விட்டு, அவனைக் கொன்றுவிட முடிவு
செய்தார்கள். 19அவர்கள் ஒருவருக்கொருவர்,
“கனவு காணும் யோசேப்பு வந்து
கொண்டிருக்கிறான். 20இப்பொழுது நம்மால்
அவனைக் கொல்லமுடியும். கொன்று
ஏதாவது ஒரு கிணற்றில் அவன் பிணத்தை
எறிந்து விடுவோம். ஏதோ காட்டு மிருகம்
அவனைக் கொன்றுவிட்டதாகத்
தந்தையிடம் சொல்லுவோம். அவனது
கனவுகள் பயனற்றவை என்று நீரூபிப்
போம்” எனப் பேசிக்கொண்டனர்.
21ஆனால் யோசேப்பைக் காப்பாற்ற ரூபன்
விரும்பினான். “அவனைக் கொல்ல
வேண்டாம். 22அவனைத் தூக்கி பாலை
வனத்திலுள்ள இந்தக் கிணற்றில் போட்டு
விடுங்கள்” என்றான். பிறகு அவனைக்
காப்பாற்றி தந்தையிடம் அனுப்பலாம்
என்று அவன் திட்டம் போட்டான்.
23யோசேப்பு சகோதரர்களிடம் வந்தான்.
அவர்கள் அவனை அடித்து அவனது
அழகான மேல் அங்கியைக் கிழித்தனர்.
24பிறகு அவனை ஒரு வறண்ட கிணற்றில்
தூக்கிப் போட்டனர்.
25அவன் கிணற்றில் கிடக்கும்போது
அவர்கள் மேலே உணவு உண்ண
உட்கார்ந்தனர். அப்போது வியாபாரிகள்
கூட்டமாகக் கீலேயாத்திலிருந்து எகிப்து
நோக்கிப் போவதைக் கண்டனர். அவர்கள்
ஒட்டகங்களில் நிறைய செல்வங்களையும்
விலையுயர்ந்த பொருட்களையும் ஏற்றிச்
சென்றனர். 26எனவே யூதா சகோதரர்களிடம்,
“யோசேப்பைக் கொன்று மறைத்து
விடுவதால் நமக்கு என்ன லாபம்?
27அதைவிட அவனை வியாபாரிகளிடம்
விற்றுவிட்டால் நிறைய லாபம்
கிடைக்குமே, சொந்த சகோதரனைக்
கொன்றோம் என்ற பழியும் இருக்காதே”
என்றான். மற்ற சகோதரர்களும் இதற்கு
ஒப்புக்கொண்டனர். 28மீதியானிய வியா
பாரிகள் அருகில் வந்ததும் யோசேப்பைக்
கிணற்றிலிருந்து வெளியே எடுத்து 20
வெள்ளிகாசுகளுக்கு அவனை விற்று
விட்டனர். அவர்கள் யோசேப்பை எகிப்
துக்கு அழைத்துக்கொண்டு போனார்கள்.
29இச்சமயத்தில் ரூபன் அவர்களோடு
இல்லை. அவனுக்கு அவர்கள் யோசேப்பை
விற்றுவிட்டார்கள் என்பது தெரியாது.
அவன் கிணற்றைப் பார்த்தபோது அவன்
இல்லாததை அறிந்து வருத்தப்பட்டு தன்
ஆடைகளைக் கிழித்துக் கொண்டான்.
30ரூபன் தன் சகோதரர்களிடம் போய்,
“அந்த இளைஞன் கிணற்றில் இல்லையே,
நான் என்ன செய்வது?” என்று கேட்டான்.
31அச்சகோதரர்கள் ஒரு ஆட்டைக் கொன்று
அதன் இரத்தத்தை யோசேப்பின் அங்கியில்
தோய்த்தனர். 32பிறகு அதைக் கொண்டு
போய் தந்தையிடம் காட்டி, “இந்த
அங்கியைக் கண்டெடுத்தோம். இது யோசேப்
பினுடையதா?” என்று கேட்டனர்.
33தந்தை அந்த அங்கியைப் பார்த்துவிட்டு
அது யோசேப்பினுடையது என்று அறிந்து
கொண்டான். “ஆமாம் இது அவனு
டையதுதான். ஒரு வேளை ஏதாவது காட்டு
மிருகம் அவனைக் கொன்றிருக்கும். என்
மகன் யோசேப்பு காட்டு மிருகத்தால்
உண்ணப்பட்டான்” என்று கூறினான்.
34அவனுக்கு வருத்தம் அதிகமாகித் தன்
ஆடைகளைக் கிழித்துக் கொண்டான். பிறகு
அவன் தன் சோகத்தை சாக்கினாலான
ஆடையை அணிந்து வெளிப்படுத்தினான்.
அவன் தொடர்ந்து நீண்ட நாள் மகனைப்
பற்றிய துக்கத்தில் இருந்தான். 35யாக்கோபின்
பிற மகன்களும், மகள்களும் அவனுக்கு
ஆறுதல் கூற முயன்றார்கள். ஆனால் அவன்
ஆறுதல் அடையவில்லை. “நான் மரிக்கும்
வரை என் மகனுக்காக வருத்தப்படுவேன்”
என்று கூறினான்.
36மீதியானிய வியாபாரிகள் எகிப்தில்
யோசேப்பை விற்றுவிட்டார்கள். பார்வோ
னின் பிரதானியும் தலையாரிகளுக்குத்
தலைவனுமான போத்திப்பாருக்கு அவனை
விற்றார்கள்.

## யூதாவும் தாமாரும்

38 அந்த நேரத்தில் யூதா தன்
சகோதரர்களை விட்டுவிட்டு ஈரா
என்ற பெயருடைய மனிதனோடு இருந்தான்.
ஈரா அதுல்லாம் என்ற நகரிலிருந்து
வந்தவன். 2யூதா ஒரு கானானிய பெண்
ணைச் சந்தித்து அவளை மணந்து
கொண்டான். அவளது தந்தையின் பெயர்
சூவா. 3அவளுக்கு ஒரு மகன் பிறந்தான்.
அவனுக்கு ஏர் என்று பெயர் வைத்தனர்.
4அவள் இன்னொரு மகனைப் பெற்றாள்.
அவனுக்கு ஓனான் என்று பேர்
வைத்தார்கள். 5இன்னொரு மகன் அவளுக்கு
பிறந்தான். அவனுக்கு சேலா என்று பெயர்
வைத்தார்கள். அவன் பிறந்தபோது அவர்கள்
கெசீபிலே வாழ்ந்தனர்.
6யூதா தன் மூத்த மகனான ஏர்
என்பவனுக்கு மணம் முடிக்க ஒரு
பெண்ணைத் தேர்ந்தெடுத்தான். அந்த
பெண்ணின் பெயர் தாமார். 7ஆனால் ஏர்
பல தீய செயல்களைச் செய்தான். கர்த்தர்

அவனைப்பற்றி சந்தோஷமடையாததால்,
கர்த்தர் அவனை அழித்துவிட்டார். 8 பிறகு
யூதா, ஏரின் சகோதரனான ஓனானிடம்,
"போய் உன் சகோதரனின் மனைவியைச்
சேர்த்துக்கொண்டு அவளுக்குக் கண
வனாகு. அவளுக்குக் குழந்தைகள் பிறந்தால்
அவை உன் சகோதரன் ஏருக்கு
உரியதாகும்" என்றான்.
9 இந்தச் சேர்க்கையினால் பிறக்கும்
குழந்தைகள் தன்னுடையதாக இருக்காது
என்பதை ஓனான் அறிந்தான். ஓனான்
தாமாருடன் பாலின உறவு கொள்ளும்போது
தனது சகோதரனுக்கு சந்ததி
உண்டாகாதிருக்கத் தனது வித்துவைத்
தரையில் விழச்செய்தான். 10 இது கர்த்தருக்கு
மிகவும் கோபம் மூட்டியது. எனவே கர்த்தர்
ஓனானையும் அழித்தார். 11 பிறகு யூதா தன்
மருமகளான தாமாரிடம், "உன் தந்தை
வீட்டிற்குப் போ. என் இளைய மகன்
வளர்ந்து ஆளாகிறவரை நீ அவனுக்காகக்
காத்திரு" என்றான். சேலாவும் அழிந்து
போவானோ என்று யூதா அஞ்சினான்.
தாமார் தன் தந்தை வீட்டிற்குப் போனாள்.
12 பின்னர் சூவாவின் மகளான யூதாவின்
மனைவி மரித்துப் போனாள். யூதாவின்
துக்ககாலத்தில் அதுல்லாம் நகரைச் சேர்ந்த
தன் நண்பன் ஈராவோடு தன் ஆடுகளுக்கு
மயிர் கத்தரிக்க திம்னாவுக்குப் போனான்.
13 தன் மாமனராகிய யூதா ஆடுகளின்
மயிரைக் கத்தரிக்கும்படி திம்னாவை
நோக்கிச் செல்கிறார் என்பதைத் தாமார்
அறிந்துகொண்டாள். அவள் எப்போதும்
விதவைக்குரிய ஆடைகளையே அணிந்து
வந்தாள். 14 எனவே இப்போது வேறு
ஆடைகளை அணிந்து, தன் முகத்தை
மூடிக்கொண்டு திம்னா நகருக்கு அருகில்
உள்ள ஏனாயிம் என்னும் இடத்துக்குச்
செல்லும் பாதைக்கு அருகில் உட்கார்ந்து
கொண்டாள். யூதாவின் இளைய மகனான
சேலா அப்பொழுது வளர்ந்து விட்டான்
என்பதைத் தாமார் அறிந்தாள். ஆனால்
தாமார் அவனை மணப்பதற்கானத்
திட்டத்தை யூதா செய்யமாட்டான் என்று
அவள் உணர்ந்து கொண்டாள்.
15 யூதா அவ்வழியாகப் போனபோது
அவளைப் பார்த்தான். அவள் தன் முகத்தை
மூடியிருந்தபடியால் அவளை வேசி என்று
நினைத்துக் கொண்டான்
16 யூதா அவளிடம் போய், "நான்
உன்னோடு பாலின உறவு கொள்ளலாமா"
என்று கேட்டான். (அவனுக்கு அவள்
தன் மருமகளான தாமார் என்பது
தெரியாது) அவளோ, "எனக்கு எவ்வளவு
கொடுப்பீர்?" என்று கேட்டாள்.
17 அவனோ, "என் மந்தையிலிருந்து ஓர்
இளம் ஆட்டை அனுப்புவேன்" என்றான்.
அவள் அதற்கு, "நான் ஒத்துக்
கொள்கிறேன். ஆனால் முதலில் ஆடு
வரும்வரை அடமானமாக ஏதாவது
கொடுத்துவிட்டுப் போகவேண்டும்" என்று
கேட்டாள்.
18 அவன், "என்னிடமிருந்து அடமானமாக
என்ன பொருளை விரும்புகிறாய்" என்று
கேட்டான்.
அவள், "உம்முடைய முத்திரை
மோதிரமும், ஆரமும், கைக்கோலும்
வேண்டும்" என்று கேட்டாள். யூதாவும்
அவ்வாறே கொடுத்துவிட்டு அவளோடு
பாலின உறவு கொண்டான். அதனால்
அவள் கர்ப்பமானாள். 19 தாமார் தன்
வீட்டிற்குப் போய் முக்காட்டை எடுத்து
விட்டாள். பின் விதவைக்குரிய ஆடைகளை
அணிந்து கொண்டாள்.
20 யூதா தான் வாக்களித்தபடி வேசியிடம்
ஆட்டுக்குட்டியைக் கொடுக்க தன் நண்பன்
ஈராவை அனுப்பினான். அவளிடம்
கொடுத்த அடமானப் பொருட்களையும்
வாங்கி வருமாறு சொன்னான். ஆனால்
அவனால் அவளைக் கண்டுபிடிக்க முடிய
வில்லை. 21 ஈரா அந்நகர ஜனங்கள் பலரிடம்
அந்த வேசியைப்பற்றி விசாரித்தான்.
அவர்கள், "அத்தகைய வேசி இங்கு
இல்லை" என்றனர்.
22 எனவே அவன் யூதாவிடமே திரும்பி
வந்தான். "என்னால் அந்தப் பெண்ணைக்
கண்டுபிடிக்க முடியவில்லை. அங்குள்ள
வர்கள் அத்தகைய வேசி அங்கில்லை எனக்
கூறுகின்றனர்" என்றான்.
23 அதனால் யூதா, "அவள் எனது
பொருட்களை வைத்திருக்கட்டும். ஜனங்கள்
எங்களை நகையாடுவதை நான் விரும்ப
வில்லை. ஆட்டுக்குட்டியை அவளுக்குக்
கொடுக்க முயன்றேன். அங்கே அவளோ
இல்லை, இதுபோதும்" என்றான்.

### தாமார் கர்ப்பமாகுதல்

24 மூன்று மாதங்கள் ஆனதும் சிலர்
யூதாவிடம், "உன் மருமகள் தாமார் ஒரு
வேசியைப்போல பாவம் செய்து விட்டாள்.
இப்போது அவள் கர்ப்பமாக இருக்கிறாள்"
என்றனர். யூதாவோ, "அவளை அழைத்துப்
போய் எரித்து விடுவோம்" என்றான்.
25 அந்த மனிதர்கள் தாமாரைக்
கொல்வதற்காக அவளிடம் சென்றார்கள்.
ஆனால் அவள் தன் மாமனாருக்கு ஒரு
செய்தியை அனுப்பினாள், "என்னைக்
கர்ப்பவதியாக்கிய மனிதருக்குரிய பொருட்
கள் சில என்னிடம் உள்ளன.
இப்பொருட்களைப் பாருங்கள், அவர் யார்?
யாருடைய முத்திரையும், ஆரமும் இது?
யாருடைய கோல் இது?" என்று
கேட்டிருந்தாள்.
26 யூதாவுக்கு எல்லாம் புரிந்து போயிற்று,
"அவள் சொல்வது சரி, நானே தவறு
செய்துவிட்டேன். நான் சொன்னபடி என்
மகன் சேலாவை நான் அவளுக்குக்

கொடுக்கவில்லை” என்று உணர்ந்தான்.
அவன் மீண்டும் தாமாரோடு பாலின உறவு
கொள்ளவில்லை.
27 தாமார் குழந்தைபெறும் காலம் வந்தது.
அவளுக்கு இரட்டைக் குழந்தை பிறக்கும்
என்றார்கள். 28 முதலில் ஒரு குழந்தை கையை
நீட்டியதும் அதன் கையில் சிவப்புக்
கயிற்றைக்கட்டி “அது மூத்த குழந்தை
என்றாள் தாதி” ஆனால் 29 அக்குழந்தை
கைகளை உள்ளே இழுத்துக்கொண்டபோது
இன்னொரு குழந்தை பிறந்தது. எனவே
தாதி, “நீ மீறிக்கொண்டு வந்தாய். அதனால்
மீறுதல் உன்னிடம் நிற்கும்” என்று அதற்கு
பாரேஸ்* என்று பேரிட்டாள். 30 பின்னரே
அடுத்த குழந்தை பிறந்தது. அதன் கையில்
சிவப்புக் கயிறு இருந்ததால் சேரா* என்று
பெயரிட்டனர்.

### யோசேப்பு போத்திபாரிடம் விற்கப்படுகிறான்

39 யோசேப்பை வாங்கிய வியாபாரிகள்
அவனை எகிப்தில் பார்வோனின்
படைத்தலைவன் போத்திபாரிடம் விற்றார்
கள். 2 ஆனால் கர்த்தர் அவனுக்கு உதவினார்.
யோசேப்பு ஒரு வெற்றியுள்ள மனிதன்
ஆனான். அவன் தன் எஜமானனின் வீட்டில்
வசித்தான்.
3 கர்த்தர் யோசேப்போடு இருப்பதையும்,
அவன் செய்கிற எல்லாவற்றிலும் கர்த்தரின்
உதவியால் வெற்றி பெறுவதையும்
பார்த்தான். 4 அதனால் யோசேப்பைப்பற்றி
மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். எனவே,
தனக்காக யோசேப்பு வேலை செய்வதை
அனுமதித்ததுடன், தன் வீட்டைக்
கவனித்துக்கொள்ளவும் வைத்தான். போத்தி
பாருக்குச் சொந்தமான எல்லாவற்றையும்
யோசேப்பு ஆளுகை செய்தான். 5 யோசேப்
பைத் தனது வீடு முழுவதற்கும்
அதிகாரியாக்கியதும் கர்த்தர் அந்த
வீட்டையும், போத்திபாருக்குச் சொந்தமான
எல்லாவற்றையும் ஆசீர்வதித்தார். இவை
அனைத்தையும் கர்த்தர் யோசேப்புக்காகச்
செய்தார். போத்திப்பாருக்குரிய வீடு மற்றும்
வயல்களையும் கர்த்தர் ஆசீர்வதித்தார்.
6 ஆகவே போத்திபார் யோசேப்பிற்கு
வீட்டிலுள்ள எல்லா பொறுப்புகளையும்
கொடுத்துவிட்டான். அவன் உண்ணும்
உணவைத் தவிர வேறு எதைப்பற்றியும்
கவலைப்படவில்லை.

### யோசேப்பு போத்திபாரின் மனைவியுடன் பாவம் செய்ய மறுத்தல்

யோசேப்பு கம்பீரமாகவும் பார்ப்பதற்கு
அழகாகவும் இருந்தான். 7 கொஞ்சக் காலம்
ஆனதும், யோசேப்பின் எஜமானனின்
மனைவி யோசேப்புமீது ஆசைப்பட
ஆரம்பித்தாள். ஒரு நாள் அவனிடம்,
“என்னோடு பாலின உறவு கொள்ள வா”
என்றாள்.
8 ஆனால் யோசேப்பு மறுத்து விட்டான்,
“என் எஜமானன் என்னை நம்பி
வீட்டிலுள்ள எல்லாவற்றையும் ஒப்படைத்
திருக்கிறார். 9 என் எஜமானன் இந்த வீட்டில்
ஏறக்குறைய என்னைத் தனக்குச் சமமாக
வைத்திருக்கிறார். நான் அவரது
மனைவியோடு பாலின உறவு கொள்ளக்
கூடாது. இது தவறு, தேவனுக்கு
விரோதமான பாவம்” என்று கூறினான்.
10 அவள் ஒவ்வொரு நாளும் யோசேப்
போடு பேசி அவனை அழைத்தாள்.
அவனோ அவளோடு பாவத்தில் ஈடுபட
மறுத்துவிட்டான். 11 ஒரு நாள் அவன்
வீட்டிற்குள் வேலை செய்வதற்காகப்
போனான். அப்போது வீட்டில் அவன்
மட்டும்தான் இருந்தான். 12 அவனது
எஜமானனின் மனைவி அவனது அங்கியை
பற்றிப்பிடித்து, “என்னோடு பாலின உறவு
கொள்ள வா” என்றாள். எனவே அவன்
வேகமாக வீட்டை விட்டு வெளியே
ஓடிவிட்டான். அப்போது அவனது அங்கி
அவளது கையில் சிக்கிக் கொண்டது.
13 அவள் அதனைக் கவனித்தாள்.
நடந்ததைப்பற்றி அவள் பொய்யாகச்
சொல்லத் திட்டமிட்டாள். 14 அவள்
வீட்டிலுள்ள வேலைக்காரர்களை அழைத்து
“பாருங்கள், நம்மை அவமானம் செய்வ
தற்காக இந்த எபிரெய அடிமை கொண்டு
வரப்பட்டுள்ளான். அவன் வந்து என்னோடு
படுக்க முயன்றான். 15 நான் சத்தமிட்டதால்
அவன் ஓடிப்போய்விட்டான். அவனது
அங்கி மட்டும் சிக்கிக்கொண்டது” என்று
முறையிட்டாள். 16 அவள் அந்த அங்கியை
அவள் புருஷன் வரும்வரை வைத்திருந்து,
17 அவனிடமும் அதே கதையைக் கூறினாள்.
“நீங்கள் கொண்டுவந்த எபிரெய அடிமை
என்னைக் கெடுக்கப் பார்த்தான். 18 அவன்
என்னருகில் வந்ததும் நான் சத்தமிட்டேன்,
அவன் ஓடிவிட்டான். அவனது அங்கி
மட்டும் சிக்கிக்கொண்டது” என்றாள்.

### சிறையில் யோசேப்பு

19 யோசேப்பின் எஜமானன் அவனது
மனைவி சொன்னதைக் கேட்டு கோபம்
கொண்டான். 20 அரசனுடைய பகைவர்
களைப் போடுவதற்கென்றிருந்த சிறையிலே
போத்திபார் யோசேப்பைப் போட்டு
விட்டான். யோசேப்பு அங்கேயே தங்கி
னான்.
21 ஆனால் கர்த்தர் யோசேப்போடு
இருந்தார். அவர் தொடர்ந்து தனது
இரக்கத்தை அவன்மீது காட்டி வந்தார்.

---

**பாரேஸ்** “உடைக்கப்பட” எனப் பொருள்படும்.
**சேரா** “பிரகாசம்” எனப் பொருள்படும்.

சிறையதிகாரி யோசேப்பை விரும்ப
ஆரம்பித்தான். 22யோசேப்பை கைதிகளைக்
கண்காணிப்பவனாக நியமித்தான். அங்கு
நடப்பவற்றுக்கு அவன் பொறுப்பாளி
யாக்கப்பட்டான். 23அந்த அதிகாரி அவனை
முழுமையாக நம்பினான். கர்த்தர்
யோசேப்போடு இருந்ததால் இது இவ்வாறு
நடந்தது. அவன் செய்கிற ஒவ்வொரு
காரியத்தையும் வெற்றிகரமாக்க கர்த்தர்
உதவினார்.

### யோசேப்பு இரண்டு கனவுகளுக்கு விளக்கம் கூறுதல்

40 பிறகு, பார்வோனுக்கு எதிராக
ரொட்டி சுடுபவனும், திராட்சைரசம்
கொடுப்பவனுமான இரண்டு வேலைக்
காரர்கள் தவறு செய்தனர். 2அவர்கள்
மீது பார்வோனுக்கு மிகுந்த கோபம்
இருந்தது. 3அரசன் அவர்களை யோசேப்பு
இருந்த சிறையிலேயே அடைத்து விட்டான்.
போத்திபார் இந்தச் சிறையின் பொறுப்
பாளன். 4அதிகாரி, இந்த இருவரையும்
யோசேப்பின் கண்காணிப்பில் வைத்தார்.
இருவரும் சிறையில் கொஞ்சக் காலம்
தொடர்ந்து இருந்தனர். 5ஓரிரவு, இருவருக்கும்
கனவு வந்தது. இருவரும் வெவ்வேறு
கனவுகளைக் கண்டனர். இருவரும் எகிப்திய
அரசனின் வேலைக்காரர்கள். ஒருவன்
ரொட்டி சுடுபவன், மற்றொருவன்
திராட்சைரசம் கொடுப்பவன். ஒவ்வொன்
றுக்கும் தனித்தனிப் பொருள் இருந்தது.
6மறுநாள் காலையில் யோசேப்பு
அவர்களிடம் சென்றான். அவர்கள்
இருவரும்கவலையாயிருப்பதைக் கண்டான்.
7அவர்களிடம், "ஏன் இவ்வாறு இன்று
கவலையோடு இருக்கிறீர்கள்?" என்று
கேட்டான்.

8அவர்கள், "நேற்று நாங்கள் இருவரும்
கனவு கண்டோம். அதன் பொருள்
புரியவில்லை. அதின் பொருளையோ,
விளக்கத்தையோ சொல்பவர்கள் யாரும்
எங்களுக்கு இல்லை" என்றனர்.

யோசேப்பு அவர்களிடம், "தேவன்
ஒருவரே நமது கனவுகளைப் புரிந்து
கொண்டு விளக்க வல்லவர். என்னிடம்
உங்கள் கனவுகளைக் கூறுங்கள் என்று
கேட்டுக் கொள்கிறேன்" என்றான்.

### திராட்சைரசம் பரிமாறுபவனின் கனவு

9திராட்சைரசம் கொடுப்பவன் தன்
கனவை யோசேப்பிடம் கூறினான். "என்
கனவில் நான் ஒரு திராட்சைக் கொடியைக்
கண்டேன். 10அதில் மூன்று கிளைகள்
இருந்தன. அவை வளர்ந்து பூக்கள் விட்டு
கனிவதைக் கண்டேன். 11நான் பார்வோனின்
கோப்பையை ஏந்தியிருந்தேன். எனவே
அந்தத் திராட்சையைப் பிழிந்து சாறு
எடுத்தேன். பிறகு அதனைப் பார்வோ
னுக்குக் கொடுத்தேன்" என்றான்.

12பிறகு யோசேப்பு, "இந்தக் கனவை
உனக்கு விளக்குவேன். மூன்று கிளைகள்
என்பது மூன்று நாட்கள். 13இன்னும் மூன்று
நாளில் பார்வோன் உன்னை மன்னித்து,
உன்னை விடுதலை செய்து, முன்பு அவரது
கிண்ணம் ஏந்துபவனாக இருந்ததுபோல்
உன்னை ஏற்றுக்கொள்வார். 14ஆனால் நீ
விடுதலையானதும் என்னை நினைத்துக்
கொள். எனக்கும் உதவி செய்.
பார்வோனிடம் என்னைப் பற்றிக் கூறு.
அவர் என்னை விடுதலை செய்வார்.
15நான் என் சொந்த எபிரெய நாட்டைவிட்டு
இங்கு பலவந்தமாக கொண்டு வரப்பட்டேன்.
இங்கேயும் நான் தவறு செய்யவில்லை.
நான் சிறையில் இருக்க வேண்டியவன்
அல்ல" என்றான்.

### ரொட்டிச் சுடுபவனின் கனவு

16ரொட்டி சுடுபவன் மற்றவனின் கனவுக்கு
நல்ல பொருள் இருப்பதை அறிந்தான்.
தன் கனவையும் யோசேப்பிடம் கூறினான்.
"நானும் ஒரு கனவு கண்டேன். என்
தலையில் மூன்று ரொட்டிக் கூடைகள்
இருந்தன. 17மேல் கூடையில் எல்லா
வகையான சமைத்த உணவுகளும் இருந்தது.
அது பார்வோனுக்கு உரியது. ஆனால்
பறவைகள் அவற்றைத் தின்றுகொண்
டிருந்தன" என்றான்.

18யோசேப்பு, "நான் உனக்கு அக்கனவின்
பொருளைச் சொல்கிறேன். மூன்று
கூடைகள் மூன்று நாட்களைக் குறிக்கும்.
19மூன்று நாள் முடிவதற்குள் நீ வெளியே
செல்வாய். அரசன் உன் தலையை
வெட்டிவிடுவான். உனது உடலைக்
கம்பத்தில் தொங்க விடுவான். பறவைகள்
உன் உடலைத் தின்னும்" என்று
சொன்னான்.

### யோசேப்பு மறக்கப்படுதல்

20மூன்று நாளானதும் பார்வோனுடைய
பிறந்த நாள் வந்தது. அவன் தன் வேலைக்
காரர்களுக்கெல்லாம் விருந்து கொடுத்தான்.
அதனால் ரொட்டி சுடுபவனையும் திராட்சை
ரசம் கொடுப்பவனையும் விடுதலை
செய்தான். 21பார்வோன் திராட்சைரசம்
கொடுப்பவனுக்கு மீண்டும் வேலை
கொடுத்தான். அவனும் பார்வோனிடம் ஒரு
கோப்பை திராட்சைரசத்தை கொடுத்தான்.
22ஆனால் பார்வோன் ரொட்டி சுடுபவனைக்
கொன்றுவிட்டான். யோசேப்பு சொன்னது
போலவே அனைத்தும் நிகழ்ந்தது. 23ஆனால்
திராட்சைரசம் வழங்குபவன் உதவிசெய்ய
மறந்துவிட்டான். அவன் யோசேப்பைப்
பற்றி பார்வோனிடம் எதுவும் சொல்ல
வில்லை.

### பார்வோனின் கனவுகள்

41 இரண்டு ஆண்டுகள் கழிந்தது.
பார்வோன் ஒரு கனவு கண்டான்.
நைல் நதியின் அருகில் நின்று
கொண்டிருப்பதாகக் கனவு கண்டான்.
2 ஆற்றிலிருந்து ஏழு பசுக்கள் வெளியே
வந்து புல் தின்று கொண்டிருந்தன. அவை
செழுமையாகவும் ஆரோக்கியமாகவும் இருந்
தன. 3 மேலும் ஏழு பசுக்கள் ஆற்றிலிருந்து
வெளியே வந்து கரையில் நின்ற மற்ற
பசுக்களோடு நின்றன. அவை மெலிந்தும்
பார்க்க அருவருப்பாகவும் இருந்தன.
4 மெலிந்த அருவருப்பான பசுக்கள் கொழுத்த
ஆரோக்கியமான ஏழு பசுக்களையும்
உண்டன. பிறகு பார்வோன் எழும்பினான்.
5 பார்வோன் மீண்டும் தூங்கி கனவு
காண ஆரம்பித்தான். அப்போது ஒரே
செடியில் ஏழு செழுமையான கதிர்கள்
வந்திருந்தன. 6 மேலும் ஒரு செடியில் ஏழு
கதிர்கள் வந்தன. ஆனால் அவை
செழுமையில்லாமல் இருந்தன. காற்றில்
உதிர்ந்து போயின. 7 மெலிந்த ஏழு கதிர்களும்
செழுமையான ஏழு கதிர்களை
விழுங்கிவிட்டன. பார்வோன் மீண்டும்
எழுந்து தான் கண்டது கனவு என
உணர்ந்தான். 8 மறுநாள் காலையில் அவன்
இதைப்பற்றி மிகவும் கவலைப்பட்டான்.
அவன் எகிப்திலுள்ள அனைத்து
மந்திரவாதிகளையும், ஞானிகளையும்
அழைத்தான். அவர்களிடம் தன் கனவைச்
சொன்னான். ஆனால் ஒருவராலும் அதற்கு
விளக்கம் சொல்ல முடியவில்லை.

### யோசேப்பைப்பற்றி வேலைக்காரன் பார்வோனிடம் கூறுதல்

9 பிறகு திராட்சைரசம் கொடுப்பவனுக்கு
யோசேப்பைப் பற்றிய நினைவு வந்தது.
அவன் பார்வோனிடம், "எனக்கு ஏற்
பட்டது இன்று நினைவுக்கு வருகிறது.
10 உங்களுக்குக் கோபம் வந்து என்னையும்,
ரொட்டி சுடுபவனையும் சிறையில்
அடைத்திருந்தீர்களே, 11 அப்போது ஓரிரவில்
நாங்கள் கனவு கண்டோம். இரண்டும்
வெவ்வேறு கனவுகள். 12 அங்கு எபிரெய
இளைஞன் ஒருவன் இருந்தான். அவன்
சிறையதிகாரியின் உதவியாள். நாங்கள்
அவனிடம் கனவைச் சொன்னோம். அவன்
அதைப்பற்றி விளக்கம்சொன்னான். 13 அவன்
சொன்னதெல்லாம் உண்மையாயிற்று. நான்
மூன்று நாளில் விடுதலையாகிப் பழைய
வேலையைப் பெறுவேன் என்றான். அது
அவ்வாறாயிற்று. ரொட்டி சுடுபவன்
தூக்கிலிடப்படுவான் என்றான். அது
போலவே நடந்தது" என்றான்.

### யோசேப்பு விளக்கம் சொல்ல அழைக்கப்படுதல்

14 எனவே, பார்வோன் சிறையில் இருந்து
யோசேப்பை அழைத்தான். அதிகாரி
உடனே யோசேப்பை வெளியே கொண்டு
வந்தான். அவன் சவரம் செய்து நல்ல
ஆடைகள் அணிந்து கொண்டு, பார்
வோனைப் பார்க்கப் போனான். 15 பார்
வோன் யோசேப்பிடம், "நான் கனவு
கண்டேன். எவராலும் அதற்கு பொருள்
சொல்ல முடியவில்லை. உன்னிடம்
அவற்றைப்பற்றி சொன்னால் நீ அதற்கு
விளக்கம் சொல்ல முடியும் என்று
அறிந்தேன்" என்றான்.
16 யோசேப்பு, "என்னால் முடியாது.
ஆனால் தேவன் உமக்காக விளக்கம்
தருவார்" என்றான்.
17 பிறகு பார்வோன், "கனவில் நான்
நைல் ஆற்றின் கரையில் நின்று
கொண்டிருந்தேன். 18 அப்போது ஏழு பசுக்கள்
ஆற்றிலிருந்து வெளியே வந்து புல் மேய்ந்து
கொண்டிருந்தது. அவை செழுமையாகவும்,
பார்க்க அழகாகவும் இருந்தன. 19 பிறகு
மேலும் ஏழு பசுக்கள் ஆற்றிலிருந்து
வெளியே வந்தன. அவை மெலிந்து, நோய்
கொண்டவையாக இருந்தன. அவற்றைப்
போன்று மோசமான பசுக்களை நான்
எகிப்திலே எங்கும் பார்த்ததில்லை. 20 அவை
செழுமையான பசுக்களை உண்டுவிட்டன.
21 அவை அதற்குப்பிறகும் ஒல்லியாகவும்,
நோயுற்றும் தோன்றின. அவை பசுக்களைத்
தின்றுவிடும் என்று சொல்ல முடியாத
வகையிலேயே இருந்தன. அதற்குள் நான்
எழுந்துவிட்டேன்.
22 "அடுத்த கனவில் ஒரு செடியில் ஏழு
கதிர்களைக் கண்டேன். அவை செழுமை
யாக இருந்தன. 23 பிறகு செடியில் மேலும்
ஏழு கதிர்கள் வளர்ந்தன. காற்றில்
உதிரக்கூடிய நிலையில் மெலிந்து இருந்தன.
24 பிறகு இவை செழுமையான கதிர்களை
விழுங்கிவிட்டன.
"நான் இந்தக் கனவை மந்திரவாதிகளிடம்
ஞானிகளிடமும் கூறினேன். ஆனால்
யாராலும் இவற்றிற்கு பதில் சொல்ல
முடியவில்லை, இவற்றின் பொருள் என்ன?"
என்று கேட்டான்.

### யோசேப்பு கனவை விளக்குதல்

25 பிறகு யோசேப்பு பார்வோனிடம்,
"இரண்டு கனவுகளுக்கும் ஒரே பொருள்தான்.
விரைவில் என்ன நடக்கும் என்பதைத்
தேவன் கூறிவிட்டார். 26 ஏழு செழுமையான
பசுக்கள், ஏழு செழுமையான கதிர்கள்
என்பது ஏழு வளமான ஆண்டுகளைக்
குறிக்கும். 27 ஏழு மெலிந்த பசுக்கள் ஏழு
மெலிந்த கதிர்கள் என்பது பஞ்சமான
ஏழு ஆண்டுகளைக் குறிக்கும். வளமான
ஏழு ஆண்டுகளுக்குப் பிறகே பஞ்சமான
ஏழு ஆண்டுகள் வரும். 28 விரைவில் என்ன
நடக்கும் என்பதைக் தேவன் உமக்கு
காண்பித்திருக்கிறார். இவ்வாறே தேவன்

நடத்துவார். 29இன்னும் ஏழு ஆண்டுகளுக்கு
எகிப்தில் ஏராளமான உணவுப் பொருட்கள்
விளையும். 30பிறகு ஏழு ஆண்டுகள் பஞ்சமும்
பசியும் இருக்கும். எகிப்து ஜனங்கள் முன்பு
கடந்த காலத்தில் தாங்கள் வைத்திருந்த
உணவின் மிகுதியை மறந்துவிடுவார்கள்.
இப்பஞ்சம் நாட்டை அழித்து விடும்.
31ஏனென்றால் தொடர்ந்து வரும் பஞ்சம்
அவ்வளவு கடுமையாக இருக்கும்.

32“நீர் ஏன் ஒரே பொருள்பற்றிய இரு
கனவுகளைக் கண்டிருக்கிறீர் தெரியுமா? இது
நிச்சயம் நடக்கும் என்பதைக் தேவன்
உமக்குக் காட்ட விரும்புகிறார். அதோடு
தேவன் இதனை விரைவில் நிகழ வைப்பார்.
33எனவே, நீர் புத்திசாலியான ஒருவனிடம்
எகிப்தின் பொறுப்புகளை விடவேண்டும்.
34பிறகு மேலும் சிறந்த ஆட்களை
தேர்ந்தெடுத்து உணவுப் பொருட்களை
எல்லாம் சேகரிக்க வேண்டும். இனியுள்ள
ஏழு வருடங்களும் ஜனங்கள் தங்கள்
விளைச்சலில் ஐந்தில் ஒரு பங்கை
அரசனுக்குரியதென இவர்களிடம் கொடுக்க
வேண்டும். 35இவ்வாறு அந்த ஆட்கள்
உணவுப் பொருட்களைச் சேகரித்து,
தேவைப்படும் அளவுக்கு நன்றாகச் சேமித்து
வைக்கவேண்டும். இந்த உணவு உமது
கட்டுப்பாட்டிற்குள் இருக்கவேண்டும். 36பிறகு
ஏழு பஞ்ச ஆண்டுகளில் தேவையான
உணவுப் பொருள் எகிப்து நாட்டில்
இருக்கும். அதனால் எகிப்து பஞ்சத்தில்
அழியாமல் இருக்கும்” என்றான்.

37இந்த விளக்கம் பார்வோனுக்கும்
அவனது அதிகாரிகளுக்கும் பொருத்த
மானதாக இருந்தது. அதோடு 38பார்வோன்
அவர்களிடம், “யோசேப்பைவிடப் பொருத்த
மானவன் வேறு யாரும் இருப்பதாகத்
தெரியவில்லை. தேவ ஆவியானவர்
அவன்மேல் இருக்கிறார். அவனை மிக
ஞானமுள்ளவனாக ஆக்கியிருக்கிறார்!”
என்றான்.

39எனவே, பார்வோன் யோசேப்பிடம்,
“தேவன் இவற்றை உனக்குத் தெரியச்
செய்தார். உன்னைப்போல் அறிவுக்
கூர்மையும், ஞானமும் உள்ளவர்கள் வேறு
யாருமில்லை. 40உன்னை என் நாட்டிற்கு
அதிகாரியாய் ஆக்குகிறேன். உன் கட்டளை
களுக்கு என் ஜனங்கள் அடங்கி
நடப்பார்கள். நான் மட்டுமே உன்னைவிட
மிகுந்த அதிகாரம் பெற்றவனாக இருப்பேன்”
என்று கூறினான்.

41யோசேப்பை ஆளுநர் ஆக்குவதற்குரிய
விசேஷச் சடங்கும், ஊர்வலமும் சிறப்பான
முறையில் நடந்தன. “உன்னை எகிப்து
முழுமைக்கும் ஆளுநர் ஆக்குகிறேன்”
என்றான். 42பார்வோன் யோசேப்புக்கு தனது
விசேஷ மோதிரத்தைக் கொடுத்தான்.
அம்மோதிரத்தில் அரசமுத்திரை பொறிக்கப்
பட்டிருந்தது. இத்தோடு அழகான
ஆடைகளையும், அவன் கழுத்தில்
பொன்மாலையும் அணிவித்தான். 43யோசேப்
பைத் தனது இரண்டாவது இரதத்தில்
ஏற்றி ஊர்வலமாகப் போகச்செய்தான்.
காவல் அதிகாரிகள் அவன் முன்னே போய்
ஜனங்களிடம், “யோசேப்புக்கு அடிபணி
யுங்கள்” என்றனர்.

இவ்வாறு யோசேப்பு எகிப்து
முழுவதற்கும் ஆளுநர் ஆனான். 44பார்வோன்
யோசேப்பிடம், “நான் எகிப்தின்
அரசனாகிய பார்வோன். எனக்கு விருப்ப
மான முறையில் நான் நடந்து கொள்வேன்.
வேறுயாரும் இந்நாட்டில் உன் அனுமதி
இல்லாமல் கையைத் தூக்கவோ காலை
நகர்த்தவோ முடியாது” என்றான்.

45பார்வோன் யோசேப்புக்கு சாப்னாத்
பன்னேயா* என்று வேறு பெயர்
சூட்டினான். அவனுக்கு ஆஸ்நாத் என்ற
மனைவியையும் கொடுத்தான். அவள் ஓன்
நகரத்து ஆசாரியனாகிய போத்திபிராவின்
மகள். இவ்வாறாக யோசேப்பு எகிப்து
தேசத்து ஆளுநரானான்.

46யோசேப்புக்கு அப்போது 30 வயது.
அவன் நாடு முழுவதையும் சுற்றிப்பார்க்கப்
புறப்பட்டான். 47ஏழு ஆண்டுகளாக எகிப்தில்
நல்ல விளைச்சல் இருந்தது. 48யோசேப்பு
அவற்றை நன்கு சேமித்து வைத்தான்.
ஒவ்வொரு நகரத்திலும் அதன் சுற்றுப்புறத்
திலுள்ள தானியங்களையெல்லாம் சேமித்து
வைத்தான். 49யோசேப்பு ஏராளமாக
கடற்கரை மணலைப்போன்று தானியங்
களைச் சேமித்து வைத்தான். அவன் சேமித்த
தானியமானது அளக்கமுடியாத அளவில்
இருந்தது.

50யோசேப்பின் மனைவி ஆஸ்நாத்து ஓன்
பட்டணத்து ஆசாரியனாகிய போத்திபிரா
வின் மகள். முதலாண்டு பஞ்சம் வருவதற்கு
முன்னால் அவளுக்கு இரண்டு மகன்கள்
பிறந்தார்கள். 51முதல் மகனுக்கு மனாசே*
என்று பேரிட்டான். ஏனென்றால் “தேவன்
என் துன்பங்களையெல்லாம் மறக்கச்
செய்தார். என் வீட்டையும் மறக்கச்
செய்துவிட்டார்” என்றான். 52யோசேப்பு
இரண்டாவது மகனுக்கு எப்பிராயீம்* என்று
பேரிட்டான். “நான் சிறுமைப்பட்டிருந்த
தேசத்தில் தேவன் என்னைப் பலுகப்
பண்ணினார்” என்று சொல்லி இந்தப்
பெயரை வைத்தான்.

---

**சாப்னாத்பன்னேயா** இது ஒரு எகிப்திய பெயர் “வாழ்வோடு இணைந்து இருக்கிறவர்” எனப் பொருள்படும். ஆனால் எபிரெய மொழியில் “மறைவான காரியங்களை வெளிப்படுத்துகிற மனிதன்” எனப் பொருள்படும்.

**மனாசே** எபிரெய மொழியில் “மறக்க” எனப் பொருள்படும்.

**எப்பிராயீம்** எபிரெய மொழியில் “இரட்டிப்பான கனிவுள்ள” எனப் பொருள்படும்.

### பஞ்சம் துவங்குகிறது

53 ஏழு ஆண்டுகளுக்குத் தேவையான
உணவுப்பொருட்கள் இருந்தன. அந்த
ஆண்டுகள் முடிந்தன. 54 அதன் பிறகு
யோசேப்பு சொன்னதைப் போலவே பஞ்ச
காலம் துவங்கியது. எந்த நாடுகளிலும்
உணவுப் பொருட்கள் விளையவில்லை.
ஆனால் எகிப்தில் உணவுப் பொருட்கள்
ஏராளமாக சேமிக்கப்பட்டிருந்தன. இதற்குக்
காரணம் யோசேப்பின் திட்டம். 55 பஞ்சம்
துவங்கியதும் ஜனங்கள் பார்வோனிடம்
வந்து உணவுக்கு அழுதனர். பார்வோன்
ஜனங்களிடம், "நீங்கள் போய் யோசேப்
பிடம் என்ன செய்யலாம் எனக் கேளுங்கள்"
என்றான்.

56 எங்கும் பஞ்சம். அதனால் யோசேப்பு
ஜனங்களுக்குச் சேமிப்பிலிருந்து தானியத்
தை எடுத்துக் கொடுத்தான். சேர்த்து வைத்த
தானியங்களை யோசேப்பு எகிப்தியருக்கு
விற்றான். பஞ்சம் மேலும் மோசமாகியது.
57 எல்லா இடத்திலும் மோசமான அளவில்
பஞ்சம் இருந்தது. எகிப்தைச்சுற்றி பல்வேறு
நாடுகளிலிருந்து ஜனங்கள் உணவுப்
பொருட்களை வாங்குவதற்காக எகிப்திற்கு
வந்தார்கள்.

### கனவுகள் நிறைவேறுகின்றன

42 கானான் தேசத்திலும் கொடிய
பஞ்சம் இருந்தது. யாக்கோபு
எகிப்தில் உணவுப் பொருட்கள் இருப்பதாக
அறிந்தான். எனவே அவன் தன்
மகன்களிடம், "எதுவும் செய்யாமல் இங்கே
இருந்து என்ன பயன்? 2 எகிப்தில் உணவுப்
பொருட்களை விற்பதாகக் கேள்விப்
பட்டேன். எனவே நாம் செத்துப்
போவதற்குப் பதிலாக அங்கே போய்
உணவுப் பொருட்களை வாங்கிவருவோம்"
என்றான்.

3 எனவே, யோசேப்பின் பத்து சகோதரர்
களும் உணவுப்பொருட்கள் வாங்க எகிப்து
நாட்டிற்குப் போனார்கள். 4 யாக்கோபு
பென்யமீனை அவர்களோடு அனுப்ப
வில்லை. (அவனே யோசேப்பின்
முழுமையான சகோதரன்) அவனுக்கும்
ஏதாவது கேடு ஏற்படலாம் என்று
யாக்கோபு பயந்தான்.

5 கானான் பகுதியில் பஞ்சம் மிகவும்
கொடுமையாக இருந்தது. எனவே
ஏராளமான ஜனங்கள் எகிப்துக்குப்
போனார்கள். அவர்களுள் இஸ்ரவேலின்
மகன்களும் இருந்தனர்.

6 யோசேப்புதான் எகிப்தின் ஆளுநராக
அச்சமயத்தில் இருந்தான். எகிப்துக்கு வரும்
ஜனங்களுக்கு விற்கப்படும் தானியத்தைக்
கண்காணிக்கும் பொறுப்பு அவனிடமே
இருந்தது. எனவே யோசேப்பின் சகோதரர்
கள் அவனிடம் வந்து குனிந்து வணங்கி
நின்றனர். 7 யோசேப்பு தன் சகோதரர்களைப்
பார்த்ததும், உடனே அடையாளம் கண்டு
கொண்டான். எனினும் தெரிந்து
கொண்டதைப்போல் காட்டிக்கொள்ளாமல்
அவர்களிடம் கடுமையாக நடந்துகொண்
டான். "எங்கேயிருந்து வருகின்றீர்கள்?"
என்று கேட்டான்.

அவர்கள், "நாங்கள் கானான் பகுதியிலி
ருந்து வருகிறோம். உணவுப் பொருட்களை
வாங்குவதற்காக வந்தோம்" என்றனர்.

8 யோசேப்புக்கு அவர்கள் அனைவரும்
தன் சகோதரர்கள் என்று புரிந்தது. ஆனால்
அவர்களுக்கு அவனை அடையாளம்
தெரியவில்லை. 9 அவன் தன் சகோதரர்
களைப்பற்றி தான் கண்ட கனவை
நினைத்துப் பார்த்தான்.

### யோசேப்பு தன் சகோதரர்களை ஒற்றர்கள் என அழைத்தல்

யோசேப்பு அவர்களிடம், "நீங்கள்
உணவுப் பொருட்கள் வாங்கவரவில்லை,
நீங்கள் ஒற்றர்கள். எங்கள் நாட்டின்
பலவீனத்தைத் தெரிந்துகொள்ள வந்திருக்
கிறீர்கள்" என்றான்.

10 அவர்களோ, "இல்லை ஐயா! நாங்கள்
உங்கள் வேலைக்காரர்களாக வந்திருக்கி
றோம். உணவுப் பொருட்களை வாங்கவே
வந்துள்ளோம். 11 நாங்கள் அனைவரும்
சகோதரர்கள். எங்கள் அனைவருக்கும் ஒரே
தந்தை. நாங்கள் நேர்மையானவர்கள்.
நாங்கள் தானியம் வாங்கவே வந்தோம்"
என்றனர்.

12 பின்னும் யோசேப்பு, "இல்லை! நீங்கள்
எங்கள் பலவீனத்தை அறியவே வந்துள்
ளீர்கள்" என்றான்.

13 அவர்களோ, "இல்லை நாங்கள்
அனைவரும் சகோதரர்கள். மொத்தம்
பன்னிரெண்டு பேர். எல்லோருக்கும் ஒரே
தந்தை. எங்கள் இளைய தம்பி வீட்டில்
தந்தையோடு இருக்கிறான். இன்னொரு
சகோதரன் பல ஆண்டுகளுக்கு முன்
மரித்துபோனான். இப்போது உங்கள் முன்
வேலைக்காரர்களைப் போன்று இருக்கி
றோம். நாங்கள் கானான் நாட்டிலிருந்து
வந்துள்ளோம்" என்றான்.

14 ஆனால் யோசேப்போ, "இல்லை! நீங்கள்
ஒற்றர்களே. 15 ஆனால், நீங்கள் சொல்வது
உண்மை என்பதை நிரூபிக்க அனுமதிக்
கிறேன். உங்கள் இளைய சகோதரன் வந்தால்
நீங்கள் போகலாம், இது பார்வோன்மேல்
நான் இடுகிற ஆணை. 16 உங்களில் ஒருவர்
மட்டும் ஊருக்குப்போய் இளைய
சகோதரனை அழைத்துவர அனுமதிக்
கிறேன். மற்றவர்கள் அனைவரும் சிறையில்
இருக்கவேண்டும். நீங்கள் சொல்வது
உண்மையா என்று பார்ப்பேன். ஆனால்
உங்களை நான் ஒற்றர்கள் என்றே

நினைக்கிறேன்” என்றான். 17பின்பு
அவர்களை மூன்று நாட்களுக்குச் சிறையில்
அடைத்தான்.

### சிமியோன் ஜாமீனாக வைக்கப்படுகிறான்

18மூன்று நாட்கள் ஆனதும் யோசேப்பு
அவர்களிடம், “நான் தேவனுக்குப்
பயந்தவன். நான் சொல்கிறபடி செய்தால்
உங்களை விடுவேன். 19நீங்கள் உண்மையில்
நேர்மையானவர்கள் என்றால் உங்களில்
ஒருவன் சிறையில் இருக்கட்டும். மற்றவர்கள்
உணவுப் பொருட்களோடு உங்கள் நாட்டிற்கு
செல்லுங்கள். 20ஆனால் நீங்கள் உங்கள்
இளைய சகோதரனை என்னிடம்
அழைத்துவர வேண்டும். அதனால் உங்களது
வார்த்தைகள் உண்மை என்று அறிவேன்.
நீங்களும் மரிக்காமல் இருக்கலாம்” என்றான்.
சகோதரர்கள் இதற்கு ஒப்புக்கொண்டனர்.
21அவர்கள் ஒருவருக்கொருவர், “நாம் நமது
இளைய சகோதரனுக்குச் செய்த தீமைக்கே
இந்தத் தண்டனை. அவன் துன்பப்படுவதைப்
பார்த்தோம். தன்னைக் காப்பாற்றும்படி
அவன் எவ்வளவோ கெஞ்சினான். ஆனால்
நாம் அவன் சொன்னதைக் கவனிக்க
மறுத்துவிட்டோம். இப்போது அதற்கு
அனுபவிக்கிறோம்” என்று
பேசிக்கொண்டனர்.
22பிறகு ரூபன் அவர்களிடம், “அவனுக்கு
எந்தத் தீமையும் செய்யவேண்டாம் என்று
நான் உங்களிடம் சொன்னேன். ஆனால்
நான் சொன்னதை நீங்கள் கேட்கவில்லை.
அவனது மரணத்துக்கு நாம் இப்போது
தண்டனை அனுபவிக்கிறோம்” என்றான்.
23யோசேப்பு மொழி பெயர்ப்பாளனைக்
கொண்டு அவர்களோடு பேசியதால் தாங்கள்
சொன்னதை அவன் புரிந்து
கொள்ளமாட்டான் என்று அவர்கள்
நினைத்தார்கள். ஆனால் யோசேப்பு
அவர்கள் சொன்னவற்றையெல்லாம் புரிந்து
கொண்டான். 24அவர்களின் வார்த்தைகள்
அவனைப் பெரிதும் வருந்தச் செய்தது.
எனவே, அவன் அவர்களை விட்டுப்
போய் கதறி அழுதான். பிறகு அவர்களிடம்
வந்து, சகோதரர்களுள் ஒருவனான
சிமியோனைக் கைது செய்தான். மற்ற
சகோதரர்கள் இதைப் பார்த்தார்கள்.
25யோசேப்பு வேலைக்காரர்களிடம் அவர்
களின் பைகளை உணவுப் பொருட்களால்
நிரப்பிய பின்னர் அவர்கள் கொடுத்த
பணத்தை அவர்கள் பையிலேயே போட்டு,
அவர்களின் பயணத்துக்குத் தேவையான
வற்றையெல்லாம் கொடுத்து அனுப்பச்
சொன்னான்.
26சகோதரர்கள் உணவுப் பொருட்களைக்
கழுதைகளில் ஏற்றிக்கொண்டு போனார்கள்.
27அன்று இரவு வழியில் ஓரிடத்தில்
தங்கினார்கள். அப்போது ஒருவன் கழுதைக்
காக உணவு எடுக்கப் பையைத் திறந்து
பார்த்தபோது உள்ளே பணம் இருந்தது.
28அவன் மற்ற சகோதரர்களிடம், “பாருங்கள்.
இங்கே பணம் இருக்கிறது. நான்
தானியத்துக்குப் பணம் கொடுத்தேன்.
ஆனால் பணம் என் பையில் திரும்பப்
போடப்பட்டிருக்கிறது” என்றான். அவர்கள்
பயந்தார்கள், “தேவன் நமக்கு என்ன
செய்கிறார்?” என்று ஒருவருக்கொருவர்
சொல்லிக் கொண்டனர்.

### சகோதரர்கள் யாக்கோபிடம் தெரிவிக்கிறார்கள்

29அவர்கள் கானான் பகுதிக்குப் போய்
தம் தந்தையான யாக்கோபைச் சந்தித்து,
நடந்தவை அனைத்தையும் சொன்னார்கள்.
30“அந்நாட்டின் ஆளுநர் எங்களிடம் மிகக்
கடுமையாகப் பேசினான். எங்களை
ஒற்றர்கள் என்று குற்றம் சாட்டினான்”
31நாங்கள் அவ்வாறு இல்லை என்று
மறுத்தோம். நாங்கள் நேர்மையானவர்கள்
என்றோம். 32நாங்கள் பன்னிரண்டு
சகோதரர்கள் என்றும் தந்தையைப் பற்றியும்
இளைய தம்பியைப் பற்றியும் சொன்னோம்.
33“பிறகு அந்த ஆளுநர் ‘நீங்கள்
கௌரவமானவர்கள் என்பதை இதன் மூலம்
நிரூபியுங்கள். ஒரு சகோதரனை விட்டு
விட்டுப் போங்கள். உங்கள் உணவுப்
பொருட்களை எடுத்துச் செல்லுங்கள்.
34பிறகு உங்கள் இளைய சகோதரனை
அழைத்துக் கொண்டு வாருங்கள். அதன்
பிறகு நீங்கள் கௌரவமானவர்களா, இல்லை
ஒற்றர்களா என்பதை அறிந்து கொள்வேன்.
நீங்கள் சொன்னது உண்மை என்றால்
உங்கள் சகோதரனை விட்டு விடுவோம்.
நீங்களும் இந்த தேசத்திலே வியாபாரம்
பண்ணலாம், என்று சொன்னான்’”
என்றார்கள்.
35பிறகு சகோதரர்கள் அனைவரும் தங்கள்
பைகளை அவிழ்த்து தானியத்தை வெளியே
எடுத்தனர். எல்லாப் பைகளிலும் பணம்
இருந்தது. சகோதரர்களும் தந்தையும் அவற்
றைப் பார்த்து அஞ்சினார்கள்.
36யாக்கோபு அவர்களிடம், “நான் எனது
எல்லா மகன்களையும் இழக்கவேண்டும்
என்று விரும்புகிறீர்களா? யோசேப்பு போய்
விட்டான். சிமியோனும் போய்விட்டான்.
நீங்கள் இப்போது பென்யமீனையும்
கொண்டு போகிறீர்களா?” என்று கேட்
டான்.
37அதற்கு ரூபன், “தந்தையே, நான்
பென்யமீனை மீண்டும் உங்களிடம்
அழைத்து வராவிட்டால் எனது இரண்டு
மகன்களையும் கொன்றுவிடுங்கள். என்னை
நம்புங்கள். நான் பென்யமீனைத் திரும்ப
அழைத்துக்கொண்டு வருவேன்” என்றான்.
38ஆனால் யாக்கோபு, “பென்யமீனை
உங்களோடு அனுப்பமாட்டேன். அவனது
ஒரே சகோதரன் மரித்துபோனான். ராகேலின்

*மகன்களில் இவன் ஒருவன் மட்டுமே
உள்ளான். எகிப்துக்கு போகிற வழியில்
ஏதாவது நடந்தால் அதுவே என்னைக்
கொன்றுவிடும். வயதான என்னை
துக்கத்துடனே கல்லறைக்கு அனுப்புவீர்கள்”
என்றான்.*

### யாக்கோபு பென்யமீனை எகிப்துக்கு அனுப்ப சம்மதித்தல்

43 *நாட்டில் பஞ்சம் மிகக் கொடியதாய்
இருந்தது.* 2*அவர்கள் எகிப்திலிருந்து
வாங்கி வந்த தானியங்கள் எல்லாம் தீர்ந்து
விட்டது. யாக்கோபு தன் மகன்களிடம்,
“எகிப்துக்குப் போய் இன்னும் கொஞ்சம்
தானியங்களை வாங்கி வாருங்கள்”
என்றான்.*
3*ஆனால் யூதாவோ யாக்கோபிடம்,
“அந்நாட்டின் ஆளுநர் எங்களை
எச்சரித்திருக்கிறார். ‘உங்கள் இளைய
சகோதரனை அழைத்துக்கொண்டு வரா
விட்டால் உங்களோடு பேசமாட்டேன்’
என்றார்.* 4*நீங்கள் பென்யமீனை எங்களோடு
அனுப்பினால் நாங்கள் போய் தானியங்
களை வாங்கி வருவோம்.* 5*ஆனால் நீங்கள்
பென்யமீனை அனுப்ப மறுத்தால் நாங்கள்
போகமாட்டோம். அந்த மனிதன் இவன்
இல்லாமல் வரவேண்டாம் என்று எச்சரித்
துள்ளான்” என்றான்.*
6*இஸ்ரவேல் (யாக்கோபு) “அவனிடம் ஏன்
உங்கள் இளைய சகோதரனைப்பற்றி
சொன்னீர்கள்? ஏன் இதுபோல் ஒரு கெட்டச்
செயலை எனக்குச் செய்தீர்கள்?” என்று
கேட்டான்.*
7*அதற்கு சகோதரர்கள், “அந்த மனிதன்
ஏராளமான கேள்விகளைக் கேட்டான்.
அவன் எங்களைப்பற்றியும் நமது குடும்பத்
தைப் பற்றியும் கேட்டான். அவன்
எங்களிடம், ‘உங்கள் தந்தை உயிரோடு
இருக்கிறாரா? இன்னொரு தம்பி வீட்டில்
இருக்கிறானா?’ என்று கேட்டான். நாங்கள்
பதிலை மட்டும் சொன்னோம், அவன்
இளைய சகோதரனையும் அழைத்துக்
கொண்டுவரச் சொல்லுவான் என்பதை
நாங்கள் அறியோம்” என்றார்கள்.*
8*பிறகு யூதா, “தன் தந்தையாகிய
இஸ்ரவேலிடம் பென்யமீனை என்னோடு
அனுப்பிவையுங்கள் அவனுக்கு நான்
பொறுப்பு. உணவுப் பொருட்களுக்காக
எகிப்துக்குப் போகவே வேண்டும். நாம்
போகாவிட்டால் நீரும், நமது குழந்தைகளும்
மரித்துபோவோம்.* 9*அவனைப் பாதுகாப்பாக
அழைத்து வருவோம் என்று உறுதி
கூறுகிறேன். அவனை நாங்கள் திருப்பி
அழைத்து வராவிட்டால் நீங்கள் என்னை
எப்பொழுதும் பழிகூறுங்கள்.* 10*நீங்கள்
முன்னமே போகவிட்டிருந்தால் இதற்குள்
இரண்டுமுறை போய் வந்திருக்கலாம்”
என்று சொன்னான்.*

11*பிறகு அவர்கள் தந்தை இஸ்ரவேல்,
“இது உண்மை என்றால் பென்யமீனை
உங்களோடு அழைத்துப்போங்கள். ஆனால்
ஆளுநருக்குச் சில அன்பளிப்புகளையும்
எடுத்துக்கொள்ளுங்கள். நம் நாட்டில்
சேகரிக்கத்தக்கவற்றைச் சேகரியுங்கள். தேன்,
பிசின்தைலம், கந்தவர்க்கம், வெள்ளைப்
போளம், தொபிந்துகொட்டைகள்,
வாதுமைக் கொட்டைகள் போன்றவற்றை
எடுத்துச் செல்லுங்கள்.* 12*பணத்தை
இரட்டிப்பாய் எடுத்துப்போங்கள். கடந்த
முறை நீங்கள் கொடுத்த பணம் தவறி
உங்களிடமே வந்துவிட்டது ஆளுநர் தவறு
செய்திருக் கலாம்.* 13*பென்யமீனையும்
அழைத்துக் கொண்டு அவரிடம் போங்கள்.*
14*நீங்கள் ஆளுநர் முன்னால் நிற்கும்போது
சர்வ வல்லமையுள்ள தேவன் உங்களுக்கு
உதவுவார். அவர் சிமியோனையும்,
பென்யமீனையும் திருப்பி அனுப்பும்படி
பிரார்த்தனை செய்கிறேன். இல்லாவிட்டால்
நான் மீண்டும் மகனை இழந்த துக்கத்துக்கு
ஆளாவேன்” என்றான்.*
15*எனவே, சகோதரர்கள் காணிக்கைப்
பொருட்களோடும் இரண்டு மடங்கு
பணத்தோடும் எகிப்துக்குப் புறப்பட்டுப்
போனார்கள். இப்போது பென்யமீனும்
அவர்களோடு போனான்.*

### சகோதரர்கள் யோசேப்பின் வீட்டிற்கு அழைக்கப்படுகிறார்கள்

16*எகிப்தில், அவர்களோடு பென்யமீனை
பார்த்த யோசேப்பு வேலைக்காரனிடம்,
“இவர்களை என் வீட்டிற்கு அழைத்து
வாருங்கள். ஒரு மிருகத்தைக் கொன்று
சமையுங்கள். இன்று மத்தியானம் அவர்கள்
என்னோடு சாப்பிடுவார்கள்” என்றான்.*
17*வேலைக்காரன் யோசேப்பு சொன்னபடி
செய்தான். அவர்களை யோசேப்பின்
வீட்டிற்கு அழைத்துப் போனார்கள்.*
18*அவர்கள் யோசேப்பின் வீட்டிற்கு
அழைத்துச் செல்லப்பட்டபோது பயந்தனர்.
“சென்ற முறை பணத்தை பைக்குள்ளே
போட்டுவிட்டதால் இப்போது தனது
வீட்டிற்கு அழைக்கிறார். அது நமக்கு
எதிரான சாட்சியாகப் பயன்படுத்தப்படும்.
நமது கழுதைளைப் பறித்துக்கொண்டு
நம்மை அடிமைகளாக்கி விடுவார்கள்”
என்று பேசிக்கொண்டார்கள்.*
19*ஆகவே அவர்கள் அனைவரும்
யோசேப்பின் வீட்டின் பொறுப்பாளனாகிய
வேலைக்காரனிடம் வந்தனர்.* 20*அவர்கள்
அவனிடம், “ஐயா, இதுதான் உண்மை
என்று வாக்குறுதிச் செய்கிறோம். சென்ற
முறை தானியம் வாங்க வந்தோம்.* 21-22*வீட்
டிற்குத் திரும்பும்போது வழியில் பைக்குள்
பணம் இருப்பதைப் பார்த்தோம். அதற்குள்
எவ்வாறு வந்தது என்று எங்களுக்குப்
புரியவில்லை. ஆனால் அந்தப் பணத்தைத்*

திருப்பிக் கொடுக்க கொண்டு வந்திருக்கி
றோம். இந்த முறை உணவுப் பொருள்
வாங்குவதற்கு அதிகப்படியான பணமும்
கொண்டு வந்திருக்கிறோம்" என்றனர்.
23ஆனால் வேலைக்காரனோ, "பயப்பட
வேண்டாம், நம்புங்கள் உங்கள் தேவனும்
உங்கள் தந்தையின் தேவனும் அந்தப்
பணத்தை உங்கள் பைகளில்
போட்டிருக்கலாம். கடந்த முறை தானியத்
துக்கான பணத்தைக் கொடுத்துவிட்டீர்கள்
என்று நினைக்கிறேன்" என்றான்.

பிறகு அவன் சிமியோனைச் சிறையி
லிருந்து விடுவித்தான். 24அவர்கள்
அனைவரையும் அழைத்துக்கொண்டு
வேலைக்காரன் வீட்டிற்குள் போனான்.
அவர்களுக்குத் தண்ணீர் கொடுத்தான்.
அவர்கள் பாதங்களைக் கழுவிக்
கொண்டனர். அவர்களின் கழுதைகளுக்கும்
உணவு கொடுத்தான்.
25அவர்கள் ஆளுநரோடு உண்ணப்
போகிறோம் என்பதை அறிந்தனர். எனவே,
அவனுக்குக் கொடுக்கவேண்டிய காணிக்
கைகளை எடுத்து தயார் செய்தனர்.
26மதியம் ஆனபோது யோசேப்பு வீட்டிற்கு
வந்தான். அவர்கள் அவனுக்குக் காணிக்கை
களைக் கொடுத்தனர். பிறகு அவனுக்கு
முன்னால் பணிந்து வணங்கினார்கள்.
27யோசேப்பு அவர்களிடம் நடந்ததை
எல்லாம் கேட்டான், "உங்கள் வயதான
தந்தை எப்படி இருக்கிறார். இப்போதும்
அவர் உயிரோடும் நலமாகவும் இருக்கி
றாரா?" என்று கேட்டான்.
28சகோதரர்கள் அனைவரும், "ஆமாம்
ஐயா, அவர் இன்னும் உயிரோடு
இருக்கிறார்" என்றனர். மீண்டும் அவனைப்
பணிந்து வணங்கினார்கள்.

### யோசேப்பு தன் தம்பி பென்யமீனைப் பார்க்கிறான்

29பிறகு யோசேப்பு தன் தம்பியைப்
பார்த்தான். (இருவரும் ஒரே தாயின்
வயிற்றில் பிறந்தவர்கள்.) "இதுதான் எனக்கு
நீங்கள் சொன்ன உங்கள் இளைய
சகோதரனா?" என்று கேட்டான். பிறகு
யோசேப்பு, "என் மகனே தேவன் உன்னை
ஆசீர்வதிக்கட்டும்" என்று பென்யமீனிடம்
சொன்னான்.
30பிறகு அவன் அந்த அறையை விட்டு
வெளியே ஓடினான். தன் சகோதரன்
பென்யமீனைத் தான் மிகவும் விரும்புவதை
அவனுக்கு உணர்த்தப் பெரிதும் விரும்பி
னான். அவனுக்கு அழவேண்டும்போல
இருந்தது. ஆனால் தான் அழுவதைத் தன்
சகோதரர்கள் பார்த்துவிடக் கூடாதே என்று
அஞ்சினான். இதனால் தன் அறைக்குச்
சென்று அழுதான். 31பிறகு முகத்தைக்
கழுவிக்கொண்டு வந்தான். அவன் தன்னைத்
தானே அடக்கிக்கொண்டு, "இது உணவு
உண்ணும் நேரம்" என்றான்.
32அவனுக்கும் அவர்களுக்கும் மற்ற
எகிப்தியர்களுக்கும் தனித்தனியாக மேஜை
போடப்பட்டிருந்தது. அவர்களும் தனித்
தனியாக அமர்ந்தார்கள். எகிப்தியர்கள்
எபிரெயர்களோடு சேர்ந்து சாப்பிடு
வதில்லை. 33யோசேப்பின் சகோதரர்கள்
அவனுக்கு முன்னால் அமர்ந்தார்கள்.
மூத்தவன் முதல் இளையவன் வரை
வரிசையாக அமர்ந்திருந்தார்கள். அவர்கள்
நடப்பதைப்பற்றி வியப்புடன் ஒருவரை
ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். 34வேலைக்
காரர்கள் யோசேப்பின் மேஜையிலிருந்து
உணவை எடுத்து வந்து அவர்களிடம்
கொடுத்தார்கள். அவர்கள் பென்யமீனுக்கு
மற்றவர்களைக் காட்டிலும் ஐந்து மடங்கு
அதிகமாக உணவு கொடுத்தனர்.
சகோதரர்கள் யோசேப்போடு சாப்பிட்டு
மகிழ்ச்சியாக இருந்தார்கள்.

### யோசேப்பின் தந்திரமான திட்டம்

44 பிறகு யோசேப்பு வேலைக்
காரர்களிடம்: "இவர்களின் பைகளில்
எவ்வளவு தானியம் போட முடியுமோ
அவ்வளவு போடுங்கள். அவர்களால்
கொண்டுபோக முடிகிறவரை போடுங்கள்.
தானியத்தோடு அவர்களின் பணத்தையும்
போட்டு விடுங்கள். 2இளைய சகோதரனின்
பைக்குள் பணத்தோடு குறிப்பாக எனது
வெள்ளிக் கோப்பையையும் போடுங்கள்"
என்றான். வேலைக்காரர்களும் அவ்வாறே
செய்தார்கள்.
3மறுநாள் அதிகாலையில் சகோதரர்களும்
அவர்களின் கழுதைகளும் அவர்களின்
நாட்டுக்குத் திரும்பி அனுப்பப்பட்டனர்.
4அவர்கள் புறப்பட்டுப் போனதும் அவன்
வேலைக்காரர்களிடம் "போய் அவர்களைப்
பின் தொடருங்கள். அவர்களை நிறுத்தி,
'நாங்கள் நல்லபடியாக நடந்து கொண்டோம்.
நீங்கள் ஏன் இவ்வாறு நடந்து
கொள்கிறீர்கள், எங்கள் எஜமானின்
வெள்ளிக் கோப்பையை ஏன் திருடினீர்கள்?
5எங்கள் எஜமானர் அந்தக் கோப்பை
யில்தான் திராட்சைரசம் குடிப்பார். அவர்
இதனைக் குறிகூறவும் பயன்படுத்துவார்.
நீங்கள் என்ன செய்தீர்களோ அது தவறு
என்று கேளுங்கள்'" என்றான்.
6வேலைக்காரர்களும் அவ்வாறே செய்து,
யோசேப்பு சொல்லச் சொன்னதைச்
சொன்னார்கள்.
7ஆனால் சகோதரர்களோ வேலைக்
காரர்களிடம், "ஏன் இவ்வாறு ஆளுநர்
சொன்னார்? நாங்கள் எதுவும் அவ்வாறு
செய்யவில்லையே. 8எங்கள் பைகளில்
கண்டுபிடித்த பணத்தைத் திரும்பக் கொண்டு
வந்திருக்கிறோம். நாங்கள் ஏன் உங்கள்

எஜமானரின் வெள்ளியையும் தங்கத்தையும்
திருடுகிறோம்? 9எங்களில் எவராவது
ஒருவரது பையில் அந்த வெள்ளிக் கோப்பை
இருக்குமானால் அவன் சாகட்டும். நீங்கள்
அவனைக் கொல்லுங்கள். நாங்கள் உங்கள்
அடிமையாகிறோம்" என்றனர்.
10வேலைக்காரனோ, "நீங்கள் சொல்வது
போலவே செய்வோம். ஆனால் அந்த
மனிதனை நான் கொல்லமாட்டேன். அந்த
வெள்ளிக் கோப்பை யாரிடம் உள்ளதோ
அவன் எங்கள் அடிமையாவான். மற்ற
வர்களை விட்டுவிடுவேன்" என்றான்.

### பென்யமீன் சிக்கிக்கொள்ளுதல்

11ஒவ்வொருவரும் தங்கள் பையை
விரைவாக அவிழ்த்து தானியத்தைத்
தரையில் கொட்டினர். 12வேலைக்காரன்
ஒவ்வொரு பையிலும் தேடினான்.
மூத்தவனிலிருந்து இளையவன் வரை என
வரிசையாகத் தேடினான். அவன்
பென்யமீனின் பையில் கோப்பையைக்
கண்டு பிடித்தான். 13சகோதரர்கள் மிகவும்
துக்கப்பட்டனர். தம் துயரத்தை வெளிப்
படுத்தும்படி தங்கள் ஆடைகளைக்
கிழித்துக்கொண்டனர். தங்கள் பைகளைக்
கழுதைகளின்மீது வைத்துக்கொண்டு
நகரத்திற்குத் திரும்பினார்கள்.
14யூதாவும் பிற சகோதரர்களும்
யோசேப்பின் வீட்டிற்கு வந்தனர். யோசேப்பு
அங்கேயே இருந்தான். அவர்கள் அவனுக்கு
முன்னால் விழுந்து வணங்கினார்கள்.
15யோசேப்பு, "ஏன் இவ்வாறு செய்தீர்கள்?
நான் இரகசியங்களை அறிந்துகொள்ள
சிறப்பான வழிகள் உண்டு என்று
உங்களுக்குத் தெரியாதா? என்னைத் தவிர
வேறு எவராலும் சிறப்பாகச் செய்ய
முடியாது!" என்றான்.
16யூதா, "ஐயா, நாங்கள் சொல்வதற்கு
எதுவுமில்லை. விளக்கிச் சொல்லவும்
வழியில்லை. நாங்கள் குற்றமற்றவர்கள்
என்பதை நிரூபிக்க முடியவில்லை. நாங்கள்
எப்போதோ செய்த தவறுக்கு இப்போது
தேவன் தண்டிக்கிறார். நாங்களும்
பென்யமீனும் இனி உங்கள் அடிமைகள்"
என்றான்.
17ஆனால் யோசேப்போ, "உங்கள்
அனைவரையும் அடிமையாக்க நான்
விரும்பவில்லை. என் கோப்பையைத்
திருடியவனை மட்டுமே அடிமை
யாக்குவேன். உங்கள் தந்தையிடம் நீங்கள்
அனைவரும் சமாதானமாகத் திரும்பிப்
போகலாம்" என்றான்.

### யூதா பென்யமீனுக்காக வாதாடுதல்

18யூதா யோசேப்பிடம் போய், "ஐயா!
எங்களை வெளிப்படையாகப் பேச
விடுங்கள். எங்களிடம் கோபப்படாதீர்கள்.
நீங்கள் பார்வோன் மன்னரைப் போன்றவர்
என்பதை அறிவோம். 19முன்பு இங்கு
வந்தபோது 'உங்களுக்குத் தந்தையோ
சகோதரரோ இருக்கிறார்களா' என்று
கேட்டீர்கள். 20நாங்கள் 'எங்களுக்குத் தந்தை
இருக்கிறார், அவர் முதியவர். இளைய
சகோதரன் இருக்கிறான். அவன் எங்கள்
தந்தையின் முதிய வயதில் பிறந்ததால்
அவனைப் பெரிதும் நேசிக்கிறார்.
அவனோடு கூடப்பிறந்தவன் மரித்துப்
போனான். இவன் ஒருவன்தான் அத்தாயின்
மகன்களில் உயிரோடு இருக்கிறான். எனவே
எங்கள் தந்தை இவனைப் பெரிதும்
நேசிக்கிறார் என்றோம். 21பிறகு நீங்கள்,
'அவனையும் அழைத்துக்கொண்டு வாருங்
கள். நான் அவனைப் பார்க்க
விரும்புகிறேன்' என்றீர்கள். 22அதற்கு
நாங்கள், 'அவனால் வரமுடியாது'
அவனைத் தந்தை விடமாட்டார். அவனைப்
பிரிந்தால் எங்கள் தந்தை மரித்துபோவார்'
என்றோம். 23ஆனால் நீங்களோ எங்களிடம்,
'நீங்கள் அவனை அழைத்துக் கொண்டு
வரவேண்டும் இல்லாவிட்டால் இனிமேல்
தானியம் தரமுடியாது' என்றீர்கள்.
24அதனால் நாங்கள் எங்கள் தந்தையிடம்
போய் நீங்கள் சொன்னதையெல்லாம்
சொன்னோம்.
25"இறுதியில் எங்கள் தந்தை, 'போய்
இன்னும் தானியம் வாங்கிக் கொண்டு
வாருங்கள்' என்றார். 26நாங்கள் எங்கள்
தந்தையிடம் 'நாங்கள் எங்கள் இளைய
சகோதரன் இல்லாமல் போகமாட்டோம்.
ஆளுநர் இவனைப் பார்க்காவிட்டால்
தானியம் தரமுடியாது என்று கூறியிருக்
கிறார்' என்றோம். 27பிறகு என் தந்தை,
'என் மனைவி ராகேல் எனக்கு இரண்டு
மகன்களைக் கொடுத்தாள். 28ஒரு மகனை
வெளியே அனுப்பினேன். அவனைக் காட்டு
மிருகங்கள் கொன்றுவிட்டன. அவனை
இன்றுவரை காணவில்லை. 29அடுத்த
மகனையும் நீங்கள் அழைத்துப்போய்
அவனுக்கு ஏதாவது நடந்தால் நான்
மரணமடையுமளவுக்கு வருத்தமடைவேன்'
என்றார். 30இப்போதும் எங்களின் இளைய
சகோதரன் இல்லாமல் நாங்கள் போகும்
பொழுது என்ன நடக்கும் என்பதைக்
கற்பனை செய்யுங்கள். அவனே எங்கள்
தந்தையின் வாழ்வில் மிக முக்கியமானவன்.
31அவன் எங்களுடன் இல்லை என்பதை
எங்கள் தந்தை அறிந்தால் அவர்
மரித்துவிடுவார். மேலும் அது எங்களுடைய
தவறாகும். நாங்கள் எங்கள் தந்தையை
மிகக் கவலைகொண்ட மனிதராக அவரது
கல்லறைக்கு அனுப்புவோம்!
32"நான் என் தந்தையிடம் இவனுக்காக
பொறுப்பேற்று வந்துள்ளேன். 'நான்
இவனைத் திரும்ப அழைத்துக்கொண்டு
வராவிட்டால் என் வாழ்க்கை முழுவதும்
என்னைப் பழிக்கலாம்' என்றேன். 33எனவே

நான் உங்களை கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். இவனை இவர்களோடு அனுப்பிவையுங்கள். நான் இங்கே உங்களுக்கு அடிமையாக இருக்கிறேன்.
34இவன் இல்லாமல் நான் என் தந்தையிடம் போகமாட்டேன். என் தந்தைக்கு என்ன நேருமோ என்று எனக்கு அச்சமாக இருக்கிறது" என்றான்.

### தான் யாரென்று யோசேப்பு சொல்கிறான்

45 யோசேப்பு அதிக நேரம் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அங்கிருந்தவர்களின் முன்னால் அவன் உள்ளம் உடைந்து கண்ணீர் சிந்தினான். யோசேப்பு "எல்லோரையும் வெளியே போகச்சொல்" என்று கட்டளையிட்டான். அனைவரும் வெளியேறினர். அச்சகோதரர்கள் மட்டுமே அங்கிருந்தார்கள். பிறகு அவன் தன்னை யாரென்று சொன்னான்.
2யோசேப்பு தொடர்ந்து அழுதான். அந்த வீட்டில் உள்ள எகிப்தியர்கள் அனைவரும் அதைக் கேட்டனர்.
3யோசேப்பு தனது சகோதரர்களிடம், "நான் உங்களின் சகோதரன் யோசேப்பு. என் தந்தை உயிரோடு நலமாக இருக்கிறாரா?" என்று கேட்டான். சகோதரர்கள் அவனுக்குப் பதில் சொல்லவில்லை. அவர்கள் குழப்பமும் பயமும் கொண்டனர்.
4யோசேப்பு மீண்டும், "என்னருகே வாருங்கள். கெஞ்சி கேட்கிறேன், வாருங்கள்" என்றான். சகோதரர்கள் அவனருகே வந்தனர். அவர்களிடம், "நான் உங்கள் சகோதரன் யோசேப்பு. எகிப்திய வியாபாரிகளிடம் உங்களால் விற்கப்பட்டவன்.
5இப்போது அதற்காக வருத்தப்படாதீர்கள். நீங்கள் செய்தவற்றுக்காக உங்களையே கோபித்துக் கொள்ளாதீர்கள். இங்கே நான் வரவேண்டும் என்பது தேவனின் திட்டம். உங்கள் வாழ்க்கையைக் காப்பாற்றவே இங்கே இருக்கிறேன்.
6இந்தப் பஞ்சம் இரண்டு ஆண்டுகளாக இருக்கின்றன. இன்னும் ஐந்து ஆண்டுகள் இருக்கும்.
7ஆகவே தேவன் என்னை உங்களுக்கு முன்னதாக அனுப்பி இருக்கிறார். அதனால் உங்களை காப்பாற்ற முடியும்.
8என்னை இங்கே அனுப்பியது உங்களது தவறு அல்ல. இது தேவனின் திட்டம். பார்வோன் மன்னருக்கே தந்தை போன்று நான் இங்கே இருக்கிறேன். நான் அரண்மனைக்கும் இந்த நாட்டிற்கும் ஆளுநராக இருக்கிறேன்" என்றான்.

### இஸ்ரவேல் எகிப்திற்கு அழைக்கப்படுதல்

9யோசேப்பு அவர்களிடம், "வேகமாக என் தந்தையிடம் போங்கள். அவரது மகன் யோசேப்பு இந்தச் செய்தியை அனுப்பியதாகக் கூறுங்கள்:

"தேவன் என்னை எகிப்தின் ஆளுநராக ஆக்கினார். எனவே என்னிடம் வாருங்கள். காத்திருக்க வேண்டாம். இப்போதே வாருங்கள்.
10என்னருகில் கோசேன் நிலப்பகுதியில் வாழலாம். நீங்களும், உங்கள் பிள்ளைகளும், பேரப்பிள்ளைகளும், மிருகங்களும் இங்கே வரவேற்கப்படுகிறீர்கள்.
11இனிவரும் ஐந்தாண்டு பஞ்சத்திலும் உங்கள் அனைவரையும் பாதுகாத்துக் கொள்வேன். எனவே, நீங்களும் உங்கள் குடும்பமும் உங்களுக்குரிய எதையும் இழக்கமாட்டீர்கள்" என்று கூறுங்கள் என்றான்.

12யோசேப்பு தன் சகோதரர்களிடம், "நன்றாக உறுதி செய்து கொள்ளுங்கள். நான்தான் யோசேப்பு. உங்கள் சகோதரனாகிய எனது வாய்தான் பேசுகிறது என்பதை நீங்களும் பென்யமீனும் கண்களால் காண்கிறீர்கள்.
13எகிப்திலே எனக்குள்ள மரியாதையையும் இங்கே நீங்கள் பார்க்கின்றவற்றையும் தந்தையிடம் சொல்லுங்கள். வேகமாகப் போய் தந்தையை அழைத்து வாருங்கள்" என்று சொன்னான்.
14பிறகு தன் தம்பி பென்யமீனை அணைத்துக் கொண்டான். இருவரும் அழுதார்கள்.
15பிறகு அவன் சகோதரர்கள் அனைவரையும் முத்தமிட்டான். அவர்களுக்காக அழுதான். இதற்குப் பிறகு அவர்கள் அவனோடு பேசத் தொடங்கினார்கள்.
16யோசேப்பின் சகோதரர்கள் வந்த செய்தியை பார்வோன் அறிந்துகொண்டான். பார்வோன் அரண்மனை முழுக்க அச்செய்தி பரவியது. அரசனும் அவனது வேலைக்காரர்களும் மகிழ்ச்சியடைந்தனர்.
17அரசன் யோசேப்பிடம் வந்து, "உங்கள் சகோதரர்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களை எடுத்துக்கொண்டு கானான் பகுதிக்குப் போகட்டும்.
18உனது குடும்பத்தையும் தந்தையையும் என்னிடம் அழைத்து வருமாறு கூறு. உங்களுக்கு வாழ நல்ல நிலத்தைக் கொடுக்கிறேன். இங்குள்ள சிறந்த உணவை அவர்கள் உண்ணலாம்" என்றான்.
19"அதோடு இங்குள்ள சிறந்த வண்டிகளை உன் சகோதரர்களுக்கு கொடு. அவர்கள் கானான் பகுதிக்குச் சென்று உன் தந்தையையும், பெண்களையும், குழந்தைகளையும் ஏற்றிக்கொண்டு வரட்டும்.
20அங்கிருந்து எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு வருவதைக் குறித்துக் கவலை கொள்ள வேண்டாம். எகிப்திலுள்ளவற்றில் சிறந்தவற்றை அவர்களுக்குக் கொடுக்கலாம்" என்றான்.
21எனவே இஸ்ரவேலின் பிள்ளைகளும் அவ்வாறே செய்தனர். பார்வோன் மன்னன்

சொன்னதுபோல் நல்ல வண்டிகளையும்,
பயணத்திற்கு வேண்டிய உணவையும்
யோசேப்பு கொடுத்து அனுப்பினான்.
22 சகோதரர் அனைவருக்கும் யோசேப்பு
அழகான ஆடைகளைக் கொடுத்தான்.
ஆனால் யோசேப்பு பென்யமீனுக்கு மட்டும்
ஐந்து ஜோடி ஆடைகளையும், 300 வெள்ளிக்
காசுகளையும் கொடுத்தான். 23 யோசேப்பு
தன் தந்தைக்கும் அன்பளிப்புகளைக்
கொடுத்து அனுப்பி னான். 10 கழுதைகள்
சுமக்குமளவு எகிப்திலுள்ள சிறந்த
பொருட்களை யெல்லாம் கொடுத்தான். 10
பெண் கழுதைகள் சுமக்கும்படி உணவுப்
பொருட் களும், ரொட்டியும் பிற
பொருட்களும் தன் தந்தையார் திரும்பிவரும்
பயணத்திற்குப் பயன்பட கொடுத்தான்.
24 பிறகு சகோதரர்களை அனுப்பினான்.
அவர்கள் பிரிந்து போகும்போது “நேராக
வீட்டிற்குப் போங்கள், வழியில் சண்டை
போடாதீர்கள்” என்றான்.
25 எனவே, சகோதரர்கள் எகிப்தை விட்டு
கானான் பகுதிக்குத் தந்தையிடம்
போனார்கள். 26 அவர்கள் அவரிடம்,
“யோசேப்பு உயிரோடு இருக்கிறான் அவன்
எகிப்து நாடு முழுவதிற்கும் ஆளுநராக
இருக்கிறான்” என்றனர்.
இந்தச் செய்தியைக் கேட்டதும் யாக்கோபு
புரியாமலிருந்தான். முதலில் அவனால் நம்ப
முடியவில்லை. 27 ஆனால் அவர்கள்
யோசேப்பு சொன்னதை எல்லாம் சொன்
னார்கள். தன்னை அழைத்துப் போவதற்காக
யோசேப்பு அனுப்பியிருந்த வண்டிகளை
யெல்லாம் பார்த்தான். பிறகு யாக்கோபு
புத்துணர்வு பெற்று மிக்க சந்தோஷமடைந்
தான். 28 “இப்போது உங்களை நம்புகிறேன்,
என் மகன் யோசேப்பு இன்னும் உயிரோடு
இருக்கிறான். மரிப்பதற்கு முன்னால்
அவனைப் பார்க்கப் போவேன்” என்று
இஸ்ரவேல் கூறினான்.

## தேவன் இஸ்ரவேலுக்கு வாக்குறுதி தருதல்

46 எனவே, இஸ்ரவேல் எகிப்துக்குப்
பயணம் தொடங்கினான். அவன்
முதலில் பெயெர்செபாவுக்குப் போனான்.
அவன் அங்கே தன் தகப்பனாகிய ஈசாக்கின்
தேவனைத் தொழுதுகொண்டு, பலிகளும்
செலுத்தினான். 2 இரவில் தேவன் கனவில்
இஸ்ரவேலிடம் பேசினார். தேவன், “யாக்
கோபே, யாக்கோபே” என்று கூப்பிட்டார்.
“நான் இங்கே இருக்கிறேன்” என்றான்
இஸ்ரவேல்.
3 அப்பொழுது அவர், “நான் தேவன், உன்
தந்தைக்கும் தேவன். எகிப்திற்குப் போகப்
பயப்படவேண்டாம். அங்கு உன்
னைப் பெரிய இனமாக்குவேன். 4 உன்னோடு
நானும் எகிப்துக்கு வருவேன். மீண்டும்
உன்னை எகிப்திலிருந்து வெளியே வர
வழைப்பேன். நீ எகிப்திலேயே மரணமடை
வாய். ஆனால் யோசேப்பு உன்னோடு
இருப்பான். நீ மரிக்கும்போது அவன் தன்
கையாலேயே உன் கண்களை மூடுவான்”
என்றார்.

## இஸ்ரவேல் எகிப்துக்குப் போகிறான்

5 பிறகு, யாக்கோபு பெயெர்செபாவை
விட்டு எகிப்துக்குப் பயணம் செய்தான்.
அவனது பிள்ளைகளும், பிள்ளைகளின்
பிள்ளைகளும், அவர்களின் மனைவி
மார்களும் எகிப்துக்கு வந்து சேர்ந்தார்கள்.
அவர்கள் பார்வோன் மன்னன் அனுப்பிய
வண்டியில் பயணம் செய்தனர். 6 தங்கள்
ஆடு மாடுகளையும் கானான் பகுதியில்
சம்பாதித்த பொருட்களையும் எடுத்துக்
கொண்டு எகிப்துக்குப் போனார்கள்.
எனவே இஸ்ரவேல் தன் குடும்பத்தோடும்
தன் எல்லாப் பிள்ளைகளோடும்
எகிப்திற்குச் சென்றான். 7 அவர்களோடு
அவனது பிள்ளைகளும் பேரன்களும்,
பேத்திகளும், இருந்தனர். மொத்த குடும்பமும்
அவனோடு எகிப்தை அடைந்தது.

## யாக்கோபின் குடும்பம்

8 எகிப்துக்கு இஸ்ரவேலோடு சென்ற
அவனது மகன்களின் பெயர்களும்
குடும்பத்தின் பெயர்களும் பின்வருமாறு:
ரூபன் முதல்மகன். 9 ரூபனுக்கு ஆனோக்கு,
பல்லூ, எஸ்ரோன், கர்மீ ஆகிய மகன்கள்
இருந்தனர்.
10 சிமியோனுக்கு எமுவேல், யாமின்,
ஓகாத், யாகீன், சொகார், கானானிய
பெண்ணின் மகனான சவுல் ஆகிய
பிள்ளைகள் இருந்தனர்.
11 கெர்சோன், கோகாத், மெராரி ஆகியோர்
லேவியின் பிள்ளைகள்.
12 ஏர், ஓனான், சேலா, பாரேஸ், சேரா
ஆகியோர் யூதாவின் பிள்ளைகள். (ஏர்
மற்றும் ஓனான் கானானில் இருக்கும்போதே
மரணமடைந்தனர்) எஸ்ரோன், ஆமூல்
இருவரும் பாரேசுடைய குமாரர்.
13 தோலா, பூவா, யோபு, சிம்ரோன்
என்பவர்கள் இசக்காரின் பிள்ளைகள்.
14 செரேத், ஏலோன், யக்லேல் ஆகியோர்
செபுலோனுடைய பிள்ளைகள்.
15 யாக்கோபுக்கும் லேயாளுக்கும் பிறந்த
பிள்ளைகள் ரூபன், சிமியோன், லேவி, யூதா,
இசக்கார், செபுலோன் ஆகியோர். அவள்
இக்குழந்தைகளை பதான் ஆராமில்
பெற்றாள். அவளுக்குத் தீனாள் என்ற மகளும்
உண்டு. மொத்தம் 33 பேர்கள் இருந்தனர்.
16 காத்துக்கு சிபியோன், அகி, சூனி,
எஸ்போன், ஏரி, அரோதி, அரேலி எனும்
பிள்ளைகள் இருந்தனர்.
17 ஆசேருக்கு, இம்னா, இஸ்வா, இஸ்வி,
பெரீயா எனும் பிள்ளைகள் இருந்தனர்.

இவர்களுக்கு செராக்கு எனும் சகோதரி
இருந்தாள். பெரீயாவுக்கு ஏபேர், மல்கியேல்
என்ற பிள்ளைகள் இருந்தனர்.
18இவர்கள் அனைவரும் யாக்கோபின்
மனைவியான லேயாளின் வேலைக்காரப்
பெண் சில்பாவுக்குப் பிறந்தவர்கள்.
அவர்கள் மொத்தம் 16 பேர்.
19யாக்கோபின்மனைவியான ராகேலுக்கு
இரண்டு பிள்ளைகள், யோசேப்பும்
பென்யமீனும். பென்யமீன் யாக்கோபோடு
இருந்தான். யோசேப்பு ஏற்கெனவே
எகிப்தில் இருந்தான்.
20எகிப்தில் யோசேப்புக்கு இரண்டு
மகன்கள். அவர்கள் மனாசேயும்
எப்பிராயீமும். அவன் மனைவி ஆஸ்நாத்,
ஓன் நகரத்து ஆசாரியனாகிய போத்திப்பிரா
வின் மகள்.
21பென்யமீனுக்கு பேலா, பெகேர்,
அஸ்பேல், கேரா, நாகமான், ஏகி, ரோஷ்,
முப்பிம், உப்பிம், ஆர்து என்னும்
பிள்ளைகள்.
22இவர்கள் அனைவரும் யாக்கோபிற்கு
ராகேல் மூலம் வந்தவர்கள். மொத்தம் 14
பேர்.
23தாணின் மகன் உசீம்.
24நப்தலியின் மகன்களான யாத்சியேல்,
கூனி, எத்சேர், சில்லேம் என்பவர்கள்.
25இவர்கள் யாக்கோபிற்கும் பில்காளுக்கும்
பிறந்தவர்கள். (பில்காள் ராகேலின்
வேலைக்காரி.) மொத்தம் ஏழு பேர்.
26ஆக மொத்தம் யாக்கோபு குடும்பத்தின்
நேர் சந்ததியார் 66 பேர் இருந்தனர்.
இவர்கள் அனைவரும் எகிப்துக்குச்
சென்றார்கள். இதில் யாக்கோபு மருமகள்கள்
பெயர் சேர்க்கப்படவில்லை. 27யோசேப்
புக்கும் இரண்டு பிள்ளைகள். அவர்கள்
எகிப்திலேயே பிறந்தவர்கள். எனவே
ஒட்டுமொத்தமாக 70 பேர் யாக்கோபு
குடும்பத்தில் இருந்தனர்.

### இஸ்ரவேல் எகிப்து வந்தடைதல்

28முதலில் யாக்கோபு யூதாவை
யோசேப்போடு பேச அனுப்பினான். யூதா
யோசேப்பிடம் போய் அவனைக்
கோசேனில் பார்த்தான். பிறகு யாக்கோபும்
மற்றவர்களும் அவனோடு போனார்கள்.
29யோசேப்பு தன் தந்தை வருவதை அறிந்து
தன் தேரைத் தயார் செய்து அவரை
எதிர்கொண்டழைக்கப் போனான். அவன்
தன் தந்தையைப் பார்த்ததும் ஓடிப்போய்
மார்போடு கட்டிப்பிடித்துக் கொண்டு நீண்ட
நேரம் அழுதான்.
30இஸ்ரவேல் யோசேப்பிடம், "இப்போது
நான் சமாதானமாகச் மரிப்பேன். உன்
முகத்தைப் பார்த்துவிட்டேன். இன்னும் நீ
உயிரோடு இருக்கிறாயே" என்றான்.
31யோசேப்பு தன் சகோதரர்களிடம்
அவர்களின் குடும்பத்தினரிடமும், "நான்
இப்போது போய் பார்வோன் மன்னரிடம்
நீங்கள் இங்கே இருப்பதைப்பற்றிக்
கூறுவேன். அவரிடம், 'என் சகோதரர்களும்
அவர்களது குடும்பமும் கானான்
நாட்டைவிட்டு என்னிடம் வந்திருக்கி
றார்கள். 32அவர்கள் மேய்ப்பர் குடும்பத்தினர்.
அவர்கள் எப்போதும் ஆடு மாடுகள்
வைத்திருப்பார்கள். அவர்கள் ஆடு மாடு
களையும் அவர்களுக்குரிய அனைத்தையும்
கொண்டு வந்திருக்கிறார்கள்' என்பேன்.
33அவர் உங்களை அழைத்து 'நீங்கள் என்ன
வேலை செய்கிறீர்கள்?' என்று கேட்டால்,
34அவரிடம் நீங்கள் 'நாங்கள் மேய்ப்பர்கள்,
எங்கள் வாழ்க்கை முழுவதும் மேய்ப்பது
தான் எங்கள் தொழில். எங்கள்
முற்பிதாக்களும் மேய்ப்பர்கள்தான்' என்று
சொல்லுங்கள். பிறகு பார்வோன் மன்னன்
உங்களை கோசேன் பகுதியில் வாழ
அனுமதிப்பார். எகிப்தியர்கள் மேய்ப்பர்
களை விரும்பமாட்டார்கள். எனவே நீங்கள்
இங்கே கோசானில் இருப்பதுதான் நல்லது"
என்றான்.

### இஸ்ரவேல் கோசேனில் குடியேறுதல்

47 யோசேப்பு பார்வோனிடம் சென்று,
"எனது தந்தையும் சகோதரர்களும்
அவர்களின் குடும்பமும் வந்துள்ளது.
அவர்கள் தங்கள் மிருகங்களையும், பொருட்
களையும் கொண்டு வந்துள்ளனர். அவர்கள்
இப்போது கோசேன் பகுதியில் உள்ளனர்"
என்றான். 2யோசேப்பு தம் சகோதரர்களில்
ஐந்து பேரைத் தேர்ந்தெடுத்து அழைத்துச்
சென்று பார்வோன் முன் நிறுத்தினான்.
3பார்வோன் அவர்களிடம், "நீங்கள்
என்ன வேலை செய்கிறீர்கள்?" என்று
கேட்டான்.
அவர்கள், "ஐயா, நாங்கள் மேய்ப்பர்கள்.
எங்கள் முற்பிதாக்களும் மேய்ப்பர்கள்"
என்றனர். 4மேலும், "கானான் நாட்டில்
பஞ்சம் அதிகம். எங்கள் மிருகங்களுக்கு
அங்கே புல் மிகுந்த வயல் எதுவுமே இல்லை.
எனவே, இங்கே வாழ்வதற்காக
வந்துள்ளோம். கோசேனில் வாழ
அனுமதிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்"
என்றனர்.
5பார்வோன் யோசேப்பிடம், "உனது
தந்தையும் சகோதரர்களும் உன்னிடம்
வந்திருக்கிறார்கள். 6எனவே, நீ எந்த
இடத்தை வேண்டுமானாலும் தேர்ந்
தெடுத்துக் கொள்ளலாம். அவர்களுக்கு நல்ல
நிலத்தைக் கொடு. அவர்கள் வேண்டுமா
னால் கோசேனிலேயே வாழட்டும். அவர்கள்
திறமையுள்ள மேய்ப்பர்கள் என்றால் எனது
ஆடுமாடுகளையும் பார்த்துக்கொள்ளலாம்"
என்றான்.
7யோசேப்பு தன் தந்தையைப்
பார்வோனைப் பார்ப்பதற்காக அழைத்தான்.
யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித்தான்.

[8]பார்வோன் அவனிடம், "உங்களுக்கு எத்த
னை வயதாகிறது?" என்று கேட்டான்.
[9]"ஏராளமான துன்பங்களோடு மிகக்குறு
கிய காலமே வாழ்ந்திருக்கிறேன். என்
வயது 130 ஆண்டுகளே. எனது தந்தையும்
அவருடைய முற்பிதாக்களும் என்னை விட
அதிகக் காலம் வாழ்திருக்கிறார்கள்"
என்றான்.
[10]யாக்கோபு பார்வோனை வாழ்த்தி,
அங்கிருந்து புறப்பட்டுச் சென்றான்.
[11]பார்வோன் சொன்னதுபோலவே
யோசேப்பு தந்தைக்கும் சகோதரர்களுக்கும்
நல்ல நிலத்தை கோசேனில் கொடுத்தான்.
இது எகிப்திலேயே சிறந்த இடம். இது
ராமசேஸ் நகரத்துக்கு அருகில் உள்ளது.
[12]யோசேப்பு தன் தந்தைக்கும் சகோதரர்
களுக்கும் குடும்பத்துக்கும் வேண்டிய
உணவுப் பொருட்களையும் கொடுத்தான்.

### யோசேப்பு பார்வோனுக்காக நிலம் வாங்குதல்

[13]பஞ்சம் மிகவும் மோசமாகியது. பூமியில்
எங்கும் உணவு இல்லை. எகிப்தும்
கானானும் இக்காலத்தில் மிகவும் மோசமா
கியது. [14]ஜனங்கள் நிறைய தானியங்களை
விலைக்கு வாங்கினார்கள். யோசேப்பு
அச்செல்வத்தைச் சேர்த்து வைத்து
பார்வோனின் வீட்டிற்குக் கொண்டு
வந்தான். [15]கொஞ்ச காலத்தில் எகிப்திலும்
கானானிலும் உள்ள ஜனங்களிடம் தானியம்
வாங்கப் பணம் இல்லை. தம்மிடம் இருந்த
பணத்தை ஏற்கனவே தானியம் வாங்குவதில்
செலவழித்திருந்தார்கள். எனவே அவர்கள்
யோசேப்பிடம் சென்று, "தயவு செய்து
தானியம் கொடுங்கள். எங்கள் பணம்
தீர்ந்துவிட்டது. நாங்கள் உணவு
உண்ணாவிட்டால் உங்கள் முன்னாலேயே
மரித்து விடுவோம்" என்று வேண்டி
னார்கள்.
[16]ஆனால் யோசேப்போ, "உங்கள்
ஆடுமாடுகளைக் கொடுங்கள் உணவு
தருகிறேன்" என்றான். [17]எனவே ஜனங்கள்
தங்கள் ஆடு மாடுகளையும் குதிரைகளையும்
மற்ற மிருகங்களையும் உணவுக்காக
விற்றனர். யோசேப்பு அவற்றை வாங்கிக்
கொண்டு உணவைக் கொடுத்தான்.
[18]ஆனால் அடுத்த ஆண்டு அவர்களிடம்
விற்க மிருகங்களும் இல்லை. எனவே,
யோசேப்பிடம் ஜனங்கள் போய்,
"எங்களிடம் உணவு வாங்கப் பணம்
இல்லை. எங்களது மிருகங்களோ
உங்களிடம் உள்ளது. எங்களிடம் எதுவும்
இல்லை. எங்கள் சரீரமும், நிலங்களும்
மட்டுமே உள்ளது. [19]நீங்கள் பார்க்கும்போதே
நாங்கள் மரித்து விடுவோம். ஆனால் நீங்கள்
உணவு கொடுத்தால் பார்வோன் மன்னருக்கு
எங்கள் நிலங்களைக் கொடுப்போம். நாங்கள்
அவரது அடிமைகளாக இருப்போம். விதை
கொடுங்கள் விதைக்கிறோம். பிறகு நாங்கள்
மரிக்காமல் உயிர் வாழ்வோம். நிலத்தில்
மீண்டும் உணவு விளையும்" என்றனர்.
[20]எனவே, யோசேப்பு எகிப்தில் உள்ள
எல்லா நிலங்களையும் பார்வோனுக்காக
வாங்கி விட்டான். அனைவரும் தங்கள்
நிலங்களை யோசேப்பிடம் விற்று
விட்டார்கள், அவர்கள் பசியாய் இருந்ததால்
இவ்வாறு செய்தார்கள். [21]எகிப்திலே,
எல்லோரும் பார்வோன் மன்னனின்
அடிமைகள் ஆனார்கள். [22]ஆசாரியர்களுக்கு
உரிய நிலத்தை மட்டுமே யோசேப்பு
வாங்கவில்லை. அவர்களின் உணவுக்கு
ஆசாரியர்கள் தங்கள் நிலத்தை விற்க
வேண்டிய தேவை ஏற்படவில்லை.
ஏனெனில் மன்னன் தேவையானவற்றைச்
சம்பளமாகக் கொடுத்து வந்தான். அதையே
உணவு வாங்க வைத்துக்கொண்டனர்.
[23]யோசேப்பு ஜனங்களிடம், "இப்போது
நான் உங்கள் நிலத்தையும் உங்களையும்
பார்வோனுக்காக வாங்கி விட்டேன்.
எனவே விதை கொடுக்கிறேன். நீங்கள்
அந்நிலங்களில் பயிர் செய்யுங்கள்.
[24]அறுவடைக் காலத்தில், நீங்கள் ஐந்தில்
ஒரு பாகம் எங்களுக்குக் கொடுக்கவேண்டும்.
ஐந்தில் நான்கு பாகம் நீங்கள் வைத்துக்
கொள்ளலாம். அதில் விதை வைத்திருந்து
அடுத்த ஆண்டுக்குப் பயன்படுத்தலாம்.
இப்போது உங்கள் குழந்தைகளுக்கும்
குடும்பத்துக்கும் உணவு கொடுக்கலாம்"
என்றான்.
[25]ஜனங்களோ, "எங்கள் உயிரைக்
காப்பாற்றினீர்கள். நாங்கள் பார்வோனுக்கு
அடிமையாக இருப்பதில் மகிழ்கிறோம்"
என்றனர்.
[26]எனவே, யோசேப்பு அப்போது ஒரு
சட்டத்தை இயற்றினான். அது இன்றும்
உள்ளது. அதன்படி நில வருவாயில் ஐந்தில்
ஒரு பாகமானது பார்வோனுக்குரியது.
பார்வோனுக்கு எல்லா நிலமும் சொந்தமாக
இருக்கும். ஆசாரியர்களின் நிலம் மட்டுமே,
பார்வோனுக்குச் சொந்தமாகவில்லை.

### "தன் மரணம் பற்றி யாக்கோபின் அறிவிப்பு"

[27]இஸ்ரவேல் (யாக்கோபு) எகிப்தில்
கோசேன் பகுதியில் வாழ்ந்தான். அவனது
குடும்பம் வளர்ந்து மிகப் பெரியதாகி
அப்பகுதியில் நன்றாக வாழ்ந்தனர்.
[28]யாக்கோபு எகிப்தில் 17 ஆண்டுகள்
வாழ்ந்தான். எனவே அவனுக்கு 147 வயது
ஆனது. [29]தான் விரைவில் மரித்துப்
போவேன் என்று இஸ்ரவேலுக்குத்
(யாக்கோபு) தெரிந்தது. அவன் யோசேப்பை
அழைத்து அவனிடம்: "நீ என்னை
நேசித்தால், உன் கையை என் தொடையின்
கீழ் வைத்து ஒரு வாக்குறுதியைச் செய்.

நான் சொல்வதை நீ செய்யவேண்டும்.
எனக்கு உண்மையாக இருக்க வேண்டும்.
நான் மரித்தால் என்னை எகிப்தில் அடக்கம்
செய்யவேண்டாம். 30எனது முற்பிதாக்களை
அடக்கம் செய்த இடத்திலேயே என்னையும்
அடக்கம் செய்துவிடு. இங்கிருந்து
கொண்டுபோய் நமது குடும்பக் கல்லறையில்
என்னை அடக்கம் செய்" என்றான்.

யோசேப்பு, "நீர் சொன்னபடியே நான்
செய்வேன் என்று வாக்குறுதி செய்கிறேன்"
என்றான்.

31பிறகு யாக்கோபு, "எனக்கு வாக்கு
கொடு" என்று கேட்டான். யோசேப்பும்
அவ்வாறே வாக்குறுதி அளித்தான். பின்
இஸ்ரவேல் (யாக்கோபு) படுக்கையில் தன்
தலையைச் சாய்த்தான்.

### மனாசேயையும் எப்பிராயீமையும் ஆசீர்வதித்தல்

48 கொஞ்ச காலத்திற்குப் பிறகு,
யோசேப்பு தன் தந்தை உடல் நலம்
குன்றி இருப்பதை அறிந்தான். ஆகவே
அவன் மனாசே மற்றும் எப்பிராயீம் எனும்
தன் இரண்டு மகன்களையும் அவனிடம்
அழைத்து சென்றான். 2யோசேப்பு போய்ச்
சேர்ந்தபோது ஒருவர், "உங்கள் மகன்
யோசேப்பு உங்களைப் பார்க்க வந்திருக்
கிறார்" என்று யாக்கோபிடம் சொன்னார்.
அவன் பலவீனமானவராக இருப்பினும்
கஷ்டப்பட்டு எழுந்து உட்கார முயன்றான்.

3அவன் யோசேப்பிடம், "சர்வ
வல்லமையுள்ள தேவன் கானான்
நாட்டிலுள்ள லூஸ் என்னுமிடத்தில் என்
முன் தோன்றி அங்கே என்னை
ஆசீர்வதித்தார். 4தேவன் என்னிடம்,
'உன்னைப் பெரிய குடும்பமாக செய்வேன்.
நிறைய குழந்தைகளைத் தருவேன். நீங்கள்
பெரிய இனமாக வருவீர்கள். உன் குடும்பம்
இந்த நிலத்தைச் சொந்தமாக்கிக்கொள்ளும்'
என்றார். 5இப்போது உனக்கு இரண்டு
மகன்கள் இருக்கிறார்கள். நான் வருவதற்கு
முன்னரே அவர்கள் இந்த எகிப்து நாட்டில்
பிறந்திருக்கிறார்கள். உன் பிள்ளைகள்
எனது சொந்தப் பிள்ளைகளைப் போன்ற
வர்கள். அவர்கள் எனக்கு சிமியோனையும்
ரூபனையும் போன்றவர்கள். 6எனவே இந்த
இருவரும் என் பிள்ளைகள். எனக்குரிய
அனைத்தையும் இவர்களுக்குப் பங்கிட்டுத்
தருகிறேன். ஆனால் உனக்கு வேறு
குழந்தைகள் பிறந்தால் அவர்கள் உன்
பிள்ளைகள். ஆனால் அவர்கள் மனாசேக்
கும் எப்பிராயீமுக்கும் பிள்ளைகள்போல்
இருப்பார்கள். எனவே, வருங்காலத்தில்
இவர்களுக்குரியவற்றை அவர்களும் பங்கிட்
டுக் கொள்வார்கள். 7பதான் அராமிலிருந்து
வரும்போது ராகேல் மரித்துப்போனாள்.
அது என்னை மிகவும் வருத்தத்திற்
குள்ளாக்கியது. அவள் கானான் நாட்டி
லேயே மரித்தாள். நாங்கள் எப்பிராத்தாவை
நோக்கி வந்தோம். சாலையோரத்தில்
அவளை அடக்கம் செய்தோம்" என்றான்.
(எப்பிராத்தா என்பது பெத்லகேமைக்
குறிக்கும்.)

8பின் இஸ்ரவேல் யோசேப்பின் பிள்ளை
களைப் பார்த்து, "இவர்கள் யார்?" என்று
கேட்டார். 9யோசேப்பு தந்தையிடம், "இவர்
கள் என் பிள்ளைகள், எனக்குத் தேவன்
கொடுத்த மகன்கள்" என்றான். இஸ்ரவேல்
அவனிடம், "என்னிடம் அவர்களை
அழைத்து வா, நான் அவர்களை ஆசீர்
வதிக்கிறேன்" என்றான்.

10இஸ்ரவேலுக்கு வயதானதால் கண்களும்
சரியாகத் தெரியவில்லை. எனவே,
யோசேப்பு தன் மகன்களை மிக அருகில்
அழைத்து வந்தான். இஸ்ரவேல் அவர்களை
முத்தமிட்டு அணைத்துகொண்டான். 11பிறகு
அவன் யோசேப்பிடம், "நான் உனது
முகத்தை மீண்டும் பார்ப்பேன் என்று
நினைக்கவில்லை. ஆனால் தேவன்
உன்னையும் உன் பிள்ளைகளையும்
பார்க்கும்படி செய்துவிட்டார்" என்றான்.

12பிறகு யோசேப்பு தன் மகன்களை
இஸ்ரவேலின் மடியில் இருந்து இறக்கி
விட்டான். அவர்கள் அவரைக் குனிந்து
வணங்கினார்கள். 13யோசேப்பு எப்பிரா
யீமை தனது வலது பக்கத்திலும்
மனாசேயை தனது இடது பக்கத்திலும்
அமர வைத்தான். 14ஆனால் இஸ்ரவேல்
தனது கைகளைக் குறுக்காக வைத்து
வலது கையை இளையவன் மீதும்
இடதுகையை மூத்தவன் மீதும் வைத்து
ஆசீர்வாதம் செய்தான். மனாசே மூத்தவனாக
இருப்பினும் அவன் மீது இடது கையை
வைத்து ஆசீர்வதித்தான். 15இஸ்ரவேல்
யோசேப்பையும் ஆசீர்வதித்தான். அவன்,

"என் முற்பிதாக்களான
ஆபிரகாமும் ஈசாக்கும்
நம் தேவனை வழிபட்டனர்.
அதே தேவன் என் வாழ்க்கை
முழுவதும் என்னை
வழிநடத்தினார்.
16 எனது அனைத்து துன்பங்களிலும்
என்னைக் காப்பாற்றும்
தேவதூதனாக இருந்தார்.
இந்தப் பிள்ளைகளை
ஆசீர்வதிக்கும்படி
அந்த தேவனை வேண்டுகிறேன்.
இப்போது இவர்கள்
எனது பெயரையும்,
எனது முற்பிதாக்களான ஆபிரகாம்
மற்றும் ஈசாக்கின் பெயரையும்
பெறுவார்கள்.
இவர்கள் வளர்ந்து மகத்தான
குடும்பமாகவும், தேசமாகவும்
இப்பூமியில் விளங்கவேண்டும்
என்று பிரார்த்திக்கிறேன்" என்றான்.

[17]யோசேப்பு தன் தந்தை வலது கையை
எப்பிராயீம் மீது வைத்திருப்பதைப்
பார்த்தான். இது யோசேப்புக்கு மகிழ்ச்சி
தரவில்லை. யோசேப்பு தன் தந்தையின்
வலது கையை எப்பிராயீம் தலையிலிருந்து
எடுத்து மனாசேயின் தலையில் வைக்க
விரும்பினான். [18]அவன் தன் தந்தையிடம்,
"உமது வலது கையைத் தவறாக
வைத்திருக்கிறீர், மனாசேதான் முதல் மகன்"
என்றான்.
[19]ஆனால் யாக்கோபோ, "எனக்குத்
தெரியும் மகனே! மனாசேதான் மூத்தவன்.
அவன் பெரியவன் ஆவான். அவனும்
ஏராளமான ஜனங்களின் தந்தையாவான்.
ஆனால் இளையவனே மூத்தவனை விட
பெரியவனாவான். அவனது குடும்பமும்
மிகப்பெரியதாக இருக்கும்" என்றான்.
[20]இவ்விதமாக இஸ்ரவேல் அன்று
அவர்களை ஆசீர்வதித்தான்.

"இஸ்ரவேலின் ஜனங்கள்
உங்கள் பெயரைப் பயன்படுத்தி
மற்றவரை வாழ்த்துவார்கள்.
அவர்கள்,
"எப்பிராயீமும் மனாசேயும் போல
தேவன் உங்களை வாழ
வைக்கட்டும் என்பார்கள்" என்றான்.

இவ்வாறு இஸ்ரவேல் எப்பீராயிமை
மனாசேயைவிடப் பெரியவனாக்கினான்.
[21]பிறகு இஸ்ரவேல் யோசேப்பிடம், "பார்,
நான் மரிப்பதற்குரிய காலம் நெருங்கி
விட்டது. ஆனாலும் தேவன் உன்னோடு
இருக்கிறார். அவர் உன்னை உன்
முற்பிதாக்களின் பூமிக்கு வழி
நடத்திச்செல்வார். [22]நான் உன் சகோதரர்
களுக்குக் கொடுக்காத சிலவற்றை உனக்குக்
கொடுத்திருக்கிறேன். எமோரிய ஜனங்
களிடம் இருந்து நான் வென்ற மலையை
உனக்குக் கொடுத்திருக்கிறேன். நான் என்
பட்டயத்தையும், வில்லையும் பயன்படுத்தி
அதை நான் வென்றேன்" என்றான்.

### யாக்கோபு தன் மகன்களை ஆசீர்வதித்தல்

49 பின்பு யாக்கோபு தன் அனைத்து
பிள்ளைகளையும் அழைத்தான்.
"பிள்ளைகளே! என்னிடம் வாருங்கள்.
எதிர்காலத்தில் என்ன நடக்கும் என்று
சொல்கிறேன்.
2 "சேர்ந்து வாருங்கள், கவனியுங்கள்.
யாக்கோபின் பிள்ளைகளே.
இஸ்ரவேலாகிய உங்கள் தந்தை
சொல்வதைக் கேளுங்கள்"

### ரூபன்

3 "ரூபனே! என் முதல் மகனே!
நீ எனக்கு முதல் பிள்ளை.
எனது மனித சக்தியின்
முதல் அடையாளம் நீயே.
நீயே வல்லமையும் மரியாதையும்
உள்ள மகனாக விளங்கியிருக்கலாம்.
4 ஆனால் உனது உணர்ச்சிகளை
வெள்ளம்போல உன்னால் கட்டுப்
படுத்த முடியாததாக இருக்கிறது.
எனவே நீ மரியாதைக்குரியவனாக
இருக்கமாட்டாய்.
நீ உன் தந்தையின் படுக்கையில்
அவர் மனைவிகளுள் ஒருத்தியோடு
படுத்தவன்.
நீ எனது படுக்கைக்கே அவமானம்
தேடித்தந்தவன்."

### சிமியோனும் லேவியும்

5 "சிமியோனும் லேவியும்
சகோதரர்கள்.
அவர்கள் வாள்களால்
சண்டையிடுவதை விரும்புவார்கள்.
6 இரகசியமாகப் பாவம் செய்யத்
திட்டமிடுவார்கள்.
அவர்களின் திட்டங்களில்
என் ஆத்துமா பங்குகொள்ள
விரும்பவில்லை.
அவர்களின் இரகசியக் கூட்டங்களை
நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன்.
கோபமாக இருக்கும்போது
மனிதர்களைக் கொல்லுகிறார்கள்,
மிருகங்களை வேடிக்கைக்காகவே
துன்புறுத்துகிறார்கள்.
7 அவர்களின் கோபமே ஒரு சாபம்.
அது வலிமையானது.
அவர்கள் பைத்தியமாகும்போது
கொடூரமானவர்களாகிறார்கள்.
யாக்கோபின் பூமியிலே அவர்கள்
சொந்த பூமியைப் பெறமாட்டார்கள்.
அவர்கள் இஸ்ரவேல் முழுவதும்
பரவி வாழ்வார்கள்."

### யூதா

8 "உன்னை உன் சகோதரர்கள்
போற்றுவார்கள்.
நீ உன் பகைவர்களை வெல்வாய்.
உன் சகோதரர்கள் உனக்கு
அடிபணிவார்கள்.
9 யூதா ஒரு சிங்கத்தைப் போன்றவன்.
என் மகனே, தான் கொன்ற
மிருகத்தின் மேல் நிற்கும் ஒரு
சிங்கத்தை போன்றவன் நீ.
நீ ஓய்வெடுக்கும்போது உன்னை
எவரும் தொந்தரவு செய்யமுடியாது.
10 யூதாவின் குடும்பத்தில் வருபவர்கள்
அரசர் ஆவார்கள்.
சமாதான கர்த்தர் வரும்வரை
உன்னைவிட்டு செங்கோல்
நீங்குவதில்லை.
ஏராளமான ஜனங்கள் அவனுக்கு

அடிபணிந்து சேவை செய்வார்கள்.
11 அவன் தன் கழுதையைத் திராட்சைக்
கொடியில் கட்டி வைப்பான்.
அவன் தன் இளைய கழுதையை
சிறந்த திராட்சைக்கொடியில்
கட்டி வைப்பான்.
அவன் சிறந்த திராட்சைரசத்தை
ஆடைவெளுக்கப் பயன்படுத்துவான்.
12 அவன் கண்கள் திராட்சைரசத்தினால்
சிவப்பாகும்.
அவன் பற்கள் பாலால் வெளுக்கும்"

### செபுலோன்

13 "இவன் கடற்கரையில் வசிப்பான்.
அவனது துறைமுகம் கப்பல்களுக்கு
ஏற்றதாக இருக்கும்.
அவனது எல்லை சீதோன்வரை
இருக்கும்"

### இசக்கார்

14 "இசக்கார் ஒரு கழுதையைப்போல
கடினமாக உழைப்பான்.
இரண்டு பொதியின் நடுவே
படுத்திருப்பவனைப் போன்றவன்.
15 தன் ஓய்விடத்தை நன்றாக
இருக்கும்படி பார்த்துக்கொள்வான்.
தன் பூமியை செழிப்பாக
வைத்துக்கொள்வான்.
அடிமையைப்போல வேலைசெய்ய
சம்மதிப்பான்"

### தாண்

16 "தாண் இஸ்ரவேல் குடும்பத்தில்
ஒருவனாக தன் சொந்த
ஜனங்களையே நியாயம்
தீர்ப்பான்.
17 இவன் சாலையோரத்தில் அலையும்
பாம்பைப் போன்றவன்.
இவன் பாதையிலே படுத்திருக்கும்
பாம்பைப்போன்று
பயங்கரமானவன்.
இப்பாம்பு ஒரு குதிரையின் காலை
கடிக்கிறது,
சவாரி செய்தவன் கீழே விழுகிறான்.
18 கர்த்தாவே நான் உமது
இரட்சிப்புக்காகக் காத்திருக்கிறேன்"

### காத்

19 "ஒரு கொள்ளைக் கூட்டம்
காத்தைத் தாக்கும்.
ஆனால் அவர்களை அவன்
துரத்திவிடுவான்."

### ஆசேர்

20 "இவனது நிலம் அதிகமாக
விளையும்.
ஒரு அரசனுக்கு வேண்டிய உணவு
பொருட்களைத் தருவான்"

### நப்தலி

21 "இவன் சுதந்திரமாக ஓடுகிற
மானைப் போன்றவன்.
அவன் வார்த்தைகள் குழந்தைகளைப்
போன்று அழகானவைகள்"

### யோசேப்பு

22 "இவன் வெற்றி பெற்றவன்.
இவன் பழத்தால் மூடப்பட்ட
திராட்சைக்கொடியைப் போன்றவன்.
நீரூற்றுக்கருகிலும் வேலிக்குள்ளும்
இருக்கிற கொடியைப் போன்றவன்.
23 நிறையப்பேர் அவனுக்கு எதிராகப்
போரிடுவார்கள்.
வில் வீரர்களே அவன் பகைவர்.
24 ஆனால் அவன்
பலம் வாய்ந்த வில்லாலும்
திறமையான கைகளாலும்
சண்டையில் வென்றான்.
அவன் யாக்கோபின் வல்லவரும்,
மேய்ப்பரும், இஸ்ரவேலின் பாறையும்
ஆனவரிடமிருந்தும்
உன் பிதாவின் தேவனிடமிருந்தும்
வலிமை பெற்றான்.
25 தேவன் உன்னை ஆசீர்வதிக்கிறார்.
சர்வ வல்லமையுள்ள தேவன்
வானத்திலிருந்தும்,
கீழே ஆழத்திலிருந்தும்
உன்னை ஆசீர்வதிக்கட்டும்.
ஸ்தனங்களுக்கும்,
கர்ப்பங்களுக்குமுரிய
ஆசிகளை அவர் உனக்கு
வழங்கட்டும்.
26 எனது பெற்றோர்களுக்கு
எவ்வளவோ நன்மைகள்
ஏற்பட்டன
எனினும் எனது ஆசீர்வாதங்கள்
அவற்றைவிட மேலானது.
உனது சகோதரர்கள் உன்னை
எதுவுமில்லாமல் விட்டுவிட்டுப்
போனார்கள்.
ஆனால், இப்போது எனது
ஆசீர்வாதங்களையெல்லாம்
மலையின் உயரம்போல்
கூட்டித் தருகிறேன்"

### பென்யமீன்

27 "பென்யமீன் ஒரு பசித்த
நரி போன்றவன்.
காலையில் கொன்று தின்பான்.
மாலையில் மிஞ்சியதைப்
பகிர்ந்துகொள்வான்."

28 இவர்கள் அனைவரும் இஸ்ரவேலின் 12
குடும்பத்தினர். இவ்வாறு யாக்கோபு

அவர்கள் ஒவ்வொருவருக்கும் அவர
வருக்குப் பொருத்தமான ஆசீர்வாதங்களைக்
கொடுத்தான். 29பின் இஸ்ரவேல் ஒரு
ஆணையிட்டான். "நான் மரிக்கும்போது
என் ஜனங்களோடு இருக்க விரும்புகிறேன்.
என் முற்பிதாக்களோடு நான் அடக்கம்
செய்யப்படவேண்டும். அந்தக் கல்லறை
ஏத்தியரிடம் வாங்கிய எப்பெரோனில்
உள்ளது. 30அந்தக் குகை மம்ரேக்கு அருகில்
மக்பேலா எனும் இடத்தில் வயலில் உள்ளது.
இது கானான் நாட்டில் உள்ளது. இதனை
ஆபிரகாம் எப்ரோனிடமிருந்து விலைக்கு
வாங்கி கல்லறையாக மாற்றிவிட்டார்.
31ஆபிரகாமும் அவன் மனைவி சாராளும்
அதே குகையில் அடக்கம் செய்யப்பட்டனர்.
ஈசாக்கும் அவர் மனைவி ரெபெக்காளும்
அதே குகையில் அடக்கம் செய்யப்பட்டனர்.
நான் என் மனைவி லேயாளையும் அதே
குகையில் அடக்கம் பண்ணினேன். 32அந்தக்
குகை இருக்கும் நிலம் ஏத்தின்
மகன்களிடமிருந்து வாங்கப்பட்டது"
என்றான். 33யாக்கோபு பேசி முடித்ததும்
படுத்தான். கால்களைக் கட்டிலின்மேல்
மடக்கியபடியே மரணமடைந்தான்.

### யாக்கோபின் இறுதிச் சடங்கு

50 இஸ்ரவேல் மரித்ததும் யோசேப்பு
மிகவும் துக்கப்பட்டான். அவன் தன்
தந்தையைக் கட்டிப் பிடித்துக்கொண்டு
அழுது முத்தமிட்டான். 2பிறகு யோசேப்பு
தன் வேலைக்காரர்களுக்கு அவனது
தந்தையின் உடலை அடக்கத்திற்கு தயார்
செய்யும்படி ஆணையிட்டான். (அவர்கள்
அனைவரும் மருத்துவர்கள்.) அடக்கம்
செய்வதற்கு ஏற்ற முறையில் அதனைத்
தயார்படுத்தினர். எகிப்திய முறையில்
அவ்வாறு செய்தனர். 3சரியான முறையில்
தயார் செய்ய 40 நாட்கள் ஆகும்.
அந்தபடியே அந்த நாட்கள் நிறைவேறின.
எகிப்தியர்கள் அவனுக்காக 70 நாட்கள்
துக்கம் கொண்டாடினர்.

4 70 நாட்கள் ஆனதும் துக்க நாட்கள்
முடிந்தன. எனவே யோசேப்பு பார்வோன்
மன்னனின் அதிகாரிகளோடு பேசினான்.
"இதனைப் பார்வோன் மன்னனுக்குச்
சொல்லுங்கள். 5'என் தந்தை மரணத்தை
நெருங்கும்போது அவருக்கு நான் ஒரு
வாக்குக் கொடுத்தேன். அவரைக் கானான்
நாட்டில் ஓரிடத்தில் அடக்கம் செய்வதாக
ஒப்புக்கொண்டேன். அதுவே அவர்
விரும்பிய குகை. எனவே, நான் போய்
அவரை அடக்கம் செய்ய எனக்கு அனுமதி
வேண்டும். பின்னர் நான் உங்களிடம்
திரும்பி வருவேன்'" என்றான்.

6பார்வோனும், "உன் வாக்கைக்
காப்பாற்று. போய் உன் தந்தையை
அடக்கம்செய்" என்றான்.

7எனவே யோசேப்பு அடக்கம் செய்யக்
கிளம்பினான். பார்வோனின் மூப்பர்களும்
(தலைவர்களும்) எகிப்திலுள்ள முதியவர்
களும் யோசேப்போடு சென்றார்கள்.
8யோசேப்பின் குடும்பத்தினரும், அவனது
சகோதரர்களின்குடும்பத்தினரும் தந்தையின்
குடும்பத்தினரும் அவனோடு சென்றார்கள்.
குழந்தைகளும் மிருகங்களும் மட்டுமே கோ
சேன் பகுதியில் தங்கினார்கள். 9அவர்கள்
பெருங்கூட்டமாகப் போனார்கள். வீரர்களும்
இரதங்களிலும் குதிரைகளிலும் ஏறிப்
போனார்கள்.

10அவர்கள் கோரான் ஆத்தாத் நதியின்
கீழ்க் கரையில் உள்ள கோசேன் ஆத்தாதிற்கு
வந்தனர். அங்கே இஸ்ரவேலுக்கு இறுதிச்
சடங்குகளையெல்லாம் செய்தனர். இது ஏழு
நாட்கள் நடந்தது. 11கானான் நாட்டிலுள்ள
ஜனங்களெல்லாம் இந்தச் சடங்கில் கலந்து
கொண்டனர். அவர்களோ, "அந்த
எகிப்தியர்கள் பெரிய துக்கமான சடங்கைக்
கொண்டுள்ளனர்" என்றனர். இப்போது
அந்த இடத்திற்கு ஆபேல் மிஸ்ராயீம்*
என்று பெயர் வழங்குகிறது.

12யாக்கோபின் மகன்கள் தந்தை
சொன்னபடியே செய்தனர். 13அவர்கள்
அவனது உடலை கானானுக்குள் எடுத்துச்
சென்று மக்பேலாவில் அடக்கம் செய்தனர்.
இந்தக் குகை ஆபிரகாம் ஏத்தின் ஜனங்களிட
மிருந்து வாங்கிய நிலத்தில் மம்ரேக்கு
அருகில் இருந்தது. ஆபிரகாம் இதனைக்
கல்லறைக்காகவே வாங்கியிருந்தான்.
14யோசேப்பு தன் தந்தையை அடக்கம்
செய்த பிறகு, அவனோடு அனைவரும்
எகிப்துக்குத் திரும்பிப் போனார்கள்.

### சகோதரர்கள் யோசேப்புக்குப் பயப்படுதல்

15யாக்கோபு மரித்தபிறகு யோசேப்பின்
சகோதரர்கள் மிகவும் கவலைப்பட்டனர்.
அவர்கள் பயந்தார்கள். அவர்கள்
யோசேப்புக்கு தாங்கள் செய்த தீமையை
எண்ணிப் பயந்தனர். "நாம் யோசேப்பிற்குச்
செய்த தீமைக்காக அவன் இப்போதும்
நம்மை வெறுக்கலாம். நம் தீமைகளுக்
கெல்லாம் அவன் பழி தீர்க்கலாம்" என்று
அவர்கள் பேசிக்கொண்டனர். 16எனவே
அவனது சகோதரர்கள் அவனுக்குக்
கீழ்க்கண்ட செய்தியை அனுப்பினர்.

தந்தை மரிப்பதற்கு முன்னால் உனக்கு
ஒரு செய்தி சொல்லும்படி சொன்னார்.
17அவர், 'யோசேப்புக்கு நீங்கள் முன்பு
செய்த தீமையை மன்னிக்கும்படி
கேட்டுக்கொள்ளுங்கள்' என்றார். என
வே நாங்கள் உன்னைக் கெஞ்சிக்
கேட்டுக்கொள்கிறோம். நாங்கள் உனக்

---

**ஆபேல் மிஸ்ராயீம்** "எகிப்தியர்களின் துக்கமான நேரம்" எனப் பொருள்படும்.

குச் செய்த தீமைக்கு எங்களை மன்னித்துவிடு. நாங்கள் தேவனின் அடிமைகள். அவர் உனது தந்தைக்கும் தேவன்" என்றனர்.

இந்தச் செய்தி யோசேப்பை மிகவும் துக்கப்படுத்தியது. அவன் அழுதான்.
18அவனது சகோதரர்கள் அவனிடம் சென்று பணிந்து வணங்கினார்கள். "நாங்கள் உன் வேலைக்காரர்கள்" என்றனர்.
19பிறகு யோசேப்பு, "பயப்படவேண்டாம், நான் தேவன் அல்ல. உங்களைத் தண்டிக்க எனக்கு உரிமையில்லை.
20எனக்குக் கேடு செய்ய நீங்கள் திட்டம் போட்டீர்கள் என்பது உண்மை. ஆனால் உண்மையில் தேவன் நன்மைக்குத் திட்டமிட்டிருக்கிறார். நான் பலரது உயிரைக் காப்பற்றவேண்டும் என்பது தேவனின் திட்டம். இன்னும் அவரது திட்டம் அதுதான்.
21எனவே அஞ்சவேண்டாம். நான் உங்களையும் உங்கள் பிள்ளைகளையும் பொறுப் பேற்றுக்கொள்வேன்" என்றான். இவ்வாறு யோசேப்பு தன் சகோதரர்களுக்கு இனிமையாகப் பதில் சொன்னான். இதனால் அவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்.
22யோசேப்பு தொடர்ந்து எகிப்தில் தன் தந்தையின் குடும்பத்தோடு வாழ்ந்தான். அவனுக்கு 110 வயதானபோது மரணமடைந்தான்.
23யோசேப்பு உயிரோடு இருக்கும் போதே எப்பிராயீமுக்குப் பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் இருந்தனர். மனாசேக்கு மாகீர் என்ற மகன் இருந்தான். மாகீரின் பிள்ளைகளையும் யோசேப்பு பார்த்தான்.

### யோசேப்பின் மரணம்

24மரணம் நெருங்கியதும் யோசேப்பு தன் சகோதரர்களிடம், "எனது மரண நேரம் நெருங்கிவிட்டது. தேவன் உங்களை கவனித்துக்கொள்வார் என்பதை நான் அறிவேன். உங்களை இந்த நாட்டிலிருந்து வெளியே அழைத்துச் செல்வார். ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோருக்கு தேவன் கொடுப்பதாகச் சொன்ன நாடுகளை உங்களுக்குக் கொடுப்பார்" என்றான்.
25பின் யோசேப்பு இஸ்ரவேல் ஜனங்களிடம் ஒரு வாக்குறுதிச் செய்தான். அவன், "நான் மரித்தபிறகு என் எலும்புகளை எடுத்துக்கொள்ளுங்கள். நீங்கள் தேவனால் வழிநடத்தப்பட்டு புதிய பூமிக்குப் போகும்போது அதையும் கொண்டு செல்லுங்கள், இதைப்பற்றி வாக்குறுதி செய்யுங்கள்" என்றான்.
26யோசேப்பு எகிப்திலேயே மரணமடைந்தான். அப்போது அவனுக்கு 110 வயது. மருத்துவர்கள் அவனது உடலை அடக்கம் செய்வதற்காகத் தயார் செய்தனர். அதனை ஒரு பெட்டியில் வைத்தார்கள்.

# யாத்திராகமம்

### எகிப்தில் யாக்கோபின் குடும்பம்

1 யாக்கோபு (இஸ்ரவேல்) தன் மகன்களோடு
எகிப்திற்குப் பயணமானான். ஒவ்வொரு
மகனும் தன் குடும்பத்தோடே சென்றான்.
பின்வருபவர்களே இஸ்ரவேலின் மகன்கள்:
2 ரூபன், சிமியோன், லேவி, யூதா, 3 இசக்கார்,
செபுலோன், பென்யமீன், 4 தாண், நப்தலி,
காத், ஆசேர். 5 70 பேர் யாக்கோபின்
நேரடி சந்ததியாகப் பிறந்தவர்களாக இருந்
தனர். (யோசேப்பு 12 மகன்களில் ஒருவன்.
ஆனால் அவன் ஏற்கெனவே எகிப்தில்
இருந்தான்.)
6 பின்னர், யோசேப்பும் அவனது
சகோதரர்களும் அத்தலைமுறையைச் சேர்ந்த
எல்லோருமே மரித்து விட்டார்கள். 7 ஆனால்
இஸ்ரவேலின் ஜனங்களுக்குப் பல குழந்தை
கள் இருந்தனர். அவர்களின் எண்ணிக்கை
பெருகிக்கொண்டேயிருந்தது. இஸ்ரவேலின்
ஜனங்கள் வலிமையுடையோரானார்கள்.
எகிப்து நாடும் இஸ்ரவேலரால் நிரம்பிற்று.

### இஸ்ரவேல் ஜனங்களுக்குத் தொல்லை

8 அப்போது யோசேப்பை அறிந்திராத
ஒரு புதிய அரசன் எகிப்தை அரசாள
ஆரம்பித்தான். 9 இந்த அரசன் தம் ஜனங்களை
நோக்கி, "இஸ்ரவேலின் ஜனங்களைப்
பாருங்கள்! அவர்கள் மிக அதிகமா
யிருக்கிறார்கள்! நம்மைக் காட்டிலும்
அவர்கள் பலம் மிக்கவர்கள்! 10 இஸ்ரவேலர்
பலம் பொருந்தியவர்களாய் வளர்ந்து
கொண்டிருப்பதைத் தடைசெய்ய நாம்
திட்டங்கள் வகுக்க வேண்டும். போர்
ஏற்படுமானால், இஸ்ரவேலர் நமது பகைவ
ரோடு சேர்ந்து கொள்வதுடன், நம்மைத்
தோற்கடித்து, நம்மிடமிருந்து தப்பித்துக்
கொள்ளக்கூடும்" என்றான்.
11 இஸ்ரவேல் ஜனங்களின் வாழ்க்கையைச்
சிரமமாக்குவதென எகிப்திய ஜனங்கள் முடி
வெடுத்து, அவர்களிடையே மேற்பார்வை
யாளர்களை எகிப்தியர் நியமித்தார்கள். இந்த
மேற்பார்வையாளர்கள்0 பித்தோம், ராமசேஸ்
நகரங்களை அரசனுக்காகக் கட்டும்படியாக
இஸ்ரவேலரைக் கட்டாயப்படுத்தினர்.
தானியங்களையும் பிற பொருட்களையும்
சேர்த்து வைப்பதற்காக அரசன் இந்நகரங்
களைப் பயன்படுத்தினான்.
12 மிகக் கடினமாக உழைக்கும்படியாக
எகிப்தியர்கள் இஸ்ரவேலரை வற்புறுத்தி
னார்கள். எந்த அளவுக்கு இஸ்ரவேல் ஜனங்
களை வேலை செய்யும்பொருட்டு கட்டாயப்
படுத்தினார்களோ, அந்த அளவுக்கு அவர்கள்
மிகுதியாகப் பெருகிப் பரவினார்கள். இஸ்ர
வேல் ஜனங்களைக் கண்டு எகிப்திய
ஜனங்கள் அதிக பயமடைந்தனர். 13 எனவே,
எகிப்தியர்கள் இஸ்ரவேலரை இன்னும்
கடினமாக உழைக்கும்படியாகக் கட்டாயப்
படுத்தினார்கள்.
14 இஸ்ரவேலரின் வாழ்க்கையை எகிப்தி
யர்கள் கடினமாக்கினார்கள். செங்கல்லும்,
சாந்தும் செய்யும்படியாக இஸ்ரவேலரை
அவர்கள் வற்புறுத்தி வேலை வாங்கினார்
கள். வயல்களிலும் கடினமாக உழைக்கும்
படியாக அவர்களைக் கட்டாயப் படுத்தினர்.
அவர்கள் செய்த ஒவ்வொரு வேலையிலும்
கடினமாக உழைக்குமாறு கட்டாயப்
படுத்தினார்கள்.

### தேவனைப் பின்பற்றிய மருத்துவச்சிகள்

15 இஸ்ரவேல் பெண்கள் குழந்தை பெறு
வதற்கு உதவ சிப்பிராள், பூவாள் என்ற
இரண்டு எபிரெய மருத்துவச்சிகள் இருந்
தனர். எகிப்தின் அரசன் மருத்துவச்சி
களிடம் பேசி, 16 "எபிரெயப் பெண்களின்
பிரசவத்திற்கு நீங்கள் இருவரும் தொடர்ந்து
உதவுங்கள். பெண் குழந்தை பிறந்தால்,
அக்குழந்தை உயிரோடிருக்கட்டும். குழந்தை
ஆணாக இருந்தால், நீங்கள் அதைக் கொன்று
விட வேண்டும்!" என்றான்.
17 ஆனால் மருத்துவச்சிகள் தேவனுக்குப்
பயப்படுகிறவர்களானதால் அவர்கள் அரச
னின் கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லை.
அவர்கள் எல்லா ஆண் குழந்தைகளையும்
உயிரோடு விட்டனர்.
18 எகிப்திய அரசன் மருத்துவச்சிகளை
அழைத்து, "நீங்கள் ஏன் இதைச் செய்தீர்கள்?
ஆண் குழந்தைகளை ஏன் உயிரோடு
விடுகிறீர்கள்?" என்று கேட்டான்.
19 மருத்துவச்சிகள் அரசனை நோக்கி,
"எபிரெயப் பெண்கள் எகிப்தியப் பெண்
களைக் காட்டிலும் வலிமையானவர்கள்.
நாங்கள் உதவுவதற்குப் போகும் முன்னரே
அவர்களுக்குக் குழந்தை பிறந்து விடு
கின்றது" என்றனர்.(
20-21 தேவன் மருத்துவச்சி

களின்மேல் மகிழ்ச்சி கொண்டு அவர்களுக்கு
நன்மை செய்தார். அவர்கள் தங்கள்
குடும்பங்களுடன் செழிப்படையச் செய்தார்.
எபிரெய ஜனங்கள் தொடர்ந்து பல குழந்தை
களைப் பெற்றெடுத்து, வலிமை மிகுந்தோர்
ஆயினர்.)
22எனவே பார்வோன், தனது சொந்த
ஜனங்களிடம், "எபிரெயரின் எல்லாப்
பெண் குழந்தைகளும் உயிரோடிருக்கட்டும்,
ஆனால் ஒவ்வொரு ஆண் குழந்தை பிறக்கும்
போதும், அதனை நைல் நதியில் வீசிவிட
வேண்டும்" என்று ஆணையிட்டான்.

### குழந்தையான மோசே

2 லேவியின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு
மனிதன் லேவியின் குடும்பத்திலிருந்த
ஒரு பெண்ணை மணந்தான். 2அப்பெண்
கருவுற்று ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெ
டுத்தாள். தாய் அக்குழந்தையின் அழகைக்
கண்டு அதை மூன்று மாதங்கள் மறைத்து
வைத்தாள். 3அது ஆணாக இருந்ததால்,
அக்குழந்தை கண்டுபிடிக்கப் பட்டு கொல்லப்
படுமோ என்று தாய் பயந்தாள். மூன்று
மாதங்களுக்குப் பிறகு அவள் ஒரு
கூடையைச் செய்து, அது மிதக்கும்படியாக
கீல் பூசி, குழந்தையை அக்கூடையில்
வைத்து, நதியில் உயரமான புற்களிடையே
கூடையை மிதக்க விட்டாள். 4குழந்தையின்
சகோதரி அங்கு நின்று நடப்பதைக்
கவனித்தாள்.குழந்தைக்கு நிகழப்போவதைப்
பார்க்க விரும்பினாள்.
5அப்போதுதான் பார்வோனின் மகள்
குளிப்பதற்காக நதிக்கு வந்தாள். உயர்ந்த
புற்களிடையே இருந்த கூடையை அவள்
கண்டாள். நதியருகே அவளது வேலைக்காரி
கள் நடந்து கொண்டிருந்தனர். அவர்களில்
ஒருவரிடம் கூடையை எடுத்து வருமாறு
அவள் கூறினாள். 6அரசனின் மகள் கூடை
யைத் திறந்து அதில் ஒரு ஆண் குழந்தை
யைக் கண்டாள். அக்குழந்தை அழுது
கொண்டிருந்தது. அவள் அதற்காக மன
மிரங்கினாள். அது எபிரெயக் குழந்தை
களில் ஒன்று என்பதை அவள் அறிந்தாள்.
7அங்கே நின்று கொண்டிருந்த குழந்தை
யின் சகோதரி அரசனின் மகளை நோக்கி,
"நான் போய் குழந்தைக்குப் பாலூட்டு
வதற்கும், அதைக் கவனித்துக் கொள்வதற்
கும் ஒரு எபிரெயப் பெண்ணை அழைத்து
வரட்டுமா?" என்றாள்.
8அரசனின் மகளும், "தயவு செய்து
அவ்வாறே செய்" என்றாள். எனவே
அப்பெண் சென்று, குழந்தையின் தாயையே
அழைத்து வந்தாள்.
9அரசனின் மகள் அத்தாயை நோக்கி,
"குழந்தையை எடுத்து எனக்காக அதற்குப்
பாலூட்டு. அவனைக் கவனித்துக் கொள்
வதற்காக உனக்குப் பணம் கொடுப்பேன்"
என்றாள்.
எனவே, அப்பெண் குழந்தையை
எடுத்துச் சென்று, அதனை வளர்த்தாள்.
10குழந்தை வளர்ந்தது. சில காலத்திற்குப்
பிறகு, அவள் அக்குழந்தையை அரசனின்
மகளிடம் கொடுத்தாள். அரசனின் மகள்
குழந்தையைத் தன் சொந்த மகனாகவே
ஏற்றுக் கொண்டாள். அக்குழந்தையை
தண்ணீரிலிருந்து எடுத்ததால் அவனுக்கு
மோசே என்று பெயரிட்டாள்.

### மோசே தன் ஜனங்களுக்கு உதவுதல்

11மோசே வளர்ந்து, பெரியவனானான்.
அவனது சொந்த ஜனங்களாகிய எபிரெ
யர்கள்கடினமாக உழைப்பதற்கு வற்புறுத்தப்
படுவதைக் கண்டான். ஒரு நாள் ஒரு எபிரெய
மனிதனை, எகிப்திய மனிதன் ஒருவன்
அடித்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.
12மோசே சுற்றிலும் நோக்கி, யாரும்
தன்னைக் கவனிக்கவில்லை என்பதைக்
கண்டான். பின் மோசே, எகிப்தியனைக்
கொன்று, அவனை மண்ணில் புதைத்தான்.
13மறுநாள் இரண்டு எபிரெய மனிதர்
கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்
கொண்டிருப்பதையும், அவர்களில் ஒருவன்
செய்தது தவறாயிருப்பதையும் மோசே
பார்த்தான். மோசே அம்மனிதனை நோக்கி,
"நீ ஏன் உனது அயலானை அடிக்கிறாய்?"
என்று கேட்டான்.
14அம்மனிதன் அதற்குப் பதிலாக,
"எங்களுக்கு அதிகாரியாகவும், நியாயாதிபதி
யாகவும் இருக்கும்படியாக உன்னிடம் யாரா
வது கூறினார்களா? நீ எகிப்தியனை நேற்று
கொன்றதுபோல என்னையும் கொல்லப்
போகிறாயா?" என்றான்.
இதைக் கேட்டு மோசே அஞ்சினான்.
மோசே தனக்குள், "நான் செய்ததை எல்லோ
ரும் இப்போது அறிந்திருக்கிறார்கள்" என்று
நினைத்துக் கொண்டான்.
15மோசே செய்ததைக் குறித்துப் பார்
வோன் கேள்விப்பட்டு, அவன் மோசே
யைக் கொல்ல முடிவு செய்தான். ஆனால்
பார்வோனிடமிருந்து மோசே தப்பி ஓடி,
மீதியான் தேசத்திற்குச் சென்றான்.

### மீதியானில் மோசே

மீதியானில் ஒரு கிணற்றருகே மோசே
நின்றான். 16ஏழு பெண்களைப் பெற்ற
ஒரு ஆசாரியன் மீதியானில் இருந்தான்.
அப்பெண்கள் வந்து தம்முடைய தந்தை யின்
ஆடுகளுக்கு தண்ணீர் காட்டும்படிக்கு
கிணற்றில் இருந்து தண்ணீர் இறைத்து
தொட்டிகளை நிரப்பிக் கொண்டிருந்தார்கள்.
17ஆனால் அங்கிருந்த சில மேய்ப்பர்கள்
அப்பெண்களைத் துரத்தி, அவர்கள்
தண்ணீர் இறைக்க முடியாதபடி செய்தனர்.
மோசே அப்பெண்களுக்கு உதவி, அவர்
களின் ஆடுகளுக்கு தண்ணீர் கொடுத்தான்.

18பின் அப்பெண்கள் தங்கள் தந்தையாகிய
ரெகுவேலிடம்* சென்றனர். அவர்கள் தந்தை
அவர்களிடம், "இன்று சீக்கிரமாக வந்து
விட்டீர்களே!" என்று கேட்டான்.
19அப்பெண்கள், "மேய்ப்பர்கள் எங்களைத்
துரத்திவிட முயன்றதால் ஒரு எகிப்திய
மனிதன் எங்களுக்கு உதவினான். அவன்
எங்களுக்கும், எங்கள் ஆடுகளுக்கும்
தண்ணீர் கொடுத்தான்" என்று பதில்
சொன்னார்கள்.
20எனவே, ரெகுவேல் அவனது பெண்
களை நோக்கி, "அம்மனிதன் எங்கே?
ஏன் அவனை விட்டு வந்தீர்கள்? அவனை
அழையுங்கள், அவன் நம்மோடு சாப்பிடட்
டும்" என்றான்.
21மோசே அம்மனிதனோடு தங்குவதில்
மகிழ்ச்சியடைந்தான். ரெகுவேல், தனது
மகளாகிய சிப்போராளை மோசேக்குத்
திருமணம் செய்துவைத்தான். 22சிப்போராள்
கர்ப்பவதியாகி, ஒரு மகனைப் பெற்றெ
டுத்தாள். மோசே அவனுக்குக் கெர்சோம்*
என்று பேரிட்டான். தனக்குச் சொந்த
மில்லாத நாட்டில் அந்நியனாக இருந்த
மையால் மோசே அவனுக்கு இப்பெயரை
வைத்தான்.

### இஸ்ரவேலுக்கு உதவ தேவன் முடிவு செய்தல்

23நீண்டகாலம் கழிந்தது. எகிப்தின்
மன்னன் மரித்தான். ஆனால் இஸ்ரவேல்
ஜனங்களோ கடினமாக உழைப்பதற்கு
தொடர்ந்து வற்புறுத்தப்பட்டனர். உதவிக்
காக அவர்கள் அழுதார்கள். 24தேவன்
அவர்கள் ஜெபத்தைக் கேட்டார். ஆபிரகாம்,
ஈசாக்கு, யாக்கோபு ஆகியோரோடு செய்த
உடன்படிக்கையை அவர் நினைவுகூர்ந்தார்.
25இஸ்ரவேல் ஜனங்கள் அடைந்த துயரங்
களைத் தேவன் கண்டார். விரைவில்
அவர்களுக்கு உதவ வேண்டும் என்பதை
தீர்மானித்தார்.

### எரியும் புதர்

3 மோசேயின் மாமன் எத்திரோ* என்ற
பெயருடையவன் ஆவான். (எத்திரோ
மீதியானில் ஆசாரியனாக இருந்தான்)
எத்திரோவின் ஆடுகளை மோசே கவனித்து
வந்தான். ஒரு நாள், மோசே ஆடுகளைப்
பாலைவனத்தின் மேற்குத் திசைக்கு
அழைத்துச் சென்றான். மோசே ஓரேப்
(சீனாய்) எனப்படும் தேவனின் மலைக்குப்
போனான். 2மோசே மலையின்மேல், ஒரு
எரியும் புதரில் கர்த்தருடைய தூதனை
கண்டான். அது பின்வருமாறு நிகழ்ந்தது:
அழியாதபடி எரிந்து கொண்டிருந்த ஒரு
புதரை மோசே கண்டான். 3மோசே புதரின்
அருகே சென்று, அழியாதபடி அது
எவ்வாறு எரிகிறது என்பதைப் பார்ப்
பதற்குத் தீர்மானித்தான்.
4புதரைப் பார்ப்பதற்கு மோசே வந்து
கொண்டிருப்பதைக் கர்த்தர் கண்டார்.
எனவே, தேவன் புதரிலிருந்து, "மோசே,
மோசே!" என்று கூப்பிட்டார். மோசே, "நான்
இங்கே இருக்கிறேன்" என்றான்.
5அப்போது கர்த்தர், "பக்கத்தில் நெருங்
காதே. உனது செருப்புகளைக் கழற்று. நீ
பரிசுத்த பூமியில் நின்று கொண்டி
ருக்கிறாய். 6நான் உனது முற்பிதாக்களின்
தேவன். நான் ஆபிரகாமின் தேவனும்,
ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனா
கவும் இருக்கிறேன்" என்றார். தேவனைப்
பார்ப்பதற்குப் பயந்ததால் மோசே முகத்தை
மூடிக்கொண்டான்.
7அப்போது கர்த்தர், "எகிப்தில் என்
ஜனங்கள் படுகின்ற தொல்லைகளை நான்
கண்டேன். எகிப்தியர்கள் அவர்களைத்
துன்புறுத்தும்போது, அவர்களிடும் கூக்
குரலை நான் கேட்டேன். அவர்கள் படும்
வேதனையை நான் அறிவேன். 8நான்
இப்போது இறங்கிப்போய், எகிப்திய
ரிடமிருந்து என் ஜனங்களை மீட்பேன்.
அந்நாட்டிலிருந்து தொல்லைகளில்லாமல்
சுதந்திரமாக வாழத்தக்க ஒரு நல்ல நாட்டிற்கு
அவர்களை அழைத்துச் செல்வேன்.*
அந்நாடு நல்ல பொருட்களால் நிரம்பிய
தாகும்.* கானானியர், ஏத்தியர், எமோரியர்,
பெரிசியர், ஏவியர், எபூசியர் போன்ற
ஜனங்கள் அந்நாட்டில் வாழ்கிறார்கள். 9நான்
இஸ்ரவேல் ஜனங்களின் கூக்குரலைக்
கேட்டேன். எகிப்தியர்கள் அவர்கள்
வாழ்க்கையைக் கடினமாக்கியதையும் கண்
டேன். 10நான், உன்னை இப்போது
பார்வோனிடம் அனுப்புகிறேன். நீ போய்
எனது ஜனங்களாகிய இஸ்ரவேலரை
எகிப்திலிருந்து வெளியே வழிநடத்து!"
என்றார்.
11ஆனால் மோசே தேவனிடம், "நான்
பெரிய மனிதன் அல்ல, நான் எவ்வாறு
பார்வோனிடம் போய், இஸ்ரவேல் ஜனங்
களை எகிப்திலிருந்து வெளியே வழிநடத்தக்
கூடும்?" என்று கேட்டான்.
12தேவன், "நான் உன்னோடு இருப்பேன்.
எனவே நீ இதைச் செய்ய முடியும். நான்
உன்னை அனுப்புகிறேன் என்பதற்கு
இதுவே சான்றாகும்! ஜனங்களை எகிப்தி

---

**ரெகுவேலிடம்** அவன் எத்திரோ என்றும் அழைக்கப்பட்டான்.

**கெர்சோம்** இது எபிரெய வார்த்தைகளைப் போன்று "அங்கே ஒரு அந்நியன்" எனப் பொருள்படும்.

**எத்திரோ** அவன் ரெகுவேல் என்றும் அழைக்கப்பட்டான்.

**நல்ல ... செல்வேன்** எழுத்தின் பிராகாரமாக "ஒரு விஸ்தாரமான நிலம்" எனப் பொருள்படும்.

**நல்ல பொருட்களால் நிரம்பிய** எழுத்தின் பிராகாரமாக "பாலும் தேனும் ஓடுகின்ற" எனப் பொருள்படும்.

லிருந்து வழிநடத்திய பிறகு, நீ வந்து
இம்மலையின் மேல் என்னைத் தொழுவாய்!”
என்றார்.
13 அப்போது மோசே தேவனை நோக்கி,
“நான் இஸ்ரவேல் ஜனங்களிடம் சென்று,
‘உங்கள் முற்பிதாக்களின் தேவன் என்னை
அனுப்பினார்’ என்று கூறினால், அவர்கள்,
‘அவரது பெயரென்ன?’ என்று கேட்டால்,
நான் என்ன சொல்லட்டும்?” என்று
கேட்டான்.
14 அப்போது தேவன் மோசேயை நோக்கி,
“அவர்களிடம் ‘இருக்கிறவராக இருக்கிறேன்’
என்று கூற வேண்டும். இஸ்ரவேல் ஜனங்
களிடம் நீ போகும்போது, ‘இருக்கிறேன்’
என்பவர் என்னை உங்களிடம் அனுப்பி
னார், என்று சொல்” என்றார்.
15 மோசேயிடம் தேவன் மீண்டும்,
“இஸ்ரவேலர்களிடம், நீ சொல்ல வேண்டி
யது இதுதான்: ‘உங்களுடைய முற்பிதாக்
களின் தேவனும், ஆபிரகாமின் தேவனும்,
ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனு
மானவர் யேகோவா என்பவர் ஆவார்.
என் பெயரும் எப்பொழுதும் யேகோவா
ஆகும். அப்பெயரில்தான் தலைமுறை
தலைமுறையாக ஜனங்கள் என்னை அறி
வார்கள். யேகோவா என்னை உங்களிடம்
அனுப்பினார்’ என்று ஜனங்களிடம் சொல்”
என்றார்.
16 மேலும் கர்த்தர், “போய் ஜனங்களின்
மூப்பர்களை (தலைவர்களை) ஒருமித்துக்
கூடிவரச்செய்து அவர்களுக்கு, ‘உங்கள்
முற்பிதாக்களின் தேவனாகிய யேகோவா,
எனக்குத் தரிசனமளித்தார். ஆபிரகாம்,
ஈசாக்கு, யாக்கோபு, ஆகியோரின் தேவன்
என்னிடம் பேசினார். கர்த்தர், நான்
உங்களை நினைவுகூர்ந்து, எகிப்தில் உங்க
ளுக்கு நடந்ததையும் கண்டேன். 17 எகிப்தில்
நீங்கள் அனுபவிக்கும் துன்பங்களிலிருந்து
உங்களை விடுவிக்க முடிவு செய்தேன்.
இப்போது கானானியர், ஏத்தியர், எமோரி
யர், பெரிசியர், ஏவியர், எபூசியர் போன்ற
வெவ்வேறு ஜனங்களுக்குச் சொந்தமான
தேசத்திற்கு உங்களை அழைத்துச் செல்
வேன். பல நல்ல பொருட்களால் நிரம்பிய
தேசத்திற்கு உங்களை வழிநடத்துவேன்’
என்று சொல்.
18 “மூப்பர்கள் (தலைவர்கள்) உனக்குச்
செவிகொடுப்பார்கள். பின்னர் நீயும், அவர்
களும் எகிப்திய அரசனிடம் செல்லுங்கள்.
நீ அரசனிடம், ‘எபிரெய ஜனங்களின்
தேவனாகிய யேகோவா எங்களிடம் பாலை
வனத்தில் மூன்று நாட்கள் பயணப்படும்
படியாகக் கூறினார். எங்கள் தேவனாகிய
யேகோவாவுக்கு நாங்கள் அங்கு பலி
செலுத்த வேண்டும் என்று சொல்லுங்கள்.’
19 “ஆனால் எகிப்திய அரசன் உங்களைப்
போக அனுமதிக்கமாட்டான் என்பதை
அறிவேன். மிகப்பெரிய ஒரு வல்லமை
மட்டுமே உங்களை அனுப்ப அவனைக்
கட்டாயப்படுத்தும். 20 ஆகையால் எனது
மிகுந்த வல்லமையை எகிப்துக்கு எதிராகப்
பயன்படுத்துவேன். அந்த தேசத்தில்
வியக்கும்படியான காரியங்கள் நிகழும்படி
செய்வேன். நான் இதைச் செய்தபிறகு,
அவன் உங்களைப் போக அனுமதிப்பான்.
21 இஸ்ரவேல் ஜனங்களிடம் எகிப்திய ஜனங்
கள் இரக்கம் கொள்ளும்படி செய்வேன்.
எகிப்தைவிட்டுச் செல்லும்போது, உன்
ஜனங்களுக்கு எகிப்தியர்கள் பல வெகுமதி
களைக் கொடுப்பார்கள்.
22 “எல்லா எபிரெய பெண்களும் தங்கள்
அண்டை வீடுகளிலும், தங்கள் வீடுகளிலும்
வசிக்கும் எகிப்திய பெண்களிடம் பரிசு
களைக் கேட்க வேண்டும். அந்த எகிப்திய
பெண்கள் அவர்களுக்குப் பரிசுகளைக்
கொடுப்பார்கள். உன் ஜனங்கள் பொன்,
வெள்ளி, விலை மதிப்புள்ள ஆடைகள்
ஆகியவற்றைப் பரிசாகப் பெறுவார்கள்.
பின் நீங்கள் எகிப்தைவிட்டுப் புறப்படும்
போது, உங்கள் குழந்தைகளுக்கு அப்பரிசு
களை அணிவிப்பீர்கள். இவ்வகையில்
நீங்கள் எகிப்து தேசத்தின் செல்வத்தை
எடுத்துச் செல்வீர்கள்” என்றார்.

## மோசேக்கு அடையாளம்

4 அப்போது மோசே தேவனை நோக்கி,
“நீர் என்னை அனுப்பினீர் என்று
கூறும்பொழுது, இஸ்ரவேல் ஜனங்கள்
என்னை நம்பமாட்டார்கள். அவர்கள்,
‘தேவன் (யேகோவா) உனக்குக் காட்சி
யளிக்க வில்லை’ என்பார்கள்” என்றான்.
2 தேவன் மோசேயை நோக்கி, “உன்
கையில் இருப்பது என்ன?” என்று
கேட்டார்.
மோசே, “இது எனது கைத்தடி”
என்றான்.
3 அப்போது தேவன், “உனது கைத்
தடியைப் தரையில் போடு” என்றார்.
மோசே, தனது கைத்தடியை நிலத்தின்
மேல் போட்டான். அது பாம்பாக மாறிற்று.
மோசே அதற்குப் பயந்து அங்கிருந்து
ஓடினான். 4 கர்த்தர் மோசேயை நோக்கி,
“கையை நீட்டி, பாம்பின் வாலைப் பிடி”
என்றார்.
எனவே மோசே கையை நீட்டிப்
பாம்பின் வாலைப் பிடித்தான். மோசே
அவ்வாறு செய்தபோது, பாம்பு மீண்டும்
கைத்தடியாயிற்று. 5 அப்போது தேவன்,
“உனது கைத்தடியை இவ்வாறு பயன்
படுத்து. அப்போது நீ உனது முற் பிதாக்
களின் தேவனாகிய ஆபிரகாமின் தேவனும்,
ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனு
மாகிய கர்த்தரைக் கண்டாய் என்பதை
ஜனங்கள் நம்புவார்கள்” என்றார்.
6 பின் கர்த்தர், “உனக்கு மற்றொரு

அடையாளத்தையும் தருவேன். உனது
கையை அங்கிக்குள் நுழை” என்றார்.
எனவே மோசே தன் அங்கிக்குள் கையை
நுழைத்தான். மோசே அங்கியிலிருந்து
கையை எடுத்தபோது, அது மாறிப்
போயிருந்தது. கைமுழுவதும் உறைந்த
பனியைப் போன்ற வெள்ளைப் புள்ளிகளால்
நிரம்பியிருந்தது.
7 அப்போது தேவன், “உனது கையை
அங்கிக்குள் மீண்டும் நுழை” என்றார்.
மோசே அவ்வாறே அங்கிக்குள் கையை
நுழைத்தான். பின் மோசே கையை வெளி
யே எடுத்தபோது அவனது கை முன்பிருந்
ததைப் போலவே நன்றாக இருந்தது.
8 அப்போது தேவன், “நீ உனது கைத்
தடியைப் பயன்படுத்தும்போது ஒரு வேளை
ஜனங்கள் உன்னை நம்பாவிட்டாலும், இந்த
அடையாளத்தைக் காட்டும்போது, அவர்கள்
உன்னை நம்புவார்கள். 9 இந்த இரண்டு
காரியங்களைக் காண்பித்து, அவர்கள்
உன்னை நம்ப மறுத்தால், நீ நைல்
நதியிலிருந்து கொஞ்சம் தண்ணீரை அள்ளி,
அதனைத் தரையில் ஊற்று. அது நிலத்தைத்
தொட்டதும் இரத்தமாக மாறும்” என்றார்.
10 “ஆனால் மோசே கர்த்தரை நோக்கி,
“கர்த்தாவே, நான் உமக்கு உண்மையைச்
சொல்கிறேன். நான் தேர்ந்த பேச்சாளன்
அல்ல. நான் சிறப்பாக எப்போதும்
பேசியதில்லை. இப்போது உம்மிடம் பேசிய
பிறகும்கூட, நான் சிறந்த பேச்சாளனாக
மாறவில்லை. நான் நிதானமாகப் பேசு
கிறேன் என்பதும், சிறந்த வார்த்தைகளைப்
பயன்படுத்தாத திக்குவாய் உடையவன்
என்பதும் உமக்கு தெரியும்” என்று
கூறினான்.
11 அப்போது கர்த்தர் அவனை நோக்கி,
“யார் மனிதனின் வாயை உண்டாக்கினார்?
யாரால் மனிதனைச் செவிடனாகவும்,
ஊமையாகவும் செய்யமுடியும்? யார்
ஒருவனைக் குருடனாக்கக் கூடும்? யார்
ஒருவனுக்குப் பார்வை தரமுடியும்? இக்
காரியங்களைச் செய்ய வல்லவர் நானே.
நான் யேகோவா. 12 எனவே நீ போ! நீ
பேசும்போது நான் உன்னோடு இருப்பேன்.
நீ சொல்ல வேண்டிய வார்த்தைகளை
நான் உனக்குத் தருவேன்” என்றார்.
13 ஆனால் மோசே, “எனது கர்த்தாவே,
வேறு யாரையாவது அனுப்புமாறு உம்
மிடம் வேண்டிக் கொள்கிறேன், என்னை
அனுப்ப வேண்டாம்” என்றான்.
14 அப்போது மோசேயின்மேல் கர்த்தர்
கோபம் கொண்டு, “நல்லது! உனக்கு
உதவியாக நான் ஒருவனைத் தருவேன்.
லேவியனாகிய உனது சகோதரன் ஆரோ
னை நான் பயன்படுத்துவேன். அவன்
தேர்ந்த பேச்சாளன். அவன் உன்னைப்
பார்க்க வந்துகொண்டிருக்கிறான். அவன்
உன்னைப் பார்த்துச் சந்தோஷப்படுவான்.
15 அவன் உன்னோடுகூட பார்வோனிடம்
வருவான். நீ கூறவேண்டியதை உனக்குச்
சொல்வேன். நீ அதை ஆரோனுக்குச் சொல்.
பார்வோனிடம் பேசவேண்டிய தகுந்த
வார்த்தைகளை ஆரோன் தெரிந்துகொள்
வான். 16 உனக்காக ஆரோன் ஜனங்களிடமும்
பேசுவான். நீ ஒரு பேரரசனைப் போலிருப்
பாய், உனக்குரிய பேச்சாளனாக அவன்
இருப்பான்.* 17 எனவே போ. உனது கைத்தடி
யையும் எடுத்துச்செல். நான் உன்னோடிருக்
கிறேன் என்பதை ஜனங்களுக்குக் காட்டு
வதற்கு உனது கைத்தடியையும், பிற
அற்புதங்களையும் பயன்படுத்து” என்றார்.

### மோசே எகிப்துக்குத் திரும்பி வருதல்

18 அப்போது மோசே தன் மாமனாகிய
எத்திரோவிடம் திரும்பிப்போனான். மோசே
எத்திரோவை நோக்கி, “நான் எகிப்துக்குத்
திரும்பிப்போக அனுமதி கொடும். எனது
ஜனங்கள் இன்னும் உயிரோடிருக்கிறார்களா
என்று பார்க்க வேண்டும்” என்றான்.
எத்திரோ மோசேயை நோக்கி, “நீ
சமாதானத்தோடு போய்வா” என்றான்.
19 மோசே இன்னும் மீதியானில் இருக்கும்
போதே, தேவன் மோசேயை நோக்கி,
“இப்போது நீ எகிப்திற்குத் திரும்பிப் போவ
தற்குப் பொருத்தமான வேளை. உன்னைக்
கொல்ல விரும்பிய மனிதர்கள் மரித்து
போய்விட்டனர்” என்றார்.
20 எனவே மோசே, தன் மனைவியையும்,
குழந்தைகளையும் கழுதையின்மேல் ஏற்றிக்
கொண்டு, எகிப்திற்குத் திரும்பிப் போனான்.
தேவனின் வல்லமையைப் பெற்றிருந்த தனது
கைத்தடியையும் மோசே எடுத்துக் கொண்
டான்.
21 மோசே எகிப்தை நோக்கிப் பிரயாணம்
செய்து கொண்டிருந்தபோது, தேவன்
அவனோடு பேசினார். அவர், “நீ பார்வோ
னோடு பேசும்போது, உனக்கு நான்
அளித்துள்ள வல்லமையினால் எல்லா
அற்புதங்களையும் செய்து காட்டவேண்டும்
என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்.
ஆனால் பார்வோன் மிகவும் பிடிவாதமாக
இருக்கும்படியாகச் செய்வேன். ஜனங்களைப்
போகும்படியாக அவன் அனுமதிக்க
மாட்டான். 22 அப்போது நீ பார்வோனைப்
பார்த்து, ‘இஸ்ரவேல் எனது முதற்பேறான
மகன். 23 என் மகன் கிளம்பிப்போய்
என்னைத் தொழுதுகொள்ள விடு என்று
உனக்குக் கூறுகிறேன்! இஸ்ரவேல் போவ
தற்கு நீ அனுமதி அளிக்க மறுத்தால், நான்
உனது முதற்பேறான மகனைக் கொல்வேன்,
என்று கர்த்தர் சொல்கிறார்’ என்று சொல்’”
என்றார்.

---

***நீ ஒரு … இருப்பான்*** எழுத்தின் பிரகாரமாக, “அவன் உன் வாயாக இருப்பான், நீ அவனுடைய தேவனாயிருப்பாய்” எனப் பொருள்படும்

### மோசேயின் மகன் விருத்தசேதனம் செய்யப்படுதல்

24எகிப்திற்குச் செல்லும் வழியில்
இரவைக் கழிப்பதற்காக மோசே ஓரிடத்தில்
தங்கினான். கர்த்தர் அவ்விடத்தில் மோசே
யைச் சந்தித்து அவனைக் கொல்ல
முயன்றார்.* 25ஆனால் சிப்போராள் கூர்மை
யான கல்லினால் செய்யப்பட்டக் கத்தியி
னால் தனது மகனின் நுனித்தோலை அறுத்
தெடுத்து, நுனித்தோலினால் மோசேயின்
பாதங்களைத் தொட்டு, "நீர் எனக்கு இரத்த
சம்பந்தமான கணவன்" என்றாள். 26மகனுக்கு
அவளே விருத்தசேதனம் செய்யும்படியாக
நேரிட்டதால் சிப்போராள் இவ்வாறு
கூறினாள். எனவே தேவன் மோசேயை
மன்னித்து அவனைக் கொல்லாமல்
விட்டார்.

### தேவனின் முன்னிலையில் மோசேயும் ஆரோனும்

27கர்த்தர் ஆரோனோடு பேசினார். கர்த்தர்
அவனிடம், "பாலைவனத்தில் சென்று
மோசேயைப் பார்" என்றார். எனவே
ஆரோன் சென்று, தேவனின் மலையில்
மோசேயைச் சந்தித்தான். ஆரோன் மோசே
யைக் கண்டு, அவனை முத்தமிட்டான்.
28தேவன் அவனை அனுப்பினார் என்பதை
நிரூபிப்பதற்காக அவன் செய்யவேண்டிய
காரியங்களையும் அற்புதங்களையும் குறித்து
மோசே ஆரோனுக்குச் சொன்னான். தேவன்
அவனுக்குச் சொன்ன எல்லாவற்றையும்
மோசே ஆரோனுக்குக் கூறினான்.
29மோசேயும் ஆரோனும் சென்று இஸ்ர
வேல் ஜனங்களின் மூப்பர்களை (தலைவர்
களை) ஒன்றாகக் கூட்டினார்கள். 30அப்போது
ஆரோன் ஜனங்களிடம் கர்த்தர் மோசேயிடம்
கூறிய எல்லாக் காரியங்களையும் கூறினான்.
எல்லா ஜனங்களும் பார்க்கும்படியாக
அடையாளங்களைச் செய்து காட்டினான்.
31தேவன் மோசேயை அனுப்பினார் என்
பதை ஜனங்கள் நம்பினார்கள். தேவன்
அவர்களின் துன்பங்களைக் கண்டார் என
வும், அவர்களுக்கு உதவுவதற்காக அவன்
வந்துள்ளான் என்பதையும் இஸ்ரவேல்
ஜனங்கள் அறிந்தார்கள். எனவே அவர்கள்
தலைகுனிந்து தேவனைத் தொழுது
கொண்டார்கள்.

### பார்வோனின் முன்னே மோசேயும் ஆரோனும்

5 மோசேயும் ஆரோனும் ஜனங்களிடம்
பேசியபிறகு, பார்வோனிடம் சென்றனர்.
அவர்கள், "இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர், 'பாலைவனத்தில் போய் பண்டிகை
கொண்டாடி என்னை கௌரவப்படுத்து
வதற்கு என் ஜனங்களை நீ போக விடு'
என்று கூறுகிறார்" என்றனர்.
2ஆனால் பார்வோன், "யார் உங்கள்
கர்த்தர்? நான் ஏன் அவருக்குக் கீழ்ப்படிய
வேண்டும்? இஸ்ரவேலரை நான் ஏன் போக
அனுமதிக்க வேண்டும்? இந்த கர்த்தர் யா
ரென்று கூட எனக்குத் தெரியாது. நான்
இஸ்ரவேலரைப் போக அனுமதிக்க
மாட்டேன்" என்றான்.
3அப்போது ஆரோனும் மோசேயும்,
"எபிரெய* ஜனங்களின் தேவன் எங்க
ளுடன் பேசினார். பாலைவனத்தில் மூன்று
நாட்கள் பயணம் செல்வதற்கு எங்களை
அனுமதிக்குமாறு நாங்கள் உன்னை வேண்டு
கிறோம். அங்கு எங்கள் தேவனாகிய
கர்த்தருக்குப் பலி* செலுத்துவோம். இதை
நாங்கள் செய்யவில்லையென்றால், அவர்
கோபங்கொண்டு நோய் அல்லது யுத்தத்
தினால் நாங்கள் அழியும்படியாகச் செய்
வார்" என்றனர்.
4ஆனால் பார்வோன் அவர்களை நோக்கி,
"மோசேயே, ஆரோனே, நீங்கள் வேலை
செய்கிறவர்களைத் தொந்தரவு செய்கிறீர்கள்.
அவர்கள் அவர்களது வேலையைச் செய்யட்
டும். உங்கள் வேலையை நீங்கள் கவனி
யுங்கள். 5ஏராளமான வேலையாட்கள்
உள்ளார்கள். தம் வேலைகளைச் செய்யாத
படி நீங்கள் அவர்களை தடுக்கிறீர்கள்"
என்றான்.

### பார்வோன் ஜனங்களைத் தண்டித்தல்

6அதே நாளில் இஸ்ரவேல் ஜனங்கள்
இன்னும் கடினமாக உழைக்கும்படியாக பார்
வோன் ஒரு கட்டளையிட்டான். அடிமை
களின் மேற்பார்வையாளர்களிடமும் எபிரெ
யர்களைக் கண்காணிப்பவர்களிடமும் பார்
வோன், 7"ஜனங்களுக்கு எப்போதும் நீங்கள்
வைக்கோலை கொடுத்து வந்தீர்கள்.
அவர்கள் அதைப் பயன்படுத்திச் செங்கல்
செய்தார்கள். ஆனால் இப்போது செங்கல்
செய்வதற்குத் தேவையான வைக்கோலை
அவர்களே சேகரித்து வரும்படி கூறுங்கள்.
8ஆனால் முன்னால் செய்தபடியே, அதே
எண்ணிக்கை செங்கற்களை தினமும் அவர்
கள் செய்ய வேண்டும். அவர்கள் சோம்பேறி
களாகி விட்டனர், எனவேதான் தங்களை
அனுப்பும்படியாக அவர்கள் என்னைக்
கேட்கிறார்கள். அவர்கள் செய்வதற்குப்
போதிய வேலை இல்லை. எனவேதான்
அவர்கள் தங்கள் தேவனுக்குப் பலிகள்
செலுத்த வேண்டுமென என்னைக்
கேட்கிறார்கள். 9எனவே இந்த மனிதர்கள்

---

**அவனைக் கொல்ல முயன்றார்** அல்லது ''அவனை விருத்தசேதனம் செய்ய வேண்டுமென்று விரும்பினார்'' என சொல்லலாம்

**எபிரெயர்** அல்லது ''இஸ்ரவேல்'' எனப் பொருள் படும்.

**பலி** தேவனுக்கு கொடுக்கும் ஒரு அன்பளிப்பு. பொதுவாக ஒரு சிறப்பான மிருகத்தைக் கொன்று அதை பலிபீடத்தில் எரிப்பதைக் குறிக்கும்.

*கடினமாக வேலை செய்யும்படிச் செய்யுங்*
*கள். அவர்களைச் சுறுசுறுப்பாக வைத்திருங்*
*கள். அப்போது அவர்களுக்கு மோசேயின்*
*பொய்களை நம்புவதற்குப் போதிய*
*நேரமிராது” என்றான்.*
10 *எனவே இஸ்ரவேலரின் எகிப்திய எஜ*
*மானர்களும், எபிரெய மேற்பார்வையாளர்*
*களும் இஸ்ரவேல் ஜனங்களிடம் சென்று,*
*“செங்கற்கள் செய்ய உங்களுக்கு வைக்கோல்*
*தரமுடியாதென பார்வோன் முடிவு செய்துள்*
*ளார்.* 11 *நீங்கள் போய் உங்களுக்கு வேண்டிய*
*வைக் கோலைக் கொண்டுவர வேண்டும்.*
*ஆனால் முன்னால் செய்தபடியே எண்ணிக்*
*கைகளில் ஒன்றும் குறைக்கப்படுவதில்லை”*
*என்றார்கள்.*
12 *வைக்கோலைக் கொண்டு வருவதற்காக*
*ஜனங்கள் எகிப்தின் எல்லா இடங்களுக்கும்*
*சென்றார்கள்.* 13 *மேற்பார்வையாளர்கள் ஜனங்*
*களை இன்னும் கடினமாக வேலை வாங்கி*
*னார்கள். முன்னால் செய்த எண்ணிக்கை*
*அளவுக்கு செங்கற்களைச் செய்யும்படி*
*வற்புறுத்தினார்கள்.* 14 *இஸ்ரவேலரின்*
*எகிப்திய எஜமானர்கள், எபிரெய மேற்*
*பார்வையாளர்களைத் தேர்ந்தெடுத்து ஜனங்*
*கள் செய்த வேலைக்கு அவர்களைப்*
*பொறுப்பாளர்கள் ஆக்கினார்கள். இஸ்ர*
*வேலரின் எகிப்திய எஜமானர்கள், எபிரெய*
*மேற்பார்வையாளர்களை அடித்து அவர்களி*
*டம், “முன்னால் செய்த எண்ணிக்கையளவு*
*செங்கற்களை ஏன் நீங்கள் செய்யவில்லை?*
*முன்பு அதனைச் செய்ய முடிந்ததென்றால்,*
*இப்போதும் உங்களால் அதைச் செய்யக்*
*கூடும்!” என்றார்கள்.*
15 *அப்போது எபிரெய மேற்பார்வையாளர்*
*கள் பார்வோனிடம் சென்று: “நாங்கள் உமது*
*ஊழியர்கள். ஏன் எங்களை இவ்வாறு*
*நடத்துகிறீர்?* 16 *எங்களுக்கு நீர் வைக்கோல்*
*தரவில்லை. ஆனால் முன்பு செய்த*
*எண்ணிக்கையளவுக்கு செங்கற்களை இப்*
*போதும் செய்யும்படியாகக் கூறுகிறீர். இப்*
*போது எங்கள் எஜமானர்கள் எங்களை*
*அடிக்கிறார்கள். இவ்வாறு உங்கள் ஜனங்கள்*
*செய்வது தவறானது” என்று குறை*
*கூறினார்கள்.*
17 *பார்வோன், “நீங்கள் சோம்பேறிகள்,*
*உங்களுக்கு வேலை செய்ய விருப்பமில்லை.*
*அதனால்தான் உங்களை அனுப்பும்படி நீங்*
*கள் என்னைக் கேட்கிறீர்கள். நீங்கள்*
*இங்கிருந்து போய், கர்த்தருக்கு பலிசெலுத்த*
*விரும்புகிறீர்கள்.* 18 *இப்போது வேலை*
*செய்யத் திரும்பி போங்கள்! உங்களுக்கு*
*வைக்கோல் தரமாட்டோம். ஆனால் முன்பு*
*செய்த எண்ணிக்கை அளவுக்கு செங்*
*கற்களை நீங்கள் செய்ய வேண்டும்!” என்று*
*பதிலளித்தான்.*
19 *தங்களுக்குத் தொல்லை நேர்ந்ததை*
*எபிரெய மேற்பார்வையாளர்கள் கண்டு*
*கொண்டார்கள். கடந்த காலத்தில் செய்த*
*எண்ணிக்கை அளவுக்கு செங்கற்களைச்*
*செய்ய முடியாது என்று அவர்கள்*
*அறிந்திருந்தார்கள்.*
20 *பார்வோனைச் சந்தித்துத் திரும்பிக்*
*கொண்டிருந்த வழியில் மோசேயும், ஆரோ*
*னும் அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருந்*
*தார்கள்.* 21 *அவர்கள் மோசேயையும், ஆரோ*
*னையும் நோக்கி, “நம்மைப் போகவிடும்*
*படியாக பார்வோனைக் கேட்டபடியால்*
*நீங்கள் பெரிய தவறு செய்து விட்டீர்கள்.*
*பார்வோனும், அவரது ஆட்சியாளர்களும்*
*எங்களை வெறுக்கும்படிச் செய்ததால்*
*கர்த்தர் உங்களைத் தண்டிப்பார். எங்களைக்*
*கொல்வதற்கு அவர்களுக்கு ஒரு தருணத்தை*
*அளித்திருக்கிறீர்கள்” என்றனர்.*

### மோசே தேவனிடம் முறையிடுதல்

22 *மோசே கர்த்தரிடம் ஜெபம் செய்து,*
*“ஆண்டவரே, உமது ஜனங்களுக்கு ஏன்*
*இந்தக் கொடுமையான காரியத்தைச்*
*செய்தீர்? ஏன் என்னை இங்கு அனுப்பினீர்?*
23 *நான் பார்வோனிடம் போய் நீர் கூறும்*
*படியாகச் சொன்னவற்றைக் கூறினேன்.*
*அப்போதிலிருந்து அவன் ஜனங்களைக்*
*கேவலமாக நடத்துகிறான். அவர்களுக்கு*
*உதவுவதற்கு நீர் எதையும் செய்யவில்லை!”*
*என்றான்.*
6 *அப்போது கர்த்தர் மோசேயை நோக்கி,*
*“நான் பார்வோனுக்குச் செய்யப்*
*போவதை நீ இப்போது காண்பாய். அவ*
*னுக்கு எதிராக என் மகா வல்லமையைப்*
*பயன்படுத்துவேன், அவன் என் ஜனங்*
*களைப் போகவிடுவான். அவர் களை*
*அனுப்ப மிக்க ஆயத்தத்தோடு இருப்பான்.*
*அவர்கள் போகும்படியாக அவன் கட்டாயப்*
*படுத்துவான்” என்றார்.*
2 *பின், தேவன் மோசேயை நோக்கி,*
*“நானே கர்த்தர்.* 3 *நான் ஆபிரகாம், ஈசாக்கு,*
*யாக்கோபுக்கு தரிசனமானேன். அவர்கள்*
*என்னை எல்ஷடாய் (சர்வ வல்லமையுள்ள*
*தேவன்) என்று அழைத்தார்கள். அவர்*
*களுக்கு யேகோவா (கர்த்தர்) என்னும்*
*எனது பெயர் தெரிந்திருக்கவில்லை.* 4 *நான்*
*அவர்களோடு ஒரு உடன்படிக்கை செய்*
*தேன். கானான் தேசத்தை அவர்களுக்குக்*
*கொடுப்பதாக வாக்களித்தேன். அவர்கள்*
*அத்தேசத்தில் வாழ்ந்தார்கள். ஆனால் அது*
*அவர்களின் சொந்த தேசமல்ல.* 5 *இஸ்ரவேல்*
*ஜனங்கள் படும் தொல்லைகளை நான்*
*இப்போது அறிகிறேன். அவர்கள் எகிப்தில்*
*அடிமைகளாக இருப்பதையும் நான்*
*அறிகிறேன், எனது உடன்படிக்கையை*
*நினைவுகூருகிறேன்.* 6 *எனவே இஸ்ரவேல்*
*ஜனங்களை நோக்கி, ‘நானே கர்த்தர். நான்*
*உங்களை மீட்பேன். நான் உங்களை*
*விடுவிப்பேன். எகிப்தியர்களுக்கு நீங்கள்*
*அடிமைகளாக இருக்கமாட்டீர்கள். எனது*
*பெரிய வல்லமையைப் பயன்படுத்தி,*

எகிப்தியருக்குப் பயங்கரமான தண்டனை
அளிப்பேன். பின், உங்களை மீட்பேன்.
7நீங்கள் எனது ஜனங்களாயிருப்பீர்கள், நான்
உங்கள் தேவனாக இருப்பேன். நான் உங்கள்
தேவனாகிய கர்த்தர், நான் உங்களை
எகிப்திலிருந்து மீட்டேன் என்பதை
அறிவீர்கள். 8ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு
ஆகியோருக்கு ஒரு பெரிய வாக்குத்தத்தம்
பண்ணினேன். அவர்களுக்கு ஒரு விசேஷ
மான தேசத்தை அளிப்பதாக வாக்களித்
தேன். எனவே உங்களை அத்தேசத்திற்கு
வழிநடத்துவேன். உங்களுக்கு அத்தேசத்தைத்
தருவேன், அது உங்களுடையதாக இருக்கும்.
நானே கர்த்தர்!' என்று கூறியதாகச்
சொல்லுங்கள்" என்றார்.
9மோசே இதனை இஸ்ரவேல் ஜனங்
களுக்குக் கூறினான். ஆனால் ஜனங்கள்
அதற்குச் செவிசாய்க்கவில்லை. அவர்கள்
மிகக் கடினமாக உழைத்ததால் மோசேயிடம்
பொறுமையிழந்து காணப்பட்டார்கள்.
10அப்போது கர்த்தர் மோசேயை நோக்கி,
11"பார்வோனிடம் போய் இஸ்ரவேல் ஜனங்
களை தனது தேசத்திலிருந்து போகவிடும்
படியாகக் கூறு" என்றார்.
12ஆனால் மோசே, "இஸ்ரவேல் ஜனங்
களே எனக்குச் செவிசாய்க்க மறுக்கிறார்
கள்! எனவே பார்வோனும் நான் சொல்
வதைக் கேட்கமாட்டான். நான் பேச திறமை
யில்லாதவன்"* என்று பதில் கூறினான்.
13ஆனால் கர்த்தர் மோசேயோடும், ஆரோ
னோடும் பேசினார். இஸ்ரவேல் ஜனங்
களிடமும், பார்வோனிடமும் சென்று பேசு
மாறு அவர்களுக்குக் கட்டளையிட்டார்.
எகிப்து தேசத்திலிருந்து இஸ்ரவேல் ஜனங்
களை வழிநடத்துமாறும் அவர்களுக்குத்
தேவன் கட்டளையிட்டார்.

### இஸ்ரவேலின் சில குடும்பங்கள்

14இஸ்ரவேல் குடும்பத் தலைவர்களில்
சிலருடைய பெயர்கள் இங்குத் தரப்படு
கின்றன. இஸ்ரவேலின் முதல் மகன்
ரூபனுக்கு நான்கு மகன்கள். அவர்கள்
ஆனோக்கு, பல்லூ, எஸ்ரோன், கர்மீ
ஆகியோர். 15சிமியோனின் மகன்கள் எமு
வேல், யாமின், ஓகாத், யாகீன், சோகார்,
சவுல் ஆகியோர். (சவுல் கானானிய
பெண்ணின் மகன்.) 16லேவி 137 ஆண்டுகள்
வாழ்ந்தான். கெர்சோன், கோகாத், மெராரி
ஆகியோர் லேவியின் ஜனங்கள். 17கெர்சோ
னுக்கு, லிப்னீ, சிமேயீ என்னும் இரண்டு
மகன்கள் இருந்தனர். 18கோகாத் 133
ஆண்டுகள் வாழ்ந்தான். கோகாத்தின் ஜனங்
கள் அம்ராம், இத்சேயார், எப்ரோன்,
ஊசியேல் ஆகியோர். 19மெராரியின் ஜனங்
கள் மகேலியும், மூசியுமாவர். இந்தக்
குடும்பங்கள் அனைத்தும் இஸ்ரவேலின்
மகன் லேவியிலிருந்து வந்தவை.
20அம்ராம் 137 ஆண்டுகள் வாழ்ந்தான்.
அவன் தன் தந்தையின் சகோதரியாகிய
யோகெபேத்தை மணந்தான். அம்ராமும்
யோகெபேத்தும், ஆரோனையும் மோசே
யையும் பெற்றனர். 21கோராகு, நெப்பேக்,
சித்ரி ஆகியோர் இத்சேயாரின் மகன்கள்.
22மீசவேல், எல்சாபான், சித்ரி ஆகியோர்
ஊசியேலின் மகன்கள்.
23எலிசபாளை ஆரோன் மணந்தான்.
(எலிசபா அம்மினதாபின் மகளும், நகசோ
னின் சகோதரியுமாவாள்.) ஆரோனும்
எலிசபாளும் நாதாப், அபியூ, எலெயாசார்,
இத்தாமார் ஆகியோரைப் பெற்றனர். 24ஆசீர்,
எல்க்கானா, அபியாசாப் ஆகியோர்
கோராகின் ஜனங்களும் கோராகியரின் முற்
பிதாக்களும் ஆவார்கள். 25ஆரோனின்
மகனாகிய எலெயாசார் பூத்தியேலின் மகள்
ஒருத்தியை மணந்தான். அவள் பினெ
காசைப் பெற்றெடுத்தாள். இந்த ஜனங்கள்
எல்லோரும் இஸ்ரவேலின் மகனாகிய
லேவியின் குடும்பத்தினராவார்கள்.
26ஆரோனும் மோசேயும், இந்த கோத்திரத்
திலிருந்து வந்தனர். அவர்களிடம் தேவன்
பேசி, "குழுக்களாக என் ஜனங்களை
வழிநடத்து" என்றார். 27ஆரோனும்
மோசேயும் எகிப்து மன்னன் பார்வோ
னிடம் பேசினார்கள். எகிப்திலிருந்து இஸ்ர
வேல் ஜனங்கள் போவதற்கு அனுமதிக்
கும்படி அவர்கள் பார்வோனிடம் கூறி
னார்கள்.

### மோசேயை தேவன் மீண்டும் அழைத்தல்

28எகிப்தில் தேவன் மோசேயிடம் பேசி
னார். 29அவர், "நானே கர்த்தர். நான்
உன்னிடம் கூறுகின்றவற்றை எகிப்து அரச
னிடம் சொல்" என்றார்.
30ஆனால் மோசே, "நான் பேச திறமை
யில்லாதவன். அரசன் எனக்குச் செவி
சாய்க்க மாட்டான்" என்று பதிலளித்தான்.
7 கர்த்தர் மோசேயிடம், "நான் உன்னோடு
இருப்பேன். பார்வோனுக்கு நீ ஒரு
பேரரசனைப்போல்* தோன்றுவாய்.
ஆரோன் உனக்காகப் பேசுகிறவனாய்* இருப்
பான். 2நான் உனக்குக் கட்டளையிடுகிற
எல்லாவற்றையும் ஆரோனுக்குச் சொல்.
நான் சொல்லும் காரியங்களை அவன்
அரசனுக்குச் சொல்வான். இஸ்ரவேல் ஜனங்
கள் இத்தேசத்தை விட்டுச் செல்வதற்குப்
பார்வோன் அனுமதிப்பான். 3ஆனால் பார்

---

**நான் பேச திறமையில்லாதவன்** அல்லது ''என்னுடைய பேச்சு அந்நியர்களைப் போன்றிருக்கும்" எழுத்தின் பிரகாரமாக, ''நான் விருத்தசேதனம் செய்யப்படாத உதடுகளை உடையவன்" எனப் பொருள்படும்.

**பேரரசன்** அல்லது ''தேவன்" எனப் பொருள்படும்.

**பேசுகிறவன்** அல்லது ''தீர்க்கதரிசி" எனப் பொருள்படும்.

வோன் பிடிவாதமாக இருக்கும்படி நான்
செய்வேன். நீங்கள் சொல்லுகிற காரியங்
களுக்கு அவன் கீழ்ப்படியமாட்டான். நான்
யாரென்பதை நிரூபிப்பதற்காக எகிப்தில்
அநேக அற்புதங்களையும் அடையாளங்க
ளையும் செய்வேன். ஆனால் உங்களுக்கு
செவிகொடுக்க மறுப்பான். 4பிறகு நான்
எகிப்தை அதிகமாகத் தண்டிப்பேன். என்
ஜனங்களையும் வெளியே கொண்டு
வருவேன். 5அப்போது எகிப்து ஜனங்கள்
நானே கர்த்தர் என்பதை அறிவார்கள்.
அதன்பின் அவர்கள் தேசத்திலிருந்து என்
ஜனங்களை வழிநடத்துவேன்” என்றார்.
6கர்த்தரின் கட்டளைகளுக்கு மோசேயும்
ஆரோனும் கீழ்ப்படிந்தனர். 7பார்வோனிடம்
பேசும்போது, மோசே 80 வயதுள்ளவனாக
வும் ஆரோன் 83 வயதுள்ளவனாகவும்
இருந்தனர்.

### மோசேயின் கைத்தடி பாம்பாக மாறுதல்

8கர்த்தர் மோசேயிடமும், ஆரோனிடமும்,
9“பார்வோன் உங்கள் வல்லமையை
நிரூபித்துக்காட்டச் சொல்வான். உங்களிடம்
ஒரு அற்புதத்தைச் செய்ய வேண்டுமென
பார்வோன் கேட்பான். ஆரோனின் கைத்தடி
யை நிலத்தில் வீசும்படியாகச் சொல்.
பார்வோன் கவனித்துக் கொண்டிருக்கும்
போதே, கைத்தடி ஒரு பாம்பாக மாறும்”
என்றார்.
10எனவே மோசேயும், ஆரோனும்
பார்வோனிடம் போய், கர்த்தர் சொன்ன
படியே செய்தார்கள். ஆரோன் அவனது
கைத்தடியைக் கீழே எறிந்தான். பார்வோ
னும் அவனது அதிகாரிகளும் பார்த்துக்
கொண்டிருக்கையிலேயே, கைத்தடி பாம்பாக
மாறிற்று.
11எனவே, அரசன் தன் நாட்டு ஞானி
களுக்கும், மந்திரவாதிகளுக்கும் சொல்லி
யனுப்பினான். அம்மனிதர்களும் அவர்களது
உபாயங்களைப் பயன்படுத்தி ஆரோன்
செய்தவாறே செய்தனர். 12அவர்களும் தங்கள்
கைத்தடிகளை நிலத்தின்மேல் எறிந்தபோது,
அக்கைத்தடிகள் பாம்புகளாயின, ஆனால்
ஆரோனின் கைத்தடியோ அவற்றைத் தின்
றது. 13பார்வோனின் இருதயம் கடினமாகி,
இப்போதும் ஜனங்களைப் போக விட
மறுத்துவிட்டான். கர்த்தர் நடக்குமெனக்
கூறியபடியே இது நிகழ்ந்தது. மோசேயும்
ஆரோனும் கூறுவதைக் கேட்க அரசன்
மறுத்தான்.

### தண்ணீர் இரத்தமாகுதல்

14கர்த்தர் மோசேயிடம், “பார்வோன் பிடி
வாதமாக இருக்கிறான். பார்வோன் ஜனங்
களை அனுப்ப மறுக்கிறான். 15காலையில்
பார்வோன் நதிக்குப் போவான். நைல்
நதியினருகே பாம்பாக மாறின உனது
கைத்தடியை எடுத்துக்கொண்டு அவனிடம்
போ. 16அவனிடம் இதைக் கூறு: ‘எபிரெய
ஜனங்களின் தேவனாகிய கர்த்தர் என்னை
உன்னிடம் அனுப்பினார். பாலைவனத்தில்
அவரது ஜனங்கள் சென்று தொழுதுகொள்ள
அனுப்பு என்று உன்னிடம் கூறுமாறு
எனக்குக் கர்த்தர் சொன்னார். இதுவரைக்
கும் நீ கர்த்தர் கூறியவற்றிற்குச் செவிசாய்க்
கவில்லை. 17எனவே, அவரே கர்த்தர்
என்பதை உனக்குக் காட்டுவதற்காக சில
காரியங்களைச் செய்வதாக கர்த்தர் சொல்
கிறார். எனது கையிலிருக்கும் இந்தக்
கைத்தடியால் நைல் நதியின் தண்ணீரை
அடிப்பேன். நதி இரத்தமாக மாறும். 18நதியின்
மீன்கள் செத்துப்போகும், நதியிலிருந்து துர்
நாற்றம் வீச ஆரம்பிக்கும். அப்போது
நதியின் தண்ணீரை எகிப்தியர்கள் பருக
முடியாது’” என்று கூறினார்.
19கர்த்தர் மோசேயை நோக்கி, “ஆரோ
னின் கையிலுள்ள கைத்தடியை நதிகள்,
கால்வாய்கள், ஏரிகள், தண்ணீர் தேங்கி
நிற்கும் இடங்கள் அனைத்தின் மேலாகவும்
நீட்டும்படியாக ஆரோனுக்குக் கூறு, அவன்
அவ்வாறு செய்தவுடன் தண்ணீரெல்லாம்
இரத்தமாகும். மரத்தாலும் கல்லாலுமாகிய
ஜாடிகளில் நிரப்பியிருக்கும் தண்ணீர்
உட்பட, எல்லா இடங்களிலுள்ள தண்ணீ
ரும் இரத்தமாக மாறும்” என்றார்.
20ஆகையால் மோசேயும் ஆரோனும்
கர்த்தர் கட்டளையிட்டபடியே செய்தார்கள்.
ஆரோன் கைத்தடியை உயர்த்தி நைல்
நதியின் தண்ணீரை பார்வோன் முன்பாகவும்
அவனது அதிகாரிகள் முன்பாகவும் அடித்
தான். நதியின் தண்ணீர் முழுவதும்
இரத்தமாயிற்று. 21நதியின் மீன்கள் இறந்தன,
நதி நாற்றமெடுத்தது. நதியின் தண்ணீரை
எகிப்தியர்கள் பருக முடியாமலாயிற்று.
எகிப்தில் எல்லா இடங்களிலும் இரத்தம்
காணப்பட்டது.
22எகிப்திய மந்திரவாதிகளும் தங்கள்
உபாயங்களைப் பயன்படுத்தி இதையே செய்
தார்கள். எனினும், பார்வோன் மோசேக்கும்,
ஆரோனுக்கும் செவிசாய்க்க மறுத்தான்.
இது கர்த்தர் சொன்னபடியே நடந்தது.
23மோசேயும், ஆரோனும் செய்தவற்றைப்
பார்வோன் பொருட்படுத்தவில்லை. பார்
வோன் மறுபுறமாகத் திரும்பி வீட்டிற்குள்
சென்றான்.
24நதியிலிருந்து தண்ணீரை எகிப்தியர்கள்
பருக முடியாமற் போயிற்று. எனவே,
அவர்கள் நதியைச் சுற்றிலும் குடிப்பதற்
குரிய தண்ணீரைப் பெறுவதற்காக கிணறு
களைத் தோண்டினர்.

### தவளைகள்

25நைல் நதியை கர்த்தர் மாற்றிய பின்னர்
ஏழு நாட்கள் கழிந்தன.

8 கர்த்தர் மோசேயை நோக்கி, “பார்
வோனிடம் போய், ‘எனது ஜனங்கள்
என்னைத் தொழுதுகொள்ளச் செல்வதற்கு
அனுமதிகொடு! 2எனது ஜனங்கள் போக
நீ அனுமதிக்காவிட்டால், நான் எகிப்தைத்
தவளைகளால் நிரப்புவேன். 3நைல் நதி
தவளைகளால் நிரம்பும், அவை நதியை
விட்டு வெளியேறி உங்கள் வீடுகளுக்குள்
நுழையும். அந்தத் தவளைகள் உங்கள்
படுக்கையறைகளிலும், படுக்கைகளிலும்
இருக்கும். உங்கள் அதிகாரிகளின் வீடுகளி
லும், உங்கள் சமையல் அடுப்புகளிலும்
தண்ணீர் ஜாடிகளிலும் இருக்கும். 4தவளை
கள் உன் மீதும், உன் ஜனங்கள் மீதும்,
உன் அதிகாரிகள் மீதும் இருக்கும்’ என்று
கர்த்தர் சொல்கிறார்” என்று சொல்லுமாறு
கூறினார்.
5பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி,
“கால்வாய்கள், நதிகள், ஏரிகள் ஆகிய
வற்றின் மீது அவனது கைத்தடியைப்
பிடிக்குமாறு ஆரோனுக்குக் கூறு, அப்போது
எகிப்து தேசமெங்கும் தவளைகள் வெளியில்
வந்து சேரும்” என்றார்.
6எனவே ஆரோன் எகிப்தின் தண்ணீர்
நிலைகள் அனைத்தின்மீதும் தனது கையைத்
தூக்கினான். தவளைகள் தண்ணீரிலிருந்து
வெளியேறிவர ஆரம்பித்து எகிப்து தேச
மெங்கும் நிறைந்தன.
7மந்திரவாதிகளும் அதே காரியத்தைச்
செய்வதற்குத் தங்கள் உபாயங்களைப் பயன்
படுத்தினர். எனவே, இன்னும் அதிகமான
தவளைகள் எகிப்து தேசத்திற்குள் வந்தன!
8பார்வோன் மோசேயையும், ஆரோனை
யும் அழைத்து, “என்னிடமிருந்தும், எனது
ஜனங்களிடமிருந்தும் தவளைகளை அப்புறப்
படுத்தும்படியாக கர்த்தரை வேண்டிகொள்
ளுங்கள், நான் கர்த்தருக்குப் பலிகளைச்
செலுத்துவதற்கு ஜனங்களைப் போக
அனுமதிப்பேன்” என்றான்.
9மோசே பார்வோனை நோக்கி, “தவளை
களை எப்போது அப்புறப்படுத்தலாமென்
பதை எனக்குக் கூறு. நான் உனக்காகவும்
உனது ஜனங்களுக்காகவும் உனது அதிகாரி
களுக்காகவும் வேண்டிகொள்வேன், அப்
போது தவளைகள் உங்களையும் உங்கள்
வீடுகளையும் விட்டுச் செல்லும், நதியில்
மட்டுமே அவை வாழும். எப்போது
தவளைகள் போகவேண்டுமென நீ விரும்பு
கிறாய்?” என்றான்.
10பார்வோன், “நாளைக்கு” என்றான்.
மோசே, “நீ சொல்வதுபோல் நடக்கும்.
இதன் மூலமாக எங்கள் தேவனாகிய
கர்த்தரைப்போல வேறே தேவன் இல்லை
என்பதை நீ அறிவாய். 11தவளைகள்
உன்னையும், உன் வீட்டையும், உன்
அதிகாரிகளையும், உன் ஜனங்களையும்
விட்டு நீங்கும். ஆற்றில் மட்டுமே தவளைகள்
தங்கும்” என்றான்.
12மோசேயும், ஆரோனும் பார்வோனிடமி
ருந்து சென்றனர். பார்வோனுக்கு எதிராகக்
கர்த்தர் அனுப்பிய தவளைகளைக் குறித்து
மோசே அவரை நோக்கி ஜெபம் செய்தான்.
13மோசே கேட்டபடியே கர்த்தர் செய்தார்.
வீடுகளிலும், வெளிகளிலும், வயல்களிலும்
இருந்த தவளைகள் செத்துப்போயின.
14தவளைகள் குவியலாக சேர்க்கப்பட்டன.
அவை அழுகிப்போனதால், நாடெங்கும்
துர்நாற்றம் வீசியது. 15தவளைகளின் தொல்
லை இல்லாததைக் கண்ட பார்வோன்
மேலும் பிடிவாதம் கொண்டான். மோசேயும்
ஆரோனும் கேட்டுக்கொண்டதை பார்வோன்
செய்யவில்லை. கர்த்தர் கூறியபடியே இது
நடந்தது.

### பேன்கள்

16கர்த்தர் மோசேயை நோக்கி, “ஆரோ
னிடம் அவனது தடியை உயர்த்தி, பூமியின்
மீதுள்ள தூசியை அடிக்கும்படிகூறு, அப்
போது எகிப்து தேசத்தின் எல்லா இடங்
களிலும் தூசியெல்லாம் பேன்களாகும்”
என்றார்.
17அவர்கள் அவ்வாறே செய்தார்கள்.
ஆரோன் அவனது கையிலுள்ள தடியை
உயர்த்தி, பூமியின் மீதுள்ள தூசியில் அடித்
தான். எகிப்து முழுவதுமிருந்த தூசி
பேன்களாயிற்று. மிருகங்களின் மீதும், ஜனங்
களின் மீதும் அவை புகுந்தன.
18மந்திரவாதிகளும் தங்கள் உபாயங் களைப்
பயன்படுத்தி அவ்வாறே செய்ய முயன்றனர்.
தூசியிலிருந்து பேன்கள் வரும் படியாகச்
செய்ய மந்திரவாதிகளால் முடிய வில்லை.
பேன்கள் மிருகங்களின் மீதும், ஜனங்களின்
மீதும் தங்கின. 19தேவனின் வல்லமையால்
இவ்வாறு நிகழ்ந்தது என்று மந்திரவாதிகள்
பார்வோனுக்குக் கூறினார் கள். ஆனால்
பார்வோன் தன் மனதைக் கடினமாக்கி
அவர்கள் கூறியதைக் கேட்க மறுத்தான்.
கர்த்தர் கூறியபடியே இது நடந்தது.

### ஈக்கள்

20கர்த்தர் மோசேயை நோக்கி, “காலையில்
எழுந்து பார்வோனிடம் போ. பார்வோன்
நதிக்குப் போவான். அவனிடம், ‘எனது
ஜனங்கள் போய், என்னைத் தொழுது
கொள்ள அனுமதி. 21எனது ஜனங்களைப்
போக அனுமதிக்காவிட்டால் ஈக்கள் உங்கள்
வீட்டிற்குள்ளும், உன் மீதும், உன்
அதிகாரிகள் மீதும் மிகுதியாய் வரும்,
உன் தேசமெங்கும் ஈக்கள் நிரம்பியிருக்கும்!
22எகிப்திய ஜனங்களுக்கு செய்ததுபோல,
நான் இஸ்ரவேல் ஜனங்களுக்குச் செய்ய
மாட்டேன். என் ஜனங்கள் வாழும் கோசே
னில் ஈக்கள் இராது. இதன் மூலம் இந்த
ஜனங்களின் கர்த்தர் நான் என்பதை நீ
அறிவாய். 23எனவே நாளைக்கு எனது
ஜனங்களை உன் ஜனங்களைக் காட்டிலும்

வேறுவிதமாக நடத்துவேன். அதுவே எனது
அடையாளமாக அமையும்' என்று கூறு"
என்றார்.
[24]பிறகு கர்த்தர் தான் சொன்னபடியே
செய்து காட்டினார். மிகுதியான ஈக்கள்
எகிப்து தேசமெங்கும் பார்வோன் வீட்டி
னுள்ளும் அவன் அதிகாரிகளின் வீட்டி
னுள்ளும் நிரம்பியிருந்தன. ஈக்கள் தேசத்தை
அழித்துக் கொண்டிருந்தன. [25]எனவே
பார்வோன் மோசேக்கும், ஆரோனுக்கும்
சொல்லியனுப்பினான். பார்வோன் அவர்
களை நோக்கி, "இந்தத் தேசத்திலேயே
உங்கள் தேவனுக்குப் பலிகளைக் கொடுங்
கள்" என்றான்.
[26]ஆனால் மோசே, "அவ்வாறு செய்வது
சரியாக இருக்காது. எங்கள் தேவனாகிய
கர்த்தருக்குப் பலியிடுவதற்காக மிருகங்
களைக் கொல்வது கொடிய காரியம் என்று
எகிப்தியர்கள் நினைக்கிறார்கள். இதை
நாங்கள் இங்குச் செய்தால் எகிப்தியர்
எங்களைக் கண்டு, எங்கள் மீது கற்களை
வீசிக் கொன்று விடுவார்கள். [27]மூன்று
நாட்கள் பாலைவனத்திற்குப் போய் எங்கள்
தேவனாகிய கர்த்தருக்குப் பலி செலுத்த
அனுமதிக்கவும். நாங்கள் செய்யும்படியாகக்
கர்த்தர் கூறியதும் இதுதான்" என்றான்.
[28]அதற்குப் பார்வோன், "பாலைவனத்
திற்கு நீங்கள் போய் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு பலிகளைச் செலுத்துவதற்கு
உங்களை அனுமதிப்பேன். ஆனால் வெகு
தூரம் பயணம் செய்யக்கூடாது. இப்போது
போய் எனக்காக ஜெபம் செய்யுங்கள்"
என்றான்.
[29]மோசே, "பார், நான் போய் உன்னிட
மிருந்தும், உன் ஜனங்களிடமிருந்தும், உன்
அதிகாரிகளிடமிருந்தும், ஈக்களை நீக்கு
வதற்காக கர்த்தரைக் கேட்டுக் கொள்வேன்.
ஆனால் கர்த்தருக்கு ஜனங்கள் பலி செலுத்து
வதை நீ தடுக்கக்கூடாது" என்றான்.
[30]பின் மோசே பார்வோனிடமிருந்து
சென்று கர்த்தரிடம் ஜெபம் செய்தான்.
[31]மோசே கேட்டபடியே கர்த்தர் செய்தார்.
பார்வோன், அவன் அதிகாரிகள், ஜனங்கள்
ஆகியோரிடமிருந்தும் ஈக்களை அகற்றினார்.
எல்லா ஈக்களும் அகன்றன. [32]ஆனால்
பார்வோன் மீண்டும் பிடிவாதம் மிகுந்தவ
னாய் ஜனங்களைப் போக அனுமதிக்க
வில்லை.

### மிருகங்களின்மேல் நோய்

9 அப்போது கர்த்தர் மோசேயை நோக்கி,
"பார்வோனிடம் போய் அவனைப்
பார்த்து, 'எபிரெய ஜனங்களின் தேவனாகிய
கர்த்தர்: என்னைத் தொழுதுகொள்ளும்படி
என் ஜனங்களைப் போக அனுமதி! [2]நீ
விடாப்பிடியாக அவர்களை அனுப்ப மறுத்
தால், [3]உனது பண்ணை மிருகங்களுக்கு
எதிராக கர்த்தர் தமது வல்லமையைப்
பயன்படுத்துவார். ஒரு கொடிய நோயால்
உனது குதிரைகள், கழுதைகள், ஒட்டகங்கள்,
பசுக்கள், ஆடுகள், ஆகியவை பாதிக்கப்
படும்படியாகக் கர்த்தர் செய்வார். [4]எகிப்திய
ரின் மிருகங்களுக்கும், இஸ்ரவேலரின்
மிருகங்களுக்கும் கர்த்தர் வித்தியாசம் காட்டு
வார். இஸ்ரவேல் ஜனங்களின் மிருகங்கள்
எதுவும் சாகாது. [5]இது நடப்பதற்குரிய
காலத்தை கர்த்தர் குறித்து விட்டார். நாளை
இதனை இத்தேசத்தில் கர்த்தர் நிறைவேற்று
வார் என்று சொல்கிறார்' என்று சொல்"
என்றார்.
[6]மறுநாள் காலையில் எகிப்தின்
பண்ணை மிருகங்கள் அனைத்தும் மடிந்தன.
ஆனால் இஸ்ரவேலருக்குரிய மிருகங்கள்
எதுவும் மரிக்கவில்லை. [7]இஸ்ரவேலரின்
மிருகங்களில் ஏதேனும் மரித்திருக்கிறதா
என்று பார்ப்பதற்குப் பார்வோன் ஆட்களை
அனுப்பினான். இஸ்ரவேலரின் மிருகங்கள்
எதுவும் மரிக்கவில்லை என்று பார்வோன்
அறிந்தும் பிடிவாதமாகவே இருந்தான்.
அவன் ஜனங்களைப் போக அனுமதிக்க
வில்லை.

### கொப்புளங்கள்

[8]கர்த்தர் மோசேயையும் ஆரோனையும்
நோக்கி, "உலையிலுள்ள சாம்பலை உங்கள்
கைகளில் அள்ளிக்கொள்ளுங்கள். மோசே,
நீ பார்வோனுக்கு முன்பாக உன் கைகளி
லுள்ள சாம்பலைக் காற்றில் வீசு. [9]எகிப்து
தேசம் முழுவதும் இச்சாம்பல் பரவி தூளாக
இது மாறும். அந்தத் தூள் ஒரு மனிதன்மீதோ,
ஒரு மிருகத்தின்மீதோ பட்டவுடன் தோலின்
மீது கொப்புளங்கள் ஏற்படும்" என்றார்.
[10]எனவே மோசேயும், ஆரோனும் ஒரு
உலையிலிருந்து சாம்பலை அள்ளிக்
கொண்டனர். பின் அவர்கள் போய் பார்
வோனுக்கு முன்னே நின்று, மோசே சாம்ப
லைக் காற்றில் தூவினான். ஜனங்களின்
மீதும், மிருகங்களின்மீதும் கொப்புளங்கள்
தோன்றின. [11]மோசே இவ்வாறு செய்வதை
மந்திரவாதிகளால் தடுத்து நிறுத்த முடிய
வில்லை. ஏனெனில் மந்திரவாதிகளின் மீதும்
கொப்புளங்கள் தோன்றியிருந்தன. எகிப்து
தேசமெங்கும் இவ்வாறு நிகழ்ந்தது. [12]ஆனால்
பார்வோன் பிடிவாதமாக இருக்கும்படி
கர்த்தர் செய்தார். எனவே மோசேக்கும்,
ஆரோனுக்கும் செவிசாய்க்க, பார்வோன்
விரும்பவில்லை. கர்த்தர் கூறியவாறே இது
நடந்தது.

### கல்மழை காற்று

[13]பின்பு கர்த்தர் மோசேயிடம், "காலை
யில் எழுந்து பார்வோனிடம் போ. எபிரெய
ஜனங்களின் தேவனாகிய கர்த்தர், 'எனது
ஜனங்கள் என்னைத் தொழுதுகொள்வதற்குப்
போக அனுமதி கொடு! [14]நீ அவ்வாறு

செய்யாவிட்டால் எனது முழு சக்தியையும்
உனக்கும், உனது அதிகாரிகளுக்கும், உனது
ஜனங்களுக்கும் எதிராக அனுப்புவேன்.
அப்போது என்னைப்போன்ற தேவன்
இவ்வுலகில் எவரும் இல்லை என்பதை நீ
அறிவாய். 15என் வல்லமையைப் பயன்
படுத்தி ஒரு நோயை ஏற்படுத்தி அதனால்
உன்னையும், உனது ஜனங்களனைவரையும்
பூமியிலேயே இராதபடி அழிக்கமுடியும்.
16ஆனால் என் வல்லமையை உங்களுக்குக்
காட்டுவதற்காகவே உங்களை இங்கு
வைத்திருக்கிறேன். அப்போது உலகமெங்கு
முள்ள ஜனங்கள் என்னைக்குறித்து அறிந்து
கொள்வார்கள்! 17எனது ஜனங்களுக்கு
எதிராகவே நீ இன்னும் இருக்கிறாய்.
அவர்களை விடுதலை செய்வதற்கு நீ
அனுமதிக்கவில்லை. 18எனவே நாளைக்கு
இதே நேரத்தில், ஒரு கொடிய கல்மழை
காற்றை வீசச்செய்வேன். எகிப்து தேசத்தில்
இன்றுவரை அதைப்போன்ற புயல்காற்று
வீசியதே இல்லை. 19இப்போதே உனது
மிருகங்களை ஒரு பாதுகாப்பான இடத்தில்
சேர்த்துவிடு. வயல்களில் காணப்படும்
உனக்குரிய பொருள் எது வாயினும்
அதைப் பாதுகாப்பான இடத்தில் சேர்த்து
விடு. ஏனெனில் வயலில் இருக்கும் எந்த
மனிதனாயினும் சரி, மிருகமாயினும் சரி,
அது கொல்லப்படும். அனைத்து பொருட்
களின் மீதும் கல்மழை காற்று வீசும்
என்று சொல்கிறார்' என்று சொல்'"
என்றார்.

20கர்த்தரின் செய்திக்குப் பார்வோனின்
அதிகாரிகளில் சிலர் செவிசாய்த்தனர். அவர்
கள் தங்கள் மிருகங்களையும், அடிமை
களையும், வீடுகளுக்குள் விரைவாகச்
சேர்த்தனர். 21ஆனால் மற்றவர்கள் கர்த்தரின்
செய்தியை ஒரு பொருட்டாய் எண்ண
வில்லை. அவர்கள் வயல்களிலிருந்த எல்லா
அடிமைகளையும் மிருகங்களையும் விட்டு
விட்டனர்.

22கர்த்தர் மோசேயிடம், "உன் கைகளை
மேலே உயர்த்து. எகிப்து முழுவதும்
கல்மழை பொழியத்துவங்கும். எகிப்தின்
வயல்களிலுள்ள எல்லா ஜனங்கள், விலங்கு
கள் மற்றும் செடிகளின் மீதும் கல்மழை
விழ ஆரம்பிக்கும்" என்றார்.

23மோசே தனது கைத்தடியை உயர்த்
தினான். இடி, மின்னல், புயல் ஆகியவை
எகிப்தைப் பாதிக்குமாறு கர்த்தர் செய்தார்.
24எகிப்தில் புயல் வீசியபோது மின்னல்
அதனூடே தோன்றியது. எகிப்து ஒரு
தேசமான பின்னர், அங்கு ஏற்பட்ட மிகக்
கொடிய புயல் இதுவேயாகும். 25புயல்,
எகிப்தின் வயல்களிலிருந்த எல்லாவற்றை
யும், ஜனங்கள், மிருகங்கள், தாவரங்கள்
அனைத்தையும் அழித்தது. வயல்களின்
மரங்களைப் புயல் வீழ்த்தியது. 26எபிரெய
ஜனங்கள் வாழ்ந்த கோசேன் தேசத்தில்
மட்டும் புயலின் பாதிப்பு ஏற்படவில்லை.

27பார்வோன் மோசேயையும், ஆரோ
னையும் அழைத்து அவர்களிடம், "இம்முறை
நான் பாவம் செய்தேன். கர்த்தர் நீதியானவர்.
நானும் எனது ஜனங்களும் குற்றம்
செய்தோம். 28தேவன் அனுப்பிய புயலும்,
இடியும், கல்மழையும் கொடியவை. புயலை
நிறுத்தும்படியாகத் தேவனிடம் விண்ணப்
பியுங்கள். நான் நீங்கள் போவதற்கு
அனுமதிப்பேன். நீங்கள் இங்குத் தங்க
வேண்டியதில்லை" என்றான்.

29மோசே பார்வோனிடம், "நான் நகரத்தை
விட்டுப் புறப்பட்டதும் கர்த்தரை நோக்கி
ஜெபம் செய்தபடியே என் கைகளை
உயர்த்துவேன். இடியும் கல்மழையும் நின்று
போகும், இந்த பூமியில் கர்த்தர் இருக்கிறார்
என்பதை அப்போது நீ அறிவாய். 30ஆனால்
நீயும் உனது அதிகாரிகளும் உண்மை
யாகவே கர்த்தருக்குப் பயந்து அவரை
மதிக்கவில்லை என்பதை நான் அறிவேன்"
என்றான்.

31சணல் பயிர்களில் ஏற்கெனவே கதிர்க
ளும், வாற்கோதுமைப் பயிரில் பூக்களும்
தோன்றியிருந்தன. இச்செடிகள் அனைத்தும்
அழிந்தன. 32ஆனால் கோதுமையும், கம்பும்,
பிற தானியங்களைக் காட்டிலும் தாமதமாக
அறுவடை ஆகும். எனவே இவை அழிக்கப்
படவில்லை.

33மோசே பார்வோனிடமிருந்து புறப்பட்டு
நகரத்திற்கு வெளியே போய் கர்த்தரை
நோக்கி ஜெபம் செய்ய கரங்களை உயர்த்தி
னான். உடனே கல்மழையும், புயலும்,
இடியும்கூட நின்றுபோனது.

34மழை, புயல், இடி ஆகியவை நின்று
போயின என்பதைக் கண்ட பார்வோன்
மீண்டும் தவறு செய்தான். அவனும், அவ
னது அதிகாரிகளும் மீண்டும் தங்கள்
இருதயத்தைக் கடினப்படுத்தினார்கள். 35இஸ்ர
வேல் ஜனங்களை விடுதலை செய்ய
பார்வோன் மறுத்தான். மோசேயின்
மூலமாக கர்த்தர் கூறியபடியே இது
நிகழ்ந்தது.

### வெட்டுக்கிளிகள்

10 கர்த்தர் மோசேயை நோக்கி, "பார்வோ
னிடம் போ. அவனையும், அவனது
அதிகாரிகளையும் பிடிவாதம் உடையவர்
களாக்கினேன். எனது வல்லமை மிக்க
அற்புதங்களை அவர்களுக்குக் காட்டும்
படியாக நான் இதைச் செய்தேன். 2நான்
எகிப்தில் செய்த அற்புதங்களையும், மற்ற
அதிசயமான காரியங்களையும் குறித்து
நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கும், பேரப்
பிள்ளைகளுக்கும் சொல்வதற்காகவும் நான்
இதைச் செய்தேன். அப்போது நானே
கர்த்தர் என்பதை நீங்கள் எல்லோரும்
அறிவீர்கள்" என்றார்.

3ஆகையால் மோசேயும், ஆரோனும்

பார்வோனிடம் சென்றார்கள். அவர்கள்
அவனை நோக்கி, “எபிரெய ஜனங்களின்
தேவனாகிய கர்த்தர், ‘எத்தனை காலம்
எனக்குக் கீழ்ப்படிய மறுப்பாய்? எனது
ஜனங்கள் என்னைத் தொழுதுகொள்வதற்குப்
போக அனுமதி! 4நீ எனது ஜனங்களைப்
போகவிடாவிட்டால், நாளை உனது
நாட்டிற்குள் வெட்டுக்கிளிகளை அனுப்
புவேன். 5வெட்டுக்கிளிகள் நாட்டை ஆக்கிர
மிக்கும். பூமியைப் பார்க்கமுடியாத அள
விற்கு வெட்டுக்கிளிகள் நிரம்பும். புயலின்
அழிவிற்குத் தப்பியவை அனைத்தும்
வெட்டுக்கிளிகளால் அழிக்கப்படும். வயலி
லுள்ள மரங்களின் இலைகள் அனைத்தையும்
வெட்டுக்கிளிகள் தின்றுவிடும். 6உனது
வீட்டிலும், உனது அதிகாரிகளின் வீடு
களிலும், எகிப்திலுள்ள எல்லா வீடுகளிலும்
வெட்டுக்கிளிகள் நிறைந்துவிடும். உங்கள்
பிதாக்களோ, முற்பிதாக்களோ பார்த்திராத
அளவிற்கு வெட்டுக்கிளிகள் காணப்படும்.
எகிப்தில் ஜனங்கள் வாழ ஆரம்பித்த காலம்
முதல் இன்றுவரை பார்த்த வெட்டுக்
கிளிகளைக் காட்டிலும் அதிகமான வெட்டுக்
கிளிகள் காணப்படும்’ என்கிறார்” என்று
சொன்னார்கள். பிறகு மோசே திரும்பி,
பார்வோனை விட்டுப் புறப்பட்டான்.
7அப்போது அதிகாரிகள் பார்வோனிடம்,
“இந்த ஜனங்களால் எத்தனை நாட்கள்
நாம் இக்கட்டில் அகப்பட்டிருப்போம்? அவர்
கள் தேவனாகிய கர்த்தரைத் தொழுது
கொள்ள அந்த ஜனங்களைப் போகவிடும்.
நீர் அவர்களைப் போகவிடாவிட்டால், நீர்
அறிந்துகொள்ளும் முன்பு எகிப்து அழிக்கப்
படும்!” என்று கூறினார்கள்.
8எனவே பார்வோன் மோசேயையும்,
ஆரோனையும் திரும்பவும் தன்னிடம்
அழைக்கும்படிக்கு அதிகாரிகளை அனுப்பி
னான். பார்வோன் அவர்களை நோக்கி,
“நீங்கள் போய், உங்கள் தேவனாகிய
கர்த்தரைத் தொழுதுகொள்ளுங்கள், ஆனால்
யார் யார் போகப்போகிறீர்கள் என்பதைச்
சரியாக எனக்குக் கூறுங்கள்” என்றான்.
9மோசே பதிலாக, “இளைஞரும், முதியோ
ருமாகிய எல்லா ஜனங்களும் போவோம்.
எங்களோடு எங்கள் மகன்களையும்,
மகள்களையும்,ஆடுகளையும், மாடுகளையும்,
அழைத்துச் செல்வோம். கர்த்தரின்
பண்டிகை எங்கள் எல்லோருக்கும் உரியது
என்பதால் நாங்கள் எல்லோரும் போவோம்”
என்று கூறினான்.
10பார்வோன் அவர்களிடம், “நான்
உங்களையும் உங்கள் ஜனங்களையும்
எகிப்தை விட்டுப் போகும்படியாக அனு
மதிக்கும் முன்னர் கர்த்தர் உங்களோடு
கண்டிப்பாக இருக்கவேண்டும். பாருங்கள்,
நீங்கள் தீமையான ஒன்றைத் திட்டமிடு
கிறீர்கள். 11ஆண்கள் மாத்திரம் போய்
கர்த்தரைத் தொழுதுகொள்ளலாம். நீங்கள்
முதலில் அதைத்தான் என்னிடம் கேட்டீர்
கள். உங்கள் ஜனங்கள் எல்லோரும் போக
முடியாது” என்று கூறி, பார்வோன்
மோசேயையும், ஆரோனையும் அனுப்பி
விட்டான்.
12கர்த்தர் மோசேயை நோக்கி, “இப்போது
உன் கைகளை எகிப்து தேசத்திற்கு மேலாக
உயர்த்து, அப்போது எகிப்து நாடெங்கும்
வெட்டுக்கிளிகள் வந்து பரவும். புயல்
அழிக்காமல்விட்ட எல்லா தாவரங்களையும்
வெட்டுக்கிளிகள் தின்றுவிடும்” என்றார்.
13எனவே, மோசே தனது கைத்தடியை
எகிப்து நாட்டிற்கு மேலாக உயர்த்தினான்.
கிழக்கிலிருந்து ஒரு பெருங்காற்று வீசும்
படியாகக் கர்த்தர் செய்தார். பகலும் இரவும்
காற்று வீசிற்று. காலையில் காற்று
எகிப்திற்குள் வெட்டுக்கிளிகளைக் கொண்டு
வந்திருந்தது. 14வெட்டுக்கிளிகள் எகிப்து
நாட்டிற்குள் வந்து பூமியில் விழுந்தன.
எகிப்தில் அதுவரை அந்த அளவில்
வெட்டுக்கிளிகள் வந்ததுமில்லை, இனி
மேலும் அத்தனை எண்ணிக்கை வெட்டுக்
கிளிகள் எகிப்தில் வருவதும் இல்லை.
15வெட்டுக்கிளிகள் தேசம் முழுவதும் பூமி
மேல் இருள் மூடும்வரை நிரப்பின. கல்மழை
அழிக்காமல் விட்ட மரங்களின் கனிகளை
யும், பூமியிலுள்ள தாவரங்கள் அனைத்
தையும் வெட்டுக்கிளிகள் தின்று விட்டன.
எகிப்தில் எங்கும் மரங்களிலும் செடி
களிலும் ஒரு இலைகூட இருக்கவில்லை.
16பார்வோன் அவசரமாக மோசேயையும்,
ஆரோனையும் அழைத்துவரச் செய்து, “நான்
உங்கள் தேவனாகிய கர்த்தருக்கும் உங்களுக்
கும் எதிராகப் பாவம் செய்தேன். 17இம்முறை
எனது பாவங்களுக்காக என்னை மன்னி
யுங்கள். இந்த ‘மரணத்தை’ (வெட்டுக்
கிளிகளை) என்னிடமிருந்து அகற்றுவதற்கு
கர்த்தரிடம் கேளுங்கள்” என்றான்.
18மோசே பார்வோனிடமிருந்து சென்று
கர்த்தரிடம் ஜெபித்தான். 19எனவே, கர்த்தர்
காற்றின் திசையை மாற்றி மேற்கிலிருந்து
மிகப் பலமான காற்று ஒன்று வீசும்படியாகச்
செய்தார். அது வெட்டுக்கிளிகளை எகிப்தி
லிருந்து அகற்றி, செங்கடலில் விழச்
செய்தது. எகிப்தில் ஒரு வெட்டுக்கிளி
கூட இருக்கவில்லை! 20ஆனால், பார்வோன்
மீண்டும் பிடிவாதமாக இருக்குமாறு கர்த்தர்
செய்தார். இஸ்ரவேல் ஜனங்கள் போவதற்குப்
பார்வோன் அனுமதி தரவில்லை.

### காரிருள்

21கர்த்தர் மோசேயை நோக்கி, “உனது
கைகளை மேலே உயர்த்து. எகிப்தை
இருள் மூடும். நீங்கள் உணர்ந்துகொள்ளுமள
விற்கு இருள் மிகுதியாக இருக்கும்!”
என்றார்.
22மோசே கைகளை மேலே உயர்த்திய
போது, இருண்ட மேகமானது எகிப்தை

மறைத்தது. எகிப்தை மூன்று நாட்கள் இருள்
மூடியது. 23 ஒருவரையொருவர் பார்க்க
முடியவில்லை. மூன்று நாட்களாக எந்த
இடத்திற்கும் போவதற்காக ஜனங்கள்
எழுந்திருக்கவில்லை. ஆனால் இஸ்ரவேல்
ஜனங்கள் வாழ்ந்த எல்லா இடங்களிலும்
ஒளி இருந்தது.
24 பார்வோன் மீண்டும் மோசேயை
வரவழைத்து, “நீங்கள் போய்க் கர்த்தரை
தொழுதுகொள்ளுங்கள்! நீங்கள் உங்கள்
குழந்தைகளையும் அழைத்துப் போகலாம்.
ஆனால் உங்கள் ஆடுகளையும், மாடுகளை
யும் இங்கே விட்டுச் செல்லவேண்டும்”
என்றான்.
25 மோசே, “நாங்கள் போகும்போது எங்
கள் ஆடுகளையும், மாடுகளையும் கொண்டு
செல்வதோடு மட்டுமல்லாது, எங்கள் தேவ
னாகிய கர்த்தரைத் தொழுதுகொள்வதற்குப்
பயன்படுத்தும் பொருட்டுப் பலிகளையும்,
காணிக்கைகளையும் நீங்களே கூட எங்க
ளுக்குக் கொடுப்பீர்கள்! 26 ஆம், கர்த்தரைத்
தொழுதுகொள்வதற்கு நாங்கள் எங்கள்
மிருகங்களையும் கொண்டு செல்வோம். எந்த
மிருகத்தின் குளம்பையும்கூட விட்டுச்செல்ல
மாட்டோம். கர்த்தரைத் தொழுது
கொள்வதற்குத் தேவைப்படுபவை எவை
என்பதை இன்னமும் நாங்கள் சரியாக
அறியவில்லை. நாங்கள் போகவிருக்கும்
இடத்தை அடையும்போது தான் அதை
அறிந்துகொள்வோம், எனவே இந்தப்
பொருட்கள் எல்லாவற்றையும் நாங்கள்
கொண்டு செல்ல வேண்டும்” என்றான்.
27 கர்த்தர் பார்வோனை இன்னும் பிடி
வாதம் உடையவனாக்கினார். எனவே
பார்வோன் அவர்களை அனுப்ப மறுத்தான்.
28 பிறகு பார்வோன் மோசேயிடம், “இங்
கிருந்து போய்விடு! நீ இங்கு மீண்டும்
வருவதை நான் விரும்பவில்லை! என்னைப்
பார்க்க நீ மீண்டும் வந்தால், நீ சாவாய்”
என்று கூறினான்.
29 அப்போது மோசே பார்வோனை
நோக்கி, “நீ ஒரு விஷயத்தைச் சரியாகச்
சொன்னாய். நான் உன்னைப் பார்ப்பதற்கு
மீண்டும் வரப்போவதில்லை!” என்றான்.

### முதற்பேறான குழந்தைகளின் மரணம்

11 அப்போது கர்த்தர் மோசேயைப்
பார்த்து, “பார்வோனுக்கும், எகிப்துக்
கும் எதிராக நான் செய்யவிருக்கும் கேடு
இன்னும் ஒன்று உண்டு. இதன்பிறகு, அவன்
உங்களை எகிப்திலிருந்து அனுப்பி விடு
வான். உண்மையில், இந்நாட்டைவிட்டு
நீங்கள் வெளியேறும்படி துரத்துவான். 2 ‘‘நீ
இஸ்ரவேருக்கு இந்த செய்தியைத் தெரியப்
படுத்து: இஸ்ரவேலின் ஒவ்வொரு ஆண்க
ளும், பெண்களும் உங்கள் அக்கம்
பக்கத்தாரிடம் வெள்ளியாலும் பொன்னாலு
மாகிய பொருட்களை உங்களுக்குக்
கொடுக்கும்படியாகக் கேட்கவேண்டும்.
3 எகிப்தியர்கள் உங்களிடம் இரக்கத்துடன்
இருக்கும்படி செய்வேன். எகிப்திய ஜனங்
களும், பார்வோனின் சொந்த அதிகாரி
களும்கூட மோசேயைப் பெரியவனாக
ஏற்கெனவே கருதுகிறார்கள்”' என்றார்.
4 மோசே ஜனங்களிடம், “கர்த்தர் ‘இன்று
நள்ளிரவில், நான் எகிப்தின் வழியாகச்
செல்வேன். 5 எகிப்தின் முதற்பேறான ஆண்
குழந்தைகள் அனைவரும், எகிப்து மன்ன
னாகிய பார்வோனின் முதற்பேறான மகன்
முதல், மாவரைக்கிற அடிமைப் பெண்ணின்
முதற்பேறான மகன்வரைக்கும் எல்லோரும்
மரிப்பார்கள். முதற்பேறான மிருகங்கள்கூட
மடியும். 6 கடந்த எந்தக் காலத்தைக் காட்டிலும்
எகிப்தின் அழுகுரல் பயங்கரமா யிருக்கும்.
வருங்காலத்தில் நடக்கக் கூடியதைக்
காட்டிலும் அது கொடியதாக இருக்கும்.
7 ஆனால் இஸ்ரவேல் ஜனங்களில் ஒருவரும்
பாதிக்கப்படுவதில்லை. ஒரு நாய் கூட
அவர்களைப் பார்த்துக் குரைக்காது.
இஸ்ரவேல் ஜனங்களில் ஒருவனும், மிருகங்
களில் ஒன்றும் காயமடைவதில்லை. இதன்
மூலமாக, எகிப்தியரைக் காட்டிலும் இஸ்ர
வேலரை நான் வித்தியாசமாக நடத்துவதை
நீங்கள் அறிவீர்கள். 8 அப்போது உங்கள்
அடிமைகள் (எகிப்தியர்கள்) எல்லோரும்
குனிந்து என்னைத் தொழுது கொள்வார்கள்.
அவர்கள், “உங்கள் ஜனங்களை உங்களோடு
அழைத்துக்கொண்டு புறப்பட்டுச் செல்லுங்
கள்” என்பார்கள். அப்போது கோபத்தோடு
நான் பார்வோனை விட்டுப் புறப்படுவேன்!’
என்றார்” என்று கூறினான்.
9 பின்பு கர்த்தர் மோசேயிடம், “பார்வோன்
நீ சொன்னதைக் கேட்கவில்லை. ஏன்?
நான் எகிப்தில் என் மகா வல்லமையைக்
காட்ட அப்போதுதான் முடியும்” என்றார்.
10 எனவேதான், மோசேயும், ஆரோனும்
இம்மகா அற்புதங்களைப் பார்வோனுக்கு
முன்பாகச் செய்து காட்டினார்கள். இதனா
லேயே இஸ்ரவேல் ஜனங்களைத் தனது
தேசத்திலிருந்து அனுப்பாதபடி பார்வோ
னைப் பிடிவாதமுள்ளவனாக கர்த்தர்
ஆக்கினார்.

### பஸ்கா பண்டிகை

12 மோசேயும் ஆரோனும் இன்னும் எகிப்
தில் இருக்கையில் கர்த்தர்
அவர்களிடம் பேசினார்: 2 “இம்மாதம்*
உங்கள் ஆண்டின் முதல் மாதமாக இருக்கும்.
3 இஸ்ரவேலின் எல்லா கோத்திரத்திற்கும்
இந்தக் கட்டளை உரியது: இம்மாதத்தின்
பத்தாவது நாள் ஒவ்வொரு மனிதனும்
அவனது வீட்டினருக்காக ஒரு

---

**இம்மாதம்** ஆபிப் (நிசான்) மாதத்தைக் குறிக்கும். இது மார்ச் மாதத்தின் நடுவிலிருந்து ஏப்ரல் மாதத்தின் நடுவிலுள்ள நாட்களாகும்.

ஆட்டுக்குட்டியைக் கொண்டுவர வேண்டும்.
4ஒரு ஆட்டுக்குட்டியை உண்பதற்கு வேண்
டிய ஆட்கள் அவனது வீட்டில் இல்லா
திருந்தால், அவன் அக்கம் பக்கத்தாரில்
சிலரை உணவைப் பகிர்ந்து கொள்வதற்கு
அழைக்க வேண்டும். ஆட்டுக்குட்டி
ஒவ்வொருவரும் உண்ணப் போது மானதாக
இருக்கவேண்டும். 5அந்த ஆட்டுக்குட்டி ஒரு
வயது நிரம்பிய கடாவாகவும்,
நோயற்றதாகவும் இருக்கவேண்டும். அது
ஒரு செம்மறி ஆடு அல்லது வெள்ளாட்டின்
குட்டியாக இருக்கலாம். 6மாதத்தின்
பதினான்காவது நாள்வரை அம்மிருகத்தைக்
கவனித்துக் கொள்ள வேண்டும். அந்நாளில்,
இஸ்ரவேல் கோத்திரத்தின் எல்லா
ஜனங்களும் மாலைப் பொழுதில் அவற்றைக்
கொல்ல வேண்டும். 7நீங்கள் அதன்
இரத்தத்தைச் சேகரிக்க வேண்டும். இந்த
இரத்தத்தை, அதன் இறைச்சியை
உண்ணுகிறவர்கள் தங்கள் வீட்டு வாசலின்
மேற்பகுதியிலும், பக்க வாட்டிலும்
நிலைக்கால்களில் பூசவேண்டும்.
8“இந்த இரவில், ஆட்டுக்குட்டியை
நெருப்பில் வாட்டியெடுத்து மாமிசம் எல்லா
வற்றையும் உண்ண வேண்டும். நீங்கள்
கசப்பான கீரை வகைகளையும், புளிக்காத
ரொட்டியையும் கூட சாப்பிட வேண்டும்.
9ஆட்டுக்குட்டியை நீங்கள் தண்ணீரில்
வேகவைக்கக்கூடாது. அந்த ஆட்டுக்குட்டி
முழுவதையும் நெருப்பினால் சுடவேண்டும்.
அதன் தலை, கால்கள் மற்றும் உள்
உறுப்புக்கள் எல்லாம் இருக்க வேண்டும்.
10அந்த இரவுக்குள் நீங்கள் மாமிசம் முழு
வதையும் சாப்பிட்டு முடிக்க வேண்டும்.
காலையில் மாமிசம் மீதியாயிருந்தால்
நெருப்பில் அந்த மாமிசத்தை சுட்டு எரிக்க
வேண்டும்.
11“நீங்கள் உணவைச் சாப்பிடும்போது
பயணத்திற்குத் தயாரான உடை அணிந்தவர்
களாய் இருக்க வேண்டும். உங்கள் மிதியடி
களை அணிந்து, கைத்தடிகளை ஏந்தியவர்
களாய் இருக்க வேண்டும். நீங்கள் அதை
அவசரமாகச் சாப்பிட வேண்டும். ஏனென்
றால், இது கர்த்தருடைய பஸ்கா பண்டிகை.*
கர்த்தர் தமது ஜனங்களைப் பாதுகாத்து,
எகிப்திலிருந்து விரைவாக வெளியில்
கொண்டுவரும் நேரம்.
12“இன்றிரவில் நான் எகிப்தின் வழியாகச்
சென்று ஒவ்வொரு முதற்பேறான மனிதனை
யும், மிருகத்தையும் கொன்றுபோடுவேன்.
இவ்வாறாக, எகிப்தின் தேவர்கள் அனைத்
தின் மேலும் தீர்ப்பு கொண்டு வருவேன்.
நானே கர்த்தர் என்பதைக் காட்டுவேன்.
13ஆனால் உங்கள் வீடுகளில் பூசப்பட்ட
இரத்தம் ஒரு விசேஷ அடையாளமாக
இருக்கும், நான் இரத்தத்தைப் பார்த்ததும்
உங்கள் வீட்டைக் கடந்து போவேன்.*
எகிப்தின் ஜனங்களுக்குத் தீமையான
காரியங்கள் ஏற்படுமாறு செய்வேன். அத்தீய
நோய்கள் ஒன்றும் உங்களைப் பாதிக்காது.
14“இந்த இரவை நீங்கள் எப்போதும்
நினைவுகூருவீர்கள். இது உங்களுக்கு ஒரு
விசேஷ விடுமுறை நாளாக இருக்கும்.
எப்போதும் இந்த விடுமுறை நாளில் உங்கள்
சந்ததியார் கர்த்தரை மகிமைப்படுத்து
வார்கள். 15இந்த விடுமுறையின் ஏழு நாட்
களும் புளிக்காத மாவினால் செய்த
ரொட்டியை உண்ணவேண்டும். இந்த
விடுமுறையின் முதல் நாளில் புளிப்பான
யாவற்றையும் உங்கள் வீடுகளிலிருந்து
அகற்ற வேண்டும். இப்பண்டிகையின் ஏழு
நாட்களிலும் யாரும் புளிப்பான எதையும்
உண்ணக்கூடாது. யாரேனும் புளிப்பா
னதைச் சாப்பிட்டால், அவன் இஸ்ரவேல்
ஜனங்களிலிருந்து ஒதுக்கப்படவேண்டும்.
16விடுமுறை காலத்தின் முதல் நாளிலும்
கடைசி நாளிலும் பரிசுத்த சபைக்
கூட்டங்கள் நடைபெற வேண்டும். இந்நாட்
களில் நீங்கள் எந்த வேலையும் செய்யக்
கூடாது. உங்கள் சாப்பாட்டிற்கான
உணவைத் தயாரிப்பது மட்டுமே நீங்கள்
செய்யும் வேலையாக இருக்க வேண்டும்.
17நீங்கள் புளிப்பில்லா அப்பப் பண்டிகையை
நினைவுகூர வேண்டும். ஏனெனில் இந்நாளில்
உங்கள் ஜனங்கள் எல்லோரையும் குழுக்
களாக* எகிப்திலிருந்து வெளியே கொண்டு
வந்தேன். எனவே உங்கள் எல்லா
சந்ததியாரும் இந்த நாளை நினைவுகூர
வேண்டும். எந்நாளும் நிலைபெற்றிருக்கும்
சட்டமாக இது அமையும். 18எனவே (நிசான்)
முதல் மாதத்தின் பதினான்காவது நாளில்
நீங்கள் புளிப்பில்லாத ரொட்டியை உண்ணத்
துவங்க வேண்டும். அதே மாதத்தின்
இருபத்தொன்றாம் நாள் மாலைவரைக்கும்
இந்த புளிப்பில்லாத ரொட்டியைத்
தொடர்ந்து நீங்கள் சாப்பிட வேண்டும்.
19ஏழு நாட்கள் உங்கள் வீடுகளில் எந்தப்
புளிப்பான பொருளும் காணப்படக்கூடாது.
இஸ்ரவேலின்குடிமகனாகிலும், அந்நியனாகி
லும், புளிப்பானதைச் சாப்பிட்டால் அவன்
இஸ்ரவேல் ஜனத்தினின்று ஒதுக்கப்பட
வேண்டும். 20இந்த ஓய்வு நாளில் நீங்கள்
புளிப்புள்ள உணவை உண்ணவே கூடாது.
நீங்கள் எங்கு வாழ்ந்தாலும் புளிப்பு இல்லாத
மாவால் செய்த ரொட்டியையே உண்ண
வேண்டும்” என்றார்.
21மோசே எல்லா மூப்பர்களையும்

---

**பஸ்கா பண்டிகை** எபிரெய வார்த்தையில் ‘‘தவிர்ப்பது, கடந்து செல்வது” அல்லது ‘‘பாது காப்பது” எனப் பொருள்படும்.

**கடந்து போ** அல்லது ‘‘பாதுகாப்பு” எனப் பொருள்படும்.

**குழுக்கள்** இஸ்ரவேலில் ஜனங்கள் கர்த்தருடைய சிப்பாய்களைப் போல பங்குபங்காக கோத்திரங் களில் வரிசையாக நடத்தப்பட்டனர்.

(தலைவர்கள்) ஒன்றாகக் கூடிவரச் செய்தான்.
மோசே அவர்களிடம், “உங்கள் குடும்பங்க
ளுக்குரிய ஆட்டுக்குட்டிகளைக் கொண்டு
வந்து, பஸ்கா பண்டிகைக்காக அவற்றைக்
கொல்லுங்கள். [22]ஈசோப் தழைகளை*
எடுத்து, அவற்றை இரத்தம் நிரம்பியிருக்கும்
கிண்ணங்களில் தோய்த்து எடுத்து வாசல்
நிலைக்கால்களின் பக்கங்களிலும், மேலேயும்
இரத்தத்தைப் பூசுங்கள். காலைவரைக்கும்
ஒருவனும் அவனது வீட்டை விட்டு எங்கும்
போகக்கூடாது. [23]எகிப்தின் முதற்பேறான
வற்றை அழிப்பதற்காகக் கர்த்தர் கடந்து
செல்லும்போது அவர் வாசல் நிலைக்கால்க
ளிலிருக்கும் இரத்தத்தைக் காண்பார்.
அப்போது கர்த்தர் அந்த வீட்டைப்
பாதுகாப்பார்.* அழிக்கிறவன் உங்கள்
வீட்டிற்குள் வந்து, உங்களைச் சேதப்படுத்த
கர்த்தர் அவனை விடமாட்டார். [24]நீங்கள்
இக்கட்டளையை நினைவுகூர வேண்டும்.
உங்களுக்கும், உங்கள் சந்ததிக்கும் எந்நாளும்
இது சட்டமாக இருக்கும். [25]கர்த்தர்
உங்களுக்குக் கொடுக்கிற தேசத்திற்குப்
போனபிறகும் இதை நினைவுகூர்ந்து செய்ய
வேண்டும். [26]உங்கள் பிள்ளைகள், ‘நீங்கள்
ஏன் இந்த பண்டிகையைக் கொண்டாடுகிறீர்
கள்?’ என்று உங்களைக் கேட்டால் [27]நீங்கள்,
‘இந்தப் பஸ்காப் பண்டிகை கர்த்தரை
மகிமைப்படுத்துவதற்குரியதாகும். ஏனெனில்,
நாங்கள் எகிப்தில் வாழ்ந்தபோது கர்த்தர்
இஸ்ரவேலரின் வீடுகளைக் கடந்து சென்று
எகிப்தியர்களைக் கொன்றார், ஆனால் அவர்
நமது வீடுகளின் ஜனங்களைக் காப்பாற்றி
னார். எனவே இன்று ஜனங்கள் கர்த்தரைப்
பணிந்து தொழுதுகொள்கிறார்கள்’ என்று
கூறுங்கள்” என்றார்.

[28]கர்த்தர் இந்தக் கட்டளையை மோசேக்
கும், ஆரோனுக்கும் கொடுத்தார். எனவே
இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தர் கட்டளை
யிட்டவற்றைச் செய்தார்கள்.

[29]நள்ளிரவில் கர்த்தர் எகிப்தின் முதற்
பேறானவர்களை, எகிப்தை ஆண்ட பார்
வோனின் முதல் மகனிலிருந்து, சிறை
யிலுள்ள கைதியின் முதல் மகன் வரைக்கும்
எல்லோரையும் அழித்தார். எல்லா முதற்
பேறான மிருகங்களும் மரித்தன. [30]அந்த
இரவில் எகிப்தின் ஒவ்வொரு வீட்டிலும்
யாராவது ஒருவர் மரித்தனர். பார்வோனும்,
அவனது அதிகாரிகளும், எகிப்தின் எல்லா
ஜனங்களும் சத்தமிட்டு அழுதனர்.

### இஸ்ரவேல் எகிப்தைவிட்டுப் புறப்படுதல்

[31]அந்த இரவில் பார்வோன் மோசேயை
யும், ஆரோனையும் வரவழைத்தான்.
பார்வோன் அவர்களிடம், “எழுந்து என்
ஜனங்களை விட்டு விலகிப்போங்கள்.
நீங்கள் கூறுகிறபடியே நீங்களும் உங்கள்
ஜனங்களும் செய்யலாம். போய்க் கர்த்தரைத்
தொழுதுகொள்ளுங்கள்! [32]உங்கள் ஆடுகளை
யும், மாடுகளையும் நீங்கள் கூறியபடியே
உங்களோடு எடுத்துச் செல்லலாம், போங்
கள்! என்னையும் ஆசீர்வதியுங்கள்!” என்
றான். [33]எகிப்தின் ஜனங்களும் அவர்களை
விரைந்துபோகும்படிக் கேட்டுக்கொண்டனர்.
அவர்கள், “நீங்கள் போகாவிட்டால், நாங்கள்
அனைவரும் மரித்துபோவோம்!” என்று
கூறினார்கள்.

[34]இஸ்ரவேல் ஜனங்கள் ரொட்டியைப்
புளிக்கச் செய்வதற்கும் நேரமிருக்கவில்லை.
மாவிருந்த கிண்ணங்களைத் துணியால்
பொதிந்து அவர்கள் தங்கள் தோள்களில்
சுமந்து சென்றனர். [35]பிறகு இஸ்ரவேல்
ஜனங்கள் மோசே கூறியபடியே செயல்பட்ட
னர். அவர்கள் அக்கம்பக்கத்தாராகிய
எகிப்தியரிடம் சென்று ஆடைகளையும்,
பொன் மற்றும் வெள்ளி பொருட்களையும்
கேட்டார்கள். [36]இஸ்ரவேல் ஜனங்கள்மீது
எகிப்தியர்களுக்கு இரக்கம் உண்டாகுமாறு
கர்த்தர் செய்தார். எனவே எகிப்தியர்கள்
தங்கள் விலையுயர்ந்த பொருட்களை இஸ்ர
வேல் ஜனங்களுக்குக் கொடுத்தனர்.

[37]ராமசேசிலிருந்து சுக்கோத்துக்கு இஸ்ர
வேல் ஜனங்கள் பிரயாணம் செய்தனர்.
சுமார் 6,00,000 புருஷர்கள் இருந்தனர்.
குழந்தைகள் இந்த எண்ணிக்கையில்
சேர்க்கப்படவில்லை. [38]ஆடுகளும், மாடு
களும், பிற பொருட்களும் மிக அதிகமாக
இருந்தன. அவர்களோடு இஸ்ரவேலர்
அல்லாத வெவ்வேறு இனத்து ஜனங்களும்
பயணம் செய்தனர். [39]ரொட்டி மாவை
புளிக்கவைக்க ஜனங்களுக்கு நேரம் இருக்க
வில்லை. பயணத்திற்காக எந்த விசேஷ
உணவையும் அவர்கள் தயாரிக்கவில்லை.
எனவே புளிப்பற்ற ரொட்டியையே
சுட்டார்கள்.

[40]இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்தில்* 430
ஆண்டுகள் வாழ்ந்திருந்தனர். [41]சரியாக 430
ஆண்டுகளுக்குப் பிறகு, அந்த நாளில்
கர்த்தரின் சேனைகள்* எகிப்தை விட்டுச்
சென்றனர். [42]கர்த்தர் செய்ததை ஜனங்கள்
நினைவுகூரும் அந்த இரவு விசேஷமானது.
இஸ்ரவேலின் ஜனங்கள் எல்லோரும் எந்
நாளும் அந்த இரவை நினைவுகூருவார்கள்.

---

**ஈசோப் தழை** 3 அடி நீளமுடைய தண்டினை உடைய செடி. அதன் இலைகளும், கிளைகளும், தலை முடியைப் போன்றிப்பதால் அவற்றைத் தூரிகை போன்று உபயோகப் படுத்தலாம்.

**பாதுகாப்பு** அல்லது ‘‘கடந்து செல்வது” எனப் பொருள்படும்.

**எகிப்தில்** பழங்காலத்து கிரேக்க, சமாரியா மொழி பெயர்ப்புகள் ‘‘எகிப்தும், கானானும்” என்று கூறுகிறது. யோசேப்பின் காலத்திருந்து அல்ல, அவர்கள் ஆபிரகாமின் காலத்திலிருந்து வருடங்களைக் கணக்கிட்டிருக்கிறார்கள் என்பதை இது குறிக்கும். ஆதி. 15:12-16; கலா. 3:17ஐ பார்க்கவும்.

**கர்த்தரின் சேனைகள்** இஸ்ரவேல் ஜனங்கள் எனப் பொருள்படும்.

43கர்த்தர் மோசேயையும், ஆரோனையும்
நோக்கி, "பஸ்கா பண்டிகையின் விதிகள்
இவை: அந்நியன் யாரும் பஸ்காவை
உண்ணக் கூடாது. 44ஆனால் ஒருவன் ஒரு
அடிமையை வாங்கி அவனுக்கு விருத்த
சேதனம் செய்வித்தால், அந்த அடிமை
பஸ்காவை உண்ணலாம். 45ஆனால் ஒருவன்
உங்கள் நாட்டில் வாழ்ந்தாலும், கூலி
வேலைக்கு உங்களால் அமர்த்தப்பட்டவ
னாக இருந்தாலும், அம்மனிதன் பஸ்கா
உணவை உண்ணக்கூடாது, இஸ்ரவேல்
ஜனங்களுக்கு மட்டுமே பஸ்கா உரியது.
46"ஒவ்வொரு குடும்பமும் அவர்கள்
வீட்டில் அவ்வுணவை உண்ண வேண்டும்.
வீட்டிலிருந்து வெளியே அவ்வுணவை
எடுத்துச் செல்லக்கூடாது. ஆட்டுக்குட்டியின்
எலும்புகளை முறிக்க வேண்டாம். 47இஸ்ர
வேலின் எல்லா ஜனங்களும் இப்பண்டிகை
யைக் கொண்டாட வேண்டும். 48உங்களோடு
வசிக்கும் இஸ்ரவேலன் அல்லாத ஒருவன்
கர்த்தரின் பஸ்காவில் பங்கு கொள்ள
விரும்பினால், அவனுக்கு விருத்தசேதனம்
செய்யவேண்டும். அப்போது அவன்
இஸ்ரவேலின் குடிமகனாகக் கருதப்படுவான்.
அவன் பஸ்கா உணவில் பங்கு கொள்ள
முடியும். ஆனால் ஒரு மனிதன் விருத்த
சேதனம் செய்துகொள்ளாவிட்டால், அவன்
பஸ்கா உணவை உண்ண முடியாது. 49இந்த
விதிகள் எல்லோருக்கும் பொதுவானவை.
இஸ்ரவேலின் குடிமகன் அல்லது உங்கள்
நாட்டில் வசிக்கும் இஸ்ரவேல் அல்லாத
எல்லோருக்கும் விதிகள் பொதுவான
தாகவே இருக்கும்" என்றார்.
50கர்த்தர் மோசேக்கும், ஆரோனுக்கும்
கொடுத்த கட்டளைகளின்படி இஸ்ரவேலின்
ஜனங்கள் குழுக்களாக எல்லோரும் எகிப்
தை விட்டுபோனார்கள். 51அதேநாளில்
கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களை எகிப்
திலிருந்து வெளியே வழிநடத்தினார்.
ஜனங்கள் குழுக்களாக* புறப்பட்டனர்.

13 பிறகு கர்த்தர் மோசேயிடம், 2"இஸ்ர
வேலில் ஒரு தாயின் வயிற்றில்
பிறக்கும் முதல் ஆண் குழந்தை ஒவ்
வொன்றும் எனக்குரியதாகும். முதலில்
பிறந்த ஒவ்வொரு ஆண் குழந்தையும்,
முதலில் பிறந்த ஒவ்வொரு விலங்கும்
எனக்குரியதாகும்" என்றார்.
3அப்போது மோசே ஜனங்களிடம், "இந்த
நாளை நினைவுகூருங்கள். நீங்கள் எகிப்தில்
அடிமைகளாக இருந்தீர்கள். ஆனால் இந்த
நாளில் கர்த்தர் அவரது மிகுந்த வல்லமை
யைப் பயன்படுத்தி உங்களை விடுதலை
செய்தார். நீங்கள் புளிப்புள்ள ரொட்டியை
உண்ணக்கூடாது. 4ஆபீப்* மாதத்தின் இந்த
நாளில் நீங்கள் எகிப்தை விட்டுச்
செல்கிறீர்கள். 5கர்த்தர் உங்கள் முற்பிதாக்
களுக்கு ஒரு விசேஷமான வாக்குறுதியை
அளித்தார். கானானியர், ஏத்தியர்,
எமோரியர், ஏவியர், எபூசியர் ஜனங்களின்
நாட்டை உங்களுக்கு கொடுப்பதாகக் கர்த்தர்
வாக்களித்தார். நல்ல பொருட்களால் நிரப்பப்
பட்ட நாட்டிற்குக் கர்த்தர் உங்களை
வழிநடத்தியபிறகும் நீங்கள் இந்த நாளை
நினைவுகூர வேண்டும். ஒவ்வொரு ஆண்டும்
முதல் மாதத்தின் இந்த நாளை வழி
பாட்டிற்குரிய விசேஷ தினமாகக் கொள்ள
வேண்டும்.
6"புளிப்பு இல்லாத ரொட்டியையே ஏழு
நாட்களுக்கு நீங்கள் உண்ண வேண்டும்.
ஏழாவது நாளில் ஒரு பெரிய விருந்து
கர்த்தரை மகிமைப்படுத்துவதற்காக நடை
பெறும். 7எனவே ஏழு நாட்கள் புளிப்புள்ள
ரொட்டியை நீங்கள் உண்ணவே கூடாது.
உங்கள் தேசத்தில் எப்பாகத்திலும் புளிப்
புள்ள ரொட்டி இருக்கவே கூடாது. 8இந்த
நாளில் உங்கள் பிள்ளைகளுக்கு, 'கர்த்தர்
நம்மை எகிப்திலிருந்து வழிநடத்தியதால்
இந்த விருந்து நடைபெறுகிறது' என்று
சொல்ல வேண்டும்.
9"உங்கள் கண்களின் முன்னால் இது
அடையாளமாக இருக்கும். இந்த பண்டிகை
நாள் கர்த்தரின் போதனைகளை நினைவு
படுத்தவும், உங்களை எகிப்திலிருந்து
வெளியே கொண்டுவர கர்த்தர் தமது பெரும்
வல்லமையைப் பயன்படுத்தினார் என்பதை
நினைவுபடுத்தவும் இது உதவும். 10எனவே
ஒவ்வொரு ஆண்டும் அதன் காலத்தில் இந்த
விடுமுறை நாளை நினைவுகூருங்கள்.
11"உங்களுக்குக் கொடுப்பதாகக் கர்த்தர்
வாக்களித்த தேசத்திற்கு அவர் உங்களை
வழிநடத்துவார். கானானிய ஜனங்கள் இப்
போது அங்கு வாழ்கிறார்கள். இத்தேசத்தை
உங்களுக்குக் கொடுப்பதாக தேவன் உங்கள்
முற்பிதாக்களுக்கு வாக்களித்தார்". தேவன்
இந்நாட்டை உங்களுக்குக் கொடுத்தபிறகு,
12நீங்கள் உங்கள் முதல் மகனை அவருக்குக்
கொடுக்க வேண்டும் என்பதை நினைவு
கூருங்கள். முதலில் பிறந்த எந்த ஆண்
மிருகத்தையும் கர்த்தருக்குக் கொடுக்க
வேண்டும். 13முதலில் பிறந்த ஒவ்வொரு
ஆண் கழுதையையும் கர்த்தரிடமிருந்து
திரும்பப்பெற்று, அதற்குப் பதிலாக ஒரு
ஆட்டுக்குட்டியைக் கொடுக்க வேண்டும்.
கர்த்தரிடமிருந்து கழுதையை வாங்க உங்க
ளுக்கு விருப்பமில்லையென்றால், அதனைக்
கொன்று விடுங்கள். அது ஒரு பலியாகும்.
நீங்கள் அதன் கழுத்தை முறிக்க வேண்டும்.
முதலில் பிறக்கும் ஒவ்வொரு ஆண்

**குழுக்களாக** அல்லது "பிரிவுகள்" ஜனங்கள் "கர்த்தரின் சேனைகளாக" ஒழுங்குபடுத்தப் பட்டிருந்தார்கள் என்பதைக் குறிக்கும் இராணுவ வார்த்தையாகும்.

**ஆபீப்** அல்லது "வசந்தகாலம்" யூத வருடத்தின் முதல் மாதமாகிய நிசான் மாதமாகும்.

குழந்தையையும் கர்த்தரிடமிருந்து திரும்பப்
பெற வேண்டும்.
14“வருங்காலத்தில் நீங்கள் இதைச்
செய்வதன் காரணத்தை அறியும்படி உங்கள்
பிள்ளைகள், ‘இதன் பொருள் என்ன?’
என்று கேட்பார்கள். நீங்கள் அவர்களிடம்:
‘கர்த்தர் தமது மகா வல்லமையைப்
பயன்படுத்தி நம்மை எகிப்திலிருந்து
மீட்டார். நாம் அந்நாட்டில் அடிமைகளாக
இருந்தோம். ஆனால் கர்த்தர் நம்மை இங்கு
வழிநடத்தினார். 15எகிப்தில், பார்வோன்
பிடிவாதமாக இருந்தான். நாம் புறப்படு
வதற்கு அவன் அனுமதி கொடுக்க வில்லை.
எனவே கர்த்தர் அந்நாட்டின் முதலாவதாகப்
பிறந்த எல்லா உயிரினங்களையும் கொன்
றார். (கர்த்தர் முதலில் பிறந்த மகன்களையும்,
முதலில் பிறந்த மிருகங்களையும் கொன்றார்.)
எனவே நான் முதலில் பிறந்த ஆண்
மிருகத்தைக் கர்த்தருக்குக் கொடுக்கிறேன்,
எல்லா முதலில் பிறந்த ஆண்
பிள்ளைகளையும் கர்த்தரிடமிருந்து திரும்பப்
பெறுகிறேன்!’ என்று நீங்கள் பதில் கூறுவீர்
கள். 16இது உங்கள் கையில் கட்டப்பட்ட
ஒரு குறியீடு போலவும், உங்கள் கண்களுக்கு
நடுவில் தொங்கும் ஒரு அடையாளமாகவும்
காணப்படும்.* கர்த்தர் தமது அளவில்லா
வல்லமையினால் நம்மை எகிப்திலிருந்து
வெளியே கொண்டுவந்தார் என்பதை நீங்கள்
நினைவுகூர இது உதவும்” என்றான்.

### எகிப்திலிருந்து வெளியேறும் பயணம்

17பார்வோன் இஸ்ரவேல் ஜனங்களை
எகிப்திலிருந்து வெளியேற்றினான். பெலிஸ்
தரின் நாட்டின் வழியாக ஜனங்கள் பயணம்
செய்வதைக் கர்த்தர் அனுமதிக்கவில்லை.
கடலின் ஓரமாக உள்ள அந்த சாலை குறுக்கு
சாலையாக இருந்தது. ஆனால் கர்த்தர்,
“அவ்வழியே ஜனங்கள் பயணத்தை
மேற்கொண்டால் அவர்கள் போரிட
வேண்டியிருக்கும். அதனால் தங்கள்
எண்ணத்தை மாற்றி, எகிப்திற்குத் திரும்பிப்
போகக் கூடும்” என்றார். 18ஆகவே கர்த்தர்
அவர்களை வேறுவழியாக நடத்திச்
சென்றார். செங்கடல்* அருகே பாலைவ
னத்தின் நடுவே அவர்களை வழிநடத்தினார்.
இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்தை விட்டுப்
புறப்பட்டபோது சண்டைக்கு ஆயத்தமான
ஆடைகளை அணிந்திருந்தனர்.

### யோசேப்பு தாயகத்திற்குத் திரும்புதல்

19யோசேப்பின் எலும்புகளை மோசே
தன்னோடு எடுத்துச் சென்றான். (யோசேப்பு
மரிக்கும்முன்னர் இஸ்ரவேலின் ஜனங்களிடம்
இதைச் செய்யவேண்டுமென வாக்குறுதி
பெற்றிருந்தான். யோசேப்பு, “தேவன் உங்
களை மீட்கும்போது, எனது எலும்புகளை
எகிப்திலிருந்து வெளியே எடுத்துச் செல்ல
வேண்டுமென்பதை நினைவில் வையுங்கள்”
என்று கூறியிருந்தான்.)

### கர்த்தர் தமது ஜனங்களை வழிநடத்துகிறார்

20இஸ்ரவேல் ஜனங்கள் சுக்கோத்தை
விட்டு நீங்கி ஏத்தாமில் தங்கினார்கள்.
ஏத்தாம் பாலைவனத்தினருகே இருந்தது.
21கர்த்தர் பாதை காட்டினார். பகலில், கர்த்தர்
ஜனங்களை வழிநடத்த உயரமான ஒரு
மேகத்தையும், இரவு வேளையில் வழி
நடத்த உயரமான ஒரு நெருப்புத் தூணையும்
பயன்படுத்தினார். அவர்கள் இரவிலும்
பயணம் செய்வதற்கேதுவாக இந்த நெருப்பு
வெளிச்சம் தந்தது. 22உயர்ந்த மேகம் பகல்
முழுவதும், உயர்ந்த நெருப்பு தூண் இரவு
முழுவதும் அவர்களோடிருந்தது.

14 அப்போது கர்த்தர் மோசேயை
நோக்கி, 2“ஜனங்களிடம் ஈரோத்துக்கு
திரும்பிப் போகும்படியாகக் கூறு. பாகால்
செபோனுக்கு அருகேயுள்ள மிக்தோலுக்கும்
செங்கடலுக்கும் மத்தியில் அவர்கள் இரவில்
தங்கட்டும். 3இஸ்ரவேல் ஜனங்கள் பாலை
வனத்தில் காணாமற்போனார்கள் என்று
பார்வோன் எண்ணுவான். ஜனங்களுக்குப்
போகத்தக்க இடம் எதுவுமில்லை என்று
அவன் நினைப்பான். 4பார்வோனுக்குத்
தைரியம் தந்து, அவன் உங்களைத்
துரத்தும்படியாகச் செய்வேன். ஆனால் நான்
பார்வோனையும் அவனது சேனையையும்
தோற்கடிப்பேன். அது எனக்கு கனத்தைக்
கொண்டுவரும். அப்போது எகிப்திய ஜனங்
கள் நானே கர்த்தர் என்பதை அறிவார்கள்”
என்றார். இஸ்ரவேல் ஜனங்கள் தேவனுக்குக்
கீழ்ப்படிந்தார்கள். அவர் கூறினபடியே
அவர்கள் செய்தார்கள்.

### பார்வோன் இஸ்ரவேலரைத் துரத்துதல்

5இஸ்ரவேல் ஜனங்கள் தப்பிச் சென்று
விட்டார்கள் என்ற செய்தி பார்வோனுக்குக்
கிடைத்தது. இதைக் கேட்டபோது அவனும்,
அவனது அதிகாரிகளும் மனம்மாறி முன்பு
செய்த தங்கள் செயல்களை மறுபரிசீலனை
செய்தனர். பார்வோன், “இஸ்ரவேல்
ஜனங்கள் போவதற்கு ஏன் அனுமதித்தோம்?
அவர்கள் ஓடிப்போவதற்கு ஏன் வகை
செய்தோம்? இப்போது நாம் நமது அடிமை
களை இழந்துபோனோம்!” என்றான்.
6எனவே, பார்வோன் தனது ஆட்களோடு
தேரையும் தயார்ப்படுத்தினான். 7பார்வோன்

---

**உங்கள் கண்களுக்கு … காணப்படும்** எழுத்தின் பிராகாரமாக ‘உன் கைகளின் மேலுள்ள ஒரு அடையாளம் மற்றும் உன் நெற்றியின் மேலுள்ள நினைவுக் குறி” ஒரு யூத மனிதன் தேவனுடைய கட்டளைகளை நினைவுகூருவதற்காக தன் கரத்திலும், நெற்றியிலும் விசேஷமான ஒன்றைக் கட்டுகிறதை இது குறிக்கலாம்.

**செங்கடல்** அல்லது ‘நாணல் கடல், 1 இரா. ▥

அவனது சிறந்த 600 ஆட்களையும், அவனது
இரதங்கள் அனைத்தையும் கூட்டிச் சென்
றான். ஒவ்வொரு தேரிலும் ஒரு அதிகாரி
இருந்தான். 8 வெற்றிக் களிப்போடு தங்கள்
கைகளை உயர்த்தியவர்களாய் இஸ்ரவேல்
ஜனங்கள் புறப்பட்டுச் சென்று கொண்டி
ருந்தனர். ஆனால் எகிப்திய அரசனாகிய
பார்வோன் தைரியம் கொள்ளும்படியாக
கர்த்தர் செய்தார். பார்வோன் இஸ்ரவேல்
ஜனங்களைத் துரத்தினான்.
9 எகிப்திய படையில் இரதங்களோடு
கூடிய பல குதிரை வீரர்கள் இருந்தனர்.
அவர்கள் இஸ்ரவேல் ஜனங்களைப் பின்
தொடர்ந்து அவர்கள் செங்கடலின்
அருகேயுள்ள பாகால் செபோனுக்குக் கிழக்
கேயிருக்கிற ஈரோத்தில் இருக்கும்போது
நெருங்கி வந்தனர்.

10 பார்வோனும் அவனது படையினரும்
தங்களை நோக்கி வருவதை இஸ்ரவேல்
ஜனங்கள் கண்டு மிகவும் பயந்தனர். அவர்
கள் கர்த்தரிடம் உதவி வேண்டினர்.
11 அவர்கள் மோசேயை நோக்கி, "நீர் ஏன்
எங்களை எகிப்திலிருந்து அழைத்து வந்தீர்?
பாலை வனத்தில் சாகும்படியாக ஏன்
எங்களை அழைத்துக்கொண்டு வந்தீர்?
எகிப்தில் நிம்மதியாக மரித்திருப்போம்.
எகிப்தில் நிறைய கல்லறைகள் இருந்தன.
12 இவ்வாறு நடக்குமென நாங்கள் உங்களிடம்
கூறினோம். எகிப்தில் இருந்தபோது நாங்கள்,
'எங்களைத் தொல்லைப்படுத்தாதீர்கள். நாங்
கள் தங்கியிருந்து எகிப்தியருக்கு அடிமை
வேலை செய்வோம்' என்றோம். அங்கிருந்து
வெளியேறி பாலைவனத்தில் இங்கு மடி
வதைக் காட்டிலும் அங்கு தங்கி
அடிமைகளாக இருப்பதே நலமாக இருந்
திருக்கும்" என்றனர்.
13 ஆனால் மோசே, "பயப்படாதீர்கள்!
ஓடிப் போகாதீர்கள்! சும்மா இருந்து, கர்த்தர்
இன்றைக்கு உங்களை மீட்பதைப் பாருங்கள்.
இந்த எகிப்தியர்களை இனிமேல் பார்க்க
மாட்டீர்கள்! 14 நீங்கள் எதையும் செய்யாமல்
அமைதியாக இருந்தால் போதும், கர்த்தர்
உங்களுக்காகப் போரிடுவார்" என்றான்.
15 கர்த்தர் மோசேயை நோக்கி, "ஏன்
இன்னும் நீ என்னிடம் அழுகிறாய்? இஸ்ர
வேல் ஜனங்கள் தங்கள் பயணத்தைத்
தொடருமாறு கூறு. 16 செங்கடலுக்கு மேலாக
உன் கைத்தடியை உயர்த்து. கடல் பிளக்கும்.
அப்போது ஜனங்கள் அதிலுள்ள உலர்ந்த
தரை வழியே நடந்து செல்லலாம். 17 உங்
களைத் துரத்தும்படியாக நானே எகிப்தி
யருக்குத் தைரியம் அளித்தேன். ஆனால்
நானே பார்வோனையும், அவனது
குதிரைகள் இரதங்களைக் காட்டிலும்
வல்லமை பொருந்தியவர் என்று உணரச்
செய்வேன். 18 அப்போது எகிப்தியர் நானே
கர்த்தர் என்பதை அறிவார்கள்.
பார்வோனையும் அவனது இரதம் குதிரை
வீரர்களையும் நான் மேற்கொள்ளும்போது
அவர்கள் என்னை மதிப்பார்கள்" என்றார்.

### கர்த்தர் எகிப்திய சேனைகளை முறியடித்தல்

19 அப்போது கர்த்தருடைய தூதன் ஜனங்க
ளுக்குப் பின்னாகப் போனான். (கர்த்தரு
டைய தூதன் எப்போதும் ஜனங்களுக்கு
முன்னே, அவர்களை வழிநடத்தியபடியே
சென்று கொண்டிருந்தான்). அந்த உயரமான
மேகம் ஜனங்களுக்கு முன்னே செல்லாமல்
அவர்களுக்குப் பின்னே சென்றது.
20 இவ்வாறு அம்மேகம் எகிப்தியருக்கும்
இஸ்ரவேல் ஜனங்களுக்கும் இடையே
சென்று நின்றது. இஸ்ரவேல் ஜனங்களுக்கு
வெளிச்சம் இருந்தது. ஆனால் எகிப்தியர்
களையோ இருள் சூழ்ந்தது. எனவே அந்த
இரவில் எகிப்தியர்கள் இஸ்ரவேல்
ஜனங்களை நெருங்கிவர முடியவில்லை.
21 மோசே தனது கரங்களைச் செங்
கடலுக்கு நேராக உயர்த்தினான். கர்த்தர்
கிழக்கிலிருந்து ஒரு காற்று வீசும்படியாகச்
செய்தார். இரவு முழுவதும் காற்று வீசிற்று,
கடல் பிளந்தது. காற்று நிலத்தை உலரச்
செய்தது. 22 இஸ்ரவேல் ஜனங்கள் உலர்ந்த
தரையின்மேல் கடலினூடே போனார்கள்.
அவர்களுக்கு வலது பக்கத்திலும் இடது
பக்கத்திலும் தண்ணீர் சுவர்போல் உயர்ந்து
நின்றது. 23 அப்போது பார்வோனின் குதிரை
வீரர்கள் தங்கள் இரதங்களுடன் கடலினுள்
இஸ்ரவேலரைப் பின்தொடர ஆரம்பித்தனர்.
24 அதிகாலையில் கர்த்தர் உயர்ந்த மேகத்
திலிருந்தும், நெருப்புத் தூணிலிருந்தும்
எகிப்திய படையை நோக்கிப் பார்த்து
அவர்களைத் தோற்கடித்தார்.
25 இரதங்களின் சக்கரங்கள் சிக்கி
கொண்டன. இரதங்களைக் கட்டுப்படுத்து
வது கடினமாக இருந்தது. எகிப்தியர்கள்,
"இங்கிருந்து தப்பிப் போவோம்! இஸ்ரவேல்
ஜனங்க ளுக்காகக் கர்த்தர் நம்மை எதிர்த்து
போர் செய்கிறார்" என்றார்கள்.
26 அப்போது கர்த்தர் மோசேயிடம், "உன்
கைகளைக் கடலுக்கு மேலாக உயர்த்து,
தண்ணீர் புரண்டு எகிப்தியரின் இரதங்களை
யும், குதிரை வீரர்களையும் மூழ்கடிக்கும்"
என்றார்.
27 எனவே விடிவதற்குச் சற்றுமுன் மோசே
கடலுக்கு மேலாகத் தன் கரங்களை உயர்த்தி
னான். தண்ணீர் முன்புபோல் சமமாக வந்து
நின்றது. எகிப்தியர்கள் தங்களால் முடிந்த
அளவு தண்ணீரிலிருந்து தப்பி ஓட
முயன்றார்கள். ஆனால் கர்த்தர் அவர்
களைக் கடலில் மூழ்கடித்துவிட்டார்.
28 தண்ணீர் முன்புபோல் சமமாக வந்ததால்
இரதங்களையும், குதிரை வீரர்களையும்
மூழ்கடித்து விட்டது. பார்வோனின் படை

யினர் இஸ்ரவேல் ஜனங்களைத் துரத்தினர்,
ஆனால் அப்படையோ அழிக்கப் பட்டது,
ஒருவரும் பிழைக்கவில்லை!
29 இஸ்ரவேல் ஜனங்கள் உலர்ந்த தரையில்
கடலைக் கடந்தனர். அவர்களது வலது, இடது
புறங்களில் மாத்திரம் தண்ணீர்
சுவரைப்போல நின்றது. 30 எனவே,
அந்நாளில் எகிப்தியரிடமிருந்து இஸ்ரவேல்
ஜனங்களை கர்த்தர் மீட்டார். செங்கடலின்
கரையில் எகிப்தியரின் பிணங்களை
இஸ்ரவேல் ஜனங்கள் கண்டனர். 31 கர்த்தர்
எகிப்தியர்களை வென்றபோது, இஸ்ரவேல்
ஜனங்கள் கர்த்தரின் மிகுந்த வல்லமையைக்
கண்டார்கள். எனவே ஜனங்கள் பயந்து
கர்த்தரை மதித்தார்கள். அவர்கள் கர்த்த
ரையும் அவரது தாசனாகிய மோசேயையும்
நம்ப ஆரம்பித்தனர்.

### மோசேயின் பாட்டு

15 அப்போது மோசேயும் இஸ்ரவேல் ஜனங்களும் கர்த்தரை நோக்கி பின் வரும் பாடலைப் பாடினார்கள்:

“நான் கர்த்தரைப் பாடுவேன்!
அவர் பெருமைமிக்க செயல்களைச் செய்தார்,
அவர் குதிரையையும்,
குதிரை வீரனையும் கடலில் தள்ளினார்.
2 கர்த்தரே எனது பலம்.
அவர் என்னை மீட்கிறார்.
நான் அவரைத் துதித்துப் பாடுவேன்.
கர்த்தரே எனது தேவன்,
நான் அவரைத் துதிப்பேன்.
கர்த்தர் எனது முற்பிதாக்களின் தேவன்.
நான் அவரை மதிப்பேன்.
3 கர்த்தர் யுத்தத்தில் சிறந்தவர்,
கர்த்தர் என்பது அவரது பெயர்.
4 பார்வோனின் இரதங்களையும்,
வீரர்களையும்
அவர் கடலில் தள்ளினார்.
பார்வோனின் சிறந்த வீரர்கள்
செங்கடலில் அமிழ்ந்தனர்.
5 ஆழியின் தண்ணீர் அவர்களை
மூடிக்கொண்டது.
அவர்கள் கடலினடியில்
பாறைகளைப்போல்
மூழ்கிப் போயினர்.
6 “உமது வலது கரம் வியக்கத்தகும்
வல்லமை உடையது.
கர்த்தாவே, உமது வலது கரம்
பகைவர்களைச் சிதறடித்தது.
உமது பெருமையால் உமக்கு
எதிராக நின்ற ஜனங்களை
நீர் அழித்தீர்.
உமது கோபம் அவர்களை
வைக்கோலில் பற்றும்
நெருப்பைப்போல அழித்தது.
8 உமது உக்கிரத்தின் பெருமூச்சால்
தண்ணீர் மேலெழும்பிற்று,
ஒழுகும் தண்ணீர் திடமான
சுவராயிற்று.
ஆழத்தின் அஸ்திபாரம் வரைக்கும்
கடல்தண்ணீர் திடன் கொண்டது.

9 “நான் தொடர்ந்து பிடிப்பேன்,
‘நான் அவர்கள் செல்வத்தைப்
பறிப்பேன்.
எனது வாளால் அவற்றை
அபகரிப்பேன்.
நான் எல்லாவற்றையும் எனக்காக
எடுப்பேன்’
என்று பகைவன் சொன்னான்.
10 ஆனால் நீர் அவர்கள் மேல் ஊதி,
கடலால் அவர்களை மூடினீர்.
ஆழ்கடலில் அவர்கள்
ஈயத்தைப்போல
மூழ்கினார்கள்.

11 “கர்த்தரைப்போன்ற தேவர்கள்
உள்ளனரோ?
இல்லை! உம்மைப்போன்ற தேவர்கள்
எவருமில்லை!
நீர் மேலான பரிசுத்தமானவர்!
நீர் வியக்கத்தக்க ஆற்றல்
வாய்ந்தவர்!
நீர் மாபெரும் அற்புதங்கள்
செய்பவர்!
12 வலதுகரத்தை உயர்த்தி உலகத்தை
அழிக்க உம்மால் முடியும்.
13 ஆனால் உமது இரக்கத்தால் நீர்
மீட்ட ஜனங்களை வழிநடத்துகிறீர்.
உமது வல்லமையால்
அவர்களைப் பரிசுத்தமும்,
இன்பமுமான நாட்டிற்குள்
நடத்துகிறீர்.
14 “பிற ஜாதிகள் இதைக் கேட்டு,
பயந்து நடுங்குவார்கள்.
பெலிஸ்தியர் பயத்தால்
நடுங்குவார்கள்.
15 ஏதோமின் தலைவர்கள்
பயத்தால் நடுங்குவார்கள்.
மோவாபின் தலைவர் பயத்தால்
நடுங்குவார்கள்.
கானானின் ஜனங்கள்
துணிவிழப்பார்கள்.
16 அவர்கள் உமது ஆற்றலைக்
காண்கையில் அச்சத்தால்
நிரம்புவார்கள்.
கர்த்தரின் ஜனங்கள் செல்லும்மட்டும்,
உம்மால் உண்டாக்கப்பட்ட உமது
ஜனங்கள் கடந்து செல்லும்மட்டும்
அவர்கள் உறுதியான
பாறையைப்போல

*ஸ்தம்பித்து நிற்பார்கள்.*
17 *கர்த்தாவே நீர் உம்முடைய*
*ஜனங்களை உம்முடைய மலைக்கு*
*வழிநடத்துவீர்.*
*உமது சிங்காசனத்திற்காக*
*நீர் தேர்ந்தெடுத்த இடத்தினருகே*
*அவர்களை வாழச்செய்வீர்.*
*ஆண்டவரே, நீர் உமது ஆலயத்தைக்*
*கட்டுவீர்!*
18 *கர்த்தாவே நீர் என்றென்றும்*
*ஆளுகை செய்வீர்!"*

19 *ஆம், அது உண்மையாகவே நிகழ்ந்தது!*
*பார்வோனின் குதிரைகளும், வீரர்களும்,*
*இரதங்களும் கடலுக்குள் அமிழ்ந்தன.*
*கடலின் ஆழத்து தண்ணீரை அவர்களுக்கு*
*மேலாகக் கர்த்தர் கொண்டு வந்தார். ஆனால்*
*இஸ்ரவேல் ஜனங்களோ கடலினூடே உலர்ந்த*
*தரையில் நடந்தனர்.*
20 *அப்போது, தீர்க்கதரிசினியும், ஆரோ*
*னின் சகோதரியுமாகிய மிரியாம் ஒரு*
*தம்புருவை எடுத்தாள். மிரியாமுடன் பெண்*
*கள் பாடவும் நடனம் ஆடவும் செய்தனர்.*
*மிரியாம்,*

21 *"கர்த்தரைப் பாடுங்கள்!*
*அவர் பெரிய செயல்களைச்*
*செய்தார்.*
*அவர் குதிரையையும்,*
*குதிரை வீரனையும் கடலுக்குள்*
*அமிழ்த்தினார்" என்று பாடினாள்.*

22 *செங்கடலை விட்டு சூர் பாலைவனத்*
*திற்குள் மோசே இஸ்ரவேல் ஜனங்களை*
*வழிநடத்திச் சென்றான். அவர்கள் பாலை*
*வனத்தில் மூன்று நாட்கள் பயணம்*
*செய்தனர். ஜனங்களுக்குக் குடிப்பதற்கு*
*அங்கு தண்ணீர் கிடைக்கவில்லை.* 23 *மூன்று*
*நாட்களுக்குப்பின் ஜனங்கள் மாராவிற்கு*
*வந்தனர். மாராவில் தண்ணீர் இருந்தது.*
*ஆனால் குடிக்க முடியாதபடி கசப்பாக*
*இருந்தது. (இதனால் அந்த இடம் மாரா**
*என்று அழைக்கப்பட்டது)*
24 *மோசேயிடம் வந்து ஜனங்கள், "நாங்கள்*
*இப்போது எதைக் குடிப்போம்?" என்று*
*முறையிட ஆரம்பித்தனர்.*
25 *மோசே கர்த்தரை வேண்டினான், கர்த்தர்*
*அவனுக்கு ஒரு மரத்தைக் காட்டினார்.*
*மோசே அம்மரத்தை தண்ணீருக்குள் போட்*
*டான். அவன் அவ்வாறு செய்தபோது, அது*
*நல்ல குடிதண்ணீராக மாறிற்று.*
*அவ்விடத்தில், கர்த்தர் ஜனங்களை*
*நியாயந் தீர்த்து அவர்களுக்கு ஒரு*
*சட்டத்தைக் கொடுத்தார். ஜனங்களின்*
*நம்பிக்கையையும் சோதித்துப் பார்த்தார்.*
26 *கர்த்தர், "நீங்கள் உங்கள் தேவனாகிய*
*கர்த்தருக்குக் கீழ்ப்படிய வேண்டும். அவர்*
*சரியெனக் கூறும் காரியங்களை நீங்கள்*
*செய்ய வேண்டும். கர்த்தரின் எல்லாக்*
*கட்டளைகளுக்கும், சட்டங்களுக்கும் நீங்கள்*
*கீழ்ப்படிந்தால், எகிப்தியர்களைப்போல*
*நோயுறமாட்டீர்கள். கர்த்தராகிய நான்*
*எகிப்தியருக்கு கொடுத்த எந்த நோயையும்*
*உங்களுக்கு வரவிடமாட்டேன். நானே*
*கர்த்தர். உங்களைக் குணப்படுத்துகிறவர்*
*நான் ஒருவரே" என்றார்.*
27 *பின்பு ஜனங்கள் ஏலிமுக்குப் பயண*
*மாயினர். ஏலிமில் பன்னிரண்டு நீரூற்றுக்*
*களும், எழுபது பேரீச்ச மரங்களும் இருந்தன.*
*எனவே தண்ணீர் இருந்த இடத்தினருகே*
*ஜனங்கள் கூடாரமிட்டுத் தங்கினார்கள்.*

16 *ஜனங்கள் ஏலிமை விட்டு ஏலிமுக்கும்,*
*சீனாய்க்கும் நடுவில் உள்ள சீன்*
*பாலைவனத்திற்கு வந்தனர். எகிப்தை*
*விட்டுப் புறப்பட்டபின் இரண்டாவது மாதத்*
*தில் பதினைந்தாம் நாள்* அவர்கள் அந்த*
*இடத்தை வந்தடைந்தனர்.'* 2 *இஸ்ரவேல்*
*ஜனங்கள் மீண்டும் முறையிட ஆரம்பித்தனர்.*
*பாலைவனத்தில் மோசேயையும், ஆரோ*
*னையும் நோக்கி:* 3 *"எகிப்துதேசத்தில் கர்த்தர்*
*எங்களைக் கொன்றிருந்தால் நலமாக*
*இருந்திருக்கும். அங்கு உண்பதற்காவது*
*மிகுதியான உணவு கிடைத்தது. எங்க*
*ளுக்குத் தேவையான எல்லா உணவும்*
*கிடைத்தன. ஆனால் இப்போது எங்களை*
*நீர் பாலைவனத்திற்குள் கொண்டு வந்திருக்*
*கிறீர். பசியால் இங்கு நாங்கள் எல்லோரும்*
*செத்துப்போவோம்" என்றனர்.*
4 *அப்போது கர்த்தர் மோசேயை நோக்கி,*
*"நான் வானத்திலிருந்து உணவுப் பொருளை*
*விழச்செய்வேன். நீங்கள் உண்பதற்கு அது*
*உணவாகும். ஒவ்வொரு நாளும் ஜனங்கள்*
*வெளியே போய் அவர்களுக்கு அந்தந்த*
*நாளுக்கு மட்டும் தேவையான உணவைச்*
*சேகரித்துவர வேண்டும். இப்படி நான்*
*அவர்களைச் சோதித்து, என் ஆலோசனை*
*களைப் பின்பற்றுகிறார்களா என்று பார்ப்*
*பேன்.* 5 *ஒவ்வொரு நாளும் ஜனங்கள் அந்த*
*நாளுக்குத் தேவையான உணவை மட்டுமே*
*சேகரிக்கவேண்டும்; ஆனால் வெள்ளிக்*
*கிழமையன்று, ஜனங்கள் உணவைத்*
*தயாரிக்கும்பொழுது, இரண்டு நாட்களுக்குப்*
*போதுமான இருமடங்கு உணவு இருக்கு*
*மாறு பார்த்துக்கொள்ள வேண்டும்"**
*என்றார்.*

***மாரா*** *இந்தப் பெயர் 'கசப்பு' எனப் பொருள்படும்.*

**இரண்டாவது மாதத்தின் பதினைந்தாம் நாள்** *அதாவது இளவேனிற் கோடைகாலம் என்ற மாதத்தின் 15வது நாள். இஸ்ரவேல் ஜனங்கள் ஒரு மாத காலமாக பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள்.*

**வெள்ளிக்கிழமை … வேண்டும்** *பரிசுத்த நாளாகிய (சனிக்கிழமை) ஓய்வு நாளில் மக்கள் வேலை செய்யத் தேவையில்லை என்பதற்காக இப்படி நடந்தது.*

6மோசேயும், ஆரோனும் இஸ்ரவேல் ஜனங்
களை நோக்கி, "இன்றிரவு நீங்கள் கர்த்தரின்
வல்லமையைக் காண்பீர்கள். எகிப்திலிருந்து
உங்களை அழைத்து வந்தவர் அவரே
என்பதை நீங்கள் அறிவீர்கள். 7நீங்கள்
கர்த்தரிடம் முறையிட்டபோது அவர் உங்கள்
முறையீட்டைக் கேட்டார். எனவே நாளைக்
காலையில் கர்த்தரின் மகிமையைக் காண்பீர்
கள். நீங்கள் எங்களிடம் முறையிட்டுக்
கொண்டேயிருக்கிறீர்கள். இப்போது எங்க
ளுக்குச் சற்று ஓய்வு கிடைக்கும்"
என்றார்கள்.
8மோசே தொடர்ந்து, "நீங்கள் முறை
யிட்டீர்கள், கர்த்தர் உங்கள் முறையீட்டைக்
கேட்டார். எனவே இன்றிரவு கர்த்தர்
உங்களுக்கு மாமிசம் கிடைக்கச் செய்வார்.
காலையில் உங்களுக்குத் தேவையான
அப்பத்தைப் பெறுவீர்கள். நீங்கள் ஆரோ
னிடமும் என்னிடமும் முறையிட்டுக்
கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் ஆரோனுக்கும்
எனக்கும் எதிராக அல்ல, நீங்கள் கர்த்தருக்
கெதிராகவே முறையிட்டீர்கள்" என்றான்.
9மோசே ஆரோனை நோக்கி, "இஸ்ர
வேலின் ஜனங்களிடம் பேசு. அவர்களிடம்,
'கர்த்தருக்கு முன்பாக ஒருமித்து வாருங்கள்.
ஏனெனில் அவர் உங்கள் முறையீட்டைக்
கேட்டார் என்று சொல்'" என்றான்.
10ஆரோன் இஸ்ரவேல் ஜனங்களிடம் பேசி
னான். அவர்கள் எல்லோரும் ஓரிடத்தில்
கூடியிருந்தார்கள். ஆரோன் பேசும்போது,
எல்லா ஜனங்களும் திரும்பிப் பாலை
வனத்தை நோக்கினார்கள். மேகத்தில்
கர்த்தரின் மகிமை வெளிப்படுவதைக்
கண்டார்கள்.
11கர்த்தர் மோசேயை நோக்கி, 12"இஸ்ர
வேல் ஜனங்களின் முறையீட்டைக் கேட்
டேன். எனவே அவர்களிடம் 'இன்றிரவு
நீங்கள் இறைச்சி உண்பீர்கள், காலையில்
உங்களுக்கு வேண்டிய ரொட்டி கிடைக்கும்.
பிறகு உங்கள் தேவனாகிய கர்த்தரை
நம்பலாம் என்று அறிவீர்கள்' என்று
சொல்லுங்கள்" என்றார்.
13அன்றிரவு, காடைப் பறவைகள் அவர்
கள் தங்கியிருந்த இடத்தைச் சுற்றிலும் வந்து
விழுந்தன. ஜனங்கள் இறைச்சிக்காக
அவற்றைப் பிடித்தனர். காலையில் அவர்கள்
தங்கியிருந்த இடத்திற்கு அருகே பனி
படர்ந்திருந்தது. 14பனி மறைந்ததும் மெல்லிய
அப்பம் போன்ற ஒரு பொருள் நிலத்தின்
மேல் காணப்பட்டது. 15இஸ்ரவேல் ஜனங்கள்
ஒருவரையொருவர் நோக்கி, "இது என்ன?"*
என்றனர். அப்பொருள் என்ன என்று
அவர்களுக்குத் தெரியாததினால், ஒருவருக்
கொருவர் பேசிக் கொண்டனர். மோசே
அவர்களை நோக்கி, "கர்த்தர் உங்களுக்கு
உணவாகக் கொடுப்பது இதுவே. 16"ஒவ்
வொருவனும் அவனவனுக்குத் தேவை யான
உணவை எடுத்துக்கொள்ள வேண்டும்.
உங்கள் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவனுக்
கும் எட்டு கிண்ண அளவின்படி எடுத்துக்
கொள்ள வேண்டும்' என்று சொல்லுகிறார்"
என்றான்.
17எனவே இஸ்ரவேல் ஜனங்கள்
அவ்வாறே செய்தார்கள். ஒவ்வொருவனும்
இந்த உணவைச் சேகரித்துக் கொண்டான்.
சிலர் மற்றவர்களைவிட அதிகமாக எடுத்துக்
கொண்டனர். 18ஜனங்கள் இந்த உணவைக்
குடும்பத்திலுள்ள ஒவ்வொருவருக்கும்
கொடுத்தார்கள். உணவை அளந்தபோது
ஒவ்வொருவருக்கும் போதுமான அளவு
இருந்தது. ஆனால் ஒருபோதும் அதிகப்
படியான உணவு இருந்ததில்லை. ஒவ்வொரு
வனும் அவனுக்கும் அவனது குடும்பத்
திற்கும் தேவையான உணவை மாத்திரம்
சேகரித்துக் கொண்டான்.
19மோசே அவர்களை நோக்கி, "மறுநாள்
உண்பதற்காக உணவை வைக்காதீர்கள்"
என்றான். 20ஆனால் ஜனங்கள் மோசேக்குக்
கீழ்ப்படியவில்லை. சிலர் அடுத்த நாளுக்
காகச் சிறிது உணவை எடுத்து வைத்தார்
கள். அந்த உணவைப் புழுக்கள் அரித்தபடி
யால் துர்நாற்றம் வீச ஆரம்பித்தது. இவ்
வாறு செய்தவர்கள்மேல் மோசே கோபங்
கொண்டான்.

21ஒவ்வொரு நாள் காலையிலும் உண
வைச் சேகரித்துக் கொண்டனர். ஒருவன்
தான் சாப்பிடக்கூடிய அளவு உணவை
எடுத்துக்கொண்டான். வெயில் ஏறினதும்
உணவு உருகி மறைந்துபோனது.
22வெள்ளியன்று, ஜனங்கள் இரண்டு
மடங்கு உணவைச் சேர்த்தார்கள். ஒவ்வொரு
வருக்கும் 16 கிண்ண அளவு உணவைச்
சேர்த்தார்கள். எனவே ஜனங்களின் தலை
வர்கள் மோசேயிடம் வந்து இதனை
அறிவித்தனர்.
23மோசே அவர்களை நோக்கி, "இவ்வாறு
தான் நடக்கும் என்று கர்த்தர் கூறியிருக்கி
றார். நாளை கர்த்தரை மகிமைப்படுத்தும்
விசேஷ நாளாகிய ஓய்வுநாள் என்பதால்
இவ்வாறு நிகழ்ந்தது. இன்றைக்குத் தேவை
யான எல்லா உணவையும் சமையுங்கள்.
மீதமாகும் உணவை நாளை காலைக்காக
எடுத்து வையுங்கள்" என்றான்.
24எனவே மீதமான உணவை ஜனங்கள்
மோசேக்குக் கீழ்ப்படிந்து அடுத்த நாளுக்
காகப் பத்திரப்படுத்தினார்கள். அன்று அந்த
உணவு கெட்டுப் போகவில்லை, புழுக்களும்
அந்த உணவை அணுகவில்லை.
25சனிக்கிழமையன்று மோசே ஜனங்களை
நோக்கி, "இன்று ஓய்வுநாள், இது கர்த்தருக்கு
மரியாதை செலுத்தும் விசேஷ நாள்.
எனவே உங்களில் ஒருவனும் வெளியே

---

**இது என்ன** எபிரெய மொழியில் இது ''மன்னா"
என்ற வார்த்தையைப் போன்றதாகும்.

போகக்கூடாது. நேற்று சேர்த்து வைத்த
உணவையே உண்ணுங்கள். 26ஆறு நாட்கள்
நீங்கள் உணவைச் சேகரிக்க வேண்டும்,
ஆனால் வாரத்தின் ஏழாவது நாள்
ஓய்வுக்குரிய நாள். எனவே பூமியில் விசேஷ
உணவு எதுவுமிராது” என்றான்.
27சனிக்கிழமையன்று சில ஜனங்கள்
உணவைச் சேகரிக்கச் சென்றார்கள், ஆனால்
அவர்களுக்கு உணவு எதுவும் கிடைக்க
வில்லை. 28அப்போது கர்த்தர் மோசேயை
நோக்கி, “எனது கட்டளைகளுக்கும்
போதனைகளுக்கும் கீழ்ப்படிய எத்தனை
காலம் இந்த ஜனங்கள் மறுப்பார்கள்? 29பார்,
உங்களுக்கு ஓய்ந்திருக்கும் நாளாக கர்த்தர்
ஓய்வுநாளை உண்டாக்கினார். எனவே
வெள்ளியன்று இரண்டு நாட்களுக்குத்
தேவையான உணவைக் கர்த்தர் கொடுப்
பார், பின் ஓய்வு நாளில் உங்களில்
ஒவ்வொருவனும் ஓய்வெடுக்க வேண்டும்.
நீங்கள் இருக்குமிடத்திலேயே தங்கியி
ருங்கள்” என்றான். 30எனவே ஜனங்கள்
ஓய்வு நாளில் ஓய்வெடுத்துக் கொண்டார்கள்.
31அந்த விசேஷ உணவை ஜனங்கள்
“மன்னா”* என்று அழைத்தார்கள். இந்த
மன்னா தோற்றத்தில் சிறிய வெண்மையான
கொத்துமல்லி விதைகளைப் போன்றிருந்தன.
அவை ருசியில் தேனில் தோய்க்கப்பட்ட
மெல்லிய வார்ப்புரொட்டி போன்று இருந்
தன. 32மோசே, “கர்த்தர் உங்கள் சந்ததி
யினருக்காக ‘இந்த உணவில் எட்டு
கிண்ணம் எடுத்து வையுங்கள். அப்போது,
உங்களை எகிப்திலிருந்து அழைத்து
செல்கையில் வனாந்தரத்தில் நான் உங்க
ளுக்கு கொடுத்த உணவை உங்கள் தலை
முறையினர் பார்க்க முடியும்’ என்றார்”
என்று சொன்னான்.
33எனவே மோசே ஆரோனை நோக்கி,
“ஒரு சிறிய ஜாடியை எடுத்து அதை 8
கிண்ணம் மன்னாவால் நிரப்பு. கர்த்தருக்கு
முன் வைக்கும்படியாக அதைப் பத்திரப்
படுத்து. அதை நமது சந்ததியினருக்காகவும்
பாதுகாத்து வை” என்றான். 34(கர்த்தர்
மோசேக்குக் கட்டளையிட்டவாறே ஆரோன்
செய்தான். உடன்படிக்கைப் பெட்டியின்*
முன்னால் அந்த ஜாடியை ஆரோன்
வைத்தான்.) 35ஜனங்கள் 40 ஆண்டுகள்
மன்னாவைச் சாப்பிட்டார்கள். ஓய்வுக்குரிய
நாடாகிய, கானான் தேசத்தின் எல்லையை
வந்தடையும் மட்டும் அவர்கள் மன்னாவைச்
சாப்பிட்டார்கள். 36(மன்னாவை அளப்பதற்
காக அவர்கள் பயன்படுத்தியது ஒரு ஓமர்.
எட்டுக் கிண்ணங்கள் அளவு கொண்டது
ஒரு ஓமர் ஆகும்.)

17சீன் பாலைவனத்திலிருந்து இஸ்ரவேல்
ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து பிரயா
ணம் செய்தார்கள். கர்த்தர் கட்டளை
யிட்டபடியே அவர்கள் ஓரிடத்திலிருந்து
மற்றோரிடத்திற்குப் பயணமானார்கள்.
ரெவிதீமிற்கு ஜனங்கள் பிரயாணம் செய்து
அங்கு கூடாரமிட்டுத் தங்கினார்கள். குடிக்கக்
கூட ஜனங்களுக்கு அங்கே தண்ணீர்
கிடைக்கவில்லை. 2எனவே ஜனங்கள்
மோசேக்கு எதிராகத் திரும்பி, அவனோடு
வாதாட ஆரம்பித்தார்கள். “எங்களுக்குக்
குடிப்பதற்கு தண்ணீர் தா” என்று ஜனங்கள்
கேட்டார்கள்.
மோசே அவர்களை நோக்கி, “ஏன்
எனக்கு எதிராகத் திரும்பினீர்கள்? ஏன்
கர்த்தரை சோதிக்கிறீர்கள்? கர்த்தர் நம்மோடு
வரவில்லை என்று நீங்கள் நினைக்கிறீர்
களா?” என்றான்.
3ஆனால் ஜனங்கள் மிகவும் தாகமாக
இருந்தபடியால் மோசேயிடம் தொடர்ந்து
முறையிட்டார்கள், “ஏன் எங்களை எகிப்தி
லிருந்து அழைத்து வந்தீர்? நாங்களும்,
எங்கள் பிள்ளைகளும், ஆடுமாடுகளும்
தாகத்தால் மரித்துபோவதற்காகவா எங்களை
அழைத்து வந்தீர்?” என்றார்கள்.
4எனவே மோசே கர்த்தரிடம் சத்தமாக
அழுது, “நான் இந்த ஜனங்களோடு என்ன
செய்யமுடியும்? இவர்கள் என்னைக்
கொல்லத் தயாராயிருக்கிறார்கள்” என்றான்.
5கர்த்தர் மோசேயை நோக்கி, “இஸ்ரவேல்
ஜனங்களுக்கு முன்பாகப் போ. ஜனங்களின்
மூப்பர்களில் (தலைவர்களில்) சிலரையும்
உன்னோடு அழைத்துச் செல். உனது
கைத்தடியையும் எடுத்துக்கொள். நைல்
நதியை அடித்தபோது நீ பயன்படுத்திய
தடி இதுவே. 6உனக்கு முன்பாக ஓரேபி
லுள்ள (சீனாய் மலையிலுள்ள) பாறையில்
நான் இருப்பேன். உனது கைத்தடியால்
பாறையை அடி, உடனே பாறையிலிருந்து
தண்ணீர் சுரந்து வரும், அப்போது ஜனங்கள்
அதைப் பருகலாம்” என்றார்.
மோசே அவ்வார்த்தைகளின்படியே செய்
தான். இஸ்ரவேலின் மூப்பர்கள் (தலை
வர்கள்) அதைப் பார்த்தார்கள். 7இவ்
விடத்தில் ஜனங்கள் மோசேக்கு எதிராகத்
திரும்பி கர்த்தரை சோதித்ததால் மோசே
அதற்கு மேரிபா* என்றும், மாசா* என்றும்
பெயரிட்டான். கர்த்தர் அவர்களோடு
இருக்கிறாரா, இல்லையா என்று சோதிக்க
ஜனங்கள் விரும்பினார்கள்.

---

**மன்னா** எபிரெய வார்த்தைகளில் ‘‘அது என்ன?” என்பதின் அர்த்தத்தைப் போன்றதாகும்.

**உடன்படிக்கைப் பெட்டி** எழுத்தின் பிராகாரமாக, ‘‘சான்று” இரண்டு கற்பலகைகளில் எழுதப்பட்ட பத்துக் கட்டளைகளும், தேவனுக்கும் இஸ்ரவேலுக்கும் இடையிலுள்ள உடன்படிக்கைக்கு சான்றாகும்.

**மேரிபா** இந்த வார்த்தைக்கு ‘‘முரட்டாட்டம்” என்று அர்த்தம்.

**மாசா** இந்த வார்த்தைக்கு ‘‘சோதனை” ‘‘சோதித்தல் அல்லது பரீட்சை” என்று அர்த்தமாகும்.

8 ரெவிதீமில் அமலேக்கிய ஜனங்கள் வந்து
இஸ்ரவேல் ஜனங்களோடு போர் செய்
தார்கள். 9 எனவே மோசே யோசுவாவை
நோக்கி, "சில மனிதர்களைத் தேர்ந்தெடுத்துக்
கொண்டு போய் அமலேக்கியரோடு நாளை
போர் செய். நான் மலையின்மீது நின்று
உங்களைக் கண்காணிப்பேன். தேவன்
எனக்குக் கொடுத்த கைத்தடியைப் பிடித்துக்
கொண்டிருப்பேன்" என்றான்.
10 யோசுவா மோசேக்குக் கீழ்ப்படிந்து,
அமலேக்கிய ஜனங்களோடு போர் செய்
வதற்கு மறுநாள் போனான். அதே நேரத்தில்
மோசேயும், ஆரோனும், ஊரும் மலையுச்
சிக்குச் சென்றார்கள். 11 மோசே கைகளை
மேலே உயர்த்தியிருந்தபோது, இஸ்ரவேல்
ஜனங்கள் வென்றனர். ஆனால் மோசேயின்
கரங்கள் கீழே தாழ்ந்தபோது, இஸ்ரவேல்
ஜனங்கள் தோல்வியடையத் தொடங்கி
னார்கள்.
12 சிறிது நேரத்திற்குப் பிறகு மோசேயின்
கைகள் சோர்வடைந்தன. மோசேயோடு
சென்ற மனிதர்கள் மோசேயின் கைகளைத்
தூக்கியவாறே வைத்திருப்பதற்கு ஒரு வழி
காண முயன்றார்கள். ஒரு பெரிய பாறையை
மோசேக்குக் கீழே நகர்த்தி, அவனை அதில்
உட்காரச் செய்தார்கள். பின் ஆரோனும்,
ஊரும் மோசேயின் கைகளைத் தூக்கிப்
பிடித்தார்கள். ஆரோன் மோசேக்கு ஒரு
புறமாகவும், ஊர் அவனுக்கு மறுபுறமாகவும்
நின்றிருந்தனர். சூரியன் மறையும் வரைக்கும்
அவர்கள் இவ்வாறே அவனுடைய
கைகளைப் பிடித்திருந்தார்கள். 13 ஆகவே
யோசுவாவும் அவனுடைய ஆட்களும்
இப்போரில் அமலேக்கியர்களை வென்
றார்கள்.
14 அப்போது கர்த்தர் மோசேயிடம், "இந்த
யுத்தத்தைப் பற்றி எழுது. இங்கு
நடந்தவற்றை ஜனங்கள் நினைவுகூரும்
படியாக இக்காரியங்களை ஒரு புத்தகத்தில்
எழுது. பூமியிலிருந்து அமலேக்கிய ஜனங்
களை முற்றிலுமாக அழிப்பேன் என்பதை
யோசுவாவுக்கு உறுதியாகக் கூறு" என்றார்.
15 பின் மோசே ஒரு பலிபீடத்தைக் கட்டி
னான். "கர்த்தர் எனது கொடி"* என்று
அந்தப் பலிபீடத்திற்குப் பெயரிட்டான்.
16 மோசே, "கர்த்தருடைய சிங்காசனத்திற்கு
நேராக என் கைகளை உயர்த்தினேன்.
ஆகையால் கர்த்தர் எப்பொழுதும் செய்தது
போல தலைமுறை தலைமுறையாக
அமலேக்கியரை எதிர்த்துப் போர் செய்தார்"
என்றான்.

### மோசேயின் மாமனாரிடமிருந்து அறிவுரை

18 மோசேயின் மாமனாராகிய எத்திரோ
மீதியானில் ஒரு ஆசாரியனாக
இருந்தான். மோசேக்கும், இஸ்ரவேல் ஜனங்க
ளுக்கும் பல வகைகளில் தேவன் உதவிய
தையும், எகிப்திலிருந்து கர்த்தர் இஸ்ரவேல
ரை வழிநடத்தினதையும் எத்திரோ கேள்விப்
பட்டான். 2 எனவே தேவனின் மலைக்கருகில்
(ஓரேப்) மோசே கூடாரமிட்டுத் தங்கியிருந்த
போது, எத்திரோ அவனிடம் சென்றான்.
அவன் மோசேயின் மனைவியாகிய
சிப்போராளையும் அழைத்து வந்திருந்தான்.
(மோசே அவளை வீட்டிற்கு அனுப்பி
விட்டிருந்தபடியால் சிப்போராள், மோசே
யோடு இருக்கவில்லை.) 3 எத்திரோ
மோசேயின் இரண்டு மகன்களையும்
அழைத்து வந்திருந்தான். முதல் மகனின்
பெயர் கெர்சோம்.* ஏனெனில் அவன்
பிறந்தபோது, நான் "அந்நிய தேசத்தில்
பரதேசியாக உள்ளேன்" என்று மோசே
கூறினான். 4 இன்னொரு மகனின் பெயர்
எலியேசர்.* ஏனெனில் அவன் பிறந்தபோது,
மோசே, "எனது முற்பிதாக்களின் தேவன்
எனக்கு உதவி, எகிப்தின் மன்னனிடமிருந்து
அவர் என்னைக் காத்தார்" என்றான்.
5 மோசே தேவனின் மலைக்குப் (சீனாய்)
பக்கத்திலுள்ள பாலைவனத்தில் கூடார
மிட்டுத் தங்கியிருந்தபோது, எத்திரோ
அவனிடம் சென்றான். மோசேயின்
மனைவியும் அவனது இரண்டு மகன்களும்
எத்திரோவோடிருந்தனர்.
6 எத்திரோ மோசேக்குச் செய்தி சொல்லி
யனுப்பினான். எத்திரோ, "உனது மாமனா
ராகிய எத்திரோ வந்துள்ளேன். நான் உனது
மனைவியையும், உனது இரண்டு மகன்
களையும் உன்னிடம் அழைத்து வந்திருக்கி
றேன்" என்று சொன்னான்.
7 எனவே மோசே மாமனாரைப்
பார்ப்பதற்கு வெளியே போனான். மோசே
அவனைக் குனிந்து வணங்கி, முத்த
மிட்டான். இருவரும் ஒருவருக்கொருவர்
சுகசெய்திகளை விசாரித்துக் கொண்டனர்.
பின் மோசேயின் கூடாரத்திற்குள் மேலும்
அதிகமாக உரையாடும்படிக்கு நுழைந்தனர்.
8 இஸ்ரவேல் ஜனங்களினிமித்தம் கர்த்தர்
பார்வோனுக்கும் எகிப்தியருக்கும் எதிராகச்
செய்த எல்லாவற்றையும், பார்வோனுக்கும்
எகிப்தின் ஜனங்களுக்கும் கர்த்தர் செய்த
வற்றையும், வழியில் அவர்களுக்கு உண்
டான பிரச்சனைகளைப் பற்றியும், துன்பம்
வந்தபோதெல்லாம் கர்த்தர் இஸ்ரவேல்
ஜனங்களை எப்படிக் காப்பாற்றினார்
என்பதையெல்லாம் மோசே தன் மாமனா
ரான எத்திரோவிடம் சொன்னான்.

---

**கர்த்தர் எனது கொடி** அல்லது "யேகோவா நிசி."

**கெர்சோம்** எபிரெய வார்த்தைகளைப் போன்று இது ''அங்கே ஒரு அந்நியன்'' எனப் பொருள்படும்.

**எலியேசர்** இந்தப் பெயர் ''என் தேவன் உதவுகிறார்'' எனப் பொருள்படும்.

9கர்த்தர் இஸ்ரவேலுக்காகச் செய்த எல்லா
நல்ல காரியங்களையும் கேள்விப்பட்டபோது
எத்திரோ மிக்க மகிழ்ச்சியடைந்தான்.
எகிப்தியரிடமிருந்து இஸ்ரவேல் ஜனங்களை
கர்த்தர் விடுதலை செய்தார் என்பதையறிந்து
அவன் மகிழ்ந்தான். 10எத்திரோ,

"கர்த்தரை துதியுங்கள்!
எகிப்தின் வல்லமையிலிருந்து
அவர் உங்களை விடுவித்தார்.
பார்வோனிடமிருந்து கர்த்தர்
உங்களைக் காப்பாற்றினார்.
11 இப்போது மற்ற எல்லா
தேவர்களையும்விட
கர்த்தர் பெரியவர் என்பதை
நான் அறிவேன்.
அவர்கள் அடிமைகளாக உள்ளார்கள்
என எண்ணியிருந்தனர்,
ஆனால் தேவன் செய்ததைப்
பாருங்கள்!" என்றான்.

12எத்திரோ சில பலிகளையும், காணிக்கை
களையும் தேவனை மகிமைப்படுத்து
வதற்காகக் கொண்டு வந்தான். மோசேயின்
மாமனாராகிய எத்திரோவோடு சேர்ந்து
உண்பதற்காக ஆரோனும் இஸ்ரவேலரின்
மூப்பர்களும் (தலைவர்களும்) வந்தார்கள்.
அவர்கள் எல்லோரும் தேவனுடைய
சந்நிதியில் சேர்ந்து உணவு உண்டார்கள்.
13மறுநாள், ஜனங்களை நியாயந்தீர்க்கும்
விசேஷ வேலை மோசேக்கு இருந்தது.
நாள் முழுவதும் மோசேக்கு முன்னால்
காலை முதல் மாலைவரை ஜனங்கள் கூடி
நின்றனர்.
14மோசே ஜனங்களை நியாயந்தீர்ப்பதை
எத்திரோ பார்த்தான். அவன், "ஏன்
இவ்வாறு செய்கிறாய்? ஏன் நீ மட்டும்
நியாயந்தீர்க்க வேண்டும்? ஏன் நாள்
முழுவதும் ஜனங்கள் உன்னிடம் வந்து
கொண்டிருக்கின்றனர்?" என்று கேட்டான்.
15மோசே அவனது மாமனாரை நோக்கி:
"ஜனங்கள் என்னிடம் வந்து, அவர்களின்
பிரச்சனைகளைப் பற்றிய தேவனின்
முடிவைக் கேட்டறிந்து சொல்லுமாறு என்
னைக் கேட்கிறார்கள். 16ஜனங்கள் மத்தியில்
விவாதம் எழுந்தால் அவர்கள் என்னிடம்
வருகிறார்கள். எந்த மனிதன் சரியாகச்
செயல்படுகிறான் என்பதை நான் முடிவு
செய்வேன். இவ்வகையில் நான் ஜனங்
களுக்கு தேவனின் சட்டங்களையும், போத
னைகளையும் கற்பிக்கிறேன்" என்றான்.
17ஆனால் மோசேயின் மாமனார் அவனை
நோக்கி, "இதைச் செய்யும் வழி இதுவல்ல,
18நீ ஒருவனே செய்வதற்கு இது பழுவான
வேலையாகும். இவ்வேலையை நீ ஒருவனே
செய்ய முடியாது. அது உன்னைக் களைப்
படையச் செய்யும். ஜனங்களும் சோர்ந்து
போகிறார்கள்! 19இப்போது நான் சொல்
வதைக் கேள். நான் உனக்குச் சில
அறிவுரைகளைக் கூறுவேன். தேவன்
உன்னோடிருக்கும் பொருட்டு நான் ஜெபம்
செய்கிறேன். ஜனங்களின் பிரச்சனைகளைத்
தொடர்ந்து நீ கேட்கவேண்டும், இவற்றைக்
குறித்துத் தொடர்ந்து நீ தேவனிடம் பேச
வேண்டும். 20நீ தேவனின் சட்டங்களையும்
போதனைகளையும் ஜனங்களுக்குக்
கற்பித்துக்கொண்டிருக்க வேண்டும். சட்டங்
களை மீறக்கூடாது என்று அவர்களை
எச்சரித்து விடு. தக்க நெறியில் நடக்குமாறு
அவர்களுக்குக் கூறு. என்னென்ன செய்ய
வேண்டும் என்பது பற்றி அவர்களுக்குக்
கூறு. 21ஆனால் தலைவர்களாகவும், நீதிபதி
களாகவும் இருப்பதற்காகச் சிலரை நீ
தேர்ந்தெடுத்துக்கொள்ளவும் வேண்டும்.

"உன் நம்பிக்கைக்குரிய நல்ல மனிதர்
களைத் தேர்ந்தெடுத்துக்கொள். அம்மனிதர்
கள் தேவனை மதிக்கிறவர்களாக இருக்க
வேண்டும். பணத்திற்காக தங்கள் முடிவு
களை மாற்றாத மனிதர்களைத் தெரிந்து
கொள். ஜனங்களுக்குத் தலைவர்களாக
அவர்களை நியமித்துவிடு. 1000 ஜனங்
களுக்கும், 100 ஜனங்களுக்கும், 50 ஜனங்
களுக்கும், 10 பேருக்கும் கூட தலைவர்கள்
இருக்கட்டும். 22இந்த அதிகாரிகள் ஜனங்களை
நியாயந்தீர்க்கட்டும். மிக முக்கியமான
வழக்கிருந்தால் அவர்கள் உன்னிடம் வரட்
டும், நீ என்ன செய்வதென முடிவெடுக்க
லாம். ஆனால் மற்ற வழக்குகளில்
இம்மனிதர்கள் உனது வேலையைப்
பகிர்ந்துகொள்ளட்டும். இப்படி ஜனங்களை
வழிநடத்துவது உனக்கு எளிதாகும். 23தேவ
தயவால் நீ இவற்றைச் செய்தால், நீ
உனது பணியை இன்னும் சிறப்பாகச் செய்ய
முடியும். அதே நேரத்தில் ஜனங்களும் தங்கள்
பிரச்சனைகளுக்குத் தீர்வு கண்டவர் களாய்
வீடு திரும்ப முடியும்" என்றான்.
24எனவே எத்திரோ கூறியபடியே மோசே
செய்தான். 25இஸ்ரவேல் ஜனங்களில் சில
நல்ல மனிதர்களை மோசே தெரிந்தெடுத்து
ஜனங்களுக்குத் தலைவர்களாக அவர்களை
நியமித்தான். 1000 பேருக்கும், 100 பேருக்கும்,
50 பேருக்கும், 10 பேருக்கும் தலைவர்கள்
நியமிக்கப்பட்டனர். 26இந்த அதிகாரிகள்
ஜனங்களுக்கு நீதிபதிகளாக இருந்தனர். இந்த
அதிகாரிகளிடம் ஜனங்கள் தங்கள் விவாதங்
களை எந்த நேரத்திலும் முன்வைக்க
முடிந்தது. மிக முக்கியமான வழக்குகளை
மட்டும் மோசே தீர்த்து வைக்க வேண்டிய
தாயிற்று.
27கொஞ்ச நாட்களுக்குப்பின், மோசே தன்
மாமனாராகிய எத்திரோவை வழியனுப்
பினான். எத்திரோ தன் வீட்டிற்குத்
திரும்பினான்.

### இஸ்ரவேலோடு தேவனின் உடன்படிக்கை

19 எகிப்திலிருந்து புறப்பட்ட மூன்றாவது
மாதத்தில் இஸ்ரவேல் ஜனங்கள் சீனாய்
பாலைவனத்தை அடைந்தனர். 2 அவர்கள்
ரெவிதீமிலிருந்து சீனாய் பாலைவனத்திற்குப்
பிரயாணம் செய்திருந்தனர். மலைக்கருகே
(ஓரேப் மலை) இஸ்ரவேல் ஜனங்கள்
கூடாரமிட்டனர். 3 பின் மோசே தேவனைச்
சந்திக்கும்பொருட்டு மலைமீது ஏறினான்.
மலையின்மேல் தேவன் அவனோடு பேசி
னார். அவனிடம், "யாக்கோபின் பெரிய
குடும்பத்தினராகிய இஸ்ரவேலின் ஜனங்
களுக்கு இவ்விஷயங்களைக் கூறு: 4 'என்
எதிரிகளுக்கு என்னால் என்ன செய்ய
முடியும் என்பதை நீங்களே பார்த்தீர்கள்.
எகிப்தின் ஜனங்களுக்கு நான் செய்தவற்றை
நீங்கள் கண்டீர்கள். கழுகைப்போல நான்
உங்களை எகிப்திலிருந்து சுமந்து வந்து,
இங்கு என்னிடம் அழைத்து வந்ததை
நீங்கள் பார்த்தீர்கள். 5 எனவே என் கட்டளை
களுக்கு நீங்கள் கீழ்ப்படிய வேண்டுமென
உங்களுக்குக் கூறுகிறேன். எனது
உடன்படிக்கையை மீறாதீர்கள். நான்
கூறுகிறபடி நீங்கள் நடந்தால், என்
விசேஷமான ஜனங்களாயிருப்பீர்கள். உலகம்
முழுவதும் எனக்குச் சொந்தமானது. ஆனால்
எனது விசேஷ ஜனங்களாக இருக்கும்படி,
நான் உங்களைத் தெரிந்து கொண்டேன்.
6 ராஜரீக ஆசாரிய கூட்டமான, ஒரு பரிசுத்த
ஜனமாக நீங்கள் இருப்பீர்கள்.' மோசே,
நான் கூறியதை நீ இஸ்ரவேல் ஜனங்களுக்குச்
சொல்ல வேண்டும்" என்றார்.

7 மோசே மலையிலிருந்து கீழே இறங்
கினான். ஜனங்களின் மூப்பர்களை
(தலைவர்கள்) வரவழைத்து அவர்களிடம்
கூறும்படியாகக் கர்த்தர் கட்டளையிட்ட
வற்றை மோசே கூறினான். 8 எல்லா
ஜனங்களும் சேர்ந்து ஒரே குரலில், "கர்த்தர்
கூறுகின்ற வற்றிற்கு நாங்கள் கீழ்ப்படி
வோம்" என்றார்கள்.

மோசே மீண்டும் மலையின் மேலேறி
தேவனிடம் சென்றான். மோசே தேவனிடம்
ஜனங்கள் அவருக்குக் கீழ்ப்படிவதாகக் கூறி
யதைச் சொன்னான். 9 கர்த்தர் மோசேயிடம்,
"கார்மேகத்தினூடே நான் உன்னிடம்
வருவேன், உன்னோடு பேசுவேன்! நான்
உன்னோடு பேசுவதை எல்லா ஜனங்களும்
கேட்பார்கள். நீ அவர்களுக்குக் கூறுவதை
ஜனங்கள் எப்பொழுதும் நம்புவதற்காக நான்
இதைச் செய்வேன்" என்றார்.

ஜனங்கள் கூறிய அனைத்தையும் மோசே
தேவனுக்குச் சொன்னான்.

10 கர்த்தர் மோசேயை நோக்கி, "ஒரு
விசேஷ கூட்டத்திற்காக இன்றும், நாளையும்
நீ ஜனங்களை ஆயத்தப்படுத்த வேண்டும்.
ஜனங்கள் அவர்கள் ஆடைகளைத் துவைக்க
வேண்டும். 11 மூன்றாம் நாளில் எனக்காகக்
காத்திருக்க வேண்டும். மூன்றாவது நாள்
கர்த்தர் சீனாய் மலைக்கு இறங்கி வருவார்,
எல்லா ஜனங்களும் என்னைக் காண்
பார்கள். 12-13 எல்லா ஜனங்களும் மலையை
நெருங்காதிருக்கும்படி அவர்களுக்கு நீ
கூறவேண்டும். ஒரு எல்லையை வரைந்து,
ஜனங்கள் அதைத் தாண்டிச் செல்லாதபடி
பார்த்துக்கொள். மலையைத் தொடும்
மனிதனோ, மிருகமோ கொல்லப்பட
வேண்டும். அவனைக் கற்களால் தாக்கியோ,
அம்புகளை எய்தோ கொல்ல வேண்டும்.
கொல்லப்பட்டவனைப் பிறர் தொடக்
கூடாது. எக்காளம் தொனிக்கும் வரைக்கும்
ஜனங்கள் காத்திருக்கவேண்டும். அதன்
பின்னரே அவர்கள் மலைக்கு சமீபம் செல்ல
லாம்" என்றார்.

14 மோசே மலையை விட்டிறங்கி, ஜனங்
களிடம் சென்று, விசேஷ கூட்டத்திற்கு
அவர்களை ஆயத்தப்படுத்தினான். அவர்கள்
தங்கள் ஆடைகளைத் துவைத்து பரிசுத்த
மாக்கினார்கள்.

15 மோசே ஜனங்களை நோக்கி, "மூன்று
நாட்களில் தேவனைத் தரிசிப்பதற்குத்
தயாராகுங்கள். அதுவரைக்கும் ஆண்கள்,
பெண்களைத் தொடக்கூடாது" என்றான்.

16 மூன்றாம் நாள் காலையில், மலையின்
மேல் மேகமொன்று திரண்டு வந்தது. இடியும்
மின்னலும் எக்காளத்தின் பேரொலியும்
இருந்தன. கூடாரத்திலிருந்த ஜனங்கள் அனை
வரும் பயந்தனர். 17 அப்போது மோசே,
ஜனங்களைக் கூடாரத்திலிருந்து மலையருகே
யுள்ள ஓரிடத்திற்கு தேவனைச் சந்திப்பதற்
காக வழிநடத்திச் சென்றான். 18 சீனாய்
மலை புகையால் நிரம்பிற்று. சூளை
யிலிருந்து புகை வருவதுபோல் மலையின்
மேல் புகை எழுந்தது. கர்த்தர் மலைக்கு
நெருப்பில் இறங்கி வந்ததால் இப்படி
ஆயிற்று. மலையும் அதிரத் தொடங்கிற்று.
19 எக்காள சத்தம் உரத்து தொனிக்க
ஆரம்பித்தது. மோசே தேவனிடம் பேசிய
போதெல்லாம், தேவன் இடிபோன்ற குரலில்
பதிலளித்தார்.

20 கர்த்தர் சீனாய் மலையின்மேல் இறங்
கினார். பரலோகத்திலிருந்து கர்த்தர் மலை
யின் உச்சியில் இறங்கினார். பின் கர்த்தர்
மோசேயை மலையின் உச்சிக்கு தன்னிடத்
தில் வருமாறு கூறினார். அவ்வாறே
மோசேயும் மலையின் மீது ஏறினான்.

21 கர்த்தர், மோசேயை நோக்கி, "ஜனங்கள்
என்னைப் பார்க்கும்படி நெருங்கிவராதபடி
அவர்களை எச்சரி. இதை மீறினால்
அவர்களில் பலர் மரிக்க நேரிடும்.
22 என்னிடம் வரவேண்டிய ஆசாரியர்களை
இந்த சிறப்புச் சந்திப்புக்கு ஆயத்தமாகி
வரும்படி கூறு. அவர்கள் சரியான ஆயத்தம்
செய்யவில்லையென்றால், நான்
அவர்களைத் தண்டிப்பேன்" என்றார்.

23 மோசே கர்த்தரை நோக்கி, "ஜனங்கள்
மலை உச்சிக்கு வர முடியாது. பரிசுத்த

எல்லையை நெருங்காதபடி செய்யுமாறு
நீர்தானே எங்களிடம் கூறியுள்ளீர்” என்றான்.
24 கர்த்தர் அவனிடம், “ஜனங்களிடம் இறங்கிச்
செல். ஆரோனை உன்னோடு அழைத்து வா.
ஆசாரியர்களோ, ஜனங் களோ என்னை
அணுகவிடாதே. அவர்கள் என்னை
நெருங்கினால் நான் அவர்களை
தண்டிப்பேன்” என்றார்.
25 எனவே மோசே ஜனங்களிடம் போய்
இச்செய்தியைக் கூறினான்.

## பத்துக் கட்டளைகள்

20 பின்பு தேவன், 2 “நானே உங்கள்
தேவனாகிய கர்த்தர். நீங்கள் அடிமை
களாயிருந்த எகிப்து தேசத்திலிருந்து நான்
உங்களை வழிநடத்தி வந்தேன். எனவே,
நீங்கள் இந்தக் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய
வேண்டும்:
3 “என்னைத் தவிர வேறு
தேவர்களை நீங்கள் தொழக்கூடாது.
4 “நீங்கள் எந்த விக்கிரகங்களையோ,
படங்களையோ, சிலைகளையோ
செய்யக்கூடாது. வானிலும், பூமியிலும்
தண்ணீரிலுமுள்ள எந்தப் பொருளின்
வடிவத்திலும் அவற்றைச் செய்யக்
கூடாது. 5 எந்த விதமான விக்கிரகத்தை
யும் தொழுகை செய்யவோ அதை
சேவிக்கவோ கூடாது. ஏனெனில்
நானே உங்கள் தேவனாகிய கர்த்தர்.
எனது ஜனங்கள் பிற தேவர்களைத்
தொழுவதை நான் வெறுக்கிறேன்.
எனக்கு எதிராகப் பாவம் செய்வோர்
எனது பகைவர்களாவார்கள். நான்
அவர்களைத் தண்டிப்பேன். அவர்
களின் பிள்ளைகளையும், பேரக்
குழந்தைகளையும், அப்பேரர்களின்
குழந்தைகளையும் தண்டிப்பேன். 6 என்
னிடம் அன்போடிருந்து எனது
கட்டளைகளுக்கு கீழ்ப்படிகிறவர்க
ளிடம் நான் இரக்கம் காட்டுவேன்.
ஆயிரம் தலைமுறைவரைக்கும் அவர்
கள் குடும்பங்களிடம் கருணையோடு
இருப்பேன்!.
7 “நீங்கள் உங்கள் தேவனாகிய
கர்த்தரின் பெயரைத் தகாத வழியில்
பயன்படுத்தக்கூடாது. ஒருவன் அவ்
வாறு பயன்படுத்தினால், அவன்
குற்றவாளியாவான். கர்த்தர் அவனது
குற்றத்திற்காக அவனை தண்டிப்பார்.
8 “ஓய்வுநாளை விசேஷ நாளாகக்
கருதும்படி நீங்கள் நினைவுகூருங்கள்.
9 உங்கள் வேலையை வாரத்தின் ஆறு
நாட்களும் செய்யுங்கள். 10 ஆனால்
ஏழாம் நாள் தேவனாகிய கர்த்தரை
மகிமைப்படுத்தும்படி ஓய்வெடுக்க
வேண்டிய நாள். எனவே அந்நாளில்
நீங்களும், உங்கள் பிள்ளைகளும்,
உங்கள் வேலைக்காரரும், வேலைக்
காரிகளும் வேலை செய்யக்கூடாது.
உங்கள் மிருகங்களையோ, உங்கள்
நகரங்களில் வாழும் அந்நியர்களையோ
வேலை வாங்கக்கூடாது. 11 ஏனெனில்
கர்த்தர் ஆறு நாட்கள் வேலைசெய்து
வானம், பூமி, கடல் அவற்றிலுள்ள
எல்லாவற்றையும் படைத்தார். ஏழாம்
நாளில் கர்த்தர் ஓய்வெடுத்தார். இவ்
வாறு கர்த்தர் ஏழாம் நாளாகிய ஓய்வு
நாளை ஆசீர்வதித்தார். கர்த்தர் அதை
ஒரு மிக விசேஷமான நாளாக்கினார்.
12 “உங்கள் தந்தை, தாயாரை மதிக்க
வேண்டும். உங்கள் தேவனாகிய கர்த்தர்
தரும் நாட்டில் நீண்ட ஆயுள் வாய்ப்ப
தற்கு இதைச் செய்தல் வேண்டும்.
13 “நீங்கள் யாரையும் கொல்லாதி
ருப்பீர்களாக.
14 “நீங்கள் விபச்சாரம், செய்யா
திருப்பீர்களாக.
15 “நீங்கள் எதையும் திருடாதிருப்
பீர்களாக.
16 “பிற ஜனங்களைக் குறித்துப்
பொய் சாட்சி பேசவேண்டாம்,
17 “அயலானின் வீட்டை இச்சிக்கக்
கூடாது. அவனது மனைவியை
விரும்பவேண்டாம். அவனது வேலைக்
காரனையோ வேலைக்காரியையோ,
ஆடுமாடுகளையோ, கழுதைகளையோ
எடுக்க வேண்டாம். இன்னொரு
வனுக்குச் சொந்தமான எந்தப் பொரு
ளையும் வஞ்சித்து எடுத்துக்கொள்ளக்
கூடாது!” என்றார்.

## ஜனங்கள் தேவனுக்கு பயப்படுதல்

18 இதுவரை, பள்ளத்தாக்கிலிருந்த ஜனங்
கள் இடிமுழக்கத்தைக் கேட்டார்கள்,
மலையின் மீது மின்னலைப் பார்த்தார்கள்.
மலையினின்று புகையெழும்பக் கண்டனர்.
ஜனங்கள் அச்சத்தால் நடுங்கினார்கள்.
மலையைவிட்டு தூரத்தில் நின்று கவனித்
தனர். 19 பின்பு ஜனங்கள் மோசேயிடம்,
“நீர் எங்களோடு பேசினால் நாங்கள்
கேட்போம். ஆனால் தேவன் எங்களோடு
நேரில் பேசவிடாதிரும். அவ்வாறு நடந்
தால், நாங்கள் மரித்துப்போவோம்”
என்றனர்.
20 மோசே ஜனங்களிடம், “பயப்படாதீர்கள்!
கர்த்தர் உங்களை நேசிக்கிறார் என்பதைக்
காண்பிக்கும்படியாக வந்திருக்கிறார். நீங்கள்
அவருக்கு மரியாதை கொடுக்க வேண்டும்.
அதினிமித்தமாக நீங்கள் பாவம் செய்யா
திருப்பீர்கள்” என்றான்.
21 தேவன் இருந்த கார்மேகத்திற்குள்
மோசே போனபோது ஜனங்கள் மலையை
விட்டு விலகி நின்றார்கள். 22 இஸ்ரவேல்
ஜனங்களிடம் கூறுமாறு கர்த்தர் மோசேக்கு
பின்வருமாறு கூறினார்: “பரலோகத்தி
லிருந்து உங்களோடு பேசினதை நீங்கள்

கண்டீர்கள். 23 எனவே, பொன் அல்லது
வெள்ளியால் எனக்கு இணையாக நீங்கள்
விக்கிரகங்களை உண்டாக்க வேண்டாம்.
இந்த போலியான தெய்வங்களை நீங்கள்
செய்யக்கூடாது.
24 “எனக்கென்று விசேஷ பலிபீடம்
செய்யுங்கள். அதைக் கட்டும்போது மண்
ணைப் பயன்படுத்துங்கள். அதன்மேல், தகன
பலிகளையும், சமாதான பலிகளையும்
பலியாகச் செலுத்துங்கள். உங்கள் ஆடு
மாடுகளை இதற்கென்று பயன்படுத்துங்கள்.
என்னை நினைவுகூரும்படியாக நான் சொல்
கிற இடங்களிலெல்லாம் இதைச் செய்யுங்கள்.
அப்போது நான் வந்து உங்களை ஆசீர்வதிப்
பேன். 25 பலிபீடத்தை அமைப்பதற்கு நீங்கள்
கற்களைப் பயன்படுத்தினால், இரும்புக்
கருவியால்* பிளக்கப்பட்ட கற்களைப் பயன்
படுத்த வேண்டாம். அப்பலிபீடம் ஏற்றுக்
கொள்ளப்படமாட்டாது. 26 பலிபீடத்திற்குப்
படிகளைச் செய்யாதீர்கள். படிகள் இருந்தால்
ஜனங்கள் பலிபீடத்தை ஏறிட்டு நோக்கும்
போது உங்கள் நிர்வாணத்தை ஆடைகளின்
கீழே அவர்கள் பார்க்க நேரிடும்” என்றார்.

### பிற சட்டங்களும், கட்டளைகளும்

21 அப்போது தேவன் மோசேயிடம்,
“ஜனங்களுக்கு நீ கொடுக்க வேண்டிய
பிற சட்டங்கள் இவையாகும்.
2 “நீங்கள் ஒரு எபிரெய அடிமையை
வாங்கினால், அவன் ஆறு ஆண்டுகள்
மட்டுமே உங்களுக்காக உழைப்பான். ஆறு
ஆண்டுகளுக்குப்பின் அவன் விடுதலை
பெறுவான். கட்டணமாக எதையும் அவன்
செலுத்தத் தேவையில்லை. 3 ஒருவன் உங்கள்
அடிமையாகும்போது மணமாகாதவனாக
இருந்தால், விடுதலையாகும்போது தனிய
னாகப் போவான். ஒருவன் அடிமையா
கும்போது திருமணமானவனாக இருந்தால்,
அவன் விடுதலை பெறும்போது மனைவி
யை அழைத்துச் செல்லலாம். 4 அடிமை
மணமாகாதவனாக இருந்தால், எஜமான்
அவனுக்கு ஒரு மனைவியைக் கொடுக்க
லாம். அவள் மகன்களையோ, மகள்
களையோ பெற்றெடுத்தால் அவளும் அவள்
பிள்ளைகளும் எஜமானுக்கு உரிமையா
வார்கள். அடிமையின் வேலையாண்டுகள்
முடிந்தபின், அவன் மட்டும் விடுதலை
பெறுவான்.
5 “ஆனால் அடிமை எஜமானோடு நீடித்து
இருப்பதாக முடிவுசெய்தால் அவன், ‘நான்
என் எஜமானை நேசிக்கிறேன். நான் எனது
மனைவியையும், என் பிள்ளைகளையும்
நேசிக்கிறேன். நான் விடுதலை பெற
மாட்டேன். நான் இங்கேயே தங்குவேன்’
என்று சொல்ல வேண்டும். 6 இவ்வாறு
நிகழ்ந்தால், எஜமான் அடிமையைத் தேவ
னுடைய சந்நிதானத்தில் கொண்டுவர
வேண்டும். எஜமான் அடிமையை ஒரு
வாசலருகே அல்லது வாசலின் நிலைக்
காலின் அருகே அழைத்துச் சென்று,
அடிமையின் காதில் கூர்மையான கருவி
யால் ஒரு துளைபோட வேண்டும்.
அப்போது அடிமை தன் வாழ்க்கை முழு
வதும் எஜமானுக்கு தொண்டு செய்வான்.
7 “ஒரு மனிதன் தன் மகளை அடிமையாக
விற்க முடிவு செய்தால், அவளை விடுதலை
செய்வதற்குரிய விதிகள் ஆண் அடிமையை
விடுவிப்பதற்கான விதிமுறைகளில் இருந்து
மாறுபட்டவை. 8 எஜமானுக்கு அப்பெண்
ணிடம் விருப்பம் இல்லை என்றால்,
அப்பெண்ணை அவள் தந்தைக்கு மீண்டும்
விற்றுவிடலாம். எஜமான் அப்பெண்ணை
மணப்பதாக வாக்குறுதி அளித்தால்,
அப்பெண்ணை வேறு யாருக்கும் விற்கும்
உரிமையை இழந்துவிடுவான். 9 அடிமைப்
பெண் எஜமானின் மகனை மணப்பதற்கு
எஜமான் சம்மதித்தால் அவளை அடிமை
யாக நடத்தக்கூடாது. அவளை ஒரு மகளைப்
போல் நடத்த வேண்டும்.
10 “எஜமான் மற்றொரு பெண்ணை
மணந்தால் முதல் மனைவிக்குக் குறைவான
ஆடையோ, உணவோ கொடுக்கக்கூடாது.
அவன் அவளோடு தூங்குவதை நிறுத்தக்
கூடாது. விவாகத்தில் அவளுக்கு உரிமை
யான எல்லாப் பொருட்களையும் அவன்
கொடுத்துவர வேண்டும். 11 அவன் அவளுக்கு
இந்த மூன்று காரியங்களையும் செய்ய
வேண்டும். இவ்வாறு செய்யவில்லை
யென்றால், அப்பெண் விடுவிக்கப்படுவாள்.
அவள் செலுத்தவேண்டிய கடன் எதுவு
மிராது.
12 “ஒரு மனிதன் இன்னொருவனை திட்ட
மிட்டு அடித்துக் கொன்றால், அப்போது
அம்மனிதன் கொல்லப்பட வேண்டும்.
13 ஆனால் ஒருவன் மற்றொருவனைத் திட்ட
மிடாமல் கொன்றால், தேவன் அந்த
விபத்தை அனுமதித்தார் என்று எண்ண
லாம். குறிப்பிட்ட சில இடங்களை பாது
காப்பிற்காக ஓடி உயிர்தப்பும்படி நியமிப்
பேன். அதனால் இத்தகைய ஒருவன் அங்கே
ஓடலாம். 14 ஒருவன் மற்றொருவனைச்
சினந்து அல்லது வெறுத்துக் கொல்லத்
திட்டமிட்டால், கொலையாளி தண்டிக்கப் பட
வேண்டும். அவனை எனது பலி பீடத்திற்குத்
தொலைவில் அழைத்துச் சென்று கொல்ல
வேண்டும்.
15 “தந்தையையோ, தாயையோ அடிக்கிற
எந்த மனிதனும் கொல்லப்பட வேண்டும்.
16 “ஒருவனை அடிமையாக்கவோ, அடி
மையாக விற்பதற்கோ திருடிச் சென்றால்,
அவ்வாறு திருடிச் சென்றவன் கொல்லப்பட
வேண்டும்.

*__இரும்புக் கருவியால்__ எழுத்தின் பிராகாரமாக ''பட்டயம்'' எனப் பொருள்படும்.

17“தந்தையையோ, தாயையோ சபிக்கிற
எந்த மனிதனும் கொல்லப்பட வேண்டும்.
18“இருவர் வாக்குவாதம் செய்து,
ஒருவனை மற்றொருவன் கல்லால் அல்லது
கையால் தாக்கினால் எவ்வாறு அம்
மனிதனைத் தண்டிக்கவேண்டும்? தாக்கப்பட
மனிதன் மரிக்கவில்லையென்றால் அவனைத்
தாக்கிய மனிதனும் கொல்லப்படக்கூடாது.
19தாக்கப்பட்ட மனிதன் படுக்கையில் சில
காலம் இருக்க நேர்ந்தால், அவனைத்
தாக்கிய மனிதன் அவன் குணமாகும்வரை
அவனை ஆதரிக்கவேண்டும். அவன்
சம்பாதிப்பதற்குரிய நாட்களை வீணாக்கி
யதற்குப் பணம் கொடுக்க வேண்டும். அம்
மனிதன் அவன் முழுமையாக குணமாகும்
வரை உதவிசெய்ய வேண்டும்.
20“சில வேளைகளில் ஜனங்கள் தங்கள்
ஆண் அல்லது பெண் அடிமைகளை
அடிப்பார்கள். அடிபட்டு அடிமை மரிக்க
நேர்ந்தால், அவனைக் கொன்றவன்
தண்டிக்கப்பட வேண்டும். 21அடிமை மரிக்கா
மல் சில நாட்களுக்குப் பின் குண
மடைந்தால், அம்மனிதனைத் தண்டிக்க
வேண்டாம். ஏனெனில் எஜமானன் அடிமை
யைப் பணம் கொடுத்து வாங்கியிருந்ததால்
அந்த அடிமை அவனுக்குரியவன்.
22“இரு மனிதர் சண்டையிடும்போது, ஒரு
கர்ப்பிணிப் பெண்ணைத் தாக்கிவிடக்கூடும்.
அதனால் உரிய காலத்திற்கு முன்னாலேயே
அவள் குழந்தையை பெறலாம். அப்பெண்
அதிகமான காயமடையவில்லையென்றால்,
அவளைக் காயப்படுத்திய மனிதன்
அபராதம் செலுத்த வேண்டும். அபராதத்
தொகை எவ்வளவு என்பதை
அப்பெண்ணின் கணவன் தீர்மானிப்பான்.
அபராதத் தொகை யின் அளவைத்
தீர்மானிக்க நீதிபதிகள் அவனுக்கு
உதவுவார்கள். 23ஆனால் அப் பெண்
மிகுதியாகக் காயமுற்றால் அவளைக்
காயப்படுத்திய மனிதன் தண்டனை பெற
வேண்டும். ஒருவன் கொல்லப்பட்டால்
அக்கொலைக்குக் காரணமானவனும்
கொல்லப்பட வேண்டும். ஒரு உயிருக்கு
மற்றொரு உயிர் வாங்கப்பட வேண்டும்.
24கண்ணுக்குக் கண்ணையும், பல்லுக்குப்
பல்லையும், கைக்குக் கையையும்,
காலுக்குக் காலையும், 25சூட்டுக்கு சூடும்,
காயத்துக்குக் காயமும், வெட்டுக்கு வெட்டும்
தண்டனை யாகக் கொடுக்கவேண்டும்.
26“ஒரு மனிதன் அடிமையைக் கண்ணில்
அடித்ததால் அவன் குருடனாக நேர்ந்தால்,
அடிமை விடுதலைபெற வேண்டும்.
விடுதலைக்குரிய விலை அவன் இழந்த
கண்ணேயாகும். இது ஆண் அடிமைக்கும்,
பெண்ணடிமைக்கும் பொதுவாகும். 27ஒரு
எஜமானன் தன் அடிமையை வாயில்
அடித்து, அடிமை பல்லை இழக்க நேர்ந்தால்
அடிமையை விடுதலை செய்ய வேண்டும்.
அவன் விடுதலைக்கு அவன் பல்லே
விலையாக அமையும். இது ஆண் அல்லது
பெண் அடிமைக்கும் பொருந்தும்.
28“ஒரு மனிதனின் மாடு ஒரு ஆணையோ,
பெண்ணையோ கொன்றால், அந்த
மாட்டைக் கல்லெறிந்து கொல்லவேண்டும்,
அதை உணவாக உட்கொள்ளக் கூடாது,
அதன் உரிமையாளன் குற்றவாளி அல்ல.
29அது முன்பு பலரைத் தாக்கியபோது
உரிமையாளன் எச்சரிக்கப்பட்டும், அவன்
ஓரிடத்தில் அதைக் கட்டியோ, அடைத்தோ
வைக்காமலிருந்ததால் அவன் குற்றவாளி
யாவான். ஏன்? அது வெளியே தனித்துச்
சென்று, யாரையேனும் கொன்றால் அப்
போது அதன் எஜமானன் குற்றவாளியாகக்
கருதப்படுவான். மாட்டையும் அதன்
உரிமையாளனையும் நீ கல்லெறிந்து கொல்ல
வேண்டும். 30மரித்த மனிதனின் குடும்பத்தி
னர் ஈடாகப் பணத்தைப் பெறலாம், அவர்கள்
பணத்தை ஏற்றுக்கொள்ளும் பட்சத்தில்
மாட்டின் உரிமையாளனைக் கொல்லத்
தேவையில்லை. ஆனால் நீதிபதி கூறும் ஈடுப்
பணத்தை அவன் செலுத்த வேண்டும்.
31“ஒருவனின் மகன் அல்லது மகளை
மாடு கொன்றாலும் அதே விதி பின்பற்றப்
பட வேண்டும். 32ஆனால் ஒரு அடிமையை
மாடு கொன்றால், அந்த அடிமையின்
எஜமானனுக்கு மாட்டின் எஜமானன் 30
வெள்ளிப் பணம்* கொடுக்க வேண்டும்.
மாட்டைக் கல்லெறிந்து கொல்ல வேண்டும்.
ஆண் அல்லது பெண் அடிமைக்கும் சட்டம்
பொதுவானதே.

33“ஒரு மனிதன் கிணற்றின் மூடியை
அகற்றினதாலோ அல்லது ஒரு குழியைத்
தோண்டி மூடாமல் விட்டதாலோ, இன்னொ
ருவனின் மிருகம் அக்குழியில் விழுந்தால்,
அக்குழியைத் தோண்டியவன் குற்றவாளியா
வான். 34அவன் மிருகத்தின் விலையைக்
கொடுத்து அம்மிருகத்தின் உடலைப்
பெற்றுக்கொள்ளலாம்.
35“ஒருவனின் மாடு மற்றொருவனின் மிரு
கத்தைக் கொன்றால் உயிருள்ள மாட்டை
விற்றுவிட வேண்டும். அப்பணத்தை
இருவரும் சரிபாதியாகப் பங்கிட்டுக்கொள்ள
வேண்டும். கொல்லப்பட்ட மாட்டையும்
அவர்கள் சமமாகப் பங்கிட்டுக்கொள்ள
வேண்டும். 36அம்மனிதனின் மாடு அதற்கும்
முன்னர் பிற மிருகங்களைத் தாக்கி
காயப்படுத்தியிருந்தால் அதன் உரிமை
யாளனே மாட்டின் பொறுப்பேற்க வேண்டும்.
அவன் மாடு மற்ற மாட்டைக்
கொன்றிருந்தால் அந்த மாட்டை அவிழ்த்து
விட்டபடியால் அதன் உரிமையாளன்
குற்றவாளியாவான். அவன் செத்துப்போன

---

30 **வெள்ளிப் பணம்** ஒரு புதிய அடிமைக்கான விலை.

மாட்டுக்கு ஈடாக இன்னொரு மாட்டைக்
கொடுக்க வேண்டும். அவனது செத்துப்
போன மாட்டின் உடலைப் பெற்றுக்கொள்ள
வேண்டும்

22 “ஒரு மாட்டையோ, ஆட்டையோ
திருடுகிற மனிதனை நீ எவ்வாறு
தண்டிக்க வேண்டும்? அம்மனிதன் அந்த
மிருகத்தைக் கொன்றாலோ அல்லது
விற்றாலோ, அதனைத் திரும்பக் கொடுக்க
முடியாது. எனவே, அவன் திருடிய
மாட்டுக்குப் பதிலாக ஐந்து மாடுகளைக்
கொடுக்க வேண்டும். அல்லது திருடிய ஒரு
ஆட்டிற்காக நான்கு ஆடுளைக் கொடுக்க
வேண்டும். திருட்டுக்காக பணம் கொடுக்க
வேண்டும். 2-4அவனுக்கு கொடுக்க எதுவும்
சொந்தமில்லையென்றால், அவன் அடிமை
யாக விற்கப்பட வேண்டும். ஆனால் அந்த
மனிதன் தான் திருடிய மிருகத்தை
வைத்திருந்தானாகில், தான் திருடிய
ஒவ்வொரு மிருகத்திற்காகவும் இரண்டு
மிருகங்களைக் கொடுக்க வேண்டும். அது
மாடா, கழுதையா, அல்லது ஆடா என்பது
ஒரு பொருட்டல்ல.
“இரவில் திருடும்படி ஒருவன் ஒரு
வீட்டுக்குள் நுழைய முயற்சி செய்யும்
போது திருடன் கொல்லப்பட்டால், அவன்
கொலைக்கு யாரும் பொறுப்பாளி அல்ல.
ஆனால் அது பகலில் நடந்தால், அவனைக்
கொன்றவன் கொலைக் குற்றவாளியாவான்.
5“ஒருவன் தன் வயலில் அல்லது
திராட்சைத் தோட்டத்தில் நெருப்பு மூட்டக்
கூடும். அந்த நெருப்பு பரவி, அடுத்த
வயலிலோ அல்லது திராட்சைத் தோட்டத்
திலோ பற்றிக்கொள்ள நேர்ந்தால் அய
லானின் நஷ்டத்திற்கு ஈடாக அவன்
விளைச்சலின் சிறந்த பலனுக்கு ஈடான
பணத்தைக் கொடுக்க வேண்டும்.”
6“ஒருவன் வயலின் முட்புதர்களை
எரிக்கும்படி நெருப்பு வைக்கக்கூடும். அது
பரவி அடுத்தவனின் வயலிலுள்ள பயிர்
களையோ, தானியத்தையோ அழித்தால்,
அழிந்து போனவற்றின் விலையை அழி
வுக்குக் காரணமாக இருந்தவன் கொடுக்க
வேண்டும்.
7“ஒரு மனிதன் தனக்குத் தேவையான
பணத்தையோ அல்லது பொருட்களையோ
அடுத்த வீட்டுக்காரனிடம் கொடுத்து வைக்கச்
சொல்லலாம். அவ்வீட்டிலிருந்து
அப்பணமோ அல்லது பொருளோ திருடப்
பட்டுவிட்டால் திருடனைக் கண்டு பிடிக்க
முயற்சி செய்ய வேண்டும். திருடன்
அகப்பட்டால் அவன் திருடிய பொருளின்
இரண்டு மடங்கு விலையைக் கொடுக்க
வேண்டும். 8ஆனால் திருடன் அகப்படாமல்
வீட்டின் எஜமான் குற்றவாளியாக இருந்தால்
தேவன் நியாயந்தீர்ப்பார். வீட்டின்
எஜமானன் தேவனுக்கு முன்னே செல்லும்
போது, அவன் திருடனாக இருந்தால் தேவன்
அவனைத் தண்டிப்பார்.
9“காணமற்போன மாடு, கழுதை, ஆடு
அல்லது துணிகளைக் குறித்து இருவர்
முரண்பட்டால் நீ என்ன செய்ய வேண்டும்?
ஒருவன், ‘இது என்னுடையது’ என்றும்
இன்னொருவன், ‘இல்லை, அது எனக்
குரியது’ என்றும் கூறுகிறான். இருவரும்
தேவனுக்கு முன்னே போக வேண்டும். யார்
குற்றவாளி என்பதைத் தேவன்
தீர்மானிப்பார். குற்றவாளியான மனிதன்
அப்பொருளின் இருமடங்கு விலையை
மற்றவனுக்குக் கொடுக்க வேண்டும்.
10“ஒருவன் அடுத்தவனிடம் தனது மிரு
கத்தைச் சில காலம் கவனித்துக்
கொள்ளும்படியாக விடலாம். அது கழுதை
அல்லது மாடு அல்லது ஆடாக இருக்கலாம்.
யாரும் பார்க்காதபோது ஒருவன் அதனைக்
காயப்படுத்தவோ, கொல்லவோ, திருடவோ
செய்தால் நீ என்ன செய்ய வேண்டும்?
11அதைப் பெற்றுகொண்டவன் அம்
மிருகத்தைத் தான் திருடவில்லை என்பதை
விளக்க வேண்டும். அது உண்மையானால்
கர்த்தரின் சந்நிதியில் சென்று நான்
திருடவில்லை என்று ஆணையிட
வேண்டும். மிருகத்தின் உரிமையாளனும்
அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். அண்டை
வீட்டுக்காரன் அந்த மிருகத்திற்காக எந்தப்
பணமும் செலுத்த தேவையில்லை. 12ஆனால்
அண்டை வீட்டுக்காரன் மிருகத்தைத் திருடி
யிருந்தால், அவன் அதற்கான விலையை
உரிமையாளனுக்குக் கொடுக்க வேண்டும்.
13காட்டு மிருகங்கள் அதனைக் கொன்றிருந்
தால் அதன் உடலைச் சாட்சியாக அண்டை
வீட்டுக்காரன் எடுத்துவர வேண்டும்.
கொல்லப்பட்ட மிருகத்துக்காக அவன்
விலை கொடுக்க வேண்டாம்.

14“அண்டை வீட்டுக்காரனிடமிருந்து
ஒருவன் எதையேனும் இரவல் பெற்றுக்
கொண்டால், அவனே அப்பொருளுக்குப்
பொறுப்பாளியாவான். ஒரு மிருகம்
காயமுற்றாலோ அல்லது மரித்தாலோ
அண்டை வீட்டுக்காரன் அம்மிருகத்தின்
விலையை உரிமையாளனுக்குக் கொடுக்க
வேண்டும். அப்பொருளின் உரிமையாளன்
அங்கு இல்லாதிருந்தால், அண்டை வீட்டுக்
காரன் அதற்குப் பொறுப்பேற்க வேண்டும்.
15ஆனால் உரிமையாளனே அங்கிருந்தால்
அயலான் அதற்குப் பொறுப்பேற்க அவசிய
மில்லை. அண்டை வீட்டுக்காரன்
அம்மிருகத்தை வேலைக்குப் பயன்படுத்தும்
போது அதற்குக் குத்தகை செலுத்தும்
பட்சத்தில் அம்மிருகம் மரித்தாலோ அல்லது
காயப்பட்டாலோ அதற்குரிய பணத்தைச்
செலுத்த வேண்டியதில்லை. மிருகத்தைப்
பயன்படுத்தியதற்காக அவன் ஏற்கெனவே
கொடுத்த பணமே போதுமானது.

16“மணமாகாத கன்னியிடம் ஒரு மனிதன்
பாலின உறவு கொண்டால், அவன் அவளை
மணந்துகொள்ள வேண்டும். அப்
பெண்ணின் தந்தைக்குப் பரிசுப் பொருளை
அவன் கொடுக்க வேண்டும். 17பெண்ணின்
தந்தை அவனைத் தன் மகள் மணக்கச்
சம்மதிக்க விட்டாலும் கூட, அவன்
அப்பணத்தைக் கொடுத்துத் தீர வேண்டும்.
அவளுக்குரிய முழு ஈட்டுப் பொருளையும்
அவன் செலுத்தியே ஆகவேண்டும்.
18“எந்தப் பெண்ணையும் மந்திரம் செய்ய
நீ அனுமதிக்கக் கூடாது. அவள் மந்திரம்
செய்தால் அவள் வாழ அனுமதிக்காதே.
19“மிருகத்தோடு யாரும் உடலுறவு
கொள்ளலாகாது. அவ்வாறு செய்யும்
மனிதன் கொல்லப்பட வேண்டும்.
20“பொய்த் தேவர்களுக்கு ஒருவன் பலி
செலுத்தினால் அம்மனிதன் கொல்லப்பட
வேண்டும். தேவனாகிய கர்த்தருக்கு மட்டுமே
நீங்கள் பலி செலுத்த வேண்டும்.
21“முன்பு எகிப்தில் அந்நியர்களாக
இருந்தீர்கள் என்பதை நினைவிலிருத்திக்
கொள்ளுங்கள். எனவே, உங்கள் நாட்டில்
வாழும் எந்த அந்நியனையும் ஏமாற்றவோ,
காயப்படுத்தவோ கூடாது.
22“கணவனை இழந்த பெண்களுக்கும்,
பெற்றோரற்ற குழந்தைகளுக்கும் எந்தத்
தீமையும் செய்யாதீர்கள். 23விதவைகளுக்கும்,
அநாதைகளுக்கும் ஏதேனும் தீங்கு செய்தீர்
களானால் நான் அதை அறிவேன். அவர்கள்
பட்ட துன்பத்தைப் பற்றிக் கூறும்போது,
நான் கேட்பேன். 24எனக்கு மிகுந்த கோபம்
உண்டாகும். உங்களைப் பட்டயத்தால்
கொல்லுவேன். அப்போது உங்கள்
மனைவியர் விதவைகளாவார்கள். உங்கள்
பிள்ளைகள் அநாதைகளாவார்கள்.
25“என் ஜனங்களில் ஏழையான ஒரு
வனுக்கு நீங்கள் கடனாகப் பணம்
கொடுத்தால், அதற்கு வட்டி கேட்காதீர்கள்.
உடனே அப்பணத்தைத் திருப்பும்படியாக
வற் புறுத்தக்கூடாது. 26நீ கொடுக்கவிருக்கும்
பணத்திற்கு அடமானமாக தன் மேற்
சட்டையை ஒருவன் கொடுத்தால் சூரியன்
மறையும் முன்னர் அந்த மேற்சட்டையைத்
திரும்பக் கொடுத்துவிட வேண்டும்.
27அம்மனிதனுக்கு மேற்சட்டை இல்லாமலிருந்
தால் உடலைப் போர்த்திக்கொள்ள எதுவு
மிராது. அவன் தூங்கும்போது சளி
பிடிக்கும். அவன் என்னைக் கூப்பிட்டால்
நான் அவனைக் கேட்பேன். நான் இரக்கம்
பொருந்தியவராக இருப்பதால் நான்
அவனுக்கு செவிகொடுப்பேன்.
28“நீங்கள் தேவனையோ, ஜனங்கள்
தலைவர்களையோ சபிக்கக்* கூடாது.
29“அறுவடையின்போது நீங்கள் முதல்
தானியத்தையும், முதல் பழங்களின் ஈற்றை
யும் எனக்குக் கொடுக்க வேண்டும். வருடத்
தின் இறுதிவரைக்கும் காத்திராதீர்கள்.
“உங்கள் முதற்பேறான மகன்களை
எனக்குக் கொடுங்கள். 30முதலில் பிறந்த
ஆடுகளையும், மாடுகளையும் எனக்குக்
கொடுங்கள். முதற்பேறான குட்டியானது
தாயுடன், ஏழுநாட்கள் இருக்கட்டும், எட்டா
வது நாள் அதை எனக்குக் கொடுங்கள்.
31“நீங்கள் என் விசேஷ ஜனங்கள். எனவே
கொடிய மிருகங்களால் கொல்லப்பட்ட
விலங்குகளின் மாமிசத்தை உண்ணாதீர்கள்.
அந்த மரித்த மிருகத்தை நாய்கள்
தின்னட்டும்.

23 “பிறருக்கு விரோதமாகப் பொய்
பேசாதீர்கள். சாட்சி சொல்லும்படி
நீதிமன்றத்துக்கு நீங்கள் சென்றால், ஒரு
தீய மனிதன் பொய் சொல்வதற்கு உதவாதீர்
கள்.
2“பிறர் செய்கிறார்கள் என்பதால்
மட்டுமே நீங்கள் சிலவற்றைச் செய்யாதீர்கள்.
ஒரு கூட்டம் ஜனங்கள் தவறு செய்தால்
அவர்களோடு சேராதீர்கள். அந்த ஜனங்கள்
உங்களை தீயவற்றைச் செய்யும்படியாகத்
தூண்டவிடாதீர்கள். எது சரியென்றும்
நியாயமானதென்றும் தெரிகிறதோ,
அதையே செய்யுங்கள்.
3“ஒரு ஏழை நியாயந்தீர்க்கப்படுகையில்
அவன் மீதுள்ள இரக்கத்தினால் ஜனங்கள்
அவனுக்கு ஆதரவாக இருக்கலாம். ஆனால்,
நீங்கள் அவ்வாறு செய்யக்கூடாது. அவன்
செய்தது சரியாக இருந்தால் மட்டுமே
அவனுக்கு ஆதரவாக இருங்கள்.
4“காணாமற்போன மாட்டையோ,
கழுதையையோ பார்த்தீர்களானால், அதை
அதன் உரிமையாளனிடம் சேர்ப்பிக்க
வேண்டும். அதன் உரிமையாளன் உனது
பகைவனாக இருந்தாலும், நீ அதைச் செய்ய
வேண்டும்.
5“மிகுந்த பாரத்தால் நடக்க முடியாத
மிருகத்தைக் கண்டால் அதை நிறுத்தி
அதற்கு உதவ வேண்டும். அது உனது
பகைவர்களில் ஒருவனுக்குச் சொந்தமான
தாக இருந்தாலும் அம்மிருகத்திற்கு நீ உதவ
வேண்டும்.
6“ஒரு ஏழை மனிதனுக்கு ஜனங்கள்
அநியாயம் செய்ய விடாதே. அவனும்
பிறரைப் போன்றே நியாயந்தீர்க்கப்பட
வேண்டும்.
7“ஒருவன் குற்றவாளி என நீ கூறும்
போது எச்சரிக்கையாக இரு. ஒருவனுக்கு
எதிராக வீண் பழி சுமத்தாதே. குற்றமற்ற
ஒருவன் செய்யாத செயலுக்குத் தண்டனை
யாகக் கொல்லப்படுவதற்கு வகை செய்
யாதே. குற்றமற்ற மனிதனைக் கொல்பவன்

---

**சபிக்க** ஒருவரைக் குறித்து தீயகாரியங்களைக் கூறுவது அல்லது ஒருவனுக்கு தீய காரியங்கள் நிகழ வேண்டுமென கேட்பது.

கொடியவன். அம்மனிதனை நான் மன்னிக்க
மாட்டேன்.
8 "ஒருவன் தவறு செய்யும்போது அவன்
செயலை ஆமோதிப்பதற்காக ஒருவன்
உனக்கு லஞ்சம் கொடுக்க வந்தால் அதை
ஏற்றுக்கொள்ளாதே. நீதிபதிகள் உண்
மையைப் பார்க்காதபடிக்கு இத்தகைய
பணம் நீதிபதிகளைக் குருடாக்கும். அந்தப்
பணம் உண்மையுள்ளவர்களையும் பொய்ய
ராக்கும்.
9 "அந்நியனுக்குத் தீங்கு செய்யாதீர்கள்.
எகிப்து தேசத்தில் வாழ்ந்தபோது நீங்களும்
அந்நியராக இருந்ததை நினைவு கூருங்கள்.

### விசேஷ விடுமுறைகள்

10 "விதைகளை விதையுங்கள், பயிர்களை
அறுவடை செய்யுங்கள், ஆறு ஆண்டுகள்
நிலத்தைப் பண்படுத்துங்கள். 11 ஆனால்
ஏழாவது ஆண்டு நிலத்தைப் பண்படுத்தாதீர்
கள். நிலம் ஓய்வெடுப்பதற்குரிய விசேஷ
காலமாக ஏழாவது ஆண்டு இருக்கட்டும்.
அந்த ஆண்டில் உங்கள் நிலங்களில்
எதையும் விதைக்காதீர்கள். ஏதேனும்
பயிர்கள் அந்நிலத்தில் விளைந்தால், அதை
ஏழைகள் அனுபவிக்கட்டும். மிகுதியான
தானியங்களைக் காட்டுமிருகங்கள் உண்
ணட்டும். உங்களுக்குச் சொந்தமான
திராட்சைத் தோட்டங்களையும், ஒலிவமரத்
தோப்புக்களையும் அவ்வாறே பயன்படுத்
துங்கள்.
12 "ஆறு நாட்கள் உழையுங்கள். ஏழாவது
நாளில் ஓய்வு எடுங்கள். உங்கள் அடிமை
களுக்கும், வேலையாட்களுக்கும் ஓய்வுக்கும்,
அமைதிக்கும் இது வழிவகுக்கும். உங்கள்
மாடுகளும், கழுதைகளும் ஓய்வெடுக்க நேரம்
கிடைக்கும்.
13 "இச்சட்டங்களை உறுதியாகப் பின்
பற்றுங்கள். பொய்த் தேவர்களை தொழுது
கொள்ளாதீர்கள். அவைகளின் பெயர்களை
உங்கள் நாவினால் உச்சரிக்க வேண்டாம்!
14 "ஒவ்வொரு ஆண்டும் மூன்று விசேஷ
விடுமுறைகள் உங்களுக்கு இருக்கும்.
அந்நாட்களில் என்னைத் தொழுது கொள்
ளும்படி விசேஷ இடத்தில் நீங்கள் கூடுங்கள்.
15 "முதலாவது, புளிப்பில்லா அப்பப்
பண்டிகையாகும். நான் கட்டளையிட்ட
படியே இதைக் கொண்டாட வேண்டும்.
புளிப்புச் சேராத ரொட்டியை நீங்கள் ஏழு
நாட்கள் உண்ணவேண்டும். ஆபிப்மாதத்தில்
இதைச் செய்ய வேண்டும். ஏனெனில்
அம்மாதத்தில்தான் நீங்கள் எகிப்தை விட்டு
வெளியேறினீர்கள். அந்த சமயம் உங்களில்
ஒவ்வொருவனும் ஒரு பலியைக் கொண்டுவர
வேண்டும்.
16 "பெந்தெகோஸ்தே பண்டிகையானது
ஆண்டின் இரண்டாவது விடுமுறை நாளாக
இருக்கும். உங்கள் வயல்களில் அறுவடை
ஆரம்பிக்கும் கோடையின் தொடக்கத்தில்
இந்த விடுமுறை நாள் வரும்.
"ஆண்டின் மூன்றாம் விடுமுறையானது
அடைக்கலக் கூடாரப் பண்டிகையாக*
இருக்கும். இலையுதிர் காலத்தில் உங்கள்
வயல்களின் எல்லாப் பயிர்களையும்
சேர்க்கும் நாட்களில் இப்பண்டிகை வரும்.
17 "ஆகவே ஆண்டிற்கு மூன்றுமுறை
ஒவ்வொரு ஆண்டும் உங்கள் கர்த்தராகிய
ஆண்டவரை வணங்கும்படி நீங்கள் எல்லோ
ரும் கூடிவரவேண்டும்.
18 "ஒரு மிருகத்தைக் கொன்று அதன்
இரத்தத்தைப் பலியாகக் கொடுத்தால், புளிப்
புள்ள ரொட்டியை அதனோடு படைக்கக்
கூடாது. இப்பலியிலிருந்து நீங்கள்
மாமிசத்தை எடுத்து உண்ணும்போது, ஒரே
நாளில் அதை முடித்துவிட வேண்டும்.
எஞ்சிய மாமிசத்தை அடுத்த நாளுக்காகப்
பாதுகாக்க வேண்டாம்.
19 "அறுவடை காலத்தில் பயிர்களைச்
சேர்க்கும்போது, பயிர்களில் முதலில் அறு
வடை செய்பவற்றை தேவனாகிய கர்த்தரின்
வீட்டிற்குக்* (பரிசுத்த கூடாரத்திற்குக்)
கொண்டுவர வேண்டும்.
"தாய் ஆட்டின் பாலில் வேக
வைக்கப்பட்ட ஆட்டுக் குட்டியின் மாமிசத்
தைச் சாப்பிடாதீர்கள்" என்றார்.

### இஸ்ரவேலர் தங்கள் நாட்டைப் பெறுவதற்கு தேவன் உதவுவார்

20 தேவன், "நான் உங்களுக்கு முன்பாக
ஒரு தூதனை அனுப்புவேன். நான்
உங்களுக்கென தயாராக வைத்திருக்கிற
இடத்திற்கு அத்தூதன் அழைத்துச் செல்வார்.
அந்தத் தூதன் உங்களைப் பாதுகாப்பார்.
21 தூதனுக்குக் கீழ்ப்படிந்து அவரைப்
பின்பற்றுங்கள். அவரை எதிர்க்காதீர்கள்.
நீங்கள் அவரை எதிர்த்துச் செய்கிற
தவறுகளைத் தூதன் மன்னிக்கமாட்டார்.
அவரில் என் வல்லமை (நாமம்) இருக்கிறது.
22 அவர் சொல்கிற எல்லாவற்றிற்கும் நீங்கள்
செவிகொடுக்க வேண்டும். அவ்வாறு
செய்தால் நான் உங்களோடிருப்பேன்.
உங்கள் பகைவர்களை எதிர்ப்பேன். உங்
களை எதிர்க்கிற ஒவ்வொருவருக்கும் நான்
பகைவனாவேன்" என்றார்.
23 தேவன், "என் தூதன் உங்களை
தேசத்தில் வழிநடத்துவார். எமோரியர்,
ஏத்தியர், பெரிசியர், கானானியர், ஏவியர்,
எபூசியர் ஆகிய வெவ்வேறு ஜனங்களுக்கு
எதிராக உங்களை வழிநடத்துவார். நான்
அந்த ஜனங்களை எல்லாம் தோற்கடிப்பேன்.

---

**அடைக்கல கூடாரப் பண்டிகை** இஸ்ரவேல் சீனாய் வனாந்தரத்தில் கூடாரவாசிகளாக இருக்கை யில் கர்த்தர் தந்த அடைக்கலத்தை நினைவுகூரும் பணடிகை இது.

**வீட்டிற்கு** ஜனங்கள் தேவனை சந்திக்கும்படியாகச் சென்ற "பரிசுத்த கூடாரம்" யாத். 25:8,9.

24“அந்த ஜனங்களின் தேவர்களைத்
தொழுது கொள்ளாதீர்கள். அவைகளுக்கு
முன்பு பணியாதீர்கள். அவர்கள் வாழுகிற
படி நீங்கள் வாழாதீர்கள். அவர்களின்
விக்கிரகங்களை அழித்து விடுங்கள். அவர்கள்
தெய்வங்களின் நினைவுச் சின்னங்களை
உடைத்துவிடுங்கள். 25உங்கள் தேவனாகிய
கர்த்தருக்குச் சேவை செய்யுங்கள். நீங்கள்
இதைச் செய்தால், உங்களை ஏராளமான
ஆகாரத்தாலும், தண்ணீராலும் ஆசீர்வதிப்
பேன். உங்களிலிருந்து எல்லா நோய்
களையும் அகற்றுவேன். 26உங்களது பெண்
களுக்கு குழந்தைகள் பிறக்கும். உங்களது
பெண்களின் பிரசவத்தின்போது குழந்தைகள்
மரிப்பதில்லை. நீங்கள் நீண்ட ஆயுளோடு
இருக்கும்படிச் செய்வேன்.
27“உங்கள் எதிரிகளோடு போரிடும்போது
உங்களுக்கு முன்பாக என் வல்லமையின்
செய்தியை அனுப்புவேன். போரில் உங்கள்
எதிரிகள் குழப்பமுற்று ஓடுவார்கள். நான்
உங்கள் பகைவர்களை வெல்ல உங்களுக்கு
உதவுவேன். 28உங்கள் பகைவர்களை
விரட்ட காட்டுக் குளவிகளை* உங்கள் முன்
அனுப்புவேன். ஏவியரும், கானா னியரும்
ஏத்தியரும் உங்கள் தேசத்தை விட்டுப்
போவார்கள். 29ஆனால் உங்கள்
தேசத்திலிருந்து இவர்களை உடனடியாக
விரட்ட மாட்டேன். ஒரே ஆண்டில் நான்
இதைச் செய்தால் நாடு வெறுமையாகிவிடும்.
எல்லாக் காட்டு மிருகங்களும் பெருகி
நாட்டை ஆக்கிரமிக்கும். அவை உங்க
ளுக்குத் தொல்லையாக மாறும். 30எனவே
உங்கள் நாட்டினின்று அந்த ஜனங்களை
சிறிது சிறிதாக அனுப்புவேன். தேசத்தில்
நீங்கள் தொடர்ந்து முன்னேறுவீர்கள். நீங்கள்
போகுமிடமெல்லாம் அந்நியரை உங்களுக்கு
முன்பாக விரட்டுவேன்.
31“செங்கடலிலிருந்து ஐப்பிராத்து நதி
வரைக்குமுள்ள நாட்டை உங்களுக்குத்
தருவேன். பெலிஸ்திய கடல் (மத்திய தரைக்
கடல்) மேற்கு எல்லையாகவும் அரேபிய
பாலைவனம் கிழக்கு எல்லையாகவும்
இருக்கும். அங்கு வாழும் ஜனங்களை நீங்கள்
தோற்கடிக்கச் செய்வேன். அங்குள்ள
ஜனங்களெல்லோரும் விலகிப் போகும்படி
செய்வீர்கள்.
32“அவர்களோடும், அவர்களது தேவர்
களோடும் எந்த ஒப்பந்தத்தையும் செய்யா
தீர்கள். 33அவர்கள் உங்கள் நாட்டில் தங்க
விடாதீர்கள். அவர்களைத் தங்க அனுமதிப்
பது உங்களுக்குக் கண்ணியாக அமையும்.
எனக்கு விரோதமாக பாவம் செய்யவும்,
அந்நிய தேவர்களை நீங்கள் தொழுது
கொள்ளவும் அவர்கள் உங்களைத்
தூண்டுவார்கள்” என்றார்.

### தேவனும் இஸ்ரவேலரும் உடன்படிக் கையை செய்து கொள்கிறார்கள்

24 தேவன் மோசேயை நோக்கி, “நீயும்
ஆரோன், நாதாப், அபியூ, மற்றும்
இஸ்ரவேலின் 70 மூப்பர்களும் (தலைவர்கள்)
மலையின்மேல் வந்து என்னைத்
தூரத்திலிருந்து தொழுதுகொள்ள வேண்டும்.
2பின்பு மோசே மாத்திரம் கர்த்தரிடம்
நெருங்கி வருவான். மற்றவர்கள் கர்த்தரை
நெருங்கி மலை மீது ஏறி வரக்கூடாது”
என்றார்.
3கர்த்தர் கூறிய எல்லா விதிகளையும்,
கட்டளைகளையும் மோசே ஜனங்களுக்குக்
கூறினான். எல்லா ஜனங்களும், “கர்த்தர்
கூறின எல்லா கட்டளைகளுக்கும் நாங்கள்
கீழ்ப்படிவோம்” என்று ஏகமாய் பதிலுரைத்
தனர்.
4எனவே மோசே ஒரு சுருளில் கர்த்தரின்
கட்டளைகளை எழுதினான். மறுநாள்
காலையில் மோசே எழுந்து மலையடி
வாரத்தில், ஒவ்வொரு கல்லும் இஸ்ரவேலின்
பன்னிரெண்டு கோத்திரங்களைக் குறிக்கும்
வகையில் பன்னிரண்டு கற்களால் ஒரு
பலிபீடத்தைக் கட்டினான். 5பின் மோசே
இஸ்ரவேலின் வாலிபர்களைப் பலி
செலுத்துவதற்காக அழைத்தனுப்பினான்.
தகன பலியாகவும் சமாதான பலியாகவும்
அவர்கள் இளங்காளைகளைப் பலியிட்டனர்.
6மோசே இம்மிருகங்களின் இரத்தத்தை
எடுத்து வைத்தான். அந்த இரத்தத்தில்
பாதியைக் கிண்ணங்களில் ஊற்றினான்.
மீதியைப் பலிபீடத்தின்மேல் தெளித்தான்.
7விசேஷ உடன்படிக்கை பொருந்திய
சுருளை எல்லா ஜனங்களும் கேட்கும்
படியாக மோசே வாசித்தான். அதைக்
கேட்டதும் ஜனங்கள், “கர்த்தர் எங்களுக்குக்
கொடுத்த சட்டங்களைக் கேட்டோம்.
அவற்றிற்குக் கீழ்ப்படிய சம்மதிக்கிறோம்”
என்றார்கள்.
8பலிகளின் இரத்தத்தைச் சேகரித்து
வைத்திருந்த கிண்ணத்தை மோசே உயர்த்தி,
இரத்தத்தை ஜனங்கள் மீது தெளித்தான்.
அவன், “கர்த்தர் உங்களோடு ஒரு விசேஷ
உடன்படிக்கையைச் செய்தார் என்பதை
இந்த இரத்தம் குறிக்கிறது. தேவன் கொடுத்த
சட்டங்கள் இந்த உடன்படிக்கையை
விளக்குகின்றன” என்றான்.
9பின்பு மோசே, ஆரோன், நாதாப், அபியூ
மற்றும் இஸ்ரவேலின் 70 மூப்பர்களும்
(தலைவர்கள்) மலையின் மீது ஏறி,
10இஸ்ரவேலின் தேவனைக் கண்டனர். அவர்
நின்றிருந்த இடம் வானத்தின் நிறமுள்ள
தெளிந்த நீல இரத்தினக் கற்பாறை போன்று
காணப்பட்டது! 11இஸ்ரவேலின் மூப்பர்

---

**காட்டுக் குளவிகளை** அல்லது தேனீயைப் போன்ற கொடுக்குடைய ஒரு பூச்சி. இது உண்மையிலேயே குளவிகளைக் குறிக்கலாம். அல்லது இது தேவனுடைய தூதனையோ அல்லது அவரது மிகப்பெரிய வல்லமையையோ குறிக்கலாம்.

எல்லோரும் தேவனைக் கண்டார்கள்.
ஆனால் தேவன் அவர்களை அழிக்க
வில்லை. அவர்கள் எல்லோரும் சேர்ந்து
சாப்பிட்டு குடித்தார்கள்.

### தேவனின் கட்டளையைப் பெறுவதற்கு மோசே போகிறான்

12 கர்த்தர் மோசேயை நோக்கி, "மலையின்
உச்சியில் என்னிடம் வா. அங்கே எனது
கற்பலகைகளையும், நீ அவர்களுக்கு கற்றுக்
கொடுக்க வேண்டிய நியாயப்பிரமாணத்தை
யும், கற்பனைகளையும் நான் உனக்கு
கொடுப்பேன்" என்றார்.
13 மோசேயும், அவனது உதவியாளனாகிய
யோசுவாவும் தேவனின் மலையின் மீது
ஏறினார்கள். 14 மோசே இஸ்ரவேல் மூப்பர்
களிடம் (தலைவர்களிடம்), "இங்கே
எங்களுக்காகக் காத்திருங்கள். நாங்கள்
உங்களிடம் திரும்பி வருவோம். நான்
இல்லாதபோது, ஆரோனும், ஊரும்
உங்களைக் கண்காணிப்பார்கள். பிரச்சனை
ஏதேனும் வந்தால் அவர்களிடம் செல்
லுங்கள்" என்றான்.

### மோசே தேவனைச் சந்திக்கிறான்

15 பின்பு மோசே மலையின் மீது ஏறி
னான். மேகம் மலையைச் சூழ்ந்து
கொண்டது. 16 கர்த்தரின் மகிமை சீனாய்
மலையின் மீது இறங்கியது. மேகம் மலை
யை சுற்றி ஆறு நாட்கள் சூழ்ந்திருந்தது.
ஏழாவது நாளில் கர்த்தர் மேகத்திலிருந்து
மோசேயிடம் பேசினார். 17 இஸ்ரவேல் ஜனங்
கள் கர்த்தரின் மகிமையைக் கண்டார்கள்.
மலை உச்சியின் மீது எரிகிற நெருப்பைப்
போன்று அது இருந்தது.
18 பின்பு மோசே மலையின் உச்சியில்
மேகத்துக்குள் சென்றான். அங்கே மோசே
40 பகலையும் 40 இரவையும் கழித்தான்.

### பரிசுத்த பொருட்களுக்குரிய காணிக்கைகள்

25 கர்த்தர் மோசேயை நோக்கி, 2 "இஸ்ர
வேல் ஜனங்களிடம் காணிக்கை
களைக் கொண்டுவரச் சொல். எனக்குக்
கொடுக்க விரும்புவதைக் குறித்து அவன
வன் தீர்மானிக்கட்டும். அவற்றை நீ
எனக்காகப் பெற்றுக்கொள். 3 ஜனங்களிட
மிருந்து நீ பெறக்கூடிய பொருட்களின்
பட்டியல் இவை: பொன், வெள்ளி,
வெண்கலம், 4 இளநீல நூல், இரத்தாம்பர
நூல், சிவப்பு நூல், மெல்லிய துகில்,
வெள்ளாட்டு மயிர், 5 சிவப்பு சாயம் தோய்த்த
ஆட்டுத் தோல், மெல்லிய தோல்,* சீத்திம்
மரம், 6 அகல் எண்ணெய், அபிஷேக
எண்ணெய்ப்* பொருட்கள், நறு
மணப்புகைப்* பொருட்கள், 7 ஏபோத்திலும்,*
நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்திலும்* பதிக்கும்
கோமேதகக் கற்களும் பிற இரத்தினக்
கற்களும் ஆகும்" என்றார்.

### பரிசுத்த கூடாரம்

8 மேலும் தேவன், "ஜனங்கள் எனக்காக
பரிசுத்த பிரகாரத்தை ஏற்படுத்த வேண்டும்.
அப்போது நான் அவர்கள் மத்தியில்
வாழ்வேன். 9 பரிசுத்தக் கூடாரமும் அதி
லுள்ள பொருட்களும் எவ்வாறு இருக்க
வேண்டுமென்பதை நான் உனக்குக் காட்டு
வேன். நான் காட்டுகிற மாதிரியின்படியே
எல்லாவற்றையும் தவறாமல் செய்."

### உடன்படிக்கைப் பெட்டி

10 "சீத்திம் மரத்தால் விசேஷமான பெட்டி
ஒன்றைச் செய். இப்பரிசுத்த பெட்டி 45
அங்குல நீளமும், 27 அங்குல அகலமும், 27
அங்குல உயரமும் இருக்க வேண்டும்.
11 பெட்டியின் உட்புறத்தையும், வெளிப்
புறத்தையும் மூடுவதற்காக சுத்தமான
தங்கத்தை உபயோகி. பெட்டியின் விளிம்பு
களையும் தங்கத் தகட்டால் மூடவேண்டும்.
12 பெட்டியைத் தூக்குவதற்கு நான்கு தங்க
வளையங்களைச் செய். பக்கத்திற்கு
இரண்டாக நான்கு மூலைகளிலும் தங்க
வளையங்களைப் போடு. பின் பெட்டியைத்
தூக்கிச் செல்ல கழிகளைச் செய். இந்த
கழிகள் சீத்திம் மரத்தில் செய்யப்பட்டு
தங்கத்தால் மூடப்பட வேண்டும். 13 பெட்டி
யைச் சுமப்பதற்குத் தண்டுகளைச் செய்.
அவை சீத்திம் மரத்தால் செய்யப்பட்டு
பொன்னால் மூடப்பட வேண்டும். 14 பெட்டி
யின் ஓரங்களிலுள்ள வளையங்க ளில்
அத்தண்டுகளை நுழைக்க வேண்டும்.
பெட்டியைச் சுமப்பதற்கு இத்தண்டுகளைப்
பயன்படுத்த வேண்டும். 15 இத்தண்டுகள்
எப்போதும் பெட்டியின் வளையங்களில்
இருக்கவேண்டும். தண்டுகளை அப்புறப்
படுத்தக் கூடாது.
16 "நான் உனக்கு உடன்படிக்கையைக்
கொடுப்பேன். அந்த உடன்படிக்கையை இப்
பெட்டியில் வை. 17 பின் ஒரு கிருபாசனத்தை
பசும் பொன்னால் செய். 45 அங்குல
நீளமும் 27 அங்குல அகலமும் உள்ளதாக
அதைச் செய். 18 "பின்பு தங்கத்தினால்
இரண்டு கேருபீன்களைச் செய்து அவற்றை

---

**மெல்லிய தோல்** கடல் நாய் அல்லது கடற்பசு போன்ற சிறப்பான வகை விலங்கிலிருந்து தயாரிக்கப்பட்ட தோல் ஆகும்.

**அபிஷேகத் எண்ணெய்** சிறப்பு நோக்கத்திற்கென்று வார்க்கப்படும் பரிமள ஒலிவ எண்ணெய்.

**நறுமணப்புகை** கந்தவர்க்க மரத்தின் உலர்ந்த பிசின் கர்த்தருக்கு சுகந்த வாசனையாக பரிமளிக்கும்.

**ஏபோத்** ஆசாரியர்களால் அணியப்படுகிற ஒரு சிறப்பான அங்கியாகும். யாத். 28:6-14.

**நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கம்** ஆசாரியர்களின் மார்பை மறைக்கின்ற ஒரு சிறப்பு மேலாடை.

*கிருபாசனத்தின் இரு முனைகளிலும் வை.*
*தகடாய் அடித்த பொன்னால் அவற்றைச்*
*செய்.* **19***ஒரு கேருபீனை ஒரு முனையிலும்*
*மற்ற கேருபீனை மறு முனையிலும் வை.*
*இந்த கேருபீன்கள் ஒன்றாக இருக்கும்படி*
*கிருபாசனத்தோடு இணை.* **20***பொன்*
*கேருபீன்களின் சிறகுகள் வானத்தை நோக்கி*
*உயர்ந்திருக்க வேண்டும். அவை தங்கள்*
*சிறகுகளால் பெட்டியை மூடவேண்டும்.*
*அவை ஒன்றுக்கொன்று எதிராக கிருபா*
*சனத்தை நோக்கியபடி இருக்க வேண்டும்.*
**21**“*நான் உனக்கு கொடுக்கும் உடன்*
*படிக்கையைப் பரிசுத்த பெட்டிக்குள் வை.*
*பெட்டியின் மீது கிருபாசனத்தை பொருத்து.*
**22***நான் உன்னைச் சந்திக்கும்போது, உடன்ப*
*டிக்கைப் பெட்டியின் மேலுள்ள கேருபீன்*
*களின் மத்தியிலிருந்து உன்னோடு பேசு*
*வேன். அங்கிருந்து இஸ்ரவேல் ஜனங்களுக்கு*
*எல்லாக் கட்டளைகளையும் கொடுப்பேன்.*

### பரிசுத்த மேசை

**23**“*சீத்திம் மரத்தால் ஒரு மேசையைச்*
*செய். அது* 36 *அங்குல நீளம்,* 18
*அங்குல அகலமும்,* 27 *அங்குல உயரமும்*
*உள்ளதாக இருக்க வேண்டும்.* **24***மேசையைப்*
*பசும்பொன்னால் மூடி, சுற்றிலும் தங்கத்*
*தகட்டால் அழகுபடுத்து.* **25***மூன்று அங்குல*
*அகலமான சட்டத்தை மேசையைச் சுற்றிலும்*
*வை. சட்டத்தைப் பொன் தகட்டால்*
*அழகுபடுத்து.* **26***நான்கு பொன்*
*வளையங்களைச் செய்து அவற்றை*
*மேசையின் நான்கு கால்கள் இருக்கும்*
*ஓரங்களில் வை.* **27***மேசையின் மேல்*
*சட்டத்தைச் சுற்றிலும் சுருக்கமாக வளையங்*
*களைப் பொருத்து. இந்த வளையங்கள்*
*மேசையைச் சுமந்து செல்லும் தண்டு*
*களைத் தாங்கிக்கொள்ளும்.* **28***தண்டுகளைச்*
*சீத்திம் மரத்தினால் செய்து அவற்றைப்*
*பொன்னால் மூடு. தண்டுகள் மேசையைச்*
*சுமந்து செல்லப் பயன்படும்.***29***தட்டுகளையும்,*
*கரண்டிகளையும், கிண்ணங்களையும்,*
*குவளைகளையும் பசும்பொன்னால் செய்.*
*பானங்களின் காணிக்கைகளைக் கொட்டு*
*வதற்கும், ஊற்றுவதற்கும் குவளைகளும்,*
*கிண்ணங்களும் பயன்படும்.* **30***பரிசுத்த*
*ரொட்டியை எனக்கு முன்பாக மேசையின்*
*மீது வை. அது எப்போதும் தவறாமல்*
*எனக்கு முன்பாக இருக்க வேண்டும்.*

### குத்து விளக்குத் தண்டு

**31**“*பின் நீ விளக்குத் தண்டைச் செய்ய*
*வேண்டும். சுத்தமான பொன்னைப் பயன்*
*படுத்தி அதன் அடிப்பகுதியைச் சுத்தியால்*
*அடித்துச் செய்ய வேண்டும். பூக்கள்,*
*மொக்குகள், இலைகள் பூசிய பொன்னால்*
*அமைய வேண்டும். அதிலுள்ள எல்லா*
*வற்றையும் ஒரே துண்டாக இணைத்து*
*அமைக்க வேண்டும்.*

**32**“*அந்தக் குத்துவிளக்குத் தண்டுக்கு ஆறு*
*கிளைகள் இருக்க வேண்டும். மூன்று*
*கிளைகள் ஒரு புறமாகவும், மூன்று கிளைகள்*
*மறுபுறமாகவும் அமைய வேண்டும்.*
**33***ஒவ்வொரு கிளையிலும் மூன்று பூக்கள்*
*இருக்க வேண்டும். வாதுமைப் பூக்களைப்*
*போல் மொக்குகளோடும், இதழ்களோடும்*
*இப்பூக்களைச் செய்ய வேண்டும்.* **34***மேலும்*
*நான்கு பூக்களை விளக்குத் தண்டுக்காகச்*
*செய். இவை மொக்குகளும் இதழ்களும்*
*கொண்ட வாதுமைப் பூக்களைப் போலிருக்க*
*வேண்டும்.* **35***குத்துவிளக்கில் ஆறு கிளைகள்*
*இருக்க வேண்டும். அடிப்பகுதியிலிருந்து*
*மும்மூன்று கிளைகளை ஒவ்வொரு*
*புறத்திலும் இணைக்க வேண்டும். கிளைகள்*
*தண்டில் சேரும் மூன்று இடங்களின்*
*அடிப்பகுதியிலும் மொக்குகளும் இதழ்களும்*
*கொண்ட ஒவ்வொரு பூவை இணைக்க*
*வேண்டும்.* **36***பூக்களும் இலைகளும் பொருத்*
*திய குத்துவிளக்குத் தண்டானது முழுவதும்*
*சுத்தமான பொன்னால் செய்யப்பட*
*வேண்டும். வெவ்வேறு பாகங்களைச் சுத்தி*
*யால் அடித்து ஒன்றாக இணைக்க வேண்டும்.*
**37***பின் குத்துவிளக்குத் தண்டில் ஏழு*
*அகல்களைப் பொருத்த வேண்டும். குத்து*
*விளக்கின் முன்னே இந்த அகல்கள் ஒளி*
*தரும்.* **38***திரிகளைக் கத்திரிக்கும் கத்திரிகளும்,*
*சாம்பல் கிண்ணங்களும் பொன்னால்*
*செய்யபட வேண்டும்.* **39***குத்துவிளக்கையும்*
*அதற்குத் தேவையான பொருட்களையும்*
*செய்வதற்கு* 75 *பவுண்டு** *எடையுள்ள*
*பசும் பொன்னைப் பயன்படுத்து.*
**40***மலையின் மீது உனக்கு காட்டியபடியே*
*ஒவ்வொரு பொருளையும் செய்வதில்*
*கவனமாயிரு” என்றார்.*

### பரிசுத்தக் கூடாரம்

**26** *கர்த்தர் மோசேயை நோக்கி,*
“*பரிசுத்தக் கூடாரம் பத்து திரைச்*
*சீலைகளால் தைக்கப்பட வேண்டும். இந்த*
*திரைச்சீலைகள் மெல்லிய துகில், இளநீலம்,*
*இரத்தாம்பரம் சிவப்பு ஆகிய நூல்களால்*
*நெய்யப்படவேண்டும். ஒரு திறமை வாய்ந்த*
*ஓவியன் இத்திரைச் சீலையில் சிறகுகளுள்ள*
*கேரூபீன்களின் ஓவியங்களை நெய்ய*
*வேண்டும்.* **2***எல்லாத் திரைகளும் ஒரே*
*அளவுடையதாய் இருக்க வேண்டும்.*
*ஒவ்வொன்றும்* 28 *முழ நீளமும்* 4 *முழ*
*அகலமுமாக இருக்க வேண்டும்.* **3***இரண்டு*
*பிரிவாகத் திரைகளை இணை. ஐந்து*
*திரைகளை ஒன்றாகவும், மற்ற ஐந்து*
*திரைகளை வேறாகவும் இணை.* **4***ஒரு*
*பிரிவின் விளிம்பில் இளநீலத் துணியால்*
*கண்ணிகளை உருவாக்கு. இவ்வாறே மற்ற*
*பிரிவின் விளிம்பு திரையிலும் செய்.*

---

**75 பவுண்டு** *எழுத்தின் பிரகாரமாக சுமார்* 35 *கிலோகிராம்.*

[5]முதலிணைப்பில் 50 கண்ணிகளும்
இரண்டாம் இணைப்பில் 50 கண்ணிகளும்
தைக்க வேண்டும். [6]பின்பு திரைகளை
இணைப்பதற்கு 50 பொன் வளையங்களைச்
செய். அது பரிசுத்தக் கூடாரத்தை ஒன்றாக
இணைத்துவிடும்.
[7]“பரிசுத்தக் கூடாரத்திற்கு மேல் மற்றொரு
கூடாரத்தை உருவாக்கு. இக்கூடாரம் செய்
வதற்குப் பதினொரு திரைகளைப் பயன்
படுத்து. வெள்ளாட்டு மயிரால் இத்திரை
களை நெசவு செய். [8]எல்லாத் திரைகளும்
ஒரே அளவுடையதாய் இருக்க வேண்டும்.
30 முழ நீளமும் 4 முழ அகலமும் உடையதாய்
அது இருக்க வேண்டும். [9]ஐந்து திரைகளை
ஒன்றாகவும், வேறு 6 திரைகளை
ஒன்றாகவும் இணைக்க வேண்டும். ஆறாம்
திரையின் பாதிப் பகுதியை கூடாரத்தின்
முன்பகுதியில் மடித்துவிட வேண்டும். [10]ஒரு
திரையிணைப்பின் கடைசித் திரையில் 50
கண்ணிகளையும் இன்னொரு திரை
யிணைப்பின் கடைசித் திரையில் 50
கண்ணிகளையும் தைக்க வேண்டும்.
[11]பின்னர் திரைகளை இணைப்பதற்கு 50
வெண்கல* வளையங்களைச் செய். அவை
கூடாரத்தின் இருபகுதிகளையும் ஒன்றாக
இணைக்கும். [12]இக்கூடாரத்தின் இறுதித்
திரையின் பாதிப்பகுதி பரிசுத்தக் கூடாரத்
தின் பின்பகுதியில் தொங்கிக் கொண்
டிருக்கும். [13]அதன் பக்கவாட்டில் பரிசுத்தக்
கூடாரத்தின் திரைகள் பரிசுத்தக் கூடாரத்தின்
கீழ்ப்புற ஓரங்களைக் காட்டிலும் ஒரு முழம்
தாழ்வாகத் தொங்கும். இவ்வாறு பரிசுத்தக்
கூடாரம் மகா பரிசுத்தக் கூடாரத்தை
முற்றிலும் மறைக்கும். [14]மகா பரிசுத்தக்
கூடாரத்தை மறைப்பதற்கு இரண்டு
உறைகளைச் செய். சிவப்புச் சாயம் தீர்த்த
ஆட்டுக்கடா தோலினால் ஒரு உறையும்
மெல்லிய தோலினால் மற்றொரு உறையும்
செய்யப்பட வேண்டும்.
[15]“பரிசுத்தக் கூடாரத்தைத் தாங்கு
வதற்காகச் சட்டங்களை சீத்திம் மரத்தால்
செய்ய வேண்டும். [16]அச்சட்டங்கள் 10
முழ உயரமும் 1 1/2 முழ அகலமும் உள்ளதாக
இருக்க வேண்டும். [17]ஒவ்வொரு புறமுள்ள
தூண்கள் குறுக்குத் துண்டுகளால் ஒவ்வொரு
சட்டமாகச் சேர்க்கப்பட வேண்டும். பரிசுத்த
கூடாரத்தின் எல்லாச் சட்டங்களும் ஒரே
அளவுடையதாய் இருக்க வேண்டும்.
[18]பரிசுத்தக் கூடாரத்தின் தென்
புறத்திற்கென்று 20 சட்டங்களை உருவாக்கு.
[19]சட்டங்களுக்கு 40 வெள்ளிப் பீடங்களை
உண்டாக்கு. ஒவ்வொரு சட்டத்தின் கீழும்
இரண்டு பீடங்கள் வீதம் அமைய வேண்டும்.
ஒவ்வொரு பக்கத் தூணுக்கும் ஒரு பீடம்
வீதம் இருக்க வேண்டும். [20]பரிசுத்தக்
கூடாரத்தின் மறுபக்கத்திற்கென்று (வடக்குப்
புறம்) மேலும் இருபது சட்டங்கள் செய்.
[21]நாற்பது வெள்ளி பீடங்கள் ஒவ்வொரு
சட்டத்திற்கும் இரண்டு வீதம் செய். [22]ஆறு
சட்டங்கள் பரிசுத்தக் கூடாரத்தின்
பின்புறத்திற்கு (மேற்குப்பக்கம்) அமைத்து
விடு. [23]பரிசுத்தக் கூடாரத்தின் பின்புறத்து
மூலைகளுக்கென்று இரண்டு சட்டங்கள்
செய். [24]மூலைகளிலுள்ள சட்டங்கள்
அடியில் சேர்க்கப்பட வேண்டும்.
மேற்புறத்தில் சட்டங்களை ஒரு வளை
யத்தால் இணைக்க வேண்டும். இரண்டு
மூலைகளுக்கும் அவ்வாறே செய்.
[25]கூடாரத்தின் மேற்குப் புறத்திற்கு எட்டுச்
சட்டங்கள் இருக்கும். 16 வெள்ளிப் பீடங்கள்
ஒவ்வொரு சட்டத்திற்கு இரண்டு வீதம்
அமையும்.
[26]“பரிசுத்த கூடாரத்தின் சட்டங்களுக்குச்
சீத்திம் மரத்தாலான தாழ்ப்பாள்களைச் செய்.
பரிசுத்த கூடாரத்தின் முன்புறத்திற்கு ஐந்து
தாழ்ப்பாள்கள் இருக்க வேண்டும். [27]பரிசுத்த
கூடாரத்தின் பின்னாலுள்ள (மேற்குப்
புறத்தின்) சட்டங்களுக்கு ஐந்து தாழ்ப்பாள்
கள் இருக்க வேண்டும். [28]நடுவிலுள்ள
தாழ்ப்பாள் ஒரு மூலையிலிருந்து மறுமூலை
வரைக்கும் சட்டங்கள் வழியாகச் செல்ல
வேண்டும்.
[29]“இந்த சட்டங்களைப் பொன் தகட்டால்
மூடு. தாழ்ப்பாள்களை இணைப்பதற்குப்
பொன் வளையங்களை உண்டுபண்ணு.
தாழ்ப்பாள்களுக்கும் பொன் முலாம் பூசு.
[30]மலையில் நான் உனக்குக் காட்டிய
மாதிரியின்படியே பரிசுத்தக் கூடாரத்தை
உண்டாக்கு.

### பரிசுத்த கூடாரத்தின் உட்புறம்

[31]“பரிசுத்தக் கூடாரத்தின் உட்புறத்தில்
விரிப்பதற்கு மெல்லிய துகிலினால் ஒரு
விசேஷ திரைச் சீலையை உண்டாக்கு. நீலம்,
இரத்தாம்பரம், சிவப்பு நூலால் அந்தத்
திரைச்சீலையை உண்டாக்கி, அதிலே
கேருபின்களின் சித்திரங்களைப் பின்னு.
[32]சீத்திம் மரத்தால் நான்கு தூண்களை
உண்டாக்கி அவற்றைப் பொன்னால் மூடு.
நான்கு தூண்கள் மேலும் பொன்னால்
ஆன கொக்கிகளை இணை. தூண்களுக்கு
அடியில் நான்கு வெள்ளி பீடங்களை வை.
பிறகு திரைச் சீலையைத் தங்கக்
கொக்கிகளில் தொங்கவிடு. [33]பொன்
வளையங்களுக்குக் கீழே திரைகளைத்
தொங்கவிடு. நீ செய்த உடன்படிக்கைப்
பெட்டியைத் திரைக்குப் பின்னே வை. இந்தத்
திரையானது பரிசுத்த இடத்தையும், மகா
பரிசுத்த இடத்தையும் பிரிக்கும்.
[34]உடன்படிக்கைப் பெட்டியை அதன் கிருபா
சனத்தால் மூடிவை.
[35]“பின்பு பரிசுத்த இடத்தின் திரையின்
முன்புறத்தில் நீ செய்த விசேஷ மேசையை

---

**வெண்கலம்** எபிரெய அர்த்ததில் இது பித்தளையாகவும் இருக்கலாம்.

*வை. பரிசுத்த கூடாரத்தின் வடக்குப்
புறத்தில் மேசை இருக்க வேண்டும். குத்து
விளக்குத்தண்டை தெற்குப் புறத்தில் வை.
அது மேசையின் குறுக்காக இருக்கும்.*

### பரிசுத்தக் கூடாரத்தின் நுழைவாயில்

[36]“*பரிசுத்தக் கூடாரத்தின் நுழைவாயிலை
மூடுவதற்கு ஒரு திரையை உருவாக்குங்கள்.
நீலம், இரத்தாம்பரம், சிவப்பு நூலாலும்,
மெல்லிய துகிலாலும், இத்திரையை
உண்டாக்கு. அதில் சித்திரங்களைப் பின்னி
வை.* [37]*திரைகளுக்குப் பொன் கொக்கிகளை
உண்டாக்கு. பொன் முலாம் பூசப்பட்ட
சீத்திம் மரத்தால் ஐந்து தூண்களைச் செய்.
ஐந்து தூண்களுக்கும் வெண்கலத்தால் ஐந்து
பீடங்களைச் செய்” என்றார்.*

### தகனபலிகளுக்குரிய பலிபீடம்

27 *கர்த்தர் மோசேயை நோக்கி, “சீத்திம்
மரத்தால் ஒரு பலிபீடம் செய்.
அப்பலிபீடம் சதுர வடிவமாக இருக்க
வேண்டும். 5 முழ நீளமும், 5 முழ அகலமும்,
3 முழ உயரமும் இருக்கட்டும்.* [2]*பலிபீடத்தின்
நான்கு மூலைகளிலும் நான்கு கொம்பு
களைப் பொருத்து. இப்படி பலிபீடமும்,
கொம்புகளும் ஒரே துண்டாக இருக்கும்.
பலிபீடத்தை வெண்கலத்தால் மூடவேண்டும்.*
[3]“*பலிபீடத்தில் பயன்படுத்தும் பாத்திரங்
களும், கருவிகளும் வெண்கலத்தால் செய்யப்
பட்டவையாக இருக்கட்டும். பானைகள்,
அகப்பைகள், கிண்ணங்கள், முள் கரண்டி
கள், நெருப்புச்சட்டிகள் ஆகியவற்றைச்
செய். பலிபீடத்தின் சாம்பலை அகற்று
வதற்காக இவை பயன்படும்.* [4]*பலிபீடத்திற்கு
வலை போன்ற ஒரு சல்லடை செய்ய
வேண்டும். சல்லடையின் நான்கு மூலைக
ளிலும் ஒவ்வொரு வெண்கல வளையங்
களைப் உண்டாக்கு.* [5]*பலிபீடத்தின் கீழ்ப்
புறத்தில் பாதி உயரத்தில் அந்த சல்லடை
யை உட்கார வை.*
[6]“*பலிபீடத்திற்கான தூண்களை சீத்திம்
மரத்தால் செய்து அதை வெண்கலத்தால்
மூடவேண்டும்.* [7]*பலிபீடத்தின் இருபக்கங்களி
லும் வளையங்களின் வழியே தண்டுகளைச்
செலுத்து. பலிபீடத்தைச் சுமப்பதற்கு
இத்தண்டுகளைப் பயன்படுத்து.* [8]*பலகை
களால் செய்யப்பட்ட பக்கங்களை உடைய
உட்குழியுள்ள பெட்டியைப்போல பலி
பீடத்தைச் செய்ய வேண்டும். நான் மலை
யில் உனக்குக் காண்பித்தபடியே பலிபீடத்
தைச் செய்யவேண்டும்.*

### பரிசுத்தக் கூடாரத்தின் வெளிப்பிரகாரம்

[9]“*பரிசுத்தக் கூடாரத்திற்கு ஒரு வெளிப்
பிரகாரம் அமைப்பாயாக. அது* 100 *முழ
நீளமான திரைகளால் தெற்குப்புறம்
மறைக்கப்படட்டும். மெல்லிய துகிலால்
இத்திரைகள் அமைய வேண்டும்.* [10]20
*வெண்கல பீடங்கள் உள்ள* 20 *தூண்களைப்
பயன்படுத்து. தூண்களின் கொக்கிகளும்,
திரைப் பூண்களும் வெள்ளியால் செய்யப்பட
வேண்டும்.* [11]*வடபுறத்திலும் திரைச் சுவர்*
100 *முழ** *நீளமாக இருக்க வேண்டும்.
அதற்கு* 20 *தூண்களும்,* 20 *வெண்கலப்
பீடங்களும் இருக்க வேண்டும். தூண்களின்
கொக்கிகளும், திரைப்பூன்களும் வெள்ளியால்
செய்யப்படவேண்டும்.*
[12]“*வெளிப்பிரகாரத்தின் மேற்குப்புறத்தில்*
50 *முழ நீளமுள்ள திரைச்சுவர் இருக்க
வேண்டும்.* 10 *தூண்களும்,* 10 *பீடங்களும்
இருக்க வேண்டும்.* [13]*வெளிப்பிரகாரத்தின்
கிழக்குப் புறமும்* 50 *முழ அகலம் இருக்க
வேண்டும்.* [14]*வெளிப்பிரகாரத்தின் நுழை
வாயில் கிழக்குப் புறத்திலேயே அமை
யட்டும். நுழைவாயிலின் ஒருபுறம்* 15 *முழ**
*நீளமான திரைகளும்,* 3 *தூண்களும்,* 3
*பீடங்களும் இருக்க வேண்டும்.* [15]*அதன்
மறுபுறமும்* 15 *முழ நீளமான திரைகளும்,
மூன்று தூண்களும், அவற்றிற்கு மூன்று
பீடங்களும் இருக்கட்டும்.*
[16]“*வெளிப்பிரகாரத்தின் நுழைவாயிலை
மூடுவதற்கு* 20 *முழ** *நீளமான திரை
இருக்க வேண்டும். மெல்லிய துகில்,
இளநீலம், இரத்தாம்பரம், சிவப்பு நூலாலும்
ஆகிய துணிகளால் திரைகளையும், அதில்
சித்திர வேலைப்பாடுகளையும் செய். நான்கு
பீடங்கள் உள்ள நான்கு தூண்கள் திரைக்
கென இருக்கட்டும்.* [17]*வெளிப் பிரகாரத்தைச்
சுற்றிலுமுள்ள அனைத்துத் தூண்களும்
வெள்ளிப் பூண்களும், வெள்ளிக் கொக்கி
களும், வெண்கலப் பீடங்களும் கொண்டதாக
இருக்க வேண்டும்.* [18]100 *முழ நீளமும்* 50
*முழ அகலமும் கொண்டதாக வெளிப்
பிரகாரம் இருக்க வேண்டும். வெளிப்
பிரகாரத்தைச் சுற்றிலுமுள்ள திரைகளின்
சுவர்* 5 *முழ உயரம் இருக்க வேண்டும்.
திரைகள் மெல்லிய துகிலால் நெய்யப்பட
வேண்டும். தூண்களின் பீடங்கள் வெண்
கலத்தாலாக வேண்டும்.* [19]*எல்லாக் கருவி
களும், கூடாரத்தின் ஆணிகளும், பரிசுத்தக்
கூடாரத்திற்குத் தேவையான எல்லாப்
பொருட்களும் வெண்கலத்தால் அமைய
வேண்டும். வெளிப்பிரகாரத்திற்கான திரை
களுக்குத் தேவையான கூடார ஆணிகளும்
வெண்கலத்தால் செய்யப்பட வேண்டும்.*

### அகல் எண்ணெய்

[20]“*தரத்தில் உயர்ந்த ஒலிவ எண்ணெயைக்
கொண்டுவரும்படியாக இஸ்ரவேல்
ஜனங்களுக்குக் கட்டளையிடு. தினமும்
மாலை நேரத்தில் ஏற்றப்பட வேண்டிய
விளக்கிற்கு இந்த எண்ணெயைப் பயன்*

---

**100 *முழம்*** 86’ 1.5’’ (26.25 *மீ.*)

**15 *முழம்*** 25’ 10’’ (7.87 *மீ.*)

**20 *முழம்*** 34’ 5.375 (10.5 *மீ.*)

படுத்து. 21ஆரோனும், அவன் மகன்களும்
விளக்கைச் சுத்திகரிக்கும் வேலையைச்
செய்ய வேண்டும். ஆசரிப்புக் கூடாரத்தின்*
முன் அறைக்குள் அவர்கள் செல்வார்கள்.
இது உடன்படிக்கை இருக்கும் அறைக்கு
முன்பாக இருக்கும் வெளிப்புற அறை. ஒரு
திரை இந்த இரண்டு அறைகளையும்
பிரிக்கும். மாலை முதல், காலை வரை
கர்த்தருக்கு முன் விளக்கு தொடர்ந்து எரிந்து
கொண்டே இருக்கும்படி அவர்கள் அதைக்
கவனித்து வரவேண்டும். இஸ்ரவேல்
ஜனங்களும், அவர்கள் சந்ததியும் இச்
சட்டத்தை என்றென்றைக்கும் பின்பற்ற
வேண்டும்" என்றார்.

### ஆசாரியருக்கான உடை

28 கர்த்தர் மோசேயை நோக்கி, "உன்
சகோதரனாகிய ஆரோனையும்,
நாதாப், அபியூ, எலெயாசார், இத்தாமார்
என்னும் ஆரோனின் மகன்களையும் இஸ்ர
வேல் ஜனங்களிடமிருந்து பிரித்து உன்
னிடம் வரவழை. இவர்கள் எனக்கு
ஆசாரியர்களாக ஊழியம் செய்வார்களாக.
2"உனது சகோதரனாகிய ஆரோனுக்
கென்று சிறப்பான ஆடைகளை உண்டாக்கு.
அந்த ஆடைகள் அவனுக்குக் கனமும்,
மேன்மையும் தரும். 3இந்த ஆடைகளைச்
செய்யும் திறமை மிக்கவர்கள் ஜனங்கள்
மத்தியில் இருக்கிறார்கள். அவர்களுக்கு
விசேஷ அறிவை நான் கொடுத்துள்ளேன்.
அவர்களிடம் ஆரோனுடைய ஆடைகளைத்
தயாரிக்கச் சொல். அவன் எனக்குச்
சிறப்பான பணிவிடை செய்வதை அந்த
உடை காட்டும். அவன் என்னைச்
சேவிக்கிற ஆசாரியனாகப் பணியாற்று
வான். 4அந்த மனிதர்கள் செய்ய வேண்டிய
ஆடைகள் இவைகளே: நியாயத்தீர்ப்பு
மார்ப்பதக்கம், ஏபோத், நீல அங்கி,
முழுவதும் நெய்யப்பட்ட வெள்ளை அங்கி,
தலைப்பாகை, கச்சை. ஆரோனுக்கும் அவன்
மகன்களுக்கென்றும் இந்தச் சிறப்பு ஆடை
களை உண்டாக்க வேண்டும். பின்பு
ஆரோனும், அவனது மகன்களும் எனக்கு
ஆசாரியர்களாக ஊழியம் செய்யமுடியும்.
5பொன்னையும், ஜரிகைகளையும், மெல்லிய
துகிலையும்,* இளநீலம், இரத்தாம்பரம்,
சிவப்புநிற நூலையும் பயன்படுத்துமாறு
அவர்களுக்குச் சொல்.

### ஏபோத்தும், இடைக் கச்சையும்

6"ஏபோத்தைச்* செய்வதற்குப் பொன்
னையும், சரிகைகளையும், மெல்லிய
துகிலையும், இளநீலம், இரத்தாம்பரம்,
சிவப்புநிற நூலையும் பயன்படுத்து. இது
திறமைமிக்க கலைஞனின் வேலை ஆகும்.
7ஏபோத்தின் தோள் பகுதி ஒவ்வொன்றிலும்
ஒவ்வொரு தோள்பட்டை இருக்க வேண்டும்.
இந்தத் தோள்பட்டைகள் ஏபோத்தின்
இரண்டு மூலைகளிலும் கட்டப்பட வேண்
டும்.
8"ஏபோத்திற்கு ஒரு இடைக்கச்சையைச்
செய்ய வேண்டும். ஏபோத்தை நெய்தது
போலவே, இடைக்கச்சையையும், பொன்
ஜரிகை, மெல்லிய துகில், இளநீலம்,
இரத்தாம்பரம், சிவப்புநிற நூல் ஆகிய
வற்றால் செய்ய வேண்டும்.
9"இரண்டு கோமேதகக் கற்களை எடுத்து
கொள். இஸ்ரவேலின் (யாக்கோபு)
பன்னிரண்டு மகன்களின் பெயர்களையும்
அக்கற்களின் மீது எழுது. 10ஆறு பெயர்
களை ஒரு கல்லிலும், மற்ற ஆறு
பெயர்களை மறு கல்லிலும் எழுதவேண்டும்.
முதல் மகனிலிருந்து கடைசி மகன்
வரைக்கும் ஒவ்வொருவரின் பெயர்களையும்
எழுத வேண்டும். 11"இந்த கற்களின் மீது
இஸ்ரவேலின் ஆண் பிள்ளைகளுடைய
பெயர்களை செதுக்கவேண்டும். முத்திரை
செய்கிற முறைப்படியே இதனையும் செய்.
பின்பு தங்கச் சட்டங்களில் கற்களைப்
பொருத்து. 12ஏபோத்தின் வார்களில் இந்தக்
கற்களைப் பொருத்து. கர்த்தருக்கு முன்னால்
நிற்கும்போது ஆரோன் அந்தச் சிவப்பு
அங்கியை அணிந்துகொள்வான். ஏபோத்
தின்மேல் இஸ்ரவேலின் பன்னிரண்டு
மகன்களின் பெயர்களும் உள்ள இரண்டு
கற்களும் இருக்கும். இஸ்ரவேல் ஜனங்களை
தேவன் நினைவுகூருவதற்கு இக்கற்கள்
உதவும். 13ஏபோத்தின் மேல் அக்கற்கள்
நன்றாக பதிக்கப்பட்டிருக்கும்படி பசும்
பொன்னை பயன்படுத்து. 14பொன்னால்
இரண்டு பின்னல் வேலையான சங்கிலிகள்
செய்து அவற்றைப் பொன் சட்டத்தில் பூட்ட
வேண்டும்.

### நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கம்

15"தலைமை ஆசாரியனுக்காக நியாயத்
தீர்ப்பு மார்ப்பதக்கத்தைச் செய். ஏபோத்தைச்
செய்ததுபோலவே, திறமைமிக்க கை
வேலைக்காரர்களைக் கொண்டு இதையும்
செய்ய வேண்டும். பொன் ஜரிகையையும்,
மெல்லிய துகிலையும், இளநீலம், இரத்தாம்
பரம், சிவப்பு நிற நூலையும் பயன்படுத்த
வேண்டும். 16இந்த நியாயத்தீர்ப்பு மார்ப்
பதக்கத்தை இரண்டாக மடித்து ஒரு சதுர
பையாக தைக்க வேண்டும். அது 9
அங்குல நீளமும், 9 அங்குல அகலமும்
உடைய சதுரமாய் இருக்க வேண்டும்.
17நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தில் நான்கு
வரிசை விலையுயர்ந்த கற்களைப் பதிக்க
வேண்டும். பத்மராகம், புஷ்பராகம்,

---

**ஆசரிப்புக் கூடாரம்** இங்குதான் இஸ்ரவேலர் தேவனைச் சந்திக்கும்படி உள்ளே சென்றனர்.

**மெல்லிய துகில்** இது சணலின் மெல்லிய நாரிலிருந்து தயாரித்து நெய்த துணியாகும்.

**ஏபோத்** ஆசாரியன் அணியும் சிறப்பு மேலாடை.

மாணிக்கம் கற்கள் முதல் வரிசையில்
இருக்க வேண்டும். 18இரண்டாவது
வரிசையில் மரகதம், இந்திரநீலம், வச்சிரம்
ஆகிய கற்கள் இருக்க வேண்டும். 19மூன்றா
வது வரிசையில் கெம்பு, வைடூரியம், சுகந்தி
ஆகிய கற்கள் இருக்க வேண்டும்.
20நான்காவது வரிசையில் படிகப்பச்சை,
கோமேதகம், யஸ்பி என்ற கற்கள் இருக்க
வேண்டும். இவை அனைத்தையும்
பொன்னில் பதிக்க வேண்டும். 21நியாயத்
தீர்ப்பு மார்ப்பதக்கத்தில் மேற்கூறிய
பன்னிரெண்டு கற்கள் இருக்க வேண்டும்.
இஸ்ரவேலின் மகன்கள் ஒவ்வொருவனுக்கும்
ஒவ்வொரு கல் இருக்க வேண்டும். முத்திரை
செய்கிற வண்ணமே ஒவ்வொரு கல்லிலும்
இப்பெயர்கள் பொறிக்கப்பட வேண்டும்.
22“சுத்தமான பொன்னினால் ஆன
சங்கிலிகளை நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்
திற்காக செய்யவேண்டும். அவை கயிறு
போல் பின்னப்பட்டிருக்க வேண்டும்.
23இரண்டு பொன் வளையங்களைச் செய்து
நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தின் இரண்டு
மூலைகளிலும் அவற்றை மாட்டவேண்டும்.
24இரண்டு பொன் சங்கிலிகளையும்
நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தின் இரண்டு
வளையங்களில் பொருத்து. 25இரண்டு
சட்டத்திலும் சங்கிலிகளின் வார்களை
இணைத்துவிடு. ஏபோத்தின் முன்பகுதியி
லுள்ள இரண்டு தோள் பட்டைகளிலும்
இவை பொருத்தப்பட்டிருக்கும். 26மேலும்
இரண்டு பொன் வளையங்களைச் செய்து
அவற்றை நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தின்
மூலைகளில் பொருத்து. ஏபோத்துக்கு
பொருத்தினநியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தின்
உட்புற மூலைகளில் இது இருக்கும்.
27இன்னும் இரண்டு பொன் வளையங்களைச்
செய்து அவற்றை ஏபோத்தின் முன்புறமுள்ள
தோள் பட்டைகளின் கீழ்ப்பகுதியில்
பொருத்து. பொன் வளையங்களை
ஏபோத்தின் இடைக்கச்சைக்கு மேல் வை.
28நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தின் வளையங்
களை ஏபோத்தின் வளையங்களோடு
இணைப்பதற்கு நீல நிற நாடாவைப்
பயன்படுத்து. இதனால் நியாயத்தீர்ப்பு மார்ப்
பதக்கம் கச்சைக்கு அருகேயும் ஏபோத்திற்கு
எதிரேயும் இருக்கும்.
29“பரிசுத்த இடத்துக்குள் ஆரோன்
நுழையும்போது, அவன் நியாயத்தீர்ப்பு
மார்ப்பதக்கத்தை அணிய வேண்டும்.
அவனது மார்புக்கு நேராக இஸ்ரவேலின்
பன்னிரெண்டு மகன்களின் பேரையும்
அவன் அணிந்துகொள்வான். இவ்வாறு
கர்த்தர் அவர்களை எப்போதும் நினைவு
கூருவார். 30நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்திற்
குள் ஊரீமையும் தும்மீமையும்* வை.
கர்த்தருக்குமுன் செல்லும்போது இவை
ஆரோனின் மார்புக்கு மேலாக இருக்கும்.
இப்படியாக இஸ்ரவேல் ஜனங்களின்
நியாயத்தீர்ப்பை கர்த்தருக்கு முன்பாக
ஆரோன் எப்போதும் சுமந்து செல்வான்.

### ஆசாரியர்களுக்குரிய பிற ஆடைகள்

31“ஏபோத்திற்காக ஒரு நீல அங்கியைத்
தயார் செய். 32தலையை நுழைத்துக்
கொள்ளும்பொருட்டு நடுவில் ஒரு துவாரத்
தை அமைப்பாயாக. அத்துவாரத்தைச்
சுற்றிலும் ஒரு நெய்யப்பட்ட துணியைத்
தைத்துவிடு. துவாரம் கிழியாதபடிக்கு அது
உதவும். 33துணியாலானமாதுளம் பழங்களை
உண்டாக்க நீலம், இரத்தாம்பரம், சிவப்பு
ஆகிய நூலைப் பயன்படுத்து. அவற்றை
வஸ்திரத்தின் ஓரங்களில் சுற்றிலும் தொங்
கவிடு. மாதுளம் பழங்களுக்கு இடையில்
பொன்மணிகளைத் தொங்கவிடு. 34இவ்வாறு
அங்கியின் கீழே பொன்மணிகளும், மாதுளம்
பழங்களும் இருக்க வேண்டும். ஒரு மாதளம்
பழமும், ஒரு பொன்மணியுமாக வரிசையாக
அமையட்டும். 35ஆரோன் ஆசாரியனாகப்
பணிவிடை செய்யும்போது இந்த அங்கியை
அணிந்துகொள்ள வேண்டும். கர்த்தரின்
முன்னே நிற்கும்படியாக பரிசுத்த இடத்திற்கு
அவன் போகும்போது அவன் சாகாதபடிக்கு
மணிகள் ஒலிக்கும். பரிசுத்த இடத்திலிருந்து
வெளியேறும்போதும் அவை ஒலிக்கும்.
36“முத்திரை செய்வதைப்போல், பொன்
தகட்டில் பொன் எழுத்துக்களால் அதில்
‘கர்த்தருக்கு பரிசுத்தம்’ என்னும் வார்த்தை
களை பொறித்து வை. 37அந்த பொன்
தகட்டை ஒரு நீல வண்ண நாடாவில்
இணைத்து விடு. தலைப்பாகையின்
முன்புறம் அந்தப் பொன் தகடு இருக்க
வேண்டும். 38ஆரோன் அதைத் தலையில்
அணிந்துகொள்ள வேண்டும். இஸ்ரவேல்
ஜனங்கள் படைக்கும் காணிக்கைகளில்
உள்ள கறையினால் அவன் கறைபடாதபடி
இது உதவும். ஜனங்கள் கர்த்தருக்குக்
கொடுக்கும் காணிக்கைகள் இவைகளே.
ஜனங்களின் காணிக்கைகளைக் கர்த்தர்
ஏற்றுக்கொள்ளும்பொருட்டு ஆரோன்
இதனை எப்போதும் தலையில் அணிந்து
கொள்ள வேண்டும்.
39“வெள்ளை அங்கியை மெல்லிய துகில்
நூலிலிருந்து நெய்ய வேண்டும். தலைப்
பாகைக்கும் மெல்லிய துகிலைப் பயன்
படுத்து, கச்சையில் சித்திர வேலைப்பாடுகள்
தைக்கப்பட்டிருக்க வேண்டும். 40மேலங்கி,
கச்சை, தலைப்பாகை ஆகியவற்றை
ஆரோனின் மகன்களுக்காகவும் செய்ய
வேண்டும். இது அவர்களுக்கு கனத்தையும்
மதிப்பையும் அளிக்கும். 41உன் சகோதர

---

**ஊரீம் தும்மீம்** தேவனுடைய சந்நிதியில் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணும்படி ஆசாரியர்களால் பயன்படுத்தப்பட்டது. ஒருவேளை இவை சீட்டுப் போடுவதற்காக பயன்படுத்தப்பட்ட கற்களாகவும், குச்சிகளாகவும், எலும்புத் துண்டுகளாகவும் இருந்திருக்கலாம்.

னாகிய ஆரோனுக்கும், அவன் மகன்
களுக்கும் இந்த ஆடைகளை அணிவி.
அவர்களை ஆசாரியர்களாக்கும்படி விசேஷ
எண்ணெயை அவர்கள் மீது ஊற்று. இது
அவர்களைப் பரிசுத்தமாக்கும். அவர்கள்
எனக்கு சேவை செய்யும் ஆசாரியர்களாக
இருப்பார்கள்.
42 "மெல்லிய துகிலால் ஆசாரியர்களுக்கு
உள்ளாடைகள் தைக்க வேண்டும். அவை
இடுப்பிலிருந்து முழங்கால் வரைக்கும்
இருக்கும். 43 ஆசரிப்புக் கூடாரத்திற்குள்
நுழையும்போதெல்லாம்ஆரோனும், அவனது
மகன்களும் இந்த ஆடைகளை அணிந்திருக்க
வேண்டும். பரிசுத்த இடத்தில் பலி
பீடத்தருகே ஆசாரியராக பணிவிடைசெய்ய
வரும்போது இதை அணிய வேண்டும்.
அவற்றை அணியாவிட்டால் அவர்கள்
குற்றவாளிகளாவார்கள். அதனால் அவர்கள்
சாக நேரிடும். ஆரோனுக்கும் அவன்
குடும்பத்தினருக்கும் என்றென்றைக்கும் இது
கட்டளையாக இருக்கும்" என்றார்.

### ஆசாரியர்களின் நியமன விழா

29 பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி,
"எனக்கு ஆசாரியர்களாக விசேஷ
பணிவிடையை ஆரோனும் அவன்
மகன்களும் செய்யும்பொருட்டு நீ செய்ய
வேண்டிய காரியங்களை நான் உனக்குக்
கூறுவேன். ஒரு இளங்காளையையும்,
குறைகள் இல்லாத இரண்டு இளம்
வெள்ளாடுகளையும் தேர்ந்தெடுத்துக்கொள்.
2 சுத்தமான கோதுமை மாவை புளிப்பில்லாத
ரொட்டியாகச் செய்துகொள். அதே மாவைப்
பயன்படுத்தி ஒலிவ எண்ணெயால் வார்ப்பு
ரொட்டிகளையும் தயாரித்துக்கொள். சிறிய
மெல்லிய அடைகளையும் எண்ணெய் பூசி
உண்டாக்கு. 3 வார்ப்பு ரொட்டிகளையும்,
அடைகளையும் ஒரு கூடையில் வைத்து
அவைகளையும், காளையையும், இரண்டு
கடாக்களையும் ஆரோனுக்கும் அவன் மகன்
களுக்கும் கொடு.
4 "ஆசரிப்புக் கூடாரத்தின் நுழை
வாயிலுக்கு ஆரோனையும், அவனது மகன்
களையும் அழைத்துவா. அவர்களை
தண்ணீரில் கழுவினபின்பு ஆரோனுக்கு
விசேஷ ஆடைகளை அணிவி. 5 முழுவதும்
நெய்த வெள்ளை அங்கியையும், ஏபோத்
தோடு அணிய வேண்டிய நீல அங்கியையும்
உடுத்திவிடு. அதன்மேல் ஏபோத்தையும்,
நியாயத்தீர்ப்புமார்ப்பதக்கத்தையும் அணியச்
செய். அழகிய அரைக்கச்சையை கட்டிவிடு.
6 தலைப்பாகையை அவன் தலையில்
வைத்து, அதன்மேல் பரிசுத்த கிரீடத்தை
வை. 7 பின்பு அபிஷேக எண்ணெயை
எடுத்து ஆரோனின் தலையின்மேல் ஊற்று.
கர்த்தருக்குரிய ஆ0சாரியப் பணிவிடைக்கு
ஆரோன் பிரித்தெடுக்கப்பட்டதை இது
காட்டும்.
8 "பின்பு ஆரோனின் மகன்களை அந்த
இடத்திற்கு அழைத்து வா. முழுவதும்
நெய்யப்பட்ட வெள்ளை நிற அங்கிகளை
அவர்களுக்கு அணிவி. 9 பின் அரைக்கச்சை
களைக் கட்டிவிடு. அவர்கள் அணிவதற்கான
விசேஷ பாகைகளைக் கொடு. அப்போதி
லிருந்து அவர்கள் ஆசாரியர்களாகப் பணி
செய்ய ஆரம்பிப்பார்கள். என்றென்றைக்கு
மான விசேஷ சட்டப்படி அவர்கள்
ஆசாரியர்களாக இருப்பார்கள். இவ்வாறு
ஆரோனையும் அவன் மகன்களையும் நீ
ஆசாரியர்களாக்க வேண்டும்.
10 "ஆசரிப்புக் கூடாரத்திற்கு முன்
காளையைக் கொண்டு வா. ஆரோனும்,
அவனது மகன்களும் தங்கள் கைகளைக்
காளையின் தலையில் வைக்கட்டும்.
11 ஆசரிப்புக் கூடாரத்தின் நுழைவாயிலில்
காளையைக் கொல். கர்த்தர் இதைப்
பார்ப்பார். 12 காளையின் இரத்தத்தில்
கொஞ்சம் எடுத்து பலிபீடத்திற்குச் செல்.
உனது விரல்களை இரத்தத்தில் தோய்த்து
பலிபீடத்தின் கொம்புகளில் பூசு. மீதி இரத்தத்
தைப் பலிபீடத்தின் அடியிலே ஊற்றிவிடு.
13 காளையின் உட்புறத்திலுள்ள எல்லா
கொழுப்பையும், ஈரலின் மேலுள்ள
சவ்வையும், சிறுநீரகங்களையும், அவை
களை சுற்றிய கொழுப்பையும் எடுத்து,
பலிபீடத்தில் எரித்துவிடு. 14 பின் காளையின்
மாமிசம், அதன் தோல், பிற பகுதிகளை
எடுத்துவிட்டு பாளையத்துக்கு வெளியே
கொண்டுபோய் அவற்றைச் சுட்டெரித்து
விடு. இதுவே ஆசாரியர்களின் பாவத்தைப்
போக்குவதற்கான காணிக்கை ஆகும்.

15 "பின் ஆரோனும், அவனது மகன்களும்
ஆட்டுக் கடாவின் தலையில் தம் கைகளை
வைக்கும்படி சொல். 16 கடாவைக் கொன்று
இரத்தத்தைச் சேகரித்துப் பலிபீடத்தைச்
சுற்றிலும் நான்கு பக்கங்களிலும் அதைத்
தெளித்துவிடு. 17 செம்மறி ஆட்டுக்
கடாவைப் பல துண்டுகளாக்கு. அதன்
எல்லா உட்பாகங்களையும், கால்களையும்
கழுவு. அவற்றை செம்மறி ஆட்டுக்கடாவின்
தலையோடும், அதன் மற்ற துண்டுகளோடும்
வை. 18 எல்லாவற்றையும் பலிபீடத்தில்
எரித்துவிடு. இது கர்த்தருக்குத் தரப்படும்
தகன பலியாகும். கர்த்தருக்கு சுகந்த
வாசனையாக இது இருக்கும்.
19 "ஆரோனும், அவனது மகன்களும்
மற்றொரு ஆட்டுக் கடாவின்மேல் தம்
கைகளை வைக்கட்டும். 20 அக்கடாவைக்
கொன்று கொஞ்சம் இரத்தத்தை சேகரித்துக்
கொள். அந்த இரத்தத்தை ஆரோனின் வலது
காதுமடலிலும், அவன் மகன்களின் வலது
காது மடலிலும், அவர்களின் வலது
பெருவிரல்களிலும், அவர்களின் வலது கால்
பெருவிரல்களிலும் தடவு. பின்பு பலி
பீடத்தின் 4 பக்கங்களின் எதிரிலும் மீதி

*இரத்தத்தை தெளி.* 21*பிறகு சிறிது இரத்தத்*
*தைப் பலிபீடத்திலிருந்து எடுத்து அதை*
*விசேஷ எண்ணெயுடன் கலந்து ஆரோன்*
*மீதும் அவன் ஆடைகள் மீதும் தெளி.*
*பின்பு அவனது மகன்கள் மற்றும்*
*அவர்களின் ஆடைகள் மீதும் தெளி.*
*ஆரோனும் அவனது மகன்களும் எனக்கு*
*விசேஷ பணிவிடை செய்பவர்கள் என்பதை*
*யும், இந்த ஆடைகள் விசேஷ காலங்களில்*
*மாத்திரம் பயன்படுத்தப்பட வேண்டியவை*
*என்பதையும் இது காட்டும்.*
22“*பின்பு ஆட்டுக் கடாவிலிருந்து*
*கொழுப்பை அகற்று. (ஆரோனை தலைமை*
*ஆசாரியனாக நியமிக்கும் விழாவில்*
*பயன்படுத்தப்படும் கடா இது.) வாலையும்,*
*உட்பாகங்களையும் சூழ்ந்திருக்கும் கொழுப்*
*பையும், ஈரலின் மேலுள்ள சவ்வையும்,*
*சிறுநீரகங்களையும் அவைகளைச் சுற்றி*
*இருக்கும் கொழுப்பையும் வலது காலையும்*
*எடுத்துக்கொள்.* 23*பின் புளிப்பு இல்லாத*
*ரொட்டி இருக்கும் கூடையை எடுத்துக்*
*கொள். கர்த்தரின் முன் வைக்க வேண்டிய*
*கூடை இது. ஒரு வார்ப்பு ரொட்டி,*
*எண்ணெயால் செய்யப்பட்ட அடை, ஒரு*
*சிறிய மெல்லிய அடை ஆகியவற்றைக்*
*கூடையில் இருந்து எடுக்க வேண்டும்.*
24*இவற்றை ஆரோனுக்கும், அவன் மகன்*
*களுக்கும் கையில் கொடு. இவற்றை*
*அவர்கள் ஏந்தி நிற்கும்படி செய். கர்த்தருக்கு*
*உகந்த அசைவாட்டும் காணிக்கையாக*
*அவர்கள் அதை அசைவாட்ட வேண்டும்.*
25*பின்பு அவற்றை அவர்களிடமிருந்து*
*வாங்கிக் ஆட்டுக் கடாவோடு பலிபீடத்தில்*
*சுட்டெரி. இது நெருப்பின் மூலமாக*
*தேவனுக்குத் தரப்படும் தகன பலியாகும்.*
*அதன் சுகந்த வாசனை கர்த்தருக்கு ஏற்றது.*
26“*ஆட்டுக்கடாவின் (இந்தக் கடா*
*ஆரோனை தலைமை ஆசாரியனாக்கும்*
*விழாவில் பயன்படுத்தப்படும்) மார்புப் பகுதி*
*யை விசேஷ காணிக்கையாக கர்த்தரின்*
*முன்னிலையில் ஏந்தி நிற்க வேண்டும்.*
*பின் அதை எடுத்து வை. மிருகத்தின் இந்தப்*
*பகுதி உனக்குரியது.* 27*ஆரோனைத்*
*தலைமை ஆசாரியனாக்கு வதற்குப்*
*பயன்படுத்திய கடாவின் மார்புப்பகுதி, கால்*
*ஆகியவற்றை எடுத்து அவற்றை பரிசுத்தப்*
*படுத்து. அந்த விசேஷ பாகங்களை*
*ஆரோனுக்கும், அவன் மகன்களுக்கும்*
*கொடு.* 28*இஸ்ரவேல் ஜனங்கள் எப்போதும்*
*இப் பாகங்களை ஆசாரியர்களுக்கு கொடுத்து*
*விட வேண்டும். இஸ்ரவேல் ஜனங்கள்*
*கர்த்தருக்கு காணிக்கை செலுத்தும்*
*போதெல்லாம் இப்பாகங்கள் ஆசாரியர்*
*களுக்கு உரியவை. இவற்றை அவர்கள்*
*ஆசாரியர்களுக்குக் கொடுக்கும்போது அது*
*கர்த்தருக்கு கொடுப்பதற்குச் சமமாகும்.*
29“*ஆரோனுக்காகச் செய்த அந்த விசேஷ*
*ஆடைகளைப் பாதுகாப்பாக வைத்திரு.*
*அவனுக்குப்பின் வரும் மகன்களுக்கும் அந்த*
*ஆடைகள் உரியனவாகும். தலைமை*
*ஆசாரியர்களாகத் தெரிந்தெடுக்கப்பட்டவர்*
*கள் அவற்றை அணிவார்கள்.* 30*ஆரோனின்*
*மகன் அவனுக்குப்பின் தலைமை ஆசாரிய*
*னாவான். பரிசுத்த இடத்தில் பணியாற்றுவ*
*தற்காக ஆசரிப்புக் கூடாரத்தில் பிர*
*வேசிக்கும்போது 7 நாளளவும் அவன் அதை*
*உடுத்த வேண்டும்.*
31“*ஆரோனை தலைமை ஆசாரியனாக்க*
*பயன்படுத்திய ஆட்டுக்கடாவின் மாம்சத்தை*
*பரிசுத்தமான இடத்தில் சமைக்கவேண்டும்.*
32*முன் வாசலில் ஆரோனும் அவன்*
*மகன்களும் அதை உண்ணவேண்டும்.*
*ஆசரிப்புக் கூடாரத்தின் கூடையிலுள்ள*
*ரொட்டியையும் அவர்கள் சாப்பிட*
*வேண்டும்.* 33*அவர்கள் ஆசாரியர்களான*
*போது, அவர்கள் பாவங்களை அகற்ற*
*இந்தக் காணிக்கை பயன்படுத்தப்பட்டது.*
*இப்போது அவர்கள் அவற்றை உண்ண*
*வேண்டும். அவைகள் பரிசுத்தமானதால்*
*அந்நியன் அவைகளை உண்ணக்கூடாது.*
34*மறுநாள் காலையில் கடாவின் மாமிசமோ,*
*ரொட்டியோ மீதியிருந்தால் அது முற்றிலும்*
*சுட்டெரிக்கப்பட வேண்டும். அதை விசேஷ*
*காலத்தில் விசேஷ வகையில் சாப்பிட*
*வேண்டுமாதலால் அந்த ரொட்டியையோ,*
*மாமிசத்தையோ நீ சாப்பிடக்கூடாது.*
35“*ஆரோனுக்காகவும், அவன் மகன்களுக்*
*காகவும் நீ அவற்றைச் செய்ய வேண்டும்.*
*நான் சொன்னபடியே அவற்றைச் செய்ய*
*வேண்டும். ஆசாரியர்களாக அவர்களை*
*நியமிக்கும் விழா 7 நாட்கள் தொடர*
*வேண்டும்.* 36*ஏழு நாட்களிலும் தினந்தோறும்*
*ஒவ்வொரு காளையைக் கொல்ல வேண்டும்.*
*ஆரோன், அவன் மகன்களின் பாவங்*
*களுக்காக செலுத்தப்பட்ட பலியாக இது*
*அமையும். பலிபீடத்தைப் பரிசுத்தப்படுத்து*
*வதற்கு இப்பலிகளை நீ பயன்படுத்த*
*வேண்டும். அதைப் பரிசுத்தமாக்க ஒலிவ*
*எண்ணெயை ஊற்ற வேண்டும்.* 37*அந்த 7*
*நாட்களில் பலிபீடத்தை சுத்தமாகவும்,*
*பரிசுத்தமாகவும் வைத்துக்கொள்ள*
*வேண்டும். அப்போது பலிபீடம் மகா*
*பரிசுத்தமாகும். பலிபீடத்தைத் தொடும்*
*எப்பொருளும் பரிசுத்தம் ஆகும்.*
38“*ஒவ்வொரு நாளும் பலிபீடத்தில் ஒரு*
*காணிக்கை செலுத்த வேண்டும். ஒரு வயது*
*நிரம்பிய இரண்டு ஆட்டுக்குட்டிகளைக்*
*கொல்ல வேண்டும்.* 39*ஒரு ஆட்டுக்குட்டி*
*யைக் காலையிலும் மற்றொன்றை மாலை*
*யிலும் காணிக்கையாய் செலுத்த வேண்டும்.*
40-41 *முதல் ஆட்டுக்குட்டியைக் கொல்லும்*
*போது, சுத்தமான அரைத்த 8 கிண்ணம்**
*கோதுமை மாவைக் காணிக்கையாகக்*
*கொடுக்க வேண்டும். அந்த மாவைக்*

---

**8 *கிண்ணம்*** *படியளவில் ஒரு பங்கு.*

கால்படி* திராட்சைரசத்தோடு சேர்த்து
காணிக்கையாக அளிக்க வேண்டும். மாலை
யில் இரண்டாவது ஆட்டுக்குட்டியைக்
கொல்லும்போதும் 8 கிண்ணம் மாவையும்
கால்படி திராட்சைரசத்தையும் காலையில்
செய்தது போலவே காணிக்கையாகக்
கொடுக்க வேண்டும். அது கர்த்தருக்கு
அளிக்கும் சுகந்த வாசனையான தகன
காணிக்கையாகும். இதனை எரிக்கும்போது,
கர்த்தர் வாசனையை முகருவார், அது
அவரை மகிழ்விக்கும்.
42 “ஒவ்வொரு நாளும் இவற்றைச் சர்வாங்க
தகனக் காணிக்கையாக எரிக்க வேண்டும்.
கர்த்தருக்கு முன்பாக ஆசரிப்புக் கூடாரத்தின்
நுழைவாயிலில் இதைச் செய். தொடர்ந்து
உனது தலைமுறைகளுக்கும் இவ்வாறே
செய். நீ காணிக்கை செலுத்தும்போது
கர்த்தராகிய நான் உங்களைச் சந்தித்துப்
பேசுவேன். 43 அங்கு இஸ்ரவேல் ஜனங்களைச்
சந்திப்பேன். எனது மகிமை அவ்விடத்தைப்
பரிசுத்தப்படுத்தும்.
44 “ஆசரிப்புக் கூடாரத்தையும் பலி
பீடத்தையும் நான் பரிசுத்தப்படுத்துவேன்.
ஆரோனையும், அவனது மகன்களையும்
எனக்கு ஆசாரியராகப் பணியாற்று
வதற்காகப் பரிசுத்தமாக்குவேன். 45 நான்
இஸ்ரவேல் ஜனங்களோடு வாழ்வேன், நான்
அவர்கள் தேவனாக இருப்பேன். 46 நானே
தேவனாகிய கர்த்தர் என்பதை ஜனங்கள்
அறிவார்கள். அவர்களோடு வாழும்படியாக
அவர்களை எகிப்திலிருந்து வழிநடத்திய
தேவன் நான் என்பதை அவர்கள் அறி
வார்கள். நானே அவர்கள் தேவனாகிய
கர்த்தர்” என்றார்.

### தூபபீடம்

30 மேலும் தேவன் மோசேயை நோக்கி,
“சீத்திம் மரத்தால் ஒரு பலிபீடத்தை
தயார்செய்து, நறுமணப்புகை எரிக்கும்
படியான தூபபீடமாக அதைப் பயன்படுத்து.
2 பலிபீடம் 1 முழம் நீளமும், 1 முழம்
அகலமும் உடைய சதுர வடிவில் இருக்க
வேண்டும். அது 2 முழம் உயரம்
இருக்கட்டும். நான்கு மூலைகளிலும் கொம்பு
கள் இருக்கும். இந்த கொம்புகள் ஒரே
துண்டாக தூபபீடத்தோடு இணைக்கப்பட
வேண்டும். 3 பீடத்தின் மேல்புறத்தையும்
பக்கங்களையும் கொம்புகளையும் பொன்
னால் மூட வேண்டும். பீடத்தைச் சுற்றிலும்
பொன் சட்டத்தைப் பதிக்க வேண்டும்.
4 அதன் கீழ் இரண்டு பொன் வளையங்கள்
இருக்கட்டும். பீடத்தின் எதிர்ப்பக்கங்களில்
இரண்டு பொன் வளையங்கள் இருக்க
வேண்டும். பீடத்தைத் தண்டுகளால் சுமப்
பதற்கு இவ்வளையங்கள் பயன்படுத்தப்
படும். 5 தண்டுகளை சீத்திம் மரத்தால் செய்து
பொன்னால் மூடு. 6 விசேஷ திரைக்கு
முன்னால் தூபபீடத்தை நிறுத்து. அத்
திரைக்குப்பின் உடன்படிக்கைப் பெட்டி
இருக்கும். உடன்படிக்கைக்குமேல் இருக்கும்
கிருபாசனத்துக்கு முன்னால் பீடம்
அமையும். இவ்விடத்தில்தான் நான்
உன்னைச் சந்திப்பேன்.
7 “ஆரோன் தினந்தோறும் அதிகாலையில்
தூபபீடத்தின்மேல் இனிய நறுமணப்
புகையை எரிக்க வேண்டும். விளக்குகளை
பராமரிக்க வரும்போது அவன் இதைச்
செய்வான். 8 மீண்டும் மாலையிலும் அவன்
நறுமணப்புகையை எரிப்பான். அதுவும்
மாலையில் விளக்கைப் பராமரிப்பதற்கு
அவன் வரும் நேரமேயாகும். ஒவ்வொரு
நாளும் என்றென்றும் கர்த்தரின் முன்
நறுமணப்புகை எரிக்கப்படவேண்டும்.
9 வேறு எந்த நறுமணப் பொருட்களை
எரிப்பதற்கோ, வேறு தகனபலிகளை
எரிப்பதற்கோ இந்தத் தூபபீடத்தைப் பயன்
படுத்தக்கூடாது. தானிய காணிக்கை
யையோ, பானங்களின் காணிக்கையையோ
எரிப்பதற்கு இப்பீடத்தைப் பயன்படுத்த
லாகாது.
10 “ஆண்டிற்கொருமுறை கர்த்தருக்கு ஒரு
விசேஷ பலியை ஆரோன் செலுத்த
வேண்டும். ஜனங்களின் பாவத்தைப்
போக்குவதற்கு பாவப் பரிகார பலியின்
இரத்தத்தை ஆரோன் பயன்படுத்த வேண்டும்.
பீடத்தின் கொம்புகளினருகே ஆரோன்
இதனைச் செய்வான். இது பாவப் பரிகார
நாள் எனப்படும். இது கர்த்தருக்கு மிகவும்
பரிசுத்த நாள்” என்றார்.

### ஆலய வரி

11 கர்த்தர் மோசேயை நோக்கி,
12 “இஸ்ரவேல் ஜனங்களின் எண்ணிக்கை
யைத் தெரிந்துகொள். நீ இதைச் செய்தபிறகு
ஒவ்வொருவனும் கர்த்தருக்கென ஒரு
தொகை கொடுக்க வேண்டும். ஒவ்வொரு
வனும் இதைச்செய்தால் அவர்களுக்குத் தீங்கு
நேராது. 13 எண்ணப்பட்ட ஒவ்வொருவனும்
1/2 சேக்கல்* வீதம் கொடுக்க வேண்டும்.
(அதாவது அதிகாரப்பூர்வமான அளவுப்படி
1/2 சேக்கல். 1 சேக்கலுக்கு 20 கேரா.
1/2 சேக்கல் கர்த்தருக்குரிய காணிக்கை.
14 குறைந்தபட்சம் இருபது வயது நிரம்பிய
வர்கள் எல்லோரையும் கணக்கெடுக்க
வேண்டும். கணக்கெடுத்து கொள்ளப்பட்ட
ஒவ்வொருவரும் கர்த்தருக்கு இந்தக் காணிக்
கையைக் கொடுக்க வேண்டும். 15 செல்வந்
தர்கள் 1/2 சேக்கலுக்கு அதிகமாக கொடுக்கக்
கூடாது. ஏழைகளும் 1/2 சேக்கலுக்குக்
குறைவாகக் கொடுக்கக்கூடாது. எல்லோரும்
கர்த்தருக்கு ஒரே அளவு காணிக்கை
தரவேண்டும். இது உங்கள் வாழ்க்கையின்

---

**கால்படி** 1 லிட்டர்.

**1/2 சேக்கல்** 5.7 கிராம் எடை அளவு.

இரட்சிப்பிற்கான பணம். 16இப்பணத்தை
இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து திரட்டு.
அதை ஆசரிப்புக் கூடாரத்தின் பணிவிடைக்
காகப் பயன்படுத்து. கர்த்தர் தமது ஜனங்
களை நினைவுகூருவதற்காக இது அமையும்.
அவர்களின் சொந்த வாழ்க்கையின் பாது
காப்புக்காக ஜனங்கள் கொடுக்கும் பணம்
இது" என்றார்.

### கழுவும் தொட்டி

17கர்த்தர் மோசேயை நோக்கி,
18"வெண்கலத்தால் ஒரு பெரிய தொட்டியைச்
செய்து அதை வெண்கலப் பீடத்தில் வை.
இதைக் கைகளையும், கால்களையும் கழுவு
வதற்குப் பயன்படுத்து. அதை ஆசரிப்புக்
கூடாரத்திற்கும், பலிபீடத்திற்கும் நடுவில்
வை. வெண்கலத் தொட்டியைத் தண்ணீரால்
நிரப்பு. 19ஆரோனும், அவனது மகன்களும்
அவர்கள் கைகளையும் கால்களையும் இந்த
தொட்டித் தண்ணீரில் கழுவ வேண்டும்.
20ஆசரிப்புக் கூடாரத்திற்குள் நுழையும்
போதும் கர்த்தருக்குக் காணிக்கையைப்
படைக்க பலிபீடத்தை நெருங்கும்போதும்
ஒவ்வொரு முறையும் அவர்கள் தண்ணீரால்
கழுவிக்கொள்ள வேண்டும். அதனால்
அவர்கள் மரிக்கமாட்டார்கள். 21அவர்கள்
மரிக்காமலிருக்கும்படிக்குத் தங்கள் கைகளை
யும் கால்களையும் கழுவி சுத்தமாக இருக்க
வேண்டும். இது ஆரோனும், அவனது
ஜனங்களும் என்றென்றும் பின்பற்ற வேண்
டிய சட்டமாகும். எதிர்காலத்தில் வாழ
விருக்கும் ஆரோனின் ஜனங்களுக்கும் இது
நித்திய கட்டளையாயிருக்கும்" என்றார்.

### அபிஷேக எண்ணெய்

22பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி,
23"தரத்தில் உயர்ந்த நறுமணப் பொருட்களை
அரசாங்க அளவின்படி வாங்கு. வெள்ளைப்
போள தைலம் 12 பவுண்டும்,* நறுமணப்
பட்டை 6 பவுண்டும்,* வசம்பு 6 பவுண்டும்
24இலவங்கம் 12 பவுண்டும் வாங்கிக்கொள்.
அதிகாரப்பூர்வமான அளவின்படி பார்த்து
வாங்குவதோடு ஒரு கேலன் தரமான ஒலிவ
எண்ணெயையும் வாங்கிக்கொள்.

25"எல்லாவற்றையும் கூட்டிக் கலந்து
சுகந்த அபிஷேக எண்ணெயைத் தயாரித்துக்
கொள். 26ஆசரிப்புக் கூடாரத்தின் மேலும்
உடன்படிக்கைப் பெட்டியின் மேலும் இந்த
எண்ணெயைத் தெளி. அவை விசேஷ
மானவை என்பதை இது உணர்த்தும்.
27எண்ணெயை மேசைமீதும் அதன் மீதுள்ள
எல்லாப் பாத்திரங்களின்மீதும் ஊற்று.
குத்துவிளக்குத் தண்டின்மீதும், அதன்
உபகரணங்களின்மீதும், தூபபீடத்தின்மீதும்
ஊற்று. 28தேவனுக்கு பலிகளை எரிப்பதற்
கான பலிபீடத்திலும் எண்ணெயை ஊற்று.
இதன் பாத்திரத்திலும் அதன் அடித்தளத்தி
லும் ஊற்று. 29இவற்றையெல்லாம் நீ
பரிசுத்தமாக்குவாய். அவை கர்த்தருக்கு
மிகவும் விசேஷமானவை. அவற்றைத்
தொடும் எவையும் பரிசுத்தமாகும்.

30"ஆரோன்மீதும், அவனது மகன்கள்
மீதும் அபிஷேக எண்ணெயை ஊற்று.
அவர்கள் எனக்கு விசேஷ பணிவிடை
செய்வதை அது காட்டும். அப்பொழுது
அவர்கள் ஆசாரியர்களாக எனக்கு சேவை
செய்யலாம். 31அபிஷேக எண்ணெய் பரிசுத்த
மானது என்பதை இஸ்ரவேல் ஜனங்களுக்குச்
சொல். அது எனக்காக மட்டுமே பயன்
படுத்தப்பட வேண்டும். 32சாதாரண நறு
மணப் பொருளாக அதைப் பயன்படுத்தக்
கூடாது. இந்த விசேஷ எண்ணெயைத்
தயாரிக்கும் முறையில் சாதாரண நறுமண
தைலத்தை தயாரிக்கக் கூடாது. இந்த
அபிஷேக எண்ணெய் பரிசுத்தமானது. இது
உங்களுக்கு மிகவும் விசேஷமானதாகும்.
33இந்தப் பரிசுத்த எண்ணெயைப் போல
யாரேனும் நறுமண தைலத்தை உண்டாக்கி
அதை அந்நியருக்குக் கொடுத்தால் அவன்
இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து ஒதுக்கப்பட
வேண்டும்" என்றார்.

### நறுமணப்பொருள்

34பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி,
"இந்த நறுமணப் பொருட்களை வாங்கிக்
கொள். அவை வெள்ளைப் போளம்,
குங்கிலியம், அல்பான் பிசின், கந்தவர்க்கம்,
சாம்பிராணி ஆகியன. எல்லாவற்றையும்
ஒரே அளவில் எடுத்துக்கொள். 35இவற்றைச்
சேர்த்து நறுமணமுள்ள தூபவர்க்கம் செய்.
அபிஷேக எண்ணெய் தயாரிப்பதுபோல,
இதைத் தயாரிக்க வேண்டும். உப்பையும்
அதனோடு சேர்க்கும்போது அது சுத்தமான
தாகவும், விசேஷமானதாகவும் இருக்கும்.
36அதில் கொஞ்சம் தூபவர்க்கத்தைத்
தூளாக்கு. ஆசரிப்புக் கூடாரத்தில் உடன்
படிக்கைக்கு முன்னால் நறுமணப் பொடியை
வை. அந்த இடத்தில் நான் உன்னைச்
சந்திப்பேன். விசேஷ காரியத்துக்காக
மட்டுமே அந்த நறுமணப் பொடியை நீ
பயன்படுத்த வேண்டும். 37இப்படியாக இந்த
நறுமணப்பொருளை கர்த்தருக்கென்று
சிறந்த முறையில் தயாரிக்க வேண்டும்.
அதேவிதமாக வேறு நறுமணப் பொருளைத்
தயாரிக்கக் கூடாது. 38ஒருவன் நறுமணத்திற்
கென்று தனது உபயோகத்திற்காக நறுமணப்
பொருளை இதே முறையில் தயாரிக்க
விரும்பலாம். ஆனால் அவன் அவ்வாறு
செய்தால், எனது ஜனங்களிலிருந்து ஒதுக்கி
வைக்கப்படுவான்" என்றார்.

---

12 **பவுண்டு** 5.44 கிலோ எடையளவு.

**6** **பவுண்டு** 2.72 கிலோ எடையளவு.

### பெசலெயேலும் அகோலியாபும்

31 கர்த்தர் மோசேயை நோக்கி,
[2]“யூதாவின் கோத்திரத்திலிருந்து ஒரு
மனிதனை எனது விசேஷ பணிக்காகத்
தெரிந்தெடுத்துள்ளேன். அவன் ஊருடைய
மகனான ஊரியின் மகன் பெசலெயேல்.
[3]தேவ ஆவியால் நான் பெசலெயேலை
நிரப்பியுள்ளேன். எல்லா விதமான கை
வேலைகளையும் செய்யக்கூடிய திறமையை
யும், அறிவையும் அவனுக்குக் கொடுத்தி
ருக்கிறேன். [4]பெசலெயேல் கலைப் பொருட்
களை வடிப்பதில் வல்லவன். பொன்,
வெள்ளி, வெண்கலம் ஆகியவற்றால்
பொருட்களைச் செய்ய அவனுக்கு இயலும்.
[5]பெசலெயேலால் அழகான அணிகலன்களை
வெட்டி உருவாக்க முடியும். மரவேலைகளி
லும் அவன் கை தேர்ந்தவன். அவன்
எல்லாவிதமான வேலைகளையும் செய்யும்
ஆற்றல் மிக்கவன். [6]அவனுக்கு உதவி
செய்வதற்குத் தாண் கோத்திரத்திலிருந்து
அகிசாமாக்கின் மகன் அகோலியாபை
தெரிந்தெடுத்துள்ளேன். நான் உனக்குக்
கூறிய எல்லாப் பொருட்களையும் செய்யும்
திறமையை எல்லாப் பணியாட்களுக்கும்
கொடுத்துள்ளேன். நான் உனக்குக் கட்டளை
யிட்ட யாவையும் அவர்கள் செய்வார்கள்:

[7] ஆசரிப்புக் கூடாரம்,
உடன்படிக்கைப் பெட்டி,
கிருபாசனம், கூடாரத்தின்
பணிமுட்டுகளும்,
[8] மேசையும் அதற்குத் தேவையான
பொருட்களும்,
சுத்தமான குத்துவிளக்கையும்
அதின் கருவிகளும்,
நறுமணப் பொருளை எரிக்கும்
பீடம்,
[9] காணிக்கைகளை எரிக்கும் பலிபீடம்,
பலிபீடத்தில் பயன்படுத்தப்படும்
பொருட்கள்,
தொட்டியும் அதன் பீடமும்.
[10] ஆசாரியனாகிய ஆரோனின்
விசேஷ ஆடைகள்,
ஆரோனின் மகன்கள் ஆசாரியராக
சேவை செய்ய அவர்களுக்கான
உடைகள்.
[11] நறுமணம் மிக்க அபிஷேக
எண்ணெய்,
மகா பரிசுத்த இடத்தின்
நறுமணப்பொருள்

அனைத்தையும் நான் உனக்குக் கூறிய
விதத்திலேயே பணியாளர்கள் செய்ய
வேண்டும்” என்றார்.

### ஓய்வு நாள்

[12]பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி,
[13]“இஸ்ரவேல் ஜனங்களுக்கு இதைக் கூறு.
‘ஓய்வுக்குரிய விசேஷ தினங்களின் விதி
களை நீங்கள் பின்பற்ற வேண்டும். எல்லாத்
தலைமுறைகளிலும் அது உங்களுக்கும்
எனக்கும் மத்தியிலுள்ள அடையாளமாக
விளங்கும். உங்களை எனது விசேஷமான
ஜனங்களாக கர்த்தராகிய நான் ஏற்றுக்
கொண்டதை இது உணர்த்தும்.
[14]“ஓய்வு நாளை* ஒரு விசேஷ நாளாக
எண்ணுவாயாக. பிறநாட்களுக்கு சமமாக
ஓய்வு நாளையும் ஒருவன் எண்ணினால்
அம்மனிதன் கொல்லப்பட வேண்டும். ஓய்வு
நாளில் வேலை செய்கிறவனை அவனது
ஜனங்களிடமிருந்து ஒதுக்கிவிட வேண்டும்.
[15]வேலை நாட்களாக வாரத்தில் ஆறு
நாட்கள் உள்ளன. ஏழாவது நாள் ஓய்வுக்
குரிய விசேஷ நாளாகும். கர்த்தரை
மகிமைப்படுத்தும் விசேஷ நாள் அது. ஓய்வு
நாளில் வேலை செய்கிற எவனும்
கொல்லப்பட வேண்டும். [16]இஸ்ரவேல் ஜனங்
கள் ஓய்வு நாளை நினைவுகூர்ந்து அதை
விசேஷ நாளாக்க வேண்டும். என்றென்றும்
தொடர்ந்து இதைச் செய்துவர வேண்டும்.
என்றென்றும் எனக்கும் அவர்களுக்கும்
மத்தியில் தொடர்கிற உடன்படிக்கையாக
அது விளங்கும். [17]ஓய்வு நாள் எனக்கும்
இஸ்ரவேலருக்கும் மத்தியில் ஒரு
அடையாளமாக எப்போதும் இருக்கும்.
கர்த்தர் ஆறு நாட்கள் உழைத்து வானையும்
பூமியையும் உண்டாக்கினார். அவர் ஏழாம்
நாளில் ஓய்வாகவும் அமைதியாகவும்
இருந்தார்’” என்றார்.
[18]சீனாய் மலையில் கர்த்தர் மோசேயிடம்
பேசி முடித்தார். உடன்படிக்கை* பதித்த
இரண்டு கற்பலகைகளை கர்த்தர்
அவனுக்குக் கொடுத்தார். தேவன் தமது
விரல்களால் அக்கற்பலகைகளில் எழுதினார்.

### பொன் கன்றுக்குட்டி

32 மோசே மலையிலிருந்து இறங்கிவர
மிகுந்த தாமதமானதை ஜனங்கள்
உணர்ந்தனர். அவர்கள் ஆரோனைச் சூழ்ந்து,
அவனை நோக்கி, “பாரும், மோசே
எங்களை எகிப்து தேசத்திலிருந்து வெளியே
வழிநடத்தி வந்தான். இப்போது அவனுக்கு
என்ன நேர்ந்தது என்று தெரியவில்லை.
ஆகவே எங்களுக்கு முன்பாகச் சென்று
வழிநடத்துவதற்குச் சில தேவர்களை
உருவாக்கும்” என்றனர்.
[2]ஆரோன் ஜனங்களிடம், “உங்கள்
மனைவி, பிள்ளைகளுக்குச் சொந்தமான

---

**ஓய்வு நாள்** சனிக்கிழமை யூதருக்கு ஓய்வு எடுக்கவும் கர்த்தரைத் தொழுதுகொள்ளவும் இந்த நாள் ஒதுக்கப்பட்டது.

**உடன்படிக்கை** “ஆதாரம்” என்பதாகும். பத்து கட்டளைகள் செதுக்கப்பட்ட இரு கற்பாளங்கள். கர்த்தருக்கும் இஸ்ரவேலருக்கும் உள்ள உடன்படிக்கையின் ஆதாரமாக இருந்தன.

பொன் காதணிகளை என்னிடம் கொண்டு
வாருங்கள்” என்றான்.
3எல்லா ஜனங்களும் தங்கள் பொன்
காதணிகளைச் சேர்த்து ஆரோனிடம்
கொடுத்தனர். 4ஆரோன் ஜனங்களிடமிருந்து
அவற்றை வாங்கி, அதைப் பயன்படுத்தி
ஒரு கன்றுக்குட்டியின் உருவத்தை வார்த்
தான். பின்பு ஒரு உளியைப் பயன்படுத்தி,
அந்த சிலையைச் செதுக்கினான். பின்
அதை பொன் தகட்டால் மூடினான்.
அப்போது ஜனங்கள், “இஸ்ரவேலரே, இந்த
தெய்வங்களே உங்களை எகிப்தி லிருந்து
அழைத்து வந்தன!” என்றனர்.
5ஆரோன் இவற்றையெல்லாம் பார்த்தான்.
கன்றுக்குட்டியின் எதிரில் ஒரு பலிபீடம்
அமைத்தான். பின்பு ஜனங்களை நோக்கி,
“கர்த்தரைக் கனப்படுத்துவதற்கு நாளை ஒரு
பண்டிகை நடத்துவோம்” என்றான்.
6மறுநாள் காலையில் ஜனங்கள் வெகு
சீக்கிரமாக எழுந்தனர். அவர்கள் மிருகங்
களைக் கொன்று தகன பலிகளையும்,
சமாதான பலிகளையும் படைத்தனர்.
ஜனங்கள் தின்று, குடித்துக் களிக்க
உட்கார்ந்தனர். பின்பு எழுந்து மிகுதியான
அநாகரீகத்தில் ஈடுபட்டனர்.
7அப்போது கர்த்தர் மோசேயிடம், “இந்த
மலையைவிட்டு சீக்கிரமாய் கீழே இறங்கிப்
போ. எகிப்திலிருந்து நீ வெளியே
அழைத்துவந்த, உனது ஜனங்கள் மிகவும்
சீர்கேடான பாவத்தைச் செய்திருக்கிறார்கள்.
8செய்யும்படி நான் அவர்களுக்கு கட்டளை
யிட்டவைகளினின்று மிக வேகமாய் சோரம்
போனார்கள். பொன்னை உருக்கி
கன்றுக்குட்டியை வார்த்தார்கள். அவர்கள்
அதைத் தொழுது அதற்குப் பலி
செலுத்துகிறார்கள். அதனிடம், ‘எங்களை
எகிப்திலிருந்து வழிநடத்தின தெய்வங்கள்
இவையே’ என்றனர்” என்றார்.
9மேலும் கர்த்தர் மோசேயை நோக்கி,
“நான் இந்த ஜனங்களைப் பார்த்திருக்கிறேன்.
அவர்கள் பிடிவாத குணமுடையோர்
என்பதையும் அறிவேன். அவர்கள் எப்
போதும் எனக்கெதிராகத் திரும்புவார்கள்.
10எனவே என் கோபத்தால் அவர்களை
அழிப்பேன். பின் உன் மூலமாக ஒரு
பெரிய ஜனத்தை உருவாக்குவேன்”
என்றார்.
11ஆனால் மோசே தேவனாகிய கர்த்தரை
மிகவும் கெஞ்சி, “கர்த்தாவே, உமது
கோபத்தால் உமது ஜனங்களை அழித்து
விடாதேயும். உமது மிகுந்த ஆற்றலினாலும்
வல்லமையாலும் நீர் இந்த ஜனங்களை
எகிப்திலிருந்து கொண்டு வந்தீர். 12ஆனால்
நீர் உமது ஜனங்களை அழித்துவிட்டால்
எகிப்தியர்கள், ‘கர்த்தர் அந்த ஜனங்களுக்குத்
தீமை செய்யத் திட்டமிட்டார். எனவே
அவர்களை எகிப்திலிருந்து அழைத்துச்
சென்றார். அவர்களை மலைகளில் கொல்ல
விரும்பினார். அவர்களைப் பூமியிலிருந்து
நிர்மூலமாக்க எண்ணினார், என்று சொல்
வார்கள்.’ எனவே, உமது ஜனங்களிடம்
கோபம் கொள்ளாதிரும். உமது எண்ணத்தை
மாற்றிக் கொள்ளும்! உமது ஜனங்களை
அழித்துவிடாதிரும். 13ஆபிரகாம், ஈசாக்கு,
இஸ்ரவேல் (யாக்கோபு) ஆகியோரை
நினைவுகூரும். அவர்கள் உமக்குப் பணி
விடை செய்தனர். உமது பெயரால்
அவர்களுக்கு வாக்குறுதி கொடுத்தீர். ‘நான்
உன் ஜனங்களை வானத்தின் நட்
சத்திரங்களைப்போல பெருகச்செய்வேன்.
நான் உன் ஜனங்களுக்கு வாக்குறுதி
அளித்த தேசத்தைக் கொடுப்பேன். அத்தேசம்
என்றும் அவர்களுக்குரியதாகும்’ என்று நீர்
வாக்குறுதி தந்தீர்” என்றான்.
14எனவே, கர்த்தர் ஜனங்களுக்காக
மனஸ்தாபப்பட்டார். தான் செய்வதாகக்
கூறிய செயலைக் கர்த்தர் செய்யவில்லை,
அவர் ஜனங்களை அழிக்கவில்லை.
15பின்பு மோசே மலையிலிருந்து
இறங்கினான். உடன்படிக்கை எழுதப்பட்ட
இரண்டு கற்பலகைகளை அவன் கையில்
ஏந்திவந்தான். கற்பலகைகளின் முன்புறமும்,
பின்புறமும் அந்தக் கட்டளைகள் எழுதப்
பட்டிருந்தன. 16தேவனே அக்கற்களை
உண்டாக்கி, அக்கற்களின் மீது கட்டளை
களை எழுதியிருந்தார்.
17மலையிலிருந்து இறங்கியபோது பாளை
யத்திலிருந்து பெரும் சத்தத்தை யோசுவா
கேட்டான். யோசுவா மோசேயை நோக்கி:
“நம் பாளையத்தில் யுத்த சத்தம்
எழும்புகிறது” என்றான்.
18மோசே பதிலாக, “இது வெற்றியால்
ஒரு படை எழுப்பும் சத்தமல்ல. தோல்வி
யால் ஒரு படை எழுப்பும் கூக்குரலும்
அல்ல. நான் கேட்டது இசையின் சத்தமே”
என்றான்.
19மோசே பாளையத்திற்கு அருகே வந்
தான். அவன் பொன் கன்றுக்குட்டியையும்
ஜனங்கள் நடனமாடுவதையும் கண்டு, மிகுந்த
கோபங்கொண்டான். அவன் கற்பலகைகளை
தரையில் வீசி எறிந்தான். மலை
அடிவாரத்தில் அவை சுக்கு நூறாக
உடைந்து சிதறின. 20பின்பு மோசே ஜனங்
கள் செய்த கன்றுக்குட்டியை உடைத்து,
அதை நெருப்பில் போட்டு உருக்கினான்.
பொன்னைத் தூளாகுமட்டும் அரைத்து
அதைத் தண்ணீரில் கரைத்தான். அந்த
தண்ணீரை பருகும்படி இஸ்ரவேல்
ஜனங்களை வற்புறுத்தினான்.
21மோசே ஆரோனை நோக்கி, “இந்த
ஜனங்கள் உனக்குச் செய்ததென்ன? ஏன் இந்த
மாபெரும் கேடான பாவத்தைச்
செய்யும்படியாக அவர்களை வழிநடத்தி
னாய்?” என்று கேட்டான்.
22ஆரோன், “கோபம் கொள்ளாதிரும், இந்த
ஜனங்கள் எப்போதுமே பாவம் செய்யத்

தயாராக இருக்கிறார்கள் என்பது உமக்குத்
தெரியும் அல்லவா” என்று பதில் கூறினான்.
23 ஜனங்கள் என்னிடம், ‘மோசே எங்களை
எகிப்திலிருந்து வழிநடத்தினான். ஆனால்
அவருக்கு என்ன நேர்ந்தது என்று
எங்களுக்குத் தெரியவில்லை. எனவே,
எங்களை வழிநடத்துவதற்கு தெய்வங்களைச்
செய்’ என்றார்கள். 24 நான் அவர்களிடம்,
‘உங்களிடம் பொன் காதணிகள் இருந்தால்,
அவற்றை என்னிடம் கொடுங்கள்’ என்
றேன். ஜனங்கள் பொன்னை என்னிடம்
கொடுத்தார்கள். நான் பொன்னை நெருப்பில்
போட்டேன். நெருப்பிலிருந்து கன்றுகுட்டி
வந்தது!” என்று பதிலுரைத்தான்.
25 ஜனங்கள் கட்டுப்பாட்டை மீறி அநாகரீக
மாக நடக்கும்படியாக ஆரோன் அவர்களை
அனுமதித்ததை மோசே கண்டான். ஜனங்கள்
காட்டுமிராண்டித்தனமாக நடந்து கொண்ட
தை அவர்களின் பகைவர்கள் கண்டனர்.
26 எனவே, பாளையத்தின் நுழைவாயிலில்
மோசே நின்றான். மோசே “கர்த்தரைப்
பின்பற்ற விரும்புகிறவர்கள் என்னிடம்
வாருங்கள்” என்று சொன்னான். லேவியின்
குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் மோசே
யிடம் ஓடினார்கள்.
27 பின்பு மோசே அவர்களை நோக்கி,
“இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்
சொல்வதை நான் உங்களுக்குக் கூறுவேன்:
‘ஒவ்வொருவனும் வாளை எடுத்துக்
கொண்டு பாளையத்தின் ஒரு புறத்திலிருந்து
மறுபுறம் வரைக்கும் போய் வாருங்கள்.
ஒவ்வொருவனும் தனது சகோதரனையும்
நண்பனையும், அயலானையும் கொல்ல
வேண்டி வந்தாலும் அவர்களைக் கொல்ல
வேண்டும்” என்றான்.
28 லேவி குடும்பத்தின் ஜனங்கள்
மோசேக்குக் கீழ்ப்படிந்தனர். அன்றையதினம்
சுமார் 3,000 இஸ்ரவேல் ஜனங்கள் செத்தனர்.
29 மோசே, “தமக்குப் பணிவிடை செய்ய
கர்த்தர் இன்று உங்களைத் தெரிந்தெடுத்தார்.
ஏனென்றால், இன்றைக்கு உங்களில்
ஒவ்வொருவரும் அவனது மகனுக்கு எதிராக
வும், சகோதரனுக்கு எதிராகவும் இருந்தீர்கள்.
எனவே இன்று அவர் உங்கள்மேல்
ஆசீர்வாதம் பொழிவார்” என்றான்.
30 மறுநாள் காலையில் மோசே
ஜனங்களை நோக்கி, “நீங்கள் கொடிய
பாவம் செய்துள்ளீர்கள்! நான் கர்த்தரிடம்
மேலே போவேன். உங்கள் பாவத்தை
அவர் மன்னிப்பதற்காக நான் ஏதாவது
செய்யக்கூடுமா எனப்பார்ப்பேன்” என்றான்.
31 எனவே மோசே கர்த்தரிடம் மீண்டும்
சென்று, “தயவு செய்து நான் கூறுவதைக்
கேளும்! இந்த ஜனங்கள் பெரும்பாவம்
செய்தனர். அவர்கள் பொன்னால் ஒரு
தேவனைச் செய்தனர். 32 இப்போது
அவர்களின் இப்பாவத்தை மன்னித்து விடும்!
நீர் அவர்களை மன்னிக்காவிட்டால், உமது
புத்தகத்திலிருந்து எனது பெயரை கிறுக்கி
விடும்” என்றான்.
33 ஆனால் கர்த்தர் மோசேயை நோக்கி,
“எனக்கெதிராக பாவம் செய்தோரின்
பெயர்களை மட்டுமே நான் அழிப்பேன்.
34 எனவே நீ கீழே போய் நான் சொல்கிற
இடத்திற்கு ஜனங்களை வழிநடத்து. எனது
தூதன் உங்களுக்கு முன்பாகச் சென்று
வழிநடத்துவார். பாவம் செய்கிற மனிதர்கள்
தண்டிக்கப்படும் காலம் வரும்போது
அவர்கள் தண்டிக்கப்படுவார்கள்” என்றார்.
35 எனவே கர்த்தர் ஒரு கொடிய நோய்
ஜனங்களை வாதிக்கும்படியாகச் செய்தார்.
ஆரோனிடம் பொன் கன்றுக்குட்டியைச்
செய்யுமாறு கேட்டதால் அவர் இவ்வாறு
செய்தார்.

### “நான் உங்களோடு வரமாட்டேன்”

33 பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி,
“நீயும், நீ எகிப்திலிருந்து வழிநடத்திய
ஜனங்களும் இவ்விடத்தை விட்டுப் புறப்பட
வேண்டும். ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு
ஆகியோருக்குக் கொடுப்பதாக நான் வாக்கு
றுதி அளித்த தேசத்திற்குச் செல்லுங்கள்.
அவர்களின் சந்ததிக்கு அத்தேசத்தைக்
கொடுப்பதாகச் சொன்னேன். 2 எனவே
உங்களுக்கு முன்பாகச் செல்வதற்கு ஒரு
தூதனை அனுப்புவேன். கானானியரையும்,
எமோரியரையும், ஏத்தியரையும், பெரிசி
யரையும், ஏவியரையும், எபூசியரையும் நான்
தோற்கடிப்பேன். உங்கள் தேசத்தைவிட்டு
அவர்கள் போகும்படியாகச் செய்வேன்.
3 எனவே உச்சிதமான பொருட்களால்
நிரம்பியுள்ள அத்தேசத்திற்குச் செல்லுங்கள்.
ஆனால் நான் உங்களோடு வரமாட்டேன்.
நீங்கள் பிடிவாதமான ஜனங்கள். என்னை
மிகவும் கோபப்படுத்துகிறீர்கள். நான் உங்க
ளோடு வந்தால் ஒருவேளை வழியிலேயே
உங்களை அழித்துவிடுவேன்” என்றார்.
4 ஜனங்கள் இந்தச் செய்தியைக் கேட்டுக்
கவலையடைந்தனர். அவர்கள் ஆபரணங்கள்
அணிவதை விட்டுவிட்டனர். 5 ஏனெனில்
கர்த்தர் மோசேயை நோக்கி, “இஸ்ரவேல்
ஜனங்களுக்குக் கூறு, ‘நீங்கள் பிடிவாதமான
ஜனங்கள். சிறிதுகாலம் உங்களோடு வந்
தாலும் நான் உங்களை அழித்து விடக்கூடும்.
நான் உங்களுக்கு என்ன செய்வதென
முடிவெடுக்கும்வரை உங்கள் அணி
கலன்ளைக் கழற்றிவிடுங்கள்’ என்று கூறு”
என்றார். 6 (சீனாய்) ஓரேப் மலையருகே
இஸ்ரவேல் ஜனங்கள் ஆபரணங்களை
அணிவதை விட்டு விட்டனர்.

### தற்காலிக ஆசரிப்புக் கூடாரம்

7 பாளையத்துக்கு வெளியே சற்று
தூரத்தில் மோசே ஒரு கூடாரத்தை எடுத்துச்
செல்வது வழக்கம். மோசே அதை

“ஆசரிப்புக் கூடாரம்”* என்று அழைத்தான்.
கர்த்தரிடமிருந்து எதையாவது கேட்டறிய
விரும்புகிறவன் பாளையத்துக்கு வெளியே
ஆசரிப்புக் கூடாரத்திற்குச் செல்வான்.
8மோசே அக்கூடாரத்திற்குப் போகும்
போதெல்லாம் ஜனங்கள் அவனைக் கவ
னித்து நோக்கினார்கள். ஜனங்கள் அவரவர்
கூடாரத்தின் வாயிலில் வந்து நின்று,
மோசே ஆசரிப்புக் கூடாரத்திற்குள்
நுழைவதைப் பார்த்தனர். 9மோசே
கூடாரத்திற்குப் போகும்போதெல்லாம் நீண்ட
மேகம் இறங்கி வந்து கூடாரத்தின் வாசலில்
தங்கும். கர்த்தர் மோசேயோடு பேசுவார்.
10ஜனங்கள் கூடார வாசலில் மேகத்தைப்
பார்க்கும்போதெல்லாம் அவரவர் கூடார
வாசல்களுக்குச் சென்று கீழே குனிந்து
கர்த்தரை வணங்கினார்கள்.
11இவ்வாறு கர்த்தர் மோசேயுடன் நேருக்கு
நேராக நின்று பேசினார். ஒரு மனிதன்
தன் நண்பனிடம் பேசுவதுபோல் கர்த்தர்
மோசேயுடன் பேசினார். கர்த்தரிடம்
பேசியபிறகு, மோசே தங்குமிடத்துக்குத்
திரும்பினான். ஆனால் அவனது உதவி
யாளன் எப்போதும் கூடாரத்திலேயே
இருந்தான். அந்த உதவியாளன் நூனின்
மகனாகிய யோசுவா என்பவனாவான்.

### கர்த்தருடைய மகிமையை மோசே காண்கிறான்.

12மோசே கர்த்தரை நோக்கி, “இந்த
ஜனங்களை வழிநடத்துமாறு நீர் சொன்னீர்.
ஆனால் என்னோடு வருபவர் யார்
என்பதை நீர் கூறவில்லை. நீர் என்னிடம்,
‘உன்னை நன்கு அறிவேன். உன்னைக்
குறித்துத் பிரியமாயிருக்கிறேன்.’ என்றீர்.
13நான் உண்மையாகவே உம்மை திருப்திப்
படுத்தியிருந்தால் உமது வழிகளை எனக்குப்
போதியும். நான் உம்மை அறிந்துகொள்ள
விரும்புகிறேன். நான் தொடர்ந்து உம்மைப்
பிரியப்படுத்துவேண். இவர்கள் உமது ஜனங்
கள் என்பதை நினைவுகூரும்” என்றான்.
14கர்த்தர், “நான் உன்னோடுகூட வரு
வேன். உன்னை வழிநடத்துவேன்”*
என்றார்.
15அப்போது மோசே கர்த்தரை நோக்கி,
“நீர் வழிநடத்தவில்லையெனில், என்னை
இவ்விடத்திலிருந்து அனுப்பாதிரும். 16மே
லும், என்னிடமும் இந்த ஜனங்களிடமும்
திருப்தியடைந்துள்ளீர் என்பதை நான்
எவ்வாறு அறிவேன்? நீர் எங்களோடு
வந்தால், அதை நிச்சயமாக அறிவோம்.
இல்லையென்றால், பூமியிலுள்ள மற்ற
மனிதருக்கும் எங்களுக்கும் வித்தியாசமே
யில்லை” என்றான்.
17அப்போது கர்த்தர் மோசேயிடம், “நீ
கேட்டபடியே நான் செய்வேன். உன்னில்
சந்தோஷம் அடைந்திருக்கிறேன், உன்னை
நான் நன்கு அறிவேன்.” என்றார்.
18அப்போது மோசே, “இப்போது உமது
மகிமையை* எனக்குக் காட்டும்” என்றான்.
19கர்த்தர், “என் பரிபூரண நன்மை உனக்கு
முன் செல்லும்படி செய்வேன். நானே
கர்த்தர், நீ கேட்கும்படி என் பெயரை
அறிவிப்பேன். நான் விரும்பும் யாருக்கும்
எனது இரக்கத்தையும், அன்பையும்
காட்டுவேன். 20ஆனால் நீ என் முகத்தைப்
பார்க்க முடியாது. எந்த மனிதனும்
என்னைப் பார்த்து பின்பு உயிரோடு
இருக்க முடியாது.
21“எனக்கருகிலுள்ள ஒரு இடத்தில் ஒரு
பாறை உள்ளது. நீ அப்பாறையின் மேல்
ஏறி நில். 22எனது மகிமை அவ்விடத்தைக்
கடந்து செல்லும். நான் உன்னைத்
தாண்டும்போது உன்னை அந்தப் பாறையின்
வெடிப்பில் வைத்து என் கரங்களால்
உன்னை மூடுவேன். 23பின் எனது கைகளை
விலக்குவேன். நீ என் முதுகைக் காண்பாய்,
ஆனால் நீ என் முகத்தைக் காணமாட்டாய்”
என்றார்.

### புதிய கற்பலகைகள்

34 கர்த்தர் மோசேயை நோக்கி,
“உடைந்துபோன முதல் இரண்டு
பலகைகளைப் போலவே வேறே இரண்டு
கற்பலகைகளைச் செய். முதல் இரண்டு
கற்களிலும் எழுதப்பட்ட அதே வார்த்தை
களை நான் இந்தக் கற்களிலும் எழுதுவேன்.
2நாளை காலையில் தக்க ஆயத்தத்துடன்
சீனாய் மலைக்கு வா. மலையின்மேல்
என் முன்னே வந்து நில். 3உன்னோடு
வேறுயாரும் வரக்கூடாது. யாரும் மலையில்
காணப்படக் கூடாது. உங்கள் மிருகங்களோ,
ஆட்டு மந்தைகளோ எதுவும் மலையடி
வாரத்தில் புல்லை உண்பதற்குக்கூட
அனுமதிக்கக்கூடாது” என்றார்.
4எனவே, முதல் இரண்டு கற்பலகை
களைப்போலவே வேறே இரண்டு கற்பலகை
களை மோசே உருவாக்கினான். மறுநாள்
அதிகாலையில் சீனாய் மலையின் மேல்
ஏறிச் சென்றான். கர்த்தர் கட்டளை
யிட்டபடியே மோசே எல்லாவற்றையும்
செய்தான். மோசே இரண்டு கற்பலகை
களையும் தன்னோடு எடுத்துச் சென்றான்.
5மோசே மலையின்மீது ஏறியவுடன், கர்த்தர்

---

**ஆசரிப்புக் கூடாரம்** பெரிய ஆசரிப்புக் கூடாரம் உண்டாக்கப்படும் வரைக்கும் மோசே இந்த சிறிய ஆசரிப்புக் கூடாரத்தை பயன்படுத்தியிருக்கலாம்.

**உன்னை வழிநடத்துவேன்** அல்லது ‘‘உனக்கு இளைப்பாறுதல் தருவேன்.

**மகிமை** கர்த்தர் தம்மை வெளிப்படுத்தும்படி பயன்படுத்திய முறைகளில் ஒன்று-‘‘மகா பிரகாசமான ஒளிக்கதிர்”.

மேகத்தில் அவனிடம் இறங்கி வந்து, தமது
பெயரை மோசேயிடம் சொன்னார்.*
6கர்த்தர் மோசேக்கு முன்னர் கடந்து
சென்று, “யேகோவா என்னும் கர்த்தர்,
இரக்கமும் தயவும் உள்ள தேவன். கர்த்தர்
எளிதில் கோபம் கொள்ள மாட்டார். கர்த்தர்
அன்பு மிகுந்தவர், கர்த்தர் நம்பிக்கைக்கு
ரியவர். 7ஆயிரம் தலைமுறைவரைக்கும்
கர்த்தர் தமது இரக்கத்தைக் காட்டுவார்.
ஜனங்கள் செய்கிற தவறுகளைக் கர்த்தர்
மன்னிப்பார். ஆனால் குற்றவாளிகளைத்
தண்டிக்க கர்த்தர் மறப்பதில்லை. கர்த்தர்
குற்றவாளிகளை மட்டும் தண்டிக்காமல்
அவர்களின் பிள்ளைகளையும், பேரக்
குழந்தைகளும், அவர்களின் பிள்ளைகளை
யும், அவர்கள் செய்த தீயகாரியங்களுக்
காகத் தண்டிப்பார்” என்றார்.
8உடனே மோசே கீழே தரையில் குனிந்து
கர்த்தரைத் தொழுதுகொண்டான். மோசே,
9“கர்த்தாவே நீர் என்னோடு சந்தோஷமாக
இருக்கிறீர் என்பது உண்மையானால்
தயவுசெய்து எங்களோடு வாரும். இவர்கள்
பிடிவாதமான ஜனங்கள் என்பதை அறி
வேன். ஆனால் நாங்கள் செய்த தீயசெயல்
களுக்கு எங்களை மன்னித்தருளும்! உமது
ஜனங்களாக எங்களை ஏற்றுக்கொள்ளும்”
என்றான்.
10அப்போது கர்த்தர், “உன் ஜனங்கள்
எல்லாரோடும் இந்த உடன்படிக்கையைச்
செய்கிறேன். பூமியிலுள்ள வேறெந்த ஜனத்
துக்கும் செய்யாத வியக்கத்தக்க காரியங்
களை நான் உங்களிடம் செய்வேன்.
உன்னோடு இருக்கிற ஜனங்கள் நான் மிக
உன்னதமான கர்த்தர் என்பதைக் காண்பார்
கள். நான் உனக்காகச் செய்யப்போகும்
அற்புதங்களை ஜனங்கள் காண்பார்கள்.
11நான் இன்றைக்கு உங்களுக்கு இடும்
கட்டளைகளுக்குக் கீழ்ப்படியுங்கள். உங்கள்
நாட்டிலிருந்து உங்கள் பகைவர்கள் போகும்
படி செய்வேன். எமோரியரையும், கானானி
யரையும், ஏத்தியரையும், பெரிசியரையும்,
ஏவியரையும், எபூசியரையும் வெளியேற்று
வேன். 12எச்சரிக்கையாயிருங்கள், நீங்கள்
நுழையும் இந்தத் தேசத்தின் ஜனங்களோடு
எந்த ஒப்பந்தத்தையும் செய்யாதீர்கள்! அந்த
ஜனங்களோடு ஒப்பந்தம் செய்தால் அது
உங்களுக்குத் தொல்லையைத் தரும். 13ஆகை
யால் அவர்கள் பலிபீடங்களை அழித்துப்
போடுங்கள். அவர்கள் தொழுதுகொள்ளும்
கற்களை உடையுங்கள். அவர்கள்
விக்கிரகங்களை நொறுக்குங்கள். 14வேறெந்த
தேவனையும் தொழுதுகொள்ளாதீர்கள். நான்
‘யேகோவா’ என்னும் வைராக்கியமுள்ள
கர்த்தர். இதுவே என் பெயர். நான் எல்கானா
– வைராக்கியமுள்ள தேவன்.
15“இத்தேசத்து ஜனங்களோடு எந்தவொரு
ஒப்பந்தமும் செய்யாதீர்கள். அவ்வாறு
செய்தால் அவர்கள் தங்கள் தெய்வங்களைத்
தொழுதுகொள்ளும்போது நீங்களும் சேர்ந்து
கொள்ள அவர்கள் உங்களை அழைப்
பார்கள். பிறகு அவர்கள் செலுத்திய
பலிகளை நீங்கள் உண்பீர்கள். 16அவர்களின்
மகள்களை உங்கள் மகன்களுக்காக நிச்சயம்
செய்யக்கூடும். அப்பெண்கள் பொய்த் தேவர்
களை சேவிக்கிறார்கள். உங்கள் மகன்களை
ளயும் அவ்வாறே பொய்த் தேவர்களை
தொழுதுகொள்ள வழிநடத்தக்கூடும்.
17“விக்கிரகங்களைச் செய்யாதீர்கள்.
18“புளிப்பில்லா ரொட்டியின் பண்டிகை
யைக் கொண்டாடுங்கள். உங்களுக்கு நான்
கட்டளையிட்டபடி ஏழு நாட்கள் புளிப்பில்
லாமல் செய்த ரொட்டிகளை உண்ணுங்கள்.
நான் தெரிந்து கொண்டபடி ஆபிப்
மாதத்திலேயே இதைச் செய்யுங்கள். ஏனெ
னில், அந்த மாதத்திலேயே நீங்கள் எகிப்தை
விட்டு வந்தீர்கள்.
19“ஒரு பெண்ணிடம் பிறக்கும் முதல்
குழந்தை எப்போதும் எனக்குரியது. உங்கள்
மிருகங்களின் ஆடுகளின் முதற்பேறானவை
யும் எனக்குரியவை. 20கழுதையின் முதல்
ஈற்றை நீங்கள் வைத்துக்கொள்ள விரும்பி
னால் அதை ஒரு ஆட்டுக்குட்டியைக்
கொடுத்து திரும்பப் பெறவேண்டும்.
இவ்வாறு ஆட்டுக்குட்டியைக் கொடுத்து
அக்கழுதையை மீட்காவிட்டால் அப்போது
அந்தக் கழுதையின் கழுத்தை முறித்துப்
போட வேண்டும். உங்கள் முதற்பேறான
மகன்கள் அனைவரையும் நீங்கள் என்னிட
மிருந்து மீண்டும் வாங்கவேண்டும். காணிக்
கையின்றி யாரும் என் முன்னிலையில்
வரக்கூடாது.
21“நீங்கள் ஆறு நாட்கள் உழையுங்கள்.
ஏழாம் நாள் நீங்கள் ஓய்வெடுக்க வேண்டும்.
விதைப்பு, அறுவடை காலங்களிலும் நீங்கள்
ஓய்வு நாளில் ஓய்வெடுக்க வேண்டும்.
22“வாரங்களின் பண்டிகையை (பெந்தெ
கோஸ்தே) கொண்டாடுங்கள். கோதுமை
அறுவடையின் முதல் தானியத்தை அதற்குப்
பயன்படுத்துங்கள். இலையுதிர் காலத்தின்
போது* அறுப்பின் பண்டிகையைக்*
கொண்டாடுங்கள்.
23“ஆண்டில் மூன்று முறை உங்கள்
ஜனங்கள் இஸ்ரவேலரின் தேவனாயிருக்கிற,
கர்த்தராகிய ஆண்டவரின் சந்நிதானத்திற்குச்
செல்ல வேண்டும்.

---

**தமது பெயரை மோசேயிடம் சொன்னார்** எழுத்தின் பிராகாரமாக, ‘‘அவன் கர்த்தருடைய நாமத்தைச் சொல்லிக் கூப்பிட்டான்” மோசே கர்த்தரை தொழுதுகொண்டான் அல்லது கர்த்தர் மோசேயிடம் தமது நாமத்தை குறித்து பேசினார் எனப் பொருள்படும்.

**இலையுதிர் காலம்** எழுத்தின் பிராகாரமாக ‘‘வருடத்தின் மாற்றத்தைக் குறிக்கும்.

**அறுப்பின் பண்டிகை** ‘‘அறுவடை விழா அல்லது சக்கோத்” என்றுகூட அழைக்கப்படும்.

24“உங்கள் தேசத்திற்குள் நீங்கள் போகும்
போது, அத்தேசத்திலிருந்து உங்கள் பகைவர்
களை வெளியேற்றுவேன். உங்கள் எல்லை
களை விரிவுபடுத்தி உங்கள் தேசத்தின்
அளவை அதிகரிக்கச் செய்வேன். உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு முன் ஓராண்டில்
மூன்று முறை செல்லுங்கள். அப்போது,
யாரும் உங்கள் நாட்டை எடுத்துக்கொள்ள
முயலமாட்டார்கள்.
25“பலியின் இரத்தத்தை எனக்குப்
படைக்கும்போதெல்லாம் புளிப்பை அத
னோடு படைக்காதீர்கள்.
“பஸ்கா உணவிலுள்ள இறைச்சியை
மறுநாள் காலைவரைக்கும் வைக்காதீர்கள்.
26“நீங்கள் அறுவடைசெய்யும் முதல்
தானியங்களைக் கர்த்தருக்குக் கொடுங்கள்.
உங்கள் தேவனாகிய கர்த்தருடைய வீட்
டிற்கு அவற்றைக் கொண்டு வாருங்கள்.
“இளம் ஆட்டை அதன் தாய்ப்பாலில்
ஒருபோதும் சமைக்காதீர்கள்” என்றார்.
27மீண்டும் கர்த்தர் மோசேயிடம், “நான்
உங்களுக்குக் கூறிய எல்லாக் காரியங்
களையும் எழுதிக்கொள். உன் னோடும்,
இஸ்ரவேல் ஜனங்களோடும் நான் செய்த
உடன்படிக்கை இதுவேயாகும்” என்றார்.
28மோசே 40 பகலும் 40 இரவும்
கர்த்தரோடு தங்கினான். மோசே எந்த
உணவையும் உண்ணவோ, தண்ணீரைப்
பருகவோ இல்லை. இரண்டு கற்பலகைகளில்
உடன்படிக்கையை (பத்துக் கட்டளைகளை)
மோசே எழுதினான்.

### மோசேயின் பிரகாசமான முகம்

29பின் மோசே சீனாய் மலையிலிருந்து
உடன்படிக்கை எழுதப்பட்ட இரண்டு
கற்பலகைகளையும் எடுத்துக் கொண்டு
இறங்கி வந்தான். கர்த்தரோடு பேசியதால்
அவன் முகம் பிரகாசித்தது. ஆனால் மோசே
அதனை அறியவில்லை. 30ஆரோனும்
இஸ்ரவேல் ஜனங்களும் மோசேயின் முகம்
பிரகாசிப்பதைக் கண்டனர். எனவே
அவனிடம் செல்ல பயந்தனர். 31ஆனால்
மோசே அவர்களை அழைத்தான். எனவே,
ஆரோனும், ஜனங்களின் தலைவர்களும்
மோசேயிடம் சென்றனர். மோசே அவர்
களோடு பேசினான். 32அதன் பிறகு இஸ்ர
வேல் ஜனங்கள் எல்லோரும் மோசேயிடம்
வந்தனர். சீனாய் மலையில் கர்த்தர்
அவனிடம் கொடுத்த கட்டளைகளை மோசே
அவர்களுக்குக் கொடுத்தான்.
33ஜனங்களிடம் மோசே பேசி முடித்த
பின்பு அவன் தன் முகத்தில் ஒரு முக்காடு
போட்டுக்கொண்டான். 34மோசே கர்த்தருக்கு
முன் பேசச் செல்லும்போது அதை
அகற்றினான். அப்புறம் கர்த்தர் கூறிய
கட்டளைகளை அவன் இஸ்ரவேல் ஜனங்
களிடம் வந்து கூறினான். 35மோசேயின்,
முகம் பிரகாசிப்பதை ஜனங்கள் கண்டனர்.
மீண்டும் மோசே முகத்தை மூடிக்
கொண்டான். மறுமுறை கர்த்தரை சந்தித்துப்
பேசுவதற்குச் செல்லும் வரைக்கும் மோசே
அவனது முகத்தை மூடி வைத்திருந்தான்.

### ஓய்வு நாளைப் பற்றிய விதிகள்

35 மோசே இஸ்ரவேல் ஜனங்கள்
எல்லோரையும் ஒன்றாகக் கூட்டி
அவர்களை நோக்கி, “நீங்கள் செய்யவேண்டு
மெனக் கர்த்தர் கட்டளையிட்ட காரியங் களை
நான் உங்களுக்குக் கூறுவேன்:
2“ஆறு நாட்கள் நீங்கள் வேலை
செய்யலாம். ஏழாவது நாள் நீங்கள்
ஓய்வெடுப்பதற்குரிய மிக விசேஷ நாளாகும்.
அந்த நாளில் ஓய்வெடுப்பதன் மூலம்
கர்த்தரை மகிமைப்படுத்துவீர்கள். ஏழாவது
நாளில் வேலை செய்கிற எவனும்
கொல்லப்பட வேண்டும். 3ஓய்வு நாளில்
நீங்கள் வாழுமிடங்களில் நெருப்பை
மூட்டவும் கூடாது” என்றான்.

### பரிசுத்தக் கூடாரத்திற்கான பொருட்கள்

4மோசே இஸ்ரவேலின் எல்லா ஜனங்
களுக்கும் கூறியதாவது, “இதுவே கர்த்தர்
கட்டளையிட்டவை: 5கர்த்தருக்காக விசேஷ
காணிக்கைகளைச் சேர்த்து வையுங்கள்.
என்ன காணிக்கையைக் கொடுக்கவேண்டும்
என்பதை மனதுக்குள்ளேயே ஒவ்வொருவ
ரும் தீர்மானம் செய்து கொள்ளுங்கள்.
பின் அந்த காணிக்கையைக் கர்த்தருக்குக்
கொண்டுவர வேண்டும். பொன், வெள்ளி,
வெண்கலம் ஆகியவற்றைக் கொண்டு
வாருங்கள். 6இளநீலம், இரத்தாம்பரம், சிவப்பு
ஆகிய நூலையும், வெள்ளாட்டு மயிராலான
கம்பள துணியையும் 7சிவப்புத் தோய்த்த
கடாவின் தோலையும், மெல்லிய தோலை
யும், சீத்திம் மரத்தையும், 8குத்து விளக்கு
களுக்கு எண்ணெயையும், தூபம்
காட்டுவதற்கு நறுமணப் பொருள்களையும்
கொண்டு வாருங்கள். 9மேலும் கோமேதகக்
கல்லையும், ஏபோத்திலும் நியாயத்தீர்ப்பு
மார்ப்பதக்கத்திலும் வைக்க வேண்டிய
கற்களையும் கொண்டு வாருங்கள்.
10“கர்த்தர் கட்டளையிட்ட பொருள்களை
யெல்லாம் திறமை மிகுந்த கைவேலைக்காரர்
அனைவரும் செய்ய வேண்டும்: 11பரிசுத்தக்
கூடாரம், அதன் வெளிப்பிரகாரம், அதன்
மேற்பரப்பு; கொக்கிகள், பலகைகள்,
தாழ்ப்பாள்கள், தூண்கள், அடித்தளங்கள்,
12பரிசுத்தப் பெட்டி, அதன் தண்டுகள்,
கிருபாசனம், பெட்டி இருக்குமிடத்தை மூடும்
திரை, 13மேசையும் அதன் தண்டுகளும்,
மேசையின் மீதிருக்கும் பொருள்கள்,
மேசையின்மீது வைக்க வேண்டிய விசேஷ
ரொட்டி, 14வெளிச்சத்திற்கான குத்து
விளக்குத் தண்டு, அதனோடு பயன்படுத்
தப்படும் பொருட்கள், விளக்குகள், விளக்
குக்கு எண்ணெய், 15நறுமணப் பொருள்

களை எரிக்கும் பீடம், அதன் தண்டுகள்,
அபிஷேக எண்ணெய், நறுமணப்புகைப்
பொருள், பரிசுத்தக் கூடாரத்தின் நுழை
வாயிலை மூடும் திரை, 16தகன பலிபீடம்,
வெண்கலத் தளம், அதின் தண்டுகள்,
பலிபீடத்தில் பயன்படும் பொருட்கள்,
வெண்கலத் தொட்டிகள், அதன் பீடம்,
17பிரகாரத்தைச் சுற்றிலுமுள்ள திரைகள்,
அவற்றிற்கான தூண்களும், பீடங்களும்,
பிரகாரத்திற்கான நுழை வாயிலை மூடும்
திரை, 18கூடாரத்தைத் தாங்கி நிற்க உதவும்
வெண்கல முளைகள், திரைகளின் சுவர்கள்,
வெளிப்பிரகாரத்தின்முளைகள், முளைகளில்
கட்டப்படும் கயிறுகள், 19பரிசுத்த இடத்தில்
ஆசாரியர் அணியும்பொருட்டு விசேஷமாக
நெய்த ஆடைகள். இந்த விசேஷ ஆடைகள்
ஆசாரியனான ஆரோனும் அவன் மகன்
களும் அணிவதற்குரியவை. அவர்கள் ஆசா
ரியராகப் பணியாற்றும்போது இந்த விசேஷ
ஆடைகளை அணிவார்கள்” என்றான்.

### ஜனங்களின் சிறப்புக் காணிக்கை

20இஸ்ரவேல் ஜனங்கள் மோசேயிட
மிருந்து புறப்பட்டு சென்றனர். 21கர்த்தருக்கு
காணிக்கைகளைக் கொடுக்க விரும்பிய
வர்கள் அனைவரும் கொண்டு வந்தனர்.
ஆசரிப்புக் கூடாரம், அதிலுள்ள பொருட்கள்,
விசேஷ ஆடைகள் ஆகியவற்றைச் செய்வ
தற்கு இப்பொருட்கள் பயன்படுத்தப்பட்டன.
22பலவகை பொன் அணிகலன்களைக்
கொடுக்க விரும்பிய தாராள மனமுள்ள
ஆண்களும், பெண்களும் அவற்றைக்
கொண்டு வந்தனர். அவர்கள் ஊசிகள்,
காதணிகள், மோதிரங்கள், மற்றும் பிற
அணிகலன்களைக் கொண்டு வந்தார்கள்.
கர்த்தருக்காக தம் ஆபரணங்களை அவர்கள்
கொடுத்தனர். இது கர்த்தருக்கு விசேஷ
காணிக்கையாகும்.

23மெல்லிய துகில், மற்றும் இளநீல,
இரத்தாம்பர, சிவப்பு நூல் வைத்திருந்த
வர்கள் அனைவரும் அவற்றைக் கர்த்தருக்
காகக் கொண்டு வந்தார்கள். மேலும் ஆட்டுத்
தோலோ, சிவப்புச் சாயமிட்ட செம்மறி
யாட்டுத் தோலோ அல்லது பதனிடப்பட்ட
மெல்லிய தோலோ வைத்திருந்தவர்கள்
அதைக் கர்த்தருக்காகக் கொண்டு வந்தனர்.
24வெள்ளி, வெண்கலம் ஆகியவற்றைக்
கொடுக்க விரும்பியவர்கள், கர்த்தருக்குக்
காணிக்கையாகக் கொண்டு வந்தனர். சீத்திம்
மரத்தை வைத்திருந்தவர்கள் அதைக்
கர்த்தருக்குக் கொண்டுவந்து கொடுத்தார்கள்.
25கலைத்திறன் வாய்ந்த ஒவ்வொரு
பெண்ணும் மெல்லிய துகில், இளநீலம்,
இரத்தாம்பரம், சிவப்பு நிற நூல்களையும்
தயாரித்தனர். 26திறமை மிகுந்தவர்களும்,
உதவிசெய்ய விரும்பிய எல்லா பெண்களும்
வெள்ளாட்டு மயிரால் ஆடைகளைச்
செய்தனர்.

27தலைவர்கள் கோமேதகக் கற்களையும்
பிற விலையுயர்ந்த கற்களையும் கொண்டு
வந்தனர். ஆசாரியரின் ஏபோத்திலும்
,நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்திலும் இவை
வைக்கப்பட்டன. 28ஜனங்கள் தூபவர்க்க
பொருட்களையும், ஒலிவ எண்ணெயையும்
கொண்டு வந்தனர். நறுமணப் பொருள்
களுக்கும், அபிஷேக எண்ணெய்க்கும், குத்து
விளக்கின் எண்ணெய்க்கும் இவை பயன்
படுத்தப்பட்டன.

29உதவிசெய்ய விரும்பிய இஸ்ரவேல்
ஜனங்கள் எல்லோரும் கர்த்தருக்கு
அன்பளிப்புகளைக் கொண்டு வந்தனர்.
இவ்வன்பளிப்புகளை அவர்கள் விரும்பிக்
கொடுத்ததால் தாராளமாகக் கொடுத்தார்கள்.
கர்த்தர் மோசேக்கும், அவனது ஜனங்
களுக்கும் செய்யுமாறு கட்டளையிட்ட
எல்லாப் பொருட்களையும் செய்வதற்கு
இப்பொருள்கள் பயன்படுத்தப்பட்டன.

### பெசலெயேலும் அகோலியாபும்

30பின் மோசே இஸ்ரவேல் ஜனங்களை
நோக்கி, “பாருங்கள், கர்த்தர் யூதாவின்
கோத்திரத்தைச் சேர்ந்த ஊர் என்பவனின்
குமாரனாகிய, ஊரியின் மகனான பெசலெ
யேலை தெரிந்தெடுத்துள்ளார். 31தேவ
ஆவியால் பெசலெயேலை நிரப்பியுள்ளார்.
பலவகை காரியங்களையும் செய்ய வல்ல
திறனையும், அறிவையும் அவனுக்குக்
கொடுத்திருக்கிறார். 32அவன் பொன்,
வெள்ளி, வெண்கலம் ஆகியவற்றால்
பொருள்களைச் செய்து அவற்றை வடி
வமைக்க வல்லவன். 33கற்களைச் செதுக்கி
அவற்றில் ஆபரணங்களைச் செய்ய முடியும்.
பெசலெயேலுக்கு மரவேலைகள் அனைத்
தும் தெரியும். 34பிறருக்குக் கற்பிக்கும்
படியான விசேஷ திறமைகளைக் கர்த்தர்
பெசலெயேலுக்கும், அகோலி யாபிற்கும்
(தாண் கோத்திரத்து அகிசமாகின் மகன்.)
கொடுத்திருக்கிறார். 35எல்லாவகை வேலை
களையும் செய்யும் ஆற்றலைக் கர்த்தர்
இவர்களுக்குக் கொடுத்திருக்கிறார். தச்சு,
உலோக வேலைகளையும் அவர்கள் செய்
வார்கள். இளநீலம், இரத்தாம்பரம், சிவப்பு
நூலாலும், மெல்லிய துகிலாலும் ஆடை
களைச் சித்திர வேலைப்பாடுகளோடு நெய்
வதில் வல்லவர்கள். கம்பளியையும் அவர்
களால் நெய்ய முடிந்தது.

36 “எனவே பெசலெயேல், அகோலி
யாப், மற்றும் திறமைவாய்ந்த
கலைவல்லுநர்கள் அனைவரும் சேர்ந்து
கர்த்தர் கட்டளையிட்ட வேலைகளைச்
செய்ய வேண்டும். அவர்கள் இந்த பரிசுத்த
இடத்தை எழுப்புவதற்கான கைதேர்ந்த
வேலையைச் செய்யத் தேவையான
ஞானத்தையும், அறிவையும் கர்த்தர் அந்த
மனிதருக்குக் கொடுத்திருக்கிறார்” என்றான்.

2 பின் மோசே பெசலெயேலையும்,
அகோலியாபையும் கர்த்தரால் திறமை
வழங்கப்பட்ட பிற கலைவல்லுநர்களையும்
அழைத்தான். வேலையில் உதவ விரும்பி
யதால் அவர்களும் ஒன்றாகக் கூடினார்கள்.
3 இஸ்ரவேல் ஜனங்கள் காணிக்கையாகக்
கொண்டுவந்த எல்லாப் பொருட்களையும்
மோசே இந்த ஜனங்களுக்குக் கொடுத்தான்.
தேவனின் பரிசுத்த இடத்தை எழுப்புவதற்கு
அவர்கள் அந்தப் பொருட்களைப் பயன்
படுத்தினார்கள். காலைதோறும் ஜனங்கள்
தங்கள் விருப்பதின்படி காணிக்கைகளை
கொண்டு வந்தனர். 4 பின்னர், கலைவல்லுநர்
கள் பரிசுத்த இடத்தில் தாங்கள் செய்யும்
வேலையை விட்டு மோசேயிடம் பேசு
வதற்குச் சென்றார்கள். அவர்கள், 5 “ஜனங்கள்
மிகுதியாகப் பொருட்களைக் கொண்டு
வந்துள்ளனர்! கூடார வேலையை முடிப்
பதற்குத் தேவையான பொருளைக் காட்டி
லும் அதிகமான பொருள்கள் உள்ளன!”
என்றார்கள்.
6 மோசே இந்தச் செய்தியை பாளை
யத்தைச் சுற்றிலும் அறிவித்து: “பரிசுத்த
இடத்தின் வேலைக்கு இனிமேல் எவரும்
எதையும் காணிக்கையாக தரவேண்டாம்”
என்றான். இவ்வாறு ஜனங்கள் அளவுக்க
திகமாகக் கொடுப்பதைக் கட்டாயமாக
நிறுத்த வேண்டியதாயிற்று. 7 தேவனின்
பரிசுத்த இடத்தை எழுப்புவதற்கு ஜனங்கள்
தேவைக்கு அதிகமான பொருட்களைக்
கொண்டு வந்திருந்தார்கள்.

### பரிசுத்தக் கூடாரம்

8 பரிசுத்தக் கூடாரத்தைத் திறமையுள்ளவர்
கள் அமைக்கத் தொடங்கினார்கள். மெல்லிய
துகில், இளநீலம், இரத்தாம்பரம், சிவப்பு
நூல்களாலும் அவர்கள் பத்துத் திரைகளை
உண்டாக்கினார்கள். திரைகளில் சிறகுக
ளுள்ள கேரூப் தூதர்களின் சித்திரங்களைத்
தைத்தனர். 9 ஒவ்வொரு திரையும் 28 முழ*
நீளமும் 4 முழ* அகலமுமாக ஒரே
அளவுடையதாய் அமைந்தன. 10 பணி
செய்வோர் இரண்டு வெவ்வேறு திரைகளாக
அத்திரைகளை இணைத்தனர். ஐந்து
திரைகளை ஒரே திரையாகவும், மற்றும்
ஐந்து திரைகளை இன்னொரு திரையாகவும்
இணைத்தனர். 11 ஒரு திரையின் கடைசிப்
பகுதியில் நீலத்துணியால் துளைகளைச்
செய்தனர். மற்றொரு திரையின் கடைசிப்
பகுதியிலும் அவ்வாறே செய்தனர். 12 ஒரு
திரையின் இறுதிப் பகுதியில் 50
கண்ணிகளும் மற்றொரு திரையின் இறுதிப்
பகுதியில் 50 கண்ணிகளும் இருந்தன.
அவ்வளையங்கள் எதிரெதிராக அமைந்தன.
13 பின் அவர்கள் அத்திரைகளை இணைப்
பதற்கு 50 பொன் வளையங்களைச்
செய்தனர். எனவே பரிசுத்தக் கூடாரம் ஒரே
துண்டாக இணைக்கப்பட்டது.
14 பரிசுத்தக் கூடாரத்தை மூடி மறைத்து
நிற்குமாறு அந்தத் திறமைச்சாலிகள் மற்
றொரு கூடாரத்தை அமைத்தனர். வெள்
ளாட்டின் மயிரால் பதினொரு திரைகளைச்
செய்தனர். 15 எல்லாத் திரைகளும் 30 முழ
நீளமும் 4 முழ அகலமும் கொண்ட ஒரே
அளவுடையனவாய் இருந்தன. 16 பணி
யாட்கள் ஐந்து திரைகளை ஒன்றாகவும்,
பிற ஆறு திரைகளை ஒன்றாகவும்
இணைத்தனர். 17 ஒரு திரையின் இறுதியில்
50 துளைகளை அமைத்தனர். மற்றொரு
திரையின் இறுதியிலும் அவ்வாறே
செய்தனர். 18 பணியாட்கள் 50 வெண்கல
வளையங்களை இரு திரைகளையும் சேர்த்து
ஒரே கூடாரமாக இணைப்பதற்காகச்
செய்தனர். 19 பரிசுத்தக் கூடாரத்திற்கு அவர்
கள் மேலும் இரண்டு மூடுதிரைகளை
செய்தனர். ஒரு மூடு திரை சிவப்புத்
தோய்க்கப்பட்ட ஆட்டுக்கடாவின் தோலா
லானது. மற்றொரு மூடுதிரை மெல்லிய
தோலினாலானது.
20 பிறகு அந்த வல்லுநர்கள் பரிசுத்த
கூடாரத்தைத் தாங்குவதற்காக சீத்திம் மரத்
தினால் சட்டங்களை அமைத்தனர். 21 ஒவ்
வொரு சட்டமும் 10 முழ* நீளமும் 1 1/2
முழ* அகலமும் உடையதாய் இருந்தது.
22 இரண்டு பக்கத்திலும் தூண்கள் குறுக்குத்
துண்டுகளால் இணைக்கப்பட்டு ஒவ்வொரு
சட்டமும் அமைக்கப்பட்டது. பரிசுத்தக்
கூடாரத்தின் ஒவ்வொரு சட்டமும் அவ்வாறு
அமைந்தது. 23 பரிசுத்தக் கூடாரத்தின்
தெற்குப்புறத்திற்கு 20 சட்டங்களைச்
செய்தனர். 24 பின் அந்தச் சட்டங்களுக்கு
40 வெள்ளி பீடங்களைச் செய்தனர்.
ஒவ்வொரு சட்டத்திற்கும் இரண்டு பீடங்கள்
இருந்தன. 25 அவர்கள் மறுபக்கமாகிய
(வடபுறத்திற்கு) 20 சட்டங்களைச் செய்
தார்கள். 26 ஒவ்வொரு சட்டத்திற்கும் இரண்டு
பீடங்களாக 20 சட்டங்களுக்கு 40 வெள்ளி
பீடங்களைச் செய்தனர். 27 பரிசுத்த
கூடாரத்தின் பின் பகுதியாகிய மேற்கு
புறத்திற்கு 6 சட்டங்கள் செய்தனர்.
28 மேலும் பரிசுத்த கூடாரத்தின் பின் மூலை
களுக்கென்று 2 சட்டங்கள் செய்தனர். 29 இந்தச்
சட்டங்கள் அடிப்புறத்தில் ஒன்றாக
இணைக்கப்பட்டன. மேலே இந்த மூலை
சட்டங்களை ஒரு வளையம் தாங்கிக்
கொண்டிருந்தது. இரண்டு மூலைகளுக்கும்
அவர்கள் அவ்வாறே செய்தனர். 30 பரிசுத்தக்
கூடாரத்தின் மேற்குப் புறத்தில் மொத்தம்
எட்டுச் சட்டங்கள் இருந்தன. ஒவ்வொரு

---

**28 முழம்** 14 மீட்டர்.

**4 முழம்** 2 மீட்டர்.

**10 முழம்** 5 மீட்டர்.

**1 1/2 முழம்** 73 மில்லி மீட்டர்.

சட்டத்திற்கும் இரண்டு பீடங்கள் வீதம் 16
வெள்ளியாலாகிய பீடங்கள் அமைந்தன.
31பரிசுத்தக் கூடாரத்தின் முதல் பக்கத்திற்கு
சீத்திம் மரத்தாலான ஐந்து தாழ்ப்பாள்களைப்
பணியாட்கள் செய்தனர். 32மறுபக்கத்திற்கு
ஐந்து தாழ்ப்பாள்களும், பரிசுத்தக்
கூடாரத்தின் பின்புறத்திற்கு (மேற்கு) ஐந்து
தாழ்ப்பாள்களும் அமைத்தனர். 33சட்டத்தின்
ஒரு முனையிலிருந்து மறுமுனைக்குச்
செல்லும்படியாக மத்தியிலுள்ள தாழ்ப்
பாளைச் செய்தனர். 34தாழ்ப்பாள்களைத்
தாங்கிக் கொள்வதற்குப் பொன்னால்
வளையங்களைச் செய்தனர். தாழ்ப்
பாள்களில் பொன் முலாம் பூசினர்.
35மெல்லிய துகில், இளநீலம், இரத்தாம்
பரம், சிவப்புநிற நூல்களையும் மகாபரிசுத்த
கூடாரத்தின் நுழை வாயிலுக்கான
திரையைச் செய்வதற்குப் பயன்படுத்தினர்.
திரையில் கேருபீன்களின் சித்திரங்களைத்
தைத்தனர். 36சீத்திம் மரத்தால் நான்கு
தூண்களைச் செய்து அவற்றிற்குப் பொன்
முலாம் பூசினர். அவற்றிற்குப் பொன்
கொக்கிகளைச் செய்தனர். அவற்றிற்கு
நான்கு வெள்ளி பீடங்களைச் செய்து
வைத்தனர். 37கூடாரத்தின் வாயிலை மூடு
வதற்குத் திரைகள் அமைத்தனர். அவர்கள்
இளநீலம், இரத்தாம்பரம், சிவப்பு நிற
நூலையும், மெல்லிய துகிலையும் இத்திரை
யைச் செய்வதற்கு உபயோகப் படுத்தினர்.
அத்திரையில் சித்திரங்களை நெய்தனர்.
38பின் அவர்கள் நுழைவாயிலின் திரைக்காக
ஐந்து தூண்களையும் அதன் கொக்கி
களையும் அமைத்தனர். அவர்கள் தூண்
களின் மேற்பகுதிகளையும் திரைத்தண்
டுகளையும் பொன் தகட்டால் மூடினார்கள்.
அத்தூண்களுக்கு ஐந்து வெண்கல பீடங்
களைச் செய்தனர்.

## உடன்படிக்கைப் பெட்டி

37 சீத்திம் மரத்தினால் பெசலெயேல்
பரிசுத்தப் பெட்டியைச் செய்தான்.
அந்தப் பெட்டி 2 1/2 முழ நீளமும் 1 1/2 முழ
அகலமும் 1 1/2 உயரமும் கொண்ட
வையாக இருந்தன. 2அவன் பெட்டியின்
உட்புறத்தையும் வெளிப்புறத்தையும் பசும்
பொன் தகட்டால் மூடினான். பெட்டியைச்
சுற்றிலும் பொன் சட்டங்களைச் செய்தான்.
3அவன் நான்கு பொன் வளையங்களைச்
செய்து அவற்றை நான்கு மூலைகளிலும்
இணைத்தான். அவ்வளையங்கள் பெட்டி
யைச் சுமப்பதற்கென்று பயன்படுத்தப்
பட்டன. ஒவ்வொரு பக்கத்திற்கும் இரண்டு
வளையங்கள் இருந்தன. 4பின் அவன்
பெட்டியைச் சுமப்பதற்குத் தேவையான
தண்டுகளைச் செய்தான். அவன் சீத்திம்
மரத்தால் அத்தண்டுகளைச் செய்து அவற்
றைப் பசும்பொன்னால் மூடினான். 5பெட்டி
யின் இருபுறங்களிலுமுள்ள வளையங்
களினுள்ளே தண்டுகளைச் செலுத்தினான்.
6பின் கிருபாசனத்தை பசும்பொன்னால்
செய்தான். அது 2 1/2 முழ நீளமும் 1 1/2
முழ அகலமும் உடையதாக இருந்தது.
7இரண்டு கேருபீன்களைச் செய்வதற்குப்
பெசலெயேல் பொன்னைச் சுத்தியால்
அடித்து உருவமைத்தான். இந்தக் கேருபீன்
களை கிருபாசனத்தின் இரண்டு ஓரத்திலும்
வைத்தான். 8ஒரு கேருபீனை கிருபா
சனத்தினஅ ஒரு ஓரத்திலும், மற்றொரு
கேருபீனை எதிர் ஓரத்திலும் வைத்தான்.
மூடியோடு இரண்டு கேருபீன்களையும்
எதிரெதிரே ஒன்றாக இணைத்தான்.
9கேருபீன்களின் சிறகுகள் வானத்தை
நோக்கி உயர்த்தப்பட்டிருந்தன. கேருபீன்கள்
தங்கள் சிறகுகளால் பெட்டியை மூடி
யிருந்தன. கிருபாசனத்தின்மேல் குனிந்த
நிலையில் தூதர்கள் ஒருவரையொருவர்
நேருக்குநேர் பார்த்துக் கொண்டிருந்தனர்.

## விசேஷ மேசை

10பின் அவன் சீத்திம் மரப்பலகையிலான
மேசையைச் செய்தான். அம்மேசை 2
முழ நீளமும் 1 முழ அகலமும் 1 முழ
உயரமும் உள்ளதாக இருந்தது. 11அவன்
மேசையை பசும் பொன்னினால் மூடினான்.
மேசையைச் சுற்றிலும் பொன் சட்டங்களை
இணைத்தான். 12பின் அவன் 3 அங்குல
அகலமுள்ள ஒரு சட்டத்தை மேசையைச்
சுற்றிலும் இணைத்தான். அவன் சட்டத்தின்
மேல் பொன் தகட்டை வைத்தான். 13பின்
அவன் நான்கு பொன் வளையங்களைச்
செய்து அவற்றை மேசையின் நான்கு
கால்களுமுள்ள நான்கு மூலைகளிலும்
வைத்தான். 14மேசையின் மேற்பகுதியைச்
சுற்றிலும் உள்ள சட்டத்தினருகே அவன்
அந்த வளையங்களை இணைத்தான்.
மேசையைச் சுமக்கும் தண்டுகளைத் தாங்கு
வதற்கு அவ்வளையங்கள் பயன்பட்டன.
15பின் அவன் சீத்திம் மரப்பலகையால்
செய்யப்பட்ட மேசையைச் சுமக்கும் தண்டு
களைச் செய்தான். தண்டுகளைச் சுத்த
பொன்னால் மூடினான். 16பின் அவன்
மேசையில் பயன்படுத்தப்படுவதற்குரிய
எல்லாப் பொருட்களையும் செய்தான்.
தட்டுகள், கோப்பைகள், கரண்டிகள்,
கிண்ணங்கள், பாத்திரங்கள் ஆகியவற்றையும்
அவன் பொன்னால் செய்தான். பானங்களின்
காணிக்கைகளை ஊற்றுவதற்குக் கிண்ணங்
களும் பாத்திரங்களும் பயன்பட்டன.

## குத்துவிளக்குத் தண்டு

17பிறகு அவன் குத்துவிளக்கைச்
செய்தான். அவன் பசும் பொன்னை அடித்து
அதன் பீடத்தையும், தண்டையும் செய்தான்.
பின் அவன் பூக்கள், மொட்டுகள், இதழ்கள்
ஆகியவற்றைச் செய்து எல்லாவற்றையும்
ஒன்றாக இணைத்தான். 18குத்துவிளக்குக்கு

ஆறு கிளைகள் இருந்தன. மூன்று கிளைகள்
ஒரு புறத்திலும், மூன்று கிளைகள் எதிர்
புறத்திலும் இருந்தன. 19ஒவ்வொரு கிளை
யிலும் மூன்று பூக்கள் இருந்தன. அப்பூக்கள்
மொட்டுகளோடும், இதழ் களோடும் பூத்த
வாதுமைப் பூக்களைப்போல் செய்யப்
பட்டன. 20குத்துவிளக்கின் தண்டில், மேலும்
நான்கு பூக்கள் இருந்தன. அவையும்
மொட்டுகளோடும் இதழ்களோடும் பூத்த
வாதுமைப் பூக்களைப்போல செய்யப்
பட்டன. 21தண்டின் இருபுறங்களிலுமிருந்து
மூன்று கிளைகள் வீதம் ஆறு கிளைகள்
இருந்தன. கிளைகள் தண்டோடு இணைந்த
மூன்று இடங்களுக்கும் கீழே மொட்டுக
ளோடும் இதழ்களோடும் கூடிய ஒவ்வொரு
பூ இருந்தது. 22பூக்களும் கிளைகளும்
கொண்ட வேலைப் பாடுகள் உடைய
அந்தக் குத்துவிளக்கு முழுவதும் பொன்
னால் ஆனதாக இருந்தது. இந்தப் பொன்
சுத்தியால் அடிக்கப்பட்டு ஒன்றாக
இணைக்கப்பட்டிருந்தது. 23இந்தக் குத்து
விளக்கிற்கு ஏழு அகல்களை அவன்
செய்தான். பின் அவன் திரி கத்தரிக்கும்
கருவிகளையும், சாம்பல் கிண்ணங்களையும்
பொன்னால் செய்தான். 24குத்துவிளக்கையும்
அதற்குத் தேவையான பொருட்களையும்
செய்வதற்கு அவன் 75 பவுண்டு* எடை
யுள்ள சுத்தமான பொன்னைப் பயன்
படுத்தினான்.

### நறுமணப் பொருள்களை எரிப்பதற்கான பீடம்

25நறுமணப் பொருள்களை எரிக்கும்
படியான பீடத்தையும் அவன் செய்தான்.
சீத்திம் மரத்தால் இதைச் செய்தான். பீடம்
சதுரவடிவமானது. அது 1 முழ நீளமும்
1 முழ அகலமும் 2 முழ உயரமுமாக இருந்தது.
நறுமணப் பீடத்தில் நான்கு கொம்புகள்
ஒவ்வொரு மூலையிலும் ஒவ்வொன்றாக
இருந்தன. இவை நறுமணப் பீடத்தோடு
ஒன்றாக அடிக்கப்பட்டன. 26நறுமணப்
பீடத்தின் மேல்புறம், பக்கங்கள், கொம்புகள்
ஆகியவற்றை அவன் பசும்பொன்னால்
மூடினான். பின்பு அவன் நறுமணப்
பீடத்தைச் சுற்றிலும் பொன் சட்டத்தை
இணைத்தான். 27நறுமணப் பீடத்திற்கு
இரண்டு பொன் வளையங்கள் செய்தான்.
அதன் ஒவ்வொரு பக்கத்திலும் பொன்
தகட்டிற்கு அடியில் சேரும்படி பொன்
வளையங்களைப் பொருத்தினான்.
நறுமணப் பீடத்தைத் தூக்கிச் செல்லும்
போது, தண்டைக் கோர்க்கும்படி இந்தத் தங்க
வளையங்கள் இருந்தன. 28அவன் சீத்திம்
மரத்தினாலான தண்டுகளைச் செய்து
அவற்றையும் பொன்னால் மூடினான்.

**75 பவுண்டு** (அல்லது 1 கிகார்) சுமார் 34 கிலோகிராம் எடையளவுக்கு சமம்.

29பிறகு அவன் பரிசுத்த அபிஷேக
எண்ணெயைத் தயாரித்தான். அவன்
சுத்தமான நறுமணப் பொருளையும்
தயாரித்தான். நறுமணத் திரவியங்களைத்
தயாரிக்கும் முறையிலேயே இப்பொருட்கள்
அனைத்தையும் அவன் செய்தான்.

### பலிகளை எரிக்கும் பீடம்

38 பலிபீடத்தை பெசலெயேல் சீத்திம்
மரத்தால் செய்தான். இப்பலிபீடம்
பலிகளை எரிப்பதற்காக பயன்படுத்தப்
பட்டது. அது சதுரவடிவமானது. அது 5
முழ* நீளமும் 5 முழ அகலமும் 3 முழ*
உயரமும் உடையது. 2அவன் பலிபீடத்தின்
நான்கு மூலைகளிலும் ஒவ்வொரு
கொம்பைச் செய்து வைத்தான். அவற்றைப்
பலிபீடத்தோடு இணைத்து ஒன்றாக
அடித்தான். பின்பு பலிபீடத்தை வெண்
கலத்தால் மூடினான். 3பலிபீடத்தில்
பயன்படுத்தப்படும் எல்லாக் கருவிகளையும்
வெண்கலத்தால் செய்தான். பானைகள்,
கரண்டிகள், கிண்ணங்கள், முள்கரண்டிகள்,
பெரிய கொப்பரைகளையும் செய்தான்.
4பின்னர் பலிபீடத்திற்காக வெண்கலத்தா
லான வலைப் பின்னல் போன்ற ஒரு
சல்லடையை உண்டாக்கினான். பலி
பீடத்தின் அடித்தட்டில் அந்தச் சல்லடை
யைப் பொருத்தினான். அது பலிபீடத்தின்
நடுப்பகுதியில் (பாதி உயரத்தில்) பொருந்
தியது. 5பின் அவன் பித்தளை
வளையங்களை செய்தான். பலிபீடத்தைச்
சுமக்கும் தண்டுகளைத் தாங்குவதற்கு
இவ்வளையங்கள் பயன் பட்டன.
சல்லடையின் நான்கு மூலைகளிலும் அவன்
அந்த வளையங்களை வைத்தான். 6பின்
அவன் சீத்திம் மரத்தினால் தண்டுகளைச்
செய்து அவற்றை வெண்கலத்தால்
மூடினான். 7பலிபீடத்தின் பக்கங்களிலுள்ள
வளையங்களில் தண்டு களைச்
செலுத்தினான். தண்டுகள் பலிபீடத்தைச்
சுமப்பதற்குப் பயன்பட்டன. பலிபீடத்தின்
நான்கு பக்கங்களையும் சீத்திம் பலகை
களினால் செய்தான். அது வெறுமையான
பெட்டியைப் போன்று உள்ளே ஒன்று
மில்லாதிருந்தது.
8அவன் வெண்கலத்தாலான தொட்டி
களையும், அதன் பீடங்களையும் செய்தான்.
பெண்கள் கொடுத்த வெண்கல முகக்
கண்ணாடிகளை* அதற்குப் பயன்படுத்தி
னான். இந்தப் பெண்களே ஆசரிப்புக்
கூடாரத்தின் நுழைவாயிலில் திருப்பணி
யாற்றி வந்தனர்.

**5 முழம்** 2.625 மீட்டர் நீளம்:

**3 முழம்** 1.575 மீட்டர் நீளம்.

**முகக் கண்ணாடி** (தர்ப்பணம்) பளபளப்பான வெண்கல தட்டுகளை முகம்பார்க்கும்படி பயன்படுத்தி வந்தனர். யாக். 1:23 பார்க்க.

### பரிசுத்த கூடாரத்தைச் சுற்றியுள்ள பிரகாரம்

9 பின்னர் முற்றத்தைச் சுற்றி திரைச்
சீலைகள் எழுப்பினான். 100 முழ* நீளமுள்ள
தொங்குதிரையை தெற்குப் பக்கத்தில்
எழுப்பினான். மெல்லிய துகிலால் அத்திரை
கள் அமைந்தன. 10 தெற்குப் பக்கத்துத்
திரைகளை 20 தூண்கள் தாங்கின. அவற்
றிற்கு 20 வெண்கல பீடங்கள் அமைந்தன.
தூண்களுக்கான கொக்கிகளையும் திரைச்
சீலைத் தண்டுகளையும் வெள்ளியால்
செய்தான். 11 பிரகாரத்தின் வடக்குப்புறத்தில்
100 முழ நீளமான திரைச்சுவர் அமைந்தது.
20வெண்கலப் பீடங்கள் உள்ள 20 தூண்கள்
இருந்தன. தூண்களின் கொக்கிகளும், திரைப்
பூண்களும் வெள்ளியால் செய்யப்பட்டன.
12 வெளிப்பிரகாரத்தின் மேற்குப் பக்கத்தில்
50 முழ* நீளமான தொங்குதிரையை
அமைத்தான். அந்த 10 தூண்களுக்கும், 10
பீடங்கள் இருந்தன. தூண்களின் கொக்கி
களையும் திரைப் பூண்களையும் வெள்ளி
யால் அமைத்தான்.
13 வெளிப் பிரகாரத்தின் கிழக்குப்புறத்
திலிருந்து தொங்குதிரை 50 முழ அகலம்
உடையதாக இருந்தது. பிரகாரத்தின்
நுழைவாயில் இப்பக்கத்தில் இருந்தது.
14 நுழைவாயிலின் ஒரு பக்கத்தில் தொங்கு
திரை 15 முழ* நீளமுடையதாகவும் மூன்று
பீடங்களின்மேல் நின்ற மூன்று தூண்களைக்
கொண்டதாகவும் இருந்தது. 15 நுழை
வாயிலின் மறுபுறத்திலுள்ள தொங்கு
திரைகள் 15 முழ நீளமுடையதாக இருந்தது.
அந்தப் பக்கத்தில் மூன்று தூண்களும்
அவற்றிக்கு மூன்று பீடங்களும் அமைத்தனர்.
16 பிரகாரத்தைச் சுற்றிலும் அமைந்த தொங்கு
திரைகள் மெல்லிய துகிலால் செய்யப்
பட்டன. 17 தூண்களின் பீடங்கள் வெண்
கலத்தால் செய்யப்பட்டிருந்தன. கொக்கி
களும், திரைப்பூண்களும், வெள்ளியால்
செய்யப்பட்டன. தூண்களின் மேற்
பகுதிகளும் வெள்ளியால் மூடப்பட்டன.
பிரகாரத்தின் தூண்களில் வெள்ளியாலான
திரைப்பூண்கள் இருந்தன.
18 பிரகார நுழைவாயிலின் தொங்குதி
ரைகள் மெல்லிய துகிலாலும், இளநீலம்,
இரத்தாம்பரம், சிவப்பு நூல்களாலும்
நெய்யப்பட்டன. அவற்றில் பல சித்திரங்
களும் வடிவமைக்கப்பட்டிருந்தன. திரை
யானது 20 முழ* நீளமும் 5 முழ*
உயரமும் உடையதாக இருந்தது. அவை
பிரகாரத்தைச் சுற்றிலும் அமைந்த தொங்கு
திரைகளின் உயரம் கொண்டிருந்தன.
19 தொங்குதிரையை நான்கு தூண்களும்,
நான்கு வெண்கல பீடங்களும் தாங்கின.
தூண்களின் கொக்கிகள் வெள்ளியால்
ஆனவை ஆகும். தூண்களின் மேற்
பகுதிகளும் வெள்ளியால் மூடப்பட்டன.
திரைப் பூண்களும் வெள்ளியாலாயின.
20 பரிசுத்தக் கூடாரத்திற்கும், வெளிப்பிரகாரத்
தின் திரைகளுக்கும் தேவையான கூடார
ஆணிகள் வெண்கலத்தால் செய்யப்பட்டன.
21 உடன்படிக்கையின் கூடாரமாகிய
பரிசுத்த கூடாரத்திற்குத் தேவைப்பட்ட
பொருட்களை எல்லாம் லேவி குடும்பத்தார்
எழுதி வைத்துக்கொள்ளும்படியாக மோசே
கட்டளையிட்டான். பட்டியலைத் தயாரிக்
கும் பொறுப்பை ஆரோனின் மகனாகிய
இத்தாமார் ஏற்றுக்கொண்டான்.
22 மோசேக்கு கர்த்தர் விதித்த எல்லாக்
கட்டளைகளையும் யூதாவின் கோத்திரத்தின்
வழியே வந்த ஊரின் மகனாகிய ஊரியின்
மகன் பெசலெயேல் நிறைவேற்றினான்.
23 தாண் கோத்திரத்தைச் சேர்ந்த அகிசாமா
கின் மகனான அகோலியாப் அவனோடு
ஒத்துழைத்தான். அகோலியாப் மிகச்சிறந்த
சித்திரை கைவேலையாளும், நெசவில்
நிபுணனும் ஆவான். மெல்லிய துகிலை
நெய்வதிலும், இளநீலம், இரத்தாம்பரம்,
சிவப்பு நூலை நெய்வதிலும் அவன்
தலைசிறந்தவனாக இருந்தான்.
24 கர்த்தரின் பரிசுத்த இடத்திற்கு 2 டன்
கள்* எடைக்கு மேற்பட்ட பொன் காணிக்
கையாக அளிக்கப்பட்டது. (அதிகாரப்
பூர்வமான அளவு எடையின்படி அது
எடையிடப்பட்டது.)
25 எண்ணிக்கை எடுக்கப்பட்ட மனிதர்கள்
அனைவரும் 3 3/4 டன்கள்* வெள்ளி
கொடுத்தனர். (இதுவும் அதிகாரப்பூர்வமான
அளவின் தராசில் நிறுக்கப்பட்டது)
26 இருபதும் அதற்கு மேற்பட்ட வயதுமுடைய
ஆண்கள் எண்ணப்பட்டனர். 6,03,550
ஆண்கள் இருந்தனர். ஒவ்வொருவனும் 1
பெக்கா வெள்ளியை வரியாக அளித்தான்.
(அதிகாரப்பூர்வமான அளவின்படி 1 பெக்கா
என்பது 1/2 சேக்கல்* எடை அளவாகும்.)
27 கர்த்தரின் பரிசுத்த இடத்தின் தொங்கு
திரைகளுக்கும் 100 பீடங்களை உண்டாக்கு
வதற்கு அந்த 3 3/4 டன்கள் வெள்ளியைப்
பயன்படுத்தினார்கள். ஒவ்வொரு பீடத்
திற்கும் சுமார் 75 பவுண்டு* வெள்ளி
வீதம் உபயோகப்படுத்தப்பட்டது. 28 மீதமுள்ள

---

**100 முழம்** சுமார் 52.5 மீட்டர்.

**50 முழம்** 26.25 மீட்டர்.

**15 முழம்** 7.875 மீட்டர்.

**20 முழம்** 10.5 மீட்டர்.

**5 முழம்** 2.625 மீட்டர்.

**2 டன்கள்** அல்லது 29 கிகாரும் 730 சேக்கலும் கொண்ட எடை. (994.27 கிலோ.)

**3 3/4 டன்கள்** அல்லது 100 கிகாரும் 1,775 சேக்கலும் நிறை கொண்டது. (1864.26 கிலோ).

**1 பெக்கா** அல்லது 0.5 சேக்கல் எடை. (5.75 கிராம்).

**75 பவுண்டு** அல்லது 1 கிகார். (35 கிலோ.

50 பவுண்டு* வெள்ளியால் கொக்கிகளையும்,
திரைப்பூண்களையும், தூண்களின் வெள்ளிப்
பூச்சையும் செய்தனர்.
29 கர்த்தருக்கு 26 1/2 டன்களுக்கும்* அதிக
மான வெண்கலம் தரப்பட்டது. 30 ஆசரிப்புக்
கூடாரத்தின் நுழைவாயிலின் பீடங்களைச்
செய்வதற்கு அது பயன்பட்டது. பீடத்தை
யும், சல்லடையையும் செய்வதற்கும்
வெண்கலத்தைப் பயன் படுத்தினர். பலி
பீடத்தின் எல்லாக் கருவிகளையும்,
பாத்திரங்களையும் செய்வ தற்கு வெண்கலம்
பயன் படுத்தப் பட்டது. 31 பிரகாரத்தைச்
சுற்றிலுமுள்ள தொங்குதிரை களின் பீடங்
களையும், நுழைவாயிலில் உள்ள தொங்கு
திரைகளின் பீடங்களையும் அமைப்பதற்கு
வெண்கலம் பயன்படுத்தப்பட்டது. வெண்
கலத்தால் பரிசுத்தக் கூடாரத்திற்கும், வெளிப்
பிரகாரத்தின் தொங்குதிரைகளுக்கும் தேவை
யான கூடார ஆணிகளைச் செய்தனர்.

## ஆசாரியர்களுக்கான விசேஷ ஆடைகள்

39 கர்த்தரின் பரிசுத்தக் கூடாரத்திற்கு
வரும்போது ஆசாரியர் அணிய
வேண்டிய விசேஷ ஆடைகளை நெய்வதற்கு
இளநீலம், இரத்தாம்பரம், சிவப்புநிற நூலை
சித்திரவேலையாட்கள் பயன்படுத்தினார்கள்.
கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்டபடி
அவர்கள் ஆரோனுக்கு விசேஷ ஆடை
களைத் தயாரித்தனர்.

### ஏபோத்

2 பொன் ஜரிகை, மெல்லிய துகில்,
இளநீலம், இரத்தாம்பரம், சிவப்புநிற நூல்
ஆகியவற்றால் ஏபோத்தைச் செய்தார்கள்.
3 (அவர்கள் பொன்னை மெல்லிய நாடாவாக
அடித்து பொன் ஜரிகைகளை வெட்டி
னார்கள். இந்தப் பொன் ஜரிகையை
இளநீலம், இரத்தாம்பரம், சிவப்பு நூலிலும்,
மெல்லிய துகிலுடனும் சேர்த்து
நெய்தார்கள். இது சிறந்த சித்திரக்காரனின்
கைவேலையாக இருந்தது). 4 அவர்கள்
ஏபோத்தின் தோள் பட்டைகளைச் செய்
தார்கள். ஏபோத்தின் இரண்டு மூலைகளிலும்
அந்தத் தோள் பட்டைகளை இணைத்
தார்கள். 5 அவர்கள் கச்சையை ஏபோத்தோடு
இணைத்தார்கள். ஏபோத்தைப் போலவே
இதுவும் செயயப்பட்டது. அவர்கள் பொன்
ஜரிகை, மெல்லிய துகில், இளநீலம்,
இரத்தாம்பரம், சிவப்பு நூல் ஆகியவற்றைப்
பயன்படுத்தி, கர்த்தர் மோசேக்குக் கட்டளை
யிட்டபடியே செய்தார்கள்.
6 கைவேலைக்காரர் ஏபோத்துக்கு இரண்டு
கோமேதகக் கற்களை தங்கச்சட்டத்தில்
பதித்தனர். அக்கற்களின்மீது இஸ்ரவேலின்
பன்னிரெண்டு மகன்களின் பெயர்களைப்
பதித்தனர். 7 பின் அவர்கள் அதனை
ஏபோத்தின் தோள்பட்டைகளோடு இணைத்
தனர். இஸ்ரவேல் ஜனங்களை தேவன்
நினைவு கூருவதற்காக இந்தக் கற்கள்
பயன்பட்டன. மோசேக்கு கர்த்தர் கட்டளை
யிட்டபடியே இதைச் செய்தனர்.

### நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கம்*

8 பின் அவர்கள் நியாயத்தீர்ப்பு மார்ப்
பதக்கத்தை செய்தனர். ஏபோத்தைச் செய்தது
போலவே, இதுவும் கைதேர்ந்த சித்திர
வேலையாக இருந்தது. அது பொன் ஜரிகை,
மெல்லிய துகில், இளநீலம், இரத்தாம்பரம்,
சிவப்புநிற நூலால் நெய்யப்பட்டன.
9 நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தை இரண்டாக
மடித்து சதுரவடிவில் அமைத்தனர். இது
9 அங்குல* நீளமும் 9 அங்குல அகலமும்
உடையதாக இருந்தது. 10 சித்திரவேலை
யாட்கள் நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தில் 4
வரிசை விலையுயர்ந்த கற்களைப் பதித்
தனர். முதல் வரிசையில் பத்மராகமும்,
புஷ்பராகமும், மாணிக்கமும் இருந்தன.
11 இரண்டாம் வரிசையில் மரகதமும், இந்திர
நீலக்கல்லும், வச்சிரமும் காணப்பட்டன.
12 மூன்றாம் வரிசையில் கெம்பும், வைடூரிய
மும், சுகந்தியும் இருந்தன. 13 நாலாம்
வரிசையில் படிகப்பச்சையும், கோமேதக
மும், யஸ்பியும் காணப்பட்டன. இந்தக் கற்கள்
அனைத்தும் பொன்னில் பூட்டப் பட்டிருந்தது.
14 நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத் தில்
இஸ்ரவேலின் (யாக்கோபின்) ஒவ்வொரு
மகனுக்கும் ஒவ்வொரு கல் வீதம்
பன்னிரண்டு கற்கள் இருந்தன. ஒவ்வொரு
கல்லிலும் முத்திரையைப் போன்று இஸ்ர
வேலின் மகன்கள் ஒவ்வொருவரின் பெயரும்
பொறிக்கபட்டிருந்தது.
15 நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்திற்காக
சித்திர வேலைக்காரர் பசும்பொன்னால்
இரண்டு சங்கிலிகளைச் செய்தார்கள்.
அச்சங்கிலிகள் கயிறுகளைப்போல் பின்னப்
பட்டிருந்தன. 16 சித்திர வேலைக்காரர்
இரண்டு பொன் வளையங்களைச் செய்து,
அவற்றை நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தின்
இரண்டு மூலைகளிலும் இணைத்தனர்.
தோள்பட்டைகளுக்கு பூட்டும்படி இரண்டு
பொன் வளைகளைச் செய்தனர். 17 அவர்கள்
பொன் சங்கிலிகளை நியாயத்தீர்ப்பு
மார்ப்பதக்கத்தின் மூலைகளிலிருந்த வளை
யங்களில் இணைத்தனர். 18 தோள்பட்டை
களின் பொன்வளையங்களில் பொன்

---

**50 பவுண்டு** அல்லது 1,775 சேக்கல். (22.667 கிலோ).

**26 1/2 டன்** அல்லது 70 கிகாரும் 2400 சேக்கலும். (13,174.077 கிலோ.)

**மார்ப்பதக்கம்** அல்லது நியாயத்தீர்ப்பு பை. பிரதான ஆசாரியனின் மார்பில் அணியப்பட்ட ஒரு துணிபட்டையாகும். யாத். 28:15-30 பார்க்க.

**9 அங்குலம்** 1 ஜாண் அளவு பெருவிரல் நுனியிலிருந்து சிறுவிரல் நுனிவரை உள்ள நீள அளவு.

சங்கிலிகளின் மறுமுனைகளை இணைத்
தனர். இவற்றை அவர்கள் ஏபோத்தின்
முன்புறத்தில் சேர்த்தனர். 19பின்பு அவர்கள்
மேலும் இரண்டு பொன் வளையங்களைச்
செய்து அவற்றை நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்
கத்தின் மற்ற இரண்டு மூலைகளிலும் தைத்
தனர். ஏபோத்தை அடுத்து நியாயத்தீர்ப்பு
மார்ப்பதக்கத்தின் உட்புறத்தில் இது இருந்
தது. 20ஏபோத்தின் முன்புறத்தில் தோள்பட்
டைகளின் கீழே இரண்டு பொன் வளையங்
களை தைத்தனர். கச்சைக்கு மேலே ஏபோத்
தின் இணைப்புக்கருகே இவ்வளையங்கள்
இருந்தன. 21பின் அவர்கள் நீல நிற நாடாவை
யும், நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தின் வளை
யங்களையும் ஏபோத்தின் வளையங்களோடு
கட்டினார்கள். இவ்விதமாக நியாயத்தீர்ப்பு
மார்ப்பதக்கம் கச்சைக்கு அருகில் ஏபோத்
துக்கு இணையாக இருக்கும்படி இழுத்துக்
கட்டப்பட்டது. கர்த்தர் கட்டளையிட்டபடி
அவர்கள் எல்லாவற்றையும் செய்தனர்.

## ஆசாரியர்களுக்கான பிற ஆடைகள்

22பின் அவர்கள் ஏபோத்திற்காக ஒரு
அங்கியை நெய்தனர். இளநீல துணியால்
அதைச் செய்தார்கள். அது சிறந்த சித்திரத்
தையல்காரனால் நெய்யப்பட்டது. 23அங்கி
யின் மத்தியில் ஒரு துளையை அவர்கள்
உண்டுபண்ணி, அந்தத் துவாரத்தின் விளிம்
பைச் சுற்றிலும் ஒரு துண்டுத் துணியைத்
தைத்தனர். துவாரம் கிழிந்து போகாதபடி
அது பாதுகாத்தது. 24பின் அவர்கள்
மெல்லிய துகில், இளநீலம், இரத்தாம்பரம்,
சிவப்பு நிற நூலைக் கொண்டு துணியா
லான மாதுளம் பழங்களை உண்டாக்
கினார்கள். அங்கியின் கீழ்த்தொங்கலில் இந்த
மாதுளம் பழங்களைத் தைத்தனர். 25பின்பு
பசும்பொன்னால் மணிகளை உண்டாக்கி
னார்கள். அவற்றை அங்கியின் கீழ்த்தொங்
கலில் மாதுளம் பழங்களுக்கு இடையே
தொங்கவிட்டனர். 26அங்கியின் கீழ்த்தொங்
கலைச் சுற்றிலும் மாதுளம் பழங்களும்,
பொன்மணிகளும் இருந்தன. மாதுளம் பழங்
களுக்கு இடையில் ஒரு பொன்மணி இருந்
தது. மோசேக்குக் கர்த்தர் கட்டளையிட்ட
படியே, கர்த்தருக்கு பணிவிடை செய்யும்
போது ஆசாரியன் அணியும் அங்கியாக
இது இருந்தது. 27ஆரோனுக்கும் அவனது
மகன்களுக்கும் சட்டைகளை கைவேலைக்
காரர் நெய்தனர். இவை மெல்லிய துகிலால்
நெய்யப்பட்டன. 28மெல்லிய துகிலிலிருந்து
கைவேலையாட்கள் ஒவ்வொரு தலைப்
பாகையையும் நெய்தனர். உள் ஆடைகளை
யும் நெற்றிப்பட்டைகளையும் மெல்லிய துகி
லிலிருந்து செய்தார்கள். 29மெல்லிய துகில்,*
இளநீலம், இரத்தாம்பரம், சிவப்புநிற நூலி
லிருந்து கச்சையைச் செய்தனர். ஆடை
யில் சித்திர வேலைப்பாடுகள் செய்யப்
பட்டன. மோசேக்குக் கர்த்தர் கட்டளை
யிட்டபடியே இவை அனைத்தும் தைக்கப்
பட்டன.

30பின் பரிசுத்தக் கிரீடத்திற்குரிய
நெற்றிப்பட்டையைத் தயாரித்தனர். சுத்தப்
பொன்னால் அதைச் செய்தனர். அந்தப்
பொன் தகட்டில் "கர்த்தருக்குப் பரிசுத்தம்"
என்ற வார்த்தைகளைப் பதித்தனர். 31பொன்
பட்டையை நீல நாடாவில் இணைத்தனர்.
மோசேக்குக் கர்த்தர் இட்ட கட்டளைப்ப
டியே இந்த நீலநாடாவை தலைப்
பாகையோடு இணைத்தனர்.

## மோசே பரிசுத்தக் கூடாரத்தைப் பார்வையிடுதல்

32இவ்வாறு பரிசுத்தக் கூடாரத்தின்
(அதாவது ஆசரிப்புக் கூடாரத்தின்) எல்லா
வேலைகளும் செய்து முடிக்கப்பட்டன.
கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்டபடியே
இஸ்ரவேல் ஜனங்கள் ஒவ்வொன்றையும்
செய்தனர். 33பின் அவர்கள் மோசேக்குப்
பரிசுத்தக் கூடாரத்தையும், அதிலுள்ள
எல்லாப் பொருட்களையும் காட்டினார்கள்.
வளையங்கள், சட்டங்கள், தாழ்ப்பாள்கள்,
தூண்கள், பீடங்கள் ஆகியவற்றை
அவனுக்குக் காட்டினார்கள். 34சிவப்புச்
சாயம் தோய்த்த ஆட்டுக்கடாவின் தோலால்
கூடாரம் மூடப்பட்டிருந்ததைக் காட்டினார்
கள். அதன் கீழ் பதனிடப்பட்ட மெல்லிய
தோலாலாகிய மூடியையும் காட்டினார்கள்.
மகா பரிசுத்தக் கூடாரத்தின் நுழைவாயிலை
மூடிய திரைச்சீலையையும் அவர்கள்
அவனுக்குக் காட்டினார்கள்.

35அவர்கள் மோசேக்கு உடன்படிக்கைப்
பெட்டியைக் காட்டினார்கள். பெட்டியைச்
சுமக்கும் தண்டுகளையும், பெட்டியின்
மூடியையும் காண்பித்தனர். 36மேசையை
அதனுடன் சேர்ந்த பொருட்களோடும்,
விசேஷ ரொட்டியோடும் காட்டினார்கள்.
37அவர்கள் அவனுக்குப் பசும் பொன்னால்
செய்யப்பட்ட குத்துவிளக்குத் தண்டையும்
அதன் அகல்களையும் காட்டினார்கள்.
அகலுக்குப் பயன்படுத்தவேண்டிய எண்ணெ
யையும் பிற பொருட்களையும் காண்பித்
தனர். 38பொன் நறுமணப்பீடம், அபிஷேக
எண்ணெய், நறுமணப்பொருள், கூடாரத்தை
மூடிய தொங்குதிரை ஆகியவற்றையும் அவர்
கள் மோசேக்குக் காட்டினார்கள். 39வெண்கல
பலிபீடத்தையும், வெண்கல சல்லடையையும்
அவனுக்குக் காட்டினார்கள். பலிபீடத்தைச்
சுமக்கும் தண்டுகளையும் காட்டினார்கள்.
பலிபீடத்தின் பொருட்களையும் காண்பித்
தனர். வெண்கலத் தொட்டியையும் அதன்
பீடத்தையும் அவனுக்குக் காட்டினார்கள்.
40பின்பு தூண்களோடும் அவற்றின்

---

**மெல்லிய துகில்** சணல் நாரிலிருந்து பிரிக்கப்பட்ட மெல்லிய இழைகள் பின்னல் வேலைக்குத் தகுந்தது.

*பீடங்களோடும் கூடிய வெளிப்பிரகாரத்
தைச் சுற்றிலும் காணப்பட்ட தொங்கு
திரைகளை அவர்கள் மோசேக்குக் காட்டி
னார்கள். பிரகாரத்தின் நுழைவாயிலில்
இருந்த திரையைக் காண்பித்தனர். கயிறு
களையும், கூடார ஆணிகளையும் காட்டி
னார்கள். பரிசுத்த கூடாரத்தின் அதாவது
ஆசரிப்புக் கூடாரத்தின் எல்லாப் பொருட்
களையும் அவர்கள் அவனுக்குக்
காட்டினார்கள்.*
**41**பரிசுத்த பிரகாரங்களில் பணிவிடை
செய்யும் ஆசாரியர்களுக்கான ஆடைகளை
அவர்கள் மோசேக்குக் காட்டினார்கள்.
ஆசாரியனான ஆரோனுக்கும், அவனது
மகன்களுக்கும் தைக்கப்பட்ட விசேஷ ஆடை
களைக் காட்டினார்கள். அவர்கள் ஆசாரியர்
களாகப் பணிவிடை செய்யும்போது அணிய
வேண்டிய ஆடைகள் இவையாகும்.
**42**கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்ட
படியே இஸ்ரவேல் ஜனங்கள் இந்த
வேலைகளை எல்லாம் செய்திருந்தனர்.
**43**மோசே எல்லா வேலைகளையும் கூர்ந்து
கவனித்தான். கர்த்தர் கட்டளையிட்டபடியே
எல்லா வேலைகளும் நிறை வேற்றப்
பட்டதைக் கண்டான். எனவே மோசே
அவர்களை ஆசீர்வதித்தான்.

### மோசே பரிசுத்தக் கூடாரத்தை நிறுவுதல்

**40** பின்பு கர்த்தர் மோசேயை நோக்கி,
**2**“முதல் மாதத்தின் முதல் நாளில்
பரிசுத்தக் கூடாரத்தை, அதாவது ஆசரிப்புக்
கூடாரத்தை எழுப்பு. **3**பரிசுத்தக் கூடாரத்தில்
உடன்படிக்கைப் பெட்டியை வைத்துப்
பெட்டியைத் திரையால் மூடு. **4**பிறகு
மேசையை உள்ளே கொண்டு வா.
மேசையின்மேல் வைக்கவேண்டிய பொருட்
களை வை. பின்பு கூடாரத்தில் குத்து
விளக்குத்தண்டை வை. சரியான இடங்
களில் குத்துவிளக்கின் அகல்களை வை.
**5**கூடாரத்தில் நறுமணப் பொருட்களின்
காணிக்கையைப் படைக்க பொன்னாலான
நறுமணப்பீடத்தை வை. உடன்படிக்கைப்
பெட்டியின் முன்புறத்தில் நறுமணப்பீடத்தை
வை. அதன்பின் பரிசுத்தக் கூடாரத்தின்
நுழைவாயிலில் திரைகளை இடு.
**6**“பரிசுத்தக் கூடாரத்தின், அதாவது
ஆசரிப்புக் கூடாரத்தின் நுழைவாயிலின்
முன்பு தகனபலிக்கான பலிபீடத்தை வை.
**7**ஆசரிப்புக் கூடாரத்திற்கும், பலிபீடத்திற்கும்
இடையே தொட்டியை வை. தொட்டியில்
தண்ணீர் ஊற்றி வை. **8**வெளிப்பிரகாரத்தைச்
சுற்றிலும் திரைச்சீலைகளைத் தொங்கவிடு.
பிரகாரத்தின் நுழைவாயில் திரையை அதன்
ஸ்தானத்தில் தொங்கவிடு.
**9**“பின்பு அபிஷேக எண்ணெயை எடுத்து
பரிசுத்தக் கூடாரத்தையும் அதிலுள்ள
எல்லாப் பொருட்களையும் அபிஷேகம் செய்.
எண்ணெயை இப்பொருட்களின் மேல்
ஊற்றும்போது அவை பரிசுத்தமாகும்.
**10**தகன பலிக்கான பலிபீடத்தையும் அதி
லுள்ள எல்லாவற்றையும் அபிஷேகம்
செய்து, பலிபீடத்தை பரிசுத்தமாக்கு. அது
மிகவும் பரிசுத்தமானதாகும். **11**பின் தொட்டி
யையும், அதன் அடித்தளத்தையும் அபி
ஷேகம் செய். அப்பொருட்கள் பரிசுத்த
மாவதற்கு இவ்வாறு செய்.
**12**“ஆரோனையும், அவனது மகன்களையும்
ஆசரிப்புக் கூடாரத்தின் நுழைவாயிலுக்கு
அழைத்து வா. அவர்களைத் தண்ணீரால்
கழுவு. **13**பிறகு ஆரோனுக்கு விசேஷ ஆடை
களை உடுத்தி எண்ணெயால் அபிஷேகம்
செய்து அவனைப் பரிசுத்தப்படுத்து. அப்
போது அவன் ஆசாரியனாகப் பணியாற்ற
முடியும். **14**பின் அவனது மகன்களுக்கும்
ஆடைகளை அணிவித்துவிடு. **15**அவர்களது
தந்தைக்கு செய்தபடியே அவர்கள் மேலும்
எண்ணெயை ஊற்றி அவர்களையும்
பரிசுத்தப்படுத்து. அப்போது அவர்களும்
ஆசாரியப் பணிவிடை செய்யமுடியும்.
அவர்கள்மேல் அபிஷேக எண்ணெயை
ஊற்றும்போது, அவர்கள் ஆசாரியர் ஆவார்
கள். வரும் காலங்களில் எல்லாம் அவர்கள்
குடும்பத்தினர் ஆசாரியர்களாகவே
இருப்பார்கள்” என்றார். **16**மோசே கர்த்தர்
கூறிய படியெல்லாம் செய்தான்.
**17**எனவே, ஏற்ற காலத்தில் பரிசுத்தக்
கூடாரம் எழுப்பப்பட்டது. எகிப்தைவிட்டுப்
புறப்பட்ட இரண்டாம் வருடத்தின் முதல்
மாதம் முதல் தேதியன்று **18**கர்த்தர்
கூறியபடியே மோசே பரிசுத்த கூடாரத்தை
நிறுவினான். முதலில் பீடங்களை வைத்
தான். பிறகு பீடங்களின்மீது சட்டங்களை
பொருத்தினான். பின்பு தாழ்ப்பாள்களை
வைத்து, தூண்களை நிறுவினான். **19**அதன்
பிறகு மோசே பரிசுத்தக் கூடாரத்திற்குமேல்
வெளிக் கூடாரத்தை அமைத்தான். பிறகு
பரிசுத்தக் கூடாரத்தின் மேல் மூடியை
அமைத்தான். கர்த்தர் கட்டளையிட்டபடியே
இவற்றையெல்லாம் செய்தான்.
**20**மோசே உடன்படிக்கையை எடுத்து
அதை பரிசுத்தப் பெட்டியில் வைத்தான்.
மோசே பெட்டியின்மீது தண்டுகளை
வைத்து பெட்டியின் மூடியை பொருத்தி
னான். **21**பின்பு மோசே பரிசுத்தப் பெட்டியை
பரிசுத்தக் கூடாரத்தில் வைத்தான். அதைப்
பாதுகாப்பதற்காக தொங்குதிரையை அதற்
குரிய இடத்தில் தொங்கவிட்டான். இவ்வாறு
அவன் கர்த்தர் கட்டளையிட்டபடியே
தொங்குதிரைகளுக்குப் பின்னே உடன்
படிக்கைப் பெட்டியை* வைத்து பாது

---

**உடன்படிக்கைப் பெட்டி** அல்லது சீனாய் பாலைவனத்தில் இஸ்ரவேல் ஜனங்களோடு தேவன் இருந்தார் என்பதை நிரூபிக்கும் வகையில், பத்துக்கட்டளைகள் எழுதப்பட்ட இரண்டு கற்பலகைகளும் அந்த உடன்படிக்கைப் பெட்டியில் இருந்தது.

காத்தான். 22பிறகு மோசே ஆசரிப்புக் கூடாரத்தில் மேசையை வைத்தான். அதைக் கூடாரத்தின் வடக்குத் திசையில் இருந்த பரிசுத்தக் கூடாரத்தில் திரைகளுக்கு முன்னே வைத்தான். 23பிறகு கர்த்தருக்கு முன்னே மேசையின்மீது பரிசுத்த அப்பத்தை வைத்தான். கர்த்தர் சொன்னபடியே அவன் இதைச் செய்தான். 24பிறகு மோசே ஆசரிப்புக் கூடாரத்தில் குத்துவிளக்குத் தண்டை வைத்தான். கூடாரத்தின் தெற்குப் பகுதியில் மேசைக்கு எதிராக அதனை வைத்தான். 25அதன் பின் மோசே கர்த்தருக்கு முன் இருந்த விளக்குத் தண்டில் அகல்களை வைத்தான். கர்த்தர் கட்டளையிட்டபடியே இதைச் செய்தான்.

26பின்பு மோசே ஆசரிப்புக் கூடாரத்தில் பொன் நறுமணப்பீடத்தை திரைக்கு முன்னால் நிறுவினான். 27பின் நறுமணப்பீடத்தில் சுகந்தவாசனையுள்ள நறுமணப் பொருள் களை எரித்தான். கர்த்தர் கட்டளையிட்ட படியே அவன் இதனையும் செய்தான். 28பிறகு மோசே பரிசுத்தக் கூடாரத்தின்நுழைவாயிலில் தொங்குதிரையை தொங்க விட்டான்.

29பரிசுத்தக் கூடாரம், அதாவது ஆசரிப்புக் கூடாரத்தின் நுழைவாயிலில் தகன பலிக்கான பலிபீடத்தை மோசே வைத்தான். பின் மோசே அந்தப் பலிபீடத்தின்மேல் ஒரு தகன பலியைச் செலுத்தினான். தானிய காணிக்கைகளையும் கர்த்தருக்குச் செலுத்தினான். கர்த்தர் கட்டளையிட்டபடியே அவன் இக்காரியங்களைச் செய்தான்.

30பின்பு ஆசரிப்புக் கூடாரத்திற்கும், பலிபீடத்திற்கும் மத்தியில் மோசே தொட்டியை வைத்தான். கழுவுவதற்கானதண்ணீரை மோசே, தொட்டியில் நிரப்பினான். 31மோசே, ஆரோன், ஆரோனின் மகன்கள் ஆகியோர் தங்கள் கைகளையும், கால்களையும் கழுவுவதற்கு இந்தக் தொட்டியைப் பயன்படுத்தினார்கள். 32அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தில் நுழையும்போதெல்லாம் தங்களைக் கழுவிக் கொண்டனர். பலிபீடத்தின் அருகே செல்லும்போதெல்லாம் அவர்கள் தங்கள் கை, கால்களைக் கழுவிக்கொண்டனர். மோசேக்குக் கர்த்தர் கட்டளையிட்டபடியே அவர்கள் இக்காரியங்களைச் செய்தார்கள்.

33பின்பு மோசே பரிசுத்தக் கூடாரத்தின் வெளிப்பிரகாரத்தைச் சுற்றிலும் திரைகளைத் தொங்கவிட்டான். மோசே பலிபீடத்தை வெளிப்பிரகாரத்தில் வைத்தான். வெளிப்பிரகாரத்தின்நுழைவாயிலில் திரைச் சீலைகளைத் தொங்கவிட்டான். கர்த்தர் செய்யுமாறு கூறிய எல்லா வேலை களையும் மோசே செய்து முடித்தான்.

### கர்த்தரின் மகிமை

34அப்போது ஆசரிப்புக் கூடாரத்தை மேகம் வந்து மறைத்துக் கொண்டது. கர்த்தரின் மகிமை பரிசுத்தக் கூடாரத்தை நிரப்பியது. 35ஆசரிப்புக் கூடாரத்திற்குள் மோசே செல்ல முடியவில்லை. ஏனெனில், மேகம் அதன் மீது மூடியிருந்தது. மேலும் கர்த்தரின் மகிமை பரிசுத்தக் கூடாரத்தை நிரப்பியிருந்தது.

36இந்த மேகமே ஜனங்கள் புறப்பட வேண்டிய நேரத்தை உணர்த்தி வந்தது. பரிசுத்தக் கூடாரத்திலிருந்து மேகம் எழும்பியபோது, இஸ்ரவேல் ஜனங்கள் பயணத்தைத் தொடங்கினார்கள். 37ஆனால் பரிசுத்தக் கூடாரத்தில் மேகம் மூடியிருந்த போது ஜனங்கள் பயணத்தைத் தொடர முயலவில்லை. மேகம் கிளம்பும் வரையிலும் அவர்கள் அவ்விடத்திலேயே தங்கினார்கள். 38எனவே பகலில் கர்த்தரின் மேகம் பரிசுத்தக் கூடாரத்தின் மீது இருந்தது. இரவில் மேகத்தில் நெருப்பு காணப்பட்டது. எனவே இஸ்ரவேல் ஜனங்கள் பிரயாணத்தின் போதெல்லாம் மேகத்தைப் பார்க்க முடிந்தது.

# லேவியராகமம்

### பலிகளும் காணிக்கைகளும்

1 தேவனாகிய கர்த்தர் மோசேயைக்
கூப்பிட்டு ஆசரிப்புக் கூடாரத்திலிருந்து
அவனிடம், 2 “நீ இஸ்ரவேல் ஜனங்களிடம்
கூற வேண்டியதாவது: நீங்கள் கர்த்தருக்குப்
பலி செலுத்த வரும்பொழுது அப்பலி
உங்கள் மந்தையில் உள்ள பசுவாகவோ,
ஆடாகவோ அல்லது வெள்ளாடாகவோ
இருக்கலாம்.
3 “ஒருவன் தனக்குச் சொந்தமான
மாடுகளில் ஒன்றைத் தகனபலியாகச்
செலுத்த விரும்பினால் அது எவ்விதமான
குறையுமற்ற காளையாக இருக்க வேண்டும்.
அந்தக் காளையை அவன் ஆசரிப்புக்
கூடாரவாசலுக்குக் கொண்டு வரவேண்டும்.
பிறகு கர்த்தர் அதனை ஏற்றுக்கொள்வார்.
4 அம்மிருகம் பலியிடப்படும்போது அவன்
அதன் தலையில் தன் கைகளை வைக்க
வேண்டும். அந்த மனிதன் பரிசுத்தம்
அடைவதற்கான விலையாகக் கர்த்தர்
அதனை ஏற்றுக்கொள்வார்.
5 “அவன் அந்த இளம் காளையை
கர்த்தருக்கு முன்பாகக் கொல்ல வேண்டும்.
பிறகு ஆரோனின் மகன்களாகிய ஆசாரியர்
கள் அதன் இரத்தத்தை எடுத்து ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் உள்ள பலிபீடத்தின்
மேலும், அதைச் சுற்றிலும் தெளிக்க
வேண்டும். 6 அம்மிருகத்தின் தோலை வெட்
டிய பிறகு ஆசாரியன் மிருகத்தை துண்டு
துண்டாக வெட்டவேண்டும். 7 ஆரோனின்
மகன்களாகிய ஆசாரியர்கள் பலிபீடத்தில்
நெருப்பிட்டு கட்டைகளை அடுக்கி 8 துண்டு
களை (மிருகத்தின் தலையையும் கொழுப்
பையும்) பலிபீடத்தின் மேலுள்ள நெருப்
பிலுள்ள கட்டைகளின்மேல் அடுக்கி வைக்க
வேண்டும். 9 பின் அதன் கால்களையும்
உட்பகுதிகளையும் தண்ணீரால் கழுவ
வேண்டும். அதன் அனைத்துப் பகுதிகளை
யும் பலிபீடத்தின்மேல் நெருப்பில் எரிக்க
வேண்டும். இது நெருப்பாலான தகனபலி.
இதன் வாசனை கர்த்தருக்கு விருப்பமான
தாக இருக்கும்.
10 “ஒருவன் தன் ஆட்டு மந்தையிலிருந்து
ஒரு வெள்ளாட்டையோ அல்லது செம்மறி
யாட்டையோ நெருப்பிலிட்டு தகன பலியிட
விரும்பினால் அது ஆண் மிருகமாக இருக்க
வேண்டும். அதில் எவ்விதக் குறைபாடும்
இருக்கக்கூடாது. 11 அதனைக் கர்த்தருக்கு
முன்பு பலிபீடத்தின் வடக்குத் திசையில்
வைத்துக் கொல்ல வேண்டும். ஆரோனின்
மகன்களாகிய ஆசாரியர்கள் அதன்
இரத்தத்தைப் பலிபீடத்தின் மேல் சுற்றிலும்
தெளிக்க வேண்டும். 12 பிறகு அம்மிருகத்தை
ஆசாரியன் வெட்டித் துண்டாக்க வேண்டும்.
அவன் அந்தத் துண்டுகளை (தலை மற்றும்
கொழுப்பு) பலிபீடத்திலுள்ள நெருப்பின்
மேலுள்ள கட்டைகளின் மேல் வைக்க
வேண்டும். 13 அதன் கால்களையும், உட்
பாகத்தையும் ஆசாரியர்கள் தண்ணீரால்
கழுவ வேண்டும். பிறகு துண்டாக
வெட்டப்பட்ட மிருகத்தின் எல்லா பாகங்க
ளையும் பலிபீடத்தில் வைத்து எரிக்க
வேண்டும். இது நெருப்பால் செய்யப்படுகிற
தகனபலி. இதன் வாசனை கர்த்தருக்கு
விருப்பமானதாக இருக்கும்.
14 “எவராவது ஒரு பறவையைக்
கர்த்தருக்குப் பலியிட விரும்பினால்
புறாவையாவது, இளம் புறாக்குஞ்சையாவது
தேர்ந்தெடுக்க வேண்டும். 15 ஆசாரியன்
அதனைப் பலிபீடத்திற்கு கொண்டு வந்து,
அதன் தலையை கிள்ளி பலிபீடத்தில்
எரிக்க வேண்டும். அப்பறவையின் இரத்தம்
பலிபீடத்தின் பக்கத்தில் சிந்த வேண்டும்.
16 ஆசாரியன் அப்பறவையின் இரைப்பையை
யும், முடிகளையும் அகற்றி பலிபீடத்தின்
கிழக்குப் பக்கமாக எறிய வேண்டும்.
அங்கேதான் பலிபீடத்தின் சாம்பலைப்
போடுவார்கள். 17 ஆசாரியன் அதன்
சிறகுகளை இரண்டாகப் பிளந்துவிடாமல்
கவனமுடன் கிழிக்க வேண்டும். பிறகு
அப்பறவையைப் பலிபீடத்தில் கட்டை
களின்மேல் வைத்து எரிக்க வேண்டும்.
இது நெருப்பினால் செய்யப்படுகிற தகன
பலி. இதன் வாசனை கர்த்தருக்கு
விருப்பமானதாக இருக்கும்.

### தானியக் காணிக்கைகள்

2 “ஒருவன் தேவனாகிய கர்த்தருக்கு தானி
யத்தைக் காணிக்கையாகக் கொடுக்க
விரும்பினால், அவன் மிருதுவான மாவைப்
பயன்படுத்த வேண்டும். அந்த மாவில்
எண்ணெய் ஊற்றி அதன்மேல் சாம்பி
ராணியைப் போடவேண்டும். 2 பிறகு அதை
ஆரோனின் மகன்களாகிய ஆசாரியர்களிடம்

கொண்டு வரவேண்டும். எண்ணெயும்
தூபவர்க்கமும் கலந்த அந்த மிருதுவான
மாவில் இருந்து ஆசாரியன் கைப்பிடியளவு
எடுத்து, பலிபீடத்தில் வைத்து அதனை
எரிக்க வேண்டும். இது நெருப்பினால்
செய்யப்படுகிற காணிக்கை ஆகும். இதன்
வாசனை கர்த்தருக்குப் பிடித்தமானதாக
இருக்கும். 3 மிஞ்சின தானியமானது ஆரோ
னுக்கும், அவன் மகன்களுக்கும் சொந்த
மாகும். கர்த்தருக்காக செய்யப்படுகிற இந்த
தகன பலியானது மிகவும் பரிசுத்தமானது.

### வேகவைத்த தானியக் காணிக்கைகள்

4 “ஒருவன் அடுப்பில் வேகவைத்த தானி
யப்பொருட்களை காணிக்கை செலுத்த
விரும்பினால் அது புளிப்பில்லா அப்பமாக
இருக்கவேண்டும். அதுவும் மிருதுவான
மாவை எண்ணெயிலே பிசைந்து செய்யப்
பட்டிருக்க வேண்டும். அல்லது எண்ணெய்
பூசப்பட்ட புளிப்பில்லா அப்பங்களாக
இருக்க வேண்டும். 5 தட்டையான சட்டியில்
சமைத்துப் பக்குவம் செய்த பலகாரத்தை
நீ தானியக் காணிக்கையாகச் செலுத்த
விரும்பினால் அது எண்ணெயிலே பிசைந்த
புளிப்பில்லாத மிருதுவான மாவினால்
செய்யப்பட்டதாக இருக்க வேண்டும்.
6 அதைத் துண்டு துண்டாக உடைத்து
அதன் மேல் எண்ணெய் ஊற்ற வேண்டும்.
இது தானியக் காணிக்கை ஆகும். 7 நீ
பொரிக்கும் சட்டியில் பாகம் செய்யப்பட்ட
பலகாரத்தை தானியக் காணிக்கையாக
செலுத்த விரும்பினால் அது மிருதுவான
மாவிலே எண்ணெய் பிசைந்து செய்யப்
பட்டதாக இருக்கட்டும்.

8 “இத்தகைய தானியக் காணிக்கையை
நீ கர்த்தருக்குக் கொண்டு வரவேண்டும்.
அதனை ஆசாரியனிடம் கொடுத்தால் அவன்
அவற்றைப் பலிபீடத்தின்மேல் வைப்பான்.
9 பின்பு, ஆசாரியன் தானியக் காணிக்கை
யின் ஒரு பாகத்தை எடுத்து பலிபீடத்தில்
ஞாபகக் காணிக்கையாக எரிப்பான்.
இக்காணிக்கை நெருப்பில் இடப்பட
வேண்டும். இதன் வாசனை கர்த்தருக்கு
விருப்பமானதாக இருக்கும். 10 மீதியுள்ள
தானியக் காணிக்கை ஆரோனுக்கும் அவ
னது மகன்களுக்கும் உரியதாகும். கர்த்தருக்
காக செய்யப்படும் தகனங்களில் இது மிகவும்
பரிசுத்தமானதாகும்.

11 “புளித்த மாவினால் செய்யப்பட்ட எந்த
தானியப் பொருட்களையும், தேனால்
செய்யப்பட்ட எந்தப் பொருட்களையும்
கர்த்தருக்குக் காணிக்கையாக எரிக்கக்
கூடாது. 12 நீ முதல் அறுவடையிலிருந்து
புளிப்பில்லாத அப்பத்தையும் அல்லது
தேனையும் கர்த்தருக்குக் காணிக்கையாகக்
கொண்டு வரலாம். ஆனால் அதனைப்
பலிபீடத்தின்மேல் இனிய வாசனையாக
எரிக்க கூடாது. 13 நீ கொண்டு வருகிற
எல்லா தானியக் காணிக்கைப் பொருட்களி
லும் உப்பு சேர்ந்திருக்கட்டும். உன்
தேவனின் உடன்படிக்கையில் உப்பை உன்
தானியக் காணிக்கையில் குறையவிடாமல்
பார்த்துக்கொள். உன் எல்லாக் காணிக்கை
களோடும் நீ உப்பைக் கொண்டுவர
வேண்டும்.

### முதல் அறுவடையிலிருந்து தானியக் காணிக்கை

14 “நீ முதல் அறுவடையிலிருந்து
தானியங்களைக் கர்த்தருக்குக் காணிக்கை
யாகக் கொண்டு வரும்போது, புதிய
பச்சையான கதிர்களை நெருப்பால் வாட்டி
உதிர்த்து கொண்டு வரவேண்டும். இதுவே
உன் முதல் அறுவடையின் தானியக்
காணிக்கையாகும். 15 அதன்மேல் நீ எண்ணெ
யையும், சாம்பிராணியையும் போட
வேண்டும். இது தானியக் காணிக்கை.
16 ஆசாரியன் இதில் ஒரு பகுதியை எடுத்து
ஞாபகார்த்தக் காணிக்கையாகப் பலி
பீடத்தில் எரிக்க வேண்டும். இது
கர்த்தருக்காக செய்யப்படும் தகனபலி ஆகும்.

### சமாதானப் பலிகள்

3 “ஒருவன் சமாதானப் பலியைப் படைக்க
விரும்பினால் அந்த மிருகம் காளையா
கவோ, பசுவாகவோ இருக்கலாம்.
கர்த்தருக்கு முன்பாக படைக்கப்படுகிற
அம்மிருகம் எவ்விதமான குறையுமற்றதாக
இருக்க வேண்டும். 2 அவன் தன் பலியின்
தலைமேல் தன் கையை வைத்து ஆசரிப்புக்
கூடார வாசலில் அதனைக் கொல்ல
வேண்டும். அப்போது ஆரோனின் மகன்
களாகிய ஆசாரியர்கள் அதன் இரத்தத்தை
பலிபீடத்தைச் சுற்றிலும் தெளிக்கவேண்டும்.
3 சமாதானப் பலி கர்த்தருக்காக செய்யப்படும்
தகனபலியாகும். பிறகு ஆசாரியன் மிரு
கத்தின் உள்பாகங்களை மூடிய கொழுப்பை
யும், குடல்களிலுள்ள கொழுப்பு முழு
வதையும்காணிக்கையாக அளிக்கவேண்டும்.
4 அந்த மனிதன் இரண்டு சிறுநீரகங்களையும்
அவற்றின்மேல் சிறு குடல்களிலுள்ள
கொழுப்பையும், முதுகின் கீழ்த் தசையின்
மேலுள்ள கொழுப்பையும், கல்லீரல்
மேலுள்ள கொழுப்பையும் செலுத்த வேண்
டும். அவற்றை சிறுநீரகங்களோடு நீக்க
வேண்டும். 5 பிறகு அதனை ஆரோனின்
மகன்கள் பலிபீடத்தில் வைத்து எரிக்கும்படி
நெருப்பின் நடுவில் இருக்கும் தகனபலியின்
கட்டைகளின் மேல் இதை வைப்பார்கள்.
இது ஒருவகை தகன காணிக்கையாகும்.
இதன் வாசனை கர்த்தருக்கு விருப்பமான
தாகும்.

6 “ஒருவன் கர்த்தருக்கு சமாதானப்
பலியைப் படைக்க வேண்டுமென்று ஆட்டு
மந்தையிலிருந்து ஒரு ஆட்டைக் கொண்டு
வரலாம். அந்த ஆடு ஆணாகவோ பெண்ணா

கவோ இருக்கலாம். ஆனால் எவ்விதத்திலும்
குறை இல்லாததாக இருக்க வேண்டும்.
7அவன் பலியிடக்கூடிய ஆட்டுக்குட்டியுடன்
வந்தால், அதைக் கர்த்தருக்கு முன்னால்
கொண்டு வந்து, 8அவன் தன் மிருகத்தின்
தலைமேல் தன் கையை வைக்க வேண்டும்.
பிறகு ஆசரிப்புக் கூடாரத்தின் முன்னால்
அதனைக் கொல்ல வேண்டும். ஆரோனின்
மகன்கள் அதன் இரத்தத்தை பலிபீடத்தின்
மேலும் அதனைச் சுற்றிலும் தெளிக்க
வேண்டும். 9அவன் சமாதானப் பலியின்
ஒரு பாகத்தை எரிக்கப்பட்ட பலியாக
கர்த்தருக்கு அளிக்கவேண்டும். அவன்
மிருகத்தின் கொழுப்பையும் கொழுப்பான
வால் முழுவதையும், மிருகத்தின் உறுப்புக
ளின் உள்ளேயும் மேலும் படர்ந்துள்ள
கொழுப்பையும் கொடுக்கவேண்டும். (அவன்
அதனுடைய முதுகெலும்புக்கு அருகிலுள்ள
வாலை வெட்டவேண்டும்.) 10இரண்டு
சிறுநீரகங்களையும், கொழுப்புத் தசைகளை
யும், கல்லீரலைச் சுற்றியுள்ள கொழுப்பு
பகுதிகளையும் கொடுக்கவேண்டும். அவன்
சிறுநீரகத்தை அப்புறப்படுத்த வேண்டும்.
11பிறகு இவை அனைத்தையும் ஆசாரியன்
பலிபீடத்தில் வைத்து எரிக்க வேண்டும்.
இவ்வாறு கர்த்தருக்காகப் படைக்கிற
காணிக்கையே சமாதானப் பலியாகும்.
மேலும் இது ஜனங்களுக்கும் உணவாகிறது.

### சமாதானக் காணிக்கையாக ஒரு வெள்ளாடு

12“ஒருவன் சமாதானக் காணிக்கையாக
வெள்ளாட்டைச் செலுத்த விரும்புவானேயா
னால் அவன் அதனை கர்த்தருக்கு முன்னால்
கொண்டு வரவேண்டும். 13அதன் தலைமேல்
தன் கையை வைத்து ஆசரிப்புக் கூடாரத்
துக்கு முன்னால் கொல்ல வேண்டும். பிறகு
ஆரோனின் மகன் அதன் இரத்தத்தை
பலிபீடத்தின் மேலும் அதனைச் சுற்றிலும்
தெளிக்க வேண்டும். 14அவன் சமாதானக்
காணிக்கையாக ஒரு பகுதியை நெருப்பில்
எரித்து கர்த்தருக்குக் காணிக்கையாக்க
வேண்டும். குடல்களை மூடிய கொழுப்பை
யும், அவைகளின் மேலிருக்கிற கொழுப்பை
யும், 15இரண்டு சிறுநீரகங்களையும் அவற்
றின்மேல் உள்ள சிறு குடல்களில் உள்ள
கொழுப்பையும் சிறுநீரகங்களோடுகூடக்
கல்லீரலின் மேலுள்ள சதையையும் எடுத்து
கர்த்தருக்குத் தகனபலியாகக் கொடுக்க
வேண்டும். 16பிறகு ஆசாரியன் பலிபீடத்தின்
மேல் அவற்றை எரிக்கவேண்டும். சமா
தானப் பலி நறுமண வாசனையாக
கர்த்தருக்கு எரிக்கப்பட்டக் காணிக்கை
யாகும். இதன் வாசனை கர்த்தருக்கு
பிரியமானதாக இருக்கும். இது ஜனங்களுக்கு
உணவாகவும் இருக்கும். ஆனால் சிறப்பான
பாகம் முழுவதும் கர்த்தருக்குரியது.
17கொழுப்பையும், இரத்தத்தையும் நீங்கள்
உண்ணக்கூடாது. எங்கெங்குமுள்ள உங்கள்
பரம்பரை முழுவதற்கும் இக்கட்டளை
உரியது. நீங்கள் எங்கு வாழ நேர்ந்தாலும்
கொழுப்பையோ, இரத்தத்தையோ, உண்ணக்
கூடாது” என்றான்.

### அசம்பாவிதமாகச் செய்த பாவங்களுக்கான காணிக்கைகள்

4 கர்த்தர் மோசேயிடம், 2“நீ, இஸ்ரவேல்
ஜனங்களிடம் கூற வேண்டியதாவது:
செய்யக்கூடாது எனக் கர்த்தர் சொன்ன
காரியங்களைச் செய்ய நேர்ந்தாலும்,
அசம்பாவிதமாக பாவம் செய்ய நேர்ந்தா
லும், ஒருவன் கீழ்க்கண்டபடி செய்ய
வேண்டும்:
3“அபிஷேகம் பெற்ற ஆசாரியன்,
ஜனங்கள் குற்றத்திற்கு உட்படத்தக்கதாகப்
பாவம் செய்தால் அந்த ஆசாரியன் தன்
பாவத்துக்காகக் கர்த்தருக்குச் சில
காணிக்கைளைச் செலுத்த வேண்டும். அந்த
ஆசாரியன் குறையற்ற ஒரு இளங்கா
ளையைப் பாவப்பரிகாரப் பலியாகக்
கொண்டு வரவேண்டும். 4ஆசாரியன்
ஆசரிப்புக் கூடார வாசலுக்கு கர்த்தரின்
சந்நிதானத்திற்கு அந்தக் காளையைக்
கொண்டு வரவேண்டும். அவன் அதன்
தலையின் மேல் தன் கையை வைத்து
அதனைக் கொல்ல வேண்டும். 5பின் அந்த
அபிஷேகம் பெற்ற ஆசாரியன் காளையின்
இரத்தத்தை எடுத்து ஆசரிப்புக் கூடாரத்திற்
குள் கொண்டு வரவேண்டும். 6அவன் தன்
விரலால் அந்த இரத்தத்தைத் தொட்டு
மகாபரிசுத்த ஸ்தலத்தின் திரைக்கு எதிரே
கர்த்தரின் சந்நிதியில் ஏழுமுறை தெளிக்க
வேண்டும். 7பின் ஆசாரியன் இரத்தத்தில்
கொஞ்சம் எடுத்து நறுமண பலிபீடத்தின்
மூலைகளில் பூச வேண்டும். (இந்த
பலிபீடமானது ஆசரிப்புக் கூடாரத்திலே
கர்த்தருக்கு முன் இருக்கும்.) காளையின்
எல்லா இரத்தத்தையும் தகன பலிபீடத்தின்
அடியில் ஊற்ற வேண்டும். (இப்பலி
பீடமானது ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில்
இருக்கும்.) 8அதற்குப் பிறகு, பாவப்பரிகாரப்
பலியாகத் தரப்பட்ட காளையின் கொழுப்பு
அனைத்தையும் எடுக்கவேண்டும். காளை
யின் உட்பகுதிகளிலும் அதைச் சுற்றிலும்
உள்ள கொழுப்பு முழுவதையும் எடுத்து,
9அவன் அதன் இரண்டு சிறுநீரகங்களையும்
அவற்றையொட்டி கீழ்ப்புறத்திலும், மேல்
புறத்திலும் ஒட்டி இருக்கிற கொழுப்பையும்,
கல்லீரலில் இருக்கும் கொழுப்புப் பகுதிகளை
யும் சிறுநீரகங்களோடு சேர்த்து, 10சமாதானப்
பலியின்போது காளையிலிருந்து எடுப்பது
போன்று இப்பாகங்களை எடுத்து ஆசாரி
யன் பலிபீடத்தின் மேல் வைத்து எரிக்க
வேண்டும். 11-12ஆனால் ஆசாரியன் காளை
யின் தோலையும், அதன் குடல்களையும்,
கழிவுப் பொருட்களையும் தலையிலும்

கால்களிலும் உள்ள மாம்சத்தையும் தனியே
எடுக்க வேண்டும். அவற்றைக் கூடாரத்திற்கு
வெளியே கொண்டுபோய் சாம்பல் கொட்டு
கிற சிறப்புக்குரிய இடத்தில் குவிக்க
வேண்டும். பின்பு ஆசாரியன் இக்குவியலை
விறகுகளின் மேல் அடுக்கி எரிக்க
வேண்டும். சாம்பல் குவிக்கப்பட்டிருக்கும்
இடத்தில் காளை எரிக்கப்பட வேண்டும்.

13 “இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும்
அறியாமையால் பாவம் செய்து, கர்த்தர்
எவற்றைச் செய்யக்கூடாது என்று
சொன்னாரோ அவற்றை அவர்கள்
தெரியாமல் செய்து பாவத்திற்குரியவர்
களாகலாம். 14 அவர்கள் தங்கள் பாவங்களை
அறிந்துகொள்ளும் போது, அதற்காக ஒரு
இளங்காளையைப் பாவப்பரிகார பலியாக
தங்கள் முழு நாட்டிற்காகவும் அளிக்க
வேண்டும். அதனை அவர்கள் ஆசரிப்புக்
கூடாரத்தின் முன்பு கொண்டு வரவேண்டும்.
15 இஸ்ரவேலின் மூப்பர்கள் கர்த்தருக்கு
முன்பாக தங்கள் கைகளை அதன் தலையில்
வைக்க வேண்டும். பின்னர் அதனைக்
கர்த்தருடைய சந்நிதானத்தில் கொல்ல
வேண்டும். 16 பின்னர் அபிஷேகம் பெற்ற
ஆசாரியன் அக்காளையின் இரத்தத்தில்
கொஞ்சம் எடுத்து ஆசரிப்புக் கூடாரத்திற்
குள் கொண்டு வரவேண்டும். 17 ஆசாரியன்
தனது விரலை இரத்தத்தில் தொட்டு
கர்த்தருக்கு முன்னால் உள்ள திரையில்
ஏழுமுறை தெளிக்க வேண்டும். 18 பிறகு
ஆசாரியன் கொஞ்சம் இரத்தத்தை எடுத்து
பலிபீடத்தின் மூலைப்பகுதிகளில் பூச
வேண்டும். (இப்பலிபீடம் ஆசரிப்புக் கூடாரத்
திற்குள் கர்த்தருக்கு முன்னால் இருக்கும்.)
பின்பு ஆசாரியன் அக்காளையின் எல்லா
இரத்தத்தையும் தகனபலிபீடத்தின் அடியில்
ஊற்ற வேண்டும். (இது ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் இருக்கும்.) 19 பின்
அக்காளையிடம் உள்ள கொழுப்பு முழு
வதையும் எடுத்து பலிபீடத்தின்மேல் எரிக்க
வேண்டும். 20 பாவப்பரிகாரப் பலியைப்
போலவே ஆசாரியன் இதன் பாகங்களையும்
செய்து முடிக்க வேண்டும். இதன் மூலம்,
ஜனங்கள் அனைவரையும் சுத்திகரிக்க
முடியும். இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரை
யும் தேவன் மன்னிப்பார். 21 ஆசாரியன்
மற்ற காளையைக் கூடாரத்திற்கு வெளியே
கொண்டுசென்று முன்பு செய்ததுபோலவே
இதையும் எரித்து விடவேண்டும். இது முழு
சமுதாயத்திற்கான பாவப்பரிகாரப்
பலியாகும்.

22 “ஒரு ஆட்சியாளன் அசம்பாவிதமாக
தன் தேவனாகிய கர்த்தர் செய்யவேண்டாம்
என்று கூறியவற்றை மீறி செய்யத்தகாததைச்
செய்து பாவத்திற்குரியவனாயிருக்கலாம்.
23 அந்த ஆட்சியாளன் தனது பாவத்தைத்
தெரிந்துகொண்டதும் அவன் எவ்விதக்
குறைபாடும் இல்லாத ஆண் வெள்ளாட்டைக்
கொண்டு வரவேண்டும். அதுவே அவனது
காணிக்கை. 24 ஆட்சியாளன் தன் கையை
ஆட்டின் தலைமேல் வைத்து, அதனைக்
கர்த்தருக்கு முன்பு தகன பலியிடக்கூடிய
இடத்தில் கொல்ல வேண்டும். அந்த
வெள்ளாடுதான் பாவப்பரிகார பலியாகும்.
25 ஆசாரியன் கொஞ்சம் இரத்தத்தைத் தன்
விரலால் எடுத்து தகனபலிபீடத்தின்
மூலைப்பகுதிகளில் பூச வேண்டும். மிச்ச
முள்ள இரத்தத்தைத் தகனபலிபீடத்தின்
அடியில் ஊற்ற வேண்டும். 26 ஆசாரியன்
அந்த ஆட்டின் கொழுப்பு முழுவதையும்
பலிபீடத்தின் மேல் எரிக்க வேண்டும்.
சமாதானப் பலியில் செய்தது போன்றே
இதிலும் கொழுப்பை எரித்து விட
வேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம்
ஆசாரியன் ஆட்சியாளனைப் பரிசுத்தப்
படுத்தி விடலாம். தேவனும் அவனை
மன்னித்து விடுவார்.

27 “பொதுஜனங்களில் ஒருவன் அசம்பா
விதமாக பாவம் செய்துவிடலாம். இப்படி
அவன் கர்த்தர் சொன்னதை மீறி செய்யத்
தகாததைச் செய்து விடுகிறான். 28 அவன்
தான் செய்தது பாவம் என்பதைத் தெரிந்து
கொண்டவுடனே அவன் பழுதற்ற பெண்
ஆட்டைக் கொண்டுவர வேண்டும். அதுவே
அவனுடைய பாவப்பரிகாரப் பலி ஆகும்.
அவன் செய்த பாவத்திற்காக அவன் அதைக்
கொண்டுவர வேண்டும். 29 அவன் தன்
கையை அதன் தலைமீது வைத்து,
தகனபலிக்குரிய இடத்தில் அதனைக்
கொல்ல வேண்டும். 30 பிறகு ஆசாரியன் தன்
விரல்களில் அதன் இரத்தத்தை எடுத்து
தகனபலிபீடத்தின் கொம்புகளில் பூச
வேண்டும். பின் அவன் மிச்சமுள்ள
இரத்தத்தைப் பலிபீடத்தின்* அடியில் ஊற்ற
வேண்டும். 31 சமாதானப் பலியில் செய்தது
போன்று ஆட்டின் கொழுப்பு முழுவதையும்
பலிபீடத்தில் எரித்து விடவேண்டும்.
கர்த்தருக்கு இனிய நறுமணம் தரும்படி
ஆசாரியன் அதனைப் பலிபீடத்தில் எரிக்க
வேண்டும். இம்முறையில் ஆசாரியன்
அம்மனிதனைச் சுத்தப்படுத்தலாம்.* தேவன்
அவனை மன்னித்து விடுவார்.

32 “அவன் பாவப்பரிகாரப் பலியாக ஒரு
ஆட்டுக்குட்டியைக் கொண்டு வரு
வானாகில், அது பழுதற்ற பெண் குட்டியாக
இருக்க வேண்டும். 33 அதன் தலைமீது தன்
கையை வைத்து, தகனபலிகளை வழங்கும்
இடத்தில் அதனை பாவப்பரிகாரப் பலியாக

---

**பலிபீடம்** பலிகளை காணிக்கையாக செலுத்து வதற்காக உபயோகப்படுத்தப்படும் ஒரு மேஜை யையோ அல்லது உயர்த்தப்பட்ட இடத்தையோ குறிக்கும்.

**அம்மனிதனைச் சுத்தப்படுத்தலாம்** அல்லது “பாவப் பரிகாரம் செய்.” எபிரெய மொழியில் “மூடுதல்,” “மறைத்தல்,” “பாவத்தை நீக்குதல்” எனப் பொருளாகும்.

கொல்ல வேண்டும். 34ஆசாரியன் அதன்
இரத்தத்தைத் தன் விரலில் எடுத்து தகன
பலிபீடத்தின் மூலைகளில் தடவவேண்டும்.
பின் அதன் இரத்தத்தைப் பலிபீடத்தின்
அடியில் ஊற்ற வேண்டும். 35சமாதானப்
பலிகளில் செய்தது போலவே ஆட்டின்
கொழுப்பை தகனபலிபீடத்தின் மேல்
வைத்து எரிக்க வேண்டும். மற்ற பலி
முறைகளில் செய்தது போலவே பலி
பீடத்தில் வைத்ததை எரிக்க வேண்டும்.
இவ்வாறு ஆசாரியன் அவன் செய்த பாவத்
திலிருந்து சுத்தப் படுத்தலாம். தேவனும்
அவனை மன்னித்து விடுவார்.

### அசம்பாவிதமான பல்வேறு பாவங்கள்

5 “ஒருவன் ஒரு எச்சரிக்கையைக் கேட்
டாலோ அல்லது பிறரை எச்சரிக்க
வேண்டியவைகளைப் பார்த்தாலோ கேட்
டாலோ அதை மற்றவர்களுக்குச் சொல்ல
வேண்டும். தான் கண்டதையும் கேட்
டதையும் மற்றவர்களுக்குச் சொல்லா
விட்டால், பிறகு அவன் தவறு செய்ததற்
கான குற்ற உணர்வைப் பெறுவான்.
2ஒருவன் தூய்மையற்ற* ஒன்றைத்
தொட்டிருக்கலாம். அது காட்டுமிருகத்தின்
இறந்துபோன உடலாகக் கூட இருக்கலாம்.
அல்லது அது தரையில் ஊர்ந்து போகும்
அசுத்தமான நாட்டு மிருகத்தின் உடலாக
இருக்கலாம். அவற்றைத் தொட்டதற்கான
உணர்வு அவனிடம் இல்லாமல் இருக்கலாம்.
எனினும் அதனால் அவன் தீட்டுக்
குரியவனாய் இருக்கிறான். 3ஒருவன் பல
காரணங்களால் அசுத்தமானவற்றைத்
தொட்டதற்கான தீட்டைப் பெற்றிருக்கலாம்.
ஒரு மனிதன் மனிதத் தீட்டுக்களில் ஏதாகிலும்
ஒன்றை அவனை அறியாமல் மற்ற
மனிதனிடமிருந்து தொட்டிருக்கலாம். அவன்
அதனை அறிய வரும்போது, அவன்
குற்றமுடைவனாகிறான். 4ஒருவன் அவசர
மாக ஏதோ ஒரு காரணத்திற்காக வாக்குறுதி
கொடுக்கிறான். அது நன்மைக்குரியதாகவோ
தீமைக்குரியதாகவோ இருக்கலாம். ஜனங்கள்
பலவிதமான அவசர வாக்குறுதிகள் வழங்கு
கின்றனர். ஒருவன் இவ்வாறு செய்து
மறந்தும் போகலாம், அதைக் காப்பாற்றாம
லும் போகலாம். பிற்காலத்தில் தான்
கொடுத்த வாக்குறுதிகளை நினைத்துப்
பார்க்கும்போது குற்றவாளியாகிறான். ஏனெ
னில் அவ்வாக்குறுதிகளின்படி அவன்
செய்யவில்லை. 5ஒருவன் இப்படிப்பட்ட
ஏதாவது ஒன்றில் குற்றம் உள்ளவனாகும்
போது அவன் தான் செய்தது பாவம்
என்று ஒத்துக்கொள்ள வேண்டும். 6அவன்
தான் செய்த பாவத்துக்குக் குற்ற நிவாரண
பலியிட வேண்டும். அதற்காக அவன்
பெண் ஆட்டினை அல்லது பெண்
வெள்ளாட்டுக்குட்டியைக் கர்த்தருக்காகப்
பாவநிவாரண பலியாகக் கொண்டு வர
வேண்டும். பிறகு ஆசாரியன் அவனை
பரிசுத்தமாக்குவதற்கான சடங்குகளைச்
செய்து அவனது பாவத்தைப் போக்கி
சுத்தமாக்குவான்.

7“ஒருவேளை அவனால் ஆட்டுக்
குட்டியைக் கொண்டு வர வசதியில்லாமல்
போனால், அவன் கர்த்தருக்கு இரண்டு
காட்டுப்புறாக்களையாவது அல்லது இரண்டு
புறாக்குஞ்சுகளையாவது கொண்டு வர
வேண்டும். இவை அவன் பாவத்திற்கான
குற்ற நிவாரண பலியாகும். அவற்றில்
ஒன்றை பாவப்பரிகார பலியாகவும் மற்
றொன்றை தகன பலியாகவும் படைக்க
வேண்டும். 8அவன் அவற்றை ஆசாரியனிடம்
கொண்டு வரவேண்டும். ஆசாரியன்
பாவப்பரிகார பலிக்கானதை முதலில்
செலுத்துவான். அதன் தலையைக் கழுத்தி
லிருந்து கிள்ளுவான். அவன் அப்புறாவை
இரண்டு துண்டாக்கக் கூடாது. 9பாவப்
பரிகாரப் பலியின் இரத்தத்தில் ஆசாரியன்
கொஞ்சம் எடுத்து பலிபீடத்தின் பக்கத்திலே
தெளித்து, மீதி இரத்தத்தைப் பலிபீடத்தின்
அடியிலே ஊற்றிவிடுவான். இதுவே பாவப்
பரிகார பலி ஆகும். 10பின்பு இரண்டாவது
புறாவை தகன பலிக்குரிய விதிகளின்படி
காணிக்கையாகச் செலுத்த வேண்டும். இதன்
மூலம் ஆசாரியன் அந்த மனிதன் செய்த
பாவத்திலிருந்து அவனை விடுவித்து
சுத்தப்படுத்துகிறான். தேவனும் அவனை
மன்னித்து விடுவார்.

11“இரண்டு காட்டுப் புறாக்களையோ,
இரண்டு புறாக்குஞ்சுகளையோ அவனால்
கொண்டுவர வசதியில்லாமல் போனால்
அவன் 8 கிண்ணங்கள்* அளவு மிருதுவான
மாவை எடுத்துவர வேண்டும். இதுவே
பாவப்பரிகாரப் பலியாக இருப்பதால் அந்த
மாவின் மேல் எண்ணெய் எதையும்
ஊற்றவோ, அதன்மேல் எவ்விதமான
சாம்பிராணியையும் போடவோ கூடாது.
12அவன் அந்த மாவை ஆசாரியனிடத்தில்
கொண்டு வரவேண்டும். அதில் ஆசாரியன்
ஒரு கைப்பிடியளவு எடுக்க வேண்டும்.
அது ஞாபகப்பலியாக இருக்கும். மாவை
ஆசாரியன் பலிபீடத்தின் மேல் எரித்து
விடுவான். இது நெருப்பினால் கர்த்தருக்
கென்று கொடுக்கும் காணிக்கையாகும். இது
பாவப்பரிகாரப் பலியாகும். 13இவ்வாறு
ஆசாரியன் அம்மனிதனை சுத்தபடுத்துவான்.
அப்போது தேவன் அவனுக்கு மன்னிப்பார்.
மீதி மாவானது தானியக் காணிக்கையைப்
போல ஆசாரியனுக்குச் சேரும்” என்றார்.

14மேலும் கர்த்தர் மோசேயிடம்,

---

**தூய்மையற்ற** தூய்மையற்றது அல்லது தேவனால் ஆராதனைக்காக ஏற்றுக் கொள்ளப்படாதது.

8 **கிண்ணங்கள்** எழுத்தின் பிரகாரமாக ஒரு எப்பா அளவில் பத்தில் ஒரு பங்காகும்.

15“கர்த்தருக்குரிய பரிசுத்தமானவற்றில் ஒரு
வன் அசம்பாவிதமாக தவறு செய்து
விட்டால் அவன் ஒரு குறையற்ற
ஆட்டுக்குட்டியைக் கொண்டு வரவேண்டும்.
அது கர்த்தருக்கு அவன் கொடுக்கும் குற்ற
நிவாரண பலியாகும். அதிகாரப் பூர்வமான
அளவைப்* பயன்படுத்தி ஆட்டின்
விலையை நிர்ணயிக்க வேண்டும். 16அந்த
மனிதன் தான் செய்த பாவத்திற்குரிய
விலையைச் செலுத்த வேண்டும். வாக்கு
றுதியளித்த தொகையோடு, அதன் மதிப்பில்
ஐந்தில் ஒரு பகுதியையும் கூட்டி, மொத்தப்
பணத்தை ஆசாரியன் கையில் கொடுக்க
வேண்டும். இம்முறையில் குற்ற நிவாரண
பலியின் மூலம் அம்மனிதனை ஆசாரியன்
சுத்தமாக்குகிறான். தேவனும் அம்மனிதனை
மன்னிப்பார்.
17“செய்யக்கூடாது என்று கர்த்தர்
சொன்னவற்றில் ஏதாவது ஒன்றைச்
செய்தால் ஒருவன் பாவியாகிறான். அவன்
அறியாமல் செய்தாலும் அது பாவமே.
அவன் குற்றவாளியாகிறான். அவன் தன்
பாவத்தின் பொறுப்பை ஏற்றுக்கொள்ள
வேண்டும். 18அவன் ஆசாரியனிடம் ஒரு
ஆட்டுக்குட்டியைக் கொண்டு வரவேண்டும்.
எவ்வித குறைகளும் இல்லாததாக அந்த
ஆடு இருக்க வேண்டும். அந்த ஆட்டுக்குட்டி
குற்ற நிவாரண பலி ஆகும். இந்த முறையில்
ஆசாரியன் அவன் அறியாமல் செய்த
பாவத்திலிருந்து அவனை சுத்தமாக்குவான்,
தேவனும் அவனை மன்னித்து விடுவார்.
19ஒருவன் பாவம் செய்யும்போது அறியாமல்
செய்தாலும் அவன் குற்றவாளிதான்.
எனவே அவன் கர்த்தருக்கு குற்ற நிவாரணப்
பலியைச் செலுத்தியே ஆகவேண்டும்”
என்று கூறினார்.

### மற்ற பாவங்களுக்கான குற்ற பரிகார பலிகள்

6 கர்த்தர் மோசேயிடம், 2“கர்த்தர் சொன்ன
வற்றுக்கு எதிராக ஒருவன் இந்தப்
பாவங்களில் ஒன்றைச் செய்திருக்கலாம்.
ஒருவன் தான் பெற்ற தொகையைப்பற்றிப்
பொய் சொல்லலாம். ஒருவன் சிலவற்றைத்
திருடியிருக்கலாம். அல்லது ஒருவன் இன்
னொருவனை ஏமாற்றியிருக்கலாம்.
3அல்லது ஒருவன் காணாமல் போனதைக்
கண்டு பிடித்துவிட்டு பின் அதுபற்றி பொய்
சொல்லலாம்; அல்லது ஒருவன் ஒன்றைச்
செய்வதாகச் சத்தியம் செய்துவிட்டு
சத்தியத்தின்படி செய்யாமல் இருக்கலாம்.
அல்லது ஒருவன் வேறு விதமான தவறுகள்
செய்யலாம். 4ஒருவன் மேற்கூறியபடி
ஏதேனும் ஒன்றைச் செய்வானேயானால்
அவன் பாவியாகக் கருதப்படுகிறான். அவன்
எதைத் திருடியிருந்தாலும் திரும்பிக்
கொண்டுவந்து கொடுக்க வேண்டும்.
ஏமாற்றிப் பொருளை எடுத்திருந்தாலும்,
பாதுகாப்புக்காக இன்னொருவன் தன்னிடம்
கொடுத்து வைத்த பொருளை எடுத்திருந்
தாலும், எதையாவது கண்டுபிடித்து பொய்
சொல்லியிருந்தாலும் 5அல்லது சத்தியம்
செய்துவிட்டு அதை நிறைவேற்றாமல்
இருந்தாலும் சரிசெய்துகொள்ள வேண்டும்.
அவன் அதற்குரிய முழுமையான விலை
யைக் கொடுக்க வேண்டும். அதோடு
அவற்றில் மதிப்பில் ஐந்தில் ஒரு பாகத்தை
அதிகமாகக் கொடுக்க வேண்டும். அத்
தொகையை அதன் உண்மையான சொந்தக்
காரனுக்குக் கொடுக்க வேண்டும். அவன்
இவற்றையெல்லாம் கொண்டுவந்து தரும்
நாளிலேயே குற்ற நிவாரண பலியைச்
செலுத்த வேண்டும்.
6“அவன் தன் குற்ற பரிகாரப் பலியை
ஆசாரியனிடம் கொண்டு வரவேண்டும்.
அது மந்தையிலிருந்து தேர்ந்தெடுத்த ஆடா
யிருக்க வேண்டும். எல்லாவிதத்திலும்
குறையற்றதாக இருக்க வேண்டும்.
ஆசாரியன் சொல்லும் விலைக்கு ஏற்றதாக
அது இருக்க வேண்டும். அது கர்த்தருக்குச்
செலுத்த வேண்டிய குற்ற பரிகாரப்
பலியாகும். 7பிறகு ஆசாரியன் கர்த்தரிடம்
சென்று அம்மனிதன் சுத்தமாவதற்குரிய
வற்றைச் செய்வான். தேவனும் அவன்
செய்த அனைத்து பாவங்களிலிருந்தும்
அவனை மன்னித்துவிடுவார்” என்று
கூறினார்.

### தகன பலிகள்

8மேலும் கர்த்தர் மோசேயிடம், 9“இந்தக்
கட்டளையை ஆரோனுக்கும் அவனது
பிள்ளைகளுக்கும் சொல். இதுவே தகன
பலியைப் பற்றிய சட்டங்கள். தகன பலி
இரவு முழுவதும் விடியும்வரை பலி
பீடத்தின்* மேல் இருக்க வேண்டும்.
காணிக்கைக்குத் தேவையான நெருப்பானது
பலிபீடத்தின்மேல் எரிந்து கொண்டிருக்க
வேண்டும். 10ஆசாரியன் தனது மெல்லிய
அங்கியை உடுத்திக் கொண்டு, தனது
மெல்லிய உள்ளாடையை இடுப்பில் கட்டிக்
கொள்ள வேண்டும். பிறகு ஆசாரியன்
பலிபீடத்தின் மேல் மீதியாய் இருக்கும்,
தகனபலியை எரித்த சாம்பலை எடுத்து
அதனைப் பலிபீடத்தின் பக்கத்திலே கொட்ட
வேண்டும். 11பிறகு ஆசாரியன் தன்
ஆடைகளை மாற்றி வேறு ஆடையை
அணிந்துக்கொள்ள வேண்டும். பின்னர்
அவன் அந்தச் சாம்பலைக் கூடாரத்துக்கு
வெளியே ஒரு விசேஷ இடத்திற்குக்
கொண்டுபோக வேண்டும். 12பலிபீடத்தின்

---

**அதிகாரப் பூர்வமான அளவு** எழுத்தின் பிரகாரமாக, “பரிசுத்த சேக்கல்,” ஆலயம் அல்லது ஆசரிப்புக் கூடாரத்தில் உபயோகப்படுத்தப்படும் அதிகாரப் பூர்வமான அளவையாகும்.

**பலிபீடம்** பலியானது எரிக்கப்படுகின்ற இடம்.

நெருப்பானது தொடர்ந்து பலிபீடத்தின்மேல்
எரிய வேண்டும். அதனை அணைந்து
போகும்படி விடக்கூடாது. ஆசாரியன்
ஒவ்வொரு நாள் காலையிலும் விறகு
வைத்து நெருப்பை அதிகரிக்க வேண்டும்.
அவன் அந்த விறகை பலிபீடத்தில் வைக்க
வேண்டும். அவன் அதனோடு சமாதானப்
பலியின் கொழுப்பையும் போட்டு எரிக்க
வேண்டும். 13பலிபீடத்தின் மேல் நெருப்பா
னது எப்பொழுதும் அணையாமல் எரிய
வேண்டும். அது அணைந்து போகக்கூடாது.

## தானியக் காணிக்கைகள்

14“தானியக் காணிக்கைக்குரிய சட்டம்
இதுவே: ஆரோனின் மகன்கள் இதனைக்
கர்த்தருக்குப் பலிபீடத்தின் முன்னால்
கொண்டு வரவேண்டும். 15தானியக்
காணிக்கையிலிருந்து மிருதுவான மாவினை
ஒரு கையளவு ஆசாரியன் எடுக்க வேண்டும்.
எண்ணெயும், சாம்பிராணியும் அத்தானியக்
காணிக்கையின்மேல் இருக்க வேண்டும்.
பலிபீடத்தின்மேல் தானியக் காணிக்கையை
ஆசாரியன் எரிக்க வேண்டும். இது கர்த்த
ருக்காக ஞாபகக் காணிக்கையாக இருக்கும்.
அதன் வாசனை கர்த்தருக்குப் பிரியமான
தாக இருக்கும்.
16“ஆரோனும் அவனது மகன்களும்
மிச்சமுள்ள தானியக் காணிக்கையை
உண்ண வேண்டும். இத்தானியக் காணிக்கை
யானது புளிப்பில்லாத ஒருவகை அப்பம்.
ஆசாரியர்கள் இந்த அப்பத்தை ஒரு பரிசுத்த
இடத்தில் வைத்து உண்ண வேண்டும்.
அவர்கள் அதனை ஆசரிப்புக் கூடாரத்தைச்
சுற்றியுள்ள வெளிப்பிரகாரத்தில் வைத்து
உண்ண வேண்டும். 17தானியக்
காணிக்கையை புளித்த மாவுடன் சமைக்கக்
கூடாது. எனக்கு அளிக்கப்படும் தகன
காணிக்கையில் ஆசாரியர்களின் பங்காக
நான் அதனை அவர்களுக்குக்
கொடுத்திருக்கிறேன். இது பாவப்பரிகார
பலியை போலவும், குற்ற நிவாரண பலியை
போலவும் மிகவும் பரிசுத்தமானது. 18கர்த்த
ருக்கு இடப்படும் தகன காணிக்கையை
ஆரோனின் ஜனங்களில் ஒவ்வொரு ஆணும்
உண்ணலாம். உங்கள் தலைமுறை
கள்தோறும் இதனை எக்காலத்திற்கும் உரிய
விதியாக வைத்துக்கொள்ள வேண்டும்.
இக்காணிக்கைகளைத் தொடுகிற மனிதர்
பரிசுத்தமடைவர்” என்றார்.

## ஆசாரியர்களின் தானியக் காணிக்கை

19மேலும் கர்த்தர் மோசேயிடம், 20“ஆரோ
னும் அவனது மகன்களும் கர்த்தருக்குக்
கொண்டு வரக்கூடிய காணிக்கை யாதெனில்:
ஆரோன் தலைமை ஆசாரியனாக அபி
ஷேகம் பண்ணப்படும் நாளில் அவர்கள்
இதனைச் செய்ய வேண்டும். அவர்கள்
தானியக் காணிக்கையாக எட்டுக்
கிண்ணங்கள் அளவு மிருதுவான மாவை
எடுத்துவர வேண்டும். (இது தினந்தோறும்
செலுத்த வேண்டிய காணிக்கையின்போது
செலுத்தப்பட வேண்டும்.) அவர்கள் காலை
யில் பாதியும் மாலையில் பாதியும் கொண்டு
வரவேண்டும். 21அந்த மென்மையான
மாவானது எண்ணெயோடு கலக்கப்பட்டு
சட்டியில் வைக்கப்பட வேண்டும். அது
பாகம் பண்ணப்பட்ட பின், நீ அதனைக்
கொண்டு வரவேண்டும். அதனைப் பல
துண்டுகளாக வெட்ட வேண்டும். அதன்
வாசனை கர்த்தருக்கு மிகவும் பிரியமானது.
22“ஆரோனின் சந்ததியில் வந்து
ஆரோனின் இடத்துக்குத் தேர்ந்தெடுக்கப்
பட்ட ஆசாரியனே இந்த தானியக்
காணிக்கையைக் கர்த்தருக்குச் செலுத்த
வேண்டும். இந்த விதி எக்காலத்திற்கு
முரியது. தானியக் காணிக்கை கர்த்தருக்காக
முழுமையாக எரிக்கப்பட வேண்டும். 23ஆசா
ரியனுக்குரிய ஒவ்வொரு தானியக்
காணிக்கையும் முழுமையாக எரிக்கப்பட
வேண்டும், அதைச் சாப்பிடக் கூடாது”
என்று கூறினார்.

## பாவப் பரிகார பலிக்கான சட்டம்

24கர்த்தர் மோசேயிடம், 25“ஆரோனுக்கும்
அவனது ஜனங்களுக்கும் சொல், இதுதான்
பாவப்பரிகார பலிக்கான சட்டம். பாவப்
பரிகார பலியை கர்த்தருக்கு முன்பாகத்
தகனபலி கொல்லப்படும் இடத்திலேயே
கொல்லப்பட வேண்டும். இது மிகவும்
பரிசுத்தமானது. 26பாவப்பரிகார பலியைச்
செலுத்தும் ஆசாரியன் அதனை உண்ண
வேண்டும். ஆனால் அதனைப் பரிசுத்தமான
இடத்தில் உண்ண வேண்டும். அந்த இடம்
ஆசரிப்புக் கூடாரத்தைச் சுற்றியுள்ள வெளிப்
பிரகாரமாக இருக்க வேண்டும்.
27பாவப்பரிகார பலிக்குரிய இறைச்சியைத்
தொடுவதும்கூட ஒரு பொருளையோ ஒரு
நபரையோ பரிசுத்தமாக்கும்.
“அதன் இரத்தம் தெளிக்கப்படும்போது
ஒருவரது ஆடையில் பட்டால், அந்த
ஆடையைப் பரிசுத்தமான ஒரு இடத்தில்
துவைக்க வேண்டும். 28பாவப்பரிகார பலி
வேகவைக்கப்பட்ட பாத்திரம் மண்பாத்தி
ரமானால் அது உடைக்கப்பட வேண்டும்.
அது செம்புப்பானையில் வேகவைக்கப்
பட்டிருந்தால் அது நன்றாக தேய்க்கப்பட்டு
தண்ணீரில் கழுவப்பட வேண்டும்.
29“பாவப்பரிகார பலியை ஆசாரியக்
குடும்பத்தைச் சேர்ந்த எந்த ஆண்
வேண்டுமானாலும் உண்ணலாம். 30ஆனால்,
பாவப்பரிகார பலியின் இரத்தமானது
ஆசரிப்புக் கூடாரத்திற்குள் கொண்டு
வரப்பட்டு பரிசுத்தமான இடத்தில் பயன்
படுத்தப்பட்டு ஜனங்களை சுத்தப்படுத்திய
பிறகு இது எரிக்கப்பட வேண்டும். அந்த
பாவப்பரிகாரப் பலியை உண்ணக் கூடாது.

### குற்ற பரிகார பலிகள்

7 “குற்ற பரிகார பலியின் விதிகள்
கீழ்க்கண்டவாறு உள்ளன. இது மிக
பரிசுத்தமானது. 2 தகன பலி கொல்லப்படும்
இடத்திலேயே ஆசாரியன் குற்ற பரிகார
பலியையும் கொல்ல வேண்டும். அதன்
இரத்தத்தைப் பலிபீடத்தைச் சுற்றி ஆசாரியன்
தெளிக்க வேண்டும்.
3 “ஆசாரியன் குற்ற பரிகார பலியின்
கொழுப்பு முழுவதையும், செலுத்தவேண்டும்.
அவன் அதன் வாலையும் குடல்களை
மூடியிருக்கிற கொழுப்பையும் அளிக்க
வேண்டும். 4 ஆசாரியன் இரண்டு சிறுநீரகங்க
ளையும் அவற்றைச் சுற்றியுள்ள கொழுப்பை
யும் எடுத்து அளிக்க வேண்டும். மேலும்
கல்லீரலின் கொழுப்பு பகுதியையும்
சிறுநீரகங்களோடு எடுத்து செலுத்த
வேண்டும். 5 இவற்றைப் பலிபீடத்தின்மேல்
ஆசாரியன் எரிக்க வேண்டும். இது நெருப்பி
னால் கர்த்தருக்கென்று கொடுக்கும் காணிக்
கையாகும். இது குற்ற பரிகார பலியாகும்.
6 “இக்குற்ற பரிகார பலியை ஆசாரியனின்
குடும்பத்தில் உள்ள எந்த ஆண் மகனாயி
னும் உண்ணலாம். இது மிகவும் பரிசுத்தமா
னது. எனவே அது ஒரு பரிசுத்தமான
இடத்தில் உண்ணப்பட வேண்டும். 7 இக்குற்ற
பரிகார பலியானது பாவப்பரிகார பலியைப்
போன்றதாகும். இரண்டுக்கும் ஒரே விதமான
விதிமுறைகளே உள்ளன. எனவே பலியைக்
கொடுத்த ஆசாரியனே அப்பலியின்
இறைச்சியைப் பெறுவான். 8 ஒருவனது தகன
பலியைச் செலுத்திய ஆசாரியன் தான்
செலுத்திய பலியின் தோலைத் தனக்காக
வைத்துக் கொள்ளலாம். 9 எல்லா தானியக்
காணிக்கைகளும் அதை முன்னின்று
வழங்கும் ஆசாரியனுக்கே உரியதாகும்.
அடுப்பில் சமைக்கப்பட்டதாகவோ, அல்லது
சட்டியிலும், தட்டையான சட்டியிலும்
சமைக்கப்பட்டதாகவோ இருக்கும் காணிக்
கையானது ஆசாரியனுக்கே சேரும்.
10 ஆரோனின் மகன்களுக்கு தானியக்
காணிக்கைப் பொருள்கள் சேரும். அவை
உலர்ந்ததா அல்லது எண்ணெயில்
கலக்கப்பட்டதா என்பதைப் பொருட்படுத்தா
மல், ஆரோனின் மகன்கள் அதனைப்
பங்கிட்டுக்கொள்ள வேண்டும்.

### சமாதானப் பலிகள்

11 “கர்த்தருக்குச் செலுத்துகிற சமாதானப்
பலியின் சட்டங்கள் கீழ்க்கண்டவையாகும்:
12 தன் நன்றியைத் தெரிவிப்பதற்காக ஒருவன்
சமாதானப் பலியைக் கொண்டுவரலாம்.
அப்போது அவன் எண்ணெயிலே கலந்து
பிசைந்த புளிப்பில்லாத அப்பத்தையும்,
எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்லாத
அடைகளையும், எண்ணெயிலே பிசைந்து
வறுக்கப்பட்ட மிருதுவான மாவால் ஆன
அப்பங்களையும் படைக்க வேண்டும்.
13 ஒருவன் தேவனுக்குத் தன் நன்றியைத்
தெரிவிக்கிற முறையே சமாதானப்
பலியாகும். அந்தக் காணிக்கையோடு அவன்
புளித்த மாவினாலான அப்பங்களையும்
செலுத்த வேண்டும். 14 சமாதானப் பலியின்
இரத்தத்தைத் தெளிக்கும் ஆசாரியனுக்கு இந்த
அப்பங்களில் ஒன்று உரியதாகும்.
15 சமாதானப் பலியின் இறைச்சியை வழங்
கும் அதே நாளிலேயே உண்ண வேண்டும்.
தேவனுக்கு தன் நன்றியைச் செலுத்தும்
வகையில் ஒருவன் சமாதானப் பலியை
வழங்குகிறான். இறைச்சியில் சிறிதளவுகூட
அடுத்த நாள் மீந்திருக்கக் கூடாது.
16 “தேவனுக்கு அன்பளிப்பாகக் கொடுக்க
விரும்பும் ஒருவன் சமாதானப் பலியைக்
கொண்டு வரலாம், அல்லது விசேஷ
வாக்குறுதியை ஒருவன் தேவனுக்கு செய்தி
ருக்கலாம். இது உண்மையானால், பின்
அந்த பலியின் இறைச்சியை அவன்
செலுத்திய அன்றே சாப்பிட வேண்டும்.
அதில் மீதியாக இருந்தால் அதனை அடுத்த
நாளில் சாப்பிட வேண்டும். 17 ஆனால்
பலியின் இறைச்சியானது மூன்றாம் நாளும்
மிஞ்சுமானால், அதனை நெருப்பிலே சுட்டு
எரித்துவிட வேண்டும். 18 எவனாவது மூன்
றாம் நாளிலும் மிச்சமான சமாதானப்
பலியின் இறைச்சியை உண்ணுவானேயா
னால் அவனைப்பற்றி கர்த்தர் மகிழ்ச்சி
யடைய மாட்டார். கர்த்தர் அந்த பலியை
அவனுக்குரியதாக ஏற்றுக்கொள்ளமாட்டார்.
அந்த பலி அசுத்தமானதாகும். அத்தகைய
இறைச்சியை எவனாவது தின்றால் அதற்
குரிய பாவத்திற்கு அவனே பொறுப்பாளியா
வான்.
19 “அந்த இறைச்சியானது தீட்டான
எப்பொருளின் மீதாவது பட்டால் அதனை
யும் ஜனங்கள் உண்ணக் கூடாது. அதனை
நெருப்பில் எரித்துவிட வேண்டும். சமாதான
பலிக்குரிய இறைச்சியைச் சுத்தமுள்ள
எவனும் உண்ணலாம். 20 ஆனால் ஒருவன்
கர்த்தருக்கு அசுத்தமானவனாக இருந்தும்
சமாதான பலிக்குரிய இறைச்சியை உண்டு
விட்டால் அவன் அந்த ஜனங்களிடமிருந்து
ஒதுக்கப்பட வேண்டும்.
21 “ஒருவன் தீட்டான ஒன்றைத் தொட்டு
விடலாம். அது மனிதர்களாலோ, தீட்டான
மிருகங்களாலோ அல்லது தீட்டான
வெறுக்கத்தக்கப் பொருளாலோ தீட்டாகியி
ருக்கலாம். ஒருவன் அதனைத் தொட்டதால்
தீட்டாகி விடுகிறான். அவன் கர்த்தருக்கு
அசுத்தமானவனாக இருந்தும், சமாதானப்
பலிக்குரிய இறைச்சியை உண்டால், பிறகு
மற்ற ஜனங்களிடமிருந்து ஒதுக்கப்பட
வேண்டும்” என்று சொன்னார்.
22 மேலும் கர்த்தர் மோசேயிடம், 23 “இஸ்ர
வேல் ஜனங்களிடம் நீங்கள் பசு, வெள்ளாடு,
ஆடு ஆகியவற்றின் கொழுப்பை உண்ணக்

கூடாது என்று கூறுங்கள். [24]தானாக இறந்த
எந்த மிருகத்தின் கொழுப்பையும் நீங்கள்
பயன்படுத்தலாம் அல்லது மற்ற மிருகங்க
ளால் கொல்லப்பட்ட மிருகக் கொழுப்பை
யும் நீங்கள் பயன்படுத்தலாம். ஆனால்
அவற்றை ஒருபோதும் நீங்கள் உண்ணக்
கூடாது. [25]எவனாவது கர்த்தருக்கு
நெருப்பில் எரித்து அளித்த பலியின் இறைச்
சியை உண்பானேயானால் அவன் தன்
ஜனங்களிடமிருந்து ஒதுக்கப்பட வேண்டும்.
[26]"நீங்கள் எங்கே வாழ்ந்தாலும் அங்கே
எவரும் பறவைகளின் இரத்தத்தையோ
அல்லது மிருகங்களின் இரத்தத்தையோ
உண்ணக் கூடாது. [27]எவனாவது இரத்தத்தை
உண்டால் அவன் தன் ஜனங்களிடம் இருந்து
ஒதுக்கப்பட வேண்டும்" என்று கூறினார்.

### அசைவாட்டும் பலிக்கான விதிகள்

[28]மேலும் கர்த்தர் மோசேயிடம், [29]"இஸ்ர
வேல் ஜனங்களிடம் கூறுங்கள்: ஒருவன்
கர்த்தருக்கு சமாதானப் பலியைக் கொண்டு
வரும்போது அதன் ஒரு பகுதியை கர்த்த
ருக்கு வழங்க வேண்டும். [30]அப்பகுதி
நெருப்பில் எரிக்கப்பட வேண்டும். அவன்
தன் கைகளால் அந்த பலிகளை
எடுத்துக்கொண்டு வரவேண்டும். அவன்
ஆசாரியனிடம் அம்மிருகத்தின் மார்புக்
கண்டத்தையும், கொழுப்பையும் தர வேண்
டும். அந்த மார்புக் கண்டத்தைக் கர்த்தருக்கு
முன்னால் மேலே தூக்கிப்பிடிக்க வேண்டும்.
இதுவே அசைவாட்டும் பலியாகும். [31]பிறகு
ஆசாரியன் அந்தக் கொழுப்பை பலிபீடத்தில்
எரிக்க வேண்டும். ஆனால் மார்புக் கண்டம்
ஆரோனுக்கும் அவன் மகன்களுக்கும்
உரியதாகும். [32]நீங்கள் அம்மிருகத்தின் வலது
தொடையை சமாதானப் பலியிலிருந்து
எடுத்து ஆசாரியனிடம் கொடுக்க வேண்டும்.
[33]சமாதானப் பலியின் இரத்தத்தையும்
கொழுப்பையும் செலுத்துகிற ஆரோனின்
குமாரனாகிய ஆசாரியனுக்கு வலது முன்னந்
தொடை பங்காகச் சேரும். [34](கர்த்தராகிய)
நான் இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து
சமாதானப் பலிகளிலிருந்து வலது
தொடையையும், அசைவாட்டும் பலியின்
மார்க்கண்டத்தையும் எடுத்துக் கொள்வேன்.
நான் அவற்றை ஆரோனுக்கும் அவனது
மகன்களுக்கும் கொடுக்கிறேன். இஸ்ரவேலின்
ஜனங்கள் இந்த விதிக்கு என்றென்றும்
கீழ்ப்படிய வேண்டும்" என்று கூறினார்.
[35]எரிக்கப்பட்ட காணிக்கை மூலமாகக்
கிடைத்த இப்பாகங்கள் ஆரோனுக்கும்
அவனது மகன்களுக்கும் கொடுக்கப்படும்.
ஆரோனும் அவனது மகன்களும் கர்த்தருக்கு
ஊழியம் செய்யுமளவும் அவர்கள் தங்களுக்
குரிய பலிகளின் பங்கைப் பெறுவார்கள்.
[36]அவர்களை ஆசாரியர்களாகத் தேர்ந்தெடுத்த
காலத்திலேயே கர்த்தர் இஸ்ரவேல்
ஜனங்களிடம் ஆசாரியர்களுக்குரிய பங்கை
அவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று
கட்டளையிட்டிருக்கிறார். அந்த ஜனங்கள்
அப்பங்கை அவர்களுக்கு எப்பொழுதும்
கொடுக்க வேண்டும்.
[37]இவையே தகன பலிகளுக்கும், தானிய
பலிகளுக்கும், குற்றபரிகார பலிகளுக்கும்,
பாவப்பரிகார பலிகளுக்கும், சமாதானப்
பலிகளுக்கும், ஆசாரியர்களைத் தேர்ந்
தெடுப்பதற்கும் உரிய சட்டங்களாகும்.
[38]கர்த்தர் இச்சட்டங்களை மோசேக்கு சீனாய்
மலையில் கொடுத்தார். கர்த்தர் அச்
சட்டங்களை, இஸ்ரவேல் ஜனங்கள் தங்கள்
பலிகளை சீனாய் வனாந்தரத்துக்கே
கொண்டுவந்து செலுத்தும்படி கட்டளை
யிட்ட அந்த நாளிலேயே கொடுத்தார்.

### மோசே ஆசாரியர்களைத் தயார் செய்தல்

8 கர்த்தர் மோசேயிடம், [2]"உன்னோடு
ஆரோனையும் அவனது மகன்களையும்
அழைத்துக்கொள். ஆடைகளையும், அபி
ஷேக எண்ணெயையும் பாவப்பரிகார
பலிக்கான ஒரு காளையையும், இரண்டு
ஆட்டுக்கடாக்களையும், ஒரு கூடை புளிப்
பில்லாத அப்பங்களையும் எடுத்துக்கொள்.
[3]பிறகு ஜனங்கள் அனைவரையும் ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் கூட்டு" என்றார்.
[4]கர்த்தர் கட்டளையிட்டபடியே மோசே
செய்து முடித்தான். ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலில் ஜனங்கள் கூடிவந்தனர். [5]மோசே
ஜனங்களிடம், "இவைதான் நாம் செய்ய
வேண்டும் என்று கர்த்தர் கட்டளை
யிட்டவை" என்றான்.
[6]பிறகு மோசே ஆரோனையும் அவனது
மகன்களையும் அழைத்து வந்து அவர்களை
தண்ணீரால் கழுவினான். [7]பின் நெய்யப்
பட்ட உள்ளங்கியை ஆரோனுக்கு அணி
வித்து, இடுப்பைச் சுற்றிக் கச்சையையும்
கட்டினான். பிறகு அவன் மேல் அங்கியை
உடுத்தி, ஏபோத்தையும் அணிவித்தான்.
அதன்மேல் ஏபோத்தின் அழகான
கச்சையைக் கட்டினான். [8]பிறகு ஆரோனுக்கு
நியாயத்தீர்ப்பு மார்ப்பதக்கத்தையும், அதின்
பையில் ஊரீம் தும்மீம்* என்பவற்றையும்
வைத்தான். [9]மோசே ஆரோனின் தலையில்
தலைப்பாகையைக் கட்டி, அதன் முன்
பக்கத்தில் பொற்பட்டத்தைக் கட்டினான்.
அது பரிசுத்த கிரீடமாக விளங்கியது.
மோசே இவற்றையெல்லாம் கர்த்தர்
கட்டளையிட்டபடியே செய்து முடித்தான்.
[10]பிறகு மோசே அபிஷேக எண்ணெயை

---

**ஊரீம் தும்மீம்** தேவனுடைய சந்நிதியில் பிரச்சனைகளுக்கு தீர்வு காணும்படி ஆசாரியர்களால் பயன்படுத்தப்பட்டது. ஒருவேளை இவை சீட்டு போடுவதற்காக பயன்படுத்தப்பட்ட கற்களாகவும், குச்சிகளாகவும், எலும்பு துண்டுகளாகவும் இருந்திருக்கலாம்.

*எடுத்து பரிசுத்த கூடாரத்திற்குள்ளும்**
*கூடாரத்திற்குள் இருந்த எல்லாப் பொருட்கள்*
*மேலும் தெளித்தான். இவ்வாறு அனைத்தை*
*யும் மோசே பரிசுத்தமாக்கினான்.** **11***பிறகு*
*மோசே சிறிதளவு அபிஷேக எண்ணெயை*
*ஏழு முறை பலிபீடத்தின்மேல் தெளித்தான்.*
*அவன் பலிபீடத்தையும் அபிஷேக*
*எண்ணெயால் பரிசுத்தப்படுத்தினான். பின்*
*கிண்ணத்திலும் அதன் அடிப்பாகத்திலும்*
*அபிஷேக எண்ணெயைத் தெளித்தான்.*
*இவ்வாறு மோசே கருவிகளையும் பாத்திரங்*
*கள் அனைத்தையும் பரிசுத்தப்படுத்தினான்.*
**12***பிறகு மோசே அபிஷேக எண்ணெயில்*
*சிறிதளவு எடுத்து ஆரோனின் தலையில்*
*ஊற்றி அவனையும் பரிசுத்தமாக்கினான்.*
**13***பின்னர் மோசே ஆரோனின் மகன்களையும்*
*அழைத்து அவர்களுக்கும் நெய்யப்பட்ட*
*அங்கியை அணிவித்து, இடுப்புக்*
*கச்சையைக் கட்டினான். பின் அவர்களின்*
*தலையில் தலைப்பாகைகளை அணிவித்*
*தான். மோசே இவற்றையெல்லாம் கர்த்தர்*
*கட்டளையிட்டபடியே செய்து முடித்தான்.*

**14***பிறகு மோசே பாவப்பரிகார பலிக்கான*
*காளையைக் கொண்டு வந்தான். ஆரோனும்*
*அவனது மகன்களும் தங்கள் கைகளை*
*அப்பாவப்பரிகார பலியான காளையின்*
*தலைமீது வைத்தார்கள்.* **15***பின் மோசே*
*அக்காளையைக் கொன்று அதன் இரத்தத்தை*
*சேகரித்தான். அவன் தன் விரல்களில்*
*இரத்தத்தைத் தொட்டு பலிபீடத்தின்*
*மூலைகளில் பூசினான். இந்த முறையில்*
*மோசே பலிபீடத்தைப் பலியிடுவதற்குரிய*
*தாகத் தயார்படுத்தினான். பின் பலிபீடத்தின்*
*அடியில் அந்த இரத்தத்தை ஊற்றினான்.*
*அம்முறையில் அவன் ஜனங்களைப்*
*பரிசுத்தப்படுத்த பலிபீடத்தைத் தயார்*
*செய்தான்.* **16***காளையின் உட்பகுதியிலுள்ள*
*கொழுப்பையெல்லாம் வெளியே எடுத்தான்.*
*பின் குடல்களின் மேலிருந்து கொழுப்பை*
*யும், கல்லீரல்மேலிருந்து ஜவ்வையும்,*
*இரண்டு சிறுநீரகங்களையும், அவற்றின்*
*மேலுள்ள கொழுப்பையும் வெளியே*
*எடுத்து, அவற்றை பலிபீடத்தின்மேல் எரித்*
*தான்.* **17***ஆனால் மோசே அக்காளையின்*
*தோலையும் இறைச்சியையும் உடல் கழிவு*
*களையும் கூடாரத்திற்கு வெளியே கொண்டு*
*போய் அவைகளை எரித்தான். மோசே*
*தனக்குக் கர்த்தர் கட்டளையிட்டபடியே*
*இவை அனைத்தையும் செய்து முடித்தான்.*

**18***பிறகு மோசே தகன பலிக்கான ஆட்டுக்*
*கடாவைக் கொண்டு வந்தான். ஆரோனும்*
*அவனது மகன்களும் செம்மறி ஆட்டுக்*
*கடாவின் தலைமீது தங்கள் கைகளை*
*வைத்தனர்.* **19***பிறகு அதனை மோசே*
*கொன்று, அதன் இரத்தத்தைப் பலிபீடத்தைச்*
*சுற்றிலும் தெளித்தான்.* **20-21***பின்னர் அந்த*
*ஆட்டைப் பல துண்டுகளாக வெட்டினான்.*
*அதன் உள்பகுதிகளையும் கால்களையும்*
*தண்ணீரால் கழுவினான். பின்னர்*
*அனைத்தையும் பலிபீடத்தின்மீது குவித்து*
*வைத்து எரித்தான். இது கர்த்தருக்கு*
*செய்யப்படும் சர்வாங்க தகனபலியாகும்.*
*இதன் மணம் கர்த்தருக்கு மிகவும் பிரியமான*
*தாக இருக்கும். கர்த்தர் கட்டளையிட்ட*
*படியே மோசே அனைத்தையும் செய்து*
*முடித்தான்.*

**22***பிறகு மோசே இன்னொரு ஆட்டுக்*
*கடாவையும் கொண்டு வந்தான். இது*
*ஆரோனையும் அவனது மகன்களையும்*
*ஆசாரியர்களாக நியமிப்பதற்காகப் பயன்*
*படுத்தப்பட்டது. ஆரோனும் அவனது*
*மகன்களும் தங்கள் கைகளை செம்மறி*
*ஆட்டுக்கடாவின் தலையில் வைத்தனர்.*
**23***பிறகு மோசே அதனைக் கொன்றான்.*
*அவன் அதன் இரத்தத்தைத் தொட்டு*
*ஆரோனின் வலது காது முனையிலும்,*
*வலது கை பெருவிரலிலும், வலது கால்*
*பெருவிரலிலும் தேய்த்தான்.* **24***பிறகு மோசே*
*ஆரோனின் மகன்களை பலிபீடத்தின்*
*அருகிலே அழைத்தான். மோசே அவர்களது*
*வலது காதுகளின் முனையிலும், வலது*
*கை பெருவிரல்களிலும், வலது கால்*
*பெருவிரல்களிலும் அதன் இரத்தத்தைத்*
*தேய்த்தான். பின்னர் இரத்தத்தைப் பலி*
*பீடத்தைச் சுற்றிலும் தெளித்தான்.* **25***மோசே*
*கொழுப்பையும், வாலையும், உட்பகுதி*
*கொழுப்பையும், நுரையீரலை மூடியுள்ள*
*கொழுப்பையும், இரண்டு சிறுநீரகங்களை*
*யும், அதன் மேல் உள்ள கொழுப்பையும்,*
*வலது கால் தொடையையும் எடுத்தான்.*
**26***கர்த்தரின் முன்பாகத் தினமும்*
*வைக்கப்படும் புளிப்பில்லா அப்பக்கூடையி*
*லிருந்து ஒரு புளிப்பான அப்பத்தையும், ஒரு*
*எண்ணெய் கலந்த அப்பத்தையும், ஒரு*
*மெல்லிய புளிப்பில்லா அடையையும்*
*எடுத்தான். இவற்றை ஏற்கெனவே எடுத்த*
*கொழுப்பின் மேலும் ஆட்டுத் தொடையின்*
*மேலும் வைத்தான்.* **27***பின்பு இவை*
*எல்லாவற்றையும் எடுத்து ஆரோனின்*
*கைகளிலும், அவனது மகன்களின் கைகளி*
*லும் வைத்து அசைவாட்டும் பலியாகக்*
*கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டினான்.*
**28***பின்பு அவற்றை அவர்கள் கைகளிலிருந்து*
*எடுத்து, அவற்றைப் பலிபீடத்தின் மேலுள்ள*
*தகன பலிக்குரிய இடத்தில் போட்டு*
*எரித்தான். இது ஆரோனையும் அவனது*
*மகன்களையும் ஆசாரியர்களாக*
*நியமித்ததற்கான பலியாகும். இது*
*நெருப்பால் எரிக்கப்பட்ட காணிக்கையா*
*கும். இதன் மணம் கர்த்தருக்கு மிகவும்*

---

***பரிசுத்த கூடாரம்*** *அல்லது ஆசரிப்புக் கூடாரம். தேவன் ஜனங்களின் மத்தியில் வந்து வாழ்வதற்காக அமைக்கப்பட்ட இடம்.*

***பரிசுத்தம்*** *பிரித்து வைக்கப்பட்டது அல்லது விசேஷ நோக்கத்திற்காக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது.*

பிரியமானதாகும். [29]மோசே மார்க்கண்டத்தை
எடுத்து கர்த்தருக்கு முன்பாக அசைவாட்டும்
பலியாக அசைவாட்டினான். இது மோசே
ஆசாரியர்களை நியமித்ததற்காக அவனது
பங்காகும். மோசேக்குக் கர்த்தர் இட்ட
கட்டளையின்படியே இது இருந்தது.
[30]மோசே கொஞ்சம் அபிஷேக எண்ணெ
யையும்* பலிபீடத்தில் உள்ள இரத்தத்தையும்
எடுத்து, அவற்றை ஆரோனின் மேலும்
அவனது ஆடைகளின் மேலும் தெளித்தான்.
பிறகு அவற்றை ஆரோனின் மகன்கள்
மீதும் அவர்களின் ஆடைகள் மேலும்
தெளித்தான். இவ்வாறு அவன் ஆரோன்,
அவனது மகன்கள், அவர்களின் ஆடைகள்
அனைத்தையும் பரிசுத்தமாக்கினான்.
[31]பிறகு மோசே ஆரோனிடமும் அவனது
மகன்களிடமும், "எனது கட்டளைகள்
உங்களுக்கு நினைவிருக்கிறதா? 'ஆரோனும்
அவனது மகன்களும் இவற்றை உண்ண
வேண்டும்' என்று சொன்னேன். எனவே
அப்பக்கூடையையும் ஆசாரியர்களாக
நியமித்ததற்கான காணிக்கை இறைச்சியை
யும் எடுத்துக் கொள்ளுங்கள். ஆசரிப்புக்
கூடாரத்தின் நுழைவாசலிலேயே இறைச்
சியை வேகவையுங்கள். அந்த இடத்திலேயே
அப்பத்தையும் இறைச்சியையும் உண்ணுங்
கள். நான் சொன்னபடியே செய்யுங்கள்.
[32]அப்பத்திலும் இறைச்சியிலும் ஏதாவது
மிஞ்சினால் அவற்றை எரித்துவிடுங்கள்.
[33]ஆசாரியர்களைத் தேர்ந்தெடுப்பதற்கான
சடங்கு ஏழு நாட்கள் நடைபெறும். எனவே
ஏழு நாட்களும் ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலைவிட்டு விலகக்கூடாது. [34]இன்று
நடந்தவை அனைத்தும் கர்த்தரின்
கட்டளையின்படி நடந்தவை. உங்களை
பரிசுத்தப்படுத்துவதற்காகவே அவர் இவ்
வாறு கட்டளையிட்டுள்ளார். [35]ஏழு நாட்க
ளாக இரவும் பகலும் நீங்கள் ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலிலேயே இருக்க
வேண்டும். நீங்கள் கர்த்தரின் கட்டளைக்குக்
கீழ்ப்படியாவிட்டால் மரித்துப்போவீர்கள்.
கர்த்தர் எனக்கு இந்தக் கட்டளைகளைக்
கொடுத்திருக்கிறார்" என்றான்.
[36]ஆரோனும் அவனுடைய மகன்களும்
மோசேக்குக் கர்த்தர் கட்டளையிட்டபடியே
செய்து முடித்தனர்.

## தேவன் ஆசாரியர்களை ஏற்றுக்கொள்ளுதல்

9 எட்டாவது நாள் மோசே ஆரோனையும்
அவனது மகன்களையும், இஸ்ரவேல்
ஜனங்களின் மூப்பர்களையும் அழைத்தான்.
[2]மோசே ஆரோனிடம், "பழுதற்ற ஒரு காளை
யையும், ஆட்டுக்கடாவையும் எடுத்துக்
கொண்டு வா. பாவப்பரிகாரப் பலியாக
காளையும், தகன பலியாக ஆட்டுக்கடாவும்
இருக்கட்டும். கர்த்தருக்கு இந்த மிருகங்
களைப் பலியாக அளிக்கவேண்டும். [3]'நீ
இஸ்ரவேலரிடம் ஒரு வயதுள்ளதும், பழுது
இல்லாததுமான ஆட்டுக்கடாவைப் பாவப்
பரிகார பலியாகவும், தகனபலியாகக்
கன்றுகுட்டியையும் ஆட்டுக்குட்டியையும்
[4]சமாதானப் பலியாக ஒரு காளையையும்
வெள்ளாட்டுக் கடாவையும் கொண்டு
வரும்படி இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறு.
அந்த மிருகங்களையும், எண்ணெயிலே
பிசைந்த தானியக் காணிக்கையையும்
கர்த்தருக்குக் கொண்டு வாருங்கள்; ஏனென்
றால் இன்று உங்களுக்குக் கர்த்தர்
தரிசனமாவார்' என்று சொல்" என்றான்.
[5]எனவே, அனைத்து ஜனங்களும் மோசே
கட்டளையிட்டபடியே அவர்கள் பொருட்
களையும் எடுத்துக்கொண்டு ஆசரிப்புக்
கூடாரத்துக்கு வந்து, கர்த்தரின் சந்நி
தானத்தில் நின்றனர். [6]மோசே அவர்களிடம்,
"கர்த்தர் கட்டளையிட்டபடி நீங்கள்
இவற்றைச் செய்ய வேண்டும், பின்னர்
கர்த்தரின் மகிமை உங்களுக்குக் காணப்
படும்" என்றான்.
[7]பிறகு மோசே ஆரோனிடம், "கர்த்தர்
கட்டளையிட்டபடி செய்வதற்காக பலி
பீடத்தின் அருகில் போய் பாவப்பரிகார
பலியையும், தகன பலியையும் செலுத்து.
அது உன்னையும் ஜனங்களையும் தூய்மைப்
படுத்தும். ஜனங்களின் பலிப் பொருட்களை
எடுத்து அவர்களைச் சுத்தப்படுத்தும்
செயல்களைச் செய்" என்றான்.
[8]எனவே ஆரோன் பலிபீடத்தின் அருகில்
சென்று தனது பாவப்பரிகார பலிக்காக
காளையைப் பலியிட்டான். [9]பிறகு
ஆரோனின் மகன்கள் அதின் இரத்தத்தை
ஆரோனிடம் கொண்டுவந்தனர். ஆரோன்
அந்த இரத்தத்தில் தன் விரலை விட்டு
பலிபீடத்தின் மூலைகளில் தடவியதுடன்,
மீந்திருந்த இரத்தத்தைப் பலிபீடத்தின்
அடியில் ஊற்றினான். [10]பின் காளையின்
கொழுப்பு, சிறுநீரகங்கள், கல்லீரலில் உள்ள
ஜவ்வு ஆகியவற்றை எடுத்து, கர்த்தர்
மோசேக்குக் கட்டளையிட்டபடியே
அவற்றைப் பலிபீடத்தின்மேல் ஆரோன்
எரித்தான். [11]பிறகு அவன் அதன் இறைச்
சியையும் தோலையும் முகாமுக்கு வெளியே
எரித்தான்.
[12]அடுத்து, தகன பலிக்கான மிருகத்தைக்
கொன்று அதனைத் துண்டுகளாக வெட்டி
னான். ஆரோனின் மகன்கள் அவனிடம்
அதன் இரத்தத்தை எடுத்து வந்தனர்.
ஆரோன் அந்த இரத்தத்தைப் பலிபீடத்தைச்
சுற்றி தெளித்தான். [13]ஆரோனின் மகன்கள்
தகன பலிக்குரிய துண்டுகளையும், தலை
யையும் ஆரோனிடம் கொடுத்தனர். ஆரோன்

---

**அபிஷேக எண்ணெய்** ஒரு பொருளின் மீதோ அல்லது ஜனங்களின் மீதோ ஒலிவ எண்ணெயை ஊற்றி, அவர்கள் விசேஷ வேலைக்காகவோ அல்லது நோக்கத்திற்காகவோ நேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைக் காண்பிப்பது.

அவற்றை பலிபீடத்தின் மேல் எரித்தான்.
14ஆரோன் தகன பலிக்குரிய மிருகத்தின்
உட்பகுதிகளையும் கால்களையும் தண்ணீ
ரால் கழுவி அவற்றையும் பலிபீடத்தின்மேல்
எரித்தான்.
15பிறகு ஆரோன் ஜனங்களின் பலிகளை
கொண்டு வந்து, ஜனங்களுக்கான பாவப்பரி
கார பலிக்குரிய ஒரு வெள்ளாட்டைக்
கொன்றான். 16ஆரோன் தகன பலிக்
குரியதையும் கொண்டு வந்து கர்த்தர்
கட்டளையிட்டபடியே பலி செலுத்தினான்.
17ஆரோன் தானியக் காணிக்கையை
கொண்டுவந்து பலிபீடத்தின் மேல் வைத்
தான். அதில் ஒரு கையளவு எடுத்து
காலையில் செலுத்தும் பலியோடு பலி
பீடத்தின்மேல் வைத்தான்.
18காளையையும், ஆட்டுக் கடாவையும்
ஆரோன் கொன்றான். இது ஜனங்களுக்குரிய
சமாதானப் பலிகள் ஆகும். ஆரோனின்
மகன்கள் அவற்றின் இரத்தத்தை ஆரோனிடம்
கொண்டு வந்தனர். ஆரோன் அதனைப்
பலிபீடத்தைச் சுற்றிலும் தெளித் தான்.
19ஆரோனின் மகன்கள் அம்மிருகங்க ளின்
கொழுப்பு, வால் குடல்களை மூடிய ஜவ்வு,
சிறு நீரகங்கள், கல்லீரலின் மேலிருந்த
ஜவ்வு ஆகியவற்றைக் கொண்டு வந்தனர்.
20ஆரோனின் மகன்கள் இக் கொழுப்புப்
பாகங்களை மார்புக் கண்டங்க ளின் மீது
வைத்தனர். ஆரோன் அந்த கொழுப்புப்
பகுதிகளை பலிபீடத்தின் மீது வைத்து
எரித்தான். 21மோசே கட்டளை யிட்டபடியே
ஆரோன் மார்புக் கண்டங்க ளையும்
வலதுகால் தொடையையும் அசைவாட்டும்
பலியாகக் கர்த்தரின் சந்நிதானத்தில்
அசைவாட்டினான்.
22பிறகு ஆரோன் தனது கைகளை
ஜனங்களை நோக்கி உயர்த்தி ஆசீர்வாதம்
செய்தான். பாவப்பரிகார பலி, தகன பலி,
சமாதானப் பலி அனைத்தையும் ஆரோன்
செலுத்தி முடித்தபிறகு பலிபீடத்திலிருந்து
கீழே இறங்கி வந்தான்.
23மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக்
கூடாரத்திற்குள்ளே சென்றனர். பின் அவர்
கள் வெளியே வந்து ஜனங்களை ஆசீர்வதித்
தனர். பிறகு கர்த்தரின் மகிமையானது
அனைத்து ஜனங்களுக்கும் காணப்பட்டது.
24கர்த்தருடைய சந்நிதியிலிருந்து நெருப்பு
எழும்பி வந்து பலிபீடத்தின் மேல் இருந்த
தகனபலிப் பொருட்களையும் கொழுப்பை
யும் எரித்தது. ஜனங்கள் இதனைப்பார்த்து
ஆரவாரம் செய்தனர். தங்கள் முகங்களைத்
தரையை நோக்கி தாழ்த்தினர்.

### தேவன் நாதாபையும் அபியூவையும் அழித்தல்

10 பின் ஆரோனின் மகன்களாகிய
நாதாபும் அபியூவும் பாவம் செய்தனர்.
ஒவ்வொருவனும் ஒரு நறுமண கலசத்தை
எடுத்து, அதில் தேவன் அங்கீகரியாத
நெருப்பைப் பயன்படுத்தி அதில் நறுமணப்
பொருளைப் போட்டனர். மோசே கட்டளை
யிட்டுச் சொல்லியிருந்த நெருப்பை அவர்
கள் பயன்படுத்தவில்லை. 2எனவே
கர்த்தரின் சந்நிதியிலிருந்து நெருப்பு கிளம்பி
நாதாபையும் அபியூவையும் அழித்தது.
அவர்கள் கர்த்தரின் சந்நிதானத்திலேயே
மரித்துப் போனார்கள்.
3பிறகு மோசே ஆரோனிடம், "'என்
அருகிலே வருகிற ஆசாரியர்கள் என்னை
மதிக்க வேண்டும். நான் அவர்களுக்கும்
எல்லா ஜனங்களுக்கும் பரிசுத்தமாக விளங்க
வேண்டும்' என்று கர்த்தர் கூறுகிறார்"
என்றான். ஆகையால் ஆரோன் தன் மகன்
கள் மரணமடைந்ததை குறித்து எதுவும்
சொல்லவில்லை.
4ஆரோனின் சிறிய தந்தையான ஊசி
யேலுக்கு மிஷாயேல், எல்சாபான் என்று
இரண்டு மகன்கள் இருந்தார்கள். மோசே
அவர்களிடம், "பரிசுத்த இடத்தின் முற்
பகுதிக்குப் போய் உங்கள் சகோதரர்களின்
உடல்களை அங்கிருந்து எடுத்து முகாமுக்கு
வெளியே கொண்டு போங்கள்" என்றான்.
5மிஷாயேலும் எல்சாபானும் மோசே
சொன்னபடியே அவர்களின் உடல்களை
முகாமுக்கு வெளியே கொண்டு போனார்கள்.
நாதாப், அபியூவின் உடல்களில் ஆசாரியர்
களுக்குரிய சிறப்பான உடைகள் இன்னமும்
இருந்தன.
6பிறகு மோசே ஆரோனின் வேறு இரு
மகன்களான எலெயாசரிடமும், இத்தாமா
ரிடமும:, "உங்கள் சோகத்தை வெளியே
காண்பிக்கவோ, உங்கள் ஆடைகளை கிழிக்
கவோ, உங்கள் தலைமுடியை கலைக்கவோ
வேண்டாம். அப்பொழுது நீங்கள்
கொல்லப்பட மாட்டீர்கள். கர்த்தர் நம்
எல்லா ஜனங்கள் மீதும் கோபம்
கொள்ளமாட்டார். இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும் உங்கள் உறவினர், எனவே
அவர்கள் நாதாபும் அபியூவும் மரித்ததற்காக
அழட்டும். 7ஆனால் நீங்கள் இந்த ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலைவிட்டு கூட வெளியே
போகக்கூடாது. நீங்கள் இதைவிட்டுப்
போனால் மரித்துப்போவீர்கள். ஏனென்றால்
கர்த்தரின் அபிஷேக எண்ணெய் உங்கள்
மேல் உள்ளது" என்றான். ஆகவே ஆரோ
னும், எலெயாசரும், இத்தாமாரும், மோசேக்
குக் கீழ்ப்படிந்தனர்.
8பிறகு கர்த்தர் ஆரோனிடம், 9"நீங்கள்
ஆசரிப்புக் கூடாரத்திற்குள் நுழையும்போது
திராட்சைரசத்தையோ அல்லது மதுவையோ
அருந்திவிட்டு வரக்கூடாது. நீங்கள் அவற்
றைக் குடித்தால் மரித்துப்போவீர்கள். இந்தச்
சட்டமானது என்றென்றைக்கும் உங்கள்
தலைமுறைகளுக்கெல்லாம் தொடரும். 10நீங்
கள் பரிசுத்தமான பொருட்களுக்கும் பரிசுத்த
மற்ற பொருட்களுக்கும்; தீட்டுள்ள பொருட்

களுக்கும் தீட்டில்லாத பொருட்களுக்கும்
இடையில் தெளிவான வேறுபாட்டினை
உருவாக்க வேண்டும். 11 கர்த்தர் தம் சட்டங்
களை மோசேயிடம் கொடுத்தார். மோசே
அந்த சட்டங்களை ஜனங்களிடம் கொடுத்
தான். ஆரோனாகிய நீ ஜனங்களுக்கு அந்த
சட்டங்களைக் கற்பிக்க வேண்டும்” என்றார்.
12 ஆரோனின் மற்ற இரண்டு மகன்களான
எலெயாசரும், இத்தாமாரும் உயிரோடு
இருந்தனர். மோசே ஆரோனிடமும் அவனது
இரு மகன்களிடமும், “பலிக்காகக் கொண்டு
வந்த பலியில் இன்னும் கொஞ்சம் தானியக்
காணிக்கை மிஞ்சியுள்ளது. அதில் புளிப்பு
எதுவும் சேர்க்காமல் பலிபீடத்தின் அருகில்
இருந்து அதை உண்ண வேண்டும்,
ஏனென்றால், அக்காணிக்கையானது மிக
பரிசுத்தமானதாகும். 13 இது கர்த்தருக்காகச்
செலுத்தப்பட்ட தகன பலியாகும். நான்
உங்களுக்குக் கொடுத்த சட்டத்தின்படி இதன்
ஒரு பகுதி உனக்கும் உன் மகன்களுக்கும்
சொந்தமாகும். ஆனால் அவற்றைப் பரிசுத்த
மான ஒரு இடத்தில் வைத்து உண்ண
வேண்டும்.
14 “நீங்களும் உங்கள் மகன்களும் மகள்
களும் அசைவாட்டும் பலியில் உள்ள
மார்புக்கண்டத்தை உண்ண வேண்டும்.
நீங்கள் இதனைப் பரிசுத்தமான இடத்தில்
வைத்து உண்ண வேண்டும் என்ற
அவசியமில்லை, ஆனால் அவற்றைத்
தீட்டில்லாத இடத்தில் வைத்து உண்ண
வேண்டும். ஏனென்றால் இவை சமாதானப்
பலியில் இருந்து பெறப்பட்டவை.
இஸ்ரவேலின் ஜனங்கள் இதனைத்
தேவனுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துள்ள
னர். அந்த ஜனங்கள் அம்மிருகத்தின் ஒரு
பாகத்தை உண்பார்கள். ஆனால் அதன்
மார்புக்கண்டம் உங்களுக்கு உரியது. 15 ஜனங்
கள் தங்கள் மிருகங்களின் கொழுப்பைப்
பலியின் ஒரு பாகமாகக் கொண்டு வந்து
பலிபீடத்தின் மேல் எரிக்க வேண்டும்.
அவர்கள் சமாதானப் பலிக்குரிய
தொடையையும் அசைவாட்டும் பலிக்குரிய
மார்புக் கண்டத்தையும் கொண்டுவர
வேண்டும். அவை கர்த்தரின் சந்நிதானத்தில்
அசைவாட்டப்படும். பின் அவை உங்க
ளுக்கு உரிய பாகமாகக் கருதப்படும். கர்த்தர்
சொன்னபடி பலியின் இப்பங்கானது
என்றென்றைக்கும் உங்களுக்கும் உங்கள்
பிள்ளைகளுக்கும் உரியதாகும்” என்றான்.
16 மோசே பாவப்பரிகார பலிக்காகச்
செலுத்தப்பட்ட வெள்ளாட்டைத் தேடினான்.
ஆனால் அது ஏற்கெனவே எரிக்கப்பட்டிருந்
தது. அதனால் மோசேக்கு ஆரோனின்
மகன்கள் எலெயாசரிடமும், இத்தாமாரிடமும்
மிகுந்த கோபம் ஏற்பட்டது. 17 மோசே,
“நீங்கள் அந்த வெள்ளாட்டை பரிசுத்தமான
இடத்தில் வைத்து உண்டிருக்க வேண்டும்.
அது மிகவும் பரிசுத்தமானது. ஏன் அதனைக்
கர்த்தரின் சந்நிதானத்தில் வைத்து
உண்ணாமற் போனீர்கள்? கர்த்தர் அதனை
உங்களிடம், ஜனங்களின் குற்றங்களைப்
போக்கி அவர்களைத் பரிசுத்தப் படுத்துவதற்
காகவே கொடுத்துள்ளார். 18 அந்த வெள்
ளாட்டின் இரத்தமானது பரிசுத்தமான
இடத்திற்குள் கொண்டுவரப் படவில்லையே.
நான் கட்டளையிட்டபடி நீங்கள் அதனைப்
பரிசுத்த இடத்தில் வைத்து உண்டிருக்க
வேண்டும்!” என்றான்.
19 ஆனால் ஆரோன் மோசேயிடம், “இன்
றைக்கு அவர்கள் பாவப்பரிகார பலியையும்,
தகன பலியையும் கர்த்தருக்கு முன்னால்
கொண்டு வந்தார்கள். ஆனால் எனக்கு
இன்று என்ன ஏற்பட்டதென்று உங்களுக்குத்
தெரியும்! பாவப்பரிகார பலிக்குரிய
பாகத்தை நான் இன்று உண்டிருந்தால்
கர்த்தர் மகிழ்ச்சி அடைந்திருப்பார் என்று
எண்ணுகிறீரா?” என்றான்.
20 மோசே இவற்றைக் கேட்டதும் அமைதி
யாகி விட்டான்.

### இறைச்சி உண்பது பற்றிய விதிகள்

11 கர்த்தர் மோசேயிடமும், ஆரோனிட
மும், 2 “இஸ்ரவேல் ஜனங்களிடம்
நீங்கள் கூறவேண்டியதாவது: நீங்கள் உண்
ணத்தக்க மிருகங்கள் பின்வருவனவாகும்,
3 இரண்டாகப் பிளந்த குளம்புடைய மற்றும்
அசைபோடும் மிருகங்களின் இறைச்சியை
உண்ணலாம்.
4-6 “சில மிருகங்கள் அசைபோடும். ஆனால்
அவற்றுக்குப் பிளந்த குளம்புகள் இருக்காது.
அவற்றை நீங்கள் உண்ணக் கூடாது.
ஒட்டகம், குழிமுயல், முயல் ஆகிய மிருகங்கள்
அவ்வகையைச் சார்ந்தவை. அவை தீட்டு
உள்ளவை. 7 இன்னும் சில மிருகங்களுக்குக்
குளம்புகள் விரிந்திருக்கும். ஆனால் அசை
போடாது. அவற்றையும் நீங்கள் உண்ணக்
கூடாது. பன்றிகள் இத் தகையவை. எனவே
இவை தீட்டுள்ளவை. 8 அவற்றின்
இறைச்சியை உண்ணாதீர்கள்! அவற்றின்
பிணத்தையும் தொடாதீர்கள்! அவை
உங்களுக்குத் தீட்டுள்ளவை!

### கடல் உணவைப் பற்றிய விதிகள்

9 “சில மிருகங்கள் கடல் தண்ணீரிலோ,
ஆற்று தண்ணீரிலோ வாழ்ந்து அவற்றுக்குச்
செதில்களும், சிறகுகளும் இருந்தால்
அவற்றை நீங்கள் உண்ணலாம். 10-11 ஆனால்
சில மிருகங்கள் கடல் தண்ணீரிலோ, ஆற்று
தண்ணீரிலோ வாழ்ந்தும் அவற்றுக்குச்
செதில்களும் சிறகுகளும் இல்லாவிட்டால்
அவற்றை உண்ணக் கூடாது. கர்த்தர்
இத்தகைய மிருகங்கள் உண்பதற்குத் தகுந்த
வையல்ல என்கிறார். இவற்றின் இறைச்
சியை உண்ணாதீர்கள். இவற்றின் பிணத்
தைத் தொடவும் கூடாது. 12 எனவே தண்
ணீரில் வாழ்ந்தும் செதில்களும், சிறகுகளும்

இல்லாத மிருகங்களை தேவன் சொன்னபடி
உண்ணத்தகாதவை என்று கருதுங்கள்.

### உண்ணத் தகாத பறவைகள்

13“தேவன் உண்ணத்தகாத மிருகங்களைப்
பற்றி சொன்னது போலவே உண்ணத்தகாத
பறவைகளைப் பற்றியும் கூறியிருக்கிறார்.
அதாவது கழுகு, கருடன், கடலுராஞ்சி,
14பருந்து, வல்லூறு வகைகள், 15காக வகை
கள், 16நெருப்புக் கோழி, கூகை, செம்புகம்,
டேகை, 17ஆந்தைகள், நீர்க்காகம், கோட்
டான், 18நாரை, கூழக்கடா, குருகு, 19கொக்கு,
ராஜாளி வகைகள், புழுக்கொத்தி, வௌவால்
ஆகியவற்றை நீங்கள் உண்ணக்கூடாது.

### உண்ணத்தக்க பூச்சிகள் பற்றிய விதிகள்

20“சிறகும் கால்களும் கொண்டு ஊர்ந்து
செல்லும் பூச்சிகளை உண்ணக்கூடாது
என்று தேவன் கட்டளையிட்டிருக்கிறார்.
21ஆனால் நீங்கள் தரையிலே தாவுவதற்கேற்ற
வகையில் கால்களுக்கு மேல் தொடை
களைக் கொண்டவற்றை உண்ணலாம்.
22வெட்டுக்கிளி வகைகளையும், சோலையாம்
என்னும் கிளி வகைகளையும் அர்கொல்,
ஆகாபு என்னும் கிளி வகைகளையும் நீங்கள்
உண்ணலாம்.
23“ஆனால் சிறகுகளும் கால்களும்
கொண்டு ஊர்ந்து செல்லும் பூச்சிகளை,
கர்த்தர் உண்ணக் கூடாது என்றார்.
24அப்பூச்சிகள் உங்களைத் தீட்டுக்குள்ளாக்
கும். எவராவது இத்தகையவற்றின் பிணத்
தைத் தொட்டாலும் மாலைவரை தீட்டுள்ள
வர்களாவர். 25எவராவது இத்தகையவற்றின்
பிணத்தைத் தொட்டு எடுத்தால் அவர்கள்
தங்கள் ஆடைகளை துவைக்க வேண்டும்.
அவர்கள் மாலைவரை தீட்டாக இருப்பார்
கள்.

### மிருகங்களைப் பற்றி மேலும் சில விதிகள்

26-27“சில மிருகங்களுக்குப் பிளந்த
குளம்புகள் இருக்கும். ஆனால் அவை
சரியாக இரண்டாகப் பிளந்திருக்காது. சில
மிருகங்கள் அசைபோடாது. சில மிருகங்கள்
குளம்புகளால் நடக்காமல் உள்ளங்கால்க
ளால் நடக்கும். இவை அனைத்தும்
தீட்டுள்ளவை. அவற்றைத் தொடுகிற எவரும்
மாலைவரை தீட்டுள்ளவர்களாக இருப்பார்
கள். 28எவராவது இவற்றின் சடலத்தை
எடுத்தால் அவர்கள் தம் ஆடைகளைத்
துவைக்க வேண்டும். அவர்களும் மாலை
வரை தீட்டு உள்ளவர்களாக இருப்பார்கள்.
அம்மிருகங்கள் உங்களுக்கு தீட்டானவை.

### ஊர்ந்து செல்லும் பிராணிகள் பற்றிய விதிகள்

29“பெருச்சாளி, எலி, பெரிய பல்லி
வகைகள், 30உடும்பு, அழுங்கு, ஓணான்,
பல்லி, பச்சோந்தி 31ஆகிய ஊர்ந்து செல்லும்
பிராணிகள் அனைத்தும் உங்களுக்குத்
தீட்டானவை. இவற்றின் செத்த உடலைத்
தொடுகிற எவரும் மாலைவரை
தீட்டுள்ளவர்களாக இருப்பார்கள்.

### தீட்டான மிருகங்களைப் பற்றிய விதிகள்

32“மேற்சொன்ன தீட்டான மிருகங்கள்
செத்து எதன் மேலாவது விழுந்தாலும்
அது தீட்டாகும். அவை மரப்பொருள், ஆடை,
தோல், துக்க நேரத்திற்குறிய ஆடை,
வேலைக்குரிய கருவி என எதுவாக
வேண்டுமானாலும் இருக்கலாம். எதுவானா
லும் உடனடியாக அதை தண்ணீரால்
கழுவவேண்டும். அது மாலைவரை தீட்டாக
இருக்கும். அதன் பிறகே அவை தீட்டு கழிந்து
சுத்தமாகும். 33அவற்றில் ஒன்று
மண்பாத்திரத்தில் விழுந்தால், பாத்திரமும்
அதில் உள்ள பொருளும் தீட்டாகிவிடும்.
எனவே அதனை உடைத்துப் போட
வேண்டும். 34தீட்டான மண்பாத்திரத்தில்
இருந்து தண்ணீர் விழுந்து உணவுப்
பொருள்கள் மேல் படுமேயானால்,
அவ்வுணவும் தீட்டாகிவிடும். 35மரித்து
தீட்டாகிப்போன மிருகத்தின் உடலானது
எதன் மேலாவது விழுமானால், அதுவும்
தீட்டாகிப்போகும். அது களிமண்ணாலான
அடுப்பாகவோ, அல்லது மண்தொட்டி
யாகவோ இருக்கலாம், அவற்றை
உடைத்துப்போட வேண்டும். அவை
உங்களுக்குத் தீட்டாய் இருக்கட்டும்.
36“நீரூற்றும், தண்ணீருள்ள கிணறும்
சுத்தமாக இருக்கும். ஆனால் எவராவது
தீட்டான மிருகத்தின் செத்த உடலைத்
தொட்டால் அவர்களும் தீட்டாகிவிடு
வார்கள். 37தீட்டான மிருகங்களின் செத்த
உடலானது விதைகளின் மேல் விழுந்தால்
அவை தீட்டாகாது. 38ஆனால் தீட்டான
மிருகங்களின் செத்த உடலின் பாகங்கள்
தண்ணீர்பட்ட விதையின்மேல் பட்டால் அது
உங்களுக்குத் தீட்டாயிருக்கும்.
39“உங்களது உணவுக்கான ஒரு மிருகம்
செத்தால், அதன் உடலைத் தொடுகிறவன்
மாலைவரை தீட்டாக இருப்பான். 40அதன்
இறைச்சியைத் தின்றவன் தன் ஆடைகளைத்
துவைக்க வேண்டும். அவன் மாலைவரை
தீட்டுள்ளவனாக இருப்பான். அம்மிருகங்க
ளின் செத்த உடலைத் தூக்குகிறவன் தன்
ஆடைகளைத் துவைக்க வேண்டும். இவனும்
மாலைவரை தீட்டுள்ளவனாக இருப்பான்.
41“தரையில் ஊர்ந்து செல்லுகிற
மிருகங்களைக் கர்த்தர் உண்ணத்தகாதவை
என்று கூறியுள்ளார். நீங்கள் அவற்றை
உண்ணக்கூடாது. 42தரையில் ஊர்ந்து
செல்லும் சகல மிருகங்களிலும் வயிற்றி
னால் நகர்ந்து செல்லுகின்றவற்றையும் நாலு
கால்களால் நடமாடுகின்றவற்றையும் பற்பல
கால்கள் உள்ளவற்றையும் உண்ண

வேண்டாம். அவை தீட்டுள்ளவை. [43]அவை
உங்களைத் தீட்டுப் பண்ணாமல் பார்த்துக்
கொள்ளுங்கள். [44]ஏனென்றால் நான்
தேவனாகிய கர்த்தர். நான் பரிசுத்தமானவர்
நீங்களும் உங்களைப் பரிசுத்தமானவர்களாக
வைத்துக் கொள்ளுங்கள். ஊர்வனவற்றால்
உங்களைத் தீட்டாக்கிக் கொள்ளாதீர்கள்.
[45]நான் உங்களை எகிப்திலிருந்து அழைத்து
வந்தேன். நான் இதைச் செய்ததால் நீங்கள்
சிறப்பான ஜனங்களாக விளங்குகிறீர்கள்.
உங்களது தேவனாகிய நான் பரிசுத்த
மானவராக இருக்கிறேன். நீங்களும் பரிசுத்த
முள்ளவர்களாக இருங்கள்" என்றார்.

[46]இவை அனைத்தும் மிருகம், பறவை
ஊர்வன பற்றிய விதிகள் ஆகும். இவை
அனைத்தும் கடலிலும், தரையிலும் உள்ள
மிருகங்களைப் பற்றியவை. [47]இதன் மூலம்
ஜனங்கள் தீட்டுள்ள மிருகங்களுக்கும்
தீட்டில்லாத மிருகங்களுக்கும் உள்ள வேறு
பாட்டைக் கண்டு கொள்ளலாம். அதோடு
உண்ணத்தக்க மிருகம் எது, உண்ணத்தகாத
மிருகம் எது என்றும் அறிந்து கொள்ளலாம்.

### புதிய தாய்மார்களுக்கு விதிகள்

12 மேலும் கர்த்தர் மோசேயிடம், [2]"இஸ்ர
வேல் ஜனங்களிடம் நீ கூற
வேண்டியதாவது: ஒரு பெண், ஆண்
குழந்தை ஒன்றைப் பெற்றிருந்தால், அவள்
ஏழு நாட்களுக்குத் தீட்டுள்ளவளாக
இருப்பாள். இது மாதவிலக்காக இருக்கும்
நாட்களைப் போல் இருக்கும். [3]எட்டாவது
நாள் அந்த ஆண் குழந்தை விருத்தசேதனம்
பண்ணப்பட வேண்டும். [4]பிறகு அவள்
முப்பத்துமூன்று நாட்கள் இரத்த சுத்திகரிப்பு
நிலையில் இருக்க வேண்டும். அந்நாட்களில்
அவள் பரிசுத்தமான எந்தப் பொருட்க
ளையும் தொடவோ, பரிசுத்தமான எந்த
இடத்திற்குள்ளும் நுழையவோ கூடாது.
[5]அவள் ஒரு பெண் குழந்தையைப்
பெற்றெடுத்தால் அவள் இரு வாரங்களுக்குத்
தீட்டாக இருப்பாள். அந்நாட்கள் அவளுக்கு
மாதவிலக்கான நாட்களைப் போன்றே
கருதப்படும். இரத்த சுத்திகரிப்புக்கு அவ
ளுக்கு அறுபத்தாறு நாட்கள் தேவைப்படும்.

[6]"ஒரு பெண், ஆண் அல்லது பெண்
பிள்ளையைப் பெற்றதற்காக அவளுடைய
சுத்தரிகரிப்பின் நாட்கள் முடிந்தபின்
ஆசரிப்புக் கூடாரத்திற்குச் சிறப்பான
பலிகளைக் கொண்டு வரவேண்டும். அவள்
ஆசாரியனிடம் ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலில் பலிகளை வழங்க வேண்டும்.
அவள் ஓராண்டு நிறைந்த ஆட்டுக் குட்டியை
தகன பலிக்காகவும், ஒரு புறாக்குஞ்சு
அல்லது காட்டுப்புறாவைப் பாவப்பரிகார
பலிக்காகவும் கொண்டு வரவேண்டும். [7-8]ஒரு
பெண்ணுக்கு ஆட்டுக் குட்டியைக் கொடுக்க
முடியாவிட்டால் அவள் இரண்டு
புறாக்களையாவது அல்லது இரண்டு புறாக்
குஞ்சுகளையாவது கொண்டு வரலாம்.
இவற்றில் ஒரு புறா தகன பலிக்காகவும்
இன்னொரு புறா பாவப்பரிகார பலிக்காக
வும் பயன்படும். ஆசாரியன் இவற்றைக்
கர்த்தரின் சந்நிதானத்தில் பலியிட வேண்
டும். இதன் மூலம் ஆசாரியன் அவளுக்காக
பாவ நிவாரணம் செய்ய வேண்டும். அவள்
அப்படியே சுத்தமாவாள். இவையே ஆண்
அல்லது பெண் குழந்தைப்பெற்ற ஒரு புதிய
தாய்க்குரிய விதிகள் ஆகும்" என்று
கூறினார்.

### தோல் வியாதியைப் பற்றிய விதிகள்

13 கர்த்தர் மோசேயிடமும் ஆரோனிட
மும், [2]"ஒரு மனிதனின் தோல்மீது
வீக்கமோ அல்லது தடிப்போ, அல்லது
வெள்ளைப் புள்ளியோ காணப்படலாம்.
அவை தொழுநோயின் அறிகுறியாய்
இருந்தால் அவனை ஆசாரியனான ஆரோன்
அல்லது அவனது மகன்கள் முன்னால்
அழைத்துவர வேண்டும். [3]ஆசாரியன் அவ
னது தோலில் ஏற்பட்ட நோயைக்
கவனித்துப் பார்க்க வேண்டும். நோயுள்ள
இடத்தின் முடிகள் வெளுத்திருந்தாலும்
நோயுள்ள இடம் மற்ற தோலைவிட
பள்ளமாக இருந்தால் அந்நோய் தொழு
நோயாக இருக்கும். எனவே ஆசாரியன்
அவனைத் தீட்டுள்ளவன் என்று அறிவிக்க
வேண்டும்.

[4]"சில நேரங்களில் நோயாளியின் உடம்
பில் வெள்ளைப் புள்ளிகள் ஏற்படலாம்.
ஆனால் அவை தோலின் பரப்பைவிட
ஆழமாக இல்லாமல் இருக்கலாம். அப்பகுதி
யிலுள்ள முடி வெள்ளை ஆகாமல்
இருக்கலாம். அப்போது, ஆசாரியன்
அந்நோயாளியைத் தனியாக ஏழு நாட்கள்
ஒதுக்கி வைத்திருக்க வேண்டும். [5]ஏழாவது
நாளில் ஆசாரியன் நோயாளியைக்
கவனித்துப் பார்க்க வேண் டும். அப்போது
புண் மாறியிருக்கா விட்டாலோ, தோலில்
மேலும் பரவி இருக்காவிட்டாலோ மேலும்
ஏழு நாட்களுக்கு அந்நோயாளியைத் தனியே
வைத்திருக்க வேண்டும். [6]அந்த ஏழு
நாட்களும் முடிந்தபிறகு ஆசாரியன் அந்த
நோயாளியை மீண்டும் பார்க்கவேண்டும்.
அப்போது புண்கள் ஆறி இருந்தாலோ, மற்ற
பகுதிகளில் பரவாமல் இருந்தாலோ
ஆசாரியன் அவன் குணமாகி விட்டதை
அறிவிக்க வேண்டும். அந்தப் புண் வெறும்
வடு மட்டுமே. அவன் தன் ஆடைகளைத்
தோய்த்து மீண்டும் சுத்தமாக இருக்க
வேண்டும்.

[7]"நோயாளி தன்னை ஆசாரியனிடம்
காட்டி சுத்தமுள்ளவனாகத் தீர்மானித்த
பிறகும் ஒரு வேளை வெண்திட்டு உடலில்
பரவலாம், அதையும் ஆசாரியனிடம் காட்ட
வேண்டும். [8]அப்பொழுது வெண்திட்டு
தோலிலே படர்ந்து வருகிறது என்று

ஆசாரியன் கண்டால் அவனைத் தீட்டான
வன் என்று அறிவிக்க வேண்டும். அது
தொழுநோய் ஆகும்.
9 "ஒருவனுக்குத் தொழுநோய் ஏற்பட்டால்
அவனை ஆசாரியனிடம் கொண்டு வர
வேண்டும். 10 ஆசாரியன் அவனைச்
சோதித்துப் பார்க்க வேண்டும். தோலிலே
வெள்ளைத் தடிப்புகள் இருந்தாலும், முடி
வெண்மையாகியிருந்தாலும், தோலானது
கொப்புளங்களில் காய்ந்து இருந்தாலும்
11 அது நெடுநாளாகவே அவன் தோலில்
உள்ள தொழுநோயாகவே கருதப்பட வேண்
டும். ஆசாரியன் உடனே அவனைத்
தீட்டுள்ளவன் என்று அறிவிக்க வேண்டும்.
அந்நோயாளியை மற்றவர்களிடமிருந்து
கொஞ்சக்காலம் தனியே பிரித்துவைக்க
வேண்டிய தேவையில்லை. ஏனென்றால்
அவன் ஏற்கெனவே தீட்டுள்ளவன்.
12 "சில வேளைகளில் தொழுநோயானது
ஒருவனின் உடல் முழுவதும் பரவியிருக்க
லாம். தலைமுதல் கால்வரை அந்நோய்
அவனை மூடி இருக்கலாம். ஆசாரியன்
அவனை முழுமையாகச் சோதித்துப் பார்க்க
வேண்டும். 13 அவனது உடல் முழுவதும்
வெள்ளையாகியிருந்தால் அவனைச் சுத்த
முள்ளவன் என்று ஆசாரியன் அறிவிக்க
வேண்டும். 14 எனினும் கொஞ்சம் புண்
நிறைந்த தோல் இருந்தால் அவன் தீட்டுள்ள
வனே. 15 ஆசாரியன் அதனைக் கண்டதும்
அவனைத் தீட்டுள்ளவனாக அறிவிக்க
வேண்டும். புண் நிறைந்த தோல் தீட்டுள்ளது.
அது தொழுநோய்.
16 "தோலின் நிறம் மாறி வெண்மையா
னால் பின் அவன் ஆசாரியனிடம் வர
வேண்டும். 17 ஆசாரியன் அவனைச்
சோதித்துப் பார்க்க வேண்டும். நோயுள்ள
இடம் வெண்மையாகியிருந்தால் அவனது
நோய் குணமாகி விட்டதென்று பொருள்.
எனவே, அவனைத் தீட்டு இல்லாதவன்
என்று ஆசாரியன் அறிவிக்க வேண்டும்.
18 "ஒருவனுக்குத் தோலின் மேல் புண்
ஏற்பட்டு அது குணமாகலாம். 19 அதே
புண் பிற்பாடு வெள்ளைத் தடிப்பாகவோ
அல்லது சிவந்த நிறத்தில் வெண்
புள்ளிகளாகவோ மாறக்கூடும். அப்படி
நேரும்போது அப்புண்ணை ஆசாரியனிடத்
தில் காட்ட வேண்டும். 20 ஆசாரியன்
அவற்றைச் சோதித்துப் பார்க்க வேண்டும்.
அப்புண்ணானது தோலின் பரப்பைவிட
ஆழமாக இருந்தாலோ, அதிலுள்ள முடிகள்
வெண்மையானாலோ அது தொழுநோய்
என்றே கருதப்பட வேண்டும். உடனே
அவனைத் தீட்டுள்ளவனாக அறிவிக்க
வேண்டும். அது புண்ணில் ஏற்பட்ட தொழு
நோயாகும். தொழுநோயானது அப்
புண்ணின் உள்ளிருந்து உருவாகியுள்ளது.
21 சோதிப்பின்பொழுது தடிப்பின் மேற்
பகுதியில் வெள்ளை முடி இல்லாதிருந்தா
லும், தோலில் அவ்வளவு ஆழமற்றதாக
ஆனால் வெளுத்து இருந்தாலும், ஆசாரியன்
அவனை ஏழு நாட்கள் தனியே பிரித்து
வைக்க வேண்டும். 22 பின்பு வெள்ளைத்
தடிப்பு அதிக அளவில் தோலில் படர்ந்திருந்
தால், ஆசாரியன் அவனைத் தீட்டுள்ளவன்
என்று அறிவிக்க வேண்டும். அது
தொழுநோய்தான். 23 அந்த வெள்ளைப்படரா
னது அதிகப்படாமல் பழைய அளவில்
நின்றிருக்குமானால் அதுவெறும் புண்ணின்
தழும்புதான். எனவே அவனைச் சுத்த
முள்ளவன் என்று ஆசாரியன் அறிவிக்க
வேண்டும்.
24-25 "ஒருவனது உடம்பின் மேல்
நெருப்புப்பட்டு வெந்து அது ஆறிப்போன
இடத்தில் தோலில் நிறம் இழந்தோ, அல்லது
வெண்மையாகவோ இருக்கலாம் ஆசாரியன்
அதனைச் சோதித்துப் பார்க்கவேண்டும்.
வெண்மையான தடிப்பு தோலுக்கு அடியில்
ஆழமாக இருந்தாலும் தடிப்பின் மேல் உள்ள
முடியின் பரப்பு வெளுத்திருந்தாலும்,
அதைத் தொழுநோயாகக் கருதலாம்.
தொழுநோய் வெந்த இடத்தில் வெளிப்பட்டு
வளர்ந்து பெருகிவிட்டது. ஆகவே ஆசா
ரியன் அவனைத் தொழுநோயாளி என்று
அறிவிக்கலாம். 26 ஆசாரியன் சோதித்துப்
பார்க்கும்போது, படரிலே வெள்ளைமுடி
இல்லை என்றாலோ அல்லது படர் மற்றப்
பகுதிகளைவிடக் குழியாமல் இருந்தால்
அவனை ஏழு நாள் தனியே பிரித்து
வைத்திருக்க வேண்டும். 27 ஏழாம் நாளில்
அவனை மீண்டும் சோதித்துப் பார்க்க
வேண்டும். அது தோலில் அதிகமாகப்
பரவியிருந்தால் ஆசாரியன் அவனைத்
தீட்டுள்ளவன் என்று அறிவிக்க வேண்டும்.
அது தொழுநோய்தான். 28 தோலில் படரா
னது பரவாமல் இருந்தாலோ அல்லது
படர் மற்ற பகுதிகளைவிடப் பள்ளமாக
இல்லாமல் இருந்தாலோ அது வெந்ததால்
உண்டான கொப்புளம் என்று எண்ண
வேண்டும். அவனை ஆசாரியன் சுத்தமான
வன் என்று அறிவிக்க வேண்டும்.
29 "ஒருவனுக்குத் தலையில் அல்லது
தாடியில் எரிச்சல் உண்டாகலாம். 30 ஆசாரி
யன் அதனைச் சோதித்து பார்க்க வேண்டும்.
அவ்விடம் மற்ற தோலைவிட பள்ளமும்
அதிலே உள்ள முடிகள் பொன்நிறமும்,
மிருதுவாயும் இருந்தால் அவனைத்
தீட்டுள்ளவன் என்று அறிவிக்க வேண்டும்.
அது சொறி தொழுநோய். 31 ஆசாரியன்
இதனைப் பார்க்கும்போது அவ்விடம் மற்ற
தோலைவிட பள்ளமாய் இராமல்
இருக்கலாம். அதிலே கறுமையான முடிகள்
இல்லாமல் இருக்கலாம். அவ்வாறானால்
அவனை ஏழு நாட்கள் தனியே அடைத்து
வைக்க வேண்டும். 32 ஏழாவது நாள்
அப்புண்ணை ஆசாரியன் மீண்டும்
சோதித்துப் பார்க்க வேண்டும். அந்த நோய்

பரவாமல் இருந்தாலோ அல்லது பொன்
நிறமாக முடிமாறாமல் இருந்தாலோ அல்லது
நோயுள்ள இடம் மற்ற தோல் பகுதியை
விடப் பள்ளம் இல்லாமல் இருந்தாலோ,
33அவன் சொறியுள்ள இடம் தவிர மற்ற
இடத்தை மழித்துக்கொள்ள வேண்டும்.
மேலும் அவனை ஏழு நாள் தனியே
பிரித்து வைக்க வேண்டும். 34ஏழாம் நாளில்
ஆசாரியன் மீண்டும் சோதித்து பார்க்கும்
போது சொறி பரவாமலும், அவ்விடம்
மற்ற இடங்களை விடப் பள்ளமில்லாமலும்
இருந்தால் அவனை ஆசாரியன் சுத்த
முள்ளவன் என்று அறிவிக்க வேண்டும்.
அவன் தன் ஆடைகளைத் துவைத்தபின்
சுத்தமாய் இருப்பான். 35ஆனால் அந்தச்
சொறி அதற்குப்பிறகு பரவினால் 36மீண்டும்
ஆசாரியன் அவனைச் சோதிக்க வேண்டும்.
சொறி தோலில் பரவியிருந்தாலோ, முடியும்
பொன்நிறமாகியிருந்தாலோ ஆசாரியன்
மறுபடியும் சோதிக்க வேண்டியதில்லை.
அவன் தீட்டுள்ளவனே. 37அவன் சோதிக்கும்
போது சொறி நீங்கியிருந்தால், கறுமையான
முடிகள் முளைத்திருந்தால் சொறி குண
மாயிற்று என்று பொருள். அவன்
சுத்தமானவன். ஆசாரியன் அவனைச்
சுத்தமுள்ளவன் என்று அறிவிக்க வேண்டும்.
38“யாராவது ஒருவனுக்கு உடல்மீது வெள்
ளைப் புள்ளிகள் ஏற்பட்டால், 39அதனை
ஆசாரியன் சோதித்து பார்க்க வேண்டும்.
தோலில் மங்கின வெள்ளைப் புள்ளிகள்
இருந்தால் அது அவ்வளவாகப் பாதிப்பற்ற
வெள்ளைத் தேமல். அவனும் சுத்தமுள்ள
வனே.
40“ஒருவனுடைய தலைமுடி உதிரக்கூடும்,
அவன் சுத்தமானவனே. அது ஒரு வகை
வழுக்கை ஆகும். 41தலையைச் சுற்றியுள்ள
பகுதியில் இருந்து முடி உதிரக்கூடும்.
அவனும் சுத்தமானவனே, அதுவும் இன்
னொரு வகை வழுக்கை ஆகும். 42ஆனால்
வழுக்கையான இடத்தில் சிவப்பாகவோ
அல்லது வெண்மையாகவோ தடிப்புகள்
இருக்குமேயானால், அது தோல் வியாதி
ஆகும். 43ஆசாரியன் அதனைச் சோதிக்க
வேண்டும். அவனது வழுக்கைத் தலை
யிலாவது, அரை வழுக்கைத் தலையிலாவது
மற்ற உறுப்புகளின் மேல் உண்டாகும்
குஷ்டத்தைப்போல் சிவப்பு கலந்த வெண்
மையான தடிப்பு இருந்தால் அவன்
தொழுநோயாளி. 44அவன் தீட்டுள்ளவன்
என்று ஆசாரியன் அறிவிக்க வேண்டும்.
அவனது நோய் தலையில் உள்ளது.
45“ஒருவனுக்குத் தொழுநோய் இருந்தால்
அவன், மற்றவர்களை எச்சரிக்க வேண்டும்.
அவன் ‘தீட்டு தீட்டு’ என்று கத்த வேண்டும்.
அவனது ஆடைகள் கிழிக்கப்பட்டிருக்க
வேண்டும். அவன் தன் தலை முடியை
நன்றாக வளர்க்க வேண்டும். அவன் தன்
வாயை மூடி மறைத்துக் கொண்டிருக்க
வேண்டும். 46அந்நோய் அவனிடம் இருக்கும்
வரை அவன் தீட்டுள்ளவனாகக் கருதப்படுகி
றான். எனவே அவன் தனியே குடியிருக்க
வேண்டும். அவன் வீடு கூடாரத்திற்கு
அப்பால் இருக்க வேண்டும்.
47-48“ஆட்டுமுடி அல்லது பஞ்சால் ஆன
ஆடையில் நோய் இருக்கும். அந்த ஆடை
நெய்யவோ பின்னவோபட்டிருக்கலாம்.
தோல் துண்டிலோ அல்லது தோலால்
ஆன ஆடையிலோ நோய் இருக்கும். 49அதில்
பச்சை அல்லது சிவப்புப் புள்ளிகள்
காணப்பட்டால் அதை ஆசாரியனுக்குக்
காட்டவேண்டும். 50ஆசாரியன் அதைச்
சோதித்துப் பார்த்துவிட்டு ஏழு நாட்கள்
தனியே அடைத்து வைக்கவேண்டும்.
51ஏழாம் நாள் ஆசாரியன் அவனைச் சோதித்
துப் பார்க்க வேண்டும். ஆடையிலாவது
பாவிலாவது, தோல் துண்டிலாவது,
தோலால் ஆன ஆடையிலாவது அது
அதிகப்பட்டிருந்தால் அது அரிக்கிற
தொழுநோய் என்று கருதலாம். அது தீட்டு
உள்ளது. 52அந்த நோய் இருக்கிற மயிராடை,
நூலாடை, தோலாடை போன்றவற்றை
ஆசாரியன் சுட்டெரிக்க வேண்டும். இது
அரிக்கிற தொழுநோய். எனவே அதனை
நெருப்பில் சுட்டெரிக்க வேண்டும்.
53“ஆசாரியன் சோதிப்பின்போது அரிப்பா
னது மேலும் பரவவில்லை என்பது
உறுதியானால், அந்த ஆடையையோ
அல்லது தோலையோ துவைக்க வேண்டும்.
அது தோலா அல்லது துணியா அல்லது
நெய்யப்பட்டதா அல்லது பின்னப்பட்டதா
என்பதில் வித்தியாசமில்லை. 54பிறகு தோல்
ஆடையை அல்லது துணியைத் துவைக்கும்
படி ஆசாரியன் ஜனங்களுக்கு ஆணையிட
வேண்டும். பிறகு துணியை ஏழு
நாட்களுக்குப் பிரித்துத் தனியே வைக்க
வேண்டும். 55அதற்குப் பின்பு அதை மீண்டும்
சோதிக்க வேண்டும். அந்த அரிப்பானது
நிறம் மாறாமல் இருந்தால் அது தீட்டு
என எண்ண வேண்டும். அரிப்பு பரவாமல்
போனாலும்கூட, அதை நெருப்பில் சுட்டெ
ரிக்க வேண்டும்.
56“தோல் ஆடையை அல்லது துணியைப்
பார்க்கும்போது அரிப்புப் பகுதி மங்கியிருந்
தால், அரித்த பகுதியை மட்டும் தோலாடை
யில் இருந்தும் அல்லது துணியில் இருந்தும்
நெய்யப்பட்ட துணியா அல்லது பின்னப்
பட்ட துணியா என்று பாராமல் ஆசாரியன்
தனியே வெட்டி எடுக்க வேண்டும்.
57அரிப்பானது மீண்டும் துணியிலோ
அல்லது தோல் ஆடையிலோ வரக்கூடும்.
அப்போது அத்துணியை அல்லது தோலை
நெருப்பில் சுட்டெரிக்க வேண்டும். 58கழுவிய
பிறகு அந்நோய் அதைவிட்டு போய்விட்ட
தென்றால், மீண்டும் கழுவப்பட வேண்டும்.
அப்போதுதான் அது சுத்தமாகும்” என்றார்.
59இவையே, தோலாடை அல்லது

நூலாடை, பின்னப்பட்டது அல்லது
நெய்யப்பட்ட ஆடைகளின் மேல் தோன்றும்
தொழுநோய்பற்றிய விதிகள் ஆகும் என்று
கூறினார்.

## தொழு நோயாளியைச் சுத்தப்படுத்துவதற்கான விதிகள்

14 மேலும் கர்த்தர் மோசேயிடம்,
2 "இவை தொழு நோயாளிகள் குணமா
வதற்கும், அவர்களைச் சுத்தப்படுத்துவதற்கு
முரிய விதிமுறைகளாகும்.
"தொழுநோயுள்ள ஒருவனை ஆசாரியன்
சோதித்துப் பார்க்க வேண்டும். 3 ஆசாரியன்
கூடாரத்திற்கு வெளியே போய் அவன் நோய்
குணமாகிவிட்டதா என்று பார்க்க
வேண்டும். 4 அவனது நோய் குணமாகியிருந்
தால் அவனிடம் கீழ்க்கண்டவற்றை செய்யும்
படி கூறவேண்டும். முதலில் சுத்தமான
இரண்டு குருவிகளையும், கேதுருக் கட்டை
களையும், சிவப்பு நூலையும், ஈசோப்பையும்
வாங்கி வரவேண்டும். 5 பின்னர், ஆசாரியன்
அதில் ஒரு குருவியை மண்பாண்டத்தில்
உள்ள ஊற்று தண்ணீரில் கொல்ல
வேண்டும். 6 அடுத்து ஆசாரியன், உயிருள்ள
குருவியையும் அதோடு கேதுரு கட்டையை
யும் சிவப்பு நூலையும் ஈசோப்பையும்
எடுத்து அதில் கொல்லப்பட்டக் குருவியின்
இரத்தத்தைத் தோய்க்க வேண்டும். 7 பின்
ஆசாரியன் நோய் நீங்கப்பட்டவனின் மேல்
ஏழுதரம் தெளித்து அவனைச் சுத்தப்படுத்த
வேண்டும். பிறகு ஆசாரியன் அவனைத்
தீட்டில்லாதவன் என அறிவிக்க வேண்டும்.
பின் ஆசாரியன் திறந்த நிலப்பரப்பிற்கு
சென்று உயிருள்ள குருவியை விட்டுவிட
வேண்டும்.
8 "பிறகு அவன் தன் ஆடைகளை
துவைத்து, தன் முடியை மழித்துக் கொண்டு,
தண்ணீரில் குளிக்க வேண்டும். பின்னரே
அவன் சுத்தமாவான். அதன் பின் அவன்
கூடாரத்திற்குள் செல்லலாம். ஆனால் அவன்
ஏழு நாட்கள் கூடாரத்திற்கு வெளியிலேயே
தங்கவேண்டும். 9 ஏழாவது நாள் அவன்
தன் தலைமுடி, தாடி, புருவம் என
அனைத்து முடியையும் மழித்துவிட வேண்
டும். பின் தன் ஆடைகளைத் துவைத்துக்
குளிக்க வேண்டும். இதன்பின் அவன்
சுத்தமாவான்.
10 "எட்டாவது நாள், எவ்விதமான
குறையுமற்ற இரண்டு ஆட்டுக் குட்டி
களையும், ஒரு வயதான எக்குறையுமில்லாத
பெண் ஆட்டுக்குட்டியையும் தோல்
வியாதியால் பாதிக்கப்பட்டவன் தானியக்
காணிக்கைக்காக கொண்டு வரவேண்டும்.
இருபத்து நான்கு கிண்ணங்கள்* எண்ணெ
யிலே பிசைந்த மெல்லிய மாவையும்,
ஆழாக்கு ஒலிவ எண்ணெயையும் கொண்டு
வரவேண்டும். 11 அவனை தீட்டில்லாதவன்
என்று அறிவித்த அதே ஆசாரியன்
நோயுற்றவனையும் அவனது பலிப்
பொருட்களையும் கர்த்தருக்கு முன்னால்
ஆசரிப்புக் கூடாரத்திற்கு கொண்டு
வரவேண்டும். 12 ஆசாரியன் ஒரு ஆண்
ஆட்டுக்குட்டியை குற்ற பரிகார பலியாக
செலுத்த வேண்டும். அவன் அதனையும்
சிறிது எண்ணெயையும் அசைவாட்டும்
பலியாகப் பயன்படுத்த வேண்டும். 13 பிறகு
ஒரு ஆண் ஆட்டுக்குட்டியை பாவப்பரிகார
பலியையும் தகனபலியையும் கொல்லுகிற
பரிசுத்த இடத்தில் கொல்ல வேண்டும்.
குற்ற நிவாரண பலியானது பாவப்பரிகார
பலி போன்றதாகும். அது ஆசாரியனுக்
குரியது. அது மிகவும் பரிசுத்தமானது.
14 "ஆசாரியன் குற்ற பரிகார பலியின்
இரத்தத்தில் சிறிதளவு எடுத்துக்கொள்ள
வேண்டும். அதனைச் சுத்திகரிக்கப்பட
வேண்டியவனின் வலது காது நுனியில்
தடவவேண்டும். அது அவனைச்
சுத்தமாக்கும். பிறகு கொஞ்சம் இரத்தத்தை
அவனது வலது கையின் பெருவிரலிலும்,
வலதுகால் பெருவிரலிலும் தடவ வேண்டும்.
15 மேலும் ஆசாரியன் எண்ணெயை எடுத்து
தனது இடது உள்ளங்கையில் ஊற்றி 16 வலது
கை விரலில் தொட்டு ஏழுமுறை கர்த்தரின்
சந்நிதியில் தெளிக்க வேண்டும். 17 பிறகு
ஆசாரியன் தன் உள்ளங்கையில் உள்ள மீதி
எண்ணெயை எடுத்து சுத்திகரிக்கப்பட
வேண்டியவனின் வலது காது நுனியிலும்,
வலது கை பெருவிரலிலும், வலது கால்
பெருவிரலிலும் தடவவேண்டும். 18 மேலும்
மீதியுள்ள எண்ணெயை அவனது
தலையிலே தடவ வேண்டும். இவ்வாறு,
ஆசாரியன் கர்த்தருக்கு முன்பாக அவனைச்
சுத்தப்படுத்தி விடுகிறான்.
19 "பின் ஆசாரியன் பாவப்பரிகார
பலியைச் செலுத்தி சுத்திகரிக்கப்பட வேண்
டியவனின் தீட்டு நீங்க அவனுக்குப்
பாவப்பரிகாரம் செய்து விடவேண்டும்.
20 பின்பு தகன பலிக்குரிய மிருகத்தைக்
கொன்று அதனோடு தானியக் காணிக்கை
யையும் பலிபீடத்தின்மேல் வைத்து அவ
னுக்காகப் பாவப்பரிகாரம் செய்ய
வேண்டும். அப்போது அவன் சுத்தமாவான்.
21 "ஆனால் ஒரு ஏழையால் இத்தகைய
பலியைக் கொடுக்க இயலாது. அப்போது
அவன் ஒரு ஆண் ஆட்டுக்குட்டியை மட்டும்
கொண்டுவந்தால் போதும். அது அசை
வாட்டும் பலியாகும். ஆசாரியன் இதன்
மூலம் அவனைச் சுத்தப்படுத்தலாம். இதற்கு
ஆசாரியன் எண்ணெயுடன் கலந்த மிருது
வான மாவிலே 8 கிண்ணம் அளவு
எடுத்துக்கொள்ள வேண்டும். இது தானியக்
காணிக்கைக்காக உபயோகப்படுத்தப்படும்.

---

**இருபத்து நான்கு கிண்ணங்கள்** எழுத்தின் பிரகாரமாக ஒரு எப்பா அளவில் பத்தில் மூன்று பங்காகும்.

22இரண்டு காட்டுப் புறாக்களையாவது அல்
லது இரு புறாக்குஞ்சுகளையாவது கொடுக்க
வேண்டும். இவற்றில் ஒன்று பாவப்பரிகார
பலிக்கும் இன்னொன்று தகன பலிக்கும்
உரியது.
23"எட்டாவது நாளில் மேற்கண்ட
எல்லாப் பொருட்களையும் எடுத்துக்
கொண்டு அவன் ஆசரிப்புக் கூடாரத்திற்கு
ஆசாரியனிடம் வரவேண்டும். அவை
கர்த்தருக்கு முன்பு அளிக்கப்பட வேண்டும்.
அதனால் அவன் சுத்தமாவான். 24ஆசாரியன்
ஆண் ஆட்டுக்குட்டியைக் குற்றப்பரிகார
பலிக்காக எடுத்துக் கொள்வான். இதையும்
ஆழாக்கு எண்ணெயையும் கர்த்தருடைய
சந்நிதியில் அசைவாட்டும் பலியாக செலுத்
துவான். 25பிறகு அந்த ஆண் ஆட்டுக்
குட்டியை குற்றப்பரிகார பலிக்காகக்
கொல்லுவான். அதன் இரத்தத்தைக்
கொஞ்சம் எடுத்து, சுத்திகரிக்கப்பட
வேண்டியவனின் வலது காதின் நுனியிலும்,
வலதுகை பெருவிரலிலும், வலது கால்
பெருவிரலிலும் தடவுவான். 26ஆசாரியன்
தனது இடது உள்ளங்கையில் எண்ணெயை
ஊற்றிக்கொண்டு 27பின் வலது கை விரலால்
தொட்டு கர்த்தருடைய சந்நிதியில் ஏழுதரம்
தெளிப்பான். 28மிச்சமிருக்கிற எண்ணெயைத்
தொட்டு இரத்தத்தை தடவிய இடங்களில்
எல்லாம் தடவுவான். அதனை அவனின்
வலது காதின் நுனியிலும், வலது கை
பெருவிரலிலும், வலது கால் பெருவிரலி
லும் தடவுவான். 29உள்ளங்கையில் மேலும்
மிச்சமிருக்கிற எண்ணெயை அவனது
தலையில் தடவுவான். இவ்வாறு ஆசாரியன்
அவனைக் கர்த்தருக்கு முன்பு சுத்தப்படுத்த
வேண்டும்.
30"பிறகு ஆசாரியன் ஒரு காட்டுப்
புறாவையாவது, புறாக்குஞ்சையாவது பலி
யிடவேண்டும். (ஒருவன் எவற்றைக்
கொடுக்க முடியுமோ அவற்றையே காணிக்
கையாக அளிக்க வேண்டும்.) 31இவற்றில்
ஒன்றை பாவப்பரிகார பலியாகவும், இன்
னொன்றை தகன பலியாகவும் செலுத்த
வேண்டும். தானியக் காணிக்கையோடு
இதனைச் சேர்த்துச் செலுத்த வேண்டும்.
இவ்வாறு ஆசாரியன் அவனைக் கர்த்தருக்கு
முன்பு சுத்திகரிப்பு செய்யவேண்டும்.
அவனும் சுத்திகரிக்கப்படுவான்" என்றார்.
32தொழு நோயுற்றவன் குணம்
அடைந்தபின் சுத்திகரிப்புச் செய்யவேண்டிய
விதிகள் இவையாகும். முறையான பலி
களைத் தரமுடியாதவர்கள் இவ்வாறு சில
விதிகளைக் கடைப்பிடிக்கலாம் என்று
கூறினார்.

### வீட்டில் உள்ள நோய்க்கான விதிகள்

33மேலும் கர்த்தர் மோசேயையும் ஆரோ
னையும் பார்த்து, 34"நான் உங்களுக்குக்
கானான் தேசத்தைக் கொடுத்திருக்கிறேன்.
நீங்கள் அங்கு போய்ச் சேர்ந்தபின்பு
உங்களில் சிலரது வீட்டிலே தொழுநோய்
ஏற்படும்படி செய்தால் 35அப்போது அந்த
வீட்டிற்கு உரியவன் ஆசாரியனிடம் வந்து,
'என் வீட்டில் தொழுநோய் போன்று
ஒன்று இருப்பதைப் பார்த்தேன்' என்று
சொல்ல வேண்டும்.
36"பிறகு அந்த ஆசாரியன், வீட்டில்
உள்ள யாவற்றையும் வெளியே எடுத்துச்
செல்ல ஜனங்களிடம் கூறவேண்டும்.
ஆசாரியன் அந்த வீட்டில் உள்ள அனைத்து
பொருட்களும் தீட்டுக்குரியவை என்று
சொல்லத் தேவை இருக்காது. வீட்டிலுள்ள
பொருட்களை எல்லாம் வெளியே வைத்த
பிறகுதான் ஆசாரியன் வீட்டிற்குள் நுழைய
வேண்டும் 37ஆசாரியன் அந்த வீட்டிற்குள்
நுழைந்து தொழு நோயுள்ள இடங்களைக்
கவனித்து பார்க்க வேண்டும். அப்போது
சுவரில் கொஞ்சம் பச்சையும், சிவப்புமான
குழிகள் சுவற்றின் மற்ற பகுதிகளைவிடப்
பள்ளமாக இருப்பதைக் கண்டால், 38ஆசாரி
யன் வெளியே வந்து அவ்வீட்டை ஏழு
நாட்கள் பூட்டிவைக்க வேண்டும்.
39"ஏழாம் நாள் ஆசாரியன் திரும்பப்
போய், சோதித்துப் பார்க்க வேண்டும்.
தோஷம் வீட்டுச் சுவர்களில் பரவியிருந்தால்
40ஆசாரியன் தோஷம் படிந்த கற்களைச்
சுவற்றிலிருந்து பெயர்த்தெடுத்துப் பட்டணத்
துக்கு வெளியே ஒரு குறிப்பிட்ட அசுத்த
மான இடத்திலே கொண்டுபோய் போடச்
சொல்ல வேண்டும். 41வீட்டினுள்ளே
தரையைப் பெயர்த்து, அதையும் வெளியே
அசுத்தமான இடத்தில் போட்டுவிட
வேண்டும். 42பிறகு சுவரில் புதிய கற்களை
வைத்துப் பூசவேண்டும்.
43"கற்களைப் பெயர்த்து வீட்டைச்
செதுக்கி புதிதாய்ப் பூசின பிறகும் நோய்
திரும்பவும் வந்தால், 44ஆசாரியன் போய்
அந்த வீட்டைச் சோதித்துப் பார்க்க
வேண்டும். அந்த நோய் மேலும் சுவரில்
பரவி இருந்தால் அதனை வீட்டை அரிக்கிற
தொழுநோயாகக் கருதவேண்டும். அது
தீட்டுள்ளதாக இருக்கும். 45எனவே வீடு
முழுவதையும் இடித்து அதன் கற்களையும்
மரங்களையும் காரையையும் ஊருக்கு
வெளியே அசுத்தமான தனி இடத்தில்
கொட்டிவிட வேண்டும். 46அந்த வீட்டிற்குள்
நுழைகிற எவனும் மாலைவரை தீட்டுள்ளவ
னாக இருப்பான். 47அந்த வீட்டில்
எவனாவது உண்டாலோ, உறங்கினாலோ,
அவனும் தனது ஆடையைத் துவைக்க
வேண்டும்.
48"புதிய கற்களும் பூச்சும் முடிந்தபிறகு
அவ்வீட்டை ஆசாரியன் சோதிக்கும்போது
நோய் பரவியதற்கான அறிகுறி எதுவும்
இல்லாவிட்டால் அவ்வீடு தீட்டு இல்லாத
தாய் ஆயிற்று என்று அறிவிக்க வேண்டும்.
49"பிறகு அந்த வீட்டை சுத்திகரிப்புச்

செய்ய வேண்டும். அதற்கு ஆசாரியன்
இரண்டு குருவிகளையும், கேதுரு
கட்டையையும், ஒரு துண்டு சிவப்புத்
துணியையும், ஈசோப்பையும் எடுத்துக்
கொள்ள வேண்டும். 50அதில் ஒரு குருவியை
மண்பாண்டத்தில் உள்ள ஊற்று தண்ணீரில்
கொல்ல வேண்டும். 51பிறகு கேதுருக்
கட்டையையும், ஈசோப்பையும், சிவப்பு
நூலையும், உயிருள்ள குருவியையும்
எடுத்துக்கொள்ள வேண்டும். பின்
கொல்லப்பட்ட குருவியின் இரத்தத்தில்
இவற்றை மூழ்க வைக்க வேண்டும். பிறகு
அந்த இரத்தத்தை ஆசாரியன் வீட்டின்மேல்
ஏழுதரம் தெளிக்க வேண்டும். 52குருவியின்
இரத்தம், ஊற்று தண்ணீர், உயிருள்ள
குருவி, ஈசோப்பு, கேதுருக் கட்டை, சிவப்பு
நூல் போன்றவற்றால் வீட்டின் தீட்டினைக்
கழிக்க வேண்டும். 53பின் உயிருள்ள
குருவியை நகருக்கு வெளியே விட்டுவிட
வேண்டும். இம்முறையில் ஆசாரியன்
வீட்டைச் சுத்தம் செய்வான். பிறகு வீடு
சுத்தமாகும்" என்று கூறினார்.
54-55துணிகளிலோ அல்லது வீட்டிலோ
தோஷம் பிடித்தல், தொழுநோய், ஆகியன
உண்டாகும்பொழுது கடைப்பிடிக்க வேண்
டிய விதிகள் இவைகளே. 56வீக்கம், அசறு,
தோலில் வெள்ளைப்புள்ளிகள் உண்டாகுதல்
ஆகியவற்றின்போதும் கடைப்பிடிக்க வேண்
டிய விதிகள் இவைகளே. 57பொருட்கள்
எப்பொழுது சுத்தமாயுள்ளன, எப்பொழுது
சுத்தமற்றவையாக உள்ளன எனக்
கற்பிப்பதற்குரிய விதிகள் இவைகளே.

### உடலில் இருந்து வெளியேறும் கழிவுப்பொருட்களுக்கான விதிகள்

15 பிறகு கர்த்தர் மோசேயையும், ஆரோ
னையும் பார்த்து, 2"நீங்கள் இஸ்ரவேல்
ஜனங்களுக்குச் சொல்லவேண்டியதாவது:
ஒருவனுக்கு உடற்கழிவுகள் ஏற்பட்டால்
அதனாலும் தீட்டு உண்டாகும். 3இக்கழிவுகள்
அவன் உடம்பிலிருந்து சரளமாக வெளி
யேறுகிறதா இல்லையா என்பது முக்கிய
மில்லை.
4"உடற்கழிவு ஏற்பட்டவன் படுக்கிற
எந்தப் படுக்கையும் தீட்டாகும். அவன்
எதன்மேல் உட்காருகிறானோ அதுவும்
தீட்டாகும். 5அவனது படுக்கையைத் தொடுகி
றவன் தனது ஆடைகளைத் துவைத்து
தண்ணீரில் குளிக்க வேண்டும். மாலைவரை
அவன் தீட்டுள்ளவனாக இருப்பான்.
6உடற்கழிவு ஏற்பட்டவன் உட்காருகிற
இடத்தில் உட்காருகிறவனும் தன் ஆடை
களைத் துவைத்து தண்ணீரில் குளிக்க
வேண்டும். மாலைவரை இவனும் தீட்டு
உள்ளவனாக இருப்பான். 7உடற்கழிவு
ஏற்படுகிறவனைத் தொடுபவனும் தன்
ஆடைகளைத் துவைத்து தண்ணீரில் குளிக்க
வேண்டும். மாலைவரை இவனுக்கும் தீட்டு
இருக்கும்.
8"உடற்கழிவு உள்ளவனின் எச்சில்
மேலே பட்டாலும் ஒருவன் தன் ஆடை
களைத் துவைத்து தண்ணீரில் குளிக்க
வேண்டும். மாலைவரை அவனுக்குத் தீட்டு
இருக்கும். 9இத்தகையவன் ஏறுகிற எந்த
சேணமும் தீட்டாகும். 10இத்தகையவனுக்குக்
கீழ் இருக்கிற எந்தப் பொருளையும்
தொடுகிறவன் மாலைவரை தீட்டாயிருப்
பான். அப்பொருளை எடுத்துக்கொண்டு
போகிறவன். தன் ஆடைகளைத் துவைத்து
தண்ணீரில் குளித்து மாலைவரை தீட்டு
உள்ளவனாக இருப்பான்.
11"சிற்சில இடங்களில் உடற்கழிவு உள்ள
வன் தண்ணீரில் தன் கைகளைக் கழுவா
மலே அடுத்தவனைத் தொட்டுவிட்டால்,
தொடப்பட்டவன் தன் ஆடைகளைத்
துவைத்து குளிக்க வேண்டும். மாலைவரை
அவன் தீட்டாக இருப்பான்.
12"உடற்கழிவு ஏற்பட்டவன் ஏதேனும்
மண்பாண்டத்தைத் தொட்டால் அம்
மண்பாண்டம் உடைக்கப்பட வேண்டும்.
மரத்தாலான பாத்திரத்தை அவன் தொட
நேர்ந்தால், அதைத் தண்ணீரால் கழுவ
வேண்டும்.
13"உடற்கழிவு உள்ளவன் அது நீங்கி
சுத்தமானதும் அதற்குச் சுத்திகரிப்புச் செய்ய
வேண்டும். அதற்காக ஏழு நாட்கள்
காத்திருந்து, தன் ஆடைகளைத் துவைத்து
தண்ணீரில் குளிக்க வேண்டும். அப்போது
தான் அவன் சுத்தமாவான். 14எட்டாவது
நாள் அவன் இரண்டு காட்டுப் புறாக்
களையாவது, புறாக்குஞ்சுகளையாவது ஆச
ரிப்புக் கூடாரத்திற்குக் கொண்டுவர
வேண்டும். அவற்றைக் கர்த்தருக்கு முன்
கொண்டுவந்து ஆசாரியனிடம் கொடுக்க
வேண்டும். 15அவற்றுள் ஒன்று பாவப்பரிகார
பலியாகவும் இன்னொன்று தகன பலியாக
வும் ஆசாரியன் கர்த்தருக்கு செலுத்துவான்.
இம்முறையில் ஆசாரியன் கர்த்தருக்கு முன்
அவனைச் சுத்திகரிப்பு செய்ய வேண்டும்.

### ஆண்களுக்கான விதிகள்

16"ஒருவனுக்கு விந்து வெளிப்பட்டால்,
அவன் தண்ணீரில் குளிக்க வேண்டும்.
அவன் மாலைவரை தீட்டுள்ளவனாக இருப்
பான். 17தோல் ஆடையிலும், துணியிலும்
விந்து பட்டிருந்தால் அவற்றை தண்ணீரால்
கழுவவேண்டும். அது மாலைவரை தீட்டுள்
ளதாக இருக்கும். 18விந்து கழிந்தவ னோடு
ஒரு பெண் படுத்திருந்தால் இருவரும் தண்ணீ
ரில் குளிக்க வேண்டும். அவர்கள் மாலை
லவரை தீட்டுள்ளவர்களாக இருப்பார்கள்.

### பெண்களுக்கான விதிமுறைகள்

19"இரத்தப் போக்குடைய மாதவிலக்கான

பெண், ஏழு நாட்கள் தீட்டுப்பட்டவளாக
இருப்பாள். அவளைத் தொடுகிறவன்
எவனும் மாலைவரை தீட்டுள்ளவனாக
இருப்பான். 20அவள் மாத விலக்காக
இருக்கும்போது எதன்மேல் படுத்துக்கொள்
கிறாளோ, எதன் மீது உட்காருகிறாளோ
அவை தீட்டாகும். 21அவளது படுக்கையைத்
தொட்டவன் தன் ஆடைகளைத் துவைத்து
தண்ணீரில் குளிக்க வேண்டும். மாலைவரை
அவனும் தீட்டுள்ளவனாக இருப்பான்.
22அவள் அமர்ந்த இருக்கையைத் தொட்ட
வனும் தன் ஆடைகளைத் துவைத்து
தண்ணீரில் குளிக்க வேண்டும். அவனும்
மாலைவரை தீட்டுள்ளவனாக இருப்பான்.
23அவள் படுக்கையையோ இருக்கையையோ
தொட்டவன் மாலைவரை தீட்டு உடையவ
னாக இருப்பான்.

24“அவளோடு ஒருவன் படுத்துக்கொண்
டால் அவள் தீட்டு அவன்மேல் படும்.
அதனால் அவன் ஏழு நாள் தீட்டாய்
இருப்பான். அவன் படுக்கிற படுக்கையும்
தீட்டாகும்.

25“ஒருத்திக்கு மாதவிலக்கு அல்லாத
நாட்களிலும் அவளிடம் இரத்தம் கசிந்தால்
அப்போதும் அவள் விலக்கானவள்
போலவே கருதப்பட வேண்டும். 26அந்த
நாட்களிலும் அவள் படுக்கும் படுக்கையும்
விலக்கான நாட்களுக்குரிய படுக்கை
போன்று தீட்டாகும். அவள் அமரும்
இருக்கையும் விலக்கத் தீட்டைப் போன்றே
கருதப்படும். 27இத்தகையவற்றைத் தொடுகிற
எவனும் தன் ஆடைகளைத் துவைத்து
தண்ணீரில் குளிக்கவேண்டும். அவனும்
மாலைவரை தீட்டாய் இருப்பான். 28அவளது
தீட்டு நின்றதும் ஏழு நாட்கள் அவள்
காத்திருக்கவேண்டும். அதன் பிறகே அவள்
சுத்தமாகிறாள். 29எட்டாவது நாளில் அவள்
இரண்டு காட்டுப் புறாக்களையோ, இரு
புறாக்குஞ்சுகளையோ கொண்டு வந்து
அவற்றை ஆசரிப்புக் கூடாரத்திற்குள்
ஆசாரியனிடம் கொடுக்க வேண்டும். 30ஆசா
ரியன் அவற்றில் ஒன்றைப் பாவப்பரிகார
பலியாகவும், இன்னொன்றை தகன பலியாக
வும் செலுத்த வேண்டும். கர்த்தருடைய
சந்நிதியில் அவளை இவ்வாறு ஆசாரியன்
சுத்திகரிப்பு செய்ய வேண்டும்.

31“இஸ்ரவேல் ஜனங்கள் தீட்டு இல்லாதவர்
களாக இருக்க எச்சரிக்கை செய்யுங்கள்.
இல்லாவிட்டால் அவர்கள் எனது ஆரா
தனைக் கூடாரத்தைத் தீட்டுள்ளதாக்குவது
டன், அவர்கள் அழிந்தும் போவார்கள்”
என்று கூறினார்.

32இவையே, உடற்கழிவு உள்ளவர்களுக்
கான விதிகள். விந்து கழிவினால் தீட்டான
ஆண்களுக்கும், 33மாதவிலக்கால் தீட்டான
பெண்களுக்கும், தீட்டானவளோடு படுத்துக்
கொண்டவனுக்குமுரிய விதிகள் இவைகளே
யாகும்.

### பாவப்பரிகார நாள்

16 ஆரோனின் இரண்டு மகன்களும் கர்த்த
ரின் சந்நிதியில் அங்கீகரிக்கப்படாத
முறையில் தூபம் காட்டியபோது மரண
மடைந்தனர். அதற்குப்பின்பு கர்த்தர் மோசே
யிடம், 2“உன் சகோதரன் ஆரோனிடம்
பின்வருவதைக் கூறு: கூடாரத்தின்
திரைக்குப் பின்னால் அவன் விரும்புகிற
போதெல்லாம் மகாபரிசுத்த இடத்திற்கு
போகவேண்டாம். திரைக்குப் பின்னால்
அந்த அறையில் பரிசுத்தப்பெட்டி உள்ளது.
அதன்மேல் கிருபாசன மூடி உள்ளது.
நான் அதற்குமேல் மேகத்தில் காட்சி
தருவேன். ஆரோன் அங்கே சென்றால்
மரித்து போகலாம்!

3“ஆரோன் பாவப்பரிகார நாள் அன்று
மிகவும் பரிசுத்தமான அந்த இடத்திற்குள்
நுழைவதற்கு முன் ஒரு காளையைப் பாவப்
பரிகார பலியாகவும், ஒரு ஆட்டுக்கடாவை
தகன பலியாகவும் செலுத்தி விடவேண்டும்.
4ஆரோன் தண்ணீரில் தன் உடல் முழு
வதையும் கழுவ வேண்டும். பின் அவன்
வேறு ஆடைகளை அணிந்துகொள்ள
வேண்டும். ஆரோன் பரிசுத்த சணல் நூல்
சட்டையை அணிந்து இடுப்பில் சணல்நூல்
சல்லடத்தைக் கட்டிக்கொள்ள வேண்டும்.
சணல் நூல் தலைப்பாகையையும், சணல்
நூலால் ஆன இடைக்கச்சையையும்
அணிந்துகொள்ள வேண்டும். இவை பரிசுத்த
மான ஆடைகள்.

5“ஆரோன் இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து
பாவப்பரிகார பலிக்காக இரண்டு வெள்
ளாட்டுக் கடாக்களையும் தகன பலிக்காக
ஒரு ஆட்டுக் கடாவையும் வாங்கிக்கொள்ள
வேண்டும். 6பிறகு ஆரோன் காளையைப்
பாவப்பரிகார பலியாக செலுத்த வேண்டும்.
இந்தப் பாவப்பரிகார பலி அவனுக்குரியது.
இதனை ஆரோன் தன்னையும் தன்
குடும்பத்தாரையும் சுத்திகரிப்பு செய்வதற்காக
இவ்வாறு செய்யவேண்டும்.

7“பிறகு ஆரோன் இரு வெள்ளாட்டுக்
கடாக்களையும் கர்த்தருக்கு முன்பாக ஆச
ரிப்புக் கூடாரத்தின் வாசலுக்குக் கொண்டு
வரவேண்டும். 8பின் கடாக்களுக்காகச்
சீட்டுப்போட வேண்டும். ஒரு சீட்டு
கர்த்தருக்குரியது. இன்னொரு சீட்டு
போக்காட்டுக்கு உரியது.

9“பிறகு ஆரோன் கர்த்தருக்குரிய சீட்
டுள்ள கடாவைக் கர்த்தருடைய சந்நிதியில்
பாவப்பரிகார பலியாக வழங்க வேண்டும்.
10ஆனால் போக்காடாகச்* சீட்டுள்ள கடா
வையும் கர்த்தருக்கு முன் கொண்டு

---

**போக்காடு** அல்லது மற்றவர்களுடைய குற்றங்களை தன் மேல் சுமக்கின்ற ஆட்டுக்குட்டி. இந்த வார்த்தை அல்லது இந்த பெயரின் அர்த்தம் தெரியவில்லை. இதன் முக்கிய கருத்தானது, அந்த ஆடு ஜனங்களின் பாவங்கள் அனைத்தையும் எடுத்துக்கொண்டு போய்விட்டது.

வரவேண்டும். பின் அந்தக் கடாவை உயி
ரோடு வனத்துக்குத் துரத்திவிட வேண்டும்.
இது ஜனங்களைச் சுத்திகரிப்புச் செய்யும்.
11“பிறகு ஆரோன் காளையைத் தனக்
குரிய பாவப்பரிகார பலியாகச் செலுத்தி,
தன்னையும் தனது குடும்பத்தாரையும்
பரிசுத்தப்படுத்த வேண்டும். அவனே தனக்
கான பாவப்பரிகார பலியாக அக்காளை
யைக் கொல்ல வேண்டும். 12பிறகு கர்த்தரின்
சந்நிதியிலிருக்கும் பலிபீடத்தின்மேலுள்ள
நெருப்புத் தணலினால் தூபகலசத்தை
நிரப்பவேண்டும். பொடியாக்கப்பட்ட
நறுமணப் பொருட்களை தன் கைப்பிடி
நிறைய எடுத்து திரைக்கு உட்புறமாகக்
கொண்டுவர வேண்டும். 13அவன் கர்த்தரின்
சந்நிதியில் நறுமணப் பொருட்களைப்
போடவேண்டும். அப்புகையானது உடன்
படிக்கைப் பெட்டியின் மேலுள்ள கிருபா
சனத்தை மூடும் அளவிற்கு போடவேண்டும்.
இவ்வாறு செய்தால் ஆரோன் மரிக்க
மாட்டான். 14ஆரோன் கொல்லப்பட்ட
காளையின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து,
அதனை விரலால் தொட்டுக் கீழ்ப்புறமாக
நின்று கிருபாசனத்தின்மேல் தெளிக்க
வேண்டும். இவ்வாறு ஏழுமுறை அவன்
இரத்தத்தைத் தெளிக்க வேண்டும்.

15“பிறகு ஆரோன் ஜனங்களின்
பாவப்பரிகார பலிக்கான வெள்ளாட்டைக்
கொன்று, அதன் இரத்தத்தைத் திரைக்குப்
பின்னால் உள்ள அறைக்குக் கொண்டு
வரவேண்டும். காளையின் இரத்தத்தைச்
செய்தது போன்றே இதனையும் செய்ய
வேண்டும். அவன் அந்த இரத்தத்தைக்
கிருபாசனத்தின் மேலும் அதற்கு முன்பும்
தெளிக்க வேண்டும். 16இவ்வாறு ஆரோன்
மிகவும் பரிசுத்தமான இடத்தைச் சுத்திகரிப்பு
செய்யவேண்டும். இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவருடைய தீட்டிற்காகவும், பாவங்
களுக்காவும் ஆரோன் இதனையெல்லாம்
செய்யவேண்டும். ஆரோன் இதனை
ஆசரிப்புக் கூடாரத்திற்குள்ளே செய்ய
வேண்டும். 17அவர்களுடைய தீட்டுகளின்
மத்தியிலிருக்கிற மிகப் பரிசுத்தமான இடத்
தில் இச்சடங்குகளையெல்லாம் ஆரோன்
செய்யும்போது எவரும் ஆசரிப்புக்
கூடாரத்தில் நுழையக்கூடாது. ஆரோன்
வெளியே வந்தபிறகுதான் எவரும் நுழைய
வேண்டும். இவ்வாறு ஆரோன் தன்னையும்,
தன் குடும்பத்தாரையும், இஸ்ரவேல் ஜனங்
களையும் சுத்தம் செய்கிறான். 18பிறகு
அவன் கர்த்தருடைய சந்நிதியில் இருக்கிற
பலிபீடத்தின் அருகில் வரவேண்டும்.
அதற்குப் பிராயச்சித்தம் செய்ய, காளையின்
இரத்தத்திலும் வெள்ளாட்டின் இரத்தத்திலும்
கொஞ்சம் எடுத்து பலிபீடத்தின் கொம்புக
ளில் தடவ வேண்டும். 19தன் விரலினால்
அந்த இரத்தத்தைத் தொட்டு ஏழுமுறை
அதன்மேல் தெளிக்க வேண்டும். அதனை
இஸ்ரவேல் ஜனங்களின் தீட்டுகள் நீங்கும்படி
சுத்திகரித்து பரிசுத்தப்படுத்த வேண்டும்.
20“ஆரோன் மிகப் பரிசுத்தமான இடத்தை
யும், ஆசரிப்புக் கூடாரத்தையும், பலி
பீடத்தையும் பரிசுத்தப்படுத்துவான். பிறகு
ஆரோன் உயிருள்ள வெள்ளாட்டைக்
கர்த்தருக்கு முன் கொண்டு வந்து 21தனது
இரு கைகளையும் அதன் தலைமீது
வைப்பான். பிறகு இஸ்ரவேல் ஜனங்களு
டைய பாவங்களையும் குற்றங்களையும்
அறிக்கையிட்டு அந்த வெள்ளாட்டின்
தலையிலே சுமத்துவான். பின் அதனை
அதற்கு நியமிக்கப்பட்ட ஆள் மூலம் வனாந்
திரத்திற்கு அனுப்பிவிடுவான். 22அந்தக்
கடாவானது வனாந்திரத்திற்கு அனைவரது
பாவங்களையும் எடுத்து சென்றுவிடுகிறது.
அதனைக் காட்டிலே விட்டுவிட்டு அந்த ஆள்
வந்துவிடுவான்.
23“பிறகு ஆரோன் ஆசரிப்புக் கூடாரத்திற்
குள் நுழைவான். பரிசுத்த இடத்திற்குள்
நுழையும்போது அவன் அணிந்திருக்கும்
மெல்லிய பஞ்சாடைகளை நீக்கி அவை
களை அங்கேயே வைத்துவிட வேண்டும்.
24ஒரு பரிசுத்தமான இடத்தில் தனது உடல்
முழுவதையும் தண்ணீரால் கழுவி, பிறகு
வேறு சிறப்பு ஆடைகளை அணிந்துக்
கொள்ள வேண்டும். அதன்பின் வெளியே
வந்து தனது மற்றும் ஜனங்களின் தகன
பலிகளைச் செலுத்தி தன்னையும் ஜனங்
களையும் பரிசுத்தமாக்க வேண்டும். 25பின்
பாவப்பரிகார பலியின் கொழுப்பை பலி
பீடத்தின்மேல் எரிப்பான்.

26“போக்காடாகிய கடாவைக் கொண்டு
போய் வனாந்திரத்திலே விட்டவன் ஆடை
களைத் துவைத்துக் குளித்துவிட்டு முகாமுக்
குள் வரவேண்டும்.
27“பாவப்பரிகார பலிக்குரிய காளையை
யும் வெள்ளாட்டையும் முகாமிற்கு வெளியே
கொண்டு செல்லவேண்டும். (அவற்றின்
இரத்தத்தை மட்டும் பரிசுத்த இடத்திற்குள்
கொண்டுபோய் அதனைச் சுத்திகரிப்பு
செய்யவேண்டும்.) தோல்கள், உடல்கள்,
கழிவுகள் அனைத்தையும் ஆசாரியன் நெருப்
பிலே போட்டு எரிக்கவேண்டும். 28எரித்த
வன் ஆடையைத் துவைத்து தண்ணீரில்
உடல் முழுவதையும் கழுவிய பின்னரே
கூடாரத்திற்குள் நுழைய வேண்டும்.
29“இந்தச் சட்டங்கள் என்றென்றும்
தொடர்ந்து இருக்கும். ஏழாவது மாதத்தின்
பத்தாவது நாளில் எவ்வுணவையும் நீங்கள்
உண்ணவோ, ஒரு வேலையும் செய்யவோ
கூடாது.* உங்கள் தேசத்தில் வசிக்கும்

**உண்ணவோ … கூடாது** எழுத்தின் பிரகாரமாக, “உங்களையே தாழ்த்துங்கள்” எனப்பொருள்படும்.

உள்நாட்டுக்காரர்களும், வெளிநாட்டுக்காரர்க
ளும் கூட எவ்வேலையும் செய்யக்கூடாது.
30ஏனென்றால் ஆசாரியர்கள் அந்நாளில்
வந்து உங்களைச் சுத்திகரிப்பு செய்து
உங்கள் பாவங்களைப் போக்குவார்கள்.
பிறகு நீங்கள் கர்த்தருக்கு முன் தீட்டு
இல்லாமல் இருப்பீர்கள். 31இந்நாள் சிறப்பான
ஓய்வு நாளாகும். அன்று உணவு எதையும்
உட்கொள்ளாமல் உங்கள் மனதில்
தாழ்மையுடன் இருக்க வேண்டும். இந்த
விதிமுறை என்றென்றும் இருக்கும்.
32“தேவனுடைய அபிஷேகம் பெற்று
தேர்ந்தெடுக்கப்பட்ட தலைமை ஆசாரியனே
பாவப்பரிகாரம் செய்யத் தகுந்தவன். தனது
தந்தைக்குப் பிறகு தலைமை ஆசாரியனாகப்
பணி செய்யும் உரிமையைப் பெற்றவன்
இவன். ஆசாரியன் பரிசுத்தமான சணல்நூல்
ஆடைகளை அணிந்துகொள்ள வேண்டும்.
33மிகப் பரிசுத்தமான இடத்திற்கும் ஆசரிப்புக்
கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் பிராயச்சித்
தம் செய்யவேண்டும். அவன் மற்ற
ஆசாரியர்களையும், இஸ்ரவேல் ஜனங்களை
யும் சுத்தப்படுத்துவான். 34இஸ்ரவேல்
ஜனங்களின் பாவங்களின் காரணமாக அவர்
களை வருடம் ஒருமுறை பரிசுத்தம் செய்யும்
இச்சட்டம் தொடர்ந்து இருக்கும்” என்றார்.
கர்த்தர் மோசேக்குக் கட்டளையிட்ட படியே
அவர்கள் செய்தார்கள்.

## மிருகங்களைக் கொல்வது மற்றும் உண்பது பற்றிய விதிகள்

17 கர்த்தர் மோசேயிடம், 2“நீ ஆரோ
னுடனும், அவனது மகன்களோடும்
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரிடமும் பேசி,
கர்த்தர் என்ன கட்டளையிட்டுள்ளார்
என்பதைக் கூறு: 3ஒரு இஸ்ரவேலன் ஒரு
காளையையோ, அல்லது ஒரு செம்மறி
யாட்டையோ அல்லது வெள்ளாட்டையோ
முகாமுக்கு உள்ளேயோ அல்லது வெளி
யேயோ கொல்லலாம். 4அவன் அந்த
மிருகத்தை ஆசரிப்புக் கூடாரத்திற்குக்
கொண்டுவர வேண்டும். அவன் அந்த
மிருகத்தின் ஒரு பகுதியை கர்த்தருக்கு
அன்பளிப்பாக அளிக்க வேண்டும். கொல்லப்
பட்ட மிருகத்தின் இரத்தத்தை அவன்
சிந்தியவனாகிறான். எனவே, தனது
அன்பளிப்பை கர்த்தரின் பரிசுத்தக் கூடாரத்
திற்கு எடுத்துச் செல்லவேண்டும். அவன்
அம்மிருகத்தின் ஒரு பகுதியை கர்த்தருக்கு
அன்பளிப்பாக எடுத்துச் செல்லவில்லை
யெனில் அவன் தனது ஜனங்களிடமிருந்து
ஒதுக்கப்பட வேண்டும். 5விதிகள் இவ்வாறு
இருப்பதால் ஜனங்கள் தங்கள் சமாதானப்
பலியைக் கர்த்தருக்குக் கொண்டு வர
வேண்டும். இஸ்ரவேல் ஜனங்கள் வயல்களில்
கொல்கிற மிருகங்களை ஆசரிப்புக்
கூடாரத்திற்கு ஆசாரியனிடம் கொண்டு
வரவேண்டும். 6பிறகு ஆசாரியன் ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் உள்ள பலி
பீடத்தின்மேல் கர்த்தருக்கு முன் இரத்தத்தைத்
தெளிக்க வேண்டும். கொழுப்பை நறு
மணமிக்க வாசனையாக எரிக்க வேண்டும்.
அந்த மணம் கர்த்தருக்கு மிகவும் பிரியமா
யிருக்கும். 7தாங்கள் தவறாகப் பின்பற்றிய
பொய்த் தேவர்களுக்கு இனிமேல் அவர்கள்
எவ்வித பலிகளும் இடாமல் இருக்க
வேண்டும். அவர்கள் இத்தகைய பொய்த்
தேவர்களைப் பின்பற்றினால் ஒரு
வேசியைப் போன்று இருப்பார்கள்.
இவ்விதிகள் நிரந்தரமானவை.
8“ஜனங்களிடம் சொல்லுங்கள், இஸ்ரவேல்
குடிமக்களோ அல்லது உங்களிடைய வாழும்
அயல்நாட்டுக்காரர்களோ தகன பலியையோ
அல்லது வேறு பலிகளையோ 9ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலுக்குக் கர்த்தருக்கு
அளிக்க வரவேண்டும். இவ்வாறு அவர்கள்
செய்யாவிட்டால் மற்ற ஜனங்களிடமிருந்து
ஒதுக்கப்பட்டுப் போவார்கள்.
10“இரத்தத்தைச் சாப்பிடுகிற எவருக்கும்
தேவனாகிய நான் எதிராக இருக்கிறேன்.
அவன் இஸ்ரவேல் குடிமகனாகவோ,
அல்லது உங்களோடு குடியிருக்கும் அயல்
நாட்டுக்காரனாகவோ இருக்கலாம். நான்
அவர்களை மற்ற ஜனங்களிடம் இருந்து
ஒதுக்கிவிடுவேன். 11ஏனென்றால் சரீரத்தின்
உயிர் இரத்தத்தில் உள்ளது. இரத்தத்தைப்
பலிபீடத்தில் ஊற்றும்படி நான் விதிகளைக்
கொடுத்திருக்கிறேன். உங்களைச் சுத்தி
கரித்துக் கொள்ள நீங்கள் இதனைச் செய்ய
வேண்டும். இரத்தமே ஆத்துமாவை பாவ
நிவர்த்தி செய்கிறது. 12உங்களில் எவரும்,
உங்களோடு வாழும் அயல் நாட்டுக்
காரர்களும் இரத்தம் உண்ணக்கூடாது.
13“எவராவது உண்ணத்தக்க பறவை
யையோ, மிருகத்தையோ பிடித்துக்கொன்
றால் அதன் இரத்தத்தைத் தரையிலே ஊற்றி
மண்ணால் மூடவேண்டும். 14இறைச்சியில்
இரத்தம் இருந்தால் இறைச்சியில் மிருகத்தின்
உயிர் இருப்பதாகப் பொருள். இறைச்சியில்
இரத்தம் இருந்தால் அதை உண்ணாதீர்கள்.
இரத்தத்தோடு உண்ணுகிற எவனும் தன்
ஜனங்களிடம் இருந்து ஒதுக்கப்படுவான்.
15“இஸ்ரவேலராகிய நீங்களும் உங்களோடு
வசிக்கும் அயலார் எவரும் தானாக
மரித்துப்போன மிருகத்தையோ, வேறு
மிருகத்தாலே கொல்லப்பட்ட மிருகத்தையோ
உண்ணக்கூடாது, அது உங்களுக்குத் தீட்டா
யிருக்கும். அப்படி உண்பவன் மாலைவரை
தீட்டாயிருப்பான். மாலையில் அவன் தன்
உடையைத் துவைத்து தண்ணீரால் உடல்
முழுவதையும் கழுவ வேண்டும். 16அவன்
தனது ஆடையைத் துவைக்காவிட்டாலோ,
தண்ணீரால் உடலைக் கழுவாவிட்டாலோ
அவன் குற்றமுள்ளவனாயிப்பான்” என்று
கூறினார்.

### பாலியல் உறவுகள் தொடர்பான விதிகள்

18 மேலும் கர்த்தர் மோசேயிடம்,
2“இஸ்ரவேல் ஜனங்களிடம் நீ
கூறவேண்டியதாவது: நானே தேவனாகிய
கர்த்தர் 3எகிப்திலிருந்த உங்களை நான்
கானானுக்கு வழி நடத்தினேன். அங்கு
செய்துவந்த செயல்களை எல்லாம் இங்கு
செய்யக்கூடாது. நான் உங்களை கானான்
தேசத்திற்கு நடத்திச் செல்கிறேன். அவர்
களின் பழக்கவழக்கங்களைப் பின்பற்றாதீர்
கள். 4நீங்கள் எனக்குக் கீழ்ப்படிந்து எனது
விதிகளைப் பின்பற்றுவதில் உறுதியாக
இருங்கள். ஏனென்றால் நானே உங்கள்
தேவனாகிய கர்த்தர். 5எனவே நீங்கள்
எனக்குக் கீழ்ப்படிந்து எனது விதிகளைப்
பின்பற்ற வேண்டும். எனது சட்டங்களுக்
கும், விதிகளுக்கும் கீழ்ப்படிகிறவனே உண்
மையில் நீடித்து வாழ்வான். நானே கர்த்தர்.
6“நீங்கள் உங்களுடைய நெருங்கிய
உறவினர்களுடன் பாலின உறவு கொள்ளக்
கூடாது. நானே கர்த்தர்!
7“நீங்கள் உங்கள் தந்தையோடும் தாயோ
டும் பாலின உறவு* தொடர்பு கொள்ளக்
கூடாது. அந்தப்பெண் உனது தாய். எனவே
நீ அவளோடு பாலின உறவு கொள்ளக்
கூடாது. 8அவள் உனது தாயாக இல்லா
விட்டாலும் உனது தந்தையின் மனைவி
யோடு பாலின உறவு வைத்துக்கொள்ளக்
கூடாது. ஏனென்றால் அது உனது தந்தையை
நிர்வாணமாக்குவது போன்ற தாகும்.
9“நீங்கள் உங்கள் சகோதரியோடு பாலின
உறவு வைத்துக்கொள்ளக் கூடாது. அவள்
உனது தந்தைக்கோ, தாய்க்கோ பிறந்தவளாக
இல்லாமல் இருக்கலாம். அவள் உனது
வீட்டிலே பிறந்தவளாகவோ* வேறு இடத்
தில் பிறந்தவளாகவோ இருக்கலாம்.
10“நீ உன் பேத்தியோடு பாலின உறவு
வைத்துக்கொள்ளக் கூடாது. அவர்கள் உங்க
ளில் ஒரு பகுதியானவர்கள்.
11“உனது தந்தைக்கும் அவரது மனை
விக்கும் பிறந்தவளாக இருந்தாலும் அவள்
உனது சகோதரிதான். நீ அவளோடு பாலின
உறவு வைத்துக்கொள்ளக் கூடாது.
12“உன் தந்தையின் சகோதரியோடும்
பாலின உறவு வைத்துக்கொள்ளக் கூடாது.
அவள் உனது தந்தையோடு நெருங்கிய
உறவு உடையவள். 13நீ உனது தாயின்
சகோதரியோடும் பாலின உறவு வைத்துக்
கொள்ளக் கூடாது. அவள் உனது தாயின்
நெருங்கிய உறவினள். 14நீ உனது தந்தையின்
சகோதரனோடும் பாலின உறவு வைத்துக்
கொள்ளக் கூடாது. நீ அவரது மனைவியோ
டும் பாலின உறவு வைத்துக்கொள்ளக்
கூடாது. ஏனென்றால் அவள் உனது அத்தை
அல்லது சித்தி அல்லது பெரியம்மாள்.
15“நீ உனது மருமகளோடும் பாலின
உறவு வைத்துக்கொள்ளக் கூடாது. ஏனென்
றால் அவள் உனது மகனின் மனைவி.
அவளோடு பாலின உறவு வைத்துக்
கொள்ளக் கூடாது.
16“நீ உனது சகோதரனது மனைவியோ
டும் பாலின உறவு வைத்துக்கொள்ளக்
கூடாது. அது உனது சகோதரனை நிர்வாண
மாக்குவது போன்றதாகும்.
17“நீ தாய்-மகள் இருவரோடும் பாலின
உறவு கொள்ளக்கூடாது. அதோடு அவளது
பேத்தியோடும் பாலின உறவு
வைத்துக்கொள்ளக் கூடாது. அந்தப் பேத்தி
அவளது மகளின் மகளாகவும் மகனின்
மகளாகவும் இருக்கலாம். அவளது பேத்தி
என்றால் அவளுக்கு நெருக்கமான உறவி
னள். அவர்களோடு தொடர்பு வைத்துக்
கொள்வது முறைகெட்ட செயல்.
18“உனது மனைவி உயிரோடு இருக்கும்
போது அவளது தங்கையை அடுத்த மனை
வியாக வைத்துக்கொள்ளக் கூடாது.
இது அந்தச் சகோதரிகளை விரோதிகளாக
மாற்றி விடும். உனது மனைவியின்
சகோதரியோடு பாலின உறவு
வைத்துக்கொள்ளக் கூடாது.
19“ஒரு பெண் மாதவிலக்கான காலத்தில்
இருக்கும்போது அவளோடு பாலின உறவு
வைத்துக்கொள்ளக் கூடாது. அவள் அப்
போது தீட்டுள்ளவளாக இருக்கிறாள்.
20“பக்கத்து வீட்டுக்காரனின் மனைவியோ
டும் பாலின உறவு வைத்துக்கொள்ளக்
கூடாது. இது உன்னை தீட்டுள்ளவனாக்கி
விடும்.
21“நீ உனது குழந்தைகளை மோளேகு
என்ற பொய்த் தெய்வத்திற்கு முன்பு நெருப்
பில் நடக்கும்படி அனுமதியாதே. நீ இதனைச்
செய்தால் உனது தேவனை மதிக்கவில்லை
என்று பொருள். நானே கர்த்தர்.
22“நீ பெண்ணோடு பாலின உறவு
வைத்துக்கொள்வதைப் போல ஆணோடு
பாலின உறவு வைத்துக்கொள்ளக் கூடாது.
இது பயங்கரமான பாவமாகும்.
23“நீ எந்த மிருகத்தோடும் பாலின உறவு
வைத்துக்கொள்ளக் கூடாது. இது உன்னை
அருவருப்பு உள்ளவனாக்கும். இதுபோல்
ஒரு பெண்ணும் எந்த மிருகத்தோடும் பாலின
உறவு வைத்துக்கொள்ளக் கூடாது. இது
இயற்கைக்கு மாறானது.

---

**பாலின உறவு** எழுத்தின் பிரகாரமாக, “நிர்வாணத்தை மூடாமல்” எனப் பொருள்படும்.

**உனது வீட்டிலே பிறந்தவளாகவோ** அல்லது ஒரு குடும்பத்தைக் குறித்தது. ஒரு மனிதனுக்கு பல மனைவிகள் இருக்கும்போது, ஒவ்வொரு மனைவிக்கும் அவளது பிள்ளைகளுக்கும் சொந்தமாக கூடாரம் வீட்டின் ஒரு பகுதியாக இருக்கும். அக்குடும்பத்திலேயே அவர்கள் ஒரு சிறு குடும்பக் குழுவாக இருப்பார்கள். எனவே ஒரு மனிதன், தன் தகப்பனுடைய குமாரத்திகளில், அது தன் சொந்த சகோதரியாகவோ அல்லது மற்றொரு தாயின் மகளாகவோ இருந்தாலும், அவர்களோடு பாலின உறவு கொள்ளக்கூடாது என்பதை இது குறிக்கிறது.

24“இது போன்ற தவறான செயல்களைச்
செய்து உங்களைத் தீட்டுள்ளவர்களாக்கிக்
கொள்ளாதீர்கள். இத்தேசத்தில் உள்ளவர்
களை வெளியே துரத்திக் கொண்டிருக்கி
றேன். அவர்களின் நிலத்தை உங்களுக்குத்
தந்தேன், ஏனென்றால் அவர்கள் இத்தகைய
பயங்கரமான பாவங்களைச் செய்திருக்கிறார்
கள். 25அவர்கள் இந்த நாட்டையும்
அருவருப்பாக்கி விட்டார்கள். எனவே நான்
இதன் பாவத்துக்காக இதனைத் தண்டிப்
பேன். அந்நாடு அங்கு வாழ்பவர்களைக்
கக்கிப்போடும்.
26“நீங்கள் என்னுடைய சட்டங்களுக்கும்
விதிகளுக்கும் கீழ்ப்படிய வேண்டும். நீங்கள்
இதுபோன்ற பயங்கரமான பாவங்களைச்
செய்யக்கூடாது. இந்த விதிகள் இஸ்ரவேல்
குடிமக்களுக்கும் அவர்களிடையே வாழும்
அயலாருக்கும் உரியது. 27உங்களுக்கு
முன்னால் இந்த நாட்டில் வாழ்ந்தவர்கள்
எல்லாம் அத்தகைய பாவங்களைச் செய்தார்
கள். அதனால் நாடே அருவருப்பாயிற்று.
28நீங்கள் இவற்றைச் செய்தால் நீங்களும்
இந்த நாட்டை அருவருப்பாக்குவீர்கள்.
அவர்களை இந்நாடு கக்கிப்போட்டது
போன்று உங்களைக் கக்கிப்போடும். 29எவ
ராவது இதுபோன்ற மோசமான பாவங்க
ளைச் செய்தால் பிறகு அவர்கள் தங்கள்
ஜனங்களிடமிருந்து ஒதுக்கப்படுவார்கள்.
30மற்ற ஜனங்கள் இத்தகைய மோசமான
பாவங்களைச் செய்தார்கள், ஆனால் நீங்கள்
எனது சட்டங்களுக்குக் கீழ்ப்படிய வேண்
டும். நீங்கள் இதுபோன்ற மோசமான
பாவங்களைச் செய்து உங்களை அரு
வருப்பாக்கிக் கொள்ளாதீர்கள். நான் உங்கள்
தேவனாகிய கர்த்தர்” என்று கூறினார்.

### இஸ்ரவேல் ஜனங்கள் தேவனுக்குரியவர்கள்

19 கர்த்தர் மோசேயிடம், 2“அனைத்து
இஸ்ரவேல் ஜனங்களுக்கும் நீ கூற
வேண்டியதாவது: நான் உங்கள் தேவனாகிய
கர்த்தர். நான் பரிசுத்தமானவர். எனவே,
நீங்களும் பரிசுத்தமாய் இருக்கவேண்டும்.
3“உங்களில் ஒவ்வொருவரும் தங்கள் தாய்
தந்தைக்கு மரியாதை செய்யவேண்டும். என்
ஓய்வு நாட்களை* ஆசரிக்கவேண்டும். நான்
உங்கள் தேவனாகிய கர்த்தர்!
4“விக்கிரகங்களை வணங்காதீர்கள். வார்ப்
பிக்கப்பட்ட தெய்வங்களை உருவாக்காதீர்
கள். நானே உங்கள் தேவனாகிய கர்த்தர்.
5“நீங்கள் சமாதானப் பலியைக் கர்த்த
ருக்குக் கொடுக்கும்போது அது அங்கீ
கரிக்கப்படத்தக்க சரியான வழியிலேயே
செய்யவேண்டும். 6நீங்கள் பலிகொடுத்த
நாளிலும், மறுநாளும் அதனை உண்ணலாம்.
ஆனால் அந்த உணவில் மீதியானது
மூன்றாவது நாளும் இருந்தால் அதனை
நெருப்பில் போட்டு எரித்துவிட வேண்டும்.
7மூன்றாவது நாள் பலியின் மீதியான
எதையும் நீங்கள் உண்ணக்கூடாது. இது
தீட்டானது, இது ஏற்றுக்கொள்ளப்பட
முடியாதது. 8இதனை எவராவது செய்தால்
அது பாவமாயிருக்கும். ஏனென்றால்
அவர்கள் கர்த்தருக்குரிய பரிசுத்தமான
வற்றை மதிக்கவில்லை. இத்தகைய மனிதர்
கள் தம் ஜனங்களிடமிருந்து ஒதுக்கப்படுவார்
கள்.
9“அறுவடைக் காலத்தில் நீங்கள்
விளைந்த பயிரை அறுவடை செய்யும்
போது வயலின் எல்லாப் பகுதிகளையும்
மூலைகளையும் சேர்த்து அறுக்காதீர்கள்.
தானியங்கள் தரையில் சிதறுமானால் அவற்
றைச் சேகரித்து அள்ளிக் கொள்ளாதீர்கள்.
10உங்கள் திராட்சைக் கொடியில் உள்ள
அனைத்து திராட்சைப் பழங்களையும்
பறிக்காதீர்கள். தரையில் விழும் திராட்சைப்
பழங்களையும் பொறுக்கிக் கொள்ளாதீர்கள்.
அவற்றை ஏழை ஜனங்களுக்கும் பயணி
களுக்கும் விட்டுவிட வேண்டும். நானே
உங்கள் தேவனாகிய கர்த்தர்.
11“நீங்கள் திருடக்கூடாது. நீங்கள் ஜனங்
களை ஏமாற்றவும் கூடாது. ஒருவருக்
கொருவர் பொய் சொல்லாதீர்கள். 12எனது
பெயரைப் பயன்படுத்தி பொய் சத்தியம்
செய்யாதீர்கள். நீங்கள் அவ்வாறு செய்தால்
உங்கள் தேவனின் பெயரை மதிக்காமல்
இருக்கிறீர்கள். நானே கர்த்தர்.
13“உங்கள் அண்டை வீட்டுக்காரனுக்குத்
தீமை செய்யாதீர்கள். அவனிடம் திருடாதீர்
கள். வேலைக்காரனின் கூலியை விடியும்
வரை இரவு முழுக்க நிறுத்தி வைக்காதீர்கள்.
14“செவிடர்களை நீங்கள் சபிக்காதீர்கள்.
குருடன் விழுந்து விடும்படி அவன் எதிரே
எதுவும் போடாதீர்கள். உங்கள் தேவனுக்கு
மரியாதைச் செலுத்தவேண்டும். நானே
கர்த்தர்!
15“நீங்கள் நியாயத்தீர்ப்பில் நடுநிலையுடன்
இருங்கள். ஒருவன் ஏழை என்பதினால்
சிறப்பான சலுகையோ அல்லது ஒருவர்
முக்கியமான மனிதர் என்பதினால் விசேஷ
சலுகையோ செய்யக்கூடாது. உனது
அயலானுக்குத் தீர்ப்பளிக்கும்போது நடு
நிலையில் இருந்து சொல்லவேண்டும்.
16மற்றவர்களைப் பற்றிய பொய்க் கதை
களைப் பரப்பிக்கொண்டு திரியக்கூடாது.
அயலானின் வாழ்வுக்கு ஆபத்து ஏற்படும்படி
நீ எதுவும் செய்யக்கூடாது. நானே கர்த்தர்!
17“உன் மனதில் உன் சகோதரனை நீ
வெறுக்கக்கூடாது. உனது அயலான்
உனக்குக் கெடுதல் செய்தால் அதைப்பற்றி
அவனிடம் பேசு, பின் அவனை
மன்னித்துவிடு. 18உனக்கு ஜனங்கள் செய்த

---

**ஓய்வு நாட்கள்** அல்லது வாரத்தின் ஏழாவது நாள். இது சனிக்கிழமையை குறிக்கலாம் அல்லது ஜனங்கள் வேலை செய்யக்கூடாத எல்லா விசேஷ நாட்களையும் குறிக்கலாம்.

தீமைகளை மறந்துவிடு. பழிவாங்க முயற்சி
செய்யாதே. உனது அயலானையும்
உன்னைப் போல நேசி. நானே கர்த்தர்!
19"நீங்கள் என்னுடைய சட்டங்களுக்குக்
கீழ்ப்படிய வேண்டும். நீங்கள் இருவிதமான
மிருகங்களைச் சேர்த்து இனப்பெருக்கம்
செய்யக்கூடாது. உங்களது வயலில் இரண்டு
விதமான விதைகளை விதைக்கக்கூடாது.
இரண்டு விதமான நூலில் இருந்து
தயாரிக்கப்பட்ட ஆடைகளை அணியக்
கூடாது.
20"அடுத்தவனிடம் அடிமையாய் இருக்கிற
ஒரு பெண்ணுடன் ஒருவன் பாலியல்
உறவுகொள்ள நேரிடலாம். ஆனால் அவளை
வாங்கவோ அவளுக்குச் சுதந்திரம் அளிக்
கவோ முடியாது. இவ்வாறு நடந்தால்
இது தண்டனைக்குரியது. ஆனால் இது
மரணத்திற்குரியது அல்ல; ஏனென்றால்
அவள் சுதந்திரமானவள் அல்ல. 21அவன்
குற்றபரிகார பலியாக ஆட்டுக்கடா ஒன்றை
ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்குக்
கொண்டுவர வேண்டும். 22அவன் சுத்தி
கரிக்கப்படும்படி ஆசாரியன் பாவ நிவிர்த்தி
செய்வான். கர்த்தருக்கு முன்பாக ஆசாரியன்
ஆட்டுக்கடாவை குற்றபரிகார பலியாகச்
செலுத்த வேண்டும், அப்போது அவன்
பாவங்கள் மன்னிக்கப்படும்.
23"வருங்காலத்தில் உங்கள் நாட்டுக்குள்
நுழைந்த பின்பு உணவுக்காகப் பலவிதமான
மரங்களை நீங்கள் நடுவீர்கள். ஒரு மரத்தை
நட்டபிறகு மூன்று வருடத்திற்கு அதிலுள்ள
பழங்களைப் பயன்படுத்தாமல் விட்டுவிட
வேண்டும். 24நான்காவது ஆண்டில் கிடைக்
கும் பழங்கள் கர்த்தருக்குரியவை.
அவற்றைப் பரிசுத்தக் காணிக்கையாகக்
கர்த்தரைத் துதிப்பதற்காகக் கொடுக்க
வேண்டும். 25ஐந்தாவது ஆண்டில் அம்மரத்தி
லுள்ள கனியை நீங்கள் உண்ணலாம்.
அம்மரம் உங்களுக்காக மேலும் மேலும்
பழங்களைத்தரும். உனது தேவனாகிய
கர்த்தர் நானே.
26"இரத்தம் இருக்கிற இறைச்சியை நீங்கள்
உண்ணக்கூடாது.
"மாயவேலைகளைப் பயன்படுத்தவோ,
அல்லது எதிர்காலத்தைப்பற்றி அறிய
மந்திர, தந்திர வழிகளில் முயற்சி செய்யவோ
கூடாது.
27"உன் முகத்தில் வளருகிற முடியையும்,
தாடியையும் மழிக்கக்கூடாது. 28மரித்து
போனவர்களின் நினைவாக உன் உடலில்
கீறி அடையாளம் உருவாக்காதே. உன்
உடம்பில் பச்சை குத்திக்கொள்ளாதே. நானே
கர்த்தர்.
29"உனது மகள் வேசியாகும்படி விடாதே.
அவளை நீ மதிக்கவில்லை என்பதையே
அது காட்டும். உன் நாட்டில் ஜனங்கள்
வேசிகளாகும்படி விடாதே. இத்தகைய
பாவம் உன் நாட்டில் காணப்படக்கூடாது.
30"எனது ஓய்வுநாளில் நீங்கள் வேலை
செய்யக்கூடாது. என் பரிசுத்தமான இடத்தை
நீங்கள் மதிக்கவேண்டும். நானே கர்த்தர்.
31"மந்திரவாதிகளிடமும்* செத்தவர்களிட
மும் தொடர்பு கொள்வதாகக் கூறுபவர்களிட
மும்* புத்திமதி கேட்டு செல்லாதீர்கள்.
அவர்கள் உங்களைத் தீட்டுப்படுத்துவார்கள்.
நானே உங்கள் தேவனாகிய கர்த்தர்.
32"முதியவர்களுக்கு மரியாதை கொடு.
அவர்கள் அறைக்குள் வரும்போது எழுந்து
நில். உங்கள் தேவனுக்கு மரியாதை செலுத்
துங்கள். நானே கர்த்தர்.
33"உனது நாட்டில் வாழும் அயல்
நாட்டுக்காரர்களுக்குக் கெடுதல் செய்யாதே.
34நீ உனது நாட்டாரை மதிப்பதுபோலவே
அந்நியர்களையும் மதிக்க வேண்டும். நீ
உன்னையே நேசிப்பதுபோல அந்நியர்களை
யும் நேசிக்க வேண்டும். ஏனென்றால் நீங்க
ளும் முன்பு எகிப்தில் அந்நியராயிருந்தீர்கள்.
நானே உங்கள் தேவனாகிய கர்த்தர்.
35"நியாய விசாரணையின்போது நடு
நிலமையில் இருங்கள். அளக்கும்போதும்,
நிறுக்கும்போதும் நேர்மையாக இருங்கள்.
36உங்கள் கூடைகளும், ஜாடிகளும் சரியான
அளவுள்ளவையாக இருக்கட்டும். உங்கள்
எடைக் கற்களும், தராசும் பொருட்களைச்
சரியாக எடை போடட்டும். நானே உங்கள்
தேவனாகிய கர்த்தர், எகிப்திலிருந்து உங்
களை நானே வெளியே அழைத்து வந்தேன்.
37"எனது கட்டளைகளையும், எனது
விதிகளையும் நினைவில் கொண்டு
அவற்றுக்கு நீங்கள் கீழ்ப்படிய வேண்டும்.
நானே கர்த்தர்" என்று கூறினார்.

### விக்கிரக ஆராதனைக்கு எதிரான எச்சரிக்கை

20 கர்த்தர் மோசேயிடம், 2"இஸ்ரவேல்
ஜனங்களிடம் நீ இவற்றையும் கூற
வேண்டும். உங்கள் நாட்டில் உள்ளவர்களில்
இஸ்ரவேலரில் ஒருவனோ அல்லது அந்நி
யரில் ஒருவனோ எவனாவது தன் பிள்ளை
களை போலிதெய்வமாகிய மோளேகுக்கு
அர்ப்பணித்தால் அவன் கல்லெறிந்து
கொல்லப்பட வேண்டும். 3நான் அவனுக்கு
எதிராக இருப்பேன். அவன் தன் பிள்ளை
களை மோளேகுக்குக் கொடுத்தபடியால்,
எனது பரிசுத்தமான பெயருக்கு மரியாதை
கொடுக்கவில்லை என்பதை அவன்
காட்டிவிட்டான். அவன் எனது பரிசுத்த
இடத்தைத் தீட்டாக்கிவிட்டான். 4அவனை
பொதுஜனங்கள் தங்களை விட்டு ஒதுக்கித்
தள்ளி விடலாம். மோளேகுக்குத் தன்
பிள்ளையைக் கொடுத்த அவனைப்

---

**மந்திரவாதி(கள்)** இறந்தவர்களின் ஆவிகளோடு பேச முயற்சிப்பவன்.

**செத்தவர்களிடம் … கூறுபவர்களிடமும்** தீய ஆவிகளை வைத்துக்கொண்டு மந்திரம் செய்பவன்.

புறக்கணிக்கலாம். அவர்கள் அவனைக்
கொல்லாமல் விடலாம். 5ஆனால் நான்
அவனுக்கும் அவனது குடும்பத்துக்கும்
எதிராக இருப்பேன். அவனை மற்ற
ஜனங்களிடம் இருந்து பிரித்து வைப்பேன்.
என்னிடம் நம்பிக்கையில்லாமல் இருக்கிற
எவனையும், மோளேகுக்குப் பின்
செல்லுகிற எவனையும் நான் ஒதுக்கி
வைப்பேன்.
6“மந்திரவாதிகளையும், குறி சொல்லுகிற
வனிடமும் எவனாவது அறிவுரை கேட்க
நாடிச்சென்றால் நான் அவனுக்கு எதிராக
இருப்பேன். அவன் என்னில் நம்பிக்கை
யற்றவனாக இருப்பதால் அவனை மற்ற
ஜனங்களை விட்டு தனியே பிரித்து வைப்
பேன்.
7“நீங்கள் சிறப்பானவர்களாயிருங்கள்.
உங்களைப் பரிசுத்தப் படுத்திக்கொள்ளுங்
கள், ஏனென்றால் நான் பரிசுத்தராய்
இருக்கிறேன். நானே உங்கள் தேவனாகிய
கர்த்தர். 8என் கட்டளைகளை நினைவில்
கொண்டு அவற்றுக்குக் கீழ்ப்படியுங்கள்.
நானே கர்த்தர். நான் உங்களை பரிசுத்த
மாக்குவேன்.
9“எவனாவது தன் தந்தை அல்லது
தாயைச் சபித்தால் அவன் கொலை
செய்யப்பட வேண்டும். அவ்வாறு செய்வதி
னால் அவனது மரணத்துக்கு அவனே
பொறுப்புள்ளவனாகிறான்.*

## பாலியல் பாவங்களுக்கான தண்டனைகள்

10“எவனாவது பிறனுடைய மனைவி
யோடு பாலின உறவு கொண்டால்
இருவரும் விபசாரம் என்னும் பாவத்துக்கு
ஆளாகிறார்கள். எனவே அந்த ஆண், பெண்
இருவரும் கொலைச் செய்யப்பட வேண்டும்.
11எவனாவது தன் தந்தையின்
மனைவியோடு பாலின உறவு கொண்டால்
அந்த இருவரும் கொலை செய்யப்பட
வேண்டும். அவர்களின் மரணத்துக்கு
அவர்களே பொறுப்பாவார்கள்.* அது
அவன் தன் தந்தையை நிர்வாணப்படுத்தி
யது போன்றதாகும்.
12“ஒருவன் தன் மருமகளோடு பாலின
உறவு கொண்டால் அந்த இருவரும் கொலை
செய்யப்பட வேண்டும். அவர்கள் மிக
மோசமான பாலியல் பாவத்தைச் செய்தி
ருக்கிறார்கள். அவர்கள் மரணத்துக்கு அவர்
களே பொறுப்பாவார்கள்.
13“ஒருவன் இன்னொரு ஆணோடு,
பெண்ணோடு பாலின உறவு கொள்வது
போன்று பாலின உறவு கொண்டால்
அந்த இருவரும் பெரும் பாவம் செய்த
படியால் அவர்கள் கொல்லப்பட வேண்டும்.
அவர்களே தம் மரணத்துக்குப் பொறுப்பா
வார்கள்.
14“ஒருவன் ஒரு தாயோடும் மகளோடும்
பாலின உறவு கொண்டால் இதுவும் பெரிய
பாலியல் பாவமாகும். ஜனங்கள் அவர்கள்
மூவரையும் நெருப்பிலே போட்டுக் கொல்ல
வேண்டும். இதுபோன்ற பாலியல் பாவங்கள்
உங்கள் ஜனங்களிடம் ஏற்படாமல் பார்த்துக்
கொள்ளுங்கள்.
15“எவனாவது மிருகத்தோடு பாலின
உறவு கொண்டிருந்தால் அவன் கொல்லப்
படவேண்டும். அந்த மிருகத்தையும் நீ
கொன்றுபோட வேண்டும். 16ஒரு பெண்
மிருகத்தோடு பாலின உறவு கொண்டால்
நீ அவளையும் அந்த மிருகத்தையும்
கொன்றுவிட வேண்டும். அவர்களே தங்கள்
மரணத்துக்குப் பொறுப்பாவார்கள்.
17“ஒருவன் தன் சகோதரியையோ,
சகோதரி முறையுள்ளவளையோ மணந்து
கொண்டு அவளோடு பாலின உறவு கொள்
வது வெட்கக்கரமான பாவமாகும். அவர்கள்
பொதுஜனங்கள் மத்தியில் தண்டிக்கப்படுவ
துடன், மற்ற ஜனங்களிடமிருந்தும் தனியே
பிரிக்கப்பட வேண்டும். ஒருவன் தன்
சகோதரியோடு பாலின உறவு கொண்ட
பாவத்துக்காக அவன் தண்டிக்கப்பட
வேண்டும்.*
18“ஒருவன் ஒரு பெண் மாதவிலக்காக
இருக்கும்போது அவளுடன் பாலின உறவு
கொண்டால் அவர்கள் இருவருமே தங்கள்
ஜனங்களிடமிருந்து தனியே ஒதுக்கப்பட
வேண்டியவர்கள். அவளது இரத்தப்
போக்கை அவன் திறந்து விட்டிருக்கிறபடி
யால் அவர்கள் பாவம் செய்தவர்களாகிறார்
கள்.
19“நீங்கள் உங்கள் தந்தை அல்லது தாயின்
சகோதரியோடு பாலின உறவு கொள்ளக்
கூடாது. இது நெருங்கிய உறவோடு பாலின
உறவு கொண்ட பாவத்திற்குரியது. உங்கள்
பாவத்திற்கு நீங்கள் தண்டிக்கப்பட வேண்
டும்.
20“ஒருவன் தன் தகப்பனின் சகோதரனு
டைய மனைவியோடு பாலின உறவு
கொண்டால் அது தகப்பனின் சகோதர
னோடு பாலின உறவு கொண்டது
போலாகும். அவனும் அவனுடைய தகப்ப
னின் சகோதரனின் மனைவியும் தண்டிக்கப்
பட வேண்டியவர்கள். அவர்கள் குழந்தைகள்
இல்லாமல் செத்துப்போவார்கள்.*

---

**அவனது … பொறுப்புள்ளவனாகிறான்** எழுத்தின் பிரகாரமாக, “அவனது இரத்தப்பழி அவன் மேலேயே இருக்கும்” எனப் பொருள்படும்.

**அவர்களின் … பொறுப்பாவார்கள்** எழுத்தின் பிரகாரமாக, “அவர்களது இரத்தபழி அவர்கள் மேலேயே இருக்கும்” எனப் பொருள்படும்.

**ஒருவன் … தண்டிக்கப்படவேண்டும்** எழுத்தின் பிரகாரமாக, “அவன் குற்றத்தை அவனே சுமப்பான்.” எனப் பொருள்படும்.

**அவனும் … செத்துப்போவார்கள்** எழுத்தின் பிரகாரமாக, அவர்களது குழந்தையில்லாத தன்மையை அவர்கள் சகிக்க வேண்டும். அவர்கள் மரித்துப் போவார்கள்.

21ஒருவன் தனது சகோதரனின் மனை
வியை எடுத்துக்கொள்வது தவறானதாகும்.
இது அவன் தன் சகோதரனோடு பாலின
உறவு கொள்வது போன்றதாகும். அவர்
களுக்கும் குழந்தைகள் இல்லாமற்போகும்.
22“நீங்கள் எனது சட்டங்களையும் விதி
களையும் நினைவில் கொண்டு,
அவற்றுக்குக் கீழ்ப்படிய வேண்டும். நான்
உங்கள் நாட்டிற்கு உங்களை அழைத்துச்
செல்கிறேன். நீங்கள் அங்கு வாழும்போது
எனது சட்டங்களுக்கும், விதிகளுக்கும்
கீழ்ப்படிந்தால் அந்த நாடு உங்களை
கக்கிவிடாது. 23நான் மற்றவர்களை
அந்நாட்டினின்று துரத்தி விடுகிறேன்.
ஏனென்றால் அவர்கள் இத்தகைய பாவங்
களையெல்லாம் செய்கின்றனர். நான்
அப்பாவங்களை வெறுக்கிறேன். எனவே
அவர்களைப் போலவே நீங்களும் வாழாதீர்
கள்!
24“அவர்களின் நாட்டை நீங்கள் பெற்றுக்
கொள்வீர்கள் என்று நான் கூறியிருக்கிறேன்.
அவர்களின் நாட்டை உங்களுக்குக் கொடுப்
பேன். இது உங்கள் நாடாகும். அது
நன்மைகள் நிரம்பிய நாடாக இருக்கும்.*
நானே உங்கள் தேவனாகிய கர்த்தர்!
“நான் உங்களை என் சிறப்புக்குரிய
ஜனங்களாக அழைத்திருக்கிறேன். மற்றவர்
களைவிட உங்களை வித்தியாசமாக நடத்தி
யிருக்கிறேன். 25எனவே நீங்கள் தீட்டுள்ள
மிருகங்களிலிருந்து தீட்டு இல்லாத மிருகங்
களையும், தீட்டுள்ள பறவைகளிலிருந்து
தீட்டு இல்லாத பறவைகளையும் வேறு
படுத்தி நடத்தவேண்டும். தீட்டுள்ள பறவை
களையும், மிருகங்களையும், ஊர்ந்து செல்லு
கின்றவற்றையும் உண்ணாதீர்கள். நான்
அவற்றைத் தீட்டுள்ளதாகச் செய்திருக்கி
றேன். 26நான் உங்களை எனக்கென்று
சிறப்பான மக்களாகச் செய்திருக்கிறேன்;
எனவே நீங்கள் எனக்குப் பரிசுத்தமாக
இருக்கவேண்டும். ஏனென்றால் நான்
பரிசுத்தமுள்ளவர். நானே கர்த்தர்!
27“மந்திரவாதிகளையும், குறிசொல்லுகிற
ஆண்களையும் பெண்களையும் ஜனங்கள்
கல்லெறிந்து கொல்ல வேண்டும்” என்று
கூறினார்.

### ஆசாரியர்களுக்கான விதிகள்

21 கர்த்தர் மோசேயிடம், “ஆரோனின்
மகன்களான ஆசாரியர்களிடம் பின்
வருபவைகளைக் கூறு: ஒரு ஆசாரியன்
மரித்த ஒருவனின் உடலைத்தொட்டு தீட்
டுள்ளவனாகக் கூடாது. 2ஆனால் மரித்தவன்
அவனது நெருங்கிய உறவினனாக இருந்தால்
அவன் அந்தப் பிணத்தைத் தொடலாம்.
மரித்துபோனவர்கள் அவரது தாய் அல்லது
தந்தை, மகன் அல்லது மகள், சகோதரன்
அல்லது 3திருமணமாகாத* கன்னித் தன்மை
யுள்ள சகோதரி எனும் உறவினராக
இருந்தால் ஆசாரியன் தீட்டு உள்ளவனாக
லாம். திருமணம் ஆகாத சகோதரி என்றால்
அவளுக்குக் கணவன் இல்லை. எனவே
அவன் அவளுக்கு நெருக்கமானவனாகிறான்.
அவள் மரித்துபோனால் அவன் தீட்டுள்ள
வனாகலாம். 4ஆனால் ஆசாரியனின் அடிமை
களுள் ஒருவன் மரித்துபோனால் அதற்காக
ஆசாரியன் தீட்டுள்ளவனாகக் கூடாது.
5“ஆசாரியர்கள் தங்கள் தலையை
மொட்டையடிக்கவோ, தங்கள் தாடியின்
ஓரங்களை மழிக்கவோ கூடாது. தங்கள்
உடலில் வெட்டி எவ்வித அடையாளக்
குறிகளும் இல்லாமல் பார்த்துக்கொள்ள
வேண்டும். 6இவர்கள் தங்கள் தேவனுக்குப்
பரிசுத்தமாக இருக்க வேண்டும். இவர்கள்
தேவனின் பெயருக்கு மரியாதை செலுத்த
வேண்டும், ஏனென்றால் இவர்கள் கர்த்தரின்
தகன பலியையும் அப்பத்தையும் செலுத்து
கிறவர்கள். எனவே, பரிசுத்தமாக இருக்க
வேண்டும்.
7“விசேஷ வழியில் ஒரு ஆசாரியன்
தேவனுக்குச் சேவை செய்கிறான். எனவே
அவர்கள் வேசியையோ, கற்பிழந்த
வளையோ திருமணம் செய்துக்கொள்ளக்
கூடாது. கணவனால் விவாகரத்து செய்யப்
பட்ட பெண்ணையும் திருமணம் செய்து
கொள்ளக் கூடாது. 8ஒரு ஆசாரியன்
தேவனுக்கு விசேஷ வழியில் சேவை
செய்கிறான். ஆகையால் நீங்கள் அவனை
விசேஷமாக நடத்தவேண்டும். ஏனென்றால்
அவன் பரிசுத்தமான பொருட்களை ஏந்திச்
செல்பவன். பரிசுத்தமான அப்பத்தைக்
கர்த்தருக்கு எடுத்து வருபவன். நான்
பரிசுத்தமானவர்! நானே கர்த்தர். நான்
உன்னையும் பரிசுத்தப்படுத்துவேன்.
9“ஒரு ஆசாரியனின் மகள் வேசியானால்
அவள் தனது பரிசுத்தத்தைக் குலைத்து
கொள்வதுடன், தன் தந்தைக்கும் அவமா
னத்தைத் தேடித்தருகிறாள். அவளைச்
சுட்டெரிக்க வேண்டும்.
10“தலைமை ஆசாரியன் தன் சகோதரர்
களுக்கிடையில் இருந்து தலைமை சிறப்பு
பதவிக்காக தேர்ந்தெடுக்கப்பட்டவன், சிறப்
பான உடைகளை அணிவதற்காக அவன்
தேர்ந்தெடுக்கப்பட்டவன். அவன் தலையில்
அபிஷேக எண்ணெய் ஊற்றப்பட்டிருக்கும்.
அவன் தனது துன்பங்களைப் பொது
ஜனங்களிடம் வெளிக்காட்டிக் கொள்ளக்
கூடாது. அவன் தன் தலைமுடியை அதிக

**அது … இருக்கும்** எழுத்தின் பிரகாரமாக, “பாலும் தேனும் ஓடுகிறதாயிருக்கும்.” எனப் பொருள்படும்.

**திருமணமாகாத** எழுத்தின் பிரகாரமாக, “கன்னித் தன்மையுள்ள” ஒரு போதும் திருமணமாகாமல், யாரிடமும் பாலின உறவு கொள்ளாத ஒரு பெண்ணைக் குறிக்கும்.

மாக வளரும்படி விடவோ, தன்
ஆடைகளைக் கிழித்துக்கொள்ளவோ
கூடாது. [11]அவன் பிணத்தைத் தொட்டு
தன்னைத் தீட்டுப் பண்ணிக்கொள்ளக்
கூடாது. மரித்துபோனது அவனது தாயா
கவோ தந்தையாகவோ இருந்தாலும்
பிணத்தின் அருகில் போகக்கூடாது. [12]தலை
மை ஆசாரியன் தேவனின் பரிசுத்தமான
இடத்தைவிட்டு வெளியே போகக்கூடாது.
அவன் அதனால் தீட்டாவதுடன், தேவனின்
பரிசுத்தமான இடத்தையும் தீட்டாக்கி
விடுகிறான். அபிஷேக எண்ணெயானது
தலைமை ஆசாரியனின் தலைமீது
ஊற்றப்பட்டிருக்கிறபடியால், இது அவனை
மற்றவர்களிடமிருந்து தனியே பிரித்துக்
காட்டும். நானே கர்த்தர்!

[13]“கன்னியான ஒரு பெண்ணை தலைமை
ஆசாரியன் மணந்துகொள்ள வேண்டும்.
[14]விபசாரியான பெண்ணையோ,
வேசியையோ, விதவையையோ, விவாக
ரத்து செய்யப்பட்டவளையோ மணந்து
கொள்ளக் கூடாது. அவன் தன் சொந்த
ஜனங்களிடமிருந்து ஒரு கன்னியான
பெண்ணை மணந்துகொள்ள வேண்டும்.
[15]அப்பொழுது அவனது பிள்ளைகளை
ஜனங்கள் மதிப்பார்கள்.* கர்த்தராகிய நான்
தலைமை ஆசாரியனை அவனது சிறப்புப்
பணிகளுக்காகத் தனியாக வைத்திருக்கி
றேன்” என்று கூறினார்.

[16]கர்த்தர் மோசேயிடம், [17]“ஆரோனிடம்
சொல்! உனது சந்ததியில் எவராவது
அங்கக் குறைவுள்ளவர்களாக இருந்தால்
அவர்கள் தேவனுக்கு சிறப்பு அப்பத்தை
எடுத்துச்செல்ல தகுதியற்றவர்களாகிறார்கள்.
[18]உடல் உறுப்புகளிலே குறைவுள்ள யாரும்
ஆசாரியனாகப் பணிச்செய்யக்கூடாது.
எனக்குப் பலிசெலுத்தும் பொருள்களையும்
கொண்டுவரக்கூடாது.

குருடர், சப்பாணி,
முகத்திலே வெட்டுக்காயங்கள்
உள்ளவர்கள்,
கைகளும் கால்களும் அதிக நீளமாய்
இருக்கிறவர்கள்,
[19] உடைந்த கைகளும், கால்களும்
உடையவர்கள்,
[20] கூனர்கள், குள்ளர்கள்,
பூ விழுந்த கண்ணுள்ளவர்கள்,
சொறியர்கள், அசறு
உள்ளவர்கள்,
விதை நசுங்கினவர்கள்
ஆகியோர் ஆசாரியனாகத்
தகுதியில்லாதவர்கள்.

[21]ஆரோனின் சந்ததியில் எவராவது
இத்தகைய உடல்குறை உடையவர்களாக
இருந்தால் அவர்கள் கர்த்தருக்கு எந்த
பலிகளையும் கொடுக்க தகுதியற்றுப்
போகிறார்கள். அவன் தேவனுக்கு சிறப்பான
அப்பத்தை எடுத்துச்செல்ல முடியாது.
[22]அவன் ஆசாரியர் குடும்பத்தைச் சேர்ந்த
வன் என்பதினால் பரிசுத்தமான அப்பத்தை
யும், மிகப்பரிசுத்தமான அப்பங்களையும்
அவன் உண்ணலாம். [23]ஆனால் அவன்
மிகவும் பரிசுத்தமான இடத்துக்குத்
திரையைக் கடந்து போகமுடியாது. பலி
பீடத்தின் அருகிலும் செல்ல முடியாது.
ஏனென்றால் அவனிடம் குறையுள்ளது.
அவன் எனது பரிசுத்தமான இடத்தை
அசுத்தப்படுத்தக் கூடாது. கர்த்தராகிய நான்
அந்த இடங்களை பரிசுத்தப்படுத்துகிறேன்!”
என்று கூறினார்.

[24]ஆகவே இவ்விதிமுறைகள் அனைத்தை
யும் ஆரோனுக்கும், ஆரோனின் பிள்ளை
களுக்கும், இஸ்ரவேல் ஜனங்கள் அனை
வரிடமும் மோசே சொன்னான்.

22 தேவனாகிய கர்த்தர் மோசேயிடம்,
[2]“ஆரோனிடமும் அவனது மகன்
களிடமும் கூறு: இஸ்ரவேல் ஜனங்கள்
எனக்குக் கொடுக்கும் பொருட்கள் பரிசுத்த
மானவையாக இருக்கும். அவை என்னுடை
யவை. எனவே ஆசாரியர்களாகிய நீங்கள்
அவற்றை எடுத்துக் கொள்ளக்கூடாது.
நீங்கள் பரிசுத்த பொருட்களை உங்கள்
சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்தினால்
நீங்கள் என் பெயருக்கு மரியாதை செலுத்த
வில்லை என்று பொருள்படும். நானே
கர்த்தர். [3]உங்களது சந்ததியார் எவரும்
அப்பொருட்களைத் தொட்டால் அவர்கள்
தீட்டுள்ளவர்களாகிறார்கள். அவர்கள் என்னி
டமிருந்து விலக்கி வைக்கப்பட வேண்டும்.
இஸ்ரவேல் ஜனங்கள் அப்பொருட்களை
எனக்குக் கொடுத்தனர். நானே கர்த்தர்.

[4]“ஆரோனின் சந்ததிகளில் எவருக்காவது
தொழுநோய் இருந்தால் அல்லது உடற்கழிவு
கள் இருந்தால் அவனது தீட்டு நீங்கும்வரை
பரிசுத்த உணவை உண்ணக்கூடாது. இது,
தீட்டுள்ள ஆசாரியர்கள் அனைவருக்கும்
உரிய விதியாகும். ஒரு ஆசாரியன்
பிணத்தைத் தொடுவதன் மூலமோ, தன்
விந்துக்கழிவின் மூலமோ தீட்டு அடை
யலாம். [5]தீட்டுள்ள எந்த ஊர்கின்ற மிருகங்
களை அவன் தொட்டாலும் தீட்டு அடைய
லாம். தீட்டுள்ள மனிதனைத் தொட்டாலும்
ஆசாரியன் தீட்டு அடையலாம். எது
அவனைத் தீட்டுப்படுத்தியது என்பது ஒரு
பொருட்டல்ல, [6]ஒருவன் மேற்கூறியவற்றுள்
ஏதாவது ஒன்றினைத் தொட்டால் அதன்
மூலம் அவன் மாலைவரை தீட்டுள்ளவனாக
இருக்கிறான். அவன் பரிசுத்தமான உணவு
வகைகளில் எதையும் தின்னக்கூடாது.
அவன் தண்ணீரால் தன்னைக் கழுவிக்

---

**அவனது … மதிப்பார்கள்** அல்லது அவனுடைய பிள்ளைகள் ஜனங்களிடமிருந்து அசுத்தமாக மாட்டார்கள்.

கொண்டாலும் அவன் பரிசுத்த உணவை
உண்ணக்கூடாது. 7சூரியன் மறைந்த பிறகே
அவன் தீட்டு இல்லாதவன் ஆகிறான், பிறகு
அவன் பரிசுத்த உணவை உண்ண லாம்.
8“ஒரு மிருகம் தானாகவோ அல்லது
இன்னொரு மிருகத்தாலோ செத்துப்
போயிருக்கலாம். எனினும் ஒரு ஆசாரியன்
அதனை உண்ணக்கூடாது. அவன் அதனை
உண்டால் அதனால் தீட்டுள்ளவன் ஆகி றான்.
நானே கர்த்தர்.
9“ஆசாரியன் எனக்குச் சேவை செய்வதற்
கென்று சிறப்பான நேரங்கள் உள்ளன.
அந்த நேரங்களில் அவர்கள் கவனம் உள்ள
வர்களாக இருக்க வேண்டும். பரிசுத்தமான
வற்றைப் பரிசுத்தமற்றதாகச் செய்துவிடக்
கூடாது. அவர்கள் கவனமாக இருந்தால்
அழிந்து போகமாட்டார்கள். கர்த்தராகிய
நான் அவர்களைச் சிறப்பான வேலைக்
கென்று தனியாகப் பிரித்துவைத்திருக்கி
றேன். 10ஆசாரியர்களின் குடும்பத்தில்
உள்ளவர்கள் மட்டுமே பரிசுத்த உணவை
உண்ணவேண்டும். இவர்களின் வீட்டிற்கு
வரும் விருந்தினனோ கூலிக்கு வேலை
செய்யும் வேலைக்காரனோ பரிசுத்த
உணவை உண்ணக்கூடாது. 11ஆனால்
ஆசாரியன் தனது சொந்தப்பணத்தின் மூலம்
ஒரு அடிமையை வாங்கியிருந்தால், அந்த
அடிமை பரிசுத்தமான உணவில் கொஞ்சம்
உண்ணலாம். ஆசாரியன் வீட்டிலேயே
பிறந்து வளர்ந்த அடிமைகளும்
ஆசாரியனின் உணவை கொஞ்சம்
உண்ணலாம். 12ஆசாரியனின் மகள்
ஆசாரியன் அல்லாத ஒருவனை
மணந்துகொண்டால் அவளும் பரிசுத்த பலி
உணவுகளை உண்ணக்கூடாது. 13ஒரு
ஆசாரியனின் மகள் விதவையாகலாம்,
அல்லது அவள் விவாகரத்து செய்யப்பட
லாம், அல்லது அவளுக்கு உதவ குழந்தைகள்
இல்லாமல் போனதால் அவள் தான் பிறந்து
வளர்ந்த தந்தையின் வீட்டிற்குத் திரும்பிவர
நேரலாம். அப்போது அவள் தன் தந்தையின்
உணவை கொஞ்சம் உண்ணலாம். ஆனால்
ஆசாரியன் குடும்பத்தில் உள்ளவர்கள்
மட்டுமே இந்த உணவை உண்ணவேண்டும்.
14“ஒருவன் தவறுதலாக பரிசுத்த உணவை
உண்டால், அவன் அதற்குரிய விலையில்
ஐந்தில் ஒரு பங்கை ஆசாரியனிடம் கூட்டிக்
கொடுக்க வேண்டும்.
15“இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தருக்குக்
கொடுக்கும் அந்த காணிக்கைகள் பரிசுத்தமா
னவை. எனவே ஆசாரியர்கள் பரிசுத்தமான
அவற்றை அசுத்தமாக்கக் கூடாது. 16ஒரு
வேளை ஆசாரியர்கள் அவற்றை அசுத்த
மாக்கிவிட்டால் அவர்கள் பரிசுத்த உணவை
உண்ணும்போது தங்கள் பாவத்தை மிகுதிப்
படுத்துகிறார்கள். கர்த்தராகிய நான் அவர்
களை பரிசுத்தமாக்குவேன்” என்று கூறி
னார்.

17தேவனாகிய கர்த்தர் மோசேயிடம்,
18“ஆரோனிடமும் அவனது மகன்களிடமும்
இஸ்ரவேல் ஜனங்களிடமும் கூறு. ஒருவன்
இஸ்ரவேல் குடிமக்களில் ஒருவனோ அல்லது
அந்நியரில் ஒருவனோ எனக்குப் பலி
கொண்டுவர விரும்பலாம். அது அவன்
செய்த சிறப்பான பொருத்தனையாக இருக்க
லாம், அல்லது அது அவன் கொடுக்க
விரும்பும் சிறப்பான பலியாக இருக்கலாம்.
19-20அவர்கள் அந்த அன்பளிப்புகளைக்
கொண்டு வரலாம். ஏனென்றால் உண்மை
யில் அவர்கள் தேவனுக்கு அன்பளிப்பு
செலுத்த விரும்புகின்றனர். அந்த
அன்பளிப்புகளில் ஏதாவது குறை இருக்கு
மானால் அவற்றை ஏற்றுக்கொள்ளக்
கூடாது. அந்தக் அன்பளிப்பால் நான்
மகிழ்ச்சியடைய மாட்டேன். அந்த அன்
பளிப்பானது ஒரு காளையாகவோ, ஆடா
கவோ, வெள்ளாடாகவோ இருக்கலாம்.
ஆனால் அது ஆணாக இருக்க வேண்டும்.
அதில் எவ்வித குறையும் இருக்கக்கூடாது.
21“ஒருவன் சமாதானப் பலியை
கர்த்தருக்குக் கொண்டு வரலாம். அந்த
சமாதானப் பலியானது அவன் ஏற்கனவே
செய்த சிறப்பான பொருத்தனைக்கு உரிய
தாக இருக்கலாம். அல்லது சிறப்பாக அவன்
கர்த்தருக்குக் கொடுக்கக்கூடிய அன்பளிப்பாக
இருக்கலாம். அது மாடாகவோ ஆடாகவோ
இருக்கலாம். ஆனால் அது ஆரோக்கியமான
தாகவும், ஊனமற்றதாகவும் இருக்க
வேண்டும். 22குருடான, அல்லது எலும்பு
முறிந்த, அல்லது நொண்டியான, அல்லது
உடற்கழிவுடைய, அல்லது சொறியும்
புண்ணும் உடைய மிருகங்களைக் கர்த்த
ருக்குப் பலியாகக் கொடுக்கக்கூடாது.
நோயுற்ற மிருகங்களையும் கர்த்தரின் பலி
பீடத்தில் செலுத்தக்கூடாது.

23“சில நேரங்களில் மாடு அல்லது
ஆட்டிற்கு கால்கள் மிக நீளமாகவோ
அல்லது குறுகியோ இருக்கலாம். எனினும்
ஒருவன் இதனைக் கர்த்தருக்கு சிறப்பான
அன்பளிப்பாகக் கொடுக்க விரும்பினால்
அது ஏற்றுக்கொள்ளப்படலாம்; ஆனால்
இது சிறப்பான பொருத்தனையின் அன்ப
ளிப்பாக ஒருவனால் கொடுக்கப்பட்டால் அது
ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது.
24“ஒரு மிருகம் காயப்பட்டதாகவோ,
நசுங்கியதாகவோ, விதை நொறுங்கியதா
கவோ இருந்தால் அதைக் கர்த்தருக்கு
பலியாகக் கொடுக்கக்கூடாது.
25“நீங்கள் அந்நியரிடமிருந்து மிருகங்க
ளைக் கர்த்தருக்குரிய பலியாக எடுத்துக்
கொள்ளக் கூடாது. ஏனென்றால் அம்மிருகம்
ஏதாவது ஒரு இடத்தில் புண் உள்ளதா
கவோ, குறையுடையதாகவோ இருக்கலாம்.
எனவே, அவற்றை ஏற்றுக்கொள்ளக்
கூடாது!” என்று கூறினார்.

26கர்த்தர் மேலும் மோசேயிடம், 27“ஒரு
கன்றுக்குட்டியோ, ஒரு செம்மறி ஆட்டுக்
குட்டியோ, ஒரு வெள்ளாட்டுக் குட்டியோ
பிறந்ததும் அது ஏழு நாட்கள் தன் தாயோடு
இருக்க வேண்டும். எட்டாவது நாளே
அது தகன பலியாக கர்த்தருக்கு முன்பு
பலியிடத் தகுதியுள்ளதாகும். 28ஆனால்
தாயையும், குட்டியையும் ஒரே நாளில்
பலியிடக்கூடாது. இந்த விதி பசுவுக்கும்
கன்றுக்குட்டிக்கும் பொருந்தும்.
29“நீ நன்றி தெரிவிப்பதற்காகக் கர்த்த
ருக்குச் சிறப்பான பலியைச் செலுத்த
விரும்பினால் அது உன் விருப்பத்தைப்
பொருத்தது. ஆனால் அது தேவனுக்கும்
விருப்பமானதாக அமைய வேண்டும்.
30ஆனால் பலியிடப்படும் முழு மிருகத்தையும்
அன்றே சாப்பிட்டு விடவேண்டும். மறுநாள்
காலையில் அதன் இறைச்சியில் எதுவும்
மீதியிருக்கக் கூடாது. நானே கர்த்தர்.
31“எனது கட்டளைகளை நினைவில்
வைத்துக்கொள். அவற்றுக்குக் கீழ்ப்படிந்து
நட. நானே கர்த்தர். 32எனது பரிசுத்தமான
பெயருக்கு மதிப்பு கொடு. நான் இஸ்ரவேல்
ஜனங்களுக்குச் சிறப்பானவராயிருப்பேன்.
கர்த்தராகிய நான் உங்களை என் சிறப்பான
ஜனங்களாக்கியிருக்கிறேன்.33நான் எகிப்திலி
ருந்து உங்களை அழைத்து வந்தேன். நானே
உங்கள் தேவனாகிய கர்த்தர்!” என்று
கூறினார்.

### சிறப்பான பண்டிகைகள்

23 மேலும் கர்த்தர் மோசேயிடம்,
2“இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறு.
கீழ்க்கண்ட பண்டிகைகள் கர்த்தரால் தேர்ந்
தெடுக்கப்பட்ட பரிசுத்த கூட்டங்கள் என்று
அறிவி:

### ஓய்வு நாள்

3“ஆறு நாட்கள் வேலை செய்யுங்கள்.
ஏழாவது நாள் ஓய்விற்குரிய சிறப்பு நாள்.
பரிசுத்தமான சபைகூடும் நாள். அன்று
ஒரு வேலையும் செய்யக்கூடாது. இது
கர்த்தருக்குரிய சிறப்பு ஓய்வு நாளாக உங்கள்
வீடுகளில் விளங்கவேண்டும்.

### பஸ்கா

4“கர்த்தர் தேர்ந்தெடுத்த விடுமுறை நாட்
கள். பரிசுத்தக் கூட்டங்கள் கூடும் குறித்த
காலங்களை நீ அறிவிக்கவேண்டும். 5முத
லாம் மாதம்* 14ஆம் நாள் அந்தி நேரத்தில்
பஸ்கா பண்டிகை நடைபெற வேண்டும்.

### புளிப்பில்லா அப்பப்பண்டிகை

6“அதே (நிசான்) மாதத்தில் 15ஆம் நாள்
புளிப்பில்லாத அப்பப் பண்டிகை வரும்.
நீங்கள் புளிப்பில்லாத அப்பத்தை ஏழு
நாட்கள் உண்ணவேண்டும். 7பண்டிகையின்
முதல்நாளில் சிறப்பு சபைக்கூட்டம்
இருக்கும். அந்நாளில் நீங்கள் எந்த வேலை
யும் செய்யக்கூடாது. 8ஏழு நாட்களிலும்
கர்த்தருக்கு தகன பலிகள் வழங்கப்பட
வேண்டும். பிறகு ஏழாவது நாளும்
சிறப்பான ஒரு சபைக் கூட்டம் இருக்கும்.
அந்நாளில் நீங்கள் எந்த வேலையும்
செய்யக்கூடாது” என்று கூறினார்.

### முதல் அறுவடைப் பண்டிகை

9மேலும் கர்த்தர் மோசேயிடம்,
10“இஸ்ரவேல் ஜனங்களிடம் சொல்: நான்
கொடுத்த நாட்டிற்குள் நீங்கள் சென்று
அங்கே பயிர் செய்து அறுவடை செய்வீர்
கள். அப்போது முதல் கதிரில் ஒருகட்டை
ஆசாரியனிடம் கொண்டு வரவேண்டும்.
11ஆசாரியன் அக்கதிரை கர்த்தருடைய
சந்நிதியில் அசைப்பான். பிறகு அது ஏற்றுக்
கொள்ளப்படும். ஆசாரியன் அசைவாட்டும்
பலியை ஞாயிற்றுக்கிழமை காலையில்
செய்யவேண்டும்.
12“கதிரை அசைவாட்டும் பலி செய்கிற
நாளில் ஒரு வயதுள்ள குறையற்ற ஒரு
ஆண் செம்மறி ஆட்டுக்குட்டியைக் கொண்டு
வந்து தகன பலியாகக் கொடுக்க வேண்டும்.
13நீங்கள் தானியக் காணிக்கையையும்
வழங்கவேண்டும். 16 கிண்ணங்கள்* அள
வுள்ள அரைத்த மாவையும், ஒலிவ எண்
ணெயையும் கலந்து பலியாக வழங்க
வேண்டும். மேலும் திராட்சைப் பழரசத்தில்
கால்படியும்* கொடுக்கவேண்டும். இக்
காணிக்கையின் மணமானது கர்த்தருக்கு
மிகவும் பிரியமாயிருக்கும். 14புதிய தானி
யத்தையோ, பழங்களையோ, புதிய மாவால்
செய்த அப்பத்தையோ உங்கள் தேவனுக்கு
பலிகளை செலுத்துவதற்குமுன் உண்ணக்
கூடாது. இது உங்கள் தலைமுறை தோறும்
தொடரவேண்டிய சட்டமாகும்.

### பெந்தெகோஸ்தே பண்டிகை

15“அறுவடை செய்த கதிரைக் கர்த்தருக்கு
முன்பு அசைவாட்டும் பலியாக வழங்கிய
ஞாயிறு காலையிலிருந்து ஏழு வாரங்களை
எண்ணுங்கள். 1650 நாட்களுக்குப் பிறகு
வரும் ஏழாவது ஞாயிற்றுக்கிழமையன்று
கர்த்தருக்கு புதிய தானியக் காணிக்கைகளை
கொண்டு வாருங்கள். 17அன்று உங்கள்
வீட்டிலிருந்து இரண்டு அப்பங்களைக்
கொண்டு வாருங்கள். இவை அசைவாட்டும்
பலிக்குரியவை. 16 கிண்ணங்கள் அளவுள்ள

---

**முதலாம் மாதம்** நிசான், இது யூத கால அட்டவணைப்படி முதல் மாதம். இது மார்ச் - ஏப்ரல் மாதங்களில் வரும்.

**16 கிண்ணங்கள்** எழுத்தின் பிரகாரமாக, ஒரு எப்பா அளவில் பத்தில் இரண்டு பங்காகும் எனப் பொருள்படும்.

**கால்படி** எழுத்தின் பிரகாரமாக, ஒரு படி அளவில் நான்கில் ஒரு பங்காகும் எனப் பொருள்படும்..

மாவைப் புளிப்பு சேர்த்து அந்த அப்பங்
களைத் தயார் செய்யப் பயன்படுத்துங்கள்.
இது முதல் அறுவடையானதும் கர்த்தருக்கு
நீங்கள் கொடுக்கவேண்டிய காணிக்கையா
கும்.
18"ஒரு காளை, இரண்டு ஆட்டுக்கடா,
ஒரு வயது நிறைந்த ஏழு ஆட்டுக்
குட்டிகளையும் தகனபலியாக தானியக்
காணிக்கையோடு ஜனங்கள் கொடுக்க
வேண்டும். அம்மிருகங்களில் எவ்வித
குறையும் இருக்கக்கூடாது. அவற்றைத் தகன
பலியாக செலுத்த வேண்டும். இதன்
வாசனை கர்த்தருக்கு மிகவும் பிரியமாயிருக்
கும். 19மேலும் நீங்கள் பாவப்பரிகார பலி
யாக ஒரு ஆட்டுக் கடாவையும், சமாதான
பலியாக ஒரு வயதான இரண்டு ஆண்
ஆட்டுக்குட்டிகளையும் கொண்டு வர
வேண்டும்.
20"ஆசாரியன் கர்த்தருக்கு முன்பாக
அசைவாட்டும் பலி செலுத்தவேண்டும்.
முதல் அறுவடையின் தானிய மாவால்
செய்த அப்பத்தோடு இரண்டு ஆட்டுக்
குட்டிகளையும் அசைவாட்டும் பலியாக
செலுத்த வேண்டும். கர்த்தருக்குப் பரிசுத்த
மான அவைகள் ஆசாரியர்களுக்கு உரி
யவை. 21அதே நாளில் நீங்கள் பரிசுத்தமான
சபைக் கூட்டம் ஒன்றை நடத்த வேண்டும்.
அன்று வேறு எந்த வேலையும் செய்யக்
கூடாது. எக்காலத்திற்கும் உங்கள் தலை
முறைதோறும் இச்சட்டம் தொடர்ந்து
இருக்கும்.
22"நீங்கள் உங்கள் வயலில் அறுவடை
செய்யும்போது, வயலின் மூலைகள் வரை
சேர்த்து அறுவடை செய்யாதீர்கள். தரை
யில் விழுந்த தானியங்களை பொறுக்காதீர்
கள். அவற்றை ஏழை ஜனங்களுக்கும்,
அந்நியர்களுக்கும், வழிப்போக்கருக்கும்
பயன்படும்படி விட்டுவிடுங்கள். நானே
உங்கள் தேவனாகிய கர்த்தர்!" என்று
கூறினார்.

### எக்காளப் பண்டிகை

23மேலும் கர்த்தர் மோசேயிடம், 24"இஸ்ர
வேல் ஜனங்களிடம் கூறு. ஏழாவது
மாதத்தில் முதல் நாள் உங்களுக்கு
ஓய்வுக்குரிய சிறப்பான நாள் உண்டு. அன்று
பரிசுத்த சபைக் கூட்டமும் உண்டு. அன்று
எக்காளத்தை ஊதி சிறப்பு நேரத்தை
நினைவூட்ட வேண்டும். 25அன்று ஒரு
வேலையும் செய்யாமல் கர்த்தருக்குரிய தகன
பலியைச் செலுத்த வேண்டும்" என்று
கூறினார்.

### பாவப்பரிகார நாள்

26கர்த்தர் மோசேயிடம், 27"ஏழாவது மாதத்
தின் பத்தாவது நாளில் பாவப்பரிகாரம்
செய்யும் பண்டிகை வரும். அப்போது
ஒரு பரிசுத்த சபைக் கூட்டம் உண்டு.
அன்று வேலை எதையும் செய்யாமலும்,
சாப்பிடாமலும் இருக்க வேண்டும்.
கர்த்தருக்குரிய தகன பலியைக் கொண்டு
வரவேண்டும். 28அந்த நாளில் நீங்கள் எந்த
வேலையும் செய்யக்கூடாது. ஏனென்றால்
அது பாவப்பரிகார நாள். அந்நாளில் ஆசாரி
யர்கள் கர்த்தருடைய சந்நிதியில் உங்களைச்
சுத்திகரிப்பு செய்யும் சடங்குகளைச் செய்
வார்கள்.
29"அன்று எவனாவது உபவாசம் இருக்க
மறுத்தால் அவன் தன் ஜனங்களிடமிருந்து
தனியே பிரிக்கப்படுவான். 30இந்நாளில்
எவனாவது வேலை செய்தால் அவனை
மற்ற ஜனங்களிடமிருந்து நான் அழித்துப்
போடுவேன். 31நீங்கள் எந்த வேலையும்
அன்று செய்யக்கூடாது என்பது என்
றென்றும் தொடர்ந்து வருகிற சட்டமாகும்.
32அது உங்களுக்கு ஒரு சிறப்பான ஓய்வு
நாளாகும். அந்நாளில் வேறு எதுவும்
நீங்கள் செய்யாமல் தாழ்மையான மனதுடன்
இருக்க வேண்டும். அந்த சிறப்பான
பண்டிகை அம்மாதத்தின் ஒன்பதாவது நாள்
மாலையிலிருந்து* மறுநாள் மாலைவரை
தொடர்ந்திருக்கும்" என்று கூறினார்.

### கூடாரப் பண்டிகை

33கர்த்தர் மோசேயிடம், 34"இஸ்ரவேல்
ஜனங்களிடம் கூறு: ஏழாவது மாதத்தின்
15ஆம் தேதி முதல் ஏழுநாட்கள் கூடாரப்
பண்டிகை நடைபெறும். 35முதல் நாள்
பரிசுத்தமான சபைக் கூட்டம் ஒன்று
நடைபெறும். அன்று நீங்கள் எந்த
வேலையும் செய்யக்கூடாது. 36நீங்கள் ஏழு
நாட்கள் தகன பலியை கர்த்தருக்குக்
கொண்டு வரவேண்டும். மறுபடியும்
எட்டாவது நாள் பரிசுத்த சபைக் கூட்டம்
நடைபெறும். நீங்கள் தகனபலியைக் கர்த்த
ருக்குக் கொண்டு வரவேண்டும். இதுவே
பரிசுத்த சபைக் கூட்டமாகும். அன்று
நீங்கள் எந்த வேலையும் செய்யக்கூடாது.
37"இவை கர்த்தரின் சிறப்பான விடு
முறைகள். அந்நாட்களில் பரிசுத்த சபைக்
கூட்டங்களும் நடைபெறும். நீங்கள்
கர்த்தருக்குத் தகன பலிகளையும், தானிய
காணிக்கைகளையும், பானங்களின் பலி
யையும் சரியான நேரத்தில் கொண்டு
வரவேண்டும். 38கர்த்தரின் ஓய்வு நாட்களை
நினைவுபடுத்துவதோடு இந்த விடுமுறை
நாட்களையும் நீங்கள் கொண்டாடவேண்டும்.
மற்ற அன்பளிப்போடு இவைகளையும்
கர்த்தருக்குக் கொண்டு வரவேண்டும்.
சிறப்பான பொருத்தனைகளுக்கான பலி
களையும் கர்த்தருக்குக் கொண்டுவர
வேண்டும். கர்த்தருக்காகச் சிறப்பாக

**அம்மாதத்தின் ... மாலையிலிருந்து** யூதர்கள் நேரப்படி, சூரியன் அஸ்தமிக்கும்போது ஒரு நாள் துவங்குகிறது.

கொடுக்கப்படும் பலிகளோடு இவைகளையும்
சேர்த்துக் கொடுக்க வேண்டும்.
39 "ஏழாவது மாதத்தின் 15வது நாளில்
நிலத்தின் விளைச்சலைச் சேர்த்து
வைக்கும்போது கர்த்தருக்கு ஏழு நாள்
பண்டிகையைக் கொண்டாடுங்கள். முதல்
நாளிலும் எட்டாவது நாளிலும் நீங்கள்
ஓய்வெடுக்க வேண்டும். 40 முதல் நாள்
பழமரங்களில் இருந்து நல்ல பழங்களையும்,
ஈச்சமரத்தின் கிளைகளையும், தழைத்துள்ள
மரக்கிளைகளையும், வில்லோ மரக்கிளை
களையும் எடுத்துகொண்டு வந்து, ஏழு
நாட்கள் தேவனாகிய கர்த்தரின் சந்நிதானத்
தில் மகிழ்ச்சியாகக் கொண்டாடுங்கள்.
41 ஒவ்வொரு ஆண்டும் இப்பண்டிகையைக்
கர்த்தருக்கு முன் ஏழு நாட்கள் கொண்டா
டுங்கள். இவ்விதிகள் எக்காலத்திற்கும்
உரியவையாகும். இதனை நீங்கள் ஏழாவது
மாதத்தில் கொண்டாட வேண்டும். 42 நீங்கள்
ஏழு நாட்களிலும் தற்காலிகமான
கூடாரங்களில் தங்கியிருக்க வேண்டும்.
இஸ்ரவேலில் பிறந்த அனைத்து ஜனங்களும்
இக்கூடாரங்களில் தங்கவேண்டும். 43 ஏனென்
றால் எகிப்திலிருந்து உங்களை அழைத்து
வரும்போது நீங்கள் தற்காலிகமான
கூடாரங்களில் தங்கியிருந்தீர்கள் என்பதை
உங்கள் சந்ததியினர் உணர்ந்துகொள்ள
வேண்டும். நானே உங்கள் தேவனாகிய
கர்த்தர்!" என்று கூறினார்.
44 எனவே, மோசே இஸ்ரவேல் ஜனங்க
ளிடம் கர்த்தரைக் கனப்படுத்துகிற பண்
டிகைகளைப்பற்றிக் கூறினான்.

### விளக்குத் தண்டும், பரிசுத்த அப்பமும்

24 கர்த்தர் மோசேயிடம், 2 "இடித்துப்
பிழிந்த சுத்தமான ஒலிவ எண்
ணெயைக் கொண்டு வரும்படி இஸ்ரவேல்
ஜனங்களுக்குக் கட்டளையிடு. அந்த
எண்ணெய் குத்து விளக்கிற்குரியது. அது
அணையாமல் தொடர்ந்து எரியவேண்டும்.
3 ஆரோன் இந்த விளக்கை ஆசரிப்புக்
கூடாரத்தில் கர்த்தருடைய சந்நிதானத்தில்
மாலைமுதல் காலைவரை அணையாமல்
காக்கவேண்டும். இது திரைக்கு வெளியே
உடன்படிக்கைப் பெட்டிக்கு முன்பு
எரியவேண்டும். இச்சட்டம் என்றென்றைக்கு
முரியது. 4 ஆரோன் கர்த்தரின் சந்நிதியில்
சுத்தமான தங்கத்தாலான விளக்குத்தண்டில்
விளக்கைப் பொருத்தி எப்பொழுதும்
எரியவிட வேண்டும்.
5 "அரைத்த மாவை எடுத்து அதில்
பன்னிரெண்டு அப்பங்களைச் செய்யுங்கள்.
ஒவ்வொரு அப்பமும் பதினாறு கிண்ணங்
கள் அளவு மாவால் செய்யப்பட வேண்டும்.
6 கர்த்தருக்கு முன்பாக தங்கத்தாலான
மேஜையின்மேல் இரண்டு வரிசையாக
அப்பங்களை அடுக்கவேண்டும். ஒவ்வொரு
வரிசையிலும் ஆறு அப்பங்கள் இருக்கட்டும்.
7 ஒவ்வொரு வரிசைக்கும் சாம்பிராணிப்
புகை காட்டு. அது அப்பத்தோடு இருந்து,
கர்த்தருக்கு நினைவு அடையாளமாக, தகன
பலியாக கர்த்தருக்கு ஏற்றதாக இருக்கும்.
8 அப்பத்தை இவ்வரிசையிலேயே ஒவ்வொரு
ஓய்வு நாளிலும் ஆரோன் கர்த்தருக்கு முன்பு
வைக்க வேண்டும். இது எல்லாக்
காலங்களுக்குமுரியது. இஸ்ரவேல் ஜனங்க
ளோடு உள்ள இந்த உடன்படிக்கை
என்றென்றும் தொடரும். 9 இந்த அப்பங்கள்
ஆரோனுக்கும் அவனது மகன்களுக்கும்
உரியதாகும். அவர்கள் பரிசுத்தமான
இடங்களில் அவற்றை உண்ண வேண்டும்;
ஏனென்றால் அவை கர்த்தருக்குத் தகன
பலியாகக் கொடுக்கப்பட்டவை. அது
என்றென்றும் ஆரோனின் பங்காக
இருக்கும்" என்று கூறினார்.

### தேவனைத் தூஷித்த மனிதன்

10 இஸ்ரவேல் பெண்ணுக்குப் பிறந்த ஒரு
வன் இருந்தான். அவனது தந்தை
எகிப்தியன். இஸ்ரவேலியப் பெண்ணுக்கு
பிறந்த அம்மகன் இஸ்ரவேலைச் சேர்ந்தவன்.
அவன் இஸ்ரவேல் ஜனங்களோடு நடந்து
கொண்டிருந்தான். அவன் முகாமில்
இன்னொரு இஸ்ரவேலனோடு சண்டை
யிட்டான். 11 அப்போது அவன் கர்த்தரின்
நாமத்தைத் தூஷித்து, அவரைப்பற்றிக்
கெடுதலாகப் பேசினான். எனவே அவனை
மோசேயிடம் அழைத்து வந்தார்கள்.
(அவனது தாயின் பெயர் செலோமித்.
அவள் தாண் கோத்திரத்தானாகிய திப்ரியின்
மகள்.) 12 ஜனங்கள் அவனைச் சிறையில்
வைத்துவிட்டு, அவனைப் பற்றிய
தெளிவான பதிலைப் பெறும்படி கர்த்தரின்
கட்டளைக்காகக் காத்திருந்தனர்.
13 கர்த்தர் மோசேயிடம், 14 "முகாமுக்கு
வெளியே ஒரு இடத்திற்கு அவனைக்
கொண்டுவா. அவன் தூஷணம் பேசியதைக்
காதால் கேட்ட எல்லோரையும் ஒன்றுகூட்டி
அழைத்துவா. அவர்கள் தங்கள் கைகளை
அவன் தலையில் வைக்கவேண்டும், பிறகு
ஜனங்கள் அவன்மீது கல்லெறிந்து கொல்ல
வேண்டும். 15 இஸ்ரவேல் ஜனங்களிடம்
கூறவேண்டும்: எவனாவது தேவனை
தூஷித்தால் அவன் தண்டிக்கப்பட வேண்
டும். 16 கர்த்தருக்கு எதிராக பேசுகிற எவனை
யும் எல்லோரும் சேர்ந்து கல்லெறிந்து
கொன்று போடவேண்டும். அவன் அந்நிய
னாக இருந்தாலும் அவனும் இஸ்ரவேல்
ஜனங்களைப் போன்றே தண்டிக்கப்பட
வேண்டும். கர்த்தரின் நாமத்தைத் தூஷிக்கிற
எவனும் சாகடிக்கப்பட வேண்டும்.
17 "எவனாவது ஒரு கொலை செய்தால்
அவனுக்கு மரணதண்டனை உண்டு. 18 ஒரு
வன் இன்னொருவனுக்குரிய மிருகத்தைக்
கொன்றால் அதற்குப்பதிலாக இன்னொரு
மிருகத்தைக் கொடுக்கவேண்டும்.

19“எவனாவது இன்னொருவனைக் காயப்
படுத்தினால் அவனுக்கும் அதைப் போன்ற
காயத்தை உண்டாக்கவேண்டும். 20உடைந்த
எலும்புக்கு எலும்பு உடைபட வேண்டும்.
கண்ணுக்குக் கண், பல்லுக்குப்பல். அடுத்த
வனுக்கு எவ்விதமான காயங்களை ஒருவன்
உண்டாக்குகிறானோ, அதே விதமான
காயங்களை அவன் அடைவான். 21எனவே
ஒருவன் ஒரு மிருகத்தைக் கொன்றால் அவன்
அதற்குரிய தொகையைக் கொடுக்க
வேண்டும். ஆனால் ஒருவன் இன்னொரு
வனைக் கொன்றுவிட்டால் அவன் மரண
தண்டனையடைய வேண்டும்.
22“இந்த சட்டம் நடுநிலையாக இருக்கும்.
இஸ்ரவேல் குடிமக்களுக்கும் அயல் நாட்டுக்
காரர்களுக்கும் ஒரே நீதிதான். ஏனென்றால்
நான் தேவனாகிய கர்த்தர்” என்று கூறினார்.
23பிறகு மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம்
பேசினான். ஜனங்கள் தேவனைத் தூஷித்த
வனை முகாமுக்கு வெளியே கொண்டு
சென்று அங்கு அவனைக் கல்லெறிந்து
கொன்றார்கள். இவ்வாறு இஸ்ரவேல்
ஜனங்கள், கர்த்தர் மோசேக்குக் கட்டளை
யிட்டபடி செய்தனர்.

### தேசத்திற்கு ஓய்வுக் காலம்

25 சீனாய் மலையில் கர்த்தர் மோசே
யிடம், 2“நீ இஸ்ரவேல் ஜனங்களிடம்
கூறவேண்டியதாவது: நான் உங்களுக்குக்
கொடுக்கப்போகும் நாட்டிற்குள் சென்ற
பின்னர் ஓய்வுக்கென சிறப்பான காலத்தை
அந்நாடு கொண்டிருக்க நீங்கள் அனுமதிக்க
வேண்டும். இது கர்த்தரைப் பெருமைப்
படுத்துகிற ஓய்வுக்காலம் ஆகும். 3ஆறு
ஆண்டுகளுக்கு, உங்கள் வயல்களில் விதை
களை விதையுங்கள், உங்கள் திராட்சைத்
தோட்டத்தில் கிளை கழியுங்கள். அதன்
பழங்களைக் கொண்டு வாருங்கள். 4ஆனால்
ஏழாவது ஆண்டில் அந்நிலத்துக்கு ஓய்வு
அளியுங்கள். இது கர்த்தரைப்
பெருமைப்படுத்துகிற சிறப்பான ஓய்வுக்
காலமாகும். அப்போது வயலில் விதை
விதைக்காமலும், திராட்சை தோட்டத்தில்
பயிர் செய்யாமலுமிருங்கள். 5அறு
வடைக்குப் பிறகு வயலில் தானாக வளர்ந்து
விளைந்தவற்றை அறுவடை செய்யவோ,
கிளை கழிக்காத கொடிகளில் உள்ள
திராட்சைப் பழங்களைப் பறிக்கவோகூடாது.
பூமி ஒரு வருடம் ஓய்வுகொள்ளட்டும்.
6“நிலம் ஒரு வருடம் ஓய்வாக விடப்
பட்டாலும் உங்களிடம் போதுமான
உணவுப்பொருட்கள் இருக்கும். உங்க
ளுக்கும், உங்கள் ஆண், பெண், வேலை
யாட்களுக்கும், உங்கள் நாட்டிலுள்ள கூலி
வேலைக்காரர்களுக்கும், அயல்நாட்டுக்காரர்
களுக்கும்கூட போதுமான உணவுப்பொருட்
கள் இருக்கும். 7உங்கள் பசுக்களுக்கும் மற்ற
மிருகங்களுக்கும்கூட போதுமான உணவு
இருக்கும்.

### யூபிலி-விடுதலையின் ஆண்டு

8“மேலும் நீங்கள் ஏழு ஓய்வு ஆண்டுகள்
கொண்ட ஏழு ஓய்வு ஆண்டுகளை எண்
ணுங்கள், அது மொத்தம் 49 ஆண்டுகள்
ஆகும். அந்த 49 வருடங்களில் மொத்தத்தில்
ஏழு ஆண்டுகளுக்கு பூமிக்கு ஓய்வு
கிடைக்கும். 9பாவப்பரிகார நாளில்
செம்மறியாட்டுக் கடாவின் கொம்பினால்
செய்யப்பட்ட எக்காளத்தை ஊதவேண்டும்.
அது ஏழாவது மாதத்தின் பத்தாவது நாளாக
இருக்கும். நாடு முழுவதும் எக்காளம் ஊதிக்
கொண்டாட வேண்டும். 10நீங்கள் ஐம்பதா
வது ஆண்டினைச் சிறப்பாகக் கொண்டாட
வேண்டும். உங்கள் நாட்டில் உள்ள அனை
வருக்கும் விடுதலை என்று அறிவிக்க
வேண்டும். இந்த விழாவை “யூபிலி”*
என்று அழைப்பீர்கள். நீங்கள் ஒவ்வொரு
வரும் உங்களது சொந்த சொத்திற்கும்,*
சொந்த குடும்பத்திற்கும் திரும்புவீர்கள்.
11உங்களுக்கு ஐம்பதாவது ஆண்டுவிழா மிகச்
சிறப்பான யூபிலி விழாவாகும். அவ்வரு
டத்தில் விதைகளை விதைக்காதீர்கள்.
தானாக வளர்ந்த பயிர்களை அறுவடை
செய்யாதீர்கள். கிளை கழிக்காத செடிகளில்
உள்ள திராட்சைகளைப் பறிக்காதீர்கள்.
12அது யூபிலி ஆண்டு, அது உங்களுக்குப்
பரிசுத்தமான வருடமாகும். உங்கள் வயலில்
விளைந்தவற்றை உண்ணுங்கள். 13யூபிலி
ஆண்டில் ஒவ்வொருவனும் தன் சொந்த
பூமிக்குச் செல்லவேண்டும்.
14“உனது அயலானிடம் நிலம் விற்கும்
போது ஏமாற்றாதே. அதுபோல் நீ நிலம்
வாங்கும்போது அவன் உன்னை ஏமாற்றும்
படி விடாதே. 15நீ அயலானின் நிலத்தை
வாங்கும்போது அந்த நிலத்தின் யூபிலியைக்
கணக்கிட்டு அதற்கேற்ற விலையை
நிர்ணயித்துக்கொள். நிலத்தை விற்கும்
போதும் அதனுடைய அறுவடைகளைக்
கணக்கிட்டு அதன் மூலம் சரியான
விலையை நிர்ணயித்துக்கொள். ஏனென்றால்
அடுத்த யூபிலிவரை அறுவடை செய்யும்
உரிமையை மட்டுமே விற்கிறான்.
16யூபிலிக்கு முன் அதிகமான ஆண்டுகள்
விளைந்த நிலம் அதிக விலையை
உடையது. குறைந்த ஆண்டுகள் விளைந்த
நிலத்தின் விலை குறையும். ஏனென்றால்
உனது அயலான் உன்னிடம்

---

**யூபிலி** பேரிகை முழங்கும் நேரத்தைக் குறிக்கும் எபிரெய வார்த்தையாகும்.

**சொந்த சொத்து** இஸ்ரவேலில், நிலமானது ஒரு குடும்பத்திற்கோ, அல்லது கோத்திரங்களுக்கோ சொந்தமாக இருக்கும். ஒரு மனிதன் தன் நிலத்தை விற்கலாம். ஆனால் யூபிலி ஆண்டின் போது அந்த நிலம் பூர்வீகமாக எந்தக் குடும்பத்திற்கும், கோத்திரத்துக்கும் கொடுக்கப்பட்டதோ அவர்களுக்கே சொந்தமாகும்.

அறுவடைகளின் எண்ணிக்கைகளையே
விற்பனை செய்கிறான். அடுத்த யூபிலியில்
அந்த நிலம் மீண்டும் அவனுக்கு உரியதாகி
விடும். 17ஒருவரை ஒருவர் ஏமாற்றக்கூடாது.
உங்கள் தேவனை நீங்கள் பெருமைபடுத்த
வேண்டும். நானே உங்களுடைய தேவ
னாகிய கர்த்தர்!

18“எனது சட்டங்களையும், விதிகளையும்
நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். அவற்
றைப் பின்பற்றுங்கள், அப்போது உங்கள்
நாட்டில் நீங்கள் பாதுகாப்போடு வாழலாம்.
19நிலம் உங்களுக்கு நல்ல விளைச்சலைத்
தரும். நீங்கள் அதிக விளைபொருட்களைப்
பெற்று நாட்டில் வசதியோடு வாழலாம்.

20“ஆனால் நீங்கள் ‘நான் விளைய
வைத்துப் பொருட்களைச் சேர்த்து வைக்கா
விட்டால் ஏழாவது ஆண்டில் வசதியாக
உண்ணமுடியாது’ என்று சொல்லலாம்.
21கவலைப்படாதிருங்கள்! ஆறாவது ஆண்
டில் என் ஆசீர்வாதம் உங்களுக்குக்
கிடைக்கும்படி கட்டளையிடுவேன்.
தொடர்ந்து நிலம் மூன்று ஆண்டுகளுக்கு
நன்கு விளையும். 22நீ எட்டாவது ஆண்டில்
பயிர் செய்யும்போதும் பழைய விளைச்
சலையே உண்டு கொண்டிருப்பாய். ஒன்பதா
வது ஆண்டில் புதிய விளைச்சல்
கிடைக்கும்வரை இவ்வாறு செய்வாய்.

### சொத்துக்குரிய சட்டங்கள்

23“இந்த நிலம் உண்மையில் எனக்குரியது.
எனவே இதனை நீங்கள் நிரந்தரமாக விற்க
முடியாது. அந்நியர்களாகவும் பயணி
களாகவுமே என் நிலத்தில் நீங்கள் அனை
வரும் என்னோடு வாழ்கிறீர்கள். 24ஜனங்கள்
தங்கள் நிலத்தை விற்றுவிடலாம். எனினும்
அது அவர்களின் குடும்பத்திற்கு மீண்டும்
வந்து சேரும். 25உங்களில் ஒருவன் மிகவும்
வறியவனாகவோ, தன் சொத்துக்களை
விற்கும் அளவுக்கு ஏழையாகவோ மாறலாம்.
அப்போது அவனுக்கு நெருக்கமான
உறவினரில் எவராவது வந்து அதனைத்
திரும்ப வாங்கிக்கொள்ள வேண்டும். 26அவ
னிடமிருந்து நிலத்தை திரும்ப வாங்குகிற
அளவுக்கு நெருக்கமான உறவினர்கள்
இல்லாமற் போகும்போது, அந்த நிலத்தைத்
தானே திரும்ப வாங்குகிற அளவிற்கு
அவன் பணத்தை சேகரித்திருக்கலாம்.
27பிறகு அவன் நிலத்தை விற்ற ஆண்டு
களைக் கணக்கிட்டு, அந்த எண்ணிக்கை
மூலம் எவ்வளவு விலை கொடுக்கவேண்டும்
என்று முடிவு செய்து அதனைத் திரும்ப
விலைக்கு வாங்கலாம். அதனால் அச்
சொத்து அவனுக்கு மீண்டும் உரியதாகும்.
28ஆனால் ஒருவேளை அவனுக்குத் தன்
நிலத்தை திரும்ப வாங்குகிற அளவிற்குப்
பணம் சேர்க்கமுடியாமல் போனால்
அப்போது அந்த நிலம் யூபிலி ஆண்டுவரை
வாங்கியவனிடமே இருக்கும். பிறகு
சிறப்பான யூபிலி விழா நடக்கும்போது
அந்நிலம் முதல் உரிமையாளனுக்கு மீண்டும்
சேர்ந்துவிடும். எனவே, சரியான குடும்பத்
துக்கு அந்த சொத்தானது மீண்டும் சொந்த
மாகும்.

29“ஒருவன், மதில் சூழ்ந்த பட்டணத்தி
லுள்ள தன் வீட்டை விற்றால் ஒரு
ஆண்டுவரை மட்டுமே அவனுக்குத் திரும்ப
வாங்கிக்கொள்கிற உரிமை உண்டு. 30ஆனால்
வீட்டுக்குச் சொந்தக்காரன் அதனைத் திரும்ப
வாங்கிக்கொள்ள முடியாவிட்டால் அது
வாங்கியவனுக்கும் அவனது சந்ததிகளுக்கும்
உரிமையாகிவிடும். வீடு யூபிலி ஆண்டில்
நிலத்தைப் போன்று அதன் சொந்தக்கார
னுக்குப் போய்ச்சேர்வதில்லை. 31மதில்
இல்லாத பட்டணங்களாக இருந்தால் அது
வயல்வெளியாக எண்ணப்படும். அதில்
உள்ள வீடுகள் மட்டுமே யூபிலி ஆண்டின்
போது உண்மையான சொந்தக்காரனுக்குச்
சேரும்.

32“ஆனால் லேவியரின் நகரம்பற்றி வேறு
விதிகள் உள்ளன, லேவியர்கள் நகரங்களில்
தங்கள் வீடுகளை எப்போது வேண்டுமானா
லும் மீண்டும் வாங்கிக்கொள்ளலாம்.
33லேவியர்களிடமிருந்து யாராவது ஒரு வீடு
வாங்கினால் லேவியரின் நகரங்களிலுள்ள
வீடுகளெல்லாம் யூபிலி ஆண்டில் மீண்டும்
அவர்களுக்கே உரியதாகி விடும்.
ஏனென்றால் லேவியரின் நகரங்கள் எல்லாம்
லேவியின் கோத்திரங்களுக்கு சொந்தம்.
இஸ்ரவேல் ஜனங்கள் இதனை லேவியர்
களுக்குக் கொடுத்துவிட்டனர். 34அதோடு
லேவியரின் நகரங்களைச் சுற்றியிருக்கிற
வெளி நிலங்களை விற்கமுடியாது. அது
எப்போதும் லேவியர்களுக்கே உரியதாகும்.

### அடிமைகளின் எஜமானர்களுக்கு உரிய விதிகள்

35“உன் சகோதரரில் ஒருவன் மிகவும்
வருமையனாகி விட்டால் அவன் அயல்
நாட்டுக்காரனைப் போன்று உன்னோடு
பிழைக்கும்படி அனுமதிக்கவேண்டும் 36நீ
அவனுக்குக் கடன் கொடுத்து அவனிடம்
வட்டி வாங்காமல் இருப்பாயாக. தேவ
னுக்குரிய மதிப்பைக் கொடுத்து, உன்
சகோதரனை* வாழ விடுவாயாக.
37அவனிடம் நீ கொடுத்த கடனுக்காக வட்டி
வாங்காதே. நீ விற்கிற உணவிற்கு
மிகுதியாக லாபம் வரும்படி செய்யாதே.
38நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்.
உன்னை எகிப்தில் இருந்து அழைத்து
வந்து கானான் நாட்டைக் கொடுத்து, உனது
தேவனாக ஆனேன்.

39“உனது சகோதரன் ஒருவன் ஏழ்மை
காரணமாக உன்னிடம் அடிமையாக

---

**உன் சகோதரன்** அல்லது “உனது சொந்த நாட்டிலுள்ள மனிதன்.”

இருக்கலாம். நீ அடிமைபோன்று அவனை
வேலை வாங்கக்கூடாது. 40யூபிலி ஆண்டு
வரை அவன் ஒரு கூலிக்காரனைப்
போன்றும் ஒரு பயணியைப் போலவும்
இருப்பான். 41பிறகு அவன் உன்னைவிட்டுச்
செல்லலாம். அவன் தன் பிள்ளைகளைக்
கூட்டிக்கொண்டு மீண்டும் தன் குடும்பத்
துக்குத் திரும்பமுடியும். அவன் தனது
முற்பிதாக்களின் சொத்துக்களைப் பெற்றுக்
கொள்வான். 42ஏனென்றால் அவர்கள் எனது
ஊழியர்கள். அவர்களை நான் அடிமைத்
தனத்திலிருந்து மீட்டு எகிப்திலிருந்து
அழைத்து வந்தேன். அவர்கள் மீண்டும்
அடிமையாகக்கூடாது. 43இவர்களுக்குக்
கொடூரமான எஜமானனாக நீங்கள் இருக்கக்
கூடாது. நீங்கள் தேவனுக்கு பயப்பட
வேண்டும்.

44“உங்கள் ஆணும் பெண்ணுமான
அடிமைகளைப் பற்றிய காரியங்களாவன:
உங்களைச் சுற்றியுள்ள நாடுகளிலிருந்து
அடிமைகளை அழைத்து வரலாம் 45உங்கள்
தேசத்தில் வசிக்கும் அயல் நாட்டவர்கள்
குடும்பங்களில் இருந்து நீங்கள் அடிமைக
ளாக சிறுவர்களையும் அழைத்து வந்திருக்க
லாம். அந்த அடிமைச் சிறுவர்கள் உனக்கு
உரியவர்கள். 46உங்கள் இறப்பிற்குப் பின்
உங்களது பிள்ளைகளின் வசத்தில் அவர்கள்
இருப்பார்கள். என்றென்றும் அவர்கள்
உங்களது அடிமைகளாக இருக்கலாம். இந்த
அயல்நாட்டுக்காரர்களை உங்கள் அடிமை
களாக வைத்துக்கொள்ளலாம். ஆனால்
உங்கள் சொந்தச் சகோதரர்களாகிய இஸ்ர
வேல் ஜனங்களுக்கு ஒரு கொடுமையான
எஜமானனாக நீ இருக்கக்கூடாது.

47“அயல் நாட்டுக்காரரோ பயணிகளோ
செல்வந்தர் ஆகலாம். உன் சொந்த
நாட்டுக்காரன் ஏழையாக இருப்பதினால்
அவர்கள் அயல் நாட்டுக்காரர் ஒருவருக்கு
அடிமையாகலாம். 48அவன் திரும்பவும்
சுதந்திரமானவனாக முடியும். அவனது
சகோதரரில் ஒருவன் அவனை விலை
கொடுத்து மீட்டுவிடலாம். 49அவனது
சித்தப்பாவோ, பங்காளிகளோ, அவனைத்
திரும்ப வாங்கலாம். ஆனால் அவனுக்குப்
போதுமான பணம் இருந்தால் தானே
அதனைக் கொடுத்துவிட்டு சுதந்திரம்
பெற்றுவிடலாம்.

50“அவன் தன்னை விற்றுக்கொண்ட
ஆண்டு முதல் அடுத்த யூபிலி வரை
எண்ணிக்கொள்ள வேண்டும். ஆண்டுகளின்
எண்ணிக்கையை வைத்து விலையை
முடிவு செய்யலாம். ஏனென்றால் அவன் சில
ஆண்டுகளே தன்னை ‘வாடகையாகத்’
தந்திருக்கிறான். 51யூபிலி ஆண்டு வருவதற்கு
இன்னும் பல ஆண்டுகள் இருந்தால் அவன்
கொடுக்கவேண்டிய விலை மிகுதியாக
இருக்கும். அவன் அதனைக் கொடுக்க
வேண்டும். 52யூபிலி ஆண்டு வர இன்னும்
கொஞ்சம் ஆண்டுகளே இருந்தால் அவன்
கொடுக்கவேண்டிய விலை குறைவாக
இருக்கும். 53ஆனால் அவன் ஒரு வாடகை
ஆளைப்போன்று அயல்நாட்டுக்காரனோடு
ஒவ்வொரு ஆண்டும் இருக்க வேண்டும்.
அந்த அயல் நாட்டுக்காரன் கொடூரமான
எஜமானனாக இல்லாமல் இருக்கட்டும்.

54“அவனை யாரும் திரும்பி வாங்கா
விட்டாலும் யூபிலி ஆண்டில் அவனும்
அவனது பிள்ளைகளும் விடுதலை
பெறுவார்கள். 55ஏனென்றால் இஸ்ரவேல்
ஜனங்கள் எல்லாரும் எனது ஊழியர்கள்.
நான் அவர்களை எகிப்தின் அடிமைத்
தனத்திலிருந்து மீட்டேன். நானே உங்கள்
தேவனாகிய கர்த்தர்!

## தேவனுக்குக் கீழ்ப்படிபவர்களுக்குரிய பலன்கள்

26 “உங்களுக்காக விக்கிரகங்களை ஏற்
படுத்தாதீர்கள். உங்கள் நாடுகளில்
சிலைகளையோ நினைவுச் சின்னங்க
ளையோ வணங்குவதற்காக ஏற்படுத்தாதீர்
கள். ஏனென்றால் நானே உங்கள் தேவ
னாகிய கர்த்தர்!

2“எனது சிறப்பான ஓய்வு நாட்களை
நினைவில் கொள்ளுங்கள். எனது பரிசுத்த
மான இடங்களைப் பெருமைப்படுத்துங்கள்.
நானே கர்த்தர்!

3“எனது சட்டங்களையும் கட்டளை
களையும் நினைவில் கொண்டு அவற்றுக்குக்
கீழ்ப்படியுங்கள்! 4நீங்கள் இவற்றைச் செய்
தால் நான் உரிய பருவத்தில் மழையைத்
தருவேன். நிலம் நன்றாக விளையும். மரங்
கள் நல்ல பழங்களைத் தரும்.
5திராட்சைப்பழம் பறிக்கும் காலம்வரை
உங்கள் போரடிப்புக் காலம் இருக்கும்.
விதைப்புக் காலம்வரை திராட்சைப்பழம்
பறிக்கும் காலம் இருக்கும். நீங்கள் உங்கள்
அப்பத்தைத் திருப்தியாகச் சாப்பிட்டு
உங்கள் நாட்டில் சுகமாய் குடியிருப்பீர்கள்.
6உங்கள் நாட்டில் சமாதானத்தை உருவாக்கு
வேன். நீங்கள் பாதுகாப்புடன் இருப்பீர்கள்.
எவரும் வந்து உங்களை நெருங்கி
அச்சுறுத்த முடியாது. தீமை செய்யும் மிருகங்
களை நாட்டுக்கு வெளியே வைத்திருப்பேன்.
வேறு படைகளும் உங்கள் நாட்டின்
வழியாகக் கடந்து செல்லாது.

7“நீங்கள் உங்களது பகைவர்களைத்
துரத்திசென்று தோற்கடிப்பீர்கள். உங்கள்
வாளால் அவர்களைக் கொல்வீர்கள். 8ஐந்து
பேரான நீங்கள் நூறுபேரை விரட்டிச்
செல்வீர்கள், நூறு பேராக இருந்தாலும்
நீங்கள் பத்தாயிரம் பேரை விரட்டிச்சென்று
அவர்களை வாளால் வெட்டிக் கொல்லுவீர்
கள்.

9“நான் உங்கள்மேல் கவனமாயிருந்து
நிறைய குழந்தைகளை நீங்கள் பெறும்படி
செய்வேன். நான் எனது உடன்படிக்கையை

பாதுகாப்பேன். 10நீ ஒரு ஆண்டு விளைச்
சலைப் போதுமான அளவிற்குமேல்
பெற்றிருப்பீர்கள். புதிய விளைச்சலும் பெறு
வீர்கள். புதியதை வைக்க இடமில்லாமல்
பழையதை எறிவீர்கள். 11உங்கள் நடுவே
எனது ஆராதனைக் கூடாரத்தை அமைப்
பேன். நான் உங்களிடமிருந்து விலகிச்
செல்லமாட்டேன். 12நான் உங்களோடு
நடந்து உங்கள் தேவனாக இருப்பேன்.
நீங்களே எனது ஜனங்கள். 13நானே உங்கள்
தேவனாகிய கர்த்தர். நீங்கள் எகிப்தில்
அடிமைகளாக இருந்தீர்கள். நான் உங்களை
அங்கிருந்து மீட்டு வந்தேன். அடிமைகளாக
நீங்கள் சுமந்த பாரத்தால் முதுகு வளைந்து
போனீர்கள். நான் உங்கள் நுகத்தடிகளை
உடைத்து உங்களை நிமிர்ந்து நடக்கச்
செய்தேன்!

### தேவனுக்குக் கீழ்ப்படியாதவர்களுக்குரிய தண்டனை

14“நீங்கள் எனக்கு கீழ்ப்படியாவிட்டாலோ
அல்லது என் கட்டளையை பின்பற்றாவிட்
டாலோ கீழ்க்கண்ட தீமைகள் உங்களுக்கு
ஏற்படும். 15நீங்கள் எனது சட்டங்களுக்கும்
கட்டளைகளுக்கும் கீழ்ப்படிய மறுத்தால்
எனது உடன்படிக்கையை மீறினவர்களாக
மாறுகிறீர்கள். 16நீங்கள் அவ்வாறு செய்தால்
நான் உங்களுக்கு மோசமான தீமைகளை
உருவாக்குவேன். நோய்களையும் காய்ச்ச
லையும் உங்களுக்கு வரச்செய்வேன். அவை
உங்கள் கண்களையும் ஜீவனையும் கெடுக்
கும். நீங்கள் செய்யும் பயிர் விளைச்சலில்
நீங்கள் வெற்றி பெறமுடியாது. உங்கள்
பகைவர்கள் உங்களது விளைச்சலை உண்
பார்கள். 17நான் உங்களுக்கு எதிராக
இருப்பேன். எனவே உங்களை உங்கள்
எதிரிகள் வெல்வார்கள். அவர்கள் உங்களை
வெறுத்து ஆட்சி செலுத்துவார்கள். உங்
களை எவரும் துரத்தாவிட்டாலும் நீங்கள்
பயந்து ஓடுவீர்கள்.
18“இவற்றுக்குப் பிறகும் நீங்கள் கீழ்ப்
படியாவிட்டால் உங்கள் பாவங்களுக்காக
ஏழு மடங்கு தண்டிப்பேன். 19உங்கள்
பெருமைக்குரிய பெரிய நகரங்களை
யெல்லாம் அழிப்பேன். வானம் உங்களுக்கு
மழையைத் தராது. நிலம் விளைச்சலைத்
தராது.* 20நீங்கள் கடினப்பட்டு உழைப்பீர்
கள், ஆனால் விளைச்சல் கிடைக்காது.
உங்கள் மரங்களும் பழங்களைத் தராது.
21“அல்லது இத்தனைக்குப் பிறகும் எனக்கு
எதிராகவே நீங்கள் மாறி கீழ்ப்படிய மறுத்
தால் உங்களை ஏழு மடங்கு கடுமையாக
தண்டிபேன். உங்களது பாவங்கள்
அதிகரிக்கும்போது தண்டனைகளும் அதிக
மாகும். 22நான் உங்களுக்கு எதிராகக் காட்டு
மிருகங்களை அனுப்புவேன். உங்கள் பிள்
ளைகளை உங்களிடமிருந்து அவை பிரித்
துக்கொண்டு போகும். அவை உங்கள்
மிருகங்களைக் கொல்லும். அவை உங்கள்
ஜனங்களை அழிக்கும். ஜனங்கள் பயணம்
செய்ய அஞ்சுவார்கள். சாலைகள் வெறுமை
யாகும்!
23“இவை அனைத்தும் நடந்த பிறகும்
நீங்கள் பாடம் கற்றுக்கொள்ளவில்லை என்
றாலோ மேலும் எனக்கு எதிராக
இருந்தாலோ, 24நானும் உங்களுக்கு எதிராக
மாறுவேன். ஆம் கர்த்தராகிய நானே உங்கள்
பாவங்களுக்காக ஏழு மடங்கு தண்டிப்பேன்.
25நீங்கள் எனது உடன்படிக்கையை மீறியி
ருப்பதினால் நான் உங்களைத் தண்டிப்பேன்.
உங்களுக்கெதிராக நான் படைகளைக்
கொண்டுவருவேன். நீங்கள் பாதுகாப்புக்காக
உங்கள் நகரங்களுக்கு ஓடுவீர்கள். ஆனால்,
உங்களுக்கிடையில் நோய்களைப் பரவச்
செய்வேன். மேலும் உங்கள் எதிரிகள்
உங்களைத் தோற்கடிப்பார்கள். 26அந்த நகரத்
தில் உண்பதற்குக் குறைவான அளவிலேயே
தானியங்கள் இருக்கும். ஒரே அடுப்பில்
பத்துப் பெண்கள் அவர்களது எல்லா
உணவையும் சமைக்கமுடியும். நீங்கள் அதை
உண்டபிறகும் பசியோடிருப்பீர்கள்!
27“நீங்கள் அதற்கு மேலும் என்னைக்
கவனிக்காவிட்டாலோ, எனக்கு எதிராகத்
திரும்பினாலோ, 28நான் உண்மையாகவே
எனது கோபத்தைக் காட்டுவேன். ஆம்,
கர்த்தராகிய நான் உங்கள் பாவங்களுக்காக
உங்களை ஏழு மடங்கு தண்டிப்பேன்!
29நீங்கள் மிகவும் பசியாவதினால் உங்கள்
மகன்களையும், மகள்களையும் தின்பீர்கள்.
30நான் உங்களது உயர்ந்த மேடைகளை
அழிப்பேன். உங்களது நறுமணப்புகைப்*
பலிபீடங்களை உடைப்பேன். உங்களது
பிணங்களை உங்களது உயிரற்ற விக்கிரகங்
களின்மேல் போடுவேன். நீங்கள் எனது
வெறுப்புக்கு ஆளாவீர்கள். 31நான் உங்கள்
நகரங்களை அழிப்பேன். உங்கள் பரிசுத்த
மான இடங்களை வெறுமையாக்குவேன்.
உங்கள் பலிகளின் மணத்தை நுகர
மாட்டேன். 32உங்கள் நிலங்களை வெறுமை
யாக்குவேன். அதிலே குடியிருக்கும் உங்கள்
பகைவர்கள் அதிர்ச்சியடைவார்கள். 33தேசங்
களெங்கும் உங்களைச் சிதறடிப்பேன். நான்
எனது வாளை உருவி உங்களை அழிப்
பேன். உங்கள் வயல்கள் பாழாகும், உங்கள்
நகரங்கள் அழிந்துபோகும்.
34“நீங்கள் உங்களது பகைவரின்
நாட்டிற்கு கொண்டு செல்லப்படுவீர்கள்.
உங்கள் நாடு வெறுமையடையும். இறுதியில்

---

**வானம் … விளைச்சலைத் தராது** எழுத்தின் பிரகாரமாக, “உங்கள் வானங்கள் இரும்பைப் போலவும், உங்களது நிலங்கள் வெண்கலத்தைப் போலவும் இருக்கும்.” எனப் பொருள்படும்.

**நறுமணப்புகை** விசேஷமான உலர்ந்த மரத்தின் பட்டை. இனிய நறுமணமான புகையை உண்டாக்க இது எரிக்கப்படுகிறது. இது தேவனுக்கு பரிசாக அளிக்கப்படுகிறது.

உங்கள் வயல்கள் ஓய்வுபெறும். அவை
ஓய்வு காலத்தின் மகிழ்ச்சியை அனுபவிக்
கும். [35]வயல்கள் ஏழு ஆண்டுகளுக்கு ஒரு
முறை ஓய்வு பெறவேண்டும் என்று சட்டம்
கூறுகின்றன. நீங்கள் அங்கு குடியிருந்த
போது ஓய்வுபெறாத அந்த நிலங்கள்
பாழாய்க் கிடந்து ஓய்வுபெறும். [36]உங்களில்
உயிரோடு இருப்பவர்களைப் பகைவரின்
நாடுகளில் தைரியம் இழந்து தவிக்கச்
செய்வேன். அசைகிற இலைகளின் சத்தமும்
அவர்களை அச்சுறுத்தி விரட்டும். அவர்கள்
எதற்கெடுத்தாலும் அஞ்சுவார்கள். யாரும்
துரத்தாவிட்டாலும் யாரோ அவர்களை
வாளெடுத்துக்கொண்டு துரத்துவதுபோன்று
ஓடிக்கொண்டிருப்பார்கள். [37]யாரும் துரத்தா
விட்டாலும் கூட அவர்கள் ஓடி ஒருவர்மேல்
ஒருவர் விழுவார்கள்.

"எதிரிகளை எதிர்த்து நிற்கிற பலம்
உங்களிடம் இல்லாமல் போகும். [38]வேறு
நாடுகளில் நீங்கள் காணாமல் போவீர்கள்.
உங்கள் பகைவரின் நாடுகளில் மறைந்து
போவீர்கள். [39]உங்களில் உயிரோடு இருப்ப
வர்கள் தங்கள் பாவங்களால் பகைவர்கள்
நாட்டில் அழிவார்கள். அவர்கள் தம்
முற்பிதாக்கள் செய்ததுபோலவே தங்கள்
பாவங்களால் அழிவார்கள்.

### எப்பொழுதும் நம்பிக்கை இருக்கிறது

[40]"ஜனங்கள் தங்கள் பாவங்களை ஒப்புக்
கொண்டு, அவர்கள் தங்கள் முற்பிதாக்களின்
பாவங்களையும் அறிக்கையிட்டு, அவர்கள்
எனக்கு எதிராக நடந்துக்கொண்டு, பாவம்
செய்தார்கள் என்பதை ஒப்புக்கொள்ளலாம்.
[41]அவர்கள் எனக்கு எதிராக நடந்து
கொண்டதால் நானும் அவர்களுக்கு எதிராக
நடந்துகொண்டேன். அவர்களைப் பகை
வரின் நாடுகளுக்கு அனுப்பிவைத்தேன்.
இதனையும் அவர்கள் அறிக்கையிடலாம்.
அவர்கள் எனக்கு அந்நியர்களாவர்கள்.
அவர்கள் அடக்கமாக* தங்கள் பாவங்களுக்
கான தண்டனைகளை ஏற்றுக்கொள்ள
வேண்டும். [42]இவ்வாறு செய்தால் நான்
யாக்கோபோடு செய்த உடன்படிக்கையை
யும், நான் ஈசாக்கோடு செய்த உடன்
படிக்கையையும், நான் ஆபிரகாமோடு
செய்த உடன்படிக்கையையும் நினைவு
படுத்திக் கொள்வேன். நான் அந்த தேசத்தை
நினைவுகூருவேன்.

[43]"நிலம் வெறுமையாக இருக்கும். அது
தனது ஓய்வு காலத்தை மகிழ்ச்சியுடன்
அனுபவிக்கும். பின் உயிரோடு
இருக்கிறவர்கள் தங்கள் பாவங்களுக்கான
தண்டனைகளை ஏற்றுக்கொள்வார்கள்.
அவர்கள் எனது சட்டங்களையும், விதி
களையும் வெறுத்து கீழ்ப்படிய மறுத்ததால்
இந்தத் தண்டனை பெற்றதாக உணர்ந்து
கொள்வார்கள். [44]அவர்கள் உண்மையில்
பாவம் செய்தவர்கள். ஆனால் அவர்கள்
என்னிடம் உதவிக்கு வந்தால் நான் அவர்
களை விட்டு விலகிப் போகமாட்டேன்.
நான் அவர்கள் சொல்வதைக் கேட்பேன்.
அவர்கள் தங்கள் பகைவரின் நாட்டிலே
இருந்தாலும் முழுவதுமாக அழித்து விட
மாட்டேன். நான் அவர்களோடு செய்த
உடன்படிக்கையை உடைக்கமாட்டேன்.
ஏனென்றால் நான் அவர்களுடைய
தேவனாகிய கர்த்தர். [45]அவர்களுக்காக, நான்
அவர்களின் முற்பிதாக்களோடு செய்த
உடன்படிக்கையை நினைவுபடுத்திக் கொள்
வேன். நான் அவர்களின் முற்பிதாக்களை
எகிப்திலிருந்து மீட்டுக்கொண்டு வந்து,
அவர்களின் தேவன் ஆனேன். மற்ற
நாடுகளும் இதனைக் கவனித்தன. நான்
கர்த்தர்!" என்று கூறினார்.

[46]இவையே இஸ்ரவேல் ஜனங்களுக்குக்
கர்த்தர் கொடுத்த சட்டங்களும், விதிகளும்,
போதனைகளுமாகும். கர்த்தருக்கும் இஸ்ர
வேல் ஜனங்களுக்கும் ஏற்பட்ட உடன்
படிக்கையின் சட்டங்களும் இவைதான்.
இச்சட்டங்களை கர்த்தர் சீனாய் மலையில்
மோசேயிடம் கொடுத்தார். மோசே இவற்றை
ஜனங்களிடம் கொடுத்தான்.

### வாக்குத்தத்தங்கள் முக்கியமானவை

27 கர்த்தர் மோசேயிடம், [2]"இஸ்ரவேல்
ஜனங்களிடம் கூறு. கர்த்தரிடம்
ஒருவன் சிறப்பான பொருத்தனை ஒன்றைச்
செய்திருக்கலாம். அவன் கர்த்தருக்கு ஒரு
நபரைக் கொடுப்பதாக வாக்குறுதி அளித்தி
ருக்கலாம். அந்த நபர் கர்த்தருக்குச்
சிறப்பான ஊழியம் செய்வான். ஆசாரியன்
அவனுக்கென்று ஒரு விலையை நிர்ணயம்
செய்யவேண்டும். அந்த நபரைத் திரும்பப்
பெற வேண்டுமானால் அவனுக்குரிய
மீட்பின் தொகையைக் கொடுக்கவேண்டும்.
[3]இருபது வயது முதல் அறுபது வயது
வரையுள்ள ஒரு ஆணின் விலை ஐம்பது
வெள்ளிச் சேக்கலாகும்.* (நீங்கள் இதற்கு
அதிகாரப்பூர்வமான பரிசுத்த இடத்தின்
சேக்கலின் அளவையே எடுத்துக்கொள்ள
வேண்டும்.) [4]இருபதுவயது முதல் அறுபது
வயது வரையுள்ள ஒரு பெண்ணின் விலை
முப்பது வெள்ளிச்சேக்கலாகும். [5]ஐந்து வயது
முதல் இருபது வயதுவரை உடைய ஒரு
ஆண்மகனின் விலை இருபது வெள்ளிச்
சேக்கலாகும். ஐந்து வயது முதல் இருபது
வயது வரை உடைய ஒரு பெண்ணின்
விலை பத்து வெள்ளிச்சேக்கலாகும். [6]ஒரு
மாதம் முதல் ஐந்து வயது வரையுள்ள

---

**அவர்கள் எனக்கு ... அடக்கமாக** எழுத்தின் பிரகாரமாக, "விருத்தசேதனம் செய்யப்படாத தங்கள் இருதயங்களை அவர்கள் தாழ்மைப் படுத்தினால்."

**சேக்கல்** ஒரு அவுன்ஸ் என்ற அளவின் ஐந்தில் இரண்டு பாகம் ஒரு சேக்கலாகும்.

ஆண் குழந்தையின் விலை ஐந்து
சேக்கலாகும். ஒரு பெண் குழந்தையின்
விலை மூன்று சேக்கலாகும். [7]அறுபதும்
அதற்கும் மேலும் ஆன ஒரு முதியவனின்
விலை பதினைந்து சேக்கலாகும். இது
போன்ற முதிய பெண்ணின் விலை பத்து
சேக்கலாகும்.
[8]“ஒருவேளை அவன் இப்பணத்தைச்
செலுத்தமுடியாத அளவிற்கு ஏழையாக
இருந்தால் அவனை ஆசாரியனிடம்
அழைத்துவர வேண்டும். அவன் செலுத்த
வேண்டிய தொகையைப் பற்றி ஆசாரியனே
முடிவு செய்வான்.

### கர்த்தருக்கான காணிக்கைகள்

[9]“கர்த்தருக்கான பலிகளாக சில மிருகங்
களைப் பயன்படுத்தலாம். ஒருவன் இத்தகைய
மிருகங்களைக் கொண்டுவந்தால் அவை
பரிசுத்தமடைந்துவிடும். [10]அவன் அந்த
மிருகத்தை கர்த்தருக்கு தருவதாக வாக்களித்
திருக்கலாம். எனவே அவன் அதற்குப்
பதிலாக வேறு மிருகத்தைக் கொண்டுவர
முயலக்கூடாது. மோசமான மிருகத்துக்குப்
பதிலாக நல்ல மிருகத்தையோ, நல்ல
மிருகத்துக்குப் பதில் மோசமான மிருகத்
தையோ, கொண்டுவர முயற்சி செய்யக்
கூடாது. அவ்வாறு ஒருவன் செய்தால் அந்த
இரண்டு மிருகங்களுமே பரிசுத்தமாகி
விடுவதால், இரண்டுமே கர்த்தருக்குரியதாகி
விடும்.
[11]“சில மிருகங்களைக் கர்த்தருக்கு
பலியாகத் தர இயலாது. இத்தகைய தீட்டுள்ள
மிருகத்தை ஒருவன் கர்த்தருக்குக்
கொண்டுவந்தால், அதனை ஆசாரியனிடம்
கொடுக்கவேண்டும். [12]ஆசாரியன் அதற்குரிய
விலையை முடிவு செய்வான். அம்மிருகம்
நல்லதா, கெட்டதா என்பதைப் பற்றி
வேறுபாடு எதுவும் இல்லை. எனவே
ஆசாரியன் முடிவு செய்வதே அம்மிருகத்தின்
விலையாகும். [13]ஒருவேளை அவன் அந்த
மிருகத்தைத் திரும்பப் பெறவேண்டும் என்று
விரும்பினால் அதற்குரிய விலையோடு
ஐந்தில் ஒரு பங்கு சேர்த்துக் கொடுக்க
வேண்டும்.

### வீட்டின் மதிப்புத் தொகை

[14]“ஒருவன் தனது வீட்டைக் கர்த்தருக்குப்
பரிசுத்தம் என்று அர்ப்பணித்தால், அதன்
விலையை ஆசாரியன் முடிவு செய்ய
வேண்டும். அவ்வீடு நல்லது, கெட்டது
என்பது பற்றி வேறுபாடு இல்லை.
ஆசாரியன் தீர்மானிப்பதே அவ்வீட்டின்
விலையாகும். [15]ஆனால் வீட்டுக்காரன்
அவ்வீட்டைத் திரும்பப் பெற்றுக்கொள்ள
வேண்டும் என்று விரும்பினால் வீட்டின்
விலையோடு ஐந்தில் ஒரு பாகம் சேர்த்துக்
கொடுக்க வேண்டும். பின்பு வீடு
அவனுக்குரியதாகும்.

### சொத்தின் மதிப்பு

[16]“ஒருவன் தனது வயல்களின் ஒரு
பாகத்தை கர்த்தருக்கு அர்ப்பணித்தால்
அதன் விலையானது அதில் எவ்வளவு
விதை விதைக்கலாம் என்பதைப் பொறுத்தே
முடிவு செய்யப்படும். ஒரு கலம்* வாற்
கோதுமை, விதைக்கிற வயல் ஐம்பது
வெள்ளிச் சேக்கலாக மதிக்கப்பட வேண்டும்.
[17]ஒருவேளை வயலை யூபிலி ஆண்டில்
தேவனுக்குக் கொடுத்தால், அதன் விலையை
ஆசாரியன் தீர்மானிப்பான். [18]அவன் தனது
வயலை யூபிலி ஆண்டுக்குப் பிறகு
கொடுத்தால், ஆசாரியன் அதன் விலையைச்
சரியாகக் கணக்கிடவேண்டும். அவன்
அடுத்த யூபிலிக்கான ஆண்டு எண்
ணிக்கையைக் கணக்கிட்டு விலையைச்
சொல்லுவான். [19]வயலைக் கொடுத்தவன்
திரும்பப்பெற வேண்டும் என்று விரும்பி
னால் வயலின் விலையோடு ஐந்தில் ஒரு
பங்கு மிகுதியாகக் கொடுத்து பெற்றுக்
கொள்ளலாம். பிறகு அது அவனுக்கு
உரிமை உடையதாகும். [20]ஒருவேளை அவன்
திரும்ப விலைகொடுத்து வாங்கிக்
கொள்ளாவிட்டால், அவ்வயல் தொடர்ந்து
ஆசாரியர்களுக்கு உரியதாகும். ஒருவேளை
அந்த வயல் வேறு யாருக்கேனும்
விற்கப்பட்டால், அவன் அதனைத் திரும்பப்
பெற்றுக்கொள்ள முடியாது. [21]எனவே
வயலுக்குச் சொந்தக்காரன் திரும்பப்
பெற்றுக்கொள்ளாவிட்டால், யூபிலி ஆண்டு
வந்தாலும் அது கர்த்தருக்கு பரிசுத்தமான
தாக விளங்கும், என்றென்றும் ஆசாரியர்
களுக்கு உரிமை உடையதாக இருக்கும்.
அது கர்த்தருக்கே முழுமையாகக் கொடுக்கப்
பட்ட நிலம்போல் இருக்கும்.
[22]“ஒருவன் கர்த்தருக்கு அர்ப்பணித்த நிலம்
அவன் விலைக்கு வாங்கியதாக இருக்கலாம்.
அது அவனது குடும்பச் சொத்தாக இல்லா
மல் இருக்கலாம். [23]அப்போது ஆசாரியன்
யூபிலி ஆண்டுக்குரிய ஆண்டுகளைக்
கணக்கிட்டு அதன் விலையை முடிவு
செய்வான். அது கர்த்தருக்கு உரியதாக
இருக்கும். [24]பிறகு யூபிலி ஆண்டில் அந்நிலம்
மீண்டும் அந்நிலத்திற்கு சொந்தமான
குடும்பத்திற்கே போய்ச்சேரும்.
[25]“இதன் விலையை முடிவு செய்யும்
போது அதிகாரப்பூர்வமான அளவை
பயன்படுத்த வேண்டும். ஒரு சேக்கல் என்பது
இருபது கேராவாகும்.

### மிருகங்களின் மதிப்புத் தொகை

[26]“ஜனங்கள் கர்த்தருக்கு மாடுகளையோ,
ஆடுகளையோ சிறப்புக் காணிக்கைகளாகக்
கொடுக்கலாம். அவை முதலில் பிறந்த
வையாக இருப்பின் அது ஏற்கெனவே

---

**கலம்** 6 புஷெல் என்ற அளவுக்கு சமமான ஒரு
அளவையாகும்.

கர்த்தருக்கு உரியது. எனவே அவற்றை
ஜனங்கள் சிறப்புக் காணிக்கையாகக்
கொடுக்க முடியாது. 27ஜனங்கள் முதலில்
பிறந்த மிருகங்களைக் கர்த்தருக்கே கொடுக்க
வேண்டும். ஆனால் அது தீட்டுள்ளதாக
இருந்தால் அவன் அதனைத் திருப்பி
வாங்கிக்கொள்ள வேண்டும். ஆசாரியன்
அதற்குரிய விலையை முடிவு செய்வான்.
விலையோடு ஐந்தில் ஒரு பாகம் மிகுதியாகக்
கொடுத்து அதனை வாங்கிக்கொள்ள
வேண்டும். அவன் அதனைத் திருப்ப
வாங்கிக்கொள்ளாவிட்டால் ஆசாரியன் தான்
விரும்புகிற விலையில் மற்றவர்களுக்கு
விற்றுவிட வேண்டும்.

### சிறப்புக் காணிக்கைகள்

28“ஜனங்கள் கர்த்தருக்குக் கொடுக்கும்
அன்பளிப்புகளில் சில சிறப்பான அன்ப
ளிப்புகள்* உள்ளன. இவை கர்த்தருக்கே
உரியவை. அவற்றைக் கொடுத்தவன்
திருப்பி வாங்கிக்கொள்ளவும், விற்கவும்
முடியாது. இவை கர்த்தருக்கே சொந்தமான
வை. காணிக்கைகளில் மனிதர்கள், மிருகங்
கள், குடும்பச் சொத்திலுள்ள வயல்கள்
போன்றவற்றை சேர்த்துக்கொள்ளலாம்.
29“சிறப்புக் காணிக்கையாக மனிதனைக்
கொடுத்தால், அவனைத் திரும்ப விலைக்கு
வாங்க முடியாது. அவன் கொல்லப்பட
வேண்டும்.
30“விளைச்சலில் பத்தில் ஒருபாகம்
கர்த்தருக்கு உரியது. வயல்களில் விளைப
வைகளிலும், மரங்களின் பழங்களிலும்
பத்தில் ஒரு பாகம் கர்த்தருக்கே உரியது.
31எனவே எவனாவது இதனைத் திரும்பப்
பெற்றுக்கொள்ள விரும்பினால் அதன்
விலையோடு ஐந்தில் ஒரு பாகம் மிகுதியாகக்
கொடுத்து பெற்றுக்கொள்ளலாம்.
32“ஒருவனது மாடு அல்லது ஆட்டு
மந்தையில் பத்தில் ஒரு பங்கான மிருகங்கள்
கர்த்தருக்கு உரியவை. 33கர்த்தருக்குத் தேர்ந்
தெடுக்கப்படும் மிருகங்கள் நல்லவையா,
கெட்டவையா என்பதைப்பற்றி கவலைப்
பட வேண்டாம். அதற்காக அவன் வேறு
மிருகங்களை மாற்றிக்கொள்ள வேண்டாம்.
அவன் அவ்வாறு மாற்றிக்கொள்ள விரும்பி
னால் இரண்டு மிருகங்களுமே கர்த்தருக்கு
உரியதாகும். இவற்றைத் திரும்ப வாங்கிக்
கொள்ள முடியாது” என்று கூறினார்.
34இவை அனைத்தும் கர்த்தர் மோசேக்குக்
கொடுத்த கட்டளைகளாகும். இதனை
இஸ்ரவேல் ஜனங்களுக்காகச் சீனாய்
மலையில் அவர் கொடுத்தார்.

---

***சிறப்பான அன்பளிப்புகள்*** *இது பொதுவாக போரில் கைப்பற்றிய பொருள்களைக் குறிக்கும் இந்தப் பொருள்கள் (காணிக்கைகள்) கர்த்தருக்கு மட்டுமே உரியது. எனவே இவை வேறெதற்கும் பயன் படுத்தப்பட முடியாது.*

# எண்ணாகமம்

### இஸ்ரவேலரை மோசே கணக்கிடுதல்

1 ஆசரிப்புக் கூடாரத்திலே கர்த்தர்
மோசேயிடம் பேசினார். இது சீனாய்
பாலைவனத்தில் நடந்தது. இஸ்ரவேல்
ஜனங்கள் எகிப்தை விட்டுப் புறப்பட்ட
இரண்டாவது ஆண்டின் இரண்டாம்
மாதத்தின் முதல் நாளில் இது நடந்தது.
கர்த்தர் மோசேயிடம், 2 "இஸ்ரவேல் ஜனங்கள்
தொகையை கணக்கிடு. ஒவ்வொரு
மனிதனையும் அவனது குடும்பத்தோடும்
கோத்திரங்களோடும் பட்டியலிடு.
3 இஸ்ரவேல் ஜனங்களில் இருபது வயது
அல்லது அதற்கு மேலுள்ள எல்லா
ஆண்களையும் நீயும் ஆரோனும் எண்ணிக்
கணக்கிடுங்கள். (இந்த ஆண்கள்தான்
இஸ்ரவேல் படையில் பணிபுரியவேண்டும்.)
இவர்களை குழுவின்படி கணக்கிடுக.
4 ஒவ்வொரு கோத்திரத்திற்கும் ஒவ்வொரு
மனிதன் உங்களுக்கு உதவுவான். அவனே
அந்தக் கோத்திரத்துக்குத் தலைவனாக
இருப்பான். 5 உங்களுக்குத் துணையாக
நின்று உங்களுக்கு உதவி செய்பவர்களின்
பெயர்கள் பின்வருவதாகும்:

ரூபனின் கோத்திரத்திலிருந்து
சேதேயூருடைய மகன் எலிசூர்;
6 சிமியோனின் கோத்திரத்திலிருந்து
சூரிஷதாயின் மகன் செலூமியேல்;
7 யூதாவின் கோத்திரத்திலிருந்து
அம்மினதாபின் மகன் நகசோன்;
8 இசக்காரின் கோத்திரத்திலிருந்து
சூவாரின் மகன் நெதனெயேல்;
9 செபுலோனின் கோத்திரத்திலிருந்து
ஏலோனின் மகன் எலியாப்;
10 யோசேப்பின் சந்ததியிலிருந்து
யோசேப்பின் மகனான
எப்பிராயீமின் கோத்திரத்திலிருந்து
அம்மியூதின் மகன் எலிஷாமா;
யோசேப்பின் மகனான
மனாசேயின் கோத்திரத்திலிருந்து
பெதாசூரின் மகன் கமாலியேல்;
11 பென்யமீனின் கோத்திரத்திலிருந்து
கீதெயோனின் மகன் அபீதான்;
12 தாணின் கோத்திரத்திலிருந்து
அம்மிஷதாயின் மகன் அகியேசேர்;
13 ஆசேரின் கோத்திரத்திலிருந்து
ஓகிரானின் மகன் பாகியேல்.
14 காத்தின் கோத்திரத்திலிருந்து
தேகுவேலின் மகன் எலியாசாப்;
15 நப்தலியின் கோத்திரத்திலிருந்து
ஏனானின் மகன் அகீரா" என்று
கூறினார்.

16 இவர்கள் அனைவரும் தங்களுடைய
கோத்திரங்களுக்கு தலைவர்களாக தேர்ந்தெ
டுக்கப்பட்டனர். 17 மோசேயும் ஆரோனும்
இவர்களைத் தலைவர்களாக ஏற்றுக்
கொண்டனர். 18 மோசேயும் ஆரோனும் இஸ்ர
வேல் ஜனங்களைச் சேர்த்துக் கூட்டினர்.
பிறகு, அவர்கள் தங்கள் குடும்பம், மற்றும்
கோத்திரங்களின்படி பட்டிய லிடப்பட்டனர்.
இருபது வயதும் அதற்கு மேலும் உள்ள
எல்லா ஆண்களும் பட்டியலிடப்பட்டனர்.
19 கர்த்தருடைய கட்டளையின்படியே மோசே
சரியாக செய்து முடித்தான். ஜனங்கள்
சீனாய் பாலைவனத்தில் இருக்கும்போதே,
மோசே அவர்களை எண்ணிக் கணக்
கிட்டான்.

20 அவர்கள் ரூபனின் கோத்திரத்தைக்
கணக்கிட்டார்கள். (இஸ்ரவேலின் மூத்த
மகன் ரூபன்.) இருபது வயதும் அதற்கு
மேலும் உள்ள படையில் பணியாற்றும்
தகுதியுடைய எல்லா ஆண்களும் எண்ணிக்
கணக்கிடப்பட்டனர். அவர்கள் தம்
குடும்பத்தாரோடும், கோத்திரங்களோடும்
எண்ணி பட்டியலிடப்பட்டனர். 21 ரூபனின்
கோத்திரத்தில் கணக்கிடப்பட்ட ஆண்களின்
மொத்த எண்ணிக்கை 46,500.

22 சிமியோனின் கோத்திரத்தில் உள்ள
வர்களை எண்ணினர். இருபது வயதும்
அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா
ஆண்களும் பட்டியலிடப்பட்டனர். அவர்கள்
தங்கள் குடும்பத்தாரோடும், கோத்திரங்
களோடும் எண்ணிப் பட்டியலிடப்
பட்டனர். 23 சிமியோனின் கோத்திரத்தில்
கணக்கிடப்பட்ட ஆண்களின் மொத்த
எண்ணிக்கை 59,300.

24 காத்தின் கோத்திரத்தில் உள்ளவர்களை
எண்ணினார்கள். இருபது வயதும், அதற்கு
மேலும் உள்ள படையில் பணியாற்றும்
தகுதியுடைய எல்லா ஆண்களும் எண்ணிப்
பட்டியலிடப்பட்டனர். அவர்கள் தங்கள்
குடும்பத்தாரோடும், கோத்திரங்களோடும்

எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 25காத்தின்
கோத்திரத்தில் கணக்கிடப்பட்ட ஆண்களின்
மொத்த எண்ணிக்கை 45,650.
26யூதாவின் கோத்திரத்தில் இருபது
வயதும், அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா ஆண்
களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தாரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 27யூதா
வின் கோத்திரத்தில் கணக்கிடப்பட்ட ஆண்
களின் மொத்த எண்ணிக்கை 74,600.
28இசக்காரின் கோத்திரத்தில் உள்ளவர்
களை எண்ணினார்கள். இருபது வயதும்
அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா ஆண்
களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தாரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 29இசக்கா
ரின் கோத்திரத்தில் கணக்கிடப்பட்ட
ஆண்களின் மொத்த எண்ணிக்கை 54,400.
30செபுலோனின் கோத்திரத்தில் உள்ளவர்
களை எண்ணினார்கள். இருபது வயதும்
அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா
ஆண்களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தாரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 31செபுலோ
னின் கோத்திரத்தில் கணக்கிடப்பட்ட
ஆண்களின் மொத்த எண்ணிக்கை 57,400.
32எப்பிராயீமின் கோத்திரத்தில் உள்ள
வர்களை எண்ணினார்கள். (இவன்
யோசேப்பின் மகன்) இருபது வயதும்,
அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா
ஆண்களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தாரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 33எப்பி
ராயீமின் கோத்திரத்தில் கணக்கிடப் பட்ட
ஆண்களின் மொத்த எண்ணிக்கை 40,500.
34மனாசேயின் கோத்திரத்தில் உள்ள
வர்களை அவர்கள் எண்ணினார்கள்.
(மனாசேயும் யோசேப்பின் மகன்.) இருபது
வயதும், அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா
ஆண்களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தினரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 35மனாசே
யின் கோத்திரத்தில் கணக்கிடப் பட்ட
ஆண்களின் மொத்த எண்ணிக்கை 32,200.
36அவர்கள் பென்யமீனின் கோத்திரத்தில்
உள்ளவர்களை எண்ணினார்கள். இருபது
வயதும் அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா
ஆண்களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தினரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 37பென்யமீ
னின் கோத்திரத்தில் கணக்கிடப் பட்ட
ஆண்களின் மொத்த எண்ணிக்கை 35,400.
38அவர்கள் தாணின் கோத்திரத்தில்
உள்ளவர்களை எண்ணினார்கள். இருபது
வயதும், அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா
ஆண்களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தினரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 39தாணின்
கோத்திரத்தில் கணக்கிடப்பட்ட ஆண்களின்
மொத்த எண்ணிக்கை 62,700. 40ஆசேரின்
கோத்திரத்தில் உள்ளவர்களை அவர்கள்
எண்ணினார்கள். இருபது வயதும், அதற்கு
மேலும் உள்ள படையில் பணியாற்றும்
தகுதியுடைய எல்லா ஆண்களையும்
பட்டியலிட்டனர். அவர்கள் குடும்பத்தின
ரோடும், கோத்திரங்களோடும் எண்ணிப்
பட்டியலிடப்பட்டனர். 41ஆசேரின் கோத்
திரத்தில் கணக்கிடப்பட்ட ஆண்களின்
மொத்த எண்ணிக்கை 41,500.
42அவர்கள் நப்தலியின் கோத்திரத்தில்
உள்ளவர்களை எண்ணினார்கள். இருபது
வயதும், அதற்கு மேலும் உள்ள படையில்
பணியாற்றும் தகுதியுடைய எல்லா
ஆண்களையும் பட்டியலிட்டனர். அவர்கள்
குடும்பத்தினரோடும், கோத்திரங்களோடும்
எண்ணிப் பட்டியலிடப்பட்டனர். 43நப்தலி
யின் கோத்திரத்தில் கணக்கிடபட்ட
ஆண்களின் மொத்த எண்ணிக்கை 53,400.
44மோசேயும், ஆரோனும், பன்னிரண்டு
இஸ்ரவேல் தலைவர்களும், இந்த ஜனங்களை
எண்ணினார்கள். (ஒவ்வொரு கோத்திரத்
துக்கும் ஒவ்வொரு தலைவர் இருந்தனர்.)
45அவர்கள் இருபது வயதும் அதற்கு மேலும்
உள்ள படையில் பணியாற்றும் தகுதி
கொண்டவர்களை எண்ணினார்கள். ஒவ்
வொருவனும், தனது குடும்பத்தோடு பட்டிய
லிடப்பட்டனர். 46அவர்கள் கணக்கிட்ட
ஆண்களின் மொத்த எண்ணிக்கை 603,550.
47லேவி கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள்
இஸ்ரவேலர்களோடு சேர்த்து எண்ணப்
படவில்லை. 48கர்த்தர் மோசேயிடம்,
49"லேவியின் கோத்திரத்தில் உள்ள ஆண்
களை எண்ணவேண்டாம். அவர்களை
இஸ்ரவேல் ஜனங்களோடு சேர்க்க
வேண்டாம். 50லேவியர்களிடம், அவர்கள்
உடன்படிக் கையின் பரிசுத்தக் கூடாரத்திற்கு
பொறுப்பானவர்கள் என்று சொல்.
அவர்கள் அக்கூடாரத்தையும், அதற்குரிய
வேலைகளையும் கவனித்துக்கொள்ள
வேண்டும். அவர்கள் பரிசுத்தக் கூடாரத்
தையும், அதிலுள்ள பொருட்களையும்
சுமக்கவேண்டும். அவர்கள் தங்கள் முகாமை
அக்கூடாரத்தைச் சுற்றிலும் அமைத்து தங்கி
யிருந்து, அவற்றைக் கவனித்துக் கொள்ள
வேண்டும். 51பரிசுத்தக் கூடாரமானது இடம்
பெரும்போதும், அதற்கான வேலைகளை
லேவியர்களே செய்யவேண்டும். பரிசுத்தக்
கூடாரமானது நிறுவப்படும்போதெல்லாம்
அதற்குரிய வேலைகளையும் லேவியர்களே

செய்ய வேண்டும். அவர்களே பரிசுத்தக்
கூடாரத்தின் சகல பொறுப்புகளுக்கும்
உரியவர்கள். லேவியின் கோத்திரத்தைச்
சேராத ஒருவன், பரிசுத்தக் கூடாரத்தின்
வேலைகளைச் செய்ய முயன்றால் அவன்
கொல்லப்பட வேண்டும். 52இஸ்ரவேல்
ஜனங்கள், தனித்தனிக் குழுக்களாக தங்கள்
முகாமை அமைத்துக்கொள்ள வேண்டும்.
தங்கள் குடும்பக் கொடியின் அருகிலேயே
ஒவ்வொருவனும் தங்கவேண்டும். 53ஆனால்,
லேவியர்கள் தங்கள் முகாமை பரிசுத்தக்
கூடாரத்தைச் சுற்றியே அமைத்துக்கொள்ள
வேண்டும். அவர்கள் உடன்படிக்கையின்
பரிசுத்தக் கூடாரத்தைப் பாதுகாக்க
வேண்டும். அதனால் இஸ்ரவேல் ஜனங்
களுக்கு எவ்விதத் தீமையும் ஏற்படாமல்
இருக்கும்" என்றார்.
54இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும்,
மோசேக்குக் கர்த்தர் கட்டளையிட்டபடியே
கீழ்ப்படிந்தனர்.

### முகாமிற்கான முன் ஏற்பாடுகள்

2 கர்த்தர் மோசேயிடமும், ஆரோனிடமும்,
2"இஸ்ரவேல் ஜனங்கள் ஆசரிப்புக்
கூடாரத்தைச் சுற்றியே, தங்கள் முகாமை
அமைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு
குழுவும், தங்களுக்கென்று தனியான கொடி
யை வைத்துக்கொள்ள வேண்டும். தங்கள்
குழுக்கொடியின் அருகிலேயே, ஒவ்வொரு
வனும் தங்க வேண்டும்.
3"யூதா முகாமின் கொடியானது சூரியன்
உதிக்கின்ற, கிழக்குத் திசையில் இருக்க
வேண்டும். யூதாவின் கோத்திரம், அக்கொடி
யின் அருகிலேயே தங்கள் முகாம்களை
அமைத்துக்கொள்ள வேண்டும். அம்மின
தாபின் மகனான நகசோன், யூதாவின்
கோத்திரத்துக்குத் தலைவனாக இருப்பான்.
4அவர்கள் குழுவில் 74,600 ஆண்கள்
இருந்தனர்.
5"இசக்காரின் கோத்திரம், யூதாவின்
கோத்திரத்திற்கு அருகில் தங்கியிருக்க
வேண்டும். சூவாரின் மகனான நெதனே
யேல், இசக்கார் ஜனங்களின் தலைவனாய்
இருப்பான். 6அவனுடைய குழுவில் 54,400
ஆண்கள் இருந்தனர்.
7"செபுலோனின் கோத்திரமானது, யூதா
வின் கோத்திரத்துக்கு அருகில் தங்கியிருக்க
வேண்டும். ஏலோனின் மகனான எலியாப்,
செபுலோன் ஜனங்களின் தலைவனாவான்.
8அவர்கள் குழுவில் 57,400 ஆண்கள்
இருந்தனர்.
9"யூதாவின் முகாமில் மொத்தம் 1,86,400
ஆண்கள் இருந்தனர். இவர்கள் அனைவரும்,
தங்கள் கோத்திரங்களின்படி பிரிக்கப்ப
ட்டார்கள். ஜனங்கள் ஓரிடத்திலிருந்து
இன்னொரு இடத்திற்குப் போகும்போது,
யூதாவின் கோத்திரமே முதலில் செல்லும்.

10"ரூபனுடைய முகாமின் கொடியைக்
கொண்ட படைகள், பரிசுத்தக் கூடாரத்தின்
தென்பகுதியில் இருக்கும். ஒவ்வொரு
குழுவும் இக்கொடியின் அருகில் இருக்கும்.
சேதேயூரின் மகனான எலிசூர், ரூபன்
ஜனங்களின் தலைவனாக இருப்பான்.
11இக்குழுவில் 46,500 ஆண்கள் இருந்தனர்.
12"சிமியோனின் கோத்திரம், ரூபனின்
கோத்திரத்தின் அருகில் இருக்கும். சூரிஷதா
வின் மகனான செலூமியேல், சிமியோன்
ஜனங்களின் தலைவனாக இருப்பான்.
13இக்குழுவில் 59,300 ஆண்கள் இருந்தனர்.
14"காத்தின் கோத்திரமும், ரூபனின்
கோத்திரத்தின் அருகில் இருக்கும். தேகுவே
லின் மகனாகிய எலியாசாப், காத்
ஜனங்களின் தலைவனாயிருப்பான். 15இக்
குழுவில் 45,650 ஆண்கள் இருந்தனர்.
16"ரூபனின் முகாமில் எல்லா கோத்திரங்
களிலிருந்தும் மொத்தம் 1,51,450 ஆண்கள்
இருந்தனர். ஜனங்கள் ஓரிடத்திலிருந்து,
இன்னொரு இடத்திற்குப் போகும்போது
இக்குழு இரண்டாவதாகச் செல்லும்.

17"ஜனங்கள் பயணம் செய்யும்போது,
அடுத்ததாக லேவியரின் குழு செல்ல
வேண்டும். ஆசரிப்புக் கூடாரமானது
அவர்களுடைய எல்லா முகாம்களுக்கும்
நடுவே இருக்க வேண்டும். அவர்கள்
செல்லுகிற வரிசைப்படியே தங்கள் முகாம்
களையும் அமைத்துக்கொள்ள வேண் டும்.
ஒவ்வொருவரும் தங்கள் குடும்பக் கொடி
களோடுதான் பயணம் செய்ய வேண்டும்.
18"எப்பிராயீமுடைய முகாமின் கொடியை
யுடைய படைகள் மேற்கு பக்கத்தில் தங்கள்
முகாமை அமைத்துக்கொள்ள வேண்டும்.
அம்மியூதின் மகனான எலிஷாமா எப்பிராயீ
மின் ஜனங்களுக்குத் தலைவனாக இருப்
பான். 19இக்குழுவில் மொத்தம் 40,500
ஆண்கள் இருந்தனர்.
20"மனாசேயின் கோத்திரமானது எப்பி
ராயீமுடைய குடும்பத்துக்கு அருகில் தங்க
வேண்டும். பெதாசூரின் மகனான
கமாலியேல், மனாசே ஜனங்களுக்குத் தலை
வனாக இருப்பான். 21இக்குழுவில் மொத்தம்
32,200 ஆண்கள் இருந்தனர்.
22"பென்யமீனின் கோத்திரமும் எப்பி
ராயீமுடைய குடும்பத்துக்கு அருகில் தங்க
வேண்டும். கீதெயோனின் குமாரனாகிய
அபீதான் பென்யமீன் ஜனங்களுக்குத் தலை
வனாக இருப்பான். 23அக்குழுவில் உள்ள
ஆண்களின் எண்ணிக்கை 35,400 ஆகும்.
24"எப்பிராயீமின் குழு தங்கி இருக்கும்
இடத்தில், மொத்தத்தில் 1,08,100 ஆண்கள்
இருந்தார்கள். ஜனங்கள் ஓரிடத்திலிருந்து
இன்னொரு இடத்திற்குப் போகும்போது,
மூன்றாவதாக இவர்கள் செல்ல வேண்டும்.
25தாண் குழுவின் கொடியானது வடக்குப்
புறத்தில் இருக்க வேண்டும். தாணின்

கோத்திரங்கள், அங்கே தங்கள் முகாம்களை
அமைத்திருப்பார்கள். அம்மிஷதாயின் மக
னான அகியேசேர், தாண் ஜனங்களின்
தலைவனாக இருப்பான். 26இந்தக் குழுவில்
62,700 ஆண்கள் இருந்தனர்.
27“ஆசேரின் கோத்திரத்தினர் தாணின்
கோத்திரத்தினரை அடுத்து இருப்பார்கள்.
ஒகிரானின் மகனான பாகியேல், ஆசேர்
ஜனங்களின் தலைவனாக இருப்பான்.
28இக்குழுவில், 41,500 ஆண்கள் இருந்தனர்.
29“நப்தலியின் கோத்திரத்தினரும் தாணின்
கோத்திரத்தினருக்கு அடுத்துக் கூடாரமிட்டு
இருப்பார்கள். ஏனானின் மகனாகிய அகீரா
நப்தலி, ஜனங்களின் தலைவனாக இருப்
பான். 30இக்குழுவில் 53,400 ஆண்கள்
இருந்தனர்.
31“தாணின் குழு தங்கி இருக்கும் இடத்தில்
மொத்தத்தில் 157,600 ஆண்கள் இருப்பார்கள்.
மக்கள் ஓரிடத்திலிருந்து இன்னொரு
இடத்திற்குச் செல்லும்போது, கடைசியில்
செல்ல வேண்டியவர்கள் இவர்களே.
ஒவ்வொருவரும் தங்கள் குடும்பக் கொடி
களோடு இருக்க வேண்டும்” என்று கூறினார்.
32இவர்கள்தான் இஸ்ரவேல் ஜனங்கள்.
அவர்கள் குடும்பவாரியாகக் கணக்கிடப்
பட்டனர். எல்லா முகாம்களிலும் இருந்த
மொத்த இஸ்ரவேல் ஆண்களின் எண்ணிக்
கை 603,550 ஆகும். 33மோசே கர்த்தருக்குக்
கீழ்ப்படிந்து, லேவியர்களை மற்ற இஸ்ரவேல்
ஜனங்களோடு சேர்த்து எண்ணவில்லை.
34கர்த்தர் மோசேயிடம் சொன்னபடி,
இஸ்ரவேல் ஜனங்கள் எல்லாவற்றையும்
செய்து முடித்தனர். ஒவ்வொரு குழுவும்
தமது சொந்தக் கொடியின் கீழ் தங்கி
இருந்தது. அனைவரும் தங்கள் குடும்பம்,
மற்றும் கோத்திரத்தின்படியே பிரயாணப்
பட்டு போனார்கள்.

## ஆசாரியர்களான ஆரோனின் குடும்பத்தினர்

3 சீனாய் மலையில் கர்த்தர் மோசேயோடு
பேசிக்கொண்டிருந்தபோது, ஆசாரிய
னாகிய ஆரோன், மற்றும் மோசேயின் வம்ச
வரலாறு கீழ்க்கண்டவாறு இருந்தது:
2ஆரோனுக்கு நான்கு மகன்கள் இருந்தனர்.
நாதாப் முதல் மகன். அபியூ, எலெயாசார்,
இத்தாமார் என்பவர்கள் இளையவர்கள்.
3இவர்கள் ஆசாரியர்களாகத் தேர்ந்தெடுக்கப்
பட்டு,
கர்த்தருக்கு ஊழியம் செய்யும்
பொறுப்பைப் பெற்றிருந்தனர். 4ஆனால்
நாதாபும் அபியூவும் தங்கள் பாவத்தின்
காரணமாக, கர்த்தருக்கு ஊழியம் செய்யும்
போதே, மரித்துப்போனார்கள். கர்த்தருக்குக்
காணிக்கைப் பலி செலுத்தும்போது
கர்த்தரால் அங்கீகரிக்கப்படாத நெருப்பை
அவர்கள் பயன்படுத்தினர்; எனவே
நாதாபும் அபியூவும் சீனாய் பாலை
வனத்திலேயே மடிந்தார்கள். அவர்களுக்கு
மகன்கள் இல்லை. எனவே, அவர்களின்
இடத்தில் எலெயாசாரும் இத்தாமாரும்
ஆசாரியர்களாகக் கர்த்தருக்கு ஊழியம்
செய்தனர். அவர்களின்தந்தையான ஆரோன்
உயிரோடு இருக்கும்போதே இது நிகழ்ந்தது.

## ஆசாரியர்களின் உதவியாட்களான லேவியர்கள்

5கர்த்தர் மோசேயிடம், 6“லேவியர்களின்
கோத்திரத்திலிருந்து அனைவரையும்,
ஆசாரியனாகிய ஆரோனிடம் அழைத்துக்
கொண்டு வா. அவர்கள் ஆரோனின்
உதவியாட்களாக இருப்பார்கள். 7ஆசரிப்புக்
கூடாரத்தில் ஆரோன் ஊழியம் செய்யும்
போது, அவனுக்கு லேவியர்கள் உதவு
வார்கள். இஸ்ரவேல் ஜனங்கள் பரிசுத்தக்
கூடாரத்திற்கு தொழுதுகொள்ள வரும்
போதும், லேவியர்கள் அவர்களுக்கு உதவி
செய்வார்கள். 8ஆசரிப்புக் கூடாரத்திலுள்ள
அனைத்துப் பொருட் களையும் பாது
காப்பது இஸ்ரவேல் ஜனங்களின்
கடமையாகும். ஆனால் லேவியர்கள்
இவற்றைச் சுமந்து இஸ்ரவேல் ஜனங்
களுக்குச் சேவை செய்யவேண்டும்.
பரிசுத்தக் கூடாரத்தில் தொழுதுகொள்ள
வேண்டிய முறை இதுவேயாகும்.
9“ஆரோனிடமும் அவனது மகன்க
ளிடமும் லேவியர்களை ஒப்படையுங்கள்.
அவர்கள் ஆரோனுக்கும் அவனது
மகன்களுக்கும் உதவி செய்வதற்காகவே
தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.
10“ஆரோனையும் அவனது மகன்களையும்,
ஆசாரியர்களாக ஊழியம் செய்ய நியமனம்
செய். அவர்கள் தங்கள் கடமையை
நிறைவேற்றி ஆசாரிய ஊழியம் செய்ய
வேண்டும். இப்பரிசுத்தமான பொருட்களின்
அருகில் வேறு எவராவது வர முயன்றால்
அவர்கள் கொல்லப்பட வேண்டும்” என்றார்.
11மேலும் கர்த்தர் மோசேயிடம், 12“இஸ்ர
வேல் ஜனங்களின் குடும்பம் ஒவ்வொன்
றிலும் முதலில் பிறக்கும் மகனை எனக்குக்
கொடுக்க வேண்டும் என்று ஏற்கெனவே
சொல்லியிருந்தேன். ஆனால் இப்போது
எனக்கு ஊழியம் செய்வதற்காக லேவியர்
களைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். அவர்கள்
எனக்குரியவர்களாக இருப்பார்கள்; எனவே
இனி இஸ்ரவேல் ஜனங்கள் தங்கள் முதல்
பிள்ளையை எனக்குக் கொடுக்க
வேண்டாம்.
13“நீங்கள் எகிப்தில் இருந்தபோது நான்
எகிப்திலுள்ள முதலில் பிறந்த அனைத்
தையும் கொன்றேன். அந்த நேரத்தில்
இஸ்ரவேல் ஜனங்களின் ஒவ்வொரு முதல்
குழந்தையையும் எனக்குரியதாக நான்
எடுத்துக் கொண்டேன். முதலில் பிறந்த

அனைத்து குழுந்தைகளும், அனைத்து
மிருகங்களும் எனக்குரியது. ஆனால்
இப்போது உங்களுக்கு முதலில் பிறக்கும்
குழுந்தைகளை, உங்களுக்கே கொடுத்து
விடுகிறேன். லேவியர்களை எனக்குச்
சொந்தமாக்கிக் கொண்டேன். நானே
கர்த்தர்” என்றார்.

14கர்த்தர் மீண்டும் சீனாய் பாலைவனத்தில்
மோசேயோடு பேசி, 15“லேவியின் எல்லாக்
குடும்பங்களையும், கோத்திரங்களையும் ஒரு
மாத வயதும் அதற்கு மேலும் உள்ள
ஆண்கள் மற்றும் ஆண் குழந்தைகளைக்
கணக்கிடு” என்றார். 16மோசே கர்த்தருக்குக்
கீழ்ப்படிந்து அவர்களை கணக்கிட்டான்.

17லேவிக்கு கெர்சோன், கோகாத், மெராரி
என்று மூன்று மகன்கள் இருந்தனர்.
18ஒவ்வொருவரும் பல கோத்திரங்களுக்குத்
தலைவர்கள்.

கெர்சோன் கோத்திரத்தில் லிப்னீயும்,
சீமேயியும் இருந்தனர்.

19கோகாத் கோத்திரத்தில் அம்ராம்,
இத்சேயார், எப்ரோன், ஊசியேல் ஆகியோர்
இருந்தனர்.

20மெராரி கோத்திரத்தில் மகேலியும்,
மூசியும் இருந்தனர்.

இந்த அனைத்துக் குடும்பங்களும்
லேவியின் கோத்திரத்தில் இருந்தனர்.

21லிபனீ, சீமேயி ஆகியோரின்
குடும்பங்கள், கெர்சோனின் கோத்திரத்தைச்
சேர்ந்தவர்கள். 22அவர்கள் இரு கோத்திரங்
களிலும் ஆண்களும், ஒரு மாத வயதுக்கு
மேற்பட்ட ஆண் பிள்ளைகளுமாக 7,500
பேர் இருந்தனர். 23மேற்குப்பக்கத்தில்
முகாமை அமைத்துக் கொள்ளுமாறு
கெர்சோனியர் கோத்திரங்களுக்குச் சொல்லப்
பட்டது. அவர்கள் பரிசுத்தக் கூடாரத்தின்
பின் பகுதியில் தங்கள் முகாமை
அமைத்தனர். 24லாயேலின் மகனாகிய
எலியாசாப் என்பவன் கெர்சோனிய
கோத்திரத்தினருக்கு தலைவன் ஆனான்.
25ஆசரிப்புக் கூடாரத்தின் காவலோடு,
பரிசுத்தக் கூடாரத்தையும், வெளிக் கூடாரத்
தையும் அதன் மூடியையும் கவனித்துக்
கொள்ளும் பொறுப்பு கெர்சோனியருக்கு
இருந்தது. ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில்
உள்ள தொங்கு திரையையும் இவர்களே
கவனித்துக் கொண்டனர். 26மேலும்
பிரகாரத்தின் தொங்கு திரைகளையும்,
பிரகாரத்தின் மூடு திரைகளையும் அவர்கள்
கவனித்து கொண்டனர். பிரகாரமானது
பரிசுத்தக் கூடாரத்தையும், பலிபீடத்தையும்
சுற்றி யிருந்தது. திரைகளுக்குத் தேவையான
கயிறு மற்றும் மற்ற பொருட்களுக்கும்
அவர்கள் பொறுப்புள்ளவர்களாக இருந்தனர்.
27அம்ராம், இத்சேயர் எப்ரோன்,
ஊத்சியேல் ஆகிய குடும்பங்கள் கோகாத்தின்
கோத்திரத்தில் இருந்தன. 28இக்கோத்திரத்தில்
ஆண்களும், ஒரு மாதத்திற்கு மேலான
ஆண் குழந்தைகளுமாக 8,300* பேர்
இருந்தனர். கோகாத்தியர்கள் பரிசுத்தமான
இடத்திலுள்ள பொருட்களைப் பாதுகாக்கும்
பொறுப்பு வகித்தார்கள். 29பரிசுத்தக்
கூடாரத்தின் தெற்கு பக்கத்தில் கோகாத்தின்
கோத்திரங்கள் தங்கள் முகாமை அமைத்
திருந்தனர். 30ஊசியேலின் மகனான
எல்சாபான் கோகாத்தியரின் கோத்திரங்
களுக்குத் தலைவன் ஆனான். 31அவர்கள்
பரிசுத்தப் பெட்டி, மேஜை, குத்துவிளக்கு,
பீடங்கள் பரிசுத்த இடத்தின் பொருட்கள்,
தொங்குதிரை, அங்குள்ள அனைத்து
வேலைகளுக்கும் உரிய பொருட்களையும்
காத்து வந்தனர்.

32ஆரோனின் மகனாகிய ஆசாரியன்
எலெயாசார் லேவியர்களின் தலைவர்களுக்
கெல்லாம் தலைவனாக இருந்தான். இவன்
பரிசுத்தப் பொருட்களை காவல்
காப்பவர்களுக்கெல்லாம் பொறுப்பாளியாய்
இருந்தான்.

33-34மகேலி, மூசி ஆகியோரின்
கோத்திரங்கள் மெராரியின் குடும்பத்தோடு
சேர்ந்தது. மகேலியின் கோத்திரத்தில்
ஆண்களும், ஒரு மாதத்திற்கு மேற்பட்ட
வயதுடைய ஆண் குழந்தைகளும் 6,200
பேர் இருந்தனர். 35அபியாயேலின் மகனாகிய
சூரியேல், மெராரி கோத்திரத்தின் தலை
வனாய் இருந்தான். பரிசுத்தக் கூடாரத்தின்
வடக்கு பக்கத்தில் இவர்களுக்கு இடம்
கொடுக்கப்பட்டிருந்தது. இந்த இடத்தில்
அவர்கள் தங்கள் முகாமை அமைத்
திருந்தனர். 36மெராரி குடும்பத்தில் உள்ள
வர்களுக்கு பரிசுத்தக் கூடாரத்தின் சட்டங்
கள் பலகைகள், தாழ்ப்பாள், தூண்கள்,
பாதங்கள் மற்றும் அதற்குரிய பொருட்கள்
அனைத்தையும் கவனித்துக் கொள்ளும்
பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருந்தது.
37பரிசுத்தக் கூடாரத்தின் சுற்றுப் பிரகாரத்தில்
உள்ள தூண்கள், பாதங்கள், முளைகள்,
கயிறுகள் அனைத்தையும் அவர்கள்
கவனித்துக் கொண்டனர்.

38மோசே, ஆரோன், அவனது மகன்கள்
எல்லோரும் ஆசரிப்புக் கூடாரத்திற்கு
எதிரில் பரிசுத்தக் கூடாரத்தின் கிழக்கில்
முகாமிட்டனர். பரிசுத்த இடத்தைக் கவனிக்
கும் பொறுப்பு அவர்களுக்கு கொடுக்கப்
பட்டிருந்தது. இஸ்ரவேலின் அனைத்து
ஜனங்களுக்காகவும் அவர்கள் இதனைச்
செய்தனர். வேறு யாராவது பரிசுத்த
இடத்தின் அருகில் வந்தால், அவர்கள்
கொல்லப்பட்டனர்.

39லேவியின் கோத்திரத்தில் உள்ள
ஆண்களையும், ஒரு மாதத்திற்கு மேற்பட்ட

---

**8,300** பழங்காலத் கிரேக்க மொழி பெயர்ப்பின் சில பிரதிகளில் “8,300” என்று உள்ளது. எபிரெய பிரதிகளில் “8,600” என்றுள்ளது. பார்க்க, எண்ணாகமம் 3:22, 28, 34, 39.

ஆண் பிள்ளைகளையும் கணக்கிடுமாறு கர்த்தர் மோசேயிடம் கட்டளையிட்டார். அவர்களின் மொத்த எண்ணிக்கை 22,000.

### முதல் மகன்களின் இடத்தை லேவியர்கள் எடுத்துக்கொள்ளுதல்

40கர்த்தர் மோசேயிடம், "இஸ்ரவேலில் முதலில் பிறந்த எல்லா ஆண்களையும், குறைந்தது ஒரு மாதமாவது ஆன ஆண் குழந்தைகளையும் கணக்கிடு. அவர்களின் பெயரையும் எழுதி பட்டியலிடு. 41கடந்த காலத்தில் நான், இஸ்ரவேலில் முதலில் பிறக்கும் ஆண் மககளையெல்லாம் எனக்குரியவர்கள் என்று கூறியிருந்தேன். கர்த்தராகிய நான் இப்போது லேவியர்களை மட்டும் எடுத்துக்கொள்வேன். இஸ்ரவேலில் முதலில் பிறக்கும் அனைத்து மிருகங் களையும் எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக, லேவியர்களுக்குரிய முதலில் பிறந்த மிருகங்களை மட்டும் எடுத்துக் கொள்வேன்" என்றார்.

42எனவே மோசே, கர்த்தருடைய கட்டளைப்படி செய்தான். அவன் இஸ்ரவேல் ஜனங்களில் முதலில் பிறந்த குழந்தைகளைக் கணக்கெடுத்தான். 43முதலாவதாக பிறந்த ஆண்களையும், ஒரு மாதமும் அதற்கு மேலு முள்ள ஆண் குழந்தைகளையும், மோசே பட்டியலிட்டான். அதில் மொத்தம் 22,273 பெயர்கள் இருந்தன.

44மேலும் கர்த்தர் மோசேயிடம், "கர்த்தராகிய நான் இந்தக் கட்டளையைக் கொடுக்கிறேன்: 'இஸ்ரவேலில் உள்ள அனைத்துக் குடும்பங்களிலுமுள்ள முதலில் பிறந்த ஆண் குழந்தைகளுக்கு பதிலாக லேவியர் வம்சத்திலுள்ள முதலில் பிறக்கும் ஆண்களை மட்டும் எடுத்துக்கொள்வேன்.
45மற்ற இஸ்ரவேலில் முதலில் பிறந்த மிருகங்களுக்குப் பதிலாக லேவியர்களிட முள்ள முதலில் பிறக்கும் மிருகங்களை மட்டும் எடுத்துக்கொள்வேன். லேவியர்கள் எனக்கு உரியவர்கள். 46மொத்தம் 22,000 லேவியர்கள் இருந்தனர். ஆனால் மற்ற குடும்பங்களில் 22,273 முதலில் பிறந்த ஆண் பிள்ளைகள் இருந்தனர். லேவியர்களை விட, முதலில் பிறந்த ஆண் பிள்ளைகள் 273 பேர் மற்ற குடும்பங்களில் இருந்தனர்.
47அதிகாரப்பூர்வமான அளவை அடிப்படை யாய் வைத்துக்கொண்டு, தலைக்கு ஐந்து சேக்கல் வீதமாக 273 பேர்களிடமிருந்தும் வாங்கு. (ஒரு சேக்கல் என்பது இருபது கேரா இருக்கும்.) 48இஸ்ரவேல் ஜனங்களிடம் இருந்து வெள்ளியையும் வசூல் செய். இவற்றை ஆரோனுக்கும், அவனது மகன்களுக்கும் கொடுப்பாயாக. இது 273 இஸ்ரவேல் ஜனங்களுக்கான சம்பளத் தொகையாகும்'" என்றார்.

49மற்ற கோத்திரங்களில் இருந்து வந்த 273 பேர்களின் இடத்தை ஈடுசெய்ய போதுமான அளவில் லேவியர்கள் இல்லாமல் இருந்தனர். எனவே மோசே அந்த 273 பேர்களுக்காக பணம் வசூல் செய்தான். 50மோசே இஸ்ரவேல் ஜனங்களில் முதலில் பிறந்த ஆண் பிள்ளைகளிடமிருந்து வெள்ளியை வசூல் செய்தான். அதிகாரப் பூர்வமான அளவை வைத்துக் கொண்டு, அவன் 1,365 சேக்கல் வெள்ளியை வசூலித்தான். 51மோசே கர்த்தருக்குக் கீழ்ப்படிந்தான். வெள்ளியை ஆரோனுக்கும் அவனது மகன்களுக்கும் கர்த்தர் கட்டளையிட்டபடியே கொடுத்தான்.

### கோகாத் குடும்பத்தின் வேலைகள்

4 கர்த்தர் மோசேயிடமும் ஆரோனிடமும்,
2"கோகாத்தின் கோத்திரத்தில் உள்ள குடும்பங்களின் மொத்த ஆண்களின் தொகையை எண்ணிக் கணக்கிடு. (கோகாத்தின் கோத்திரமானது லேவியர் கோத்திரத்தின் ஒரு பகுதியாகும்.) 330 வயது முதல் 50 வயது வரையுள்ள, படையில் பணியாற்றக்கூடிய ஆண்களைக் கணக்கிடு. இவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தில் வேலை செய்வார்கள். 4ஆசரிப்புக் கூடாரத்தில் உள்ள மிகப் பரிசுத்தமானப் பொருட்களைக் கவனித்துக் கொள்வதே இவர்களின் வேலை.
5"இஸ்ரவேல் ஜனங்கள் புதிய இடங்களுக்குப் பயணம் செய்யும்போது, ஆரோனும் அவனது மகன்களும் ஆசரிப்புக் கூடாரத்தின் உள்ளேச் செல்லவேண்டும். அவர்கள் திரையை கீழே எடுத்து, அதனால் பரிசுத்த உடன்படிக்கைப் பெட்டியை மூடவேண்டும். 6அதன்மேல் அழகான தோலினாலான மூடியால் மூடவேண்டும். அதன்மேல் கெட்டியான நீலத்துணியை விரித்து, தண்டுகளை வளையத்தினுள் செலுத்தி, பரிசுத்தப்பெட்டியை மூடவேண்டும்.
7"பிறகு ஒரு நீலத்துணியைப் பரிசுத்த மேஜையின்மேல் விரிக்க வேண்டும். அதன்மேல் தட்டுக்களை வைத்து, கரண்டி, கோப்பை, மற்றும் பானங்களின் காணிக் கைக்கான ஜாடியை வைக்க வேண்டும். அதோடு சிறப்பான அப்பத்தையும் அதன்மேல் வைக்க வேண்டும். 8பின் அதன்மேல் சிவப்புத் துணியை வைத்து, அதனை மெல்லிய தோல் மூடியால் மூடவேண்டும். பிறகு மேஜை தண்டு களையும் வளையத்தினுள் கட்டிவிட வேண்டும்.
9"குத்து விளக்குத் தண்டையும் அதிலுள்ள அகல்களையும் நீலத்துணியால் மூட வேண்டும். விளக்கு எரிவதற்கு உதவுகின்ற அனைத்துப் பொருட்களையும், எண்ணெய் பாத்திரங்களையும் மூடி வைக்க வேண்டும். 10பிறகு இவை அனைத்தையும்

மெல்லிய தோலால் மூடிக்கட்டி, ஒரு
தண்டோடு இணைக்க வேண்டும். இது
இவற்றைத் தூக்கிச் செல்ல உதவியாக
இருக்கும்.
11“அவர்கள் தங்க பலீபீடத்தின் மேல்
நீலத்துணியை மூடி, அதன் மேல் மெல்லிய
தோலை மூடவேண்டும். அதில் தண்டு
களை வளையத்தோடு இணைத்துக் கட்ட
வேண்டும்.
12“பிறகு பரிசுத்த இடத்தில் தொழுது
கொள்வதற்குப் பயன்படும், அனைத்து
சிறப்புப் பொருட்களையும் சேகரிக்க
வேண்டும். அவற்றை நீலத்துணியில் சுருட்ட
வேண்டும். பிறகு அதனை மெல்லியத்
தோலால் மூடிக் கட்டவேண்டும். இவற்றைத்
தூக்கிச் செல்வதற்கு வசதியாக ஒரு
தண்டோடு கட்டிக்கொள்ள வேண்டும்.
13“வெண்கலத்தாலான பலிபீடத்தில் உள்ள
சாம்பலை சுத்தப்படுத்த வேண்டும். பிறகு
அதனை நீலத் துணியால் மூட வேண்டும்.
14பின் தொழுதுகொள்வதற்கான அனைத்துப்
பொருட்களையும் சேகரிக்க வேண்டும்.
நெருப்புத்தட்டு, குறடு, சாம்பல் எடுக்கும்
கரண்டி, கலசங்கள் போன்றவைகளை
அவர்கள் வெண்கலத்தாலான பலிபீடத்தின்
மேல் வைக்க வேண்டும். பின் மெல்லியத்
தோலால் பலிபீடத்தை மூடவேண்டும்.
இவற்றைத் தூக்கிச் செல்ல வசதியாக
தண்டுகளை வளையங்களில் மாட்டிக்
கொள்ளவேண்டும்.
15“ஆரோனும் அவனது மகன்களும்,
பரிசுத்த இடத்திலுள்ள பரிசுத்தமான
பொருட்களையெல்லாம் மூடிவைத்துக்
கொள்ள வேண்டும். பிறகு கோகாத்
கோத்திரத்தில் உள்ளவர்கள், இவற்றைத்
தூக்கிச் செல்ல வேண்டும். இம்முறையில்
இவர்கள் மரிக்காதபடிக்கு பரிசுத்தமான
இடத்தைத் தொடாதிருக்கக்கடவர்கள்.
16“ஆசாரியன் ஆரோனின் மகனான
எலெயாசார் பரிசுத்தக் கூடாரத்தின்
பொறுப்புக்குரியவன். பரிசுத்த இடத்திற்கும்,
அதிலுள்ள பொருட்களுக்கும் அவனே
பொறுப்பானவன். விளக்குக்குரிய எண்
ணெய்க்கும் நறுமணப் பொருட்களுக்கும்,
தினந்தோறும் செலுத்தப்படும் பலிகளுக்கும்,
அபிஷேக எண்ணெய்க்கும் அவனே
பொறுப்பானவன்” என்றார்.
17மேலும் கர்த்தர் மோசேயிடமும்,
ஆரோனிடமும், 18“கவனமாக இருங்கள்.
கோகாத் கோத்திரம் அழிந்துபோகாமல்
பார்த்துக் கொள்ளுங்கள். 19அவர்கள் மகா
பரிசுத்த இடத்தின் அருகில் செல்லும்போது
மரிக்காமல் இருப்பதற்காக, நீங்கள் அவர்
களுக்காக இவற்றைச் செய்யவேண்டும்.
ஆரோனும் அவனது மகன்களும். உள்ளே
போய்க் கோகாத்தியர்கள் என்னென்ன
செய்யவேண்டும் என்று கூறுவார்கள்.
ஒவ்வொரு ஆணுக்கும் அவனது வேலையும்,
அவன் சுமக்க வேண்டியவற்றையும் நியமிக்க
வேண்டும். 20நீங்கள் இவற்றைச் செய்யா
விட்டால் கோகாத்தியர்கள் உள்ளே போய்
பரிசுத்த பொருட்களை ஒரு வேளை பார்த்து
விடலாம். அவ்வாறு ஒரு விநாடி
பார்த்தாலும், அவர்கள் மரிக்க நேரிடும்”
என்று கூறினார்.

## கெர்சோன் குடும்பத்தாருக்குரிய வேலைகள்

21கர்த்தர் மோசேயிடம், 22“கெர்சோன்
குடும்பத்தில் உள்ள அனைத்து ஜனங்
களையும் எண்ணிக் கணக்கிடு. அவர்களைக்
குடும்ப வாரியாகவும், கோத்திரங்களாகவும்
பட்டியலிடு. 23படையில் பணியாற்றக்கூடிய
30 வயது முதல் 50 வயது வரையுள்ள
ஆண்களையும் கணக்கிடுக. இவர்களுக்கு
ஆசரிப்புக் கூடாரத்தைக் கவனிக்கும்
வேலையுண்டு.
24“இவைதான் கெர்சோன் வம்சத்தாரின்
வேலைகள். அவர்கள் கீழ்க்கண்டவற்றைச்
சுமக்க வேண்டும்: 25பரிசுத்தக் கூடாரத்தின்
திரைகளையும், அதோடு ஆசரிப்புக் கூடாரத்
தையும், அதன் மூடியையும், அவற்றைப்
போர்த்தியுள்ள மெல்லியத் தோல் மூடியை
யும், ஆசரிப்புக் கூடார வாசல் திரையையும்
சுமந்து செல்ல வேண்டும். 26அவர்கள்
பரிசுத்தக் கூடாரத்தைச் சுற்றியுள்ள
பிரகாரத்தின் தொங்கு திரைகளையும்,
பலிபீடத்தின் திரையையும், பிரகாரத்தின்
வாசல் திரையையும், அதோடு கயிறு
களையும், திரைக்குப் பயன்படும் மற்ற
பொருட்களையும் சுமக்க வேண்டும்.
இவற்றுக்காகச் செய்யவேண்டிய அனைத்து
வேலைகளையும் கெர்சோனியர்கள் செய்ய
வேண்டும். 27கெர்சோனியர்கள் சுமத்தல்
மற்றும் மற்ற வேலைகளையும் செய்யும்
போது ஆரோனும் அவனது மகன்களும்
இவ்வேலைகளைக் கவனித்துக் கொள்ள
வேண்டும். அவர்கள் சுமக்க வேண்டிய
பொருட்களைப் பற்றி அவர்களிடம்
எடுத்துச் சொல்ல வேண்டும். 28ஆசரிப்புக்
கூடாரத்துக்காக கெர்சோனிய கோத்திரம்
செய்யவேண்டிய பணிகள் இவைதான்.
ஆசாரியனான ஆரோனின் மகனான இத்தா
மார் இந்த வேலைகளுக்குப் பொறுப்
பானவன்.

## மெராரி குடும்பத்தின் வேலைகள்

29“மெராரி கோத்திரத்தில் உள்ள எல்லாக்
கோத்திரங்களையும், எண்ணிக் கணக்
கெடுக்க வேண்டும். 30படையில் பணியாற்றக்
கூடிய 30 முதல் 50 வயது வரையுள்ள
ஆண்களைக் கணக்கிடு. இவர்கள் ஆசரிப்புக்
கூடாரத்திற்காக, ஒரு சிறப்பான பணியைச்
செய்யவேண்டும். 31நீங்கள் பயணம்

செய்யும்போது, ஆசரிப்புக் கூடாரத்திற்கான
மரச்சட்டங்களை, இவர்களே சுமந்து
செல்லவேண்டும். அதோடு பாதங்களையும்,
தாழ்ப்பாள்களையும், தூண்களையும்
32பிரகாரத்தூண்களையும் சுமக்கவேண்டும்.
பிரகாரத்திலுள்ள மற்ற பாதங்கள்,
முளைகள், கயிறுகள், அவற்றுக்கான சகல
கருவிகள் ஆகியவற்றையும் சுமக்கவேண்டும்.
அதோடு, அதைச் சார்ந்த அனைத்து
வேலைகளையும் செய்ய வேண்டும். அவர்
களின் பெயரைப் பட்டியலிட்டு, ஒவ்வொரு
வரிடமும் அவர்கள் எதைச் சுமந்து செல்ல
வேண்டும் என்பதையும் சொல்லுங்கள்.
33இவைதான் மெராரி வம்சத்தினர் ஆசரிப்புக்
கூடாரத்திற்காகச் செய்யவேண்டிய பணி
களாகும். ஆசாரியனான ஆரோனின்
மகனாகிய இத்தாமர் இதற்கான பொறுப்
புடையவன்” என்றார்.

## லேவியர் குடும்பங்கள்

34கோகாத்தியர்களையும், மற்ற இஸ்ரவேல்
தலைவர்களையும் மோசேயும், ஆரோனும்
எண்ணிக் கணக்கிட்டனர். அவர்களைக்
குடும்ப வாரியாகவும், கோத்திரங்கள்
வாரியாகவும் கணக்கிட்டனர். 35படையில்
பணியற்றக்கூடிய 30 முதல் 50 வயது
வரையுள்ள ஆண்கள் அனைவரையும் அவர்
கள் கணக்கிட்டனர். இவர்கள் ஆசரிப்புக்
கூடாரத்திற்கான சிறப்பு வேலைகளைச்
செய்யும்படி நியமிக்கப்பட்டனர்.
36கோகாத்திய கோத்திரத்தில் 2,750
ஆண்கள் இவ்வேலையைச் செய்ய தகுதி
யுடையவர்களாக இருந்தனர். 37எனவே,
ஆசரிப்புக் கூடாரத்திற்க்கான சிறப்பு
வேலைகளைச் செய்ய கோகாத்திய
கோத்திரத்தினர் நியமிக்கப்பட்டனர். கர்த்தர்
மோசேயிடம் சொன்னபடியே, மோசேயும்,
ஆரோனும் இதனைச் செய்தனர்.
38கெர்சோனிய கோத்திரத்தினரும்
எண்ணி கணக்கிடப்பட்டனர். 39படையில்
பணியாற்றும் தகுதியுடைய 30 முதல் 50
வயது வரையுள்ள ஆண்கள் எண்ணப்
பட்டனர். அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்
திற்கான சிறப்பு பணிகளைச் செய்ய
நியமிக்கப்பட்டனர். 40கெர்சோன் கோத்திரத்
தில் தகுதி கொண்டவர்களாக 2,630 ஆண்கள்
இருந்தனர். 41எனவே, கெர்சோன் கோத்திரத்
தைச் சேர்ந்த இவர்களுக்கு, ஆசரிப்புக்
கூடாரத்தின் சிறப்பு வேலைகள் கொடுக்கப்
பட்டன. கர்த்தர் மோசேயிடம் சொன்னபடி
மோசேயும், ஆரோனும் செய்து முடித்தனர்.
42மெராரி குடும்பத்திலும், கோத்திரங்
களிலும் உள்ள ஆண்கள் கணக்கிடப்
பட்டனர். 43அவர்களில் படையில் பணி
யாற்றக்கூடிய 30 முதல் 50 வயது வரையுள்ள
ஆண்கள் அனைவரும் எண்ணப்பட்டனர்.
அந்த ஆண்கள் ஆசரிப்புக் கூடாரத்திற்கான
சிறப்பு வேலைகளைச் செய்ய நியமிக்கப்
பட்டனர். 44மெராரி கோத்திரத்தில் தகுதி
கொண்ட வர்களாக 3,200 ஆண்கள்
இருந்தனர். 45எனவே, மெராரி கோத்திரத்தில்
உள்ள இந்த ஆண்கள், இச்சிறப்பு
வேலைகளுக்கு நியமிக்கப்பட்டனர். கர்த்தர்
மோசேயிடம் சொன்னபடி மோசேயும்
ஆரோனும் செய்து முடித்தனர்.
46எனவே மோசே, ஆரோன், இஸ்ரவேல்
ஜனங்களின் தலைவர்கள் ஆகியோர்
லேவியரின் கோத்திரத்தில் உள்ளவர்களை
யும் எண்ணிக் கணக்கிட்டனர். அவர்கள்
ஒவ்வொரு குடும்பவாரியாகவும், கோத்திர
வாரியாகவும் கணக்கிடப்பட்டனர். 47படை
யில் பணியாற்றக்கூடிய 30 முதல் 50
வயது வரையுள்ள ஆண்களும் எண்ணிக்
கணக்கிடப்பட்டனர். இவர்களுக்கு ஆசரிப் புக்
கூடாரத்தின், சிறப்பு வேலைகள் தரப்பட்டன.
அவர்கள் தங்கள் பயணத்தின் போது,
ஆசரிப்புக் கூடாரத்தைச் சுமக்கும்
வேலையைச் செய்தனர். 48அவர்களின்
மொத்த எண்ணிக்கை 8,580.
49எனவே, கர்த்தர் மோசேயிடம்
சொன்னப்படி, ஒவ்வொரு ஆண்மகனும்,
கணக்கிடப்பட்டான். ஒவ்வொருவனுக்கும்
அவன் செய்யவேண்டிய வேலை ஒதுக்கப்
பட்டது. அவன் எதனைச் சுமந்துசெல்ல
வேண்டும் என்பதும் சொல்லப்பட்டது.
இவை யாவும் கர்த்தர் கட்டளையிட்
டபடியே நடைபெற்றது.

## சுத்தப்படுத்துவதைப் பற்றிய விதிமுறைகள்

5 கர்த்தர் மோசேயிடம், 2“நான் இஸ்ரவேல்
ஜனங்களுக்கு கட்டளையிடுவதாவது:
அவர்கள் தங்கள் முகாம்களை நோய்கள்
பரவாதபடி வைத்துக் கொள்ளவேண்டும்.
அவர்களில் யாராவது ஒருவனுக்குத்
தொழுநோய் இருந்தால், அவனை முகாமை
விட்டு அனுப்பிவிட வேண்டும் என்று
சொல். முகாமில் யாருக்காவது (இரத்தப்
போக்கான) விலக்கு தீட்டு இருந்தால்
அவர்களையும் அனுப்பி விட வேண்டும்
என்று சொல். முகாமில் யாராவது
பிணத்தைத் தொட்டு அதனால் தீட்டாகி
யிருந்தால் அவனையும் வெளியே அனுப்பி
விடவேண்டும். 3ஆணா, பெண்ணா என்பது
பற்றிக் கவலைப்படாமல் அந்த நபரை
வெளியேற்றவேண்டும். அதனால் மற்றவர்
களுக்கு அந்த நோயும், தீட்டும் ஏற்படாமல்
இருக்கும். நானும் உங்கள் முகாமில்
உங்களோடு வாழ்வேன்” என்றார்.
4எனவே இஸ்ரவேல் ஜனங்கள் தேவ
னுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தனர்.
அவர்கள் இத்தகையவர்களை முகாமை
விட்டு வெளியேற்றினர். கர்த்தர் மோசே
யிடம் கட்டளையிட்டபடியே அவர்கள்
செய்தனர்.

### தவறுக்குச் செலுத்தும் அபராதம்
5கர்த்தர் மோசேயிடம், 6“இஸ்ரவேல்
ஜனங்களில் ஒருவன் இன்னொருவனுக்குத்
தீமை செய்திருந்தால் (ஒருவன் இன்னொ
ருவனுக்குத் தீமைசெய்வது என்பது
உண்மையில் தேவனுக்கு எதிராகப் பாவம்
செய்வதாகும்) அவன் தண்டனைக்கு
உரியவன். 7எனவே அவன் தான் செய்த
பாவத்தைப் பற்றி ஜனங்களிடம் சொல்ல
வேண்டும். பின் அதற்கான அபராதத்
தொகையையும் செலுத்த வேண்டும். அதில்
ஐந்தில் ஒரு பாகத்தையும் சேர்த்து
பாதிக்கப்பட்டவனுக்குக் கொடுக்கவேண்டும்.
8பாதிக்கப்பட்டவன் ஒருவேளை மரித்து
போயிருந்தாலோ, அத்தொகையை ஏற்றுக்
கொள்ள அவனுக்கு நெருங்கிய உறவினர்கள்
யாரும் இல்லாமலிருந்தாலோ, அவன்
அத்தொகையை கர்த்தருக்குச் செலுத்த
வேண்டும். அவன் அம்முழுத்தொகையையும்
ஆசாரியனிடம் கொடுக்கவேண்டும். அந்த
ஆசாரியன் அவனது பாவநிவிர்த்திக்காக
ஆட்டுக்கடாவை பலியாகச் செலுத்த
வேண்டும். அதனைப் பலியிடுவதன் மூலம்
ஜனங்கள் செய்த பாவமானது நிவிர்த்தி
செய்யப்படுகிறது. மீதிபணத்தை, ஆசாரியன்
வைத்துக்கொள்ள வேண்டும்.
9“இஸ்ரவேலனாக இருக்கும் ஒருவன்
தேவனுக்கு இதுபோல் சிறப்பான அன்பளிப்
புகளைச் செலுத்தினால் ஆசாரியன்
அவற்றைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.
அது அவனுக்கு உரியது. 10ஒருவன் இது
போன்ற சிறப்பு காணிக்கை களை
கொடுக்காமலும் இருக்கலாம். ஆனால்
ஆசாரியனுக்குக் கொடுக்கப்பட்ட எதுவும்
அவனுக்கு உரியதாகிவிடும்” என்று
கூறினார்.

### சந்தேகம் கொள்ளும் கணவர்கள்
11கர்த்தர் மோசேயிடம், 12“ஒருவனின்
மனைவி அவனுக்கு நம்பிக்கைத் துரோகம்
செய்திருக்கலாம். 13அவள் இன்னொருவ
னோடு பாலின உறவு வைத்துக்கொண்டு
அதனைக் கணவனுக்குத் தெரியாமல்
மறைத்துவிடலாம், அவள் தனது செயலில்
பிடிபடாமல் அவளுக்கு எதிராக எந்த
சாட்சியும் இல்லாமல் இருக்கலாம். எனவே,
அவள் செய்த பாவம் அவளது
கணவனுக்குத் தெரியாமல் போய்விடலாம்.
அவளும் தன் கணவனுக்குத் தன் பாவம்
பற்றி சொல்லாமல் இருக்கலாம். 14ஆனால்,
அவளது கணவன் தனது மனைவி தனக்குத்
துரோகம் செய்கிறாளோ என்று சந்தேகப்
படலாம். அவள் தனக்கு உண்மையான
வளாகவும், சுத்தமானவளாகவும் இல்லை
என்று அவன் நினைக்கலாம். 15இவ்வாறு
நிகழ்ந்தால், அவன் தன் மனைவியை
ஆசாரியனிடம் அழைத்துச் செல்லவேண்டும்.
அப்போது, அவன் காணிக்கையாக ஒரு
எப்பா அளவான வாற்கோதுமை மாவிலே
பத்தில் ஒருபங்கைக் கொடுக்க வேண்டும்.
அவன் அந்த வாற்மோதுமை மாவிலே
எண்ணெயோ, நறுமணப் பொருளோ
போடக்கூடாது. இது கர்த்தருக்குத் தானிய
காணிக்கையாக இருக்கும். கணவன்
சந்தேகம் அடைந்ததால் அதற்குப் பரிகார
மாக இப்பலி அமைகின்றது. தனது மனைவி
தனக்கு உண்மையில்லாதவளாக இருந்தாள்
என்று அவன் எண்ணியதை இப்பலி
காட்டும்.
16“ஆசாரியன் அந்தப் பெண்ணை
கர்த்தரின் முன்பு அழைத்துக்கொண்டு போய்
அங்கே அவளை நிறுத்தி, 17பிறகு ஆசாரியன்
பரிசுத்த தண்ணீரை எடுத்து மண்ஜாடியில்
ஊற்ற வேண்டும். பின் பரிசுத்தக்
கூடாரத்தின் தரையிலிருந்து கொஞ்சம்
மண்ணை எடுத்து, அப்பாத்திரத்தில் போட
வேண்டும். 18ஆசாரியன் அவளைக் கர்த்தர்
முன் நிற்குமாறு செய்து பிறகு அவளது
கூந்தலை அவிழ்க்கச் சொல்லி, அவள்
கையில் தானியக் காணிக்கையை வைக்க
வேண்டும். இப்பலி, அவளது கணவனால்
அவனது சந்தேகத்திற்காக கர்த்தருக்குக்
கொடுக்கப்பட்ட காணிக்கையாகும். அதே
நேரத்தில் ஆசாரியன் தன் கையில் பரிசுத்த
தண்ணீர் இருக்கும் மண்ஜாடியை
வைத்திருக்க வேண்டும். அந்த பரிசுத்த
தண்ணீர் அவள் பாவம் செய்திருந்தால்
அவளுக்குச் சாபத்தை உண்டாக்கும்.
19“பிறகு, ஆசாரியன் அந்தப் பெண்ணிடம்
அவள் பொய் சொல்லக்கூடாது என்றும்,
அவள் உண்மையைச் சொல்ல வேண்டு
மென்றும் கட்டளையிட வேண்டும். ஆசாரி
யன் அவளிடம், ‘நீ இன்னொரு மனிதனோடு
தொடர்பு வைக்காமல் இருந்திருந்தால்,
திருமணத்துக்குப்பின் உன் கணவனுக்கு
எதிராகப் பாவம் செய்யாமல் இருந்திருந்
தால், சாபங்களைக் கொடுக்கும் இந்த
தண்ணீரானது உனக்குத் தீங்கு செய்யாது.
20ஆனால் நீ உன் கணவனுக்கு எதிராகப்
பாவம் செய்திருந்தால், உன் கணவன்
அல்லாத ஒருவனுடன் நீ தொடர்பு
வைத்திருந்தால், நீ தூய்மையானவளல்ல.
21இது உண்மையென்றால், இந்த பரிசுத்த
மான தண்ணீரை நீ குடிப்பதால் உனக்குத்
துன்பங்கள் வரும். உனக்குக் குழந்தை
பெறுகிற பாக்கியம் கிடைக்காமல் போகும்.
ஒருவேளை நீ இப்பொழுது கருவுற்றவளாக
இருந்தால் அக்குழந்தை மரித்துப் போகும்.
பிறகு உன் ஜனங்கள் உன்னை விலக்கி
வைத்து, உன் மீது குற்றங்களைச் சுமத்து
வார்கள்’ என்று கூறவேண்டும்.

“பிறகு கர்த்தருக்கு முன்பு ஒரு விசேஷ
உறுதியளிக்கும்படி அப்பெண்ணிடம் ஆசாரி
யன் சொல்ல வேண்டும். பொய் சொன்னால்
அவளுக்குத் தீமைகள் ஏற்படும் என்பதை

அவள் உணரச் செய்ய வேண்டும். 22‘நீ
கேடு உண்டாக்கக் கூடிய தண்ணீரைக்
குடிக்க வேண்டும். நீ பாவம் செய்திருந்தால்,
உனக்குக் குழந்தை ஏற்படாமல் போகும்.
நீ கருவுற்றிருந்தால் அது பிறக்குமுன்
மரித்துப் போகும்’ என்று ஆசாரியன்
அப்பெண்ணிடம் கூறவேண்டும். அதற்கு
அவள், ‘நீர் சொல்கிறபடி நான் செய்வேன்’
என்று கூற வேண்டும்.
23“இந்த எச்சரிக்கைகளையெல்லாம் ஒரு
நீண்டத் தோல் சுருளில் ஆசாரியன் எழுதி
வைக்க வேண்டும். அதனைப் பிறகு
பரிசுத்தத் தண்ணீரால் சிறிது கழுவ
வேண்டும். 24பின்னர் கேடு தருகிற அந்தத்
தண்ணீரை அவள் குடிக்க வேண்டும்.
அதைக்குடித்ததும், அவள் பாவம் செய்த
வளாக இருந்தால் அத்தண்ணீர் அவளுக்குப்
பெருந்துன்பத்தைத் தரும்.

25“பிறகு ஆசாரியன் அவள் கையில்
உள்ள தானியக் காணிக்கையை வாங்கி
அதனை கர்த்தரின் சமூகத்தில் தூக்கிப்
பிடிக்க வேண்டும். பின் அதனைப் பலிபீடத்
தில் வைக்க வேண்டும். 26ஆசாரியன்
அத்தானியப் பலியைக் கை நிறைய அள்ளி
பலிபீடத்தின் நெருப்பில் போட்டு எரித்து
விட வேண்டும். அதற்குப் பிறகு ஆசாரியன்
அவள் தண்ணீரைக் குடிக்குமாறு கேட்டுக்
கொள்ள வேண்டும். 27அவள் தன்
கணவனுக்கு எதிராகப் பாவம் செய்தவளாக
இருந்தால், அந்த தண்ணீர் அவளுக்குப்
பெருந்துன்பத்தை அளிக்கும். அத்தண்ணீர்
அவள் உடம்புக்குள் சென்று அவளுக்குப்
பெருந்துன்பத்தைக் கொடுக்கும். அவள்
கருவிலுள்ள எந்தக் குழந்தையும், அது
பிறக்கு முன்னரே மரித்துப் போகும். அவள்
என்றென்றும் குழந்தை பெறமுடியாமல்
இருப்பாள். அவள் அவளது ஜனங்களின்
மத்தியில் சபிக்கப்பட்டவளாக இருப்பாள்.
28ஆனால் அவள் தன் கணவனுக்கு எதிராகப்
பாவம் செய்யாமல், சுத்தமானவளாக
இருந்தால், ஆசாரியன் அவளைக் குற்ற
மற்றவள் என்று கூறுவான். பின் அவள்
சாதாரணமானவளாக குழந்தைகளைப்
பெறுவாள்.
29“இதுவே பொறாமை அல்லது சந்தேகம்
பற்றிய சட்டமாகும். ஒருத்தி ஒருவனுக்குத்
திருமணத்தின் மூலம் மனைவியான பிறகு,
அவனுக்கு எதிராகப் பாவம் செய்தால்,
நீங்கள் இதையே செய்ய வேண்டும். 30ஒரு
கணவன் தன் மனைவி மீது பொறாமை
கொண்டு அவளைச் சந்தேகப்பட்டாலும்,
அவன் இந்தப் பரிகாரத்தையே செய்ய
வேண்டும். ஆசாரியன் அந்தப் பெண்ணை
கர்த்தரின் முன்னிலையில் நிற்கச் செய்து
இவற்றையெல்லாம் செய்ய வேண்டும். இது
தான் சட்டம். 31அவள் தவறினிமித்தம்
அவள் கணவனுக்கு எதுவும் நேரிடாது.
ஆனால் அந்தப் பெண்ணோ தன் பாவத்
தினிமித்தம் துன்பப்படுவாள்” என்று
கூறினார்.

### நசரேயர்கள்

6 கர்த்தர் மோசேயிடம், 2“இவற்றை
இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறு. ஒரு
ஆணோ அல்லது பெண்ணோ தன்
ஜனங்களிடமிருந்து தனியே பிரிந்து வாழ
வேண்டும் என்று விரும்பலாம். இந்த
விரதகாலம் ஒருவன் தன்னையே முழுக்க
கர்த்தருக்கு சில காலம் ஒப்படைத்துக்
கொள்ள அனுமதிக்கிறது. இத்தகையவனை
‘நசரேயன்’ என அழைப்பார்கள். 3இக்காலக்
கட்டத்தில், அவன் திராட்சைரசமோ,
போதை தரும் வேறு பானமோ குடிக்கக்
கூடாது. அவன் திராட்சைரசம் மற்றும்
மதுபானத்தின் காடியையோ குடிக்கக்
கூடாது. திராட்சைரசத்தால் செய்த எவ்வித
பானத்தையோ திராட்சைப் பழங்களையோ,
காய்ந்த திராட்சைகளையோ உண்ணாமல்
இருக்க வேண்டும். 4இந்த விரத காலத்தில்
அவன் திராட்சைச் செடியின் எந்த உணவுப்
பொருட்களையும், உண்ணக்கூடாது, அவன்
திராட்சைப் பழத்தின் தோலையும் விதை
களையும் கூட உண்ணக்கூடாது.
5“இந்த விரதகாலத்தில் அவன் தனது
தலைமுடியைக் கூட வெட்டிக் குறைத்துக்
கொள்ளக்கூடாது. தனது விரத நாட்கள்
முடியும் வரையில் அவன் பரிசுத்தமாக
இருக்கவேண்டும். அவன் தன் தலைமுடியை
வளர விட வேண்டும். அவனது தலைமுடி
யானது அவன் தேவனுக்குச் செய்த
பொருத்தனையின் ஒரு பகுதியாகும். அவன்
அந்த முடியை வெட்டாமலிருப்பது
தேவனுக்குத் தன்னை அர்ப்பணித்தி
ருப்பதின் அடையாளம். எனவே விரதகாலம்
முடிகிறவரை தனது தலைமுடியை நீளமாக
வளர விடவேண்டும்.
6“இவ்விரதக் காலத்தில் ஒரு நசரேயன்
பிணத்தின் அருகில் செல்லக்கூடாது.
ஏனென்றால் அவன் கர்த்தருக்குத் தன்னை
முழுமையாக அர்ப்பணித்து இருக்கிறான்.
7ஒரு வேளை அவனது தாயோ, தந்தையோ,
அல்லது சகோதரனோ, சகோதரியோ கூட
மரித்து போயிருக்கலாம். எனினும் அவன்
அவர்களைத் தொடக்கூடாது. அது அவனைத்
தீட்டு உள்ளவனாக ஆக்கும். அவன்
தன்னைத் தனிப்பட்டவன் என்றும்,
தன்னை தேவனுக்கு முழுமையாகக்
கொடுத்திருக்கிறான் என்பதையும் காட்ட
வேண்டும். 8விரதகாலம் முழுமைக்கும்
அவன் தன்னை முழுவதுமாக கர்த்தரிடம்
ஒப்படைக்கிறான்.
9“நசரேய விரதம் கொள்பவன்,
இன்னொருவனோடு இருக்கும்போது, திடீ
ரென்று அந்த மற்றவன் மரித்து போனதாக

வைத்துக்கொள்வோம். அவனையறியா
மலேயே மரித்தவனைத் தொட்டிருப்பா
னேயானால், அவன் தீட்டுள்ளவனாகக்
கருதப்படுகிறான். இவ்வாறு நிகழ்ந்தால்
அவன் தலைமுடியை முழுக்க மழித்துக்
கொள்ள வேண்டும். (அந்தத் தலை
முடியானது அவனது விசேஷ அர்ப்
பணிப்பின் ஒரு பகுதியாகும்.) ஏழாவது
நாள் தன் முடியை வெட்டிக்கொள்ள வேண்
டும். ஏனென்றால் அன்றைக்குத்தான் அவன்
தீட்டு இல்லாதவனாகிறான். [10]எட்டாவது
நாள், நசரேய விரதம் கொள்ளும் அவன்,
இரண்டு புறாக்களையும், இரண்டு புறாக்
குஞ்சுகளையும், ஆசாரியனிடம் கொண்டு
வரவேண்டும். அவன் இவற்றை ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் ஆசாரியனிடம்
கொடுக்க வேண்டும். [11]பிறகு ஆசாரியன்
அவற்றில் ஒன்றைப் பாவப்பரிகாரப் பலியா
கவும், இன்னொன்றைத் தகன பலியாகவும்
தரவேண்டும். இந்த தகனபலியானது நசரேய
விரதத்தில் அவன் செய்த பாவத்திற்குரிய
காணிக்கையாகும். (அவன் பிணத்தின்
அருகில் இருந்ததால் பாவம் செய்தவனாகக்
கருதப்படுகிறான்.) அந்த வேளையில், அவன்
தன் தலைமுடியை மீண்டும் தேவனுக்கு
தருவதாக வாக்களிக்க வேண்டும். [12]அவன்
மீண்டும் ஒருமுறை கர்த்தருக்காகத் தன்னை
முழுமையாக ஒப்புக்கொடுத்து தனியாக சில
காலம் நசரேய விரதம் இருக்க வேண்டும்.
அவன் ஓராண்டான ஆட்டுக்குட்டியைக்
கொண்டு வந்து அதை அவன் குற்ற
பரிகார பலியாகக் கொடுக்க வேண்டும்.
அவன் விரதம் இருந்த நாட்களெல்லாம்
மறக்கப்படும். எனவே, அவன் புதிதாக
விரதம் அனுசரிக்க வேண்டும். அவன்
முதலில் விரதம் இருக்கும்போது, பிணத்தைத்
தொட்டதினால் தீட்டானதே இதற்குக்
காரணம்.

[13]“அவனது விரதகாலம் முடிந்தபிறகு,
ஒரு நசரேயன் ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலுக்குப் போக வேண்டும். [14]அவன்
தனது காணிக்கையைக் கர்த்தருக்குக்
கொடுக்க வேண்டும். அவன்:

*தகன பலிக்காக ஒரு வயதான,*
*எவ்விதக் குறைபாடும் இல்லாத*
*ஆட்டுக்குட்டியையும்;*
*பாவப்பரிகார பலிக்காக ஒரு*
*வயதான, குறைபாடுகளற்ற*
*ஒரு பெண் ஆட்டுக்குட்டியையும்;*
*சமாதான பலிக்காக குறைபாடுகளற்ற*
*ஆட்டுக்கடாவையும்,*

[15] *தானிய காணிக்கைக்காக கூடை*
*நிறைய எண்ணெயிலே பிசைந்த*
*புளிப்பில்லாத மெல்லிய மாவில்*
*செய்த அதிரசங்களையும்,*
*எண்ணெய் தடவப்பட்ட*
*புளிப்பில்லாத அடைகளையும்*
*காணிக்கையாகச் செலுத்த*
*வேண்டும்.*

[16]“இவை அனைத்தையும் கர்த்தருக்கு
ஆசாரியன் கொடுக்கவேண்டும். பிறகு,
அவன் பாவப்பரிகார பலியையும், தகன
பலியையும் செலுத்த வேண்டும். [17]புளிப்பில்
லாத அதிரசங்கள் நிறைந்த கூடையைக்
கர்த்தருக்கு ஆசாரியன் கொடுக்க வேண்டும்.
சமாதான பலிக்காக அவன் ஆட்டுக்
கடாவைக் கொல்ல வேண்டும், பிறகு
அவன் தானிய காணிக்கையையும், பானங்
களின் காணிக்கையையும் அளிக்க
வேண்டும்.

[18]“நசரேய விரதம் கொண்டவன்
ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்குச் செல்ல
வேண்டும். அவன் அங்கே கர்த்தருக்காக
வளர்த்த தலைமுடியை மழித்துக்கொள்ள
வேண்டும். பிறகு அதனை சமாதானப்
பலிக்குக் கீழ் நெருப்பில் போட்டு எரிக்க
வேண்டும்.

[19]“நசரேய விரதம் கொண்டவன், தன்
தலைமுடியை மழித்தபிறகு ஆசாரியன்
வேகவைத்த ஆட்டுக்கடாவின் தோள்பாகத்
தையும், கூடையில் உள்ள புளிப்பில்லாத
அதிரசம் மற்றும் அடையையும் அவனு
டைய உள்ளங்கையில் வைக்க வேண்டும்.
[20]பின்னர் ஆசாரியன் இவற்றை கர்த்தருக்கு
முன் அசைவாட்டும் பலியாக ஏறெடுக்க
வேண்டும். அது அசைவாட்டப்பட்ட
மார்க்கண்டத்தோடும், ஏறெடுத்துப்
படைக்கப் பட்ட முன்னந் தொடையோடும்
ஆசாரியனுக்கு உரிய தாகும். ஆட்டுக்
கடாவின் மார்க்கண்டத்தையும், தொடை
யையும் கர்த்தருக்கு முன்பு அசைவாட்டும்
பலி செய்வார்கள். அவைகளும்
ஆசாரியனுக்கு உரியதாகும். அதற்குப் பிறகு
நசரேய விரதம் கொண்டவன், திராட்சை
ரசம் குடிக்கலாம்.

[21]“நசரேய விரதம் கொள்ளும் ஒருவன்,
கடைப்பிடிக்க வேண்டிய விதிகள்
இவையாகும். அவன் அனைத்து அன்பளிப்பு
களையும் கர்த்தருக்குக் கொடுக்க வேண்டும்.
ஆனால் ஒருவன் மிக அதிக அளவில்
கர்த்தருக்கு அன்பளிப்பு தரும் வசதியைக்
கொண்டிருக்கலாம். ஒருவன் அவ்வாறு
மிகுதியாக அன்பளிப்பு கொடுப்பதாக
வாக்குத்தந்தால் பிறகு அந்த வாக்கைக்
காப்பாற்ற வேண்டும். ஆனால் அவன்
குறைந்தபட்சமாக நசரேய விதிகளில்
சொல்லியபடியாவது காணிக்கை செலுத்த
வேண்டும்” என்றார்.

### ஆசாரியனின் ஆசீர்வாதங்கள்

[22]கர்த்தர் மோசேயிடம், [23]“ஆரோனிடமும்
அவனது மகன்களிடமும், சொல்லவேண்டி

யதாவது: நீங்கள் இஸ்ரவேல் ஜனங்களை
ஆசீர்வதிக்கும்போது,

24 கர்த்தர் உன்னை ஆசீர்வதித்து,
உன்னைக் காப்பாற்றுவாராக!
25 கர்த்தர் உன்னிடம் நல்லவராக
இருந்து அவர் உனக்குக் கருணை
காட்டுவாராக!
26 உனது ஜெபங்களுக்கு கர்த்தர்
பதில் தருவாராக!
அவர் உனக்குச் சமாதானத்தைத்
தருவாராக!
என்று சொல்லுங்கள்” என்றார்.

27“இவ்வாறு ஆரோனும், அவனது
மகன்களும் எனது நாமத்தைச் சொல்லி
இஸ்ரவேல் ஜனங்களை ஆசீர்வதிக்க வேண்
டும். நானும் அவர்களை ஆசீர்வதிப்பேன்”
என்று கூறினார்.

### பரிசுத்தக் கூடாரத்தை அர்ப்பணித்தல்

7 மோசே பரிசுத்தக் கூடாரத்தை அமைத்து
முடித்தான். அந்நாளிலேயே அதனை
கர்த்தருக்கு அர்ப்பணித்தான். மோசே
கூடாரத்தையும் அதிலுள்ள பொருட்
களையும், பலிபீடத்தையும் அதற்குரிய
அனைத்து பொருட்களையும் அபிஷேகம்
செய்தான். இவையனைத்துப் பொருட்களும்
கர்த்தரை தொழுதுகொள்வதற்கு மாத்திரமே
பயன்படுத்தப்பட வேண்டும் என்று இது
காட்டியது.
2பிறகு இஸ்ரவேலின் அனைத்து
தலைவர்களும் கர்த்தருக்குக் காணிக்கை
செலுத்தினார்கள். இவர்கள் அவர்களது
குடும்பத்தின் தலைவர்களும் கோத்திரங்
களின் தலைவர்களும் ஆவார்கள். இவர்களே
இஸ்ரவேல் ஜனங்களை எண்ணி கணக்கிடும்
பொறுப்புடையவர்கள். 3இத்தலைவர்கள்
கர்த்தருக்கு அன்பளிப்புகளைக் கொண்டு
வந்தனர். அவர்கள் மூடப்பட்ட ஆறு
வண்டிகளையும் அதை இழுக்க பன்னி
ரெண்டு மாடுகளையும் கொண்டுவந்தனர்.
(ஒவ்வொரு தலைவர்களும் ஆளுக்கொரு
மாட்டையும் இருதலைவர்கள் சேர்ந்து ஒரு
வண்டியையும் கொடுத்தனர்.) பரிசுத்தக்
கூடாரத்தில் தலைவர்கள் இவற்றைக்
கர்த்தருக்குக் கொடுத்தனர்.
4கர்த்தர் மோசேயிடம்,
5“தலைவர்களிடமிருந்து இந்தக் அன்பளிப்பு
களைப் பெற்றுக்கொள். ஆசரிப்புக் கூடாரத்
திற்கான வேலைகளுக்கு இக் காணிக்கைகள்
உதவியாயிருக்கும்படி இவற்றை
லேவியர்களிடம் கொடு” என்று கூறினார்.
6எனவே, மோசே வண்டிகளையும்,
அவற்றை இழுத்து வந்த மாடுகளையும்
ஏற்றுக்கொண்டு, அவற்றை லேவியர்களிடம்
கொடுத்தான். 7அவன் அவற்றில் இரண்டு
வண்டிகளையும் நான்கு மாடுகளையும்
கெர்சோன் குழுவினருக்குக் கொடுத்தான்.
அவர்களின் வேலைக்கு அந்த வண்டிகளும்,
மாடுகளும் தேவையாய் இருந்தன. 8பிறகு
நான்கு வண்டிகளையும் எட்டு மாடு
களையும் மெராரி குழுவினருக்குக் கொடுத்
தான். அவர்களின் வேலைக்கு இந்த
வண்டிகளும் மாடுகளும் தேவையாய் இருந்
தன. ஆசாரியனான ஆரோனின் மகனான
இத்தாமர் இவர்களின் வேலைகளுக்கான
பொறுப்பினை ஏற்றிருந்தான். 9மோசே
கோகாத் குழுவினருக்கு எந்த
வண்டியையும், மாடுகளையும் கொடுக்க
வில்லை. ஏனென்றால், அவர்களின் வேலை,
பரிசுத்தமான பொருட்களைத் தங்கள்
தோள்களில் தூக்கிச் செல்வதாகும்.
10மோசே பலிபீடத்தை அபிஷேகம் செய்
தான். அதே நாளில், தலைவர்கள் தங்கள்
காணிக்கைகளை, அந்தப் பலிபீடத்தை
அர்ப்பணிப்பதற்காகக் கொண்டு வந்தனர்,
அவர்கள் தங்கள் காணிக்கைகளைக்
கர்த்தருக்காகப் பலிபீடத்தின்மேல் வைத்
தனர். 11கர்த்தர் மோசேயிடம், “ஒவ்வொரு
நாளும், ஒவ்வொரு தலைவனும் தன்
அன்பளிப்பைக் கொண்டு வந்து
பலிபீடத்தில் அர்ப்பணிக்க வேண்டும்”
என்றார்.
12-83பன்னிரெண்டு தலைவர்களில் ஒவ்
வொருவரும் தங்கள் அன்பளிப்புகளைக்
கொண்டு வந்தனர். அவை பின்வருமாறு:
ஒவ்வொரு தலைவனும் மூன்றேகால்
பவுண்டு எடையுள்ள ஒவ்வொரு வெள்ளித்
தட்டுக்களையும், ஒன்றே முக்கால் பவுண்டு
எடையுள்ள ஒவ்வொரு வெள்ளிக் கோப்பை
களையும் கொண்டு வந்தனர். இவ்விரண்டு
காணிக்கைகளும் அதிகாரப்பூர்வமான
அளவால் நிறுக்கப்பட்டன. வட்டமான
கிண்ணங்களும், தட்டுகளும் எண்ணெயில்
கலக்கப்பட்ட மெல்லிய மாவால் நிரப்பப்
பட்டு இருந்தன. இது தானியக் காணிக்
கைக்குப் பயன்படுவதாக இருந்தது. ஒவ்
வொரு தலைவனும் பெரிய தங்கக்
கரண்டியையும் கொண்டு வந்தனர். அது 4
அவுன்ஸ் எடையுள்ளதாய் இருந்தது.
இக்கரண்டி நறுமணப் பொருட்களால்
நிரப்பப்பட்டிருந்தது.
ஒவ்வொரு தலைவனும் ஒரு இளம்
காளையைக் கொண்டு வந்தனர். அதோடு
ஒரு ஆட்டுக்கடா, ஒரு வயதான ஒரு
ஆண் ஆட்டுக்குட்டி ஆகியவற்றையும்
கொண்டுவந்தனர். இம்மிருகங்கள் தகன
பலிக்கு உரியவை. ஒவ்வொரு தலைவனும்
பாவ பரிகார பலிக்குரியதாக ஒரு
ஆட்டுக்கடாவைக் கொண்டு வந்தனர்.
அதோடு அவர்கள் 2 பசுக்களையும் 5
ஆட்டுக்கடாக்களையும், ஒரு வயதான 5
வெள்ளாட்டுக் கடாக்களையும், 5 ஆண்
ஆட்டுக்குட்டிகளையும் கொண்டு வந்தனர்.

*இவை அனைத்தும் சமாதான பலிக்காகக்
கொல்லப்பட்டன.*

*முதல் நாளில், யூதா கோத்திரத்தின்
தலைவனான அம்மினதாபின் மகனான
நகசோன் அன்பளிப்புகளைக் கொண்டு
வந்தான்.*

*இரண்டாம் நாளில், இசக்கார் குழுவின்
தலைவனான சூவாரின் மகன் நெதனெயேல்
தன் அன்பளிப்புகளைக் கொண்டு வந்தான்.*

*மூன்றாம் நாளில், செபுலோன் கோத்தி
ரத்தின் தலைவனான ஏலோனின் மகன்
எலியாப் தன் அன்பளிப்புகளைக் கொண்டு
வந்தான்.*

*நான்காம் நாளில், ரூபன் கோத்திரத்தின்
தலைவனான சேதேயூரின் மகனான எலிசூர்
தன் அன்பளிப்புகளைச் செலுத்தினான்.*

*ஐந்தாம் நாளில், சிமியோன் கோத்திரத்
தின் தலைவனான சூரிஷதாயின் மகன்
செலுமியேல் தன் அன்பளிப்புகளைச்
செலுத்தினான்.*

*ஆறாம் நாளில், காத் கோத்திரத்தின்
தலைவனான தேகுவேலின் மகன் எலியா
சாப் தன் அன்பளிப்புகளைச் செலுத்தினான்.*

*ஏழாம் நாளில், எப்பிராயீம் கோத்திரத்
தின் தலைவனான அம்மியூதின் மகன்
எலிஷாமா தன் அன்பளிப்புகளைக்
கொண்டு வந்தான்.*

*எட்டாம் நாளில், மனாசே கோத்திரத்தின்
தலைவனான பெதாசூரின் மகன் கமாலி
யேல் தன் அன்பளிப்புகளைக் கொண்டு
வந்தான்.*

*ஒன்பதாம் நாளில், பென்யமீன் கோத்திரத்
தின் தலைவனான கீதெயோனின் மகன்
அபீதான் தன் அன்பளிப்புகளைக் கொண்டு
வந்தான்.*

*பத்தாம் நாளில், தாண் கோத்திரத்தின்
தலைவனான அம்மிஷதாயின் மகன் அகியே
சேர் தன் அன்பளிப்புகளைக் கொண்டு
வந்தான்.*

*பதினோறாம் நாளில், ஆசேர் கோத்திரத்
தின் தலைவனான ஒகிரானின் மகன்
பாகியேல் தன் அன்பளிப்புகளைக் கொண்டு
வந்தான்.*

*பன்னிரெண்டாம் நாளில், நப்தலி
கோத்திரத்தின் தலைவனான ஏனானின்
மகன் அகீரா தன் அன்பளிப்புகளைக்
கொண்டு வந்தான்.*

**84** *இஸ்ரவேல் ஜனங்களின் தலைவர்களிட
மிருந்து இவ்வாறு பல்வேறு அன்பளிப்புகள்
வந்து சேர்ந்தன. அவர்கள் இவற்றை மோசே
பலிபீடத்தை அபிஷேகம் செய்து அர்ப்ப
ணித்த நாட்களில் கொண்டு வந்தனர்.
அவர்கள் 12 வெள்ளித் தட்டுக்களையும், 12
வெள்ளிக் கோப்பைகளையும், 12 தங்கக்
கரண்டிகளையும் கொண்டு வந்தனர்.
**85** ஒவ்வொரு வெள்ளித்தட்டும் முன்றேகால்
பவுண்டு எடையுள்ளதாய் இருந்தது.
ஒவ்வொரு வெள்ளிக் கோப்பையும் ஒன்றே
முக்கால் பவுண்டு எடையுள்ளதாய்
இருந்தது. ஆக மொத்தம் தட்டுகளும்
கோப்பைகளும் சேர்ந்து 60 பவுண்டு
அதிகாரப்பூர்வமான அளவு எடையுள்ள
வெள்ளியாய் இருந்தது. **86** நறுமணப் பொருட்
கள் நிறைந்த 12 தங்கக் கரண்டிகளும்,
ஒவ்வொன்றும் 4 அவுன்ஸ் உடையதாக
இருந்தது. அந்த 12 தங்கக் கரண்டிகளும்
சேர்ந்து 3 பவுண்டு அதிகாரப்பூர்வமான
அளவு எடையுள்ளதாக இருந்தன.*

**87** *ஆக மொத்தம் தகனபலிக்கான 12
காளைகளும் 12 ஆட்டுக்கடாக்களும், 12
ஒரு வயதான ஆண் ஆட்டுக்குட்டிகளும்
கொண்டு வரப்பட்டன. அவற்றோடு தானிய
காணிக்கையும் கொடுக்கப்பட்டன. கர்த்த
ருக்கு பாவப்பரிகாரப் பலியாக 12 ஆண்
வெள்ளாடுகளும் கொண்டு வரப்பட்டன.
**88** சமாதானப் பலிக்குப் பயன்படுத்து
வதற்காகத் தலைவர்கள் மிருகங்களைக்
கொண்டு வந்தனர். அவற்றின் எண்ணிக்
கையானது 24 காளைகள், 60 ஆட்டுக்
கடாக்கள், 60 வெள்ளாட்டுக் கடாக்கள்,
60 ஒரு வயதான ஆண் ஆட்டுக்குட்டிகள்
என இருந்தன. இவ்வாறு மோசே
பலிபீடத்தை அபிஷேகம் செய்தபிறகு,
அவர்கள் அதனை அர்ப்பணம் செய்தனர்.*

**89** *கர்த்தரோடு பேசுவதற்காக மோசே
ஆசரிப்புக் கூடாரத்தின் உள்ளே சென்றான்.
அப்போது கர்த்தரின் குரல் அவனோடு
பேசுவதைக் கேட்டான். அந்தக் குரலானது
உடன்படிக்கைப் பெட்டியின் மேலுள்ள
கிருபாசனமான இரு கேருபீன்களின் நடுவில்
இருந்து உண்டாயிற்று. தேவன் மோசே
யோடு பேசிய முறை இதுதான்.*

### *விளக்குத் தண்டு*

**8** *கர்த்தர் மோசேயிடம், **2** "நான் காட்டிய
இடத்தில் ஏழு விளக்குகளையும் வைக்க
வேண்டும் என்று ஆரோனிடம் சொல்.
ஏழு விளக்குகளும் விளக்குத் தண்டுக்கு
நேரே எரிய வேண்டும்" என்று கூறினார்.*

**3** *ஆரோன் அவ்வாறே விளக்குகளைச்
சரியான இடத்தில் வைத்தான். விளக்குத்
தண்டுக்கு எதிரேயுள்ள பகுதியில் ஒளி
வீசுமாறு விளக்குகள் இருந்தன. கர்த்தர்
மோசேக்கு இட்ட கட்டளைக்கு ஆரோன்
கீழ்ப்படிந்தான். **4** விளக்குத் தண்டு கீழ்க்
கண்டவாறு அமைக்கப்பட்டது. இது அடித்த
பொன்னால் செய்யப்பட்டது. அடிப்பாகம்
முதல் உச்சிவரை பொன்னால் பூ வேலைகள்
செய்யப்பட்டிருந்தது. மோசேயிடம் கர்த்தர்
சொன்னபடியே விளக்கு அமைக்கப்
பட்டிருந்தது.*

### *லேவியர்களை அர்ப்பணித்தல்*

**5** *கர்த்தர் மோசேயிடம், **6** "மற்ற இஸ்ர
வேல் ஜனங்களிடமிருந்து லேவியர்களைப்
பிரித்து, அவர்களைச் சுத்திகரிப்பாயாக.*

7கீழ்க்கண்டவாறு அவர்களைத் சுத்தப்படுத்த
வேண்டும். அவர்கள் மீது பாவப்
பரிகாரத்திற்குரிய சிறப்பான தண்ணீரைத்
தெளிக்க வேண்டும். பின் அவர்கள் உடல்
முழுவதிலும் சவரம் பண்ணிக் கொண்டு
ஆடைகளைச் சலவை செய்ய வேண்டும்.
இது அவர்களின் உடலைச் சுத்தமாக்கும்.
8"லேவியர்களில் ஆண்கள் ஒரு
இளங்காளையையும், தானியக் காணிக்
கையையும் எடுத்து வரவேண்டும்.
அப்பலியானது எண்ணெயோடு கலக்கப்
பட்ட மெல்லிய மாவாக இருக்கும். பின்
இன்னொரு இளங்காளையைப் பாவப்
பரிகார பலியாகக் கொண்டுவர வேண்டும்.
9லேவியர்களை ஆசரிப்புக் கூடாரத்திற்கு
எதிரேயுள்ள இடத்தில் கூட்டவேண்டும்.
பின் இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரையும்
அங்கே கூட்டவேண்டும். 10பின் லேவியரைக்
கர்த்தருக்கு முன்னால் அழைத்து வாருங்கள்.
இஸ்ரவேல் ஜனங்கள் அவர்கள்மீது தம்
கைகளை வைக்க வேண்டும். 11பிறகு
ஆரோன் லேவியர்களைக் கர்த்தருக்கு அர்ப்
பணிக்கவேண்டும். அவர்கள் தேவனுக்கு
அளிக்கப்படும் காணிக்கையைப் போன்று
இருப்பார்கள். இம்முறையில் லேவியர்கள்
கர்த்தருக்குத் தாங்கள் செய்ய வேண்டிய
சிறப்பு வேலைகளுக்காகத் தயாராயிருப்
பார்கள்.
12"தங்கள் கைகளை காளைகளின்
தலைமீது வைக்குமாறு லேவியர்களுக்குக்
கூறுங்கள். ஒரு காளை, கர்த்தருக்குரிய
பாவப்பரிகார பலியாகும். இன்னொரு
காளை, கர்த்தருக்குரிய தகனபலியாகும்.
இப்பலிகளினால் லேவியர்கள் சுத்தம்
செய்யபடுகின்றனர். 13ஆரோன் மற்றும்
அவனது மகன்களின் முன்னிலையில்
நிற்குமாறு லேவியர்களிடம் கூறு. பிறகு
லேவியர்களை கர்த்தருக்கு அர்ப்பணித்து
விடு அவர்கள் அசைவாட்டும் பலியைப்
போன்றவர்கள். 14இது லேவியர்களைப்
பரிசுத்தமாக்கும். அவர்கள் தேவனுக்காக
ஒரு சிறப்பான முறையில் பயன் படுத்தப்
படுகிறார்கள் என்பதைக் காட்டும். இவர்கள்
மற்ற இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து
வேறுபட்டவர்கள். லேவியர்கள் எனக்
குரியவர்கள்.
15"எனவே லேவியர்களை சுத்தமாக்
குங்கள். அவர்களைக் கர்த்தருக்குக்
கொடுங்கள். அவர்கள் அசைவாட்டும்
பலியைப் போன்றவர்கள். நீங்கள் இவ்வாறு
செய்தபிறகு அவர்கள் ஆசரிப்புக்
கூடாரத்திற்குள் வந்து தம் பணியைச்
செய்யலாம். 16இஸ்ரவேலர்கள் லேவியர்களை
எனக்குக் கொடுப்பார்கள். அவர்கள் எனக்கு
உரியவர்கள். ஒவ்வொரு இஸ்ரவேல் குடும்ப
மும் தனக்கு முதலில் பிறக்கும் ஆண்
குழந்தைகளை எனக்குத் தரவேண்டும்
என்று கடந்த காலத்தில் கூறியிருக்கிறேன்.
இஸ்ரவேல் ஜனங்களில் முதலில் பிறக்கும்
குழந்தைகளுக்குப் பதிலாக லேவியர்களை
நான் இப்போது எடுத்துக் கொண்டேன்.
17இஸ்ரவேலர்களில் முதலில் பிறக்கும் ஆண்
குழந்தைகள் ஒவ்வொன்றும் எனக்
குரியதாகும். அது மனிதர்களா, அல்லது
மிருகங்களா என்பது ஒரு பொருட்டல்ல.
அவை எனக்குரியதாகும். ஏனென்றால் நான்
எகிப்திலே, முதலில் பிறக்கும் ஆண்
குழந்தைகளையும் மிருகங்களையும் கொன்
றேன். அதோடு இஸ்ரவேலில் முதலில்
பிறக்கும் ஆண் குழந்தைகளை எனக்குரிய
வர்களாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன்.
18ஆனால் இப்போது இவர்களின் இடத்தில்
லேவியர்களை எடுத்துக் கொண்டேன்.
இஸ்ரவேலில் உள்ள மற்ற குடும்பங்களில்
முதலாவதாகப் பிறந்த ஆண் மகன்களுக்குப்
பதிலாக லேவியர்களை எடுத்துக் கொண்
டேன். 19இஸ்ரவேலில் உள்ள அனைத்து
ஜனங்களிலிருந்தும் லேவியர்களைத் தேர்ந்
தெடுத்தேன். அவர்களை ஆரோனுக்கும்,
அவனது மகன்களுக்கும் தத்தமாகக் கொடுத்
தேன். அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தில்
பணியாற்ற வேண்டும் என்று விரும்புகி
றேன். அவர்கள் இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவருக்காகவும் சேவை செய்வார்கள்.
இஸ்ரவேல் ஜனங்களை சுத்தப்படுத்தும்
பலிகளைச் செலுத்த உதவி செய்வார்கள்.
இதனால் பெருநோய்களும், துன்பங்களும்
இஸ்ரவேலர்கள் பரிசுத்தமான இடத்திற்குள்
வரும்போது ஏற்படுவதில்லை" என்றார்.
20எனவே மோசே, ஆரோன், இஸ்ர
வேல் ஜனங்கள் அனைவரும் கர்த்தருக்குக்
கீழ்ப்படிந்தனர். கர்த்தர் மோசேக்குக்
கட்டளையிட்டபடி அவர்கள் லேவியரோடு
சேர்ந்து செயல்பட்டனர். 21லேவியர்கள்
தங்களையும், தங்கள் ஆடைகளையும் சுத்தப்
படுத்திக் கொண்டனர். ஆரோன் லேவியர்
களை அசைவாட்டும் பலிபோன்று
கர்த்தருக்கு அர்ப்பணித்தான். ஆரோன்
பலிகளைக் கொடுத்ததின் மூலம் அவர்களின்
பாவங்கள் நீக்கப்பட்டு, அவர்கள் பரிசுத்தம்
அடைந்தனர். 22அதன் பிறகு லேவியர்கள்
ஆசரிப்புக் கூடாரத்திற்குள் தங்கள் பணி
யைச் செய்ய வந்தனர். ஆரோனும் அவனது
மகன்களும் அவர்களைக் கண்காணித்தனர்.
லேவியர்களின் பணிகளுக்கு இவர்களே
பொறுப்பானவர்கள். மோசேயிடம் கர்த்தர்
சொன்னபடியே ஆரோனும் அவனது
மகன்களும் செயல்பட்டனர்.
23மேலும் கர்த்தர் மோசேயிடம், 24"இது
லேவியர்களுக்கான சிறப்புக் கட்டளைகள்
ஆகும். ஆசரிப்புக் கூடாரத்திலுள்ள வேலை
களை லேவியர்களில் 25 வயதும் அதற்கு
மேற்பட்ட வயதும் கொண்டவர்கள் வந்து
பங்கிட்டுச் செய்யவேண்டும். 25ஆனால்,
ஒருவனுக்கு 50 வயதாகும்போது அவன்
தன் பணியிலிருந்து ஓய்வுபெற வேண்டும்.

அவன் மேலும் வேலை செய்யவேண்டிய
தேவை இல்லை. [26]இப்படிப்பட்ட 50 வயதும்
அதற்கு மேலும் ஆன ஆண்கள் ஆசரிப்புக்
கூடாரத்தில் தங்கள் சகோதரர்களின்
வேலைக்கு உதவியாக இருக்கலாம். ஆனால்,
அவர்கள் அவ்வேலைகளைத் தாமாகவே
செய்யக் கூடாது. நீங்கள் லேவியர்களை
அவர்களின் வேலைக்குத் தேர்ந்தெடுக்கும்
போது இவற்றைச் செய்யவேண்டும்”
என்றார்.

### பஸ்கா

9 சீனாய் பாலைவனத்தில் மோசேயிடம்
கர்த்தர் பேசினார். இது இஸ்ரவேல்
ஜனங்கள் எகிப்தை விட்டு வந்த இரண்டா
வது ஆண்டின் முதல் மாதமாகும். கர்த்தர்
மோசேயிடம்: [2]“தேர்ந்தெடுக்கப்பட்ட காலத்
தில், பஸ்கா பண்டிகையைக் கொண்டாட
வேண்டும் என்று இஸ்ரவேல் ஜனங்களிடம்
கூறு. [3]அவர்கள் பஸ்கா விருந்தை
இம்மாதத்தின் 14ஆம் நாளன்று சூரியன்
மறைகிற அந்தி வேளையில் உண்ண
வேண்டும். அவர்கள் அந்தத் தேர்ந்தெடுத்த
நேரத்தில் இதனைச் செய்ய வேண்டும்.
பஸ்கா பண்டிகையின் விதிகளை அவர்கள்
பின்பற்ற வேண்டும்” என்று கூறினார்.
[4]எனவே, பஸ்காவைக் கொண்டாடும்படி
இஸ்ரவேல் ஜனங்களிடம் மோசே கூறினான்.
[5]அவர்கள் சீனாய் பாலைவனத்தில், முதல்
மாதத்தின் 14ஆம் நாளன்று, சூரியன்
மறைகின்ற சாயங்கால வேளையில்
பஸ்காவைக் கொண்டாடினர். கர்த்தர்
மோசேக்குக் கட்டளையிட்டபடியே,
இஸ்ரவேல் ஜனங் கள் எல்லாவற்றையும்
செய்து முடித்தனர்.
[6]ஆனால் அந்நாளில் சில ஜனங்கள்
பஸ்காவைக் கொண்டாட முடியவில்லை.
காரணம், அவர்கள் பிணத்தைத் தொட்ட
தால் தீட்டாகி இருந்தனர். எனவே, அன்று
அவர்கள் மோசேயிடமும், ஆரோனிடமும்
சென்றனர். [7]அவர்கள் மோசேயிடம்,
“நாங்கள் பிணத்தைத் தொட்டதால்
தீட்டாகிவிட்டோம். எனவே தேர்ந்தெடுக்கப்
பட்ட நேரத்தில் நாங்கள் கர்த்தருக்கு
அன்பளிப்பைச் செலுத்த முடியாமல்
ஆசாரியர்களால் தடுக்கப்பட்டோம். எனவே,
எங்களால் மற்ற இஸ்ரவேலர்களோடு
பஸ்காவைக் கொண்டாட முடியவில்லை.
நாங்கள் என்ன செய்யலாம்?” என்று
கேட்டனர்.
[8]மோசே அவர்களிடம், “கர்த்தர் இதனைப்
பற்றி என்ன சொல்கிறார் என்று கேட்
கிறேன்” என்றான்.
[9]பிறகு கர்த்தர் மோசேயிடம், [10]“எல்லா
இஸ்ரவேல் ஜனங்களிடமும் இவற்றைக் கூறு.
இந்த விதியானது உனக்கும் உனது எல்லாச்
சந்ததிக்கும் உரியதாகும். சரியான நேரத்தில்
ஒருவனால் பஸ்காவைக் கொண்டாட
முடியாமல் போகலாம். அவன் பிணத்தைத்
தொட்டதால் தீட்டுள்ளவனாக இருக்கலாம்,
அல்லது அவன் பயணத்தின்பொருட்டு
வெளியே போயிருக்கலாம். [11]ஆனாலும்
அவன் இரண்டாவது மாதத்தில் 14ஆம்
தேதி மாலை வேளையில் பஸ்காவைக்
கொண்டாடலாம். அப்போது அவன்
ஆட்டுக்குட்டியின் இறைச்சியையும்.
புளிப்பில்லாத அப்பத்தையும், கசப்பான
கீரையையும் உண்ணவேண்டும். [12]அவன்
மறுநாள் விடியும்வரை அதில் எதையும்
மீதி வைக்காமல் உண்ணவேண்டும். அவன்
ஆட்டுக்குட்டியின் எலும்புகள் எதையும்
உடைக்கக் கூடாது. அவன் பஸ்காவின்
அனைத்து விதிகளையும் பின்பற்ற
வேண்டும். [13]ஆனால் இயன்றவர்கள்
குறிப்பிட்ட காலத்திலேயே பஸ்காவைக்
கொண்டாட வேண்டும். ஆனால் அவன்
தீட்டில்லாமல் இருந்து, பயணம் போகாமல்
இருந்தால் அவனுக்கு மன்னிப்பு இல்லை.
அவன் சரியான காலத்தில் பஸ்காவைக்
கொண்டாடாவிட்டால், அவன் மற்ற
ஜனங்களிடமிருந்து பிரிக்கப்படவேண்டும்
அவன் குற்றவாளியாகி அதனால் தண்டிக்கப்
படுவான். ஏனென்றால் அவன் சரியான
நேரத்தில் தன் அன்பளிப்பைக் கர்த்தருக்குச்
செலுத்தவில்லை.
[14]“உங்களோடு வாழ்கின்ற அயல்
நாட்டுக்காரன், கர்த்தரின் பஸ்காப்
பண்டிகையை பகிர்ந்துகொள்ள விரும்ப
லாம், இதனை அனுமதிக்கலாம். ஆனால்,
அவன் பஸ்காவின் விதிகளைப் பின்பற்ற
வேண்டும். அவ்விதிகள் அனைவருக்கும்
ஒரே மாதிரிதான்” என்றார்.

### மேகமும் நெருப்பும்

[15]பரிசுத்தக் கூடாரத்தையும், உடன்
படிக்கையின் கூடாரத்தையும் அமைத்த
அன்று, கர்த்தரின் மேகமானது அதை
மூடிற்று. மாலை முதல் காலைவரை
பரிசுத்தக் கூடாரத்திற்கு மேலுள்ள
மேகமானது நெருப்பு போல் காணப்பட்டது.
[16]அம்மேகம் பரிசுத்தக் கூடாரத்தின் மேல்
எப்போதும் இருந்தது. இரவு நேரத்தில்
அது நெருப்புபோல தோன்றியது. [17]மேக
மானது பரிசுத்தக் கூடாரத்தை விட்டு
நகர்ந்தபோது, இஸ்ரவேலரும் கூடவே
சென்றனர். அம்மேகம் நின்ற இடத்தில்
அவர்கள் தங்கள் முகாமை அமைத்தனர்.
[18]இவ்வாறு எப்போது புறப்பட வேண்டும்,
எப்போது நிற்க வேண்டும், முகாமை
எங்கே அமைக்க வேண்டும், என்பதை
யெல்லாம் இஸ்ரவேலர்களுக்குக் கர்த்தர்
சுட்டிக் காட்டினார். அங்கே மேகம்
நிலைத்திருக்கும்வரை அவர்கள் அங்கேயே
தங்கள் முகாமை அமைத்திருந்தனர். [19]சில
வேளைகளில் அம்மேகமானது நீண்ட காலம்
பரிசுத்தக் கூடாரத்தின் மேல் தங்கியிருக்கும்.

கர்த்தரின் கட்டளைக்குப் பணிந்து
இஸ்ரவேலர்கள் அதை விட்டு நகராமல்
இருந்தனர். [20]சில வேளைகளில், மேகமானது
பரிசுத்தக் கூடாரத்தின்மேல் சில நாட்களே
தங்கியிருக்கும். எனவே, அவர்கள் கர்த்தரின்
கட்டளைக்கு அடிபணிந்து, அது நகரும்
போது அவர்களும் நகர்ந்தனர். [21]சில
வேளைகளில் மேகமானது இரவு மட்டுமே
தங்கியிருக்கும். மறுநாள் காலையில் அது
நகர்ந்துவிடும். அப்போது அவர்களும் தங்கள்
பொருட்களை கட்டிக் கொண்டு பின்பற்றிச்
செல்வார்கள். மேகமானது பகலில் நகர்ந்
தாலும், அல்லது இரவில் நகர்ந்தாலும்
இஸ்ரவேல் ஜனங்கள் அதைப் பின்பற்றிச்
சென்றனர். [22]அந்த மேகம் பரிசுத்தக்
கூடாரத்தின் மேல் இரண்டு நாட்களோ,
ஒரு மாதமோ, ஒரு ஆண்டோ இருந்தால்
அவர்களும் அங்கே தங்கியிருப்பார்கள்.
கர்த்தரின் ஆணைப்படி மேகம் நகரும்வரை
அவர்களும் நகர மாட்டார்கள். எப்போது
மேகம் எழும்பி நகருகிறதோ அப்போது
அவர்களும் நகருவார்கள். [23]எனவே,
ஜனங்கள் இவ்வாறு கர்த்தருடைய
கட்டளைக்குக் கீழ்ப்படிந்தனர். கர்த்தரின்
ஆணைப்படி முகாமை அமைத்தனர். கர்த்தர்
சொல்லும்போது முகாமை கலைத்துவிட்டுப்
புறப்பட்டனர். ஜனங்கள் மிக எச்சரிக்கை
யாகக் கவனித்து மோசேக்குக் கர்த்தர்
கட்டளையிட்டபடி கீழ்ப்படிந்தனர்.

### வெள்ளி எக்காளங்கள்

10 கர்த்தர் மோசேயிடம், [2]“வெள்ளியைப்
பயன்படுத்தி அடிப்பு வேலையினால்
இரண்டு எக்காளங்களை செய்து
கொள்ளுங்கள். இந்த எக்காளங்கள் ஜனங்
களை கூப்பிட்டு எப்போது நகர வேண்டும்
என்பதை அறிவிப்பதற்காகப் பயன்படும்.
[3]இரண்டு எக்காளங்களையும் தொடர்ச்சியாக
பெருந்தொனியாக ஊதினால் இஸ்ரவேல்
ஜனங்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில்
கூட வேண்டும். [4]ஆனால் ஒரே ஒரு
எக்காளத்தை மட்டும் பெருந்தொனியாகத்
தொடர்ந்து ஊதினால், தலைவர்கள் மட்டும்,
உன்னைச் சந்திக்க கூடி வரவேண்டும்.
(தலைவர்கள் என்பது 12 இஸ்ரவேல்
கோத்திரங்களின் தலைவர்கள் ஆகும்.)
[5]“எக்காளங்களை குறைந்த நேரம்
ஊதினால், ஜனங்கள் தங்கும் இடங்களைக்
கலைத்து விட்டுப் புறப்படவேண்டும் என்று
அர்த்தமாகும். முதல்முறை குறைந்த நேரம்
ஊதும்போது ஆசரிப்புக் கூடாரத்தின்
கிழக்குப் பக்கத்தில் தங்கி இருக்கும்
குடும்பங்கள் புறப்பட வேண்டும்.
[6]இரண்டாவது முறை குறைந்த நேரம்
ஊதினால், ஆசரிப்புக் கூடாரத்தின் தென்
பக்கத்தில் பாளையமிட்ட குடும்பங்கள்
நகரவேண்டும். [7]ஆனால் நீ ஜனங்கள்
அனைவரையும் கூட்ட வேண்டும் என்று
விரும்பினால் எக்காளங்களை சற்று
வித்தியாசமாக ஓயாமல் நெடுநேரம் ஊத
வேண்டும். [8]ஆரோனின் மகன்களான
ஆசாரியர்கள் மாத்திரமே எக்காளங்களை
ஊத வேண்டும். இதுவே என்றென்றும்
வரும் தலைமுறைகளிலும் கடைப்பிடிக்க
வேண்டிய சட்டமாகும்.
[9]“நீங்கள் உங்கள் சொந்த பூமியில்
பகைவர்களோடு சண்டையிட வேண்டி
வந்தால் எக்காளத்தை மிகச் சத்தமாகப்
போருக்கு முன் ஊதுங்கள். உங்கள்
தேவனாகிய கர்த்தர் அதனைக் கேட்டு
உங்கள் பகைவரிடமிருந்து உங்களைக்
காப்பாற்றுவார். [10]உங்களது சிறப்புக்
கூட்டங்களுக்கும், மாதப்பிறப்பு நாட்
களிலும், மகிழ்ச்சிக் காலங்களிலும்
எக்காளங்களை ஊதுங்கள். நீங்கள் தகன
பலியும், சமாதான பலியும் கொடுக்கும்
போதெல்லாம் எக்காளங்களை ஊதுங்கள்.
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களை
நினைவு கூருவதற்கு இந்த எக்காளச் சத்தம்
உதவும். இவ்வாறு செய்யுமாறு நான்
கட்டளையிடுகிறேன், நானே உங்கள்
தேவனாகிய கர்த்தர்” என்று கூறினார்.

### இஸ்ரவேல் ஜனங்கள் முகாமோடு புறப்படுதல்

[11]இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்தை விட்டுப்
புறப்பட்ட இரண்டாவது ஆண்டின் இரண்
டாவது மாதத்தின் 20ஆம் நாளில்,
உடன்படிக்கைக் கூடாரத்தின் மேல் இருந்த
மேகமானது எழும்பிற்று. [12]எனவே,
இஸ்ரவேல் ஜனங்கள் தங்கள் பயணத்தைத்
தொடர்ந்தனர். அவர்கள் சீனாய் பாலை
வனத்தைக் கடந்து பாரான் பாலைவனத்தில்
நிற்கும்வரை பயணம் செய்தனர். [13]இதுவே
இஸ்ரவேல் ஜனங்கள் தம் முகாமை
கலைத்துவிட்டு, முதல் முதலாக புறப்பட்ட
சம்பவம் ஆகும். மோசேயிடம் கர்த்தர்
ஆணையிட்டபடியே அவர்கள் நகர்ந்து
சென்றனர்.
[14]யூதாவின் முகாமில் உள்ள மூன்று
குழுக்களும் முதலில் சென்றன. அவர்கள்
தங்கள் கொடியோடு பயணம் செய்தனர்.
முதல் குழுவானது யூதாவின் கோத்திர
மாகும். அம்மினதாபின் மகனான நகசோன்
அக்குழுவின் தலைவனாக இருந்தான்.
[15]அடுத்து இசக்காரின் கோத்திரம் வந்தது.
சூவாரின் மகனான நெதனெயேல் இதற்குத்
தலைவனாக இருந்தான். [16]அதற்கு அடுத்து
செபுலோனின் கோத்திரம் வந்தது.
ஏலோனின் மகனான எலியாசாப் அதற்குத்
தலைவனாக இருந்தான்.
[17]பிறகு, பரிசுத்தக் கூடாரம் இறக்கி
வைக்கப்பட்டது. பரிசுத்தக் கூடாரத்தைக்
கெர்சோன் மற்றும் மெராரி குடும்பத்தில்
உள்ளவர்கள் சுமந்து கொண்டு வந்தனர்.

எனவே, இக்குடும்பத்தவர்கள் இவ்வரி
சையில் அடுத்ததாக வந்தனர்.
18பிறகு ரூபனின் முகாமைச் சேர்ந்த
மூன்று குழுக்களும் வந்தன, அவர்கள்
தம் கொடியோடு பயணம் செய்தனர். முதலில்
ரூபனின் கோத்திரம் வந்தது. சேதேயூரின்
மகன் எலிசூர் இதற்குத் தலை வனாக
இருந்தான். 19அடுத்து சிமியோனின்
கோத்திரம் வந்தது. சூரிஷதாயின் மகனான
செலூமியேல் இதற்குத் தலைவனா
யிருந்தான். 20அதற்கு அடுத்து காத்
கோத்திரம் வந்தது, தேகுவேலின் மகனான
எலியாசாப் அதற்குத் தலைவனாக
இருந்தான். 21பிறகு கோகாத்தியர்
குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பரிசுத்த
இடத்தில் இருக்கும் பரிசுத்தப் பொருட்
களைச் சுமந்துவந்தனர். இவர்கள் வந்து
சேருமுன் மற்றவர்கள் பரிசுத்த கூடாரத்தை
அமைத்து முடிப்பார்கள்.
22அதற்குப் பிறகு எப்பிராயீம்
கோத்திரத்தின் முகாமில் இருந்து மூன்று
குழுக்கள் தங்கள் கொடிகளோடு பயணம்
செய்தனர். முதலில் எப்பிராயீமின்
கோத்திரம் வந்தது. அம்மியூதின் மகனான
எலிஷாமா அதற்குத் தலைவனாக இருந்தான்.
23அடுத்து மனாசேயின் கோத்திரம் வந்தது.
பெதாசூரின் மகனான கமாலியேல் அதற்குத்
தலைவனாக இருந்தான். 24அடுத்து
பென்யமீன் கோத்திரம் வந்தது. கீதெ
யோனின் மகனான அபீதான் அதற்குத்
தலைவனாக இருந்தான்.
25இவ்வரிசையில் உள்ள கடைசி மூன்று
கோத்திரங்களும் மற்றக் கோத்திரங்களுக்குப்
பாதுகாவலாக இருந்தது. அது தாண்
கோத்திரத்தின் பிரிவுகள் ஆகும். அவர்கள்
தங்கள் கொடியோடு பயணம் செய்தனர்.
முதலில் தாணின் கோத்திரம் வந்தது.
அம்மிஷதாயின் மகனான அகியேசேர்
அதற்குத் தலைவனாக இருந்தான். 26அடுத்து
ஆசேர் கோத்திரம் வந்தது. ஒகிரானின்
மகனான பாகியேல் அதற்குத் தலைவனாக
இருந்தான். 27நப்தலியின் கோத்திரம் அதற்கு
அடுத்து வந்தது. ஏனானின் மகனான
அகிரா அதற்குத் தலைவனாக இருந்தான்.
28இவ்வாறுதான் இஸ்ரவேல் ஜனங்கள்
ஓரிடத்தை விட்டு இன்னொரு இடத்துக்குப்
போகும்போது வரிசை முறையைக்
கைக்கொண்டனர்.
29ஓபாப், மீதியானியனான ரெகுவேலின்
மகன். (ரெகுவேல் மோசேயின் மாமனார்.)
மோசே ஓபாபிடம், "தேவன் எங்களுக்கு
தருவதாக வாக்களித்துள்ள நாட்டிற்கு
நாங்கள் போய்க் கொண்டிருக்கிறோம்.
எங்களோடு வாரும், உமக்கு நாங்கள்
நல்லவர்களாக இருப்போம். இஸ்ரவேல்
ஜனங்களுக்கு கர்த்தர் நன்மை செய்வதாக
வாக்களித்துள்ளார்" என்று கூறினார்.
30ஆனால் ஓபாப், "இல்லை நான்
உங்களோடு வரமாட்டேன். நான் எனது
தாய் நாட்டிற்குத் திரும்பிப் போகிறேன்.
அங்கே என் சொந்த ஜனங்கள் இருக்கின்
றனர்" என்றான்.
31பிறகு மோசே, "தயவுசெய்து எங்களை
விட்டுப் போகாதிரும், எங்களைவிட இந்தப்
பாலைவனத்தைப்பற்றி உமக்கு நன்றாகத்
தெரியும். நீர் எங்களுக்கு வழிகாட்டியாக
இரும். 32நீர் எங்களோடு வந்தால், கர்த்தர்
எங்களுக்கு அளிக்கும் நன்மையை உம்
மோடு பகிர்ந்து கொள்வோம்" என்றான்.
33எனவே, ஓபாப் ஒப்புக்கொண்டான்.
பிறகு அவர்கள் கர்த்தரின் மலையிலிருந்து
பயணம் செய்தனர். ஆசாரியர்கள் கர்த்தரு
டைய உடன்படிக்கைப் பெட்டியைத்
தூக்கிக்கொண்டு முன்னே சென்றார்கள்.
மூன்று நாட்கள் அவர்கள் பரிசுத்தப்
பெட்டியைச் சுமந்து பயணம் செய்து
முகாம் அமைப்பதற்காக இடம் பார்த்தனர்.
34கர்த்தரின் மேகமானது தினமும் அவர்
களுக்கு மேல் சென்றது. ஒவ்வொரு நாள்
காலையிலும் அது வழிகாட்டிய வண்ணம்
சென்றது.
35ஜனங்கள் பரிசுத்தப் பெட்டியைத்
தூக்கிக் கொண்டு நகரும் போதெல்லாம்
மோசே:

"கர்த்தாவே எழுந்திரும்!
உமது பகைவர்கள்
சிதறடிக்கப்படட்டும்.
உமது பகைவர்கள் உம்மைவிட்டு
ஓடட்டும்"
என்று சொன்னான்.

36பரிசுத்தப் பெட்டியை அவர்கள் கீழே
வைக்கும்போதெல்லாம் மோசே எப்பொழு
தும்,

"கர்த்தாவே, அநேக ஆயிரங்களான
இஸ்ரவேல் ஜனங்களிடம் திரும்பி
வாரும்" என்று சொன்னான்.

### ஜனங்கள் மீண்டும் முறையிடுதல்

11 ஜனங்கள் தங்கள் துன்பங்களைப்
பற்றி முறுமுறுக்க ஆரம்பித்தனர்.
கர்த்தர் அவர்களது முறுமுறுப்புகளைக்
கேட்டு அதனால் கோபம் கொண்டார்.
கர்த்தரிடமிருந்து நெருப்பு தோன்றி,
முகாமின் ஓரங்களில் உள்ள சில ஜனங்களை
எரித்தது. 2எனவே ஜனங்கள் மோசேயிடம்
தம்மக்களைக் காப்பாற்றுமாறு கதறினார்கள்.
மோசே கர்த்தரிடம் வேண்டுதல் செய்த
தினால் நெருப்பு அணைந்து போயிற்று.
3எனவே அந்த இடம் தபேரா* என்று
அழைக்கப்பட்டது. கர்த்தர் நெருப்பின் மூலம்

---

**தபேரா** இந்த பெயருக்கு "எரிகின்றது" என்று அர்த்தம்.

அவர்கள் முகாமை எரித்ததால் இந்தப் பெயர் அந்த இடத்திற்கு ஏற்பட்டது.

### எழுபது முதிய தலைவர்கள்

4 இஸ்ரவேல் ஜனங்களோடு சேர்ந்த அயல் நாட்டுக்காரர்கள் மற்றப் பொருட்களை உண்ண ஆசைப்பட்டார்கள். எனவே, இஸ்ரவேல் ஜனங்கள் மீண்டும் முறையிட ஆரம்பித்தனர். அந்த ஜனங்கள், "நாங்கள் இறைச்சியை உண்ண ஆசைப்படுகிறோம்!
5 நாங்கள் எகிப்தில் உண்ட மீன்களை எண்ணிப் பார்க்கிறோம். அவை எங்களுக்கு விலையில்லாதது. அங்கு எங்களுக்கு வெள்ளரிக்காய், கொம்மட்டிக்காய், கீரை, வெங்காயம், வெள்ளைப்பூண்டு போன்ற நல்ல காய்கறிகளும் இருந்தன. 6 ஆனால் இப்போது நாங்கள், எங்கள் பலத்தை இழந்து விட்டோம். இந்த மன்னாவை மட்டுமே உண்கிறோம், வேறு எதையும் புசிப்ப தில்லை" என்றனர். 7 (இந்த மன்னா சிறிய கொத்தமல்லி விதை போன்று அளவிலும் மரப்பிசின் போன்று தோற்றத்திலும் இருக்கும்.) 8 ஜனங்கள் இந்த மன்னாவைப் பொறுக்கிக் கொண்டு வந்து அதனைக் கல்லால் அரைத்து பானையில் போட்டு சமைப்பார்கள். அல்லது அதனை எந்திரங் களில் அரைத்து மாவாக்கி அப்பங்களாகச் செய்வார்கள். இந்த அப்பங்கள் ஒலிவ எண்ணையால் செய்யப்பட்ட இனிப்பு அப்பங்களைப்போல சுவையாக இருக்கும்.
9 பூமி பனியால் நனைந்திருக்கும்போது ஒவ்வொரு இரவும் இந்த மன்னா தரையில் விழும்.)
10 மோசே ஜனங்களின் முறையீட்டைக் கேட்டான். ஒவ்வொரு குடும்பத்தில் உள்ளவர்களும் தங்கள் தங்கள் கூடாரவாசலில் இருந்துகொண்டு முறையிட் டார்கள். இதனால், கர்த்தர் பெருங்கோபம் கொண்டார். மோசேயும் இதனால் சஞ்சலப் பட்டான். 11 மோசே கர்த்தரிடம், "கர்த்தாவே, ஏன் எனக்கு இந்தத் தொல்லையைத் தந்தீர்? நான் உமது ஊழியன். நான் என்ன தவறு செய்தேன்? நான் உமக்கு என்ன பொல்லாப்பு செய்தேன்? இவ்வளவு மிகுதி யான ஜனங்களுக்கான பொறுப்பினை ஏன் எனக்குக் கொடுத்தீர்? 12 நான் இவர்களின் தந்தை அல்ல என்பதையும், நான் இவர்களைப் பெற்றெடுக்கவில்லை என்ப தையும் நீர் அறிவீர். ஆனால் ஒரு தாதி ஒரு குழந்தையைக் கைகளில் தாங்கிச் செல்வது போன்று நான் தாங்கிச் செல்ல வேண்டியதாயிருக்கிறது. ஏன் இதனை என்மேல் சுமத்தினீர்? என் முன்னோருக்குத் தருவதாகச் சொன்ன தேசத்திற்கு இவர்களை அழைத்துப்போகும் பொறுப்பை என்மேல் ஏன் சுமத்தினீர்? 13 இவர்கள் அனைவருக்கும் தேவையான இறைச்சி என்னிடம் இல்லை. அவர்கள் தொடர்ந்து முறையிட்டுக் கொண்டு 'எங்களுக்கு இறைச்சியைத் தாரும்' என்று கேட்கிறார்கள்! 14 நான் ஒருவனாக இவர்கள் அத்தனை பேரையும் கவனித்துக் கொள்ளமுடியாது. இந்தச் சுமை எனக்கு மிகவும் அதிகமாக உள்ளது.
15 இதுபோல் தொடர்ந்து நீர் எனக்கு அவர்களின் தொல்லைகளைக் கொடுப்பதாக இருந்தால், இப்போது என்னைக் கொன்று விடும். உமது ஊழியனாக என்னை ஏற்றுக் கொண்டால், இப்போது எனக்கு மரணத்தைத் தாரும். நான், என் தொல்லை களிலிருந்து விடுதலை பெறுவேன்" என்றான்!
16 கர்த்தர் மோசேயிடம், "இஸ்ரவேல் ஜனங்களில் 70 முதிய தலைவர்களை என்னிடம் அழைத்து வா. இவர்கள் இஸ்ரவேலர்களின் தலைவர்களாயிருக் கிறார்கள். அவர்களை ஆசரிப்புக் கூடாரத்திற்குள் அழைத்து வா. அவர்கள் உன்னோடு நிற்கட்டும். 17 பிறகு நான் இறங்கி வந்து உன்னோடு பேசுவேன். இப்போது ஆவியானவர் உன்மேல் உள்ளார். ஆனால் அவர்களுக்கும் ஆவியை அளிப்பேன். பிறகு இந்த ஜனங்களைக் கவனித்து கொள்கிற பொறுப்பில் அவர்கள் உனக்கு உதவு வார்கள். இவ்வகையில் நீ மட்டும் தனியாக இவர்களுக்கான பொறுப்பை ஏற்க வேண்டி யதிருக்காது."

18 "இவற்றை ஜனங்களிடம் கூறு: நாளைக்காக உன்னைத் தயார் செய்து கொள்! நாளை நீங்கள் இறைச்சி உண்பீர்கள். நீங்கள் முறையிட்டபோது கர்த்தர் அதனைக் கேட்டார். 'எங்களுக்கு உண்ண இறைச்சி வேண்டும், எகிப்து எங்களுக்கு நன்றாக இருந்தது!' என்று நீங்கள் சொன்ன சொற்களைக் கர்த்தர் கேட்டார். எனவே, இப்போது கர்த்தர் உங்களுக்கு இறைச் சியைக் கொடுப்பார். 19 நீங்கள் ஒரு நாள் அல்லது, இரு நாள் அல்லது, ஐந்து நாள் அல்லது, பத்து நாள் அல்லது, இருபது நாட்களுக்கு மேலாக இறைச்சியை உண்பீர்கள்! 20 நீங்கள் இந்த மாதம் முழுவதும்கூட இறைச்சியை உண்பீர்கள். அது உங்களுக்குத் திகட்டும்வரைக்கும் உண்பீர்கள். நீங்கள் கர்த்தருக்கு எதிராக முறையிட்டதினால் இது உங்களுக்கு ஏற்படும். கர்த்தர் உங்களோடு வாழ்கிறார். உங்களது தேவைகளை அவர் அறிவார். ஆனால் நீங்கள் அழுதீர்கள்! அவரிடம் முறையிட்டீர்கள். 'நாங்கள் எகிப்தை விட்டு ஏன் வந்தோம்' என்று கூறுகிறீர்கள்?" என்றார்.
21 மோசே, "கர்த்தாவே இங்கே 6,00,000 மனிதர்கள் உள்ளனர். ஆனால் நீர் 'இவர்கள் ஒரு மாதத்திற்குப் போதுமானபடி உண்ண இறைச்சியைக் கொடுப்பேன்' என்று கூறுகிறீர். 22 நாம் இங்குள்ள அத்தனை

ஆடுகளையும், மாடுகளையும் கொன்றாலும்
கூட அது போதுமானதாக இராது. கடலில்
உள்ள அத்தனை மீன்களையும் பிடித்தா
லும்கூட அவை போதுமானதாக இராது”
என்றான்.
23ஆனால் கர்த்தர் மோசேயிடம்,
“கர்த்தருடைய வல்லமையைக் குறைவாக
எடை போடாதே! நான் சொன்னபடி
என்னால் செய்யமுடியுமா? என்பதை
இப்போது காண்பாய்” என்றார்.
24எனவே, ஜனங்களோடு பேச மோசே
வெளியே சென்றான். கர்த்தர் சொன்ன
வற்றையெல்லாம் மோசே ஜனங்களிடம்
கூறினான். பின் 70 முதிய இஸ்ரவேல்
தலைவர்களைக் கூட்டி அழைத்து வந்தான்.
ஆசரிப்புக் கூடாரத்தைச்சுற்றி நிற்குமாறு
அவர்களிடம் கூறினான். 25பிறகு கர்த்தர்
மேகத்தில் இறங்கி வந்து மோசேயோடு
பேசினார். மோசேயின் மேல் ஆவியானவர்
இருந்தார். அதே ஆவியை 70 முதிய
தலைவர்கள் மேலும் கர்த்தர் வைத்தார்.
அவர்கள்மேல் ஆவி வந்ததும் தீர்க்க
தரிசனம்* சொன்னார்கள். ஆனால் அவர்கள்
அந்த நேரத்தில் மட்டுமே அவ்வாறு நடந்து
கொண்டனர்.
26அப்போது எல்தாத், மேதாத் எனும்
இரு முதிய தலைவர்கள் மட்டும்
கூடாரத்திற்கு வெளியே போகவில்லை.
அவர்களின் பெயர் முதிய தலைவர்களின்
பட்டியலில் இருந்தது. எனினும் அவர்கள்
கூடாரத்திற்குள்ளேயே இருந்து விட்டனர்.
எனினும் அவர்கள் மீதும் ஆவி வந்தது.
அவர்கள் கூடாரத்திற்குள்ளிருந்தே தீர்க்கதரி
சனம் சொன்னார்கள். 27ஒரு இளைஞன்
மோசேயிடம் ஓடிப்போய், “எல்தாத்தும்
மேதாத்தும் கூடாரத்திற்குள் தீர்க்கத்தரிசனம்
கூறுகிறார்கள்” என்றான்.
28நூனின் மகனாகிய யோசுவா மோசே
யிடம், “மோசே ஐயா, நீங்கள் அவர்களைத்
தடுக்க வேண்டும்” என்றான். (யோசுவா
தன் சிறு வயதிலிருந்தே மோசேயிடம்
உதவியாளனாக இருந்தான்.)
29ஆனால் மோசே, “நான் இப்போது
தலைவன் இல்லை என்று ஜனங்கள்
நினைத்துவிடுவார்கள் என்று அஞ்சு
கிறாயா? கர்த்தரின் ஜனங்கள் அனைவரும்
தீர்க்கதரிசனம் சொல்லவேண்டும் என்று
நான் விரும்புகிறேன்! அவர்கள் அனைவர்
மேலும் கர்த்தர் தன் பரிசுத்த ஆவியை
வைக்க வேண்டும் என்று விரும்புகிறேன்”
என்றான். 30பிறகு மோசேயும் இஸ்ரவேல்
தலைவர்களும் கூடாரத்திற்குள் சென்றனர்.

### காடைகள் அனுப்பபடுதல்

31பிறகு கடலிலிருந்து பெருங்காற்று
அடிக்குமாறு கர்த்தர் செய்தார். அக்காற்று
காடைகளைக் கொண்டு வந்தது. காடைகள்
கூடாரத்தைச் சுற்றிலும் பறந்து வந்து
தரையில் விழுந்தன. தரையின் மேல்
மூன்றடி உயரத்திற்கு அவை விழுந்து
கிடந்தன. ஒரு மனிதன் எல்லா
திசைகளிலும் ஒரு நாள் முழுவதும் நடக்கும்
தூரம் வரை அக்காடைகள் கிடந்தன.
32ஜனங்கள் மகிழ்ச்சியோடு சென்றனர்!
அவர்கள் இரவும் பகலுமாக அவற்றைச்
சேகரித்தனர். ஒவ்வொருவரும் மறுநாளும்
அவற்றைச் சேகரித்தனர். அவர்கள் குறைந்த
பட்சம் 60 மரக்கால் அளவு சேர்த்தனர்.
அவற்றை வெயிலில் காயும்படி முகாம்
களைச் சுற்றிலும் பரப்பி வைத்தனர்.
33ஜனங்கள் அந்த இறைச்சியை உண்ண
ஆரம்பித்தனர். ஆனால் கர்த்தரோ பெருங்
கோபம் கொண்டார். அவர்கள் வாயில்
இறைச்சி இருக்கும்போதே, அவற்றை
அவர்கள் தின்று முடிக்கும் முன்னரே
அவர்கள் நோயுறும்படி கர்த்தர் செய்தார்.
அதனால் பலர் மரித்துப்போனார்கள். அங்
கேயே புதைக்கப்பட்டனர். 34எனவே
ஜனங்கள் அந்த இடத்திற்கு ‘கிப்ரோத்
அத்தாவா’ என்று பெயர் வைத்தனர்.
இறைச்சி மேல் அதிக ஆசை கொண்டு
மரித்தவர்கள் புதைக்கப்பட்ட இடம் என்று
இதற்கு பொருள்.
35கிப்ரோத் அத்தாவா என்ற இடத்
திலிருந்து அவர்கள் பயணப்பட்டு ஆஸ்
ரோத்துக்குப் போய் அங்கே தங்கினார்கள்.

### மிரியாமும் ஆரோனும் மோசே பற்றி முறையிடல்

12 மிரியாமும், ஆரோனும் மோசேக்கு
எதிராகப் பேச ஆரம்பித்தனர். அவன்
ஒரு எத்தியோப்பிய பெண்ணை மணந்து
கொண்டதால் அவனைப் பற்றி அவர்கள்
அவதூறு பேசினார்கள். அவன்
எத்தியோப்பிய பெண்ணை மணந்து
கொண்டது சரியல்ல என அவர்கள்
எண்ணினார்கள். 2அவர்கள் தமக்குள்,
“ஜனங்களோடு பேசுவதற்கு கர்த்தர் மோசே
ஒருவனை மட்டும் பயன்படுத்தவில்லை;
எங்கள் மூலமாகவும் கர்த்தர் பேசினார்”
என்று கூறிக்கொண்டனர்!
கர்த்தர் இதனைக் கேட்டார். 3(மோசே
மிகவும் தாழ்மையான குணமுள்ளவன்.
அவன் தனக்குள் பெருமையுள்ளவன் அல்ல.
பூமியிலுள்ள மற்ற மனிதர்களைவிட அவன்
மிகவும் சாந்த குணமுள்ளவன்.) 4எனவே
கர்த்தர் மோசே, ஆரோன், மிரியாம் ஆகிய
மூவருடனும் பேசி, “நீங்கள் மூவரும்
இப்பொழுது ஆசரிப்புக் கூடாரத்திற்குள்
வாருங்கள்” என்று சொன்னார்.

---

**தீர்க்கதரிசனம்** பொதுவாக இது “தேவனுக்காகப் பேசுவது” எனப் பொருள்படும். ஆனால் இங்கு, தேவனுடைய ஆவியானவர் இந்த மனிதர்களை விசேஷ விதத்தில் ஆட்கொண்டார் எனப் பொருள்படும்.

5உயரமான மேகத்திலிருந்து கர்த்தர்
இறங்கி வந்து கூடாரத்தின் வாசலில் நின்று:
“ஆரோன்! மிரியாம்!” என்று அழைத்தார்.
ஆரோனும் மிரியாமும் அவரிடம் சென்றனர்.
6தேவன், “நான் சொல்வதைக் கேளுங்கள்.
உங்களுக்குத் தீர்க்கதரிசிகள் இருக்கிறார்கள்.
கர்த்தராகிய நான் அவர்களுக்குக் காட்சி
யளிப்பேன். அவர்களோடு கனவில்
பேசுவேன். 7ஆனால் மோசே அத்தகையவன்
அல்ல. மோசே எனது உண்மையான
ஊழியன். நான் அவனை எனது வீட்டில்
எல்லா விதத்திலும் நம்பிக்கையும், உண்மை
யுள்ளவனாகக் காண்கிறேன். 8நான்
அவனோடு பேசும்போது, முகமுகமாய்
பேசுகிறேன். மறைபொருளான கதை
களையல்ல, அவன் தெரிந்துகொள்ள
வேண்டியவற்றை நான் தெளிவாகக்
கூறிவிடுவேன். கர்த்தரின் தோற்றத்தையே
மோசே பார்க்க இயலும். எனவே, ஏன்
நீங்கள் எனது ஊழியனான மோசேக்கு
எதிராகப் பேசத் துணிந்தீர்கள்?” என்று
கேட்டார்.

9கர்த்தர் அவர்கள் மீது பெருங்கோபத்
தோடு இருந்தபடியால் அவர்களைவிட்டு
கர்த்தர் விலகினார். 10மேகம் கூடாரத்
திலிருந்து மேலே எழும்பிச் சென்றது.
ஆரோன் திரும்பி மிரியாமைப் பார்த்தான்.
அவளது தோல் பனியைப் போன்று
வெளுத்திருந்தது. அவளுக்குப் பயங்கரமான
தொழுநோய் ஏற்பட்டது!
11பிறகு ஆரோன் மோசேயிடம், “ஐயா,
தயவு செய்து எங்களை மன்னித்து
விடுங்கள். நாங்கள் முட்டாள்தனமாக பாவம்
செய்து விட்டோம். 12மரித்துப் பிறந்த
குழந்தையைப் போல அவள் தன் தோலை
இழக்க விட்டுவிடாதிரும்” என்றான். (சில
வேளையில் சில குழந்தைகள் பாதி தோல்
அழுகியநிலையில் மரித்துப் பிறப்பதுண்டு.)
13எனவே மோசே கர்த்தரிடம் விண்ணப்
பம் செய்து, “தேவனே தயவு செய்து
இவளது தொழுநோயைப் போக்கிவிடும்”
என்றான்.
14கர்த்தர் மோசேயை நோக்கி, “அவளது
தந்தை அவள் முகத்தின் மீது உமிழ்ந்தால்,
அவளுக்கு ஏழு நாட்கள் அவமானமாக
இருக்கும். எனவே அவளை முகாமிற்கு
வெளியே ஏழு நாட்கள் வைத்திரு. அதற்குப்
பிறகு அவள் குணமாவாள். பின்னர் அவள்
கூடாரத்திற்குத் திரும்பலாம்” என்றார்.
15ஆகையால் அவர்கள் மிரியாமை ஏழு
நாட்கள் முகாமிற்கு வெளியே வைத்திருந்
தனர். அவளைத் திரும்பக் கூடாரத்திற்குள்
அழைத்துக் கொள்ளும்வரை அவர்கள் அந்த
இடத்தை விட்டு நகரவில்லை. 16அதன்பின்
அவர்கள் ஆஸ்ரோத்தை விட்டு பாரான்
பாலைவனத்துக்குச் சென்று, அங்கே முகா
மிட்டனர்.

### கானானுக்குப் போன ஒற்றர்கள்

13 கர்த்தர் மோசேயிடம், 2“கானான்
தேசத்தைக் கண்டு வருமாறு சிலரை
அனுப்பு. இஸ்ரவேல் ஜனங்களுக்கு நான்
கொடுக்கப்போகும் நாடு இதுதான். குடும்பத்
திற்கு ஒரு தலைவன் என்கிற வீதம் 12
கோத்திரங்களில் இருந்தும் 12 தலைவர்களை
அங்கு அனுப்பு” என்று கூறினார்.
3கர்த்தருடைய கட்டளைக்கு மோசே
கீழ்ப்படிந்தான். ஜனங்கள் அனைவரும்
பாரான் பாலைவனத்தில் தங்கியிருந்த
போது இந்தத் தலைவர்களை மோசே
கானானுக்கு அனுப்பிவைத்தான்.

4 ரூபனின் கோத்திரத்திலிருந்து
சக்கூரின் மகனான சம்முவா;
5 சிமியோனின் கோத்திரத்திலிருந்து
ஓரியின் மகனான சாப்பாத்;
6 யூதாவின் கோத்திரத்திலிருந்து
எப்புன்னேயின் மகனான காலேப்;
7 இசக்காரின் கோத்திரத்திலிருந்து
யோசேப்பின் மகனான ஈகால்;
8 எப்பிராயீமின் கோத்திரத்திலிருந்து
நூனின் மகனான ஓசேயா;
9 பென்யமீன் கோத்திரத்திலிருந்து
ரப்பூவின் மகனான பல்த்தி;
10 செபுலோன் கோத்திரத்திலிருந்து
சோதியின் மகனான காதியேல்;
11 யோசேப்பின் கோத்திரத்திலிருந்து
(மனாசே) ஆசின் மகனான காதி;
12 தாண் கோத்திரத்திலிருந்து
கெமல்லியின் மகனான அம்மியேல்;
13 ஆசேர் கோத்திரத்திலிருந்து
மிகாவேலின் மகனான சேத்தூர்;
14 நப்தலி கோத்திரத்திலிருந்து
ஒப்பேதியின் மகனான நாகபி;
15 காத் கோத்திரத்திலிருந்து
மாகியின் மகனான கூவேல்;

16நாட்டைப் போய் கண்டுபிடிக்கவும்,
அதைப்பற்றி அறியவும் மோசேயால்
அனுப்பப்பட்டவர்களின் பெயர்கள் இவை
களே ஆகும். (நூனின் மகனான ஓசேயாவுக்கு
மோசே, யோசுவா என்று பெயர்
வைத்திருந்தான்.)
17மோசே அவர்களைக் கானான்
தேசத்தைக் கண்டு வருமாறு அனுப்பும்
போது அவர்களிடம், “நீங்கள் இந்தப்
பாலைவனத்தின் தெற்குப் பகுதி வழியாகச்
சென்று மலையில் ஏறவேண்டும். 18அந்த
நாடு எவ்வாறு தோற்றம் அளிக்கிறது
என்று பார்க்க வேண்டும், அங்கே வாழுகிற
ஜனங்களைப் பற்றித் தெரிந்துகொள்ளுங்
கள். அவர்கள் பலமானவர்களா, அல்லது
பலவீனமானவர்களா? அவர்களின் எண்
ணிக்கை குறைவா, மிகுதியா? 19நாட்டைப்
பற்றியும் அதில் வாழும் ஜனங்களைப்

பற்றியும் தெரிந்துகொள்ளுங்கள், இது நல்ல
நாடா கெட்ட நாடா? எந்த விதமான
பட்டணங்களில் குடியிருக்கிறார்கள்?
நகரங்களைப் பாதுகாக்க மதில் சுவர்கள்
உள்ளனவா? நகரங்கள் பலமாகப் பாது
காக்கப்பட்டுள்ளனவா? [20]நாட்டிலுள்ள மற்ற
செய்திகளைப் பற்றியும் தெரிந்து
கொள்ளுங்கள். அங்குள்ள மண் விவசாயம்
செய்வதற்குரிய வளம் உள்ளதா, அல்லது
சாரம் அற்றதா? இந்நாட்டில் மரங்கள்
உள்ளனவா? அங்குள்ள பழவகைகளில்
சிலவற்றைக்கொண்டு வர முயலுங்கள்"
என்றான். (அது முதல் திராட்சைகள்
பழுக்கும் காலமாய் இருந்தது.)

[21]எனவே அவர்கள் நாட்டைப் பற்றித்
தெரிந்துகொள்ளச் சென்றனர். பின் அவர்கள்
சீன் பாலைவனம் முதல் ஆமாத்துக்குப்
போகிற வழியாகிய ரேகொப் வரை சுற்றிப்
பார்த்தனர். [22]நெகேவ் வழியாக நாட்டிற்குள்
நுழைந்தனர். தெற்கேயும் எபிரோன் வரை
சென்றார்கள். (எபிரோன் எகிப்திலுள்ள
சோவானுக்கு ஏழு ஆண்டுகளுக்கு முன்
கட்டப்பட்டது.) அங்கே ஆனாக்கின் சந்ததி
யாகிய அகீமானும், சேசாயும் தல்மாயும்
இருந்தார்கள். [23]பிறகு அவர்கள் எஸ்கோல்
பள்ளத்தாக்குவரை சென்றனர். அங்கே
அவர்கள் திராட்சைக்கொடியில் ஒரு
குலையை அறுத்துக் கொண்டனர். அதனை
ஒரு கம்பிலே கட்டி, இரண்டு பேர் தூக்கிக்
கொண்டு வந்தனர். அவர்கள் மாதுளம்
பழங்களிலும், அத்திப் பழங்களிலும்
சிலவற்றைக் கொண்டு வந்தனர். [24]அந்த
இடம் எஸ்கோல்* பள்ளத்தாக்கு என்று
அழைக்கப்பட்டது. காரணம் அந்த இடத்தில்
தான் இஸ்ரவேல் ஜனங்கள் ஒரு குலை
திராட்சை பழத்தைக் கொடியோடு வெட்டிக்
கொண்டு வந்தார்கள்.

[25]அவர்கள் 40 நாட்கள் அந்த தேசத்தை
நன்கு சுற்றி பார்த்தனர். பிறகு அவர்கள்
தங்கள் முகாமுக்கு திரும்பி வந்தனர்.
[26]இஸ்ரவேல் ஜனங்கள் பாரான் பாலை
வனத்தில் காதேஷ் என்ற இடத்துக்கு
அருகில் தம் கூடாரங்களை அடித்திருந்தனர்.
அவர்கள் மோசே, ஆரோன் மற்றும் மற்ற
இஸ்ரவேல் ஜனங்கள் இருந்த இடத்துக்குத்
திரும்பி வந்தனர். அந்நாட்டிலிருந்து
கொண்டு வந்த பழங்களைக் காட்டினார்கள்.
[27]மேலும் அவர்கள் மோசேயிடம், "நீங்கள்
அனுப்பிய இடத்திற்கு நாங்கள் சென்றோம்.
பல நல்ல பொருட்களால் நிறைந்த நாடு
அது. அங்கே பழுத்துள்ள சில பழங்களில்
கொஞ்சம் இதோ; [28]ஆனால் அங்கு ஜனங்கள்
மிகவும் பலமுள்ளவர்களாக வாழ்கிறார்கள்.
நகரங்கள் மிகவும் விரிவானவை, மிகவும்
பலமான பாதுகாப்பு கொண்டவை. அங்கே
சில ஏனாக்கின் ஜனங்களையும் கண்டோம்.
[29]அமலேக்கியர் தென்புறமான நாட்டில்
குடியிருக்கிறார்கள். மலை நாடுகளில்
ஏத்தியரும், எபூசியரும், எமோரியரும்
குடியிருக்கிறார்கள். கானானியர்கள் கடற்
கரைகளிலும், யோர்தான் நதி அருகேயும்
வாழ்கிறார்கள்" என்றனர்.

[30]மோசேயின் அருகே இருந்த ஜனங்
களைக் காலேப் அமைதிபடுத்தி, "நாம் போய்
அந்நாட்டை நமக்குரியதாக எடுத்துக்
கொள்வோம். நாம் எளிதில் இவர்களை
வென்று விடலாம்" என்றான்.

[31]ஆனால் அவனோடு சென்று வந்த
மற்றவர்களோ, "நாம் அவர்களோடு சண்டை
யிட முடியாது. அவர்கள் நம்மைவிட
பலமுள்ளவர்கள்" என்றான். [32]மேலும்
அவர்கள் இஸ்ரவேல் ஜனங்களிடம் தம்மால்
அந்நாட்டில் உள்ளவர்களை வெல்ல
முடியாது என்று கருத்து தெரிவித்தனர்.
அவர்கள், "நாங்கள் பார்வையிட்ட
அந்நாட்டில் பலமுள்ளவர்கள் பலர் இருக்
கின்றனர். எனவே அங்கே செல்லும்
எவரையும் அவர்கள் எளிதாக வென்று
விடுவார்கள். [33]அங்கே நாங்கள் இராட்சதர்
களையும் பார்த்தோம்! (ஏனாக்கின்
சந்ததியிலுள்ள சிலர் இராட்சதப் பிறவி
களாயிருந்தனர்.) எங்கள் பார்வையில்
அவர்களுக்கு முன் நாங்கள் சிறிய
வெட்டுக்கிளிகளைப் போன்று இருந்தோம்.
அவர்களது பார்வையில் நாங்களும் அப்ப
டியே தோன்றினோம்!" என்றார்கள்.

### ஜனங்கள் மீண்டும் முறையிடுதல்

14 அன்று இரவு, முகாம்களில் உள்ள
அனைவரும் கூக்கூரலிட்டுப் புலம்பி
னார்கள். [2]இஸ்ரவேல் ஜனங்கள் மோசேக்கும்,
ஆரோனுக்கும் எதிராக முறையிட்டனர்.
அவர்கள் அனைவரும் கூடி மோசேயிடமும்,
ஆரோனிடமும்,, "நாம் எகிப்து நாட்டிலோ
பாலைவனங்களிலோ
மரித்துப்போயிருக்கலாம், இவ்வாறு புதிய
நாட்டில் கொல்லப்படுவதை விட அது
மேலானது. [3]நாம் இப்புதிய நாட்டில் போரில்
கொல்லப்படுவதற்காகத்தான், கர்த்தர் இங்கே
அழைத்து வந்தாரா? எதிரிகள் நம்மைக்
கொன்றுவிட்டு, நமது மனைவியரையும்,
பிள்ளைகளையும் அபகரித்துக் கொள்
வார்கள். இதைவிட நாம் எகிப்துக்குத்
திரும்பிப் போவது நல்லது" என்றனர்.

[4]பிறகு ஜனங்கள் ஒருவரோடு ஒருவர்,
"நாம் வேறு தலைவரைத் தேர்ந்தெடுத்து,
எகிப்துக்குத் திரும்பிப் போவோம்" எனப்
பேசிக்கொண்டனர்.

[5]அங்கே கூடியிருந்த அனைத்து இஸ்ர
வேல் ஜனங்களின் முன்பும், மோசேயும்,
ஆரோனும் தரையில் பணிந்து வணங்கி

---

**எஸ்கோல்** எபிரெய வார்த்தையின் அர்த்தத்தைப் போன்று இந்த பெயர் "திராட்சைக் கொத்து" எனப் பொருள்படும்.

னார்கள். 6யோசுவாவும் காலேப்பும் மிகவும்
மனமுறிவடைந்தனர். (யோசுவா நூனின்
மகன். காலேப் எப்புன்னேயின் மகன்.
இருவரும் கானான் நாட்டைச் சுற்றிப்
பார்த்து விட்டு வந்தவர்கள்.) 7அங்கே
கூடியிருந்த இஸ்ரவேல் ஜனங்களிடம் அந்த
இருவரும், "நாங்கள் பார்த்த அந்த நாடு
நன்றாக இருக்கிறது. 8அது நல்ல பொருட்கள்
பலவற்றால் நிறைந்த நாடு. கர்த்தர் நம்மீது
விருப்பம் உடையவராக இருந்தால், அவர்
அந்த நாட்டுக்குள் நம்மை வழி நடத்திச்
செல்லுவார். அந்த நாட்டை கர்த்தர் நமக்குத்
தருவார். 9எனவே கர்த்தருக்கு எதிராக
திரும்பாதீர்கள். அந்த நாட்டின் ஜனங்க
ளுக்குப் பயப்படாதீர்கள்! நாம் அவர்களைத்
தோற்கடிக்க முடியும். அவர்களுக்குப்
பாதுகாப்பு இல்லை, எதுவும் அவர்களைக்
காப்பாற்றாது. ஆனால், நம்மோடு கர்த்தர்
இருக்கிறார். எனவே, பயப்படவேண்டாம்"
என்றனர்.

10அனைத்து ஜனங்களும் யோசுவா
வையும் காலேபையும் கல்லெறிந்து
கொன்றுவிட வேண்டும் என்று பேச
ஆரம்பித்தார்கள். ஆனால் கர்த்தரின் மகிமை,
ஆசரிப்புக் கூடாரத்தின் மேலே அவர்கள்
அனைவரும் காணும்படி தோன்றியது.
11கர்த்தர் மோசேயுடன் பேசினார். அவர்,
"எவ்வளவு காலத்திற்கு இந்த ஜனங்கள்
எனக்கெதிராக இருப்பார்கள்? என் மீது
நம்பிக்கையில்லை என்பதைக் காட்டு
கிறார்கள், என் வல்லமையின் மீது
நம்பிக்கை இல்லை என்பதைக்
காட்டுகிறார்கள். நான் எத்தனையோ அடை
யாளங்களை அவர்களுக்கு காட்டியி
ருக்கிறேன். எனினும் என்னை அவர்கள்
நம்ப மறுக்கிறார்கள். நான் அவர்களுக்கி
டையில் பலப் பெருங்காரியங்களைச்
செய்திருக்கிறேன். 12அவர்கள் அனை
வரையும் பெருநோயால் கொன்று
விடுவேன். அவர்களை அழிப்பேன். நான்
இவர்களை விட உங்கள் ஜனத்தை
பெரியதாகவும் பலமிக்கதாகவும் பண்ணு
வேன்" என்றார்.

13பிறகு மோசே கர்த்தரிடம், "நீர் இதனைச்
செய்து விட்டால், எகிப்தியர்கள் இதனைப்
பற்றி கேள்விப்படுவார்கள் நீர் உமது
வல்லமையைப் பயன்படுத்தி உமது
ஜனங்களை எகிப்திலிருந்து வெளியே மீட்டு
வந்தீர், என்பதை அவர்கள் அறிவார்கள்.
14எகிப்திய ஜனங்கள் கானான் ஜனங்களிடம்
இதைப்பற்றி கூறினார்கள். நீரே கர்த்தர்
என்பதை ஏற்கனவே அவர்கள் அறிந்திருக்
கின்றனர் நீர் உமது ஜனங்களோடு
இருப்பதையும், ஜனங்கள் உம்மைப்
பார்த்தனர் என்பதையும் அறிந்திருக்
கின்றனர். அவர்களுக்குத் தனிச்சிறப்புடைய
மேகத்தைப் பற்றி தெரியும். பகல் பொழுதில்
நீர் மேகத்தின் மூலம் வழிநடத்திச்
சென்றதையும், இரவில் அம்மேகம்
நெருப்பாகி ஜனங்களுக்கு வெளிச்சம்
தந்ததையும் அவர்கள் அறிவார்கள். 15எனவே
இப்போது நீர் இந்த ஜனங்களை
அழிக்ககூடாது. நீர் இவர்களை அழித்தால்,
உமது வல்லமையைப்பற்றி அறிந்த
அனைத்து ஜனங்களும், 16'கர்த்தர் தான்
வாக்களித்தபடி தன் ஜனங்களுக்கு நாட்டை
அளிக்க முடியவில்லை. எனவே, அவர்
அவர்களை பாலைவனத்தில் கொன்று
விட்டார் என்று பேசுவார்கள்' என்பார்கள்.

17"இப்போதும், ஆண்டவரே, உமது
பலத்தைக் காட்டும்! உம்மைப்பற்றி நீரே
சொல்லியிருக்கிறபடி செய்யும்! 18'நீர் கர்த்தர்
கோபப்படுகிறதற்கு தாமதம் பண்ணுகிறார்;
கர்த்தர் பேரன்பு கொண்டவர். சட்டங்களை
மீறி குற்றம் செய்கின்றவர்களை கர்த்தர்
மன்னிப்பார். ஆனால் அக்கிரமக்காரர்
களையும், அவர்கள் பிள்ளைகளையும்,
பேரப்பிள்ளைகளையும், அவர்களின்
பிள்ளைகளையும் தண்டிப்பார்' என்று
உம்மைப்பற்றி சொல்லியிருக்கிறபடியால்,
19இப்போது உமது பேரன்பை இந்த
ஜனங்களிடம் காண்பித்து, இவர்களின்
பாவத்தை மன்னித்தருளும், எகிப்தைவிட்டுப்
புறப்பட்ட நாள்முதல் நீர் மன்னித்து வருவது
போலவே, இப்போதும் மன்னித்து விடும்"
என்றான்.

20இதற்கு கர்த்தர், "ஆம்! நீ கேட்டுக்
கொண்டபடியே இந்த ஜனங்களை
மன்னித்து விடுகிறேன். 21ஆனால் உனக்கு
ஒரு உண்மையைக் கூறுகிறேன். நான்
இந்த பூமியில் இருப்பது எவ்வளவு உண்மை
யோ, அதுபோலவே எனது மகிமையும்
பூமியில் நிறைந்திருக்கும் என்பதும்
உண்மையாகும். 22எகிப்திலிருந்து என்னால்
அழைத்து வரப்பட்டவர்கள் எவரும்
கானான் நாட்டைக் காணமாட்டார்கள்.
நான் எகிப்தில் செய்த அற்புதங்களையும்,
நான் பாலைவனத்தில் செய்த பெருஞ்செயல்
களையும், அவர்கள் கண்டிருக்கிறார்கள்.
ஆனாலும், அவர்கள் எனக்குக்
கீழ்ப்படியவில்லை. என்னைப் பத்துமுறை
சோதித்திருக்கிறார்கள். 23நான் அவர்களின்
முற்பிதாக்களிடம் அவர்களுக்கு ஒரு
நாட்டைத் தருவதாக வாக்களித்தேன்.
ஆனால் எனக்கு எதிராக உள்ள எவரும்
அந்த நாட்டிற்குள் நுழைய முடியாது.
24ஆனால் எனது ஊழியனான காலேப்
வேறுபட்டவன். என்னை அவன்
முழுமையாகப் பின்பற்றினான். எனவே
அவனை ஏற்கனவே அவன் பார்வையிட்ட
நாட்டிற்குள் அழைத்துச் செல்வேன். அவனது
ஜனங்கள் அந்நாட்டைப் பெற்றுக்
கொள்வார்கள். 25அமலேக்கியரும், கானானி
யரும் இந்தப் பள்ளத்தாக்கில் வாழ்ந்து
கொண்டிருக்கிறார்கள். எனவே, நாளை இந்த
இடத்தை விட்டுப் புறப்பட்டு செங்

கடலுக்குச் செல்லும் சாலையின் மேலுள்ள
பாலைவனத்துக்குச் செல்லுங்கள்” என்றார்.

### கர்த்தர் ஜனங்களைத் தண்டித்தல்

[26]கர்த்தர் மோசேயிடமும், ஆரோனிடமும்,
[27]“இன்னும் எவ்வளவு காலத்திற்கு இந்தத்
தீய ஜனங்கள் எனக்கு எதிராக
முறையிடுவார்கள்? நான் இவர்களின்
முறையீடுகளையும், புலம்பல்களையும்
பலமுறை கேட்டிருக்கிறேன். [28]‘நீங்கள்
முறையிட்டபடியே கர்த்தர் நிச்சயம்
உங்களுக்குச் செய்வார் என்று அவர்களிடம்
சொல். இதுதான் உங்களுக்கு
நடைபெறப்போகிறது: [29]நீங்கள் பாலை
வனத்தில் மரித்துப்போவீர்கள். இருபதும்
அதற்கு மேலும் வயதுள்ள, எண்ணி
கணக்கிடப்பட்ட ஜனங்கள் மரிப்பார்கள்.
கர்த்தராகிய எனக்கு எதிராக முறை
யிட்டீர்கள். [30]எனவே, நான்
வாக்களித்திருந்த நாட்டிற்குள் எப்புன்
னேயின் மகனான காலேபும், நூனின்
மகனான யோசுவாவும் தவிர வேறு எவரும்
நுழைய முடியாது. [31]அந்நாட்டிலுள்ள
உங்களது பகைவர்கள், உங்கள்
பிள்ளைகளை அபகரித்துக் கொள்வார்கள்
என்று அஞ்சி முறையிட்டீர்கள். ஆனால்,
நான் உங்களுக்குக் கூறுகிறேன், அந்தப்
பிள்ளைகள் அந்நாட்டிற்குள் செல்வார்கள்.
நீங்கள் ஏற்றுக்கொள்ள மறுத்த மகிழ்ச்சியை
அவர்கள் அனுபவிப்பார்கள். [32]உங்களைப்
பொறுத்தவரையில், நீங்கள் இந்தப்
பாலைவனத்திலேயே மரித்துப்போவீர்கள்.
[33]“உங்கள் பிள்ளைகள் இந்தப் பாலை
வனத்தில் மேய்ப்பர்களாக 40 ஆண்டுகள்
அலைந்து திரிவார்கள், நீங்கள் எனக்கு
உண்மையுள்ளவர்களாக இல்லாததால்,
அவர்கள் துன்பப்படுவார்கள். நீங்கள்
அனைவரும் இப்பாலைவனத்தில் மரித்து
விழும்வரை அவர்கள் துன்பப்படுவார்கள்.
[34]40 ஆண்டுகள் உங்கள் பாவங்களுக்காக
நீங்கள் துன்பப்படுவீர்கள். (நீங்கள் கானான்
நாட்டைச் சுற்றி பார்த்தது 40 நாட்கள்.
ஒரு நாளுக்கு ஒரு ஆண்டு வீதம் 40
ஆண்டுகள்.) உங்களுக்கு எதிராக என்னை
நிறுத்தி வைப்பது எவ்வளவு பயங்கர
மானது என்பதை நீங்கள் அறிந்து
கொள்வீர்கள்.
[35]“நானே கர்த்தர். நான் சொல்லி
யிருக்கிறேன், தீய ஜனங்கள் அனைவருக்கும்
நான் சொன்னபடியே செய்வேன் என்று
உறுதியாய்க் கூறுகிறேன். இந்த ஜனங்கள்
அனைவரும் எனக்கு எதிராக ஒன்று
சேர்ந்தார்கள். எனவே அனைவரும்
இப்பாலைவனத்திலேயே மரித்துப்போவார்
கள்” என்றார்.
[36]புதிய நாட்டைப் பார்வையிட்டு
வருமாறு மோசே அனுப்பி வைத்தவர்களில்
சிலர் இஸ்ரவேல் ஜனங்களிடம் வதந்தியைப்
பரப்பினார்கள். அந்நாட்டிற்குள் நுழைகிற
அளவிற்குத் தமக்குப் பலமில்லை என்றனர்.
[37]இஸ்ரவேல் ஜனங்கள் மத்தியில் அவநம்பிக்
கையைப் பரப்பியதற்கு இவர்களே
பொறுப்பாகும். எனவே கர்த்தர் அந்த
ஜனங்களை கொல்லும்படி நோயைக்
கொண்டுவந்தார். [38]ஆனால் நூனின் மகனான
யோசுவாவும், எப்புன்னேயின் மகனான
காலேபும் கானான் நாட்டை பார்வை
யிட்டவர்களில் இந்த இருவரையும் கர்த்தர்
காப்பாற்றினார். மற்றவர்களைச் சாகடித்த
அந்நோய் இவர்களுக்கு வரவில்லை.

### கானான் நாட்டிற்குள் ஜனங்கள் நுழைய முயலுதல்

[39]இஸ்ரவேல் ஜனங்களிடம் மோசே இவை
அனைத்தையும் சொன்னான். அவர்கள்
மிகவும் துக்கப்பட்டு மனங்கசந்து அழுதனர்.
[40]மறுநாள் அதிகாலையில் அவர்கள் உயர
மான மலை நாட்டிற்குள் பிரவேசிக்கப்
புறப்பட்டனர். அவர்கள்: “நாங்கள் பாவம்
செய்து விட்டோம். நாங்கள் கர்த்தரை
நம்பாமல் போனதற்காக வருத்தப்படுகிறோம்.
கர்த்தர் வாக்களித்த நாட்டிற்குள் நாங்கள்
போவோம்” என்றனர்.
[41]ஆனால் மோசே, “கர்த்தரின்
கட்டளைக்கு ஏன் கீழ்ப்படிய மறுக்கிறீர்கள்.
நீங்கள் வெற்றியடையப் போவதில்லை.
[42]அந்த நாட்டிற்குள் போகாதீர்கள். கர்த்தர்
இப்போது உங்களோடு இல்லை. எனவே,
உங்கள் பகைவர்கள் உங்களை எளிதில்
வென்று விடுவார்கள். [43]அமலேக்கியரும்,
கானானியரும் உங்களுக்கு முன்னே அங்கே
இருக்கிறார்கள். அவர்கள் உங்களுக்கு
எதிராகச் சண்டையிடுவார்கள். நீங்கள்
கர்த்தரிடமிருந்து விலகிவிட்டீர்கள். எனவே
நீங்கள் அவர்களோடு சண்டையிடும்போது
கர்த்தர் உங்களோடு இருக்கமாட்டார்.
எனவே நீங்கள் அனைவரும் போரில்
கொல்லப்படுவீர்கள்” என்றான்.
[44]ஆனால் மோசேயின் வார்த்தைகளை
ஜனங்கள் நம்பவில்லை. அவர்கள் மலை
நாட்டை நோக்கிச் சென்றனர். ஆனால்
மோசேயும், கர்த்தருடைய உடன்படிக்கைப்
பெட்டியும் அவர்களோடு போகவில்லை.
[45]மலைநாட்டில் வாழ்ந்த அமலேக்கியரும்,
கானானியரும் கீழே இறங்கி வந்து
அவர்களைத் தாக்கி, அவர்களை எளிதில்
தோற்கடித்தனர். அவர்களை ஓர்மா வரை
துரத்தி அடித்தனர்.

### பலிகளைப் பற்றிய விதிகள்

15 கர்த்தர் மோசேயிடம், [2]“இஸ்ரவேல்
ஜனங்களிடம் பேசி இதனைக் கூறு.
உங்கள் வீடாக இருக்கும்படி நான்
உங்களுக்கு ஒரு நாட்டைக் கொடுக்கிறேன்.
நீங்கள் அதனுள்ளே நுழைந்ததும், [3]நீங்கள்
கர்த்தருக்குச் சில சிறப்புக்குரிய தகன

பலிகளைச் செலுத்த வேண்டும். அவற்றின்
வாசனை கர்த்தருக்கு விருப்பமானது. நீங்கள்
உங்கள் மாடுகளையும், ஆடுகளையும்,
வெள்ளாடுகளையும் தகனபலிக்குப் பயன்
படுத்தலாம். அவற்றை சிறப்பு காணிக்
கைகள், உற்சாகபலிகள், சமாதானப் பலிகள்
அல்லது சிறப்புப் பண்டிகைப் பலிகள்,
ஆகியவற்றுக்காகவும் பயன்படுத்த
வேண்டும்.
4 "ஒருவன் கர்த்தருக்கு காணிக்கையைக்
கொண்டு வரும்போது, அவன் தானியக்
காணிக்கையையும் கொண்டுவர வேண்டும்.
தானியக் காணிக்கை என்பது, ஒரு
மரக்காலில் பத்தில் ஒரு பங்கு மெல்லிய
மாவில் காற்படி எண்ணெய் பிசைந்து
கொண்டு வரவேண்டும். 5 ஒரு ஆட்டுக்
குட்டியைத் தகனபலியாகக் கொண்டுவரும்
ஒவ்வொரு முறையும், நீங்கள் காற்படி
திராட்சைரசத்தையும், பானங்களின் காணிக்
கையாகப் படைக்கவேண்டும்.
6 "நீங்கள் ஒரு ஆட்டுக்கடாவைப்
படைக்கும்போது, தானியக் காணிக்கை
யையும் சேர்த்து படைக்க வேண்டும்.
இந்தத் தானியக் காணிக்கை, ஒரு மரக்காலில்
பத்தில் இரண்டு பங்கான, மெல்லிய மாவிலே
ஒரு படியில் மூன்றில் ஒரு பங்கு ஒலிவ
எண்ணையோடு பிசைந்து கொடுக்க
வேண்டும். 7 ஒரு படியில் மூன்றில் ஒரு
பங்கு, திராட்சைரசத்தைப் பானங்களின்
காணிக்கையாகக் கொடுக்க வேண்டும்.
அதன் மணம் கர்த்தருக்கு மிகவும் விருப்ப
மானது.
8 "ஓர் இளங்காளையைத் தகனபலிய
ாகவோ, சிறப்பான பொருத்தனைப்
பலியாகவோ, சமாதான பலியாகவோ,
கொடுக்கலாம். 9 அப்போது, அதனோடு
தானியக் காணிக்கையையும், ஒரு காளை
யையும் படைக்கவேண்டும். அதாவது, ஒரு
மரக்காலில் பத்தில் மூன்று பங்கான
மெல்லிய மாவுடன், அரைப்படி ஒலிவ
எண்ணையைப் பிசைந்து கொடுக்க
வேண்டும். 10 அதோடு பானங்களின் காணிக்
கையாக அரைப்படி திராட்சைரசத்தையும்
கொடுக்க வேண்டும். இதன் மணம்
கர்த்தருக்கு மிகவும் விருப்பமாக இருக்கும்.
11 நீங்கள் கர்த்தருக்கு தகனபலியாக
கொடுக்கப்போகும் பலி, காளை அல்லது
ஆட்டுக்கடா அல்லது செம்மறி ஆட்டுக்குட்டி
அல்லது வெள்ளாட்டுக் குட்டியை இம்முறை
யில்தான் அளிக்க வேண்டும். 12 நீங்கள்
படைக்கும் ஒவ்வொரு மிருகத்திற்கும்
இவ்வாறுதான் செய்ய வேண்டும்.
13 "இவ்வாறே ஒவ்வொரு இஸ்ரவேலனும்
கர்த்தருக்குப் பிரியமான முறையில்
தகனபலியைச் செலுத்த வேண்டும். 14 உங்க
ளிடையே பிறநாட்டு ஜனங்களும்
வாழ்வார்கள். அவர்களும் தகனபலி
கொடுத்து கர்த்தரை வழிபட விரும்பினால்
இந்த முறையில்தான் செலுத்த வேண்டும்.
15 இதே விதிகள்தான் உங்களுக்கும், உங்க
ளோடு வாழும் பிறநாட்டு ஜனங்களுக்கும்
உரியதாகும். இவ்விதிகள் எக்காலத்திற்கும்
உரியதாக விளங்கும். கர்த்தருக்கு முன்பு,
நீங்களும், உங்களோடு வாழும்
மற்றவர்களும், சமமாகக் கருதப்படுவார்கள்.
16 எனவே, நீங்கள் இந்த விதிகளையும்,
சட்டங்களையும் கண்டிப்பாகக் கடைபிடிக்க
வேண்டும் என்பதுதான் இதற்குப் பொருள்.
அந்தச் சட்டங்களும், விதிகளும் இஸ்ரவேல்
ஜனங்களாகிய உங்களுக்கும், உங்களோடு
வாழும் மற்ற ஜனங்களுக்கும் பொருந்தும்"
என்றார்.
17 கர்த்தர் மேலும் மோசேயிடம்,
18 "இவற்றை இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறு.
நான் உங்களை வேறு நாட்டிற்கு
அழைத்துச் செல்வேன். 19 அங்கு நீங்கள்
விளைந்த உணவை உண்பதற்கு முன்னால்,
அதில் ஒரு பங்கை, கர்த்தருக்கு காணிக்கை
யாகக் கொடுக்க வேண்டும். 20 நீங்கள்
தானியத்தைச் சேகரித்து, மாவாக அரைக்க
வேண்டும். அது அப்பம் செய்வதற்கு
ஏற்றதாக இருக்கவேண்டும். முதலில்
செய்யப்படும் அப்பத்தை, கர்த்தருக்கு
காணிக்கையாகக் கொடுக்க வேண்டும்.
போரடிக்கிற களத்தில் தானியத்தைக் காணிக்
கையாகக் கொடுப்பது போன்று இது
இருக்கும். 21 இவ்விதிமுறை எக்காலத்திற்கும்
தொடர்ந்திருக்கும். நீங்கள் பிசைந்த மாவின்
முதற்பகுதியை, கர்த்தருக்கு அன்பளிப்பாகக்
கொடுக்க வேண்டும்.
22 "இந்தக் கட்டளையை மறதியினால்
தவறி நீங்கள் அநுசரியாமற் போனால்,
நீங்கள் அதற்காக என்ன செய்யவேண்டும்?
23 இந்தக் கட்டளைகளைக் கர்த்தர் உங்களுக்கு
மோசே மூலமாகக் கொடுத்தார். உங்களுக்கு
கொடுத்த அந்நாளிலேயே இக்கட்டளைகள்
செயல்படத் துவங்கியது. அந்நாள் முதல்
எல்லாக் காலத்திற்கும் இக்கட்டளைகள்
உங்களுக்குத் தொடர்ந்து வரும். 24 எனவே,
இஸ்ரவேலின் அனைத்து ஜனங்களும்
திட்டமிடாமல் இந்தக் கட்டளைகளை
காக்கத் தவறினால் அதற்கு என்ன
செய்வீர்கள்? இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும் இந்தத் தவறைச் செய்தால்,
அவர்கள் அனைவரும் சேர்ந்து, ஓர்
இளங்காளையைப் பலி கொடுக்க வேண்டும்.
அதன் மணம் கர்த்தருக்கு மிகவும்
விருப்பமானதாகும். அதோடு தானியக்
காணிக்கையையும், பானங்களின் காணிக்
கையையும் ஒரு காளையோடு
காணிக்கையாக கொடுக்க வேண்டும்.
பாவநிவாரண பலியாக ஒரு வெள்ளாட்டுக்
கடாவையும் பலி கொடுக்க வேண்டும்.
25 "ஜனங்களைத் சுத்தப்படுத்த ஆசாரியன்
அனைத்து சடங்குகளையும் செய்ய
வேண்டும். அவன் இவற்றை இஸ்ரவேல்

ஜனங்கள் அனைவருக்காகவும் செய்ய
வேண்டும். தாங்கள் பாவிகள் என்பது
அவர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம்.
ஆனால், எப்போது அவர்களுக்கு அது
தெரிய வருகிறதோ, அப்போதே அவர்கள்
கர்த்தருக்குக் அன்பளிப்புச் செலுத்த
வேண்டும். அவர்கள் தகனபலியையும் பாவ
நிவாரண பலியையும் கொடுக்க வேண்டும்.
அதனால் அவர்கள் பாவங்கள்
மன்னிக்கப்படும். 26இஸ்ரவேலின் அனைத்து
ஜனங்களும், அவர்களோடு வாழும் மற்ற
ஜனங்களும் மன்னிக்கப்படுவார்கள். அவர்
களுக்குத் தாம் தவறு செய்து கொண்டி
ருக்கிறோம் என்று தெரியாதிருந்தால்
அவர்களும் மன்னிக்கப்படுவார்கள்.
27“ஒரே ஒரு மனிதன் மட்டும் தவறிப்
பாவம் செய்தால் அவன் ஓராண்டு
வயதுள்ள பெண் வெள்ளாட்டைக் கொண்டு
வரவேண்டும். அது பாவப்பரிகார
பலியாகும். 28அவனைத் சுத்தப்படுத்
துவதற்குரிய நியமனத்தை ஆசாரியன்
நிறைவேற்ற வேண்டும். அந்த மனிதன்
கர்த்தர் முன்னால் தவறி குற்றம் செய்து
பாவியானால் ஆசாரியன் அவனுக்கு
நிவாரணம் செய்தபின் அவன் சுத்தமாக்கி
மன்னிக்கப்படுகிறான். 29குற்றம் செய்து
பாவியாகிற எவனுக்கும் இந்தச் சட்டம்
உரியதாகும். இச்சட்டங்கள் இஸ்ரவேல்
குடும்பத்தில் பிறந்த ஜனங்களுக்கும்,
அவர்களிடையே வாழும் அயல் நாட்டுக்
காரர்களுக்கும் உரியதாகும்.
30“ஆனால் ஒருவன் அறிந்தே பாவம்
செய்து கொண்டேயிருக்கிறவனாயிருந்தால்
அவன் கர்த்தருக்கு எதிராகிறான். அவன்
தம் ஜனங்களிடமிருந்து தனியே பிரிக்கப்பட
வேண்டும். இந்தச் சட்டம் இஸ்ரவேல்
குடும்பத்தில் பிறந்த ஜனங்களுக்கும், உங்க
ளோடு வாழும் பிறநாட்டு ஜனங்களுக்கும்
உரியதாகும். 31கர்த்தரின் வார்த்தைகள்
முக்கியமானவை என்று அந்த மனிதன்
நினைக்கவில்லை. அவன் கர்த்தரின்
கட்டளையை உடைத்துவிட்டான். அப்படிப்
பட்டவன் உங்கள் குழுவிலிருந்து நிச்சயம்
விலக்கப்படவேண்டும். அவன் குற்ற
வாளியாகித் தண்டிக்கப்படுவான்!” என்றார்.

### ஓய்வு நாளில் ஒருவன் வேலை செய்தால்

32இந்த நேரத்தில் இஸ்ரவேல் ஜனங்கள்
பாலைவனத்திலேயே இருந்தனர். ஒருவன்
ஓய்வு நாள் ஒன்றில் எரிப்பதற்கான
விறகுகளைக் கண்டு அவற்றைச்
சேகரித்தான். சிலர் இதனைப் பார்த்தனர்.
33அவன் விறகைச் சேகரித்துக்கொண்டு
வரும்போது, அவர்கள் அவனை
மோசேயிடமும், ஆரோனிடமும் அழைத்து
வந்தனர். மற்றவர்களும் அவர்களோடு
சேர்ந்து வந்தனர். 34அவனுக்கு என்ன
தண்டனை கொடுப்பது என்பது
தெரியாததால் அவனை காவலுக்குள் வைத்
திருந்தனர். 35பிறகு மோசேயிடம் கர்த்தர்,
“இவன் சாக வேண்டும். முகாமிற்கு
வெளியே அவனைக் கொண்டு போய்
அனைவரும் அவன் மேல் கல்லெறியுங்கள்”
என்றார். 36எனவே, ஜனங்கள் அவனை
முகாமிற்கு வெளியே கொண்டு போய்
கல்லால் எறிந்தனர். அவர்கள் இதனை
மோசேக்குக் கர்த்தர் கட்டளையிட்டபடியே
செய்தனர்.

### ஜனங்கள் விதிகளை நினைவுபடுத்திக் கொள்ள தேவன் உதவுதல்

37கர்த்தர் மோசேயிடம், 38“இஸ்ரவேல்
ஜனங்களிடம் பேசி கீழ்க்கண்டவற்றை
அவர்களிடம் கூறு. எனது கட்டளைகளை
நினைவுபடுத்திக்கொள்ள நான் உங்களுக்கு
உதவுவேன். பலதுண்டு நூல் கயிறுகளைச்
சேர்த்து, உங்கள் ஆடைகளின் மூலையில்
தொங்கல்களைக் கட்டிக்கொள்ளுங்கள்.
ஒவ்வொரு தொங்கலிலும் நீல நிற நூலைக்
கட்டிக்கொள்ளுங்கள். இதனை இப்போதும்
எக்காலத்திற்கும் அணிந்துகொள்ள வேண்
டும். 39நீங்கள் இம்முடிச்சுகளைப்
பார்க்கும்போதெல்லாம் கர்த்தர் உங்களுக்குக்
கொடுத்த கட்டளைகளை நினைவுபடுத்திக்
கொள்ளுங்கள். அப்போது நீங்கள் அவற்றுக்
குக் கீழ்ப்படிவீர்கள். இதனால் மறதி
காரணமாக பாவம் செய்யாமல் இருப்பீர்கள்.
உங்கள் உடம்பும், கண்களும் விரும்புகிற
காரியங்களை செய்யமாட்டீர்கள். 40எனது
அனைத்து கட்டளைகளுக்கும் நீங்கள்
கீழ்ப்படிய வேண்டும் என்பதை நினைவு
படுத்திக் கொள்ளுங்கள். அப்போது நீங்கள்
உங்கள் தேவனுக்கென்று பரிசுத்தமாக
இருப்பீர்கள். 41நான் உங்கள் தேவனாகிய
கர்த்தர் நானே உங்களை எகிப்திலிருந்து
மீட்டு வந்தேன். நான் உங்கள்
தேவனாயிருக்க இவற்றைச் செய்தேன்.
நானே உங்கள் தேவனாகிய கர்த்தர்” என்று
கூறினார்.

### சில தலைவர்கள் மோசேக்கு எதிராகத் திரும்புதல்

16 கோராகு, தாத்தான், அபிராம், ஓன்
ஆகியோர் மோசேக்கு எதிராகக்
கிளம்பினார்கள். (கோராகு இத்சேயாரின்
மகன். இத்சேயார் கோகாத்தின் மகன்.
கோகாத் லேவியின் மகன். தாத்தானும்,
அபிராமும் சகோதரர்கள். இவர்கள்
எலியாபின் பிள்ளைகள். ஓன் பேலேத்தின்
மகன். இவர்கள் அனைவரும் ரூபன்
சந்ததியைச் சேர்ந்தவர்கள்.) 2இவர்கள் நான்கு
பேரும் 250 இஸ்ரவேல் ஜனங்களைச் சேர்த்து
மோசேக்கு எதிராக நின்றனர். இவர்கள்
அனைவரும் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்
பட்டத் தலைவர்கள். அவர்களை

அனைவருக்கும் தெரியும். 3அவர்கள்
அனைவரும் ஒரு குழுவாகி மோசேக்கும்,
ஆரோனுக்கும் எதிராகப் பேச வந்தனர்.
அவர்கள் மோசேயிடமும், ஆரோனிடமும்
வந்து, “நீங்கள் அளவை மிஞ்சிப் போய்
விட்டீர்கள். நீங்கள் தவறானவர்கள்!
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும் பரிசுத்த
மானவர்கள். அவர்கள் மத்தியில் கர்த்தர்
வாழ்கிறார்! கர்த்தரின் மற்ற
ஜனங்களைவிட, நீங்கள் உங்களை மட்டும்
மிக முக்கியமானவர்களாக்கிக் கொண்
டீர்கள்” என்றனர்.
4இதைக் கேள்விப்பட்டதும் மோசே
தரையில் முகம் குப்புற விழுந்து வணங்கி,
தான் பெருமை இல்லாதவன் என்பதை
வெளிப்படுத்தினான். 5பிறகு மோசே,
கோராகிடமும் அவனைப் பின்பற்றி
வந்தவர்களிடமும்: “நாளை காலையில்
கர்த்தர், தனது உண்மையான ஊழியன்
யாரென்றும் உண்மையில் யார் பரிசுத்த
மானவன் என்பதையும் காட்டுவார். அந்த
மனிதனை அவர் தன்னருகில் அழைப்பார்.
அந்த மனிதனைத் தேர்ந்தெடுத்து, கர்த்தர்
தன்னருகே சேர்த்துக்கொள்வார். 6எனவே,
கோராகே! நீயும் உன்னைப் பின்பற்று
கிறவர்களும் 7நாளை தூபகலசங்களில்
நெருப்பை உண்டாக்கி, அதில் நறுமணப்
பொருட்களையிட்டு, அவற்றைக் கர்த்தருக்கு
முன்னால் கொண்டு வாருங்கள்.
உண்மையில் பரிசுத்தமானவன் யார்
என்பதைக் கர்த்தர் தேர்ந்தெடுப்பார். லேவி
யர்களாகிய நீங்கள்தான் மிதமிஞ்சி
போகிறீர்கள். நீங்கள் தவறானவர்கள்”
என்றான்.
8மேலும் மோசே கோராகிடம், “லேவியர்
களாகிய நீங்கள் நான் சொல்வதைக்
கேளுங்கள். 9இஸ்ரவேல் ஜனங்களின் தேவன்
உங்களைச் சிறப்பாகத் தேர்ந்தெடுத்
திருப்பதால், நீங்கள் மேலும் மகிழ்ச்சி
அடையவேண்டும், இல்லையா? மற்ற
இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து நீங்கள்
வேறுபட்டவர்கள். பரிசுத்தக் கூடாரத்தில்
பணிவிடை செய்வதற்காகக் கர்த்தர்
உங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். அவர்
தம்மருகே உங்களை வரச்செய்திருக்கிறார்.
இஸ்ரவேல் ஜனங்களின் ஆராதனைக்கு
நீங்கள் உதவ வேண்டும். இது போதாதா?
10ஆசாரியர்களுக்கு உதவும்படி லேவியர்
களாகிய உங்களைக் கர்த்தர் தன்னருகே
அனுமதித்திருக்கிறார். ஆனால் நீங்கள்
இப்போது ஆசாரியர்களாக மாறப்
பார்க்கிறீர்கள். 11“நீயும் உன்னைப்
பின்பற்றுகிறவர்களும் சேர்ந்து கர்த்தருக்கு
எதிராக நிற்கிறீர்கள். ஆரோன் ஏதாவது
தவறு செய்தானா? இல்லையே! அவ்வாறு
இருக்க அவனுக்கு எதிராக ஏன்
முறையிடுகிறீர்கள்?” என்றான்.
12பிறகு மோசே எலியாபின்
மகன்களான தாத்தானையும், அபிராமையும்
அழைத்தான். ஆனால் அவர்களோ, “நாங்கள்
வரமாட்டோம்! 13நீர் ஏராளமான நன்மைகள்
நிறைந்த நாட்டிலிருந்து வெளியேற்றி
எங்களை கொல்வதற்காக இப்பாலை
வனத்துக்கு கொண்டு வந்திருக்கிறீர்.
இப்போது எங்களை விட உம்மை திறமை
மிக்கவராக காட்ட விரும்புகிறீர். 14நாங்கள்
ஏன் உம்மை பின்பற்ற வேண்டும்? தேவன்
வாக்களித்த பாலும் தேனும் ஓடுகிற
தேசத்துக்குள் நீர் எங்களைக் கொண்டு
வரவில்லை. நீர் எங்களுக்கு வயல்களோ,
திராட்சை தோட்டங்களோ கொடுக்க
வில்லை. இந்த ஜனங்களையெல்லாம் உங்கள்
அடிமைகளாக்குவதுதான் உங்கள் எண்ண
மா? முடியாது. நாங்கள் அங்கே வர
மாட்டோம்” என்றனர்.
15எனவே, மோசே மிகவும் கோபம்
கொண்டான். அவன் மீண்டும் கர்த்தரிடம்,
“நான் இந்த ஜனங்களுக்கு எதிராக எந்தத்
தவறும் செய்யவில்லை. நான்
அவர்களிடமிருந்து எதையும், ஏன் ஒரு
கழுதையையும் கூட எடுத்துக் கொள்ள
வில்லை! கர்த்தாவே, இவர்களது அன்பளிப்
பை ஏற்றுக் கொள்ளாதிரும்” என்றான்.
16பிறகு மோசே கோராகிடம், “நாளை
கர்த்தருக்கு முன்னால் நீயும், உன்னைப்
பின்பற்றுகிறவர்களும் நிற்கவேண்டும்.
அங்கே உங்களோடு ஆரோனும் நிற்பான்.
17நீங்கள் ஒவ்வொருவரும் நறுமணப் பொருட்
களை இடுகின்ற தூபகலசத்தைக் கொண்டு
வந்து அவற்றைக் கர்த்தருக்கு முன்பு வைக்க
வேண்டும். மூப்பர்களுக்குரிய 250
தூபகலசத்தோடு உனக்கும், ஆரோனுக்குமாக
இரண்டு தூபகலசங்கள் இருக்கும்” என்றான்.
18எனவே, ஒவ்வொரு தலைவரும்
தனக்கென்று தூபகலசமும், அதில் இடு
வதற்கு நறுமணப் பொருட்களும் கொண்டு
வந்தனர். ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில்
அவர்கள் வந்து நின்றனர். மோசேயும்
ஆரோனும் அங்கே நின்றனர். 19கோராகும்
அனைத்து ஜனங்களையும் ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் கூடுமாறு செய்தான்.
பிறகு அங்குள்ள முழு சபையினருக்கும்
கர்த்தரின் மகிமை காணப்பட்டது.
20கர்த்தர் மோசேயிடமும், ஆரோனிடமும்,
21“இந்த ஜனங்களிடமிருந்து விலகி
நில்லுங்கள். அவர்களை இப்போதே
அழிக்கப்போகிறேன்!” என்றார்.
22ஆனால் மோசேயும், ஆரோனும்
தரையில் முகங்குப்புற விழுந்து வணங்கிக்
கதறினார்கள், “தேவனே! நீர் மாம்சமான
எல்லாருடைய ஆவிகளுக்கும் தேவன். ஒரே
ஒருவன் மட்டும் பாவம் செய்தால் நீர்
முழு சபையினர் மீதும் கோபங்
கொள்ளலாமா?” என்றனர்.
23பிறகு கர்த்தர் மோசேயிடம், 24“கோராகு,
தாத்தான், அபிராம் ஆகியோரின் கூடாரத்தை

தவிட்டு விலகிப்போகும்படி ஜனங்களிடம்
கூறு” என்று கேட்டுக் கொண்டார்.
25 மோசே எழுந்து, தாத்தானிடமும்,
அபிராமிடமும் சென்றான். எல்லா
மூப்பர்களும் அவனைப் பின்பற்றினர்.
26 மோசே, ஜனங்களை எச்சரித்து. “அந்தத்
தீய மனிதர்களின் கூடாரங்களை விட்டு
விலகிப்போங்கள், அவர்களுக்குரிய
எதையும் தொடாதீர்கள், நீங்கள் இவ்வாறு
செய்தால் அவர்களது பாவத்தின் காரண
மாக அழிக்கப்படுவீர்கள்” என்றான்.
27 எனவே கோராகு, தாத்தான், அபிராம்
ஆகியோரின் கூடாரத்தை விட்டு விலகிப்
போனார்கள். தாத்தானும் அபிராமும் தங்கள்
கூடாரத்திற்கு வெளியே வந்து, தங்கள்
கூடார வாசல்களில், தங்கள் மனைவி,
குழந்தைகளோடு நின்று கொண்டிருந்தனர்.
28 பிறகு மோசே, “இவை எல்லா
வற்றையும் செய்யுமாறு கர்த்தர் என்னை
அனுப்பினார் என்று ஏற்கெனவே நான்
கூறியுள்ளேன். இதுதான் அதற்கான சாட்சி.
இவை எனது சொந்த எண்ணங்கள் அல்ல
என்பதை இவை உங்களுக்குக் காட்டும்.
29 இங்குள்ள மனிதர்கள் மரித்துப்போவார்கள்.
அவர்கள் சாதாரண ஜனங்களைப் போன்று
மரிப்பார்களேயானால் பிறகு கர்த்தர்
உண்மையில் என்னை அனுப்பவில்லை
என்று தெரிந்து கொள்ளுங்கள். 30 ஆனால்
கர்த்தர் இவர்களை அசாதாரணமான
முறையில் மரிக்க செய்வாரானால், இவர்கள்
கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்தார்கள்
என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். பூமி
பிளந்து இந்த மனிதர்களை அப்படியே
விழுங்கிவிடும். இதுதான் அதற்கு சான்று,
இவர்கள் உயிரோடு தங்கள் கல்லறைக்குள்
புதைக்கப்படுவார்கள். இவர்களுக்குரிய
அனைத்தும், இவர்களோடேயே போய்ச்
சேரும்” என்றான்.
31 மோசே இவற்றைச் சொல்லி முடித்ததும்,
அவர்கள் நின்ற இடத்தில் பூமி பிளந்தது.
32 பூமி தன் வாயைத் திறந்து, அவர்களை
விழுங்கியது போல் இருந்தது. கோராவின்
ஜனங்களும் அவர்களின் குடும்பங்களும
அவர்களுக்குரிய அனைத்தும் பூமிக்குள்
சென்று விட்டன. 33 அவர்கள் தங்கள்
கல்லறைக்குள் உயிரோடு சென்றனர்.
அவர்களுக்குரிய பொருட்களும், அவர்
களோடு சென்றன. பிறகு பூமி
மூடிக்கொண்டது. அவர்கள் முகாமிலிருந்து
மூடப்பட்டு மடிந்தனர்!
34 இஸ்ரவேல் ஜனங்கள் அழிந்து போன
வர்களின் அழுகுரல்களைக் கேட்டனர்,
அவர்கள் பல திசைகளிலும் ஓடிப்போய்,
“இந்தப் பூமி எங்களையும் விழுங்கிக்
கொன்றுவிடும்” என்று கதறினர்.
35 பிறகு கர்த்தரிடமிருந்து நெருப்பு
புறப்பட்டு வந்து தூபதீபம் காட்டிய 250
தலைவர்களையும் அழித்துப் போட்டது.
36 கர்த்தர் மோசேயிடம், 35-36 “ஆசாரிய
னான ஆரோனின் மகனான எலெ
யாசாரிடம் நெருப்புக்குள் அகப்பட்ட தூப
கலசங்களை எடுத்து, அவற்றிலுள்ள
கரியையும், சாம்பலையும் கொட்டி
விடச்சொல். அவர்கள் எனக்கெதிராகப்
பாவம் செய்தார்கள். அவர்களது பாவம்
அவர்களின் உயிரைப் போக்கிவிட்டது.
ஆனால், அக்கலசங்கள் இப்போதும் பரிசுத்
தமானவை. அவற்றை கர்த்தருக்குக்
கொண்டுவந்ததால் பரிசுத்தமடைந்தன.
அவற்றைத் தகடுகளாக அடித்து, பலி
பீடத்தைச் சுற்றிலும் மூடிவைக்கவும். இது
எல்லா இஸ்ரவேல் ஜனங்களுக்கும் ஒரு
எச்சரிக்கையாக இருக்கும்” என்று கூறினார்.
39 எனவே, ஆசாரியனாகிய எலெயாசார்
அனைத்து வெண்கலத் தூபகலசங்களையும்
சேகரித்தான். அவற்றைக் கொண்டு வந்த
மனிதர்கள் மரித்துப்போனார்கள். ஆனால்,
கலசங்கள் இருந்தன. அவன் அவற்றை
அடித்து, தகடாக்கும்படி செய்து, பின்
அத்தகடுகளைப் பலிபீடத்தைச்சுற்றி மாட்டி
வைத்தான். 40 மோசே மூலமாக கர்த்தர்
எலெயாசாருக்குக் கட்டளையிட்டபடிச்
செய்து முடித்தான். இது இஸ்ரவேல்
ஜனங்களுக்கு ஒரு அடையாளம் ஆயிற்று.
ஆரோன் ஜனங்களைத் தவிர வேறு
யாரேனும் நறுமணப் பொருள் கொண்டு
வரக்கூடாது என்பதற்கு இது நினைவூட்டல்
ஆயிற்று. யாராவது கர்த்தருக்கு நறுமணப்
பொருள் கொண்டுவந்தால், கோராகும்
அவனைப் பின்பற்றியவர்களும் மரித்துப்
போனது போல் மரித்துப்போவார்கள்.

### ஆரோன் ஜனங்களைக் காப்பாற்றுதல்

41 மறுநாள் இஸ்ரவேல் ஜனங்கள், மோசேக்
கும், ஆரோனுக்கும் எதிராக முறையிட்டு,
“நீங்கள் கர்த்தருடைய ஜனங்களைக்
கொன்று விட்டீர்கள்” எனக் கூறினர்.
42 மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் நின்று கொண்டு
இருந்தனர். ஜனங்கள் அங்கே கூடி
அவர்களுக்கு எதிராக முறையிட்டனர்.
ஆனால் அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தை
நோக்கியபோது அதை மேகம் சூழ்ந்தது.
அங்கே கர்த்தரின் மகிமை காணப்பட்டது.
43 பிறகு மோசேயும் ஆரோனும் ஆசரிப்புக்
கூடாரத்தின் முன்பாக வந்தனர்.
44 மோசேயிடம் கர்த்தர், 45 “இந்த
ஜனங்களிடமிருந்து விலகி நில்லுங்கள். நான்
இவர்களை உடனே அழிக்கப்போகிறேன்”
என்றார். எனவே மோசேயும் ஆரோனும்
தரையில் முகம் குப்புற விழுந்து வணங்
கினார்கள்.
46 பிறகு மோசே ஆரோனிடம், “உனது
வெண்கலத் தூபகலசத்தை எடுத்துக்கொள்,
பலிபீடத்திலுள்ள நெருப்பை அதில் இடு,

பின் நறுமணப் பொருளைப்போடு,
அவற்றை ஜனங்களிடம் கொண்டு போய்
காட்டு, அது அவர்களைத் சுத்தமாக்கும்.
அவர்கள் மேல் கர்த்தர் கோபமாக உள்ளார்.
அவர்களுக்கு துன்பம் ஏற்கனவே தொடங்கி
விட்டது” என்றான்.
47-48ஆரோன் மோசே சொன்னபடி தூப
கலசமும், நெருப்பும், நறுமணப்
பொருட்களும் எடுத்துக்கொண்டு ஜனங்கள்
மத்தியில் ஓடினான். ஆனால், ஏற்கனவே
நோய் அவர்களிடையே துவங்கிவிட்டது.
எனவே ஆரோன் மரித்துப்போன
வர்களுக்கும், இன்னும் உயிரோடு
இருந்தவர்களுக்கும் இடையே நின்று
அவர்களைத் சுத்தப்படுத்துவதற்குரிய
வற்றைச் செய்தான். நோயும்
நிறுத்தப்பட்டது. 49ஆனால் 14,700 பேர்
நோயால் மரித்துப்போனார்கள். கோரா
கினால் மரித்தவர்கள் இதில் கணக்கிடப்பட
வில்லை. 50எனவே நோய் நிறுத்தப்பட்டது.
பின் ஆரோன் ஆசரிப்புக் கூடாரத்தின்
வாசலில் நின்ற மோசேயிடம் திரும்பி
வந்தான்.

## ஆரோன் தான் தலைமை ஆசாரியன் என தேவன் உறுதிப்படுத்துதல்

17 கர்த்தர் மோசேயிடம், 2“இஸ்ரவேல்
ஜனங்களிடம் பேசு. அவர்
களிடமிருந்து 12 கைத்தடிகளை வாங்கு. 12
கோத்திரங்களின் தலைவர்களிடமிருந்தும்
ஒவ்வொரு கைத்தடியாகப் பெறவேண்டும்.
ஒவ்வொருவரின் பெயரையும் அவரவர்
கைத்தடியிலும் எழுது. 3லேவியின்
கைத்தடியில் ஆரோனின் பெயரை எழுது.
ஒவ்வொரு கோத்திரத்திற்கும் ஒரு கைத்தடி
வீதம் பன்னிரண்டு இருக்க வேண்டும்.
4அக்கைத்தடிகளை ஆசரிப்புக் கூடாரத்
திற்குள் உடன்படிக்கைப் பெட்டியின்
முன்னால் வை. அந்த இடத்தில்தான் நான்
உன்னைச் சந்திப்பேன். அவர்களில்
ஒருவனை நான் உண்மையான ஆசாரி
யனாக தேர்ந்தெடுப்பேன். 5நான் யாரைத்
தேர்ந்தெடுப்பேனோ அவனது கைத்தடியில்
இலைகள் துளிர்த்திருக்கும். இதன் மூலம்
உனக்கும் எனக்கும் எதிராக முறையிடு
பவர்களை நான் தடுப்பேன்” என்று
கூறினார்.
6இஸ்ரவேல் ஜனங்களிடம் மோசே
பேசினான். ஒவ்வொரு 12 கோத்திரங்களின்
தலைவரும் தங்கள் கைத்தடியை அவனிடம்
கொடுத்தார்கள். மொத்தம் 12 கைத்தடிகளைப்
பெற்றான். ஒவ்வொரு கோத்திரத்திற்கும் ஒரு
கைத்தடி என்பதாக இருந்தது. ஒரு
கைத்தடியில் ஆரோனுடைய பெயர்
இருந்தது. 7மோசே அனைத்து கைத்தடி
களையும் கர்த்தருக்கு முன்னால்
உடன்படிக்கைக் கூடாரத்திற்குள் வைத்தான்.
8மறுநாள் மோசேக் கூடாரத்திற்குள்
நுழைந்தபோது லேவியின் குடும்பத்தி
லிருந்து வந்த ஆரோனின் கைத்ததடியில்
புதிய இலைகள் துளிர்விட்டிருந்ததை
மோசே பார்த்தான். அதில் கிளைகளும்
தோன்றி வாதுமை பழங்களும் காணப்
பட்டன. 9மோசே கர்த்தரின் சமூகத்திலிருந்து
கைத்தடிகளை எடுத்து வந்து, இஸ்ரவேல்
ஜனங்களிடம் அவற்றைக் காட்டினான்.
அவரவர் தங்கள் கைத்தடிகளை பார்த்து
எடுத்துக்கொண்டனர்.
10பிறகு கர்த்தர் மோசேயிடம்,
“ஆரோனின் கைத்தடியை மீண்டும்
கூடாரத்திற்குள் எனது உடன்படிக்கைப்
பெட்டியின் முன்பாக வை. எப்போதும்
எனக்கு எதிராகத் திரும்புவோருக்கு இது
ஒரு எச்சரிக்கையாக இருக்கும். இது எனக்கு
எதிராக அவர்கள் முறையிடுவதை தடுக்கும்.
எனவே அவர்களை நான் அழிக்க
மாட்டேன்” என்று கூறினார். 11எனவே
மோசே கர்த்தர் தனக்குக் கட்டளையிட்டபடி
செய்து முடித்தான்.
12இஸ்ரவேல் ஜனங்கள் மோசேயிடம்,
“நாங்கள் மரித்துப்போவோம் என்பது
எங்களுக்குத் தெரியும். நாங்கள் தொலைந்
தோம். நாங்கள் அனைவரும் அழிந்து
போவோம். 13எவராவது கர்த்தரின் பரிசுத்த
இடத்தின் அருகில் வந்தாலும் மரித்துப்
போவார்கள். நாங்கள் அனைவரும் மரித்துப்
போவோம் என்பது உண்மையா?” என்று
கேட்டனர்.

## ஆசாரியர்கள் மற்றும் லேவியர்களின் வேலை

18 கர்த்தர் ஆரோனிடம், “நீயும், உனது
மகன்களும், உன் தந்தையின்
குடும்பத்தில் உள்ளவர்களுமே பரிசுத்தமான
இடத்தில் ஏற்படும் தவறுகளுக்குப் பொறுப்
பாவீர்கள். ஆசாரியர்களுக்கு எதிராக
நடைபெறும் தவறுகளுக்கும் நீயும், உனது
மகன்களும் பொறுப்பாவீர்கள். 2உனது
கோத்திரத்தில் உள்ள மற்ற லேவியர்
களையும் உங்களோடுச் சேர்த்துக்கொள்.
ஆசரிப்புக் கூடாரத்தில் நீங்களும் உங்கள்
மகன்களும் செய்யும் வேலைகளுக்கு
அவர்கள் உதவுவார்கள். 3லேவியரின்
குடும்பத்தில் உள்ள அனைத்து ஜனங்களும்
உங்கள் கட்டுப்பாட்டிற்குள் இருப்பார்கள்.
கூடாரத்திற்குள் செய்ய வேண்டிய
அனைத்து வேலைகளையும் அவர்கள்
செய்வார்கள். ஆனால் அவர்கள் பரிசுத்த
மான இடத்தின் அருகிலோ, பலிபீடத்தின்
அருகிலோ போகக்கூடாது. அவ்வாறு
போனால் மரித்துப் போவார்கள். நீங்களும்
மரித்துப்போவீர்கள். 4அவர்கள் உங்களோடு
சேர்ந்து வேலை செய்வார்கள். அவர்களே
ஆசரிப்புக் கூடாரத்தைக் காக்கும்
பொறுப்புள்ளவர்கள். கூடாரத்திற்குள் நடை
பெறவேண்டிய அனைத்து வேலைகளையும்

அவர்கள் செய்வார்கள். நீங்கள் இருக்கும்
இடத்தில் உங்கள் அருகில் எவரும்
வரக்கூடாது.
5 "இஸ்ரவேல் ஜனங்கள் மீது திரும்பவும்
கோபாக்கினை விழாதபடி நீங்கள் பரிசுத்த
இடத்தையும் பலிபீடத்தையும் காக்கிற
பொறுப்புடையவர்கள். நான் மீண்டும்
இஸ்ரவேல் ஜனங்கள் மீது கோபம் கொள்ள
விரும்பவில்லை. 6 அனைத்து இஸ்ரவேல்
ஜனங்களிடமிருந்தும் நானே லேவியர்களைத்
தேர்ந்தெடுத்தேன். அவர்கள் உங்களுக்கு ஒரு
பரிசைப் போன்றவர்கள். நான், அவர்களை
உங்களுக்காகக் கர்த்தருக்குச் சேவை
செய்யவும், ஆசரிப்புக் கூடாரத்திற்குள் சில
வேலைகளைச் செய்யவும் தந்தேன். 7 ஆனால்
ஆரோனே! நீயும் உன் மகன்களும் மட்டும்
ஆசாரியர்களாகப் பணிபுரிய வேண்டும்.
பலிபீடத்தின் அருகில் செல்லும் தகுதியுடை
யவர்கள் நீங்கள் மட்டுமே. மகாபரிசுத்த
இடத்திற்குள் திரைக்குப் பின்னால் செல்லும்
தகுதி உடையவர்களும் நீங்கள் மட்டுமே.
ஆசாரியர்களாகப் பணிபுரிவதை உங்களுக்கு
ஒரு பரிசாகக் கொடுத்திருக்கிறேன். வேறு
எவராவது எனது பரிசுத்த இடத்திற்கு
அருகில் வந்தால் கொல்லப்படுவார்கள்"
என்று கூறினார்.
8 பிறகு கர்த்தர் ஆரோனிடம், "ஜனங்கள்
எனக்குத் தருகிற எல்லா அன்பளிப்பு
களுக்கும் உங்களையே பொறுப்பாளர்களாக
ஆக்கினேன். இஸ்ரவேல் ஜனங்கள்
கொடுக்கும் அனைத்து பரிசுத்தமான
அன்பளிப்புகளையும் நான் உங்களுக்குத்
தருகிறேன். அவற்றை நீயும் உனது
மகன்களும் பங்கிட்டுக்கொள்ள வேண்டும்.
அவை எப்பொழுதும் உங்களுக்கு உரியது.
9 ஜனங்கள் பலிகளையும், தானியக் காணிக்
கைகளையும், பாவப்பரிகார பலிகளையும்,
குற்ற பரிகாரப் பலிகளையும் கொண்டு
வருவார்கள். அவை மிகவும் பரிசுத்தமா
னவை. தகனம் செய்யப்படாத
பலிகளெல்லாம் உங்கள் பங்காகக்
கிடைக்கும். அவை உனக்கும் உன்
மகன்களுக்கும் உரியதாகும். 10 அவற்றை
மிகப் பரிசுத்தமான இடத்தில் வைத்துதான்
உண்ணவேண்டும். உங்கள் குடும்பத்திலுள்ள
ஒவ்வொரு ஆணும் உண்ணலாம். ஆனால்
அவை பரிசுத்தமானவை என்பதை நீங்கள்
மறக்கக் கூடாது.
11 "இஸ்ரவேலர்கள் தரும் அசைவாட்டும்
பலிகளும், உங்களுக்கு உரியதாகும். நான்
அவற்றை உனக்கும், உன் மகன்களுக்கும்,
உனது மகள்களுக்கும் தருவேன். இது
உனது பங்காகும். உன் குடும்பத்திலுள்ள
தீட்டு இல்லாத எல்லோரும் அதனை
உண்ணலாம்.
12 "அதோடு நான் உனக்கு சிறந்த ஒலிவ
எண்ணெயையும், புதிய திராட்சைரசத்
தையும், தானியத்தையும் தருவேன். இவை
இஸ்ரவேல் ஜனங்களால் கர்த்தராகிய
எனக்குக் கொடுக்கப்பட்டவை. இவை
அறுவடையின்போது, முதலில் கிடைக்
கப்பெற்றவையாயிருக்கும். 13 ஜனங்கள்
அறுவடை செய்யும் போதெல்லாம் முதலில்
கிடைத்ததைக் கர்த்தருக்குக் கொண்டு
வரவேண்டும். அவற்றையெல்லாம் உனக்குத்
தருவேன். உன் குடும்பத்தில் உள்ள தீட்டு
இல்லாத ஒவ்வொருவரும் அவற்றை
உண்ணலாம்.
14 "இஸ்ரவேல் ஜனங்களால் கர்த்தருக்குக்
கொடுக்கப்படும் அனைத்தும் உங்களுக்கு
உரியதாகும்.
15 "ஒரு பெண்ணின் முதல் குழந்தையும்
ஒரு மிருகத்தின் முதல் குட்டியும்
கர்த்தருக்குக் கொடுக்கப்பட வேண்டும். அந்த
விலங்கின் முதலீற்று தீட்டுள்ளதாக
இருந்தால் கொடுப்பவரே அதைத் திரும்ப
விலைக்கு வாங்கிக் கொள்ளவேண்டும்.
முதலில் பிறந்த குழந்தை காணிக்கையாகக்
கொடுக்கப்படும்போது அதுவும் திரும்ப
வாங்கப்பட வேண்டும். அப்பொழுது
அக்குழந்தை மறுபடியும் அதே குடும்பத்திற்கு
உரியதாகிவிடும். 16 அக்குழந்தை ஒரு மாத
வயதுடையதாக இருந்தால், அதற்குரிய
தொகையைக் கொடுக்கவேண்டும். அத்
தொகை 2 அவுன்ஸ் வெள்ளியாகும். அது
அதிகாரப் பூர்வமான அளவு முறையில் 5
சேக்கல் உடையதாக எடையிடப்பட
வேண்டும். ஒரு சேக்கல் அதிகாரப்
பூர்வமான அளவில் 20 கேராவாகும்.
17 "ஆனால் நீங்கள் முதலில் பிறந்த
காளைக்கும், ஆட்டுக்கும், வெள்ளாட்டுக்கும்
பணம் கொடுக்கக் கூடாது. அவை
பரிசுத்தமானவை. அவற்றின் இரத்தத்தைப்
பலிபீடத்தின்மேல் தெளிக்கவேண்டும்.
அவற்றின் கொழுப்பை எரிக்க வேண்டும்.
இது நெருப்பிலிடப்படும் தகன பலியாகும்.
இதின் மணம் கர்த்தருக்குப் பிரியமான
தாயிருக்கும். 18 அவற்றின் இறைச்சியானது
உங்களுக்கு உரியதாகும். அசைவாட்டும்
பலியாகச் செலுத்தப்பட்ட மார்புக்
கண்டமும், உங்களுக்கு உரியது. மற்ற
பலிகளின் தொடைக்கறியும் உங்களுக்கு
உரியது. 19 ஜனங்களால் கொடுக்கப்படும்
பரிசுத்தமான அன்பளிப்புகளையும்
கர்த்தராகிய நான் உங்களுக்குத் தருவேன்.
இது உங்கள் பங்காகும். நான் இவற்றை
உனக்கும், உன் மகன்களுக்கும், உன்
மகள்களுக்கும் தருவேன். இந்த சட்டம்
எல்லாக் காலத்திற்கும் உரியதாகும். இது
கர்த்தரோடு செய்யப்பட்ட உடன்படிக்
கையாகும். இதனை உடைக்க முடியாது.
நான் இந்த வாக்குறுதியை உனக்கும்,
உன் சந்ததிகளுக்கும் தந்துள்ளேன், இது
மாறாததாகும்" என்று கூறினார்.
20 கர்த்தர் மேலும் ஆரோனிடம், "நீ
எவ்வித நிலத்தையும் பெறமாட்டாய்.

மற்றவர்களுக்குச் சொந்தமான எதுவும்
உனக்குச் சொந்தமாவதில்லை. கர்த்தராகிய
நானே உனக்கு உரியவர். இஸ்ரவேல்
ஜனங்கள் நான் வாக்களித்தபடி நிலத்தைப்
பெற்றுக்கொள்வார்கள். ஆனால் என்னை
நானே உனக்கு சுதந்திரமாகத் தந்துள்ளேன்.
21“இஸ்ரவேல் ஜனங்கள் தங்களுக்குரிய
அனைத்திலும் பத்தில் ஒரு பங்கை
உங்களுக்குத் தருவார்கள். எனவே நான்
அந்தப் பத்தில் ஒன்றை லேவியின்
சந்ததியினருக்குக் கொடுக்கிறேன். ஆசாரிப்புக்
கூடாரத்தில் பணிபுரியும் அவர்களுக்கு
இதுவே சம்பளமாகும். 22ஆனால் இஸ்ர
வேலரின் ஜனங்களில் மற்றவர்கள்
ஆசாரிப்புக் கூடாரத்தின் அருகில் சென்றால்
அவர்கள் சாகடிக்கப்படுவர்! 23ஆசாரிப்புக்
கூடாரத்திற்குள் பணியாற்றும் லேவியர்கள்
இதற்கு எதிரான பாவங்களுக்குப் பொறுப்
பாவார்கள். இந்த சட்டம் எல்லாக்
காலத்திற்குரியதாகும். நான் மற்ற இஸ்ரவேல்
ஜனங்களுக்கு வாக்களித்த நிலமானது
லேவியர்களுக்கும் கிடைக்காது. 24ஆனால்
இஸ்ரவேல் ஜனங்கள் தங்களுக்குரிய
அனைத்திலும் பத்தில் ஒரு பங்கை எனக்கு
தருவார்கள். நான் அதனை லேவியர்
களுக்குத் தருவேன். எனவே லேவியர்கள்
மற்ற இஸ்ரவேலரைப் போல நிலம் எதையும்
பெற்றுக் கொள்ளமாட்டார்கள்” என்று
கூறினார்.
25கர்த்தர் மோசேயிடம், 26“லேவியர்
களிடம் இவற்றை கூறு: இஸ்ரவேல்
ஜனங்கள் தங்களுக்குரிய அனைத்திலும்
பத்தில் ஒரு பங்கை கர்த்தருக்குத்
தருவார்கள். அவை லேவியர்களுக்கு
உரியதாகும். ஆனால், நீங்கள் அதில் பத்தில்
ஒரு பங்கைக் கர்த்தருக்குக் காணிக்கையாகக்
கொடுக்க வேண்டும். 27அறுவடையானதும்
தானியத்தையும், திராட்சைரசத்தையும்
நீங்கள் பெறுவீர்கள். அவற்றையும் கர்த்த
ருக்குக் காணிக்கையாக செலுத்த வேண்டும்.
28இவ்வாறு மற்ற இஸ்ரவேல் ஜனங்கள்
செய்வதுபோலவே, நீங்களும் கர்த்தருக்குக்
காணிக்கையைச் செலுத்த வேண்டும். ஜனங்
கள் கர்த்தருக்குக் கொடுக்கும் பத்தில் ஒரு
பங்கு உங்களுக்குரியது. உங்களுக்குக்
கொடுக்கப்படும் பத்தில் ஒரு பங்கில்,
கர்த்தருக்கு ஒரு பங்கைத் தரவேண்டும்.
பிறகு ஆசாரியனாகிய ஆரோனுக்கும் அதில்
பத்தில் ஒரு பங்கைக் கொடுக்க வேண்டும்.
29இஸ்ரவேல் ஜனங்கள் தங்களுக்குரிய
அனைத்திலும் பத்தில் ஒரு பங்கைத் தரும்
போது நீங்கள் அவற்றில் சிறந்த
பரிசுத்தமானவற்றைத் தேர்ந்தெடுக்க வேண்
டும். அவற்றையே நீங்கள் உங்கள் பாகத்தில்
பத்தில் ஒரு பங்காகக் கர்த்தருக்குத் தர
வேண்டும்.
30“மோசே, லேவியர்களிடம் கூறு:
இஸ்ரவேல் ஜனங்கள் தங்கள் அறுவடையின்
போது தானியத்திலும் திராட்சைரசத்திலும்
பத்தில் ஒரு பங்கைத் தருவார்கள். நீங்கள்
அவற்றில் சிறந்த பங்கைக் கர்த்தருக்குத்
தரவேண்டும். 31மீதமுள்ளவற்றை நீங்களும்
உங்கள் குடும்பத்தாரும் உண்ணலாம். நீங்கள்
ஆசாரிப்புக் கூடாரத்திற்குள் செய்யும்
வேலைகளுக்கு இதுவே கூலியாகும். 32நீங்கள்
எப்போதும் உங்கள் பங்கிலுள்ள சிறந்த
பகுதியை மட்டும் கர்த்தருக்குக் கொடுத்து
வந்தால் பிறகு எப்போதும் நீங்கள்
குற்றவாளியாகமாட்டீர்கள். அந்த
அன்பளிப்புகளை எல்லாம் இஸ்ரவேல்
ஜனங்களால் தரப்பட்டப் பரிசுத்த
காணிக்கைகள் என்பதை எப்போதும்
நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்,
அப்போது நீங்கள் அழியமாட்டீர்கள்”
என்று கூறினார்.

## சிவப்பு பசுவின் சாம்பல்

19 கர்த்தர் மோசேயிடமும்,
ஆரோனிடமும் பேசினார். அவர்,
2“இந்த சட்டங்களெல்லாம் கர்த்தர்
இஸ்ரவேல் ஜனங்களுக்குத் தந்த போதனை
களாகும். பழுதற்ற ஒரு சிவப்புப் பசுவைக்
கொண்டு வாருங்கள். அப்பசு நுகத்தடியில்
பூட்டப்படாததாகவும் ஊனமில்லாததாகவும்
இருக்க வேண்டும். 3கன்று போடாத இளம்
பசுவை ஆசாரியனாகிய எலெயாசாரிடம்
கொடுங்கள். அவன் அதை வெளியே
கொண்டு போய் கொல்லவேண்டும். 4பிறகு
எலெயாசார் அதன் இரத்தத்தில் கொஞ்சம்
தன் விரல்களால் தொட்டு பரிசுத்த
கூடாரத்திற்குள் தெளிக்க வேண்டும்.
இவ்வாறு அவன் ஏழு முறை செய்ய
வேண்டும். 5பின்பு அவன் கண்களுக்கு
முன்னால் அந்தப் பசுவின் தோல், சதை,
இரத்தம், குடல் அனைத்தும் எரிக்கப்பட
வேண்டும். 6பிறகு, ஆசாரியர் கேதுருக்
கட்டையையும், ஈசோப்பையும், சிவப்பு
நூலையும் எடுத்து காளை எரிக்கப்படும்
இடத்தில் போடவேண்டும். 7பின்னர்
ஆசாரியன் தன்னையும், தனது உடை
களையும் தண்ணீரால் சுத்தம் செய்ய
வேண்டும். அதற்குப்பின் அவன்
கூடாரத்திற்குள் வரவேண்டும். அவன்
மாலைவரை தீட்டாக இருப்பான்.
8காளையை எரித்தவனும் தன்னைக் கழுவி
உடலைச் சுத்தமாக்க வேண்டும். மேலும்
தனது ஆடையையும் தண்ணீரால் கழுவ
வேண்டும். அவனும் அன்று மாலைவரை
தீட்டாக இருப்பான்.
9“பிறகு தீட்டு இல்லாத ஒருவன்
எரிந்துபோன காளையின் சாம்பலைச்
சேகரித்து அவற்றைக் கூடாரத்திற்கு
வெளியே சுத்தமான இடத்தில் கொட்ட
வேண்டும். ஜனங்கள் இதனை தம்மை
சுத்தப்படுத்திக் கொள்ளும் சடங்குகளில்
பயன்படுத்திக் கொள்ளலாம். இச்சாம்பல்

ஒருவனின் பாவத்தைப் போக்கவும் பயன்படும்.
10"காளையின் சாம்பலைச் சேகரித்தவன் தனது ஆடைகளைத் துவைக்க வேண்டும். அவன் அன்று மாலைவரை தீட்டாக இருப்பான்.
"இந்த விதிகள் எல்லாக் காலத்துக்கும் இஸ்ரவேல் ஜனங்கள் அனைவருக்கும் உரியதாகும். இந்த விதி உங்களோடு வாழ்கிற அயல்நாட்டவருக்கும் உரியதாகும்.
11எவனாவது, மரித்துப் போனவனின் சரீரத்தை தொட்டால், அவன் ஏழு நாட்களுக்குத் தீட்டுள்ளவனாக இருப்பான்.
12அவன் தன்னைச் தீட்டுக்கழிக்கும் தண்ணீரால் மூன்றாவது நாளும், ஏழாவது நாளும் கழுவ வேண்டும். அவ்வாறு அவன் செய்யாவிட்டால் தொடர்ந்து அவன் தீட்டுள்ளவனாக இருப்பான். 13ஒருவன் ஒரு மரித்த சரீரத்தைத் தொட்டால், அவன் தீட்டுள்ளவன் ஆகிறான். அவன் தீட்டுள்ள வனாக பரிசுத்த கூடாரத்திற்குள் சென்றால், அதுவும் தீட்டாகிவிடும். எனவே அவன் இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து தனியே பிரித்து வைக்கப்படுவான். தீட்டுள்ளவன் மேல் தீட்டுக்கழிக்கும் தண்ணீர் தெளிக்கப் படாவிட்டால், அவன் தொடர்ந்து தீட்டுள்ளவனாக இருப்பான்.
14"இவை அனைத்தும் தங்கள் கூடாரத்திற்குள் மரித்துப் போகிறவர்களைப் பற்றிய விதிகளாகும். ஒருவன் தனது கூடாரத்தில் மரித்தால், அக்கூடாரத்திலுள்ள அனைத்துப் பொருட்களும் தீட்டாகும். அவை ஏழு நாட்களுக்குத் தீட்டுள்ளவையாக இருக்கும். 15ஒவ்வொரு ஜாடியும், பாத்திரமும் மூடப்படாமல் இருந்தால் தீட்டாகும்.
16வெளியிலே எவனாவது பிணத்தைத் தொட்டால், ஏழு நாட்களுக்குத் தீட்டுள்ளவனாக இருப்பான். போரில் கொல்லப்பட்டவனையோ, மரித்தவனின் எலும்பையோ தொட்டாலும் அவன் தீட்டுள்ளவன் ஆவான்.
17"எனவே அவனை மீண்டும் சுத்தப்படுத்த எரித்த காளையின் சாம்பலை நீங்கள் பயன்படுத்த வேண்டும். ஒரு ஜாடிக்குள் சாம்பலைப்போட்டு தண்ணீரை அதில் விடவேண்டும். 18தீட்டில்லாத ஒருவன் ஈசோப்புக் கிளையை எடுத்து அதை தண்ணீரில் நனைக்க வேண்டும். பிறகு அதனைக் கூடாரம், சகல பொருட்கள், ஜனங்கள் ஆகியவற்றின் மீது தெளிக்க வேண்டும். மரித்த மனிதனின் சரீரத்தைத் தொட்டவன் மீதும் இவ்வாறு தெளிக்க வேண்டும். போரில் கொல்லப்பட்ட ஒருவனைத் தொட்டவன் மீதும், மரித்துப் போனவனின் எலும்புகளைத் தொட்டவன் மீதும் இவ்வாறு தெளிக்க வேண்டும்.
19"தீட்டு இல்லாத ஒருவன், இத்தண்ணீரை தீட்டுள்ளவன் மீது மூன்றாவது நாளும், ஏழாவது நாளும் தெளிக்க வேண்டும். ஏழாவது நாள் தீட்டுள்ளவன் சுத்தமாவான். அவன் தனது ஆடையை தண்ணீரில் துவைக்க வேண்டும். மாலையில் அவன் சுத்தமாகி விடுவான்.
20"ஒருவன் தீட்டுள்ளவனாகி அதிலிருந்து சுத்தமாகாமல் இருந்தால் அவனை இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து ஒதுக்கி வைக்க வேண்டும். அவன் மீது தீட்டுக்கழிக்கும் தண்ணீர் தெளிக்கப்படா ததால் அவன் சுத்தமாகவில்லை; ஆகையால், அவன் பரிசுத்தக் கூடாரத்தையும் தீட்டாக்கி விடுவான். 21இந்த விதி எல்லாக் காலத்திற்கும் உரியது. ஒருவன் தீட்டுக்க ழிக்கும் தண்ணீரால் தெளிக்கப்பட்டாலும் அவன் தன் ஆடைகளை தண்ணீரில் துவைக்க வேண்டும். தீட்டுக்கழிக்கும் தண்ணீரைத் தொடுகிற எவனும் மாலை வரை தீட்டுள்ளவனாக இருப்பான்.
22தீட்டுள்ள ஒருவன் யாரையாவது தொட்டால் அவனும் தீட்டுள்ளவனாவான். அவன் மாலைவரை தீட்டுள்ளவனாக இருப்பான்" என்று கூறினார்.

### மிரியாமின் மரணம்

20 இஸ்ரவேல் ஜனங்கள் முதல் மாதத்தில் சீன் பாலைவனத்தை அடைந்தனர். ஜனங்கள் காதேசில் தங்கியிருந்தபோது மிரியாம் மரணமடைந்தாள். அவள் அங்கே யே அடக்கம் செய்யப்பட்டாள்.

### மோசேயின் தவறு

2அந்த இடத்தில் ஜனங்களுக்குப் போதுமான தண்ணீர் இல்லை. எனவே ஜனங்கள் ஒன்று கூடி வந்து இதைப்பற்றி மோசேயிடமும் ஆரோனிடமும் முறையிட் டனர். 3அவர்கள், மோசேயிடம் விவாதித்து, "எங்கள் சகோதரர்களைப் போலவே நாங்களும் இந்த இடத்தில் கர்த்தர் முன்னால் மரித்துப் போயிருக்கவேண்டும்? 4எதற்காக கர்த்தருடைய ஜனங்களை இந்தப் பாலை வனத்துக்கு அழைத்து வந்தீர்கள்? நாங்களும் எங்கள் மிருகங்களும் இங்கேயே மரித்துப் போகவேண்டும் என்று விரும்புகின்றீரா?
5எங்களை எகிப்திலிருந்து இந்த மோசமான இடத்திற்கு ஏன் அழைத்து வந்தீர்கள்? இங்கே தானியங்கள் இல்லை. அத்தி மரமும், திராட்சை செடிகளும், மாதளஞ்செடியும், குடிக்க தண்ணீர் கூட இல்லையே" என்றனர்.
6எனவே, மோசேயும் ஆரோனும் கூட்டத்தை விட்டு விலகி ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்குச் சென்று அங்கே அவர்கள் தரையில் விழுந்து வணங்கினார்கள். கர்த்தருடைய மகிமை அவர்களுக்குக் காணப்பட்டது.
7கர்த்தர் மோசேயோடு பேசினார். 8அவர், "சிறப்புக்குரிய உன் கைத்தடியை எடுத்துக்

கொள். உனது சகோதரன் ஆரோனையும்
ஜனங்கள் கூட்டத்தையும் அழைத்துக்
கொண்டு பாறையின் மீது போ. ஜனங்கள்
முன்னால் பாறையோடு பேசு. பிறகு
பாறையிலிருந்து தண்ணீர் சுரந்து வரும்.
அந்த தண்ணீரை நீ ஜனங்களுக்கும்
மிருகங்களுக்கும் தரலாம்” என்றார்.
9 பரிசுத்தக் கூடாரத்திற்குள் கர்த்தர்
முன்னிலையில் கைத்தடி இருந்தது. கர்த்தர்
சொன்னபடியே மோசே கைத்தடியை
எடுத்துக் கொண்டான். 10 மோசேயும்,
ஆரோனும் ஜனங்களிடம் பாறையின்
முன்னால் கூடுமாறு சொன்னார்கள். பிறகு
மோசே, “நீங்கள் எப்போதும்
முறையிடுகிறீர்கள். இப்போது நான்
சொல்வதைக் கவனியுங்கள். நான் இந்த
பாறையிலிருந்து தண்ணீர் வரும்படி
செய்வேன்” என்றான். 11 மோசே தன்
கையை உயர்த்தி பாறையின் மீது தனது
கோலால் இருமுறை அடித்தான். தண்ணீர்
பாறையிலிருந்து பீறிட்டு வெளியே வந்தது.
ஜனங்களும் மிருகங்களும் அந்த தண்ணீரைக்
குடித்தனர்.
12 ஆனால் கர்த்தர் மோசேயிடமும்
ஆரோனிடமும், “அனைத்து இஸ்ரவேல்
ஜனங்களும் இங்கே கூடியுள்ளனர். ஆனால்
நீங்கள் என்னை கனப்படுத்தவில்லை.
தண்ணீரை பெறும் வல்லமை என்னிட
மிருந்து வந்ததை நீங்கள் ஜனங்களுக்கு
காண்பிக்கவில்லை. நீங்கள் என்னில்
நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள் என்பதையும்
ஜனங்களிடம் காட்டவில்லை. ஆகையால்
நான் அவர்களுக்கு கொடுக்கப்போகும்
தேசத்திற்குள் நீங்கள் ஜனங்களை
அழைத்துக் கொண்டு செல்லமாட்டீர்கள்!”
என்றார்.
13 இந்த இடம் மேரிபாவின்* தண்ணீர்
என்று அழைக்கப்படுகிறது! இங்குதான்
இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தரோடு தர்க்கம்
பண்ணினார்கள். அங்கே கர்த்தர் தம்மை
பரிசுத்தர் என்று அவர்களுக்குக் காட்டினார்.

### ஏதோம் இஸ்ரவேல் ஜனங்களைத் தடைசெய்தல்

14 மோசே காதேசில் இருக்கும்போது,
சிலரை ஏதோமின் அரசனிடம் பின்வரும்
செய்தியோடு அனுப்பினான்: “உங்கள்
சகோதரர்களாகிய இஸ்ரவேல் ஜனங்கள்
உங்களுக்குச் சொல்லியது என்னவென்றால்:
நாங்கள் அடைந்த துன்பங்களைப்பற்றி
நீங்கள் அறிந்திருப்பீர்கள். 15 வெகு காலத்
திற்கு முன்னர் நமது முற்பிதாக்கள்
எகிப்துக்குள் சென்றனர். அங்கே நாங்கள்
நீண்ட காலம் வாழ்ந்தோம். எகிப்து
ஜனங்கள் எங்களிடம் கொடூரமாக நடந்து
கொண்டனர். 16 ஆனால் நாங்கள் கர்த்தரிடம்
உதவிசெய்யுமாறு கேட்டோம். கர்த்தர்
எங்கள் குறையைக் கேட்டு தேவதூதனை
அனுப்பி உதவினார். கர்த்தர் எங்களை
எகிப்தைவிட்டு வெளியே அழைத்து
வந்தார்.

“இப்போது நாங்கள் உங்கள் நாடு
தொடங்குகிற காதேசில் இருக்கிறோம்.
17 நாங்கள் உங்கள் நாட்டின் வழியாகக்
கடந்து செல்ல எங்களுக்கு அனுமதி
தரவேண்டும். நாங்கள் வயல் அல்லது
திராட்சை தோட்டத்தின் வழியாக நடந்து
செல்ல மாட்டோம். உங்கள் கிணறு
களிலிருந்து தண்ணீர் மொண்டு குடிக்க
மாட்டோம். நாங்கள் ராஜபாதை வழியாக
மட்டுமே செல்வோம். நாங்கள் அந்தச்
சாலையிலிருந்து வலது புறமாகவோ இடது
புறமாகவோ நகரமாட்டோம். நாங்கள்
உங்கள் நாட்டைக் கடந்து செல்லும் வரை
சாலையிலேயே தங்குவோம்” என்றனர்.
18 ஆனால் ஏதோம் அரசனோ, “நீங்கள்
எங்கள் நாட்டின் வழியாக பயணம் செய்ய
முயன்றால், பிறகு நாங்கள் வந்து
உங்களோடு வாளால் சண்டையிடுவோம்”
என்று பதில் அளித்தான்.
19 இஸ்ரவேல் ஜனங்களோ, “நாங்கள்
ராஜபாதை வழியாக மட்டுமே பயணம்
செய்வோம். உங்களுக்கு சொந்தமான
தண்ணீரை நாங்களோ எங்கள் மிருகங்களோ
குடித்தால் அதற்குரிய தொகையைத் தந்து
விடுவோம். நாங்கள் உங்கள் நாட்டின்
வழியாக நடந்து செல்லவே விரும்புகிறோம்.
நாங்கள் உங்கள் நாட்டை எடுத்துக்கொள்ள
விரும்பவில்லை” என்றனர்.
20 ஆனால் மீண்டும் ஏதோம் அரசன்,
“எங்கள் நாட்டின் வழியாக நீங்கள் நடந்து
செல்வதை நாங்கள் அனுமதிக்க மாட்டோம்”
என்றான்.

பிறகு ஏதோம் அரசன் மிகப் பெரியதும்,
பலமுள்ளதுமான படையைக் கூட்டினான்.
அவர்கள் இஸ்ரவேல் ஜனங்களோடு போரிட
வந்தனர். 21 ஏதோம் அரசன் இஸ்ரவேல்
ஜனங்களைத் தன் நாட்டின் வழியாகச்
செல்ல அனுமதிக்க மறுத்து விட்டான்.
அவர்கள் திரும்பி அந்த நாட்டைச்
சுற்றிக்கொண்டு சென்றனர்.

### ஆரோனின் மரணம்

22 இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும்
காதேசிலிருந்து பயணம் செய்து ஓர்
என்னும் மலைக்குச் சென்றனர். 23 அது
ஏதோம் நாட்டின் எல்லைக்கருகில் இருந்தது.
கர்த்தர் மோசேயிடமும், ஆரோனிடமும்,
24 “இது ஆரோன் மரிப்பதற்குரிய நேரம்.
அவன் தன் முற்பிதாக்களோடு போய்ச்
சேருவான். நான் இஸ்ரவேல் ஜனங்களுக்கு
வாக்களித்த நாட்டிற்குள் அவன் நுழைய
மாட்டான். ஏனென்றால் நீயும் ஆரோனும்

---

**மேரிபா** இந்த பெயர் “விவாதம்” அல்லது “முரட்டுத்தனம்” எனப் பொருள்படும்.

எனது ஆணைகளுக்கு முழுமையாக
கீழ்ப்படியவில்லை. மேரிபாவின் தண்ணீர்
பற்றிய நிகழ்ச்சியில் தவறு செய்து
விட்டீர்கள்.
25 "இப்போது, ஆரோனையும் அவனது
மகன் எலெயாசாரையும் ஓர் என்னும்
மலைமீது அழைத்து வா. 26 ஆரோனின்
சிறப்புக்குரிய ஆடையை அவனது மகன்
எலெயாசாருக்கு அணிவித்து அழைத்து
வா. ஆரோன் மலைமீது மரித்துப்போவான்.
அவன் தன் முற்பிதாக்களோடு போய்ச்
சேருவான்" என்றார்.
27 கர்த்தருடைய ஆணைக்கு மோசே
கீழ்ப்படிந்தான். ஓர் என்னும் மலையின்
மீது மோசே, ஆரோன், எலெயாசார்
ஆகியோர் ஏறினார்கள். இஸ்ரவேல்
ஜனங்கள் அனைவரும் அவர்கள் செல்வ
தைப் பார்த்தனர். 28 மோசே, ஆரோனின்
சிறப்புக்குரிய ஆடையை அகற்றி அதனை
ஆரோனின் மகனான எலெயாசாருக்கு
அணிவித்தான். பிறகு மலை உச்சியிலேயே
ஆரோன் மரித்துப்போனான். மோசேயும்
எலெயாசாரும் மலையிலிருந்து இறங்கி
வந்தனர். 29 ஆரோன் மரித்துப்போனதை
இஸ்ரவேல் ஜனங்கள் அறிந்து கொண்டனர்.
எனவே அவர்கள் 30 நாட்களுக்குத் துக்கம்
கொண்டாடினார்கள்.

### கானானியர்களோடு போர்

21 கானானிய ஜனங்களுக்கு ஆராத்
என்ற அரசன் இருந்தான். அவன்
பாலைவனத்தின் தென்பகுதியில் குடி
இருந்தான். இஸ்ரவேல் ஜனங்கள் அத்தாரீம்
சாலைவழியாக வருகிறார்கள் என்பதைக்
கேள்விப்பட்டான். உடனே அவன் படைவீ
ரர்களை அனுப்பி இஸ்ரவேல் ஜனங்களைத்
தாக்கினான். ஆராத் சிலரைக் கைது செய்து
சிறையில் அடைத்தான். 2 பிறகு இஸ்ரவேல்
ஜனங்கள் கர்த்தரிடம் ஒரு விசேஷ
வேண்டுதல் செய்தனர். அவர்கள்,
"கர்த்தாவே! இந்த ஜனங்களை வெல்ல
எங்களுக்கு உதவும். நீர் இவ்வாறு செய்தால்
அவர்களின் நகரங்களை உமக்கு அர்ப்பணிப்
போம். நாங்கள் அவர்களை முழுமையாக
அழித்து விடுவோம்" என்று கூறினார்கள்.
3 இஸ்ரவேல் ஜனங்களின் வேண்டுதலைக்
கர்த்தர் கேட்டார். இஸ்ரவேல் ஜனங்கள்
கானானியர்களை வெல்வதற்கு கர்த்தர்
உதவி செய்தார். இஸ்ரவேல் ஜனங்கள்
கானானியர்களை முழுமையாக அழித்தனர்.
அவர்களின் நகரங்களும் அழிக்கப்பட்டன.
எனவே அந்த இடத்திற்கு ஓர்மா* என்று
பெயரிட்டனர்.

### வெண்கலப் பாம்பு

4 ஓர் என்ற மலையை விட்டு இஸ்ரவேல்
ஜனங்கள் செங்கடலுக்குச் செல்லும் சாலை
வழியாகப் பயணம் செய்தனர். ஏதோம்
நாட்டைச் சுற்றிக்கொண்டு அவர்கள்
சென்றனர். இதனால் ஜனங்கள் பொறுமை
இழந்தனர். 5 அவர்கள் தேவனுக்கும் மோசேக்
கும் எதிராக முறுமுறுக்கத் துவங்கினார்கள்.
அவர்கள், "ஏன் எங்களை எகிப்திலிருந்து
அழைத்து வந்தீர்? நாங்கள் இங்கே பாலை
வனத்தில் மரித்துக் கொண்டிருக்கிறோம்!
உண்ண அப்பம் இல்லை! தண்ணீர் இல்லை!
இந்த அற்பமான உணவை நாங்கள்
வெறுக்கிறோம்!" என்றனர்.
6 எனவே, கர்த்தர் விஷமுள்ள பாம்புகளை
அனுப்பினார். அவை அவர்களைக் கடித்தன.
அநேக இஸ்ரவேல் ஜனங்கள் மரண
மடைந்தனர். 7 ஜனங்கள் மோசேயிடம் வந்து,
"நாங்கள் உமக்கும் கர்த்தருக்கும் எதிராகப்
பேசும்போதெல்லாம் பாவம் செய்வதாக
அறிகிறோம். கர்த்தரிடம் ஜெபம் செய்யும்.
இப்பாம்புகள் அகலும்படி கர்த்தரிடம்
வேண்டுதல் செய்யும்" என்றனர். மோசே
ஜனங்களுக்காக வேண்டினான்.
8 கர்த்தர் மோசேயிடம், "வெண்கலத்தால்
ஒரு பாம்பு செய்து அதனைக் கம்பத்தின்
மேல் வை. பாம்பால் கடிக்கப்பட்ட எவனும்
கம்பத்தில் உள்ள பாம்பைப் பார்த்தால்
மரிக்க மாட்டான்" என்றார். 9 எனவே
மோசே கர்த்தருக்குக் கீழ்ப்படிந்து ஒரு
வெண்கல சர்ப்பத்தை உண்டுபண்ணி
அதனைக் கம்பத்தில் வைத்தான். பாம்பால்
கடிக்கப்பட்டவர்கள் கம்பத்தில் உள்ள
பாம்பைப் பார்த்து உயிர் பிழைத்தனர்.

### மோவாபுக்குப் பயணம்

10 இஸ்ரவேல் ஜனங்கள் அவ்விடத்தை
விட்டுப் பயணம் செய்து ஓபோத்தில்
கூடாரம் போட்டனர். 11 பிறகு அவர்கள்
அதனை விட்டுப்போய் மோவாபுக்குக்
கிழக்கே பாலைவனத்தில் அய் அபாரீமினில்
தங்கினார்கள். 12 பிறகு அங்கிருந்து பயணம்
செய்து சாரோத் பள்ளத்தாக்கில் கூடாரம்
போட்டனர், 13 பின்னர் அங்கிருந்து சென்று,
அர்னோன் ஆற்றைக் கடந்து கூடாரம்
போட்டனர். இந்த ஆறு அம்மோனியர்களின்
எல்லையிலிருந்து புறப்படுகிறது. அந்தப்
பள்ளத்தாக்கானது மோவாபியருக்கும்
எமோரியருக்கும் எல்லையாக இருந்தது.
14 இதனால்தான் கர்த்தருடைய யுத்தங்கள்
என்ற நூலில்:

> "சூப்பாவிலுள்ள வாகேபும், அர்னோ
> னின் ஆற்றின் பள்ளத்தாக்குகளும் 15 ஓர்
> எனும் இடத்துக்குப் போகும் பள்ளத்
> தாக்குகளும், மோவாபின் எல்லையைச்
> சார்ந்திருக்கிறது" என்று எழுதப்
> பட்டிருக்கிறது.

---

**ஓர்மா** இந்த பெயருக்கு "முழுமையாக அழிக்கப்பட்டது" அல்லது "ஒரு அன்பளிப்பை தேவனுக்கென்று முழுமையாக கொடுக்கப் பட்டது" எனப் பொருள்படும். லேவி 27:28-29.

16இஸ்ரவேல் ஜனங்கள் அந்த இடத்தையும்
விட்டு பேயீருக்குப் போனார்கள். அங்கே
கிணறு இருந்தது. இந்த இடத்தில்தான்
கர்த்தர் மோசேயிடம், "ஜனங்களை இங்கே
கூட்டிவா அவர்களுக்கு தண்ணீர் வழங்கு
வேன்" என்றார். 17பிறகு இஸ்ரவேல்
ஜனங்கள் இந்தப் பாடலைப் பாடினார்கள்:

"கிணறு, தண்ணீரால் நிரம்பி
வழிகிறது!
இதைப்பற்றி பாடுங்கள்!
18 பெரிய மனிதர்கள் இந்தக்
கிணற்றைத் தோண்டினார்கள்.
முக்கிய தலைவர்களால்
தோண்டப்பட்ட கிணறு இது.
அவர்கள் தங்கள் ஆயுதங்களாலும்
தடிகளாலும் அதைத்
தோண்டினார்கள்.
பாலைவனத்தில் இது ஒரு
அன்பளிப்பாகும்."

எனவே, அவர்கள் அந்தக் கிணற்றை
"மாத்தனா" என்று அழைத்தனர். 19ஜனங்கள்
மாத்தனாவிலிருந்து நகாலியேலுக்கும்,
பிறகு நகாலியேலிலிருந்து பாமோத்துக்குப்
பயணம் செய்தனர். 20ஜனங்கள் பாமோத்
திலிருந்து மோவாப் பள்ளத்தாக்குக்குப்
பயணம் செய்தனர். அங்கே பிஸ்கா மலை
உச்சியானது பாலைவனத்துக்கு மேலே
தெரிந்தது.

### சீகோனும் ஓகும்

21இஸ்ரவேல் ஜனங்கள் எமோரியரின்
அரசனாகிய, சீகோனிடம் சில மனிதர்களை
அனுப்பினர். அவர்கள் அரசனிடம்,
22"உங்கள் நாட்டின் வழியாகப் பயணம்
செய்ய அனுமதி தாருங்கள். நாங்கள் வயல்
வழியாகவோ, திராட்சைத் தோட்டத்தின்
வழியாகவோ செல்லமாட்டோம். உங்கள்
கிணறுகளிலுள்ள தண்ணீரைக் குடிக்க
மாட்டோம். நாங்கள் ராஜபாதையின்
வழியாக மட்டுமே செல்வோம். உங்கள்
நாட்டைக் கடந்து செல்லும்வரை நாங்கள்
சாலையிலேயே தங்குவோம்" என்றனர்.
23ஆனால் சீகோன் அரசனோ, இஸ்ரவேல்
ஜனங்களைத் தன் நாட்டின் வழியாகப்
பயணம் செய்ய அனுமதிக்கவில்லை. அந்த
அரசன் தன் படைகளைத் திரட்டி
பாலைவனத்தில் இஸ்ரவேல் ஜனங்களுக்கு
எதிராகப் போரிடப் புறப்பட்டான். யாகாஸ்
எனும் இடத்தில் அவன் இஸ்ரவேல்
ஜனங்களோடு போரிட்டான்.
24இஸ்ரவேல் ஜனங்கள் அந்த அரசனைக்
கொன்றனர். பிறகு அவர்கள் அவனுடைய
நாட்டை அர்னோன் நதி முதல் யாப்போக்
நதி வரை எடுத்துக் கொண்டனர். அவர்கள்
எடுத்துக்கொண்ட நாடானது அன்று வரை
அம்மோனியர்களின் எல்லையாக இருந்தது.
அம்மோனிய ஜனங்களால் பலமாக
பாதுகாக்கப்பட்டதால் அவர்கள் எல்லை
வரை நிறுத்திக் கொண்டார்கள். 25இஸ்ரவேல்
ஜனங்கள் எமோரியரின் அனைத்து
நகரங்களையும் கைப்பற்றிக்கொண்டு அதில்
வாழத் துவங்கினார்கள். அவர்கள் எஸ்
போன் நகரத்தையும் இன்னும் பல
நகரங்களையும்கூட வென்றனர். 26எஸ்போன்
நகரத்தில்தான் எமோரியரின் அரசனான
சீகோன் வசித்து வந்தான். கடந்த காலத்தில்
சீகோன், மோவாப் அரசனோடு சண்டை
செய்திருக்கிறான். சீகோன் அர்னோன்
ஆறுவரையுள்ள நிலத்தைக் கைப்பற்றிக்
கொண்டான். 27இதனால்தான் பாடகர்கள்
கீழ்க்கண்டவாறு பாடினார்கள்:

"எஸ்போனே, நீ மீண்டும்
கட்டப்பட வேண்டும்!
சீகோனின் நகரமும் பலமுள்ளதாக
வேண்டும்.
28 எஸ்போனில் நெருப்பு தோன்றியது.
சீகோனின் நகரத்திலும் நெருப்பு
தோன்றியது.
மோவாபிலுள்ள ஒரு நகரத்தையும்
நெருப்பு அழித்தது.
அது அர்னோன் ஆற்றுக்கு
மேலேயுள்ள குன்றுகளையும்
எரித்தது.
29 மோவாபே உனக்கு ஐயோ!
கேமோஷ் ஜனங்களை இழந்தாய்.
அவனது மகன்கள் ஓடிவிட்டனர்.
அவனது மகள்கள் எமோரிய
அரசனான சீகோனால்
சிறைப்பிடிக்கப்பட்டனர்.
30 ஆனால் நாங்கள் அத்தகைய
எமோரியர்களைத் தோற்கடித்தோம்.
அவர்களின் நகரங்களை அழித்தோம்.
எஸ்போன் முதல் திபோன் வரையும்
மேதேபாவுக்கு அருகிலுள்ள
நோப்பா வரை அழித்தோம்."

31பின்னர், இஸ்ரவேல் ஜனங்கள், எமோ
ரியரின் நாட்டில் தங்கள் முகாம்களை
அமைத்தனர்.
32மோசே யாசேர் பட்டணத்தைப்
பார்வையிடும்படி சிலரை அனுப்பி
வைத்தான். மோசே இவ்வாறு செய்தபிறகு
இஸ்ரவேல் ஜனங்கள் அந்த நகரத்தையும்
அதைச் சுற்றியுள்ள சிறு பட்டணங்களையும்
கைப்பற்றினார்கள். இஸ்ரவேல் ஜனங்கள்
எமோரியர்களை விரட்டியடித்தனர்.
33பிறகு அவர்கள் பாசானுக்குப் போகும்
சாலையில் பயணம் செய்தனர். பாசானின்
அரசனான ஓக் என்பவன் தனது படை
களோடு இஸ்ரவேல் ஜனங்களை எதிர்த்து
வந்து, எத்ரே என்னும் இடத்தில் அவன்
இவர்களோடு சண்டையிட்டான்.

[34]ஆனால் கர்த்தர் மோசேயிடம், "அந்த அரசனுக்குப் பயப்பட வேண்டாம். அவர்களைத் தோற்கடிக்கும்படி செய்வேன். நீங்கள் அவனது படைகளையும், நாட்டையும் கைப்பற்றிக் கொள்வீர்கள். எஸ்போனில் இருந்த எமோரியரின் அரசனான சீகோனுக்கு நீங்கள் செய்தது போன்று இங்கேயும் செய்வீர்கள்" என்றார்.
[35]எனவே இஸ்ரவேல் ஜனங்கள் ஓக் அரசனையும் அவனது படைகளையும் தோற்கடித்து, அவனையும் அவனது பிள்ளைகளையும் படைகளையும் கொன்றதுடன் அவனது நாட்டையும் கைப்பற்றிக் கொண்டனர்.

### பிலேயாமும் மோவாபின் அரசனும்

22 பிறகு இஸ்ரவேல் ஜனங்கள் மோவாபிலுள்ள யோர்தான் பள்ளத்தாக்குக்குப் பயணம் செய்தனர். எரிகோவின் அருகிலுள்ள யோர்தானுக்கு இக்கரையில் தங்கள் முகாம்களை அமைத்தனர்.
[2-3]சிப்போரின் மகனான பாலாக் எமோரியர்களுக்கு இஸ்ரவேல் ஜனங்கள் செய்த எல்லாவற்றையும் அறிந்திருந்தான். அதினால் மோவாபின் அரசன் மிகவும் பயந்தான். ஏனென்றால் இஸ்ரவேலரின் எண்ணிக்கை மிகுதியானது. மோவாப் உண்மையில் கலங்கிப்போனான்.
[4]மீதியானின் தலைவர்களிடம் மோவாபின் அரசன், "பசுவானது ஒரு நிலத்தின் புல்லை மேய்ந்து போடுவதுபோல, இஸ்ரவேல் ஜனங்களின் கூட்டம் நம்மைச் சுற்றிலும் உள்ளவற்றை அழித்துப்போடும்" என்றான்.
அந்த நேரத்தில் சிப்போரின் மகனான பாலாக் மோவாபின் அரசனாக இருந்தான்.
[5]அவன் பேயோரின் மகனான பிலேயாமை அழைத்துவர சிலரை அனுப்பினான். பிலேயாம் ஐபிராத்து ஆற்றின் அருகிலுள்ள பெத்தூரில் இருந்தான். அவனது ஜனங்களும் அங்கேயே வாழ்ந்தனர். பாலாக், "எகிப்திலிருந்து புதிய ஜனங்கள் கூட்டம் வந்திருக்கிறது. முழுநாட்டையும் ஆக்கிரமித்துக் கொள்வது போன்று அவர்கள் எண்ணிக்கையில் மிகுதியாக இருக்கின்றனர். எங்களை அடுத்து அவர்கள் கூடாரங்களை அமைத்துக் கொண்டு முகாமிட்டிருக்கிறார்கள். [6]நீ வந்து எனக்கு உதவிசெய். எங்களைவிட அவர்கள் பலமிக்கவர்களாக உள்ளனர். உனக்குப் பெரும் வல்லமை உண்டு என்பதை நான் அறிவேன். நீ ஒருவனை ஆசீர்வதித்தால் அவனுக்கு நன்மைகள் ஏற்படும். நீ ஒருவனுக்கு எதிராகப் பேசினால் அவனுக்குத் தீமை ஏற்படும். எனவே நீ வந்து அவர்களுக்கு எதிராகப் பேசு. ஒரு வேளை அதனால் நான் இவர்களைத் தோற்கடித்து விடலாம். பின் அவர்களை இந்நாட்டை விட்டுத் துரத்தி விடலாம்" என்று செய்தி அனுப்பினான்.
[7]மோவாப் மற்றும் மீதியானின் மூப்பர்கள் பிலேயாமிடம் பேசச் சென்றார்கள். அவனது சேவைக்குப் பரிசுக் கொடுக்கப் பணமும் கொண்டு சென்றார்கள். அவர்கள் அங்கு பாலாக் சொன்னதைச் சொன்னார்கள்.
[8]பிலேயாம் அவர்களிடம், "இரவு இங்கே தங்கியிருங்கள். நான் கர்த்தரோடு பேசி அவர் எனக்குச் சொல்லும் பதிலை நான் கூறுவேன்" என்றான். எனவே அன்று இரவு மோவாபின் தலைவர்கள் பிலேயாமோடு அங்கே தங்கியிருந்தனர்.
[9]தேவன் வந்து பிலேயாமிடம், "உன்னோடு இருக்கும் இவர்கள் யார்?" என்று கேட்டார்.
[10]தேவனிடம் பிலேயாம், "இவர்கள் மோவாபின் அரசனும் சிப்போரின் மகனுமான பாலாக் அனுப்பிய தலைவர்கள். அவன் ஒரு செய்தியை அனுப்பியிருக்கிறான்.
[11]எகிப்திலிருந்து ஒரு புது ஜனங்கள் கூட்டம் இங்கே வந்திருக்கிறது. அவர்கள் பெரும் எண்ணிக்கையில் நாடு முழுவதும் நிறைந்துவிட்டனர். அவர்களுக்கு எதிராக நீ வந்து பேசவேண்டும். பிறகு என்னால் அவர்களோடுச் சண்டையிட்டு அவர்களைத் தோற்கடித்து விரட்ட முடியும் என்று கருதுகிறான்" என்றான்.

[12]ஆனால் தேவன் பிலேயாமிடம், "அவர்களோடு போக வேண்டாம். அந்த ஜனங்களுக்கு எதிராகப் பேசவேண்டாம். அவர்கள் எனது ஜனங்கள்" என்று கூறினார்.
[13]மறுநாள் காலையில் எழுந்து பிலேயாம், பாலாக்கின் தலைவர்களிடம், "உங்கள் சொந்த நாட்டிற்குத் திரும்பிச் செல்லுங்கள். உங்களோடு வர கர்த்தர் என்னை அனுமதிக்கவில்லை" என்றான்.
[14]எனவே மோவாபின் தலைவர்கள் பாலாக்கிடம் திரும்பினார்கள், "எங்களோடு வர பிலேயாம் மறுத்துவிட்டான்" என்றனர்.
[15]எனவே பாலாக் வேறு சில தலைவர்களை பிலேயாமிடம் அனுப்பினான். இந்தமுறை அவன் போன முறையைவிட மிகுதியான ஆட்களை அனுப்பினான். இவர்கள் முன்பு சென்றவர்களைவிட முக்கியமானவர்கள். [16]இவர்கள் பிலேயாமிடம் போய், "சிப்போரின் மகனான பாலாக் சொன்னது இதுதான்: நீர் எங்களிடம் வர தடைப்பட வேண்டாம். [17]நான் கேட்டுக்கொண்டபடி நீ செய்தால் உனக்கு மிகுதியாகப் பணம் கொடுப்பேன். எனக்காக இங்கு வந்து இந்த ஜனங்களுக்கு எதிராகப் பேசு" என்று சொல்லச் சொன்னார் என்றனர்.
[18]பிலேயாம் பாலாக்கின் அதிகாரிகளிடம், "என் தேவனாகிய கர்த்தருக்கு நான்

அடிபணிய வேண்டும். அவரது ஆணைக்கு எதிராக நான் எதையும் செய்ய முடியாது. சிறியதோ பெரியதோ கர்த்தருடைய ஆணையில்லாமல் நான் எதையும் செய்ய மாட்டேன். பாலாக் அரசன் ஒரு அழகான மாளிகையுடன் தங்கமும் வெள்ளியும் நிறைத்துக் கொடுப்பதாக இருந்தாலும் கர்ததருடைய கட்டளைக்கு எதிராக நான்
ஒன்றும் செய்யமாட்டேன். 19ஆனாலும்
நீங்களும் இன்று இரவு இங்கே தங்குங்கள்; இரவு நேரத்தில் கர்த்தர் என்ன சொல்கிறார் என்பதையும் அறிந்துகொள்வேன்" என்றான்.
20அன்று இரவு தேவன் பிலேயாமை
நோக்க், "மீண்டும் தங்களோடு வரும்படி உன்னை அழைக்க அந்த மனிதர்கள் வந்திருக்கிறார்கள். நீ அவர்களோடு போகலாம். ஆனால் நான் சொல்வதை மட்டுமே நீ செய்ய வேண்டும்" என்றார்.

## பிலேயாமும் அவனது கழுதையும்

21மறுநாள் காலை பிலேயாம் எழுந்து
தன் கழுதையைத் தயார் செய்துகொண்டு மோவாபின் தலைவர்களோடு சென்றான்.
22பிலேயாம் தனது கழுதைமேல் சவாரி
செய்தான். அவனோடு இரு வேலைக்காரர் களும் இருந்தனர். பிலேயாம் பயணம் செய்யும்போது, தேவன் கோபங்கொண்டார். எனவே கர்த்தருடைய தூதன் சாலையில் பிலேயாமின் முன்னால் நின்றான். தேவ தூதன் பிலேயாமைத் தடுத்து நிறுத்தப் போனான்.
23பிலேயாமின் கழுதை கர்த்தருடைய
தூதன் சாலையில் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தது. அத்தேவதூதன் தன் கையில் வாள் ஒன்றை வைத்திருந்தான். எனவே கழுதை சாலையிலிருந்து திரும்பி வயலில் இறங்கியது. பிலேயாமால் தேவ தூதனைக் காணமுடியவில்லை; எனவே அவன் கழுதை மீது மிகுந்த கோபங்கொண்டான். அவன் கழுதையை அடித்து சாலைக்குத் திரும்புமாறு கட்டாயப் படுத்தினான்.
24பிறகு கர்த்தருடைய தூதன் சாலை
குறுகலாகும் இடத்தில் நின்றான். இது இரண்டு திராட்சைத் தோட்டங்களுக்கு நடுவே உள்ள இடம். சாலையின் இரு
பக்கங்களிலும் சுவர்கள் இருந்தன. 25மீண்டும்
அந்தக் கழுதை கர்த்தருடைய தூதனைப் பார்த்தது. எனவே ஒரு சுவரை ஒட்டி நெருக்கமாகச் சென்றது. இதனால் பிலேயாமின் கால் சுவரோடு தேய்த்து உரசியது. ஆகையால் பிலேயாம் மீண்டும் கழுதையை அடித்தான்.
26பிறகு கர்த்தருடைய தூதன் இன்னொரு
இடத்தில் நின்றான். இது சாலை குறுகலாகும் இன்னொரு இடம். தேவதூதனைச் சுற்றிக் கொண்டு செல்ல சாலையில் போதுமான இடம் இல்லை. அந்தக் கழுதையால் இடது பக்கமோ வலது
பக்கமோ திரும்ப முடியவில்லை. 27கழுதை
கர்த்தருடைய தூதனைப் பார்த்தது. எனவே, கழுதை பிலேயாம் தன்மேல் இருக்கும்போதே தரையில் படுத்துவிட்டது. இதனால் பிலேயாமுக்கு கழுதைமேல் மிகுந்த கோபம் வந்தது. எனவே அதனைத் தனது கைத்தடியால் அடித்தான்.
28பிறகு கர்த்தர் கழுதையைப் பேசுமாறு
செய்தார். அது பிலேயாமிடம், "என் மீது ஏன் கோபம் கொள்கிறீர்! நான் உமக்கு என்ன செய்து விட்டேன்? என்னை மூன்று முறை அடித்து விட்டீரே!" என்றது.
29பிலேயாம் கழுதையிடம், "என்னை நீ
முட்டாளாக்குகின்றாய். இப்போது என் கையில் ஒரு வாள் இருந்தால் இந்த வேளையிலேயே உன்னைக் கொன்று விடுவேன்!" என்று பதில் சொன்னான்.
30ஆனால் கழுதையோ பிலேயாமிடம்,
"பாரும்! நான் உமக்குச் சொந்தமான கழுதை! பல ஆண்டுகளாக என்மீது சவாரி செய்து வருகிறீர். நான் இதற்கு முன்னால் இதுபோல் நடந்து கொள்ளவில்லை என்பது உமக்குத் தெரியும்!" என்றது.

இதற்குப் பிலேயாம், "இது உண்மைதான்" என்றான்.
31பிறகு தேவன் பிலேயாமின் கண்களைத்
திறந்து தூதனைப் பார்க்கும்படிச் செய்தார். கர்த்தருடைய தூதன் சாலையின் மேல் நின்று கொண்டிருந்தான். அவன் தனது கையில் வாளை ஏந்தியிருந்தான். பிலேயாம் தரையில் பணிந்து வணங்கினான்.
32பிறகு கர்த்தருடைய தூதன்
பிலேயாமிடம், "ஏன் மூன்று முறை கழுதையைஅடித்தாய்?நான்தான் உன்னைத் தடுத்து நிறுத்துவதற்காக வந்தேன். ஏனெனில் எனக்கு முன்பாக உனது போக்கு
சீர்கெட்டதாய் இருக்கிறது. 33ஆனால்
சரியான நேரத்தில் கழுதை என்னைப் பார்த்து என்னிடமிருந்து திரும்பிவிட்டது. இது மூன்று முறை நடைபெற்றது. கழுதை அவ்வாறு திரும்பாமல் இருந்திருந்தால் நான் அப்பொழுதே உன்னைக் கொன்றிருப்பேன். நான் உன் கழுதையை உயிர் பிழைக்க வைத்திருப்பேன்" என்றார்.
34பிறகு பிலேயாம் கர்த்தருடைய தூத
னிடம், "நான் பாவம் செய்திருக்கிறேன். நீர் சாலையில் நின்றுக் கொண்டிருந்ததை நான் அறிந்துகொள்ளவில்லை. நான் குற்றம் செய்திருந்தால் நான் திரும்பி வீட்டிற்குப் போகிறேன்" என்றான்.
35பிறகு கர்த்தருடைய தூதன் பிலேய
ாமிடம், "இல்லை! நீ இந்த மனிதர்களோடு செல்லலாம். ஆனால் கவனமாக இரு. நான் எதைச் சொல்லச் சொல்லுகிறேனோ அதையே சொல்ல வேண்டும்" என்றார்.

எனவே பிலேயாம் பாலாக் அனுப்பிய
மனிதர்களோடு சென்றான்.
36பிலேயாம் வருவதைப் பற்றி பாலாக்
கேள்விப்பட்டான். எனவே பாலாக்
அவனைச் சந்திப்பதற்குப் புறப்பட்டு
ஆர்னோன் ஆற்றின் அருகிலுள்ள மோவாப்
பின் நகரத்திற்குப் போனான். இது நாட்டின்
வட எல்லையில் இருந்தது. 37பாலாக்
பிலேயாமை பார்த்தான். அவன் இவனிடம்,
"நான் வரச்சொல்லி முன்பே கேட்டேனே.
அப்போது ஏன் வரவில்லை? இது மிக
மிக முக்கியமானது என்று சொல்லி
இருந்தேன். நீர் ஏன் என்னிடம் வரவில்லை?
நான் உமக்கு மரியாதைத் தராமல் போய்
விடுவேனா?" என்றான்.
38பிலேயாம் அவனிடம் "நான் இப்போது
இங்கே இருக்கிறேன். ஆனால் நீர் கேட்டபடி
என்னால் உதவ முடியாமல் போகலாம்.
தேவனாகிய கர்த்தர் என்னிடம் எதைச்
சொல்லச் சொல்கிறாரோ அதனையே நான்
சொல்லுவேன்" என்றான்.
39பிலேயாம் பாலாக்குடன் கீரியாத்
ஊசோத்திற்குச் சென்றான். 40பாலாக் சில
ஆடுகளையும் மாடுகளையும் பலியாகக்
கொடுத்தான். அவன் கொஞ்சம் இறைச்
சியைப் பிலேயாமுக்கும் தன்னோடு இருந்த
சில தலைவர்களுக்கும் கொடுத்தான்.
41மறுநாள் காலையில் பாலாக்
பிலேயாமை பாமோத்பால் நகரத்தின் மேடுக
ளுக்கு அழைத்துச் சென்றான். அங்கிருந்து
இஸ்ரவேல் பாளையங்களின் ஒரு பகுதியை
அவர்களால் காண முடிந்தது.

### பிலேயாமின் முதல் செய்தி

23 பிலேயாம் பாலாக்கிடம், "இங்கே
ஏழு பலிபீடங்களை கட்டி. ஏழு
காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்
களையும் தயார் செய்யும்" என்றான்.
2பாலாக் பிலேயாம் சொன்னபடி செய்தான்.
பிறகு பாலாக்கும் பிலேயாமும் ஒரு
ஆட்டுக்கடாவையும் ஒரு காளையையும்
ஒவ்வொரு பலிபீடத்திலும் பலியிட்டனர்.
3பிறகு பிலேயாம் பாலாக்கிடம்,
"இப்பலிபீடத்தின் அருகில் இரும். நான்
இன்னொரு இடத்திற்குப் போவேன். பிறகு
கர்த்தர் என்னிடம் வருவார். நான் என்ன
சொல்லவேண்டுமோ அதனை அவர்
சொல்லுவார்" என்றான். பிறகு பிலேயாம்
ஓர் உயரமான இடத்திற்குச் சென்றான்.
4அந்த இடத்தில் பிலேயாமிடம் தேவன்
வந்தார். பிலேயாம் அவரிடம், "நான் ஏழு
பலிபீடங்களைத் தயார் செய்துள்ளேன்.
அவற்றில் இரண்டில் ஒரு காளையும் ஒரு
ஆட்டுக்கடாவையும் பலியிட்டேன்" என்றான்.
5கர்த்தர் பிலேயாமிடம் அவன் என்ன
சொல்லவேண்டுமோ அதனைச் சொன்னார்.
பிறகு கர்த்தர், "பாலாக்கிடம் திரும்பிப்போ.
நான் இவற்றைச் சொல்லச் சொன்னேன்
என்று அவனிடம் சொல்" என்றார்.
6எனவே பிலேயாம் பாலாக்கிடம் போ
னான். பாலாக்கும் அவனோடு மோவாபின்
தலைவர்களும் பலிபீடத்தின் அருகிலேயே
நின்று கொண்டிருந்தனர். 7பிறகு பிலேயாம்
பின்வருமாறு சொன்னான்:

மோவாபின் அரசனான பாலாக்
என்னை இங்கே அழைத்து
வந்தான்.
ஆராம் மலையின் கிழக்குப்
பகுதியிலிருந்து வந்தேன்.
பாலாக் என்னிடம்,
"வா, வந்து எனக்காக
யாக்கோபிற்கு எதிராகப்
பேச வேண்டும்,
இஸ்ரவேல் ஜனங்களுக்கு எதிராகப்
பேசவேண்டும்"
என்று கேட்டான்.
8 ஆனால் தேவன் அந்த ஜனங்களுக்கு
எதிராக இல்லை.
எனவே, என்னாலும் அவர்களுக்கு
எதிராகப் பேச முடியாது!
கர்த்தர் அந்த ஜனங்களுக்கு தீமை
ஏற்படும்படி பேசவில்லை.
எனவே என்னால் அவ்வாறுச்
செய்ய முடியாது.
9 நான் மலையிலிருந்து
அந்த ஜனங்களைப் பார்க்கிறேன்.
உயரமான மலையிலிருந்து
அவர்களைப் பார்க்கிறேன்.
அவர்கள் தனியாக வாழ்கிறார்கள்.
அவர்கள் வேறொரு தேசத்தாரையும்
சேர்ந்தவர்கள் அல்ல.
10 யாக்கோபின் ஜனங்களை எவரால்
எண்ணிப்பார்க்க முடியும்?
அவர்கள் புழுதியைப் போல
அதிக எண்ணிக்கையுள்ளவர்கள்.
இஸ்ரவேல் ஜனங்களின் நாலில் ஒரு
பங்கைக்கூட எவராலும் எண்ண
இயலாது.
என்னை ஒரு நல்ல மனிதனைப்
போன்று மரிக்க விடு.
அவர்களுடைய வாழ்வைப் போன்று
மகிழ்ச்சியோடு என் வாழ்வையும்
முடிய விடு!.

11பாலாக் பிலேயாமிடம், "நீர் எனக்கு
என்ன செய்தீர்? எனது பகைவர்களுக்கு
எதிராகப் பேசும்படி உம்மை அழைத்து
வந்தேன். ஆனால் நீர் அவர்களை
ஆசீர்வாதம் செய்கிறீரே!" என்றான்.
12ஆனால் பிலேயாம், "கர்த்தர் என்னிடம்
சொல்லுமாறு சொன்னவற்றையே நான்
சொல்வேன்" என்றான்.
13பிறகு பாலாக் அவனிடம், "இன்னொரு
இடத்திற்கு வா. அந்த இடத்திலிருந்து

அவர்களில் மிகுதியான ஜனங்களை நீ
பார்க்க முடியும். ஆனால் அவர்களில் முழு
பகுதியினரை உன்னால் பார்க்க முடியாது.
ஆனால் அவர்களில் ஒரு பகுதியினரை
உன்னால் பார்க்க முடியும். எனக்காக
அங்கிருந்து அவர்களுக்கு எதிராக நீ பேச
முடியும்" என்றான். 14எனவே பாலாக்
பிலேயாமை காவற்காரன் மலைக்கு
அழைத்து சென்றான். இது பிஸ்கா
மலையின் உச்சியில் இருந்தது. அங்கே
பாலாக் ஏழு பலிபீடங்களைக் கட்டினான்.
பின் ஒரு காளையையும் ஒரு ஆட்டுக்
கடாவையும் தனித்தனியாக ஒவ்வொரு
பலிபீடத்திலும் பலியாக செலுத்தினான்.
15பிலேயாம் பாலாக்கிடம், "இந்தப்
பலிபீடத்தின் அருகிலே இரு. நான் அந்த
இடத்திற்குப் போய் தேவனைச் சந்தித்து
விட்டு வருகிறேன்" என்றான்.
16எனவே கர்த்தர் பிலேயாமிடம் வந்து
பேசி, தான் சொன்னவற்றை பாலாக்கிடம்
திரும்பிப்போய் சொல்லுமாறு கூறினார்.
17பிலேயாம் பாலாக்கிடம் திரும்பிப்போ
னான். அங்கே பலிபீடத்தின் அருகிலேயே
பாலாக் நின்று கொண்டிருந்தான்.
அவனோடு, மோவாபின் தலைவர்களும்
நின்று கொண்டிருந்தனர். பிலேயாம் வரு
வதைப் பார்த்து பாலாக், "கர்த்தர் என்ன
சொன்னார்?" எனக்கேட்டான்.

### பிலேயாமின் இரண்டாவது செய்தி

18பிலேயாம் அவனிடம்,

"பாலாக்! எழுந்து நில்.
நான் சொல்வதைக் கவனி.
சிப்போரின் மகனான பாலாக்கே!
நான் சொல்வதைக் கேள்:
19 தேவன் ஒரு மனிதனல்ல;
அவர் பொய்ச் சொல்லமாட்டார்.
அவர் மானிடன் அல்ல.
அவரது முடிவு மாறாதது.
கர்த்தர் ஒன்றைச் செய்வதாகக்
கூறினால் அவர் அதனை நிச்சயம்
செய்வார்.
கர்த்தர் ஒரு வாக்குறுதி தந்தால்
அந்த வாக்குறுதியை நிச்சயம்
காப்பாற்றுவார்.
20 கர்த்தர் அந்த ஜனங்களை
ஆசீர்வதிக்குமாறு சொன்னார்.
அவர் அவர்களை ஆசீர்வதித்தார்.
அதனை என்னால் மாற்ற முடியாது.
21 யாக்கோபின் ஜனங்களிடம் தேவன்
எவ்வித தவறையும் காணவில்லை.
இஸ்ரவேல் ஜனங்களிடம் எவ்வித
பாவத்தையும்
தேவன் பார்க்கவில்லை.
கர்த்தரே அவர்களின் தேவன்.
அவர் அவர்களோடு இருக்கிறார்.
அந்த மாபெரும் அரசர்
அவர்களோடு இருக்கிறார்!
22 அவர்களை அவர் எகிப்திலிருந்து
வெளியே கொண்டு வந்தார்.
அவர்கள் காட்டுக்காளையைப்
போன்று பலம் பொருந்தியவர்கள்.
23 யாக்கோபின் ஜனங்களைத்
தோற்கடிக்கிற வல்லமை
எதுவும் இல்லை.
இஸ்ரவேல் ஜனங்களை தடுத்து
நிறுத்துகிற மந்திரம் எங்குமில்லை.
'தேவன் செய்த மாபெரும்
செயல்களை பாருங்கள்' என்று
யாக்கோபையும் இஸ்ரவேல்
ஜனங்களையும் பற்றி ஜனங்கள்
பேசுவார்கள்.
24 அந்த ஜனங்கள் சிங்கம் போன்று
பலமுள்ளவர்கள்.
அவர்கள் சிங்கத்தைப் போன்றே
சண்டையிடுவார்கள்.
அந்தச் சிங்கம் பகைவரை அடித்துத்
தின்னும்வரை ஓய்வு எடுக்காது.
தனக்கு எதிராக வந்த ஜனங்களின்
இரத்தத்தைக் குடிக்கும்வரை
அது ஓய்வு எடுக்காது" என்றான்.

25பிறகு பாலாக் பிலேயாமிடம், "நீ
அவர்களுக்கு நன்மை நடக்குமாறு கேட்க
வேண்டாம். நீ அவர்களுக்கு தீமை
ஏற்படுமாறும் கேட்க வேண்டாம்" என்றான்.
26பிலேயாம் அதற்கு, "கர்த்தர் சொல்லச்
சொல்லுகிறவற்றைத்தான் நான் சொல்வேன்
என்று ஏற்கெனவே உனக்குச் சொல்லியி
ருக்கிறேன்" என்று பதிலுரைத்தான்.
27பிறகு பாலாக் பிலேயாமிடம் "எனவே
என்னோடு இன்னொரு இடத்திற்கு வா.
அங்கேயிருந்து நீ அவர்களைச் சபிப்பது
தேவனுக்குப் பிடிக்கலாம்" என்று அழைத்
தான். 28பிலேயாமைப் பாலாக் அழைத்துக்
கொண்டு பேயோர் என்னும் மலையின்
உச்சிக்குப் போனான். அது பாலை
வனத்திற்கு மேலே தெரிந்தது.
29பிலேயாம், "ஏழு பலிபீடங்களை இங்கே
கட்டு. பிறகு ஏழு காளைகளையும் ஏழு
ஆட்டுக்கடாக்களையும் பலிக்கென்று ஆயத்
தப்படுத்து" என்றான். 30பிலேயாம் கேட்டுக்
கொண்டபடி பாலாக் செய்தான்.
பலிபீடத்தில் காளைகளையும் ஆட்டுக்கடாக்
களையும் பலியிட்டான்.

### பிலேயாமின் மூன்றாவது செய்தி

24 இஸ்ரவேல் ஜனங்களை கர்த்தர்
ஆசீர்வதிக்க வேண்டும் என்று
விரும்புவதைப் பிலேயாம் கவனித்தான்.
எனவே, பிலேயாம் அதனை மாற்ற
எவ்வகையான மந்திரத்தையும் பயன்படுத்த
முயற்சி செய்யவில்லை. ஆனால் பிலேயாம்

திரும்பி பாலைவனத்தை நோக்கிப்
பார்த்தான். 2 பிலேயாம் இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரையும் பார்த்தான். அவர்கள்
வெவ்வேறு பகுதிகளில் தங்கள் கோத்திரங்
களோடு கூடாரமிட்டுத் தங்கி இருந்தார்கள்.
தேவனுடைய ஆவி பிலேயாமின் மீது
வந்தது. 3 அதனால் அவன் கீழ்க்கண்ட
வற்றைக் கூறினான்:

"பேயோரின் குமாரனான
பிலேயாமிடமிருந்து வரும் செய்தி.
நான் தெளிவாக பார்த்தவற்றைபற்றிப்
பேசிக் கொண்டிருக்கிறேன்.
4 நான் தேவனிடமிருந்து
இந்த செய்தியைக் கேட்டேன்.
சர்வ வல்லமையுள்ள தேவன்
எனக்குக் காட்டியதை
நான் பார்த்தேன்.
நான் தெளிவாகப் பார்த்தவற்றைப்
பணிவாகக் கூறுகிறேன்.
5 "யாக்கோபின் ஜனங்களே,
உங்கள் கூடாரங்கள் அழகாக
இருக்கின்றன!
இஸ்ரவேல் ஜனங்களே உங்கள்
வீடுகள் அழகாக இருக்கின்றன!
6 நீங்கள் நதிக்கரையில் அமைக்கப்பட்ட
தோட்டம் போன்றும்,
ஆற்றங்கரையில் வளர்ந்த
தோட்டம் போன்றும்
இருக்கின்றீர்கள்.
கர்த்தரால் நடப்பட்ட வாசனை
நிறைந்த அடர்ந்த செடிகளைப்
போன்று இருக்கின்றீர்கள்.
தண்ணீர்க் கரையில் வளர்ந்திருக்கும்
அழகான மரங்களைப் போன்று
இருக்கின்றீர்கள்.
7 உங்கள் விதைகள் வளர்வதற்கேற்ற
போதுமான தண்ணீரை
நீங்கள் பெறுவீர்கள்.
ஆகாக் அரசனைவிட உங்கள்
அரசன் பெரியவன்.
உங்கள் ராஜ்யம் மிகப் பெரியதாகும்.
8 "தேவன் அந்த ஜனங்களை எகிப்தை
விட்டு வெளியே கொண்டு வந்தார்.
அவர்கள் காட்டுக் காளையைப்
போன்று பலமுள்ளவர்கள்.
அவர்கள் பகைவர்கள்
அனைவரையும் தோற்கடிப்பார்கள்.
அவர்களின் எலும்பை நொறுக்கி,
தங்கள் அம்புகளை எய்வார்கள்.
9 "இஸ்ரவேல் ஜனங்கள் சிங்கம்
போன்றவர்கள்.
அவர்கள் சுருண்டு
படுத்திருக்கிறார்கள்.
ஆமாம்! அவர்கள் இளம் சிங்கத்தைப்
போன்றவர்கள்.
எவரும் அவர்களை எழுப்ப
விரும்பவில்லை!
உங்களை ஆசீர்வதிப்பவர்கள்
ஆசீர்வதிக்கப்படுவார்கள்.
உங்களை சபிப்பவர்கள்
சபிக்கப்படுவார்கள்."

10 பிலேயாம் மீது பாலாக்குக்கு பெருங்
கோபம் ஏற்பட்டது. பாலாக் பிலேயாமிடம்,
"நீ வந்து என் பகைவருக்கு எதிராகப்
பேசும்படி அழைத்தேன். ஆனால் நீ
அவர்களை ஆசீர்வதிக்கிறாய். நீ அவர்களை
மூன்று முறை ஆசீர்வதித்திருக்கிறாய்."
11 இப்போது இந்த இடத்தை விட்டு வீட்டிற்கு
ஓடிப்போ. நான் உனக்கு ஒரு நல்ல
தொகையைக் கொடுப்பதாகச் சொல்லி
யிருந்தேன். ஆனால் உனது பரிசை நீ
இழப்பதற்குக் கர்த்தர் காரணமாக இருந்து
விட்டார்" என்றான்.
12 ஆனால் பிலேயாம், "நீ என்னிடம்
சிலரை அனுப்பினாய், அவர்கள் என்னை
அழைத்தனர். ஆனால் நான் அவர்களிடம்,
13 'பாலாக் தனது அழகான வீடு நிறைய
வெள்ளியும் தங்கமும் எனக்குத் தரலாம்.
ஆனால் கர்த்தர் எதைச் சொல்லவேண்டும்
என்று ஆணையிடுகிறாரோ அதை மட்டுமே
சொல்வேன். நானாக எதையும் என்னால்
செய்யமுடியாது. அது நன்மையோ அல்லது
தீமையாகவோ இருக்கலாம். கர்த்தர்
ஆணையிட்டபடியே நான் சொல்ல
வேண்டும்' என்றேன். நான் உன்
ஆட்களிடம் கூறியதை நினைத்துப் பார்.
14 நான் இப்போது என் சொந்த ஜனங்களிடம்
திரும்பிச் செல்கிறேன். ஆனால் நான் உனக்கு
இந்த எச்சரிக்கையை கொடுக் கிறேன்.
இஸ்ரவேல் ஜனங்கள் உனக்கும் உன்
ஜனங்களுக்கும் வரும் நாட்களில் என்ன
செய்வார்கள் என்பதையும் உனக்குக்
கூறிவிடுகிறேன்" என்றான்.

### பிலேயாமின் கடைசிச் செய்தி

15 பிறகு பிலேயாம் கீழ்க்கண்டவற்றைக்
கூறினான்:

"பேயோரின் மகனாகிய பிலேயாம்
சொல்லும் செய்தி இது.
நான் தெளிவாகப் பார்த்தவற்றைப்
பற்றி மட்டுமே சொல்கிறேன்.
16 நான் இந்தச் செய்திகளை
தேவனிடமிருந்து கேட்டேன்.
உன்னதமான தேவன் கற்பித்தவற்றை
நான் அறிந்தேன்.
சர்வ வல்லமையுள்ள தேவன்
காட்டியவற்றை நான் கண்டேன்.
நான் தெளிவாகப் பார்த்தவற்றை
மட்டுமே உங்களுக்குப் பணிவுடன்
கூறுவேன்.
17 "கர்த்தர் வருவதை நான்
காண்கிறேன்.
ஆனால் இப்பொழுது அல்ல.

நான் அவரைக் காண்பேன்,
ஆனால் வெகு சீக்கிரம் அல்ல.
யாக்கோபின் குடும்பத்திலிருந்து
ஒரு நட்சத்திரம் வரும்.
இஸ்ரவேல் ஜனங்களிடமிருந்து
ஒரு அரசன் வருவார்.
அவர் மோவாப் ஜனங்களின்
தலைகளை நசுக்கி,
சேத்தின் பிள்ளைகளது
தலைகளையெல்லாம்
அந்த அரசன் அழிப்பார்.

18 இஸ்ரவேல் ஜனங்கள் பலத்தோடு
வளர்வார்கள்!
அவர்கள் ஏதோமின் நாட்டைப்
பெறுவார்கள்.
அவர்களது பகைவர்களான
சேயர்களின் நாட்டையும்
அவர்கள் கைப்பற்றுவார்கள்.
19 "யாக்கோபின் குடும்பத்திலிருந்து
ஒரு புதிய அரசன் வருவார்.
நகரத்தில் உயிரோடு மிஞ்சியிருக்கும்
ஜனங்களை அவர் அழிப்பார்."

20 பிறகு பிலேயாம் திரும்பி அமலேக்
ஜனங்களை நோக்கி,

"அமலேக் நாடானது அனைத்து
நாடுகளையும்விடப்
பலம்பொருந்தியது.
ஆனால் இந்த அமலேக்கும் கூட
அழிக்கப்படும்!"
என்று சொன்னான்.

21 பிறகு கேனிய ஜனங்களைப் பார்த்து:

"மலை உச்சியில் இருக்கும்
பறவையின் கூடுபோல உங்கள்
நாடு பாதுகாப்புடன் இருப்பதாக
நினைக்கிறீர்கள்.
22 ஆனால் கேனிய ஜனங்களும்
கூடுகளைப் போன்று
கர்த்தரால் அழிக்கப்படுவார்கள்.
அசீரியா உங்களைச் சிறை
பிடிக்கும்" என்றான்.

23 மேலும் அவன்:
"தேவன் இவ்வாறு செய்யும்போது
ஒருவனும் தப்பிக்க முடியாது.
24 சைப்ரஸிலிருந்து கப்பல்கள் வரும்.
அவர்கள் அசீரியாவையும்,
ஏபோரையும் தோற்கடிப்பார்கள்.
ஆனால் அந்தக் கப்பல்களும்
அழிக்கப்படும்" என்றான்.

25 பிறகு பிலேயாம் எழுந்து தன்
வீட்டிற்குத் திரும்பிப் போனான். பாலாக்
தன் பாதையில் சென்றான்.

### பேயோரில் இஸ்ரவேலர்கள்

25 இஸ்ரவேல் ஜனங்கள் அகாசியாவின்
அருகில் முகாமிட்டிருந்தார்கள்.
அப்போது அவர்கள் மோவாப் பெண்க
ளோடு பாலுறவுப் பாவத்தில் ஈடு
பட்டார்கள். 2-3 மோவாப் பெண்கள்
இஸ்ரவேல் ஜனங்களை அழைத்துப் போய்
தங்கள் போலியான தேவர்களுக்குப் பலி
கொடுக்கச் செய்தனர். இஸ்ரவேல் ஜனங்கள்
அப்போலியான தெய்வங்களை வணங்கவும்
அவர்களிட்ட பலிகளை உண்ணவும்
ஆரம்பித்தனர். அந்த இடத்தில், இஸ்ரவேல்
ஜனங்கள் பாகால் பேயோர் போன்ற
போலியான தேவர்களை வணங்கத் துவங்
கினார்கள். இதனால் அவர்கள் மீது கர்த்தர்
பெருங்கோபம் கொண்டார்.
4 கர்த்தர் மோசேயிடம், "இந்த ஜனங்களின்
தலைவர்களையெல்லாம் ஒன்று சேர். பிறகு
மற்றவர்கள் பார்க்கும்படி அவர்களைக்
கொன்று விடு. அவர்களின் பிணங்களை
என் பார்வையில் தூக்கில் போடு. பிறகு
மற்ற இஸ்ரவேல் ஜனங்கள் மீது நான்
கோபம் கொள்ளாமல் இருப்பேன்" என்றார்.
5 எனவே மோசே இஸ்ரவேலின் நீதிபதி
களிடம், "நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள்
கோத்திரங்களில், பாகால் பேயோர் போன்ற
போலியான தெய்வங்களை வணங்க
அழைத்துப் போனவர்களை கண்டு பிடித்து,
அவர்களைக் கொல்ல வேண்டும்" என்றார்.
6 அதே நேரத்தில் மோசேயும் இஸ்ர
வேலரின் முப்பர்களும் ஆசரிப்புக்
கூடாரத்தின் வாசலில் கூடினார்கள். இஸ்ர
வேலன் ஒருவன் மீதியானிய பெண்
ஒருத்தியைத் தன் சகோதரனின்
குடியிருப்பிற்கு அழைத்துப்போனதை மோ
சேயும் மற்ற தலைவர்களும் பார்த்து மிகவும்
வருத்தப்பட்டனர். 7 இதை ஆரோனின்
பேரனும், எலெயாசாரின் மகனுமான
பினெகாசும் பார்த்தான். ஒரு பெண்ணைக்
கூடாரத்திற்கு இஸ்ரவேலன் அழைத்துச்
செல்வதை அந்த ஆசாரியன் பார்த்ததும்
தன் ஈட்டியை எடுத்துக் கொண்டான்.
8 அவனும் அக்கூடாரத்திற்குள் பின்
தொடர்ந்து சென்றான். அந்த ஈட்டியால்
இஸ்ரவேலனையும் மீதியானியப் பெண்ணை
யும் கூடாரத்திலேயே கொன்றான். இரு
வரையும் ஒருசேர ஈட்டியால் குத்திக்
கொன்றுவிட்டான். அதே நேரத்தில் இஸ்ர
வேல் ஜனங்கள் மத்தியில் நோய் பரவி
விட்டது. பினெகாஸ் அவர்களைக் கொன்ற
தும் நோய் நிறுத்தப்பட்டது. 9 அந்நோயால்
24,000 ஜனங்கள் மரித்துப்போனார்கள்.
10 கர்த்தர் மோசேயை நோக்கி, 11 "நான்
ஜனங்கள் மீது மிகுந்த கோபம் கொண்டி
ருந்தேன். அவர்கள் எனக்கு மட்டுமே
சொந்தமானவர்களாக இருக்க வேண்டும்
என்று விரும்பினேன். ஆரோனின் மகனான
எலெயாசாரின் மகன் பினெகாஸ் இஸ்ரவேல்

ஜனங்களை என் கோபத்திலிருந்து காப்பாற்
றினான். எனவே, நான் அவர்களைக்
கொல்லவில்லை. 12நான் அவனோடு
சமாதான உடன்படிக்கைச் செய்து
கொள்வேன் என்று பினெகாசிடம்
கூறுங்கள். 13அவனும் அவனது குடும்பத்தி
லுள்ளவர்களும், அவனுக்குப் பின் வாழும்
சந்ததியினரும் எப்போதும் ஆசாரியர்களாக
இருப்பார்கள். ஏனென்றால் அவனுக்குக்
தேவன் மீது பலமான பக்தியுள்ளது.
இஸ்ரவேல் ஜனங்களை சுத்தப்படுத்தும்
செயல்களை அவன் செய்து விட்டான்"
என்றார்.
14மீதியானியப் பெண்ணோடு கொல்லப்
பட்ட இஸ்ரவேலனின் பெயர் சிம்ரி. இவன்
சாலூவின் மகன். இவன் சிமியோன்
கோத்திரத்திலுள்ள தலைவன். 15கொல்லப்
பட்ட மீதியானிய பெண்ணின் பெயர் கஸ்பி.
அவள் சூரின் மகள். சூர் மீதியானியக்
கோத்திரத்தின் தலைவனாகவும், குடும்பத்
தலைவனாகவும் விளங்கினான்.
16கர்த்தர் மோசேயிடம், 17"மீதியானிய
ஜனங்கள் உங்கள் பகைவர்கள். நீ
அவர்களை கொல்ல வேண்டும். 18அவர்கள்
ஏற்கெனவே உங்கள் அனைவரையும்
பகைக்கின்றனர். பேயோரில் அவர்கள்
தந்திரம் செய்தனர். அவர்கள் கஸ்பி என்ற
பெண் மூலம் உங்களிடம் தந்திரம் செய்தனர்.
அவள் மீதியானிய தலைவரின் மகள்.
ஆனால் இஸ்ரவேல் ஜனங்களை அழிக்கும்
நோய் வந்தபோது அவள் கொல்லப்
பட்டாள். ஜனங்கள் தந்திரத்திற்குட்பட்டு
பாகால் பேயோர் போன்ற பொய்யான
தேவர்களை வணங்கியதால் இந்நோய்
ஏற்பட்டது" என்றார்.

### ஜனங்கள் கணக்கிடப்படுதல்

26 பெருநோய் ஏற்பட்ட பிறகு கர்த்தர்
மோசேயிடமும் ஆரோனின் மகனும்,
ஆசாரியனுமாகிய எலெயாசரிடமும்
பேசினார். 2அவர், "இஸ்ரவேல் ஜனங்களை
எண்ணிக் கணக்கிடுங்கள். 20 வயதும்
அதற்கு மேலுமுள்ள ஆண்களைக் குடும்ப
வாரியாகக் கணக்கிட்டு பட்டியல்
செய்யுங்கள். இவர்களே இஸ்ரவேல் படை
யில் சேர்ந்து பணியாற்றும் தகுதி
உடையவர்கள்" என்றார்.
3இந்த நேரத்தில் ஜனங்கள் மோவாபின்
யோர்தான் பள்ளத்தாக்குப் பகுதியில் முகா
மிட்டிருந்தார்கள். இது, யோர்தான் ஆறு
எரிகோவிலிருந்து வந்து கடக்கும்
இடமாகும். எனவே மோசேயும்
ஆசாரியனாகிய எலெயாசாரும் ஜனங்க
ளிடம் இங்கே பேசினர். அவர்கள், 4"நீங்கள்
20 வயதும் அதற்கு மேற்பட்டுமுள்ள
ஆண்களை எண்ணிக் கணக்கிட வேண்டும்.
கர்த்தர் மோசேயிடம் இந்த ஆணையை
அளித்திருக்கிறார்" என்றனர். எகிப்தி
லிருந்து வெளியேறி வந்த ஜனங் களின்
பட்டியல் இதுதான்:
5ரூபன் குடும்பத்தில் உள்ளவர்கள்
இவர்கள்தான்: (ரூபன் இஸ்ரவேலின் மூத்த
மகன்.) அந்தக் குடும்பங்களாவன:

ஆனோக்கியர் குடும்பத்துக்குத்
 தந்தையான ஆனோக்,
பல்லூவியர் குடும்பத்துக்குத்
 தந்தையான பல்லூ,
6 எஸ்ரோனியர் குடும்பத்துக்குத்
 தந்தையான எஸ்ரோன்,
கர்மீயர் குடும்பத்துக்குத்
 தந்தையான கர்மீ.

7இவர்கள் ரூபனின் குழுவில் உள்ள
குடும்பத்தினர். இவர்களில் மொத்தம் 43,730
ஆண்கள் கணக்கிடப்பட்டனர்.
8பல்லூவின் மகன் எலியாப்.
9எலியாப்புக்கு மூன்று மகன்கள். அவர்கள்
நேமுவேல், தாத்தான், அபிராம் ஆகியோர்.
இவர்களில் தாத்தான், அபிராம் என்ற
இரு தலைவர்களும், மோசேக்கும்
ஆரோனுக்கும் எதிராகத் திரும்பினவர்கள்
ஆவார்கள். இவர்கள் கர்த்தருக்கு எதிராகச்
செயல்பட்ட கோராகைப் பின்பற்றினார்கள்.
10அப்போது பூமி பிளந்து கோராகையும்
அவனைப் பின் பற்றியவர்களையும்
விழுங்கிவிட்டது. அதினால் 250 பேர்
மரித்துப்போனார்கள்! அது இஸ்ரவேல்
ஜனங்கள் அனைவருக்கும் எச்சரிக்கையாய்
இருந்தது. 11ஆனால் கோராகின் குடும்பத்
தைச் சேர்ந்த பலர் மரிக்கவில்லை.
12சிமியோனின் கோத்திரத்திலும் பல
குடும்பங்கள் இருந்தன:

நேமுவேல் குடும்பத்தின் தந்தையான
 நேமுவேல்,
யாமினியர் குடும்பத்தின் தந்தையான
 யாமினி,
யாகீனியர் குடும்பத்தின் தந்தையான
 யாகீன்,
13 சேராகியர் குடும்பத்தின் தந்தையான
 சேராகி,
சவுலியர் குடும்பத்தின் தந்தையான
 சவுல்.

14இவர்களே சிமியோனின் கோத்திரத்தில்
உள்ளவர்கள். இவர்களில் ஆண்கள் மொத்தம்
22,200 பேர் இருந்தனர்.
15காத் கோத்திரத்தில் கீழ்க்கண்டவர்கள்
இருந்தனர்.

சிப்போனியர் குடும்பத்தின்
 தந்தையான சிப்போன்,
ஆகியரின் குடும்பத்தின் தந்தையான
 ஆகி,

சூனியர் குடும்பத்தின் தந்தையான
சூனி,
16 ஒஸ்னியர் குடும்பத்தின் தந்தையான
ஒஸ்னி,
ஏரியர் குடும்பத்தின் தந்தையான
ஏரி,
17 ஆரோதியர் குடும்பத்தின் தந்தையான
ஆரோத்,
அரேலியர் குடும்பத்தின் தந்தையான
அரேலி,

18 இவர்களே காத்தின் குடும்பத்திலுள்ளவர்கள். இவர்களின் ஆண்கள் மொத்தம் 40,500 பேர் இருந்தனர்.
19-20 யூதாவின் கோத்திரத்தில் உள்ளவர்களின் பெயர்கள்:

சேலாவியர் குடும்பத்தின் தந்தையான
சேலாவி,
பாரேசியர் குடும்பத்தின் தந்தையான
பாரேசி,
சேராவியர் குடும்பத்தின் தந்தையான
சேரா ஆகியோர்.
(யூதாவின் ஏர், ஓனான் எனும் இரு
மகன்களும் கானான் நாட்டில்
மரித்துப் போனார்கள்.)
21 பாரேசின் மகன்களின் குடும்பத்தில்,
எஸ்ரோனியர் குடும்பத்தின்
தந்தையாக எஸ்ரோனியும்,
ஆமூலியர் குடும்பத்தின்
தந்தையாக ஆமூலும் இருந்தனர்.

22 இவர்கள் அனைவரும் யூதாவின் கோத்திரத்தில் உள்ளவர்கள். இவர்களில் ஆண்கள் மொத்தம் 76,500 பேர் இருந்தனர்.
23 இசக்காரின் கோத்திரத்தில்,

தோலாவியர் குடும்பத்தின் தந்தையாக
தோலாவும்
பூவாவியர் குடும்பத்தின் தந்தையாக
பூவாவும்
24 யாசூபியர் குடும்பத்தின் தந்தையாக
யாசூபும்
சிம்ரோனியர் குடும்பத்தின்
தந்தையாக சிம்ரோனும் இருந்தனர்.

25 இவர்கள் இசக்காரின் கோத்திரத்தில் உள்ளவர்கள். இவர்களில் ஆண்கள் மொத்தம் 64,300 பேர் இருந்தனர்.
26 செபுலோனியர் கோத்திரத்தில்,

சேரேத்தியர் குடும்பத்தின் தந்தையாக
சேரேத்தும்,
ஏலோனியர் குடும்பத்தின் தந்தையாக
ஏலோனும்,
யாலேயேலியர் குடும்பத்தின்
தந்தையாக யாலேயேலும்
இருந்தனர்.

27 இவர்கள் செபுலோனின் கோத்திரத்தில் உள்ளவர்கள். இவர்களின் ஆண்கள் மொத்தம் 60,500 பேர் இருந்தனர்.
28 யோசேப்பிற்கு மனாசே, எப்பிராயீம் எனும் இரண்டு மகன்கள் இருந்தனர், இருவரும் தம் சொந்தக் குடும்பங்களோடு, ஒரு கோத்திரமாக உருவானார்கள்.
29 மனாசேயின் குடும்பங்கள் பின்வருமாறு:

மாகீர் - மாகீரியர் குடும்பம்
(மாகீர் கிலெயாத்தின் தந்தை)
கிலெயாத் - கிலெயாத்தின் குடும்பம்.
30 கிலெயாத்தின் கோத்திரத்தில் உள்ள
குடும்பங்கள்:
ஈயேசேர் - ஈயேசேரியரின்
குடும்பம்.
ஏலேக் - ஏலேக்கியரின் குடும்பம்.
31 அஸ்ரியேல் - அஸ்ரியேலரின்
குடும்பம்.
சேகேம் - சேகேமியரின் குடும்பம்.
32 செமீதா - செமீதாவியரின்
குடும்பம்.
ஏப்பேர் - ஏப்பேரியரின் குடும்பம்.
33 ஏப்பேரின் மகன் செலோப்பியாத்.
ஆனால் அவனுக்கு மகன்கள் இல்லை.
மகள்கள் மட்டுமே இருந்தனர். மக்லாள்,
நோவாள், ஒக்லாள், மில்காள், திர்சாள்
என்பவை அவர்களின் பெயர்களாகும்.

34 இவர்கள் மனாசேயின் கோத்திரத்தில் உள்ளவர்கள். இவர்களில் ஆண்கள் மொத்தம் 52,700 பேர் இருந்தனர்.
35 எப்பிராயீமுடைய கோத்திரத்தில் உள்ள குடும்பங்கள்:

சுத்தெலாகி - சுத்தெலாகியரின்
குடும்பம்,
பெகேர் - பெகேரியரின் குடும்பம்,
தாகான் - தாகானியரின் குடும்பம்,
36 ஏரான் சுத்தெலாகியர்
குடும்பத்தவன்.
இவனது குடும்பம் ஏரானியர்
குடும்பம் ஆயிற்று.

37 இவர்கள் எப்பிராயீமுடைய கோத்திரத்தில் உள்ளவர்கள். இவர்களில் ஆண்கள் மொத்தம் 32,500 பேர் இருந்தனர். இந்த ஜனங்கள் அனைவரும் யோசேப்பின் குடும்பத்தில் உள்ளவர்கள்:
38 பென்யமீனின் கோத்திரத்தில் உள்ள குடும்பங்கள்:

பேலா - பேலாவியரின் குடும்பம்,
அஸ்பேல் - அஸ்பேலியரின்
குடும்பம்,
அகிராம் - அகிராமியரின் குடும்பம்,
39 சுப்பாம் - சுப்பாமியரின் குடும்பம்,
உப்பாம் - உப்பாமியரின் குடும்பம்,

40 போலாவின் கோத்திரத்தில் உள்ள
குடும்பங்கள்:
ஆரேது - ஆரேதியரின் குடும்பம்,
நாகமான் - நாகமானியரின்
குடும்பம்,

41இவர்கள் அனைவரும் பென்யமீனின்
கோத்திரத்தில் உள்ளவர்கள். இவர்களில்
ஆண்கள் மொத்தம் 45,600 பேர் இருந்தனர்.
42தானின் கோத்திரத்தில் உள்ள
குடும்பங்கள்:

சூகாம் - சூகாமியரின் குடும்பம்.

இது தானின் கோத்திரத்திலிருந்து வந்த
கோத்திரங்களாகும். 43சூகாமியரின் கோத்
திரத்தில் ஏராளமான குடும்பங்கள் இருந்தன.
இவர்களில் ஆண்கள் மொத்தம் 64,400
பேர் இருந்தனர்.
44ஆசேருடைய கோத்திரத்தில் உள்ள
குடும்பங்கள்:

இம்னா - இம்னாவியரின் குடும்பம்.
இஸ்வி - இஸ்வியரின் குடும்பம்.
பெரீயா - பெரீயாவியரின் குடும்பம்.
45 பெரீயாவின் குடும்பங்களில்
உள்ளவர்கள்:
ஏபேர் - ஏபேரியரின் குடும்பம்,
மல்கியேல் - மல்கியேலியரின்
குடும்பம்.

46சாராள் என்ற பேரில் ஆசேருக்கு
ஒரு மகள் இருந்தாள். 47இவர்கள் அனைவரும்
ஆசேரின் கோத்திரத்தில் உள்ளவர்கள்.
இவர்களில் ஆண்கள் மொத்தம் 53,400 பேர்
இருந்தனர்.
48நப்தலியினுடைய குடும்பத்தில் உள்ள
குடும்பங்கள்:

யாத்சியேல் - யாத்சியேலியரின்
குடும்பம்,
கூனி - கூனியரின் குடும்பம்,
49 எத்சேர் - எத்சேரியரின் குடும்பம்.
சில்லேமின் - சில்லேமியரின்
குடும்பம்.

50இவர்கள் அனைவரும் நப்தலியின்
கோத்திரத்தில் உள்ளவர்கள். இவர்களில்
ஆண்கள் மொத்தம் 45,400 பேர் இருந்தனர்.
51எனவே மொத்தம் 601,730 இஸ்ரவேல்
ஆண்கள் இருந்தனர்.
52கர்த்தர் மோசேயிடம், 53“இந்த நாடானது
பங்கிடப்பட்டு இவர்களுக்குக் கொடுக்கப்
படுகிறது. ஒவ்வொரு கோத்திரமும்
போதுமான நிலத்தைப் பெற்றுக்கொள்ளும்.
54“பெரிய கோத்திரம் மிகுதியான நிலத்தைப்
பெறும். சிறிய கோத்திரம் குறைந்த அளவு
நிலத்தைப் பெறும். அவர்கள் பெற்றுள்ள
இந்த நாடானது சமமாகப் பங்கு
வைக்கப்பட்டு அவர்களுக்குக் கொடுக்கப்
படும். 55ஆனால் நீயோ சீட்டுக் குலுக்கல்
முறை மூலமே எந்தப் பகுதி எந்தக்
கோத்திரத்திற்கு உரியது என்பதை முடிவு
செய்யவேண்டும். ஒவ்வொரு கோத்திரமும்
தனது பங்கினைப் பெற வேண்டும்.
அப்பங்கானது கோத்திரத்தின் பெயரிலேயே
கொடுக்கப்பட வேண்டும். 56சிறியதும்
பெரியதுமான அனைத்து கோத்திரத்திற்கும்
நிலங்கள் கொடுக்கப்படும். இதனை
முடிவுசெய்ய சீட்டு குலுக்கல் முறையைக்
கையாளவேண்டும்” என்றார்.
57அவர்கள் லேவியின் கோத்திரத்தையும்
எண்ணிக் கணக்கிட்டனர். லேவியின்
கோத்திரத்தில் உள்ள குடும்பங்கள்:

கெர்சோன் - கெர்சோனியரின்
குடும்பம்.
கோகாத் - கோகாத்தியரின் குடும்பம்.
மெராரி - மெராரியரின் குடும்பம்.

58 லிப்னீயரின் குடும்பம்,
எப்ரோனியரின் குடும்பம்,
மகலியரின் குடும்பம்,
மூசியரின் குடும்பம்,
கோராகியரின் குடும்பம்

ஆகியவை லேவியரின் கோத்திரத்தில்
உள்ள குடும்பங்கள்.
அம்ராமும் கோகாத் கோத்திரத்தைச்
சேர்ந்தவன். 59அம்ராமின் மனைவியின்
பெயர் யோகெபேத். இவளும் லேவியின்
கோத்திரத்தில் உள்ளவள். அவள் எகிப்திலே
பிறந்தவள். யோகெபேத்தும் அம்ராமும்
ஆரோனையும் மோசையும் பெற்றனர்.
அவர்களுக்கு மிரியாம் என்ற மகளும்
உண்டு.
60ஆரோன் நாதாப், அபியூ, எலெயாசார்,
இத்தாமர் ஆகியோரின் தந்தை. 61ஆனால்
நாதாபும் அபியூவும் மரித்துப்போனார்கள்.
ஏனென்றால் அவர்கள் அங்கீகரிக்கப்படாத
அக்கினியால் கர்த்தருக்கு பலியைச்
செலுத்தினார்கள்.
62லேவியின் கோத்திரத்தில் ஆண்கள்
மொத்தம் 23,000 பேர் இருந்தனர். ஆனால்
இவர்கள் மற்ற இஸ்ரவேல் ஜனங்களோடு
சேர்த்து எண்ணி கணக்கிடப்படவில்லை.
அவர்கள், மற்றவர்களுக்குக் கர்த்தர் கொடுத்த
நாட்டின் பங்குகளையும் பெறவில்லை.
63மோசேயும் எலெயாசாராகிய ஆசாரிய
னும் சேர்ந்து அனைத்து ஜனங்களையும்
எண்ணிக் கணக்கிட்டனர். மோவாபின்
யோர்தான் பள்ளத்தாக்கில் இருந்தபோது
அவர்கள் இஸ்ரவேல் ஜனங்களை எண்ணிக்
கணக்கிட்டனர். இந்த இடம் யோர்தானுக்கு
அப்பால் எரிகோவின் அருகில் இருந்தது.
64பல ஆண்டுகளுக்கு முன்னால், சீனாய்

*பாலைவனத்தில் மோசேயும் ஆரோனும்*
*இஸ்ரவேல் ஜனங்களை எண்ணிக் கணக்கிட்*
*டனர். ஆனால் அவர்கள் மரித்துவிட்டனர்.*
*அவர்களில் யாரும் உயிரோடு இல்லை.*
**65***ஏனென்றால் அவர்கள் அனைவரும்*
*பாலைவனத்திலேயே மரித்துப்போவார்கள்*
*என்று கர்த்தர் சொல்லியிருந்தபடியால்*
*அவர்கள் மரித்தார்கள். அவர்களில் இருவர்*
*மட்டுமே உயிரோடு இருந்தனர். ஒருவன்,*
*எப்புன்னேயின் மகனான காலேப். இன்*
*னொருவன் நூனின் மகனாகிய யோசுவா.*

### செலோப்பியாத்தின் மகள்கள்

**27** *செலோப்பியாத் ஏபேரின் மகன்.*
*ஏபேர் கிலெயாத்தின் மகன்.*
*கிலெயாத் மாகீரின் மகன். மாகீர் மனாசே*
*யின் மகன். மனாசே யோசேப்பின் மகன்.*
*செலோப்பியாத்திற்கு ஐந்து மகள்கள்*
*இருந்தனர். அவர்களின் பெயர்கள் மக்லாள்,*
*நோவாள், ஒக்லாள், மில்காள், திர்சாள்*
*என்பவையாகும். **2**இந்த ஐந்து பேரும்*
*ஆசரிப்புக் கூடாரத்திற்குச் சென்று அங்கே*
*மோசே, ஆசாரியனாகிய எலேயாசார்,*
*தலைவர்கள் மற்றும் ஜனங்கள் முன்னால்*
*நின்றனர்.*

*அந்த ஐந்து பேரும், **3**"நாங்கள் பாலை*
*வனத்தின் வழியாகப் பயணம் செய்தபோது*
*எங்கள் தந்தை மரித்துப்போனார். அவரது*
*மரணம் ஒரு இயற்கை மரணம். அவர்*
*கோராவின் குழுவைச் சேர்ந்தவரல்ல.*
*(கோரா கர்த்தருக்கு எதிராக மாறியவன்.)*
*ஆனால் எங்கள் தந்தைக்கு ஆண்*
*பிள்ளைகள் இல்லை. **4**எங்கள் தந்தையின்*
*பெயர் சொல்ல ஆண் வாரிசுகள் இல்லை.*
*எங்கள் தந்தையின் பெயர் தொடர்ந்து*
*வழங்கப்படாதது சரியல்ல. அவருக்கு ஆண்*
*குழந்தைகள் இல்லாததால் அவரது பெயர்*
*முடிந்து போகிறது. ஆகையால் எங்கள்*
*தந்தையின் சகோதரர்கள் பெற்ற நிலங்களில்*
*ஒரு பங்கை எங்களுக்கும் தருமாறு நாங்கள்*
*கேட்டுக் கொள்கிறோம்" என்று முறை*
*யிட்டார்கள்.*

**5***இதனால் என்னச் செய்யலாம் என்று*
*மோசே கர்த்தரிடம் கேட்டான். **6**கர்த்தர்*
*மோசேயிடம், **7**"செலோப்பியாத்தின் மகள்*
*கள் கூறுவது சரிதான். அவர்கள் தம்*
*தந்தையின் சகோதரர்களோடு தங்கள்*
*பங்கைப் பெற்றுக்கொள்ளலாம். எனவே*
*இவர்களின் தந்தைக்குரிய நிலத்தை இவர்*
*களுக்கே கொடுக்கவும்.*

**8**"*இஸ்ரவேல் ஜனங்களுக்கு இந்தச்*
*சட்டத்தையும் ஏற்படுத்து. 'ஒருவேளை*
*ஒருவனுக்கு ஆண்பிள்ளை இல்லாவிடில்*
*அவன் மரித்தபின் அவனுக்குரிய அனைத்*
*தும் அவனது பெண் பிள்ளைகளுக்கு*
*உரியதாகும். **9**ஒருவனுக்கு பெண்*
*குழந்தைகளும் இல்லாவிட்டால் அவனுக்*
*குரிய அனைத்தும் அவனது சகோதரர்*
*களுக்கு உரியதாகும். **10**ஒருவனுக்குச்*
*சகோதரர்களும் இல்லாவிட்டால் அவனுக்*
*குரிய அனைத்தும் அவனது தந்தையின்*
*சகோதரர்களுக்கு உரியதாகும். **11**ஒருவனது*
*தந்தைக்கும் சகோதரர்கள் இல்லாவிட்டால்*
*பிறகு அவன் குடும்பத்திலுள்ள நெருங்கிய*
*உறவினருக்கு அவனுக்குரிய அனைத்தும்*
*உரியதாகும். இது இஸ்ரவேல் ஜனங்களுக்கு*
*ஒரு சட்டமாக வேண்டும்'" என்றார்.*

### புதிய தலைவராக யோசுவா

**12***பிறகு கர்த்தர் மோசேயிடம், "யோர்தான்*
*நதிக்குக் கிழக்கேயுள்ள பாலைவனப்*
*பகுதியில் உள்ள மலைகள் ஒன்றின் மீது*
*ஏறிச்செல். அங்கே நான் இஸ்ரவேல்*
*ஜனங்களுக்கு அளித்த பூமியை நீ*
*பார்க்கலாம். **13**நீ அந்த நாட்டைப் பார்த்த*
*பிறகு, நீயும் உனது சகோதரன் ஆரோனைப்*
*போன்று மரித்துப்போவாய். **14**சீன் என்னும்*
*பாலைவனத்தில் தண்ணீர் விஷயமாக*
*இஸ்ரவேல் ஜனங்கள் கலகம் செய்ததை*
*நினைத்துப் பார். நீயும் உனது சகோதரன்*
*ஆரோனும் நான் கூறியபடி செய்யவில்லை.*
*நான் பரிசுத்தமானவர் என்பதை ஜனங்களுக்*
*குக் காட்டி என்னை கனப்படுத்தாமல்*
*விட்டுவிட்டீர்கள்." (இது சீன் என்னும்*
*பாலைவனத்தில், காதேஸ் என்ற இடத்தில்*
*மேரிபா தண்ணீருக்காக நிகழ்ந்தது.)*

**15***மோசே கர்த்தரிடம், **16**"ஜனங்கள் என்ன*
*நினைக்கிறார்கள் என்பது கர்த்தராகிய*
*உமக்கு நன்கு தெரியும். கர்த்தாவே! இந்த*
*ஜனங்களுக்கு ஒரு புதிய தலைவனைத்*
*தேர்ந்தெடுத்து விடவேண்டும் என்று*
*உம்மை வேண்டிக்கொள்கிறேன். **17**இந்த*
*ஜனங்களை இந்த நாட்டிலிருந்து அழைத்துப்*
*போய் புதிய நாட்டில் சேர்க்கும் புதிய*
*தலைவனை கர்த்தர் தேர்ந்தெடுக்க வேண்டும்*
*என்று வேண்டிக்கொள்கிறேன். அதற்குப்*
*பின்பு இந்த ஜனங்கள் மேய்ப்பன் இல்லாத*
*ஆடுகளைப் போன்று ஆக மாட்டார்கள்"*
*என்றான்.*

**18***எனவே கர்த்தர் மோசேயிடம், "நூனின்*
*மகனான யோசுவாவே புதிய தலைவன்.*
*அவன் மிகவும் ஞானம் உள்ளவன்.*
*அவனைப் புதிய தலைவனாக்கு. **19**முதலில்*
*அவனை ஆசாரியனாகிய எலெயாசார்*
*முன்பும் மற்ற ஜனங்கள் முன்பும் நிறுத்து.*
*பிறகு அவனைத் தலைவனாக ஏற்படுத்து.*
**20**"*நீ அவனைத் தலைவனாக்குவதை*
*ஜனங்கள் காணும்படி செய். அப்போது*
*ஜனங்கள் அவனுக்கு அடங்கி நடப்பார்கள்.*
**21***யோசுவா எதைப்பற்றியாவது முடிவு*
*எடுக்கவேண்டுமானால், அவன் ஆசாரிய*
*னாகிய எலெயாசார் முன் நிற்கவேண்டும்.*
*எலெயாசார் ஊரிமைப் பயன்படுத்தி*
*கர்த்தருடைய பதிலை அறிந்துகொள்வான்.*
*பின் கர்த்தர் சொல்வதை யோசுவாவும்*
*இஸ்ரவேல் ஜனங்களும் செய்யவேண்டும்.*

அவன், 'போருக்குப் போங்கள்' என்று
சொன்னால், அவர்கள் போருக்குப்
போவார்கள். அவன் 'வீட்டிற்கு போங்கள்'
என்று சொன்னால், அவர்கள் வீட்டிற்குப்
போவார்கள்" என்றார்.
22கர்த்தருடைய வார்த்தைகளுக்கு மோசே
கீழ்படிந்தான். இஸ்ரவேல் ஜனங்களுக்கும்
ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் முன்பு
நிற்குமாறு யோசுவாவிடம் மோசே கூறி
னான். 23பின் தனது கையை அவன்மேல்
வைத்து அவனைப் புதிய தலைவனாக
ஆக்கினான். அவன் இதனைக் கர்த்தர்
சொன்னபடியே செய்து முடித்தான்.

## அனுதினப் பலிகள்

28 கர்த்தர் மோசேயிடம் பேசினார்.
அவர், 2"இஸ்ரவேல் ஜனங்களுக்கு
இந்தக் கட்டளையையும் கொடு. எனக்குரிய
தானியக் காணிக்கையையும், பலிகளையும்
உரிய காலத்தில் கொடுக்க வேண்டும்
என்று சொல். அவற்றில் தகன பலியும்
ஒன்று. அதன் நறுமணம் கர்த்தருக்கு மிகவும்
பிடிக்கும். 3கர்த்தருக்கு ஜனங்கள் கொடுக்க
வேண்டிய பலிகளில் நெருப்பில் இடப்படும்
தகன பலியும் ஒன்று. ஒவ்வொரு நாளும்
ஒரு வயதுடைய பழுதற்ற இரண்டு
ஆட்டுக்குட்டிகளைப் பலியிட வேண்டும்.
4இவற்றில் ஒன்றைக் காலையிலும், மற்றொன்
றைச் சூரியன் அஸ்தமிக்கும் வேளையிலும்
பானங்களின் காணிக்கையோடு கொடுக்க
வேண்டும். 5பிறகு தானியக் காணிக்கையும்
தரவேண்டும். அதாவது ஒரு மரக்காலில்
பத்தில் ஒரு பங்கான மெல்லிய மாவை,
காற்படி ஒலிவ எண்ணெயிலே பிசைந்து
செலுத்த வேண்டும். 6(சீனாய் மலையில்
அவர்கள் இவ்வாறு செய்யத் தொடங்கி
னார்கள். அவர்கள் இதனை நெருப்பில்
தகன பலியாகச் செய்தனர். அதன் நறுமணம்
கர்த்தருக்கு மிகவும் பிடித்தமாயிருந்தது.)
7அவர்கள் தகன பலியோடுச் சேர்த்து
பானங்களின் காணிக்கையையும் கொடுத்த
னர். ஒவ்வொரு ஆட்டுக்குட்டியோடும்
அவர்கள் காற்படி திராட்சைரசத்தையும்
அளிக்க வேண்டும். பலிபீடத்தின்
பரிசுத்தமான இடத்தில் பானங்களின்
காணிக்கையை ஊற்ற வேண்டும். இது
கர்த்தருக்குத் தரும் அன்பளிப்பாகும்.
8மாலையில் சூரியன் அஸ்தமித்த பிறகு
இன்னொரு ஆட்டுக்குட்டியைப் பலியிட
வேண்டும். காலையில் செய்தது போலவே
மாலையிலும் செய்யவேண்டும். அதோடு
பானங்களின் பலியையும் கொடுக்க
வேண்டும். இந்தப் பலியானது நெருப்பின்
மூலம் செலுத்தப்பட வேண்டும். இதன்
நறுமணம் கர்த்தருக்குப் பிடிக்கும்."

## ஓய்வு நாள் பலிகள்

9"ஓய்வு நாளுக்கு, நீங்கள் ஒரு வயதான
2 ஆட்டுக்குட்டிகளைக் கொடுக்க வேண்டும்.
அவை பழுதற்றதாக இருக்க வேண்டும்.
அதோடு தானியக் காணிக்கையையும்
கொடுக்க வேண்டும். மெல்லிய மாவிலே
பத்தில் இரண்டு பங்கினை ஒலிவ எண்ணெ
யிலே பிசைந்து தரவேண்டும். பானங்களின்
காணிக்கையையும் தரவேண்டும். 10இது
ஓய்வு நாளுக்குரிய சிறப்பான பலியாகும்.
இது, வழக்கமான தினப் பலிகளோடு
சேர்த்து கொடுக்க வேண்டிய பலியாகும்.
பானங்களின் காணிக்கையும் இதோடு சேர
வேண்டும்.

## மாதாந்தர கூட்டங்கள்

11"ஒவ்வொரு மாதத்தின் முதல் நாளிலும்
கர்த்தருக்கு விசேஷமான ஒரு தகனபலி
கொடுக்க வேண்டும். இரண்டு காளை
களையும், ஒரு ஆட்டுக்கடாவையும், ஒரு
வயதுடைய ஏழு பழுதற்ற ஆட்டுக்
குட்டிகளையும் பலி தரவேண்டும்.
12ஒவ்வொரு காளையோடும் தானியக்
காணிக்கையும் கொடுக்க வேண்டும். அது
பத்தில் மூன்று பங்கான மெல்லிய மாவை
ஒலிவ எண்ணெயிலே பிசைந்து கொடுக்க
வேண்டும். ஆட்டுக்கடாவோடு கொடுக்கப்
படும் உணவுப் பலியில் பத்தில் இரண்டு
பங்கான மென்மையான மாவை ஒலிவ
எண்ணெயுடன் பிசைந்து கொடுக்க
வேண்டும். 13ஒவ்வொரு ஆட்டுக்குட்டி
யோடும் தரப்படும் தானியப்பலியில்
பத்திலே ஒரு பங்கான மென்மையான
மாவை ஒலிவ எண்ணெயுடன் பிசைந்து
கொடுக்க வேண்டும். இவற்றை நெருப்பில்
தகன பலியாகக் கொடுக்க வேண்டும் இதன்
நறுமணம் கர்த்தருக்கு மிகவும் பிடித்த
மானதாக இருக்கும். 14பானங்களின்
காணிக்கையானது ஒவ்வொரு காளையோடு
அரைப்படி திராட்சைரசமாக இருக்க
வேண்டும். செம்மறி ஆட்டுக்கடாவோடு ஒரு
படியில் மூன்றில் ஒரு பங்கு திராட்சை
ரசத்தையும் ஒவ்வொரு ஆட்டுக்குட்டியோடும்
அரைப்படி திராட்சைரசமும் கொடுக்க
வேண்டும். இவை தகன பலியாக ஒவ்வொரு
மாதத்தின் முதல் நாளில் அளிக்க வேண்டும்.
15வழக்கமாக நாள்தோறும் தரப்படும் தகன
பலியோடும், பானபலியோடும் ஒரு
வெள்ளாட்டுக்கடாவைப் பாவப்பரிகாரப்
பலியாகக் கொடுக்க வேண்டும்.

## பஸ்கா

16"முதல் மாதத்தின் 14வது நாள்
கர்த்தருடைய பஸ்கா பண்டிகையாகும்.
17அம்மாதத்தின் 15வது நாளில் புளிப்பில்லா
அப்பப்பண்டிகை துவங்குகிறது. இது ஏழு
நாட்களுக்கு இருக்கும். இந்த நாட்களில்
புளிப்பில்லாத அப்பத்தை மட்டும் சாப்பிட
வேண்டும். 18இதன் முதல் நாளில் ஒரு
சிறப்புக் கூட்டம் இருக்கும். அந்நாளில்

நீங்கள் எந்த வேலையும் செய்யக்கூடாது.
19கர்த்தருக்கு தகனபலி தர வேண்டும்.
அதில் 2 காளைகள், 1 ஆட்டுக்கடா, ஒரு
வயதுடைய 7 ஆட்டுக்குட்டிகள் இருக்க
வேண்டும். இவற்றில் எந்தக்குறையும்
இருக்கக்கூடாது. 20-21தானியக் காணிக்
கையாக ஒவ்வொரு காளையோடும் பத்தில்
மூன்று பங்கான மெல்லிய மாவினை
எண்ணெயோடு பிசைந்து தரவேண்டும்.
ஆட்டுக்கடாவோடு பத்தில் இரண்டு பங்கான
மெல்லிய மாவினை எண்ணெயோடு
பிசைந்து தரவேண்டும்; ஒவ்வொரு ஆட்டுக்
குட்டியோடும் பத்தில் ஒரு பங்கான மெல்லிய
மாவினை எண்ணெயோடு பிசைந்து
தரவேண்டும். 22அத்தோடு நீங்கள் ஒரு
வெள்ளாட்டுக் கடாவையும் கொடுக்க
வேண்டும். அது உங்களைத் சுத்தப்படுத்தும்
பாவப்பரிகாரப் பலியாகும். 23இதனை
நீங்கள் வழக்கமாகக் காலையில் கொடுக்கும்
பலியோடு சேர்த்துக் கொடுக்க வேண்டும்.
24“இதுபோலவே, ஏழு நாட்கள் ஒவ்வொரு
நாளிலும் இவற்றை நெருப்பில் தகன
பலியாகக் கொடுக்க வேண்டும். அதனோடு
பானங்களின் காணிக்கையும் சேரும்.
கர்த்தருக்கு இம்மணம் மிகவும் பிடிக்கும்.
இப்பலிகள் ஜனங்களுக்கு உணவாகும்.
நீங்கள் இதனை வழக்கமாக ஒவ்வொரு
நாளும் கொடுக்கும் பலியோடு சேர்த்து
கொடுக்க வேண்டும்.
25“இதன் ஏழாவது நாள் இன்னொரு
சிறப்புக் கூட்டம் இருக்கும். அந்நாளில்
நீங்கள் எவ்வித வேலையும் செய்யக்கூடாது.

### வாரங்களின் விழா (பெந்தெகோஸ்தே)

26“முதல் கனிகளைச் செலுத்தும்
பண்டிகையின்போதும் (பெந்தேகோஸ்தே
என்னும் வாரங்களின் பண்டிகை) புதிய
அறுவடையின்போது கர்த்தருக்கு தானியக்
காணிக்கையாகக் கொடுக்க வேண்டும்.
அப்போது ஒரு சிறப்புக் கூட்டத்திற்கும்
நீங்கள் ஏற்பாடு செய்யவேண்டும். அந்த
நாளில் நீங்கள் எந்த வேலையும்
செய்யக்கூடாது. 27நீங்கள் ஒரு தகன பலியைக்
கொடுக்க வேண்டும். இது நெருப்பின் மூலம்
அளிக்கப்பட வேண்டும். இந்த வாசனை
கர்த்தருக்கு மிகவும் பிடிக்கும். அப்போது
நீங்கள் 2 காளை களையும், 1 செம்மறி
ஆட்டுக்கடாவையும், 7 ஆட்டுக்குட்டிகளையும்
பலி தரவேண்டும். ஆட்டுக்குட்டிகள் ஓராண்டு
வயதுடையதாய் பழுதற்றதாய் இருக்க
வேண்டும். 28ஒவ்வொரு காளையோடும் 24
கிண்ணம் மெல்லிய மாவை எண்ணெயுடன்
பிசைந்து தரவேண்டும்; ஒவ்வொரு செம்மறி
ஆட்டுக் கடாவோடும், 16 கிண்ணம் மெல்லிய
மாவை எண்ணெயுடன் பிசைந்து தர
வேண்டும்; 29ஒவ்வொரு ஆட்டுக்குட்டி
யோடும், 8 கிண்ணம் மெல்லிய மாவை
எண்ணெயுடன் பிசைந்து தரவேண்டும்.
30ஒரு வெள்ளாட்டுக் கடாவை உங்களைத்
சுத்தப்படுத்த பாவப்பரிகார பலியாகத்
தரவேண்டும். 31நீங்கள் இந்தப் பலிகளை
வழக்கமாகத் தரும் தினப் பலிகளோடு
சேர்த்துத் தரவேண்டும். மிருகங்களில்
எவ்வித குறையும் இல்லாதவாறு எச்சரிக்
கையாகக் கவனித்துக்கொள்ள வேண்டும்.
பானங்களின் காணிக்கைகளிலும் குறை
யில்லாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும்.

### எக்காளங்களின் பண்டிகை

29 “ஏழாவது மாதத்தின் முதல் நாளில்
ஒரு சிறப்பு கூட்டம் ஏற்பாடு செய்ய
வேண்டும். அந்த நாளில் நீங்கள் எந்த
வேலையும் செய்யக்கூடாது. அந்நாளில்
எக்காளம் ஊதவேண்டும். 2அப்போது
நீங்கள் தகனபலி தரவேண்டும். இதன்
மணம் கர்த்தருக்கு மிகவும் பிரிய
மாயிருக்கும். நீங்கள் ஒரு காளையும், ஒரு
ஆட்டுக்கடாவும், ஒரு வயதுள்ள எவ்வித
குறையும் இல்லாத 7 ஆட்டுக்குட்டிகளையும்
பலி தரவேண்டும். 3அதோடு உணவுபலியும்
தரவேண்டும். அதில் காளையோடு 24
கிண்ணம் மெல்லிய மாவை எண்ணெயுடன்
பிசைந்து தரவேண்டும். ஆட்டுக்கடாவோடு
16 கிண்ணம் மெல்லிய மாவை
எண்ணெயுடன் பிசைந்து தரவேண்டும்.
4ஒவ்வொரு ஆட்டுக்குட்டியோடும் 8
கிண்ணம் மென்மையான மாவை எண்ணெ
யுடன் பிசைந்து தரவேண்டும். 5அதோடு
பாவப்பரிகாரப் பலியாக ஒரு வெள்ளாட்டுக்
கடாவையும் உங்களை சுத்தப்படுத்த
கொடுக்க வேண்டும். 6இப்பலிகள்
வழக்கமான மாதப்பிறப்பின் நாளின்
சர்வாங்க தகனபலியோடு சேரவேண்டும்.
அத்துடன் தானியக் காணிக்கையும் தர
வேண்டும். இது தினந்தோறும்
அளிக்கப்படும் தகனபலி, தானியக்
காணிக்கை மற்றும் பானங்களின்
காணிக்கையோடு சேர்ந்திருக்க வேண்டும்.
இப்பலிகள் விதிகளின்படி அமைந்திருக்க
வேண்டும். இப்பலிகள் நெருப்பில் தகனம்
செய்யப்பட வேண்டும். இந்த நறுமணம்
கர்த்தருக்குப் பிரியமானது.

### பாவப்பரிகார நாள்

7“ஏழாவது மாதத்தின் பத்தாவது நாளில்
ஒரு சிறப்புக் கூட்டம் இருக்கும். அந்த
நாளில் எந்த உணவையும் உண்ணக்கூடாது.
அன்று வேறு வேலைகள் எதையும்
செய்யக்கூடாது. 8நீங்கள் அன்றைக்குத்
தகனபலி தரவேண்டும். அவற்றின் நறுமணம்
கர்த்தருக்கு மிகவும் பிரியமாயிருக்கும்.
நீங்கள் 1 காளையையும் 1 ஆட்டுக்
கடாவையும், ஒரு வயதுடைய 7
ஆட்டுக்குட்டிகளையும் தரவேண்டும். இவை
பழுதற்றதாக இருக்க வேண்டும். 9இத்துடன்
உணவுப்பலி தரவேண்டும். காளையோடு

24 கிண்ணம் மென்மையான மாவை ஒலிவ
எண்ணெயுடன் பிசைந்து தரவேண்டும்.
ஆட்டுக்கடாவோடு 16 கிண்ணம் மென்மை
யான மாவை எண்ணெயுடன் பிசைந்து
தரவேண்டும். **10**ஒவ்வொரு ஆட்டுக்
குட்டியோடும் 8 கிண்ணம் மென்மையான
மாவை எண்ணெயுடன் பிசைந்து
தரவேண்டும். **11**அத்துடன் உங்களைப்
பரிசுத்தப்படுத்த பாவப்பரிகாரப் பலியாக
ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் பலி
தரவேண்டும். இது வழக்கமான தினப்பலி,
தானியக் காணிக்கை மற்றும் பானங்களின்
காணிக்கையோடு கூடுதலான ஒன்றாக
அமையும்.

### அடைக்கல கூடாரப் பண்டிகை

**12**“ஏழாவது மாதத்தின் பதினைந்தாவது
நாளில் ஒரு சிறப்புக் கூட்டம் இருக்கும்.
இது அடைக்கல கூடாரப்பண்டிகை
எனப்படும். அந்த நாளில் நீங்கள் எந்த
வேலையும் செய்யக் கூடாது. கர்த்தருக்காக
அந்நேரத்தில் ஏழு நாட்களை சிறப்பு
விடுமுறை நாட்களாகக் கொண்டாட
வேண்டும். **13**நீங்கள் தகன பலியையும் தர
வேண்டும். அவை நெருப்பில் தகனிக்கப்பட
வேண்டும். அந்த மணம் கர்த்தருக்கு மிகவும்
பிரியமாயிருக்கும். நீங்கள் 13 காளை
களையும் 2 ஆட்டுக்கடாக்களையும் 14
ஆட்டுக்குட்டிகளையும் தரவேண்டும். ஆட்டுக்
குட்டிகள் ஒரு வயதுடையதாக இருப்பதுடன்,
எவ்வித குறைபாடும் இல்லாததாகவும்
இருக்க வேண்டும். **14**இதோடு
உணவுப்பலியும் தரவேண்டும். ஒவ்வொரு
காளைக்கும் 24 கிண்ணம் மெல்லிய மாவை
எண்ணெயுடன் பிசைந்து தரவேண்டும்.
ஒவ்வொரு ஆட்டுக்கடாவுக்கும் 16 கிண்ணம்
மென்மையான மாவை எண்ணெயுடன்
பிசைந்து தரவேண்டும். **15**ஒவ்வொரு
ஆட்டுக்குட்டிக்கும் 8 கிண்ணம் மென்மை
யான மாவை எண்ணெயுடன் பிசைந்து
தரவேண்டும். **16**ஒரு வெள்ளாட்டுக்
கடாவையும் நீங்கள் இவற்றோடு தனியே
தரவேண்டும். இவை தினந்தோறும்
அளிக்கப்படும் தகனபலி, தானியக்
காணிக்கை மற்றும் பானங்களின் காணிக்
கையோடு சேர்த்துத் தரவேண்டும்.
**17**“இந்த விடுமுறையின் இரண்டாவது
நாளில் 12 காளைகளையும், 2 ஆட்டுக்
கடாக்களையும், 14 ஆட்டுக்குட்டிகளையும்
தரவேண்டும். ஆட்டுக்குட்டிகள் ஒரு
வயதுடையதாகவும், எவ்வித குறையும்
இல்லாததாகவும், இருக்க வேண்டும். **18**நீங்கள்
இந்த மிருகங்களுக்கு ஏற்ற சரியான தானியக்
காணிக்கையையும் தரவேண்டும். அதோடு
பானங்களின் காணிக்கையும் காளை
யோடும், ஆட்டுக்கடாவோடும், ஆட்டுக்குட்டி
களோடும் தரவேண்டும். **19**பாவநிவாரணப்
பலியாக ஒரு ஆட்டுக்கடாவையும் தர
வேண்டும். இவை தினந்தோறும் தரப்படும்
தானியக் காணிக்கை மற்றும் பானங்களின்
காணிக்கையோடு சேர்க்கையாக இருக்க
வேண்டும்.
**20**“இந்த விடுமுறையின் மூன்றாவது
நாளில் நீங்கள் 11 காளைகளையும், 2
ஆட்டுக்கடாக்களையும், 14 ஆட்டுக்குட்டி
களையும் தரவேண்டும். ஆட்டுக்குட்டிகள்
ஒரு வயதும் எவ்வித குறையும்
இல்லாததாகவும் இருக்க வேண்டும். **21**நீங்கள்
இந்தக் காளை, கடா மற்றும் ஆட்டுக்
குட்டிகளோடு சரியான அளவில் தானியக்
காணிக்கையும் பானங்களின்
காணிக்கையும் கொடுக்க வேண்டும். **22**நீங்கள்
பாவப் பரிகாரப் பலியாக ஒரு வெள்ளாட்டுக்
கடாவையும் கொடுக்க வேண்டும். இவை
தினந்தோறும் கொடுக்கப்படும் தானியக்
காணிக்கை மற்றும் பானங்களின் காணிக்
கையோடு சேரவேண்டும்.
**23**“இந்த விடுமுறையின் நான்காவது
நாளில் நீங்கள் 10 காளைகளையும், 2
வெள்ளாட்டுக் கடாக்களையும், 14 ஆட்டுக்
குட்டிகளையும் தரவேண்டும். குட்டிகள் ஒரு
வயதும், எவவிதக் குறையும்
இல்லாததாகவும் இருக்க வேண்டும். **24**இந்தக்
காளைகள், கடாக்கள், ஆட்டுக்குட்டிகள்
ஆகியவற்றோடு சரியான அளவில் தானியக்
காணிக்கையும், பானங்களின்காணிக்கையும்
கொடுக்க வேண்டும். **25**பாவப்பரிகாரப்
பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்
தரவேண்டும். இவை தினந்தோறும்
கொடுக்கப்படும் தானியக் காணிக்கை
மற்றும் பானங்களின் காணிக்கையுடன்
கூடுதலான ஒன்றாகச் செலுத்த வேண்டும்.
**26**“இந்த விடுமுறையின் ஐந்தாவது நாளில்
நீங்கள் 9 காளைகளையும், 2 ஆட்டுக்
கடாக்களையும், 14 ஆட்டுக்குட்டிகளையும்
கொடுக்க வேண்டும். ஆட்டுக்குட்டிகள் ஒரு
வயதும், எவ்விதக் குறைகளும் இல்லாததாக
இருக்க வேண்டும். **27**நீங்கள் இவற்றுக்குச்
சரியான அளவில் தானியக் காணிக்கையும்,
பானங்களின் காணிக்கையையும் காளை
களோடும், ஆட்டுக்கடாக்களோடும் ஆட்டுக்
குட்டிகளோடும் கொடுக்க வேண்டும்.
**28**நீங்கள் இவற்றோடு ஒரு வெள்ளாட்டுக்
கடாவையும் பாவப்பரிகாரப் பலியாகத்
தரவேண்டும். இவை தினந்தோறும்
தரப்படும் தானியக் காணிக்கை மற்றும்
பானங்களின் காணிக்கையோடு கூடுதலான
ஒன்றாக அமையும்.
**29**“இந்த விடுமுறையின் ஆறாவது நாளில்
நீங்கள் 8 காளைகளையும் 2 ஆட்டுக்
கடாக்களையும் 14 ஆட்டுக்குட்டிகளையும்
தரவேண்டும். ஆட்டுக்குட்டிகள் ஒரு வயது
டையதாகவும், எவ்விதக் குறையும் இல்லாத
தாக இருக்க வேண்டும். **30**நீங்கள் இவற்றுக்
குச் சரியான அளவில் தானியக்

காணிக்கையும் பானங்களின் காணிக்கை
யையும் காளைகளோடும், ஆட்டுக்கடாக்
களோடும், ஆட்டுக்குட்டிகளோடும் கொடுக்க
வேண்டும். 31நீங்கள் இவற்றில் ஒரு
வெள்ளாட்டுக் கடாவைப் பாவப்பரிகாரப்
பலியாக செலுத்த வேண்டும். இவை
தினந்தோறும் தரப்படும் தானியக் காணிக்
கை மற்றும் பானங்களின் காணிக்கையோடு
கூடுதலாகச் செலுத்த வேண்டும்.
32“இந்த விடுமுறையின் ஏழாவது நாளில்
நீங்கள் 7 காளைகளையும் 2 ஆட்டுக்
கடாக்களையும் 14 ஆட்டுக் குட்டிகளையும்
தரவேண்டும். ஆட்டுக்குட்டிகள் ஒரு
வயதுடையதாகவும், குறை இல்லாததாகவும்
இருக்க வேண்டும். 33நீங்கள் இதற்கு ஏற்ற
சரியான அளவுடையதாக தானியக்
காணிக்கையும் பானங்களின் காணிக்கை
யையும் காளைகளோடும், ஆட்டுக் கடாக்க
ளோடும், ஆட்டுக்குட்டிகளோடும் தர
வேண்டும். 34நீங்கள் ஒரு வெள்ளாட்டுக்
கடாவைப் பாவப்பரிகாரப் பலியாகக்
கொடுக்க வேண்டும். இது வழக்கமாக
தினந்தோறும் தரப்படும் தானியக் காணிக்
கையும் மற்றும் பானங் களின் காணிக்
கைக்கும் சேர்க்கையாகும்.
35“இந்த விடுமுறையின் எட்டாவது
நாளில் ஒரு மிகச் சிறப்பான கூட்டம்
நடைபெறும். அந்நாளில், நீங்கள் எவ்வித
வேலையும் செய்யவேண்டாம். 36நீங்கள் ஒரு
தகனபலி கொடுக்க வேண்டும். இதை
நெருப்பில் தகனம் செய்யவேண்டும். அதன்
மணம் கர்த்தருக்கு மிகவும் பிரிய
மாயிருக்கும். நீங்கள் 1 காளையையும், 1
வெள்ளாட்டுக்கடாவையும், 7 ஆட்டுக்குட்டி
களையும் தரவேண்டும். ஆட்டுக்குட்டிகள்
ஓராண்டு வயதும் எவ்விதக் குறையும்
இல்லாததாய் இருக்க வேண்டும்.
37இவற்றுக்கு ஏற்ற சரியான அளவில்
தானியக் காணிக்கையையும் பானங்களின்
காணிக்கை யையும் காளைகளோடும்,
ஆட்டுக் கடாக் களோடும், ஆட்டுக்
குட்டிகளோடும் கொடுக்க வேண்டும். 38நீங்கள்
பாவப் பரிகாரப் பலியாக ஒரு வெள்ளாட்டுக்
கடாவையும் தரவேண்டும். இவை வழக்க
மாகத் தினந்தோறும் தரப்படும் தானியம்
மற்றும் பானங்களின் காணிக்கைகளோடு
கூடுதலான ஒன்றாக அமையும்.
39“சிறப்பான விடுமுறைகளில் நீங்கள்
தகனபலித் தரவேண்டும். அதோடு தானியக்
காணிக்கை, பானங்களின் காணிக்கை,
மற்றும் சமாதான பலிகளையும் தர
வேண்டும். நீங்கள் இவற்றைக் கர்த்தருக்கு
தரவேண்டும். இப்பலிகள் நீங்கள் கொடுக்க
விரும்பும் சிறப்பான அன்பளிப்புகளுக்குச்
சேர்க்கையாக இருக்கும். இவற்றை விசேஷ
வாக்குறுதிகளைச் செய்யும்போதும்
கொடுக்க வேண்டும்” என்றார்.
40இஸ்ரவேல் ஜனங்களிடம் மோசே
கர்த்தர் ஆணையிட்ட அனைத்தையும் பற்றி
கூறினான்.

## விசேஷ பொருத்தனைகள்

30 இஸ்ரவேல் கோத்திரங்களில் உள்ள
தலைவர்களைப் பார்த்து மோசே
பேசினான். கர்த்தர் தனக்குச் சொன்ன
இக்கட்டளைகளை எல்லாம் மோசே
அவர்களிடம் சொன்னான். அவன்,
2“ஒருவன் கர்த்தருக்கு ஏதாவது விசேஷ
பொருத்தனை செய்ய விரும்பினால்,
அல்லது கர்த்தருக்கு விசேஷமானவற்றைக்
கொடுக்க விரும்பினால், அவன் அவ்வாறே
செய்யட்டும். ஆனால் அவன் வாக்களித்த
படிக் கொடுக்க வேண்டும்!
3“ஓர் இளம் பெண் தன் தகப்பன்
வீட்டில் இருக்கும்போது சிலவற்றை கொடுப்
பதாக அவள் கர்த்தரிடம் ஒரு விசேஷ
பொருத்தனை பண்ணியிருக்கலாம். 4இதைப்
பற்றி அவளது தந்தை தெரிந்துகொண்டு
அந்த வாக்கை நிறைவேற்ற ஒப்புக்
கொண்டால் பிறகு அவள் தன்
பொருத்தனையை நிறைவேற்ற வேண்டும்.
5ஆனால் அவளது வேண்டுதலை அவளது
தந்தை அறிந்து அதைத் தடுத்தால், பிறகு
அவள் தன் வாக்கில் இருந்து விடுதலை
பெறுகிறாள். அவள் தனது பொருத்
தனையை நிறைவேற்றத் தேவையில்லை.
அவளது தந்தை அவளைத் தடுத்துவிட்டால்
அவளை கர்த்தர் மன்னித்து விடுவார்.
6“ஒரு பெண் தான் கர்த்தருக்கு
சிலவற்றைக் கொடுப்பதாக விசேஷ வாக்கை
கர்த்தரிடம் செய்த பிறகு திருமணம்
ஆகியிருக்கலாம். 7அவளது கணவன் அந்த
வேண்டுதலை அறிந்து அதற்கு ஒப்புக்
கொண்டுவிட்டால் அவள் அதை
நிறைவேற்ற வேண்டும். 8ஆனால் அவளது
கணவன் அவளது வேண்டுதலை அறிந்து
மறுத்துவிட்டால் பிறகு அவள் தன் வாக்கை
நிறைவேற்ற வேண்டாம். அவளது கணவன்
அந்த வாக்கை முறித்து அதனை நிறைவேற்ற
முடியாதபடி செய்துவிட்டதால் கர்த்தர்
அவளை மன்னித்து விடுவார்.
9“ஒரு விதவை அல்லது விவாகரத்து
செய்துகொண்ட பெண் சிறப்பான
பொருத்தனை செய்திருக்கலாம். அப்போது
அவள் தனது பொருத்தனையை நிறைவேற்ற
வேண்டும். 10ஒரு திருமணமானப் பெண்
கர்த்தருக்கு ஒரு பொருத்தனை செய்திருக்
கலாம். 11இதைப்பற்றி அவளது கணவன்
அறிந்து அதை அவன் அனுமதித்து
விட்டால், பிறகு அவள் தன்
பொருத்தனையை நிறைவேற்ற வேண்டும்.
அவள் வாக்கின்படி அனைத்தையும்
கொடுக்க வேண்டும். 12ஆனால் அவளது
கணவன் அதனை அறிந்து மறுத்து
விட்டால், அவள் தன் வாக்கை நிறைவேற்ற

தேவையில்லை. அவளது வாக்கை அவளது கணவன் முறித்துவிட்டதால் அது பொருட் படுத்தக் கூடியதாக இல்லை. எனவே கர்த்தர் மன்னித்து விடுவார்.
[13]ஒரு திருமணமான பெண் கர்த்தருக்குச் சிலவற்றைத் தருவதாக வாக்களித்திருக்கலாம்; அல்லது அவள் தன் ஆத்துமாவைத் தாழ்மைப்படுத்தும்படி ஆணையிட்டிருக்கலாம் அல்லது வேறு ஏதாவது விசேஷ வாக்குறுதிகளைச் செய்திருக்கலாம். அவற்றை அவளது கணவன் தடுக்கவோ அல்லது காப்பாற்றவோ செய்யலாம்.
[14]எவ்வாறு ஒரு கணவன் தன் மனைவியின் வாக்கை நிறைவேற்ற உதவ முடியும்? அவன் அதைப் பற்றி அறிந்ததை ஏற்றுக்கொண்டால் போதும். அவன் மறுக்காத பட்சத்தில் அவள் அதனை முழுமையாகச் செய்து முடித்துவிட வேண்டும்.
[15]ஆனால் அவளது கணவன் அவளது வாக்கை அறிந்தும் தடுத்து விட்டால், வாக்குறுதியை உடைத்த பொறுப்பு அவனைச் சார்ந்ததாகும்" என்றான்.

[16]இந்தக் கட்டளைகளையே மோசேயிடம் கர்த்தர் கூறினார். இவை, ஒருவனுக்கும் அவன் மனைவிக்கும் உரிய கட்டளைகளாகும். இவை, ஒரு தந்தைக்கும் தந்தை வீட்டில் வாழும் இளம் பெண்ணுக்கும் உரிய கட்டளைகளாகும்.

## மீதியானியர்களுடன் இஸ்ரவேலர்களின் யுத்தம்

31 மோசேயிடம் கர்த்தர் பேசினார். அவர்,
[2]"மீதியானியர்களையும் மேற்கொள்ளும்படியாக நான் இஸ்ரவேல் ஜனங்களுக்கு உதவுவேன். அதன் பிறகு நீ மரித்துப்போவாய்" என்றார்.

[3]எனவே மோசே ஜனங்களோடு பேசினான். அவன் "உங்கள் ஆண்களில் வீரர்களைத் தேர்வு செய்து கொள்ளுங்கள். கர்த்தர் அவர்களை மீதியானியர்களையும் வெல்லும்படி செய்வார்.
[4]இஸ்ரவேல் ஜனங்களின் ஒவ்வொரு கோத்திரத்தில் இருந்தும் 1,000 ஆண்களைத் தேர்ந்தெடுங்கள்.
[5]ஆகமொத்தம் இஸ்ரவேல் கோத்திரங்களில் இருந்து 12,000 பேர் வீரர்களாவார்கள்" என்றான்.

[6]மோசே அவர்களைப் போருக்கு அனுப்பினான். ஆசாரியனாகிய எலெயாசாரின் மகனான பினேகாசையும் அவர்களோடு அனுப்பினான். எலெயாசார் பரிசுத்தமான பொருட்களோடு, கொம்புகளையும், எக்காளத்தையும் எடுத்து சென்றான்.
[7]இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தர் கட்டளையிட்டபடியே மீதியானியர்களோடு போரிட்டு அவர்களைக் கொன்றனர்.
[8]மீதியானிய அரசர்களில் ஏவி, ரேக்கேம், சூர், ஊர், ரேபா என்னும் ஐந்து பேரையும் கொன்று போட்டார்கள். அவர்கள் பேயோரின் மகனான பிலேயாமையும் வாளால் கொன்றார்கள்.
[9]இஸ்ரவேல் ஜனங்கள் மீதியானிய பெண்களையும் குழந்தைகளையும் கைதிகளாகப் பிடித்தனர். அவர்களது மந்தைகளையும் பசுக்களையும் மற்றயவற்றையும் எடுத்துக்கொண்டனர்.
[10]பிறகு அவர்களது நகரங்களையும், கிராமங்களையும் எரித்துவிட்டனர்.
[11]அவர்கள் அனைத்து ஜனங்களையும், மிருகங்களையும் கைப்பற்றினர்.
[12]தாங்கள் கைப்பற்றிய அனைத்தையும் மோசேயிடம், ஆசாரியனாகிய எலெயாசர் மற்றும் மற்ற ஜனங்களிடத்திலும் கொண்டு வந்தனர். அங்கே அவர்கள் கவர்ந்த அனைத்துப் பொருட்களையும் முகாமுக்குள் கொண்டு வந்தனர். மோவாபிலுள்ள யோர்தான் பள்ளத்தாக்கில் அவர்கள் கூடாரம் அமைத்திருந்தனர். அந்த இடம் யோர்தானைக் கடந்து கிழக்குப் பகுதியில் எரிகோவின் எதிரில் இருந்தது.
[13]பிறகு மோசேயும், ஆசாரியனாகிய எலெயாசாரும், ஜனங்கள் தலைவர்களும் கூடாரத்தை விட்டு வெளியே வந்து வீரர்களைச் சந்தித்தனர்.
[14]படைத்தலைவர்களுக்கு எதிராக மோசே கோபங்கொண்டான். அவன் போரிலிருந்து திரும்பி வந்திருந்த 1,000 வீரர்களின் தலைவரோடும் 100 வீரர்களின் தலைவரோடும் கோபங்கொண்டான்.
[15]மோசே அவர்களிடம், "ஏன் பெண்களை உயிரோடு விட்டீர்கள்.
[16]இப்பெண்களே பிலேயாமின் நாட்களில் பேயோரில் நடந்ததுபோல் இஸ்ரவேல் ஆண்கள் கர்த்தரை விட்டு விலகுவதற்கு காரணமாயிருந்தவர்கள். கர்த்தருடைய ஜனங்களுக்கு மீண்டும் அந்த நோய் ஏற்படும்.
[17]இப்போது எல்லா மீதியானிய சிறுவர்களையும், வாழ்க்கைப் பட்ட மீதியானிய பெண்களையும், ஒருவனோடு பாலின உறவு கொண்ட ஒவ்வொரு மீதியானிய பெண்ணையும் கொன்று விடுங்கள்.
[18]எந்தவொரு மனிதனோடும் பாலின உறவு கொள்ளாத இளம் பெண்ணை மட்டும் வாழவிடுங்கள்.
[19]பிறகு மற்றவர்களைக் கொன்ற அனைவரும் கூடாரத்திற்கு வெளியே ஏழு நாட்கள் தங்கி இருங்கள். உங்களில் எவரேனும் பிணத்தைத் தொட்டிருந்தாலும் அவன் கூடாரத்திற்கு வெளியே இருக்கவேண்டும். மூன்றாவது நாள், நீங்களும் உங்கள் கைதிகளும் சுத்தப்படுத்தப்பட வேண்டும். இவற்றை மீண்டும் நீங்கள் ஏழாவது நாள் செய்ய வேண்டும்.
[20]நீங்கள் உங்கள் ஆடைகளைத் துவைக்க வேண்டும். அதோடு தோல், கம்பளி, மரம் போன்றவற்றால் செய்யப்பட்டப் பொருட்களையும் கழுவ வேண்டும். நீங்கள் சுத்தமாக வேண்டும்" என்றார்.
[21]பிறகு ஆசாரியனாகிய எலெயாசார்

வீரர்களோடு பேசினான். அவன்,
"இவ்விதிகள் எல்லாம் கர்த்தரால் மோசேக்
குக் கொடுக்கப்பட்டவை. இவ்விதிகள்
போரிலிருந்து திரும்பிவரும் வீரர்களுக்கு
உரியவை. 22-23ஆனால் நெருப்பில் இடப்படும்
பொருள்களுக்கு உரிய விதிகள் வேறு
விதமானவை. நீங்கள் பொன், வெள்ளி,
வெண்கலம், இரும்பு, தகரம் போன்றவற்றை
நெருப்பில் இடலாம். பிறகு அவற்றை
தண்ணீரில் கழுவும்போது அவை
சுத்தமாகும். நெருப்பில் இட முடியாத
பொருட்களை தண்ணீரால்தான் சுத்தப்படுத்த
முடியும். 24ஏழாவது நாளில் உங்கள்
ஆடைகளைத் துவைக்க வேண்டும். பிறகு
நீங்கள் சுத்தம் அடைவீர்கள். அதன் பின்ன
ரே நீங்கள் கூடாரத்திற்குள் வரமுடியும்"
என்றான்.
25பிறகு கர்த்தர் மோசேயிடம், 26"நீயும்
ஆசாரியனாகிய எலெயாசாரும் தலைவர்
அனைவரும் கைதிகளையும், மிருகங்
களையும், கைப்பற்றி வந்த பொருட்
களையும் எண்ணிக் கணக்கிட வேண்டும்.
27பிறகு அவற்றைப் போருக்குச் சென்று
வந்த வீரர்களுக்கும், மற்ற இஸ்ரவேல்
ஜனங்களுக்கும் பங்கிடவேண்டும்.
28போருக்குச் சென்று வந்த வீரர்களிட
மிருந்து ஒரு பகுதியை எடு. அது கர்த்தருக்கு
உரியது. 500ல் ஒன்று கர்த்தருடைய
பங்காகும். இது ஜனங்கள், பசுக்கள்,
கழுதைகள், ஆடுகள் என அனைத்திற்கும்
பொருந்தும். 29அவர்களுடைய பாதிப்
பங்கில் எடுத்து ஆசாரியனாகிய
எலெயாசாருக்குக் கொடுக்க வேண்டும். இது
கர்த்தருக்கு உரிய பங்காகும். 30பிறகு பிற
ஜனங்களுடைய பங்கில் 50ல் ஒன்றை எடு.
இது ஜனங்கள், பசுக்கள், கழுதைகள்,
ஆடுகள் ஆகியவற்றுக்குப் பொருந்தும்.
இப்பங்கை லேவியர்களுக்குக் கொடுக்க
வேண்டும். ஏனென்றால் லேவியர்கள்
கர்த்தருடைய பரிசுத்தக் கூடாரத்திற்குப்
பொறுப்பாளிகள்" என்றார்.
31மோசேக்குக் கர்த்தர் கொடுத்த
கட்டளையின்படி மோசேயும் எலெயாசாரும்
செய்தனர். 32வீரர்கள் 6,75,000 ஆடுகளையும்,
33 72,000 பசுக்களையும், 34 61,000 கழுதை
களையும் 35 32,000 பெண்களையும்
கைப்பற்றியிருந்தனர். (இப்பெண்கள் எந்த
ஆணோடும் இதுவரை பாலின உறவு
கொள்ளாதவர்கள்.) 36இவற்றில் போருக்குச்
சென்ற வீரர்கள் 3,37,500 ஆடுகளைப்
பெற்றார்கள். 37அவர்கள் 675 ஆடுகளைக்
கர்த்தருக்குக் கொடுத்தனர். 38வீரர்கள் 36,000
பசுக்களைப் பெற்றுக்கொண்டு அவற்றில் 72
பசுக்களைக் கர்த்தருக்குக் கொடுத்தனர்.
39வீரர்கள் 30,500 கழுதைகளைப் பெற்றுக்
கொண்டு அவற்றில் 61 கழுதைகளை
கர்த்தருக்குக் கொடுத்தனர். 40வீரர்கள் 16,000
பெண்களை அடைந்தனர். அவர்களில் 32
பெண்களைக் கர்த்தருக்கு அர்ப்பணித்தனர்.
41கர்த்தர் அவனுக்கு ஆணையிட்டபடி
கர்த்தருக்கு உரிய இந்த அன்பளிப்புகளை
யெல்லாம் ஆசாரியனான எலெயாசாரிடம்
மோசே கொடுத்தான்.
42பிறகு மோசே வீரர்கள் கைப்பற்றி
யவைகளில் இஸ்ரவேல் ஜனங்களுக்குரிய
பங்காகிய பாதிப்பகுதியை எண்ணினான்.
போருக்குச் சென்ற வீரர்களிடமிருந்து
மோசே ஜனங்களுக்காகப் பெற்றுக்கொண்ட
தாவது. 43 3,37,500 ஆடுகள், 44 36,000 பசுக்கள்,
45 30,500 கழுதைகள், 46 16,000 பெண்களையும்
பெற்றனர். 47இவற்றில் 50ல் ஒன்றைக்
கர்த்தருக்காக மோசே எடுத்துக்
கொண்டான். இவற்றில் ஜனங்களும் மிருகங்
களும் அடங்கும். பிறகு அவன் அவற்றை
லேவியர்களுக்குக் கொடுத்தான்,
ஏனென்றால் அவர்கள் கர்த்தருடைய
பரிசுத்தமான கூடாரத்தைக் கவனிப்பவர்கள்.
மோசே இதனைக் கர்த்தருடைய
கட்டளைப்படி செய்து முடித்தான்.
48பிறகு படைத்தலைவர்கள் (இவர்கள்
1,000 பேருக்கு தலைவராகவும் 100 பேருக்கு
தலைவராகவும் இருந்தனர்.) மோசேயிடம்
வந்தனர். 49அவர்கள் மோசேயிடம், "நாங்கள்
உங்களது வேலைக்காரர்கள். எங்கள்
வீரர்களை எண்ணி கணக்கிட்டிருக்கிறோம்.
அவர்களில் யாரையும் தவறவிடவில்லை.
50நாங்கள் ஒவ்வொரு வீரரிடமிருந்தும்
கர்த்தருக்குரிய அன்பளிப்புகளைக் கொண்டு
வந்துள்ளோம். நாங்கள் கொண்டு
வந்தவற்றுள், தங்கத்தாலான வளையங்கள்,
கை வளையல்கள், மோதிரங்கள்,
காதணிகள், கழுத்தணிகள் ஆகியவை
அடங்கும். கார்த்தருக்கான இந்த அன்ப
ளிப்புகள் எங்களைத் சுத்தப்படுத்தும்"
என்றார்கள்.
51எனவே மோசே பொன்னாலான
அத்தனை அணிகலன்களையும் எடுத்து
ஆசாரியனான எலெயாசாரிடம் கொடுத்
தான். 52 1,000 பேருக்கும், 100 பேருக்கும்
தலைவரானவர்கள் கொடுத்த பொன்னணி
கள் 420 பவுண்டு இருந்தது. 53வீரர்கள்
தங்கள் பங்காகக் கிடைத்த பொருட்களை
வைத்துக்கொண்டனர். 54மோசேயும்,
ஆசாரியனான எலெயாசாரும் 1,000
ஆண்களுக்கும் 100 ஆண்களுக்கும் உரிய
தலைவர்களிடமிருந்து பொன்னைப் பெற்
றுக்கொண்டனர். பிறகு அவர்கள் அவற்றை
ஆசரிப்புக் கூடாரத்தில் வைத்தனர். இது
இஸ்ரவேல் ஜனங்களுக்கு நினைவு
அடையாளமாக வைக்கப்பட்டது.

## யோர்தான் நதிக்குக் கீழ்ப் பகுதியிலுள்ள கோத்திரங்கள்

32 ரூபன் மற்றும் காத்தின் கோத்திரத்
தினர் ஏராளமான பசுக்களைப்
பெற்றனர். அந்த ஜனங்கள் யாசேர் மற்றும்

கீலேயாத் நாட்டையும் பார்த்ததும் அவை
ஆடுமாடுகளுக்கு ஏற்ற இடம் என்று
எண்ணினார்கள். 2எனவே காத் மற்றும்
ரூபனின் கோத்திரத்தில் உள்ள ஜனங்கள்
மோசேயிடம் வந்தனர். அவர்கள் மோசே,
ஆசாரியரான எலெயாசார் மற்றும்
தலைவர்களோடு பேசினார்கள். 3-4அவர்கள்,
“உங்கள் வேலைக்காரர்களாகிய எங்களிடம்
ஏராளமான ஆடுமாடுகளை வைத்
திருக்கிறோம். கர்த்தரால் கொடுக்கப்பட்ட
இந்த பூமியானது கால் நடைகளுக்கு ஏற்ற
நல்ல இடமாக உள்ளது. இந்த நாடானது
அதரோத், தீபோன், யாசேர், நிம்ரா,
எஸ்போன், எலெயாலெ, சேபாம், நேபோ,
பெயோன் எனும் நகரங்களைக் கொண்டது.
5உங்கள் கண்களில் எங்களுக்குத் தயவு
கிடைத்தால் அவற்றை நீங்கள் எங்களுக்குக்
கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறோம்.
எங்களை யோர்தான் நதியின் அக்கரைக்கு
அழைத்துச் செல்ல வேண்டாம்”
என்றார்கள்.
6ரூபன் மற்றும் காத்தின் கோத்திரங்
களுடன் மோசே பேசி, “உங்கள்
சகோதரர்கள் போருக்குப் போகும்போது
நீங்கள் மட்டும் இங்கே இருப்பீர்களோ?
7நீங்கள் எதற்காக இஸ்ரவேல் ஜனங்களை
அதைரியப்படுத்துகிறீர்கள்? அவர்கள்
நதியைக் கடந்து சென்று கர்த்தர்
அவர்களுக்குக் கொடுத்த நாட்டைப் பெற்
றுக்கொள்ள ஏன் தடையாக இருக்கிறீர்கள்?
8உங்கள் தந்தைமார்களும் இதையே முன்பு
என்னிடம் செய்தார்கள். அவர்களை
காதேஸ்பர்னேயாவிலிருந்து
அனுப்பினபோது இது நடந்தது. 9அவர்கள்
எஸ்கோல் பள்ளத்தாக்கு வரை சென்று
அந்நாட்டைப் பார்த்தார்கள். பின் அவர்கள்
இஸ்ரவேல் ஜனங்களை அதைரியப்
படுத்தினார்கள். கர்த்தர் கொடுத்த
நாட்டுக்குப் போகாதபடிக்கு அவர்கள்
செய்து விட்டனர். 10கர்த்தர் அந்த ஜனங்கள்
மீது மிகுந்த கோபம் கொண்டார். கர்த்தர்
இந்த ஆணையை இட்டார்: 11‘எகிப்திலிருந்து
வந்தவர்களில் 20 வயதும் அதற்கு மேலும்
உள்ளவர்களில் எவரும் அந்த நாட்டை
காண்பதற்கு அனுமதிக்கப்படுவதில்லை.
நான் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோ
புக்கும் இந்த நாட்டைக் கொடுப்பேன்
என்று வாக்குறுதி கொடுத்தேன். ஆனால்
அவர்கள் என்னை உண்மையாக
பின்பற்றவில்லை. எனவே இந்த நாட்டை
அவர்கள் பெறுவதில்லை. 12கேனேசியனான
எப்புன்னேயின் மகனான காலேபும் நூனின்
மகனான யோசுவாவும் கர்த்தரை
உண்மையாகவே பின்பற்றியபடியால் அந்
நாட்டைப் பெறுவார்கள்!’
13“இஸ்ரவேல் ஜனங்களுக்கு எதிராக
கர்த்தர் பெருங்கோபம் கொண்டிருந்தார்.
எனவே கர்த்தர் அவர்களை 40 ஆண்டுகள்
பாலைவனத்தில் இருக்கும்படி செய்தார்.
கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்தவர்கள்
எல்லோரும் மரிக்கும் வரைக்கும்
அவர்களை பாலைவனத்திலேயே இருக்கச்
செய்தார். 14இப்போது நீங்களும் உங்கள்
தந்தைமார்கள் செய்தது போலவே
செய்கிறீர்கள். பாவிகளாகிய நீங்கள், மேலும்
கர்த்தர் தமது ஜனங்களுக்கு விரோதமாக
இன்னும் கோபங்கொள்ள வேண்டும் என்று
நீங்கள் விரும்புகிறீர்களா? 15நீங்கள்
கர்த்தரைப் பின்பற்றாமல் விலகிப்போனால்
அவர் உங்களை மீண்டும் பாலைவனத்தில்
இருக்கச் செய்வார். பிறகு நீங்கள் அனைத்து
ஜனங்களையும் அழித்து விடுவீர்கள்!”
என்று கூறினான்.
16ஆனால் ரூபன் மற்றும் காத்
கோத்திரங்களிலுள்ள ஜனங்கள் மோசே
யிடம், “நாங்கள் எங்கள் பிள்ளைகளுக்காக
நகரங்களையும், எங்கள் மிருகங்களுக்குத்
தொழுவங்களை உருவாக்குவோம். 17பிறகு
இந்நாட்டிலுள்ள ஜனங்களிடமிருந்து எங்கள்
பிள்ளைகள் பாதுகாப்பாக இருப்பார்கள்.
ஆனால், மற்ற இஸ்ரவேல் ஜனங்களுக்கு
நாங்கள் மகிழ்ச்சியோடு வந்து உதவி
செய்வோம். அவர்களின் நாட்டுக்கு
அவர்களைக் கொண்டு வருவோம்.
18இஸ்ரவேல் ஜனங்களில் ஒவ்வொருவரும்
இந்நாட்டில் தங்களின் பங்கைப் பெறும்
வரை, நாங்கள் வீட்டிற்குத் திரும்பிவர
மாட்டோம். 19யோர்தான் ஆற்றுக்கு மேற்கே
உள்ள அந்த நாட்டையும் நாங்கள்
எடுத்துக்கொள்ள மாட்டோம்! யோர்தான்
ஆற்றுக்குக் கிழக்கே உள்ள நாடுகள்தான்
எங்கள் பங்குக்கு உரியவை” என்றனர்.
20எனவே மோசே அவர்களிடம், “நீங்கள்
இவற்றையெல்லாம் செய்தால், இந்த நாடு
உங்களுக்கு உரியதாகும். ஆனால் உங்கள்
வீரர்கள் கர்த்தருக்கு முன் போருக்குச்
செல்லவேண்டும். 21உங்கள் வீரர்கள்
யோர்தானைக் கடந்து சென்று அங்கேயுள்ள
எதிரிகளோடு போரிட வேண்டும்.
22எல்லோரும் தங்கள் நாட்டைப்பெற கர்த்தர்
உதவிய பிறகு நீங்கள் வீட்டிற்குத்
திரும்பலாம். அப்போது கர்த்தரும் இஸ்ர
வேலரும் உங்களைக் குற்றவாளிகளாகக்
கருதாமல் நீங்களும் இந்த நாட்டைப்
பெற்றுக்கொள்ள உதவுவார். 23ஆனால்,
நீங்கள் இவற்றையெல்லாம் செய்யா
விட்டால், கர்த்தருக்கு எதிராகப் பாவிகள்
ஆவீர்கள். உங்கள் பாவங்களுக்காகத்
தண்டிக்கப்படுவீர்கள் என்பதையும் உறுதி
யாகத் தெரிந்து கொள்ளுங்கள். 24உங்கள்
பிள்ளைகளுக்கு நகரங்களையும், மிருகங்
களுக்குத் தொழுவங்களையும் அமையுங்கள்.
ஆனால் நீங்கள் வாக்களித்தபடி செய்து
முடிக்க வேண்டும்” என்றான்.
25பிறகு காத் மற்றும் ரூபனின்
கோத்திரங்களில் உள்ள ஜனங்கள்

மோசேயிடம், "நாங்கள் உம்முடைய
வேலைக்காரர்கள், நீர் எங்கள் எஜமானர்.
எனவே நீர் சொன்னபடியே நாங்கள்
செய்வோம். 26எங்கள் மனைவியரும்,
குழந்தைகளும் அனைத்து மிருகங்களும்
கீலேயாத்தின் நகரங்களில் தங்கி இருப்
பார்கள். 27ஆனால் உம் ஆடியார்களாகிய
நாங்கள் யோர்தான் ஆற்றைக் கடப்போம்.
எங்கள் எஜமானர் சொன்னபடி நாங்கள்
ஆயுதபாணிகளாகக் கர்த்தருக்கு முன்னால்
செல்லுவோம்" என்றனர்.
28எனவே மோசே, ஆசாரியனாகிய
எலெயாசார், நூனின் மகனாகிய யோசுவா
மற்றும் இஸ்ரவேலின் அனைத்து கோத்திரங்
களிலும் உள்ள தலைவர்கள் அனைவரும்
அவர்களின் வாக்குறுதியைக் கேட்டனர்.
29பிறகு மோசே அவர்களிடம், "காத் மற்றும்
ரூபனின் கோத்திரங்களில் உள்ள ஜனங்கள்
யோர்தான் ஆற்றைக் கடந்து செல்வார்கள்.
கர்த்தரின் முன்னால் போருக்கு ஆயுதப
ாணிகளாக அணிவகுத்து நிற்பார்கள்.
உங்கள் நாட்டை கைப்பற்றுவதற்கு
அவர்கள் உதவுவார்கள். பின்பு நீங்கள்
கீலேயாத் பகுதியை அவர்களது நாட்டின்
சுதந்திரமாகும்படி கொடுப்பீர்கள். 30கானான்
தேசத்தை நீங்கள் எடுத்துக்கொள்வதற்கு
அவர்கள் உதவி செய்வதாக வாக்குறுதி
கொடுத்திருக்கின்றனர்" என்றான்.

31காத் மற்றும் ரூபனின் ஜனங்கள்
பதிலாக, "கர்த்தர் ஆணையிட்டபடியே
நாங்கள் செய்வதாக வாக்களித்துள்ளோம்.
32நாங்கள் யோர்தான் நதியைக் கடந்து
செல்வோம். நாங்கள் கர்த்தருக்கு முன்பாக
ஆயுதம் தரித்தவர்களாகக் கானான்
நாட்டிற்குச் செல்வோம். யோர்தான்
ஆற்றுக்குக் கிழக்கே உள்ள நாடுகளே
எங்கள் பங்குக்கு உரிய நாடுகளாகும்"
என்றனர்.
33எனவே மோசே, காத்தின்
ஜனங்களுக்கும் ரூபனின் ஜனங்களுக்கும்
மனாசேயின் ஜனங்களில் பாதிப்பேருக்கும்
அந்த பகுதியைக் கொடுத்தான். (மனாசே
யோசேப்பின் மகன்.) இந்த பூமியானது
எமோரியருடைய அரசனாகிய சீகோனின்
பட்டணத்தையும் பாசானுடைய அரச
னாகிய ஓகின் பட்டணத்தையும் அவற்றைச்
சேர்ந்த பூமியையும் கொண்டது. அந்த
பூமியானது அவற்றின் எல்லையைச்
சுற்றிலுமுள்ள நகரங்களையும் கொண்டது.
34பின்பு காத் ஜனங்கள் தீபோன்,
அதரோத், ஆரோவேர், 35ஆத்ரோத், சோ
பான், யாசேர், யொகிபேயா, 36பெத்நிம்ரா,
பெத்தாரன் எனும் நகரங்களையும் அவற்றின்
பலமான சுவர்களையும், களஞ்சியங்
களையும், தொழுவங்களையும் கட்டினார்கள்.
37ரூபன் ஜனங்களோ, எஸ்போன்,
எலெயாலெ, கீரியத்தாயீம், 38நேபோ, பாகால்
மெயோன், சீப்மா என்னும் நகரங்களைக்
கட்டினார்கள். அவர்கள் நேபோ, பாகால்
மெயோன் எனும் பெயர்களை மாற்றிக்
கொண்டனர்.
39மாகீரின் ஜனங்கள் கீலேயாத்திற்கு
போனார்கள். (மாகீர் மனாசேயின் மகன்.)
அவர்கள் அந்நகரத்தைத் தோற்கடித்து அங்கு
வாழ்ந்த எமோரியர்களை விரட்டியடித்தனர்.
40எனவே மோசே, மனாசேயின் கோத்திரத்
தைச் சேர்ந்த மாகீர் ஜனங்களுக்கு
கீலேயாத்தைக் கொடுத்தான். எனவே அந்தக்
குடும்பம் அங்கே தங்கிற்று. 41மனாசேயின்
கோத்திரத்தைச் சேர்ந்த யாவீர் அங்குள்ள
சிறு நகரங்களைத் தோற்கடித்தான். பின்
அந்நகரங்களை யாவீர் நகரங்கள் என்று
அழைத்தான். 42நோபாக், கேனாத்தையும்
அதன் அருகிலுள்ள நகரத்தையும் தோற்கடித்
தான். பிறகு அந்த இடத்தைத் தன் பெயரால்
அழைத்தான்.

### எகிப்திலிருந்து இஸ்ரவேல் ஜனங்களின் பயணம்

33 மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல்
ஜனங்களைக் குழுக் குழுவாக
எகிப்தை விட்டு அழைத்துச் சென்றனர்.
அவர்கள் கீழ்க்கண்ட இடங்களின் வழியாகப்
பயணம் செய்தனர். 2மோசே தாம் பயணம்
செய்த இடங்களைப் பற்றி எழுதினான்.
கர்த்தருடைய விருப்பப்படியே மோசே
எழுதினான். அவர்கள் எகிப்தை விட்டு
பயணம் செய்த இடங்கள் பின் வருவன
வாகும்:
3முதல் மாதத்தின் 15வது நாளில் அவர்கள்
ராமசேசை விட்டனர். அன்று காலை
பஸ்காவுக்குப் பிறகு இஸ்ரவேல் ஜனங்கள்
எகிப்தைவிட்டு வெற்றி முழக்கங்களோடு
வெளியேறினார்கள். அவர்களை எகிப்து
ஜனங்கள் அனைவரும் பார்த்தனர். 4கர்த்தர்
கொன்ற தங்கள் பிள்ளைகளையெல்லாம்
எகிப்தியர் அடக்கம் செய்தார்கள். அடக்கம்
செய்யப்பட்டவர்களெல்லாம் முதலாவது
பிறந்த பிள்ளைகள். அவர்களது தேவர்களின்
மீதும் கர்த்தர் தீர்ப்பளித்தார்.
5இஸ்ரவேல் ஜனங்கள் ராமசேசை விட்டு
சுக்கோத்திற்குப் பயணம் செய்தனர்.
6சுக்கோத்திலிருந்து அவர்கள் ஏத்தாமிற்குச்
சென்றனர். ஜனங்கள் பாலைவனத்தின்
ஓரத்தில் தம் முகாம்களை ஏற்பாடு
செய்துகொண்டனர். 7அவர்கள் ஏத்தாமை
விட்டு ஈரோத்துக்குச் சென்றனர். அது
பாகால் செபோனுக்கு அருகில் இருந்தது.
அவர்கள் மிக்தோலுக்கு அருகில் தம்
முகாமை அமைத்தனர்.
8ஜனங்கள் ஈரோத்தைவிட்டு கடல் நடுவே
நடந்து பாலைவனத்தை நோக்கிச்
சென்றனர். பின் அவர்கள் மூன்று நாள்
பயணம் செய்து, மாராவிலே தம் முகாமை
அமைத்தனர்.

9 ஜனங்கள் மாராவை விட்டு ஏலிமிற்குச்
சென்று அங்கே கூடாரமிட்டனர். அங்கே 12
நீரூற்றுகளும், 70 பேரீச்சம் மரங்களும்
இருந்தன.
10 பின் ஏலிமிலிருந்து விலகி செங்கட
லுக்கு அருகே முகாமிட்டனர்.
11 பின் செங்கடலைவிட்டு சீன் பாலை
வனத்தில் முகாமிட்டனர்.
12 பின் சீன் பாலைவனத்தை விட்டு
தொப்காவில் முகாமிட்டனர்.
13 பின் தொப்காவை விட்டு ஆலூசிலே
முகாமிட்டனர்.
14 பின் ஆலூசைவிட்டு ரெவிதீமிலே முகா
மிட்டனர். அந்த இடத்தில் ஜனங்கள்
குடிப்பதற்கு தண்ணீர் இல்லாதிருந்தது.
15 பின் ரெவிதீமை விட்டு சீனாய் பாலை
வனத்தில் முகாமிட்டனர்.
16 பின் சீனாயை விட்டு கிப்ரோத் அத்
தாவிலே முகாமிட்டனர்.
17 பின் கிப்ரோத் அத்தாவை விட்டு
ஆஸ்ரோத்திலே முகாமிட்டனர்.
18 பின் ஆஸ்ரோத்தை விட்டு ரித்மாவிலே
முகாமிட்டனர்.
19 பின் ரித்மாவை விட்டு ரிம்மோன்
பேரேசிலே முகாமிட்டனர்.
20 பின் ரிம்மோன்பேரேசை விட்டு லிப்னா
விலே முகாமிட்டனர்.
21 பின் லிப்னாவை விட்டு ரீசாவிலே
முகாமிட்டனர்.
22 பின் ரீசாவை விட்டு கேலத்தாவிலே
முகாமிட்டனர்.

23 பின் கேலத்தாவை விட்டு சாப்பேர்
மலையில் முகாமிட்டனர்.
24 பின் சாப்பேர் மலையை விட்டு
ஆரதாவிலே முகாமிட்டனர்.
25 பின் ஆரதாவை விட்டு மக்கெலோத்
திலே முகாமிட்டனர்.
26 பின் மக்கெலோத்தாவை விட்டு தாகாத்
திலே முகாமிட்டனர்.
27 பின் தாகாத்தை விட்டு தாராகிலே
முகாமிட்டனர்.
28 பின் தாராகியை விட்டு மித்காவிலே
முகாமிட்டனர்.
29 பின் மித்காவை விட்டு அஸ்மோனாவில்
முகாமிட்டனர்.
30 பின் அஸ்மோனாவை விட்டு மோசெ
ரோத்திலே முகாமிட்டனர்.
31 பின் மோசெரோத்தை விட்டு பெனெ
யாக்கானிலே முகாமிட்டனர்.
32 பின் பெனெயாக்கானை விட்டு கித்காத்
மலையிலே முகாமிட்டனர்.
33 பின் கித்காத் மலையை விட்டு யோத்
பாத்தாவிலே முகாமிட்டனர்.
34 பின் யோத்பாத்தாவை விட்டு எப்ரோ
னாவிலே முகாமிட்டனர்.
35 பின் எப்ரோனாவை விட்டு எசியோன்
கேபேரிலே முகாமிட்டனர்.
36 பின் எசியோன் கேபேரிலை விட்டு
காதேசாகிய சீன் என்னும் பாலைவனத்
திலேயே முகாமிட்டனர்.
37 பின் காதேசாகிய சீன் பாலைவனத்தை
விட்டு ஓர் என்னும் மலையில் முகாமிட்ட
னர். இது ஏதோம் தேசத்தின் எல்லையில்
உள்ளது. 38 ஆசாரியனாகிய ஆரோன்
கர்த்தருக்கு கீழ்ப்படிந்து, ஓர் என்னும்
மலை மீது ஏறினான். பின் அங்கேயே
மரணமடைந்தான். அவன் ஐந்தாவது
மாதத்தில், முதல் நாளன்று மரித்துப்
போனான். அது இஸ்ரவேல் ஜனங்கள்
எகிப்தை விட்டு வந்த 40வது ஆண்டு.
39 அப்போது ஆரோனுக்கு 123 வயது.
40 கானான் நாட்டில் நெகேவ்* என்ற
பாலைவனத்தில் ஆராத் என்ற நகரம் ஒன்று
இருந்தது. கானானிய அரசன் இஸ்ரவேல்
ஜனங்கள் வருவதைப்பற்றி அறிந்தான்.
41 இஸ்ரவேல் ஜனங்கள் ஓர் மலையை விட்டு
சல்மோனாவில் முகாமிட்டனர்.
42 பின் சல்மோனாவை விட்டு பூனோனில்
முகாமிட்டனர்.
43 பின் பூனோனை விட்டு ஓபோத்தில்
முகாமிட்டனர்.
44 பின் ஓபோத்தை விட்டு அபாரீமின்
மேடுகளில் முகாமிட்டனர். இது மோவாபின்
எல்லையில் இருந்தது.
45 பின் அபாரீமினை விட்டு தீபோன்
காத்திலே முகாமிட்டனர்.
46 பின் தீபோன்காத்தை விட்டு அல்மோன்
திப்லத்தாயிமிலே முகாமிட்டனர்.
47 பின் அல்மோன் திப்லாத்தாயிமை
விட்டு நேபோவுக்கு அருகிலுள்ள அபாரீம்
மலைகளில் முகாமிட்டனர்.
48 பின் அபாரீம் மலைகளை, விட்டு
மோவாபிலே உள்ள யோர்தான் பள்ளத்
தாக்கில் முகாமிட்டனர். இது யோர்தான்
நதியைக்கடந்து எரிகோவின் அருகிலே
உள்ளது. 49 பின் யோர்தானைச் சார்ந்த
மோவாபின் சமவெளிகளில் முகாமிட்டனர்.
அவர்களது பாளையம் பெத்யெசிமோத்தைத்
தொடங்கி ஆபேல் சித்தீம்வரை இருந்தது.
50 அந்த இடத்தில் மோசேயோடு கர்த்தர்
பேசினார். அவர், 51 “இஸ்ரவேல் ஜனங்க
ளிடம் இவற்றைக் கூறு: நீங்கள் யோர்தான்
நதியை கடந்து கானான் நாட்டிற்குள்
நுழைவீர்கள். 52 நீங்கள் அங்கே காணும்
ஜனங்களிடமிருந்து அந்நாட்டை எடுத்துக்
கொள்வீர்கள். அவர்களின் செதுக்கப்பட்ட
சிலைகளையும், விக்ரகங்களையும் அழித்து
விடுவீர்கள். அவர்களின் மேடைகளையும்
நீங்கள் அழிக்க வேண்டும். 53 நீங்கள்
அந்நாட்டைக் கைப்பற்றி அங்கேயே
குடியிருப்பீர்கள். ஏனென்றால் நான் இந்த
நாட்டை உங்களுக்கு கொடுத்திருக்கிறேன்.

---

**நெகேவ்** யூதாவின் தெற்கில் உள்ள பாலைவனப் பகுதி.

இது உங்கள் குடும்பத்தாருக்கு உரியது.
54உங்கள் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும்
இந்நாட்டின் பங்கைப் பெறுவார்கள். எந்தக்
குடும்பத்தினர் எந்தப் பகுதியைப் பெறுவது
என்பதைச் சீட்டுக் குலுக்கல் மூலம்
அறிந்துகொள்வீர்கள். பெரிய குடும்பத்தினர்
பெரும் பகுதியைப் பெறுவார்கள். சிறிய
குடும்பத்தினர் சிறியப் பகுதியைப்
பெறுவார்கள். எந்தக் குடும்பம் நாட்டின்
எந்தப் பகுதியைப்பெறும் என்பதை சீட்டுக்
குலுக்கல் மூலம் தீர்மானிக்க வேண்டும்.
ஒவ்வொரு கோத்திரமும் இந்த தேசத்தின்
பங்கைச் சுதந்தரிக்கும்.

55“நீங்கள் அந்த அந்நிய ஜனங்களை
இந்நாட்டைவிட்டுத் துரத்த வேண்டும்.
அவர்களை இந்நாட்டிலே தங்கவிட்டால்
பிறகு அவர்கள் உங்களுக்கு மிகுந்த
தொந்தரவுகளை கொண்டு வருவார்கள்.
அவர்கள் உங்கள் கண்களில் முள்ளாகவும்,
விலாக்களில் கூராகவும் இருப்பார்கள்.
அவர்கள் உங்களுக்குப் பல பிரச்சனை
களைக் கொண்டு வருவார்கள். 56நான்
அப்போது அவர்களுக்குச் செய்ய திட்ட
மிட்டதை உங்களுக்குச் செய்வேன் என்று
சொல்” என்றார்.

### கானான் நாட்டின் எல்லைகள்

34 மோசேயிடம் கர்த்தர் பேசினார்.
அவர், 2“இஸ்ரவேல் ஜனங்களிடம்
இந்த கட்டளைகளைக் கூறு: நீங்கள் கானான்
நாட்டிற்கு போய்க் கொண்டு இருக்கிறீர்கள்.
நீங்கள் இந்நாட்டை தோற்கடிப்பீர்கள்.
நீங்கள் கானான் நாடு முழுவதையும் பெற்றுக்
கொள்வீர்கள். 3தெற்குப் பக்கம் ஏதோம்
அருகிலுள்ள சீன் பாலைவனத்தின் ஒரு
பகுதியைப் பெறுவீர்கள். உங்களது தெற்கு
எல்லையானது கிழக்கே இருக்கிற
சவககெடலின் கடைசியில் தொடங்கும். 4இது
ஸ்கார்ப்பியன் கணவாயின் தெற்காகக்
கடந்து செல்லும். சீன் பாலைவனத்தின்
வழியாக, காதேஸ்பர்னேவுக்கும் பிறகு
ஆத்சார் ஆதாருக்கும், பின் அங்கிருந்து
அஸ்மோனாவுக்கும் செல்லும். 5அஸ்மோனி
லிருந்து எல்லையானது எகிப்து நதியில்
போய், பிறகு அது மத்தியத்தரைக் கடலில்
போய் முடியும். 6மத்தியத்தரைக் கடல்
உங்களது மேற்கு எல்லையாக இருக்கும்.
7உங்கள் வடக்கு எல்லையானது மத்தியத்
தரைக் கடலில் தொடங்கி, லெபனானில்
உள்ள ஓர் மலைக்குச் செல்லும். 8ஓர்
என்னும் மலையிலிருந்து, இது லெபோ
ஆமாத்திற்குப் போகும். பிறகு சேதாத்திற்குப்
போகும். 9பின்னர் அவ்வெல்லையானது,
சிப்ரோனுக்குப் போய் ஆத்சார் ஏனானிலே
முடியும். அதுதான் உங்கள் வடக்கு
எல்லையாகும். 10உங்கள் கிழக்கு
எல்லையானது ஏனானிலே தொடங்கி, அது
சேப்பாமுக்குப் போகும், 11சேப்பாமிலிருந்து
ஆயினுக்குக் கிழக்கிலுள்ள ரிப்லாவிற்குப்
போகும். எல்லையானது தொடர்ந்து
கலிலேயா ஏரிக்குத் தொடரும். 12பிறகு
அந்த எல்லையானது யோர்தான் நதிவரைத்
தொடரும். அது மரணக்கடலில் போய்
முடியும். இவை தான் உங்கள் நாட்டைச்
சுற்றியுள்ள எல்லைகள் ஆகும்” என்றார்.

13எனவே, மோசே இந்த கட்டளைகளை
இஸ்ரவேல் ஜனங்களிடம் கொடுத்தான்.
“அதுதான் நீங்கள் பெறப்போகிற நாடு.
இதனைச் சீட்டுக்குலுக்கல் மூலமாக 9
கோத்திரங்களுக்கும் மனாசேயின் பாதி
குடும்பத்திற்கும் பங்கிட்டுக்கொள்ள வேண்
டும். 14ரூபன் மற்றும் காத்தின்
கோத்திரத்தினரும் மனாசேயின் பாதிக்
குடும்பத்தினரும் ஏற்கனவே தங்கள்
நாட்டைப் பெற்றுள்ளனர். 15அந்த இரண்ட
ரைக் கோத்திரத்தினரும் எரிகோவின்
அருகில் யோர்தானுக்குக் கிழக்கே உள்ள
நாடுகளைப் பெற்றுள்ளனர்” என்றான்.

16பிறகு கர்த்தர் மோசேயோடு பேசினார்.
17அவர், “நாட்டைப் பங்கு வைக்க
ஆசாரியனாகிய எலெயாசாரும், நூனின்
மகனான யோசுவாவும், 18கோத்திரங்களின்
தலைவர்களும் உங்களுக்கு உதவுவார்கள்.
ஒவ்வொரு கோத்திரத்திற்கும் ஒரு தலைவர்
இருப்பார். அவர்கள் நாட்டைப் பங்கு
போட்டுக் கொடுப்பார்கள். 19பின்வருபவை
அந்தத் தலைவர்களின் பெயர்களாகும்:

யூதாவின் கோத்திரத்திலிருந்து
எப்புன்னேயின் மகனான காலேபு;
20 சிமியோனின் கோத்திரத்திலிருந்து
அம்மியூதின் மகனான சாமுவேல்;
21 பென்யமீனின் கோத்திரத்திலிருந்து
கிஸ்லோனின் மகனான எலிதாது;
22 தாணின் கோத்திரத்திலிருந்து
யொக்லியின் மகனான புக்கி;
23 யோசேப்பின் மகனான மனாசேயின்
கோத்திரத்திலிருந்து எபோதின்
மகனாகிய அன்னியேல்;
24 எப்பிராயீமின் கோத்திரத்திலிருந்து
சிப்தானின் மகனாகிய கேமுவேல்;
25 செபுலோனின் கோத்திரத்திலிருந்து
பர்னாகின் மகனாகிய
எலிசாப்பான்;
26 இசக்காரின் கோத்திரத்திலிருந்து
ஆசானின் மகனாகிய பல்த்தியேல்;
27 ஆசேரின் கோத்திரத்திலிருந்து
செலோமியின் மகனான அகியூத்;
28 நப்தலியின் கோத்திரத்திலிருந்து
அம்மியூதின் மகனான பெதாக்கேல்”
என்றார்.

29இஸ்ரவேல் ஜனங்கள் மத்தியில் கானான்
தேசத்தைப் பங்கிடும்படி கர்த்தர் இவர்களைத்
தெரிந்தெடுத்தார்.

### லேவியரின் நகரங்கள்

35 யோர்தான் நதிக்கருகில் மோவா
பிலுள்ள யோர்தான் பள்ளத்தாக்கில்
கர்த்தர், மோசேயிடம் பேசினார். கர்த்தர்,
2 “இஸ்ரவேல் ஜனங்கள் தங்கள் பங்குகளில்
உள்ள நகரங்களின் சில இடங்களை
லேவியர்களுக்குத் தரவேண்டும் என்று கூறு,
இஸ்ரவேல் ஜனங்கள் அந்நகரப்
பகுதிகளிலும் அதைச் சுற்றிலும் உள்ள
வெளி நிலங்களையும் லேவியருக்குத்
தந்துவிட வேண்டும். 3 லேவியர்கள் இந்த
நகரங்களில் குடியேறுவார்கள். அவர்களின்
பசுக்களும், மற்ற மிருகங்களும் வெளி
நிலங்களில் மேய்ந்து கொள்ளும். 4 உங்கள்
நிலங்களில் லேவியர்களுக்கு நீங்கள்
கொடுக்க வேண்டிய பாகமாவது: நகரச்
சுவர்களில் 1,500 அடி தூரமும் அதற்
கிடையில் உள்ள நிலங்களும் 5 நகரத்தின்
மேற்கேயுள்ள 3,000 அடி தூரமும்,
கிழக்கேயுள்ள 3,000 அடி தூரமும்,
வடக்கேயுள்ள 3,000 அடி தூரமும்,
தெற்கேயுள்ள 3,000 அடி தூரமும், லேவியர்
களுக்கு உரியதாகும். (அனைத்து
நிலங்களுக்கும் நடுவில் நகரம் இருக்கும்.)
6 இத்தகைய 6 நகரங்களும் பாதுகாப்பின்
நகரங்களாகும். விபத்தாக எவராவது
ஒருவரைக் கொன்று விட்டால், உடனே
அவன் இந்த நகரத்திற்குள் ஓடிப்போனால்
இது அவர்களுக்குப் பாதுகாப்பைத்தரும்.
இந்த ஆறு நகரங்களோடும் மேலும் 42
நகரங்களை லேவியர்களுக்குத் தரவேண்டும்.
7 எனவே மொத்தமாக நீங்கள் லேவியர்
களுக்கு 48 நகரங்களையும், அவற்றைச்
சுற்றியுள்ள நிலங்களையும் அவர்களுக்குத்
தரவேண்டும். 8 பெரிய குடும்பத்தைச் சேர்ந்த
இஸ்ரவேல் ஜனங்கள் பெரிய பங்கைப்
பெறுவார்கள். சிறிய குடும்பத்தைச் சேர்ந்த
இஸ்ரவேல் ஜனங்கள் சிறிய பங்கைப்
பெறுவார்கள். எனவே பெரிய கோத்திரத்
தினர் தங்கள் பங்கில் அதிக நகரங்களை
லேவியர்களுக்குக் கொடுத்துவிட வேண்டும்.
சிறிய கோத்திரத்தினர் சில நகரங்களை
லேவியர்களுக்குக் கொடுத்துவிட வேண்டும்”
என்றார்.

9 மேலும் கர்த்தர் மோசேயிடம்:
10 “ஜனங்களிடம் இவற்றையும் கூறு: நீங்கள்
யோர்தான் ஆற்றைக் கடந்து கானான்
நாட்டிற்குள் போனபின்பு 11 நீங்கள் அடைக்
கல பட்டணங்களைத் தேர்ந்தெடுக்க
வேண்டும். எவனாவது ஒருவன்
தற்செயலாய் யாரையாவது கொன்று
விட்டால், அடைக்கலப் பட்டணங்களுக்குள்
ஓடிப்போக வேண்டும். 12 சாகடிக்கப்
பட்டவனின் உறவினர் யாராலும்
இடையூறு வராமல், வழக்கு மன்றத்தில்
தீர்ப்பளிக்கப்படும்வரை அங்கு பாதுகாப்பாக
இருப்பான். 13 ஆறு நகரங்கள் பாதுகாப்பின்
நகரங்களாக விளங்கும். 14 இவற்றில் மூன்று
நகரங்கள் யோர்தான் நதிக்கு கிழக்கே
இருக்கும். மேலும் மூன்று நகரங்கள் கானான்
நாட்டிற்குள் யோர்தான் நதிக்கு மேற்கே
இருக்கும். 15 இந்நகரங்கள் இஸ்ரவேல்
ஜனங்களுக்கும் அவர்களிடையே வாழும்
அயல்நாட்டுக் ஜனங்களுக்கும் பயணிகளுக்
கும் பாதுகாப்பிற்காக இருக்கும். விபத்தில்
எவனையாவது கொன்றுவிட்டால், பாது
காப்புக்காக இந்நகரங்களுக்குள் ஓடி ஒளிந்து
கொள்ளலாம்.

16 “எவனாவது இரும்பு ஆயுதத்தை
பயன்படுத்தி இன்னொருவனைக் கொன்
றால், அவன் கொலை செய்யப்பட
வேண்டும். 17 எவனாவது கல்லைப்
பயன்படுத்தி இன்னொருவனைக் கொன்
றால், அவனும் கொலை செய்யப்பட
வேண்டும். (ஆனால் பொதுவாக கொலைச்
செய்யப்படத்தக்க அளவுள்ள கல்லே
கொலை செய்யப் பயன்படுத்தப்பட்டிருக்க
வேண்டும்.) 18 ஒருவன் இன்னொருவனை
மரத்தடியைப் பயன்படுத்திக் கொன்றால்,
அவனும் கொலை செய்யப்பட வேண்டி
யவன். (பொதுவாக மரத்தடியே பிறரைக்
கொல்ல ஆயுதமாகப் பயன்படுத்தப்படும்.)
19 கொலை செய்யப்பட்டவனின் குடும்பத்
திலுள்ள ஒருவன் கொலைகாரனை
விரட்டிப்போய் கொன்று விடலாம்.

20-21 “ஒருவன் இன்னொருவனைத் தன்
கையால் அடித்துக் கொலைசெய்து விடலாம்
அல்லது ஒருவன் இன்னொரு வனைத்
தள்ளிவிட்டுக் கொன்றுவிடலாம். அல்லது
ஒருவன் இன்னொருவன் மீது எதையாவது
வீசியும் கொன்றுவிடலாம். ஒருவன்
இவற்றை வெறுப்பின் காரணமாகச்
செய்தால் அவன் கொலைகாரனாகிறான்.
அவன் கொலை செய்யப்படவேண்டியவன்
ஆவான். கொலை செய்யப்பட்டவனின்
குடும்பத்திலுள்ள ஒருவன் கொலைகாரனை
விரட்டிப்போய் கொன்று விடலாம்.

22 “ஆனால் ஒருவன் எதிர்பாராதவிதத்தில்
ஒருவனைக் கொன்றுவிடலாம். கொன்று
விட்ட மனிதனின் மேல் அவனுக்கு
வெறுப்பு எதுவும் இல்லை. எதிர்பாராத
விதத்தில் நடந்தது இது அல்லது ஒருவன்
எதையோ வீச அது எதிர்பாராதவிதமாக
இன்னொருவன் மீது பட்டு அவன்
மரிக்கலாம். அவன் திட்டமிட்டுக் கொலை
செய்யவில்லை. 23 அல்லது ஒருவன் ஒரு
கல்லை வீச அது இன்னொருவன் மீது பட்டு
அவன் மரித்துப் போகலாம். அவன்
யாரையும் கொல்லத் திட்டமிடவில்லை.
அவன் யாரையும் வெறுக்கவில்லை.
எதிர்பாராதவிதத்தில் கொலை செய்து
விட்டான். 24 இவ்வாறு நிகழ்ந்தால், பிறகு
சமுதாயம் தான் முடிவெடுக்க வேண்டும்.
அவர்களுக்குரிய வழக்குமன்றமே நிறை
வேற்ற வேண்டியதைத் தீர்மானிக்கும். சமூக

நீதிமன்றமே கொலை செய்யப்பட்டவனின்
குடும்பத்தில் உள்ள ஒருவன், கொலை
காரனை கொலை செய்யலாமா என்பதைத்
தீர்மானிக்கும். 25சமுதாய நீதிமன்றமானது
கொலைகாரனைத் தண்டிக்க வேண்டாம்
என்று எண்ணினால் அவனை அடைக்கலப்
பட்டணத்துக்கு அனுப்பி விடலாம். அவன்,
அப்போதைய தலைமை ஆசாரியன்
மரிக்கும்வரை அந்த பட்டணத்தில் இருக்க
வேண்டும்.
26-27“அவன் பாதுகாப்பான நகரத்தின்
எல்லைகளை விட்டு வெளியே போகாமல்
இருக்க வேண்டும். அவ்வாறு போனால்,
அப்போது கொலை செய்யப்பட்டவனின்
குடும்பத்தில் உள்ளவர்கள் அவனைப்
பிடித்துக் கொன்றால், அது கொலை குற்றம்
ஆகாது. 28எதிர்பாராதவிதமாக இன்னொரு
வனைக் கொன்ற ஒருவன் தலைமை
ஆசாரியன் மரிக்கும்வரை பாதுகாப்பான
நகரத்திற்குள்ளேயே இருக்க வேண்டும்.
தலைமை ஆசாரியனின் மறைவிற்குப்
பின்னர் அவன் தன் சொந்த இடத்திற்குத்
திரும்பிப் போகலாம். 29உங்கள் ஜனங்கள்
வாழும் நகரங்களில் எல்லாம் இந்த விதிகள்
என்றென்றைக்கும் இருக்கும்.
30“சாட்சிகள் இருந்தால்தான், ஒருவனைக்
கொலைகாரன் என்று முடிவு செய்து
கொன்றுவிட தீர்ப்பளிக்க முடியும். ஒரு
சாட்சி மட்டும் இருந்தால் ஒருவனைக்
கொலைக் குற்றவாளியாக்க முடியாது.
31“ஒருவன் கொலைகாரன் என்று
முடிவானால், அவன் மரண தண்டனைக்குத்
தகுதியாவான். அவனிடம் பணத்தை பெற்
றுக்கொண்டு தண்டனையை மாற்ற
வேண்டாம். கொலைகாரன் கொல்லப்பட
வேண்டும்.
32“ஒருவன் மற்றொருவனைக் கொன்று
விட்டு பாதுகாப்பான நகரத்திற்கு
ஓடிவிட்டால், அவனிடம் பணத்தை
வாங்கிக்கொண்டு அவனை வீட்டிற்கு
அனுப்பி விடாதீர்கள். அவன் தலைமை
ஆசாரியன் மரிக்கும்வரை அந்நகரத்திலேயே
இருக்க வேண்டும்.
33“குற்றமில்லாத இரத்தம் சிந்தி உங்கள்
நாட்டை அசுத்தப்படுத்தி விடாதீர்கள்.
இரத்தம் சிந்திய பூமியை கொலைகாரனின்
இரத்தத்தைக் கொண்டு தவிர வேறு
எதினாலேயும் பரிகாரம் செய்ய முடியாது.
34நானே கர்த்தர், நான் உங்கள் நாட்டில்
இஸ்ரவேல் ஜனங்களோடு வாழ்வேன். நான்
அங்கே வாழ்வதால் அந்த இடத்தை
அறியாதவர்களின் இரத்தத்தால் தீட்டு
உள்ளதாகச் செய்யவேண்டாம்” என்றார்.

## செலோப்பியாத்தின் மகள்களின் பகுதி

36 மனாசே யோசேப்பின் மகன். மாகீர்
மனாசேயின் மகன். கீலேயாத்
மாகீரின் மகன். கீலேயாத் கோத்திரத்தின்
தலைவர்கள் மோசேயோடும் மற்ற
இஸ்ரவேல் கோத்திரங்களின் தலைவர்க
ளோடும் பேசப்போனார்கள். 2அவர்கள்,
“ஐயா, எங்கள் நிலத்தின் பங்குகளைச்
சீட்டுக்குலுக்கல் மூலம் நாங்கள் பெறுமாறு
கர்த்தர் கட்டளையிட்டு இருக்கிறார்.
அதோடு செலோப்பியாத்தின் நிலப்பங்
கானது அவனது மகள்களுக்குச்
சேரவேண்டும் என்றும் கர்த்தர்
கூறியிருக்கிறார். செலோப்பியாத் எங்களது
சகோதரன். 3வேறு ஒரு கோத்திரத்தில்
உள்ளவர்கள் செலோப்பியாத்தின் மகளை
மணக்க நேரிடலாம். அப்போது அந்தப்
பங்கு எங்கள் குடும்பத்தை விட்டுப்
போய்விடுமே. வேறு ஒரு கோத்திரத்தைச்
சேர்ந்தவர்கள் அந்தப் பூமியை பெற்றுக்
கொள்வர்களா? இவ்வாறு சீட்டுக்குலுக்கல்
மூலம் நாங்கள் பெற்ற நிலப்பாகத்தை
நாங்கள் இழந்து விடுவதா? 4ஜனங்கள்
தங்கள் நிலத்தை விற்கலாம். ஆனால் யூபிலி
ஆண்டில் எல்லா நிலமும் உண்மையில் நில
உரிமையாளனுக்கே திரும்பி அளிக்கப்
படும். அப்போது செலோப்பியாத்தின்
மகள்களுக்குரிய நிலம் யாருக்கு வந்து
சேரும்? நித்தியத்துக்கும் எங்கள் குடும்பம்
அந்த நிலத்தை இழந்து விட
வேண்டியதுதானா?” என்று கேட்டனர்.
5மோசே பின்வரும் கட்டளையை
இஸ்ரவேல் ஜனங்களுக்கு கொடுத்தான்.
இந்தக் கட்டளை கர்த்தரிடமிருந்து வந்தது.
“யோசேப்பின் கோத்திரத்தில் உள்ள
மனிதர்கள் கூறுவது சரியே. 6செலொப்
பியாத்தின் மகள்கள் விஷயத்தில் கர்த்தர்
கூறும் கட்டளைகளாவன: அவர்கள்
தங்களுக்கு விருப்பமானவர்களை மணந்து
கொள்ளலாம். எனினும் அவர்கள் தங்கள்
தந்தையின் கோத்திரத்தில் உள்ளவர்களை
மட்டுமே மணந்துகொள்ள வேண்டும்.
7இதனால் இஸ்ரவேல் ஜனங்களின் ஒரு
கோத்திரத்தில் உள்ள சொத்தானது
இன்னொரு கோத்திரத்திற்குச் செல்லாமல்
இருக்கும். எனவே ஒவ்வொரு இஸ்ரவேல
னும் தன் முற்பிதாக்களுக்குரிய நிலங்களைப்
பாதுகாத்துக் கொள்வான். 8ஒரு பெண்
தன் தந்தைக்குரிய நிலத்தைப் பெற்றால்,
பின்னர் அவள் தந்தையின் கோத்திரத்தில்
உள்ளவர்களை மட்டுமே மணந்துகொள்ள
வேண்டும். இந்த முறையில் ஒவ்வொரு
இஸ்ரவேல் குடிமகனும் தங்கள் முற்பிதாக்
களின் சொத்துக்களைத் தம் வசமே
வைத்திருப்பார்கள். 9எனவே, இஸ்ரவேல்
ஜனங்களின் ஒரு கோத்திரத்தில் இருந்து
இன்னொரு கோத்திரத்திற்கு நிலம்
போகாமல் இருக்கும். ஒவ்வொரு இஸ்ரவேல
னும் தன் முற்பிதாக்களுக்குரிய நிலத்தை
பாதுகாத்துக் கொள்வான்.”
10செலொப்பியாத்தின் மகள்கள், மோ
சேக்கு கர்த்தர் அளித்த கட்டளைகளுக்குக்

*கீழ்படிந்தனர். **11**எனவே மக்லாள், திர்சாள்,
ஒக்லாள், மில்காள், நோவாள் எனும் செ
லொப்பியாத்தின் மகள்கள் தம் தந்தையின்
சகோதரரின் மகன்களை மணந்து கொண்ட
னர். அவர்கள் யோசேப்பின் மகனாகிய
மனாசேயின் கோத்திரத்தினரை மணந்து
கொண்டபடியால் அவர்களின் சொத்தானது
அக்கோத்திரத்திற்குள்ளேயே இருந்தது.*

***13**எரிகோவின் எதிரே, யோர்தானுக்கு
இக்கரையில் மோவாப் சமவெளியில் கர்த்தர்
மோசேக்கு கொடுத்த சட்டங்களும் கட்டளை
களும் இவைகளேயாகும்.*

# உபாகமம்

### இஸ்ரவேல் ஜனங்களிடம் மோசே பேசுதல்

1 இது இஸ்ரவேல் ஜனங்களுக்கு மோசே அறிவித்தச் செய்தி. யோர்தான் நதிக்குக் கிழக்கில் உள்ள பாலைவனத்தின் பள்ளத்தாக்கில் அவர்கள் இருந்தபொழுது, மோசே அவர்களிடம் சொன்னான். அப்பகுதி சூப்புக்கு எதிராகவும், பாரான் பாலைவனத்திற்கும் தோப்பேல், லாபான், ஆஸரோத், திசாகாப் ஆகிய நகரங்களுக்கு இடையிலும் இருந்தது.
2ஓரேப் மலையிலிருந்து (சீனாய்) சேயீர் குன்றுகள் வழியாக காதேஸ்பர்னேயாவுக்கு பயணம் செய்வதற்கு பதினோரு நாட்கள்
ஆகும். 3ஆனால் எகிப்தை விட்டுப் புறப்பட்ட இஸ்ரவேல் ஜனங்கள் நாற்பதாண்டுகள் கழிந்தபின்னரே இவ்விடத்தை அடைந்தனர். நாற்பதாவது ஆண்டின் பதினோராவது மாதத்தின் முதல் நாளன்று, மோசே அந்த ஜனங்களிடம் பேசினான். அவர்களிடம் கூறுமாறு தேவன் கட்டளையிட்ட எல்லாவற்றையும் மோசே
எடுத்துச் சொன்னான். 4கர்த்தர் சீகோனையும் ஓகையும் வெற்றிக்கொண்ட பின்னர் இது நடந்தது. (எஸ்பானில் வசித்த சீகோன் எமோரியரின் அரசன். பாசான் மன்னனாகிய ஓக், அஸ்தரோத்திலும் எதிரேயிலும்
வசித்தான்.) 5இஸ்ரவேல் ஜனங்கள் யோர்தான் நதிக்குக் கிழக்கே மோவாப் நிலப்பகுதியில் இருந்தபொழுது, தேவன் கட்டளையிட்டவற்றை மோசே அவர்களுக்கு விளக்கமாக எடுத்துச் சொன்னான். மோசே,
6"நமது தேவனாகிய கர்த்தர் ஓரேப் மலையில் (சீனாய்) நம்மிடம் பேசினார். தேவன் சொன்னது என்னவென்றால்: 'நீங்கள் நீண்டகாலம் இம்மலையில் தங்கி
யிருந்தது போதும். 7எமோரிய ஜனங்கள் வாழும் மலைநாட்டிற்கும், அதைச் சுற்றியுள்ள எல்லா இடங்களுக்கும் செல்லுங்கள் யோர்தான் பள்ளத்தாக்கு, மலைநாடு, மேற்குச்சரிவுகள், யூதேயாவின் தெற்கிலுள்ள நெகேவ்* (பாலைவனப் பகுதி) மற்றும் கடற்கரைப் பகுதிக்கும் செல்லுங்கள். கானான் நிலப்பகுதி மற்றும் லீபனோன் ஆகியவற்றின் வழியாக பெரும் நதியான ஐபிராத்து வரைக்கும் செல்லுங்கள்.
8அந்நிலத்தை நான் உங்களுக்குக் கொடுக்கிறேன். சென்று எடுத்துக்கொள்ளுங்கள். அந்நிலத்தை உங்களுக்குக் கொடுப்பதாக உங்கள் முற்பிதாக்களான ஆபிரகாம், ஈசாக்கு மற்றும் யாக்கோபு ஆகியோருக்கு நான் வாக்களித்தேன். அந்நிலத்தை அவர்களுக்கும் அவர்களது சந்ததியினருக்கும் கொடுப்பதாக நான் வாக்களித்தேன்'" என்றார்.

### மோசே தலைவர்களைத் தேர்ந்தெடுத்தல்

9மோசே, "அந்த நாட்களில் நான் ஒருவனாக உங்களை கவனித்துக்கொள்ள
இயலாது" 10இப்பொழுது, உங்களிடம் பலர் இருக்கிறீர்கள்! உங்கள் தேவனாகிய கர்த்தர் மேலும் பலரை சேர்த்துள்ளார். ஆகவே வானத்திலுள்ள நட்சத்திரங்களைப்போல் நீங்கள் எண்ணிக்கையில் பெருகியுள்ளீர்கள்!
11உங்கள் முற்பிதாக்களின் தேவனாகிய கர்த்தர், உங்களை இப்பொழுதுள்ளதைப் போல 1000 மடங்கு எண்ணிக்கையில் அதிகரிக்கச் செய்யட்டும்! அவர் வாக்களித்தபடி உங்களை ஆசீர்வதிக்கட்டும்!
12ஆனால் உங்களை கவனித்துக்கொள்ளவும், உங்கள் வாதங்களைத் தீர்த்து வைக்கவும்,
என் ஒருவனால் முடியவில்லை. 13ஆகவே 'ஒவ்வொரு கோத்திரத்திலிருந்தும் சிலரைத் தேர்ந்தெடுங்கள். அவர்களை உங்களுக்குத் தலைவர்களாக்குவேன். புரிந்துகொள்ளும் ஆற்றலும் அனுபவமும் வாய்ந்த ஞானவான்களைத் தேர்ந்தெடுங்கள்' என்று நான் சொன்னேன்.

14"அதற்கு நீங்கள், 'நீர் செய்யச்சொன்ன செயல் நல்ல செயல்' என கூறினீர்கள்.
15"ஆகவே உங்கள் கோத்திரங்களிலிருந்து நீங்கள் தேர்ந்தெடுத்த அறிவும் அனுபவமும் நிறைந்தவர்களை உங்கள் தலைவர்களாக்கினேன். இப்படியாக, 1,000 பேர்களுக்குத் தலைவர்களையும், 100 பேர்களுக்குத் தலைவர்களையும், 50 பேர்களுக்குத் தலைவர்களையும், 10 பேர்களுக்குத் தலைவர்களையும், உங்களுக்கு ஏற்படுத்தினேன். மேலும் உங்கள் ஒவ்வொரு கோத்திரங்களுக்கும் அதிகாரிகளையும் கொடுத்தேன்.
16"அந்த சமயத்தில் அந்த நீதிபதிகளிடம், 'உங்கள் ஜனங்களுக்கு இடையிலான வாதங்களைக் கேளுங்கள். ஒவ்வொரு வழக்கிற்கும்

---

**நெகேவ்** தென் யூதாவிலுள்ள பாலைநிலம்.

தீர்ப்பளிக்கும்போது நடுநிலையாக இருங்கள்.
வழக்கு இரு இஸ்ரவேலர்களுக்கு இடையிலா
அல்லது ஒரு இஸ்ரவேலனுக்கும் ஒரு வெளி
நாட்டவனுக்கும் இடையிலா என்பது
முக்கியமல்ல. ஒவ்வொரு வழக்குகளையும்
நடுநிலையுடன் தீர்க்கவேண்டும். 17நீங்கள்
நியாயம் வழங்கும்பொழுது, ஒருவன்
மற்றவனைவிட முக்கியத்துவம் வாய்ந்தவன்
என நினைக்கக்கூடாது. நீங்கள் அனை
வரையும் சமமாகக் கருதவேண்டும். நீங்கள்
யாருக்கும் பயப்படவேண்டாம், ஏனெனில்
உங்கள் தீர்ப்பு தேவனுடையது. ஆனால்
கடினமான வழக்காயிருந்தால், என்னிடம்
அவ்வழக்கைக் கொண்டு வாருங்கள். நான்
நியாயம் வழங்குகிறேன்’ என்று கூறினேன்.
18அதே சமயம், நீங்கள் செய்யவேண்டிய
மற்ற எல்லாவற்றையும் உங்களுக்குக்
கூறினேன்.

## ஒற்றர்கள் கானானுக்கு செல்லுதல்

19“பின் நாம் நம்முடைய தேவனாகிய
கர்த்தருக்குக் கீழ்படிந்தோம். ஓரேப் மலையை
விட்டு (சீனாய்), எமோரிய ஜனங்களின்
மலைநாட்டிற்குப் பயணம் செய்தோம்.
நீங்கள் கண்ட பெரியதும் கொடூர
மானதுமாகிய பாலைவனத்தின் வழியாகப்
பயணம் செய்து காதேஸ்பர்னேயாவை
அடைந்தோம். 20பின் நான் உங்களிடம்:
‘நீங்கள் இப்பொழுது எமோரிய ஜனங்களின்
மலைநாட்டிற்கு வந்துள்ளீர்கள். நமது
தேவனாகிய கர்த்தர் இந்நாட்டை நமக்குக்
கொடுப்பார். 21அங்கே தெரிகிறது,
பாருங்கள்! நீங்கள் போய் அப்பூமியை
உங்களுக்குச் சொந்தமாக்கிக்கொள்ளுங்கள்!
உங்கள் முற்பிதாக்களின் தேவனாகிய
கர்த்தர், நீங்கள் இதைச் செயல்படுத்துமாறு
கூறினார். எனவே, பயப்படாதீர்கள்,
எதைப்பற்றியும் கவலைப்படாதீர்கள்!’
என்று கூறினேன்.
22“ஆனால் நீங்கள் எல்லோரும் என்னிடம்
வந்து: ‘அந்த நிலத்தைப் பார்க்க முதலில்
சிலரை அனுப்புவோம். அவர்கள் அங்குள்ள
வலிமையுள்ளதும், வலிமையற்றதுமாகிய
இடங்களைப் பார்த்துவர இயலும். பின்
அவர்கள் திரும்பி வந்து நாம் எந்த
வழியாகச் செல்லவேண்டும் என்பதைத்
தெரிவிப்பார்கள். மேலும் நாம் போக
வேண்டிய நகரங்களையும் நமக்குக்
கூறுவார்கள்’ என்று சொன்னீர்கள்.
23“அது நல்ல யோசனை என்று நான்
நினைத்தேன். ஆகவே ஒவ்வொரு கோத்திரத்
திலிருந்தும் ஒவ்வொருவராக மொத்தம்
பன்னிரெண்டு பேரைத் தேர்ந்தெடுத்தேன்.
24பின் அந்த ஆட்கள் மலை நாட்டிற்கு
ஏறிச்சென்றார்கள். அவர்கள் எஸ்கோல்
பள்ளத்தாக்கிற்கு மட்டும் சென்று அதைச்
சுற்றிப் பார்த்தார்கள். 25அங்கிருந்து
சிலவகைப் பழங்களை நம்மிடம்
கொண்டுவந்து கொடுத்து அந்நிலப்
பகுதியைப் பற்றி நமக்குக் கூறினார்கள்.
அவர்கள், ‘நமது தேவனாகிய கர்த்தர்,
நமக்கு நல்லதொரு நாட்டினைக்
கொடுக்கிறார்!’ என்று சொன்னார்கள்.
26“ஆனால் நீங்களோ அங்கு செல்ல
மறுத்து, உங்கள் தேவனாகிய கர்த்தருடைய
கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தீர்கள்.
27நீங்கள் உங்களது கூடாரங்களுக்குத்
திரும்பிச்சென்று குறைகூறத் துவங்கினீர்கள்.
நீங்கள், ‘கர்த்தர் நம்மை வெறுக்கிறார்!
எமோரிய ஜனங்கள் நம்மை அழிப்ப
தற்காகவே அவர் எகிப்து தேசத்திலிருந்து
நம்மை வெளியேற்றினார்! 28நாம்
இப்பொழுது எங்கே செல்லமுடியும்? நம்
சகோதரர்கள் (பன்னிரண்டு ஒற்றர்கள்)
நம்மை பயமுறுத்திவிட்டார்கள். அவர்கள்,
அங்குள்ளவர்கள் நம்மை விடவும்
பலசாலிகளாகவும், உயரமானவர்களாகவும்
இருக்கிறார்கள்! நகரங்கள் பெரியனவாயும்,
வானுயர்ந்த சுவர்களைக் கொண்டதாயும்
உள்ளன! மேலும் நாங்கள் இராட்சதர்களை*
அங்கே கண்டோம்!’ என்று சொன்னீர்கள்.
29“ஆகவே நான் உங்களிடம்: ‘கலக்கம்
அடையாதீர்கள்! அந்த ஜனங்களைக்
குறித்துப் பயப்படாதீர்கள்! 30உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்கு முன்னால்
சென்று உங்களுக்காகப் போரிடுவார். அவர்
எகிப்தில் செய்ததைப்போலவே இதையும்
செய்வார், 31அவர் பாலைவனத்தில்
செய்ததைக் கண்டீர்கள். தன் மகனை
ஒருவன் சுமந்து செல்வதைப்போல, தேவன்
உங்களை சுமந்து சென்றதைக் கண்டீர்கள்.
கர்த்தர் உங்களைப் பத்திரமாக இங்கே
கொண்டுவந்து சேர்த்தார்’ என்று கூறினேன்.
32“ஆனாலும் உங்கள் தேவனாகிய
கர்த்தரிடம் நீங்கள் நம்பவில்லை! 33உங்கள்
பயணத்தின்போது, நீங்கள் முகாம்
அமைக்கத் தகுந்த இடத்தைத் தேட
உங்களுக்கு முன்பாகச் சென்றார். அவர்
இரவில் அக்கினியாலும், பகலில் மேகத்
திலும் உங்களுக்கு வழிகாட்டிச் சென்றார்.

## ஜனங்கள் கானானுக்குள் நுழையாமல் தடுக்கப்பட்டது

34“நீங்கள் கூறியதைக் கேட்ட கர்த்தர்
கோபமடைந்து, 35‘இப்பொழுது உயிருடனி
ருக்கும் தீயவர்களாகிய உங்களில் ஒருவரும்
நான் உங்கள் முற்பிதாக்களுக்கு வாக்களித்த
பரிசுத்த பூமிக்குச் செல்லமாட்டீர்கள்.
36எப்புன்னேயின் மகனாகிய காலேப்
மட்டுமே அப்பூமியைக் காண்பான். காலேப்
நடந்து சென்ற பூமியை அவனுக்கும்,

---

**இராட்சதர்** உயரத்திலும் பராக்கிரமத்திலும் பெயர் பெற்ற ஏனாக் குடும்பத்தைச் சேர்ந்த ஏனாக்கியர்கள், போரில் வல்லவர்கள். எண். 13:33.

அவனது சந்ததியினருக்கும் வழங்குவேன். ஏனென்றால் நான் கட்டளையிட்டவற்றை காலேப் மட்டுமே செய்தான் என்று கர்த்தர் கூறினார்.
37“உங்கள் நிமித்தம் என்னிடமும் கர்த்தர் கோபமாயிருந்தார். அவர் என்னிடம், ‘மோசே நீயும் அந்நாட்டிற்குள் நுழைய முடியாது.
38ஆனால் உன் உதவியாளனும், நூனின் மகனுமாகிய யோசுவாவும் அந்நாட்டிற்குச் செல்வார்கள். யோசுவாவை ஊக்கப்படுத்து, ஏனெனில் இஸ்ரவேலர்கள் அந்த நாட்டை சொந்தமாக்கிக்கொள்ள அவன் அவர்களை வழிநடத்துவான்’ என்று கூறினார்.
39“மேலும் கர்த்தர் எங்களிடம், ‘உங்கள் குழந்தைகள் எதிரிகளால் தூக்கிச் செல்லப்படுவார்கள் என்று கூறினீர்கள். ஆனால் அக்குழந்தைகள் அந்நாட்டிற்குள் நுழைவார்கள். உங்கள் தவறுகளுக்காக உங்கள் குழந்தைகளை நான் குற்றஞ் சொல்லமாட்டேன் ஏனென்றால் நல்லது கெட்டது அறியாத இளம்பருவத்தினர் அவர்கள். ஆகவே அந்த நாட்டை நான் அவர்களுக்கு வழங்குகிறேன். உங்கள் குழந்தைகள் அதைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்வார்கள்.
40ஆனால் நீங்களோ செங்கடலுக்குச் செல்லும் சாலை வழியாகப் பாலைவனத்திற்குத் திரும்பிச்செல்ல வேண்டும்’ என்று கூறினார்.
41“பின்னர் நீங்கள் ‘கர்த்தருக்கு எதிராக நாங்கள் பாவம் செய்துவிட்டோம். ஆனால் இனி தேவனாகிய கர்த்தர் கட்டளையிட்டபடி நாங்கள் சென்று போராடுவோம்’ என்று சொன்னீர்கள். பின் நீங்கள் ஒவ்வொருவரும் ஆயுதங்களைத் தரித்துக் கொண்டீர்கள். மலைதேசத்தை வெற்றி கொள்வது எளிது என்று நினைத்தீர்கள்.
42“ஆனால் கர்த்தர் என்னிடம், ‘மலை மீதேறி போராட வேண்டாமென்று ஜனங்களிடம் சொல். ஏனென்றால் நான் அவர்களுடன் இருக்க மாட்டேன். அவர்களை எதிரிகள் தோற்கடிப்பார்கள்!’ என்று கூறினார்.
43“நான் உங்களிடம் அதை சொன்னேன், ஆனாலும் நீங்கள் அதைக் கேட்கவில்லை. கர்த்தருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தீர்கள். உங்கள் சுய வலிமையைப் பயன்படுத்த எண்ணி, மலைநாட்டிற்கு ஏறிச் சென்றீர்கள்.
44ஆனால் அங்கே வசித்துக் கொண்டிருந்த எமோரிய ஜனங்கள் உங்களை எதிர்த்துப் போரிட்டு, தேனீக் கூட்டத்தைப்போல அவர்கள் உங்களை சேயீரிலிருந்து ஓர்மா வரைக்கும் துரத்தியடித்தார்கள்,
45பின், நீங்கள் திரும்ப வந்து கர்த்தரிடம் உதவி கேட்டு அழுதீர்கள். ஆனால் உங்களுக்குச் செவிசாய்க்க தேவன் மறுத்தார்.
46எனவே நீங்கள் காதேசில் நீண்டகாலம் தங்கியிருந்தீர்கள்.

### பாலைவனத்தில் இஸ்ரவேலர் அலைகின்றனர்

2 “பின் கர்த்தர் என்னிடம் சொல்லியபடி நாம் செய்தோம். செங்கடலுக்குச் செல்லும் சாலை வழியாகப் பாலை வனத்திற்குத் திரும்பிச்சென்றோம். சேயீர் மலைகளைச் சுற்றி பலநாட்கள் அலைந்தோம்.
2பின் கர்த்தர் என்னிடம்,
3‘இம்மலைகளைச் சுற்றி நீங்கள் அலைந்தது போதும். வடக்கே திரும்புங்கள்,
4ஜனங்களிடம் இதைச் சொல்வாயாக: நீங்கள் சேயீர் நிலப்பகுதியைக் கடந்து செல்வீர்கள். இது ஏசாவின் சந்ததியினரான உங்கள் உறவினர்களுக்கு உரியது. உங்களைக் கண்டு அவர்கள் பயப்படுவார்கள். மிகுந்த எச்சரிக்கையாயிருங்கள்.
5அவர்களுடன் சண்டையிடாதீர்கள். அவர்களுக்கு உரிமை யானதில் ஒரு அடி நிலம் கூட உங்களுக்குத் தரமாட்டேன். ஏனென்றால் சேயீர் மலைநாட்டை ஏசாவிற்குச் சொந்தமாக வழங்கினேன்.
6நீங்கள் அங்கே உண்ணும் உணவிற்கும் குடிக்கும் தண்ணீருக்கும் ஏசாவின் ஜனங்களுக்குக் கட்டணம் செலுத்தவேண்டும்.
7நீங்கள் செய்த ஒவ் வொரு செயலையும் உங்கள் தேவனாகிய கர்த்தர் ஆசீர்வதித்திருக்கிறார் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இப்பெரும் பாலைவனத்தில் நீங்கள் நடந்து செல்வதை அவர் அறிவார். இந்த 40 ஆண்டு காலமும் உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுடன் இருந்தார். உங்களுக்குத் தேவையான அனைத்தும் கிடைத்தன’ என்று கூறினார்.
8“ஆகவே சேயீரில் வசித்த ஏசாவின் ஜனங்களாகிய நமது உறவினர்களைக் கடந்தோம். யோர்தான் பள்ளத்தாக்கிலிருந்து ஏலாத் மற்றும் எசியோன்கேபேர் ஆகிய நகரங்களுக்குச் செல்லும் வழியை விட்டு விலகி மோவாப் பாலைவனத்துக்குச் செல்லும் சாலை வழியாகத் திரும்பினோம்.

### ஆர் நகரில் இஸ்ரவேலர்

9“கர்த்தர் என்னிடம், ‘மோவாப் ஜனங்களைத் துன்புறுத்த வேண்டாம், அவர் களுக்கு எதிராகப் போர் துவங்காதீர்கள். அவர்களது நிலம் எதையும் உங்களுக்குத் தரமாட்டேன். லோத்தின் சந்ததியாராகிய அவர்களுக்கு ஆர் நகரை வழங்கினேன்’ என்று கூறினார்.”
(10கடந்த காலத்தில், ஏமிய ஜனங்கள் ஆர் நகரில் வாழ்ந்தனர்! பலசாலிகளான அவர்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தனர். ஏனாக்கியர்களைப் போலவே ஏமியர்களும் உயரமானவர்கள்.
11ஏனாக்கி யர்கள் ரெப்பெய்தியர்களில் ஒரு பகுதியினர், ஏமியர்களும் ரெப்பெய்தியர்கள் என்றே கருதப்பட்டனர், ஆனால் மோவாப் ஜனங்கள் அவர்களை ஏமியர்கள் என்றே

அழைத்தார்கள், 12ஓரியர்களும் முன்னர்
சேயீரில் வாழ்ந்தார்கள். ஆனால் ஏசாவின்
ஜனங்கள் அவர்களிடமிருந்து நாட்டை
எடுத்துக் கொண்டார்கள். ஓரியர்களை
அழித்துவிட்டு ஏசாவின் ஜனங்கள்
அவர்களது நிலத்தில் குடியேறினார்கள்.
இஸ்ரவேல் ஜனங்களுக்குச் சொந்தமாக
கர்த்தர் வழங்கிய நிலத்தில் இஸ்ரவேல்
ஜனங்கள் செய்ததைப்போலவே ஏசாவின்
ஜனங்களும் செய்தார்கள்.)
13“கர்த்தர் என்னிடம், ‘இப்பொழுது
சேரேத் பள்ளத்தாக்கின் மறுபுறம்
செல்லுங்கள்’ என்று கூறினார். ஆகவே நாம்
சேரேத் பள்ளத்தாக்கைக் கடந்தோம். 14நாம்
காதேஸ்பர்னேயாவை விட்டு விலகி
யதிலிருந்து சேரேத் பள்ளத்தாக்கைக் கடக்க
38 ஆண்டுகள் கடந்தன. நமது முகாமிலிருந்த
அத்தலைமுறையைச் சேர்ந்த எல்லா
போர்வீரர்களும் மரித்து விட்டனர். அப்படி
நடக்குமென்று கர்த்தர் ஆணையிட்டிருந்தார்.
15அவர்கள் மரித்து நமது முகாமை விட்டு
விலகும் வரையிலும் கர்த்தர் அந்த
ஆட்களுக்கு எதிராயிருந்தார்.
16“போர்வீரர்கள் அனைவரும் மரித்துப்
போனார்கள். 17பின் கர்த்தர் என்னிடம்,
18‘இன்று நீங்கள் ஆர் நகர எல்லையைக்
கடந்து மோவாப்பிற்குள் நுழையவேண்டும்.
19நீங்கள் அம்மோனிய ஜனங்களுக்கு அருகில்
செல்வீர்கள், அவர்களைத் துன்புறுத்த
வேண்டாம். அவர்களுடன் போரிட
வேண்டாம், ஏனென்றால் அவர்களது
நிலத்தை உங்களுக்குத் தரமாட்டேன் என்று
கூறினார். லோத்தின் சந்ததியாராகிய
அவர்களுக்கு அந்த நிலத்தைக் கொடுத்து
விட்டேன்’ என்றார்.”
20(அந்நாடும் ரெப்பாயிம் எனப்பட்டது.
கடந்த காலத்தில் ரெப்பெய்தியர்கள் அங்கு
வாழ்ந்தார்கள். அம்மோனிய ஜனங்கள்
அவர்களைச் சம்சூமியர்கள் என்று
அழைத்தார்கள். 21பலசாலிகளான சம்சூமியர்
களில் பலர் அங்கே இருந்தார்கள். ஏனாக்கிய
ஜனங்களைப்போலவே அவர்களும்
உயரமானவர்கள். சம்சூமியர்களை அழிக்க
அம்மோனிய ஜனங்களுக்கு கர்த்தர்
உதவினார். நிலங்களை வசப்படுத்திக்
கொண்டு அம்மோனிய ஜனங்கள் அங்கு
வசித்தார்கள். 22ஏசாவின் ஜனங்களுக்கும்
தேவன் இதையே செய்தார். கடந்த காலத்தில்
சேயீரில் ஓரிய ஜனங்கள் வாழ்ந்தார்கள்.
ஏசாவின் ஜனங்கள் ஓரியர்களை
அழித்தார்கள். ஏசாவின் சந்ததியார் இன்று
வரை அங்கே வசிக்கின்றனர்.
23கெரேத்திலிருந்து வந்த ஜனங்கள்
சிலருக்கும் இவ்வாறே தேவன் செய்தார்.
காசாவைச் சுற்றியுள்ள நகரங்களில் ஆவியர்
வாழ்ந்தார்கள். ஆனால் கெரேத்திலிருந்து
வந்த ஜனங்கள் சிலர் ஆவியர்களை
அழித்தனர். அவர்கள் அந்த நிலங்களை
வசப்படுத்திக்கொண்டு இதுவரையிலும்
வசித்து வருகின்றனர்.)

### எமோரியர்களுடன் போர்

24“கர்த்தர் என்னிடம், ‘அர்னோன்
பள்ளத்தாக்கைக் கடந்து செல்லத்
தயாராகுங்கள். எஸ்போனின் அரசனாகிய
சீகோன் என்னும் எமோரியர்களை நீங்கள்
தோற்கடிக்கச் செய்து, அவனது நாட்டை
உங்களுக்குச் சொந்தமாக்குவேன். ஆகவே
அவனுடன் போரிட்டு அவனது நாட்டை
எடுத்துக்கொள்ளுங்கள். 25உங்களைக் கண்டு
எங்குமுள்ள ஜனங்களனைவரையும் பயப்
படச் செய்வேன். அவர்கள் உங்களைப்
பற்றிய செய்திகளைக் கேட்டு, பயந்து
நடுங்குவார்கள்’ என்று கூறினார்.
26“நாம் கெதெமோத் பாலைவெளியில்
தங்கியிருந்தபொழுது, எஸ்போனின்
அரசனாகிய சீகோனிடம் நான் தூதர்களை
அனுப்பினேன், அந்தத் தூதுவர்கள்
சமாதான வார்த்தைகளை கேட்டு
சீகோனிடம் வேண்டினார்கள். அவர்கள்
அவனிடம், 27‘உங்கள் நாட்டின் வழியாக
எங்களைப் போகவிடுங்கள். நாங்கள்
சாலைகளிலேயே இருப்போம். சாலையின்
வலது பக்கமோ, இடது பக்கமோ
திரும்பமாட்டோம். 28நாங்கள் உண்ணும்
உணவுக்கோ, அல்லது குடிக்கும் தண்ணீ
ருக்கோ வெள்ளிக்காசுகளைத் தருகிறோம்.
உங்கள் நாட்டின் வழியாகச் செல்வதற்கு
மட்டுமே நாங்கள் விரும்புகிறோம்.
29யோர்தான் நதியைக் கடந்து நமது
தேவனாகிய கர்த்தர் எங்களுக்கு வழங்கும்
நிலத்தை அடையும்வரை உங்கள் நாட்டின்
வழியாகப் பயணம் செய்ய விரும்புகிறோம்.
சேயீரில் வசிக்கும் ஏசாவின் ஜனங்களும்
ஆர் நகரில் வசிக்கும் மோவாப் ஜனங்களும்
எங்களை அவர்களது நாடுகளின் வழியாகப்
பயணம் செய்ய அனுமதித்தார்கள்’ என்று
கூறினார்கள்.
30“ஆனால் எஸ்போனின் அரசன் சீகோன்,
நம்மை அவனது நாட்டின் வழியாக செல்ல
அனுமதிக்கவில்லை. உங்கள் தேவனாகிய
கர்த்தர் அவனை மிகவும் பிடிவாதமாக
இருக்கச் செய்தார். சீகோனை நீங்கள்
தோற்கடிக்கவே கர்த்தர் இவ்வாறு செய்தார்.
அது மெய்யாகவே நடந்ததை இன்று நாம்
அறிவோம்!
31“கர்த்தர் என்னிடம, ‘அரசன் சீகோனை
யும் அவனது நாட்டையும் உங்களுக்குத்
தருகிறேன். அவனது நாட்டைச் சென்று
எடுத்துக்கொள்ளுங்கள்!’ என்று கூறினார்.
32“பின்னர் அரசன் சீகோனும் அவனது
குடிமக்கள் அனைவரும் யாகாசில் நம்முடன்
போரிட வந்தார்கள். 33ஆனால் நமது
தேவனாகிய கர்த்தர் அவனை நம்மிடம்
ஒப்புக்கொடுத்தார். அரசன் சீகோன்,
அவனது குமாரர்கள், மற்றும் அவனது

குடிமக்கள் அனைவரையும் நாம்
தோற்கடித்தோம். 34அப்பொழுது சீகோ
னுக்குச் சொந்தமாயிருந்த எல்லை நகரங்
களையும் நாம் அழித்தோம். எல்லா
நகரங்களிலுமிருந்த ஆண்கள், பெண்கள்
மற்றும் குழந்தைகள் ஆகிய அனைவரையும்
அழித்தோம். எவரையும் உயிருடன் விட்டு
வைக்கவில்லை! 35அந்நகரங்களிலிருந்த
கால்நடைகள் மற்றும் விலையுயர்ந்த
பொருட்களை மட்டும் எடுத்துக்
கொண்டோம், 36அர்னோன் பள்ளத்தாக்கின்
ஓரத்திலிருந்த ஆரோவேரையும் அப்பள்ளத்
தாக்கின் மையத்திலிருந்த வேறொரு
நகரையும் வென்றோம். அர்னோன்
பள்ளத்தாக்கிலிருந்து கீலேயாத் வரைக்கு
மான எல்லா நகரங்களையும் வெல்லும்
வல்லமையைக் கர்த்தர் நமக்குக் கொடுத்தார்.
எந்த நகரமும் நம்மைவிட வலிமையில்
மிஞ்சியிருக்கவில்லை. 37ஆனால் அம்மோ
னிய ஜனங்களின் நாட்டிற்கு அருகில் நீ
செல்லவில்லை. யாபோக் ஆற்றங்கரைக்கு
அருகிலோ அல்லது மலை நாட்டின்
நகரங்களுக்கு அருகிலோ நீ செல்லவில்லை.
நமது தேவனாகிய கர்த்தர் நமக்குத் தராத
எந்த இடத்திற்கு அருகிலும் நீ
செல்லவில்லை.

### பாசான் ஜனங்களுடன் போர்

3 “நாம் பாசானுக்குச் செல்லும் சாலையில்
திரும்பிச் சென்றோம். பாசானின் அரசன்
ஓக்கும், அவனது ஆட்கள் அனைவரும்
எத்ரேயில் எங்களுடன் சண்டையிட
வந்தார்கள். 2கர்த்தர் என்னிடம், ‘ஓக்கைக்
கண்டுப் பயப்படாதீர்கள். அவனை
உங்களிடம் ஒப்புக்கொடுப்பேன். அவனது
ஆட்கள், அவனது நிலம் அனைத்தையும்
உங்களிடம் தருவேன். எஸ்போனை ஆண்ட
எமோரிய மன்னன் சீகோனைத் தோற்கடித்
ததுபோலவே ஓக்கையும் நீங்கள்
தோற்கடிப்பீர்கள்’ என்று கூறினார்.
3“ஆகவே நமது தேவனாகிய கர்த்தர்
பாசானின் அரசனான ஓக்கைத்
தோற்கடிக்கச் செய்தார். அவனையும் அவனு
டைய ஆட்கள் அனைவரையும் அழித்தோம்.
ஒருவரையும் விட்டு வைக்கவில்லை.
4அப்பொழுது ஓக்கிற்குச் சொந்தமாயிருந்த
எல்லா நகரங்களையும் கைப்பற்றினோம்.
அவை அர்கோப் பிரதேசத்தில் ஓக்கின்
பாசான் நாட்டைச்சேர்ந்த 60 நகரங்கள்.
5அந்நகரங்கள் அனைத்தும் வலிமை
வாய்ந்தவையாக இருந்தன. அவை உயர்ந்த
மதில்களையும், உறுதியான கதவுகளையும்,
வலிமையான தாழ்ப்பாள்களையும்
கொண்டிருந்தன. 6சுவர்கள் இல்லாத பல
நகரங்களும் இருந்தன. எஸ்போனின்
அரசனாகிய சீகோனின் நகரங்களை
அழித்ததுபோலவே அவற்றையும் அழித்
தோம். எல்லா நகரங்களையும்
அவற்றிலிருந்த பெண்கள், குழந்தைகள்
ஆகிய அனைத்து ஜனங்களையும்
அழித்தோம். 7ஆனால் அந்நகரங்களிலிருந்த
எல்லாப் பசுக்களையும், விலை உயர்ந்த
பொருட்களையும் நமக்காக வைத்து
கொண்டோம்.
8“அவ்வாறு, இரண்டு எமோரிய அரசர்
களின் நிலத்தைக் கைப்பற்றினோம்.
அர்னோன் பள்ளத்தாக்கிலிருந்து எர்மோன்
மலைவரைக்கும் யோர்தான் நதிக்குக்
கிழக்கில் அந்நிலத்தைக் கைப்பற்றினோம்.
9(சீதோனிலிருந்து வந்த ஜனங்கள் எர்மோன்
மலையை சீரியோன் என்றழைத்தார்கள்.
ஆனால் எமோரியர்களோ அதை சேனீர்
என்றழைத்தார்கள்.) 10உயர்ந்த சமவெளி
யிலிருந்த எல்லா நகரங்களையும்
கீலேயாத்தையும் நாம் எடுத்துக்
கொண்டோம். சல்க்காயி துவங்கி எத்ரேயி
வரைக்கும் பாசானின் எல்லாப்
பகுதிகளையும் எடுத்துக்கொண்டோம். பாசா
னின் அரசன் ஓக்கின் ஆட்சியில்
சல்க்காயிவும் எத்ரேயும் நகரங்களா
யிருந்தன.”
11(பாசானின் அரசன் ஓக் அதுவரைக்கும்
வாழ்ந்திருந்த மிகச்சில ரெபெய்தியர்களில்
ஒருவன். ஓக்கின் படுக்கை இரும்பாலானது.
அது 13 அடிக்கும் அதிக நீளமும் 6 அடி
அகலமும் உடையது. அந்தப் படுக்கை
அம்மோனிய ஜனங்கள் வசிக்கும் ரப்பா
நகரில் இன்னமும் உள்ளது.)

### யோர்தான் நதியின் கிழக்குப் பகுதி

12“எனவே அந்நிலத்தை நமக்கு
சொந்தமாக்கிக் கொண்டோம். ரூபன் மற்றும்
காத் ஆகியோரின் கோத்திரத்திற்கு
அந்நிலத்தின் பகுதியை நான் தந்தேன்.
நான் அவர்களுக்கு அர்னோன் பள்ளத்
தாக்கின் ஆரோவேர் முதல் கீலேயாத்
மலைநாடு வரைக்குமான நிலப்பகுதியை
அதில் இருந்த நகரங்கள் உள்ளாகக்
கொடுத்தேன். கீலேயாத் மலைநாட்டின் பாதி
அவர்களுக்குக் கிடைத்தது. 13கீலேயாத்தின்
மற்றொரு பாதியையும் பாசான் முழுவதை
யும், மனாசே கோத்திரத்தைச் சேர்ந்த
பாதிப்பேர்களுக்குக் கொடுத்தேன்.”
(பாசான் ஓக்கின் ஒரு இராஜ்யம்.
பாசானின் ஒரு பகுதி அர்கோப்
எனப்பட்டது. அது ரெப்பாயிம் நாடு
என்றும் அழைக்கப்பட்டது. 14அர்கோப்
நிலப்பகுதி முழுவதையும் (பாசான்) மனாசே
கோத்திரத்தைச் சேர்ந்த யாவீர்
எடுத்துக்கொண்டான். கேசூரிய ஜனங்களும்
மாகாத்திய ஜனங்களும் வசித்த எல்லை
வரைக்கும் அந்நிலப்பகுதி பரவியிருந்தது.
அதற்கு யாவீரின் பெயரிடப்பட்டது. ஆகவே
இன்றைக்கும், ஜனங்கள் பாசானை யாவீரின்
நகரங்கள் என்றழைக்கின்றனர்.)

15“நான் கீலேயாத்தை மாகீருக்குக்
கொடுத்தேன். 16மேலும் கீலேயாத்திலிருந்து
துவங்கும் நிலப்பகுதியை ரூபன்
கோத்திரத்திற்கும், காத் கோத்திரத்திற்கும்
கொடுத்தேன். இந்த நிலப்பகுதி அர்னோன்
பள்ளத்தாக்கிலிருந்து யாப்போக் நதி
வரைக்கும் உள்ளது. பள்ளத்தாக்கின்
நடுப்பகுதி ஒரு எல்லை. யாப்போக் நதி
அம்மோனிய ஜனங்களின் எல்லை.
17பாலைவனத்தின் அருகில் உள்ள
யோர்தான் நதி அவர்களின் மேற்கு எல்லை.
இப்பகுதிக்கு வடக்கே கலிலேயாவும் தெற்கே
சவக்கடலும் (உப்புக்கடல்) உள்ளன.
இப்பகுதி கிழக்கிலுள்ள பிஸ்கா சிகரங்களின்
கீழுள்ளது.
18“அச்சமயம், நான் அந்தக் கோத்திரங்
களுக்கு இக்கட்டளையைக் கொடுத்தேன்.
அதாவது, ‘உங்கள் தேவனாகிய கர்த்தர்
நீங்கள் வசிப்பதற்காக யோர்தான் நதியின்
இப்பகுதியில் உள்ள நிலத்தைக் கொடுத்திருக்
கிறார். ஆனால், உங்களில் உள்ள போர்
வீரர்கள் தம் ஆயுதங்களை ஏந்தி மற்றுமுள்ள
பிற இஸ்ரவேல் கோத்திரங்கள் யோர்தான்
நதியைக் கடக்க உதவி செய்யவேண்டும்.
19நான் உங்களுக்குத் தந்துள்ள இந்நகரங்களில்
உங்கள் மனைவிகளும், சிறு குழந்தைகளும்,
ஆடுமாடுகளும், (உங்களிடம் ஏராளமான
கால்நடைகள் இருப்பதை நான் அறிவேன்.)
தங்கியிருக்க வேண்டும். 20ஆனால் உங்கள்
உறவினரான மற்ற இஸ்ரவேலருக்கு கர்த்தர்
யோர்தான் நதியின் மறுபுறம் வசிப்பதற்காக
நிலங்களை வழங்கும் வரையிலும் நீங்கள்
அவர்களுக்கு உதவிசெய்ய வேண்டும்.
உங்களுக்குத் தந்ததைப்போலவே, கர்த்தர்
அவர்களுக்கும் அங்கு அமைதியைத்
தருகிறவரையிலும்அவர்களுக்கு உதவுங்கள்.
பின் நான் உங்களுக்குத் தந்துள்ள இந்நிலப்
பகுதிக்கு நீங்கள் திரும்பி வரலாம்.’
21“பிறகு நான் யோசுவாவிடம், ‘உங்கள்
தேவனாகிய கர்த்தர் இவ்விரு
அரசர்களுக்கும் செய்த அனைத்தையும் நீ
பார்த்திருக்கிறாய். நீ நுழையும் எல்லா
நாடுகளிலும் கர்த்தர் அவ்வாறே செய்வார்.
22அந்நாட்டு அரசர்களைக் கண்டு நீ
பயப்படாதே, ஏனென்றால் உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்குக்காகப்
போரிடுவார்’ என்று கூறினேன்.

### மோசே கானானுக்குள் நுழைவதற்கு தடை

23“பின் எனக்கென்று சிறப்பாக
எதையேனும் செய்யுமாறு நான் கர்த்தரை
வேண்டினேன். 24நான், ‘கர்த்தராகிய என்
ஆண்டவரே, நான் உமது அடிமை. நீர்
செய்யப்போகும் அற்புதமும் வல்லமை
யுமான செயல்களின் ஒரு சிறு பகுதியை
மட்டுமே எனக்குக் காட்டியிருக்கிறீர்
என்பதை நான் அறிவேன். நீர் செய்துள்ள
மாபெரும் வல்லமை மிக்க செயல்களை
செய்யதக்க வேறொரு தேவன்
விண்ணுலகிலோ, பூமியிலோ இல்லை!
25தயவுசெய்து என்னை யோர்தான் நதியைக்
கடந்துசென்று, அதன் மறுபுறம் உள்ள
நற்பகுதியைக் காணவிடும். அழகான
மலைநாட்டினையும், லீபனோனையும்
என்னைப் பார்க்கவிடும்?’ என்று
வேண்டினேன்.
26“ஆனால் உங்கள் நிமித்தம் கர்த்தர்
என்னிடம் கோபமாயிருந்தார். அவர்
எனக்கு செவி சாய்க்கவில்லை. கர்த்தர்
என்னிடம், ‘போதும் நிறுத்து! இதைப்பற்றி
மேலும் பேசாதே. 27பிஸ்கா மலையின்
மீது ஏறிச்செல். மேற்கு, வடக்கு, தெற்கு
மற்றும் கிழக்கு ஆகிய திசைகளில் பார்,
நீ இவற்றை உன் கண்களால் பார்க்கலாம்.
ஆனால் நீ ஒருபோதும் யோர்தான் நதியைக்
கடக்க முடியாது. 28நீ யோசுவாவிற்கு
கட்டளைக் கொடுத்து, அவனை ஊக்கப்
படுத்து, திடப்படுத்து! நீ அந்நாட்டைப்
பார்க்கலாம், ஆனால் யோசுவாவே
இஸ்ரவேலரை அங்கு வழிநடத்திச்
செல்வான். அவர்கள் அந்நாட்டைக் கைப்
பற்றவும், அங்கு வாழவும் யோசுவா
உதவுவான்’ என்று கூறினார்.
29“பின்பு நாம் பெத்பெயரைத் தாண்டி
யுள்ள பள்ளத்தாக்கில் தங்கினோம்.”

### தேவனின் சட்டங்களுக்குக் கீழ்ப்படியுமாறு மோசே ஜனங்களுக்குக் கூறுகிறான்

4 “இஸ்ரவேல் ஜனங்களே, இனி நான்
போதிக்கும் கட்டளைகளையும், நியாயங்
களையும் கவனியுங்கள். அவற்றைக்
கடைபிடித்தால் நீங்கள் வாழலாம். பிறகு
உங்கள் முற்பிதாக்களின் தேவனாகிய
கர்த்தர் உங்களுக்குத் தரும் நிலத்தை, சென்று
எடுத்துக்கொள்ளுங்கள். நான் இடும்
கட்டளைகளுடன் எதையும் நீங்கள்
சேர்க்கவும் கூடாது. மேலும் எதையும்
(நீங்கள்) நீக்கவும் கூடாது. 2நான்
உங்களுக்குத் தரும் உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய கட்டளைகளுக்கு நீங்கள்
கீழ்ப்படியவேண்டும்.
3“பாகால்பேயோரின் நிமித்தம், கர்த்தர்
என்ன செய்தார் என்று பார்த்தீர்கள்.
பொய்த் தெய்வங்களான அங்குள்ள
பாகாலை வழிபட்ட உங்கள் ஜனங்கள்
அனைவரையும், உங்கள் தேவனாகிய
கர்த்தர் அங்கே அழித்தார். 4ஆனால் உங்கள்
தேவனாகிய கர்த்தரோடு இருந்த நீங்கள்
அனைவரும் இன்று உயிருடன்
இருக்கின்றீர்கள்.
5“என் தேவனாகிய கர்த்தர் எனக்கிட்ட
கட்டளையின்படி உங்களுக்கு கட்டளை
களையும், நியாயங்களையும் போதித்தேன்.
நீங்கள் நுழையவும் வசப்படுத்தவும்

*தயாராகவுள்ள எந்த நாட்டிலும்
அச்சட்டங்களுக்கு நீங்கள் கீழ்ப்படிய
வேண்டுமென்பதற்காகவே நான் அவற்றைப்
போதித்தேன்,* 6 *எச்சரிக்கையுடன் இச்சட்டங்
களுக்குக் கீழ்ப்படியுங்கள். நீங்கள் அறிவும்,
ஞானமும் உள்ளவர்கள் என்பதை இது மற்ற
நாட்டு ஜனங்களுக்கு எடுத்துக்காட்டும்.
அந்நாட்டு ஜனங்களும் இச்சட்டங்களைக்
கேள்விப்படும்போது, ‘உண்மையிலேயே,
இந்த பெரிய ஜனத்தின் (இஸ்ரவேலர்)
ஜனங்கள் ஞானமுள்ளவர்களாகவும்
அறிவுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள்’
என்று அவர்கள் கூறுவார்கள்.*

7 *“நாம் உதவி கேட்கும்பொழுது
தேவனாகிய கர்த்தர் நமது அருகில்
இருக்கிறார். வேறெந்த நாட்டிற்கும்
அவரைப்போல ஒரு தேவன் இல்லை!*
8 *நான் இன்று உங்களுக்கு வழங்கும்
போதனைகளைப் போன்று நீதியான சட்ட
விதிகள் வேறு எந்த பெரிய ஜனத்துக்கும்
இல்லை.* 9 *ஆனால் நீங்கள் எச்சரிக்கையுடன்
இருக்க வேண்டும். உங்கள் வாழ்நாள்
முழுவதும் இவைகள் உங்கள்
இதயத்திலிருந்து நீங்காதபடிக்கு காத்துக்
கொள்ளுங்கள். நீங்கள் அவற்றை உங்கள்
குழந்தைகளுக்கும் பேரக்குழந்தைகளுக்கும்
எடுத்துக்கூற வேண்டும்.* 10 *ஓரேப் மலையில்
நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு
முன்னால் நின்றதை நினைத்துப்பாருங்கள்.
கர்த்தர் என்னிடம், ‘நான் சொல்வதைக்
கேட்க ஜனங்களை ஒன்று கூட்டு. பின்னர்
அவர்கள் வாழ்நாள் முழுவதும் எனக்குப்
பயந்து மதிப்பளிக்க கற்பார்கள். மேலும்
இவற்றை அவர்கள் தமது குழந்தைகளுக்குக்
கற்பிப்பார்கள்’ என்று கூறினார்.* 11 *நீங்கள்
நெருங்கிவந்து மலையின் கீழ் பகுதியில்
நின்றீர்கள். தீப்பற்றி மலை வான
உயரத்திற்கு எரிந்தது. கரிய மேகங்கள்
சூழ்ந்து இருண்டது.* 12 *பின் நெருப்பிலிருந்து
கர்த்தர் உங்களிடம் பேசினார். யாரோ
பேசும் குரலை நீங்கள் கேட்டீர்கள். ஆனால்
உருவம் எதையும் நீங்கள் பார்க்கவில்லை.
குரல் மட்டுமே கேட்டது.* 13 *கர்த்தர் உங்களிடம்
தமது உடன்படிக்கையைச் சொன்னார்.
அவர் பத்துக் கட்டளைகளைக் கூறி,
அவற்றிற்குக் கீழ்ப்படியச் சொன்னார்.
அந்த உடன்படிக்கையின் சட்டங்களைக்
கர்த்தர் இரு கற்பலகைகளில் எழுதினார்.*
14 *அதே சமயம், நீங்கள் எடுத்துக்கொண்டு
வாழப்போகும் நாடுகளில், நீங்கள்
கடைப்பிடிக்க வேண்டிய சட்ட விதிகளை
உங்களுக்குப் போதிக்குமாறு எனக்குக்
கட்டளையிட்டார்.*

15 *“ஓரேப் மலை மீது நெருப்பிலிருந்து
கர்த்தர் உங்களுடன் பேசிய நாளில், நீங்கள்
அவரைப் பார்க்கவில்லை. ஏனென்றால்
தேவனுக்கு உருவமில்லை.* 16 *எனவே
எச்சரிக்கையாக இருங்கள்! எந்த
உயிரினத்தின் வடிவத்திலும் சிலை
களையோ பொய்யான தெய்வங்களை
உருவாக்கும் பாவத்தைச் செய்து உங்களை
நீங்களே அழித்துக் கொள்ளாதீர்கள். ஆண்
அல்லது பெண் போன்ற சிலைகளைச்
செய்யாதீர்கள்.* 17 *நிலத்தில் வாழும் ஒரு
மிருகத்தைப்போலவோ அல்லது வானில்
பறக்கும் ஒரு பறவையைப்போலவோ
விக்கிரகத்தைச் செய்யாதீர்கள்.* 18 *நிலத்தில்
ஊர்பவை அல்லது கடலில் உள்ள
மீனைப்போலவோ விக்கிரகத்தைச் செய்
யாதீர்கள்.* 19 *வானத்தைப் பார்க்கும்பொழுதும்
சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் மற்றும்
வானில் உள்ள பல்வேறு பொருட்களைப்
பார்க்கும்பொழுதும் எச்சரிக்கையாக
இருங்கள். அவற்றைத் தொழுதுகொள்ளவும்,
சேவை செய்யவும் தூண்டப்படாதிருக்க
எச்சரிக்கையுடன் இருங்கள். உங்கள்
தேவனாகிய கர்த்தர் உலகின் மற்ற
ஜனங்களை அவ்வாறு செய்யும்படி விட்டி
ருக்கிறார்.* 20 *ஆனால் கர்த்தர் எகிப்திலிருந்து
உங்களை வெளியேற்றி தமது சிறப்பான
ஜனமாக்கியுள்ளார். இது, இரும்பை உருக்கும்
வெப்பமிக்க உருக்காலையிலிருந்து*
உங்களை வெளியே இழுத்துப்போட்டது
போலாகும். இப்பொழுதோ நீங்கள்
அவருடைய ஜனங்கள்!*

21 *“உங்களால் என்மீது கோபங்கொண்ட
கர்த்தர், நான் யோர்தான் நதியைக் கடக்க
இயலாது என்று ஆணையிட்டார். உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்குத் தரும்
சிறப்பான நாட்டிற்குள் நான் கடந்து
போவதில்லை” என்றார்.* 22 *ஆகவே நான்
இங்கேயே மரிக்க வேண்டும். ஆனால்
நீங்களோ விரைவில் யோர்தான் நதியைக்
கடந்து நல்ல நிலப்பகுதியைக் கைப்பற்றி
அங்கு வாழ்வீர்கள்.* 23 *அப்புதிய பூமியில்,
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுடன்
செய்துகொண்ட உடன்படிக்கையை நீங்கள்
மறக்கக்கூடாது. கர்த்தருடைய கட்டளைக்கு
நீங்கள் கீழ்படிய வேண்டும். எந்த உருவிலும்
விக்கிரகங்களைச் செய்யாதீர்கள்.* 24 *ஏனென்
றால், உங்கள் தேவனாகிய கர்த்தர் தம்
ஜனங்கள் அந்நிய தெய்வங்களை தொழுது
கொள்வதை வெறுக்கிறார். அழிக்கும்
அக்கினியாகவும் கர்த்தர் விளங்குவார்!*

25 *“அந்நாட்டில் நீங்கள் நீண்டகாலம்
வசிப்பீர்கள். அங்கே குழந்தைகளையும்
பேரக்குழந்தைகளையும் பெறுவீர்கள். அங்கு
நீங்கள் முதுமையடைவீர்கள். பின் எல்லா
வகையான விக்கிரகங்களையும் செய்து
உங்கள் வாழ்க்கையை பாழாக்குவீர்கள்.
நீங்கள் அவ்வாறுச் செய்யும்போது,
தேவனுக்கு மிகுந்த கோபமூட்டுவீர்கள்!*
26 *ஆகவே இப்பொழுதே நான் உங்களை*

---

**உருக்காலை** *இரும்பை உருக்கும் உலை என்பது
எகிப்துக்கு உவமானமாக இருக்கிறது.*

எச்சரிக்கிறேன். பரலோகமும் பூமியும்
எனக்குச் சாட்சி! அக்கொடியச் செயலை
நீங்கள் செய்தால் விரைவில் அழிக்கப்
படுவீர்கள். அப்பூமியைக் கைப்பற்ற நீங்கள்
யோர்தான் நதியை இப்பொழுது
கடக்கின்றீர்கள். ஆனால் நீங்கள் ஏதேனும்
விக்கிரகங்களைச் செய்தால், அங்கே நீங்கள்
நீண்ட காலம் வசிக்கமாட்டீர்கள். இல்லை,
நீங்கள் முழுவதுமாக அழிக்கப்படுவீர்கள்!
27கர்த்தர் உங்களைப் பல நாடுகளில்
சிதறடிப்பார். கர்த்தர் உங்களை அனுப்பும்
நாடுகளுக்குச் செல்ல உங்களில் வெகு
சிலரே மீதியாயிருப்பீர்கள். 28அங்கே
மரத்தாலும் கல்லாலும் செய்யப்பட்டு
பார்க்கவோ, கேட்கவோ, உண்ணவோ
அல்லது நுகரவோ சக்தியற்ற, மனிதர்களால்
உருவாக்கப்பட்ட தெய்வங்களுக்குச் சேவை
செய்வீர்கள். 29ஆனால் மற்ற நாடுகளில்
நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தரைத்
தேடுவீர்கள். நீங்கள் உங்கள் முழு
மனதுடனும் முழு இருதயத்துடனும்
தேடினால் அவரைக் கண்டடைவீர்கள்.
30நீங்கள் துன்பமடைகிறபொழுது, இவை
களெல்லாம் உங்களுக்கு நேரும்போது
உங்கள் தேவனாகிய கர்த்தரிடம்
திரும்புவீர்கள். அவருக்குக் கீழ்ப்படிவீர்கள்.
31உங்கள் தேவனாகிய கர்த்தர் கருணைமிக்க
தேவன், உங்களை அங்கே விட்டு
விடமாட்டார் அவர் உங்களை முழுமையாக
அழிக்கமாட்டார். உங்கள் முற்பிதாக்களுடன்
அவர் செய்துகொண்ட உடன்படிக்கையை
மறக்கமாட்டார்.

## தேவன் செய்த பெரும் செயல்களை நினையுங்கள்

32“இதைப்போன்ற பெரிய செயல் ஏதும்
இதற்கு முன் நடந்ததுண்டா? இல்லவே
இல்லை. கடந்த காலத்தைப் பாருங்கள்.
நீங்கள் பிறப்பதற்கு முன்பு நடந்த
அனைத்தையும் சிந்தித்துப் பாருங்கள்.
பூமியில் தேவன் மனிதர்களைப் படைத்த
காலம்வரைக்கும் பின்னோக்கிப் பாருங்கள்.
இவ்வுலகில் நடந்த எல்லாவற்றையும்
பாருங்கள். இப்படிப்பட்ட பெரிய காரியம்
எதனையும் யாரும் கேள்விப்பட்டதுண்டா?
இல்லை! 33தேவன் அக்கினியிலிருந்து
உங்களுடன் பேசியதைக் கேட்டும்
உயிருடன் இருக்கிறீர்கள்! வேறெவருக்
கேனும் அவ்வாறு நடந்ததுண்டா? இல்லை!
34மேலும் வேறு எந்த தேவனும் ஒரு
நாட்டிற்குள் நுழைந்து தன் ஜனங்களை
தனக்காகத் தேர்ந்தெடுக்க முயன்றதுண்டா?
இல்லை! ஆனால் இந்த அற்புதச் செயல்களை
உங்கள் தேவனாகிய கர்த்தர் செய்ததை
நீங்களே கண்டீர்கள்! தன் வல்லமையையும்
பலத்தையும் உங்களுக்குக் காண்பித்தார்.
ஜனங்களுக்கு ஏற்பட்ட சோதனைகளைக்
கண்டீர்கள். அற்புதங்களையும் அதிசயங்
களையும் கண்டீர்கள். போரையும்,
கொடுஞ்செயல்கள் ஏற்பட்டதையும் பார்த்
தீர்கள். 35கர்த்தர் அவர் தேவன் என்பதை
நீங்கள் அறியவே அவற்றை நிகழ்த்தினார்.
அவரைப்போல் வேறொரு தேவன் இல்லை!
36உங்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க
பரலோகத்திலிருந்து நீங்கள் அவரது
குரலைக் கேட்க வைத்தார். பூமியின் மீது
அவருடைய பெரும்நெருப்பை நீங்கள்
காணும்படிச் செய்து, அதிலிருந்து
உங்களுடன் பேசினார்.

37“கர்த்தர் உங்கள் முற்பிதாக்களை
நேசித்தார். அதனால்தான், அவர்களின்
சந்ததியினரான உங்களைத் தேர்ந்தெடுத்தார்.
அதனாலேயே கர்த்தர் உங்களை
எகிப்திலிருந்து வெளியேற்றினார். அவர்
உங்களுடன் இருந்து, தமது பெரும்
வல்லமையினால் உங்களை வெளி
யேற்றினார். 38நீங்கள் முன்னேறியபொழுது,
உங்களைவிடவும் பெரியதும் வலிமை
மிக்கதுமான ஜனங்களை கர்த்தர் வெளியில்
துரத்தினார். அந்நாடுகளுக்குள் உங்களை
வழிநடத்தினார். நீங்கள் வாழ்வதற்காக
உங்களுக்கு அவர்களுடைய நாடுகளைக்
கொடுத்தார். இன்றும் அவர் அதைச் செய்து
கொண்டிருக்கிறார்.

39“ஆகவே கர்த்தரே தேவன் என்பதை
நீங்கள் இன்று உணர்ந்து ஒப்புக்கொள்ள
வேண்டும். மேலேயுள்ள பரலோகத்திலும்,
கீழேயுள்ள பூமியிலும் அவரே தேவன். வேறு
தேவன் இல்லை! 40நான் உங்களுக்கு
இன்று தரும் அவரது சட்டங்களுக்கும்
கட்டளைகளுக்கும் நீங்கள்க் கீழ்ப்படிய
வேண்டும். உங்களுக்கும் உங்களுக்குப் பின்
வசிக்கப்போகும் உங்கள் குழந்தைகளுக்கும்
ஒவ்வொன்றும் நல்லபடியாக நடக்கும்.
உங்களுக்கே எப்பொழுதும் சொந்தமாக
உங்கள் தேவனாகிய கர்த்தர் கொடுக்கும்
நாட்டில் நீங்கள் நீண்ட காலம் வாழ்வீர்கள்.
இது என்றும் உங்களுடையதாயிருக்கும்!”
என்றான்.

## பாதுகாப்பு நகரங்களை மோசே தேர்ந்தெடுத்தல்

41பின் யோர்தான் நதியின் கிழக்குத்
திசையில் மோசே மூன்று நகரங்களைத்
தேர்ந்தெடுத்தான். 42ஒருவன் முற்பகையின்றி
மற்றவனைக் கைத்தவறி கொலை செய்தால்,
அவன் அம்மூன்று நகரங்களில் ஒன்றுக்குள்
கொல்லப்படாமல் ஓடிவிடலாம். ஆனால்
அவன் மற்றவனை வெறுக்காமலும்,
வேண்டுமென்றே கொலை செய்யாதிருந்தால்
மட்டுமே பாதுகாப்பாக இருக்க முடியும்.
43மோசே தேர்ந்தெடுத்த மூன்று நகரங்
களாவன: ரூபனின் கோத்திரத்திற்குரிய
உயரமான சமவெளியில் உள்ள பேசேர்,
காத்தின் கோத்திரத்திற்குரிய கீலேயாத்தில்
உள்ள ராமோத் மற்றும் மனாசேயின்

*கோத்திரத்திற்குரிய பாசானில் உள்ள*
*கோலான் ஆகியவையாகும்.*

### மோசேயின் சட்டங்களுக்கான அறிமுகம்

44*தேவனின் சட்டங்களை மோசே*
*இஸ்ரவேல் ஜனங்களுக்குக் கொடுத்தான்.*
45*இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்திலிருந்து*
*வெளியேறியபின், மோசே இப்போதனை*
*களையும் பிரமானங்களையும் தந்தான்.*
46*அவர்கள் பெத்பேயோரைத் தாண்டியுள்ள*
*பள்ளத்தாக்கில் யோர்தான் நதிக்குக் கிழக்கில்*
*இருந்தபொழுது, மோசே இச்சட்டங்களை*
*அவர்களுக்கு வழங்கினான். எஸ்போனில்*
*வசித்த எமோரிய அரசனாகிய சீகோனின்*
*நாட்டில் அவர்கள் இருந்தார்கள்.*
*(எகிப்திலிருந்து வெளியேறியபொழுது*
*மோசேயும் இஸ்ரவேல் ஜனங்களும்*
*சீகோனைத் தோற்கடித்தனர்.* 47*அவர்கள்*
*சீகோனின் தேசத்தைப் பிடித்துக் கொண்*
*டார்கள். மேலும் பாசானின் அரசனாகிய*
*ஓக்கின் தேசத்தையும் அவர்கள்*
*கைப்பற்றினார்கள். இவ்விரு எமோரிய*
*அரசர்களும் யோர்தான் நதிக்குக் கிழக்கில்*
*வசித்தார்கள்.* 48*இந்த நிலப்பகுதி அர்னோன்*
*பள்ளத்தாக்கின் ஓரத்தில் ஆரோவேர் முதல்*
*சிரியோன்* மலை (எர்மோன் மலை)*
*வரையிலும் பரவியுள்ளது.* 49*யோர்தான்*
*நதியின் கிழக்கில் யோர்தான் பள்ளத்தாக்கு*
*முழுவதையும் இந்நிலப்பகுதி உள்ளடக்கி*
*யுள்ளது. இது தெற்கில் சவக்கடல்*
*வரையிலும் கிழக்கில் பிஸ்கா மலையின்*
*அடிவாரம் வரையிலும் பரவியுள்ளது.)*

### பத்துக் கட்டளைகள்

5 *மோசே இஸ்ரவேல் ஜனங்கள் அனை*
*வரையும் அழைத்து அவர்களிடம்,*
*“இஸ்ரவேல் ஜனங்களே! நான் இன்று*
*உங்களிடம் கூறும் சட்டங்களையும்*
*நியாயங்களையும் நன்றாகக் கவனித்துக்*
*கேளுங்கள். நீங்கள் அவற்றை மனதில்*
*கொண்டு அவற்றிற்குக் கீழ்ப்படிய வேண்*
*டும்.* 2*நமது தேவனாகிய கர்த்தர் ‘ஓரேப்’*
*மலையில் நம்மோடு ஒரு உடன்படிக்கை*
*செய்துகொண்டார்.* 3*கர்த்தர் இந்த*
*உடன்படிக்கையை நமது முற்பிதாக்களுடன்*
*செய்து கொள்ளாமல், இன்று உயிரோடு*
*வாழ்கின்ற நம் எல்லோருடனுமே*
*செய்துகொண்டார்.* 4*மலையிலே கர்த்தர்*
*உங்களிடம் முகமுகமாய்ப் பார்த்துப்*
*பேசினார். அவர் அக்கினியின் நடுவிலிருந்து*
*உங்களிடம் பேசினார்.* 5*ஆனால், அந்த*
*அக்கினியைக் கண்டு நீங்கள் பயந்தீர்கள்.*
*அதனால் நீங்கள் மலையில் ஏறாமல்*
*இருந்தீர்கள். எனவே, கர்த்தர் சொல்வதை*
*உங்களுக்கு அறிவிக்க நான் கர்த்தருக்கும்*
*உங்களுக்கும் நடுவில் நின்றேன்.*
*அப்பொழுது கர்த்தர் சொன்னார்:* 6*உங்கள்*
*தேவனாகிய கர்த்தர் நான் எகிப்தில் உங்கள்*
*அடிமைத்தனத்திலிருந்து உங்களை*
*வெளியேறச் செய்தேன். எனவே நான்*
*கூறும் இந்தக் கட்டளைகளுக்கு நீங்கள்*
*கீழ்ப்படிய வேண்டும்.*

7*“என்னைத் தவிர அந்நிய*
*தெய்வங்களை நீங்கள் தொழுது*
*கொள்ளக்கூடாது.*

8*“மேலே ஆகாயத்திலோ, கீழே*
*பூமியிலோ அல்லது பூமிக்குக் கீழே*
*தண்ணீரிலோ உள்ளவைகளின் சிலை*
*களையோ உருவங்களையோ உண்டாக்*
*கக்கூடாது.* 9*நீங்கள் எத்தகைய*
*விக்கிரகங்களையும்*
*தொழுதுகொள்ளவோ, சேவிக்கவோ*
*வேண்டாம். ஏனென்றால் நானே உங்கள்*
*தேவனாகிய கர்த்தர்! என் ஜனங்கள்*
*அந்நிய தெய்வங்களைத்*
*தொழுதுகொள்வதை நான் வெறுக்கின்*
*றேன். எனக்கு எதிராக அவ்வாறு*
*பாவம் செய்யும் ஜனங்கள், என்*
*எதிரிகள். நான் அவர்களைத்*
*தண்டிப்பேன். அவர்களது குழந்தை*
*களையும் பேரக்குழந்தைகளையும்*
*அவர்களின் குழந்தைகளையும்கூடத்*
*தண்டிப்பேன்.* 10*ஆனால், என்னிடத்தில்*
*அன்புகாட்டி என் கட்டளைகளுக்குக்*
*கீழ்ப்படிபவர்களிடம் மிகவும் இரக்கம்*
*காட்டுவேன். அவர்களின் குடும்பங்*
*களின்மீது ஆயிரம் தலைமுறைகள்**
*வரை இரங்கி அருள்வேன்!*

11*“உங்கள் தேவனாகிய கர்த்தருடைய*
*பெயரைத் தவறான வழியில்*
*பயன்படுத்தாதே. அவ்வாறு, ஒருவன்*
*கர்த்தருடைய பெயரைத் தவறாகப்*
*பயன்படுத்தினால் அவன் தண்டிக்கப்*
*படுவான். அவன் கர்த்தரால்*
*குற்றமற்றவனாகக் கருதப்படமாட்டான்.*

12*“உங்கள் தேவனாகிய கர்த்தர்*
*உனக்குக் கட்டளையிட்டபடியே ஓய்வு*
*நாட்களைப் பரிசுத்தமாகக் கழிப்பாயாக.*
13*வாரத்திற்கு ஆறு நாட்கள் உன்*
*வேலைக்குரிய கிரியைகளைச் செய்.*
14*ஆனால், ஏழாவது நாளோ உங்கள்*
*தேவனாகிய கர்த்தருக்கான ஓய்வு நாள்.*
*எனவே, அந்த நாளில் யாரும் வேலை*
*செய்யக்கூடாது. நீ மட்டுமின்றி, உனது*
*மகன்களும், மகள்களும், வேலைக்*
*காரர்களும், உன் வீட்டிலுள்ள மாடு,*
*கழுதை மற்றும் பிற விலங்குகளும்கூட*
*வேலைச் செய்யக்கூடாது. உன்*
*வீட்டிலிருக்கின்ற அந்நியர்களும்*
*யாதொரு வேலையும்ச் செய்யக்கூடாது.*

---

***சிரியோன்*** *அல்லது சியோன்.*

***ஆயிரம் தலைமுறைகள்*** *அல்லது. “என் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிகிற ஆயிரக் கணக்கானோருக்கும் இரக்கம் கான்பிப்பேன்.”*

நீ ஒய்வு எடுப்பதுபோல உன்
அடிமைகள் எல்லோருமே ஓய்வு எடுக்க
வேண்டும். 15நீங்கள் எகிப்து நாட்டில்
அடிமைகளாக இருந்ததை மறந்து
விடாதீர்கள். உங்கள் தேவனாகிய
கர்த்தர் அவரது ஆற்றல் மிகுந்த
கரத்தினாலும், ஓங்கிய புயத்தினாலும்
உங்களை எகிப்திலிருந்து மீட்டு
வந்தார். உங்களை அடிமைத்
தனத்திலிருந்து சுதந்திரமாக்கினார்.
இதனாலேயே ஓய்வுநாளை* எப்போதும்
விசேஷித்த நாளாக செய்யும்படி உங்கள்
தேவனாகிய கர்த்தர் கட்டளையிட்டார்.
16“உன் தாய், தந்தைக்கு மரியாதை
செலுத்தவேண்டும். உங்கள் தேவனாகிய
கர்த்தர் நீ இதைச் செய்வதற்குக்
கட்டளையிட்டுள்ளார். நீ இந்தக்
கட்டளையைப் பின்பற்றினால், உங்கள்
தேவனாகிய கர்த்தர் உனக்கு அளிக்கும்
நாட்டிலே உன்னை நீண்ட நாள்
வாழச்செய்வார்.
17“யாரையும் கொலை செய்யாதிருக்க
வேண்டும்.
18“விபச்சாரம் என்னும் பாவத்தைச்
செய்யாதே.
19“எந்த ஒரு பொருளையும் திருடக்
கூடாது.
20“பிறருக்கு எதிராகப் பொய் சாட்சி
சொல்லக்கூடாது.
21“பிறருடைய மனைவி மீது ஆசை
கொள்ளாதே. பிறரது வீட்டையும்,
அவரது நிலத்தையும், அவரது
வேலைக்காரன்-வேலைக்காரிகளையும்,
அவனது மாடு அல்லது கழுதைகளை
யும் விரும்பக்கூடாது. மற்றவர்களிடம்
உள்ள எந்த ஒரு பொருளையும்
எடுத்துக்கொள்ள ஆசைப்படக்கூடாது”
என்றான்.

### தேவனைக் கண்டு ஜனங்கள் பயந்தனர்

22மோசே, “இந்தக் கட்டளைகளை கர்த்தர்
மலையிலே உங்கள் எல்லோர்
முன்னிலையிலுமே வழங்கினார். அக்கினி
யிலிருந்தும், மேகத்திலிருந்தும், இருளிலிருந்
தும் மகாசத்தமாகவே கர்த்தர் பேசினார்.
அவர் வழங்கிய இக்கட்டளைகளைத் தவிர
வேறு எதுவும் கூறவில்லை. அவர் இந்தக்
கட்டளைகளை இரண்டு கற்பலகைகளில்
எழுதி என்னிடம் தந்தார்.
23“மலை அக்கினியால் எரிந்தபோது
இருளிலிருந்து உண்டான சத்தத்தை நீங்கள்
கேட்டீர்கள். பின்பு மூப்பர்களும் உங்கள்
கோத்திரங்களின் தலைவர்களும் என்னிடம்
வந்தார்கள். 24அவர்கள், ‘நமது தேவனாகிய
கர்த்தர் அவரது மகிமையையும், பெருமை
களையும் காண்பித்தார். நாம் அவர்
அக்கினியிலிருந்து பேசியதைக் கேட்டோம்.
தேவன் மனிதனோடு பேசியும் அவன்
உயிரோடு வாழ்வதை இந்நாளில் கண்டோம்.
25ஆனால், இங்கே மீண்டும் நமது
தேவனாகிய கர்த்தர் பேசுவதைக்
கேட்போமானால் நாம் மரிப்பது உறுதி. அந்த
பயங்கரமான அக்கினியானது நம்மை
அழித்துவிடும். நாம் மரிக்க விரும்பவில்லை.
26நாம் கேட்டதுபோல் அக்கினியின் நடுவே
இருந்து பேசுகிற ஜீவனுள்ள தேவனுடைய
சத்தத்தை வேறு யாராவது கேட்டு
உயிரோடிருந்ததுண்டோ! 27மோசே, நீ
நெருங்கிச் சென்று, நமது தேவனாகிய
கர்த்தர் கூறும் எல்லாவற்றையும் கேட்க
வேண்டும். பின் கர்த்தர் உம்மிடம் கூறிய
எல்லாவற்றையும் எங்களிடம் சொல்ல
வேண்டும். நாங்கள் நீர் சொல்வதைக் கேட்டு
அதன்படியே செய்வோம்’ என்றீர்கள்.

### கர்த்தர் மோசேயிடம் பேசுகிறார்

28“கர்த்தர் நீங்கள் என்னோடு பேசியதைக்
கேட்டுக்கொண்டு, அவர் என்னிடம்
சொன்னது, ‘இந்த ஜனங்கள் உன்னோடு
பேசியதை எல்லாம் நான் கேட்டேன்.
அவர்கள் சொன்னது எல்லாமே நன்றாகவே
இருந்தன. 29நான் விரும்புவதெல்லாம்
அவர்களது சிந்தனை வழிமாறாமல் என்னை
மதித்து எனக்குக் கீழ்ப்படிந்து, எனது
கட்டளைகளை எல்லாம் பின்பற்றக்கூடிய
மன உறுதியைப் பெறவேண்டும். அப்போது
அவர்களுக்கு எல்லாவற்றிலும் நன்மை
உண்டாயிருக்கும். அவர்களுக்கு மட்டு
மின்றி, அவர்களது சந்ததிகளுக்கும்
என்றென்றைக்கும் அனைத்தும் நன்றாய்
அமையும்.
30“‘நீ சென்று அந்த ஜனங்களிடம்,
அவர்களது கூடாரங்களுக்குத் திரும்பிப்
போகச்சொல், 31ஆனால் நீயோ இங்கே
எனது அருகிலேயே நில். நான் உன்னிடம்
எல்லா கட்டளைகளையும், சட்டங்களையும்,
நியாயங்களையும் சொல்லுகிறேன். அவற்
றை நீ அவர்களுக்குப் போதிக்க வேண்டும்.
நான் அவர்கள் வாழும்படி கொடுத்த
நிலத்தில் உன் போதனைப்படியே அவர்கள்
ஒவ்வொன்றையும் செய்ய வேண்டும்.’
32“ஆகையால், நீங்கள் கர்த்தர்
உங்களுக்குக் கூறிய கட்டளைகளின்படி
நடந்துகொள்ளக் கவனமாக இருங்கள்.
தேவன் கூறியவற்றைப் பின்பற்றுவதை
நிறுத்திவிடாதீர்கள். 33உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களுக்கு கொடுத்தக் கட்டளை
களின்படியே நெறிதவறாது வாழவேண்டும்.
பின் நீங்கள் தொடர்ந்து எல்லாவற்றிலும்
நலம் பெற்று வாழலாம். உங்களுக்குச்
சொந்தமான நிலத்தில் நீண்டநாள் நீங்கள்
வாழ்வீர்கள்.

---

**ஓய்வுநாள்** ‘யூதருக்கு சனிக்கிழமை ஓய்வுநாளாக உள்ளது. அது இளைப்பாறவும் ஆராதிக்கவும் பயன்படும் நாள்.’

### எப்பொழுதும் தேவனை நேசித்து கீழ்ப்படி!

6 “உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குப் போதிக்கும்படி என்னிடம்
கூறியக் கட்டளைகளும், சட்டங்களும்,
நியாயங்களும் இவைகளே. குடியேறும்படி
நீங்கள் போகிற தேசத்திலே இந்த
சட்டங்களுக்குக் கீழ்ப்படியுங்கள். 2நீயும் உன்
சந்ததியினரும் நீங்கள் வாழ்கின்ற
காலம்வரை உங்கள் தேவனாகிய கர்த்தரை
மதிக்க வேண்டும். நான் உங்களுக்குத்
தரும் சட்டங்களுக்கும் கற்பனைகளுக்கும்
நீங்கள் கீழ்ப்படிய வேண்டும். இவ்வாறு
நீங்கள் செய்தால், நீங்கள் நீண்ட ஆயுளைப்
பெறுவீர்கள். 3இஸ்ரவேல் ஜனங்களே, நான்
கூறுவதைக் கவனமாகக் கேட்பதுடன் இந்தச்
சட்டங்களுக்கு நீங்கள் கீழ்ப்படிய வேண்டும்,
அப்போது உங்களுக்கு எல்லாம்
நல்லவையாக அமையும். நீங்கள், அநேக
குழந்தைகளைப் பெறுவீர்கள். உங்கள்
முற்பிதாக்களின் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்கு வாக்களித்தபடி பாலும் தேனும்
ஓடக்கூடிய வளமான தேசத்தைப்
பெறுவீர்கள்.
4“இஸ்ரவேல் ஜனங்களே, கவனியுங்கள்.
நமது தேவனாகிய கர்த்தர் ஒருவரே தேவன்!
5உங்கள் தேவனாகிய கர்த்தரிடத்தில், நீ
முழு இருதயத்துடன், நிறைவான
ஆத்மாவுடன், உன் முழு வலிமையுடன்
அன்பு செலுத்தவேண்டும். 6இன்று நான்
கூறும் இந்தக் கட்டளைகளை என்றும்
உங்கள் மனதில் வைக்கவேண்டும். 7நீங்கள்
இவற்றைக் கட்டாயமாக உங்கள்
குழந்தைகளுக்குப் போதிக்க வேண்டும்.
உங்கள் வீட்டினுள் இருக்கும்போதும்
வீதிகளில் நடக்கும்போதும் அவற்றைப்
பற்றிப் பேசவேண்டும். நீங்கள் தூங்கச்
செல்லும்போதும் உறங்கி எழும்போதும்
அவற்றைப் பற்றியே அவர்களிடம்
பேசவேண்டும். 8அவற்றை எழுதிக்கொண்டு
அடையாளமாக உங்கள் கைகளில் அணிந்து
கொள்ளுங்கள். என் போதனைகளை
ஞாபகத்தில் வைத்துக்கொள்ளப் பயன்
படும்படி எப்போதும் அவைகளை உங்கள்
நெற்றியில் அணிந்துக் கொள்ளுங்கள்.
9அவைகளை உங்கள் வீட்டுக் கதவு
நிலைக்கால்களிலும் வாசல்களிலும்
எழுதிவையுங்கள்.

10“ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகிய
உங்கள் முற்பிதாக்களிடம் உங்கள்
தேவனாகிய கர்த்தர் இந்தப் பூமியை
உங்களுக்குத் தருவதாகக் கூறினார். கர்த்தர்
உங்களுக்கு அந்த பூமியைக் கொடுப்பார்.
நீங்கள் இதுவரை உருவாக்காத வளமான
பெரிய நகரங்களைத் தருவார். 11நீங்கள்
வைத்திராத சிறந்த நல்ல பொருட்கள்
பலவற்றைக் கொண்ட வீடுகளை கர்த்தர்
உங்களுக்குத் தருவார். நீங்கள் இதுவரைத்
தோண்டியிருக்காத கிணறுகளைத் தருவார்.
நீங்கள் இதுவரைப் பயிரிடாத திராட்சைத்
தோட்டங்கள், ஒலிவ மரங்கள் போன்ற
வற்றை கர்த்தர் உங்களுக்குத் தருவார்.
நீங்கள் திருப்தியாக உண்ணலாம்.
12“ஆனால் எச்சரிக்கையாய் இருங்கள்!
கர்த்தரை மறந்து விடாதிருங்கள். நீங்கள்
எகிப்தில் அடிமைகளாக இருந்தீர்கள்,
ஆனால் கர்த்தர் உங்களை அந்த அடிமைத்
தனத்திலிருந்து மீட்டு வந்தார். 13உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு மரியாதை செய்து
அவர் ஒருவரை மட்டும் சேவியுங்கள்.
அவரது பெயரை மட்டுமே வைத்து
மற்றவருக்கு வாக்களி (பிற பொய்த்
தெய்வங்களின் பெயரைப் பயன்
படுத்தாதிருங்கள்!) 14நீங்கள் கண்டிப்பாக
பிற பொய்த் தெய்வங்களைப் பின்பற்றக்
கூடாது. உங்களைச் சுற்றியிருக்கின்ற
ஜனங்களின் பிற பொய்த் தெய்வங்களை
நீங்கள் பின்பற்றக் கூடாது. 15உங்கள்
தேவனாகிய கர்த்தர் எப்போதும்
உங்களுடன் இருக்கிறார். அவர் தமது
ஜனங்கள் பிற பொய்த் தெய்வங்களை
தொழுதுகொள்வதை வெறுக்கின்றார்.
எனவே, நீங்கள் அத்தகைய தெய்வங்களைப்
பின்பற்றினால் உங்கள் மீது கர்த்தர் மிகவும்
கோபங்கொள்வார். அவர் உங்களை இந்தப்
பூமியில் இருந்தே அழித்துவிடுவார்.
16“நீங்கள் மாசாவிலே செய்ததுபோல்
உங்கள் தேவனாகிய கர்த்தரை சோதனை
செய்யாதீர்கள். 17உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய, கட்டளைகளுக்குக் கீழ்ப்படி
வதில் நீங்கள் உறுதியாக இருக்க வேண்டும்.
அவர் உங்களுக்காக வழங்கிய எல்லா
போதனைகளையும், சட்டங்களையும் நீங்கள்
கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டும். 18நீங்கள்
கர்த்தரைத் திருப்திப்படுத்தும்படி நல்ல
வற்றையும், சரியானவற்றையும் மட்டுமே
செய்யவேண்டும். அப்போது எல்லாம்
உங்களுக்கு நன்றாகவே நடக்கும். கர்த்தர்
உங்கள் முற்பிதாக்களுக்கு உறுதியளித்த
தேசத்தில் போய் நல்ல நிலங்களை
எடுத்துக்கொள்ளலாம். 19கர்த்தர் சொன்னது
போல் உங்கள் எதிரிகள் அனைவரையும்
நீங்கள் துரத்திவிடலாம்.

### தேவன் செய்தவற்றை உங்கள் பிள்ளைகளுக்குப் போதியுங்கள்

20“வருங்காலத்தில், ‘நமது தேவனாகிய
கர்த்தர் உங்களுக்கு வழங்கிய போதனை
களுக்கும், சட்டங்களுக்கும், நியாயங்
களுக்கும் அர்த்தம் என்ன?’ என்று
உன்னுடைய மகன் உன்னிடம் கேட்கலாம்.
21நீ உன் மகனிடம் சொல், ‘நாங்கள்
எகிப்தில் பார்வோனுக்கு அடிமைகளாக
இருந்தோம். அப்போது கர்த்தர் தன்
வல்லமையான கரத்தினாலே எகிப்திலிருந்து
எங்களை வெளியேறச் செய்து மீட்டுக்

கொண்டார். 22கர்த்தர் அங்கே சிறந்த
அற்புதங்களைச் செய்தார். கர்த்தர் எங்கள்
கண்களுக்கு முன்பே எகிப்தின் மீதும்,
பார்வோன் மீதும், அவன் குடும்பம்
அனைத்தின் மீதும், கொடிய
அடையாளங்களையும் அற்புதங்களையும்
செய்தார். 23பின்பு கர்த்தர் நமது
முற்பிதாக்களுக்கு கூறியபடி இந்த தேசத்தை
நமக்குக் கொடுக்கும்படி நம்மை
எகிப்திலிருந்து வெளியேறச் செய்தார்,
24கர்த்தர் போதித்த அனைத்தையும் நாம்
பின்பற்றும்படி கர்த்தர் நமக்கு கட்டளை
யிட்டார். நாம் நமது தேவனாகிய
கர்த்தருக்கு மிகுந்த மரியாதை
செலுத்தவேண்டும். அப்போது கர்த்தர் நாம்
இன்று இருக்கிற வண்ணமாக எப்போதும்
வாழ்ந்து செழிப்பாக இருக்கும்படிச்
செய்வார். 25நமது தேவனாகிய கர்த்தர்
சொன்னபடியே அவரது சட்டங்களை நாம்
கவனமாகப் பின்பற்றினோம் என்றால்,
அப்போது தேவன் நாம் மிக நல்ல
காரியத்தைச் செய்தோம்' என்று சொல்.

### இஸ்ரவேலர், தேவனின் விசேஷ ஜனங்கள்

7 "உங்கள் விருப்பத்திற்கேற்ப சுதந்திரமாக
வாழப்போகின்ற இந்த தேசத்தில் உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களை வழிநடத்திச்
செல்வார். உங்களுக்காக உங்களைவிடப்
பெரியவர்களும், பலசாலிகளுமான ஏத்தியர்,
கிர்காசியர், எமோரியர், கானானியர்,
பெரிசியர், ஏவியர், எபூசியர் ஆகிய ஏழு
நாட்டினர்களையும் உங்களுக்கு முன்பாகவே
துரத்துவார். 2உங்கள் தேவனாகிய கர்த்தர்
அந்த ஏழு நாட்டினரையும் உங்களுக்குக்
கீழே கட்டுப்பட வைப்பார். அவர்களை
நீங்கள் தோற்கடிப்பீர்கள். அவர்களை முழு
வதுமாக நீங்கள் அழித்துவிட வேண்டும்.
அவர்களிடம் எவ்வித ஒப்பந்தமும்
செய்யாதீர்கள். அவர்களிடம் இரக்கம்
காட்டாதீர்கள். 3அவர்களில் எவரையும்
மணந்துகொள்ளாதீர்கள். நீங்கள் மட்டுமின்றி
உங்கள் மகன்களையோ மகள்களையோ
அந்த ஜனங்களைச் சார்ந்தவர்களில்
ஒருவருக்கும் திருமணம் செய்து வைக்கக்
கூடாது. 4ஏனென்றால் அந்த ஜனங்கள்
உங்கள் பிள்ளைகளை என்னைப்
பின்பற்றுவதிலிருந்து திசைதிருப்பி
விடுவார்கள். பின்பு உங்கள் பிள்ளைகள்
மற்ற பொய்த் தெய்வங்களை தொழுதுகொள்
வார்கள். அதனால், கர்த்தர் உங்கள்மீது
கடுமையாக கோபங்கொள்ள நேரிடும். அவர்
உங்களை விரைவில் அழித்து விடுவார்.

### பொய்த் தெய்வங்களை அழித்துவிடுங்கள்

5"நீங்கள் அந்தப் பகைவர்களுக்குச் செய்ய
வேண்டியது என்னவென்றால், அவர்களின்
பலிபீடங்களை இடித்து, அவர்களுடைய
ஞாபகார்த்தக் கற்களைத் உடைத்து
விடுங்கள். அவர்களது அஷேரா கோவில்
கம்பங்களை* வெட்டி வீழ்த்தி, அவர்களது
சிலைகளைத் தீயிலிட்டு அழித்து விடுங்கள்!
6ஏனென்றால் நீங்கள் எல்லோரும்
கர்த்தருடைய சொந்த ஜனங்கள். இந்தப்
பூமியில் உள்ள எல்லா ஜனங்களிலிருந்தும்
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களைத்
தேர்ந்தெடுத்து தமக்கு விசேஷமான
ஜனங்களாக ஆக்கினார். 7ஏன் கர்த்தர்
உங்கள்மீது அன்பு செலுத்தி
தேர்ந்தெடுத்தார்? மற்ற ஜனங்களைவிட
நீங்கள் அதிகமானவர்கள் என்பதால் அல்ல,
மற்ற எல்லா ஜனங்களையும் விட நீங்கள்
மிகக் குறைவானவர்களே! 8ஆனால், கர்த்தர்
தமது பெரிய வல்லமையினால்
எகிப்திலிருந்து உங்களை மீட்டு வந்தார்.
அவர் உங்களை அடிமைத்தனத்திலிருந்து
விடுவித்தார். எகிப்து நாட்டு மன்னனாகிய
பார்வோனின் கட்டுப்பாட்டிலிருந்து
உங்களை கர்த்தர் விடுவித்தார். ஏனென்றால்
கர்த்தர் உங்கள்மீது அன்பு செலுத்தி உங்கள்
முற்பிதாக்களுக்குக் கொடுத்த வாக்கைக்
காப்பாற்ற விரும்பினார்.

9"ஆகையால், உங்கள் தேவனாகிய
கர்த்தர் ஒருவரே தேவன் என்பதை
நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் அவரிடம்
முழு நம்பிக்கை கொள்ளலாம்! அவர் தமது
உடன்படிக்கையிலிருந்து விலகமாட்டார்.
யாரெல்லாம் அவரிடம் அன்பு வைத்து,
அவரது கட்டளைகளுக்குக் கீழ்ப்படி
கிறார்களோ அவர்களுக்கெல்லாம் தேவன்
தமது அன்பையும், அருளையும் பொழிவார்.
உங்களிடம் மட்டுமின்றி, உங்களின் ஆயிரம்
தலைமுறைகளுக்கும் அவர் தமது
அன்பையும் அருளையும் தருவார். 10ஆனால்,
அவரை வெறுக்கின்றவர்களைக் கர்த்தர்
தண்டிப்பார். அவர்களை அழித்துவிடுவார்.
அவர்களைத் தண்டிப்பதில் சிறிதும் தயவு
காட்டமாட்டார். 11எனவே நான் இன்று
கொடுக்கும் நமது தேவனுடைய கட்டளை
களையும், கற்பனைகளையும், நியாயங்
களையும் நீங்கள் எச்சரிக்கையுடன் பின்பற்ற
வேண்டும்.

12"உன்னோடு செய்த உடன்படிக்கை
யின்படி உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்கள்மீது அன்பு செலுத்த வேண்டு
மென்றால் இந்த சட்டங்களை நீ கவனமாகப்
பின்பற்றி அவைகளுக்குக் கீழ்ப்படிய
வேண்டும். இதைத் தேவன் உங்கள்
முற்பிதாக்களுடன் உறுதிசெய்துள்ளார்.
13தேவன் உங்கள்மீது அன்பு செலுத்தி
உங்களை ஆசீர்வதிப்பார். உங்கள் தேசத்தை
தேவன் வளர்ச்சியடையச் செய்வார்.
உங்கள் பிள்ளைகளைத் தேவன்

---

**அஷேரா கம்பம்** அஷேரா தேவதையை கனப்படுத்த நாட்டிய ஆலய கம்பம் ஆகும் நிறையபிள்ளைக் கனியைக் கொடுக்கும் தேவதை என்று அஷேரா பூஜிக்கப்பட்டது.

ஆசீர்வதிப்பார். உங்கள் வயல்வெளிகளை
வளமாக்குவார். உன் நிலத்தில் தானியங்
களையும், புதிய திராட்சைரசத்தையும்,
எண்ணெயையும் தேவன் தந்தருளுவார்.
உங்கள் பசுக்களையும், கன்றுகளையும்,
ஆடுகளையும், ஆட்டுக் குட்டிகளையும்
தேவன் ஆசீர்வதிப்பார். கொடுப்பேன் என்று
உங்கள் முற்பிதாக்களுக்கு அவர் வாக்களித்த
அந்த தேசத்தில் அவர் உங்களுக்கு எல்லா
வகையான ஆசீர்வாதங்களையும் தந்தருளு
வார்.
14“மற்ற எல்லா ஜனங்களை விடவும்
நீங்கள் தேவனால் ஆசீர்வதிக்கப்படுவீர்கள்.
ஒவ்வொரு கணவனும் மனைவியும்
குழந்தைச்செல்வம் பெறுவீர்கள். உங்கள்
மாடுகளும் கன்றுகளைப் பெறும். 15உங்களி
டம் உள்ள எல்லா நோய்களையும் கர்த்தர்
நீக்கிவிடுவார். உங்களுக்குத் தெரிந்துள்ள
எகிப்தியர்களின் கொடிய நோய்களில்
ஒன்று கூட உங்கள் மீது வந்துவிடாமல்
கர்த்தர் காத்துக்கொள்வார். ஆனால் உங்கள்
எதிரிகளுக்கு அவ்வித நோய்கள் பிடிக்கு
மாறு செய்வார். 16உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய உதவியோடு தோற்கடித்த
எல்லா எதிரிகளையும் அழித்துவிட
வேண்டும். அவர்களுக்காக வருத்தப்படா
தீர்கள். அவர்களது பொய்த் தெய்வங்களை
தொழுதுகொள்ளாதீர்கள். ஏனென்றால்
அவை உங்களைப் பிடிக்கும் கண்ணியாகி
விடும். அவை உங்கள் வாழ்வை
நாசமாக்கிவிடும்.

### கர்த்தர் அவரது ஜனங்களுக்கு உதவுவதாக வாக்களிக்கிறார்

17“‘நம்மைவிட நம் எதிரிகள் பெரிய
வர்கள். நாம் எப்படி அவர்களைத்
துரத்திவிடுவது’ என்று உங்கள் மனதிற்குள்
நீங்களே சொல்லிக் கொள்ளாதீர்கள். 18நீங்கள்
அவர்களைக் கண்டு சிறிதும் பயப்படத்
தேவையில்லை. அன்று எகிப்தில் உங்கள்
தேவனாகிய கர்த்தர் பார்வோனுக்கும்
எகிப்தின் அனைத்து ஜனங்களுக்கும்
செய்ததை நீங்கள் நினைத்துப் பார்க்க
வேண்டும். 19அவர்களுக்குத் தேவன் செய்த
பெரிய இடையூறுகளை நீங்கள் பார்த்தீர்கள்.
தேவன் செய்த அற்புதச் செயல்களையும்
நீங்கள் பார்த்துள்ளீர்கள். எகிப்திலிருந்து
உங்களை மீட்க கர்த்தர் தமது பலத்த
கைகளையும் ஓங்கியப் புயத்தையும்
பயன்படுத்தியதை நீங்கள் பார்த்துள்ளீர்கள்.
உங்கள் தேவனாகிய கர்த்தர் மீண்டும்
அதே ஆற்றலைப் பயன்படுத்தி, நீங்கள்
பயப்படுகின்ற அனைத்து ஜனங்களுக்கு
எதிராகவும் அப்படியே செய்வார்.
20“அவ்வாறு செய்தபின்பும், மீதியுள்ள
வர்களான உங்களுக்குத் தப்பி ஒளிந்து
கொள்பவர்களையும் கண்டுபிடித்து அழித்து
விடுவதற்கு உங்கள் தேவனாகிய கர்த்தர்
குளவிகளை* அனுப்புவார். தேவன்
அவர்கள் அனைவரையும் அழித்துவிடுவார்.
21அவர்களைக் கண்டு பயப்படாதீர்கள்.
ஏனென்றால், உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுடன் இருக்கின்றார். அவர் வல்லமை
யும் பயங்கரமும் கொண்ட தேவனாவார்.
22உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களின்
எதிரிகளை உங்கள் தேசத்தை விட்டு
கொஞ்சம் கொஞ்சமாகத் துரத்திவிடுவார்.
நீங்கள் அவர்கள் அனைவரையும் ஒரே
சமயத்தில் அழித்துவிட வேண்டாம். நீங்கள்
அப்படிச்செய்தால் காட்டு மிருகங்கள்
உங்களைச் சுற்றி எண்ணிக்கையில்
பெருகிவிடும். 23ஆனால் உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களின் எதிரிகளை உங்களிடம்
தோற்கச் செய்வார். அவர்கள் அழியும்
வரையில் அவர்களைத் திணறச் செய்வார்.
24அவர்களது இராஜாக்கள் உங்களிடம்
தோற்றுப்போக கர்த்தர் உங்களுக்கு
உதவுவார். நீங்கள் அவர்களை அழித்து
விடுவீர்கள்! உலகம் அவர்கள் வாழ்ந்ததை
மறந்துவிடும். அவர்களில் ஒருவனும்
உங்களைத் தடுத்து நிறுத்த முடியாது.
அவர்கள் அனைவரையும் நீங்கள் அழித்து
விடுவீர்கள்.
25“நீங்கள் அவர்களது தெய்வங்களின்
சிலைகளைத் தீயிலிட்டுக் கொளுத்திவிட
வேண்டும். நீங்கள் அந்தச் சிலைகளில்
உள்ள வெள்ளி அல்லது தங்கத்தின் மீது
சிறிதளவும் ஆசை கொள்ளாமலும், எடுத்துக்
கொள்ளாமலும் இருக்க வேண்டும்.
அவர்களின் வெள்ளி அல்லது தங்கத்தை
நீங்கள் எடுத்துக்கொண்டால் அது உங்களை
சிக்கவைத்து, உங்கள் வாழ்க்கையை
நாசமாக்கிவிடும். ஏனென்றால் உங்கள்
தேவனாகிய கர்த்தர் அவற்றை அருவெருத்து
வெறுப்பவர் ஆவார். 26எனவே, அந்த
அருவெருக்கத்தக்க விக்கிரகங்களை நீங்கள்
உங்கள் வீட்டுக்குள் கொண்டுவரக்கூடாது.
நீங்களும் அவற்றைக் கண்டிப்பாக வெறுத்து
ஒதுக்க வேண்டும். அவை அனைத்தையும்
அழித்துவிட வேண்டும்!

### கர்த்தரை நினை

8 “நான் இன்று கொடுக்கின்ற எல்லாக்
கட்டளைகளையும் நீங்கள் கண்டிப்பாகப்
பின்பற்ற வேண்டும். ஏனென்றால்,
அப்போதுதான் நீங்கள் வாழ்ந்து வளர்ந்து
உயர்ந்ததொரு சமுதாயமாக வரமுடியும்.
கர்த்தர் உங்கள் முற்பிதாக்களிடம்
சொன்னதுபோல் நீங்கள் சுதந்திரமான
தேசத்தைப் பெறமுடியும். 2இந்தப் பாலை
வனத்தில் கடந்துவந்த 40 ஆண்டு காலத்தில்
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களை

---

**குளவிகள்** கடந்தை என்று கூறப்படும் மலைக்குளவிகள் கொட்டினால் மரண சிட்சை கிடைக்கும். இங்கு தேவனுடைய தூதர்களையும், அவரது பேராற்றலையும் அது குறிக்கலாம்.

நடத்தி வந்த எல்லா வழிகளையும் பற்றி
நீங்கள் நினைத்துப் பார்க்கவேண்டும். கர்த்தர்
உங்களை சோதித்துக் கொண்டிருந்தார்.
உங்களைத் தாழ்மையானவர்களாக்க அவர்
விரும்பினார். உங்கள் மனதில் உள்ள
எண்ணங்களை அறிய அவர் ஆசைப்
பட்டார். அவரது கட்டளைகளை நீங்கள்
ஒழுங்காகப் பின்பற்றுகிறீர்களா என்பதை
அவர் அறிய விரும்பினார். 3கர்த்தர்
உங்களைத் தாழ்மையாக்கி உங்களைப்
பசியால் வருத்தி, பின் நீங்களும் உங்கள்
முற்பிதாக்களும் இதுவரைப் பார்க்காத,
இருந்த ‘மன்னா’ என்னும் உணவை
உண்ணச் செய்தார். தேவன் ஏன் இப்படிச்
செய்தார்? ஏனென்றால் மனிதன் வெறும்
அப்பத்தைத் தின்பதால் மட்டும்
உயிர்வாழ்ந்திட முடியாது. அவர்கள் கர்த்தர்
கூறியதைக் கேட்பதினாலேயே வாழலாம்
என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள
வேண்டும் என தேவன் விரும்பினார்.
4கடந்த 40 ஆண்டுகளில் உங்களது ஆடைகள்
பழமையடைந்துபோக விடவில்லை.
உங்களது கால்கள் வீக்கமடைந்துவிட
வில்லை. (ஏனென்றால் கர்த்தர் உங்களைப்
பாதுகாத்தார்.) 5உங்களுக்காக உங்கள்
தேவனாகிய கர்த்தர் செய்த எல்லாவற்றை
யும் நீங்கள் நினைத்துப் பார்க்கவேண்டும்.
ஒரு தந்தை தன் மகனுக்கு கற்றுக்கொடுத்து
அவனைத் திருத்துவதுபோல் தேவன்
உங்களுக்கு விளக்கினார்.

6“அத்தகைய உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய கட்டளைகளுக்கு நீங்கள்
கீழ்ப்படிய வேண்டும். அவற்றைப் பின்பற்றி
அவரை மதிக்க வேண்டும். 7உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களை ஒரு நல்ல
தேசத்திலே வசிக்க அழைத்துக்கொண்டு
வருகிறார். அங்கு பள்ளத்தாக்குகளிலிருந்தும்
மலைகளிலிருந்தும் புறப்படுகின்ற ஆறு
களும், ஊற்றுகளும், ஏரிகளும்
தண்ணீர்வளம் நிறைந்தது. 8அந்த நிலம்
கோதுமையையும், பார்லியையும், திராட்
சைக் கொடிகளையும், அத்தி மரங்களையும்,
மாதுளஞ்செடிகளையும் விளைவிக்கும்
வளமான நிலம். அது ஒலிவ மரங்களையும்,
எண்ணெய், தேன் ஆகியவற்றையும்
கொடுக்கவல்ல நிலமாகும். 9அங்கே நீங்கள்
தாராளமாக உண்டு வாழலாம். உங்களுக்குத்
தேவையான எல்லாப் பொருட்களும்
கிடைக்கும். அது, பாறைகள் இரும்பாக
இருக்கும் தேசமாக உள்ளது. அங்குள்ள
மலைகளிலிருந்து செம்பு உலோகத்தை
நீங்கள் வெட்டி எடுக்கலாம். 10அங்கு நீங்கள்
உண்ண விரும்புகின்ற எல்லாம்
உங்களுக்குக் கிடைக்கும். இத்தகைய வளம்
நிறைந்த, நீங்கள் திருப்தியுடன் மகிழ்வாய்
வாழக்கூடிய இந்த நிலத்தை உங்களுக்குத்
தந்த உங்கள் தேவனாகிய கர்த்தரை நீங்கள்
பாராட்டிப் போற்றுவீர்கள்.

### கர்த்தர் செய்தவற்றை மறந்து விடாதே

11“எச்சரிக்கையாய் இருங்கள். உங்கள்
தேவனாகிய கர்த்தரை நீங்கள் மறந்து
விடாதீர்கள்! கவனமாக இருங்கள். நான்
இன்று உங்களுக்குத் தந்த தேவனது
கட்டளைகளுக்கும், சட்டங்களுக்கும்,
நியாயங்களுக்கும் கீழ்ப்படிந்து நடக்க
வேண்டும். 12பின், நீங்கள் தாராளமான
திருப்தியான உணவை உண்ணலாம்.
வசதியான வீடுகளை நீங்கள் கட்டி
அவைகளை அனுபவித்து வாழலாம்.
13உங்களது ஆடு, மாடு, வெள்ளாடுகள்
பெருகி வளர்ச்சியடையும். பொன்னும்,
வெள்ளியும் மிகுதியாகப் பெறலாம். நீங்கள்
எல்லாவற்றையும் தாராளமாக அடையலாம்!
14இவற்றையெல்லாம் அனுபவிக்கும்போது
நீங்கள் கர்வம் கொள்ளாமல் எச்சரிக்கையாக
இருக்க வேண்டும். உங்கள் தேவனாகிய
கர்த்தரை நீங்கள் ஒருபோதும் மறந்துவிடக்
கூடாது. நீங்கள் எகிப்தில் அடிமைகளாக
இருந்தீர்கள். ஆனால் கர்த்தர் உங்களை
விடுவித்து அங்கிருந்து வெளியேற்றி இங்கு
அழைத்து வந்தார். 15மிகப்பெரிய பயங்
கரமான பாலைவனத்தின் வழியாகக்
கொள்ளிவாய் பாம்புகளும், கொடிய
தேள்களும் நிறைந்த அந்தப் பாலைவனத்தில்
வறண்ட நிலமாகத் தண்ணீரே இல்லாத
கொடிய பாலைவனமாக இருந்தது. ஆனால்,
கர்த்தர் அங்கே பாறைகளுக்கு அப்பால்
இருந்து உங்களுக்குத் தண்ணீரைத் தந்தார்.
16அந்தப் பாலைவனத்தில் உங்கள் முற்பிதாக்
களும் பார்த்திராத ‘மன்னா’ என்னும்
உணவை உங்களுக்கு உண்ணக் கொடுத்தார்.
கர்த்தர் உங்களைச் சோதித்தார். ஏன்?
ஏனென்றால், முடிவில் எல்லாம் உங்களுக்கு
நன்றாய் நடக்கும்படிக்குத் தேவன் உங்க
ளைப் பணியச் செய்தார். 17‘எனது சொந்த
ஆற்றலினாலும், திறமையினாலுமே எல்லா
வகையான இந்த வசதிகளைப் பெற்றேன்’
என்று ஒருநாளும் உனக்குள் சொல்லி
விடாதே. எச்சரிக்கையாய் இரு! 18உங்கள்
தேவனாகிய கர்த்தரையே நினைப்பீர்களாக!
அவரே உங்கள் முற்பிதாக்களுக்கு ஆணை
யிட்டுக் கொடுத்த தமது உடன்படிக்கையை
நிறைவேற்றும்பொருட்டு, இந்நாளில்
உங்களுக்கு இருக்கின்றச் செல்வங்களை,
நீங்கள் ஏற்படுத்திக் கொள்வதற்கான
ஆற்றலைத் தந்தார்.

19“உங்கள் தேவனாகிய கர்த்தரை
என்றைக்கும் மறந்து விடாதீர்கள். மற்ற
பொய்த் தெய்வங்களை ஒருபோதும்
பின்பற்றி விடாதீர்கள். அவற்றைத் தொழுது
கொள்ளவோ, சேவிக்கவோ வேண்டாம்.
நீங்கள் அவ்வாறு செய்தால் நான் இன்று
உங்களை எச்சரிக்கின்றேன், நீங்கள்
கண்டிப்பாக அழிந்துவிடுவீர்கள்! 20கர்த்தர்
உங்களுக்காக உங்கள் எதிரிகளை அழித்தார்.
ஆனால் நீங்களோ அவர்களின் பிற பொய்த்

தெய்வங்களைப் பின்பற்றினால், உங்களை
யும் அவர்களைப்போன்றே அழித்து
விடுவார். ஏனென்றால் நீங்கள் உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு செவிகொடுப்பதை
நிறுத்திவிட்டீர்கள்!

### கர்த்தர் இஸ்ரவேலருடன் இருப்பார்

9 "இஸ்ரவேல் ஜனங்களே கவனியுங்கள்!
நீங்கள் இன்று யோர்தான் நதியைக்
கடந்து செல்லப் போகிறீர்கள். அந்த நிலத்தில்
உங்களைவிடப் பெரிய பலம் வாய்ந்த
உங்களின் எதிரிகளை வெளியே
துரத்துவீர்கள். அவர்களது நகரங்கள்
வானத்தைத் தொடும் உயர்ந்த மதில்களைக்
கொண்ட பெரிய நகரங்களாகும்! 2அங்குள்ள
ஜனங்கள் உயரமாகவும் பருமனாகவும்
இருக்கிறார்கள். அவர்கள் ஏனாக்கின்
வம்சத்தினர். நீங்கள் அவர்களைப்பற்றி
அறிந்திருக்கிறீர்கள். 'ஏனாக்கியர்களை எவ
ராலும் எதிர்த்து வெல்ல முடியாது' என்று
நம் ஒற்றர்கள் கூறியதை நீங்கள்
கேட்டிருப்பீர்கள். 3ஆனால் உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்கு முன்பாக
இந்த ஆற்றினைக் கடந்து செல்பவராயிருக்
கிறார் என்பதை அறிந்துகொள்ளுங்கள்.
எனவே உங்களால் ஏனாக்கியர்களை
எதிர்க்க முடியும். தேவன் அக்கனியைப்
போல் அவர்களை அழித்து விடுவார்!
கர்த்தர் அந்த ஜனங்களை அழித்து விடுவார்.
அவர்களை உங்கள் முன்னால் வீழ்ச்சி
யடையச் செய்வார். அவர்களை நீங்கள்
வெளியே துரத்திவிடுவீர்கள். நீங்கள்
அவர்களை விரைவில் அழித்து விடுவீர்கள்.
தேவன் உங்களுக்குச் சொன்னபடியே இது
விரைவில் நிகழும்.
4"உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களிடமிருந்து அவர்களை உங்களுக்கு
முன்பாகவே துரத்திடுவார். ஆனால் 'நாம்
நல்லவர்கள் என்பதால் கர்த்தர் நம்மை இந்த
தேசத்திற்கு சுதந்திரமாக வாழும்படி
அழைத்து வந்தார்' என்று உங்களுக்குள்ளே
சொல்லிக் கொள்ளாதீர்கள். அந்த
ஜனங்களைத் கர்த்தர் வெளியே துரத்திய
தற்கு நீங்கள் நல்லவர்களாக இருந்தீர்கள்
என்பதால், அவர்கள் தீயவர்களாக
இருந்தனர் என்பதே காரணமாகும். 5நீங்கள்
நல்லவர்களாயும் நேர்மையாயும் வாழ்ந்ததால்
அவர்களது தேசத்தில் சுதந்திரமாக வாழப்
போகிறீர்கள் என்பதல்ல. தீயவழிகளில்
அவர்கள் வாழ்வதினால் உங்கள்
தேவனாகிய கர்த்தர் அவர்களை வெளியே
துரத்தினார். அதனாலேயே நீங்கள் அங்கே
போகின்றீர்கள். அதுமட்டுமின்றி, தேவன்
உங்கள் முற்பிதாக்களாகிய ஆபிரகாம்,
ஈசாக்கு, யாக்கோபு ஆகியவர்களுடன் செய்த
வாக்கினை நிறைவேற்ற விரும்பினார்.
6உங்கள் தேவனாகிய கர்த்தர் நீங்கள்
சுதந்திரமாக வசிக்க உங்களுக்கு இந்த
நல்ல தேசத்தை தருகின்றார். ஆனால் நீங்கள்
நல்லவர்கள் அல்ல, மிகவும் பிடிவாதமுள்ள
ஜனங்கள் என்பதை தெரிந்துகொள்ள
வேண்டும்.

### கர்த்தரின் கோபத்தை நினைத்துப்பார்

7"பாலைவனத்தில் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு நீங்கள் ஏற்படுத்திய
கோபத்தினை நினைத்துப் பாருங்கள்,
மறந்துவிடாதீர்கள்! நீங்கள் எகிப்திலிருந்து
புறப்பட்ட நாள் முதல் இவ்விடத்தில் வந்து
சேரும்வரை கர்த்தருக்குக் கீழ்ப்படிய
மறுத்தீர்கள். 8ஓரேப் மலையிலும் நீங்கள்
கர்த்தருக்குக் கடுங்கோபத்தை உண்டாக்கி
னீர்கள்! கர்த்தர் உங்களை அழித்துவிட
நினைக்கும் அளவிற்கு கோபத்தை
உண்டாக்கினீர்கள். 9கர்த்தர் உங்களுக்காக
உடன்படிக்கையை எழுதிய கற்பலகை
களைப் பெற்றுக்கொள்வதற்கு நான்
மலைமீது ஏறிச்சென்றேன். மலைமீதே 40
நாட்கள் இரவும், பகலும் தங்கினேன். நான்
உணவு உண்ணாமலும், தண்ணீர்
குடிக்காமலும் இருந்தேன். 10அப்போது
கர்த்தர் என்னிடம் அந்தக் கற்பலகைகளைத்
தந்தார். தேவன் அவரது கட்டளைகளை
அந்த இரண்டு கற்பலகைகளில் தமது
விரல்களால் எழுதியிருந்தார். தேவன்
எழுதிய ஒவ்வொன்றும் நீங்கள்
மலையருகில் கூடியபோது அக்கினியின்
நடுவிலிருந்து பேசிய வார்த்தைகளின்படியே
இருந்தன.
11"இரவும் பகலுமாய் 40 நாட்கள்
முடிந்தபின்பு, கர்த்தர் அந்த உடன்
படிக்கையின்படி எழுதிய இரண்டு
கற்பலகைகளையும் என்னிடம் கொடுத்தார்.
12பின் கர்த்தர் என்னிடம், 'நீ எழுந்து
இங்கிருந்து விரைவாக இறங்கிப்போ.. நீ
எகிப்திலிருந்து அழைத்துவந்த ஜனங்கள்
தங்களைத் தாங்களே கெடுத்துக்
கொண்டார்கள். என்னுடைய கட்டளை
களுக்குக் கீழ்ப்படிவதை இவ்வளவு
விரைவாக நிறுத்திவிட்டார்கள். அவர்கள்
பொன்னை வார்த்து தங்களுக்கென்று ஒரு
விக்கிரகத்தை உருவாக்கினார்கள்' என்று
கூறினார்.
13"மேலும் கர்த்தர் என்னிடம், 'நான் இந்த
ஜனங்களைக் கவனித்தேன். இவர்கள்
மிகவும் பிடிவாதமுள்ளவர்கள்! 14என்னை
விட்டு விடு! இவர்கள் எல்லோரையும்
அழித்து விடுகிறேன் இவர்களில் ஒருவரது
பெயரைக்கூட தங்க விடமாட்டேன்!
உன்னிடமிருந்து இவர்களைவிட மிகப்
பெரிய பலம் வாய்ந்த ஜனங்கள் இனத்தை
உருவாக்குவேன்' என்று கூறினார்.

### தங்கக் கன்றுக்குட்டி

15"பின் மலையிலிருந்து திரும்பி கீழே
இறங்கி வந்தேன். மலையானது

அக்கினியால் எரிந்தது. உடன்படிக்கையை
எழுதிய இரண்டு கற்பலகைகளும் என்
கைகளில் இருந்தன. 16நான் உங்களைக்
கவனித்தபோது உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு எதிராக நீங்கள் பாவம்
செய்ததைப் பார்த்தேன். தங்கத்தில்
வார்க்கப்பட்ட கன்றுக்குட்டியை உருவாக்
கியதை நான் பார்த்தேன்! கர்த்தர்
உங்களுக்கு இட்ட வழியை விட்டு நீங்கள்
வேகமாக விலகிச் சென்றதைக் கண்டேன்!
17எனவே நான் எடுத்துவந்த இரண்டு
கற்பலகைகளையும் ஓங்கி கீழே எறிந்தேன்.
உங்களின் கண்கள் முன்னாலேயே கற்
பலகைகளை துண்டுத் துண்டுகளாகப்
போட்டு உடைத்தேன். 18பின் உங்களுடைய
பாவங்களுக்காக கர்த்தருக்கு முன்பாக
முன்போல் மீண்டும் 40 நாட்கள் இரவு
பகலாக விழுந்து கிடந்தேன். எவ்வகை
உணவும் உண்ணவில்லை. தண்ணீரும்
குடிக்கவில்லை. எதற்காக இதனைச்
செய்தேன் என்றால் நீங்கள் செய்த பாவங்கள்
மிகக் கொடுமையானவை. நீங்கள் செய்த
இந்த செயல்கள் கர்த்தருக்குச் செய்த
தீமைகள் ஆகும். கர்த்தருக்குக் கடுங்கோபம்
உண்டாக்கினீர்கள். 19கர்த்தருக்கு இருந்த
கடுமையான கோபத்தைக் கண்டு நான்
பயந்தேன். உங்களை அழிக்கின்ற அளவுக்கு
அவர் கோபம் கொண்டிருந்தார். ஆனால்,
மீண்டும் நான் மன்றாடியதைக் கேட்டார்.
20ஆரோன் மீதும் கர்த்தர் கடுங்கோபம்
கொண்டு அவனை அழிக்கவேண்டும்
என்றிருந்தார்! ஆனால் ஆரோனுக்காகவும்
நான் மன்றாடினேன். 21நீங்கள் உருவாக்கிய
எரிச்சலூட்டும் அந்தக் கன்றுக்குட்டியை
எடுத்து தீயிலிட்டுக் கொளுத்தி தூள்
தூளாக்கும்படி செய்தேன். அவற்றைப்
புழுதியாகும்படிச் செய்தேன். பின் அந்தச்
சாம்பலை மலையிலிருந்து வரும் ஆற்றில்
போட்டுவிட்டேன்.

## இஸ்ரவேலரை மன்னிக்கும்படி மோசே தேவனிடம் மன்றாடியது

22"தபேராவிலும், மாசாவிலும், கிப்ரோத்
அத்தாவாவிலும் கர்த்தருக்குக் கடுங்
கோபத்தை உண்டாக்கினீர்கள். 23காதேஸ்பர்
னேயாவிலிருந்து விலகி வரச் செய்யும்
போது கர்த்தர் உங்களிடம் சொன்னதைக்
கேட்காமல் அவருக்குக் கீழ்ப்படியாமல்
இருந்தீர்கள். கர்த்தர் உங்களிடம், 'நீங்கள்
போய், நான் உங்களுக்குக் கொடுத்த
தேசத்தை சுதந்திரமாக வாழ எடுத்துக்
கொள்ளுங்கள்' என்று கூறினார். ஆனால்,
உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு கீழ்ப்படிய
நீங்கள் மறுத்தீர்கள். நீங்கள் கர்த்தரை
விசுவாசிக்கவில்லை. கர்த்தருடைய கட்ட
ளைகளையும் கவனிக்கவில்லை. 24நான்
உங்களைப்பற்றி அறிந்த நாள்முதற்கொண்டு
நீங்கள் கர்த்தருக்குக் கீழ்ப்படிய மறுத்து
வருகிறீர்கள்.

25"ஆகவே கர்த்தருக்கு முன், இரவு பகலாக
40 நாட்கள் விழுந்து கிடந்தேன்.
ஏனென்றால், கர்த்தர் உங்களை அழித்து
விடுவதாகச் சொன்னார். 26நான் கர்த்தரிடம்
இவ்வாறு வேண்டினேன்: கர்த்தாவே!
எங்கள் ஆண்டவரே! உமது ஜனங்களை
அழித்து விடாதிரும். அவர்கள் உமக்கு
உரியவர்கள். எகிப்திலிருந்து உமது
பேராற்றலினாலும், பலத்தினாலும்
அவர்களை விடுவித்து அழைத்துவந்தீர்.
27உமது சேவகர்களான ஆபிரகாம், ஈசாக்கு,
யாக்கோபு ஆகியவர்களிடம் நீர் சொன்ன
வாக்கினை நினைத்துப் பாரும். உமக்கு
இணங்காமல் போன இவர்களை மன்னியும்.
இவர்கள் சென்ற தீய வழிகளையும், செய்த
பாவங்களையும் பாராது இருப்பீராக.
28அப்படியும் உமது ஜனங்களாகிய
இவர்களைத் தண்டிக்க விரும்பினால்,
அதைக் காணும் எகிப்தியர்கள், 'கர்த்தர்
அவர்களுக்குக் கொடுத்த வாக்கின்படி, இந்த
ஜனங்களை அந்த தேசத்திற்கு அழைத்துச்
சென்று சுதந்திரமாக்க முடியவில்லை'
என்பார்கள். 'கர்த்தர் இவர்களை
வெறுத்தார். எனவே, அவர் இவர்களை
பாலைவனத்திற்குக் கொல்வதற்கென்று
அழைத்துச் சென்றார்' என்றும்
கூறுவார்கள். 29ஆனால், அவர்கள் உமது
ஜனங்களே! கர்த்தாவே! இவர்கள்
எகிப்திலிருந்து உமது பேராற்றலினாலும்
பலத்தினாலும் உம்மால் அழைத்து வரப்
பட்ட உமது ஜனங்களாவார்கள்.

## புதிய கற்பலகைகள்

10 "அந்த நேரத்தில், கர்த்தர் என்னிடம்,
'நீ முதலில் வைத்திருந்ததைப் போன்று
இரண்டு கற்பலகைகளை வெட்டி எடுத்துக்
கொண்டு, மலையின்மேல் ஏறி என்னிடம்
வா. ஒரு மரப்பெட்டியையும் செய்து
எடுத்துக்கொள். 2நீ உடைத்துப் போட்ட
முந்தின கற்பலகைகளில் உள்ள அதே
வார்த்தைகளை நான் இந்தப் புதிய
கற்பலகைகளின் மீது எழுதுவேன். பின்
நீ அவ்விரு கற்பலகைகளையும் அந்த
மரப்பெட்டிக்குள் வைத்துக்கொள்ள
வேண்டும்.'

3"அதன்படி நான் சீத்திம் மரத்தினால்
ஒரு பெட்டியைச் செய்தேன். முதலில்
வைத்திருந்ததைப்போல் இரண்டு கற்பலகை
களை வெட்டி எடுத்தேன். பின் நான்
மலையின் மீது ஏறிச்சென்றேன். இரண்டு
கற்பலகைகளையும் கையில் வைத்திருந்
தேன். 4முன்னர் நீங்கள் அனைவரும்
கூட்டமாக கூடிவந்த நாளில், மலையில்
அக்கினியின் நடுவிலிருந்து கர்த்தர்
உங்களோடுப் பேசிய அந்த பத்துக்
கட்டளைகளையும் அவர் அப்போது

எழுதித்தந்ததின்படியே இந்தப் பலகை
களிலும் எழுதினார். பின் கர்த்தர் அந்த
இரண்டு கற்பலகைகளையும் என்னிடம்
தந்தார். 5மலையில் இருந்து திரும்பிக் கீழே
இறங்கி வந்தேன். நான் செய்திருந்த
மரப்பெட்டிக்குள் அந்தக் கற்பலகைகளை
வைத்தேன். கர்த்தர் எனக்கிட்ட கட்டளை
யின்படியே அப்பெட்டியில் அவைகளை
வைத்தேன். இன்றுவரையிலும் அந்தக்
கற்பலகைகள் அந்தப் பெட்டிக்குள்ளேயே
உள்ளன.”
6(இஸ்ரவேல் ஜனங்கள் பெனெயாக்
கானுக்கு அடுத்த பேரோத்திலிருந்து
மோசாராவிற்குப் பயணம் செய்தார்கள்.
அங்கே ஆரோன் மரித்து விட்டான்.
அவனை அடக்கம் செய்தார்கள். ஆரோனின்
மகன் எலெயாசார் ஆரோனின் இடத்தில்
ஆசாரியனாக ஊழியம் செய்தான். 7பின்
இஸ்ரவேல் ஜனங்கள் அங்கிருந்து
குத்கோதாவுக்கு சென்றனர். அங்கிருந்து
ஆறுகள் ஓடும் தேசமான யோத்பாத்துக்கும்
சென்றனர். 8அந்த நேரத்தில் கர்த்தர் மற்ற
கோத்திரத்திலிருந்து லேவி குடும்பத்தைத்
தனியாகப் பிரித்தெடுத்தார். லேவி
குடும்பத்தை தமது சிறப்புப் பணிகளுக்காக
பிரித்தெடுத்துக் கொண்டார். அவர்கள்
கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியை
சுமக்கும் பணியை மேற்கொண்டனர்.
மேலும் அவர்கள் கர்த்தருக்கு முன்
பணியாற்றும் ஆசாரியர்களாக இருந்தனர்.
கர்த்தருடைய நாமத்தால் ஜனங்களுக்கு
ஆசீர்வாதங்களை வழங்கியும், ஆராதனை
செய்தும் வந்தனர். அவர்கள் இன்று
வரையிலும் இந்தச் சிறப்புப் பணிகளைச்
செய்து வருகின்றார்கள். 9இதனாலேயே மற்ற
கோத்திரத்தினர் பெற்ற நிலப்பங்கினைப்
போல் லேவியின் கோத்திரம் பெறவில்லை.
உங்கள் தேவனாகிய கர்த்தர் அவர்களுக்கு
வாக்களித்தபடி கர்த்தர் தாமே லேவியருக்கு
சொத்தும் சுதந்திரமுமாக இருப்பார்.)
10“நான் முன்பு தங்கியதைப்போல
மலையின்மேலே 40 நாட்கள் இரவும்,
பகலுமாய் தங்கியிருந்தேன். கர்த்தர் இந்த
முறையும் நான் வேண்டியதை கேட்டு
அருளினார். நான் வேண்டியபடியே கர்த்தர்
உங்களை அழிக்காமல் விட்டார். 11கர்த்தர்
என்னிடம், ‘நான் கொடுப்பேன் என்று
அவர்களுடைய முற்பிதாக்களுக்கு ஆணை
யிட்டபடி, அந்தத் தேசத்தில் அவர்கள்
சுதந்திரமாக வாழ்வதற்கு, அவர்களுக்கு முன்
தலைமையேற்றுப் பயணப்பட்டுப் போ’
என்றார்.

### கர்த்தரின் உண்மையான விருப்பம்

12“இப்போதும், இஸ்ரவேல் ஜனங்களே
கவனியுங்கள்! உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களிடமிருந்து உண்மையிலேயே விரும்
புவது என்ன? கர்த்தர் உங்களிடம்
விரும்புவது, நீங்கள் அவருக்கும் அவர்
சொன்னவற்றுக்கும் மதிப்பளித்து அதன்படி
செய்யவேண்டும். தேவன் விரும்புவது,
நீங்கள் அவர் மீது அன்பு செலுத்துவதையும்,
உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு உங்கள்
முழு மனதோடும், உங்களின் முழு
ஆத்மதிருப்தியுடனும் சேவைச் செய்வதே.
13ஆகையால், நான் இன்று உங்களுக்கு
வழங்குகின்ற கர்த்தருடைய கட்டளை
களுக்கும், சட்டங்களுக்கும் நீங்கள் கீழ்ப்படிய
வேண்டும். உங்களின் நன்மைக்கென்றே
இந்தக் கட்டளைகளும், சட்டங்களும்
உள்ளன.
14“எல்லாப் பொருட்களும் உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு உரியவை!
வானங்களும், வானாதிவானங்களும் கர்த்த
ருக்குச் சொந்தமானவை இந்தப் பூமியும்
பூமியின்மேல் உள்ள எல்லாப் பொருட்களும்
உங்கள் தேவனாகிய கர்த்தருக்குச்
சொந்தமானவை. 15கர்த்தர் உங்கள்
முற்பிதாக்களின்மீது அன்பு வைத்திருந்தார்.
அவர்கள்மீது அதிகமாக அன்பு
வைத்ததினாலேயே உங்களையும், உங்கள்
சந்ததியினரையும் கர்த்தர் தன்னுடைய
ஜனங்களாக இன்றும் கருதி அன்பு
காட்டுகிறார். மற்ற எல்லா ஜனங்களும்
இருந்தாலும் உங்களைத் தேவன் பிரித்
தெடுத்தார். இன்றளவும் நீங்கள் தேவனால்
தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனங்களாய் இருக்கி
றீர்கள்.
16“உங்களின் பிடிவாத குணத்தை
விட்டுவிடுங்கள். உங்களின் உள்ளங்களைக்
கர்த்தருக்குக் கொடுங்கள். 17ஏனென்றால்,
உங்களுடைய தேவனாகிய கர்த்தர் அவர்
கர்த்தாதி கர்த்தரும், தேவாதி தேவனும்
ஆவார். நமது கர்த்தரே மகத்துவமும்,
வல்லமையும், பயங்கரமும் உடைய தேவனா
வார். கர்த்தர் பாரபட்சம் காட்டுபவர்
அல்ல. கர்த்தர் தன் மனதை மாற்றிக்கொள்ள
பணத்தை ஏற்றுக்கொள்ள மாட்டார்.
18அநாதைக் குழந்தைகளுக்கும், விதவை
களுக்கும் ஆதரவாகவும் அன்பு
செலுத்துபவராகவும் தேவன் அருள்
செய்கிறார். அந்நியர்கள் மீதும் தேவன்
அன்பு காட்டுகிறார். அவர்களுக்கும் உண்ண
உணவும், உடுக்க உடையும் அளிக்கின்றார்.
19எனவே நீங்களும் அந்நியர்களிடம் அன்பு
காட்டவேண்டும். ஏனென்றால், நீங்களும்
எகிப்து தேசத்தில் அந்நியராக இருந்துள்
ளீர்கள்.
20“உங்கள் தேவனாகிய கர்த்தர் மீது
மரியாதை செலுத்தி அவர் ஒருவரையே
நீங்கள் ஆராதிக்கவேண்டும். அவரை விட்டு
ஒருபோதும் விலகாதீர்கள். நீங்கள் எப்போது
வாக்களித்தாலும் நமது தேவனுடைய
நாமத்தை பயன்படுத்த வேண்டும். 21நீங்கள்
நமது தேவனையே போற்றிப் புகழ
வேண்டும். கர்த்தரே உங்கள் தேவன். அவரே

உங்கள் தேவன் முன்பு இந்த
அற்புதங்களையும் மகத்துவங்களையும் உங்க
ளுக்காகச் செய்தார். நீங்கள் அனைவரும்
உங்கள் கண்களால் அவர் செய்த
அனைத்தையும் பார்த்தீர்கள். 22உங்கள்
முற்பிதாக்களில் எழுபது பேரே
எகிப்திற்குள் சென்றார்கள். ஆனால் இன்றோ
உங்கள் தேவனாகிய கர்த்தர் வானில்
உள்ள எண்ணற்ற நட்சத்திரங்களைப்போல்
உங்களை மிகப்பெரிய ஜனங்கள் சமுதாய
மாக உருவாக்கியுள்ளார்.

### கர்த்தரை நினை

11 “உங்கள் தேவனாகிய கர்த்தர் மீது
நீங்கள் அன்பு கொள்ளவேண்டும்.
நீங்கள் பின்பற்றுவதற்காக தேவன்
உங்களுக்குக் கூறியவற்றையெல்லாம் நீங்கள்
கடைப்பிடிக்க வேண்டும். எப்போதும்
நீங்கள் அவரது சட்டங்களுக்கும், நியாயங்
களுக்கும், கட்டளைகளுக்கும் கீழ்ப்படிய
வேண்டும். 2உங்களுக்குப் போதிக்கும்படி
உங்கள் தேவனாகிய கர்த்தர் செய்த
பெருஞ்செயல்களை நினைத்துப் பாருங்கள்.
அந்த மகா காரியங்களைக் கண்டு,
அவற்றைக் கடந்துவந்தவர்கள் நீங்களே,
உங்கள் குழந்தைகளல்ல. உங்களுக்குத்தான்
தெரியும், கர்த்தருடைய மகத்துவத்தைப்
பார்த்தவர்கள் நீங்கள், கர்த்தருடைய
வலிமையைக் கண்ணாரப் பார்த்துள்ளீர்கள்.
கர்த்தருடைய ஆற்றல் நிறைந்த
செயல்களைப் பார்த்தவர்கள் நீங்கள்.
3கர்த்தருடைய அற்புதங்களைப் பார்த்
தவர்கள் நீங்கள்தான், உங்கள் பிள்ளைகள்
அல்ல. எகிப்தின் இராஜாவாகிய
பார்வோனுக்கும் அவனது நாடு
முழுவதிற்கும் கர்த்தர் செய்த அடையாளங்
களையும், செயல்களையும் நீங்கள்
பார்த்துள்ளீர்கள். 4எகிப்தின் படையும்,
அவர்களது குதிரைகளும், இரதங்களும்
போரில் உங்களைத் தொடர்ந்து வரும்போது,
கர்த்தர் அவர்களைச் செங்கடலின்
தண்ணீரில் மூடியதை உங்கள் பிள்ளைகள்
அல்ல, நீங்கள்தான் பார்த்தீர்கள். அவர்களை
முழுவதுமாக அழித்ததை நீங்கள்
பார்த்தீர்கள். 5உங்கள் தேவனாகிய கர்த்தர்
நீங்கள் இன்று இவ்விடத்திற்கு வரும்
வரைக்கும், அன்றும் பாலைவனத்தில்
உங்களுக்காகச் செய்த எல்லாவற்றையும்
பார்த்தவர்கள் நீங்கள்தான். உங்கள்
பிள்ளைகள் அல்ல. 6ரூபன் குடும்பத்தைச்
சார்ந்த எலியாப் என்பவனின் மகன்களான
தாத்தான், அபிராம் இருவருக்கும் கர்த்தர்
என்ன செய்தார் என்பது உங்களுக்குத்
தெரியும். பூமி தன் வாயைத் திறந்து
அவர்களை விழுங்கியதை இஸ்ரவேல்
ஜனங்கள் அனைவரும் பார்த்தார்கள்,
அவ்விருவரின் குடும்பங்களையும், கூடாரங்
களையும் அவர்களது விலங்குகள்,
வேலையாட்கள் எல்லாவற்றையும் பூமி
விழுங்கியது. 7கர்த்தர் செய்த இந்தப் பெரிய
செயல்களை எல்லாம் உங்களுடைய
பிள்ளைகளல்ல, நீங்களே கண்டீர்கள்.
8“ஆகவே நான் இன்று உங்களுக்குச்
சொல்லும் ஒவ்வொரு கட்டளைக்கும் நீங்கள்
கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். பின் நீங்கள்
பலம் வாய்ந்தவர்களாக ஆவீர்கள். அதனால்,
யோர்தான் ஆற்றினைக் கடந்து, நீங்கள்
நுழையத் தயாராகவுள்ள இந்த தேசத்தை
சொந்தமாக்கி கொள்வீர்கள். 9பின் நீங்கள்
அந்தத் தேசத்தில் நீண்ட வாழ்க்கை
வாழலாம். இந்த தேசத்தை உங்கள்
முற்பிதாக்களுக்கும் அவர்களது சந்ததி
யினருக்கும் கொடுப்பதாக கர்த்தர்
வாக்களித்துள்ளார். இந்த தேசம் பாலும்
தேனும் ஓடக்கூடிய செழிப்பும், எல்லா
வளங்களும் நிறைந்த நாடாகவும் இருக்கும்.
10நீங்கள் சுதந்திரமாக வசிக்கப்போகும் இந்த
தேசம் நீங்கள் விட்டு வந்த எகிப்து
நாட்டைப்போல் இருக்காது. எகிப்தில்
நீங்கள் விதை விதைத்தீர்கள். தண்ணீர்ப்
பாய்ச்சும்படி உங்கள் கால்களால் மிதித்து,
வாய்க்காலில் இருந்து உங்கள்
தோட்டங்களுக்கு நீங்கள் தண்ணீர்ப்
பாய்ச்சினதுபோல உங்கள் வயல்களுக்கும்
தண்ணீர் இறைத்து வந்தீர்கள். 11ஆனால்,
இப்போது வசிக்கப்போகின்ற இந்த நிலம்
அப்படிப்பட்டது அல்ல. இஸ்ரவேலில்
மலைகளும், பள்ளத்தாக்குகளும் உள்ளன.
அந்த நிலம் வானத்தின் மழைத் தண்ணீரைக்
குடிக்கும் தேசம். 12உங்கள் தேவனாகிய
கர்த்தர் நீங்கள் வசிக்கப்போகும் நிலத்தைக்
காத்து வருகிறார். வருடத்தின் துவக்கம்
முதல் முடிவுவரை ஆண்டு முழுவதும்
உங்கள் தேவனாகிய கர்த்தர் கவனித்து
வருகிறார்.
13“கர்த்தர், ‘நான் இன்று உங்களுக்குத்
தரும் கட்டளைகளைக் கவனமாகக்
கேளுங்கள். நீங்கள் உங்கள் தேவனாகிய
கர்த்தர் மீது அன்பு செலுத்தி, அவருக்கு
அடிபணிந்து, முழு மனதோடு ஆத்ம
திருப்தியுடன் சேவை செய்யவேண்டும்.
நீங்கள் அப்படிச் செய்தீர்களென்றால்,
14உங்கள் நிலத்திற்குத் தேவையான மழையை
ஏற்ற பருவத்தில் பெய்யச் செய்வேன். நீங்கள்
உங்கள் தானியங்களைச் சேர்க்கவும்,
எண்ணெய் வித்துக்களைப் பெருக்கவும்,
புதிய திராட்சைரசத்தைப் பெறவும்,
அதற்கான காலத்தில் உங்கள் தேசத்தில்
இலையுதிர் காலத்தில் முன்மாரியையும்
வசந்த காலத்தில் பின்மாரியையும் நான்
அனுப்புவேன். 15உங்கள் கால்நடைகளுக்குத்
தேவையான புல்வெளிகளை செழிப்
படையச் செய்வேன். உங்களுக்கு
உண்ணும்படி ஏராளமான ஆகாரம்
இருக்கும்’ என்று கூறுகிறார்.

16"ஆனால் நீங்கள் எச்சரிக்கையுடன்
இருங்கள்! உங்கள் இருதயம் சந்தேகப்பட்டு
விலகாதபடி இருங்கள். உங்களின்
வழியிலிருந்து விலகி அந்நிய
தெய்வங்களைத் தொழுதுகொண்டு சேவை
செய்யாதீர்கள். 17அப்படிச் செய்தீர்களானால்,
பின் கர்த்தர் உங்கள் மீது கடுங்கோபம்
கொள்வார். மழை பெய்யாது, உங்கள்
நிலம் எவ்வித விளைச்சலையும் தராதபடி
வானத்தை அடைத்து விடுவார். அதனால்
கர்த்தர் உங்களுக்குக் கொடுக்கின்ற இந்த
நல்ல தேசத்திலேயே நீங்கள் விரைவில்
மரித்து போவீர்கள்.
18"நான் இன்று உங்களுக்குத் தருகிற
இந்தக் கட்டளைகளை எப்போதும் உங்கள்
உள்ளங்களில் வையுங்கள். அவற்றை
எழுதுங்கள், கட்டுங்கள், அணிந்துகொண்டு,
அல்லது உங்கள் கண்களில் படும்படி
எப்போதும் உங்களின் ஞாபகத்தில்
இருக்கும்படி வைத்துக்கொள்ள வேண்டும்.
19இந்தச் சட்டங்களை உங்கள் குழந்தை
களுக்கும் சொல்லிக் கொடுங்கள். உங்கள்
வீடுகளில் இருக்கும்போதும், வீதிகளில்
நடக்கும்போதும், தூங்குவதற்கு முன்பும்,
எழுந்த பின்பும், எப்போதும் இவற்றைப்
பற்றியேப் பேசவேண்டும். 20உங்கள் வீட்டுக்
கதவுகள் மீதும், வாசல்களிலும் இந்தக்
கட்டளைகளை எழுதி வையுங்கள். 21அப்
போது உங்கள் முற்பிதாக்களிடம் கர்த்தர்
கொடுத்த வாக்கின்படி உங்களுக்குச்
சுதந்திரமாக வாழக்கொடுத்த நிலத்தில்
நீங்களும் உங்கள் பிள்ளைகளும் நீண்ட
காலம் வாழலாம். இந்த பூமியின்மேல் வானம்
உள்ளளவும் நீங்கள் நீண்டகாலம் வாழலாம்.

22"நான் உங்களிடம் கூறியவற்றைப்
பின்பற்றுவதிலும், ஒவ்வொரு கட்டளை
களுக்கும் கீழ்ப்படிவதிலும் எச்சரிக்கையுடன்
இருங்கள்! உங்கள் தேவனாகிய கர்த்தர் மீது
அன்பு செலுத்துங்கள். அவரது எல்லா
வழிகளையும் பின்பற்றுங்கள். அவருக்கு
உண்மையானவர்களாய் இருங்கள். 23பின்
உங்கள் தேசத்திற்குள் செல்லும்போது
கர்த்தர் உங்களுக்கு எதிரான மற்ற
இனத்தவர்களை வெளியே துரத்தி விடுவார்.
உங்களைவிடப் பெரிய பலம்
வாய்ந்தவர்களிடமிருந்து அந்த நிலத்தை
நீங்கள் கைப்பற்றி விடலாம். 24உங்கள்
பாதங்கள் படும் இடமெல்லாம்
உங்களுடையதாகும். உங்களின் நிலமானது
தெற்கே பாலைவனம் முதல் வடக்கே
லீபனோன் வரை விரிந்து செல்லும்.
கிழக்கே ஐபிராத்து நதி தொடங்கி
மத்தியதரைக் கடல் வரையிலும் உங்கள்
தேசத்தின் எல்லையாக இருக்கும்.
25உங்களை எதிர்த்து நிற்பவர் எவருமில்லை.
உங்கள் தேவனாகிய கர்த்தர் இந்த நிலத்தில்
நீங்கள் எங்கெல்லாம் செல்கிறீர்களோ
அங்கெல்லாம் அந்த ஜனங்களைப்
பயமடையச் செய்வார். அதைத்தான் கர்த்தர்
உங்களுக்கு ஏற்கனவே வாக்களித்
திருக்கிறார்.

## இஸ்ரவேலர் தெரிந்துகொள்ள வேண்டிய ஆசீர்வாதங்கள் அல்லது சாபங்கள்

26"நீங்கள் தெரிந்துகொள்ள நான் இன்று
உங்களுக்கு ஒரு வாய்ப்பைத் தருகிறேன்.
இதோ! ஆசீர்வாதங்களையும் சாபங்களையும்
உங்களுக்கு முன்பாக வைக்கிறேன்.
இவற்றில் நீங்கள் எதையாவது ஒன்றைத்
தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். 27நான் இன்று
உங்களுக்குக் கூறியிருக்கிறபடி உங்கள்
தேவனாகிய கர்த்தர் தந்த கட்டளைகளுக்கு
செவிகொடுத்து கீழ்ப்படிந்து, அவற்றைக்
கடைப்பிடித்தால் நீங்கள் ஆசீர்வாதம்
பெறுவீர்கள். 28ஆனால் உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய கட்டளைகளுக்கு கீழ்ப்படி
வதையும், பின்பற்றுவதையும் மறுத்தால்
சாபத்தைப் பெறுவீர்கள். ஆகவே, நான்
இன்று உங்களுக்குக் கட்டளையிட்டபடி
வாழ்வதை நிறுத்தி விடாதீர்கள். அதுமட்டு
மின்றி அந்நிய பொய்த் தெய்வங்ளைப்
பின்பற்றாதிருங்கள். கர்த்தரைப் பற்றி
உங்களுக்குத் தெரியும். ஆனால் அந்தப்
பொய்த் தெய்வங்களைப்பற்றி உங்களுக்குத்
தெரியாது.
29"உங்களின் சுதந்திர தேசத்தில் உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களை வழிநடத்திச்
செல்வார். நீங்கள் விரைவில் அந்த தேசத்தில்
வாழப்போகிறீர்கள். அந்த நேரத்தில் கெரிசீம்
மலையின் உச்சிக்கு நீங்கள் செல்ல
வேண்டும். அங்கிருந்து ஜனங்களுக்கு
ஆசீர்வாதங்களைக் கூறுங்கள். பின்பு ஏபால்
மலையின் உச்சிக்குச் செல்லவேண்டும்.
அங்கிருந்து ஜனங்களுக்கு சாபங்களைக்
கூறவேண்டும். 30இந்த மலைகள் யோர்தான்
நதியின் மறுபக்கத்தில் கானானியர்
குடியிருக்கின்ற நாட்டில் உள்ளன. இந்த
மலைகள் மேற்கு நோக்கி ஓக் மரங்களுக்கு
அதிக தொலைவில் இல்லாமல் கில்காலுக்கு
எதிரான மோரே என்னும் சமவெளிக்கு
அருகே இருக்கின்றன. 31நீங்கள் யோர்தான்
நதியைக் கடந்துசெல்ல வேண்டும். உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்குக் கொடுக்
கின்ற நிலத்தைச் சென்றடைவீர்கள். அங்கு
சுதந்திரமாகக் குடியிருப்பீர்கள். இந்த
நிலத்தில் நீங்கள் வாழும்போது, 32நான்
இன்று உங்களுக்குத் தருகின்ற சட்டங்
களுக்கும், நியாயங்களுக்கும் கீழ்ப்படிந்து
எச்சரிக்கையுடன் அவற்றை கடைப்பிடிக்க
வேண்டும்.

## தேவனை ஆராதிப்பதற்கான இடம்

12 "இவைகளே தேவனுடைய கட்டளை
களும், நியாயங்களும் ஆகும்.
அவற்றை நீங்கள் சுதந்திரமாக வாழப்

போகின்ற தேசத்தில் கடைப்பிடிக்க
வேண்டும். இந்த பூமியில் நீங்கள் வாழ்கின்ற
நாள்வரைக்கும் இந்த கட்டளைகளுக்கும்,
நியாயங்களுக்கும் கீழ்ப்படிந்து கவனமாக
அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும்.
கர்த்தரே! உங்கள் முற்பிதாக்களுடைய
தேவன் ஆவார்! அதனாலேயே அவர்களுக்கு
அளித்த வாக்கின்படி இந்த சுதந்திர
தேசத்தை உங்களுக்குத் தருகிறார்.
**2**இப்போது வசிக்கின்ற உங்கள் எதிர்
இன ஜனங்களிடமிருந்து அந்த தேசத்தை
நீங்கள் எடுத்துக்கொள்வீர்கள். அந்த
ஜனங்கள் எங்கெல்லாம் அவர்களது
தெய்வங்களை தொழுதுகொண்டார்களோ,
அந்த இடங்களையெல்லாம், முழுவதுமாக
நீங்கள் அழித்துவிட வேண்டும். அந்த
இடங்களெல்லாம் மலைகள் மீதும், மேடுகள்
மீதும், பசுமையான மரங்களுக்குக் கீழும்
உள்ளன. **3**நீங்கள் அவர்களது பலிபீடங்களை
இடித்து, அவர்கள் ஞாபகார்த்த கற்களையும்
தூள் தூளாக தகர்த்திட வேண்டும்.
அவர்களது அஷேரா என்ற ஸ்தம்பத்தையும்,
பொய்த் தெய்வங்களின் சிலைகளையும்
வெட்டி, இவ்வாறு அந்த இடத்திலிருந்து
அவைகளின் பெயரை நிர்மூலமாக்க
வேண்டும்.

**4**“அந்த ஜனங்கள் அவர்களது பொய்த்
தெய்வங்களை தொழுதுகொள்கிற அதே
முறையை நீங்களும், உங்கள் தேவனாகிய
கர்த்தருக்குச் செய்யக்கூடாது. **5**உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்கள் சகல
கோத்திரங்களின் நடுவில் ஒரு சிறந்த
இடத்தை தேர்ந்தெடுத்துத் தருவார். கர்த்தர்
அவரது நாமத்தை அவ்விடத்திற்கு
வைப்பார். அந்த விசேஷ இருப்பிடம்
தேவனுடையதாகும். நீங்கள் எல்லோரும்
அந்த இடத்திற்குச் சென்றே கர்த்தரை
ஆராதிக்க வேண்டும். **6**அங்கே நீங்கள்
வரும்போது நெருப்பினால் வேகவைத்த
தகனபலியையும், உங்கள் காணிக்கை
களையும், உங்கள் விளைச்சலில் பத்தில்
ஒரு பங்கையும், ஆடு, மாடுகளையும்,
உங்களின் காணிக்கைகளையும், கர்த்த
ருக்குக் காணிக்கைகளாக வாக்கு கொடுத்த
பொருட்களையும், கர்த்தருக்குக் கொடுக்க
விரும்பும் பொருட்களையும், உங்கள்
மந்தைகளில் உள்ள ஆடு, மாடுகளில் தலை
ஈற்றுகளையும் கொண்டு வரவேண்டும்.
**7**நீங்களும், உங்கள் குடும்பத்தினரும், அந்த
இடத்திற்கு வந்து உண்டு மகிழவேண்டும்.
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களோடு
இருந்து மகிழ்ச்சியைத் தருவார். அந்த
இடத்தில் நீங்கள் எல்லோரும் உங்களது
மகிழ்ச்சியையும், உங்கள் கைகளால் செய்த
பொருட்களையும், ஒருவொருக்கொருவர்
பங்கிட்டுக்கொள்ள வேண்டும். உங்கள்
தேவனாகிய கர்த்தருடைய ஆசீர்வாதங்
களையும், நீங்கள் பெற்றுள்ள எல்லாப்
பொருட்களையும், அவர் உங்களுக்குத்
தந்ததையும் நினைத்துப் பார்ப்பீர்களாக.

**8**“ஆனால் நாம் அனைவரும் தொழுது
வந்ததுபோல் நீங்கள் தொழுது கொள்வதைத்
தொடரக்கூடாது. இதுவரையிலும் ஒவ்வொ
ருவரும் தேவனை தாங்கள் விரும்பின
வழியில் தொழுது கொண்டு வந்தீர்கள்.
**9**ஏனென்றால் நாம் உங்கள் தேவனாகிய
கர்த்தர் தருகின்ற, அமைதியான, அந்த
தேசத்திற்குள் இன்னும் அடி எடுத்து
வைக்கவில்லை. **10**ஆனால் நீங்கள் யோர்தான்
நதியைக் கடந்துசென்று அந்த தேசத்தில்
வாழலாம். அந்த சுதந்திர தேசத்தை கர்த்தர்
உங்களுக்குத் தருவார். அங்கே உங்கள்
எதிரிகள் அனைவரையும் விலக்கி கர்த்தர்
உங்களை இளைப்பாறச் செய்வார். அங்கே
நீங்கள் பாதுகாப்பாக இருக்கலாம். **11**பின்
கர்த்தர் அவருக்கான சிறந்த வீட்டினை
அமைப்பதற்கான இடத்தை தேர்ந்தெடுப்பார்.
அவ்விடத்திற்கு கர்த்தர் அவரது பெயரை
வைப்பார். அங்கே நீங்கள் நான்
உங்களுக்குக் கட்டளையிட்ட அனைத்துப்
பொருட்களையும், கொண்டுவர வேண்டும்.
நெருப்பினால் வேகவைத்த தகனபலி
களையும், உங்கள் காணிக்கைகளையும்,
உங்கள் விளைச்சலில் பத்தில் ஒரு
பங்கையும், ஆடு, மாடுகளையும், உங்கள்
காணிக்கைகளையும், கர்த்தருக்கு வாக்குப்
பண்ணின பொருட்களையும், உங்கள்
மந்தைகளிலுள்ள ஆடுமாடுகளின் தலை
ஈற்றுகளையும், கொண்டுவர வேண்டும்.
**12**கர்த்தருடைய ஆலயத்திற்கு நீங்களும்,
உங்கள் பிள்ளைகளும், வேலைக்காரர்
அனைவரும் வந்து, உங்கள் நகரங்களில்
வசிக்கும் எந்தவொரு சொத்தும் சுதந்திரமும்
இல்லாத லேவியருடன் கூடி, வந்திருந்து
ஒருவொருக்கொருவர் உங்கள் தேவனாகிய
கர்த்தரோடு மகிழ்ச்சியாக இருங்கள். **13**நீங்கள்
கண்ட இடங்களில் எல்லாம் உங்கள்
விருப்பப்படி தகனபலிகளை செலுத்தாமல்
இருக்க கவனமாக இருங்கள். **14**உங்கள்
கோத்திரங்கள் நடுவில் அவரது விசேஷ
இடத்தினை கர்த்தர் தேர்ந்தெடுத்துக்
கொடுப்பார். அந்த இடத்தில் மட்டுமே
நீங்கள் உங்கள் பலிகளைச் செலுத்தி,
நான் உங்களுக்குச் சொன்ன எல்லா
வற்றையும் நீங்கள் அங்கேயே செய்ய
வேண்டும்.

**15**“நீங்கள் எங்கெல்லாம் வசிக்கின்றீர்
களோ, அங்கெல்லாம் நீங்கள் விரும்பிய
வெளிமான், கலைமான் போன்ற விலங்கு
களை அடித்து சாப்பிடலாம். நீங்கள் உங்கள்
விருப்பப்படி எவ்வளவு இறைச்சி
வேண்டுமானாலும் உண்ணலாம். அந்த
அளவிற்கு உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்கு கொடுப்பார். யார் வேண்டு
மானாலும் அவர்கள் சுத்தமானவர்களாக
தேவனை தொழுதுகொள்ள தகுதி உடைய

வர்களானாலும் சரி, சுத்தமின்றி தேவனை தொழுதுகொள்ள தகுதி இல்லாதவராயினும் சரி, இறைச்சி உணவை சாப்பிடலாம்.
16ஆனால் நீங்கள் இரத்தத்தை மாத்திரம் உண்ணவே கூடாது. அதைத் தண்ணீரைப் போல் தரையிலேயே ஊற்றிவிடவேண்டும்.
17"நீங்கள் வசித்து வரும் வீடுகளில் இவற்றை நீங்கள் உண்ணவேண்டாம். அந்தப் பொருட்கள் பின்வருமாறு: தேவனுக்காக கொடுக்க இருக்கும் உங்களது தானியத் தையும், திராட்சைரசத்தையும், எண்ணெயை யும், உங்கள் மந்தைகளிலுள்ள ஆடு மாடுகளின் தலை ஈற்றுகளையும், தேவனுக்குத் தருவதாக வேண்டிக் கொண்ட வற்றையும், தேவனுக்காக நீங்கள் கொடுக்க விரும்பும் வேறு எந்தப் பொருட்களையும், அல்லது உங்களின் அன்பளிப்புகளையும், உங்கள் வீடுகளில் உண்ணக்கூடாது.
18நீங்கள் இவற்றையெல்லாம் உங்கள் தேவனாகிய கர்த்தர் தேர்ந்தெடுத்த இடத்தில் உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களோடு சேர்ந்து இருக்கக்கூடிய இடத்திலேயே உண்ண வேண்டும். நீங்கள் உங்கள் மகன்கள், மகள்கள், உங்களது எல்லா வேலைக்காரர்கள், மற்றும் உங்கள் நகரங்களில் வசிக்கும் லேவியர்களையும் அழைத்துக்கொண்டு சென்று அந்த இடத்தில் உண்டு மகிழவேண்டும். அந்த இடத்தில் உங்களுக்குள் எல்லோருடனும் ஒன்றுபட்ட மகிழ்ச்சியாலும் அங்கு உங்கள் கைகளால் செய்கின்ற எல்லாக் காரியங்களிலும் உங்கள் தேவனாகிய கர்த்தரிடம் சந்தோஷப் படுவீர்களாக.
19எப்போதும் உங்களது இந்த உணவுகளில் லேவியர்களுக்கு பங்கு அளிப்பதில் தவறாதீர்கள். உங்கள் தேசத்தில் நீங்கள் வாழும்வரை இதை நீங்கள் செய்யவேண்டும்.
20-21"உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுக்கு வாக்களித்ததுபோல் உங்கள் நாட்டின் எல்லைகளை விரிவாக்குவார். அவர் அவ்வாறு செய்யும்போது கர்த்தர் அவருக்காகத் தேர்ந்தெடுத்த ஆலயங்கள் நீங்கள் வசிக்கும் இடத்திலிருந்து தொலை வில் இருக்கலாம். அவ்வாறு தொலைதூரம் இருந்தால் நீங்கள் வரும்வழியில் பசி ஏற்பட்டு இறைச்சி உண்ண ஆசைப்பட்டால் அங்கு உங்களுக்கு கிடைக்கும் எந்த இறைச்சியையும் நீங்கள் உண்ணலாம். கர்த்தர் உங்களுக்குக் கொடுத்த மந்தை களிலுள்ள ஆடு மாடுகளில் எதை வேண்டுமானாலும் நான் உங்களுக்கு இட்ட கட்டளையின்படி அதனை அடித்து உண்ணலாம். இவ்வாறு நீங்கள் விரும்பிய இடங்களில் உண்ணலாம்.
22வெளி மானையும், கலைமானையும், உண்பது போன்றே நீங்கள் அதையும் உண்ணலாம். யாவரும் அதாவது தேவனை தொழுதுகொள்ள தகுதியான சுத்தமான வர்களும், தொழுதுகொள்ளத் தகாத அசுத்த மானவர்களும் அதை உண்ணலாம்.
23ஆனால் அவற்றின் இரத்தத்தை உண்ணக்கூடாது என்பதில் உறுதியாக இருங்கள். ஏனென்றால் உயிரானது இரத்தத்தில் தான் இருக்கிறது. நீங்கள் அந்த உயிர் இருக்கும்வரை இறைச்சியை உண்ணக் கூடாது.
24எனவே நீங்கள் இரத்தத்தை உண்ணாமல், தண்ணீரைபோல் தரையிலே ஊற்றிவிட வேண்டும்.
25ஆகவே இரத்தத்தை உண்ணக்கூடாது. கர்த்தர் உங்களுக்குச் சொன்ன சரியானவற்றையே நீங்கள் செய்யவேண்டும். பின் உங்களுக்கும், உங்கள் சந்ததியினருக்கும் நல்லவைகளே நடக்கும்.
26"தேவனுக்காக ஏதேனும் சிறப்பான வாக்குறுதிகளைக் கொடுக்க நீங்கள் முடிவு செய்தால், நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தர் தேர்ந்தெடுக்கும் அந்த ஆலயத்திற்கே செல்லவேண்டும். அதுமட்டுமின்றி, தேவனுக்காக நீங்கள் செய்த சிறப்பு வாக்குறுதியை தேவனுடைய ஆலயத்திற்கே சென்று செலுத்தவேண்டும்.
27அங்கேயே நீங்கள் உங்களின் தகனபலிகளையும் செலுத்தவேண்டும். நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருடைய பலிபீடத்திலேயே இறைச்சியோடும், இரத்தத்தோடும் பலியிட வேண்டும். நீங்கள் செய்ய விரும்புகின்ற மற்ற பலிகளின் இரத்தமும், உங்கள் தேவனாகிய கர்த்தருடைய பலிபீடத்தின் மேலே ஊற்றப்பட வேண்டும். பின், நீங்கள் அந்த மாமிசத்தை உண்ணலாம்.
28நான் கூறும் எல்லாக் கட்டளைகளுக்கும் கீழ்ப்படிந்து பின்பற்றுவதில் நீங்கள் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். உங்கள் தேவனாகிய கர்த்தர் முன்பாக நல்லவற் றையும், நேர்மையானவற்றையும் நீங்கள் செய்வதனால் நீங்களும், உங்களுக்குப் பின்வரும் சந்ததியினரும் என்றென்றைக்கும் எல்லாவற்றிலும் நல்லதையே பெறுவீர்கள்.
29"உங்கள் எதிர் இன ஜனங்களிடமிருந்து, நீங்கள் சுதந்திரமாக வசிக்கப் போகிற தேசத்தை நீங்கள் எடுத்துக்கொள்ளப் போகிறீர்கள். உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுக்காக அந்த எதிரின ஜனங்களை அழித்துவிடுவார். நீங்கள் அவர்களை வெளியே துரத்திவிட்டு அங்கே வாழப்போகிறீர்கள்.
30அவ்வாறு நடந்ததற்கு பின்பு நீங்களும் எச்சரிக்கையாய் இருங்கள். அந்த ஜனங்களை அழித்துவிடுவீர்கள். அவர்களது பொய்த் தெய்வங்களை தொழுதுகொள்ளும் வலையில் சிக்கி விடாதீர்கள்! அந்த பொய்த் தெய்வங்களிடம் உதவிக்காக செல்லாமல் எச்சரிக்கையாய் இருங்கள். 'அவர்கள் அந்த பொய்த் தெய்வங்களை தொழுதுகொண்டார்கள். ஆகவே நானும், அதைப் பின்பற்றி தொழுதுகொள்ளுவேன்!' என்று சொல்லி விடாதீர்கள்.
31உங்கள் தேவனாகிய

கர்த்தருக்கு அதைப்போன்று செய்து
விடாதீர்கள். அந்தவிதத்தில் நமது தேவனை
தொழுதுகொள்ள வேண்டாம். ஏனென்றால்
கர்த்தர் அருவருக்கின்ற எல்லா தீய
செயல்களையும், அவர்கள் செய்துள்ளார்கள்.
அவர்களது பிள்ளைகளைக்கூட அந்த
பொய்த் தெய்வங்களுக்காக தீயிலிட்டு
பலியிட்டனர்!
32 "நான் உங்களுக்குக் கட்டளையிட்ட
ஒவ்வொன்றையும் கடைப்பிடிப்பதில் கவன
மாய் இருங்கள். அவற்றில் எதையும்
கூட்டவோ, அல்லது குறைக்கவோ கூடாது.

### பொய்த் தீர்க்கதரிசிகள்

13 "ஒரு தீர்க்கதரிசி அல்லது கனவுகளை
விளக்கிக் கூறுபவன் ஒருவன்
உங்களிடம் வந்து, ஒரு அடையாளத்தையோ
அல்லது ஒரு அற்புதத்தையோ காட்டு
வதாகச் சொல்லுவான். 2 அவன் சொன்னபடி
அந்த அடையாளமோ, அற்புதமோ,
உண்மையிலேயே நடந்திடலாம். நீங்கள்
அறிந்திராத அந்நிய தெய்வங்களைச்
சேவிப்போம் என்று அவன் உங்களிடம்
சொல்வான். 3 அந்த தீர்க்கதரிசி அல்லது
கனவை விளக்கிக் கூறுபவன் சொல்லு
வதைக் கேட்காதீர்கள் ஏனென்றால், உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களைச்
சோதிக்கிறார். நீங்கள் மனப்பூர்வமாகவும்,
ஆத்ம திருப்தியாகவும், கர்த்தர் மீது அன்பு
செலுத்துகின்றீர்களா என்பதை அறிய
விரும்புகிறார். 4 உங்கள் தேவனாகிய
கர்த்தரை மதித்து அவரையே பின்பற்ற
வேண்டும்! கர்த்தருடைய கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிந்து அவர் உங்களுக்குச் சொன்ன
வற்றையேச் செய்யுங்கள். கர்த்தருக்குச்
சேவை செய்வதிலிருந்து ஒருபோதும்
விலகிவிடாதீர்கள்! 5 அதுமட்டுமின்றி, நீங்கள்
அந்தத் தீர்க்கதரிசியை அல்லது கனவுகளை
விளக்கிக் கூறுபவனைக் கொல்ல வேண்டும்.
ஏனென்றால் அவன் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு எதிராக உங்களைத் திசைத்
திருப்பப் பேசினான். உங்கள் தேவனாகிய
கர்த்தர் எகிப்து தேசத்தின் அடிமைத்தனத்
திலிருந்து உங்களை வெளியே கொண்டு
வந்தார். உங்கள் தேவனாகிய கர்த்தர் நீங்கள்
வாழும்படி கட்டளையிட்டிருந்த வழியி
லிருந்து உங்களை வெளியே இழுக்க அந்த
ஆள் முயற்சித்தான். எனவே நீங்கள்
அவனைக் கொன்று அந்தத் தீமையை
உங்களிடமிருந்து வெளியேற்றுங்கள்.
6 "யாராவது ஒருவன், அது உங்கள்
உடன் பிறந்த சகோதரன், உங்கள் மகன்,
உங்கள் மகள், நீங்கள் நேசிக்கின்ற உங்கள்
மனைவி அல்லது உங்கள் உயிர் நண்பன்,
இவர்களில் யாராக வேண்டுமானாலும்
இருக்கலாம். இவர்களுள் ஒருவர் உங்களிடம்
வந்து, 'நாம் போய் அந்நிய தெய்வங்
களுக்குச் சேவை செய்யலாம்' என்று
அந்நிய தெய்வங்களை நீங்கள் வழிபட
இரகசியமாகக் கூறலாம். (இந்தத் தெய்வங்கள்
உங்களுக்கும், உங்கள் முற்பிதாக்களுக்கும்
தெரியவே தெரியாது. 7 அந்தத் தெய்வங்கள்
உங்களைச் சுற்றியுள்ள தேசங்களில்
வசிக்கின்ற ஜனங்களின் தெய்வங்களாகும்.
அவைகள் உங்கள் சமீபத்திலும் தூரத்திலும்
உள்ளன.) 8 நீங்கள் உங்களைத் திசை
திருப்பக் கூறியவனின் பேச்சை ஒத்துக்
கொள்ளாதீர்கள். அவன் பேச்சைக் கேட்கா
தீர்கள். அவனுக்கு இரக்கம் காட்டாதீர்கள்.
அவனை ஒளித்து வைக்காதீர்கள். அவன்
தப்பும்படி விட்டுவிடக்கூடாது. 9-10 அதற்குப்
பதில் அவனை நீங்கள் கொன்றுவிட
வேண்டும்! கற்களால் அவனை அடித்துக்
கொல்லுங்கள், அவ்வாறு செய்வதில் நீங்கள்
முதன்மையாக இருங்கள். பின் அவன்
மரிக்கும்வரை மற்ற எல்லா ஜனங்களும்
அவன்மீது கற்களை எறியவேண்டும்.
ஏனென்றால் அவன் உங்கள் தேவனாகிய
கர்த்தரிடமிருந்து உங்களை விலக்கி இழுக்க
முயன்றான். எகிப்தில் அடிமைகளாக இருந்த
உங்களை வெளியே கொண்டுவந்த உங்கள்
தேவனாகிய கர்த்தரிடமிருந்து உங்களை
வெளியே இழுக்க முயற்சி செய்தவன்
அவன். 11 பின் இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும், அதைக் கேட்டுப் பயந்து
உங்களின் நடுவே இப்படிப்பட்ட தீய
காரியத்தைச் செய்யாதிருப்பார்கள்.

### அழிக்க வேண்டிய நகரங்கள்

12 "உங்கள் தேவனாகிய கர்த்தர் நீங்கள்
வாழ்வதற்கான நகரங்களைத் தந்துள்ளார்.
சில நேரங்களில் நீங்கள் அந்த நகரங்களில்
ஏதாவது ஒரு நகரத்தைப் பற்றித் தீய
செய்திகளைக் கேட்கலாம். நீங்கள் கேட்கும்
அந்தச் செய்தியானது, 13 உங்கள் தேசத்தைச்
சார்ந்த சில தீயவர்கள் அவர்களது நகர
ஜனங்களை தீயச் செயல்களைச் செய்யுமாறு
தூண்டினார்கள்' என்பதாகும். அவர்கள்
அவர்களது நகர ஜனங்களிடம் 'அந்நிய
தெய்வங்களை தொழுதுகொண்டுச் சேவை
செய்வோம் வாருங்கள்!' என்று அழைத்த
செயலே அதுவாகும். (அந்தத் தெய்வங்கள்
நீங்கள் இதற்குமுன் அறிந்திராத அந்நிய
தெய்வங்கள்.) 14 இப்படிப்பட்டச் செய்திகளை
நீங்கள் கேட்டீர்கள் என்றால், அனைவரும்
அதை நன்றாகக் கேட்டு ஆராய வேண்டும்.
நீங்கள் விசாரித்தது உண்மை என்றால்,
அப்படிப்பட்ட எரிச்சலூட்டும் காரியம்
உங்கள் நடுவே நடந்தது உண்மையென்று
கண்டீர்கள் என்றால், 15 பின் அந்த நகர
ஜனங்களை நீங்கள் தண்டிக்க வேண்டும்.
நீங்கள் அவர்கள் அனைவரையும் கொல்ல
வேண்டும். அவர்களது விலங்குகளையும்
கூட கொன்றுவிட வேண்டும். அந்த
நகரத்தை முழுவதுமாக நாசமாக்கி
அழித்துவிட வேண்டும். 16 பின் நீங்கள்

அங்கு கைப்பற்றிய அனைத்துப்
பொருட்களையும், விலையுயர்ந்தப் பொருட்
களையும், நகரத்தின் நடுப் பகுதிக்குக்
கொண்டுவந்து நகரத்தையும் அதிலுள்ள
எல்லாவற்றையும், தீயிட்டு கொளுத்த
வேண்டும். அது உங்கள் தேவனாகிய
கர்த்தருக்குச் செய்யும் தகனபலியாகும். அந்த
நகரமானது வெறும் வெற்றிடமாக,
மண்மேடாகவே என்றென்றும் இருக்கும்.
அந்த நகரம் மீண்டும் கட்டப்படவே கூடாது.
17அந்த நகரில் உள்ள எல்லாப் பொருளும்
அழிக்கப்படுவதற்காக தேவனிடம் கொடுக்
கப்பட வேண்டும். ஆகையால் நீங்கள்
அவற்றில் எந்த ஒரு பொருளையும்
உங்களுக்காக வைத்துக்கொள்ளக் கூடாது.
இப்படி நீங்கள் செய்வீர்கள் என்றால் கர்த்தர்
உங்கள் மீதுள்ள கடுங்கோபத்தை நிறுத்தி
விடுவார். கர்த்தர் உங்களுக்கு இரக்கம்
காட்டுவார். உங்களுக்காக வருந்துவார்.
அவர் உங்கள் தேசத்தை உங்களது
முற்பிதாக்களுக்குக் கொடுத்த வாக்கின்படி
வளர்ச்சி அடையச் செய்வார். 18இவைகள்
நடக்க வேண்டுமென்றால் நான் இன்று
உங்களுக்குத் தரும் உங்கள் தேவனாகிய
கர்த்தர் கூறியதைக் கேட்டு அவரது
கட்டளைகளுக்குக் கீழ்படிந்து நடக்க
வேண்டும். உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குச் சொல்லும் சரியானவற்றை
யெல்லாம் நீங்கள் கண்டிப்பாகச் செய்ய
வேண்டும்.

### இஸ்ரவேலர் தேவனின் விசேஷ ஜனங்கள்

14 “நீங்கள் எல்லோரும் உங்கள்
தேவனாகிய கர்த்தருடைய பிள்ளை
கள். உங்களில் ஒருவன் மரித்ததற்காக
நீங்கள் உங்களை கீறிக் கொள்ளாமலும்,
மொட்டையடித்து சவரம் செய்யாமலும்
இருப்பீர்களாக. 2ஏனென்றால் நீங்கள் மற்ற
ஜனங்களிடமிருந்து வேறுபட்டவர்கள். இந்த
உலகில் உள்ள எல்லா ஜனங்களிலும்
உங்களையே தமது சொந்தமான விசேஷ
ஜனங்களாக இருக்கும்படி உங்கள்
தேவனாகிய கர்த்தர் தேர்ந்தெடுத்துக்
கொண்டார்.

### இஸ்ரவேல் ஜனங்கள் உண்ண அனுமதிக்கப்பட்ட உணவுகள்

3“கர்த்தர் வெறுக்கின்ற எந்தப்
பொருளையும் நீங்கள் உண்ணக்கூடாது.
4நீங்கள் உண்ணத்தகுந்த மிருகங்களாவன:
மாடுகள், செம்மறி ஆடு, வெள்ளாடு, 5மான்,
வெளிமான், கலைமான், வரையாடு,
புள்ளிமான், சருகுமான், புல்வாய், ஆகியன
வாகும். 6நீங்கள் கால்களில் விரிகுளம்புக
ளுடைய மிருகங்களையும், குளம்புகள்
இரண்டாகப் பிரிந்திருக்கின்ற மிருகங்
களையும், அசைபோடுகின்ற சகல
மிருகங்களையும உண்ணலாம். 7ஆனால்
ஒட்டகங்களையும், முயல்களையும் குழிமுயல்
களையும் உண்ணக்கூடாது. இவைகள்
அசைபோடும் மிருகங்களாக இருந்தாலும்
அவைகளுக்கு விரிகுளம்புகள் இல்லை.
ஆகவே அந்த மிருகங்கள் உங்களுக்கு
அசுத்தமான உணவாகும். 8நீங்கள்
பன்றிகளை உண்ணக்கூடாது. அவை
விரிகுளம்பு உள்ளதாய் இருந்தாலும் அசை
போடாது. ஆகவே இவை உங்களுக்கு
சுத்தமான உணவு இல்லை. இவைகளின்
இறைச்சியை உண்ணக்கூடாது. இவற்றின்
மரித்த உடலைக்கூட தொடக்கூடாது.
9“நீங்கள் துடுப்பும், செதில்களும் உள்ள
எந்த வகையான மீனையும் உண்ணலாம்.
10ஆனால் துடுப்புகளும். செதில்களும்
இல்லாத தண்ணீருக்குள் வசிக்கும் எதையும்
உண்ணக்கூடாது. இவை உங்களுக்கான
சுத்தமான உணவு அல்ல.
11“சுத்தமான எந்தப் பறவையையும்
நீங்கள் உண்ணலாம். 12ஆனால் கழுகுகள்,
கருடன்கள், கடலுராஞ்சிகள் ஆகிய
வற்றையும், 13பைரி, வல்லூற்று எவ்வகை
பருந்தும், 14எந்த வகையான காகங்களும்,
15தீக்குருவி, கூகை, செம்புகம், சகலவிதமான
டேகையும், 16ஆந்தை, கோட்டான்,
நாரைகள், 17கூழக்கடா, குருகு, தண்ணீர்க்
காகம், 18கொக்கு, சகலவித ராஜாளியும்,
புழுக்கொத்தி, வௌவால், ஆகியவற்றை
உண்ணக்கூடாது.
19“பறப்பனவற்றில் எல்லாவகையான
ஊர்வன யாவும் சுத்தமற்றவை. ஆகவே
அவற்றை உண்ணக்கூடாது. 20ஆனால்,
சுத்தமான பறவைகள் எவற்றையும் நீங்கள்
உண்ணலாம்.
21“தானாக மரித்துப்போன எந்த
விலங்கையும் உண்ண வேண்டாம். நீங்கள்
அவற்றை உங்கள் ஊரிலுள்ள வழிப்
போக்கருக்குக் கொடுத்து விடலாம்,
அவர்கள் அதனை உண்ணலாம். அல்லது
அந்நியருக்கு விற்றுவிடலாம். ஆனால்
நீங்கள் உங்களுக்குள் அவற்றை உண்ணக்
கூடாது. ஏனென்றால் நீங்கள் உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு பரிசுத்தமான
ஜனங்கள்.
“வெள்ளாட்டுக் குட்டியை, அதின் தாயின்
பாலிலே சமைக்க வேண்டாம்.

### பத்தில் ஒரு பாகத்தைக் கொடுப்பது

22“உங்கள் வயல்களின் எல்லா விளைச்
சலிலுமிருந்து பத்தில் ஒரு பங்கை
வருடந்தோறும் தனியாக எடுத்து வையுங்
கள். 23அதை நீங்கள் கர்த்தர் தமக்கென்று
தெரிந்துகொண்ட சிறப்பான இடத்திற்கு
எடுத்துச்செல்ல வேண்டும். உங்கள்
தேவனாகிய கர்த்தரோடு இருக்க நீங்கள்
அங்கே செல்ல வேண்டும். அந்த இடத்தில்
உங்களது தானியத்திலும், உங்களது
திராட்சைரசத்திலும், உங்கள் எண்ணெ

யிலும் எடுத்துவைத்த பத்தில் ஒரு
பங்கையும், உங்கள் மந்தைகளிலுள்ள ஆடு
மாடுகளின் தலையீற்றையும் கொண்டுவந்து
கர்த்தர் உங்களுக்கு நியமிக்கும்
தேவாலயத்தில் உண்டு மகிழுங்கள். உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு மரியாதை
யளிக்கும்படி எப்பொழுதும் நினைவாயிரு.
24 ஆனால் கர்த்தர் உங்களை ஆசீர்வதிக்
கின்றபோது தமது நாமம் விளங்கும்படி
தெரிந்துகொண்ட இடமானது நீங்கள்
குடியிருக்கிற இடத்திலிருந்து, மிகத்
தொலைவில் இருக்கலாம். இந்த சூழ்நிலை
யில் பத்தில் ஒரு பங்கு காணிக்கைப்
பொருட்களை தூக்கி எடுத்துச்செல்ல
இயலாமல் போகலாம். அப்படி நடக்கு
மென்றால் 25 நீங்கள் ஒதுக்கிவைத்த பங்குப்
பொருட்களை விற்று, அதன் மூலம்
கிடைத்த பணத்தை எடுத்துக்கொண்டு
கர்த்தருடைய ஆலயத்திற்கு வரவேண்டும்
26 தேவாலயத்திற்கு வந்தபின்பு, நீங்கள்
உங்கள் தேவைகேற்ற மாடுகள், ஆடுகள்,
திராட்சைரசம் போன்ற உணவுப்
பொருட்களை அந்த பணத்தினால் வாங்கிக்
கொள்ளலாம். பின்பு நீங்களும் உங்கள்
குடும்பத்தினரும் உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய சந்நிதியில் உண்டு மகிழலாம்.
27 உங்கள் நகரில் வசிக்கின்ற லேவியரை
ஒருபோதும் மறந்து விடாதீர்கள்.
(அவர்களுக்கும் உங்கள் உணவை
பகிர்ந்தளியுங்கள்) ஏனெனில், அவர்களுக்கு
உங்களைப்போன்று எந்த சொத்தும்
சுதந்திரமும் கிடையாது.

28 “மூன்று ஆண்டுகள் முடிகின்ற
ஒவ்வொரு முறையும் அந்த ஆண்டு
உங்களுக்குக் கிடைத்த பலன்
எல்லாவற்றிலும் பத்தில் ஒரு பங்கை ஒதுக்கி
வைக்கவேண்டும். மற்ற ஜனங்கள்
பயன்படுத்தக்கூடிய உங்கள் பட்டணங்களில்
அந்த உணவுப் பொருட்களை சேர்த்து
வைத்திருங்கள். 29 இந்த உணவுப் பொருட்கள்
லேவியர்களுக்கு சொந்தம் ஆகும்.
ஏனென்றால், அவர்களுக்கென்று சொந்த
மான எந்த நிலமும் அவர்களுக்கு இல்லை.
மேலும் இந்த உணவுப் பொருட்கள் உங்கள்
ஊரில் தேவை உள்ள ஜனங்களுக்கும்
ஆகும். அது அயல்நாட்டு குடிகளுக்கும்,
விதவைகளுக்கும், அநாதைகளுக்கும்,
உரியது. அவர்கள் வந்து உண்டு திருப்தி
அடையட்டும். இவ்வாறெல்லாம் நீங்கள்
செய்தீர்கள் என்றால் பின் உங்கள்
தேவனாகிய கர்த்தர் நீங்கள் செய்யும்
எல்லாவற்றையும் ஆசீர்வதிப்பார்.

## கடன்களை ரத்து செய்யும் விசேஷ ஆண்டு

15 “ஏழு ஆண்டுகள் முடிகின்ற ஒவ்வொரு
முறையும் நீங்கள் கடன்களை ரத்து
செய்ய வேண்டும். 2 நீங்கள் செய்யவேண்டிய
முறையாவது: ஒவ்வொருவரும் தான் மற்ற
இஸ்ரவேலருக்குக் கடனாகக் கொடுத்த
பணத்தை ரத்து செய்துவிட வேண்டும்.
அவன் மற்ற இஸ்ரவேல் சகோதரனிடம்
அந்தப் பணத்தை திரும்ப தன்னிடம்
செலுத்துமாறு கேட்கக்கூடாது. ஏனென்
றால், கர்த்தர் உனக்குக் கூறியதின்படி
அந்தக் கடனை அவ்வாண்டிலேயே ரத்து
செய்திட வேண்டும். 3 நீங்கள் அந்நியர்
களுக்குக் கொடுத்த கடனை திரும்பச்
செலுத்துமாறு கேட்கலாம். ஆனால், உன்
இஸ்ரவேல் சகோதரனிடம் அவ்வாறு
கேட்கக்கூடாது. 4 உங்கள் நாட்டில் ஏழை
ஜனங்கள் யாரும் இருக்கக்கூடாது.
ஏனென்றால், கர்த்தர் இந்த தேசத்தை
உங்களுக்குக் கொடுத்திருக்கின்றார். கர்த்தர்
உங்களை வெகுவாய் ஆசீர்வதிப்பார்.
5 ஆனால், நீங்கள் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்குக் கீழ்ப்படிந்தால் மாத்திரம் இது
நடக்கும். நான் இன்று உங்களுக்குச்
சொன்ன தேவனுடைய ஒவ்வொரு
கட்டளையையும் நீங்கள் கவனமாகப்
பின்பற்ற வேண்டும். 6 பின்பு உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்கு
வாக்களித்தபடி உங்களை ஆசீர்வதிப்பார்.
அதனால், நீங்கள் பல ஜாதிகளுக்கு கடன்
கொடுப்பீர்கள். ஆனால், நீங்கள்
யாரிடமிருந்தும் கடன் வாங்கும் அவசியம்
உங்களுக்கு இருக்காது. நீங்கள் அவர்களை
ஆளலாம். அவர்கள் யாரும் உங்களை ஆள
இயலாது.

7 “உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குக் கொடுக்கும், இந்த தேசத்தில்
உங்களில் யாராவது ஒருவன் ஏழை
எளியவனாக இருந்தால், அவர்கள் மத்தியில்
நீங்கள் யாரும் சுயநலமுள்ளவர்களாக
இருந்து விடக்கூடாது. நீங்கள் அந்த ஏழை
எளியவனுக்குக் கைகொடுத்து உதவ
மறுத்து விடக்கூடாது. 8 நீங்கள் அவனுக்கு
உதவுவதில் ஆர்வம் காட்டவேண்டும்.
அவர்களுக்குத் தேவையானவற்றைக் கடன்
கொடுத்து உதவவேண்டும்.

9 “கடன்களை ரத்து செய்யும் ஏழாவது
ஆண்டு சமீபமாக வந்துவிட்டது என்பதால்,
ஏழைக்கு உதவிச்செய்ய மறுத்து விடாதே.
இப்படிப்பட்ட ஒரு கெட்ட சிந்தை உன்
மனதில் நுழைய இடம் கொடாதே. தேவை
உள்ள ஏழையைக் குறித்து ஒருபோதும்
கெட்ட எண்ணம் கொள்ளாதே. அவனுக்கு
உதவிச்செய்ய மறுத்து விடாதே. அப்படி
நீங்கள் உதவவில்லையென்றால், அவன்
உங்களுக்கு எதிராகக் கர்த்தரிடத்தில்
முறையிடுவான். அப்போது கர்த்தர் அதை
உங்கள்மேல் குற்றமாகச் சுமத்துவார்.

10 “அந்த ஏழை நபருக்குத் தாராளமாகக்
கொடுங்கள். அவர்களுக்குக் கொடுப்பதை
இழிவாகக் கருதாதீர்கள். ஏனென்றால்
உங்கள் தேவனாகிய கர்த்தர், நீங்கள் இந்த

நற்செயலைச் செய்வதால் உங்களை
ஆசீர்வதிப்பார். நீங்கள் செய்யும் எல்லாப்
பணிகளையும், நீங்கள் செய்யும் ஒவ்வொரு
செயலையும் அவர் ஆசீர்வதிப்பார்.
11 தேசத்திலே ஏழை எளியவர்கள்
எப்போதும் இருப்பார்கள். அதனால்தான்
உன் தேசத்தில் உள்ள ஏழை எளிய
சகோதரனுக்கு நீங்கள் உதவத் தயாராக
இருக்கவேண்டுமென நான் கட்டளையிடு
கிறேன். அவர்களுக்குத் தேவைப்படும்போது
கொடுங்கள்.

## அடிமைகள் விடுதலை பெற அனுமதித்தல்

12 “எபிரெய ஆணையோ, பெண்ணையோ
நீங்கள் அடிமைகளாக விலை கொடுத்து
வாங்கியிருந்தால், நீங்கள் அவர்களை ஆறு
ஆண்டுகளுக்கு உங்களுக்குச் சேவை செய்ய
வைத்துக்கொள்ளலாம். ஆனால் ஏழாவது
ஆண்டு அவர்களை உங்களிடமிருந்து
விடுதலை பெற்றுச்செல்ல அனுமதிக்க
வேண்டும். 13 அவ்வாறு அவர்கள்
உங்களிடமிருந்து விடுதலையாகிச் செல்லும்
போது, அவர்களை ஒன்றுமில்லாதவர்களாய்
அனுப்பிவிடாதீர்கள். 14 நீங்கள் அவர்களுக்கு
உங்களது ஆடுமாடுகளில் சிலவற்றையும்,
கொஞ்சம் தானியத்தையும், கொஞ்சம்
திராட்சைரசத்தையும் கொடுத்து அனுப்ப
வேண்டும். உங்கள் தேவனாகிய கர்த்தர்
நீஙகள் தாராளமாகக் கொடுக்குமளவு
ஏராளமான நன்மைகளால் உங்களை
ஆசீர்வதித்தார். அதேபோல் நீங்களும்
உங்களது அடிமைகளுக்குத் தாராளமாகக்
கொடுங்கள். 15 நீங்கள் எகிப்தில் அடிமை
களாக இருந்தீர்கள். உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களை அங்கிருந்து மீட்டுக்
கொண்டுவந்தார். அதை நினைத்துப்
பார்க்கக் கடமைப்பட்டுள்ளீர்கள். அதனால்
தான் நான் இன்று உங்களுக்கு இந்தக்
கட்டளையைக் கொடுக்கின்றேன்.
16 “ஆனால், உங்களது அடிமைகளுள்
ஒருவன், ‘நான் உங்களை விட்டுப்
பிரியமாட்டேன்’ என்று உங்களையும்
உங்கள் குடும்பத்தினரையும் நேசித்து
உங்களுடன் நல்லதொரு வாழ்வைப்
பெற்றதனால், கூறிடலாம். 17 நீங்கள் அந்த
அடிமையை உங்கள் வீட்டுக் கதவுக்கு
எதிராக நிறுத்தி, ஒரு கூர்மையான சிறிய
கம்பியினால் அந்த அடிமையின் காதில்
ஒரு துளை போடவேண்டும். அவன்
உங்களுக்கு என்றைக்கும் அடிமை
யாயிருப்பான் என்பதை இது காட்டும்,
உங்களோடு இருக்க விரும்பும் உங்களின்
பெண் அடிமைக்கும் இவ்வாறே செய்ய
வேண்டும்.
18 “உங்கள் அடிமைகளை விடுதலையாக்கி
அனுப்பிவிடுவதை தவறாக எண்ண
வேண்டும். ஆறு ஆண்டுகளாக ஒரு
வேலையாளுக்குரிய சம்பளத்தில் பாதிக்
கூலிக்கு அவர்கள் உங்களுக்குச் சேவை
செய்ததை எண்ணிப்பாருங்கள். உங்கள்
தேவனாகிய கர்த்தர் நீங்கள் செய்யும்
எல்லாவற்றிலும் உங்களை ஆசீர்வதிப்பார்.

## மந்தைகளின் தலையீற்றுகளைப் பற்றிய விதிகள்

19 “உங்கள் மந்தைகளில் உள்ள ஆடு
மாடுகளின்தலையீற்று ஆண்களையெல்லாம்
கர்த்தருக்குரியதாக்குங்கள். அவற்றை உங்கள்
பணிகளுக்காகப் பயன்படுத்தாதீர்கள்.
அவற்றில் உள்ள தலையீற்று ஆட்டினை
மயிர் கத்தரியாமல் இருக்க வேண்டும்.
20 ஆண்டுதோறும் அவற்றை நீங்கள் உங்கள்
தேவனாகிய கர்த்தர் தேர்ந்தெடுத்த இடத்திற்கு
எடுத்துச்சென்று, நீங்களும் உங் கள்
குடும்பத்தினரும் உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய சந்நிதியில் உண்ணுங்கள்.
21 “ஆனால், அந்தக் கால்நடைகளுக்கு
முடம், குருடு முதலான எந்த ஒரு பழுது
இருந்தாலும் அவற்றை உங்கள் தேவனாகிய
கர்த்தருக்குப் பலியிடவேண்டாம். 22 நீங்கள்
உங்கள் வீடுகளிலேயே அவற்றின் இறைச்
சியை உண்ணலாம். யார் வேண்டுமானா
லும், அசுத்தமானவனும் சுத்தமானவனும்
அதை உண்ணலாம். வெளிமான்களையும்,
கலைமான்களையும் புசிக்கும்படி கொடுக்
கப்பட்ட கட்டளையின்படியே இந்த
இறைச்சியையும் புசிக்கவேண்டும். 23 ஆனால்,
அவற்றின் இரத்தத்தை மட்டும் உண்ணாமல்,
அதைத் தண்ணீரைப் போன்று தரையிலே
ஊற்றிவிட வேண்டும்.

## பஸ்கா

16 “ஆபீப் மாதம் வருவதைக் கவனித்து,
அந்த மாதத்தில் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு பஸ்காவை நீங்கள் கொண்டாட
வேண்டும். ஏனென்றால், ஆபீப் மாதத்தி
லேயே இரவு நேரத்தில் உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களை எகிப்திலிருந்து மீட்டுக்
கொண்டு வந்தார். 2 நீங்கள் எல்லோரும்
கர்த்தர் தமக்குச் சிறப்பாகத் தேர்ந்தெடுத்த
இடத்திற்கு, அந்தக் கொண்டாட்ட தினத்தில்
செல்லவேண்டும். அங்கே, உங்கள்
கர்த்தருக்குப் பஸ்காவின் பலியாகிய ஆடு,
மாடுகளைப் பலியிடுவாயாக. 3 அந்த நாளில்,
புளிப்புள்ள அப்பத்தை நீங்கள்
உண்ணக்கூடாது. புளிப்பில்லாத அப்பங்க
ளையே ஏழு நாட்களுக்கு உண்ணவேண்டும்,
இந்த அப்பங்கள் “துன்பத்தின் அப்பங்கள்”
என்று அழைக்கப்படும்! இவை எகிப்தில்
நீங்கள் அடைந்த துன்பங்களை
நினைவூட்டுவதாக இருக்கும். எவ்வளவு
விரைவாக நீங்கள் அந்த தேசத்திலிருந்து
வெளியேறினீர்கள் என்பதை பஸ்காதோறும்
நீங்கள் உயிரோடு இருக்கின்ற நாளெல்லாம்
நினைத்துப் பார்க்கவேண்டும். 4 ஏழு
நாட்களுக்கு உங்களுடைய தேசத்தில் யார்

வீட்டிலும் புளிப்புள்ள அப்பங்கள்
இருக்ககூடாது. நீங்கள் முதல் நாள்
மாலையில் பலியிட்ட இறைச்சியில்
எதையும் மறுநாள் காலைவரை மீதி
வைக்காமல் உண்டுவிட வேண்டும்.
5 “உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுக்கு
வழங்கிய எந்த நகரத்திலும் நீங்கள்
பஸ்காவைப் பலியிடக்கூடாது. 6 உங்கள்
தேவனாகிய கர்த்தர் தமக்கென்று சிறப்பாக
தேர்ந்தெடுத்த இடத்திலேயே பஸ்காவைப்
பலியிடவேண்டும். அங்கே நீங்கள்
எகிப்திலிருந்து புறப்பட்ட நேரமாகிய
சூரியன் மறையும் மாலைப் பொழுதில்
பஸ்காவைப் பலியிடவேண்டும். அந்த நாள்
உங்களுக்கு விடுமுறை நாள். 7 உங்கள்
தேவனாகிய கர்த்தர் தேர்ந்தெடுத்த
இடத்திலேயே பஸ்கா இறைச்சியை சமைத்து
அன்று இரவே உண்ணவேண்டும். பின்
மறுநாள் விடியற்காலையில் நீங்கள் உங்கள்
வீடுகளுக்குத் திரும்பிவிடுங்கள். 8 ஆறு
நாட்கள் புளிப்பில்லாத அப்பத்தையே
நீங்கள் உண்ணவேண்டும். ஏழாவது நாளில்
நீங்கள் எந்த வேலையும் செய்யக்கூடாது.
அந்த நாளில் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு மரியாதை செலுத்தும் பொருட்டு
நீங்கள் அனைவரும் ஒன்று கூடவேண்டும்

### வாரங்களின் பண்டிகை (பெந்தெகோஸ்தே)

9 “உங்களது அறுவடைக்காலம் துவங்கு
வதிலிருந்து ஏழு வாரங்களை
எண்ணிக்கொள்ளுங்கள். 10 பின் உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கான வாரங்களின்
பண்டிகையைக் கொண்டாடுங்கள். நீங்கள்
தேவனுக்குக் கொடுக்க விரும்புகின்ற
சிறப்பான அன்பளிப்பைக் கொண்டு
வருவதின் மூலம் இதைச் செய்யுங்கள்.
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களை
எந்த அளவிற்கு ஆசீர்வதித்தாரோ
அதற்கேற்ப உங்கள் காணிக்கையைச்
செலுத்துங்கள். 11 கர்த்தர் சிறப்பாகத்
தேர்ந்தெடுத்த இடத்துக்குச் செல்லுங்கள்.
நீங்களும் உங்கள் பிள்ளைகளும் சேர்ந்து
உங்கள் தேவனாகிய கர்த்தருடைய
சந்நிதானத்தில் மகிழ்ச்சியாய் இருங்கள்.
அனைவரையும் அழைத்துச் செல்லுங்கள்.
உங்கள் மகன்கள், மகள்கள், உங்களது
வேலையாட்கள், லேவியர்கள், உங்களி
டத்தில் இருக்கின்ற அந்நியர்கள்,
அநாதைகள், உங்கள் நகரங்களில் வாழும்
விதவைகள், ஆகிய எல்லோரையும்
உங்களுடன் அழைத்துச் செல்லுங்கள்.
12 எகிப்தில் நீங்கள் அடிமைகளாக இருந்ததை
எண்ணிப் பாருங்கள். ஆகையால் இந்தக்
கட்டளைகளுக்கு நீங்கள் கீழ்ப்படிய
வேண்டும்.

### அடைக்கலக் கூடாரப் பண்டிகை

13 “நீங்கள், உங்கள் தானியக் களத்தின்
பலனையும், உங்கள் திராட்சைரச
ஆலைகளின் பலனையும் சேர்த்தபின்பு, ஏழு
நாட்கள் உங்கள் அடைக்கலக் கூடாரப்
பண்டிகையைக் கொண்டாடவேண்டும்.
14 இந்தப் பண்டிகையை உங்களுக்குள்
மகிழ்வாகக் கொண்டாடுங்கள். நீங்கள்,
உங்கள் மகன்கள், உங்கள் மகள்கள், உங்கள்
வேலையாட்கள், உங்களைச் சார்ந்த
பகுதியில் வசிக்கும் லேவியர்கள்,
அந்நியர்கள், அநாதைகள், உங்கள்
நகரங்களில் வாழும் விதவைகள், எல்லோரு
மாகச் சேர்ந்து கொண்டாடுங்கள். 15 இந்தப்
பண்டிகையை உங்கள் கர்த்தர் தேர்ந்தெடுத்த
இடத்தில் ஏழு நாட்கள் கொண்டாடி
மகிழுங்கள். உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு மரியாதை செலுத்தும்படி
இதைச் செய்யுங்கள். உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களது விளைச்சல்களையும்,
நீங்கள் செய்யும் எல்லா வேலைகளையும்
ஆசீர்வதித்துள்ளார். ஆகவே நீங்கள் மிக்க
மகிழ்ச்சி அடைவீர்களாக!
16 “வருடத்திற்கு மூன்றுமுறை உங்களது
ஆண் ஜனங்கள் அனைவரும் தவறாது
உங்கள் தேவனாகிய கர்த்தருடைய
சந்ததியில் கூடவேண்டும். அவர்கள்
அனைவரும், புளிப்பில்லாத அப்பப்
பண்டிகைக்கும், வாரங்களின் பண்டி
கைக்கும், அடைக்கல கூடாரங்களின்
பண்டிகைக்கும் கண்டிப்பாக வரவேண்டும்.
ஒவ்வொருவரும் வரும்பொழுது, கர்த்தருக்
குரிய அன்பளிப்புகளை எடுத்துவர
வேண்டும். 17 ஒவ்வொருவரும் தன் தகுதிக்கு
ஏற்றவாறு காணிக்கையைச் செலுத்த
வேண்டும். கர்த்தர் உங்களை எந்த
அளவிற்கு ஆசீர்வதித்தாரோ அதற்
கேற்றவாறு உங்கள் காணிக்கையைச்
செலுத்துங்கள்.

### ஜனங்களுக்கான நீதிபதிகளும், தலைவர்களும்

18 “உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குக் கொடுக்கும் அனைத்துப்
பட்டணங்களிலும் நீங்கள் நீதிபதிகளையும்,
தலைவர்களையும் தேர்ந்தெடுங்கள்.
ஒவ்வொரு கோத்திரமும் இவ்வாறு செய்ய
வேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்
பட்டவர்கள் நீதியுடன் ஜனங்களுக்கு
நியாயமான தீர்ப்புகளை வழங்க வேண்டும்.
19 நீங்கள் அனைவரும் நேர்மையாக இருக்க
வேண்டும். நீங்கள் மற்ற ஜனங்களை மீறி
சிலரை மாத்திரம் ஆதரித்துப் பேசாதீர்கள்.
நியாயத்தில் உங்கள் மனது புரளாதபடி
நீங்கள் லஞ்சம் வாங்காமல் இருங்கள்.
பணமானது ஞானிகளின் கண்களைக்
குருடாக்கி, நல்லவன் சொல்லக்கூடிய
சரியான தீர்ப்பை மாற்றிவிடும். 20 நல்லவற்
றையும், நேர்மையானவற்றையுமே நீங்கள்
செய்ய வேண்டும்! நீங்கள் எப்போதும்

நல்லவராக, நேர்மையானவராக இருப்ப
தற்குப் பாடுபட வேண்டும்! பின் உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்குக் கொடுத்த
தேசத்தில் வாழ்வையும், சுதந்திரத்தையும்
பெறுவீர்கள்.

### தேவன் விக்கிரகங்களை வெறுக்கிறார்

21"நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு
உண்டாக்கும் பலிபீடத்தின் அருகில்
அஷெரா தேவதைக்கென்று எந்த ஸ்தம்பத்
தையும் வைக்கக்கூடாது. 22அதுமட்டுமின்றி
பொய்யான தெய்வங்களைத் தொழுது
கொள்வதற்கான சிற்ப கற்களையும் அங்கே
வைக்ககூடாது. உங்கள் தேவனாகிய கர்த்தர்
இவற்றையெல்லாம் வெறுக்கின்றார்.

### குறையற்ற மிருகங்களையே பலிகொடுக்க பயன்படுத்துதல்

17 "குறையுள்ள அல்லது ஏதேனும்
ஊனமுற்ற மாட்டையோ, ஆட்டை
யோ உங்கள் தேவனாகிய கர்த்தருக்குப்
பலி கொடுக்கக் கூடாது. ஏனென்றால்,
உங்கள் தேவனாகிய கர்த்தர் அவற்றை
வெறுக்கிறார்!

### விக்கிரகங்களை தொழுதுகொள்வதினால் அடையும் தண்டனைகள்

2"உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குத் தருகின்ற நகரங்கள் ஏதேனும்
ஒன்றில் அக்கிரமமான செயல் கர்த்தருக்கு
எதிராக நடந்ததைக் குறித்து நீங்கள்
கேள்விப்படலாம். கர்த்தருக்கு எதிராக அந்த
அக்கிரமச் செயலை உங்களைச் சார்ந்த
ஆணோ, அல்லது பெண்ணோ செய்திருக்க
லாம் கர்த்தருடைய உடன்படிக்கையை மீறி
அவர்கள் நடந்திருப்பார்கள். 3அதாவது,
அவர்கள் அந்நிய தெய்வங்களையோ
அல்லது சூரியன், சந்திரன், நட்சத்திரம்
போன்ற வான சேனைகளையோ தொழுது
கொள்வதை நீங்கள் கேள்விப்பட்டால்,
அவைகளெல்லாம் நான் உங்களுக்கு
வழங்கிய கர்த்தருடைய கட்டளைக்கு
விரோதமான செயல்களாகும். 4இதுபோன்ற
தீய செய்திகளை நீங்கள் கேள்விபட்டால்,
நீங்கள் அதைக் குறித்து விசாரிக்கவேண்டும்.
நீங்கள் அதை நன்றாகத் தீர ஆராய்ந்து
அது உண்மையென்று கண்டறிந்தால்,
இஸ்ரவேலில் இப்படிப்பட்ட ஒரு
அருவருக்கத்தக்க நிகழ்ச்சி நடந்தது
உண்மையாகும்போது, 5நீங்கள் அந்தத் தீய
செயலைச் செய்தவனைத் தண்டிக்க
வேண்டும். நீங்கள் அத்தகைய தீயச்
செயலைச் செய்த அந்த ஆணையோ,
அல்லது பெண்ணையோ, வெளியே
இழுத்துவந்து நகர எல்லையின் பொது
இடத்தில் கற்களால் அடித்து அவர்களைக்
கொன்று விடுங்கள். 6ஆனால் ஒரே ஒரு
சாட்சியின் கூற்றைக் கேட்டு நீங்கள்
அவனுக்குக் கொலைத் தண்டனையை
கொடுத்து விடாதீர்கள். இரண்டு அல்லது
மூன்று சாட்சிகள் அவன் இந்த தீயச்
செயல்களை செய்தது உண்மைதான் என்று
கூறினால், பின் நீங்கள் அந்தத் துரோகியை
கொன்று விடலாம். 7தீமை செய்தவன்
கொல்லப்படும்படி சாட்சிகளே முதலில்
அவன்மீது கற்களை எறியவேண்டும்.
பின்னரே மற்ற ஜனங்கள் அனைவரும்
அவன் மரிக்கும்வரை கற்களால் அடிக்க
வேண்டும். இதன் மூலமே நீங்கள்
உங்களிடமிருந்து அந்தத் தீமையை விலக்கிட
முடியும்.

### சிக்கலான நீதிமன்ற முடிவுகள்

8"உங்கள் நீதிமன்றங்களால் தீர்ப்புக்கூற
முடியாமல் போகும் அளவிற்கு சில
பிரச்சினைகள் உங்களிடம் இருக்கலாம்,
அவை கொலைக் குற்றமாகவோ, அல்லது
இரண்டு நபர்களின் வாக்குவாதங்களோ,
அல்லது சண்டையில் ஒருவருக்கு ஏற்பட்ட
காயம் குறித்த சேதங்களையோ குறித்த
வழக்குகளாக இருக்கலாம். உங்கள் ஊர்களி
லுள்ள உங்களது நீதிபதிகளால் இத்தகைய
வழக்குகளுக்குச் சரியான தீர்ப்பைக் கூற
இயலாமல் இருந்தால், நீங்கள் உங்கள்
தேவனாகிய கர்த்தர் சிறப்பாக தேர்ந்தெடுத்த
இடத்திற்குச் செல்ல வேண்டும். 9லேவிக்
கோத்திரத்திலிருந்து வந்த ஆசாரியர்கள்
அங்கே இருப்பார்கள். நீங்கள் அவர்களிடம்
சென்று அன்றைய பொறுப்பில் இருக்கின்ற
நியாயாதிபதியினிடத்தில் அந்தப்
பிரச்சினைக்கான முடிவுகளைப் பெறலாம்.
10கர்த்தர் சிறப்பாகத் தேர்ந்தெடுத்த இடத்தில்
இருக்கின்ற அவர்கள், உங்களுக்கு அளிக்
கின்ற தீர்ப்புகளுக்கு இணங்கி, அவர்கள்
உங்களுக்கு விதிக்கின்றபடி செய்யக்
கவனமாய் இருப்பீர்களாக. 11நீங்கள் அவர்கள்
கூறும் முடிவுகளை ஏற்றுக்கொண்டு,
அவர்கள் விதிக்கின்றபடியே அவர்களது
நியாயத்தீர்ப்புகளைப் பின்பற்ற வேண்டும்.
அவர்கள் சொன்ன எதையும் மாற்றாமல்
அப்படியே செய்யவேண்டும்!

12"அச்சமயத்தில் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு ஊழியம் செய்யும் ஆசாரியனின்
வார்த்தைகளையோ, அல்லது நீதிபதியின்
தீர்ப்பையோ ஏற்காமலும், கீழ்ப்படியாமலும்
இருக்கிறவர்களை நீங்கள் தண்டிக்க
வேண்டும். அவன் கண்டிப்பாக மரிக்க
வேண்டும். இஸ்ரவேலில் இருந்து அந்தத்
தீயவனை நீங்கள் அகற்றிவிட வேண்டும்.
13இந்தத் தண்டனையைக் கேட்கும்
அனைத்து ஜனங்களும் அதைக் கண்டு
பயந்து இதுபோன்ற தவறினைச்
செய்யாதிருப்பார்கள்.

### இராஜாவை எவ்வாறு தேர்ந்தெடுப்பது

14"உங்கள் தேவனாகிய கர்த்தர்

உங்களுக்குத் தருகின்ற தேசத்தில் நீங்கள்
போய்ச் சேர்ந்து அதைச் சுதந்திரமாக்கிக்
கொண்டு அதில் குடியேறியபின்,
'எங்களைச் சுற்றிலும் இருக்கின்ற மற்ற
இனத்தவர்களைப்போல நாங்களும்
எங்களுக்கு ஒரு இராஜாவை ஏற்படுத்திக்
கொள்வோம்' என்று கூறுவீர்கள் என்றால்,
15அவ்வாறு நடக்க வேண்டுமென்றால்,
உங்கள் தேவனாகிய கர்த்தர் தேர்ந்தெடுக்கும்
அரசனையே நீங்கள் வைத்துக்கொள்ள
வேண்டும். உங்களுள் ஒருவரான உங்கள்
சகோதரனையே உங்களை ஆளும் அரசனாக
வைத்துக்கொள்ளுங்கள். உங்கள் ஜனங்கள்
அல்லாத அந்நியனை நீங்கள் அரசனாக்கக்
கூடாது. 16அந்த அரசன் தனக்காக
அதிகமான குதிரைகளை வைத்துக்கொள்ளக்
கூடாது. அதுமட்டுமின்றி அதிகமான
குதிரைகளுக்காக ஜனங்களை எகிப்திற்கு
அனுப்பக் கூடாது. ஏனென்றால், 'நீங்கள்
திரும்பவும் அந்த வழியாக போகவே
வேண்டாம்' என்று கர்த்தர் உங்களுக்குச்
சொல்லி உள்ளார். 17மேலும், அரசன்
அதிகமான மனைவிகளை வைத்துக்
கொள்ளக் கூடாது. ஏனென்றால், அது
அவனைக் கர்த்தரிடமிருந்து வேறு திசைக்கு
அழைத்துச் சென்றுவிடும். மேலும், அந்த
அரசன் அவனுக்காகப் பொன்னையும்,
வெள்ளியையும், மிகுதியாக சேர்த்துக்
கொள்ளக் கூடாது.

18"அரசன் தன் அரியாசனத்தில் அமர்ந்து
ஆட்சி செய்யும்முன் தனக்கான சட்டங்
களைப் புத்தகமாக எழுதி வைத்துக்கொள்ள
வேண்டும். அவன் அந்த நீதி புத்தகத்தை,
லேவியரும் ஆசாரியர்களும் வைத்துள்ள
புத்தகத்திலிருந்து உருவாக்கி தன்னிடத்தில்
வைத்துக்கொள்ள வேண்டும். 19அரசன் அந்த
புத்தகத்தை தன்னிடம் பத்திரமாக
வைத்துக்கொள்ள வேண்டும். அவன்
வாழ்நாள் முழுவதும் அந்தப் புத்தகத்தைப்
படித்தறிய வேண்டும். ஏனென்றால்,
அவனது தேவனாகிய கர்த்தருக்கு
மதிப்பளிக்க வேண்டும். அதிலுள்ள எல்லா
சட்டங்களுக்கும், கட்டளைகளுக்கும் அரசன்
கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். 20அரசன்
தன் சகோதரர்களாகிய ஜனங்களைவிட
தான் மேன்மையானவன் என்று
எண்ணிவிடக் கூடாது. மேலும் அவன்
ஒருபோதும் இந்த சட்டங்களிலிருந்து விலகி
விடக்கூடாது. ஆனால் அவன் இவற்றைச்
சரியானபடி முழுமையாகப் பின்பற்றினால்,
பின் அந்த அரசனும் அவன் சந்ததியினரும்
நீண்டகாலம் இஸ்ரவேல் நாட்டை ஆளலாம்.

## ஆசாரியர்களுக்கும் லேவியர்களுக்கும் ஆதரவு அளித்தல்

18 "லேவியின் கோத்திரம் இஸ்ரவேலில்
எவ்வித சொத்தும், நிலமும் பெறுவ
தில்லை. அவர்கள் ஆசாரியர்களாகச் சேவை
செய்வார்கள். தகனபலியாகக் கர்த்தருக்குச்
செலுத்தும் உணவுப் பொருட்களே
இவர்களுக்கு பிழைப்பூட்டும் சுதந்திர
வீதமாக இருக்கிறது. அதுவே
லேவியர்களின் பங்கு ஆகும். 2இந்த
லேவியர்கள், மற்ற கோத்திரங்கள் வைத்
திருப்பதைப்போன்று எவ்வித பங்கும்,
சுதந்திரமும் பெற்றிருப்பவர்கள் அல்ல.
கர்த்தர் அவர்களுக்குக் கூறியதுபோல்
கர்த்தரே அவர்களது சொத்து.

3"நீங்கள் மாட்டையோ, ஆட்டையோ,
பலியிட்டால் அவற்றின் சில பகுதியினை
ஆசாரியர்களுக்குக் கொடுக்கவேண்டும்.
அப்படிக் கொடுக்கும் பகுதிகள் எதுவென்
றால்: அந்த ஆடு மாடுகளின்
முன்தொடையையும், தாடைகளையும்,
இரைப்பைகளையும் ஆசாரியர்களுக்குக்
கொடுக்கவேண்டும். 4நீங்கள் அறுவடை
செய்த முதல் பலன்களின் ஒரு பகுதியையும்
ஆசாரியர்களுக்குக் கொடுக்கவேண்டும்.
உங்கள் தானியங்கள், திராட்சைரசம்,
எண்ணெய் ஆகியவற்றின் முதல் பலன்களை
அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். உங்கள்
ஆடுகளில் கத்தரிக்கும் முதல் பங்கான
ஆட்டு ரோமங்களை லேவியருக்குக்
கொடுக்கவேண்டும். 5ஏனென்றால், உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்கள் எல்லாக்
கோத்திரங்களையும் பார்த்து அவர்க
ளிலிருந்து, லேவியரையும் அவர்களது
சந்ததியினரையும் என்றென்றும் ஆசாரிய
சேவை செய்ய தேர்ந்தெடுத்துள்ளார்.

6"உங்களில் வசிக்கின்ற ஒவ்வொரு
லேவியனும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில்
கர்த்தர் தேர்ந்தெடுத்த இடத்தில் பணி
செய்வான். ஆனால், அவன் மேலும் அதிக
நேரம் அங்குப் பணியாற்ற விரும்பினால்
அவன் எப்பொழுது வேண்டுமானாலும்
பணி செய்யலாம். இஸ்ரவேலில் எந்த
ஊர்களிலும், எந்தப் பகுதிகளிலும் வசித்து
வருகின்ற யாதொரு லேவியனும் அவன்
வசிக்கின்ற வீட்டிலிருந்து தேவாலயத்திற்கு
வரலாம். எந்த நேரத்திலும் அங்கு வந்து
சேவை செய்யலாம். 7அங்கே தேவாலயத்தில்
பணியாற்றுகின்ற மற்ற லேவியரான
சகோதரனைப்போல் இந்த லேவியனும்,
அவனது தேவனாகிய கர்த்தருடைய
நாமத்தில் அங்கே சேவை செய்யலாம்.
8இந்த லேவியன் தனது குடும்பம்
வழக்கமாகப் பெறுகின்ற பங்குடன் மற்ற
லேவியரின் சமபங்கையும் பெற்றுக்
கொள்வான்.

## இஸ்ரவேல் ஜனங்கள் மற்ற இனத்தவர்கள் போன்று வாழக்கூடாது

9"உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்க
ளுக்குத் தருகின்ற தேசத்திற்குள் நீங்கள்
போய்ச் சேரும்போது, மற்ற இனத்தவர்கள்
செய்கின்ற அருவருக்கத்தக்கச் செயல்களை

நீங்களும் செய்யக் கற்றுக் கொள்ளாதீர்கள்.
[10]உங்கள் மகன்களையோ, மகள்களையோ
பலிபீடங்களின் தீயிலிட்டு பலியிடக்கூடாது.
குறி சொல்கிறவன், நாள் பார்ப்பவன்,
மை போட்டு பார்ப்பவன், மந்திரவாதி,
அல்லது சூன்யக்காரன் ஆகியவர்களுடன்
சென்று அவர்களது வித்தைகளைக்
கற்றுக்கொள்ள முயற்சிக்காதீர்கள். [11]மற்ற
வர்கள் மீது மாயவித்தை வித்தைகளைச்
செய்ய யாரையும் அனுமதிக்காதீர்கள்.
உங்களில் யாரையும் மரித்தவர்களுடன்
அல்லது தீய ஆவிகளுடன் குறி கேட்க
அனுமதிக்காதீர்கள். அதுமட்டுமின்றி
உங்களில் யாரும் மரித்த எவரிடமும்
பேச முயற்சிக்கக் கூடாது. [12]உங்கள்
தேவனாகிய கர்த்தர் இப்படிப்பட்ட
செயல்களைச் செய்கின்ற ஜனங்களை
வெறுக்கின்றார். அதனால்தான் உங்களுக்
காக அந்த இனஜனங்களை இந்த தேசத்தை
விட்டே துரத்துகின்றார். [13]நீங்கள்
அனைவரும் உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு உண்மையானவர்களாக இருக்க
வேண்டும்.

### கர்த்தருடைய விசேஷ தீர்க்கதரிசி

[14]“நீங்கள் அந்த மற்ற இனஜனங்களை
உங்கள் தேசத்தை விட்டுத் துரத்திவிட
வேண்டும். அந்த இனஜனங்கள் மாயவித்தை
செய்கிறவர்களையும், குறி சொல்லு
பவர்களையும் நம்புகிறார்கள். ஆனால்
உங்கள் தேவனாகிய கர்த்தர் நீங்கள்
அவற்றைச் செய்வதை அனுமதிக்கமாட்டார்.
[15]உங்கள் தேவனாகிய கர்த்தர் ஒரு
தீர்க்கதரிசியை உங்களிடம் அனுப்புவார்.
அந்தத் தீர்க்கதரிசியை உங்கள் சொந்த
ஜனங்களிடமிருந்தே வரச்செய்வார். அவர்
என்னைப்போன்ற ஒருவராய் இருப்பார்.
நீங்கள் அவர் சொல்வதைக் கேட்க
வேண்டும். [16]தேவன் இந்தத் தீர்க்கதரிசியை
உங்களிடம் அனுப்புவது எதற்கென்றால்,
நீங்கள் இதைத்தான் தேவனிடம் கேட்டுக்
கொண்டீர்கள். ஓரேப் மலையிலே நீங்கள்
எல்லாரும் ஒன்றாகக் கூடிய நாளில் நீங்கள்
தேவனுடைய சத்தத்தைக் கேட்டும்,
மலையின்மீது நீங்கள் பார்த்த நெருப்பினைக்
கண்டும், பயந்தீர்கள். ஆதலால் நீங்கள்: ‘நமது
தேவனாகிய கர்த்தருடைய சத்தத்தை
நாங்கள் கேட்க அனுமதிக்க வேண்டாம்!
நாங்கள் மரிக்கின்ற அளவிற்கு ஏற்படக்
கூடிய மிகப்பெரிய அந்த அக்கனியை
நாங்கள் பார்த்திட அனுமதிக்க வேண்டாம்!’
என்றீர்கள். அதற்காகவே, இந்தத்
தீர்க்கதரிசியை அனுப்புகிறார்.

[17]“கர்த்தர் என்னிடம், ‘அவர்கள் கேட்டுக்
கொண்டது சரியே. [18]நான் உன்னைப்போல்
ஒரு தீர்க்கதரிசியை அவர்களிடம்
அனுப்புவேன். அந்தத் தீர்க்கதரிசி அவர்
களின் சொந்த ஜனங்களில் ஒருவனாக
இருப்பான். நான் அவன் பேச வேண்டியதை
எல்லாம் அவனுக்குச் சொல்லுவேன். அதை
அவன் அந்த ஜனங்களிடம் சொல்லுவான்.
நான் அவனுக்கு கட்டளையிட்டதை
யெல்லாம் அவன் அந்த ஜனங்களுக்குக்
கூறுவான். [19]அந்தத் தீர்க்கதரிசி எனக்காகப்
பேசுவான். அவன் அப்படி எனக்காகப்
பேசும்போது, என்னுடையக் கட்டளை
களைக் கூறும்போது, யாராவது அதைக்
கேட்க மறுத்தால், நான் அந்த அந்த
நபரைத் தண்டிப்பேன்’ என்று கூறினார்.

### பொய்த் தீர்க்கதரிசிகளை அறிவது எப்படி

[20]“ஆனால் நான் உங்களிடம்
சொல்லும்படி சொல்லாத சிலவற்றை ஒரு
தீர்க்கதரிசி கூறலாம். அதுமட்டுமின்றி, அந்தத்
தீர்க்கதரிசி நான் தேவனுக்காகப் பேசுகி
றேன் என்று சொல்லலாம். அப்படி ஏதும்
நடந்தால் பின் அந்தத் தீர்க்கதரிசி
கொல்லப்பட வேண்டும். ஒரு தீர்க்கதரிசி
பொய்த் தெய்வங்களுக்காகப் பேச
வந்திருக்கலாம். அப்படிப்பட்ட தீர்க்கதரிசி
கண்டிப்பாகக் கொல்லப்பட வேண்டும்.
[21]‘கர்த்தர் சொல்லாத சிலவற்றை இந்தத்
தீர்க்கதரிசிக் கூறுகிறான் என்பதை நாம்
எப்படி அறிந்துகொள்வது?’ என்று நீங்கள்
சிந்திப்பீர்களானால், [22]கர்த்தருக்காக நான்
பேசுகிறேன், என்று கூறும் தீர்க்கதரிசியின்
வார்த்தைகள் நடக்காமல் போனால், பின்
நீங்கள் கர்த்தர் இவற்றை கூறவில்லை
யென்று அறிந்துகொள்ளலாம். அந்தத்
தீர்க்கதரிசி பேசியது, அவனது சொந்தக்
கருத்துக்களே என்று நீங்கள் அறிந்து
கொண்டால், நீங்கள் அவனைப் பார்த்துப்
பயப்படத் தேவையில்லை.

### அடைக்கலப் பட்டணங்கள்

19 “மற்ற இனஜனங்களை அழித்துவிட்டு
உங்கள் தேவனாகிய கர்த்தர்
அவர்களது தேசத்தை உங்களுக்குத்
தருகின்றார். அவர்கள் வாழ்ந்த இடங்களி
லேயே நீங்கள் வாழப்போகிறீர்கள். நீங்கள்
அவர்களது நகரங்களையும், வீடுகளையும்
எடுத்துக்கொண்டு அனுபவிக்கப் போகி
றீர்கள். அப்படி நடக்கும்போது, [2-3]நீங்கள்
அந்த தேசத்தை மூன்று பிரிவுகளாக
பிரித்துக்கொள்ள வேண்டும். பின்
ஒவ்வொரு பிரிவிலும் எல்லாருக்கும்
மையமான ஒரு நகரத்தைத் தேர்ந்தெடுத்து,
அந்த நகரங்களுக்குச் சாலைகளையும்,
வீதிகளையும் அமைத்துக்கொள்ளுங்கள்.
அப்போது தற்செயலாக மற்றவர்களைக்
கொலை செய்திடும் நபர் பாதுகாப்பாய்
அந்நகருக்குள் ஓடிப்போகலாம்.

[4]“கொலை செய்தவன் எவனும்
அம்மூன்று நகரங்களில் ஒன்றில் ஓடிப்போய்
இருக்க வேண்டுவதற்கான நியாயம் என்ன

வென்றால்: அந்த நபர் மற்றவனைக்
கொன்றது எதிர்பாராதவிதமாக நடந்திருக்க
வேண்டும். தான் மனதறியாது எவ்வித முன்
வெறுப்பும் இல்லாது கொன்றிருக்க
வேண்டும். 5 இங்கு உதாரணமாகச்
சொன்னால், ஒருவன் மற்றவனோடு விறகு
வெட்ட காட்டிற்குச் சென்று மரத்தை
வெட்டும்படி தன் கையிலிருக்கும்
கோடரியை ஓங்கும்போது, அதிலிருந்த
இரும்பானது கைப்பிடியை விட்டு கழன்று
மற்றவன்மேல் விழுந்ததினால் அவன்
மரித்துப்போனால், அந்தக் கோடரியை
ஓங்கியவன், அம்மூன்று பட்டணங்கள்
ஒன்றில் ஓடிப்போய் பாதுகாப்படைந்து
கொள்ளலாம். 6 ஆனால், இந்தப் பட்டணம்
வெகுதூரத்தில் இருப்பதினால் போதுமான
வேகத்திற்கு அவனால் ஓடமுடியாமல்
போகலாம். அப்போது கொலையுண்ட
வனின் நெருங்கிய உறவினன் பழிவாங்கும்
நோக்கத்தோடு அவனை விரட்டக்கூடும்.
அவன் கோபவேசம் நிறைந்தவனாய்
கொலை செய்தவனை நெருங்கியவுடன்
அவனைக் கொன்று போடக்கூடும். இப்படி
அவன் மரிக்க வேண்டியவனல்ல. ஏனெனில்,
அவன் முன் விரோதமின்றி கொலை
செய்தவனாவான். 7 இந்த மூன்று நகரங்களும்
அவைகளைச் சுற்றியுள்ள ஜனங்களுக்கு
அருகாமையில் இருக்கவேண்டும். அதனால்
தான், நீங்கள் விசேஷமான அந்த மூன்று
நகரங்களைத் தேர்ந்தெடுக்கக் கட்டளை
யிட்டேன்.

8 "உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்கள்
பிதாக்களுக்கு வாக்களித்தபடி உங்கள்
தேசத்தை விரிவுபடுத்தி, உங்கள் முற்பிதாக்
களுக்குக் கொடுத்த வாக்கின்படி உங்களுக்கு
இந்த தேசம் முழுவதையும் தருவார். 9 தேவன்
இதை உங்களுக்குச் செய்ய வேண்டு
மென்றால், நான் இன்று உங்களுக்குத்
தருகின்ற கட்டளைகளுக்கெல்லாம் நீங்கள்
கீழ்ப்படிந்து, உங்கள் தேவனாகிய கர்த்தர்
மீது நீங்கள் அன்பு செலுத்தும்பொருட்டு
அவர் விரும்பியபடி நீங்கள் வாழவேண்டும்.
பின் கர்த்தர், உங்கள் தேசத்தை விரிவாக்கித்
தருவதோடு, உங்கள் அடைக்கலத்திற்காக
மூன்று பட்டணங்களை நீங்கள்
அமைத்துக்கொள்ளச் செய்வார். 10 பின்
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுக்கு
வழங்குகின்ற தேசத்தில் கள்ளம்கபடில்லாத
அப்பாவி ஜனங்கள் கொல்லப்பட
மாட்டார்கள். அதுமட்டுமின்றி, உங்கள் மீது
எவ்வித கொலைக் குற்றமும் சுமத்தப்படாது.

11 "ஒருவன் வேறொருவன் மீது
வெறுப்படைந்து அவனைப் பழிவாங்கும்
விரோதத்தோடு காத்திருந்து அவன்
மரிக்கும்படி அடித்துவிட்டு, இந்த நகரங்
களுக்குள் ஒன்றில் ஓடிப்போய், தன்னைக்
காத்துக்கொள்வான் என்றால், 12 அந்த
நகரத்தின் மூப்பர்கள் ஆள் அனுப்பி, அவன்
தன்னைப் பாதுகாத்துக் கொண்டிருக்கும்
வீட்டிற்குச் சென்று அவனைக்
கொண்டுவந்து, அவனைப் பழிவாங்கத்
துடிக்கும் மரித்தவனின் உறவினர்களிடம்
ஒப்படைத்துவிட வேண்டும். கொலை
செய்தவன் கண்டிப்பாக மரிக்கவேண்டும்.
13 நீங்கள் அவர்களுக்காக வருத்தப்படாதீர்கள்.
அவன் ஏதுமறியாத ஒரு அப்பாவியை
கொன்ற குற்றவாளி. நீங்கள் அந்தக்
குற்றத்தை இஸ்ரவேலில் இருந்து அப்புறப்
படுத்த வேண்டும், அப்போது, எல்லாம்
உங்களுக்கு நல்லதாக அமையும்.

### சொத்திற்கான எல்லை

14 "உங்களது அயலாரின் சொத்திற்கான
எல்லைக் கல்லை நீங்கள் நகற்றக் கூடாது.
உங்களது தேவனாகிய கர்த்தர் உங்களுக்குத்
தந்த நிலத்தில் உங்களது முன்னோர் இட்ட
எல்லைக் கோடுகளையே நீங்களும்,
அவரவரது சொத்திற்கான எல்லைக் கற்
களாக அடையாளமிட்டு வையுங்கள்.

### சாட்சிகள்

15 "சட்டத்திற்கு எதிராக ஏதாவது
குற்றத்தைச் செய்த நபரை, ஒரே ஒரு
சாட்சியை வைத்து 'அவன் குற்றவாளி'
என்று நிரூபிக்காதீர்கள். அவன் அக்குற்றத்
தைச் செய்தானா இல்லையா என்பதை,
இரண்டு அல்லது மூன்று சாட்சிகளை
வைத்து நிரூபிக்கவேண்டும்.

16 "ஒருவன் குற்றத்தைச் செய்தான் என்று
மற்றொருவன் அவன் மேல் பொய்
சொல்லக்கூடும். 17 பின், அவ்விருவரும்
கர்த்தருடைய ஆலயத்திற்குச் சென்று
நீதியைப் பெற, அங்கு பணியில் இருக்கும்
ஆசாரியர் மற்றும் நீதிபதிகளிடம்
நிற்கவேண்டும். 18 நீதிபதிகள், நன்றாக
விசாரிப்பதன் மூலம் அந்த நபருக்கு எதிராக
பொய்சாட்சி கூறியதாகக் கண்டறிந்தால்,
அவன் பொய்சாட்சி என்று நிரூபிக்கப்
பட்டால், 19 நீங்கள் அவனைத்
தண்டிக்கவேண்டும். அவன் மற்றவர்களுக்குச்
செய்ய விரும்பியதையே நீங்கள் அவனுக்குச்
செய்யவேண்டும். இந்தவிதமாக, இந்தத்
தீமையை உங்கள் சமுதாயத்திலிருந்து
அகற்றிவிட வேண்டும். 20 மற்ற ஜனங்கள்
அனைவரும் இதைக் கேட்டும் கண்டும்
பயப்படுவார்கள். அதுமட்டுமின்றி, மீண்டும்
இத்தகைய தீயச் செயலைச் செய்யா
திருப்பார்கள்.

21 "குற்றங்களுக்குத் தகுந்தாற்போல் தண்ட
னைகளும் கடுமையாக இருக்கவேண்டும்.
ஒருவன் செய்த குற்றத்திற்காக அவனைத்
தண்டிக்கின்றபோது, அதற்காக நீங்கள்
வருத்தம் கொள்ளாதீர்கள். ஒருவன் ஒரு
உயிரை எடுத்தான் என்றால் அவன்
கண்டிப்பாக அவனது உயிரை இழப்பான்.

கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல், கைக்குக்
கை, காலுக்குக் கால், என்பதே சட்டமாகும்.

### போருக்கான விதிகள்

20 “நீங்கள் உங்கள் எதிரிகளை எதிர்த்து,
போருக்காகச் செல்லும்போது குதிரை
களையும், இரதங்களையும், உங்களிடமிருப்ப
வர்களைவிட மிகுதியான ஜனங்களையும்
அவர்களிடம் கண்டால், அவற்றைக் கண்டு
பயப்படாதிருங்கள். ஏனென்றால் எகிப்து
தேசத்திலிருந்து வெளியே அழைத்து வந்த
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களோடு
கூடவே இருக்கின்றார்.
2 “நீங்கள் போருக்குச் செல்கின்றபோது,
ஆசாரியன் போர் வீரர்களுடன் சேர்ந்து
வந்து அவர்களுடன் பேசவேண்டும்.
3 ஆசாரியன் உங்களிடம், ‘இஸ்ரவேல்
ஜனங்களே நான் கூறுவதை கேளுங்கள்,
நீங்கள் இன்று போரில் உங்கள் எதிரிகளை
எதிர்த்துப் போரிடப் போகின்றீர்கள். நீங்கள்
மனந்தளர்ந்து விடாதீர்கள்! நீங்கள்
அவர்களைக் கண்டு கலக்கமோ, விரக்தியோ
அடைந்து விடாதீர்கள்! உங்கள்
எதிரிகளைக் கண்டு பயந்து விடாதீர்கள்!
4 ஏனென்றால் உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களோடு வருகின்றார். அவர் உங்கள்
எதிரிகளை எதிர்த்து நீங்கள் போரிட
துணை செய்வார். உங்கள் தேவனாகிய
கர்த்தர் நீங்கள் வெற்றிப் பெற துணை
புரிவார்!’ என்று கூறவேண்டும்.
5 “அந்த லேவிய அதிகாரிகள் வீரர்களிடம்:
‘இங்கே யாராவது புது வீட்டைக்கட்டி
இன்னும் அவ்வீட்டைப் பிரதிஷ்டை
செய்யாமல் இங்கு போருக்காக வந்திருப்
பீர்கள் என்றால், அவன் அவ்வீட்டிற்கு
திரும்பிச் செல்லவேண்டும். ஏனென்றால்
போரில் அவன் கொல்லப்பட்டால் அவனது
வீட்டினை மற்றொருவன் பிரதிஷ்டைபன்ன
நேரிடும். 6 தன் தோட்டத்தில் திராட்சையைப்
பயிரிட்டு, அதன் பலனை அனுபவிக்காதவர்
யாரும் இங்கே இருந்தால், அவர்கள் தம்
வீட்டிற்குத் திரும்பிச் செல்லலாம். ஏனெனில்
யுத்தத்தில் அவன் மரித்துவிட்டால், பின்
வேறொருவன் அவன் தோட்டத்துத்
திராட்சையை அனுபவிக்க நேரிடும். 7 திரு
மணம் நிச்சயிக்கப்பட்டவன் யாரேனும்
இங்கு இருந்தால் அவன் தன் வீட்டிற்குத்
திரும்பிச் செல்லலாம். போரில் அவன்
மரித்து விட்டால், பின் வேறொருவன்
இவனுக்கு நிச்சயிக்கப்பட்ட பெண்ணை
மணந்துகொள்ள நேரிடும்’ என்று
சொல்வார்கள்.
8 “மேலும் அவ்வதிகாரிகள் ஜனங்களிடம்
கண்டிப்பாகக் கூறவேண்டியது, ‘இங்கே
தன்னம்பிக்கை இழந்து, பயந்துகொண்டு
இருக்கின்ற தைரியமற்றவர்கள் யாராவது
இருந்தால் வீட்டிற்குத் திரும்பிச் சென்றுவிட
வேண்டும். அப்போதுதான் மற்ற வீரர்கள்
மனந்தளர்ந்திட இவன் காரணமாக இருக்க
மாட்டான்.’ 9 பின்பு, அந்த அதிகாரிகள் படை
வீரர்களுடன் பேசி முடித்தபின்பு,
வீரர்களைத் தலைமை ஏற்றுச்செல்ல
தளபதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.
10 “நீங்கள் ஒரு நகரத்தைத் தாக்கச்
செல்லும்போது, முதலில் அந்த நகர
ஜனங்களுக்கு சமாதானம் கூறவேண்டும்.
11 அவர்கள் உங்களது சமாதானத்தை ஏற்றுக்
கொண்டால், அவர்களது வாசல்களைத்
திறந்திடுவார்கள். பின், அந்நகரத்தின் எல்லா
ஜனங்களும் உங்களது அடிமைகளாகி
விடுவதுடன், உங்களுக்காக ஊழியம் செய்ய
முன் வருவார்கள். 12 ஆனால், அந்த நகர
ஜனங்கள் உங்களோடு சமாதானம் செய்ய
மறுத்து உங்களை எதிர்த்து சண்டை
யிட்டால், நீங்கள் அந்த நகரத்தை
முற்றுகையிடுங்கள். 13 உங்கள் தேவனாகிய
கர்த்தர் அந்நகரைக் கைப்பற்ற உங்களை
அனுமதிக்கும்போது, நீங்கள் அங்குள்ள
ஆண்கள் அனைவரையும் கொல்லவேண்டும்.
14 ஆனால் நீங்கள் அங்குள்ள பெண்கள்,
குழந்தைகள், மாடுகள் ஆகியவற்றைக்
கொல்லாமல் உங்களுக்காக அந்நகரிலுள்ள
எல்லாப் பொருட்களையும் எடுத்து
அனுபவிப்பீர்களாக. இந்த எல்லாப் பொருட்
களையும், நீங்கள் பயன்படுத்திக்
கொள்ளலாம். உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்காகவே இவற்றையெல்லாம்
கொடுத்துள்ளார். 15 நீங்கள் வசிக்கின்ற
நகரங்களையுடைய இந்த தேசத்தை விட்டு
வெகு தூரத்திலுள்ள எல்லா நகரங்களிலும்
இவ்வாறே செய்வீர்களாக.
16 “உங்கள் தேவனாகிய கர்த்தர்,
உங்களுக்குத் தருகின்ற தேசத்தில் நீங்கள்
எடுத்துக்கொள்ளப் போகிற நகரங்களில்
இருக்கின்ற ஒவ்வொருவரையும் கொன்
றுவிட வேண்டும். 17 அங்குள்ள ஜனங்கள்
இனங்களான ஏத்தியர், எமோரியர்,
கானானியர், பெரிசியர், ஏவியர், எபூசியர்
ஆகியவற்றை முழுமையாக அழித்துவிட
வேண்டும். உங்கள் தேவனாகிய கர்த்தர்
நீங்கள் இதைச் செய்யக் கட்டளை
யிட்டுள்ளார். 18 ஏனென்றால் அவர்கள்
உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு எதிராக
உங்களை எந்தவொரு பாவத்தையும்
செய்யக் கற்றுக்கொடுக்க முடியாது.
அவர்கள் பொய்த் தெய்வங்களைத் தொழுது
கொண்ட அந்த அருவருப்பான செயல்களில்
எந்த ஒன்றையும் உங்களை செய்யுமாறு
கற்றுக்கொடுக்க இயலாத வண்ணம்
அவர்களை அழிக்கவேண்டும்.
19 “நீங்கள் ஒரு நகரத்தை எதிர்த்துப்
போர் செய்யும்போது, அந்நகரத்தை
நீண்டகாலம் முற்றுகையிடுகின்ற நிலையில்
அந்நகரைச் சுற்றிலும் உள்ள எந்தவொரு
பழங்கள் தரக்கூடிய மரத்தையும் நீங்கள்
வெட்டக்கூடாது, நீங்கள் அவற்றை

வெட்டாமல் இருந்தால்தான், அந்த மரங்
களிலிருந்து நீங்கள் உண்ணுவதற்காகப்
பழங்களைப் பெறலாம். அந்த மரங்கள்
எல்லாம் உங்களுக்கு எதிரி அல்ல.
ஆகையால், அவைகளுக்கு எதிராக நீங்கள்
போரிட வேண்டாம். 20ஆனால் உண்ணு
வதற்கேற்ற பழங்களைத் தராத மரங்கள்
என்று நீங்கள் அறிந்தபின் அந்த மரங்களை
வெட்டிக்கொள்ளலாம். நீங்கள், அந்த
மரங்களை எடுத்து அந்த நகரத்தை
முற்றுகையிடவும், அந்நகருக்கு எதிராக
நடத்தும் போரில் தேவையான
படைக்கருவிகள் செய்வதற்கும் பயன்
படுத்திக் கொள்ளலாம். அவ்வாறு அந்நகரம்
வீழ்ச்சி அடையும்வரை, நீங்கள் அவற்றை
பயன்படுத்திக் கொள்ளலாம்.

### கொலை செய்யப்பட்டவனைக் குறித்த காரியம்

21 “உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குக் கொடுக்கின்ற தேசத்தில்
உள்ள வயலில் ஒரு மனிதன் கொலை
செய்யப்பட்டுக் கிடப்பதைக் கண்டறிந்தால்,
அவனைக் கொன்றது யார் என்று
யாருக்கும் தெரியவில்லை என்றால்,
2உங்களது தலைவர்களும்,நீதிபதிகளும் அந்த
இடத்திற்கு வந்து கொல்லப்பட்ட நபரைச்
சுற்றிலும் உள்ள ஊர்களின் தொலைவை
அளந்து பார்க்கவேண்டும். 3மரித்துக்
கிடப்பவனுக்கு அருகிலுள்ள ஊர் எது
என்பதை நீங்கள் அறிந்தவுடன், அந்த ஊரின்
தலைவர்கள், அவர்களது மந்தை யிலிருந்து
ஒரு மாட்டினைக் கொண்டுவரச்
செய்யவேண்டும். அந்த மாடானது கன்று
இல்லாத கிடாரியாக இருக்கவேண்டும்.
அதுமட்டுமின்றி, எவ்விதப் பணிகளுக்கும்
பயன்படுத்தப்படாத மாடாக அது இருக்க
வேண்டும். 4அந்த ஊரின் தலைவர்கள்
அந்த மாட்டை அந்த ஊரின் பள்ளத்
தாக்கிற்குக் கொண்டுவர வேண்டும். அந்தப்
பள்ளத்தாக்கானது உழுதிட முடியாமலும்,
எவ்விதப் பயிரையும் பயிர் செய்ய முடியாத
நிலமாக இருக்கவேண்டும். பின் அந்த
தலைவர்கள் அந்த மாட்டின் தலையைப்
பள்ளத்தாக்கில் விழுமாறு வெட்டிப்
போடவேண்டும். 5லேவியின் சந்ததியினரான
ஆசாரியர்கள் அத்தருணத்தில் அங்குச்
செல்லவேண்டும். (உங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு சேவைச் செய்வதற்கும்,
அவருடைய நாமத்தால் ஜனங்களை
ஆசீர்வதிக்கவும் இந்த ஆசாரியர்களைத்
தேர்ந்தெடுத்துள்ளார். அவர்களும் அத்தரு
ணத்தில் வந்திருக்க வேண்டும். ஏனெனில்,
அவர்களே யாருடைய மனதும்
புண்படாதவாறு சரியாக விசாரித்து
அதற்கேற்ற முடிவை சகல வழக்கிற்கும் ஏற்ற
தீர்ப்பாக அளிப்பார்கள்.) 6கொலை
செய்யப்பட்ட மனிதனுக்கு அருகிலுள்ள
ஊரின் தலைவர்கள் எல்லோரும், பள்ளத்
தாக்கில் கழுத்து வெட்டப்பட்டு தலை
துண்டிக்கப்பட்டக் கிடாரியின்மேல் தங்கள்
கைகளை கழுவிட வேண்டும். 7பின்பு, அந்தத்
தலைவர்கள் சொல்லவேண்டியது: ‘நாங்கள்
இந்த மனிதனைக் கொல்லவில்லை. இது
நடந்ததையும் நாங்கள் பார்க்கவில்லை.
8கர்த்தாவே, இஸ்ரவேலரை காப்பாற்றும்,
நாங்கள் உமது ஜனங்கள். இப்போதும்
எங்கள்மேல் குற்றம் இல்லாத இரத்தப்
பழியைச் சுமத்தாமல் காப்பீராக. ஏதுமறியாத
மனிதனைக் கொல்லுகின்ற குற்றத்தை
சுமத்தாது காப்பீராக.’ இவ்வாறு அவர்கள்
குற்றமற்ற ஒருவனைக் கொல்லும்
குற்றத்தைச் செய்தவர்களாக மாட்டார்கள்.
9இவ்வாறாக, நீங்கள் சரியானவற்றை
செய்வதன் மூலம் உங்களுக்குள்ளிருந்து
அந்த குற்றத்தை விலக்குவீர்கள்.

### போரில் கைதான பெண்கள்

10“நீங்கள் உங்கள் எதிரிகளுக்கு எதிராகச்
சண்டையிடும்போது, உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களிடம் அவர்களைத் தோல்வி
யடையச் செய்யும்போது, நீங்கள் அந்தப்
பகைவர்களைச் சிறைப்பிடித்து வந்திருக்
கலாம். 11அந்த கைதிகளில் உள்ள ஒரு
அழகியப் பெண்ணைக் கண்டு, அவளை
உங்களில் ஒருவன் மனைவியாக்கிக்கொள்ள
விரும்பினால், 12அவளை அவன் வீட்டிற்கு
அழைத்து வரவேண்டும். அவள் தன்
தலையை மொட்டையடித்து தன் நகங்களை
வெட்டிக்கொள்ள வேண்டும். 13அவள்
அணிந்திருந்த போர்க்கைதிக்குரிய ஆடை
களை நீக்கிவிட வேண்டும். அவள் தான்
இழந்த தந்தை, தாயை எண்ணி உங்கள்
வீட்டில் ஒரு மாதம் முழுவதும் துக்கம்
கொண்டாட வேண்டும். அதற்குப் பின்பு
அவன் அவளிடம் சென்று அவளுக்குக்
கணவனாக வாழலாம். அவள் அவனுக்கு
மனைவியாக இருப்பாள். 14அவளோடு
வாழ்வது அவனுக்கு மகிழ்ச்சி அளிக்க
வில்லை என்றால், அவன் அவளை
விவாகரத்து செய்து, அவள் இஷ்டம்போல்
அவளை வாழ அனுமதித்து விடவேண்டும்.
நீங்கள் அவளை விற்க முடியாது. நீங்கள்
அவளை அடிமையாக நடத்தவும் கூடாது.
ஏனென்றால் உங்களில் ஒருவன் அவ
ளோடு ஏற்கனவே தாம்பத்திய உறவு
கொண்டாயிற்று.

### மூத்த மகன்

15‘‘ஒருவன் இரண்டு மனைவிகளைப்
பெற்றிருந்து, அவன் ஒருத்தி மேல் மட்டும்
மற்றவளைவிட அன்பு செலுத்திட, இரண்டு
மனைவிகளும் அவனது குழந்தைகளைப்
பெற்றிருக்க, அதில் முதல் குழந்தை, இவன்
அதிகம் நேசிக்காத மனைவியின் குழந்தை
யாக இருக்கலாம். 16தந்தையானவன் தனது

சொத்தினை தன் பிள்ளைகளுக்குப் பங்கிடும்
நாளில் தான் நேசிக்காமல் வெறுக்கிற
மனைவியிடத்தில் பிறந்த முதல் பிள்ளைக்கு
சேஷ்ட புத்திர சுதந்திரத்தைக் கொடுக்க
வேண்டுமே தவிர தான் விரும்பும்
மனைவியிடத்தில் பிறந்த குழந்தைக்குக்
கொடுக்ககூடாது. 17அவன் தான் நேசிக்காத
மனைவியிடம் பிறந்த முதல் மகனை தனது
குடும்பத்தின் மூத்த பிள்ளையாக ஒப்புக்
கொள்ள வேண்டும். அவன் தனது மூத்த
மகனுக்கு தன்னுடைய எல்லாவற்றிலும்
இரண்டு பங்கினைக் கொடுக்கவேண்டும்.
ஏனென்றால், அந்தக் குழந்தையே அவனது
மூத்த குழந்தை. அந்த குழந்தையே
மூத்தபிள்ளைக்கான உரிமையைப் பெறு
கிறது.

### கீழ்ப்படிய மறுக்கும் பிள்ளைகள்

18“தன் தந்தையின் சொல்லையும், தாயின்
சொல்லையும் கேட்காமலும், அவர்களுக்கு
அடங்காமலும் கீழ்ப்படிய மறுக்கின்ற
தண்டனைக்குரிய மகன் ஒருவனுக்கு
இருந்தால் அவனை தண்டித்தும் இன்னும்
அவர்கள் சொன்னபடிக் கேட்க மறுப்
பவனாய் இருந்தால், 19அவனது தந்தையும்,
தாயும் அவனை அழைத்துக்கொண்டு, அந்த
ஊர் தலைவர்களிடம் வந்து, ஊர்
கூடுமிடத்தில் வந்த நிற்கவேண்டும்.
20அவர்கள் நகரத் தலைவர்களிடம்: ‘எங்க
ளது மகன் எங்களுக்குக் கீழ்ப்படிய மறுத்து,
எங்களுக்கு அடங்காதவனாக இருக்கிறான்.
நாங்கள் அவனிடம் செய்யச் சொல்வது
எதையும் அவன் செய்வதில்லை. அவன்
அளவுக்கு அதிகமாகக் குடிக்கவும்,
சாப்பிடவும் செய்கிறான்’ என்று சொல்ல
வேண்டும். 21பின் ஊரிலுள்ளவர்கள் அந்த
மகனைச் மரிக்கும்வரை கற்களால் அடிப்
பார்கள். இவ்வாறு செய்வதன் மூலம் உங்கள்
மத்தியில் உள்ள இந்த தீமையை
விலக்கிவிடுங்கள். இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும் அதைக் கேட்டுப் பயப்
படுவார்கள்.

### கொலைக் குற்றவாளிகள் கொல்லப்படுவதும், தூக்கில் இடப்படுவதும்

22“ஒருவன் மரணதண்டனை பெறத்தக்க
பாவம் செய்த குற்றவாளியாக இருக்கலாம்,
ஜனங்கள் அவனைக் கொன்ற பிறகு
அவனது உடலை மரத்திலே தொங்கவிட
வேண்டும். 23இரவு முழுவதும் அவனது
உடலை மரத்திலேயே தொங்க விடக் கூடாது.
அந்த நாளிலேயே அவனை நீங்கள் அடக்கம்
செய்திட வேண்டும். ஏனென்றால்,
மரத்தின்மேல் தூக்கிலிடப்பட்ட அவன்
தேவனால் சபிக்கப்பட்டவன். உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்குத் தருகின்ற
தேசத்தை நாசபடுத்தக் கூடாது.

### பிற சட்டங்கள்

22 “உங்கள் பக்கத்து வீட்டுக்காரரின்
ஆடாவது மாடாவது வழிதப்பிச்
செல்வதைக் கண்டால், நீங்கள் அதைக்
காணாதவர்போல் இருந்து விடாதீர்கள்.
அதை உரியவர்களிடம் திருப்பிக் கொண்டு
போய் ஒப்படைக்க வேண்டும். 2ஒருவேளை,
அதன் சொந்தக்காரர் உங்களுக்கு அருகில்
குடியில்லாதவராகவோ,அல்லது உங்களுக்கு
அறிமுகமில்லாதவராகவோ இருந்தால்
நீங்கள் அதை உங்கள் வீட்டுக்குக் கொண்டு
சென்று, உரியவர் தேடிவரும்வரை
உங்களிடமே வைத்திருந்து அவரிடம்
திரும்பக் கொடுக்கவேண்டும். 3அதுபோன்றே
அவர்களது கழுதையைக் கண்டாலும்,
அவர்களது ஆடைகளையோ மற்றும் எந்தப்
பொருளானாலும் சரி, நீங்கள் அவற்றைக்
கண்டுபிடித்தால், அவற்றைக் காணா
ததுபோல் இராமல் உரியவர்களுக்கு
உதவவேண்டும்.
4“உங்களின் பக்கத்து வீட்டுக்காரரின்
கழுதையாவது, மாடாவது சாலையில்
விழுந்து கிடப்பதை நீங்கள் பார்த்தால்,
அதைப் பார்க்காததுபோல் சென்றுவிடாமல்,
நீங்கள் அவருடன் சேர்ந்து தூக்கிவிட
உதவிசெய்ய வேண்டும்.
5“ஒரு பெண், ஆணின் உடைகளை
அணியக்கூடாது. அதுபோல் ஒரு ஆண்
பெண்ணின் ஆடைகளை அணியக்கூடாது
உங்கள் தேவனாகிய கர்த்தர் இதை மிகவும்
வெறுக்கின்றார்.
6“பாதைவழியே நீங்கள் நடந்து
செல்லும்போது மரத்தில் அல்லது தரையில்
ஏதேனும் ஒரு பறவைக் கூட்டைக் கண்டால்,
அதில் தாய்ப் பறவையானது தன் குஞ்சு
களையாவது, முட்டைகளையாவது அடை
காப்பதைக் கண்டால், நீங்கள் அந்தத் தாய்ப்
பறவையை அதன் குஞ்சுகளை விட்டு
பிரிக்கக்கூடாது. 7நீங்கள் உங்களுக்காக
குஞ்சுகளை வேண்டுமானால் எடுத்துக்
கொள்ளலாம். ஆனால் தாய்ப் பறவையைப்
போகவிட்டுவிட வேண்டும். இந்த நியாயங்
களுக்குக் கீழ்ப்படிந்தால் நீங்கள் நன்றாயிருப்
பதுடன், நீண்ட காலமும் வாழலாம்.
8“நீங்கள் புது வீடு கட்டும்போது உங்க
ளின் மாடித்தளத்தைச் சுற்றிலும் சிறிய சுவர்
எழுப்பவேண்டும். அப்படிச் செய்தால் அந்த
மாடியிலிருந்து விழுந்து மரித்தவனின்
கொலைப் பழியை நீங்கள் சுமக்க
வேண்டியதில்லை.

### நீங்கள் ஒன்று சேர்க்கக் கூடாதவை

9“நீங்கள் உங்கள் திராட்சைத் தோட்டத்
திலேயே பிற தானியங்களையும் விதைக்கக்
கூடாது. ஏனென்றால், நீங்கள் விதைத்த
பயிர்களையும், திராட்சைத் தோட்டத்தின்
பலனையும் பரிசுத்தமற்றதாக ஆக்கி விடு
வீர்கள். அதனால் அவை பயனற்றவை

யாகிவிடும். அவற்றில் எதனையும் நீங்கள் பயன்படுத்த முடியாது.
10 "நீங்கள் மாட்டையும் கழுதையையும் பிணைந்து உழக்கூடாது.
11 "நீங்கள், ஆட்டு ரோமத்தாலும் பஞ்சு நூலாலும் கலந்து நெய்த ஆடையை அணியக்கூடாது.
12 "நீங்கள் அணிந்து கொள்கின்ற உங்களது மேல் சட்டையின் நான்கு ஓரங்களிலும், நூல் குஞ்சங்களாலான தொங்கல்களைச் செய்திட வேண்டும்.

### திருமணச் சட்டங்கள்

13 "ஒருவன் ஒருத்தியைத் திருமணம் செய்து அவளுடன் பாலின உறவு கொண்ட பின்பு, அவளை விரும்பவில்லை என்று முடிவுசெய்து,
14 அவன் அவள் மீது பொய்யாக, 'நான் இந்தப் பெண்ணைத் திருமணம் செய்து, அவளோடு பாலின உறவுகள் வைத்துக் கொள்ளும்போது அவள் கற்பில்லாதவள் என்பதைக் கண்டேன்' என்று கூறி அதன் மூலம், ஜனங்கள் மத்தியில் அவள் மீது கெட்ட எண்ணங்களை உருவாக்கினால்,
15 அந்தப் பெண்ணின் தாயும் தந்தையும் தன் மகள் கற்புடையவள் என்பதற்கான ஆதாரத்துடன் ஊர் கூடும் இடத்திற்கு வந்து, அவ்வூரின் தலைவர்கள் முன்பு நிற்கவேண்டும்.
16 பெண்ணின் தந்தை ஊரின் தலைவர்களிடம், 'என் மகளை இந்த மனிதனுக்கு மனைவியாகத் திருமணம் செய்து கொடுத்தேன், ஆனால் இப்போது இவன் அவளை வெறுத்து,
17 'நான் உன் மகளிடம் கற்புத்தன்மை இருப்பதைக் காணவில்லை' என்று என் மகளுக்கு எதிரான பொய்களைக் கூறிவிட்டான். ஆனால், இதோ என் மகள் கற்புடையவள் என்பதற்கான ஆதாரம்' என்று கூறி தன் மகளின் முதலிரவுப் படுக்கையின் மேல் விரித்த விரிப்புத் துணியைக் காட்டுவார்.
18 பின் அவ்வூர்த் தலைவர்கள் அவனைப் பிடித்துத் தண்டிப்பார்கள்.
19 அவனிடமிருந்து அபராதமாக 100 வெள்ளிக் காசுகளை வாங்கி பெண்ணின் தந்தையிடம் கொடுக்க வேண்டும். (ஏனெனில், அவள் கணவன் இஸ்ரவேல் பெண்ணுக்கு அவமானத்தைக் கொண்டு வந்தான்.) பின் அந்தப் பெண் அவனுக்கு தொடர்ந்து மனைவியாக இருக்கவேண்டும். அவன் தன் வாழ்நாள் முழுவதும் அவளை விவாகரத்து செய்யக் கூடாது.[s]
20 "ஆனால், அவன் கூறியபடி அவனது மனைவி கற்புத்தன்மை இல்லாதவள் என்பது உண்மையாக இருந்தால், அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் அவள் கற்புடையவள் என்பதற்கான ஆதாரத்தை நிரூபிக்கவில்லையென்றால்,
21 ஊர்த்தலைவர்கள் அந்தப் பெண்ணை அவளது தந்தை வீட்டு வாசலுக்கு முன்பாகக் கொண்டுவந்து, ஊர்ஜனங்கள் அவளைக் கல்லால் அடித்துக் கொல்லவேண்டும். ஏனென்றால், இஸ்ரவேலில் அந்தப் பெண் அவமானமான செயல் ஒன்றைச் செய்துள்ளாள். தன் தந்தை வீட்டில் ஒரு வேசியைப் போன்ற செயலைச் செய்த பாவியாக இருந்துள்ளாள். உங்கள் மத்தியில் இந்தத் தீமையை இப்படியே விலக்கிட வேண்டும்.

### பாலுறவுப் பாவங்கள்

22 "ஒருவன் மற்றவனது மனைவியுடன் தகாத பாலுறவு கொள்வது கண்டு பிடிக்கப் பட்டால், சம்பந்தப்பட்ட இருவரும் தகாத உறவு கொண்ட அந்தப் பெண்ணும் ஆணும் ஆகிய இருவரும் மரிக்கவேண்டும். நீங்கள் இந்தத் தீயச் செயலை இஸ்ரவேலிலிருந்து இவ்வாறே விலக்கிவிட வேண்டும்.
23 "ஒருவனுக்குத் திருமணம் செய்ய நிச்சயிக்கப்பட்டுள்ள கற்புள்ள பெண் ஒருத்தியை வேறொருவன் சந்தித்து அவளுடன் பாலுறவு தொடர்பு வைத்துக் கொள்வது நகரில் நடந்ததென்றால்,
24 பின் நீங்கள் அவ்விருவரையும் நகர எல்லையின் பொது இடத்திற்குக் கொண்டுவந்து அவர்களைக் கற்களால் எறிந்து கொல்ல வேண்டும். நீங்கள் அவனைக் கொல்வது எதற்கென்றால், அவன் அடுத்தவனது மனைவியைக் கற்பழித்தப் பாவத்திற்காக. அவளைக் கொல்வது எதற்கென்றால், அவள் இந்நகரத்தில் அவ்வாறு நடக்கும்போது, அதிலிருந்து தப்பிக்க யாரையும் கூக்குரலிட்டு அழைக்காமல் இருந்ததால். உங்கள் மத்தியிலிருந்து இப்படிப்பட்ட தீமையை இவ்வாறு விலக்கிட வேண்டும்.
25 "ஆனால், ஒருவனுக்கு நிச்சயிக்கப்பட்ட பெண்ணை வெளி இடங்களில் கண்ட ஒருவன் அவளைப் பலவந்தமாகப் பிடித்துக் கற்பழித்தாக அறிந்தால், அவனை மட்டும் கொன்றுவிட வேண்டும்.
26 அந்தப் பெண்ணை ஒன்றும் செய்து விடாதீர்கள். அவள், மரிக்கும் தண்டனையைப் பெறும் அளவிற்கு ஏதும் செய்துவிடவில்லை. இது ஒரு நபர் தன் பக்கத்து வீட்டுக்காரனை திடீரெனத் தாக்கி அவனைக் கொல்வதற்குச் சமமானது.
27 வெளி இடத்திலே அவன் அவளைக் கண்டதும் அவளைத் தன் பலத்தினால் பிடிக்க, அவள் தனக்கு உதவிட கூக்குரலிட்டபோதும் அவளைக் காப்பாற்ற அங்கு யாரும் இல்லாததால் அவளைத் தண்டிக்க வேண்டாம்.
28 "ஒருவன், இன்னும் திருமணம் நிச்சயிக்கப்படாத ஒரு கன்னிப்பெண்ணை பலவந்தமாகப் பிடித்து கற்பழிப்புச் செய்ததை மற்ற ஜனங்கள் பார்த்துவிட்டால்,
29 அவன் அவளது தந்தைக்கு 50 வெள்ளிக் காசுகளை கொடுக்கவேண்டும். அவன் அவளைக் கற்பழித்த பாவத்தினால், அவளே

அவனது மனைவியாவாள். அவன் வாழ்
நாள் முழுவதிலும் அவளை விவாகரத்து
செய்திட முடியாது.
30"எவனும் தன் தந்தையின் மனைவி
யுடன் பாலின உறவு வைத்துக்கொள்வதால்,
அவரது மானத்தை வெளிப்படுத்தக்கூடாது."

## ஆராதனையில் கலந்து கொள்ளக்கூடிய ஜனங்கள்

23 "ஆண்மையில்லாதவனாக விதை
நசுக்கப்பட்டவனும், உடலுறவு
உறுப்பு துண்டிக்கப்பட்டவனும், இஸ்ரவேல்
ஜனங்களது கர்த்தருடைய ஆராதனையில்
சேரக்கூடாதவர்கள் ஆவார்கள். 2ஒருவனது
பெற்றோர் முறைப்படி திருமணம்
செய்யாமல் அவன் பிறந்திருந்தால், அப்படி
பட்டவன் இஸ்ரவேலருடன் சேர்ந்து
கர்த்தரை ஆராதிக்க கூடிவரக் கூடாது.
அவர்கள் சந்ததியாரில் பத்தாவது
தலைமுறைமட்டும் எவரும் இஸ்ரவேலர்
களின் ஆராதனையில் சேரத் தகுதியற்ற
வர்கள் ஆவார்கள்.
3"அம்மோனியனும், மோவாபியனும்,
இஸ்ரவேல் மனிதர்கள் ஆராதிக்கும் கர்த்தரு
டைய சபைக்கு ஆகாதவர்கள். அவர்களது
சந்ததியாரில் பத்தாம் தலைமுறையினர்கூட
என்றைக்கும் கர்த்தரை ஆராதிக்கும்
இஸ்ரவேல் ஜனங்களோட சேர்ந்து வர
வேண்டாம். 4ஏனென்றால் எகிப்திலிருந்து
நீங்கள் வருகின்ற வழியில் இந்த
அம்மோனியரும், மோவாபியரும். உங்க
ளுக்கு அப்பமும், தண்ணீரும் தர
மறுத்தார்கள். அதுமட்டுமின்றி மெசொ
பொத்தாமியா நகரமாகிய பேத்தோரில்
பேயோரின் மகனான பிலேயாமுக்கு
கூலிபேசி உங்களை சபிக்கும்படி செய்ததற்
காகவும், அவர்களை தேவனுடைய சபைக்கு
உரியவராகாது செய்யவேண்டும். 5ஆனால்
உங்கள் தேவனாகிய கர்த்தர் பிலேயாம்
கூறியதைக் கேட்க மறுத்தார். கர்த்தர் அந்த
சாபத்தையெல்லாம் உங்களுக்காக ஆசீர்வா
தங்களாக்கினார். ஏனென்றால் உங்கள்
தேவனாகிய கர்த்தர், உங்களை நேசிக்
கின்றார். 6நீங்கள் அந்த ஜனங்களுடன்
ஒருபோதும் எவ்வித சமாதானத்திற்கும்
முயற்சி செய்யக்கூடாது. நீங்கள் வாழ் நாள்
முழுவதும் அவர்களுடன் நட்புறவு
கொள்ளக்கூடாது.

## இஸ்ரவேல் ஜனங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய ஜனங்கள்

7"நீங்கள் ஏதோமியர்களை வெறுக்கக்
கூடாது. ஏனெனில், அவர்கள் உங்கள்
உறவினர்கள். நீங்கள் எகிப்தியர்களை
வெறுக்காதீர்கள். ஏனென்றால், நீங்கள் அந்த
தேசத்தில் அந்நியர்களாக இருந்தீர்கள்.
8ஏதோமியருக்கும், எகிப்தியருக்கும் பிறந்த
மூன்றாவது தலைமுறையின் குழந்தைகள்
இஸ்ரவேலருடன் இணைந்து கர்த்தருடைய
சபையில் ஆராதிக்கலாம்.

## படை முகாமினை சுத்தமாக பாதுகாப்பது

9"நீங்கள் உங்கள் எதிரிகளை எதிர்த்துப்
போரிடச் செல்லும்போது தீட்டான காரி
யங்கள் எல்லாவற்றிலும் இருந்து விலகி
இருங்கள். 10உங்களது போர் முகாமில்
ஒருவன் இரவின் கனவுகளினால் சரீரத்தில்
அசுத்தமானால் அவன் அந்த முகாமை விட்டு
வெளியே போகவேண்டும். அவன் போர்
முகாமிற்குள் செல்லாமல் வெளியே தங்கி
இருந்து, 11பின் அன்று மாலையில்,
தண்ணீரில் குளித்து சூரியன் மறைந்த
பின்பே முகாமிற்குத் திரும்பலாம்.
12"உங்கள் போர் முகாமிற்கு வெளிப்
புறத்தில் மலம் கழிக்கும் இடத்தை
ஏற்படுத்தியிருக்க வேண்டும். 13உங்களது
படைக் கருவிகளுடன் நீங்கள் தரையைத்
தோண்டுவதற்காக சிறிய கோலையும்
வைத்திருக்க வேண்டும். பின் நீங்கள் மலம்,
சிறுநீர் கழிக்கின்றபோது அச்சிறிய
கோலைக்கொண்டு மண்ணைத் தோண்டி
அதில் கழிவைச் செய்தபின்பு மூடிவிட
வேண்டும். 14ஏனென்றால், உங்கள் தேவனா
கிய கர்த்தர் உங்களது போர் முகாமில்
உங்களோடே இருந்து, உங்களைக் காத்து,
உங்கள் எதிரிகள் உங்களிடம் தோல்வி
யடைய உதவுகிறார் ஆகையால் அந்தப்
போர் முகாம் பரிசுத்தமாக இருக்கவேண்டும்.
அப்போது கர்த்தர் உங்களுடைய சுத்தமற்ற
காரியங்களைக் காணாமலும் உங்களை
விட்டுப் போகாமலும் இருப்பார்.

## பிற சட்டங்கள்

15"ஒரு அடிமை தன் எஜமானனிடம்
இருந்து உங்களிடம் ஓடி வந்தால் நீங்கள்
அவனை அவன் முதலாளியிடமே ஒப்ப
டைத்து விடாதீர்கள். 16அந்தச் சேவகன்
உங்களிடத்தில் எங்கும் அவன் விரும்பு
கிறபடி பணிசெய்யலாம். அவன் தேர்ந்
தெடுக்கிற ஏதாவது நகரில் வாழலாம்.
நீங்கள் அவனை ஒன்றும் செய்யாதீர்கள்.
17"எந்த ஒரு இஸ்ரவேல் ஆணோ,
பெண்ணோ,ஆலய விபச்சாரக்காரனாகவோ
வேசியாகவோ இருக்கக்கூடாது. 18ஒரு
ஆணோ, பெண்ணோ விபச்சார பாவத்
தினால் சம்பாதித்தப் பணத்தை உங்கள்
தேவனாகிய கர்த்தருடைய ஆலயத்திற்கு
கொண்டுவரக் கூடாது. எந்தவொரு நபரும்
அந்த பணத்தைத் தேவனுக்கு வாக்களித்
திருந்த பொருளை வாங்குவதற்கென்று
பயன்படுத்தக் கூடாது. ஏனென்றால், உங்கள்
தேவனாகிய கர்த்தர் தங்கள் உடல்களை
விற்று விபச்சாரப் பாவம் செய்யும் அந்த
ஜனங்களை அருவெருக்கின்றார்.

19"நீங்கள் வேறு ஒரு இஸ்ரவேல்
சகோதரருக்கு கடன் கொடுத்திருப்பீர்கள்
என்றால் அதற்கான வட்டியை வசூலிக்கக்
கூடாது. அவர்களுக்குக் கொடுத்த பணத்தின்
மீதோ, உணவின் மீதோ அல்லது வேறு
எந்த பொருள் மீதோ நீங்கள் வட்டிவாங்கக்
கூடாது. 20நீங்கள் அந்நியர்களிடமிருந்து
வட்டி வசூலித்துக் கொள்ளலாம். ஆனால்
உங்கள் இஸ்ரவேல் சகோதரர்களிடம் வட்டி
வசூலிக்கக் கூடாது. இந்த விதிகளை நீங்கள்
பின்பற்றினால், பின் உங்கள் தேவனாகிய
கர்த்தர் எல்லாச் செயல்களிலும் உங்களை
ஆசீர்வதிப்பார். நீங்கள் வாழப்போகின்ற
இந்த தேசத்தில் நீங்கள் செய்யும் எல்லா
வற்றினையும் ஆசீர்வதிப்பார்.
21"நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தரிடம்
ஏதாவது பொருத்தனை செய்திருந்தால்,
அவற்றைச் செலுத்துவதில் தாமதம் செய்யா
தீர்கள், ஏனென்றால் உங்கள் தேவனாகிய
கர்த்தர், நீங்கள் அவற்றை செலுத்துமாறு
உரிமையோடு கேட்பார். நீங்கள் வாக்களித்
தபடி அவற்றை செலுத்தவில்லை என்றால்
அது உங்களுக்குப் பாவமாகும். 22நீங்கள்
அப்படிஏதும் வாக்களிக்கவில்லையென்றால்
உங்கள் மீது பாவமில்லை. 23ஆனால் நீங்கள்
செய்வதாக உங்கள் வாயினால் சொன்னதை
நிறைவேற்ற வேண்டும். நீங்கள் தேவனுக்குத்
தருவதாக விசேஷமான வாக்களித்திருந்தால்,
நீங்கள் அதை நிறைவேற்ற வேண்டும்.
தேவன் கட்டாயப்படுத்தி உங்களை வாக்
களிக்கும்படிச் செய்யவில்லை. நீங்களே
தருவதாக வாக்களித்திருந்தால் நீங்கள்
சொன்னபடி அவற்றைச் செலுத்தவேண்டும்!
24"நீங்கள் பிறருடைய திராட்சைத்
தோட்டத்திற்குள் புகுந்துசெல்ல வேண்டி
யிருந்தால், நீங்கள் விரும்புகின்ற அளவிற்கு
அங்குள்ள திராட்சைப் பழங்களை உண்ண
லாம். ஆனால் அவற்றில் ஒன்றைக்கூட
உங்கள் கூடையில் போட்டுக்கொள்ளக்
கூடாது. (அப்பழங்களை உங்களோடு
எடுத்து வராதீர்கள்.) 25நீங்கள் மற்றவரின்
தானிய வயல் வழியாக செல்ல வேண்டி
யிருந்தால் உங்கள் கைகளால் அங்குள்ள
கதிர்களைப் பறித்து உண்ணலாம். ஆனால்
பிறருடைய அந்த விளைச்சலை நீங்கள்
அறுவடை செய்து தூக்கிக்கொண்டு செல்ல
எண்ணி அரிவாளைப் போடக்கூடாது.

24 "ஒருவன் ஒரு பெண்ணைத் திருமணம்
செய்துகொண்ட பின்பு அவளிடத்தில்
ஏதோ இரகசியமான காரியத்தைக் கண்டு,
அதனால் அவள் மீது விருப்பமில்லாதவன்
ஆகக்கூடும். அவன் அவளோடு மகிழ்ச்சி
யாய் இருக்கவில்லையென்றால், விவாகரத்து
எழுதிக்கொடுத்து அவளைத் தன் வீட்டை
விட்டு அனுப்பிவிட வேண்டும். 2அவள்
அவனது வீட்டைவிட்டுப் போனபின்பு
வேறு ஒருவனுக்கு மனைவியாகலாம்.
3-4ஆனால் அவளின் அந்த புதிய கணவனும்
அவளை விரும்பாது, மீண்டும் அனுப்பி
விட்டால், அவனும் அவளுக்கு விவாகரத்து
எழுதிக்கொடுக்க வேண்டும். அல்லது அவன்
மரித்துப்போக நேரிட்டால், அதன் பின்பு
அவளின் முதல் கணவன் அவளை மீண்டும்
மனைவியாக்கிக்கொள்ளக் கூடாது. அவள்
அவனுக்கு அசுத்தமானவளாகிவிட்டவள்.
அப்படி அவன் அவளை மீண்டும் மணந்து
கொள்வான் என்றால், அவன் கர்த்தர்
வெறுக்கின்ற காரியங்களைச் செய்கின்றான்
என்பதாகும். உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குக் கொடுக்கின்ற இந்த தேசத்தில்
அப்படிப்பட்ட பாவத்தைச் செய்யக்கூடாது.
5"ஒருவன் ஒரு பெண்ணைப் புதிதாய்
திருமணம் செய்திருந்தால், அவன்
தரைப்படையில் சேவை செய்யப் புறப்பட்டு
செல்லவேண்டாம். அதுமட்டுமின்றி வேறு
எந்த சிறப்புப் பணியிலும் அவன் ஈடுப்படக்
கூடாது. அவன் ஓராண்டிற்குத் தன் வீட்டில்
தான் விரும்பியபடி இருந்து, தான் திரு
மணம் செய்து கொண்ட மனைவியை
சந்தோஷப்படுத்த வேண்டும்.
6"நீங்கள் எந்த காரணத்தைக் கொண்டும்
மற்றவர்களுக்குக் கொடுக்கும் கடனுக்கு
அடமானமாக அவர்களது மாவு அரைக்கும்
திரிகையின் அடிக்கல்லையாவது மேற்கல்
லையாவது வாங்கக்கூடாது. ஏனென்றால்
அது அவர்களின் உணவையே அவர்களிட
மிருந்து எடுத்துப் போடுவதற்கு சமமாகும்.
7"ஒருவன் தன் சொந்த ஜனங்களாகிய
இஸ்ரவேல் சகோதரன் ஒருவனை கடத்திச்
சென்று அவனை அடிமையாக விற்று
ஆதாயம் தேடினால், அந்த ஆட்களைக்
கடத்தும் திருடனைக் கொன்றுவிட
வேண்டும். இவ்வாறாக இந்தத் தீமையை
உங்களிடமிருந்து விலக்கிவிட வேண்டும்.
8"நீங்கள் தொழுநோய் போன்ற கொடிய
நோய்களுக்கு ஆளானால் லேவியராகிய
ஆசாரியர்கள் உங்களுக்கு சொல்வதைப்
பின்பற்றுவதில் எச்சரிக்கையுடன் இருங்கள்.
இதற்காக நான் ஆசாரியரிடம் கொடுத்த
கட்டளையின்படியே நீங்கள் செய்ய எச்சரிக்
கையுடன் இருங்கள். 9நீங்கள் எகிப்திலிருந்து
வெளியேறி புறப்பட்டு வருகின்ற வழியிலே
உங்கள் தேவனாகிய கர்த்தர் மிரியாமுக்குச்
செய்ததை நினைத்துக் கொள்ளுங்கள்.
10"நீங்கள் பிறருக்குக் கொடுக்கின்ற எந்த
வகையான கடனுக்கும் அடமானத்தைப்பெற
அவனது வீட்டிற்குள் செல்லவேண்டாம்.
11வெளியே நின்று விடுங்கள். பின் அவன்
நீங்கள் கொடுத்த கடனுக்கான அடமா
னத்தை வெளியில் வந்து தருவான்.
12ஒருவேளை அவன் ஏழையாக இருந்தால்,
(அவன் போர்த்திக்கொள்ள வைத்திருந்த
ஆடைகளை கொடுக்க முன் வந்தால்), நீங்கள்
அவற்றை இரவு முழுவதும் வைத்துக்
கொள்ளாதீர்கள். 13நீங்கள் அவற்றை

ஒவ்வொரு நாள் மாலையிலும் அவனிடம்
கொடுத்துவிட வேண்டும். அது அவன்
தூக்கத்திற்கு அவசியமானதாகும். அவன்
உங்களை ஆசீர்வதிப்பான். உங்கள் தேவனா
கிய கர்த்தர் முன்பு இத்தகைய நல்ல செயல்
உன் வாழ்வின் நியாயத்தை ஏற்கச்
செய்திடும்.
14 “நீங்கள் உங்களிடம் காண்கின்ற ஏழை
எளிய கூலிக்காரனை வஞ்சனை செய்யக்
கூடாது. உங்கள் நகரங்களில் வசிக்கின்ற
அந்நியர்களிடமும் அல்லது உங்களது
இஸ்ரவேல் சகோதரர்களிடமும் இத்தகைய
வஞ்சனை செயல்களைச் செய்யாதீர்கள்.
15 அவர்களது ஊதியத்தை ஒவ்வொரு நாள்
சாயங்காலத்திலும் கொடுத்துவிட வேண்டும்.
ஏனென்றால் அவன் அந்த சம்பளத்தையே
எதிர்பார்த்து வாழ்கின்ற ஏழையாக
இருக்கின்றான். நீங்கள் அப்படி அவனுக்கு
கொடுக்கவில்லையென்றால் அவன் கர்த்தரி
டம் உங்களுக்கு எதிராக முறையிடுவான்.
நீங்கள் பாவம் செய்தவராகிவிடுவீர்கள்.
16 “பிள்ளைகள் செய்தக் காரியத்திற்காகப்
பெற்றோர்கள் கொலைசெய்யப்படக்கூடாது.
அதுபோன்று பெற்றோர்கள் செய்த
காரியங்களுக்காகப் பிள்ளைகள் கொலை
செய்யப்படக் கூடாது. அவனவன் செய்த
பாவச் செயல்களுக்கு ஏற்ப அவனவன்
கொலைசெய்யப்பட வேண்டும்.
17 “உங்களைச் சார்ந்துள்ள அந்நியர்
களையும், அநாதைகளையும், நியாயமாகவே
நடத்துவதில் உறுதிகொண்டு இருக்க
வேண்டும். விதவைகளின் ஆடைகள்
துணிமணிகளை அடமானாக ஒருபோதும்
வாங்கிகொள்ளக் கூடாது. 18 எகிப்தில் நீங்கள்
ஏழை அடிமைகளாக இருந்ததை மறந்து
விடாதீர்கள். உங்கள் தேவனாகிய கர்த்தர்
அங்கிருந்து உங்களை மீட்டுவந்து நீங்கள்
சுதந்திரமாக வாழ அமைத்துக் கொடுத்ததை
மறந்துவிடாதீர்கள். அதனால்தான் ஏழை
ஜனங்களிடம் நீங்கள் இவ்வாறாக நடந்து
கொள்ளவேண்டும் என்று சொல்லுகிறேன்.
19 “நீங்கள் உங்கள் விளைநிலங்களில்
அறுவடை செய்து எடுத்து வரும்போது
கொஞ்சம் தானியத்தை மறந்து அங்கேயே
விட்டு விட்டு வந்தீர்கள் என்றால் அவற்றை
எடுக்க நீங்கள் திரும்பிச் செல்லக்கூடாது.
அவை அந்நியர்களுக்கும் ஆதரவற்ற
அநாதைகளுக்கும், விதவைகளுக்கும் இருக்
கட்டும். கொஞ்சம் தானியத்தை அவர்
களுக்காக அங்கேயே விட்டு வந்தால்,
உங்கள் தேவனாகிய கர்த்தர் நீங்கள்
செய்கின்ற எல்லாக் காரியங்களையும்
ஆசீர்வதிப்பார். 20 நீங்கள் உங்கள் ஒலிவ
மரத்தை உதிர்த்துவிட்டுத் திரும்பிய பின்பு
மீண்டும் அதன் கிளைகளிலே தப்பிய
வற்றைப் பறிப்பதற்குத் திரும்பிப்போக
வேண்டாம். அவற்றை உங்களைச் சார்ந்த
அந்நியர்களுக்கும், ஆதரவற்ற அநாதை
களுக்கும், விதவைகளுக்கும் விட்டு
வைப்பீர்களாக. 21 நீங்கள் உங்கள் திராட்சைத்
தோட்டங்களில் திராட்சைப் பழங்களைப்
பறித்து சேகரித்த பின்பு தப்பிக் கிடக்கும்
பழங்களைப் பறிப்பதற்கு மீண்டும் அங்கே
செல்லவேண்டாம். அந்தத் திராட்சைப்
பழங்கள் உங்களைச் சார்ந்த அந்நியர்
களுக்கும், ஆதரவற்ற அநாதைகளுக்கும்,
விதவைகளுக்கும் விட்டு வைப்பீர்களாக.
22 நீங்கள் எகிப்தில் ஏழை அடிமைகளாக
இருந்ததை நினைத்துப்பாருங்கள். அதனால்
தான் இந்த ஏழை ஜனங்களுக்காக இவை
களைச் செய்யுங்கள் என்று நான்
உங்களுக்குச் சொல்லுகிறேன்.

25 “இருவருக்குள் வாக்குவாதம் முற்றி
அதனால், அவர்கள் தங்கள் வழக்கைத்
தீர்க்க நீதிமன்றம் வந்தால், நீதிபதிகள்
அவ்விருவரில் யார் நிரபராதி? யார்
குற்றவாளி? என்று முடிவுசெய்வர். 2 குற்ற
வாளி சாட்டையால் அடிக்கப்பட
வேண்டியவன் என நீதிபதி முடிவு செய்தால்,
நீதிபதி அக்குற்றவாளியை கீழே முகம்
குப்புறப் படுக்கச்செய்து வேறு ஒருவரை
வைத்து தம் முன்னால் அவனை
அடிக்கச்செய்வார். அந்த அடிகளின்
எண்ணிக்கை அவனது குற்றத்திற்கேற்ப
அமையும். 3 நாற்பது அடிகளுக்குமேல்
அவனை அடிக்க கூடாது. அவ்வாறு
நாற்பது அடிகளுக்குமேல் அடித்தால், அவனு
டைய உயிர் உங்களுக்கு முக்கியமல்ல
என்பது வெளிப்படும். எனவே, நாற்பது
அடிகளுக்குமேல் ஒருவனை அடிக்காதீர்கள்.
4 “தானியக் களத்தில் போரடிக்கிற ஒரு
மாட்டை, அது தின்னாதபடி அதன்
வாயைக் கட்டாதீர்கள்.
5 “இரு சகோதரர்கள் ஒரே வீட்டில்
வசித்துவர, அதில் ஒருவன் பிள்ளைப்பேறு
இல்லாது மரித்துவிடுவான் என்றால், மரித்த
வனின் மனைவியை அந்தக் குடும்பத்தை
விட்டு வெளியே இருக்கிற வேறு
ஒருவனுக்கு திருமணம் செய்துவைக்கக்
கூடாது. அவளது கணவனின் சகோதரன்
அவளை மனைவியாக ஏற்றுக்கொண்டு,
அவளுடன் பாலின உறவு வைத்துக்கொள்ள
வேண்டும். ஒரு புருஷனின் சகோதரர்
செய்யவேண்டிய கடமைகளை, அவளது
கணவனின் சகோதரர் அவளுக்குச்
செய்யவேண்டும். 6 பின் அவர்களது முதல்
குழந்தைக்கு மரித்த சகோதரனின் பெயரை
வைத்து, மரித்தவனின் பெயர் இஸ்ரவேலை
விட்டு அழியாதபடி காத்திட வேண்டும்.
7 ஆனால், அவன் அவனது சகோதரனின்
மனைவியைத் தன் மனைவியாக எடுக்க
விரும்பவில்லை என்றால், பின் அவள் ஊர்
கூடும் பஞ்சாயத்திற்குச் சென்று ஊர்த்
தலைவர்களிடம், ‘என் கணவனின்
சகோதரர் அவரது சகோதரரின் பெயர்
இஸ்ரவேலில் நிலைத்து நிற்கச்செய்ய

மறுக்கிறார். ஒரு புருஷனின் சகோதரர்
செய்யவேண்டிய கடமைகளை எனக்கு இவர்
செய்யவில்லை’ என்று முறையிட
வேண்டும். 8பின் ஊர்த்தலைவர்கள்
அவனை அழைத்துப் பேசுவார்கள். அதற்கு
அவன், ‘நான் அவளை மனைவியாக
வைத்துக்கொள்ள விரும்பவில்லை’ என்று
பிடிவாதமாகக் கூறினால், 9பின் அவனது
சகோதரன் மனைவி ஊர்த்தலைவர்கள்
எதிரில் அவனருகில் வந்து, அவனது
பாதரட்சைகளை அவன் கால்களிலிருந்து
கழற்றி, பின் அவன் முகத்தில் துப்புவாள்.
அவள், ‘தன் சகோதரன் மனைவியை ஏற்று
அவன் குடும்பத்தைக் கட்டிக்காக்கத்
தவறியவனுக்கு இப்படியே செய்யவேண்டும்’
என்று கூறவேண்டும். 10பின் இஸ்ரவேலில்
இப்படிப்பட்டவனின் வீடு, ‘செருப்பு
கழற்றிப் போடப்பட்டவன் வீடு’ என்று
அழைக்கப்படும்.
11“இருவர் சண்டையிட்டுக் கொண்டிருக்
கையில், ஒருவனது மனைவி தன்
கணவனை அடிக்கின்றவனிடமிருந்து அவ
னைக் காப்பாற்ற நினைத்து அங்கு வந்து
தன் கையை நீட்டி அடிக்கிறவனின்
அந்தரங்க உறுப்பை நசுக்கி இழுக்கக்கூடாது.
12அவள் இப்படிச் செய்தால், அவள்
கையைத் துண்டித்துவிட வேண்டும்.
அவளிடம் இரக்கம் காட்டாதீர்கள்.
13“ஏமாற்றும் நோக்கத்துடன் ஜனங்களை
ஏமாற்ற கூடுதலான அல்லது குறைவான
எடைக்கற்களைப் பயன்படுத்தாதீர்கள்.
14உங்கள் வீடுகளில் அதிகமான அல்லது
குறைவான அளவுக் கருவிகளை வைத்திருக்
காதீர்கள். 15சரியானதாகவும் பிழையற்ற
தாகவும் உள்ள எடைக்கற்களையும், அளவு
கருவிகளையுமே நீங்கள் பயன்படுத்த
வேண்டும். அப்போது நீங்கள், உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்குத் தருகின்ற
தேசத்தில் நீண்ட காலம் வாழலாம். 16உங்கள்
தேவனாகிய கர்த்தர், ஏமாற்றும் எண்ணத்
துடன் தவறான எடைக் கற்களையும்,
அளவுக் கருவிகளையும் பயன்படுத்து
பவர்களை வெறுக்கின்றார். ஆம், தேவன்
தவறு செய்கின்ற அனைவரையும்
வெறுக்கின்றார்.

### அமலேக்கியர்கள் அழிக்கப்பட வேண்டும்

17“எகிப்திலிருந்து நீங்கள் வருகின்ற
வழியில் அமலேக்கிய ஜனங்கள் உங்க
ளுக்குச் செய்ததை நினைத்துப் பாருங்கள்.
18அந்த அமலேக்கிய ஜனங்கள் நமது
தேவனை மதிக்காமல், நீங்கள் பலவீன
மாகவும் சோர்வாகவும் இருந்தபொழுது
உங்களைத் தாக்கினார்கள். அவர்கள் உங்கள்
ஜனங்களில் மெதுவாக எல்லோருக்கும்
பின்னால் நடந்து வந்தவர்களைத் தாக்கி
வெட்டிக் கொன்றார்கள். 19அதனால் நீங்கள்
இந்த அமலேக்கியர்களின் நினைவே இந்த
உலகத்தில் இருக்காமல் அழித்துவிட
வேண்டும். உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குத் தருகின்ற இந்த தேசத்தில்,
உங்களைச் சுற்றியிருக்கும் உங்கள்
எதிரிகளை எல்லாம் அழித்து உங்களை
இளைப்பாறச் செய்கையில், அமலேக்
கியர்களை அழித்துவிட வேண்டும்
என்பதை நீங்கள் மறந்துவிடாதீர்கள்!

### முதல் அறுவடை

26 “உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குத் தருகின்ற தேசத்தில்
நீங்கள் விரைவில் நுழையப் போகிறீர்கள்.
நீங்கள் அந்த நிலத்தில் குடிகொண்டு
சுதந்திரமாய் வாழப் போகிறீர்கள். 2கர்த்தர்
உங்களுக்கு வழங்கிய நிலத்தில் விளைந்
தவற்றை நீங்கள் அறுவடை செய்யும்போது,
உங்களின் விளைச்சலின் முதல் பலனை
கூடைகளில் எடுத்து வைத்துவிட
வேண்டும். பின் நீங்கள் அறுவடை செய்
ததின் முதல் பங்கை எடுத்துக்கொண்டு
உங்கள் தேவனாகிய கர்த்தர் சிறப்பாகத்
தேர்ந்தெடுத்த அவரது ஆலயத்திற்கு
கொண்டுசென்று, 3அங்கே ஆலய
சேவையில் இருக்கின்ற ஆசாரியரிடம்:
‘கர்த்தர் நமது முற்பிதாக்களுக்கு ஒரு தேசத்
தைக் கொடுப்பேன் என்று ஆணையிட்டார்.
இன்று தேவனாகிய கர்த்தரிடத்தில், நான்
அந்தத் தேசத்திற்கு வந்துவிட்டேன் என்று
அறிக்கையிடுகிறேன்’ என்று கூறு.
4“பின் அந்த ஆசாரியன் உன்னிடமிருந்து
அந்தக் கூடையை எடுத்து கர்த்தருடைய
பலிபீடத்திற்கு முன்பு வைப்பான். 5பின்
அவ்விடத்தில் உங்கள் தேவனாகிய கர்த்தர்
முன்பு நீங்கள்: ‘அலைந்து திரிந்த
அரேமியரான எனது முற்பிதாக்கள் எகிப்
துக்குச் சென்று அங்கு தங்கினார்கள்.
செல்லும்போது கொஞ்சம் ஜனங்களே
அவன் குடும்பத்தினராய் இருந்தனர். ஆனால்
எகிப்தில் அவர்கள் பெரிய ஜனமாக
பெருகினார்கள். வலிமை வாய்ந்த ஜனமாக
அதிக ஜனங்களை கொண்டவர்களாக
இருந்தனர். 6எகிப்தியர்கள் எங்களைச்
சிறுமைப்படுத்தி, எங்களை அடிமைகளாக்
கினார்கள். எங்களை வேதனைப்படுத்தி
மிகவும் கடினமான வேலைகளைச்
செய்யும்படி கட்டாயப் படுத்தினார்கள். 7பின்
நாங்கள் எங்கள் முற்பிதாக்களின்
தேவனாகிய கர்த்தரிடம் ஜெபித்தோம் அவர்
களைப்பற்றி முறையீடு செய்தோம். கர்த்தர்
நாங்கள் கூறியவற்றைக் கேட்டார். எங்களது
இன்னல்களையும், கடின உழைப்பையும்,
நாங்கள் அடைந்த வருத்தங்களையும் கர்த்தர்
பார்த்தார். 8பின் கர்த்தர் எகிப்திலிருந்து
எங்களைத் தனது மிகுந்த ஆற்றலாலும்,
பலத்தினாலும் மீட்டுக்கொண்டு வந்தார்.

*அவர் மிகுந்த அற்புதங்களையும், அதிசயங்*
*களையும் பயன்படுத்தினார். வியக்கத்தக்க*
*நிகழ்ச்சிகளைச் செய்தார்.* 9*அதனால்*
*எங்களை இந்த தேசத்திற்கு மீட்டுக்கொண்டு*
*வந்தார். பாலும், தேனும் ஓடக்கூடிய இந்த*
*வளமான தேசத்தை எங்களுக்குத் தந்தார்.*
10*இப்போதும் இதோ கர்த்தாவே நீர்*
*எங்களுக்குத் தந்த தேசத்திலிருந்து நாங்கள்*
*பெற்ற முதல் அறுவடையின் பலனைக்*
*கொண்டு வந்துள்ளோம்' என்று சொல்ல*
*வேண்டும்.*

*"பின் நீங்கள் அந்த அறுவடையின்*
*பலனை உங்கள் தேவனாகிய கர்த்தர் முன்பு*
*வைத்து தாழ்ந்து பணிந்து அவரை*
*ஆராதிக்கவேண்டும்.* 11*பின் நீங்கள் சேர்ந்து*
*உண்டு மகிழ்ந்து உங்கள் தேவனாகிய*
*கர்த்தர் உங்களுக்கும், உங்கள் குடும்பத்*
*திற்கும் கொடுத்த எல்லா நன்மைகளினிமித்*
*தமும் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கவேண்டும்.*
*நீங்கள் அந்த நன்மைகளில் எல்லாம்*
*லேவியர்களுக்கும் மற்றும் உங்களைச்*
*சார்ந்து வாழ்கின்ற அந்நியர்களுக்கும்*
*பங்களிக்கவேண்டும்.*

12*"ஒவ்வொரு மூன்றாவது ஆண்டும்*
*பத்தில் ஒரு பங்கைச் செலுத்தும் ஆண்டாக*
*இருக்கவேண்டும். இந்த வருடத்தில் நீங்கள்*
*உங்கள் அறுவடைப் பலனில் பத்திலொரு*
*பங்கை லேவியருக்கும், உங்கள் நாட்டில்*
*வாழும் அயல்நாட்டு குடிகளுக்கும், விதவை*
*களுக்கும், அநாதைகளுக்கும் கொடுக்க*
*வேண்டும். பின் ஒவ்வொரு நகரத்திலும்*
*அந்த ஜனங்கள் தாராளமாக, திருப்தியாக*
*உண்டு மகிழ்வார்கள்.* 13*நீங்கள் உங்கள்*
*தேவனாகிய கர்த்தரிடம், 'கர்த்தாவே, நான்*
*எனது வீட்டிலிருந்து எனது அறுவடைப்*
*பலனின் பரிசுத்த பங்கு ஒன்றை வெளியே*
*எடுத்துவந்து லேவியருக்கும், அயல் நாட்டு*
*குடிகளுக்கும், அநாதைகளுக்கும், விதவை*
*களுக்கும் கொடுத்துள்ளேன். நீர் எனக்குத்*
*தந்த எல்லா கட்டளைகளையும் நான்*
*பின்பற்றியுள்ளேன். நான் உமது எந்த*
*கட்டளைக்கும் கீழ்ப்படிய மறுத்ததில்லை.*
*அவற்றை மறந்ததுமில்லை.* 14*நான்*
*துக்கமாயிருந்தபோது அதில் எதையும்*
*உண்ணவில்லை. நான் சுத்தமில்லாதவனாக*
*இருந்தபோது அவற்றைச் சேகரிக்கவில்லை.*
*நான் மரித்தவர்களுக்காக அதிலிருந்து எந்த*
*உணவையும் செலுத்தவில்லை. நான்*
*உமக்குக் கீழ்ப்படிந்து இருந்தேன். என்*
*தேவனாகிய கர்த்தாவே நீர் எனக்குக்*
*கட்டளையிட்டபடியே நான் எல்லா செயல்*
*களையும் செய்துள்ளேன்.* 15*தேவனே*
*பரலோகத்தில் உமது பரிசுத்த ஆலயத்*
*திலிருந்து என்னைப் பாரும். உமது*
*இஸ்ரவேல் ஜனங்களை ஆசீர்வதியும். நீர்*
*எங்களுக்குக் கொடுத்த தேசத்தை*
*ஆசீர்வதிப்பீராக. எங்கள் முற்பிதாக்களிடம்*
*ஆணையிட்டபடி எல்லா வளங்களும்*
*கொண்ட பாலும், தேனும் ஓடக்கூடிய நீர்*
*தந்த இந்த தேசத்தை ஆசீர்வதியும்' என்று*
*கூறுவீர்களாக.*

### தேவனின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியுங்கள்

16*"இந்த எல்லாச் சட்டங்களுக்கும்,*
*விதிகளுக்கும் நீங்கள் கீழ்ப்படிய, உங்கள்*
*தேவனாகிய கர்த்தர் இன்று உங்களுக்குக்*
*கட்டளையிடுகின்றார். நீங்கள் உங்கள் ஆத்ம*
*திருப்தியுடனும், முழு மனதோடும்,*
*அவற்றைப் பின்பற்றுவதில் எச்சரிக்*
*கையாய் இருங்கள்!* 17*இன்று நீங்கள் கர்த்தரே*
*உங்கள் தேவன் என்று சொல்லியிருக்*
*கிறீர்கள்! தேவன் விரும்பிய நெறிப்படியே*
*நீங்கள் வாழ்வதாக வாக்களித்துள்ளீர்கள்!*
*அவரது போதனைகளுக்கும், நியாயங்*
*களுக்கும், கட்டளைகளுக்கும், நீங்கள்*
*கீழ்ப்படிவதாக உறுதி செய்துள்ளீர்கள்.*
*நீங்கள் செய்யும்படி கர்த்தர் உங்களுக்குச்*
*சொல்லிய ஒவ்வொன்றையும் செய்வதாகச்*
*சொன்னீர்கள்.* 18*இன்று உங்களெல்*
*லோரையும் கர்த்தருடைய சிறப்புக்குரிய*
*சொந்த ஜனங்களாக கர்த்தர்*
*ஏற்றுக்கொண்டார்! அவர் இப்படிச் செய்ய*
*உங்களிடம் வாக்களித்துள்ளார். அவரது*
*கட்டளைகளுக்கு நீங்கள் கீழ்ப்படிய*
*வேண்டும் என்றும் கர்த்தர் சொன்னார்.*
19*கர்த்தர் தாம் படைத்த மற்றெல்லா*
*ஜனங்களையும்விட, புகழும், பெருமையும்,*
*மதிப்பும் கொண்ட சிறந்தவர்களாக உங்*
*களை ஆக்கியுள்ளார். கர்த்தர் உங்களுக்கு*
*வாக்களித்தபடியே, நீங்களும் அவருக்குச்*
*சொந்தமான விசேஷ ஜனங்களாக இருக்க*
*வேண்டும்."*

### ஜனங்களுக்கான கல் நினைவுச்சின்னங்கள்

27 *மோசேயும் இஸ்ரவேலின் மூப்பர்களும்*
*(தலைவர்கள்) இஸ்ரவேல் ஜனங்*
*களுடன் பேசினார்கள். மோசே, "இன்று*
*நான் கொடுக்கிற அனைத்து கட்டளை*
*களுக்கும் கீழ்ப்படியுங்கள்.* 2*உங்கள்*
*தேவனாகிய கர்த்தர் உங்களுக்குக்காகக்*
*கொடுத்திருக்கிற நாட்டிற்குள் போகும்படி*
*நீங்கள் விரைவில் யோர்தான் ஆற்றைக்*
*கடப்பீர்கள். அந்த நாளில் நீங்கள் பெரிய*
*கற்களை நாட்ட வேண்டும். அக்கற்களைச்*
*சாந்து பூசி மூடி* 3*பிறகு அக்கற்களின்*
*மேல் இந்த கட்டளைகளையும், போதனை*
*களையும் எழுதவேண்டும். நீங்கள்*
*யோர்தான் ஆற்றைக் கடந்தவுடன் இதனைச்*
*செய்யவேண்டும். பிறகு நீங்கள் அந்த*
*நாட்டிற்குள் போகலாம். அதை உங்கள்*
*தேவனாகிய கர்த்தர் உங்களுக்காகக் கொடுத்*
*திருக்கிறார். அந்நாடு பல நன்மைகளால்*

நிறைந்தது உங்கள் முற்பிதாக்களின் தேவனாகிய கர்த்தர் இந்த நாட்டை உங்களுக்குக் கொடுப்பதாக வாக்களித்தார்.
4“யோர்தான் ஆற்றைக் கடந்து நீங்கள் போனதும், நான் இன்று கட்டளை யிடுகின்றவற்றை நீங்கள் செய்யவேண்டும். அக்கற்களை நீங்கள் ஏபால் மலையின் மேல் நாட்ட வேண்டும். நீங்கள் இக்கற்களைச் சாந்து பூசி மூடவேண்டும்.
5அதோடு சில கற்களைப் பயன்படுத்தி, உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டவேண்டும். கற்களை வெட்டுவதற்கு இரும்புக் கருவிகளைப் பயன்படுத்த வேண்டாம்.
6உங்கள் தேவனா கிய கர்த்தருக்குப் பலிபீடம் கட்டும்போது செதுக்கின கற்களைப் பயன்படுத்த வேண்டாம். உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு இப்பலி பீடத்தின்மேல் சர்வாங்க தகன பலிகளைச் செலுத்துங்கள்.
7நீங்கள் சமாதான பலிகளையும் அங்கே செலுத்தி, அதனை உண்ணவேண்டும். உங்கள் தேவ னாகிய கர்த்தருடைய சந்நிதியில் அவற்றைச் சேர்ந்து உண்டு உங்களுக்குள் மகிழுங்கள்.
8நீங்கள் நாட்டிய கற்களில் இந்தப் போதனை களையெல்லாம் தெளிவாக எழுதவேண்டும். அதனால் அவற்றை வாசிக்க சுலபமாக இருக்கும்” என்றான்.

### சட்டத்தின் சாபங்களை ஜனங்கள் ஒப்புக்கொள்கிறார்கள்

9மோசேயும், ஆசாரியர்களும் இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரிடமும் பேசினார்கள். மோசே, “அமைதியாக இருந்து கவனி யுங்கள். இன்று உங்கள் தேவனாகிய கர்த்தருடைய ஜனங்களாகியிருக்கிறீர்கள்.
10எனவே நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தர் சொன்னபடியே எல்லாவற்றையும் செய்யவேண்டும். நீங்கள் அவரது கட்டளை களுக்கும், சட்டங்களுக்கும் கீழ்ப்படிய வேண்டும். இன்று அவற்றை நான் உங்களுக்குக் கொடுக்கிறேன்” என்றான்.
11அதே நாளில் மோசே ஜனங்களிடம்
இதையும் சொன்னான்,
12“யோர்தான் ஆற்றை நீங்கள் கடந்துபோனபிறகு, ஜனங் களுக்குரிய ஆசீர்வாதங்களை வாசிக்க சிமியோன், லேவி, யூதா, இசக்கார், யோசேப்பு, பென்யமீன் ஆகியோரின் கோத்திரங்கள் கெரிசீம் மலையின் மீது நிற்பார்கள்.
13ரூபன், காத், ஆசேர், செபு லோன், தாண், நப்தலி ஆகியோரின் கோத்திரங்கள் ஏபால் மலைமீது நின்று சாபத்தை வாசிப்பார்கள்.
14“லேவியர் உரத்தக் குரலில்;
15“பொய்த் தெய்வங்களைச் செய்து இரகசியமான இடத்தில் அதனை ஒளித்து வைப்பவன் சபிக்கப்பட்டவன். அந்த பொய்த் தெய்வங்கள் எல்லாம் சித்திர வேலைக் காரர்களால் மரத்தாலும் கல்லாலும் அல்லது உலோகத்தாலும் செய்யப்பட்ட சிலைகள். கர்த்தர் அவற்றை வெறுக்கின்றார்!’ என்று அவர்கள் சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று சொல்லவேண்டும்.

16“லேவியர்கள், ‘தன் தகப்பனுக்கும் தாய்க்கும் மரியாதை செய்யாமலிருக்கிறவன் சபிக்கப்பட்டவன்’ என்று சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று பதில் சொல்லவேண்டும்.

17“லேவியர், ‘தனது அயலானின் எல்லைக் கல்லை மாற்றிப் போடுகிறவன் சபிக்கப்பட்டவன்’ என்று சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று பதில் சொல்லவேண்டும்.

18“லேவியர், ‘குருடனை வழிதப்பச் செய்பவன் சபிக்கப்பட்டவன்!’ என்று சொல்லும்போது,

“பிறகு எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று சொல்லவேண்டும்.

19“லேவியர், ‘அயல் நாட்டவர், அநாதை கள், விதவைகளின் நியாயத்தைப் புரட்டு கிறவன் சபிக்கப்பட்டவன்!’ என்று சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று சொல்லவேண்டும்.

20“லேவியர், ‘தனது மாற்றாந்தாயோடு பாலின உறவு வைத்துக்கொள்பவன் சபிக்கப்பட்டவன். ஏனென்றால், அவன் தன் தந்தைக்கு அவமானத்தைக் கொண்டு வருகிறான்!’ என்று சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று சொல்லவேண்டும்.

21“லேவியர், ‘யாதொரு மிருகத்தோடும் புணர்ச்சி செய்கிறவன் சபிக்கப்பட்டவன்!’ என்று சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று சொல்லவேண்டும்.

22“லேவியர், ‘தன் சகோதரியோடும், சகோதரி உறவுள்ளவர்களோடும் பாலின உறவு கொள்பவன் சபிக்கபட்டவன்!’ என்று சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று செல்லவேண்டும்.

23“லேவியர், ‘தன் மாமியாரோடு பாலின உறவு கொள்பவன் சபிக்கபட்டவன்!’ என்று சொல்லும்போது,

“எல்லா ஜனங்களும் ‘ஆமென்’ என்று சொல்லவேண்டும்.

24“லேவியர், ‘மற்றொருவனைக் கொல்லு கிறவன், பிடிபடாமல் இருந்தால் கூட, சபிக்கப்பட்டவனாக இருப்பான்’ என்று சொல்லும்போது,

“ஜனங்கள் எல்லோரும் ‘ஆமென்’ என்று சொல்லவேண்டும்.

25“லேவியர், ‘ஒரு அப்பாவியைக் கொன்று அவனது பொருட்களை அபகரிப்

பவன் சபிக்கப்பட்டவன்.' என்று சொல்லும் போது,

"ஜனங்கள் எல்லோரும் 'ஆமென்' என்று பதில் சொல்லவேண்டும்.

26"லேவியர், 'இந்த சட்டத்தின் வார்த்தை களையெல்லாம் ஆதரிக்காமலும் அதற்குக் கீழ்ப்படியும்படி அதற்கு ஒப்புக்கொள்ளா மலும் இருப்பவன் சபிக்கப்பட்டவன்' என்று சொல்லும்போது,

"ஜனங்கள் எல்லாரும் 'ஆமென்' என்று சொல்லவேண்டும்."

### சட்டத்திற்குக் கீழ்ப்படிபவர்களுக்கான ஆசீர்வாதங்கள்

28 "இப்போதும், நான் இன்று உங்களுக்குச் சொன்ன உங்கள் தேவனாகிய கர்த்தருடைய கட்டளை களையெல்லாம் நீங்கள் கவனமாகக் கடைப்பிடிப்பீர்களேயானால், உங்கள் தேவனாகிய கர்த்தர் பூமியில் உள்ள எல்லா ஜனங்களையும் விட உங்களை உயர்த்தி வைப்பார். 2நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருக்குக் கீழ்ப்படிவீர்களேயானால், இந்த எல்லா ஆசீர்வாதங்களும் உங்களுக்கு வரும்:

3 "நகரத்திலும் வயலிலும்
கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார்.
4 கர்த்தர் உங்களை ஆசீர்வதித்து
உங்களுக்குப் பல குழந்தைகளைக்
கொடுப்பார்.
அவர் உங்கள் நிலத்தை
ஆசீர்வதிப்பார்.
அவர் உங்களுக்கு
நல்ல விளைச்சலைக் கொடுப்பார்.
அவர் உங்கள் மிருகங்களை
ஆசீர்வதிப்பார்.
அவற்றுக்கு நிறைய குட்டிகளைப்
பெருகச்செய்வார்.
அவர் உங்களது அனைத்து
கன்றுகளையும் மற்றும் ஆட்டுக்
குட்டிகளையும் ஆசீர்வதிப்பார்.
5 கர்த்தர் உங்களது கூடைகளையும்,
பாத்திரங்களையும் ஆசீர்வதித்து
அவற்றில் உணவை நிரப்புவார்.
6 கர்த்தர் உங்களை எல்லா
நேரங்களிலும் நீங்கள் செய்கிற
அனைத்திலும் ஆசீர்வதிப்பார்.

7"உங்களுக்கு எதிராகச் சண்டைச் செய்ய வருகிற உங்கள் பகைவர்களைத் தோற்க டிக்க கர்த்தர் உங்களுக்கு உதவி செய்வார். உங்கள் பகைவர்கள் உங்களுக்கு எதிராக ஒரு வழியாக வருவார்கள், ஆனால் அவர் கள் வேறுபட்ட ஏழு வழிகளில் ஓடுவார்கள்.
8"கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார். உங்கள் களஞ்சியங்களை நிரப்புவார். நீங்கள் செய்கிற அனைத்தையும் அவர் ஆசீர் வதிப்பார். உங்கள் தேவனாகிய கர்த்தர் அவர் உங்களுக்குக் கொடுத்த நாட்டை ஆசீர்வதிப்பார். 9கர்த்தர் உங்களைத் தமக்கென்று சிறந்த பரிசுத்த ஜனங்களாக, தாம் வாக்குறுதி அளித்தபடி ஆக்குவார். நீங்கள் உங்களது தேவனாகிய கர்த்தரைப் பின்பற்றி அவரது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தால் கர்த்தர் இதனைச் செய்வார்.
10பிறகு எல்லா நாட்டினரும் கர்த்தருடைய பெயரால் நீங்கள் அழைக்கப்படுவதைக் கேட்பார்கள். அவர்கள் உங்களுக்குப் பயப்படுவார்கள்.
11"கர்த்தர் உங்களுக்கு அநேக நன்மை களைச் செய்வார். அவர் உங்களுக்குப் பல பிள்ளைகளைத் தருவார். உங்களது பசுக்களுக்குப் பல கன்றுகளை அவர் தருவார். உங்கள் முற்பிதாக்களுக்குக் கொடுப்பதாக வாக்களித்த நிலத்தில் அவர் உங்களுக்கு நல்ல விளைச்சலைத் தருவார்.
12கர்த்தர், தமது வளமான ஆசீர்வாதங்களை வைத்துள்ள சேமிப்பு அறையினைத் திறப்பார். உங்கள் நிலத்திற்குத் தேவையான மழையைச் சரியான காலத்தில் அனுப்புவார். நீங்கள் செய்கிற எல்லா வற்றையும் கர்த்தர் ஆசீர்வதிப்பார். நீங்கள் பல நாடுகளுக்குக் கடன் கொடுக்கிற அளவிற்குப் பணம் பெறுவீர்கள். அவர்களிடமிருந்து எதையும் கடனாகப் பெறுகிற தேவை உங்களுக்கு நேரிடாது.
13கர்த்தர் உங்களை வாலாக இல்லாமல் தலையாக ஆக்குவார். நீங்கள் கீழாக இல்லாமல் மேலாவீர்கள். இன்று நான் சொல்கிறபடி உங்கள் தேவனாகிய கர்த்தருடைய கட்டளைகளைக் கேட்டால், இது நிகழும். நீங்கள் கவனமாக இக்கட்டளைகளுக்குக் கீழ்ப்படியவேண்டும்.
14நான் இன்று உங்களுக்குக் கொடுத்த கட்டளைகளிலிருந்து நீங்கள் விலகிப் போகாமல் இருக்கவேண்டும். நீங்கள் வலது புறமாகவோ, இடது புறமாகவோ திரும்பவேண்டாம். நீங்கள் மற்ற பொய்த் தெய்வங்களைப் பின்பற்றி அவற்றுக்குச் சேவை செய்யக்கூடாது.

### சட்டங்களுக்குக் கீழ்ப்படியாவிட்டால் ஏற்படும் சாபங்கள்

15"ஆனால் நீ உனது தேவனாகிய கர்த்தர் சொல்கின்றவற்றைக் கவனிக்காமல் இருந் தால், நான் இன்று உனக்கு சொல்கின்றபடி அவரது சட்டங்களுக்கும், கட்டளைகளுக்கும் கீழ்ப்படியாமல் இருந்தால்,பிறகு இத்தீமைகள் எல்லாம் உனக்கு ஏற்படும்:

16 "நகரிலும், வயலிலும்
கர்த்தர் உன்னைச் சபிப்பார்.
17 கர்த்தர் உனது கூடைகளையும்,
பாத்திரங்களையும் சபிப்பார்.

அவற்றில் உணவு இல்லாமல்
போகும்.
18 கர்த்தர் உன்னைச் சபிப்பார்.
உனக்கு அதிகக் குழந்தைகள்
இல்லாமல் போகும்.
அவர் உனது நிலத்தைச் சபிப்பார்.
உனக்கு நல்ல விளைச்சல்
கிடைக்காமல் போகும்.
அவர் உனது மிருகங்களைச்
சபிப்பார்.
அவை குட்டிகள் அதிகம்
இல்லாமல் போகும்.
அவர் உனது எல்லா
கன்றுக்குட்டிகளையும்
ஆட்டுக்குட்டிகளையும் சபிப்பார்.
19 கர்த்தர் எல்லா நேரங்களிலும்
நீ செய்கின்ற எல்லாவற்றையும்
சபிப்பார்.

20“நீ தீமைசெய்து கர்த்தரை விட்டு
விலகிப்போனால், பிறகு அவர் உனக்கு
தீமைகள் ஏற்படும்படிச் செய்வார். நீ
செய்கிற எல்லாவற்றிலும் உனக்கு விரக்
தியும், கஷ்டமும் ஏற்படும்படிச் செய்வார்.
நீ விரைவாகவும் முழுவதுமாகவும்
அழிக்கப்படும்வரை கர்த்தர் இதனைத்
தொடர்ந்து செய்வார். அவர் இதனைச்
செய்வார். ஏனென்றால், நீ அவரை விட்டு
விலகிப்போனாய். 21நீ பெறப்போகும்
நாட்டிலிருந்து நீ அழிந்து முடிந்து போகும்
வரை, உனக்குக் கர்த்தர் பயங்கரமான
நோய்கள் ஏற்படும்படிச் செய்வார். 22கர்த்தர்
உன்னை நோய்களாலும், காய்ச்சல் மற்றும்
வீக்கங்களாலும் தண்டிப்பார். கர்த்தர்
உனக்குப் பயங்கரமான வெப்பத்தை
அனுப்புவார். உனக்கு மழை இல்லாமல்
போகும். உனது பயிர்கள் வெப்பத்தாலும்,
நோயாலும் பட்டுப்போகும். நீ அழிக்கப்
படும்வரை இத்தீமைகள் எல்லாம் நிகழும்.
23வானத்தில் மேகங்கள் இராது. வானம்
பளபளப்பாக்கப்பட்ட வெண்கலத்தைப்
போல் இருக்கும். உனக்குக் கீழுள்ள
பூமியானது கெட்டியான இரும்பைப்
போன்று இருக்கும். 24கர்த்தர் மழையை
அனுப்பமாட்டார். வானத்திலிருந்து
மணலும், புழுதியுமே விழும். நீ அழிகிற
வரை இது கீழே வந்து கொண்டிருக்கும்.
25“உனது பகைவர்கள் உன்னைத்
தோற்கடிக்கும்படி கர்த்தர் செய்வார். உனது
பகைவரோடு சண்டையிட நீ ஒரு வழியில்
போவாய். ஆனால் நீ வேறுபட்ட ஏழு
வழிகளில் தப்பி ஓடுவாய். உனக்கு ஏற்படும்
இந்த தீமைகள் எல்லாம் பூமியிலுள்ள
எல்லா ஜனங்களையும் பயப்படுத்தும்.
26உங்களது மரித்த உடல்கள் காட்டு
மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் உண
வாகும். உங்கள் மரித்த உடல்களிலிருந்து
அவற்றை எவராலும் பயமுறுத்தி விரட்ட
முடியாது.
27“கர்த்தர் எகிப்தியர்களுக்கு அனுப்பியது
போன்று பருக்களால் உன்னைத்
தண்டிப்பார். அவர் உன்னைக் குணமாக்க
முடியாதபடியுள்ள மூல வியாதியினாலும்,
சொறியினாலும், சிரங்கினாலும் தண்டிப்
பார். 28கர்த்தர் உன்னைப் புத்தி மயங்
கவைத்தும் தண்டிப்பார். அவர் உன்னைக்
குருடாக்கியும் குழப்புவார். 29பகல்
வெளிச்சத்தில், குருடனைப்போல் உனது
வழியை தடவிப்பார்த்துச் செல்வாய். நீ
செய்கிற எல்லாவற்றிலும் தோற்றுப்
போவாய். ஜனங்கள் மீண்டும், மீண்டும்
உன்னைத் தாக்கி உன்னிடமுள்ளவற்றைத்
திருடிக்கொள்வார்கள். அங்கு எவராலும்
உன்னைக் காப்பாற்ற முடியாது.
30“நீ ஒரு பெண்ணை நியமித்துக்
கொள்வாய், ஆனால் இன்னொருவன்
அவளோடு பாலின உறவு கொள்வான். நீ
ஒரு வீட்டைக் கட்டுவாய். ஆனால் அதில்
நீ இருக்கமாட்டாய். நீ திராட்சைச்
செடிகளைப் பயிர் செய்வாய். ஆனால்
அவற்றிலிருந்து எதையும் நீ சேகரிக்கமாட்
டாய். 31ஜனங்கள் உனக்கு முன்னாலேயே
உனது பசுக்களைக் கொல்வார்கள். ஆனால்
அவற்றின் இறைச்சியை நீ தின்னமாட்டாய்.
ஜனங்கள் உனது கழுதைகளை
எடுத்துக்கொள்வார்கள். அவர்கள் அவற்றை
உனக்குத் திரும்பக் கொடுக்கமாட்டார்கள்.
உனது பகைவர்கள் உனது ஆட்டு
மந்தையை எடுத்துக்கொள்வார்கள். அங்கே
எவரும் உன்னைக் காப்பாற்ற இருக்க
மாட்டார்கள்.
32“மற்ற ஜனங்கள் உனது மகன்களையும்,
மகள்களையும் எடுத்துகொள்ள அனுமதிக்கப்
படுவார்கள். நாள்தோறும் உனது பிள்ளை
களை எதிர்ப்பார்த்திருப்பாய். உனது
கண்கள் பலவீனமாகிக் குருடாகும்வரை நீ
பார்த்துக் கொண்டிருப்பாய், ஆனால்
உன்னால் அவர்களைக் காணமுடியாது.
தேவன் உனக்கு உதவிசெய்ய மாட்டார்.
33“நீ அறிந்திராத நாடு உனது விளைச்சல்
எல்லாவற்றையும், மற்றும் நீ உழைத்துப்
பெற்ற எல்லாவற்றையும் எடுத்துக்
கொள்ளும். ஜனங்கள் உன்னை மோசமாக
நடத்துவார்கள். ஜனங்கள் உன்னைப் பழிப்
பார்கள். 34நீ பார்க்கின்றவை அனைத்தும்
உனக்குப் பைத்தியத்தை ஏற்படுத்தும்.
35கர்த்தர் உன்னைக் குணப்படுத்த முடியாத
கொடிய எரிபந்தப் பருக்களினால் தண்டிப்
பார். அப்பருக்கள் உனது முழங்
கால்களிலும், கால்களிலும் இருக்கும்.
அப்பருக்கள் உனது உள்ளங்கால்கள் முதல்
உச்சந்தலைவரை உடம்பின் எல்லாப்
பாகங்களிலும் இருக்கும்.
36“நீ அறிந்திராத நாட்டிற்கு உன்னையும்,
உனது அரசனையும் கர்த்தர் அனுப்புவார்.

நீயும் உனது முற்பிதாக்களும் இதற்கு
முன்னால் இந்நாட்டைப் பார்த்திருக்
கவில்லை. அங்கே நீ பொய்த்
தெய்வங்களுக்கு சேவை செய்வாய். அவை
மரத்தாலும் கல்லாலும் செய்யப்பட்டிருக்கும்.
37 கர்த்தர் உங்களை அனுப்பிய நாடுகளில்
உங்களுக்கு ஏற்படுகின்ற தீயவற்றைப்
பார்த்து அங்குள்ள ஜனங்கள் அதிர்ச்சி
அடைவார்கள். அவர்கள்
உங்களைப்பார்த்துச்சிரிப்பார்கள். அவர்கள்
உங்களைப்பற்றி மோசமாகப் பேசுவார்கள்.

### தோல்வியின் சாபம்

38 "உங்கள் வயல்கள் ஏராளமாக
தானியங்களை விளைவித்தாலும், உங்களது
அறுவடை சிறியதாக இருக்கும். ஏனென்
றால், வெட்டுக்கிளிகள் உங்கள் அறுவடை
யைத் தின்றுவிடும். 39 நீ திராட்சைச்
செடிகளைப்பயிர்செய்வாய். அவற்றுக்காகக்
கடினமாக வேலை செய்வாய். ஆனால், நீ
திராட்சைப் பழங்களைப் பறிக்கமாட்டாய்.
திராட்சைரசத்தையும் குடிக்கமாட்டாய்.
ஏனென்றால், புழுக்கள் அவற்றைத்
தின்றுவிடும். 40 உனது நிலத்தில் ஒலிவ
மரங்கள் எங்கெங்கும் வளர்ந்திருக்கும்.
ஆனால், நீ பயன்படுத்திட ஒலிவ எண்ணெ
யைப் பெறமாட்டாய். ஏனென்றால், ஒலிவ
மரங்களில் பிஞ்சுகள் கீழே விழுந்து
அழுகிப்போகும். 41 உனக்கு மகன்களும்,
மகள்களும் இருப்பார்கள், ஆனால் நீ
அவர்களைப் பாதுகாக்க முடியாது.
ஏனென்றால், அவர்கள் சிறைபிடிக்கப்பட்டுக்
கொண்டு செல்லப்படுவார்கள். 42 வெட்டுக்
கிளிகள் உனது வயலில் உள்ள
விளைச்சலையும், மரங்களையும் அழித்து
விடும். 43 உங்களிடையே வாழ்கிற பிறநாட்டு
ஜனங்கள் மேலும் மேலும் அதிகாரத்தைப்
பெறுவார்கள். நீயோ உனக்கிருந்த
அதிகாரத்தையும் இழப்பாய். 44 பிற நாட்டுக்
காரர்கள் உனக்குக் கடன்தர பணம்
வைத்திருப்பார்கள். ஆனால் அவர்களுக்குக்
கடன்கொடுக்க உன்னிடம் பணம் இருக்காது.
(தலை உடலைக் கட்டுப்படுத்துவது
போன்று) அவர்கள் உன்னைக் கட்டுப்
படுத்துவார்கள். நீ வாலைப் போன்று
இருப்பாய்.

45 "இந்த சாபங்கள் எல்லாம் உனக்கு
வரும். நீ அழியும்வரை இவை உன்னைத்
துரத்திப் பிடிக்கும். ஏனென்றால், நீ உனது
தேவனாகிய கர்த்தர் சொன்னவற்றைக்
கவனிக்கவில்லை. அவர் கொடுத்த சட்டங்
களுக்கும் கட்டளைகளுக்கும் நீ
அடிபணியவில்லை. 46 உன்னையும் உனது
சந்ததிகளையும் தேவன் நியாயந்தீர்த்
திருக்கிறார் என்று ஜனங்களுக்கு இந்த
சாபங்கள் காட்டும். உங்களுக்கு ஏற்படுகிற
பயங்கரத்தைப்பற்றி ஜனங்கள் வியப்படை
வார்கள்.

47 "உனது தேவனாகிய கர்த்தர் உனக்குப்
பல ஆசீர்வாதங்களைக் கொடுத்தார். ஆனால்
நீ அவருக்குச் சந்தோஷமும் மகிழ்ச்சியும்
கொண்ட மனதோடு சேவை செய்யவில்லை.
48 ஆகவே கர்த்தர் அனுப்பிவைத்த உனது
பகைவர்களுக்கு நீ சேவை செய்வாய். நீ
பசியும், தாகமும், நிர்வாணமும், ஏழ்மையும்
அடைவாய். கர்த்தர் உன்மீது நீக்க முடியாத
சுமையை வைப்பார். அவர் உன்னை
அழிக்கும்வரை அந்தச் சுமையை நீ
சுமப்பாய்.

### பகை நாட்டிற்குரிய சாபம்

49 "கர்த்தர் தொலைதூரத்திலிருந்து உன்
னோடு சண்டையிட ஒரு நாட்டை
வரவழைப்பார். அவர்களது மொழியை
உன்னால் புரிந்துகொள்ள முடியாது. அவர்
கள் விரைந்து வருவார்கள். வானிலிருந்து
ஒரு கழுகு வருவதுபோன்று வருவார்கள்.
50 அந்த ஜனங்கள் கொடூரமானவர்களாக
இருப்பார்கள். அவர்கள் முதியவர்
களைப்பற்றிக் கவலைப்படமாட்டார்கள்.
அவர்கள் இளங்குழந்தைகளிடம் இரக்கம்
காட்டமாட்டார்கள். 51 அவர்கள் உங்களது
மிருகங்களையும் நீங்கள் வளர்த்த உணவுப்
பொருட்களையும் எடுத்துக்கொள்வார்கள்.
உன்னை அழிக்கும்வரை அவர்கள்
எல்லாவற்றையும் எடுத்துக்கொள்வார்கள்.
அவர்கள் உன்னிடம் தானியம், திராட்சை
ரசம், எண்ணெய், பசுக்கள், ஆடுகள் அல்லது
மாடுகள் எதையும் விட்டு வைக்க
மாட்டார்கள். அவர்கள் உன்னை
அழிக்கும்வரை எல்லாவற்றையும் எடுத்துக்
கொள்வார்கள்.

52 "அந்த நாடு உனது நகரங்களைச் சுற்றி
முற்றுகையிட்டுத் தாக்கும். உனது நகரங்
களைச் சுற்றியுள்ள உயரமும் உறுதியும்
கொண்ட சுவர்கள் உங்களைக் காப்பாற்றும்
என்று நீ நினைத்தால், அந்தச்சுவர்கள் கீழே
விழும், உனது தேவனாகிய கர்த்தர்
உனக்குக் கொடுத்த நாட்டிலுள்ள நகரங்கள்
எல்லாவற்றையும் பகைவர்கள் முற்றுகை
யிடுவார்கள், 53 நீ மிகவும் துன்பப்படுவாய்.
பகைவர்கள் உனது நகரங்களை முற்றுகை
யிடுவார்கள், உனக்கு உணவு கிடைக்க
அவர்கள் அனுமதிக்க மாட்டார்கள். நீ
மிகுந்த பசியை அடைவாய். உங்கள் சொந்த
மகன்களையும் மகள்களையும் தின்னும்
படியும் உங்கள் தேவனாகிய கர்த்தர்
கொடுத்த பிள்ளைகளைத் தின்னும்படியும்
உங்களுக்கு அதிக பசி இருக்கும்.

54 "உங்களில் மிக சாந்தமும் இரக்கமும்
கொண்டவன் கொடூரமானவனாக ஆவான்.
அவன் பிறருக்கும், தான் மிகவும் நேசித்த
தன் மனைவிக்கும் கொடியவன் ஆவான்.
அவன் உயிரோடுள்ள தன் பிள்ளைகளுக்கும்
கொடியவன் ஆவான். 55 அவனுக்கு எந்த

உணவும் இல்லாதபடியால் தன் சொந்தப்
பிள்ளைகளையே புசிப்பான். அவன் அந்த
உணவை வேறு யாரோடும் தன் சொந்தக்
குடும்பத்தினரோடும்கூட பகிர்ந்துகொள்ள
மாட்டான். உனது பகைவர்கள் உன்
நகரங்களை முற்றுகையிட்டு உன்னைத்
துன்புறுத்தும்போது இந்த கொடூரங்க
ளெல்லாம் ஏற்படும்.
56“உங்கள் மத்தியில் மிகுந்த சாந்தமும்
இரக்கமுமுள்ள பெண்ணும்கூடக் கொடியவள்
ஆவாள். அவள் மிகவும் சாந்தமும், அவளது
கால்கள் தரையில்படாத அளவிற்கு
நளினமுள்ளவளாகவும் இருக்கலாம். ஆனால்
அவள் தன் மிகுந்த அன்புக்குரிய
கணவனுக்குக் கொடியவள் ஆவாள். அவள்
தனது சொந்த மகனுக்கும், மகளுக்கும்கூடக்
கொடியவள் ஆவாள். 57அவள் மறைவாக
ஒரு குழந்தையைப் பெறுவாள். அக்குழந்தை
யோடு அவளது உடலிருந்து வெளிவரும்
அனைத்தையும் அவள் புசிப்பாள். உன்
பகைவன் உனது நகரங்களை முற்றுகை
யிட்டு உன்னைத் துன்புறுத்தும்போது
இத்தீயவை எல்லாம் நிகழும்.
58“நீ இந்தப் புத்தகத்திலுள்ள அனைத்து
கட்டளைகளுக்கும் போதனைகளுக்கும்
கீழ்ப்படிய வேண்டும். நீ உனது தேவனாகிய
கர்த்தருடைய அற்புதமும் பயங்கரமுமான
பெயருக்கு மதிப்பளிக்கவேண்டும். நீ
கீழ்ப்படியாவிட்டால் பிறகு 59கர்த்தர்
உனக்கும் உனது சந்ததிகளுக்கும்* மிகுந்த
துன்பங்களைக் கொடுப்பார். உன் துன்பங்
களும் நோய்களும் பயங்கரமானதாக
இருக்கும். 60எகிப்தில் நீ பல துன்பங்
களையும் நோய்களையும் பார்த்தாய். அவை
உன்னை அஞ்சும்படி செய்தன. உனக்கு
அத்துன்பங்களையெல்லாம் கர்த்தர் கொண்டு
வருவார். 61இந்தப் போதனைகளின்
புத்தகத்தில் எழுதப்படாத துன்பங்களையும்,
நோய்களையும் கர்த்தர் உனக்குக்
கொண்டுவருவார். நீ அழிக்கப்படும்வரை
கர்த்தர் இதனைத் தொடர்ந்து செய்வார்.
62நீங்கள் வானத்து நட்சத்திரங்களைப்
போன்று அதிக எண்ணிக்கையுடை
யவர்களாக இருக்கலாம். ஆனால் உங்களிடம்
சிலரே மீதியாக விடப்படுவீர்கள்.
ஏனென்றால், நீ உனது தேவனாகிய
கர்த்தருக்குச் செவிசாய்க்கவில்லை.
63“கர்த்தர் உனக்கு நல்லவராக
இருப்பதிலும் உனது நாட்டை வளர்ச்சி
அடைய செய்வதிலும் மகிழ்ந்தார். அதே
வழியில் உன்னை அழிப்பதிலும் அதம்
பண்ணுவதிலும் மகிழ்ச்சியடைவார். நீ அந்த
நாட்டை உனக்குச் சொந்தமானதாக
ஆக்கப்போகிறாய், ஆனால் ஜனங்கள் அந்த
நாட்டை விட்டு உன்னை அப்புறப்
படுத்துவார்கள். 64கர்த்தர் உங்களை உலக
நாட்டு குடிகளினிடையில் சிதறடிப்பார்.
அங்கே நீ கல்லாலும், மரத்தாலும் ஆன
பொய்த் தெய்வங்களுக்குச் சேவை
செய்வாய். அவர்கள் உன்னாலும் உனது
முற்பிதாக் களாலும் ஆராதிக்கப்படாத
பொய்த் தெய்வங்கள்.
65“இந்நாட்டு குடிகளுக்குள்ளே நீ
சமாதானத்தைப் பெறமாட்டாய், உனக்கு
ஓய்வுகொள்ள இடமிருக்காது. கர்த்தர் உனது
மனம் முழுவதையும் கவலைகளால்
நிரப்புவார். உனது கண்கள் சோர்வை
உணரும். நீ மிகுந்த மனசஞ்சலம் அடைவாய்.
66நீ எப்பொழுதும் ஆபத்துகளுக் கிடையில்
பயத்தோடு இருப்பாய். நீ இரவும், பகலும்
பயப்படுவாய். நீ உனது வாழ்க்கையைப்
பற்றிய உறுதி இல்லாமல் இருப்பாய்.
67காலையில் நீ, ‘எப்பொழுது சாயங்காலம்
வருமோ’ என்றும், மாலையில் ‘இது
காலையாக இருக்க விரும்புகிறேன்’ என்றும்
சொல்லுவாய். ஏனென்றால், உன் மனதில்
பயம் இருக்கும். நீ தீயவற்றைப் பார்ப்பாய்.
68கப்பல்களில் கர்த்தர் உன்னை மீண்டும்
எகிப்துக்கு அனுப்புவார். உங்களை
மீண்டும் அனுப்பமாட்டேன் என்று நான்
சொன்னேன். ஆனால், கர்த்தர் உங்களை
அனுப்புவார். எகிப்தில் உங்கள் பகைவர்
களுக்கு நீங்களே உங்களை அடிமைகளாக
விற்பீர்கள். ஆனால் உங்களை யாரும்
வாங்கமாட்டார்கள்.”

### மோவாபில் உடன்படிக்கை

29 கர்த்தர், இஸ்ரவேல் ஜனங்களோடு
ஓரேப் மலையின் (சீனாய்) மேல்
உடன்படிக்கை செய்தார். அவர்கள்
மோவாபில் இருக்கும்போது உடன்படிக்
கையோடு கர்த்தர், இன்னொரு உடன்படிக்
கயைச் செய்துகொள்ளும்படி மோசேக்குக்
கட்டளையிட்டார். இதுதான் அந்த
உடன்படிக்கை:
2மோசே இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரையும் கூட்டி அழைத்தான். அவன்
அவர்களிடம், “நீங்கள் கர்த்தர் எகிப்தில்
செய்த எல்லாவற்றையும் பார்த்தீர்கள். அவர்
பார்வோனுக்கும், பார்வோனின் அதிகாரி
களுக்கும், நாடு முழுவதற்கும் செய்தவற்றை
நீங்கள் பார்த்தீர்கள். 3அவர் கொடுத்த
பெருந்துன்பங்களையும் நீங்கள் பார்த்தீர்கள்.
அவர் செய்த அற்புதங்களையும், வியக்கத்
தக்கவற்றையும் பார்த்தீர்கள். 4ஆனால்,
இன்றுவரை என்ன நடந்தது என்று நீங்கள்
புரிந்துகொள்ளவில்லை. நீங்கள் பார்த்த
வற்றையும் கேட்டவற்றையும் பற்றி
உண்மையிலேயே புரிந்துகொள்ள கர்த்தர்
அனுமதிக்கவில்லை. 5கர்த்தர் 40
ஆண்டுகளாக உங்களை வனாந்தரத்தில் வழி
நடத்தினார். அக்காலம் முழுவதும் உங்கள்
ஆடைகளும் பாதரட்சைகளும் கிழிந்து

**சந்ததி(கள்)** ஒரு நபருடைய குழந்தைகளும்,
அவர்களுடைய எதிர்காலக் குடும்பங்களும்.

போகவில்லை. 6உங்களோடு எவ்வித
உணவும் இருக்கவில்லை. உங்களிடம்
குடிப்பதற்குத் திராட்சைரசமோ வேறு
பானமோ இருக்கவில்லை. ஆனால், கர்த்தர்
உங்களைக் கவனிக்கும் பொறுப்பை
எடுத்துக் கொண்டார். அவரே உங்கள்
தேவனாகிய கர்த்தர் என்பதைப்
புரிந்துகொள்ளும்படி அவர் இதனைச்
செய்தார்.
7“நீங்கள் இந்த இடத்திற்கு வந்தீர்கள்.
நமக்கு எதிராகச் சண்டையிட எஸ்போனின்
அரசனாகிய சீகோனும், பாசானின் அரச
னாகிய ஓகும் வந்தார்கள். ஆனால் நாம்
அவர்களைத் தோற்கடித்தோம். 8பிறகு நாம்
அவர்களுடைய நாடுகளை எடுத்து
ரூபனியருக்கும், காத்தியருக்கும், மனாசே
யின் பாதிக்கோத்திரத்திற்கும் கொடுத்தோம்.
9இந்த உடன்படிக்கையில் உள்ள அனைத்துக்
கட்டளைகளுக்கும் நீ கீழ்ப்படிந்தால் பிறகு
நீ செய்கிற எல்லாவற்றிலும் தொடர்ந்து
வெற்றிபெறுவாய்.
10“இன்று அனைத்து இஸ்ரவேல்
ஜனங்களும் உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு
முன் நின்று கொண்டிருக்கிறீர்கள். உங்கள்
தலைவர்கள், அதிகாரிகள், மூப்பர்கள்
மற்றும் எல்லா மனிதர்களும், 11உங்கள்
மனைவிகளும் பிள்ளைகளும் இங்கே
இருக்கிறார்கள். உங்களிடையே அயல்
நாட்டுக் குடிகள் வாழ்கிறார்கள். அவர்கள்
உங்களுக்கென்று மரத்தை வெட்டி,
தண்ணீரைக் கொண்டு வருகிறார்கள்.
12உங்கள் தேவனாகிய கர்த்தரிடம் உடன்
படிக்கை செய்ய நீங்கள் அனைவரும்
இங்கே இருக்கிறீர்கள். கர்த்தர் இன்று
உங்களோடு இந்த உடன்படிக்கையைச்
செய்கிறார். 13இந்த உடன்படிக்கையோடு,
கர்த்தர் உங்களைத் தமது சொந்த விசேஷ
மான ஜனங்களாக்கிக் கொண்டிருக்கிறார்.
அவர்தாமே உங்கள் தேவன் ஆவார். அவர்
இதை உனக்குக் கூறுகிறார். அவர் உனது
முற்பிதாக்களான ஆபிரகாம்,ஈசாக்கு மற்றும்
யாக்கோபுஆகியோர்களுக்கு வாக்களித்திருக்
கிறார். 14கர்த்தர் இந்த உடன்படிக்கையை
தமது வாக்குறுதிகளோடு உங்களுக்கு
மட்டும் கொடுக்கவில்லை. 15நமது
தேவனாகிய கர்த்தருக்கு முன்பு நிற்கிற நம்
அனைவரோடும் அவர் உடன்படிக்கை
செய்திருக்கிறார். ஆனால் இந்த
உடன்படிக்கை இன்று நம்மோடு இங்கே
இல்லாத நமது சந்ததிகளுக்கும் உரியதா
கிறது. 16நாம் எகிப்து நாட்டில் எப்படி
வாழ்ந்தோம் என்றும், நாம் கடந்து வந்த
வழியிலுள்ள இந்நாடுகளில் எப்படிப்
பயணம் செய்தோம் என்று நினைத்துக்
கொள்ளுங்கள். 17அவர்களது வெறுக்கத்தக்க
பொருட்களான மரத்தாலும், கல்லாலும்,
வெள்ளியாலும், தங்கத்தாலும் செய்யப்பட்ட
விக்கிரகங்களை பார்த்தீர்கள். 18இங்கே ஒரு
ஆணோ, பெண்ணோ, கோத்திரமோ இன்று,
நமது தேவனாகிய கர்த்தரை விட்டு
விலகாதபடி உறுதியாயிருங்கள். அந்நிய
நாடுகளிலுள்ள தெய்வங்களுக்குச் சேவை
செய்ய எவரும் போகவேண்டாம். அவ்வாறு
செய்கிற ஜனங்கள் கசப்பும், விஷத்
தன்மையும் உள்ள கனியுள்ள செடிபோல
இருப்பார்கள்.
19“ஒருவன் இந்தச் சாபங்களைக்
கேட்கலாம். ஆனால் அவன் தன்னை
ஆறுதல் படுத்திக்கொண்டு தனக்குள், ‘நான்
என் விருப்பம் போல்தான் செய்வேன்.
எனக்கு எந்தத் தீமையும் ஏற்படாது’ என்று
சொல்லலாம். அவன் தனக்கு மட்டும்
தீமையை வரவழைப்பதில்லை. ஆனால்
எல்லோருக்கும், நல்லவர்களுக்கும் கூடத்
தீமையை வரவழைக்கிறான். 20-21கர்த்தர்
அவனை மன்னிப்பதில்லை. அவன்மேல்
கர்த்தர் கோபமும் எரிச்சலும் அடைவார்.
அவனைக் கர்த்தர் தண்டிப்பார். கர்த்தர்
அவனது பெயரை வானத்தின் கீழிருந்து
அழித்துப்போடுவார். கர்த்தர் அவனை
முழுமையாக அழிப்பார். இப்புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ள எல்லாத் தீமைகளும்
அவனுக்கு ஏற்படும். இந்தப் போதனைகளின்
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ள உடன்படிக்கை
யின் ஒரு பகுதியாக அவை இருக்கும்.
22“எதிர்காலத்தில் உங்கள் சந்ததிகளும்,
தொலைதூரத்து அயல்நாட்டுக் குடிகளும்
இந்நாடு எவ்வாறு பாழானது என்று
காண்பார்கள். கர்த்தர் இந்த நாட்டிற்குக்
கொண்டு வந்திருக்கிற நோய்களையும்
பார்ப்பார்கள். 23அனைத்து நாடுகளும்
பயனற்றுப்போகும். எரிகின்ற கந்தகத்தால்
அழிக்கப்பட்டு உப்பால் மூடப்படும். எதுவும்
நடுவதற்கு ஏற்றதாக பூமி இருக்காது.
களைகள்கூட வளராத அளவிற்குப் பாழாய்
போகும். கர்த்தர் மிகக் கோபத்தோடு
இருந்தபோது, நகரங்களான சோதோமையும்,
கொமோராவையும், அத்மாவையும், செபோ
யீமையும் அழித்ததுபோன்று இந்த நாடும்
அழிக்கப்படும்.
24“‘கர்த்தர் இந்த நாட்டிற்கு ஏன் இவ்வாறு
செய்தார்? அவர் ஏன் இவ்வளவு கோபமாக
இருக்கிறார்?’ மற்ற அனைத்து நாடுகளும்
கேட்கும். 25அதன் பதில் இவ்வாறு இருக்கும்:
‘கர்த்தர் கோபமாக இருக்கிறார். ஏனென்
றால், இஸ்ரவேல் ஜனங்கள் தங்கள்
முற்பிதாக்களின் தேவனாகிய கர்த்தருடைய
உடன்படிக்கையை விட்டு விலகிப்
போனார்கள். அவர்களைக் கர்த்தர் எகிப்தை
விட்டு வெளியே கொண்டுவந்தபோது
அவர்களோடு அவர் செய்த உடன்படிக்
கையை பின்பற்றுவதை நிறுத்தினர். 26இஸ்ர
வேல் ஜனங்கள் அந்நிய தெய்வங்களுக்கும்,
இதற்குமுன்பு தொழுதுகொள்ளாத தெய்வங்
களுக்கும் பணிவிடை செய்யத் தொடங்கி
னார்கள். அத்தெய்வங்களை ஆராதிக்க

வேண்டாம் என்று கர்த்தர் அந்த ஜனங்
களிடம் கூறினார். 27அதனால்தான், கர்த்தர்
அந்நாட்டு ஜனங்களுக்கு எதிராக மிகவும்
கோபங்கொண்டார். எனவே, புத்தகத்தில்
எழுதப்பட்ட எல்லா சாபங்களையும் அவர்
களுக்கு அவர் கொண்டுவந்தார். 28கர்த்தர்
அவர்கள்மேல் மிகவும் கோபங்கொண்டு
எரிச்சல் அடைந்தார். எனவே, அவர்களை
அவர் அந்நாட்டை விட்டு வெளியே எடுத்
தார். அவர் அவர்களை இன்று இருக்கிற
நாட்டில் விட்டார்.'

29"நமது தேவனாகிய கர்த்தர் சில
காரியங்களை இரகசியமாக வைத்துள்ளார்.
அவற்றை அவர் மட்டுமே தெரிந்திருக்கிறார்.
ஆனால் கர்த்தர் தமது போதனைகளை
நமக்கும் நமது சந்ததிகளுக்கும் என்றென்
றைக்கும் கொடுத்திருக்கிறார். அந்தச்
சட்டத்திலுள்ள எல்லா கட்டளைகளுக்கும்
நாம் கீழ்ப்படிய வேண்டும்.

### இஸ்ரவேலர்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்புவார்கள்

30 "நான் சொல்லியிருக்கிற அனைத்தும்
உங்களுக்கு நிகழும். நீங்கள்
ஆசீர்வாதங்களிலிருந்து நன்மையைப் பெறு
வீர்கள். நீங்கள் சாபங்களிலிருந்து தீமை
களைப் பெறுவீர்கள். உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களை வேறு நாடுகளுக்கு
அனுப்புவார். பிறகு நீங்கள் இவற்றைப்
பற்றி நினைப்பீர்கள். 2அந்த நேரத்தில்
நீங்களும் உங்கள் சந்ததிகளும் உங்கள்
தேவனாகிய கர்த்தரிடம் திரும்பி வருவீர்கள்.
நீங்கள் முழுமனதோடு அவரைப் பின்
பற்றுவீர்கள். நான் இன்று உங்களுக்குக்
கொடுத்திருக்கிற அவரது அனைத்து
கட்டளைகளுக்கும் முழுமையாக அடிபணி
வீர்கள். 3பிறகு உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களிடம் இரக்கம்கொள்வார். கர்த்தர்
உங்களை மீண்டும் விடுதலை செய்து
உங்களை அனுப்பிய தேசங்களிலிருந்து
திரும்பக் கூட்டிச் சேர்ப்பார். 4அவர் உங்
களை பூமியின் ஒரு பகுதிக்கு
அனுப்பியிருந்தாலும் உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களைச் சேகரித்துத் திரும்ப
அங்கிருந்து உங்களைக் கொண்டு வருவார்.
5உங்கள் முற்பிதாக்களுக்குரிய நாட்டிற்குக்
கர்த்தர் உங்களைக் கொண்டு வருவார்.
அந்நாடு உங்களுக்கு உரியதாகும். கர்த்தர்
உங்களுக்கு நன்மையைச் செய்வார். உங்கள்
முற்பிதாக்களுக்குரியதைவிட நீங்கள் அதிகம்
பெறுவீர்கள். அவர்களிடம் இருந்த
ஜனங்களைவிட உங்கள் நாட்டில் மிகுதி
யான ஜனங்கள் இருப்பார்கள். 6உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களையும் உங்கள்
சந்ததிகளையும் கீழ்ப்படிய விரும்பும்படிச்
செய்வார். பிறகு நீ உன் முழு இருதயத்தோடு
கர்த்தரை நேசிப்பாய். நீ வாழ்வாய்!

7"பிறகு உனது தேவனாகிய கர்த்தர்
உங்கள் பகைவர்களுக்கு அத்தீமைகளை
எல்லாம் ஏற்படும்படிச் செய்வார். ஏனென்
றால், அந்த ஜனங்கள் உன்னை வெறுத்து
உனக்குத் தீமையைச் செய்தார்கள். 8நீ
மீண்டும் கர்த்தருக்குக் கீழ்ப்படிவாய். நான்
இன்று உங்களுக்குக் கொடுக்கிற அவரது
அனைத்துக் கட்டளைகளுக்கும் நீ
கீழ்ப்படிவாய். 9உனது தேவனாகிய கர்த்தர்
நீ செய்கிற அனைத்திலும் வெற்றி
அடையும்படிச் செய்வார். அவர் உன்னை
அதிகக்குழந்தைகள் பெறும்படி ஆசீர்வதிப்
பார். அவர் உனது பசுக்களை
ஆசீர்வதிப்பார். அவை மிகுதியான
கன்றுகளைப் பெறும். அவர் உனது
வயல்களை ஆசீர்வதிப்பார். அவை நல்ல
விளைச்சல் அடையும். கர்த்தர் உனக்கு
நல்லவராக இருப்பார். கர்த்தர் உனக்கு
நன்மை செய்வதில் உங்கள் முற்பிதாக்
களுக்கு நன்மை செய்யும்போது
மகிழ்ந்ததைப்போன்று மீண்டும் மகிழ்வார்.
10ஆனால் நீ உனது தேவனாகிய கர்த்தர்
சொன்னபடி செய்யவேண்டும். நீ அவரது
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய வேண்டும்.
இந்தப் போதனைகளின் புத்தகத்தில்
சொல்லப்பட்டுள்ள விதிகளைப் பின்பற்ற
வேண்டும். உனது தேவனாகிய கர்த்தருக்கு
நீ உன் முழு இருதயத்தோடும், முழு
ஆத்மாவோடும் கீழ்ப்படிய வேண்டும்.
அப்போது உனக்கு இந்த நன்மைகள்
ஏற்படும்.

### ஜீவன் அல்லது மரணம்

11"இன்று நான் உனக்கு கொடுக்கிற இந்த
கட்டளைகள் கடினமானவை அல்ல,
உங்களுக்குத் தூரமானதும் அல்ல.
12'பரலோகத்துக்குச் சென்று, எங்களுக்காக
அதனைக் கொண்டு வருவது யார்?
அப்பொழுதுதான் எங்களால் அதைக்
கேட்கவும் அதன்படி நடக்கவும் முடியும்'
என்று நீ சொல்லாதபடிக்கு அது
பரலோகத்தில் உள்ளதும் அல்ல. 13'கடல்
கடந்துபோய் நாங்கள் கேட்கவும், செய்யவும்
யார் கொண்டு வருவார்கள்?' என்று நீ
சொல்லாதபடிக்கு அது கடலுக்கு
அக்கரையிலும் இல்லை. 14இந்த வார்த்தை
உனக்கு மிகவும் அருகில் இருக்கிறது.
அது உன் வாயிலும், உன் இருதயத்திலும்
இருக்கிறது. எனவே நீ அதற்குக் கீழ்ப்படிய
முடியும்.

15"இன்று நான் வாழ்வையும், மரணத்
தையும், நன்மையையும், தீமையையும்
உனக்கு முன்பாகத் தெரிந்து கொள்ளும்
படியாகக் கொடுக்கிறேன். 16உனது
தேவனாகிய கர்த்தரை நேசிக்கும்படி இன்று
நான் உனக்குக் கட்டளையிடுகிறேன்.
அவரைப் பின்பற்றும்படியும் அவரது
சட்டங்களுக்கும், விதிகளுக்கும், கட்டளை
களுக்கும் கீழ்ப்படியுமாறு நான் உனக்குக்

கட்டளையிடுகிறேன். பிறகு நீ வாழ்வாய்,
உனது ஜனம் பெரிதாக வளரும். உனக்குச்
சொந்தமாக்கிக்கொள்ள நீ நுழைகின்ற இந்த
நாட்டில் உன்னை, உனது தேவனாகிய
கர்த்தர் ஆசீர்வதிப்பார். 17ஆனால்
கர்த்தரிடமிருந்து விலகி நீ அவருக்குச்
செவிசாய்க்க மறுத்து நீ அவரை
தொழுதுகொள்வதிலிருந்து விலகி பிற
பொய்த் தெய்வங்களுக்குச் சேவை
செய்தால், 18நீ அழிக்கப்படுவாய். நான்
உன்னை எச்சரிக்கிறேன். நீ
கர்த்தரிடமிருந்து விலகினால், உனக்குச்
சொந்தமாக்கிக்கொள்ள நீ நுழைந்து
கொண்டிருக்கிற யோர்தானைக் கடந்து
போகிற நாட்டில் நீண்டகாலம் வாழ
மாட்டாய்.

19“இன்று நான் உனக்கு முன்பாக இரண்டு
வழிகளை வைத்தேன். உனது தேர்வுக்கு
பரலோகத்தையும் பூமியையும் சாட்சியாக
வைத்தேன். நீ வாழ்வு அல்லது மரணத்தைத்
தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். நீ வாழ்வைத்
தெரிந்தெடுத்தால் அது ஆசீர்வாதத்தைக்
கொண்டுவரும். நீ மரணத்தைத் தெரிந்தெ
டுத்தால் அது உனக்கு சாபத்தைக்
கொண்டுவரும். எனவே வாழ்வைத்
தேர்ந்தெடு. பிறகு நீயும் உனது
பிள்ளைகளும் வாழலாம். 20நீ உனது
தேவனாகிய கர்த்தரை நேசித்து அவருக்குக்
கீழ்ப்படிய வேண்டும். அவரைவிட்டு
விலகக்கூடாது. ஏனென்றால், கர்த்தரே
உனது வாழ்வு. உனது முற்பிதாக்களான
ஆபிரகாம், ஈசாக்கு மற்றும் யாக்கோபு
ஆகியோருக்கு கர்த்தர் வாக்களித்த நாட்டில்
நீண்டகாலம் வாழும்படி அவர் உன்னை
ஆசீர்வதிப்பார்.”

## யோசுவா புதிய தலைவனாக இருப்பான்

31 பிறகு மோசே போய் இஸ்ரவேலின்
அனைத்து ஜனங்களிடம் இவற்றைப்
பேசினான். 2மோசே அவர்களிடம், “நான்
இன்று 120 வயதுள்ளவன். இனிமேல்
என்னால் உங்களை வழிநடத்த முடியாது.
கர்த்தர் என்னிடம்: ‘நீ யோர்தானைக்
கடந்து போகமாட்டாய்’ என்று சொன்னார்.
3ஆனால், உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களை அந்த நாட்டிற்குள் வழிநடத்திச்
செல்வார். உனக்காகக் கர்த்தர் இந்த
ஜாதிகளை அழிப்பார். நீ அவர்களது
நாட்டை அவர்களிடமிருந்து எடுத்துக்
கொள்வாய், ஆனால், யோசுவா உங்களை
வழிநடத்த வேண்டும் என்று கர்த்தர்
சொன்னார்.

4“கர்த்தர் சீகோனையும், ஓகையும்
அழித்தார். கர்த்தர் அந்த எமோரிய
அரசர்களையும் அழித்தார். கர்த்தர்
உனக்காக மீண்டும் அதனைச் செய்வார்.
5அந்த ஜாதிகளைத் தோற்கடிக்கக் கர்த்தர்
உதவிசெய்வார். ஆனால் நான் உங்களுக்குச்
சொன்னபடி எல்லாவற்றையும் நீங்கள்
அவர்களுக்குச் செய்யவேண்டும். 6பலமுள்ள
வர்களாகவும் தைரியம் உள்ளவர்களாகவும்
இருங்கள். அந்த ஜனங்களுக்குப் பயப்பட
வேண்டாம். ஏனென்றால், உன் தேவனாகிய
கர்த்தர் உன்னோடு இருக்கிறார். அவர்
உன்னை விட்டு விலகுவதுமில்லை,
உன்னைக் கைவிடுவதுமில்லை” என்றான்.

7பின்பு மோசே யோசுவாவை
அழைத்தான். மோசே யோசுவாவிடம்
சொல்வதை இஸ்ரவேல் ஜனங்கள் அனை
வரும் பார்த்தனர். அவன் “பலமாகவும்
தைரியமாகவும் இரு. அவர்களது
முற்பிதாக்களுக்கு தருவதாகக் கர்த்தர்
வாக்களித்த நாட்டிற்கு நீதான் இவர்களை
வழி நடத்தவேண்டும். இஸ்ரவேல் ஜனங்கள்
அந்நாட்டைத் தமக்குச் சொந்தமாக்கிக்
கொள்ள நீ உதவவேண்டும். 8கர்த்தர்
உன்னை வழிநடத்துவார். அவர்தாமே
உன்னுடன் இருக்கிறார். அவர் உன்னைக்
கைவிடமாட்டார். உன்னை விட்டு விலக
மாட்டார். கவலைப்படாதே. பயப்படாதே”
என்றான்.

## மோசே போதனைகளை எழுதுகிறான்

9பிறகு மோசே போதனைகளை எழுதி
ஆசாரியர்களிடம் கொடுத்தான். அந்த
ஆசாரியர்கள் அனைவரும் லேவியர்
கோத்திரத்தினர். அவர்கள் கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியைத் தூக்கிச்
செல்லும் வேலையை உடையவர்கள்.
மோசே போதனைகளை இஸ்ரவேலின்
மூப்பர்கள் (தலைவர்கள்) அனைவருக்கும்
கொடுத்தான். 10பிறகு, மோசே தலைவர்
களிடம் பேசினான். அவன், “ஒவ்வொரு ஏழு
ஆண்டின் முடிவிலும் விடுதலைக்கான
ஆண்டில் அடைக்கலக் கூடாரப்
பண்டிகையில், இந்தப் போதனைகளை
ஜனங்களுக்கு வாசியுங்கள். 11அப்பொழுது,
இஸ்ரவேலின் அனைத்து ஜனங்களும் கூடி
வருவார்கள். அவர்கள் உன் தேவனாகிய
கர்த்தர் குறிப்பிடும் சிறப்பான இடத்தில்
அவரைச் சந்திக்க வருவார்கள். பிறகு நீ
ஜனங்களுக்கு போதனைகளை வாசிக்க
வேண்டும். அப்பொழுது அவற்றை அவர்கள்
கேட்க முடியும். 12அனைத்து ஜனங்களையும்
ஒன்று கூட்டு. ஆண்கள், பெண்கள்,
சிறுகுழந்தைகள், உங்கள் நகரங்களில்
வாழும் அயல்நாட்டுக்குடிகள் என
அனைவரையும் கூட்டு. போதனைகளை
அவர்கள் கேட்பார்கள். அவர்கள் உனது
தேவனாகிய கர்த்தரை மதிக்கக் கற்றுக்கொள்
வார்கள். போதனைகளில் உள்ளவற்றுக்குக்
கீழ்ப்படிவார்கள். 13அவர்களது சந்ததிகள்
போதனைகளை அறிந்திராவிட்டால், பிறகு
அவர்கள் அவற்றைக் கேட்பார்கள். அவர்கள்
உனது தேவனாகிய கர்த்தரை மதிக்கக்
கற்றுக்கொள்வார்ள். நீ உனது நாட்டில்

வாழும் காலம்வரை அவர்கள் அவரை மதிப்பார்கள். நீ விரைவில் யோர்தானை கடந்துபோய் அந்த நாட்டை உங்களுக்குச் சொந்தமாக்கிக்கொள்வாய்" என்றான்.

### கர்த்தர் மோசேயையும் யோசுவாவையும் அழைக்கிறார்

14 கர்த்தர் மோசேயிடம், "இப்பொழுது நீ மரணமடைவதற்குரிய நேரம் நெருங்கி யுள்ளது. பரிசுத்தக் கூடாரத்திற்குள் வரும்படி யோசுவாவிடம் சொல். அவன் செய்ய வேண்டியவற்றை நான் யோசுவாவிடம் கூறுவேன்" என்றார். எனவே மோசேயும் யோசுவாவும் ஆசரிப்புக் கூடாரத்திற்குள் சென்றார்கள்.

15 கர்த்தர் கூடாரத்திலே உயரமான மேகத்தூணில் தோன்றினார். உயரமான அந்த மேகத்தூண் கூடாரத்தின் வாசலுக்கு
மேல் நின்றது! 16 கர்த்தர் மோசேயிடம், "நீ விரைவில் மரணமடைவாய். நீ உனது முற்பிதாக்களோடு போய்ச் சேர்ந்தபிறகு இந்த ஜனங்கள் என் மீதுள்ள நம்பிக்கையில் தொடரமாட்டார்கள். நான் அவர்களோடு செய்த உடன்படிக்கையை அவர்கள் முறிப்பார்கள். அவர்கள் என்னைவிட்டு விலகி வேறு தெய்வங்களைத் தொழுதுகொள் வார்கள். அவர்கள் போகிற நாட்டில் உள்ள பொய்த் தெய்வங்களை
தொழுதுகொள்வார்கள். 17 அந்த நேரத்தில் நான் அவர்கள்மேல் மிகவும் கோபங்கொள்வேன். நான் அவர்க ளை விட்டு விலகுவேன். அவர்களுக்கு உதவ நான் மறுப்பேன். அவர்கள் அழிக்கப்படுவார்கள். அவர்களுக்குப் பயங்கரமானவை ஏற்படும். அவர்களுக்குப் பல தொல்லைகள் ஏற்படும். பிறகு அவர்கள், 'இத்தீமைகள் எல்லாம் எங்களுக்கு ஏற்படு கின்றன. ஏனென்றால், தேவன் எங்களோடு
இல்லை' என்பார்கள். 18 நான் அவர்களுக்கு உதவ மறுப்பேன். ஏனென்றால், அவர்கள் தீமை செய்திருக்கின்றனர். மற்ற தெய்வங்களை வணங்கினார்கள்.

19 "எனவே, இப்பாடலை எழுது. இஸ்ரவேல் ஜனங்களுக்கு இதனைக் கற்றுக் கொடு. இப்பாடலைப் பாட அவர்களுக்குக் கற்றுக்கொடு. பிறகு இப்பாடல் இஸ்ரவேல் ஜனங்களுக்கு எதிராக எனக்குச் சாட்சியாக
இருக்கும். 20 நான் அவர்களது முற்பிதாக் களுக்கு கொடுப்பதாக வாக்களித்த பல நன்மைகள் நிறைந்த நாட்டிற்கு அவர்களை அழைத்துச் செல்வேன். அவர்கள் உண்ண விரும்புகின்றவற்றை எல்லாம் பெறுவார் கள். அவர்கள் வளமான வாழ்வைப் பெறுவார்கள். ஆனால், பின்னர் அவர்கள் அந்நிய தெய்வங்களிடம் திரும்பி அவர்களுக்குப் பணிவிடை செய்வார்கள். அவர்கள் என்னிடமிருந்து விலகி எனது
உடன்டிக்கையை உடைப்பார்கள். 21 பிறகு பல பயங்கரமானவை அவர்களுக்கு நிகழும். அவர்களுக்குப் பல தொல்லைகள் ஏற்படும். அப்போது, அவர்களின் ஜனங்கள் இப்பாடலை நினைவு வைத்திருப்பார்கள். அவர்கள் எந்த அளவு தவறியுள்ளனர் என்பதை இப்பாடல் காட்டும். நான் அவர்களுக்குக் கொடுப்பதாக வாக்களித்த நாட்டிற்கு அவர்களை அதுவரை அழைத்துப் போயிருக்கமாட்டேன். ஆனால் ஏற்கெனவே அவர்கள் அங்கே என்னசெய்ய திட்டமிட்டுள்ளார்கள் என்பதை நான் அறிவேன்" என்று கூறினார்.

22 எனவே அதே நாளில் மோசே அப்பாடலை எழுதினான். அவன் இஸ்ர வேல் ஜனங்களுக்கு அந்தப்பாட்டை கற்றுத்தந்தான்.

23 பின்னர், கர்த்தர் நூனின் மகனான யோசுவாவிடம் பேசி, "பலமுள்ளவனாகவும், தைரியமுள்ளவனாகவும் இரு. நான் வாக்களித்த நாட்டிற்கு இஸ்ரவேல் ஜனங்களை வழிநடத்திச் செல்வாய். நான் உன்னோடு இருப்பேன்" என்று கூறினார்.

### மோசே இஸ்ரவேல் ஜனங்களை எச்சரிக்கிறான்

24 மோசே கவனமாக இப்போதனைகள் எல்லாவற்றையும் ஒரு புத்தகத்தில் எழுதி
முடித்தபோது, 25 அவன் லேவியர்களுக்கு ஒரு ஆணை கொடுத்தான். (இவர்கள் கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியைத்
தூக்கிச் செல்லுகிறவர்கள்.) மோசே, 26 "இந்த போதனைகளின் புத்தகத்தை எடுத்துக் கொண்டு, இதனை உங்கள் தேவனாகிய கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியின் பக்கத்தில் வைத்துக்கொள்ளுங்கள். அது உங்களுக்கு எதிரான சாட்சியாக அங்கே
இருக்கும். 27 நீங்கள் கடினமானவர்கள் என்பதை நான் அறிவேன். நீங்கள் உங்கள் சொந்த வழியில் வாழ விரும்புகிறீர்கள் என்பதை நான் அறிவேன். பாருங்கள், நான் உங்களோடு இருக்கும்போதே நீங்கள் கர்த்தருக்குக் கீழ்ப்படிய மறுக்கிறீர்கள். நான் மரித்தபிறகும் நீங்கள் கர்த்தருக்குக் கீழ்ப்படிய
மறுப்பீர்கள். 28 எல்லா அதிகாரிகளையும், கோத்திரங்களின் தலைவர்களையும் ஒன்று கூட்டுங்கள். நான் அவர்களிடம் இவற்றைச் சொல்வேன். நான் பரலோகத்தையும், பூமியையும் அவர்களுக்கு எதிராக
சாட்சியாக அழைப்பேன். 29 எனது மரணத்திற்குப் பிறகு நீங்கள் கெட்டவர்களா வீர்கள் என்பதை நான் அறிவேன். நீங்கள் பின்பற்றுவதற்காக நான் கட்டளையிட்ட வழிகளை விட்டு விலகுவீர்கள். ஆகையால், எதிர்காலத்தில் உங்களுக்குத் தீமைகள் ஏற்படும். ஏனென்றால், கர்த்தர் தீங்கு என்று சொன்னவற்றையெல்லாம் நீங்கள் செய்ய விரும்புகிறீர்கள். நீங்கள் செய்த தீமை

களினால் அவரைக் கோபமடையச் செய்கிறீர்கள்" என்று சொன்னான்.

### மோசேயின் பாடல்

30 இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும் ஒன்று கூட்டப்பட்டனர். மோசே அவர் களுக்காக இந்தப் பாடலைப் பாடினான். மோசே முழுப்பாடலையும் பாடினான்:

32 "வானங்களே, கவனியுங்கள்,
நான் பேசுவேன்.
பூமியே, என் வாயின்
வார்த்தையைக் கேள்.
2 எனது போதனைகள் மழையைப்
போன்று வரும்,
பூமியின்மேல் விழும்
பனியைப்போன்றும்,
மெல்லிய புல்லின்மேல் தூறும்
மழைத்துளிகள் போன்றும்,
பசும் புதர்களின்மேல் விழும்
மழையைப்போன்றும் வரும்.
3 நான் கர்த்தருடைய நாமத்தைப்
பேசுவேன்.
தேவனைப் போற்றுங்கள்!*

4 "அவர் பாறை (கர்த்தர்),
அவரது செயல்கள்
பரிபூரணமானவை!
ஏனென்றால் அவரது வழிகள்
எல்லாம் சரியானவை!
தேவன் உண்மையும் சத்தியமும்
உள்ளவர்.
அவர் நீதியும் செம்மையுமானவர்.
5 நீங்கள் அவருடைய பிள்ளைகள்
அல்ல.
உங்களது பாவங்கள்
அவரை அசுத்தமாக்கியது.
நீங்கள் கோணலான பொய்யர்கள்.
6 உங்களுக்காக இவ்வளவு செய்த
கர்த்தருக்கு இந்த வழியிலா நீங்கள்
திரும்ப கொடுப்பீர்கள்? இல்லை!
நீங்கள் அறிவில்லாத அஞ்ஞான
ஜனங்கள்.
கர்த்தர் உங்களது தந்தையாக
இருக்கிறார்.
அவர் உங்களை உண்டாக்கினார்.
அவர் உங்களைத் தாங்குகிறார்.

7 "நீண்ட காலத்திற்கு முன்பு நடந்ததை
நினைத்துப்பாருங்கள்.
பற்பல ஆண்டுகளுக்கு முன்னால்
நடந்தவற்றை எண்ணிப்பாருங்கள்.
உனது தந்தையைக்கேள்.
அவன் உனக்குச் சொல்வான்.
உங்கள் தலைவர்களைக் கேள்.
அவர்கள் உனக்குச் சொல்வார்கள்.
8 உன்னதமான தேவன் பூமியில்
ஜனங்களைப் பிரித்து ஒவ்வொரு
ஜனத்தாருக்கும் சொந்தமான
ஒரு நாட்டைக் கொடுத்தார்.
அந்த ஜனங்களுக்குத் தேவன்
எல்லைகளை ஏற்படுத்தினார்.
இஸ்ரவேலில் எவ்வளவு ஜனங்கள்
இருக்கிறார்களோ
அவ்வளவு ஜாதிகளையும் அவர்
உண்டாக்கினார்.
9 கர்த்தருடைய ஜனங்களே அவரது
பங்கு,
யாக்கோபு (இஸ்ரவேல்) கர்த்தருக்குச்
சொந்தம்.

10 "கர்த்தர் யாக்கோபை (இஸ்ரவேல்)
ஒரு வனாந்திரத்தில் கண்டுபிடித்தார்.
அது ஒரு காலியான காற்று மிகுந்த
நிலம்.
கர்த்தர் அவனைக் காப்பாற்றுவதற்கு
யாக்கோபுவைச் சுற்றி
வளைத்துக்கொண்டார்.
அவர் அவனை தன் சொந்த
கண்மணியைப்போல் காத்தார்.
11 கர்த்தர் இஸ்ரவேலுக்கு
ஒரு கழுகைப்போன்று இருந்தார்.
ஒரு கழுகு தன் குஞ்சுகளைப்
பறக்கக் கற்பிக்கும்போது,
அவற்றைக் கூட்டிலிருந்து
கீழேதள்ளும்.
பின் அது தன் குஞ்சுகளைக்
காப்பதற்கு அவற்றோடு பறக்கும்.
அவை விழும்போது
தன் இறக்கைகளை விரித்து
அவற்றைப் பிடித்துக்கொள்ளும்,
அது பாதுகாப்பான இடத்திற்குக்
குஞ்சுகளைச் சிறகுகளில் தாங்கி
எடுத்துச்செல்லும்.
கர்த்தர் இதனைப் போன்றவர்.

12 "கர்த்தர் ஒருவரே யாக்கோபை
வழி நடத்தினார்,
அயல்நாட்டு தெய்வங்கள்
எவரும் அவனுக்கு உதவவில்லை.
13 கர்த்தர் மலைநாட்டை அடக்கி
ஆளும்படி யாக்கோபை
வழி நடத்தினார்.
யாக்கோபு வயல்களிலுள்ள
அறுவடைகளை
எடுத்துக்கொண்டான்
கர்த்தர் யாக்கோபிற்குப்
பாறையிலிருந்து தேனைக்
கொடுத்தார்.
கடினமான பாறைகளிலிருந்து
ஒலிவ எண்ணெய் பாயும்படிச்
செய்தார்.

---

**தேவனைப் போற்றுங்கள்** அல்லது "தேவனுக்கு (கனம்) மரியாதையைக் கொடுங்கள்" அல்லது "தேவனுடைய மகத்துவத்தைக் குறித்துப் பேசுங்கள்."

14 கர்த்தர் இஸ்ரவேலுக்குப்
பசுவிலிருந்து வெண்ணெயையும்,
ஆடுகளிலிருந்து பாலையும்
கொடுத்தார்.
அவர் இஸ்ரவேலுக்குப்
பாசானிலுள்ள ஆட்டுக்குட்டிகள்,
ஆட்டுக்கடாக்கள், வெள்ளாட்டுக்
கடாக்கள் ஆகியவற்றின்
கொழுப்பையும்,
சிறந்த கோதுமையையும் கொடுத்தார்.
இஸ்ரவேல் ஜனங்களாகிய நீங்கள்,
சிவந்த வண்ணமுடைய
திராட்சைரசத்தையும் குடித்தீர்கள்.

15 “ஆனால் யெஷுரன்*
கொழுத்துப்போய் கொழுத்த
காளையைப்போன்று உதைத்தான்
(ஆமாம், நீங்கள் நன்றாகப்
போஷிக்கப்பட்டீர்கள்!
நீங்கள் திருப்தியாகி கொழுத்தீர்கள்.)
அவன் தன்னை உண்டாக்கிய
தேவனை விட்டு விலகினான்.
தன்னை இரட்சித்த பாறையை
(தேவன்) விட்டு ஓடினான்.
16 கர்த்தருடைய ஜனங்கள் மற்ற
தெய்வங்களை வழிபட்டனர்,
கர்த்தரை எரிச்சல் அடையும்படி
செய்தனர்.
கர்த்தர் விக்கிரகங்களை
வெறுக்கிறார்.
ஆனால் அவரது ஜனங்கள்
வெறுக்கத்தக்க விக்கிரகங்களை
தொழுதுகொண்டு
தேவனுக்குக் கோபமூட்டினார்கள்.
17 அவர்கள் உண்மையில் தெய்வங்கள்
அல்லாத பிசாசுகளுக்குப்
பலியிட்டனர்.
அவைகள் இதுவரை அவர்கள்
அறிந்திராத புதிய பொய்த்
தெய்வங்கள் ஆகும்.
அவைகள் உங்களது முற்பிதாக்கள்
அறிந்திராத தெய்வங்கள் ஆகும்.
18 நீ உன்னை உண்டாக்கிய
பாறையை (தேவன்) விட்டு
விலகினாய்,
உனக்கு வாழ்வு தந்த உன் தேவனை
நீ மறந்தாய்.

19 “கர்த்தர் இதனைப் பார்த்து
கலக்கமடைந்தார்,
அவரது ஜனங்களை நிராகரித்தார்.
ஏனென்றால், அவரது குமாரரும்,
குமாரத்திகளும் அவருக்குக்
கோபமூட்டினர்!

20 அதனால் கர்த்தர் கூறினார்,
‘நான் அவர்களிடமிருந்து
திரும்புவேன்.
அப்போது அவர்களுக்கு என்ன
ஏற்படும் என்பதை அவர்கள்
பார்க்கட்டும்!
அவர்கள் மிகவும் கலகக்கார
ஜனங்களாய் இருக்கின்றனர்.
அவர்கள் தம் பாடங்களைப்
படிக்காத பிள்ளைகளைப்போன்று
இருக்கின்றார்கள்.
21 அவர்கள் பிசாசுகளை
தொழுதுகொண்டு என்னைப்
பொறாமைபடும்படிச் செய்தனர்.
இவ்விக்கிரகங்கள் உண்மையான
தேவன் அல்ல.
அவர்கள் பயனற்ற விக்கிரகங்கள்
மூலம்,
என்னைக் கோபமடையச் செய்தனர்.
எனவே, நான் இஸ்ரவேலுக்குப்
பொறாமையை உண்டாக்குவேன்.
ஒரு தேசமாக மதிக்கப்படாத
மூட ஜனங்களின் மூலம்
நானும் அவர்களுக்குக்
கோபத்தை உண்டாக்குவேன்.
22 எனது கோபம் எரியும் நெருப்பைப்
போன்றது
அது நரகத்தின் ஆழம்வரை
செல்கிறது.
அது பூமியையும், பூமி உற்பத்தி
செய்யும் பொருட்களையும்
எரிக்கிறது.
அது மலைகளின்
அஸ்திவாரங்களையும் எரிக்கிறது!

23 “‘நான் இஸ்ரவேலர்களுக்குத்
துன்பங்களைக் கொண்டுவருவேன்.
நான் அவர்கள் மீது
எனது அம்புகளை எய்வேன்.
24 அவர்கள் பசியால் மெலிந்து
பலவீனம் அடைவார்கள்.
பயங்கரமான நோய்கள் அவர்களை
அழிக்கும்.
நான் அவர்களுக்கு எதிராகக்
காட்டு மிருகங்களை அனுப்புவேன்.
விஷப் பாம்புகளும் பல்லிகளும்
அவர்களைக் கடிக்கும்.
25 வீரர்கள் அவர்களை வீதிகளில்
கொல்லுவார்கள்.
அவர்கள் தங்களது வீட்டிற்குள்ளேயே
பயப்படுவார்கள.
படைவீரர்கள் இளைஞர்களையும்,
இளம் பெண்களையும் கொல்வார்கள்.
அவர்கள் குழந்தைகளையும்,
முதியவர்களையும் கொல்வார்கள்.
26 நான் இஸ்ரவேலர்களை அழிக்க
விரும்பினேன்.
எனவே ஜனங்கள் அவர்களை

---

**யெஷூரன்** இது இஸ்ரவேலின் மற்றொரு பெயர் ஆகும். இந்தப் பெயர் “நல்லது” அல்லது “நேர்மையானது” எனப் பொருள்படும்.

முழுமையாக மறப்பார்கள்!
27 அவர்களது பகைவர்கள் என்ன
சொல்வார்கள் என்பதை
நான் அறிவேன்.
பகைவருக்கு அது புரியாது.
அவர்கள் பெருமை கொண்டு
சொல்வார்கள்.
"கர்த்தர் இஸ்ரவேலை
அழிக்கவில்லை.
நாங்கள் எங்கள் சொந்த பலத்தால்
வென்றோம்!'"

28 "இஸ்ரவேல் ஜனங்கள்
அறிவில்லாதிருக்கிறார்கள்.
அவர்கள் புரிந்துகொள்கிறதில்லை.
29 அவர்கள் அறிவுள்ளவர்களாக
இருந்தால்,
அவர்கள் புரிந்திருக்கக்கூடும்.
என்ன நடந்திருக்கக்கூடும் என்று
அவர்கள் அறிந்திருப்பார்கள்!
30 ஒருவனால் 1,000 பேரை துரத்த
முடியுமா?
இரண்டு பேரால் 10,000 பேரை
ஓட வைக்க முடியுமா?
கர்த்தர் அவர்களை எதிரிகளுக்குக்
கொடுத்திருந்தால் மட்டுமே
அது நிகழும்!
அவர்களின் பாறையானவர் (தேவன்)
அடிமைகளைப் போன்று
விற்றிருந்தால் மட்டுமே
அது நிகழும்!
31 எதிரிகளின் 'பாறையானவர்'
நமது பாறையானவரைப் (கர்த்தர்)
போன்று பலமுள்ளவர் அல்ல.
நமது பகைவர்கள் கூட இதனைத்
தெரிந்திருக்கின்றார்கள்!
32 பகைவர்களின் திராட்சைத்
தோட்டங்களும், வயல்களும்
சோதோம் மற்றும் கொமோராவைப்
போன்று அழிக்கப்படும்.
அவர்களது திராட்சைப் பழங்கள்
விஷமுள்ளதாகும்.
33 அவர்களது திராட்சைரசம்
பாம்பு விஷம் போன்றிருக்கும்.

34 "கர்த்தர் கூறுகிறார்,
'நான் அந்தத் தண்டனையைப்
பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன்.
நான் அதனை எனது சேமிப்பு
அறையில் பூட்டியுள்ளேன்!
35 அவர்கள் தீமையான கிரியைகளைச்
செய்யும்போது நான் அதற்குத்
தண்டனையை வைத்திருப்பேன்.
அவர்கள் தவறானவற்றைச்
செய்ததால் நான் அவர்களைத்
தண்டிப்பேன்.
அவர்களின் துன்பகாலம் அருகில்
உள்ளது.
அவர்களது தண்டனை விரைவில்
வரும்.'

36 "கர்த்தர் தமது ஜனங்களை
நியாயந்தீர்ப்பார்.
அவர்கள் அவரது வேலைக்காரர்கள்,
அவர்களுக்கு அவர் இரக்கம்
காண்பிப்பார்.
அவர்களது வல்லமை
போய்விட்டதை அவர் பார்ப்பார்.
அவர்களில் அடிமைகளும்,
சுதந்திரமானவர்களும் ஏகமாய்
உதவியற்றவர்களாக இருக்கிறார்கள்
என்பதை அவர் பார்ப்பார்.
37 பின்னர் கர்த்தர் கூறுவார்,
'பொய்த் தெய்வங்கள் எங்கே
இருக்கிறார்கள்?
பாதுகாப்பிற்காக நீங்கள் ஓடிய
'பாறை' எங்கே?
38 அப்பொய்த் தெய்வங்கள்
உங்கள் பலிகளில் உள்ள
கொழுப்பைத் தின்றன.
அவை உங்கள் காணிக்கையில்
உள்ள திராட்சைரசத்தைக் குடித்தன.
எனவே அந்தத் தெய்வங்கள் எழுந்து
உங்களுக்கு உதவட்டும்.
அவை உங்களைக் காக்கட்டும்!

39 "'இப்பொழுது நானே, நான் ஒருவரே
தேவனாக இருக்கிறதைப் பார்!
வேறு தேவன் இல்லை.
நான் ஜனங்களை மரிக்கச்
செய்வேன்.
நானே ஜனங்களை உயிருடன்
வைப்பேன்.
நான் ஜனங்களைக் காயப்படுத்த
முடியும்.
நான் அவர்களைக் குணப்படுத்தவும்
முடியும்.
எனது அதிகாரத்திலிருந்து ஒருவனும்
இன்னொருவனைக் காப்பாற்ற
முடியாது.
40 நான் எனது கையைப் பரலோகத்தை
நோக்கி உயர்த்தி,
இந்த வாக்குறுதியைச் செய்கிறேன்.
நான் என்றென்றும் ஜீவித்திருக்கிறவர்
என்பதினால் இவை நிகழும்
என்பதும் உண்மையாகும்!
41 நான் எனது பளபளக்கும் வாளைக்
கூர்மைப்படுத்துவேன்.
எனது எதிரிகளைத் தண்டிக்க
அதனைப் பயன்படுத்துவேன்.
அவர்களுக்கு ஏற்ற தண்டனையை
நான் கொடுப்பேன்
42 எனது பகைவர்கள்
கொல்லப்படுவார்கள்.
கைதிகளாக சிறைபிடிக்கப்படுவார்கள்.
எனது அம்புகள் அவர்களது

இரத்தத்தால் மூடப்படும்.
அவர்களது வீரர்களின் தலைகளை
எனது வாள் வெட்டும்.'

43 "இந்த உலகம் முழுவதும்
தேவஜனங்களுக்காக மகிழவேண்டும்
ஏனென்றால் அவர்களுக்கு
அவர் உதவுகிறார்.
அவர்களது வேலைகாரர்களைக்
கொன்ற ஜனங்களை
அவர் தண்டிக்கிறார்.
அவர் அவரது பகைவர்களுக்கு
ஏற்ற தண்டனைகளைக்
கொடுக்கிறார்.
அவர் அவரது நாட்டையும்,
ஜனங்களையும் சுத்தம் செய்கிறார்."

### மோசே அவனது பாடலை ஜனங்களுக்குக் கற்றுத்தருகிறான்

44மோசே வந்து அவனது பாடலில் உள்ள
எல்லா வார்த்தைகளையும் இஸ்ர வேல்
ஜனங்கள் கேட்கும்படி பாடினான். நூனின்
மகனாகிய யோசுவாவும் மோசேயோடு
இருந்தான். 45மோசே இவற்றை
ஜனங்களுக்குக் கற்றுக்கொடுத்து முடித்த
போது 46அவன் அவர்களிடம், "இன்று
நான் உங்களுக்குச் சொன்ன அனைத்துக்
கட்டளைகளிலும் நீங்கள் கவனம்
செலுத்தவேண்டும். இந்த சட்டத்தில் உள்ள
கட்டளைகளுக்கு முழுமையாகக் கீழ்ப்
படியும்படி உங்கள் பிள்ளைகளுக்கு நீங்கள்
சொல்லவேண்டும். 47இந்தப் போதனைகளை
முக்கியமற்றவை என்று நீங்கள்
எண்ணவேண்டாம். அவை உங்கள் ஜீவன்
ஆகும். இந்தப் போதனைகள் மூலம்,
யோர்தான் ஆற்றைக் கடந்துபோய் நீங்கள்
சுதந்தரிக்கத் தயாராக இருக்கும் தேசத்தில்
நீண்ட வாழ்வை வாழப்போகிறீர்கள்"
என்றான்.

### நேபோ மலையின்மேல் மோசே

48கர்த்தர் மோசேயிடம் அதே நாளில்
பேசினார். கர்த்தர், 49"அபாரீம் எனும்
மலைகளுக்குப் போ, எரிகோவிற்கு எதிர்ப்
புறமாக இருக்கிற மோவாப் நாட்டிலுள்ள
நேபோ மலையின்மேல் ஏறு. பிறகு நீ,
இஸ்ரவேல் ஜனங்கள் வாழ்வதற்காக நான்
கொடுக்கிற கானான் நாட்டினைப் பார்க்க
முடியும். 50நீ அந்த மலைமீது
மரணமடைவாய். உன் சகோதரன் ஆரோன்
ஓர் மலைமீது மரித்து முற்பிதாக்களிடம்
சேர்ந்ததுபோல் நீயும் உன் முற்பிதாக்களிடம்
சேருவாய். 51ஏனெனில், நீங்கள் இருவரும்
எனக்கு எதிராகப் பாவம் செய்தீர்கள்.
நீங்கள் காதேசிலே மேரிபாவின் தண்ணீர்
அருகில் இருந்தீர்கள். அது சீன்
வனாந்தரத்திலே இருந்தது. அங்கே,
இஸ்ரவேல் ஜனங்கள் முன்பாக, நான்
பரிசுத்தமானவர் என்று நீ கனப்படுத்த
வில்லை. 52எனவே, இப்போது இஸ்ரவேல்
ஜனங்களுக்கு நான் கொடுக்கிற தேசத்தை
நீ பார்க்கலாம். ஆனால், நீ அந்த
தேசத்திற்குள் செல்லமுடியாது" என்று
கூறினார்.

### மோசே ஜனங்களை ஆசீர்வதிக்கிறான்

33 மோசே மரிப்பதற்கு முன்பு, தேவனு
டைய மனுஷனான அவன் இஸ்ரவேல்
ஜனங்களுக்குக் கொடுத்த ஆசீர்வாதம்
இதுதான். 2மோசே சொன்னான்:

"சீனாயிலிருந்து கர்த்தர் வந்தார்.
கர்த்தர் சேயீரிலிருந்து அவர்களுக்கு
உதயமாகும் ஒளி போன்று
தோன்றினார்.
அவர் பாரான் மலையிலிருந்து
ஒளிவீசும் வெளிச்சத்தைப்
போன்று இருந்தார்.
கர்த்தர் 10,000 பரிசுத்தரோடு வந்தார்.
தேவனின் பலமிக்க படைவீரர்கள்
அவரது பக்கத்திலேயே
இருந்தார்கள்.
3 ஆம்! கர்த்தர் அவரது ஜனங்களை
நேசிக்கிறார்.
அவரது பரிசுத்தமான ஜனங்கள்
அனைவரும் அவரது கைக்குள்
இருக்கிறார்கள்.
அவர்கள் அவரது காலடியில்
இருந்து,
அவரது போதனையைக்
கற்கிறார்கள்!
4 மோசே சட்டத்தை கொடுத்தான்.
அந்தப் போதனைகள் எல்லாம்
யாக்கோபின் ஜனங்களுக்குரியது.
5 அந்த நேரத்தில், இஸ்ரவேலின்
ஜனங்களும் அவர்களது
தலைவர்களும்,
ஒன்று கூடினார்கள்.
கர்த்தர் யெஷூரனுக்கு அரசரானார்!

### ரூபனுக்கான ஆசீர்வாதம்

6 "ரூபன் வாழட்டும். அவன்
சாகவேண்டாம்!
ஆனால், அவனது குடும்பத்தில்
கொஞ்சம் ஜனங்கள் மட்டும்
இருக்கட்டும்!"

### யூதாவுக்கான ஆசீர்வாதம்

7மோசே யூதாவைப் பற்றி இவற்றைச்
சொன்னான்:

"கர்த்தாவே, யூதாவிலிருந்து தலைவன்
உதவிக்காக அழைக்கும்போது
கேளும்.
அவனை அவனது ஜனங்களிடம்
கொண்டுவாரும்.

அவனைப் பலப்படுத்தும்,
அவனது பகைவர்களை
தோற்கடிக்கும்படி உதவும்."

### லேவிக்கான ஆசீர்வாதம்

8 மோசே லேவியைப் பற்றி இவற்றைச்
சொன்னான்:

"லேவி உமது உண்மையான சீடன்.
அவன் ஊரீம் மற்றும் தும்மீமை
வைத்திருக்கிறான்.
நீர் மாசாவிலே லேவியின்
ஜனங்களைச் சோதித்தீர்.
மேரிபாவின் தண்ணீரிடத்திலே
அவர்கள் உமது ஜனங்களாக
இருக்கிறார்கள் என்பதை
நிரூபித்தீர்.
9 கர்த்தாவே, அவர்கள் சொந்தக்
குடும்பத்தை காட்டிலும்
உமக்கென்று மிகவும் கவனம்
செலுத்தினார்கள்.
அவர்களது தந்தை மற்றும் தாயைப்
பற்றியும் கவலைப்படவில்லை.
அவர்கள் தமது சகோதரர்களையும்
அடையாளம் காணவில்லை.
அவர்கள் தங்கள் சொந்தப்
பிள்ளைகள் மேலும் அக்கறை
செலுத்தவில்லை.
ஆனால், அவர்கள் உமது
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தார்கள்.
அவர்கள் உமது
உடன்படிக்கையைக் காத்தார்கள்.
10 அவர்கள் உமது விதிகளை
யாக்கோபிற்குப்* போதிப்பார்கள்.
அவர்கள் உமது சட்டத்தை
இஸ்ரவேலுக்குப் போதிப்பார்கள்.
அவர்கள் உமக்கு முன்னால் நறுமண
பொருட்களை எரிப்பார்கள்.
அவர்கள் உமது பலிபீடத்தில்
தகனபலிகளைச் செலுத்துவார்கள்.
11 கர்த்தாவே, லேவியின் உடமைகளை
ஆசீர்வதியும்.
அவன் செய்கின்றவற்றை
ஏற்றுக்கொள்ளும்.
அவனைத் தாக்குகிறவர்களை
அழித்துபோடும்!
அவனது பகைவர்களைத்
தோற்கடியும்
அப்போது அவர்கள் மீண்டும்
அவனை தாக்கமாட்டார்கள்."

### பென்யமீனுக்கான ஆசீர்வாதம்

12 மோசே பென்யமீனைப் பற்றி இதனைச்
சொன்னான்:

"கர்த்தர் பென்யமீனை நேசிக்கிறார்.
பென்யமீன் அவர் அருகில்
பாதுகாப்பாக வாழ்வான்.
கர்த்தர் எல்லா நேரத்திலும்
அவனைக் காப்பாற்றுகிறார்.
கர்த்தர் அவனது நாட்டில்
வாழ்வார்."

### யோசேப்புக்கான ஆசீர்வாதம்

13 மோசே யோசேப்பைப் பற்றி இதனைச்
சொன்னான்:

"கர்த்தர் யோசேப்பின் நாட்டை
ஆசீர்வதிக்கட்டும்.
கர்த்தாவே, வானத்தின் மேலிருந்து
மழையையும்
பூமிக்குக் கீழிருந்து நீரூற்றுகளையும்
அனுப்பும்.
14 அவர்களுக்குச் சூரியன்
நல்ல கனியைக் கொடுக்கட்டும்.
ஒவ்வொரு மாதமும் அதன்
நல்ல கனியைக் கொடுக்கட்டும்.
15 குன்றுகளும், பழமையான மலைகளும்
அவற்றின் சிறந்த கனியைத்
தயார் செய்யட்டும்.
16 பூமி தனது சிறந்த பொருட்களை
யோசேப்பிற்குத் தரட்டும்
யோசேப்பு தனது சகோதரர்களிடம்
இருந்து பிரிக்கப்பட்டான்.
எனவே, எரியும் முட்செடிகளில்
இருந்து கர்த்தர் தன்னிடமுள்ள
சிறந்தவற்றை யோசேப்பிற்குக்
கொடுக்கட்டும்.
17 யோசேப்பு பலமுள்ள காளையைப்
போன்றிருக்கிறான்.
அவனது இரு மகன்களும்
காளையின் கொம்புகளைப்
போன்றுள்ளனர்.
அவர்கள் மற்ற ஜனங்களைத் தாக்கிப்
பூமியின் கடைசிவரை தள்ளுவர்!
ஆமாம், மனாசே ஆயிரக்கணக்கான
ஜனங்களையும்,
எப்பிராயீம் பத்தாயிரக்கணக்கான
ஜனங்களையும்
தள்ளியிருக்கிறார்கள்."

### செபுலோன் மற்றும் இசக்காருக்கான ஆசீர்வாதம்

18 மோசே இதனைச் செபுலோனுக்குச்
சொன்னான்:

"செபுலோன், நீ வெளியே
போகும்போது மகிழ்ச்சியாய் இரு.
இசக்கார், நீ உன் கூடாரங்களாகிய
தாபரத்தில் மகிழ்ச்சியாய் இரு.
19 அவர்கள் ஜனங்களை தங்கள்
மலைக்கு அழைப்பார்கள்.

---

**யாக்கோபு** இஸ்ரவேலின் மற்றொரு பெயர்.

அவர்கள் அங்கே நல்ல பலிகளை
செலுத்துவார்கள்.
அவர்கள் கடலிலிருந்து
செல்வங்களையும்
கடற்கரையிலிருந்து
பொக்கிஷங்களையும் எடுப்பார்கள்."

### காத்துக்குரிய ஆசீர்வாதம்

20 மோசே இதனைச் சொன்னார்.

"தேவனைப் போற்றுங்கள்.
அவர் காத்திற்கு மிகுதியான
நாட்டைக் கொடுத்தவர்!
காத் ஒரு சிங்கத்தைப் போன்றவன்.
அவன் படுத்து காத்திருக்கிறான்.
பிறகு, அவன் தாக்கி
மிருகத்தைத் துண்டுகளாகக்
கிழிப்பான்.
21 அவன் அவனுக்குரிய சிறந்த
பகுதியைத் தேர்ந்தெடுக்கிறான்.
அவன் அரசனின் பாகத்தை
எடுக்கிறான்.
ஜனங்களின் தலைவர்கள் அவனிடம்
வருகிறார்கள்.
கர்த்தர் சொன்ன நல்லவற்றை
அவன் செய்கிறான்.
இஸ்ரவேல் ஜனங்களுக்குச்
சரியானதை
அவன் செய்கிறான்."

### தாணுக்குரிய ஆசீர்வாதம்

22 மோசே தாணைப்பற்றி இதனைச் சொன்னான்:

"தாண் சிங்கத்தின் குட்டியாக
இருக்கிறான்.
அது பாசானிலிருந்து வெளியே
குதித்தது."

### நப்தலிக்கான ஆசீர்வாதம்

23 மோசே நப்தலியைப் பற்றி இதனைச் சொன்னான்:

" நப்தலி, ஏராளமான நல்லவற்றைப்
பெறுவாய்.
கர்த்தர் உன்னை உண்மையாக
ஆசீர்வதிப்பார்.
நீ கலிலேயா ஏரி உள்ள நாட்டைப்
பெறுவாய்."

### ஆசேருக்கான ஆசீர்வாதம்

24 மோசே ஆசேரைப் பற்றி இதனைச் சொன்னான்:

"மகன்கள் அனைவரிலும்,
ஆசீர்வதிக்கப்பட்டவனாக ஆசேர்
இருக்கிறான்.
அவன் தனது சகோதரர்களுக்கு
பிரியமானவனாக இருக்கட்டும்.
அவன் தனது கால்களை
எண்ணெயில் கழுவட்டும்.
25 உனது வாசல்கள் இரும்பாலும்
வெண்கலத்தாலும் செய்யப்பட்ட
பூட்டுகளைப் பெறட்டும்.
உனது வாழ்நாள் முழுவதும்
நீ பலத்தோடு இருப்பாய்."

### மோசே தேவனைப் புகழுகிறான்

26 "யெஷுரனுடைய, தேவனைப்
போன்றவர் எவருமில்லை!
தேவன் உனக்கு உதவுவதற்காகத்
தமது மகிமையோடு
மேகங்களின்மேல் சவாரி செய்து
வானங்களின்மேல் வருகிறார்.
27 தேவன் என்றென்றும் வாழ்கிறார்.
அவர் உனது பாதுகாப்பான இடம்.
தேவனின் வல்லமை என்றென்றும்
தொடரும்!
அவர் உன்னைப் பாதுகாத்துக்
கொண்டிருக்கிறார்.
உனது பகைவர்கள் உன் நாட்டை
விட்டு விலகும்படி தேவன்
துரத்துவார்.
அவர்,
'பகைவரை அழித்துப்போடு'
என்று சொல்லுவார்.
28 எனவே இஸ்ரவேல் பாதுகாப்பில்
வாழும்.
யாக்கோபின் ஊற்று அவர்களுக்கு
உரியதாக இருக்கும்.
அவர்கள் தானியமும்,
திராட்சைரசமும் நிறைந்த
நாட்டைப் பெறுவார்கள்.
அந்த நாடு மிகுதியான மழையைப்
பெறும்.
29 இஸ்ரவேலே, நீ
ஆசீர்வதிக்கப்பட்டவன்.
வேறு எந்த நாடும் உன்னைப்
போன்றில்லை.
கர்த்தர் உன்னைக் காப்பாற்றினார்
கர்த்தர் உனக்குப் பாதுகாப்பான
கேடயத்தைப் போன்றிருக்கிறார்!
கர்த்தர் பலமுள்ள வாளைப்
போன்றும் இருக்கிறார்
உனது பகைவர்கள் உனக்குப்
பயப்படுவார்கள்.
நீ அவர்களது பரிசுத்த இடங்களை
மிதிப்பாய்!"

### மோசே மரணமடைதல்

34 மோசே நேபோ மலைமீது ஏறினான்.
மோசே மோவாப்பிலுள்ள யோர்தான்
சமவெளியிலிருந்து பிஸ்காவின் உச்சிக்குச்
சென்றான். இது எரிகோவிலிருந்து யோர்

தான் ஆற்றுக்கு எதிர்புறத்தில் உள்ளது.
கர்த்தர் மோசேக்கு கீலேயாத் முதல் தாண்
வரையுள்ள அனைத்து நாடுகளையும்
காட்டினார். 2கர்த்தர் அவனுக்கு நப்தலி,
எப்பிராயீம், மற்றும் மனாசேயின் நாடுகள்
எல்லாவற்றையும் காட்டினார். அவர்
அவனுக்கு மத்தியதரைக் கடல் வரையுள்ள
யூதா நாடு முழுவதையும் காட்டினார்.
3கர்த்தர் மோசேக்கு பாலைவனத்தையும்,
பேரீச்ச மரங்களின் நகரம் என்னும் சோவார்
முதல் எரிகோ வரையுள்ள பள்ளத்தாக்
கையும் காட்டினார். 4கர்த்தர் மோசேயிடம்,
"நான் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு
ஆகியோருக்கு வாக்களித்த நாடு இதுதான்.
நான் அவர்களிடம் சொன்னேன் 'நான்
இந்த நாட்டை உங்கள் சந்ததிகளுக்குத்
தருவேன். அந்த நாட்டை நீ பார்க்கும்படி
செய்வேன். ஆனால் அங்கே உன்னால்
போகமுடியாது' என்று கூறினார்.
5பின்னர் கர்த்தருடைய தாசனாகிய
மோசே மோவாப் நாட்டில் மரித்தான். கர்த்தர்
மோசேயிடம் இவை நிகழும் என்று
சொல்லியிருந்தார். 6கர்த்தர் மோசேயை
மோவாபில் அடக்கம் செய்தார். இது
பெத்பேயோருக்கு எதிர்புறத்தில் உள்ள
பள்ளத்தாக்கிலே உள்ளது. ஆனால் இன்று
வரை மோசேயின் கல்லறை எங்கே
இருக்கிறது என்று எவருக்கும் தெரியாது.
7மோசே மரணமடையும்போது 120 வயது
டையவனாக இருந்தான். அவன்
எப்பொழுதும்போல் பலமுள்ளவனாக
இருந்தான். அவனது கண்கள் அப்பொழுதும்
நன்றாக இருந்தது. 8இஸ்ரவேல் ஜனங்கள்
மோசேக்காக 30 நாட்கள் அழுதனர்.
அவர்கள் துக்ககாலம் முடியும்வரை மோவா
பிலுள்ள யோர்தான் சமவெளியில்
தங்கினார்கள்.

### யோசுவா புதிய தலைவனாகுதல்

9யோசுவாவின்மேல் மோசே தனது
கைகளை வைத்து அவனைப் புதிய
தலைவனாக நியமித்திருந்தான். பிறகு
நூனின் மகனான யோசுவா ஞானத்தின்
ஆவியால் நிரப்பப்பட்டான். எனவே
இஸ்ரவேல் ஜனங்கள் யோசுவாவிற்குக்
கீழ்ப்படியத் தொடங்கினார்கள். கர்த்தர்
மோசேக்குக் கட்டளையிட்டிருந்தவற்றை
எல்லாம் அவர்கள் செய்தனர்.
10இஸ்ரவேல் மோசேயைப் போன்று
இன்னொரு தீர்க்கத்தரிசியைப் பெறவில்லை.
கர்த்தர் மோசேயை நேருக்கு நேர் தெரிந்து
வைத்திருந்தார். 11எகிப்து நாட்டில் அற்புதங்
களைச் செய்வதற்குக் கர்த்தர் மோசேயை
அனுப்பினார். பார்வோன், அவனது அதிகா
ரிகள் மற்றும் எகிப்திலுள்ள அனைத்து
ஜனங்களும் அந்த அற்புதங்களைப்
பார்த்தனர். 12மோசே செய்ததுபோன்று
வேறு எந்த தீர்க்கத்தரிசியும் சகல
வல்லமையும், பயங்கரமும் கொண்ட செயல்
களைச் செய்யவில்லை. அவன் செய்ததை
இஸ்ரவேலில் உள்ள எல்லா ஜனங்களும்
பார்த்தனர்.

# யோசுவாவின் புத்தகம்

### இஸ்ரவேலரை வழிநடத்துவதற்கு
### கர்த்தர் யோசுவாவைத் தெரிந்தெடுத்தல்

1 மோசே கர்த்தருடைய ஊழியனாக இருந்
தான். நூனின் மகனாகிய யோசுவா
மோசேயின் உதவியாளனாக இருந்தான்.
மோசே மரித்தபிறகு, கர்த்தர் யோசுவாவிடம்
பேசினார். கர்த்தர், 2“எனது ஊழியனாகிய
மோசே மரித்துவிட்டான். இப்போது நீயும்
இந்த ஜனங்களும் யோர்தான் நதியைத்
தாண்டி, நான் இஸ்ரவேல் ஜனங்களாகிய
உங்களுக்குக் கொடுக்கின்ற தேசத்திற்குள்
நீங்கள் செல்லவேண்டும். 3நான் இந்தத்
தேசத்தை உங்களுக்குக் கொடுப்பதாக
மோசேக்கு வாக்களித்திருந்தேன். எனவே
நீங்கள் காலடி எடுத்து வைக்கும் இடத்தை
யெல்லாம் உங்களுக்கே கொடுப்பேன்.
4பாலைவனத்திலிருந்தும், லீபனோனிலிருந்
தும் பெரிய நதியாகிய ஐபிராத்து வரைக்கு
மான ஏத்திய ஜனங்களுக்குரிய, தேசம்
உங்களுக்குரியதாகும். மற்றும் உங்கள்
எல்லைக்குள் இங்கிருந்து (சூரியன் மறைகிற
இடமாகிய) மேற்கில் மத்தியதரைக் கடல்
வரைக்குமுள்ள தேசம் இருக்கும். 5நான்
மோசேயோடு இருந்தது போல் உன்னோடும்
இருப்பேன். உன் ஆயுள் உள்ள மட்டும்
உன்னை யாரும் எதிர்க்கவோ தடுக்கவோ
முடியாது. நான், உன்னைக் கைவிட
மாட்டேன். ஒருபோதும் உன்னைவிட்டு
விலகமாட்டேன்.
6“யோசுவா, நீ வல்லமையும், தைரியமும்
உள்ளவனாக இருக்கவேண்டும்! இந்த
ஜனங்கள் தமக்குரிய தேசத்தைப் பெறும்படி
நீ அவர்களை வழிநடத்த வேண்டும். இந்
நாட்டை அவர்களுக்குக் கொடுப்பதாக நான்
அவர்கள் முன்னோர்களுக்கு வாக்களித்தேன்.
7ஆனால் நீயும் மற்றொரு காரியத்தில்
உறுதியோடும், தைரியத்தோடும் இருக்க
வேண்டும். எனது ஊழியனாகிய மோசே
உனக்குக் கொடுத்த கட்டளைகளுக்குக்
கண்டிப்பாக நீ கீழ்ப்படிய வேண்டும். நீ
அவற்றைச் சரியாகப் பின்பற்றினால், நீ
செய்கிற எல்லாவற்றிலும் வெற்றி அடை
வாய். 8சட்ட புத்தகத்தில் எழுதியிருப்ப
வற்றை எப்போதும் நினைவு கூர்ந்து,
இரவும் பகலும் அதைப்படி. அப்போது
அப்புத்தகத்தில் எழுதியிருப்பவைகளுக்கு நீ
கீழ்ப்படிய முடியும். இதைச் செய்தால், நீ
செய்கின்ற எல்லாக் காரியங்களிலும் ஞான
முள்ளவனாய் வெற்றி காண்பாய். 9நீ உறு
தியும், தைரியமும் உடையவனாய் இருக்க
வேண்டுமெனக் கட்டளையிட்டதை நினை
வில் வைத்துக்கொள், எனவே பயப்படாதே,
நீ போகுமிடங்களில் எல்லாம் தேவனாகிய
கர்த்தர் உன்னோடிருப்பார்” என்றார்.

### யோசுவா பதவி ஏற்குதல்

10யோசுவா, ஜனங்களின் தலைவர்களுக்கு
ஆணைகளைக் கொடுத்தான். 11அவன்,“
முகாம்களுக்குச் சென்று ஜனங்களிடம் தயா
ராகும்படி கூறுங்கள், மேலும் ஜனங்களிடம்,
‘கொஞ்சம் உணவைத் தயாரியுங்கள்.
இன்றிலிருந்து மூன்று நாட்களுக்குள் நாம்
யோர்தான் நதியைக் கடக்கப் போகிறோம்.
தேவனாகிய கர்த்தர் உங்களுக்குக் கொடுக்
கின்ற தேசத்திற்குப் போய் அதைச் சுதந்தரிப்
போம்’ எனச் சொல்லுங்கள்” என்றும்
சொன்னான்.
12பின் ரூபன், காத், ஆகிய கோத்திரத்தா
ரிடமும், மனாசே கோத்திரத்தின்
பாதிப்பேர்களிடமும் யோசுவா பேசினான்.
13அவன்,“கர்த்தருடைய ஊழியகாரனாகிய
மோசே உங்களுக்குக் கூறியதை நினைவு
கூருங்கள். தேவனாகிய கர்த்தர் நீங்கள்
தங்குவதற்காக ஓரிடத்தை உங்களுக்குக்
கொடுப்பார் என்று அவன் கூறினான்.
கர்த்தர் அத்தேசத்தை உங்களுக்குத் தருவார்!
14உண்மையில், யோர்தான் நதிக்குக்
கிழக்கிலுள்ள தேசத்தை கர்த்தர் ஏற்கெனவே
கொடுத்துவிட்டார். உங்கள் மனைவிகளும்,
பிள்ளைகளும், உங்கள் மிருகங்களோடு
உங்களுக்குச் சொந்தமான இத்தேசத்தில்
தங்கியிருக்கலாம். ஆனால் போர் வீரர்கள்
உங்கள் சகோதரரோடு யோர்தான் நதியைக்
கடக்கவேண்டும். நீங்கள் போருக்குத்
தயாராகி உங்கள் சகோதரர் அத்தேசத்தைக்
கைப்பற்ற உதவவேண்டும். 15கர்த்தர் நீங்கள்
தங்கியிருப்பதற்கு ஓர் இடத்தைக் கொடுத்
தார். அதையே உங்கள் சகோதரருக்கும்
செய்வார். தேவனாகிய கர்த்தர் அவர்
களுக்குத் தருகின்ற தேசத்தைக் கைப்பற்று
வதற்கு நீங்கள் உதவவேண்டும். பிறகு
நீங்கள் யோர்தான் நதிக்குக் கிழக்கிலுள்ள
உங்கள் சொந்த தேசத்திற்குத் திரும்பி
வரலாம். கர்த்தருடைய ஊழியனாகிய

மோசே உங்களுக்கு அத்தேசத்தைப்
பிரித்துக்கொடுத்தான்" என்றான்.
16 அப்போது ஜனங்கள் யோசுவாவிடம்:,
"நீர் எங்களுக்குக் கட்டளையிடுகின்ற
எல்லாக் காரியங்களையும் செய்வோம்!
நீர் சொல்கின்ற இடங்களுக்கெல்லாம்
போவோம்! 17 நாங்கள் மோசேக்குக் கீழ்ப்
படிந்தபடியே, நீர் கூறுகின்றவற்றிற்கும்
கீழ்ப்படிவோம். நாங்கள் கர்த்தரிடம் ஒன்றை
மட்டும் கேட்கிறோம். மோசேயோடு இருந்த
படியே, உங்களோடும் இருக்க வேண்டுமென
தேவனாகிய கர்த்தரிடம் கேட்கிறோம்.
18 மேலும், உம்முடைய கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிய யாராவது மறுத்தால், அல்லது
உமக்கு எதிராக யாராவது எழும்பினால்,
அப்போது அவன் கொல்லப்படுவான்.
உறுதியோடும் தைரியத்தோடும் இரும்!"
என்றனர்.

### எரிகோவில் ஒற்றர்கள்

2 அகாசியாவில்* நூனின் மகனாகிய
யோசுவாவும், ஜனங்கள் அனைவரும்
முகாமிட்டிருந்தனர். யோசுவா இரண்டு
ஒற்றர்களைஅனுப்பினான். அம்மனிதர்களை
யோசுவா அனுப்பிய விவரம் யாருக்கும்
தெரியாது. யோசுவா அவர்களிடம், "போய்
தேசத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வாருங்
கள், முக்கியமாக எரிகோ நகரத்தைப்
பார்த்து வாருங்கள்" என்றான்.

எனவே அவர்கள் எரிகோ நகரத்திற்குச்
சென்றனர். அவர்கள் ஒரு வேசியின்
வீட்டிற்குச் சென்று, அங்கே இரவில்
தங்கினர். அப்பெண்ணின் பெயர் ராகாப்.
2 சிலர் எரிகோவின் அரசனிடம் சென்று,
"நேற்றிரவு இஸ்ரவேலிலிருந்து சில மனிதர்
கள் நம் நாட்டின் பெலவீனங்களைக் கண்
டறிய வந்திருக்கிறார்கள்" என்றனர்.
3 எனவே எரிகோவின் அரசன் ராகாபுக்கு,
"உனது வீட்டிற்கு வந்து தங்கியிருக்கிற
மனிதர்களை ஒளித்து வைக்காதே. அவர்
களை வெளியே அழைத்து வா. அவர்கள்
நம் நாட்டை உளவுபார்க்க வந்துள்ளனர்"
என்ற செய்தியைச் சொல்லியனுப்பினான்.
4 அப்பெண் அவ்விருவரையும் மறைத்து
வைத்திருந்தாள். ஆனால் அவள், "அவ்விரு
வரும் இங்கு வந்திருந்தனர், அவர்கள்
எங்கிருந்து வந்தனர் என்கிற விவரம்
எனக்குத் தெரியாது. 5 மாலையில், நகர
வாயிலை அடைக்கும் சமயத்தில், அவ்விரு
வரும் சென்றுவிட்டனர். அவர்கள் எங்கே
சென்றனர் என்பது எனக்குத் தெரியாது.
நீங்கள் விரைந்து சென்றால், அவர்களைப்
பிடிக்கக்கூடும்" என்றாள். 6 (ராகாப், அவள்
இப்படி கூறினாலும், உண்மையில் அவ்
விருவரையும், கூரையின்* மேல்பகுதிக்கு
அழைத்துச் சென்று அங்கே அவள் குவித்து
வைத்திருந்த சணல் தட்டைகளுக்குள்*
மறைத்து வைத்திருந்தாள்.)
7 எனவே அரசனால் அனுப்பப்பட்ட
ஆட்கள் நகரத்திற்கு வெளியே சென்ற பின்பு,
நகரவாயிலை அடைத்தனர். இஸ்ர
வேலிலிருந்து வந்த இருவரையும் தேடி
அரசனின் மனிதர்கள் சென்றனர். அவர்கள்
யோர்தான் நதிக்குச் சென்று, ஜனங்கள்
நதியைக் கடக்கும் எல்லா இடங்களிலும்
அவர்களைத் தேடினார்கள்.
8 ஒற்றர்களாக வந்த இருவரும் இரவில்
தூங்குவதற்கு ஆயத்தமாயினர். ஆனால்
ராகாப் கூரையின் மேல்பகுதிக்கு ஏறிச்
சென்று அவர்களிடம், 9 "உங்கள் ஜனங்க
ளுக்குக் கர்த்தர் இத்தேசத்தைக் கொடுத்தார்
என்பதை நான் அறிவேன். நீங்கள்
எங்களுக்கு அச்சமூட்டுகிறீர்கள். இத்தேசத்
தில் வாழும் ஜனங்கள் உங்களைக் கண்டு
பயப்படுகிறார்கள். 10 கர்த்தர் உங்களுக்கு
உதவிய வழிகளை நாங்கள் கேள்விப்
பட்டிருக்கிறபடியால் நாங்கள் அஞ்சுகிறோம்.
நீங்கள் எகிப்திலிருந்து வந்தபோது, அவர்
செங்கடலின் தண்ணீரை வற்றிப்போகச்
செய்தார் என்று நாங்கள் கேள்விப்
பட்டோம். சீகோன், ஓகு என்னும் இரண்டு
எமோரிய அரசர்களுக்கும் நீங்கள் செய்ததை
நாங்கள் கேள்விப்பட்டோம். யோர்தான்
நதியின் கிழக்கில் வாழ்ந்த அரசர்களை
நீங்கள் அழித்ததையும் அறிந்தோம். 11 அந்தக்
காரியங்களை நாங்கள் அறிந்து மிகவும்
அஞ்சினோம். இப்போது, எங்களில் எந்த
மனிதனுக்கும் உங்களை எதிர்க்கும் துணிவு
இல்லை. ஏனெனில் உங்கள் தேவனாகிய
கர்த்தர் மேலே வானத்தையும், கீழே
பூமியையும் ஆளுகிறார்! 12 எனவே நீங்கள்,
இப்போது எனக்கு ஒரு வாக்குறுதி
அளிக்கவேண்டுமென நான் விரும்புகிறேன்.
நான் உங்களிடம் இரக்கம்காட்டி, உங்களுக்கு
உதவினேன். எனவே என் குடும்பத்திற்கு
இரக்கம் காட்டுவதாகக் கர்த்தருக்கு
முன்னால் வாக்களியுங்கள். நீங்கள் இதைச்
செய்வீர்களென்று எனக்கு உறுதி கூறுங்கள்.
13 நீங்கள் எனது தந்தை, தாய், சகோதரர்கள்,
சகோதரிகள், அவர்கள் குடும்பத்தினர்
ஆகியோர் உட்பட, எனது குடும்பத்தார்
அனைவரையும் உயிரோடு வாழ
அனுமதிப்பதாக எனக்குக் கூறுங்கள்.
எங்களை மரணத்தினின்று விடுவிப்பதாக
எனக்கு வாக்குறுதி அளியுங்கள்" என்றாள்.
14 அவ்விருவரும் அதற்கு ஒப்புக் கொண்ட
னர். அவர்கள், "உங்கள் உயிருக்கு எங்கள்

---

**அகாசியா** அல்லது "சித்தீம்" இது யோர்தான் ஆற்றுக்கு கிழக்கே உள்ள ஒரு ஊர்.

**கூரை** இஸ்ரவேல் நாட்டில், வீட்டின் மேல் கூரை தட்டையாக இருக்கும். ஜனங்கள் இதை பொருட்களைப் சேர்த்துவைக்க பயன்படுத்தினர்.

**சணல் தட்டை** எழுத்தின் பிரகாரமாக "சணல்" ஒரு செடியாகும்.

உயிரைப் பணயம் வைக்கிறோம். நாங்கள்
செய்வதை யாருக்கும் சொல்லாதே. கர்த்தர்,
எங்களுக்குக்குரிய நாட்டை எங்களுக்குக்
கொடுக்கும்போது, உனக்கு இரக்கம் காட்டு
வோம். நீ எங்களை நம்பலாம்" என்றனர்.
15 நகரத்தின் மதிலில் அப்பெண்ணின் வீடு
கட்டப்பட்டிருந்தது. அது சுவரின் ஒரு
பாகமாக அமைந்திருந்தது. எனவே அப்
பெண் ஜன்னல் வழியே ஒரு கயிற்றின்
மூலமாக அவ்விருவரையும் கீழே இறக்கி
னாள். 16 அப்போது அப்பெண் அம்மனிதரை
நோக்கி: "அரசனின் ஆட்கள் உங்களைக்
காணாதபடிக்கு மேற்குத் திசையில் மலை
களின் உள்ளே சென்று விடுங்கள். அங்கு
மூன்று நாட்கள் ஒளிந்திருங்கள். அரசனின்
ஆட்கள் திரும்பி வந்தபின் நீங்கள் திரும்பிப்
போகலாம்" என்றாள்.
17 அம்மனிதர்கள் அவளைப் பார்த்து,
"நாங்கள் உனக்கு ஒரு வாக்குறுதி அளித்
தோம். ஆனால் நீ ஒரு காரியம் செய்ய
வேண்டும். இல்லையென்றால் அந்த வாக்கு
றுதிக்கு நாங்கள் பொறுப்பாக மாட்டோம்.
18 நாங்கள் தப்பிச்செல்ல உதவுவதற்கு நீ
இந்தச் சிவப்புக் கயிற்றைப் பயன்படுத்து
கிறாய். நாங்கள் இத்தேசத்திற்குத் திரும்பவும்
வருவோம். அப்போது உன் வீட்டு
ஜன்னலில் இந்தக் கயிற்றை நீ கட்ட
வேண்டும். உன் தந்தை, தாய், குடும்பத்தினர்
எல்லோரையும் உன்னோடு வீட்டிற்குள்
அழைத்துக் கொள்ளவேண்டும். 19 இவ்வீட்டில்
இருக்கிற எல்லோரையும் நாங்கள் காப்
போம். உன் வீட்டிலுள்ள யாரேனும்
காயமுற்றால், நாங்கள் அதற்குப் பொறுப்
பாளிகளாவோம். ஆனால் உன் வீட்டி
லிருந்து ஒருவன் வெளியே போனால்,
அவன் கொல்லப்படக்கூடும். அவனுக்கு நாங்
கள் பொறுப்பாக மாட்டோம். அது அவ
னுடைய குற்றமாகும். 20 நாங்கள் இந்த ஒப்
பந்தத்தை உன்னோடு செய்கிறோம். ஆனால்
நாங்கள் செய்கிறதை நீ யாருக்காவது
கூறினால், இந்த ஒப்பந்தத்திலிருந்து நாங்கள்
நீங்கலாயிருப்போம்" என்றனர்.
21 அதற்கு அப்பெண், "நீங்கள் கூறியபடியே
எல்லாவற்றையும் செய்வேன்" என்று கூறி
அவர்களை வழியனுப்பினாள். அம்மனிதர்
கள் அவள் வீட்டைவிட்டுச் சென்றனர்.
அப்பெண் ஜன்னலில் அச்சிவப்புக் கயிற்
றைக் கட்டினாள்.
22 அவ்விருவரும் அவள் வீட்டிலிருந்து
மலைகளுக்குச் சென்று அங்கு மூன்று
நாட்கள் தங்கினார்கள். அரசனின் ஆட்கள்
பாதைகளில் எல்லாம் தேடினார்கள். மூன்று
நாட்களுக்குப் பின்னர், அவர்களைக் கண்டு
பிடிக்க முடியாமல் நகருக்குத் திரும்பி
னார்கள். 23 ஒற்றர்கள் இருவரும் மலைகளை
விட்டு நீங்கி, நதியைக் கடந்து நூனின்
மகனாகிய யோசுவாவிடம் சென்றார்கள்.
தாங்கள் அறிந்து வந்த எல்லாவற்றையும்
அவர்கள் யோசுவாவுக்குக் கூறினார்கள்.
24 அவர்கள் யோசுவாவை நோக்கி, "கர்த்தர்
நமக்கு உண்மையாகவே அத்தேசம் முழு
வதையும் கொடுத்திருக்கிறார். அந்நாட்டின்
ஜனங்கள் எல்லோரும் நம்மைக் கண்டு
அஞ்சுகிறார்கள்" என்றார்கள்.

### யோர்தான் நதியில் நடந்த அற்புதம்

3 மறுநாள் காலையில் யோசுவாவும்,
இஸ்ரவேல் ஜனங்களும் எழுந்து, அகா
சியாவை (சித்தீமை) விட்டு புறப்பட்டு
யோர்தான் நதிக்கரைக்கு வந்தார்கள்.
அவர்கள் நதியைக் கடக்கும் முன்னர்,
அங்கே நதிக்கரையில் முகாமிட்டார்கள்.
2 மூன்று நாட்களுக்குப் பிறகு, தலைவர்கள்
முகாமிற்குள் சுற்றிப் பார்த்தார்கள். 3 அவர்கள்
ஜனங்களிடம், "உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியை*
ஆசாரியரும், லேவியரும்* சுமந்து செல்
வதைக் காண்பீர்கள். அப்போது, நீங்கள்
அவர்களைப் பின்தொடர வேண்டும்.
4 ஆனால் மிகவும் நெருங்கிச் செல்லாதீர்கள்.
2,000 முழ தூரத்தில் அவர்களைப் பின்
தொடர்ந்து செல்லுங்கள். நீங்கள் இதற்குமுன்
ஒருபோதும் இவ்வழியாக வந்ததில்லை.
ஆனால் அவர்ளைப் பின் தொடர்ந்தால்,
எங்கு செல்வதென்பதை அறிவீர்கள்" என்று
ஆணைகள் கொடுத்தார்கள்.
5 அப்போது யோசுவா ஜனங்களிடம்,
"நீங்கள் உங்களைத் பரிசுத்தமாக்கிக் கொள்
ளுங்கள். நாளை கர்த்தர் அதிசயமான
காரியங்களைச் செய்வார்" என்றான்.
6 பின் யோசுவா ஆசாரியர்களை நோக்கி,
"உடன்படிக்கைப் பெட்டியை எடுத்துக்
கொண்டு ஜனங்களுக்கு முன்பாக நதியைக்
கடந்து செல்லுங்கள்" என்றான். அவ்வாறே
ஆசாரியர்களும் பெட்டியைச் சுமந்தவாறு
ஜனங்களுக்கு முன்பாகச் சென்றார்கள்.
7 அப்போது கர்த்தர் யோசுவாவிடம்,
"இன்று இஸ்ரவேலின் எல்லா ஜனங்களும்
பார்க்கும்படியாக உன்னை உயர்ந்த மனி
தனாக்கினேன். அப்போது, நான் மோசே
யோடு இருந்தது போலவே உன்னோடும்
இருக்கிறேன் என்பதை ஜனங்கள்
அறிவார்கள். 8 உடன்படிக்கைப் பெட்டியைச்
சுமந்து செல்கிற ஆசாரியர்களிடம், 'யோர்
தான் நதியின் கரை வரைக்கும் நடந்து
தண்ணீரினுள் இறங்கும் முன்பாக அங்கு
சற்று நில்லுங்கள் என்று சொல்'" என்றார்.
9 அப்போது யோசுவா இஸ்ரவேல்

---

**உடன்படிக்கைப் பெட்டி** சீனாய் பாலைவனத்தில் இஸ்ரவேல் ஜனங்களோடு தேவன் இருந்தார் என்பதை நிரூபிக்கும் வகையில், பத்துக்கட்டளைகள் எழுதப்பட்ட இரண்டு கற்பலகைகளும் அந்த உடன்படிக்கைப் பெட்டியில் இருந்தது.

**லேவியர்** லேவியர் கோத்திரத்தை சேர்ந்த ஜனங்கள். லேவியர்கள் ஆலயத்தில் ஆசாரியர்களுக்கு உதவி செய்தும் உளநாட்டு அரசு பணியும் செய்தனர்.

ஜனங்களை நோக்கி, “உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய வார்த்தைகளை வந்து கேளுங்
கள். 10உயிருள்ள தேவன் உங்களோடி
ருக்கிறார் என்பதற்கும், அவர் பகைவரைத்
தோற்கடிப்பார் என்பதற்கும் சான்றாக
கானானியரையும், ஏத்தியரையும், ஏவிய
ரையும், பெரிசியரையும், கிர்காசியரையும்,
எமோரியரையும், எபூசியரையும் அவர்
தோற்கடித்து இத்தேசத்தை விட்டுப் போகு
மாறு செய்வார். 11இதுவே அதற்கு சான்று.
முழு உலகத்துக்கும் ஆண்டவராயிருப்பவ
ரின் உடன்படிக்கைப் பெட்டி, நீங்கள்
யோர்தான் நதியைத் தாண்டும்போது,
உங்களுக்கு முன்னே செல்லும். 12இப்போது,
இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களில்
இருந்தும், குழுவுக்கு ஒருவர் வீதம்
பன்னிரண்டு மனிதரைத் தேர்ந்தெடுத்துக்
கொள்ளுங்கள். 13கர்த்தருடைய பெட்டியை
ஆசாரியர் சுமந்து செல்வார்கள். உலகத்தின்
ஆண்டவர் கர்த்தரே. அவர்கள் அப்
பெட்டியை உங்களுக்கு முன்பாக யோர்தான்
நதியில் சுமந்து செல்வார்கள். அவர்கள்
தண்ணீருக்குள் கால் வைத்ததும், யோர்தான்
நதியில் தண்ணீர் ஓடாமல் நின்று, அணை
போல் தேங்கியிருக்கும்” என்றான்.
14உடன்படிக்கைப் பெட்டியை ஆசாரியர்
சுமந்து சென்றனர். முகாமிட்டிருந்த
இடத்திலிருந்து ஜனங்கள் புறப்பட்டு,
யோர்தான் நதியைக் கடக்க ஆரம்பித்தனர்.
15(அறுவடைக் காலத்தில் யோர்தான் நதியில்
வெள்ளம் கரைபுரண்டு ஓடும். எனவே
நதியில் தண்ணீர் பெருகியிருந்தது.) பெட்டி
யைச் சுமந்துவந்த ஆசாரியர்கள் நதிக்
கரையை அடைந்தனர். அவர்கள் கரை
யோரத்தில் தண்ணீரில் கால் வைத்தனர்.
16உடனே, தண்ணீர் ஓடாமல் நின்று ஒரு
அணைபோல் தேங்கிக்கொண்டது. (சார
தான் அருகிலுள்ள ஊராகிய) ஆதாம்
வரைக்கும் நதியின் தண்ணீர் குவிந்து
நின்றது. எரிகோ அருகே ஜனங்கள்
நதியைக் கடந்தனர். 17அவ்விடத்தில் நிலம்
வறண்டது, ஆசாரியர் கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியைச் சுமந்தவாறே
நதியின் நடுப்பகுதி வரைக்கும் சென்று
அங்கே நின்றனர். இஸ்ரவேலின் ஜனங்கள்
அனைவரும் யோர்தான் நதியை உலர்ந்த
நிலத்தின் வழியாக கடக்கும் மட்டும்
ஆசாரியர்கள் அங்கேயே நின்றனர்.

### ஜனங்கள் நினைவு கூருவதற்கான கற்கள்

4 எல்லா ஜனங்களும் யோர்தான் நதியைக்
கடந்ததும் கர்த்தர் யோசுவாவை
நோக்கி, 2“பன்னிரண்டு பேரைத் தேர்ந்தெடுத்
துக்கொள். ஒவ்வொரு கோத்திரத்தில் இருந்
தும் ஒருவரைத் தேர்ந்தெடு. 3ஆசாரியர்கள்
நின்ற இடத்தில் நதியினுள்ளே தேடி அங்கி
ருந்து பன்னிரண்டு கற்களை எடுத்து
வருமாறு கூறு. இன்றிரவு தங்குமிடத்தில்
அந்தப் பன்னிரண்டு கற்களையும் வை”
என்றார்.
4எனவே யோசுவா ஒவ்வொரு கோத்திரத்
திலிருந்தும் ஒருவனைத் தேர்ந்தெடுத்துக்
கொண்டான். பின் அவன் பன்னிரண்டு
பேரையும் ஒன்றுகூட்டி, 5அம்மனிதரை
நோக்கி, “நதியில் உங்கள் தேவனாகிய
கர்த்தருடைய பரிசுத்த பெட்டியிருக்கும்
இடத்திற்குச் செல்லுங்கள். ஒவ்வொரு கோத்
திரத்திற்கும் ஒவ்வொரு கல் இருக்க
வேண்டும். அக்கல்லை உங்கள் தோள்களில்
சுமந்து வாருங்கள். 6இக்கற்கள் உங்களுக்கு
ஒரு அடையாளமாக இருக்கும். எதிர்
காலத்தில், உங்கள் பிள்ளைகள் ‘இந்தக்
கற்கள் எதற்காக?’ என்று உங்களிடம்
கேட்கும்போது, 7யோர்தான் நதியின்
தண்ணீரைக் கர்த்தர் ஓடாமல் நிறுத்தியதை
அவர்களுக்குக் கூறுவீர்கள். கர்த்தருடைய
பரிசுத்த உடன்படிக்கைப் பெட்டி நதியைக்
கடந்தபோது, தண்ணீர் அசையாமல்
நின்றது. இந்நிகழ்ச்சியை என்றென்றைக்கும்
இஸ்ரவேல் ஜனங்கள் நினைவுகூருவதற்கு
இக்கற்கள் உதவும்” என்றார்.
8இஸ்ரவேல் ஜனங்கள் யோசுவாவுக்குக்
கீழ்ப்படிந்தனர். யோர்தான் நதியின் மத்தி
யிலிருந்து அவர்கள் பன்னிரண்டு கற்களைச்
எடுத்து வந்தனர். இஸ்ரவேலின் பன்னிரண்டு
கோத்திரத்தினருக்கும் ஒவ்வொரு கல்
இருந்தது. கர்த்தர் யோசுவாவுக்குக் கட்டளை
யிட்டபடியே அவர்கள் இதைச் செய்தனர்.
அம்மனிதர்கள் கற்களைச் சுமந்து வந்து,
அவர்கள் முகாமிட்டிருந்த இடத்தில்
அக்கற்களை நாட்டினர். 9(யோசுவா நதியின்
மத்தியில் பன்னிரண்டு கற்களை வைத்தான்.
கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டியை ஆசா
ரியர் சுமந்து வந்து நின்ற இடத்தில்
அவன் அவற்றை வைத்தான். அக்கற்கள்
இன்றைக்கும் அவ்விடத்திலேயே உள்ளன.)
10ஜனங்கள் செய்ய வேண்டியவற்றை
அவர்களுக்குக் கூறும்படி கர்த்தர் யோசு
வாவுக்குக் கட்டளையிட்டார். யோசுவா
செய்யவேண்டியவையாக மோசே யோசு
வாவுக்குக் கூறிய காரியங்களே அவையா
கும். பரிசுத்தப் பெட்டியைச் சுமந்து வந்த
ஆசாரியர்கள் இக்காரியங்கள் எல்லா
வற்றையும் செய்து முடிக்கும் வரைக்கும்
நதியின் மத்தியிலேயே நின்றுகொண்டிருந்த
னர். ஜனங்கள் நதியை வேகமாகத் தாண்டி
னார்கள். 11ஜனங்கள் நதியைக் கடந்த பின்
னர், ஆசாரியர்கள் கர்த்தருடைய பெட்டியை
அவர்களுக்கு முன்பாகச் சுமந்து சென்றனர்.
12ரூபன், காத் கோத்திரத்திலுள்ள ஆண்
களும், மனாசே கோத்திரத்தில் பாதி ஆண்
களும் மோசே சொல்லியிருந்தபடியே கீழ்ப்
படிந்தனர். பிறருக்கு முன்பாக அவர்கள்
நதியைக் கடந்தனர். அவர்கள் போருக்கு
ஆயத்தமாயினர். தேவன் இஸ்ரவேலருக்கு

வாக்களித்த தேசத்தைப் பெறுவதற்கு மீதி
ஜனங்களுக்கு உதவுவதற்காகச் சென்றனர்.
13ஏறத்தாழ 40,000 பேர், போருக்குத் தயாராகி,
எரிகோவின் சமவெளிக்கு நேராக கர்த்த
ருக்கு முன்பாக அணியணியாய் சென்றார்
கள்.
14இஸ்ரவேலின் எல்லா ஜனங்களுக்கும்
உயர்ந்தவனாக யோசுவாவை கர்த்தர் அந்த
நாளில் மேன்மைப்படுத்தினார். அப்போதி
லிருந்து ஜனங்கள் யோசுவாவை மதித்தனர்.
மோசேயை அவர்கள் மதித்தபடியே, யோசு
வாவையும் அவன் வாழ்க்கை முழுவதும்
ஜனங்கள் மதித்தனர்.
15பெட்டியைச் சுமந்த ஆசாரியர்கள்
நதியில் நின்று கொண்டிருக்கும்போதே,
கர்த்தர் யோசுவாவை நோக்கி, 16"ஆசாரியர்
களை நதியினின்று வெளியே வரும்படிக்
கட்டளையிடு" என்றார்.
17எனவே யோசுவா ஆசாரியர்களிடம்,
"யோர்தான் நதியிலிருந்து வெளியேறுங்கள்"
என்று கட்டளையிட்டான்.
18ஆசாரியர்கள் யோசுவாவுக்குக் கீழ்ப்
படிந்து பெட்டியைச் சுமந்தபடி நதியிலி
ருந்து கரைக்கு வந்தனர். ஆசாரியர்களின்
கால்கள் தரையில் பட்டதும், நதியின்
தண்ணீர் ஓட ஆரம்பித்தது. ஜனங்கள்
கடக்கும்முன்னர் இருந்ததுபோலவே தண்
ணீர் கரைபுரண்டோடத் தொடங்கிற்று.
19முதலாம் மாதத்தின் பத்தாவது நாள்,
ஜனங்கள் யோர்தான் நதியைத் தாண்டி
னார்கள். எரிகோவின் கிழக்கிலுள்ள
கில்காலில், ஜனங்கள் முகாமிட்டனர்.
20யோர்தான் நதியில் எடுத்த பன்னிரண்டு
கற்களையும் ஜனங்கள் சுமந்து வந்தனர்.
கில்காலில் யோசுவா அக்கற்களை நாட்டி
னான். 21யோசுவா ஜனங்களை நோக்கி,
"வருங்காலத்தில் பிள்ளைகள் பெற்றோரை
நோக்கி, 'இக்கற்கள் எதைக் குறிக்கின்றன?'
எனக் கேட்பார்கள். 22நீங்கள் பிள்ளை
களுக்கு, 'உலர்ந்த நிலத்தில் இஸ்ரவேல்
ஜனங்கள் யோர்தான் நதியைக் கடந்ததை
இக்கற்கள் நினைவூட்ட உதவுகின்றன. 23உங்
கள் தேவனாகிய கர்த்தர் செங்கடலைப்
போலவே யோர்தான் நதியின் தண்ணீரை
ஓடாதவாறு நிறுத்தினார். ஜனங்கள் உலர்ந்த
தரையில் கடந்து செல்லும் வரைக்கும்
செங்கடலின் தண்ணீரைத் தடுத்து நிறுத்தி
யதை நினைவு கூருங்கள்.' 24கர்த்தர் மிகுந்த
வல்லமை வாய்ந்தவர் என்பதை இந்நாட்டின்
ஜனங்கள் எல்லோரும் அறிந்துகொள்வதற்
காகக் கர்த்தர் இதைச் செய்தார். உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு அவர்கள் எப்போ
தும் அஞ்சுவார்கள் என்று கூறுங்கள்"
என்றான்.

5 இஸ்ரவேல் ஜனங்கள் கடந்துபோகும்
மட்டும் கர்த்தர் யோர்தான் நதியை
உலர்ந்து போகச் செய்தார். யோர்தான்
நதிக்குக் கிழக்கிலிருந்து மத்தியதரைக்
கடலுக்குச் செல்லும் வழி முழுவதும்
வாழ்ந்த எமோரியரின் அரசர்களும், மத்திய
தரைக் கடலின் கரையில் வாழ்ந்த கானா
னிய அரசர்களும் இதைக் கேள்விப்பட்டு
மிகவும் பயந்தார்கள். அதற்குப்பின் அவர்கள்
இஸ்ரவேலரை எதிர்த்து நின்று போர்
செய்வதற்குத் துணியவில்லை.

### இஸ்ரவேலர் விருத்தசேதனம் செய்யப்படுதல்

2அப்போது, கர்த்தர் யோசுவாவிடம்,
"நெருப்பை உண்டாக்கும் கற்களால் கத்தி
களைச் செய்து இஸ்ரவேலின் ஆண்களுக்கு
விருத்தசேதனம் செய்" என்றார்.
3எனவே யோசுவா நெருப்பு உண்டாக்
கும் கற்களால் கத்திகளைச் செய்தான்.
பின் அவன் இஸ்ரவேல் ஜனங்களை கிபி
யாத் ஆர்லோத்* என்னுமிடத்தில் விருத்த
சேதனம்* செய்தான்.
4-7அவர்களுக்கு யோசுவா விருத்தசேதனம்
செய்த காரணம் இதுதான்: இஸ்ரவேல்
ஜனங்கள் எகிப்திலிருந்து புறப்பட்ட பிறகு,
படையில் பங்கு வகிக்கக்கூடிய ஆண்கள்
எல்லோருக்கும் விருத்தசேதனம் செய்யப்
பட்டது. பாலைவனத்திலிருந்தபோது, போர்
செய்யும் ஆண்களில் பலர் கர்த்தருக்குச்
செவி சாய்க்கவில்லை. எனவே கர்த்தர்
அந்த ஜனங்கள் "நன்றாக விளைகிற
தேசத்தைக் காணமாட்டார்கள்" என்று
உறுதியாகக் கூறினார். கர்த்தர் நமது முற்
பிதாக்களுக்கு அத்தேசத்தைக் கொடுப்பதாக
உறுதி கூறியும், அம்மனிதர்களினிமித்தம்,
தேவன் ஜனங்களை 40 ஆண்டுகள்
பாலைவனத்தில் அவர்கள் மரிக்கும்வரை
அலையச் செய்தார். போர் செய்யும் அந்த
ஆண்கள் மரித்தனர், அவர்கள் மகன்கள்
போரிடும் ஸ்தானத்தை ஏற்றார்கள். ஆனால்
பாலைவனத்தில் பிறந்த சிறுவர் எவரும்
விருத்தசேதனம் செய்யப்பட்டிருக்கவில்லை.
எனவே யோசுவா அவர்களுக்கு விருத்த
சேதனம் செய்தான்.
8யோசுவா எல்லா மனிதருக்கும் விருத்த
சேதனம் செய்து முடித்தான். அவர்கள்
குணமடையும் வரைக்கும் அங்கேயே முகா
மிட்டிருந்தார்கள்.

### கானானில் முதல் பஸ்கா

9அப்போது, கர்த்தர் யோசுவாவிடம்,
"நீங்கள் அனைவரும் எகிப்தில் அடிமைகளா
யிருந்தீர்கள். அது உங்களை வெட்கமடை
யச் செய்தது. ஆனால் இன்று நான்

---

**கிபியோத் ஆர்லோத்** இந்த பெயரின் பொருள் "விருத்த-சேதன மலை" ஆகும்.

**விருத்தசேதனம்** ஆணின் சிறுநீரகத்தின் நுனித் தோலைத் துண்டித்தல். இது தேவன் இஸ்ரவேல் ஜனங்களோடு செய்த உடன்படிக்கையில் பங்கு கொள்வதைக் காட்ட, எல்லா யூத மகனுக்கும் செய்யப்பட்டது. ஆதி. 17:9-14.

அவ்வெட்கத்தைப் போக்கிவிட்டேன்” என்
றார். எனவே யோசுவா அவ்விடத்திற்குக்
கில்கால்* எனப் பெயரிட்டான். இன்றளவும்
அந்த இடம் கில்கால் என்றே அழைக்கப்
படுகிறது.
10 எரிகோவின் சமவெளியிலுள்ள கில்கா
லில் முகாமிட்டிருந்தபோது இஸ்ரவேல்
ஜனங்கள் பஸ்காவைக் கொண்டாடினர்.
அப்போது மாதத்தின் பதினான்காவது நாள்
மாலையாக இருந்தது. 11 பஸ்காவிற்கு மறு
நாள், ஜனங்கள் அந்நிலத்தில் விளைந்த
உணவை உண்டனர். புளிப்பின்றி செய்த
அப்பத்தையும், சுட்ட தானியத்தையும் அவர்
கள் சாப்பிட்டனர். 12 மறுநாள், காலையில்
வானத்திலிருந்து கிடைத்த விசேஷ உணவு
காணப்படவில்லை. கானானில் விளைந்த
உணவைச் சாப்பிட்ட நாளில் அது நிகழ்ந்
தது. அப்போதிலிருந்து இஸ்ரவேலின் ஜனங்
கள் வானத்திலிருந்து விசேஷ உணவைப்
பெறவில்லை.
13 யோசுவா எரிகோவை நெருங்கியபோது
அண்ணாந்து பார்த்து, அவனுக்கு முன்பாக
ஒருவர் நிற்பதைக் கண்டான். அவர் கையில்
ஒரு வாள் இருந்தது. யோசுவா அவரிடம்
சென்று, “நீர் எங்கள் ஜனங்களின் நண்பரா,
அல்லது எங்கள் பகைவரில் ஒருவரா?”
என்று கேட்டான்.
14 அவர் அதற்கு பதிலாக, “நான் உன்
பகைவன் அல்ல. கர்த்தருடைய படையின்
சேனாதிபதி நான். நான் உன்னிடம்
இப்போதுதான் வந்திருக்கிறேன்” என்றார்.
உடனே யோசுவா தன் மரியாதையை
வெளிப்படுத்துவதற்கு தரையில் விழுந்து
வணங்கினான். அவன், “நான் உமது
ஊழியன். எனது எஜமானராகிய நீர்
ஏதேனும் எனக்குக் கட்டளை வைத்திருக்கி
றீரா?” என்று கேட்டான்.
15 கர்த்தருடைய படையின் சேனாதிபதி,
“உனது பாதரட்சையைக் கழற்று. நீ நிற்கு
மிடம் பரிசுத்தமானது” என்று கூறினார்.
யோசுவா அவ்வாறே கீழ்ப்படிந்தான்.

## எரிகோ பிடிக்கப்படுதல்

6 எரிகோ நகரம் மூடப்பட்டது. இஸ்ர
வேல் ஜனங்கள் அருகே இருந்ததால்,
நகர ஜனங்கள் அஞ்சினார்கள். நகரத்திற்குள்
எவரும் போகவுமில்லை. நகரத்திலிருந்து
யாரும் வெளியே வரவுமில்லை.
2 அப்போது கர்த்தர் யோசுவாவிடம்,
“பார், நீ எரிகோ நகரத்தை வீழ்த்தும்படி
செய்வேன். நீ அந்நகரத்தின் அரசனையும்,
போர் செய்யும் ஜனங்களையும் தோற்
கடிப்பாய். 3 உனது சேனையோடு ஒவ்வொரு
நாளும் நகரை ஒரு முறை சுற்றிச் செல்.
ஆறு நாட்கள் இவ்வாறு செய்.
4 வெள்ளாட்டுக் கடாவின் கொம்பால் செய்த
எக்காளங்களை ஏழு ஆசாரியர்கள் சுமக்கும்
படி சொல். பரிசுத்தப் பெட்டியையும் சுமந்து
செல்லுங்கள். ஆசாரியர்களை பரிசுத்தப்
பெட்டிக்கு முன் அணிவகுத்துச் செல்லும்
படி கூறு. ஏழாம் நாள், ஏழு முறை
அணிவகுத்துச் செல்லும்போது ஆசாரியர்
களிடம் எக்காளம் ஊதும்படி கூறு.
5 ஆசாரியர்கள் எக்காளத்தை உரத்த குரலில்
ஊதும் சத்தத்தை நீ கேட்டதும், எல்லா
ஜனங்களையும் உரத்த சத்தம் எழுப்பச்
சொல். அவ்வாறு நீங்கள் செய்யும்போது,
நகரத்தின் சுவர்கள் இடிந்து விழும். உனது
ஜனங்கள் நகரத்திற்குள் நுழைவார்கள்”
என்றார்.
6 நூனின் மகனாகிய யோசுவா ஆசாரியர்
களை அழைத்து அவர்களிடம், “கர்த்தரு
டைய பரிசுத்தப் பெட்டியைச் சுமந்து
செல்லுங்கள். ஏழு ஆசாரியர்களிடம் எக்கா
ளத்தைச் சுமந்துக் கொண்டு பெட்டிக்கு
முன் அணிவகுத்துப் போகச் சொல்லுங்கள்”
என்றான்.
7 பின் யோசுவா ஜனங்களிடம், “இப்
போது புறப்பட்டுச் செல்லுங்கள்! நகரைச்
சுற்றிலும் அணிவகுத்துச் செல்லுங்கள்.
கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டிக்கு முன்பாக
ஆயுதமேந்திய வீரர்கள் அணிவகுத்துச் செல்
வார்கள்” என்றான்.
8 யோசுவா ஜனங்களிடம் பேசி முடித்த
பிறகு, கர்த்தருக்கு முன்பாக அந்த ஏழு
ஆசாரியர்களும் அணிவகுத்துச் சென்றார்
கள். அவர்கள் ஏழு எக்காளங்களை ஏந்திக்
கொண்டு, அணிவகுத்துச் சென்றபோது
ஊதினார்கள். கர்த்தருடைய பரிசுத்தப் பெட்
டியைச் சுமந்தவர்கள் அவர்களைப் பின்
தொடர்ந்தனர். 9 ஆயுதமேந்திய வீரர்கள்
ஆசாரியர்களுக்கு முன்பு சென்றனர். பரி
சுத்தப் பெட்டிக்குப் பின்பு சென்றோர்
அணிவகுத்துச் செல்லும்போது, எக்காளம்
ஊதினார்கள். 10 போர் முழக்கம் செய்யாத
படிக்கு யோசுவா ஜனங்களுக்குக் கூறியிருந்
தான். அவன், “சத்தம் போடாதீர்கள். நான்
சொல்லும் நாள் வரைக்கும் எந்த வார்த்தை
யும் பேசாதீர்கள். அதன் பிறகு சத்த
மிடலாம்!” என்றான்.
11 நகரத்தைச் சுற்றிலும் ஒருமுறை கர்த்த
ருடைய பரிசுத்தப் பெட்டியை ஆசாரியர்கள்
சுமந்து வருமாறு யோசுவா செய்தான்.
பின்பு அவர்கள் முகாமிட்டிருக்கும் இடத்திற்
குச் சென்று இரவைக் கழித்தனர்.
12 மறுநாள் அதிகாலையில், யோசுவா
எழுந்தான். கர்த்தருடைய பரிசுத்தப் பெட்
டியை ஆசாரியர்கள் மீண்டும் சுமந்தனர்.
13 ஏழு ஆசாரியர்களும், ஏழு எக்காளங்களை
ஏந்திச் சென்றனர். கர்த்தருடைய பரிசுத்தப்
பெட்டிக்கு முன்பாக, அவர்கள் அணி
வகுத்து எக்காளங்களை ஊதியபடியே
நடந்தார்கள். ஆயுதங்களை ஏந்தியிருந்த

**கில்கால்** இந்த பெயர் “உருண்டுபோக” என்ற பொருளடங்கிய எபிரெய வார்த்தையைப் போன்றது.

வீரர்கள் அவர்களுக்கு முன்னால் அணி
வகுத்துச் சென்றார்கள். கர்த்தருடைய பரி
சுத்தப் பெட்டிக்குப் பின்னால் நடந்து
சென்ற மீதி ஜனங்கள் அணிவகுத்தும்,
தங்களது எக்காளங்களை ஊதியும் சென்றார்
கள். 14எனவே இரண்டாம் நாளும், அவர்கள்
எல்லோரும் நகரைச் சுற்றிலும் ஒரு முறை
சென்றனர். பின் அவர்கள் முகாமிற்குத்
திரும்பினார்கள். இவ்வாறே ஆறு நாட்கள்
தொடர்ந்து செய்தனர்.
15ஏழாவது நாள், அதிகாலையிலேயே
எழுந்து நகரத்தைச் சுற்றிலும் ஏழு முறை
நடந்தனர். முந்தின நாட்களில் நடந்து
சென்றதுபோலவே சென்றார்கள். ஆனால்,
அன்றைய தினம் ஏழு முறை நகரைச்
சுற்றி வந்தனர். 16ஏழாவது முறை நகரைச்
சுற்றி வந்தபோது, ஆசாரியர்கள் எக்காளம்
ஊதினார்கள். அப்பொழுது, யோசுவா: "இப்
போது, சத்தமிடுங்கள்! கர்த்தர் இந்நகரத்தை
உங்களுக்குத் தருகிறார்! 17நகரமும் அதி
லுள்ளவை அனைத்தும் கர்த்தருக்
குரியவை.* ராகாப் என்னும் வேசியும்
அவள் வீட்டினரும் மட்டுமே உயிரோடிருப்
பார்கள். அவர்கள் கொல்லப்படக்கூடாது.
ஏனென்றால் ராகாப் இரண்டு ஒற்றர்களுக்கும்
உதவினாள். 18எல்லாவற்றையும் நாம் அழிக்க
வேண்டும் என்பதை நினைவில் வையுங்கள்.
எந்தப் பொருட்களையும் எடுக்காதீர்கள்.
அவற்றை எடுத்து நமது முகாமிற்குக்
கொண்டு வந்தால் நீங்கள்
அழிக்கப்படுவதுடன், இஸ்ரவேல் ஜனங்கள்
எல்லோருக்கும் தொல்லையை வரவழைப்
பீர்கள். 19எல்லா வெள்ளியும், பொன்னும்,
வெண்கலம், இரும்பு ஆகியவற்றால் செய்யப்
பட்ட பொருட்களும் கர்த்தருக்குரியவை.
அப்பொருட்கள் கர்த்தருடைய ஆலய
பொக்கிஷத்தில் சேர்க்கப்பட வேண்டும்"
என்று கட்டளையிட்டான்.
20ஆசாரியர்கள் எக்காளம் ஊதின
சத்தத்தைக் கேட்டு ஜனங்கள் ஆரவாரம்
செய்தபோது சுவர்கள் இடிந்து விழுந்தன.
ஜனங்கள் நேரே நகரத்திற்குள் நுழைந்தனர்.
அவ்வாறு இஸ்ரவேல் ஜனங்கள் அந்நகரை
வென்றனர். 21அங்குள்ள அனைத்தையும்,
அங்கு வாழ்ந்த உயிரினங்களையும் இஸ்ர
வேல் ஜனங்கள் அழித்தனர். அவர்கள்
இளைஞரும் முதியோருமாகிய ஆண்களை
யும், இளைஞரும் முதியோருமாகிய பெண்க
ளையும், ஆடுமாடுகளையும், கழுதைகளை
யும் கொன்றனர்.
22யோசுவா இரண்டு ஒற்றரோடும் பேசி
னான். யோசுவா, "அந்த வேசியின் வீட்டிற்
குள் போங்கள். அவளையும், அவளோடு
இருப்போர் அனைவரையும் வெளியே
அழைத்து வாருங்கள். நீங்கள் அவளுக்கு
அளித்த வாக்குறுதியின்படி இதைச் செய்யுங்
கள்" என்றான்.
23அவ்விதமே அவ்விருவரும் அவளுடைய
வீட்டிற்குள் சென்று ராகாபை அழைத்து
வந்தனர். அவளது தந்தை, தாய், சகோதரர்,
அவள் குடும்பத்தினர், அவளோடிருந்த
ஜனங்கள் எல்லோரையும் வெளியே
அழைத்து வந்து, இஸ்ரவேலரின் முகாமிற்கு
வெளியே ஒரு பாதுகாப்பான இடத்தில்
அவர்களை வைத்தனர்.
24பின் இஸ்ரவேல் ஜனங்கள் நகரத்தை
எரித்தனர். வெள்ளி, பொன், வெண்கலம்,
இரும்பு ஆகியவற்றாலான பொருட்களைத்
தவிர பிறவற்றை நெருப்புக்கு இரையாக்கி
னர். அப்பொருட்களை மட்டும் கர்த்தரு
டைய ஆலய பொக்கிஷத்தில் சேர்ந்தனர்.
25ராகாப் என்னும் வேசியையும், அவளது
குடும்பத்தாரையும், அவளோடிருந்தவர்களை
யும் யோசுவா காப்பாற்றினான். யோசுவா
எரிகோவிற்கு ஒற்றர்களை அனுப்பியபோது
ராகாப் அவர்களுக்கு உதவியதால் யோசுவா
அவர்களை வாழவிட்டான். இஸ்ரவேல்
ஜனங்கள் மத்தியில் இன்னும் ராகாப்
வாழ்கிறாள். 26அப்போது:

"எரிகோவை மீண்டும்
கட்டியெழுப்புகிற எவனும்
கர்த்தரால் அழிவைக் காண்பான்.
இந்த நகரின் அஸ்திபாரத்தை
இடுபவன்,
தன்னுடைய முதலாவதாகப்
பிறந்த மகனை இழப்பான்.
நகரவாயிலை அமைப்பவன்
தனது கடைசி மகனை இழப்பான்"
என்ற சாப அறிவிப்பை யோசுவா
வெளியிட்டான்.

27கர்த்தர் யோசுவாவோடிருந்தார். நாடு
முழுவதும் யோசுவாவின் புகழ் பரவியது.

### ஆகானின் பாவம்

7 இஸ்ரவேலின் ஜனங்கள் தேவனுக்கு
கீழ்ப்படியாமலிருந்தனர். சிம்ரி என்பவ
னின் பேரனும், கர்மீ என்பவனின் மகனு
மாகிய யூதா கோத்திரத்தைச் சார்ந்த ஆகான்
என்ற பெயருடைய ஒருவன் இருந்தான்.
அவன் அழிக்கப்பட வேண்டிய சில
பொருட்களை எடுத்து வைத்திருந்தான்.
எனவே இஸ்ரவேல் ஜனங்களிடம் கர்த்தர்
மிகுந்த கோபமடைந்தார்.
2அவர்கள் எரிகோவை தோற்கடித்த
பிறகு, யோசுவா சில மனிதரை ஆயீக்கு*
அனுப்பினான். ஆயீ, பெத்தாவேனுக்கு
அருகில், பெத்தேலுக்குக் கிழக்காக உள்ளது.

---

**கர்த்தருக்குரியவை** இது பொதுவாக, இந்த பொருட்கள் ஆலய பண்டைசாலையில் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன அல்லது மற்றவர்கள் அவைகளை பயன்படுத்தக் கூடாதபடிக்கு அழிக்கப்பட்டுவிட்டன என்பதைக் குறிக்கும்.

**ஆயீ** இந்த பெயரின் அர்த்தம் "அழிவு" ஆகும்.

யோசுவா அவர்களிடம், “ஆயீக்குச் சென்று
அவ்விடத்தின் பெலவீனங்களைத் தெரிந்து
வாருங்கள்” என்றான். அம்மனிதர்களும்
அந்த இடத்தை உளவறிந்து வருவதற்குச்
சென்றனர்.
3 பின்னர் அவர்கள் யோசுவாவிடம்
திரும்பி வந்து, “ஆயீ ஒரு பலவீனமான
பகுதி. அவ்விடத்தை தோற்கடிக்க நம்
ஜனங்கள் அனைவரும் தேவையில்லை. 2,000
அல்லது 3,000 ஆட்களை அங்கு போர்செய்ய
அனுப்புங்கள். படை முழுவதையும் பயன்
படுத்த வேண்டியிராது. நம்மை எதிர்த்துப்
போர் செய்வதற்குச் சில மனிதர்களே
உள்ளனர்” என்றார்கள்.
4-5 எனவே சுமார் 3,000 மனிதர் ஆயீக்குப்
போனார்கள். ஆனால் ஆயீயின் ஜனங்கள்,
இஸ்ரவேலரில் சுமார் 36 பேரைக் கொன்ற
னர். இஸ்ரவேல் ஜனங்கள் ஓடிவிட்டனர்.
நகரவாசலிலிருந்து இஸ்ரவேலரை மலைச்
சரிவு வரைக்கும் துரத்தினார்கள். ஆயீயின்
ஜனங்கள் அவர்களைப் பயங்கரமாகத்
தோற்கடித்தனர்.
இஸ்ரவேல் ஜனங்கள் இதைக் கண்டு
அஞ்சி, துணிவிழந்தனர். 6 யோசுவா இதைக்
கேட்டபோது, துயரமுற்றுத் தன்
ஆடைகளைக் கிழித்துக்கொண்டு, பரிசுத்தப்
பெட்டிக்கு முன்பாக விழுந்து வணங்கி
னான். மாலைவரைக்கும் அங்கேயே இருந்
தான். இஸ்ரவேலரின் தலைவர்களும் அவ்
வாறே செய்தனர். அவர்கள் தங்கள்
துயரத்தை வெளிப்படுத்துவதற்குச் சாம்ப
லைத் தலையில் தூவிக்கொண்டனர்.

7 யோசுவா, “எனது ஆண்டவராகிய
கர்த்தாவே! எங்கள் ஜனங்களை நீர்
யோர்தான் நதியைக் கடக்க வைத்தீர். ஏன்
எங்களை இத்தனை தூரம் அழைத்து
வந்து எமோரியரால் அழிவுற வைக்கிறீர்?
நாங்கள் திருப்தியோடு யோர்தானின்
அக்கரையில் வாழ்ந்திருக்கலாம்! 8 கர்த்தாவே!
எனது உயிரின் மீது ஆணையிடுகிறேன்,
நான் சொல்லக்கூடியது எதுவுமில்லை. இஸ்ர
வேலரைப் பகைவர்கள் சூழ்ந்துள்ளனர்.
9 கானானியரும் இந்நாட்டின் எல்லா ஜனங்
களும் நடந்ததை அறிவார்கள். அவர்கள்
எங்களைத் தாக்கி அழிப்பார்கள்! அப்போது
உமது மேலான பெயரைக் காப்பாற்றிக்
கொள்ள என்ன செய்வீர்?” என்றான்.
10 கர்த்தர் யோசுவாவை நோக்கி, “உன்
முகத்தைத் தரையில் கவிழ்த்து ஏன் விழுந்து
கிடக்கிறாய்? எழுந்து நில்! 11 இஸ்ரவேல்
ஜனங்கள் எனக்கு எதிராகப் பாவம் செய்
தார்கள். அவர்கள் கீழ்ப்படியுமாறு கட்டளை
யிட்ட உடன்படிக்கையை மீறினார்கள்.
அழித்துவிடும்படி நான் கட்டளையிட்ட
பொருட்களை எடுத்து வைத்திருக்கிறார்கள்.
அவர்கள் அதை திருடிவிட்டனர். அவர்கள்
பொய் கூறிவிட்டனர். அப்பொருட்களை
அவர்களுக்காக எடுத்துள்ளனர். 12 அதனால்
தான் இஸ்ரவேல் படை போரிலிருந்து
புறமுதுகு காட்டித் திரும்பிவிட்டது. அவர்
கள் தவறு செய்ததாலேயே அவ்விதம்
நடந்தது. நான் உங்களுக்கு உதவமாட்டேன்.
நீங்கள் அழிக்கவேண்டுமென நான் கட்டளை
யிட்டவற்றை அழிக்காவிட்டால் நான் உங்க
ளோடு இருக்கமாட்டேன்.
13 “இப்போதும் போய், ஜனங்களை
பரிசுத்தப்படுத்து. ஜனங்களிடம், ‘உங்களை
பரிசுத்தப்படுத்திக் கொள்ளுங்கள், நாளைக்
குத் தயாராகுங்கள். இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தர் இங்கு சிலர், கர்த்தர்
அழிக்குமாறு கட்டளையிட்ட பொருட்களை
வைத்துக்கொண்டிருப்பதாகக் கூறுகிறார்.
நீங்கள் அவற்றை அப்புறப்படுத்தாவிட்டால்
உங்கள் பகைவர்களை ஒரு போதும் வெல்ல
முடியாமல் போகலாம்.
14 “‘நாளை காலையில் கர்த்தரின் முன்பாக
எல்லோரும் வரவேண்டும். எல்லாக் கோத்தி
ரத்தினரும் கர்த்தருக்கு முன்பு நிற்கும்போது,
கர்த்தர் ஒரு கோத்திரத்தரைத் தேர்ந்
தெடுப்பார். அப்போது அந்தக் கோத்திரத்தி
னர் கர்த்தரின் முன் நிற்கவேண்டும். கர்த்தர்
அந்தக் கோத்திரத்திலிருந்து ஒரு வம்சத்தை
தேர்ந்தெடுப்பார். பின் அவ்வம்சத்திலிருந்து
கர்த்தர் ஒரு குடும்பத்தைத் தேர்ந்தெடுப்பார்.
பின் கர்த்தர் அக்குடும்பத்தின் அங்கத்தினர்
கள் ஒவ்வொருவரையும் பார்ப்பார். 15 அழிக்க
வேண்டிய பொருளை வைத்திருக்கிறவன்
அப்போது அகப்படுவான். அம்மனிதனும்,
அவனுக்குச் சொந்தமானவையெல்லாம் அவ
னோடு நெருப்பினால் அழிக்கப்படவேண்
டும். அம்மனிதன் கர்த்தரோடு செய்த
உடன்படிக்கையை மீறினான். அவன் இஸ்ர
வேல் ஜனங்களுக்கு மிகுந்த தீமையான
காரியத்தைச் செய்தான்!’ என்று சொல்”
என்றார்.
16 மறுநாள் அதிகாலையில், யோசுவா
இஸ்ரவேல் ஜனங்களைக் கர்த்தரின் முன்
னால் நிற்கும்படி செய்தான். எல்லாக்
கோத்திரத்தினரும் கர்த்தருக்கு முன்
நின்றனர். கர்த்தர் யூதா கோத்திரத்தைத்
தேர்ந்தெடுத்தார். 17 எனவே அந்தக்
கோத்திரத்தைச் சேர்ந்த எல்லாக் குழுக்களும்
கர்த்தருக்கு முன்னே நின்றனர். கர்த்தர்
சேரா குழுவினரைத் தேர்ந்தெடுத்தார். பின்
சேரா குழுவினரின் எல்லாக் குடும்பத்தாரும்
கர்த்தருக்கு முன்னே நின்றார்கள். சிம்ரியின்
குடும்பம் தேர்ந்தெடுக்கப்பட்டது. 18 யோசுவா
அக்குடும்பத்தின் ஆண்களையெல்லாம் கர்த்த
ருக்கு முன் வருமாறு கூறினான். கர்த்தர்
கர்மீயின் மகன் ஆகானைத் தேர்ந்தெடுத்தார்.
(கர்மீ சிம்ரியின் மகன், சிம்ரி சேராவின்
மகன்.)
19 யோசுவா ஆகானை நோக்கி, “மகனே,
உனது விண்ணப்பங்களைச் சொல். நீ
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரை

மகிமைப்படுத்தி, உனது பாவங்களை அவரி
டம் கூறு. நீ செய்ததை எனக்குக் கூறு.
என்னிடமிருந்து எதையும் மறைக்காதே!”
என்றான்.
20 ஆகான், “நான் இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தருக்கு எதிராகப் பாவம்
செய்தது உண்மை. நான் செய்தது இதுவே:
21 நாம் எரிகோவையும் அந்நகரத்தின்
பொருட்களையும் கைப்பற்றிக்கொண்ட
போது பாபிலோனிலிருந்து கொண்டு வந்த
அழகிய மேலாடையையும், சுமார் ஐந்து
பவுண்டு வெள்ளியையும், ஒரு பவுண்டு
பொன்னையும் கண்டேன். அவற்றை
எடுத்துக் கொண்டேன். அப்பொருள்கள்
எனது கூடாரத்திற்கடியிலுள்ள நிலத்தில்
புதைக்கப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம்.
மேலாடையின் கீழே வெள்ளி இருக்கிறது”
என்றான்.
22 எனவே யோசுவா சிலரைக் கூடாரத்
திற்கு அனுப்பினான். அவர்கள் கூடாரத்
திற்கு ஓடிச்சென்று, அப்பொருட்கள் கூடாரத்
தில் மறைத்து வைக்கப்பட்டிருப்பதைக்
கண்டனர். மேலாடையின் கீழே வெள்ளி
இருந்தது. 23 அவர்கள் அப்பொருட்களைக்
கூடாரத்திற்கு வெளியே எடுத்து வந்து,
அவற்றை யோசுவாவிடமும் இஸ்ரவேல்
ஜனங்களிடமும் கொண்டு சென்று, கர்த்த
ருக்கு முன் அவற்றைத் தரையில்போட்டனர்.
24 சேராவின் மகனாகிய ஆகானை யோசு
வாவும், ஜனங்களும் ஆகோர் பள்ளத்
தாக்கிற்கு அழைத்துச் சென்றனர். அந்த
வெள்ளி, மேலாடை, பொன், ஆகானின்
மகன்கள், மகள்கள், அவனது ஆடு மாடுகள்,
கழுதைகள் கூடாரம், பிற பொருட்களையும்
ஆகோர் பள்ளத்தாக்கில் சேர்ப்பித்தனர்.
25 அப்போது யோசுவா, “எங்களுக்கு நேர்ந்த
தொந்தரவுகளுக்கு நீ காரணமாக இருந்தாய்!
இப்போது கர்த்தர் உனக்குத் தொல்லையளிப்
பார்!” என்றான். அப்போது ஜனங்கள்
ஆகானின் மீதும் அவன் குடும்பத்தினர்
மீதும் அவர்கள் மரிக்கும்படி கற்களை
வீசினார்கள். பிறகு ஜனங்கள் அவர்களின்
உடல்களையும் அவர்களின் பொருட்களை
யும் எரித்தனர். 26 ஆகானை எரித்த பின்,
அவன் உடம்பின் மீது கற்களைக் குவித்த
னர். அவை இன்னும் அங்கு உள்ளன.
தேவன் ஆகானின் குடும்பத்திற்குத்
தொல்லை கொடுத்தார். அதனால் அவ்விடம்
ஆகோர்* (தொல்லை) பள்ளத்தாக்கு எனப்
படுகிறது. அதன் பின் கர்த்தர் ஜனங்களிடம்
கோபமாயிருக்கவில்லை.

## ஆயீ அழிக்கப்படுதல்

8 கர்த்தர் யோசுவாவை நோக்கி,
“அஞ்சாதே, முயற்சியைக் கைவிடாதே.
போர் செய்யும் ஆண்களை ஆயீக்கு
வழிநடத்து. ஆயியின் அரசனை அழிக்க
நான் உதவுவேன். அவன் ஜனங்கள், நகரம்,
தேசம் ஆகியவற்றை உனக்குத் தருகிறேன்.
2 எரிகோவுக்கும் அதன் அரசனுக்கும் செய்த
வற்றை நீ ஆயீக்கும், அதன் அரசனுக்கும்
செய்வாய். இம்முறை எல்லா செல்வத்
தையும், கால்நடைகளையும் உங்களுக்காக
வைத்துக்கொண்டு உனது ஜனங்களோடு
செல்வத்தைப் பங்கிட்டுக்கொள்வாய். இப்
போது, நகரத்தின் பின்னே உன் வீரர்களில்
சிலரை மறைந்துகொள்ளச் சொல்” என்றார்.
3 யோசுவா தனது சேனையை ஆயீக்கு
நேராக வழி நடத்தினான். பின் 30,000
சிறந்த போர் வீரரைத் தேர்ந்தெடுத்து அவர்
களை இரவில் அனுப்பினான். 4 யோசுவா
அவர்களுக்குப் பின்வருமாறு கட்டளை
யிட்டு: “நான் உங்களுக்கு சொல்வதைக்
கவனமாகக் கேளுங்கள். நகரத்திற்குப் பின்
னாலுள்ள பகுதியில் நீங்கள் ஒளிந்திருக்க
வேண்டும். தாக்குவதற்கேற்ற நேரத்துக்காக
காத்திருங்கள். நகரத்திலிருந்து வெகுதூரம்
செல்லாதீர்கள். தொடர்ந்து கவனித்தபடி
தயாராக இருங்கள். 5 நகரத்திற்கு நேராக
அணிவகுத்துச் செல்வதற்கு நான் என்னு
டன் உள்ளவர்களை வழி நடத்துவேன்.
நகரத்தின் ஜனங்கள் எங்களை எதிர்த்து
சண்டையிட வெளியில் வருவார்கள். நாம்
முன்னர் செய்தபடியே, திரும்பி ஓடுவோம்.
6 அம்மனிதர்கள் எங்களை நகரத்திற்கு
வெளியே துரத்துவார்கள். முன்பைப் போல்
நாம் நகரத்திற்கு வெளியே ஓடுகிறோம்
என்று அவர்கள் நினைப்பார்கள். இவ்வாறு
நாங்கள் ஓடிவிடுவோர்களைப் போலக்
காண்பிப்போம். 7 அப்போது நீங்கள் மறை
விடங்களிலிருந்து வெளியேவந்து நக
ரத்தைக் கைப்பற்ற வேண்டும். வெற்றி
பெறும் வல்லமையைத் தேவனாகிய கர்த்தர்
உங்களுக்குத் தருவார்.
8 கர்த்தர் கூறுகிறபடியே நீங்கள் செய்ய
வேண்டும். என்னைக் கவனியுங்கள். நக
ரத்தைத் தாக்குவதற்கான கட்டளையை நான்
இட்டதும் நகரத்தைக் கைப்பற்றி, அதற்குத்
தீ மூட்டுங்கள்” என்றான்.
9 யோசுவா அம்மனிதர்களை மறைவிடங்க
ளுக்கு அனுப்பியபின் காத்திருந்தான். அவர்
கள் பெத்தேலுக்கும் ஆயீக்கும் மத்தியிலுள்ள
ஓரிடத்திற்குச் சென்றனர். அது ஆயீக்கு
மேற்கிலிருந்தது. அன்றிரவு யோசுவா தனது
ஜனங்களோடு தங்கியிருந்தான்.
10 மறுநாள் அதிகாலையில் யோசுவா
ஆண்களைக் கூடிவரும்படி அழைத்தான்.
பின் யோசுவாவும், இஸ்ரவேல் தலைவர்க
ளும் அவர்களை ஆயீக்கு வழிநடத்தினர்.
11 யோசுவாவோடிருந்த எல்லா வீரர்களும்
ஆயீக்கு நேராக அணிவகுத்துச் சென்று
நகரத்திற்கு முன்னே சென்று நின்றனர்.
நகரத்திற்கு வடக்கே படை முகாமிட்டது.

---

**¶ÁµfifiÉ** இந்த பெயரின் அர்த்தம் “தொல்லை” ஆகும்.

பாளையத்திற்கும் ஆயீக்கும் நடுவே ஒரு பள்ளத்தாக்கு இருந்தது.
12அப்போது யோசுவா சுமார் 5,000 ஆண்களைத் தெரிந்து கொண்டு, பெத்தேலுக்கும் ஆயீக்கும் நடுவில், நகரத்திற்கு மேற்கேயுள்ள பகுதியில் மறைந்திருக்குமாறு கூறி, யோசுவா அவர்களை அனுப்பினான்.
13யோசுவா அவனது ஆட்களைப் போருக்குத் தயாராக்கினான். நகரத்திற்கு வடக்கே பெரிய முகாம் இருந்தது. மற்ற ஆட்கள் மேற்கே மறைந்திருந்தனர். இரவில் யோசுவா பள்ளத்தாக்கினுள் இறங்கிச் சென்றான்.
14இஸ்ரவேலரின் படையைக் கண்டதும் ஆயீயின் அரசனும் அவனது ஆட்களும் எழுந்து இஸ்ரவேலரின் படையோடு போர் செய்வதற்கு விரைந்து வந்தனர். ஆயீயின் அரசன் நகரின் கிழக்குப் பகுதிக்குச் சென்றான். அதனால் நகருக்குப் பின்னே மறைந்திருந்த வீரர்களை அவன் பார்க்கவில்லை.
15யோசுவாவும், இஸ்ரவேலின் மனிதர்களும் ஆயீயின் படையினர் தம்மைத் துரத்திவர இடம் கொடுத்தனர். யோசுவாவும் அவனது ஆட்களும் பாலைவனத்திற்கு நேராக கிழக்கே ஓட ஆரம்பித்தனர்.
16நகரத்து ஜனங்கள் சத்தமிட்டுக் கொண்டே, யோசுவாவையும் அவனது மனிதர்களையும் துரத்த ஆரம்பித்தனர். எல்லா ஜனங்களும் நகரத்திற்கு வெளியே வந்தனர்.
17ஆயீ, பெத்தேல் ஆகியவற்றின் எல்லா ஜனங்களும் இஸ்ரவேல் படையைத் துரத்தினார்கள். நகரம் திறந்திருந்தது. யாரும் நகரத்தைப் பாதுகாப்பதற்காகப் பின் தங்கவில்லை.
18அப்போது கர்த்தர் யோசுவாவை நோக்கி, "உனது ஈட்டியை ஆயீ நகரத்திற்கு நேராக நீட்டு, நான் உனக்கு அந்நகரத்தைக் கொடுப்பேன்" என்றார். எனவே யோசுவா ஆயீ நகரத்திற்கெதிராக அவனது ஈட்டியை நீட்டினான்.
19மறைந்திருந்த இஸ்ரவேலர் இதைக் கண்டனர். அவர்கள் மறைவிடங்களிலிருந்து வெளிவந்து நகரத்திற்குள் நுழைந்து அதைத் தங்கள் ஆதிக்கத்திற்குள் கொண்டு வந்தனர். பிறகு வீரர்கள் நகரத்திற்கு நெருப்பூட்டினர்.
20ஆயீ நகர ஜனங்கள் திரும்பிப் பார்த்து, தங்கள் நகரம் எரிவதையும், வானத்திற்கு நேராகப் புகை எழும்புவதையும் கண்டனர். எனவே அவர்கள் தங்கள் வலிமையையும் துணிவையும் இழந்து, இஸ்ரவேலரைத் துரத்துவதைக் கைவிட்டனர். இஸ்ரவேலர் ஓடுவதை நிறுத்திவிட்டு, திரும்பி ஆயீ நகர மக்களோடு போரிட்டனர். ஆயீ நகர ஜனங்கள் ஓடி ஒளிவதற்கு எந்த இடமும் அகப்படவில்லை.
21யோசுவாவும் அவனது ஆட்களும், நகரம் தங்கள் வசமானதையும், நகரத்திலிருந்து புகையெழுவதையும் கண்டதும் ஓடுவதை நிறுத்தி, திரும்பிவந்து, ஆயீ நகர ஜனங்களை எதிர்த்தனர்.
22அப்போது ஒளிந்திருந்த மனிதர்களும் நகரத்திலிருந்து வந்து போரில் உதவினார்கள். ஆயீ நகர ஜனங்களை இஸ்ரவேலர் இருபுறமும் சூழ்ந்து வளைந்து கொண்டனர். இஸ்ரவேலர் அவர்களைத் தோற்கடித்தனர். ஆயீ நகர மனிதர்கள் தப்பி, உயிரோடிராதபடி இஸ்ரவேலர் அவர்களோடு போரிட்டு அழித்தனர்.
23ஆனால், ஆயீ நகர அரசனை உயிரோடு பிடித்து யோசுவாவிற்கு முன்னால் வீரர்கள் கொண்டு வந்தனர்.

### போரைப்பற்றிய விமர்சனம்

24போரின்போது, இஸ்ரவேலின் படை வீரர்கள் ஆயீ நகர ஜனங்களை வயல்களுக்கும், பாலைவனத்திற்கும் துரத்தினார்கள். ஆயீயின் மனிதர்களை இஸ்ரவேல் சேனையினர் வயல்களிலும், பாலைவனத்திலும் கொன்று குவித்தனர். பின் இஸ்ரவேல் வீரர்கள் ஆயிக்குச் சென்று அங்கு உயிரோடிருந்த ஜனங்களையும் கொன்றனர்.
25ஆயீயின் எல்லா ஜனங்களும் அன்று மரித்தனர். அவர்கள் ஆண்களும் பெண்களுமாக 12,000 பேர் இருந்தனர்.
26தனது ஆட்கள் நகரை அழிப்பதற்கு அடையாளமாக யோசுவா அவனது ஈட்டியை ஆயீக்கு நேராக நீட்டிக் கொண்டிருந்தான். நகரத்தின் ஜனங்கள் அனைவரும் அழியும் வரைக்கும் அவ்வாறே நின்றிருந்தான்.
27இஸ்ரவேலர் மிருகங்களையும், பிற பொருட்களையும் தங்களுக்காக நகரத்திற்கு வெளியே கொண்டு வந்தனர். அவர்கள் இவ்வாறு செய்யும்படி கர்த்தர் ஏற்கெனவே யோசுவாவிடம் கூறியிருந்தார்.
28யோசுவா ஆயீ நகரை எரித்தான். அந்நகரம் வெறும் கற்களின் குவியலாக்கப்பட்டது. இன்றுவரைக்கும் அது அப்படியே உள்ளது.
29ஆயீயின் அரசனை யோசுவா ஒரு மரத்தில் தூக்கிலிட்டான். மாலையில், அரசனின் உடலை அப்புறப்படுத்துமாறு தனது ஆட்களுக்குக் கூறினான். அவர்கள் நகர வாசலுக்கு வெளியே அவனது உடலை வீசி, பின் அவ்வுடலைக் கற்களால் மூடினார்கள். கற்களின் குவியலும் இன்றளவும் அங்கேயே உள்ளது.

### ஆசீர்வாதமும் சாபமும் பற்றி வாசித்தல்

30அப்போது யோசுவா, இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தை ஏபால் மலைமீது கட்டினான்.
31இஸ்ரவேலின் ஜனங்களுக்குப் பலிபீடத்தை எப்படிக் கட்டுவதென்று கர்த்தருடைய தாசனான மோசே கூறியிருந்தான். மோசேயின் சட்ட புத்தகத்தில் விளக்கப்பட்டிருந்தபடி யோசுவா பலிபீடத்தைக் கட்டினான். வெட்டப்படாத கற்களால் பலிபீடம் கட்டப்பட்டது. அக்கற்களின் மீது எந்த கருவியும் பட்டிருக்கவில்லை. கர்த்தருக்குத் தகன பலிகளை

அப்பலிபீடத்தில் செலுத்தினர். சமாதான
பலிகளையும் செலுத்தினர்.
32 அவ்விடத்தில் யோசுவா மோசேயின்
சட்டங்களைக் கற்களில் எழுதினான். இஸ்ர
வேலின் ஜனங்கள் எல்லோரும் பார்க்கும்
படியாக அவன் இதைச் செய்தான். 33 பரி
சுத்தப் பெட்டியைச் சூழ்ந்து தலைவர்களும்,
அதிகாரிகளும், நியாயாதிபதிகளும், இஸ்ர
வேலரும் நின்றனர். கர்த்தருடைய உடன்
படிக்கையுள்ள பரிசுத்தப் பெட்டியைச்
சுமந்து வந்த லேவி கோத்திரத்தின்
ஆசாரியர்களுக்கு முன்னே அவர்கள் நின்று
கொண்டிருந்தனர். இஸ்ரவேலின் ஜனங்
களும், பிறரும் அங்கே நின்றிருந்தனர்.
பாதி ஜனங்கள் கூட்டத்தினர் ஏபால்
மலைக்கு முன்பும், மற்றொரு பாதியினர்
கெரிசீம் மலைக்கு முன்னேயும் நின்றார்கள்.
கர்த்தருடைய தாசனாகிய மோசே ஆசீர்
வாதத்தைப் பெறுவதற்காக இப்படி
செய்யும்படி ஜனங்களிடம் கூறியிருந்தான்.
34 சட்டங்களில் கூறப்பட்ட எல்லாவற்றை
யும் அப்போது யோசுவா வாசித்தான்.
ஆசீர்வாதங்களையும், சாபங்களையும்
குறித்து வாசித்தான். சட்ட புத்தகத்தில்
எழுதியிருந்த முறைப்படியே எல்லாவற்றை
யும் வாசித்தான். 35 இஸ்ரவேலரோடு வாழ்ந்த
அந்நியரும், எல்லாப் பெண்களும், குழந்தைக
ளும் அங்கிருந்தனர். மோசே கொடுத்த
ஒவ்வொரு கட்டளையையும் யோசுவா
வாசித்தான்.

### யோசுவாவிடம் கிபியோனியரின் தந்திரம்

9 யோர்தான் நதியின் மேற்கிலுள்ள
எல்லா அரசர்களும் இந்த நிகழ்ச்சி
களைக் கேள்விப்பட்டார்கள். அவர்கள்
ஏத்தியர், எமோரியர், கானானியர், பெரி
சியர், ஏவியர், எபூசியர் ஆகியோரின்
அரசர்கள் ஆவார்கள். அவர்கள் மலைகளி
லும், சமவெளிகளிலும் வாழ்ந்தனர். லீப
னோன் வரைக்குமுள்ள மத்தியதரைக் கட
லோரமாக அவர்கள் வாழ்ந்தனர். 2 இந்த
அரசர்கள் ஒருமித்துக் கூடி, யோசுவா
வோடும், இஸ்ரவேல் ஜனங்களோடும்
போரிடுவதற்குத் திட்டமிட்டனர்.
3 எரிகோவையும் ஆயீயையும் யோசுவா
தோற்கடித்த வகையை கிபியோனின்
ஜனங்கள் கேள்விப்பட்டிருந்தனர். 4 அவர்கள்
இஸ்ரவேலரை ஏமாற்ற முடிவெடுத்தனர்.
இதுவே அவர்கள் திட்டம்: அவர்கள் நைந்து
போன பழைய திராட்சைரசத் தோல்
பைகளைச் சேகரித்தனர். அவர்கள் கழுதைக
ளின் முதுகில் அவற்றை ஏற்றினார்கள்.
பழைய சாக்குகளை அந்தக் கழுதைகளின்
மேல் ஏற்றி, வெகுதூரத்திலிருந்து பயணம்
செய்து வருவோரைப்போல் தோற்றம்
அளித்தனர். 5 அவர்கள் பழைய செருப்பு
களை அணிந்து, பழைய ஆடைகளை
உடுத்திக்கொண்டு, உலர்ந்து, பூசணம்
பூத்திருந்த பழைய அப்பங்களையும் எடுத்துக்
கொண்டனர். தொலைவான இடத்திலிருந்து
பயணம் செய்து வந்தவர்களைப் போன்றே
அவர்கள் தோன்றினர். 6 பின்னர் அம்
மனிதர்கள் கில்காலுக்கு அருகே இருந்த
இஸ்ரவேலரின் முகாமிற்குச் சென்றனர்.
அம்மனிதர்கள் யோசுவா மற்றும் இஸ்ர
வேலின் மூப்பர்களிடமும் சென்று, “நாங்கள்
மிகவும் தூரத்திலுள்ள ஒரு தேசத்தில் இருந்து
கிளம்பி வந்துள்ளோம். உங்களோடு ஒரு
சமாதான ஒப்பந்தம் செய்துகொள்ள விரும்பு
கிறோம்” என்றனர்.
7 இஸ்ரவேலர் அந்த ஏவியரிடம், “நீங்கள்
எங்களை ஏமாற்றப் பார்க்கிறீர்கள், அருகே
எங்கேயேனும் நீங்கள் வசித்துக் கொண்டி
ருக்கலாம். நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்
என்பதைத் தெரிந்துகொள்ளும் வரைக்கும்
உங்களோடு சமாதான ஒப்பந்தம் செய்ய
மாட்டோம்” என்றனர்.
8 ஏவியர்கள் யோசுவாவிடம், “நாங்கள்
உமது பணியாட்கள்” என்றனர்.
ஆனால் யோசுவா, “நீங்கள் யார்? எங்கி
ருந்து வருகிறீர்கள்?” என்று கேட்டான்.
9 அந்த ஆட்கள் அதற்குப் பதிலாக, “நாங்
கள் உங்கள் பணியாட்கள். நாங்கள் தூரத்தி
லுள்ள நாட்டிலிருந்து வந்துள்ளோம்.
உங்கள் தேவனாகிய கர்த்தருடைய மிகுந்த
வல்லமையை அறிந்ததால் இங்கு வந்தோம்.
அவர் செய்த காரியங்களை அறிந்துள்ளோம்.
அவர் எகிப்தில் செய்தவற்றையும் அறிந்
தோம். 10 யோர்தான் நதிக்குக் கிழக்கிலுள்ள
எமோரியரின் அரசர்களான அஸ்தரோத்
தேசத்திலுள்ள எஸ்போனின் அரசனாகிய
சீகோனையும், பாசானின் அரசனாகிய
ஓகையும் அவர் தோற்கடித்ததைக் கேள்விப்
பட்டோம். 11 எனவே எங்கள் மூப்பர்களும்,
ஜனங்களும் எங்களை நோக்கி, ‘உங்கள்
பயணத்திற்குத் தேவையான உணவை
எடுத்துச் செல்லுங்கள். இஸ்ரவேலரின்
ஜனங்களைப் போய்ச் சந்தித்து, அவர்களி
டம், “நாங்கள் உங்கள் பணியாட்கள்.
எங்களோடு சமாதான ஒப்பந்தம் செய்து
கொள்ளுங்கள்” என்று சொல்லுங்கள்’ என்
றார்கள்.
12 “எங்கள் அப்பத்தைப் பாருங்கள்! நாங்
கள் எங்கள் வீடுகளைவிட்டு உங்களிடம்
வரும்படி பயணம் செய்யத் துவங்கியபோது
அது சூடாகவும், புதியதாகவும் இருந்தது.
ஆனால் இப்போது உலர்ந்து பழையதாகப்
போய்விட்டது. 13 எங்கள் திராட்சைரசப்
பைகளைப் பாருங்கள்! நாங்கள் வீட்டிலி
ருந்து வந்தபோது அவை புதிதாகவும்
திராட்சைரசம் நிரப்பப்பட்டவையாகவும்
இருந்தன. இப்போது அவை கிழிந்து,
பழையனவாகி விட்டன. எங்கள் உடை
களையும், பாதரட்சைகளையும் பாருங்கள்!
நாங்கள் அணிந்து கொண்டிருப்பவை

பயணத்தால் கிழிந்துபோயிருப்பதைக் காண்
பீர்கள்” என்றனர்.
14அந்த ஆட்கள் உண்மை பேசுகிறார்களா
என்பதை அறிய இஸ்ரவேலர் விரும்பினர்.
எனவே அவர்கள் அப்பத்தை ருசி பார்த்
தனர். ஆனால் அவர்கள் செய்யவேண்டியது
என்னவென்று கர்த்தரைக் கேட்டுத் தெரிந்து
கொள்ளவில்லை. 15யோசுவா அவர்களோடு
சமாதானம் செய்துகொள்ள உடன்பட்டான்.
அவர்களை வாழவிடுவதாக ஒப்பந்தம் செய்
தான். யோசுவாவின் இந்த வாக்குறுதிக்கு
இஸ்ரவேலின் தலைவர்களும் ஒப்புக்
கொண்டனர்.
16மூன்று நாட்களுக்குப் பிறகு, இஸ்ரவேல்
ஜனங்கள் அந்த ஆட்கள் தங்கள் முகாமிற்கு
வெகு அருகாமையில் வாழ்பவர்கள் என்
பதை அறிந்துகொண்டனர். 17எனவே இஸ்ர
வேலர் அம்மனிதர்கள் வாழ்ந்த இடத்திற்குச்
சென்றனர். அவர்கள் மூன்றாம் நாள் கிபி
யோன், கெபிரா, பெயெரோத், கீரியாத்
யெயாரீம் என்ற நகரங்களை வந்தடைந்தனர்.
18ஆனால் இஸ்ரவேல் படையினர் அந்
நகரங்களை எதிர்த்துப் போர் செய்ய
வில்லை. அந்த ஜனங்களோடு அவர்கள்
ஒரு சமாதான ஒப்பந்தத்தைச் செய்து கொண்
டனர். ஏனெனில் இஸ்ரவேலரின் தேவ
னாகிய கர்த்தருக்கு, முன்பு அவர்கள் ஒரு
வாக்குறுதியைச் செய்திருந்தனர்.
ஒப்பந்தம் செய்த தலைவர்களை எதிர்த்து
ஜனங்கள் குற்றம் சாட்டினார்கள். 19ஆனால்
தலைவர்கள், “நாங்கள் வாக்களித்து
விட்டோம். இஸ்ரவேலரின் தேவனாகிய
கர்த்தருக்கு முன்னால் வாக்களித்தோம்,
அவர்களை எதிர்த்து இப்போது போரிட
முடியாது. 20இப்படித்தான் நாம் நடந்து
கொள்ளவேண்டும். அவர்களை உயிரோடு
விடவேண்டும். அவர்களைக் காயப்படுத்தி
னால் நாம் அவர்களோடு செய்த வாக்
குறுதியை மீறியதற்காக தேவன் நம்மிடம்
கோபமடைவார். 21எனவே அவர்கள்
வாழட்டும். ஆனால் அவர்கள் நமது பணி
யாட்களாக இருப்பார்கள். அவர்கள்
நமக்காக விறகு வெட்டுவார்கள். நம் ஜனங்
களுக்காக தண்ணீர் மொண்டு வருவார்கள்”
என்று பதிலளித்தார்கள். இவ்வாறு அந்த
ஜனங்களுக்கு அளித்த சமாதானத்திற்கான
வாக்குறுதியை தலைவர்கள் மீறவில்லை.
22யோசுவா கிபியோனிய ஜனங்களை
அழைத்து, “ஏன் எங்களிடம் பொய்
சொன்னீர்கள்? உங்கள் தேசம் எங்கள்
முகாமிற்கு அருகில் இருந்தது. ஆனால்
நீங்களோ தூரதேசத்தைச் சேர்ந்தவர்கள்
என்றீர்கள். 23இப்போது, நீங்கள் ஒரு
சாபத்தினால் பிடிக்கப்பட்டிருக்கிறீர்கள்.
உங்கள் ஜனங்கள் அனைவரும் அடிமைகள்
ஆவர். அவர்கள் தேவனின் ஆலயத்திற்கு
விறகு வெட்டவும், தண்ணீர் மொண்டு
வரவும் வேண்டும்” என்றான்.
24கிபியோனிய ஜனங்கள், “நீங்கள்
எங்களைக் கொன்று விடுவீர்கள் என்ற
பயத்தால் நாங்கள் பொய் சொன்னோம்.
தேவன் தம் ஊழியராகிய மோசேக்கு
இந்தத் தேசத்தையெல்லாம் கொடுப்பதாக
வாக்களித்ததாக நாங்கள் கேள்விப்பட்டோம்.
இத்தேசத்தில் வசிப்போரைக் கொல்லும்
படியாக தேவன் உங்களுக்குக் கூறினார்.
எனவே நாங்கள் உங்களிடம் பொய்
கூறினோம். 25இப்போதும் நாங்கள் உங்கள்
பணியாட்கள். நீங்கள் சரியென நினைப்
பதை எங்களுக்குச் செய்யலாம்” என்றனர்.
26எனவே கிபியோனிய ஜனங்கள்
அடிமைகளாயினர். ஆனால் யோசுவா அவர்
களை உயிரோடு விட்டான். இஸ்ரவேலர்
அவர்களைக் கொல்வதற்கு அனுமதிக்க
வில்லை. 27கிபியோனிய ஜனங்களை இஸ்ர
வேல் ஜனங்களுக்கு அடிமைகளாக
யோசுவா ஆக்கினான். அவர்கள் இஸ்ரவேல்
ஜனங்களுக்கும் கர்த்தருடைய பலி
பீடத்திற்கும் தேவையான விறகு வெட்டி,
தண்ணீர் மொண்டு வந்தனர். தேவன்
தெரிந்தெடுத்த இடத்தில் எல்லாம் அவர்கள்
அவ்வேலைகளைச் செய்தனர். அந்த ஜனங்
கள் இன்றைக்கும் அடிமைகளாக உள்ளனர்.

## சூரியன் அசையாது நின்ற நாள்

10 அக்காலத்தில் அதோனிசேதேக் எருச
லேமின் அரசனாக இருந்தான்.
யோசுவா ஆயீ நகரைத் தோற்கடித்து முற்
றிலும் அழித்துவிட்டான் என்ற செய்தியை
அந்த அரசன் அறிந்தான். எரிகோவிற்கும்
அதன் அரசனுக்கும் யோசுவா அவ்வாறே
செய்தான் என்பதையும் அவன் தெரிந்து
கொண்டான். கிபியோனியர் இஸ்ரவேல
ரோடு சமாதான ஒப்பந்தம் செய்து கொண்
டதையும் அவன் அறிந்திருந்தான். அந்த
ஜனங்கள் எருசலேமுக்கு வெகு அருகாமை
யில் வாழ்ந்தனர். 2எனவே அதோனி
சேதேக்கும் அவன் ஜனங்களும் மிகவும்
பயந்தனர். கிபியோன் ஆயீயைப் போன்ற
சிறிய நகரமன்று. கிபியோன் ஒரு பெரிய
பலமான நாடு. அங்கிருந்த ஆண்கள்
அனைவரும் சிறந்த போர் வீரர்களாக
இருந்தார்கள். 3எருசலேமின் அரசனாகிய
அதோனிசேதேக், எபிரோனின் அரசனாகிய,
ஓகாமுடனும் யர்மூத்தின் அரசனாகிய பீராமு
டனும், லாகீசின் அரசனாகிய யப்பியா
வுடனும், எக்லோனின் அரசனாகிய
தெபீருடனும் பேச்சுவார்த்தை நடத்தினான்.
எருசலேமின் அரசன் இவர்களிடம், 4“என்
னோடு வந்து கிபியோனைத் தாக்குவதற்கு
உதவுங்கள். யோசுவாவோடும் இஸ்ரவேல்
ஜனங்களோடும் கிபியோனியர் ஒரு
சமாதான ஒப்பந்தம் செய்துள்ளனர்!” என்று
கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.
5இந்த ஐந்து எமோரிய அரசர்களும்
படை திரட்டினர். (அவர்கள் எருசலேம்,

எப்ரோன், யர்மூத், லாகீசு, எக்லோன்
ஆகிய நாட்டு மன்னர்கள் ஆவார்கள்.)
அப்படைகள் கிபியோனை நோக்கிச் சென்று
நகரைச் சூழ்ந்துகொண்டு, போர் செய்ய
ஆரம்பித்தன.
6கிபியோன் நகர ஜனங்கள் கில்காலில்
முகாமிட்டுத் தங்கி இருந்த யோசுவாவிற்குச்
செய்தியனுப்பினார்கள்: அதில், “நாங்கள்
உமது பணியாட்கள்! எங்களைக் கைவிட்டு
விடாதீர்கள். வந்து எங்களுக்கு உதவுங்கள்!
விரைந்து வாருங்கள், எங்களைக் காப்பாற்
றுங்கள்! மலை நாட்டின் எமோரிய அரசர்
கள் எல்லோரும் எங்களை எதிர்த்துப்
போரிடுவதற்கு அவர்கள் படைகளைக்
கொண்டுவந்துள்ளனர்” என்று இருந்தது.
7எனவே யோசுவா தனது படையோடு
கில்காலிலிருந்து புறப்பட்டான். யோசுவா
வின் சிறந்த படைவீரர்கள் அவனோடிருந்த
னர். 8கர்த்தர் யோசுவாவிடம், “அப்
படைகளைக் கண்டு அஞ்சாதீர்கள். நீங்கள்
அவர்களைத் தோற்கடிக்கச் செய்வேன். அப்
படைகளில் ஒன்றும் உங்களைத் தோற்கடிக்க
இயலாது” என்றார்.
9யோசுவாவும், அவனது படையும் கிபி
யோனுக்கு இரவு முழுவதும் அணிவகுத்துச்
சென்றனர். யோசுவா வருவதைப் பகைவர்
கள் அறியவில்லை. எனவே அவன் திடீ
ரென்று தாக்கியபோது அவர்களுக்கு அதிர்ச்
சியாக இருந்தது.
10இஸ்ரவேலர் தாக்கியபோது அவர்கள்
மிகுந்த குழப்பமடையும்படியாக கர்த்தர்
செய்தார். எனவே இஸ்ரவேலர் அவர்களைத்
தோற்கடித்துப் பெரும் வெற்றி பெற்றனர்.
பெத்தொரோனுக்குப் போகிற வழிவரைக்கும்
இஸ்ரவேலர் பகைவர்களைக் கிபியோனி
லிருந்து துரத்தினர். அசெக்கா, மக்கெதா
வரைக்கும் இஸ்ரவேலர் அவர்களைக்
கொன்றனர். 11அப்போது இஸ்ரவேல் படை
யினர் பகைவர்களை பெத்தொரானிலிருந்து
அசெக்கா வரைக்குமுள்ள வழியில் துரத்தி
னார்கள். அப்போது, கர்த்தர் வானத்தி
லிருந்து பெருங்கற்கள் விழும்படியாகச்
செய்தார். அப்பெருங்கற்களால் பகைவர்கள்
பலர் மரித்தனர். இஸ்ரவேல் வீரர்களின்
வாளால் அழிக்கப்பட்டவர்களைக் காட்டி
லும் கற்களால் கொல்லப்பட்டோரே அதிகம்.
12கர்த்தர் அன்று இஸ்ரவேலர் எமோரி
யரை வெற்றிக்கொள்ளச் செய்தார். அந்த
நாளில் யோசுவா இஸ்ரவேல் ஜனங்களுக்கு
முன்பாக நின்று, கர்த்தரை நோக்கி:

“சூரியன், கிபியோனின் மேல்
நிற்கட்டும்.
ஆயலோன் பள்ளத்தாகின் மேல்,
சந்திரன் அசையாது நிற்கட்டும்”

என்றான்.
13எனவே சூரியனும், சந்திரனும் இஸ்ர
வேலர் தங்கள் பகைவர்களை முறியடிக்கும்
வரைக்கும் அசையாமல் நின்றன. இது
யாசேரின் புஸ்தகத்தில் எழுதப்பட்டுள்ளது.
வானத்தின் நடுவில் சூரியன் அசையாமல்
நின்றது. ஒரு நாள் முழுவதும் அது
அசையவேயில்லை. 14அவ்வாறு முன்னர்
நிகழ்ந்ததேயில்லை! அதன் பின் நிகழவு
மில்லை. அந்நாளில் கர்த்தர் ஒரு மனிதனின்
சொல்லுக்குக் கீழ்ப்படிந்தார். உண்மையில்
கர்த்தரே இஸ்ரவேலருக்காகப் போர் செய்
தார்!
15அதன்பிறகு, யோசுவாவும் அவனது
படையினரும் கில்காலில் முகாமிட்டிருந்த
இடத்துக்கு திரும்பிப் போனார்கள். 16ஆனால்
போரின்போது, ஐந்து அரசர்களும் ஓடிப்
போய் மக்கெதாவிக்கு அருகிலுள்ள ஒரு
குகையில் ஒளித்திருந்தனர். 17அவர்கள்
குகைகளில் ஒளிந்திருந்ததைச் சிலர்
பார்த்து யோசுவாவிற்கு தெரிவித்தார்கள்.
18யோசுவா, “குகையின் நுழைவாசலைப்
பெரிய கற்களைப் புரட்டி மூடிவிடுங்கள்.
அக்குகையைக் காவல் செய்வதற்குச் சிலரை
நியமியுங்கள். 19ஆனால் நீங்கள் அங்கு
நின்றுகொண்டிருக்க வேண்டாம். பின்
தொடர்ந்து உங்கள் பகைவர்களைத் தாக்குங்
கள். அவர்கள் தங்கள் நகரத்திற்குச் செல்ல
விடாதீர்கள். அவர்கள் மீது வெற்றியை
உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுக்குத்
தந்துள்ளார்” என்றான்.
20யோசுவாவும் இஸ்ரவேல் ஜனங்களும்
பகைவர்களை வென்றனர். ஆனால் சில
பகைவர்கள் அவர்கள் நகரங்களுக்குப் போய்
ஒளிந்துகொண்டனர். அவர்கள் கொல்லப்பட
வில்லை. 21போர் முடிந்தபின், மக்கெதாவிற்கு
யோசுவாவின் ஆட்கள் திரும்பி வந்தனர்.
இஸ்ரவேல் ஜனங்களுக்கெதிராக எதையும்
கூறும் துணிவு அந்நாட்டு ஜனங்களுக்கு
இருக்கவில்லை.
22யோசுவா, “குகையின் வாசலை மூடி
யுள்ள கற்களை அகற்றி, ஐந்து அரசர்
களையும் என் முன் கொண்டு வாருங்கள்”
என்றான். 23யோசுவாவின் ஆட்கள் அப்ப
டியே செய்தனர். அவர்கள் எருசலேம்,
எப்ரோன், யர்மூத், லாகீசு, எக்லோன்
ஆகியவற்றின் அரசர்களாவார்கள். 24அவர்
கள் அந்த ஐந்து அரசர்களையும் யோசுவா
விடம் அழைத்து வந்தனர். அவ்விடத்திற்கு
வருமாறு யோசுவா தன் எல்லா ஆட்
களையும் அழைத்தான். யோசுவா படையதி
காரிகளை நோக்கி, “இங்கே வாருங்கள்!
உங்கள் பாதங்களை இந்த அரசர்களின்
கழுத்தின் மீது வையுங்கள்” என்றான்.
அவ்வாறே யோசுவாவின் படை அதிகாரி
கள் நெருங்கி வந்து அந்த அரசர்களின்
கழுத்துக்களின் மீது தங்கள் பாதங்களை
வைத்தனர்.
25அப்போது யோசுவா தன் ஆட்களை
நோக்கி, “வலிமையும் துணிவும் உடையவர்
களாயிருங்கள், அஞ்சாதீர்கள். நீங்கள் எதிர்

காலத்தில் எதிர்கொள்ளப் போகிற பகைவர்
கள் எல்லோருக்கும் கர்த்தர் செய்யவிருப்
பதை உங்களுக்குக் காட்டுவேன்” என்றான்.
26யோசுவா அந்த ஐந்து அரசர்களையும்
கொன்று, அவர்களின் உடல்களை ஐந்து
மரங்களில் தொங்கவிட்டான். மாலைவரை
யோசுவா அவர்களை மரத்திலேயே தொங்க
விட்டான். 27சூரியன் மறையும் வேளையில்
யோசுவா அவனது ஆட்களிடம் அந்த
உடல்களை மரங்களிலிருந்து கீழே இறக்கு
மாறு கூறினான். அவர்கள் அந்த உடல்களை
இறக்கி முன்பு அந்த அரசர்கள் ஒளித்திருந்த
குகைகளில் போட்டு மூடி, அவற்றின்
வாசல்களைப் பெரிய பாறைகளால் மூடி
னார்கள். அந்தப் பாறைகள் இன்றைக்கும்
உள்ளன.
28அன்று யோசுவா மக்கெதா என்னும்
நகரத்தை வென்றான். அந்நகரின் அரசனை
யும் ஜனங்களையும் கொன்றான். யாரும்
உயிரோடு விடப்படவில்லை. எரிகோவின்
அரசனுக்குச் செய்தபடியே மக்கெதாவின்
அரசனுக்கும் செய்தான்.

### தெற்குப் பகுதியின் நகரங்களைக் கைப்பற்றுதல்

29பின் யோசுவாவும், இஸ்ரவேல் ஜனங்
கள் எல்லோரும் மக்கெதாவிலிருந்து பய
ணம் செய்தனர். அவர்கள் லிப்னா என்னும்
நகருக்குச் சென்று, அந்நகரத்தைத் தாக்கி
னார்கள். 30அந்நகரத்தையும் அதன்
அரசனையும் தோற்கடிப்பதற்குக் கர்த்தர்
இஸ்ரவேலரை அனுமதித்தார். அந்நகரில்
இருந்த ஒவ்வொருவரையும் இஸ்ரவேல்
ஜனங்கள் கொன்றனர். யாரும் உயிரோடு
விடப்படவில்லை. இஸ்ரவேல் ஜனங்கள்
எரிகோவின் அரசனுக்குச் செய்தபடியே
லிப்னாவின் அரசனுக்கும் செய்தனர்.
31பிறகு யோசுவாவும் இஸ்ரவேல்
ஜனங்களும் லிப்னா நகரிலிருந்து லாகீசை
நோக்கிச் சென்றனர். யோசுவாவும் அவனது
படையும் லாகீசைச் சுற்றிலும் முகாமிட்டு
அந்நகரத்தைத் தாக்கினார்கள். 32லாகீசு
நகரத்தைத் தோற்கடிப்பதற்கு கர்த்தர் அவர்
களை அனுமதித்தார். இரண்டாம் நாளில்
அந்நகரைத் தோற்கடித்தார்கள். லிப்னாவில்
செய்தபடியே, இஸ்ரவேல் ஜனங்கள் அந்
நகரிலிருந்த அனைவரையும் கொன்றார்கள்.
33அப்போது கேசேரின் அரசனாகிய ஓராம்,
லாகீசுக்கு உதவியாக வந்தான். யோசுவா
அவனையும் அவனது படையையும்கூட
வென்றான். யாரும் உயிரோடு விடப்பட
வில்லை.
34பிறகு, யோசுவாவும் எல்லா இஸ்ரவே
லர்களும் லாகீஸ் நகரிலிருந்து எக்லோன்
நகரை நோக்கிப் பயணம் செய்தார்கள்.
அவர்கள் எக்லோன் நகரைச் சூழ்ந்து
அதைத் தாக்கினார்கள். 35அவர்கள் அன்
றைக்கு அந்நகரைக் கைப்பற்றியதோடு
அங்கு வசித்து வந்த ஜனங்களையும் கொன்
றனர். லாகீஸ் நகரில் செய்தபடியே இந்த
நகரிலும் செய்தனர்.
36பின்பு யோசுவாவும் இஸ்ரவேலரும்
எக்லோன் நகரத்திலிருந்து எபிரோன் என்
னும் நகருக்குச் சென்று அதைத் தாக்கி
னார்கள். 37அவர்கள் அந்த நகரத்தையும்
அதைச் சுற்றியிருந்த ஊர்களையும்
கைப்பற்றினர். நகரத்தில் வாழ்ந்தவர்களை
எல்லாம் இஸ்ரவேலர் கொன்றனர். யாரும்
உயிரோடு விடப்படவில்லை. அவர்கள்
எக்லோனிலும் அவ்வாறே செய்திருந்தனர்.
அவர்கள் நகரத்தை அழித்து, எல்லா
ஜனங்களையும் கொன்றனர்.
38பின்பு யோசுவாவும் இஸ்ரவேலர்
எல்லோரும் தெபீருக்குத் திரும்பிச்சென்று,
அந்நகரைத் தாக்கினார்கள். 39அவர்கள்
நகரத்தையும், அதன் அரசனையும், நகரைச்
சுற்றிலுமிருந்த சிறிய ஊர்களையும் கைப்
பற்றினார்கள். அந்நகரில் வாழ்ந்த அனை
வரையும் கொன்றனர். யாரும் உயிரோடு
விடப்படவில்லை. எபிரோனுக்கும் அதன்
அரசனுக்கும் செய்ததையே இஸ்ரவேலர்
தெபீருக்கும் அதன் அரசனுக்கும் செய்தனர்.
அவ்வாறே லிப்னாவிற்கும் அதன் அரச
னுக்கும் செய்திருந்தனர்.
40மலை நாடுகளிலும், பாலைவனங்களி
லும், மேற்கு மற்றும் கிழக்கு மலையடி
வாரங்களிலும், இருக்கிற நகரங்களை
யெல்லாம் ஆட்சி செய்த எல்லா அரசர்களை
யும் யோசுவா தோற்கடித்தான். இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தர் எல்லா ஜனங்களையும்
கொல்லும்படியாக யோசுவாவிற்குக் கூறி
னார். எனவே யோசுவா அந்த இடங்களில்
யாரையும் உயிரோடு விட்டுவைக்கவில்லை.
41காதேஸ்பர்னேயாவிலிருந்து காத்சா
வரைக்கும் இருந்த எல்லா நகரங்களையும்
யோசுவா கைப்பற்றினான். எகிப்திலிருந்த
கோசோன் நிலப்பகுதியிலிருந்து கிபியோன்
வரையிலிருந்த எல்லா நகரங்களையும்
கைப்பற்றினான். 42யோசுவா அந்த நகரங்கள்
அனைத்தையும் அவற்றின் அரசர்களையும்
ஒரே ராணுவ நடவடிக்கையில் கைப்
பற்றினான். இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் இஸ்ரவேலுக்காகப் போராடியதால்
யோசுவா இதைச் சாதித்தான். 43பின்பு
யோசுவாவும், இஸ்ரவேல் ஜனங்கள்
எல்லோரும் கில்கால் என்னும் நகரிலிருந்த
தங்கள் முகாமிற்குத் திரும்பினார்கள்.

### வடக்குப் பகுதியின் பட்டணங்களைத் தோற்கடித்தல்

11 ஆத்சோரின் அரசனாகிய யாபீன்,
நடந்த எல்லா காரியங்களையும்
குறித்துக் கேள்விப்பட்டான். எனவே பல
அரசர்களின் சேனைகளையும் திரட்ட முடிவு
செய்தான். மாதோனின் அரசனாகிய யோபா
பிடத்திற்கும், சிம்ரோனின் அரசனிடத்திற்

கும், அக்சாபாவின் அரசனிடத்திற்கும்,
2வடக்கிலும், மலைநாடுகளிலும், பாலை
வனங்களிலும் உள்ள மற்ற அரசர்களுக்கும்
செய்தியனுப்பினான். கின்னரோத், நெகேவ்,
மேற்கிலுள்ள மலையடிவாரங்களிலுள்ள
அரசர்களுக்கும் யாபீன் செய்தியனுப்பினான்.
மேற்கிலுள்ள நாபோத், தோரின் அரச
னுக்கும் யாபீன் செய்தி அனுப்பினான்.
3கிழக்கிலும் மேற்கிலும் உள்ள கானானி
யரின் அரசர்களுக்கும் யாபீன் செய்தியைத்
தெரிவித்தான். எமோரியர், ஏத்தியர்,
பெரிசியர், எபூசியர், எர்மோன் மலைக்குக்
கீழே மிஸ்பாவிற்கு அருகிலுள்ள ஏவியர்
ஆகியோருக்கும் செய்தி கூறினான். 4எனவே
இந்த அரசர்களின் படைகள் அனைத்தும்
ஒன்றுகூடி போர் வீரர்களும், குதிரைகளும்,
இரதங்களும் எண்ணிக்கையில்
மிகுதியாக இருந்தபடியால், அது மிகவும்
பெரிய படை யாக இருந்தது. கடற்கரையின்
மணலைப் போன்று ஆட்கள் ஏராளமாக
இருந்தனர்.
5மேரோம் என்கிற சிறு நதிக்கருகே
எல்லா அரசர்களும் சந்தித்தனர். அவர்கள்
தங்கள் படைகளை எல்லாம் ஒன்றிணைத்து
இஸ்ரவேலுக்கு எதிராகப் போர் செய்யத்
திட்டமிட்டனர்.
6அப்போது கர்த்தர் யோசுவாவை
நோக்கி, “அப்படையைக் கண்டு அஞ்சாதே.
நீ அவர்களைத் தோற்கடிக்கச் செய்வேன்.
நாளை இதே வேளையில், நீ அவர்களை
யெல்லாம் கொன்றிருப்பாய். நீங்கள்
குதிரையின் கால்களை வெட்டி, அவர்களின்
இரதங்களை எரித்துப் போடுவீர்கள்” என்று
சொன்னார்.
7யோசுவாவும் அவனது படையினரும்
பகைவரை வியப்படையச் செய்தனர்.
மேரோம் நதிக்கரையில் அவர்கள் பகைவர்
களைத் தாக்கினார்கள். 8பிறகு இஸ்ரவேலர்
அவர்களைத் தோற்கடிப்பதற்கு கர்த்தர்
அனுமதித்தார். இஸ்ரவேல் படையினர்
அவர்களைத் தோற்கடித்து பெரிய சீதோன்,
மிஸ்ரபோத்மாயீம், கிழக்கேயுள்ள மிஸ்பா
பள்ளத்தாக்கு வரைக்கும் துரத்தினார்கள்.
பகைவரில் ஒருவரும் உயிரோடிராதபடிக்கு
இஸ்ரவேல் படையினர் போர் செய்தார்கள்.
9கர்த்தர் செய்யும்படியாகக் கூறியவற்றை
யெல்லாம் அவன் செய்தான். யோசுவா
அவர்களது குதிரைகளின் கால்களை
வெட்டி, அவர்களது தேர்களை எரித்தான்.
10பின் யோசுவா திரும்பிச் சென்று
ஆத்சோரைக் கைப்பற்றினான். ஆத்சோரின்
அரசனைக் கொன்றான். (இஸ்ரவேலுக்கு
எதிராகப் போர் செய்த எல்லா அரசுகளுக்
கும் ஆத்சோர் தலைமை தாங்கி இருந்தான்.)
11இஸ்ரவேல் படை நகரிலிருந்த ஒவ்வொரு
வரையும் கொன்றழித்தது. எல்லா ஜனங்
களையும் அவர்கள் அழித்துப்போட்டனர்.
எதுவும் உயிரோடு விடப்பட்டிருக்க
வில்லை. பிறகு அவர்கள் அந்த நகரை
எரித்தனர்.
12யோசுவா எல்லா நகரங்களையும் கைப்
பற்றினான். அவற்றின் அரசர்களையும்,
நகரங்களில் இருந்த எல்லாவற்றையும் அழித்
தான். கர்த்தருடைய ஊழியனாகிய மோசே,
கட்டளையிட்டபடியே யோசுவா செய்தான்.
13ஆனால் இஸ்ரவேல் படை மலைகளின்
மேல் கட்டப்பட்டிருந்த நகரங்களை எரிக்க
வில்லை. மலையின் மேல் கட்டப்பட்டிருந்த
நகரங்களில் அவர்கள் எரித்தழித்த ஒரே
நகரம் ஆத்சோர் ஆகும். யோசுவா
இந்நகரத்தை எரித்தான். 14நகரங்களில்
கிடைத்த எல்லாப் பொருட்களையும் இஸ்ர
வேல் ஜனங்கள் தங்களுக்காக வைத்துக்
கொண்டனர். நகரத்திலிருந்த மிருகங்களை
யும் அவர்களுக்காக எடுத்துக்கொண்டனர்.
ஆனால் மனிதர்கள் எல்லோரையும்
கொன்றுவிட்டனர். அவர்கள் ஒருவரையும்
உயிரோடிருக்க அனுமதிக்கவில்லை. 15வெகு
நாட்களுக்கு முன்னரே கர்த்தர் அவரது
ஊழியனாகிய மோசேக்கு இவ்வாறு
செய்யும்படி கட்டளையிட்டார். பின்
மோசே யோசுவாவிற்கு இவ்வாறு செய்யக்
கட்டளை தந்தான். ஆகையால் யோசுவா
தேவனுக்குக் கீழ்ப்படிந்தான். மோசேக்குக்
கர்த்தர் கட்டளையிட்டவற்றையெல்லாம்
யோசுவா செய்தான்.

16அந்நாடு முழுவதிலுமுள்ள ஜனங்கள்
எல்லாரையும் யோசுவா தோற்கடித்தான்.
மலை நாடுகள், பாலைவனங்கள், கோசே
னின் பகுதிகள், மேற்கு மலையடிவாரத்தின்
பகுதிகள், யோர்தான் பள்ளத்தாக்கு, இஸ்ர
வேலின் பர்வதங்கள், அருகேயுள்ள மலை
கள் அனைத்தையும் தன் கட்டுப்பாட்டுக்கு
உட்படுத்தினான். 17சேயீருக்கு அருகிலுள்ள
ஆலாக் மலையிலிருந்து லீபனோனின்
பள்ளத்தாக்கில் எர்மோன் மலையடி
வாரத்தில் இருக்கிற பாகால் காத்வரைக்கு
முள்ள இடங்களிலும் யோசுவாவுக்கு அதி
காரம் செலுத்த முடிந்தது. அங்குள்ள எல்லா
அரசர்களையும் பிடித்து அவர்களைக்
கொன்றான். 18நீண்டகாலம் அந்த
அரசர்களோடு யோசுவா போர் செய்தான்.
19அப்பகுதியில் இருந்த ஒரே ஒரு நகரம்
மட்டுமே இஸ்ரவேலரோடு சமாதான
ஒப்பந்தம் செய்து கொண்டது. கிபியோனி
லுள்ள ஏவியரின் நகரமே அது. மற்ற
நகரங்களெல்லாம் போரில் தோல்வி
கண்டன. 20அந்த ஜனங்கள் தங்களை வலி
யவர்களாக கருதும்படி கர்த்தர் செய்தார்.
அப்போதுதான் அவர்கள் இஸ்ரவேலரோடு
போர் செய்யக் கருதக்கூடும், இரக்கமின்றி
அந்த ஜனங்களை அழிப்பதற்கு யோசுவா
விற்கு வழியுண்டாகும். கர்த்தர் மோசேக்குக்
கட்டளையிட்டபடியே அவன் அவர்களை
அழிக்கமுடியும்.

21எபிரோன், தெபீர், ஆனாப், யூதா ஆகிய
மலை நாடுகளில் ஏனாக்கியர்* வாழ்ந்து
வந்தனர். யோசுவா அவர்களோடு போர்
தொடுத்து அவர்களையும், அவர்களது
ஊர்களையும் முற்றிலும் அழித்தான்.
22இஸ்ரவேல் நாட்டில் ஏனாக்கியர் ஒருவரும்
வாழவில்லை. காசா, காத், ஆஸ்தோத்
நாடுகளில் மட்டுமே ஏனாக்கியர் உயிரோடு
விடப்பட்டனர். 23முன்பே கர்த்தர் மோசேக்
குக் கூறியிருந்தபடி, யோசுவா இஸ்ரவேல்
நாட்டின் மீது ஆதிக்கம் உடையவனானான்.
வாக்களித்தபடியே கர்த்தர் இஸ்ரவேலருக்கு
அத்தேசத்தைக் கொடுத்தார். இஸ்ரவேலின்
கோத்திரங்கள் அனைத்திற்கும் அத்தேசத்தை
யோசுவா பிரித்துக் கொடுத்தான். இறுதியில்
போர் முடிந்து, அத்தேசத்தில் அமைதி
நிலவிற்று.

### இஸ்ரவேலரால் தோற்கடிக்கப்பட்ட இராஜாக்கள்

12 யோர்தான் நதிக்குக் கிழக்கிலுள்ள
தேசத்தில் இஸ்ரவேலரின் ஆதிக்கம்
இருந்தது. அர்னோன் நதியிலிருந்து எர்
மோன் மலை வரைக்குமுள்ள எல்லா
தேசங்களும் யோர்தான் நதியின் கிழக்குக்
கரையோரமுள்ள எல்லா தேசங்களும் அவர்
களுக்கு உரியதாக இருந்தது. இப்பகுதி
களைக் கைப்பற்றும் பொருட்டு அவர்கள்
தோற்கடித்த எல்லா அரசர்களின் பெயர்
களும் இங்குத் தரப்படுகின்றன:
2அவர்கள் எஸ்போன் நகரில் வாழ்ந்த
எமோரியரின் அரசனாகிய சீகோனைத்
தோற்கடித்தனர். அவன் அர்னோன் பள்ளத்
தாக்கிலுள்ள ஆரோவேரிலிருந்து யாபோக்
நதி வரைக்குமுள்ள தேசத்தை ஆண்டு
வந்தான். பள்ளத்தாக்கின் நடுவில் அவன்
தேசத்தின் எல்லை (தேசம்) ஆரம்பித்தது.
இது அம்மோனியரோடு அவர்களின் எல்
லையாக இருந்தது. கீலேயாத்தின் பாதிப்
பகுதியும் சீகோனின் ஆளுகைக்குட்பட்டிருந்
தது. 3கலிலேயா ஏரியிலிருந்து சவக்கடல்
வரைக்கும் யோர்தான் பள்ளத்தாக்கின்
கிழக்குப் பகுதிகளை அவன் ஆண்டுவந்தான்.
பெத்யெசிமோத்திலிருந்து பிஸ்கா மலை
களின் தெற்குப் பகுதி வரைக்கும் அவன்
ஆண்டுவந்தான்.
4அவர்கள் பாசானின் அரசனாகிய
ஓகையும், வென்றார்கள். அவன் ரெபெயத்
ஜனங்களைச் சார்ந்தவன். அவன் அஸ்த
ரோத்திலும் எத்ரேயிலுமிருந்த நிலப்
பகுதிகளை ஆண்டான். 5எர்மோன் மலை,
சல்கா, பாசானின் நிலப்பகுதிகள்
ஆகியவற்றையெல்லாம் ஓக் அரசாண்டான்.
கெசூர், மாகா ஆகிய ஜனங்கள் வாழ்ந்த
தேசம் வரைக்கும் அவன் தேசம் இருந்தது.
கீலேயாத்தின் பாதிப் பகுதியையும் ஓக்
ஆண்டு வந்தான். எஸ்போனின் அரசனாகிய,
சீகோனின் தேசம் மட்டும் அப்பகுதி
பரவியிருந்தது.
6கர்த்தருடைய ஊழியனாகிய மோசேயும்,
இஸ்ரவேல் ஜனங்களும் இந்த அரசர்களை
எல்லாம் வென்றார்கள். ரூபன், காத், ஆகிய
கோத்திரத்தாருக்கும், மனாசே கோத்திரத்தா
ரில் பாதி ஜனங்களுக்கும் சொந்தமாக
மோசே அத்தேசத்தைக் கொடுத்தான்.
7யோர்தான் நதிக்கு மேற்கிலுள்ள தேசங்
களின் அரசர்களையும் இஸ்ரவேல் ஜனங்கள்
வென்றார்கள். இந்நாட்டிற்குள் ஜனங்களை
யோசுவா வழி நடத்தினான். இத்தேசத்தை
இஸ்ரவேலரின் பன்னிரண்டு கோத்திரங்
களுக்கு இடையே யோசுவா பிரித்துக்
கொடுத்தான். தேவன் அவர்களுக்குக்
கொடுப்பதாக வாக்களித்த தேசம் இதுவேயா
கும். லீபனோன் பள்ளத்தாக்கிலுள்ள
பால்காத்திலிருந்து சேயீரிலுள்ள ஆலாக்
மலை வரைக்குமுள்ள தேசம் இதுவாகும்.
8மலைநாடு, மேற்கு மலையடிவாரம்,
யோர்தான் பள்ளத்தாக்கு, கிழக்கு மலைகள்,
பாலைவனம், நெகேவ் யூதாவின் கிழக்கி
லுள்ள பாலைப்பிரதேசம், ஆகியவை
இப்பகுதியில் அடங்கியிருந்தன. ஏத்தீயரும்,
எமோரியரும், கானானியரும், பெரிசியரும்,
ஏவியரும், எபூசியரும் வாழ்ந்த தேசம்
இதுவாகும். இஸ்ரவேலர் தோற்கடித்த அரசர்
களின் பெயர்ப் பட்டியல் பின் வருவதாகும்:

| | | |
|---|---|---|
| 9 | எரிகோவின் அரசன் | 1 |
| | பெத்தேலுக்கு அருகிலுள்ள ஆயீயின் அரசன் | 1 |
| 10 | எருசலேமின் அரசன் | 1 |
| | எப்ரோனின் அரசன் | 1 |
| 11 | யர்மூத்தின் அரசன் | 1 |
| | லாகீசின் அரசன் | 1 |
| 12 | எக்லோனின் அரசன் | 1 |
| | கேசேரின் அரசன் | 1 |
| 13 | தெபீரின் அரசன் | 1 |
| | கெதேரின் அரசன் | 1 |
| 14 | ஓர்மாவின் அரசன் | 1 |
| | ஆராதின் அரசன் | 1 |
| 15 | லிப்னாவின் அரசன் | 1 |
| | அதுல்லாமின் அரசன் | 1 |
| 16 | மக்கேதாவின் அரசன் | 1 |
| | பெத்தேலின் அரசன் | 1 |
| 17 | தப்புவாவின் அரசன் | 1 |
| | எப்பேரின் அரசன் | 1 |
| 18 | ஆப்பெக்கின் அரசன் | 1 |
| | லசரோனின் அரசன் | 1 |
| 19 | மாதோனின் அரசன் | 1 |
| | ஆத்சோரின் அரசன் | 1 |
| 20 | சிம்ரோன் மேரோனின் அரசன் | 1 |
| | அக்சாபின் அரசன் | 1 |

---

**ஏனாக்கியர்** ஏனாக்கின் சந்ததி. அவர்கள் வளர்த்தியானவர்கள் மற்றும், பலத்தோடு சண்டையிடும் மனிதர்கள் எனவும் புகழ்பெற்ற ஒரு குடும்பமாகும். எண். 13:33.

| | | |
|---|---|---|
| 21 | *தானாகின் அரசன்* | 1 |
| | *மெகிதோவின் அரசன்* | 1 |
| 22 | *கேதேசின் அரசன்* | 1 |
| | *கர்மேலிலுள்ள யொக்னியாமின் அரசன்* | 1 |
| 23 | *தோர் மலையிலுள்ள தோரின் அரசன்* | 1 |
| | *கில்காலின் கோயிம் அரசன்* | 1 |
| 24 | *திர்சாவின் அரசன்* | 1 |
| | *மொத்தம் அரசர்களின் எண்ணிக்கை* | 31 |

### கைப்பற்றப்படாத நாடுகள்

13 *யோசுவா வயது முதிர்ந்தவனாக*
*இருக்கும்போது, கர்த்தர் அவனை*
*நோக்கி, "யோசுவா உனக்கு வயது முதிர்ந்து*
*விட்டது, ஆனால் நீ கைப்பற்றவேண்டிய*
*நாடுகள் இன்னும் பல உள்ளன.* 2*கெசூரிம்*
*தேசத்தையோ, பெலிஸ்தியரின் தேசத்*
*தையோ நீ இன்னும் எடுத்துக்கொள்ள*
*வில்லை.* 3*எகிப்திலுள்ள சீகோர் நதியின்**
*தேசங்களையும், வடக்கில் எக்ரோனின்*
*கரையிலுள்ள நாடுகளையும் நீ கைப்பற்ற*
*வில்லை. அது இன்னமும் கானானியருக்*
*குரியதாக உள்ளது. காசா, அஸ்தோத்,*
*அஸ்க லோன், காத், எக்ரோன் ஆகிய*
*இடங்களின் ஐந்து பெலிஸ்திய தலைவர்*
*களையும் நீ தோற்கடிக்கவேண்டியுள்ளது.*
4*கானானியரின் நாட்டிற்குக் கிழக்கேயுள்ள*
*ஏவியரையும் நீ வெல்லவேண்டும்.*
5*கிப்லியரின் தேசத்தையும் நீ இன்னும்*
*வெற்றி கொள்ளவில்லை. எர்மோன்*
*மலையின் கீழேயுள்ள பாகால்காத் திற்குக்*
*கிழக்கில் லீபனோனின் பகுதியி லிருந்து*
*லெபோ ஆமாத் வரைக்கும் நீ கைப்பற்ற*
*வேண்டும்.*
6*"சீதோனின் ஜனங்கள் லீபனோனிலி*
*ருந்து மிஸ்ரெபோத்மாயீம் வரையுள்ள மலை*
*நாட்டில் வசித்து வருகின்றனர். இஸ்ர*
*வேலருக்காக இவர்கள் அனைவரையும் நான்*
*துரத்துவேன். இஸ்ரவேலின் ஜனங்களுக்காக*
*தேசத்தைப் பிரிக்கும்போது இத்தேசத்தையும்*
*ஞாபகப்படுத்திக்கொள். நான் உனக்குச்*
*சொன்னபடியே இதைச் செய்.* 7*இப்போது,*
*தேசத்தை ஒன்பது கோத்திரத்தினருக்கும்,*
*மனாசே என்னும் கோத்திரத்தின் சரிபாதியி*
*னருக்கும் பிரித்துக் கொடு" என்றார்.*

### தேசத்தைப் பங்கிடுதல்

8*ரூபன், காத், ஆகிய கோத்திரத்தின*
*ருக்கும், மனாசே என்னும் கோத்திரத்தின்*
*பாதிப் பகுதியினரும் அவர்களுக்குரிய*
*தேசத்தை ஏற்கனவே பெற்றிருந்தார்கள்.*
*கர்த்தருடைய ஊழியனாகிய மோசே,*
*யோர்தான் நதிக்குக் கிழக்கிலுள்ள தேசத்தை*
*அவர்களுக்குக் கொடுத்திருந்தான்.* 9*ஆரோ*
*வேர் நதிக்கருகிலுள்ள அர்னோன் நதியில்*
*அத்தேசம் ஆரம்பித்து நதியின் நடுப்பகுதியி*
*லுள்ள ஊர்வரைக்கும் அவர்களது தேசம்*
*இருந்தது. அது மெதெபாவிலிருந்து தீபோன்*
*வரைக்குமுள்ள சமவெளியையும் கொண்*
*டிருந்தது.* 10*அத்தேசத்தில் எமோரியரின்*
*அரசனாகிய சீகோன் ஆண்டிருந்த எல்லா*
*ஊர்களும் அடங்கியிருந்தன. அந்த அரசன்*
*எஸ்போன் நகரில் ஆண்டு வந்தான்.*
*எமோரியர் வாழ்ந்த பகுதி வரைக்கும்*
*அத்தேசம் தொடர்ந்தது.* 11*கீலேயாத் என்னும்*
*ஊரும் அத்தேசத்தில் இருந்தது. கெசூர்,*
*மாகா ஆகியவற்றின் ஜனங்கள் வாழ்ந்த*
*பகுதியும் அத்தேசத்தில் இருந்தது. எர்மோன்*
*மலைப்பகுதி முழுவதும் சலேகா வரைக்கு*
*மான பாசானின் பகுதியும் அந்த*
*நிலப்பகுதியில் அடங்கி இருந்தன.* 12*ஓகின்*
*அரசுக்குட்பட்ட நாடு முழுவதும் அதில்*
*அடங்கியிருந்தது. பாசானில் ஓக் என்ற*
*அரசன் ஆண்டு வந்தான். முன்பு*
*அஸ்தரோத்திலும், எத்ரேயியிலும் அவன்*
*ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். ஓக் ரெபயத்*
*ஜனங்கள் இனத்தவன். முன்பே மோசே*
*இவர்களை வென்று, அவர்கள் நாட்டைக்*
*கைப்பற்றியிருந்தான்.* 13*கெசூர், மாகா*
*ஆகியவற்றின் ஜனங்களை, இஸ்ரவேல்*
*ஜனங்கள் துரத்தவில்லை. இன்றும் இஸ்ர*
*வேல் ஜனங்களோடுகூட அவர்களும்*
*வாழ்கின்றனர்.*
14*லேவி கோத்திரத்திற்கு எந்த நிலப்*
*பகுதியும் கொடுக்கப்படவில்லை. இஸ்ரவே*
*லின் தேவனாகிய கர்த்தருக்கு, தகன பலி*
*யாகக் கொடுக்கப்பட்ட மிருகங்கள் அனைத்*
*தும் லேவி கோத்திரத்தினரைச் சார்ந்தவர்*
*களுக்கு உரியனவாயின. கர்த்தர் அவர்*
*களுக்கு வாக்களித்தது அதுவே.*
15*ரூபனின் கோத்திரத்திலுள்ள ஒவ்வொரு*
*கோத்திரத்திற்கும் மோசே வழங்கியிருந்த*
*சிறிய நிலப்பகுதியை மட்டுமே அவர்கள்*
*பெற்றிருந்தனர்:* 16*அது அர்னோன் நதி*
*யருகேயுள்ள ஆரோவேரிலிருந்து மெதெபா*
*என்ற ஊர் வரைக்கும் உள்ள பகுதியாகும்.*
*அந்நதியின் மத்தியிலுள்ள ஊரையும்,*
*சமவெளிப் பகுதியையும் அது உள்ளடக்கி*
*யிருந்தது.* 17*எஸ்போன் வரைக்கும் அத்தேசம்*
*இருந்தது. சமவெளியின் எல்லா ஊர்களை*
*யும் அது கொண்டிருந்தது. தீபோன்,*
*பாமோத்பாகால், பெத்பாகால், மெயோன்*
*ஆகியப் பகுதிகளும்,* 18*யாகாசா, கெதெமோத்,*
*மேபாகாத்,* 19*கீரியாத்தாயீம், சிப்மா, ஆகிய*
*வையும், பள்ளத்தாக்கைச் சார்ந்த மலைப்*
*பகுதிகளில் உள்ள செரேத்சகார்,*
20*பெத்பேயோர், பிஸ்காவின் மலைகள்,*
*பெத்யெசிமோத் ஆகிய பகுதிகளும் அந்த*
*ஊர்களில் அடங்கியிருந்தன.* 21*அத்தேசம்*
*சமவெளியிலுள்ள எல்லா ஊர்களையும்,*

---

***சீகோர் நதி*** *ஒருவேளை இது நைல் நதியிலிருந்து கிழக்காகச் செல்லும் நதிகளில் ஒரு கிளை நதியாக இருக்கும்.*

எமோரியரின் அரசனாகிய சீகோன்
அரசாண்ட எல்லாப் பகுதிகளையும் உள்
ளடக்கியிருந்தது. எஸ்போன் என்னும்
ஊரில் அந்த அரசன் அரசாட்சி செய்தான்.
ஆனால் மோசே அவனையும், மீதியானி
யரின் தலைவர்களையும் தோற்கடித்தான்.
ஏவி, ரெக்கேம், சூர், ஊர், ரேபா ஆகியோர்
அத்தலைவர்கள் ஆவார்கள். (இத்தலைவர்கள்
எல்லோரும் சீகோனுடன் ஒன்று சேர்ந்து
மோசேயை எதிர்த்துப் போரிட்டனர்.)
இத்தலைவர்கள் எல்லோரும் அந்நாட்டில்
வசித்தனர். 22இஸ்ரவேல் ஜனங்கள் பேயோ
ரின் மகனாகிய பாலாமைத் தோற்கடித்தனர்.
(எதிர்காலம் பற்றி தனது மந்திர சக்தியால்
சொல்வதற்குப் பாலாம் முயன்று கொண்டி
ருந்தான்.) போரின்போது இஸ்ரவேல்
ஜனங்கள் பலரைக் கொன்றனர். 23யோர்தான்
நதிக்கரை ரூபனுக்குக் கொடுக்கப்பட்ட
நிலத்தின் எல்லையாக அமைந்தது. மேலே
கூறப்பட்ட ஊர்களும் அவற்றின் வயல்களும்
ரூபனுக்குச் சொந்தமான தேசத்தில் இருந்தன.
24காத்தின் கோத்திரத்துக்கு அவரவர்
வம்சங்களின்படி மோசே இத்தேசத்தைக்
கொடுத்திருந்தான்:
25யாசேரின் தேசமும் கீலேயாத்தின்
எல்லா ஊர்களும், ரபாவின் அருகேயுள்ள
ஆரோவேர் வரைக்குமான அம்மோனியரின்
தேசத்தில் பாதியையும் கொடுத்தான். 26அத்
தேசம் எஸ்போனிலிருந்து ராமாத் மிஸ்பா
பெத்தோனீம் வரைக்கும் உள்ள பகுதியைக்
கொண்டிருந்தது. அத்தேசம் மக்னாயீமிலி
ருந்து தெபீர் வரைக்குமுள்ள இடத்தைக்
கொண்டது. 27பெத்ஹராம் பள்ளத்தாக்கு,
பெத்நிம்ரா, சுக்கோத், சாப்போன் ஆகியவை
யும் அத்தேசத்தில் இருந்தன. எஸ்போனின்
அரசனாகிய சீகோன் ஆண்ட மீதி நாடும்
இந்த நிலத்தில் அடங்கியிருந்தது. யோர்தான்
நதியானது அந்த நிலத்தில் கிழக்குப்
பகுதியாக அமைந்தது. அந்த நிலம்
கலிலேயா ஏரியின் கடைசி வரைக்கும்
தொடர்ந்தது. 28மோசே காத் கோத்திரத்
தாருக்குக் கொடுத்த தேசத்தில் இவை
யெல்லாம் இருந்தன. மேலே தரப்பட்ட
எல்லா ஊர்களும் அத்தேசத்தைச் சார்ந்தன.
இவற்றை காத் கோத்திரத்தின் வம்சத்தின
ருக்கு மோசே பிரித்துக் கொடுத்தான்.
29மனாசேயின் கோத்திரத்துக்கு மோசே
கொடுத்த நிலம் பின்வருவதாகும்: மனாசே
கோத்திரத்தின் பாதிப் பகுதியினர் இதனைப்
பெற்றனர்.
30மக்னாயீமில் தேசம் ஆரம்பித்தது.
பாசான் முழுவதும் பாசானின் அரசனாகிய
ஓகினால் ஆளப்பட்ட நாடும், பாசானில்
யாவீரின் எல்லா ஊர்களும் அத்தேசத்தில்
இருந்தன. (மொத்தம் 60 நகரங்கள் இருந்தன.)
31கீலேயாத்தின் பாதிபாகம், அஸ்தரோத்,
எத்ரேயி ஆகிய நகரங்களும் அத்தேசத்தில்
இருந்தன. (ஓக் அரசன் வசித்த நகரங்கள்
கீலேயாத், அஸ்தரோத், எத்ரேயி ஆகியவை.)
மனாசேயின் மகனாகிய மாகீரின் குடும்
பத்திற்கு இத்தேசங்கள் எல்லாம் கொடுக்கப்
பட்டன. மனாசேயின் மகன்களில் பாதிக்
குடும்பத்தினர் அவற்றைப் பெற்றனர்.
32மோசே இத்தேசத்தை இந்தக் கோத்திரத்தி
னருக்கு கொடுத்தான். மோவாப் சம
வெளியில் ஜனங்கள் பாளையமிட்டிருந்த
போது மோசே இதைச் செய்தான். எரிகோ
விற்குக் கிழக்கில், யோர்தான் நதிக்குக்
குறுக்காக இது இருந்தது. 33.லேவியின்
கோத்திரத்தினருக்கு மோசே எந்த நிலத்தை
யும் கொடுக்கவில்லை. லேவி கோத்திரத்தின
ருக்கு, இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரே
பங்காக அமைவதாக வாக்களித்திருந்தார்.

14 ஆசாரியனாகிய எலெயாசாரும்,
நூனின் மகனாகிய யோசுவாவும்,
இஸ்ரவேலின் எல்லாக் கோத்திரங்களின்
தலைவர்களும் ஜனங்களுக்கு எந்தெந்த
தேசத்தைக் கொடுப்பதென்று முடிவு
செய்தனர். 2ஜனங்கள் அவர்களுக்குரிய
தேசத்தைத் தேர்ந்தெடுப்பதற்கு விரும்பிய
வகையை அவர் முன்னரே மோசேக்குக்
கட்டளையிட்டிருந்தார். அவரவருக்கு எந்
தெந்த நிலப்பகுதி வேண்டுமென்பதை
ஒன்பதரை கோத்திரத்தாரும் சீட்டு போட்டுத்
தேர்ந்தெடுத்தனர். 3இரண்டரை கோத்திரத்தா
ருக்கு மோசே ஏற்கனவே யோர்தானுக்குக்
கிழக்கேயுள்ள நிலத்தைப் பிரித்துக் கொடுத்
திருந்தான். ஆனால் லேவியின் கோத்
திரத்தார் எந்த நிலத்தையும் பெறவில்லை.
4பன்னிரண்டு கோத்திரத்தினருக்கும் அவர்
களுக்குரிய நிலம் கொடுக்கப்பட்டது.
யோசேப்பின் ஜனங்கள் மனாசே,
எப்பிராயீம் என்று இரண்டு கோத்திரங்
களாகப் பிரிக்கப்பட்டனர். ஒவ்வொரு
கோத்திரமும் நிலத்தைப் பெற்றனர். லேவி
கோத்திரத்துக்கு எந்த நிலமும் கொடுக்கப்பட
வில்லை. அவர்கள் வசிப்பதற்கு சில
ஊர்கள் மட்டுமே கொடுக்கப்பட்டன.
ஒவ்வொரு கோத்திரத்தின் நடுவிலும் இந்த
ஊர்கள் இருந்தன. அவர்களுடைய மிருகங்
களுக்காக வயல்வெளி கொடுக்கப்பட்டிருந்
தது. 5இஸ்ரவேலின் ஒவ்வொரு கோத்தி
ரத்திற்கும் நிலத்தை எவ்வாறு பிரித்துக்
கொடுப்பதென்று கர்த்தர் மோசேக்குச்
சொல்லியிருந்தார். கர்த்தர் கட்டளையிட்ட
படியே இஸ்ரவேல் ஜனங்கள் நிலத்தைப்
பங்கிட்டனர்.

### காலேப் அவனுக்குரிய நிலத்தைப் பெறுதல்

6ஒருநாள் கில்காலில் யோசுவாவிடம்
யூதா கோத்திரத்திலிருந்து சிலர் வந்தனர்.
கேனாசியனான எப்புன்னேயின் மகனாகிய
காலேபும், அவர்களில் ஒருவன். காலேப்
யோசுவாவிடம், “காதேஸ் பர்னேயாவில்

கர்த்தர் அவரது ஊழியனாகிய,* மோசே
யிடம், உம்மையும் என்னையும் குறித்துச்
சொன்னவற்றை நினைவுகூர்ந்து பாரும்.
7நாம் போகப்போகிற தேசத்தைப் பார்த்து
வரும்படியாக கர்த்தருடைய ஊழியனாகிய
மோசே என்னை அனுப்பினான். எனக்கு
அப்போது நாற்பது வயது. அத்தேசத்தைப்
பற்றிய எனது எண்ணங்களை நான் திரும்பி
வந்தபோது மோசேக்குக் கூறினேன்.
8என்னோடு வந்த மற்றவர்கள் தாம் பார்த்து
அஞ்சியவற்றைக் குறித்துச் சொன்னார்கள்.
ஆனால் நாம் அத்தேசத்தைப் பெறுவதற்கு
கர்த்தர் நிச்சயம் உதவி செய்வார் என நான்
உண்மையாகவே நம்பினேன். 9எனவே
அந்நாளில், 'நீ செல்லும் தேசம் உனக்
குரியதாகும். உனது பிள்ளைகளுக்கு எப்
போதும் அத்தேசம் சொந்தமாகும். எனது
தேவனாகிய கர்த்தரை, நீ உண்மையாகவே
நம்பியதால் உனக்கு அத்தேசத்தைக் கொடுப்
பேன்' என்று மோசே எனக்கு வாக்குறுதி
அளித்தான். 10கடந்த, 45 ஆண்டுகளுக்கு
முன்பு கர்த்தர் எனக்குக் கூறியபடியே
இன்றும் என்னை உயிரோடு வைத்திருக்
கிறார். நாம் பாலைவனங்களில் இதுவரைக்
கும் அலைந்தோம். இப்போது எனக்கு, 85
வயது. 11மோசே என்னை அனுப்பிய
போது இருந்துபோலவே இன்றும் பெல
முள்ளவனாக இருக்கிறேன். அன்று போல
வே இன்றும் என்னால் போரிட முடியும்.
12முன்பு, கர்த்தர் எனக்குக் கொடுப்பதாக
வாக்களித்த மலைப் பிரதேசத்தை இப்போது
எனக்குக் கொடும். வலிமை பொருந்திய
ஏனாக்கியர் அந்நாளில் அங்கு வாழ்ந்தனர்
என்பதையும், அவர்களுடைய நகரங்கள்
பெரியதாகவும் பாதுகாப்புடையதாகவும்
இருக்கின்றன என்பதையும் நீர் கேள்விப்
பட்டிருக்கிறீர். இப்போதும், கர்த்தர் என்
னோடிருக்கிறபடியால், அவர்களை வெளி
யேற்றிவிட்டு கர்த்தர் கூறியபடி அந்த
நிலப்பகுதியை நான் உரிமையாக்கிக்கொள்
வேன்" என்றான்.

13எப்புன்னேயின் மகனாகிய காலேபை
யோசுவா ஆசீர்வதித்தான். அவனுக்குச்
சொந்தமாக எபிரோன் நகரை யோசுவா
கொடுத்தான். 14கேனாசியனான, எப்புன்னே
யின் மகனாகிய காலேபின் குடும்பத்தாருக்கு
இன்றும் அந்நகரம் உரியதாக இருக்கிறது.
ஏனென்றால் அவன் இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தரிடம் நம்பிக்கை கொண்டு
அவருக்குக் கீழ்ப்படிந்திருந்தான். 15முன்பு
அந்நகரம் கீரியாத்அர்பா எனப்பட்டது.
அர்பா என்னும் ஏனாக்கியரின் புகழ்பெற்ற
மனிதனின் பெயரை அந்நகரம் முன்பு
பெற்றிருந்தது. இதற்குப்பின், அந்த நிலப்
பகுதியில் அமைதி நிலவியது.

## யூதாவிற்குரிய நிலம்

15 யூதாவுக்குக் கொடுக்கப்பட்ட நிலம்
அந்தக் கோத்திரத்திலிருந்த குடும்பங்
களுக்கிடையில் பங்கிடப்பட்டது. அந்த
நிலம் ஏதோம் எல்லையிலிருந்து தெற்காக
தேமான் விளிம்பில் சீன் பாலைவனம்
வரைக்கும் சென்றது. 2யூதாவின் தெற்கு
எல்லை சவக்கடலின் தெற்குக் கோடியில்
துவங்கியது. 3அந்த எல்லை தேள்
கணவாயின் தெற்காக சீன் மலைப்பகுதி
வரை தொடர்ந்தது. காதேஸ்பர்னேயா
விற்குத் தெற்காகத் தொடர்ந்தது. எஸ்ரோனி
லிருந்து ஆதாரையும் அந்த எல்லை கடந்து
சென்றது. ஆதாரிலிருந்து அந்த எல்லை
கர்க்காவிற்கு தொடர்ந்தது. 4அந்த எல்லை
யானது அஸ்மோன், எகிப்தின் ஆறு,
பின் மத்தியதரைக் கடல் எனத் தொடர்ந்தது.
இதுவே அவர்களின் தெற்கு எல்லை
யாயிருந்தது.

5அத்தேசத்தின் கிழக்கு எல்லை சவக்கட
லின் தென்கரையிலிருந்து யோர்தான் நதி
கடலோடு சேரும் பகுதிவரைக்கும் இருந்தது.

வடக்கு எல்லையானது யோர்தான் நதி
சவக்கடலோடு கலந்த பகுதியில் அமைந்தது.
6பின் அது பெத்எக்லா வரைக்கும் சென்று,
பெத்அரபாவின் வடக்கே தொடர்ந்தது.
போகனின் கல் வரைக்கும் அந்த எல்லை
நீண்டது. (ரூபனின் மகன் போகன்) 7வடக்கு
எல்லை ஆகோர் பள்ளத்தாக்கிலிருந்து
தெபீருக்குத் தொடர்ந்தது. பின் வடக்கே
திரும்பி கில்காலுக்குச் சென்றது. அதும்மீ
மின் மலைவழியாகச் செல்லும் பாதையின்
குறுக்கே அந்த எல்லை இருந்தது. அது
நதியின் தெற்குப் பகுதியாகும். என்சேமே
சின் தண்ணீரின் வழியாகத் தொடர்ந்தது.
இந்த எல்லை ரொகேலில் முடிந்தது.
8எபூசியர் நகரின் தெற்குப் பகுதிக்குப்
பக்கத்திலுள்ள இன்னோம் பள்ளத்தாக்கு
வழியாக அவ்வெல்லை சென்றது. (அந்த
எபூசிய நகரமே எருசலேம் எனப்பட்டது.)
அவ்விடத்தில் எல்லை இன்னோம் பள்ளத்
தாக்கின் மேற்கேயுள்ள மலையுச்சி
வரைக்கும் சென்றது. ரெப்பாயீம் பள்ளத்தாக்
கின் வடக்கு மூலை வரைக்கும் அது
இருந்தது. 9அந்த இடத்திலிருந்த நெப்தோவா
வின் நீரூற்று வரைக்கும் எல்லை
தொடர்ந்து எப்பெரோன் மலைக்கருகே
யுள்ள நகரங்களுக்குச் சென்றது. அங்கு
எல்லை திரும்பி, பாலா வரைக்கும்
போனது. (பாலா, கீரியாத்யெயாரீம் என்றும்
அழைக்கப்படுகிறது.) 10பாலாவில் எல்லை
மேற்கே திரும்பி சேயீரின் மலைநாட்டிற்குச்
சென்றது. யெயாரீம் மலையின் (கெசலோ
னின்) வடக்குப் பகுதிக்கு அது தொடர்ந்து
பெத்ஷிமேசுக்குத் தொடர்ந்தது. அங்கிருந்து
எல்லை திம்னாவைக் கடந்தது. 11பிறகு
எக்ரோனுக்கு வடக்கேயுள்ள மலையை
எல்லை எட்டியது. அங்கிருந்து சிக்ரோ

---

**அவரது ஊழியன்** எழுத்தின் பிரகாரமாக "தேவனுடைய மனுஷன்" எனப் பொருள்படும்.

னுக்குத் திரும்பி, பாலா மலையைத் தாண்
டியது. பிறகு யாப்னியேலுக்குச் சென்று,
மத்திய தரைக்கடலில் முடிவடைந்தது.
[12]யூதாவுக்குரிய தேசத்தின் மேற்கெல்லையாக
மத்தியதரைக் கடல் இருந்தது. இந்த நான்கு
எல்லைகளுக்கும் மத்தியில் யூதாவின் தேசம்
இருந்தது. யூதாவின் குடும்பங்கள் அப்பகுதி
யில் வாழ்ந்து வந்தார்கள்.

[13]யூதாவின் தேசத்தின் ஒரு பகுதியை
எப்புன்னேயின் மகன் காலேபுக்குக் கொடுக்
கும்படியாக, கர்த்தர் யோசுவாவுக்குக் கட்ட
ளையிட்டார். எனவே தேவன் கட்டளை
யிட்டபடி அத்தேசத்தைக் காலேபுக்கு
யோசுவா கொடுத்தான். கீரியாத் அர்பா
(எபிரோன்) என்னும் நகரத்தை யோசுவா
அவனுக்குக் கொடுத்தான். (அர்பா
ஏனாக்கின் தந்தை.) [14]எபிரோனில் வாழ்ந்த
சேசாய், அகீமான், தல்மாய் என்ற மூன்று
ஏனாக்கிய குடும்பங்களையும் காலேப்
வெளியேறும்படி செய்தான். அவை ஏனாக்
கின் குடும்பத்தைச் சார்ந்தவை. [15]தெபீரில்
வாழ்கின்ற ஜனங்களோடு காலேப் போர்
செய்தான். (முன்பு, தெபீரைக் கீரியாத்
செப்பேர் என்றும் அழைத்தார்கள்.)
[16]காலேப், "நான் கீரியாத்செப்பேரைத் தாக்க
வேண்டும். நகரத்தைத் தாக்கி முறியடிக்கிற
வனுக்கே என் மகளாகிய அக்சாளை
மணம் செய்து வைப்பேன்" என்றான்.

[17]காலேபின் சகோதரனும், கேனாசின்
மகனுமான ஒத்னியேல் நகரை வென்றான்.
எனவே, ஒத்னியேலுக்கு மனைவியாக
தனது மகள் அக்சாளைக் காலேப் கொடுத்
தான். [18]ஒத்னியேலோடு வாழ்வதற்காக
அக்சாள் சென்றாள். இன்னும் கொஞ்சம்
நிலத்தைத் தந்தையிடம் கேட்டுப் பெறும்படி
ஒத்னியேல் அக்சாளிடம் சொன்னான்.*
அக்சாள் தந்தையிடம் பேசுவதற்காகக்
கழுதையிலிருந்து இறங்கியதும்; காலேப்
அவளை நோக்கி, "உனக்கு என்ன
வேண்டும்?" என்று கேட்டான்.

[19]அக்சாள், "என்னை ஆசீர்வதியுங்கள்.*
நெகேவில்* காய்ந்த பாலைவன நிலத்தை
எனக்குக் கொடுத்தீர்கள். தண்ணீருள்ள
நிலத்தில் கொஞ்சம் எனக்குச் சேர்த்துக்
கொடுங்கள்" என்று கூறினாள். எனவே
அவள் கேட்டதைக் காலேப் கொடுத்தான்.
அந்நிலத்தில் மேற்பகுதியிலும் கீழ்ப்பகுதி
யிலும் இருந்த தண்ணீர் வளமுள்ள
நிலங்களைக் கொடுத்தான்.

[20]தேவன் அவர்களுக்கு வாக்களித்த
தேசத்தை யூதா கோத்திரத்தினர் பெற்றனர்.
ஒவ்வொரு யூதா கோத்திரத்தினரும் தங்க
ளுக்குரிய பங்கு நிலத்தைப் பெற்றனர்.
[21]நெகேவின் தெற்கிலுள்ள ஊர்களை
யெல்லாம் யூதா கோத்திரத்தினர் பெற்றனர்.
ஏதோமின் எல்லையருகே இந்த ஊர்கள்
இருந்தன. அவ்வூர்களின் பட்டியல் இங்கே
தரப்படுகிறது: கப்செயேல், ஏதேர், யாகூர்,
[22]கீனா, திமோனா, அதாதா, [23]கேதேஸ்,
ஆத்சோர், இத்னான், [24]சீப், தேலெம்,
பெயாலோத், [25]ஆத்சோர், அதாத்தா,
கீரியோத், எஸ்ரோன், (ஆத்சோர்) [26]ஆமாம்,
சேமா, மொலாதா, [27]ஆத்சார்காதா,
எஸ்மோன், பெத்பாலேத், [28]ஆத்சார்சுவால்,
பெயெர்செபா, பிஸ்யோத்யா, [29]பாலா, ஈயிம்,
ஆத்சேம், [30]எல்தோலாத், கெசீல், ஓர்மா,
[31]சிக்லாக், த்மன்னா, சன்சன்னா,
[32]லெபாயோத், சில்லீம், ஆயின், ரிம்மோன்
ஆகிய மொத்தம் 29 ஊர்களும் அவற்றின்
வயல்களும் இருந்தன. மேற்கு மலை
யடிவாரத்தில் யூதா கோத்திரத்தினர் தங்கள்
ஊர்களைப் பெற்றனர். அந்த ஊர்களின்
பட்டியல் வருமாறு: [33]எஸ்தாவோல்,
சோரியா, அஷ்னா, [34]சனோகா, என்கன்னீம்,
தப்புவா, ஏனாம், [35]யர்மூத், அதுல்லாம்,
சோக்கோ, அசேக்கா, [36]சாராயீம்,
அதித்தாயீம், கெதேரா, (கேதெரொத்தாயீம்)
ஆகியவை ஆகும். மொத்தத்தில் 14 ஊர்களும்
அவற்றின் வயல்களும் அங்கு இருந்தன.

[37]யூதா கோத்திரத்தினருக்கு சேனான்,
அதாஷா, மிக்தால்காத், [38]திலியான், மிஸ்பே,
யோக்தெயேல், [39]லாகீஸ், போஸ்காத், எக்
லோன், [40]காபோன், லகமாம், கித்லீஷ்.
[41]கெதெரோத், பெத்டாகோன், நாகமா,
மக்கேதா, ஆகியவை உட்பட மொத்தம் 16
ஊர்களும் அவற்றைச் சூழ்ந்த வயல்களும்
கொடுக்கப்பட்டன.

[42]யூதாவின் ஜனங்கள் இந்த ஊர்களையும்
பெற்றார்கள். லிப்னா, ஏத்தேர், ஆஷான்,
[43]இப்தா, அஸ்னா, நெத்சீப், [44]கேகிலா,
அக்சீப், மரேஷா ஆகியவை ஆகும். மொத்தத்
தில் ஒன்பது ஊர்களும் அவற்றைச்
சுற்றிலுமுள்ள ஊர்களும் இருந்தன.

[45]எக்ரோனும் அதைச் சார்ந்த ஊர்களும்
வயல்களும் யூதாவின் ஜனங்களுக்குக்
கிடைத்தன. [46]அவர்கள் எக்ரோனுக்கு மேற்கி
லுள்ள பகுதியையும் அஸ்தோத்திற்கு
அருகேயுள்ள ஊர்களையும் வயல்களையும்
பெற்றார்கள். [47]அஸ்தோத்தைச் சுற்றிலுமுள்ள
பகுதியும் அங்குள்ள ஊர்களும் யூதாவின்
நிலத்தின் பகுதிகளாயின. காசாவைச்
சுற்றிலுமுள்ள பகுதிகளையும்
வயல்களையும் ஊர்களையும் கூட யூதாவின்
ஜனங்கள் பெற்றனர். அவர்களது நிலம்
எகிப்தின் நதி மற்றும் மத்தியதரைக் கடலின்
கடற்கரை வரைக்கும் தொடர்ந்தது.

[48]யூதாவின் ஜனங்களுக்கு மலைநாட்டின்
ஊர்களும் கொடுக்கப்பட்டன. இங்கு
அவ்வூர்களின் பட்டியல் தரப்படுகிறது:

---

**ஒத்னியேல் அக்சாளிடம் சொன்னான்** அல்லது "அக்சாள் ஒத்னியேலிடம் சொன்னாள்."

**என்னை ஆசீர்வதியுங்கள்** அல்லது, தயவுசெய்து என்னை உபசரி, அல்லது ஒரு தண்ணீரின் நீரோட்டத்தை எனக்கு கொடு.

**நெகேவ்** யூதேயாவின் தென்பகுதியின் பாலை வனம்.

சாமீர், யாத்தீர், சோக்கோ, [49]தன்னா,
கீரியாத், சன்னா (தெபீர்), [50]ஆனாப், எஸ்
தெமொ, ஆனீம், [51]கோசேன், ஒலோன்,
கிலொ. இவை பதினொரு ஊர்களும்
அவற்றைச் சூழ்ந்த வயல்களும் உள்ளடங்
கிய பகுதி ஆகும்.
[52]இந்த ஊர்களும் கூட யூதாவின் ஜனங்க
ளுக்குத் தரப்பட்டன: அராப், தூமா, எஷி
யான், [53]யானூம், பெத்தப்புவா, ஆப்பெக்கா,
[54]உம்தா, கீரியாத்அர்பா, (எபிரோன்),
சீயோர். மொத்தம் ஒன்பது ஊர்களும்,
அவற்றைச் சுற்றிலுமிருந்த வயல்களும்
உள்ளடங்கிய பகுதி ஆகும்.
[55]இன்னும் சில ஊர்களும் யூதா
ஜனங்களுக்கு அளிக்கப்பட்டன: மாகோன்,
கர்மேல், சீப், யுத்தா, [56]யெஸ்ரயேல்,
யொக்தெயாம், சனோகா, [57]காயின், கிபியா,
திம்னா, ஆகிய பத்து ஊர்களும் அவற்றின்
வயல்களும் உள்ளடங்கிய பகுதியாகும்.
[58]யூதாவின் ஜனங்களுக்குக் கீழ்வரும்
ஊர்களும் வழங்கப்பட்டன: அல்கூல்,
பெத்சூர், கெதோர், [59]மகாராத், பெதானோத்,
எல்தெகோன், ஆகிய ஆறு ஊர்களும்,
அவற்றைச் சுற்றிலும் காணப்பட்ட வயல்
களும் உள்ளடங்கிய பகுதி ஆகும்.
[60]ரபா, கீரியாத்பாகால் (கீரியாத்யெயாரீம்)
ஆகிய இரண்டு ஊர்களும் யூதாவின்
ஜனங்களுக்குக் கொடுக்கப்பட்டன.
[61]பாலைவனத்தின் பின்வரும் ஊர்களும்
யூதாவின் ஜனங்களுக்கு அளிக்கப்பட்டன:
அவ்வூர்களின் பட்டியல் இங்குத் தரப்படுகி
றது: பெத்அரபா, மித்தீன், செக்காக்கா,
[62]நிப்சான், உப்பு நகரம், என்கேதி ஆகிய
ஆறு ஊர்களும், அவற்றைச் சுற்றியிருந்த
வயல்களும் உள்ளடங்கிய பகுதி ஆகும்.
[63]எருசலேமில் வாழ்ந்த எபூசியரை
யூதாவின் படையால் துரத்த முடியவில்லை.
எனவே இன்றும் எருசலேமில் யூதர்க
ளோடே எபூசியர் வாழ்கின்றனர்.

### எப்பிராயீம், மனாசே ஆகியோருக்கான நிலம்

16 யோசேப்பின் குடும்பம் பெற்ற தேசம்
இதுவே. எரிகோவின் அருகே யோர்
தான் நதியில் ஆரம்பித்து, இத்தேசம்
எரிகோவின் ஆறுகள் வரைக்கும் உள்ள
பகுதி ஆகும். (அது எரிகோவின் கிழக்குப்
பாகமாகும்.) எரிகோவிலிருந்து பெத்தேலின்
மலைநாடு வரைக்கும் அதின் எல்லை
விரிந்திருந்தது. [2]பெத்தேலிலிருந்து (லூஸ்)
அதரோத்திலுள்ள அர்கீயினுடைய எல்லை
வரைக்கும் நீண்டது. [3]தொடர்ந்து எல்லை
மேற்கே யப்லெத்தியரின் எல்லை வரைக்கும்
தொடர்ந்து, தாழ்வான பெத்தொரோன்
வரைக்கும் அது விரிந்தது. மேலும்
கேசேருக்குச் சென்று, மத்தியதரைக் கடல்
வரைக்கும் தொடர்ந்தது.
[4]மனாசே, எப்பிராயீம் கோத்திர ஜனங்கள்
அவர்களுக்குரிய நாட்டைப் பெற்றனர்.
(மனாசேயும் எப்பிராயீமும் யோசேப்பின்
ஜனங்கள்.)
[5]எப்பிராயீம் ஜனங்களுக்குக் கொடுக்கப்
பட்ட நிலம் இதுவே: மேல் பெத்தொ
ரோனுக்கு அருகேயுள்ள அதரோத் அதார்
என்னும் இடத்தில் கிழக்கெல்லை ஆரம்பித்
தது. [6]மிக்மேத்தாத்தில் அதன் மேற்கெல்லை
தொடங்கியது. எல்லை கிழக்காகத் திரும்பி
தானாத் சீலோவிற்குச் சென்று, யநோகாவிற்
குக் கிழக்காகத் தொடர்ந்தது. [7]இந்த எல்லை
யநோகாவிலிருந்து அதரோத் மற்றும் நகராத்
வரைக்கும் சென்றது. எரிகோவைத் தொடும்
அந்த எல்லை தொடர்ந்து யோர்தான்
நதியில் போய் முடிந்தது. [8]மேற்கு எல்லை
தப்புவாவிலிருந்து கானா நதிக்குப் போய்,
கடலில் முடிந்தது. எப்பிராயீம் ஜனங்க
ளுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் இதுவே.
அந்தக் கோத்திரத்தின் ஒவ்வொரு குடும்பமும்
அத்தேசத்தின் பாகத்தைப் பெற்றது.
[9]எப்பிராயீமின் எல்லையிலுள்ள ஊர்களில்
பலவும் மனாசேயின் எல்லைகளில்
இருந்தன. ஆனால் எப்பிராயீம் ஜனங்கள்
அவ்வூர்களையும் அவற்றைச் சூழ்ந்த
வயல்களையும் பெற்றனர். [10]காசேர் என்னும்
ஊரைவிட்டுக் கானானியரை வெளியேற்ற
எப்பிராயீம் ஜனங்களால் முடியவில்லை.
இன்றும்கூட கானானியர் எப்பிராயீம் ஜனங்
களோடு வசித்து வருகின்றனர். ஆனால்
கானானியர் எப்பிராயீமருக்கு அடிமைகளா
யினர்.

17 பிறகு மனாசேயின் கோத்திரத்தின
ருக்கு நிலம் வழங்கப்பட்டது. மனாசே
யோசேப்பின் முதல் மகன், கிலேயாத்தின்
தந்தையாகிய* மாகீர் மனாசேயின் முதல்
மகன். மாகீர் சிறந்த வீரன், எனவே
கீலேயாத், பாசான் ஆகிய பகுதிகள்
அவனுக்குத் தரப்பட்டன. [2]மனாசே கோத்தி
ரத்தின் பிற குடும்பங்களுக்கும் தேசம்
கொடுக்கப்பட்டது. அவை அபியேசர்,
ஏலேக், அஸ்ரியேல், செகேம், எப்பேர்,
செமீதா ஆகியோரின் குடும்பங்கள் ஆகும்.
இவர்கள் மனாசேயின் பிற மகன்கள். இவர்
களின் குடும்பங்கள் தேசத்தில் பங்கைப்
பெற்றன.
[3]எப்பேரின் மகன் செலொப்பியாத்.
கிலேயாத்தின் மகன் எப்பேர். மாகீரின் மகன்
கிலேயாத், மனாசேயின் மகன் மாகீர்,
செலோப்பியாத்திற்கு மகன்கள் இருக்க
வில்லை, அவனுக்கு ஐந்து பெண்கள்
இருந்தனர். அவர்களின் பெயர்கள் மக்லாள்,
நோவாள், ஒக்லாள், மில்காள், திர்சாள்
ஆகியவை ஆகும். [4]ஆசாரியனாகிய
எலெயாசாரிடமும் நூனின் மகனாகிய

---

**கிலேயாத்தின் தந்தை** அல்லது “கிலேயாத் பகுதியின் தலைவன்.”

யோசுவாவிடமும், எல்லாத் தலைவர்களிட
மும் அப்பெண்கள் சென்று “ஆண்களைப்
போலவே எங்களுக்கும் நிலத்தைத் தரும்
படியாக கர்த்தர் மோசேக்குக் கட்டளை
யிட்டார்” என்றனர். எலெயாசார்
கர்த்தருக்குக்கீழ்ப்படிந்து அப்பெண்களுக்கும்
கொஞ்சம் நிலம் கொடுத்தான். எனவே
ஆண்களைப் போன்றே இந்த மகள்களும்
நிலத்தைப் பெற்றார்கள்.

**5**யோர்தான் நதிக்கு மேற்கே பத்துப்
பகுதிகளையும், யோர்தான் நதிக்கு
மறுகரையில் கீலேயாத், பாசான் ஆகிய
பகுதிகளையும் மனாசே கோத்திரத்தினர்
பெற்றனர். **6**மனாசேயின் மகள்களும்,
மகன்களைப் போன்றே நிலத்தில் பங்கைப்
பெற்றனர். கீலேயாத் தேசம் மனாசேயின்
பிற குடும்பங்களுக்குக் கொடுக்கப்பட்டது.

**7**ஆசேருக்கும் மிக்மேத்தாத்திற்கும் இடைப்
பட்ட பகுதியில் மனாசேயின் நிலங்கள்
இருந்தன. அது சீகேமுக்கு அருகில் இருந்தது.
என்தப்புவாவின் தெற்கே எல்லை சென்றது.
**8**தப்புவாவைச் சூழ்ந்த பகுதி மனாசேக்கு
உரியதாயிற்று, ஆனால் அவ்வூர் அவனுக்கு
உரியதாகவில்லை. மனாசேயின் தேசத்து
எல்லையில் தப்புவா என்ற ஊர் இருந்தது.
அது எப்பிராயீம் ஜனங்களுக்கு உரியதாக
இருந்தது. **9**மனாசேயின் எல்லை தெற்கே
கானா நதிவரைக்கும் தொடர்ந்தது. இப்பகுதி
மனாசே கோத்திரத்தினருக்கு உரியதாக
இருந்தும், நகரங்கள் எப்பிராயீமுக்குச்
சொந்தமாயின. நதிக்கு வடக்கே மனாசே
யின் எல்லை அமைந்தது. அது மத்தி
யத்தரைக் கடல் வரை எட்டியது. **10**தெற்
கேயுள்ள தேசம் எப்பிராயீமுக்குச் சொந்த
மானது. வடக்கேயுள்ள தேசம் மனாசேக்குச்
சொந்தமானது. மத்தியத்தரைக் கடல் மேற்கு
எல்லையாக இருந்தது. அதன் எல்லை
வடக்கில் ஆசேரின் தேசத்தையும், கிழக்கில்
இசக்காரின் தேசத்தையும் தொட்டது.

**11**இசக்கார், ஆசேர் ஆகியோரின் பகுதி
களிலும் மனாசே ஜனங்களின் ஊர்கள்
இருந்தன. பெத்செயான், இப்லெயாம், அவற்
றைச் சுற்றிலும் காணப்பட்ட சிற்றூர்கள்
எல்லாம் மனாசே ஜனங்களுக்குச் சேர்ந்தன.
தோர், எந்தோர், தானாக், மெகிதோ மற்றும்
அவைகளைச் சுற்றியிருந்த சிறிய நகரங்
களிலும் வாழ்ந்தார்கள். நாபோத்தின் மூன்று
ஊர்களிலும் அவர்கள் வாழ்ந்தனர்.
**12**மனாசே கோத்திரத்து ஜனங்கள் அந்
நகரங்களை முறியடிக்க முடியவில்லை.
கானானியர்கள் அங்கு தொடர்ந்து வாழ்ந்த
போதிலும் **13**இஸ்ரவேலர் வலியோராயினர்.
அப்போது கானானியரைத் தங்களுக்காக
உழைக்கும்படி இஸ்ரவேலர் செய்தனர்.
ஆனால் அவர்கள் தேசத்தை விட்டுப்
போகும்படியாக கானானியரை வற்புறுத்த
வில்லை.

**14**யோசேப்பின் கோத்திரத்தினர் யோசுவா
விடம், “எங்களுக்கு ஒரு பகுதி நிலம்
மாத்திரமே நீங்கள் கொடுத்தீர்கள். ஆனால்
நாங்களோ எண்ணிக்கையில் மிகுதியான
அளவில் உள்ளோம். தம் ஜனங்களுக்காக
கர்த்தர் கொடுத்த தேசத்தில் ஒரு பகுதியை
மட்டும் நீங்கள் ஏன் எங்களுக்குக் கொடுத்தீர்
கள்?” என்றனர்.

**15**யோசுவா, “நீங்கள் எண்ணிக்கையில்
அதிக அளவு இருந்தீர்களேயானால் மலை
நாட்டுக்குச் சென்று, அந்நிலத்தை எடுத்துக்
கொள்ளுங்கள். அந்நிலம் இப்போது
பெரிசியருக்கும், ரெப்பாயீமீயருக்கும் உரிய
தாக உள்ளது. எப்பிராயீமின் மலைநாடு
உங்களுக்கு அளவில் மிகவும் சிறியதாக
இருந்தால் மட்டுமே அந்நிலத்தை எடுத்துக்
கொள்ளுங்கள்” என்றான்.

**16**யோசேப்பின் ஜனங்கள், “எங்களுக்கு
எப்பிராயீமின் மலைநாடு போதுமான
அளவு பெரியது அல்ல. ஆனால் அங்கு
வாழும் கானானியரிடம் ஆற்றல் வாய்ந்த
போர்க்கருவிகள் உள்ளன. அவர்களிடம்
இரும்பாலாகிய தேர்கள் இருக்கின்றன! அந்த
ஜனங்களே பள்ளத்தாக்கிலும் அதிகாரம்
செலுத்துகின்றனர்! யெஸ்ரேயேல் பள்ளத்
தாக்கு, பெத்செயான், அங்குள்ள சிறிய
ஊர்கள் ஆகியவற்றின் அதிகாரமும் அவர்
களிடமே உள்ளது” என்றார்கள்.

**17**எப்பிராயீம், மனாசே, யோசேப்பின்
ஜனங்களிடம் யோசுவா, “நீங்கள் எண்ணி
க்கையில் பலராயிருக்கிறீர்கள். வல்லமை
மிக்கவர்கள். நிலத்தில் ஒரு பகுதியைக்
காட்டிலும் அதிகம் உங்களுக்குத் தரப்பட
வேண்டும். **18**நீங்கள் மலைநாட்டைப் பெறு
வீர்கள். அது காடு, ஆனால் மரங்களை
வெட்டி, வாழ்வதற்கேற்ற இடமாக
மாற்றலாம். உங்களுக்கு அது சொந்தமாகும்.
அங்கிருந்து கானானியரை வெளியேறச்
செய்வீர்கள். அவர்கள் ஆற்றல் வாய்ந்தோ
ராய், சிறந்த போர்க்கருவிகளை வைத்திருந்
தாலும் அவர்களை நீங்கள் தோற்கடிப்பீர்
கள்” என்றான்.

### தேசத்தின் பிறபகுதிகளைப் பங்கிடுதல்

**18** சீலோவில் இஸ்ரவேலர் எல்லோரும்
ஒன்றாகக் கூடினார்கள், அங்கு
ஆசரிப்புக் கூடாரத்தை* நிறுவினர். இஸ்ர
வேலர் தேசத்தில் ஆட்சி செலுத்தினர்.
அத்தேசத்தின் பகைவர்களை எல்லாம் அவர்
கள் வென்றனர். **2**அப்போது இஸ்ரவேலின்
ஏழு கோத்திரங்கள் இன்னும் தேவன்
வாக்களித்த தங்களுக்குரிய நிலத்தின்
பாகத்தைப் பெறாமலிருந்தனர்.

**3**எனவே யோசுவா இஸ்ரவேலரை
நோக்கி, “நீங்கள் உங்கள் நிலங்களைப்

---

**ஆசரிப்புக் கூடாரம்** இஸ்ரவேல் ஜனங்கள் தேவனை சந்திப்பதற்காக சென்ற பரிசுத்தக் கூடாரம்.

பெற ஏன் இவ்வளவு காலம் காத்திருந்தீர்கள்?
உங்கள் பிதாக்களின், தேவனாகிய கர்த்தர்,
இத்தேசத்தை உங்களுக்குத் தந்தார். 4எனவே
உங்களில் ஒவ்வொரு கோத்திரத்தினரும்
மும்மூன்று ஆட்களைத் தெரிந்து கொள்ளுங்
கள். தேசத்தைப் பற்றித் தெரிந்து வருவதற்கு
நான் அவர்களை அனுப்புவேன். அவர்கள்
திரும்பி வந்து என்னிடம் அந்த தேசத்தை
பற்றி விவரிப்பார்கள். 5அவர்கள் தேசத்தை
ஏழு பாகங்களாகப் பிரிப்பார்கள். யூதாவின்
ஜனங்களுக்குத் தெற்கிலுள்ள தேசம்
உரியதாகும். யோசேப்பின் ஜனங்கள் வடக்
கிலுள்ள தேசத்தை வைத்துக்கொள்வார்கள்.
6ஆனால் நீங்கள் தேசப்படத்தை வரைந்து
அதை ஏழாகப் பிரிக்க வேண்டும்.
அப்படத்தை என்னிடம் கொண்டு வாருங்
கள். எந்தெந்த கோத்திரத்தாருக்கு, எந்தெந்த
பகுதி என்பதை நமது தேவனாகிய கர்த்தர்
தீர்மானிப்பதற்கு* விட்டுவிடுவோம். 7லேவி
யர் தேசத்தில் எந்தப் பாகத்தையும் பெற
வில்லை. கர்த்தருக்கு ஆசாரியர்களாக
சேவை செய்வதே அவர்களுக்குரிய பங்
காகும். வாக்களிக்கப்பட்ட தேசத்தில் தங்க
ளுக்குரிய பாகத்தை காத், ரூபன் ஆகிய
கோத்திரங்களும், மனாசே கோத்திரத்தின்
பாதிக் குடும்பங்களும் பெற்றுக் கொண்ட
னர். யோர்தான் நதியின் கிழக்குப் பகுதியில்
அவர்கள் வசித்தனர். கர்த்தருடைய, ஊழிய
னாகிய மோசே, அவர்களுக்கு அத்தேசத்
தைக் கொடுத்திருந்தான்" என்றான்.

8தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்கள் தேசத்தைப்
பார்க்கவும், பின்னர் அதைப் படமாக
வரைந்து யோசுவாவிடம் கொண்டுவரவும்
திட்டமிட்டனர். யோசுவா அவர்களை
நோக்கி, "போய் தேசத்தை ஆராய்ந்து,
அதன் படங்களை வரையுங்கள். பிறகு
சீலோவில் என்னிடம் வாருங்கள். பின்
சீட்டுப் போட்டு, கர்த்தர் உங்களுக்கான
பாகத்தைத் தேர்ந்தெடுக்கும்படியாகச் செய்
வேன்" என்றான்.

9எனவே அந்த ஆட்கள் தேசத்திற்குள்
சென்றார்கள். அவர்கள் தேசத்தைச் சுற்றி
ஆராய்ந்து, படங்கள் தயாரித்தனர். அவர்கள்
அந்தத் தேசத்தை ஏழு பகுதிகளாகப் பிரித்
தனர். அவர்கள் படங்களை வரைந்த பின்
னர் சீலோவிற்கு யோசுவாவிடம் திரும்பிச்
சென்றனர். 10சீலோவில் கர்த்தருடைய
முன்னிலையில் யோசுவா சீட்டுகளைக்
குலுக்கிப் போட்டுத் தேர்ந்தெடுத்தான். இவ்
வாறு, யோசுவா தேசத்தைப் பிரித்து ஒவ்
வொரு கோத்திரத்தினருக்கும் அவரவருக்கு
ரிய பாகத்தைக் கொடுத்தான்.

### பென்யமீனுக்குரிய நிலம்

11யூதா, யோசேப்பு கோத்திரங்களுக்கு
மத்தியிலுள்ள நிலம், பென்யமீன் கோத்திரத்
தினருக்குக் கிடைத்தது. பென்யமீன் கோத்தி
ரத்தில் உள்ள ஒவ்வொரு குடும்பத்தாரும்
தங்களுக்குரிய பங்கைப் பெற்றனர். பென்ய
மீனுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிலம்
இதுவே: 12யோர்தான் நதியருகே அதன்
வடக்கெல்லை ஆரம்பித்தது. எரிகோவின்
வடக்குக் கரையோரமாக எல்லை தொடர்ந்
தது. பெத்தாவேனின் கிழக்குப் பகுதி
வரைக்கும் அவ்வெல்லை சென்றது.
13லூசின் (பெத்தேலின்) தெற்கே எல்லை
சென்றது. அதரோத்அதார் வரைக்கும்
எல்லை தொடர்ந்தது. கீழ்பெத்தொரோனின்
தெற்கிலுள்ள மலையின் மேல் அதரோத்
அதார் இருந்தது. 14பெத்தொரோனின் தெற்கி
லுள்ள மலையிலிருந்து எல்லை தெற்கே
திரும்பி, மலைக்கு மேற்குப்புறமாக சென்றது.
கீரியாத்பாகாலுக்கு (கீரியாத் யெயாரீம்
என்றும் அழைக்கப்பட்டது.) எல்லை
சென்றது. இவ்வூர் யூதா ஜனங்களுக்குச்
சொந்தமானது. இது மேற்கெல்லை ஆகும்.

15தெற்கெல்லை கீரியாத்யெயாரீமுக்கருகே
தொடங்கி நெப்தோவா நதிக்குச் சென்றது.
16ரெபாயீம் பள்ளத்தாக்கின் வடக்கிலிருந்த
இன்னோம் பள்ளத்தாக்கிற்கு, அருகேயுள்ள
மலைக்குக் கீழே எல்லை நீண்டது. எபூசி
யின் நகரத்திற்குத் தெற்கே இன்னோம்
பள்ளத்தாக்கு வரைக்கும் எல்லை தொடர்ந்
தது. பின் என்ரொகேல் வரை சென்றது.
17அங்கு, எல்லை வடக்கே திரும்பி என்
சேமேசு வரை போனது. கெலிலோத்
வரைக்கும் எல்லை தொடர்ந்தது (மலைத்
தொடர்களிலிருந்து அதும்மீம் வழி அருகே
கெலிலோத் இருந்தது.) ரூபனின் மகனான
போகனுக்காக குறிக்கப்பட்ட "பெருங்கல்"
வரைக்கும் எல்லை நீண்டது. 18பெத்அரபா
வின் வடக்குப் பாகம் வரைக்கும் எல்லை
சென்றது. பின் எல்லை அராபா வரைக்கும்
போயிற்று. 19பின்பு எல்லை பெத் ஒக்லா
வின் வடக்குப் பகுதிவரைக்கும் சென்று
சவக் கடலின் வடக்கெல்லையில் முடி
வுற்றது. இங்கேதான் யோர்தான் நதி கடலில்
சென்று சேர்ந்தது. அதுவே தெற்கெல்லை.

20யோர்தான் நதி கிழக்கெல்லையாக
இருந்தது. இதுவே பென்யமீன் கோத்திரத்தின
ருக்காக கொடுக்கப்பட்ட நிலமாக இருந்தது.
எல்லாப் பக்கத்து எல்லைகளும் அவையே.
21எல்லாக் குடும்பங்களும் அவற்றிற்குரிய
நிலத்தைப் பெற்றன. இவையே அவர்களின்
பட்டணங்கள்: எரிகோ, பெத்ஒக்லா, ஏமேக்
கேசீஸ், 22பெத்அரபா, செமாராயிம்,
பெத்தேல், 23ஆவீம், பாரா, ஒப்ரா, 24கேப்பார்
அமோனாய், ஒப்னி, காபா ஆகியவை ஆகும்.
மொத்தம் 12 நகரங்களும் அவற்றைச் சூழ்ந்த
வயல்களும் அவர்களுக்கு உரிய
வையாயின.

25பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்தவர்
கள் கிபியோன், ராமா, பேரோத், 26மிஸ்பே,

---

**கர்த்தர் தீர்மானிக்க** நான் இங்கே கர்த்தருக்கு முன்பாக சீட்டு போட்டு தீர்மானிப்பேன்.

கெப்பிரா, மோத்சா, 27ரெக்கேம், இர்பெயேல், தாராலா, 28சேலா, ஏலேப், எபூசி நகரம் (எருசலேம்), கீபெயாத், கீரேயாத் ஆகியவற்றையும் பெற்றனர். 14 நகரங்களும் அவற்றைச் சூழ்ந்த ஊர்களும் இருந்தன. இவற்றை எல்லாம் பென்யமீன் கோத்திரத்தினர் பெற்றனர்.

## சிமியோனின் நிலம்

19 பின்பு யோசுவா, சிமியோன் கோத்திரத்தைச் சார்ந்த எல்லா குடும்பங்களுக்கும் அவர்களுக்குரிய பாகத்தைக் கொடுத்தான். யூதாவிற்குரிய இடத்திற்குள் சிமியோனின் நிலம் இருந்தது. 2இதுவே அவர்கள் பெற்ற பகுதியாகும்: பெயர்செபா (சேபா எனவும் அழைக்கப்பட்டது.) மொலாதா, 3ஆசார்சூகால், பாலா, ஆத்சேம். 4எல்தோலாத், பெத்தூல், ஓர்மா, 5சிக்லாக், பெத்மார்காபோத், ஆத்சார்சூசா, 6பெத்லெபாவோத், சருகேன் ஆகியவை ஆகும். மொத்தம் 13 ஊர்களும் அவற்றைச் சுற்றிலுமுள்ள வயல்களும் அமைந்தன.

7அவர்கள் ஆயின், ரிம்மோன், எத்தேர், ஆசான் ஆகிய ஊர்களையும் பெற்றனர். நான்கு ஊர்களும் அவற்றைச் சுற்றிலுமுள்ள வயல்களும் கிடைத்தன. 8பாலாத் பெயேர் (நெகேவின் ராமா) வரைக்குமுள்ள நகரங்களைச் சுற்றிலுமிருந்த வயல்கள் கிடைத்தன. அதுவே சிமியோன் கோத்திரத்தினருக்குக் கிடைத்த நிலமாகும். ஒவ்வொரு குடும்பத்திற்கும் தேசத்தில் பாகம் கிடைத்தது. 9யூதாவிற்குக் கிடைத்த இடத்திற்குள் சிமியோனின் நிலம் இருந்தது. யூதா ஜனங்களுக்கு அவர்களின் தேவைக்கதிகமான நிலம் இருந்தது. எனவே அவர்கள் நிலத்தில் ஒரு பகுதி சிமியோன் ஜனங்களுக்குக் கிடைத்தது.

## செபுலோனின் நிலம்

10தங்கள் நிலத்தைப் பெற்ற அடுத்த கோத்திரம், செபுலோன் ஆகும். அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட நிலங்களைச் செபுலோனின் குடும்பங்கள் பெற்றன. செபுலோனின் எல்லை சாரீத் வரை நீண்டது. 11அது மாராலாவின் மேற்கே சென்று தாபசேத்தைத் தொட்டது. யெக்கினேயாமின் கரையோரமாக எல்லை நீண்டது. 12பின் எல்லை கிழக்கே திரும்பியது. சாரீதிலிருந்து கிஸ்லோத்தாபோர் வரை சென்றது. பிறகு எல்லை தாபாராத்திற்கும் யப்பியாவிற்கும் சென்றது. 13கித்தாஏபேர், இத்தாகாத்சீன் ஆகியவற்றின் கிழக்கு வரைக்கும் எல்லை நீண்டு பின் ரிம்மோனில் முடிவுற்றது. பிறகு எல்லை திரும்பி நியாவிற்குச் சென்றது. 14நியாவில் எல்லை திரும்பி அன்னத்தோனின் வடக்கே சென்று இப்தாஏல் பள்ளத்தாக்கு வரை தொடர்ந்தது. 15இவ்வெல்லையின் உள்ளே கத்தாத், நகலால், சிம்ரோன், இதாலா, பெத்லகேம் நகரங்கள் இவ்வெல்லைக்குள் இருந்தன. மொத்தம் 12 ஊர்களும், அவற்றைச் சூழ்ந்த வயல்களுமிருந்தன.

16செபுலோனுக்குக் கொடுக்கப்பட்ட ஊர்களும் வயல்களும் இவையே. செபுலோனின் குடும்பங்கள் நிலத்தில் பங்கைப் பெற்றன.

## இசக்காரின் நிலம்

17இசக்காரின் கோத்திரத்திற்கு நிலத்தின் நான்காவது பாகம் கொடுக்கப்பட்டது. அந்தக் கோத்திரத்தின் ஒவ்வொரு குடும்பமும் பங்கைப் பெற்றன. 18அந்தக் கோத்திரத்தினருக்குக் கொடுக்கப்பட்ட நிலம் இதுவே: யெஸ்ரயேல், கெசுல்லோத், சூனேம், 19அப்பிராயீம், சீகோன், அனாகராத், 20ராப்பித், கிஷியோன், அபெத்ஸ், 21ரெமேத், என்கன்னீம், என்காதா, பெத்பாத்செஸ் ஆகியவை அடங்கிய பகுதி ஆகும்.

22அவர்கள் நிலத்தின் எல்லை தாபோர், சகசீமா, பெத்ஷிமேசு ஆகியவற்றைத் தொட்டது. யோர்தான் நதியில் எல்லை நின்றது. மொத்தம் 16 ஊர்களும் அவற்றைச் சுற்றியிருந்த வயல்களும் இருந்தன. 23இந்த நகரங்களும் ஊர்களும் இசக்கார் கோத்திரம் பெற்ற நிலத்தில் இருந்தன. ஒவ்வொரு குடும்பத்திற்கும் பங்கு கிடைத்தது.

## ஆசேரின் நிலம்

24ஆசேர் கோத்திரத்தினருக்கு நிலத்தின் ஐந்தாவது பாகம் கொடுக்கப்பட்டது. அந்தக் கோத்திரத்தின் ஒவ்வொரு குடும்பமும் நிலத்தின் ஒரு பங்கை பெற்றது. 25அந்தக் கோத்திரத்தினருக்கு கொடுக்கப்பட்ட நிலம் இதுவே: எல்காத், ஆலி, பேதேன், அக்சாப், 26அலம்மேலெக், ஆமாத், மிஷயால் ஆகியவை.

கர்மேல் மலை, சிகோர்லிப்னாத் வரைக்கும் மேற்கெல்லை தொடர்ந்தது. 27பிறகு எல்லை கிழக்கே திரும்பியது. பெத்தாகோனுக்கு எல்லை சென்றது. செபுலோனையும், இப்தாவேல் பள்ளத்தாக்கையும் அவ்வெல்லை தொட்டது. பின்னர் மேற்கே பெத்தேமோக்கிற்கும், நேகியேலுக்கும் அவ்வெல்லை சென்றது. காபூலின் வடக்குப் பகுதியை எல்லை தாண்டியது. 28பின் எல்லை எபிரோன் என்ற அப்தோன்* ரேகோப், அம்மோன், கானா வரைக்கும் சென்றது. பெரிய சீதோன் பகுதி வரைக்கும் எல்லை நீண்டது. 29அந்த எல்லை ராமாவிற்குத் தெற்கே போய், தீரு என்னும் வலிய நகருக்கு நேராக சென்றது. பின் அது திரும்பி ஓசாவை அடைந்து, 30உம்மா, ஆஃபெக், ரேகோப், அத்சீப் அருகில் கடலில் முடிவுற்றது.

---

**அப்தோன்** அல்லது “எபிரோன்.”

மொத்தத்தில் 22 நகரங்களும் அவற்றைச்
சூழ்ந்த வயல்நிலங்களும் இருந்தன. 31இந்
நகரங்களும் வயல்களும் ஆசேரின் கோத்தி
ரத்தாருக்குக் கொடுக்கப்பட்டன. அந்த கோத்
திரத்தின் குடும்பங்களில் உள்ள எல்லா
ருக்கும் அந்த நிலத்தில் பங்கு கிடைத்தது.

### நப்தலியின் நிலம்

32ஆறாவது பகுதியின் நிலம் நப்தலி
கோத்திரத்திற்கு கொடுக்கப்பட்டது. அந்த
கோத்திரத்தின் ஒவ்வொரு குடும்பத்திற்கும்
அதில் பங்கு கிடைத்தது. 33சானானீமிற்கு
அருகிலுள்ள பெரிய மரத்தினருகே அவர்கள்
நிலத்தின் எல்லை ஆரம்பித்தது. இது
ஏலேபிற்கு அருகே இருந்தது. ஆதமி
நெகேபிற்கும், யாப்னீயேலுக்கும் ஊடாக
எல்லை தொடர்ந்து லக்கூம் வழியாக
யோர்தான் நதியில் முடிவுற்றது. 34அஸ்னோத்
தாபோர் வழியாக எல்லை மேற்கே
சென்றது. உக்கோக்கில் எல்லை நின்றது.
தெற்கெல்லை செபுலோனையும், மேற்
கெல்லை ஆசேரையும் தொட்டது. எல்லை
யோர்தான், நதிக்குக் கிழக்கே யூதாவிற்குச்
சென்றது. 35இவ்வெல்லைகளின் உள்ளே
பலமுள்ள நகரங்கள் சில இருந்தன. அந்
நகரங்கள் சீத்திம், சேர், அம்மாத், ரக்காத்,
கின்னரேத், 36ஆதமா, ராமா, ஆத்சோர்,
37கேதேஸ், எத்ரேயி, என்ஆத்சோர்,
38ஈரோன், மிக்தாலேல், ஓரேம், பெதானாத்,
பெத்ஷிமேஸ் ஆகியவை ஆகும். மொத்தம்
19 ஊர்களும், அவற்றைச் சூழ்ந்த
வயல்களும் இருந்தன.
39இந்த நகரங்களும் வயல்களும் நப்தலி
கோத்திரத்தாருக்குக் கொடுக்கப்பட்டன.
அந்தக் கோத்திரத்தில் ஒவ்வொரு குடும்பமும்
நிலத்தில் பங்கைப் பெற்றன.

### தாணின் நிலம்

40பின்பு தேசத்தின் ஏழாவது பகுதி
தாண் கோத்திரத்திற்கு கொடுக்கப்பட்டது.
அந்த கோத்திரத்தின் ஒவ்வொரு குடும்பத்திற்
கும் பங்கு கிடைத்தது. 41கீழ்க்கண்ட பகுதி
களே அவர்களுக்கு அளிக்கப்பட்ட நிலமா
கும்: சோரா, எஸ்தாவோல், இர்சேமேஸ்,
42சாலாபீன், ஆயலோன், யெத்லா, 43ஏலோன்,
திம்னாதா, எக்ரோன், 44எல்தெக்கே,
கிபெத்தோன், பாலாத், 45யேகூத், பெனபெ
ராக், காத்ரிம்மோன், 46மேயார்கோன், ராக்
கோன், யாப்போவிற்கு அருகிலுள்ள பகுதி
கள் ஆகியவை ஆகும்.
47தாணின் ஜனங்கள் அவர்களுக்குரிய
தேசத்தைப் பெறுவதில் தொல்லை நேர்ந்தது.
பலமான பகைவர்கள் அங்கே இருந்தனர்.
தாண் ஜனங்களால் அவர்களை எளிதில்
வெல்ல முடியவில்லை. லேசேமின் ஜனங்
களுக்கு எதிராக தாண் ஜனங்கள் போர்
செய்தனர். லேசேமைத் தோற்கடித்து அங்கு
வாழ்ந்த ஜனங்களைக் கொன்றனர். லேசேம்
என்னும் ஊரில் தாண் ஜனங்கள் வாழ்ந்த
னர். அவர்கள் கோத்திரத்தின் தந்தையாகிய
தாண் என்ற பெயரை அதற்குக் கொடுத்த
னர். 48அந்த எல்லா நகரங்களும் அவற்றைச்
சூழ்ந்த வயல்களும் தாண் கோத்திரத்தின
ருக்கு உரியனவாயின. ஒவ்வொரு குடும்பத்
திற்கும் அதற்குரிய பங்கு கிடைத்தது.

### யோசுவாவின் நிலம்

49தலைவர்கள் தேசத்தைப் பங்கிட்டு
வெவ்வேறு கோத்திரங்களுக்கு கொடுத்து
முடித்தனர். அதன் பிறகு, நூனின் குமாரனா
கிய யோசுவாவிற்கும் கொஞ்சம் நிலத்தை
பங்காகக் கொடுப்பதென இஸ்ரவேல்
ஜனங்கள் முடிவெடுத்தனர். அது அவனுக்கு
வாக்களிக்கப்பட்ட நிலம் ஆகும். 50கர்த்தர்
கட்டளையிட்டபடி எப்பிராயீம் மலை
நாட்டிலுள்ள திம்னாத் சேரா நகரத்தை
அவர்கள் யோசுவாவிற்குக் கொடுத்தனர்.
அவ்வூரையே தனக்கு வேண்டுமென
யோசுவா கேட்டான். யோசுவா அவ்வூரைப்
பலமாகக் கட்டி அங்கு வாழ்ந்தான்.
51இஸ்ரவேலின் வெவ்வேறு கோத்திரங்
களுக்கும் இந்த தேசப் பகுதிகள் முழுவதும்
பிரித்து கொடுக்கப்பட்டன. நிலத்தைப்
பங்கிட ஆசாரியனாகிய எலெயாசார்,
நூனின் மகனாகிய யோசுவா, ஒவ்வொரு
கோத்திரத்தின் தலைவர்கள் ஆகியோர்
சீலோவில் ஒருமித்துக் கூடினார்கள். ஆசரிப்
புக் கூடாரத்தின் நுழைவாயிலில் கர்த்தருக்கு
முன்னர் அவர்கள் சந்தித்து, தேசத்தைப்
பங்கிட்டு முடித்தனர்.

### அடைக்கல நகரங்கள்

20 கர்த்தர் யோசுவாவிடம், “நீ இஸ்ர
வேலருக்குக் கூறவேண்டியதாவது,
உங்களுக்கு ஒரு கட்டளையைக் கொடுக்கும்
படி மோசேக்குச் சொன்னேன். 2பாதுகாப்பிற்
கென்று சில குறிப்பிட்ட நகரங்களைத்
தேர்ந்தெடுக்குமாறு அவன் உன்னிடம் கூறி
னான். 3யாரேனும் ஒருவன் மற்றொருவனைக்
கொன்றால், அக்கொலையானது வேணடு
மென்றே செய்த காரியமாக இல்லாமல்
தற்செயலாக நிகழ்ந்ததாக இருக்கும்பட்சத்தில்
அவன் அடைக்கல நகருக்குள் சென்று
ஒளிந்துக்கொள்ளலாம்.
4“அவன் செய்யவேண்டிய காரியங்கள்
என்னவெனில்: அவன் ஓடி அந்நகரங்கள்
ஒன்றில் ஒளிந்துக்கொள்ளும்போது, அவன்
நகரத்தின் நுழை வாயிலருகே நின்று
தலைவர்களை நோக்கி நிகழ்ந்ததைச் சொல்ல
வேண்டும். பின் தலைவர்கள் நகரத்தி
னுள்ளே நுழைய அவனுக்கு அனுமதியும்,
அவர்களோடு சேர்ந்து வாழ அவனுக்கோர்
இடமும் தரலாம். 5அவனைத் துரத்திய
மனிதன் அந்நகரை வந்தடையும் பட்சத்தில்,

குற்றஞ்சாட்டப்பட்டவனை அவர்கள் ஒப்
படைக்கக் கூடாது. அந்நகரத்தின்
தலைவர்கள் அக்கொலை வேண்டுமென்றே
நிகழ்ந்த ஒன்றல்ல என்பதால் அவனைக்
காப்பாற்றவேண்டும். அது ஒரு விபத்து.
அவன் கோபம்கொண்டு திட்டமிட்டு
அக்கொலையைச் செய்யவில்லை. அது தற்
செயலாக நிகழ்ந்தது. 6 அந்நகரத்து நீதி
மன்றத்தால் விசாரிக்கப்படும்வரை அவன்
அந்நகரில் தங்கவேண்டும். தலைமை ஆசா
ரியன் இறக்கும்மட்டும் அவன் அந்நகரில்
இருக்க வேண்டும். பின்னர் அவன் தனது
வீட்டிற்குத் திரும்பிச் செல்லலாம்" என்றார்.
7 எனவே இஸ்ரவேலர், "அடைக்கல
நகரங்கள்" என அழைக்கும்பொருட்டு சில
நகரங்களை தேர்ந்தெடுத்துக்கொண்டனர்.
அந்நகரங்கள்:

நப்தலியின் மலைநாட்டிலுள்ள
கலிலேயாவின் கேதேஸ்,
எப்பிராயீம் மலைநாட்டில் சீகேம்,
யூதாவின் மலைநாட்டில்
கீரியாத்அர்பா (எபிரோன்).
8 ரூபனின் தேசத்தில், வனாந்திரத்தில்
எரிகோவிற்கு அருகே யோர்தான்
நதியின் கிழக்கிலுள்ள பேசேர்,
காத்தின் தேசத்தில் கீலேயாத்திலுள்ள
ராமோத்,
மனாசே தேசத்தில் பாசானிலுள்ள
கோலான் ஆகியனவாகும்.

9 யூதனோ, அல்லது அவர்களோடு வாழ்ந்த
அந்நியனோ யாரையாவது அசம்பாவிதமாக
கொல்ல நேர்ந்தால் இந்நகரங்களில் ஒன்றிற்கு
பாதுகாப்பிற்காக ஓடிவிட அனுமதிக்கப்
பட்டிருந்தான். அவனைத் துரத்தும் எவரும்
அவனைக் கொல்லக் கூடாது. அந்நகரின்
நீதிமன்றம் அவனுக்கு நீதி வழங்கும்.

## ஆசாரியர்களுக்கும் லேவியர்களுக்கும் உரிய பட்டணங்கள்

21 லேவி கோத்திரத்தின் குடும்பத் தலை
வர்கள் ஆசாரியனாகிய எலெயாசா
ரையும், நூனின் மகனாகிய யோசுவா
வையும், இஸ்ரவேலின் பிற கோத்திரங்களின்
தலைவர்களையும் கண்டு பேசுவதற்குச்
சென்றார்கள். 2 கானான் தேசத்திலுள்ள
சீலோ என்னும் நகரில் இது நிகழ்ந்தது.
லேவியின் தலைவர்கள் அவர்களை நோக்கி,
"கர்த்தர் மோசேக்கு ஓர் கட்டளையிட்டார்.
நாங்கள் வாழ்வதற்கு நகரங்களையும்,
எங்கள் மிருகங்கள் மேய்வதற்குத் தேவை
யான வயல்நிலங்களைத் தருமாறு
கட்டளையிட்டார்" என்றார்கள். 3 எனவே
இஸ்ரவேலர் கர்த்தருடைய இக்கட்ட
ளைக்குக் கீழ்ப்படிந்தனர். லேவிய ஜனங்
களுக்கு இந்த நகரங்களையும், அவர்களின்
மிருகங்களுக்காக அவற்றைச் சார்ந்த நிலங்க
ளையும் வழங்கினார்கள்.

4 கோகாத்தியரின் குடும்பத்தினர் லேவி
யின் கோத்திரத்திலிருந்து வந்த ஆசாரிய
னான ஆரோனின் சந்ததியார். யூதா, சிமி
யோன் மற்றும் பென்யமீன் ஆகியோருக்கு
ரிய பகுதிகளிலிருந்து 13 ஊர்கள் கோகாத்
குடும்பத்தின் ஒரு பகுதியினருக்குக் கொடுக்
கப்பட்டன.
5 எப்பிராயீம், தாண், ஆகிய கோத்திரத்தி
னருக்கும் மனாசே கோத்திரத்தின் பாதிபேர்க்
கும் சொந்தமான ஊர்களிலிருந்து பத்து
நகரங்கள் கோகாத்தியரின் பிற குடும்பங்க
ளுக்குத் தரப்பட்டன.
6 கெர்சோனின் குடும்பத்தினருக்கு 13
நகரங்கள் அளிக்கப்பட்டன. இசக்கார், ஆசேர்.
நப்தலி, மற்றும் பாசானிலிருந்த மனா
சேயின் பாதிக் குடும்பத்தினர் ஆகி
யோருக்குச் சொந்தமான பகுதிகளில் இந்த
நகரங்கள் இருந்தன.

7 மெராரி குடும்பத்தாருக்குப் பன்னிரண்டு
ஊர்கள் வழங்கப்பட்டன. ரூபன், காத்,
செபுலோன் ஆகியோருக்குச் சொந்தமான
தேசத்தில் இவை இருந்தன.
8 இவ்வாறு இஸ்ரவேலர் லேவியருக்கு
இந்த நகரங்களையும், அவற்றைச் சுற்றி
யிருந்த வயல்நிலங்களையும் கொடுத்தனர்.
மோசேக்கு கர்த்தர் கட்டளையிட்டதற்குக்
கீழ்ப்படும்படியாக அவர்கள் இதைச்
செய்தனர்.
9 யூதாவிற்கும் சிமியோனுக்கும் சொந்த
மான பகுதிகளிலிருந்த நகரங்களின்
பெயர்கள் இவை: 10 லேவியரில் கோகாத்
குடும்பத்தாருக்கு முதலில் தேர்ந்தெடுக்கப்
பட்ட நகரங்கள் கொடுக்கப்பட்டன.
11 கீரியாத்அர்பாவை அவர்களுக்குக் கொடுத்த
னர். (இது எபிரோன். அர்பா என்னும்
மனிதனின் பெயரால் அழைக்கப்பட்டது.
அர்பா ஆனாக்கின் தந்தை.) அவர்களின்
மிருகங்களுக்காக நகரங்களின் அருகே சில
நிலங்களையும் கொடுத்தார்கள். 12 ஆனால்
கீரியாத்அர்பா நகரைச் சுற்றிலுமிருந்த
நகரங்களும் நிலங்களும் எப்புன்னேயின்
மகன் காலேபுக்குச் சொந்தமாயிருந்தது.
13 எனவே எபிரோன் நகரை ஆரோனின்
சந்ததிக்குக் கொடுத்தார்கள். (எபிரோன்
பாதுகாப்பான நகரமாயிருந்தது.) லிப்னா,
14 யத்தீர், எஸ்தெமொவா, 15 ஓலோன், தெபீர்,
16 ஆயின், யுத்தா, பெத்ஷிமேஸ் ஆகிய
நகரங்களையும் ஆரோனின் சந்ததிக்கு
அளித்தனர். இந்த நகரங்களின் அருகேயிருந்த
நிலத்தையும் அவர்களின் கால்நடை
களுக்காக அளித்தனர். இந்த இரண்டு
கூட்டத்தாருக்கும் ஒன்பது நகரங்களைக்
கொடுத்தார்கள்.
17 பென்யமீன் கோத்திரத்திற்கு சொந்தமான
நகரங்களையும் ஆரோனின் சந்ததிக்கு
அவர்கள் கொடுத்தார்கள். அந்நகரங்கள்
கிபியோன், கேபா, 18 ஆனாதோத், அல்மோன்

ஆகியனவாகும். அவர்களுக்கு இந்த நான்கு
நகரங்களையும், மிருகங்களுக்கென அவற்றி
னருகேயுள்ள நிலங்களையும் கொடுத்தார்கள்.
19மொத்தத்தில், ஆசாரியர்களுக்கு 13 ஊர்
களைக் கொடுத்தார்கள். (எல்லா
ஆசாரியர்களும் ஆரோனின் சந்ததியார்.)
ஒவ்வொரு நகருக்கருகேயும் நிலங்களை
மிருகங்களுக்காக ஒதுக்கினர்.
20கோகாத்திய குடும்பங்களில் மீதியான
வர்களுக்கு எப்பிராயீம் கோத்திரத்தைச்
சேர்ந்த பகுதியிலுள்ள நகரங்கள்
தரப்பட்டன. அவர்கள் இந்த நகரங்களைப்
பெற்றனர்: 21எப்பிராயீம் மலைநாட்டின்
சீகேம் நகரம். (சீகேம் அடைக்கல நகரம்.)
கேசேர், 22கிப்சாயீம், பெத்தொரோன்
ஆகியவற்றையும் பெற்றார்கள். மொத்தத்தில்,
எப்பிராயீம் ஜனங்கள் நான்கு நகரங்களை
யும் மிருகங்களுக்காக அவ்வூர்களைச்
சுற்றியிருந்த நிலங்களையும் வழங்கினர்.
23தாண் கோத்திரத்தினர்களுக்கு எல்
தெக்கே, கிபெத்தோன், 24ஆயலோன், காத்
ரிம்மோன் ஆகியவற்றைக் கொடுத்தனர்.
மொத்தம், நான்கு நகரங்களையும் மிருகங்
களுக்காக அந்த நகரங்களைச் சுற்றியிருந்த
நிலங்களையும் கொடுத்தனர்.
25மனாசே கோத்திரத்தின் பாதி ஜனங்கள்
தானாகையும், காத் ரிம்மோனையும் கொடுத்
தனர். அவர்கள் இரண்டு நகரங்களையும்
மிருகங்களுக்காக அந்நகரங்களைச் சுற்றியி
ருந்த நிலங்களையும் கொடுத்தார்கள்.
26கோகாத்திய குடும்பத்தின் மீதியான
ஜனங்கள் பத்து நகரங்களையும், மிருகங்
களுக்காக அவற்றைச் சூழ்ந்திருந்த நிலங்
களையும் பெற்றார்கள்.
27கெர்சோன் குடும்பமும் லேவியின்
கோத்திரத்தைச் சார்ந்தது. அவர்கள் இந்த
நகரங்களைப் பெற்றனர்:

மனாசே கோத்திரத்தின் பாதி ஜனங்கள்
பாசானிலுள்ள கோலானைக் கொடுத்தனர்.
(கோலான் அடைக்கல நகரம்.) மனாசே
ஜனங்கள் பெயேஸ்திராவையும் கொடுத்தார்
கள். மொத்தத்தில், மனாசே கோத்திரத்தின்
பாதி ஜனங்கள் இரண்டு நகரங்களையும்
மிருகங்களுக்காக அவற்றைச் சூழ்ந்த
நிலங்களையும் கொடுத்தனர்.
28இசக்கார் கோத்திரத்தினர் கீசோன்,
தாபராத், 29யர்மூத், என்கன்னீம் ஆகிய
வற்றைக் கொடுத்தனர். மொத்தம் நான்கு
நகரங்களையும், மிருகங்களுக்காக அவற்
றைச் சார்ந்த நிலங்களையும் இசக்கார்
ஜனங்கள் கொடுத்தார்கள்.
30ஆசேர் கோத்திரத்தினர் மிஷயால்,
அப்தோன், 31எல்காத், ரேகோப் ஆகிய
வற்றைக் கொடுத்தார்கள். ஆசேர் ஜனங்கள்
மொத்தம் நான்கு நகரங்களையும் மிருகங்க
ளுக்காக அவற்றைச் சூழ்ந்த நகரங்களையும்
கொடுத்தனர்.
32நப்தலி கோத்திரத்தினர் கலிலேயாவி
லுள்ள கேதேசைக் கொடுத்தார்கள். (கேதேஸ்
அடைக்கல நகரம்.) நப்தலி ஜனங்கள்
அம்மோத்தோரையும் கர்தானையும் கொடுத்த
னர். நப்தலி ஜனங்கள் மூன்று நகரங்களை
யும், மிருகங்களுக்காக அவற்றைச் சுற்றிலு
மிருந்த நிலங்களையும் கொடுத்தனர்.
33மொத்தத்தில், கெர்சோன் குடும்பத்தார்
13 நகரங்களையும் மிருகங்களுக்காக
அவற்றைச் சுற்றிலுமிருந்த நிலங்களையும்
பெற்றனர்.
34மற்றொரு லேவியர் குழு மெராரி
குடும்பம் ஆகும். மெராரி குடும்பம் இந்த
நகரங்களைப் பெற்றது: செபுலோன் கோத்தி
ரத்தினர் யோக்னியாம், கர்தா, 35திம்னா,
நகலால் ஆகியவற்றைக் கொடுத்தனர். செபு
லோன் ஜனங்கள் மொத்தம் நான்கு நகரங்
களையும், மிருகங்களுக்காக அவற்றைச்
சூழ்ந்திருந்த நிலங்களையும் கொடுத்தனர்.
36ரூபன் கோத்திரத்தினர் அவர்களுக்குப்
பேசேர், யாகசா, 37கேதெமோத், மெபகாத்
ஆகியவற்றைக் கொடுத்தனர். மொத்தத்தில்,
ரூபன் ஜனங்கள் நான்கு நகரங்களையும்
மிருகங்களுக்காக அவற்றைச் சூழ்ந்திருந்த
நிலங்களையும் கொடுத்தனர்.

38காத் கோத்திரத்தினர் அவர்களுக்குக்
கீலேயாத்திலுள்ள ராமோத்தைக் கொடுத்த
னர். (ராமோத் அடைக்கல நகரம்.)
மக்னாயீம், எஸ்போன், யாசேர் ஆகிய
வற்றையும் கொடுத்தனர். 39மொத்தம் நான்கு
நகரங்களையும் மிருகங்களுக்காக அந்
நகரங்களைச் சார்ந்த நிலங்களையும் காத்
ஜனங்கள் கொடுத்தனர்.
40மொத்தத்தில், லேவியரின் கடைசி
குடும்பத்தினர் ஆகிய, மெராரி குடும்பத்தி
னர், பன்னிரண்டு நகரங்களைப் பெற்றனர்.
41எனவே லேவியர்கள் மொத்தம் 48
நகரங்களையும் மிருகங்களுக்காக அவற்றைச்
சுற்றிலுமுள்ள நிலங்களையும் பெற்றனர்.
இந்த நகரங்கள் அனைத்தும் பிற
கோத்திரத்தினருக்குச் சொந்தமான பகுதிக
ளில் இருந்தன. 42ஒவ்வொரு பகுதியிலும்
மிருகங்களுக்கான நிலமும் இருந்தது.
ஒவ்வொரு ஊரிலும் அவ்வாறே இருந்தது.
43அவ்வாறு கர்த்தர் இஸ்ரவேலருக்கு
அளித்த வாக்குறுதியை நிறைவேற்றினார்.
அவர் வாக்களித்த எல்லா நிலத்தையும்
ஜனங்களுக்குக் கொடுத்தார். ஜனங்கள்
நிலத்தைப் பெற்று அங்கு வாழ்ந்தனர்.
44கர்த்தர் அந்த ஜனங்களின் முற்பிதாக்களுக்கு
வாக்களித்தபடியே அவர்களின் தேசத்தைச்
சுற்றிலுமுள்ள பகுதிகளில் அமைதி
நிலவும்படி செய்தார். அவர்கள் பகைவர்கள்
யாரும் அவர்களை வெல்லவில்லை. இஸ்ர
வேலர் தமது பகைவர்களை எல்லாம்
முறியடிப்பதற்கு கர்த்தர் அனுமதித்தார்.
45கர்த்தர் இஸ்ரவேலருக்குக் கொடுத்த எல்லா
அருமையான வாக்குறுதிகளையும் நிறை

*வேற்றினார். அவர் கொடுத்த வாக்குறுதி
எதையும் நிறைவேற்றாமல் இருக்கவில்லை.
ஒவ்வொரு வாக்குறுதியையும் நிறைவேற்றி
னார்.*

### மூன்று கோத்திரங்கள் சொந்த இடத்திற்குச் செல்லுதல்

*22 ரூபன், காத், மனாசே கோத்திரங்க
ளிலிருந்த ஜனங்கள் அனைவரையும்
யோசுவா ஒரு கூட்டத்திற்கு அழைத்தான்.
2 யோசுவா அவர்களை நோக்கி, “மோசே
கர்த்தருடைய ஊழியன். மோசே செய்யும்
படி கூறியவற்றிற்கு நீங்கள் கீழ்ப்படிந்தீர்கள்.
எனது எல்லா கட்டடளைகளுக்கும்
கீழ்ப்படிந்து நடந்தீர்கள். 3 இஸ்ரவேலரின்
எல்லா ஜனங்களுக்கும் நீங்கள் உதவியாக
இருந்தீர்கள். உங்கள் தேவனாகிய கர்த்தர்
இட்ட கட்டளைகளுக்குக் கவனமாகக்
கீழ்ப்படிந்தீர்கள். 4 இஸ்ரவேலருக்கு அமைதி
வழங்குவதாக உங்கள் தேவனாகிய கர்த்தர்
வாக்களித்தார். இப்போது, கர்த்தர் தமது
வாக்குறுதியை நிறைவேற்றினார். இப்போது
உங்கள் வீடுகளுக்கு திரும்பிப் போகலாம்.
யோர்தான் நதியின் கிழக்குப் புறத்திலுள்ள
நிலத்தை கர்த்தருடைய ஊழியனாகிய
மோசே உங்களுக்குக் கொடுத்தார். அந்நி
லத்தை உங்கள் இருப்பிடமாகக் கொண்டு
நீங்கள் போகலாம். 5 ஆனால் மோசே
கொடுத்த சட்டத்தைத் தொடர்ந்து பின்பற்ற
வேண்டுமென்பதை நினைவில் வையுங்கள்.
உங்கள் தேவனாகிய கர்த்தரை நேசித்து
அவரது கட்டளைகளுக்குக் கீழ்ப்படியுங்கள்.
அவரைப் பின்பற்றி முழு இதயத்துடனும்
முழு ஆத்துமாவுடனும் சிறப்பாக அவருக்குச்
சேவை செய்வதைத் தொடர்ந்து செய்து
வாருங்கள்” என்றான்.
6 பின் யோசுவா அவர்களை ஆசீர்
வதித்தான். அவர்கள் தங்கள் வீடுகளுக்குத்
திரும்பிப் போனார்கள். 7 பாசான் தேசத்தை,
மோசே மனாசேயின் பாதிக் கோத்திரத்
திற்குக் கொடுத்திருந்தான். யோர்தான்
நதியின் மேற்குப் பகுதியிலுள்ள தேசத்தை
யோசுவா மனாசே கோத்திரத்தின் மற்ற
பாதிக் குடும்பங்களுக்கு கொடுத்தான்.
யோசுவா அவர்களை ஆசீர்வதித்து அவர்
களை வீட்டிற்கு அனுப்பினான். 8 அவன்,
“நீங்கள் செல்வந்தர்கள் ஆனீர்கள். உங்க
ளுக்கு மிருக ஜீவன்கள் பல உள்ளன.
உங்களிடம் பொன்னும், வெள்ளியும், விலை
யுயர்ந்த நகைகளும் உள்ளன. உங்களிடம்
அழகிய ஆடைகள் இருக்கின்றன. உங்கள்
எதிரிகளிடமிருந்து பல பொருட்களைக்
கொள்ளையடித்திருக்கிறீர்கள். உங்கள் இருப்
பிடத்திற்குச் சென்று அவற்றை உங்கள்
சகோதரரோடே பங்கிட்டுக் கொள்ளுங்கள்”
என்றான்.
9 எனவே ரூபன், காத், மனாசே கோத்தி
ரத்தினரும் பிற இஸ்ரவேலரைப் பிரிந்து
சென்றனர். அவர்கள் கானானிலுள்ள
சீலோவில் இருந்தனர். அவர்கள் அவ்
விடத்தை விட்டு கீலேயாத்திற்குத் திரும்பிச்
சென்றார்கள். மோசே அவர்களுக்குக்
கொடுத்த அவர்கள் சொந்த இடத்திற்குப்
போனார்கள். இந்நிலத்தை அவர்களுக்குக்
கொடுக்கும்படியாக கர்த்தர் மோசேக்குக்
கட்டளையிட்டிருந்தார்.
10 ரூபன், காத், மனாசே கோத்திரத்தினரும்
கீலேயாத் என்னும் இடத்திற்குச் சென்றார்
கள். அந்த இடம் கானான் தேசத்தில்
யோர்தான் நதிக்கு அருகே இருந்தது.
அவ்விடத்தில் ஜனங்கள் ஓர் அழகிய
பலிபீடத்தைக் கட்டினார்கள். 11 இந்த மூன்று
கோத்திரங்களும் கட்டிய பலிபீடத்தைக்
குறித்து சீலோவிலுள்ள பிற இஸ்ரவேலர்
கேள்விப்பட்டனர். கானானின் எல்லையில்
கீலேயாத் என்னுமிடத்தில் அப்பலிபீடம்
இருந்தது என்பதை அறிந்தனர். அப்பலிபீடம்
இஸ்ரவேலரின் நாட்டில் யோர்தான்
நதிக்கருகே இருந்தது. 12 இம்மூன்று கோத்திரத்
தினரிடமும் இஸ்ரவேல் ஜனங்கள் மிகுந்த
கோபம் கொண்டனர். அவர்கள் ஒன்று
சேர்ந்து, அவர்களுக்குகெதிராகப் போர்
செய்ய முடிவெடுத்தனர்.
13 ரூபன், காத், மனாசே கோத்திரத்தினரிட
மும் பேசுவதற்கு இஸ்ரவேலர் சில ஆட்களை
அனுப்பினார்கள். ஆசாரியனாகிய எலெயா
சாரின் மகன் பினெகாஸ் அவர்களுக்குத்
தலைவனாகச் சென்றான். 14 அவர்கள்
கோத்திரத்தின் தலைவர்கள் பத்து பேரை
அவனோடே கூட அனுப்பினார்கள். சீலோ
விலிருந்த இஸ்ரவேல் கோத்திரங்களிலிருந்து
ஒவ்வொன்றிற்கும் ஒரு மனிதன் வீதம்
சென்றான்.
15 எனவே பதினொருவர் கீலேயாத்திற்கு
ரூபன், காத், மனாசே கோத்திரத்தினரிடம்
பேசுவதற்காகச் சென்றனர். பதினொருவரும்
அவர்களை நோக்கி: 16 “இஸ்ரவேலரின்
தேவனுக்கெதிராக இக்காரியத்தை ஏன்
செய்தீர்கள்? கர்த்தருக்கு எதிராக ஏன்
திரும்பினீர்கள்? உங்களுக்காக ஏன் ஒரு
பலிபீடத்தைக் கட்டினீர்கள்? இது தேவனின்
போதனைக்கு எதிரானது என்பதை நீங்கள்
அறிவீர்கள்! 17 பேயோரில் என்ன நேர்ந்தது
என்பதை நினைத்துப்பாருங்கள். அப்பாவத்
தால் நாம் இன்றும் துன்புறுகிறோம்.
அப்பெரும் பாவத்தால் இஸ்ரவேலரில் பலர்
நோயுறுமாறு தேவன் செய்தார். அந்
நோயால் இன்றும் நாம் துன்புறுகிறோம்,
18 இப்போது நீங்களும் அதையே செய்கிறீர்
கள்! கர்த்தருக்கு எதிராகத் திரும்புகிறீர்கள்!
கர்த்தரைப் பின்பற்ற மறுப்பீர்களா? நீங்கள்
செய்வதை நிறுத்தாவிட்டால், கர்த்தர்
இஸ்ரவேல் ஜனம் முழுவதின் மேலும்
கோபம் கொள்வார்.
19 “உங்கள் நிலம் ஆராதனைக்குச்
சிறந்ததல்லவென்றால், எங்கள் நிலத்திற்குள்*

வாருங்கள். கர்ததருடைய கூடாரம் எங்கள்
நிலத்தில் உள்ளது. எங்கள் நிலத்தில் சில
பகுதிகளை எடுத்துக்கொண்டு இங்கு வாழ
லாம். ஆனால் கர்த்தருக்கு எதிராகத்
திரும்பாதீர்கள். இன்னொரு பலிபீடம்
கட்டாதீர்கள். ஆசரிப்புக் கூடாரத்தினருகே
கர்த்தருடைய பலிபீடம் ஏற்கனவே
கட்டப்பட்டுள்ளது.
20 “சேராவின் மகனாகிய ஆகான் என்ற
மனிதனை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்.
அழிக்கப்படவேண்டிய பொருட்களைப்
பற்றிய கட்டளைக்குக் கீழ்ப்படிய அவன்
மறுத்தான். அந்த ஒரு மனிதன் தேவனின்
கட்டளையை மீறினான், ஆனால் இஸ்ர
வேலர் எல்லோரும் தண்டிக்கப்பட்டனர்.
ஆகான் தன் பாவத்திற்காக மரித்தான்.
ஆனால் மற்றும் பலரும் மரிக்க நேரிட்டது”
என்று எல்லா இஸ்ரவேலரும் உங்களிடம்
கேட்கிறார்கள் என்றனர்.
21 ரூபன், காத், மனாசே கோத்திரத்தினர்,
அந்தப் பதினொரு ஆட்களுக்கும் பதிலளித்
தனர். அவர்கள், 22 “கர்த்தர் எங்கள் தேவன்!
கர்த்தரே எங்கள் தேவன் என்று மீண்டும்
சொல்கிறோம்! நாங்கள் இதைச் செய்த
காரணத்தையும் தேவன் அறிவார். நீங்களும்
அதை அறிய வேண்டுமென்று நாங்கள்
விரும்புகிறோம். நாங்கள் செய்ததை நீங்கள்
நியாயந்தீர்க்கலாம். நாங்கள் தவறேனும்
செய்ததாக நீங்கள் நம்பினால், நீங்கள்
எங்களைக் கொல்லலாம். 23 நாங்கள்
தேவனின் சட்டங்களை மீறினால், கர்த்தரே
எங்களைத் தண்டிக்கட்டும். 24 தகன பலி,
தானிய காணிக்கை, சமாதான பலி
ஆகியவற்றைக் கொடுப்பதற்காக நாங்கள்
இந்தப் பலிபீடத்தைக் கட்டியதாக நீங்கள்
நினைக்கிறீர்களா? இல்லை! அதற்காக
நாங்கள் இதைக் கட்டவில்லை. நாங்கள் ஏன்
இந்தப் பலிபீடத்தைக் கட்டினோம்? உங்கள்
தேசத்தின் ஜனங்கள் எதிர்காலத்தில்
எங்களை இஸ்ரவேலின் ஒரே பகுதியாக
ஏற்றுக் கொள்ளமாட்டார்களோ என்று
எண்ணி பயந்தோம். இஸ்ரவேலின் தேவனா
கிய கர்த்தரை நாங்கள் ஆராதிக்கக்கூடாது
என்று உங்கள் ஜனங்கள் கூறுவார்கள்
என நினைத்து பயந்தோம். 25 யோர்தான்
நதிக்கு மறுபக்கத்தில் தேவன் எங்களுக்கு
நிலத்தைக் கொடுத்தார். யோர்தான் நதி
நம்மைப் பிரிக்கிறது. உங்கள் பிள்ளைகள்
வளர்ந்து தேசத்தை ஆளும்போது, நாங்களும்
உங்களைச் சார்ந்தவர்களே என்று அவர்கள்
எண்ணமாட்டார்கள். அவர்கள் எங்களை
நோக்கி, ‘ரூபன், காத் ஜனங்கள் இஸ்ரவேல்
ஜனங்கள் அல்ல!’ என்று சொல்லக்கூடும்.
அப்போது எங்கள் பிள்ளைகள் கர்த்தரை
ஆராதிக்க உங்கள் பிள்ளைகள் தடை
செய்யக்கூடும்.
26 “எனவே இப்பலிபீடத்தைக் கட்ட
முடிவெடுத்தோம். தகன பலிகளுக்கோ, மற்ற
பலிகளுக்கோ இதைப் பயன்படுத்த நினைக்க
வில்லை. 27 நீங்கள் ஆராதிக்கும் தேவனையே
நாங்களும் ஆராதிக்கிறோம் என்பதை
எங்கள் ஜனங்களுக்கு உணர்த்துவதே இப்
பலிபீடத்தைக் கட்டியதன் உண்மையான
காரணமாகும். கர்த்தரை நாம் ஆராதிக்கி
றோம் என்பதற்குச் சான்றாக உங்களுக்கும்
எங்களுக்கும் எதிர்காலத்தில் நம் பிள்ளை
களுக்கும், இப்பலிபீடம் அமையும். நமது
பலிகள், தானிய காணிக்கைகள், சமாதான
பலிகள் ஆகியவற்றைக் கர்த்தருக்கே கொடுப்
போம். உங்கள் பிள்ளைகள் வளர்ந்து
பெரியவர்கள் ஆகும்போது நாங்களும்
உங்களைப்போலவே இஸ்ரவேல் ஜனங்கள்
என்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்று
விரும்புகிறோம். 28 வருங்காலத்தில், உங்கள்
பிள்ளைகள் எங்கள் பிள்ளைகளைப்
பார்த்து, அவர்கள் இஸ்ரவேலரல்ல என்று
கூறினால், அப்போது எங்கள் பிள்ளைகள்,
‘பாருங்கள்! எங்கள் பிதாக்கள் ஒரு
பலிபீடத்தைக் கட்டியிருக்கிறார்கள். பரிசுத்த
கூடாரத்தின் அருகேயுள்ள கர்த்தருடைய
பலிபீடத்தைப் போலவே இப்பலிபீடமும்
அமைந்துள்ளது. நாங்கள் இப்பலிபீடத்தைப்
பலி செலுத்துவதற்குப் பயன்படுத்துவ
தில்லை. நாங்களும் இஸ்ரவேலரில் ஒரு
பங்குடையவர்கள் என்பதற்கு இது
சான்றாகும்!’ என்று சொல்லமுடியும்.
29 “உண்மையாகவே, கர்த்தருக்கு எதிராக
இருப்பதற்கு எங்களுக்கு விருப்பமில்லை.
அவரைப் பின்பற்றுவதை நிறுத்தும் விருப்ப
மும் இப்போது எங்களுக்குக் கிடையாது.
பரிசுத்த கூடாரத்தின் முன்னே இருப்பது
மட்டுமே உண்மையான பலிபீடம் என்பதை
நாங்கள் அறிவோம். அப்பலிபீடம் நமது
தேவனாகிய கர்த்தருக்கு உரியது” என்றார்
கள்.
30 ரூபன், காத், மனாசே கோத்திரத்தினர்
கூறியவற்றை ஆசாரியனாகிய பினெகாசும்
அவனோடு வந்த தலைவர்களும் கேட்டார்
கள். அந்த ஜனங்கள் உண்மையே
கூறுகிறார்கள் என்று அவர்கள் திருப்தி
அடைந்தார்கள். 31 எனவே ஆசாரியனாகிய
பினெகாஸ், “கர்த்தர் நம்மோடிருக்கிறார்
என்பதை அறிகிறோம். அவருக்கு எதிராக
நீங்கள் திரும்பவில்லை என்பதையும் நாங்
கள் அறிகிறோம். கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்
களைத் தண்டிக்கமாட்டார், என்பதால் நாங்
கள் மகிழ்ச்சியடைகிறோம்” என்றார்கள்.
32 பிறகு பினெகாசும், தலைவர்களும்
அங்கிருந்து தங்கள் இருப்பிடத்திற்குத்
திரும்பிச் சென்றனர். ரூபன், காத்
ஜனங்களைக் கீலேயாத் தேசத்தில் விட்டு
கானானுக்குப் போனார்கள். இஸ்ரவேல்
ஜனங்களிடம் அவர்கள் திரும்பிப்போய்
நடந்தவற்றைக் கூறினார்கள். 33 இஸ்ரவேல்
ஜனங்களும் திருப்தி கொண்டனர். அவர்கள்
சந்தோஷமடைந்து தேவனுக்கு நன்றி

தெரிவித்தனர். ரூபன், காத், மனாசே ஆகிய
ஜனங்களுக்குக்கெதிராகப் போர் செய்ய
வேண்டாமென முடிவெடுத்தனர். அந்த
ஜனங்கள் வாழும் இடத்தை அழிக்க
வேண்டாம் எனவும் முடிவு செய்தனர்.
34ரூபன், காத் ஜனங்கள் பலிபீடத்திற்கு
ஒரு பெயரிட்டனர். அவர்கள் அதை,
“கர்த்தரே தேவன் என்ற எங்கள்
நம்பிக்கைக்கு இது சான்று” என்று அழைத்
தார்கள்.

### யோசுவா ஜனங்களை உற்சாகப்படுத்துதல்

23 சுற்றிலுமிருந்த எதிரிகளிடமிருந்து
கர்த்தர் இஸ்ரவேலருக்கு அமைதியைக்
கொடுத்தார். கர்த்தர் இஸ்ரவேலரைப் பாது
காத்தார். வருடங்கள் கழிந்தன, யோசுவா
வயது முதிர்ந்தவனானான். 2அப்போது,
எல்லா மூத்த தலைவர்களையும், குடும்பத்
தலைவர்களையும், நியாயாதிபதிகளையும்,
இஸ்ரவேலரின் அதிகாரிகளையும் யோசுவா
ஒருங்கே அழைத்தான். அவர்களிடம், “நான்
மிகவும் வயது முதிர்ந்தவனானேன். 3நமது
பகைவர்களுக்கு கர்த்தர் செய்தவற்றைப்
பார்த்திருக்கிறீர்கள். நமக்கு உதவும்
பொருட்டு கர்த்தர் இதைச் செய்தார். உங்கள்
தேவனாகிய கர்த்தர் உங்களுக்காகப் போர்
செய்தார். 4யோர்தான் நதிக்கும், மேற்கில்
மத்தியத்தரைக் கடலுக்கும் இடையில் உள்ள
இடத்தை உங்கள் ஜனங்கள் பெறமுடியும்
என்று நான் உங்களுக்குச் சொன்னதை
இப்போது நினைவு கூருங்கள். அந்நிலத்தை
உங்களுக்குக் கொடுப்பதாக வாக்களித்தேன்,
ஆனால் இதுவரைக்கும் நீங்கள் அதைப்
பெறவில்லை. 5ஆனால் உங்கள் தேவனாகிய
கர்த்தர் தமது வாக்குப்படியே அங்கு
வசிக்கும் ஜனங்களை அங்கிருந்து வெளி
யேற்றுவார்! நீங்கள் அவர்கள் தேசத்தை
எடுத்துக்கொள்வீர்கள். அங்கு வசிக்கும்
ஜனங்களை கர்த்தர் வெளியேறுமாறு
கட்டாயப்படுத்துவார். கர்த்தர் இதைச்
செய்வதாக உங்களுக்கு வாக்களித்துள்ளார்.
6“கர்த்தர் நமக்குக் கட்டளையிட்ட
எல்லாவற்றிற்கும் கீழ்ப்படிவதற்குக் கவன
மாக இருங்கள். மோசேயின் சட்டப்
புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிற எல்லா
வற்றிற்கும் கீழ்ப்படியுங்கள். அச்சட்டத்தை
மீறாதீர்கள். 7இஸ்ரவேலரல்லாத ஜனங்கள்
நம்மிடையே வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.
அந்த ஜனங்கள் தமக்குச் சொந்தமான
தெய்வங்களையே வழிபடுகின்றனர். அந்த
ஜனங்களோடு நட்பு கொள்ளாதீர்கள்.
அத்தெய்வங்களுக்குச் சேவை செய்யவோ,
அவற்றை வழிபடவோ வேண்டாம். 8உங்கள்
தேவனாகிய கர்த்தரைத் தொடர்ந்து பின்
பற்றுங்கள் இதையே முன்பும் செய்தீர்கள்,
இனிமேலும் செய்யவேண்டும்.
9“பெரிய, வல்லமையான தேசங்களை
வெல்வதற்கு கர்த்தர் உங்களுக்கு உதவினார்.
அவர்கள் அங்கிருந்து போகும்படியாக
கர்த்தர் துரத்தினார். உங்களைத் தோற்கடிக்க
எந்தத் தேசத்தாலும் முடியவில்லை.
10கர்த்தருடைய உதவியோடு, இஸ்ரவேலரில்
ஒருவன் 1,000 பகைவீரர்களை வெல்ல
முடிந்தது. ஏனெனில் கர்த்தர் உங்களுக்காகப்
போர் செய்கிறார். கர்த்தர் இதைச்
செய்வதாக வாக்களித்தார். 11எனவே உங்கள்
தேவனாகிய கர்த்தரைத் தொடர்ந்து நேசியுங்
கள்.
12“கர்த்தரைப் பின்பற்றுவதை நிறுத்தாதீர்
கள். இஸ்ரவேலரல்லாத ஜனங்களோடு
நண்பராகாதீர்கள். அவர்களில் யாரையும்
மணந்துகொள்ளாதீர்கள். ஒருவேளை அவர்
களோடு நீங்கள் நட்பு கொண்டால், 13பிறகு
பகைவர்களை வெல்லும் முயற்சியில்
கர்த்தர் உங்களுக்கு உதவமாட்டார். அந்த
ஜனங்கள் உங்ளுக்குக் கண்ணியாக
மாறுவார்கள். அவர்கள் உங்கள் கண்களில்
புகையைப் போலவும், தூசியைப் போலவும்
அமைந்து வேதனை விளைவிப்பார்கள்.
நீங்கள் இத்தேசத்தை விட்டுச்செல்ல
வற்புறுத்தப்படுவீர்கள். உங்கள் தேவனாகிய
கர்த்தர் உங்களுக்கு இந்த நல்ல நிலத்தைக்
கொடுத்தார். இக்கட்டளைக்குக் கீழ்ப்படியா
விட்டால் நீங்கள் அதை இழக்கக்கூடும்.
14“இது நான் மரிக்கும் நேரம். கர்த்தர்
மிகப் பெரிய காரியங்களைச் செய்தார்
என்பதை அறிந்து உண்மையாகவே
நம்புகிறீர்கள். தன் வாக்குறுதிகளை அவர்
சற்றும் மீறவில்லை. அவர் நமக்கு
வாக்களித்த அனைத்தையும் நிறைவேற்றி
னார். 15உங்கள் தேவனாகிய கர்த்தர் நமக்கு
வாக்களித்த நல்லவை அனைத்தும்
நிறைவேறின, நீங்கள் தவறு செய்தால்
உங்களுக்குத் தீமை விளையுமென அவர்
உறுதியளித்தார். அவர் உங்களுக்குத் தந்த
இத்தேசத்தினின்று உங்களைத் துரத்துவார்
எனவும் உறுதியாகக் கூறினார். 16உங்கள்
தேவனாகிய கர்த்தரோடு செய்த உடன்
படிக்கையை நீங்கள் மீறினால் இவ்வாறு
நிகழும். நீங்கள் போய், அந்நிய
தெய்வங்களை ஆராதித்தால் உங்கள்
நிலத்தை இழப்பீர்கள். நீங்கள் அவ்வாறு
செய்தால், கர்த்தர் உங்கள் மீது
கோபமடைவார். அப்போது அவர்
உங்களுக்குத் தந்த இந்த நல்ல இடத்தை
விட்டு விரைவில் துரத்தப்படுவீர்கள்”
என்றான்.

### யோசுவா விடை பெறுதல்

24 இஸ்ரவேல் கோத்திரத்தினர் எல்லோ
ரையும் சீகேமில் கூடுமாறு யோசுவா
அழைத்தான். பின் யோசுவா மூத்த தலை
வர்களையும், நியாயாதிபதிகளையும், அதி
காரிகளையும் இஸ்ரவேலின் ஆட்சியாள
ரையும் அழைத்தான். இவர்கள் தேவனுக்கு
முன்னே நின்றார்கள்.

2 பின்பு யோசுவா எல்லா ஜனங்களையும்
பார்த்துப் பேசினான். அவன்,
"இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்,
உங்களுக்குக் கூறுவதை நான்
சொல்லுகிறேன்: பலகாலத்திற்கு முன்,
உங்கள் முற்பிதாக்கள் ஐபிராத்து நதி
யின் மறுபுறத்தில் வாழ்ந்தனர். ஆபிர
காம், நாகோர் ஆகியோரின் தந்தையா
கிய தேராகு, போன்றோரைக் குறித்து
நான் பேசிக் கொண்டிருக்கிறேன்.
அப்போது, அம்மனிதர்கள் வேறு
தெய்வங்களை வணங்கி வந்தனர்.
3 ஆனால் கர்த்தராகிய நான், நதிக்கு
மறுபுறத்திலுள்ள தேசத்திலிருந்து உங்
கள் தந்தையாகிய ஆபிரகாமை
அழைத்து வந்தேன். கானான் தேசத்
தின் வழியாக அவனை வழிநடத்திப்
பல பல பிள்ளைகளை அவனுக்குக்
கொடுத்தேன். ஆபிரகாமுக்கு ஈசாக்கு
என்னும் பெயருள்ள மகனைக் கொடுத்
தேன். 4 ஈசாக்கிற்கு யாக்கோபு, ஏசா
என்னும் இரண்டு மகன்களைக் கொடுத்
தேன். சேயீர் மலையைச் சுற்றியிருந்த
தேசத்தை ஏசாவிற்குக் கொடுத்தேன்.
யாக்கோபும் அவனது மகன்களும்
அங்கு வாழவில்லை. அவர்கள்
எகிப்து தேசத்தில் வாழ்வதற்குச் சென்
றார்கள்.
5 பிறகு நான் மோசேயையும்
ஆரோனையும் எகிப்திற்கு அனுப்பி
னேன். எனது ஜனங்களை எகிப்தி
லிருந்து அழைத்து வருமாறு அவர்
களுக்குச் சொன்னேன். எகிப்து ஜனங்
களுக்குப் பல கொடிய காரியங்கள்
நிகழுமாறு செய்தேன், பின் உங்கள்
ஜனங்களை எகிப்திலிருந்து வெளியே
கொண்டு வந்தேன். 6 அவ்வாறு உங்கள்
முற்பிதாக்களை எகிப்திலிருந்து
அழைத்து வந்தேன். அவர்கள் செங்கட
லுக்கு வந்தார்கள், எகிப்தியர்கள்
தேர்களிலும் குதிரைகளிலும் அவர்
களைத் துரத்தினார்கள். 7 ஜனங்கள்,
கர்த்தராகிய என்னிடம் உதவி
வேண்டினார்கள், நான் எகிப்தியருக்
குப் பெருந்தொல்லைகள் வரப்பண்ணி
னேன். கடல் அவர்களை மூடிவிடு
மாறு கர்த்தராகிய நான் செய்தேன்.
நான் எகிப்திய படைக்குச் செய்ததை
நீங்களே கண்டீர்கள்.
அதன் பிறகு, நீண்டகாலம் நீங்கள்
பாலைவனத்தில் வாழ்ந்தீர்கள். 8 எமோ
ரியரின் தேசத்திற்கு உங்களை
அழைத்து வந்தேன். அது யோர்தான்
நதிக்குக் கிழக்குப் பகுதியாகும். அந்த
ஜனங்கள் உங்களுக்கு எதிராகப் போர்
செய்தனர், ஆனால் நீங்கள்
அவர்களைத் தோற்கடிக்குமாறு செய்
தேன். அந்த ஜனங்களை அழிப்
பதற்கான ஆற்றலை உங்களுக்கு
கொடுத்தேன். பின்பு அத்தேசத்தை
நீங்கள் கைப்பற்றினீர்கள்.
9 பிறகு மோவாபின் அரசனும், சிப்
போரின் மகனுமாகிய பாலாக், இஸ்ர
வேல் ஜனங்களை எதிர்த்துப்
போரிடத் தயாரானான். பேயோரின்
மகனாகிய பிலேயாமுக்கு அரசன்
சொல்லியனுப்பினான். அவன் பிலே
யாமிடம் உங்களைச் சபிக்குமாறு கூறி
னான். 10 ஆனால் கர்த்தராகிய, நான்,
பிலேயாம் கூறுவதைக் கேட்க மறுத்
தேன். எனவே பிலேயாம் உங்களுக்கு
நல்லவை நிகழ வேண்டுமெனக்
கேட்டான்! அவன் உங்களைப் பல
முறை ஆசீர்வதித்தான். நான் உங்
களைக் காப்பாற்றி, தீமைகளினின்று
விலக்கினேன்.
11 பின் நீங்கள் யோர்தான் நதியைத்
தாண்டினீர்கள். எரிகோவிற்குச் சென்
றீர்கள். எரிகோ நகர ஜனங்கள்
உங்களுக்கு எதிராகப் போர் தொடுத்
தனர். எமோரியரும், பெரிசியரும்,
கானானியரும், ஏத்தியரும், கிர்காசிய
ரும், ஏவியரும், எபூசியரும் உங்க
ளுக்கு எதிராகப் போரிட்டனர். அவர்
கள் எல்லோரையும் நீங்கள் வெல்லு
மாறு செய்தேன். 12 உங்கள் படை
முன்னோக்கிச் சென்றபோது, நான்
காட்டுக் குளவிகளை அவர்களுக்கு
முன்பாக அனுப்பினேன். காட்டுக்
குளவிகள் அந்த ஜனங்களையும்
இரண்டு எமோரிய அரசர்களையும்
பயமுறுத்தி ஓடச் செய்தன. வாளையும்,
வில்லுகளையும் பயன்படுத்தாமலே
தேசத்தைக் கைப்பற்றினீர்கள்.
13 கர்த்தராகிய, நான் அத்தேசத்தை
உங்களுக்குக் கொடுத்தேன்! நீங்கள்
அத்தேசத்தைப் பெறுவதற்கென்று
உழைக்கவில்லை! நீங்கள் அந்நகரங்
களை கட்டவில்லை! ஆனால் இப்
போது அத்தேசத்திலும், அந்நகரங்களி
லும் சுகமாக வாழ்கிறீர்கள். திராட்சை
செடிகளும், ஒலிவ மரங்களுமுள்ள
தோட்டங்கள் உங்களுக்கு இருக்கின்
றன. ஆனால் அத்தோட்டங்களை
நீங்கள் நாட்டவில்லை.
14 பின் யோசுவா ஜனங்களை நோக்கி,
"இப்போது நீங்கள் கர்த்தருடைய வார்த்தை
களைக் கேட்டீர்கள். எனவே நீங்கள்
கர்த்தரை மதித்து அவருக்கு உண்மையாக
சேவை செய்யவேண்டும். உங்கள் முற்பிதாக்
கள் ஆராதித்த பொய்த் தெய்வங்களை
வீசியெறிந்து விடுங்கள். ஐபிராத்து நதியின்
மறுகரையிலும் எகிப்திலும் பலகாலங்
களுக்கு முன்னர் அவ்வாறு நிகழ்ந்தது.
இப்போது கர்த்தருக்கு மட்டுமே சேவை
செய்யுங்கள்.

15"நீங்கள் கர்த்தருக்குச் சேவை செய்ய
விரும்பாமல் இருக்கலாம். ஆனால் உங்க
ளுக்கு நீங்களே ஒன்றைத் தேர்ந்தெடுத்தாக
வேண்டும். யாருக்குச் சேவை செய்வதென்று
இன்றைக்கு முடிவெடுங்கள். ஐபிராத்து
நதியின் மறுகரையில் வாழ்ந்தபோது உங்கள்
முற்பிதாக்கள் ஆராதித்த தெய்வங்களுக்கு
சேவை புரிவீர்களா? அல்லது இத்தேசத்தில்
வாழ்ந்த எமோரியர் வழிபட்ட தேவர்
களையா? நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டும்.
ஆனால் நானும் எனது குடும்பமும்,
கர்த்தருக்கே சேவை செய்வோம்!" என்றான்.
16அப்போது ஜனங்கள் பதிலாக,
"கர்த்தரைப் பின்பற்றுவதை நிறுத்தமாட்
டோம். அந்நிய தெய்வங்களுக்கு ஒருபோதும்
சேவை செய்யமாட்டோம்! 17தேவனாகிய
கர்த்தர் தான் எகிப்திலிருந்து வெளியேற்றி
நம் ஜனங்களை அழைத்து வந்தார் என்பதை
நாங்கள் அறிவோம். நாங்கள் அத்தேசத்தில்
அடிமைகளாக இருந்தோம். ஆனால் அங்கு
பெரிய காரியங்களை கர்த்தர் எங்களுக்காகச்
செய்தார். அவர் எங்களை அத்தேசத்தி
லிருந்து அழைத்து வந்து, பிற தேசங்கள்
வழியாக நாங்கள் பிரயாணம் செய்யும்
போது எங்களைப் பாதுகாத்து வந்தார்.
18அத்தேசங்களில் வசித்த ஜனங்களைத்
தோற்கடிக்க கர்த்தர் எங்களுக்கு உதவினார்.
நாங்கள் இப்போதிருக்கிற தேசத்தில் வாழ்ந்த
எமோரிய ஜனங்களை வெல்லவும் கர்த்தர்
எங்களுக்கு உதவினார். கர்த்தருக்குத்
தொடர்ந்து நாங்கள் சேவை செய்வோம்.
ஏனெனில் அவரே எங்கள் தேவன்" என்றார்
கள்.

19அப்போது யோசுவா, "அது உண்
மையல்ல. நீங்கள் கர்த்தருக்குத் தொடர்ந்து
சேவை செய்வதென்பது இயலாதது. தேவ
னாகிய கர்த்தர் பரிசுத்தர். அந்நிய
தெய்வங்களை ஆராதிக்கும் ஜனங்களை
தேவன் வெறுக்கிறார். தனக்கெதிராக
அவ்வாறு திரும்பினால் உங்களை தேவன்
மன்னிக்கமாட்டார். 20ஆனால் நீங்கள்
கர்த்தரை விட்டு நீங்கிப் அந்நிய
தெய்வங்களுக்குச் சேவை செய்வீர்கள்.
உங்களுக்குக் கொடிய காரியங்கள் நிகழும்
படி கர்த்தர் செய்வார். கர்த்தர் உங்களை
அழிப்பார். தேவனாகிய கர்த்தர் உங்களிடம்
நல்லவராக இருந்தார், ஆனால் நீங்கள்
அவருக்கெதிராக திரும்பினால் அவர்
உங்களை அழிப்பார்" என்றான்.
21அதற்கு ஜனங்கள் யோசுவாவை
நோக்கி, "இல்லை! நாங்கள் கர்த்தருக்கே
சேவை செய்வோம்" என்றார்கள்.
22அப்போது யோசுவா, "உங்களையும்,
உங்களோடிருக்கிற ஜனங்களையும் சுற்றி
நோக்குங்கள். நீங்கள் கர்த்தருக்குச் சேவை
செய்ய முடிவெடுத்திருக்கிறீர்கள் என்பதை
அறிவீர்களா? இதற்கு நீங்கள் எல்லோரும்
சாட்சிகளா?" என்றான்.
ஜனங்கள் பதிலாக, "ஆம், அது உண்மை!
நாங்கள் கர்த்தருக்கு சேவை செய்ய முடி
வெடுத்துள்ளோம் என்பதைக் காண்கிறோம்"
என்றார்கள்.
23அப்போது யோசுவா, "உங்களிட
மிருக்கிற பொய்த் தெய்வங்களை எடுத்து
வீசிவிடுங்கள். இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தரை உங்கள் முழுமனதோடும் நேசியுங்
கள்" என்றான்.
24பின் ஜனங்கள் யோசுவாவை நோக்கி,
"நாங்கள் எங்கள் தேவனாகிய கர்த்தருக்கு
சேவை செய்வோம். நாங்கள் அவருக்குக்
கீழ்ப்படிவோம்" என்றார்கள்.
25அந்த நாளில் யோசுவா ஜனங்களுக்காக
ஒரு ஒப்பந்தத்தைச் செய்தான். சீகேம்
எனப்பட்ட ஊரில் இந்த ஒப்பந்தத்தைச்
செய்தான். அது அவர்கள் பின்பற்ற வேண்
டிய சட்டமாயிற்று. 26தேவனுடைய சட்ட
புத்தகத்தில் யோசுவா இவற்றை எழுதினான்.
பின் யோசுவா ஒரு பெரிய கல்லை
எடுத்தான். அக்கல்லே அந்த ஒப்பந்தத்திற்கு
அடையாளமாயிற்று. கர்த்தருடைய பரிசுத்த
கூடாரத்தின் அருகே இருந்த கர்வாலி
மரத்திற்கு அடியில் அவன் அக்கல்லை
வைத்தான்.
27பிறகு யோசுவா அனைவரையும்
நோக்கி, "நாம் இன்று கூறிய காரியங்களை
நினைவு கூருவதற்கு இந்தக் கல் உதவும்.
கர்த்தர் நம்மோடு பேசிக்கொண்டிருந்த இந்த
நாளில், இந்த கல் இங்கு இருந்தது. இன்று
நடந்தவற்றை நினைவு கூருவதற்கு உதவும்
ஒன்றாக இந்த கல் இருக்கும். உங்களுக்கு
எதிரான சாட்சியாகவும் இந்த கல்
அமையும். உங்கள் தேவனாகிய கர்த்த
ருக்கு எதிராக நீங்கள் திரும்புவதை அது
தடுக்கும்" என்றான்.
28பின்பு யோசுவா அனைவரிடமும் தம்
வீடுகளுக்குத் திரும்பிப் போகுமாறு கூறி
னான். எனவே ஒவ்வொருவனும் அவனவன்
இருப்பிடத்திற்குச் சென்றான்.

### யோசுவா மரணமடைதல்

29அதன்பின்னர் நூனின் மகனாகிய
யோசுவா மரித்தான். யோசுவாவுக்கு அப்
போது 110 வயது. 30திம்னாத் சேராவிலுள்ள
அவனது சொந்த நிலத்தில் அவன் அடக்கம்
பண்ணப்பட்டான். காயாஸ் மலைக்கு
வடக்கேயுள்ள எப்பிராயீமின் மலைநாட்டில்
அது இருந்தது.
31யோசுவா உயிரோடிருந்தபோது இஸ்ர
வேலர் கர்த்தருக்குச் சேவை செய்தனர்.
யோசுவா மரித்த பின்னரும், கர்த்தருக்குத்
தொடர்ந்து, ஜனங்கள் சேவை செய்து
வந்தார்கள். அவர்கள் தலைவர்கள்

உயிரோடிருந்தபோது ஜனங்கள் தொடர்ந்து கர்த்தரைச் சேவித்தனர். கர்த்தர் இஸ்ரவேலருக்குச் செய்த காரியங்களைப் பார்த்தவர்கள் இத்தலைவர்கள் ஆவர்.

### யோசேப்பு தன்னிடத்திற்கு வருகிறான்

32 இஸ்ரவேலர் எகிப்தை விட்டுப் புறப்பட்டபோது, அவர்கள் யோசேப்பின் எலும்புகளை எடுத்து வந்தனர். சீகேமில் யோசேப்பின் எலும்புகளைப் புதைத்தனர். சீகேம் என்ற மனிதனின் தந்தையாகிய, எமோரியரின் மகன்களிடமிருந்து யாக்கோபு வாங்கிய நிலத்தில் அந்த எலும்புகளைப் புதைத்தனர். யாக்கோபு அந்த நிலத்தை 100 சுத்த வெள்ளி பணத்திற்கு வாங்கியிருந்தான். அந்நிலம் யோசேப்பின் பிள்ளைகளுக்குச் சொந்தமானதாக இருந்தது.
33 ஆரோனின் மகன், எலெயாசாரும் மரித்தான். எப்பிராயீம் மலைநாட்டிலுள்ள கிபியாவில் அவன் அடக்கம்பண்ணப்பட்டான். எலெயாசாரின் மகன் பினெகாசுக்குக் கிபியா கொடுக்கப்பட்டது.

# நியாயாதிபதிகளின் புத்தகம்

### யூதா கானானியரோடு போரிடுதல்

1 யோசுவா மரணமடைந்தான். அப்போது
இஸ்ரவேலர் கர்த்தரிடம் ஜெபம் செய்
தார்கள். அவர்கள், “கானானியரை எதிர்த்து
முதலில் சென்று எங்களுக்காக போரிட
வேண்டிய கோத்திரத்தினர் யார்?” என்று
கேட்டார்கள்.
2 கர்த்தர் இஸ்ரவேலரிடம், “யூதா கோத்தி
ரத்தினர் செல்வார்கள். அவர்கள் இந்த
தேசத்தைப் பெற அனுமதிப்பேன்” என்றார்.
3 சிமியோன் கோத்திரத்தைச் சேர்ந்த தங்
கள் சகோதரரிடம் யூதா ஜனங்கள் உதவி
வேண்டினார்கள். யூதாவின் மனிதர்கள்,
“சகோதரர்களே, நம் ஒவ்வொருவருக்கும் சில
நிலங்களைக் கொடுப்பதாகக் கர்த்தர்
வாக்களித்தார். எங்கள் நிலத்தைப் பெற
நீங்கள் வந்து உதவினால், உங்கள்
தேசத்தைப் பெறுவதற்கு நீங்கள் போரிடும்
போது நாங்கள் வந்து உதவுவோம்”
என்றார்கள். சிமியோனின் குடும்பத்தினர்
போரில் யூதா மனிதருக்கு உதவ ஒப்புக்
கொண்டனர்.
4 கானானியரையும் பெரிசியரையும்
தோற்கடிக்க யூதாவின் ஆட்களுக்குக் கர்த்தர்
உதவினார். பேசேக் நகரில் யூதா ஜனங்கள்
10,000 ஆட்களைக் கொன்றார்கள். 5 பேசேக்
கில் யூதா ஜனங்கள் பேசேக்கின் அரச
னைக்* கண்டு, அவனோடு போரிட்டார்கள்.
யூதா ஜனங்கள் கானானியரையும் பெரி
சியரையும் வென்றார்கள்.
6 பேசேக்கின் அரசன் தப்பிச் செல்ல
முயன்றான். ஆனால் யூதா ஜனங்கள் அவ
னைத் துரத்திப் பிடித்தனர். அவனைப்
பிடித்தபின் அவனது கை, கால் பெருவிரல்
களைத் துண்டித்தனர். 7 அப்போது பேசேக்
கின் அரசன், “70 அரசர்களின் கை,
கால் பெருவிரல்களை நான் துண்டித்தேன்.
எனது மேசையிலிருந்து விழுந்த உணவுத்
துணிக்கைகளை அந்த அரசர்கள் புசித்தார்
கள். நான் அந்த அரசர்களுக்குச் செய்தவற்றி
ற்கான தண்டனையை தேவன் எனக்குத்
தந்தார்” என்றான். யூதா மனிதர்கள் பேசேக்
கின் அரசனை எருசலேமிற்குக் கொண்டு
சென்றார்கள். அவன் அங்கு மரித்தான்.
8 யூதா மனிதர்கள் எருசலேமுக்கு
எதிராகப் போரிட்டு அதனைப்
பிடித்தார்கள். எருசலேம் ஜனங்களைக்
கொல்ல யூதா மனிதர்கள் தங்கள் வாள்
களைப் பயன்படுத்தினார்கள். பின்பு நகரை
எரித்தார்கள். 9 பின்னர் யூதா மனிதர்கள்
கானானியர் சிலரை எதிர்த்துப் போரிடச்
சென்றார்கள். அந்தக் கானானியர்கள் பாலை
வனப் பகுதியிலும், மலைநாட்டிலும், மேற்கு
மலையடிவாரங்களிலும் வசித்தார்கள்.
10 பின்பு யூதா மனிதர்கள் எபிரோன்
நகரில் வாழ்ந்த கானானியரோடு போரிடச்
சென்றார்கள். (எபிரோன் கீரியாத்அர்பா
என்றும் அழைக்கப்பட்டது.) சேசாய்,
அகிமான், தல்மாய்* ஆகிய மனிதர்களையும்
யூதாவின் ஜனங்கள் தோற்கடித்தனர்.

### காலேபும் அவனது மகளும்

11 யூதாவின் மனிதர்கள் அவ்விடத்தை
விட்டுக் கிளம்பி தெபீர் நகர ஜனங்களோடு
போரிடுவதற்குச் சென்றார்கள். (முன்பு,
தெபீர், கீரியாத்செப்பேர் என அழைக்கப்
பட்டது.) 12 யூதா மனிதர்கள் போரிடத்
துவங்கும் முன்னர், காலேப் அவர்களிடம்,
“நான் கீரியாத்செப்பேரைத் தாக்க விரும்புகி
றேன். அந்நகரைத் தாக்கிக் கைப்பற்றுகிற
மனிதனுக்கு என் மகள் அக்சாளைக்
கொடுப்பேன். அம்மனிதன் எனது மகளைத்
திருமணம் செய்துகொள்ளட்டும்” என்று
வாக்குறுதி அளித்தான்.
13 காலேபுக்குக் கேனாஸ் என்னும் பெயரு
டைய இளைய சகோதரன் ஒருவன் இருந்
தான். அவனுக்கு ஒத்னியேல் என்னும்
பெயருடைய மகன் இருந்தான். கீரியாத்
செப்பேர் என்னும் நகரை ஒத்னியேல்
கைப்பற்றினான். எனவே ஒத்னியேலுக்கு
மனைவியாகும்படி காலேப் தன் மகள்
அக்சாளைக் கொடுத்தான்.
14 அக்சாள் ஒத்னியேலோடு வாழும்படி
புறப்பட்டுச் சென்றபோது அவளது தந்தை
யிடம் கொஞ்சம் நிலம் கேட்கும்படியாக
ஒத்னியேல் அக்சாளிடம் சொன்னான்.*
அக்சாள் தன் தந்தையிடம் சென்றாள்.
அவள் கழுதையிலிருந்து இறங்கியதும்,

---

**பேசேக்கின் அரசன்** அல்லது, அதோனிபெசேக்.

**சேசாய், அகிமான், தல்மாய்** ஏனாக் என்ற பெயருடைய மனிதனின் மூன்று மகன்கள். அவர்கள் அரக்கர்கள். எண். 13:22.

**ஒத்னியேல் அக்சாளிடம் சொன்னான்** அல்லது, “அக்சாள் ஒத்னியேலிடம் சொன்னாள்.”

காலேப் அவளை நோக்கி, “என்ன நிகழ்ந் தது?” என்றான்.
15அக்சாள் காலேபுக்குப் பதிலாக, “என்னை ஆசீர்வதியுங்கள்.* பாலைவனப் பகுதியிலுள்ள வறட்சியான நிலத்தை எனக்குக் கொடுத்தீர்கள். தண்ணீருள்ள நிலத் தில் கொஞ்சம் எனக்குக் கொடுங்கள்” என்றாள். அவளுக்கு வேண்டியதைக் காலேப் கொடுத்தான். அந்நிலத்தின் மேலும் கீழும் தண்ணீர் நிலைகள் இருந்த பகுதியைக் கொடுத்தான்.
16ஈச்சமரங்களின் நகரத்தை (எரிகோவை) விட்டுக் கேனிய ஜனங்கள் யூதாவின் ஜனங்க ளோடு புறப்பட்டு, யூதாவின் பாலை நிலத்திற்கு அங்குள்ள ஜனங்களோடு வாழ் வதற்காகப் போனார்கள். ஆராத் நகரத்திற்கு அருகேயுள்ள பாலைவனப் பகுதியில் இது இருந்தது. (மோசேயின் மாமனாரின் குடும்பத் தைச் சார்ந்தோர் கேனிய ஜனங்களாவர்.)
17சேப்பாத் நகரில் சில கானானியர் வாழ்ந்தனர்.யூதாவின் மனிதர்களும் சிமியோ னின் மனிதர்களும் அந்தக் கானானியரைத் தாக்கி, அவர்கள் நகரத்தை முழுமையாக அழித்து, அந்நகரத்திற்கு ஓர்மா* எனப் பெயரிட்டனர்.
18காசாவையும் அதனைச் சூழ்ந்த ஊர் களையும்யூதாவின் ஜனங்கள் கைப்பற்றினர். அஸ்கலோன், எக்ரோன், நகரங்களையும், அவற்றைச் சுற்றிலுமுள்ள சிறு ஊர்களை யும் யூதா ஜனங்கள் கைப்பற்றினார்கள்.
19போர் நடந்தபோது கர்த்தர் யூதாவின் மனிதர்களோடிருந்தார். மலைநாட்டிலுள்ள ஊர்களை அவர்கள் பெற்றனர். பள்ளத் தாக்கில் வாழ்ந்த ஜனங்களிடம் இரும்பு இரதங்கள் இருந்ததால், யூதாவின் ஜனங்கள் அவர்கள் சத்துருக்களை வெற்றிகொள்ள முடியவில்லை.
20எபிரோனுக்கு அருகேயுள்ள நிலத்தை காலேபிற்குக் கொடுப்பதாக மோசே வாக்க ளித்திருந்தான். எனவே அந்நிலம் காலேபின் குடும்பத்திற்குக் கொடுக்கப்பட்டது. காலே பின் மனிதர்கள் ஏனாக்கின் மூன்று மகன் களையும்* அவ்விடத்தை விட்டுத் துரத்தினார்கள்.

## பென்யமீன் மனிதர்கள் எருசலேமில் தங்குதல்

21எபூசியரை எருசலேமைவிட்டு வெளி யேற்ற பென்யமீன் கோத்திரத்தினரால் முடியவில்லை. எனவே இன்றும், எபூசியர் பென்யமீன் ஜனங்களோடு கூட எருசலேமில் வாழ்கிறார்கள்.

## யோசேப்பின் மனிதர்கள் பெத்தேலைக் கைப்பற்றுதல்

22-23யோசேப்பின் கோத்திரத்தினர் பெத் தேல் நகரை எதிர்த்துப் போர் செய்தனர் (கடந்த காலத்தில் பெத்தேல் லூஸ் எனப்பட்டது.) யோசேப்பின் கோத்திரத்தின ரோடு கர்த்தர் இருந்தார். யோசேப்பின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பெத்தேல் நகரத் திற்குச் சில ஒற்றர்களை அனுப்பினார்கள். பெத்தேல் நகரைத் தோற்கடிப்பதற்குரிய வகைகளை இவர்கள் ஆராய்ந்தார்கள்.
24பெத்தேல் நகரத்தை ஒற்றர்கள் கவனித்துக் கொண்டிருந்தபோது, அவர்கள் நகரிலிருந்து வந்த ஒரு மனிதனைக் கண்டார்கள். ஒற்றர்கள் அம்மனிதனிடம், “நகரத்திற்குள் செல்லும் ஒரு இரகசிய வழியைக் காட்டு, நாங்கள் நகரைத் தாக்குவோம். நீ எங்களுக்கு உதவினால், உன்னைத் துன்புறுத்த மாட்டோம்” என்றார்கள்.
25அம்மனிதன் ஒற்றர்களுக்கு நகரத்திற்குள் செல்லும் இரகசிய வழியைக் காட்டினான். யோசேப்பின் ஜனங்கள் தங்கள் வாள்களால் பெத்தேல் ஜனங்களைக் கொன்றார்கள். ஆனால் அவர்கள் தங்களுக்கு உதவிய மனிதனைத் துன்புறுத்தவில்லை. அம்மனித னும் அவனது குடும்பமும் விடுதலையாகச் செல்ல அனுமதிக்கப்பட்டனர். 26ஏத்தியர்
வாழ்ந்த தேசத்திற்கு அம்மனிதன் சென்று ஒரு நகரைக் கட்டினான். அந்நகரத்திற்கு லூஸ் என்று பேரிட்டான். இன்றைக்கும் கூட அந்நகரம் லூஸ் என்றே அழைக்கப்ப டுகிறது.

## கானானியரோடு மற்ற கோத்திரங்கள் போரிடுதல்

27பெத்செயான், தானாக், தோர், இப் லெயாம், மெகிதோ ஆகிய நகரங்களிலும் அவற்றைச் சூழ்ந்திருந்த சிறு நகரங்களிலும் கானானியர் வாழ்ந்து வந்தனர். மனாசே கோத்திரத்தினரால் அந்த ஜனங்களை நகரங் களிலிருந்து வெளியேற்ற முடியவில்லை. எனவே கானானியர் அங்கே தங்கினார்கள். அவர்கள் தங்கள் வீடுகளை விட்டு வெளியேற மறுத்தனர். 28பின்னர் இஸ்ர
வேலர் பலமடைந்தனர். தங்களுக்கு அடிமை களாக உழைக்குமாறு கானானியரை வற் புறுத்தினார்கள். ஆனால் எல்லாக் கானானி யரையும் தங்கள் நிலத்தை விட்டுப் போகும்படி செய்ய இஸ்ரவேலரால் முடிய வில்லை.
29எப்பிராயீம் கோத்திரத்தினருக்கும் இவ் விதமாகவே நிகழ்ந்தது. கேசேரில் வாழ்ந்து கொண்டிருந்த கானானியரை அத்தேசத்தை விட்டு வெளியேற்ற எப்பிராயீம் ஜனங் களால் முடியவில்லை. எப்பிராயீம் ஜனங்

---

**என்னை ஆசீர்வதியுங்கள்** அல்லது, “தயவு செய்து என்னை உபசரி” அல்லது “ஒரு தண்ணீரின் நீரோத்தை எனக்கு கொடு.”

**ஓர்மா** இந்த பெயரின் அர்த்தம் “முழுவதுமாக அழிக்கப்பட்டுவிட்டது” என்பதாகும்.

**ஏனாக்கின் மூன்று மகன்கள்** மேலே பத்தாவது வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள சேஷாய், அகிமான், மற்றும் தல்மாய்.

களோடு கேசேரில் கானானியரும் சேர்ந்து
வாழ்ந்தனர்.
30அதுவே செபுலோன் கோத்திரத்தின
ருக்கும் நிகழ்ந்தது. கித்ரோன், நகலோல்
நகரங்களிலும் கானானியர் சிலர்
வாழ்ந்தனர். செபுலோன் ஜனங்கள் அந்த
ஜனங்களைத் தேசத்தை விட்டுச் செல்லு
மாறு வற்புறுத்தவில்லை. அக்கானானியர்
செபுலோன் ஜனங்களோடு தங்கி வாழ்ந்தனர்.
ஆனால் செபுலோன் ஜனங்கள் அவர்களைத்
தங்களுக்கு அடிமைகளாக உழைக்கும்படி
செய்தார்கள்.
31அவ்வாறே ஆசேர் கோத்திரத்தினருக்கும்
நிகழ்ந்தது. அக்கோ, சீதோன், அக்லாப்,
அக்சீப், எல்பா, ஆப்பீக், ரேகோப் ஆகிய
நகரங்களிலுள்ள ஜனங்கள் வெளியேறுமாறு
ஆசேர் ஜனங்கள் துரத்தவில்லை. 32ஆசேர்
ஜனங்கள் கானானியரை வெளியேற்ற
வில்லை. எனவே கானானியர் ஆசேர்
ஜனங்களோடு சேர்ந்து தொடர்ந்து
வாழ்ந்தனர்.
33நப்தலி கோத்திரத்தினர் மத்தியிலும்
அவ்வாறே நிகழ்ந்தது. நப்தலியின் ஜனங்கள்
பெத்ஷிமேஸ், பெத்தானாத் நகரங்களை
விட்டு அங்கிருந்த ஜனங்களை வெளியேற்ற
வில்லை. எனவே அந்த ஜனங்கள் அந்நகரங்
களில் நப்தலி ஜனங்களோடு சேர்ந்து
வாழ்ந்தனர். அந்தக் கானானியர் நப்தலி
ஜனங்களுக்கு அடிமைகளாகப் பணிபுரிந்த
னர்.
34தாண் ஜனங்கள் மலைநாட்டில்
வசிக்கும்படியான நிலையை எமோரியர்
உண்டு பண்ணினார்கள். பள்ளத்தாக்கில்
வாழ்வதற்கு எமோரியர் அனுமதிக்காததால்
அவர்கள் மலைகளில் வாழவேண்டியதா
யிற்று. 35ஏரேஸ் மலை, ஆயலோன், சால்பீம்
ஆகியவற்றில் எமோரியர் வாழ முடிவெடுத்த
னர். பின் யோசேப்பு கோத்திரத்தார்
பலத்தில் பெருகினார்கள். அப்போது அவர்
கள் எமோரியரை அடிமைகளாகப் பணி
யாற்றுமாறு செய்தனர். 36ஸ்கார்பியன்
கணவாய் வழியிலிருந்து சேலா வரைக்கும்,
சேலாவைத் தாண்டியுள்ள மலை நாடுகள்
வரைக்கும், எமோரியரின் தேசம் பரவி
இருந்தது.

### போகீமில் கர்த்தருடைய தூதன்

2 கில்கால் நகரத்திலிருந்து கர்த்தருடைய
தூதன் போகீம் நகரத்திற்குச் சென்றான்.
தூதன் கர்த்தரிடமிருந்து ஒரு செய்தியை
இஸ்ரவேலருக்குக் கூறினான். இதுவே அந்த
செய்தி: “நான் உங்களை எகிப்திலிருந்து
வெளியே கொண்டு வந்தேன். உங்கள்
முற்பிதாக்களுக்குக் கொடுப்பதாக வாக்க
ளித்த தேசத்திற்கு உங்களை வழிநடத்தி
னேன். உங்களோடு செய்த உடன்
படிக்கையை ஒருபோதும் மீறமாட்டேன்
என்று உங்களுக்குக் கூறினேன். 2ஆனால்
அதற்குப் பதிலாக, நீங்கள் அந்த நிலத்தில்
வாழும் ஜனங்களோடு எந்த ஒப்பந்தமும்
செய்யக்கூடாது. அவர்களின் பலிபீடங்களை
நீங்கள் அழிக்க வேண்டும் என்று நான்
உங்களுக்குச் சொல்லியிருந்தேன். நீங்கள்
அதற்குக் கீழ்ப்படியவில்லை!
3“இப்போது நான் உங்களுக்கு இதைக்
கூறுகிறேன், ‘இவ்விடத்தை விட்டுப்
போகும்படியாக அங்குள்ள ஜனங்களை
இனிமேலும் நான் வற்புறுத்த மாட்டேன்.
இந்த ஜனங்கள் எப்போதும் உங்களுக்குப்
பிரச்சனையாய் இருப்பார்கள். அவர்கள்
உங்களுக்கு ஒரு கண்ணியைப் போன்றி
ருப்பார்கள். உங்களைப் பிடிப்பதற்கு விரிக்
கப்படும் வலையைப் போன்று அவர்களின்
பொய்த் தெய்வங்கள் அமைவார்கள்.’”
4கர்த்தரிடமிருந்து இந்தச் செய்தியைத்
தூதன் இஸ்ரவேலருக்குக் கூறியபின், ஜனங்
கள் உரத்தக் குரலில் அழுதனர். 5அவர்கள்
அங்கே அழுதபடியால், அதனைப் போகீம்*
என்று அழைத்தார்கள். போகீமில் இஸ்ர
வேலர் கர்த்தருக்குப் பலிகளைச் செலுத்தி
னார்கள்.

### கீழ்ப்படியாமையும் தோல்வியும்

6பின் யோசுவா ஜனங்களை வீட்டிற்குப்
போகச் சொன்னான். எனவே ஒவ்வொரு
கோத்திரத்தினரும் தேசத்தில் அவரவருக்
குரிய பகுதியை வாழ்வதற்காக எடுத்துக்
கொள்ளச் சென்றனர். 7யோசுவா உயிரோடி
ருக்கும்வரை இஸ்ரவேலர் கர்த்தரைச் சேவித்
தனர். யோசுவா மரித்தபின்னரும் மூத்த
தலைவர்கள் வாழ்ந்த காலத்தில் அவர்கள்
கர்த்தரைத் தொடர்ந்து சேவித்தனர்.
இஸ்ரவேல் ஜனங்களுக்காகக் கர்த்தர் செய்த
எல்லா மகத்தான செயல்களையும் இந்த
மூத்த மனிதர்கள் பார்த்திருந்தார்கள். 8நூனின்
மகனும், கர்த்தருடைய தாசனுமாகிய
யோசுவா 110 வயதான போது மரணமடைந்
தான். 9இஸ்ரவேலர் யோசுவாவை
அவனுக்குக் கொடுத்திருந்த நிலத்திலேயே
அடக்கம் செய்தனர். அது காயாஸ் மலைக்கு
வடக்கே, எப்பிராயீம் மலை நாட்டில்,
திம்னாத் ஏரேஸ் என்ற இடத்தில் இருந்தது.
10அந்தத் தலைமுறையினர் மரித்தபின்,
அடுத்த தலைமுறையினர் வளர்ந்து வந்தனர்.
புதிய தலைமுறையினர் கர்த்தரைக் குறித்தும்
அவர் இஸ்ரவேலருக்குச் செய்தவற்றைக்
குறித்தும் அறிந்திருக்கவில்லை. 11எனவே
இஸ்ரவேலர் தீயவற்றைச் செய்து பொய்
தேவனான பாகாலை* சேவிக்கத் தொடங்

---

**போகீம்** இந்த பெயரின் அர்த்தம் “அழுகின்ற ஜனங்கள்” என்பதாகும்.

**பாகால்** கானானிய ஜனங்கள் இந்த பொய்யான தெய்வம் மழையும் காற்றும் கொண்டு வருவான் என நம்பினார்கள். மேலும் அவர்கள் நிலத்தை நல்ல தானியத்தில் விளையச் செய்கிறவனும் அவன்தான் என எண்ணினார்கள்.

*கினார்கள். ஜனங்கள் இந்த தீயகாரியத்தைச்
செய்வதைக் கர்த்தர் கண்டார். 12கர்த்தர்
இஸ்ரவேலரை எகிப்திலிருந்து வெளியே
அழைத்து வந்திருந்தார். இந்த ஜனங்களின்
முற்பிதாக்கள் கர்த்தரை ஆராதித்தனர்.
ஆனால் இஸ்ரவேலரோ கர்த்தரைப் பின்
பற்றுவதை விட்டு விலகி, தங்களைச்
சுற்றிலும் வாழ்ந்த ஜனங்களின் பொய்த்
தெய்வங்களை தொழுதுகொள்ள ஆரம்பித்
தனர். அது கர்த்தரை கோபத்திற்குள்ளாக்
கிற்று. 13இஸ்ரவேலர் கர்த்தரை
ஆராதிப்பதை விட்டு விட்டுப் பாகாலையும்
அஸ்த ரோத்தையும்* தொழுதுகொள்ளத்
தொடங்கி னார்கள்,*

*14கர்த்தர் இஸ்ரவேலரிடம் கோபங்
கொண்டார். பகைவர்கள் இஸ்ரவேலரை
எதிர்த்து அவர்களுடைய உடைமைகளைக்
கைப்பற்றிக்கொள்ள கர்த்தர் அனுமதித்தார்.
பகைவர்களிடமிருந்து தங்களைக் காப்
பாற்றிக்கொள்ள இஸ்ரவேலரால் முடிய
வில்லை. 15இஸ்ரவேலர் போருக்குச் சென்ற
போதெல்லாம், தோல்வியே கண்டனர்.
கர்த்தர் அவர்களோடு இல்லாதபடியால்
அவர்கள் தோற்றனர். தங்களைச் சுற்றிலும்
வாழ்கின்ற ஜனங்களின் பொய்த் தெய்வங்
களைத் தொழுதால் அவர்கள் தோற்று
விடுவார்கள் என்று கர்த்தர் அவர்களை
ஏற்கெனவே எச்சரித்திருந்தார். இஸ்ரவேலர்
மிகவும் துன்புற்றார்கள்.*

*16பிறகு கர்த்தர் நியாயாதிபதிகள் என்று
அழைக்கப்பட்ட தலைவர்களைத் தேர்ந்
தெடுத்தார். இஸ்ரவேலரின் உடைமைகளைக்
கைப்பற்றிக் கொண்ட பகைவர்களிடமிருந்து
அவர்களை இந்தத் தலைவர்கள் மீட்டார்கள்.
17ஆனால் நியாயாதிபதிகளின் வார்த்தைக்கு
இஸ்ரவேலர்கள் கட்டுப்படவில்லை. அவர்
கள் தேவனுக்கு உண்மையாக இருக்க
வில்லை. அவர்கள் பிற தெய்வங்களைப்
பின்பற்றினார்கள். கடந்த காலத்தில், இஸ்ர
வேலரின் முற்பிதாக்கள் கர்த்தருடைய
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தனர். இப்
போதோ இஸ்ரவேலர் மனம் மாறியவர்க
ளாய், கர்த்தருக்குக் கீழ்ப்படிவதை நிறுத்தி
னார்கள்.*

*18பலமுறை இஸ்ரவேலருக்குத் தம்
பகைவர்களால் தீங்கு நேர்ந்தது. எனவே
இஸ்ரவேலர் உதவி வேண்டினார்கள். ஒவ்
வொரு முறையும், கர்த்தர் அவர்களுக்காக
மனமிரங்கினார். ஒவ்வொரு முறையும்,
பகைவரிடமிருந்து இஸ்ரவேலரைக் காப்
பாற்ற ஒரு நியாயாதிபதியை அனுப்பினார்.
கர்த்தர் எப்பொழுதும் அந்த நியாயாதிபதிக
ளோடு இருந்தார். எனவே ஒவ்வொரு
முறையும் இஸ்ரவேலர் பகைவர்களிட
மிருந்து காப்பாற்றப்பட்டனர். 19ஆனால்
ஒவ்வொரு நியாயாதிபதியும் மரித்தபோது
இஸ்ரவேலர் மீண்டும் பாவம் செய்து,
பொய்த் தெய்வங்களைத் தொழுதுகொள்ள
ஆரம்பித்தனர். இஸ்ரவேலர் பிடிவாதம் மிக்
கவர்களாக இருந்தார்கள். அவர்கள் தங்கள்
தீய வழிகளை மாற்றிக்கொள்ள மறுத்தனர்.*

*20எனவே கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களி
டம் மிகவும் கோபமடைந்தார், அவர்,
“இத்தேசத்தின் முற்பிதாக்களுடன் நான்
செய்து கொண்ட உடன்படிக்கையை இவர்
கள் மீறினார்கள். இவர்கள் நான் கூறிய
வற்றைக் கேட்டு நடக்கவில்லை. 21எனவே
இனிமேல் நான் பிறரைத் தோற்கடித்து
இஸ்ரவேலருக்கு வழியைச் சரிப்படுத்திக்
கொடுக்க மாட்டேன். யோசுவா மரித்த
போது அந்நிய ஜனங்கள் இந்த தேசத்தி
லேயே இருந்தனர். மேலும் அவர்களை
இந்த தேசத்திலேயே இருக்க விடுவேன்.
22இஸ்ரவேலரைப் பரிசோதிப்பதற்கு அந்த
ஜனங்களைப் பயன்படுத்துவேன். தங்கள்
முற்பிதாக்கள் செய்ததைப்போல இஸ்ரவேலர்
கர்த்தருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படி
கிறார்களா என்பதை நான் பார்ப்பேன்”
என்றார். 23கர்த்தர் அந்த ஜனங்கள் அந்தத்
தேசத்தில் தங்கி வாழ அனுமதித்தார்.
தேசத்தை விட்டு அவர்கள் சீக்கிரமாய்
வெளியேற கர்த்தர் அவர்களை வற்புறுத்த
வில்லை. யோசுவாவின் இராணுவம்
அவர்களைத் தோற்கடிப்பதற்குக் கர்த்தர்
உதவவில்லை.*

*3 1-2இஸ்ரவேலரின் தேசத்தை விட்டுப்
போகும்படி கர்த்தர் பிற நாட்டினரை
வற்புறுத்தவில்லை. கர்த்தர் இஸ்ரவேலரைச்
சோதிக்க விரும்பினார். கானான் தேசத்தை
எடுத்துக்கொள்ள இக்காலத்தில் வாழ்ந்த
இஸ்ரவேலர் எவரும் போர் செய்யவில்லை.
எனவே கர்த்தர் பிறஜனத்தார் அத்தேசத்தில்
வாழ அனுமதித்தார். (ஏற்கனவே போர்
அனுபவமற்ற இஸ்ரவேல் ஜனங்களுக்குப்
போர் முறையைக் கற்பிக்க கர்த்தர் இதைச்
செய்தார்.) கர்த்தர் அந்த தேசத்தில் விட்டு
வைத்த ஜனங்களின் பெயர்கள்: 3பெலிஸ்தி
யரின் ஐந்து அரசர்கள், கானானியர்,
சீதோனின் ஜனங்கள், பாகால் எர்மோன்
மலையிலிருந்து லெபோ ஆமாத் வரைக்கு
முள்ள லீபனோனின் மலைகளில் வாழ்ந்த
ஏவியர்கள் ஆகியோர். 4இஸ்ரவேலரைச்
சோதிப்பதற்கென்று கர்த்தர் இந்த ஜனங்
களை அந்த தேசத்தில் விட்டு வைத்தார்.
மோசேயின் மூலமாக அவர்களின் முற்
பிதாக்களுக்கு கொடுத்த கட்டளைகளுக்கு
இஸ்ரவேலர் கீழ்ப்படிகிறார்களா என்று
பார்க்க கர்த்தர் விரும்பினார்.*

*5கானானியர், ஏத்தியர், எமோரியர்,
பெரிசியர், ஏவியர், எபூசியர் ஆகிய ஜனங்
களோடு இஸ்ரவேலர் வாழ்ந்தனர். 6அந்த*

---

**அஸ்தரோத்** *கானானிய ஜனங்கள் இந்த பொய்யான தேவதை ஜனங்களுக்கு குழந்தைகள் உண்டாக்க முடியும் என்று எண்ணினர். அவள் அவர்களுடைய அன்பு மற்றும் யுத்தத்தின் தேவதையாக இருந்தாள்.*

ஜனங்களின் பெண்களை இஸ்ரவேலர் மணந்துகொள்ள ஆரம்பித்தனர். தங்களது மகள்களை மணந்துகொள்ள அவர்களது ஆண்களையும் அனுமதித்தனர். இஸ்ரவேலர் அந்த ஜனங்களின் தெய்வங்களைத் தொழுதுகொள்ளவும் ஆரம்பித்தனர்.

## முதல் நியாயாதிபதியாகிய ஒத்னியேல்

7 இஸ்ரவேலர் தீயக்காரியங்களில் ஈடுபடு
வதைக் கர்த்தர் கண்டார். இஸ்ரவேலர்
தமது தேவனாகிய கர்த்தரை மறந்து பொய்த்
தெய்வங்களாகிய பாகாலையும், அசேராவை
யும்* தொழத்தொடங்கினர். 8 இஸ்ரவேலர்கள்
மீது கர்த்தர் கோபங்கொண்டார். மெசொ
பொத்தாமியாவின்* அரசனாகிய கூசான்
ரிஷதாயீம் என்பவன் இஸ்ரவேலரைத் தோற்
கடித்து அவர்களை ஆள்வதற்குக் கர்த்தர்
அனுமதித்தார்.அம்மன்னனின் ஆட்சியின்கீழ்
இஸ்ரவேலர் 8 ஆண்டுகள் வாழ்ந்தனர்.
9 ஆனால் இஸ்ரவேலர் கர்த்தரிடம் உதவிக்
காக அழுது வேண்டினார்கள். அவர்களை
மீட்பதற்காக கர்த்தர் ஒரு மனிதனை
அனுப்பினார். அம்மனிதனின் பெயர் ஒத்னி
யேல் அவன் கேனாஸ் என்னும் மனிதனின்
மகன். கேனாஸ் காலேபின் இளைய
சகோதரன். ஒத்னியேல் இஸ்ரவேலரைக்
காப்பாற்றினான். 10 கர்த்தருடைய ஆவி
ஒத்னியேல் மீது வந்தது. அவன் இஸ்ரவே
லருக்கு நியாயாதிபதி ஆனான். ஒத்னியேல்
இஸ்ரவேலரைப் போருக்கு வழிநடத்தினான்.
மெசொப்பொத்தாமியாவின், அரசனாகிய
கூஷான்ரிஷதாயீமை வெல்வதற்குக் கர்த்தர்
ஒத்னியேலுக்கு உதவினார். 11 எனவே
கேனாசின் மகனாகிய ஒத்னியேல் மரிக்கும்
வரைக்கும் 40 ஆண்டுகள் தேசம் அமை
தியாக இருந்தது.

## நியாயாதிபதியாகிய ஏகூத்

12 மீண்டும் இஸ்ரவேலர் தீயகாரியங்களைச்
செய்வதைக் கர்த்தர் கவனித்தார்.
எனவே மோவாபின் அரசனாகிய எக்
லோனுக்கு இஸ்ரவேலரைத் தோற்கடிக்கும்
ஆற்றலை அளித்தார். 13 அம்மோனியரும்,
அமலேக்கியரும் எக்லோனுக்கு உதவினார்
கள். அவர்கள் அவனோடு சேர்ந்து இஸ்ர
வேலரைத் தாக்கி ஈச்சமரங்களின் நகரமாகிய
எரிகோவை விட்டு அவர்கள் போகுமாறு
செய்தனர். 14 மோவாபின் அரசனாகிய
எக்லோனுக்கு இஸ்ரவேலர்கள் 18 ஆண்டுகள்
அடிபணிந்து இருந்தார்கள்.
15 பின் இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தரிடம்
வந்து அழுதார்கள். இஸ்ரவேலரை மீட்பதற்கு
கர்த்தர் ஒரு மனிதனை அனுப்பினார்.
அம்மனிதனின் பெயர் ஏகூத். அவன்
இடதுகைப் பழக்கமுடையவனாயிருந்தான்.
ஏகூத் பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த
கேரா என்பவனின் மகன். மோவாபின்
அரசனாகிய எக்லோனுக்கு கப்பம் செலுத்தி
வருமாறு இஸ்ரவேலர் ஏகூதை அனுப்பி
னார்கள். 16 ஏகூத் தனக்காக ஒரு வாளைச்
செய்து கொண்டான். அது இருபுறமும்
கருக்குள்ளதாகவும் 18 அங்குல நீளமுடைய
தாகவும் இருந்தது. ஏகூத் தன் வலது
தொடையில் வாளைக் கட்டிக்கொண்டு தனது
ஆடைகளினுள் அதை மறைத்துக்
கொண்டான்.
17 இவ்வாறு ஏகூத் மோவாபின் அரசன்
எக்லோனுக்கு கப்பம் கொண்டு வந்தான்.
எக்லோன் பருத்த உடல் உடையவன்.
18 ஏகூத் எக்லோனுக்குக்கப்பம் கொடுத்தபின்,
கப்பம் கொண்டு வந்த மனிதர்களை
ஊருக்குத் திரும்பிச் செல்லுமாறு கூறினான்.
19 கில்காலில் தெய்வங்களின்
சிலைகளிலிருந்த இடத்திலிருந்து எக்லோன்
திரும்பிய பொழுது, ஏகூத் எக்லோனிடம்,
"அரசே, நான் உமக்காக ஒரு இரகசியச்
செய்தி வைத்திருக்கிறேன்" என்றான்.
அரசன், "அமைதியாக இருங்கள்!" என்று
சொல்லி அறையிலிருந்த பணியாட்களை
வெளியே அனுப்பினான். 20 அரசனான
எக்லோனுடன் ஏகூத் சென்றான். கோடைக்
கால அரண்மனையிலுள்ள மேல் அறையில்
எக்லோன் இப்போது தனித்தவனாய் உட்
கார்ந்திருந்தான்.
ஏகூத், "தேவனிடமிருந்து ஒரு செய்தியை
உமக்குக் கொண்டு வந்திருக்கிறேன்" என்
றான். அரசன் சிங்காசனத்திலிருந்து எழுந்து
நின்றான். அவன் ஏகூத்திற்கு மிக அருகில்
இருந்தான். 21 அரசன் சிங்காசனத்திலிருந்து
எழுந்தபோது, ஏகூத் தனது இடது கையை
நீட்டி வலது தொடையில் கட்டப்பட்டிருந்த
வாளை எடுத்து அவ்வாளை அரசனின்
வயிற்றில் செருகினான். 22 வாளின் பிடி
கூட வெளியே தெரியாதபடி வாள் எக்லோ
னின் வயிற்றினுள் நுழைந்தது. அரசனின்
பருத்த உடல் வாளை மறைத்தது. எனவே
ஏகூத் வாளை எக்லோனின் உடம்பிலேயே
விட்டு விட்டான்.
23 ஏகூத் அறையிலிருந்து வெளியே வந்து
கதவுகளை மூடிப் பூட்டி விட்டான். 24 ஏகூத்
புறப்பட்ட சற்று நேரத்தில் வேலையாட்கள்
திரும்பி வந்து, அறையின் கதவுகள்
மூடப்பட்டிருப்பதைக் கண்டனர். அவர்கள்,
"அரசன் கழிவறைக்குப் போயிருக்க
வேண்டும்" என்று எண்ணினார்கள்.
25 எனவே அவர்கள் அதிக நேரம் காத்திருந்த
னர். இறுதியில் அவர்கள் கவலை அடைந்து
கதவுகளைத் திறந்தனர். பணியாட்கள்
உள்ளே நுழைந்தபோது அரசன் மரண
மடைந்து, தரையில் கிடப்பதைப் பார்த்தனர்.

---

**அசேரா** ஒரு முக்கியமான கானானிய தேவதை. ஜனங்கள் அவளை ஏலின் மனைவி அல்லது பாகாலின் பிரியமானவள் எனவும் எண்ணினர்.

**மெசொபொத்தாமிய** டைகிரிஸ் மற்றும் ஐபிராத்து ஆறுகளுக்கு இடையிலுள்ள சிரியாலின் வட பகுதியாகும்.

26*பணியாட்கள், அரசனுக்காகக் காத்தி
ருந்தபோது, ஏகூத்திற்குத் தப்பிச்செல்ல
போதுமான நேரம் இருந்தது. ஏகூத் விக்கிர
கங்கள் இருந்த வழியே கடந்துசென்று
சேயிரா என்னும் இடத்திற்குச் சென்றான்.*
27*சேயிராவை அடைந்ததும், அந்த எப்
பிராயீம் மலைநாடுகளில் எக்காளம்
ஊதினான். இஸ்ரவேலர் அதனைக் கேட்டு,
ஏகூத்தின் பின்செல்ல மலைகளிலிருந்து
இறங்கி வந்தனர்.* 28*ஏகூத் இஸ்ரவேலரிடம்,
"என்னைப் பின்பற்றுங்கள்! நமது பகை
வராகிய மோவாபியரை வெல்வதற்குக்
கர்த்தர் எனக்கு உதவினார்" என்றான்.*

*எனவே இஸ்ரவேலர் ஏகூதைப்
பின்பற்றினார்கள். யோர்தான் நதியை
எளிதாகக் கடக்கக்கூடிய இடங்களுக்
கெல்லாம் ஏகூதைப் பின்பற்றி அவற்றைக்
கைப்பற்றுவதற்காகச் சென்றனர். ஒருவரும்
யோர்தான் நதியைக் கடந்து செல்வதற்கு
இஸ்ரவேல் ஜனங்கள் அனுமதிக்கவில்லை.*
29*மோவாபில் வலிமையும் துணிவும் உள்ள
மனிதர்களில் சுமார்* 10,000 *பேரை இஸ்ர
வேலர் கொன்றனர். மோவாபியரில் ஒரு
வனும் தப்பிச் செல்லவில்லை.* 30*அன்றையதி
னம் இஸ்ரவேலர் மோவாபியரை ஆளத்
தொடங்கினார்கள். அத்தேசத்தில்* 80 *ஆண்டு
கள் அமைதி நிலவிற்று.*

### நியாயாதிபதியாகிய சம்கார்

31*ஏகூத் இஸ்ரவேலரை மீட்டுக் காத்த
பின்பு, மற்றொரு மனிதன் இஸ்ரவேலரைக்
காத்தான். அவன் ஆனாத்தின்* மகனாகிய
சம்கார்.* 600 *பெலிஸ்தியர்களைச் சம்கார்
தாற்றுக் கோலால் கொன்றான்.*

### பெண் நியாயாதிபதியும், தீர்க்கதரிசியுமான தெபோராள்

4 *ஏகூத் மரித்த பின்பு, தீயவை எனக்
கர்த்தரால் குறிக்கப்பட்டச் செயல்களை
மீண்டும் ஜனங்கள் செய்ய ஆரம்பித்தனர்.*
2*எனவே கர்த்தர் கானானின் அரசனாகிய
யாபீன் என்பவன் இஸ்ரவேலரைத் தோற்
கடிக்க அனுமதித்தார். யாபீன் ஆத்சோர்
பட்டணத்தில் ஆண்டு வந்தான். யாபீனின்
சேனைக்குச் சிசெரா என்பவன் தலை
வனாக இருந்தான். அரோசேத் ஆகோயிம்
என்ற நகரில் சிசெரா வசித்து வந்தான்.*
3*சிசெராவிற்கு* 900 *இரும்பு இரதங்கள்
இருந்தன,* 20 *ஆண்டுகள் அவன் இஸ்ர
வேலரைக் கொடுமையாக ஆண்டுவந்தான்.
எனவே அவர்கள் கர்த்தரிடம் முறை
யிட்டனர்.*

4*அங்கு தெபோராள் என்ற பெண்
தீர்க்கத்தரிசி இருந்தாள். அவள் லபிதோத்தின்
மனைவி. அவள் அக்காலத்தில் இஸ்ர
வேலின் பெண் தீர்க்கத்தரிசியாக இருந்தாள்.*
5*ஒருநாள், தன் பேரீச்சமரத்தின் கீழ் தெபோ
ராள் உட்கார்ந்திருந்தாள். எப்பிராயீம்
மலைநாட்டில் ராமா, பெத்தேல் ஆகிய
நகரங்களின் நடுவே அம்மரம் இருந்தது.
சிசெராவை என்ன செய்வதென்று
அவளிடம் கேட்டறிவதற்காக இஸ்ரவேலர்
கூடி வந்தனர்.* 6*தெபோராள் பாராக்
என்பவன் தன்னை வந்து சந்திக்குமாறு
அவனுக்கு செய்தியை சொல்லி அனுப்
பினாள். பாராக் அபினோகாமின் மகன்.
பாராக் நப்தலியிலுள்ள, கேதேஷ் நகரில்
வசித்தான். தெபோராள் பாராக்கை நோக்கி,
"இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்
உனக்குக் கட்டளையிட்டு: 'நப்தலி, செபு
லோன் கோத்திரத்தில் இருந்து* 10,000
*ஆட்களைத் திரட்டு. அவர்களைத் தாபோர்
மலைக்கு வழிநடத்து.* 7*நான் யாபீனின்
படைத்தலைவனாகிய சிசெராவை உன்
னிடம் வரச்செய்வேன். சிசெராவையும்,
அவனது இரதங்களையும், படைகளையும்
கீசோன் நதிக்கு* வரச்செய்வேன். அங்கு
சிசெராவைத் தோற்கடிப்பதற்கு உனக்கு
உதவுவேன்' என்றார்" என்று சொன்னாள்.*
8*பாராக் தெபோராவிடம், "நீ என்னோடு
வருவதாக இருந்தால் நான் போய், இதைச்
செய்வேன். நீ என்னோடு வராவிட்டால்
நான் போகமாட்டேன்" என்றான்.*
9*அதற்கு தெபோராள், "கண்டிப்பாக நான்
உன்னோடு வருவேன், ஆனால் உன்
மனப்பான்மையால் சிசெரா தோற்கடிக்கப்
படும்போது உனக்கு அந்தப் புகழ் சேராது.
கர்த்தர் ஒரு பெண்ணைச் சிசெராவைத்
தோற்கடிக்க அனுமதிப்பார்" என்று பதிலு
ரைத்தாள்.*

*எனவே, கேதேஸ் நகரத்திற்குத் தெபோ
ராள் பாராக்குடன் சென்றாள்.* 10*கேதேஷ்
நகரத்தில் பாராக் நப்தலி, செபுலோன்
கோத்திரத்தினரைவரவழைத்தான். அக்கோத்
திரத்திலிருந்து தன்னைப் பின்தொடர்ந்து
செல்வதற்கு* 10,000 *ஆட்களைத் தெரிந்து
கொண்டான். தெபோராளும் பாராக்கோடு
சென்றாள்.*
11*கேனியரில் ஒருவனான ஏபேர்
என்பவன் இருந்தான், அவன் கேனியரை
விட்டுப் பிரிந்து சென்றான். (கேனியர்
மோசேயின் மாமனாரான ஓபாபின்
சந்ததியார்.) கேதேஸ் நகருக்கருகில் சானா
னீம் என்னுமிடத்திலுள்ள கர்வாலி மரத்தி
னருகே அவன் தங்கியிருந்தான்.*
12*அபினோகாமின் மகனாகிய பாராக்
தாபோர் மலையிலிருக்கிறான் என்று சிலர்*

---

**ஆனாத்** *கானானிய யுத்த தேவதை. இங்கு இந்த பராகரமம் சம்காரின் தந்தை அல்லது தாய் அல்லது "இது பெரிய யுத்தவீரனாகிய சம்கார்" அல்லது "ஏனாத் என்ற ஊரிலிருந்து வரும் சம்கார்" எனப் பொருள்படும்.*

**கீசோன் நதி** *தாபோர் மலையிலிருந்து* 10 *மைல் தொலைவில்லுள்ள ஒரு நதி.*

சீசெராவுக்குக் கூறினார்கள். 13எனவே
சிசெரா அவனது 900 இரும்பு ரதங்களையும்
ஒருமித்து வரச்செய்ததுடன், தனது போர்
வீரர்களையும் ஒன்று திரட்டினான். அவர்கள்
அரோசேத் நகரத்திலிருந்து கீசோன் பள்ளத்
தாக்குவரைக்கும் அணிவகுத்துச் சென்றார்
கள்.
14அப்போது தெபோராள் பாராக்கிடம்,
“இன்று சிசெராவைத் தோற்கடிக்க கர்த்தர்
உனக்கு உதவுவார். கர்த்தர் உனக்காக
வழியை ஏற்கெனவே ஆயத்தமாக வைத்தி
ருக்கிறார் என்பதை அறிவாய்” என்றாள்.
எனவே பாராக் 10,000 ஆட்களையும்
தாபோர் மலையிலிருந்து கீழே வழிநடத்திச்
சென்றான். 15பாராக்கும் அவனது ஆட்களும்
சிசெராவைத் தாக்கினார்கள். யுத்தத்தின்
போது, கர்த்தர் சிசெராவையும் அவனது
படைகளையும், இரதங்களையும் குழப்பம
டையச் செய்தார். அவர்களுக்கு என்ன
செய்வதெனத் தெரியவில்லை. பாராக்கும்
அவனது ஆட்களும் சிசெராவின் படையைத்
தோற்கடித்தனர். சிசெரா அவனது இரத்தை
விட்டுக் கீழிறங்கி ஓட ஆரம்பித்தான்.
16பாராக் சிசெராவின் படையோடு போரிடு
வதைத் தொடர்ந்தான். பாராக்கும் அவனது
ஆட்களும் சிசெராவின் படைகளை
அரோசேத் வரைக்கும் துரத்திச் சென்று
சிசெராவின் ஆட்களை வாளால் கொன்
றார்கள். சிசெராவின் ஆட்களில் ஒருவனும்
உயிரோடு விடப்படவில்லை.
17ஆனால் சிசெரா தப்பி ஓடிவிட்டான்.
அவன் ஏபேர் என்பவனின் மனைவி
யாகேல் இருந்த கூடாரத்தை வந்தடைந்தான்.
ஏபேர் கேனியர்களில் ஒருவன். ஆசோரின்
அரசனாகிய யாபீனோடு ஏபோரின்
குடும்பம் அமைதியான உறவு கொண்டிருந்
தது, எனவே சிசெரா யாகேலின்
கூடாரத்திற்கு ஓடினான். 18யாகேல் சிசெரா
வருவதைக் கண்டாள். எனவே அவனைச்
சந்திப்பதற்காக வெளியே வந்தாள். யாகேல்
சிசெராவைப் பார்த்து, “ஐயா கூடாரத்திற்கு
உள்ளே வாருங்கள், அஞ்சவேண்டாம்.
வாருங்கள்” என்றாள். எனவே சிசெரா
யாகேலின் கூடாரத்திற்குள் சென்றான்.
அவள் அவனை ஒரு விரிப்பால் மூடினாள்.
19சிசெரா யாகேலிடம், “நான் தாகமாயி
ருக்கிறேன். குடிப்பதற்குக் கொஞ்சம் தண்
ணீர் கொடு” என்று கேட்டான். மிருகத்தின்
தோலினாலாகிய பை ஒன்று யாகேலிடம்
இருந்தது. அவள் அதில் பால் வைத்திருந்
தாள். யாகேல் சிசெராவுக்குக் குடிப்பதற்கு
அந்தப் பாலைக் கொடுத்தாள். பின்
சிசெராவைத் துணியால் மூடிவிட்டாள்.
20பின் சிசெரா யாகேலை நோக்கி,
“கூடாரத்தின் வாசலில் நின்றுகொள். யாரே
னும் வந்து உன்னிடம், ‘உள்ளே யாராவது
இருக்கிறார்களா?’ என்று கேட்டால்,
‘இல்லை’ என்று பதில் சொல்” என்றான்.
21ஆனால் யாகேல் ஒரு கூடார ஆணியை
யும் சுத்தியலையும் எடுத்தாள். சத்தமெழுப்
பாது சிசெராவிடம் சென்றாள். சிசெரா
மிகவும் களைப்புற்றிருந்ததால், அயர்ந்து
தூங்கிக் கொண்டிருந்தான் யாகேல் கூடார
ஆணியைச் சிசெராவின் தலையின் ஒரு
பக்கத்தில் வைத்துச் சுத்தியால் ஓங்கி
அடித்தாள். கூடார ஆணி சிசெராவின்
தலைப்பக்கத்தில் புகுந்துநிலத்தினுள் இறங்கி
யது! சிசெரா மரித்துப்போனான்.
22அப்போது பாராக் சிசெராவைத் தேடி
யபடி யாகேலின் கூடாரத்தை வந்தடைந்
தான். பாராக்கைச் சந்திப்பதற்கு யாகேல்
வெளியே வந்து, “உள்ளே வாருங்கள், நீங்கள்
தேடும் மனிதனை நான் காட்டுகி
றேன்” என்றாள். பாராக் யாகேலோடு
கூடாரத்தினுள் நுழைந்தான். தலைப்பக்கத்
தில் ஆணி செருகப்பட்ட நிலையில் நிலத்தில்
மரித்துக் கிடந்த சிசெராவைப் பாராக்
பார்த்தான்.
23அன்று இஸ்ரவேலருக்காகத் தேவன்
கானானிய அரசனாகிய யாபீனைத் தோற்க
டித்தார். 24அவர்கள் கானானிய அரசனான
யாபீனைத் தோற்கடிக்கும் மட்டும் பெலன்
பெற்று அவனை அழித்தார்கள்.

### தெபோராளின் பாடல்

5 சிசெராவை இஸ்ரவேலர் தோற்கடித்த
நாளில், தெபோராளும், அபினோகாமின்
மகனாகிய பாராக்கும் பாடிய பாடல் இது:

2 இஸ்ரவேலர் போருக்குத் தயாராயினர்.
அவர்கள் போருக்குச் செல்ல
தாமாகவே முன் வந்தனர்!
கர்த்தரை வாழ்த்துங்கள்!
3 அரசர்களே, கேளுங்கள்.
ஆளுவோரே, கேளுங்கள்.
நான் பாடுவேன்.
நான் கர்த்தருக்குப் பாடுவேன்.
இஸ்ரவேல் ஜனங்களின் தேவனாகிய
கர்த்தருக்குப் பாட்டு இசைப்பேன்.
4 கர்த்தாவே, முன்பு சேயீரிலிருந்து *
வந்தீர்.
ஏதோமிலிருந்து * அணிவகுத்துச்
சென்றீர்.
நீர் அணிவகுத்துச் சென்றபோது,
பூமி அதிர்ந்தது.
வானம் பொழிந்தது.
மேகம் தண்ணீர் தந்தது.
5 மலைகள் கர்த்தருக்குமுன் நடுங்கின,
சீனாய் மலையின், இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தர்
முன்னிலையில் நடுங்கின.

---

**சேயீர்** ஏதோம் என்னும் இடத்திலுள்ள மற்றொரு பெயர்.

**ஏதோம்** இந்த இடமானது இஸ்ரவேலுக்கு தெற்கு மற்றும் கிழக்கு பகுதியாகும்.

6 ஆனாத்தின் மகனாகிய சம்காரின்
காலத்தில் யாகேலின் நாட்களில்
பெருஞ்சாலைகள் வெறுமையாய்
கிடந்தன.
வணிகரும்* வழிநடப்போரும்
பக்கவழியாய்ச் சென்றார்கள்.
7 அங்கு வீரர்கள் இல்லை.
தெபோராள், நீ வரும் வரைக்கும்
அங்கு வீரர்கள் இல்லை.
இஸ்ரவேலின் தாயாக நீ திகழும்
வரைக்கும் இஸ்ரவேலில் வீரர்கள்
இருந்ததில்லை.
8 நகரத்தின் வாசல்களில் போர்
புரிவதற்கே தேவன் புது
தலைவர்களைத் தேர்ந்தெடுத்தார்.
இஸ்ரவேலின் 40,000 வீரர்களில்
ஒருவனிடத்திலும் கேடயத்தையோ,
ஈட்டியையோ யாரும்
காணவில்லை.
9 இஸ்ரவேலின் படைத்தலைவர்களை
என் நெஞ்சம் நினைக்கிறது.
அவர்கள் போருக்குத் தாமாகவே
முன்வந்தார்கள்.
கர்த்தரை வாழ்த்துங்கள்!
10 வெள்ளைக் கழுதைகளின்மேல்
சவாரி செய்வோரும்,
சேண விரிப்பில் அமர்ந்திருப்போரும்,
பாதை வழியே நடப்போரும்
கவனமாய்க் கேளுங்கள்!

11 கால்நடைகள் தண்ணீர் பருகும்
இடங்களிலே,
கைத்தாளங்களின் இசையைக்
கேட்கிறோம்.
கர்த்தரும், அவரது போர் வீரரும்
பெற்ற வெற்றிகளை ஜனங்கள்
பாடுகின்றனர்.
நகர வாசல்களினருகே
கர்த்தருடைய ஜனங்கள்
போரிட்டனர்.
அவர்களே வென்றனர்!
12 எழுக, எழுக, தெபோராளே!
எழுக, எழுக, பாடலைப் பாடுக!
எழுந்திரு, பாராக்!
அபினோகாமின் மகனே,
உன் பகைவரை நீ மேற்கொள்!
13 இப்போதும், மீதியாயிருக்கும்
ஜனங்களே,
தலைவர்களிடம் செல்லுங்கள்.
கர்த்தருடைய ஜனங்களே!
எனக்காக வீரரோடு செல்லுங்கள்!
14 எப்பிராயீமின் மனிதர்கள்
அமலேக்கின் மலைநாட்டினின்று*
வந்தனர்.
பென்யமீனே, அவர்கள் உன்னையும்
உன் ஜனங்களையும்
பின் தொடர்ந்தனர்.
மாகீரின் குடும்பத்தில்
படைத்தலைவர்கள் இருந்தனர்.
வெண்கலக் கைத்தடியேந்திய
தலைவர்கள் செபுலோன்
கோத்திரத்திலிருந்து வந்தனர்.
15 இசக்காரின் தலைவர்கள்
தெபோராளோடிருந்தனர்.
இசக்காரின் குடும்பம் பாராக்கிற்கு
உண்மையாய் நடந்தது.
பள்ளத்தாக்கிற்கு அவர்கள்
கால்நடையாய் நடந்தனர்.
ரூபனே உனது படைகளின்
கூட்டத்தில் துணிவுமிக்க வீரர்கள்
பலருண்டு.
16 தொழுவங்களின் சுவரருகே
நீ எதற்காக அமர்ந்திருக்கிறாய்?
ரூபனின் துணிவான வீரர்கள்
போரைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்தனர்.
அவர்கள் வீட்டில் அமர்ந்து
மந்தைகளுக்காய் இசைத்த
இசையைக் கேட்டுக்
கொண்டிருந்தனர்.
17 யோர்தான் நதியின் மறுகரையில்
கீலேயாத்தின் ஜனங்கள்
தம் முகாம்களில் தங்கி இருந்தனர்.
தாணின் ஜனங்களே,
நீங்கள் கப்பல்களில்
தங்கியிருந்ததேன்?
ஆசேர் குடும்பம் கடற்கரையில்
பாதுகாப்பான துறைமுகத்தில்
முகாமிட்டு தங்கினர்.
18 ஆனால் செபுலோனின் ஆட்களும்,
நப்தலியின் ஆட்களும்
தம் உயிர்களைப் பணயம் வைத்து
மலைகளின் மேல் போரிட்டனர்.
19 அரசர்கள் போரிட வந்தனர்.
கானானின் அரசர்கள் தானாக்
நகரத்தில் மெகிதோவின் கரையில்
போரிட்டனர்.
ஆனால் பொக்கிஷத்தைத்
தங்கள் நாட்டிற்கு எடுத்துச்
செல்லவில்லை!
20 வானிலிருந்து நட்சத்திரங்கள்
போரிட்டன.
அவைகள் வான வீதியிலிருந்து
சிசெராவோடு போர்செய்தன.
21 பழைய நதியாகிய கீசோன்,
சிசெராவின் ஆட்களை
அடித்துச் சென்றது.
எனது ஆத்மாவே,

---

**வணிகர்** வியாபாரிகளின் குழுக்கள். வழக்கமாக பல வியாபாரிகள் ஒன்றாக சேர்ந்து கழுதை அல்லது ஒட்டகங்களின் மேல் தங்கள் பொருட்களை ஏற்றுக்கொண்டு பயணம் செய்தார்கள்.

**அமலேக்கின் மலைநாடு** எப்பிராயீம் கோத்திரத்தார் வாழ்ந்த பகுதி. நியா. 12:15.

ஆற்றலோடு புறப்படு!
22 குதிரையின் குளம்புகள் பூமியில்
மோதின.
சிசெராவின் பலமான குதிரைகள்
ஓடின,
மேலும் ஓடின.
23 கர்த்தருடைய தூதன்,
"மேரோஸ் நகரைச் சபியுங்கள்.
அதன் குடிகளைச் சபியுங்கள்!
கர்த்தருக்கு உதவுவதற்காக
அவர்கள் வீரரோடு சேரவில்லை"
என்றான்.
24 கேனியனாகிய ஏபேரின் மனைவி
யாகேல்.
அவள் பெண்களெல்லாரிலும்
ஆசீர்வதிக்கப்பட்டவள்.
25 சிசெரா தண்ணீரைக் கேட்டான்.
யாகேல் பாலைக் கொடுத்தாள்.
அரசனுக்கான கிண்ணத்தில்
அவள் பாலாடையைக் கொண்டு
வந்தாள்.
26 யாகேல் தன் கையில்
ஒரு கூடார ஆணியை எடுத்தாள்.
வேலையாள் பயன்படுத்தும் சுத்தியை
அவள் வலதுகையில் பிடித்தாள்.
பின் சிசெராவின் தலைமீது
சுத்தியால் அடித்தாள்!
அவன் நெற்றிப் பொட்டின்
உள்ளே துளையிட்டாள்!
27 அவன் யாகேலின் பாதங்களிடையே
வீழ்ந்தான்.
அவன் மடிந்தான்.
அங்கு கிடந்தான்.
அவன் அவள் பாதங்களினிடயே
வீழ்ந்தான்.
அவன் மடிந்தான்.
சிசெரா வீழ்ந்த இடத்திலேயே
மடிந்தான்.
அங்கு மரித்து கிடந்தான்!
28 சிசெராவின் தாய்
ஜன்னலினூடே பார்த்து அழுதாள்.
சிசெராவின் தாய்
திரைச் சீலைகளினூடே பார்த்தாள்.
"ஏன் சிசெராவின் இரதம்
தாமதிக்கிறது?
அவன் இரத ஒலியை நான்
கேளாதது
ஏன்?" என்று புலம்பினாள்.
29 அவளின் புத்திசாலியான
வேலைக்காரப் பெண் அவளுக்குப்
பதில் அளித்தாள்.
ஆம், பணிப்பெண் அவளுக்குப்
பதில் சொன்னாள்.
30 "அவர்கள் போரில்
வென்றிருப்பார்கள்.
தோற்கடித்த ஜனங்களிடமிருந்து
பொருள்களை எடுத்துக்
கொண்டிருக்கிறார்கள்.
அவற்றைத் தம்மிடையே
பங்கிட்டுக் கொண்டிருக்கிறார்கள்!
ஒவ்வொரு வீரனும் ஓரிரு
பெண்களை எடுத்துக்கொள்கிறான்.
சிசெரா சாயம் தீர்த்த ஆடையைக்
கண்டெடுத்தான்.
அதுவே அவன் முடிவாயிற்று!
சிசெரா அழகான ஆடை ஒன்றைக்
கண்டெடுத்தான்.
வெற்றி வேந்தன் சிசெரா
தான் அணிவதற்காக இரண்டு
ஆடைகளையும்
தேர்ந்தெடுத்திருக்கலாம்."
31 கர்த்தாவே, உமது பகைவர்கள்
அனைவரும் இவ்வாறு மடியட்டும்.
உமது அன்பான ஜனங்கள் உதய
சூரியனைப்போல
வலிமை பெறட்டும்!

இதன் பின்பு 40 ஆண்டுக் காலத்திற்கு தேசத்தில் அமைதி நிலவியது.

### மீதியானியர் இஸ்ரவேலரிடம் போரிடுதல்

6 தீயவை என்று கர்த்தர் கூறிய காரியங்
களை மீண்டும் இஸ்ரவேலர் செய்தனர்.
இஸ்ரவேலரை மீதியானியர் 7 ஆண்டுகள்
தோற்கடிப்பதற்குக் கர்த்தர் அனுமதித்தார்.
2 மீதியானியர் மிக வல்லமையுடையவர்
களாய் இஸ்ரவேலரைக் கொடுமைப் படுத்தி
னார்கள். எனவே இஸ்ரவேலர், மலைகளில்
ஒளிந்துகொள்வதற்கான இடங்கள் பல
வற்றை அமைத்தனர். பார்க்க இயலாத
இடங்களிலும், குகைகளிலும் இஸ்ரவேலர்
உணவுப் பொருட்களை மறைத்து
வைத்தனர். 3 மீதியானியரும், கிழக்கிலுள்ள
அமலேக்கியரும் வந்து அவர்கள் பயிர்களை
அழித்ததால் இஸ்ரவேலர் அவ்வாறு
செய்தனர். 4 அவர்கள் தேசத்தில் முகாமிட்டுத்
தங்கி, இஸ்ரவேலர் பயிரிட்ட தானியங்களை
அழித்தனர். காசா நகரம் வரைக்கும் உள்ள
நிலங்களில் இஸ்ரவேலர் பயிரிட்ட பயிர்
களை அந்த ஜனங்கள் பாழாக்கினர். இஸ்ர
வேலர் உண்பதற்கு அவர்கள் ஒன்றையும்
விட்டு வைக்கவில்லை. அவர்களது ஆடுகள்,
பசுக்கள், கழுதைகள் ஆகியவற்றையும் அவர்
கள் விட்டு வைக்கவில்லை. 5 மீதியானின்
ஜனங்கள் வந்து தேசத்தில் முகாமிட்டுத்
தங்கினார்கள். அவர்கள் குடும்பத்தினரையும்
அவர்களின் விலங்குகளையும் அழைத்து
வந்தனர். வெட்டுக்கிளிகளின் கூட்டத்தைப்
போல் அவர்கள் மிகுதியாக வந்தனர்.
எண்ணக்கூடாத அளவிற்கு ஜனங்களையும்
ஒட்டகங்களையும் பார்க்க முடிந்தது. அந்த
ஜனங்கள் எல்லோரும் தேசத்திற்குள்
நுழைந்து அதனைப் பாழாக்கினர். 6 மீதியா
னியரின் வருகையால் இஸ்ரவேலர் மிக
ஏழைகளாயினர். எனவே இஸ்ரவேலர்
கர்த்தரிடம் உதவிக்காக வேண்டினார்கள்.

[7]மீதியானியர் எல்லாத் தீயகாரியங்களை
யும் செய்தனர். எனவே இஸ்ரவேலர்
கர்த்தரிடம் உதவிக்காக வேண்டினார்கள்.
[8]எனவே கர்த்தர் ஒரு தீர்க்கதரிசியை
அவர்களிடம் அனுப்பினார். அத்தீர்க்கதரிசி
இஸ்ரவேலரிடம், "இஸ்ரவேலரின் தேவ
னாகிய கர்த்தர் கூறுவது இதுவே: 'நீங்கள்
எகிப்தில் அடிமைகளாயிருந்தீர்கள். நான்
உங்களை விடுவித்து அந்தத் தேசத்திலிருந்து
அழைத்து வந்தேன். [9]நான் எகிப்தின்
பலமுள்ள ஜனங்களிடமிருந்து உங்களை
மீட்டேன். பின்னர் கானானியர் உங்களைத்
துன்புறுத்தினார்கள். நான் மீண்டும்
உங்களைக் காப்பாற்றினேன். அத்தேசத்தில்
இருந்தே அவர்களைப் போகும்படி செய்
தேன். அவர்கள் தேசத்தை நான் உங்க
ளுக்குக் கொடுத்தேன்.' [10]பின் உங்களிடம்,
'நானே உங்கள் தேவனாகிய கர்த்தர்,
எமோரியரின் தேசத்தில் வாழ்வீர்கள்.
ஆனால் அவர்களின் பொய்த்
தெய்வங்களைத் தொழுதுகொள்ளாதீர்கள்'
என்றேன். ஆனால் நீங்கள் எனக்குக்
கீழ்ப்படிய வில்லை" என்றார்.

### கிதியோனைக் கர்த்தருடைய தூதன் சந்தித்தல்

[11]அப்போது கர்த்தருடைய தூதன் கிதி
யோன் என்னும் பெயருள்ளவனிடம் வந்
தான். ஒப்ரா என்னுமிடத்தில் ஒரு கர்வாலி
மரத்தின் கீழே கர்த்தருடைய தூதன் வந்து
உட்கார்ந்தான். அந்த கர்வாலி மரம்
யோவாஸ் என்பவனுக்குச் சொந்தமாயிருந்
தது. யோவாஸ் அபியேசேரின் குடும்பத்
தைச் சேர்ந்தவன். யோவாஸ் என்பவன்
கிதியோனின் தந்தை. திராட்சை ஆலையில்
கிதியோன் கோதுமையை அடித்துக்
கொண்டிருந்தான். கர்த்தருடைய தூதன்,
கிதியோனுக்கருகே உட்கார்ந்தான். மீதியானி
யர் கோதுமையைப் பார்த்துவிடக் கூடா
தென்று கிதியோன் மறைத்துவைக்க முயன்
றான். [12]கர்த்தருடைய தூதன் கிதியோ
னுக்குக் காட்சி தந்து, அவனிடம், "பெரும்
வீரனே! கர்த்தர் உன்னோடிருக்கிறார்!"
என்றான்.
[13]அப்போது கிதியோன், "கர்த்தர் எங்க
ளோடிருந்தால் எங்களுக்கு ஏன் இத்தனைத்
துன்பங்கள் நேருகின்றன? எங்கள் முற்
பிதாக்களுக்கு அவர் அற்புதமானக் காரியங்
களைச் செய்தார் என்று நாங்கள் கேள்விப்
பட்டோம். கர்த்தர், தங்களை எகிப்திலிருந்து
அழைத்துவந்ததாக எங்கள் முற்பிதாக்கள்
கூறினார்கள். ஆனால் கர்த்தர் எங்களை
விட்டுப் பிரிந்துவிட்டார். மீதியானியர் எங்
களைத் தோற்கடிப்பதற்குக் கர்த்தர் அனு
மதித்தார்" என்றான்.
[14]கர்த்தர் கிதியோனைப் பார்த்து, "உனது
வல்லமையைப் பயன்படுத்து, மீதியானியரிட
மிருந்து இஸ்ரவேலரைக் காப்பாற்று. அவர்
களைக் காப்பாற்ற நான் உன்னை அனுப்
புகிறேன்!" என்றார்.
[15]ஆனால் கிதியோன் அவருக்குப் பதி
லாக, "என்னை மன்னித்துவிடுங்கள் ஐயா,
நான் எவ்வாறு இஸ்ரவேலரை காப்பாற்று
வேன். மனாசே கோத்திரத்தில் எங்கள்
குடும்பமே மிகவும் எளியது. எங்கள் குடும்
பத்தில் நான் இளையவன்" என்றான்.
[16]கர்த்தர் கிதியோனிடம், "நான் உன்னோ
டிருக்கிறேன்! எனவே மீதியானியரை நீ
தோற்கடிக்க முடியும்! ஒரே மனிதனை
எதிர்த்துப் போரிடுவது போலவே உனக்குத்
தோன்றும்" என்றார்.
[17]கிதியோன் கர்த்தரிடம், "உமக்கு என்
மேல் கருணை இருந்தால் என்னிடம்
பேசுகிறவர் நீர் தான் என்பதற்கு ஏதேனும்
சான்று காட்டும். [18]இங்கேயே தயவுசெய்து
காத்திரும். நான் திரும்பி வரும்வரை எங்கும்
போகாதிரும். நான் எனது காணிக்கையைக்
கொண்டுவந்து உம் முன் வைக்க அனு
மதியும்" என்றான்.
கர்த்தர், "நீ வரும்வரைக் காத்திருப்பேன்"
என்றார்.
[19]கிதியோன் உள்ளே சென்று, ஒரு
வெள்ளாட்டுக்குட்டியை சமைத்தான். 20
பவுண்டு மாவை எடுத்துப் புளிப்பின்றி
அப்பம் செய்தான். இறைச்சியை ஒரு
கூடையிலும், அது வேகப் பயன்படுத்திய
தண்ணீரை ஒரு பானையிலும் எடுத்துக்
கொண்டான். இறைச்சியையும், இறைச்சியை
வேகவைத்த தண்ணீரையும், புளிப்பற்ற
அப்பத்தையும் கிதியோன் கொண்டு
வந்தான். கர்வாலி மரத்தின் கீழே
அமர்ந்திருந்த கர்த்தருக்கு அந்த உணவைக்
கிதியோன் கொடுத்தான்.
[20]தேவனுடைய தூதன் கிதியோனை
நோக்கி, "இறைச்சியையும், புளிப்பற்ற
அப்பத்தையும் அங்கேயிருக்கும் பாறையில்
வைத்து அதன் மீது தண்ணீரை ஊற்று"
என்றார். கிதியோனும் அவ்வாறே செய்
தான்.
[21]கர்த்தருடைய தூதன் இறைச்சியையும்
அப்பத்தையும் தன் கையில் வைத்திருந்த
கைத்தடியின் முனையால் தொட்டான்.
பாறையிலிருந்து நெருப்பு தோன்றி இறைச்
சியையும், அப்பத்தையும் எரித்து விட்டது!
பின் கர்த்தருடைய தூதனும் மறைந்து
போனான்.
[22]அப்போது கிதியோன் தான்
கர்த்தருடைய தூதனோடு பேசிக்கொண்டி
ருந்ததை உணர்ந்தான். எனவே கிதியோன்,
"சர்வ வல்லமையுள்ள கர்த்தாவே! நான்
கர்த்தருடைய தூதனை நேருக்கு நேராகச்
சந்தித்தேன்!" என்று சத்தமிட்டான்.
[23]ஆனால் கர்த்தர் கிதியோனிடம், "அமை
தியாயிரு! பயப்படாதே! நீ மரிக்க
மாட்டாய்!" என்றார்.

24ஆகையால் கிதியோன் அங்கு தேவனை
ஆராதிப்பதற்கு ஒரு பலிபீடத்தைக் கட்டி
னான். கிதியோன் அப்பலிபீடத்திற்கு “கர்த்
தரே சமாதானம்” என்று பெயரிட்டான்.
ஒப்ரா நகரில் அப்பலிபீடம் இன்றும்
உள்ளது. அபியேசர் குடும்பம் வாழும் இடம்
ஒப்ரா ஆகும்.

### பாகாலின் பலிபீடத்தைக் கிதியோன் அழித்தல்

25அதே இரவில் கர்த்தர் கிதியோனிடம்
பேசினார். கர்த்தர், “உன் தந்தைக்குச்
சொந்தமான ஏழு வயதுள்ள முழுமையாக
வளர்ந்த காளையை எடுத்துக் கொள்.
பாகால் என்னும் பொய்த் தெய்வங்களுக்
கென்று உன் தந்தை அமைத்த பலிபீடம்
ஒன்று உள்ளது. பலிபீடத்தினருகே ஒரு
மரத்தூணும் இருக்கிறது. அசேரா என்னும்
பொய்த் தேவதையை மகிமைப்படுத்து
வதற்காக அத்தூண் அமைக்கப்பட்டது.
காளையால் பாகாலின் பலிபீடத்தை வீழ்த்தி,
அசேராவின் கோவில் தூணை முறித்து
விடு. 26அதன் பிறகு உங்கள் தேவனாகிய
கர்த்தருக்காக முறைப்படி பலிபீடம் கட்டு.
மேடான நிலத்தில் அப்பலிபீடத்தைக் கட்டு.
பின்பு முழுமையாக வளர்ந்த காளையை
அந்தப் பலிபீடத்தில் தகன பலியாகச்
செலுத்து. அசேரா தூணின் விறகை உனது
பலியை எரிப்பதற்குப் பயன்படுத்து”
என்றார்.
27ஆகையால் கிதியோன் தன் வேலை
யாட்களில் 10 பேரை அழைத்துச் சென்று,
தன்னிடம் கர்த்தர் கூறியபடியே செய்தான்.
அவனது குடும்பத்தாரும் நகர ஜனங்களும்
அவன் செய்வதைப் பார்க்கக் கூடும் என்று
அவன் பயந்தான். தன்னிடம் கர்த்தர்
கூறியபடியே கிதியோன் செய்தான். ஆனால்
அதைப் பகலில் செய்யாமல் இரவில்
செய்தான்.
28நகர ஜனங்கள் மறுநாள் காலையில்
விழித்தபோது, பாகாலின் பலிபீடம்
அழிக்கப்பட்டிருப்பதையும், அசேராவின்
தூண் முறிக்கப்பட்டிருப்பதையும் பார்த்தனர்.
முன்னால் பாகாலின் பீடத்தருகே அசேரா
வின் தூண் இருந்த இடத்தில் கிதியோன்
கட்டிய பலிபீடத்தையும், அதில் பலியிடப்
பட்டிருந்த காளையையும் அவர்கள்
கண்டனர்.
29நகர ஜனங்கள் ஒருவரையொருவர்
பார்த்து, “பலிபீடத்தை அழித்தவன் யார்?
அசேராவின் தூணை உடைத்தவன் யார்?
புதிய பலீபீடத்தில் காளையைப் பலி
யிட்டவன் யார்?” என்று கேட்டனர்.
அவர்கள் பல கேள்விகளைக் கேட்டு,
அக்காரியங்களைச் செய்தவன் யார் என்
பதை அறிய விரும்பினார்கள்.
ஒருவன் அவர்களுக்கு, “யோவாஸின்
மகனாகிய கிதியோன் இதனைச் செய்தான்”
என்றான்.
30எனவே, நகர ஜனங்கள் யோவாஸிடம்
வந்தனர். அவர்கள் யோவாஸிடம், “நீ
உனது மகனை வெளியே அழைத்து வா.
அவன் பாகாலின் பலிபீடத்தைத் தரைமட்ட
மாக்கினான். பலிபீடத்தருகிலுள்ள அசேரா
வின் தூணை உடைத்தான். எனவே உன்
மகன் மரிக்க வேண்டும்” என்றனர்.
31தன்னைச் சுற்றிலும் கூடியிருந்த ஜனங்
களைப் பார்த்து யோவாஸ், “நீங்கள் பாகா
லுக்காகப் பரிந்து பேசுகிறீர்களா? பாகாலை
மீண்டும் பாதுகாக்கப் போகிறீர்களா?
பாகாலைச் சார்ந்திருக்கிறவன் எவனோ,
அவன் காலைக்குள் கொல்லப்படக்கடவன்.
பாகால் உண்மையிலேயே பலமுள்ள
தேவனாக இருந்தால் அவனது பலிபீடத்தை
ஒருவன் அழிக்கும்போது தன்னை
காப்பாற்றிக்கொண்டிருக்கலாமே” என்றான்.
32யோவாஸ், “கிதியோன் பாகாலின் பலி
பீடத்தை அழித்திருந்தால், பாகால் அவ
னோடு வழக்காடட்டும்” என்றான். அந்நா
ளில் யோவாஸ் கிதியோனுக்கு ஒரு புதிய
பெயரிட்டான். அவனை யெருபாகால்*
என்று அழைத்தான்.

### கிதியோன் மீதியானியரை முறியடித்தல்

33இஸ்ரவேலரைஎதிர்ப்பதற்கு மீதியானிய
ரும் அமலேக்கியரும் கிழக்கிலுள்ள பிற
ஜனங்களும் ஒன்றாகக் கூடி வந்தனர்.
அவர்கள் யோர்தான் நதியைத் தாண்டி
யெஸ்ரயேல் பள்ளத்தாக்கில் முகாமிட்டுத்
தங்கினார்கள். 34கர்த்தருடைய ஆவி கிதி
யோனுக்குள் வந்து மிகுந்த வல்லமை
பெற்றான். அபியேசர் குடும்பம் தன்னைப்
பின்தொடர்ந்து வருமாறு கிதியோன்
எக்காளம் ஊதி அழைத்தான். 35மனாசேயின்
கோத்திரத்தினரிடம் கிதியோன் செய்தி
தெரிவிப்போரை அனுப்பினான். அவர்கள்
மனாசேயின் ஜனங்களிடம் ஆயுதங்களை
எடுத்துப் போருக்குத் தயாராகும்படி கூறி
னார்கள். ஆசேர், செபுலோன், நப்தலி
கோத்திரத்தினரிடமும் அவன் செய்தி தெரி
விக்கும் ஆட்களை அனுப்பினான். அவர்கள்
அதே செய்தியைத் தெரிவிப்பதற்குச்
சென்றனர். கிதியோனையும் அவனது
ஆட்களையும் சந்திப்பதற்காக அந்தக்
கோத்திரத்தினர் சென்றனர்.
36அப்போது கிதியோன் தேவனிடம்,
“இஸ்ரவேலரைக் காப்பதற்கு எனக்கு
உதவுவதாகக் கூறினீர். அதற்குச் சான்று
தாரும். 37நான் தரையில் ஆட்டுத்தோலைப்

---

**யெருபாகால்** இது “பாகால் வாக்குவாதம் செய்யபடும்” எனப் பொருள்படும். எபிரெய வார்த்தைகளைப் போன்றது. இதே வினைச்சொல் “ஒருவர் பக்கம் எடுத்துக்கொண்டு, ஆதரி” என்றும் 31ம் வசனத்தில் மெழிபெயர்க்கப்பட்டுள்ளது.

போடுவேன். தரையெல்லாம் உலர்ந்திருக்க,
தோலில் மட்டும் பனி பெய்திருந்தால், நீர்
கூறியபடியே இஸ்ரவேலரை மீட்பதற்கு
என்னைப் பயன்படுத்துவீர் என்பதை அறி
வேன்" என்றான்.
38அவ்வாறே நடந்தது. கிதியோன் காலை
யில் எழுந்து செம்மறியாட்டுத் தோலைப்
பிழிந்தான். ஒரு கிண்ணம் நிறைய
தண்ணீரைப் பிழிந்தெடுக்க முடிந்தது.
39அப்போது கிதியோன் தேவனை
நோக்கி, "என்னிடம் கோபங்கொள்ளாதிரும்.
இன்னும் ஒரே ஒரு விஷயம் குறித்து
மட்டும் உம்மிடம் கேட்டுவிடுகிறேன்.
ஆட்டுத்தோலால் உம்மை மீண்டும் ஒருமுறை
சோதிப்பேன். இம்முறை தரையெல்லாம்
பனியால் ஈரமாயிருக்க, தோல் மட்டும்
உலர்ந்திருக்கச் செய்யும்" என்றான்.
40அன்றிரவு தேவன் அவ்வாறே நடக்கச்
செய்தார். செம்மறியாட்டுத் தோல் உலர்ந்தி
ருந்தது. தரையோ பனியால் ஈரமாயிருந்தது.

7 அதிகாலையில் யெருபாகாலும் (கிதி
யோன்) அவனது ஆட்களும்
ஆரோத்திலுள்ள நீரூற்றினருகில் தம்
முகாம்களை ஏற்படுத்திக் கொண்டனர்.
மோரே என்னும் மலையடிவாரத்திலுள்ள
பள்ளத்தாக்கில் மீதியானியர் முகாமிட்டுத்
தங்கி இருந்தனர். இப்பகுதி, கிதியோனும்
அவனது ஆட்களும் தங்கி இருந்த பகுதிக்கு
வடக்கில் இருந்தது.
2கர்த்தர் கிதியோனை நோக்கி, "மீதியானி
யரை வெல்வதற்கு உனது ஜனங்களுக்கு
உதவப் போகிறேன். ஆனால் அவ்வேலைக்கு
தேவையான எண்ணிக்கைக்கு அதிகமான
வீரர்கள் உன்னோடிருக்கிறார்கள். இஸ்ர
வேலர் என்னை மறந்து தங்களைத்
தாங்களே காப்பாற்றிக் கொண்டதாக
எண்ணுவதை நான் விரும்பவில்லை.
3எனவே இப்போது உன் வீரர்களுக்கு
இதனை அறிவித்துவிடு. அவர்களிடம்,
'பயப்படுகிற எவனும் கீலேயாத் மலையை
விட்டு தன் வீட்டிற்குத் திரும்பிச்
செல்லலாம்' என்று கூறு" என்றார்.
அப்போது 22,000 பேர் கிதியோனை
விட்டு வீடுகளுக்குத் திரும்பினார்கள்.
ஆனாலும் 10,000 பேர் மீதி இருந்தனர்.
4அப்போது கர்த்தர் கிதியோனை நோக்கி,
"இப்போதும் ஆட்கள் மிகுதியாக இருக்கிறார்
கள், அவர்களை தண்ணீரருகே அழைத்துச்
செல். உனக்காக அவர்களை அங்கு
பரிசோதிப்பேன். 'இந்த மனிதன் உன்னோடு
செல்வான்' என்று நான் கூறினால் அவன்
போவான். 'அவன் உன்னோடு செல்லமாட்
டான்' என்று நான் கூறினால் அவன் போக
மாட்டான்" என்றார்.
5எனவே கிதியோன் அவர்களை
தண்ணீரருகே அழைத்துச் சென்றான். அங்கு
கர்த்தர் கிதியோனை நோக்கி, "உனது
ஆட்களில் நாயைப்போல் தண்ணீரை நக்கிக்
குடிப்போரை ஒரு குழுவாகவும், மண்டி
யிட்டு தண்ணீரை குடிப்போரை மற்றொரு
குழுவாகவும் பிரித்துவிடு" என்றார்.
6கைகளால் தண்ணீரை அள்ளி நாயைப்
போல் நக்கிப் பருகியோர் 300 பேர்.
மற்ற எல்லோரும் மண்டியிட்டு தண்ணீரைப்
பருகினார்கள். 7கர்த்தர் கிதியோனை
நோக்கி, "நாயைப் போல் தண்ணீரை
நக்கிய 300 பேரையும் நான் பயன்படுத்து
வேன். நீ மீதியானியரை முறியடிக்கும்படி
செய்வேன். பிறர் வீடுகளுக்குத் திரும்பட்டும்"
என்றார்.
8எனவே கிதியோன் பிற இஸ்ரவேலரைத்
திருப்பி அனுப்பிவிட்டான். 300 மனிதரை
மட்டும் கிதியோன் தன்னோடு இருக்கச்
செய்தான். வீட்டிற்குச் சென்றவர்களது
பொருட்களையும், எக்காளங்களையும் அந்த
300 பேரும் வைத்துக் கொண்டனர்.
கிதியோனின் முகாமிற்குக் கீழேயுள்ள
பள்ளத்தாக்கில் மீதியானியர் முகாமிட்டுத்
தங்கி இருந்தனர். 9இரவில் கர்த்தர்
கிதியோனிடம், "எழுந்திரு, நீ மீதியானி
யரின் சேனையைத் தோற்கடிக்கச் செய்
வேன். அவர்களின் முகாமிற்குச் செல்.
10தனியே செல்ல நீ பயப்பட்டால் உன்
வேலைக்காரனாகிய பூராவையும் உன்
னோடு அழைத்துச் செல். 11மீதியானியரின்
முகாமிற்குள் செல். அங்கே ஜனங்கள்
பேசும் செய்திகளைக் கவனித்துக்கொள்.
அதன்பின் அவர்களைத் தாக்குவதற்கு
அஞ்சமாட்டாய்" என்றார்.
எனவே கிதியோனும் அவனது
வேலையாளாகிய பூராவும் பகைவர் முகா
மின் ஓரத்திற்குச் சென்றனர். 12அப்பள்ளத்
தாக்கில் மீதியானியரும், அமலேக்கியரும்,
கிழக்கிலிருந்து வந்த அனைத்து ஜனங்களும்
முகாமிட்டுத் தங்கி இருந்தனர். வெட்டுக்
கிளிகளின் கூட்டத்தைப்போல அவர்கள்
எண்ணிக்கையில் மிகுந்திருந்தனர். கடற்
கரை மணலைப் போன்று அவர்களுக்கு
ஒட்டகங்கள் இருந்தது போல் தோன்றிற்று.
13கிதியோன் பகைவரின் முகாமை
நெருங்கி ஒரு மனிதன் பேசுவதைக் கேட்
டான். அம்மனிதன் அவனது நண்பனுக்குத்
தான் கண்ட கனவைக் கூறிக் கொண்டிருந்
தான். அம்மனிதன், "மீதியானியரின் முகா
மில் ஒரு உருண்டை வடிவமான அப்பமா
னது உருண்டு வருவதாகக் கனவுக்
கண்டேன். அந்த அப்பம் மிக வலிமையாக
முகாமைத் தாக்கியதால் கூடாரம் தாக்குண்டு
தரைமட்டமாக விழுந்தது" என்றான்.
14அம்மனிதனின் நண்பன் கனவின்
பொருளை அறிந்திருந்தான். அம்மனிதனின்
நண்பன், "உன் கனவிற்கு ஒரே ஒரு
பொருளுண்டு. உனது கனவு இஸ்ரவேலின்
மனிதனைப் பற்றியது. அது யோவாஸின்
மகனாகிய கிதியோனைக் குறித்து உணர்த்து
கிறது. மீதியானியரின் எல்லா சேனைகளை

யும் கிதியோன் தோற்கடிப்பதற்கு தேவன்
அனுமதிப்பார் என்று இது பொருள்படுகி
றது” என்றான்.
15அம்மனிதர்கள் கனவையும் அதன்
பொருளையும் பற்றிப் பேசுவதை அவன்
கேட்டபின்னர், கிதியோன் தேவனை
விழுந்து வணங்கினான். பின் அவன்
இஸ்ரவேலரின் முகாமிற்குத் திரும்பிப்
போனான். கிதியோன் ஜனங்களை
அழைத்து, “எழுந்திருங்கள்! மீதியானியரை
வெல்வதற்குக் கர்த்தர் உதவி செய்வார்”
என்றான். 16பின்பு கிதியோன் 300 பேரையும்
மூன்று பிரிவுகளாகப் பிரித்தான். கிதியோன்
ஒவ்வொருவருக்கும் ஒரு எக்காளத்தையும்
ஒரு வெறுமையான ஜாடியையும் கொடுத்
தான். ஒவ்வொரு ஜாடியினுள்ளும் ஒரு
எரியும் தீப்பந்தம் இருந்தது. 17கிதியோன்
அம்மனிதரைப் பார்த்து, “என்னைக் கூர்ந்து
கவனித்து நான் செய்வதைச் செய்யுங்கள்.
பகைவரின் முகாம் வரைக்கும் என்னைத்
தொடர்ந்து வாருங்கள். பகைவர்களது
முகாமின் ஓரத்தை நான் அடைந்ததும்
நான் செய்வதையே நீங்களும் செய்யுங்கள்.
18நீங்கள் எல்லோரும் பகைவரின் முகாம்
களைச் சூழ்ந்துகொள்ளுங்கள். நானும்
என்னோடிருக்கும் ஆட்களும் எக்காளங்
களை ஊதுவோம். நாங்கள் எக்காளங்களை
ஊதியதும்நீங்களும் உங்கள் எக்காளங்களை
ஊதுங்கள். உடனே சத்தமாக இவ்வாறு
கூறுங்கள்: ‘கர்த்தருக்காகவும் கிதியோனுக்
காகவும்!’ என்று கூறுங்கள்” என்றான்.

19கிதியோனும் அவனோடிருந்த 100
மனிதர்களும் பகைவரது முகாமின் ஓரத்தை
அடைந்தார்கள். பகைவர்கள் இரவுக் காவ
லாளரை மாற்றினதும் அவர்கள் அங்கு
வந்தடைந்தனர். அது நள்ளிரவு ஜாமக்காவ
லின்போது நடந்தது. கிதியோனும் அவனது
மனிதர்களும் எக்காளங்களை ஊதி,
அவர்களுடைய ஜாடிகளை உடைத்தனர்.
20உடனே எல்லாக் குழுவினரும் எக்காளங்
களை ஊதி ஜாடிகளை உடைத்தார்கள்.
அம்மனிதர்கள் தீப்பந்தங்களை இடது
கைகளிலும், எக்காளங்களை வலது
கைகளிலும் ஏந்திக் கொண்டனர். அவர்கள்
எக்காளங்களை ஊதியதும், “கர்த்தருக்
கென்று ஒரு பட்டயம், கிதியோனுக்கென்று
ஒரு பட்டயம்!” எனச் சத்தமிட்டனர்.
21கிதியோனின் மனிதர்கள் தாங்கள் நின்ற
இடத்திலேயே நின்று கொண்டனர்.
முகாமிற்குள் மீதியானின் மனிதர்கள் கதறிக்
கொண்டே ஓட ஆரம்பித்தனர். 22கிதி
யோனின் 300 மனிதர்களும் எக்காளங்களை
ஊதியபொழுது, மீதியானியர் ஒருவரை
யொருவர் தங்கள் வாள்களால் கொல்லும்
படியாக கர்த்தர் செய்தார். சேரோ நகரத்
திற்கு அருகேயுள்ள பெத்சித்தா என்னும்
நகரத்திற்கு பகைவரின் படைகள் ஓட்டம்
எடுத்தனர். தாபாத் நகரத்தின் அருகேயுள்ள
ஆபேல்மேகொலா நகரத்தின் எல்லை
வரைக்கும் அவர்கள் ஓடிச் சென்றார்கள்.
23நப்தலி, ஆசேர், மனாசே கோத்திரத்தின
ரைச் சேர்ந்த வீரர்கள் மீதியானியரைத்
துரத்துமாறு அனுப்பப்பட்டனர். 24கிதி
யோன் எப்பிராயீமின் மலைநாடுகளுக்
கெல்லாம் செய்தி அறிவிப்போரை
அனுப்பினான். அவர்கள், “கீழிறங்கி வந்து
மீதியானியரைத் தாக்குங்கள். பெத்தாபரா
வரைக்கும் யோர்தான் நதிமட்டும் உங்கள்
ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வாருங்கள்.
மீதியானியர் அங்கு வந்து சேரும்முன்னர்
இதைச் செய்யுங்கள்” என்றார்கள்.
எனவே அவர்கள் எப்பிராயீம் கோத்
திரத்தைச் சேர்ந்தமனிதர்களை அழைத்தனர்.
பெத்தாபரா வரைக்கும் நதிப்பிரதேசத்தைத்
தம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தனர்.
25எப்பிராயீம் மனிதர்கள் மீதியானிய தலை
வர்களில் இருவரைப் பிடித்தனர். அவர்
களின் பெயர்கள்: ஓரேபும் சேபும் ஆகும்.
எப்பிராயீம் ஆட்கள் ஓரேப் பாறை
என்னுமிடத்தில் ஓரேபைக் கொன்றனர். சேப்
ஆலை என்னுமிடத்தில் அவர்கள் சேபைக்
கொன்றனர். எப்பிராயீம் மனிதர்கள்
மீதியானியரைத் தொடர்ந்து துரத்தினார்கள்.
ஆனால் அவர்கள் முதலில் ஓரேப், சேப்
ஆகியோரின் தலைகளை வெட்டி, அத்தலை
களைக் கிதியோனிடம் கொண்டு வந்தனர்.
அச்சமயம் கிதியோன் யோர்தான் நதியை
ஜனங்கள் கடக்கும் இடத்தில் இருந்தான்.
8 எப்பிராயீம் மனிதர்கள் கிதியோனிடம்
கோபப்பட்டனர். எப்பிராயீம் மனிதர்கள்
கிதியோனைச் சந்தித்தபோது, அவர்கள்,
“ஏன் எங்களை இப்படி நடத்தினீர்கள்?
மீதியானியரை எதிர்த்து நீங்கள் போராடச்
சென்றபோது ஏன் எங்களை அழைக்க
வில்லை?” என்று கேட்டார்கள்.
2ஆனால் கிதியோன் எப்பிராயீம் ஆட்
களைப் பார்த்து, “நீங்கள் சாதித்த அளவுக்கு
நான் எதையும் செய்யவில்லை. எனது
குடும்பத்தாராகிய அபியேஸரின் குடும்பத்
தைக் காட்டிலும் எப்பிராயீம் ஜனங்களாகிய
நீங்கள் சிறப்பாக அறுவடை செய்கிறீர்கள்.
அறுவடைக் காலத்தில் எங்கள்
குடும்பத்தினர் சேகரிப்பதைக் காட்டிலும்
நீங்கள் உங்கள் வயல்களில் அதிகமான
திராட்சைக் கனிகளை விட்டு வைக்கிறீர்கள்.
அது உண்மை அல்லவா? 3அதுபோலவே,
உங்களுக்கு இப்போதும் சிறந்த அறுவடை
வாய்த்துள்ளது. தேவன் உங்களை
மீதியானியரின் தலைவர்களாகிய ஓரே
பையும் சேபையும் சிறைப்பிடிக்கச் செய்தார்.
நீங்கள் செய்வதோடு என் வெற்றியை
நான் எவ்வாறு ஒப்பிட்டுப் பார்க்க
முடியும்?” என்றான். எப்பிராயீமின் ஆட்கள்
கிதியோனின் பதிலைக் கேட்டபோது,
அவர்கள் கோபம் அடங்கியது.

### *மீதியானியரின் இரண்டு அரசர்களையும் கிதியோன் சிறைபிடித்தல்*

4கிதியோனும் அவனது 300 ஆட்களும் யோர்தான் நதியருகே வந்து மறுகரைக்குக் கடந்து சென்றனர். அவர்கள் களைப்புற்றுப் பசியோடு* காணப்பட்டனர். 5கிதியோன் சுக்கோத் நகரத்தின் மனிதர்களைப் பார்த்து, "எனது வீரர்கள் உண்பதற்கு ஏதாவது கொடுங்கள். அவர்கள் களைப்புற்றிருக்கிறார்கள். நாங்கள் மீதியானியரின் அரசர்களாகிய சேபாவையும் சல்முனாவையும் துரத்திக் கொண்டிருக்கிறோம்" என்றான்.

6ஆனால் சுக்கோத் நகரத்தின் தலைவர்கள் கிதியோனைப் பார்த்து, "ஏன் நாங்கள் உமது வீரர்களுக்கு சாப்பிட உணவு கொடுக்க வேண்டும்? நீங்கள் இன்னும் சேபாவையும் சல்முனாவையும் பிடிக்கவில்லை" என்றார்கள்.

7அப்போது கிதியோன், "நீங்கள் எங்களுக்கு உணவு தரமாட்டீர்கள். சேபாவையும் சல்முனாவையும் பிடிப்பதற்கு கர்த்தர் எனக்கு உதவுவார். அதன் பின்னர் நான் மீண்டும் இங்கு வருவேன். அப்போது பாலைவனத்திலுள்ள முட்களாலும் நெருஞ்சிகளாலும் அடித்து உங்கள் தோலைக் கிழித்து விடுவேன்" என்றான்.

8சுக்கோத் நகரை விட்டு வெளியேறிய கிதியோன் பெனூவேல் நகரத்திற்குச் சென்றான். கிதியோன் பெனூவேலின் ஆட்களிடமும் உணவு கேட்டான். சுக்கோத்தின் மனிதர்களைப் போலவே பெனூவேலின் ஆட்களும் கிதியோனுக்குப் பதில் கூறினார்கள். 9எனவே கிதியோன் பெனூவேலின் மனிதர்களிடம், "நான் வெற்றி பெற்றபின் இங்குத் திரும்பிவந்து கோபுரத்தைத் தரைமட்டம் ஆக்குவேன்" என்றான்.

10சேபாவும், சல்முனாவும், அவர்களது சேனைகளும் கர்கோர் நகரத்தில் இருந்தார்கள். அவர்களது சேனையில் 15,000 வீரர்கள் இருந்தனர். இவர்கள் கிழக்கிலிருந்து வந்த ஜனங்களின் சேனையில் மீதியிருந்த படைவீரர்களாவர். அவர்கள் சேனையின் 1,20,000 வலிமை மிக்க படைவீரர்கள் ஏற்கனவே கொல்லப்பட்டனர். 11கிதியோனும் அவனது மனிதர்களும் கூடாரங்களில் வாழ்வோரின் பாதை வழியாகச் சென்றனர். நோபாகு, யொகிபெயா ஆகிய நகரங்களின் கிழக்கில் அப்பாதை இருந்தது. கிதியோன் கர்கோர் நகரம் வரைக்கும் வந்து, பகைவரைத் தாக்கினான். எதிரிகளின் சேனை அந்தத் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. 12மீதியானியரின் அரசர்களாகிய சேபாவும் சல்முனாவும் ஓடிப்போனார்கள். ஆனால் கிதியோன் அவர்களைத் துரத்திப் பிடித்தான். கிதியோனும் அவனது ஆட்களும் பகைவரின் படையைத் தோற்கடித்தனர்.

13பின், யோவாஸின் மகனான கிதியோன் போரிலிருந்து திரும்பினான். ஏரேஸ் கணவாய் வழியாகக் கிதியோனும் அவனது ஆட்களும் திரும்பினார்கள். 14கிதியோன் சுக்கோத் நகரத்து இளைஞன் ஒருவனைப் பிடித்தான். கிதியோன் அந்த இளைஞனைச் சில கேள்விகள் கேட்டான். அந்த இளைஞன் சுக்கோத் நகரத்துத் தலைவர்கள் மற்றும் மூப்பர்களது பெயர்களை எழுதினான். அவன் 77 மனிதர்களின் பெயர்களைத் தந்தான்.

15பின் கிதியோன் சுக்கோத் நகரத்திற்கு வந்தான். அவன் அந்நகரத்து மனிதர்களைப் பார்த்து, "சேபாவையும், சல்முனாவையும் இதோ பிடித்திருக்கிறோம். நீங்கள் எங்களைப் பார்த்துக் கிண்டலாக, 'ஏன் உங்கள் களைத்த வீரர்களுக்கு உணவளிக்க வேண்டும்?' நீங்கள் இன்னும் சேபாவையும் சல்முனாவையும் பிடிக்கவில்லை' என்றீர்கள்" என்றான். 16கிதியோன் சுக்கோத் நகரத்தின் தலைவர்களை அழைத்துவந்து, பாலைவனத்தின் முட்களாலும் நெருஞ்சில்களாலும் அவர்களை அடித்தான். 17பெனூவேல் நகரத்தின் கோபுரத்தையும் கிதியோன் தரைமட்டம் ஆக்கி, அந்நகரின் மனிதர்களைக் கொன்றான்.

18பின் கிதியோன் சேபாவையும் சல்முனாவையும் நோக்கி, "தாபோர் மலையில் நீங்கள் சில மனிதர்களைக் கொன்றீர்கள், அவர்கள் யாரைப் போன்றிருந்தார்கள்?" என்று கேட்டான்.

சேபாவும் சல்முனாவும், "அவர்கள் உங்களைப் போன்றிருந்தார்கள். ஒவ்வொருவனும் ஒரு இராஜகுமாரனைப் போல் காணப்பட்டான்" என்று பதில் கூறினார்கள்.

19கிதியோன், "அவர்கள் என் சகோதரர்கள்! என் தாயின் ஜனங்கள்! கர்த்தர் ஜீவித்திருக்கிறபடியால்,நீங்கள் அவர்களைக் கொல்லாமல் விட்டிருந்தால், நானும் இப்போது உங்களைக் கொல்லாமல் விட்டிருப்பேன்" என்றான்.

20பின்பு கிதியோன் யெத்தேரை ஏறிட்டுப் பார்த்தான். யெத்தேர் கிதியோனின் மூத்த மகன். கிதியோன் அவனை நோக்கி, "இந்த அரசர்களைக் கொன்று விடு" என்றான். ஆனால் யெத்தேர் பயம் நிறைந்த ஒரு பையனாக இருந்தான். எனவே அவன் தன் வாளை உருவவில்லை.

21அப்போது சேபாவும் சல்முனாவும் கிதியோனை நோக்கி, "நீர் எழுந்து எங்களைக் கொன்றுபோடும். இதை நிறைவேற்றும் வலிமை உம்மிடமே உண்டு" என்றனர். எனவே கிதியோன் எழுந்து சேபாவையும் சல்முனாவையும் கொன்றான். பின்பு அவர்களது ஒட்டகங்களின் கழுத்துக்களி

---

**பசி** எபிரெய மொழியில் "துரத்து" என்று பொருள்படும்.

லிருந்த ச்சந்திரனைப் போன்ற அலங்காரங்
களை எடுத்துக் கொண்டான்.

### கிதியோன் ஓர் ஏபோதைச் செய்தல்

22இஸ்ரவேலர் கிதியோனை நோக்கி, “நீர்
எங்களை மீதியானியரிடமிருந்து காப்பாற்றி
னீர். எனவே எங்களை நீரே ஆட்சி
செய்யும். நீரும், உமது மகனும், உமது
பேரனும் எங்களை ஆள வேண்டுமென்று
நாங்கள் விரும்புகிறோம்” என்றனர்.
23ஆனால் கிதியோன் இஸ்ரவேலரை
நோக்கி, “கர்த்தர் தாமே உங்கள் அரசராக
இருப்பார். நான் உங்களை ஆளமாட்டேன்,
எனது மகனும் உங்களை ஆளமாட்டான்”
என்றான்.
24இஸ்ரவேலர் வென்ற ஜனங்களில்
இஸ்மவேலரும் இருந்தனர். இஸ்மவேலரில்
ஆண்கள் பொன்னாலாகிய காதணிகளை
அணிந்திருந்தனர். எனவே கிதியோன்
இஸ்ரவேலரை நோக்கி, “நான் கேட்கும்
இந்த காரியத்தை நீங்கள் எனக்குச் செய்ய
வேண்டும். போரில் நீங்கள் எடுத்துக்
கொண்ட பொருள்களிலிருந்து ஒவ்வொருவ
ரும் ஒரு பொன் காதணியை எனக்குத்
தரவேண்டும்! என்று விரும்புகிறேன்”
என்றான்.
25அதற்கு இஸ்ரவேலர் கிதியோனை
நோக்கி, “நீர் கேட்பதை நாங்கள் மகிழ்ச்சி
யோடு தருவோம்” என்றனர். அவர்கள்
ஓர் மேலாடையைக் கீழே விரித்தனர்.
ஒவ்வொருவனும் அதன் மீது ஒரு
காதணியைப் போட்டான். 26அக்காதணி
களைச் சேர்த்து எடை போட்டபோது
43 பவுண்டு எடையுள்ளதாய் இருந்தது.
இஸ்ரவேலர் கிதியோனுக்குக் கொடுத்த
மற்றப் பரிசுகள் இங்கு சேர்க்கப்படவில்லை.
பிறையைப் போன்றும், மழைத் துளிகளைப்
போன்றும் வடிவமைந்த அணிகலன்களை
யும் அவர்கள் அவனுக்குக் கொடுத்தனர்.
அவனுக்கு ஊதா நிற அங்கியையும்
கொடுத்தனர். மீதியானியரின் அரசர்கள்
அவற்றை அணிந்திருந்தனர். மீதியானிய
அரசர்களின் ஒட்டகங்களிலுள்ள சங்கிலி
களையும் அவர்கள் அவனுக்குக் கொடுத்த
னர்.
27கிதியோன் ஒரு ஏபோத்தைச்* செய்ய,
இப்பொன்னைப் பயன்படுத்தினான். ஒப்ரா
என்னும் அவனது சொந்த ஊரிலேயே
ஏபோத்தை வைத்தான். இஸ்ரவேலர் எல்
லோரும் ஏபோத்தை வழிபட்டனர். இவ்வித
மாக இஸ்ரவேல் ஜனங்கள் தேவனிடம்
அவநம்பிக்கைகொண்டு ஏபோத்தை வழி
பட்டனர். கிதியோனும் அவனது குடும்பத்தி
னரும் பாவம் செய்யும்படியான கண்ணியாக
இந்த ஏபோத் அமைந்தது.

### கிதியோனின் மரணம்

28இஸ்ரவேலரின் ஆளுகையின் கீழ்
மீதியானியர் வந்தனர். மீதியானியர் இஸ்ர
வேலருக்கு எந்தப் பிரச்சனையும் மேற்
கொண்டு தரவில்லை. கிதியோன் உயிரோடு
இருந்தவரைக்கும் தேசம் 40 ஆண்டுகள்
அமைதியாக இருந்தது.
29யோவாஸின் மகனாகிய யெருபாகால்
(கிதியோன்) தன் வீட்டிற்குச் சென்றான்.
30கிதியோனுக்கு 70 மகன்கள் இருந்தனர்.
அவனுக்குப் பல மனைவியர் இருந்ததால்
அத்தனை மகன்கள் இருந்தனர். 31கிதி
யோனின் வேலைக்காரி சீகேமில் வாழ்ந்து
வந்தாள். கிதியோனுக்கு அவள் மூலமாக
பிறந்த மகன் ஒருவன் இருந்தான். அவன்
பெயர் அபிமெலேக்கு.
32யோவாஸின் மகனாகிய கிதியோன் மிக
முதிர்ந்த வயதில் மரித்தான். யோவா
ஸின் கல்லறையில் கிதியோன் அடக்கம்
பண்ணப்பட்டான். அபியேஸர் குடும்பம்
வாழும் ஒப்ரா நகரில் அந்தக் கல்லறை
இருக்கிறது. 33கிதியோன் மரித்ததும், இஸ்ர
வேலர் தேவனிடம் நம்பிக்கை வைக்காமல்
பாகாலைப் பின்பற்றினார்கள். அவர்கள்
பாகால் பேரீத்தைத்* தேவனாக்கினார்கள்.
34சுற்றி வாழ்ந்த பகைவர்களிடம் இருந்தெல்
லாம் இஸ்ரவேலர்களைக் காப்பாற்றியும்
கூட, இஸ்ரவேலர்கள் தமது தேவனாகிய
கர்த்தரை நினைத்துக்கூடப் பார்க்கவில்லை.
35எவ்வளவோ நன்மைகளைச் செய்தி
ருந்தும்கூட யெருபாகாலின் (கிதியோன்)
குடும்பத்தினருக்கு இஸ்ரவேலர் விசுவாச
முடையவர்களாய் இருக்கவில்லை.

### அபிமெலேக்கு அரசன் ஆகுதல்

9 யெருபாகாலின் (கிதியோன்) வேலைக்
காரியின் மகனான அபிமெலேக்கு சீகே
மில் வாழ்ந்த தனது மாமன்மார்களிடம்
“எனது தாயின் குடும்பத்தாரிடமும் சென்று,
2“சீகேம் நகரின் தலைவர்களிடம் இக்கேள்
வியைக் கேளுங்கள்: ‘யெருபாகாலின் 70
மகன்களாலும் நீங்கள் ஆளப்படுவது
நல்லதா, அல்லது ஒரே ஒருவனால் ஆளப்
படுதல் நல்லதா? நான் உங்கள் உறவினன்
என்பதை நினைவு படுத்திக்கொள்ளுங்கள்’”
என்றான்.
3அபிமெலேக்கின் மாமன்மார் சீகேமின்
தலைவர்களைச் சந்தித்து இக்கேள்வியைக்
கேட்டார்கள். சீகேமின் தலைவர்கள்
அபிமெலேக்கைப் பின்பற்ற முடிவெடுத்தனர்.
தலைவர்கள், “எவ்வாறாயினும் அவன்

---

**ஏபோத்** இது நமக்கு எதுவென்று சரியாகத் தெரியாது. ஒருவேளை இது இஸ்ரவேலின் தலைமை ஆசாரியன் அணிந்திருந்த அங்கியை போன்ற ஒரு விசேஷித்த அங்கியாக இருக்கலாம். (யாத். 28) அல்லது இது ஒருவேளை ஒரு விக்கிரமாக இருக்கலாம்.

**பாகால் பேரீத்** இந்த தெய்வத்தின் பெயரின் அர்த்தம் “ஒப்பந்தத்தின் ஆண்டவர்” ஆகும்.

நமக்குச் சகோதரன்” என்றார்கள். [4]எனவே,
சீகேமின் தலைவர்கள் அபிமெலேக்கிற்கு
70 வெள்ளிக்காசுகளைக் கொடுத்தார்கள்.
அவ்வெள்ளி பாகால்பேரீத் கோவிலுக்குச்
சொந்தமானது. அபிமெலேக்கு அவ்வெள்ளி
யால் சில மனிதர்களைக் கூலிக்குப் பேசி
அமர்த்திக் கொண்டான். அவர்கள் பயனற்ற
போக்கிரிகள் ஆவர். அபிமெலேக்கு எங்கு
சென்றாலும் அவர்கள் அவனைப் பின்
தொடர்ந்தார்கள்.
[5]அபிமெலேக்கு ஒப்ராவிலுள்ள தன்
தந்தையின் வீட்டிற்குச் சென்று தன் சகோ
தரர்களைக் கொன்றான். யெருபாகாலின்
(கிதியோன்) 70 மகன்களையும் அபிமெ
லேக்கு கொன்றான். ஒரே சமயத்தில் அவர்
களையெல்லாம் கொன்றான். ஆனால்
யெருபாகலின் கடைசி மகன் அபிமெலேக்
கிடமிருந்து மறைந்திருந்து தப்பிவிட்டான்.
அவன் பெயர் யோதாம்.
[6]பின்பு சீகேமின் எல்லா தலைவர்களும்
மில்லோவின்* வீட்டாரும் கூடினார்கள்.
அவர்கள் சீகேமின் பெரிய மரத்தின் தூண்
அருகில் கூடி, அபிமெலேக்கைத் தங்கள்
அரசன் ஆக்கினார்கள்.

### யோதாமின் கதை

[7]சீகேம் நகரத்தின் தலைவர்கள் அபிமெ
லேக்கை அரசனாக்கினார்கள் என்பதை
யோதாம் கேள்விப்பட்டான். அவன் அதைக்
கேள்விப்பட்டபோது அவன் கெரிசீம்
மலையின்மேல்* போய் நின்றான். யோதாம்
பின்வரும் உவமையை ஜனங்களுக்கு
உரக்கக் கூறினான்:

சீகேம் நகரத்தின் தலைவர்களே,
நான் சொல்வதைக் கேளுங்கள். பின்
தேவன் உங்களுக்குச் செவிசாய்க்
கட்டும்.
[8]ஒருநாள் மரங்கள் தம்மை ஆள்
வதற்கு ஓர் அரசனைத் தேர்ந்தெடுக்க
முடிவு செய்தன. மரங்கள் ஒலிவமரத்
திடம், “எங்களுக்கு நீ அரசனாக
இருந்து ஆளுகை செய்” என்றன.
[9]ஆனால் ஒலிவமரம், “மனிதர்களும்
தேவனும் எனது எண்ணெய்க்காக
என்னைப் போற்றுகின்றனர். நான்
எண்ணெய் தருவதை நிறுத்திவிட்டு
பிற மரங்களை ஆளும்படி போக
முடியுமா?” என்றது.
[10]பின் மரங்கள் அத்தி மரத்தைப்
பார்த்து, “நீ வந்து எங்களுக்கு அரசனா
யிரு” என்றன.

[11]ஆனால் அத்தி மரம், “நான் நல்ல,
இனிய பழம் தருவதை நிறுத்திவிட்டுப்
பிற மரங்களை ஆட்சிசெய்ய வர
முடியுமா?” என்றது.
[12]பின் மரங்கள் திராட்சைக்
கொடியைப் பார்த்து, “எங்களுக்கு
அரசனாக இரு” என்றன.

[13]அதற்குத் திராட்சைக்கொடி,
“எனது ரசம் மனிதர்களையும் அரசர்
களையும் மகிழ்விக்கின்றது. நான்
ரசத்தை உண்டாக்குவதை நிறுத்தி
விட்டு மரங்களை ஆள முடியுமா?”
என்று பதில் சொன்னது.
[14]இறுதியில் எல்லா மரங்களும் முட்
புதரைப் பார்த்து, “எங்களுக்கு அரச
னாயிரு” என்றன.
[15]அந்த முட்புதர் மரங்களைப்
பார்த்து, “நான் உங்களுக்கு உண்மை
யாகவே அரசனாக வேண்டுமென்றால்,
என் நிழலின் கீழ் வாருங்கள். உங்க
ளுக்கு அவ்வாறு செய்ய விருப்ப
மில்லையென்றால், முட்புதரிலிருந்து
நெருப்பு எழட்டும். நெருப்பு லீபனோ
னிலுள்ள கேதுரு மரங்களையும்
எரிக்கட்டும்” என்றது.

[16]“இப்போதும் நீங்கள் முழுமையாக
நேர்மையுடன் அபிமெலேக்கை அரசனாக்கி
யிருந்தால்அவனோடு சந்தோஷமாயிருங்கள்.
நீங்கள் யெருபாகாலோடும் அவனது குடும்
பத்தோடும் நியாயமாக நடந்திருந்தால்
நல்லது. யெருபாகாலைத் தக்கபடி சிறப்பித்தி
ருந்தீர்களாயின் அது நல்லது. [17]ஆனால்
என் தந்தை உங்களுக்குச் செய்ததை நினை
வுகூருங்கள். என் தந்தை உங்களுக்காகப்
போர் செய்தார். தமது உயிரைப் பணயம்
வைத்து மீதியானியரிடமிருந்து உங்களைக்
காப்பாற்றினார். [18]ஆனால் நீங்கள் என்
தந்தையின் குடும்பத்திற்கு எதிராகத்
திரும்பினீர்கள். நீங்கள் என் தந்தையின்
70 மகன்களையும் ஒரே நேரத்தில் கொன்றீர்
கள். சீகேம் நகரத்திற்கு அபிமெலேக்கை
அரசனாக்கினீர்கள். அவன் உங்களது
உறவினன் என்பதால் அவனை அரச
னாக்கினீர்கள். ஆனால் அவன் எங்கள்
தந்தையின் அடிமைப் பெண்ணின் ஒரே
மகன். [19]ஆனால் நீங்கள் யெருபாகாலிற்கும்,
அவனது குடும்பத்திற்கும் முழு நேர்மையா
னவர்களாக இருந்திருந்தால், நீங்கள் அபி
மெலேக்கை உங்கள் அரசனாக ஏற்றுக்
கொண்டு மகிழ்ச்சியாக இருங்கள். மேலும்
அவனும் தனது குடிகளோடு மகிழ்ச்சியாக
இருப்பான் என நம்புகிறேன். [20]ஆனால்
நீங்கள் நியாயமாக நடந்துகொள்ளா விட்
டால், சீகேமின் தலைவர்களையும்,
மில்லோவின் வீட்டாரையும் அபிமெலேக்கு
அழிப்பதுடன், அபிமெலேக்கும் அழிந்து

---

**மில்லோ** ஒருவேளை நன்கு பாதுகாக்கப்பட்ட பட்டணத்தின் ஒரு பகுதியாக இருக்கலாம். இது பட்டணத்தின் உள்ளேயோ அல்லது பட்டணத்தின் அருகிலேயோ இருந்திருக்கலாம்.

**கெரிசீம் மலை** இந்த மலையானது சீகேம் பட்டணத்தின் அருகிலுள்ளது.

போவானென்று நான் நம்புகிறேன்!”
என்றான்.
[21]யோதாம் இவற்றையெல்லாம் கூறிமுடித்த
தும் ஓடிப்போய் விட்டான். பேயேர் என்
னும் நகரத்திற்கு அவன் தப்பிச் சென்றான்.
தனது சகோதரனாகிய அபிமெலேக்குக்கு
பயந்ததால் யோதாம் அந்நகரத்தில் தங்கி
யிருந்தான்.

### அபிமெலேக்கு சீகேமை எதிர்த்துப் போரிடுதல்

[22]அபிமெலேக்கு இஸ்ரவேலரை மூன்று
ஆண்டுகள் ஆண்டு வந்தான். [23-24]யெரு
பாகாலின் 70 மகன்களையும் அபிமெலேக்கு
கொன்றிருந்தான். அவர்கள் அபிமெலேக்கின்
சொந்த சகோதரர்கள்! இத்தவறான
காரியத்தைச் செய்வதற்கு சீகேமின் தலை
வர்கள் அவனுக்கு உதவினர். எனவே
தேவன் அபிமெலேக்கிற்கும் சீகேம் மனிதர்க
ளுக்குமிடையே ஒரு தீய ஆவியை அனுப்பி
னார். அபிமெலேக்கை தாக்குவதற்கு
சீகேமின் தலைவர்கள் திட்டமிட்டனர்.
[25]சீகேம் நகரின் தலைவர்களுக்கு அபி
மெலேக்கின் மேல் இருந்த விருப்பம்
குறைந்தது. மலையில் கடந்து சென்றவர்
களையெல்லாம் தாக்கி அவர்களது பொருட்
களைப் பறிக்கும்பொருட்டு அவர்கள்
மலையின்மேல் ஆட்களை அமர்த்தினார்கள்.
இந்தத் தாக்குதலைக் குறித்து அபிமெலேக்கு
அறிந்தான்.
[26]ஏபேதின் மகனாகிய காகால் என்னும்
பெயருடையவனும் அவனது சகோதரர்
களும் சீகேம் நகருக்கு வந்தனர். சீகேமின்
தலைவர்கள் காகாலை நம்பி, அவனைப்
பின்பற்றுவதற்கு முடிவு செய்தனர்.
[27]ஒரு நாள் சீகேம் ஜனங்கள்
திராட்சைகளைச் சேகரிப்பதற்குத் தோட்டங்
களுக்குச் சென்று, திராட்சைகளைப் பிழிந்து
ரசம் தயாரித்தனர். பின் அவர்கள்
தெய்வங்களின் கோயிலில் ஒரு விருந்து
நடத்தினார்கள். ஜனங்கள் உண்டு, குடித்து,
அபிமெலேக்கைத் தூஷித்தனர்.
[28]ஏபேதின் மகனாகிய காகால், “நாம்
சீகேமின் மனிதர்கள். நாம் ஏன் அபிமெ
லேக்கிற்குக் கீழ்ப்படிய வேண்டும்? அவன்
தன்னை யாரென்று நினைத்திருக்கிறான்?
அபிமெலேக்கு, யெருபாகாலின் மகன்களில்
ஒருவன் மாத்திரமே. மேலும் அவன்
சேபூலைத் தனது அதிகாரியாக நியமித்
தானே நாம் அபிமெலேக்கிற்குக் கீழ்ப்படியக்
கூடாது. ஏமோரின் ஜனங்களே,* நாம்
நமது ஜனங்களையே பின்பற்றவேண்டும்.
(ஏமோர் சீகேமின் தந்தை.) [29]நீங்கள் என்னை
இந்த ஜனங்களுக்கு சேனைத்தலைவனாக
ஆக்கினால் நான் அபிமெலேக்கை
அழிப்பேன். நான் அவனிடம், ‘உன் சேனை
யைத் தயார் செய்து போருக்கு வா’ என்று
கூறுவேன்” என்றான்.
[30]சீகேம் நகரத்தின் ஆளுநராக சேபூல்
இருந்தான். ஏபேதின் மகனாகிய காகால்
சொன்னதைச் கேட்டுச் சேபூல் கோப
மடைந்தான். [31]அருமா நகரில்* உள்ள
அபிமெலேக்கிடம் சேபூல் தூதுவர்களை
அனுப்பி:

“ஏபேதின் மகனாகிய காகாலும்,
காகாலின் சகோதரர்களும் சீகேம் நகரத்
திற்கு வந்துள்ளனர். அவர்கள் உமக்குத்
தொல்லை தருகின்றனர். நகரம் முழு
வதையும் உமக்கு எதிராக காகால்
திருப்புகின்றான். [32]எனவே நீரும்,
உமது ஆட்களும் இன்றிரவு வந்து
நகரத்திற்கு வெளியேயுள்ள வயல்களில்
மறைந்திருக்க வேண்டும். [33]காலையில்
சூரியன் உதிக்கும் நேரத்தில் நகரத்தைத்
தாக்குங்கள். காகாலும் அவனது
ஆட்களும் உங்களோடு போரிடுவதற்கு
நகரத்திலிருந்து வெளியே வருவார்கள்.
அவர்கள் போரிடுவதற்கு வெளியே
வரும்போது, உம்மால் முடிந்ததை
அவர்களுக்குச் செய்யும்” என்று
சொல்லச் சொன்னான்.

[34]எனவே அபிமெலேக்கும் அவனுடைய
எல்லா வீரர்களும் இரவில் எழுந்து நான்கு
குழுக்களாகப் பிரிந்து நகரத்திற்குச் சென்
றார்கள். அவர்கள் சீகேம் நகரத்திற்கு அருகே
ஒளிந்திருந்தார்கள். [35]ஏபேதின் மகனாகிய
காகால் வெளியே சென்று சீகேம் நகரத்திற்கு
நுழையும் வாயிலின் அருகே நின்று
கொண்டிருந்தான். காகால் அங்கு நின்று
கொண்டிருந்தபோது அபிமெலேக்கும் அவ
னது வீரர்களும் மறைவிடங்களிலிருந்து
வெளியே வந்தனர்.
[36]காகால் அந்த வீரர்களைக் கண்டான்.
காகால் சேபூலிடம், “பார், மலைகளிலிருந்து
ஜனங்கள் இறங்கி வருகிறார்கள்” என்றான்.
ஆனால் சேபூல், “நீ மலைகளிலுள்ள
நிழலையே காண்கிறாய். நிழல்கள் ஜனங்
களைப்போலத் தோற்றமளிக்கின்றன” என்
றான்.
[37]காகால் மீண்டும், “பார், சில ஜனங்கள்
தேசத்தின் மேட்டுப் பகுதியிலிருந்து இறங்கி
வருகின்றனர். அங்கே பார், மந்திரவாதியின்
மரமருகே யாரோ ஒருவனின் தலையை
நான் காண முடிந்தது” என்றான். [38]சேபூல்
காகாலை நோக்கி, “நீ ஏன் வாய் மூடி

---

**ஏமோரின் ஜனங்கள்** சீகேம் நாட்டில் பிறந்த குடிமகன்களைக் குறிக்கும். ஆதி. 34ம் ஆதிகாரத்திலுள்ள ஒரு கதையில் ஏமோர் சீகேமின் தந்தையானவன். சீகேம் பட்டணத்திற்கும் ஏமோரின் மகனுடைய பெயரிட்டான்.

**அருமா நகரம்** அல்லது “இரகசியமாக” அல்லது “தோர்மாவில்” அபிமெலேக் அரசனாக வாழ்ந்த நகரம். இது ஒருவேளை சீகேமிலிருந்து தெற்கே 8 மைல் தொலைவில் இருக்கலாம்.

*இருக்கிறாய்? ‘அபிமெலேக்கு யார்? ஏன்
அவனுக்குக் கீழ்ப்படிய வேண்டும்?’
என்றாய். நீ அவர்களைக் கிண்டல் செய்
தாய். இப்போது அவர்களை எதிர்த்துப்
போரிடு” என்றான்.
**39**எனவே சீகேமின் தலைவர்களை
அபிமெலேக்கோடு போரிடுவதற்கு வழி
நடத்தி காகால் அழைத்து வந்தான். **40**அபி
மெலேக்கும் அவனது ஆட்களும்
காகாலையும் அவனது ஆட்களையும்
துரத்தினர். காகாலின் ஆட்கள் சீகேம்
நகரத்தில் வாயிலை நோக்கி ஓடினார்கள்.
காகாலின் வீரர்களில் பலர் அவர்கள்
வாசலுக்குள் நுழைவதற்கு முன்னரே
கொல்லப்பட்டனர்.*

**41***பின் அபிமெலேக்கு அருமா நகரத்திற்குத்
திரும்பினான். சேபூல் காகாலையும் அவன்
சகோதரரையும் சீகேம் நகரை விட்டுக்
கட்டாயப்படுத்தி வெளியேற்றினான்.*
**42***மறுநாள் சீகேமின் ஜனங்கள்
வயல்களுக்கு வேலைசெய்யப் போனார்கள்.
அபிமெலேக்கிற்கு அவ்விஷயம் தெரிந்து
விட்டது.* **43***எனவே அபிமெலேக்கு அவனது
ஆட்களை மூன்று குழுக்களாகப் பிரித்தான்.
அவன் சீசேமின் ஜனங்களைத் திடீரென
தாக்குவதற்கு விரும்பினான். எனவே
தன்னுடைய ஆட்களை வயலில் மறைந்
திருக்கும்படி செய்தான். நகரத்திலிருந்து
ஜனங்கள் வெளியே வந்ததும் அவர்கள்மேல்
பாய்ந்து அவர்களைத் தாக்கினார்கள்.*
**44***அபிமெலேக்கும் அவனது குழுவினரும்
சீகேமின் வாசலுக்கு அருகில் இருந்த ஓர்
இடத்திற்கு ஓடினார்கள். மற்ற இரண்டு
குழுவினரும் வயல்களிலிருந்த ஜனங்களிடம்
ஓடி அவர்களைக் கொன்றார்கள்.* **45***அபி
மெலேக்கும் அவனது ஆட்களும் அந்த
நாள் முழுவதும் சீகேம் நகரத்தை எதிர்த்துப்
போரிட்டனர். அபிமெலேக்கும் அவனது
ஆட்களும் சீகேம் நகரைக் கைப்பற்றி,
அந்த நகரத்தின் ஜனங்களைக் கொன்றனர்.
பின் அபிமெலேக்கு நகரத்தை இடித்துப்
பாழாக்கி, அதன் மீது உப்பைத் தூவினான்.*
**46***சீகேம் நகரத்துக் கோபுரத்தில்* சில
மக்கள் வாழ்ந்தனர். அந்த இடத்திலுள்ள
ஜனங்கள் சீகேம் நகரத்திற்கு நடந்ததைக்
கேள்விப்பட்டபோது அவர்கள் ஏல்பேரீத்*
என்னும் தெய்வத்தின் கோவிலிலுள்ள
பாதுகாப்பான அறையில் வந்து பதுங்கி
னார்கள்.*
**47***அபிமெலேக்கு சீகேமின் ஜனங்கள்
ஒருமித்து பதுங்கியிருப்பதைக் கேள்விப்
பட்டான்.* **48***எனவே அபிமெலேக்கும்
அவனது ஆட்களும் சல்மோன் மலை*
உச்சிக்குச் சென்றனர். அபிமெலேக்கு ஒரு
கோடாரியை எடுத்து மரக்கிளைகள்
சிலவற்றை வெட்டி, அவற்றைத் தோளில்
சுமந்து வந்தான். அபிமெலேக்கு தன்னோடி
ருந்தவர்களிடம், “விரைந்து நான் செய்
வதைப் போலவே செய்யுங்கள்” என்றான்.*
**49***எனவே அவர்களும் அபிமெலேக்கைப்
போலவே கிளைகளை வெட்டினார்கள்.
அவர்கள் மரக்கிளைகளைப் ஏல்பேரீத்
கோவிலின் பாதுகாப்பான அறைக்கு
வெளியே குவித்து அதற்கு நெருப்பூட்டி,
உள்ளே பதுங்கியிருந்த ஆட்களை எரித்துப்
போட்டனர். சுமார் 1,000 ஆண்களும்,
பெண்களும் சீகேம் கோபுரத்திற்கருகில்
மரித்தனர்.*

### *அபிமெலேக்கின் மரணம்*

**50***பின் அபிமெலேக்கும் அவனது ஆட்க
ளும் தேபேசு நகரத்திற்குச் சென்று, அதைக்
கைப்பற்றினர்.* **51***நகரத்தின் உள்ளே பலமான
ஒரு கோபுரம் இருந்தது. அந்நகரத்தின்
தலைவர்களும் ஆண்களும் பெண்களும்
அக்கோபுரத்திற்கு ஓடினார்கள். எல்லோரும்
உள்ளே நுழைந்து உட்புறமாகக் கதவைத்
தாழிட்டு கோபுரத்தின் உச்சியின்மீது
ஏறினார்கள்.* **52***அபிமெலேக்கும் அவனது
ஆட்களும் கோபுரத்தைத் தாக்குவதற்காக
அங்கு வந்தனர். அபிமெலேக்கு கோபுர
வாசலினருகே வந்தான். அவன் கோபுரத்
திற்கு நெருப்பூட்ட எண்ணினான்.* **53***ஆனால்
கோபுரவாசலின் முன் அபிமெலேக்கு
நின்றுகொண்டிருந்தபோது கோபுர உச்சி
யில் இருந்த ஒரு பெண் ஏந்திர கல்லை
அவன் தலைமீது போட்டாள். அக்கல்
அபிமெலேக்கின் மண்டையைப் பிளந்தது.*
**54***உடனே அபிமெலேக்கு ஆயுதங்களைத்
தாங்கி நின்ற தன் பணியாளை நோக்கி,
“உன் வாளை எடுத்து என்னைக் கொன்று
விடு. ‘ஒரு பெண் அபிமெலேக்கைக்
கொன்றாள்’ என்று ஜனங்கள் கூறாதபடிக்கு
நீ என்னைக் கொல்ல வேண்டுமென
விரும்புகிறேன்” என்றான். எனவே
பணியாள் அவனது வாளால்
அபிமெலேக்கை வெட்ட, அவன் மரித்தான்.*
**55***அபிமெலேக்கு மரித்ததைக் கண்டு
இஸ்ரவேலர்கள் தங்கள் இருப்பிடங்களுக்குத்
திரும்பினார்கள்.*
**56***இவ்வாறு, அவன் செய்த எல்லா
தீமைகளுக்காக தேவன் அபிமெலேக்கைத்
தண்டித்தார். அபிமெலேக்கு தன் 70 சகோ
தரர்களையும் கொன்று தன் தந்தைக்
கெதிராய் தீமை செய்தான்.* **57***சீகேமின்
ஜனங்களை அவர்களின் தீய செயல்க*

---

***சீகேம் நகரத்துக் கோபுரம்*** *இது ஒருவேளை சீகேமுக்கு அருகிலுள்ள ஒரு இடமாகும். அது பட்டணத்தின் ஒரு பகுதி அல்ல.*

***ஏல்பேரீத்*** *இந்த தெய்வத்தின் பெயரின் அர்த்தம் “உடன்படிக்கையின் தெய்வம்” ஆகும்.*

***சல்மோன் மலை*** *இது ஒருவேளை சீகேமுக்கு அருகிலுள்ள ஏபேல் மலையின் மற்றொரு பெயராக இருக்கலாம்.*

ளுக்காக தேவன் தண்டித்தார். எனவே
யோதாம் கூறியவை அனைத்தும் நிகழ்ந்தன.
(யெருபாகாலின் கடைசி மகன் யோதாம்,
யெருபாகாலின் மறுபெயர் கிதியோன்.)

## நியாயாதிபதியாகிய தோலா

10 அபிமெலேக்கு மரித்தபின், தேவன்
மற்றொரு நியாயாதிபதியை இஸ்ர
வேலரை காப்பாற்றும்படி எழுப்பினார்.
அந்த மனிதனின் பெயர் தோலா. தோலா,
பூவா என்பவனின் மகன். பூவா
தோதோவின் மகன். தோலா இசக்கார்
கோத்திரத்தைச் சேர்ந்தவன். தோலா சாமீர்
நகரத்தில் வசித்து வந்தான். சாமீர் நகரம்
எப்பிராயீம் மலைநாட்டில் இருந்தது.
2 தோலா இஸ்ரவேலருக்கு 23 ஆண்டுகள்
நியாயாதிபதியாக இருந்தான். பின்பு அவன்
மரித்தபோது சாமீர் நகரத்தில் புதைக்கப்
பட்டான்.

## நியாயாதிபதியாகிய யாவீர்

3 தோலா மரித்தபின், தேவனால் மற்றொரு
நீதிபதி நியமிக்கப்பட்டான். அவன் பெயர்
யாவீர். யாவீர் கீலேயாத் தேசத்தில் வாழ்ந்து
வந்தான். யாவீர் இஸ்ரவேலருக்கு 22
ஆண்டுகள் நீதிபதியாக இருந்தான். 4 யாவீ
ருக்கு 30 மகன்கள் இருந்தனர். அந்த 30
மகன்களும் 30 கழுதைகளின் மீது சவாரி
செய்தனர்.* அவர்கள் கீலேயாத் தேசத்தில்
உள்ள 30 நகரங்களைத் தம் அதிகாரத்
துக்குட்படுத்திக் கொண்டனர். அவை இன்
றும் யாவீரின் நகரங்கள் எனப்படுகின்றன.
5 யாவீர் மரித்தபோது காமோன் நகரில்
அடக்கம் பண்ணப்பட்டான்.

## அம்மோனியர் இஸ்ரவேலரை எதிர்த்துப் போரிடுதல்

6 தீமையானவைகள் எனக் கர்த்தரால்
குறிக்கப்பட்ட அனைத்தையும் இஸ்ரவேலர்
மீண்டும் செய்ய ஆரம்பித்தனர். அவர்கள்
பொய்த் தெய்வங்களாகிய பாகாலையும்,
அஸ்தரோத்தையும் தொழுதுகொள்ள ஆரம்
பித்தனர். அவர்கள் ஆராமின் தெய்வங்களை
யும், சீரியாவின் தெய்வங்களையும்
சீதோனின் தெய்வங்களையும் மோவாபின்
தெய்வங்களையும் அம்மோனியரின் தெய்
வங்களையும், பெலிஸ்தரின் தெய்வங்
களையும் தொழுதுகொண்டனர். இஸ்ரவேலர்
கர்த்தரை மறந்து அவரை ஆராதிப்பதை
நிறுத்தினர்.
7 எனவே கர்த்தர் இஸ்ரவேலர் மீது
கோபமடைந்தார். பெலிஸ்தரையும் அம்மோ
னியரையும் இஸ்ரவேலரைத் தோற்கடிப்ப
தற்கு கர்த்தர் அனுமதித்தார். 8 அதே ஆண்டில்
யோர்தான் நதிக்குக் கிழக்கிலுள்ள பகுதியில்
கீலேயாத் தேசத்தில் வாழ்ந்த இஸ்ர
வேலரையும் அழித்தனர். எமோரியர்
வாழ்ந்த தேசம் அதுவே. இஸ்ரவேலர்
அங்கு 18 ஆண்டுகள் தொல்லையடைந்தனர்.
9 அம்மோனியர் யோர்தான் நதியைக்
கடந்தனர். அவர்கள் யூதா, பென்யமீன்,
எப்பிராயீம் ஜனங்களோடு போரிடச்
சென்றனர். அம்மோனியர் இஸ்ரவேலருக்கு
மிகுந்த தொல்லைகள் அளித்தனர்.
10 இஸ்ரவேலர் கர்த்தரிடம் உதவிவேண்டி
அழுதார்கள். அவர்கள், "தேவனே, உமக்கு
எதிராகப் பாவம் செய்தோம். எங்கள்
தேவனை விட்டுப் பொய்த் தெய்வமாகிய
பாகாலை நாங்கள் தொழுதுகொண்டோம்"
என்றனர்.
11 கர்த்தர் இஸ்ரவேலரை நோக்கி,
"எகிப்தியரும், எமோரியரும், அம்மோனிய
ரும், பெலிஸ்தியரும் உங்களைத் துன்பு
றுத்தும்போது என்னிடம் முறையிட்டீர்கள்.
நான் அவர்களிடமிருந்து உங்களைக்
காப்பாற்றினேன். 12 சீதோனியரும், அமலேக்கி
யரும், மீதியானியரும்* உங்களைத் துன்பு
றுத்தியபோது என்னிடம் முறையிட்டீர்கள்.
நான் உங்களை அவர்களிடமிருந்தும்
காத்தேன். 13 ஆனால் நீங்கள் என்னை விட்டு
விட்டு பிற தெய்வங்களை தொழுது
கொள்ளத் தொடங்கினீர்கள். எனவே
உங்களைக்காப்பாற்ற மறுக்கிறேன். 14 நீங்கள்
அந்த தெய்வங்களைத் தொழுதுகொள்ள
விரும்புகிறீர்கள். எனவே அவர்களிடம்
போய் உதவி வேண்டுங்கள். அந்தத்
தெய்வங்கள் உங்கள் தொல்லைகளிலிருந்து
உங்களைக் காப்பாற்றட்டும்" என்று பதில்
கூறினார்.
15 ஆனால் இஸ்ரவேலர் கர்த்தரிடம்,
"நாங்கள் பாவம் செய்தோம். உமது
விருப்பம்போல எங்களுக்குச் செய்யும்.
ஆனால் இன்று எங்களைக் காப்பாற்றும்"
என்றார்கள். 16 பின்பு இஸ்ரவேல் ஜனங்கள்
அந்நிய தெய்வங்களை வீசியெறிந்துவிட்டு,
கர்த்தரை மீண்டும் ஆராதிக்க ஆரம்பித்தனர்.
எனவே கர்த்தர் அவர்கள் துன்பத்தைக்
கண்டு மனமிரங்கினார்.

## யெப்தா தலைவனாக தேர்ந்தெடுக்கப் படுதல்

17 அம்மோன் மக்கள் போருக்காக ஒன்
றாகக் கூடினார்கள். அவர்களின் முகாம்
கீலேயாத் தேசத்தில் இருந்தது. இஸ்ரவேலர்
ஒன்றாகக் கூடினார்கள். மிஸ்பாவில்
அவர்களின் முகாம் இருந்தது. 18 கீலேயாத்
தேசத்தில் வாழ்ந்த ஜனங்களின் தலைவர்கள்,

**30 மகன்களும் 30 கழுதைகளின் மீது சவாரி செய்தனர்** இந்த ஜனங்களனைவரும் முக்கியத் தலைவர்கள் என்பதை இது குறிக்கிறது. ஒரு வேளை கீலேயாத்திலுள்ள முப்பது நகரங்களின் நகராட்சி கழகத் தலைவர்களாக இருக்கலாம்.

**மீதியானியர்** இது பழைமையான கிரேக்க மொழி பெயர்ப்பு ஆகும். எபிரெய மொழியில் "மோவானிய ஜனங்கள்" என்று மொழிபெயர்க்கப் பட்டிருக்கி றது.

"அம்மோன் ஜனங்களை எதிர்த்துப் போரி
டுவதற்குத் தலைமை தாங்கும் மனிதன்
கீலேயாத்தில் வாழும் ஜனங்களுக்குத்
தலைவன் ஆவான்" என்றனர்.

11 கீலேயாத் கோத்திரத்தைச் சேர்ந்தவன்
யெப்தா, அவன் சிறந்த வீரன்.
ஆனால் யெப்தா ஒரு வேசியின் மகன்.
அவன் தந்தை கிலெயாத் என்பவன்.
2 கிலெயாத்தின் மனைவிக்குப் பல மகன்கள்
இருந்தனர். அவர்கள் வளர்ந்தபோது
யெப்தாவை விரும்பவில்லை. அவனது
சொந்த ஊரைவிட்டுச் செல்லுமாறு அம்
மகன்கள் யெப்தாவைக் கட்டாயப்படுத்தி
னார்கள். அவர்கள் அவனை நோக்கி, "நீ
நம் தந்தையின் சொத்தில் எதையும்
பெறமட்டாய். நீ வேறொரு பெண்ணின்
மகன்" என்றனர். 3 எனவே தன் சகோதரர்
களினிமித்தமாக யெப்தா அங்கிருந்து போய்
தோப் தேசத்தில் வாழ்ந்து வந்தான். தோப்
தேசத்தில் சில முரட்டு மனிதர்கள் அவனைப்
பின்பற்றத் தொடங்கினார்கள்.

4 கொஞ்சக் காலத்திற்குப் பின் அம்
மோனிய ஜனங்கள் இஸ்ரவேலரோடு போர்
செய்தனர். 5 அம்மோனிய ஜனங்கள் இஸ்ர
வேலரை எதிர்த்துப் போரிட்டதால்
கீலேயாத்தின் தலைவர்கள் யெப்தாவிடம்
சென்றனர். தோப் தேசத்தை விட்டுக்
கீலேயாத்திற்கு யெப்தா திரும்பிவர வேண்டு
மென்று அவர்கள் விரும்பினார்கள்.

6 தலைவர்கள் யெப்தாவை நோக்கி, "வா,
வந்து எங்கள் சேனாதிபதியாக அம்மோனி
யர்களை எதிர்த்துப் போரிடு" என்றனர்.

7 ஆனால் யெப்தா கீலேயாத் தேசத்து
முப்பர்கள் (தலைவர்களிடம்) "எனது
தந்தையின் வீட்டிலிருந்து வெளியேறும்படி
கட்டாயப்படுத்தினீர்கள். நீங்கள் என்னைப்
பகைக்கிறீர்கள்! உங்களுக்குத் துன்பம்
வந்தபோது என்னிடம் ஏன் வருகிறீர்கள்?"
என்று கேட்டான்.

8 கீலேயாத்தின் தலைவர்கள் யெப்தாவி
டம், "அதனாலேயே நாங்கள் உன்னிடம்
வந்துள்ளோம். எங்களோடு வந்து
அம்மோனிய ஜனங்களை எதிர்த்துப்
போராடு. கீலேயாத்தில் வாழும் ஜனங்கள்
எல்லோருக்கும் நீ அதிபதியாவாய்"
என்றனர்.

9 அப்போது யெப்தா கீலேயாத்தின் தலை
வர்களிடம், "நான் கீலேயாத்திற்கு வந்து
அம்மோனிய ஜனங்களை எதிர்த்துப்
போரிட வேண்டுமென்றால் அவ்வாறே செய்
வேன். ஆனால் கர்த்தர் எனக்கு வெற்றிபெற
உதவினால், நான் உங்கள் புதியத் தலை
வனாக இருப்பேன்" என்றான்.

10 கீலேயாத்தின் மூப்பர்கள் (தலைவர்கள்)
யெப்தாவை நோக்கி, "நாம் கூறுகின்ற
எல்லாவற்றையும் கர்த்தர் கேட்டுக் கொண்டி
ருக்கிறார். நீ கூறுகின்றபடியே செய்வதாக
நாங்கள் வாக்களிக்கிறோம்" என்றார்கள்.

11 எனவே யெப்தா கீலேயாத்தின்
மூப்பர்களோடு (தலைவர்களோடு) சென்
றான். அவர்கள் யெப்தாவைத் தங்கள்
தலைவனாகவும், அதிபதியாகவும் நியமித்த
னர். மிஸ்பா நகரத்தில் கர்த்தருக்கு முன்பாக
யெப்தா தனது வார்த்தைகளையெல்லாம்
மீண்டும் கூறினான்.

### அம்மோனிய ஜனங்களின் அரசனுக்கு யெப்தாவின் செய்தி

12 அம்மோனிய ஜனங்களின் அரசனிடம்
யெப்தா செய்தியாளர்களை அனுப்பினான்.
"அம்மோனிய ஜனங்களுக்கும் இஸ்ரவேல
ருக்குமிடையே இருக்கும் பிரச்சினை என்ன?
எங்கள் தேசத்தில் நீங்கள் போர் தொடுத்து
வரக் காரணமென்ன?" என்பதே அவன்
அனுப்பிய செய்தியாகும்.

13 அம்மோனிய ஜனங்களின் அரசன்
யெப்தாவிடமிருந்து வந்தோருக்கு, "எகிப்தி
லிருந்து வந்தபோது இஸ்ரவேலர் எங்கள்
தேசத்தை எடுத்துக் கொண்டதால் நாங்கள்
இஸ்ரவேலை எதிர்த்துப் போர் செய்கிறோம்.
அர்னோன் நதியிலிருந்து யாபோக் நதி
வரைக்கும் யோர்தான் நதிவரைக்கும் அவர்
கள் எங்கள் தேசத்தை கைப்பற்றிக் கொண்
டார்கள். இப்போது எங்கள் தேசத்தை
அமைதியான முறையில் திரும்பக் கொடுத்து
விடுமாறு இஸ்ரவேலர்களிடம் கூறு"
என்றான்.

14 எனவே யெப்தாவின் தூதுவர்கள்
(செய்தி தெரிவிப்போர்) இச்செய்தியை
யெப்தாவிற்குத் தெரிவித்தனர். யெப்தா
மீண்டும் தூதுவர்களை அம்மோனிய
அரசனிடம் அனுப்பினான். 15 அவர்கள் இச்
செய்தியை எடுத்துச் சென்றனர்:

யெப்தா கூறுவது இதுவே: மோவாப்
அல்லது அம்மோனிய ஜனங்களின்
தேசத்தை இஸ்ரவேலர் எடுத்துக்
கொள்ளவில்லை. 16 எகிப்திலிருந்து
இஸ்ரவேலர் வெளியேறியபோது
பாலைவன வழியாக செங்கடலுக்குச்
சென்றனர். பின்பு காதேசுக்குப்
போனார்கள். 17 இஸ்ரவேலர் ஏதோம்
அரசனுக்கு தூதுவரை அனுப்
பினார்கள். தூதுவர்கள் ஒரு தயவு
கேட்டனர். அவர்கள், "இஸ்ரவேலர்
உங்கள் தேசத்தினூடே கடந்து
செல்லட்டும்" என்று கேட்டனர்.
ஆனால் ஏதோமின் அரசன் தனது
தேசத்தைக் கடந்து செல்ல அனுமதிக்க
வில்லை. மோவாப் அரசனுக்கும் இதே
செய்தியை அனுப்பினோம். மோவாபும்
எங்களைத் தனது தேசத்தின் வழியாக
கடந்து செல்ல அனுமதிக்கவில்லை.
இதனால் இஸ்ரவேலர் காதேசில்
தங்கினார்கள்.

18 பின்பு இஸ்ரவேலர் பாலைவனத்
தின் வழியாக ஏதோம், மோவாப்

தேசங்களின் எல்லை ஓரமாகவே
கடந்துச் சென்றனர். மோவாபின்
கிழக்கே இஸ்ரவேலர் பயணம் செய்
தனர். அர்னோன் நதியின் மறுபுறம்
அவர்கள் முகாமிட்டுத் தங்கினார்கள்.
மோவாப் தேசத்தில் எல்லையையும்
அவர்கள் தாண்டிச் செல்லவில்லை.
(அர்னோன் நதியே மோவாபின்
எல்லையாக இருந்தது.)
19எமோரிய அரசனாகிய
சீகோனிடம் இஸ்ரவேலர் தூதுவரை
அனுப்பினார்கள். சீகோன் எஸ்போன்
நகரத்து மன்னன். தூதுவர் சீகோனி
டம், "இஸ்ரவேலர் உங்கள் தேசத்தின்
வழியே கடந்து செல்ல அனுமதிக்க
வேண்டும். எங்கள் தேசத்துக்குப் போக
நாங்கள் விரும்புகிறோம்" என்றனர்.
20ஆனால், எமோரிய அரசனாகிய
சீகோன் தன் எல்லைகளைக் கடந்து
செல்ல இஸ்ரவேலரை அனுமதிக்க
வில்லை. சீகோன் தம் ஆட்களை
ஒருங்கே அழைத்து யாகாசில் முகா
மிட்டான். பின் எமோரியர் இஸ்ர
வேலரோடு போர் செய்தனர். 21ஆனால்
இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்தர்,
சீகோனையும் அவனது சேனையையும்
வெல்வதற்கு இஸ்ரவேலருக்கு உதவி
னார். எனவே எமோரியரின் தேசம்
இஸ்ரவேலருக்குச் சொந்தமாயிற்று.
22அவ்வாறு இஸ்ரவேலர் எமோரியரின்
தேசத்தையே தங்களுக்குச் சொந்தமாக்
கிக்கொள்ள முடிந்தது. அத்தேசம்
அர்னோன் நதியிலிருந்து யாபோக்
நதிவரைக்கும் இருந்தது. அத்தேசம்
பாலைவனத்திலிருந்து யோர்தான்
நதிவரைக்கும் பரவியிருந்தது.
23இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்
தரே எமோரியரை அவர்கள் தேசத்திலி
ருந்து வெளியேறும்படிச் செய்தார்.
கர்த்தர் இஸ்ரவேலருக்கு அத்தேசத்தைக்
கொடுத்தார். இஸ்ரவேலரை இத்
தேசத்தைவிட்டுப் போகச்செய்ய
முடியுமென நீங்கள் நினைக்கிறீர்களா?
24காமோஸ்* என்னும் உங்கள் தேவன்
உங்களுக்குத் தந்துள்ள தேசத்தில்
நீங்கள் நிச்சயமாக வாழமுடியும்.
எனவே எங்கள் தேவனாகிய கர்த்தர்
எங்களுக்குத் தந்துள்ள தேசத்தில் நாங்
கள் வாழ்வோம்! 25நீங்கள் சிப்போரின்
மகனாகிய பாலாக்கைக் காட்டிலும்
சிறந்தவர்களா? அவன் மோவாப் தேசத்
தின் அரசனாக இருந்தான். அவன்
இஸ்ரவேலரோடு வாக்குவாதம் செய்
தானா? அவன் இஸ்ரவேலரோடு நேரில்
போரிட்டானா? 26இஸ்ரவேலர் எஸ்
போனிலும் அதைச் சுற்றிலுமுள்ள
ஊர்களிலும் 300 ஆண்டுகள் வாழ்ந்துள்
ளனர். இஸ்ரவேலர் ஆரோவேரிலும்
அதைச் சுற்றிலுமுள்ள நகரங்களிலும்
300 ஆண்டுகள் வசித்து உள்ளனர்.
இஸ்ரவேலர் அர்னோன் நதியரு
கேயுள்ள எல்லா நகரங்களிலும் 300
ஆண்டுகள் வாழ்ந்துள்ளனர். இவ்வளவு
காலமும் அந்நகரங்களைக் கைப்பற்றிக்
கொள்ள நீங்கள் முயலாததேன்? 27இஸ்ர
வேலர் உங்களுக்கெதிராகப் பாவம்
செய்யவில்லை. ஆனால் இஸ்ர
வேலருக்குக்கெதிராக நீங்கள் தீமை
செய்கிறீர்கள். உண்மையான நீதிபதி
யாகிய கர்த்தரே இஸ்ரவேலர்கள், அம்
மோனியர்கள் ஆகிய இருவரிடையே
சரியானவர் யார் என்பதைத் தீர்மானிக்
கட்டும்! என்றனர்.
28அம்மோனிய ஜனங்களின் அரசன்
யெப்தாவிடமிருந்து வந்த இச்செய்தியை
ஏற்றுக்கொள்ள மறுத்தான்.

### யெப்தாவின் வாக்குறுதி

29அப்போது தேவஆவியானவர் யெப்தா
வின்மேல் வந்தார். யெப்தா கீலேயாத்,
மனாசே பகுதிகளைக் கடந்து கீலேயாத்தி
லுள்ள மிஸ்பாவுக்குப் போனான். கீலேயாத்
திலுள்ள மிஸ்பாவிலிருந்து அம்மோனிய
ஜனங்களின் தேசத்தை யெப்தா தாண்டிச்
சென்றான்.
30யெப்தா கர்த்தரிடம், "நீர் அம்மோனிய
ஜனங்களை வெல்ல என்னை அனுமதித்தால்
31வெற்றிபெற்று நான் திரும்பும்போது,
எனது வீட்டிலிருந்து வெளிவருகிற முதற்
பொருளை உமக்குத் தகன பலியாகக்
கொடுப்பேன்" என்று வாக்குறுதி செய்தான்.
32பின்பு யெப்தா அம்மோனிய ஜனங்
களின் தேசத்திற்குச் சென்று, அம்மோனிய
ஜனங்களோடுப் போரிட்டான். அவர்களைத்
தோற்கடிப்பதற்குக் கர்த்தர் அவனுக்கு
உதவினார். 33ஆரோவேர் நகரத்திலிருந்து
மின்னித் நகரம் வரைக்கும் அவர்களைத்
தோற்கடித்தான். யெப்தா 20 நகரங்களைக்
கைப்பற்றினான். பின் அவன் அம்மோனிய
ஜனங்களோடு ஆபேல்கேராமிம் வரைக்கும்
போரிட்டான். இஸ்ரவேலர் அம்மோனிய
ஜனங்களைத் தோற்கடித்தனர். இது அம்மோ
னியருக்கு மிகப்பெரிய தோல்வியாக
இருந்தது.
34பின்பு யெப்தா தனது வீட்டிற்குப்
போனான். அவனைச் சந்திப்பதற்கு அவ
னது மகள் எதிரே வந்தாள். அவள்
தம்புரு வாசித்து நடனமாடிக் கொண்டிருந்
தாள். அவள் அவனது ஒரே மகள். யெப்தா
அவளை மகவும் நேசித்தான். யெப்தாவிற்கு
வேறு மகனோ, மகளோ இல்லை. 35தனது
வீட்டிலிருந்து முதலில் வெளிவந்தவள் தன்

**காமோஸ்** மில்காம் அம்மோனிய மக்களின் தெய்வமாக இருந்தபோதிலும் காமோஸ் மோவாபிய நாட்டின் நாட்டு தெய்வம் ஆகும்.

*மகளே என்று யெப்தா அறிந்தபோது
தனது ஆடையைக் கிழித்து தனது
துக்கத்தைக் காட்டினான். பின் அவன்,
“என் மகளே! நீ என்னை அழித்தாய். நீ
என்னை மிகுந்த துக்கத்திற்காளாக்கினாய்.
நான் கர்த்தருக்குக் கொடுத்த வாக்குறுதியை
மாற்ற இயலாது” என்றான்.*
**36***அப்போது அவனது மகள் யெப்தாவை
நோக்கி, “தந்தையே! நீங்கள் கர்த்தருக்கு
கொடுத்த உங்கள் வாக்கைக் காப்பாற்றுங்
கள். நீங்கள் செய்வதாகக் கூறியதைச்
செய்யுங்கள். உங்கள் பகைவராகிய அம்மோ
னிய ஜனங்களை நீங்கள் வெல்வதற்குத்
கர்த்தர் உதவியுள்ளார்” என்றாள்.*
**37***பின்பு யெப்தாவின் மகள் தன்
தந்தையிடம், “எனக்காக முதலில் ஒரு
காரியம் செய்யுங்கள். நான் இரண்டு
மாதங்கள் தனித்திருக்க வேண்டும், நான்
மலைகளுக்குப் போவேன். நான் திருமணம்
செய்து கொள்ளமாட்டேன். குழந்தை
பெறவும் மாட்டேன். எனவே, நானும்
எனது தோழியரும் போய் சேர்ந்து அழ
அனுமதி கொடுங்கள்” என்றாள்.*
**38***யெப்தா, “போய், அவ்வாறே செய்”
என்றான். யெப்தா அவளை இரண்டு
மாதத்திற்கு அங்கிருந்து அனுப்பி வைத்
தான். யெப்தாவின் மகளும் அவளது தோழி
யரும் மலைகளில் தங்கினார்கள். அவர்கள்
அவளுக்காக அழுதனர். ஏனென்றால் அவள்
திருமணம் செய்து குழந்தை பெறுவதாக
இல்லை.*
**39***இரண்டு மாதங்கள் முடிந்த பின்னர்,
யெப்தாவின் மகள் தந்தையிடம் திரும்பி
னாள். கர்த்தருக்கு வாக்குறுதி அளித்தபடியே
யெப்தா அவளுக்குச் செய்தான். யெப்தாவின்
மகள் யாரோடும் பாலின உறவு கொண்டு
வாழ்ந்திருக்கவில்லை.* **40***ஒவ்வொரு ஆண்டும்
கீலேயாத்திலுள்ள யெப்தாவின் மகளை
இஸ்ரவேலின் பெண்கள் நினைவு கூர்ந்தனர்.
அப்பெண்கள் ஒவ்வெரு வருடமும் நான்கு
நாட்கள் யெப்தாவின் மகளுக்காக அழுதனர்.
இது இஸ்ரவேலில் ஒரு பழக்கமாயிற்று.*

### *யெப்தாவும் எப்பிராயீமும்*

**12** *எப்பிராயீம் கோத்திரத்தின் மனிதர்கள்
தம் வீரர்கள் எல்லோரையும் ஒருங்கே
அழைத்து நதியைக் கடந்து சாபோன்
நகரத்திற்குச் சென்றனர். அவர்கள் யெப்தாவி
டம், “அம்மோனிய ஜனங்களை எதிர்த்து
நீங்கள் போரிடும்போது ஏன் எங்களை
அழைக்கவில்லை? உங்களையும் உங்கள்
வீட்டையும் நாங்கள் எரித்துப்போடுவோம்”
என்றனர்.*
**2***யெப்தா அவர்களுக்குப் பதிலாக,
“அம்மோனிய ஜனங்கள் நமக்குத் தொல்லை
தந்துகொண்டே இருந்தனர். எனவே நானும்
எனது ஜனங்களும் அவர்களுக்கெதிராகப்
போர் செய்தோம். நான் உங்களை அழைத்
தேன். ஆனால் நீங்கள் எங்களுக்கு உதவ
வரவில்லை.* **3***நீங்கள் எங்களுக்கு உதவ
வரமாட்டீர்கள் என்பதை நான் கண்டேன்.
எனவே நான் எனது உயிரைப் பணயம்
வைத்து, நதியைக் கடந்து அம்மோனிய
ஜனங்களோடு போரிடுவதற்குச் சென்றேன்.
அவர்களைத் தோற்கடிப்பதற்குக் கர்த்தர்
எனக்கு உதவினார். இப்போது ஏன்
என்னை எதிர்த்துப் போரிட இன்றைக்கு
வந்திருக்கிறீர்கள்?” என்றான்.*
**4***அப்போது யெப்தா கீலேயாத்தின் மனிதர்
களை ஒருங்கே அழைத்தான். எப்பிராயீம்
கோத்திரத்தின் மனிதர்களை எதிர்த்து அவர்
கள் போரிட்டனர். எப்பிராயீம் ஜனங்கள்
கீலேயாத் ஜனங்களை அவமானப்படுத்திய
தால் அவர்கள் எப்பிராயீம் ஜனங்களோடு
போர் செய்தனர். அவர்கள், “கீலேயாத்தின்
மனிதர்களாகிய நீங்கள்எப்பிராயீம் மனிதர்க
ளிலிருந்து பிரிந்து போனவர்கள்தான், உங்க
ளுக்கென சொந்தமான தேசம் எதுவும்
கிடையாது. உங்களில் சிலர் எப்பிராயீமை
யும், மற்றும் சிலர் மனாசேயையும் சேர்ந்த
வர்கள்” என்று சொல்லியிருந்தனர்.
கீலேயாத்தின் மனிதர்கள் எப்பிராயீமின்
மனிதர்களைத் தோற்கடித்தனர்.*
**5***கீலேயாத்தின் ஆட்கள் யோர்தான் நதியை
ஜனங்கள் கடக்கின்ற எல்லா பகுதி
களையும் கைப்பற்றினார்கள். அப்பகுதிகள்
எப்பிராயீம் நாட்டிற்குச் செல்லும் வழியில்
இருந்தன. எப்பிராயீமிலிருந்து ஓடிப்போன
வன் நதிக்கு வந்து, “என்னை நதியைக்
கடக்க விடுங்கள்” என்று சொன்னால்
கீலேயாத்தின் மனிதர்கள், “நீ எப்பிராயீமைச்
சேர்ந்தவனா?” என்று கேட்பார்கள். அவன்
“இல்லை” என்று சொன்னால்,* **6***அவர்கள்,
“ஷிபோலேத் என்று சொல்லு” என்பார்கள்.
எப்பிராயீம் மனிதரால் அந்த வார்த்தையைச்
சரியாக உச்சரிக்க முடியாமல் அவர்கள்
அதை, “சிபோலேத்” என்றனர். ஒருவன்
“சிபோலேத்” என்று கூறினால் அவன்
எப்பிராயீமைச் சேர்ந்தவன் என்று கண்டு,
கீலேயாத் மனிதர்கள் நதியைக் கடக்கும்
இடத்தில் அவனைக் கொன்று விடுவார்கள்.
எப்பிராயீம் ஆட்களில்* 42,000 *பேரை
இவ்வாறு கொன்றார்கள்.*
**7***யெப்தா* 6 *வருட காலம் இஸ்ரவேலருக்கு
நியாயாதிபதியாக இருந்தான். கீலேயாத்தைச்
சேர்ந்த யெப்தா மரித்தான். யெப்தாவை
கீலேயாத்திலுள்ள அவனது நகரில் அடக்கம்
செய்தனர்.*

### *நியாயாதிபதியாகிய இப்சான்*

**8***யெப்தாவுக்குப் பின்பு இப்சான் என்னும்
பெயருள்ளவன் இஸ்ரவேலருக்கு நீதிபதியா
னான். இப்சான் பெத்லகேம் நகரத்தைச்
சேர்ந்தவன்.* **9***இப்சானுக்கு* 30 *மகன்களும்*
30 *மகள்களும் இருந்தனர். அவனுக்கு
உறவினரல்லாத* 30 *பேரைத் திருமணம்*

செய்யுமாறு அவன் தனது மகள்களுக்குக்
கூறினான். அவன் உறவினரல்லாத 30
பெண்களைத் தேர்ந்தெடுத்தான். அவனது
மகன்கள் அவர்களைத் திருமணம் செய்தனர்.
இப்சான் 7 ஆண்டுகள் இஸ்ரவேலருக்கு
நீதிபதியாக இருந்தான். [10]பின் இப்சான்
மரித்தான். அவன் பெத்லகேம் நகரில்
அடக்கம் செய்யப்பட்டான்.

### நியாயாதிபதியாகிய ஏலோன்

[11]இப்சானுக்குப் பின் இஸ்ரவேலருக்கு
ஏலோன் என்பவன் நீதிபதியாக இருந்தான்.
ஏலோன் செபுலோன் கோத்திரத்தைச் சேர்ந்த
வன். அவன் 10 ஆண்டுகள் இஸ்ரவேலருக்கு
நீதிபதியாக இருந்தான். [12]பின் செபுலோன்
கோத்திரத்தானாகிய ஏலோன் மரித்தான்.
அவனை செபுலோனிலுள்ள ஆயலோனில்
அடக்கம் செய்தனர்.

### நியாயாதிபதியாகிய அப்தோன்

[13]ஏலோன் மரித்த பின்பு இல்லேலின்
மகனாகிய அப்தோன் இஸ்ரவேலருக்கு நீதி
பதியானான். அவன் பிரத்தோன் நகரத்தைச்
சேர்ந்தவன். [14]அவனுக்கு 40 மகன்களும்
30 பேரன்களும் இருந்தனர். அவர்கள் 70
கழுதைகளில் ஏறி சவாரி வந்தனர்.
அப்தோன் 8 ஆண்டுகள் இஸ்ரவேலருக்கு
நீதிபதியாக இருந்தான். [15]பின் இல்லேனின்
மகனாகிய அப்தோன் மரித்தான். அவன்
பிரத்தோன் நகரில் அடக்கம் செய்யப்
பட்டான். பிரத்தோன் எப்பிராயீம் தேசத்தில்
இருந்தது. இது அமலேக்கியர் வாழ்ந்த
மலை நாட்டில் இருந்த நகரமாகும்.

### சிம்சோனின் பிறப்பு

13 மீண்டும் இஸ்ரவேலர்கள் தீயசெயல்
களில் ஈடுபடுவதை கர்த்தர் கண்டார்.
எனவே பெலிஸ்தியர் இஸ்ரவேலரை 40
ஆண்டுகள் ஆள்வதற்கு அனுமதித்தார்.
[2]சோரா என்னும் ஊரைச் சேர்ந்த ஒரு
மனிதன் இருந்தான். அவன் பெயர்
மனோவா. அவன் தாண் கோத்திரத்தைச்
சார்ந்தவன். மனோவாவிற்கு மனைவி
குழந்தைகளின்றி மலடியாக இருந்தாள்.
[3]கர்த்தருடைய தூதன் மனோவாவின்
மனைவியின் முன் தோன்றி, “நீ பிள்ளை
இல்லாதவளாயிருக்கிறாய், ஆனால் நீ
கருவுற்று ஒரு மகனைப் பெறுவாய்.
[4]திராட்சைரசத்தையோ, வேறு மது
பானத்தையோ பருகாதே. அசுத்தமான*
உணவு எதையும் உண்ணாதே. [5]ஏனெனில்
நீ கருவுற்று ஓர் ஆண் மகனைப் பெறுவாய்.
அவன் விசேஷமாக தேவனுக்கென்று
அர்பணிக்கப்படுவான். அவன் நசரேயனாக*
இருப்பான். எனவே அவன் முடியை சவரம்
செய்யவோ, வெட்டவோ கூடாது. அவன்
பிறப்பதற்கு முன்பிருந்தே தேவனுக்கென்று
விசேஷமானவனாக இருப்பான். அவன்
பெலிஸ்தியரின் ஆட்சியிலிருந்து இஸ்ர
வேலரை மீட்பான்” என்றான்.
[6]அப்போது அப்பெண் தன் கணவனிடம்
சென்று நடந்தவற்றைக் கூறினாள். அவள்,
“தேவனிடமிருந்து ஒரு மனிதன் என்னிடம்
வந்தார். அவர் தேவன் அனுப்பிய தூதனைப்
போன்றிருந்தார். அவர் என்னை பய
மடையச் செய்தார். அவர் எங்கிருந்து
வந்தாரென்று நான் விசாரிக்கவில்லை.
அவர் தன் பெயரையும் எனக்குச்
சொல்லவில்லை. [7]ஆனால் அவர் என்னை
நோக்கி, ‘நீ கருவுற்று ஒரு மகனைப்
பெறுவாய். திராட்சைரசத்தையோ, வேறு
மதுபானத்தையோ பருகாதே, அசுத்தமான
எதையும் உண்ணாதே. ஏனெனில் ஒரு
விசேஷமான வகையில் அச்சிறுவன் தேவ
னுக்காக அர்ப்பணிக்கப்படுவான். அவன்
தேவனுக்குரிய விசேஷமானவனாக, பிறக்
கும் முன்னரே அமைந்து, மரணம் அடையும்
மட்டும் அவ்வாறே விளங்குவான்’ என்றார்”
என்றாள்.
[8]பின்பு மனோவா கர்த்தரிடம் ஜெபம்
செய்தான். அவன், “கர்த்தாவே, நீர் உமது
தேவ மனிதனை எங்களிடம் மீண்டும்
அனுப்ப வேண்டும். விரைவில் பிறக்கப்
போகிற மகனுக்கு நாங்கள் என்னென்ன
செய்ய வேண்டுமென்பதை அவர் எங்க
ளுக்குக் கற்பிக்க வேண்டுமென்று
விரும்புகிறோம்” என்றான்.
[9]தேவன் மனோவாவின் ஜெபத்தைக்
கேட்டார். தேவதூதன் அப்பெண்ணிடம்
மீண்டும் வந்தான். அவள் மனோவா இல்லாத
போது வயலில் தனித்திருந்தாள். [10]எனவே
அவள் தன் கணவனிடம் ஓடி, “அந்த
மனிதன் வந்திருக்கிறார்! அன்று என்னிடம்
வந்த அதே மனிதன்!” என்றாள்.
[11]மனோவா எழுந்து மனைவியை
பின்தொடர்ந்து சென்றான். அம்மனிதனிடம்
வந்து, “நீர் எனது மனைவியிடம் முன்பு
பேசிய அதே மனிதரா?” என்று கேட்டான்.
தூதன், “நானே” என்றான்.
[12]மனோவா, “நீர் சொன்னபடியே
நடக்குமென நம்புகிறேன். சிறுவன்
வாழப்போகும் வாழ்க்கையைக் குறித்துச்
சொல்லுங்கள். அவன் என்ன செய்வான்?”
என்றான்.

**அசுத்தமான** அல்லது “ஏற்றுக்கொள்ளப்படாதது” சுத்தமல்லாதது அல்லது தேவனுடைய ஆராதனையில் பயன்படுத்த முடியாது. சுத்தமுள்ள மற்றும் சுத்தமற்ற காரியங்களுக்கான பழைய ஏற்பாட்டு விதிமுறைகளைத் தெரிந்துகொள்ள லேவி. 11-15 அதிகாரங்களை பார்க்கவும்.

**நசரேயன்** கர்த்தருக்கென்று விசேஷ பொருத்தனை செய்தவன். நசரேய விரதம் குறித்து. எண். 6:1-21 ல் பார்க்கவும்.

13கர்த்தருடைய தூதன் மனோவாவை
நோக்கி, "உன் மனைவி நான் கூறிய
எல்லாவற்றையும் செய்ய வேண்டும்.
14திராட்சைச் செடியில் விளையும் எதையும்
அவள் உண்ணக்கூடாது. அவள் திராட்சை
ரசத்தையோ அல்லது வேறு மது
பானத்தையோ பருகக் கூடாது. அசுத்தமான
உணவு எதையும் அவள் உண்ணக் கூடாது.
நான் அவளைச் செய்யுமாறு கட்டளை
யிட்ட அனைத்தையும் அவள் செய்ய
வேண்டும்" என்றான்.
15அப்போது மனோவா கர்த்தருடைய
தூதனை நோக்கி, "நீர் சற்றுத் தங்கிச்
செல்வதை விரும்புகிறோம். ஒரு வெள்
ளாட்டுக் குட்டியை நீர் உண்பதற்காகச்
சமைத்து வர விரும்புகிறோம்" என்றான்.
16கர்த்தருடைய தூதன் மனோவாவை
நோக்கி, "நீங்கள் இருக்குமாறு கூறினாலும்
உங்கள் உணவை உண்ண மாட்டேன்.
நீங்கள் ஏதேனும் தயாரிக்க விரும்பினால்
கர்த்தருக்குத் தகனபலி கொடுங்கள்" என்
றான். (மனோவா உண்மையிலேயே அவன்
கர்த்தருடைய தூதன் என்பதை அறியா
திருந்தான்.)
17பின் கர்த்தருடைய தூதனிடம்
மனோவா, "உமது நாமமென்ன? நீர் சொன்
னது உண்மையாகவே நடந்தால் நாங்கள்
உம்மை எப்படி கௌரவிக்க முடியும்?
இதற்காகவே உமது நாமத்தை நாங்கள்
தெரிந்துகொள்ள விரும்புகிறோம்" என்றான்.
18கர்த்தருடைய தூதன், "என் நாமத்தை
ஏன் கேட்கிறீர்கள்? (நீங்கள் நம்ப முடியாத
அளவிற்கு) அது மிக அதிசயம் ஆகும்"
என்றார்.
19மனோவா ஒரு வெள்ளாட்டுக்குட்டியை
ஒரு பாறையின் மேல் பலியிட்டான். அவன்
ஆட்டுக்குட்டியையும் தானியக் காணிக்கை
யையும் அதிசயங்களை செய்கிற கர்த்தருக்கு
அன்பளிப்பாகச் செலுத்தினான். 20மனோவா
வும் அவனது மனைவியும் நடந்த
அனைத்தையும் கவனித்துக் கொண்டி
ருந்தனர். பலிபீடத்திலிருந்து நெருப்பு
ஜுவாலை எழும்பியபோது கர்த்தருடைய
தூதன் நெருப்பிலேயே விண்ணிற்கு எழுந்து
சென்றார்.

மனோவாவும் அவனது மனைவியும்
அதைக்கண்டு முகங்குப்புற தரையில்
விழுந்து வணங்கினார்கள். 21அவர் கர்த்தரு
டைய தூதன் என்பதை மனோவா
இறுதியில் கண்டு கொண்டான். கர்த்தரு
டைய தூதன் மீண்டும் மனோவாவிற்கும்
அவன்மனைவிக்கும் காட்சியளிக்கவில்லை.
22மனோவா தன் மனைவியை நோக்கி,
"நாம் தேவனைப் பார்த்தோம், அதனால்
நாம் கண்டிப்பாக மரித்துவிடுவோம்!"
என்றான்.
23ஆனால் அவள் அவனை நோக்கி,
"கர்த்தர் நம்மைக் கொல்ல விரும்பவில்லை.
அவர் நம்மைக் கொல்ல விரும்பினால்
நமது தகன பலியையும், தானியக் காணிக்
கையையும் ஏற்றுக் கொண்டிருக்கமாட்டார்.
இந்த அற்புதங்களையும் காட்டியிருக்க
மாட்டார். இக்காரியங்களை அறிவித்திருக்க
வும் மாட்டார்" என்றாள்.
24அவள் ஓர் ஆண் குழந்தையைப்
பெற்றெடுத்தாள். அவனுக்குச் சிம்சோன்
என்று பெயரிட்டனர். சிம்சோன் நன்றாக
வளர்ந்தான். அவனைக் கர்த்தர் ஆசீர்வதித்
தார். 25கர்த்தருடைய ஆவி சிம்சோன் மீது
வந்து, அவன் மகானே தாண் என்னும்
நகரிலிருக்கும்போது கர்த்தருடைய ஆவியன
வர் கிரியை செய்ய ஆரம்பித்தார். மகானே
நகரம் என்பது சோரா என்னும் நகரத்திற்கும்
எஸ்தாவோல் என்னும் நகரத்திற்கும் நடுவில்
உள்ளது.

### சிம்சோனின் திருமணம்

14 சிம்சோன் திம்னாத் என்னும் நகரத்திற்
குச் சென்றான், அங்கு ஒரு பெலிஸ்
திய இளம் பெண்ணைக் கண்டான். 2அவன்
வீட்டிற்குத் திரும்பியதும் தன் தந்தையையும்,
தாயையும் நோக்கி, "ஒரு பெலிஸ்திய
பெண்ணைத் திம்னாவில் நான் பார்த்தேன்,
அவளை நீங்கள் எனக்காக அழைத்து
வரவேண்டும். நான் அவளைத் திருமணம்
செய்துகொள்ள விரும்புகிறேன்" என்றான்.
3அவனது தந்தையும் தாயும், "இஸ்ர
வேலில் உனக்குத் திருமணம் செய்வதற்கு
நிச்சயமாக ஒரு பெண் வாய்ப்பாள்.
பெலிஸ்தியரிலிருந்து ஒரு பெண்ணை நீ
திருமணம் செய்யவேண்டுமா? அந்த
ஜனங்கள் விருத்தசேதனம் செய்யப்பட்டவர்
கள் அல்ல" என்றார்கள்.

ஆனால் சிம்சோன், "அப்பெண்ணை
எனக்காக அழைத்து வாருங்கள்! அப்
பெண்ணே எனக்கு வேண்டும்!" என்றான்.
4(சிம்சோனின் பெற்றோர் கர்த்தர் இவ்வாறு
நிகழ வேண்டுமென விரும்பியதை அறியா
திருந்தார்கள். கர்த்தர் பெலிஸ்தியருக்கு
எதிராகச் செயல்படும் வகையை எதிர்
பார்த்துக்கொண்டிருந்தார். பெலிஸ்தியர்
அக்காலத்தில் இஸ்ரவேலரை ஆண்டு
கொண்டிருந்தனர்.)
5சிம்சோன் திம்னாத் நகரத்திற்கு தன்
தந்தையோடும் தாயோடும் சென்றான். அவர்
கள் அந்த நகரத்திற்கு அருகேயுள்ள
திராட்சைத் தோட்டத்தை நெருங்குகையில்
ஒரு இளம் சிங்கம் திடீரென கர்ச்சித்தபடி
சிம்சோனை நோக்கி வந்தது. 6கர்த்தருடைய
ஆவியானவர் வல்லமையோடு சிம்சோனின்
மீது இறங்கினார். அவன் தனது வெறுங்
கைகளாலேயே சிங்கத்தைக் கொன்றான்.
இதை அவனால் எளிதாகச் செய்ய முடிந்
தது. ஒரு வெள்ளாட்டைக் கொல்வதுபோல்
எளிதாக அதனைக் கொன்றான். ஆனால்

அவன் அதை தன் தந்தைக்கோ, தாய்க்கோ
தெரிவிக்கவில்லை.
7பின்பு சிம்சோன் நகரத்திற்குச் சென்று
அந்த பெலிஸ்தியப் பெண்ணைச் சந்தித்துப்
பேசினான். அவளை அவனுக்குப் பிடித்
திருந்தது. 8பல நாட்களுக்குப் பின்பு அந்த
பெலிஸ்தியப் பெண்ணைத் திருமணம்
செய்துகொள்ள சிம்சோன் திரும்பி வந்தான்.
வழியில் சிங்கத்தைப் பார்க்க சென்றான்
மரித்த சிங்கத்தின் உடலில் தேனீக்
கூட்டத்தைக் கண்டான். அவை தேனைச்
சேகரித்திருந்தன. 9சிம்சோன் தனது
கைகளால் அதில் கொஞ்சம் தேனை எடுத்
தான். அவன் தேனைச் சுவைத்துக்
கொண்டே வழியில் நடந்தான். அவன்
தன் பெற்றோரிடம் வந்தபோது அவர்களுக்
கும் சிறிது தேனைக் கொடுத்தான்.
அவர்களும் அதை உண்டனர். ஆனால்
மரித்த சிங்கத்திடமிருந்து எடுத்ததேன்
அது என்று அவர்களிடம் சிம்சோன்
கூறவில்லை.
10சிம்சோனின் தந்தை பெலிஸ்திய
பெண்ணைப் பார்ப்பதற்காகச் சென்றார்.
மணமகனுக்கான முறைமைப்படி சிம்சோன்
ஒரு விருந்து கொடுத்தான். 11பெலிஸ்தியர்கள்
30 பேரை விருந்துக்கு அனுப்பி வைத்தனர்.
12அந்த 30 பேருக்கும் சிம்சோன், "நான்
உங்களுக்கு ஒரு விடுகதை சொல்ல
விரும்புகிறேன். இந்த விருந்து 7 நாட்கள்
நீடிக்கும். இந்த நாட்களுக்குள் அந்த
விடுகதைக்கான பதிலை நீங்கள் சொல்ல
வேண்டும். அந்நாட்களுக்குள் உங்களால்
விடுகதையை விடுவிக்கக் கூடுமாயின் 30
பஞ்சாடைகளையும், 30 மாற்று ஆடை
களையும் கொடுப்பேன். 13ஆனால் நீங்கள்
பதில் தராவிட்டால் 30 பஞ்சாடைகளையும்,
30 மாற்று ஆடைகளையும் எனக்குத்
தரவேண்டும்" என்றான். அந்த 30 பேரும்,
"உன் விடுகதையைச் சொல். நாங்கள் கேட்க
விரும்புகிறோம்" என்றார்கள்.
14சிம்சோன் அவர்களிடம்,

'சாப்பிடுவோரிடமிருந்து
சாப்பிடுவதற்குக் கொஞ்சம்
கிடைத்தது.
பலமானவரிடமிருந்து இனிப்பும்
கிடைத்தது'
என்ற விடுகதையைச் சொன்னான்.

30 பேரும் 3 நாட்கள் இந்த விடுகதையை
விடுவிக்க முற்பட்டனர். ஆனால் அவர்
களால் முடியவில்லை.
15நான்காம் நாள் அவர்கள் சிம்சோனின்
மனைவியிடம் வந்தனர். அவர்கள், "எங்
களை வறியோராக்கும்படிக்கு அழைத்தீர்
களா? விடுகதையின் பதிலை அறியும்படிக்கு
நீ உனது கணவனைத் தந்திரமாய் வசப்
படுத்த வேண்டும். நீ அதை எங்களுக்கு
அறிவிக்காவிட்டால் உன்னையும் உன்
தந்தையின் வீட்டார் எல்லோரையும்
நெருப்பிட்டுக் கொல்லுவோம்" என்றார்கள்.
16சிம்சோனின் மனைவி அவனிடம் வந்து
அழுதாள். அவள் சிம்சோனிடம், "உங்க
ளுக்கு என்னைப் பிடிக்கவில்லை! நீங்கள்
உண்மையில் என் மீது அன்பு செலுத்த
வில்லை! எங்கள் ஆட்களுக்கு விடுகதை
போட்டுள்ளீர்கள். ஆனால் என்னிடம் நீங்கள்
பதிலைக் கூறவில்லை" என்றாள்.
17விருந்தின் 7 நாட்களும் முடியும்வரை
சிம்சோனின் மனைவி அழுதாள். அதனால்
7வது நாள் சிம்சோன் அவளுக்கு விடுகதை
யின் பதிலைக் கூறினான். அவள் தொடர்ந்து
அவனைத் தொந்தரவு செய்ததினாலும்
வற்புறுத்தியதாலும் அவளுக்குக் கூறினான்.
அவள் அந்தப் பதிலை தனது ஜனங்களுக்குக்
கூறினாள்.
18ஏழாவது நாள் சூரியன் மறையும்
முன்னர், பெலிஸ்தியர்கள் பதிலை அறிந்த
னர். அவர்கள் சிம்சோனிடம்,

"தேனைவிட சுவையானது எது?
சிங்கத்தைக் காட்டிலும்
வலிமையானது எது?"
என்றார்கள்.

அப்போது சிம்சோன் அவர்களிடம்,

"என் பசுவால் நீங்கள் உழாவிட்டால்
என் விடுகதைக்கு நீங்கள் பதில்
சொல்லியிருக்க மாட்டீர்கள்"
என்றான்.

19சிம்சோன் மிகவும் கோபமாக இருந்தான்.
கர்த்தருடைய ஆவியானவர் சிம்சோன் மீது
வல்லமையோடு வந்தார். அதினால் அவன்
அஸ்கலோன் நகரத்திற்குச் சென்று அங்கு
30 பெலிஸ்தியரைக் கொன்றான். அவர்களது
ஆடைகளையும், சொத்துக்களையும் எடுத்
துக்கொண்டான். அந்த ஆடைகளைப் பதில்
சொன்ன 30 பேருக்கும் கொடுத்தான். அதன்
பின்பு தனது தந்தையின் வீட்டிற்கு வந்தான்.
20சிம்சோன் தன் மனைவியைத் தன்னோடு
அழைத்துச் செல்லவில்லை. மாப்பிள்ளைத்
தோழன் அவளை வைத்துக்கொண்டான்.

## சிம்சோன் பெலிஸ்தியருக்குத் தொல்லை கொடுத்தல்

15 கோதுமை அறுவடையின்போது சிம்
சோன் தன் மனைவியைச் சந்திக்கப்
போனான். அவளுக்கு அன்பளிப்பாக ஒரு
வெள்ளாட்டுக் குட்டியைக் கொண்டு
வந்தான். அவன், "என் மனைவி இருக்கும்
அறைக்குச் செல்கிறேன்" என்றான்.
அவளது தந்தை சிம்சோனை உள்ளே
விடவில்லை. 2அவளது தந்தை சிம்
சோனிடம், "நீ அவளை வெறுத்தாய் என

*நான் நினைத்தேன். எனவே மாப்பிள்ளைத்
தோழனை அவள் திருமணம் செய்துகொள்ள
நான் அனுமதித்துவிட்டேன். அவள் தங்கை
இன்னும் அழகானவள், அவளை மணந்து
கொள்" என்றான்.*
**3**ஆனால் *சிம்சோன் அவனிடம், "இப்
போது பெலிஸ்தியராகிய உங்கள் அனைவ
ரையும் துன்புறுத்துவதற்கு எனக்கு ஒரு
நல்ல காரணம் கிடைத்திருக்கிறது. என்னை
இப்போது யாரும் குறைச் சொல்ல
முடியாது" என்றான்.*
**4**பின்பு *சிம்சோன் வெளியே சென்று
300 நரிகளைப் பிடித்தான். அவற்றை
இரண்டு இரண்டாகச் சேர்த்து அவற்றின்
வாலைக் கட்டி, வால்களுக்கிடையில்
நெருப்புப் பந்தத்தை வைத்தான்.* **5**பின்பு
*சிம்சோன் அவற்றைக் கொளுத்தி வாலில்
நெருப்பு வைக்கப்பட்ட அந்நரிகளைப்
பெலிஸ்தியரின் தானியங்கள் விளையும்
வயல்களுக்கிடையில் துரத்தி விட்டான்.
இவ்வாறு அவர்களின் வயல்களில்
விளைந்து கொண்டிருந்த பயிர்களையும்,
அறுவடை செய்து தனியே குவித்து வைத்த
கதிர்க்கட்டுகளையும் நெருப்பால் அழித்தான்.
மேலும் திராட்சைத் தோட்டங்களையும்,
ஒலிவ மரங்களையும் எரித்தான்.*
**6**பெலிஸ்தியர், *"இதனைச் செய்தது யார்?"
என்று கேட்டார்கள்.*
*திம்னாவிலுள்ள மனிதனின் மருமகனான
சிம்சோன் அதனைச் செய்ததாகச் சிலர்
கூறினார்கள். அவர்கள் "சிம்சோனின்
மாமனார் தன் மகளை மாப்பிள்ளைத்
தோழனுக்குத் திருமணம் செய்து வைத்ததால்
அவன் அத்தகைய செயலைச் செய்தான்"
என்றார்கள். அதனால் பெலிஸ்தியர் சிம்
சோனின் மனைவியையும், அவளது
தந்தையையும் எரித்துக் கொன்றனர்.*
**7**பின்பு *சிம்சோன் அப்பெலிஸ்திய
ஜனங்களிடம் "நீங்கள் தீமை செய்ததால்
நானும் உங்களுக்குத் தீமை செய்வேன்.
நான் உங்கள் மேல் பழி சுமத்துகிற
வரைக்கும் நிறுத்தமாட்டேன்!" என்றான்.*
**8**பின்பு *சிம்சோன் பெலிஸ்தியரைத் தாக்கி
அவர்களில் பலரைக் கொன்றான். பின்பு
அவன் ஒரு குகையில் சென்று தங்கினான்.
அக்குகை ஏத்தாம் பாறையில் இருந்தது.*
**9**பின்பு *பெலிஸ்தியர் யூதாவின் தேசத்
திற்குச் சென்று, லேகி என்னுமிடத்திற்க
ருகில்தங்கினார்கள். அவர்களின் சேனையும்
அங்கேயே தங்கிப் போருக்குத் தயாரானது.*
**10**யூதா *கோத்திரத்தினர் அவர்களிடம்,
"பெலிஸ்தியராகிய நீங்கள் ஏன் எங்களோடு
போரிட வந்துள்ளீர்கள்?" என்று கேட்டனர்.*
*அதற்கு பெலிஸ்தியர், "நாங்கள் சிம்
சோனைக் கைது செய்ய வந்துள்ளோம்.
எங்கள் ஜனங்களுக்கெதிராக அவன் செய்த
செயல்களுக்கு அவனைத் தண்டிக்க
விரும்புகிறோம்" என்றனர்.*
**11**பின்பு *3,000 யூதா கோத்திரத்தினர்
சேர்ந்து ஏத்தாம் பாறைக்கு அருகில் இருந்த
குகைக்கு சிம்சோனிடம் சென்றனர்.
அவர்கள், "நீ எங்களுக்கு என்ன செய்தாய்
என்பதை அறிவாயா? பெலிஸ்தியர் நம்மை
ஆட்சி வலிமை செய்து கெண்டிருக்கிறார்கள்
என்று தெரியாதா?" என்று கேட்டனர்.*
*அதற்கு சிம்சோன், "அவர்கள் எனக்குத்
தீங்கு செய்ததால் அவர்களைத் தண்டித்
தேன்" என்றான்.*
**12**பின்பு *அவர்கள், "உன்னைக் கட்டி,
பெலிஸ்தியரிடம் கொடுப்பதற்காக வந்து
ள்ளோம்" என்றனர்.*
*சிம்சோன் யூதா ஜனங்களிடம், "நீங்களா
கவே என்னை காயப்படுத்த மாட்டீர்கள்
என்று எனக்கு வாக்குக் கொடுங்கள்"
என்று கேட்டான்.*
**13**அதற்கு *அவர்கள், "அதற்கு நாங்கள்
ஒத்துக்கொள்கிறோம். உன்னைக் கட்டி
பெலிஸ்தியரிடம் நாங்கள் கொடுப்
போமேயன்றி, உன்னைக் கொல்லமாட்
டோம்" என்றனர். அவ்வாறே அவர்கள்
அவனை இரண்டு புதிய கயிறுகளால்
கட்டி, குகைக்கு வெளியே கொண்டு
வந்தனர்.*
**14**லேகி *என்னுமிடத்திற்குச் சிம்சோன்
வந்தபோது, பெலிஸ்தியர்கள் அங்கு
வந்தனர். அவர்கள் மகிழ்ச்சியால் துள்ளி
னார்கள். அப்போது கர்த்தருடைய ஆவியா
னவர் வல்லமையோடு சிம்சோன் மீது
வந்தார். சிம்சோன் கயிறுகளை அறுத்தான்.
அந்த கயிறுகள் எரிந்துபோன நூலைப்
போல காணப்பட்டன. உருகின கயிறுகள்
போல அவன் கரங்களிலிருந்து அவை
நழுவின.* **15**அவ்விடத்தில் *மரித்த ஒரு
கழுதையின் தாடையெலும்பு அவனுக்குக்
கிடைத்தது. அத்தாடையெலும்பால் அவன்
1,000 பெலிஸ்தியர்களைக் கொன்றான்.*
**16**பின்பு *சிம்சோன்,*

*"ஒரு கழுதையின் தாடையெலும்பால்*
*1,000 பேரைக் கொன்றேன்!*
*கழுதையின் தாடையெலும்பால்*
*அவர்களை ஒன்றின் மேலொன்றாக*
*பெரும் குவியலாக குவித்தேன்"*
*என்றான்.*

**17**இவ்வாறு *சொல்லி அத்தாடை
யெலும்பை கீழே எறிந்தான். அந்த இடம்
அதனால் ராமாத்லேகி* என்று அழைக்கப்
பட்டது.*
**18**சிம்சோன் *மிகவும் தாகமாயிருந்தான்.
அவன் கர்த்தரை நோக்கி, "நான் உமது
ஊழியன், நீர் எனக்குப் பெரும் வெற்றியைத்
தந்தீர். நான் தாகத்தால் மரிக்கும்படி தயவு*

---

***ராமாத்லேகி*** *இந்தப் பெயரின் அர்த்தம் "தாடையெலும்பு உயரம்" என்பதாகும்.*

செய்து விடாதிரும். விருத்தசேதனம் இல்லாத மனிதர்கள் என்னைப் பிடிக்க அனுமதியாதிரும்" என்று அழுது முறை யிட்டான்.

19லேகியின் தரையில் ஒரு துவாரம் இருந்தது. தேவன் அந்தத் துவாரத்தின் வழி வெடித்து தண்ணீர் வரும்படியாகச் செய்தார். சிம்சோன் அந்தத் தண்ணீரைக் குடித்து மறுபடியும் வலிமை பெற்றான். அந்த நீருற்றுக்கு எந்நக்கோரி* என்று பெயரிட்டான். அது இன்னும் லேகி நகரில் உள்ளது.

20இவ்வாறு சிம்சோன் இஸ்ரவேலருக்கு 20 ஆண்டுகள் நியாயாதிபதியாக இருந்தான். இது பெலிஸ்தியரின் காலத்தில் நடந்தது.

### காசா என்னும் நகருக்கு சிம்சோன் செல்லுதல்

16 ஒரு நாள் சிம்சோன் காசா நகரத்திற்குச் சென்றான். அவன் அங்கு ஒரு வேசியைச் சந்தித்து, அன்றிரவு அவளோடு தங்கச் சென்றான். 2காசா நகர ஜனங்களிடம், "சிம்சோன் இங்கு வந்திருக்கி றான்" என்று யாரோ தெரிவித்தனர். அவர் கள் அவனைக் கொல்ல எண்ணினார்கள். எனவே, அவன் இருந்த இடத்தைச் சூழ்ந்த னர். அவர்கள் மறைந்திருந்து சிம்சோனின் வரவுக்காகக் காத்திருந்தனர். அவர்கள் நகரவாயிலருகே இரவு முழுவதும் அமைதியாகத் தங்கியிருந்தனர். அவர்கள் ஒருவருக்கொருவர், "காலையில் சிம் சோனைக் கொல்வோம்" என்று பேசிக் கொண்டனர்.

3ஆனால் சிம்சோன் அவ்விலைமகளோடு நள்ளிரவுவரை மட்டுமே தங்கியிருந்தான். சிம்சோன் நள்ளிரவில் விழித்தெழுந்தான். சிம்சோன் நகரவாயில் கதவுகளை பிடித்து, மதிலிலிருந்து தளர்த்திப் பெயர்த்தெடுத்தான். சிம்சோன் கதவுகளையும், அவற்றின் இரண்டு தூண்களையும், கதவுகளை மூடும் இரும்புத் துண்டுகளையும் சேர்த்துத் தூக்கிக் கொண்டான். சிம்சோன் அதை தோளில் சுமந்துகொண்டு, எபிரோன் நகருக்கு அருகி லுள்ள மலையின்மீது ஏறினான்.

### சிம்சோனும் தெலீலாளும்

4பின்னர் சிம்சோன் தெலீலாள் என்னும் ஒரு பெண்ணை நேசித்தான். அவள் சோரேக் என்னும் பள்ளத்தாக்கைச் சேர்ந்தவள்.

5பெலிஸ்திய ஜனங்களின் தலைவர்கள் தெலீலாளிடம் சென்றனர். அவர்கள், "சிம்சோனைப் பெலசாலியாக வைத்திருப் பது எதுவென்று நாங்கள் அறிய விரும்புகிறோம். அவனது இரகசியத்தை உனக்குத் தெரிவிக்குமாறு நீ ஏதேனும் தந்திரம் செய். அப்போது அவனைப் பிடித்துக் கட்டுவது எப்படியென்பதை நாம் அறிந்துகொள்ள முடியும். பிறகு அவனைக் கட்டுப்படுத்துவதும் எளிதாயிருக்கும். நீ இதைச் செய்தால் நாங்கள் ஒவ்வொருவரும் உனக்கு 28 பவுண்டு எடையுள்ள வெள்ளி யைக் கொடுப்போம்" என்றார்கள்.

6எனவே தெலீலாள் சிம்சோனிடம், "நீங்கள் எதனால் பெலசாலியாக இருக்கிறீர் கள் என்பதைக் கூறுங்கள். எவ்வாறு உங்களைக் கட்டி பெலவீனப்படுத்த முடி யும்?" என்று கேட்டாள்.

7சிம்சோன் பதிலாக, "7 பச்சையான உலராத வில் நாண்களால் என்னைக் கட்ட வேண்டும். அவ்வாறு செய்தால் நான் பிறரைப் போன்று பெலனற்றவனா வேன்" என்றான்.

8அப்போது பெலிஸ்தியரின் அதிகாரிகள் தெலீலாளிடம் 7 பச்சையான வில் நாண் களைக் கொண்டு வந்தனர். அவை இன்னும் உலர்ந்திருக்கவில்லை. அவற்றால் தெலீலாள் சிம்சோனைக் கட்டினாள். 9சிலர் அடுத்த அறையில் ஒளித்திருந்தனர். தெலீலாள் சிம் சோனிடம், "சிம்சோன், உங்களைப் பெலிஸ்தியர்கள் பிடிக்கப் போகிறார்கள்!" என்றாள். ஆனால் சிம்சோன் எளிதாக அந்த வில் நாண்களை அறுத்துப் போட்டான். விளக்கில் எரியும் திரியிலுள்ள சாம்பலைப்போன்று அவைத் தெறித்து விழுந்தன. எனவே பெலிஸ்தியர்கள் சிம் சோனின் பெலத்தின் இரகசியத்தை அறிந்து கொள்ளவில்லை.

10அப்போது தெலீலாள் சிம்சோனிடம், "நீங்கள் என்னிடம் பொய் சொன்னீர்கள்! என்னை முட்டாளாக்கினீர்கள். உண்மை யைத் தயவுசெய்து எனக்குக் கூறுங்கள். எப்படி, யாரால் உங்களைக் கட்டிப்போட முடியும்?" என்று கேட்டாள்.

11சிம்சோன், "யாராவது என்னை முன்னால் பயன்படுத்தப்படாத புதுக் கயிறு களால் கட்டவேண்டும். அவ்வாறு யாரே னும் எனக்குச் செய்தால் நானும் பிற மனிதர்களைப் போன்று பெலமிழந்தவனாகி விடுவேன்" என்றான்.

12எனவே தெலீலாள் சில புதுக்கயிறு களை எடுத்து சிம்சோனைக் கட்டினாள். சில ஆட்கள் அடுத்த அறையில் ஒளித்துக் கொண்டிருந்தனர். தெலீலாள் அவனை அழைத்து, "சிம்சோன், பெலிஸ்திய ஆட்கள் உங்களைப் பிடிக்கப் போகிறார்கள்!" என்றாள். ஆனால் அவன் கயிறுகளை எளிதாக அறுத்துவிட்டான். நூலை அறுத்தாற்போன்று அவன் கயிறுகளை அறுத்தெறிந்தான்.

13பின்பு தெலீலாள் சிம்சோனை நோக்கி, "நீங்கள் என்னிடம் மீண்டும் பொய் சொல்லிவிட்டீர்கள்! என்னை முட்டாள்

---

**எந்நக்கோரி** இதன் பொருள் "அழைக்கிற ஒருவரின் நீரூற்று" என்பதாகும்.

ஆக்கிவிட்டீர்கள். இப்போது உங்களை
ஒருவன் எவ்வாறு கட்டக்கூடும் என்பதைக்
கூறுங்கள்" என்றாள்.

சிம்சோன், "நீ என் தலைமயிரின் 7
ஜடைகளையும் நெசவு தறியால் நெய்து
அதனைப் பின்னலிட்டு இறுகக் கட்டினால்
நானும் பிற மனிதரைப்போல் பெலமற்றவ
னாவேன்" என்றான்.

பின் சிம்சோன் உறங்கப்போனான்.
தெலீலாள் நெசவுத் துணியின் நூலைப்
பயன்படுத்தி அவனது தலைமயிரின் 7
ஜடைகளையும் நெய்தாள். [14]பின் தறியை
நிலத்தில் ஒரு கூடார ஆணியால் அடித்தாள்.
அவள் மீண்டும் சிம்சோனை அழைத்து,
"சிம்சோன், பெலிஸ்திய ஆட்கள் உங்களைப்
பிடிக்கப் போகிறார்கள்!" என்றாள்.
சிம்சோன் கூடார ஆணியையும், தறியையும்,
பாவையும் பிடுங்கி எடுத்துக்கொண்டு
எழுந்தான்!

[15]பின் தெலீலாள் சிம்சோனைப் பார்த்து,
"முற்றிலும் என்மேல் நம்பிக்கையற்றவராக
இருக்கும்போது 'நான் உன்னை நேசிக்கி
றேன்' என்று நீங்கள் எப்படி சொல்ல
முடியும்? உங்கள் இரகசியத்தை சொல்ல
மறுக்கிறீர்கள்? மூன்றாவதுமுறை நீங்கள்
என்னை முட்டாளாக்கி விட்டீர்கள். உங்
களது பேராற்றலின் இரகசியத்தை நீங்கள்
இன்னும் எனக்குக் கூறவில்லை" என்றாள்.
[16]தினந்தோறும் அவள் சிம்சோனைத்
தொந்தரவுச் செய்துக் கொண்டேயிருந்தாள்.
அவனது இரகசியத்தைப்பற்றி அவள்
கேட்டதினால் அவன் ஆத்துமா மிகவும்
சோர்ந்து, வாழ்க்கையை வெறுத்தான். [17]இறு
தியில் சிம்சோன் தெலீலாளுக்கு எல்லா
வற்றையும் கூறினான். அவன், "நான் எனது
தலைமயிரைச் சிரைத்ததில்லை. நான்
பிறக்கும் முன்னரே தேவனுக்கென்று
அர்ப்பணிக்கப்பட்டவன். யாராவது எனது
தலை மயிரை நீக்கினால் எனது பலத்தை
இழந்து விடுவேன். நான் வேறெந்த மனி
தனைப் போன்றும் பலவீனனாய் காணப்
படுவேன்" என்றான்.

[18]சிம்சோன் அவளிடம் இரகசியத்தைக்
கூறிவிட்டான் என்பதைத் தெலீலாள் கண்டு
கொண்டாள். பெலிஸ்தியரின் தலைவர்
களுக்கு அவள் செய்தியைச் சொல்லியனுப்
பினாள். அவள், "மீண்டும் இங்கே வாருங்
கள். சிம்சோன் என்னிடம் எல்லாவற்றையும்
கூறிவிட்டான்" என்றாள். எனவே பெலிஸ்தி
யரின் தலைவர்கள் தெலீலாளிடம் வந்தார்
கள். அவளுக்குக் கொடுப்பதாக வாக்க
ளித்திருந்த பணத்தை அவர்கள் கொண்டு
வந்திருந்தார்கள்.

[19]சிம்சோன் அவள் மடியில் படுத்திருந்த
போதே அவனைத் தெலீலாள் உறங்க
வைத்தாள். பின்பு அவள் சவரம் செய்யும்
ஒருவனை அழைத்து அவனது தலைமயிரின்
7 ஜடைகளையும் சிரைத்துவிடச் செய்தாள்.
அப்போது சிம்சோன் தனது பெலத்தை
இழந்தான். சிம்சோனின் பலம் அவனை
விட்டு நீங்கியது. [20]அப்போது தெலீலாள்
அவனை அழைத்து, "சிம்சோன், பெலிஸ்
தியர் உன்னைப் பிடிக்கப் போகிறார்கள்!"
என்றாள். அவன் எழுந்து, "நான்
எப்போதும் போல் என்னை விடுவித்துத்
தப்பிவிடுவேன்" என்று நினைத்தான்.
கர்த்தர் அவனை விட்டு நீங்கிச்சென்றதை
அவன் அறியவில்லை.

[21]பெலிஸ்திய ஆட்கள் சிம்சோனைச்
சிறைபிடித்தனர். அவர்கள் அவனது கண்
களைப் பிடுங்கி, அவனைக் காசா
நகரத்திற்கு அழைத்துச் சென்றனர். அவன்
ஓடிவிடாதபடிக்கு அவனுக்கு விலங்கிட்டுக்
கட்டினார்கள். அவர்கள் சிம்சோனைச்
சிறையில் அடைத்து, அவனைத் தானியம்
அரைக்குமாறு செய்தனர். [22]ஆனால் சிம்
சோனின் தலைமயிர் மீண்டும் வளர
ஆரம்பித்தது.

[23]பெலிஸ்தியரின் தலைவர்கள் கொண்
டாட்டத்திற்கென ஓரிடத்தில் கூடினார்கள்.
தங்கள் பொய்த் தெய்வமாகிய தாகோ
னிற்குப்* பெரும் பலிகொடுக்க அங்கு
வந்தனர். அவர்கள், "நமது தேவன் நமது
பகைவனாகிய சிம்சோனை வெல்வதற்கு
நமக்கு உதவினார்" என்று சொன்னார்கள்.
[24]பெலிஸ்தியர் சிம்சோனைக் காணும்
பொழுது, அவர்கள் தம் பொய்த்
தெய்வத்தை வாழ்த்தினார்கள். அவர்கள்,

"இம்மனிதன் நம் ஜனங்களை
அழித்தான்!
இம்மனிதன் நம் ஜனங்களில் பலரைக்
கொன்றான்!
ஆனால் நமது தெய்வம்
நம் பகைவனை வெல்ல
உதவினார்!" என்றார்கள்.

[25]அவர்கள் கொண்டாட்டத்தில் களி
கூர்ந்து நன்றாகப் பொழுதைப் போக்கினார்
கள். எனவே அவர்கள், "சிம்சோனை
வெளியே அழைத்து வாருங்கள். அவனை
ஆட்டம் காண்பித்து கிண்டல் செய்ய
நாங்கள் விரும்புகிறோம்" என்றார்கள்.
எனவே அவர்கள் சிம்சோனைச் சிறையிலி
ருந்து அழைத்து வந்து அவனைக் கேலிச்
செய்தனர். பொய்த் தெய்வம் தாகோன்
கோவிலின் தூண்களுக்கு நடுவே அவனை
நிறுத்தினார்கள். [26]ஒரு பணியாள் அவனது
கைகளைப் பிடித்துக் கொண்டிருந்தான்.
சிம்சோன் அவனிடம், "இக்கோவிலைத்
தாங்கி நிற்கும் தூண்களை நான் தொடுமாறு

---

**தாகோன்** கானானிய ஜனங்கள் இந்த பொய்த் தெய்வம் நல்ல தானிய விலைச்சலை அவர்களுக்கு கொடுப்பார் என நம்பி ஆராதித்தனர். இது ஒருவேளை பெலிஸ்திய ஜனங்களின் மிக முக்கியமான தெய்வமாக இருக்கலாம்.

என்னை நிறுத்து. நான் அவற்றில் சாய்ந்து கொள்ள விரும்புகிறேன்" என்றான்.

27அக்கோவில் ஆண்களாலும் பெண்களாலும் நிரம்பிவழிந்தது. பெலிஸ்தியரின் எல்லா தலைவர்களும் அங்கிருந்தனர். கோவிலின் மாடி அடுக்கில் சுமார் 3,000 ஆண்களும் பெண்களும் இருந்தனர். அவர்கள் நகைத்துக் கொண்டு, சிம்சோனைக் கேலிச் செய்தபடி இருந்தனர். 28அப்போது சிம்சோன் கர்த்தரை நோக்கி ஜெபம் செய்தான். அவன், "சர்வ வல்லமையுள்ள கர்த்தாவே, என்னை நினைவுகூரும். தேவனே, எனக்கு இன்னொருமுறை பெலன் தாரும். எனது இரு கண்களையும் பிடுங்கியதற்காய் இப்பெலிஸ்தியரை ஒரு முறை நான் தண்டிக்க அனுமதியும்!" என்றான். 29பின்பு கோவிலின் நடுவே கோவிலைத் தாங்கிக் கொண்டிருந்த இரண்டு தூண்களையும் சிம்சோன் பற்றிக் கொண்டான். ஒரு தூண் அவனது வலதுபுறமும், இன்னொரு தூண் அவனது இடதுபுறமும் இருக்கும்படி நின்று கொண்டான். 30சிம்சோன், "என்னையும் இந்த பெலிஸ்தியர்களுடன் மரிக்க விடும்" என்றான். பின்பு அத்தூண்களைப் பலங்கொண்டமட்டும் தள்ளினான். தலைவர்கள்மீதும், அதிலிருந்த ஜனங்கள்மீதும் கோவில் இடிந்து விழுந்தது. இவ்வாறு உயிரோடிருந்தபோது கொன்றதைக் காட்டிலும் அதிகமான பெலிஸ்தியரைச் சிம்சோன் மரித்தபோது கொன்றான்.

31சிம்சோனின் சகோதரர்களும் அவனது தந்தையின் குடும்பத்தினரும் அவனது உடலை எடுத்துக் கொண்டு வந்து, அவனது தந்தையின் கல்லறையிலேயே புதைத்தனர். அக்கல்லறை சோரா நகரத்திற்கும் எஸ்தாவோல் நகரத்திற்கும் நடுவே இருந்தது. இஸ்ரவேலருக்கு 20 ஆண்டுகள் சிம்சோன் நியாயாதிபதியாக இருந்தான்.

### மீகாவின் விக்கிரங்கள்

17 எப்பிராயீம் என்னும் மலைநாட்டில் மீகா என்னும் மனிதன் வசித்து வந்தான். 2மீகா தன் தாயை நோக்கி, "உன்னிடமிருந்து 28 பவுண்டு வெள்ளியை யாரோ திருடிச் சென்றது உனக்கு நினைவிருக்கிறதா? நீ அதைக் குறித்து சாபமிட்டதை நான் கேட்டேன். என்னிடம் அந்த வெள்ளி உள்ளது. நான்தான் அதை எடுத்தேன்" என்றான்.

அவன் தாய், "எனது மகனே, கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கட்டும்" என்றாள்.

3மீகா 28 பவுண்டு வெள்ளியையும் தன் தாயிடம் திருப்பிக் கொடுத்தான். அப்போது அவள், "நான் இந்த வெள்ளியைக் கர்த்தருக்கு விசேஷ அன்பளிப்பாகச் செலுத்துவேன். என் மகன் ஒரு விக்கிரகத்தைச் செய்து அதை வெள்ளியால் பூசும்படியாக இதைக் கொடுப்பேன். மகனே, எனவே இப்போதே அந்த வெள்ளியை உனக்கு நான் கொடுக்கிறேன்" என்றாள்.

4ஆனால் மீகா வெள்ளியைத் தாயிடமே கொடுத்து விட்டான். அவள் அதில் 5 பவுண்டு வெள்ளியை எடுத்து அதைப் பொற்கொல்லனிடம் கொடுத்தாள். வெள்ளி முலாம் பூசிய விக்கிரகத்தைப் பொற்கொல்லன் அந்த வெள்ளியால் உருக்கினான். அந்த விக்கிரகம் மீகாவின் வீட்டில் இருந்தது.
5விக்கிரகங்களைத் தொழுதுகொள்ளும் கோயில் ஒன்று மீகாவுக்கு இருந்தது. அவன் ஒரு ஏபோத்தையும் சில வீட்டு விக்கிரங்களையும் செய்தான். மீகா தன் மகன்களில் ஒருவனைப் பூஜை செய்வதற்கு நியமித்தான்.
6(அப்போது இஸ்ரவேலருக்கு அரசனாக யாருமில்லை. எனவே, ஒவ்வொருவனும் தான் சரியென நினைத்ததையே செய்தான்.)
7அங்கு இளைஞன் ஒருவன் இருந்தான். அவன் யூதாவிலுள்ள பெத்லெகேம் நகரிலிருந்து வந்தவன். அவன் யூதா கோத்திரத்தினரோடு வாழ்ந்து வந்தான். 8அந்த இளைஞன் யூதாவிலுள்ள பெதலெகேமிலிருந்து சென்ற பின் வாழ்வதற்கு மற்றோர் இடம் தேடிக் கொண்டிருந்தான். அவன் பயணம் செய்து கொண்டிருந்தபோது, மீகாவின் வீட்டிற்கு வந்தான். எப்பிராயீமின் மலைநாட்டில் மீகாவின் வீடு இருந்தது. 9மீகா அவனிடம், "நீ எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டான்.

இளைஞன் அதற்கு, "நான் யூதாவிலுள்ள பெத்லெகேமைச் சேர்ந்த ஒரு லேவியன். நான் வசிப்பதற்கு ஒரு இடம் தேடிக்கொண்டிருக்கிறேன்" என்று பதில் கூறினான்.

10அப்போது மீகா அவனிடம், "என்னோடு தங்கியிருந்து, எனது தந்தையாகவும், போதகனாகவும் இரு. ஒவ்வொரு ஆண்டும் உனக்கு 4 ஆழாக்கு* வெள்ளியைத் தருவேன். மேலும் உனக்கு உடையும் உணவும் தருவேன்" என்றான்.

மீகா சொன்னபடியே லேவியன் செய்தான். 11இளைஞனான லேவியன் மீகாவோடு வசிப்பதற்குச் சம்மதித்தான். மீகாவின் மகன்களைப்போல் அந்த இளைஞன் அவ்வீட்டில் ஒருவனாக வாழ்ந்து வந்தான். 12மீகா அவனைப் பூஜை செய்பவனாகத் தேர்ந்தெடுத்தான். எனவே அவன் பூஜை செய்பவனாக மீகாவின் வீட்டில் வாழ்ந்து வந்தான். 13மீகா, "கர்த்தர் எனக்கு நன்மை செய்வார் என்பதை இப்போது அறிகிறேன். நான் இதை அறிவேன். ஏனென்றால், ஒரு லேவியன் ஆசாரியனாக இருக்கிறான்" என்றான்.

---

4 **ஆழாக்கு** சுமார் 91.2 கிராம் எடையளவுள்ள வெள்ளி, என கொள்ளலாம்.

### லாயீசு நகரத்தைத் தாண் கைப்பற்றுதல்

18 அக்காலத்தில் இஸ்ரவேலருக்கு அரச
னாக யாரும் இல்லை. அப்போது
தாண் கோத்திரத்தினர் வசிப்பதற்கு இன்னும்
இடம் தேடிக்கொண்டிருந்தனர். அவர்களுக்கு
ரிய தேசப்பகுதியை அவர்கள் சுதந்தரிக்க
வில்லை. பிற இஸ்ரவேலின் கோத்திரத்தினர்
அனைவரும் தமக்குரிய நிலத்தைப் பெற்றி
ருந்தனர். ஆனால் தாண் கோத்திரத்தினர்
தமக்கான நிலத்தை இதுவரை சுதந்தரிக்க
வில்லை.
2 எனவே தாண் கோத்திரத்தினர் ஏதேனும்
நிலத்தைப் பார்த்து வருவதற்காக 5 வீரர்
களை அனுப்பினார்கள். அவர்கள் குடியேற
ஏற்ற இடத்தைக் கண்டு பிடிப்பதற்காகச்
சென்றனர். அந்த 5 மனிதர்களும் சோரா,
எஸ்தாவோல் ஆகிய நகரங்களைச்
சேர்ந்தவர்கள். அவர்கள் தாணின் கோத்திரத்
திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அவர்
களிடம் "போய் நமக்காக நிலத்தைப் பார்த்து
வாருங்கள்" என்று சொல்லப்பட்டது.
அந்த 5 மனிதர்களும் எப்பிராயீமின்
மலை நாட்டிற்கு வந்தனர். அவர்கள்
மீகாவின் வீட்டிற்கு வந்து, இரவை அங்குக்
கழித்தனர். 3 அவர்கள் மீகாவின் வீட்டிற்
கருகே வந்து கொண்டிருந்தபோது, லேவி
யனாகிய இளைஞனின் சத்தத்தைக் கேட்
டனர். அவர்கள் மீகாவின் வீட்டில்
தங்கியிருந்தபோது, அவன் குரலை அடை
யாளம் கண்டு கொண்டனர். அவர்கள்
அந்த இளைஞனிடம், "உன்னை இங்கு
அழைத்து வந்தது யார்? நீ இங்கு என்ன
செய்கிறாய்? இங்கு உன் வேலை என்ன?"
என்று கேட்டனர்.
4 மீகா அவனுக்குச் செய்தவற்றை எல்லாம்
அந்த இளைஞன் அவர்களுக்குக் கூறினான்.
அந்த இளைஞன், "மீகா என்னைச்
சம்பளத்திற்கு அமர்த்தினான். நான் பூஜை
செய்கிறவனாக உள்ளேன்" என்று
கூறினான்.
5 எனவே அவர்கள் அவனிடம், "தயவு
செய்து தேவனிடம் எங்களுக்காக ஏதாவது
விசாரித்துச் சொல். நாங்கள் சிலவற்றைத்
தெரிந்துகொள்ள விரும்புகிறோம். நாங்கள்
வாழ்வதற்காக இடம் தேடுவது வெற்றி
பெறுமா?" என்று கேட்டனர்.
6 பூஜை செய்யும் இளைஞன் அந்த 5
மனிதரிடமும், "ஆம், சமாதானத்தோடு
செல்லுங்கள். உங்கள் பாதையில் கர்த்தர்
உங்களை வழிநடத்துவார்" என்றான்.
7 எனவே அந்த 5 மனிதர்களும்
அங்கிருந்து சென்றனர். அவர்கள் லாயீஸ்
நகரத்திற்குச் சென்றனர். அந்நகர ஜனங்கள்
பாதுகாப்பாக வாழ்வதைக் கண்டனர்.
அவர்களைச் சீதோனியர் ஆண்டு வந்தனர்.
எல்லாம் சமாதானத்தோடு, அமைதியாக
நடைபெற்றன. அவர்கள் எல்லாவற்றையும்
நிறைவாய் பெற்றிருந்தனர். எந்தப் பகை
வரும் அவர்களைத் துன்புறுத்துவதற்கு
அருகே இருக்கவில்லை. மேலும் அவர்கள்
சீதோனிலிருந்து வெகுதூரத்தில் வாழ்ந்து
வந்தார்கள். ஆராமின் ஜனங்களோடும்
எத்தகைய ஒப்பந்தமும்அவர்கள் செய்திருக்க
வில்லை.
8 அந்த 5 பேரும் சோரா, எஸ்தாவோல்,
ஆகிய நகரங்களுக்குத் திரும்பினார்கள்.
அவர்களின் உறவினர், "நீங்கள் அறிந்து
வந்ததென்ன?" என்று கேட்டார்கள்.
9 அவர்கள், "நாங்கள் ஒரு இடத்தைப்
பார்த்து வந்திருக்கிறோம். அது மிகவும்
நன்றாக இருக்கிறது. நாம் அதைத்
தாக்கவேண்டும். காத்திருக்கக் கூடாது, நாம்
போய், அத்தேசத்தைக் கைப்பற்றுவோம்!
10 அந்த இடத்திற்கு நீங்கள் வரும்போது
அத்தேசம் மிகப்பெரிய நிலப்பரப்பு
கொண்டது என்பதை அறிவீர்கள். எல்லாம்
மிகுதியாக அங்குக் கிடைக்கின்றன.
ஜனங்கள் தாக்குதலை எதிர்பார்த்திருக்க
வில்லை என்பதையும் நீங்கள் காண்பீர்கள்.
அத்தேசத்தைக் தேவன் நமக்கு நிச்சயமாக
அளித்திருக்கிறார்" என்றார்கள்.
11 எனவே தாண் கோத்திரத்தைச் சேர்ந்த
600 ஆட்கள் சோரா, எஸ்தாவோல் ஆகிய
நகரங்களிலிருந்து சென்றனர். அவர்கள்
போருக்குத் தயாராக இருந்தனர். 12 லாயீஸ்
நகரத்திற்குச் செல்லும் வழியில் அவர்கள்
யூதா தேசத்திலுள்ள கீரியாத்யாரீம் என்னும்
நகரத்திற்குச் சென்று, அங்கு முகாமிட்டுத்
தங்கினார்கள். ஆகையால் கீரியாத்யாரீமிற்கு
மேற்கேயுள்ள இடம் இன்றுவரைக்கும்
மக்னிதான் எனப்படுகிறது. 13 அந்த
இடத்திலிருந்து 600 பேரும் எப்பிராயீமின்
மலைநாட்டிற்குப் பயணம் செய்தனர். பிறகு
அவர்கள் மீகாவின் வீட்டிற்கு வந்தனர்.
14 லாயீசைச் சுற்றிப் பார்த்துவந்த 5
பேரும் தம் உறவினர்களிடம், "இந்த
வீடுகளுள் ஒன்றில் ஒரு ஏபோத் உள்ளது.
மேலும் வீட்டிற்குரிய தெய்வங்களும், ஒரு
செதுக்கப்பட்ட சிலையும், ஒரு வெள்ளி
விக்கிரகமும் இங்கு உள்ளன. உங்களுக்கு
என்ன செய்வதெனத் தெரியும் சென்று
அவற்றை எடுத்து வாருங்கள்" என்றனர்.
15 எனவே அவர்கள் மீகாவின் வீட்டருகே,
இளைஞனாகிய லேவியன் வசித்துவந்த
இடத்தில் நின்று, அந்த இளைஞனின்
நலத்தை விசாரித்தனர். 16 தாண்
கோத்திரத்தைச் சேர்ந்த 600 பேரும் நுழை
வாயிலில் நின்று கொண்டனர். அவர்கள்
கையில் ஆயுதங்களை ஏந்தியவர்களாய்
போருக்குத் தயாராக இருந்தனர். 17-18 அந்த
5 ஒற்றர்களும் வீட்டினுள் நுழைந்தனர்.
போருக்குத் தயாராக நின்ற 600 பேரோடும்
பூஜை செய்பவன் கதவிற்கு வெளியே
நின்றுக் கொண்டிருந்தான். அந்த ஆட்கள்
செதுக்கப்பட்ட சிலை, ஏபோத், வீட்டு
விக்கிரகங்கள், வெள்ளி விக்கிரகம்

ஆகியவற்றை எடுத்துக் கொண்டனர். லேவி
யனாகிய பூஜை செய்யும் இளைஞன்,
“நீங்கள் என்ன செய்கிறீர்கள்?” என்று
கேட்டான்.
19 ஐந்து பேரும், “அமைதியாக இரு! ஒரு
வார்த்தையும் பேசாதே. எங்களோடு
வா. எங்கள் தந்தையாகவும், பூஜை செய்
பவனாகவும் இரு. நீ இப்போது ஏதேனும்
ஒன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும்.
ஒருவனுக்காக பூஜை செய்யும் பணியைச்
செய்வது நல்லதா? அல்லது இஸ்ரவேலின்
மொத்த கோத்திரங்களுக்கு பூஜை செய்வது
நல்லதா?” என்று கேட்டனர்.
20 இது லேவியனாகிய அம்மனிதனுக்குச்
சந்தோஷம் அளித்தது. எனவே அவன்
ஏபோத், வீட்டு விக்கிரகங்கள், விக்கரகம்
ஆகியவற்றை எடுத்துக்கொண்டு, தாண்
கோத்திரத்தைச் சேர்ந்த அம்மனிதரோடு
சென்றான்.
21 பின்பு தாண் கோத்திரத்தைச் சேர்ந்த
அந்த 600 பேரும் லேவியனாகிய அந்தப்
பூஜை செய்பவனோடு மீகாவின் வீட்டி
லிருந்து திரும்பி நடந்தனர். அவர்கள்
தங்கள் குழந்தைகள், மிருகங்கள், பொருட்
கள் அனைத்தையும் தங்களுக்கு முன்பாகப்
போகவிட்டனர்.
22 அங்கிருந்து தாண் கோத்திரத்து ஆட்கள்
மிகுந்த தூரம் சென்றார்கள். ஆனால்
மீகாவிற்கு அருகே வாழ்ந்தவர்கள் ஒன்று
கூடி தாண் மனிதர்களைத் துரத்திப்
பிடித்தனர். 23 மீகாவின் ஆட்கள் தாணின்
மனிதர்களைப் பார்த்து சத்தமிட்டனர்.
தாணின் ஆட்கள் திரும்பிப் பார்த்தனர்.
மீகாவிடம், “சிக்கல் என்ன? ஏன்
சத்தமிடுகிறீர்கள்?” என்றனர்.
24 மீகா, “தாணின் மனிதர்களாகிய நீங்கள்
எனது விக்கிரகங்களை எடுத்து வந்தீர்கள்.
அவற்றை எனக்காகச் செய்தேன். எனக்காக
பூஜை செய்பவனையும் அழைத்துப்
போகிறீர்கள். இப்போது என்னிடம் என்ன
இருக்கிறது? ‘உன் பிரச்சனை என்ன?’
என்று எப்படி என்னைக் கேட்கிறீர்கள்?”
என்றான்.
25 தாண் கோத்திரத்தைச் சேர்ந்த மனிதர்
கள், “நீங்கள் எங்களோடு விவாதிக்கா
திருப்பது நல்லது. எங்கள் மனிதரில் சிலர்
கோபக்காரர்கள். எங்களைப் பார்த்து நீங்கள்
சத்தமிட்டுப் பேசினால் அவர்கள் உங்களைத்
தாக்கக்கூடும். நீங்களும் உங்கள் குடும்பத்தின
ரும் கொல்லப்படுவீர்கள்” என்றார்கள்.
26 பின்பு தாணின் ஆட்கள் திரும்பி,
தங்கள் வழியேச் சென்றார்கள். அவர்கள்
வலிமைமிக்கவர்கள் என்பதை மீகா
அறிந்ததினால் தன் வீட்டிற்குத் திரும்பிச்
சென்றான்.
27 மீகா செய்த விக்கிரகங்களைத் தாணின்
ஆட்கள் எடுத்து சென்றனர். மீகாவுடனிருந்த
ஆசாரியனையும் அவர்கள் தங்களுடன்
அழைத்து லாயீஸுக்கு வந்தனர். அங்குள்ள
ஜனங்கள் அமைதியாக வாழ்ந்தனர்.
அவர்கள் எந்தத் தாக்குதலையும் எதிர்
பார்க்கவில்லை. தாணின் ஆட்கள் தங்கள்
வாளால் அவர்களைக் கொன்று போட்டு,
அவர்கள் நகரத்தை எரித்தனர். 28 லாயீஸில்
வாழ்ந்த ஜனங்களைக் காப்பாற்றுவதற்கு
யாரும் இருக்கவில்லை. சீதோன் நகரில்
அவர்களுக்கு உதவும் ஜனங்கள் இருந்தனர்.
ஆனால் அந்நகரத்திலிருந்து வெகு தொலை
வில் அவர்கள் வசித்தார்கள். லாயீசின்
ஜனங்கள் ஆராமியரோடு எந்த ஒப்பந்தமும்
செய்திருக்கவில்லை எனவே அவர்கள் எந்த
உதவியும் செய்யவில்லை. பேத்ரே
கோபிற்குச் சொந்தமான ஒரு பள்ளத்தாக்கில்
லாயீஸ் நகரம் இருந்தது. அந்த இடத்தில்
தாணின் ஜனங்கள் ஒரு புதிய நகரத்தைக்
கட்டினார்கள். அந்நகரம் அவர்கள் இருப்
பிடமாயிற்று. 29 தாண் ஜனங்கள் அந்ந
கரத்திற்கு ஒரு புதிய பெயரிட்டனர். அந்நகரம்
லாயீஸ் என்னும் பெயர் கொண்
டது. அவர்கள் அதைத் தாண் என்று
மாற்றினார்கள். இஸ்ரவேலின் மகன்களில்
ஒருவனும், தங்கள் முற்பிதாவுமாகிய
தாணின் பெயரால் அந்நகரை அழைத்தனர்.
30 தாண் நகரில் தாண் கோத்திரத்தினர்
அந்த விக்கிரங்களை வைத்தனர். கெர்சோ
னின் மகனாகிய யோனத்தானை அவர்கள்
பூஜை செய்பவனாக நியமித்தனர். கெர்சோம்
மோசேயின்* மகன். இஸ்ரவேலர் பாபிலோ
னுக்குக் கைதிகளாக அழைத்துச் செல்லப்
படும் வரையிலும் யோனத்தானும், அவனது
மகன்களும் தாண் கோத்திரத்தினருக்கு பூஜை
செய்பவர்களாக விளங்கினர். 31 தாண் ஜனங்
கள் மீகா செய்த விக்கிரகங்களை தொழுது
கொண்டனர். தேவனின் கூடாரம் சீலோவில்
இருந்த காலத்தில் அவர்கள் அந்த விக்கிரகங்
களை வணங்கி வந்தனர்.

## லேவியனான மனிதனும் அவனது வேலைக்காரியும்

19 அக்காலத்தில் இஸ்ரவேலருக்கு அரசன்
இருக்கவில்லை.
எப்பிராயீம் என்னும் மலைநாட்டில் ஒரு
லேவியன் வாழ்ந்து வந்தான். அவனுடன்
இருந்த வேலைக்காரி, அவனுக்கு மனை
வியைப் போல வாழ்ந்து வந்தாள். அந்த
வேலைக்காரி யூதா தேசத்துப் பெத்லெ
கேமைச் சேர்ந்தவள். 2 அந்த வேலைக்காரி
லேவியனோடு ஒரு விவாதம் செய்து
அவனை விட்டுவிட்டு, யூதாவிலுள்ள
பெத்லெகேமிலிருந்த தனது தந்தையின்
வீட்டிற்குத் திரும்பிச் சென்று, அங்கு
நான்கு மாதங்கள் தங்கியிருந்தாள். 3 பின்பு
அவள் கணவன் அவளிடம் சென்றான்.

---

**மோசே** அல்லது “மனாசே.”

அவள் அவனோடு வரும்படி அழைப்பதற்
காக அவளோடு அன்பாகப் பேச
விரும்பினான். அவன் தன்னோடு தன்
பணியாளையும், இரண்டு கழுதைகளையும்
அழைத்துச் சென்றான். லேவியன் அவளது
தந்தையின் வீட்டை அடைந்தான். லேவி
யனைக் கண்ட அவளது தந்தை சந்தோஷம்
அடைந்து அவனை வரவேற்பதற்கு
வெளியே வந்தான். 4அப்பெண்ணின் தந்தை
லேவியனை வீட்டிற்குள் அழைத்துச் சென்
றான். லேவியனின் மாமனார் அவனைத்
தங்கிச் செல்லுமாறு கூறினான். எனவே
லேவியன் 3 நாட்கள் அங்கு தங்கியிருந்தான்.
அவன் மாமனார் வீட்டிலேயே உண்டு,
பருகித் தூங்கினான்.

5நான்காம் நாளில் அவர்கள் அதிகாலை
யில் எழுந்தனர். லேவியன் புறப்படுவதற்குத்
தயாரானான். ஆனால் அந்தப் பெண்ணின்
தந்தை, தன் மருமகனைப் பார்த்து, “முதலில்
ஏதாவது சாப்பிடு. சாப்பிட்டப் பின்னர்
புறப்படலாம்” என்றான். 6எனவே லேவி
யனும் அவனது மாமனாரும் சாப்பிடவும்
குடிக்கவும் உட்கார்ந்தனர். பின் அந்த
இளம்பெண்ணின் தந்தை லேவியனை
நோக்கி, “இன்றிரவு தயவுசெய்து இங்கேயே
தங்கு இளைப்பாறி மகிழ்ச்சியோடு இரு.
நடுப்பகல் வரைக்கும் இருந்து போகலாம்”
என்றான். எனவே இருவரும் உண்ண
ஆரம்பித்தனர். 7லேவியன் புறப்படுவதற்கு
எழுந்தான். ஆனால் அன்றிரவும் அவனைத்
தங்கும்படியாக அவனது மாமனார் வேண்டி
னான்.

8பின்பு, ஐந்தாம் நாளில், லேவியன்
அதிகாலையில் எழுந்தான். புறப்படுவதற்கு
அவன் தயாரானான். ஆனால் அப்பெண்
ணின் தந்தை மருமகனை நோக்கி, “முதலில்
ஏதேனும் சாப்பிடு. களைப்பாறி நடுப்பகல்
வரைக்கும் தங்கியிரு” என்றான். எனவே
இருவரும் சேர்ந்து உண்டனர்.

9பின் லேவியனும், அவனது வேலைக்
காரியும், அவனது வேலையாளும், புறப்
படுவதற்கு எழுந்தனர். ஆனால் அந்த
இளம்பெண்ணின் தந்தை, “இருள் சூழ்ந்து
வருகிறது. பகல் மறைய ஆரம்பிக்கிறது.
எனவே இரவு இங்கே தங்கி களித்திரு.
நாளைக் காலையில் சீக்கிரமாக எழுந்து
உன் வழியே செல்” என்றான்.

10மற்றொரு இரவும் தங்கியிருக்க அந்த
லேவியன் விரும்பவில்லை. அவன் தன்
2 கழுதைகளோடும், வேலைக்காரியோடும்
புறப்பட்டான். அவன் பயணம் செய்து
எபூசை நெருங்கினான். (எருசலேமுக்கு
மற்றொரு பெயர் எபூசு.) 11பகல் கழிந்தது.
அவர்கள் எபூசு நகரத்திற்கு அருகில்
வந்தனர். எனவே பணியாள் எஜ
மானனாகிய லேவியனை நோக்கி, “இந்த
எபூசு நகரத்தில் தங்கி இங்கு இரவைக்
கழிப்போம்” என்றான்.

12ஆனால் லேவியனாகிய அந்த
எஜமானன், “இல்லை, இஸ்ரவேல் ஜனங்க
ளில்லாத அந்நிய நகரத்திற்கு நாம்
போகவேண்டாம், நாம் கிபியா நகரத்திற்குச்
செல்வோம்” என்றான். 13லேவியன், “வாருங்
கள், நாம் கிபியாவுக்கோ, ராமாவுக்கோ
செல்வோம். அந்த இரண்டு நகரங்களில்
ஒன்றில் இரவில் தங்கலாம்” என்றான்.

14லேவியனும் அவனோடிருந்தோரும் பய
ணத்தைத் தொடர்ந்தனர். கிபியாவில்
அவர்கள் நுழைந்ததும் சூரியன் மறைந்தது.
பென்யமீன் கோத்திரத்திற்குரிய பகுதியில்
கிபியா இருந்தது. 15எனவே அவர்கள்
கிபியாவில் தங்கினார்கள். இரவை அந்த
நகரில் கழிக்க எண்ணினார்கள். அவர்கள்
நகர சதுக்கத்திற்கு வந்து அங்கு அமர்ந்தனர்.
ஆனால் இரவில் தங்குவதற்கு யாரும்
அவர்களை அழைக்கவில்லை.

16அன்று மாலை வயல்களிலிருந்து ஒரு
முதியவன் நகரத்திற்குள் வந்தான். அவனு
டைய வீடு எப்பிராயீம் மலை நாட்டி
லிருந்தது. ஆனால் அவன் கிபியா நகரத்தில்
வசித்துக் கொண்டிருந்தான். (கிபியாவின்
ஆட்கள் பென்யமீன் கோத்திரத்தைச்
சேர்ந்தவர்கள்.) 17முதிய மனிதன் நகரசதுக்
கத்தில் பயணியைப் (லேவியனை) பார்த்
தான். முதியவன், “எங்கு போய்க் கொண்டி
ருக்கிறாய்? எங்கிருந்து வந்தாய்?” என்று
கேட்டான்.

18லேவியன், “நாங்கள் யூதாவிலுள்ள
பெத்லெகேம் நகரிலிருந்து பயணம் செய்கி
றோம். நாங்கள் கர்த்தருடைய கூடாரத்
துக்குப் போகிறோம். நான் எப்பிராயீம்
மலைநாட்டில் தொலைவான இடத்தில் வாழ்
கிறவன். நான் யூதாவிலுள்ள பெத்லெகே
மிற்குப் போயிருந்தேன். இப்போது என்
வீட்டிற்குப் போய்க்கொண்டிருக்கிறேன்.
19எங்கள் கழுதைகளுக்கு வைக்கோலும்
தீனியும் உண்டு. எனக்கும், இளம்பெண்ணுக்
கும், பணியாளுக்கும் ரொட்டியும் திராட்சை
ரசமும் உண்டு. எங்களுக்கு எதுவும் தேவை
யில்லை” என்று கூறினான்.

20முதியவன், “நீ என் வீட்டில் வந்து
தங்கலாம். உனக்குத் தேவையான ஏதாவது
நான் கொடுப்பேன். ஆனால் இரவில் நகர
சதுக்கத்தில் மட்டும் தங்காதே” என்றான்.
21பின்பு முதியவன் லேவியனையும் அவ
னோடிருந்தவர்களையும் தன் வீட்டிற்கு
அழைத்துக்கொண்டுச் சென்றான். லேவி
யனின் கழுதைகளுக்குத் தீனி கொடுத்தான்.
அவர்கள் கால்களைக் கழுவி, உண்ணவும்
பருகவும் செய்தனர்.

22லேவியனும் அவனோடிருந்தவர்களும்
அவற்றை அனுபவித்துக் கொண்டிருந்த
பொழுது அந்நகர மனிதர்களில் துன்மார்க்
கரான சிலர் அந்த வீட்டைச் சூழ்ந்து
கொண்டனர். அவர்கள் கதவை பலமாகத்
தட்ட ஆரம்பித்தார்கள். அந்த வீட்டின்

சொந்தக்காரனான முதியவனிடம் உரக்கப்
பேசினார்கள். அவர்கள், "உன் வீட்டிற்கு
வந்த மனிதனை வெளியே அழைத்து
வா. நாங்கள் அவனோடு பாலின உறவு
கொள்ள வேண்டும்" என்றனர்.
23முதியவன் வெளியே போய், அந்த
துன்மார்க்கரிடம் பேசி, "வேண்டாம், எனது
நண்பர்களே, அத்தகைய தீயகாரியத்தைச்
செய்யாதீர்கள். அவன் என் வீட்டு
விருந்தினன். இத்தகைய கொடிய பாவத்தைச்
செய்யாதீர்கள். 24பாருங்கள், இவள் என்
மகள். இதற்கு முன் பாலியல் அனுபவத்தை
அறிந்ததில்லை. அவளை உங்களிடம்
அழைத்து வருவேன். மேலும் எனது
விருந்தினனுடைய வேலைக்காரியையும்
அழைத்து வருகிறேன். உங்கள் விருப்பம்
போல் அவர்களை நடத்தலாம். ஆனால்
இம்மனிதனுக்கு அத்தகைய கொடுமை
செய்யாதீர்கள்" என்றான்.
25ஆனால் அந்த துன்மார்க்கர் முதியோன்
கூறியதைப் பொருட்படுத்தவில்லை. எனவே
லேவியன் வேலைக்காரியை அழைத்து
வெளியே அனுப்பினான். அவர்கள் அவளை
இராமுழுவதும் கற்பழித்து காயப்படுத்தினார்
கள். அதிகாலையில் அவர்கள் அவளைப்
போகவிட்டனர். 26விடியும்போது அவள்
தன் எஜமானன் தங்கியிருக்கும் வீட்டிற்குத்
திரும்பிவந்து முன் வாசலில் வந்து
விழுந்தாள். வெளிச்சம் உதிக்கும்வரை
அங்கேயே கிடந்தாள்.
27லேவியன் மறுநாள் அதிகாலையில்
விழித்து தன் வீட்டிற்குப் போகவிரும்பி
வெளியே போவதற்காக கதவைத் திறந்த
போது கதவின் நிலையில் ஒரு கை
குறுக்கே விழுந்தது. அவன் வேலைக்காரி
அங்கே வாசலுக்கெதிரில் விழுந்துகிடந்தாள்.
28லேவியன் அவளிடம், "எழுந்திரு, புறப்பட
லாம்" என்றான். ஆனால் அவள் பதில்
தரவில்லை (மரித்து கிடந்தாள்.)
லேவியன் தன் வேலைக்காரியை கழுதை
யின் மேலேற்றிக் கொண்டு, வீட்டிற்குச்
சென்றான். 29அவன் வீட்டிற்கு வந்ததும்,
ஒரு கத்தியை எடுத்து அவளை 12 துண்
டுகளாக வெட்டினான். அந்த வேலைக்காரி
யின் 12 துண்டுகளையும் இஸ்ரவேலர்
வாழ்ந்த பகுதிகளுக்கெல்லாம் அனுப்பினான்.
30அதைப் பார்த்தவர்கள் எல்லோரும்,
"இதைப்போன்ற எதுவும் இதுவரைக்கும்
இஸ்ரவேலில் நடந்ததில்லை. எகிப்திலிருந்து
நாம் வந்த காலத்திலிருந்து இதைப்போன்று
எதையும் பார்த்ததில்லை இதை விசாரித்து,
என்ன முடிவு செய்யவேண்டும் என்று
சொல்லுங்கள்" என்றனர்.

### இஸ்ரவேலுக்கும் பென்யமீனுக்கும் யுத்தம்

20 இஸ்ரவேலர் எல்லோரும் மிஸ்பா
நகரில் கர்த்தருக்கு முன்பாக
நிற்பதற்காக ஒன்றுகூடினார்கள். தாண் முதல்
பெயெர்செபா வரை இஸ்ரவேலின் எல்லாப்
பகுதிகளிலிருந்தும், கீலேயாத்திலுள்ள
இஸ்ரவேலரும் அங்குக் கூடினார்கள். 2இஸ்ர
வேல் கோத்திரங்களின் எல்லாத் தலைவர்
களும் அங்கிருந்தனர். தேவனுடைய ஜனங்
களின் கூட்டத்தில் அவரவருக்குரிய இடங்
களில் அமர்ந்தனர். அங்கு 4,00,000 வீரர்கள்
தங்கள் வாளோடு நின்றனர். 3பென்யமீன்
கோத்திரத்தின் ஜனங்கள் இஸ்ரவேலர்
மிஸ்பாவில் ஒன்று கூடியிருப்பதை அறிந்த
னர். இஸ்ரவேலர், "இந்த கொடிய காரியம்
எவ்வாறு நிகழ்ந்தது என்பதைக் கூறு"
என்றனர்.
4எனவே கொல்லப்பட்ட பெண்ணின்
கணவன் நடந்ததை விளக்கினான். அவன்,
"எனது வேலைக்காரியும் நானும் பென்
யமீன் பகுதியிலுள்ள கிபியா நகரத்திற்கு
வந்து, அங்கு இரவைக் கழித்தோம். 5ஆனால்
இரவில் கிபியா நகரத்தின் தலைவர்கள்
நான் தங்கியிருந்த வீட்டிற்கு வந்தனர்.
அவர்கள் வீட்டைச் சூழ்ந்து என்னைக்
கொல்ல விரும்பினார்கள். அவர்கள் என்
வேலைக்காரியை கற்பழித்தனர். அவள்
மரித்தாள். 6எனவே நான் என் பணிப்
பெண்ணை எடுத்துச் சென்று அவளைக்
துண்டுகளாக்கினேன். பின் நான் ஒவ்வொரு
துண்டையும் இஸ்ரவேலின் ஒவ்வொரு
கோத்திரத்துக்கும் அனுப்பினேன். நாம்
பெற்ற தேசங்களுக்கெல்லாம் 12 துண்டு
களையும் அனுப்பிவைத்தேன். இஸ்ரவேலில்
பென்யமீன் ஜனங்கள் இத்தகைய கொடிய
காரியத்தைச் செய்ததால் நான் இவ்வாறு
செய்தேன். 7இப்போது இஸ்ரவேலின் மனிதர்
களே பேசுங்கள். நாம் செய்ய வேண்டிய
தென்ன என்பது பற்றிய உங்கள் முடிவைக்
கூறுங்கள்" என்றான்.
8அப்போது எல்லா ஜனங்களும் ஒரே
நேரத்தில் எழுந்து நின்றனர். அவர்கள்
ஒருமித்த குரலில், "யாரும் வீட்டிற்குத்
திரும்பமாட்டோம். ஆம், யாரும் வீட்டிற்குத்
திரும்பிப்போக வேண்டியதில்லை. 9இப்
போது கிபியா நகரத்திற்கு இதனைச் செய்
வோம். சீட்டுப்போட்டு தேவன் அவர்
களுக்குச் செய்ய நினைப்பதென்ன என்ப
தைக் கண்டு பிடிப்போம். 10இஸ்ரவேலின்
எல்லா கோத்திரங்களிலிருந்தும் 100 பேரில்
10 ஆட்களைத் தேர்ந்தெடுப்போம். ஒவ்
வொரு 1,000 பேரிலும் 100 பேரைத்
தேர்ந்தெடுப்போம். ஒவ்வொரு 10,000 பேரி
லும் 1,000 பேர்களைத் தேர்ந்தெடுப்போம்.
நாம் தேர்ந்தெடுத்தோர் ஆயுதங்களைக்
கொண்டு வருவார்கள். இந்த சேனை பென்ய
மீன் பகுதியிலுள்ள கிபியா நகரத்திற்குச்
செல்லும். இஸ்ரவேல் ஜனங்களிடையே
அவர்கள் செய்தக் கொடிய தீமைக்காக
அந்த ஜனங்களை சேனை தண்டிக்கும்"
என்றனர்.

11எனவே இஸ்ரவேலர் கிபியா நகரில்
கூடினார்கள். தாங்கள் செய்வதில் எல்
லோரும் ஒருமனப்பட்டிருந்தனர். 12இஸ்ரவேல்
கோத்திரங்கள் சேர்ந்து பென்யமீன்
கோத்திரம் எங்கும் பின்வரும் செய்தியுடன்
ஒருவனை அனுப்பினார்கள். "உங்கள்
ஆட்களில் சிலர் இந்த கொடிய தீமையைச்
செய்ததேன்? 13கிபியா நகரிலிருந்து அந்த
துன்மார்க்கரை எங்களிடம் அனுப்புங்கள்.
அவர்களைக் கொல்லும்படிக்கு எங்களிடம்
ஒப்படையுங்கள். இஸ்ரவேலரிடமிருந்து
தீமையை அகற்ற வேண்டும்."

ஆனால் பென்யமீன் கோத்திரத்தினர் பிற
இஸ்ரவேலரிடமிருந்து வந்த செய்தியைப்
பொருட்படுத்தவில்லை. 14பென்யமீன் கோத்
திரத்தின் ஜனங்கள் தங்கள் நகரங்களை
விட்டு, கிபியா நகரத்திற்குச் சென்றனர்.
இஸ்ரவேலின் பிற கோத்திரங்களுடன்
போரிட அவர்கள் கிபியாவுக்குச் சென்றனர்.
15பென்யமீன் கோத்திரத்தினர் போருக்குப்
பயிற்சியளிக்கப்பட்ட 26,000 வீரர்களை ஒன்
றாக கூட்டினார்கள். அவர்களிடம் கிபியா
வில் பயிற்சி பெற்ற 700 வீரர்களும்
இருந்தனர். 16இடதுகை பழக்கமுள்ள 700
பயிற்சி பெற்ற வீரர்களும் இருந்தனர்.
அவர்கள் கவண்கல்லை மிகவும் திறமை
யாகப் பயன்படுத்தக் கூடியவர்கள். ஒரு
மயிரிழையும் தவறாது அவர்கள் கவண்
கல்லைப் பயன்படுத்துவதற்கு அறிந்திருந்த
னர்.

17பென்யமீன் அல்லாத மற்ற எல்லா
இஸ்ரவேல் கோத்திரங்களும் 4,00,000
வீரர்களைத் திரட்டினார்கள். அந்த 4,00,000
மனிதர்களும் வாளேந்தியிருந்தனர். ஒவ்வொ
ருவனும் பயிற்சிப் பெற்ற வீரனாக
இருந்தான். 18இஸ்ரவேலர் பெத்தேல்
நகரத்திற்குச் சென்றனர். பெத்தேலில்
அவர்கள் தேவனிடம், "எந்தக் கோத்
திரத்தினர் முதலில் பென்யமீன்
கோத்திரத்தைத் தாக்கவேண்டும்?" என்று
கேட்டனர்.

கர்த்தர், "யூதா முதலில் போகட்டும்"
என்றார்.

19மறுநாள் காலையில் இஸ்ரவேலர்
எழுந்தனர். கிபியா நகருக்கருகே அவர்கள்
ஒரு முகாம் அமைத்தனர். 20அப்போது
இஸ்ரவேல் சேனை பென்யமீன் சேனை
யோடுப் போருக்குச் சென்றது. கிபியா
நகரில் இஸ்ரவேல் சேனை பென்யமீன்
சேனையை எதிர்த்துப் போரிடுவதற்குத்
தயாராயிற்று, 21அப்போது பென்யமீன்
சேனை கிபியா நகரத்திலிருந்து வெளி
வந்தது. அந்த நாளில் நடந்த போரில்
பென்யமீன் சேனை இஸ்ரவேல் சேனையின்
22,000 மனிதர்களைக் கொன்றது.

22-23இஸ்ரவேலர் கர்த்தரிடம் சென்றனர்.
மாலைவரைக்கும் அழுதனர். அவர்கள்
கர்த்தரை நோக்கி, "பென்யமீன் ஜனங்
களோடு மீண்டும் போரிடுவதற்குச் செல்ல
வேண்டுமா? அவர்கள் எங்கள் உறவினர்
கள்" என்றனர்.

கர்த்தர், "போய், அவர்களுக்கெதிராகப்
போர் செய்யுங்கள்" என்று பதில் கூறினார்.
இஸ்ரவேல் மனிதர்கள் ஒருவரையொருவர்
உற்சாகப்படுத்தினார்கள். மீண்டும் போருக்கு
முதல்நாளைப் போலவே சென்றனர்.

24இஸ்ரவேல் சேனை பென்யமீன்
படையை நெருங்கிற்று. அது போரின்
இரண்டாம்நாள். 25பென்யமீன் சேனை
கிபியா நகரிலிருந்து இஸ்ரவேல் சேனை
யைத் தாக்க வந்தது. இம்முறை, பென்யமீன்
சேனை மேலும் இஸ்ரவேல் சேனையின்
18,000 மனிதர்களைக் கொன்றது. இஸ்ர
வேலர் படையிலிருந்த அவ்வீரர்கள் அனை
வரும் பயிற்சி பெற்றிருந்தனர்.

26பின் இஸ்ரவேலர் பெத்தேல் நகரம்
வரைக்கும் சென்றனர். அந்த இடத்தில்
அமர்ந்திருந்து கர்த்தரை நோக்கி அழுதனர்.
அன்று மாலைவரை நாள் முழுவதும்
அவர்கள் எதுவும் உண்ணவில்லை.
அவர்கள் கர்த்தருக்குத் தகன பலியையும்,
சமாதான பலிகளையையும் செலுத்தினார்
கள். 27இஸ்ரவேலர் கர்த்தரிடம் ஒரு கேள்வி
கேட்டனர். (அந்நாளில் பெத்தேலில்
தேவனுடைய உடன்படிக்கைப் பெட்டி
இருந்தது. பினெகாஸ் என்பவன் தேவ
னுடைய ஆசாரியனாக இருந்தான். 28பினெ
காஸ் எலெயாசாரின் மகன், எலெயாசார்
ஆரோனின் மகன்.) இஸ்ரவேலர்,
"பென்யமீன் ஜனங்கள் எங்கள் உறவினர்.
நாங்கள் அவர்களோடு போரிட மீண்டும்
போக வேண்டுமா? அல்லது போரை நிறுத்த
வேண்டுமா?" என்று கேட்டனர்.

கர்த்தர், "போங்கள், நாளை அவர்களை
வெல்வதற்கு உங்களுக்கு உதவுவேன்"
என்று பதில் உரைத்தார்.

29பின்பு இஸ்ரவேல் சேனை கிபியா
நகரைச் சுற்றிலும் சிலரை ஒளித்து வைத்
தது. 30மூன்றாம் நாள் இஸ்ரவேல் சேனை
கிபியா நகரை எதிர்த்துப் போரிடச்
சென்றது. அவர்கள் முன்பு செய்தது
போலவே போருக்குத் தயாராயினார்கள்.
31பென்யமீன் சேனை இஸ்ரவேல் சேனை
யோடு போர் செய்வதற்காக கிபியா நகரை
விட்டு வெளியே வந்தது. இஸ்ரவேல்
சேனை பின்னிட்டுத் தங்களைப் பென்யமீன்
சேனை துரத்தும்படி செய்தது. இவ்வாறாக
நகரை விட்டு சேனை வெகுதூரம்
வரும்படியாக பென்யமீன் சேனைக்கு எதி
ராக தந்திரம் செய்யப்பட்டது.

ஏற்கனவே செய்தது போன்று பென்யமீன்
சேனை இஸ்ரவேல் சேனையில் சில மனிதர்
களைக் கொல்ல ஆரம்பித்தனர். சுமார் 30
இஸ்ரவேல் மனிதர்களை அவர்கள் கொன்ற
னர். வயல்களில் சிலரையும், பாதைகளில்
சிலரையும் கொன்றனர். ஒரு பாதை

பெத்தேல் நகரத்திற்கும் மற்றொரு பாதை
கிபியாவிற்கும் சென்றது. 32பென்யமீன்
மனிதர்கள், “முன்பு போலவே நாம் வெற்றி
பெற்றுக் கொண்டிருக்கிறோம்” என்றனர்.
இஸ்ரவேல் மனிதர் ஓடிப்போய்க்
கொண்டிருந்தார்கள், ஆனால் அது ஓர்
தந்திரமே. பென்யமீன் மனிதர்களை
நகரத்திலிருந்து வெகுதூரத்திற்கும், பெரும்
பாதைகளுக்கும் அழைத்துவர விரும்பினர்.
33எனவே எல்லா மனிதரும் ஓடிவிட்டனர்.
பாகால்தாமார் என்னுமிடத்தில் அவர்கள்
நின்றனர். கிபியாவிற்கு மேற்கே இஸ்ர
வேலரில் சிலர் ஒளிந்து கொண்டிருந்தனர்.
அவர்கள் மறைவிடங்களிலிருந்து ஓடிவந்து,
கிபியாவைத் தாக்கினார்கள். 34கிபியா நகரை
இஸ்ரவேலின் 10,000 வீரர்கள் தாக்கினார்கள்.
போர் கடுமையாக இருந்தது. ஆனால்
பென்யமீன் சேனை தங்களுக்கு நேரவிருக்
கும் கொடுமையானக் காரியத்தை அறியாதி
ருந்தார்கள்.

35கர்த்தர் இஸ்ரவேல் சேனையைப் பயன்
படுத்தி, பென்யமீன் சேனையைத் தோற்க
டித்தார். அந்த நாளில் இஸ்ரவேல் படை
பென்யமீன் சேனையிலிருந்து 25,100 வீர
ரைக் கொன்றனர். அவர்கள் போர்ப்பயிற்சி
பெற்றிருந்தனர். 36பென்யமீன் ஜனங்கள் தாம்
தோற்கடிக்கப்பட்டதைக் கண்டனர்.

இஸ்ரவேல் சேனை பின்னோக்கிச்
சென்றது. அவர்கள் திடீர் தாக்குதலை
நம்பியிருந்ததால் அவ்வாறு பின்னே சென்
றார்கள். 37மறைந்திருந்த மனிதர்கள் கிபியா
நகரத்திற்கு விரைந்தனர். அவர்கள் நகரெங்
கும் சென்று அங்கிருந்தோரை வாளால்
கொன்றனர். 38ஒளிந்திருந்த மனிதர்கள் மூலம்
நிறைவேற்றக்கூடிய திட்டத்தை இஸ்ரவேலர்
வகுத்திருந்தனர். ஒளித்திருந்த மனிதர்கள்
ஒரு விசேஷ அடையாளத்தைத் தெரிவிக்கும்
படி கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தார்கள்.
ஒரு பெரும் புகை மண்டலத்தை எழுப்பு
மாறு எதிர்பார்க்கப்பட்டனர்.

39-41பென்யமீன் சேனை சுமார் 30 இஸ்ர
வேல் படைவீரர்களைக் கொன்றிருந்தது.
எனவே பென்யமீன் ஆட்கள், “முன்பு
போலவே, நாங்கள் வெல்கிறோம்” என்றனர்.
அப்போது நகரிலிருந்து புகையெழுந்தது.
பென்யமீன் ஜனங்கள் திரும்பி, புகையைப்
பார்த்தனர். நகரம் முழுவதும் எரிய
ஆரம்பித்தது. அப்போது இஸ்ரவேல் சேனை
யினர் ஓடுவதை நிறுத்தினார்கள். இதைக்
கண்ட பென்யமீன் மனிதர்கள் பயந்தனர்.
அப்பொழுது தமக்கு நேர்ந்த கொடிய
நிலையை அறிந்தனர்.

42எனவே பென்யமீன் சேனை இஸ்ரவேல்
சேனையைக் கண்டு ஓட ஆரம்பித்தது.
அவர்கள் பாலைவனத்தை நோக்கி ஓடி
னார்கள். ஆனால்அவர்களால் போரிடுவதை
நிறுத்த முடியவில்லை. இஸ்ரவேலர்
நகரங்களிலிருந்து வந்து அவர்களைக்
கொன்றனர். 43இஸ்ரவேலர் பென்யமீன்
மனிதரைச் சூழ்ந்துக்கொண்டு துரத்த
ஆரம்பித்தனர். அவர்களை ஓய்வெடுக்க
விடவில்லை. கிபியாவின் கிழக்குப்
பகுதியில் அவர்களைத் தோற்கடித்தனர்.
44பென்யமீன் சேனையைச் சார்ந்த 18,000
துணிவுமிக்க, பலமுள்ள வீரர்கள் கொல்லப்
பட்டனர்.

45பென்யமீன் சேனை திரும்பி,
பாலைவனத்திற்கு நேரே ஓடினார்கள். அவர்
கள் ரிம்மோன் பாறை எனப்படும்
இடத்திற்கு ஓடினார்கள். ஆனால் இஸ்ரவேல்
சேனையினர் பெரும் பாதைகளில் 5,000
பென்யமீன் வீரர்களைக் கொன்றனர்.
பென்யமீன் மனிதர்களை அவர்கள் துரத்திக்
கொண்டேயிருந்தனர். அவர்களைக் கீதோம்
வரைக்கும் துரத்தினார்கள். அவ்விடத்தில்
இஸ்ரவேல் சேனை இன்னும் 2,000 வீரர்
களைக் கொன்றது.

46அந்த நாளில் பென்யமீன் படையிலுள்ள
25,000 பேர் கொல்லப்பட்டனர். அம்மனிதர்
கள் வாளைச் சுழற்றி மிகவும் துணிவுடன்
போர் செய்தனர். 47ஆனால் பென்யமீனைச்
சேர்ந்த 600 பேர் பாலைவனத்திற்குள்
ஓடினார்கள். அவர்கள் ரிம்மோன் பாறை
என்னுமிடத்திற்குச் சென்று நான்கு
மாதங்கள் அங்குத் தங்கினார்கள். 48இஸ்ர
வேல் ஆட்கள் பென்யமீன் தேசத்திற்குத்
திரும்பிச் சென்றார்கள். அவர்கள் கடந்து
வந்த நகரங்களிலுள்ள மனிதர்களைக்
கொன்றார்கள். அவர்கள் மிருகங்களை
யெல்லாம் கொன்றனர். அகப்பட்ட பொருட்
களையெல்லாம் அழித்தனர். அவர்கள்
நுழைந்த நகரங்களையெல்லாம் எரித்தனர்.

### பென்யமீன் மனிதர்களுக்கு மனைவியரைத் தேர்ந்தெடுத்தல்

21 மிஸ்பாவில் இஸ்ரவேல் மனிதர்கள்
ஒரு வாக்குறுதி செய்து கொண்டனர்.
இதுவே அவர்கள் செய்த வாக்குறுதி:
“நம் கோத்திரத்தில் யாருடைய மகளும்,
பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவ
னை மணக்க ஒருபோதும் அனுமதிக்கக்
கூடாது.”

2இஸ்ரவேலர் பெத்தேல் நகரத்திற்குச்
சென்றனர். மாலை வரைக்கும் தேவனுக்கு
முன்பு அமர்ந்தனர். அவர்கள் அங்கு உட்
கார்ந்திருந்து உரக்க அழுதனர். 3அவர்கள்
தேவனிடம், “கர்த்தாவே, நீர் இஸ்ரவேலரின்
தேவன். ஏன் இந்தக் கொடியக் காரியம்
எங்களுக்கு நேர்ந்தது? ஏன் ஒரு
கோத்திரத்தினர் இஸ்ரவேலரிலிருந்து
மறைய வேண்டும்?” என்றார்கள்.

4மறுநாள் அதிகாலையில், இஸ்ரவேலர்
ஒரு பலிபீடத்தைக் கட்டினார்கள். அவர்கள்
அப்பலிபீடத்தில் கர்த்தருக்கென்று தகன
பலியையும் சமாதான பலியையும்

செலுத்தினார்கள். 5அப்போது இஸ்ரவேலர்,
“கர்த்தருக்கு முன்பாக எங்களுடன் இங்கு
வந்து சேராத இஸ்ரவேல் கோத்திரங்களில்
யாரேனும் இருக்கிறார்களா?” என்றனர்.
அவர்கள் தீவிரமான வாக்குறுதி கொடுத்தி
ருந்ததினால் இந்த கேள்வியைக் கேட்டனர்.
மிஸ்பாவில் பிறக் கோத்திரங்களோடு வந்து
சேராதவன் கொல்லப்படுவான் என்று வாக்
குறுதி அளித்திருந்தனர்.
6தமது உறவினரான பென்யமீன்
ஜனங்களுக்காக இஸ்ரவேலர் துக்கமடைந்த
னர். அவர்கள், “இன்று இஸ்ரவேலிலிருந்து
ஒரு கோத்திரம் விலக்கப்பட்டு விட்டது.
7கர்த்தருக்கு முன் நாம் ஒரு வாக்குறுதி
அளித்தோம். பென்யமீன் கோத்திரத்தைச்
சார்ந்தவனை நமது பெண்கள் மணக்க
அனுமதிப்பதில்லை என்றோம். பென்யமீன்
ஆட்களுக்கு மனைவியர் கிடைப்பதற்கு நாம்
என்ன செய்யலாம்?” என்றார்கள்.
8பின் இஸ்ரவேலர், “மிஸ்பாவிற்கு
இஸ்ரவேலின் எந்தக் கோத்திரத்தினர் வந்து
சேரவில்லை? நாம் கர்த்தருக்கு முன்னே
ஒருமித்துக் கூடியுள்ளோம். இங்கு ஒரு
குடும்பம் நிச்சயமாக வரவில்லை!”
என்றனர். 9இஸ்ரவேலர் யார் யார் வந்திருக்
கிறார்கள் என்பதை அறிய ஒவ்வொருவராக
எண்ணிக்கை எடுத்தனர். கீலேயாத்திலுள்ள
யாபேசிலிருந்து ஒருவரும் வரவில்லை
என்பதைக் கண்டு கொண்டார்கள். 10எனவே
இஸ்ரவேலர் 12,000 வீரர்களை கீலேயாத்தி
லுள்ள யாபேசு நகரத்திற்கு அனுப்பினார்
கள். அவர்கள் வீரரிடம், “கீலேயாத்திலுள்ள
யாபேசுக்குப் போங்கள். உங்கள் வாளால்
அங்கு வாழும் அனைவரையும் பெண்களை
யும் குழந்தைகளையும் கூட கொல்லுங்கள்.
11நீங்கள் இதைச் செய்யவேண்டும். அங்குள்ள
எல்லா ஆண்களையும் கொல்ல வேண்டும்.
ஆணோடு பாலின உறவு கொண்ட
பெண்களையெல்லாம் கொல்லுங்கள்.
ஆனால் ஆணோடு பாலின உறவு கொண்டி
ராத கன்னிகைகளைக் கொல்லாதீர்கள்”
என்றார்கள். எனவே அவ்வீரர்கள்
அப்படியே செய்தார்கள். 12ஆண்களோடு
பாலின உறவு கொண்டிராத 400 கன்னிகை
களை அந்த 12,000 வீரர்களும் கண்டனர்.
சீலோவிலுள்ள முகாமிற்கு அவர்கள் அந்த
கன்னிகைகளை அழைத்து வந்தனர். சீலோ
என்னும் இடம் கானான் தேசத்தில் இருந்தது.
13பின்பு இஸ்ரவேலர் பென்யமீன்
மனிதருக்கு ஒரு செய்தி அனுப்பினர். அவர்
கள் பென்யமீன் மனிதரோடு சமாதானம்
செய்துகொள்ள முன்வந்தனர். ரிம்மோன்
பாறை என்னுமிடத்தில் பென்யமீன் ஆட்கள்
இருந்தனர். 14எனவே பென்யமீன் மனிதர்கள்
இஸ்ரவேலுக்குத் திரும்பி வந்தனர்.
கீலேயாத்திலுள்ள யாபேசில் கொல்லாமல்
விட்ட பெண்களை அவர்களுக்கு இஸ்ர
வேலர் கொடுத்தனர். ஆனால் பென்யமீன்
மனிதருக்கு வேண்டிய எண்ணிக்கைக்குப்
பெண்கள் போதவில்லை.
15இஸ்ரவேலர் பென்யமீன் மனிதருக்காக
கவலைப்பட்டனர். இஸ்ரவேலின் பிற
கோத்திரங்களிலிருந்து கர்த்தர் அவர்களை
பிரித்ததற்காக இஸ்ரவேலர் வருந்தினர்.
16இஸ்ரவேலின் தலைவர்கள், “பென்யமீன்
கோத்திரத்தின் பெண்கள் கொல்லப்பட்டனர்.
உயிரோடிருக்கிற பென்யமீன் ஆட்களுக்கு
எங்கிருந்து பெண்களைத் தருவோம்?
17உயிரோடிருக்கிற பென்யமீன் மனிதர்கள்
தம் தலைமுறை தொடர்வதற்காக பிள்ளை
களைப் பெறுதல் வேண்டும். இஸ்ரவேலின்
ஒரு கோத்திரம் அழிந்து போகாதபடிக்கு
இது நடைபெற வேண்டும். 18ஆனால் பென்ய
மீன் மனிதரை மணந்துகொள்ள நம் பெண்
களை அனுமதிக்க முடியாது. நாம் இந்த
வாக்குறுதி அளித்துள்ளோம்: ‘பென்ய
மீனைச் சேர்ந்தவனுக்குப் பெண் கொடுக்கிற
எவனும் சபிக்கப்படுவான். 19நமக்கு ஒரு
யோசனை தோன்றுகிறது. சீலோ நகரத்தில்
கர்த்தருடைய பண்டிகை காலம் இது.
ஒவ்வொரு ஆண்டும் அப்பண்டிகை
நடக்கிறது” என்றனர். (சீலோ நகரம்
பெத்தேல் நகரத்திற்கு வடக்கிலும் பெத்தேலி
லிருந்து சீகேமுக்குப் போகிற பாதையின்
கிழக்கிலும் உள்ளது. அது லிபோனா
நகரத்திற்குத் தெற்கேயும் இருக்கிறது.)
20எனவே தலைவர்கள் பென்யமீன்
கோத்திரத்திற்கு தங்கள் யோசனையைத்
தெரிவித்தனர். அவர்கள், “போய்
திராட்சைத் தோட்டங்களில் மறைந்துகொள்
ளுங்கள். 21பண்டிகைச் சமயத்தில் நட
னமாடும்படி சீலோ நகர இளம் பெண்கள்
வருகிற சமயத்தைப் பார்த்துக்கொண்டே
இருங்கள். அப்போது திராட்சைத் தோட்டங்
களில் உங்கள் மறைவிடங்களில் இருந்து
ஓடி வாருங்கள். உங்களில் ஒவ்வொருவரும்
சீலோ நகரத்து கன்னிகைகளில் ஒருத்தியை
எடுத்துக்கொள்ளலாம். அந்த கன்னி
கைகளை பென்யமீன் தேசத்திற்குக் கொண்டு
சென்று மணந்துகொள்ளுங்கள். 22அந்த
கன்னிகைகளின் தந்தையரோ, சகோதரரோ
வந்து எங்களிடம் முறையிடுவார்கள்.
ஆனால் நாங்கள், ‘பென்யமீன் மனிதரிடம்
இரக்கம் காட்டுங்கள். அப்பெண்களை
அவர்கள் மணந்துகொள்ளட்டும். அவர்கள்
உங்கள் பெண்களைத்தானே கொண்டு
சென்றார்கள். அவர்கள் உங்களோடு போர்
தொடுக்கவில்லை. அவர்களே கன்னிகை
களை எடுத்து சென்றதால், நீங்கள்
தேவனுக்குக் கொடுத்த வாக்குறுதியை
மீறவில்லை. நீங்கள் பென்யமீன் ஆட்களுக்கு
உங்கள் பெண்களை மணம் முடித்து
வைப்பதில்லை என்று தானே வாக்குறுதி
அளித்தீர்கள். நீங்களே பென்யமீன்
ஆட்களுக்குப் பெண்களைக் கொடுக்க
வில்லை. அவர்களே உங்களிடமிருந்து

பெண்களை எடுத்துச் சென்றார்கள். எனவே நீங்கள் உங்கள் வாக்குறுதியை மீறவில்லை' என்போம்'' என்றார்கள்.
23அவ்வாறே பென்யமீன் ஆட்கள் செய்தார்கள். அந்த கன்னிகைகள் நடனமாடி வரும்போது, ஒவ்வொருவனும் ஒவ்வொரு பெண்ணைப் பிடித்துக் கொண்டான். அவர்கள் அப்பெண்களைக் கவர்ந்து சென்று, மணந்துகொண்டார்கள். அவர்கள் தங்கள் தேசத்திற்குப் போனார்கள். அத்தேசத்தில் மீண்டும் நகரங்களை கட்டி, அந்நகரங்களில் குடியேறினார்கள்.
24பின் இஸ்ரவேலர் தங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பினார்கள். அவர்கள் தங்கள் தேசத்திற்கும் கோத்திரங்களுக்கும் சென்றனர்.
25அந்நாட்களில் இஸ்ரவேலருக்கு அரசன் இருக்கவில்லை. எனவே ஒவ்வொருவனும் தனக்கு சரியெனக் கருதியதைச் செய்தான்.

# ரூத்தின் சரித்திரம்

## யூதாவில் பஞ்சம்

1 நியாயாதிபதிகளின் ஆட்சிக்காலத்தில், உண்ணக்கூட போதுமான உணவில்லாத மோசமான ஒரு பஞ்சம் யூதா நாட்டில் ஏற்பட்டது. அப்போது யூதாவிலுள்ள பெத்லெகேமை விட்டு, எலிமெலேக்கு என்பவன் தனது மனைவியுடனும், இரண்டு மகன்களுடனும் மலைநாடான மோவாப்புக்குச் சென்றான். [2]அவனது மனைவியின் பெயர் நகோமி. அவனது இரண்டு மகன்களின் பெயர்களும் மக்லோன், கிலியோன் என்பவை ஆகும். இவர்கள் யூதாவிலுள்ள பெத்லெகேமில் எப்பிராத்தியர் வம்சத்தைச் சேர்ந்தவர்கள். இக்குடும்பமானது மலைநாடான மோவாபுக்கு சென்று அங்கேயே தங்கியது.

[3]பின்னர், நகோமியின் கணவனான எலிமெலேக்கு மரித்துப் போனான். எனவே நகோமியும் அவளது இரண்டு மகன்களும் மட்டுமே மீந்திருந்தார்கள். [4]அவளது மகன்கள் மோவாப் நாட்டிலுள்ள பெண்களை மணந்துகொண்டனர். ஒருவனின் மனைவி பெயர் ஓர்பாள், இன்னொருவனின் மனைவி பெயர் ரூத். அவர்கள் அங்கே 10 ஆண்டுகள் வாழ்ந்தனர். [5]பின், மக்லோனும் கிலியோனும் கூட மரித்துவிட்டனர். அதன்பின் கணவனும், மகன்களும் இல்லாமல் நகோமி தனித்தவளானாள்.

## நகோமி வீட்டிற்குத் திரும்பிப் போகுதல்

[6]மலைநாடான மோவாப்பில் நகோமி வாழ்ந்துக் கொண்டிருக்கும்போது, கர்த்தர் யூதாவில் தன் ஜனங்களுக்கு உணவு கொடுத்தார் என்று அறிந்தாள். எனவே நகோமியும் மலைநாடான மோவாபை விட்டுத் தன் சொந்த நாட்டிற்குப் போக முடிவு செய்தாள். அவளது மருமகள்களும் அவளோடு புறப்பட்டனர். [7]அவர்கள் தாம் வாழ்ந்த இடத்தை விட்டுவிட்டு யூதா நாட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தனர்.

[8]அப்போது நகோமி தன் மருமகள்களிடம், “நீங்கள் இருவரும் உங்கள் தாய்வீட்டுக்கேத் திரும்பிச் செல்லவேண்டும். நீங்கள் என்னோடும், மரித்துப்போன எனது மகன்களோடும் மிக அன்பாக இருந்தீர்கள். எனவே கர்த்தரும் உங்களிடம் கருணை காட்டுமாறு வேண்டிக்கொள்வேன். [9]உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு நல்ல கணவனும், வீடும் கிடைக்கவேண்டுமென்று நான் வேண்டுவேன்” என்றாள். நகோமி அவர்களை முத்தமிட்டபோது, அவர்கள் அழ ஆரம்பித்தனர்.

[10]பிறகு அவர்கள், “நாங்கள் உம்மோடு வர விரும்புகிறோம். உம்முடைய குடும்பத்தில் சேரவே விரும்புகிறோம்” என்றனர்.

[11]ஆனால் நகோமி, “வேண்டாம் மகள்களே, உங்கள் தாய் வீட்டுக்கே திரும்பிச் செல்லுங்கள். நீங்கள் என்னோடு ஏன் வரவேண்டும்? என்னால் உங்களுக்கு உதவமுடியாது. உங்களோடு கணவனாக வாழ வேறு மகன்களும் என்னிடம் இல்லை. [12]உங்கள் வீட்டிற்குத் திரும்பிச் செல்லுங்கள்! ஒரு புதிய கணவனைப் பெறமுடியாத அளவிற்கு நானும் முதியவளாகிவிட்டேன். நான் மீண்டும் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்று விரும்பினாலும், உங்களுக்கு உதவமுடியாது. இன்று இரவே நான் கர்ப்பமாகி இரண்டு ஆண் குழந்தைகளைப் பெற்றாலும் அது உங்களுக்கு உதவாது. [13]ஏனென்றால் அவர்கள் வளர்ந்து ஆளாகும்வரை நீங்கள் காத்திருக்க வேண்டும். நான் அவ்வளவு காலம் உங்களைக் காக்கவைக்கக் கூடாது. அது எனக்கு மிகவும் துக்கத்தைத் தரும்! எனக்காக கர்த்தர் செய்த பல காரியத்துக்காக நான் ஏற்கனவே துக்கமாக இருக்கிறேன்!” என்றாள்.

[14]எனவே, அந்தப் பெண்கள் மேலும் அழுதனர். பிறகு ஓர்பாள் நகோமிக்கு முத்தமிட்டு விட்டு விலகிப் போனாள். ஆனால் ரூத் அவளைக் கட்டி அணைத்துக் கொண்டு அவளோடு தங்கிவிட்டாள்.

[15]நகோமியோ அவளிடம், “பார், உனது சகோதரி தனது சொந்த ஜனங்களிடமும் தெய்வங்களிடமும் சென்றாள். எனவே, நீயும் அவளைப் போன்றே நடந்துகொள்ள வேண்டும்” என்றாள்.

[16]ஆனால் ரூத், “உம்மை விட்டு விலகும்படி என்னை வற்புறுத்த வேண்டாம்! என் சொந்தக்காரர்களிடம் திரும்பிப் போகுமாறு என்னைக் கட்டாயப்படுத்த வேண்டாம். என்னை உம்மோடு வரவிடும். நீர் செல்லும் இடங்களுக்கு எல்லாம் நானும் உம்மோடு வருவேன். நீர் உறங்கும்

*இடத்திலேயே நானும் உம்மோடு உறங்கு
வேன். உம் ஜனங்களே என் ஜனங்கள்.
உம்முடைய தேவனே என் தேவன். 17நீர்
மரிக்கும் இடத்திலேயே நானும் மரிப்பேன்.
அதே இடத்தில்தான் நான் அடக்கம்
பண்ணப்பட வேண்டும். நான் இந்த
வாக்குறுதியைக் காப்பாற்றாவிட்டால்
என்னைத் தண்டிக்கும்படி கர்த்தரிடம்
கேட்டுக் கொள்வேன்: மரணம் ஒன்றுதான்
நம்மைப் பிரிக்கும்" என்றாள்.*

### வீட்டிற்குத் திரும்புதல்

*18ரூத் தன்னோடு வர மிகவும் விரும்பு
வதை நகோமி அறிந்துக்கொண்டாள்.
எனவே நகோமி அவளோடு விவாதம்
செய்வதை நிறுத்திவிட்டாள். 19நகோமியும்,
ரூத்தும் பெத்லெகேம்வரை பயணம்
செய்தனர். அவர்கள் பெத்லெகேமிற்குள்
நுழைந்தபோது அனைவரும் ஆச்சரியப்
பட்டார்கள், "இது நகோமியா?" என்று
கேட்டார்கள்.*

*20ஆனால் நகோமியோ ஜனங்களிடம்,
"என்னை நகோமி* என்று அழைக்காதீர்கள்,
மாராள்* என்று அழையுங்கள். ஏனென்றால்
எனது வாழ்க்கையை சர்வ வல்லமையுள்ள
தேவன் துக்கம் நிறைந்ததாக்கிவிட்டார்.
21நான் இங்கிருந்து போகும்போது எனக்கு
விருப்பமான அனைத்தையும் பெற்றிருந்
தேன். ஆனால் இப்போது நான்
வெறுமையானவளாகும்படி கர்த்தர் செய்து
விட்டார். என்னைத் துக்கமுள்ள
வளாகும்படி கர்த்தர் செய்தபிறகு, ஏன்
என்னை நகோமி (மகிழ்ச்சி) என்று
அழைக்கிறீர்கள்? சர்வ வல்லமையுள்ள
தேவன் எனக்கு மிகுந்த துன்பத்தைக்
கொடுத்துவிட்டார்" என்றாள்.*

*22இவ்வாறு நகோமியும் அவளது
மருமகளான ரூத்தும் மலைநாடான
மோவாபிலிருந்து திரும்பி வந்தனர். இரண்டு
பெண்களும் பெத்லெகேம் வந்த போது,
யூதாவில் வாற்கோதுமை அறுவடை
தொடங்கியது.*

### ரூத் போவாஸை சந்தித்தல்

*2 பெத்லெகேமில் ஒரு பணக்காரன்
வாழ்ந்து வந்தான். அவனது பெயர்
போவாஸ். அவன் நகோமியின் நெருங்கிய
உறவினன். அவன் எலிமெலேக்கின் குடும்
பத்தைச் சார்ந்தவன்.*

*2ஒருநாள் ரூத் (மோவாபிலிருந்து வந்த
பெண்) நகோமியிடம், "நான் வயலுக்குப்
போகலாம் என்றும், என்மீது இரக்கம்
காட்டக்கூடிய ஒருவரைக் காண முடியும்
என்றும், வயலில் சிதறிக்கிடக்கும் தானியங்
களைச் சேகரித்துக்கொள்ள அவர் அனு
மதிக்கக்கூடும் என்றும் எண்ணுகின்றேன்"
என்றாள்.*

*3நகோமி, "நல்லது மகளே, போய் வா"
என்றாள். எனவே ரூத் வயலுக்குப் போய்,
தானியங்களை அறுவடை செய்யும்
வேலைக்காரர்களுக்குப் பின்னால் போனாள்.
சிதறிக்கிடக்கும் தானியங்களைச் சேகரித்
தாள். அந்த வயலின் ஒரு பகுதி
போவாஸூக்கு உரியது. அவன் எலிமெ
லேக்கின் குடும்பத்தைச் சேர்ந்தவன்.*

*4பிறகு போவாஸ் பெத்லெகேமிலிருந்து
வயலுக்கு வந்தான். அவன் வேலைக
காரர்களை வாழ்த்தி, "கர்த்தர் உங்களோடு
இருக்கட்டும்" என்று கூறினான்.*

*அதற்கு வேலைக்காரர்களும், "கர்த்தர்
உங்களை ஆசீர்வதிக்கட்டும்!" என்றனர்.*

*5பிறகு, போவாஸ் தனது வேலைக்
காரர்களிடம், "அந்தப் பெண் யார்?" என்று
கேட்டான்.*

*6வேலைக்காரன் அதற்கு, "அவள்
மோவாபிய பெண். அவள் மலைநாடான
மோவாபிலிருந்து நகோமியோடு வந்திருக்
கிறாள். 7அவள் அதிகாலையில் என்னிடம்
வந்து, வேலைக்காரர்களின் பின்னால்
போய், சிதறும் தானியங்களை எடுத்துக்
கொள்ளட்டுமா? என்று கேட்டாள். இது
வரை இங்கேயே இருக்கிறாள். அவளது
குடிசையும் இங்கேதான் இருக்கிறது"
என்றான்.*

*8பிறகு போவாஸ் ரூத்திடம், "பெண்ணே
கவனி, நீ என் வயலிலேயே தங்கியிருந்து
சிதறும் தானியங்களை எல்லாம் சேகரித்து
உனக்காக எடுத்துக்கொள்ளலாம். மற்றவர்
களின் வயலுக்குப் போகவேண்டிய
அவசியம் இல்லை. தொடர்ந்து பெண்
வேலைக்காரர்களின் பின்னால் போ.
9அவர்கள் எந்த வயலுக்குப் போகிறார்கள்
என்பதைப் பார்த்திருந்து, அவர்களைப்
பின்தொடர்ந்து செல். உனக்குத் தொந்தரவு
செய்யாதபடி இங்குள்ள இளைஞர்களை
எச்சரித்திருக்கிறேன். உனக்குத் தாகமாக
இருக்கும்போது, எனது ஆட்கள் குடிக்கும்
ஜாடியில் இருந்தே நீயும் தண்ணீரை
எடுத்துக் குடிக்கலாம்" என்றான்.*

*10ரூத் தரையில் பணிந்து வணங்கினாள்.
அவள் போவாஸிடம், "என்னைப் பொருட்
படுத்தி கவனித்ததுபற்றி ஆச்சரியப்படு
கிறேன். நான் அந்நிய தேசத்தாளாயிருந்தும்
என் மீது கருணை காட்டுகிறீர்" என்றாள்.*

*11போவாஸ் அவளுக்குப் பதிலாக, "நீ
உன் மாமியாரான நகோமிக்குச் செய்துவரும்
உதவியைப்பற்றி, நானும் அறிந்துள்ளேன்.
உன் கணவன் மரித்தப் பிறகும் நீ அவளுக்கு
உதவி வருகிறாய். நீ உனது தந்தை, தாய்,
உறவினர், நாடு அனைத்தையும்
விட்டுவிட்டு இங்கே வந்திருக்கிறாய்.*

---

***நகோமி*** *இந்த பெயரின் அர்த்தம் "மகிழ்ச்சி" அல்லது "இன்பம்" ஆகும்.*

***மாராள்*** *இந்த பெயரின் அர்த்தம் "கசப்பு" அல்லது "துக்கம்" ஆகும்.*

இங்குள்ள எவரையும் உனக்குத் தெரியாது,
எனினும் நீ நகோமியோடு இங்கே வந்து
விட்டாய். நீ செய்த நல்ல செயல்களுக்
கெல்லாம் கர்த்தர் உனக்கு நன்மைச்
செய்வார். 12இஸ்ரவேலரின் தேவனாகிய
கர்த்தர் உனக்கு முழுமையான பலனைத்
தருவார். அவரிடம் பாதுகாப்புக்காக
வந்திருக்கிறாய்.* அவர் உன்னைப்
பாதுகாப்பார்” என்றான்.
13பிறகு ரூத், “நீங்கள் என்னிடம் மிகுந்த
கருணையோடு இருக்கிறீர்கள். நான் ஒரு
சாதாரண வேலைக்காரி. நான் உங்கள்
வேலைக்காரிகளுள் ஒருத்திக்குக்கூட சமமா
னவள் அல்ல. ஆனால் நீங்கள் என்னிடம்
கருணையான வார்த்தைகளைக் கூறி
ஆறுதலடையச் செய்துள்ளீர்கள்” என்றாள்.
14மதிய உணவு நேரத்தில், போவாஸ்,
“இங்கே வா! எங்களிடம் இருக்கும்
அப்பத்தில், நீயும் கொஞ்சம் சாப்பிடு.
உன் அப்பத்தை இந்த காடியிலே தோய்த்துக்
கொள்” என்று ரூத்திடம் சொன்னான்.
எனவே ரூத் வேலைக்காரர்களோடு
உட்கார்ந்தாள். போவாஸ் அவளுக்குக்
கொஞ்சம் வறுத்த கோதுமையைக் கொடுத்
தான். அவள் வயிறுநிறைய சாப்பிட்டாள்.
எனினும் உணவு மிஞ்சியது. 15பிறகு அவள்
எழுந்து தன் வேலைக்குத் திரும்பிப்
போனாள்.
பின்னர் போவாஸ் தன் வேலைக்
காரர்களிடம், “அவள் அறுத்த கட்டுகளின்
நடுவே இருக்கும் தானியங்களையுங்கூடச்
சேகரித்துக்கொள்ளட்டும். அவளைத் தடுக்க
வேண்டாம். 16அவளுக்கு எளிதாக இருக்கும்
படி, அறுக்கும்போதே சில தானியக்
கதிர்களை விட்டுச் செல்லுங்கள். அவள்
அவற்றை சேகரித்துக்கொள்ளட்டும். சேகரிக்
கும் வேலையை நிறுத்தும்படி சொல்ல
வேண்டாம்” என்றான்.

### நகோமி போவாஸைப்பற்றி கேள்விப் படுதல்

17ரூத் மாலைவரை வயல்களில் வேலை
செய்தாள். பிறகு அவள் தான் பொறுக்கி
யதை தட்டி அடித்துப் புடைத்தாள். அது
ஏறக்குறைய ஒரு மரக்கால் வாற்கோதுமை
இருந்தது. 18ரூத் அதனை எடுத்துக் கொண்டு
நகரத்துக்குள் போய் தன் மாமியாரிடம்
அவற்றைக் காட்டினாள். அத்துடன்
தன்னிடம் மீதியிருந்த மதிய உணவையும்
அவளுக்குக் கொடுத்தாள்.
19அவளது மாமியாரோ அவளிடம், “நீ
இந்த தானியத்தை எங்கே சேகரித்தாய்?
எங்கே வேலை செய்தாய்? உன்னை
விசாரித்தவன் ஆசீர்வதிக்கப்படுவான்”
என்றாள்.
ரூத் அவளிடம் தான் யாரோடு
வேலைசெய்தாள் என்பதைக் கூறினாள்.
அவள், “இன்றைக்கு நான் வேலைசெய்த
வயல்காரனின் பெயர் போவாஸ்” என்றாள்.
நகோமி தன் மருமகளிடம், “கர்த்தர்
அவனை ஆசீர்வதிக்கட்டும்! உயிருடன்
இருப்பவர்களுக்கும், மரித்துப்போன
வர்களுக்கும் தொடர்ந்து தன் கருணையை
அவரே காட்டிவருகிறார்” என்றாள்.
20அத்துடன் “போவாஸ் நமது உறவினர்
களில் ஒருவன், போவாஸ் நமது
பாதுகாவலர்களிலும்* ஒருவன்” என்றாள்.
21பிறகு ரூத், “மீண்டும் வரும்படியும்,
வயலில் தொடர்ந்து வேலை செய்யும்படியும்
போவாஸ் என்னிடம் சொன்னார்.
அறுவடைக்காலம் முடியும்வரை அவரது
வேலைக்காரர்களுடனேயே நானும் வேலை
செய்யலாம் என்றார்” என்று சொன்னாள்.
22பிறகு நகோமி தன் மருமகளிடம்,
“அவனது பெண் வேலைக்காரிகளோடு
சேர்ந்து வேலைசெய்வது உனக்கும் நல்லது.
நீ வேறு ஏதாவது வயலில் வேலை
செய்தால், யாராவது உனக்குத் தொல்லை
கொடுக்கக்கூடும்” என்றாள். 23எனவே ரூத்,
போவாஸின் வேலைக்காரிகளோடு சேர்ந்து
தொடர்ந்து வேலை செய்துவந்தாள்.
வாற்கோதுமையின் அறுவடை முடியும்
வரை அவள் தானியத்தைச் சேகரித்து
வந்தாள். கோதுமை அறுவடைக்காலம்
முடியும்வரையும் அங்கு வேலைசெய்தாள்.
ரூத் தனது மாமியாரான நகோமியோடு
தொடர்ந்து வாழ்ந்து வந்தாள்.

### தானியத்தைப் போரடிக்கும் இடம்

3 பிறகு நகோமி ரூத்திடம், “என் மகளே,
உனக்காக நான் ஒரு நல்ல
கணவனையும், சிறந்த வீட்டையும் ஏற்பாடு
செய்ய வேண்டும். அதுதான் உனக்கும்
நல்லது. 2அதற்கு போவாஸ் சரியான
மனிதனாக இருக்கலாம். போவாஸ் நமது
நெருக்கமான உறவினன். நீ அவனது
வேலைக்காரிகளோடு வேலை செய்திருக்
கிறாய். இன்று இரவு களத்தில் தானியத்தைப்
போரடிக்கும் இடத்தில் அவன் வேலை
செய்வான். 3நீ குளித்து நன்றாக ஆடை
அணிந்துகொள். தானியத்தை போரடிக்கும்
களத்திற்குப் போ. அவன் இரவு உண்டு
முடிக்கும்வரை போவாஸின் கண்ணில்
படாமல் இரு. 4அவன் உண்டு முடித்ததும்,
ஓய்வுக்காகப் படுப்பான். அவனையே

---

**இஸ்ரவேலரின் ... வந்திருக்கிறாய்** எழுத்தின்பிரகாரமாக, “நீ அவருடைய செட்டைகளின் கீழ் பாதுகாப்புக்காக வந்திருக்கிறாய்” என்பதாகும்.

**பாதுகாவலர்(கள்)** அல்லது “மீட்பர்” மரித்துபோன உறவினருடைய குடும்பத்தை பாதுகாத்த மற்றும் பராமரித்த ஒரு நபர். அடிக்கடி இந்த நபர் ஏழையான உறவினர்களை அடிமைத்தனத்திலிருந்து வாங்கி (மீட்டு) மறுபடியும் சுதந்திரமானவர்களாக்கினான்.

கவனித்துக் கொண்டிருந்தால் அவன்
படுக்கும் இடத்தை நீ அறிந்துகொள்ள
முடியும். அங்கேபோய் அவனது காலை
மூடியிருக்கும் போர்வையை ஒதுக்கிவிட்டு
அவனோடு படுத்துக்கொள். நீ திருமணத்துக்
காகச் செய்ய வேண்டியதைப்பற்றி அவன்
உனக்குக் கூறுவான்" என்றாள்.
5 பிறகு ரூத், "நீங்கள் சொன்னபடியே நான்
செய்வேன்" என்று பதில் சொன்னாள்.
6 எனவே ரூத் தானியத்தைப் போரடிக்கும்
களத்திற்குச் சென்றாள். ரூத் தனது மாமியார்
சொன்னபடியே எல்லாவற்றையும் செய்து
முடித்தாள். 7 உணவை உண்டு, குடித்தபின்
போவாஸ் மிகவும் மனநிறைவோடு
இருந்தான். அவன் ஒரு தானிய
அம்பாரத்துக்கு அடியிலே படுத்துக்
கொண்டான். பிறகு ரூத் அமைதியாக
அவன் அருகிலே சென்று காலருகே
போர்வையை விலக்கிவிட்டு படுத்துக்
கொண்டாள்.
8 நடு இரவில் போவாஸ் தூக்கத்தில்
புரண்டு படுத்தான். அப்போது விழிப்பு
வந்தது. தன் காலடியில் ஒரு பெண்
படுத்திருப்பதைக் கண்டு அவனுக்கு ஆச்சரி
யமாக இருந்தது. 9 போவாஸ் அவளிடம்,
"யார் நீ?" என்று கேட்டான்.
அவளோ, "நான் உங்கள் வேலைக்
காரியான ரூத். உங்கள் போர்வையை
என்மேல் மூடுங்கள். நீங்களே எனது
பாதுகாவலர்" என்றாள்.
10 பிறகு போவாஸ், "இளம்பெண்ணே!
கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கட்டும். நீ
என்னிடம் கருணை உடையவளாய்
இருக்கிறாய். நீ உன் மாமியாரின் பேரில்
வைத்திருக்கும் கருணையைவிட என்மீது
வைத்திருக்கும் கருணை மிகவும் உயர்ந்தது.
ஏழையோ பணக்காரனோ, உன்னால் ஒரு
இளைஞனை மணந்திருக்க முடியும். ஆனால்
நீ அவ்வாறு செய்யவில்லை. 11 இளம்
பெண்ணே, இனிமேல் நீ பயப்பட
வேண்டாம். நீ கேட்கும் உதவியை உனக்குச்
செய்வேன். நீ மிகவும் சிறந்த பெண்
என்பதை நகரத்தில் உள்ள அனைவரும்
அறிவார்கள். 12 நான் உனது நெருங்கிய
உறவினன் என்பதும் உண்மைதான். ஆனால்
என்னைவிட நெருக்கமான உறவினன்
ஒருவன் உனக்கு இருக்கிறான். 13 இன்று
இரவு இங்கேயே தங்கியிரு. காலையில்
அவன் உனக்கு உதவுவானா என்று
பார்க்கலாம். அவன் உனக்கு உதவுவதாகத்
தீர்மானித்துவிட்டால் அது மிகவும் நல்லதாக
இருக்கும். ஒருவேளை அவன் மறுத்து
விட்டால், பிறகு கர்த்தருடைய பேரால்
ஆணையிட்டுக் கூறுகிறேன், நானே
உன்னை மணந்துகொள்வேன். உனக்காக
எலிமெலேக்கின் நிலத்தையும் வாங்கித்
தருவேன். எனவே காலைவரை இங்கேயே
படுத்திரு" என்றான்.
14 எனவே ரூத், போவாஸின் காலருகே
காலைவரை படுத்திருந்தாள். விடியும் முன்,
இருள் இருக்கும்போதே ரூத் எழுந்தாள்.
போவாஸ் அவளிடம், "நேற்று இரவு நீ
இங்கே வந்தது நமக்குள் இரகசியமாக
இருக்கட்டும்" என்று கூறினான். 15 மேலும்
அவன், "உனது போர்வையைக் கொண்டு
வா. அதனை விரித்துப்பிடி" என்று
கூறினான்.
எனவே ரூத் போர்வையை விரித்துப்
பிடித்தாள், போவாஸ் அதில் ஆறுபடி
வாற்கோதுமையை அளந்து போட்டான்.
அதை நகோமிக்குத் தனது அன்பளிப்பாகக்
கொடுக்கச் சொன்னான். பிறகு அதை
அவளது முதுகில் ஏற்றிவிட்டு, நகரத்தை
நோக்கி போவாஸ் போனான்.
16 ரூத் தனது மாமியாரான நகோமி இருந்த
வீட்டிற்குப் போனாள். நகோமி கதவருகே
வந்து, "யாரங்கே?" என்று கேட்டாள்.
ரூத் வீட்டிற்குள்ளே போய் போவாஸ்
அவளுக்காகச் செய்ததை எல்லாம் எடுத்துச்
சொன்னாள். 17 அவள், "போவாஸ்
உங்களுக்கு அன்பளிப்பாக இதை என்னிடம்
கொடுத்தார். உங்களுக்கு அன்பளிப்பாக
எதையும் எடுத்துச் செல்லாமல் நான்
வீட்டுக்குப் போகக்கூடாது என்று சொன்
னார்" என்றாள்.
18 அதற்கு நகோமி, "மகளே, என்ன
நடக்கிறது என்பதை அறிந்துகொள்ளும்
வரை பொறுமையாக இருப்போம். தான்
செய்ய வேண்டியவற்றை போவாஸ் செய்து
முடிக்கும்வரை ஓய்வெடுக்க மாட்டான்.
என்ன நடக்கப் போகிறது என்பதை இன்று
இரவுக்குள் நாமறிவோம்" என்றாள்.

### போவாஸும் மற்ற உறவினனும்

4 நகரவாசலில் ஜனங்கள் கூடும் இடத்திற்கு
போவாஸ் சென்றான். தான் சொன்ன
உறவினன் வரும்வரை அங்கேயே அவன்
காத்திருந்தான். அவன் வந்ததும், "நண்பனே!
வா, இங்கே உட்காரு!" என்றான்.
2 பிறகு போவாஸ் சில சாட்சிகளையும்
அருகில் அழைத்தான். நகரத்திலுள்ள 10
மூப்பர்களையும் அழைத்து, "இங்கு
உட்காருங்கள்!" என்றான். அவர்களும்
உட்கார்ந்தனர்.
3 பிறகு போவாஸ் நெருங்கிய உறவின
னிடம், "மோவாபின் மலை நகரத்திலிருந்து
நகோமி வந்திருக்கிறாள். எலிமெலேக்கின்
நிலத்தை அவள் விற்கப் போகிறாள். 4 நான்
இங்கே வாழும் ஜனங்களின் முன்னிலை
யிலும் நமது மூப்பர்களின் முன்னிலை
யிலும் இதைக்கூற முடிவு செய்தேன். நீ
அதனைத் திரும்ப மீட்க வேண்டுமென
விரும்பினால் வாங்கிக்கொள்! நீ அந்த
நிலத்தை மீட்டுக்கொள்ள விரும்பாவிட்டால்
என்னிடம் கூறு. நானே அதை
மீட்டுக்கொள்ளும் இரண்டாவது உரிமை

யாளன். நீ அதனைத் திரும்ப மீட்டுக் கொள்ளாவிட்டால் நான் வாங்கிக் கொள் வேன்" என்றான்.

5 பிறகு போவாஸ், "நீ நகோமியிடமிருந்து நிலத்தை வாங்கும்போதே நீ மரித்துப் போனவனின் மனைவியையும் பெறுவாய், அவள் மோவாபிய பெண்ணான ரூத். அவளுக்குக் குழந்தை பிறந்தால், இந்த நிலமும் அதற்கு உரியதாகும். இதன் மூலம், அந்த நிலம் மரித்துப் போனவனின் குடும்பத்திற்குரியதாகவே விளங்கும்" என் றான்.

6 அந்த நெருங்கிய உறவினனோ, "என்னால் அந்த நிலத்தைத் திரும்ப வாங்கிக்கொள்ள முடியாது. அது எனக்கே உரியதாகவேண்டும். ஆனால் என்னால் விலைகொடுத்து வாங்கமுடியாது. நான் அவ்வாறு செய்தால் என் நிலத்தை இழந்துபோனவன் ஆகிறேன். நீங்களே அந்நிலத்தை வாங்கிக்கொள்ளுங்கள்" என்
றான். 7 (இஸ்ரவேலில் முற்காலத்தில், ஒருவன் ஒரு சொத்தை வாங்கினாலோ மீட்டுக் கொண்டாலோ, ஒருவன் தனது பாதரட்சை எடுத்து மற்றவனிடம் கொடுக்க வேண்டும். இது வாங்கியதற்கான ஒரு சான்றாக
விளங்கும்.) 8 எனவே நெருக்கமான உறவினன், "நிலத்தை வாங்கிக்கொள்" என்று கூறி, தனது பாதரட்சையை எடுத்து போவாஸிடம் கொடுத்தான்.

9 பிறகு போவாஸ் மூப்பர்களிடமும், மற்ற ஜனங்களிடமும், "இன்று நான் நகோமி யிடமிருந்து எலிமெலேக்குக்கும், கிலியோ னுக்கும், மக்லோனுக்கும் சொந்தமாக இருந்த எல்லாவற்றையும் வாங்கிக்கொள்கிறேன்.
10 நான் ரூத்தையும் என் மனைவியாகப் பெற்றுக்கொள்கிறேன். இவ்வாறு நான் செய்வதால், மரித்துப்போனவனின் சொத்த ானது அவனது குடும்பத்துக்கு உரியதாகவே விளங்கும். இதன் மூலம் அவனது பெயரானது அவனது குடும்பத்தையும் சொத்துக்களையும் விட்டு பிரிக்கப்படாமல் இருக்கும். இன்று இதற்கு நீங்களே சாட்சிகளாக இருக்கிறீர்கள்" என்றான்.

11 நகரவாசலில் உள்ள ஜனங்களும் மூப்பர்களும், சாட்சிகளாக இருந்தவர்களும்,

"உனது வீட்டிற்கு வருகிற இந்தப்
பெண்ணை இஸ்ரவேல் வீட்டைக்
கட்டுவித்த ராகேலைப் போலவும்,
லேயாளைப் போலவும்
கர்த்தர் ஆக்குவாராக.
நீ எப்பிராத்தாவிலே அதிகாரத்தைப்
பெறுவாயாக!
பெத்லெகேமில் புகழ் பெறுவாயாக!
12 தாமார் யூதாவுக்குப் பேரேசை
மகனாகப் பெற்றாள்.
அதனால் அந்தக் குடும்பம் உயர்வு
பெற்றது.
அதைப்போலவே, ரூத் மூலமாக
கர்த்தர் உனக்கு நிறைய
பிள்ளைகளைத் தரட்டும்.
உனது குடும்பமும் அதைப்போலவே,
உயர்வைப் பெறட்டும்" என்றனர்.

13 எனவே போவாஸ் ரூத்தை மணந்து கொண்டான். அவள் கர்ப்பவதியாக கர்த்தர் கருணை செய்தார். அவள் ஒரு மகனைப்
பெற்றாள். 14 நகரத்தில் உள்ள பெண்கள் நகோமியிடம்,

"உனக்குப் பிள்ளையைக் கொடுத்த
கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.
அவன் இஸ்ரவேலில் மிகுந்த
புகழைப் பெறுவான்.
15 அவன் மீண்டும் உன்னை
வாழவைப்பான்,
உனது முதியவயதில் அவன்
உன்னைக் கவனித்துக்கொள்வான்.
இவ்வாறு நடக்குமாறு உனது
மருமகள் செய்தாள்.
அவள் உனக்காகவே
இந்தக் குழந்தையைப் பெற்றாள்.
அவள் உன்மீது அன்புடையவள்.
அவள் 7 ஆண் மகன்களையும்விட
உனக்கு மேலானவள்" என்றனர்.

16 நகோமி பிள்ளையை எடுத்துத் தனது கைகளில் ஏந்தி அவனைக் கவனித்துக்
கொண்டாள். 17 அயல் வீட்டுப் பெண்கள், "இந்தப் பையன் நகோமிக்காகப் பிறந்தவன்!" என்றனர். அவர்கள் அவனுக்கு ஓபேத் என்று பேரிட்டனர். அவன் ஈசாயின் தந்தையானான். ஈசாய் அரசனான தாவீதின் தந்தையானான்.

### ரூத் மற்றும் போவாஸின் குடும்பம்

18 இது பேரேசுடைய குடும்பத்தின் வரலாறு:

பேரேஸ் எஸ்ரோனின்
தந்தையானான்.
19 எஸ்ரோன் ராமின் தந்தையானான்.
ராம் அம்மினதாபின் தந்தையானான்.
20 அம்மினதாப் நகசோனின்
தந்தையானான்.
நகசோன் சல்மோனின்
தந்தையானான்.
21 சல்மோன் போவாஸின்
தந்தையானான்.
போவாஸ் ஓபேதின் தந்தையானான்.
22 ஓபேத் ஈசாயின் தந்தையானான்.
ஈசாய் தாவீதின் தந்தையானான்.

# சாமுவேலின் முதலாம் புத்தகம்

### எல்க்கானாவும் அவனது குடும்பமும் சீலோவில் ஆராதித்தனர்

1 எப்பிராயீம் என்னும் மலைநாட்டில்
உள்ள ராமா என்னும் நகரில் எல்க்கானா
என்னும் பெயருள்ள மனிதன் இருந்தான்,
அவன் சூப் என்னும் குடும்பத்தைச் சேர்ந்த
வன். எல்க்கானா எரோகாமின் மகன்,
எரோகாம் எலிகூவின் மகன், எலிகூ
தோகுவின் மகன், தோகு சூப்பின் மகன்,
எப்பிராயீம் என்னும் கோத்திரத்திலிருந்து
வந்தவன்.
2எல்க்கானாவிற்கு இரண்டு மனைவி
மார்கள் இருந்தனர். அவர்களில் ஒருத்தியின்
பெயர் அன்னாள், மற்றொருவள் பெயர்
பெனின்னாள். பெனின்னாளுக்கு பிள்ளை
கள் இருந்தனர். ஆனால் அன்னாளுக்கோ
பிள்ளைகள் இல்லை.
3ஒவ்வொரு ஆண்டும் எல்க்கானா தனது
நகரமான ராமாவை விட்டு சீலோவுக்குப்
போவான். அங்கு அவன் சர்வ வல்லமை
யுள்ள கர்த்தரை தொழுதுகொண்டான்,
அங்கு கர்த்தருக்குப் பலிகளும் செலுத்தி
னான். சீலோவில் ஓப்னியும் பினெகாசும்
கர்த்தருடைய ஆசாரியர்களாகச் சேவை
செய்து வந்தனர். இவர்கள் ஏலியின்
மகன்கள். 4ஒவ்வொரு முறையும் எல்க்கானா
பலிகளை செலுத்தும்போது, அதில் ஒரு
பங்கினை பெனின்னாளுக்கும், அவளது
பிள்ளைகளுக்கும் கொடுத்து வந்தான்.
5எல்க்கானா அன்னாளுக்கும் இரட்டிப்பான
பங்கினை எப்போதும் கொடுத்து வந்தான்.
ஏனென்றால் அவளில் அவன் அன்பு
செலுத்தினான். கர்த்தர் அவளது கர்ப்பத்தை
அடைத்திருந்தார்.

### பெனின்னாள் அன்னாளை துன்புறுத்தல்

6பெனின்னாள் எப்பொழுதும் அன்னா
ளைத் துக்கப்படுத்தி அவள் துயருறுமாறு
செய்வாள். ஏனென்றால் அன்னாள்
குழந்தைப்பேறு இல்லாதவளாக இருந்தாள்.
7இது ஒவ்வொரு ஆண்டும் நிகழ்ந்து வந்தது.
ஒவ்வொரு முறையும் அவர்களின் குடும்பம்
சீலோவிலுள்ள கர்த்தருடைய ஆலயத்திற்கு
போகும்போதும், பெனின்னாள் அன்னாளை
வேதனைப்படுத்துவாள். ஒரு நாள் எல்க்
கானா பலிகளைச் செலுத்திக் கொண்
டிருந்தான், அன்னாள் துக்கம் மீறி அழ
ஆரம்பித்தாள், அவள் அன்று எதையும்
உண்ணவில்லை. 8அவளது கணவனான
எல்க்கானா அவளிடம், "அன்னாள்! ஏன்
நீ அழுகிறாய்? ஏன் உண்ணாமல் இருக்கி
றாய்? ஏன் துக்கமாய் இருக்கிறாய்? நீ
எனக்குரியவள், நான் உனது கணவன்.
நான் பத்து மகன்களைவிட உனக்கு மேலா
னவன் என்பதை சிந்திக்ககூடாதா"
என்றான்.

### அன்னாளின் ஜெபம்

9உணவை உண்டு குடித்த பின்,
அன்னாள் அமைதியாக எழுந்து கர்த்தரிடம்
ஜெபம் செய்யச் சென்றாள். கர்த்தருடைய
பரிசுத்த ஆலயத்தின்* கதவருகில் ஏலி
எனும் ஆசாரியன் ஒரு நாற்காலியில் உட்
கார்ந்து கொண்டிருந்தான், 10அன்னாள்
மிகவும் துக்கமாக இருந்தபடியால் அவள்
கர்த்தரிடம் அழுதுகொண்டே வேண்டுதல்
செய்தாள். 11அவள் தேவனிடம் ஒரு விசேஷ
வாக்குறுதியைக் கொடுத்தாள். அவள், "சர்வ
வல்லமையுள்ள கர்த்தாவே, நான் எவ்வளவு
துக்கத்தில் இருக்கிறேன் என்பதைப் பாரும்.
என்னை நினைவுகூறும்! என்னை மறவாதே
யும். நீர் எனக்கு ஒரு மகனைத் தந்தால்,
நான் அவனை உமக்கே தருவேன். அவன்
நசரேயனாக இருப்பான்; அவன் திராட்சை
ரசமோ அல்லது வெறிகொள்ளத் தக்கவை
களை அருந்தாமலும் இருப்பான். எவரும்
அவனது தலைமயிரை வெட்டாமல் இருப்
பார்கள்"* என்று வேண்டிக்கொண்டாள்.
12இவ்வாறு அன்னாள் நீண்ட நேரம்
கர்த்தரிடம் ஜெபிக்கும்பொழுது அவளது
வாயையே ஏலி கவனித்துக் கொண்டி
ருந்தான். 13அன்னாள் தன் இருதயத்தில்
ஜெபித்துக்கொண்டிருந்தாள். அவளது உதடு
கள் அசைந்தன, ஆனால் அவள் உரக்க
எதையும் சொல்லவில்லை. எனவே ஏலி,

---

**பரிசுத்த ஆலயம்** சீலோவிலிருந்த பரிசுத்தக் கூடாரம். இங்கே ஜனங்கள் கர்த்தரை தொழுது கொள்ள போவார்கள் அல்லது அவர்கள் பரிசுத்தக் கூடாரத்தை அமைத்திருந்த விசாலமான இடம்.

**எவரும் ... வெட்டாமல் இருப்பார்கள்** நசரேய ஜனங்கள், தேவனுக்கு ஒரு சிறந்த முறையில் ஊழியம் செய்வதாக வாக்குதத்தம் செய்தவர்கள். அதன்படி அவர்கள் தம் தலைமயிரை வெட்டிக் கொள்ளமாட்டார்கள். அவர்கள் திராட்சைரசத்தை குடிக்கமாட்டார்கள்.

அன்னாளைக் குடித்திருப்பவளாக எண்ணி
னான். [14]ஏலி அன்னாளிடம், "நீ அதிகப்
படியாகக் குடித்திருக்கின்றாய்! இது குடியை
விடவேண்டிய நேரம்" என்றான்.
[15]அதற்கு அன்னாள், "ஐயா, நான்
திராட்சைரசமோ அல்லது மதுவையோ
குடிக்கவில்லை. நான் ஆழமான துயரத்
தில் இருக்கிறேன். நான் எனது துன்பங்களை
யெல்லாம் கர்த்தரிடம் சொல்லிக்கொண்டிருந்
தேன். [16]மோசமான பெண் என்று என்னை
எண்ணவேண்டாம். நான் நீண்ட நேரமாக
பிரார்த்தனை செய்துகொண்டிருக்கிறேன்.
ஏனென்றால் எனக்கு அநேக தொல்லைகள்
உள்ளன மற்றும் நான் மிகவும் துக்கத்தில்
இருக்கிறேன்" என்றாள்.
[17]ஏலி அவளிடம், "சமாதானத்துடனே
போ. இஸ்ரவேலரின் தேவன் நீ கேட்டதை
யெல்லாம் உனக்குத் தருவாராக" என்றான்.
[18]அன்னாள், "உம்முடைய அடியாளுக்கு
உம் கண்களில் இரக்கத்தைக் காணட்டும்"
என்றாள். பிறகு அவள் அங்கிருந்து போய்
உணவருந்தினாள். அதற்குப்பின் அவள்
துக்கமாயிருக்கவில்லை.
[19]மறுநாள் அதிகாலையில் எல்க்கானா
வின் குடும்பம் எழுந்து, கர்த்தரைத் தொழுது
கொண்ட பிறகு ராமாவிலுள்ள தங்கள்
வீட்டிற்கு திரும்பிப் போனார்கள்.

### சாமுவேலின் பிறப்பு

[20]எல்க்கானா தன் மனைவியான அன்னா
ளோடு பாலின உறவு கொண்டான், கர்த்தர்
அன்னாளை நினைவுக்கூர்ந்தார். அதே
காலம் அதற்கடுத்த ஆண்டில் அவள் கர்ப்ப
முற்று ஒரு மகனைப் பெற்றெடுத்தாள்.
அவள் தன் மகனுக்கு சாமுவேல் என்று
பெயரிட்டாள். அவள், "இவன் பெயர்
சாமுவேல், ஏனென்றால் நான் கர்த்தரிடம்
இவனைக் கேட்டேன்" என்றாள்.
[21]அந்த ஆண்டில் எல்க்கானா சீலோ
விற்குப் பலிகளைக் கொடுப்பதற்காகவும்
மற்றும் தேவனுக்குத் தந்த வாக்குறுதியை
நிறைவேற்றும்படியும் சென்றான். அவன்
தனது குடும்பத்தை தன்னோடு அழைத்துக்
கொண்டு சென்றிருந்தான். [22]ஆனால்
அன்னாள் செல்லவில்லை. அவள் எல்க்கா
னாவிடம், "பிள்ளை வளர்ந்து திட உணவு
உண்ணும் வயதை அடையும்பொழுது, நான்
இவனைச் சீலோவிற்கு அழைத்துவருவேன்.
பிறகு அவனைக் கர்த்தருக்குத் தருவேன்.
அவன் நசரேயனாக* இருப்பான். அவன்
சீலோவிலேயே தங்கி இருப்பான்" என்றாள்.
[23]அன்னாளின் கணவனான எல்க்கானா
அவளிடம், "உனக்கு எது நல்லதென்று
தெரிகிறதோ அதைச் செய். பையன் பாலை
மறந்து உணவு உண்ணும் காலம்வரை நீ
வீட்டிலேயே தங்கியிரு. நீ சொன்னபடியே
கர்த்தர் உனக்கு செய்வாராக" என்றான்.
எனவே அன்னாள் தன் மகனை வளர்ப்ப
தற்காக வீட்டிலேயே இருந்தாள்.

### சீலோவில் ஏலியிடம் சாமுவேலை அன்னாள் கொண்டுபோகிறாள்

[24]பிள்ளை வளர்ந்து உணவு உண்ண
ஆரம்பித்ததும் அன்னாள் அவனை அழைத்
துக்கொண்டு சீலோவிலுள்ள கர்த்தருடைய
ஆலயத்திற்குப் போனாள். தன்னோடு மூன்று
காளைகளையும், ஒரு மரக்கால் மாவையும்,
ஒரு துருத்தி திராட்சைரசத்தையும் கொண்டு
வந்தாள்.
[25]அவர்கள் கர்த்தருக்கு முன் சென்றார்கள்.
எல்க்கானா காளையைப் பலியாகக் கொன்
றான். அவன் முன்பு கர்த்தருக்கென்று
வழக்கமாகச் செய்வதுபோல் செய்தான்.
பின் அன்னாள் ஏலியிடம் பிள்ளையைக்
கொடுத்தாள். [26]அன்னாள் ஏலியிடம்,
"என்னை மன்னித்துக்கொள்ளுங்கள் ஐயா,
கர்த்தரை நோக்கி ஜெபம் செய்தபடி உங்கள்
முன் நின்ற அதே பெண்தான் நான். நான்
உண்மையை சொல்கிறேன் என
இதன்மூலம் உறுதி கூறுகிறேன். [27]நான்
இக்குழந்தைக்காக ஜெபம் செய்து
கொண்டேன், கர்த்தர் என் ஜெபத்திற்கு
பதில் அளித்தார். கர்த்தர் இந்தக் குழந்தையை
எனக்குத் தந்தார். [28]இப்போது நான் இந்தக்
குழந்தையை கர்த்தருக்குத் தருகிறேன்.
அவன் தன் வாழ்நாள் முழுவதும் கர்த்த
ருக்குச் சேவை செய்வான்" என்றாள்.
பிறகு அன்னாள், அந்தப் பிள்ளையை
அங்கேயே விட்டுவிட்டு கர்த்தரைத்
தொழுதுகொண்டாள்.

### அன்னாள் நன்றி சொன்னது (அன்னாளின் ஜெபம்)

2 அன்னாள் ஜெபம் பண்ணி,

"என் இதயம் கர்த்தருக்குள்
மகிழ்ச்சியாக இருக்கிறது!
நான் என் தேவனுக்குள் மிக்க
பலத்துடன் இருப்பதை
உணருகிறேன்!
என் எதிரிகளைக் கண்டு
நகைக்கிறேன்.
உமது இரட்சிப்பினாலே நான்
மகிழ்ச்சி அடைகிறேன்!
2 கர்த்தரைப்போல பரிசுத்தமான
வேறு தேவன் இல்லை.
உம்மைத் தவிர வேறு தேவன்
இல்லை!
நமது தேவனைப் போன்ற

**நசரேயன்** தேவனுக்கு ஒரு விசேஷ வாக்குதத்தம் செய்த ஒரு மனிதன். எபிரெய மொழியில் "பிரிக்கப்பட்டவன்" எனப் பொருள்படும்.

ஒரு கன்மலை* வேறில்லை.
3 இனி அகம்பாவத்தோடும்
தற்பெருமையோடும் பேசாதிருங்கள்!
ஏனென்றால் தேவனாகிய கர்த்தர்
எல்லாவற்றையும் அறிவார்,
செய்கைகள் அவராலே
நியாயந்தீர்க்கப்படும்.
4 வலிமையான வீரர்களின் வில்கள்
முறிகிறது!
பலவீனமானவர்கள் பெலன்
பெறுகிறார்கள்.
5 கடந்த காலத்தில் ஏராளமான
உணவுப் பொருட்களை
வைத்திருந்த ஜனங்கள் இப்போது
உணவுக்காகக் கஷ்டப்பட்டு
வேலை செய்யவேண்டும்.
ஆனால் கடந்த காலத்தில் பசியோடு
இருந்தவர்கள்,
எல்லாம் இனிமேல் பசியாயிரார்கள்.
முன்பு குழந்தை பேறு இல்லாமல்
இருந்த பெண் இப்போது ஏழு
குழந்தைகளைப் பெற்றிருக்கிறாள்!
ஆனால் முன்பு நிறைய
குழந்தைகளைப் பெற்ற பெண்
அக்குழந்தைகள் தம்மை விட்டு
விலகியதால் வருத்தமாயிருக்கிறாள்.
6 கர்த்தர் மரணத்தைக் கொண்டு
வருகிறவராகவும்
வாழ வைக்கிறவராகவும்
இருக்கின்றார்.
அவரே பாதாளத்தில் இறங்கவும்,
அதிலிருந்து ஏறவும் பண்ணுகிறவர்.
7 கர்த்தர் சிலரை ஏழையாக்குகிறார்,
அவரே இன்னும் சிலரைச்
செல்வந்தராக்குகிறார்.
கர்த்தர் சிலரைத் தாழ்த்துகிறார்,
மற்றவர்களை மேன்மையாக்குகிறார்.
8 கர்த்தர் ஏழை ஜனங்களை
புழுதியிலிருந்து உயிர்ப்பிக்கிறார்
மற்றும் அவர்களை
குப்பையிலிருந்து உயர்த்துகிறார்.
கர்த்தர் ஏழை ஜனங்களை
முக்கியமானவர்களாக்குகிறார்.
அவர்களை அவர் இளவரசர்களோடும்
மதிப்புக்குரிய விருந்தினர்களோடும்
அமர வைக்கிறார்.
கர்த்தர் உலகம் முழுவதையும்
படைத்தார்!
இந்த முழு உலகமும் அவருக்குரியது!
9 கர்த்தர் தமது பரிசுத்தவான்களின்
பாதங்களைப் பாதுகாக்கிறார்
அவர்களை அழிவினின்றும் காப்பார்.
ஆனால் தீயவர்கள் இருளிலே
அமைதியாவார்கள்.

**கன்மலை** இது தேவனுக்கான நாமம். அவர் கோட்டை அல்லது பலமிக்க பாதுகாப்பான இடம் போன்றவர் என்பதை இது காட்டும்.

அவர்களின் பெலன் அவர்களை
வெற்றியடையச் செய்யாது.
10 கர்த்தரை எதிர்ப்பவர்கள்
சிதறடிக்கப்படுவார்கள்.
உன்னதமான தேவன்
பரலோகத்திலிருந்து
தமது எதிரிகளுக்கு எதிராக
இடியாய் முழங்குவார்.
கர்த்தர் பூமியின் கடைசிபகுதியையும்
நியாயந்தீர்ப்பார்.
அவர் தமது அரசனுக்கு
வல்லமையை அளிப்பார்.
தாம் அபிஷேகம் பண்ணினவரின்
கொம்பை உயரப்பண்ணுவார்"
என்றாள்.

11 பிறகு எல்க்கானா ராமாவிலுள்ள தன்னு
டைய வீட்டிற்குத் திரும்பினான். ஆனால்
அந்தப் பிள்ளை சீலோவில் தங்கி ஆசாரி
யனாகிய ஏலிக்குக்கீழ் கர்த்தருக்கு முன்பாக
பணிவிடைச் செய்தான்.

### ஏலியின் தீய மகன்கள்

12 ஏலியின் மகன்கள் எல்லாரும் தீயவர்
கள். அவர்கள் கர்த்தருக்கு பயப்படாதவர்
கள். 13 ஜனங்களிடம் ஆசாரியர்கள் எவ்வாறு
நடக்கவேண்டும் என்பது பற்றியும் கவலைப்
படாதவர்கள். ஒவ்வொரு முறையும் ஜனங்
கள் பலி செலுத்தும்போது, ஆசாரியர்கள்
இறைச்சியைக் கொதிக்கும் தண்ணீருள்ள
பாத்திரத்தில் போடவேண்டும். பிறகு ஆசாரி
யனின் வேலைக்காரன் மூன்று முனைகளை
உடைய பெரியமுள் கரண்டியைக் கொண்டு
வருவான். 14 பாத்திரத்தில் இருக்கிற இறைச்
சியை எடுக்க ஆசாரியரின் வேலைக்காரன்
இந்த ஆயுதத்தைத்தான் பயன்படுத்த
வேண்டும். பாத்திரத்தில் இருந்து அந்த
வேலைக்காரன் எடுத்துத் தரும் இறைச்சியை
மட்டுமே ஆசாரியன் எடுத்துக்கொள்ள
வேண்டும். சீலோவிற்கு பலிகளை கொடுக்க
வந்த இஸ்ரவேலர் அனைவருக்கும் ஆசாரி
யர்கள் செய்யவேண்டிய முறை இதுவே
ஆகும்.
15 ஆனால் ஏலியின் பிள்ளைகளோ
இப்படிச் செய்யவில்லை. பலிபீடத்தில்
கொழுப்பு எரிக்கப்படுமுன்னரே அவர்களின்
வேலைக்காரர்கள் பலிகொடுக்கும் ஜனங்
களிடம் சென்று, "பொறிப்பதற்காக ஆசாரிய
ருக்குக் கொஞ்சம் இறைச்சியைக் கொடுங்
கள். அவர், உங்களிடமிருந்து வேகவைத்த
இறைச்சியைப் பெறமாட்டார்" என்றுச்
சொல்வார்கள்.
16 பலியை கொடுக்கவந்த ஜனங்களோ,
"முதலில் கொழுப்பை எரியுங்கள்.* பிறகு

**கொழுப்பை எரியுங்கள்** மிருகத்தின் ஒரு பகுதியான இந்தக் கொழுப்பானது தேவனுக்கே உரியது. ஆசாரியர்கள் தேவனுக்கான அன்பளிப்பாக அந்தக் கொழுப்பை பலிபீடத்தில் எரிக்க வேண்டும்.

உங்களுக்கு வேண்டியதை எடுத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்வார்கள். இவ்வாறு நடந்தால் உடனே ஆசாரியனின் அந்த வேலைக்காரன், "இல்லை, அந்த இறைச்சியை இப்போதே கொடுங்கள். நீங்கள் அதனைக் கொடுக்காவிட்டால் அதனைப் பலவந்தமாக எடுத்துக்கொள்வேன்!" என்று சொல்வான்.
[17]இவ்வாறு ஒப்னியும் பினெகாசும் கர்த்தருக்கு கொடுக்கும் பலிக்கு மரியாதை தராமல் இருந்தார்கள். இது கர்த்தருக்கு விரோதமானமிக மோசமான பாவமாயிற்று!
[18]ஆனால் சாமுவேல் கர்த்தருக்குச் சேவை செய்தான். அவன் இளம் உதவியாளனாக ஆசாரியர்கள் அணிகின்ற சணல் நூல் ஏபோத்தை* அணிந்திருந்தான். [19]ஒவ்வொரு ஆண்டும் சாமுவேலின் தாய் அவனுக்காக ஒரு சின்ன சட்டையைத் தைப்பாள். அவள் தன் கணவனோடு சீலோவிற்கு பலிசெலுத்த வரும்போதெல்லாம் அதனைக் கொண்டு வந்து தருவாள்.
[20]ஏலி, எல்க்கானாவையும் அவனது மனைவியையும் ஆசீர்வதித்தான். அவன், "அன்னாள் மூலமாக கர்த்தர் மேலும் பல குழந்தைகளைத் தரட்டும். கர்த்தரிடம் ஜெபித் துக்கொண்டபடி, அவருக்கே அளிக்கப்பட்ட அன்னாளின் மகனுடைய இடத்தை இந்த பிள்ளைகள் பிறந்து நிரப்பட்டும்" என்றான்.
எல்க்கானாவும், அன்னாளும் வீட்டிற்குத் திரும்பினார்கள். [21]கர்த்தர் அன்னாளிடம் கருணையாக இருந்தார். அவளுக்கு மேலும் மூன்று மகன்களும், இரண்டு மகள்களும் பிறந்தனர். சாமுவேல் பரிசுத்த இடத்தில் கர்த்தர் அருகிலேயே வளர்ந்து ஆளானான்.

### ஏலி தனது தீய மகன்களைக் கட்டுப் படுத்த தவறுதல்

[22]ஏலிக்கு மிகவும் வயது ஆயிற்று. சீலோ விற்கு வரும் இஸ்ரவேலரிடம் தம் பிள்ளை கள் நடந்து கொள்வதைப்பற்றி, அவன் மீண்டும் மீண்டும் கேள்விப்பட்டான். அதோடு அவன் அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில் வேலை செய்த பெண்களோடுப் படுத்துக்கொள்வதாகவும் கேள்விப்பட்டான்.
[23]ஏலி தன் பிள்ளைகளிடம், "நீங்கள் செய்த கெட்டக் காரியங்களைப் பற்றி யெல்லாம், இங்குள்ளவர்கள் என்னிடம் கூறினார்கள். ஏன் இதுபோல் செய்கிறீர்கள்?
[24]இவ்வாறு செய்யாதீர்கள். கர்த்தருடைய பிள்ளைகள் உங்களைப்பற்றி தவறாகச் சொல்லுகிறார்கள். [25]ஒருவன் இன்னொருவ னுக்கு எதிராகப் பாவம் செய்தால், தேவன் அவனுக்கு உதவலாம். ஆனால் ஒருவன் கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்தால், யார் அவனுக்கு உதவமுடியும்?" என்று கேட்டான்.
ஆனால் ஏலியின் மகன்கள் அவன் கூறியதைக் கேட்க மறுத்துவிட்டனர். எனவே ஏலியின் பிள்ளைகளைக் கொல்ல கர்த்தர் தீர்மானித்தார்.
[26]சாமுவேல் வளர்ந்து வந்தான். அவன் தேவனுக்கும், ஜனங்களுக்கும் பிரியமா யிருந்தான்.

### ஏலியின் குடும்பத்தைப் பற்றிய பயங்கரமான தீர்க்கதரிசனம்

[27]தேவனுடைய மனிதன் ஒருவன் ஏலி யிடம் வந்தான். அவன், "கர்த்தர் இவற்றைச் சொன்னார், 'உன் முற்பிதாக்கள் எகிப்தில் பார்வோனின் அடிமைகளாய் இருந்தார்கள். அந்த காலத்தில் நான் உன் முற் பிதாக் களுக்குத் தோன்றினேன். [28]நான் உன் கோத்திரத்தை மற்ற எல்லா இஸ்ரவேல் கோத்திரங்களிலிருந்தும் தேர்ந்தெடுத்தேன். உனது சந்ததியை எனது ஆசாரியர்களாகத் தேர்ந்தெடுத்தேன். அவர்களை என் பலி பீடத்திற்குப் பலி செலுத்துகிறவர்களாகத் தேர்ந்தெடுத்தேன். அவர்களை நான் ஏபோத் அணியவும் நறுமணப் பொருட்களை எரிக்க வும் தேர்ந்தெடுத்தேன். இஸ்ரவேலர், எனக் குத் தரும் பலிகளிலிருந்து இறைச்சியை உங்கள் கோத்திரம் உண்ணும்படியும் செய்தேன். [29]இவ்வாறு இருக்க நீங்கள் ஏன் எனது அன்பளிப்புகளையும், பலிப் பொருட்களையும் மதிப்பதில்லை? நீ என்னைவிட உன் மகன்களையே அதிகம் உயர்த்துகிறாய். இஸ்ரவேலர், இறைச்சியை எனக்காக கொண்டு வரும்போது, அதன் நல்ல பாகங்களையெல்லாம் தின்று நீங்கள் கொழுத்துப்போய் இருக்கிறீர்கள்.'
[30]"இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர், உங்கள் தந்தையின் குடும்பமே, எல்லா காலத்திலும் சேவை செய்யும் என்று வாக்குறுதி கொடுத்திருந்தார். ஆனால் இப் போது கர்த்தர் சொல்கிறார், 'அது அவ் வாறு நடக்காது! என்னை கனம்பண்ணுகிற வர்களை நானும் கனம்பண்ணுவேன். என்னை அசட்டை செய்பவர்களுக்கு தீமை ஏற்படும். [31]உனது சந்ததிகளையெல்லாம் அழிக்கின்ற காலம் வந்துவிட்டது. உன் குடும்பத்தில் உள்ள யாரும் முதிய வயது வரை வாழ மாட்டார்கள். [32]இஸ்ரவேல் ஜனங்களுக்கு நன்மைகள் ஏற்படும், ஆனால் உன் வீட்டில் மட்டும் தீமை ஏற்படுவதைக் காண்பாய். உன் குடும்பத்தில் யாரும் முதுமைவரை வாழமாட்டார்கள். [33]நான் ஒருவனை மாத்திரம் ஆசாரியனாக என் பலிபீடத்தில் சேவைசெய்யப் பாதுகாப்பேன். அவன் முதுமைவரை வாழ்வான். அவன் கண்பார்வை போகுமட்டும், சக்தியெல்லாம் ஓயுமட்டும் வாழ்வான். உன் சந்ததிகள்

---

**ஏபோத்** ஒருவன் ஆசாரியன் அல்லது ஆசாரி யனின் வேலைக்காரன் என்பதைக் காட்டுவதற் காக அணிந்துகொள்கிற சிறப்பான மேலாடை.

எல்லோரும் வாளால் மரித்துப்போவார்கள்.
34இவைகள் உண்மையில் நிறைவேறும்
என்பதற்கும் ஒரு அடையாளம் காட்டுவேன்.
உனது மகன்களான ஓப்னியும் பினெகாசும்
ஒரே நாளில் மரித்துப்போவார்கள். 35நான்
எனக்காக ஒரு உண்மையுள்ள ஆசாரி
யனைத் தேர்ந்தெடுத்துக்கொள்வேன். அவன்
எனக்குச் செவிகொடுத்து நான் சொல்லுகிற
படி செய்வான். நான் அந்த ஆசாரியனின்
குடும்பத்தைப் பலமுள்ளதாகச் செய்வேன்.
அவன் அபிஷேகம் செய்யப்பட்ட எனது
அரசரின் முன்னிலையில் எப்போதும்
சேவை செய்வான். 36பிறகு உன் குடும்பத்தில்
மீதியான எல்லோரும் வந்து அந்த ஆசாரி
யன் முன்பு பணிந்து, வணங்கி நிற்பார்கள்.
அவர்கள் ஒரு துண்டு ரொட்டிக்காகவும்,
சில்லரை காசுகளுக்காகவும் பிச்சை எடுப்
பார்கள். அப்போது அவர்கள், “தயவுசெய்து
எனக்கு ஆசாரியன் வேலை தாரும். அத
னால் நான் உண்ண உணவை பெறுவேன்”
என்று வேண்டுவார்கள்’” என்று கூறினான்.

### தேவன் சாமுவேலை அழைக்கிறார்

3 சிறுவனான சாமுவேல், ஏலியின் கீழே
கர்த்தருக்குச் சேவை செய்து வந்தான்.
அந்த நாட்களில், கர்த்தர் ஜனங்களோடு
நேரடியாக அடிக்கடி பேசுவதில்லை. அங்கே
மிகக் குறைந்த தரிசனங்களே இருந்தன.
2ஏலியின் கண்கள் பலவீனமாகி ஏறக்கு
றைய அவன் குருடாகிவிட்டான். ஒரு
நாள் அவன் படுக்கையில் கிடந்தான்.
3சாமுவேல் தேவனுடைய பரிசுத்தப் பெட்டி*
இருக்கிற கர்த்தருடைய ஆலயத்தில் படுத்
திருந்தான். கர்த்தருடைய விளக்கானது
இன்னும் எரிந்துக் கொண்டிருந்தது. 4கர்த்தர்
சாமுவேலை அழைத்தார். சாமுவேலோ,
“நான் இங்கே இருக்கிறேன்” என்றான்.
5ஏலி தன்னை அழைப்பதாக சாமுவேல்
நினைத்துக்கொண்டான். எனவே சாமுவேல்
ஏலியின் அருகில் ஓடிச்சென்றான். “நான்
இங்கே இருக்கிறேன். ஏன் என்னை அழைத்
தீர்கள்” என்று கேட்டான்.

ஆனால் ஏலியோ, “நான் உன்னை
அழைக்கவில்லை. படுக்கைக்குத் திரும்பிப்
போ” என்றான்.

சாமுவேல் படுக்கைக்குத் திரும்பிப்
போனான். 6மீண்டும் கர்த்தர், “சாமுவேலே!”
என்று கூப்பிட்டார். மீண்டும் சாமுவேல்
ஏலியிடம் ஓடிப்போனான். அவனிடம், “நான்
இங்கே இருக்கிறேன். என்னை ஏன்
கூப்பிட்டீர்கள்?” என்று கேட்டான்.

ஏலியோ, “நான் உன்னை அழைக்க
வில்லை. படுக்கைக்குத் திரும்பிப் போ”
என்றான்.

7சாமுவேல் அதுவரை கர்த்தரைப்பற்றி
அறியாமல் இருந்தான். கர்த்தர் அதுவரை
அவனிடம் நேரடியாகப் பேசினதில்லை.*
8கர்த்தர் சாமுவேலை மூன்றாவது முறை
யாக அழைத்தார். மீண்டும் சாமுவேல்
எழுந்து ஏலியிடம் ஓடிப்போனான். “நான்
இங்கே இருக்கிறேன். என்னை ஏன்
அழைத்தீர்கள்” என்றான்.

பின்னர் ஏலி, சாமுவேலை அழைத்தது
கர்த்தர் என்பதை அறிந்துக்கொண்டான்.
9ஏலி சாமுவேலிடம், “படுக்கைக்குப் போ.
அவர் உன்னை மீண்டும் அழைத்தால்,
‘கர்த்தாவே, பேசும். நான் உமது தாசன்.
நான் கவனித்துக் கேட்டுக்கொண்டிருக்கி
றேன்’ என்று சொல்” என்றான்.

எனவே சாமுவேல் மீண்டும் படுக்கைக்
குத் திரும்பிப்போனான். 10கர்த்தர் வந்து
அங்கே நின்றார். அவர் முன்புபோலவே
செய்தார். அவர், “சாமுவேலே, சாமு
வேலே!” என்று அழைத்தார்.

சாமுவேலோ, “கர்த்தாவே பேசும். நான்
உமது தாசன், நான் கவனித்துக் கேட்டுக்
கொண்டிருக்கிறேன்” என்றான்.
11கர்த்தர் சாமுவேலிடம், “நான் இஸ்ர
வேலில் சில காரியங்களை விரைவில்
செய்வேன். அதைப்பற்றி கேள்விப்படுகிற
ஜனங்கள் அதிர்ச்சி அடைவார்கள். 12நான்
ஏலிக்கும் அவன் குடும்பத்திற்கும் எதிராகச்
செய்வேன் என்று சொன்னப்படியே ஒவ்
வொன்றையும் தொடக்கம் முதல் இறுதிவரை
செய்வேன். 13நான் ஏலியிடம் அவனது
குடும்பத்தை என்றென்றைக்கும் தண்டிக்கப்
போவதாகக் கூறியிருக்கிறேன். அவன்
மகன்கள் அவர்களாகவே சாபத்தை வர
வழைத்துக் கொண்டனர். அவர்கள்
தேவனுக்கு விரோதமாகக் கெட்டவற்றைப்
பேசியும் செய்தும் வந்தனர் என்பதை
ஏலி அறிந்திருந்தும், ஏலி அவர்களைக்
கட்டுப்படுத்தத் தவறிவிட்டான். 14அதனால்
தான் ஏலியின் குடும்பத்தார் செய்த பாவங்
கள் ஒருபோதும் பலிகளாலோ, தானியக்
காணிக்கையாலோ தீர்வதில்லை என்று
நான் ஆணையிட்டிருக்கிறேன்” என்றார்.
15விடியும்வரை சாமுவேல் படுக்கையி
லேயே படுத்திருந்தான். அதிகாலையிலேயே
எழுந்து கர்த்தருடைய ஆலய கதவைத்
திறந்தான். ஏலியிடம் கர்த்தருடைய தரி
சனத்தைப் பற்றிக்கூற சாமுவேல் பயந்தான்.
16ஆனால் ஏலியோ சாமுவேலிடம், “என்
மகனே சாமுவேல்!” என்று அழைத்தான்.
அதற்கு சாமுவேல், “ஐயா” என்றான்.
17ஏலி அவனிடம், “கர்த்தர் உன்னிடம்
என்ன சொன்னார்? அதனை என்னிடம்
மறைக்கவேண்டாம். தேவன் உன்னிடம்

**தேவனுடைய ... பெட்டி** தேவனுடைய உடன்படிக்கைப் பெட்டி. இந்தப் பெட்டியில் இஸ்ரவேலர் சீனாய் பாலைவனத்தில் இருந்த காலமுதல் பலபொருட்கள் இருந்தன.

**கர்த்தர் ... பேசினதில்லை** எழுத்தின் பிரகாரமாக, “கர்த்தருடைய வார்த்தை இன்னும் அவனுக்கு வெளிப்படுத் தப்படவில்லை.”

சொன்னச் செய்தியை மறைத்தால் தேவன் உன்னைத் தண்டிப்பார்" என்றான்.

[18]அதனால் சாமுவேல் ஏலியிடம் எல்லா வற்றையும் கூறினான். அவன் ஏலியிடம் எதையும் மறைத்து வைக்கவில்லை.

ஏலி, "அவர் கர்த்தர். அவருக்குச் சரி யெனத் தோன்றுவதை அவர் செய்யட்டும்" என்றான்.

[19]சாமுவேல் வளரும்போது கர்த்தர் அவனோடேயே இருந்தார். சாமுவேலின் எந்தச் செய்தியும் பொய்யாக நிரூபிக்க கர்த்தர் அனுமதிக்கவில்லை. [20]பிறகு இஸ்ர வேல் ஜனங்கள் அனைவருக்கும் தாண் முதல் பெயெர்செபா வரைக்கும் சாமுவேல் உண்மையான கர்த்தருடைய தீர்க்கதரிசி என்றறிந்தார்கள். [21]சீலோவில் தொடர்ந்து கர்த்தர் சாமுவேலுக்கு தம்மை காண்பித்து வந்தார், மற்றும் அங்கே தம்முடைய வார்த்தையினாலேயே கர்த்தர் சாமு வேலுக்குத் தம்மை வெளிப்படுத்தி வந்தார்.

4 சாமுவேலைப் பற்றியச் செய்தி அனைத்து இஸ்ரவேலருக்கும் பரவியது. ஏலி முதியவனானான். அவனது மகன்கள் தொடர்ந்து கர்த்தருக்கு எதிராக தீயச் செயல்களைச் செய்துவந்தனர்.

### பெலிஸ்தியர்கள் இஸ்ரவேலர்களை வெல்லுகின்றனர்

அந்த காலத்தில், இஸ்ரவேலர் பெலிஸ் தருக்கு எதிராகப் போர் செய்யப் போனார்கள். இஸ்ரவேலர் எபெனேசர் என்ற இடத்தில் முகாமிட்டனர். பெலிஸ்தர் தங்கள் முகாம்களை ஆப்பெக்கில் அமைத்த னர். [2]பெலிஸ்தர் இஸ்ரவேலரைத் தாக்கும் பொருட்டுத் தயாரானார்கள். போர்த் துவங்கியது.

பெலிஸ்தர் இஸ்ரவேலரைத் தோற் கடித்தனர். இஸ்ரவேல் சேனையில் உள்ள 4,000 வீரர்களைப் பெலிஸ்தர் கொன்றனர். [3]இஸ்ரவேல் வீரர்கள் தங்கள் முகாம்களுக்குத் திரும்பிவந்தனர். மூப்பர்கள், "கர்த்தர் ஏன் பெலிஸ்தர் நம்மைத் தோற்கடிக்கும்படிச் செய்தார்? சீலோவில் உள்ள நமது கர்த்த ருடைய உடன்படிக்கைப் பெட்டியைக் கொண்டுவருவோம். அதன்படி தேவன் நம்மோடு கூட போர்க்களத்துக்கு வருவார். அவர் நம்மை எதிரிகளிடமிருந்துக் காப் பாற்றுவார்" என்றனர்.

[4]எனவே ஜனங்கள் சீலோவிற்குச் சிலரை அனுப்பினார்கள். அவர்கள் சர்வ வல்லமை யுள்ள கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டியைக் கொண்டுவந்தனர். அப்பெட்டி யின் மேல் கேருபின்கள் இருந்தார்கள். அவை கர்த்தர் உட்காரும் சிங்காசனம் போல இருந்தது. ஏலியின் இரண்டு மகன் களான ஓப்னியும் பினெகாசும் அப்பெட்டி யோடு வந்தனர்.

[5]கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டி யானது முகாமுக்குள்ளே வந்ததும், இஸ்ர வேல் ஜனங்கள் பலமாகச் சத்தமிட்டனர். அச்சத்தம் பூமியையே அதிரச் செய்தது. [6]பெலிஸ்தர் இஸ்ரவேலர்களின் சத்தத்தைக் கேட்டு, "ஏன் இஸ்ரவேல் முகாமில் இவ் வாறு சத்தமிடுகிறார்கள்?" என்று கேட் டனர்.

பின்னர் கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டி முகாமிற்கு கொண்டு வரப்பட்டதை அறிந் துக்கொண்டனர். [7]பெலிஸ்தர் அதனால் அஞ்சினர். அவர்களோ, "தேவன் அவர் களின் முகாமிற்கு வந்திருக்கிறார். நாம் இக்கட்டில் இருக்கிறோம். இதற்கு முன்பு இதுபோல் நடந்ததில்லை! [8]நாங்கள் கவலைப் படுகிறோம். வல்லமையான இந்தத் தெய் வங்களிடமிருந்து நம்மை யார் காப்பாற் றுவார்கள்? இந்தத் தெய்வங்கள் ஏற்கனவே எகிப்தியர்களுக்கு நோயையும் துன்பங்களை யும் கொடுத்தவர்கள். [9]பெலிஸ்தியர்களே, தைரியமாக இருங்கள். ஆண்களைப் போன் றுப் போரிடுங்கள். முற்காலத்தில் இஸ்ர வேலர்கள் நமக்கு அடிமைகளாக இருந்தனர். நீங்கள் ஆண்களைப்போன்று சண்டையிடா விட்டால் அவர்களுக்கு அடிமையாகி விடுவீர்கள்!" என்றனர்.

[10]எனவே பெலிஸ்தர்கள் கடுமையாகச் சண்டையிட்டு இஸ்ரவேலர்களைத் தோற் கடித்தனர். ஒவ்வொரு இஸ்ரவேல் வீரனும் தங்கள் முகாமிற்கு ஓடினார்கள். இது இஸ்ர வேலுக்குப் படுதோல்வியாயிருந்தது. 30,000 இஸ்ரவேல் வீரர்கள் கொல்லப்பட்டனர். [11]பெலிஸ்தர் தேவனுடைய பரிசுத்தப் பெட் டியை எடுத்துக்கொண்டு, ஓப்னியையும் பினெகாசையும் கொன்றுவிட்டனர்.

[12]அந்த நாளில் பென்யமீனின் கோத்திரத்தி லிருந்து ஒருவன் போர்க் களத்திலிருந்து சீலோவிற்கு ஓடிப்போனான். அவன் தனது ஆடையைக் கிழித்தெறிந்தான். தலையின் மேல் புழுதியை அள்ளி போட்டுக் கொண்டான். இவ்வாறு அவன் தன் சோகத்தை வெளிகாட்டினான். [13]இந்த மனி தன் சீலோவிற்கு வந்தபொழுது ஏலி நகர வாசல்களுக்கு அருகில் ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தான். தேவனுடைய பரிசுத்தப் பெட்டியைப்பற்றி ஏலி கவலைப்பட்டு, கவனித்துக் காத்திருந்தான். பிறகு பென்ய மீன் குடும்பத்தைச் சேர்ந்த மனிதன் சீலோ வுக்கு வந்து அந்தக் கெட்டச் செய்தியைக் கூறினான். நகரிலிருந்த ஜனங்கள் அனை வரும் சத்தமாக அழத்துவங்கினார்கள். [1415]ஏலி 98 வயதுடையவன். அவன் குருடன். என்ன நடக்கிறது என்பதை அவனால் காண முடியவில்லை. ஆனால் அவனால் ஜனங்களின் உரத்த அழுகை சத்தத்தைக் கேட்க முடிந்தது. ஏலி, "ஏன் இவர்கள் இவ்வாறு சத்தமிடுகிறார்கள்?" என்று கேட்டான்.

பென்யமீன் குடும்பத்தைச் சேர்ந்தவன்
ஏலியிடம் ஓடிவந்து நடந்ததைக் கூறினான்.
16 அவன், "நான் இப்போதுதான் போர்க்களத்
திலிருந்து ஓடி வந்தேன்" என்றான்.
ஏலி அவனிடம், "மகனே! என்ன நடந்
தது?" என்று கேட்டான்.
17 அதற்கு அவன், "பெலிஸ்தர்களிட
மிருந்து இஸ்ரவேலர்கள் ஓடிப்போனார்கள்.
இஸ்ரவேல் படை ஏராளமான வீரர்களை
இழந்துவிட்டது. உமது இரு மகன்களும்
மரித்துப்போனார்கள். பெலிஸ்தர் தேவனு
டைய பரிசுத்தப் பெட்டியை எடுத்துக்
கொண்டனர்" என்றான்.
18 பென்யமீன் குடும்பத்தைச் சேர்ந்தவன்
தேவனுடைய பரிசுத்தப் பெட்டியைப்பற்றிச்
சொன்னதும், ஏலி நாற்காலியிலிருந்து
வாசல் பக்கமாய் மல்லாக்க விழுந்து தன்
கழுத்தை முறித்துக்கொண்டான். அவன்
வயதானவனாகவும் சரீரம் பருமனாகவும்
இருந்ததால், மரித்துப்போனான். ஏலி இஸ்ர
வேல் ஜனங்களை 20 ஆண்டுகள்*
வழிநடத்தினான்.

### மகிமை போய்விட்டது

19 ஏலியின் மருமகளான பினெகாசின்
மனைவி அப்போது நிறைமாத கர்ப்பிணி
யாக இருந்தாள். அவள் குழந்தைப்
பெறுவதற்குரியக் காலம் அது. தேவனு
டைய பரிசுத்தப் பெட்டி பறிபோனதுப்
பற்றி அவள் கேள்விப்பட்டாள். அதோடு
அவள் தன் கணவனும் தன் மாமனாரும்
மரித்துப்போனதுப் பற்றியும் கேள்விப்
பட்டாள். உடனே அவளுக்கு பிரசவ வலி
ஆரம்பமாகிக் குழந்தையைப் பெற்றாள்.
20 அவளது பிரசவத்திற்கு உதவிய
பெண்ணோ, "கவலைப்படாதே! நீ ஒரு
ஆண்மகனைப் பெற்றிருக்கிறாய்" என்றாள்.
ஆனால் ஏலியின் மருமகளோ அதைக்
கவனிக்கவில்லை, எவ்வித பதிலும் சொல்ல
வில்லை. 21 அவள், அந்தப் பிள்ளைக்கு
இக்கபோத் என்றுப் பெயரிட்டாள், அதற்கு
பொருள் "இஸ்ரவேலரின் மகிமைப்
போயிற்று!" என்பதாகும். தேவனுடைய
பரிசுத்தப் பெட்டி பறிபோனது, கணவனும்
மாமனாரும் மரித்துப்போனார்கள், எனவே
அவள் இந்தப் பெயரை வைத்தாள். 22 அவள்,
"இஸ்ரவேலரின் மகிமைப் போயிற்று"
ஏனென்றால் பெலிஸ்தர் தேவனுடைய
பரிசுத்தப் பெட்டியை பறித்துக்கொண்டனர்
என்றாள்.

---

**20 ஆண்டுகள்** கிரேக்க மொழிபெயர்ப்பு மற்றும் யோசப்பஸின் எழுத்துக்களிலிருந்து இது காணப்பட்டாலும், எபிரெய மூலம் "அவன் 40 ஆண்டுகள் நியாயந்தீர்த்தான்" என கூறுகிறது.

### பரிசுத்தப் பெட்டியினால் பெலிஸ்தர் களுக்குத் தொல்லை

5 பெலிஸ்தர் தேவனுடைய பரிசுத்தப்
பெட்டியை எபெனேசரிலிருந்து
அஸ்தோத் திற்குக் கொண்டுப் போனார்கள்.
2 பெலிஸ்தர் தேவனுடைய பரிசுத்த
பெட்டியை தாகோனின் கோவிலுக்குள்
கொண்டுப்போய் தாகோனின் சிலைக்கு
அருகில் வைத்தனர். 3 மறுநாள் காலை,
அஸ்தோத் ஜனங்கள் எழுந்ததும் தாகோனின்
சிலை முகம் குப்புற விழுந்து கிடப்பதைக்
கண்டனர். தாகோன் கர்த்தருடைய பெட்டிக்கு
முன்னால் விழுந்து கிடந்தது.
அஸ்தோத் ஜனங்கள் தாகோனின்
சிலையைப் பழைய இடத்தில் வைத்தனர்.
4 ஆனால் மறுநாள் காலையில், மீண்டும்
தாகோனின் சிலை முகம் குப்புற விழுந்து
கிடப்பதைக் கண்டனர்! கர்த்தருடைய
பரிசுத்தப் பெட்டிக்கு முன்னால் தாகோன்
சிலை விழுந்து கிடந்தது. இந்த முறை
தாகோனின் தலையும், கைகளும் உடைந்து
கோவில் வாசற்படியிலே கிடந்தன.
தாகோனின் உடல் மாத்திரம் அப்படியே
கிடந்தது. 5 அதனால்தான் இன்றும் கூட,
தாகோனின் பூசாரிகளும், அஸ்தோத்தில்
உள்ள தாகோனின் கோவிலுக்குள் நுழைகிற
ஒருவனும் கோவில் வாசற்படியை
மிதிப்பதில்லை.
6 அஸ்தோத்து ஜனங்களுக்கும், அவர்களது
அக்கம் பக்கத்தினருக்கும் வாழ்க்கைச்
சிரமமாகும்படி கர்த்தர் செய்தார். கர்த்தர்
அவர்களுக்கு பல துன்பங்களைத் தந்தார்.
அவர்களை தோல் கட்டிகளினால்
வாதித்தார். அவர்களுக்கு சுண்டெலிகளை
யும் அனுப்பினார். அவை அவர்களின்
கப்பல்களுக்கும், நிலப்பகுதிகளுக்கும் பரவி
யது. நகர ஜனங்கள் அஞ்சினார்கள்.
7 அஸ்தோத் ஜனங்கள் நடப்பதை எல்லாம்
கண்டனர். அவர்கள், "இஸ்ரவேலரின்
தேவனுடைய பரிசுத்தப் பெட்டியானது
இங்கே இருக்கக்கூடாது! அவர் நம்மையும்
நமது தெய்வமான தாகோனையும் தண்டித்
திருக்கிறார்" என்றனர்.
8 அஸ்தோத் ஜனங்கள் பெலிஸ்தியரின் 5
ஆளுநர்களையும் வரவழைத்தனர். அவர்களி
டம், "இஸ்ரவேலின் தேவனுடைய பரிசுத்தப்
பெட்டியை நாம் என்னச் செய்யவேண்டும்?"
என்று கேட்டனர்.
ஆளுநர்களோ, "இஸ்ரவேலின் தேவனு
டைய பரிசுத்தப் பெட்டியை இங்கிருந்து
காத் பட்டணத்திற்கு எடுத்துப் போக
வேண்டும்" என்றனர். ஆகவே பெலிஸ்தர்கள்
தேவனுடைய பரிசுத்தப் பெட்டியை எடுத்
துச் சென்றனர்.
9 ஆனால் தேவனுடைய பரிசுத்தப்
பெட்டியை காத் நகரம் வரைக்கும் பெலிஸ்
தர்கள் எடுத்துச் சென்றதும், காத் நகரை
கர்த்தர் தண்டித்தார். ஜனங்கள் மிகவும்

*கலக்கமுற்றனர். இளைஞர் முதியவர் என
அனைவருக்கும் தேவன் தொல்லைகளை
ஏற்படுத்தினார். தேவன் அங்குள்ளவர்களுக்
கும் தோல் கட்டிகளை தந்தார். 10எனவே,
பெலிஸ்தியர் தேவனுடைய பரிசுத்தப்
பெட்டியை எக்ரோனுக்கு அனுப்பினர்.*

*ஆனால் அங்குள்ள ஜனங்கள், தேவ
னுடைய பரிசுத்தப் பெட்டியைக் கண்டதும்,
முறையிட்டார்கள். “எங்களது எக்ரோன்
நகரத்திற்கு இஸ்ரவேலருடைய தேவனின்
பரிசுத்தப் பெட்டியை ஏன் கொண்டு வந்தீர்
கள்? நீங்கள் எங்களையும் எங்கள் ஜனங்
களையும் கொல்ல விரும்புகிறீர்களா?” எனக்
கேட்டனர். 11எக்ரோன் ஜனங்கள் பெலிஸ்
திய ஆளுநர்களைக் கூட்டி, “இஸ்ரவேல
ருடைய தேவனின் பெட்டி நம்மை கொன்
றுப் போடுவதற்கு முன் இதனை அதன்
பழைய இடத்திற்கே அனுப்பிவிடுவோம்!”
என்றனர்.*

*எக்ரோன் ஜனங்கள் மிகவும் பய
மடைந்தனர்! அங்குள்ள ஜனங்களை தேவன்
மிகவும் கஷ்டப்படுத்தினார். 12பலர் மரித்
தனர். மரிக்காதவர்களுக்கு தோல் கட்டி
இருந்தது. எக்ரோன் ஜனங்களின் கூக்குரல்
பரலோகம்வரை எட்டியது.*

### தேவனுடைய பரிசுத்தப் பெட்டி திருப்பி அனுப்பப்படுகிறது

*6 பெலிஸ்தர் தம் நாட்டில் பரிசுத்தப்
பெட்டியை ஏழு மாதங்கள் வைத்திருந்
தனர். 2பெலிஸ்தர் தங்கள் பூசாரிகளையும்,
மந்திரவாதிகளையும் அழைத்து, “கர்த்த
ருடைய பெட்டியை என்னச் செய்யலாம்?
பெட்டியை எவ்வாறு திருப்பி அனுப்
பலாம்” என்றுக் கேட்டனர்.*

*3அதற்கு அவர்கள், “நீங்கள் இஸ்ர
வேலரின் தேவனுடைய பரிசுத்தப் பெட்
டியைத் திருப்பி அனுப்புவதானால் வெறு
மையாக அனுப்பவேண்டாம். அன்பளிப்
போடு அனுப்புங்கள். அப்போது உங்கள்
பாவங்களையும் இஸ்ரவேலின் தேவன்
எடுத்துப்போடுவார். பின் நீங்களும் குணம்
பெறுவீர்கள். நீங்களும் பரிசுத்தம் அடைவீர்
கள். இதனைச் செய்தால் தேவன் உங்களைத்
தண்டிப்பதையும் நிறுத்துவார்” என்றனர்.*

*4பெலிஸ்தர்கள், “நம்மை மன்னிப்பதற்காக
நாம் எத்தகைய காணிக்கைகளை இஸ்ர
வேலரின் தேவனுக்குக் கொடுக்கவேண்டும்?”
எனக் கேட்டனர்.*

*அதற்கு பூசாரிகளும், மந்திரவாதிகளும்
பதில் சொன்னார்கள், “ஒவ்வொரு நகரத்துக்
கும் ஒரு ஆளுநராக, 5 பெலிஸ்திய ஆளுநர்
கள் இருக்கிறார்கள். உங்களுக்கும் உங்கள்
ஆளுநர்களுக்கும் ஒரேவிதமானப் பிரச்சனை
தான். எனவே தங்கத்தால் 5 உருவங்களை
தோல் கட்டியின் சாயலிலும், 5 சுண்டெலி
சாயலிலும் செய்து அனுப்பவேண்டும்”
என்றனர். 5எனவே, உங்களை அழித்துக்
கொண்டிருக்கும் தோல்கட்டி மற்றும்
எலியின் உருவங்களை செய்யுங்கள்.
அத்தங்க உருவங்களை இஸ்ரவேல் தேவ
னுக்குக் காணிக்கையாக்குங்கள். பின் இஸ்ர
வேலின் தேவன், உங்களையும் உங்கள்
தெய்வங்களையும், உங்கள் நாட்டையும்
தண்டிப்பதைநிறுத்துவார். 6எகிப்தியர்களை
யும் பார்வோனையும் போன்று கடினமனம்
உடையவர்களாக இராதீர்கள். தேவன்
எகிப்தியர்களைத் தண்டித்தார். எனவேதான்
எகிப்தியர்கள் இஸ்ரவேலர்களை எகிப்தை
விட்டுப் போகும்படி அனுமதித்தனர்.*

*7“இப்போது நீங்கள் ஒரு புது வண்டியைச்
செய்யவேண்டும். நுகம்பூட்டாத இரண்டு
இளைய பசுக்களைப் பிடித்து வண்டியில்
கட்டவேண்டும். அவற்றின் கன்றுக்குட்டி
களை அவற்றின் பின் போகவிடாமல்
வீட்டில் கட்டவேண்டும்.* 8கர்த்தருடைய
பரிசுத்தப் பெட்டியை அவ்வண்டியில்
வைக்கவும். தங்க உருவங்களையும் சிலை
களையும் பெட்டியின் அருகில் பக்கத்தில்
பையில் வைக்கவும். இவை உங்கள்
பாவங்களை மன்னிக்கும் தேவனுக்கான
அன்பளிப்புகளாகும். வண்டியை நேரான
வழியில் போகவிடுங்கள். 9வண்டியைக்
கவனியுங்கள். அது நேராக இஸ்ரவேலரின்
சொந்த இடமான பெத்ஷிமேசுக்குப்
போனால், நமக்கு இந்த நோய்களைத்
தந்தவர் கர்த்தர் தான் என அறியலாம்.
ஒருவேளை பெத்ஷிமேசுக்கு அப்பசுக்கள்
நேராகச் செல்லவில்லை என்றால், இஸ்ர
வேலரின் தேவன் நம்மைத் தண்டிக்க
வில்லை, இந்த நோய் தற்செயலாக வந்தது
என்று அறிந்துகொள்ளலாம்” என்றனர்.*

*10பெலிஸ்தியர் பூசாரிகளும் மந்திர
வாதிகளும் சொன்னபடிச் செய்தனர்.
அப்போதுதான் கன்றுகளை ஈன்ற இரண்டு
பசுக்களைக் கண்டார்கள். அந்த இரண்டு
பசுக்களை வண்டியில் பூட்டி அதன் கன்று
குட்டிகளை வீட்டுத் தொழுவில் கட்டி
னார்கள். 11பின் பெலிஸ்தர் கர்த்தருடைய
பரிசுத்தப் பெட்டியை வண்டியில்
வைத்தனர். தங்க உருவங்களால் செய்யப்
பட்ட தோல்கட்டியையும், சுண்டெலிகளை
யும் அதன் பக்கத்தில் வைத்தனர். 12பசுக்கள்
நேராக பெத்ஷிமேசுக்குச் சென்றன. அவை
நேராகச் சாலையில் வலது பக்கமோ இடது
பக்கமோ திரும்பாமல் சென்றன. பெலிஸ்தர்
கள் தொடர்ந்து நகர எல்லைவரை பின்
சென்றனர்.*

*13பெத்ஷிமேசின் ஜனங்கள் தங்கள்
கோதுமையை பள்ளத்தாக்கிலே அறுவடை*

---

**அவற்றின் … கட்டவேண்டும்** *பசுக்களானது தம் கன்றுக்குட்டிகளைக் கண்டுகொள்ள முடியாவிட்டால், தேவன் அவர்களை வழிநடத்திச் செல்வார் என்றும் அவர்களுடைய அன்பளிப்புகளை ஏற்றுக்கொள்வார் என்றும் பெலிஸ்தர்கள் நினைத்தார்கள்.*

செய்து கொண்டிருந்தனர். அவர்கள்
பரிசுத்தப் பெட்டியைக் கண்டனர். அவர்கள்
பெட்டியை மீண்டும் பார்த்ததில் மிகவும்
மகிழ்ந்தனர். அதைப் பெற்றுக்கொள்ள
ஓடினார்கள். 14-15 பெத்ஷிமேசில் யோசுவாவின்
வயலுக்கு வண்டி வந்து பாறைக்கருகில்
நின்றது. ஜனங்கள் வண்டி மரங்களைப்
பிளந்தனர், பசுக்களைக் கொன்றுக் கர்த்த
ருக்கு பலியாக செலுத்தினார்கள்.
லேவியர்கள் கர்த்தருடைய பரிசுத்தப்
பெட்டியை எடுத்துச் சென்றனர். தங்க
உருவங்கள் இருந்தப் பையையும் எடுத்துக்
கொண்டனர். அவர்கள் அவற்றைப் பெரியப்
பாறைமீது வைத்தனர். அந்த நாளில் பெத்ஷி
மேசின் ஜனங்கள் கர்த்தருக்கு தகனபலிகளை
அளித்தனர்.
16 ஐந்து பெலிஸ்திய அரசர்களும் பெத்ஷி
மேசின் ஜனங்கள் செய்வதை எல்லாம்
கவனித்தனர். அன்றே அவர்கள் எக்ரோ
னுக்குத் திரும்பினார்கள்.
17 இவ்வாறு பெலிஸ்தர் தோல் கட்டிகளின்
தங்க உருவங்களை தம் பாவங்களுக்கு
பரிகாரமாக கர்த்தருக்குக் கொடுத்தனர்.
ஒவ்வொரு பெலிஸ்திய நகரத்திற்கும் ஒரு
உருவம் வீதம் கொடுத்தனர். அவை
அஸ்தோத்து, அஸ்கலோன், காத், காசா,
எக்ரோன் ஆகியவையாகும். 18 பெலிஸ்தர்
சுண்டெலியின் தங்க உருவங்களையும்
அனுப்பினார்கள். அவையும் நகர எண்ணிக்
கையைப் போலவே இருந்தன. இந்நகரங்
களைச் சுற்றிலும் சுவர்களும், நகரங்களைச்
சுற்றிலும் கிராமங்களும் இருந்தன.
பெத்ஷிமேசின் ஜனங்கள், கர்த்தருடைய
பரிசுத்தப் பெட்டியைப் பாறையின் மேல்
வைத்தனர். அப்பாறை இன்றும் யோசுவா
வின் வயலில் உள்ளது. 19 ஆனால் அவர்கள்
கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டியைப்
பார்த்த போது அங்கே ஆசாரியர்கள்
இல்லாமல் இருந்தனர். எனவே தேவன்
பெத்ஷிமேசில் 70 பேரை கொன்றார்.
பெத்ஷிமேசில் உள்ள ஜனங்கள்
இக்கொடுமையான தண்டனைக்காகக் கதறி
அழுதனர். 20 அவர்கள், “பரிசுத்தப்
பெட்டியைப் பராமரிக்கும் ஆசாரியன்
எங்கே இருக்கிறான்? இங்கிருந்து அந்த
பெட்டி எங்கே செல்லவேண்டும்?” என்றனர்.
21 கீரியாத்யாரீம் என்ற இடத்தில் ஒரு
ஆசாரியன் இருந்தான். அங்குள்ள ஜனங்
களுக்கு பெத்ஷிமேசின் ஜனங்கள் தூது
அனுப்பினார்கள். தூதுவர்கள், “பெலிஸ்தர்
கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டியைத்
திரும்பக் கொண்டு வந்துவிட்டனர். இதனை
உங்கள் நகரத்திற்கு எடுத்துச் செல்லுங்கள்”
என்றனர்.

7 கீரியாத்யாரீம் ஜனங்கள் வந்து கர்த்த
ருடைய பரிசுத்தப் பெட்டியை எடுத்துச்
சென்றனர். அவர்கள் அதனை பாறைமேல்
இருந்த அபினதாபின் வீட்டில் வைத்தனர்.
கர்த்தருடைய பெட்டியைக் காக்க அபினதா
பின் மகன் எலெயாசாருக்கு அவர்கள்
சிறப்பான சடங்குகளைச் செய்தார்கள்.
2 பெட்டி கீரியாத்யாரீமிலேயே 20 ஆண்டுகள்
இருந்தது.

## இஸ்ரவேலர்களைக் கர்த்தர் காப்பாற்று கிறார்

இஸ்ரவேல் ஜனங்கள் மீண்டும் கர்த்தரைப்
பின்பற்ற தொடங்கினார்கள். 3 சாமுவேல்
அவர்களிடம், “நீங்கள் உண்மையிலேயே
கர்த்தரிடம் மனப்பூர்வமாக திரும்புவீர்கள்
என்றால் உங்களிடம் உள்ள அந்நிய தெய்
வங்களை தூர எறியுங்கள். அஸ்தரோத்
விக்கிரகங்களைத் தூக்கி எறியுங்கள். நீங்கள்
உங்களை முழுமையாக கர்த்தருக்கு ஒப்புக்
கொடுங்கள். நீங்கள் கர்த்தருக்கு மட்டுமே
சேவை செய்யவேண்டும்! பின்னரே கர்த்தர்
உங்களை பெலிஸ்தர்களிடமிருந்து காப்பாற்
றுவார்” என்றான்.
4 எனவே இஸ்ரவேலர் தமது பாகால்
மற்றும் அஸ்தரோத் சிலைகளைத் தூர
எறிந்தனர். கர்த்தருக்கு மட்டுமே சேவை
செய்தனர்.
5 சாமுவேல், “இஸ்ரவேலர் அனைவரும்
மிஸ்பாவில் கூடுங்கள். நான் உங்களுக்காக
கர்த்தரிடம் ஜெபம் செய்வேன்” என்றான்.
6 இஸ்ரவேலர் மிஸ்பாவில் கூடினார்கள்.
அவர்கள் தண்ணீரை கர்த்தருடைய சந்நிதி
யில் ஊற்றினார்கள். இவ்விதமாக உபவாசம்
இருந்தனர். அன்றைய நாளில் எந்தவகை
உணவும் உண்ணாமல், தங்கள் பாவங்
களுக்காக மனம் வருந்தி அதை
அறிக்கையிட்டனர், “நாங்கள் கர்த்தருக்கு
எதிராகப் பாவம் செய்தோம்” என்றனர்.
எனவே சாமுவேல் இஸ்ரவேலர்களின் நீதி
பதியாக மிஸ்பாவில் இருந்தான்.
7 பெலிஸ்தர், இஸ்ரவேலர் மிஸ்பாவில்
கூடுகின்றதைப்பற்றி அறிந்துகொண்டனர்.
பெலிஸ்தியர்களின் அரசர்கள் இஸ்ர
வேலருக்கு எதிராகப் போர் செய்யச்
சென்றனர். இதையறிந்து இஸ்ரவேலர்
பயந்தார்கள். 8 அவர்கள் சாமுவேலிடம்,
“எங்களுக்காக நமது தேவனாகிய கர்த்த
ரிடம் ஜெபம் செய்வதை நிறுத்தவேண்டாம்!
எங்களை பெலிஸ்தர்களிடமிருந்து காப்
பாற்றுமாறு கர்த்தரிடம் கேளுங்கள்!”
என்றனர்.
9 சாமுவேல் ஆட்டுக்குட்டியை எடுத்துக்
கொண்டான். அதனை முழுமையாக
கர்த்தருக்கு சர்வாங்க தகன பலியாகச்
செலுத்தினான். சாமுவேல் இஸ்ரவேலர்
களுக்காக கர்த்தரிடம் ஜெபம் செய்தான்.
கர்த்தர் அவனுடைய ஜெபத்திற்கு பதில்
சொன்னார். 10 சாமுவேல் தகனபலியைச்
செலுத்திக் கொண்டிருக்கும்போது, பெலிஸ்
தர்கள் இஸ்ரவேலர்களுடன் போரிட
வந்தனர். ஆனால் கர்த்தர் பெலிஸ்தியர்கள்

பக்கம் பெரிய இடி முழங்குமாறு செய்தார்.
இது பெலிஸ்தரைக் அச்சப்படுத்தியது,
மேலும் குழப்பியது. தலைவர்களால்
அவர்களைக் கட்டுப்படுத்த இயலவில்லை.
எனவே இஸ்ரவேலர்கள் அவர்களைப்
போரில் தோற்கடித்தனர். 11இஸ்ரவேலர்கள்
மிஸ்பாவிலிருந்து பெலிஸ்தர்களை பெத்கார்
வரை துரத்தினார்கள். வழியெல்லாம்
பெலிஸ்தர்களைக் கொன்றனர்.

## இஸ்ரவேலுக்கு சமாதானம் திரும்புகிறது

12இதற்குப்பின், சாமுவேல் ஒரு சிறப்பான
கல்லை நிறுவினான். அது தேவனுடைய
உதவியை ஜனங்கள் நினைவு கூரும்படி
இருந்தது. இந்த கல் மிஸ்பாவிற்கும்
சேணுக்கும் இடையில் இருந்தது. அதற்கு
“எபெனேசர்” (உதவியின் கல்) என்று
பேரிட்டான். “இந்த இடம் வரும்வரை
கர்த்தர் நமக்கு உதவிச் செய்தார்” என்றான்.
13பெலிஸ்தர்கள் தோற்கடிக்கப்பட்டனர்.
அவர்கள் மீண்டும் இஸ்ரவேலுக்குள் நுழைய
வில்லை. சாமுவேலின் மீதியான வாழ்வு
முடியுமட்டும் கர்த்தர் பெலிஸ்தியர்களுக்கு
எதிராக இருந்தார். 14பெலிஸ்தர் ஏற்கனவே
இஸ்ரவேலர்களிடம் இருந்து எக்ரோன் முதல்
காத் வரை பல நகரங்களைக் கைப்பற்றி
இருந்தனர். அவற்றை இஸ்ரவேலர் திரும்பப்
பெற்றனர். அவற்றைச் சுற்றியுள்ள நகரங்க
ளையும் கைப்பற்றிக்கொண்டனர்.

இஸ்ரவேலர்களுக்கும் எமோரியருக்கும்
இடையில் சமாதானம் நிலவியது.

15சாமுவேல் தம் வாழ்நாள் முழுவதும்
இஸ்ரவேலர்களை வழிநடத்திச் சென்றான்.
16இஸ்ரவேல் ஜனங்களை நியாயம் விசா
ரித்துக்கொண்டு சாமுவேல் இடம்விட்டு இடம்
சென்றான். ஒவ்வொரு ஆண்டும்
சுற்றுப்பயணம் செய்து, அவன் பெத்தேல்,
கில்கால், மிஸ்பா போன்ற இடங்களில்
நியாயம் விசாரித்து வந்தான். 17அவனது
வீடு ராமாவில் இருந்தது. எனவே எப்
போதும் அங்கேயே திரும்பி வருவான்.
இஸ்ரவேலர்களை அங்கிருந்தே ஆண்டு
கொண்டும் நியாயம் விசாரித்தும் வந்தான்.
சாமுவேல் ராமாவில் கர்த்தருக்காக ஒரு
பலிபீடம் கட்டினான்.

## இஸ்ரவேலர் ஒரு அரசன் வேண்டும் என்று கேட்கிறார்கள்

8 சாமுவேல் முதுமையடைந்ததும், அவன்
தன் ஜனங்களை நியாயம் விசாரிக்க
ஏற்பாடு செய்தான். 2அவனது மூத்த மகனின்
பெயர் யோவேல், இளையவனுக்குப் பெயர்
அபியா, அவர்கள் பெயெர்செபாவில் நீதி
பதிகளாக இருந்தனர். 3ஆனால் சாமுவேல்
வாழ்ந்த விதத்தில் அவனது மகன்கள்
வாழவில்லை. அவர்கள் இரகசியமாகப்
பணம் பெற்றுக்கொண்டு நீதிமன்றங்களில்
தீர்ப்பை மாற்றினார்கள். அவர்கள்
ஜனங்களை நீதிமன்றத்திலே ஏமாற்றினார்
கள். 4எனவே இஸ்ரவேலின் மூப்பர்கள்
கூடி, ராமாவிலே சாமுவேலை சந்திக்கும்
படிச் சென்றனர். 5மூப்பர்கள் சாமுவேலிடம்,
“உங்களுக்கு வயதாகி விட்டது. உங்கள்
மகன்கள் சத்தியத்தின் வழியில் வாழ
வில்லை. அவர்கள் உங்களைப்போல்
இல்லை. இப்போது, மற்ற நாடுகளைப்
போன்று எங்களை ஆள்வதற்கு ஒரு
அரசனைத் தாருங்கள்” என்று கேட்டனர்.

6எனவே மூப்பர்கள் தங்களை வழி
நடத்த ஒரு அரசனை வேண்டினார்கள்.
சாமுவேல் இதனை ஒரு கெட்ட திட்டம்
என எண்ணினான். எனவே சாமுவேல்
கர்த்தரிடம் ஜெபித்தான். 7கர்த்தர் சாமுவேலி
டம், “ஜனங்கள் சொன்னதைப்போல் செய்ய
வும். அவர்கள் உன்னைத் தள்ளவில்லை.
என்னைத் தள்ளியுள்ளார்கள்! என்னை
அவர்களுடைய அரசனாக ஏற்றுக்கொள்ள
விருப்பமில்லை! 8அவர்கள் எப்போதும்
செய்ததுபோலவே தொடர்ந்து செய்கிறார்
கள். நான் எகிப்திலிருந்து அவர்களை
வெளியே கொண்டுவந்தேன். ஆனால்
என்னை விட்டுவிட்டு மற்ற தெய்வங்களுக்
குச் சேவை செய்தனர். அவர்கள் அதையே
உனக்கும் செய்வார்கள். 9எனவே அவர்கள்
சொன்னதைக் கவனித்து அவர்கள்
சொல்வது போல் செய்யவும். ஆனால்
அவர்களை எச்சரிக்கவும். ஒரு அரசன்
அவர்களுக்கு என்ன செய்வான் என்பதை
யும் கூறு! ஒரு அரசன் எவ்வாறு ஆள்வான்
என்பதையும் கூறு” என்றார்.

10அவர்கள் சாமுவேலிடம் ஒரு அரசன்
வேண்டுமெனக் கேட்டிருந்தனர். எனவே
சாமுவேல் கர்த்தர் சொன்னவற்றை அவர்
களிடம் சொன்னான். 11அவன் சொன்னது;
“உங்களை ஆள்வதற்கு ஒரு அரசன் வந்தால்,
அவன் செய்வது இதுதான்: அவன்
உங்களின் மகன்களை எடுத்துக்கொள்வான்.
அவர்களைத் தனக்குச் சேவை செய்யுமாறு
பலவந்தப்படுத்துவான். அவர்களை வீரர்கள்
ஆகுமாறு கட்டாயப்படுத்துவான். அவர்கள்
அவனது தேரிலிருந்து சண்டையிட
வேண்டும். அவனது படையில் குதிரை
வீரர்களாக வேண்டும். அவர்கள் காவல்காரர்
களாகி அரசனின் இரதத்துக்கு முன்னால்
செல்லவேண்டும். 12அரசன் உங்கள் பிள்ளை
களை வீரர்களாகுமாறு வற்புறுத்துவான்.
சிலர் 1,000 பேருக்கான அதிகாரிகளாகவும்,
இன்னும் சிலர் 50 பேருக்கான அதிகாரிகளா
கவும் ஆவார்கள். அரசன் உங்கள் பிள்ளை
களைக் கட்டாயப்படுத்தி தம் வயல்களை
உழவும், அறுவடை செய்யவும் ஈடுபடுத்து
வான். அவன் உங்கள் பிள்ளைகளைக்
கட்டாயப்படுத்தி போருக்கான ஆயுதங்
களைச் செய்யச் சொல்வான்! அவர்களது
தேருக்கான பொருட்களைச் செய்யுமாறு
பலவந்தப்படுத்துவான்!

13 “அரசன் உங்கள் பெண் பிள்ளைகளை
எடுத்துக்கொள்வான். தனக்கான வாசனைப்
பொருட்களைச் செய்யச் சொல்வான். அவர்
களில் சிலரை அவனுக்காக சமைக்கவும்,
பலகாரம் சுடவும் பலவந்தப் படுத்துவான்.
14 ‘‘அரசன் உங்கள் செழிப்பான வயல்க
ளையும், திராட்சைத் தோட்டங்களையும்,
ஒலிவ மரங்களையும் எடுத்துக்கொள்வான்.
தன் அதிகாரிகளுக்கு அவற்றைக் கொடுப்
பான். 15 உங்கள் தானியங்களிலும் திராட்சை
யிலும் பத்தில் ஒரு பாகத்தை எடுத்துக்
கொள்வான். அவற்றைத் தன் அதிகாரி
களுக்குக் கொடுப்பான். 16 அரசன் உங்களி
லிருந்து வேலைக்காரரையும், வேலைக்காரி
களையும், தேர்ந்த வாலிபர்களையும்
எடுத்துக்கொள்வான். அவன் உங்கள் கழு
தைகளையும் எடுத்து தன் சொந்த உப
யோகத்துக்கு வைத்துக்கொள்வான். 17 உங்கள்
மந்தையில் பத்தில் ஒரு பாகத்தையும்
எடுத்துக்கொள்வான்.
“நீங்களே அரசர்களுக்கு அடிமை
யாவீர்கள். 18 காலம் வரும்போது நீங்கள்
தேர்ந்தெடுத்த அரசனால் கதறி அழுவீர்கள்.
அப்போது கர்த்தர் உங்களுக்குப் பதில்
சொல்லமாட்டார்” என்றான்.
19 ஆனால் ஜனங்கள் சாமுவேலுக்கு செவி
கொடுக்கவில்லை. அவர்கள், “இல்லை!
எங்களை ஆள ஒரு அரசன் வேண்டுமென
விரும்புகிறோம். 20 அப்போது நாங்கள் மற்ற
நாடுகளைப்போன்று இருப்போம். அரசன்
எங்களை வழிநடத்துவான். எங்களோடு
வந்து எங்களுக்காகப் போர் செய்வான்”
என்றனர்.
21 சாமுவேல் ஜனங்கள் சொன்னதைக்
கேட்டு கர்த்தரிடம் அவர்கள் வார்த்தை
களைத் திருப்பிச் சொன்னான். 22 கர்த்தரோ,
“அவர்கள் சொல்வதைக் கேள்! ஒரு
அரசனைக் ஏற்படுத்து” என்றார்.
பிறகு சாமுவேல் இஸ்ரவேல் ஜனங்
களிடம், “நல்லது! நீங்கள் புதிய அரசனை
அடைவீர்கள். இப்போது, நீங்கள்
அனைவரும் வீட்டுக்குத் திரும்பிச் செல்
லுங்கள்” என்றான்.

### சவுல் தன் தந்தையின் கழுதைகளைத் தேடுகிறான்

9 பென்யமீன் கோத்திரத்தில் கீஸ் முக்கி
யமானவனாக இருந்தான். இவன்
அபியேலின் மகன். அபியேல் சேரோரின்
மகன். சேரோர் பெகோராத்தின் மகன்.
பெகோரேத் பென்யமீன் கோத்திரத்தி
லுருந்து வந்த அப்பியாவின் மகன்.
2 கீஸுக்குச் சவுல் என்ற மகன் இருந்தான்.
இவன் அழகான இளைஞன். இவனைப்போல்
அழகுள்ளவன் யாரும் இல்லை. இஸ்ரவேலில்
எல்லோரும் இவன் தோளுக்குக் கீழா
யிருக்கத்தக்க உயரம் இருந்தான்.
3 ஒரு நாள், கீஸின் கழுதைகள்
தொலைந்துப் போயின. எனவே அவன்
தன் மகன் சவுலிடம், “ஒரு வேலைக்காரனை
அழைத்துப்போய் கழுதைகளைத் தேடு”
என்றான். 4 சவுல் கழுதைகளைத் தேடிப்
போனான். அவன் எப்பிராயீம் மலைச்சரிவு
களிலும் சலிஷா பகுதிகளிலும் தேடினான்.
ஆனால் கண்டுபிடிக்க முடியவில்லை.
எனவே சாலீம் நாட்டுப் பக்கம் போனார்
கள். அங்கேயும் இல்லை. பிறகு பென்யமீன்
நாட்டுப் பக்கத்திலும் கண்டுபிடிக்க
முடியவில்லை.
5 இறுதியாக, சவுலும் வேலைக்காரனும்
சூப் நாட்டிற்கு வந்தனர். சவுல் தன்
வேலைக்காரனிடம், “நாம் திரும்பிப் போக
லாம். என் தந்தை இப்பொழுது கழுதைகளை
விட்டு நம்மைப்பற்றி கவலைப்பட ஆரம்பித்
திருப்பார்” என்றான்.
6 ஆனால் வேலைக்காரனோ, “ஒரு
தேவமனிதன்* இங்கே இருக்கிறார். ஜனங்கள்
அவரை மதிக்கின்றனர். அவர் சொல்வ
தெல்லாம் உண்மையாகிறது. எனவே, நாம்
நகரத்திற்குள் போவோம். நாம் அடுத்து
செல்லவேண்டிய இடத்தைப்பற்றி தேவமனி
தன் கூறக்கூடும்” என்றான்.
7 சவுல் தன் வேலைக்காரனிடம், “உறுதி
யாக, நாம் நகருக்குள் போவோம். ஆனால்
அவருக்கு எதைக் கொடுப்பது? தேவமனி
தனுக்கு கொடுக்க அன்பளிப்புகள் எதுவு
மில்லை. நம்மிடம் உணவு கூட இல்லையே?”
என்றான்.
8 மீண்டும் அந்த வேலைக்காரன், “பாருங்
கள், என்னிடம் கொஞ்சம் பணம் இருக்கி
றது. இதனைத் தேவமனிதனுக்கு கொடுப்
போம். பிறகு நாம் அடுத்துப் போக
வேண்டிய இடத்தைப்பற்றி அவர் சொல்
வார்” என்றான்.
9-11 சவுல் தனது வேலைக்காரனிடம், “நல்ல
யோசனை! நாம் போவோம்!” என்றான்.
எனவே, தேவமனிதன் தங்கி இருந்த நகருக்கு
அவர்கள் சென்றார்கள்.
சவுலும், வேலைக்காரனும் நகரை நோக்கி
மலைமீது ஏறிக்கொண்டிருந்தனர். சாலை
யில் அவர்கள் சில இளம் பெண்களைச்
சந்தித்தார்கள். அந்த இளம் பெண்கள்
தண்ணீர் எடுக்க வந்து கொண்டிருந்தார்கள்.
சவுலும், வேலைக்காரனும் அந்த இளம்
பெண்களிடம், “சீயர் இங்கு தான் இருக்கி
றாரா?” என்று கேட்டார்கள். (முற்காலத்தில்,
இஸ்ரவேலில் இருந்த ஜனங்கள் தீர்க்க
தரிசியை, ‘சீயர்’ என்று அழைத்தார்கள்.
எனவே, அவர்கள் தேவனிடம் ஏதேனும்
கேட்க வேண்டியிருந்தால், “நாம் சீயரிடம்
போகலாமா?” என்பார்கள்.)

---

**தேவமனிதன்** தீர்க்கதரிசி. ஜனங்களிடத்தில் பேசும்படி தேவனால் அனுப்பப்பட்டவன்.

12அந்த இளம் பெண்கள், “ஆம், சீயர்
இங்குதான் இருக்கிறார். அவர் சாலையில்
சற்று தூரத்தில் தங்கி இருக்கிறார். அவர்
இன்றுதான் ஊருக்கு வந்தார். சமாதான
பலிகளைச் செலுத்துவதற்காக இன்று சிலர்
அவரை ஆராதனை இடத்தில் சந்திக்கிறார்
கள். 13ஊருக்குள் நீங்கள் விரைவாகச்
சென்றால், ஆராதனை செய்யுமிடத்தில் அவர்
உண்ணப்போகும் முன் அவரைச் சந்தித்து
விடலாம். அத்தீர்க்கதரிசி பலியை
ஆசீர்வதிப்பார். எனவே அவர் அங்கு
சேரும் முன்பு ஜனங்கள் உண்ணத்
தொடங்கமாட்டார்கள். எனவே, நீங்கள்
கொஞ்சம் விரைவாகச் சென்றால் அத்தீர்க்க
தரிசியைச் சந்திக்க முடியும்” என்றார்கள்.
14சவுலும் அவனது வேலைக்காரனும்
நகரை நோக்கி மலையில் ஏறத்தொடங்
கினார்கள். நகருக்குள் நுழையும் சமயத்தில்,
சாமுவேல் அவர்களை நோக்கி வந்தான்.
அப்பொழுதுதான் சாமுவேல் ஆராதனை
இடத்திற்கு போக நகரைவிட்டு வெளியே
வந்துக்கொண்டிருந்தான்.

15சவுல் வருவதற்கு ஒருநாள் முன்பு,
கர்த்தர் சாமுவேலிடம், 16“நாளை இந்
நேரத்தில் உன்னிடம் ஒருவனை அனுப்பு
வேன். அவன் பென்யமீன் கோத்திரத்தில்
உள்ளவன். அவனை இஸ்ரவேல் ஜனங்
களின் புதிய தலைவனாக நீ அபிஷேகம்
செய். அவன் பெலிஸ்தர்களிடமிருந்து என்
ஜனங்களைக் காப்பாற்றுவான். நான்
என்னுடைய ஜனங்களின் துன்பத்தைப்
பார்த்திருக்கிறேன், அழுகையைக் கேட்டிருக்
கிறேன்” என்றார்.
17சாமுவேல் சவுலைப் பார்த்தான். அப்
போது கர்த்தர், “நான் சொன்னது இவனைப்
பற்றித்தான். இவனே எனது ஜனங்களை
ஆள்வான்” என்றார்.
18சவுல் வழி கேட்பதற்காகக் கதவண்டை
நின்றிருந்து சாமுவேலை நெருங்கி, “தயவு
செய்து சீயரின் வீடு எங்கே இருக்கிறதென்று
சொல்லுங்கள்?” என்று கேட்டான்.
19அதற்கு சாமுவேல், “நானே சீயர். நீ
எனக்கு முன்பாக ஆராதனை இடத்திற்கு
மேடையின்மேல் ஏறிப்போ! இன்று என்
னோடு சேர்ந்து நீயும் உனது வேலைக்
காரனும் சாப்பிடுங்கள். நான் உங்களை
நாளைக் காலையில்தான் போகவிடுவேன்.
உனது கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்
வேன். 20மூன்று நாட்களுக்கு முன்னால்
இழந்த கழுதைகளைப்பற்றி கவலைப்பட
வேண்டாம். அவைக் கண்டுபிடிக்கப்பட்டது.
இப்போது அனைத்து இஸ்ரவேலரும்
உன்னை விரும்புகின்றனர்! அவர்கள் உன்
னையும் உன் குடும்பத்திலுள்ள அனைவரை
யும் விரும்புகின்றனர்” என்றான்.
21அதற்கு சவுல், “ஆனால் நான்
பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்தவன்,
இதுதான் இஸ்ரவேலில் மிகவும் சிறிய
கோத்திரம். இதில் எனது குடும்பந்தான்
பென்யமீன் கோத்திரத்திலே மிகவும் சிறியது.
இவ்வாறிருக்க இஸ்ரவேல் என்னை விரும்பு
வதாக எப்படி சொல்கிறீர்?” என்று
கேட்டான்.
22பிறகு சாமுவேல், சவுலையும் அவனது
வேலைக்காரனையும் அழைத்துகொண்டு
உணவு சாப்பிடும் பகுதிக்குப் போனான்.
ஏறக்குறைய 30 பேர் சேர்ந்து உணவு
உண்ணவும் பலியை பங்கிட்டுக்கொள்ளவும்
அழைக்கப்பட்டிருந்தனர். சாமுவேல், சவுலுக்
கும் அவனது வேலைக்காரனுக்கும்
மேஜையில் மிக முக்கியமான இடத்தைக்
கொடுத்தான். 23சாமுவேல் சமையற்காரனி
டம், “நான் எடுத்து வைக்கச் சொன்ன
இறைச்சியின் ஒரு பகுதியைப் பரிமாறு”
என்றான்.
24சமையற்காரன் தொடைக்கறியைக்
கொண்டுவந்து மேஜையில் சவுலின் முன்
னால் வைத்தான். சாமுவேல், “உனக்கு
முன்பாக இருக்கும் இறைச்சியைச் சாப்பிடு.
இந்தச் சிறப்பான நோரத்தில் ஜனங்கள்
கூடியிருந்தாலும் இது உனக்காக பாதுகாத்து
வைக்கப்பட்டது” என்றான். எனவே சவுல்
அன்று சாமுவேலோடு சேர்ந்து அதனைச்
சாப்பிட்டான்.
25அவர்கள் உண்டு குடித்ததும் ஆராதனை
இடத்திலிருந்து கீழே இறங்கி மீண்டும்
நகரத்திற்குள் சென்றார்கள். சாமுவேல்
சவுலுக்காக ஒரு படுக்கையை மேல் வீட்டில்
அமைத்தான். சவுல் அதில் உறங்கினான்.
26மறுநாள், அதிகாலையில் சவுலை மேல்
வீட்டிற்கு அழைத்தான். “எழு, நான்
உன்னை உன் வழியிலே அனுப்புவேன்”
என்றான். அவனும் தயார் ஆகி சாமு
வேலோடு வீட்டைவிட்டு வெளியேறினான்.
27சவுலும் வேலைக்காரனும் சாமு
வேலோடு ஊரின் எல்லைக்குச் சென்றனர்.
சாமுவேல் சவுலிடம், “உனது வேலைக்
காரனை நமக்கு முன்னே போகச்சொல்.
நான் உனக்காக தேவனிடமிருந்து ஒரு
செய்தியை வைத்திருக்கிறேன்” என்றான்.
வேலைக்காரனும் முன் நடந்தான்.

### சாமுவேல் சவுலை அபிஷேகம் செய்கிறான்

10 சாமுவேல் சிறப்புக்குரிய எண்ணை
இருக்கும் ஜாடியை எடுத்தான்.
அதனைச் சவுலின் தலையில் ஊற்றி,
முத்தமிட்டுச் சொன்னான், “கர்த்தர் உன்னை
இஸ்ரவேல் ஜனங்களின் தலைவனாக
அபிஷேகித்திருக்கிறார். கர்த்தருடைய ஜனங்
களை நீ கட்டுப்படுத்துவாய். அவர்களைச்
சுற்றியுள்ள எதிரிகளிடமிருந்து காப்பாற்று
வாய். கர்த்தர் உன்னை அவருடைய
ஜனங்களின் மேல் அரசனாக்கியுள்ளார். இது
உண்மை என்பதை நிரூபிக்க ஒரு

அடையாளம் உள்ளது. [2]இன்று நீ என்னை
விட்டுப் போனதும் பென்யமீன் எல்லையில்
செல்சாவில் ராகேலின் கல்லறை அருகில்
இருவரைக் காண்பாய். அவர்கள் உன்னிடம்,
'நீ தேடிப்போன கழுதைகள் கிடைத்தன.
உன் தந்தை கழுதைகளைப்பற்றிய கவலை
களை விட்டு விட்டார். இப்போது அவர்
உன்னைப் பற்றி கவலைப்படுகிறார். அவர்,
என் மகனுக்காக என்ன செய்வேன்?'
என்கிறார் என்பார்கள்" என்றான்.
[3]மேலும் சாமுவேல், ''பின்பு தாபோரி
லுள்ள பெரிய சிந்தூர மரத்தடிவரை
போவாய் அங்கே மூன்று பேர் உன்னைச்
சந்திப்பார்கள். அவர்கள் பெத்தேலுக்கு
தேவனை தொழுதுகொள்ளச் செல்பவர்கள்.
அவர்களில் ஒருவன் மூன்று வெள்ளாட்டுக்
குட்டிகளையும், இன்னொருவன் மூன்று
அப்பங்களையும், மூன்றாமவன் ஒரு புட்டி
திராட்சைரசத்தையும் வைத்திருப்பார்கள்.
[4]அவர்கள் உனது நலனை விசாரிப்பார்கள்.
அவர்கள் இரண்டு அப்பங்களைத் தரு
வார்கள். நீ அவர்களிடம் அவற்றைப்
பெற்றுக்கொள்ள வேண்டும். [5]பிறகு நீ
கிபியாத் எலோகிமுக்குப் போவாய். அங்கே
பெலிஸ்தரின் கோட்டை உண்டு. நீ நகரத்துக்
குள் போகும்போது, தீர்க்கதரிசிகளின்
கூட்டம் ஒன்று வெளியே வரும். அவர்கள்
ஆராதனை ஸ்தலத்திலிருந்து வருவார்கள்.
அவர்கள் தீர்க்கதரிசனம் சொல்வார்கள்.
அவர்கள் சுரமண்டலமும், தம்புரும், புல்
லாங்குழலும், இரட்டைவால் யாழும்
இசைப்பார்கள். [6]அப்பொழுது கர்த்தருடைய
ஆவியானவர் மிகுந்த வல்லமையோடு உன்
மீது இறங்குவார். நீயும் அவர்களோடு
சேர்ந்து தீர்க்கதரிசனம் சொல்லி வேறு
மனிதன் ஆவாய். [7]இவை ஆனதும், தேவன்
உன்னோடு இருப்பதால் சந்தர்ப்பத்திற்கு
ஏற்றபடி செய்ய ஆரம்பி.
[8]"நீ எனக்கு முன்னால் கில்காலுக்கு
இறங்கிப்போ. நான் பிறகு அங்கு வருவேன்.
நான் சர்வாங்க தகன பலிகளையும்
சமாதான பலிகளையும் செலுத்துவேன்.
ஆனால் நீ 7 நாட்கள் காத்திருக்க வேண்டும்.
பிறகு நீ செய்ய வேண்டியவற்றைப்பற்றி
நான் சொல்வேன்" என்றார்.

### சவுல் தீர்க்கதரிசிகளைப் போல் ஆகிறான்

[9]சவுல் சாமுவேலை விட்டு போனபோது,
தேவன் சவுலின் வாழ்க்கையை மாற்றினார்.
அந்த நாளில் இந்த அடையாளங்கள்
எல்லாம் நடந்து முடிந்தன. [10]சவுலும் அவ
னது வேலைக்காரனும் கிபியாத் எலோகிம்
மலைக்குச் சென்றனர். அங்கே, அவன்
தீர்க்கதரிசிகளின் குழுவைச் சந்தித்தான்.
தேவனுடைய ஆவியானவர் மிகுந்த வல்ல
மையோடு சவுலின் மேல் இறங்கினார்.
அவனும், தீர்க்கதரிசிகளுடன் தீர்க்கதரிசனம்
சொன்னான். [11]அவனை முன்பே அறிந்
திருந்தவர்கள் அவன் தீர்க்கதரிசிகளோடு
சேர்ந்து தீர்க்கதரிசனம் சொல்வதைக் கண்ட
னர். அவர்கள், "கீஸின் மகனுக்கு என்ன
ஆயிற்று? சவுலும் ஒரு தீர்க்கதரிசியா?"
என்று பேசிக்கொண்டனர்.
[12]கிபியாத் ஏலோமில் வாழும் ஒருவன்,
"ஆமாம்! அவன்தான் அவர்களின் தலை
வன்" என்றான். அதனால் "சவுலும் தீர்க்க
தரிசிகளுள் ஒருவனோ?" என்பது மிகவும்
புகழ்வாய்ந்தப் பழமொழி ஆனது.

### சவுல் வீட்டிற்க்கு திரும்புகிறான்

[13]சவுல் தீர்க்கதரிசனம் சொல்லி முடித்த
பின், தன் வீட்டிற்கு அருகிலுள்ள தொழுது
கொள்ளுகிற இடத்திற்கு வந்தான்.
[14]அப்போது சவுலின் சிறிய தகப்பன்
சவுலிடமும் அவனது வேலைக்காரனிடமும்,
"நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்?" எனக்
கேட்டான்.
"நாங்கள் கழுதைகளைத் தேடிப்
போனோம். கிடைக்காததால் சாமுவேலை
சந்திக்கச் சென்றோம்" என்றான்.
[15]"சாமுவேல் என்ன சொன்னார் என்று
தயவுசெய்து சொல்?" எனச் சவுலின் சிறிய
தகப்பன் கேட்டான்.
[16]அதற்கு சவுல், "சாமுவேல், கழுதைகள்
ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டு விட்டன
என்று சொன்னார்" என்று பதிலுரைத்தான்.
அரசாட்சியைப்பற்றி சாமுவேல் கூறியதைப்
பற்றி சவுல் எதுவும் சொல்லவில்லை.

### சவுலை அரசனாக சாமுவேல் அறிவிக்கிறான்

[17]சாமுவேல் இஸ்ரவேல் ஜனங்கள் அனை
வரிடமும் மிஸ்பாவில் கர்த்தரைச் சந்திக்க
கூடுமாறு கூறினான். [18]சாமுவேல் இஸ்ர
வேலரைப் பார்த்து, "இஸ்ரவேலரின் தேவ
னாகிய கர்த்தர் கூறுகிறார், 'நான் இஸ்ர
வேலரை எகிப்திற்கு வெளியே அழைத்து
வந்தேன். உங்களுக்குத் தீங்கு செய்ய முயன்ற
எகிப்தியர்களிடமிருந்தும் மற்ற அரசுக
ளிடமிருந்தும் நான் உங்களைக் காப்பாற்றி
னேன்' என்றார். [19]ஆனால் இன்று நீங்கள்
உங்கள் தேவனை ஒதுக்கிவிட்டீர்கள்,
உங்களது துன்பங்களிலிருந்தும் சிக்கல்களி
லிருந்தும் உங்கள் தேவன் காப்பாற்றினார்.
ஆனால் நீங்களோ, 'எங்களை ஆள ஒரு
அரசன் வேண்டும்' என்கிறீர்கள். இப்போது
நீங்கள் உங்கள் குடும்பத்தோடும் கோத்திரங்க
ளோடும் கர்த்தருக்கு முன்பு சேர்ந்து நில்
லுங்கள்" என்றான்.
[20]சாமுவேல் இஸ்ரவேலர்களின் எல்லா
கோத்திரங்களையும் கூட்டினான். பின் புதிய
அரசனைத் தேர்ந்தெடுத்தான். முதலில் பென்
யமீனின் கோத்திரத்தைத் தேர்ந்தெடுத்தான்.
[21]அவன் பென்யமீன் கோத்திரத்தின் ஒவ்
வொரு குடும்பங்களையும் கடந்துப்போகச்
சொல்லின பின்பு மாத்திரி குடும்பம்

தேர்ந்தெடுக்கப்பட்டது. அவர்களின் குடும்
பம் கடந்துபோகும்போது கீசின் மகனாகிய
சவுலும் தேர்ந்தெடுக்கப்பட்டான்.
ஆனால் ஜனங்கள் அவனைத் தேடிய
போது அவன் காணப்படவில்லை. 22பிறகு
அவர்கள் கர்த்தரிடம், “அவன் இன்னும்
இங்கே வரவில்லையா?” எனக் கேட்டனர்.
அதற்குக் கர்த்தர், “சவுல் கிடங்கில்
பொருட்களுக்கு மறைவில் ஒளிந்துகொண்டி
ருக்கிறான்” என்றார்.
23ஜனங்கள் ஓடிப்போய் அவனை
அழைத்துக்கொண்டு வந்தனர். அவன்
அவர்கள் மத்தியில் நின்றான். அவனது
தலை மற்றவர்களைவிட உயர்ந்திருந்தது.
24சாமுவேல் அனைத்து ஜனங்களிடமும்,
“கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்பட்ட மனிதனைப்
பாருங்கள். அவனைப் போன்று சிறப்புடை
யவன் வேறுயாருமில்லை” என்றார். பிறகு
ஜனங்கள் “அரசனே நீடூழி வாழ்க!” என்று
குரலெழுப்பினார்கள்.
25சாமுவேல் அரசாங்கத்தின் விதிகளை
ஜனங்களுக்கு விளக்கிக் கூறினான். அவன்
ஒரு புத்தகத்தில் அவ்விதிகளை எழுதினான்.
அந்த புத்தகத்தை கர்த்தருக்கு முன்பு வைத்
தான். பின் ஜனங்களை வீட்டிற்கு போகு
மாறு கூறினான்.
26சவுலும் கிபியாவிலுள்ள தன் வீட்
டிற்குப் போனான். தேவன் சில வீரர்களின்
இதயத்தைத் தொட அவர்கள் அவனைப்
பின் தொடர்ந்துச் சென்றார்கள். 27ஆனால்
சில கயவர்கள், “இவன் எவ்வாறு நம்மைக்
காப்பாற்றுவான்?” என்றனர். அவர்கள்
சவுலைப்பற்றி கெட்டவற்றைக் கூறி அவ
னுக்கு அன்பளிப்புக்களைக் கொடுக்க
மறுத்தனர். சவுல் ஒன்றும் கூறவில்லை.

### நாகாஸ் எனும் அம்மோனிய அரசன்

நாகாஸ் அம்மோனிய அரசன், காத்
மற்றும் ரூபன் கோத்திரங்களை காயப்படுத்
திக் கொண்டிருந்தான். அவன் ஒவ்வொரு
ஆண்களின் வலது கண்ணை பிடுங்கி
யாரும் அவர்களுக்கு உதவி செய்யாதபடி
தடுத்தான். யோர்தான் நதி ஓரத்தில் வாழ்ந்த
இஸ்ரவேல் ஆண்களுக்கும் அப்படியே செய்
தான். எனவே 7,000 இஸ்ரவேலர்கள்
அம்மோனியரிடமிருந்து தப்பி யாபேஸ்
கீலேயாத்திற்கு வந்தனர்.

11 ஒரு மாதத்திற்குப்பின் நாகாஸ் தன்
சேனையோடு யாபேஸ் கீலேயாத்தின்
நகரை முற்றுகையிட்டான். யாபேஸ் ஜனங்
கள் நாகாஸை நோக்கி, “நீங்கள் எங்களோடு
ஒரு ஒப்பந்தத்தைச் செய்துக்கொண்டால்,
உங்களுக்குச் சேவை செய்வோம்” என்றனர்.
2ஆனால் அம்மோனியனான நாகாஸ்,
“நான் ஒவ்வொரு மனிதனின் வலது
கண்ணையும் பிடுங்கிய பிறகுதான் ஒப்பந்தத்
தைச் செய்துகொள்வேன். அதுதான் எல்லா
இஸ்ரவேலரையும் அவமானப்படுத்தும்!”
என்றான்.
3யாபேசின் தலைவர்கள் நாகாசிடம்,
“எங்களுக்கு 7 நாட்கள் அவகாசம் கொடுங்
கள். அனைத்து இஸ்ரவேலருக்கும் தூது
அனுப்புகிறோம். யாரும் உதவிக்கு வர
வில்லை என்றால், உங்களிடம் வந்துச்
சரணடைந்து விடுகிறோம்” என்று கூறி
னார்கள்.

### சவுல் யாபேஸ் கீலேயாத்தைக் காப்பாற்று கிறான்

4சவுல் வசித்த கிபியாவுக்கு தூதுவர்கள்
வந்தார்கள். அவர்கள் செய்தியை ஜனங்களி
டம் சொன்னார்கள். ஜனங்கள் மிகவும்
சத்தமாக அழுதார்கள், 5அச்சமயம் சவுல்
தன் பசுக்களோடு வயல் வெளியில் இருந்
தான். அவன் உள்ளே வந்தபோது, அவர்
களின் கூக்குரலைக் கேட்டான். அவன்
அவர்களிடம், “ஏன் அழுகிறீர்கள்? உங்க
ளுக்கு என்ன நடந்தது?” என்று கேட்டான்.
அதற்கு அவர்கள் யாபேஸில் இருந்து
வந்த தூதுவர்கள் சொன்ன செய்தியைச்
சொன்னார்கள். 6சவுல் அவர்கள் சொன்
னதைக் கேட்டான். பின் தேவனுடைய
ஆவியானவர் அவன் மீது மிகுந்த வல்லமை
யோடு இறங்கினார். அவன் சீறி எழுந்தான்.
7அவன் இரண்டு பசுக்களைத் துண்டுத்
துண்டாக வெட்டி அத்துண்டுகளைத்
தூதுவர்களிடம் கொடுத்து அனுப்பினான்.
அவர்கள் அதனை இஸ்ரவேல் முழுவதும்
எடுத்துச் செல்லுமாறு கூறினான். இஸ்ர
வேல் ஜனங்களிடம்: “சவுலையும் சாமு
வேலையும் பின்பற்றி வாருங்கள். யாராவது
இதைக் கேட்டு கூடி வந்து உதவாவிட்டால்
அவர்களின் பசுவுக்கும் இப்படியே செய்யப்
படும்!” எனச் சொல்லி அனுப்பினான்.
கர்த்தரிடமிருந்து பெரும் பயம் ஜனங்கள்
மேல் வந்தது. அவர்கள் ஒன்று கூடினார்கள்.
8சவுல் ஆண்களை பேசேக்கில் கூட்டினான்.
அவர்களில் இஸ்ரவேல் ஜனங்களிலிருந்து
3,00,000 பேரும், யூதாவின் ஜனங்களிலிருந்து
30,000 பேரும் கூடி இருந்தனர்.
9சவுலும் அவனது படையும் யாபேசி
லிருந்து வந்த தூதர்களிடம், “நாளை
மதியத்தில் நீங்கள் காப்பாற்றப்படுவீர்கள்
என கீலேயாத்திலுள்ள யாபேசியர்களுக்குக்
கூறுங்கள்” என்றான்.
தூதுவர்கள் சவுலின் செய்தியை
யாபேசியர்களுக்குக் கூறினார்கள். அவர்கள
மிகவும் சந்தோஷப்பட்டனர். 10பின் அவர்கள்
அம்மோனியனான நாகாசிடம், “நாளை
நாங்கள் உங்களிடம் வருவோம், அப்போது
உங்கள் விருப்பம்போல் செய்யலாம்” என்
றனர்.
11மறுநாள் தனது வீரர்களைச் சவுல்
மூன்று குழுக்களாக பிரித்தான். சூரிய

உதயத்தின் போது, சவுலும் அவனது
வீரர்களும் அம்மோனிய கூடாரங்களுக்குள்
புகுந்து மதியத்திற்குள் அம்மோனியர்களைத்
தோற்கடித்தனர். இரண்டு பேராகிலும்
சேர்ந்து ஓடிப்போகாதபடி அவர்கள் பல
திசைகளிலும் சிதறிப் போனார்கள்.
12பின் ஜனங்கள் சாமுவேலிடம், “சவுலை
அரசன் ஆக்கவேண்டாம் எனக் கூறியவர்கள்
எங்கே? இழுத்து வாருங்கள், அவர்களைக்
கொல்வோம்!” என்றனர்.
13ஆனால் சவுலோ, “இல்லை இன்று
யாரையும் கொல்லக்கூடாது! கர்த்தர் இன்று
இஸ்ரவேலரைக் காப்பாற்றினார்!” என்றான்.
14பின்பு சாமுவேல் ஜனங்களிடம்,
“வாருங்கள், கில்காலுக்குப் போவோம்,
அங்கே சவுலை மீண்டும் அரசனாக்குவோம்”
என்றார்.
15அனைவரும் கில்காலுக்குப் போனார்
கள். அங்கே, கர்த்தருடைய முன்னிலையில்
ஜனங்கள் சவுலை அரசனாக்கினார்கள்.
கர்த்தருக்கு சமாதான பலிகளைக் கொடுத்த
னர். சவுலும் இஸ்ரவேலரும் அதனை
சிறப்பாகக் கொண்டாடினார்கள்.

### சாமுவேல் இஸ்ரவேலரிடம் அரசனைப் பற்றி பேசுகிறான்

12 சாமுவேல் இஸ்ரவேலரிடம், “நீங்கள்
என்னிடம் எதை எதிர்ப்பார்த்தீர்
களோ அதனைச் செய்துவிட்டேன், உங்க
ளுக்கு ஒரு அரசனை நியமித்திருக்கிறேன்.
2இப்போது உங்களை வழிநடத்த ஒரு அரசன்
இருக்கிறான். எனக்கு முதுமையும் நரையும்
வந்துவிட்டது. ஆனால் என் மகன்கள்
உங்களுடன் இருக்கிறார்கள், நான் சிறு
வயது முதலே உங்களது தலைவனாக
இருந்திருக்கிறேன். 3நான் ஏதாவது தவறு
செய்திருந்தால் அதைக் கர்த்தரிடமும்,
கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசனிட
மும் சொல்லவேண்டும். நான் ஏதாவது
உங்கள் பசுவையோ, கழுதையையோ திருடி
யிருக்கிறேனா? யாரையாவது புண்
படுத்தியோ, ஏமாற்றியோ இருக்கிறேனா?
நான் பணத்தையோ பாதரட்சையை லஞ்ச
மாக பெற்றிருக்கிறேனா? அப்படி ஏதாவது
செய்திருந்தால் நான் அதை சரி செய்துக்
கொள்வேன்” என்றான்.
4இஸ்ரவேலர்களோ, “இல்லை! நீங்கள்
எங்களுக்கு எப்போதும் தீமை செய்ய
வில்லை. எங்களை ஏமாற்றவோ, எங்கள்
பொருட்களை எந்தக் காலத்திலும் எடுத்துக்
கொள்ள வில்லை!” என்றனர்.
5சாமுவேல் அவர்களிடம், “கர்த்தரும்,
அரசரும் இன்று சாட்சிகளாக உள்ளனர்.
நீங்கள் சொன்னதை அவர்கள் கேட்
கிறார்கள். என்னிடம் தவறில்லை என்பதை
அவர்கள் அறிந்துகொண்டனர்” என்றான்.
“ஆமாம்! கர்த்தரே சாட்சி!” என்று ஜனங்கள்
சத்தமிட்டனர்.
6பின் சாமுவேல் ஜனங்களிடம், “இங்கே
நடந்ததை கர்த்தர் பார்த்திருக்கிறார். கர்த்தர்
தாமே மோசேயையும், ஆரோனையும் தேர்ந்
தெடுத்தவர். அவரே எகிப்திலிருந்து உங்கள்
முற்பிதாக்களை மீட்டுக் கொண்டவர். 7இப்
போது அங்கே நில்லுங்கள். உங்களுக்கும்,
உங்கள் முற்பிதாக்களுக்கும் கர்த்தர் செய்த
நன்மைகளைப்பற்றிச் சொல்வேன். 8யாக்
கோபு எகிப்துக்குப் போனார். பின்னர்
எகிப்தியர்கள் அவருடைய சந்ததிகளுக்கு
வாழ்க்கையை கடினமாக்கித் துன்புறுத்தி
னார்கள். கர்த்தரிடம் உதவிக்காக அழுதார்
கள். கர்த்தர் மோசேயையும் ஆரோனையும்
அனுப்பினார். அவர்கள் உங்கள் முற்பிதாக்
களை எகிப்திலிருந்துக் காப்பாற்றி இங்கே
வாழும் பொருட்டு அழைத்து வந்தனர்.
9“ஆனால் உங்கள் முற்பிதாக்கள் தமது
தேவனாகிய கர்த்தரை மறந்துவிட்டனர்.
எனவே கர்த்தர் அவர்களை சிசெராவிடம்
அடிமைகளாகுமாறு செய்தார். சிசெரா,
ஆத்சோர் என்னும் இடத்தில் இருந்த
படையின் சேனாதிபதி. பின்னர் கர்த்தர்
அவர்களை பெலிஸ்தரின் கையிலும்
மோவாப் அரசர்களிடம் அடிமையாக்கினார்.
உங்கள் முற்பிதாக்களுக்கு எதிராக அவர்கள்
எல்லோரும் சண்டையிட்டனர். 10ஆனால்,
உங்கள் முற்பிதாக்கள் கர்த்தரிடம் உதவி
கேட்டு அழுதார்கள். அவர்கள், ‘நாங்கள்
பாவம் செய்துவிட்டோம். கர்த்தரை விட்டு
பொய்த் தெய்வங்களான பாலையும், (பாகா
லையும்) அஸ்த்ரோத்தையும் சேவித்தோம்.
இப்போது எங்களைப் பகைவர்களிடம்
இருந்து காப்பாற்றுங்கள். நாங்கள் உங்க
ளுக்குச் சேவை செய்கிறோம்’ என்றனர்.

11“எனவே, கர்த்தர் எருபாகாலையும்,
(கிதியோன்) பேதானையும், யெப்தாவையும்,
சாமுவேலையும் அனுப்பினார். கர்த்தர்
உங்களைச் சுற்றியுள்ள பகைவர்களிட
மிருந்து காப்பாற்றினார். நீங்கள் பாது
காப்பாயுள்ளீர்கள். 12ஆனால், நாகாஸ் அரசன்
உங்களுக்கு எதிராகச் சண்டையிட வந்தான்.
நீங்கள், ‘இல்லை! எங்களை ஆள ஒரு
அரசன் வேண்டும்!’ என்றீர்கள்! தேவனாகிய
கர்த்தர் ஏற்கனவே உங்கள் அரசராக
இருந்தார்! எனினும் நீங்கள் கேட்டீர்கள்.
13இப்போது ஒரு அரசனைத் தேர்ந்
தெடுத்துள்ளீர்கள். கர்த்தர் அவரை உங்கள்
அரசனாக்கினார். 14கர்த்தருக்குப் பயந்து
அவரை மதிக்கவேண்டும். நீங்கள் அவருக்கு
சேவை செய்து அவரது கட்டளைகளுக்கு
கீழ்ப்படிய வேண்டும். அவருக்கு எதிராகப்
போராடக்கூடாது. நீங்களும் உங்கள்
அரசனும் உங்கள் தேவனாகிய கர்த்தரை
பின்பற்றவேண்டும். இவற்றைச் செய்தால்
தேவன் உங்களைக் காப்பார். 15ஆனால்,
நீங்கள் கர்த்தருக்குக் கீழ்ப்படியாவிட்டால்,
அவரது கட்டளைகளுக்கு எதிராகப்

போரிட்டால் பின் அவர் உங்களுக்கு
எதிராவார். கர்த்தர் உங்களையும் உங்கள்
அரசனையும் அழிப்பார்!
16“இப்பொழுது நீங்கள் அமைதலாயிருந்து
கர்த்தர் உங்கள் கண்களுக்கு முன் செய்யப்
போகும் பெரியக் காரியத்தைப் பாருங்கள்.
17இப்போது கோதுமை அறுவடைக்காலம்.
நான் கர்த்தரிடம் ஜெபிப்பேன். இடியையும்
மழையையும் கேட்பேன். நீங்கள் அரசன்
வேண்டுமென்று கேட்டது கர்த்தருக்கு
விரோதமான காரியம் என்பதை அறிந்து
கொள்வீர்கள்” என்றான்.
18எனவே, சாமுவேல் கர்த்தரிடம்
ஜெபித்தான். அன்றே கர்த்தர் இடியையும்
மழையையும் அனுப்பினார். ஜனங்கள்
கர்த்தருக்கும் சாமுவேலுக்கும் மிகவும்
பயந்தனர். 19அனைத்து ஜனங்களும் சாமு
வேலிடம், “உம்முடைய அடியார்களாகிய
எங்களுக்காக உங்கள் தேவனாகிய கர்த்த
ரிடம் ஜெபியுங்கள், நாங்கள் அழிந்துவிட
விட்டு விடாதேயும்! நாங்கள் பலமுறை
பாவம் செய்திருக்கிறோம். இப்போது அரச
னைக் கேட்டு மேலும் பாவம்ச் செய்து
விட்டோம்” என்றனர்.
20சாமுவேல் அவர்களிடம், “அஞ்சாதீர்கள்,
இது உண்மை! நீங்கள் எல்லா தீமைகளை
யும் செய்தீர்கள். ஆனால் கர்த்தரைப் பின்
பற்றுவதை நிறுத்தாதீர்கள். முழு மனதோடு
கர்த்தருக்குச் சேவை செய்யுங்கள். 21விக்கிர
கங்கள் வெறும் சிலைகளே அவைகள்
உதவாது. அவற்றைத் தொழுதுகொள்ள
வேண்டாம். விக்கிரகங்கள் உங்களுக்கு
உதவாது! காப்பாற்றாது! அவைகள் ஒன்று
மில்லை.
22“ஆனால், கர்த்தர் தம் ஜனங்களைக்
கைவிடமாட்டார். கர்த்தர் உங்களைத் தமது
சொந்த ஜனங்களாக ஆக்கிக்கொள்ள
விருப்பம் கொண்டார். எனவே, அவரது
பெரிய பெயரினிமித்தம் தம் ஜனங்களை
அவர் விட்டுவிட மாட்டார். 23என்னைப்
பொறுத்தவரை உங்களுக்காக நான் ஜெபிப்
பதை என்றும் நிறுத்தமாட்டேன். நிறுத்தி
னால், கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்த
வனாவேன். நல்வாழ்க்கைக்கான சரியான
வழியை போதித்துக்கொண்டே இருப்பேன்.
24ஆனால், நீங்கள் கர்த்தரை கனம் பண்ண
வேண்டும். முழு இருதயத்துடன் அவருக்குச்
சேவை செய்யவேண்டும். அவர் செய்த
அதிசயமான காரியங்களை மறவாதீர்கள்!
25நீங்கள் கடினப்பட்டு தீமை செய்தால்,
தேவன் உங்களையும் உங்கள் அரசனையும்
அழுக்கை துடப்பத்தால் நீக்குவதுப்போல்
எறிந்து விடுவார்” என்றான்.

## சவுல் தன் முதல் தவறைச் செய்கிறான்

13 சவுல் அரசனாகி ஓராண்டு ஆயிற்று.
பின்பு, அவன் இஸ்ரவேலை இரண்டு
ஆண்டுகள் ஆண்ட பிறகு, 2அவன் 3,000
பேரை இஸ்ரவேலில் தேர்ந்தெடுத்தான்.
மலைநாடான பெத்தேலில் உள்ள மிக்மாசில்
அவனோடு 2,000 பேர் இருந்தனர். 1,000
பேர் பென்யமீனில் உள்ள கிபியாவில்
யோனத்தானோடு இருந்தனர். சவுல் மீதி
உள்ளவர்களை வீட்டிற்கு அனுப்பினான்.
3யோனத்தான் பெலிஸ்தர்களை
கேபாவில் தோற்கடித்தான். இதனை
பெலிஸ்தர் கேள்விப்பட்டு, “இஸ்ரவேலர்
புரட்சி செய்கின்றனர்” என்றார்கள்.
சவுல், “நடந்த நிகழ்ச்சியை எபிரெயர்
கேட்கட்டும்” என்று சொன்னான். எனவே
இஸ்ரவேல் நாடுகளில் எக்காளம் ஊதும்படி
சொன்னான். 4இஸ்ரவேலர் அனைவரும்
செய்தியைக் கேட்டனர். அவர்கள், “சவுல்
பெலிஸ்தரின் தலைவனைக் கொன்றான்.
இப்போது உண்மையில் பெலிஸ்தர் இஸ்ர
வேலரை வெறுக்கிறார்கள்!” என்றனர்.
கில்காலில் கூடும்படி சவுல் இஸ்ரவேலரை
அழைத்தான். 5பெலிஸ்தர்களும் இஸ்ர
வேலரை எதிர்த்துப் போரிட ஒன்று கூடி
னார்கள். அவர்களிடம் 30,000 இரதங்களும்
6,000 குதிரைவீரரோடும் இருந்தனர். கடற்
கரை மணலைப் போல் மிக்மாசிலே (பெத்தா
வேனுக்கு கிழக்கே மிக்மாஸ் இருந்தது.)
கூடினார்கள்.
6இஸ்ரவேலர் தாம் தொல்லையில் சிக்
குண்டிருப்பதாக அறிந்தனர். வலைக்குள்
சிக்கியதாக அறிந்துக் குகைகளிலும் மலைப்
பிளவுகளிலும் ஒளிந்துக்கொள்ள ஓடினார்
கள். கிணறுகள், பாறைகள், நிலத்துவாரங்க
ளில் ஒளிந்தனர். 7சிலர் யோர்தான் நதியைக்
கடந்து காத், கீலேயாத் போன்ற நிலங்
களுக்கு ஓடினார்கள். சவுல் கில்காலிலேயே
இருந்தான். படையில் உள்ளவர்கள் நடுங்கி
னார்கள்.
8சாமுவேல் சவுலை கில்காலில் சந்திப்
பதாகக் கூறியிருந்தான். சவுல் 7 நாட்கள்
காத்திருந்தான். ஆனால், சாமுவேல் இன்னும்
கில்காலுக்கு வரவில்லை. வீரர்கள் சவுலை
விட்டு விலக ஆரம்பித்தனர். 9ஆகையால்
சவுல், “தகன பலிகளையும் சமாதான
பலிகளையும் கொண்டு வாருங்கள்” என்று
கூறி தகன பலிகளைச் செலுத்தினான்.
10அதைச் செய்து முடிக்கும் தருவாயில்
சாமுவேல் வந்தான். சவுல் அவனைச்
சந்திக்க முன் சென்றான்.
11சாமுவேல், “என்ன செய்து கொண்
டிருந்தாய்?” என்று கேட்டான். அதற்கு
சவுல் “வீரர்கள் என்னை விட்டு விலகு
வதைப் பார்த்தேன். நீங்களும் சரியான
நேரத்தில் வரவில்லை. பெலிஸ்தர்கள் மிக்மா
சில் கூடிக்கொண்டிருந்தனர். 12நான், ‘அவர்
கள் வந்து கில்காலில் என்னைத் தாக்கு
வார்கள்’ என எண்ணினேன். நான்
இதுவரை கர்த்தரிடம் உதவி கேட்கவில்லை!
எனவே தகனபலி செலுத்த என்னை நானே
கட்டாயப்படுத்திக் கொண்டேன்” என்றான்.

13சாமுவேலோ, “நீ முட்டாள்தனமாக
இதைச் செய்தாய்! நீ உனது தேவனாகிய
கர்த்தருக்குக் கீழ்ப்படியவில்லை. நீ தேவ
கட்டளைக்குக் கீழ்படிந்திருந்தால், அவர்
உன் குடும்பத்தை என்றென்றைக்கும்
இஸ்ரவேலை ஆளச் செய்திருப்பார். 14இப்
போது உனது அரசு தொடராது. கர்த்தர்
தனக்குக் கீழ்ப்படிகிறவனையே தேடிக்
கொண்டிருக்கிறார்! எனவே கர்த்தர் அந்த
மனிதனைத் தெரிந்துகொண்டார். கர்த்தர்
தம் ஜனங்களுக்காக அவனை தேர்ந்
தெடுப்பார். கர்த்தருடைய கட்டளைகளுக்கு
நீ கீழ்ப்படியவில்லை. எனவே புதிய தலை
வரை தேர்ந்தெடுத்தார்” என்றான். 15பின்
சாமுவேல் எழுந்து கில்காலை விட்டு
விலகினான்.

### மிக்மாசில் போர்

சவுலும், மீதியாக இருந்த அவனது
சேனையும் கில்காலை விட்டு பென்யமீனில்
உள்ள கிபியாவிற்குச் சென்றனர், தன்னிடம்
உள்ளவர்களை எண்ணினான். அவர்கள் 600
பேர். 16சவுல், அவனது மகன் யோனத்
தான், வீரர்கள் அனைவரும் கிபியாவிற்குச்
சென்றனர்.
பெலிஸ்தர்கள் மிக்மாசில் முகாமிட்டிருந்த
னர். 17அவர்கள் அப்பகுதியில் வசித்து
வந்த இஸ்ரவேலரைத் தண்டிக்கத் தீர்மானித்த
னர். எனவே, அவர்களது சிறந்த வீரர்கள்
இஸ்ரவேலர்களைத்தாக்கினார்கள். அவர்கள்
மூன்றாகப் பிரிந்து ஒரு குழு வடக்கே
சூகாலின் அருகிலுள்ள ஒப்ரா வழியிலும்,
18இரண்டாவது குழு தென் கிழக்கே
பெத்தொரோன் சாலையிலும் சென்றது.
மூன்றாவது படை வனாந்தரத்தை நோக்கிப்
போகும் செபோயீமின் பள்ளத்தாக்குக்கு
எதிரான வழியில் சென்றது.
19இஸ்ரவேலர்கள் யாருக்கும் இரும்பு
ஆயுதங்களைச் செய்யத் தெரியாது. இஸ்ர
வேலில் இரும்புக் கொல்லர்கள் யாரும்
இல்லை. பெலிஸ்தர்கள்அவர்களுக்கு ஆயுதம்
செய்யக் கற்றுக் கொடுக்கவில்லை. அவர்கள்
கத்தி, வாள், ஈட்டிகளை செய்துவிடக்
கூடாதே என்று அஞ்சினார்கள். 20பெலிஸ்தர்
மட்டுமே தங்கள் ஆயுதங்களைக் கூர்படுத்த
அறிந்திருந்தனர். இஸ்ரவேலர் தங்கள்
கடப்பாரை, மண்வெட்டி, முக்கூருள்ள
வேலாயுதங்கள், கோடரி, தாற்றுக்கோல்
போன்றவற்றை கூர்மையாக்க பெலிஸ்தரிடம்
சென்றனர். 21பெலிஸ்தர்களின் கொல்லர்கள்
கடப்பாரை, மண்வெட்டியை கூர்மைப்
படுத்த 1/3, 1/6 சேக்கல் வெள்ளியை வசூ
லித்தனர். 22எனவே, போரிடும் நாளில்
சவுலோடு சென்ற இஸ்ரவேலர்களின்
கையில் வாளோ அல்லது கேடயமோ
எதுவும் இல்லை. சவுலிடமும் அவன்
மகன் யோனத்தானிடமும் மட்டுமே ஆயுதங்
கள் இருந்தன.
23ஒரு பெலிஸ்தர் சேனை மிக்மாசியிலி
ருந்து போகிற மலைப்பாதை மட்டும்
காத்துக் கொண்டிருந்தது.

### யோனத்தான் பெலிஸ்தர்களைத் தாக்குகிறான்

14 அன்று தன் ஆயுதங்களைத் தூக்கிவந்த
இளைஞனோடு சவுலின் மகனாகிய
யோனத்தான் பேசினான், “பள்ளத்தாக்கின்
இன்னொரு பக்கத்தில் உள்ள பெலிஸ்தர்
களின் முகாமிற்கு போவோம்” என்றான்.
தந்தையிடம் சொல்லாமல் போனான்.
2சவுல் மலையோரத்தில் மிக்ரோனில் ஒரு
மாதுளை மரத்தின் கீழ் உட்கார்ந்திருந்தான்.
அதனருகில் போரடிக்கிற களம் இருந்தது.
அவனோடு 600 பேர் இருந்தனர். 3அந்நாட்க
ளில் அகியா என்ற ஒருவன் இருந்தான்.
இப்போது அகியா ஆசாரியனாயிருந்தான்.
அகியா ஏபோத்தைத் தரித்து ஆசாரிய
ஊழியம் செய்துவந்தான். அகியா என்பவன்
இக்கபோத்தின் சகோதரனான அகிதூபின்
மகன். இக்கபோத் பினெகாசின் மகன்.
பினெகாசு ஏலியின் மகன். சீலோவில்
முன்பு ஏலி ஆசாரியனாக இருந்தான்.
யோனத்தான் தனியாக விட்டுப் போயி
ருந்ததை யாரும் அறியவில்லை.
4அவன் சென்ற வழியில் இரு பக்கமும்
போசே, சேனே எனும் இரு பெரும்
பாறைகள் இருந்தன. இந்தக் கணவாய்
வழியாகச் செல்ல யோனத்தான் திட்ட
மிட்டான். 5இந்தப் பாறைகளில் ஒன்று
மிக்மாசை நோக்கியும் இன்னொன்று கிபி
யாவை நோக்கியும் இருந்தன.
6யோனத்தான் தன்னுடைய ஆயுதங்
களைச் சுமந்து வந்த இளம் உதவி
யாளனிடம், “வா, நாம் அந்நியரின்
முகாமுக்குப் போவோம். அவர்களைத் தோற்
கடிக்க ஒருவேளை கர்த்தர் நமக்கு உதவ
லாம்! கர்த்தரை யாராலும் தடுக்கமுடியாது.
நமது எண்ணிக்கை அதிகமோ அல்லது
குறைவோ அது காரியமல்ல” என்றான்.
7அதற்கு ஆயுதங்களை சுமந்து வந்த
இளம் உதவியாளன், “உங்களுக்குச் சரி
யென்று தோன்றுவதைச் செய்யுங்கள். நான்
எப்போதும் உங்களோடு இருப்பேன்”
என்றான்.
8அப்பொழுது யோனத்தான், “சரி
போவோம், பள்ளத்தாக்கைக் கடந்து பெலிஸ்
தர்களின் எல்லைக்குள் செல்வோம். நம்மைப்
அவர்கள் பார்க்கும்படி செய்வோம். 9அவர்
கள், ‘நாங்கள் வரும்வரை அங்கேயே
நில்லுங்கள்’ என்றால் நாம் அங்கேயே
நிற்போம். மேலே செல்ல மாட்டோம்.
10ஆனால் அவர்கள், ‘இங்கே வாருங்கள்’
என்றால் போவோம். ஏனென்றால் கர்த்தர்
நாம் அவர்களைத் தோற்கடிக்க அனு

மதிக்கிறார் என்பதற்கு இது தேவனுடைய
அடையாளமாகும்” என்றான்.
11பெலிஸ்தர் பார்வையில் படுமாறு
யோனத்தானும், இளம் உதவியாளனும் நடந்
தனர். அவர்களோ, “பார்! இஸ்ரவேலர்கள்
துவாரங்களில் ஒளிந்திருந்து வெளியே
வருகிறார்கள்” என்றனர். 12கோட்டைக்கு
மேலிருந்த பெலிஸ்தர், “இங்கே வாருங்கள்.
உங்களுக்குப் பாடம் கற்பிக்கிறோம்!” என
அவர்களை நோக்கிக் கூவினர்.
யோனத்தான் தன் உதவியாளிடம்,
“மலைக்கு என்னைப் பின் தொடர்ந்து
வா. கர்த்தர் பெலிஸ்தர்களை தோற்கடிக்க
அடையாளம் காட்டினார்!” என்றான்.
13-14யோனத்தான் தன் கைகளாலும்,
கால்களாலும் பற்றியபடி மலைமீது ஏறி
னான். உதவியாளன் பின்னால் ஏறினான்.
அவர்கள் இருவரும் பெலிஸ்தர்களைத்
தாக்கி, முதலில் 20 பேரை கொன்றனர்.
முன்னால் வருகின்றவர்களை யோனத்
தானும், பின்னால் வருகிறவரை உதவியாள
னும் கொன்றனர்.
15வயலிலும், கோட்டையிலும், முகாமி
லும் உள்ள வீரர்கள் இவர்களைக் கண்டு
பயந்தனர்! பூமி அதிர்ந்தது. இதைக் கண்டு
மிகுந்த தைரியமுள்ள வீரர்களும் மேன்
மேலும் பயந்தனர்.
16பென்யமீன் நாட்டில் கிபியாவிலே
சவுலின் காவல்காரர்கள் பெலிஸ்தர் பல்
வேறு திசைகளில் ஓடிக்கொண்டிருப்பதைக்
கண்டனர். 17சவுல், “நம்மவர்களை எண்ணிக்
கணக்கிடுங்கள். முகாமிற்கு வெளியே யார்
போனது என்று தெரியவேண்டும்” என்
றான்.
அவர்கள் ஆட்களின் தொகையைக்
கணக்கிட்டனர், யோனத்தானும் அவனது
உதவியாளனும் காணவில்லை.
18சவுல் அகீயாவிடம், “கர்த்தருடைய
பரிசுத்தப் பெட்டியை கொண்டுவா!” என்
றான். (அப்போது கர்த்தருடைய பரிசுத்தப்
பெட்டி அவர்களோடுதான் இருந்தது.) 19சவுல்
ஆசாரியனாகிய அகீயாவிடம் பேசிக்
கொண்டே தேவனுடைய ஆலோசனைக்குக்
காத்திருந்தான். பெலிஸ்தர்களின் முகாமில்
கூச்சலும் குழப்பமும் மிகுந்தன. இதனால்
சவுல் பொறுமையை இழந்து, ஆசாரிய
னாகிய அகீயாவிடம், “இது போதும்!
உன் கைகளைத் தளர்த்தி ஜெபத்தை
நிறுத்து!” என்றான்.
20சவுல் தன் படையைச் சேர்த்துக்
கொண்டு சண்டையிடச் சென்றான். பெலிஸ்
தர்கள் குழப்பமுற்று தங்களுக்குள் வாளால்
மோதிக்கொண்டனர்! 21ஏற்கனவே சில
எபிரெயர் பெலிஸ்தியருக்கு அடிமை
வேலை செய்துகொண்டிருந்தனர்! அவர்
களும் இப்போது இஸ்ரவேல் மற்றும் சவுல்
யோனத்தானோடு சேர்ந்தனர். 22எப்பிராயீம்
மலைப் பகுதியில் ஒளிந்திருந்த இஸ்ரவேலர்
பெலிஸ்தரின் தோல்வியைக் கேள்விப்பட்டு
அவர்களும் சேர்ந்து துரத்தினார்கள்.
23எனவே, கர்த்தர் அன்று இஸ்ரவேலரை
காப்பாற்றினார். அச்சண்டை பெத்தா
வேனைக் கடந்தது. சவுலிடம் இப்போது
10,000 வீரர்களும் முழுபடையும் இருந்தனர்.
மலைநாட்டில் உள்ள அனைத்து நகரங்க
ளுக்கும் இந்தப் போர் பரவியது.

### சவுல் இன்னொரு தவறு செய்கிறான்

24அன்று சவுல் ஒரு பெரிய தவறு
செய்தான். இஸ்ரவேலர் களைப்பாகவும் பசி
யோடும் இருந்தனர். அவர்களிடம்,
“மாலைக்கு முன் யாராவது உண்டாலோ,
பகைவரை வெல்லுமுன் யாராவது உண்
டாலோ தண்டிக்கப்படுவார்கள்!” என்று
ஆணையிட்டிருந்தான். எனவே யாரும்
அன்று உண்ணாமல் இருந்தனர்.
25-26சிலர் போர் செய்த வண்ணம் காட்டுப்
பகுதிக்குப் போனபோது தேன் கூடுகளைக்
கண்டும் ஆணைக்குப் பயந்து உண்ண
வில்லை. 27ஆனால் யோனத்தானுக்கு
அவற்றைப்பற்றி எந்த விஷயமும் தெரியாது.
உண்ணாமலிருக்க ஜனங்கள் நிர்ப்பந்திக்கப்
பட்டதைப்பற்றி அவன் எதுவும் அறிந்தி
ருக்கவில்லை. யோனத்தானின் கையில் ஒரு
கோல் இருந்தது. கோலின் ஒரு முனையைத்
தேன் கூட்டில் நுழைத்து வெளியே எடுத்து,
அத்தேனைப் பருகினான். பருகி முடிந்ததும்
மிகவும் தெம்பாக இருப்பதாக உணர்ந்தான்.
28ஒரு வீரன், “உமது தந்தை ஒரு சிறப்
பான ஆணைச் செய்யும்படி எல்லா
வீரர்களையும் நிர்ப்பந்தித்திருக்கிறார். யாரே
னும் ஒருவர் இன்றையதினம் உண்டால்
தண்டிக்கப்படுவதாகக் கூறியுள்ளார்! எவரும்
உண்ணவில்லை. அதனால்தான் எல்லாரும்
சோர்வாக உள்ளனர்” என்றான்.
29யோனத்தானோ, “என் தந்தை ஏராள
மான துன்பங்களை நாட்டுக்குத் தந்துள்ளார்!
கொஞ்சம் தேன் உண்டதும் எனக்கு எவ்
வளவு உற்சாகமாக இருக்கிறது என்பதை
நீயே பார்! 30பகைவரிடமிருந்து எடுத்த
உணவை உண்டிருந்தால் நாம் மேலும்
உற்சாகமாக இருந்திருக்க முடியும். நாம்
இன்னும் அதிக பெலிஸ்தர்களைக் கொன்றி
ருக்கலாம்!” என்றான்.
31அன்று இஸ்ரவேலர்கள் பெலிஸ்தர்
களைத் தோற்கடித்து, அவர்களை மிக்மாஸ்
முதல் ஆயலோன் வரை துரத்தினபடியால்
களைப்பாகவும், பசியாகவும் இருந்தனர்.
32அவர்கள் ஆடுகளையும், கன்றுகுட்டிகளை
யும் பெலிஸ்தர்களிடமிருந்து கைப்பற்றி
கொன்று தின்றனர். அம்மிருகங்களின்
இரத்தம் இன்னும் உறைந்திருந்தது!
33ஒருவன் சவுலிடம், “பாருங்கள்! ஜனங்
கள் கர்த்தருக்கு எதிராகப் பாவம்
செய்துவிட்டனர். அவர்கள் இறைச்சியை

அதில் இரத்தம் இருக்கும்போது தின்று
கொண்டிருக்கின்றனர்!” என்றான்.
சவுலோ, “நீங்கள் பாவம் செய்திருக்கிறீர்
கள்! இப்போது இங்கே பெரிய கல்லை
உருட்டிக் கொண்டு வாருங்கள்” என்றான்.
34மேலும், “ஜனங்களிடம் போங்கள், இரத்தத்
தோடு இருப்பதைச் சாப்பிடுவதால் கர்த்த
ருக்கு எதிராகப் பாவம் செய்து விட்டீர்கள்.
தங்கள் மாட்டையும் ஆட்டையும் என்
முன் கொண்டுவர வேண்டும் எனச்
சொல்லுங்கள். இங்குதான் அவர்கள் ஆடு
களையும், மாடுகளையும் கொல்ல வேண்டும்.
கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்ய
வேண்டாம். இரத்தம் உறைந்திருக்கிற
இறைச்சியை உண்ண வேண்டாம்” என்
றான்.
அன்று இரவு ஒவ்வொருவனும் தங்கள்
மிருகங்களைக் கொண்டுவந்து அங்கே
கொன்றனர். 35பின் சவுல் அங்கே கர்த்தருக்
காக பலிபீடம் கட்டினான். சவுல் தானாகவே
கர்த்தருக்காக அப்பலிபீடத்தைக் கட்டத்
தொடங்கினான்!
36சவுல், “இன்று இரவு பெலிஸ்தர்களுக்கும்
பின்னால் போய் அவர்களைக் கொன்று
அவர்களுடையதை எடுத்து வருவோம்!”
என்று சொன்னான்.
படையினர், “உங்களுக்குச் சரி என்று
படுவதைச் செய்யுங்கள்” என்று சொன்
னார்கள்.
ஆனால் ஆசாரியனோ, “தேவனைக் கேட்
போம்” என்றான்.
37எனவே சவுல் தேவனிடம், “பெலிஸ்தர்
களைத் துரத்திப் போகலாமா? அவர்களைத்
தோற்கடிக்கவிடுவீரா?” என்று கேட்டான்.
ஆனால் தேவன் அன்று சவுலுக்கு பதில்
சொல்லவில்லை.
38எனவே, “எல்லாத் தலைவர்களையும்
கூப்பிடுங்கள்! இன்று பாவம் செய்தது
யாரெனப் பார்ப்போம். 39நான் இஸ்ரவேலை
காக்கும் கர்த்தருடயை பேரில் சத்தியம்
செய்திருக்கிறேன், என் மகனே பாவம்
செய்தாலும் சாகடிக்கப்படுவான்” என்றான்.
யாரும் பதில் சொல்லவில்லை.
40பின்பு அவன், “நீங்கள் அந்தப்பக்கம்
நில்லுங்கள். நானும் என் மகனும்
இந்தப்பக்கம் நிற்போம்” என்றான்.
வீரர்களும், “உங்கள் விருப்பம் ஐயா!”
என்றனர்.
41அப்பொழுது சவுல், “இஸ்ரவேலரின்
தேவனாகிய கர்த்தாவே, உமது தொண்ட
னுக்கு இன்று ஏன் பதில் சொல்லவில்லை?
நானோ அல்லது என் மகனோ பாவம்
செய்திருந்தால், ஊரீம்மைத் தாரும். உம்
முடைய இஸ்ரவேல் ஜனங்கள் பாவம்
செய்திருந்தால் தும்மீம்மைத் தாரும்” என்று
ஜெபித்தான்.
சவுலும் யோனத்தானும் தேர்ந்தெடுக்கப்
பட்டனர். ஜனங்கள் தப்பினார்கள். 42சவுல்
“மீண்டும் சீட்டைப்போட்டு, பாவி நானா
என் மகனா” என்று கேட்டான். யோனத்
தான் மேல் சீட்டு விழுந்தது.
43சவுல் மகனிடம், “சொல் என்ன பாவம்
செய்தாய்?” என்று கேட்டான்.
அதற்கு யோனத்தான், “நான் என்
கோலின் நுனியில் இருந்த கொஞ்சம் தேனை
சுவைத்தேன். அதற்காக நான் மரிக்க
வேண்டுமா?” என்று கேட்டான்.
44ஆனால் சவுல், “என் சத்தியத்தை
நான் காப்பாற்றாவிட்டால் தேவன் என்
னைத் தண்டிப்பார்! நீ மரிக்கத்தான்
வேண்டும்” என்றான்.
45ஆனால் வீரர்களோ, “இன்று யோனத்
தான் இஸ்ரவேலருக்குப் பெரிய வெற்றியைத்
தந்தான். அவன் மரிக்கக்கூடாது! ஜீவனுள்ள
தேவனுடைய நாமத்தில் நாங்களும் சத்தியம்
செய்கிறோம். யோனத்தானின் தலையி
லிருந்து யாரும் ஒரு மயிரையேனும் அகற்ற
முடியாது! தேவன் இன்று அவனுக்குப்
பெலிஸ்தர்களை வெல்ல உதவினார்!”
என்றனர். எனவே யோனத்தானை ஜனங்கள்
காப்பாற்றினார்கள். அவன் கொல்லப்பட
வில்லை.
46சவுல் பெலிஸ்தர்களைத் துரத்தாததால்
அவர்கள் தங்கள் சொந்த இடங்களுக்குப்
போனார்கள்.

## சவுல் இஸ்ரவேலரின் பகைவரோடு போரிடுகிறான்

47சவுல் இஸ்ரவேலர்களை முழுமையாகக்
கட்டுப்படுத்தி அவர்களின் அரசனானான்.
மோவாப், அம்மோனியர், ஏதோம் எனும்
சோபா அரசன், பெலிஸ்தர்களை சவுல்
வென்றான். சவுல் எங்கெல்லாம் சென்
றானோ அங்கெல்லாம் இஸ்ரவேலரின்
பகைவர்களையெல்லாம் வென்றான். 48சவுல்
மிகத்தைரியமானவன். இஸ்ரவேலை கைப்
பற்ற முயன்ற அனைத்து பகைவரையும்
வென்றான். மேலும் அமலேக்கியரையும்
தோற்கடித்தான்!
49யோனத்தான், இஸ்வி, மல்கிசூவா ஆகி
யோர் சவுலின் மகன்கள். மூத்தமகள் மேராப்,
இளையவள் மீகாள். 50சவுலின் மனைவி
பெயர் அகினோவாம். அவள் அகிமாசின்
மகள்.
அவனது தளபதியின் பெயர் அப்னேர்,
இவன் சவுலின் சித்தப்பா நேரின் மகன்.
51கீஸ் சவுலின் தந்தை. அப்னேரின் தந்தை
யான நேர் ஆபியேலின் மகன்.
52சவுல் தன் ஆயுள் முழுவதும் பெலிஸ்த
ரோடு போரிட்டான். தைரியமும் வீரமும்
உள்ள யாரைப் பார்த்தாலும் அவனை
அழைத்து வீரர்களின் சேனையில் சேர்த்து
விடுவான். அவர்கள் அரசனுக்கு அருகாமை
யில் இருந்து அரசனை காப்பாற்றுவர்.

### சவுல் அமலேக்கியரை அழித்துப் போடுகிறான்

15 ஒருநாள் சாமுவேல், சவுலிடம்,
"உன்னை அபிஷேகித்து அவருடைய
ஜனங்கள் இஸ்ரவேலருக்கு அரசனாக்கும்படி
கர்த்தர் என்னை அனுப்பினார். இப்போது
கர்த்தருடைய செய்தியைக் கேள். 2சர்வ
வல்லமையுள்ள கர்த்தர், 'இஸ்ரவேலர்கள்
எகிப்தை விட்டு வரும்போது கானானுக்குப்
போகாமல் அமலேக்கியர்கள் தடுத்தனர்.
அவர்கள் செய்தவற்றை நான் பார்த்தேன்.
3இப்போது அவர்களோடு போரிடு, அவர்
களையும் அவர்கள் உடைமையையும் முழு
வதுமாக அழி, எதையும் உயிரோடு
விடாதே; ஆண்கள், பெண்கள், சிறுவர்கள்,
கைக்குழந்தைகள், பசுக்கள், ஆடுகள்,
ஒட்டகங்கள், கழுதைகள் எதையும் விடாதே'
என்கிறார்" என்றான்.
4சவுல் தன் படையை தெலாயிமில்
கூட்டினான். 2,00,000 காலாட்படையும் யூதா
விலுள்ள 10,000 சேனையாட்களும் இருந்த
னர். 5பிறகு சவுல் அமலேக்கு நகருக்குப்
போய் பள்ளத்தாக்கில் காத்திருந்தான்.
6அங்கு கேனியரிடம், "அமலேக்கியரை
விட்டுப்போங்கள். நான் உங்களை அழிக்க
மாட்டேன். இஸ்ரவேலர் எகிப்திலிருந்து
வெளியேறும்போது நீங்கள் கருணை
காட்டினீர்கள்" என்றான். எனவே கேனியர்
அமலேக்கியரை விட்டு வெளியேறினார்கள்.
7சவுல் அமலேக்கியரைத் தோற்கடித்தான்.
அவர்களை, ஆவிலாவில் இருந்து சூர்வரை
துரத்தியடித்தான். 8ஆகாக் அமலேக்கியரின்
அரசன். சவுல், அவனை உயிருடன் பிடித்
தான். மற்றவர்களைக் கொன்றான். 9எல்லா
வற்றையும் அழிக்க சவுலும் வீரர்களும்
தயங்கினார்கள். ஆகாக் என்பவனை
உயிருடன் விட்டனர். மேலும் கொழுத்த
பசுக்களையும் நல்ல ஆடுகளையும் சிறந்த
பொருட்களையும் கூட அழிக்காமல் விட்டு
விட்டனர். பயனுள்ள எல்லாவற்றையும்
வைத்துக் கொண்டனர். அவற்றை அழிக்க
அவர்கள் விரும்பவில்லை. பயனற்ற
வற்றையே அவர்கள் அழித்தார்கள்.

### சவுலின் பாவத்தைப்பற்றி சாமுவேல் சொன்னது

10பிறகு சாமுவேல், கர்த்தரிடமிருந்து ஒரு
செய்தியைப் பெற்றான். 11அதற்கு கர்த்தர்,
"சவுல் என்னைப் பின்பற்றுவதை விட்டு
விட்டான், அவனை அரசனாக்கியதற்காக
வருந்துகிறேன். நான் சொல்வதை அவன்
செய்வதில்லை" என்றார். சாமுவேலும்
கோபங்கொண்டு இரவு முழுவதும் அழுது
கர்த்தரை நினைத்து ஜெபம் செய்தான்.
12சாமுவேல் அடுத்தநாள் அதிகாலையில்
எழுந்து சவுலைச் சந்திக்கச் சென்றான்.
ஆனால் ஜனங்கள் அவனிடம், "கர்மேல்
என்ற பேருள்ள யூதேயாவின் நகருக்கு
சவுல் போயிருக்கிறான். அங்கே தன்னை
பெருமைப்படுத்தும் நினைவு கல்லை
எழுப்புகிறான். அவன் பல இடங்களை
சுற்றிவிட்டு கில்காலுக்கு வருவான்"
என்றனர்.

எனவே சாமுவேல் அவனிருக்கும் இடத்
துக்கே சென்று சவுலைத் தேடிப்பிடித்தான்.
சவுல் அப்போதுதான் கர்த்தருக்கு அமலேக்கி
யரிடம் இருந்து எடுத்த முதல் பாகங்களை
தகனபலி செலுத்திக்கொண்டிருந்தான்.
13சவுல் சாமுவேலை வரவேற்றான், "கர்த்தர்
உம்மை ஆசீர்வதிக்கிறார்! கர்த்தருடைய
கட்டளைகளை நிறைவேற்றினேன்" என்
றான்.
14ஆனால் சாமுவேலோ, "அப்படியானால்
நான் கேட்ட சத்தம் எத்தகையது? ஆடுகளின்
சத்தத்தையும், மாடுகளின் சத்தத்தையும் நான்
எதற்காகக் கேட்டேன்?" என்று கேட்டான்.
15அதற்கு சவுல், "இவை அமலேக்கியரிட
மிருந்து வீரர்கள் எடுத்தவை. உமது தேவ
னாகிய கர்த்தருக்கு பலியிடும் பொருட்டு
சிறந்த ஆடுகளையும், மாடுகளையும் பிடித்து
வந்தனர். மற்றபடி நாங்கள் அனைத்தையும்
அழித்துவிட்டோம்" என்றான்.
16சாமுவேலோ, "நிறுத்து! நேற்று இரவு
கர்த்தர் சொன்னதை நான் சொல்லட்டுமா"
எனச் சவுலிடம் கேட்டான்.

சவுல், "நல்லது சொல்லுங்கள்" என்றான்.
17சாமுவேல், "முக்கியமானவன் இல்லை
என்று கடந்த காலத்தில் நீ உன்னை
நினைத்திருந்தாய். பின்பு இஸ்ரவேல் ஜனங்
களின் தலைவன் ஆனாய். கர்த்தர் உன்னை
அரசனாக்கினார். 18கர்த்தர் உன்னை
சிறப்பான கடமை நிறைவேற்ற அனுப்பி
னார். கர்த்தர் சொன்னார், 'போய் அமலேக்
கியரை முழுமையாக அழி! அவர்கள்
தீயவர்கள். எல்லோரும் கொல்லப்படும்வரை
போரிடு!' என்றார். 19ஆனால் நீ கர்த்தருக்கு
கீழ்ப்படியவில்லை! ஏன்? தீயவை என்று
கர்த்தர் எதை ஒதுக்கினாரோ அவற்றைச்
சேகரித்துக்கொள்ள நீ விரும்பிவிட்டாய்!"
என்றான்.
20சவுலோ, "கர்த்தருக்கு நான் கீழ்படிந்
தேன். அவர் சொன்ன இடத்திற்குப்
போனேன். அமலேக்கியரை எல்லாம் அழித்
தேன்! அவர்களின் அரசன் ஆகாக்கை
மட்டுமே கொண்டு வந்தேன். 21வீரர்கள்
நல்ல ஆட்டையும், மாட்டையும் கொண்டு
வந்தனர். அவை கில்காலில் உள்ள உமது
தேவனாகிய கர்த்தருக்கு பலியிட காத்தி
ருக்கின்றன!" என்றான்.
22ஆனால் சாமுவேல், "கர்த்தருக்குப் பிடித்
தமானது எது? தகனபலியா? அன்பளிப்பா?
அல்லது கர்த்தருடைய கட்டளைக்குக்
கீழ்ப்படிவதா? கர்த்தருக்குக் கீழ்ப்படிவது
தான் அனைத்திலும் சிறந்தது. 23கீழ்ப்படிய
மறுப்பது தவறு. அது பில்லிசூனியத்திற்கு
இணையான பெரும் பாவம். நீ கீழ்ப்படிய

மறுப்பது பிடிவாதமாக பிற விக்கிரகங்களை
தொழுதுக்கொள்வதற்கு சமம் ஆகும். நீ
கர்த்தருக்குக் கீழ்ப்படிய மறுத்தாய். அதனால்
கர்த்தர் உன்னை அரசனாக ஏற்றுக்கொள்ள
மறுக்கிறார்” என்றான்.
24அதற்கு சவுல், “நான் பாவம்
செய்துவிட்டேன். நான் கர்த்தருடைய
கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லை, நீர்
சொன்னதையும் செய்யவில்லை. ஜனங்
களுக்கு பயந்தேன், அவர்கள் சொன்னபடி
செய்தேன். 25இப்போது கெஞ்சுகிறேன், என்
பாவத்தை மன்னியுங்கள். என்னுடன் மீண்
டும் வாருங்கள் எனவே கர்த்தரை நான்
தொழுதுகொள்வேன்” என்றான்.
26ஆனால் சாமுவேலோ, “நான் உன்
னோடு வரமாட்டேன். நீ கர்த்தருடைய
கட்டளையை ஒதுக்கி விட்டாய், இப்போது
கர்த்தர் உன்னை அரசனாக ஏற்றுக்கொள்ள
மறுக்கிறார்” என்றான்.
27சாமுவேல் திரும்பியபோது சவுல்
அவரது சால்வை நுனியைப் பிடித்தான்,
அது கிழிந்தது. 28சாமுவேலோ, “என் சால்
வையைக் கிழித்துவிட்டாய். இதுபோல
இன்று கர்த்தர் உன்னிடமிருந்து இஸ்ர
வேலின் இராஜ்யத்தைக் கிழிப்பார். உன்
நண்பன் ஒருவனுக்கு கர்த்தர் அரசைக்
கொடுப்பார். அவன் உன்னைவிட நல்லவ
னாக இருப்பான். 29கர்த்தரே இஸ்ரவேலரின்
தேவன், கர்த்தர் என்றென்றும் ஜீவிப்பவர்.
கர்த்தர் பொய் சொல்லவோ மனதை
மாற்றவோ மாட்டார். அவர் மனிதனைப்
போன்று மனதை மாற்றுபவர் அல்ல”
என்றான்.
30சவுலோ, “சரி நான் பாவம் செய்தேன்!
எனினும் என்னுடன் திரும்பி வாருங்கள்.
இஸ்ரவேலின் தலைவர்கள் மற்றும் ஜனங்
களின் முன்னால் எனக்கு மரியாதைக்
காட்டுங்கள். என்னுடன் திரும்பி வாருங்கள்.
உங்கள் தேவனாகிய கர்த்தரை நான்
தொழுதுகொள்வேன்” என்றான். 31சாமு
வேல் சவுலோடு திரும்பிப் போனான்,
சவுல் கர்த்தரை தொழுதுகொண்டான்.
32“அமலேக்கியரின் அரசனான ஆகாகை
என்னிடம் கொண்டு வா” என்றான்
சாமுவேல்.
ஆகாக் சாமுவேலிடம் வந்தான். அவன்
சங்கிலியால் கட்டப்பட்டிருந்தான். “நிச்சயம்
நம்மை இவர் கொல்லமாட்டார்” என்று
ஆகாக் எண்ணினான்.
33ஆனால் சாமுவேலோ, “உனது வாள்
குழந்தைகளை தாயிடமிருந்து எடுத்துக்
கொண்டது. எனவே இப்போது உன்
தாய் பிள்ளையற்றவள் ஆவாள்” எனக்கூறி
அவன் ஆகாகை கில்காலில் கர்த்தருக்கு
முன்பாக துண்டுகளாக வெட்டிப் போட்
டான்.
34பிறகு சாமுவேல் ராமாவிற்குத்
திரும்பிப் போனான். சவுல் கிபியாவிலுள்ள
தன் வீட்டிற்குப் போனான். 35இதற்குப் பின்
சாமுவேல் தன் வாழ்நாளில் சவுலைப்
பார்க்கவில்லை. சவுலுக்காக வருத்தப்
பட்டான். சவுலை அரசனாக்கியதற்குக்
கர்த்தரும் வருத்தப்பட்டார்.

## சாமுவேல் பெத்லேகேம் போகிறான்

16 கர்த்தர் சாமுவேலிடம், “நீ எவ்வளவு
காலம் சவுலுக்காக வருந்துவாய்?
நான் அரச பதவியிலிருந்து புறக்கணித்த
பின்னும் வருந்துகிறாயே, உனது கொம்பை
எண்ணையால் நிரப்பு. பெத்லேகேமிற்குச்
செல். உன்னை ஈசாயினிடம் அனுப்புகி
றேன். அவன் அங்கே இருக்கிறான். அவனது
மகன்களில் ஒருவனே புதிய அரசனாக நான்
தெரிந்தெடுத்திருக்கிறேன்” என்றார்.
2சாமுவேலோ, “நான் போனால், அதனை
சவுல் அறிவான். என்னைக் கொல்ல முயல்
வான்” என்றான்.
கர்த்தர், “பெத்லேகேமிற்கு ஒரு இளம்
கன்றுக்குட்டியை எடுத்துக்கொண்டு போ,
‘கர்த்தருக்கு பலி கொடுக்க வந்திருக்கிறேன்’
என்று சொல். 3ஈசாயையும் பலிக்கு அழைத்
தனுப்பு. பிறகு செய்ய வேண்டியது என்ன
என்பதைக் காட்டுவேன். நான் காட்டு
கிறவனை அரசனாக அபிஷேகம் செய்”
என்றார்.
4சாமுவேல் கர்த்தர் சொன்னபடி செய்
தான். சாமுவேல் பெத்லேகேம் சென்றதும்
அங்குள்ள மூப்பர்கள் நடுங்கினார்கள். அவர்
கள் சாமுவேலைச் சந்தித்து, “சமாதானத்
தோடு வந்துள்ளீரா?” என்று கேட்டனர்.
5அதற்கு சாமுவேல், “ஆமாம், நான்
சமாதானத்தோடு வருகிறேன். நான்
கர்த்தருக்கு பலிகொடுக்க வந்துள்ளேன். உங்
களை ஆயத்தப் படுத்திக்கொண்டு, என்
னோடு பலி செலுத்த வாருங்கள்” என்றான்.
சாமுவேல் ஈசாயையும் அவனது மகன்
களையும் ஆயத்தம் செய்துப் பலியில்
பங்குகொள்ள அழைத்தான்.
6அவர்கள் சாமுவேலிடம் வந்து சேர்ந்த
தும் எலியாபைப் பார்த்தான். சாமுவேல்,
“நிச்சயமாக இவன் தான் கர்த்தரால் தேர்ந்
தெடுக்கப்பட்டவன்!” என எண்ணினான்.
7ஆனால் கர்த்தர் சாமுவேலிடம், “எலி
யாப் உயரமானவன், அழகானவன். ஆனால்
அப்படி சிந்திக்க வேண்டாம். ஜனங்கள்
பார்க்கிறபடி தேவன் கவனிக்கிறதில்லை.
ஜனங்கள் ஒருவனை வெளித்தோற்றத்தைப்
பார்க்கிறார்கள், கர்த்தரோ அவன் இருதயத்
தைப் பார்க்கிறார். எலியாப் சரியானவன்
அல்ல” என்றார்.
8பிறகு ஈசாய் இரண்டாவது மகனான,
அபினதாபை அழைத்தான். அவன் சாமுவே
லினருகில் நடந்து வந்தபோது சாமுவேல்
பார்த்து, “இல்லை, கர்த்தர் இவனைத்
தேர்ந்தெடுக்கவில்லை” எனக் கூறினான்.

9 பிறகு ஈசாய் இன்னொரு மகனான
சம்மாவை அழைத்தான். அவனைப் பார்த்து,
“கர்த்தர் இவனையும் தேர்ந்தெடுக்கவில்லை”
என்றான்.
10 ஈசாய் 7 மகன்களையும் காட்டினான்.
சாமுவேல் ஈசாயிடம், “இவர்களில் யாரை
யும் கர்த்தர் தேர்ந்தெடுக்கவில்லை” என்
றான்.
11 சாமுவேல், “உன் பிள்ளைகள் இத்
தனைப் பேர்தானா?” எனக் கேட்டான்.

அதற்கு ஈசாய், “இல்லை, கடைசி மகன்
ஆடு மேய்க்கப்போயிருக்கிறான்” என்றான்.

சாமுவேலோ, “அவனை அழைத்து வா.
அவன் வரும்வரை நாம் சாப்பிடக்கூடாது”
என்றான்.
12 ஈசாய் ஒருவனை அனுப்பி தன் இளைய
மகனை அழைப்பித்தான். இந்த மகன் அழ
காய் சிவந்த மயிரோடு* நல்ல சௌந்தரிய
தோற்றமுடையவனாக இருந்தான்.

கர்த்தர் சாமுவேலிடம், “எழுந்து
அவனை அபிஷேகம் செய், இவன்தான்”
என்றார்.
13 சாமுவேல் எண்ணெய் நிரப்பிய
கொம்பை எடுத்து, சிறப்பு எண்ணெயை
ஈசாயின் கடைசி மகன்மேல் அவனுடைய
சகோதரரின் முன்னிலையில் ஊற்றினான்.
கர்த்தருடைய ஆவியானவர் அன்று முதல்
தாவீது மீது பெரும் வல்லமையோடு வந்தார்.
சாமுவேல் ராமாவிலுள்ள தன் வீட்டிற்குத்
திரும்பினான்.

### சவுலை ஒரு கெட்ட ஆவி துன்புறுத்துகிறது

14 கர்த்தருடைய ஆவியானவர் சவுலை
விட்டு விலகினார், கர்த்தர் ஒரு கெட்ட
ஆவியை சவுலுக்கு அனுப்பினார். அது
மிகத் தொல்லை கொடுத்தது. 15 சவுலின்
வேலைக்காரர்களோ, “தேவனிடமிருந்து
கெட்ட ஆவி ஒன்று உங்களைத் தொந்தரவு
செய்கிறது. 16 ஆணையிடுங்கள், நாங்கள்
சுரமண்டலம் வாசிக்கும் ஒருவனைத் தேடிப்
பிடிப்போம். ஒரு வேளை கர்த்தரிடமிருந்து
கெட்ட ஆவி உங்கள் மீது வருமானால்,
உமக்காக அவன் இசை மீட்டுவான். அப்
போது நீங்கள் நலம் பெறுவீர்கள்” என்றனர்.
17 எனவே சவுல், “நன்றாக இசை
மீட்டுபவனைக் கண்டுபிடித்து அழைத்து
வாருங்கள்” என்றான். 18 ஒரு வேலையாள்,
“ஈசாய் என்று ஒருவன் பெத்லேகேமில்
இருக்கிறான். அவனது மகனுக்கு நன்றாக
சுரமண்டலம் வாசிக்கத் தெரியும். தைரி
யமாக நன்றாக சண்டை இடுவான். அழகான
வனும் சுறுசுறுப்பானவனும் கூட, மேலும்
கர்த்தர் அவனுடன் இருக்கிறார்” என்றான்.
19 எனவே சவுலின் ஆட்கள் ஈசாயிடம்
சென்றனர். அவர்கள் ஈசாயிடம், “ஆட்டைக்
காக்கிற உன் மகன் தாவீதை என்னிடம்
அனுப்புங்கள்” என்று சொன்னார்கள்.
20 எனவே ஈசாய் சில அன்பளிப்புகளாக
கழுதை, அப்பம், திராட்சைரசம், இளம்
வெள்ளாட்டுக்குட்டி ஆகியவற்றை தாவீ
துக்குக் கொடுத்து சவுலிடம் அனுப்பினான்.
21 தாவீது சவுல் முன்பு போய் நின்றான்.
சவுலுக்கு தாவீதை மிகவும் பிடித்தது.
அவன் சவுலின் ஆயுதங்களைச் சுமக்கும்
உதவியாளனானான். 22 அவன் ஈசாய்க்கு,
“நான் தாவீதை மிகவும் விரும்புகிறேன்.
அவன் என்னோடு இருந்து எனக்குச்
சேவை புரியட்டும்” என்ற செய்தி சொல்லி
அனுப்பினான்.
23 எப்பொழுதாவது தேவனிடத்திலிருந்து
சவுல் மேல் கெட்ட ஆவி வந்தால்,
தாவீது தன் சுரமண்டலத்தை மீட்டுவான்.
அப்போது அந்த கெட்ட ஆவி சவுலை
விட்டு போய்விடும், சவுலும் நலம் பெறு
வான்.

### இஸ்ரவேலருக்கு கோலியாத்தின் சவால்

17 பெலிஸ்தர் போரிடும் பொருட்டு
படையாட்களைக் கூட்டினார்கள்.
அவர்கள் யூதாவிலுள்ள சோக்கோவில் கூடி
னார்கள். அவர்கள் கூடிய எபேஸ்தம்மீம்
எனும் இடம் சோக்கோவுக்கும் அசெக்கா
வுக்கும் இடையில் இருந்தது.
2 சவுலும் இஸ்ரவேல் வீரர்களும் ஒன்று
கூடினார்கள். இவர்களின் முகாம் ஏலாவி
லிருந்தது. வீரர்கள் சண்டையிடத் தயாராக
இருந்தனர். 3 பெலிஸ்தியர் மலையின்மேல்
இருந்தனர். அடுத்த மலையில் இஸ்ரவேலர்
இருந்தனர். இடையில் பள்ளத்தாக்கு இருந்
தது.
4 பெலிஸ்தியரிடம் கோலியாத் என்னும்
வீரன் இருந்தான். அவன் காத் என்னும்
ஊரினன், 9 அடி உயரமாக* இருந்தான்.
5 ஒரு வெண்கல கிரீடமும், போர்க்கவசமும்
தரித்திருந்தான். அது 5,000 சேக்கல் வெண்
கலம் எடையுள்ளதாயிருந்தது. 6 அவன்
கால்களில் வெண்கல கவசத்தையும், தோள்
களில் வெண்கல கேடகத்தையும் அணிந்
திருந்தான். 7 அவனது ஈட்டியின் பிடி
நெசவுக்காரரின் படைமரம் போல் இருக்கும்.
ஈட்டியின் அலகு 600 சேக்கல் இரும்பு
எடையுள்ளதாக இருந்தது. கோலியாத்தின்
கேடயம் சுமந்த வீரன், அவனுக்கு முன்னால்
நடப்பான்.

---

***சிவந்த மயிர்*** சிவந்த மேனியோடு, என்று பொருள். எபிரெய மொழியில் ‘சிவந்தவன்’ என்பதாகும்.

**9 அடி உயரம்** 6 முழம் 1 ஜாணளவாகும். எனினும் ஜோசப்பஸின் கிரேக்க ஏட்டின் படியும் கும்ரானின் ஒரு எபிரெய மொழி பெயர்ப்பின்படியும் அவன் 4 முழம் 1 ஜாண் உயரமாக இருந்தான், அதாவது 6 அடி 9 அங்குல உயரம்.

8தினந்தோறும் அவன் வெளியே வந்து
இஸ்ரவேலரைப் பார்த்து, சத்தமாக சண்
டைக்கு சவால் விடுவான். அவன், “உங்க
ளுடைய எல்லா வீரர்களும் போருக்குத்
தயாராக ஏன் அணிவகுத்து நிற்கிறீர்கள்?
நீங்கள் அனைவரும் சவுலின் வேலைக்
காரர்கள். நான் பெலிஸ்தன். யாரேனும்
ஒருவனைத் தேர்ந்தெடுத்து என்னோடு
சண்டையிட அனுப்புங்கள். 9அவன் என்
னைக் கொன்றுவிட்டால் நாங்கள் (பெலிஸ்
தர்) அனைவரும் உங்களது அடிமை. நான்
அவனைக் கொன்று விட்டால் நீங்கள்
எங்கள் அடிமை! நீங்கள் எங்களுக்குச்
சேவை செய்யவேண்டும்” என்றான்.
10மேலும் அவன், “நான் இன்று இஸ்ர
வேல் சேனையை கேலிச்செய்தேன்! உங்க
ளில் ஒருவனுக்குத் தைரியமிருந்தால் என்
னிடம் அனுப்பி சண்டையிட்டுப் பாருங்
கள்!” என்றான்.
11சவுலும் அவனது வீரர்களும் கோலியாத்
சொன்னதைக் கேட்டு மிகவும் நடுங்கி
னார்கள்.

## தாவீது போர் முனைக்குச் செல்கிறான்

12தாவீது ஈசாயின் மகன், யூதாவிலுள்ள
பெத்லேகேமில் எப்பிராத்தா குடும்பத்தைச்
சேர்ந்தவன். ஈசாயிக்கு 8 மகன்கள். சவுலின்
காலத்தில் ஈசாய் முதிர்வயதாக இருந்தான்.
13ஈசாயின் 3 பெரிய மகன்கள் சவுலுடன்
போருக்குச் சென்றிருந்தனர். எலியாப் முதல்
மகன். அபினதாப் இரண்டாவது மகன்.
சம்மா மூன்றாவது மகன். 14தாவீது கடைசி
மகன். பெரிய மூன்று மகன்களும் சவுலின்
படையில் இருந்தனர். 15தாவீது சவுலை
விட்டு விலகி அவ்வப்போது பெத்லேகேமில்
தன் தந்தையின் ஆடுகளைக் மேய்க்கப்
போவான்.
16கோலியாத் தினமும் காலையில் வந்து
இவ்வாறு 40 நாட்கள் இஸ்ரவேல் சேனை
யைக் கேலிச் செய்தான்.
17ஒருநாள் ஈசாய் தாவீதிடம், “கூடையில்
வறுத்த பயிரையும், 10 அப்பங்களையும்
கொண்டு போய் முகாமில் உள்ள உன்
சகோதரர்களுக்குக் கொடு. 18இந்த 10
பாலாடைக் கட்டிகளையும் உன் சகோதரர்
குழுவின் 1,000 வீரருக்கு அதிபதியினிடம்
கொடு. உன் சகோதரர்கள் எப்படி இருக்கி
றார்கள் என்றும் பார். அவர்கள் நலமுடன்
இருக்கிறார்கள் என்பதற்கு அடையாளமாக
ஏதேனும் வாங்கி வா! 19ஏலா பள்ளத்தாக்கில்
உன் சகோதரர்கள் சவுலின் சேனையில்
பெலிஸ்தருக்கு எதிராகச் சண்டையிட்டுக்
கொண்டிருக்கின்றனர்” என்றான்.
20அதிகாலையில் தாவீது வேறு ஒரு
மேய்ப்பவனிடம் ஆடுகளை ஒப்படைத்தான்.
தாவீது உணவை எடுத்துக்கொண்டு ஈசாய்
சொன்னபடி புறப்பட்டான். தாவீது தனது
வண்டியை முகாமுக்குச் செலுத்தினான்.
தாவீது வந்து சேர்ந்தபோது வீரர்கள் தங்கள்
போர்புரியும் நிலைக்குச் சென்று கொண்டி
ருந்தனர். வீரர்கள் தங்கள் போர் முழக்கங்
களை எழுப்பத் துவங்கினார்கள். 21இஸ்ர
வேலரும் பெலிஸ்தியரும் அணிவகுத்து
போருக்குத் தயாரானார்கள்.
22தாவீது தான் கொண்டு போனதை,
பொருட்களின் காப்பாளனிடம் கொடுத்தான்.
பின் இஸ்ரவேல் வீரர்களின் அணிக்கு
ஓடி, தன் சகோதரர்களைக் குறித்து விசாரித்
தான். 23தன் சகோதரர்களோடு பேச ஆரம்பித்
தான்.
அப்போது, கோலியாத் பெலிஸ்தர் முகா
மிலிருந்து வெளியே வந்து, வழக்கம்போல
கேலிச் செய்தான். அவன் சொன்னதை
யெல்லாம் தாவீது கேட்டான். 24அவனைக்
கண்டு இஸ்ரவேலர் பயந்து ஓடிப்
போனார்கள். அவர்களுக்கு அவன் மீது
பெரிய பயமிருந்தது.
25இஸ்ரவேலர், “கோலியாத் வெளியில்
வந்து இஸ்ரவேலரை மீண்டும் மீண்டும்
கேலிக்குள்ளாக்குகினதைப் பார்த்தீர்களா!
அவனை யார் கொன்றாலும் சவுல் அரசன்
அவனுக்கு நிறையப் பணம் கொடுத்து,
தனது மகளை அவனுக்கு மணம் செய்து
கொடுப்பான். சவுல் அவனது குடும்பத்திற்கு
இஸ்ரவேலின் மத்தியில் சுதந்திரம் அளிப்
பான்” என்றார்கள்.
26தாவீதோ அவர்களிடம், “அவன் என்ன
சொல்லுவது? அவனைக் கொன்று இஸ்ர
வேலில் இருந்து அவமானத்தை களைபவ
னுக்கு விருது என்ன வேண்டிகிடக்கிறது?
இஸ்ரவேலர் இந்த நிந்தையைச் சுமக்க
வேண்டுமா? இத்தனைக்கும் யார் இந்த
கோலியாத்? இவன் யாரோ அந்நியன்.*
சாதாரண பெலிஸ்தியன். ஜீவனுள்ள தேவனு
டைய சேனைக்கு எதிராகப் பேச அவன்
எப்படி நினைக்கலாம்?” என்று கேட்டான்.
27அதற்கு இஸ்ரவேலன், கோலியாத்தைக்
கொன்றால் கிடைக்கும் மேன்மையைப் பற்றி
சொன்னான். 28தாவீதின் மூத்த அண்ணனான
எலியாப் தனது தம்பி, வீரர்களிடம்
சொன்னதைக் கேட்டு கோபத்தோடு, “இங்கு
ஏன் வந்தாய்? ஆடுகளைக் காட்டில் யாரிடம்
விட்டு வந்தாய்? நீ எதற்காக இங்கு
வந்தாய் என்று எனக்குத் தெரியும்! உனக்கு
சொல்லப்பட்டதைச் செய்ய உனக்கு
விருப்பம் இல்லை. யுத்தத்தை வேடிக்கை
பார்க்கவே நீ இங்கு வந்தாய்!” என்றான்.
29அதற்கு தாவீது, “நான் இப்போது
என்ன செய்துவிட்டேன்? நான் ஒரு தவறும்
செய்யவில்லை! வெறுமனே பேசிக்
கொண்டிருந்தேன்” என்றான். 30தாவீது
வேறு சிலரிடம் அதே கேள்விகளைத்

---

**அந்நியன்** இஸ்ரவேலரின் முறைப்படி விருத்த சேதனம் (ஆண்டவரும் இஸ்ரவேலரும் செய்து கொள்ளும் உடன்படிக்கையின் முறை) செய்யாதவன்.

திரும்ப கேட்டான். அவர்களும் அதே பதில்
சொன்னார்கள்.
31 தாவீது சொல்வதைச் சிலர் கேட்டு
அவனைச் சவுலிடம் அழைத்துச் சென்
றார்கள். 32 தாவீது சவுலிடம், “கோலியாத்
துக்காக யாரும் நடுங்க வேண்டாம். நான்
உங்கள் சேவகன். நான் போய் அவனோடு
போரிடுகிறேன்!” என்றான்.
33 “உன்னால் வெளியே போய் அந்த
பெலிஸ்தியனாகிய கோலியாத்துடன் சண்
டைபோட முடியாது. நீ ஒரு படை வீரன்
அல்ல! அவனோ சிறுவயது முதல்
போரிட்டு வருகிறான்” என்றான்.
34 ஆனால் தாவீது சவுலிடம், “நான்
ஒரு இடையன், ஆடுகளை மேய்த்து வருப
வன். இரு தடவை ஒரு சிங்கமும்,
மற்றொருதடவை கரடியும் ஆடுகளைத்
தூக்கியபோது, 35 அவற்றைக் கொன்று
அவற்றின் வாயிலிருந்து ஆட்டை மீட்டேன்.
அவை என்மேல் பாய்ந்தன. எனினும்
அவற்றின் வாயின் அடிப்பகுதியைப்
பிடித்து கிழித்துக் கொன்றேன். 36 சிங்கத்தை
யும் கரடியையும் கொன்ற என்னால், இந்த
அந்நியனையும் விலங்குகளைப்போல்
கொல்லமுடியும்! அவன் ஜீவனுள்ள தேவ
னுடைய சேனையைக் கேலிச் செய்ததால்
அவன் கொல்லப்படுவான். 37 கர்த்தர்
என்னைச் சிங்கம் மற்றும் கரடியிடமிருந்து
காப்பாற்றியது போலவே பெலிஸ்தனிட
மிருந்தும் என்னைக் காப்பாற்றுவார்” என்
றான்.
சவுல் தாவீதிடம், “கர்த்தர் உன்னோடு
இருப்பாராக, நீ போ” என்றான். 38 சவுல்
தன் சொந்த ஆடையை தாவீதுக்கு அணி
வித்தான். தலையில் வெண்கல தலைச்
சிராவை, பிற யுத்த சீருடையும் போடு
வித்தான். 39 தாவீது வாளை எடுத்துக்
கட்டிக்கொண்டு நடந்து பார்த்தான். சவுலின்
சீருடையை அணிந்து பார்த்தான், ஆனால்
அவ்வளவு பாரமான யுத்த சீருடை
அணிந்துகொள்ளும் பயிற்சி அவனுக்கு
இருக்கவில்லை.
தாவீது சவுலிடம், “இவற்றை அணிந்து
என்னால் சண்டை போட முடியாது.
அணிந்து பழக்கமில்லை” என்றான். எனவே
தாவீது எல்லாவற்றையும் கழற்றினான். 40 தன்
கைத்தடியை எடுத்துக்கொண்டு 5 கூழாங்கற்
கள் கிடைக்குமா என்று பார்க்கச் சென்
றான். தேடியெடுத்த 5 கூழாங்கற்களையும்
தான் வைத்திருந்த இடையர் தோல் பையில்
போட்டுக் கொண்டான், கையில் வில்
கவணை வைத்துக்கொண்டான். பிறகு
கோலியாத்தை நோக்கி நடந்தான்.

### தாவீது கோலியாத்தைக் கொல்கிறான்

41 கோலியாத் மெதுவாக நடந்து தாவீதை
நெருங்கினான். கேடகத்தை ஏந்திய உதவி
யாள் முன்னே நடந்தான், 42 கோலியாத்
தாவீதைப் பார்த்து, அவன் யுத்த பயிற்சி
இல்லாத சிவந்த முகத்தையுடைய இளைஞன்
என்று கண்டு நகைத்தான். 43 “ஏன் இந்த
கைத்தடி? ஒரு நாயை விரட்டுவது போல்
நீ என்னை விரட்டப் போகிறாயா?” என்று
கோலியாத் கேட்டான். அதற்கு பின்
கோலியாத் தன் தெய்வங்களின் பெயரைச்
சொல்லி தாவீதை நிந்தித்தான். 44 கோலியாத்
தாவீதிடம், “இங்கே வா, உனது உடலை
பறவைகளுக்கும், காட்டு மிருகங்களுக்கும்
இரையாகப் போடுகிறேன்!” என்றான்.
45 தாவீது அவனிடம், “நீ உனது பட்டயம்,
ஈட்டியைப் பிடித்துகொண்டு வந்துள்ளாய்.
நானோ இஸ்ரவேல் சேனைகளின் தேவ
னாகிய சர்வ வல்லமையுள்ள கர்த்தருடை
நாமத்தில் வந்துள்ளேன், அவரைத் தூஷித்து
நீ நிந்தித்தாய். 46 இன்று உன்னைத் தோற்
கடிக்க கர்த்தர் எனக்கு உதவுவார். இன்று
உன் தலையை வெட்டி உன் உடலை
பறவைகளுக்கும், காட்டு மிருகங்களுக்கும்
இரையாக்குவேன். மற்ற பெலிஸ்தரையும்
இவ்வாறே செய்வோம்! அப்போது இஸ்ர
வேலில் தேவன் ஒருவர் இருக்கிறார் என்று
உலகம் அறிந்துக்கொள்ளும்! 47 ஜனங்களை
மீட்கும்படி கர்த்தருக்குப் பட்டயமும் ஈட்டி
யும் தேவையில்லை என்பதை இங்குள்ளவர்
களும் அறிவார்கள். யுத்தம் கர்த்தருடையது!
பெலிஸ்தியர்களாகிய உங்களெல்லாரையும்
வெல்ல கர்த்தர் உதவுவார்” என்றான்.

48 கோலியாத் தாவீதை தாக்கும்படி சீறி
எழுந்து நெருங்கி வந்தான். தாவீதும்
நெருங்கி ஓடி, 49 தனது தோல் பையிலிருந்து
கூழாங்கல்லை எடுத்து கவணில் வைத்து
சுழற்றி வீசினான். அது கோலியாத்தின்
நெற்றியில் இரு கண்களுக்கும் நடுவில்
பட்டது. அவன் நெற்றிக்குள் அது புகவே
அவன் முகங்குப்புற விழுந்தான்.
50 இவ்வாறு தாவீது கோலியாத்தை ஒரே
கவண் கல்லால் சாகடித்தான். தாவீதிடம்
பட்டயம் இருக்கவில்லை, 51 அதனால்
ஓடிப்போய் அந்த பெலிஸ்தியன் அருகில்
நின்று, கோலியாத்தின் பட்டயத்தை அவ
னது உறையில் இருந்து உருவி அதைக்
கொண்டே அவனது தலையை சீவினான்.
இவ்விதமாகத்தான் தாவீது பெலிஸ்தியனான
கோலியாத்தை கொன்றான்.
மற்ற பெலிஸ்தியர் தங்களது மாவீரன்
மரித்ததைப் பார்த்து பின்வாங்கி ஓடினார்
கள். 52 இஸ்ரவேல் வீரர் அவர்களைத் துரத்தி,
காத் மற்றும் எக்ரோன் எல்லைவரை
விரட்டினார்கள். சாராயீமின் சாலை
யோரங்களில் காத் மற்றும் எக்ரோன்
வரை பலரைக் கொன்று குவித்தனர்.
53 பின்னர் பெலிஸ்தியரின் முகாமிற்குள்
சென்று பொருட்களை எடுத்து வந்தனர்.
54 தாவீது கோலியாத்தின் தலையை
எருசலேமிற்கு எடுத்துச் சென்றான். கோலி

யாத்தின் ஆயுதங்களைத் தன் சொந்தக்
கூடாரத்தில் வைத்தான்.

### சவுல் தாவீதுக்கு அஞ்சத் தொடங்குகிறான்

55 தாவீது சண்டைக்குப் போவதைப்
பார்த்தான். சவுல் தன் தளபதியான அப்
னேரிடம், "இவனது தந்தை யார்?" எனக்
கேட்டான்.
அப்னேரும், "எனக்குத் தெரியாது ஐயா"
என்றான்.
56 சவுலோ, "இவனது தந்தையைப்பற்றி
தெரிந்து வா" என்றான்.
57 தாவீது கோலியாத்தைக் கொன்றுவிட்டு
திரும்பும்போது அப்னேர் அவனைச் சவு
லிடம் அழைத்து வந்தான். தாவீது இன்னும்
கோலியாத்தின் தலையைப் பிடித்துக்
கொண்டிருந்தான்.
58 சவுல் அவனிடம், "உன் தந்தை யார்?"
எனக் கேட்டான்.
அதற்கு தாவீது, "நான் உங்கள் வேலைக்
காரனான, பெத்லேகேமில் உள்ள ஈசாயின்
மகன்" என்றான்.

### தாவீதும் யோனத்தானும் நெருங்கிய நண்பர்களாகிறார்கள்

18 சவுல் தாவீதோடு பேசி முடிந்ததும்,
யோனத்தானும் தாவீதும் நெருங்கிய
நண்பர்களானார்கள். அவன் தன்னைப்
போலவே தாவீதையும் நேசித்தான்.
2 சவுல் அன்று முதல் தாவீதை தன்னோடு
வைத்துக்கொண்டான். அவனைத் தன்
தந்தையிடம் திரும்பிச்செல்ல அனுமதிக்க
வில்லை.
3 யோனத்தான் தாவீதை அதிகம் நேசித்து
அவனோடு ஒரு ஒப்பந்தம் செய்து கொண்
டான். 4 யோனத்தான் தான் அணிந்திருந்த
மேலாடையை கழற்றி தாவீதுக்குக் கொடுத்
தான். அவன் தன் சீருடையையும் கழற்றி
தாவீதுக்குக் கொடுத்தான். மேலும் தனது
வில், பட்டயம் மற்றும் கச்சையையும் கூட
தாவீதுக்கே கொடுத்தான்.

### தாவீதின் வெற்றிகளைச் சவுல் கவனிக்கிறான்

5 பல யுத்தங்களுக்கு தாவீதை சவுல்
அனுப்பினான். தாவீதும் மிகப் பெரிய
வெற்றிகளை அடைந்தான். பின்பு அவனை
படை வீரருக்கு தலைவன் ஆக்கினான்,
சவுலின் தளபதிகள் உட்பட அனைவரும்
இதை ஏற்றுக்கொண்டனர்! 6 தாவீது பெலிஸ்
தியர்களோடு சண்டையிட வெளியேறி
னான். போரிலிருந்து வெற்றி பெற்று
திரும்பியபோது, இஸ்ரவேலின் ஒவ்வொரு
நகரப் பெண்மணிகளும் தாவீதைப் பாராட்ட
வந்தனர். சிரித்து நடனமாடி மேளமும்
யாழும் வாசித்தனர். சவுல் எதிரில் இதனைச்
செய்தனர். 7 பெண்கள்,

"சவுல் ஆயிரம் பகைவர்களை
கொன்றிருக்கிறான்.
ஆனால் தாவீதோ பதினாயிரம்
பகைவர்களை கொன்றான்!"
என்று பாடினார்கள்!

8 இதனால் சவுல் கோபம் அடைந்தான்.
பெண்கள் சொன்னதை நினைத்து விசனப்
பட்டான். 9 அன்று முதல் தாவீதை நெருக்க
மாகப் பின்தொடர ஆரம்பித்தான்.

### தாவீதைக் கண்டு சவுல் பயப்படுகிறான்

10 மறுநாள், தேவனிடமிருந்து ஒரு கெட்ட
ஆவி சவுலை ஆட்கொண்டது. தாவீது
வழக்கம்போல் சுரமண்டலத்தை எடுத்து
மீட்டிக்கொண்டிருக்கும்போது, சவுல் தன்
வீட்டில் தீர்க்கதரிசனம் சொல்லிக்கொண்டி
ருந்தான். 11 சவுலிடம் ஈட்டி இருந்தது. சவுல்,
"சுவரோடு சேர்த்து தாவீதைக் குத்திக்
கொன்றுவிடலாம்" என எண்ணினான்.
அதன்படியே இரண்டு முறை ஈட்டியை
வீசினான். ஆனால் இரண்டு முறையும்
தாவீது தப்பிவிட்டான்.
12 தாவீதோடு கர்த்தர் இருந்தார். சவுலிட
மிருந்து கர்த்தர் விலகிவிட்டார். எனவே
சவுல் தாவீதைக் கண்டு பயந்தான். 13 தன்னிட
மிருந்து வெகுதொலைவான இடத்துக்குத்
தாவீதை சவுல் அனுப்பினான். 1,000 வீரர்க
ளுக்கு அதிகாரியாக தாவீதை ஆக்கினான்.
வீரர்களை போருக்கு வழிநடத்துகிறவனாயி
ருந்தான். 14 கர்த்தர் தாவீதோடு இருந்ததால்
எல்லா யுத்தங்களிலும் வென்றான். 15 சவுல்
தாவீதின் வெற்றிகளைக் கண்டபோது
அவனுக்கு மேலும் மேலும் பயம் வந்தது.
16 ஆனால் யூதாவிலும் இஸ்ரவேலிலும்
உள்ளவர்கள் தாவீதை நேசித்தனர். போரில்
தங்களுக்காகப் போராடுவதால் அனைவரும்
தாவீதை நேசித்தனர்.

### தாவீதுக்கு தன் மகளை திருமணம் செய்துவைக்க சவுல் விரும்புகிறான்

17 ஆனால், சவுல் தாவீதைக் கொல்ல
விரும்பி தந்திரமான ஒரு வழியை யோசித்
தான். அவன், "என் மூத்த மகள் மேராப்பை
உனக்கு மணமுடித்துத் தருவேன், பின் நீ
வலிமை மிக்க வீரனாகலாம். என் மகன்
போல இருக்கலாம்! பிறகு நீ போய்
கர்த்தருடைய யுத்தங்களை நடத்தலாம்!"
என்றான். மேலும் சவுல், "இவனை நான்
கொல்லாமல், எனக்காக பெலிஸ்தியர்களால்
கொல்லச் செய்வேன்" என்று எண்ணி
னான்.
18 தாவீதோ, "நான் பெரிய குடும்பத்தவ
னும் அல்ல! முக்கியமானவனும் அல்ல!
என்னால் அரசனின் மகளை மணந்து
கொள்ள முடியாது!" என்றான்.

19எனவே மேராப் தாவீதை மணக்க
வேண்டிய காலம் வந்தபோது, அவளை
மேகோலத்தியனாகிய ஆதரியேலுக்கு மண
முடித்துக் கொடுத்தான்.
20சவுலின் அடுத்த மகள் மீகாள் தாவீதை
நேசித்தாள். இவ்விஷயத்தைப்பற்றி சவுலிடம்
ஜனங்கள் சொன்னார்கள். இது சவுலுக்கு
மகிழ்ச்சி தந்தது. 21எனவே, "மீகாளைப்
பயன்படுத்தி தாவீதைச் சூழ்ச்சிக்குட்படுத்த
வேண்டும். அவள் அவனை மணக்கட்டும்.
பிறகு அவன் பெலிஸ்தர்களால் கொல்லப்
படுவான்" என்று நினைத்த சவுல் இரண்
டாம் தடவையாக, "இன்று என் மகளை
மணமுடிக்கலாம்" என்றான்.
22சவுல் தன் அதிகாரிகளுக்கு கட்டளை
யிட்டு, "தனியாக தாவீதிடம் கூறுங்கள்,
'பார், அரசனும் உன்னை விரும்புகிறான்.
அவரது அதிகாரிகளும் உன்னை விரும்பு
கின்றனர். நீ அவனுடைய மகளை மணக்க
வேண்டும்' என்று சொல்லுங்கள்" என்றான்.
23அதிகாரிகள் இதை அவனிடம் கூற,
அவனோ, "அரசனுக்கு மருமகனாவது
அவ்வளவு எளிதா? அரசனின் மகளுக்குத்
தருகிற அளவிற்கு என்னிடம் செல்வ
மில்லை! நான் சாதாரண ஏழை" என்றான்.
24தாவீது சொன்னதைச் சவுலிடம்
அதிகாரிகள் சொன்னார்கள். 25சவுல் அவர்
களிடம், "'அரசன் உன்னிடம் பணத்தை
எதிர்பார்க்கவில்லை பணத்திற்கு பதிலாக
100 பெலிஸ்தியர்களின் நுனித்தோல் போ
தும்' எனக் தாவீதிடம் கூறுங்கள்" என்றான்.
இதுதான் சவுலின் சூழ்ச்சி. பெலிஸ்தியர்கள்
தாவீதை நிச்சயம் கொல்வார்கள் என சவுல்
நம்பியிருந்தான்.
26அதிகாரிகள் தாவீதிடம் இதனைக் கூறி
னார்கள். அரசனின் மருமகனாக வாய்ப்புக்
கிடைத்ததற்காய் மகிழ்ச்சியடைந்தான்.
27எனவே தாவீதும் அவனது வீரர்களும்
உடனே பெலிஸ்தியர்களோடு சண்டைக்குப்
போய் 200 பெலிஸ்தியரைக் கொன்று,
அவர்களின் நுனித்தோலை வெட்டி
கொண்டுவந்து சமர்ப்பித்தான். அரசனின்
மரு மகனாக விரும்பினபடியால் தாவீது
இதைச் செய்தான்.

தன் மகள் மீகாளை தாவீது மணந்துக்
கொள்ள சவுல் அனுமதித்தான். 28தாவீதோடு
கர்த்தர் இருப்பதைச் சவுல் அறிந்துக்
கொண்டான். அதோடு அவனது மகள் மீகாள்
தாவீதை நேசித்தாள் என்பதையும்
அறிந்துக்கொண்டான். 29எனவே சவுலுக்கு
தாவீது மீது மேலும் பயம் வந்தது. அவ
னைத் தனது எதிரியாக எப்போதும்
எண்ணி வந்தான்.
30பெலிஸ்திய தளபதிகள் தொடர்ந்து
இஸ்ரவேலருக்கு எதிராக சண்டையிட்டனர்.
ஆனால், ஒவ்வொரு முறையும் தாவீது
அவர்களைத் தோற்கடித்தான். தாவீது மிகச்
சிறந்த அதிகாரி என்று புகழ் பெற்றான்.

### யோனத்தான் தாவீதுக்கு உதவுகிறான்

19 சவுல் தன் அதிகாரிகளிடமும் யோனத்
தானிடமும் தாவீதைக் கொல்லுமாறு
கூறினான். ஆனால் யோனத்தான் தாவீதை
அதிகமாக விரும்பினான். 2-3எனவே
யோனத்தான் தாவீதை எச்சரித்து, "கவன
மாக இரு. சவுல் உன்னைக் கொல்லப்
பார்க்கிறார். இன்று காலை, வயலில்
ஒளிந்துகொள். நான் என் தந்தையோடு
அங்கு வந்து பேசுவதை கேட்டுக்கொள்"
என்றான்.
4யோனத்தான் தனது தந்தை சவுலிடம்
சம்பாஷித்தான். தாவீதைப் பற்றி நல்ல
வற்றை அவன் எடுத்து கூறினான். அவன்,
"நீங்கள் ஒரு அரசன், தாவீது ஒரு சேவகன்,
அவன் உங்களுக்கு எதிராக எதுவும்
செய்யமாட்டான். எனவே அவனுக்கு எதி
ராக எதுவும் செய்யாதீர்கள், அவன் உங்க
ளுக்கு நன்மையே செய்வான். 5அவன்
கோலியாத்தைக் கொல்ல தன் உயிரையே
பணயம் வைத்தான். கர்த்தர் இஸ்ர
வேலுக்காக பெரிய வெற்றியைத் தந்தார்,
நீங்கள் பார்த்து மகிழ்ந்தீர்கள், அவன்
அப்பாவி! அவனைக் கொல்ல காரணமே
இல்லை" என்றான்.
6யோனத்தான் சொல்வதை சவுல் கேட்டு,
"கர்த்தர் ஜீவிப்பது உண்மை, தாவீது
கொல்லப்பட மாட்டான்" என்றான்.
7எனவே, யோனத்தான் தாவீதை
அழைத்து நடந்த எல்லாவற்றையும் சொன்
னான். பிறகு தாவீதை சவுலிடம் அழைத்து
வந்தான். ஆகையால் முன்பு போலவே
தாவீதைச் சவுலோடேயே இருக்கச் செய்
தான்.

### சவுல் தாவீதை மீண்டும் கொல்ல முயற்சிக்கிறான்

8மறுபடியும் போர் தொடங்கியது. தாவீது
புறப்பட்டு சென்று பெலிஸ்தியரோடு போர்
செய்தான். பெலிஸ்தியரை தாவீது தோற்
கடித்தான், அங்கிருந்து அவர்கள் ஓடிப்
போனார்கள். 9சவுல் வீட்டில் இருக்கும்
போது, கர்த்தரிடமிருந்து ஒரு தீய ஆவி
அவன் மீது வந்தது. அவன் தனது கையில்
ஈட்டி ஒன்றை வைத்திருந்தான். தாவீது
சுரமண்டலம் வாசித்துக்கொண்டிருந்தான்.
10சவுல் ஈட்டியால் அவனைச் சுவரோடு
சேர்த்து குத்திக் கொல்லப் பார்த்தான்.
ஆனால் தாவீது அப்புறம் குதித்துத் தப்பி
னான். சவுல் தன் ஈட்டியைச் சுவரில்
பதிய குத்தினான். தாவீது அன்றிரவு
தப்பிவிட்டான்.
11தாவீதின் வீட்டுக்கு சவுல் ஆட்களை
அனுப்பினான். அவர்கள் தாவீதின்
வீட்டைக் கண்காணித்தார்கள். அன்றிரவு
முழுக்க அவர்கள் அங்கேயே தங்கி இருந்தார்
கள். அதிகாலையில் தாவீதைக் கொல்ல
அவர்கள் திட்டமிட்டார்கள். தாவீதின்

*மனைவியான மீகாள் அவனை எச்சரித்து, "இந்த இரவே இங்கே இருந்து தப்பி ஓடி, உன் உயிரைக் காப்பாற்றிக்கொள். இல்லையென்றால் நாளை கொல்லப்படுவீர்" என்று சொன்னாள்.*
12*அவள் அவனை ஜன்னல் வழியாக இறக்கிவிட, அவன் தப்பினான்.*
13*மீகாள் கட்டில் மேல் ஒரு சிலையை வைத்து, தலைமாட்டில் வெள்ளாட்டுத் தோலை போட்டு ஆடையால் மூடி வைத்தாள்.*
14*தாவீதைக் கைது செய்து அழைத்து வரும்படி சவுல் ஆட்களை அனுப்பினான். மீகாள் அவர்களிடம், 'தாவீது நோயுற்றிருக்கிறான்' என்று சொன்னாள்.*
15*தூதுவர்கள் சவுலிடம் சங்கதியைச் சொன்னார்கள். ஆனால் அவர்களை மீண்டும் சவுல் திருப்பி அனுப்பினான். அவர்களிடம், "தாவீதை என்னிடம் அழைத்து வாருங்கள். முடிந்தால் அவன் படுத்துக் கிடக்கும் கட்டிலோடு அவனைத் தூக்கி வாருங்கள், அவனை நான் கொல்வேன்" என்றான்.*
16*தாவீதின் வீட்டுக்குத் தூதுவர்கள் சென்றார்கள். தாவீதைத் தூக்கிவர வீட்டுக்குள் நுழைந்தார்கள். ஆனால் படுக்கையில் வெறும் சிலையைத்தான் பார்த்தார்கள். ஆட்டு மயிர் அதன் போர்வையாக இருக்க கண்டனர்.*
17*சவுல், மீகாளிடம், "ஏன் என்னிடம் நீ தந்திரம் செய்கிறாய்? நீ எனது எதிரியை தப்பிக்கவிட்டாய்!" என்று கேட்டான்.*

*அவள், "தாவீது தப்பிக்க நான் உதவி செய்யாவிட்டால் அவர் என்னை கொன்றுவிடுவதாகச் சொன்னார்!" என்றாள்.*

## தாவீது ராமாவில் உள்ள முகாமிற்குப் போதல்

18*தாவீது தப்பித்து ராமாவில் தங்கியிருந்த சாமுவேலிடம் போனான். தனக்குச் சவுல் செய்தக் காரியங்கள் அனைத்தையும் சாமுவேலிடம் சொன்னான். பிறகு இருவரும் தீர்க்கதரிசிகள் தங்கி இருக்கிற முகாம்களுக்குச் சென்றனர். தாவீது அங்கேயே தங்கினான்.*
19*ராமாவில் உள்ள முகாமில் தாவீது இருக்கும் செய்தியைப்பற்றி சவுல் கேள்விப்பட்டான்.*
20*தாவீதை கைது செய்து அழைத்து வர சேவகர்களை அனுப்பினான். அவர்கள் வந்து தீர்க்கதரிசனம் சொல்கிற தீர்க்கதரிசிகளின் குழு மத்தியில் சாமுவேல் குழுத்தலைவனாக நிற்பதைக் கண்டனர். அப்போது சேவகர்மேல் தேவனுடைய ஆவியானவர் இறங்க அவர்களும் தீர்க்கதரிசனம் சொன்னார்கள்.*
21*இதை அறிந்த சவுல், வேறு சேவகர்களை அனுப்பினான். அவர்களும் அங்கு போய் தீர்க்கதரிசனம் சொல்ல, மூன்றாவது குழுவை அனுப்பினான். அவர்களும் தீர்க்கதரிசனம் சொன்னார்கள்.*
22*சவுலும் ராமாவுக்குப் போய் சேக்குவிலுள்ள கிணற்றருகில் நின்று, "சாமுவேலும் தாவீதும் எங்கே?" என்று கேட்டான்.*

*ஜனங்கள், "ராமாவின் முகாமில் உள்ளனர்" என்று சொன்னார்கள்.*
23*அவனும் ராமாவுக்கு அருகில் உள்ள முகாம்களுக்குப் போனான். அவன்மேலும் தேவனுடைய ஆவியானவர் இறங்கவே அவனும் தீர்க்கதரிசனம் சொல்ல ஆரம்பித்தான். முகாமிற்குச் செல்லும் வரை அப்படிச் சொல்லிக்கொண்டே சென்றான்.*
24*சவுலும் தன் ஆடைகளைக் கழற்றிப் போட்டு சாமுவேலுக்கு முன்பாக தீர்க்கதரிசனம் சொல்லி இரவும் பகலும் ஆடையில்லாமல் கிடந்தான்.*
*எனவேதான், "சவுலும் தீர்க்கதரிசிகளில் ஒருவனா?" என்று ஜனங்கள் கூறுகின்றனர்.*

## தாவீதும் யோனத்தானும் ஒரு ஒப்பந்தம் செய்கிறார்கள்

20 *ராமாவிற்கு அருகில் உள்ள முகாம்களில் இருந்து தாவீது தப்பி ஓடி யோனத்தானிடம் வந்தான். தாவீது, "உன் தந்தை என்னைக் கொல்ல தேடுகிறாரே. நான் என்ன தவறு செய்தேன்? நான் அவருக்குச் செய்த துரோகம் என்ன?" என்று கேட்டான்.*
2*அதற்கு யோனத்தான், "அது உண்மையாக இருக்க முடியாது! என் தந்தை உன்னைக் கொல்ல முயலவில்லை. என்னிடம் சொல்லாமல் எந்தக் காரியத்தையும் என் தந்தை செய்வதில்லை. அது சின்ன காரியமோ, பெரிய காரியமோ எதுவாக இருந்தாலும் சரி. உன்னைக் கொல்லும் திட்டத்தை என்னிடமிருந்து அவர் ஏன் மறைத்தார்? இல்லை, இது உண்மையன்று!" என்றான்.*
3*ஆனால் தாவீது, "உன் கண்களில் எனக்கு தயை கிடைத்தது. இதை உன் தந்தை அறிவார். அதனால், என்னிடமுள்ள நட்பினிமித்தம் நீ சஞ்சலம் அடையாதபடிக்கு இதை உன்னிடம் மறைத்தார், கர்த்தர் ஜீவித்திருக்க நீயும் ஜீவித்திருக்கிற உண்மைபடி கூறுகிறேன். நான் மரணத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறேன்!" என்று பதிலளித்தான்.*
4*யோனத்தான் அப்போது, "நீ சொல்லுகிறபடி நான் செய்வேன்" என்றான்.*
5*தாவீது, "கவனி, நாளை அமாவாசை விருந்து,* நான் அரச பந்தியில் சாப்பிட வேண்டும். ஆனால் மாலை வரை ஒளிந்திருக்க எனக்கு உத்தரவு வேண்டும்!*
6*உன் தந்தை கேட்டால், 'தன் ஊராகிய பெத்லேகேமில் ஆண்டுக்கு ஒரு தடவை*

---

**அமாவாசை விருந்து** *இது யூதர்களின் மாதத்தின் முதல் நாள். இது ஓய்வுக்கும் ஆராதனைக்கும் உரிய சிறப்பான நாள். அன்று ஜனங்கள் ஒன்று கூடி, லேவி. 7:16-21ல் விளக்கியப்படி காணிக்கைகளைப் பகிர்ந்துகொள்வார்கள்.*

மாதப் பலிச் செலுத்துவதால் அதில் கலந்துக்
கொள்ள தன் குடும்பத்தோடு போயிருப்
பதாகச் சொல்.’ 7அதற்கு அவர், ‘நல்லது’
என்றால் எனக்குச் சமாதானம். அவருக்கு
எரிச்சல் வந்தால், அவரால் ஆபத்து என்று
அர்த்தம். 8எனவே தயவுச் செய்யவேண்டும்.
என்னோடு கர்த்தருக்கு முன்னால் ஒப்பந்தம்
செய்துள்ளாய். என் மீது தவறு என்றால்
என்னைக் கொல். என்னை உன் தந்தை
யிடம் மட்டும் அழைத்துப் போகாமல்
இருக்க வேண்டும்!” என வேண்டினான்.
9அதற்கு யோனத்தான், “அந்த நிலை
உனக்கு ஏற்படாமல் இருப்பதாக! என்
தந்தையால் உனக்கு ஆபத்து என்றால்
நான் சொல்லாமல் இருப்பேனா?” என்று
கேட்டான்.
10ஆனால் தாவீது, “உன் தந்தைக்
கடுமையான உத்தரவு போட்டால் எனக்கு
அதை யார் சொல்வது?” என்று கேட்டான்.
11அதற்கு யோனத்தான், “வா ஊருக்கு
வெளியே வயலுக்குப்போவோம்” என்றான்.
இருவரும் வெளியே போனார்கள்.
12யோனத்தான், “இஸ்ரவேலரின் தேவ
னாகிய கர்த்தருடைய முன்னிலையில் வாக்
களிக்கிறேன், நான் நாளையோ மறுநாளோ
என் தந்தையின் மனதை அறிந்து விடுவேன்.
அவர் உன்மேல் தயவாக இருந்தாலும்,
தீங்கு செய்யும் எண்ணமாக இருந்தாலும்
3 நாட்களுக்குள் அறிவிப்பேன். 13ஒருவேளை,
எனது தந்தை உனக்குத் தீமை செய்யத்
துடித்துக் கொண்டிருந்தால் அதையும் அறி
விப்பேன். அதோடு அமைதியாக நீ ஒதுங்கி
விட உதவுகிறேன். நான் உனக்கு உண்மை
யைச் சொல்லாவிட்டால் கர்த்தர் எனக்கு
அதற்கு நிகராகவும் அதிகமாகவும் துன்பம்
தரட்டும்! கர்த்தர் உன் தந்தையோடு
இருந்தது போலவே உன்னோடும் இருப்
பாராக. 14மேலும் நான் உயிரோடு இருக்கும்
வரை என்மீது கருணையோடு இரு. 15நான்
மரித்தப் பிறகும் என் குடும்பத்தின்
மேலுள்ள கருணையை நிறுத்தாமல் இரு.
உன் பகைவரையெல்லாம் கர்த்தர் பூமியில்
இருந்து அழிப்பார். 16யோனத்தான் பெயர்
தாவீதின் குடும்பத்திலிருந்து எடுத்துப்
போடாமல் இருப்பதாக. தாவீதின் பகைவர்
களை கர்த்தர் தண்டிப்பாராக” என்று
தாவீதின் குடும்பத்தோடு ஒப்பந்தம் செய்துக்
கொண்டான்.
17யோனத்தான் தாவீதிடம், அவனது
அன்பு பற்றிய வாக்குறுதியைத் திருப்பிச்
சொல்லும்படி கேட்டான். ஏனென்றால்,
அவன் தன்னைத்தானே எவ்வளவு நேசித்
தானோ அவ்வளவு அதிகமாய் தாவீதையும்
நேசித்தான்.
18யோனத்தான் தாவீதிடம், “நாளை
அமாவாசை விருந்து. நீ உட்கார வேண்டிய
இடம் காலியாயிருப்பதால் உன்னைக்
குறித்து விசாரிக்கப்படும். 19இந்த சிக்கல்
முதலில் ஆரம்பித்தபோது நீ ஒளிந்திருந்த
இடத்திற்குப் போ. அங்கேயே காத்திரு.
20மூன்றாவது நாள், ஏஸேல் எனும்
கல்லருகில் காத்திரு, பிறகு மூன்றாம் நாளில்
ஒரு இலக்கைக் குறிவைத்து எய்வதுபோல்.
நான் அங்கு போய் அதன் பக்கமாக
மூன்று அம்புகளை எய்வேன். 21ஒரு பிள்
ளையை அம்பைத் தேடி வருமாறு அனுப்
புவேன். நான் அவனிடம், ‘அதிக தூரம்
போனாய் அம்புகள் என் அருகில் உள்ளன’
என்று சொன்னால் வந்துவிடு. அப்போது
ஒன்றும் இல்லை, உனக்கு சமாதானம்.
இதைக் கர்த்தருடைய அன்பால் கூறுகிறேன்!
22ஏதாவது தொந்தரவு இருந்தால் அவனிடம்,
‘அம்புகள் ரொம்ப தூரத்தில் கிடக்கிறது,
எடுத்து வா’ என்று சத்தமிடுவேன். உடனே
நீ விலகவேண்டும். கர்த்தர் உன்னை தூர
அனுப்பிகொண்டிருக்கிறார் என்று அர்த்தம்.
23அப்போது நமக்கு இடையேயுள்ள
ஒப்பந்தத்தை மறவாமல் இரு. கர்த்தர் தாமே
நமக்கு எப்போதும் சாட்சியாக இருப்பார்!”
என்றான்.
24பிறகு தாவீது வயலில் ஒளிந்துக்
கொண்டான்.

## விருந்தில் சவுலின் போக்கு

அமாவாசை விருந்துக்கு சமயம் வந்தது,
அரசன் உணவுண்ண உட்கார்ந்தான்.
25அரசன் வழக்கம்போல் சுவரை அடுத்து
உட்கார்ந்தான். யோனத்தான் எதிரே
இருந்தான். அப்னேர் சவுலுக்கடுத்து இருந்
தான். தாவீதின் இடம் வெறுமையாய்
இருந்தது. 26சவுல் எதுவும் சொல்லவில்லை.
அவன், “தாவீதிற்கு ஏதேனும் நடந்து
அதனால் தீட்டாக இருப்பான்” என்று
எண்ணிக் கொண்டான்.
27மாதத்தின் இரண்டாம் நாளான மறுநாள்
மீண்டும் தாவீதின் இடம் வெறுமையாய்
இருந்தது. சவுல் தன் மகனிடம், “எதற்காக
ஈசாயின் மகன் நேற்றும் இன்றும்
அமாவாசை விருந்துஉண்ண வரவில்லை?”
என்று கேட்டான்.
28யோனத்தான், “தாவீது தன்னை
பெத்லேகேமுக்குப் போக அனுமதிக்கும்படி
கேட்டுக் கொண்டான். 29அதனால் என்னி
டம், ‘என்னைப் போகவிடு. எங்கள்
குடும்பத்திற்குப் பெத்லேகேமில் ஒரு பலி
யைச் செலுத்தவேண்டியுள்ளது. எனது
சகோதரன் அங்கே இருக்கும்படி எனக்கு
கட்டளையிட்டிருக்கிறார். இப்பொழுது நான்
உனது நண்பனானால், நான் போய் என்
சகோதர்களைப் பார்க்க அனுமதி தா!’
என்று கேட்டான். அதனால் தாவீது அரச
னுடைய பந்திக்கு வரவில்லை” என்று
பதிலுரைத்தான்.
30சவுல் யோனத்தான் மீது கோபமுற்று,
“அடிபணிய மறுத்த கலகக்காரப் பெண்
ணின் மகன் நீ, நீயும் அவளைப்போல்

*இருக்கிறாய், நீ தாவீதின் பக்கத்தில் உள்
ளாய். நீ உனக்கும் உன் தாய்க்கும் அவ
மானத்தைத் தந்தாய்!* **31***ஈசாயின் மகன்
இருக்கும்வரை நீ அரசனாக முடியாது.
உனக்கு அரசும் கிடைக்காது. இப்போது
தாவீதைக் கொண்டு வா! அவன் ஒரு
மரித்தவன்” என்றான்.*

**32***யோனத்தான் அவனிடம், “தாவீது ஏன்
கொல்லப்பட வேண்டும்? அவனது தவறு
யாது?” எனக் கேட்டான்.*

**33***ஆனால் சவுல் ஈட்டியை அவன் மீது
எறிந்து கொல்லப் பார்த்தான். எனவே
யோனத்தான் தனது தந்தை தாவீதைக்
கொன்றுவிட பெரிதும் விரும்புகிறான் என்
பதை அறிந்தான்.* **34***அவன் தந்தை மீது
கோபங்கொண்டுப் பந்தியிலிருந்து விலகிக்
கொண்டான். விருந்தின் இரண்டாம் நாளில்
யோனத்தான் உணவுண்ண மறுத்தான்.
தனது தந்தை தன்னை அவமானப் படுத்தி
யதாலும் தாவீதை கொல்லவிரும்பியதாலும்
யோனத்தான் கோபமடைந்தான்.*

### தாவீதும் யோனத்தானும் விடை பெறுகின்றனர்

**35***மறுநாள் காலை யோனத்தான் வய
லுக்குப் போனான். அவர்கள் ஏற்கனவே
திட்டமிட்ட இடத்தில் தாவீதைச் சந்திக்க
தன்னோடு ஒரு சிறுவனை அழைத்துப்
போனான்.* **36***அவன் சிறுவனிடம், “நான்
எறிகிற அம்பைத் தேடி கண்டுபிடித்து
வா” என்றான். பையனின் தலைக்கு மேலாக
எறிந்த அம்பை அவன் தேடிப்போனான்.*
**37***அம்பு விழுந்த இடத்தில் சிறுவன் தேட,
“அம்புகள் இன்னும் தூரத்தில் உள்ளது”
என்றான்.* **38***மீண்டும் அவன், “சும்மா
நிற்காதே! போய் அம்பைத் தேடு” என்றான்.
சிறுவன் அம்பைத்தேடி தன் எஜமானனிடம்
எடுத்து வந்தான்.* **39***என்ன நடைபெறுகிறது
என்று அந்தப் பையன் அறியாதிருந்தான்.
ஆனால் தாவீதிற்கும் யோனத்தானுக்கும்
அது புரிந்தது.* **40***யோனத்தான் சிறுவனிடம்,
வில்லையும் அம்பையும் கொடுத்து, “நகரத்
திற்குத் திரும்பிப் போ” என்று அனுப்பி
னான்.*

**41***பையன் போனதும் தாவீது வெளியே
வந்து யோனத்தானைத் தரையில் குனிந்து
3 முறை வணங்கினான். பின் அவர்கள்
ஒருவரை ஒருவர் முத்தமிட்டனர். இருவரும்
சத்தமிட்டு அழ, தாவீது யோனத்தானை
விட மிகுதியாக அழுதான்.*

**42***யோனத்தான் தாவீதிடம், “சமாதான
மாகப் போ, நாம் கர்த்தருடைய நாமத்தால்
நண்பர்களாக இருப்போம் என்று ஆணை
யிட்டோம். அதன்படியே நமக்கும் நமது
சந்ததியினருக்கும் நடுவே உள்ள ஒப்பந்தத்
திற்கு கர்த்தரே என்றென்றைக்கும் சாட்சி
யாக இருப்பார்” என்றான்.*

### தாவீது ஆசாரியனாகிய அகிமெலேக்கைப் பார்க்கப் போகிறான்

**21** *பின்பு தாவீது வெளியே போனான்,
யோனத்தான் நகரத்திற்குத் திரும்பிப்
போனான்.* **2***தாவீது நோப் எனும் நகரத்திற்கு
ஆசாரியனான அகிமெலேக்கைப் பார்க்கப்
போனான்.*

*அகிமெலேக்கு தாவீதைச் சந்திக்க
வெளியே வந்தான், அவன் பயத்தால்
நடுங்கினான். அவன், “ஏன் தனியாக
வந்தீர்கள்? உங்களோடு ஏன் யாரும் வர
வில்லை?” என்று கேட்டான்.*

**3***அதற்கு தாவீது, “அரசன் எனக்கு
விசேஷ கட்டளையை இட்டிருக்கிறான்.
அவர் என்னிடம், ‘எவரும் இதனைப்பற்றித்
தெரிந்துகொள்ளாமல் இருக்கட்டும், நீ செய்ய
வேண்டுமென்று நான் சொன்னதை ஒரு
வரும் தெரிந்துகொள்ளாமல் இருக்கட்டும்’
என்றார். நான் என் ஜனங்களிடம்
என்னைச் சந்திக்கிற இடத்தைப்பற்றி கூறி
யிருக்கிறேன்.* **4***இப்போது உன்னோடு என்ன
உணவை வைத்திருக்கிறாய்? எனக்கு 5
அப்பங்களையோ அல்லது உன்னிடம்
உள்ள எதையேனும் புசிக்கக் கொடு”
என்றான்.*

**5***ஆசாரியன் தாவீதிடம், “என்னிடம் சாதா
ரணமான அப்பங்கள் இல்லை. பரிசுத்த
அப்பங்கள்* மட்டுமே உள்ளன. உங்கள்
ஆட்கள் எந்தப் பெண்ணோடும் பாலின
உறவு கொள்ளாமல் இருந்தால், அவர்கள்
அவற்றை உண்ணலாம்” என்றான்.*

**6***அதற்கு தாவீது, ஆசாரியனிடம்,
“எங்களோடு பெண்கள் இல்லை. எங்கள்
வீரர்கள் போருக்குப் போகும்போது தங்கள்
உடலை பரிசுத்தமாக வைத்திருப்பார்கள்,
எங்கள் வேலை மிகவும் சிறப்பானது.
எனவே, விசேஷமாக இன்று இது உண்மை”
என்றான்.*

**7***பரிசுத்த அப்பங்களைத் தவிர வேறு
அப்பங்கள் இல்லாததால் ஆசாரியன்
அவற்றை தாவீதுக்கு கொடுத்தான். அவை,
கர்த்தருக்கு முன்பு பரிசுத்தமான மேஜையின்
மேல் வைக்கப்பட்டவை. ஒவ்வொரு நாளும்
ஆசாரியர் புதியஅப்பங்களை வைப்பார்கள்.*
**8***சவுலின் அதிகாரிகளில் ஒருவன் அவர்
களோடு இருந்தான். அவன் பெயர்
ஏதோமியனான தோவேக்கு ஆகும். அவன்
சவுலின் ஒற்றர் தலைவனாவான். கர்த்தருக்கு
முன்பாக அவன் காவலில் அடைக்கப்பட்டி
ருந்தான்.*

**9***தாவீது அகிமெலேக்கிடம், “இங்கு ஈட்டி
யாவது பட்டயமாவது உள்ளதா? அரசனது
வேலை முக்கியமானது. அது விரைவாக
நடக்கவேண்டும். நான் சடுதியில் புறப்பட்ட*

---

***பரிசுத்த அப்பம்*** *பரிசுத்த கூடாரத்தில் வைக்கப்பட்டுள்ள சமூகத்து அப்பம் ஆகும். ஆசாரியர்கள் மட்டுமே இதை உண்ணவேண்டும்.*

தால் பட்டயமாவது எந்தவித ஆயுதங்களை
யாவது எடுத்து வரவில்லை” என்றான்.
10அதற்கு ஆசாரியன், “இங்கே பெலிஸ்
தனாகிய கோலியாத்தின் பட்டயம் மட்டுமே
உள்ளது. அது உன்னால் அவனிடமிருந்து
எடுக்கப்பட்டது. துணியில் சுற்றி ஏபோத்
தின் பின்னால் வைக்கப்பட்டுள்ளது,
உனக்கு விருப்பமானால் எடுத்துக்கொள்ள
லாம்” என்றான்.

தாவீதோ, “அதனை எனக்குக் கொடு.
கோலியாத்தின் வாளைப்போன்று வேறு
நல்ல வாள் இல்லை!” என்றான்.

### காத்தில் உள்ள எதிரிகளிடத்தில் தாவீது ஓடுகிறான்

11அன்று தாவீது சவுலிடமிருந்து ஓடி
னான். அவன் காத்தின் அரசனான ஆகீ
ஸிடம் சென்றான். 12ஆகீஸின் வேலைக்காரர்
அவனிடம் சொன்னார்கள், “இவன் இஸ்ர
வேல் நாட்டின் அரசனான தாவீது, இஸ்ர
வேலரால் போற்றப்படுபவன். அவர்கள்
ஆடிக்கொண்டே,

“சவுல் ஆயிரம் வீரர்களைக்
கொன்றிருக்கிறான்.
ஆனால் தாவீதோ பதினாயிரம்
வீரர்களைக் கொன்றிருக்கிறான்!”
என்று பாடுகின்றனர்.

13அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்
பதை தாவீது உற்று கவனித்தான். அவன்
காத்தின் அரசனான ஆகீஸுக்கு மிகவும்
பயந்தான். 14எனவே, அவன் ஆகீஸ்
அதிகாரிகளுக்கு முன்பு பைத்தியக்காரனைப்
போல் நடித்தான். வாசற்படிகளில் கீறிக்
கொண்டான். வாயில் நுரைத் தள்ளி தாடி
யில் ஒழுகவிட்டான்.
15ஆகீஸ் தனது அதிகாரிகளிடம்,
“இவனைப் பாருங்கள்! இவன் பைத்திய
மடைந்தவன்! என்னிடம் ஏன் அழைத்து
வந்தீர்கள்? 16என்னிடம் இப்படிப்பட்டவர்கள்
போதுமானப் பேர் உள்ளனர். இவனை
மீண்டும் என் வீட்டுக்குள் வர அனும
திக்காதீர்கள்!” என்றான்.

### பல இடங்களுக்கு தாவீது போகிறான்

22 தாவீது காத்தை விட்டு அதுல்லாம்
குகைக்கு ஓடினான். தாவீது அதுல்லா
மில் இருப்பதாக அவனது சகோ தரர்களும்
உறவினர்களும் அறிந்துகொண்டனர்.
அவனைப் பார்க்க அங்கே சென்றார்கள்.
2பலர் தாவீதோடு சேர்ந்துகொண்டார்கள்.
சிலர் சிலவிதமான பிரச்சனைகளில்
இருந்தனர். சிலர் கடன் பட்டவர்கள். சிலர்
தம் வாழ்வில் விரக்தியடைந்தவர்கள். இவர்
கள் அனைவரும் தாவீதோடு சேர்ந்து,
அவனை தலைவன் ஆக்கினார்கள். இப்
போது அவன் 400 பேர்களோடு இருந்தான்.

3தாவீது அதுல்லாமை விட்டு மோவாப்பி
லுள்ள மிஸ்பாவிற்குச் சென்றான். மோவாப்
பின் அரசனிடம், “எனக்காக தேவன்
என்ன செய்யப்போகிறார் என்று தெரியும்
மட்டும் என் தாயும் தந்தையும் இங்கு
வந்து தங்கி இருக்க தயவுசெய்து அனுமதிக்க
வேண்டும்” என்று கேட்டுக் கொண்டான்.
4அவ்வாறே அவர்களை அங்கே அடைக்கல
மாக இருக்கச் செய்தான். தாவீது கோட்டை
யில் இருக்கும்வரை அவர்களும் இருந்தார்
கள்.
5ஆனால் காத் என்னும் தீர்க்கதரிசி
தாவீதிடம், “கோட்டையில் தங்கவேண்டாம்.
யூதா நாட்டிற்குப் போ” என்று சொன்னான்.
எனவே அவன் விலகி ஏரேத் எனும்
காட்டிற்குச் சென்றான்.

### சவுல் அகிமெலேக்கின் குடும்பத்தை அழிக்கிறான்

6ஜனங்கள் தாவீது மற்றும் அவனது
ஆட்கள் மூலம் சேர்ந்து வருவதை சவுல்
கேள்விப்பட்டான். அவன் கிபியா மேட்டில்
ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருந்
தான். அவனது கையில் ஈட்டி இருந்தது.
அதிகாரிகள் அவனைச் சுற்றிலும் நின்று
கொண்டிருந்தனர். 7அவன் அவர்களிடம்,
“பென்யமீனின் ஜனங்களே! கவனியுங்கள்.
தாவீது உங்களுக்கு வயல்களையும், திராட்
சைத் தோட்டங்களையும் தருவான் என்று
நினைக்கிறீர்களா? அவன் உங்களை 1,000
பேருக்கும் 100 பேருக்கும் அதிகாரிகளாக்கு
வான் என்று எண்ணுகிறீர்களா? 8நீங்கள்
எனக்கு எதிராகச் சூழ்ச்சி செய்கிறீர்கள்!
இரகசியத் திட்டங்களைப் போடுகிறீர்கள்.
என் மகன் யோனத்தானைப் பற்றி எனக்குச்
சொல்லவில்லை. அவன் தாவீதோடு ஒரு
ஒப்பந்தம் செய்திருக்கிறான் என்று யாரும்
சொல்லவில்லை. என் மகன் தாவீதை
உற்சாகப்படுத்தி, அவனிடம் மறைந்திருந்து
என்னைத் தாக்கச் சொல்கிறான் என்பதை
யாரும் எனக்குக் கூறவில்லை. நீங்கள்
யாரும் என் மீது அக்கறை கொள்ளவில்லை!
யோனத்தான் தாவீதுடன் சேர்ந்து அதையே
இப்போது செய்துக் கொண்டிருக்கிறான்!”
என்றான்.
9அப்போது ஏதோமியனாகிய தோவேக்கு,
சவுலின் அதிகாரிகளோடு நின்று கொண்டி
ருந்தான். அவன், “நான் தாவீதை நோப்பில்
பார்த்தேன். அவன் அகிதூபின் மகனான
அகிமெலேக்கைப் பார்க்க வந்தான். 10அகி
மெலேக்கும் தாவீதிற்காக கர்த்தரிடம் ஜெபம்
செய்தான், உணவளித்தான், கோலியாத்தின்
பட்டயத்தைக் கொடுத்தான்” என்றான்.
11பிறகு சவுல் சிலரை அனுப்பி ஆசா
ரியனை அழைத்துவரக் கட்டளையிட்டான்.
நோப்பில் ஆசாரியர்களாக இருந்த அகி
மெலேக்கின் உறவினர்களையும் அழைத்து
வர கட்டளையிட்டான். அகிமெலேக்கின்

உறவினர்களும் நோப்பில் ஆசாரியர்களாக
இருந்தார்கள். அனைவரும் அரசனிடம்
வந்தார்கள். 12சவுல் அகிமெலேக்கிடம்,
“அகிதூபின் மகனே! கவனி” என்றான்.
அவன், “சரி ஐயா” என்றான்.
13சவுல் அகிமெலேக்கிடம், “நீயும் ஈசாயின்
மகனான தாவீதும் சேர்ந்து எனக்கு எதிராக
ஏன் இரகசிய திட்டமிட்டீர்கள்? நீ அவ
னுக்கு அப்பமும் பட்டயமும் கொடுத்தி
ருக்கிறாய்! அவனுக்காக தேவனிடம் ஜெபம்
செய்திருக்கிறாய்? இப்போது, தாவீது என்
னைத் தாக்குவதற்குத் தயாராக இருக்கி
றான்!” என்றான்.
14அதற்கு அகிமெலேக்கு, “உங்களிடம்
தாவீது உண்மையுள்ளவனாக இருக்கிறான்.
உங்கள் அதிகாரிகளில் எவரும் அவனைப்
போன்றவர்கள் இல்லை. அவன் உமது
சொந்த மருமகன். அவன் உமது கட்டளை
களுக்கு விசுவாசத்தோடு அடிபணிகிறான்.
உமது குடும்பம் அவனை மதிக்கிறது.
15நான் தாவீதிற்காக தேவனிடம் ஜெபம்
செய்வது முதல் முறையன்று, இல்லவே
இல்லை. என்னையோ, என் உறவினர்
களையோ இதற்காகப் பழி சுமத்த
வேண்டாம். நாங்கள் உமது சேவகர்கள்,
நீர் சொல்லும் காரியங்கள் நடந்து கொண்
டிருப்பதைப் பற்றி எங்களுக்கு ஒன்றும்
தெரியாது” என்றான்.
16ஆனால் அரசனோ, “அகிமெலேக்கே,
நீயும் உனது உறவினர்களும் மரிக்க
வேண்டும்!” என்றான். 17பிறகு அவன்
தன் காவலர்களைப் பார்த்து, “போய்,
கர்த்தருடைய ஆசாரியர்களைக் கொல்லுங்
கள். ஏனென்றால், அவர்கள் தாவீதின்
பக்கம் இருக்கிறார்கள், அவன் தப்பித்துப்
போனதை அறிந்தும், அவர்கள் என்னிடம்
சொல்லவில்லை!” என்றான்.
ஆனால், கர்த்தருடைய ஆசாரியர்களைக்
கொல்ல அதிகாரிகள் மறுத்து விட்டனர்.
18எனவே, அரசன் தோவேக்கிற்கு கட்ட
ளையிட்டான். “தோவேக், நீ போய்
ஆசாரியர்களைக் கொன்றுவிடு” என்றான்.
எனவே, அவன்போய் ஆசாரியர்களைக்
கொன்றான். அன்று 85 ஆசாரியர்கள்
அவனால் கொல்லப்பட்டனர். 19நோவாப்
ஆசாரியர்களின் நகரமாக இருந்தது. அங்
குள்ள அனைவரையும் கொன்றான். அவன்
ஆண்கள், பெண்கள், குழந்தைகள், கைப்
பிள்ளைகள் என அனைவரையும் வாளால்
கொன்றுப் போட்டான். அதோடு அவன்
பசுக்கள், கழுதைகள், ஆடுகள் ஆகியவற்றை
யும் கொன்றான்.
20ஆனால், அபியத்தார் தப்பித்தான்.
அவன் அகிதூபின் மகனான அகிமெலேக்
கின் மகன். இவன் ஓடிப்போய் தாவீதோடு
சேர்ந்துக் கொண்டான். 21அவன் தாவீதிடம்
சவுல் கர்த்தருடைய ஆசாரியர்களைக்
கொன்றுப் போட்டதைக் கூறினான். 22பின்
தாவீது அவனிடம், “நான் ஏதோமியனாகிய
தோவேக்கை அன்று பார்த்தேன். அவன்
சவுலிடம் சொல்வான் என்றும் தெரியும்!
எனவே உன் தந்தையும் மற்றவர்களும்
மரித்துப்போனதற்கு நானே பொறுப்பு.
23சவுல் உன்னை மட்டுமல்ல என்னையும்
கொல்ல விரும்புகிறான். பயப்படாதே, என்
னோடு பாதுகாப்பாக இருக்கலாம்” என்
றான்.

## கேகிலாவில் தாவீது

23 ஜனங்கள் தாவீதிடம், “பாருங்கள்,
பெலிஸ்தியர்கள் கேகிலாவிற்கு எதி
ராகப் போரிடுகிறார்கள். அவர்கள் அறு
வடை களத்திலிருந்து தானியங்களைக்
கொள்ளையிடுகிறார்கள்” என்றனர்.
2உடனே தாவீது கர்த்தரிடம், “நான்
போய் பெலிஸ்தியர்களோடு போரிடட்
டுமா?” என்று கேட்டான்.
கர்த்தர், “ஆமாம், நீ பெலிஸ்தியர்களோடு
போரிட்டு கேகிலாவைக் காப்பாற்று” என்று
பதிலுரைத்தார்.
3ஆனால் தாவீதைச் சேர்ந்தவர்கள்,
“பாருங்கள், யூதாவில் உள்ள நாங்களே
பயந்து போயுள்ளோம். பெலிஸ்தியர்கள்
இருக்கும் இடத்திற்குப் போனால் எவ்வளவு
பயப்படுவோம் என எண்ணிப்பாரும்”
என்றனர்.
4தாவீது மீண்டும் கர்த்தரிடம் கேட்டான்.
கர்த்தர், “கேகிலாவிற்குப் போ. பெலிஸ்தியர்
களை வெல்ல நான் உதவுவேன்” என்றார்.
5எனவே தாவீதும் அவனது ஆட்களும்
கேகிலாவிற்குச் சென்றனர். அவர்கள்
பெலிஸ்தியரோடு சண்டையிட்டுத் தோற்
கடித்து, அவர்களின் மந்தைகளைக்
கவர்ந்துக் கொண்டனர். இவ்வாறு, தாவீது
கேகிலாவைக் காப்பாற்றினான். 6(அபியத்
தார் தாவீதிடம் ஓடிப்போனபோது, அவன்
தன்னோடு ஏபோத்தையும் கொண்டு சென்
றான்.)
7ஜனங்கள் சவுலிடம் வந்து தாவீது
கேகிலாவில் இருப்பதை அறிவித்தனர்.
அதற்குச் சவுல், “தேவன் தாவீதை எனக்குக்
கொடுத்தார்! அவன் தானே வலைக்குள்
விழுந்திருக்கிறான். அவன் பூட்டிப்போடக்
கூடிய கோட்டைக் கதவுகளை உடைய
நகரத்திற்குள் போய்விட்டான்” என்றான்.
8சவுல் தனது படைவீரர்களைப் போரிடு
வதற்காகக் கூட்டினான். அவர்கள் கேகிலா
விற்குச் சென்று தாவீதையும் அவனது
ஆட்களையும் தாக்கத் தயாரானார்கள்.
9தனக்கு எதிரான சவுலின் திட்டங்களைத்
தாவீது அறிந்துக்கொண்டான். பிறகு
ஆசாரியனாகிய அபியத்தாரிடம், “ஏபோத்
தைக் கொண்டு வா” என்றான்.
10தாவீது, “இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தாவே, எனக்காக சவுல் இந்நகரத்திற்கு

வந்து அதை அழிக்கப்போவதாக அறிந்தேன்.
11சவுல் கேகிலாவிற்கு வருவாரா? இங்குள்ள
ஜனங்கள் என்னைச் சவுலிடம் ஒப்படைப்
பார்களா? இஸ்ரவேலரின் தேவனாகிய
கர்த்தாவே! நான் உமது தாசன்! தயவுசெய்து
சொல்லும்!” என்று வேண்டினான்.
“சவுல் வருவான்” என்று கர்த்தர் பதிலு
ரைத்தார்.
12மீண்டும் தாவீது, “என்னையும் எனது
ஆட்களையும் கெய்லா ஜனங்கள் சவுலிடம்
ஒப்படைத்து விடுவார்களா?” என்று
கேட்டான்.
“அவர்கள் செய்வார்கள்” என்று கர்த்தர்
சொன்னார்.
13எனவே தாவீதும் அவனது ஆட்களும்
கேகிலாவை விட்டு விலகினார்கள். அவ
னோடு 600 பேர் சென்றனர். அவர்கள்
ஒவ்வொரு இடமாக நகர்ந்தனர். கேகி
லாவிலிருந்து தாவீது தப்பிவிட்டதை சவுல்
அறிந்தான், எனவே அவன் அந்நகரத்திற்குப்
போகவில்லை.

## சவுல் தாவீதைத் துரத்துகிறான்

14பாலைவனத்தின் கோட்டைகளில்
தாவீது மறைந்திருந்தான். அவன் சீப் பாலை
வனத்தில் உள்ள மலை நகரத்திற்குச் சென்
றான். ஒவ்வொரு நாளும் சவுல் தாவீதைத்
தேடினான். ஆனால் சவுல் தாவீதைப்
பிடிக்கும்படி கர்த்தர் அனுமதிக்கவில்லை.
15சீப் பாலைவனத்தில் உள்ள ஓரேஷில்
தாவீது இருந்தான். சவுல் அவனைக் கொல்ல
முயன்றதால் அவன் பயந்தான். 16ஆனால்
சவுலின் மகனான யோனத்தான் ஓரேஷில்
தாவீதைச் சந்தித்தான் தேவனில்உறுதியான
நம்பிக்கையை வைக்கும்படி யோனத்தான்
தாவீதுக்கு உதவினான். 17யோனத்தான்,
“பயப்படாதே என் தந்தையான சவுல்
உன்னைக் கொல்லமாட்டார். நீ இஸ்ர
வேலின் அரசனாவாய். நான் உனக்கு
அடுத்தவனாக இருப்பேன். இதுவும் என்
தந்தைக்குத் தெரியும்” என்றான்.
18யோனத்தானும், தாவீதும் கர்த்தருக்கு
முன்னால் ஒரு ஒப்பந்தம் செய்துக் கொண்ட
னர். யோனத்தான் தன் வீட்டிற்குப் போக,
தாவீது ஓரேஷிலேயே தங்கினான்.

## சீப்பிலுள்ள ஜனங்கள் தாவீதைப் பற்றி சவுலிடம் சொல்கின்றனர்

19சீப்பிலுள்ள ஜனங்கள் சவுலைப் பார்க்க
கிபியாவிற்குச் சென்றனர். அவர்கள், “எங்
கள் பகுதியில்தான் தாவீது ஒளிந்திருக்கி
றான். அவன் ஆகிலா மேட்டில் உள்ள,
ஓரேஷ் கோட்டைக்குள் இருக்கிறான். அது
யெஷிமோனின் தெற்கில் உள்ளது. 20இப்
போது அரசே, நீர் விரும்பும் எந்தக்
காலத்திலும் இறங்கி வாரும். தாவீதை
உங்களிடம் ஒப்படைப்பது எங்கள் கடமை”
என்றார்கள்.
21சவுலோ, “எனக்கு உதவினதற்காக
கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார். 22போய்,
அவனைப்பற்றி அதிகமாகத் தெரிந்துக்
கொள்ளுங்கள். தாவீது எங்கே தங்கியிருக்கி
றான்? அவனை யார் யார் வந்து சந்திக்
கின்றனர். ‘தாவீது தந்திரக்காரன். அவன்
என்னை ஏமாற்ற விரும்புகிறான்’ என்று
நினைத்தான். 23தாவீது ஒளிந்துள்ள எல்லா
இடங்களையும் அறிந்துகொள்ளுங்கள். பின்
என்னிடம் வந்து எல்லாவற்றையும் கூறுங்
கள். பின் நான் உங்களோடு வருவேன்.
தாவீது அந்தப் பகுதியில் இருந்தால் அவ
னைக் கண்டுப் பிடிப்பேன். யூதாவில் உள்ள
அனைத்துக் குடும்பங்களிலும் அவனைத்
தேடிக் கண்டுப் பிடிப்பேன்” என்றான்.
24பின்னர் சீப்பிலுள்ள ஜனங்கள் திரும்பிப்
போனார்கள். சவுல் தாமதமாகப் போனான்.
தாவீதும் அவனது ஆட்களும் மாகோன்
பாலைவனத்தில் இருந்தனர். அவர்கள்
இருந்த பகுதி எஷிமோனின் தென் பகுதியில்
இருந்தது. 25சவுல் தன் ஆட்களோடு தாவீ
தைத் தேடிச் சென்றான். சவுல் தேடுவதாக
ஜனங்கள் தாவீதை எச்சரித்தனர். அதனால்
மாவோனில் உள்ள “கன்மலையில்” தாவீது
இறங்கினான். சவுல் இதனை அறிந்து அங்
கும் தாவீதைத் தேடிப்போனான்.
26சவுல் மலையின் ஒரு பகுதியில் இருந்த
போது தாவீதும் அவனது ஆட்களும் அடுத்த
பகுதியில் இருந்தனர். தாவீது சவுலை
விட்டு விரைவாக விலகினான். சவுலும்
அவனது ஆட்களும் மலையைச் சுற்றிப்
போய் தாவீதையும் அவனது ஆட்களையும்
பிடிக்க முயன்றனர்.
27அப்போது, ஒரு தூதுவன் சவுலிடம்
வந்து, “வேகமாக வாருங்கள்! பெலிஸ்தியர்
நம்மை தாக்கப் போகின்றனர்!” என்றான்.
28எனவே சவுல் தாவீதைத் துரத்துவதை
விட்டு பெலிஸ்தியரோடு சண்டையிடப்
போனான். எனவே ஜனங்கள் இந்த
மலையை “வழுக்கும் பாறை” அல்லது
சேலா “அம்மாலிகோத்” என்று அழைக்கின்
றனர். 29தாவீது அவ்விடத்தைவிட்டு என்கே
தியிலுள்ள கோட்டைகளுக்குச் சென்றான்.

## தாவீது முன் சவுலின் அவமானம்

24 சவுல் பெலிஸ்தியரை விரட்டின
பின்பு, “தாவீது என்கேதி அருகி
லுள்ளபாலைவனப்பகுதியில் இருக்கிறான்”
என்று ஜனங்கள் அறிவித்தனர்.
2எனவே, சவுல் இஸ்ரவேலரில் 3,000
பேரைத் தேர்ந்தெடுத்தான். அவர்களை கூட்
டிக்கொண்டு தாவீதையும் அவனது ஆட்
களையும் காட்டு ஆடுகள் உள்ள பாறைப்
பகுதிகளில் தேடினான். 3சவுல் சாலை

யோரத்தில் இருந்த ஆட்டுத் தொழுவத்திற்கு
வந்தான். அதன் அருகில் ஒரு குகை
இருந்தது. சவுல் அதனுள்ளே தீட்டுக்கழிக்கச்
சென்றான். அதன் பின் பகுதியில் தாவீதும்
அவனது ஆட்களும் ஒளிந்திருந்தனர். 4தாவீ
திடம் அவனது ஆட்கள், "கர்த்தர் சொன்ன
நாள் இதுவே! கர்த்தர், 'நான் உனது
பகைவனை உன்னிடம் தருவேன். நீ
அவனை என்ன வேண்டுமானாலும்
செய்துகொள்' என்று சொல்லியிருக்கி
றார்" என்றார்கள்.

தாவீது சவுலின் அருகில் ஊர்ந்து
சென்றான். சவுலின் சால்வை நுனியை
அறுத்தான். அதனைச் சவுல் கவனிக்க
வில்லை. 5பின்னர் இதற்காக தாவீது
வருத்தப்பட்டான். 6தாவீது தன் ஆட்களிடம்,
"மீண்டும் நான் என் எஜமானனுக்கு
இதுபோல் செய்துவிடாமல் கர்த்தர்தான்
தடுக்கவேண்டும். சவுல் கர்த்தரால் தேர்ந்
தெடுக்கப்பட்ட அரசன். அவருக்கு எதிராக
நான் எதுவும் செய்ய மாட்டேன்!" என்
றான். 7தாவீது தனது ஆட்களையும்
சவுலுக்குத் தீமை செய்துவிடாமல் பார்த்துக்
கொண்டான்.

சவுலும் அந்த குகையை விட்டு
வெளியேறிச் சென்றான். 8தாவீது வெளியே
வந்து சவுலைப் பார்த்து, "என் ஆண்ட
வனாகிய அரசனே!" என்று சத்தமிட்டான்

தாவீது தரையில் முகம் குப்புற
வணங்குவதை சவுல் திரும்பிப் பார்த்தான்.
9தாவீது சவுலிடம், "உமக்குத் தீங்கிழைக்கத்
தாவீது திட்டமிடுகிறான்" என்று ஜனங்கள்
சொல்வதை ஏன் காது கொடுத்துக்
கேட்கிறீர்? 10நான் உமக்குத் தீமை செய்ய
விரும்பவில்லை! இதனை உமது கண்
களாலேயே பார்க்கலாம்! இன்று கர்த்தர்
உம்மைக் குகைக்குள் அனுப்பினார். ஆனால்
நான் உம்மைக் கொல்ல மறுத்து விட்டேன்.
உம் மீது இரக்கம் கொண்டேன். நானோ,
'நான் என் எஜமானனுக்குத் தீமை செய்ய
மாட்டேன்! சவுல் கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்
பட்ட அரசன்!' என்று கூறினேன். 11என்
கையிலுள்ள இந்தத் துண்டுத் துணியைப்
பாரும். இதனை உமது சால்வை நுனியில்
இருந்து வெட்டி எடுத்தேன். நான் உம்மை
கொன்றிருக்கலாம்! நான் அப்படிச் செய்ய
வில்லை! இதனை நீர் புரிந்துக்கொள்ள
வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.
நான் உமக்கு எதிராக எந்த தீமையும்
செய்யவில்லை என்பதை நீங்கள்
புரிந்துகொள்ள வேண்டும்! நான் உமக்கு
எதிராக எதுவும் செய்யவில்லை. ஆனால்
நீர் என்னை வேட்டையாடிக் கொல்லப்
பார்க்கிறீர். 12கர்த்தர் தாமே இதில்
தீர்ப்பளிக்கட்டும்! நீர் எனக்குச் செய்த
தீமைக்குத் தக்கதாக கர்த்தர் உம்மை தண்
டிக்கக் கூடும். ஆனால், நான் உமக்கு
எதிராகச் சண்டையிடமாட்டேன்.

13 'கெட்ட ஜனங்களிடமிருந்தே
கெட்டவை வருகின்றன'
என்பது பழமொழி.

நான் எவ்வித தீமையும் செய்யவில்லை!
நான் கெட்டவன் அல்ல! நான் உமக்குத்
தீமை செய்யமாட்டேன்! 14நீர் யாரைத்
தேடுகிறீர்? இஸ்ரவேல் அரசர் யாரோடு
சண்டையிட அலைகிறார்? உமக்குத் தீமை
செய்யும் உமது எதிரியைத் தேடவில்லை!
ஒரு மரித்த நாயை, தெள்ளுப்பூச்சியைத்
தேடி அலைகிறீர்கள். 15கர்த்தர் தாமே
தீர்ப்பளிக்கட்டும். நம் இருவரையும் பற்றி
அவர் முடிவு செய்யட்டும். நான் சொல்வது
சரி என்று கர்த்தருக்குத் தெரியும். அவர்
எனக்கு உதவுவார். கர்த்தர் உம்மிடமிருந்து
என்னைக் காப்பாற்றுவார்" என்றான்.

16தாவீது பேசி முடித்ததும் சவுல், "இது
உன் குரல் தானா என் மகனாகிய தாவீதே?"
என்று சொல்லி கதறி அழுதான். 17அவன்,
"நீ சரியானவன். நான் தவறானவன். நீ
என்னிடம் நல்லபடியாக இருக்க நான்
உன்னிடம் தவறாக நடந்துக் கொண்டேன்.
18நீ எனக்குச் செய்த நன்மைகளைப் பற்றிக்
கூறினாய். கர்த்தர் என்னை உன்னிடம்
ஒப்படைத்தார், நீ என்னைக் கொல்ல
வில்லை. 19இது நான் உன் எதிரி அல்ல
என்பதைக் காட்டும். எவனும் தன் எதி
ரியைப் பிடித்தால் எளிதில் விடமாட்டான்,
இன்று எனக்கு நீ செய்த நன்மைக்காக
கர்த்தர் உனக்குப் பதிலளிப்பார்! 20நீ புதிய
அரசனாவாய் என்பது எனக்குத் தெரியும்.
நீ இஸ்ரவேல் சாம்ராஜ்யத்தை ஆளுவாய்.
21இப்போது எனக்கொரு சத்தியம் செய்துக்
கொடு. எனது சந்ததியாரைக் கொல்ல
மாட்டேன் என்று கர்த்தருடைய பேரில்
சத்தியம் செய். என் தந்தையின் குடும்பத்தி
லிருந்து என் பெயரையும் அழிக்காமல்
இருக்க வேண்டும்" எனக் கேட்டுக்
கொண்டான்.

22எனவே தாவீதும் தான் சவுலின்
குடும்பத்தாரைக் கொல்லமாட்டேன் என்று
சவுலிடம் சத்தியம் செய்தான். சவுல் தன்
வீட்டிற்குத் திரும்பினான். தாவீதும் அவனது
ஆட்களும் கோட்டைக்குப் போனார்கள்.

### தாவீதும், நாபால் எனும் முட்டாளும்

25 சாமுவேல் மரித்தான். அவனது
மரணத்திற்காக அனைத்து இஸ்ர
வேலரும் கூடித் தங்கள் வருத்தத்தைத்
தெரிவித்துக் கொண்டனர். ராமாவில் உள்ள
வீட்டில் அவனை அடக்கம் செய்தனர். பின்
பாரான் பாலைவனத்துக்கு தாவீது
போனான்.

2மாகோனில் ஒரு செல்வந்தன் இருந்தான்.
அவனிடம் 3000 ஆடுகளும் 1000 வெள்ளாடு

களும் இருந்தன. அவன் கர்மேலில் இருந்துக்
கொண்டு தன் வியாபாரத்தைக் கவனித்து
வந்தான். அவன் ஆடுகளுக்கு மயிர் கத்தரிக்க
அங்கே போய் வருவான். 3இவனது பெயர்
நாபால்,* இவன் காலேபின் குடும்பத்தவன்.
இவனது மனைவி அபிகாயில் புத்திசாலித்
தனமும் அழகும் கொண்டவள். ஆனால்
நாபால் அற்பனாகவும் கொடூரமானவனாக
வும் இருந்தான்.

4பாலைவனத்தில் நாபால்தன் ஆடுகளுக்கு
மயிர் கத்தரிப்பதாக தாவீது அறிந்து
கொண்டான். 5அவனோடு பேச, தாவீது
10 இளைஞர்களை அனுப்பினான். அவர்
களிடம், "கர்மேலுக்குப் போங்கள்,
நாபாலைக் கண்டு எனக்காக வாழ்த்துச்
சொல்லுங்கள்" என்றான். 6தாவீது
நாபாலுக்கு இந்தச் செய்தியையும் சொல்லி
அனுப்பினான், "நீயும் உனது குடும்பத்தாரும்
நலமென்று நம்புகிறேன். உனக்குரிய
அனைத்தும் நலமென்று நம்புகிறேன். 7நீ
மயிர் கத்தரிப்பதாக அறிந்தேன். கொஞ்ச
நேரம் உனது மேய்ப்பர்கள் எங்களோடு
இருக்கையில், அவர்களுக்கு நாங்கள் தீங்கு
செய்யவில்லை. அவர்கள் கர்மேலில்
இருக்கும்வரை அவர்களிடமிருந்து எதையும்
எடுக்கவில்லை. 8உன் வேலைக்காரரிடம்
கேட்டுப்பார். அவர்கள் உண்மையைக்
கூறுவார்கள். என் இளைஞரிடம் கருணை
யோடு இரு. இந்த மகிழ்ச்சியான நேரத்தில்
உன்னிடம் வந்திருக்கிறோம். உன்னால்
முடிந்ததை இவர்களுக்குக் கொடு. இதை
எனக்காகவும் உனது நண்பன்* தாவீதிற்காக
வும் செய்" என்றான்.

9தாவீதின் ஆட்கள் நாபாலிடம் சென்றனர்.
தாவீதின் செய்தியைச் சொன்னார்கள்.
10ஆனால் நாபால் அவர்களிடம் முரட்டுத்தன
மாக நடந்துக்கொண்டான். அவன், "தாவீது
யார்? இந்த ஈசாயின் மகன் யார்? இந்
நாட்களில் பல அடிமைகள் தம் எஜ
மானர்களை விட்டு ஓடிப்போகிறார்கள்!
11என்னிடம் அப்பமும் தண்ணீரும் உள்ளன.
மயிர் கத்தரித்தவர்களுக்காக, நான் ஆட்டைக்
கொன்று சமையல் செய்திருக்கிறேன்.
ஆனால், அதை எனக்கு முன் பின் அறி
யாதவர்களுக்காக கொடுக்க மாட்டேன்!"
என்றான்.

12தாவீதின் இளைஞர் திரும்பி வந்து
நாபால் சொன்னவற்றை சொன்னார்கள்.
13அதற்கு தாவீது, "உங்கள் பட்டயங்களை
எடுத்துக் கொள்ளுங்கள்!" என்றான். தாவீ
தும் அவனது ஆட்களும் தங்கள்
பட்டயங்களை எடுத்தனர். அவனோடு 400
பேர் சென்றனர். மீதி 200 பேர் தங்கள்
பொருட்களுக்கருகில் அங்கேயே தங்கினார்
கள்.

### அபிகாயில் ஆபத்தைத் தவிர்க்கிறாள்

14நாபாலின் வேலைக்காரரில் ஒருவன்
நாபாலின் மனைவியாகிய அபிகாயிலிடம்
பேசி, "நமது எஜமானர் நாபாலைப்
பாராட்டும்படி தாவீது தன் தூதுவர்களை
அனுப்பினார். ஆனால் நாபால் அவர்களிடம்
அற்பமாக நடந்துகொண்டான். 15அவர்கள்
நமக்கு மிகவும் வேண்டியவர்கள். நாம்
வயல்களில் ஊருக்கு வெளியே இருந்தோம்.
தாவீதின் ஆட்கள் எப்போதும் நம்மோடு
தங்கி இருக்கையில். அவர்கள் நமக்குத்
தீமை செய்யவில்லை! அவர்கள் நமக்குரிய
வற்றை ஒருபோதும் திருடவில்லை! 16இரவும்
பகலும் தாவீதின் ஆட்கள் நம்மைக்
காப்பாற்றினார்கள். நம்மைச் சுற்றிலும்
அவர்கள் சுவர்களைப்போன்று காவலாக
இருந்தார்கள். நாம் மந்தைகளை நடத்திச்
செல்லும்போது உதவுவார்கள். 17இப்போது
சிந்தித்துப் பார்த்து நாம் என்ன செய்யலாம்
என்று முடிவு செய்யுங்கள். நாபால் தன்
காரியங்களைப் பேசினது அறிவீனமாய்
இருக்கிறது! இப்போது நமது எஜமான
னுக்கும் அவனது வீட்டில் உள்ளவர்
களுக்கும் ஆபத்து வந்துகொண்டிருக்கிறது"
என்றான்.

18இதைக் கேட்டதும், அபிகாயில் அவசர
மாக 200 அப்பத்துண்டுகளையும், 2
திராட்சைரசப்பைகளையும், 5 சமைத்த
ஆடுகளையும், 5 படி வறுத்த பயிரையும்,
வற்றலான 100 திராட்சைக் குலைகளையும்,
வற்றலான 200 அத்திப்பழ அடைகளையும்
எடுத்துக் கொண்டாள். அவற்றைக் கழுதை
யின் மேல் ஏற்றினாள். 19பின் அவள்
தன் வேலைக்காரனிடம், "நீ போ. நான்
உன்னை பின் தொடர்ந்து வருகிறேன்"
என்றாள். ஆனால் அவளோ கணவனிடம்
அதைச் சொல்லவில்லை.

20அவள் கழுதையின் மேல் சவாரி செய்து
மலையின் அடுத்தப் பகுதிக்கு வந்தாள். எதிர்
திசையிலிருந்து வந்துகொண்டிருந்த
தாவீதையும் அவனது ஆட்களையும் சந்தித்
தாள்.

21தாவீது அபிகாயீலைச் சந்திக்கும் முன்,
"நான் இந்தப் பாலைவனத்தில் நாபாலின்
சொத்துக்களைக் காப்பாற்றினேன். அவனது
ஆடுகள் எதுவும் தவறிப்போகாது என
நான் உறுதி செய்தேன், நான் பிரதிபலனை
எதிர்பார்த்துச் செய்யவில்லை! அவனுக்கு
நன்மைகளைச் செய்தேன் ஆனால் அவன்
என்னிடம் தவறாக நடந்துக் கொண்டான்.
22நாளைக் காலைக்குள் நாபாலின்
குடும்பத்தில் உள்ள ஒருவரையாவது உயி
ரோடு விட்டு வைத்தால் தேவன் என்னைத்
தண்டிப்பார்" என்று சொல்லியிருந்தான்.

---

**நாபால்** இந்த பெயருக்கு "முட்டாள்தனம்" என்று பொருள்.

**நண்பன்** எழுத்தின் பிரகாரமாக, "மகன்" எனப் பொருள்படும்.

23 அந்த நேரத்தில் தான் அபிகாயில்
வந்து சேர்ந்தாள். அவள் தாவீதைப் பார்த்த
தும் கழுதையிலிருந்து இறங்கி தரையில்
முகம்படும்படி குனிந்து தாவீதின் முன்பு
நின்றாள். 24 அபிகாயீல் அவன் காலில்
விழுந்து, “ஐயா, உங்களோடு பேச
தயவுசெய்து என்னை அனுமதியுங்கள். நான்
சொல்வதை தயவுசெய்து கேளுங்கள்.
நடந்தவற்றிற்கு என்னைப் பழிவாங்குங்கள்.
25 நீங்கள் அனுப்பினவர்களை நான்
பார்க்கவில்லை. பயனற்றக் கொடிய மனித
னாகிய நாபாலிடம் கவனம் செலுத்தா
திருங்கள். அவன் தன் பெயரைப்போலவே
‘அறிவீனனாக’ இருக்கிறான். 26 அப்பாவி
ஜனங்களைக் கொல்வதினின்றும் கர்த்தர்
உங்களை விலக்கட்டும். கர்த்தருடைய
ஜீவன் பேரிலும் உங்கள் ஜீவன் பேரிலும்,
உங்களுடைய பகைவர்களும், நாபாலைப்
போன்று உமக்குத் தீமை செய்பவர்களும்
அழிந்துப்போவார்கள் என நம்புகிறேன்.
27 இப்போது, உங்களுக்கு இந்த அன்பளிப்பு
களைக் கொண்டு வந்திருக்கிறேன். இவற்றை
உங்கள் மனிதர்களுக்கு கொடுங்கள். 28 நான்
தவறு செய்தால் மன்னித்து விடும். உங்கள்
குடும்பத்தை கர்த்தர் பெலப்படுத்துவார்
என்று எனக்குத் தெரியும். உங்கள்
குடும்பத்தில் இருந்து பல அரசர்கள்
புறப்படுவார்கள். நீங்கள் கர்த்தருக்காகப்
போர் செய்து வருவதால் அவர் இதனை
உமக்காகச் செய்வார்! நீங்கள் வாழ்கின்ற
காலம்வரை ஜனங்கள் உங்களிடம் எந்தக்
குறையும் காணமாட்டார்கள். 29 எவராவது
உங்களைக் கொல்வதற்குத் தொடர்ந்து
வந்தால் உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களைக் காப்பாற்றுவார்! ஆனால் உங்கள்
பகைவர்களைக் கர்த்தர் கவணில் உள்ள
கல்லைப்போன்று தூர எறிவார்!
30 உங்களுக்குப் பல நன்மைகளைச் செய்யப்
போவதாக கர்த்தர் வாக்கு செய்துள்ளார்.
கர்த்தர் தமது வாக்கைக் காப்பாற்றுவார்!
தேவன் உம்மை இஸ்ரவேலரின் தலைவராக்
குவார். 31 அப்பாவிகளைக் கொன்றப் பழி
உங்களுக்கு வரக்கூடாது. நீங்கள் அந்த
வலையில் விழக்கூடாது. கர்த்தர் உமக்கு
வெற்றிகளைத் தரும்போது என்னை
நினைத்துக்கொள்ளுங்கள்” என்றாள்.
32 தாவீது அபிகாயீலிடம், “இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தரைப் போற்று, என்னிடம்
உன்னை அனுப்பியதற்காக தேவனைப்
போற்று. 33 உனது நல்ல தீர்ப்புக்காக தேவன்
உன்னை ஆசீர்வதிக்கட்டும். இன்று அப்
பாவிகளைக் கொன்றுப் போடாமல்
என்னைக் காப்பாற்றினாய். 34 இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தருடைய ஜீவனைக்
கொண்டு சத்தியமாகக் கூறுகிறேன், நீ
இவ்வளவு விரைவாக வந்து என்னைச்
சந்திக்காமல் இருந்தால் நாளை விடி
வதற்க்குள் நாபாலின் குடும்பத்தில் ஒருவன்
கூட உயிரோடு இருந்திருக்கமாட்டார்கள்”
என்றான்.
35 பிறகு தாவீது, அபிகாயீலின் அன்ப
ளிப்புகளை ஏற்றுக்கொண்டான். அவளிடம்,
“வீட்டிற்குச் சமாதானமாகப் போ. உனது
வேண்டுகோளை ஏற்று உன் விருப்பப்
படியே செய்வேன்” என்றான்.

## நாபாலின் மரணம்

36 அபிகாயீல் நாபாலிடம் திரும்பிப்
போனாள். அவன் தன் வீட்டில் ஒரு
அரசனைப் போன்று உணவு உண்டு
கொண்டிருந்தான். நன்றாக குடித்து
போதையில் சுகபோகமாக இருந்தான்.
எனவே அபிகாயீல் விடியும்வரை அவ
னிடம் எதுவும் சொல்லவில்லை. 37 மறுநாள்
காலையில் நாபால் போதை தெளிந்தபோது.
அவனது மனைவி அவனிடம் நடந்ததைக்
கூறினாள். அவனுக்கு நெஞ்சுவலி ஏற்பட்டு,
அவனது உடல் பாறையாக இறுகியது!
38 பத்து நாட்களில் கர்த்தர் அவனை மரிக்கச்
செய்தார்.
39 நாபால் மரித்துப்போனதை தாவீது
கேள்விப்பட்டு, “கர்த்தரைப் போற்றுங்கள்!
நாபால் என்னைப்பற்றி அவதூறு சொன்
னான். கர்த்தர் எனக்கு உதவினார். நான்
தீமை செய்யாதப்படி கர்த்தர் என்னை
விலக்கினார். நாபால் கேடு செய்ததால்
கர்த்தர் அவனை மரிக்கச் செய்தார்”
என்றான்.
பிறகு தாவீது அபிகாயீலிடம் தனது
மனைவியாகுமாறு செய்தி அனுப்பினான்.
40 தாவீதின் ஆட்கள் கர்மேலுக்குச் சென்று
அபிகாயீலிடம், “உங்களை அழைத்துவர,
தாவீது எங்களை அனுப்பினார். நீங்கள்
அவரது மனைவியாக வேண்டுமென்று
விரும்புகிறார்” என்றார்கள்.
41 அபிகாயீல் தன் முகம் தரையில் படும்படி
வணங்கி, “நான் உங்கள் வேலைக்காரி.
உங்களுக்குச் சேவை செய்ய தயார். எனது
எஜமானனாகிய தாவீதின் வேலைக்காரரின்
பாதங்களையும் கழுவ ஆயத்தமாக
இருக்கிறேன்” என்றாள்.
42 அவள் உடனே ஒரு கழுதையின் மீது
ஏறித் தாவீதின் ஆட்களுடன் புறப்பட்டாள்.
அவள் தன்னோடு 5 பணிப்பெண்களையும்
அழைத்து வந்து, தாவீதின் மனைவி
ஆனாள்.
43 யெஸ்ரயேல் ஊரினவளாகிய அகினோ
வாளையும் தாவீது மணம் செய்து
கொண்டான். அகினோவாளும், அபி
காயீலும் தாவீதின் மனைவிகள். 44 தாவீது
ஏற்கனவே சவுலின் மகளான மீகாளையும்
மணந்திருந்தான். ஆனால் சவுல் அவளை
எடுத்து கல்லீம் ஊரானாகிய லாயீசின்
மகனான பல்த்திக்கு மணமுடித்து கொடுத்து
விட்டிருந்தான்.

### தாவீதும் அபிசாயும் சவுலின் முகாமிற்குள் நுழைகின்றனர்

26 சீப் ஜனங்கள் சவுலைப் பார்க்க
கிபியாவிற்குச் சென்றார்கள். அவர்
கள் சவுலிடம், "தாவீது ஆகிலா மேட்டில்
ஒளிந்திருக்கிறான். அந்த இடம் எஷிமோனை
அடுத்துள்ளது" என்று சொன்னார்கள்.
2 சவுல் சீப் பாலைவனத்திற்கு இறங்கிப்
போனான். சவுல் இஸ்ரவேல் முழுவதிலும்
இருந்து 3,000 வீரர்களைத் தேர்ந்தெடுத்தான்.
அவர்கள் பாலைவனத்தில் தாவீதைத் தேடி
னார்கள். 3 சவுல் ஆகிலா மேட்டில் தன்
முகாமை அமைத்திருந்தான். இது எஷிமோ
னிலிருந்து வரும் சாலைக்கு அருகில்
இருந்தது.
தாவீது அதே பாலைவனத்தில் தான்
தங்கியிருந்தான். சவுல் தன்னைத் தேடி
வந்திருப்பதை தாவீது அறிந்து கொண்
டான். 4 அவன் ஒற்றர்களை அனுப்பி சவுல்
ஆகிலாவிற்கு வந்து விட்டதையும் தெரிந்து
கொண்டான். 5 பிறகு தாவீது சவுலின்
முகாமிற்குச் சென்றான். அங்கே சவுலும்
அப்னேரும் தூங்குவதைக் கண்டான்.
(அப்னேர் சவுலின் படைத்தலைவனான
நேரின் மகன்) சவுல் முகாமின் மையத்தில்
தூங்கிக் கொண்டிருந்தான். அவனைச்
சுற்றிலும் படைவீரர்கள் இருந்தனர்.
6 ஏத்தியனாகிய அகிமெலேக்கிடமும்,
செருயாவின் மகனும் யோவாபின் சகோதர
னுமான அபிசாயிடமும் தாவீது பேசினான்,
"நான் சவுலின் முகாமிற்குப் போகிறேன்.
என்னோடு யார் வருகிறீர்கள்?" என்று
கேட்டான்.
அபிசாயோ, "நான் உங்களுடன் வருகி
றேன்" என்று பதிலுரைத்தான்.
7 இரவில் அவர்கள் அங்குச் சென்றார்கள்.
முகாமின் மையத்தில் சவுல் தூங்க, அவனது
தலைமாட்டில் அவனது ஈட்டி தரையில்
குத்தி வைக்கப்பட்டிருந்தது. அப்னேரும்
மற்ற வீரர்களும் சவுலைச் சுற்றிலும் தூங்கிக்
கொண்டிருந்தனர். 8 அபிசாய் தாவீதிடம்,
"உங்கள் எதிரியைத் தோல்வியுறச் செய்ய
தேவன் இன்று வாய்ப்பு அளித்துள்ளார்.
தரையோடு இவனை ஈட்டியால் ஒரே
குத்தாக குத்திவிடட்டுமா? ஒரே தடவையில்
அதைச் சாதிக்க என்னால் முடியும்!"
என்றான்.
9 ஆனால் தாவீது அபிசாயிடம், "சவுலைக்
கொல்லவேண்டாம்! கர்த்தரால் தேர்ந்தெடுக்
கப்பட்ட அரசனுக்கு யார் கேடு செய்தாலும்
அவர்கள் தண்டிக்கப்படுவார்கள்! 10 ஜீவிக்
கின்ற கர்த்தர் தாமே இவரைத் தண்டிப்பார்.
இவர் இயற்கையாகவும் மரிக்கலாம், அல்லது
போரில் கொல்லப்படலாம், 11 ஆனால்,
கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசனுக்கு
என்னால் மரணம் வரும்படி கர்த்தர்
செய்யக்கூடாது! இப்போது ஈட்டியையும்
தண்ணீர் செம்பையும் எடுத்துக்கொண்டு
போவோம்" என்றான்.
12 சவுலின் தலைமாட்டில் இருந்த ஈட்டியை
யும், தண்ணீர்ச் செம்பையும் எடுத்துக்
கொண்டு தாவீது கிளம்பினான். பிறகு
தாவீதும், அபிசாயும் முகாமைவிட்டு வெளி
யேறினார்கள். நடந்தது என்னதென்று
யாருக்கும் தெரியவில்லை! யாரும் இதைப்
பார்க்கவுமில்லை, எழும்பவுமில்லை. கர்த்த
ரால் சவுலும் மற்ற வீரர்களும் நன்றாகத்
தூங்கிக் கொண்டிருந்தனர்.

### மீண்டும் சவுலை தாவீது அவமானப் படுத்துகிறான்

13 பள்ளத்தாக்கின் மறு பக்கத்திற்கு தாவீது
கடந்து போனான். மலையின் உச்சியில்
நின்று கொண்டான். 14 அப்னேரிடமும், சவு
லின் வீரர்களிடமும் சத்தமான குரலில்,
"அப்னேர்! எனக்குப் பதில் சொல்"
என்றான்.
அப்னேரும், "நீ யார்? ஏன் அரசனை
அழைக்கிறாய்?" என்று கேட்டான்.
15 தாவீது, "நீ ஒரு மனிதன் தானே?
இஸ்ரவேலில் உள்ள பிற மனிதர்களைவிட
நீ சிறந்தவன் அல்லவா? நான் சொல்வது
சரி என்றால் பின் ஏன் உன் அரசனைக்
காக்கவில்லை? உன் அரசனைக் கொல்ல
ஒரு சாதாரண மனிதன் உன் கூடாரத்திற்கு
வந்தான். 16 நீ பெரிய தவறுச் செய்து
விட்டாய்! நீயும் உன் ஆட்களும் மரித்திருக்க
வேண்டும். கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்பட்ட
அரசனைப் பாதுகாக்கத் தவறிவிட்டீர்கள்.
உன் அரசனின் தலை மாட்டில் உள்ள
ஈட்டியும் தண்ணீர் செம்பும் எங்கே என்று
பாருங்கள்?" என்றான்.
17 சவுல் தாவீதின் சத்தத்தை அறிந்து
கொண்டான். "என் மகனே! தாவீது, இது
உனது குரலா?" என்று கேட்டான்.
அதற்கு தாவீது, "ஆமாம், என்
அரசனாகிய எஜமானே. என் குரலே தான்"
என்றான். 18 தாவீது மேலும், "ஐயா என்னை
ஏன் தேடுகிறீர்கள்? நான் என்ன தவறு
செய்தேன்? நான் என்ன குற்றவாளியா?
19 எனது எஜமானனாகிய அரசனே! நான்
சொல்வதைக் கவனியும்! என் மீது உமக்கு
கோபம் வரும்படி, கர்த்தர் செய்திருந்தால்
அதற்கு தகுந்த காணிக்கையை அவர்
ஏற்றுக்கொள்வாராக, மனிதர்கள் செய்தி
ருந்தால், அதற்கு கர்த்தர் அவர்களுக்குத்
தண்டனை அளிக்கட்டும். கர்த்தர் எனக்குக்
கொடுத்த நாட்டை விட்டுப் போகும்படி
மனிதர்கள் செய்து விட்டார்களே. 'போய்
அந்நியரோடு வாழு, அவர்களின் தெய்வங்
களுக்குச் சேவைசெய்' என்று மனிதர்கள்
சொல்லியிருக்கிறார்கள். 20 இப்போது கர்த்தரு
டைய சந்நிதிவிட்டு வெகு தூரத்தில் நான்
மரிக்கும்படி நீர் செய்யவேண்டாம். மலை
யில் ஒரு கவுதாரியை வேட்டையாடுவது

போன்று இஸ்ரவேலின் அரசன் ஒரு
தெள்ளுப்பூச்சியை வேட்டையாட வந்தா
ரோ?” என்று கேட்டான்.
21 பிறகு சவுல், “நான் பாவம் செய்து
விட்டேன். திரும்பி வா மகனே, என்
உயிர் உனக்கு முக்கியமானது என்பதை
எனக்குக் காட்டிவிட்டாய். இனிமேல்
உனக்குக் கேடு செய்ய முயலமாட்டேன்.
நான் அறிவீனமாக நடந்துக் கொண்டேன்.
நான் பெருந்தவறு செய்துவிட்டேன்”
என்றான்.
22 தாவீதோ, “இதோ, அரசனின் ஈட்டி
என்னிடம் உள்ளது. யாராவது ஒரு இளை
ஞன் வந்து பெற்றுக்கொள்ளட்டும்.
23 கர்த்தர்
ஒவ்வொரு மனிதருக்கும், அவரவரின்
செயலுக்கு தக்க பலன் அளிக்கிறார்.
நீதியான காரியங்களை செய்பவர்களுக்கு
நன்மை தருகிறார், தீமை செய்பவர்களுக்கு
தண்டனையைத் தருகிறார். கர்த்தர் எனக்கு
இன்று உங்களைத் தோற்கடிக்க வாய்ப்பளித்
தார், ஆனால் நான் கர்த்தரால்
தேர்ந்தெடுக்கப்பட்ட அரசனுக்குக் கேடு
செய்யவில்லை.
24 இன்று உங்கள் வாழ்க்கை
எனக்கு முக்கியமானது என்பதைக்
காட்டினேன்! அதேபோல் கர்த்தரும் என்
வாழ்க்கை அவருக்கு முக்கியமானது என்று
காட்டுவார்! கர்த்தர் என்னை அனைத்து
துன்பங்களில் இருந்தும் காப்பார்” என்றான்.
25 பின் சவுல் தாவீதிடம், “தேவன்
உன்னை ஆசீர்வதிப்பார், என் மகனே. நீ
பெரியக் காரியங்களைச் செய்து, வாழ்வில்
பெரும் வெற்றியைப் பெறுவாய்” என்றான்.
தாவீது தன் வழியே போனான். சவுல்
தன் வீட்டிற்குத் திரும்பிப் போனான்.

### பெலிஸ்தர்களோடு தாவீது வாழ்கிறான்

27 தாவீது தனக்குள், “என்றாவது சவுல்
என்னைப் பிடித்துக் கொல்லுவான்.
எனவே பெலிஸ்தரின் நாட்டிற்குத் தப்பிச்
செல்வதுதான் நான் இப்போது செய்ய
வேண்டியது. பிறகு சவுல் என்னை
இஸ்ரவேலில் தேடுவதை விட்டு விடுவான்.
இவ்வாறு தான் இவனிடமிருந்து தப்பிக்க
வேண்டும்” என்று நினைத்துக் கொண்
டான்.
2 எனவே தாவீதும், அவனது 600 ஆட்
களும் இஸ்ரவேலை விட்டு மாயோகின்
மகனான ஆகீஸிடம் சென்றனர். ஆகீஸ்
காத்தின் அரசன்.
3 தாவீதும் அவனது
குடும்பமும் ஆட்களும் காத்தில் ஆகீஸோடு
வாழ்ந்தனர். தாவீதுடன் அவனது இரு
மனைவியரும் இருந்தனர். அவர்கள் யெஸ்ரே
லின் அகினோவாளும், கர்மேலின் அபிகாயீ
லும் ஆவார்கள். அபிகாயீல் நாபாலின்
விதவை.
4 தாவீது காத்துக்கு ஓடிப்போனதாக
ஜனங்கள் வந்து சவுலிடம் சொல்லவே,
அவனும் தாவீதைத் தேடுவதை விட்டு
விட்டான்.
5 ஆகீஸிடம் தாவீது, “என்னை உங்களுக்கு
பிடிக்குமானால், எனக்கு நாட்டிலுள்ள ஒரு
நகரத்தில் ஓரிடத்தைக் கொடுங்கள். நான்
உங்கள் வேலைக்காரன். நான் அங்கே
வாழ்வேன் உங்களோடு இத்தலைநகரத்தில்
வாழமாட்டேன்” என்றான்.
6 அன்றைதினம் ஆகீஸ் தாவீதிற்கு சிக்லாக்
நகரத்தைக் கொடுத்தான். அன்று முதல்
அந்நகரம்யூதாவின் அரசர்களுக்கு உரியதாய்
இருந்தது.
7 அங்கே தாவீது பெலிஸ்தர்களோடு
ஓராண்டும் நான்கு மாதமும் வாழ்ந்தான்.

### அரசனான ஆகீஸை தாவீது ஏமாற்றுகிறான்

8 தாவீதும் அவனது ஆட்களும் கெசூரியர்,
கெர்சியர் மற்றும் அமலேக்கியர் ஆகி
யோர்க்கு எதிராக படையெடுத்தனர். பழங்
காலம் முதல் இவர்கள் தேலீம் அருகிலுள்ள
சூர் முதல் எகிப்துவரை பரந்துள்ள நாட்டில்
வாழ்ந்தனர். அவர்களைத் தோற்கடித்து செல்
வங்களை அபகரித்தான்.
9 தாவீது அப்பகு
தியில் உள்ளவர்களையெல்லாம் தோற்கடித்
தான். அவர்களின் ஆடுகள், மாடுகள்,
கழுதைகள், ஒட்டகங்கள், ஆடைகள் போன்ற
வற்றைப் பறித்து ஆகீஸிடம் கொண்டு
வந்தான். யாரையும் அவன் உயிரோடு
விடவில்லை.
10 தாவீது இவ்வாறு பலமுறைச் செய்தான்.
ஆகீஸ் அவனிடம், ‘யாரோடு எங்கே
போரிட்டு இவற்றை எடுத்து வருகிறாய்?’
என்று கேட்டான். அதற்கு தாவீது, “நான்
யூதாவின் தென் பகுதியில் சண்டையிட்டு
வருகிறேன்” என்பான், அல்லது “நான்
யெராமியேலின் தென்பகுதியில் சண்டை
யிட்டேன்” என்பான், அல்லது “நான்
கேனியருடைய தென்பகுதியில் சண்டை
யிட்டேன்” என்பான்.
11 தாவீது காத்திலி
ருந்து உயிரோடு ஆண் பெண் யாரையும்
ஒருநாளும் கொண்டு வந்ததில்லை,
“யாரையாவது உயிரோடு கொண்டு வந்தால்
அவர்கள் உண்மையைச் சொல்லிவிடலாம்”
என்று நினைத்தான்.
பெலிஸ்தர்களின் நாட்டில் இருக்கும்வரை
தாவீது இப்படி செய்து வந்தான்.
12 ஆகீஸும்
தாவீதை நம்பினான். அவன் தனக்குள்ளே,
“இப்போது தாவீதின் சொந்த ஜனங்கள்
அவனை வெறுப்பார்கள். இஸ்ரவேலரும்
தாவீதை மிகவும் வெறுப்பார்கள். எனவே
தாவீது என்றும் எனக்கே சேவைச்
செய்வான்” என்று நினைத்துக்கொண்
டான்.

### பெலிஸ்தர் போருக்குத் தயாராகுதல்

28 பிறகு பெலிஸ்தர்கள் இஸ்ரவேலுக்கு
எதிராகப் போரிட கூடினார்கள்.
ஆகீஸ் தாவீதிடம், “இப்போது நீயும் உனது
ஆட்களும் என்னோடு இஸ்ரவேலுக்கு

எதிராகச் சண்டையிட வரவேண்டும் என்று
அறிவாயா?” என்று கேட்டான்.
2தாவீது, “உறுதியாக! என்னால் என்ன
செய்ய முடியும் என்பதை நீங்களே
பார்ப்பீர்கள்!” என்றான்.
ஆகீஸும், “நல்லது நான் உன்னை எனது
மெய்க்காப்பாளனாக நியமிக்கிறேன். என்றென்றும் என்னை நீ காப்பாற்றுவாய்” என்றான்.

### சவுலும் எந்தோரின் பெண்ணும்

3சாமுவேல் மரித்ததும், அனைத்து இஸ்ர
வேலரும் தங்கள் துக்கத்தை வெளிப்படுத்தி
னார்கள். சாமுவேலை அவனது தாய்
மண்ணான ராமாவில் அடக்கம் செய்திருந்
தனர். சவுல் மரித்தவர்களின் ஆவிகளோடு
பேசுகிறவர்களையும் ஆரூடம், குறி சொல்
கிறவர்களையும் நகரத்தில் இராதபடித்
துரத்தியிருந்தான்.
4பெலிஸ்தர் போருக்குத் தயாரானார்கள்.
அவர்கள் சூநேமிலே கூடி முகாமிட்டுத்
தங்கினார்கள்.சவுல் இஸ்ரவேலரையெல்லாம்
கூட்டி கில்போவாவில் முகாமிட்டான்.
5சவுல் பெலிஸ்தியரின் படையைப் பார்த்து
பயந்தான். அவன் மனதில் பயம் நிறைந்தது.
6சவுல் கர்த்தரிடம் ஜெபம் செய்தான்,
ஆனால் கர்த்தர் அவனுக்குப் பதில் சொல்ல
வில்லை. சவுலின் கனவிலும் தேவன்
பேசவில்லை. ஊரிம்* மூலமாகவோ,
தீர்க்கத்தரிசிகள் மூலமாகவோ தேவன் பதில்
சொல்லவில்லை. 7கடைசியாக சவுல் தனது
அதிகாரிகளிடம், “குறி பார்க்கிற ஒரு
பெண்ணை* அழைத்து வாருங்கள். போரின்
முடிவை அவள் மூலம் அறிந்துக்
கொள்வேன்” என்றான்.
அவனது அதிகாரிகளோ, “எந்தோரிலே
குறி பார்ப்பவள் ஒருவள் இருக்கிறாள்”
என்றனர்.
8சவுல் தன்னை மறைத்து மாறுவேடத்தில்
போனான். அன்று இரவு சவுல் இரண்டு
ஆட்களோடு அந்தப் பெண்ணைச் சந்தித்
தான். அவன் அவளிடம், “நீ ஒரு ஆவியைக்
கூப்பிடு. நான் விரும்பி பேர் சொல்லுகிற
வனின் ஆவியை நீ அழைக்கவேண்டும்”
என்றான்.
9ஆனால் அந்தப் பெண்ணோ சவுலிடம்,
“சவுல் என்ன செய்தான் என்று உனக்குத்
தெரியும்! அவன் குறி பார்ப்பவர்கள்
எல்லாரையும் இஸ்ரவேல் நாட்டை விட்டுத்
துரத்திவிட்டான். நீயும் என்னை சூழ்ச்சி யின்
மூலம் குற்றத்தில் அகப்படுத்தி என்
னைக் கொல்லப் பார்க்கிறாய்” என்றாள்.
10சவுல் கர்த்தருடைய நாமத்தில் ஆணை
யிட்டான். “இதற்காக நீ தண்டிக்
கப்படமாட்டாய். இது கர்த்தருடைய ஜீவன்
மீது ஆணை” என்றான்.
11அப்பெண்ணோ சவுலிடம், “உனக்காக
யாரை வரவழைக்க நீ விரும்புகிறாய்?”
என்று கேட்டாள்.
அதற்கு அவன், “சாமுவேலின் ஆவியை”
என்றான்.
12அப்படியே ஆயிற்று! அப்பெண் சாமு
வேலின் ஆவியைப் பார்த்து மகா சத்தமாய்
கூப்பிட்டு, “நீ சூழ்ச்சி செய்துவிட்டாய்! நீ
தானே சவுல்” என்று கேட்டாள்.
13அரசன் அவளிடம், “பயப்படாதே! நீ
என்ன பார்க்கிறாய்?” எனக் கேட்டான்.
“நான் ஆவியொன்று பூமிக்குள்ளிருந்து*
வெளியே வருவதைப் பார்க்கிறேன்” என்
றாள்.
14சவுல் அவளிடம், “அந்த ஆவி
யாரைப்போல் இருக்கிறது?” என்று கேட்
டான்.
அதற்கு அப்பெண், “அது சிறப்பான
சால்வையைப் போர்த்திக்கொண்டு மிக
வயதான தோற்றத்தில் தெரிகிறது” என்றாள்.
அப்போது சவுலுக்கு அது சாமுவேலின்
ஆவி என்று புரிந்தது. சவுல் குனிந்து
வணங்கினான், அவன் முகம் தரையைத்
தொட்டது. 15சாமுவேலின் ஆவி சவுலிடம்,
“என்னை ஏன் தொந்தரவு செய்கிறாய்?
எதற்காக எழுப்பினாய்?” என்று கேட்டது.
அதற்கு சவுல், “நான் ஆபத்தில் சிக்கி
இருக்கிறேன். பெலிஸ்தியர் எனக்கு எதி
ராகச் சண்டையிட வந்திருக்கிறார்கள்.
தேவன் என்னை கைவிட்டு விலகிவிட்டார்,
தேவன் இனி எனக்குப் பதில் சொல்வ
தில்லை. அவர் தீர்க்கதரிசியையோ, கன
வையோ பயன்படுத்தி பதில் சொல்லு
வதில்லை. அதனால் உங்களை அழைத்தேன்.
நான் செய்யவேண்டியது இன்னது என்று
நீங்கள் சொல்ல விரும்புகிறேன்!” என்றான்.
16சாமுவேலின் ஆவி, “கர்த்தர் உன்னை
விட்டு விலகிவிட்டார். அவர் இப்போது
உனக்கு அருகிலுள்ள தாவீதோடு இருக்
கிறார். அதற்கு என்னை ஏன் தொந்தரவு
செய்கிறாய்? 17கர்த்தர் என்ன செய்ய
இருக்கிறாரோ அதையே என் மூலம் ஏற்
கனவே கூறிவிட்டார்! கர்த்தர் சொன்னதை
இப்போது நிறைவேற்றுகிறார். உனது
கைகளிலிருந்து கர்த்தர் அரசைக் கிழித்
தெடுத்து, உனக்கு அருகிலுள்ள தாவீதுக்குக்
கொடுத்திருக்கிறார். 18நீ கர்த்தருக்குக் கீழ்ப்
படியவில்லை. அமலேக்கியரை நீ முழுமை
யாக அழிக்கவில்லை. கர்த்தர் அவர்கள்
மீது கோபமுடையவராக இருக்கிறார் என்ப
தைக் காட்டவில்லை. அதனால் இன்று
கர்த்தர் உனக்கு இவ்வாறு செய்கிறார்.

---

**ஊரிம்** இது ஆசாரியர்கள் தேவனிடமிருந்து பதில் பெறுவதற்காக பயன்படுத்திய கற்கள். எண். 27:20-22.

**குறி சொல்கின்ற ஒரு பெண்** மரித்துப்போன உயிர்களு டன் பேசுகிறவள்.

**பூமி** அல்லது, “சீயோல், மரணத்தின் இடம்.”

[19]கர்த்தர் உன்னையும், இஸ்ரவேல் படையையும் பெலிஸ்தர்கள் மூலமாகத் தோற்கடிப்பார். நாளை நீயும், உனது மகன்களும் இங்கே என்னோடு இருப்பீர்கள்!” என்றது.
[20]சவுல் உடனே தரையில் விழுந்து கிடந்தான். சாமுவேல் சொன்னதைக் கேட்டு மிகவும் பயந்தான். அன்று சவுல் இரவும் பகலும் உண்ணாமல் இருந்ததால் மிகவும் பலவீனமாக இருந்தான்.
[21]அந்தப் பெண் சவுலிடம் வந்து, உண்மையில் அவன் பயப்படுவதைக் கவனித்தாள். அவள், “நான் உங்கள் வேலைக்காரி, நான் உங்களுக்குக் கீழ்ப்படிந்து இருக்கிறேன், என் உயிரைப் பணயம் வைத்து நீங்கள் சொன்னபடி செய்தேன்.
[22]இப்போது தயவுசெய்து எனக்குச் செவிகொடுங்கள். உங்களுக்குச் சிறிது உணவு கொடுக்க அனுமதியுங்கள், நீங்கள் அதனை உண்ணவேண்டும், பின் உங்கள் வழியில் செல்லப் போதுமான பலம் கிடைக்கும்” என்றாள்.
[23]ஆனால் சவுல், “நான் உண்ணமாட்டேன்” என மறுத்துவிட்டான். சவுலின் அதிகாரிகளும் அந்தப் பெண்ணோடு சேர்ந்து கெஞ்சினார்கள். இறுதியில் அவள் சொன்னதைக் கேட்டான். தரையிலிருந்து எழுந்து படுக்கையில் உட்கார்ந்தான்.
[24]அப்பெண்ணின் வீட்டில் கொழுத்த கன்றுகுட்டி இருந்தது. அவள் அதை வேகமாகக் கொன்று சமைத்தாள். மாவைப் பிசைந்து, புளிப்பு இல்லாத அப்பம் சுட்டாள்.
[25]சவுல் மற்றும் அவனது அதிகாரிகளின் முன்னர் அவள் அந்த உணவை வைத்தாள். அவர்கள் அதை புசித்தப்பின், அன்று இரவே புறப்பட்டுச் சென்றார்கள்.

### “தாவீது எங்களோடு வரக்கூடாது!”

29 ஆப்பெக்கில் பெலிஸ்திய வீரர்கள் கூடினார்கள். இஸ்ரவேலர் யெஸ்ரயேலிலிருக்கிற நீரூற்றுக்கருகில் முகாமிட்டனர்.
[2]பெலிஸ்திய அரசர்கள் தங்கள் 100 பேர் குழுவோடும், 1,000 பேர் குழுவோடும் அணிவகுத்து வந்தனர். தாவீதும் அவனது ஆட்களும் ஆகீஸோடு கடைசியில் சேர்ந்து வந்தனர்.
[3]பெலிஸ்திய தலைவர்கள், “இந்த எபிரெயர் இங்கே என்ன செய்துக் கொண்டிருக்கிறார்கள்?” என்று கேட்டனர்.

அதற்கு ஆகீஸ் பெலிஸ்திய தலைவரிடம், “இவன் தாவீது, இவன் முன்பு சவுலின் அதிகாரிகளுள் ஒருவனாக இருந்தான். என்னிடம் இப்போது நீண்ட காலம் இருக்கிறான். அவன் சவுலை விட்டு என்னிடம் வந்து சேர்ந்த நாள் முதல் இன்றுவரை அவனிடம் எந்தக் குறையும் காணவில்லை” என்றான்.
[4]ஆனால் பெலிஸ்திய தலைவர்கள் ஆகீஸின் மீது கோபங்கொண்டு, “தாவீதைத் திரும்ப அனுப்பிவிடு. நீ கொடுத்த நகரத்திற்கே அவன் திரும்பிப் போகட்டும். அவன் நம்மோடு யுத்தத்துக்கு வரக்கூடாது. அவன் இங்கே இருப்பதும், எதிரி நமது முகாமிற்குள் இருப்பதும் ஒன்றே. அவன் நமது வீரர்களைக் கொல்வதன் மூலம் அவனது அரசனாகிய சவுலுக்கு ஆதரவாகி விடுவான்.
[5]தாவீதைப்பற்றி ஏற்கனவே இஸ்ரவேல் ஜனங்கள் ஆடிப்பாடிக் கொண்டிருக்கிறார்கள்.

“சவுல் ஆயிரக்கணக்கான
பகைவர்களைக் கொன்றான்.
ஆனால் தாவீதோ
பத்தாயிரக்கணக்கான
பகைவர்களைக்
கொன்றிருக்கிறான்!” என்றனர்.

[6]எனவே ஆகீஸ் தாவீதை அழைத்து, “கர்த்தருடைய ஜீவன்மேல் ஆணையாக, நீ எனக்கு உண்மையாக இருக்கிறாய். நீ எனது படையில் இருப்பது எனக்கு மிகவும் பிடித்தமான ஒன்று. என்னிடம் நீ சேர்ந்த நாள் முதலாக உன்னிடம் எந்தக் குற்றமும் காணவில்லை. ஆனால் பெலிஸ்திய படைத்தலைவர்கள் உன்னை அங்கீகரிக்கவில்லை.
[7]என்றாலும் சமாதானமாகத் திரும்பிப் போ. பெலிஸ்திய அரசர்களுக்கு எதிராக எதுவும் செய்யாமல் இரு” என்றான்.
[8]அதற்கு தாவீது, “நான் என்ன குற்றம் செய்தேன்? நான் உங்களிடம் சேர்ந்த நாள்முதல், இன்றுவரை என்னிடம் என்ன தவறு கண்டீர்கள்? என் அரசனுக்கு எதிரான பகைவர்களோடுச் சண்டையிட ஏன் என்னை அனுமதிக்கவில்லை?” என்று கேட்டான்.
[9]ஆகீஸோ, “நான் உன்னை விரும்புகிறேன், அது உனக்குத் தெரியும். நீ தேவனிடமிருந்து வந்த தூதுவனைப் போன்றவன். ஆனால் பெலிஸ்திய அரசர்களோ, ‘நம்மோடு தாவீது போருக்கு வரக்கூடாது’ என்கின்றனர்.
[10]அதிகாலையில், நீயும் உனது ஆட்களும் திரும்பி, நான் கொடுத்த நகரத்திற்கே போங்கள். தலைவர்கள் சொன்னதுபோல் கெட்டக் காரியங்களில் கவனம் செலுத்தாதீர்கள், நீ நல்லவன். எனவே, சூரியன் உதிக்கும் முன் புறப்பட்டுப் போ” என்றான்.
[11]ஆகவே, தாவீதும் அவனது ஆட்களும் அதிகாலையில் எழுந்து, பெலிஸ்திய நகரத்திற்குத் திரும்பினார்கள். பெலிஸ்தர்களோ யெஸ்ரயேலுக்குச் சென்றனர்.

### சிக்லாக் மீது அமலேக்கிய தாக்குதல்

30 மூன்றாவது நாள், தாவீதும் அவனது ஆட்களும் சிக்லாகை அடைந்தனர். அங்கே அமலேக்கியர்கள் அந்நகரைத்

*தாக்குவதைக் கண்டனர். அவர்கள் நெகேவ்
பகுதியில் நுழைந்து சிக்லாகைத் தாக்கித்
தீ மூட்டினர். [2]சிக்லாகில் உள்ள பெண்
களைச் சிறைப்பிடித்தனர். இளைஞர் முதல்
முதியோர்வரை அனைவரையும் பிடித்தனர்.
ஆனால் யாரையும் கொல்லவில்லை.
அவர்களைப் பிடித்துக் கொண்டுச் சென்று
விட்டார்கள்.*

*[3]தாவீதும் அவனது ஆட்களும் சிக்லாகை
அடைந்தபோது, அது எரிந்து கொண்டி
ருந்தது. அவர்களின் மனைவியர், ஆண்
பிள்ளைகள், பெண் பிள்ளைகள் அனை
வரும் அமலேக்கியர்களால் சிறைகொண்டு
போகப்பட்டனர். [4]அவர்கள் இதனைக் கண்டு
கதறி அழுதனர். மீறி, அழுது அழ முடியாத
அளவிற்குப் பலவீனம் அடைந்தனர்.
[5]அமலேக்கியர்கள் தாவீதின் இரு மனைவிய
ரான யெஸ்ரேலின் அகினோவாளையும்,
கர்மேலிலுள்ள நாபாலின் விதவையான
அபிகாயீலையும் பிடித்துச் சென்றி
ருந்தார்கள்.*

*[6]படையில் உள்ள அனைவரும் தமது
மகன்களையும் மகள்களையும் பறிகொடுத்த
தால், கடுங்கோபமும் வருத்தமும் கொண்ட
னர். அவர்கள் தாவீதைக் கல்லெறிந்து
கொல்ல எண்ணினார்கள். இந்தச் செய்தி
தாவீதைத் தளரச்செய்தது. எனினும் தேவ
னாகிய கர்த்தருக்குள் தன்னைத் திடப்படுத்தி
னான். [7]தாவீது ஆசாரியனும் அகி
மெலேக்கின் மகனுமான அபியத்தாரிடம்,
“ஏபோத்தைக் கொண்டு வா” என்றான்.
அபியத்தார் அவனிடம் ஏபோத்தைக்
கொண்டு போனான்.*

*[8]பிறகு தாவீது கர்த்தரிடம் ஜெபம்
செய்தான். “எங்கள் குடும்பத்தைப் பிடித்துக்
கொண்டு போனவர்களைத் துரத்தட்டுமா?
அவர்களைப் பிடிப்போமா?” என்று
கேட்டான்.*

*அதற்கு கர்த்தர், “அவர்களைத் துரத்து.
நீ பிடிப்பாய். நீ உங்கள் குடும்பங்களைக்
காப்பாற்றுவாய்” என்றார்.*

### எகிப்திய அடிமையை தாவீதும் அவனது ஆட்களும் காண்கிறார்கள்

*[9-10]தாவீது தன்னோடு 600 வீரர்களை
அழைத்துக் கொண்டுப் பேசோர் ஆற்றருகே
வந்தான், அங்கு 200 பேர்த் தங்கிவிட்டனர்,
காரணம் அவர்கள் மிகவும் பலவீனமாக
இருந்தனர். அமலேக்கியரைத் துரத்திக்
கொண்டு, தாவீது 400 பேரோடு கிளம்
பினான்.*

*[11]வயலில் ஒரு எகிப்திய அடிமையை
தாவீதின் ஆட்கள் கண்டனர், அவனை
தாவீதிடம் அழைத்து வந்தனர். அவனுக்கு
உண்ண உணவும் குடிக்க தண்ணீரும்
கொடுத்தனர். [12]அவர்கள் அவனுக்கு
அத்திப்பழ அடையின் ஒரு துண்டையும்
வற்றலான இரண்டு திராட்சைக் குலை
களையும் தின்ன கொடுத்தனர். அதை
உண்டு அவன் சிறிது பெலன் பெற்றான்.
அவன் மூன்று நாட்கள் இரவும் பகலும்
உண்ணாமல் இருந்தபடியால் மிகவும்
பலவீனமாக இருந்தான்.*

*[13]தாவீது அந்த அடிமையிடம், “உனது
எஜமானன் யார்? நீ எங்கிருந்து வருகி
றாய்?” எனக்கேட்டான்.*

*அதற்கு அவன், “நான் ஒரு எகிப்தியன்,
நான் அமலேக்கியனின் அடிமை. மூன்று
நாட்களுக்கு முன் நான் சுகமில்லாமல்
போனதால் என்னை இங்கேயே விட்டு
விட்டுப் போய்விட்டனர். [14]நாங்கள் கிரேத்
தியர்கள்* வாழும் நெகேவ் பகுதியைத்
தாக்கினோம். யூதா நாட்டையும் காலேப்
பகுதியையும் தாக்கினோம். சிக்லாகையும்
தீ மூட்டி எரித்தோம்” என்று பதிலுரைத்
தான்.*

*[15]தாவீது அவனிடம், “எங்கள் குடும்பத்
தைப் பிடித்துப் போனவர்கள் இருக்கும்
இடத்திற்கு எங்களை அழைத்துப்
போவாயா?” எனக்கேட்டான்.*

*அதற்கு அந்த எகிப்தியன், “தேவன்
முன்னிலையில் சிறப்பு ஆணை செய்து
தந்தால் நான் உங்களுக்கு உதவுவேன்,
அதன்படி நீங்கள் என்னைக் கொல்லக்
கூடாது. அதோடு என் எஜமானனிடமும்
என்னைத் திரும்ப அனுப்பக்கூடாது” என்
றான்.*

### தாவீது அமலேக்கியரைத் தோற்கடிக்கிறான்

*[16]அந்த எகிப்தியன் அமலேக்கியர்
இருக்கும் இடத்திற்கு தாவீதை அழைத்துப்
போனான். அங்கே அவர்கள் தரையில்
புரண்டு, குடித்து வெறித்துகொண்டும்,
சாப்பிட்டுக் கொண்டும் இருந்தனர்.
பெலிஸ்தர்களின் நகரங்களில் இருந்தும்
யூதாவிலிருந்தும் கொண்டுவந்த பொருட்
களால் மகிழ்ச்சியோடு அனுபவித்துக்
கொண்டிருந்தனர். [17]தாவீது அவர்களைத்
தாக்கிக் கொன்றான். அவர்கள் காலைமுதல்
மறுநாள் மாலைவரை சண்டையிட்டனர்
அமலேக்கியரில் 400 இளைஞர்கள் மட்டும்
ஒட்டகத்தின் மூலம் தப்பித்துப் போனார்கள்,
மற்றவர் எவரும் பிழைக்கவில்லை.*

*[18]அமலேக்கியர்கள் கைப்பற்றிய அனைத்
தையும் தாவீது திரும்பப் பெற்றான். இரண்டு
மனைவியரையும் பெற்றுக்கொண்டான்,
[19]எதுவும் தவறவில்லை. சிறுவர்களும்,
முதியவர்களும் கிடைத்தனர். மகன்களையும்,
மகள்களையும் திரும்பப் பெற்றனர். விலை
மதிப்புள்ள பொருட்களையும் பெற்றனர்.
[20]அனைத்து ஆடுகளையும், வெள்ளாடுகளை*

---

**கிரேத்தியர்கள்** *அல்லது “கிரேத்திலுள்ள ஜனங்கள்.” இவர்கள் சொல்லப்போனால் பெலிஸ்தியர்களே, ஆனால் தாவீதின் சில சிறந்த வீரர்கள் கிரேத்தியர்களே.*

யும் தாவீதுக் கைப்பற்றினான். அவைகளை
தங்களுக்கு முன்னால் ஓட்டினார்கள். தாவீ
தின் ஆட்கள், “அவை தாவீதின் பரிசுகள்”
என்றனர்.

### அனைவருக்கும் சம பங்கீடு

21தனது 200 ஆட்கள் இருக்கும் பேசோர்
ஆற்றங்கரைக்கு தாவீது வந்துச் சேர்ந்தான்.
அங்கு களைப்பாகவும், பலவீனமாகவும்
இருந்தவர்கள் தாவீதைக் கண்டதும் மகிழ்ச்சி
யோடு ஆரவாரம் செய்தனர். 22தாவீதைப்
பின் தொடர்ந்தவர்களில் சிலர் கெட்டவர்
களாகவும், குழப்பம் செய்பவர்களாகவும்
இருந்தனர். அவர்கள், “இந்த 200 பேரும்
எங்களோடு வரவில்லை. எனவே நாங்கள்
கைப்பற்றியவற்றில் இவர்களுக்குப் பங்கு
கொடுக்க மாட்டோம். இவர்களுக்கு இவர்க
ளது மனைவி ஜனங்கள் மட்டுமே உரியவரா
வார்கள்” என்றனர்.
23தாவீதோ, “அவ்வாறில்லை, என்
சகோதரரே அப்படிச் செய்யக்கூடாது! நாம்
மீட்டதை, கர்த்தர் நமக்குக் கொடுத்ததைப்
பாருங்கள்! நம்மை தாக்கியவர்களை கர்த்தர்
தான் தோல்வியுறச் செய்தார்! 24உங்கள்
பேச்சுக்கு யாரும் சம்மதம் தெரிவிக்க
முடியாது! இங்கே தங்கியவர்களாயினும்
சரி, சண்டைக்கு போனவர்களாயினும் சரி,
அனைவருக்கும் சமபங்கு உண்டு” என்று
பதில் சொன்னான். 25தாவீது இதனை இஸ்ர
வேலருக்கு ஒரு விதியாக்கினான். இது
இன்றும் தொடர்ந்து வருகிறது.
26தாவீது சிக்லாகை வந்தடைந்தான்.
யூதாவின் தலைவர்களுக்கும் அவனது நண்
பர்களுக்கும் அமலேக்கியரிடம் அபகரித்தப்
பொருட்களில் சிலவற்றை அன்பளிப்பாகக்
கொடுத்தான். அவன், “கர்த்தருடைய பகை
வரிடமிருந்து வென்று எடுத்தப் பொருட்
களை உங்களுக்குத் தருகிறோம்” என்றான்.
27அவன் மேலும் பெத்தேல் நெகெவி
லுள்ள ராமோத், யாத்தீர், 28ஆரோவேர்,
சிப்மோத், எஸ்கேமோவா, 29ராக்கால்,
யெராமித்தீயரின் கேனிய நகரங்கள், 30ஓர்மா,
கொராசீன், ஆற்றாகில், 31எப்ரோன் ஆகிய
நகரங்களில் உள்ளவர்களுக்கும் தாவீது தன்
ஆட்களுடன் எங்கெங்கே தங்கினானோ,
அங்கே உள்ள தலைவர்களுக்கும் அன்ப
ளிப்பைக் கொடுத்து அனுப்பினான்.

### சவுலின் மரணம்

31 பெலிஸ்தியர் இஸ்ரவேலுக்கு எதி
ராகப் போரிட்டனர், இஸ்ரவேலர்
தோற்று ஓடினார்கள். கில்போவா மலைப்
பகுதியில் பல இஸ்ரவேலர் கொல்லப்
பட்டனர். 2சவுலுக்கும் அவனது மகன்க
ளுக்கும் எதிராகக் கடுமையாய் பெலிஸ்தியர்
போரிட்டனர். அவர்கள் சவுலின் மகன்
களான யோனத்தான், அபினதாப், மற்றும்
மல்கிசூகா ஆகியோரைக் கொன்றனர்.
3சவுலுக்கு எதிராக போரானது மேலும்
மேலும் வலுத்தது. வில் வீரர்கள் சவுலின்
மீது அம்பு எய்ததால், சவுல் பயங்கரமாக
காயப்பட்டான். 4தன்னோடு ஆயுதம் தூக்கி
வருபவனிடம் சவுல், “உனது பட்டயத்தை
எடுத்து என்னைக் கொன்று போடு.
அதனால் அந்நியர் என்னை காயப்படுத்தி
கேலிச் செய்யாமல் இருப்பார்கள்” என்றான்.
அவன் பயந்து அவ்வாறு செய்ய மறுத்து
விட்டான்.
எனவே சவுல் தனது வாளை உருவி
தற்கொலை செய்து கொண்டான். 5சவுல்
மரித்துப்போனதை, ஆயுதங்களை எடுத்து
வரும் அவனது உதவியாளன் அறிந்து,
தனது வாளால் தானும் மடிந்தான். 6எனவே
சவுலும் அவனது மூன்று மகன்களும்,
சவுலின் ஆயுதம் தாங்கும் வீரனும்
அனைத்துப் படைவீரர்களும் அதே நாளில்
மரித்தார்கள்.

### சவுலின் மரணத்தால் பெலிஸ்தியர் மகிழ்ச்சியடைகின்றனர்

7பள்ளத்தாக்கின் மறு பக்கத்தில் இருந்த
இஸ்ரவேலர் தங்கள் சேனை பயந்து
ஓடுவதைக் கண்டனர். சவுலும் அவனது
மகன்களும் மரித்துப்போனதை அறிந்தனர்.
எனவே அவர்கள் தங்கள் நகரங்களை
விட்டு ஓடிப்போனார்கள். பெலிஸ்தியர் அந்ந
கரங்களை ஆக்கிரமித்துக் கொண்டனர்.
8மறுநாள், பெலிஸ்தியர் பிணங்களின்
மேலுள்ள பொருட்களை கவரச் சென்றனர்.
கில்போவா மலையில் சவுலும், அவனது
மூன்று மகன்களும் மரித்துக் கிடப்பதைக்
கண்டனர். 9அவர்கள் சவுலின் தலையை
வெட்டி, அவனது ஆயுதங்களையும் எடுத்துக்
கொண்டனர். அவர்கள் இச்செய்தியைப்
பெலிஸ்தருக்கும், தங்கள் விக்கிரகங்களின்
ஆலயத்திற்கும் எடுத்துச் சென்றனர்.
10சவுலின் ஆயுதங்களை அவர்கள் அஸ்த
ரோத் கோவிலில் வைத்தனர். சவுலின்
உடலை அவர்கள் பெத்ஸானின் சுவரில்
தொங்கவிட்டனர்.
11இது குறித்து யாபேஸ் கீலேயாத்
நகரத்தார் கேள்விப்பட்டனர்! 12எனவே,
எல்லா வீரர்களும் பெத்ஸானுக்கு இரவு
முழுவதும் பயணம் செய்து, சவுலின்
உடலையும், அவனது மகன்களின் பிணங்
களையும் எடுத்து வந்தனர், அவற்றை
யாபேசில் எரித்தனர். 13பின்பு சவுல் மற்றும்
அவனது மகன்களின் எலும்புகளை எடுத்து
யாபேசில் பெரிய மரத்தடியில் புதைத்தனர்.
யாபேஸின் குடிகள் 7 நாட்களுக்கு உணவு
உண்ணாமல் துக்கம் கொண்டாடினர்.

# சாமுவேலின் இரண்டாம் புத்தகம்

### சவுல் மரணத்தை தாவீது அறிதல்

1 அமலேக்கியரை முறியடித்தபின் தாவீது
சிக்லாகிற்குத் திரும்பிச் சென்றான். சவுல்
கொல்லப்பட்டதைத் தொடர்ந்து இது
நடந்தது. அங்கே தாவீது இரண்டு நாட்கள்
தங்கினான். 2 பின்பு, மூன்றாம் நாளில், ஒரு
இளம் வீரன் சிக்லாகிற்கு வந்தான். அவன்
சவுலின் முகாமிலிருந்து வந்திருந்தான்.
அம்மனிதனின் ஆடைகள் கிழிந்திருந்தன,
அவனுடைய தலையில் புழுதி
படிந்திருந்தது.* அவன் தாவீதிடம் வந்து
நிலத்தில் முகங்குப்புற விழுந்து
வணங்கினான்.
3 தாவீது அம்மனிதனைப் பார்த்து, "நீ
எங்கிருந்து வருகிறாய்?" என்று கேட்டான்.
அம்மனிதன் தாவீதிடம், "நான் இஸ்ர
வேலரின் முகாமிலிருந்து வருகிறேன்"
என்று பதிலுரைத்தான்.
4 தாவீது அம்மனிதனை நோக்கி, "யார்
போரில் வெற்றியடைந்தார் என்பதைத்
தயவுசெய்து கூறு" என்றான்.
அம்மனிதன், "நம் வீரர்கள் போரிலிருந்து
தப்பி ஓடினார்கள். பலர் யுத்தத்தில் அகப்
பட்டு மடிந்தனர். சவுலும் அவனது மகன்
யோனத்தானுங்கூட மரித்துவிட்டனர்" என்று
பதில் கூறினான்.
5 தாவீது இளைஞனாகிய அந்த வீரனிடம்,
"சவுலும் யோனத்தானும் மரித்ததைப்பற்றி
உனக்கு எப்படி தெரியும்?" என்று கேட்
டான்.
6 அந்த இளம் வீரன், "நான் கில்போவா
மலைக்குப் போயிருந்தேன். சவுல் தனது
ஈட்டியில் சொருகிச் சாய்ந்துக்கொண்
டிருப்பதைப் பார்த்தேன். பெலிஸ்தியரின்
தேர்களும் குதிரை வீரர்களும் சவுலுக்கு
அருகில் நெருங்கிக்கொண்டிருந்தனர். 7 சவுல்
திரும்பி என்னைப் பார்த்து அழைத்து,
8 என்னை யாரென்று கேட்டார். நான் ஒரு
அமலேக்கியன் என்பதை அவருக்குக்
கூறினேன். 9 அப்போது சவுல், 'தயவுசெய்து
என்னைக் கொன்றுவிடு. நான் மிகவும்
காயப்பட்டு மரிக்கும் தருவாயில் உள்ளேன்'
என்றார். 10 அவர் அதிகமாகக் காயப்பட்
டிருந்ததால், இனி உயிர் பிழைக்கமாட்டார்
என்பதை நான் மிக நன்கு அறிந்தேன்.
எனவே நான் அவரைக் கொன்றேன். பின்பு
அவரது தலையிலிருந்த கிரீடத்தையும்
புயங்களில் இருந்த கடகத்தையும் கழற்றி
னேன். அவற்றை என் ஆண்டவனாகிய
உங்களிடம் கொண்டுவந்துள்ளேன்" என்
றான்.
11 அப்போது தாவீது தன் துக்கமிகுதியால்
ஆடைகளைக் கிழித்தான். தாவீதோடிருந்த
மனிதர்களும் அவ்வாறே செய்தார்கள்.
12 அவர்கள் வருத்தமுற்று அழுது மாலை
வரைக்கும் ஏதும் உண்ணவில்லை. சவுலும்
அவனது மகன் யோனத்தானும் மரித்துப்
போனதால் அவர்கள் அழுதார்கள். தாவீதும்
அவனது மனிதர்களும் கொல்லப்பட்டிருந்த
கர்த்தருடைய ஜனங்களுக்காகவும் இஸ்ர
வேலருக்காகவும் அழுதனர். சவுலும்,
யோனத்தானும், பல இஸ்ரவேலரும் யுத்
தத்தில் கொல்லப்பட்டதற்காக அவர்கள்
அழுதனர்.

### அமலேக்கியனைக் கொல்ல தாவீது கட்டளை

13 சவுலின் மரணத்தைப்பற்றி கூறிய இளம்
வீரனிடம் தாவீது பேசினான். தாவீது, "நீ
எந்த இடத்தைச் சேர்ந்தவன்?" என்று
கேட்டான்.
அந்த இளம் வீரன், "நான் ஒரு அந்நிய
னின் மகன். நான் ஒரு அமலேக்கியன்"
என்றான்.
14 தாவீது அந்த இளம் வீரனிடம், "கர்த்தர்
தேர்ந்தெடுத்த, அரசனைக் கொல்வதற்கு நீ
ஏன் அச்சம் கொள்ளவில்லை?" என்றான்.
15-16 பின்பு தாவீது அமலேக்கியனை
நோக்கி, "உனது மரணத்திற்கு நீயே கார
ணம். கர்த்தர் தேர்ந்தெடுத்த அரசனைக்
கொன்றாய் என்று நீயே கூறினாய். உனது
வார்த்தைகளே நீ குற்றவாளி என்று
தீர்க்கின்றன" என்று கூறினான். பின்பு
தாவீது ஒரு இளம் வேலையாளை அழைத்து
அமலேக்கியனைக் கொல்லுமாறு கூறினான்.
எனவே அந்த இஸ்ரவேல் இளைஞன்
அமலேக்கியனைக் கொன்றான்.

### சவுல் யோனத்தான் பற்றிய தாவீதின் சோககீதம்

17 சவுலையும் அவனது மகன் யோனத்தா
னையும் குறித்து துயரம் மிகுந்த பாடலொன்
றைத் தாவீது பாடினான். 18 அப்பாடலை

---

**ஆடைகள் ... புழுதி படிந்திருந்தது** அம்மனிதன் பெருஞ்சோகமாய் இருந்தான் என்பதைக் காட்டும்.

யூதா ஜனங்களுக்குக் கற்பிக்குமாறு தாவீது தனது ஆட்களிடம் கூறினான். அப்பாடல் "வில்" எனப்பட்டது. அது யாசேரின் புத்தகத்தில்* உள்ளது.

19 "இஸ்ரவேலே, உன் அழகு
உன் மேடுகளில் அழிக்கப்பட்டது.
ஓ, அந்த வீரர்கள் எப்படி வீழ்ந்தனர்!
20 அச்செய்தியைக் காத்* நகரில்
கூறாதே,
அஸ்கலோனின்* தெருக்களில்
அதை அறிவிக்காதே.
அதனால் பெலிஸ்திய நகரங்கள்
களிப்படையும்!
அந்த அந்நியர்கள் மகிழக்கூடும்.
21 மழையோ பனியோ கில்போவா
மலைகளில் பெய்யாதென
நம்புகிறேன்.
அவ்வயல்களினின்று பயிர்களின்
காணிக்கை இனி வராதென
நான் நம்புகிறேன்.
வீரர்களின் கேடயங்கள் அங்குத்
துருப்பிடித்தன
சவுலின் கேடகத்தில் எண்ணெய்
பூசப்படவில்லை.
22 வில்லால் பல பகைவரைக்
கொன்றான் யோனத்தான்.
வாளால் அவ்வாறே வெற்றி
கண்டான், சவுல்
இவர்கள் மடிந்த பல வீரரின்
இரத்தத்தைச் சிந்த வைத்தனர்!
வலியோரில் வலிய வீரரையும்
துண்டுத் துண்டாக வெட்டினர்.
23 சவுலும் யோனத்தானும்
தம் வாழ்வில் ஒருவருக்கொருவர்
அன்பு காட்டி மகிழ்ந்தனர்.
மரணமும் அவர்களைப்
பிரிக்கவில்லை!
அவர்கள் கழுகுகளிலும்
வேகமானவர்கள்
அவர்கள் சிங்கங்களிலும் பலசாலிகள்.

24 இஸ்ரவேலின் குமாரத்திகளே,
சவுலுக்காக அழுங்கள்!
இரத்தாம்பர ஆடைகளை
சவுல் உனக்குத் தந்தான்.
இன்னும் ஆடைகளில் பொன்
வேலைப்பாடுகள் செய்வித்தான்!
25 போரில் பலசாலிகள் வீழ்ந்தனர்.
கில்போவா மலையில்
யோனத்தான் மடிந்தான்.
26 சகோதரன் யோனத்தானே,
மறைந்தாய், வெகுவாய்
வருந்துகிறேன்.
உனது அன்பு பெரு மகிழ்வைத்
தந்தது,
மங்கையரின் நேசத்தைக் காட்டிலும்
மாமேன்மையானது உனது அன்பு
27 போரில் பலசாலிகள் வீழ்ந்தனர்,
போர்க்கருவி அனைத்தும்
அழிந்தனவே."

### தாவீது தனது ஆட்களுடன் எப்ரோனுக்குச் செல்வது

2 பின்பு தாவீது கர்த்தருடைய அறிவுரை
யைக் கேட்டான். தாவீது, "நான்
யூதாவின் நகரங்களுள் ஏதேனும் ஒரு
நகரத்திற்குப் போகலாமா?" என்று
கேட்டான்.

கர்த்தர் தாவீதிடம், "போகலாம்" என்றார்.

தாவீது, "எங்கு நான் போகட்டும்?" என்று கேட்டான்.

கர்த்தர், "எப்ரோனுக்கு" என்று பதிலளித்தார்.

2 எனவே தாவீதும் அவனது இரண்டு
மனைவியரும் எப்ரோனுக்குச் சென்றனர்.
(யெஸ்ரயேல் ஊரானான அகினோவாள்
ஒரு மனைவி. மற்றொருத்தி கர்மேல்
நாபாலின் விதவையாகிய அபிகாயில்.)
3 தாவீது தம் ஆட்களையும் அவர்களின்
குடும்பத்தாரையும் தம்மோடு அழைத்துச்
சென்றான். அவர்கள் எல்லோரும் எப்ரோனிலும் அருகிலுள்ள ஊர்களிலும் குடியேறினார்கள்.

### தாவீது யாபேசின் ஜனங்களுக்கு நன்றி கூறுவது

4 யூதாவின் மனிதர்கள் எப்ரோனுக்கு
வந்து தாவீதை யூதாவின் அரசனாக அபி
ஷேகம் செய்தார்கள். அவர்கள் தாவீதிடம்,
"கீலேயாத்திலுள்ள யாபேசின் மனிதர்கள்
சவுலைப் புதைத்தார்கள்" என்றனர்.
5 கீலேயாத்திலுள்ள யாபேசின் மனிதர்களி
டம் தாவீது தூதுவர்களை அனுப்பினான்.
அந்த ஆட்கள் யாபேசின் மனிதர்களை
நோக்கி, "சவுலின் சாம்பலைப்* புதைத்து
உங்கள் ஆண்டவனாகிய சவுலுக்கு இரக்கம்
காட்டியதால் கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்
பாராக. 6 கர்த்தர் உங்களிடம் இரக்கமாகவும்
உண்மையாகவும் இருப்பாராக. நானும்
உங்களுக்கு இரக்கம் காட்டுவேன். 7 இப்
போது பலமும் தைரியமும் உடையவர்
களாய் இருங்கள். உங்கள் ஆண்டவனாகிய
சவுல் மரித்துவிட்டார். ஆனால் யூதா கோத்
திரத்தினர் அவர்களுடைய அரசனாக
என்னை அபிஷேகம் செய்திருக்கிறார்கள்"

---

**யாசேரின் புத்தகம்** இது இஸ்ரவேலின் போர்கள் பற்றிய பழங்காலத்து புத்தகம்.

**காத்** பெலிஸ்தியர்கள் தலைநகரம்.

**அஸ்கலோன்** இது பெலிஸ்தியர்கள் ஐந்து நகரங்களில் ஒன்று.

**சவுலின் சாம்பல்** சவுல் மற்றும் யோனத்தான் ஆகியோரின் உடல்கள் எரிக்கப்பட்டது. பார்க்க 1 சாமு. 31:12.

என்று தாவீது செய்தியைக் கூறியனுப்
பினான்.

### இஸ்போசேத் அரசனாவது

8சவுலின் படைக்கு நேர் என்பவனின்
மகனாகிய அப்னேர் தளபதியாக இருந்தான்.
சவுலின் மகனாகிய இஸ்போசேத்தை அப்
னேர் மகனாயீமுக்கு அழைத்துச்சென்று
அவனை 9கீலேயாத், அஷூரியர், யெஸ்ர
யேல், எப்பிராயீம், பென்யமீன், இஸ்ரவேல்
எல்லாவற்றிற்கும் அரசனாக்கினான்.
10இஸ்போசேத் சவுலின் மகன். அவன்
இஸ்ரவேலை ஆளத் தொடங்கியபோது அவ
னுக்கு நாற்பது வயது, அவன் இரண்டு
ஆண்டுகள் அரசாண்டான். ஆனால் யூதா
கோத்திரத்தார் தாவீதைப் பின்பற்றினர்.
11தாவீதும் எப்ரோனில் அரசனாக இருந்
தான். தாவீது 7 ஆண்டுகள் 6 மாதங்கள்
யூதா கோத்திரத்தை அரசாண்டான்.

### ஆபத்தான போட்டி

12நேரின் மகனாகிய அப்னேரும் சவுலின்
மகனாகிய இஸ்போசேத்தின் அதிகாரிகளும்
மகனாயீமைவிட்டுக் கிபியோனுக்குச் சென்
றனர். 13செருயாவின் மகனாகிய யோவாபும்,
தாவீதின் அதிகாரிகளும் சேர்ந்து கிபி
யோனுக்குச் சென்றனர். கிபியோனின்
குளத்தருகே அவர்கள் அப்னேரையும்
இஸ்போசேத்தின் அதிகாரிகளையும் சந்தித்
தனர். அப்னேரின் கூட்டத்தினர் குளத்தின்
ஒரு கரையிலும், யோவாபின் கூட்டத்தார்
குளத்தின் மறுகரையிலும் அமர்ந்தனர்.
14அப்னேர் யோவாபிடம், "இளம் வீரர்கள்
நமக்கு முன்பு ஒருவருக்கொருவர் போட்டி
யிட்டுக்கொள்ளட்டும்" என்றான்.
யோவாபும், "சரி நாம் போட்டியிடலாம்"
என்றான்.
15எனவே இளம் வீரர்கள் எழுந்தனர்.
இரு குழுவினரும் போராடத் துணிந்த
தங்கள் ஆட்களை எண்ணிக்கையிட்டனர்.
சவுலின் மகனாகிய இஸ்போசேத்திற்காகச்
சண்டையிட பென்யமீன் கோத்திரத்
திலிருந்து 12 பேர்களையும் தாவீதின்
பக்கத்திலிருந்து 12 பேர்களையும் அவர்கள்
தேர்ந்தெடுத்தனர். 16ஒவ்வொருவனும் பகை
வனின் தலையைப் பிடித்து வாளால்
விலாவில் குத்திக்கொண்டான். எனவே
அம்மனிதர்கள் ஒருமித்து வீழ்ந்தனர். எனவே
அந்த இடம், "கூரிய கத்திகளின் நிலம்"
(எல்கா அருரீம்) என அழைக்கப்பட்டது.
இந்த இடம் கிபியோனில் இருக்கிறது.

### அப்னேர் ஆசகேலைக் கொல்வது

17பின் அந்தச் சண்டை பெரும் யுத்தமாக
மாறிற்று, அந்த நாளில் தாவீதின்
அதிகாரிகள் அப்னேரையும் இஸ்ரவேல
ரையும் தோற்கடித்தனர். 18செருயாவிற்கு
மூன்று மகன்கள் இருந்தனர் அவர்கள்
யோவாப், அபிசாய், ஆசகேல் ஆகியோரா
வார்கள். ஆசகேல் மிக வேகமாக
ஓடக்கூடியவன். காட்டுமானைப் போன்ற
வேகமுள்ளவன். 19ஆசகேல் அப்னேரிடம்
ஓடி, அவனைத் துரத்த ஆரம்பித்தான்.
20அப்னேர் திரும்பிபார்த்து, "நீ ஆசகேலா?"
எனக் கேட்டான்.
ஆசகேல், "ஆம், நானே தான்" என்றான்.
21அப்னேர் ஆசகேலைத் தாக்க விரும்ப
வில்லை. எனவே அப்னேர் ஆசகேலை
நோக்கி, "என்னைத் துரத்துவதைவிட்டு,
இளம் வீரர்களுள் வேறு ஒருவனைத் துரத்து,
நீ எளிதில் அவனை வென்று அவன்
போர் அங்கிகளை* எடுத்து விடுவாய்"
என்றான். ஆனால் ஆசகேல் அப்னேரைத்
துரத்துவதை நிறுத்தவில்லை.
22அப்னேர் மீண்டும் ஆசகேலிடம், "என்
னைத் துரத்துவதை விட்டுவிடு. இல்லை
யென்றால் நான் உன்னைக் கொல்ல
வேண்டியிருக்கும். பிறகு உனது சகோதர
னாகிய யோவாபின் முகத்தை மீண்டும்
நான் பார்க்க முடியாது" என்றான்.
23ஆனால் ஆசகேலோ அப்னேரை விடா
மல் துரத்தினான். எனவே அப்னேர்
ஈட்டியின் மறுமுனையால் ஆசகேலின்
வயிற்றில் குத்தினான். ஈட்டி ஆசகேலின்
வயிற்றினுள் புகுந்து முதுகில் வெளிவந்தது.
ஆசகேல் அங்கேயே விழுந்து மரித்தான்.

### யோவாபும் அபிசாயும் அப்னேரைத் துரத்துதல்

ஆசகேலின் உடல் நிலத்தில் கிடந்தது.
ஓடிவந்த மனிதர்கள் அவனருகே நின்று
விட்டனர். 24ஆனால் யோவாபும் அபிசாயும்*
அப்னேரைத் தொடர்ந்து துரத்திக்கொண்டே
ஓடினார்கள். அம்மா என்னும் மேட்டை
அவர்கள் அடைந்தபோது சூரியன் அஸ்த
மித்துக் கொண்டிருந்தது. (கிபியோன்
பாலைவனத்திற்குப் போகும் வழியில் கீயா
விற்கு எதிரில் அம்மா மேடு இருந்தது.)
25பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த மனிதர்
கள் அப்னேரிடம் வந்தனர். அவர்கள்
எல்லோரும் சேர்ந்து மலையின் உச்சியில்
நின்றுகொண்டிருந்தார்கள்.
26அப்னேர் யோவாபை நோக்கி உரக்க,
"நாம் போரிட்டு ஒருவரையொருவர் கொல்ல
வேண்டுமா? இது துக்கத்திலேயே முடிவுறும்
என்பது உங்களுக்கு நிச்சயமாகத் தெரியும்.
சொந்த சகோதரர்களையே துரத்திக்கொண்டு
இருக்கவேண்டாம் என ஜனங்களுக்குச்
சொல்" என்றான்.
27அப்போது யோவாப், "நீ அவ்வாறு
சொன்னது நல்லதாயிற்று. நீ அவ்வாறு

---

**போர் அங்கிகள்** இரும்பால் செய்யப்பட்ட ஆடை, போர்க்களத்தில் ஆட்கள் இதனை அணிந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்வார்கள்.

**யோவாபும் அபிசாயும்** அப்னேரினால் கொல்லப்பட்ட ஆசகேலின் சகோதரர்கள்.

சொல்லாவிட்டால், எல்லாரும் தங்கள்
சகோதரர்களைக் காலைவரை துரத்திக்
கொண்டே இருப்பார்கள் என்று தேவனு
டைய ஜீவனைக்கொண்டுச் சொல்லு
கிறேன்" என்றான். 28எனவே யோவாப்
ஒரு எக்காளத்தை ஊதி, தனது ஆட்கள்
இஸ்ரவேலரைத் துரத்தாதபடி தடுத்து நிறுத்
தினான். அவர்கள் இஸ்ரவேலரோடு போரிட
முயலவில்லை.
29அப்னேரும் அவனது ஆட்களும் யோர்
தான் பள்ளத்தாக்கு வழியாக இரவுப்
பொழுதில் அணிவகுத்துச் சென்றனர். அவர்
கள் யோர்தான் நதியைக் கடந்து மகனா
யீமுக்கு வரும்வரை பகல் முழுவதும்
அணிவகுத்து நடந்தனர்.
30அப்னேரைத் துரத்துவதை விட்டுவிட்டு
யோவாப் திரும்பிச்சென்றான். யோவாப்
தன் ஆட்களை அழைத்தான். ஆசகேல்
உட்பட தாவீதின் அதிகாரிகளுள் 19 பேர்
அங்கு இல்லாதிருப்பதைக் கண்டான்.
31ஆனால் தாவீதின் அதிகாரிகள் பென்யமீன்
கோத்திரத்திலிருந்து அப்னேரின் ஆட்களில்
360 பேரைக் கொன்றிருந்தனர். 32தாவீதின்
அதிகாரிகள் ஆசகேலை எடுத்துச்சென்று
பெத்லகேமிலிருந்த அவனது தந்தையின்
கல்லறையில் புதைத்தனர்.

யோவாபும், அவனது மனிதர்களும் இரவு
முழுவதும் அணிவகுத்துச் சென்றனர். அவர்
கள் எப்ரோனை அடைந்தபோது சூரியன்
உதித்தது.

### இஸ்ரவேலுக்கும் யூதாவுக்குமிடையே போர்

3 சவுல், தாவீது ஆகியோரின் குடும்பத்
தாருக்கிடையே நீண்டகாலம் யுத்தம்
தொடர்ந்தது. தாவீது வலிமை பெற்றுக்
கொண்டே இருந்தான். சவுலின் குடும்பத்தார்
தளர்ந்துக்கொண்டே வந்தனர்.

### தாவீதுக்கு ஆறு மகன்கள் எப்ரோனில் பிறந்தனர்

2எப்ரோன் நகரில் தாவீதுக்கு பிள்ளைகள்
பிறந்தனர். முதல் மகன் அம்மோன்.
அம்மோனின் தாய் யெஸ்ரயேலைச் சேர்ந்த
அகினோவாள் ஆவாள். 3இரண்டாவது மகன்
கீலேயாப். கீலேயாபின் தாய் அபிகாயில்.
அவள் கர்மேலிலுள்ள நாபாலின் விதவை
யாயிருந்தாள். மூன்றாவது மகன் அப்ச
லோம். இவனது தாய், கேசூரின் அரச
னாகிய தல்மாயின் மகள் மாக்காள்
என்பவள் ஆவாள். 4நான்காம் மகன்
அதோனியா. அதோனியாவின் தாய் ஆகீத்.
ஐந்தாம் மகன் செப்பத்தியா. இவனது
தாய் அபித்தால். 5ஆறாம் மகன் இத்ரேயாம்.
தாவீதின் மனைவி எக்லாள் இத்ரேயாமுக்கு
தாய். தாவீதுக்கு எப்ரோனில் இந்த ஆறு
மகன்களும் பிறந்தனர்.

### தாவீதோடு சேர அப்னேரின் தீர்மானம்

6தாவீது, சவுல் ஆகியோரின் குடும்பங்
கள் ஒன்றுக்கொன்று மோதிக்கொண்டிருந்த
போது சவுலின் படையில் அப்னேர் மிகவும்
பலமடைந்து வந்தான். 7சவுலிடம் ஆயாவின்
மகளான ரிஸ்பாள் என்னும் பெயருள்ள
வேலைக்காரி* ஒருத்தி இருந்தாள். இஸ்
போசேத் அப்னேரை நோக்கி, "எனது
தந்தையின் வேலைக்காரியோடு நீ ஏன்
பாலின உறவு கொண்டாய்?" என்று
கேட்டான்.
8இஸ்போசேத் இவ்வாறு கேட்டதால்
அப்னேர் கோபமடைந்தான். அப்னேர்,
"நான் சவுலுக்கும் அவனது குடும்பத்துக்கும்
உண்மையுள்ளவனாக இருந்தேன். நான்
உன்னைத் தாவீதிடம் ஒப்படைக்கவில்லை.
அவன் உன்னைத் தோற்கடிக்க அனுமதிக்க
வில்லை. நான் யூதாவுக்காக உழைக்கும்
வஞ்சகன் அல்ல. நான் இத்தீயக் காரியத்
தைச் செய்ததாக நீ கூறிக்கொண்டிருக்கிறாய்.
9-10நான் இப்போது இந்த வாக்குறுதியை
அளிக்கிறேன். தேவன் சொன்ன காரியங்கள்
நிறைவேறும் என நான் உறுதியாக
நம்புகிறேன். சவுலின் குடும்பத்தாரிடமிருந்து
அரசை எடுத்து தாவீதின் குடும்பத்தாருக்குக்
கொடுப்பதாக கர்த்தர் கூறினார். கர்த்தர்
தாவீதை இஸ்ரவேலுக்கும் யூதாவுக்கும்
அரசனாக்குவார். தாணிலிருந்து பெயெர்
செபாவரைக்கும்* அவன் அரசாளுவான்.
இது நிகழும்படியாக நான் செய்யாவிட்டால்
தேவன் எனக்குத் தீமை செய்வார் என்று
நான் எதிர்பார்க்கிறேன்!" என்றான்.
11இஸ்போசேத்தால் அப்னேருக்கு எந்த
பதிலும் கூற முடியவில்லை. அவனைக்
கண்டு இஸ்போசேத் மிகவும் பயந்தான்.
12அப்னேர் தாவீதிடம் செய்தி சொல்
வோரை அனுப்பினான். அப்னேர், "நீ
யார் இந்த நாட்டை ஆளவேண்டும் என்று
நினைக்கிறாய்? என்னோடு ஒப்பந்தம்
செய்துக்கொள். இஸ்ரவேலருக்கு அரசனா
கும்படியாக நான் உனக்கு உதவுவேன்"
என்றான்.
13தாவீது, "நல்லது! நான் உன்னோடு ஒரு
ஒப்பந்தம் செய்துக்கொள்வேன். ஆனால்
உன்னிடம் ஒரு காரியத்தைக் கேட்கிறேன்:
சவுலின் மகள் மீகாளை என்னிடம் அழைத்
துவரும் வரை உன்னை நான் சந்திக்க
மாட்டேன்" என்றான்.

---

**வேலைக்காரி** அல்லது "மறுமனையட்டி" அடிமைப்பெண் ஒருவனுக்கு மனைவிபோல இருப்பவள்.

**தாண், பெயெர்செபா** இஸ்ரவேலின் வடக்கும் தெற்கும் சேர்ந்த முழு நாடு என்று இதற்கு அர்த்தம். தாண் இஸ்ரவேலின் வடக்கு பகுதியில் இருந்த நகரம் மற்றும் பெயெர்செபா யுதாவின் தெற்கு பகுதியில் இருந்தது.

### தாவீது தன் மனைவி மீகாளை பெற்றுக்கொள்கிறான்

14 தாவீது சவுலின் மகனாகிய இஸ்போ
சேத்திடம் செய்தியோடு தூதுவரை
அனுப்பினான். தாவீது, “என்னுடைய
மனைவியாகிய மீகாளைக் கொடு. அவளை
எனக்குக் கொடுப்பதாக வாக்களிக்கப்
பட்டுள்ளது. நான் அவளுக்காக நூறு
பெலிஸ்தியரைக் கொன்றேன்”* என்றான்.
15 இஸ்போசேத் லாயிசின் மகனாகிய
பல்த்தியேலிடமிருந்து மீகாளை அழைத்து
வருமாறு ஆட்களை அனுப்பினான். 16 மீகா
ளைப் பின் தொடர்ந்து அவள் கணவன்
பல்த்தியேலும் சென்றான். மீகாளோடு
பகூரீமுக்கு வந்தபோது பல்த்தியேல் அழுது
கொண்டே பின்தொடர்ந்தான். ஆனால்
அப்னேர் பல்த்தியேலை நோக்கி, “வீட்டிற்
குப் போ” என்றான். எனவே பல்த்தியேல்
தன் வீட்டிற்குத் திரும்பிச்சென்றான்.

### தாவீதுக்கு உதவுவதாக அப்னேரின் உறுதி

17 இஸ்ரவேலின் தலைவர்களுக்கு அப்னேர்
செய்தி சொல்லியனுப்பினான். அவன், “நீங்
கள் தாவீதை அரசனாக ஆக்கக் காத்திருக்
கிறீர்கள். 18 இப்போது அவ்வாறே செய்யுங்
கள்! கர்த்தர் தாவீதைக் குறித்து ஏற்கனவே
இவ்வாறு சொல்லியிருக்கிறார், ‘இஸ்ர
வேலராகிய எனது ஜனங்களை நான்
பெலிஸ்தியரிடமிருந்தும் பிற பகைவர்
களிடமிருந்தும் விடுவிப்பேன். எனது
தாசனாகிய தாவீதின் மூலமாக இதைச்
செய்வேன்’” என்றார்.
19 எப்ரோனிலிருந்த தாவீதுக்கு அப்னேர்
சொன்ன இக்காரியங்களை பென்யமீன்
கோத்திரத்திற்கும் சொன்னான். பென்யமீன்
கோத்திரத்திற்கும் இஸ்ரவேல் ஜனங்களுக்கும்
அப்னேர் கூறிய காரியங்கள் நன்மையாகத்
தோன்றின.
20 பின்பு எப்ரோனிலிருந்த தாவீதிடம்
அப்னேர் வந்தான். அவன் தன்னோடு 20
பேரை அழைத்து வந்திருந்தான். அப்னேருக்
கும் அவனோடு வந்த ஆட்களுக்கும் தாவீது
விருந்தளித்தான்.
21 அப்னேர் தாவீதை நோக்கி, “எனது
ஆண்டவனும், அரசருமானவரே! நான்
அனைத்து இஸ்ரவேலரையும் உம்மிடம்
அழைத்துவர அனுமதியும். அப்போது
அவர்கள் உம்மோடு ஒரு ஒப்பந்தம் செய்துக்
கொள்வார்கள். பின் நீர் விரும்பியதுபோல்
இஸ்ரவேலை ஆளலாம்” என்றான். எனவே
தாவீது அப்னேரை அனுப்பிவிட்டான்.
அப்னேர் சமாதானமாய் திரும்பினான்.

### அப்னேரின் மரணம்

22 யோவாபும் தாவீதின் அதிகாரிகளும்
யுத்தத்திலிருந்து திரும்பினார்கள். பகைவரிட
மிருந்து எடுத்த பல பொருட்கள்
அவர்களிடமிருந்தன. அப்போதுதான் அப்
னேர் தாவீதிடமிருந்து சமாதானமாய்
புறப்பட்டுச் சென்றிருந்தான். ஆதலால்
அந்நேரம் எப்ரோனில் தாவீதோடு அப்னேர்
இருக்கவில்லை. 23 யோவாபும் அவனது
படையும் எப்ரோனை அடைந்தது. படை
யினர் யோவாபிடம், “நேரின் மகனாகிய
அப்னேர் தாவீது அரசனிடம் வந்திருந்தான்.
அவன் சமாதானமாய்ச் செல்லுமாறு தாவீது
அனுமதித்தான்” என்றனர்.
24 யோவாப் அரசனிடம் வந்து, “நீங்கள்
என்ன செய்தீர்கள்? அப்னேர் உங்களிடம்
வந்தும், அவனுக்கு எந்தத் துன்பமும்
செய்யாமல் அவனை அனுப்பியுள்ளீர்கள்!
25 நேரின் மகனாகிய அப்னேரை உமக்குத்
தெரியும். அவன் உம்மை வஞ்சிக்க வந்தான்.
நீர் செய்துக்கொண்டிருக்கும் காரியங்களைக்
குறித்து வேவு பார்க்க அவன் வந்தான்”
என்றான்.
26 யோவாப் தாவீதை விட்டுச்சென்று
சீராவின் கிணற்றருகே இருந்த அப்னேரைச்
சந்திக்கும்படி தூதுவர்களை முன்னே
அனுப் பினான். அவர்கள் அப்னேரை
தனியே அழைத்துவந்தனர், அது தாவீதுக்குத்
தெரிந்திருக்கவில்லை. 27 அப்னேர் எப்ரோ
னை அடைந்ததும், அவனோடு தனித்துப்
பேசும்படியாக யோவாப் வாசலின் பின்புறம்
அழைத்துச்சென்றான். அப்போது யோவாப்
அப்னேரை வயிற்றில் குத்தினான், அப்னேர்
மரித்தான். யோவாபின் சகோதரனான
ஆசகேலை அப்னேர் கொன்றிருந்தான்,
ஆகையால் இப்போது யோவாப் அப்னே
ரைக் கொன்றான்.

### அப்னேருக்காக தாவீதின் அழுகை

28 தாவீது நடந்ததை எல்லாம் கேள்விப்
பட்டான். தாவீது, “நானும் எனது அரசும்
நேரின் மகனாகிய அப்னேரின் மரணத்தைக்
குறித்து என்றும் களங்கமற்றவர்கள். இதைக்
குறித்து கர்த்தர் அறிவார். 29 யோவாபின்
குடும்பத்தார் குற்றவாளிகள். அவர்களுக்கும்
பல தொல்லைகள் நேரக்கூடும். தொழுநோய்
போன்றவற்றால்அக்குடும்பத்தினர் பாதிக்கப்
படக்கூடும். அவர்கள் முடவர்களாகக் கூடும்.
யுத்தத்தில் மரிக்கக்கூடும், உண்ண உண
வின்றி வாழக்கூடும்!” என்றான்.
30 கிபியோனில் நடந்த யுத்தத்தில் தங்கள்
சகோதரனாகிய ஆசகேலை அப்னேர் கொன்
றதால் யோவாபும் அவனது சகோதரன்
அபிசாயும் அப்னேரைக் கொன்றார்கள்.
31-32 யோவாபிடமும் யோவாபுடனிருந்த
எல்லா ஜனங்களிடமும் தாவீது, “உங்கள்
ஆடைகளைக் கிழித்து துக்கத்திற்குரிய
ஆடைகளை அணிந்துகொள்ளுங்கள். அப்

---

**நான் … கொன்றேன்** *எழுத்தின் பிராகாரமாக, “அவளுக்காக நான் 100 பெலிஸ்த்தியர்களின் நுனிதோலை கொடுத்தேன்.” பார்க்க* 1சாமு. 18:20-30; 25:44.

னேருக்காக அழுங்கள்” என்றான். அவர்கள்
எப்ரோனில் அப்னேரைப் புதைத்தார்கள்.
அடக்கத்திற்குத் தாவீது சென்றிருந்தான்.
தாவீது அரசனும் எல்லா ஜனங்களும்
கல்லறையருகே அப்னேருக்காக அழுதனர்.
33 அப்னேரின் அடக்கத்தின்போது தாவீது
அரசன் இந்த சோக கீதத்தைப் பாடினான்:

“அறிவில்லாத குற்றவாளியைப்போல
அப்னேர் மரித்தானா?
34 அப்னேர், உனது கைகள்
கட்டப்படவில்லை.
கால்களில் விலங்கு
மாட்டப்படவில்லை,
அப்னேரே, தீயோர் உன்னைக்
கொன்றனர்!”

அப்போது ஜனங்கள் எல்லோரும்
அப்னேருக்காக மீண்டும் அழுதனர். 35 அந்த
நாள் முழுவதும் ஜனங்கள் தாவீதிடம்
வந்து அப்பம் உண்ணுமாறு வற்புறுத்தி
னார்கள். ஆனால் தாவீது விசேஷ வாக்
குறுதி செய்திருந்தான். அவன், “சூரியன்
மறையும் முன்னர் நான் ரொட்டியையோ,
வேறு உணவையோ உட்கொண்டால்
தேவன் என்னைத் தண்டிப்பாராக” என்
றான். 36 எல்லோரும் நடந்ததைக் கண்டனர்.
தாவீது அரசனின் செய்கையைக் கண்டு
திருப்தியுற்றனர். 37 நேரின் மகனாகிய
அப்னேரைத் தாவீது அரசன்
கொல்லவில்லையென யூதா ஜனங்களும்
இஸ்ரவேலரும் புரிந்துக் கொண்டனர்.
38 தாவீது அரசன் அதிகாரிகளை நோக்கி,
“இஸ்ரவேலில் இன்று ஒரு முக்கியமான
தலைவன் மரித்துவிட்டான் என்பதை
அறிவீர்கள். 39 இதே நாளில் நான் அரசனா
கவும் அபிஷேகம் செய்யப்பட்டேன். இந்த
செருயாவின் மகன்கள் எனக்கு மிகுந்த
துன்பத்தை கொடுத்து விட்டனர். அவர்கள்
தவறுக்கேற்ற தண்டனையை கர்த்தர் அளிப்
பார் என நம்புகிறேன்” என்றான்.

## சவுலின் குடும்பத்திற்குத் தொல்லைகள்

4 எப்ரோனில் அப்னேர் மரித்தான்
என்பதைச் சவுலின் மகனான இஸ்போ
சேத் கேள்விப்பட்டான். இஸ்போசேத்தும்
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும் மிகவும்
அச்சம் கொண்டனர். 2 சவுலின் மகனாகிய
இஸ்போசேத்தைப் பார்ப்பதற்கு இருவர்
சென்றனர். அவர்கள் படைத் தலைவர்களாக
இருந்தனர். அவர்கள் ரிம்மோனின் மகன்
களாகிய, ரேகாபும், பானாவும் ஆவார்கள்.
(ரிம்மோன் பேரோத்தைச் சேர்ந்தவன்.
பென்யமீன் கோத்திரத்திற்கு உரிய நகரமாக
பேரோத் இருந்ததால் அவர்கள் பென்ய
மீனியர் ஆவார்கள். 3 ஆனால் பேரோத்தின்
ஜனங்கள் கித்தாயீமிற்கு ஓடிவிட்டனர்.
அவர்கள் இன்றும் அங்கேயே வசித்து
வருகின்றனர்.)
4 சவுலின் மகனாகிய யோனத்தானுக்கு
மேவிபோசேத் என்னும் பெயருள்ள மகன்
இருந்தான். சவுலும் யோனத்தானும்
கொல்லப்பட்டார்கள் என்ற செய்தி யெஸ்ர
யேலிலிருந்து வந்தபோது மேவிபோ
சேத்திற்கு ஐந்து வயது ஆகியிருந்தது.
பகைவர்கள் வருவார்கள் என எதிர்
பார்த்ததால் மேவிபோசேத்தை வளர்த்த தாதி
பெண் அச்சம் கொண்டாள். எனவே அவள்
அவனைத் தூக்கிக்கொண்டு ஓடினாள்.
அவ்வாறு ஓடியபோது, அவள் குழந்தை
யைத் தவறி போட்டுவிட்டாள். எனவே
அவனது இரண்டு கால்களும் முடமாயின.
5 பேரோத்திலுள்ள ரிம்மோனின் மகன்
களாகிய ரேகாபும் பானாவும் இஸ்போ
சேத்தின் வீட்டிற்கு நண்பகலில்
சென்றார்கள். வெப்பம் மிகுதியாக இருந்த
தால் இஸ்போசேத் ஓய்வெடுத்துக்கொண்
டிருந்தான். 6-7 கோதுமை எடுக்க வந்தவர்
களைப் போன்று ரேகாபும் பானாவும்
வீட்டிற்குள் புகுந்தனர். படுக்கையறையில்
இஸ்போசேத் சாய்ந்திருந்தான். அவனை
ரேகாபும் பானாவும் குத்திக் கொன்றார்கள்.
பின் அவனது தலையை வெட்டி
எடுத்துக்கொண்டு யோர்தான் பள்ளத்தாக்கு
வழியாக இரவு முழுவதும் பயணம்
செய்தனர். 8 அவர்கள் எப்ரோனை வந்த
டைந்தனர். இஸ்போசேத்தின் தலையைத்
தாவீதிடம் கொடுத்தனர்.
ரிம்மோனின் பிள்ளைகளாகிய ரேகாபும்
பானாவும் தாவீது அரசனை நோக்கி,
“இதோ உம்மைக் கொல்ல முயன்ற உமது
பகைவனாகிய சவுலின் மகன் இஸ்போ
சேத்தின் தலை. உமக்காக இன்று கர்த்தர்
சவுலையும் அவனது குடும்பத்தாரையும்
தண்டித்துள்ளார்” என்றனர்.
9 ஆனால் தாவீது ரேகாபையும் அவனது
சகோதரன் பானாவையும் நோக்கி, “கர்த்தர்
உயிரோடிருப்பது எவ்வளவு நிச்சயமோ,
அவ்வாறே அவர் என்னைத் தொல்லை
களிலிருந்து விடுவித்ததும் நிச்சயம்.
10 ஆனால் முன்பொருமுறை ஒருவன் எனக்கு
ஏதோ நற்செய்தி கொண்டுவருவதாக எண்
ணினான். அவன் என்னிடம், ‘பாருங்கள்
சவுலை கொன்றதினால் மரித்துவிட்டான்’
என்றான். அச்செய்தியைக் கொண்டு
வந்ததற்காக ஏதேனும் பரிசளிப்பேன் என்று
அவன் எண்ணினான். ஆனால் அம்மனி
தனைப் பிடித்து சிக்லாக் என்னும் இடத்தில்
அவனைக் கொன்றேன். 11 எனவே உன்
னையும் நான் கொன்று இத்தேசத்திலிருந்து
அகற்றவேண்டும். ஏனெனில் துஷ்டராகிய
நீங்கள் ஒரு நல்ல மனிதனை வீட்டிற்குள்,
அவனது படுக்கையில் உறங்கிக்கொண்
டிருக்கும்போது கொன்றீர்கள்” என்றான்.

[12]எனவே ரேகாபையும் பானாவையும்
கொல்லும்படி தனது இளம் வீரர்களுக்குத்
தாவீது கட்டளையிட்டான். அந்த இளம்
வீரர்கள் ரேகாப், பானா ஆகியோரின்
கைகளையும் கால்களையும் வெட்டி எப்
ரோன் குளத்தருகே தொங்கவிட்டார்கள்.
பின் அவர்கள் இஸ்போசேத்தின் தலையை
எடுத்து எப்ரோனில் அப்னேர் புதைக்கப்
பட்ட இடத்திலேயே புதைத்தார்கள்.

### இஸ்ரவேலர் தாவீதை அரசனாக்கு கிறார்கள்

5 இஸ்ரவேல் கோத்திரங்கள் எல்லோரும்
எப்ரோனில் தாவீதிடம் கூடிவந்தார்கள்.
அவர்கள் தாவீதை நோக்கி, "நாம் எல்லோ
ரும் ஒரே குடும்பத்தார்!* [2]சவுல் நமது
அரசனாக இருந்தபோதும் யுத்தத்தில் நீர்
எங்களை வழிநடத்தினீர். யுத்தத்திலிருந்து
இஸ்ரவேலரை அவர்கள் இருப்பிடத்திற்கு
நீரே அழைத்துவந்தீர். கர்த்தர் உம்மிடம்,
'எனது ஜனங்களாகிய இஸ்ரவேலருக்கு
மேய்ப்பனாயிருப்பாய். இஸ்ரவேலருக்கு
அரசனாக இருப்பாய்!' என்று சொன்னார்"
என்றார்கள்.
[3]எனவே இஸ்ரவேலின் அனைத்து
தலைவர்களும் தாவீதைச் சந்திப்பதற்காக
எப்ரோன் என்னும் நகருக்கு வந்தார்கள்.
தாவீது அரசன் இத்தலைவர்களோடு கர்த்தரு
டைய முன்னிலையில் ஒரு ஒப்பந்தம்
செய்துகொண்டான். இஸ்ரவேலின் அரச
னாக தலைவர்கள் அனைவரும் தாவீதை
அபிஷேகம் பண்ணினார்கள்.
[4]தாவீது அரசாள ஆரம்பித்தபோது அவ
னுக்கு 30 வயது. அவன் 40 ஆண்டுகள்
அரசாண்டான். [5]எப்ரோனில் 7 ஆண்டு 6
மாதங்கள் அவன் யூதர்களுக்கு அரசனாக
இருந்தான். எருசலேமில் இஸ்ரவேலுக்கும்
யூதாவுக்கும் 33 ஆண்டுகள் அரசனாக
இருந்தான்.

### எருசலேமில் தாவீதின் வெற்றி

[6]அரசனும் அவனது வீரர்களும் எருசலே
மில் வாழ்ந்துக் கொண்டிருக்கின்ற
எபூசியரை எதிர்த்துப் போரிடுவதற்குச்
சென்றனர். எபூசியர்கள் தாவீதிடம், "எங்கள்
நகரத்திற்குள் உங்களால் வரமுடியாது.*
எங்களில் குருடர்களும் முடவர்களுங்கூட
உங்களைத் தடுத்து நிறுத்தமுடியும்"
என்றனர். (தாவீது அவர்கள் நகரத்திற்குள்
நுழையமாட்டான் என்று அவர்கள்
நினைத்ததால் இவ்வாறு கூறினார்கள்.
[7]ஆனால் தாவீது சீயோன் கோட்டையைப்
பிடித்தான். இக்கோட்டை பின்பு தாவீதின்
நகரமாயிற்று.*)
[8]அந்த நாளில் தாவீது தனது ஆட்களை
நோக்கி, "நீங்கள் எபூசியரை வெல்ல
விரும்பினால், தண்ணீர் குகை* வழியே
சென்று 'முடவரும் குருடரும்' ஆகிய
பகைவரை நெருங்குங்கள்" என்றான்.
இதனால்தான் மக்கள், "குருடரும் முட
வரும் வீட்டினுள்* வரமுடியாது" என்பார்
கள்.
[9]கோட்டையினுள் தாவீது வாழ்ந்தான்.
அதைத் "தாவீதின் நகரம்" என்று அழைத்
தான். மில்லோ* என்னும் கோபுர
பகுதியையும் தாவீது கட்டினான். நகரத்திற்
குள்ளும் பல கட்டிடங்களை கட்டினான்.
[10]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் தாவீதோ
டிருந்ததால் அவன் பலம் மிகுந்தவனானான்.
[11]தீருவின் அரசனாகிய ஈராம் தாவீதி
னிடம் தூதுவர்களை அனுப்பினான். கேதுரு
மரங்களையும் தச்சரையும் சிற்பிகளையும்
அனுப்பினான். அவர்கள் தாவீதுக்கென்று
ஒரு வீட்டைக் கட்டினார்கள். [12]அப்போது
தாவீது கர்த்தர் தன்னை உண்மையாகவே
இஸ்ரவேலின் அரசனாக்கியதை அறிந்தான்.
தேவனுடைய ஜனங்களாகிய இஸ்ரவேல
ருக்கு தனது அரசை கர்த்தர் முக்கியமான
தாக ஆக்கினார் என்பதை அவன்
உணர்ந்தான்.
[13]தாவீது எப்ரோனிலிருந்து எருச
லேமுக்கு குடிபெயர்ந்தான். எருசலேமுக்கு
வந்த பின் தாவீது இன்னும் பல மனைவி
யரும் வேலைக்காரிகளும் சேர்த்துக் கொண்
டான். அவனுக்கு மேலும் பிள்ளைகள்
பிறந்தனர். [14]எருசலேமில் தாவீதுக்குப் பிறந்த
பிள்ளைகளின் பெயர்கள் இவைகளே: சம்
முவா, சோபாப், நாத்தான், சாலொமோன்,
[15]இப்பார், எலிசூவா, நெப்பேக், யப்பியா,
[16]எலிஷாமா, எலியாதா, எலிப்பேலேத்.

### பெலிஸ்தியருக்கு எதிராக தாவீது சண்டையிடுகிறான்

[17]இஸ்ரவேலின் அரசனாக தாவீதை
இஸ்ரவேலர் அபிஷேகம் செய்தார்கள் என்ப
தைப் பெலிஸ்தியர் கேள்விப்பட்டனர்.
தாவீதைக் கொன்றுவிடுவதற்காக பெலிஸ்

---

***ஒரே குடும்பம்*** எழுத்தின் பிரகாரமாக, "உங்களது சதையும் இரத்தமும்."

***எங்கள் … வரமுடியாது*** எருசலேம் நகரம் மலையின்மேல் கட்டப்பட்டது. அதனைச் சுற்றிலும் உயர்ந்த சுவர்களைக் கொண்டாது. எனவே அது கைப்பற்றுவதற்கு மிகவும் கடினமானது.

***தாவீதின் நகரம்*** எருசலேம் நகரத்தின் தென்கிழக்கு திசையிலுள்ள பழமையான நகரப் பகுதி.

***தண்ணீர் குகை*** தண்ணீர் செல்லும் கால்வாய் ஒன்று பாழங்காலத்து நகரத்தின் சுவருக்குக் கீழே ஒடியது. பிறகு ஒரு குறுகிய கால்வாய் நகரம் வரைக்கும் நேராக ஒடியது. நகர ஜனங்கள் இதனைக் கிணறாக பயன்படுத்தினார்கள். தாவீதின் ஆட்களில் ஒருவன் இந்தக் கால்வாய் மீது ஏறி நகரத்திற்குள் போனான்.

***வீடு*** இதற்கு அரண்மனை அல்லது ஆலயம் எனப் பொருள்படும்.

***மில்லோ*** சீயோன் கோட்டையை அமைத்த பலமுள்ள இடங்களில் ஒன்று.

தியர் அவனைத் தேடிப் புறப்பட்டனர்.
தாவீது இதையறிந்து எருசலேமில் கோட்
டைக்குள் இருந்தான். 18பெலிஸ்தியர் வந்து
ரெப்பாயீம் பள்ளத்தாக்கில் முகாமிட்டுத்
தங்கினார்கள்.
19தாவீது கர்த்தரிடம், "நான் பெலிஸ்
தியரை எதிர்த்துப் போரிட வேண்டுமா?
பெலிஸ்தியரைத் தோற்கடிக்க நீர் எங்களுக்கு
உதவுவீரா?" என்று கேட்டான்.

கர்த்தர் தாவீதிடம், "பெலிஸ்தியரைத்
தோற்கடிப்பதற்கு நான் கண்டிப்பாக உதவு
வேன்" என்றார்.
20பின்பு தாவீது பாகால் பிராசீம் என்னும்
இடத்துக்கு வந்து அந்த இடத்தில் பெலிஸ்
தியரைத் தோற்கடித்தான். தாவீது, "உடைந்த
அணையில் வெள்ளம் பெருக்கெடுப்பதைப்
போல கர்த்தர் எனது பகைவர்களிடையே
பாய்ந்தார்" என்று கூறினான். எனவே
அவ்விடத்திற்குப் "பாகால் பிராசீம்"* என்று
பெயரிட்டான். 21பெலிஸ்தியர்கள் பாகால்
பிராசீமில் தம் தெய்வங்களின் உருவங்களை
விட்டுச் சென்றனர். தாவீதும் அவன் ஆட்
களும் அவற்றை அப்புறப்படுத்தி விட்டனர்.
22மீண்டும் பெலிஸ்தியர் வந்து ரெப்பாயீம்
பள்ளத்தாக்கில் முகாமிட்டுத் தங்கினார்கள்.
23தாவீது கர்த்தரிடம் பிரார்த்தனை செய்
தான். இம்முறை கர்த்தர் தாவீதிடம், "நீ
அங்குப் போகாதே. அவர்கள் படைக்குப்
பின்னே சென்று வளைத்துக்கொள். முசுக்
கட்டை செடிகளுக்கு அருகே இருந்து
அவர்களைத் தாக்கு. 24முசுக்கட்டை செடி
களின் உச்சியிலிருந்து பெலிஸ்தியர் போருக்
காக அணிவகுத்து வரும் ஒலியைக்
கேட்பீர்கள். அப்போது நீங்கள் விரைந்து
செயல்படவேண்டும். ஏனெனில் அதுவே
கர்த்தர் உங்களுக்கு முன்பாக சென்று
பெலிஸ்தியரைத் தோற்கடிக்கும் சமயமாகும்"
என்றார்.
25கர்த்தர் கட்டளையிட்டபடியே தாவீது
செய்தான். அவன் பெலிஸ்தியரை வென்
றான். கேபாவிலிருந்து கேசேர் வரைக்கும்
அவர்களைத் துரத்தினான்.

### தேவனுடைய பரிசுத்தப் பெட்டி எருசலேமுக்கு வருதல்

6 இஸ்ரவேலின் மிகச்சிறந்த வீரர்களை
யெல்லாம் தாவீது ஒன்றாகக் கூட்டினான்.
மொத்தம் 30,000 பேர் இருந்தனர். 2தாவீதும்
அவனது ஆட்களும் யூதாவிலுள்ள பாலா
விற்குச் சென்றனர். அவர்கள் தேவனுடைய
பரிசுத்தப் பெட்டியை எருசலேமுக்குக்
கொண்டுவந்தனர். கர்த்தரைத் தொழுது
கொள்ளும்படி ஜனங்கள் பரிசுத்தப் பெட்டிய
ருகே வருவார்கள். பரிசுத்தப் பெட்டியானது
கர்த்தருடைய சிங்காசனமாக இருந்தது.
கேருபீன்களின் உருவங்கள் பரிசுத்தப் பெட்
டியின் மேலே இருந்தன. கேருபீன்கள் மேல்
கர்த்தர் ராஜாவாக வீற்றிருக்கிறார்.
3மேட்டிலிருந்த அபினதாபின் வீட்டிற்கு
வெளியே அவர்கள் பரிசுத்தப் பெட்டியைக்
கொண்டுவந்தார்கள். பின்பு தேவனுடைய
பரிசுத்தப் பெட்டியை ஒரு புதிய வண்டியில்
ஏற்றினார்கள். அந்த வண்டியை அபினதா
பின் மகன்களாகிய ஊசாவும் அகியோவும்
ஓட்டினார்கள்.
4மேட்டிலிருந்த அபினதாபின் வீட்டி
லிருந்து அவர்கள் பரிசுத்தப் பெட்டியைச்
சுமந்துவந்தனர். தேவனுடைய பரிசுத்தப்
பெட்டியோடு ஊசா வண்டியின் மீது
அமர்ந்திருந்தான். பரிசுத்தப் பெட்டிக்கு
முன்பாக அகியோ நடந்துக்கொண்டிருந்
தான். 5கர்த்தருக்கு முன் தாவீதும் இஸ்ர
வேலரும் நடனமாடினார்கள். இரட்டைவால்
வீணை, சுரமண்டலம், தம்புரு, மேளம்,
வீணை, தாளம் ஆகிய மருதகட்டையில்
செய்த இசைக்கருவிகளை இசைத்தபடி
சென்றனர். 6நாகோனுக்குச் சொந்தமான
போரடிக்கும் களத்தை அடைந்தபோது
வண்டியில் பூட்டப்பட்ட பசுக்கள் இடறின.
எனவே தேவனுடைய பரிசுத்தப் பெட்டி
வண்டிக்கு வெளியே விழலாயிற்று. ஊசா
பரிசுத்தப் பெட்டியை பிடித்தான். 7ஆனால்
கர்த்தர் ஊசாவின் மீது கோபங்கொண்டு
அவனைக் கொன்றார்.* ஊசா பரிசுத்தப்
பெட்டியைத் தொட்டபோது அவன் தேவ
னுக்கு மரியாதைக் கொடுக்காமல் செயல்
பட்டான். ஆகவே தேவனுடைய பரிசுத்தப்
பெட்டியருகில் ஊசா அங்கே மரித்தான்.
8கர்த்தர் ஊசாவைக் கொன்றதால் தாவீது
கலக்கமுற்றான். தாவீது அந்த இடத்தை
"பேரேஸ்ஊசா"* என்று அழைத்தான்.
இன்றும் அந்த இடம் பேரேஸ்ஊசா என்றே
அழைக்கப்படுகிறது.
9தாவீது அந்த நாளில் கர்த்தரிடம் பயப்
பட்டான். தாவீது, "நான் இங்கு இப்போது
தேவனுடைய பரிசுத்தப் பெட்டியை
எவ்வாறு கொண்டுவரமுடியும்?" என்றான்.
10ஆகையால் தாவீதின் நகரத்திற்குள் கர்த்தரு
டைய பரிசுத்தப் பெட்டியைக் கொண்டு
வரவில்லை. காத் ஊரானாகிய ஓபேத்
ஏதோமின்* வீட்டில் தாவீது பரிசுத்தப்
பெட்டியை வைத்தான். போரடிக்கும்
களத்திலிருந்து ஓபேத்ஏதோமின் வீடுவரைக்
கும் கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டியை

**பாகால் பெராசீம்** இந்தப் பெயருக்கு 'கர்த்தர் இதன் மூலம் உடைத்தவர்' எனப் பொருள்படும்.

**ஆனால் கர்த்தர் ... கொன்றார்** லேவியர்கள் மட்டும் தேவனடைய பரிசுத்தமான பெட்டியைத் சுமக்க முடியும். அல்லது பரிசுத்த கூடாரத்திலுள்ள பிற பொருட்கள் ஊசா லேவியன் அல்ல. படிக்க எண்ண. 1:50.

**பேரேஸ்ஊசா** இந்தப் பெயருக்கு 'ஊசாவின் தண்டனை' எனப் பொருள்படும்.

**காத் ஊரானாகிய ஓபேத்ஏதோம்** லேவி கோத்திரத்திலுள்ள ஒருவன் எருசலேம் அருகில் வாழ்பவன்.

*தாவீது சுமந்துவந்தான். 11ஓபேத்ஏதோமின்
வீட்டில் கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டி
மூன்று மாதங்கள் இருந்தது. ஓபேத்
ஏதோமையும் அவனது குடும்பத்தாரையும்
கர்த்தர் ஆசீர்வதித்தார்.*
*12பின்னர், ஜனங்கள் தாவீதிடம்,
"ஓபேத்ஏதோமின் குடும்பத்தையும் அவ
னுக்குச் சொந்தமான எல்லாவற்றையும்,
தேவனுடைய பரித்தப் பெட்டி அங்கிருந்
ததால் கர்த்தர் அவனை ஆசீர்வதித்தார்"
என்றார்கள். தாவீது போய் தேவனுடைய
பரிசுத்தப் பெட்டியை ஓபேத்ஏதோம் வீட்
டிலிருந்து கொண்டுவந்தான். அதனைத்
தாவீதின் நகரத்திற்கு கொண்டுபோனான்.
தாவீது மகிழ்ச்சியும் உற்சாகமும் அடைந்
தான். 13கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டியைச்
சுமந்து சென்றவர்கள் ஆறு அடி எடுத்து
வைத்ததும் நின்றார்கள். தாவீது ஒரு
காளையையும் கொழுத்த கன்று குட்டி
யையும் பலியிட்டான். 14பின்பு தாவீது
கர்த்தருக்கு முன்பாகத் தன் முழு பலத்தோடு
நடனமாடினான். தாவீது மெல்லிய பஞ்சா
லாகிய ஏபோத்தை அணிந்திருந்தான்.*
*15தாவீதும் இஸ்ரவேலரும் களிப்படைந்
தனர். அவர்கள் ஆரவாரம் செய்து
எக்காளம் ஊதியபடி கர்த்தருடைய
பரிசுத்தப் பெட்டியை நகரத்திற்குள்
கொண்டுவந்தார்கள். 16சவுலின் மகள் மீகாள்
ஜன்னல் வழியாய் இதைப் பார்த்துக்
கொண்டிருந்தாள். கர்த்தருடைய பரிசுத்தப்
பெட்டி நகரத்திற்குள் கொண்டுவரப்
பட்டபோது, கர்த்தருக்கு முன்பாக தாவீது
பாடி நடனம் ஆடிக்கொண்டிருந்தான். மீகாள்
தாவீதைப் பார்த்து தன் மனதிற்குள்
அவனை இகழ்ந்தாள். அவன் தன்னைத்
தானே தரக் குறைவாக்கிகொள்கிறான்
என்று அவள் நினைத்தாள்.*
*17தாவீது பரிசுத்தப் பெட்டிக்காக ஒரு
கூடாரம் அமைத்தான். இஸ்ரவேலர்
கூடாரத்தினுள்ளே கர்த்தருடைய பரிசுத்தப்
பெட்டியை அதற்குரிய இடத்தில் வைத்
தார்கள். பின்பு தாவீது தகன பலியையும்
சமாதான பலியையும் கர்த்தருக்கு முன்பாகச்
செலுத்தினான்.*
*18தகன பலியையும் சமாதான பலியையும்
செலுத்திய பிறகு தாவீது சர்வ வல்லமை
யுள்ள கர்த்தருடைய நாமத்தில் ஜனங்களை
ஆசீர்வதித்தான். 19தாவீது இஸ்ரவேலின்
ஒவ்வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் அவர
வர் பங்காகிய ரொட்டியும், முந்திரிப்பழ
அடையும், பேரீச்சம்பழ அடையும்
கொடுத்தான். பின்பு எல்லோரும் தங்கள்
வீடுகளுக்குச் சென்றனர்.*

### மீகாள் தாவீதை திட்டுதல்

*20தாவீது தன் வீட்டை ஆசீர்வதிப்பதற்குத்
திரும்பிச்சென்றான். ஆனால் சவுலின்
மகளாகிய மீகாள் அவனைச் சந்தித்து,
"இஸ்ரவேலின் அரசர் தன்னைத்தான் இன்று
மதிக்கவில்லை! பணிப் பெண்களின்
முன்னே உமது ஆடைகளை நீக்கி*
வெட்கமின்றி ஆடுகின்ற மூடனைப்போல்
நடந்துக் கொண்டீர்!" என்றாள்.*
*21அதற்குத் தாவீது மீகாளை நோக்கி,
"உனது தந்தையையோ, அவரது குடும்பத்
தின் எந்த மனிதனையோ தேர்ந்தெடுக்காமல்
கர்த்தர், என்னைத் தேர்ந்தெடுத்தார். அவரது
ஜனங்களாகிய இஸ்ரவேலருக்குத் தலை
வனாக கர்த்தர் என்னைத் தேர்ந்தெடுத்தார்.
எனவே நான் கர்த்தருக்கு முன்பாக
தொடர்ந்து ஆடிப்பாடிக் கொண்டாடுவேன்!
22இதைக்காட்டிலும் அவமரியாதையான
செயல்களையும் நான் செய்யக்கூடும்! நீ
என்னை மதியாமலிருந்தாலும் நீ குறிப்பிடும்
பெண்கள் என்னை உயர்வாக மதிக்கி
றார்கள்!" என்றான்.*
*23சவுலின் மகளான மீகாள் தனது
மரணநாள்வரை குழந்தை இல்லாமல் இருந்து
மரித்தாள்.*

### தாவீது ஒரு ஆலயம் கட்ட விரும்புதல்

*7 தாவீது தன் புதுவீட்டிற்குச் சென்றபின்
கர்த்தர் அவனது பகைவர்களிடமிருந்து
அவனுக்கு சமாதானத்தைக் கொடுத்தார்.
2தாவீது அரசன் தீர்க்கதரிசியாகிய
நாத்தானை நோக்கி, "பாரும், நான் தேவதாரு
மரங்களால் அமைந்த அழகிய வீட்டில்
வாழ்கிறேன். ஆனால் தேவனுடைய
பரிசுத்தப் பெட்டியோ ஒரு கூடாரத்திலேயே
இன்னும் வைக்கப்பட்டுள்ளது! பரிசுத்தப்
பெட்டிக்கு அழகான நல்ல கட்டிடம் நாம்
கட்டவேண்டும்" என்றான்.*
*3நாத்தான் தாவீது அரசனை நோக்கி,
"நீர் செய்ய விரும்புகிறதைச் செய்யும்.
கர்த்தர் உம்மோடிருக்கிறார்" என்றான்.*
*4ஆனால் அன்றிரவு, நாத்தானுக்குக்
கர்த்தருடைய செய்திக் கிடைத்தது. கர்த்தர்
நாத்தானிடம், 5"நீ என் தாசனாகிய தாவீதி
டம் போய், 'இதுவே கர்த்தர் சொல்வதாகும்:
நான் வாழவேண்டிய வீட்டைக் கட்டும்
ஆள் நீ அல்ல, 6இஸ்ரவேலரை எகிப்தி
லிருந்து அழைத்து வந்தபோது நான் ஒரு
வீட்டிலும் தங்கி வாழவில்லை.' நான்
ஒரு கூடாரத்திலேயே எல்லா இடங்களுக்கும்
பயணமானேன். எனது வீடாக கூடாரத்
தையே பயன்படுத்தினேன். 7தேவதாரு
மரங்களாலாகிய அழகிய வீட்டை எனக்குக்
கட்டுமாறு நான் எந்த ஒரு இஸ்ரவேல்
கோத்திரத்திற்கும் ஒருபோதும் ஒரு வார்த்
தையும் கூறவில்லை.'*
*8"நீ என் தாசனாகிய தாவீதுக்கு இதைக்*

---

**பணிப்பெண்கள் ... நீக்கி** *தாவீது ஒரே ஒரு
பரிசுத்தமான ஏபோத்தை வைத்திருந்தான், அவன்
உடலின் எவ்வளவு பகுதி மூடப்பட்டுள்ளது
என்பது நமக்குத் தெரியாது.*

கூறவேண்டும்: 'சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கூறுவது இதுவே: நீ ஆடு மேய்த்துக்
கொண்டிருக்கும்போது உன்னை தேர்ந்
தெடுத்தேன். அவ்வேலையிலிருந்து விலக்கி
எடுத்து இஸ்ரவேலராகிய எனது ஜனங்
களுக்கு உன்னை தலைவனாக்கினேன். 9நீ
சென்ற எல்லா இடங்களிலும் நான்
உன்னோடு இருந்தேன். உனக்காக உன்
பகைவர்களை நான் முறியடித்தேன். உலகி
லுள்ள மேன்மையான ஜனங்களைப்போல்
உன்னையும் புகழ் பெறச் செய்வேன்.
10-11இஸ்ரவேலராகிய எனது ஜனங்களுக்கு,
நான் ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்துள்ளேன்.
நான் இஸ்ரவேலரை நிலை நிறுத்தினேன்.
அவர்கள் வாழ்வதற்குரிய சொந்த இடத்தைக்
கொடுத்தேன். ஓரிடத்திலிருந்து இன்னோ
ரிடத்திற்கு அவர்கள் அலைந்து கொண்டி
ராதபடிக்கு நான் இதைச் செய்தேன். முன்பு
இஸ்ரவேலரை வழிநடத்த நியாயாதிபதி
களை அனுப்பினேன். ஆனால் தீயோர்
அவர்களுக்குத் தொல்லைகள் விளை
வித்தனர். அத்தொல்லைகள் இப்போது
வராது. உனது எல்லாப் பகைவர்களிட
மிருந்தும் உனக்கு அமைதியளிக்கிறேன்.
உனது குடும்பத்தாரை அரசர்களாக்குவேன்
என உனக்கு வாக்குறுதி அளிக்கின்றேன்.
12"உனது முதிர்வயதில், நீ மரித்து உனது
முற்பிதாக்களோடு சேர்த்து புதைக்கப்
படுவாய். அப்போது உனது சொந்த மகனை
அரசனாக்குவேன். 13அவன் எனது பெயரில்
ஒரு வீட்டைக் (ஆலயத்தைக்) கட்டுவான்.
அவனது அரசின் சிங்காசனத்தை என்றென்
றைக்கும் நிலைநிறுத்துவேன் 14நான்
அவனுக்குத் தந்தையாக இருப்பேன். அவன்
எனக்கு மகனாக இருப்பான். அவன் பாவம்
செய்கையில், பிறரால் அவனுக்குத்
தண்டனை அளிப்பேன். அவர்கள் எனது
சாட்டையாக இருப்பார்கள். 15ஆனால் நான்
அவனை என்றும் நேசியாமல் விட்டு
விடமாட்டேன். அவனுக்கு உண்மையான
வனாக என்றும் இருப்பேன். சவுலிடமிருந்து
எனது அன்பையும் இரக்கத்தையும்
நீக்கினேன். நான் உன்னிடம் திரும்பிய
போது சவுலைத் தள்ளிவிட்டேன். ஆனால்
உனது குடும்பத்தாருக்கு அவ்வாறு செய்ய
மாட்டேன். 16உனது குடும்பத்தினர் அரசர்
களாகத் தொடர்ந்து இருப்பார்கள். நீ அதை
நம்பியிருக்கலாம்! உனது ஆட்சி என்றும்
தொடரும், உனது சிங்காசனம் என்றும்
நிலைத்து நிற்கும்!' என்று கூறு" என்றார்.
17நாத்தான் தான் கண்ட தரிசனத்தைக்
குறித்து தாவீதுக்குக் கூறினான். தேவன்
கூறிய எல்லாவற்றையும் அவன் தாவீதிற்குக்
கூறினான்.

### தாவீது தேவனிடம் ஜெபம் செய்கிறான்

18அப்போது தாவீது அரசன் உள்ளே
சென்று கர்த்தருக்கு முன்பாக அமர்ந்தான்.
தாவீது, "கர்த்தராகிய என் ஆண்டவரே,
நான் ஏன் உமக்கு முக்கியமானவனானேன்?
என் குடும்பம் ஏன் உமக்கு முக்கியமான
தாயிற்று? என்னை ஏன் முக்கியமானவனாக
மாற்றினீர்? 19நான் ஊழியக்காரனன்றி வேறெ
துவுமல்ல. நீர் என்னிடம் மிகவும் இரக்கம்
காட்டினீர். எனது எதிர்கால குடும்பம்
பற்றியும் இரக்கமான சொற்களைக் கூறினீர்!
கர்த்தராகிய என் ஆண்டவரே, நீர்
எப்போதும் ஜனங்களிடம் இவ்வாறு பேசு
வதில்லை அல்லவா? 20நான் எவ்வாறு
தொடர்ந்து உம்மோடு பேசமுடியும்? கர்த்தரா
கிய என் ஆண்டவரே, நான் உமது
ஊழியன் என்பதை அறிவீர். 21நீர் செய்
வதாகக் கூறியதாலும் அவற்றைச் செய்ய
விரும்புவதாலும் இந்த அற்புதமான
காரியங்களை நீர் செய்வீர். இக்காரியங்கள்
எல்லாவற்றையும் நான் அறிந்துகொள்ள நீர்
முடிவு செய்தீர். 22கர்த்தராகிய என்
ஆண்டவரே, அதனால் தான் நீர் மிகவும்
பெரியவர்! உம்மைப் போன்று வேறொரு
வரும் இல்லை. உம்மைத் தவிர வேறு
தேவன் இல்லை! நீர் செய்த காரியங்களைக்
குறித்து நாங்கள் கேள்விப்பட்டிருப்பதால்
அதை அறிவோம்.
23"உமது ஜனங்களாகிய இஸ்ரவேலரு
டையதைப் போன்று இவ்வுலகில் வேறு
எந்த ஜனங்களும் இல்லை. அவர்கள்
விசேஷமான ஜனங்கள். அவர்கள் அடிமை
களாயிருந்தார்கள், ஆனால் நீர் அவர்களை
எகிப்திலிருந்து அழைத்துவந்து விடுதலை
அடைய வைத்தீர். அவர்களை உமது
ஜனங்களாக மாற்றினீர். அவர்களை உமது
ஜனங்களாக்கினீர். உமது ஜனங்களுக்காக
பெரிய காரியங்களையும், அற்புதங்களையும்
செய்தீர். உமது தேசத்திற்காக (நிலம்) அற்புத
மான காரியங்களைச் செய்தீர். 24என்றென்
றும் உம்முடைய சொந்த ஜனங்களாக
இஸ்ரவேலரைச் செய்தீர், கர்த்தாவே, நீர்
அவர்கள் தேவனானீர்.

25"இப்போது, தேவனாகிய கர்த்தாவே,
உமது ஊழியக்காரனாகிய எனக்காகவும்
என் குடும்பத்திற்காகவும் சில காரியங்
களைச் செய்ய வாக்குறுதி தந்தீர், நீர்
வாக்குறுதி அளித்த காரியங்களை இப்
போது செய்யும். என் குடும்பத்தை அரச
குடும்பமாக எப்போதும் வைத்திரும்.
26அப்போது உமது பெயர் என்றென்றும்
மகிமைப்படுத்தப்படும்! ஜனங்கள், 'சர்வ
வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர் இஸ்ர
வேலை ஆளுகிறார்.' உமக்குச் சேவை
செய்வதில் உமது ஊழியக்காரனாகிய
தாவீதின் குடும்பம் தொடர்ந்து வலிமை
பெறட்டும்' என்பார்கள்.
27"சர்வ வல்லமையுள்ள இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தாவே, நீர் எனக்குப்
பல காரியங்களைக் காட்டினீர். நீர், 'உன்

குடும்பத்தைப் பெருமைப்படுத்துவேன்’ என்
றீர். அதனால் உமது தாசனாகிய நான்
இப்பிரார்த்தனையை செய்கிறேன். 28கர்த்தரா
கிய என் ஆண்டவரே, நீர் தேவன். நீர்
கூறும் காரியங்களை நான் நம்பமுடியும்,
உமது ஊழியக்காரனாகிய எனக்கு இந்நல்ல
காரியங்கள் ஏற்படும் என்று நீர் கூறினீர்.
29இப்போது தயவுசெய்து என் குடும்பத்தை
ஆசீர்வதியும். உமக்கு முன்பாக நின்று
எப்போதும் ஊழியம் செய்யட்டும். கர்த்த
ராகிய என் ஆண்டவரே, நீரே இவற்றைக்
கூறினீர். உம்முடைய ஆசீர்வாதம் என்றும்
தொடரும், நீரே என் குடும்பத்தை
ஆசீர்வதித்தீர்” என்றான்.

## தாவீதுக்கு பல போர்களில் வெற்றி

8 இதற்குப் பின்பு தாவீது பெலிஸ்தியரை
வென்றான். பெலிஸ்தியரின் தலைநகரம்
பரந்த நிலப்பகுதியைக் கொண்ட நகரமாக
இருந்துவந்தது. தாவீது அந்த இடங்களின்
ஆட்சியைக் கைப்பற்றினான். 2மோவாபின்
ஜனங்களையும் தாவீது தோற்கடித்தான்.
அவர்கள் எல்லோரையும் தரைமட்டும்
பணியச்செய்தான். பின் அவர்களை வரிசை
களாக ஒரு கயிற்றினால் பிரித்தான்.
அவர்களில் இரண்டு வரிசை ஆட்களைக்
கொன்றான். மூன்றாவது வரிசை ஆட்களை
உயிரோடு விட்டான். இவ்விதமாக மோவா
பின் ஜனங்கள் தாவீதின் பணியாட்களா
யினர். அவர்கள் தாவீதுக்கு கப்பம்
கட்டினார்கள்.
3ரேகோபின் மகனாகிய ஆதாதேசர்
சோபாவின் அரசனாக இருந்தான். ஐபி
ராத்து நதியருகேயுள்ள நிலப்பகுதியைத்
தாவீது கைப்பற்றுவதற்காகச் சென்றபோது
தாவீது ஆதாதேசரைத் தோற்கடித்தான்.
4ஆதாதேசரிடமிருந்து 1,700 குதிரை
வீரர்களையும் 20,000 காலாட்ப் படை
களையும் தாவீது கைப்பற்றினான். 100
இரதக்குதிரைகளைத் தவிர்த்துப் பிறவற்றைத்
தாவீது முடமாக்கினான்.
5சோபாவின் அரசனாகிய ஆதாதேசருக்கு
உதவுவதற்காக தமஸ்கு நகரிலிருந்து
ஆராமியர்கள்* படையெடுத்து வந்தார்கள்.
ஆனால் தாவீது 22,000 ஆராமியர்களையும்
வென்றான். 6பின் தாவீது, ஆராமிலுள்ள
தமஸ்குவில் வீரர்களைக் கூட்டம் கூட்டமாக
நிறுத்தினான். ஆராமியர்கள் தாவீதின்
பணியாட்களாகி அவனுக்கு கப்பம் கட்டி
வந்தனர். தாவீது சென்ற இடங்களிலெல்லாம்
கர்த்தர் அவனுக்கு வெற்றியைக் கொடுத்தார்.
7ஆதாதேசரின் பணியாட்களுக்குரிய
வெண்கல கேடயங்களைத் தாவீது எடுத்துக்
கொண்டான். அவற்றை அவன் எருசலே
முக்குக் கொண்டுவந்தான். 8பேத்தா,
பேரொத்தா ஆகிய நகரங்களிலிருந்து வெண்
கலத்தாலாகிய பற்பல பொருட்களைத்
தாவீது எடுத்துக்கொண்டான். (பேத்தாவும்
பேரொத்தாவும் ஆதாதேசேருக்குச் சொந்த
மான நகரங்கள்)
9ஆமாத்தின் அரசனாகிய தோயீ, ஆதாதே
சரின் படைகளையெல்லாம் தாவீது
தோற்கடித்ததைக் கேள்வியுற்றான். 10எனவே
தோயீ தன் மகனாகிய யோராமைத் தாவீது
அரசனிடம் அனுப்பினான். தாவீது ஆதாதே
சரைத் தோற்கடித்ததால் யோராம் தாவீதை
வாழ்த்தி ஆசீர்வதித்தான். ஆதாதேசர் முன்பு
தோயீக்கு எதிராக போரிட்டிருந்தான்.
பொன், வெள்ளி வெண்கலம் ஆகியவற்றா
லான பொருட்களை யோராம் கொண்டு
வந்திருந்தான். 11தாவீது, இப்பொருட்களை
வாங்கி கர்த்தருக்கு அர்ப்பணித்தான்.
கர்த்தருக்குக் கொடுத்த பிற பொருட்களோடு
அவற்றையும் வைத்தான். தாவீது தோற்
கடித்த தேசங்களிலிருந்து அவற்றை தாவீது
எடுத்துக்கொண்டான். 12ஆராம், மோவாப்,
அம்மோன், பெலிஸ்தியா, அமலேக்கு ஆகிய
நிலப்பகுதிகளை தாவீது வென்றான். சோபா
வின் அரசனும் ரேகோபின் மகனாகிய
ஆதாதேசரையும் தாவீது வென்றான்.
13தாவீது 18,000 ஆராமியரையும் உப்புப்
பள்ளத்தாக்கில் தோற்கடித்தான். அவன் தன்
இருப்பிடத்திற்குத் திரும்பியபோது புகழ்
பெற்றவனாக இருந்தான். 14தாவீது ஏதோமில்
வீரர்களின் கூட்டத்தை வைத்தான். ஏதோம்
முழுவதும் இவ்வாறு கூட்டம் கூட்டமாக
வீரர்களை நிறுத்தினான். ஏதோமியர் எல்லா
ரும் தாவீதின் பணியாட்களானார்கள்.
தாவீது சென்ற இடமெல்லாம் கர்த்தர்
அவனுக்கு வெற்றியைக் கொடுத்தார்.

## தாவீதின் ஆட்சி

15இஸ்ரவேல் முழுவதையும் தாவீது ஆட்சி
செய்தான். தாவீது தனது ஜனங்கள் எல்லோ
ருக்கும் சிறந்த நன்மையான தீர்மானங்களை
எடுத்தான். 16செருயாவின் மகனாகிய
யோவாப் தாவீதின் படைத்தலைவனாக
இருந்தான். அகிலூதின் மகனாகிய யோச
பாத் மந்திரியாக இருந்தான். 17அகிதூபின்
மகனாகிய சாதோக்கும், அபியத்தாரின்
மகனாகிய அகிமெலேக்கும் ஆசாரியர்கள்.
செராயா செயலாளனாக இருந்தான். 18யோய்
தாவின் மகனாகிய பெனாயா கிரேத்தியருக்
கும் பிலேத்தியருக்கும்* பொறுப்பாளியாக
இருந்தான். தாவீதின் மகன்களும் முக்கிய
தலைவர்களாக இருந்தார்கள்.

---

***ஆராமியர்*** *சிரியா தேசத்தவர் ஆகும்.*

***கிரேத்தியர் பிலேத்தியர்*** *இவர்கள் தாவீதின் சிறப்புக்குரிய மெய்க்காப்பாளர்கள். அரமயிக் மொழிபெயர்ப்பின்படி வில்வீரர்களும் கல் வீச்சாளர்களும். இதன்படி இவர்கள் வில், அம்பு, கல் போன்றவற்றைப் பயன்படுத்த பயிற்சியளிக்கப் பட்டவர்கள் எனப் பொருள்படும்.*

### சவுலின் குடும்பத்தாருக்குத் தாவீது இரக்கம் காட்டுகிறான்

9 தாவீது, "சவுலின் வீட்டில் இன்னும்
யாராவது உயிரோடிருக்கிறார்களா?
நான் அவனுக்கு கருணை காட்ட விரும்பு
கிறேன். யோனத்தான் நிமித்தம் நான் இதைச்
செய்ய விரும்புகிறேன்" என்று கூறினான்.
2சவுலின் குடும்பத்தைச் சேர்ந்த சீபா
என்னும் வேலைக்காரன் இருந்தான். தாவீ
தின் பணியாட்கள் சீபாவைத் தாவீதிடம்
அழைத்துவந்தனர். தாவீது அரசன் சீபாவி
டம், "நீ சீபாவா?" என்று கேட்டான்.
சீபா, "ஆம் நான் உங்கள் பணியாளாகிய
சீபா" என்றான்.
3அரசன், "சவுலின் குடும்பத்தில் யாரா
வது உயிரோடிருக்கிறார்களா? தேவனுடைய
இரக்கத்தை நான் அவனுக்குக் காட்ட
வேண்டும்" என்றான்.
தாவீதிடம், "யோனத்தானுக்கு இரு கால்
களும் முடமான ஒரு மகன் இருக்கிறான்"
என்று சீபா சொன்னான்.
4அரசன் சீபாவை நோக்கி, "அந்த மகன்
எங்கே இருக்கிறான்?" என்று கேட்டான்.
சீபா, அரசனிடம், "லோதேபாரில் அம்மி
யேலின் மகனாகிய மாகீரின் வீட்டில் அவன்
இருக்கிறான்" என்றான்.
5தாவீது அரசன் பணியாட்களை லோதே
பாரிலுள்ள அம்மியேலின் மகனாகிய மாகீ
ரின் வீட்டிலிருந்த யோனத்தானின் மகனை
அங்கிருந்து அழைத்து வருவதற்காக அனுப்
பினான். 6யோனத்தானின் மகன் மேவி
போசேத் என்பவன் தாவீதிடம் வந்து
முகங்குப்புற விழுந்து வணங்கினான்.
தாவீது, "மேவிபோசேத்?" என்றான்.
மேவிபோசேத், "நான் உங்கள் பணியா
ளாகிய மேவிபோசேத்" என்றான்.
7தாவீது மேவிபோசேத்தை நோக்கி,
"பயப்படாதே நான் உனக்கு இரக்கம் காட்டு
வேன். உன் தந்தை யோனத்தானிமித்தம்
இதைச் செய்வேன். உன் பாட்டனான
சவுலின் நிலங்களையெல்லாம் உனக்குத்
தருவேன். நீ எப்பொழுதும் எனது பந்தியில்
உண்பாய்" என்றான்.
8மேவிபோசேத் மீண்டும் தாவீதை வணங்
கினான். மேவிபோசேத், "உங்கள் பணியா
ளாகிய என்னிடம் நீங்கள் இரக்கம்
காட்டுகிறீர்கள். நான் செத்த நாயைக்
காட்டிலும் மேலானவன் அல்ல" என்றான்.
9அப்போது தாவீது அரசன் சவுலின்
வேலைக்காரன் சீபாவை அழைத்தான்.
தாவீது சீபாவை நோக்கி, "உன் எஜமா
னரின் பேரனாகிய மேவிபோசேத்திற்குச்
சவுல் குடும்பம் மற்றும் சவுலுக்கும்
சொந்தமான எல்லாவற்றையும் கொடுத்
துள்ளேன். 10நீ அந்த நிலத்தைப் பயிர்
செய்வாய். உன் மகன்களும் வேலையாட்
களும் மேவிபோசேத்திற்காக இதைச்
செய்யவேண்டும். நீ பயிர்களை அறுவடைச்
செய்து விளைச்சலைச் சேர்ப்பாய்.
அப்போது உன் எஜமானனின் பேரனான,
மேவிபோசேத் உண்பதற்குத் தேவையான
உணவைப் பெறுவான். உனது எஜமான
னின் பேரன், எப்பொழுதும் என் பந்தியில்
ஆகாரம் உண்பான்" என்றான்.
சீபாவிற்கு 15 மகன்களும் 20 வேலைக்
காரரும் இருந்தனர். 11சீபா தாவீது அரசனை
நோக்கி, "நான் உங்கள் பணியாள், ஆண்ட
வனாகிய எனது அரசன் கட்டளையிடுகிற
எல்லாவற்றையும் நான் செய்வேன்"
என்றான்.
மேவிபோசேத் ராஜகுமாரனைப் போல்
தாவீதின் பந்தியில் உணவுண்டான். 12மேவி
போசேத்திற்கு மீகா என்னும் சிறிய மகன்
இருந்தான். சீபாவின் குடும்பத்தின் ஜனங்கள்
அனைவரும் மேவிபோசேத்தின் வேலை
யாட்களாயினர். மேவிபோசேத் இருகால்
களும் முடமானவன். 13மேவிபோசேத் எருச
லேமில் வாழ்ந்தான். ஒவ்வொரு நாளும்
அவன் அரச பந்தியில் உணவுண்டான்.

### தாவீதின் ஆட்களுக்கு ஆனூனால் அவமானம்

10 அதற்குப் பிறகு அம்மோன் அரசனா
கிய நாகாஸ் மரித்தான். அவனது
மகனாகிய ஆனூன் அவனுக்குப் பிறகு
அரசனானான். 2தாவீது, "நாகாஸ் என்னிடம்
இரக்கத்தோடு நடந்துக்கொண்டான். எனவே
நானும் அவனது மகன் ஆனூனுக்கு இரக்கம்
காட்டுவேன்" என்றான். எனவே ஆனூனின்
தந்தையின் மறைவிற்குத் துக்கம் விசாரிப்ப
தற்காக தாவீது தனது அதிகாரிகளை
அனுப்பினான்.
தாவீதின் அதிகாரிகள் அம்மோன் தேசத்
திற்குச் சென்றார்கள். 3ஆனால் அம்மோனின்
அதிகாரிகள் தங்கள் ஆண்டவனாகிய
ஆனூனை நோக்கி, "உங்களுக்கு ஆறுதல்
கூறுவதற்குச் சில அதிகாரிகளை அனுப்பு
வதால் தாவீது உங்களைப் பெருமைப்
படுத்துவதாக நீர் நினைக்கிறீரா? இல்லை!
உங்கள் நகரத்தைக் குறித்து உளவறிந்து
கொள்வதற்காக தாவீது இந்த ஆட்களை
அனுப்பியிருக்கிறான். உங்களுக்கு எதிராகப்
போரிடுவதற்கான திட்டம் இதுவாகும்"
என்றார்கள்.
4எனவே ஆனூன் தாவீதின் அதிகாரி
களைப் பிடித்து அவர்கள் தாடியின் ஒரு
பகுதி மயிரைச் சிரைத்தான். அவர்கள்
ஆடைகளை இடுப்புப் பகுதிவரைக்கும்
நடுவே கிழித்துவிட்டப் பின் அவர்களை
அனுப்பிவிட்டான்.
5இச்செய்தியை ஜனங்கள் தாவீதிடம்
தெரிவித்தபோது அவன் தனது அதிகாரி
களைச் சந்திக்கும் பொருட்டு அவர்களிடம்
தூதுவர்களை அனுப்பினான். தனது
அதிகாரிகள் அவமானப்படுத்தப்பட்டதால்
தாவீது அரசன் செய்தியனுப்பி, "உங்கள்

தாடி மீண்டும் வளரும் மட்டும் எரிகோவில்
தங்கியிருங்கள். பின்பு எருசலேமுக்குத்
திரும்பி வாருங்கள்" என்றான்.

### அம்மோனியருக்கு எதிராகப் போர்

6அம்மோனியர் தாவீதிடம் பகை
வளர்த்தனர். எனவே அவர்கள் பெத்ரே
கோப், ஸோபா ஆகிய இடங்களிலுள்ள
ஆராமியரை அழைத்தனர். காலாட்படை
களில் 20,000 ஆராமியர் தேறினார்கள்.
அம்மோனியர் மாக்கா அரசனையும்
அவனது 1,000 வீரர்களையும் தோபிலிருந்து
12,000 வீரர்களையும் வரவழைத்தார்கள்.
7தாவீது இதைக் கேள்விப்பட்டான்.
எனவே அவன் யோவாபையும், வலிமை
மிகுந்த தனது முழு சேனையையும்
அனுப்பினான். 8அம்மோனியர் புறப்பட்டுப்
போருக்குத் தயாராயினர். அவர்கள் நகர
வாயிலருகே நின்றுக்கொண்டனர். சோபா,
ரேகோப் ஆகிய இடங்களிலுள்ள ஆராமி
யரும் தோப், மாக்கா ஆகிய இடங்களிலுள்ள
வீரர்களும் யுத்தக் களத்தில் அம்மோனிய
ரோடு சேர்ந்து நிற்கவில்லை.
9அம்மோனியர் முன்னணியிலும் பின்
பகுதியிலும் தனக்கு எதிரே நிற்பதை
யோவாப் கண்டான். எனவே அவன்
இஸ்ரவேலரில் திறமை மிகுந்த வீரர்களைத்
தெரிந்துக்கொண்டான். ஆராமியருக்கு எதி
ராகப் போர் செய்வதற்காக இவர்களை
அனுப்பினான். 10பின் தனது சகோதரனாகிய
அபிசாயின் தலைமையில் யோவாப் மற்ற
வீரர்களை அம்மோனியருக்கு எதிராகப்
போரிடுவதற்கு அனுப்பினான். 11யோவாப்
அபிசாயியை நோக்கி, "ஆராமியர் மிகுந்த
பலசாலிகளாக இருந்தால் நீ எனக்கு
உதவுவாய். அம்மோனியர்களின் பலம் மிகுந்
திருந்தால் நான் உனக்கு உதவுவேன்.
12துணிவாயிரு. நமது ஜனங்களுக்காகவும்
நமது தேவனுடைய நகரங்களுக்காகவும் நாம்
வீரத்தோடு போரிடுவோம். கர்த்தர் தாம்
சரியெனக் கண்டதைச் செய்வார்" என்றான்.
13பின்பு யோவாபும் அவனது வீரர்களும்
ஆராமியரைத் தாக்கினார்கள். ஆராமியர்கள்
யோவாபிடமிருந்தும் அவனது ஆட்களிட
மிருந்தும் தப்பி ஓடினார்கள். 14ஆராமியர்
ஓடிப்போவதை அம்மோனியர் பார்த்தனர்.
எனவே அவர்கள் அபிசாயிடமிருந்து தப்பி
ஓடிப்போய் தங்கள் நகரத்தை அடைந்தனர்.

எனவே யோவாப் அம்மோனியரோடு
போர் செய்வதை நிறுத்தி திரும்பிவந்து,
எருசலேமிற்கு போனான்.

### ஆராமியர் மீண்டும் போரிட முடிவெடுக் கின்றனர்

15இஸ்ரவேலர் தங்களைத் தோற்கடித்ததை
ஆராமியர்கள் கண்டார்கள். எனவே அவர்
கள் ஒரு பெரும்படையைத் திரட்டினார்கள்.
16ஐபிராத்து நதியின் மறுகரையில் வாழ்ந்த
ஆராமியரை அழைத்து வருவதற்கு
ஆதாதேசர் ஆட்களை அனுப்பினான். இந்த
ஆராமியர் ஏலாமுக்கு வந்தார்கள். அவர்
களின் தலைவனாக ஆதாதேசரின் படைத்
தலைவனாகிய சோபாக் சென்றான்.
17தாவீது இதைக் கேள்விப்பட்டான்.
எல்லா இஸ்ரவேலரையும் ஒன்றாகக் கூட்டி
னான். அவர்கள் யோர்தான் நதியைத்
தாண்டி ஏலாமுக்குச் சென்றனர்.

ஆராமியர் போருக்குத் தயாராகித்
தாக்கினார்கள். 18ஆனால் தாவீது ஆராமி
யரை முறியடித்தான். இஸ்ரவேலரிடமிருந்து
ஆராமியர் தப்பித்து ஓடினார்கள். தாவீது
700 தேரோட்டிகளையும் 40,000 குதிரை
வீரர்களையும் கொன்றான். தாவீது ஆராமி
யரின் படைத்தலைவனாகிய சோபாக்கைக்
கொன்றான்.
19ஆதாதேசருக்கு உதவ வந்த அரசர்கள்
இஸ்ரவேலர் வென்றதைக் கண்டார்கள்.
எனவே அவர்கள் இஸ்ரவேலரோடு சமா
தானம் செய்து அவனுக்குப் பணிவிடைச்
செய்தனர். அம்மோனியருக்கு மீண்டும்
உதவுவதற்கு ஆராமியர்கள் அஞ்சினார்கள்.

### தாவீது பத்சேபாளைச் சந்திக்கிறான்

11 வசந்த காலத்தில் அரசர்கள் போர்
புரியப் போகும்போது தாவீது யோ
வாபையும் அதிகாரிகளையும் அனைத்து
இஸ்ரவேலரையும் அம்மோனியரை அழிப்ப
தற்காக அனுப்பினான். யோவாபின் சேனை
பகைவர்களின் தலைநகராகிய ரப்பாவைத்
தாக்கிற்று.

ஆனால் தாவீது எருசலேமில் தங்கி
விட்டான். 2சாயங்காலத்தில் அவன்
படுக்கையிலிருந்து எழுந்து அரண்மனை
யின் மேல்மாடியில் உலாவிக்கொண்டிருந்
தான். அவன் மாடியிலிருந்தபோது குளித்துக்
கொண்டிருக்கும் ஒரு பெண்ணைப் பார்த்
தான். அவள் மிகுந்த அழகியா யிருந்தாள்.
3உடனே தாவீது தனது அதிகாரிகளை
அழைத்து அப்பெண்யா ரென விசாரித்தான்.
ஒரு அதிகாரி, "அப் பெண் எலியாமின்
மகளாகிய பத்சேபாள், அவள் ஏத்தியனாகிய
உரியாவின் மனைவி" என்றான்.
4தாவீது பத்சேபாளைத் தன்னிடம்
அழைத்து வருவதற்காக ஆட்களை அனுப்
பினான். அவள் தாவீதிடம் வந்தபோது
தாவீது அவளோடு பாலினஉறவுக் கொண்
டான். அவள் தன் தீட்டுக் கழிய குளித்தப்
பின்பு தன்னுடைய வீட்டிற்குச் சென்றாள்.
5ஆனால் பத்சேபாள் கருவுற்றாள். அதனைத்
தாவீதுக்குச் சொல்லியனுப்பி, "நான் கருவுற்
றிருக்கிறேன்" எனத் தெரிவித்தாள்.

### தாவீது தன் பாவத்தை மறைக்க முயலுவது

6தாவீது யோவாபுக்கு, "ஏத்தியனாகிய

உரியாவை என்னிடம் அனுப்பு” என்று
சொல்லியனுப்பினான்.
எனவே யோவாப் உரியாவைத் தாவீதி
டம் அனுப்பினான். 7உரியா தாவீதிடம்
வந்தான். தாவீது உரியாவிடம், “யோவாப்
நலமா, வீரர்கள் நலமா, யுத்தம் எப்படி
நடக்கிறது?” என்று விசாரித்தான். 8பின்பு
தாவீது உரியாவை நோக்கி, “நீ வீட்டிற்குப்
போய் ஓய்வெடுத்துக்கொள்” என்றான்.
அரசனின் அரண்மனையிலிருந்து உரியா
புறப்பட்டான். அரசனும் அவனுக்கு பரிசு
கொடுத்து அனுப்பினான். 9ஆனால் உரியா
தன் வீட்டிற்குப் போகவில்லை. வாசலுக்கு
வெளியே அரசனின் பிற பணியாட்கள்
செய்ததைப் போலவே அவனும் அங்குத்
தூங்கினான். 10காவலர்கள் தாவீதை நோக்கி,
“உரியா வீட்டிற்குப் போகவில்லை” என்
றனர்.
தாவீது உரியாவிடம், “நீ நீண்ட பயணம்
செய்து வந்திருக்கிறாய் அல்லவா? ஏன்
வீட்டிற்குப் போகவில்லை?” என்று கேட்
டான்.
11உரியா தாவீதை நோக்கி, “பரிசுத்தப்
பெட்டியும், இஸ்ரவேல் யூதாவின் வீரர்களும்
கூடாரங்களில் தங்கியுள்ளனர். எனது
ஆண்டவனாகிய யோவாபும், என் ஆண்ட
வருடைய (தாவீதின்) அதிகாரிகளும்
வெளியே முகாமிட்டுத் தங்கி இருக்கின்றனர்.
எனவே வீட்டிற்குச் சென்று உண்டு குடித்து
மனைவியோடு உறவு கொள்வது எனக்கு
முறையன்று” என்றான்.
12தாவீது உரியாவிடம், “நீ இன்று இங்கே
தங்கியிரு. நாளை உன்னைப் போருக்கு
அனுப்புகிறேன்” என்றான்.
உரியா மறுநாள் காலைவரை எருசலே
மில் தங்கியிருந்தான். 13அப்போது தாவீது
தன்னை வந்து பார்க்கும்படி உரியாவுக்குச்
சொல்லியனுப்பினான். உரியா தாவீதுடன்
உண்டு குடித்தான். தாவீது உரியாவைக்
குடிபோதையில் மூழ்கும்படிச் செய்தான்.
அப்போதும் உரியா வீட்டிற்குப் போக
வில்லை. பதிலாக அரசரின் பணியாட்
களோடு வீட்டிற்கு வெளியே உரியா தூங்கச்
சென்றான்.

### தாவீது உரியாவின் மரணத்திற்கு திட்டமிடுகிறான்

14மறுநாள், காலையில் தாவீது யோவா
புக்கு ஒரு கடிதம் எழுதினான். அதை
உரியாவிடம் கொடுத்து அனுப்பினான்.
15கடிதத்தில் தாவீது, “உரியாவைக் கடும்
போர் நடக்கும் யுத்தமுனையில் தனித்து
நிறுத்து. போரில் அவன் கொல்லப்
படட்டும்” என்றான்.
16யோவாப் பலசாலிகளான அம்மோ
னியர் இருக்கும் இடத்தைக் கவனித்தான்.
உரியாவை அங்கு அனுப்பினான். 17ரப்பா
நகரத்தின் ஆட்கள் யோவாபை எதிர்த்துப்
போரிட வந்தனர். அப்போது தாவீதின்
ஆட்களில் சிலர் கொல்லப்பட்டனர். ஏத்திய
னாகிய உரியாவும் அவர்களில் ஒருவன்.
18யுத்தத்தில் நிகழ்ந்தவற்றைக் குறித்து
யோவாப் ஒரு குறிப்பு எழுதி தாவீதுக்கு
அனுப்பினான். 19போரில் நடந்தவற்றைத்
தாவீது அரசனுக்குச் சொல்லும்படி தூதுவர்
களிடம் யோவாப் கூறினான். 20“அரசன்
கோபமடையக்கூடும், ‘யோவாபின் படை
போரிடுவதற்கு நகரை மிகவும் நெருங்
கியதேன்? என்று அரசன் கேட்கக்கூடும்.
அம்புகளை எய்யக்கூடிய ஆட்கள் நகர
மதில்களில் அமர்ந்திருப்பார்கள் என்பது
அவனுக்கு நிச்சயமாகத் தெரியும். 21எருப்
சேத்தின் மகனாகிய அபிமெலேக்கை ஒரு
பெண் கொன்றாள் என்பதை அவன்
நிச்சயமாக அறிவான். அது தேபேசில்
நடந்தது. அப்பெண் நகர மதிலில் அமர்ந்
திருந்து அரைக்கிற கல்லின் மேல்பாகத்தை
அபிமெலேக்கின் மேல் எறிந்தாள். எனவே
ஏன் யோவாப் மதிலுக்கு மிக அருகே
சென்றான்?’ என்றும் கேட்கக்கூடும். தாவீது
அரசன் இவ்வாறு கூறினால் அவனிடம்
இச்செய்தியைக் கூறவேண்டும்: ‘உங்கள்
அதிகாரிகளில் ஏத்தியனான உரியாவும்
மரித்துவிட்டான்’” என்றான்.
22செய்தியாளன் தாவீதிடம் சென்று
யோவாப் கூறியவற்றையெல்லாம் சொன்
னான். 23அவன் தாவீதிடம், “அம்மோனியர்
களத்தில் எங்களை எதிர்த்தார்கள். நாங்கள்
போரிட்டு அவர்களை நகரவாயில்வரைக்
கும் துரத்தினோம். 24அப்போது நகரமதிலி
லிருந்த ஆட்கள் உங்கள் அதிகாரிகள் மேல்
அம்புகளை எய்தார்கள். உமது சில
அதிகாரிகள் அதில் மரித்தனர். அவர்களில்
ஏத்தியனாகிய உரியாவும் மரித்தான்”
என்றான்.
25தாவீது அத்தூதுவனிடம் “யோவாபுக்கு
இச்செய்தியைத் தெரிவி: ‘இதைக் குறித்து
மிகவும் கலங்காதே. ஒரு வாள் ஒருவனை
மட்டுமல்ல, அடுத்தவனையும் கொல்லக்
கூடும். ரப்பாவின் மீது தாக்குதலைப்
பலப்படுத்து. நீ வெற்றி பெறுவாய்’ இந்த
வார்த்தைகளால் யோவாபுக்கு உற்சாக
மூட்டு” என்று சொல்லியனுப்பினான்.

### தாவீது பத்சேபாளை மணந்துக் கொள்கிறான்

26தனது கணவன் உரியா மரித்ததை
பத்சேபாள் கேள்விப்பட்டாள். அவளது
கணவனுக்காக அழுதாள். 27அவளது துக்க
காலம் முடிந்தபிறகு, தாவீது அவளைத்
தனது வீட்டிற்கு அழைத்து வரும்படியாக
ஆட்களை அனுப்பினான். அவள் தாவீதின்
மனைவியானாள். அவள் தாவீதுக்கு ஒரு
மகனைப் பெற்றெடுத்தாள். ஆனால் தாவீது

செய்த இந்த தீமையை கர்த்தர் விரும்ப
வில்லை.

### தாவீதிடம் நாத்தான் பேசுகிறான்

12 கர்த்தர் நாத்தானை தாவீதிடம்
அனுப்பினார். நாத்தான் தாவீதிடம்
சென்றான். நாத்தான், “ஒரு நகரத்தில்
இரண்டு பேர் இருந்தார்கள். ஒருவன் செல்
வந்தன், மற்றவன் ஏழை. 2செல்வந்தனிடம்
ஏராளமான ஆடுகளும் கால்நடைகளும்
இருந்தன. 3ஆனால், ஏழையிடம் அவன்
வாங்கிய ஒரு (பெண்) ஆட்டுக்குட்டி
மாத்திரம் இருந்தது. அது அந்த ஏழை
யோடும் அவனது பிள்ளைகளோடும்
வளர்ந்து, உணவை உண்டது, ஏழையின்
கோப்பையில் அது குடித்தது. ஏழையின்
மார்பில் அது தூங்கிற்று. அந்த ஏழைக்கு
அது ஒரு மகளைப் போல இருந்தது.
4“அந்த வழியாய் வந்த ஒரு பயணி
செல்வந்தனைச் சந்திப்பதற்காக இறங்கி
னான். செல்வந்தன் அவனுக்கு ஒரு விருந்து
தர ஏற்பாடு செய்தான். அதற்கென்று
அச்செல்வந்தன் தனது ஆடுமாடுகளில்
எதையும் தொடாமல் ஏழையின் ஒரே
ஆட்டுக்குட்டியை எடுத்துக்கொண்டான்.
அதைக் கொன்று விருந்தாளிக்கு உணவாகச்
சமைத்தான்” என்றான்.
5தாவீது அச்செல்வந்தன் மீது கோபங்
கொண்டான். அவன் நாத்தானை நோக்கி,
“கர்த்தர் உயிரோடிருப்பது நிச்சயமானால்,
அம்மனிதன் மரிக்கவேண்டும் என்பதும்
நிச்சயம்! 6அவன் ஆட்டுக்குட்டிக்காக நான்கு
மடங்கு பணம் செலுத்த வேண்டும்.
ஏனெனில் அவன் இக்கொடிய தீமையைச்
செய்தான். ஏனெனில் அவனிடம் இரக்க
குணம் எள்ளளவும் இருக்கவில்லை”
என்றான்.

### நாத்தான் தாவீதிடம் அவன் பாவத்தை கூறுதல்

7அப்போது நாத்தான் தாவீதை நோக்கி,
“நீயே அந்த செல்வந்தன்! இதுவே இஸ்ர
வேலின் தேவனாகிய கர்த்தர் கூறுவது:
‘நான் உன்னை இஸ்ரவேலின் அரசனாக
அபிஷேகம் செய்தேன். நான் உன்னைச்
சவுலிடமிருந்து மீட்டேன். 8நீ அவனது
குடும்பத்தையும் அவனது மனைவியரையும்
எடுத்துக்கொள்ளுமாறு நான் செய்தேன்.
நான் உன்னை இஸ்ரவேல், யூதா
ஜனங்களுக்கு அரசனாக்கினேன். அதுபோதா
தென்று உனக்கு இன்னும் அதிகமதிகமாகக்
கொடுத்தேன். 9ஏன் நீ கர்த்தருடைய
கட்டளையை அசட்டை செய்தாய்? அவர்
தவறெனக் கூறிய காரியத்தை நீ ஏன்
செய்தாய்? உரியாவின் மனைவியை உன்
மனைவியாக்கிக் கொண்டாய். நீ, அம்மோ
னியரின் வாளால் ஏத்தியனாகிய உரியா
வைக் கொன்றாய். இந்த விதமாக ஏத்திய
னாகிய உரியாவை ஒரு வாளால் கொன்
றாய். 10எனவே வாள் உன் குடும்பத்தை
விட்டு அகலாது. நீ ஏத்தியனாகிய உரியா
வின் மனைவியை எடுத்துக்கொண்டாய்.
இப்படி செய்ததினால் நீ என்னைப் பொருட்
படுத்தவில்லை என்பதைக் காட்டினாய்.’
11“கர்த்தர் சொல்வது: ‘நான் உனக்கு
எதிராக தொல்லையைத்தர ஆரம்பிப்பேன்.
இந்த தொல்லை உனது குடும்பத்திலிருந்தே
உருவாகும். உன் மனைவியரை நான்
உன்னிடமிருந்து பிரித்து உனக்கு மிக
நெருக்கமான ஒருவனுக்குக் கொடுப்பேன்,
அம்மனிதன் உன் மனைவியரோடு படுப்
பான், அதை எல்லோரும் காண்பார்கள்!*
12நீ இரகசியமாக பத்சேபாளோடு படுத்
தாய். இஸ்ரவேலர் எல்லோரும் பார்க்கும்
படியாக* பகிரங்கமாக நான் இக்கா
ரியத்தைச் செய்வேன்’ என்றார்” என்றான்.
13அப்போது தாவீது நாத்தானை நோக்கி,
“நான் கர்த்தருக்கு எதிராக பாவம்
செய்தேன்” என்றான்.
நாத்தான் தாவீதை நோக்கி, “கர்த்தர்
இந்த பாவத்தை மன்னிப்பார். நீ மரிக்க
மாட்டாய். 14ஆனால் நீ செய்த இந்த
பாவத்தின் மூலம் கர்த்தருடைய எதிரிகளும்
அவரை வெறுத்தொதுக்க நீ வழிவகுத்து
விட்டாய்! ஆதலால் உனக்குப் பிறக்கும்
மகன் மரிப்பான்” என்றான்.

### தாவீதுக்கும் பத்சேபாளுக்கும் பிறந்த மகனின் மரணம்

15பின்பு நாத்தான் வீட்டிற்குத் திரும்பி
னான். தாவீதுக்கும் உரியாவின் மனைவிக்
கும் பிறந்த ஆண் குழந்தையை கர்த்தர்
பெரும் நோய்க்குள்ளாக்கினார். 16தாவீது
தேவனிடம் குழந்தையின் பொருட்டு
வேண்டினான். தாவீது உண்ணவோ,
குடிக்கவோ மறுத்தான். வீட்டிற்குள் சென்று
அங்கேயே இருந்தான். இரவு முழுவதும்
தரையில் கிடந்தான்.
17தாவீதின் குடும்பத்திலுள்ள மூப்பர்கள்
வந்து தரையிலிருந்து அவனை எழுப்ப
முயன்றனர். ஆனால் தாவீதோ எழுந்திருக்க
மறுத்தான். அந்த மூப்பர்களுடன் அமர்ந்து
உண்ண மறுத்தான். 18ஏழாவது நாள்,
குழந்தை மரித்தது. தாவீதின் பணியாட்கள்
குழந்தை மரித்த செய்தியை தாவீதிடம்
சொல்லப் பயந்தனர். அவர்கள், “குழந்தை
உயிரோடிருந்தபோது தாவீதோடு பேச
முற்பட்டோம். ஆனால் அவர் நாங்கள்
சொன்னதைக் கேட்க மறுத்தார். இப்போது
குழந்தை மரித்ததென்று தாவீதிடம் சொன்

---

**அதை எல்லோரும் காண்பார்கள்** எழுத்தின் பிராகாரமாக, “சூரியனின் பார்வையில்.”

**இஸ்ரவேல் … பார்க்கும்படியாக** எழுத்தின் பிராகாரமாக, “இஸ்ரவேலுக்கு முன்னாலும் சூரியனுக்கு முன்நாலும்.”

னால், அவர் தனக்குத்தானே தீங்கு ஏதேனும்
செய்துக்கொள்ளலாம்" என்றனர்.
19 ஆனால் தாவீது, அவனது பணியாட்கள்
மெதுவான குரலில் பேசிக்கொள்வதைப்
பார்த்தான். குழந்தை மரித்துப்போனதைப்
புரிந்துக்கொண்டான். எனவே தாவீது
பணியாட்களை நோக்கி, "குழந்தை மரித்து
விட்டதா?" என்று கேட்டான்.

பணியாட்கள், "ஆம், அவன் மரித்துப்
போனான்" என்றனர்.
20 அப்போது தாவீது தரையிலிருந்து
எழுந்து குளித்தான். பழைய ஆடைகளைக்
களைந்து புதிய ஆடைகளை உடுத்திக்
கொண்டான். பின்னர் அவன் கர்த்தருடைய
வீட்டிற்குள் தொழுதுகொள்ளச் சென்றான்.
அதன்பின் தன் வீட்டிற்குப் போய் உண்
பதற்கு ஏதாவது வேண்டுமெனக் கேட்டான்.
அவனது வேலைக்காரர்கள் கொடுத்த
உணவை உண்டான். 21 தாவீதின்
வேலையாட்கள் அவனிடம், "நீர் ஏன்
இப்படிச் செய்கிறீர்? குழந்தை உயிருடன்
இருந்தபோது உண்ண மறுத்து அழுதீர்?
ஆனால் அது மரித்த பின்பு, எழுந்து
புசித்தீரே?" என்று கேட்டனர்.
22 தாவீது, "குழந்தை உயிரோடிருந்த
போது, நான் உணவுண்ண மறுத்து
அழுதேன். ஏனெனில், 'யாருக்குத் தெரியும்?
கர்த்தர் எனக்காக இரக்கங்கொண்டு
குழந்தையின் உயிரை அனுமதிக்கக்கூடும்'
என நான் எண்ணினேன். 23 இப்போது
குழந்தை மரித்துப்போனது. நான் உண்ண
மறுத்து பயன் என்ன? அதனால்
குழந்தையை உயிருடன் கொண்டுவர
முடியுமா? முடியாது! ஒருநாள் நானும்
அவனிடம் செல்வேன், ஆனால் அவனோ
என்னிடம் வரமுடியாது" என்றான்.

### சாலொமோன் பிறப்பு

24 பின்பு தாவீது தன் மனைவியாகிய
பத்சேபாளுக்கு ஆறுதல் கூறினான். அவன்
அவளோடு பாலின உறவுக் கொண்டான்.
பத்சேபாள் மீண்டும் கருவுற்றாள். அவளுக்கு
மற்றோர் ஆண்குழந்தை பிறந்தது. தாவீது
அவனுக்குச் சாலொமோன் என்று பெயரிட்
டான். கர்த்தர் சாலொமோனை நேசித்தார்.
25 கர்த்தர், தீர்க்கதரிசியாகிய நாத்தான் மூல
மாக சொல்லியனுப்பி சாலொமோனுக்கு
யெதிதியா* என்று பெயரிட்டார். நாத்தான்
கர்த்தருக்காக இதைச் செய்தான்.

### தாவீது ரப்பாவைக் கைப்பற்றுகிறான்

26 ரப்பா அம்மோனியாவின் தலைநகரமா
யிருந்தது. அம்மோனியரின் ரப்பாவுக்கு
எதிராக யோவாப் போரிட்டான். அவன்
அந்நகரைக் கைப்பற்றினான். 27 யோவாப்
தாவீதிடம் தூதுவர்களை அனுப்பி, "நான்
ரப்பாவுக்கு எதிராகப் போர் செய்தேன்.
நீர்நிலைகளின் நகரத்தை நான் கைப்பற்றி
னேன். 28 இப்போது பிறரையும் அழைத்து
வந்து இந்நகரைத் (ரப்பாவை) தாக்குங்கள்.
நான் கைப்பற்றும் முன்பு இந்நகரைக்
கைப்பற்றுங்கள். நான் இந்நகரைக் கைப்
பற்றினால் அது என் பெயரால் அழைக்கப்
படும்" என்று கூறினான்.
29 பின்பு தாவீது எல்லோரையும்
அழைத்துக்கொண்டு ரப்பாவுக்குப்
போனான். அவன் ரப்பாவுக்கு எதிராகப்
போர்செய்து அந்நகரைக் கைப்பற்றினான்.
30 அந்த அரசனின் தலையிலிருந்த கிரீடத்
தைத்* தாவீது அகற்றினான். அக்கிரீடம்
பொன்னாலானது, 75 பவுண்டு* எடை
யுள்ளது. அக்கீரிடத்தில் விலையுயர்ந்த
கற்கள் இருந்தன. அக்கீரிடத்தைத் தாவீதுக்கு
சூட்டினார்கள். அந்நகரிலிருந்து பல விலை
யுயர்ந்த பொருட்களைத் தாவீது எடுத்துச்
சென்றான்.
31 ரப்பாவின் ஜனங்களைத் தாவீதின்
நகருக்கு வெளியே அழைத்துவந்தான். இரம்
பம், கடப்பாரை, இரும்புக்கோடரி ஆகிய
வற்றைப் பயன்படுத்தும் வேலையை
அவர்கள் செய்யும்படி தாவீது கூறினான்.
செங்கற்களால் கட்டிடம் கட்டும் வேலை
யைச் செய்யும்படியாகவும் தாவீது அவர்
களை வற்புறுத்தினான். அம்மோனியரின்
நகரங்கள் அனைத்திலும் தாவீது இதனையே
செய்தான். பின்பு தாவீதும் அவனது
படையினரும் எருசலேமுக்குத் திரும்பிச்
சென்றனர்.

### அம்னோனும் தாமாரும்

13 தாவீதுக்கு அப்சலோம் என்னும்
பெயருள்ள மகன் இருந்தான். அப்ச
லோமின் சகோதரியின் பெயர் தாமார்
ஆகும். தாமார் மிகுந்த அழகுடையவள்.
தாவீதின் மற்றொரு மகனாகிய அம்னோன்
2 தாமாரை விரும்பினான். தாமார் ஒரு
கன்னிகை அவளுக்கு எந்தத் தீமையையும்
விளைவிக்க அம்னோன்* நினைக்கவில்லை.
எனினும் அவன் அவளை அதிகமாக
நேசித்தான். நோயுறுமளவிற்கு அம்னோன்
அவள் நினைவானான்.
3 சிமியாவின் மகனாகிய யோனதாப்
அம்னோனின் நெருங்கிய நண்பன். (சிமியா
தாவீதின் சகோதரன்.) யோனதாப் மிகவும்

**யெதிதியா** இந்த பெயர் "கர்த்தரால் நேசிக்கப்பட்டவன்" என்பதாகும்.

**தலையிலிருந்த கிரீடம்** அல்லது "மில்காமின் தலை" மில்காம் ஒரு பொய் தெய்வம். இதனை அம்மோனியர்கள் வழிபட்டனர்.

**75 பவுண்டு** ஒரு தாலந்து எடையளவு, அதாவது சுமார் 34 கிலோகிராம்.

**அம்னோன்** அம்னோன், அப்சலாம் மற்றும் தாமாரின் அரை சகோதரன். அவரனைவருக்கும் தாவீது தந்தை. ஆனால் அம்னாவின் அம்மா வேறு. பார்க்க 2 சாமு. 3:2,3.

புத்திசாலி. 4யோனதாப் அம்மோனை
நோக்கி, “நாளுக்கு நாள் நீ மெலிந்துக்
கொண்டே வருகிறாய். நீ அரசனின் மகன்!
உனக்கு உண்பதற்கு ஏராளமான பொருட்
கள் இருந்தும், நீ ஏன் எடை குறைந்து
காணப்படுகிறாய்? சொல்!” என்றான்.

அம்மோன் யோனதாபை நோக்கி, “நான்
தாமாரை மிகவும் விரும்புகிறேன். அவள்
எனது ஒன்று விட்ட சகோதரன் அப்ச
லோமின் சகோதரி” என்றான்.

5யோனதாப் அம்மோனை நோக்கி,
“படுக்கைக்குப் போ. நோயுற்றவன் போல்
நடி. உன் தந்தை உன்னைக் காணவருவார்.
அவரிடம், ‘எனது சகோதரியாகிய தாமார்
வந்து எனக்கு உணவு தரட்டும். அவள்
என் முன்னே உணவு சமைக்கட்டும்.
அப்போது அதை நான் பார்த்து, அவள்
கையால் புசிப்பேன்’ என்று சொல்”
என்றான்.

6அவ்வாறே அம்மோன் படுக்கையில்
படுத்து நோயுற்றவன்போல் நடித்தான்.
தாவீது அரசன் அம்மோனைப் பார்க்க
வந்தான். அம்மோன் தாவீது அரசனிடம்,
“தயவுசெய்து எனது சகோதரி தாமாரை
உள்ளே வரச்சொல்லுங்கள். அவள் என்
முன்னே எனக்காக இரண்டு அப்பங்கள்
சுட்டுதரட்டும். அப்போது அவள் கையால்
ஊட்ட அவற்றை புசிப்பேன்” என்றான்.

7தாவீது தாமாரின் வீட்டிற்கு ஆட்களை
அனுப்பினான். செய்தி சொல்லவந்த ஆட்கள்
தாமாரிடம், “உனது சகோதரன் அம்மோன்
வீட்டிற்குச் சென்று அவனுக்காக கொஞ்சம்
உணவைத் தயாரித்துக் கொடு” என்றார்கள்.

### தாமார் அம்னோனுக்காக உணவு தயாரித்தல்

8எனவே தாமார் தன் சகோதரனாகிய
அம்னோனின் வீட்டிற்குச் சென்றாள். அம்
னோன் படுக்கையில் இருந்தான். தாமார்
மாவை எடுத்து, தன் கைகளால் பிசைந்து,
அப்பங்களைச் சுட்டாள். அம்னோன் எதிரி
லேயே இதனைச் செய்தாள். 9சமையல்
பாத்திரத்திலிருந்து அவற்றை எடுத்து, அம்
னோன் உண்பதற்காகப் பரிமாறினாள்.
ஆனால் அம்னோன் சாப்பிட மறுத்தான்.
அம்னோன் தன் வேலையாட்களை நோக்கி,
“இங்கிருந்து போங்கள். என்னைத் தனி
மையில் இருக்கவிடுங்கள்!” என்றான்.
எனவே எல்லா வேலையாட்களும்
அறையை விட்டு வெளியே சென்றனர்.

### அம்னோன் தாமாரைக் கற்பழித்தல்

10அப்போது அம்னோன் தாமாரிடம்,
“உணவைப் படுக்கையறைக்குள் கொண்டு
வந்து உனது கைகளால் எனக்கு உண
வூட்டு” என்றான்.

எனவே தாமார் தான் தயாரித்த அப்பங்
களை எடுத்துக்கொண்டு, தன் சகோதரனின்
படுக்கையறைக்குள் சென்றாள். 11அவள்
அம்னோனுக்கு அவ்வுணவைக் கொடுக்க
ஆரம்பித்தாள். ஆனால் அவனோ அவளை
கையைப் பிடித்திழுத்து அவளிடம், “சகோ
தரியே, நீ என்னோடு சேர்ந்து படுத்துக்
கொள்” என்றான்.

12தாமார் அம்னோனிடம், “சகோதரனே,
வேண்டாம்! அவ்வாறு செய்ய என்னை
வற்புறுத்தாதே! அவமானமான இக்காரியத்
தைச் செய்யாதே! இஸ்ரவேலில் இந்த
கொடிய காரியம் நடக்கக்கூடாது! 13நான்
எனக்கு நேரும் அவமானத்திலிருந்து ஒரு
போதும் மீளமுடியாது. நீ ஒரு பயங்கர
குற்றவாளி என்று ஜனங்கள் கவனிப்
பார்கள். தயவுசெய்து, அரசனோடு பேசு.
என்னை நீ மணம் செய்துக்கொள்ள அவர்
அனுமதியளிப்பார்” என்றாள்.

14ஆனால் அம்னோன், தாமார் சொன்ன
தைக் கேட்க மறுத்தான். அவன் தாமாரைக்
காட்டிலும் பலசாலி. அம்னோன் தாமாரை
பாலினஉறவு கொள்ளும்படி கட்டாயப்
படுத்தி அவளை பலவந்தமாய் கற்பழித்தான்.
15பின்பு அம்னோன் தாமாரை வெறுக்க
ஆரம்பித்தான். அவளை முன்பு விரும்பின
தற்கு அதிகமாக அவளை வெறுக்க
ஆரம்பித்தான். அம்னோன் தாமாரை
நோக்கி, “எழுந்து இங்கிருந்து போ!”
என்றான்.

16தாமார் அம்னோனிடம், “இப்படி
என்னை அனுப்பிவிடாதே. முன்பு நிகழ்ந்
ததைக் காட்டிலும் அது தீமையானதாக
இருக்கும்!” என்றாள்.

ஆனால் அம்னோன் தாமார் சொல்வதைக்
கேட்க மறுத்தான். 17அம்னோன் தன்
வேலையாளை அழைத்து, “இப்பெண்ணை
இந்த அறைக்கு வெளியே கொண்டு
செல்லுங்கள். பின்பு அவளுக்குப்பிறகு
கதவை தாழ்ப்பாளிடுங்கள்” என்றான்.

18அவ்வாறே அம்னோனின் வேலைக்
காரன் தாமாரை அறைக்கு வெளியே நடத்தி,
கதவைத் தாழிட்டான்.

தாமார் பலநிறங்களுள்ள ஒரு நீண்ட அங்கி
அணிந்திருந்தாள். அரசனின் கன்னிப்
பெண்கள் (மகள்கள்) இத்தகைய நீண்ட
பலவர்ண அங்கி அணிவது வழக்கமாக
இருந்தது. 19தாமார் பலவர்ண அங்கியைக்
கிழித்துக்கொண்டு, தலையின் மேல் சாம்
பலை வாரிப் போட்டுக்கொண்டாள். பின்
அவள் தனது கையைத் தலையில் வைத்துக்
கொண்டு அழ ஆரம்பித்தாள்.

20அப்போது தாமாரின் சகோதரன்
அப்சலோம் அவளை நோக்கி, “நீ உனது
சகோதரன் அம்னோனிடம் சென்றாயா?
அவன் உன்னைத் துன்புறுத்தினானா?
அமைதியாக இரு, அம்னோன் உனது
சகோதரன். நாங்கள் இது குறித்து கவனித்
துக்கொள்வோம். அதிகமாக உன் மனதை
வருத்தாதே” என்றான். தாமார் எதுவும்

*சொல்லவில்லை. அவள் அமைதியாக அப்ச*
*லோமின் வீட்டில் தங்கும்படி சென்றாள்.*
21*தாவீது அரசன் இச்செய்தியைக்*
*கேள்விப்பட்டான். அவன் மிகவும்*
*கோபப்பட்டான்.* 22*அப்சலோம் அம்னோனை*
*வெறுத்தான். அப்சலோம் அம்னோனிடம்*
*நல்லதோ கெட்டதோ ஒரு வார்த்தையும்*
*பேசவில்லை. தன் சகோதரியாகிய தாமா*
*ரைக் கற்பழித்ததால், அப்சலோம் அம்னோ*
*னை வெறுத்தான்.*

### அப்சலோம் பழிவாங்குதல்

23*இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு*
*அப்சலோமின் ஆடுகளிலிருந்து உரோமத்*
*தைக்கத்தரிக்கபாகால்சோரிலிருந்து சிலரை*
*வரவழைத்தான். அதைப் பார்ப்பதற்கென்று*
*அரசனின் எல்லாப்பிள்ளைகளையும் அப்ச*
*லோம் அழைத்தான்.* 24*அப்சலோம் அரசனி*
*டம் போய், "எனது ஆடுகளின் மயிரைக்*
*கத்தரிக்க சிலர் வந்துள்ளனர். உங்கள்*
*வேலையாட்களோடும் வந்து அதைப்*
*பாருங்கள்" என்றான்.*
25*தாவீது அரசன் அப்சலோமிடம்,*
*"இல்லை மகனே. நாங்கள் எல்லோரும்*
*வரமாட்டோம். உனக்கு அதிகம்*
*தொல்லையாக இருக்கும்" என்றான்.*
*தாவீதை வரும்படி அப்சலோம் மிகவும்*
*கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். ஆனால்*
*தாவீது வரவில்லை, ஆனாலும் தன் ஆசி*
*களை அவனுக்கு வழங்கினான்.*
26*அப்சலோம், "நீங்கள் வரவிரும்பா*
*விட்டால் எனது சகோதரன் அம்னோனை*
*என்னோடு அனுப்புங்கள்" என்றான்.*
*தாவீது அரசன் அப்சலோமிடம், "அவன்*
*ஏன் உன்னோடு வரவேண்டும்?" என்று*
*கேட்டான்.*
27*அப்சலோம் தாவீதை கெஞ்சிக் கெஞ்சிக்*
*கேட்டுக்கொண்டே இருந்தான். எனவே*
*இறுதியாக, அம்னோனும், அரசனின் மற்ற*
*மகன்களும் அப்சலோமோடு சென்றனர்.*

### அம்னோன் கொலைச் செய்யப்படுகிறான்

28*பின்பு, அப்சலோம் தன் வேலையாட்*
*களுக்கு இவ்வாறு கட்டளையிட்டான்,*
*"அம்னோனைக் கவனித்துக்கொண்டிருங்கள்.*
*அவன் குடிக்க ஆரம்பித்து திராட்சை*
*ரசப்போதையில் ஆழ்ந்திருக்கும்போது, நான்*
*உங்களுக்குக் கட்டளையிடுவேன். நீங்கள்*
*அம்னோனைத் தாக்கி அவனைக்*
*கொல்லுங்கள். தண்டனை நேரும் என்று*
*அஞ்சாதீர்கள். எவ்வாறாயினும், நீங்கள்*
*எனது கட்டளைக்குப் பணிகிறீர்கள்.*
*இப்போது, துணிவும் வீரமும்*
*உடையவர்களாய் இருங்கள்" என்றான்.*
29*ஆகையால் அப்சலோமின் இளம்*
*வீரர்கள் அவன் கூறியபடியே செய்தார்கள்.*
*அவர்கள் அம்னோனைக் கொன்றார்கள்.*
*ஆனால் தாவீதின் பிற மகன்கள் தப்பிப்*
*பிழைத்தார்கள். ஒவ்வொரு மகனும் தன்*
*கோவேறு கழுதையின் மேலேறித் தப்பிச்*
*சென்றான்.*

### தாவீதுக்கு அம்னோனின் மரணச் செய்தி

30*அரசனின் மகன்கள் தங்கள் நகரத்தை*
*நோக்கி பயணம் செய்துக்கொண்டிருந்தனர்.*
*ஆனால் நிகழ்ந்தவற்றைப் பற்றிய செய்தியை*
*தாவீது அரசன் முந்திக் கேள்விப்பட்டான்.*
*ஆனால் அவனறிந்தச் செய்தி, "அரசனின்*
*எல்லா மகன்களையும் அப்சலோம் கொன்று*
*விட்டான்! ஒருவன்கூட உயிரோடு*
*விடப்படவில்லை" என்பதாகும்.*
31*தாவீது அரசன் தனது ஆடைகளைக்*
*கிழித்துக்கொண்டு தரையில் கிடந்தான்.*
*அவனருகே நின்றுக்கொண்டிருந்த அதிகாரி*
*களும் தங்கள் ஆடைகளைக் கிழித்துக்*
*கொண்டனர்.*
32*ஆனால் தாவீதின் சகோதரனும், சிமியா*
*வின் மகனுமாகிய யோனதாப், "அரசனின்*
*எல்லா மகன்களும் கொல்லப்பட்டார்கள்*
*என்று நினைக்கவேண்டாம்.! அம்னோன்*
*மட்டுமே மரித்தான். அப்சலோமின் சகோத*
*ரியாகிய தாமாரை அம்னோன் கற்பழித்ததி*
*லிருந்து அப்சலோம் இதற்காகத் திட்டமிட்*
*டுக் கொண்டிருந்தான்.* 33*எனது ஆண்ட*
*வனாகிய அரசரே, உங்கள் எல்லா*
*மகன்களும் மரித்துவிட்டனர் என்று*
*நினைக்கவேண்டாம். அம்னோன் மட்டுமே*
*மரித்தான்" என்றான்.*
34*அப்சலோம் ஓடிப்போய்விட்டான்.*
*நகரகோட்டைச் சுவரின் மீது ஒரு*
*காவலாள் நின்றுக்கொண்டிருந்தான். மலை*
*மேட்டிலிருந்து பலர் வந்துக்கொண்*
*டிருப்பதை அவன் கவனித்தான்.* 35*எனவே*
*யோனதாப் தாவீது அரசனை நோக்கி,*
*"பாருங்கள், நான் சொன்னது சரியே!*
*அரசனின் மகன்கள் வந்துக்கொண்டிருக்*
*கிறார்கள்" என்றான்.*
36*யோனதாப் அவ்வாறு கூறி முடித்ததும்*
*அரசனின் மகன்கள் வந்து சேர்ந்தனர்.*
*அவர்கள் சத்தமாக அழுதுக்கொண்*
*டிருந்தனர். தாவீதும் அவனது அதிகாரிகளும்*
*அழ ஆரம்பித்தனர். அவர்கள் மிகவும்*
*புலம்பி அழுதனர்.* 37*தாவீது தனது மகனுக்*
*காக (அம்னோனுக்காக) தினசரி அழுதான்.*

### அப்சலோம் கேசூருக்குத் தப்பிச் செல்லுதல்

*அப்சலோம் அம்மியூதின் மகனாகிய*
*தல்மாய் என்னும் கேசூரின் அரசனிடம்**
*ஓடிப்போனான்.* 38*அப்சலோம் கேசூருக்கு*
*ஓடிப்போனப் பிறகு, அங்கு மூன்று*
*ஆண்டுகள் தங்கியிருந்தான்.*39*தாவீது அரசன்*

---

**அம்மியூதின் ... அரசனிடம்** *தலமாய் அப்சலோமின் தாத்தா பார்க்க 2 சாமு.* 3:3.

அம்னோனின் மரணத்திற்குப்பின், ஆறுதல்
பெற்றான். ஆனால் அப்சலோமின் பிரிவு
அவனை மிகவும் வாட்டியது.

### யோவாப் புத்திசாலியான ஒரு பெண்ணைத் தாவீதிடம் அனுப்புகிறான்

14 தாவீது அரசன் அப்சலோமின்
பிரிவைத் தாங்கமுடியாமல் வருந்து
வதை செருயாவின் மகனாகிய யோவாப்
அறிந்தான். 2எனவே யோவாப் சிலரைத்
தெக்கோவாவிற்கு அனுப்பி, அங்கிருந்து
புத்திசாலியான ஒரு பெண்ணை அழைத்து
வருமாறு கூறினான். யோவாப் அந்தப்
பெண்ணிடம், “மிகவும் துக்கமாயிருக்கிற
வளைப்போல் காண்பித்துக்கொள். துக்கத்
திற்கு அறிகுறியான ஆடைகளை அணிந்துக்
கொள். நல்ல ஆடைகளை அணியாதே.
மரித்த ஒருவருக்காக பலநாட்கள் வருந்துகிற
ஒருவளைப்போல் நடி. 3அரசனிடம் போய்
நான் உனக்குச் சொல்லித்தரும் சொற்களைப்
பயன்படுத்திப் பேசு” என்றான். பின்பு
யோவாப் அப்பெண்ணுக்கு அவள் கூற
வேண்டியவற்றைச் சொல்லிக்கொடுத்தான்.
4பின்பு தெக்கோவாவைச் சேர்ந்த அப்
பெண் அரசனிடம் பேசினாள். அவள்
தரையில் விழுந்து முகம் நிலத்தைத் தொடும்
படி வணங்கினாள். அவள் குனிந்து,
“அரசே, எனக்கு உதவுங்கள்!” என்றாள்.
5தாவீது அரசன் அவளிடம், “உனக்கு
நேர்ந்த பிரச்சனை என்ன?” என்று
கேட்டான்.

அப்பெண், “நான் ஒரு விதவை எனது
கணவன் மரித்துப்போனான். 6எனக்கு
இரண்டு மகன்கள் இருக்கிறார்கள். அவர்கள்
களத்தில் போரிட்டனர். ஒருவரும் அவர்கள்
சண்டையைச் சென்று நிறுத்தவில்லை.
ஒருவன் மற்றவனைக் கொன்றுவிட்டான்.
7இப்போது எனது குடும்பத்தார் எனக்கு
விரோதிகளாயிருக்கிறார்கள். அவர்கள்
என்னை நோக்கி, ‘சகோதரனைக் கொன்ற
உனது மகனை அழைத்து வா. நாங்கள்
அவனைக் கொல்லவேண்டும். ஏனெனில்
அவன் தனது சகோதரனைக் கொன்றி
ருக்கிறான்’ என்றனர். எனது மகன் நெருப்
பில் மீந்திருக்கும் கடைசி கரிநெருப்பைப்
போன்றவன். அவன் மரித்தால் எங்கள்
குடும்ப விளக்கு அணைந்துவிடும். தந்தை
யின் சொத்தை சுதந்தரிக்கும்படி பிழைத்
திருக்கும் ஒரே மகன் அவனே. அவன்
மரித்தால் மரித்துபோன எனது கணவனின்
சொத்துக்கள் வேறொருவருக்குச் சொந்த
மாகும். அவனது பெயரும் தேசத்தில் இல்லா
தபடி அழிந்துப்போகும்” என்றாள்.
8அப்போது அரசன் அப்பெண்ணை
நோக்கி, “வீட்டிற்குப் போ. நான் உன்
காரியங்களைக் கவனிப்பேன்” என்றான்.
9தெக்கோவாவின் பெண் அரசனை
நோக்கி, “பழி என் மீது இருக்கட்டும்,
எனது ஆண்டவனாகிய அரசனே! நீர்
குற்றமற்றவர். உமது சிங்காசனமும் குற்ற
மற்றது” என்றாள்.
10தாவீது அரசன், “யாரேனும் உன்
மீது தீயவற்றைக் கூறினால் அவனை
என்னிடம் அழைத்து வா. அவன் உன்னை
மீண்டும் தொல்லைப்படுத்தமாட்டான்” என்
றான்.
11அந்தப் பெண், “தயவுசெய்து, உமது
தேவனாகிய கர்த்தருடைய பெயரால்
ஆணையிட்டு நீங்கள் அந்த ஜனங்களைத்
தடுப்பதாக எனக்கு வாக்களியுங்கள். தனது
சகோதரனைக் கொலைச் செய்ததற்காக
அவர்கள் எனது மகனைத் தண்டிக்க
விரும்புகிறார்கள். அவர்கள் என் மகனை
அழிக்காதபடி நீர் பாதுகாப்பீராக. எனக்கு
வாக்கு கொடும்” என்றாள்.

தாவீது, “கர்த்தர் உயிரோடிருப்பது
போலவே, யாரும் உன் மகனைத் தாக்க
மாட்டார்கள். உன் மகனின் தலையிலிருந்து
ஒரு முடிகூட நிலத்தில் விழாது” என்றான்.
12அப்பெண், “எனது அரசனாகிய ஆண்ட
வனே, தயவுசெய்து நான் வேறு சிலவற்றை
உம்மிடம் பேச அனுமதியும்” என்றாள்.
அரசன், “சொல்” என்றான்.
13அப்போது அப்பெண், “தேவனுடைய
ஜனங்களுக்கு விரோதமாக ஏன் இவ்வாறு
திட்டமிடுகிறீர்? இவ்வாறு சொல்லும்போது
நீரே குற்றவாளியென்பதைக் காட்டிவிடுகிறீர்.
ஏனெனில் உமது வீட்டிலிருந்து போகும்படி
செய்த உமது மகனை வீட்டிற்குத் திரும்ப
அழைத்து வரவில்லை. 14நாம் எல்லோரும்
ஒருநாள் மரிப்போம், நாம் நிலத்தில் சிந்திய
தண்ணீரைப் போன்றவர்கள். யாரும்
அத்தண்ணீரை நிலத்திலிருந்து மீண்டும்
சேகரிக்க முடியாது. தேவன் மக்களை
மன்னிப்பாரென்று உமக்குத் தெரியும்.
பாதுகாப்பான இடத்திற்கு விரட்டப்பட்ட
ஜனங்களுக்காக தேவன் திட்டம் வகுத்திருக்
கிறார். தேவன் தம்மிடமிருந்து ஓடிப்
போகும்படி அவர்களை வற்புறுத்தமாட்டார்.
15எனது ஆண்டவராகிய அரசனே, நான்
இவ்வார்த்தைகளை உம்மிடம் கூற வந்தேன்.
ஏனெனில் ஜனங்கள் என்னைப் பய
முறுத்தினர். நான் எனக்குள் சொல்லிய
தாவது, ‘நான் அரசனிடம் பேசுவேன்.
அரசன் ஒருவேளை எனக்கு உதவலாம்.
16அரசன் நான் சொல்வதைக் கேட்டு,
என்னையும் எனது மகனையும்
கொல்லவிரும்பும் மனிதனிடமிருந்து
காப்பாற்றுவார். அம்மனிதன் தேவன்
எங்களுக்குக் கொடுத்த பொருட்களைப்
பெறாதபடி செய்கிறான்.’ 17எனது
அரசனாகிய ஆண்டவனின் வார்த்தைகள்
எனக்கு ஆறுதலளிக்கும் என்பது எனக்குத்
தெரியும். ஏனெனில் நீங்கள்
தேவனிடமிருந்து வந்த தூதனைப் போன்ற
வர். நல்லது எது, கெட்டது எது என்பது

உமக்குத் தெரியும். தேவனாகிய கர்த்தர்
உம்மோடு இருக்கிறார்” என்றாள்.
18 தாவீது அரசன் அந்த பெண்ணிற்கு
உத்தரவாக, “நான் கேட்கவிருக்கும் கேள்
விக்கு நீ பதில் சொல்லவேண்டும்” என்றான்.
அப்பெண், “எனது அரசனாகிய ஆண்ட
வனே, தயவுசெய்து உங்கள் வினாவை
சொல்லுங்கள்” என்றாள்.
19 அரசன், “இவற்றையெல்லாம் சொல்
வதற்கு யோவாப் உனக்குச் சொல்ல
வில்லையா?” என்று கேட்டான்.
அப்பெண் பதிலாக, “எனது அரசனாகிய
ஆண்டவனே, நீங்கள் உயிரோடிருக்கு
மளவிற்கு நீங்கள் சரியானவர்! உங்கள்
அதிகாரியாகிய யோவாப் என்னிடம்
இவற்றையெல்லாம் கூறும்படிச் சொன்னார்.
20 நடந்த காரியங்களை நீர் வித்தியாசமான
கண்ணோட்டத்தில் பார்ப்பதற்காக யோவாப்
இவற்றைச் செய்தார். என் ஆண்டவனே,
நீர் தேவதூதனைப்போன்ற ஞானம்
உள்ளவர்! உமக்கு இப்பூமியில் நடப்பவை
யெல்லாம் தெரியும்” என்றாள்.

## அப்சலோம் எருசலேம் திரும்புதல்

21 அரசன் யோவாபை நோக்கி, “இதோ,
நான் வாக்களித்தபடியே செய்வேன். போய்
இளைஞனாகிய அப்சலோமை இப்போதே
அழைத்துவாருங்கள்” என்றான்.
22 யோவாப் முகங்குப்புற விழுந்து வணங்
கினான். அவன் தாவீது அரசனை வாழ்த்திய
படியே, “நீங்கள் என்னிடம் கருணைக்
காட்டுகிறீர்கள் என்பதை இன்று அறிகி
றேன். நான் கேட்டதை நீர் நிறைவேற்று
கிறபடியால் அதை நான் அறிகிறேன்”
என்றான்.
23 பின்பு யோவாப் எழுந்து கேசூருக்குப்
போய் அப்சலோமை எருசலேமுக்கு
அழைத்துவந்தான். 24 ஆனால் தாவீது அரசன்,
“அப்சலோம் தனது வீட்டிற்குப் போகலாம்.
ஆனால் அவன் என்னைப் பார்க்க
வரமுடியாது” என்றான். எனவே அப்ச
லோம் தனது வீட்டிற்குப் போனான்.
அப்சலோம் அரசனைப் பார்க்கப்போக
முடியவில்லை.
25 அப்சலோமின் அழகைக் கண்ட
ஜனங்கள் வியந்தனர். இஸ்ரவேலில் ஒரு
வனும் அப்சலோமைப்போல் அழகுடையவ
னாக இருக்கவில்லை, தலையிலிருந்து பாதம்
வரைக்கும், அவனது உடம்பில் ஒரு பழுதும்
இல்லாதிருந்தது. 26 ஒவ்வோராண்டின் இறுதி
யிலும் அப்சலோம் தனது தலையைச்
சிரைத்துக்கொண்டான். அவன் சிரைத்தப்
பின் தலைமயிரை எடுத்து, நிறுத்துப்
பார்த்தான். அது 5 பவுண்டு* எடை
யுள்ளதாக இருந்தது. 27 அப்சலோமுக்கு
மூன்று மகன்களும் ஒரு மகளும் இருந்தனர்.
இம்மகளின் பெயர் தாமார். தாமார் ஒரு
அழகிய பெண்மணி.

## யோவாப்புக்கு அப்சலோம் தன்னை வந்து பார்க்குமாறு வற்புறுத்தல்

28 அப்சலோம் இரண்டு ஆண்டுகள் வரை
தாவீது அரசனைப் பார்க்க அனுமதியின்றி
எருசலேமில் வாழ்ந்தான். 29 அப்சலோம்
யோவாபிடம் ஆட்களை அனுப்பினான்.
அவர்கள் யோவாபிடம் அப்சலோமை அரச
னிடம் அனுப்புமாறு கூறினார்கள். ஆனால்
யோவாப் அப்சலோமிடம் வரவில்லை.
இரண்டாவது முறையும் அப்சலோம் ஒரு
செய்தியை அனுப்பினான். ஆனால்
யோவாப் இம்முறையும் மறுத்தான்.
30 அப்போது அப்சலோம் தனது வேலை
யாட்களிடம், “பாருங்கள், யோவாபின்
வயல் எனது வயலுக்கு அருகிலுள்ளது.
அவனது வயலில் பார்லியைப் பயிரிட்டிருக்
கிறான். போய் அந்த பார்லி பயிரை
எரித்து விடுங்கள்” என்றான்.
எனவே அப்சலோமின் வேலையாட்கள்
போய் யோவாபின் வயலுக்கு நெருப்பு
மூட்டினர். 31 யோவாப் புறப்பட்டு அப்ச
லோமின் வீட்டிற்கு வந்தான். யோவாப்
அப்சலோமிடம், “உன் வேலையாட்கள்
எதற்காக என் வயலைக் கொளுத்தினர்?”
என்று கேட்டான்.
32 அப்சலோம் யோவாபிடம், “நான்
உனக்குச் செய்தி சொல்லியனுப்பினேன்.
நான் உன்னை இங்கு வருமாறு
அழைத்தேன். உன்னை அரசனிடம் அனுப்ப
விரும்பினேன். கேசூரிலிருந்து என்னை
இங்கு ஏன் வரவழைத்தார் என்று எனக்காக
நீ அவரைக் கேட்க வேண்டும். நான்
அவரை நேரில் பார்க்கமுடியாது, எனவே
நான் கேசூரில் தங்கியிருந்தால் இன்னும்
நன்றாக இருந்திருக்கும். இப்போது நான்
போய் அரசனைக் காணவிடுங்கள். நான்
பாவம் செய்திருந்தால் அவர் என்னைக்
கொல்லட்டும்!” என்றான்.

## அப்சலோம் தாவீது அரசன் சந்திப்பு

33 பின்பு யோவாப் அரசனிடம் வந்து
அப்சலோமின் வார்த்தைகளைக் கூறினான்.
அரசன் அப்சலோமை வரவழைத்தான்.
அப்போது அப்சலோம் அரசனிடம் வந்தான்.
அப்சலோம் அரசனுக்கு முன்பு தரையில்
விழுந்து வணங்கினான். அரசன் அப்ச
லோமை முத்தமிட்டான்.

## அப்சலோம் பல நண்பர்களை கூட்டுதல்

15 இதற்குப் பின்பு அப்சலோம் ஒரு
தேரையும் குதிரைகளையும் தனக்காக
பெற்றுக் கொண்டான். அவன் தேரைச்
செலுத்தும்போது அவனுக்கு முன்னே
ஓடுவதற்கு 50 ஆட்கள் இருந்தனர்.

---

**5 பவுண்டு** சுமார் 2.27 கிலோகிராம் எடை.

2அப்சலோம் அதிகாலையில் எழுந்து நகர
வாசலருகே* நின்று, நியாயத்திற்காக தாவீது
அரசனிடம் செல்லும் ஆட்களைக் கவனிப்
பான். பின்பு அவர்களோடு பேசி, "எந்த
நகரத்திலிருந்து வருகிறாய்?" என்பான்.
அம்மனிதன், "நான் இஸ்ரவேலின் இந்த
கோத்திரத்தைச் சேர்ந்தவன்" என்று
கூறுவான். 3அப்சலோம் அம்மனிதனிடம்,
"பாரும், நீ சொல்வது சரியே. ஆனால்
தாவீது அரசன் நீ சொல்வதைக் கேட்க
மாட்டார்" என்பான்.
4அப்சலோம் மேலும், "யாராகிலும்
என்னை இந்நாட்டின் நீதிபதியாக நியமித்
தால் சிக்கலோடு வருகிற ஒவ்வொரு
மனிதனுக்கும் நான் உதவக்கூடும். அவனுக்
குத் தக்க தீர்ப்பு கிடைப்பதற்கு நான்
உதவுவேன்" என்பான்.
5எவனாகிலும் அப்சலோமிடம் வந்து
அவனை வணங்கியதும் அப்சலோம் அவ
னை நெருங்கிய நண்பனாக எண்ணி
நடத்துவான். அப்சலோம் கையை நீட்டி,
அவனைத் தொட்டு, முத்தமிடுவான். 6தாவீது
அரசனிடம் நீதி வேண்டிவந்த எல்லா
இஸ்ரவேலருக்கும் அவ்வாறே செய்தான்.
அதனால் இஸ்ரவேலருடைய இருதயங்
களைக் கவர்ந்துக்கொண்டான்.

### தாவீதின் அரசைப் பெற அப்சலோம் திட்டம்

7நான்கு ஆண்டுகளுக்குப* பிறகு அப்ச
லோம் அரசன் தாவீதிடம், "எப்ரோனில்
கர்த்தருக்கு நான் கொடுத்த விசேஷ
வாக்குறுதியை நிறைவேற்றுவதற்கு போகி
றேன். 8ஆராமிலுள்ள கேசூரில் வாழ்ந்துக்
கொண்டிருக்கையில் அந்த வாக்குறுதியை
நான் செய்தேன். 'என்னை கர்த்தர்
எருசலேமுக்குத் திரும்பக் கொண்டுவந்தால்
நான் கர்த்தருக்குச் சேவைச் செய்வேன்'
என்றேன்" என்றான்.
9தாவீது அரசன், "சமாதானமாகப் போ"
என்றான்.
அப்சலோம் எப்ரோனுக்குப் போனான்.
10ஆனால் அப்சலோம் எல்லா இஸ்ரவேல்
கோத்திரங்கள் மூலமாகவும் உளவாளிகளை
அனுப்பினான். இந்த உளவாளிகள் ஜனங்
களிடம், "நீங்கள் எக்காளம் முழங்கியதும்,
'அப்சலோம் எப்ரோனின் அரசன் ஆனான்,
என்று கூறுங்கள்!" என்றான்.
11அப்சலோம் தன்னோடு வர 200 பேரை
அழைத்தான். அவர்கள் எருசலேமிலிருந்து
அவனோடு புறப்பட்டனர். ஆனால்
அப்சலோமின் திட்டத்தை அவர்கள் அறிந்
திருக்கவில்லை. 12அகித்தோப்பேல் தாவீ
துக்கு ஆலோசனை வழங்குபவர்களில்
ஒருவன். அவன் கீலோ என்னும் ஊரைச்
சேர்ந்தவன். அப்சலோம் பலிகளைச் செலுத்
தும்போது அகித்தோப்பேலை நகரத்தி
லிருந்து (கீலோவிலிருந்து) வருமாறு
கூறினான். அப்சலோமின் திட்டங்கள் சரிவர
நிறைவேறிக் கொண்டிருந்தன. ஜனங்களில்
பலர் அவனுக்கு ஆதரவளிக்க முன்வந்தனர்.

### அப்சலோமின் திட்டங்களை தாவீது அறிகிறான்

13ஒரு மனிதன் தாவீதிடம் அச்செய்தியைச்
சொல்லவந்தான். அவன், "இஸ்ரவேல் ஜனங்
கள் அப்சலோமைப் பின்பற்றத் தொடங்கி
யிருக்கிறார்கள்" என்றான்.
14அப்போது தாவீது எருசலேமில்
தன்னோடிருந்த அதிகாரிகளை நோக்கி,
"நாம் தப்பித்து விடவேண்டும். நாம்
தப்பிக்காவிட்டால் அப்சலோம் நம்மை
விட்டு விடமாட்டான். அப்சலோம் நம்மைப்
பிடிக்கும் முன்னர் விரைவாய் செயல்படு
வோம். அவன் நம் எல்லோரையும்
அழிப்பான். அவன் எருசலேம் ஜனங்களை
அழிப்பான்" என்றான்.
15அரசனின் அதிகாரிகள் அவனை
நோக்கி, "நீங்கள் சொல்கின்றபடியே நாங்கள்
செய்வோம்" என்றார்கள்.

### தாவீதும் அவன் ஆட்களும் தப்பித்தனர்

16தாவீது தன் வீட்டிலிருந்த எல்லோ
ரோடும் வெளியேறினான். தன் பத்து
மனைவியரையும்* வீட்டைக் கவனித்து
கொள்வதற்கு விட்டுச் சென்றான். 17எல்லா
ஜனங்களும் பின் தொடர்ந்து வர அரசன்
வெளியேறினான். கடைசி வீட்டினருகே
சற்று நின்றார்கள். 18தன் அதிகாரிகள்
எல்லோரும் அரசன் அருகே நடந்தனர்.
கிரேத்தியர், பிலேத்தியர், கித்தியர் (காத்தி
லிருந்து வந்த 600 பேர்) எல்லோரும்
அருகே நடந்தார்கள்.
19அப்போது அரசன் கித்தியனாகிய
ஈத்தாயிடம், "நீ ஏன் எங்களோடு வந்துக்
கொண்டிருக்கிறாய்? திரும்பிச்சென்று புதிய
அரசனோடு (அப்சலோமோடு) தங்கியிரு.
நீ ஒரு அந்நியன். இது உன் சொந்த தேசம்
அல்ல. 20நேற்றுதான் நீ என்னோடு
சேர்வதற்கு வந்தாய். நான் எங்கே செல்
கிறேன் என்று தெரியாதபொழுது,
உன்னையும் அலைந்துதிரிய என்னோடு
அழைத்துச் செல்லவேண்டுமா? வேண்டாம்.

---

**நகர வாசல்** இந்த வாசல் வழியாகத்தான் மக்கள் தம் வியாபாரத்துக்காக நுழையார்கள். இதுதான் பல வழக்குகள் தீர்க்குமிடம்.

**நான்கு ஆண்டுகள்** சில பழைய ஏடுகளில் 40 ஆண்டுகள் என கூறுகின்றன.

**மனைவியர்** எழுத்தின் பிராகாரமாக, "மறுமனையட்டி" மனைவியரைப்போல இருக்கின்ற வேலைக்காரப் பொண்கள்.

திரும்பிப் போ. உனது சகோதரர்களையும்
உன்னோடு அழைத்துச் செல். உனக்கு
இரக்கமும் உண்மையும் காட்டப்படட்டும்”
என்றான்.
21ஆனால் ஈத்தாய் அரசனுக்குப் பதிலாக,
“கர்த்தர் உயிரோடிருப்பதைப் போல, நீங்கள்
வாழும் காலம்வரைக்கும் நான் உங்களோடு
இருப்பேன். வாழ்விலும் மரணத்திலும் நான்
உங்களோடு இருப்பேன்!” என்றான்.
22தாவீது ஈத்தாயைப் பார்த்து, “வா,
நாம் கீதரோன் ஆற்றைக் கடக்கலாம்”
என்றான்.

எனவே காத் நகரிலிருந்து வந்த ஈத்தாயும்
அவனுடைய எல்லா ஜனங்களும் அவர்
களுடைய குழந்தைகளும் கீதரோன் ஆற்றைக்
கடந்தார்கள். 23எல்லா ஜனங்களும் சத்தமாய்
அழுதார்கள். தாவீது அரசனும் கீதரோன்
ஆற்றைக் கடந்தான். ஜனங்கள் பாலை
வனத்திற்குச் சென்றார்கள். 24சாதோக்கும்
லேவியரும் தேவனுடைய உடன்படிக்கைப்
பெட்டியைச் சுமந்து சென்றார்கள். அவர்கள்
தேவனுடைய பரிசுத்தப் பெட்டியைக் கீழே
வைத்தார்கள். எருசலேமைவிட்டு எல்லா
ஜனங்களும் வெளியேறும் வரைக்கும்
அபியத்தார் ஜெபம் செய்துக்கொண்
டிருந்தான்.
25தாவீது அரசன் சாதோக்கிடம், “தேவனு
டைய பரிசுத்தப் பெட்டியை எருசலே
முக்குத் திரும்பவும் கொண்டு போ. கர்த்தர்
என்னிடம் இரக்கம் காட்டினால் என்
னைத் திரும்பவும் வரவழைத்துக்கொள்வார்.
கர்த்தர் எருசலேமையும் அவருடைய
ஆலயத்தையும் பார்ப்பதற்கு எனக்கு
உதவுவார். 26கர்த்தர் என்னிடம் கருணை
காட்டவில்லை என்பாராயின், அவர்
விரும்புகிற எதையும் எனக்குச் செய்யட்
டும்” என்றான்.
27அரசன் ஆசாரியனாகிய சாதோக்கைப்
பார்த்து, “நீ தீர்க்கதரிசி அல்லவா?
நகரத்திற்குச் சமாதானத்தோடு திரும்பிப்
போ. உன் மகனாகிய அகிமாசையும்
அபியத்தாரின் மகன் யோனத்தானையும்
உன்னோடு அழைத்துப் போ. 28ஜனங்கள்
பாலைவனத்திற்குள் கடந்து செல்லும்
இடங்களில் நான் காத்திருப்பேன். உங்களிட
மிருந்து செய்தி எனக்குக் கிடைக்கும்
வரைக்கும் நான் காத்திருப்பேன்” என்றான்.
29எனவே சாதோக்கும் அபியத்தாரும்
தேவனுடைய பரிசுத்தப் பெட்டியை எருச
லேமுக்கு எடுத்துச்சென்று அங்கே
தங்கினார்கள்.

### அகித்தோப்பேலுக்கு எதிராக தாவீதின் ஜெபம்

30தாவீது ஒலிவமலைக்குப் போனான்.
அழுதுக்கொண்டிருந்தான். அவன் தலையை
மூடிக்கொண்டு, கால்களில் மிதியடி இல்லா
மல் நடந்தான். தாவீதோடிருந்த எல்லா
ஜனங்களும் அவர்களுடைய தலைகளை
மூடிக்கொண்டனர். அவர்கள் அழுதபடியே,
தாவீதோடு சென்றனர்.
31ஒருவன் தாவீதிடம், “அப்சலோமோடு
திட்டமிட்டவர்களில் அகித்தோப்பேலும்
ஒருவன்” என்றான். அப்போது தாவீது,
“கர்த்தாவே, நீர் அகித்தோப்பேலின் உபதே
சம் பயனற்றவையாக இருக்கும்படி செய்யும்”
என்று ஜெபம் செய்தான். 32தாவீது
மலையின் உச்சிக்கு வந்தான். இங்கு அவன்
அடிக்கடி தேவனை தொழுதுகொள்ள
வந்திருக்கின்றான். அப்போது அற்கியனா
கிய ஊசாய் அவனிடம் வந்தான். அவன்
அங்கி கிழிந்திருந்தது. தலையில் புழுதி
இருந்தது.
33தாவீது ஊசாய்க்கு, “நீ என்னோடு
வந்தால் எனக்குப் பாரமாவாய். 34ஆனால்
நீ எருசலேமுக்குத் திரும்பிப் போனால்
அகித்தோப்பேலின் அறிவுரை பயனற்றுப்
போகும்படி நீ செய்யலாம். அப்சலோமிடம்
அரசனே, நான் உங்கள் பணியாள். நான்
உங்கள் தந்தைக்குச் சேவை செய்தேன்.
இப்போது உங்களுக்குச் சேவை செய்வேன்”
என்று கூறு. 35ஆசாரியர்களான சாதோக்கும்
அபியத்தாரும் உன்னோடு இருப்பார்கள்.
நீ அரண்மனையில் கேட்கும் செய்திகளை
அவர்களிடம் சொல்லவேண்டும். 36சாதோக்
கின் மகன் அகிமாசும் அபியத்தாரின்
மகன் யோனத்தானும் அவர்களோடிருப்
பார்கள். அவர்கள் மூலமாக உனக்குத்
தெரியவரும் செய்திகளை எனக்கு அனுப்பு”
என்றான்.
37தாவீதின் நண்பனாகிய ஊசாய் நகரத்
திற்குப் போனான். அப்சலோம் எருச
லேமுக்கு வந்தான்.

### சீபா தாவீதைச் சந்திக்கிறான்

16 தாவீது ஒலிவமலை உச்சியின் மேல்
கொஞ்சதூரம் நடந்துப்போனான்.
அங்கு மேவிபோசேத்தின் பணியாளாகிய
சீபா தாவீதைச் சந்தித்தான். சீபாவிடம்
சேணம் கட்டப்பட்ட இரண்டு கழுதைகள்
இருந்தன. கழுதைகள் 200 ரொட்டிகளையும்,
100 குலைகள் உலர்ந்த திராட்சைகளையும்,
100 கோடைக்காலக் கனிகளையும் ஒரு
துருத்தி திராட்சைரசத்தையும் சுமந்து
வந்தன. 2தாவீது அரசன் சீபாவைப் பார்த்து,
“இவைகளெல்லாம் எதற்கு?” என்று
கேட்டான்.

சீபா பதிலாக, “இந்தக் கழுதைகள்
அரசனின் குடும்பத்தினர் செல்வதற்காகவும்
ரொட்டியும் பழங்களும் அதிகாரிகளின்
உணவிற்காகவும், திராட்சைரசம் பாலை
வனத்தில் நடந்து செல்வோர் சோர்வுறும்
போது குடிப்பதற்காகவும் பயன்படும்”
என்றான்.

3அரசன், “மேவிபோசேத் எங்கே?” என்று
கேட்டான்.
சீபா அரசனிடம், “மேவிபோசேத் எருச
லேமில் இருக்கிறான். ஏனென்றால் அவன்
‘இன்று என் பாட்டனாரின் அரசை
இஸ்ரவேலர்கள் எனக்குத் திருப்பிக் கொடுப்
பார்கள் என நினைக்கிறான்’” என்று
கூறினான்.
4பின்னர் அரசன் சீபாவிடம், “சரி
மேவிபோசேத்திற்கு உரியவற்றையெல்லாம்
இப்போது நான் உனக்குத் தருகிறேன்”
என்றான்.
சீபா, “நான் உங்களை வணங்குகிறேன்.
நான் எப்போதுமே உங்கள் தயை பெறு
வேன் எனக் கருதுகிறேன்” என்றார்.

### சீமேயி தாவீதைச் சபிக்கிறான்

5தாவீது பகூரிமுக்கு வந்தான். சவுலின்
குடும்பத்தைச் சேர்ந்த மனிதன் ஒருவன்
பகூரிமுலிருந்து அங்கு வந்தான். இம்மனிதன்
கேராவின் மகனாகிய சீமேயி. சீமேயி
தாவீதிடம் தீயவற்றைப் பேசியவனாக வந்
தான். அவன் மீண்டும் மீண்டும் தீயன
வற்றையே பேசினான்.
6தாவீதின் மீதும் அவனது அதிகாரிகள்
மீதும் சீமேயி கற்களைவீச ஆரம்பித்தான்.
ஆனால் மக்களும் வீரர்களும் தாவீதைச்
சூழ்ந்து நின்று அவனைக் காத்தனர். 7சீமேயி
தாவீதைச் சபித்தான். அவன், “கொலை
காரனே! வெளியே போ. வெளியே போ.
8கர்த்தர் உன்னைத் தண்டிக்கிறார். ஏனெனில்
நீ சவுலின் குடும்பத்தாரைக் கொலைச்
செய்தாய். நீ சவுலின் இடத்தில் அரசனாக
அமர்ந்தாய். ஆனால் இப்போது கர்த்தர்
அரசாட்சியை உனது மகனான அப்சலோ
முக்குக் கொடுத்துள்ளார். இப்போது அதே
தீமைகள் உனக்கு நேர்கின்றன. ஏனெனில்
நீ ஒரு கொலைகாரன்” என்றான்.
9செருயாவின் மகனாகிய அபிசாய்
அரசனை நோக்கி, “எனது அரசனாகிய
ஆண்டவரே, ஏன் இந்தச் மரித்த நாய்
உம்மைச் சபிக்க வேண்டும்?, நான்
சீமேயியின் தலையை வெட்டப்போகிறேன்”
என்றான்.
10அதற்கு அரசன், “நான் என்ன
செய்யமுடியும், செருயாவின் ஜனங்களே?
சீமேயி என்னைச் சபிக்கிறான். ஆனால்
அவன் என்னைச் சபிக்குமாறு அவனிடம்
கர்த்தர் கூறியுள்ளார்” என்றான்.
11தாவீது அபிசாயிடமும் அவனது
பணியாட்களிடமும், “இங்கே பாருங்கள்,
என் சொந்த மகனான அப்சலோம்
என்னைக் கொல்ல முயல்கிறான். சீமேயி
என்ற பென்யமீன் கோத்திரத்திலிருந்து
வந்தவன் என்னைக் கொல்ல அதிக
உரிமையுடையவன். அவன் அதைச்
செய்யட்டும். அவன் தீய வார்த்தைகளைச்
சொல்லிக் கொண்டே இருக்கட்டும். கர்த்தர்
அவ்வாறு செய்ய அவனிடம் கூறியுள்ளார்.
12ஒரு வேளை கர்த்தர் தீய காரியங்கள்
எனக்கு நேரிடுவதைப் பார்ப்பார். பின்பு
கர்த்தர் சீமேயி சொல்லும் தீய காரியங்கள்
ஒவ்வொன்றிற்கும் பதிலாக நல்லதைச்
செய்யலாம்” என்றான்.
13இவ்வாறு தாவீதும் அவனுடைய
ஆட்களும் பாதையில் தொடர்ந்து நடந்துச்
சென்றனர். ஆனால் சீமேயி தாவீதைப்
பின் தொடர்ந்தான். மலையோரமுள்ள
மறுபுறத்துப் பாதையில் சீமேயி நடந்தான்.
சீமேயி தீயவற்றைச் சொல்லிக்கொண்டே
நடந்தான். சீமேயி கற்களையும் அழுக்கை
யுங்கூட தாவீதின் மீது எறிந்தான்.
14தாவீது அரசனும் அவனது ஆட்களும்
பகூரிம்முக்கு வந்தனர். அரசனும் அவனது
ஆட்களும் சோர்வுற்றிருந்தனர். ஆகையால்
பகூர்மில் ஓய்வெடுத்தனர்.
15அப்சலோம், அகித்தோப்பேல், மற்றும்
இஸ்ரவேலர் அனைவரும் எருசலேமுக்கு
வந்தனர். 16தாவீதின் நண்பனாகிய அற்கிய
னாகிய ஊசாய் அப்சலோமிடம் வந்தான்.
ஊசாய் அப்சலோமிடம், “அரசரே! நீண்ட
காலம் வாழ்க” என்றான்.
17அப்சலோம் பதிலாக, “நீ உங்கள்
நண்பனான தாவீதுக்கு உண்மையாக இருக்க
வில்லை? எருசலேமைவிட்டு உன் நண்ப
னோடு ஏன் போகவில்லை?” என்று
கூறினான்.
18அதற்கு ஊசாய், “கர்த்தர் தேர்ந்
தெடுக்கும் ஆளைச் சார்ந்தவன் நான். இந்த
ஜனங்களும் இஸ்ரவேலரும் உம்மைத்
தேர்ந்தெடுத்தனர். நான் உம்மோடு தங்கு
வேன். 19முன்பு நான் உமது தந்தைக்குப்
பணியாற்றியிருக்கிறேன். ஆகவே இப்போது
நான் தாவீதின் மகனுக்குப் பணி
செய்யவேண்டும். எனவே உமக்குப் பணி
செய்வேன்” என்றான்.

### அப்சலோம் அகித்தோப்பேலிடம் அறிவுரை கேட்கிறான்

20அப்சலோம் அகித்தோப்பேலிடம், “நாம்
இப்போது என்ன செய்ய வேண்டுமென்று
சொல்லுங்கள்” என்றான்.
21அகித்தோப்பேல் அப்சலோமிடம், “உங்
கள் தந்தையார் அவரது மனைவியரில்
சிலரை இங்கிருக்கும் வீட்டைக் கவனிக்க
விட்டிருந்தார். போய், அவர்களோடு பாலின
உறவுக் கொள்ளுங்கள். பின்பு எல்லா
இஸ்ரவேலரும் உங்கள் தந்தை உங்களை
வெறுப்பதை அறிவார்கள். உங்கள்
ஜனங்கள் உங்களுக்கு அதிகமான ஆதரவு
காட்ட ஊக்கமடைவார்கள்” என்றான்.
22பின்பு அவர்கள் அப்சலோமிற்காக
வீட்டின் மாடியின்மீது ஒரு கூடாரத்தை
அமைத்தனர். அப்சலோம் தன் தந்தையின்

மனைவியரோடு பாலின உறவுக் கொண்
டான். இஸ்ரவேலர் அதனைப் பார்த்தனர்.
23அந்நேரத்தில் அகித்தோப்பேலின் உபதேசம்
தாவீதுக்கும் அப்சலோமுக்கும் மிக முக்கிய
மானதாக இருந்தது. தேவன் மனிதனுக்குச்
சொன்ன வாக்கைப்போன்று முக்கிய
மானதாக இருந்தது.

### தாவீதைக் குறித்த அகித்தோப்பேலின் அறிவுரை

17 அகித்தோப்பேல் மேலும் அப்ச
லோமிடம், "நான் இப்போது 12,000
ஆட்களைத் தேர்ந்தெடுப்பேன். இன்றிரவு
தாவீதை நான் துரத்துவேன். 2அவன்
தளர்ந்து சோர்வுற்றிருக்கும்போது அவனைப்
பிடிப்பேன். நான் அவனைக் கலக்கமடையச்
செய்வேன். அவனது ஆட்கள் ஓடிவிடு
வார்கள். ஆனால் தாவீது அரசனை மட்டும்
கொல்வேன். 3பின்பு ஜனங்களையெல்லாம்
உங்களிடம் அழைத்துவருவேன். தாவீது
மரித்துவிட்டால், எல்லா ஜனங்களும்
சமாதானத்தோடு திரும்புவார்கள்" என்றான்.
4இத்திட்டம் அப்சலோமுக்கும் இஸ்ர
வேலின் தலைவர்களுக்கும் நல்லதெனப்
பட்டது. 5ஆனால் அப்சலோம், "அற்கிய
னாகிய ஊசாயைக் கூப்பிடுங்கள். அவன்
கூறுவதைக் கேட்கவேண்டும்" என்றான்.

### அகித்தோப்பேலின் அறிவுரையை ஊசாய் பாழாக்குகிறான்

6ஊசாய் அப்சலோமிடம் வந்தான்.
அப்சலோம் ஊசாயிடம், "இதுதான் அகித்
தோப்பேல் வகுத்தளித்த திட்டம், நாம் இதைப்
பின்பற்றவேண்டுமா? இல்லையெனில்
சொல்லும்" என்றான்.
7ஊசாய் அப்சலோமிடம், "இம்முறை
அகிப்தோப்பேலின் அறிவுரை சரியாக
இல்லை" என்றான். 8மேலும் ஊசாய், "உன்
தந்தையும் அவரது ஆட்களும் வலிய
வர்கள் என்பது உனக்குத் தெரியும். தன்
குட்டிகளைக் களவுகொடுத்த கரடிகள்போல்
அவர்கள் கோபங்கொண்டிருக்கிறார்கள்.
உன் தந்தை பயிற்சிப்பெற்ற வீரர். அவர்
ஜனங்களோடு இரவில் தங்கமாட்டார். 9அவர்
ஒருவேளை குகையிலோ, வேறெங்கோ
ஒளிந்திருக்க வேண்டும். அவர் முதலில்
உன் ஆட்களைத் ராக்கினால், ஜனங்கள்
அச்செய்தியை அறிவார்கள். அவர்கள்
'அப்சலோமின் ஆட்கள் தோற்கிறார்கள்'
என்று நினைப்பார்கள். 10பின்பு சிங்கம்
போல் தைரியம் கொண்ட ஆட்களும்
பயப்படுவார்கள். ஏனென்றால் எல்லா
இஸ்ரவேலரும் உங்கள் தந்தை சிறந்தவீரர்
என்றும், அவரது ஆட்கள் தைரிய
மானவர்கள் என்றும் அறிவார்கள்.
11"இதுவே நான் சொல்ல விரும்புவதாகும்:
நீ தாண் முதல் பெயெர்செபா மட்டும்
உள்ள இஸ்ரவேலரை ஒன்று திரட்ட
வேண்டும். அப்போது கடலின் மணலைப்
போல் பலர் இருப்பார்கள். பின்பு நீ
போருக்குச் செல்லவேண்டும். 12நாம் தாவீதை
அவர் ஒளிந்திருக்குமிடத்திலிருந்து பிடிக்க
லாம். பனித்துளி நிலத்தில் விழுவதுபோல்,
நாம் தாவீதின்மீது விழுந்து பிடிக்கலாம்.
தாவீதையும் அவரது ஆட்களையும் கொல்ல
லாம். யாரும் உயிரோடு இருக்கமாட்டார்கள்.
13ஒருவேளை நகரத்திற்குள் தாவீது தப்பிச்
சென்றால் எல்லா இஸ்ரவேலரும் அங்குக்
கயிறுகளைக் கொண்டு வருவர். நகரத்தின்
மதில்களை தகர்ப்போம். நகரம் பள்ளத்
தாக்காக மாறும்படி செய்வர். ஒரு கல்கூட
முன்புபோல் நகரத்தில் இராது" என்றான்.
14அப்சலோமும் இஸ்ரவேலர் எல்லோரும்,
"அற்கியனாகிய ஊசாயின் அறிவுரை அகித்
தோப்பேலுடையதைக் காட்டிலும் சிறந்தது"
என்றனர். இது கர்த்தருடைய திட்ட
மானதால் அவர்கள் அவ்வாறு கூறினார்கள்.
அகித்தோப்பேலின் நல்ல அறிவுரை
பயனற்றுப்போகும்படி கர்த்தர் திட்ட
மிட்டார். அப்சலோமைக் கர்த்தர் இவ்வாறு
தண்டிப்பார்.

### தாவீதுக்கு ஊசாய் ஒரு எச்சரிக்கை அனுப்புகிறான்

15இவ்விஷயங்களையெல்லாம் ஆசாரியர்
களாகிய சாதோக்குக்கும் அபியத்தாருக்கும்
ஊசாய் கூறினான். அகித்தோப்பேல் அப்ச
லோமுக்கும் இஸ்ரவேல் தலைவர்களுக்கும்
கூறிய காரியங்களை அவன் அவர்களுக்குத்
தெரிவித்தான். சாதோக்கும் அபியத்
தாருக்கும் ஊசாய் தான் கூறிய ஆலோசனை
பற்றிய செய்தியையும் தெரிவித்தான்.
ஊசாய், 16"விரையுங்கள்! தாவீதுக்குச்
செய்தி அனுப்புங்கள். இன்றிரவில் ஜனங்கள்
பாலைவனத்திற்குக் கடந்து செல்லுமிடங்
களில் தங்கவேண்டாமெனக் கூறுங்கள்.
ஆனால் உடனே யோர்தான் நதியைக்
கடக்கவேண்டும். நதியைக் கடந்துவிட்டால்
அரசனும் அவனுடைய ஜனங்களும் பிடிபட
மாட்டார்கள்" என்று கூறினான்.
17ஆசாரியர்களின் மகன்களாகிய
யோனத்தானும் அகிமாசும், இன்றோகேல்
என்னுமிடத்தில் காத்திருந்தார்கள். ஊருக்
குள் போவதைப் பிறர் காணவேண்டாமென
விரும்பினார்கள், எனவே ஒரு வேலைக்
காரப் பெண்மணி அவர்களிடம் வந்தாள்.
அவள் அவர்களுக்குச் செய்தியைத் தெரிவித்
தாள். பின்பு யோனத்தானும் அகிமாசும்
அரசன் தாவீதிடம் சென்று இவ்விஷயங்
களைப்பற்றித் தெரிவித்தனர்.
18ஆனால் ஒரு சிறுவன் யோனத்
தானையும் அகிமாசையும் பார்த்துவிட்டான்.
அவன் அதைச் சொல்வதற்கு அப்சலோமி
டம் ஓடினான். யோனத்தானும் அகிமாசும்
விரைவாக ஓடிவிட்டார்கள். அவர்கள்
பகூரிமில் உள்ள ஒரு மனிதனின் வீட்டை

அடைந்தனர். அவன் முற்றத்தில் ஒரு கிணறு
இருந்தது. யோனத்தானும் அகிமாசும்
கிணற்றினுள் இறங்கினார்கள். 19அம்மனி
தனின் மனைவி ஒரு விரிப்பை எடுத்துக்
கிணற்றின் மீது விரித்தாள். பின்பு அவள்
அதன் மீது தானியங்களைப் பரப்பினாள்.
தானியத்தைக் குவித்து வைத்திருந்தாற்போல்
அக்கிணறு காணப்பட்டது. யாரும் யோனத்
தானும் அகிமாசும் அங்கு ஒளிந்திருப்பதைக்
கண்டுபிடிக்க முடியாது. 20அப்சலோமின்
பணியாட்கள் வீட்டிலிருந்த பெண்ணிடம்
வந்தார்கள். அவர்கள், "யோனத்தானும்
அகிமாசும் எங்கே?" என்று கேட்டார்கள்.

அப்பெண் அப்சலோமின் வேலையாட்களிடம், "அவர்கள் ஏற்கனவே நதியைக் கடந்து விட்டார்கள்" என்று கூறினாள்.

அப்சலோமின் வேலைக்காரர்கள் பின்பு யோனத்தானையும் அகிமாசையும் தேடினர். ஆனால் அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. எனவே அப்சலோமின் வேலைக்காரர்கள் எருசலேமுக்குத் திரும்பினார்கள்.

21அப்சலோமின் வேலைக்காரர்கள்
போனபிறகு, யோனத்தானும் அகிமாசும்
கிணற்றிற்கு வெளியே வந்தார்கள். அவர்கள்
போய் தாவீது அரசனிடம் சொன்னார்கள்.
அவர்கள் தாவீதை நோக்கி, "விரைந்து
நதியைக் கடந்து போய்விடுங்கள். அகித்
தோப்பேல் உங்களுக்கு எதிராக இந்த
காரியங்களைத் திட்டமிட்டுள்ளான்" என்
றார்கள்.

22அப்போது தாவீதும் அவனோடிருந்த எல்லா ஜனங்களும் யோர்தான் நதியைக் கடந்தார்கள். சூரியன் தோன்றும் முன்னர் தாவீதின் ஜனங்கள் யோர்தான் நதியைக் கடந்துவிட்டிருந்தனர்.

### அகித்தோப்பேல் தற்கொலை செய்து கொள்கிறான்

23இஸ்ரவேலர் தனது அறிவுரையை ஏற்றுக்கொள்ளவில்லை என்று அகித்தோப்பேல் கண்டான். அகித்தோப்பேல் கழுதையின்மேல் சுமைகளை ஏற்றிக்கொண்டான். அவன் நகரத்திலிருந்த தன் வீட்டிற்குச் சென்றான். அவன் தன் குடும்பக் காரியங்களை ஒழுங்கு படுத்தி, அவன் தூக்கு போட்டுக்கொண்டான். அகித்தோப்பேல் மரித்தபிறகு, ஜனங்கள் அவனை அவனது தந்தையின் கல்லறைக்குள் புதைத்தார்கள்.

### அப்சலோம் யோர்தான் நதியைக் கடக்கிறான்

24தாவீது மக்னாயீமை வந்தடைந்தார்.
அப்சலோமும் இஸ்ரவேலரும் யோர்தான்
நதியைக் கடந்தனர். 25அப்சலோம்
அமாசாவைப் படைக்குத் தலைவனாக்
கினான். அமாசா யோவாபின் பதவியை
வகித்தான்* அமாசா இஸ்மவேலனாகிய
எத்திராவின் மகன். அவள் செருயாவின்
சகோதரியாகிய நாகாசின் மகளாகிய
அபிகாயில் அமாசாவின் தாய். (செருயா
யோவாபின் தாய்.)

26கீலேயாத் தேசத்தில் அப்சலோமும் இஸ்ரவேலரும் பாளயமிறங்கினார்கள்.

### சோபி, மாகீர், பர்சிலா ஆகியோர்

27தாவீது மக்னாயீமை வந்தடைந்தார்.
அந்த இடத்தில் சோபி, மாகீர், பர்சிலா
ஆகியோர் இருந்தனர். (அம்மோனியரின்
ஊராகிய ரப்பாவைச் சார்ந்தவன் சோபி
நாகாசின் மகன் லோதேபாரிலிருந்து
அம்மியேலின் மகனாகிய மாகீர் வந்தான்.
கீலேயாத்திலுள்ள ரோகிலிமிலிருந்து வந்த
வன் பர்சிலா.) 28-29அவர்கள், "பாலைவனத்
தில் ஜனங்கள் சோர்வோடும், பசியோடும்,
தாகத்தோடும் இருக்கிறார்கள்" என்றார்கள்.
தாவீதும் அவரின் ஜனங்களும் உண்பதற்
காகவும் குடிப்பதற்காகவும் அவர்கள் பல
பொருட்களைக் கொண்டு வந்தார்கள்.
படுக்கைகள், குவளைகள், மண்பாண்டங்கள்
ஆகியவற்றையும் அவர்கள் கொண்டு
வந்தனர். அவர்கள் கோதுமை, பார்லி,
மாவு, வறுத்த தானியங்கள், பெரும்பயிறு,
சிறும்பயிறு. உலர்ந்த கொட்டைகள், தேன்,
வெண்ணெய், ஆடுகள், பால்கட்டிகள்
ஆகியவற்றைக் கொண்டு வந்தார்கள்.

### தாவீது போருக்குத் தயாராகிறான்

18 தாவீது தன் ஆட்களை எண்ணிப்
பார்த்தான். 1,000 பேருக்கு ஒரு
படைத்தலைவனாகவும் 100 பேருக்கு ஒரு
படைத்தலைவனாகவும் ஜனங்களை வழி
நடத்துவோரை நியமித்தான். 2ஜனங்களை
மூன்று பிரிவினராகப் பிரித்தான். பின்பு
ஜனங்களை வெளியே அனுப்பினான்.
மூன்றில் ஒரு பகுதி ஜனங்களை யோவாப்
வழிநடத்தினான். மற்றொரு, மூன்றில் ஒரு
பகுதியினரை செருயாவின் மகனும் யோவா
பின் சகோதரனுமாகிய அபிசாய் வழி
நடத்தினான். காத்திலிருந்து வந்த ஈத்தாயி
மூன்றாவது பிரிவு ஜனங்களை வழி
நடத்தினான்.

தாவீது அரசன் ஜனங்களிடம், "நானும் உங்களோடு வருவேன்" என்று கூறினான்.

3ஆனால் ஜனங்கள், "இல்லை. நீங்கள்
எங்களோடு வரக்கூடாது. ஏனெனில்
நாங்கள் (யுத்தத்தில்) ஓடிவிட்டால் அப்ச
லோமின் ஆட்கள் பொருட்படுத்த
மாட்டார்கள். நம்மில் பாதிபேர் கொல்லப்

---

**அமாசா யோவாபின் பதவியை வகித்தான்** யோவாப் இன்னும் தாவீதிற்கு உதவினான் தாவீது அப்சலோமிடமிருந்து ஓடிவந்தபொழுது யோவாப் தாவீதின் படையின் மூன்று தளபதிகளில் ஒருவனாக இருந்தான். பார்க்க 2சாமு. 18:2.

பட்டாலும், அப்சலோமின் ஆட்கள்
கவலைப்பட மாட்டார்கள். ஆனால் நீங்கள்
எங்களில் 10,000 பேருக்கு ஒப்பானவர்கள்!
நீங்கள் நகரத்தில் தங்கியிருப்பதே நல்லது.
பின்பு, எங்களுக்கு உதவி தேவையானால்,
நீங்கள் எங்களுக்கு உதவமுடியும்"
என்றார்கள்.
4அரசன் ஜனங்களை நோக்கி, "நீங்கள்
சிறந்ததென முடிவெடுக்கும் காரியத்தையே
நான் செய்வேன்" என்றான்.

பின்பு அரசன் வாயிலருகே வந்து
நின்றான். படை வெளியே சென்றது.
அவர்கள் 100 பேராக மற்றும் 1,000
பேராக அணிவகுத்துச் சென்றனர்.

### "அப்சலோமிடம் மென்மையாய் நடந்துக்கொள்ளுங்கள்!"

5யோவாப், அபிசாயி, ஈத்தாய் ஆகியோ
ருக்கு அரசன் ஒரு கட்டளையிட்டான்.
அவன், "இதை எனக்காகச் செய்யுங்கள்:
அப்சலோமிடம் மென்மையாய் நடந்துக்
கொள்ளுங்கள்!" என்றான்.

ஜனங்கள் எல்லாரும் அப்சலோமைக்
குறித்து படைத் தலைவர்களுக்கு அரசன்
இட்ட கட்டளையைக் கேட்டார்கள்.

### தாவீதின் படை அப்சலோமின் படையைத் தோற்கடிக்கிறது

6அப்சலோமின் இஸ்ரவேலருடைய
படையைத் தாவீதின் படை களத்தில்
சந்தித்தது. அவர்கள் எப்பிராயீமின் காட்டில்
சண்டையிட்டனர். 7தாவீதின் படை
இஸ்ரவேலரைத் தோற்கடித்தது. அன்றைக்கு
20,000 ஆட்கள் கொல்லப்பட்டனர்.
8அப்போர் தேசமெங்கும பரவியது். அன்
றைக்கு வாளால் மரித்தோரைக்காட்டிலும்
காட்டில் மரித்தவர்களே அதிக எண்ணிக்
கையில் இருந்தனர்.

9அப்சலோம் தாவீதின் அதிகாரிகளைச்
சந்திக்க நேர்ந்தது. அப்சலோம் தனது
கோவேறு கழுதையின் மேலேறிக்கொண்டு,
தப்பித்துச்செல்ல முயன்றான். ஒரு பெரிய
கர்வாலி மரத்தின் கீழே அந்தக் கோவேறு
கழுதைச் சென்றது. அதன் கிளைகள்
அடர்த்தியாக இருந்தன, அப்சலோமின்
தலை மரத்தில் அகப்பட்டுக்கொண்டது.
அவன் ஏறிவந்த கோவேறு கழுதை ஓடி
விட்டதால், அப்சலோம் நிலத்திற்கு
மேலாகத்* தொங்கிக்கொண்டிருந்தான்.
10ஒரு மனிதன் நிகழ்ந்தது அனைத்தையும்
பார்த்தான். அவன் யோவாபிடம், "ஓர்
கர்வாலி மரத்தில் அப்சலோம் தொங்கிக்
கொண்டிருப்பதை நான் கண்டேன்"
என்றான்.
11யோவாப் அம்மனிதனை நோக்கி, "ஏன்
அவனைக் கொன்று நிலத்தில் விழும்படி
யாகச் செய்யவில்லை? நான் உனக்கு ஒரு
கச்சையையும் 10 வெள்ளிக் காசையும்
கொடுத்திருப்பேன்!" என்றான்.
12அம்மனிதன் யோவாபை நோக்கி,
"நீங்கள் எனக்கு 1,000 வெள்ளிக்காசைக்
கொடுத்தாலும் நான் அரசனின் மகனைக்
காயப்படுத்த முயலமாட்டேன். ஏனெனில்
உங்களுக்கும், அபிசாயிக்கும், ஈத்தாயிக்கும்
அரசன் இட்ட கட்டளையை நாங்கள்
கேட்டோம். அரசன், 'இளைய அப்சலோ
மைக் காயப்படுத்தாதபடி பார்த்துக்கொள்
ளுங்கள்' என்றான். 13நான் அப்சலோமைக்
கொன்றால்,அரசன் கண்டுபிடித்துவிடுவான்.
அப்போது நீங்களே என்னைத் தண்டிப்
பீர்கள்" என்றான்.
14யோவாப், "நான் உன்னோடு இங்குப்
பொழுதை வீணாக்கமாட்டேன்!" என்றான்.
அப்சலோம் உயிரோடு இன்னும் ஓக்
மரத்தில் தொங்கிக்கொண்டிருந்தான். யோ
வாப் மூன்று ஈட்டிகளை எடுத்தான்.
அவற்றை அப்சலோமை நோக்கி எறிந்தான்.
அவை அப்சலோமின் இருதயத்தைத் துளைத்
தன. 15யோவாபுக்கு யுத்தத்தில் உதவிய
பத்து இளம் வீரர்கள் இருந்தனர். அந்தப்
பத்துப்பேரும் அப்சலோமைச் சூழ்ந்துநின்று
அவனைக் கொன்றனர்.
16யோவாப் எக்காளம் ஊதி அப்சலோ
மின் இஸ்ரவேலரைத் துரத்துவதை நிறுத்து
மாறு அறிவித்தான். 17பின்பு அப்சலோமின்
உடலை யோவாபின் ஆட்கள் எடுத்துக்
காட்டிலிருந்து ஒரு பெரிய குழியில்
இட்டனர். அக்குழியைப் பெரிய கற்களால்
மூடினார்கள்.
அப்சலோமைப் பின்பற்றிய இஸ்ரவேலர்
ஓடிப்போய், தங்கள் வீடுகளை அடைந்தனர்.
18அப்சலோம் உயிரோடிருந்தபோது அரச
னின் பள்ளத்தாக்கில் ஒரு தூணை
நிறுவினான். அப்சலோம், "எனது பெயரை
நிலை நிறுத்துவதற்கு எனக்கு மகன்
இல்லை" என்றான். எனவே அத்தூணுக்கு
தனது பெயரிட்டான். அத்தூண் இன்
றைக்கும் "அப்சலோமின் ஞாபகச்சின்னம்"
என்று அழைக்கப்படுகிறது.

### யோவாப் தாவீதுக்கு செய்தியனுப்புகிறான்

19சாதோக்கின் மகனாகிய அகிமாஸ்
யோவாபை நோக்கி, "நான் ஓடிப்போய்
தாவீது அரசனுக்குச் செய்தியைத் தெரிவிப்
பேன். அவருக்காக பகைவனை கர்த்தர்தாமே
அழித்தார் என்று சொல்வேன்" என்றான்.
20யோவாப் அகிமாசிடம், "வேண்டாம்,
நீ இன்று தாவீதுக்குச் செய்தியைச் சொல்ல
வேண்டாம். இன்றல்ல, இன்னொரு நாள்
செய்தியைக் கொண்டுபோகலாம். ஏனெனில்,

---

**நிலத்திற்கு மேல்** எழுத்தின் பிராகாரமாக, "வானத்திற்க்கும் புமிக்கும் நடுவில்."

அரசனின் மகன் மரித்துவிட்டான்”
என்றான்.
21 பின்பு யோவாப் கூஷியை நோக்கி,
“நீ பார்த்த காரியங்களை அரசனிடம்
போய்ச்சொல்” என்றான்.
கூஷியன் யோவாபை வணங்கினான்.
பின்பு அவன் தாவீதுக்குச் சொல்ல
ஓடினான்.
22 ஆனால் சாதோக்கின் மகனாகிய
அகிமாஸ் யோவாபை மீண்டும் வேண்டிய
வனாய், “எது நடந்தாலும் பரவாயில்லை,
கூஷியன் பின்னால் ஓட என்னை
அனுமதியுங்கள்!” என்றான்.
யோவாப், “மகனே, ஏன் நீ செய்தியைக்
கொண்டுபோக வேண்டும் என நினைக்
கிறாய்? நீ கூறப்போகும் செய்திக்கு எந்தப்
பரிசையும் பெற மாட்டாய்” என்றான்.
23 அகிமாஸ் பதிலாக, “எது நடந்தாலும்
பரவாயில்லை, நான் ஓடுவேன்” என்றான்.
யோவாப் அகிமாசிடம், “ஓடு!” என்றான்.
அப்போது அகிமாஸ் யோர்தான் பள்ளத்
தாக்கு வழியாக ஓடினான். அவன்
கூஷியனை முந்திவிட்டான்.

## தாவீது செய்தியை அறிகிறான்

24 நகர வாயில்கள் இரண்டிற்கும் நடுவே
தாவீது உட்கார்ந்திருந்தான். வாயில் மதிலின்
கூரையில் காவலன் போய் நின்றான். ஒரு
மனிதன் தனித்து ஓடிவருகிறதைக் காவலன்
கண்டான். 25 காவலன் தாவீது அரசனிடம்
உரக்கச் சொன்னான்.
தாவீது அரசன், “அம்மனிதன் தனித்து
வந்தால் அவன் செய்திக் கொண்டு
வருகிறான்” என்றான்.
அம்மனிதன் அருகே வந்துக்கொண்
டிருந்தான். 26 காவலன் மற்றொரு மனிதனும்
ஓடிவருவதைக் கண்டான். காவலன் வாயிற்
காப்போனிடம், “பார்! மற்றொருவனும்
தனியாக ஓடிவருகிறான்!” என்றான்.
அரசன், “அவனும் செய்திக் கொண்டு
வருகிறான்” என்றான்.
27 காவலன், “சாதோக்கின் மகன் அகிமா
சைப்போல் முதல் மனிதன் ஓடிவருகிறான்”
என்றான்.
அரசன், “அகிமாஸ் நல்லமனிதன். அவன்
நற்செய்தியைக் கொண்டு வரக்கூடும்” என்
றான்.

28 அகிமாஸ் அரசனிடம், “எல்லாம்
நல்லபடி நடந்தது!” என்றான். அகிமாஸ்
அரசனை வணங்கினான். அவனது முகம்
நிலத்திற்கு அருகில் வந்தது. அகிமாஸ்,
“உங்கள் தேவனாகிய கர்த்தரை துதியுங்கள்!
எனது அரசனாகிய ஆண்டவனே, உங்க
ளுக்கு எதிரான ஆட்களைக் கர்த்தர்
தோற்கடித்தார்” என்றான்.
29 அரசன், “இளம் அப்சலோம் நலமா?”
என்று கேட்டான்.
அகிமாஸ் பதிலாக, “யோவாப் என்னை
அனுப்பியபோது பெரிய சந்தடியிருந்தது.
அது என்னதென்று எனக்குத் தெரியாது”
என்றான்.
30 அப்போது அரசன், “இங்கே வந்து
நின்று காத்திரு” என்றான். அகிமாசும்
தள்ளிப்போய் நின்றான்.
31 கூஷியன் வந்தான். அவன், “எனது
ஆண்டவனாகிய அரசனுக்குச் செய்தி இது.
உங்களுக்கு எதிரான ஜனங்களை கர்த்தர்
இன்று தண்டித்தார்!” என்றான்.
32 அரசன் கூஷியனை நோக்கி, “இளம்
அப்சலோம் நலமா?” என்றான்.
கூஷியன் பதிலாக, “உங்களுக்கு எதிராக
வரும் பகைவர்களும் ஜனங்களும் இந்த
இளம் மனிதனைப் (அப்சலோமைப்) போல
தண்டிக்கப்படுவார்கள் என நம்புகிறேன்”
என்றான்.

33 அப்போது அப்சலோம் மரித்துவிட்டான்
என்பதை அரசன் அறிந்தான். அரசன்
நிலைகுலைந்தான். நகரவாயிலின் மேலிருந்த
அறைக்கு அவன் சென்றான். அங்கே அவன்
அழுதான். போகும்போது, “எனது மகன்
அப்சலோமே, என் மகன் அப்சலோமே!
நான் உனக்காக மரித்திருக்கலாம் என
விரும்புகிறேன், என் மகனே, என் மகனே!”
என்றான்.

## யோவாப் தாவீதைக் கடிந்துக் கொள்கின்றான்

19 ஜனங்கள் யோவாபுக்குச் செய்தியைத்
தெரிவித்தனர். அவர்கள் யோவாபை
நோக்கி, “பாருங்கள் அரசர் அப்சலோமுக்
காக மிகவும் அழுது துக்கமாய் இருக்கிறார்”
என்றார்கள்.
2 அன்றைய போரில் தாவீதின் படை
வெற்றிபெற்றது. ஆனால் அந்தநாள் எல்லோ
ருக்கும் துக்கநாளாக அமைந்தது, “அரசன்
தனது மகனுக்காக அதிக துக்கமடைந்
துள்ளான்” என்பதை ஜனங்கள் கேள்விப்
பட்டதால், அது மிகுந்த துக்கநாள் ஆயிற்று.
3 ஜனங்கள் அமைதியாக நகரத்திற்குள்
வந்தனர். போரில் தோற்கடிக்கப்பட்டு, ஓடிப்
போன ஜனங்களைப்போல் அவர்கள்
இருந்தார்கள். 4 அரசன் முகத்தை மூடிக்
கொண்டிருந்தான். “எனது மகன்
அப்சலோமே, ஓ அப்சலோமே, என் மகனே,
என் மகனே!” என்று அவன் சத்தமிட்டு
அழுதுக் கொண்டிருந்தான்.
5 அரசனின் அரண்மனைக்குள் யோவாப்
வந்தான். யோவாப் அரசனைப் பார்த்து,
“உங்கள் ஒவ்வொரு அதிகாரிகளையும்
நீங்கள் புண்படுத்துகிறீர்கள். பாருங்கள் அந்த
அதிகாரிகள் இன்று உங்கள் உயிரைக்

காப்பாற்றினார்கள். அவர்கள் உங்கள்
மகன்கள், மகள்கள், மனைவிகள், வேலைக்
காரிகள் ஆகியோரின் உயிர்களையும்
காப்பாற்றினார்கள். 6உங்களைப் பகைக்கிற
வர்களை நீர் நேசிக்கிறீர். உங்களை
நேசிக்கிறவர்களை நீர் வெறுக்கிறீர். உங்கள்
அதிகாரிகளும் உங்கள் வீரர்களும் உங்க
ளுக்கு ஒரு பொருட்டல்ல என்பதை இன்று
வெளிப்படுத்திவிட்டீர்கள். அப்சலோம் உயி
ரோடிருந்து, நாங்கள் அனைவரும்
கொல்லப்பட்டிருந்தால் நீர் மிகவும் மகிழ்ச்சி
யடைந்திருப்பீர்கள் என்பதை அறிந்துக்
கொள்ள முடிகிறது! 7இப்போது எழுந்து
போய், உங்கள் அதிகாரிகளிடம் பேசுங்கள்.
அவர்களை உற்சாகப்படுத்துங்கள்! இப்
போதே எழுந்து நீங்கள் அவ்வாறு
செய்யாவிட்டால், இன்றிரவு உம்மோடு
ஒருவன்கூட இருக்கமாட்டான் என்று
கர்த்தர் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்.
நீங்கள் குழந்தையாயிருந்ததிலிருந்து அனு
பவித்த எல்லா துன்பங்களையும்விட அது
தீமையானதாக இருக்கும்" என்றான்.
8அப்போது அரசன் நகரவாயிலுக்குச்
சென்றான். அரசன் வாயிலருகே வந்துள்
ளான் என்ற செய்தி பரவியது. எனவே
எல்லோரும் அரசனைக் காணவந்தனர்.

### தாவீது மீண்டும் அரசனாதல்

அப்சலோமைப் பின்பற்றிய இஸ்ரவேலர்
வீடுகளுக்கு ஓடிப்போய்விட்டனர். 9எல்லா
இஸ்ரவேல் கோத்திரங்களைச் சேர்ந்த ஜனங்
களும் விவாதிக்கத் தொடங்கினார்கள்.
அவர்கள், "பெலிஸ்தியரிடமிருந்தும் பிற
பகைவரிடமிருந்தும் தாவீது அரசர் நம்மைக்
காப்பாற்றினார். தாவீது, அப்சலோமிட
மிருந்து ஓடிப்போனார். 10நம்மை ஆள்வதற்கு
அப்சலோமைத் தேர்ந்தெடுத்தோம். ஆனால்
அவன் போரில் மரித்துப்போனான். நாம்
தாவீதை மீண்டும் அரசனாக்கவேண்டும்"
என்றார்கள்.
11தாவீது அரசன் ஆசாரியர்களாகிய
சாதோக்குக்கும் அபியத்தாருக்கும் செய்தி
யனுப்பினர். தாவீது, "யூதாவின் தலைவர்
களிடம் பேசுங்கள். அவர்களிடம் கூறுங்கள்,
'தாவீதை தன் வீட்டிற்கு அழைத்துவரும்
கடைசி கோத்திரமாக நீங்கள் இருப்பதேன்?
பாருங்கள், இஸ்ரவேலர் எல்லோரும்
அரசனை மீண்டும் அரண்மனைக்கு
அழைத்து வருவதைப்பற்றிப் பேசிக்கொண்
டிருக்கிறார்கள். 12நீங்கள் எனது சகோதரர்
கள், நீங்கள் என் குடும்பம். அவ்வாறிருக்
கையில் அரசனை வீட்டிற்குத் திரும்ப
அழைப்பதற்கு நீங்கள் கடைசி கோத்திரமாக
இருப்பதேன்?' என்று சொல்லுங்கள்.
13அமாசாவிடம், 'நீங்கள் எனது குடும்பத்தின்
ஒரு பகுதியினர். யோவாபின் இடத்தில்
உங்களைப் படைத்தலைவன் ஆக்கா
விட்டால் தேவன் என்னைத் தண்டிக்
கட்டும்' என்று சொல்லுங்கள்" என்றான்.
14தாவீது யூதாவின் ஜனங்களின்
இருதயங்களைத் தொட்டான், அவர்கள் ஒரே
மனிதனைப்போன்று அவன் கூறியதற்குச்
சம்மதித்தனர். யூதா ஜனங்கள் அரசனுக்குச்
செய்தியனுப்பினார்கள். அவர்கள், "நீங்களும்
உங்கள் அதிகாரிகளும் திரும்பிவாருங்கள்"
என்றனர்.
15பின்பு தாவீது அரசன் யோர்தான்
நதிக்கு வந்தான். யூதா ஜனங்கள் அரசனைக்
காண கில்காலுக்கு வந்தனர். அரசனை
யோர்தான் நதியைத் தாண்டி அழைத்துச்
செல்வதற்காக அவர்கள் அங்கு வந்தனர்.

### சீமேயி தாவீதிடம் தன்னை மன்னிக்கும் படி வேண்டுகிறான்

16கேராவின் மகனாகிய சீமேயி பென்ய
மீன் கோத்திரத்தைச் சேர்ந்தவன். அவன்
பகூரிமில் வாழ்ந்தான். தாவீது அரசனைச்
சந்திப்பதற்குச் சீமேயி விரைந்தான்.
யூதாவின் ஜனங்களோடு சீமேயி வந்தான்.
17பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த 1,000
ஆட்களும் சீமேயியோடு வந்தனர். சவுலின்
குடும்பத்தைச் சேர்ந்த சீபா என்னும்
பணியாளும் வந்தான். சீபா தன் 15
மகன்களையும் 20 பணியாட்களையும்
தன்னோடு அழைத்துவந்தான். தாவீது
அரசனைச் சந்திப்பதற்கு இவர்கள்
எல்லோரும் யோர்தான் நதிக்கு விரைந்தனர்.
18அரசனின் குடும்பத்தை மீண்டும்
யூதாவுக்கு அழைத்துவருவதில் உதவு
வதற்காக ஜனங்கள் யோர்தான் நதியைக்
கடந்தனர். அரசன் விரும்பியவாறே ஜனங்
கள் செயல்பட்டனர், அரசன் நதியைக்
கடந்துகொண்டிருக்கும்போது, கேராவின்
மகனாகிய சீமேயி அவனைச் சந்திப்பதற்கு
வந்தான். அரசனுக்கு முன் சீமேயி தரையில்
விழுந்து வணங்கினான். 19சீமேயி அரச
னிடம், "என் ஆண்டவனே, நான் செய்த
தவறுகளை மனதில் வைத்துக்கொள்
ளாதீர்கள். எனது அரசனாகிய ஆண்டவனே,
நீர் எருசலேமை விட்டுப்போனபோது நான்
செய்த தீய காரியங்களை நினைவில்
வைத்துக் கொள்ளாதீர்கள். 20நான் பாவம்
செய்தேன் என்பதை நீங்கள் அறிவீர்.
யோசேப்பின் குடும்பத்திலிருந்து வந்து
உங்களைச் சந்திக்கிற முதல் மனிதன் நான்,
எனது ஆண்டவனாகிய அரசனே"
என்றான்.
21ஆனால் செருயாவின் மகனாகிய
அபிசாய், "கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்பட்ட
அரசனுக்குத் தீமை நிகழவேண்டுமென்று
வேண்டிக்கொண்டதால் நாம் சீமேயியைக்
கொல்லவேண்டும்" என்றான்.
22தாவீது, "செருயாவின் மகன்களே, நான்
உங்களுக்கு என்ன செய்யவேண்டும்? இன்று

நீங்கள் என் எதிராளி. ஆனால் இஸ்ரவேலில் ஒருவனும் இன்று கொல்லப்படமாட்டான். இஸ்ரவேலுக்கு நான் அரசன் என்பது இன்று எனக்குத் தெரியும்" என்றான்.
23பிறகு அரசன் சீமேயியை நோக்கி, "நீ மரிக்கமாட்டாய்" என்றான். அரசன் சீமேயியைக் கொல்லப்போவதில்லை என்று சீமேயிக்கு வாக்களித்தான்.*

## மேவிபோசேத் தாவீதைப் பார்க்கப் போகிறான்

24தாவீது அரசனைக் காண சவுலின் பேரனாகிய மேவிபோசேத் வந்தான். மேவி போசேத் அரசன் எருசலேமிலிருந்து போனதிலிருந்து அமைதியோடு திரும்பி வரும் வரைக்கும், அவனது கால்களைச் சுத்தம் பண்ணவில்லை. தாடியைச் சவரம் செய்துகொள்ளவில்லை, அவனது ஆடை களை வெளுக்கவுமில்லை. 25மேவிபோசேத் எருசலேமிலிருந்து அரசனைச் சந்திக்க வந்தான். அரசன் மேவிபோசேத்தை நோக்கி, "மேவிபோசேத், நான் எருசலேமிலிருந்து ஓடிப்போனபோது நீ ஏன் என்னோடு வரவில்லை?" என்று கேட்டான்.
26மேவிபோசேத் பதிலாக, "எனது அரச னாகிய ஆண்டவனே, எனது வேலையாள் (சீபா) என்னை ஏமாற்றிவிட்டான். நான் சீபாவிடம், 'நான் முடவன் எனவே கழுதையில் ஏற்றி வை. நான் கழுதையின் மேலேறி அரசனோடு போவேன்' என்றேன்.
27ஆனால் எனது வேலையாள் என்னை ஏமாற்றிவிட்டான். என்னைக் குறித்து தீய செய்திகளை உங்களிடம் சொல்லி இருக்கி றான். தேவதூதனைப் போன்றவன் எனது அரசனாகிய ஆண்டவன் என்பது என் எண்ணம், உங்களுக்கு நல்லதென்று தோன்றுவதைச் செய்யுங்கள். 28எனது பாட்டனாரின் குடும்பத்தார் எல்லோரையும் நீங்கள் கொன்றிருக்கமுடியும். ஆனால் நீங்கள் அதைச் செய்யவில்லை. உங்கள் மேசையில் உண்கிறவர்களோடு என்னையும் வைத் தீர்கள். எனவே எதைக் குறித்தும் அரச னோடு முறையிட எனக்கு உரிமையில்லை" என்றான்.
29அரசன் மேவிபோசேத்தை நோக்கி, "உனது கஷ்டங்களைக் குறித்து அதிகமாக எதுவும் சொல்லாதே. இதுவே நான் செய்த முடிவு: நீயும் சீபாவும் தேசத்தைப் பிரித்துக் கொள்ளுங்கள்" என்றான்.
30மேவிபோசேத் அரசனிடம், "நிலம் முழுவதையும் சீபாவே எடுத்துக்கொள் ளட்டும். ஏனெனில் எனது அரசனாகிய ஆண்டவன் சமாதானத்தோடு சொந்த வீட்டிற்கே மீண்டும் வந்து சேர்ந்திருக் கிறீர்கள்! இதுவே எனக்குப் போதும்" என்றான்.

## பர்சிலாவைத் தன்னோடு வரும்படியாக தாவீது கேட்கிறான்

31கீலேயாத்தின் பர்சிலா ரோகிலிமி லிருந்து வந்தான். தாவீது அரசனோடு அவன் யோர்தான் நதிக்கு வந்தான். நதியைக் கடந்து அரசனை அழைத்துச் செல்வதற்காக அவன் அரசனோடு போனான். 32பர்சிலா மிகவும் வயது முதிர்ந் தவன். அவனுக்கு 80 வயது. மக்னாயீமில் தாவீது தங்கியிருந்தபோது அவனுக்கு உணவும் பிற பொருட்களும் கொடுத்தான். அவன் செல்வந்தனாக இருந்தபடியால் அவனால் இதைச் செய்யமுடிந்தது. 33தாவீது பர்சிலாவிடம், "என்னோடு நதியைக் கடந்துவா. என்னோடு எருசலேமில் நீ வாழ்ந்தால் நான் உன்னைப் பராமரிப்பேன்" என்றான்.
34ஆனால் பர்சிலா அரசனிடம், "நான் எவ்வளவு வயது முதிர்ந்தவன் என்பது உனக்குத் தெரியுமா? நான் உன்னோடு எருசலேமுக்குப் போகமுடியும் என நீ நினைக்கிறாயா? 35எனக்கு 80 வயது! எது நல்லது, எது கெட்டது என்று கூறுவதற்கும் இயலாத முதிர்ந்த வயது. நான் உண்ணும், பருகும் உணவுகளின் சுவையறிய இயலாதவன். பாடுகிற ஆண் களின், பெண்களின் சத்தத்தைக் கேட்கவும் இயலாத அளவிற்கு வயதில் முதிர்ந்தவன். நீ ஏன் என்னைப்பற்றிக் கவலைப்படுகிறாய்?
36உன்னிடமிருந்து எனக்கு எந்த பரிசும் வேண்டாம். நான் உன்னோடு யோர்தான் நதியைத் தாண்டுவேன். 37ஆனால், நான் திரும்பிப்போக அனுமதியுங்கள். அப்போது நான் எனது நகரத்தில் மரித்து எனது தந்தை, தாய் ஆகியோரின் கல்லறையில் அடக்கம் செய்யப்படுவேன். கிம்காம் உங்களுக்குப் பணியாளாயிருப்பான். எனது அரசனாகிய ஆண்டவனே, அவன் உங்க ளோடு வரட்டும். உங்கள் விருப்பப்படியே அவனை நடத்தும்" என்றான்.
38அரசன் பதிலாக, "கிம்காம் என்னோடு வருவான். உனக்காக நான் அவனிடம் இரக்கம் காட்டுவேன். நான் உனக்காக எதையும் செய்வேன்" என்றான்.

## தாவீது வீட்டிற்குப் போகிறான்

39அரசன் பர்சிலாவை முத்தமிட்டு வாழ்த்தினான். பர்சிலா வீட்டிற்குத் திரும்பிப் போனான். அரசனும் அவனது ஜனங்கள் எல்லோரும் நதியைக் கடந்தனர்.
40அரசன் யோர்தான் நதியைத் தாண்டி, கில்காலுக்குப் போனான். கிம்காம் அவனோடு சென்றான். யூதா ஜனங்கள் எல்லோரும் இஸ்ரவேலில் பாதிப்பகுதி

---

***அரசன் ... வாக்களித்தான்*** தாவீது சீமேயியைக் கொல்லவில்லை. ஆனால் சில ஆண்டுகளுக்கு பிறகு, தாவீதின் மகன் சாலமோன் சீமேயியை மரணத்துக்குட்படுத்தும்படி கட்டளையிட்டான். பார்க்க 1 இராஜா. 2:44-46.

யினரும் தாவீதை நதியைத் தாண்டி
அழைத்துச்சென்றனர்.

### யூதா மக்களோடு இஸ்ரவேலர் வாதாடுகின்றனர்

41இஸ்ரவேலர் எல்லோரும் அரசனிடம்
வந்தனர். அவர்கள் அரசனைப் பார்த்து,
"ஏன்? எங்கள் சகோதரராகிய யூதா
ஜனங்கள் உங்களைத் திருடிச்சென்று, இப்
போது உங்களையும், உங்கள் குடும்பத்
தையும், உங்கள் ஆட்களோடு யோர்தான்
ஆற்றைத் தாண்டி அழைத்து வந்திருக்
கின்றனர்" என்றார்கள்.
42யூதாவின் ஜனங்கள் எல்லோரும்
இஸ்ரவேலருக்குப் பதிலாக, "ஏனெனில்
அரசர் எங்களுக்கு நெருங்கிய உறவினர்
என்பதே அதன் காரணம். இந்த விஷயம்
குறித்து நீங்கள் ஏன் கோபப்படுகிறீர்கள்?
நாங்கள் ஒன்றும் அரசனின் செலவில்
சாப்பிடவில்லை. அரசன் எங்களுக்கு எந்தப்
பரிசும் தரவில்லை" என்றார்கள்.
43இஸ்ரவேலர் பதிலாக, "தாவீதிடம்
எங்களுக்குப் பத்துப் பங்குகள் உள்ளன.
எனவே உங்களைக் காட்டிலும் தாவீதிடம்
எங்களுக்கு அதிக உரிமை உண்டு. ஆனால்
நீங்கள் எங்களை மதிக்கவில்லை? நாங்கள்
தாம் அரசரை அழைத்து வருவதைக்
குறித்து முதலில் எடுத்துரைத்தோம்"
என்றார்கள்.

ஆனால் யூதா ஜனங்கள் இஸ்ரவேலரிடம்
கடுமையாக நடந்துக்கொண்டனர். யூத
ஜனங்களுடைய வார்த்தைகள் இஸ்ரவேல்
ஜனங்களுடைய வார்த்தைகளை காட்டிலும்
மிகவும் கடுமையாக இருந்தது.

### தாவீதுக்கு எதிராக இஸ்ரவேலரை சேபா வழிநடத்துகிறான்

20 பிக்கிரியின் மகனாகிய சேபா
என்னும் மனிதன் அந்த இடத்தில்
இருந்தான். சேபா எல்லோருக்கும் தொல்லை
விளைவிக்கும் பயனற்ற மனிதன். சேபா
பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்தவன்.
ஜனங்களைக் கூட்டுவதற்காக அவன் ஒரு
எக்காளம் ஊதினான். பின்பு அவன்,

"நமக்குத் தாவீதிடம் பங்கெதுவும்
இல்லை.
ஈசாயின் மகனிடத்தில் நமக்கு எந்தப்
பாகமும் இல்லை.
இஸ்ரவேலே, நாம் நமது
கூடாரங்களுக்குத் திரும்புவோம்"
என்றான்.

2எனவே இஸ்ரவேலர் எல்லோரும்
தாவீதை விட்டுப் பிக்கிரியின் மகனாகிய
சேபாவைப் பின்பற்றினார்கள். ஆனால் யூதா
ஜனங்கள் யோர்தான் ஆற்றிலிருந்து
எருசலேம் வரைக்கும் வருகிற வழியில்
எல்லாம் அவர்களுடைய அரசனோடு
தங்கியிருந்தனர்.
3தாவீது எருசலேமிலுள்ள தன் வீட்
டிற்குச் சென்றான். தாவீது தன் 10
மனைவியரை வீட்டைக் கவனித்துக்
கொள்வதற்காக விட்டுச் சென்றிருந்தான்.
தாவீது அவர்களை ஒரு தனித்த வீட்டில்
வைத்தான்.* அந்த வீட்டைச் சுற்றிலும்
காவலாளரை நியமித்தான். அவர்கள்
மரிக்கும்வரைக்கும் அந்த வீட்டில் தங்கி
யிருந்தார்கள். தாவீது அப்பெண்களைப்
பராமரித்து அவர்களுக்கு உணவளித்தான்.
ஆனால் அவர்களோடு பாலின உறவுக்
கொள்ளவில்லை. அவர்கள் மரிக்கும்
வரைக்கும் விதவைகளைப்போல் வாழ்ந்
தார்கள்.
4அரசன் அமாசாவை நோக்கி, "இன்னும்
மூன்று நாட்களுக்குள் யூதா ஜனங்கள்
என்னை வந்து சந்திக்க வேண்டுமென
அவர்களுக்குக் கூறு. நீயும் இங்கிருக்க
வேண்டும்" என்றான்.
5உடனே யூதா ஜனங்களை அழைத்து
வருவதற்காக அமாசா சென்றான். ஆனால்
அரசன் கொடுத்த கால அவகாசத்தைக்
காட்டிலும் அதிகமாக எடுத்துக்கொண்டான்.

### சேபாவைக் கொல்லும்படி அபிசாயிடம் தாவீது கூறுகிறான்

6தாவீது அபிசாயிடம், "பிக்கிரியின்
மகனாகிய சேபா அப்சலோமைக் காட்டிலும்
அதிகம் ஆபத்தானவன். எனவே என்
அதிகாரிகளை அழைத்துச்சென்று சேபா
வைத் துரத்து, மதிலுள்ள நகரங்களுக் குள்
அவன் நுழையும் முன் விரைந்து செல்.
பாதுகாப்பான நகரங்களுக்குள் சேபா
சென்றுவிட்டால் பிறகு அவனைப் பிடிக்க
முடியாது" என்றான்.
7எனவே யோவாப் பிக்கிரியின் மகனா
கிய சேபாவைத் துரத்துவதற்காக எருசலே
மை விட்டுச் சென்றான். கிரேத்தியர்
பிலேத்தியர் மற்ற வீரர்கள் ஆகியோ
ரோடுகூட யோவாப் தன் ஆட்களையும்
அழைத்துக்கொண்டான்.

### யோவாப் அமாசாவைக் கொல்கிறான்

8கிபியோனிலுள்ள பெரும்பாறை அருகே
யோவாபும் அவனது படையும் வந்தபோது,
அவர்களைச் சந்திப்பதற்கு அமாசா அங்கு
வந்தான். யோவாப் சீருடை அணிந்திருந்
தான். யோவாப் கட்டியிருந்த கச்சைக்குள்
உறையில் தன் வாளை வைத்திருந்தான்.
யோவாப் அமாசாவை சந்திக்க நடந்து
சென்றபோது யோவாபின் வாள் உறையி

---

**தாவீது ... வைத்தான்** தாவீதின் மகனான அப்லாம், தாவீதின் வைப்பாட்டிப் பெண்களோடு பாலினஉறவு கொண்டு அழித்துப்போட்டான். பார்க்க 2 சாமு. 16:21-22.

லிருந்து வெளியே விழுந்தது. யோவாப்
வாளை எடுத்துக் கையில் ஏந்தியிருந்தான்.
9 யோவாப் அமாசாவை நோக்கி,
“சகோதரனே, எப்படி இருக்கிறாய்?” என்று
கேட்டான்.
பின்பு யோவாப் தனது வலது கையை
நீட்டி அமாசாவின் தாடியைப் பிடித்து
முத்தமிடுவதுபோல் இழுத்தான். 10 யோவா
பின் இடது கையிலிருந்த வாளை அமாசா
கவனிக்கவில்லை. ஆனால் உடனே
யோவாப் தன் வாளால் அமாசாவை
வயிற்றில் குத்தினான். அமாசாவின் குடல்
நிலத்தில் சரிந்தது. யோவாப் மீண்டும்
அமாசாவைக் குத்த வேண்டியிருக்கவில்லை.
அவன் மரித்துபோயிருந்தான்.

### தாவீதின் ஆட்கள் சேபாவைத் தேடிக் கொண்டிருக்கின்றனர்

பின்பு யோவாபும், அவனது சகோதரன்
அபிசாயியும் பிக்கிரியின் மகனாகிய சேபா
வைத் துரத்தத் தொடங்கினர். 11 யோவாபின்
இளம் வீரர்களில் ஒருவன் அமாசாவின்
உடல் அருகே நின்றான். இந்த இளம்
வீரன், “யோவாபையும் தாவீதையும் ஆதரிக்
கின்ற வீரர்களே, நாம் யோவாபைப் பின்
தொடர்வோம்” என்றான்.
12 பாதையின் நடுவே அமாசாவின் உடல்
அவனது குருதியினூடே கிடந்தது. எல்லா
ஜனங்களும் அதைப் பார்ப்பதற்கு நின்றதை
அந்த இளம் வீரன் கவனித்தான். எனவே
அவன் அந்த உடலைப் பாதையிலிருந்து
வயலுக்குள் புரட்டித் தள்ளினான். பின்
உடலை ஒரு துணியால் மூடினான்.
13 அமாசாவின் உடல் பாதையிலிருந்து
அப்புறப்படுத்தப்பட்ட பிறகு, ஜனங்கள்
அதைத் தாண்டிச்சென்று யோவாபைப்
பின்தொடர்ந்தனர். அவர்கள் யோவாபோடு
சேர்ந்து பிக்கிரியின் மகனாகிய சேபாவைத்
துரத்தினார்கள்.

### ஆபேல் பெத்மாக்காவிற்கு சேபா தப்பிக்கிறான்

14 ஆபேல்பெத்மாக்காவை அடையும்வரை
வழியில் எல்லா இஸ்ரவேல் கோத்திரங்
களையும் பிக்கிரியின் மகனாகிய சேபா
கடந்துசென்றான். பேரீமின் ஜனங்களும்
சேபாவைப் பின்தொடர்ந்துச் சென்றனர்.
15 யோவாபும் அவனது ஆட்களும் ஆபேல்
பெத்மாக்காவிற்கு வந்தான். யோவாபின்
படை நகரத்தைச் சூழ்ந்தது. நகரத்து மதிலின்
மேல் அவர்கள் புழுதி வீசினார்கள்.
அவர்கள் மதிலில் ஏறுவதற்கு வசதியாக
இதைச் செய்தார்கள். யோவாபின் மனிதர்
மதில் கீழே விழும்படியாக, மதிலின்
கற்களை உடைக்க ஆரம்பித்தார்கள்.
16 ஆனால் அந்நகரத்தில் ஒரு புத்திசாலி
யானப் பெண் இருந்தாள். அவள், “நான்
சொல்வதைக் கேளுங்கள்! யோவாபை இங்கு
வரும்படி கூறுங்கள். நான் அவனோடு
பேசவேண்டும்” என்றாள்.
17 யோவாப் அப்பெண்ணைச் சந்தித்துப்
பேசுவதற்குச் சென்றான். அப்பெண் அவனி
டம், “நீர் யோவாபா?” என்று கேட்டாள்.
யோவாப், “ஆம், நானே” என்று பதில்
கூறினான்.
அப்போது அப்பெண்மணி, “நான் கூறு
வதைக் கேள்” என்றாள்.
யோவாப், “நான் கேட்கிறேன்” என்றான்.
18 அப்போது அப்பெண்மணி, “முன்பு
ஜனங்கள் ‘ஆபேலில் யாரேனும் உதவி
வேண்டினால் தேவையானது கிடைக்கும்’
என்று சொல்லிக்கொள்வார்கள். 19 நான்
இவ்வூரின் சமாதானமான, உண்மையான
ஜனங்களுள் ஒருத்தி. இஸ்ரவேலின் ஒரு
முக்கிய நகரத்தை நீ அழிக்கப்போகிறாய்.
கர்த்தருக்குச் சொந்தமான ஒன்றை நீ ஏன்
அழிக்க விரும்புகிறாய்?” என்று கேட்டாள்.
20 யோவாப் பதிலாக, “நான் எதையும்
அழிக்க விரும்பவில்லை! உங்கள் ஊரை
அழிக்க, நான் விரும்பமாட்டேன். 21 ஆனால்
மலைநாடாகிய எப்பிராயீமைச் சார்ந்த ஒரு
மனிதன் உங்கள் நகரில் இருக்கிறான். அவன்
பிக்கிரியின் மகன் சேபா. அவன் தாவீது
அரசனை எதிர்க்கிறான். அவனை
என்னிடம் கொண்டுவாருங்கள். நான் நகரை
ஒன்றும் செய்யமாட்டேன்” என்றான்.
அப்பெண் யோவாபிடம், “சரி அவனது
தலை மதிலின் மேலாக உங்களிடம்
வீசப்படும்” என்றாள்.
22 அந்நகரின் ஜனங்களிடம் அப்பெண்
மிகவும் புத்திசாதுரியத்தோடு பேசினாள்.
பிக்கிரியின் மகனாகிய சேபாவின் தலையை
ஜனங்கள் வெட்டினார்கள். சேபாவின்
தலையை மதிலுக்கு மேலாக யோவாபுக்கு
அந்த ஜனங்கள் வீசினார்கள்.
ஆகையால் யோவாப் எக்காளம் ஊதி
னான். படை நகரைவிட்டு நீங்கிச் சென்றது
ஒவ்வொருவரும் தத்தம் கூடாரத்திற்குச் சென்
றார்கள். யோவாப் எருசலேமில் அரசனிடம்
சென்றான்.

### தாவீதின் ஆளுகையின்கீழ் மக்கள்

23 இஸ்ரவேல் படைக்கு யோவாப் தலை
வனாக இருந்தான். கிரேத்தியரையும்
பிலேத்தியரையும் யோய்தாவின் மகன்
பெனாயா வழிநடத்தினான். 24 அதோனிராம்
கடும் உழைப்பாளிகளுக்குத் தலைவனா
னான். அகிலூதின் மகன் யோசபாத் வரலாற்
றாசிரியனாக இருந்தான். 25 சேவா செயலாள
ரானான். சாதோக்கும் அபியத்தாரும் ஆசாரி
யர்களாக இருந்தார்கள். 26 யயீரியனாகிய ஈரா
தாவீதுக்குப் பிரதானியாக* இருந்தான்.

---

**பிரதானி** அல்லது “ஆலோசகர்” எழுத்தின் பிராகாரமாக ஆசாரியார்.

### சவுலின் குடும்பம் தண்டிக்கப்படுகிறது

21 தாவீது அரசனாக இருந்தபோது ஒரு
பஞ்சம் வந்தது. இம்முறை பஞ்சம்
மூன்று ஆண்டுகள் நீடித்தது. தாவீது
கர்த்தரிடம் ஜெபம் செய்தான். கர்த்தரும்
அவனுக்குப் பதில் தந்தார். கர்த்தர், “சவுலும்
கொலைக்காரரான அவனது குடும்பத்தாரும்
இப்பஞ்சத்திற்குக் காரணமானார்கள். இப்
பஞ்சம் சவுல் கிபியோனியரைக் கொன்ற
தால் வந்ததாகும்” என்றார். 2 (கிபியோனியர்
இஸ்ரவேலர் அல்ல. அவர்கள் எமோரியர்
குழுவினராகும். இஸ்ரவேலர் கிபியோனிய
ரைத் துன்புறுத்துவதில்லை என்று வாக்
களித்திருந்தனர். ஆனால் சவுல் கிபியோனிய
ரைக் கொல்ல முயன்றான். அவன்
இஸ்ரவேலர் மீதும் யூதா ஜனங்கள் மீதும்
அளவுகடந்த பாசம் வைத்திருந்ததால்
இப்படிச் செய்தான்.)
அரசனாகிய தாவீது கிபியோனியரை
அழைத்து அவர்கள் எல்லோரிடமும் பேசி
னான். 3 தாவீது கிபியோனியரிடம், “நான்
உங்களுக்கு என்ன செய்யக்கூடும்? இஸ்ர
வேலின் பாவத்தைப் போக்குவதற்கு நான்
என்ன செய்யமுடியும்? எனவே நீர்
கர்த்தருடைய ஜனங்களை ஆசீர்வதிக்க
லாம்?” என்றான்.
4 கிபியோனியர் தாவீதிடம், “தாம் செய்த
காரியத்திற்கு ஈடாக கொடுப்பதற்கு சவுலின்
குடும்பத்தினரிடம் போதிய அளவு
வெள்ளியோ, தங்கமோ இல்லை. ஆனால்
இஸ்ர வேலரைக் கொல்வதற்கு எங்களுக்கு
உரிமை கிடையாது” என்றனர்.
தாவீது, “அப்படியெனில், நான் உங்களுக்
காக என்ன செய்யமுடியும்?” என்று
கேட்டான்.
5 அதற்குக் கிபியோனியர் அரசன் தாவீதி
டம், “எங்களுக்கெதிராக சவுல் திட்டங்கள்
தீட்டினான். இஸ்ரவேலில் வாழும் எங்கள்
அத்தனை பேரையும் அழிப்பதற்கு அவன்
முயன்றான். 6 எங்களுக்குச் சவுலின் ஏழு
மகன்களையும் எங்களிடம் ஒப்படையுங்கள்.
சவுல் கர்த்தரால் தேர்ந் தெடுக்கப்பட்ட
அரசன். ஆகையால் நாங்கள் கிபியா மலை
யில் கர்த்தரின் முன்னால் சவுலின் மகன்
களைத் தூக்கில் இடுவோம்” என்றார்கள்.
அரசனாகிய தாவீது, “நல்லது, அவர்
களை நான் உங்களிடம் ஒப்படைப்பேன்”
என்றான். 7 ஆனால் அரசன் யோனத்தானின்
மகனாகிய மேவிபோசேத்தைப் பாதுகாத்
தான். யோனத்தான் சவுலின் மகன், ஆனால்
கர்த்தருடைய பெயரில் யோனத்தானுக்கு
தாவீது ஒரு வாக்குறுதி அளித்திருந்தான்.*
ஆகையால் அரசன் மேவிபோசேத்தை
அவர்கள் துன்புறுத்தாதபடி பார்த்துக்
கொண்டான். 8 சவுலுக்கும் அவன் மனைவி
ரிஸ்பாவுக்கும் பிறந்தவர்கள், அர்மோனியும்
மேவிபோசேத்தும்* ஆவார்கள். சவுலுக்கு
மீகாள் என்னும் மகள் இருந்தாள். அவளை
மேகோலாவிலுள்ள பர்சிலாவின் மகன்
ஆதரியேலுக்கு மணம் புரிந்து வைத்தனர்.
ஆதரியேலுக்கும் மீகாளுக்கும் பிறந்த ஐந்து
மகன்களைத் தாவீது அழைத்தான். 9 இவ்
வாறு தாவீது ஏழுபேரைக் கிபியோனி
யருக்குக் கொடுத்தான். கிபியோனியர்
கர்த்தருக்கு முன்பாக அவர்களைக் கிபியா
மலையில் தூக்கிலிட்டனர். ஏழுபேரும் ஒரே
சமயத்தில் மடிந்தனர். அறுவடையின்
ஆரம்ப நாட்களில் அவ்வாறு அவர்கள்
கொல்லப்பட்டனர். இது வசந்தக் காலத்தில்
பார்லி அறுப்புக்கு முன் நடந்தது.

### தாவீதும் ரிஸ்பாவும்

10 ஆயாவின் மகளான ரிஸ்பாள் துக்கத்
திற்கு அறிகுறியான துணியை எடுத்து,
பாறை மீது வைத்தாள். அந்த ஆடை
அறுவடை தொடங்கியக் காலத்திலிருந்து
மழை வரும்வரை பாறை மீதே இருந்தது.
ரிஸ்பாள் மரித்தவர்களின் உடலை, இரவும்
பகலும் காத்தாள். காட்டுப்பறவைகள் பகலி
லும், காட்டுவிலங்குகள் இரவிலும் உடலை
நெருங்கிவிடாத வண்ணம் கண்காணித்தாள்.
11 ஜனங்கள் தாவீதிடம் சென்று சவுலின்
வேலைக்காரியான ரிஸ்பாவின் செயலைப்
பற்றிக் கூறினார்கள். 12 பின்பு தாவீது
யாபேஸ் கீலேயாத்திலுள்ள ஜனங்களி
லிருந்து சவுல் மற்றும் யோனத்தானின்
எலும்புகளை எடுத்தனர். (கிலேயாத்திலுள்ள
யாபேசின் ஆட்கள், கில்போவாவில் சவுலும்
யோனத்தானும் கொல்லப்பட்ட பிறகு இந்த
எலும்புகளை எடுத்தார்கள். பெலிஸ்தர்கள்
சவுல், மற்றும் யோனத்தானின் உடல்களை
பெத்சானிலுள்ள ஒரு சுவரில் தொங்க
விட்டனர். ஆனால் யாபேஸ் கீலேயாத்தின்
ஆட்கள் அங்குச்சென்று, பொது இடத்தி
லிருந்து உடல்களைத் திருடினார்கள்.)
13 தாவீது கீலேயாத்திலுள்ள யாபேசி
லிருந்து சவுல், மற்றும் யோனத்தானின்
எலும்புகளைக் கொண்டு வந்தான். அவர்கள்
தூக்கிலிடப்பட்ட ஏழுபேரின் உடல்
களையும் கொண்டுவந்தனர். 14 அவர்கள்
பென்யமீன் பகுதியில் சவுல், மற்றும்
யோனத்தானின் எலும்பைப் புதைத்தனர்.
அவர்கள் சவுலின் தந்தையாகிய கீசின்
கல்லறையில் அவர்களைப் புதைத்தனர்.
அரசர் சொன்னபடி ஜனங்கள் செய்தனர்.
ஆகையால் தேவன் அந்த ஜனங்களின்
வேண்டுதல்களை ஏற்றுக்கொண்டார்.

---

**கர்த்தருடைய ... அளித்திருந்தான்** தாவீதும் யோனத்தானும் தங்களுக்குள் ஒருவர் குடும்பத்துக்கு ஒருவர் தீமை செய்வதில்லை என்று உறுதிமொழி செய்து கொண்டனர்.

**மேவிபோசேத்தும்** மேவிபோசேத் இன்னொருவன் இவன் யோனாதனின் மகனல்லன்.

### பெலிஸ்தரோடு போர்

[15]பெலிஸ்தர் இஸ்ரவேலருடன் இன்னொரு
போரை ஆரம்பித்தனர். தாவீதும் அவனது
ஆட்களும் பெலிஸ்தரோடு போரிடச் சென்
றனர். தாவீது சோர்வாகவும் பலவீனமாகவும்
இருந்தான். [16]இஸ்பிபெனோப் இராட்சதர்
களில் ஒருவன். இஸ்பிபெனோபின் ஈட்டி 7
1/2 பவுண்டு எடையுள்ளதாக இருந்தது.
அவனிடம் புதிய வாள் ஒன்றும் இருந்தது.
அவன் தாவீதைக் கொல்லமுயன்றான்.
[17]ஆனால் செருயாவின் மகனாகிய அபிசாய்
பெலிஸ்தனைக் கொன்று தாவீதைக்
காப்பாற்றினான்.

பின்பு தாவீதின் ஆட்கள் தாவீதிற்கு
சிறப்பான ஒரு வாக்குறுதி அளித்தனர்.
அவர்கள் தாவீதிடம், "இனி நீங்கள் எங்க
ளோடு சேர்ந்து போருக்கு வரவேண்டாம்.
அவ்வாறு வந்தால் இஸ்ரவேல் தனது
சிறந்த தலைவரை இழக்கக்கூடும்" என்றனர்.
[18]பின்பு கோப் என்னுமிடத்தில் பெலிஸ்
தரோடு மற்றொரு போர் நடந்தது.
ஊசாத்தியனாகிய சீபேக்காய் இன்னொரு
இராட்சதனான, (ரஃபா குடும்பத்தவனான)
சாப் என்பவனைக் கொன்றான்.
[19]மீண்டும் பெலிஸ்தருக்கு எதிராக கோப்
என்னுமிடத்தில் போர் நடந்தது. யாரெயொர்
கிமின் மகனான எல்க்கானான் பென்யமீன்
குடும்பத்திலிருந்து வந்தவன். அவன்
காத்தியனாகிய (காத் ஊரானாகிய) கோலி
யாத்தைக் கொன்றான். அவனது ஈட்டி
நெய்கிறவர்களின் படைமரம் போன்று
பெரியதாக இருந்தது.

[20]மற்றொரு போர் காத் என்னுமிடத்தில்
நடந்தது. அங்கு மிகப்பெரிய மனிதன்
ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒவ்வொரு
கையிலும் ஆறுவிரல்களும், ஒவ்வொரு
பாதத்திலும் ஆறு விரல்களும் காணப்
பட்டன. இவ்வாறு அவனுக்கு மொத்தம் 24
விரல்கள் இருந்தன. இவனும் ரஃபா
(இராட்சதக்) குடும்பத்தைச் சார்ந்தவன்.
[21]அவன் இஸ்ரவேலைச் சவாலுக்கு அழைத்
தான். இஸ்ரவேலரை பார்த்து நகைத்தான்.
ஆனால் யோனத்தான் அவனைக் கொன்
றான். (யோனத்தான் தாவீதின் சகோதரனான
சீமேயின் மகன்.)
[22]இவ்வாறு மரித்த நான்குபேரும் காத்
ஊரைச் சார்ந்த ரஃபாவின் ஜனங்களா
வார்கள். அவர்கள் தாவீதினாலும் அவனது
ஆட்களாலும் கொல்லப்பட்டார்கள்.

### கர்த்தருடைய துதிகளைப்பாடும் தாவீதின் பாட்டு

22 கர்த்தர் தாவீதைச் சவுல் மற்றும்
பகைவர்களிடமிருந்து பாதுகாத்த
போது, தாவீது கர்த்தரைப் புகழ்ந்து பாடிய
பாட்டு.

2 கர்த்தர் என் கன்மலை
என் கோட்டை
என் பாதுகாப்பிடம்.
3 அவர் எனது தேவன்
நான் பாதுகாப்பைத் தேடி
ஓடும் கன்மலை
தேவன் எனது கேடயம்
அவரது ஆற்றல் என்னைக்
காக்கிறது.
மலைகளின் உச்சியில்
நான் மறைந்துக்கொள்ள ஏதுவான
என் பாதுகாப்பிடம் கர்த்தர் ஆவார்.
கொடிய பகைவரிடமிருந்து
அவர் என்னைக் காக்கிறார்.
4 அவர்கள் என்னைக் கேலிச்
செய்தனர்.
ஆனால் நான் கர்த்தரை உதவிக்கு
அழைத்தேன்.
என் பகைவரிடமிருந்து நான்
பாதுகாக்கப்பட்டேன்!
5 என் பகைவர்கள் என்னைக் கொல்ல
முயற்சித்துக்கொண்டிருந்தனர்!
மரணத்தின் அலைகள் என்னைச்
சூழ்ந்தன.
மரணத்தை நோக்கி
இழுத்துச்செல்லும் வெள்ளத்தில்
நான் அகப்பட்டேன்.
6 மயானக் கயிறுகள் என்னைச்
சுற்றிக் கட்டின.
மரணத்தின் கண்ணி எனக்கு
முன் இருந்தது.
7 மாட்டிக்கொண்ட நான் கர்த்தரிடம்
உதவி கேட்டேன்.
ஆம், எனது தேவனை அழைத்தேன்.
தேவன் தமது ஆலயத்தில் இருந்தார்.
என் குரலைக் கேட்டார்.
அவர் என் அழுகையைக் கேட்டார்.
8 பின்பு பூமி அசைந்து நடுங்கியது
பரலோகத்தின் அடித்தளம் ஆடியது.
ஏனெனில்? கர்த்தர் கோபமாயிருந்தார்
9 தேவனுடைய நாசியிலிருந்து
புகையெழுந்தது.
எரியும் தழல் அவரின் வாயிலிருந்து
வந்தது,
எரியும் பொறிகள் அவரிடமிருந்து
பறந்தன.
10 கர்த்தர் ஆகாயத்தைக் கீறி
கீழிறங்கி வந்தார்!
அவர் கட்டியான கறுப்பு மேகத்தில்
நின்றார்!
11 அவர் பறந்துக்கொண்டிருந்தார்
கேருபீன்கள் மீது பறந்து வந்தார்
காற்றின் மீது பயணம் வந்தார்.
12 கர்த்தர் கருமேகத்தைத் தன்னைச்சுற்றி
ஒரு கூடாரம்போல் அணிந்தார்.
அவர் கட்டியான இடிமேகங்களில்
தண்ணீரைச் சேகரித்தார்.

13 அவரது ஒளி நிலக்கரியைக்கூட
எரியவைக்கும் பிரகாசத்தைக்
கொண்டது!
14 வானிலிருந்து இடியைப்போல
கர்த்தர் முழங்கினார்!
உன்னதமான தேவன் தனது குரலை
எல்லோரும் கேட்கும்படி செய்தார்.
15 கர்த்தர் தனது அம்புகளை எய்தார்.
பகைவர்களைப் பயந்தோடச்
செய்தார்.
கர்த்தர் மின்னலை அனுப்பினார்
ஜனங்கள் குழம்பிச்
சிதறியோடினார்கள்.
16 கர்த்தாவே நீர் பலமாகப் பேசினீர்
பலமுள்ள காற்று
உங்கள் வாயிலிருந்து அடித்தது.
தண்ணீர் விலகிற்று.
எங்களால் கடலின் அடிப்பாகத்தைப்
பார்க்கமுடிந்தது.
பூமியின் அடித்தளத்தையும்
எங்களால் பார்க்கமுடிந்தது.
17 கர்த்தர் எனக்கும் உதவினார்!
கர்த்தர் மேலிருந்து கீழே வந்தார்.
கர்த்தர் என்னை துன்பத்திலிருந்துக்
காப்பற்றினார்.
18 என் பகைவர்கள் என்னைவிட
பலமானவர்கள்
அவர்கள் என்னை வெறுத்தார்கள்.
என் பகைவர்கள் என்னை
வெல்லக்கூடியவர்கள்!
எனவே தேவன்தாமே என்னைப்
பாதுகாத்தார்.
19 நான் தொல்லையில் இருந்தேன்.
என் பகைவர்கள் என்னைத்
தாக்கினார்கள்.
ஆனால் எனக்கு உதவிச்செய்ய
கர்த்தர் இருந்தார்!
20 கர்த்தர் என்மேல் பிரியமாயிருக்கிறார்
எனவே என்னைக் காத்தார்.
பாதுகாப்பான இடத்திற்கு
என்னை அழைத்துச்சென்றார்.
21 கர்த்தர் எனக்கான வெகுமதியை
எனக்குத் தருவார்.
ஏனெனில் நான் சரியானவற்றையே
செய்தேன்,
நான் தவறிழைக்கவில்லை.
எனவே அவர் எனக்கு நல்லதைச்
செய்வார்.
22 ஏனென்றால் நான் கர்த்தருக்குக்
கீழ்ப்படிந்தேன்!
எனது தேவனுக்கு எதிரான
பாவத்தைச் செய்யவில்லை.
23 நான் கர்த்தருடைய தீர்மானங்களை
நினைவில் வைத்திருந்தேன்.
அவரது சட்டங்களுக்குக்
கீழ்ப்படிந்தேன்!
24 நான் பரிசுத்தமானவனாகவும்
களங்கமற்றவனாகவும்
அவர் முன்னிலையில் இருந்தேன்.
25 எனவே கர்த்தர் எனக்கு
வெகுமதியைத் தருவார்!
ஏனெனில் சரியானதையே நான்
செய்தேன்!
அவர் எதிர்பார்ப்பதையே
நான் செய்கிறேன்.
நான் தவறு செய்யவில்லை.
எனவே அவர் எனக்கு நலமானதைச்
செய்வார்.
26 ஒருவன் உண்மையிலேயே உம்மை
விரும்பினால் அவனுக்கு
உண்மையான அன்பை நீர் காட்டுவீர்.
ஒருவன் உம்மிடம் உண்மையாக
இருந்தால் நீர் அவனிடம்
உண்மையாக இருப்பீர்.
27 கர்த்தாவே, யார் நல்லவராகவும்
பரிசுத்தமானவராகவும்
இருக்கிறார்களோ,
அவர்களுக்கு நீர் நல்லவராகவும்
பரிசுத்தமானவராகவும் இருக்கிறீர்.
உம்மிடம் மாறுபாடு உள்ளவருக்கு
நீர் மாறுபடுகிறவராகவும் நடந்து
கொள்வீர்.
28 கர்த்தாவே, சிறுமைப்பட்ட
ஜனங்களுக்கு உதவுகிறீர்.
மேட்டிமையானவர்களை நாணமுற
வைக்கிறீர்.
29 கர்த்தாவே, நீர் என்னுடைய
விளக்கு.
கர்த்தர் என்னைச் சுற்றியுள்ள
இருளைப் போக்கி ஒளி தருகிறார்!
30 கர்த்தாவே, உம்முடைய உதவியால்
நான் வீரர்களுடன் பாயமுடியும்
தேவனுடைய உதவியால்
பகைவர்களின் சுவர்களில்
என்னால் ஏறமுடியும்.
31 தேவனுடைய ஆற்றல்
முழுமையானது.
கர்த்தருடைய சொல் சோதித்துப்
பார்க்கப்பட்டது.
அவரை நம்புகிறவர்களை
அவர் பாதுகாக்கிறார்.
32 கர்த்தரைத் தவிர வேறு தேவன்
கிடையாது.
நமது தேவனைத் தவிர வேறு
கன்மலை இல்லை.
33 தேவன் எனது அரண்.
அவர் தூயவர்களைச் சரியாக
வாழவைக்கிறார்.
34 தேவன் நான் ஒரு மானைப்போல
வேகமாக ஓடும்படி செய்கிறார்!
உயரமான இடங்களில் நான்
நிலையாக நிற்கும்படி செய்கிறார்.
35 தேவன் என்னைப் போருக்குப்
பயிற்சி தருகிறார்.

அதனால் என் கைகள் சக்திவாய்ந்த
அம்புகளைச் செலுத்தமுடியும்.
36 தேவனே, நீர் என்னைப் பாதுகாத்தீர்.
எனக்கு வெற்றி அளித்தீர்.
என் பகைவரை நான் வெல்ல
உதவினீர்.
37 என் கால்களையும் மூட்டுக்களையும்
பலப்படுத்தினீர்!
எனவே நான் தடுமாறாமல் வேகமாக
நடக்கமுடியும்.
38 நான் பகைவர்களை
விரட்டவேண்டும்.
அவர்களை இறுதியில் அழிக்கும்
வரை!
அவர்களை முற்றிலும் அழிக்கும்
வரை
நான் திரும்பிவரமாட்டேன்.
39 என் பகைவர்களைத் தோற்கடித்தேன்.
அவர்களை வென்றேன்!
அவர்கள் மீண்டும் எழமாட்டார்கள்.
ஆம், என் பகைவர்கள்
என் பாதத்தில் விழுந்தார்கள்.
40 தேவனே, நீர் என்னை போரில்
வலிமையுடையவன் ஆக்கினீர்
என் பகைவர்கள் என் முன்னே
வந்து விழும்படி செய்தீர்.
41 என் பகைவர்களைத் தலைகுனிய
வைப்பதில் நீர் உதவினீர்,
என் பகைவர்களின் கழுத்தை
வெட்டும்படியாக அவர்கள்
கழுத்தை என்முன் ஒப்புவித்தீர்!
42 என் பகைவர்கள் உதவிக்கு ஆள்
தேடினார்கள்.
ஆனால் யாரும் அவர்கள்
உதவிக்கு வரவில்லை
அவர்கள் கர்த்தரிடம்கூட
கேட்டார்கள்.
ஆனால் அவர் அவர்களுக்குப் பதில்
அளிக்கவில்லை.
43 என் பகைவர்களைத் துண்டு
துண்டாக்கினேன்.
அவர்கள் நிலத்தின் மீது
புழுதியானார்கள்.
என் பகைவர்களை நான்
சிதறடித்தேன்.
அவர்கள் மீது தெருப்புழுதியென
நினைத்து நடந்தேன்.
44 நீர் எனக்கு எதிராக
போரிட்டவரிடமிருந்து என்னைக்
காத்தீர்.
நீர் அந்தத் தேசங்களை ஆள்பவனாக
என்னை ஆக்கினீர்.
எனக்குத் தெரியாதவர்கள் இப்போது
எனக்குப் பணிசெய்கிறார்கள்!
45 பிறதேசத்தவர் எனக்கு
கீழ்ப்படிகின்றார்கள்!
என்னுடைய கட்டளையைக்
கேட்கும்போது விரைந்து
பணிவிடை செய்கிறார்கள்,
அயல்நாட்டவர்கள் எனக்குப்
பயப்படுகிறார்கள்!
46 அந்த அயல்நாட்டினர் பயத்தால்
நடுங்குகிறார்கள்.
பயந்துக்கொண்டே அவர்களின்
மறைவிடங்களிலிருந்து வெளியில்
வருகிறார்கள்.
47 கர்த்தர் உயிரோடிருக்கிறார்.
எனது கன்மலையான அவரைத்
துதிப்பேன்!
தேவன் உயர்ந்தவர்!
என்னைப் பாதுகாக்கும் ஒரு
கன்மலை அவர்.
48 என் பகைவர்களை எனக்காகத்
தண்டிக்கும் தேவன் அவர்
ஜனங்களை என் ஆட்சியின் கீழ்
அவர் வைக்கிறார்.
49 தேவனே, என் பகைவரிடமிருந்து
என்னைக் காத்தீர்!
என்னை எதிர்த்தவர்களைத்
தோற்றோடச் செய்தீர்.
கொடியவர்களிடமிருந்து என்னைப்
பாதுகாத்தீர்!
50 கர்த்தாவே, ஆகையால் எல்லா
தேசங்களும் அறியும்படி
நான் உம்மைத் துதிப்பேன்.
எனவே உமது பேரில்
நான் பாடல்கள் பாடுகிறேன்.
51 கர்த்தர், தன் அரசன் போரில்
வெல்லும்படி செய்கிறார்!
கர்த்தர் தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட
அரசனுக்கு உண்மையான
அன்பைக் காட்டுகிறார்.
அவர் தாவீதுக்கும் அவன்
சந்ததிகளுக்கும் எப்போதும்
உண்மையாக இருப்பார்!

### தாவீதின் கடைசி வார்த்தைகள்

23 இவையே தாவீதின் கடைசி
வார்த்தைகள்:
இச்செய்தி ஈசாயின் மகன்
தாவீதினுடையது.
தேவனால் உயர்த்தப்பட்ட
மனிதனுடையது.
யாக்கோபின் தேவனால்
தேர்ந்தெடுக்கப்பட்ட அரசன்,
இஸ்ரவேலின் இனியப் பாடகன்.
2 கர்த்தருடைய ஆவி என் மூலமாகப்
பேசினார்.
என் நாவில் அவரது வார்த்தைகள்
இருந்தன.
3 இஸ்ரவேலின் தேவன் பேசினார்.
இஸ்ரவேலின் கன்மலையானவர்
என்னிடம்,
“நேர்மையாய் ஆளும் மனிதன்
தேவனை மதித்து ஆளும் மனிதன்

4 உதயகால ஒளியைப்
போன்றிருப்பான்:
மேகங்கள் அற்ற
அதிகாலையைப்போல இருப்பான்.
மழையைத் தொடர்ந்து தோன்றும்
வெளிச்சத்தைப் போன்றிருப்பான்.
அம்மழை நிலத்திலிருந்து
பசும்புல்லை எழச்செய்யும்”
என்று சொன்னார்.
5 கர்த்தர் என் குடும்பத்தை
பலமுள்ளதாகவும்
பாதுகாப்புள்ளதாகவும் மாற்றினார்.
தேவன் என்னோடு ஒரு நித்திய
உடன்படிக்கையைச் செய்தார்!
எல்லா வழிகளிலும் இந்த
உடன்படிக்கை நல்லதே என்று
தேவன் உறுதி செய்தார்.
உறுதியாக அவர் எனக்கு எல்லா
வெற்றியையும் தருவார்.
எனக்கு வேண்டிய எல்லாவற்றையும்
அவர் தருவார்.
6 ஆனால் தீயோர் முட்களைப்
போன்றவர்கள்
ஜனங்கள் முட்களை
வைத்திருப்பதில்லை.
அவர்கள் அவற்றை வீசிவிடுவார்கள்.
7 ஒருவன் அவற்றைத் தொட்டால்
அவை மரத்தாலும்
வெண்கலத்தாலுமான ஈட்டியால்
குத்துவது போலிருக்கும்
ஆம், அம்மக்கள் முட்களைப்
போன்றவர்கள்.
அவர்கள் தீயில் வீசப்படுவார்கள்
அவர்கள் முற்றிலும்
எரிக்கப்படுவார்கள்!

### மூன்று புகழ்வாய்ந்த வீரர்கள்

8இவை தாவீதின் பலம்பொருந்திய வீரர்களின் பெயர்கள்:

தேர்ப்படை அதிகாரிகளின் தலைவன் தக்கெமோனியின் மகனாகிய யோசேப்பாசெபெத். அவன் அதீனோஏஸ்னி எனவும் அழைக்கப்பட்டான். யோசேப்பாசெபெத் 800 பேரை ஒரே நேரத்தில் கொன்றவன்.

9இவனுக்குப் பின் அகோயின் மகனாகிய
தோதோவின் மகன் எலெயாசார் குறிப்பிடத்
தக்கவன். பெலிஸ்தரை எதிர்த்தபோது
தாவீதோடிருந்த மூன்று பெரும் வீரர்களில்
எலெயாசாரும் ஒருவன். அவர்கள் போருக்கு
ஓரிடத்தில் குழுமியிருந்தனர், ஆனால்
இஸ்ரவேல் வீரர்கள் ஓடிப்போய்விட்டனர்.
10மிகவும் சோர்ந்து போகும்வரைக்கும்
எலெயாசார் பெலிஸ்தரோடு போரிட்டான்.
ஆனால் அவன் வாளை இறுகப் பிடித்துக்
கொண்டு போர் செய்வதைத் தொடர்ந்தான்.
கர்த்தர் அன்று இஸ்ரவேலருக்குப் பெரும்
வெற்றியைக் கொடுத்தார். எலெயாசார்
போரில் வென்ற பிறகு பிற வீரர்கள்
திரும்பிவந்தனர். மரித்த பகைவரிடமிருந்து
பொருட்களைக் கொள்ளையிட அவர்கள்
வந்தனர்.

11இவனுக்குப் பிறகு சொல்லத்தக்கவன்
ஆராரிலுள்ள ஆகேயின் மகன் சம்மா.
பெலிஸ்தர் போரிட ஒன்றாகத் திரண்டு
வந்தனர். சிறு பயிறு நிரம்பிய களத்தில்
அவர்கள் போர் செய்தனர். பெலிஸ்தரிட
மிருந்து வீரர்கள் ஓடிப்போய்விட்டனர்.
12ஆனால் சம்மா போர்களத்தின் நடுவில்
நின்று தாங்கிக்கொண்டான். அவன் பெலிஸ்
தரை வென்றான். அன்று கர்த்தர்
இஸ்ரவேலுக்குப் பெரும் வெற்றியைக்
கொடுத்தார்.

### மூன்று பெரும் வீரர்கள்

13ஒரு முறை, தாவீது அதுல்லாம்
குகையில் இருந்தான். பெலிஸ்தரின் படை
ரெப்பாயீம் பள்ளத்தாக்கில் இருந்தது.
முப்பது பெரும் வீரர்களில்* மூன்றுபேர்
நிலத்தில் தவழ்ந்தவாறே சென்று தாவீது
இருக்குமிடத்தை அடைந்தனர்.
14மற்றொரு முறை தாவீது அரணுக்குள்
பாதுகாப்பான இடத்தில் இருந்தான்.
பெலிஸ்திய வீரர்களின் ஒரு கூட்டத்தினர்
பெத்லகேமில் இருந்தனர். 15தாவீது தனது
சொந்த ஊரின் தண்ணீரைப் பருகும் தாகங்
கொண்டிருந்தான். தாவீது, “பெத்லகேமின்
நகர வாயிலுக்கு அருகேயுள்ள கிணற்றி
லிருந்து யாரேனும் எனக்குக் கொஞ்சம்
தண்ணீர் தருவார்களா என்று விரும்பு
கிறேன்!” என்றான். தாவீதுக்கு உண்மையில்
அது தேவைப்படவில்லை. வெறுமனே
அவன் சொல்லிக்கொண்டிருந்தான்.
16ஆனால் அந்த மூன்று பெரும் வீரர்களும்
பெலிஸ்தரின் படைக்குள் புகுந்து சென்றனர்.
பெத்லகேமின் நகரவாயிலுக்கு அருகேயுள்ள
கிணற்றிலிருந்து கொஞ்சம் தண்ணீர்
எடுத்துவந்தனர். அம்முப்பெரும் வீரர்களும்
அந்த தண்ணீரைத் தாவீதிடம் கொண்டு
வந்தனர். ஆனால் தாவீது அதைக்குடிக்க
மறுத்தான். கர்த்தருக்குக் காணிக்கையாக
அதை நிலத்தில் ஊற்றிவிட்டான். 17தாவீது,
“கர்த்தாவே, நான் இந்த தண்ணீரைப்
பருகமுடியாது. எனக்காக தங்கள் உயிரைப்
பணயம் வைத்துச் சென்ற மனிதரின்
இரத்தத்தைக் குடிப்பதற்கு அது சமமாகும்”
என்றான். இதனாலேயே தாவீது
தண்ணீரைப் பருகவில்லை, இதைப்போன்ற
பல துணிவான காரியங்களை முப்பெரும்
வீரர்களும் செய்தார்கள்.

### மற்ற தைரியமான வீரர்கள்

18அபிசாயி யோவாபின் சகோதரனும்
செருயாவின் மகனும் ஆவான். முப்பெரும்

---

**முப்பது பெரும் வீரர்கள்** இவர்கள் தாவீதின் புகழ்மிக்க வீரமுடைய வீரர்கள்.

வீரர்களின் தலைவன். 300 வீரர்களைத்
தனது ஈட்டியால் கொன்றவன் இந்த
அபிசாயி. 19இவன் முப்பெரும் வீரர்களைப்
போன்ற புகழ் பெற்றவன். அவன் அவர்
களில் ஒருவனாக இல்லாதிருந்தும், அவர்க
ளுக்குத் தலைவனாக இருந்தான்.
20பின்பு யோய்தாவின் மகன் பெனாயா
இருந்தான். இவன் வலிமைக்கொண்ட
ஒருவனின் மகன். அவன் கப்செயேல்
ஊரான். பெனாயா பல வீரச்செயல்கள்
புரிந்தவன். மோவாபிலுள்ள ஏரியேலின்
இரண்டு மகன்களைப் பெனாயாக் கொன்
றான். ஒருநாள் பனிபெய்து கொண்டிருக்
கையில் பெனாயா நிலத்திலிருந்த ஒரு
குழியில் இறங்கிச்சென்று ஒரு சிங்கத்தைக்
கொன்றான். 21பெனாயா ஒரு மிகப்பெரிய
எகிப்திய வீரனையும் கொன்றான். எகிப்திய
னின் கையில் ஒரு ஈட்டி இருந்தது.
பெனாயா கையில் ஒரு தடி மட்டுமே
இருந்தது. ஆனால் பெனாயா எகிப்தியன்
கையிலிருந்த ஈட்டியைப் பறித்து எடுத்தான்.
எகிப்தியனின் ஈட்டியாலேயே பெனாயா
அவனைக் கொன்றான். 22யோய்தாவின்
மகன் பெனாயா அத்தகைய பல துணிவான
செயல்களைச் செய்தான். முப்பெரும்
வீரர்களைப்போன்று பெனாயா புகழ் பெற்
றவன். 23பெனாயா முப்பெரும் வீரர்களைக்
காட்டிலும் மிகவும் புகழ் பெற்றவன். ஆனால்
அவன் முப்பெரும் வீரர்களின் குழுவைச்
சார்ந்தவன் அல்லன். தாவீது தனது
மெய்க்காப்பாளர்களின் தலைவனாக பெனா
யாவை நியமித்தான்.

### முப்பது வீரர்கள்

24முப்பது வீரர்களில் யோவாபின் சகோ
தரனாகிய ஆசகேலும் ஒருவன். முப்பது
வீரர்களில் பிறரின் பெயர்கள்: பெத்லகேமின்
தோதோவின் மகன் எல்க்கானான்; 25ஆரோதி
யனாகிய சம்மா; ஆரோதியனாகிய எலிக்கா;
26பல்தியனாகிய ஏலெஸ்; தெக்கோவின்
இக்கேசின் மகன் ஈரா; 27ஆனதோத்தியனாகிய
அபியேசர்; ஊசாத்தியனாகிய மெபுன்னாயி;
28அகோகியனாகிய சல்மோன்; நெதோபாத்
தியனாகிய மகராயி; 29பானாவின் மகன்
ஏலேப் என்னும் நெத்தோபாத்தியன்; பென்ய
மீனியரின் கிபியா ஊரைச்சார்ந்த ரிபாயின்
மகன் இத்தாயி; 30பிரத்தோனியனாகிய
பெனாயா; காகாஸ் நீரோடைகளின்
நாட்டிலுள்ள ஈத்தாயி; 31அர்பாத்தியன் ஆகிய
அபிஅல்பொன்; பருமியன் ஆகிய அஸ்மா
வேத்; 32சால்போனியன் ஆகிய எலியூபா;
யாசேனின் மகனாகிய யோனத்தான்;
33ஆராரியனாகிய சம்மா; ஆராரியனாகிய
சாராரின் மகனாகிய அகியாம்; 34மாகாத்
தியன் ஆகிய அகஸ்பாயிம் மகன்
எலிப்பெலேத்; கீலோனியன் ஆகிய
அகித்தோப்பேலின் மகன் எலியாம்; 35கர்மே
லியன் ஆகிய எஸ்ராயி; அர்பியனாகிய
பாராயி; 36சோபாவில் உள்ள நாத்தானின்
மகன் ஈகால்; காதியனாகிய பானி; 37அம்மோ
னியனாகிய சேலேக்; பெரோத்தியனாகிய
நகராய்; (செருயாவின் மகனாகிய
யோவாபின் ஆயுதங்களை, நகராய் சுமந்துச்
சென்றான்.) 38இத்ரியனாகிய ஈரா; இத்ரிய
னாகிய காரேப்; 39ஏத்தியனாகிய உரியா.
மொத்தத்தில் அவர்கள் எண்ணிக்கை 37
பேர் ஆகும்.

### தாவீது தன் படையை கணக்கெடுக்க முடிவெடுக்கிறான்

24 இஸ்ரவேல் மீது மீண்டும் கர்த்தர்
கோபம் அடைந்தார். இஸ்ரவேலருக்கு
எதிராகத் திரும்பும்படி கர்த்தர் தாவீதை
மாற்றினார். தாவீது, “இஸ்ரவேல் மற்றும்
யூதா ஜனங்களின் எண்ணிக்கையைக் கணக்
கெடுங்கள்” என்றான்.
2தாவீது அரசன் படைத்தலைவனாகிய
யோவாபை நோக்கி, “தாணிலிருந்து
பெயெர்செபாவரைக்கும் எல்லா இஸ்ரவேல்
கோத்திரங்களிடமும் நீ போய் ஜனங்களின்
எண்ணிக்கையைக் கணக்கிடு. அப்போது
நான் மொத்த ஜனங்கள் தொகையைப்பற்றித்
தெரிந்துக்கொள்ள முடியும்” என்றான்.
3ஆனால் யோவாப் அரசனிடம்,
“எத்தனை ஆட்கள் இருக்கிறார்கள் என்பது
முக்கியமன்று. உன் தேவனாகிய கர்த்தர்,
உங்களுக்கு நூறு மடங்கு ஆட்களைத்
தருவார், உங்கள் கண்கள் அவ்வாறு
நடப்பதைப் பார்க்கும்! ஆனால் ஏன் இதைச்
செய்யவிரும்புகிறீர்?” என்று கேட்டான்.
4தாவீது அரசன் உறுதியாக யோவா
புக்கும் படைத்தலைவர்களுக்கும் ஜனங்கள்
தொகையைக் கணக்கிடுமாறு கட்டளை
யிட்டார். எனவே யோவாபும் படைத்
தலைவர்களும் இஸ்ரவேலின் ஜனங்கள்
தொகையைக் கணக்கெடுக்க அரசனிட
மிருந்து சென்றனர். 5அவர்கள் யோர்தான்
நதியைக் கடந்தனர். அவர்கள் ஆரோவேரில்
முகாமிட்டுத் தங்கினார்கள். நகரின்
வலதுபுறத்தில் அவர்கள் முகாம் இருந்தது.
(காத் பள்ளத்தாக்கின் நடுவில் நகரம்
இருந்தது. யாசேருக்குப் போகும் வழியில்
அந்த நகரம் இருந்தது.)
6பின்பு அவர்கள் கீலேயாத்திற்கும்
தாதீம்ஓத்சிக்கும் போனார்கள். அங்கே
யிருந்துதாண்யானுக்கும்சீதோனைச் சூழ்ந்த
பகுதிகளுக்கும் சென்றார்கள். 7அவர்கள் தீரு
என்னும் கோட்டைக்கு போனார்கள்.
அவர்கள் கானானியர் மற்றும் ஏவியரின்
நகரங்களுக்கெல்லாம் சென்றார்கள். அவர்கள்
யூதாவின் தெற்கிலுள்ள பெயெர்செபா
விற்குப் போனார்கள். 8ஒன்பது மாதங்களும்
20 நாட்களும் கழிந்த பிறகு அவர்கள்
தேசம் முழுவதும் சுற்றிவந்திருந்தார்கள். 9
மாதங்கள் 20 நாட்களுக்குப் பிறகு அவர்கள்

*எருசலேமுக்கு வந்தனர். [9]யோவாப் அரசனுக்குரிய ஜனங்களின் பட்டியலைக் கொடுத்தான். இஸ்ரவேலில் 8,00,000 ஆண்கள் வாளைப் பயன்படுத்தக் கூடியவர்கள். யூதாவிலும் 5,00,000 ஆண்கள் இருந்தனர்.*

### கர்த்தர் தாவீதைத் தண்டிக்கிறார்

*[10]ஜனங்கள் தொகையைக் கணக்கெடுத்த பிறகு தாவீது வெட்கமடைந்தான். தாவீது கர்த்தரை நோக்கி, "நான் செய்த இக்காரியத்தில் பெரும்பாவம் செய்தேன்! கர்த்தாவே! என் பாவத்தை மன்னிக்கும்படி நான் கெஞ்சுகிறேன். நான் மிகவும் மூடனாகிவிட்டேன்" என்றான்.*

*[11]காலையில் தாவீது எழுந்தபோது, கர்த்தருடைய வார்த்தைத் தாவீதின் தீர்க்கதரிசியாகிய காத்திற்கு வந்தது.*
*[12]கர்த்தர் காத்தை நோக்கி, "போய் தாவீதிடம் கூறு, 'இதுவே கர்த்தர் கூறுவது: நான் மூன்று காரியங்களை முன் வைக்கிறேன். நான் உனக்குச் செய்வதற்கு ஏதேனும் ஒன்றைத் தெரிந்துக்கொள் என்கிறார்' என்று சொல்" என்றார்.*

*[13]காத் தாவீதிடம், போய் அவ்வாறே கூறினான். அவன் தாவீதிடம், "இம்மூன்று காரியங்களிலும் ஒன்றைத் தெரிந்துக் கொள்ளுங்கள். உங்களுக்கும் இத்தேசத்திற்கும் ஏழு ஆண்டுகள் பஞ்சம் வர வேண்டுமா? மூன்று மாதங்கள் உங்கள் பகைவர்கள் உங்களைத் துரத்தவேண்டுமா? அல்லது மூன்று நாட்கள் உங்கள் தேசத்தாரை நோய் பாதிக்கட்டுமா? இதைக் குறித்து யோசித்துப் பாருங்கள், இவற்றில் எதை முடிவு செய்கிறீர்கள் என்பதை நான் என்னை அனுப்பிய கர்த்தருக்குக் கூறவேண்டும்" என்றான்.*

*[14]தாவீது காத்தை நோக்கி, "உண்மையிலேயே நான் துன்பத்துக்குள் ளானேன்! ஆனால் கர்த்தர் இரக்கமுள்ளவர். எனவே கர்த்தர் நம்மைத் தண்டிக்கட்டும். ஜனங்களிடமிருந்து எனக்குத் தண்டனை கிடைக்கவேண்டாம்" என்றான்.*

*[15]எனவே கர்த்தர் இஸ்ரவேலில் நோயை அனுப்பினார். அது, காலையில் ஆரம்பித்துக் குறிப்பிட்ட காலம் மட்டும் நீடித்தது. தாணிலிருந்து பெயெர்செபாவரைக்கும் 70,000 பேர் மடிந்தனர்.*
*[16]தேவதூதன் எருசலேமை அழிக்கும்படி அதற்கு நேராக தன் கரங்களை உயர்த்தினான். ஆனால் நடந்த தீய காரியங்களுக்காக கர்த்தர் மனம் வருந்தினார். ஜனங்களை அழித்த தூதனைக் கர்த்தர் நோக்கி, "போதும்! உனது கரங்களைத் தாழ்த்து" என்றார். எபூசியனாகிய அர்வனாவின் போரடிக்கிற களத்திற்கு அருகே கர்த்தருடைய தூதன் நின்றுக் கொண்டிருந்தான்.*

### அர்வனாவின் போரடிக்கிற களத்தைத் தாவீது வாங்குகிறான்

*[17]ஜனங்களைக் கொன்ற தூதனைத் தாவீது பார்த்தான். தாவீது கர்த்தரிடம் பேசினான். தாவீது, "நான் பாவம் செய்தேன்! நான் தவறிழைத்தேன். இந்த ஜனங்கள் ஆடுகளைப் போன்று என்னைப் பின்பற்றினார்கள். அவர்கள் தவறேதும் செய்யவில்லை. என்னையும் எனது தந்தையின் குடும்பத்தையும் நீங்கள் தண்டியுங்கள்" என்றான்.*

*[18]அன்றைய தினம் காத் தாவீதிடம் வந்தான். காத் தாவீதைப் பார்த்து, "எபூசியனாகிய அர்வனாவின் களத்தில் கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டி எழுப்பு" என்றான.*
*[19]காத் கூறியபடியே தாவீது செய்தான். கர்த்தர் விரும்பியபடியே தாவீது செய்தான். அர்வனாவைப் பார்க்க தாவீது சென்றான.*
*[20]அரசனான தாவீதும் அவனது அதிகாரிகளும் தன்னிடம் வருவதை அர்வனா பார்த்தார். அர்வனா நிலத்தில் தலைதாழ்த்தி வணங்கினார்.*
*[21]பின் அர்வனா, "எனது ஆண்டவனும் அரசருமாகிய நீங்கள் ஏன் என்னிடம் வந்தீர்கள்?" என்று கேட்டான்.*

*தாவீது அவனுக்கு, "உன்னிடமிருந்து போரடிக்கிற களத்தை வாங்குவதற்கு வந்தேன். அதில் கர்த்தருக்குப் பலிபீடம் அமைக்கமுடியும். அப்படிச் செய்து நோய் பரவாமல் தடுக்கமுடியும்" என்றான்.*

*[22]அர்வனா, தாவீதிடம், "எனது அரசனாகிய ஆண்டவன் தாங்கள் பலிகொடுக்க எதையும் என்னிடமிருந்து எடுக்கலாம். இந்தப் பசுக்களைத் தகனபலிக்காகவும், போரடிக்கிற உருளைகளையும் நுகத்தடிகளையும் விறகுக்காகவும் பயன்படுத்துங்கள்.*
*[23]அரசனே! நான் எல்லாவற்றையும் உங்களுக்குத் தருவேன்!" என்றான். அர்வனா மீண்டும் அரசனுக்கு, "உங்கள் தேவனாகிய கர்த்தர் இதைக் கண்டு மகிழட்டும்" என்றான்.*

*[24]ஆனால் அரசன் அர்வனாவுக்கு, "நான் உனக்கு உண்மையைச் சொல்வேன், உன் நிலத்தை ஒரு விலைகொடுத்துப் பெறுவேன். ஆனால் எனது தேவனாகிய கர்த்தருக்கு இலவசமாக கிடைத்த எந்த தகனபலியையும் செலுத்த மாட்டேன்" எனக் கூறினான்.*

*ஆகையால் தாவீது போரடிக்கிற களத்தையும் பசுக்களையும் 50 சேக்கல் வெள்ளிக்கு வாங்கினான்.*
*[25]பின்பு தாவீது ஒரு பலிபீடத்தைக் கர்த்தருக்காக கட்டினான். தாவீது அதில் தகனபலியையும் சமாதான பலியையும் அளித்தான்.*

*தேசத்திற்காகச் செய்யப்பட்ட தாவீதின் ஜெபத்திற்குக் கர்த்தர் செவிச் சாய்த்தார். கர்த்தர் இஸ்ரவேலிலிருந்த நோய்களைப் பரவாமல் தடுத்தார்.*

# இராஜாக்களின் முதலாம் புத்தகம்

### அதோனியா இராஜாவாக விரும்புகிறான்

1 தாவீது அரசன் வயதானபோது, அவன்
உடல்சூடு குறைந்து கொண்டே வந்தது.
அவனது வேலைக்காரர்கள் அவனைப்
போர்வையால் மூடினார்கள், எனினும்
அவனுக்குக் குளிராய் இருந்தது. 2எனவே
அவனது வேலைக்காரர்கள் அவனிடம்,
“உங்களை கவனித்துக்கொள்ள ஒரு சிறு
பெண்ணைத் தேடுவோம். அவள் உங்கள்
அருகே நெருக்கமாகப் படுத்து உங்களுக்கு
சூட்டினை உண்டாக்குவாள்” என்றனர்.
3எனவே அரசனின் உடலில் சூடேற்றும்
பொருட்டு அரசனின் வேலைக்காரர்கள்
ஒரு அழகான சிறு பெண்ணை இஸ்ரவேல்
நாடு முழுவதும் தேடினார்கள். அவர்கள்
அபிஷாக் என்ற பெண்ணைக் கண்டு
பிடித்தனர். அவள் சூனேம் நகரத்தவள்.
அவளை அவர்கள் அரசனிடம் அழைத்து
வந்தனர். 4அந்தப்பெண் மிகவும் அழகான
வள். அவள் அரசனை மிகவும் கவனித்து
சேவை செய்தாள். ஆனால் அரசனான
தாவீது அவளோடு பாலின உறவு வைத்துக்
கொள்ளவில்லை.

5தாவீதிற்கும் அவனது மனைவி
ஆகீத்திற்கும் அதோனியா எனும் மகன்
இருந்தான். அவன் பெருமிதம் கொண்டவ
னாகி அவனே புதிய அரசனாக ஆவான்
என்று முடிவு செய்தான். அவனுக்கு
அரசனாவதில் மிகுந்த விருப்பமும் இருந்தது.
எனவே அவன் ஒரு இரதத்தையும், குதிரை
களையும், முன்னால் ஓடிப்போக 50
ஆட்களையும் ஏற்பாடு செய்துக்
கொண்டான். 6அவன் அழகான தோற்றம்
உடையவன். அப்சலோமுக்குப் பிறகு
பிறந்தவன். ஆனால் தாவீதோ அவனைத்
திருத்தவில்லை, “ஏன் இவ்வாறு
செய்கிறாய்?” என்றும் கேட்க வில்லை.

7செருயாவின் மகனான யோவாபோடும்
ஆசாரியனாகிய அபியத்தாரோடும் அதோ
னியா பேசினான். அவன் புதிய அரசனாக
அவர்கள் உதவ முடிவுசெய்தனர். 8ஆனால்
பலர் அதோனியாவின் செயலுக்கு ஒத்துக்
கொள்ளவில்லை. அவர்கள் தொடர்ந்து
தாவீதிற்கு உண்மையானவர்களாக இருந்
தனர். ஆசாரியனான சாதோக்கு, யோய்தா
வின் மகனான பெனாயா, தீர்க்கதரிசியாகிய
நாத்தான், சீமேயி, ரேயி, தாவீதோடு இருந்த
பலசாலிகள் போன்றோர் அதோனியாவுக்குச்
சாதகமாக இல்லை.

9ஒருநாள், அதோனியா இன்ரோகேலுக்கு
அருகிலுள்ள சோகெலெத் என்னும்
மலையில் சில ஆடுகளையும், பசுக்களையும்,
கொழுத்த மிருகங்களையும் கொன்று சமா
தானப் பலியாகக் கொடுத்தான். அவன் தன்
தந்தையின் மற்ற மகன்களான சகோதரர்
களையும், யூதாவிலுள்ள அதிகாரிகளையும்
அழைத்திருந்தான். 10ஆனால் அவன்
தந்தையின் சிறப்பான மெய்க்காவலாளி
யையும், தன் சகோதரனான சாலொ
மோனையும், தீர்க்கதரிசிகளாகிய நாத்தான்,
பெனாயா ஆகியோரையும் அழைக்க
வில்லை.

### நாத்தானும் பத்சேபாளும் சாலொமோனுக்காக பேசுதல்

11ஆனால் நாத்தான், இதைப்பற்றி அறிந்து
சாலொமோனின் தாயான பத்சேபாளிடம்
சென்றான். அவளிடம் அவன், “ஆகீத்தின்
மகனான அதோனியா என்ன செய்து
கொண்டிருக்கிறான் என்பதை அறிவீர்களா?
அவன் தன்னையே அரசனாக்கிக் கொண்
டான். நமது ஆண்டவனும் அரசனுமான
தாவீது இதைப்பற்றி எதுவும் சொல்லாமல்
இருக்கிறார். 12உங்கள் வாழ்வும், உங்கள்
மகன் சாலொமோனின் வாழ்வும் ஆபத்தில்
உள்ளது. நான் உங்களைக் காப்பாற்றிக்
கொள்ளும் வழியைப்பற்றிக் கூறுகிறேன்.
13அரசனிடம் செல்லுங்கள். அவனிடம், ‘என்
அரசனும் ஆண்டவனுமானவரே! என் மகன்
சாலொமோனே அடுத்த அரசனாக வருவான்
என்று என்னிடம் சத்தியம் செய்திருக்
கிறீர்கள். அப்படி இருக்கும்போது
அதோனியா எவ்வாறு அரசனாக
வரமுடியும்?’ என்று சொல்லுங்கள். 14நீங்கள்
அவரோடு பேசிக் கொண்டிருக்கும்போது,
நான் அங்கே வருவேன். நீங்கள் போனபிறகு
நானும் அரசனிடம் நடப்பவற்றைக்
கூறுவேன். அதனால் நீங்கள் கூறியதும்
உண்மையாக அவருக்குத் தோன்றும்”
என்றான்.

15எனவே பத்சேபாள் அரசனை அவனது
படுக்கை அறையில் போய் பார்த்தாள்.
அரசன் முதியவனாயிருந்தான். சூனேமி
லுள்ள பெண்ணான அபிஷாக் அவனைக்

கவனித்துக்கொண்டிருந்தாள். 16அவள் அரச
னின் முன்பு குனிந்து வணங்கினாள். “நான்
உனக்கு என்ன செய்யவேண்டும்?” என்று
அரசன் கேட்டான்.
17பத்சேபாள் அவனிடம், “ஐயா உங்கள்
தேவனாகிய கர்த்தருடைய நாமத்தைப்
பயன்படுத்தி எனக்கு வாக்குறுதி கொடுத்
துள்ளீர்கள். ‘எனக்குப் பிறகு உன் மகனான
சாலொமோனே அடுத்த அரசன் என்று
கூறியுள்ளீர். சாலொமோன் என் சிங்கா
சனத்தில் அமர்வான்’ என்று கூறியுள்ளீர்கள்.
18இப்போது, இதை அறியாமல் அதோனியா
தன்னையே அரசனாக்கிக் கொண்டிருக்
கிறான். 19அவன் சமாதான விருந்தைக்
கொடுக்கிறான். அவன் சமாதான பலிக்காக
பல பசுக்களையும் சிறந்த ஆடுகளையும்
கொன்றிருக்கிறான். அதற்கு அவன் உங்கள்
அனைத்து மகன்களையும், ஆசாரியனான
அபியத்தாரையும், தளபதியான யோவாபை
யும் அழைத்துள்ளான். ஆனால் உங்களுக்கு
உண்மையுள்ள மகனான சாலொமோனை
அழைக்கவில்லை. 20எனது அரசனும்
ஆண்டவனுமானவரே, இப்போது உங்களை
இஸ்ரவேல் ஜனங்கள் கவனித்துக் கொண்டி
ருக்கிறார்கள். உமக்குப்பிறகு அடுத்த அரசன்
யார் என்பதை முடிவுசெய்ய அவர்கள்
உமக்காக காத்திருக்கிறார்கள். 21நீங்கள்
மரிப்பதற்கு முன் ஏதாவது செய்யவேண்டும்.
இல்லாவிட்டால், உங்களை அடக்கம் செய்த
பிறகு, அவர்களால் நானும் என் மகன்
சாலொமோனும் குற்றவாளிகளாக நடத்தப்
படுவோம்” என்றாள்.
22இவ்வாறு அவள் அரசனோடு பேசிக்
கொண்டிருக்கும் போதே, தீர்க்கதரிசியான
நாத்தான் வந்தான். 23வேலைக்காரர்கள்
அரசனிடம் போய், “தீர்க்கதரிசியான
நாத்தான் வந்துள்ளார்” என்றனர். எனவே
நாத்தான் அரசனிடம் சென்று தரையில்
குனிந்து வணங்கினான். 24பிறகு அவன்,
“எனது ஆண்டவனும் அரசனுமானவரே,
உங்களுக்குப் பிறகு அதோனியாதான்
அடுத்த அரசன் என்று நீங்கள் அறிவித்
துள்ளீர்களா? இனி அதோனியாதான் ஜனங்
களை ஆள்வான் என்று முடிவுசெய்து
விட்டீர்களா? 25ஏனென்றால் அவன் இன்று
பள்ளத்தாக்குக்குப் போய், பல பசுக்களை
யும், ஆடுகளையும் சமாதானப் பலியாகக்
கொடுத்துள்ளான். அதற்கு சாலொமோனைத்
தவிர அனைத்து மகன்களையும் அழைத்
துள்ளான். படைத்தலைவர்களும், ஆசாரிய
னான அபியத்தாரும் அழைக்கப்பட்டுள்ள
னர். அவனோடு அவர்கள், உண்டும்
குடித்தும் மகிழ்கின்றனர். அவர்கள், ‘அதோ
னியா அரசன் நீண்டகாலம் வாழட்டும்!’
என்று வாழ்த்துகின்றனர். 26ஆனால் அவன்
என்னையும், ஆசாரியனான சாதோக்கையும்,
யோய்தாவின் மகனான பெனாயாவையும்,
உங்கள் மகனான சாலொமோனையும்
அழைக்கவில்லை. 27எனது அரசனும் ஆண்ட
வனுமானவரே, நீங்கள் எங்களுக்குத் தெரியா
மல் இதனைச் செய்தீர்களா? தயவுசெய்து
உங்களுக்குப் பிறகு யார் அரசனாவார்கள்
என்பதை தெரிவியுங்கள்” என்றான்.
28பிறகு அரசனாகிய தாவீது,
“பத்சேபாளை உள்ளே வரச்சொல்!”
என்றான். எனவே பத்சேபாளும் உள்ளே
வந்தாள்.
29பின்னர் அரசன், ஒரு வாக்குக் கொடுத்
தான்: “தேவனாகிய கர்த்தர்தாமே என்னை
அனைத்து ஆபத்துகளிலிருந்தும் காப்பாற்றி
இருக்கிறார். கர்த்தர் உயிருடன் இருப்பதைப்
போலவே, இவ்வாக்குறுதியும் உறுதியானது.
30நான் முன்பு உனக்கு ஆணையிட்டப
படியே இன்று செயலாற்றுவேன், இதனை
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தருடைய
வல்லமையால் வாக்குறுதியளிக்கிறேன்.
எனக்குப்பின் உன் மகனான சாலொமோனே
அரசனாவான். எனது இடத்தையும் அவன்
பிடித்துக்கொள்வான். நான் எனது வாக்குறு
தியை நிறைவேற்றுவேன்!” என்றான்.
31பிறகு பத்சேபாள் தரையில் குனிந்து
அரசனை வணங்கினாள். அவள், “தாவீது
அரசன் நீண்டகாலம் வாழ்வாராக!” என்று
வாழ்த்தினாள்.

### சாலொமோன் புதிய அரசனாக தேர்ந் தெடுக்கப்படுதல்

32பிறகு தாவீது அரசன், “ஆசாரியனான
சாதோக், தீர்க்கதரிசியான நாத்தான்,
யோய்தாவின் மகனான பெனாயா
ஆகியோரை உள்ளே வரச்சொல்” என்றான்.
எனவே மூன்று பேரும் உள்ளே வந்து
அரசன் முன்பு நின்றனர். 33அவன்
அவர்களிடம், “எனது அதிகாரிகளை
உங்களோடு அழைத்துக்கொள்ளுங்கள். என்
மகனாகிய சாலொமோனை என் கோவேறு
கழுதையின்மேல் ஏற்றுங்கள். அவனைக்
கீகோனுக்கு அழைத்துக்கொண்டுப்
போங்கள். 34அங்கே, ஆசாரியனாகிய
சாதோக்கும் தீர்க்கதரிசியாகிய நாத்தானும்
அவனை இஸ்ரவேலின் அரசனாக
அபிஷேகம் செய்யட்டும். பின் எக்காளத்தை
ஊதி, ‘புதிய அரசனாகிய சாலொமோன்
வாழ்க!’ என்று வாழ்த்துங்கள். 35பிறகு
அவனை நகர்வலம் செய்து என்
சிங்காசனத்தில் வீற்றிருக்கக் கூட்டிக்
கொண்டு வாருங்கள். அவனே எனது
இடத்தில் அரசனாக இருப்பான்.
இஸ்ரவேலின் மேலும் யூதாவின் மேலும்
தலைவனாக இருக்கும்படி அவனைத் தேர்ந்
தெடுத்தேன்” என்றான்.
36யோய்தாவின் மகனான பெனாயா,
“எனது அரசனும் ஆண்டவனுமானவரே,
தேவனாகிய கர்த்தரும் இவ்வாறே சொன்
னார். 37என் அரசனும் ஆண்டவனு
மானவரே! கர்த்தர் உங்களோடு இருக்கிறார்.

இனி சாலொமோனோடும் கர்த்தர் இருப்பார்
என்று நம்புவோமாக! அவனது அரசாங்கம்
வளர்ந்து உங்களுடையதைவிட அதிக
வலிமையுள்ளதாகும் என்று நம்புகிறேன்”
என்றான்.
38 எனவே ஆசாரியனான சாதோக், தீர்க்க
தரிசியான நாத்தான், யோய்தாவின்
மகனான பெனாயா, மற்றும் அரசு அதிகாரி
கள் தாவீது அரசனுக்குக் கீழ்ப்படிந்தனர்.
சாலொமோனை அரசனுடைய கழுதையின்
மேல் ஏற்றி கீகோனுக்கு அழைத்துச் சென்
றனர். 39 ஆசாரியனான சாதோக் பரிசுத்த
கூடாரத்தில் இருந்து எண்ணெயை எடுத்துச்
சென்றான். அவனது தலையில் அதனை
ஊற்றி அரசனாக அபிஷேகம் செய்தான்.
எக்காளம் ஊத மற்ற ஜனங்கள், “அரசன்
சாலொமோன் நீண்டகாலம் வாழட்டும்!”
என்று வாழ்த்தினார்கள். 40 பிறகு அனை
வரும் சாலொமோனைப் பின்தொடர்ந்து
நகருக்கு வந்தனர். நாதசுரங்களை ஊதினர்.
அவர்கள் மகிழ்ச்சியடைந்தனர். பூமி அதிரும்
படி அவர்கள் சத்தத்தை எழுப்பினர்.
41 இதற்கிடையில், அதோனியாவும் அவ
னது விருந்தினரும் விருந்தை முடித்தனர்.
அவர்கள் எக்காள சத்தத்தைக் கேட்டனர்.
“இது என்ன சத்தம், நகரத்தில் என்ன
நடக்கிறது?” என யோவாப் கேட்டான்.
42 அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது
ஆசாரியனான அபியத்தாரின் மகனான,
யோனத்தான் வந்தான். அதோனியா அவ
னிடம், “இங்கே வா! நீ நல்லவன். நல்ல
செய்தியைக் கொண்டு வந்திருப்பாய்”
என்றான்.
43 ஆனால் அவனோ, “இல்லை. இது
உனக்கு நல்ல செய்தியில்லை! தாவீது
அரசன் சாலொமோனைப் புதிய அரசனாக
நியமித்துவிட்டான். 44 அவனோடு ஆசாரிய
னாகிய சாதோக்கையும், தீர்க்கதரிசியாகிய
நாத்தானையும், யோய்தாவின் மகனான
பெனாயாவையும், மற்ற அரச அதிகாரி
களையும் அனுப்பினான். அவர்கள்
அரசனின் கழுதை மேல் அவனை
ஏற்றினார்கள். 45 பின் ஆசாரியனான
சாதோக்கும், தீர்க்கதரிசியான நாத்தானும்
கீகோனில் அவனை அரசனாக அபிஷேகம்
செய்தனர். பின் நகரத்திற்குள் வந்தனர்.
ஜனங்கள் அவனைப் பின்தொடர்ந்து
மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். இதுதான்
நீங்கள் கேட்கும் சத்தம், 46 சாலொமோன்
இப்போது அரச சிங்காசனத்தில்
இருக்கிறான். 47 அனைத்து அதிகாரிகளும்
அரசர் தாவீதுக்கு வாழ்த்து சொல்லிக்
கொண்டு இருக்கிறார்கள். அவர்கள், ‘தாவீது
அரசனே, நீ மிகப்பெரிய அரசன்! சாலொ
மோனையும் மிகப்பெரிய அரசனாக்கும்படி
உங்கள் தேவனிடம் இப்போது நாங்கள்
ஜெபம் செய்கிறோம். உங்கள் தேவன்
உங்களைவிடவும் சாலொமோனைப் புகழுள்
ளவனாக்குவார் என்று நம்புகிறோம்.
மேலும் உங்கள் அரசாங்கத்தைவிட
சாலொமோனின் அரசாங்கம் பெரியதாக
இருக்கும் என்றும் நம்புகிறோம்!’ என்று
வாழ்த்தினர்.
அங்கே தாவீது அரசனும் இருந்தான்.
படுக்கையிலேயே அவன் குனிந்து வணங்
கினான். 48 அரசன் தாவீது, ‘இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தரை துதியுங்கள். என்
சிங்காசனத்தில் என் மகனையே கர்த்தர்
உட்காரவைத்துள்ளார். இதைத் தொடர்ந்து
காண எனக்கு ஜீவனைக் கொடுத்தார்”
என்று சொன்னான்.
49 அதோனியாவின் விருந்தினர் பயந்து
வேகமாக வெளியேறினார்கள். 50 அதோனியா
வும் சாலொமோனுக்குப் பயந்தான். அவன்
பலிபீடத்தின் கொம்புகளைப் பிடித்துக்
கொண்டான்.* 51 சிலர் சாலொமோனிடம்
போய், “அதோனியா உங்களைக் கண்டு
அஞ்சுகிறான். அவன் பரிசுத்த கூடாரத்தில்
பலிபீடத்தின் கொம்புகளைப் பிடித்துக்
கொண்டு நிற்கிறான். அவன், ‘என்னைக்
கொல்லமாட்டேன் என சாலொமோனை
வாக்குறுதி தரச்சொல்லுங்கள்’ என்கிறான்”
என்றார்கள்.
52 எனவே சாலொமோன், “அதோனியா
தன்னை நல்லவன் என்று காட்டினால்,
நான் அவனது தலையிலுள்ள ஒரு
மயிருக்குக்கூட தீங்குச் செய்யமாட்டேன்.
அவனிடம் கேடு இருந்தால், அவன் மரிக்க
வேண்டும்” என்று பதில் சொன்னான்.
53 பிறகு சிலரை அனுப்பி அதோனியாவை
அழைத்தான். அவர்கள் அவனை அழைத்து
வந்தனர். அதோனியா வந்து சாலொ
மோனை பணிந்து வணங்கினான். அதற்கு
சாலொமோன், “வீட்டிற்குப் போ” என்று
சொன்னான்.

### தாவீது ராஜாவின் மரணம்

2 தாவீது மரித்து போவதற்குரிய நேரம்
வந்தது. எனவே அவன் சாலொமோ
னிடம் சொல்லும் போது, 2 “நான் எல்லா
மனிதரையும் போலவே மரிக்க இருக்கிறேன்,
ஆனால் நீ மேலும் பலத்தில் வளர்ந்து
மனிதனாக இரு. 3 இப்போது, உனது தேவ
னாகிய கர்த்தருடைய கட்டளைகளுக்குக்
கவனமாகக் கீழ்ப்படிந்து நட. நீ அனைத்து
சட்டங்களுக்கும், கட்டளைகளுக்கும், முடிவு
களுக்கும், உடன்படிக்கைகளுக்கும் கீழ்ப்படி.
மோசேயின் சட்டங்களில் எழுதப்பட்ட
அனைத்திற்கும் கீழ்ப்படிந்திரு. நீ இவற்றைச்

---

**பலிபீடத்தின் ... பிடித்துக் கொண்டான்** அவன் இரக்கத்துக்காக கேட்டுக் கொண்டிருந்தான் என்பதை இது காட்டியது. ஒருவன் பரிசுத்தமான இடத்துக்குள்ளே ஓடிப்போய் பலிபீடத்தின் கொம்புகளைப் பிடித்தால், அவன் தண்டிக்கப் படக்கூடாது என்று சட்டம் இருந்தது.

செய்தால், பின்னர் நீ செய்கிற அனைத்திலும் நீ போகிற அனைத்து திட்டங்களிலும் வெற்றி பெற்றவன் ஆவாய்.
4நீ கர்த்தருக்குக் கீழ்ப்படிந்தால், கர்த்தர் தன் வாக்குறுதியை காப்பாற்றுவார். கர்த்தர் என்னிடம், 'நான் சொல்லிய வழிகளில் உன் பிள்ளைகள் கவனமாகவும் மனதுக்கு உண்மையாகவும் நடந்தால், பின்னர் இஸ்ரவேலரின் அரசன் உன் குடும்பத்திலுள்ள ஒருவனாகவே இருப்பான்' என்றார்" என்றான்.

5தாவீது மேலும், "செருயாவின் மகனான யோவாப் எனக்கு என்ன செய்தான் என்பதை நினைத்துப்பார். அவன் இஸ்ரவேலரின் படையிலுள்ள இரண்டு தளபதிகளைக் கொன்றான். அவன் நேரின் மகனான அப்னேரையும் ஏத்தேரின் மகனான அமாசாவையும் கொன்றான். அவன் இவர்களைச் சமாதானக் காலத்தின்போது கொன்றான் என்பதை நினைத்துப்பார், இம்மனிதர்களின் இரத்தமானது அவனது அரைக் கச்சையிலும் கால்களிலுள்ள பாதரட்சைகளிலும் படிந்தது. நான் அவனைத் தண்டித்திருக்க வேண்டும்.
6ஆனால் இப்போது நீ தான் அரசன். எனவே நீ விரும்புகிற வழியில் அவனைத் தண்டிப்பதுதான் மிகப் புத்திசாலித்தனமானது. ஆனால் அவன் கொல்லப்பட வேண்டியவன் என்பதில் மட்டும் நீ உறுதியாக இருக்கவேண்டும். அவனைத் தன் முதுமையில் சமாதானத்தோடு மரிக்கு மாறு விட்டுவிடாதே!

7"கீலேயாத்தியனான பர்சிலாயின் பிள்ளைகளுக்கு இரக்கம் காட்டு. அவர்களை உனது நண்பர்களாக்கி உனது மேஜையிலேயே உணவு உண்ணச்செய். நான் உன் சகோதரனாகிய அப்சலோமிடமிருந்து ஓடிப் போகும்போது அவர்கள் எனக்கு உதவி செய்தார்கள்.

8"கேராவின் மகனான சீமேயி இன்னும் இங்கேதான் இருக்கிறான் என்பதை நினைத்துக்கொள், அவன் பகூரிமின் ஊரைச் சார்ந்த பென்யமீன் கோத்திரத்திலிருந்து வந்தவன். நான் மக்னாயீமுக்குப் போகும்போது அவன் என்னை மோசமாகச் சபித்தான். ஆனாலும் நான் யோர்தானுக்குப் போனதும் அவன் என்னை வரவேற்றதால் நான் உன்னை வாளால் கொல்வதில்லை என்று கர்த்தர் மேல் வாக்குறுதிக் கொடுத்துவிட்டேன்.
9எனினும், அவனை குற்றமற்றவன் என்று எண்ணி நீ தண்டிக்காமல் விட்டுவிடாதே. அவனை என்ன செய்ய வேண்டும் என்று உனக்குத் தெரியும். அவனையும் முதியவயதில் சமாதானத்தோடு மரிக்குமாறு விட்டுவிடாதே" என்றான்.

10பின்னர் தாவீது மரித்தான். அவன் தாவீது நகரத்திலேயே அடக்கம் செய்யப்பட்டான்.
11இஸ்ரவேலை 40 ஆண்டு தாவீது அரசாண்டான். அதாவது 7 ஆண்டுகள் எப்ரோனிலும் 33 ஆண்டுகள் எருசலேமிலும் ஆண்டான்.

### சாலொமோன் தன் இராஜ்யத்தைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருதல்

12இப்போது சாலொமோன் அரசன் தனது தந்தையின் சிங்காசனத்தில் அமர்ந்தான். அவன் ராஜ்யபாரம் முழுவதையும் தன் ஆளுகையின் கீழ் கொண்டு வந்தான்.

13ஆகீத்தின் மகனான அதோனியா சாலொமோனின் தாயான பத்சேபாளிடம் வந்தான். அவள் அவனிடம், "நீ சமாதானத்தோடு வந்திருக்கிறாயா?" என்று கேட்டாள்.

அவனோ, "ஆமாம், இது ஒரு சமாதான வருகையே ஆகும்.
14நான் உங்களிடம் சொல்வதற்கு ஒரு காரியம் இருக்கிறது" என்றான்.

பத்சேபாள், "அப்படியென்றால் சொல்" என்றாள்.

15அதோனியா, "ஒரு காலத்தில் அரசாங்கம் எனக்குரியதாயிருந்தது என்பதை நினைத்துப் பாருங்கள். இஸ்ரவேலில் உள்ள அனைத்து ஜனங்களும் அடுத்த அரசன் நான்தான் என்று எண்ணினார்கள். ஆனால் நிலைமை மாறிவிட்டது. இப்போது எனது சகோதரன் அரசனாகிவிட்டான். கர்த்தர் அவனை அரசனாகத் தேர்ந்தெடுத்து விட்டார்.
16இப்போது உங்களிடம் கேட்க ஒரு காரியம் உள்ளது. தயவுசெய்து மறுத்து விடாதீர்கள்" என்றான்.

பத்சேபாள், "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

17அதோனியா, "அரசனாகிய சாலொமோனிடம் நீ என்ன கேட்டாலும் அவன் கொடுப்பான் என்பது எனக்குத்தெரியும். அவன், நான் சூனேம் ஊராளாகிய அபிஷாகை மணக்கும்படி செய்யவேண்டும்" என்று கேட்டான்.

18பிறகு பத்சேபாள், "நல்லது இதுபற்றி உனக்காக அரசனிடம் பேசுவேன்" என்றாள்.

19எனவே பத்சேபாள் அரசன் சாலொமோனிடம் பேசுவதற்காகப் போனாள். சாலொமோன் அவளைப் பார்த்ததும் எழுந்து நின்று வரவேற்றான். அவன் குனிந்து வணங்கி பிறகு உட்கார்ந்தான். அவளுக்கு இன்னொரு சிங்காசனம் கொண்டுவரும்படி வேலைக்காரர்களிடம் கூறினான். அவனது வலது பக்கத்தில் அவள் உட்கார்ந்திருந்தாள்.

20பத்சேபாள் அவனிடம், "நான் உன்னிடம் கேட்பதற்கு ஒரு சிறிய காரியம் உள்ளது. தயவுசெய்து மறுத்துவிடாதே" என்றாள்.

அதற்கு அரசன், "அம்மா, நீங்கள் என்னிடம் எதை வேண்டுமானாலும் கேட்கலாம். நான் மறுக்கமாட்டேன்" என்றான்.

21எனவே பத்சேபாள், "உனது சகோதரனான அதோனியா சூனேம் ஊராளாகிய

அபிஷாகை மணந்துகொள்ள அனுமதிக்க
வேண்டும்” என்றாள்.
22அதற்கு அவன் தன் தாயிடம்,
“அபிஷாகை அதோனியாவிற்குக் கொடுக்
கும்படி நீ ஏன் வேண்டுகிறாய். அவனையே
அரசனாக்கி விடு என்று நீ ஏன் கேட்க
வில்லை. இத்தனைக்கும் அவன் எனக்கு
மூத்த சகோதரன் தானே! ஆசாரியனான
அபியத்தாரும் யோவாப்பும் அவனுக்கு பக்க
பலமாக இருப்பார்கள்!” என்றான்.
23பிறகு சாலொமோன் கர்த்தரிடம் ஒரு
வாக்குறுதி செய்துகொடுத்தான். “நான்
இதற்குரிய விலையை அதோனியாவை
செலுத்தச் செய்வேன்! அது அவனது
உயிராகவும் இருக்கும்! 24கர்த்தர் என்னை
இஸ்ரவேலின் அரசனாக்கினார். என் தந்தை
தாவீதிற்கு உரிய சிங்காசனத்தை நான்
பெறுமாறு செய்தார். கர்த்தர் தன்
வாக்குறுதியைக் காத்து எனக்கும் எனது
குடும்பத்திற்கும் ஆட்சியை அளித்தார். நான்
கர்த்தர் மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன்.
இன்று அதோனியா கொல்லப்படுவான்”
என்றான்.
25அரசனான சாலொமோன் அதை
பெனாயாவிற்கு கட்டளையிட்டான். அவன்
சென்று அதோனியாவைக் கொன்று
விட்டான்.
26பிறகு ஆசாரியனாகிய அபியத்தாரிடம்,
அரசனான சாலொமோன், “நான் உன்னைக்
கொல்ல வேண்டும், ஆனால் உன்னை
உனது வீடு இருக்கிற ஆனதோத்திற்குப்
போக அனுமதிக்கிறேன். நான் இப்போது
உன்னைக் கொல்லமாட்டேன். ஏனென்றால்,
என் தந்தையோடு பயணம் செய்யும்போது
கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டியைச் சுமந்து
சென்றாய். என் தந்தையின் துன்பங்களிலும்
பங்கு பெற்றிருக்கிறாய் என்று தெரியும்”
என்றான். 27சாலொமோன் ஆசாரியனாகிய
அபியத்தாரிடம் மேலும் தொடர்ந்து அவன்
கர்த்தருக்கு சேவை செய்யமுடியாது என்
றும் சொன்னான். இது கர்த்தர் சொன்ன
வழியிலேயே நிகழ்ந்தது. சீலோவில் தேவன்
ஆசாரியனான ஏலி பற்றியும் அவனது
குடும்பத்தைப்பற்றியும் இவ்வாறுதான் சொன்
னார். அபியத்தாரும் ஏலியின் குடும்பத்
தினன் தான்.
28யோவாப், இதைப்பற்றி கேள்விப்பட்ட
தும் அஞ்சினான். அவன் அப்சலோமிற்கு
உதவாவிட்டாலும் அதோனியாவிற்கு உதவி
யிருக்கிறான். அவன் கர்த்தருடைய கூடாரத்
துக்கு ஓடிப்போய் பலிபீடத்தின் கொம்பு
களைப் பிடித்துக்கொண்டான். 29யாரோ
ஒருவன் சாலொமோனிடம் போய், யோவாப்
கர்த்தருடைய கூடாரத்தில் பலிபீடத்தருகில்
இருப்பதாய் சொன்னான். எனவே சாலொ
மோன் யோய்தாவின் குமாரனாகிய
பெனாயாவிடம் அங்குபோய் அவனைக்
கொல்லுமாறு ஆணையிட்டான்.
30பெனாயா கர்த்தருடைய கூடாரத்திற்குப்
போய் யோவாபிடம், “‘வெளியே வா!’ என
அரசன் சொல்கிறான்” என்றான்.
ஆனால் யோவாப்போ, “இல்லை, நான்
இங்கேயே மரிக்கிறேன்” என்றான்.
எனவே பெனாயா அரசனிடம் திரும்பி
வந்து, யோவாப் சொன்னதைச் சொன்னான்.
31பிறகு அரசன் பெனாயாவை நோக்கி,
“அவன் சொல்வது போன்று செய்!
அங்கேயே அவனைக் கொன்று புதைத்து
விடு. பின்னரே நானும் எனது குடும்பமும்
பழியிலிருந்து விடுதலை பெறுவோம்.
அப்பாவி ஜனங்களை கொன்றதுதான்
யோவாப் செய்த குற்றம். 32யோவாப் அவ
னை விட மிகச்சிறந்த இரண்டு பேரைக்
கொன்றிருக்கிறான். அவர்கள் நேரின்
மகனான அப்னேரும் ஏதேரின் மகனான
அமாசாவும் ஆவார்கள். அப்னேர் இஸ்ரவேல்
படையின் தளபதியாகவும், அமாசா யூதேயா
படையின் தளபதியாகவும் இருந்தனர்.
அந்தக்காலத்தில் அவர்களை யோவாப்பு
தான் கொன்றான் என்பது என் தந்தையான
தாவீதிற்குத் தெரியாது. எனவே கர்த்தர்
அவனைக் கொலையுறும்படி தண்டித்துள்
ளார். 33அவர்களின் மரணத்துக்கு அவனே
காரணம். அவனது குடும்பத்திற்கும் இப்பழி
எக்காலத்திற்கும் உரியதாகும். ஆனால்
தேவன் தாவீதிற்கும், அவனது சந்ததி
யினருக்கும், குடும்பத்திற்கும், அரசாங்கத்
திற்கும் எக்காலத்திலும் சமாதானத்தை
உருவாக்குவார்” என்றான்.
34எனவே, யோய்தாவின் மகனான
பெனாயா யோவாப்பைக் கொன்றான். அப்
பாலைவனத்திலேயே, அவனது வீட்டிற்கு
அருகிலேயே யோவாப் அடக்கம் செய்யப்
பட்டான். 35பிறகு யோவாப்பின் இடத்தில்
யோய்தாவின் மகனான பெனாயாவைத்
தனது படைத்தளபதியாக அரசன் நியமித்
தான். அபியத்தாரின் இடத்தில் சாதோக்கை
சாலொமோன் தலைமை ஆசாரியனாக
நியமித்தான். 36பிறகு சீமேயியை வர
வழைத்தான். அரசன் அவனிடம், “எருசலே
மிலே உனக்கென்று ஒரு வீட்டைக்கட்டி,
அதிலே வாழ்ந்துகொள். நகரத்தைவிட்டு
வெளியே போகாதே. 37நீ நகரத்தை விட்டு
கீதரோன் ஆற்றை தாண்டிச் சென்றால்
கொல்லப்படுவாய். அது உனது சொந்த
தவறாக இருக்கும்” என்றான்.
38எனவே சீமேயி, “அரசனே! அது
நல்லது. நான் உங்களுக்குக் கீழ்ப்படிவேன்”
என்றான். அதனால் எருசலேமில் நீண்ட
காலம் அவன் வாழ்ந்தான். 39ஆனால் மூன்று
ஆண்டுகள் கழிந்ததும், அவனது இரண்டு
அடிமைகள் அவனை விட்டு ஓடிப்
போனார்கள். அவர்கள் காத் நகர அரசனான
மாக்காவின் மகனான ஆகீஸிடம் ஓடிச்
சென்றனர். சீமேயிக்கு தனது அடிமைகள்
காத் நகரில் இருப்பது தெரிய வந்தது.

40எனவே சீமேயி தனது கழுதையின் மீது
சேணத்தைப்போட்டு காத்திலுள்ள ஆகீஸ்
அரசனிடம் சென்றான். அவன் தன்
அடிமைகளைக் கண்டுப்பிடித்து வீட்டிற்குத்
திரும்ப அழைத்துக்கொண்டு வந்தான்.
41ஆனால் சிலர் சாலொமோனிடம் சீமேயி
எருசலேமிலிருந்து காத்திற்குச் சென்று
திரும்பியதைப்பற்றி சொன்னார்கள்.
42எனவே சாலொமோன் அவனை அழைத்து
வரச்செய்தான். அரசன், “நீ எருசலேமை
விட்டுச்சென்றால் கொல்லப்படுவாய் என்று
நான் கர்த்தருடைய பேரால் ஆணைச்செய்து
உன்னை எச்சரித்துள்ளேன். நீ எங்காவது
சென்றால், உன் மரணத்துக்கு உன் தவறே
காரணம் என்றும் எச்சரித்திருக்கிறேன்.
நான் சொன்னதற்கு நீயும் ஒப்புக்கொண்டிருக்
கிறாய். எனக்குக் கீழ்ப்படிவதாகக் கூறினாய்.
43உனது சத்தியத்திலிருந்து ஏன் தவறினாய்?
எனது கட்டளைக்கு ஏன் கீழ்ப்படிய
வில்லை? 44என் தந்தை தாவீதிற்கு எதிராகப்
பல தவறுகளை நீ செய்துள்ளாய் என்பதை
அறிவேன். இப்போது அத்தவறுகளுக்குக்
கர்த்தர் உன்னைத் தண்டிக்கிறார். 45ஆனால்
கர்த்தர் என்னை ஆசீர்வதிப்பார். அவர்
தாவீதின் அரசாங்கத்தை என்றென்றும்
பாதுகாப்பார்” என்றான்.
46பிறகு அரசன் பெனாயாவிடம் சீமேயி
யைக் கொல்லுமாறு ஆணையிட்டான்.
அவனும் அப்படியே செய்தான். இப்போது
சாலொமோன் தன் அரசாங்கத்தை தன்
முழுக்கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவந்தான்.

## சாலொமோன் ஞானத்தைக் கேட்டல்

3 சாலொமோன், பார்வோன் எனும் எகிப்
தியமன்னனோடு, அவனது மகளை
ஒப்பந்தம் செய்து திருமணம் கொண்டான்.
சாலொமோன் அவளை தாவீது நகரத்திற்கு
அழைத்து வந்தான். அப்போது, சாலொ
மோன் தனது அரண்மனையையும்
கர்த்தருடைய ஆலயத்தையும் கட்டிக் கொண்
டிருந்தான். அவன் எருசலேமைச் சுற்றிலும்
ஒரு சுவரையும் கட்டிக் கொண்டிருந்தான்.
2ஆலயம் முடிக்கப்படாமல் இருந்தது. எனவே
ஜனங்கள் பொய்த் தெய்வங்களின் பலிபீடங்
களில் மிருகங்களைப் பலிக்கொடுத்து
வந்தனர். 3சாலொமோன் கர்த்தரை நேசிப்
பதாகக் காட்டிக்கொண்டான். அவனது
தந்தையான தாவீது சொன்னதற்கெல்லாம்
கீழ்ப்படியும் பொருட்டு அவன் இவ்வாறு
செய்துவந்தான். அதனால் அதோடு தாவீது
சொல்லாத சிலவற்றையும் அவன் செய்து
வந்தான். அவன் மேடைகளுக்குப் பலிக்
கொடுப்பதையும் நறுமணப் பொருட்களை
எரிப்பதையும் இன்னும் கடைப்பிடித்தான்.
4அரசனான சாலொமோன் கிபியோ
னுக்குச் சென்று பலிகொடுத்தான். அது
மிகவும் முக்கியமான தெய்வீக இடம்
என்பதால் அவன் அங்கே சென்றான்.
அவன் பலிபீடத்தில் 1,000 பலிகளைச்
செய்தான். 5சாலொமோன் கிபியோனில்
இருந்தபோது, அன்று இரவு கனவில் கர்த்தர்
வந்தார். தேவன், “உனக்கு என்ன வேண்
டுமோ கேள். அதனை நான் உனக்குத்
தருவேன்” என்றார்.
6சாலொமோனும், “உங்கள் ஊழியனான
என் தந்தை தாவீதிடம் நீர் மிகுந்த
கருணையுடன் இருந்தீர். அவரும் உம்மை
பின்பற்றினார். அவர் நல்ல வராகவும்
சரியானவராகவும் வாழ்ந்தார். அவரது
மகனை அவருக்குப்பின் சிங்காசனத்தில்
அமர வைத்ததன் மூலம் கருணையைக்
காட்டிவிட்டீர். 7என் தேவனாகிய
கர்த்தாவே, என் தந்தையின் இடத்தில்
என்னை அரசனாக்கினீர். ஆனால் நான்
ஒரு குழந்தையைப்போன்று இருக்கிறேன்.
நான் செய்யவேண்டியதைச் செய்வதற்குரிய
ஞானம் இல்லாமல் இருக்கிறேன். 8உங்கள்
ஊழியனான நான் உங்களால் தேர்ந்
தெடுக்கப்பட்டவர்களுள் ஒருவனாக இருக்கி
றேன். அங்கே ஏராளமான ஜனங்கள்
இருக்கின்றனர். அவர்கள் கணக்கிட மிகுதி
யாக இருந்தனர். ஒரு அரசன் அவர்கள்
மத்தியில் பல முடிவுகளை எடுக்க வேண்டிய
வனாக இருக்கிறான். 9எனவே எனக்கு
ஞானத்தைத் தருமாறு கேட்டுக்கொள்கிறேன்.
அதனால் நான் ஜனங்களைச் சிறப்பாக
ஆளவும் சரியான வழியில் நியாயந்தீர்க்கவும்
இயலும். இது நான் நல்லதுக்கும்
தீமைக்குமான வேறுபாட்டை அறிந்துக்
கொள்ளச் செய்யும். மிகப்பெரிய இந்த
ஞானம் இல்லாமல் அதிக எண்ணிக்கையில்
உள்ள மனிதர்களை ஆள்வது முடியாத
செயல்” என்று வேண்டினான்.

10இவ்வாறு சாலொமோன் வேண்டியதைக்
கேட்டு கர்த்தர் மிகவும் மகிழ்ந்தார். 11தேவன்
அவனிடம், “நீ உனக்காக நீண்ட ஆயுளைக்
கேட்டுக்கொள்ளவில்லை, நீ உனக்காக
பெரிய செல்வத்தையும் கேட்டுக்கொள்ள
வில்லை. நீ உன் எதிரிகளின் மரணத்தையும்
கேட்டுக்கொள்ளவில்லை. நீயோ வழக்கு
களைக் கவனிக்கவும், சரியான முடிவை
எடுக்கவும் ஞானத்தைக் கேட்கிறாய்.
12எனவே நீ கேட்டதை நான் உனக்குத்
தருவேன். ஞானமும் உணர்வுமுள்ள
இருதயத்தை உனக்குத் தருவேன். இதற்கு
முன் இதுபோல் யாரும் இருந்ததில்லை
என்று சொல்லும்படி, உனது ஞானத்தை
மகத்தானதாக்குவேன். அதோடு எதிர்
காலத்திலும் உன்னைப்போல் யாரும்
இருக்கமாட்டார்கள். 13அதோடு, நீ கேட்காத
சிலவற்றையும் உனக்குப் பரிசுகளாகத்
தருவேன், உனது வாழ்க்கை முழுவதும்
நீ செல்வமும் சிறப்பும் பெற்று விளங்குவாய்.
இந்த உலகில் உன்னைப்போல் எந்த
அரசரும் இல்லை என்று செய்வேன்.

14 என்னைப் பின்பற்றுமாறும் எனது சட்டங்
களுக்கும் கட்டளைகளுக்கும் கீழ்ப்படியு
மாறும் கேட்டுக்கொள்கிறேன். உன் தந்தை
தாவீது செய்ததுபோல் செய். அவ்வாறு
செய்தால், உனக்கு நீண்ட ஆயுளையும்
தருவேன்” என்றார்.
15 சாலொமோன் விழித்தபொழுது,
கனவிலே தேவன் பேசினார் என்று
அவனுக்குத் தெரிந்தது. பின் அவன்
எருசலேம் போய் கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியின் முன்பு நின்று
கர்த்தருக்குத் தகனபலியைச் செலுத்தினான்.
கர்த்தருக்கு சமாதான பலியையும் தந்தான்.
பின், அவன் தன் ஆட்சிக்கு உதவும்
தலைவர்களுக்கும் அதிகாரிகளுக்கும்
விருந்து கொடுத்தான்.
16 ஒருநாள் இரு வேசிகள் சாலொமோ
னிடம் வந்தனர். அவர்கள் அரசன் முன்பு
நின்றனர். 17 அதில் ஒருத்தி, “ஐயா, இவளும்
நானும் ஒரே வீட்டில் வாழ்கிறோம். நாங்கள்
இருவரும் ஒரே சமயத்தில் கர்ப்பமாகி
குழந்தைப்பேற்றுக்குத் தயாராக இருந்தோம்.
நான் குழந்தை பெறும்போது இவளும்
கூட இருந்தாள். 18 மூன்று நாட்களுக்குப்
பின் இவளும் குழந்தைப் பெற்றாள். அந்த
வீட்டில் எங்களைத் தவிர எவரும் இல்லை.
நாங்கள் இருவர் மட்டும்தான் இருந்தோம்.
19 ஒரு இரவில், இவள் தன் குழந்தையோடு
தூங்கும்போது, குழந்தை மரித்துப்போனது.
20 அப்பொழுது நான் தூங்கிக்கொண்டிருந்
ததால், இவள் என் குழந்தையை எடுத்துக்
கொண்டாள். அவளது மரித்த குழந்தையை
என் கையருகில் போட்டுவிட்டாள்.
21 மறுநாள் காலையில் எழுந்து என்
குழந்தைக்குப் பால் கொடுக்க முயன்றேன்.
ஆனால் குழந்தை மரித்திருப்பதை அறிந்
தேன். பிறகு உற்றுப்பார்த்தபோது அது
என் குழந்தையல்ல என்பதை அறிந்து
கொண்டேன்” என்றாள்.
22 ஆனால் அடுத்தவள், “இல்லை! உயிரோ
டுள்ள குழந்தை என்னுடையது மரித்துப்
போன குழந்தை உன்னுடையது!” என்றாள்.
ஆனால் முதல் பெண், “இல்லை நீ
தவறாக சொல்கிறாய்! மரித்த குழந்தை
உன்னுடையது. உயிருள்ள குழந்தை என்னு
டையது!” என்றாள். இவ்வாறு இருவரும்
அரசனுக்கு முன்பு வாக்குவாதம் செய்துக்
கொண்டனர்.
23 பிறகு சாலொமோன் அரசன், “இரு
வருமே உயிரோடுள்ள குழந்தை உங்களு
டையது என்று கூறுகிறீர்கள். ஒவ்வொருத்
தியும் மரித்துப்போன குழந்தை மற்றவளு
டையது என்று கூறுகிறீர்கள்” என்றான்.
24 பிறகு சாலொமோன் வேலைக்காரனை
அனுப்பி ஒரு வாளைக் கொண்டு வரச்
செய்தான். 25 பின்னர் அவன், “நம்மால்
செய்யமுடிந்தது இதுதான். உயிரோடுள்ள
குழந்தையை இரு துண்டுகளாக வெட்டு
வோம். ஆளுக்குப் பாதியைக் கொடுப்போம்”
என்றான்.
26 இரண்டாவது பெண், “அதுதான்
நல்லது. குழந்தையை இரண்டாக வெட்டுங்
கள். பிறகு இருவருக்குமே கிடைக்காமல்
போகும்” என்றாள்.
ஆனால் முதல் பெண், அக்குழந்தை மேல்
மிகுந்த அன்பு கொண்டவள், அவளே
உண்மையான தாய், அவள் அரசனிடம்,
“ஐயா, அந்தக் குழந்தையைக் கொல்ல
வேண்டாம்! அதனை அவளிடமே கொடுத்து
விடுங்கள்” என்றாள்.
27 பிறகு சாலொமோன், “அக்குழந்தையைக்
கொல்லவேண்டாம். அதனை முதல் பெண்
ணிடமே கொடுத்துவிடுங்கள். அவளே
உண்மையான தாய்” என்றான்.
28 இஸ்ரவேல் ஜனங்கள் சாலொமோனின்
முடிவைப்பற்றி கேள்விப்பட்டனர். அவனது
அறிவுத்திறனைப் பாராட்டி அவனைப்
பெரிதும் மதித்தனர். அவன் தேவனிட
மிருந்து ஞானத்தைப் பெற்று சரியான
முடிவுகளை எடுத்துள்ளான் என்று
அறிந்தனர்.

### சாலொமோனின் இராஜ்யம்

4 சாலொமோன் இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரையும் ஆண்டான். 2 கீழ்க்கண்ட
முக்கிய அதிகாரிகள் அனைவரும் அவனது
ஆட்சிக்கு உதவினார்கள்:

சாதோக்கின் மகனான அசரியா ஆசாரியனாக இருந்தான்.
3 சீசாவின் மகனான எலிகோரேப்பும், அகியாவும் எழுத்தாளர்கள்.
அகிலூதின் மகன் யோசபாத் பதிவாளர்.
4 யோய்தாவின் மகன் பெனாயா படைத்தலைவன்,
சாதோக்கும் அபியத்தாரும் ஆசாரியர்கள்,
5 நாத்தானின் மகன் அசரியா மணியக்காரர்களின் தலைவன்:
நாத்தானின் மகன் சாபூத் அரசனின் அன்புக்குரிய பிரதானியும், ஆசாரியனுமாயிருந்தான்.
6 அகீஷார் அரண்மனை விசாரிப்புக்காரன்,
அப்தாவின் மகன் அதோனிராம் அடிமைகளுக்கு பொறுப்பு அதிகாரி.

7 இஸ்ரவேல் பன்னிரெண்டு மாவட்டங்
களாக பிரிக்கப்பட்டது. சாலொமோன்
ஒவ்வொரு மாவட்டத்தையும் ஆள ஆளுநர்
களை தேர்ந்தெடுத்தான். இவர்கள் ஒவ்வொரு
மாவட்டத்திலும் உணவுப்பொருட்களைச்
சேகரித்து அரசனுக்கும் அவனது குடும்பத்
திற்கும் அளித்தனர். ஒவ்வொருவரும் ஒவ்
வொரு மாதத்திற்குப் பொறுப்பேற்றுக்

கொண்டனர். 8கீழ்க்கண்டவர்களே அந்தப்
பன்னிரண்டு ஆளுநர்களாவர்கள்:
எப்பிராயீம் மலைநாட்டின் ஆளுநர்
ஊரின் குமாரன்.
9தேக்கேரின் குமாரன், மாக்காத்
சிலும், சால்பீமிலும், பெத்ஷிமேசிலும்,
ஏலோன் பெத்தானானிலும் ஆளுநராக
இருந்தான்.
10ஏசேதின் குமாரன் அறுபோத்
திலும், சோகோப்பிலும், எப்பேர்
சீமையிலும் ஆளுநராக இருந்தான்.
11அபினதாபின் மகன் இரதத்தின்
ஆளுநர். இவன் சாலொமோனின்
மகளான தாபாத்தை மணந்திருந்தான்.
12அகிலூதின் மகனான பானா,
தானாகு, மெகிதோ, சர்த்தனாவுக்கு
அருகிலும் ஆளுநர். இது யெஸ்ரயே
லுக்கு கீழாகவும் பெத்செயான் முதல்
ஆபேல் மெகொல்லா வரையிலும்
யக்மெயாமுக்கு அப்புறம் மட்டும்
இருந்தது.
13ராமோத் கீலேயாத்தின் ஆளுநராக
கேபேரின் மகன் இருந்தான். கீலேயாத்
மனாசேயின் மகனான யாவீரின்
எல்லா ஊர்களுக்கும் கிராமங்களுக்கும்
அவன் ஆளுநராக இருந்தான். மேலும்
பாசானில் அர்கோப் மாவட்டத்திற்கும்
அவன் ஆளுநராக இருந்தான். இப்பகுதி
யில் பெரிய மதில்களைக் கொண்ட 60
நகரங்கள் இருந்தன. இந்த நகரங் களின்
வாயில்களில் வெண்கலக் கம்பி களும்
இருந்தன.
14இத்தோவின் மகனான அகினதாப்
மக்னாயீமில் ஆளுநர்.
15அகிமாஸ் நப்தலியில் ஆளுநர்.
இவன் சாலொமோனின் மகளான பஸ்
மாத்தை மணந்திருந்தான்.
16ஊசாயின் மகனான பானா ஆசே
ரிலும் ஆலோத்திலும் ஆளுநர்.
17பருவாவின் மகன் யோசபாத் இசக்
காரின் ஆளுநர்.
18ஏலாவின் மகன் சீமேயி பென்யமீ
னில் ஆளுநர்.
19ஊரியின் மகன் கேபேர் கீலேயாத்
நாட்டில் ஆளுநர். இங்கு எமோரியரின்
அரசனாகிய சீகோனும் பாசானின்
அரசனாகிய ஒகு ஜனங்களும் வாழ்ந்
தனர். எனினும் இவன் மட்டுமே
இங்கு ஆளுநராக இருந்தான்.
20யூதாவிலும், இஸ்ரவேலிலும்ஏராளமான
ஜனங்கள் வாழ்ந்தனர். அவர்களின்
எண்ணிக்கை கடற்கரை மணலைப் போன்
றிருந்தது. அவர்கள் உண்டும், குடித்தும்,
மகிழ்ச்சியோடு இருந்தனர்.
21சாலொமோன், ஐபிராத்து ஆறுமுதல்
பெலிஸ்தர் நாடு வரையுள்ள நாடுகளை
ஆண்டுவந்தான். அவனது எல்லை எகிப்து
வரை விரிந்திருந்தது. இந்நாடுகள் சாலொ
மோனுக்குப் பரிசுகளை அனுப்பி அவனது
வாழ்வு முழுவதும் கட்டுப்பட்டு வாழ்ந்தது.
22-23சாலொமோனுக்கு அவனோடு மேஜை
யில் உணவைச் சேர்ந்து உண்ணும் மற்ற
வர்களுக்கும் ஒருநாளுக்கு கீழ்க்கண்ட
பொருட்கள் தேவைப்பட்டன:

30 மரக்கால் மெல்லியமாவு,
60 மரக்கால் மாவு,
10 கொழுத்த பசுமாடுகள்,
20 நன்றாக மேய்ந்த பசுமாடுகள்,
100 ஆடுகள்,
கலைமான்கள், வெளிமான்கள்,
பறவைகள்.

24சாலொமோன், ஐபிராத்து ஆற்றின் மேற்
கிலுள்ள நாடுகளையும் அரசாண்டான். இது
திப்சா முதல் ஆசா மட்டும் இருந்தது.
சாலொமோன் தனது இராஜ்யத்தின் எல்லாப்
பக்கங்களிலும் சமாதானமாயிருந்தான்.
25சாலொமோனின் வாழ்நாளில் யூதா மற்றும்
இஸ்ரவேலில் உள்ள ஜனங்கள், தாண்
முதல் பெயெர்செபா வரை சமாதானத்
தோடும் பாதுகாப்போடும் இருந்தனர்,
இவர்கள் தமது அத்திமரத்தின் நிழலிலும்,
திராட்சை கொடியின் நிழலிலும் சமாதானத்
தோடு குடியிருந்தனர்.
26சாலொமோனிடம் 4,000 இரதக்குதிரை
லாயங்களும் 12,000 குதிரைவீரர்களும் இருந்
தனர். 27ஒவ்வொரு மாதமும் பன்னிரெண்டு
மாவட்டங்களிலும் உள்ள ஆளுநர்களும்
அரசனான சாலொமோனுக்கு வேண்டிய
வற்றையெல்லாம் கொடுத்து வந்தனர். அரச
னோடு உணவு அருந்துகின்றவர்களுக்கு
இது போதுமானதாக இருந்தது. 28இரதக்
குதிரைகளுக்கும் சவாரிக்குதிரைகளுக்கும்
தேவையான வைக்கோல், பார்லி போன்ற
வற்றையும் அவர்கள் கொடுத்துவந்தனர்.
ஒவ்வொருவரும் தங்கள் பொறுப்பின்படி
தேவையான தானியங்களை உரிய
இடத்திற்குக் கொண்டுவந்தனர்.

### சாலொமோனின் ஞானம்

29தேவன் சாலொமோனைச் சிறந்த ஞானி
யாக்கினார். அவனால் பலவற்றைப் புரிந்து
கொள்ள முடிந்தது. அவனது ஞானம்
கற்பனைக்குள் அடங்காததாக இருந்தது.
30கிழக்கே உள்ள அறிஞர்களின் ஞானத்தை
விட சாலொமோனின் ஞானம் மிகச்சிறந்
ததாக இருந்தது. எகிப்திலுள்ள அனைவரின்
ஞானத்தை விடவும் சிறந்த ஞானமாக
இருந்தது. 31பூமியிலுள்ள அனைவரையும்
விட புத்திசாலியாக இருந்தான். எஸ்ராகிய
னாகிய ஏத்தானிலும், ஏமான், கல்கோல்,
தர்தா என்னும் மாகோலின் ஜனங்களை
விடவும் ஞானவானாயிருந்தான். இஸ்ரவேல்
மற்றும் யூதாவைச்சுற்றியுள்ள நாடுகள்
அனைத்திலும் அவன் புகழ்பெற்றவனாக

விளங்கினான். 32அவனது வாழ்வில், 3,000
நீதிமொழிகளையும் 1,005 பாடல்களையும்
எழுதினான்.
33சாலொமோனுக்கு இயற்கையைப்பற்றி
தெரியும். லீபனோனில் உள்ள கேதுரு
மரங்கள் முதற்கொண்டு சுவரில் முளைக்கிற
ஈசோப்பு பூண்டு வரை பலவிதமான
தாவரங்கள்பற்றி கற்பித்தான். மேலும் அவன்
மிருகங்கள், பறவைகள், ஊர்வன மற்றும்
மீன்கள் ஆகியவற்றைப்பற்றியும் கற்பித்தான்.
34அவனது ஞானத்தைப்பற்றி தெரிந்து
கொள்ள பல நாடுகளில் உள்ளவர்களும்
வந்தனர். பலநாட்டு அரசர்களும் தம்
நாட்டிலுள்ள அறிஞர்களை அனுப்பி
சாலொமோனைக் கவனிக்க வைத்தனர்.

### சாலொமோன் ஆலயத்தைக் கட்டுகிறான்

5 ஈராம் தீரு நாட்டு அரசன். அவன்
எப்போதும் தாவீதின் நண்பனாக
இருந்தான். தாவீதிற்குப் பிறகு அவனது
மகன் சாலொமோன் புதிய அரசனானதை
அறிந்து தனது வேலைக்காரர்களை அனுப்பி
வைத்தான். 2சாலொமோன் ஈராம் அரச
னுக்கு, 3“என் தந்தை தாவீது எப்போதும்
தன்னைச் சுற்றி உள்ளவர்களோடு போரிட்
டுக் கொண்டிருந்தார், அதனால் தன்
தேவனாகிய கர்த்தருடைய ஆலயத்தைக்
கட்ட நேரம் இல்லாமல் இருந்தது. கர்த்தர்
தனது பகைவர்களை எல்லாம் வெல்லும்
வரை தாவீது காத்திருந்தார். 4ஆனால்
தேவனாகிய கர்த்தர் எனது நாட்டின்
அனைத்து பக்கங்களிலும் அமைதியையும்
சமாதானத்தையும் தந்திருக்கிறார். இப்போது
எனக்குப் பகைவர்கள் யாரும் இல்லை.
என் ஜனங்களுக்கும் ஆபத்தில்லை.
5“என் தந்தையான தாவீதிற்கு கர்த்தர்
ஒரு வாக்குறுதியை அளித்திருக்கிறார்.
கர்த்தர், ‘உனக்குப் பிறகு உன் மகனை
அரசனாக்குவேன். அவன் எனக்குப்
பெருமை தரும்படி ஒரு ஆலயத்தைக் கட்டு
வான்’ என்றார். இப்போது நான் என்
தேவனாகிய கர்த்தரைப் பெருமைபடுத்த
ஆலயம் கட்ட திட்டமிடுகிறேன். 6எனவே
எனக்கு உதவும்படி உங்களைக் கேட்டுக்
கொள்கிறேன். லீபனோனுக்கு உங்கள்
ஆட்களை அனுப்புங்கள். அவர்கள் அங்கே
எனக்காக கேதுரு மரங்களை வெட்ட
வேண்டும். எனது வேலையாட்களும்
அவர்களோடு வேலை செய்வார்கள். உங்கள்
ஆட்களுக்கு எவ்வளவு கூலிக் கொடுக்க
வேண்டுமோ அவ்வளவு கூலியை நான்
கொடுப்பேன். ஆனால் உங்கள் உதவி
எனக்குத் தேவைப்படுகிறது. சீதோனில்
உள்ள தச்சர்களைப்போன்று அவ்வளவு
சிறந்தவர்களாக இங்குள்ள தச்சர்கள்
இல்லை” என்ற செய்தியைச் சொல்லி
அனுப்பினான்.
7சாலொமோனின் வேண்டுகோளை
அறிந்து ஈராம் மிகவும் மகிழ்ந்தான்.
அவனும், “இப்படி ஒரு அறிவுமிக்க மகனை
தாவீதிற்குத் தந்து இவ்வளவு அதிகமான
ஜனங்களை ஆளவிட்டதற்குக் கர்த்தர்
ஸ்தோத்தரிக்கப்படட்டும்!” என்றான். 8பிறகு
ஈராம் சாலொமோனுக்கும் செய்தி அனுப்பி
னான். அதில், “நீங்கள் கேட்டிருந்தவற்றை
அறிந்தேன். நான் இங்குள்ள அனைத்து
கேதுரு மரங்களையும், தேவதாரு மரங்
களையும் வெட்டி உங்களுக்குத் தருவேன்.
9எனது ஆட்கள் அவற்றை லீபனோனில்
இருந்து கடலுக்குக் கொண்டு வருவார்கள்.
பிறகு அவற்றைக் கட்டி நீங்கள் விரும்
புகின்ற இடத்துக்கு மிதந்து வரும்படி
செய்வேன். அங்கே அவற்றைப் பிரித்து
தருவேன், நீங்கள் எடுத்துச் செல்லலாம்”
என்று குறிப்பிட்டிருந்தான்.
10-11சாலொமோன் ஈராமின் குடும்பத்
திற்காக 20,000 கலம் கோதுமையையும் 20
கலம் ஒலிவ மர எண்ணெயையும்
கொடுத்தான். இதுவே சாலொமோன்
ஈராமிற்கு ஆண்டு தோறும் கொடுப்பது.
12கர்த்தர் வாக்குறுதி அளித்தபடி சாலொ
மோனுக்கு ஞானத்தைக் கொடுத்தார்.
ஈராமும் சாலொமோனும் சமாதானமாக
இருந்தனர். இருவரும் தங்களுக்குள் ஒப்பந்தம்
செய்துக்கொண்டனர்.
13சாலொமோன் அரசன் கோவில்
வேலைக்காக 30,000 இஸ்ரவேல் ஆண்
களைப்பயன்படுத்தினான். 14சாலொமோன்,
இவர்களுக்கு மேற்பார்வையாளராக
அதோனிராமை நியமித்தான். அரசன் தம்
ஆட்களை மூன்று பிரிவாக்கி ஒவ்வொன்
றிலும் 10,000 பேரை வகுத்தான். ஒவ்வொரு
குழுவும் ஒருமாதம் லீபனோனிலும், இரு
மாதம் தம் வீட்டிலும் இருந்தனர்.
15சாலொமோன் மலை நாட்டில் வேலை
செய்ய 80,000 ஆட்களை அனுப்பினான்.
இவர்கள் கற்பாறைகளை உடைத்தனர். 70,000
ஆட்கள் அவற்றைச் சுமந்துவந்தனர். 16 3,300
பேர் இந்த வேலையை மேற்பார்வை
செய்துவந்தனர். 17ஆலயத்திற்கு அடித்தளக்
கல்லாக பெரிய கல்லை வெட்டும்படி
ஆணையிட்டான். கற்கள் கவனமாக
வெட்டப்பட்டன. 18சாலொமோன் மற்றும்
ஈராமின் கல்தச்சர்கள் கல்லைச் செதுக்
கினார்கள். ஆலயத்தைக் கட்டுவதற்குரிய
கற்களையும் மரத்தடிகளையும் தயார் செய்து
முடித்தனர்.

### சாலொமோன் ஆலயத்தைக் கட்டுதல்

6 சாலொமோன் அவ்வாறே ஆலயத்தைக்
கட்ட ஆரம்பித்தான். இஸ்ரவேலர்கள்
எகிப்தை விட்டு வெளியே வந்து 480
ஆண்டுகள் ஆகியிருந்தன. இப்போது சாலொ
மோன் அரசனாகி நான்கு ஆண்டுகள்
ஆகியிருந்தன. இது ஆண்டின் இரண்டாவது

மாதமாகவும் இருந்தது, 2ஆலயம் 90 அடி
நீளமும், 30 அடி அகலமும், 45 அடி
உயரமுமாய் இருந்தது. 3ஆலயத்தின் முகப்பா
னது 30 அடி அகலமும், 15 அடி நீளமும்
கொண்டது. இது ஆலயத்தின் முக்கிய
பகுதியோடு இணைந்திருந்தது. இதன் நீள
மானது ஆலயத்தின் அகலத்திற்கு சமமாக
இருந்தது. 4ஆலயத்தில் குறுகிய ஜன்னல்
களும் இருந்தன. இவை வெளியே
குறுகலாகவும் உட்பகுதியில் பெரிதாகவும்
தோற்றமளித்தன. 5ஆலயத்தின் முக்கியமான
பகுதியைச் சுற்றி சாலொமோன் வரிசையாக
பல அறைகளைக் கட்டினான். இந்த
அறைகள் ஒன்றின்மேல் ஒன்றாக இருந்தன.
இவ்வரிசை அறைகளின் உயரமானது
மூன்று அடுக்குகளையுடையதாக இருந்தன.
6இவ்வறைகள் ஆலயத்தின் சுவரைத்
தொட்டுக் கொண்டிருந்தன, ஆனால் அந்தச்
சுவர்களுக்குள் உத்திரங்கள் கட்டப்பட
வில்லை. ஆலயச் சுவரானது உச்சியில்
மெல்லியதாக இருந்தது. எனவே அறை
களின் ஒருபக்க சுவர் மற்ற பக்கங்களைவிட
மெல்லியதாக இருந்தது. அறைகளின் அடித்
தளமானது 7 1/2 அடி அகலமும், நடுத்தள
அறையானது 9 அடி அகலமும் அதற்கு
மேலுள்ள அறையானது 10 1/2 அடி
அகலமும் கொண்டவை. 7வேலைக்காரர்கள்
சுவர்களைக் கட்டுவதற்குப் பெரிய கற்
களைப் பயன்படுத்தினார்கள். பூமியில்
வெட்டி எடுக்கப்படும் இடத்திலேயே அவர்
கள் கற்களை வெட்டி சரி செய்துவிட்டனர்.
அதனால் ஆலயம் கட்டும் இடத்தில் சுத்திகள்,
வாச்சிகள், முதலான எந்த இரும்புக்
கருவிகளின் சத்தமும் கேட்கவில்லை.

8அடியிலுள்ள அறையின் நுழை
வாசலானது, ஆலயத்தின் தென்புறத்தில்
இருந்தது. உள்ளே படிக்கட்டுகள் அங்கிருந்து
இரண்டாவது மாடிக்கும் மூன்றாவது
மாடிக்கும் போயின.
9இவ்வாறு, சாலொமோன் ஆலயம் கட்டும்
வேலையை முடித்தான். ஆலயத்தின் ஒவ்
வொரு பகுதியும் கேதுரு மரங்களால்
மூடப்பட்டிருந்தது. 10ஆலயத்தைச் சுற்றியுள்ள
அறைகளின் வேலைகளையும் முடித்தான்.
ஒவ்வொரு அறையும் 7 1/2 அடி உயரமுள்ள
வை. அந்த அறைகளில் உள்ள கேதுரு
மரத்தூண்கள் ஆலயத்தைத் தொட்டுக்
கொண்டிருந்தன.
11கர்த்தர் சாலொமோனிடம், 12“நீ எனது
அனைத்து சட்டங்களுக்கும் கட்டளை
களுக்கும் கீழ்ப்படிந்தால், உன் தந்தை
தாவீதிற்கு வாக்களித்தபடி நான் உனக்குச்
செய்வேன். 13நீ கட்டிய இவ்வாலயத்தில்
இஸ்ரவேலின் ஜனங்களோடு நான் வாழ்
வேன். நான் இஸ்ரவேல் ஜனங்களை விட்டுப்
போகமாட்டேன்” என்றார்.

### ஆலயத்தைப் பற்றிய விபரங்கள்

14இவ்வாறு சாலொமோன் ஆலயத்தைக்
கட்டும் வேலையை முடித்தான்.
15ஆலயத்தின் உட்புறத்தில் உள்ள கற்
சுவர்கள் கேதுரு மரப்பலகைகளால் மூடப்
பட்டிருந்தன. அவை தரையிலிருந்து
கூரைவரை இருந்தன. கல் தரையானது
தேவதாரு மரப்பலகைகளால் மூடப்பட்டன.
16ஆலயத்தின் பின் பகுதியில் 30 அடி
நீளத்தில் ஒரு அறையைக் கட்டினார்கள்.
அதன் சுவர்களைக் கேதுரு மரப்பலகை
களால் தரையிலிருந்து கூரைவரை மூடினர்.
இந்த அறையானது மகா பரிசுத்த இடம்
என்று அழைக்கப்பட்டது. 17மகா பரிசுத்த
இடத்தின் முன்புறத்தில்தான் ஆலயத்தின்
முக்கிய இடம் இருந்தது. இந்த அறை 60
அடி நீளம் இருந்தது. 18அவர்கள் சுவரில்
உள்ள கற்கள் தெரியாத வண்ணம் கேதுரு
மரப்பலகைகளால் மூடினார்கள். அவர்கள்
பூ மொட்டுகள் மற்றும் மலர்களின்
வடிவங்களை அம்மரத்தில் செதுக்கினார்கள்.
19சாலொமோன் ஒரு அறையை ஆலயத்
தின் பின்பகுதியில் உள்ளே கட்டினான்.
இந்த அறையில் கர்த்தருடைய உடன்
படிக்கைப் பெட்டியை வைத்தனர். 20இது
30 அடி நீளமும், 30 அடி அகலமும், 30
அடி உயரமும் உடையதாக இருந்தது.
21சாலொமோன் இந்த அறையைச் சுத்தமான
தங்கத்தால் மூடினான், அவன் நறுமணப்
பொருட்களை எரிக்கும் பலிபீடத்தை
கட்டினான். அவன் பலிபீடத்தையும் தங்கத்
தகடுகளால் மூடி பொன் சங்கிலிகளைக்
குறுக்காகத் தொங்கவிட்டான். அந்த அறை
யில் இரண்டு கேருபீன்களின் உருவங்கள்
இருந்தன. அவை தங்கத்தால் மூடப்
பட்டவை. 22ஆலயத்தின் அனைத்து
பகுதிகளும் தங்கத்தால் மூடப்பட்டன. மகா
பரிசுத்த இடத்திற்கு வெளியே உள்ள
பலிபீடத்தையும் தங்கத்தால் மூடினார்கள்.

23வேலைக்காரர்கள் ஒலிவமரத்தைக்
கொண்டு இரண்டு கேருபீன்களின் உருவங்
களை செய்தனர். இவற்றை மகா பரிசுத்த
இடத்தில் வைத்தனர். இவற்றின் உயரம்
15 அடி. 24-26இரு கேருபீன்களும் ஒரே
மாதிரி ஒரே முறையில் செய்யப்பட்டவை.
ஒவ்வொரு கேருபீனுக்கும் இரு சிறகுகள்
இருந்தன. ஒவ்வொரு சிறகும் 7 1/2 அடி
நீளமுடையவை. ஒரு சிறகின் நுனியிலிருந்து
இன்னொரு சிறகின் நுனிவரை 15 அடி
இருந்தன. ஒவ்வொரு கேருபீனும் 15 அடி
உயரம் இருந்தன. 27அவை மகா பரிசுத்த
இடத்தில் இருபக்கங்களிலும் இருந்தன.
இரண்டின் சிறகுகளும் அறையின் மத்தியில்
தொட்டுக்கொண்டிருந்தன. வெளி நுனிகள்
சுவரைத் தொட்டுக்கொண்டிருந்தன. 28இரு
கேருபீன்களும் தங்கத்தால் மூடப்
பட்டிருந்தன.

29முக்கிய அறையைச் சுற்றியுள்ள சுவர்
களிலும் உட்சுவர்களிலும் கேருபீன்களின்
உருவங்கள், பேரீச்ச மரங்கள், பூக்கள் என
பொறிக்கப்பட்டன. 30இரு அறைகளின்
தரைகளும் தங்கத்தகடுகளால் மூடப்பட்டன.
31மகா பரிசுத்த இடத்தின் நுழைவாயிலில்
ஒலிவ மரத்தால் ஆன இரு கதவுகளைச்
செய்து பொருத்தினர். இதன் சட்டமானது
ஐந்து பக்கங்களுடையதாக அமைக்கப்
பட்டது. 32இக்கதவுகளின் மேல் கேருபீன்
களும், பேரீச்ச மரம், பூக்கள் எனப்
பலவடிவங்கள் செதுக்கப்பட்டன. பின்னர்
தங்கத்தால் இவற்றை மூடினார்கள்.
33அவர்கள் முக்கியமான அறையின்
நுழைவிற்குக் கதவுகள் செய்தனர். அவர்கள்
ஒலிவமரத்தை பயன்படுத்தி சதுரக் கதவு
சட்டத்தைச் செய்தனர். 34பிறகு அவர்கள்
கதவுகளைச் செய்ய ஊசியிலை மரத்தைப்
பயன்படுத்தினார்கள். 35ஒவ்வொரு கதவும்
இரண்டு பகுதிகளாக இருந்தன, இரண்டு
மடிப்புகள் இருந்தன. அக்கதவுகளில்
கேருபீன்கள், பேரீச்ச மரங்களும் பூக்களும்
வரையப்பட்டன. தங்கத்தால் அவைகள்
மூடப்பட்டிருந்தன.
36பிறகு அவர்கள் உட்பிரகாரத்தைக் கட்டி
னார்கள். அதைச் சுற்றி சுவர்களைக் கட்டி
னர். ஒவ்வொரு சுவரும் மூன்று வரிசை
வெட்டப்பட்ட கற்களாலும், ஒரு வரிசை
கேதுரு மரங்களாலும் செய்யப்பட்டன.
37ஆண்டின் இரண்டாவது மாதமான சீப்
மாதத்தில், ஆலயத்தின் வேலைகளைச்
செய்ய ஆரம்பித்தார்கள். இது சாலொமோன்
இஸ்ரவேலின் அரசனாகி நான்காவது
ஆண்டாக இருந்தது. 38ஆலயத்தின் வேலை
யானது ஆண்டின் எட்டாவது மாதமான பூல்
மாதத்தில் முடிந்தது. இது சாலொமோன்
ஆட்சிக்கு வந்த பதினொன்றாவது ஆண்டா
யிற்று. ஆலய வேலை முடிய ஏழு ஆண்டு
கள் ஆனது. திட்டமிட்ட விதத்திலேயே
ஆலயமானது மிகச்சரியாகக் கட்டப்பட்டது.

### சாலொமோனின் அரண்மனை

7 சாலொமோன் அரசன் தனக்கென ஒரு
அரண்மனையும் கட்டிமுடித்தான். இவ்
வேலை முடிய 13 ஆண்டுகள் ஆயின.
2"லீபனோன் காடு" என்ற கட்டிடத்தையும்
கட்டினான். இது 150 அடி நீளமும், 75
அடி அகலமும், 45 அடி உயரமும்
கொண்டது. கேதுரு மரத்தூண்கள் நான்கு
வரிசைகளில் அமைக்கப்பட்டன. அதன்மேல்
கேதுரு மர உத்திரங்களையும் அமைத்தான்.
3உத்திரங்களின் மேல் கேதுரு மரச்
சட்டங்களைப் பாவினர். ஒவ்வொரு
தூணுக்கும் 15 சட்டங்கள் இருந்தன. அங்கே
மொத்தம் 45 சட்டங்கள் இருந்தன. 4சுவர்
களின் ஒவ்வொரு பக்கத்திலும் மூன்று
வரிசையாக ஜன்னல்கள் இருந்தன. மூன்று
வரிசை ஜன்னல்கள் ஒன்றுக்கொன்று எதிரா
யிருந்தது. 5ஒவ்வொன்றின் முடிவிலும்
மூன்று கதவுகள் இருந்தன. அவற்றின்
சட்டங்கள் சதுரமாயிருந்தன.
6சாலொமோன் 75 அடி நீளமும், 45
அடி அகலமும் கொண்ட "தூண்" ஒன்றைக்
கட்டினான், எதிரே தூண்களையும்
நிறுத்தினான்.
7சாலொமோன் நியாயம் தீர்க்கிறதற்கு
"நியாய விசாரணை மண்டபத்தையும்"
கட்டினான். அம்மண்டபம் தரையிலிருந்து
கூரைவரை கேதுரு மரங்களால் அமைக்கப்
பட்டிருந்தன.
8நியாய விசாரணை மண்டபத்திற்குள்
தான் சாலொமோன் வசித்துவந்தான். அவன்
குடியிருந்த அரண்மனைக்குள்ளும் இதுபோல்
ஒரு மண்டப வீடு இருந்தது. நியாய
விசாரணை மண்டபம் அமைக்கப்பட்ட
விதத்திலேயே இவ்வீடும் கட்டப்பட்டது.
எகிப்து அரசனின் மகளான, தன் மனைவிக்
கும் இதேபோல ஒரு வீட்டைக் கட்டிக்
கொடுத்தான்.
9இக்கட்டிடங்கள் அனைத்தும் விலை
யுயர்ந்த கற்களால் கட்டப்பட்டன. கற்கள்
சரியான அளவில் வெட்டப்பட்டிருந்தன,
முன்னும் பின்னும் செதுக்கப்பட்டிருந்தன.
இக்கற்கள் அஸ்திவாரம் முதல் கூரைவரை
பயன்படுத்தப்பட்டன. சுற்றுச் சுவர்களும்
விலையுயர்ந்த கற்களால் கட்டப்பட்டன.
10அஸ்திபாரமானது பெரியதும் விலையுயர்ந்
ததுமான கற்களால் கட்டப்பட்டது. சில
15 அடி நீளமும், சில 12 அடி நீளமும்
கொண்டன. 11உச்சியிலும் வேறு விலை
யுயர்ந்த கற்களும் கேதுருமர உத்திரங்களும்
வைக்கப்பட்டிருந்தன. 12அரண்மனை, ஆல
யம், மண்டபம் ஆகியவற்றைச் சுற்றிலும்
சுவர்கள் மூன்று வரிசை கற்களும், ஒரு
வரிசை கேதுரு மரப்பலகைகளாலும் கட்டப்
பட்டன.
13சாலொமோன் அரசன் தீருவில் உள்ள
ஈராமுக்கு ஒரு செய்தி அனுப்பினான்.
அவனை எருசலேமுக்கு வரவழைத்தான்.
14ஈராமின் தாய் இஸ்ரவேல் குடும்பத்தில்
உள்ள நப்தலியின் கோத்திரத்தைச் சேர்ந்
தவள் ஆவாள். அவளது மரித்துப்போன
தந்தை தீருவை சேர்ந்தவர். ஈராம்
வெண்கலப் பொருட்களைச் செய்பவன்.
அவன் திறமையும் அனுபவமும்
வாய்ந்தவன். எனவே அவனை அழைத்து,
வெண்கல வேலைகளுக்கும் பொறுப்பாளி
ஆக்கினான். அவன் வெண்கலத்தால்
செய்யவேண்டியவற்றைச் செய்து
முடித்தான்.
15ஈராம் இரண்டு வெண்கல தூண்களைச்
செய்தான். ஒவ்வொன்றும் 27 அடி உயரமும்,
18 அடி சுற்றளவும் கொண்டது. இது 3
அங்குல கனமும் உள்ளே வெற்றிடமாகவும்
இருந்தது. 16ஈராமும் 7 1/2 அடி உயரமுள்ள
இரண்டு கும்பங்களைத் தூண்களின்

உச்சியில் வைக்கச்செய்தான். 17 பிறகு அவன்
கும்பங்களை மூட வலை போன்ற இரு
பின்னல்களைச் செய்தான். 18 பின்னர் அவன்
இருவரிசைகளில் வெண்கல மாதுளம் பழங்
களைச் செய்தான். இவற்றை தூண்களின்
உச்சியில் வலைகளுக்கு முன் வைத்தான்.
19 தூண்களின் உச்சியில் இருந்த 7 1/2 அடி
கும்பங்கள் பூவைப்போன்றும், 20 கிண்ணம்
போன்ற வடிவில் உள்ள வலைகளுக்கு
மேலும் அமைக்கப்பட்டன. கும்பங்களைச்
சுற்றிலும் வரிசைக்கு 20 உருண்டைகளாக
தொங்கவிட்டான். 21 ஈராம் இந்த இரு
வெண்கலத்தூண்களையும் ஆலய வாசல்
மண்டபத்தில் நிறுவினான். வாசலின் உட்
புறத்தில் ஒன்றும் தென்புறத்தில் ஒன்றுமாகத்
தூண்கள் நிறுத்தப்பட்டன. தெற்குத் தூண்
யாகீன் என்றும் வடக்குத் தூண் போவாஸ்
என்றும் பெயர் பெற்றன. 22 தூண்களுக்கு
மேல் மலர்வடிவ கும்பங்கள் வைக்கப்
பட்டதும் தூண்களின் வேலை முடிந்தது.

23 வெண்கலத்தாலேயே வட்டவடிவில் ஒரு
தொட்டியை ஈராம் அமைத்தான். அவர்கள்,
அதை "கடல்" என்று அழைத்தார்கள்.
இதன் சுற்றளவு 51 அடிகள், குறுக்களவு 17
அடியாகவும், ஆழம் 7 1/2 அடியாகவும்
இருந்தன. 24 தொட்டியைச் சுற்றிலும் விளிம்
பில் தகடு பொருத்தப்பட்டது. இதற்கு
அடியில் இருவரிசைகளில் வெண்கலப்
பொருட்கள் வார்க்கப்பட்டன. இவை
தொட்டியோடு சேர்த்து பொருத்தப்பட்டன.
25 இது 12 வெண்கல காளைகளின் மேல்
வைக்கப்பட்டது. அக்காளைகளின் பின்புறங்
கள், தொட்டிகளுக்கு உள்ளே மறைந்து
காணப்பட்டன. மூன்று காளைகள் வடக்
கிலும், மூன்று காளைகள் தெற்கிலும்,
மூன்று காளைகள் மேற்கிலும், மூன்று
காளைகள் கிழக்கிலும் பார்த்த வண்ணம்
இருந்தன. 26 தொட்டியின் பக்கங்கள் 4
அங்குல கனம் கொண்டவை. தொட்டியின்
விளிம்பானது கிண்ணத்தின் விளிம்பைப்
போலவும், பூவின் இதழ்களைப்போலவும்
இருந்தன. இதன் கொள்ளளவு 11,000
காலன்களாகும்.

27 பிறகு பத்து வெண்கல வண்டிகளையும்
ஈராம் செய்தான். ஒவ்வொன்றும் 6 அடி
நீளமும், 6 அடி அகலமும், 4 1/2 அடி
உயரமும் கொண்டவை. 28 இவை சதுர
சட்டங்களால் ஆன சவுக்கையால் செய்யப்
பட்டிருந்தன. 29 சவுக்கைகளிலும் சட்டங்
களிலும் வெண்கலத்தால் சிங்கங்கள்,
காளைகள், கேருபீன்கள் பொருத்தப்
பட்டிருந்தன. மேலேயும் கீழேயும் சிங்கங்கள்
மற்றும் காளைகளின் உருவங்களோடு
வெண்கலத்தால் பூ வேலைப்பாடுகளும்
அமைக்கப்பட்டன. 30 ஒவ்வொரு வண்டி
யிலும் வெண்கலத்தால் சக்கரங்களும்
அச்சுகளும் அமைக்கப்பட்டன. நான்கு
மூலைகளிலும் உதவியாக கிண்ணங்கள்
வைக்கப்பட்டன. அவற்றில் வெண்கல பூ
வேலைப்பாடுகளும் இருந்தன. 31 கிண்ணங்
களின் உச்சியில் சட்டம் அமைக்கப்பட்டன.
அவை 18 அங்குலம் கிண்ணத்தின்
விளிம்பிலிருந்து உயர்ந்திருந்தது. அதன்
திறப்பு 27 அங்குல விட்டத்தில்
அமைந்திருந்தது. சட்டத்தில் வெண்கல
வேலைப்பாடுகள் இருந்தன. அது வட்டமாக
இல்லாமல் சதுரமாக இருந்தது. 32 சட்டத்திற்கு
அடியில் நான்கு சிறு சக்கரங்கள் இருந்தன.
அவற்றின் விட்டம் 27 அங்குலமாக
இருந்தது. இரு சக்கரங்களையும் இணைக்கும்
அச்சுத்தண்டு வண்டியோடு இணைக்கப்
பட்டது. 33 இச்சக்கரங்கள் தேர்ச்சக்கரங்
களைப் போன்றிருந்தன. சக்கரங்கள், அச்சுத்
தண்டு, பட்டை, வட்டங்கள், கம்பிகள்
எல்லாம் வெண்கலத்தால் ஆனவை.

34 ஒவ்வொரு வண்டியின் நான்கு மூலை
களிலும் நான்கு தாங்கிகள் இருந்தன. அவை
அனைத்தும் வண்டியோடு ஒன்றாக இணைக்
கப்பட்டன. 35 ஒவ்வொரு வண்டியின்
தலைப்பிலும் வெண்கலத்தால் ஆன விளிம்பு
இருந்தது. அவை வண்டியோடு ஒரே
துண்டாக இணைக்கப்பட்டிருந்தது. 36 வண்டி
யின் பக்கங்களில் வெண்கலத்தால் ஆன
கேருபீன்களும், சிங்கங்களும், பேரீந்து
மரங்களும் வைக்கப்பட்டிருந்தன. வண்டியில்
எங்கெங்கே இடம் இருந்ததோ அங்கெல்லாம்
இச்சிற்பங்கள் செதுக்கப்பட்டிருந்தது. வண்டி
யின் சட்டங்களில் பூவேலைப்பாடுகளும்
அமைக்கப்பட்டன. 37 ஈராம் பத்து வண்டி
களை செய்தான். எல்லாம் ஒரே மாதிரியாக
வெண்கலத்தால் வார்க்கப்பட்டிருந்தன.

38 ஈராம் பத்து கிண்ணங்களையும்
செய்தான். ஒவ்வொரு வண்டியிலும் ஒவ்
வொரு கிண்ணங்கள் வைக்கப்பட்டது.
ஒவ்வொரு கிண்ணமும் 6 அடி குறுக்களவு
உள்ளது. ஒவ்வொன்றும் 230 காலன்
கொள்ளளவு கொண்டது. 39 ஆலயத்தின் தென்
புறத்தில் ஐந்து வண்டிகளையும், வட
புறத்தில் ஐந்து வண்டிகளையும்
நிறுத்திவைத்தான். ஆலயத்தின் தென்கிழக்கு
முனையில் பெரிய தண்ணீர்த் தொட்டியை
வைத்தான். 40-45 இதோடு கொப்பரை, சாம்பல்
எடுக்கும் கரண்டி, கலங்கள் போன்ற
வற்றையும் ஈராம் செய்தான். சாலொமோன்
அரசன் விரும்பியவற்றையெல்லாம் ஈராம்
செய்து கொடுத்தான். அவன் கர்த்தருடைய
ஆலயத்திற்காகச் செய்தப் பொருட்களின்
பட்டியல் கீழேத் தரப்பட்டுள்ளது:

2 தூண்கள்,
2 தூண்களுக்கு மேல் வைக்கத்தக்க கிண்ணவடிவ கும்பங்கள்,
2 கும்பங்களை மூடும் வலைப்பின்னல்கள்,
400 மாதுளம் பழங்கள். இவை கும்பங்களை மூடும் ஒவ்வொரு

வலைபின்னலூடும்
இரண்டு வரிசையாக தொங்க
விடப்பட்டன.
10 வண்டிகள் அதன்மேல் 10
கொப்பரைகள், 1 கடல் தொட்டி,
அதன் கீழ் 12 காளைகள்.
செப்புச்சட்டிகள், சாம்பல்
கரண்டிகள், கலங்கள்.

இவை அனைத்தும் சுத்தமான வெண்
கலத்தால் ஆனவை. அரசன் சாலொமோன்
விரும்பிய விதத்திலேயே இவை அனைத்
தையும் ஈராம் செய்தான். இவை
அனைத்துமே பரிசுத்த வெண்கலத்தால் ஆன
வை. 46-47சாலொமோன் இவ்வெண்கலத்தை
எடை போடவில்லை. இவை எடைக்கு
அதிகமாகவே இருந்தன. எனவே வெண்கலத்
தின் மொத்த எடையை யாரும் அறிந்திருக்க
வில்லை. யோர்தான் நதிக்கரையில்
சுக்கோத்துக்கும் சர்தானுக்கும் நடுவில்
களிமண் தரையில் இவற்றைச் செய்யுமாறு
அரசன் கட்டளையிட்டான். தரையில்
அச்சுகளைப் பதித்து, அவற்றில் வெண்
கலத்தை உருக்கி ஊற்றி இவற்றை அவர்கள்
செய்தார்கள்.
48-50சாலொமோன் ஆலயத்திற்குத் தங்கத்
தால் பலபொருட்களைச் செய்ய கட்டளை
யிட்டான். அவை கீழ்வருவன:

பொன்னாலான பலிபீடம்,
பொன்னாலான மேஜை.
(தேவனுக்குச் செலுத்தும் விசேஷ
அப்பங்களை வைக்க உதவும்.)
விளக்குத்தண்டுகள். (மகா
பரிசுத்தமான இடத்தில் தென்பக்கம்
5தும் வடபக்கம் 5தும் வைத்தனர்.)
பொன் பூக்கள், விளக்குகள்,
கத்தரிகள்,
கிண்ணங்கள், வெட்டுக்கத்திகள்,
கலங்கள், கலயங்கள், தூபகலசங்கள்,
ஆலய வாசல் கதவுகள்.

51இவ்வாறு கர்த்தருடைய ஆலயத்திற்குத்
தேவையான பொருட்களைச் சாலொமோன்
செய்துமுடித்தான். பிறகு தனது தந்தை
தாவீது சேர்த்து வைத்திருந்தப் பொருட்
களையெல்லாம் ஆலயத்துக்காக ஒன்றாகச்
சேர்த்தான். இவை அனைத்தையும் ஆலயத்
துக்குள் கொண்டுவந்தான். வெள்ளி, பொன்
முதலியவற்றையெல்லாம் கர்த்தருடைய
ஆலயத்தில் இருந்த பொக்கிஷத்தில் சேர்த்து
வைத்தான்.

## ஆலயத்தில் வைக்கப்பட்ட உடன்படிக்கைப் பெட்டி

8 பின் சாலொமோன் இஸ்ரவேலரில்
முதியவர்களையும் கோத்திரத் தலைவர்
களையும் கூட்டினான். அவர்களை எருச
லேமுக்கு வரச்செய்தான். அவர்களை தாவீது
நகரத்திலிருந்து உடன்படிக்கைப் பெட்டியை
ஆலயத்திற்கு கொண்டுவரும்படி கேட்டான்.
2எனவே இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும்
சாலொமோனிடம் வந்தனர். இது, ஏழாம்
மாதமாகிய ஏத்தானீம் மாதத்து அடைக்கல
கூடார பண்டிகைக்குரியதாக இருந்தது.
3இஸ்ரவேலின் முதியவர்கள் அனைவரும்
அங்குவந்து சேர்ந்ததும் பரிசுத்தப் பெட்டி
யை ஆசாரியர்கள் எடுத்தனர். 4அவர்கள்
கர்த்தருடைய பரிசுத்தப் பெட்டியோடு
ஆசரிப்புக் கூடாரத்தையும் கூடாரத்திலிருந்து
பரிசுத்த பணிமுட்டுகள் அனைத்தையும்
சுமந்துகொண்டு ஆசாரியரும் லேவியர்களும்
வந்தனர். 5சாலொமோன் அரசனும் இஸ்ர
வேலின் அனைத்து ஜனங்களும் உடன்
படிக்கைப் பெட்டியின் முன் கூடினார்கள்.
அவர்கள் பல பலிகளைக் கொடுத்தனர்.
எவராலும் எண்ணிப்பார்க்க முடியாதபடி
ஆடுகளையும் மாடுகளையும் பலியிட்டனர்.
6பின்னர் ஆசாரியர்கள் கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியை அதற்கு உரிய
சரியான இடத்தில் வைத்தனர். அது
ஆலயத்தின் உள்ளே மகா பரிசுத்தமான
இடத்தில் இருந்தது. உடன்படிக்கைப் பெட்டி
யானது கேருபீன்களின் சிறகுகளுக்கு
அடியில் இருந்தது. 7கேருபீன்கள் தங்கள்
சிறகுகளை விரித்து பரிசுத்தப் பெட்டி
யையும் அதன் தண்டுகளையும் மூடின.
8தூக்கிச் செல்லத்தக்க தண்டுகள் மிகவும்
நீளமானவை. அவை பரிசுத்த இடத்திற்கு
முன்னால் மகா பரிசுத்த இடத்தில் நிற்கும்
எவராலும் காணத்தக்கதாக இருந்தன.
என்றாலும் அவை வெளியே காணப்
படவில்லை. அவை இன்றும் அங்கேதான்
உள்ளன. 9அப்பரிசுத்தப் பெட்டிக்குள்ளே
இரண்டு கற்பலகைகளைத் தவிர வேறு
எதுவும் இல்லை. அவற்றை மோசே ஓரேப்
என்ற இடத்தில் பரிசுத்தப் பெட்டிக்குள்ளே
வைத்தான். அந்த இடத்தில்தான் இஸ்ர
வேலர்கள் எகிப்தை விட்டு வெளியே
வந்ததும் கர்த்தர் அவர்களோடு உடன்படிக்
கைச் செய்துக்கொண்டார்.
10ஆசாரியர்கள் பரிசுத்தப் பெட்டியை
மகா பரிசுத்த இடத்தில் வைத்தனர்.
ஆசாரியர்கள் பரிசுத்த இடத்தைவிட்டு
வெளியேறியதும் மேகமானது கர்த்தருடைய
ஆலயத்தை மூடிக்கொண்டது. 11ஆசாரியர்
களால் தொடர்ந்து வேலை செய்ய
முடியாமல் போனது. ஏனென்றால் கர்த்தரு
டைய மகிமை ஆலயத்தை நிரப்பிவிட்டது.
12பிறகு சாலொமோன்:

"கர்த்தர், கனமான மேகத்தில்
வாழ்வதாகச் சொன்னார்,*

---

**கர்த்தர் … சொன்னார்** இது ஒரு பழமையான பாடத்தில் உள்ளது. எபிரெய மொழியில் "கர்த்தர் இருளில் வாழச் சொன்னார்."

13 நான் உங்களுக்காக ஒரு பிரமாதமான
ஆலயத்தை கட்டினேன்,
என்றென்றும் நீங்கள் வாழத்தக்க
இடத்தை உருவாக்கினேன்”
என்றான்.

14இஸ்ரவேலின் அனைத்து ஜனங்களும்
அங்கே நின்றுக்கொண்டு இருந்தனர்.
எனவே சாலொமோன் அவர்களை நோக்கி
திரும்பி ஆசீர்வதிக்கும்படி தேவனை வேண்
டினான்.
15பிறகு சாலொமோன் அரசன் கர்த்தருக்கு
முன் மிக நீண்ட நேரம் ஜெபித்தான்.
அவன்:

“இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்
மிகப்பெரியவர்.
கர்த்தர் தாமாகவே என் தந்தையான
தாவீதிற்குச் செய்த வாக்குறுதியைச்
செய்துமுடித்தார்.
அவர் என் தந்தையிடம்,
16 ‘நான் என் இஸ்ரவேல் ஜனங்களை,
எகிப்திலிருந்து வெளியே
கொண்டுவந்தேன்.
ஆனால் நான் இன்னும் என்னை
மகிமைப்படுத்தும் ஆலயத்தைக்
கட்டுவதற்குரிய இடத்தை
இஸ்ரவேல் கோத்திரங்களில் இருந்து
தேர்ந்தெடுக்கவில்லை.
அதோடு இஸ்ரவேல் ஜனங்களை
வழிநடத்திச் செல்லும்
தலைவனையும்
தேர்ந்தெடுக்கவில்லை.
ஆனால், இப்போது நான்
மகிமைப்படுவதற்குரிய இடமாக
எருசலேமை தேர்ந்தெடுத்துள்ளேன்.
அதோடு, இஸ்ரவேல் ஜனங்களை
வழிநடத்திச் செல்ல தாவீதைத்
தேர்ந்தெடுத்துவிட்டேன்.’

17“என் தந்தையான தாவீது, இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தரை மகிமைப்படுத்திட,
ஒரு ஆலயத்தை கட்ட விரும்பினார்.
18ஆனால் அவரிடம் கர்த்தரோ, ‘என்னை
மகிமைப்படுத்திட நீ ஆலயம் கட்ட
வேண்டுமென்று விரும்புகிறாய். நீ என்
ஆலயத்தைக் கட்ட விரும்புவது நல்லது தான்.
19ஆனால் நான் என் ஆலயத்துக்காக
உன்னைத் தேர்ந்தெடுக்கவில்லை. உன் மகன்
எனது ஆலயத்தைக் கட்டுவான்!’ என்று
கூறினார்.
20“எனவே கர்த்தர் தனது வாக்குறுதியை
நிறைவேற்றிக் கொண்டார். நான் என்
தந்தையான தாவீதின் இடத்தில் அரசனாக
இருக்கிறேன். கர்த்தருடைய வாக்குறுதியின்
படி இப்போது நான் இஸ்ரவேலை
ஆண்டுவருகிறேன். நான் இஸ்ரவேலரின்
தேவனாகிய கர்த்தருக்கு ஆலயம் கட்டி
விட்டேன். 21ஆலயத்திற்குள் பரிசுத்தப்
பெட்டியை வைக்கவும் இடம் அமைத்து
விட்டேன். அப்பரிசுத்தப் பெட்டிக்குள்
கர்த்தர் நமது முற்பிதாக்களோடு செய்த
உடன்படிக்கை இருக்கிறது. இந்த உடன்படிக்
கையை அவர் நமது முற்பிதாக்களோடு
எகிப்தை விட்டு வெளியே வந்ததும்
செய்தார்” என்றான்.
22பிறகு சாலொமோன் கர்த்தருடைய
பலிபீடத்தின் முன்பு நின்றான். அனைவரும்
அவனுக்கு முன்பு நின்றனர். அவன் தன்
கைகளை விரித்து வானத்தை நோக்கி,
23“இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்தாவே,
வானத்திலும் பூமியிலும் உம்மைப்போன்று
வேறு ஒரு தேவன் இல்லை. நீர் உம்முடைய
ஜனங்களிடம் அன்பாயிருந்ததால் அவர்
களோடு உடன்படிக்கை செய்துக்கொண்டீர்.
அதனைக் காப்பாற்றினீர். உம்மைப் பின்
பற்றுபவர்களிடம் கருணையோடும் உண்
மையோடும் இருந்தீர். 24உமது சேவகனான
என் தந்தை தாவீதிடம், ஒரு வாக்குறுதி
தந்தீர். அதையும் காப்பாற்றினீர். உம்முடைய
வாயாலேயே அந்த வாக்குறுதியைச் செய்
தீர். அதை உண்மையாக்கிட உம்முடைய
சொந்த பலத்தைப் பயன்படுத்தினீர். 25இப்
போது, இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தாவே, தாவீதிற்குத்தந்த மற்ற வாக்குறுதி
களையும் நிறைவேற்றும். நீர் ‘உன் மகன்கள்
உன்னைப்போலவே எனக்குக் கவனமாகக்
கீழ்ப்படியவேண்டும். அவர்கள் அவ்வாறு
செய்தால் பிறகு எப்பொழுதும் உன்
குடும்பத்தில் உள்ளவர்களே இஸ்ரவேல்
ஜனங்களை ஆள்வார்கள்’ என்று சொன்னீர்.
26இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்தாவே, நீர்
என் தந்தைக்களித்த வாக்குறுதியைக்
காப்பாற்றும்படி மீண்டும் கேட்டுக்கொள்
கிறேன்.
27“ஆனால், தேவனே உண்மையில் நீர்
இந்தப்பூமியில் எங்களோடு வாழ்கின்றீரா?
வானங்களும், வானாதி வானங்களும்
உமக்குப் போதாதே. என்னால் கட்டப்பட்ட
இந்த ஆலயம் எம்மாத்திரம்? 28ஆனால்
என் ஜெபங்களையும் வேண்டுகோள்
களையும் தயவுசெய்து கேளும். நான் உமது
ஊழியன், நீர் எனது தேவனாகிய கர்த்தர்,
இன்று என் ஜெபத்தைக் கேட்டருளும்.
29முன்பு நீர், ‘அங்கே நான் மகிமைப்
படுத்தப்படுவேன்’ என்றீர். இவ்வாலயத்தை
இரவும் பகலும் கவனித்துக்கொள்ளும். இந்த
ஆலயத்தில் நான் செய்யும் ஜெபங்களைக்
கேட்டருளும். 30கர்த்தாவே, நானும் இஸ்ர
வேல் ஜனங்களும் இங்கே உம்மிடம் திரும்பி
ஜெபிக்கிறோம். தயவுசெய்து அந்த ஜெபங்
களைக் கேளும்! நீர் பரலோகத்தில்
இருப்பதை அறிவோம். அங்கிருந்து எங்கள்
ஜெபங்களைக் கேட்டு எங்களை மன்னியும்.
31“எவனாவது ஒருவன் இன்னொரு
வனுக்குத் தப்புசெய்தால், அவன் இங்கே

பலிபீடத்திற்குக் கொண்டு வரப்படுவான்.
அவன் குற்றவாளியாகஇல்லாமல் இருந்தால்,
ஒரு சத்தியம் செய்துக்கொள்வான். தான்
ஒன்றும் அறியாதவன் என்று அவன்
வாக்குறுதி செய்யவேண்டும். 32பரலோகத்தி
லிருந்து கவனித்து நியாயம் வழங்க
வேண்டும். அவன் குற்றவாளியானால்,
தயவுசெய்து அதை எங்களுக்கு உணர்த்தும்.
அவன் ஒன்றும் அறியாத அப்பாவியாக
இருந்தால், அவன் குற்றமற்றவன் என்பதை
உணர்த்தியருளும்.
33“சில நேரங்களில் உமது இஸ்ரவேல்
ஜனங்கள் உமக்கு எதிராகப் பாவம் செய்ய
லாம், அவர்களின் பகைவர்கள் அவர்களைத்
தோற்கடிக்கலாம். பிறகு அவர்கள் உம்மைத்
துதிப்பார்கள், இந்த ஆலயத்தில் வந்து ஜெபம்
செய்வார்கள். 34தயவுச் செய்து
பரலோகத்திலிருந்து அவற்றைக் கேளும்.
அவர்களை மன்னித்து நமது நாட்டைப்
பெற்றுக்கொள்ளும்படி உதவும், நீர் இந்த
நாட்டை அவர்களின் முற்பிதாக்களுக்கு
தந்துள்ளீர்.
35“சில வேலைகளில் இவர்கள் உமக்கு
எதிராகப் பாவம் செய்வதினால், நீர்
மழையை நிறுத்திவிடுகிறீர். பிறகு அவர்கள்
இந்த ஆலயத்திற்கு வந்து ஜெபித்து உம்மைத்
துதித்து உமது பேரையும் புகழையும்
பாடுவார்கள். நீர் துன்புறுத்த, அவர்கள்
தமது பாவங்களுக்காக வருந்துவார்கள்.
36தயவுசெய்து பரலோகத்திலிருந்து அவர்
களின் ஜெபத்தைக் கேளும். பிறகு எங்களது
பாவங்களை மன்னியும். ஜனங்களுக்கு
சரியான வழிகளைக் கற்பியும். கர்த்தாவே,
உமது ஜனங்களுக்கு வாரிசுரிமையாகக்
கொடுத்த மண்ணுக்கு மழையை அனுப்பி
வையும்.
37“இந்த பூமி வறண்டு போகலாம்,
உணவுப்பொருட்கள் விளையாமல் போக
லாம், அல்லது ஜனங்களிடம் பெருநோய்
பரவலாம் அல்லது பயிர்கள் புழுப்பூச்சி
களால் அழிக்கப்படலாம் அல்லது பகைவர்
களால் ஜனங்கள் தம் நகரங்களில்
தாக்கப்படலாம் அல்லது ஜனங்களுக்கு நோய்
வரலாம். 38இவற்றில் ஏதாவது ஒன்று
ஏற்பட்டு, ஜனங்களில் ஒவ்வொருவனும்
மனம் மாறவிரும்பி, ஆலயத்தை நோக்கி
தன் கைகளை ஏறெடுத்து ஜெபம் செய்தால்,
39தயவுசெய்து கவனியும். நீர் உமக்குரிய
இடமாகிய பரலோகத்தில் இருந்தாலும்
கவனியும். அவர்களை மன்னித்து உதவி
செய்யும். உமக்கு மட்டுமே மனிதர்கள்
உண்மையாக நினைப்பது தெரியும். எனவே
ஒவ்வொருவரையும் அவரவர் செய்கிறபடி
நடத்தும். 40எங்கள் முற்பிதாக்களுக்காக நீர்
கொடுத்த இந்நாட்டில் நாங்கள் வாழும்வரை
உமக்கு பயந்து நடப்போம்.
41-42“வெளி இடங்களில் உள்ள ஜனங்
களையும் உமது உயர்வையும் பலத்தையும்
அறிவார்கள். இந்த ஆலயத்தில் ஜெபிப்
பதற்காக அவர்கள் வெகுதூரத்திலிருந்து
வருவார்கள். 43பரலோகத்திலிருந்து அவர்
களது ஜெபங்களுக்குச் செவிசாயும். அவர்
கள் கேட்பவற்றை தந்து உதவும். பிறகு
அவர்களும் இஸ்ரவேல் ஜனங்களைப்
போலவே உம்மிடம் பயமும் மரியாதையும்
வைத்திருப்பார்கள். பின் எல்லா இடங்
களிலும் உள்ள ஜனங்களும் உமது நாமத்
தைத் தாங்கிய நான் கட்டியிருக்கிற இந்த
ஆலயத்தை அறிவார்கள்.
44“சில நேரங்களில் உமது ஜனங்களுக்கு
அவர்களது எதிரிகளோடு சண்டையிடுமாறு
நீர் ஆணையிடுவீர். பிறகு உமது ஜனங்கள்
உம்மால் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த நகரத்
திற்கும் நான் உம்மை மகிமைப் படுத்து
வதற்குக் கட்டியிருக்கிற ஆலயத்திற்கும்
திரும்பிவந்து அவர்கள் உம்மிடம் ஜெபம்
செய்வார்கள். 45அப்போது, உம்முடைய
பரலோகத்திலிருந்து அந்த ஜெபங்களுக்கு
செவிசாய்த்து அவர்களுக்கு உதவும்.
46“உமது ஜனங்கள் உமக்கு எதிராகப்
பாவம் செய்வார்கள். நான் இதனை
அறிவேன். ஏனென்றால் ஒவ்வொருவரும்
பாவம் செய்கின்றனர். உமது ஜனங்களின்
மேல் கோபமாக இருப்பீர். பகைவர்களால்
தோற்கடிக்கப்படச் செய்வீர். பகைவர்கள்
அவர்களைக் கைது செய்து தூர நாடு
களுக்குக் கொண்டு போவார்கள். 47அங்கே
உமது ஜனங்கள் நடந்தவற்றை நினைத்துப்
பார்ப்பார்கள். தம் பாவங்களுக்காக வருந்தி
உம்மிடம் ஜெபிப்பார்கள், ‘பாவம் செய்து
உமக்குத் தவறிழைத்துவிட்டோம்’ என்பார்
கள். 48அவர்கள் தொலைவிலுள்ள அந்த
நிலப்பகுதியில் இருப்பார்கள். அவர்களை
அடிமைப்படுத்திய எதிரிகளின் நிலத்தி
லிருந்து முழு இருதயத்தோடும் ஆத்துமா
வோடும் உம்மை நோக்கித் திரும்பினாலும்
அவர்களது முற்பிதாக்களுக்கு நீர் கொடுத்த
நிலத்தை நோக்கி உம்மிடம் ஜெபித்தாலும்,
நீர் தேர்ந்தெடுத்த நகரத்தை நோக்கித்
திரும்பினாலும் நான் உமது நாமத்தால்
கட்டியுள்ள ஆலயத்தை நோக்கித் திரும்பி
னாலும், 49நீர் அவர்களது ஜெபங்களுக்கு
பரலோகத்திலிருந்து செவிசாய்த்து உதவும்.
50உமது ஜனங்களின் பாவங்களை மன்னியும்.
அவர்கள் உமக்கு எதிராக திரும்பியதற்கு
மன்னித்துவிடும். பகைவர்கள் அவர்களிடம்
இரக்கத்துடன் இருக்கச்செய்யும். 51அவர்கள்
உம்முடைய ஜனங்கள் என்பதை மறவாதீர்.
அவர்களை எகிப்திலிருந்து மீட்டு வந்தததை
நினைவுகூரும். சூடான அடுப்பிலிருந்து
அவர்களைக் காப்பாற்றியதைப் போன்ற
செயல் அது!
52“தேவனாகிய கர்த்தாவே, என் ஜெபத்
தையும் இஸ்ரவேல் ஜனங்களின் ஜெபங்
களையும் கேளும். உதவி கேட்கும்
போதெல்லாம் உதவும். 53நீர் அவர்களை

உலகிலுள்ள அனைத்து ஜனங்களிட
மிருந்தும் தேர்ந்தெடுத்தீர். உமது வேலை
யாள் மோசே மூலம் எங்கள் முற்பிதாக்களை
எகிப்திற்கு வெளியே கொண்டுவந்தபோது
நீர் அதை வெளிப்படுத்தினீர்” என்றான்.
54சாலொமோன் இவ்வாறு தேவனிடம்
ஜெபம் செய்தான். அவன் பலிபீடத்திற்கு
முன்னால் முழங்காலிட்டு தன் கைகளை
உயர்த்தி பரலோகத்தை நோக்கி வேண்டி
னான். அவன் தன் வேண்டுதல்களை
முடித்தபிறகு எழுந்து நின்றான். 55பின்
உரத்தக்குரலில் தேவன் இஸ்ரவேல் ஜனங்
களை ஆசீர்வதிக்கும்படி வேண்டினான்.
56சாலொமோன், “கர்த்தரை துதியுங்கள்!
அவரது ஜனங்களுக்கு அவர் வாக்களித்தது
போன்று இளைப்பாறுதல் அளிக்கிற
கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படுங்கள்! கர்த்தர்
தமது ஊழியன் மோசே மூலம் கொடுத்த
வாக்குறுதிகளில் ஒரு வார்த்தை கூட
தவறுவதில்லை. கர்த்தர் அத்தனையையும்
காப்பாற்றுவார்! 57தேவனாகிய கர்த்தர் நமது
முற்பிதாக்களோடு இருந்தது போலவே
நம்மோடும் இருப்பார், கர்த்தர் நம்மை
விட்டு விலகக்கூடாது என்று
ஜெபிக்கிறேன். 58நாம் அவர் பக்கம் திரும்பி
அவரைப் பின்பற்றுவோம். நமது
முற்பிதாக்களுக்கு அவர் கொடுத்த
சட்டங்களுக்கும், முடிவுகளுக்கும்,
கட்டளைகளுக்கும் கீழ்ப்படிவோம், 59நமது
தேவனாகிய கர்த்தர், எனது இந்த
ஜெபங்களையும் வேண்டுகோள்களையும் மற
வாமல் இருப்பார். அவர் இதனை அவரது
ஊழியனுக்கும் அரசனுக்கும் இஸ்ரவேல்
ஜனங்களுக்கும் செய்வார். ஒவ்வொரு நாளும்
செய்யவேண்டும் என்று வேண்டிக்
கொள்கிறேன். 60இவ்வாறு கர்த்தர் செய்து
வந்தால், உலகில் உள்ள ஜனங்கள் அனை
வரும் அவரை உலகின் ஒரே தேவனாகக்
கருதுவார்கள். 61நீங்கள் நமது தேவனாகிய
கர்த்தருக்கு உண்மையோடும் நம்பிக்கை
யோடும் இருக்க வேண்டும். எப்பொழுதும்
அவரைப் பின்பற்றி அவரது கட்டளை
களுக்கும், சட்டங்களுக்கும் கீழ்ப்படிய வேண்
டும். இப்பொழுது போலவே எதிர்
காலத்திலும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்க
வேண்டும்” என்றான்.
62பிறகு சாலொமோன் அரசனும்,
இஸ்ரவேல் ஜனங்களும் கர்த்தருக்கு பலி
களைச் செலுத்தினார்கள். 63 22,000 மாடு
களையும், 1,20,000 ஆடுகளையும் கொன்றனர்.
இவை சமாதானப் பலியாகக் கொடுக்கப்
பட்டன. இவ்வழியில்தான், அரசனும்
இஸ்ரவேலர்களும் ஆலயத்தை கர்த்தருக்கு
உரியதாக ஆக்கினார்கள்.
64அன்று சாலொமோன் ஆலயத்தின்
முற்றத்தை அர்ப்பணித்தான். அவன் தகன
பலி, தானியக் காணிக்கை, விலங்குகளின்
கொழுப்பைக்கொண்டு சமாதானபலி ஆகிய
வற்றைக் கொடுத்தான். சாலொமோன்
இவற்றை ஆலயத்தின் முற்றத்தில் கொடுத்
தான். ஏனென்றால், கர்த்தருக்கு முன்பாக
இருந்த வெண்கல பலிபீடம் அவை
அனைத்தையும் கொள்ளமுடியாத அளவு
சிறியதாக இருந்தது.
65ஆலயத்தில் சாலொமோனும், இஸ்ரவேல்
ஜனங்களும் விடுமுறையைக்* கொண்டாடி
னார்கள். அனைத்து இஸ்ரவேலர்களும்
ஆமாத்தின் எல்லை தொடங்கி, எகிப்தின்
நதிமட்டுமுள்ள ஜனங்களும் அங்கே
இருந்தனர். அவர்கள் ஏழு நாட்கள்
உண்பதும் குடிப்பதும் கர்த்தருடன் சேர்ந்து
மகிழ்வதுமாக இருந்தனர். அவர்கள் மேலும்
7 நாட்கள் இருந்தனர். மொத்தம் 14
நாட்கள் கொண்டாடினர். 66மறுநாள், சாலொ
மோன் ஜனங்களை வீட்டிற்குத் திரும்பச்
சொன்னான். அனைவரும் அவனுக்கு நன்றி
சொல்லிவிட்டு வீட்டிற்குத் திரும்பினார்கள்.
கர்த்தர் தனது ஊழியனான தாவீதிற்கும்
இஸ்ரவேல் ஜனங்களுக்கும் நன்மை
செய்ததால் அனைவரும் மகிழ்ச்சியோடு
இருந்தனர்.

### தேவன் சாலொமோனிடம் மீண்டும் வருதல்

9 இவ்வாறு சாலொமோன் கர்த்தருடைய
ஆலயத்தையும் தனது அரண்மனை
யையும் கட்டி முடித்தான். அவன் கட்ட
விரும்பியவற்றையெல்லாம் கட்டிமுடித்தான்.
2பிறகு கர்த்தர் மீண்டும், அவன் முன்
கிபியோனில் தோன்றியது போல தோன்றி
னார். 3கர்த்தர் அவனிடம், “நான் உன்
ஜெபத்தைக் கேட்டேன். நீ கேட்டவற்றையும்
அறிந்தேன். நீ இந்த ஆலயத்தைக் கட்டினாய்.
நான் இதனைப் பரிசுத்த இடமாக்கினேன்.
எனவே நான் அங்கே என்றென்றும் மகிமை
படுத்தப்படுவேன். எப்பொழுதும் அதைக்
கவனித்து அதைப்பற்றி சிந்தித்துக்கொண்
டிருப்பேன். 4உன் தந்தையைப் போலவே
நீயும் எனக்கு ஊழியம் செய்யவேண்டும்.
அவன் நல்லவனாகவும் உண்மையான
வனாகவும் இருந்தான். நீ என் சட்டங்
களுக்குக் கீழ்ப்படிந்து எனது கட்டளை
களைச் செய்து முடிக்கவேண்டும்.
5“நீ இவ்வாறு செய்துவந்தால், இஸ்ர
வேலரின் அரசன் உன் குடும்பத்தவனாகவே
இருப்பான். இந்த வாக்குறுதியைத்தான்
உனது தந்தையான தாவீதிற்குக் கொடுத்
திருக்கிறேன். நான் அவனிடம், ‘இஸ்ரவேல்
உன் சந்ததியிலிருந்தே எப்பொழுதும்
ஆளப்படும்’ என்று கூறியிருக்கிறேன்.
6-7“ஆனால் நீயோ அல்லது உன் பிள்ளை
களோ என்னைப் பின்பற்றாமல், நான்
உனக்குத் தந்த சட்டங்களுக்கும், கட்டளை
களுக்கும் கீழ்ப்படியாமல், அந்நிய

**விடுமுறை** இது பஸ்காவைக் குறிக்கிறது.

*தெய்வங்களை தொழுதுகொள்வீர்களே
யானால், நான் உங்களுக்குத் தந்த இந்த
நாட்டைவிட்டு வெளியேற்றுவேன். மற்ற
எல்லா தேசங்களின் ஜனங்களும் இஸ்ர
வேலர்களை எண்ணி நகைக்கக்கூடாது.
நான் ஆலயத்தைப் பரிசுத்தமாக்கினேன்.
இந்த இடத்தில் ஜனங்கள் என்னை
மகிமைப்படுத்தலாம். ஆனால் நீங்கள்
எனக்குக் கீழ்ப்படியாவிட்டால், உங்களை
விலக்குவேன். 8இந்த ஆலயம் அழிக்கப்படும்.
இதைப் பார்க்கிறவர்கள் வியப்பார்கள். 'இந்த
நாட்டையும் ஆலயத்தையும் ஏன் கர்த்தர்
இவ்வாறு செய்தார்?' என்பார்கள். 9மற்றவர்
களோ, 'அவர்கள் தமது தேவனாகிய
கர்த்தரை விட்டுவிலகினார்கள். அதனால்
இவ்வாறு ஆயிற்று. அவர்களது முற்பிதாக்
களை அவர் எகிப்திலிருந்து மீட்டார்.
ஆனால் அவர்களோ அந்நிய தெய்வங்களை
நாடினார்கள். அதனால் கர்த்தர் அவர்களுக்கு
இதுபோன்ற தீமைகளைச் செய்தார்'
என்பார்கள்" என்றார்.*

*10சாலொமோனுக்கு கர்த்தருடைய ஆலயத்
தையும் அரண்மனையையும் கட்டிமுடிக்க* 20
*ஆண்டுகள் ஆயின. 11அதற்குப் பின்
சாலொமோன் ஈராமுக்கு கலிலேயாவில்*
20 *நகரங்களைக் கொடுத்தான். காரணம்
அவன் ஆலயத்தையும் அரண்மனையும்
கட்ட உதவிச்செய்தான். சாலொமோனுக்குத்
தேவையான கேதுரு மரங்களையும் தேவ
தாரு மரங்களையும் தங்கத்தையும் கொடுத்து
வந்தான். 12எனவே, தீரு என்னும் நகரில்
இருந்து பயணப்பட்டு சாலொமோன்
கொடுத்த நகரங்களை எல்லாம் ஈராம்
பார்வையிட்டான். அப்போது அவன்
திருப்தியடையவில்லை. 13ஈராம், "என்
சகோதரனே, நீ எத்தகைய நகரங்களைக்
கொடுத்திருக்கிறாய்?" என்று கேட்டான்.
ஈராம் மன்னன் அதற்கு காபூல்* என்று
பேரிட்டான். இப்பொழுது அது அவ்வாறே
அழைக்கப்படுகிறது. 14ஈராம்* 9,000 *பவுண்டு
தங்கத்தை ஆலயம் கட்ட சாலொமோனுக்கு
அனுப்பியிருக்கிறான்.*

*15சாலொமோன் ஆலயத்தையும் அரண்
மனையையும் கட்ட அடிமைகளை
கட்டாயப்படுத்தினான். மேலும் அவர்
களைப் பயன்படுத்தி பலவற்றைக் கட்டி
னான். அவன் மில்லோவைக் கட்டினான்.
எருசலேம் நகரைச்சுற்றி ஒரு சுவரையும்
பின்னர் ஆத்சோரையும், மெகிதோவையும்,
கேசேரையும் கட்டினான்.*

*16முன்பு, எகிப்து மன்னன் கேசேரைச்
சண்டையிட்டு எரித்துவிட்டான். அங்கு
வாழ்ந்த கானானியரையும் கொன்றான்.
சாலொமோன் பார்வோன் மன்னனின்
மகளையும் மணந்துக்கொண்டான். எனவே
திருமணப்பரிசாக இந்நகரத்தைச் சாலொ
மோன் பெற்றுக்கொண்டான். 17சாலொ
மோன் அந்நகரை மீண்டும் கட்டினான்.
அவன் கீழ்ப்பெத்தொரோனையும் கட்டி
முடித்தான். 18மேலும் பாலாத், பாலை
வனத்தில் உள்ள தத்மோரையும் 19தன்
தானியங்களைச் சேகரித்துவைத்த நகரங்
களையும் தன் இரதங்கள் மற்றும் குதிரை
களை வைத்திருக்கும் நகரங்களையும் அவன்
கட்டினான். அவன் எருசலேம், லீபனோன்
மற்றும் அவனது ஆட்சிக்குட்பட்ட இடங்கள்
அனைத்திலும் தான் விரும்பிய
வற்றையெல்லாம் கட்டினான்.*

*20அந்நாட்டில் இஸ்ரவேலர் அல்லாதாரும்
வாழ்ந்தனர். அவர்கள் எமோரியர், எத்தியர்,
பெரிசியர், ஏவியர், எபூசியர் ஆகியோ
ராகும். 21இஸ்ரவேலர்களால் சிலர்களை
அழிக்கமுடியவில்லை. ஆனால் சாலொ
மோன் அவர்களை அடிமைகள்போல
வேலைசெய்ய கட்டாயப்படுத்தினான், அவர்
கள் இன்றும் அடிமைகளாக இருக்கின்றனர்.
22சாலொமோன் இஸ்ரவேலர்களை அடிமை
யாக்கவில்லை. இஸ்ரவேலர்கள் வீரர்களா
கவும், அரசு அதிகாரிகளாகவும், தலைவர்
களாகவும், இரதஏவலர்களாகவும் இருந்தனர்.*

*23சாலொமோனின் திட்டக்குழுவில்* 550
*மேற்பார்வையாளர்கள் இருந்தனர். இவர்கள்
வேலைக்காரர்களின் எஜமானர்கள். 24பார்
வோன் மன்னனின் மகள் தாவீது நகரத்
திலிருந்து சாலொமோன் புதிதாகக் கட்டிய
அரண்மனைக்கு வந்தாள். பிறகு சாலொ
மோன் மில்லோவைக்* கட்டிமுடித்தான்.*

*25ஒவ்வொரு ஆண்டும் மூன்றுமுறை
சாலொமோன் பலிபீடத்தில் சர்வாங்க தகன
பலிகளையும், சமாதான பலிகளையும்
செலுத்தினான். இது சாலொமோனால்
கர்த்தருக்காகக் கட்டப்பட்ட பலிபீடம்.
அவன் கர்த்தருக்கு முன் நறுமணப் பொருட்
களை எரித்தான். ஆலயத்திற்குத் தேவை
யான பொருட்களையும் கொடுத்துவந்தான்.*

*26சாலொமோன் அரசன் எசியோன்
கேபேரிலே கப்பங்களைச் செய்வித்தான்.
அந்நகரம் ஏலோத்துக்கு அருகில் செங்
கடலின் கரையில் ஏதோம் நாட்டில்
இருந்தது. 27ஈராம் அரசனின் ஆட்களில்
சிலருக்குக் கடல் பற்றிய அறிவு அதிகமாக
இருந்தது. அவர்களை அவன் சாலொமோ
னிடம் அனுப்பி கப்பற்படையில் பணி
புரியச்செய்தான். 28சாலொமோனின் கப்பல்
கள் ஒப்பீருக்குப் போனது. அங்கிருந்து*
31,500 *பவுண்டு தங்கத்தைக் கொண்டு
வந்தது.*

---

**காபூல்** *இந்த பெயர் எபிரெய மொழியில் "பயனற்றது" என்ற பொருள் உள்ள வார்த்தையை போலுள்ளது.*

**மில்லோ** *மில்லோ என்பது எருசலேமின் தென்கிழக்கில் உள்ள ஆலயப் பகுதியில் எழுப்பட்ட மேடையைக் குறித்தது.*

### சேபாவின் அரசி சாலொமோனைப் பார்க்க வருதல்

10 சேபாவின் அரசி சாலொமோனின் புகழைப்பற்றி கேள்விப்பட்டாள்.
எனவே கடினமான கேள்விகள் மூலம்
அவனைச் சோதிக்கவந்தாள். 2ஏராளமான
வேலைக்காரர்களோடு அவள்
எருசலேமுக்குப் பயணம் செய்தாள்.
ஏராளமான இரத்தினங்களை சுமக்கிற
ஒட்டகங்களையும், மணப் பொருட்களையும்,
நகைகளையும் பொன்னையும்
சுமந்துவந்தாள். அவள் சாலொமோனைச்
சந்தித்து தனக்குத்தெரிந்த பல வினாக்களைக்
கேட்டாள். 3சாலொமோன் அனைத்துக்கும்
விடைசொன்னான். எந்தக் கேள்வியும்
அவனுக்குப் பதிலளிக்க கஷ்டமாக இல்லை.
4அவள் சாலொமோனிடம் அறிவுத்திறனைக்
கண்டுகொண்டாள். அவன் கட்டிய அரண்
மனையின் அழகையும் பார்த்தாள். 5அரச
னின் மேஜையில் இருந்த உணவுப் பொருட்
களையும் பார்த்தாள். அவள் அதிகாரிகளின்
கூட்டத்தையும் பார்வையிட்டாள். அரண்
மனையில் வேலைக்காரர்களும் நன்றாக
உடை அணிந்திருப்பதைக் கவனித்தாள்.
அவள் ஆலயத்தில் அவன் அளித்த விருந்து
களையும் பலிகளையும் பார்த்தாள். இவை
யெல்லாம் உண்மையில் அவளுக்கு வியப்
பை உண்டாக்கி 'அவளது பெருமூச்சை
வரவழைத்தது!'
6எனவே அரசி சாலொமோனிடம், "நான்
எனது நாட்டிலே உங்கள் அறிவைப்
பற்றியும் உங்கள் செயல்களைப் பற்றியும்
பலவாறு கேள்விப்பட்டேன்! அத்தனையும்
உண்மை. 7நான் இங்கே வந்து என்
சொந்தக் கண்களால் காணும்வரை இவற்றை
நம்பாமல் இருந்தேன். இப்போது கேள்விப்
பட்டதையெல்லாம் கண்ணால் பார்த்து
விட்டேன். ஜனங்கள் சொன்னதைவிட
உங்கள் அறிவும் செல்வமும் மிகுதியாகும்.
8உங்கள் மனைவிகளும்* வேலைக்காரர்களும்
கொடுத்துவைத்தவர்கள்! அவர்கள் உங்க
ளுக்கு பணிவிடை செய்து உங்கள் அறிவை
ஒவ்வொரு நாளும் கேட்டு வருகிறார்கள்!
9உங்கள் தேவனாகிய கர்த்தரைத் துதிக்
கிறேன்! உங்களை இஸ்ரவேலின் அரச
னாக்கியதில் அவர் திருப்தியடைவார்.
தேவனாகிய கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களை
பெரிதும் நேசிக்கிறார். அதனால்தான்
உங்களை அவர்களின் அரசன் ஆக்கினார்.
நீங்கள் சட்டங்களைப் பின்பற்றி ஜனங்
களிடம் அன்பாய் இருக்கிறீர்கள்" என்றாள்.
10பிறகு அரசி சாலொமோனுக்கு 9,000
பவுண்டு பொன்னைக் கொடுத்தாள். அவள்
மேலும் மணப்பொருட்களையும் நகை
களையும் கொடுத்தாள். அதுவரை இஸ்ர
வேலில் யாரும் பெற்றிராத அளவிற்கு
சாலொமோனுக்கு மணப் பொருட்களைக்
கொடுத்தாள்.
11ஈராமின் கப்பல்கள் ஓப்பீரிலிருந்து
பொன்னைக் கொண்டுவந்தன. அவை
சிறப்புமிக்க மரத்துண்டுகளையும் நகை
களையும் கொண்டுவந்தன. 12சாலொமோன்
இம்மரத்தடிகளை ஆலயத்திலும் அரண்மனை
யிலும் உதவிக்காகப் பொருத்தினான்.
அவற்றை இசைக்கருவிகள் செய்யவும் பயன்
படுத்தினான். இஸ்ரவேலுக்கு இதுவரை
எவரும் இதுபோன்ற மரத்தைக் கொண்டு
வந்ததில்லை, இதுவரைப் பார்த்ததுமில்லை.
13பிறகு அரசன் சாலொமோன் ஒரு
அரசன் இன்னொரு நாட்டு அரசனுக்கு
கொடுப்பது போன்று சேபா நாட்டு
அரசிக்கு பரிசுகளைக் கொடுத்தான். மேலும்
அவள் விருப்பப்படி கேட்டதையெல்லாம்
கொடுத்தான். அதன்பின், அரசியும் வேலைக்
காரர்களும் தம் நாட்டுக்குத் திரும்பிப்
போனார்கள்.
14ஒவ்வொரு ஆண்டும் சாலொமோன்
அரசன் 79,920 பவுண்டு தங்கத்தைப்
பெற்றான். 15அவன் தர்ஷீசிலிருந்து பெற்ற
தங்கத்திற்கு மேலாக அவன் வியாபாரி
களிடம் இருந்தும், வர்த்தகர்களிடமிருந்தும்,
அரேபிய அரசர்களிடமிருந்தும், நாட்டு
ஆளுநர்களிடமிருந்தும் பொன்னைப்
பெற்றான்.
16சாலொமோன் அரசன் அடித்தப்
பொன்தகட்டால் 200 கேடயங்களைச்
செய்தான். ஒவ்வொன்றும் 15 பவுண்டு
தங்கமுடையதாக இருந்தது. 17அதோடு 300
சின்ன கேடயங்களையும் செய்தான். அது
ஒவ்வொன்றும் 4 பவுண்டு எடையுள்ளது.
அரசன் அவற்றை "லீபனோனின் காடு"
என்ற கட்டிடத்தில் வைத்தான்.
18சாலொமோன் அரசன் ஒரு தந்த
சிங்காசனத்தைச் செய்தான். அதனைப்
பொன் தகட்டால் செய்தான். 19அதில்
ஏறிச்செல்ல 6 படிகள் இருந்தன. அதன்
பின் பகுதியின் உச்சியில் வட்டமாக
இருந்தது. இருபக்கங்களிலும் கை வைப்பதற்
கான பிடிமானங்கள் இருந்தன. 20அதன்
அருகில் இரண்டு சிங்கங்கள் இருந்தன.
ஆறு படிகளின் மேலும் இரண்டு
பக்கத்திலும் 12 சிங்கங்கள் நின்றன. எந்த
அரசாங்கத்திலும் இதுபோல் அமைக்கப்
படவில்லை. 21அரசனின் பானபாத்திரங்கள்
பொன்னால் செய்யப்பட்டிருந்தது. "லீபனோ
னின் காடு" எனும் மாளிகை பொருட்கள்
எல்லாம் பசும்பொன்னால் செய்யப்
பட்டிருந்தன. எதுவும் வெள்ளியால் செய்யப்
படவில்லை. காரணம் அவனது காலத்தில்
வெள்ளி ஒரு பொருட்டாக மதிக்கப்
படவில்லை!
22அரசனுக்கு வியாபாரத்தின் பொருட்டு

---

**மனைவிகள்** இது தொன்மையான கிரேக்க மொழிப்பெயர்ப்பிலிருந்து வருகிறது. எபிரெய மொழியில் "ஆட்கள்" என்று இருக்கிறது.

*வேறு தேசங்களுக்கு அனுப்பப்பட்ட பல
தர்ஷீசின் கப்பல்களும் இருந்தன. இவைய
னைத்தும் ஈராமின் கப்பல்கள், மூன்று
ஆண்டுக்கு ஒருமுறை அவை பொன்,
வெள்ளி, யானைத்தந்தம், விலங்குகள்
போன்றவற்றை பல்வேறு நாடுகளில் இருந்து
கொண்டுவரும்.*

23 *பூமியிலே சாலொமோன் மிகப் பெரிய
அரசனாக விளங்கினான். அவன் மற்றவர்
களைவிட செல்வத்திலும் அறிவிலும்
சிறந்து விளங்கினான்.* 24 *எல்லா இடங்களி
லுள்ள ஜனங்கள் சாலொமோனைப் பார்க்க
விரும்பினார்கள். தேவன் கொடுத்த
ஞானத்தை அவன் மூலம் கேட்க விரும்பி
னார்கள்.* 25 *ஒவ்வொரு ஆண்டும் ஜனங்கள்
அரசனைப் பார்க்க வந்தனர். ஒவ்வொரு
வரும் அவனுக்குப் பரிசுகளையும் கொண்டு
வந்தனர். அவர்கள் தங்கம், வெள்ளி, துணி,
ஆயுதம், மணப்பொருள், குதிரை, கோவேறு
கழுதை எனக்கொண்டு வந்தனர்.*

26 *எனவே சாலொமோனுக்கு ஏராளமான
இரதங்களும் குதிரைகளும் இருந்தன.
அவனிடம் 1,400 இரதங்களும், 12,000
குதிரைகளும் இருந்தன. இதற்கென்று ஒரு
தனி நகரத்தையே உருவாக்கினான். அவன்
சில இரதங்களை எருசலேமில் வைத்திருந்
தான்.* 27 *அவன் இஸ்ரவேலைச் செல்வம்
கொழிக்கச்செய்தான். அவன் நாட்டில்
வெள்ளியானது பாறைகளைப்போல பொது
வாகக் கிடந்தது, கேதுரு மரங்களை மலைப்
பகுதியில் உள்ள காட்டத்தி மரங்களைப்
போல மிகுதியாக வளர்ந்திருந்தன.*
28 *எகிப்திலிருந்தும்குவையிலிருந்தும் அரசன்
சாலொமோன் குதிரை களை
வரவழைத்தான். வியாபாரிகள் அவற்றை
கொண்டு வந்தனர்.* 29 *எகிப்தி லிருந்து
கொண்டு வரப்பட்ட ஒரு இரதம் 15
பவுண்டு வெள்ளியும், ஒரு குதிரை 3 3/4
பவுண்டு வெள்ளியும் மதிப்புடையதாக
இருந்தது. சாலொமோன் இரதங்களையும்,
குதிரைகளையும் ஏத்தியர் மற்றும் சீரியர்
களுக்கு விற்பனை செய்தான்.*

### சாலொமோனும் அவனது பல மனைவியரும்

11 *சாலொமோன் அரசன் பெண்களை
நேசித்தான்! அவன் இஸ்ரவேலில்
உள்ள பெண்களை மட்டுமல்லாமல் பார்
வோனின் மகள், ஏத்தியர், மோவாப்,
அம்மோன், ஏதோம், சீதோன் எனப்
பலநாட்டுப் பெண்களை விரும்பினான்.*
2 *முன்பு, கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களிடம்,
“அடுத்த நாட்டு பெண்களை மணந்து
கொள்ளாதீர்கள். அவ்வாறு செய்தால்,
அவர்களின் தெய்வங்களை நீங்கள் வணங்க
வேண்டியது வரும்” என்றார். ஆனால்,
சாலொமோன் இதுபோன்ற பெண்களை
நேசித்தான்.* 3 *சாலொமோனுக்கு 700 மனைவி
யர் இருந்தனர். (அவர்கள் அனைவரும்
பிற நாட்டுத் தலைவர்களின் மகள்கள்
ஆவார்கள்.) இதுமட்டுமன்றி அவனுக்கு 300
அடிமைப் பெண்களும் மனைவியரைப்
போன்று இருந்தனர். அவர்கள் அவனை
தேவனுடைய வழியிலிருந்து திருப்பி
னார்கள்.* 4 *அவன் முதியவன் ஆனதும்,
அவர்கள் அவனை அந்நிய தெய்வங்களை
பின்பற்றும்படிச் செய்தனர். அவனது தந்தை
தாவீதைப் போன்று சாலொமோன்
முழுமையாக கர்த்தரைப் பின்பற்றவில்லை.*
5 *சாலொமோன் அஸ்தரோத்தை* * *தொழுது
கொண்டான். இது சீதோனியரின் தெய்வ
மாகும். அவன் மில்கோமையும் தொழுது
கொண்டான். இது அம்மோனியரின்
அருவருப்பான விக்கிரகமாகும்.* 6 *எனவே
சாலொமோன் கர்த்தருக்கு முன் தவறு
செய்தான். அவன் தன் தந்தை தாவீதைப்
போன்று கர்த்தரை முழுமையாகப் பின்
பற்றவில்லை.*

7 *சாலொமோன் காமோஸ் என்னும்
பொய்த் தெய்வத்தை தொழுதுகொள்ள ஒரு
இடத்தைக் கட்டினான். இது மோவா
பியரின் அருவருப்பான விக்கிரகம் ஆகும்.
இவ்விடத்தை எருசலேமுக்கு எதிரில் உள்ள
மலைமீது கட்டினான். அதே மலையில்,
மோளோகுக்கும் ஆலயம் கட்டினான். இது
அம்மோன் ஜனங்களின் அருவருப்பான
தோற்றமுடைய விக்கிரமாகும்.* 8 *சாலொ
மோன் இதுபோலவே மற்ற மனைவியரின்
நாட்டுத் தெய்வங்களுக்கும் செய்தான்.
அவனது மனைவியர் அத்தெய்வங்களுக்கு
நறுமணப் பொருட்களை எரித்து, பலியிட்டு
வந்தனர்.*

9 *இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்தரை
பின்பற்றுவதிலிருந்து அவன் விலகிப்
போனான். எனவே, கர்த்தர் சாலொமோன்
மீது கோபங்கொண்டார். கர்த்தர் அதற்கு
முன்பு அவனிடம் இருமுறை தோன்றினார்.*
10 *அவர் அவனிடம் அந்நிய தெய்வங்களை
பின்பற்றக்கூடாது என்று கூறினார். ஆனால்
அவன் கர்த்தருடைய கட்டளைக்குக்
கீழ்ப்படியவில்லை.* 11 *எனவே கர்த்தர் சாலொ
மோனிடம், “என்னோடு செய்த உடன்படிக்
கையை மீற முடிவெடுத்துவிட்டாய். நீ
எனது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய
வில்லை. எனவே உனது அரசை
உன்னிடமிருந்து விலக்குவேன் என்று
வாக்குறுதிக் கொடுக்கிறேன். அதனை உன்
வேலைக்காரர்களில் ஒருவருக்குக் கொடுப்
பேன்.* 12 *ஆனால் நான் உன் தந்தையான
தாவீதை நேசித்தேன். எனவே நீ உயிரோடு
இருக்கும்வரை இவ்வரசை உன்னிடமிருந்து
பறித்துக்கொள்ள மாட்டேன். உன் மகன்*

---

***அஸ்தரோத்*** *இந்தப் பொய் பெண்தெய்வம் மக்களுக்குப் பிள்ளைப்பேறு அளிக்கும் என்று கானானியர்கள் நினைத்தனர். அவள் அவர்களின் அன்பிற்கும் போருக்குமான பெண்தெய்வம்.*

அரசனாகும் வரை உனக்காகக் காத்திருப்
பேன். பிறகு இதனை அவனிடமிருந்து
எடுத்துக்கொள்வேன். 13இதுவரை, நான்
உனது மகனிடமிருந்து ராஜ்யத்தை
விலக்கியதில்லை. அவன் ஆள்வதற்கு நான்
அவனுக்கு ஒரு கோத்திரத்தை விட்டு
விடுகிறேன். இதனை நான் தாவீதிற்காகச்
செய்கிறேன். அவன் ஒரு நல்ல ஊழியன்.
அதோடு எருசலேமுக்காகவும் இதனைச்
செய்கிறேன். இது என்னால் தேர்ந்தெடுக்கப்
பட்ட நகரம்!" என்றார்.

### சாலொமோனின் பகைவர்கள்

14அதே காலத்தில், ஏதோமியனாகிய
ஆதாத்தை சாலொமோனின் பகைவனாக
கர்த்தர் உருவாக்கினார். அவன் ஏதோம்
அரசனின் குடும்பத்தைச் சார்ந்தவன். 15இப்
பகைமை இவ்வாறுதான் வளர்ந்தது: முன்பு
தாவீது ஏதோமைத் தோற்கடித்தான்.
தாவீதின் படையில் யோவாப் தளபதியாக
இருந்தான். அவன் மரித்தவர்களைப் புதைப்
பதற்காக ஏதோமுக்குச் சென்றான். யோவாப்
அப்போது அங்கே உயிரோடு இருந்தவர்
களையும் கொன்றுபோட்டான். 16யோவாப்
பும் மற்ற இஸ்ரவேலர்களும் ஏதோமில் 6
மாதங்கள் இருந்தனர். அப்போது அங்கிருந்த
அனைத்து ஆண்களையும் கொன்றுவந்தனர்.
17ஆனால் அப்போது ஆதாத் சிறுவனாக
இருந்தான். அவன் எகிப்துக்கு ஓடிப்
போனான். அவனுடைய தந்தையின்
வேலைக்காரர்களும் அவனோடு போனார்
கள். 18அவர்கள் மீதியானை விட்டு பாரானுக்
குச் சென்றனர். பாரானில் மேலும் சிலர்
சேர்ந்து கொண்டார்கள். பின் அனைவரும்
எகிப்துக்குப் போய் பார்வோன் மன்ன
னிடம் உதவி கேட்டனர். மன்னன்
அவனுக்கு ஒரு வீடும், கொஞ்ச நிலமும்
கொடுத்தான். இன்னும் பல உதவிகளையும்
உணவும் கொடுத்து வந்தான்.
19பார்வோன் ஆதாத்தை மிகவும் விரும்பி,
திருமணமும் செய்து வைத்தான். அவள்
பார்வோனின் மனைவியின் தங்கை ஆவாள்.
அவன் மனைவியோ தாப்பெனேஸ் என்னும்
அரசகுமாரி. 20ஆதாத்துக்கு கேனுபாத்
என்னும் மகன் பிறந்தான். தாப்பெனேஸ்
அவனைத் தன் குழந்தைகளோடு அரண்
மனையில் வளரவிட்டாள்.
21தாவீது, மரித்துப்போனதை ஆதாத்
எகிப்தில் அறிந்தான். யோவாப் தளபதியும்,
மரித்துப்போனதை அறிந்துக்கொண்டான்.
எனவே அவன் பார்வோனிடம், "நான்
என் சொந்த நாட்டுக்குப்போக அனுமதி
யுங்கள்" என்றான்.
22ஆனால் பார்வோன், "உனக்குத் தேவை
யான அனைத்தையும் இங்கே உனக்குக்
கொடுத்திருக்கிறேன்! அவ்வாறிருக்க ஏன்
உன் நாட்டிற்குப் போகவிரும்புகிறாய்?"
என்று கேட்டான்.

ஆனால் ஆதாத்தோ, "தயவுசெய்து, என்
னைப் போக அனுமதியுங்கள்" என்றான்.
23சாலொமோனுக்கு எதிராக இன்னொரு
பகைவனை உருவாக்கவும் தேவன் தாமே
காரணமானார். அவன் பெயர் ரேசோன்,
இவன் எலியாதாவின் மகன். இவன் தன்
எஜமானிடமிருந்து ஓடிப்போனான். இவனது
எஜமானன் சோபாவின் அரசனான, ஆதா
தேசர். 24தாவீது சோபாவைத் தோற்கடித்த
பிறகு, ரேசோன் சில வீரர்களைச் சேர்ந்து
அவர்களுக்கு தலைவன் ஆனான். அவன்
தமஸ்குவுக்கு போய் அங்கே தங்கி இருந்
தான். பின் அதன் அரசன் ஆனான்.
25அதோடு ஆராமையும் ஆண்டான். அவன்
இஸ்ரவேலர்களை வெறுத்து, தொடர்ந்து
அவர்களுக்குப் பகைவனாகச் சாலொமோன்
காலம்வரை இருந்தான். ஆதாத்தும் ரேசானும்
இஸ்ரவேலுக்கு தொந்தரவு கொடுக்க ஆரம்
பித்தனர்.
26நேபாத்தின் மகனான யெரோபெயாம்
சாலொமோனின் ஊழியக்காரன். இவன்
எப்பிராயீம் கோத்திரத்தைச் சேர்ந்தவன்.
இவன் சேரேதா ஊரினன். இவன் தாயின்
பெயர் செரூகாள். இவனது தந்தை மரித்துப்
போனான். இவனும் சாலொமோனுக்கு
எதிராக எழும்பினான்.

27யெரோபெயாம் சாலொமோனுக்கு
எதிராக எழும்பிய கதை இதுதான். சாலொ
மோன் தாவீது நகரத்தில் மில்லோவும்
சுவரும் கட்டினான். 28யெரோபெயாம் உறுதி
மிக்கவன். இவன் நல்ல வேலைக்காரன்
என்பதைச் சாலொமோன் அறிந்து
கொண்டான். யோசேப்பின் கோத்திரத்
திலிருந்த வேலைக்காரர்கள் அனைவருக்கும்
இவனைத் தலைவனாக்கினான். 29ஒரு நாள்
யெரோபெயாம் எருசலேமிற்கு வெளியே
பயணம் போனான். சாலையில் அகியா
எனும் சீலோனியனான தீர்க்கதரிசியைச்
சந்தித்தான். அகியா புதிய அங்கியை
அணிந்திருந்தான். இருவரும் தனியாக இருந்
தார்கள். 30அகியா தனது புதிய அங்கியை
எடுத்து 12 துண்டுகளாகக் கிழித்தான்.
31பின் அவன் யெரொபெயாமை நோக்கி,
"உனக்காக இதில் 10 துண்டுகளை எடுத்துக்
கொள். இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்,
'நான் சாலொமோனிடமிருந்து அரசை
விலக்குவேன்' என்று கூறியிருக்கிறார். நான்
உனக்குப் பத்து கோத்திரங்களைத் தருவேன்.
32தாவீதின் குடும்பம் ஒரே ஒரு கோத்திரத்தை
மட்டும் ஆளும்படி செய்வேன். நான் இதனை
தாவீதிற்காகவும் எருசலேமிற்காகவும் செய்கி
றேன். நான் எருசலேமை அனைத்து இஸ்ர
வேல் கோத்திரங்களிலிருந்து தேர்ந்தெடுத்
தேன். 33சாலொமோன் என்னைப் பின்பற்று
வதை விட்டுவிட்டதால் அவனிடமிருந்து
ராஜ்ஜியத்தை எடுக்கப்போகிறேன். அவன்
சீதோனின் பொய் தெய்வமான அஸ்த

ரோத்தையும், மோவாபியரின் பொய்த்
தெய்வமான காமோசையும், அம்மோன்
ஜனங்களின் பொய்த் தெய்வமான மில்கோ
மையும் தொழுதுகொண்டு வருகிறான்.
அவன் தன் தந்தை தாவீதைப் போன்று
வாழவில்லை. அவன் எனது சட்டங்
களுக்கும் கட்டளைகளுக்கும் கீழ்ப்படிய
வில்லை. அவன் நல்ல வழிகளில் இருந்து
விலகிவிட்டான். 34எனவே நான் சாலொ
மோனின் குடும்பத்திலிருந்து அரசை
விலக்குவேன். ஆனால் நான் சாலொ
மோனை அவனது கடைசிகாலம் மட்டும்
அரசனாக இருக்க அனுமதிப்பேன். நான்
இதனை தாவீதிற்காகச் செய்கிறேன். தாவீது
என் எல்லா கட்டளைகளுக்கும் சட்டங்
களுக்கும் கீழ்ப்படிந்ததால் அவனைத்
தேர்ந்தெடுத்தேன். 35ஆனால் நான் சாலொ
மோனின் மகனிடமிருந்து அரசை விலக்கு
வேன். நான் உன்னை, பத்து கோத்திரங்
களை ஆட்சி செய்ய வைப்பேன். நீ
இஸ்ரவேல் முழுவதையும் ஆள்வாய். 36நான்
சாலொமோனின் மகனை ஒரு கோத்திரத்தை
மட்டும் ஆளவிடுவேன். இதன் மூலம்
தாவீதின் சந்ததியார் தொடர்ந்து எருச
லேமில் ஆள்வதாக இருக்கும். நான் எருச
லேமை எனக்காகத் தேர்ந்தெடுத்தேன்.
37ஆனால் உன்னை, உனக்கு விருப்பமான
அனைத்தையும் ஆளும்படி வைப்பேன்.
இஸ்ரவேல் முழுவதையும் நீ ஆளுவாய்.
38நீ என்னைப் பின்பற்றி என் கட்டளை
களுக்குக் கீழ்ப்படிந்தால் உன்னை இவ்வாறு
ஆக்குவேன். நீ தாவீதைப்போன்று சட்டங்
களையும், கட்டளைகளையும் மீறாமல்
நடந்துக்கொண்டால், நான் உன்னோடு
இருப்பேன். நான் உனது குடும்பத்தையும்
தாவீதின் குடும்பத்தைப் போன்று அரச
குடும்பமாகச் செய்வேன். நான் உனக்கு
இஸ்ரவேலைத் தருவேன். 39நான் சாலொ
மோனின் தவறுகளுக்காக தாவீதின் ஜனங்
களைத் தண்டிக்கப்போகிறேன். ஆனால்
அவர்களை என்றென்றைக்கும் தண்டிக்க
மாட்டேன்'" என்றான்.

### சாலொமோனின் மரணம்

40சாலொமோன் யெரொபெயாமைக்
கொல்ல முயன்றான். ஆனால் அவன் எகிப்
துக்கு ஓடிப்போனான். அவன் சீஷாக்
அரசனைச் சந்தித்தான். அவன் சாலொ
மோன் மரிக்கும்வரை அங்கேயே இருந்தான்.
41சாலொமோன் தனது ஆட்சிக்காலத்தில்
மிக உயர்ந்த அறிவுள்ள செயல்களைச்
செய்தான். அவை அனைத்தும் 'சாலொ
மோனின் வரலாறு' என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளது. 42இவன் எருசலேமி
லிருந்து கொண்டு இஸ்ரவேல் முழுவதையும்
40 ஆண்டுகாலம் ஆட்சி செய்தான். 43பின்
சாலொமோன் மரித்ததும், தமது முற்பிதாக்
களோடு அடக்கம் செய்யப்பட்டான். அவன்
அடக்கம் செய்யப்பட்ட இடம் தாவீதின்
நகரமாகும். பிறகு சாலொமோனின் மகன்
ரெகொபெயாம் அரசனானான்.

### ஜனங்களின் போராட்டம்

12 1-2சாலொமோனிடமிருந்து ஓடிப்போன
நேபாத்தின் மகனான யெரொபெயாம்
எகிப்திலேயே இருந்தான். சாலொமோன்
மரித்ததை அறிந்ததும் (சேரதாவுக்குத்)
திரும்பினான், இது எப்பிராயிம் மலைப்
பகுதியில் இருந்தது.

சாலொமோன் அரசன் மரித்து தனது
முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்
பட்டான். அதன் பிறகு அவனது மகனான
ரெகொபெயாம் அரசன் ஆனான். 3இஸ்ரவேல்
ஜனங்கள் அனைவரும் சீகேமுக்குப்
போனார்கள். அவர்கள், ரெகொபெயாமை
அரசனாக்க விரும்பினார்கள். ரெகொ
பெயாமும் சீகேமுக்குச் சென்றான். 4ஜனங்கள்
அவனிடம், "உங்கள் தந்தை நாங்கள்
கடுமையாக உழைக்கும்படி கட்டாயப்
படுத்தினார். இப்போது, அவற்றை எளிதாக்க
வேண்டும். உங்கள் தந்தையைப்போல்
கடுமையான வேலைகளைக் கொடுக்க
வேண்டாம். அவ்வாறானால் நாங்கள் உங்க
ளுக்குச் சேவை செய்வோம்" என்றனர்.
5அதற்கு ரெகொபெயாம், "மூன்று நாட்
களில் திரும்பி வாருங்கள். நான் உங்க
ளுக்குப் பதில் சொல்வேன்" என்றான்.
பிறகு ஜனங்கள் திரும்பிச் சென்றார்கள்.
6சாலொமோன் உயிரோடு இருந்தபோது
அவனுக்கு யோசனை சொல்வதற்காகச் சில
முதியவர்கள் இருந்தனர். அவர்களிடம்,
ரெகொபெயாம் என்ன செய்வது என்று
கேட்டான். சாலொமோன், "இந்த ஜனங்
களுக்கு நான் என்ன பதில் சொல்ல
வேண்டும்?" என்று கலந்து ஆலோசித்தான்.
7அதற்கு மூப்பர்கள், "இன்று நீ
அவர்களுக்குச் சேவகனானால், பிறகு அவர்
களும் உண்மையான சேவகர்களாக உனக்கு
இருப்பார்கள். அவர்களுடன் இரக்கத்தோடு
பேசினால், பின் அவர்கள் உனக்காக
எப்பொழுதும் வேலை செய்வார்கள்"
என்றனர்.
8ஆனால் அந்தப் புத்திமதியை அவன்
கேட்கவில்லை. அவன் தன் இளைய நண்பர்
களைக் கேட்டான். 9அவன் அவர்களிடம்,
"ஜனங்கள் என்னிடம் வந்து, 'உங்கள்
தந்தையைப்போன்று கடினமான வேலை
யைக் கொடுக்க வேண்டாம். எளிதான
வேலையைக் கொடுங்கள்' என்கின்றனர்.
நான் என்ன பதில் சொல்ல வேண்டும் என
நினைக்கிறீர்கள்? நான் என்ன சொல்ல
வேண்டும்?" என்று கலந்து ஆலோசித்தான்.
10அரசனிடம் இளைய நண்பர்களோ,
"சிலர் உன்னிடம் வந்து, 'உங்கள் தந்தை
கடினமான வேலையைக் கொடுத்தார். நீங்கள்
எளிதான வேலையைக் கொடுங்கள்'

என்கின்றனர். நீ அவர்களிடம், ‘என் சிறிய
விரல் தந்தையின் முழு சரீரத்தைவிட
பலமிக்கது என்று சொல்ல வேண்டும்.
11என் தந்தை கடினமான வேலையைச்
செய்யும்படி கட்டாயப்படுத்தினார். நான்
அதை விட கடினமான வேலையைத்
தருவேன்! அவர் சாட்டை மூலம் கட்டாயப்
படுத்தினார். ஆனால் நான் அடித்து
கட்டாயப்படுத்துவேன். எனது அடிகள்
தேளின் கொடுக்கைப் போலிருக்கும்’ என்று
சொல்!” என்றனர்.
12ரெகொபெயாம் மூன்று நாட்களில்
திரும்பி வரும்படி ஜனங்களிடம் கூறியிருந்
தான். எனவே மூன்று நாட்களுக்குப் பிறகு
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும் ரெகொ
பெயாமிடம் வந்தனர். 13அப்போது அவர்
களிடம், அரசன் கடுமையாகப் பேசினான்.
அவன் மூப்பர்களின் ஆலோசனையைக்
கேட்டுக் கொள்ளவில்லை. 14அவன் தன்
இளைய நண்பர்கள் சொல்லச் சொன்ன
தையே சொன்னான். அவன் அவர்களிடம்,
“என் தந்தை கடின வேலை செய்யும்படி
கட்டாயப்படுத்தினார். நான் அதைவிடவும்
கடின வேலைகளைத் தருவேன். என்
தந்தை உங்களைச் சவுக்கால் அடித்தார்.
நானோ தேள் கடியைப்போல வேதனை
யடையுமாறு அடிப்பேன்!” என்றான்.
15எனவே ஜனங்கள் விரும்பியது போன்று
அரசன் செய்யவில்லை. கர்த்தர்தாமே
இவ்வாறு நிகழும்படி செய்தார். நேபாத்தின்
மகனான யெரோபெயாமுக்குச் செய்த
வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக
கர்த்தர் இவ்வாறு செய்தார். கர்த்தர்
அகியாவின் மூலமாக இந்த வாக்குறுதியைச்
செய்தார். அகியா சீலோ நாட்டைச்
சேர்ந்தவர்.

16இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும் புதிய
அரசன் தங்கள் வேண்டுகோளைக் கேட்டுக்
கொள்ளவில்லை என்று எண்ணினார்கள்.
எனவே அவர்கள் அரசனிடம், “நாங்கள்
தாவீதின் குடும்பத்தினர்கள் தானா? இல்லை.
ஈசாயின் நிலத்தில் எங்களுக்குப் பங்கிருக்
கிறதா? இல்லை! எனவே இஸ்ரவேல்
ஜனங்கள், தம்தம் சொந்த நிலத்திற்கு
திரும்பிப் போகட்டும். தாவீதின் மகன்
தமது ஜனங்களை மட்டும் ஆளட்டும்!” என்று
கூறினர். எனவே அவர்கள் தங்கள்
வீட்டிற்குப் போனார்கள். 17ஆனால் ரெகொ
பெயாம் யூதா நகரங்களில் வாழும் இஸ்ர
வேலர்கள் முழுவதையும் ஆண்டு வந்தான்.
18அதோனிராம் என்பவன் வேலைக்
காரர்களின் பொறுப்பாளனாக இருந்தான்.
அரசன் அவனை ஜனங்களிடம் பேசிப்பார்க்
குமாறு அனுப்பினான். ஆனால் ஜனங்கள்
அவனைக் கல்லெறிந்து கொன்றனர். பின்
அரசன் தனது இரதத்தில் ஏறி
எருசலேமிற்குத் தப்பித்து ஓடினான்.
19இவ்வாறு இஸ்ரவேல் ஜனங்கள் தாவீதின்
குடும்பத்திற்கு எதிராகப் போரிட்டனர்.
அவர்கள் இன்றும் தாவீதின் குடும்பத்திற்கு
எதிராக உள்ளனர்.
20யெரொபெயாம் திரும்பி வருவதை
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும் அறிந்
தனர். எனவே ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு
செய்து அவனை இஸ்ரவேல் முழுமைக்கும்
அரசனாக்கினார்கள். யூதாவின் கோத்திரத்
தினர் மட்டும் தாவீதின் குடும்பத்தைப்
பின்பற்றுகிறவர்களாக இருந்தனர்.
21ரெகொபெயாம் எருசலேமுக்குப் போய்
யூதா மற்றும் பென்யமீன் கோத்திரத்தாரை
ஒன்று சேர்த்தான். இது 1,80,000 பேர்
கொண்ட படையாயிற்று. அரசன் இஸ்ர
வேல் ஜனங்களுக்கு எதிராகச் சண்டை
போட விரும்பினான். தனது ஆட்சி பீடத்
தைத் திரும்பப்பெற விரும்பினான்.
22ஆனால் கர்த்தர் சேமாயா என்ற
தீர்க்கதரிசியோடு பேசினார். கர்த்தர், 23“நீ
யூதாவின் அரசனான, சாலொமோனின்
மகன், ரெகொபெயாமிடம் கூறு. அத்துடன்
யூதா, மற்றும் பென்யமீன் ஜனங்களிடமும்
கூறு. 24நீ அவர்களிடம், ‘உனது சகோதரர்
களோடு சண்டை போடவேண்டாம் என்று
கர்த்தர் சொல்கிறார். ஒவ்வொருவரும்
வீட்டிற்குப் போங்கள். நான் இவ்வாறு
நிகழும்படி செய்தேன்!’ என்று சொல்”
என்றார். எனவே அரசனின் படையிலுள்ள
அனைவரும் கர்த்தருடைய கட்டளைக்கு
அடிப்பணிந்து வீட்டிற்குத் திரும்பினார்கள்.
25சீகேம் என்பது எப்பிராயீம் நாட்டின்
மலைநகரம். அதனை அரசன் யெரொ
பெயாம் பலம்பொருந்தியதாக ஆக்கி அங்கே
வாழ்ந்தான். பின்னர் பெனூவேலைப்
பலமாக்கி அங்கே வாழ்ந்தான்.
2627யெரொபெயாம் தனக்குள்ளேயே,
“ஜனங்கள் எருசலேமில் தொடர்ந்து கர்த்தரு
டைய ஆலயத்திற்குக் காணிக்கைகளை
அளிக்கச் செல்வார்களேயானால், பின்
அவர்கள் தாவீதின் குடும்பத்தால் ஆளப்பட
வேண்டும் என விரும்புவார்கள். அவர்கள்
ரெகொபெயாமைப் பின்பற்றி, அவனை
மீண்டும் அரசனாக்குவார்கள். என்னைக்
கொன்றுவிடுவார்கள்” என எண்ணினான்.
28எனவே அவன் தன்னைச் சார்ந்தவர்
களோடு கலந்து யோசித்தான். அவன்
இரண்டு தங்க கன்றுக்குட்டிகளைச் செய்
தான். ஜனங்களிடம், “இனிமேல் நீங்கள்
எருசலேம் போய் தொழுதுகொள்ள வேண்
டாம். உங்களை எகிப்திலிருந்து வெளியே
கொண்டுவந்த தெய்வங்கள் இவைகள்தான்”
என்றான். 29பின்னர் பெத்தேலில் ஒரு
கன்றுக்குட்டியும், தாண் நகரில் ஒரு
கன்றுக்குட்டியும் வைத்தான். 30ஜனங்கள்
பெத்தேலுக்கும் தாணுக்கும் போய் கன்றுக்
குட்டிகளின் உருவங்களை வழிபட்டனர். இது
பெரிய பாவமானது.

31யெரொபெயாமும் உயர்ந்த மலையிடங்
களில் ஆலயங்களைக் கட்டினான். அதற்கு
ஆசாரியர்களாக இஸ்ரவேலின் வெவ்வேறு
கோத்திரங்களிலிருந்து தேர்ந்தெடுத்தான்.
(அவன் லேவியர் கோத்திரத்திலிருந்து
மட்டும் ஆசாரியர்களைத் தேர்ந்தெடுக்க
வில்லை.) 32அரசன் புதிய விடுமுறை
நாளையும் உருவாக்கினான். இது பஸ்கா
பண்டிகையைப் போன்று யூதாவில்
விழாவாயிற்று. ஆனால் இது எட்டாவது
மாதத்தில் 15வது நாள், முதல் மாதத்தின்
15வது நாள் இல்லை. அந்த காலத்தில்
பெத்தேலில் பலிபீடத்தில் பலவித பலி
களைச் செய்தான். அப்பலிகள் அவனால்
செய்யப்பட்ட காளைகளுக்கு உரியதாயிற்று.
அங்கே பெத்தேல் நகரிலேயே அரசன்
ஆசாரியர்களை தேர்ந்தெடுத்து தொழுகைக்கு
ஏற்பாடு செய்தான். 33இவ்வாறு அரசன்,
இஸ்ரவேலுக்கு உரிய விடுமுறைக்கு தன்
சொந்த நாளை தேர்ந்தெடுத்துக் கொண்
டான். இது எட்டாவது மாதத்தின் 15வது
நாள். அப்போது அவன் பலிபீடத்தில்
பலியிட்டு நறுமணப் பொருட்களை
எரித்தான். இவை பெத்தேல் நகரில் நடந்தது.

## பெத்தேலுக்கு எதிராக தேவன் பேசுதல்

13 கர்த்தர், யூதாவிலுள்ள தேவமனித
னைப் பெத்தேலுக்கு போகும்படி
கட்டளையிட்டார். அவன் அங்கே போன
போது, யெரொபெயாம் பலிபீடத்தின்
முன்னால் நறுமண வாசனைப் பொருட்
களைச் செலுத்திக் கொண்டிருந்தான்.
2பலிபீடத்திற்கு எதிராகப் பேசுமாறு கர்த்தர்
அந்த தேவமனிதனுக்குக் கட்டளையிட்டார்.
அவனும்,

“பலிபீடமே, கர்த்தர் உன்னிடம் கூறு
கிறார்: ‘தாவீதின் குடும்பத்தில் யோசியா
என்பவன் இருக்கிறான். இந்த ஆசாரியர்
களெல்லாம் இப்போது பொய்த் தெய்வங்
களை தொழுது வருகின்றனர். எனவே
பலிபீடமே, யோசியா என்பவன் உன்
மேல் தூபம்காட்டுகிற மேடையின் ஆசாரி
யர்களை உன் மேல் பலியிடுவான். அந்த
ஆசாரியர்கள் நறுமணப் பொருட்களைப்
போட்டு எரிக்கின்றனர். ஆனால் யோசி
யாவோ மனித எலும்புகளைப் போட்டு
எரிப்பான். பிறகு மீண்டும் உன்னைப்
பயன்படுத்த முடியாது!’” என்றான்.

3இவையெல்லாம் நிகழும் என்பதற்கான
சான்றையும் அந்தத் தேவமனிதன் காட்டி
னான். அவன், “இதுதான் கர்த்தர் என்னிடம்
சொன்ன அத்தாட்சியாகும். கர்த்தர், ‘இந்தப்
பலிபீடம் வெடித்து இதிலுள்ள சாம்பல்
தரையிலே விழும்’ என்று சொன்னார்”
என்றான்.

4அரசனான யெரொபெயாம் பெத்தேலின்
பலிபீடத்தைப் பற்றி தேவமனிதனிடமிருந்து
செய்தியைக் கேட்டான். அவன் தன்
கையைப் பலிபீடத்திலிருந்து நீட்டி, “அவ
னை பிடியுங்கள்!” என்றான். ஆனால்
நீட்டிய அந்தக்கை, மடக்க முடியாத
அளவிற்கு முடங்கிப்போனது. 5பலிபீடமும்,
தூள்தூளாகச் சிதறி உடைந்துபோனது.
அதன் சாம்பல் தரையில் சிந்தியது. தேவ
மனிதன் சொன்னது தேவனிடமிருந்து
வந்தது என்பதற்கு இதுவே சாட்சியாயிற்று.
6அப்போது அரசன் அந்தத் தேவமனித
னிடம், “எனக்காக உன் தேவனாகிய
கர்த்தரிடம் ஜெபம் செய். எனது கையை
குணமாக்கும்படி கர்த்தரைக் கேள்”
என்றான்.

தேவமனிதனும் அவ்வாறே ஜெபிக்க அவ
னது கை முன்பு போலாயிற்று. 7அரசனும்
தேவமனிதனிடம், “என்னோடு என்
வீட்டிற்கு வா. என்னோடு உணவருந்து.
உனக்குப் பரிசளிப்பேன்” என்றான்.

8ஆனால் தேவமனிதனோ அரசனிடம்,
“உனது ஆட்சியில் பாதியைக் கொடுத்
தாலும், என்னால் உன்னோடு வரமுடியாது,
இந்த இடத்தில் என்னால் எதையும்
உண்ணவோ குடிக்கவோ கூடாது. 9எதையும்
உண்ணவோ அல்லது குடிக்கவோ கூடாது
என எனக்கு கர்த்தர் கட்டளையிட்டார். நான்
இங்கு வந்த பாதை வழியே பயணம்
செய்யக்கூடாது என்றும் கர்த்தர் கட்டளை
யிட்டிருக்கிறார்” என்றான். 10எனவே அவன்
வேறு பாதை வழியாகத் தன் பயணத்தைத்
தொடர்ந்தான்.

11பெத்தேலில் ஒரு முதிய தீர்க்கதரிசி
இருந்தான். அவனது மகன்கள் அவனிடம்
வந்து தேவமனிதன் பெத்தேலில் செய்ததைச்
சொன்னார்கள், அரசனிடம் சொன்னதையும்
சொன்னார்கள். 12அதற்கு அந்த முதிய
தீர்க்கதரிசி, “அவன் எந்தச் சாலை வழி
யாகத் திரும்பிப் போனான்?” என்று
கேட்டான். அவர்களும் அந்தச் சாலையைச்
சுட்டிக்காட்டினார்கள். 13அவன் தனது
கோவேறு கழுதைக்குச் சேணத்தை கட்டு
மாறு வேண்டினான். அவனது பிள்ளை
களும் அவ்வாறே செய்தனர். அவனும்
அக்கழுதையின் மீது ஏறிப்போனான்.

14முதிய தீர்க்கதரிசி அந்தத் தேவ
மனிதனைப் பின் தொடர்ந்து போனான்.
தேவமனிதன் கர்வாலி மரத்தின் கீழ் இருப்
பதை அவன் கண்டான், “யூதாவிலிருந்து
வந்தத் தேவமனிதன் நீதானா?” என்று
கேட்டான்.

அந்த தேவமனிதன், “ஆமாம், நான்தான்”
என்றான்.

15முதிய தீர்க்கதரிசி, “என்னோடு வீட்
டிற்கு வந்து உணவருந்துங்கள்” என்று
வேண்டினான்.

16ஆனால் அந்தத் தேவமனிதன், “என்னால்
உங்களோடு வீட்டிற்கு வரமுடியாது. இந்த
இடத்தில் உங்களோடு உண்ணவோ குடிக்க

வோ கூடாது. 17கர்த்தர் எனக்கு, ‘இந்த
இடத்தில் எதையும் உண்ணவோ குடிக்க
வோ கூடாது. நீ சென்ற சாலையின் வழியே
மீண்டும் செல்லக் கூடாது’ என்று
கட்டளையிட்டுள்ளார்” என்றான்.
18பிறகு முதிய தீர்க்கதரிசி, “நானும்
உங்களைப் போன்று தீர்க்கதரிசிதான்” என்
றான். மேலும் அவன் ஒரு பொய்ச்
சொன்னான். அவன், “தேவதூதன் ஒருவன்
கர்த்தரிடத்திலிருந்து வந்தான். அவன்
உங்களை எனது வீட்டிற்கு அழைத்துப்
போய் உண்ணவும் குடிக்கவும் கொடுக்கு
மாறு கேட்டுக்கொண்டான்” என்றான்.

19எனவே தேவமனிதன் முதியவனோடு
அவனது வீட்டிற்குப்போய் உண்டான். அவ
னோடு குடித்தான். 20அவர்கள் மேஜையின்
முன்னால் உட்கார்ந்திருக்கும்போது, கர்த்தர்
முதிய தீர்க்கதரிசியிடம் பேசினார். 21முதிய
வனும், அந்த தேவமனிதனிடம், “கர்த்தர்
உனக்கிட்ட கட்டளையை மீறினாய்! அவ
ருக்குக் கீழ்படியவில்லை. 22இந்த இடத்தில்
எதையும் உண்ணவோ அல்லது குடிக்கவோ
கூடாது என்று கர்த்தர் உனக்குக்
கட்டளையிட்டார். ஆனால் நீ திரும்பிவந்து
உண்டு குடித்தாய். எனவே உனது பிணம்
உன் குடும்பக் கல்லறையில் அடக்கம்
செய்யப்படாமல் போகும்” என்றான்.
23தேவமனிதன் உணவருந்தி முடித்தான்.
முதிய தீர்க்கதரிசி பிறகு கழுதையில்
அவனுக்காக சேணத்தை கட்டி அவன்
போனான். 24அவன் பாதையில் பயணம்
செய்யும்போது, ஒரு சிங்கம் வந்து அவனைக்
கொன்றுபோட்டது. அவனது உடல்
பாதையில் கிடக்க அருகில் சிங்கமும்
கழுதையும் நின்று கொண்டிருந்தன. 25சிலர்
அவ்வழியாக வந்தனர். அவர்கள் பிணத்தை
யும் சிங்கத்தையும் கண்டு முதிய தீர்க்க
திரிசியிடம் வந்து தாங்கள் கண்டதைக்
கூறினார்கள்.
26அவன்தான் தந்திரம்செய்து தீர்க்கதரிசி
யைத் திருப்பி அழைத்தவன். அவன்
அனைத்தையும் கேட்டபின், “அந்தத் தேவ
மனிதன் கர்த்தருடைய கட்டளைக்குக்
கீழ்ப்படியவில்லை. எனவே சிங்கத்தை
அனுப்பி கொன்றுவிட்டார். இவ்வாறு செய்
வேன் என்று கர்த்தர் ஏற்கனவே கூறி
யிருக்கிறார்” என்றான். 27பிறகு அவன்
தன் மகன்களிடம், “என் கழுதைக்குச்
சேணத்தை கட்டுங்கள்” என்றான். அவனது
மகன்களும் அவ்வாறே செய்தனர். 28அவன்
சாலைக்குப் போய் தீர்க்கதரிசியின் பிணத்
தைப் பார்த்தான். கழுதையும் சிங்கமும்
அப்பொழுதும் அங்கே நின்று கொண்
டிருந்தது. சிங்கம் அந்த உடலைத்
தின்னவில்லை, கழுதையையும் எதுவும்
செய்யவில்லை.
29முதிய தீர்க்கதரிசி அந்தப் பிணத்தை
எடுத்து தனது கழுதையின் மீது வைத்தான்.
அதனை நகரத்திற்குக் கொண்டு வந்து
அவனுக்காக அழுதான். 30அவனைத் தனது
குடும்பக் கல்லறையிலேயே அடக்கம் செய்
தான். பின் அவனுக்காக அழுது, “என்
சகோதரரே, உங்களுக்காக நான் வருந்து
கிறேன்” என்று புலம்பினான். 31எனவே
அந்த முதிய தீர்க்கதரிசி சவஅடக்கத்தை
முடித்தபின், தன் மகன்களிடம், “நான்
மரித்தபின்னும், என்னை இதே கல்லறையில்
அடக்கம் செய்யுங்கள். எனது எலும்புகளை
இவனது எலும்புகளுக்கு அருகில்
வையுங்கள். 32இவன் மூலமாக கர்த்தர்
சொன்னதெல்லாம் உறுதியாக நிறைவேறும்.
கர்த்தர் இவன் மூலமாக பெத்தேலின் பலி
பீடத்திற்கு எதிராகவும் சமாரியாவின்
நகரங்களிலுள்ள பொய்த் தெய்வங்களுக்கு
எதிராகவும் பேசினார்” என்றான்.
33யெரொபெயாம் அரசன் மாறவில்லை.
தொடர்ந்து தீமைகளைச் செய்து வந்தான்.
ஆசாரியர்களாக வெவ்வேறு கோத்திரங்
களிலிருந்து தேர்ந்தெடுத்தான். அவர்கள்
பொய்த் தெய்வங்களுக்கு ஆராதனை
செய்தனர். ஆசாரியராக யார் விரும்பி
னாலும் விரும்பியபடி அனுமதிக்கப்
பட்டனர். 34இச்செயல்களே பெரும்பாவமாகி
அவனது ஆட்சி அழிய காரணமாயிற்று.

### யெரொபெயாம் மகனின் மரணம்

14 அப்போது, யெரொபெயாமின் மகன்
அபியா என்பவன் நோய்வாய்ப்
பட்டான். 2அரசன் தன் மனைவியிடம்,
“சீலோவிற்குப் போ. அகியா தீர்க்க
தரிசியைப்பார். அவர்தான் நான் இஸ்ர
வேலின் அரசனாவேன் என்று கூறினார்.
ஜனங்கள் அடையாளம் காணமுடியாதவாறு
ஆடை அணிந்துக்கொள். 3தீர்க்கதரிசிக்கு
10 துண்டு அப்பங்களையும், பணியாரங்
களையும், ஒரு ஜாடிதேனையும் கொடு. நம்
மகனுக்கு என்ன ஏற்படும் என்றும் கேள்.
அகியா தீர்க்கதரிசி உனக்கு சரியாகச்
சொல்லுவார்” என்றான்.
4அரசன் சொன்னது போலவே அவனது
மனைவியும் செய்தாள். அவள் தீர்க்கதரிசி
யான அகியாவின் வீட்டிற்குப்போனாள்.
அவன் முதுமையடைந்து பார்வையற்றுப்
போய் இருந்தான். 5ஆனால் கர்த்தர் அவ
னிடம், “யெரொபெயாமின் மனைவி தன்
மகனைப் பற்றி உன்னிடம் கேட்க வரு
கிறாள். ஏனென்றால் அவன் நோய்வாய்ப்
பட்டிருக்கிறான்” என்றார். அவன் என்ன
சொல்லவேண்டும் என்பதையும் கர்த்தர்
அவனுக்கு சொல்லியிருந்தார்.
அரசனின் மனைவி அகியாவின்
வீட்டிற்கு வந்தாள். தன்னை யாரென்று
ஜனங்கள் அறிந்துகொள்ளாதபடி நடந்துக்
கொண்டாள். 6அவள் கதவருகே வந்ததை
அறிந்ததும் அவன், “யெரொபெயாமின்

மனைவியே வருக, உன்னைப்பற்றி மற்ற
வர்கள் வேறு யாராகவோ நினைக்கும்படி
ஏன் நீ நடந்துகொள்கிறாய்? உனக்கு ஒரு
கெட்டச் செய்தியை வைத்திருக்கிறேன்.
7யெரொபெயாமிடம் போய் இஸ்ரவேலரின்
தேவனாகிய கர்த்தர், என்ன சொன்னார்
என்பதைப் போய் சொல். கர்த்தர், 'யெரொ
பெயாம், நான் உன்னை அனைத்து இஸ்ர
வேலர்களிடமிருந்தும் தேர்ந்தெடுத்தேன்.
எனது ஜனங்களை ஆளும்படிச் செய்தேன்.
8தாவீதின் குடும்பம் இஸ்ரவேலை ஆண்டு
கொண்டு இருந்தது. ஆனால் நான் அதனை
அவர்களிடமிருந்து எடுத்து உன்னிடம்
கொடுத்தேன். ஆனால் நீ எனது ஊழியனான
தாவீதைப்போல் நடந்துகொள்ளவில்லை.
அவன் எப்போதும் எனக்குக் கீழ்ப்படிந்தான்.
முழுமனதோடு அவன் என்னைப் பின்
தொடர்ந்தான். எனக்கு ஏற்றதையே அவன்
செய்து வந்தான். 9ஆனால் நீ பெரும்
பாவங்களை செய்து விட்டாய். உனது
பாவங்கள் உனக்கு முன்னால் ஆண்டவர்
களின் பாவங்களைவிட மிக மோசமானது.
என்னைப் பின்பற்றுவதைவிட்டு, நீயே
விக்கிரகங்களையும் அந்நிய தெய்வங்களை
யும் செய்தாய். இது எனக்கு கோப மூட்டியது.
10எனவே உனது குடும்பத்திற்குத்
துன்பங்களைத் தருவேன். உன் குடும்பத்தி
லுள்ள அனைத்து ஆண்களையும் கொல்
வேன். நெருப்பு சாணத்தை அழிப்பது
போன்று நான் உன் குடும்பம் முழுவதையும்
அழித்துப் போடுவேன். 11இந்நகரில் மரித்துப்
போகும் உன் குடும்பத்தானின் பிணத்தை
நாய்கள் உண்ணும். வயலில் மரிப்பவர்களை
பறவைகள் உண்ணும். இவற்றைக் கர்த்தர்
சொன்னார்'" என்றான்.

12பின் அகியா தீர்க்கதரிசி மேலும்
யெரொபெயாமின் மனைவியிடம் பேசி
னான், "இப்போது வீட்டிற்குப் போ. நீ
எப்பொழுது நகரத்திற்குள் நுழைகிறாயோ
அப்போது உன் மகன் மரிப்பான். 13இஸ்ர
வேலர்கள் அனைவரும் அவனுக்காக அழுது
அடக்கம் செய்வார்கள். உன் குடும்பத்தில்
அவன் மட்டுமே அடக்கம் செய்யப்படுவான்.
இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்தருக்கு
அவன் ஒருவன் மட்டுமே யெரொபெயாமின்
குடும்பத்தில் பிடித்தமானவன் என்பதுதான்
காரணம். 14இஸ்ரவேலருக்குப் புதிய அரச
னை கர்த்தர் ஏற்படுத்துவார். அவன்
யெரொபெயாமின் குடும்பத்தை அழிப்பான்.
இது விரைவில் நடைபெறும். 15பிறகு
கர்த்தர் இஸ்ரவேலர்களைத் தாக்குவார்.
அவர்கள் ஆற்றங்கரையிலுள்ள நாணலைப்
போன்று அசைவார்கள். அவர்களை இந்த
நல்ல நாட்டினின்றும் கர்த்தர் துரத்துவார்.
இந்த நாடு கர்த்தரால் அவர்களின்
முற்பிதாக்களுக்குக் கொடுக்கப்பட்டது. அவர்
அவர்களை ஐபிராத்து ஆற்றுக்கு அப்பால்
சிதறடிப்பார். இஸ்ரவேல் ஜனங்கள் மீது
கர்த்தர் கோபத்தோடு இருப்பதால் இவ்வாறு
செய்வார். காரணம் அவர்கள் பொய்த்
தெய்வங்களுக்கு கம்பங்கள் அமைத்து
தொழுதுகொண்டனர். 16யெரொபெயாம்
தானும் பாவம் செய்து இஸ்ரவேல்
ஜனங்களையும் பாவத்துக்குட்படுத்தினான்.
எனவே கர்த்தர் அவர்களைத் தோற்கடிப்
பார்" என்றான்.

17அரசனின் மனைவி திர்சாவிலுள்ள தன்
வீட்டிற்குத் திரும்பினாள். அவள் வீட்டிற்குள்
நுழைந்ததும், அவளது மகன் மரித்தான்.
18இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும் அவனுக்
காக அழுது அவனை அடக்கம் செய்தனர்.
இது கர்த்தர் சொன்னது போலவே நடந்தது,
கர்த்தர் தன் ஊழியனான, தீர்க்கதரிசி
அகாயாவின் மூலம் இதைச் சொன்னார்.

19அரசன் வேறுபல செயல்களைச் செய்
தான். பல போர்களைச் செய்து தொடர்ந்து
ஜனங்களை ஆண்டான். 'இஸ்ரவேல் அரசர்
களின் வரலாறு' என்ற புத்தகத்தில் அவன்
செய்தது எல்லாம் எழுதப்பட்டிருக்கிறது.
20அவன் 22 ஆண்டுகள் அரசாண்டான்.
அவன் மரித்ததும் அவனது முற்பிதாக்
களோடு அடக்கம் செய்யப்பட்டான்.
அவனுக்குப்பின் அவனது மகன் நாதாப்
அரசன் ஆனான்.

21சாலொமோனின் மகனான ரெகொ
பெயாம் யூதாவின் அரசனான போது,
அவனுக்கு 41 வயது. அவன் எருசலேமில்
17 ஆண்டுகள் அரசாண்டான். கர்த்தரை
பெருமைப்படுத்துவதற்காக தேர்ந்தெடுத்த
நகரம் இதுதான். அவர், இந்த நகரத்தை
பிற அனைத்து இஸ்ரவேல் நகரங்களில்
இருந்து தேர்ந்தெடுக்கிறார். அவனது
தாயான நாமாள் அம்மோனியளாக இருந்
தாள்.

22யூதாவிலுள்ள ஜனங்களும் பாவம்
செய்தனர். அவர்களின் பாவம் அவர்களின்
முற்பிதாக்களின் பாவத்தைவிட மிகுதியா
யிற்று. இதனால் கர்த்தருக்கு அவர்கள்
மீது கோபமும் மிகுதியானது. 23அவர்கள்
பொய்த் தெய்வங்களுக்கு உருவங்களும்,
நினைவு சின்னங்களும், தூண்களும் கட்டி
னார்கள். அவர்கள் இவற்றை ஒவ்வொரு
மலைமீதும் ஒவ்வொரு பசுமையான மரத்தடி
யிலும் அமைத்தனர். 24பாலின உறவுக்காக
தங்கள் உடலை விற்று அந்நிய தெய்வங்
களுக்குப் பணி செய்த ஆண்கள்
இருந்தார்கள். இதனால் யூதா நாட்டினர் பல
தவறுகளைச் செய்தனர். இந்நாட்டில் இதற்கு
முன்னால் இருந்தவர்களும் இதுபோல் தீய
செயல்களைச் செய்ததால் அவர்களின்
நாட்டை தேவன் இஸ்ரவேலர்களிடம்
கொடுத்துவிட்டார்.

25ரெகொபெயாம் அரசனான ஐந்தாம்
ஆண்டில், எகிப்தின் அரசனான சீஷாக்
எருசலேம் மீது படையெடுத்தான். 26அவன்
கர்த்தருடைய ஆலயத்திலிருந்த பொக்கிஷங்

களையும் அரண்மனையிலுள்ள செல்வங்
களையும் சூறையிட்டான். ஆராம் நாட்டு
அரசனிடம் தாவீது அபகரித்து வந்த தங்கக்
கேடயங்களையும் எடுத்துக் கொண்டான்.
27அதனால் அரசன் அவற்றுக்குப் பதிலாக
வெண்கல கேடயங்களைச் செய்து அவற்றை
வாயில் காப்போர்களின் தலைவரின்
பொறுப்பில் வைத்தான். 28ஒவ்வொரு
தடவையும் அரசன் வரும்போது, இவர்கள்
கேடயங்களை கர்த்தருடைய ஆலயத்திற்குள்
எடுத்து வருவார்கள். பின் பழையபடி
பாதுகாப்பாக வைத்துக்கொள்வார்கள்.
29ரெகொபெயாம் அரசன் செய்தவற்றை
யெல்லாம் “யூத அரசர்களின் வரலாறு”
என்ற புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது.
30ரெகொபெயாமும் யெரொபெயாமும் அடிக்
கடி தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்
டனர்.
31ரெகொபெயாம் மரித்து தமது முற்பிதாக்
களோடு அடக்கம் செய்யப்பட்டான். அவன்
தாவீது நகரத்தில் அடக்கம் செய்யப் பட்டான்.
(அவனது தாயின் பெயர் நாமாள். அவள்
அம்மோனியள்.) அவனது மகனான அபியா
அடுத்து அரசனானான்.

## யூதாவின் அரசனான அபியா

15 நேபாத் என்பவனின் மகனான
யெரொபெயாம் என்பவன் இஸ்ர
வேலின் அரசனாக ஆண்டான். அவனது
18வது ஆட்சியாண்டில், அவனது மகன்
அபியா யூதாவின் அரசன் ஆனான். 2அபியா
எருசலேமிலிருந்து மூன்று ஆண்டுகள்
அரசாண்டான். அவனது தாய் அப்ச
லோமின் மகளான மாகாள்.
3அவன் தன் தந்தையைப் போலவே
அனைத்து பாவங்களையும் செய்தான்.
அபியா தன் தாத்தாவாகிய தாவீதை
போன்று தேவனாகிய கர்த்தருக்கு உண்மை
யானவனாக இல்லை. 4கர்த்தர் தாவீதை
நேசித்தார். அதனால், கர்த்தர் அபியாவிற்கு
எருசலேமின் ஆட்சியைக் கொடுத்தார். அவ
னுக்கு ஒரு மகனையும் எருசலேமிற்குப்
பாதுகாப்பையும் தாவீதிற்காக கர்த்தர்
கொடுத்தார். 5கர்த்தருக்குப் பிடித்த சரியான
காரியங்களை மட்டுமே எப்பொழுதும்
தாவீது செய்து வந்தான். அவன் எப்பொ
ழுதும் கர்த்தருடைய கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிந்து நடந்தான். அவன் ஒரே
ஒருமுறை மட்டும் கர்த்தருக்கு கீழ்ப்படிய
வில்லை. அது ஏத்தியனான உரியாவிற்கு
செய்ததாகும்.
6ரெகொபெயாமும் யெரொபெயாமும் எப்
பொழுதும் ஒருவருக்கொருவர் சண்டை
யிட்டுக் கொண்டிருந்தனர். 7அபியா செய்த
பிற செயல்களெல்லாம் ‘யூதாவின் அரசர்கள்
வரலாறு’ என்ற புத்தகத்தில் எழுதப்
பட்டிருக்கிறது.
அபியா அரசனாக இருந்த காலம்வரை
அவன் யெரொபெயாமோடு சண்டையிட்டுக்
கொண்டிருந்தான். 8அவன் மரித்ததும் தனது
முற்பிதாக்களோடு தாவீது நகரத்தில்
அடக்கம் பண்ணப்பட்டான். அபியாவிற்குப்
பின் அவனது மகனான ஆசா அரசனா
னான்.

## யூதாவின் அரசனான ஆசா

9யெரொபெயாமின் 20வது ஆட்சி ஆண்
டின் போது, ஆசா யூதாவின் அரசனானான்.
10ஆசா 41 ஆண்டுகள் யூதாவை எருசலே
மிலிருந்து ஆண்டு வந்தான். அவனது
பாட்டியின் பெயர் மாகாள். இவள் அப்ச
லோமின் மகள்.
11ஆசா அவனது முற்பிதாவான தாவீதைப்
போன்றே கர்த்தருக்குச் சரியான செயல்
களை மட்டுமே செய்து வந்தான். 12அப்
போது ஆண்கள் பாலின உறவுக்காக தம்
உடலை விற்று அந்நிய தெய்வங்களுக்குச்
சேவை செய்து வந்தனர். இத்தகையவர்களை
ஆசா நாட்டைவிட்டுத் துரத்தினான். அவன்
முற்பிதாக்களால் செய்யப்பட்ட பொய்த்
தெய்வங்களின் விக்கிரகங்களையும் எடுத்
தெறிந்தான். 13அவன் தனது பாட்டியான
மாகாளையும், அரசி என்ற பதவியிலிருந்து
விலக்கினான். ஏனென்றால் அவள் அஷரா
பொய்த் தெய்வத்தின் உருவத்தை செய்தாள்.
ஆசா இந்தப் பயங்கரமான உருவத்தை
உடைத்துப் போட்டான். கீதரோன் பள்ளத்
தாக்கில் அதனை எரித்து விட்டான். 14அவன்
பொய்த் தெய்வங்களை தொழுவதற் கான
மேடைப் பகுதிகளை அழிக்கவில்லை,
ஆனால், தன் வாழ்நாள் முழுவதும்
கர்த்தருக்கு நம்பிக்கையாளனாக இருந்தான்.
15ஆசாவும் அவனது தந்தையும் தேவனுக்கு
பொன், வெள்ளி போன்ற பொருட்களை
அன்பளிப்பாக ஆலயத்தில் கொடுத்திருந்
தனர்.
16அப்போது, இஸ்ரவேலின் அரசனாக
இருந்த பாஷாவோடு, ஆசா அடிக்கடி
சண்டையிட்டான். 17பாஷா யூதாவிற்கு
எதிராக, இஸ்ரவேல் ஜனங்களை அங்கே
போகவோ வரவோ அனுமதிக்காமல்
சண்டையிட்டான். அவன் ராமா நகரத்தைப்
பலம் பொருந்தியதாக ஆக்கினான். 18எனவே
ஆசா, கர்த்தருடைய ஆலயம் மற்றும்
அரண்மனை பொக்கிஷங்களிலிருந்து பொன்
னையும் வெள்ளியையும் எடுத்து வேலைக்
காரர்களுக்குக் கொடுத்து பெனாதாத்திடம்
அனுப்பினான். அவன் ஆராமின் அரசன்.
பெனாதாத் தப்ரிமோனின் மகன். தப்ரிமோன்
எசியோனின் மகன். தமஸ்கு பெனாதாத்தின்
தலைநகரம். 19ஆசா அவனுக்கு, “என்
தந்தையும் உங்கள் தந்தையும் சமாதான
ஒப்பந்தம் செய்துக்கொண்டனர். நான் இப்
போது உங்களோடு ஒரு சமாதான ஒப்பந்தம்
செய்துக்கொள்ள விரும்புகிறேன். இப்பொன்

னையும் வெள்ளியையும் உமக்கு அன்பளிப்
பாக அனுப்புகிறேன். நீங்கள் இஸ்ரவேலின்
அரசனான பாஷாவிடம் கொண்டுள்ள
ஒப்பந்தத்தை ரத்து செய்யுங்கள். அப்போது
தான் அவன் எங்கள் நாட்டை விட்டு
விலகுவான்” என்று தூது அனுப்பினான்.
20 அரசனான பெனாதாத் ஒப்பந்தத்தின்படி
ஆசாவோடு ஒரு படையை அனுப்பி
இஸ்ரவேல் நகரங்களான ஈயோன், தாண்,
பெத்மாக்கா எனும் ஆபேல், கின்னரேதாத்,
நப்தலி ஆகியவற்றில் போர் செய்து வென்
றான். 21 பாஷா இத்தாக்குதலை அறிந்தான்.
எனவே ராமாவைப் பலப்படுத்துவதை
விட்டு, திர்சாவை நோக்கிச் சென்றான்.
22 பிறகு ஆசா தம் ஜனங்கள் அனைவருக்கும்
ஒரு கட்டளையிட்டான். அதன்படி
ஒவ்வொருவரும் உதவவேண்டும் என்றும்
அவர்கள் ராமாவிற்குப் போய் கல்லையும்
மரத்தையும் எடுத்து வரவேண்டும் என்று
ஆணையிட்டான். அதனால் கேபாவில்
உள்ள பென்யமீன் மற்றும் மிஸ்பா ஆகிய
நகரங்களை பலமுள்ளதாகக் கட்டினான்.
23 ஆசாவைப் பற்றிய, அவன் செய்த மற்ற
பெரும் செயல்களையெல்லாம் ‘யூதா
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
சொல்லப்பட்டுள்ளது. அதில் நகரங்கள்
கட்டப்பட்டதும் உள்ளன. அவன் முதுமை
யடைந்ததும் பாதத்தில் ஒரு நோய் வந்தது.
24 அவன் மரித்ததும் தனது முற்பிதாவான
தாவீதின் நகரத்தில் அடக்கம் செய்யப்
பட்டான். பின் இவனது மகனான யோசபாத்
அரசனானான்.

### இஸ்ரவேல் அரசனான நாதாப்

25 ஆசாவின் இரண்டாம் ஆட்சி ஆண்டில்,
யெரொபெயாமின் மகனான நாதாப் இஸ்ர
வேலின் அரசனானான். அவன் 2 ஆண்டுகள்
ஆண்டான். 26 இவன் கர்த்தருக்கு எதி
ராகக் கெட்ட காரியங்களை தந்தையைப்
போலவே செய்தான். ஜனங்களையும் பாவம்
செய்ய வைத்தான்.
27 அகியா என்பவனின் மகன் பாஷா
ஆவான். இவன் இசக்கார் கோத்திரத்தில்
உள்ளவன். இவன் நாதாப்பைக் கொல்ல
திட்டமிட்டான். இது நாதாப்பும் இஸ்ரவேலர்
களும் கிப்பெத்தோனுக்கு எதிராகச் சண்டை
யிடும்போது நிகழ்ந்தது. இது பெலிஸ்தியரின்
நகரம். இங்கே பாஷா நாதாப்பைக் கொன்
றான். 28 இது யூதாவின் அரசனான ஆசா
ஆண்ட மூன்றாவது ஆண்டில் நடந்தது.
பின் பாஷா இஸ்ரவேலின் அரசன் ஆனான்.

### பாஷா இஸ்ரவேலின் அரசன்

29 இவன் அரசன் ஆனதும், யெரொபெயா
மின் குடும்பத்தில் உள்ள அனைவரையும்
கொன்றான். எவரையும் உயிரோடு விட
வில்லை. கர்த்தர் சொன்னபடியே நடந்தது.
இதனைக் கர்த்தர் சீலோவில் அகியா மூலம்
சொன்னார். 30 இவ்வாறு நிகழ யெரொ
பெயாம் செய்த பாவங்களும் ஜனங்களைப்
பாவம் செய்ய வைத்ததும் காரணமாயிற்று.
இவையே இஸ்ரவேலரின் தேவனாகிய
கர்த்தருக்கு கோபத்தைத் தந்தது.
31 நாதாப் செய்த மற்ற செயல்கள் ‘இஸ்ர
வேல் அரசர்களின் வரலாறு’ என்ற
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளது. 32 பாஷாவின்
ஆட்சிகாலம் முழுவதும் யூதாவின் அரச
னான ஆசாவோடு போரிட்டான்.
33 ஆசாவின் மூன்றாவது ஆட்சி ஆண்டில்
தான் இஸ்ரவேலின் அரசனாக அகியாவின்,
மகனான பாஷா அரசன் ஆனான். திர்சாவில்
அவன் 24 ஆண்டுகள் ஆட்சி செய்தான்.
34 பாஷா கர்த்தருக்கு விரோதமான செயல்
களைச் செய்தான். யெரொபெயாமைப்
போல் தானும் பாவம் செய்து, ஜனங்
களையும் பாவம் செய்யத் தூண்டினான்.
16 பிறகு கர்த்தர் ஆனானியின் மகனான
யெகூவோடு பாஷாவிற்கு எதிராக
கீழ்கண்டவாரு பேசினார்: 2 “நான் உன்னை
ஒரு முக்கியமான மனிதனாகச் செய்தேன்.
உன்னை இஸ்ரவேலின் அரசனாக்கினேன்.
ஆனால் நீ யெரொபெயாமின் வழியில்
என் ஜனங்களை பாவத்துக்குள்ளாக்கு
கிறாய். இது எனக்குப் பெருங்கோபத்தை
உண்டாக்கிற்று. 3 எனவே, நான் பாஷாவை
யும், அவனது குடும்பத்தையும் அழிப்பேன்.
நான் நாபாத்தின் மகனான யெரொபெயா
மின் குடும்பத்திற்குச் செய்தது போலவே
செய்வேன். 4 இந்நகரத் தெருக்களில் நாய்கள்
உண்ணும்படி உன் குடும்பத்தினர் சிலர்
மரிப்பார்கள். இன்னும் சிலர் வயல்வெளிக
ளில் மரிப்பார்கள். அவர்கள் பிணங்களைப்
பறவைகள் தின்னும்.”
5 பாஷாவைப் பற்றிய அவன் செய்த
பெருஞ்செயல்களைப் பற்றி ‘இஸ்ரவேல்
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளன. 6 பாஷா மரித்ததும் திர்சா
நகரத்தில் அடக்கம் செய்யப்பட்டான். அவ
னது மகனான ஏலா அடுத்த அரசனானான்.
7 எனவே கர்த்தர், பாஷாவிற்கும் அவனது
குடும்பத்திற்கும் எதிரான செய்திகளை ஆனா
னியின் மகனான யெகூ தீர்க்கதரிசி மூலம்
சொன்னார். பாஷா கர்த்தருக்கு எதிராக
மிகுந்த பாவம் செய்ததால் அவன் மீது
கர்த்தருடைய கோபம் அதிகரித்தது. அவ
னுக்கு முன் யெரொபெயாம் குடும்பத்தினர்
செய்தது போலவே பாஷா பாவங்களைச்
செய்தான். பாஷா யெரொபெயாம் குடும்
பத்தை அழித்ததாலும் கர்த்தருக்குக் கோபம்
ஏற்பட்டது.

### இஸ்ரவேலின் அரசனான ஏலா

8 யூதாவின் அரசனான ஆசா 26ம் ஆண்டில்
இருக்கும்போது ஏலா இஸ்ரவேலின்
அரசனானான். பாஷாவின் மகனான இவன்
திர்சாவில் 2 ஆண்டுகள் ஆண்டான்.

[9]சிம்ரி ஏலாவின் அதிகாரிகளுள் ஒருவன்.
இரதப்படையின் பாதிக்குத் தளபதி. இவன்
ஏலாவிற்கு எதிராகத் திட்டமிட்டான்.
அரசன் திர்சாவில் அர்சாவின் வீட்டில்
குடித்தும் குடிக்க வைத்துக்கொண்டும்
இருந்தான். அர்சா அரண்மனை பொறுப்
பாளி. [10]சிம்ரி அந்த வீட்டிற்குப் போய்
அரசனைக் கொன்று விட்டான். இது
யூதாவின் அரசனாக ஆசா 27ஆம் ஆண்டில்
இருந்தபோது நடந்தது. பின்னர் சிம்ரி
அடுத்து அரசனானான்.

### இஸ்ரவேலின் அரசனான சிம்ரி

[11]சிம்ரி அரசனானதும், பாஷாவின்
குடும்பத்திலுள்ள அனைவரையும் கொன்
றான். எவரையும் உயிரோடு விடவில்லை.
பாஷாவின் நண்பர்களையும் கொன்றான்.
[12]இது பாஷாவிற்கு எதிராக யெகூ தீர்க்க
தரிசியிடம் கர்த்தர் சொன்னது போலவே
ஆயிற்று. [13]இது, பாஷாவும் அவனது மகன்
ஏலாவும் செய்த பாவத்தால் ஆயிற்று.
அவர்கள் தாம் பாவம் செய்ததோடு இஸ்ர
வேல் ஜனங்களும் பாவம் செய்ய காரண
மானார்கள். அவர்கள் பல விக்கிரகங்களைச்
செய்து தொழுதுகொண்டதால் கர்த்தரால்
கோபம் கொள்ளக் காரணமானார்கள்.
[14]ஏலா செய்த பிற செயல்கள் ‘இஸ்ரவேல்
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளன.
[15]யூதாவின் அரசனாக ஆசா 27வது
ஆண்டில் இருக்கும்போது சிம்ரி அரச
னானான். அவன் திர்சாவிலிருந்து 7
நாட்கள் தான் ஆண்டான். இஸ்ரவேல்
படைகள் பெலிஸ்தியரின் கிபெத்தோனுக்கு
அருகில் முகாமிட்டுத் தங்கினார்கள்.
அவர்கள் போருக்குத் தயாராயிருந்தார்கள்.
[16]சிம்ரி அரசனுக்கு எதிராக சதித்திட்டம்
தீட்டியதாக படையிலிருந்தவர்கள் அறிந்
தார்கள். அவன் அரசனைக் கொன்றதாகவும்
கேள்விப்பட்டார்கள். எனவே எல்லா இஸ்ர
வேலர்களும் அன்று முகாமில் உம்ரியை
இஸ்ரவேல் முழுவதற்கும் அரசனாக்கினார்
கள். உம்ரி படைத்தலைவனாக இருந்தான்.
[17]ஆகவே உம்ரியும் இஸ்ரவேலர்கள் அனை
வரும் கிபெத்தோனிலிருந்து சென்று
திர்சாவைத் தாக்கினார்கள். [18]சிம்ரி தன்
நகரம் கைப்பற்றப்படுவதை அறிந்து அரண்
மனைக்குப் போய் தனக்கும் அரண்மனைக்
கும் தீ வைத்து அதில் செத்தான். [19]தனது
பாவத்தால் சிம்ரி மரித்துப்போனான். இவன்
கர்த்தருக்கு எதிராக பாவம் செய்தான்.
யெரோபெயாம் பாவம் செய்தது போலவே
இவனும் பாவம் செய்து இஸ்ரவேல் ஜனங்
கள் பாவம் செய்வதற்கும் காரணம் ஆனான்.
[20]இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு என்ற
புத்தகத்தில் சிம்ரி செய்த சதிகளும் பிற
செயல்களும் எழுதப்பட்டுள்ளன. அதில்
அவன் ஏலாவிற்கு எதிராகக் கிளம்பியதும்
சொல்லப்பட்டுள்ளது.

### இஸ்ரவேலின் அரசனான உம்ரி

[21]இஸ்ரவேல் ஜனங்கள் இருபிரிவாகப்
பிரிந்து, ஒரு பகுதி கீனாத்தான் மகனான
திப்னியையும், இன்னொரு பகுதி உம்ரி
யையும் அரசனாக்க விரும்பினார்கள்.
[22]ஆனால் உம்ரியின் ஆட்கள் திப்னியின்
ஆட்களைவிடப் பலமிக்கவர்கள். எனவே
திப்னியைக் கொன்று உம்ரி அரசனானான்.
[23]யூதாவின் அரசனாக ஆசா ஆட்சிபுரிந்த
31வது ஆண்டில் இஸ்ரவேலின் அரசனாக
உம்ரி ஆனான். உம்ரி 12 ஆண்டுகள்
ஆண்டான். இதில் 6 ஆண்டுகாலம் அவன்
திர்சாவிலிருந்து ஆண்டான். [24]உம்ரி
சமாரியா மலையை சேமேரிடமிருந்து வாங்
கினான். அதன் விலை 2 தாலந்து வெள்ளி.
அதில் நகரத்தைக் கட்டி அதன் சொந்தக்
காரனான சேமேரின் பெயரால் சமாரியா
என்று பெயரிட்டான்.
[25]உம்ரி கர்த்தருக்கு எதிராகப் பாவங்
களைச் செய்தான். அவனுக்கு முன்னால்
உள்ளவர்களைவிட மோசமாக இருந்தான்.
[26]யெரொபெயாமின் மகனான நேபாத் செய்த
பாவங்களையெல்லாம் இவனும் செய்தான்.
யெரொபெயாம் தானும் பாவம் செய்து,
ஜனங்களையும் பாவம் செய்யத் தூண்டி,
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தருடைய
கோபத்துக்கு ஆளானான். பயனற்ற விக்கிர
கங்களையும் தொழுதுகொண்டான்.
[27]‘இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு’
என்ற புத்தகத்தில் உம்ரி செய்த மற்ற
செயல்களையும் அவர் செய்த அருஞ்செயல்
களும் எழுதப்பட்டுள்ளன. [28]உம்ரி மரித்து
சமாரியா நகரத்தில் அடக்கம் செய்யப்பட்
டான். இவனது மகன் ஆகாப் புதிய
அரசனானான்.

### இஸ்ரவேலின் அரசனான ஆகாப்

[29]யூதாவின் அரசனான ஆசா 38வது
ஆண்டில் இருக்கும்போது ஆகாப் இஸ்ர
வேலின் புதிய அரசனானான். இவன்
சமாரியாவில் இருந்து 22 ஆண்டுகள் ஆண்
டான். [30]இவனும் கர்த்தருக்கு விரோதமாகப்
பாவங்களைச் செய்தான். அவனுக்கு முன்
னால் உள்ளவர்களைவிட மோசமாக இருந்
தான். [31]யெரொபெயாமும் அவனது மகன்
நாபாத்தும் செய்த அதே பாவங்களைச்
செய்வது இவனுக்குப் போதுமானதாயிருக்க
வில்லை. அவன் சீதோனியரின் அரசனான
ஏத்பாகாலின் மகள் யேசபேலை மணந்து
பாகாலையும் தொழுதுகொண்டான். [32]சமா
ரியாவில் பாகாலுக்கு ஆலயத்தைக் கட்டி
னான். ஆலயத்தில் பலிபீடமும் அமைத்தான்.
[33]ஒரு சிறப்பான தூணையும் அஷெராவை
தொழுதுகொள்ள உருவாக்கினான். அவ

னுக்கு முன்பு இஸ்ரவேலின் அரசனாக
இருந்த மற்றவர்களைவிட இவன் இஸ்ர
வேலின் தேவனாகிய கர்த்தரை அதிகமாகக்
கோபப்படுத்தினான்.
34 இவனது காலத்தில், ஈயேல் எனும்
பெத்தேல் ஊரான் எரிகோவைக் கட்டி
னான். அப்போது, அவனது மூத்தமகனான
அபிராம் மரித்தான். நகர வாயில்களை
அமைக்கும்போது, இளையமகன் செகூப்
மரித்தான். நூனின் மகனான யோசுவாவின்
மூலமாகப் பேசியபொழுது இது நடக்கு
மென்று கர்த்தர் சொன்னதைப் போலவே
இது நடந்தது.*

### எலியாவும் மழையற்ற காலமும்

17 கீலேயாத்தின் திஸ்பியன் நகரில்
எலியா என்ற தீர்க்கதரிசி இருந்தான்.
இவன் அரசனான ஆகாப்பிடம், “நான்
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தருக்கு
ஊழியம் செய்பவன். அவரது வல்லமை
யால், வருகின்ற சில வருடங்கள் மழையும்
பனியும் இல்லாமல் போகும் எனக்
கூறுகிறேன். நான் கட்டளையிட்டால் தான்
மழை பொழியும்” என்றான்.
2 பிறகு கர்த்தர் எலியாவிடம், 3 “இந்த
இடத்தைவிட்டு கீழ் நாடுகளுக்குப் போ.
கேரீத் ஆற்றருகில் ஒளிந்துக்கொள். அது
யோர்தான் ஆற்றிற்குக் கிழக்கே உள்ளது.
4 அந்த ஆற்றின் தண்ணீரைக் குடி. அங்கு
காகங்கள் உனக்கு உணவு கொண்டுவரும்
படி நான் கட்டளையிட்டிருக்கிறேன்” என்
றார். 5 எனவே எலியா அங்கே போனான்.
கர்த்தருடைய கட்டளைபடியே கேரீத்தில்
ஒளிந்திருந்தான். 6 ஒவ்வொரு நாள் காலையி
லும் மாலையிலும் காகங்கள் இறைச்சியும்
அப்பமும் கொண்டுவந்தன. ஆற்று
தண்ணீரைக் குடித்தான்.
7 மழை இல்லாமல் போனது. கொஞ்ச
நாள் ஆனதும் ஆறும் வறண்டது. 8 கர்த்தர்
எலியாவிடம், 9 “சீதோனில் உள்ள சாறி
பாத்துக்குப் போ. அங்கே இரு. கணவனை
இழந்த ஒருத்தி அங்கே இருக்கிறாள். அவள்
உனக்கு உணவு தருமாறு நான் கட்ட
ளையிட்டிருக்கிறேன்” என்றார்.
10 எலியா சாறிபாத்துக்குப் போனான்.
நகரவாயிலுக்குள் நுழையும்போதே ஒரு
பெண்ணைப் பார்த்தான். அவள் கணவன்
மரித்துப்போயிருந்தான். அவள் விறகு
பொறுக்கிக்கொண்டிருந்தாள். எலியா
அவளிடம், “நான் குடிக்க ஒரு கிண்ணத்தில்
கொஞ்சம் தண்ணீர் கொண்டு வரமாட்
டாயா?” என்று கேட்டான். 11 அவள் தண்
ணீர் கொண்டுவர போனபோது அவன்,
“தயவுசெய்து அப்பமும் கொண்டு வா”
என்றான்.
12 அவளோ, “நான் தேவனாகிய கர்த்தர்
மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். என்னிடம்
அப்பம் இல்லை. ஜாடியில் கொஞ்சம் மாவும்,
கலயத்தில் கொஞ்சம் எண்ணெயும் உள்ளது.
நான் விறகு பொறுக்க வந்துள்ளேன். இத
னால் எங்கள் கடைசி உணவை சமைத்து
உண்டுவிட்டு பிறகு பசியால் நானும் என்
மகனும் மரிக்கவேண்டும்” என்றாள்.
13 எலியா அந்தப் பெண்ணிடம், “கவலைப்
படாதே. வீட்டிற்குப்போய் நான் சொன்னது
போல் சமையல் செய். உன்னிடம் உள்ள
மாவால் ஒரு சிறு அப்பத்தைச் செய்.
அதனை எனக்குக் கொண்டுவா. பிறகு
உங்களுக்குக்கானதைச் செய்யலாம், 14 இஸ்ர
வேலரின் தேவனாகிய கர்த்தர், ‘அந்த
ஜாடியில் உள்ள மாவு காலியாகாது கலயத்
திலும் எண்ணெ குறையாது என்று
கூறியுள்ளார். இது கர்த்தர் மழையைக்
கொண்டுவரும்வரை நிகழும்’ என்கிறார்”
என்றான்.
15 எனவே அந்தப் பெண் வீட்டிற்குத்
திரும்பிச்சென்று எலியா சொன்னதுபோல்
செய்தாள். எலியாவிற்கும் அந்தப் பெண்
ணிற்கும் அவள் மகனுக்கும்
பலநாட்களுக்குப் போதுமான உணவு
இருந்தது. 16 அவளது ஜாடியும் பானையும்
காலியாகாமல் இருந்தன. கர்த்தர்
சொன்னபடியே எல்லாம் நடந்தது. கர்த்தர்
எலியாவின் மூலம் பேசினார்.

17 கொஞ்சநாள் ஆனதும் அப்பெண்ணின்
மகன் அதிகமாக நோய்வாய்ப்பட்டான்.
இறுதியில் சுவாசிப்பதை நிறுத்தினான்.
18 அப்பெண் எலியாவிடம், “நீர் ஒரு
தீர்க்கதரிசி. எனக்கு உதவுவீரா. நீங்கள்
இங்கு ஏன் வந்தீர்கள்? உங்களுக்கும் எனக்
கும் என்ன தொடர்பு? என் பாவங்களை
நினைவூட்டவும் என் மகனைக் கொல்லு
வதற்குமா வந்தீர்கள்?” என்று கேட்டாள்.
19 எலியா அவளிடம், “உன் மகனை
என்னிடம் கொடு” என்றான். பின் அவனைத்
தூக்கிக்கொண்டு மேல் மாடிக்குப் படிவழியே
ஏறிப்போனான். தனது அறையி லுள்ள
படுக்கையில் அவனைக் கிடத்தி னான்.
20 பிறகு எலியா, “எனது தேவனாகிய
கர்த்தாவே, இந்த விதவை எனக்குத் தங்க
இடம் தந்தாள். அவளுக்கு இத்தீமையைச்
செய்யலாமா? மகன் மரிக்க காரணம்
ஆகலாமா? 21 பின் அவன் மீது மூன்று முறை
குப்புற விழுந்து, “எனது தேவனாகிய
கர்த்தாவே! இவனை மீண்டும் பிழைக்கச்
செய்வீராக!” என்றான்.
22 எலியாவின் வேண்டுதலுக்குக் கர்த்தர்
பதிலளித்தார். அப்பையன் மீண்டும் உயிர்
பிழைத்தான்! 23 எலியா அவனைத் தூக்கிக்
கொண்டு கீழே வந்தான். அவன் அந்தப்
பெண்ணிடம், “இதோ பார் உன் மகன்
உயிரோடு இருக்கிறான்!” என்று கூறினான்.

---

**நூனின் மகனான ... நடந்தது** பார்க்க யோசுவா 6:26.

24அந்தப் பெண், “நீங்கள் உண்மையில்
தேவனுடைய மனிதர் என்று நான் இப்
போது அறிகிறேன். கர்த்தர் உங்கள் மூலமாக
உண்மையில் பேசுகிறார்” என்றாள்.

### எலியாவும் பாகாலின் தீர்க்கதரிசிகளும்

18 மூன்று ஆண்டுகளுக்குப் பிறகும்,
மழை பெய்யவில்லை. கர்த்தர் எலியா
விடம், “போய் ஆகாப் அரசனைப் பார்.
நான் மழையை அனுப்புவேன்” என்றார்.
2எனவே எலியா ஆகாப்பைச் சந்திக்கச்
சென்றான்.
அப்போது, சமாரியாவில் உணவே
இல்லை. 3எனவே அரசன் அரண்மனை
விசாரிப்புக்காரனான ஒபதியாவைத் தன்
னிடம் வரவழைத்தான். (காரணம் ஒபதியா
உண்மையான கர்த்தருடைய ஊழியன்.
4ஒருமுறை யேசபேல் கர்த்தருடைய எல்லா
தீர்க்கதரிசிகளையும் கொன்றாள். எனவே
ஒபதியா 100 தீர்க்கதரிசிகளை 2 குகைகளில்
ஒளித்து வைத்தான். ஒவ்வொன்றிலும் 50
பேரை வைத்தான். அவர்களுக்கு உணவும்
தண்ணீரும் அளித்தான்.) 5அரசன் ஒபதியா
விடம், “இந்த நாட்டின் வழியாக என்னைப்
போகவிடு. நாம் இங்குள்ள ஒவ்வொரு
ஊற்றையும் ஆற்றையும் பார்ப்போம். நமது
குதிரைகளுக்கும் கழுதைகளுக்கும் புல்
கிடைக்குமா என்றும் பார்ப்போம். கிடைத்
தால் இந்த மிருகங்களைக் கொல்ல
வேண்டாம்” என்றான். 6நாட்டைப் பிரித்துக்
கொண்டு ஒவ்வொருவரும் ஒரு பகுதிக்குத்
தேடிப்போனார்கள். இருவரும் நாடு
முழுக்கப்போனார்கள். ஆகாப் ஒரு திசை
யிலும் ஒபதியா இன்னொரு திசையிலும்
போனார்கள். 7ஒபதியா, எலியாவைச் சந்தித்
தான். எலியாவைப் பணிந்து வணங்கினான்.
அவன், “எலியா? எஜமானரே! உண்மை
யில் நீங்கள்தானா?” என்று கேட்டான்.
8அதற்கு எலியா, “ஆமாம்! நான்தான்.
நான் இங்கே இருப்பதாக உன் அரசனிடம்
கூறு” என்றான்.
9பிறகு ஒபதியா, “நீர் இங்கே இருப்பதைப்
பற்றி நான் அரசனிடம் சொன்னால், அவர்
என்னைக் கொல்வார்! நான் உங்களுக்கு
எந்தத் தவறும் செய்யவில்லையே! ஏன்
என்னை கொல்ல விரும்புகிறீர்கள்? 10தேவ
னாகிய கர்த்தர் மீது ஆணையாகக் கூறுகி
றேன், அரசன் உங்களை எல்லா இடங்களி
லும் தேடினான்! எல்லா நாடுகளுக்கும்
ஆட்களை அனுப்பினான். ஒவ்வொரு நாட்டு
அரசனிடம் நீர் அங்கே இல்லையென்று
சத்தியம் செய்யும்படி செய்தான்! 11நான்
அரசனிடம் போய், நீங்கள் இங்கிருப்பதைச்
சொன்னால் 12பிறகு, கர்த்தருடைய ஆவி
உங்களை இங்கிருந்து வேறு இடத்துக்குத்
தூக்கிச் செல்லும். பிறகு, அரசன் உங்க
ளைக் காணாமல் என்னைக் கொல்வான்!
நான் சிறுவயது முதலே கர்த்தரைப்
பின்பற்றி வருகிறேன். 13நான் செய்ததை
நீங்கள் அறிவீர்! யேசபேல் கர்த்தருடைய
தீர்க்கதரிசிகளைக் கொன்றபோது நான் 100
தீர்க்கதரிசிகளை அழைத்துபோய் 50 பேர்
வீதம் இரண்டு குகைகளில் ஒளித்து
வைத்தேன். உணவு கொடுத்து காப்பாற்றி
னேன். 14இப்போது நீர் இங்கிருப்பதாக
அரசனிடம் சொல்ல சொல்கிறீர். அவன்
என்னைக் கொன்றுவிடுவான்!” என்றான்.
15எலியாவோ, “சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் உறுதியாக வாழ்வதுபோல, நான்
ஆணையிட்டுக் கூறுகிறேன். இன்று நான்
அரசன் முன்பு நிற்பேன்” என்றான்.
16எனவே ஒபதியா அரசனிடம் போய்
எலியா இருக்கும் இடம் பற்றி கூறினான்.
அரசனும் எலியாவைப் பார்க்க வந்தான்.
17அரசன் எலியாவைப் பார்த்ததும், “இது
நீர்தானா? நீர்தான் இஸ்ரவேலில் எல்லா
கஷ்டங்களுக்கும் காரணமானவரா?” என்று
கேட்டான்.
18அதற்கு எலியா, “இஸ்ரவேலின்
துன்பத்திற்கு நான் காரணம் அல்ல. நீயும்
உன் தந்தையின் குடும்பமும்தான் காரணம்.
நீங்கள் கர்த்தருடைய கட்டளைக்குக் கீழ்ப்
படியவில்லை, பொய்த் தெய்வங்களை
பின்பற்றினீர்கள். 19இப்போது, அனைத்து
இஸ்ரவேலர்களும் என்னை கர்மேல் மலை
யில் சந்திக்கும்படி கூறுங்கள். பாகாலின்
450 தீர்க்கதரிசிகளும் வரட்டும். ஆஷரா
பொய்த் தேவதை அரசியின் ஆதரவு பெற்ற
400 தீர்க்கதரிசிகளும் வரட்டும். இந்த
தீர்க்கதரிசிகள் அரசி யேசபேலின் உதவி
பெற்றவர்கள்” என்றான்.
20எனவே ஆகாப் அனைத்து இஸ்ர
வேலர்களையும் தீர்க்கதரிசிகளையும் கர்மேல்
மலைக்கு வரவழைத்தான். 21எலியா அங்கு
வந்து, “யாரை பின்பற்றுவது என்று
எப்பொழுது முடிவு செய்வீர்கள்? கர்த்தர்
உண்மையான தேவன் என்றால், அவரைப்
பின்பற்ற வேண்டும். பாகால்தான் உண்மை
யான தேவன் என்றால், அவனைப் பின்பற்ற
வேண்டும்!” என்றான்.
ஜனங்கள் எதுவும் கூறவில்லை. 22எனவே
எலியா, “நான் இங்கு கர்த்தருடைய ஒரே
தீர்க்கதரிசி. நான் தனியாக இருக்கிறேன்.
ஆனால் பாகாலுக்கு 450 தீர்க்கதரிசிகள்
உள்ளனர். 23எனவே இரண்டு காளைகளைக்
கொண்டு வாருங்கள். பாகாலின் தீர்க்க
தரிசிகள் ஒரு காளையை எடுத்துக் கொள்
ளட்டும். அவர்கள் அதை கொன்று துண்டு
துண்டாக வெட்டி விறகின் மேல் வைக்கட்
டும். ஆனால் அதை எரிக்கவேண்டாம்.
பிறகு மற்ற காளையை நான் அப்படியே
செய்வேன். நான் நெருப்பு எரிக்கத் தொடங்
கமாட்டேன். 24பாகால் தீர்க்கதரிசிகளே,
நீங்கள் உங்கள் தெய்வத்தை நோக்கி ஜெபி

யுங்கள். நான் என் கர்த்தரை நோக்கி
ஜெபிப்பேன். அந்த ஜெபத்திற்கு செவி
சாய்த்து விறகுகளைத் தானாக எரிய
வைக்கிறவரே உண்மையான தேவன்”
என்றான்.
இது நல்ல திட்டம் என அனைவரும்
ஒப்புக்கொண்டனர்.
25 எலியா பாகாலின் தீர்க்கதரிசிகளிடம்,
“நீங்கள் நிறையபேர் இருக்கிறீர்கள். முதலில்
போய் ஒரு காளையைத் தேர்ந்தெடுங்கள்.
அதைத் தயார் செய்து உங்கள் தெய்வத்தை
வேண்டுங்கள். ஆனால் நெருப்பிட வேண்
டாம்” என்றான்.
26 அவர்களும் அவ்வாறே செய்தனர்.
மதியம்வரை, பாகாலிடம் ஜெபித்தனர்.
“பாகால், எங்களுக்குப் பதில் கூறும்!”
என்றனர். சத்தமில்லை. யாரும் பதில்
சொல்லவில்லை. அவர்கள் பலிபீடத்தைச்
சுற்றி ஆடினார்கள். நெருப்பு பற்றவில்லை.
27 எலியா மத்தியானத்தில் அவர்களைக்
கேலிச் செய்தான், “உண்மையில் பாகால்
தெய்வமானால் சத்தமாக ஜெபியுங்கள்!
அவர் ஒருவேளை தியானத்தில் இருப்பார்!
அல்லது வேறு வேலையில் இருப்பார்!
அல்லது எங்காவது போயிருப்பார்! அல்லது
தூங்கியிருப்பார்! எழுப்புங்கள்!” என்று
கூறினான். 28 அவர்களும் சத்தமாக ஜெபித்
தார்கள். அவர்கள் தங்களை வாளாலும்
ஈட்டியாலும் காயப்படுத்திக் கொண்டனர்.
இது ஒருவகையான தொழுதுகொள்ளுதல்.
இரத்தம் கொட்டும்வரை இவ்வாறு செய்த
னர். 29 மதியமும் போனது. நெருப்பு பற்ற
வில்லை. மாலை வரை வேண்டுதல் செய்த
னர். எதுவும் நடக்கவில்லை. பாகாலிட
மிருந்து பதிலும் வரவில்லை. எந்த ஓசையும்
இல்லை. யாரும் கவனிக்கவில்லை!
30 இப்போது எலியா ஜனங்களிடம்,
“இப்போது என்னிடம் வாருங்கள்” என்று
கூப்பிட ஜனங்கள் அவனைச் சுற்றிக் கூடி
னார்கள். உடைந்த கர்த்தருடைய பலி
பீடத்தை அவன் செப்பனிட்டான். 31 எலியா
அதில் 12 கற்களைக் கோத்திரங்களுக்கு
ஒன்று வீதமாகக் கண்டுபிடித்தான். இது
யாக்கோபின் 12 மகன்களைக் குறிக்கும்.
கர்த்தரால் இஸ்ரவேல் என்று அழைக்கப்
பட்டவராக யாக்கோபு இருந்தார். 32 எலியா
பலிபீடத்தைச் செப்பனிட்டு, அதைச்
சுற்றிலும் குழி அமைத்தான். 7 கலன்
தண்ணீர் பிடிக்குமாறு அக்குழி இருந்தது.
33 பின் பலிபீடத்தில் விறகை வைத்து,
காளையைத் துண்டுகளாக்கி மேலே
வைத்தான். 34 எலியா, “ஏழு ஜாடிகளில்
தண்ணீரை நிரப்பச் சொன்னான். அதனை,
விறகின் மேலுள்ள மாமிசத் துண்டில்
ஊற்றுங்கள்” என்று சொன்னான். அவன்,
“மீண்டும் செய்க” என்றான். பிறகு அவன்,
“மூன்றாவது முறையும் அப்படியே செய்யுங்
கள்” என்று சொன்னான். 35 அந்த தண்ணீர்
வடிந்து பலிபீடத்தைச் சுற்றிய குழியில்
நிரம்பியது.
36 இது மாலை பலிக்கான நேரம். எனவே
பலிபீடத்தின் அருகில் எலியா சென்று,
ஜெபம் செய்தான். “கர்த்தாவே, ஆபிரகாம்,
ஈசாக்கு, யாக்கோபு ஆகியோரின் தேவனே,
நீர்தான் இஸ்ரவேலின் தேவன் என்பதை
நிரூபியும் என்று நான் இப்போது உம்மைக்
கேட்கிறேன். நான் உம்முடைய ஊழியன்
என்பதையும் நிரூபியும். நீர்தான் இவற்றை
செய்ய கட்டளையிட்டுள்ளீர் என்பதைக்
காட்டும். 37 கர்த்தாவே! என் ஜெபத்திற்கு
பதில் சொல்லும். பிறகு அவர்கள்,
கர்த்தாவே நீர்தான் தேவன், என்று
அறிவார்கள். நீர் அவர்களது இதயங்களை
மீண்டும் திருப்பிக் கொண்டிருக்கிறீர்”
என்றான்.
38 எனவே கர்த்தர் நெருப்பை அனுப்
பினார். மாமிசம், விறகு, பலிபீடம், பலீ
பீடத்தைச் சுற்றிய இடமும் பற்றி எரிந்தது.
தண்ணீரும் வற்றியது. 39 அனைவரும் இத
னைப் பார்த்து, தரையில் விழுந்து வணங்கி,
“கர்த்தரே தேவன், கர்த்தரே தேவன்” என்
றனர்.
40 பிறகு எலியா, “பாகாலின் தீர்க்க
தரிசிகளைத் தப்பிவிடாதபடி பிடியுங்கள்!”
என்றான். ஜனங்கள் அவர்களைப் பிடித்த
னர். அவர்கள் அனைவரையும் கீசோன்
என்ற இடத்தில் கொன்றனர்.

## மழை மீண்டும் வந்தது

41 எலியா ஆகாப் அரசனிடம், “போ,
உணவு உண்ணும். மழை வரப்போகிறது”
என்றான். 42 எனவே ஆகாப் உணவு
உண்ணப்போனான். பிறகு, எலியா கர்மேல்
மலையின் உச்சியில் ஏறி, குனிந்து
தலையை முழங்கால்களுக்கு இடையில்
வைத்து, 43 தன் வேலைக்காரனிடம்,
“கடலைப்பார்” என்றான். வேலைக்காரனும்
சென்று கடலைப்பார்த்தான். திரும்பி வந்து,
“எதையும் காணவில்லை” என்றான்.
எலியா அவனை மீண்டும் பார்க்கச் சொன்
னான். இவ்வாறு ஏழு முறை சொல்ல,
44 ஏழாவது முறை வேலைக்காரன், “மனிதக்
கை அளவில் சிறுமேகம் கடலிலிருந்து
எழும்பி வருவதைப் பார்த்தேன்” என்றான்.
எலியா அவனிடம், “ஆகாப் அரசனிடம்
போய்ச் சொல். உடனே இரதத்தில் ஏறி
வீட்டிற்குப் போகச்சொல். இல்லாவிடில்
மழை தடுத்துவிடும்” என்றான்.
45 சிறிது நேரத்தில், வானத்தில் கருமேகங்
கள் கவிந்தன. காற்று வீசியது, பெருமழை
பெய்தது. ஆகாப் இரதத்தில் ஏறி யெஸ்ரயே
லுக்குப் போனான். 46 கர்த்தருடைய வல்
லமை எலியாவிடம் வர, தன் ஆடையை
இறுக்கக் கட்டிக்கொண்டு அரசனுக்கு முன்
னால் யெஸ்ரயேல் வழி முழுவதும் ஓடி
னான்.

### சீனாய் மலையில் எலியா

19 எலியா செய்ததை எல்லாம் ஆகாப்
அரசன் தன் மனைவி யேசபேலுக்கு
கூறினான். அவன் எவ்வாறு அனைத்து
தீர்க்கதரிசிகளையும் வாளால் கொன்றான்
என்றும் கூறினான். 2எனவே அவள்
எலியாவிடம் ஒரு தூதுவனை அனுப்பி,
"நாளை இதே நேரத்திற்குள், நீ தீர்க்க
தரிசிகளைக் கொன்றது போன்று உன்னைக்
கொல்வேன். இல்லாவிட்டால், என்னைத்
தெய்வங்கள் கொல்லட்டும்" என்று சொல்
லச்செய்தாள்.
3எலியா இதைக் கேட்டதும், பயந்தான்.
தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடி
னான். தன்னோடு வேலைக்காரனையும்
அழைத்துப்போனான். யூதாவிலுள்ள
பெயெர்செபாவிற்குப்போய், அங்கே
அவனை விட்டுவிட்டான். 4பிறகு நாள்
முழுவதும் பாலைவனத்தில் அலைந்தான்.
ஒரு புதரின் அருகில் உட்கார்ந்தான். "இது
போதும், கர்த்தாவே! என்னை மரிக்கவிடும்.
என் முற்பிதாக்களைவிட நான் நல்லவன்
அல்ல" என்று வேண்டினான்.
5பிறகு அவன் ஒரு மரத்தடியில் படுத்து
தூங்கினான். ஒரு தேவதூதன் வந்து அவ
னைத் தொட்டான். "எழுந்திரு, சாப்பிடு!"
என்றான். 6எலியா தன்னருகில் தழலில்
சுடப்பட்ட அடையும் ஒரு பாத்திரத்தில்
தண்ணீரும் இருப்பதைப் பார்த்தான். அவன்
உண்டு குடித்து திரும்பத் தூங்கப் போனான்.
7மீண்டும் தேவதூதன் வந்து, "எழுந்திரு!
சாப்பிடு! இல்லாவிட்டால், நீண்ட பயணம்
செய்ய முடியாது" என்றான். 8எனவே
எலியா எழுந்து சாப்பிட்டுவிட்டு தண்ணீர்
குடித்தான். 40 நாட்கள் இரவும் பகலும்
நடப்பதற்கான பெலத்தை அது கொடுத்தது.
அவன் தேவனுடைய மலையான ஓரேப்புக்
குச் சென்றான். 9அங்கு ஒரு குகையில்
இரவில் தங்கினான்.
அப்போது கர்த்தர், "இங்கே ஏன் இருக்கி
றாய்?" என்று எலியாவிடம் பேசினார்.
10அதற்கு எலியா, "சர்வ வல்லமையுள்ள
தேவனாகிய கர்த்தாவே, நான் எப்போதும்
உமக்கு ஊழியம் செய்திருக்கிறேன். நான்
எப்பொழுதும் என்னால் முடிந்த அளவு*
சிறப்பாகச் சேவை செய்திருக்கிறேன்.
ஆனால் இஸ்ரவேலர்கள் தம் உடன்படிக்
கையை முறித்துவிட்டனர். உம்முடைய
பலிபீடங்களை அழித்தனர். உம்முடைய
தீர்க்கதரிசிகளைக் கொன்றனர். இப்பொழுது
ஒரே தீர்க்கதரிசியான என்னையும் கொல்லப்
பார்க் கிறார்கள்!" என்று முறையிட்டான்.
11கர்த்தர் எலியாவிடம், "எனக்கு முன்
னால் மலையின்மேல் நில் அப்பொழுது
நான் உன்னை கடந்து செல்வேன்" என்றார்.
பிறகு ஒரு பலமான காற்று அடித்தது. அது
மலைகளை உடைப்பது போல இருந்
தது. ஆனால் அது கர்த்தர் அல்ல! பிறகு
நில அதிர்ச்சி உண்டாயிற்று. அதுவும்
கர்த்தர் அல்ல! 12அதற்குப்பின், நெருப்பு
உருவானது. அதுவும் கர்த்தர் அல்ல.
நெருப்புக்குப்பின், அமைதியான மென்மை
யான சத்தம் வந்தது.
13எலியா அந்தச் சத்தத்தைக் கேட்டதும்
தன் முகத்தைச் சால்வையால் மூடிக்
கொண்டான். குகையின் வாசலுக்கு வந்து
நின்றான். பிறகு அந்தச் சத்தம் அவனிடம்,
"எலியா, ஏன் இங்கிருக்கிறாய்?" என்று
கேட்டது.
14எலியாவோ, "சர்வ வல்லமையுள்ள
தேவனாகிய கர்த்தாவே, என்னால் முடிந்த
வரை உமக்கு எப்போதும் சேவை செய்து
வருகிறேன். ஆனால் இஸ்ரவேல் ஜனங்கள்
தமது உடன்படிக்கையில் இருந்து நழுவி
மீறிவிட்டனர். அவர்கள் உம்முடைய பலி
பீடங்களை உடைத்தனர், உம்முடைய தீர்க்க
தரிசிகளைக் கொன்றனர். நான் மட்டுமே
ஒரே தீர்க்கதரிசியாக உயிரோடு இருக்கி
றேன். இப்போது என்னையும் கொல்லப்
பார்க்கிறார்கள்" என்றான்.
15கர்த்தர், "சாலைக்குப் போ. அது தமஸ்கு
விற்கு போகும். அங்குப்போய் ஆசகேலை
சீரியாவின் அரசனாக அபிஷேகம் செய்.
16பிறகு, இஸ்ரவேலின் அரசனாக நிம்சியின்
மகனான யெகூவை அபிஷேகம் செய்.
பிறகு, ஆபேல்மேகொலா ஊரானாகிய
சாப்பாத்தின் மகன் எலிசாவை உனது
இடத்தில் தீர்க்கதரிசியாக அபிஷேகம் செய்.
17ஆசகேல் பல தீயவர்களைக் கொன்றுவிடு
வான். இவனது வாளுக்குத் தப்பியவர்களை
யெகூ கொன்றுவிடுவான். இவனது
வாளுக்குத் தப்பியவர்களை எலிசா
கொன்றுவிடுவான். 18எலியா, நீ மட்டும்
இஸ்ரவேலில் உண்மையானவன் என்
றில்லை. இன்னும் பலர் இருக்கிறார்கள். நான்
7000 பேரின் உயிரை வைப்பேன். 7000
இஸ்ரவேலர் பாகாலை வணங்காதவர்களாக
இருக்கிறார்கள்! அவர்கள் பாகாலின்
விக்கிரகத்தை முத்தமிடுவதில்லை" என்றார்.

### எலிசா தீர்க்கதரிசியாகிறான்

19எலியா அந்த இடத்தை விட்டுப்போய்
சாப்பாத்தின் மகனான எலிசாவைக்
கண்டுபிடித்தான். எலிசா 12 ஏக்கர் நிலத்தை
உழுதுகொண்டிருந்தான். எலியா போகும்
போது அவன் உழவை முடிக்கிற நிலையில்
இருந்தான். பிறகு எலியா அவனிடம்
சென்று, அவன் மீது தன் போர்வையை
எறிந்தான். 20உடனே அவன் தன் மாடுகளை
விட்டுவிட்டு, எலியாவின் பின்னால்
போனான். எலிசா, "நான் என் தந்தையிட

---

**என்னால் முடிந்த அளவு** வல்லமைமிக்க தேவனாகிய கர்த்தரை குறித்து நான் மிக்க மகிழ்ச்சியுடனிருக்கிறேன்.

*மும் தாயிடமும் முத்தமிட்டு விடைபெற்று
வரட்டுமா?” எனக்கேட்டான். எலியாவோ,
“நல்லது போ. என்னால் அதைத் தடுக்க
முடியாது” என்றான்.
21 எலிசா தன் குடும்பத்துடன் சிறப்பான
உணவை உண்டான். எலிசா தன் பசுக்
களைக் கொன்றான். நுகத்தடியை ஒடித்து
விறகாக்கினான். பிறகு இறைச்சியை
சமைத்து அனைவருக்கும் உண்ண உணவ
ளித்தான். பின்னர் அவன் எலியாவிற்குப்
பின்னால் போய் அவனுக்குச் சேவை
செய்தான்.*

### பெனாதாத்தும் ஆகாப்பும் போரிடல்

20 *பெனாதாத் ஆராமின் அரசன். அவன்
தனது படையைத்திரட்டி 32 அரசர்
களோடும் குதிரைகளோடும் இரதங்
களோடும் சமாரியாவைத் தாக்கி முற்றுகை
யிட்டான். 2 அவன் இஸ்ரவேலின் அரசனான
ஆகாப்புக்குத் தூதுவர்களை அனுப்பினான்.
அவனுடைய செய்தி கீழ்கண்டவாறு
இருந்தது. 3 “உனது வெள்ளியையும்
பொன்னையும் எனக்குக் கொடுக்க
வேண்டும், உனது தேர்ந்தெடுக்கப்பட்ட
மனைவியரையும் குழந்தைகளையும்
எனக்குக் கொடுக்க வேண்டும்.”
4 இஸ்ரவேலரின் அரசனோ, “என்
எஜமானனாகிய அரசனே, இப்போது நான்
உமக்குரியவன். என்னைச் சார்ந்த அனைத்
தும் உமக்கு உரியது ஆகும்” என்றான்.
5 மீண்டும் தூதுவர்கள் ஆகாப்பிடம்
வந்தனர். “நாங்கள் அரசனிடம் நீங்கள்
சொன்னவற்றைக் கூறினோம். பெனாதாத்,
‘ஏற்கனவே உங்கள் வெள்ளி, பொன்,
மனைவி ஜனங்கள் எல்லாவற்றையும்
கொடுக்க வேண்டும் என்று கூறியிருந்தேன்.
6 நாளை என் ஆட்களை அனுப்புவேன்.
அவர்கள் உங்கள் வீடுகளுக்கும் அதிகாரிக
ளின் வீடுகளுக்கும் வருவார்கள். உங்களது
மதிப்பிற்குரிய பொருட்களைக் கொடுத்து
விட வேண்டும்’ என்றான்” என்றனர்.
7 எனவே ஆகாப் தன் நாட்டிலுள்ள
மூப்பர்களை அழைத்து ஒன்றுசேர்த்து ஒரு
கூட்டம் போட்டான். அவன், “பாருங்கள்,
பெனாதாத் தொல்லை தர வந்துள்ளான்.
முதலில் அவன் எனது வெள்ளி, பொன்,
மனைவி, ஜனங்கள் அனைத்தையும்
கேட்டான். நான் அவற்றைக் கொடுக்க
ஒப்புக்கொண்டேன். ஆனால் இப்போது
அவன் எல்லாவற்றையும் விரும்புகிறான்.
நாம் என்ன செய்யலாம்” என ஆலோசித்
தான்.
8 ஆனால் மூப்பர்களும் மற்றவர்களும்,
“அவனுக்குக் கீழ்ப்படிந்து அவன் சொன்ன
படி செய்யவேண்டாம்” என்றனர்.
9 எனவே ஆகாப் பெனாதாத்துக்குத்
தூதுவனை அனுப்பி, “நான் உனது முதல்
கட்டளைக்குக் கீழ்ப்படிகிறேன். ஆனால்
இரண்டாவது கட்டளைக்குக் கீழ்ப்படியமாட்
டேன்” என்றான்.
பெனாதாத் செய்தியை அறிந்துக்கொண்
டான். 10 அவனது ஒரு தூதுவனை அனுப்பி,
“நான் சமாரியா முழுவதையும் அழிக்கப்
போகிறேன். நகரத்தில் எதுவும் மீதியாகாது.
எனது ஆட்கள் எடுத்துக்கொள்ள எதுவும்
இருக்காது! இவ்வாறு நான் செய்யா
விட்டால் தேவன் என்னைத் தண்டிக்
கட்டும்!” என்றான்.
11 அதற்கு ஆகாப், “பெனாதாத்திடம்
சொல். ஆயுதம் அணிந்திருப்பவன்
ஆயுதத்தை உரிந்து போடுபவனைப்போன்று
பெருமைபடக்கூடாது” என்று சொல்லி
அனுப்பினான்.
12 கூடாரத்தில் பெனாதாத் மற்றவர்களோடு
குடித்துக்கொண்டிருந்தான். அப்போது தூது
வர்கள் ஆகாப்பின் செய்தியைச் சொல்ல
சமாரியாவைத் தாக்கும்படி ஆணை
யிட்டான். படைகளும் நகர்ந்தன.
13 அப்போது, ஆகாப்பிடம் ஒரு தீர்க்கதரிசி
வந்து, “அரசனே, அந்த பெரும்ப
டையைப்பார்?, நானே கர்த்தர், என்று நீ
அறியும்படி நான் அப்படையை உன்
மூலம் தோற்கடிப்பேன்” என்று கர்த்தர்
கூறுகிறார்.
14 அதற்கு ஆகாப், “யார் மூலம்?” என்று
கேட்டான்.
அதற்கு அத்தீர்க்கதரிசி, “அரசாங்க அதி
காரிகளின் ‘இளம் உதவியாளர்கள் மூலம்’
என்று கர்த்தர் கூறுகிறார்” என்றான்.
மேலும் அரசன், “போரை யார் துவக்க
வேண்டும்?” என்று கேட்க,
தீர்க்கதரிசி, “நீ தான்” என்று பதில்
சொன்னான்.
15 எனவே ஆகாப் அரசாங்க அதிகாரி
களின் இளம் உதவியாளர்களில் 232 பேரைச்
சேர்த்தான். இதனோடு இஸ்ரவேல் படையின்
எண்ணிக்கை 7,000 ஆயிற்று.
16 நடுமத்தியான வேளையில் அரசனான
பெனாதாத்தும் அவனது உதவிக்கு வந்த
32 அரசர்களும் குடித்துகொண்டு தம்
கூடாரத்தில் மயங்கிக்கிடந்தார்கள். அப்
போது, ஆகாப் அவர்களைத் தாக்கினான்.
17 முதலில் இளம் உதவியாளர்கள் தாக்கினர்.
பெனாதாத்தின் ஆட்கள் அரசனிடம் சென்று
இவர்கள் சமாரியாவிலிருந்து வந்திருப்
பதாகச் சொன்னார்கள். 18 அதற்கு அவன்,
“அவர்கள் போரிட வந்திருக்கலாம் அல்லது
சமாதானத்திற்கு வந்திருக்கலாம். அவர்களை
உயிரோடு பிடியுங்கள்” என்றான்.
19 ஆகாப்பின் இளைஞர்கள் தீவிரமாகத்
தாக்கினார்கள். அவர்களைத் தொடர்ந்து
இஸ்ரவேலின் படை சென்றது. 20 எதிரே
வருபவர்களைக் கொன்றனர். சீரியாவி
லிருந்து வந்தவர்கள் ஓட ஆரம்பித்தனர்.
இஸ்ரவேல் படை அவர்களை விரட்டியது.
பெனாதாத் இரதத்தில் ஏறி தப்பித்து ஓடி*

னான். 21ஆகாப் அரசன் படையோடு போய்
சீரியா நாட்டு குதிரைகளையும் இரதங்களை
யும் கைப்பற்றிக் கொண்டான். சீரியாவின்
படையின் மீது ஆகாப் பெரு வெற்றியை
பெற்றான்.
22பிறகு தீர்க்கதரிசி, ஆகாப்பிடம் போய்,
“சீரியாவின் அரசனான பெனாதாத் மீண்டும்,
அடுத்த ஆண்டு போரிட வருவான். எனவே
உங்கள் படையைப் பலப்படுத்துங்கள்.
அவனிடமிருந்து உங்களைக் காத்துக்
கொள்ள கவனமாக திட்டங்களைச் செய்யுங்
கள்” என்றான்.

### பெனாதாத் மீண்டும் தாக்கினான்

23பெனாதாத்தின் அதிகாரிகள், “இஸ்ர
வேலின் தெய்வங்கள் மலைத் தெய்வங்களாக
உள்ளனர். அதனால் வென்றுவிட்டனர்.
எனவே நாம் சமவெளியில் போர் செய்ய
வேண்டும். அப்போதுதான் வெற்றி கிடைக்
கும்! 24இனிமேல் செய்யவேண்டியது இது
தான். 32 அரசர்களும் கட்டளையிடும்படி
அனுமதிக்காதே. ஒவ்வொரு தளபதியும் தம்
படைகளை நடத்தட்டும்.
25“இப்போது நீ அழிக்கப்பட்ட ஒரு
படையை கூட்டவேண்டும். இரதங்களையும்
குதிரைகளையும் சேர்க்க வேண்டும். சம
வெளியில் சண்டையிட வேண்டும். பிறகு
வெல்வோம்” என்றனர். அவர்கள் சொன்ன
படியே பெனாதாத்தும் செய்தான்.
26அடுத்த ஆண்டில், அவன் ஆப்பெக்குக்கு
இஸ்ரவேலரோடு சண்டையிடச் சென்றான்.
27இஸ்ரவேலரும் போருக்குத் தயாராக
இருந்தனர். அவர்கள் சீரியாவுக்கு எதிராக
முகாம்கள் அமைத்தனர். சீரியா படையோடு
ஒப்பிடும்போது, இவர்கள் படை சிறிய
ஆட்டு மந்தையைப்போல் இருந்தனர்.
ஆனால் சீரியா, வீரர்கள் முழு பகுதியையும்
சூழ்ந்தனர்.
28இஸ்ரவேல் அரசனிடம் தேவமனிதன்
ஒருவன் கீழ்க்கண்ட செய்திகளோடு வந்தான்:
கர்த்தர் சொன்னார், “கர்த்தராகிய நான்
மலைகளின் தேவன் என்று ஆராமியர்
சொன்னார்கள். ‘சமவெளிப் பிரதேசங்க
ளுக்கு நான் தேவன் அல்ல என்று
அவர்கள் நினைத்துக்கொண்டு இருக்கிறார்
கள். எனவே இந்த பெரும்படையைத்
தோற்கடிக்க உன்னை அனுமதிக்கிறேன்.
பிறகு நீங்கள் அனைவரும் எல்லா இடங்க
ளுக்கும் நானே கர்த்தர் என்பதை உணர்வீர்
கள்.’”
29படைகள் ஒன்றுக்கொன்று எதிராக ஏழு
நாட்கள் முகாமிட்டிருந்தன. ஏழாவதுநாள்
போர் தொடங்கியது. ஒரே நாளில் 1,00,000
பேரை இஸ்ரவேலர்கள் கொன்றனர்.
30பிழைத்தவர்கள் ஆப்பெக் நகருக்குள்
ஓடிப்போனார்கள். மீதியுள்ள 27,000 பேர்
மீது சுவரிடிந்து விழுந்தது. பெனாதாத்தும்
ஓடிப்போனான். ஒரு அறைக்குள் ஒளிந்துக்
கொண்டான். 31அவனிடம் அவனது
வேலைக்காரர்கள், “இஸ்ரவேல் மன்னர்கள்
இரக்கமுள்ளவர்கள் என்று கேள்விபட்டுள்
ளோம். ஆனால் நாங்கள் இரட்டுகளை
இடுப்பிலும் கயிறுகளைத் தலையிலும் கட்டி
அவர்களிடம் போய் கெஞ்சினால் உம்மை
உயிரோடு விடுவர்” என்றனர்.
32பின் அவ்வாறே போய் இஸ்ரவேல்
அரசனைச் சந்தித்தனர். “உங்கள் அடிமை
யான, பெனாதாத் ‘எங்களை உயிரோடு
விடுங்கள்’ என்று வேண்டுகிறார்” என்றனர்.
அதற்கு ஆகாப், “அவன் இன்னும்
உயிரோடு இருக்கிறானா? அவன் என்
சகோதரன்” என்றான்.
33அவர்கள், பெனாதாத்தைக் கொல்லாமல்
இருக்க வாக்குறுதிகளைக் கேட்டனர்.
ஆகாப் பெனாதாத்தைச் சகோதரன் என
அழைத்ததும் அவனது ஆலோசகர்களும்,
“ஆமாம். அவன் உன் சகோதரன்” என்றனர்.
ஆகாப், “என்னிடம் அவனைக் கொண்டு
வா” என்றான். எனவே பெனாதாத்
அரசனிடம் வந்தான். ஆகாப் அரசன்
அவனிடம், அவனோடு இரதத்தில் ஏறுமாறு
சொன்னான்.
34பெனாதாத்தோ, “ஆகாப். என் தந்தை
எடுத்துக்கொண்ட உங்கள் நகரங்களைத்
திரும்பத் தருவேன். நீங்கள் தமஸ்குவிலே,
கடை வீதிகளை என் தந்தை சமாரியாவில்
செய்தது போன்று வைத்துக்கொள்ளலாம்”
என்றான்.
ஆகாப்போ, “இதற்கு நீ அனுமதித்தால்,
நான் உன்னை விட்டுவிடுவேன்” என்றான்.
இவ்வாறு இருவரும் சமாதான ஒப்பந்தம்
செய்து கொண்டனர். பெனாதாத் விடுதலை
பெற்றான்.

### ஆகாப்புக்கு எதிராகத் தீர்க்கதரிசி பேசியது

35ஒரு தீர்க்கதரிசி இன்னொருவனிடம்,
“என்னைத் தாக்கு!” என்றான். ஏனென்றால்
கர்த்தருடைய கட்டளை என்றான்.
அவனோ தாக்கவில்லை. 36அதற்கு அவன்,
“நீ கர்த்தருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிய
வில்லை. எனவே உன்னை ஒரு சிங்கம்
கொல்லும்” என்றான். அவ்வாறே அவன்
அந்த இடத்தை விட்டுப் போனதும் சிங்கம்
அவனைக் கொன்றது.
37அந்த தீரிக்கதரிசி இன்னொருவனிடம்
போய், “என்னைத் தாக்கு” என்றான்.
அதற்கு அவன் தாக்கி காயப்படுத்தினான்.
38எனவே, அந்த தீர்க்கதரிசி தன் முகத்திலே
சாம்பலைப் போட்டு வேஷம் மாறி அரசனுக்
காக வழியில் காத்திருந்தான். 39அரசன்
வந்ததும் அவனிடம், “நான் போரிட சென்
றேன். நம்மில் ஒரு மனிதன் பகை வீரனை
அழைத்து வந்தான். அவன், ‘இந்த
மனிதனைப் பாதுகாப்பாக வைத்திரு, இவன்
தப்பினால் இவனுக்காக உன் உயிரைக்

கொடுக்க வேண்டும் அல்லது அபராதமாக
75 பவுண்டுகளைத் தரவேண்டும்' என்றான்.
40 நான் வேறு வேலைகளில் இருந்தபோது
அவன் தப்பித்துவிட்டான்" என முறை
யிட்டான்.

அதற்கு இஸ்ரவேல் அரசன், "நீ ஒரு
வீரனை தப்பவிட்டதற்கான குற்றவாளி
ஆகிறாய். எனவே அவன் சொன்னபடி
செய்" என்றான்.

41 பிறகு அவன் தன் முகத்தில் உள்ள
துணியை விலக்கவே, அரசனுக்கு அவன்
தீர்க்கதரிசிகளில் ஒருவன் என்பது தெரிந்தது.
42 தீர்க்கதரிசி அரசனிடம், "கர்த்தர் உம்மிடம்,
'நான் உன்னிடம், மரிக்கவேண்டும் என்று
சொன்னவனை விடுதலைச் செய்தாய்.
எனவே நீ அவனது இடத்தை அடுத்து நீ
மரிப்பாய்! உனது ஜனங்கள் அவர்களின்
பகைவர்களது இடத்தை எடுப்பார்கள், உன்
ஜனங்களும் மரிப்பார்கள்!' என்று சொல்லச்
சொன்னார்" என்றான்.

43 இதனால் சலிப்பும் துக்கமும் அடைந்து
அரசன் சமாரியாவிற்கு திரும்பினான்.

## நாபோத்தின் திராட்சை தோட்டம்

21 சமாரியாவில் ஆகாப்பின் அரண்
மனை இருந்தது. அதனருகில் ஒரு
திராட்சை தோட்டமும் இருந்தது. அதன்
உரிமையாளன் யெஸ்ரயேலியனாகிய
நாபோத். 2 ஒருநாள் அரசன் அவனிடம்,
"உனது வயலை எனக்குக்கொடு. அதனைக்
காய்கறி தோட்டமாக்க வேண்டும். இது என்
அரண்மனைக்கருகில் உள்ளது. உனக்கு
அந்த இடத்தில் வேறு திராட்சைத்
தோட்டத்தைத் தருவேன் அல்லது நீ
விரும்பினால் பணம் தருவேன்" என்றான்.
3 அதற்கு நாபோத், "நான் தரமாட்டேன்.
இது என் குடும்பத்திற்கு உரியது" என்றான்.
4 எனவே ஆகாப் அரண்மனைக்குப்போய்
நாபோத் மீது கோபம்கொண்டான். அவன்
சொன்னதை அரசன் விரும்பவில்லை.
நாபோத், "என் குடும்பத் தோட்டத்தைத்
தரமாட்டேன்" எனக்கூறியது எரிச்சலைத்
தந்தது. படுக்கையில் படுத்துக்கொண்டு
உண்ண மறுத்தான்.
5 ஆகாப்பின் மனைவி யேசபேல் அவனி
டம், "ஏன் நீங்கள் குலைந்து போனீர்கள்?
ஏன் நீங்கள் உண்ண மறுக்கிறீர்கள்?"
என்று கேட்டாள்.
6 அதற்கு அவன், "நான் நாபோத்திடம்
திராட்சை தோட்டத்தைக் கேட்டேன். அதற்
குரிய முழு விலையோ, அல்லது வேறு
வயலோ தருவதாகச் சொன்னேன். ஆனால்
அவன் மறுத்துவிட்டான்" என்றான்.
7 அவளோ, "நீங்கள் இஸ்ரவேலின் அரசன்!
எழுந்திருங்கள். சாப்பிடுங்கள். நான் அந்த
வயலை வாங்கித் தருவேன்" என்றாள்.
8 பிறகு அவள் சில கடிதங்களை எழுதி
அரசனின் கையெழுத்திட்டு முத்திரையும்
அடித்தாள். பின் அவற்றை மூப்பர்களிடமும்
நாபோத்தைப் போன்று அதே பட்டிணத்தில்
இருந்த முக்கிய மனிதர்களிடமும் அனுப்பி
னாள். 9 அக்கடிதத்தில்,

"நீங்கள் உபவாசம் பற்றி அறிவியுங்கள்.
பின் அனைவரையும் அழையுங்கள். அதில்
நாபோத்தைப்பற்றி பேசவேண்டும். 10 அவன்
மீது பொய்க்குற்றம் சாட்ட இரண்டு
ஏமாற்றுக்காரர்கள் வேண்டும். அவன்
அரசனுக்கும் தேவனுக்கும் எதிராகப்
பேசினான் என்று கூறவேண்டும். பின்
அவனை ஊருக்கு வெளியே கல்லெறிந்து
கொல்ல வேண்டும்" என்று எழுதியிருந்தது.
11 எனவே, மூப்பர்களும் முக்கியமானவர்
களும் இக்கட்டளைக்கு அடிபணிந்தனர்.
12 தலைவர்கள் உண்ணாநோன்பு நாளை
அறிவித்தனர். அன்று ஒரு கூட்டத்திற்கு
அழைத்தனர். நாபோத்தைத் தனியாக
நிறுத்தினர். 13 பின் இரு ஏமாற்றுக்காரர்கள்
ஜனங்களிடம் நாபோத் தேவனுக்கு எதிராக
வும் அரசனுக்கு எதிராகவும் பேசினான்
என்றனர். எனவே, அவனை ஊருக்கு
வெளியே கொண்டுபோய் கல்லெறிந்து
கொன்றனர். 14 அவர்கள் பிறகு யேசபே
லுக்கு, "நாபோத் கொல்லப்பட்டான்" என்ற
செய்தியை அனுப்பிவைத்தனர்.
15 அவள் இதனை அறிந்ததும் ஆகாப்பிடம்,
"நாபோத் மரித்துப்போனான். இப்போது
உங்களுக்கு விருப்பமான தோட்டத்தை
எடுத்துக் கொள்ளுங்கள்" என்றாள். 16 அவ
னும் அதனைச் சொந்தமாக்கிக் கொண்டான்.
17 அப்போது திஸ்பியனாவின் தீர்க்கதரிசி
எலியாவிடம் கர்த்தர், 18 "அரசனிடம் போ,
அவன் நாபோத்தின் வயலில் உள்ளான்.
சொந்தமாக்கப் போகிறான். 19 அவனிடம்
'ஆகாப்! நீ நாபோத்தைக் கொன்றாய்.
அவனது வயலை எடுக்கப்போகிறாய்.
நாபோத் மரித்த இடத்திலேயே நீயும் மரிப்
பாய். நாபோத்தின் இரத்தத்தை நக்கிய
நாய்கள் உனது இரத்தத்தையும் நக்கும்,
என்று நான் சொன்னதாகச் சொல்"!
என்றார்.
20 எனவே எலியா ஆகாப்பிடம் சென்
றான். அரசனோ அவனிடம், "என்னை
மீண்டும் பார்க்கிறாய். எப்போதும் எனக்கு
எதிராக இருக்கிறாய்" என்றான்.

அதற்கு எலியா, "ஆமாம், நீ எப்போதும்
உன் வாழ்வில் கர்த்தருக்கு எதிராகப் பாவம்
செய்கிறாய். 21 எனவே கர்த்தர், 'நான்
உன்னை அழிப்பேன். உன் குடும்பத்திலுள்ள
அனைவரையும் அழிப்பேன். 22 உனது
குடும்பமானது நாபோத்தின் மகனான
அரசின் யெரொபெயாமின் குடும்பத்தைப்
போன்று அழியும். பாஷாவின் குடும்பத்தைப்
போல் அழியும். இந்த இரு குடும்பங்களும்
முழுவதுமாக அழிந்துவிட்டன. நீ எனக்குக்
கோபத்தைத் தந்ததால் நானும் அதுபோல்
செய்வேன். இஸ்ரவேல் ஜனங்கள் பாவம்

செய்யவும் காரணமானாய்' என்றார்.
23கர்த்தர் மேலும், 'நாய்கள் யெஸ்ரயேல்
நகரில் உன் மனைவியின் உடலை உண்
ணும். 24உன் குடும்பத்திலுள்ள அனைவரும்
செத்தபின் நாய்களால் உண்ணப்படுவார்கள்,
வயலில் மரிக்கும் யாவரும் பறவைகளால்
உண்ணப்படுவார்கள்' என்றார்" எனக்கூறி
னான்.
25ஆகாப்பைப்போன்று இதுவரை எவரும்
அதிகப் பாவங்களைச் செய்ததில்லை. அவ
னது பாவங்களுக்கு அவன் மனைவியும்
ஒரு காரணமானாள். 26அவன் மர விக்கிரகங்
களை தொழுதுகொண்டு பாவம் செய்தான்.
எமோரியர்களின் பாவங்களைப் போன்
றவை இவை. எனவே கர்த்தர் அந்த
நாட்டைப் பறித்து இஸ்ரவேலர்களுக்குக்
கொடுத்தார்.
27எலியா சொல்லி முடித்ததும் ஆகாப்
வருந்தி, தன் ஆடைகளைக் கிழித்துக்
கொண்டான். வருத்தத்துக்கான ஆடைகளை
அணிந்து சாப்பிட மறுத்தான். அப்படியே
தூங்கினான்.
28கர்த்தர் எலியாவிடம், 29"நான் ஆகாப்
திருந்திவிட்டதாக அறிகிறேன். எனவே,
அவனுக்குத் துன்பம் தரமாட்டேன். ஆனால்
அவனது மகனது வாழ்நாளில் துன்பங்
களைத் தருவேன்" என்றார்.

### மிகாயா ஆகாப்பை எச்சரித்தது

22 அடுத்த இரு ஆண்டுகளில், இஸ்ர
வேலுக்கும் சீரியாவுக்கும் சமாதானம்
நிலவியது. 2மூன்றாம் ஆண்டில், யூதாவின்
அரசனான யோசபாத் இஸ்ரவேலின் அரச
னான ஆகாப்பைப் பார்க்கப்போனான்.
3அப்போது, ஆகாப் அதிகாரிகளிடம்,
"சீரியாவின் அரசன் கீலேயாத்திலுள்ள
ராமோத்தை நம்மிடமிருந்து எடுத்துக்
கொண்டான். அதைத் திரும்பப்பெற ஏன்
எந்த முயற்சியும் செய்யவில்லை? அது
நமக்குச் சொந்தமாகவேண்டும்" என்றான்.
4எனவே யோசபாத்திடம், "நீ என்னோடு
சேர்ந்து ராமோத்துக்காகப் போரிட
வருகிறாயா?" என்று கேட்டான்.
அதற்கு அவன், "சரி, உன்னோடு
சேர்ந்துக்கொள்கிறேன். எனது படை
வீரர்களும் குதிரைகளும் உன் படையோடு
சேர்ந்துகொள்ளத் தயார். 5ஆனால் முதலில்
கர்த்தரிடம் இதுபற்றி ஆலோசனை கேட்
போம்" என்றான்.
6எனவே ஆகாப் தீர்க்கதரிசிகளைக் கூட்டி
னான். அவர்கள் 400 பேர். அவர்களிடம்,
"நான் ராமோத்துக்காக சீரிய படையோடு
போரிடப்போகலாமா? அல்லது காத்திருக்க
லாமா?" என்று கேட்டான்.
அதற்கு அவர்கள், "இப்போது போய்
போர் செய்யும். கர்த்தர் வெற்றி பெறச்
செய்வார்" என்றார்கள்.
7யோசபாத், "வேறு யாராவது தீர்க்கதரிசி
கள் உண்டா? அவரிடமும், தேவனுடைய
விருப்பத்தைக் கேட்போமே" என்றான்.
8அதற்கு ஆகாப், "மற்றொரு தீர்க்கதரிசி
இருக்கிறார். அவர் மூலம் கர்த்தருடைய
ஆலோசனைகளைப் பெறலாம். அவரது
பெயர் இம்லாவின் மகனான மிகாயா.
எனக்கு எதிராகவே அவன் பேசுவதால்
அவனை வெறுக்கிறேன். எப்போதும்
எனக்கு விருப்பம் இல்லாததையே அவன்
கூறுவான்" என்றான்.
யோசபாத், "நீ அவ்வாறு சொல்லக்
கூடாது!" என்றான்.
9எனவே, ஆகாப் ஒரு அதிகாரியை
அனுப்பி மிகாயாவை அழைத்து வரச்சொன்
னான்.
10அப்போது இரு அரசர்களும் அரச
உடையோடு சிங்காசனத்தில் இருந்தனர்.
இது சமாரியா அருகில் உள்ள நியாய
மன்றம். தீர்க்கதரிசிகள் அவர்களுக்கு முன்
நின்றுகொண்டு தீர்க்கத்தரிசனம் சொல்லிக்
கொண்டிருந்தனர். 11அவர்களில் ஒருவன்
பெயர் சிதேக்கியா, இவன் கேனானாவின்
மகன். அவன் இரும்பு கொம்புகளைச்*
செய்து, "இதனை நீங்கள் பயன்படுத்தி
போரிடுங்கள். உங்களால் வெற்றி பெறமுடியு
மென்று கர்த்தர் சொன்னார்" என்று கூறி
னான். 12மற்றவர்களும் இதனை ஒப்புக்
கொண்டனர். "இப்பொழுதே, உங்கள் படை
புறப்படவேண்டும். அது ராமோத்தில் சீரிய
படையோடு போரிடும். கர்த்தர் வெற்றி
பெறச் செய்வார்" என்றனர்.
13இது நடைபெறும்போது, அதிகாரி
மிகாயாவைக் கண்டுபிடித்து, "எல்லா தீர்க்க
தரிசிகளும் இப்போது போருக்குப் போக
வேண்டும் என்கின்றனர். நீயும், அவ்வாறே
சொல்" என்றான்.
14ஆனால் அவன், "முடியாது! கர்த்தர்
சொல்லச்சொல்வதை மட்டுமே நான் சொல்
வேன்!" என்றான்.
15பிறகு அவன் அரசனிடம் வந்து நின்
றான். அரசனும், "நானும் யோசபாத்தும்
சேரலாமா? சீரிய மன்னனோடு சண்டையிட
ராமோத்துக்கும் போகலாமா?" என்று
கேட்டான்.
அதற்கு மிகாயா, "சரி, நீ இப்போதே
போய் சண்டையிடு, கர்த்தர் வெற்றி
பெறச்செய்வார்" என்றான்.
16ஆனால் ஆகாப், "கர்த்தருடைய
அதிகாரத்தால் நீ பேசிக்கொண்டிருக்க
வில்லை. நீ உன் சொந்த வார்த்தைகளைப்
பேசுகிறாய். எனவே உண்மையைச் சொல்!
எத்தனை முறை நான் உனக்குச் சொல்லி
யிருக்கிறேன்? கர்த்தர் சொல்கிறதை எனக்
குச்சொல்!" என்றான்.

---

**இரும்பு கொம்புகள்** இவை பெரும் பலத்தின் அடையாளமாக இருந்தன.

17 அதற்கு மிகாயா, “என்ன நடக்கும்
என்பதை நான் பார்க்கமுடியும். இஸ்ரவேல்
படைகள் சிதறியுள்ளன. மேய்ப்பன் இல்லாத
ஆடுகள் போல உள்ளன. எனவே கர்த்தர்,
‘இவர்களுக்கு தலைவன் இல்லை, எனவே
சண்டைக்குப் போகாமல் வீட்டிற்குப் போக
வேண்டும்’ என்று சொல்கிறார்” என்றான்.
18 ஆகாப் யோசபாத்திடம், “நான் சொன்
னதைப்பார்! இவன் எப்போதும் எனக்குப்
பிடிக்காததையே கூறுவான்” என்றான்.
19 ஆனால் மிகாயா தொடர்ந்து கர்த்தருக்
காகப் பேசினான். “கவனி, இது கர்த்தர்
கூறுவது! கர்த்தர் பரலோகத்தில் சிங்காச
னத்தில் உட்கார்ந்திருக்கிறார். பரலோகத்தில்
உள்ள அனைத்து தேவதூதர்களும் கர்த்தரு
டைய பக்கத்தில் வலதுபுறமும், இடதுபுறமும்
நின்று கொண்டிருக்கின்றனர். 20 கர்த்தர்,
‘உங்களில் யாரேனும் அரசன் ஆகாபிடம்
ஒரு தந்திரம் செய்வீர்களா? அவன் ராமோத்
தில் இருக்கும் சீரியாவின் படையை
எதிர்த்து சண்டையிட வேண்டுமென நான்
விரும்புகிறேன். பின்னர் அவன் கொல்லப்
படுவான்’ என்று சொன்னார். என்ன
செய்யவேண்டுமென்பதைக் குறித்து தூதர்
கள் ஒரு ஒத்த கருத்துக்கு வரவில்லை.
21 இறுதியில் ஒரு ஆவி வெளியே வந்து
கர்த்தருக்கு முன் நின்றுக்கொண்டு
சொன்னது. ‘நான் தந்திரம் செய்வேன்!’
22 கர்த்தர், ‘எவ்வாறு செய்வாய்?’ என்று
கேட்டார். அதற்கு அவன், ‘நான் தீர்க்க
தரிசிகளைக் குழப்பி பொய் சொல்லுமாறு
செய்வேன். அவர்கள் பேசுவதெல்லாம்
பொய்’ என்றான். உடனே அவர், ‘போய்
ஆகாப்பை ஏமாற்று. நீ வெற்றி பெறுவாய்’
என்றார்” என்றான்.

23 மிகாயா இவ்வாறு தன் கதையைச்
சொல்லி முடித்தான். பிறகு அவன், “இது
தான் இங்கு நடந்தது. இவ்வாறு பொய்
சொல்லுமாறு கர்த்தர்தான் தீர்க்கதரிசிகளை
மாற்றினார். உனக்குத்தீமை வருவதை
கர்த்தரே விரும்புகிறார்” என்றான்.
24 பிறகு சிதேக்கியா மிகாயாவிடம் வந்து
முகத்தில் அடித்தான். அவன், “கர்த்தருடைய
சக்தி என்னைவிட்டு விலகி எந்த வழியாய்
உன்னிடம் வந்தது?” என்று கேட்டான்.
25 அதற்கு மிகாயா, “விரைவில் துன்பம்
வரும். அப்போது, நீ சிறிய அறையில்
ஒளிந்துக்கொள்வாய். அப்போது நான் சொல்
வது உண்மையென்று உனக்குத் தெரியும்!”
என்றான்.
26 மிகாயாவைக் கைது செய்யும்படி
ஆகாப், அதிகாரிகளுக்குக் கட்டளை
யிட்டான். ஆகாப் அரசன், “இவனைக் கைது
செய்து நகர ஆளுநரான ஆமோனிடத்திலும்
பிறகு இளவரசனான யோவாசிடமும்
அழைத்துக்கொண்டு போங்கள். 27 நான்
சமாதானத்தோடு வரும்வரை இவனைச்
சிறையில் அவர்களிடம் அடைக்கச்சொல்.
அதுவரை அப்பமும் தண்ணீரும் கொடுங்
கள்” என்றான். 28 அதற்கு மிகாயா, “நான்
சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் போர்
முடிந்து உயிரோடு திரும்பி வந்தால் கர்த்தர்
என் மூலமாக பேசவில்லை” என்று
சத்தமாகச் சொன்னான்.
29 பிறகு ஆகாப்பும் யோசபாத்தும்
ராமோத்திற்கு ஆராமோடு சண்டையிடப்
போனார்கள். அவ்விடம் கீலேயாத்தில் உள்
ளது. 30 ஆகாப் யோசபாத்திடம், “நாம்
போருக்குத் தயாராக்குவோம். நான் அரசன்
என்று தோன்றாதபடி சாதாரண ஆடை
களையும் நீ அரச உடைகளையும் அணிந்து
க்கொள்” என்றான். அவ்வாறே சாதாரண
உடையில் சண்டையிட்டான்.
31 சீரியா அரசனுக்கு 32 இரதப்படை
தளபதிகள் இருந்தனர். அவர்களிடம் இஸ்ர
வேல் அரசனைக் கண்டுபிடிக்குமாறு கட்ட
ளையிட்டான். அரசனைக் கொன்றுவிட
வேண்டும் என்றும் உத்தரவிட்டான்.
32 போரின்போது, அவர்கள் யோசபாத்தைக்
கண்டு இஸ்ரவேலின் அரசன் என்று
எண்ணித் தாக்கினர். அவன் சத்தமிட்டான்.
33 ஆனால், அவன் அரசனில்லை என்பதை
அறிந்து கொல்லாமல் விட்டுவிட்டனர்.
34 ஆனால் ஒருவன் குறிவைக்காமல் ஒரு
அம்பை எய்தான். எனினும், அது ஆகாப்
மீதுபட்டு கவசம் மூடாத உடலில் நுழைந்
தது. அவன் இரத ஓட்டியிடம், “ஒரு
அம்பு என்னைத் தாக்கியுள்ளது! இரதத்தை
களத்தை விட்டு வெளியே கொண்டு செல்”
என்றான். 35 படைகள் தொடர்ந்து
போரிட்டன. அரசன் தொலைவில்
தங்கியிருந்தான். அதிலிருந்து சீரியாவின்
படையைக் கவனித்துக்கொண்டிருந்தான்.
அவனது இரத்தம் வடிந்து இரதத்தில்
நிறைந்தது. அன்று மாலை, அவன்
மரித்துப்போகவே, 36 மாலை படையை
நகருக்குத் திரும்புமாறு கட்டளையிட்டனர்.
37 இவ்வாறுதான் ஆகாப் மரித்துப்
போனான். சிலர் அவனை சமாரியாவிற்கு
எடுத்துப்போனார்கள். அங்கே அடக்கம்
செய்தனர். 38 அத்தேரை சமாரியாவிலுள்ள
குளத்து தண்ணீரால் கழுவினார்கள்.
இரதத்தில் உள்ள இரத்தத்தை நாய்கள்
நக்கின. அத் தண்ணீரை வேசிமகள்கள்
தம்மைச் சுத்தப் படுத்த பயன்படுத்தினார்கள்.
கர்த்தர் சொன்னபடியே அனைத்தும்
நடந்தது.
39 ‘இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு’
என்ற புத்தகத்தில் ஆகாப் செய்த
அனைத்தும் எழுதப்பட்டுள்ளன. அவன் தன்
அரண்மனையைத் தந்தத்தால் அலங்கரித்
தான் என்றும் சொல்லப்பட்டுள்ளது. அவன்
உருவாக்கிய நகரைப்பற்றியும் அந்த
புத்தகத்தில் விளக்கபட்டிருக்கிறது. 40 ஆகாப்
மரித்து தனது முற்பிதாக்களோடு அடக்கம்

*பண்ணப்பட்டான். அவனுக்கு அடுத்து அவன் மகன் அகசியா, அரசன் ஆனான்.*

### யூதாவின் அரசனான யோசபாத்

41*இஸ்ரவேலின் அரசனாக ஆகாப் இருந்த
நாலாவது ஆண்டில், யூதாவில் யோசபாத்
அரசனானான். இவன் ஆசாவின் மகன்.*
42*யோசபாத் அரசனாகும்போது அவனுக்கு
35 வயது. இவன் எருசலேமில் 25 ஆண்டுகள்
ஆண்டான். இவனது தாய் அசுபாள். இவள்
சில்கியின் மகள்.* 43*யோசபாத் நல்லவன்.
அவன் முன்னோர்களைப் போன்று இருந்
தான். கர்த்தருடைய விருப்பப்படி
கீழ்ப்படிந்து நடந்தான். ஆனால் பொய்த்
தெய்வங்களை தொழுதுகொள்ள அமைக்
கப்பட்ட மேடைகளை அழிக்கவில்லை.
ஜனங்கள் தொடர்ந்து அங்கு பலி செலுத்தி,
நறுமணப் பொருட்களை எரித்து வந்தனர்.*
44*யோசபாத் இஸ்ரவேல் அரசனோடு ஒரு
சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டான்.*
45*இவன் தைரியமாகப் பல போர்களைச்
செய்தான். இவன் செய்தது எல்லாம் 'யூதா
அரசர்களின் வரலாற்றில்' எழுதப்பட்டு
ள்ளது.* 46*தன் நாட்டில் உள்ள முறை
கெட்ட புணர்ச்சிக்காரர்களை தொழுகை
இடங்களிலிருந்து விரட்டினான். அவர்கள்,
தன் தந்தை ஆசா ராஜாவாக இருந்தபோது
இருந்தவர்கள்.*
47*அப்போது, ஏதோமில் அரசன் இல்லை.
ஆளுநரால் அது ஆளப்பட்டது. இவன் யூதா
அரசனால் தேர்ந்தெடுக்கப்பட்டவன்.*

### யோசபாத்தின் கடற்படை

48*இவன் கப்பல்களைச் செய்தான். பொன்
வாங்க ஓப்பீருக்குச் செல்ல விரும்பினான்.
ஆனால் அவைபோக முடியாதபடி எசி
யோன் கேபேரிலே உடைந்துபோயின.*
49*இஸ்ரவேலின் அரசனாகிய அகசியா
யோசபாத்திடம், "என் ஆட்கள் உங்கள்
ஆட்களோடு கப்பலில் போகட்டும்" என்
றான். யோசபாத் ஒப்புக்கொள்ளவில்லை.*
50*யோசபாத் மரித்ததும் தனது
முற்பிதாக்களோடு தாவீது நகரில் அடக்கம்
செய்யப்பட்டான். பின் அவனது மகன்
யோராம் அரசன் ஆனான்.*

### இஸ்ரவேலின் அரசனான அகசியா

51*ஆகாபின் அரசனான அகசியா இஸ்ர
வேலுக்கு சமாரியாவில் அரசன் ஆனான்.
அப்போது யூதாவில் யோசபாத் 17ம்
ஆண்டில் ஆண்டு கொண்டிருந்தான்.
அகசியா இரண்டு ஆண்டுகள் ஆண்டான்.*
52*அகசியா கர்த்தருக்கு எதிராகப் பாவம்
செய்தான். அவன் தந்தை ஆகாப், மற்றும்
தாய் யேசபேலைப் போன்றும், நேபாத்தின்
மகனான யெரொபெயாம் போன்றும் பாவம்
செய்து வந்தான். இவர்கள் நாட்டு
ஜனங்களையும் பாவத்திற்குட்படுத்தினர்.*
53*அகசியா பாகால் தெய்வத்தை வழி
பட்டான், இதனால் கர்த்தருக்கு கோபம்
வந்தது. அவனது தந்தையிடம் போலவே
அவனிடமும் கோபம் கொண்டார்.*

# இராஜாக்களின் இரண்டாம் புத்தகம்

## அகசியாவிற்கு ஒரு செய்தி

1 ஆகாப் மரித்ததும் இஸ்ரவேலின் ஆட்சி
யில் இருந்து இஸ்ரவேலுக்கு எதிராக
மோவாப் பிரிந்துவிட்டது.
2 ஒரு நாள், அகசியா தன் வீட்டின்
மேல்மாடியில் இருந்தான். அப்போது மரச்
சட்டங்களாலான கிராதியின் வழியாகக் கீழே
விழுந்துவிட்டான். அவனுக்கு பலமாக
அடிபட்டுவிட்டது. அவன் தன் வேலையாட்
களை அழைத்து அவர்களிடம், "எக்ரோ
னின் தேவனாகிய பாகால்சேபூபிடத்தில்
போய், அவர்கள் ஆசாரியர்களிடம், இந்த
காயங்களில் இருந்து குணமடைவேனா"
என்று விசாரித்து வரும்படி சொன்னான்.
3 ஆனால் கர்த்தருடைய தூதன் திஸ்பி
யனாகிய எலியாவிடம், "சமாரியாவில்
இருந்து தூதுவர்களை அரசன் அகசியா
அனுப்பி இருக்கிறான். நீ சென்று அவர்
களைச் சந்திப்பாயாக. அவர்களிடம், 'இஸ்ர
வேலில் ஒரு தேவன் இருக்கிறார்! ஆனால்
நீங்கள் அனைவரும் எதற்காக எக்ரோனின்
தேவனாகிய பாகால்சேபூபிடத்தில் கேள்வி
கள் கேட்கச் செல்கிறீர்கள்?
4 அரசன்
அகசியாவிடம் இவ்விஷயங்களைச் சொல்
லுங்கள்: பாகால்சேபூபிடத்தில் கேள்விகள்
கேட்க தூதுவர்களை அனுப்பினாய்.
இக்காரியத்தை நீ செய்ததால், நோய்வாய்ப்
பட்டு படுத்த படுக்கையிலேயே மரித்து
போவாய் என கர்த்தர் சொல்கிறார்!'
என்று சொல்" என்றான். பிறகு அங்கிருந்து
கிளம்பி எலியா இவ்விதமாகவே அகசியா
வின் ஆட்களிடம் சொன்னான்.
5 தூதுவர்கள் அகசியாவிடம் திரும்பிப்
போக, அவனோ "ஏன் இவ்வளவு விரை
வில் வந்தீர்கள்?" என்று கேட்டான்.
6 அவர்கள் அவனிடம், "ஒருவன்
எங்களைச் சந்தித்தான். உங்களை அனுப்
பிய அரசனிடமே திரும்பிச்சென்று, கர்த்தர்
சொல்லும் வார்த்தைகளை சொல்லுங்கள்
என்று அவன் திருப்பி அனுப்பினான்.
கர்த்தர் சொல்கிறார்: 'இஸ்ரவேலுக்குள்
தேவன் இருக்க, எக்ரோனின் தேவனாகிய
பாகால்சேபூபிடம் ஏன் கேள்வி கேட்க
அரசன் தூதுவர்களை அனுப்பினான்? இவ்
வாறு செய்ததால் நீ உடல் நலம் தேறாமல்
படுத்தப் படுக்கையிலேயே மரித்துவிடு
வாய்'" என்றனர்.
7 அகசியா அவர்களிடம், "உங்களைச்
சந்தித்து இதைச் சொன்னவன் எப்படி
இருந்தான்?" என்று கேட்டான்.
8 அவர்களோ, "அவன் ரோமத்தாலான
மேலாடையை அணிந்திருந்தான். இடுப்பில்
தோல் கச்சை இருந்தது" என்றனர்.
பின் அகசியா, "அவன் திஸ்பியனாகிய
எலியாதான்!" என்றான்.

## அகசியாவால் அனுப்பப்பட்ட தளபதிகளை அக்கினி அழித்தது

9 அகசியா ஒரு தளபதியையும் 50
ஆட்களையும் எலியாவிடம் அனுப்பினான்.
அவர்கள் வந்தபோது, எலியா மலையுச்சி
யில் இருந்தான். தளபதி அவனிடம்,
"தேவமனிதனே, உங்களைக் கீழே வருமாறு
அரசர் சொல்கிறார்" என்றான்.
10 எலியா அவனிடம், "நான் தேவமனிதன்
என்றால் பரலோகத்திலிருந்து அக்கினி
வந்து உன்னையும் உன்னுடைய 50
ஆட்களையும் அழிக்கட்டும்!" என்றான்.
அவ்வாறே வானில் இருந்து அக்கினி
வந்து தளபதியையும் அவனுடன் வந்த
50 பேர்களையும் அழித்தது.
11 அகசியா இன்னொரு தளபதியையும்
50 பேரையும் அனுப்பிவைத்தான். அத்
தளபதியும், "தேவமனிதனே! நீங்கள் விரை
வாக கீழே இறங்கவேண்டும் என்று அரசர்
சொல்கிறார்!" என்றான்.
12 அதற்கு எலியா, "நான் தேவமனித
னானால் பரலோகத்திலிருந்து அக்கினி
வந்து உன்னையும், உன் 50 வீரர்களையும்
அழிக்கட்டும்!" என்றான்.
பின் தேவனுடைய அக்கினி பரலோகத்
திலிருந்து வந்து அந்த தளபதியையும் 50
வீரர்களையும் அழித்தது.
13 அகசியா மூன்றாவதாக ஒரு தளபதியை
50 ஆட்களுடன் அனுப்பிவைத்தான். அவர்
களும் எலியாவிடம் வந்தனர். பின் தளபதி,
"தேவமனிதனே, என்னுடைய உயிரையும்,
உங்கள் ஊழியர்களாகிய இந்த 50
பேருடைய உயிர்களையும் காப்பாற்றுங்கள்.
14 பரலோகத்தில் இருந்துவந்த அக்கினி
ஏற்கனவே வந்த இரண்டு தளபதிகளையும்
அவர்களுடன் வந்த 50 வீரர்களையும்
அழித்துவிட்டது. இப்போது எங்கள் மேல்
இரக்கம் வைத்து எங்கள் உயிர்களைக்

*காப்பாற்றுங்கள்!" என்று கெஞ்சிக்*
*கேட்டுக்கொண்டான்.*
15*கர்த்தருடைய தூதன் எலியாவிடம்,*
*"தளபதியோடு செல், அவனைக்கண்டு*
*பயப்பட வேண்டாம்" என்றான்.*
*எனவே எலியா அரசனான அகசி*
*யாவைப் பார்க்கத் தளபதியோடு போனான்.*

16*எலியா அகசியாவிடம், "தேவன்*
*இப்படிக் கூறுகிறார். அதாவது: இஸ்ரவேலில்*
*தேவன் இருக்கிறார். அவரிடம் கேட்காமல்*
*ஏன் எக்ரோனின் தேவனான பாகால்*
*சேபூபிடத்தில் தூதுவர்களை அனுப்புகிறாய்.*
*நீ இவ்வாறு செய்ததால் நோய் குணமாகா*
*மல் படுத்தப் படுக்கையிலேயே மரித்து*
*விடுவாய்!" என்றான்.*

### யோராம் அகசியாவின் இடத்தைப்பெறல்

17*எலியாவின் மூலமாக, கர்த்தர்*
*சொன்னதுபோல அகசியா மரித்தான்.*
*அவனுக்கு மகன் இல்லாததால் யோராம்*
*புதிய அரசனானான். இது அவன் தந்தை*
*யோசபாத்தின் இரண்டாம் ஆட்சியாண்டில்*
*நடந்தது.*
18*அகசியா செய்த பிறச்செயல்கள் எல்*
*லாம் 'இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு'*
*என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.*

### எலியாவை அழைத்துக்கொள்ள கர்த்தருடைய திட்டம்

2 *சுழல்காற்றின் மூலம் எலியாவைக் கர்த்*
*தர் பரலோகத்திற்கு அழைத்துக்கொள்ளத்*
*திட்டமிட்டுக் கொண்டிருந்த பொழுது, எலியா*
*எலிசாவுடன் கில்காலுக்கு போய்க்*
*கொண்டிருந்தார்கள்.*
2*எலியா எலிசாவிடம், "நீ இங்கே இரு.*
*கர்த்தர் என்னைப் பெத்தேலுக்குப் போகச்*
*சொன்னார்" என்றான்.*
*ஆனால் எலிசாவோ, "நான் உங்களை*
*விட்டு விலகமாட்டேன் என்று கர்த்தர்*
*மீதும் உங்கள் மீதும் ஆணையிட்டுக் கூறுகி*
*றேன்" என்றான். எனவே இருவரும்*
*பெத்தேலுக்குச் சென்றார்கள்.*
3*சில தீர்க்கதரிசிகள் எலிசாவிடம் வந்து,*
*"இன்று உங்கள் எஜமானனான எலியா*
*வைக் கர்த்தர் உன்னிடமிருந்து எடுத்துக்*
*கொள்ளப்போகும் செய்தி தெரியுமா?"*
*என்று கேட்டார்கள்.*
*அதற்கு அவன், "ஆமாம். எனக்குத்*
*தெரியும். அதுபற்றி பேசவேண்டாம்" என்று*
*பதிலளித்தான்.*
4*அங்கே எலியா எலிசாவிடம், "நீ*
*இங்கேயே இரு. கர்த்தர் என்னிடம் எரிகோ*
*விற்குப் போகச்சொன்னார்" என்றான்.*
*ஆனால் எலிசாவோ, "நான் உங்களை*
*விட்டு விலகமாட்டேன் என்று கர்த்தர்*
*மீதும் என் மீதும் ஆணையிட்டுக் கூறு*
*கிறேன்" என்றான். எனவே அவர்கள்*
*இருவருமாக எரிகோவிற்குச் சென்றனர்.*
5*எரிகோவில் சில தீர்க்கதரிசிகள்*
*எலிசாவிடம், "இன்று உனது எஜமான்*
*எலியாவைக் கர்த்தர் உன்னிடமிருந்து*
*எடுத்துக்கொள்ளப் போகிறாராமே?" என்று*
*கேட்டார்கள்.*
*அதற்கு அவன், "ஆமாம். அது தெரியும்.*
*அதைப்பற்றி பேசவேண்டாம்" என்றான்.*
6*எலியா எலிசாவிடம், "நீ தயவுசெய்து*
*இங்கேயே இரு. யோர்தான் ஆற்றுக்குப்*
*போகுமாறு என்னிடம் கர்த்தர் சொன்னார்"*
*என்றான்.*
*அதற்கு அவன், "நான் உங்களைவிட்டு*
*விலகமாட்டேன் என்று கர்த்தர் மீதும்*
*என் மீதும் ஆணையிட்டுக் கூறுகிறேன்"*
*என்றான். எனவே இருவரும் சென்றனர்.*
7*அங்கே 50 பேர்கள் அடங்கிய தீர்க்கதரிசி*
*குழு அவர்களைப் பின்தொடர்ந்து வந்தது.*
*எலியாவும் எலிசாவும் யோர்தான் ஆற்றின்*
*அருகில் நின்றார்கள். அவர்கள் நின்ற*
*இடத்தை நோக்கியபடி மற்ற 50 பேர்களும்*
*அவர்களிடம் இருந்து விலகி தூரத்தில்*
*நின்றார்கள்.* 8*எலியா தன் சால்வையை*
*எடுத்து முறுக்கி தண்ணீரில் அடிக்க*
*தண்ணீர் இரண்டு பாகமாகி விலகிப்*
*போயிற்று. அவர்கள் உலர்ந்த தரையில்*
*நடந்து அக்கரைக்குக் கடந்து போனார்கள்.*
9*பின்னர் எலியா எலிசாவிடம்,*
*"என்னை உன்னிடத்திலிருந்து தேவன்*
*எடுத்துக்கொள்வதற்கு முன் உனது*
*விருப்பம் என்ன?" என்று கேட்டான்.*
*அதற்கு எலிசா, "உங்களிடம் உள்ள*
*ஆவி எனக்கு இரண்டு மடங்காகக் கிடைக்க*
*வேண்டும்" என்றான்.*
10*எலியா, "கஷ்டமானதையே கேட்டிருக்*
*கிறாய். நான் உன்னிடமிருந்து எடுத்துக்*
*கொள்ளப்படும்பொழுது நீ என்னைப்*
*பார்ப்பாயானால், இது நடக்கும். ஆனால்*
*நான் எடுத்துக்கொள்ளப்படும் நேரத்தில்*
*என்னை உன்னால் பார்க்கமுடியாமல்*
*போகுமேயானால், இது நடக்காது" என்*
*றான்.*

### தேவன் எலியாவை பரலோகத்திற்கு எடுத்துக்கொண்டது

11*எலியாவும் எலிசாவும் பேசிக்கொண்டே*
*நடந்துச்சென்றார்கள். திடீரென்று இரதமும்*
*குதிரைகளும் வந்து இருவரையும் பிரித்தன.*
*அவை நெருப்பாகத் தோன்றின! எலியா*
*சுழற்காற்றால் வானுலகத்திற்கு எடுத்துக்*
*கொள்ளப்பட்டான்.* 12*எலிசா இதனைப்*
*பார்த்து, "என் தந்தையே! என் தந்தையே!*
*இஸ்ரவேலின் இரதமும் குதிரைவீரருமான*
*வரே!" என்று சத்தமிட்டான்.*
*இதற்குப் பிறகு எலியாவை எலிசா*
*பார்க்கவில்லை. அவன் தனது ஆடையைக்*

*கிழித்து தன் சோகத்தை வெளிப்*
*படுத்தினான். [13]எலியாவின் மேலாடை தரை*
*யிலே விழுந்து கிடந்தது. அதனை எலிசா*
*எடுத்துக்கொண்டு யோர்தான் கரைக்குப்*
*போனான். மேலாடையை தண்ணீரில்*
*அடித்து, "எலியாவின் தேவனாகிய கர்த்தர்*
*எங்கே?" என்று கேட்டான்.*

*[14]மேலாடையால் தண்ணீரை அடித்த*
*உடனே தண்ணீர் வலதுபுறமாகவும் இடது*
*புறமாகவும் பிரிந்துபோயிற்று! எலிசா*
*ஆற்றைக் கடந்துபோனான்.*

### தீர்க்கதரிசிகள் எலியாவைப்பற்றி கேட்டது

*[15]இவர்களைக் கவனித்துக்கொண்டிருந்த*
*எரிகோவின் தீர்க்கதரிசிகள் எலிசாவைப்*
*பார்த்து, "எலியாவின் ஆவி இப்பொழுது*
*எலிசாவின் மேல் உள்ளது!" என்றார்கள்.*
*அவர்கள் எலிசாவைச் சந்திக்கவந்தார்கள்.*
*அவர்கள் அவனுக்கு முன்பாகத் தரையில்*
*குனிந்து வணங்கினார்கள். [16]அவர்கள்*
*எலிசாவிடம், "பாருங்கள், எங்களிடம்*
*தகுதியான* 50 *பேர்கள் இருக்கிறார்கள்.*
*தயவுசெய்து நாங்கள் சென்று உங்கள்*
*எஜமானைத் தேட எங்களை அனுமதி*
*யுங்கள். ஒருவேளை தேவனுடைய ஆவி*
*அவரைத் தூக்கிச்சென்று எங்காவது*
*மலையிலோ அல்லது பள்ளத்தாக்கிலோ*
*போட்டிருக்கலாம்!" என்றார்கள்.*

*அதற்கு எலிசா, "இல்லை" எலியாவைத்*
*தேட ஆட்களை அனுப்பாதீர்கள்?!" என்*
*றான்.*

*[17]எலிசா குழப்பமடையும்வரை தீர்க்க*
*தரிசி குழு அவனைக் கெஞ்சியது. பின்*
*எலிசா, "நல்லது எலியாவைத் தேட*
*ஆட்களை அனுப்புங்கள்" என்றான்.*

*எலியாவைத் தேட தீர்க்கதரிசி குழு*
50 *ஆண்களை அனுப்பியது. மூன்று*
*நாட்கள் தேடியும், அவர்களால் எலியாவைக்*
*கண்டு பிடிக்க முடியவில்லை. [18]எனவே*
*அந்த ஆண்கள் எலிசா தங்கியிருந்த எரிகோ*
*விற்குச் சென்றார்கள். அவர்கள் எலிசா*
*விடம் தங்களால் எலியாவைக் கண்டுபிடிக்க*
*முடியவில்லை என்றார்கள். எலிசா*
*அவர்களிடம், "நான் உங்களிடம் போக*
*வேண்டாம் என்று கூறினேன்" என்றான்.*

### எலிசா தண்ணீரைச் சுத்தமாக்கியது

*[19]நகர ஜனங்கள் எலிசாவிடம் வந்து,*
*"ஐயா, இந்த நகரம் நல்ல இடத்தில்*
*அமைந்துள்ளதை நீங்கள் பார்க்கமுடியும்.*
*ஆனால் தண்ணீரோ மிகவும் மோசம்.*
*அதனால் இங்கு நல்ல விளைச்சல் இல்லை"*
*என்றனர்.*

*[20]எலிசாவோ, "ஒரு புதிய தோண்டியில்*
*உப்பைப் போட்டுக்கொண்டு வாருங்கள்"*
*என்றான்.*

*அவர்கள் அப்பாத்திரத்தை எலிசாவிடம்*
*கொண்டுவந்தனர். [21]அவன் தண்ணீர்*
*பாய்கிற இடத்திற்குப் போனான். அதில்*
*உப்பைப் போட்டான். "அவன், 'நான் இந்த*
*தண்ணீரைச் சுத்தமாக்குகிறேன்! இப்*
*பொழுதிலிருந்து இந்த தண்ணீர் எவ்வித*
*மரணத்துக்கும் காரணமாக இருக்காது.*
*விளைநிலங்களில் தொடர்ந்து நல்ல விளைச்*
*சலைத் தரும்' என்று கர்த்தர் சொல்கிறார்"*
*என்றான்.*

*[22]எலிசா சொன்னதுபோல் தண்ணீர்*
*பரிசுத்தமானது. இன்றளவும் அத்தண்ணீர்*
*சுத்தமாக இருக்கிறது. அனைத்துமே எலிசா*
*சொன்னதுபோல நடந்தது.*

### சில சிறுவர்கள் எலிசாவைக் கேலிச் செய்கிறார்கள்

*[23]எலிசா அங்கிருந்து பெத்தேல்வரை*
*சென்றான். அவன் மலை மீது ஏறிக்*
*கொண்டிருந்தபொழுது, சில சிறுவர்கள்*
*நகரத்திலிருந்து கீழே இறங்கி வந்தார்கள்.*
*அவர்கள் அவனை கேலிச் செய்தார்கள்.*
*அவர்கள், "வழுக்கைத் தலையனே மேலே*
*போ! வழுக்கைத் தலையனே மேலே போ!'"*
*என்றனர்.*

*[24]எலிசா திரும்பி அவர்களைப் பார்த்*
*தான். அவர்களுக்குத் தீமை ஏற்படுமாறு*
*கர்த்தரை வேண்டினான். உடனே இரண்டு*
*கரடிகள் காட்டிலிருந்து வந்து அவர்களைத்*
*தாக்கி* 42 *சிறுவர்களைக் கொன்று*
*போட்டன.*

*[25]எலிசா பெத்தேலிலிருந்து கர்மேல்*
*மலைக்குச் சென்றான். பின்னர் அங்கிருந்து*
*சமாரியாவிற்குத் திரும்பிச்சென்றான்.*

### யோராம் இஸ்ரவேலின் அரசனானான்

3 *சமாரியாவில் ஆகாபின் மகனாகிய*
*யோராம் இஸ்ரவேலின் அரசன் ஆனான்.*
*யூதாவின் அரசனாகிய யோசபாத்தின் பதி*
*னெட்டாம் ஆண்டில் அவன் அரசாளத்*
*துவங்கினான். யோராம் பன்னிரண்டு*
*ஆண்டுகள் ஆண்டான். [2]தவறு என்று*
*கர்த்தர் சொன்னவற்றையெல்லாம் அவன்*
*செய்தான். ஆனால் அவன் தன் தந்தையைப்*
*போலவும் தாயைப்போலவும் இல்லை.*
*அவன் தந்தை தொழுதுக்கொள்வதற்காக*
*நிறுவிய பாகாலின் தூணை அகற்றி*
*விட்டான். [3]ஆனாலும் அவன் நேபாத்தின்*
*மகனாகிய யெரொபெயாமின் பாவங்களைத்*
*தொடர்ந்து செய்துவந்தான். யோராம்*
*இஸ்ரவேல் ஜனங்களையும் பாவம் செய்யச்*
*செய்தான். யோராம், யெரொபெயாமின்*
*பாவத்தை நிறுத்தவில்லை.*

### மோவாப் இஸ்ரவேலிலிருந்து பிரிந்து போனது

*[4]மேசா மோவாபின் அரசன். அவனுக்கு*
*ஆடு மாடுகள் இருந்தன. அவன் இஸ்ரவேல்*
*அரசனுக்கு* 1,00,000 *ஆட்டுக்குட்டிகளையும்*

1,00,000 செம்மறியாட்டுக் கடாக்களையும்
கம்பளிக்காகக் கொடுத்துவந்தான். 5ஆனால்
ஆகாப் மரித்ததும் மோவாபின் அரசன்
இஸ்ரவேலுக்கு எதிராகப் புரட்சிசெய்து
தன் நாட்டைப் பிரித்துக்கொண்டான்.
6பிறகு யோராம் சமாரியாவிற்கு
வெளியே சென்று இஸ்ரவேல் ஜனங்களை
ஒன்று சேர்த்தான். 7அவன் தூதுவர்களை
அனுப்பி யூதாவின் அரசனான
யோசபாத்திடம் பேசினான். யோராம்,
“மோவாபின் அரசன் எனக்கு எதிராக
என் ஆட்சியிலிருந்து விலகிவிட்டான்.
அவனோடு போரிட என்னுடன் சேர்ந்து
வருவீர்களா?” என்று கேட்டான்.

அதற்கு யோசபாத் “சரி, நான் உன்னோடு வருகிறேன். நான் உன்னைப் போன்றவன். எனது ஜனங்களும் உன் ஜனங்களைப் போன்றவர்கள். என் குதிரைகளும் உனது குதிரைகளைப் போன்றவைதாம்” என்றான்.

## மூன்று அரசர்களும் எலிசாவை ஆலோசனைக் கேட்கிறார்கள்

8யோசபாத் யோராமிடம், “நாம் எந்த
வழியில் போவது?” என்று கேட்டான்.

அதற்கு யோராம், “நாம் ஏதோம் பாலைவனத்தின் வழியாகப் போக வேண்டும்” என்று பதில் சொன்னான்.

9எனவே இஸ்ரவேல் அரசன் யூதாவின்
அரசனோடும் ஏதோமின் அரசனோடும்
பயணம் செய்தான். அவர்கள் ஏறக்குறைய
ஏழு நாட்கள் பயணம் செய்தனர். பிறகு
படைவீரர்களுக்கும் மிருகங்களுக்கும் குடிக்க
தண்ணீரில்லை. 10இறுதியாக இஸ்ரவேலின்
அரசன், “ஓ! கர்த்தர் நமது மூன்று அரசர்
களையும் ஒன்று கூடி அழைத்து நம்மை
மோவாபியர்களிடம் ஒப்படைத்து நம்மை
தோற்கடித்தார்!” என்றான்.

11ஆனால் யோசபாத், “கர்த்தருடைய ஒரு
தீர்க்கதரிசி இங்கே இருக்கவேண்டும். நாம்
என்ன செய்யவேண்டும் என்று கர்த்தர்
சொல்கிறார் என அவரிடமே கேட்போம்”
என்றான்.

இஸ்ரவேல் அரசரின் வேலைக்காரர் ஒருவன், “சாப்பாத்தின் மகனான எலிசா இங்கே இருக்கிறார். அவர் எலியாவின் வேலைக்காரர்”* என்றான்.

12யோசபாத்தும், “கர்த்தருடைய வார்த்தை
எலிசாவோடு உள்ளது” என்று கூறினான்.

எனவே இஸ்ரவேலின் அரசனும் யோசபாத்தும் ஏதோமின் அரசனும் எலிசாவைப் பார்க்கப் போனார்கள்.

13எலிசா இஸ்ரவேல் அரசனான யோரா
மிடம், “நான் உங்களுக்கு செய்வதற்கு
எதுவுமில்லை. உங்கள் தந்தை மற்றும்
தாயின் தீர்க்கதரிசிகளிடம் செல்லுங்கள்!”
என்றான்.

அதற்கு இஸ்ரவேலின் அரசன், “இல்லை. நாங்கள் உங்களைப் பார்க்கவே வந்துள்ளோம். ஏனென்றால் கர்த்தர் மோவாப் மூலம் எங்களைத் தோற்கடிக்க எங்கள் மூவரையும் ஒன்றாகக் கூட்டியுள்ளார். எங்களுக்கு நீங்கள் உதவ வேண்டும்” என்றான்.

14அதற்கு எலிசா, “சர்வ வல்லமையுள்ள
கர்த்தருக்கு நான் ஊழியம் செய்கிறேன்.
அவர் இருப்பது எந்த அளவிற்கு
உண்மையோ, அதே அளவுக்கு நான்
உம்மிடம் உண்மையைப் பேசுகிறேன்.
யூதாவின் அரசனாகிய யோசபாத் இங்கே
இல்லா விட்டால் உங்களை நான்
பார்த்திருக்கவோக் கவனித்திருக்கவோ
மாட்டேன்! 15இப்போது சுரமண்டலம்
வாசிக்கிற ஒருவனை அழைத்துவாருங்கள்”
என்றான்.

அவன் வந்து சுரமண்டலத்தை வாசித்த
போது, கர்த்தருடைய வல்லமை எலிசாவின்
மேல் இறங்கியது. 16பிறகு எலிசா,
“இப்பள்ளத்தாக்கிலே துளைகளைப் போடுங்
கள். கர்த்தர் இதைத்தான் கூறுகிறார்: 17நீங்கள்
காற்றையும் மழையையும் பார்ப்பதில்லை.
ஆனால் பள்ளத்தாக்கு தண்ணீரால் நிறையும்.
பின் நீங்களும் உங்கள் பசுக்களும் மற்ற
மிருகங்களும் குடிக்க தண்ணீர் கிடைக்கும்.
18இதனை கர்த்தர் எளிதாகச் செய்வார்.
மோவாப் ஜனங்களை நீங்கள் வெல்லும்
படியாகவும் செய்வார்! 19நீங்கள் பலமுள்ள
(கோட்டை அமைந்த) நகரங்களையும் தேர்ந்
தெடுத்த (நல்ல) நகரங்களையும் தாக்குவீர்கள்.
நல்ல மரங்களையெல்லாம் வெட்டுவீர்கள்.
தண்ணீரின் ஊற்றுகளை அடைப்பீர்கள்.
வயல்களைக் கற்களால் அழித்துவிடுவீர்கள்”
என்றான்.

20காலையில், பலியைச் செலுத்தும்போது
ஏதோம் சாலை வழியாக தண்ணீர் வந்து
பள்ளத்தாக்கை நிரப்பிற்று.

21மோவாபிலுள்ள ஜனங்கள் அரசர்கள்
தம்மோடு போரிட வருவதை கேள்விப்
பட்டனர். எனவே, ஆயுதம் தரிக்கக்கூடிய
வயதுடைய அத்தனை ஆண்களும்
கூடினார்கள். அவர்கள் எல்லையில்
போரிடத் தயாராகிக் காத்திருந்தனர். 22அவர்
கள் காலையில் விழித்தபோது சூரியன்
தண்ணீரில் பிரகாசிப்பதை இரத்தம்
நிறைந்திருப்பதைப்போல் கண்டனர். 23அவர்
கள், “இரத்தத்தைப் பாருங்கள். அரசர்
கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டனர்.
அவர்கள் ஒருவருக்கொருவர் தங்களைத்
அழித்துக்கொண்டனர். மரித்த பிணங்களி
லுள்ள விலை மதிப்புள்ள பொருட்களை
எடுத்துக்கொண்டு செல்லுங்கள்” என்றனர்.

---

**எலிசா எலியாவின் வேலைக்காரன்** எழுத்தின் பிரகாரமாக, “எலிசா எலியாவின் கைகளின் மேல் தண்ணீரை ஊற்றினான்” எனப் பொருள்படும்.

24மோவாப் ஜனங்கள் இஸ்ரவேலர்களின்
முகாம்களுக்கு வந்தனர். அங்கே இஸ்ரவேலர்
களால் தாக்கப்பட்டனர். தப்பித்து ஓட
முயன்றதும் இஸ்ரவேலர்கள் அவர்களைத்
துரத்தி மோவாபுக்குள்ளும் புகுந்து தாக்கி
னார்கள். 25இஸ்ரவேலர்கள் மோவாப் நகரங்
களை நொறுக்கித் தள்ளினார்கள். ஒவ்வொரு
நல்ல வயல்களில் கற்களை எறிந்தனர்,
நீரூற்றுகளை அடைத்தனர், நல்ல மரங்களை
யெல்லாம் வெட்டி எறிந்தனர். அவர்கள்
மோவாபின் தலைநகரத்தின் கிர்கரசேத்தில்
உள்ள கற்கள் விடுபட்டு நிற்கும்வரை
விரட்டினார்கள். இஸ்ரவேல் வீரர்கள் சுற்றி
வளைத்து அவர்களை தாக்கினார்கள்.
26மோவாபின் அரசனுக்கு இந்தப் போர்
மிகவும் பலமாக (அவனுக்கு எதிராக)
இருந்தது. அவன் 700 வாள் வீரர்களைச்
சேர்த்துக்கொண்டு ஏதோம் அரசனைத்
தாக்கிக் கொல்லச் சென்றான். ஆனால்
அவர்களால் ஏதோம் அரசனை நெருங்க
முடியவில்லை. 27பிறகு தன்னைத் தொடர்ந்து
ஆட்சியில் அமர இருக்கிற தன் மூத்த
மகனை மோவாபின் அரசன் அழைத்தான்.
நகரைச்சுற்றியுள்ள சுவரில் தன் மகனையே
சர்வாங்க தகனபலியாகச் செலுத்தினான்.
இது இஸ்ரவேல் ஜனங்களைப் பெரிதும்
பாதித்தது. எனவே அவர்கள் மோவாபை
விட்டுவிட்டு தங்கள் நாட்டிற்குப்
போய்விட்டனர்.

## ஒரு தீர்க்கதரிசியின் விதவை எலிசாவிடம் உதவி கேட்டல்

4 தீர்க்கதரிசிகளுள் ஒருவனுக்கு ஒரு
மனைவி இருந்தாள். அந்த திர்க்கதரிசி
மரித்துப்போயிருந்தான். அவள் எலிசா
விடம் வந்து, "என் கணவன் உங்கள்
ஊழியனாக இருந்தார். இப்போது மரித்துப்
போனார். அவர் கர்த்தரை மதித்ததை
நீங்கள் அறிவீர்கள். அவர் ஒருவனிடம்
பணம் வாங்கியிருந்தார். அதற்காக இப்
போது அந்த ஆள் என் இரண்டு பிள்ளை
களை அடிமையாக்கிக்கொள்ள வந்திருக்
கிறான்!" என்று அழுதாள்.
2அதற்கு எலிசா, "நான் எவ்வாறு
உதவமுடியும்? உன் வீட்டில் என்ன இருக்
கிறது என்று சொல்" என்று கேட்டான்.
அப்பெண்ணும், "என் வீட்டில் எதுவு
மில்லை. ஒரு ஜாடி (ஒலிவ) எண்ணெய்
மட்டும் உள்ளது" என்றாள்.
3உடனே எலிசா அவளிடம், "நீ போய்
உனது பக்கத்து வீட்டுக்காரர் அனைவர்
களிடமும் கிண்ணங்களைக் கடனாக வாங்கி
வா. அவை காலியாக இருக்கட்டும். நிறைய
கிண்ணங்களை கடன் வாங்கு. 4உன்
வீட்டிற்குள் போய் கதவுகளை மூடிக்கொள்.
வீட்டிற்குள் நீயும் உன் பிள்ளைகளும்
மட்டும்தான் இருக்கவேண்டும். ஒலிவ
எண்ணெயை எல்லாக் கிண்ணங்களிலும்
ஊற்றி நிரப்ப அது நிறைந்ததும் ஒவ்வொரு
பாத்திரத்தையும் அப்புறம் வை" என்றான்.
5எனவே அந்தப் பெண் எலிசாவிட
மிருந்து கிளம்பிப்போய் வீட்டுக் கதவுகளை
அடைத்துக்கொண்டாள். அவளும் அவள்
பிள்ளைகள் மட்டுமே வீட்டில் இருந்தனர்.
அவளது மகன்கள் அவளிடம் கிண்ணங்
களைக் கொண்டுவந்தனர். அவற்றில் அவள்
எண்ணெயை ஊற்றினாள். 6அனைத்து
கிண்ணங்களும் நிரம்பியபோது அவள் தன்
மகனிடம், "இன்னொரு கிண்ணம் கொண்டு
வா" என்றாள்.
ஆனால் அவன் அவளிடம், "கிண்ணங்
கள் வேறு எதுவுமில்லை" என்றான்.
அப்போது ஜாடியில் இருந்த எண்ணெயும்
பெருகுவது நின்றுபோயிற்று.
7பின் அவள் வந்து தேவனுடைய
மனுஷனுக்கு (எலிசா) அதைச் சொன்னாள்.
அவரோ, "நீ போய் அந்த எண்ணெயை
விற்று உன் கடனை அடைத்துவிடு, மீதி
யுள்ள பணத்தில் நீயும் உன் பிள்ளைகளும்
வாழுங்கள்" என்றான்.

## சூனேமிலுள்ள ஒரு பெண் எலிசாவிற்கு அறை கொடுத்தது

8ஒரு நாள் எலிசா சூனேமுக்குச் சென்
றான். அங்கு ஒரு முக்கியமானப் பெண்
இருந்தாள். அவள் எலிசாவை (தடுத்து) தன்
வீட்டில் உணவு உண்ண அழைத்தாள்.
எனவே ஒவ்வொரு நேரமும் அவர் அந்த
வழியாகப்போகும் போதெல்லாம் அவன்
உணவு உண்பதற்காக நிறுத்தப்பட்டான்.
9அவள் தன் கணவனிடம், "இதோ
பாருங்கள், எலிசா தேவனுடைய பரிசுத்த
மான மனிதன் என்பதைத் தெரிந்துக்
கொண்டேன். எப்பொழுதும் நம் வீட்டைக்
கடந்தே போகிறார். 10அவருக்காக நாம்
கூரைமீது ஒரு சிறு அறை ஏற்பாடு
செய்வோம். அதில் படுக்கையிட்டு, ஒரு
மேஜை, நாற்காலி, விளக்குத்தண்டு ஆகிய
வற்றையும் வைத்துவிடுங்கள். அவர் இங்கு
வரும்போது தன் உபயோகத்திற்காக இந்த
அறையை வைத்துக்கொள்ளலாம்" என்றாள்.
11ஒரு நாள் எலிசா அவளது வீட்டிற்கு
வந்தான். அவன் அங்குள்ள அறைக்குச்
சென்று அங்கே ஓய்வெடுத்தான். 12எலிசா
தனது வேலையாளான கேயாசிடம், "அந்த
சூனேமியாளைக் கூப்பிடு" என்றான்.
அந்த வேலையாள் சூனேமியாளை
அழைத்தான். அவளும் கிளம்பிவந்து எலிசா
வின் முன்னிலையில் நின்றாள். 13எலிசா
தன் வேலையாளிடம், "இப்போது அவளி
டம் "எங்களுக்கு வசதியானவற்றை உன்
னால் முடிந்தவரை நன்கு செய்துள்ளாய்.
நான் உனக்காக என்ன செய்யவேண்டும்?
நான் உனக்காக அரசனிடமோ அல்லது

*படைத்தலைவனிடமோ ஏதாவது பேச வேண்டுமா?" எனக்கேட்டான்.*

*அதற்கு அவள், "இங்கே வாழுகின்ற என் சொந்த ஜனங்களில் நான் நன்றாகவே இருக்கிறேன்" என்றாள்.*

14*எலிசா தன் வேலைக்காரனிடம், "நாம் இவளுக்காக என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான்.*

*அதற்கு கேயாசி "எனக்குத் தெரியும். இவளுக்குக் குழந்தையில்லை. இவள் கணவ னுக்கு வயதாகிவிட்டது" என்றான்.*

15*பிறகு எலிசா, "அவளைக் கூப்பிடு" என்றான்.*

*வேலைக்காரன் அவளை அழைத்தான். அவள் கதவருகில் வந்துநின்றாள்.* 16*எலிசா அவளிடம், "அடுத்த ஆண்டு இதே பருவத் தில் நீ உனது சொந்த ஆண் குழந்தையை அணைத்துக்கொண்டிருப்பாய்" என்றான்.*

*அதற்கு அவள், "இல்லை! தேவமனிதரே, நீங்கள் உங்கள் வேலைக்காரியிடம் பொய் சொல்ல வேண்டாம்" என்றாள்.*

### சூனேமிய பெண் ஆண் மகனைப் பெறுதல்

17*ஆனால் அப்பெண் கருவுற்றாள். எலிசா சொன்னதுபோல அடுத்த ஆண்டு அதே பருவகாலத்தில், அவள் ஆண் குழந்தையைப் பெற்றாள்.*

18*அந்தப் பையன் வளர்ந்தான். ஒரு நாள், அவனது தந்தையும் ஆட்களும் வயலில் அறுவடை செய்துகொண்டிருந்த இடத்துக்கு போனான்.* 19*அவன் தன் தந்தையிடம், "என் தலை வலிக்கிறது!" என் றான்.*

*அவனது தந்தை, "இவனைத் தன் தாயிடம் தூக்கிச்செல்லுங்கள்"! என்று வேலைக்காரனிடம் சொன்னான்.*

20*வேலைக்காரன் அவனைத் தூக்கிக் கொண்டு தாயிடம் சென்றான். அவன் தாய்மடியில் மத்தியம்வரை இருந்து, பிறகு மரித்துபோனான்.*

### அப்பெண் எலிசாவைப் பார்க்கப் போகிறாள்

21*அப்பெண் மேலறையில் போய் தேவ மனிதனின் படுக்கையில் பையனைக் கிடத்தினாள். அந்த அறையின் கதவுகளை அடைத்துவிட்டு வெளியே போனாள்.*
22*அவள் கணவனை அழைத்து அவனிடம், "தயவுசெய்து என்னோடு ஒரு வேலைக் காரனையும் கழுதையையும் அனுப்புங்கள். நான் தீர்க்கதரிசியான எலிசாவை வேகமாக அழைத்துக்கொண்டு திரும்பிவர வேண்டும்" என்றாள்.*

23*அதற்கு அவளுடைய கணவன், "இன்றைக்கு அந்தத் தீர்க்கதரிசியிடம் போக வேண்டும் என்று ஏன் விரும்புகிறாய்? இன்று அமாவாசையோ அல்லது ஓய்வு நாளோ இல்லையே" என்றான்.*

*அதற்கு அவள், "கவலைப்பட வேண் டாம் எல்லாம் சரியாகும்" என்றாள்.*

24*பிறகு அவள் கழுதையின் மீது சேணத் தைப் கட்டினாள், "வேகமாகப் போ. நான் சொல்லும்போது மட்டும் மெதுவாகச்செல்" என்றாள்.*

25*அவள் தேவமனிதனைப் (எலிசாவைப்) பார்க்க கர்மேல் மலைக்குச் சென்றாள்.*

*எலிசாவும் சூனேமியப்பெண் வெகு தூரத்திலிருந்து வருவதைக் கவனித்தான். அவன் தன் வேலைக்காரனான கேயாசி யிடம், "பார். அந்த சூனேமியப் பெண் வருகிறாள்.* 26*அவளிடம் ஓடிப்போ. 'என்ன காரியம்? நன்றாக இருக்கிறாயா? கணவன் நலமா? குழந்தை நலமா?' என்று கேள்" என்றான்.*

*கேயாசி அவளிடம் ஓடிப்போய் இத்தனை யும் கேட்டான். அதற்கு அவள், "எல்லாரும் நலம்தான்" என்றாள்.*

27*ஆனாலும் சூனேமியப்பெண் மலைமீது ஏறி எலிசாவிடம் வந்தாள். அவள் அவரது பாதத்தைப் (பணிந்து) பற்றினாள். கேயாசி நெருங்கிவந்து அவளை இழுத்து விலக்கி னான். உடனே தேவமனிதன் (எலிசா), "அவளைத் தனியாகவிடு! அவள் மிகவும் கலங்கிப்போயிருக்கிறாள். அவள் ஆத்துமா துடிக்கிறது. கர்த்தர் என்னிடம் இதைப்பற்றி எதையும் சொல்லவில்லை. கர்த்தர் என் னிடம் இதனை மறைத்துவிட்டார்" என்றான்.*

28*அதற்கு அந்தப்பெண், "ஐயா! நான் உம்மிடம் மகனைக் கேட்கவில்லை 'என்னை ஏமாற்றவேண்டாம்' என்றுதானே சொன்னேன்" என்றாள்.*

29*பிறகு எலிசா கேயாசியிடம், "புறப் படுவதற்குத் தயார்செய்! எனது கைத்தடியை எடுத்துக்கொண்டு போ. பேசுவதற்காக யாரையும் நிறுத்தாதே. யாரையாவது சந்தித் தாலும் நீ அவர்களை நலம் கூட விசாரிக்க வேண்டாம். யாராவது விசாரித்தாலும் பதில் சொல்ல வேண்டாம்! எனது கைத் தடியை அந்த பிள்ளையின் முகத்தில் வை" என்றான்.*

30*ஆனால் அவள், "நீங்கள் இல்லாமல் நான் போகமாட்டேன்!" என்றாள்.*

*எனவே எலிசா எழுந்து அந்த சூனே மியப் பெண்ணோடு போனான்.*

31*அவர்களுக்கு முன்னால் கேயாசி அப் பெண்ணின் வீட்டை அடைந்தான். அவன் கைத்தடியை பிள்ளையின் முகத்தில் வைத் தான். ஆனால் அந்தக் குழந்தை பேசவோ பேச்சுக்கு பதிலாக அசையவோ இல்லை. எனவே கேயாசி எலிசாவிடம் ஓடிவந்து, "குழந்தை இன்னும் எழுந்திருக்கவில்லை!" என்று கூறினான்.*

### சூனேமியப் பெண்ணின் மகன் மீண்டும் உயிரடைகிறான்

32எலிசா வீட்டிற்கு வந்தான். அவனது
படுக்கையில், பிள்ளை மரித்து கிடந்தது.
33அவன் அறையுள் நுழைந்ததும் கதவுகளை
அடைத்தான். அவ்வறையில் அவனும்
பிள்ளையும் மட்டுமே இருந்தனர். எலிசா
கர்த்தரை நினைத்து ஜெபம் செய்தான்.
34அவன் படுக்கையருகில் சென்று
அப்பிள்ளை மேல் படுத்து, தன் வாயை
அப்பிள்ளையின் வாயோடு வைத்து, தன்
கண்ணை அதன் கண்களோடு வைத்து, தன்
கைகளை அதன் கைகளோடு வைத்து
நீட்டிபடுத்தான். அப்பிள்ளையின் உடல்
சூடு அடைந்தது.
35பிறகு எலிசா அறையைவிட்டு
வெளியே வந்து வீட்டைச்சுற்றி முன்னும்
பின்னும் நடந்தான். பிறகு (அறைக்குள்)
போய் பிள்ளை மேல் குப்புறப்படுத்தான்.
உடனே பிள்ளை ஏழு முறை தும்மி தன்
கண்களை திறந்தான்.
36பிறகு அவன் கேயாசியிடம், "சூனே
மியப் பெண்ணை கூப்பிடு" என்றான்.

கேயாசி அவளை அழைக்க அவளும் வந்தாள். அவன் அவளிடம் "உன் மகனை எடுத்துக்கொள்" என்றான்.
37பிறகு அந்த சூனேமியப்பெண் அறைக்
குள் வந்து எலிசாவின் பாதத்தில் விழுந்து
பணிந்தாள். குழந்தையை எடுத்துக்கொண்டு
வெளியே போனாள்.

### எலிசாவும் விஷமுள்ள கூழும்?

38எலிசா மீண்டும் கில்காலுக்கு வந்தான்.
அப்போது அந்நாட்டில் பஞ்சமாய் இருந்தது.
தீர்க்கதரிசிகள் கூட்டமாக எலிசாவின்
முன்னர் கூடினார்கள். எலிசா தனது
வேலைக்காரனிடம், "பெரிய பாத்திரத்தை
நெருப்பில் வை. இவர்களுக்கு கூழ் தயார்
செய்" என்றான்.
39மூலிகைத் தழைகளைச் சேகரிக்கும்
பொருட்டு ஒருவன் வயல்வெளிக்குச் சென்
றான். அங்கே விஷ திராட்சைக் கொடி
களைக் கண்டான். அக்கொடியில் இருந்து
முதிர்ந்த பழங்களைச் சேகரித்துத் தன்
மேலாடையின் பையில் நிரப்பிக்கொண்
டான். திரும்பிவந்து, பானையில் வைத்து
மூடினான். ஆனால் அங்கிருந்த தீர்க்க
தரிசிகளுக்கு இவ்விஷயம் பற்றி எதுவும்
தெரியாது.
40பிறகு அதை குடிக்க ஊற்றினார்கள்.
அவர்கள் குடிக்கப்போகும்போது, "தேவ
மனிதனே! இந்தப் பாத்திரத்தில் விஷம்
இருக்கிறது" என்று சத்தமிட்டனர். அதனால்
அவர்கள் அதனைக் குடிக்க முடியவில்லை.
41ஆனால் எலிசாவோ, "சிறிது மாவு
கொடுங்கள்" என்று கேட்க அவர்கள்
கொடுத்தார்கள். அதனை அந்தப் பாத்திரத்
தில் அவன் போட்டு, "இப்போது ஜனங்
களுக்குச் கூழை ஊற்றுங்கள். அவர்கள்
அதை குடிக்கலாம்" என்றான்.

பிறகு அந்தச் சாற்றில் எந்த குறையும் இல்லை!

### தீர்க்கதரிசிகளுக்கு எலிசா உணவளித்தது

42பாகால் சலீஷாவிலிருந்து ஒருவன்
வந்தான். அவன் எலிசாவிற்கு முதல்
அறுவடையின் வாற்கோதுமையின் 20
அப்பங்களையும் புதிய கதிர்களையும் தனது
கோணிப்பையில் தேவமனிதனுக்கு (எலிசா)
கொண்டுவந்தான். எலிசாவோ "அவற்றை
ஜனங்களுக்குக் கொடு. அவர்கள் உண்ணட்
டும்" என்றான்.
43அதற்கு எலிசாவின் வேலைக்காரன்,
"என்ன? இங்கே 100 பேர்கள் இருக்கிறார்கள்.
இந்த உணவை எல்லோருக்கும் எப்படி
பகிர்ந்தளிக்க முடியும்" என்றான்.

ஆனால் எலிசாவோ, "இந்த உணவை ஜனங்களுக்குக் கொடு. கர்த்தர், 'அவர்கள் உண்ட பிறகும் உணவு மீதியாகும்' என்று கூறியிருக்கிறார்" என்றான்.
44பிறகு எலிசாவின் வேலைக்காரன் உண
வை ஜனங்களுக்குக் கொடுத்தான். அத்தீர்க்க
தரிசிகள் அவற்றை நன்கு உண்டனர்,
மேலும் உணவு மீதியானது! இவ்வாறு
கர்த்தர் சொன்னபடியே நிறைவேறியது.

### நாகமானின் பிரச்சனை

5 நாகமான் என்பவன் ஆராம் அரசனின்
படைத்தளபதி ஆவான். அவன்
அரசனுக்கு மிகவும் முக்கியமானவன். ஏனெ
னில் அவன் மூலமாகத்தான் கர்த்தர்
ஆராமுக்கு வெற்றியைத் தேடித்தந்தார்.
அவன் மகா பராக்கிரமசாலியாக இருந்தான்.
ஆனால் தொழுநோயால் துன்புற்றான்.
2ஆராமிய படை பல பிரிவுகளை
அனுப்பி இஸ்ரவேலரோடு சண்டையிட்டது.
அவர்கள் ஜனங்களை அடிமைகளாகப்
பிடித்துவந்தனர். ஒரு தடவை ஒரு சிறு
பெண்ணைப் பிடித்துவந்தனர். அவள்
நாகமானின் மனைவிக்கு வேலைக்காரியாக
இருந்தாள். 3அவள் தனது எஜமானியிடம்,
"சமாரியாவில் வாழும் தீர்க்கதரிசியை
(எலிசாவை) நமது எஜமான் (நாகமான்)
பார்க்கவேண்டும் என்று நான் விரும்பு
கிறேன். அவர் இவரது தொழுநோயைக்
குணமாக்குவார்" என்றாள்.
4நாகமானும் அவனது எஜமானிடம்
(அரசனிடம்) போய், இஸ்ரவேலியப் பெண்
கூறியதைச் சொன்னான்.
5ஆராமின் அரசனும், "இப்போது செல்,
நானும் இஸ்ரவேல் அரசனுக்கு ஒரு கடிதம்
எழுதி அனுப்புகிறேன்" என்றான்.

எனவே நாகமான் இஸ்ரவேலுக்குச் சென்றான். தன்னோடு சில அன்பளிப்புகளாக 750 பவுண்டு வெள்ளி, 6,000 தங்கத்துண்டுகள், 10 மாற்றுத்துணிகள்

ஆகியவற்றை எடுத்துச்சென்றான். 6அதோடு
அரசனின் கடிதத்தையும் எடுத்துச்சென்றான்.
அக்கடிதத்தில், “இப்போது, என் சேவகனான
நாகமானை நான் அனுப்பியிருக்கிறேன்
என்பதை இக்கடிதம் காட்டும். அவனது
தொழுநோயைக் குணமாக்கவும்” என்று
எழுதப்பட்டிருந்தது.
7இஸ்ரவேல் அரசன் கடிதத்தை வாசித்
ததும் வருத்தப்பட்டுத் தனது ஆடைகளைக்
கிழித்தான். தனது வருத்தத்தை வெளிப்
படுத்த. அவன், “நான் தேவனா? இல்லை.
மரணத்தின் மீதும் வாழ்வின் மீதும் எனக்கு
அதிகாரமில்லை. அப்படியிருக்க ஆராம்
அரசன் என்னிடம் ஒரு தொழுநோயா
ளியைக் குணப்படுத்த ஏன் அனுப்பினான்?
இதைப்பற்றி நினைத்துப்பார்க்க வேண்டும்.
இது ஒரு தந்திரம்தான். ஒரு போரை
ஆரம்பிக்கவே ஆராம் அரசன் முயற்சி
செய்கிறான்” என்றான்.
8அரசன் வருத்தப்பட்டுத் தன் ஆடை
களைக் கிழித்துக் கொண்டதைப்பற்றி
தேவமனிதனான எலிசா அறிந்தான். உடனே
தன் தூதுவனை அனுப்பி, “ஏன் உங்கள்
ஆடைகளைக் கிழித்துக்கொண்டீர்கள்.
நாகமானை என்னிடம் அனுப்புங்கள்.
அப்போதுதான் அவர்கள் இஸ்ரவேலில் ஒரு
தீர்க்கதரிசி இருக்கிறார் என்பதைத்
தெரிந்துக்கொள்வார்கள்!” என்று தெரிவித்
தான்.
9ஆகவே, நாகமான் தனது குதிரை
களோடும் இரதங்களோடும் எலிசாவின்
வீட்டிற்கு வந்து கதவிற்கு வெளியே நின்
றான். 10எலிசா நாகமானிடம் ஒரு
தூதுவனை அனுப்பினான். அத்தூதுவன்
நாகமானிடம், “போய் யோர்தான் ஆற்றில்
ஏழுமுறை ஸ்நானம்பண்ணு. பின் உன்
தோல் குணமாகும். நீயும் சுத்தமாவாய்”
என்று கூறினான்.
11நாகமான் மிகவும் கோபப்பட்டு
வெளியேறினான். அவன், “அவர் (எலிசா)
வெளியே வந்து என் முன்னால் நிற்பார்.
அவரது தேவனாகிய கர்த்தருடைய
நாமத்தைக் கூறுவார், எனது உடல் மீது
தனது கைகளை அசைத்து நோயைக்
குணப்படுத்துவார் என்று நினைத்தேன்.
12இஸ்ரவேலில் கிடைக்கும் எல்லா
தண்ணீரை விடவும் ஆப்னா, பர்பாரும்
ஆகிய தமஸ்குவின் ஆறுகள் சிறந்தவை.
அப்படியிருக்க நான் ஏன் அவற்றில்
ஸ்நானம்பண்ணி சுத்தமடையக்கூடாது?”
என்றவாறு கோபத்தோடு திரும்பிப்
போனான்.
13ஆனால் நாகமானின் வேலைக்காரர்கள்
அவனிடம் வந்து, “தந்தையே! தீர்க்கதரிசி
உம்மிடம் சில பெருஞ்செயல்களைச் செய்ய
வேண்டும் என்று சொல்லியிருந்தால், நீர்
செய்திருப்பீரல்லவா? எனவே அவர்
எளிதானவற்றைச் சொன்னாலும் அதற்குக்
கீழ்ப்படிய வேண்டும். அவர், (தீர்க்கதரிசி),
‘ஸ்நானம்பண்ணு. நீ சுத்தமடைவாய்’ என்று
கூறியிருக்கிறார்” என்றனர்.
14எனவே நாகமான் தேவமனிதன் (தீர்க்க
தரிசி எலிசா) சொன்னவாறு செய்தான்.
அவன் போய் யோர்தான் ஆற்றில் ஏழு
தடவை மூழ்கிச் சுத்தமானான்! அவனது
தோல் குழந்தையின் தோலைப்போன்று
மென்மையாயிற்று.
15நாகமானும் அவனது குழுவும் தேவ
மனிதனிடம் (எலிசாவிடம்) திரும்பி
வந்தனர். நாகமான் எலிசாவின் முன் நின்று,
“உலகம் முழுவதிலும் பாரும், இஸ்ரவேலைத்
தவிர வேறெங்கும் தேவன் இல்லை
என்பதைத் தெரிந்துகொண்டேன்! இப்போது
உமது வேலையாளான என்னிடமிருந்து
அன்பளிப்புகளை ஏற்றுக் கொள்ளுங்கள்!”
என்றான்.
16ஆனால் எலிசாவோ, “நான் கர்த்தருக்கு
ஊழியம் செய்கிறேன். நான் எவ்வித
அன்பளிப்புகளையும் ஏற்றுக்கொள்ள
மாட்டேன், என்று கர்த்தர் மீது ஆணை
யிட்டுள்ளேன்” என்றான்.
நாகமான் எவ்வளவோ முயன்று பார்த்
தான். எலிசாவோ அன்பளிப்புகளை ஏற்றுக்
கொள்ளவில்லை. 17பிறகு நாகமான், “எனது
அன்பளிப்புகளை நீங்கள் ஏற்றுக்கொள்ளா
விட்டாலும் எனக்காக இதைச் செய்யுங்கள்.
நான் இரண்டு கோவேறு கழுதைகள்
சுமக்கும்படி இஸ்ரவேலிலிருந்து மண்
எடுத்துச்செல்ல அனுமதிக்க வேண்டும்.
ஏனெனில் இனிமேல் நான் கர்த்தரைத்
தவிர வேறு எந்த தெய்வங்களுக்கும்
காணிக்கையும் பலிகளையும் தகன
பலியையும் அளிக்கமாட்டேன்! 18இதற்காக
என்னை மன்னிக்கும்படி இப்பொழுது
கர்த்தரை வேண்டிக்கொள்கிறேன். என்
எஜமான் (அரசன்) போலித் தெய்வமான
ரிம்மோனின் ஆலயத்திற்குள் போய்
தொழுகைச் செய்யும்போது நானும்
அவனோடு போக வேண்டியதிருக்கும்.
என்மீது சாய்ந்துக்கொள்ள அரசன்
விரும்புவான். எனவே அந்த ரிம்மோனின்
ஆலயத்திற்குள் வணங்கிக் குனியவேண்டிய
திருக்கும். அதற்காக இப்போதே கர்த்தரிடம்
மன்னிப்பு கேட்டுக்கொள்கிறேன்” என்றான்.
19பிறகு எலிசா நாகமானிடம், “சமாதான
மாகப் போ” என்றான்.
எனவே அவன் எலிசாவை விட்டுவிட்டு
கொஞ்சதூரம் போனான். 20ஆனால் தேவ
மனிதனின் (எலிசாவின்) வேலைக்காரனான
கேயாசி, “பாருங்கள் எனது எஜமானன்
(எலிசா) ஆராமியனான, நாகமானிடமிருந்து
அவன் கொண்டுவந்த எவ்வித அன்பளிப்பு
களையும் பெற்றுக்கொள்ளாமல் போக அனு
மதித்திருக்கிறார்! நான் அவன் பின்னால்
ஓடிப்போய் கொஞ்சம் பெற்றுக்கொள்ள

வேண்டும்!” என்று கூறி, 21நாகமானின்
பின்னால் ஓடினான்.
இவன் வருவதைக் கவனித்த நாகமான்
இரதத்திலிருந்து இறங்கி, “எல்லாம் சரியாய்
உள்ளதா?” என்று கேட்டான்.
22அதற்கு கேயாசி, “எல்லாம் சரியாக
உள்ளது. எனது எஜமானர் அனுப்பினார்.
தீர்க்கதரிசிகளின் குழுவில் இருந்து இரண்டு
இளைஞர்கள் எப்பிராயீம் மலைநாட்டி
லிருந்து வந்துள்ளனர். அவர்களுக்கு தயவு
செய்து 75 பவுண்டு வெள்ளியும் இரண்டு
மாற்று ஆடைகளையும் கொடுக்கவேண்டும்”
என்றான்.
23அதற்கு நாகமான், “தயவுசெய்து 150
பவுண்டு வெள்ளியை எடுத்துக்கொள்க”
என்றான். பின் அவனை (எடுக்க) அவசரப்
படுத்தி இரண்டு பைகளில் இரண்டு தாலந்து
வெள்ளியையும் இரண்டு மாற்று ஆடை
களையும் கட்டினான். பிறகு நாகமான்
இவற்றை அவனது இரண்டு வேலைக்
காரர்களிடம் கேயாசிக்குத் தூக்கிவரும்படி
கொடுத்தான். 24கேயாசி குன்றுக்கருகில்
வந்ததும் வேலைக்காரர்களிடம் இருந்து
அவற்றை வாங்கிக்கொண்டு அனுப்பி
விட்டான். தன் வீட்டிற்குள் அவற்றை
மறைத்தான்.
25அவன் வந்து எஜமான் (எலிசாவின்)
முன் நின்றதும் எலிசா அவனிடம், “எங்கே
போயிருந்தாய் கேயாசி?” எனக்கேட்டான்.
அதற்கு கேயாசி, “எங்கும் போக
வில்லையே!” என்றான்.
26எலிசா அவனிடம், “இது உண்மை
இல்லை! நாகமான் இரதத்திலிருந்து இறங்கி
உன்னை எதிர்கொண்டபோதே என் மனம்
உன்னோடு வந்துவிட்டதே. பணம், ஆடை,
ஒலிவ எண்ணெய், திராட்சை, ஆடு,
பசுக்கள், ஆண்கள் அல்லது பெண்கள்
அடிமைகள் போன்றவற்றை அன்பளிப்பாகப்
பெறும் காலம் இதுவல்ல. 27இப்போது
நீயும் உன் பிள்ளைகளும் நாகமானின்
நோயைப் பெறுவீர்கள். உனக்கு இனி
எப்போதும் தொழுநோய் இருக்கும்!”
என்றான்.
கேயாசி எலிசாவைவிட்டு விலகியதும்
அவனது, தோல் பனியைப்போன்று வெளுத்
தது! அவன் தொழுநோயாளியானான்.

## எலிசாவும் கோடரியும்

6 தீர்க்கதரிசிகளின் குழு எலிசாவிடம்,
“நாங்கள் அங்கிருக்கும் இடத்தில் தங்கி
யிருக்கிறோம். ஆனால் அது மிகவும்
சிறியது. 2நாம் யோர்தான் ஆற்றுவெளிக்குப்
போய். கொஞ்சம் மரங்களை வெட்டிவரு
வோம் ஒவ்வொருவரும் ஒரு மரத்தடி
கொண்டுவந்தால் வசிப்பதற்கு ஒரு இடம்
அமைக்கலாம்” என்றனர்.
எலிசாவும், “நல்லது. போய் செய்யுங்கள்”
என்றான்.
3அவர்களில் ஒருவன், “எங்களோடு
வாரும்” என்று அழைத்தான்.
எலிசாவும், “நல்லது நான் உங்களோடு
வருகிறேன்” என்றான்.
4எனவே எலிசாவும் தீர்க்கதரிசிகளின்
குழுவோடு சென்றான். அவர்கள் யோர்தான்
ஆற்றை அடைந்ததும் சில மரங்களை
வெட்ட ஆரம்பித்தனர். 5ஆனால் ஒரு மனி
தன் மரத்தை வெட்டும்போது, அவனது
கோடரியின் தலை கழன்று தண்ணீருக்குள்
விழுந்துவிட்டது. அதற்கு அவன், “ஐயோ
என் எஜமானனே! அது கடனாக வாங்கிய
தாயிற்றே!” என்று கூறினான்.
6தேவமனுஷனோ, (எலிசா) “எங்கே அது
விழுந்தது?” என்று கேட்டான்.
அந்த மனிதன் எலிசாவிற்குக் கோடரி
விழுந்த இடத்தைக் காட்டினான். அவன்,
(எலிசா) ஒரு கொம்பை வெட்டி அதை
தண்ணீருக்குள் எறிந்தான். அது (மூழ்கி
விட்ட) இரும்புக் கோடரியை மிதக்கச்
செய்தது. 7எலிசா, “கோடரியை எடுத்துக்
கொள்” என்றான். பிறகு அவன் கைவைத்து
அதனை எடுத்துக்கொண்டான்.

## ஆராமின் அரசன் இஸ்ரவேல் அரசனைத் தந்திரமாகப் பிடிக்க முயற்சிக்கிறான்

8ஆராமின் அரசன் இஸ்ரவேலுக்கு எதி
ராகப் போரை ஆரம்பித்தான். வேலைக்காரர்
களோடு படை அதிகாரிகளோடு ஆலோ
சனை கூட்டம் நடத்தினான். அரசன்,
“இந்த இடத்தில் ஒளிந்திருங்கள்.
இஸ்ரவேலின் படைகள் வரும்போது
தாக்கவேண்டும்” என்றான்.
9ஆனால் தேவமனிதனோ (எலிசாவோ)
இஸ்ரவேல் அரசனுக்கு ஒரு தூதுவனை
அனுப்பி, “எச்சரிக்கையாய் இரு! அந்த
வழியாகப் போகாதே! ஆராமியப் படை
வீரர்கள் ஒளிந்திருக்கிறார்கள்!” என்று
சொல்லச்செய்தான்.
10உடனே அரசன் எலிசாவின்
எச்சரிக்கைச் செய்தியை தன் படைவீரர்
களுக்கு அந்த இடத்திற்கு அனுப்பி பெரும்
எண்ணிக்கையில் அவர்களை ஆபத்திலி
ருந்து காப்பாற்றினான்.
11இதை அறிந்ததும் ஆராமின் அரசன்
மிகவும் குலைந்து போனான். அவன் தன்
அதிகாரிகளை அழைத்து, “நம் திட்டத்தை
இஸ்ரவேல் அரசனுக்கு வெளிப்படுத்திய
ஒற்றன் உங்களில் யார்?” என்று கேட்டான்.
12ஒரு அதிகாரி, “எங்கள் அரசனும்
ஆண்டவனுமானவரே! நம்மில் எவரும்
ஒற்றராகவில்லை. நீங்கள் உங்களுடைய
படுக்கையறையில் பேசுகின்ற பல இரகசியங்
களையுங்கூட, இஸ்ரவேலில் இருந்துவந்த
தீர்க்கதரிசி எலிசாவால் இஸ்ரவேல் அரச
னிடம் சொல்லமுடியும்!” என்றான்.
13அதற்கு அரசன், ஆட்களை அனுப்பி
“போய் எலிசாவை கண்டுபிடியுங்கள். நான்

அவனைப் பிடித்துகொண்டுவர ஆட்களை அனுப்புவேன்" என்றான்.

வேலைக்காரர்களோ, "எலிசா தோத்தா னில் இருக்கிறார்" என்றனர்.

14பிறகு அரசன் குதிரைகள், இரதங்கள், பெரும்படை ஆகியோரைத் தோத்தானுக்கு அனுப்பினான். அவர்கள் இரவில் அந்நகரை
முற்றுகை இட்டனர். 15தேவமனிதனின்
(எலிசாவின்) வேலைக்காரன் காலையில் விரைவில் எழுந்து, வெளியே சென்றபோது படைவீரர்கள், குதிரைகள், மற்றும் இரதங்கள் ஆகியவற்றைக் கண்டான்.

எலிசாவின் வேலைக்காரன் (அவரிடம் ஓடிவந்து), "எஜமானரே! நாம் என்ன செய்யமுடியும்?" என்று கேட்டான்.

16எலிசாவோ, "பயப்படவேண்டாம். ஆராம் அரசனுக்காகப் போரிடும் வீரர்களை விட நமக்காகப் போரிடும் வீரர்கள் அதிகம்" என்றான்.

17பிறகு அவன் ஜெபம் செய்து "கர்த்தாவே! என் வேலைக்காரனின் கண்ணை திறந்துவிடும். அதனால் அவன் கண்டுகொள்வான்" என்று வேண்டிக் கொண்டான்.

அந்த வேலைக்காரனின் கண்களை கர்த்தர் திறந்தார். அவன் பார்த்தபோது, மலைமுழுவதும் படைவீரர்களும் குதிரை களும் இரதங்களும் நிற்பதைப் பார்த்தான். அவர்கள் எலிசாவை சுற்றியிருந்தனர்!

18பின் அவர்கள் (ஆராமியர்கள்) கீழே இறங்கி எலிசாவிடம் வந்து நின்றதும், அவன் கர்த்தரிடம், "இம்மனிதர்கள் குருடாகப் போகும்படி உம்மை வேண்டிக் கொள்கிறேன்" என்றான்.

பிறகு கர்த்தர் எலிசா வேண்டிக் கொண்டபடியே ஆராமியர்களை குருடாக்
கினார். 19எலிசா அவர்களைப் பார்த்து,
"இது சரியான வழியல்ல. இது சரியான நகரமும் அல்ல. என்னைப் பின்பற்றுங்கள். நான் உங்களை நீங்கள் தேடுகிறவரிடம் அழைத்துப் போவேன்" என்றான். பிறகு அவர்களைச் சமாரியாவிற்கு அழைத்துப போனான்.

20அவர்கள் சமாரியாவை அடைந்ததும் எலிசா "கர்த்தாவே, இப்போது இந்த மனிதர்களின் கண்களைத் திறக்கச்செய்யும். எனவே அவர்கள் பார்க்கமுடியும்" என்றான்.

பிறகு கர்த்தர் அவர்களின் கண்களைத் திறந்தார், அவர்கள் சமாரியாவின் நடுவே
இருப்பதைப் பார்த்தனர்! 21இஸ்ரவேலின்
அரசன் ஆராமிய படைகளைக் கண்டதும் எலிசாவிடம் "என் தந்தையே, இவர்களைக் கொல்லட்டுமா? இவர்களைக் கொல்லட் டுமா?" என்று கேட்டான்.

22அதற்கு எலிசா, "இவர்களைக் கொல்ல வேண்டாம். நீ உனது வாளாலும் வில்லாலும் போரில் கைப்பற்றிய வீரர் களைக் கொல்லக்கூடாது! இவர்களுக்கு அப்பமும் தண்ணீரும் கொடு. அவர்களை உண்ணவும் குடிக்கவும் விடு. பின் எஜமானனிடம் செல்லவும் அனுமதிகொடு" என்றான்.

23ஆராமியப் படைக்காக இஸ்ரவேல் அரசன் நிறைய உணவைத் தயாரித்தான். ஆராமியப் படை உண்டு குடித்தது. பிறகு, இஸ்ரவேல் அரசன் ஆராமியப்படையை ஆராமுக்கு அனுப்பினான். ஆராமியப் படை யினர் தங்களது எஜமானனிடம் திரும்பச் சென்றார்கள். பறிமுதல் செய்வதற்காக இஸ்ரவேலுக்குள் ஆராமியர்கள் அதற்குமேல் படைகளை அனுப்பவில்லை.

## சமாரியாவைப் பஞ்சம் தாக்கிய கொடிய காலம்

24இதற்குப் பிறகு, ஆராமிய அரசனான பெனாதாத்தும் முழுப்படைகளையும் சேர்த்து சமாரியாவைத் தாக்கினான்.
சமாரியாவைக் கைப்பற்றினான். 25வீரர்கள்
நகருக்குள் உணவு வராதபடி தடுத்து விட்டனர். எனவே சமாரியாவில் பஞ்சமும் பட்டினியும் அதிகரித்தது. அங்கு ஒரு கழுதையின் தலை எண்பது வெள்ளிக் காசுகளுக்கும், புறாக்களுக்குப் போடும் கால்படி புறா புழுக்கை ஐந்து வெள்ளி காசுகளுக்கும் மிக மோசமாக விற்கப் பட்டன.

26ஒரு நாள் இஸ்ரவேல் அரசன் நகரச் சுவரின்மேல் நடந்துக்கொண்டிருந்தான். அப் போது ஒரு பெண் அவனிடம், "எனது அரசனாகிய ஆண்டவனே, என்னைக் காப்பாற்றும்!" என்று சத்தமிட்டாள்.

27அதற்கு அரசன் அவளிடம், "கர்த்தரே உன்னைக் காப்பாற்றாவிட்டால் நான் எவ்வாறு உன்னைக் காப்பாற்றமுடியும்? உனக்குக் கொடுக்க என்னிடம் எதுவு மில்லை. தூற்றி சுத்தம் செய்த தானியத் திலிருந்து செய்த மாவு அல்லது திராட்சையை நசுக்கும் இடத்திலிருந்து எடுக்கப்பட்ட திராட்சைரசம் என
எதுவுமில்லை" என்றான். 28பிறகு அரசன்
அவளிடம், "உனது பிரச்சனை என்ன?" என்றான்.

அதற்கு அவள், "நானும் அந்தப் பெண்ணும் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டோம். அதன்படி என்னிடம் இவள் 'நீ உன் மகனை தா. நாம் அவனைக் (கொன்று) தின்போம். பிறகு நான் என் மகனைத் தருவேன். அவனை நாளைத்
தின்னலாம் என்றாள். 29அதன்படி என்
மகனை வேகவைத்து தின்றுவிட்டோம். பிறகு மறுநாள் நான் அவளிடம், 'எனக்கு உன் மகனைத் தா. எனவே நாம் அவனைக் கொன்றுத் தின்போம்' என்றேன். ஆனால் ஒளித்து வைத்திருக்கிறாள்!" என்றாள்.

30 அரசன் அந்த பெண்ணின் வார்த்தை
களைக் கேட்டதும், தன் துக்கத்தை
வெளிப்படுத்தும் பொருட்டு தன் ஆடை
களைக் கிழித்துக்கொண்டான். அரசன் சுவர்
வழியாகச் செல்லும்பொழுது, அரசன் தனது
உடைகளுக்கடியில் சாக்குத் துணியை
அணிந்திருந்ததை ஜனங்கள் பார்த்தார்கள்.
அது அரசன் துக்கமாயிருப்பதைக் காண்
பித்தது.
31 அரசன் எலிசாவின் மீது கோபங்
கொண்டு, “சாப்பாத்தின் மகனான எலிசா
வின் தலையானது அவனது உடலில்
இன்றைக்கும் தொடர்ந்து இருந்தால் தேவன்
என்னைத் தண்டிக்கட்டும்!” என்றான்.
32 எலிசாவிடம் அரசன் ஒரு தூதுவனை
அனுப்பினான். எலிசா தன் வீட்டில் சில
மூப்பர்களோடு இருந்தான். தூதுவன்
வருமுன் அவன் (எலிசா), “கொலை
காரனின் மகன் (இஸ்ரவேல் அரசன்) என்
தலையை வெட்ட ஆட்களை அனுப்பி
யுள்ளான்! தூதுவன் வருகிறபோது கதவு
களை அடையுங்கள்! அவனுக்கு எதிராக
வேகமாகப் பிடியுங்கள்! அவனை உள்ளே
விடாதீர்கள்! அவனுக்குப் பின்னால்
அவனது எஜமானின் காலடி சத்தம்
கேட்கிறது!” என்றான்.
33 இவ்வாறு எலிசா மூப்பர்களோடு பேசிக்
கொண்டிருக்கும்போதே தூதுவன் வந்தான்.
அவன், “கர்த்தரிடமிருந்தே இந்த பிரச்சனை
வந்துள்ளது. எதற்காக இனி கர்த்தருக்காக
காத்திருக்கவேண்டும்?” எனக் கேட்டான்.
7 எலிசா, “கர்த்தரிடமிருந்து வந்த
செய்தியைக் கேளுங்கள்! அவர், ‘நாளை
இதே நேரத்தில், உணவுப் பொருட்கள்
மிகுதியாகக் கிடைக்கும். அவற்றின் விலை
மலிவாக இருக்கும். சமாரியாவின் வாசல்
அருகிலுள்ள சந்தையில் ஒரு மரக்கால்
கோதுமை மாவு ஒரு சேக்கலுக்கும் இரண்டு
மரக்கால் வாற்கோதுமை ஒரு சேக்கலுக்கும்
ஒருவனால் வாங்கமுடியும்’ என்று கூறு
கிறார்” என்றான்.
2 பிறகு அரசனுக்கு நெருக்கமான அதிகாரி
தேவமனிதனை நோக்கி, “கர்த்தர் பரலோகத்
திலே ஜன்னல் அமைத்தாலும், இதுபோல்
நடக்காது!” என்று சொன்னான்.
எலிசா, “உனது கண்களால் காண்பாய்.
ஆனால் அந்த உணவை நீ உண்ண
மாட்டாய்” என்றான்.

### ஆராமிய முகாம் காலியானதைக் கண்டு பிடித்த தொழுநோயாளிகள்

3 நகர வாசலருகில் நான்கு தொழு
நோயாளிகள் நின்றுக்கொண்டிருந்தனர்.
அவர்கள் தங்களுக்குள், “நாம் மரணத்தை
எதிர்பார்த்து ஏன் இங்கே உட்
கார்ந்துகொண்டிருக்கிறோம்?
4 சமாரியாவில்
உண்ண உணவில்லை. நகரத்திற்குள்
போனால் நாம் மரித்துப்போவோம். இங்கி
ருந்தாலும் மரித்துப்போவோம். எனவே
ஆராமிய படைக்குச் செல்வோம். அவர்கள்
வாழவைத்தால் வாழ்வோம். கொல்ல
நினைத்தால் மரித்துப்போவோம்” என்றனர்.
5 எனவே அன்று மாலையில் அவர்கள்
ஆராமியர்களின் முகாமிற்கு அருகில்
சென்றார்கள். முகாமின் விளிம்பு வரைக்கும்
சென்றார்கள். அங்கு யாருமே இல்லை எனக்
கண்டார்கள்!
6 ஆராமிய வீரர்களின்
காதுகளில் வீரர்கள், குதிரைகள், இரதங்கள்
ஆகியவற்றின் ஓசையைக் கேட்கும்படி
கர்த்தர் செய்தார். அவர்கள் தமக்குள்,
“ஏத்திய மற்றும் எகிப்திய அரசர்களின்
துணையுடன் இஸ்ரவேல் அரசன் நம்மோடு
போர் செய்ய வருகிறான்!” என்று பேசிக்
கொண்டனர்.
7 அதனால் அவர்கள் (பயந்து) அன்று
மாலையே ஓடிவிட்டனர். அப்போது
கூடாரங்கள், குதிரைகள், கழுதைகள் முகா
மில் உள்ள எல்லாவற்றையும், அப்படியே
விட்டுவிட்டுத் தம் உயிருக்காக ஓடி
விட்டனர்.

### பகை முகாம்களில் தொழுநோயாளிகள்

8 முகாம் தொடங்கும் இடத்திற்கு வந்
தடைந்த தொழுநோயாளிகள், காலியாக
இருந்த கூடாரத்திற்குள் நுழைந்தனர். அவர்
கள் நன்றாக உண்டு குடித்தனர். பின்
அவர்கள் தங்கம், வெள்ளி, துணி
போன்றவற்றை அள்ளிக்கொண்டு வந்தனர்.
வெளியே கொண்டுபோய் ஒளித்து
வைத்தனர். மீண்டும் இன்னொரு கூடாரத்
திற்குள் நுழைந்தனர். அங்குள்ள பொருட்
களையும் எடுத்துப்போய் ஒளித்துவைத்தனர்.
9 பிறகு அவர்கள் தங்களுக்குள், “நாம் தவறு
செய்கிறோம்! இன்று நம்மிடம் நல்ல செய்தி
உள்ளது. ஆனால் அமைதியாக இருக்
கிறோம். விடியும்வரை இவ்வாறு இருந்தால்
தண்டிக்கப்படுவோம். எனவே இப்போது
அரசனுடைய வீட்டில் இருக்கிற ஜனங்
களிடம் சொல்வோம்” என்று சொல்லிக்
கொண்டனர்.

### தொழுநோயாளிகள் சொன்ன நற்செய்தி

10 எனவே தொழுநோயாளிகள் வந்து
வாயில் காவலரை அழைத்தனர். அவர்
களிடம், “நாங்கள் ஆராமியர்களின் முகா
மிற்குச் சென்றோம். அங்கே மனிதர்களும்
யாரும் இல்லை. குதிரைகளும் கழுதைகளும்
கட்டப்பட்டுள்ளன. கூடாரங்களும் அங்கு
உள்ளன. ஆனால் மனிதர்கள் யாரும்
இல்லை” என்றனர்.
11 பிறகு நகரவாயில் காப்போர்கள்
சத்தமிட்டு அரண்மனையில் உள்ளவர்
களிடம் சொன்னார்கள்.
12 அது இரவு நேரம்,
ஆனால் அரசன் படுக்கையிலிருந்து எழுந்து
தன் அதிகாரிகளிடம், “ஆராமிய வீரர்கள்
நமக்காக என்ன செய்திருக்கிறார்கள் என்று

கூறுகிறேன். நமது பட்டினியையும் வறுமை
யையும் பார்த்து, கூடாரத்தைவிட்டு வயலில்
ஒளிந்துக்கொண்டனர். 'இஸ்ரவேல் ஜனங்கள்
நகரத்தைவிட்டு வெளியே வரும்போது
உயிரோடு நாம் அவர்களைப் பிடித்துக்
கொள்ளலாம் என்று நினைத்துக்கொண்டு
இருக்கிறார்கள். அதன் பிறகு நகருக்குள்
நுழையலாம்' என்று இருக்கிறார்கள்" என்று
சொன்னான்.
13ஒரு அதிகாரியோ, "சிலர் 5 குதிரை
களைக் கொண்டுபோக அனுமதி வழங்குங்
கள். அவை எப்படியாவது இங்கு மரித்துப்
போகும். இவை ஜனங்களைப்போலவே
பட்டினியாக உள்ளன. அவற்றை அனுப்பிப்
பார்ப்போம்" என்றான்.
14எனவே ஜனங்கள் இரண்டு இரதங்
களைக் குதிரையோடு தயார் செய்தனர்.
அரசன் அவர்களை ஆராமியப் படையை
நோக்கி அனுப்பினான். அரசன் அவர்
களிடம், "என்ன நடக்கிறது என்று போய்
பாருங்கள்" என்றான்.
15அவர்கள் ஆராமியர்களைத் தொடர்ந்து
யோர்தான் ஆறு வரைக்கும் சென்றார்கள்.
வரும் வழியெல்லாம் ஆடைகளும் ஆயுதங்
களும் கிடந்தன. அவை வீரர்கள் ஓடும்போது
எறிந்தவை. தூதர்கள் அரசனிடம் திரும்பி
வந்து இவற்றைக் கூறினார்கள்.
16பிறகு ஜனங்கள் கூடாரங்களுக்கு ஓடிப்
போய் அங்குள்ள பொருட்களை எல்லாம்
எடுத்துக்கொண்டு ஓடிவந்தனர். எனவே
இது கர்த்தர் சொன்னது போலானது.
ஒருவனால் ஒரு மரக்கால் கோதுமை மாவை
ஒரு சேக்கலுக்கும் இரண்டு மரக்கால் வாற்
கோதுமையை ஒரு சேக்கலுக்கும் வாங்க
முடிந்தது.
17அரசனின் அரச ஆணைப்படி காவ
லுக்கு நெருக்கமான அதிகாரி வாசலில்
இருந்தான். ஜனங்கள் கூடாரங்களை நோக்கி
ஓடிக்கொண்டிருந்தனர். அவர்கள் அவனைத்
தள்ளி மிதித்துவிட்டு ஓடியதால் கொல்லப்
பட்டான். அரசன் அவரது வீட்டிற்கு
போனபோது, தேவமனிதர் (எலிசா) சொன்
னது போலவே எல்லாம் நடந்தது. 18எலிசா,
"சமாரியாவின் நகர வாசலுக்கருகில் உள்ள
சந்தையில் ஒருவன் ஒரு மரக்கால் கோதுமை
மாவை ஒரு சேக்கலுக்கும் இரண்டு மரக்கால்
வாற்கோதுமையை ஒரு சேக்கலுக்கும்
வாங்கமுடியும்" என்று சொல்லியிருந்தான்.
19ஆனால் அந்த அதிகாரி அவனுக்கு,
"பரலோகத்தின் ஜன்னல்கள் திறந்தாலும்
அது சாத்தியமில்லையே!" என்று பதில்
சொல்ல, எலிசா, "இதனை நீ உன் கண்
களால் காண்பாய். ஆனால் அந்த உணவை
உன்னால் உண்ண முடியாது" என்றான்.
20அந்த அதிகாரிக்கும் அது அவ்வாறே
நடந்தது. ஜனங்கள் நகர வாசலில் அவனைத்
தள்ளி, அவன் மீதே நடந்து சென்றார்கள்.
அவனும் செத்துப்போனான்.

### எலிசா சூனேமியப் பெண்ணைப் போகச் சொன்னது

8 எலிசா தன்னால் உயிர் தரப்பட்ட
பிள்ளையின் தாயுடன் பேசிக்
கொண்டிருந்தான். அவன், "நீயும் உனது
குடும்பத்தாரும் இன்னொரு நாட்டிற்குப்
போகவேண்டும். ஏனென்றால் கர்த்தர் இங்கு
பஞ்ச காலத்தை உருவாக்க தீர்மானித்
துள்ளார். இந்நாட்டில் இப்பஞ்சம் ஏழு
ஆண்டுகளுக்கு இருக்கும்" என்றான்.
2எனவே, அப்பெண் தேவமனிதன்
சொன்னது போலவே நடந்துக்கொண்டாள்.
பெலிஸ்திய நாட்டில் ஏழு ஆண்டுகள்
வசிப்பதற்கு அவள் தன் குடும்பத்தோடு
சென்றாள். 3ஏழு ஆண்டுகள் முடிந்ததும்
அவள் பெலிஸ்தியர்களின் நிலத்திலிருந்து
திரும்பினாள்.
அவள் அரசனோடு பேசுவதற்குச்
சென்றாள். தனது வீட்டையும் நிலத்தையும்
திரும்பப் பெறுவதற்காக முறையிட்டாள்.
4அரசன், தேவமனிதனுடைய வேலைக்
காரனான கேயாசியோடு பேசிக்கொண்
டிருந்தான். அவன் எலிசாவின் வேலைக்
காரனிடம், "எலிசா செய்த அருஞ்செயல்
களையெல்லாம் கூறு" எனக்கேட்டான்.
5கேயாசி, மரித்துபோன குழந்தைக்கு
எலிசா உயிர் கொடுத்ததைப்பற்றிச் சொன்
னான். அப்போது அந்தப் பெண் அங்கு
வந்து, தனது வீட்டையும் நிலத்தையும்
திரும்பப்பெற உதவவேண்டும் என்று அரச
னிடம் வேண்டினாள். அவளைக் கண்டதும்
கேயாசி, "எனது அரசனாகிய ஆண்டவனே!
இவள்தான் அந்தப் பெண்! இந்தப்
பையனுக்குத்தான் எலிசா உயிர் கொடுத்
தான்!" என்று கூறினான்.
6அரசன் அவளது விருப்பத்தை
விசாரிக்க அவளும் விளக்கிச் சொன்னாள்.
பிறகு அரசன் ஒரு அதிகாரியை
அவளுக்கு உதவுமாறு நியமித்தான். அவ
னிடம், "இவளுக்குரியவற்றையெல்லாம்
இவள் பெறுமாறு செய், இவள் இந்த
நாட்டை விட்டுப் போன நாள்முதல் இன்று
வரை இவள் நிலத்தில் விளைந்த தானியத்
தையும் இவள் பெறுமாறு செய்" என்றான்.

### பெனாதாத் ஆசகேலை எலிசாவிடம் அனுப்பியது:

7எலிசா தமஸ்குவுக்குச் சென்றான். ஆராம்
தேசத்து அரசன் பெனாதாத் நோயுற்றிருந்
தான். ஒருவன் அவனிடம், "தேவமனிதர்
(தீர்க்கதரிசி) இங்கே வந்துள்ளார்" என்றான்.
8பிறகு பெனாதாத் ஆசகேலிடம்,
"அன்பளிப்போடு போய் தேவமனிதரை
(தீர்க்கதரிசி) சந்தி. நான் நோயிலிருந்து
குணமடைவேனா என்று அவரை கர்த்தரி
டம் கேட்டுக் கொள்ளுமாறு கூறு" என்றான்.
9எனவே, ஆசகேல் எலிசாவைச் சந்திக்கச்
சென்றான். தன்னோடு அன்பளிப்பையும்

எடுத்துச்சென்றான். தமஸ்குவிலுள்ள சிறந்த
பொருட்களையெல்லாம் கொண்டு சென்
றான். அவற்றை 40 ஒட்டகங்களில் எடுத்துச்
சென்றான். அவன், "உங்கள் தொண்டனான
ஆராமின் அரசரான பெனாதாத் என்னை
உங்களிடம் அனுப்பினார். நோயிலிருந்து
தான் குணமாவேனா என்று கேட்கச்
சொன்னார்" என்றான்.
10 பிறகு எலிசா ஆசகேலிடம், "போய்
பெனாதாத்திடம், 'நீ நோய் நீங்கிப்
பிழைப்பாய்' என்று கூறு. எனினும்,
கர்த்தர் 'அவன் மரித்துப்போவான்' என்றே
கூறுகிறார்" என்றான்.

### எலிசா ஆசகேலைப்பற்றி தீர்க்கதரிசனம் சொன்னது

11 எலிசா ஆசகேலை உற்றுப் பார்த்து
பிறகு அழுதான். 12 ஆசகேல் அவனிடம்,
"ஐயா ஏன் அழுகிறீர்?" என்று கேட்டான்.
அதற்கு எலிசா, "நீ இஸ்ரவேலர்களுக்குச்
செய்யப்போகும் தீமைகள் என்னென்ன
என்பதை நான் அறிவேன். அதற்காக
அழுகிறேன். நீ அவர்களின் கோட்டையுள்ள
நகரங்களை எரிப்பாய், நீ வாளால்
இளைஞர்களைக் கொல்வாய், குழந்தை
களைக் கொல்வாய். கருவிலுள்ள குழந்தை
களையும் கீறிப்போடுவாய்" என்றான்.
13 ஆசகேல், "நான் வல்லமையுள்ளவன்
அல்ல! என்னால் இவ்வளவு பெரிய காரியங்
களைச் செய்ய முடியாது!" என்று
கூறினான்.
அதற்கு எலிசா, "நீ ஆராம் நாட்டின்
அரசனாவாய் என்று கர்த்தர் என்னிடம்
காட்டிக்கொண்டிருக்கிறார்" என்றான்.
14 பிறகு ஆசகேல் எலிசாவிடமிருந்து
கிளம்பி அரசனிடம் போக, அவன் இவனி
டம், "எலிசா உன்னிடம் என்ன சொன்
னார்?" என்று கேட்டான்.
ஆசகேல், "நீ பிழைப்பீர் என்று எலிசா
சொன்னார்" என்றான்.

### ஆசகேல் பெனாதாத்தைக் கொலை செய்கிறான்

15 ஆனால் மறுநாள், ஆசகேல் ஒரு
போர்வையை எடுத்து தண்ணீரில் நனைத்து
அதனைப் பெனாதாத்தின் முகத்தில் மூடி
னான். மூச்சை நிறுத்தினான். பெனாதாத்
மரித்துப்போனான். எனவே ஆசகேல் புதிய
அரசன் ஆனான்.

### யோராம் ஆளத் தொடங்குகிறான்

16 யூதாவில் யோசபாத்தின் மகனான
யோராம் அரசனாக இருந்தான். இவனது
ஐந்தாம் ஆட்சியாண்டில் ஆகாபின் மகனான
யோராம் அரசனாக இருந்தபோது அவன்
ஆளத் தொடங்கினான். 17 யோராம் ஆளத்
துவங்கும்போது அவனுக்கு 32வயது.
எருசலேமில் 8 ஆண்டுகள் ஆண்டான்.
18 ஆனால், அவன் இஸ்ரவேலின் அரசர்
களைப் போன்றே கர்த்தருக்குப் பிடிக்காதப்
பாவங்களைச் செய்துவந்தான். அவனது
மனைவி ஆகாபின் மகளானதால் யோராம்
ஆகாபின் குடும்பத்தவர்களைப் போன்றே
வாழ்ந்துவந்தான். 19 ஆனால் தன் வேலையாள்
தாவீதிற்கு கர்த்தர் சத்தியம் செய்து
கொடுத்திருந்ததால் யூதாவை அழிக்
கமாட்டார். அவர் ஏற்கனவே தாவீதின்
குடும்பத்தில் உள்ளவனே அரசனாக
எப்பொழுதும் இருப்பான் என்று ஆணை
யிட்டுள்ளார்.
20 யோராமின் காலத்தில் யூதாவின் ஆட்சிக்
குள்ளிருந்து ஏதோம் கலகம் செய்ததால்
உடைந்துவிட்டது. அவர்கள் தங்களுக்குரிய
அரசனைத் தாங்களே தேர்ந்தெடுத்துக்
கொண்டனர்.
21 அதனால் யோராம் (யூதாவைச்
சேர்ந்தவன்) இரதங்களோடு சாயீருக்குப்
போனான். அவர்களை ஏதோமிய படை
சூழ்ந்தபோது, யோராமும் அவனது தளபதி
களும் ஏதோமியர்களைத் தாக்கினார்கள்.
யோராமின் வீரர்கள் அனைவரும் வீட்டிற்
குத் தப்பிச் சென்றார்கள். 22 எனவே ஏதோம்
யூதாவின் ஆட்சியிலிருந்து (கலகத்தால்)
உடைந்துவிட்டது. இன்றுவரை அவர்கள்
சுதந்திரமாகவே உள்ளனர்.
அப்போது, லிப்னாத்தும் யூதாவின் ஆட்சி
யில் இருந்து உடைந்தது.
23 யோராம் செய்த மற்ற செயல்களும்
அவன் செய்த அனைத்தும் யூத அரசர்களின்
வரலாறு என்ற புத்தகத்தில் எழுதப்
பட்டுள்ளது.
24 இவன் மரித்தபோது இவனை தாவீது
நகரத்தில் முற்பிதாக்களோடு அடக்கம் செய்த
னர். அவனது மகன் அகசியா அரசனா
னான்.

### அகசியா தனது ஆட்சியைத் தொடங்குகிறான்

25 யோராமின் மகனான அகசியா
யூதாவின் அரசனானான். அப்போது, இஸ்ர
வேலை ஆகாபின் மகனான யோராம்
12வது ஆட்சியாண்டில் இருந்தான்.
26 அகசியா விற்கு அவன் ஆளவந்தபோது
22 வயது. ஓராண்டு எருசலேமில்
ஆண்டான். அவன் தாயின் பெயர்
அத்தாலியாள். அவள் இஸ்ரவேலின் ஒம்ரி
அரசனின் மகள். 27 தவறு என்று கர்த்தர்
குறிப்பிட்ட செயல்களையே அவனும்
செய்தான். ஆகாபின் குடும்பத் தவர்களைப்
போன்றே ஆண்டான். ஏனெனில் அவன்
ஆகாபின் மருமகன்.

### ஆசகேலுக்கு எதிரான போரில் யோராம் புண்பட்டது

28 யோராம் ஆகாபின் குடும்பத்தைச் சேர்ந்
தவன். ஆராமிய அரசனான ஆசகேலோடு

ராமோத் கீலேயாத்தில் போரிடுவதற்காக
அகசியா யோராமுடன் சென்றான். ராமோத்
கீலேயாத்தில் அராமியர்கள் யோராமைத்
தாக்கிக் காயப்படுத்தினார்கள். அரசனான
யோராம் இஸ்ரவேலுக்குத் திரும்பித்
தன்னைக் காயங்களிலிருந்து குணப்படுத்திக்
கொள்ள யெஸ்ரயேல் பகுதிக்குச் சென்றான்.
யோராமின் மகனான அகசியா யூதாவின்
அரசனாயிருந்தான். அகசியா யோராமைக்
காண யெஸ்ரயேலுக்குச் சென்றான்.

### யெகூவை அபிஷேகம் செய்யும்படி எலிசா இளம் தீர்க்கதரிசிக்கு சொல்கிறான்

9 தீர்க்கதரிசிகளின் குழுவிலிருந்து தீர்க்க
தரிசியான எலிசா ஒருவனை அழைத்
தான். அவனிடம், “புறப்படத் தயாராகு.
இச்சிறிய குப்பியில் உள்ள எண்ணெயை
உன் கையில் எடுத்துக்கொண்டு ராமோத்
கீலேயாத்துக்குப் போ! 2நீ அங்கு போனதும்,
நிம்சியின் மகனான யோசபாத்தின் குமாரன்
யெகூவைக் கண்டுபிடி. அவன் வீட்டிற்குள்
போ. அவனது சகோதரர்களிடமிருந்து
அழைத்து உள் அறைக்குப் போ. 3இந்தச்
சிறிய எண்ணெய்க் குப்பியை எடுத்துக்
கொண்டு எண்ணெயை அவன் தலையில்
ஊற்றி ‘இது கர்த்தர் சொன்னது: உன்னை
இஸ்ரவேலுக்கு அரசன் ஆக்குகிறேன்’
என்று சொல். பிறகு கதவைத் திறந்துக்
கொண்டு ஓடிவந்து விடு. அங்கே தங்காதே”
என்றான்.
4எனவே இந்த இளம் தீர்க்கதரிசி, ராமோத்
கீலேயாத்திற்குச் சென்றான். 5அவன் அங்கு
நுழைந்ததும், படைத் தளபதி உட்கார்ந்
திருப்பதைப் பார்த்தான். இவன் அவனிடம்,
“தலைவரே, உங்களுக்காக என்னிடம் ஒரு
செய்தி உண்டு” என்றான்.

அதற்கு யெகூ, “இங்கு இருக்கிற அனை
வரிலும் உமது செய்தி யாருக்குரியது?”
என்று கேட்டான்.

உடனே இளம் தீர்க்கதரிசி, “இந்த செய்தி
உங்களுக்குரியதுதான்தளபதியே”என்றான்.
6யெகூ எழுந்து வீட்டிற்குள் சென்றான்.
இளம் தீர்க்கதரிசி அவனது தலையில்
எண்ணெயை ஊற்றி, “இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தர் சொன்னதைக் கூறுகிறேன்:
‘நான் உன்னை இஸ்ரவேலில் கர்த்தருடைய
ஜனங்களின் மேல் அரசனாக அபிஷேகம்
செய்கிறேன். 7நீ உனது அரசனான ஆகாபின்
குடும்பத்தை அழிக்கவேண்டும். இதன் மூலம்,
எனது வேலைக்காரர்களான தீர்க்கதரிசி
களின் இரத்தப்பழியையும் கர்த்தருடைய
மரித்துப்போன சகல தொண்டர்களின்
இரத்தப்பழியையும் யேசபேலின் கையிலே
வாங்குவேன். 8ஆகையால், ஆகாபின்
குடும்பத்திலுள்ள அனைவரும் மரிப்பார்கள்.
ஆகாப் குடும்பத்திலுள்ள எந்த ஆண்
குழந்தையையும் உயிரோடு விடமாட்டேன்.
அந்த ஆண் அடிமையாக இருந்தாலும்
சரி அல்லது இஸ்ரவேலில் சுதந்திரமுள்ள
ஆளாக இருந்தாலும் சரியே. 9நான் ஆகாபின்
குடும்பத்தை நேபாத்தின் மகனான யெரொ
பெயாமின் குடும்பத்தைப்போலவும் அகியா
வின் மகனான பாஷாவின் குடும்பத்தைப்
போலவும் அழிப்பேன். 10நாய்கள், யெஸ்ர
யேல் பகுதியில் யேசபேலை தின்னும்.
அவள் அடக்கம் செய்யப்படமாட்டாள்’”
என்றான்.

பிறகு அந்த இளம் தீர்க்கதரிசி கதவைத்
திறந்துகொண்டு வெளியே ஓடிவிட்டான்.

### யெகூவை அரசனாக வேலைக்காரர்கள் அறிவிக்கிறார்கள்

11அரசனின் வேலைக்காரர்கள் (அதிகாரி
கள்) இருந்த இடத்திற்கு யெகூ போனான்.
அந்த அதிகாரிகளில் ஒருவன், “எல்லாம்
சரியாக உள்ளதா? ஏன் அந்தப் பைத்தியக்
காரன் உன்னிடம் வந்தான்” என்று
கேட்டான்.

யெகூ வேலைக்காரர்களிடம், “உங்களுக்கு
அவனையும் அவனது பைத்தியகாரத்தனச்
செயலையும் தெரியுமே” என்றான்.
12அதற்கு அதிகாரிகள், “இல்லை! உண்
மையைச் சொல். அவன் என்ன
சொன்னான்?” என்று கேட்க, யெகூ இளந்
தீர்க்கதரிசி சொன்னதைக் கூறினான்.
“அவன் என்னிடம், ‘கர்த்தர் சொன்ன
தாவது: நான் உன்னை இஸ்ரவேலின்
அரசனாக அபிஷேகம் செய்கிறேன்’ என்
றான்” என்று சொன்னான்.
13உடனே ஒவ்வொரு அதிகாரியும் தனது
ஆடையைப் படிகளின் மேல் விரித்தனர்.
எக்காளத்தை ஊதி, “யெகூ அரசன்
ஆனான்!” என்று அறிவித்தனர்.

### யெகூ யெஸ்ரயேலுக்குச் சென்றது

14எனவே நிம்சியின் மகன் யோசபாத்தின்
மகனான யெகூ யோராமுக்கு எதிராகச்
சூழ்ச்சி செய்தான்.

அப்போது, யோராமும் இஸ்ரவேலரும்
சேர்ந்து ஆராமின் அரசனான ஆசகேலிட
மிருந்து ராமோத் கீலேயாத்தை பாதுகாக்க
முயன்றனர். 15யோராம் அரசன் ஆசகேலுக்கு
எதிராகப் போரிட்டான். ஆனால் ஆராமிய
வீரர்கள் யோராமைக் காயப்படுத்தினார்கள்.
அவனும் குணப்படுத்திக்கொள்ள யெஸ்ர
யேலுக்குப் போனான்.

எனவே யெகூ அதிகாரிகளிடம்,
“என்னை நீங்கள் புதிய அரசனாக ஏற்றுக்
கொள்வதானால் நகரத்திலிருந்து எவரும்
தப்பித்துப் போய் இந்தச் செய்தியை
யெஸ்ரயேலில் சொல்லாதபடிக்குப் பார்த்துக்
கொள்ளுங்கள்” என்றான்.
16யோராம் யெஸ்ரயேலில் ஓய்வெடுத்துக்
கொண்டிருந்தான். எனவே யெகூ இரதத்தில்

ஏறி யெஸ்ரயேலுக்குப் போனான். அப்
போது யூதாவின் அரசனான அகசியாவும்
யோராமைப் பார்க்க வந்திருந்தான்.
17 ஒரு காவல்காரன் யெஸ்ரயேல் நகரக்
கோபுரத்தின் மீது நின்று பார்த்தான். யெகூ
வின் பெரிய கூட்டம் வருவதைக் கவனித்து,
“ஒரு பெருங்கூட்டத்தைப் பார்க்கிறேன்”
என்றான்.

யோராம், “சிலரைக் குதிரையில் அனுப்பி அவர்களைச் சந்தித்து, அவர்கள் சமாதானத்தோடு வருகிறார்களா என்று விசாரியுங்கள்” என்றான்.

18 எனவே, தூதுவன் யெகூவைச் சந்திக்க
குதிரையில் சென்றான். தூதுவன், “நீங்கள்
சமாதானத்தோடு வருகிறீர்களா’ என்று
அரசன் கேட்கச்சொன்னார்” என்று
கேட்டான்.

அதற்கு யெகூ, “சமாதானத்துடன் எந்த சம்பந்தமும் உனக்கு இல்லை! என்னைப் பின் தொடர்ந்து வா” என்றான்.

காவல்காரன் யோராமிடம், “தூதுவன் அந்தக் கூட்டத்தோடு சேர்ந்துவிட்டான். அவன் திரும்பி வரவில்லை” என்றான்.

19 பிறகு யோராம் இரண்டாவது தூது
வனை குதிரையில் அனுப்பினான். அவன்
யெகூவிடம் சென்று, “யோராம் அரசன்
‘சமாதானம்’ சொன்னான்” என்றான்.

அதற்கு யெகூ, “சமாதானத்திற்கும் உனக்கும் இந்த சம்பந்தமுமில்லை! என்னைப் பின்தொடர்ந்து வா” என்றான்.

20 காவல்காரனோ யோராமிடம், “இரண்
டாவது தூதுவனும் கூட்டத்தோடு சேர்ந்துக்
கொண்டான், அவனும் திரும்பி வரவில்லை.
ஒரு பைத்தியக்காரனைப்போன்று ஒருவன்
இரதத்தை ஓட்டுகிறான். நிம்சியின் மகனான
யெகூவைப்போல அவன் தேரோட்டுகிறான்”
என்றான்.
21 யோராம், “எனது இரதத்தைக் கொண்டு
வா!” என்றான்.

வேலைக்காரன் அரசனின் இரதத்தைக்
கொண்டுவந்தான். இஸ்ரவேலின் அரசனா
கிய யோராமும் யூதாவின் அரசனான
அகசியாவும் யெகூவைச் சந்திக்கச் சென்றார்
கள். அவர்கள் அவனை யெஸ்ரயேலிய
னாகிய நாபோத்தின் நிலத்திலே சந்தித்தனர்.
22 யோராம் யெகூவைப் பார்த்து, “யெகூ,
நீ சமாதானமாக வந்திருக்கிறாயா” என்று
கேட்டான்.

அதற்கு யெகூ, “உன் தாயான யேசபேல்
விபச்சாரமும் சூன்யமும் செய்து கொண்டி
ருக்கும்வரை சமாதானமாக இருக்க
முடியாது” என்றான்.
23 யோராம் குதிரையில் வேகமாகத்
திரும்பினான். அவன் அகசியாவிடம்,
“அகசியா, இது தந்திரம்” என்றான்.
24 ஆனால் யெகூ தன் பலத்தையெல்லாம்
கூட்டி வில்லில் அம்பை எய்தான். அம்பு
அவனது முதுகில் துளைத்து இதயத்தின்
வழியாகச்சென்றது. அவன் இரதத்திலிருந்து
விழுந்து மரித்தான்.
25 யெகூ தனது இரத ஓட்டியான பித்காரி
டம், “யோராமின் உடலை எடுத்து யெஸ்ர
யேலியனாகிய நாபோத்தின் வயலில் எறி.
நானும் நீயும் யோரோமின் தந்தையான
ஆகாபோடு பயணம் செய்யும்போது, இவ
னுக்கு இவ்வாறே நிகழும் என்று கர்த்தர்
சொன்னதை எண்ணிப்பார். 26 கர்த்தர்,
‘நேற்று நான் நாபோத் மற்றும் அவனது
பிள்ளைகளின் இரத்தத்தைப் பார்த்தேன்.
நான் ஆகாபை இதே வயலில் தண்டிப்பேன்’,
என்று சொன்னார்! எனவே, அவர்
சொன்னபடியே, யோராமின் உடலை
எடுத்து வயலுக்குள் வீசு!” என்றான்.
27 யூதாவின் அரசனான அகசியா
இதனைப் பார்த்து ஓடிப்போனான். அவன்
தோட்ட வீட்டிற்குப்போக, யெகூ அவனைத்
துரத்திப்போனான். யெகூ, “அகசியாவை
அவன் இரதத்தில் வெட்டிப்போடுங்கள்”
என்றான்.

எனவே யெகூவின் ஆட்கள் அகசியாவை
இப்லேயாம் அருகிலுள்ள கூர் மலைக்கான
சாலையில் எய்தனர். அவன் மெகிதோவுக்கு
ஓடிப்போய் அங்கேயே மரித்துப்போனான்.
28 அகசியாவின் வேலைக்காரர்கள் அவனது
உடலை எடுத்துக்கொண்டு எருசலேமுக்கு
வந்தனர். தாவீது நகரத்தில் முற்பிதாக்களின்
கல்லறையில் அவனை அடக்கம் செய்தனர்.
29 இஸ்ரவேல் அரசன் யோராமின் 11 வது
ஆட்சியாண்டில் அகசியா யூதாவின்
அரசனாகினான்.

### யேசபேலின் பயங்கரமான மரணம்

30 யெகூ யெஸ்ரயேலுக்குப் போனான்,
இச்செய்தியை யேசபேல் அறிந்தாள்.
தலையைச் சிங்காரித்து அலங்காரம் செய்து
கொண்டு பிறகு ஜன்னல் வழியாகப் பார்த்
தாள். 31 யெகூ நகரத்து வாசலில் நுழைந்
ததும் அவள், “சிம்ரி!* அவனைபோல
நீயும் உன் எஜமானனைக்
கொன்றிருக்கிறாய்” என்றாள்.
32 யெகூ மேலே ஜன்னலைப் பார்த்து,
“என் பக்கத்தில் இருப்பது யார்?” என்று
கேட்டான்.

மேலிருந்து இரண்டு மூன்று அலிகள்
அவனைப் பார்த்தார்கள். 33 அவர்களிடம்
யெகூ, “யேசபேலைக் கீழே தள்ளுங்கள்”
என்றான்.

அவர்களும் அவ்வாறே கீழே அவளைத்
தள்ளினார்கள். அவளது இரத்தத்தில் கொஞ்
சம் சுவர் மீதும் குதிரைகள் மீதும் தெளித்
தது. குதிரைகள் அவள் மேலே நடந்துச்
சென்றன. 34 யெகூ வீட்டிற்குள் போய் உண்டு

---

**சிம்ரி** சிம்ரி என்பவன் பல ஆண்டுகளுக்கு முன்பு இஸ்ரவேலில் ஏலா மற்றும் பாஷாவின் குடும்பத்தினரை கொன்றவன். பார்க்க 1 இராஜா. 16:8-12.

குடித்தான். அவன், "இப்போது சபிக்கப்
பட்ட இந்தப் பெண்ணைப் பாருங்கள்.
அரசனின் மகளாகையால் அவளை
அடக்கம் செய்யுங்கள்" என்றான்.
35அந்த ஆட்கள் அவளை அடக்கம்
பண்ணச் சென்றனர். ஆனால் அவளது
உடலைக் கண்டுபிடிக்க முடியவில்லை.
அவர்கள் அவளது கபாலம், கால்கள்,
கைகள் ஆகியவற்றையே கண்டுபிடித்தனர்.
36அவர்கள் யெகூவிடம் திரும்பிவந்தனர்.
பிறகு யெகூ, "இது கர்த்தர் திஸ்பியனாகிய
எலியா என்னும் தமது தொண்டனைக்
கொண்டு சொன்ன வார்த்தை: 'யெஸ்ர
யேலின் நிலத்தில் யேசபேலின் மாமிசத்தை
நாய்கள் தின்னும், என்றும் 37இதுதான்
யேசபேல் என்று சொல்ல முடியாதபடி
அவளது பிணம் வயல் வெளியில் போடப்
படும் எருவைப்போன்று ஆகும்" என்றான்.

### சமாரியாவின் தலைவர்களுக்கு யெகூ எழுதியது:

10 ஆகாபின் 70 மகன்கள் (பேரன்கள்)
சமாரியாவில் இருந்தனர். யெகூ
சமாரியாவில் அவர்களை வளர்க்கிறவர்
களுக்கும், ஆள்பவர்களுக்கும், தலைவர்
களுக்கும் கடிதங்களை எழுதி அனுப்பினான்.
2-3அதில் "இக்கடிதம் கண்டதும், உங்கள்
எஜமானனுடைய பிள்ளைகளில் மிக நல்ல
வனும் மிகத் தகுதியானவனுமாகிய ஒருவ
னைத் தேர்ந்தெடுங்கள். உங்களிடம் இரதங்
களும் குதிரைகளும் இருக்கின்றன. நீங்கள்
பலப்படுத்தப்பட்ட நகரத்தில் இருக்கின்
றீர்கள். உங்களிடம் ஆயுதங்களும் உள்ளன.
நீங்கள் தேர்ந்தெடுத்தவனை அவனுடைய
தந்தையின் சிங்காசனத்தில் உட்கார
வையுங்கள். பின் உங்கள் தந்தையின்
குடும்பத்திற்காகப் போராட வாருங்கள்"
என்று எழுதப்பட்டிருந்தது.
4ஆனால் யெஸ்ரயேலில் உள்ள தலைவர்
களும் அதிகாரிகளும் பயந்தனர். அவர்கள்,
"யெகூவை இரண்டு அரசர்களாலும் தடுக்க
முடியவில்லை, எங்களாலும் முடியாது!"
என்று சொன்னார்கள்.
5ஆகாபின் வீட்டைப் பாதுகாத்தவர்களும்
நகரத்தைப் பரிபாலித்தவர்களும் மூப்பர்களும்
ஆகாபின் மகன்களைக் கவனிப்பவர்களும்
யெகூவிற்குத் தூது அனுப்பி, "நாங்கள்
உங்கள் சேவகர்கள். நீங்கள் என்ன சொன்
னாலும் நாங்கள் செய்கிறோம். வேறு
எவரையும் அரசனாக்கமாட்டோம். நீங்கள்
நல்லதென நினைப்பதை செய்யுங்கள்"
என்றனர்.

### சமாரியாவின் தலைவர்கள் ஆகாபின் மகன்களைக் கொல்கிறார்கள்

6பிறகு யெகூ அவர்களுக்கு இரண்டாவது
கடிதத்தை எழுதினான். அதில், "நீங்கள்
எனக்கு அடிபணிந்து உதவுவதாக இருந்
தால், ஆகாப் மகன்களின் தலையை
வெட்டிப் போடுங்கள். நாளை இந்நேரத்
திற்குள் அவர்களை என் முன்னால் யெஸ்ர
யேலுக்கு கொண்டுவாருங்கள்" என்றான்.
ஆகாபுக்கு 70 மகன்கள் இருந்தனர்.
அவர்கள் நகரத்தலைவர்களால் வளர்க்கப்
பட்டனர். 7அவர்கள் யெகூவின் கடிதத்தைக்
கண்டதும், அந்த 70 மகன்களையும்
கொன்றுபோட்டனர். தலைகளைக் கூடை
களுக்குள் போட்டு யெஸ்ரயேலிலுள்ள
யெகூவிடம் அனுப்பினார்கள். 8ஒரு தூதுவன்
யெகூவிடம் வந்து, "அவர்கள் அரசனது
மகன்களின் தலைகளைக் கொண்டு
வந்திருக்கிறார்கள்!" என்றான்.
யெகூ, "விடியும்வரை நகரவாசலில்
இரண்டு குவியலாக அத்தலைகளை வைத்
திருங்கள்" என்று கட்டளையிட்டான்.
9காலையில், யெகூ வெளியே வந்து
ஜனங்கள் முன்பு நின்றான். அவன் ஜனங்
களிடம், "நீங்கள் ஏதும் அறியாதவர்கள்.
நான் என் எஜமானனுக்கு எதிராகத்
திட்டங்கள் பல வைத்திருந்தேன். நான்
அவனைக் கொன்றேன். ஆனால் அவனது
பிள்ளைகளைக் கொன்றது யார்? அவர்
களைக் கொன்றவர்கள் நீங்கள் தான்!
10கர்த்தர் சொன்னபடி எல்லாம் நடக்கிறது
என்பதை நீங்கள் அறியவேண்டும். ஆகாபின்
குடும்பத்தைப்பற்றி கர்த்தர் எலியாவின்
மூலம் கூறியிருக்கிறார். இப்போது கர்த்தர்
தான் செய்வதாகச் சொன்னவற்றைச் செய்து
முடித்துள்ளார்" என்றான்.
11இவ்வாறு யெகூ யெஸ்ரயேலில்
ஆகாபின் குடும்பத்திலுள்ள அனைவரையும்
கொன்றான். அதோடு முக்கியமான மனிதர்
களையும், நெருங்கிய நண்பர்களையும்
ஆசாரியர்களையும் கொன்றுப் போட்டான்.
ஆகாபின் ஆட்கள் யாருமே உயிரோடு
விடப்படவில்லை.

### அகசியாவின் உறவினர்களை யெகூ கொன்றது

12யெகூ யெஸ்ரயேலை விட்டு சமாரியா
விற்குப் போனான். வழியில் மேய்ப்பனின்
முகாம் என்று அழைக்கப்படும் இடத்தில்
நின்றான். பெத்ஏகத்திற்குச் செல்லும்
பாதையின் அருகில் உள்ள வீட்டுக்குச்
சென்றான். அங்கே மேய்ப்பர்கள் ஆட்டு
மயிர் கத்தரித்துக்கொண்டிருந்தார்கள். 13யூதா
வின் அரசனான அகசியாவின் உறவினர்
களை அங்கே சந்தித்தான். யெகூ
அவர்களைப் பார்த்து, "நீங்கள் யார்?"
என்றான்.
அதற்கு அவர்கள், "நாங்கள் அகசியாவின்
உறவினர்கள். நாங்கள் அரசனின் மகன்
களையும் ராஜமாதாவின் (யேசபேல்)
மகன்களையும் பார்ப்பதற்கு வந்திருக்
கிறோம்" என்றனர்.

14 யெகூ (தன் ஆட்களிடம்) “இவர்களை
உயிரோடு பிடியுங்கள்!” என்று கூறினான்.
அவனது ஆட்கள் அவர்களை உயிரோடு
பிடித்தனர். அவர்கள் மொத்தம் 42 பேர்
இருந்தனர். அவர்களில் ஒருவரும் உயிரோடு
இராதபடி பெத் ஏகத் கிணறுக்கு அருகில்
அவர்களை கொன்றுபோட்டனர்.

### யெகூ யோனதாபைச் சந்தித்தது

15 அவ்விடத்தைவிட்டு பிறகு யெகூ,
ரேகாபின் மகனாகிய யோனதாபைச்
சந்தித்தான். அவனும் யெகூவைச் சந்திக்க
வந்துக்கொண்டிருந்தான். யெகூ அவனை
வாழ்த்தி விட்டு, “நான் உனக்கு இருப்பது
போல நீ எனது உண்மையான நண்பன்
தானா?” என்று கேட்டான்.
யோனதாபும், “ஆமாம். நான் உனது
உண்மையான நண்பன்தான்” என்றான்.
யெகூ, “அப்படியானால் உன் கையைக்
கொடு” என்று கேட்டான்.
அவன் தன் கையைக் கொடுத்தபோது
தன் இரதத்திற்குள் இழுத்தான்.
16 யெகூ, “என்னோடு வா. நான் கர்த்தரி
டம் எவ்வளவு உறுதியான பக்தி
வைத்திருக்கிறேன் என்று அறிந்துகொள்ள
லாம்” என்றான்.
எனவே யோனதாப் யெகூவின் இரதத்தில்
பயணம் செய்தான். 17 யெகூ சமாரியாவிற்கு
வந்து அங்கு உயிரோடுள்ள ஆகாபின்
குடும்பத்திலுள்ள அனைவரையும் கொன்று
போட்டான். கர்த்தர் எலியாவிடம் சொன்ன
படியே அவன் செய்துமுடித்தான்.

### பாகாலின் பக்தர்களை யெகூ அழைத்தது

18 பிறகு யெகூ அனைத்து ஜனங்களையும்
சேர்த்துக் கூட்டினான். அவன் அவர்களிடம்,
“ஆகாப் பாகாலுக்குச் சிறிது சேவை
செய்தான். ஆனால் யெகூ அவனுக்கு மேல்
இன்னும் கூடுதலாகச் சேவைசெய்வான்!
19 இப்போது பாகாலின் பக்தர்களையும்
ஆசாரியர்களையும் கூப்பிடுங்கள். இக்கூட்டத்
திற்கு யாரையும் தவறவிடாதீர்கள்.
பாகாலுக்குக் கொடுக்க பெரும்பலி இருக்கி
றது! இக்கூட்டத்திற்கு வராதவர்களைக்
கொல்வேன்!” என்று ஆணையிட்டான்.
இவ்வாறு யெகூ தந்திரம் செய்தான்.
அவர்கள் அத்தனை பேரையும் அழிப்பது
தான் அவனது திட்டம். 20 யெகூ அவர்
களிடம், “பாகாலுக்காக ஒரு பரிசுத்த
கூட்டத்தை ஏற்பாடு செய்யுங்கள்” என்றான்.
ஆசாரியர்களும் அறிவித்தனர். 21 பிறகு யெகூ
இஸ்ரவேல் நாடுகள் அனைத்திற்கும் ஒரு
செய்தியை அனுப்பினான். பாகாலின்
பக்தர்கள் அனைவரும் வந்தனர். எவரும்
வீட்டிலே இல்லாமல் பாகாலின் ஆலயத்திற்கு
வந்தனர். ஆலயம் ஜனங்களால் நிரம்பியது.
22 யெகூ மேலாடைகளை வைத்திருந்த
வேலைக்காரனிடம், “பாகாலின் பக்தர்களுக்
கெல்லாம் மேலாடைகளைக் கொண்டுவா”
என்று சொன்னான். எனவே அந்த
வேலைக்காரனும் பாகாலின் பக்தர்களுக்கு
மேலாடைகளைக் கொண்டுவந்தான்.
23 பிறகு யெகூவும் ரேகாபின் மகனான
யோனதாபும் பாகாலின் ஆலயத்திற்குள்
நுழைந்தார்கள். பாகாலின் தொண்டர்
களிடம், “இங்கே பாகாலின் பக்தர்கள்
மட்டுமே இருக்கவேண்டும் என்பதை
சுற்றுமுற்றும் பார்த்து உறுதி செய்துக்
கொள்ளுங்கள். கர்த்தருடைய ஊழியர்கள்
இருக்கக்கூடாது” என்று ஆணையிட்டான்.
24 அதன்படி பாகாலின் பக்தர்கள் காணிக்கை
களையும் தகனபலிகளையும் செலுத்த
ஆலயத்திற்குள் சென்றனர்.
வெளியே, யெகூவின் 80 ஆட்கள் காத்துக்
கொண்டிருந்தனர். அவர்களிடம், “யாரையும்
தப்பித்து போகும்படி விடாதீர்கள்.
எவனாவது எவனையாவது தப்பிக்க
விட்டால், அவன் தனது உயிரைக் கொடுக்க
வேண்டும்” என்றான்.
25 பிறகு யெகூ விரைவாகத் தகனபலி
கொடுத்தபின், தனது அதிகாரிகளிடமும்
தளபதிகளிடமும், “உள்ளே போய் அனை
வரையும் கொல்லுங்கள். உயிரோடு
எவனையும் வெளியே வரவிடாதீர்கள்”
என்றான்.
எனவே தளபதிகள் தம் மெலிந்த
வாள்களால் பாகாலின் பக்தர்களைக்
கொன்றுபோட்டனர். பிணங்களை
வெளியே எறிந்தனர். பிறகு ஆலயத்தின்
உள்ள றைக்குள்* சென்றனர். 26 ஞாபகக்
கற்களை* (தூண்கள்) பாகாலின்
வீட்டைவிட்டு வெளியே எடுத்துப்போட்டு
அவற்றை எரித்தனர். 27 பிறகு பாகாலின்
நினைவுக்கற்களையும் பாகாலின்
வீட்டினையும் நொறுக்கினார்கள்.
ஆலயத்தை ஒய்வறையாக ஒதுக்கினார்கள்.
எப்போதும் அசுத்தமாக வைத்திருந்தனர்.
ஜனங்கள் அந்த இடத்தை கழிவறையாகப்
பயன்படுத்தி வருகின்றனர்.
28 இவ்வாறு யெகூ பாகால் ஆராதனையை
இஸ்ரவேல் நாட்டில் அழித்தான். 29 ஆனால்
யெகூ முழுவதுமாக நேபாத்தின் மகன்
யெரொபெயாமின் பாவங்களிலிருந்து
திரும்பவில்லை. இஸ்ரவேலின் பாவத்துக்குக்
காரணமான அவன் பெத்தேல், தாண்
ஆகிய இடங்களில் உள்ள தங்கக் கன்றுக்
குட்டிகளை அழிக்கவில்லை.

---

**உள்ளறை** எழுத்தின் பிரகாரமாக, “பாகால் கோவிலின் நகரம்” எனப் பொருள்படும்.

**ஞாபகக் கற்கள்** இந்தக் கற்கள் ஜனங்களுக்குச் சிறப்புக்குரிய சிலவற்றை நினைவூட்டுவதற்கு உதவும்படி அமைக்கப்பட்டுள்ளன. இஸ்ரவேலின் பழங்காலத்தில் ஜனங்கள் சிறப்புக்குரிய இடங்களில் இத்தகைய கற்களைப் பொய்த் தெய்வங்களை தொழுதுகொள்வதற்காக அமைத் தனர்.

### இஸ்ரவேல் மீது யெகூவின் ஆட்சி

30கர்த்தர் யெகூவிடம், "நல்லது செய்தாய். நான் நல்லவை எனச் சொன்னதைச் செய்தாய். நீ ஆகாபின் குடும்பத்தினரை அழித்துவிட்டாய். எனவே இஸ்ரவேலை உனது சந்ததியார், நான்கு தலைமுறைகளுக்கு ஆண்டுவருவார்கள்" என்றார்.
31ஆனால் யெகூ முழுமனதோடு கர்த்தருடைய சட்டப்படி கவனமாக வாழவில்லை. அவன் யெரொபெயாமின் பாவங்களை விட்டுவிடவில்லை.

### ஆசகேல் இஸ்ரவேலைத் தோற்கடித்தது

32அப்போது கர்த்தர் இஸ்ரவேலின் பகுதிகள் குறைந்துபோகும்படி செய்தார். இஸ்ரவேலின் ஒவ்வொரு எல்லையையும் ஆராமின் அரசனான ஆசகேல் தாக்கி தோல்வியடையச் செய்தான்.
33ஆசகேல் யோர்தான் ஆற்று கிழக்குப் பகுதிகள் அது கீலேயாத்தின் அனைத்து பகுதிகளும் காதியர், ரூபேனியர், மனாசேயர் கோத்திரங்களின் பகுதிகளையும் வென்றான். அவன் ஆரோவேர் முதல் கீலேயாத்திலும் பாசானிலுமுள்ள பகுதிகள் முழுவதையும் வென்றான்.

### யெகூவின் மரணம்

34யெகூ செய்த பிற அருஞ்செயல்களை எல்லாம் இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு என்ற புத்தகம் கூறுகிறது.
35இவன் மரித்ததும் முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்பட்டான். ஜனங்கள் சமாரியாவில் இவனுடைய முற்பிதாக்களோடு அடக்கம் செய்தனர். இவனுக்குப் பிறகு இவனது மகன் யோவாகாஸ் புதிய அரசன் ஆனான்.
36யெகூ சமாரியாவில் இருந்து இஸ்ரவேலை 28 ஆண்டுகள் ஆண்டுவந்தன்.

### யூதா அரசனின் அனைத்து மகன்களையும் அத்தாலியாள் கொன்றது

11 அத்தாலியாள் என்பவள் அகசியாவின் தாயார் ஆவாள். தன் மகன் மரித்துப்போனதைப் பார்த்ததும், எழுந்து அரச குடும்பத்தினரையெல்லாம் கொன்றாள்.
2அரசனான யோராமின் மகள் யோசேபாள் ஆவாள். இவள் அகசியாவிற்குச் சகோதரி ஆவாள். யோவாஸ் அகசியா அரசனின் மகன்களுள் ஒருவன். மற்றவர்கள் கொல்லப்பட்டபோது அவள் அவனைக் காப்பாற்றி ஒளித்துவைத்தாள். தன் படுக்கையறையிலேயே யோவாசையும் அவனது தாதியையும் மறைத்துவைத்தாள். இவ்வாறு யோவாஸ் அத்தாலியாவால் கொல்லப்படாமல் தப்பித்தான்.
3பிறகு கர்த்தருடைய ஆலயத்தில் யோவாசும் யோசேபாவும் ஆறு ஆண்டுகள் மறைந்து இருந்தனர். அத்தாலியா யூதாவை ஆண்டுவந்தாள்.
4ஏழாவது ஆண்டில், தலைமை ஆசாரியனான யோய்தா 100 பேருக்கு அதிகாரிகளையும் தலைவர்களையும் யோய்தா காவலர்களையும் ஒருங்கே அழைத்தான். கர்த்தருடைய ஆலயத்தில் கூடச் செய்து அவர்களோடு ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டான். அவர்களை ஆலயத்தில் வாக்குறுதி கொடுக்கச்செய்து அரசனின் மகனைக் காட்டினான்.
5பின் அவன் அவர்களுக்கு ஆணையிட்டு, "நீங்கள் செய்யவேண்டிய காரியம் இதுதான். உங்களில் மூன்றில் ஒரு பங்கு பேர் ஒவ்வொரு ஓய்வுநாளில் முறைப்படி வர வேண்டும். அரசனின் வீட்டை கவனித்து வரவேண்டும்.
6இன்னொரு மூன்றில் ஒருபங்கினர் சூர் வாசலில் இருக்கவேண்டும். மூன்றில் மற்றொரு பங்கினர் காவலர்களுக்குப் பின்னாலுள்ள வாசலில் இருக்க வேண்டும். இவ்வாறு நீ அரசனின் வீட்டைச்சுற்றி சுவர்போல இருக்கவேண்டும்.
7ஒவ்வொரு ஓய்வுநாளும் முடியும்போது, மூன்றில் இரண்டு பங்கினர் கர்த்தருடைய ஆலயத்தையும், அரசன் யோவாசையும் பாதுகாத்து நிற்பார்கள்.
8நீங்கள் அரசன் யோவாசோடு தங்கி அவன் எங்கு போனாலும் போகவேண்டும். அவர்கள் எப்போதும் அவனைச் சுற்றியே இருக்க வேண்டும். ஒவ்வொருவரும் கையில் ஆயுதம் வைத்திருக்கவேண்டும். உங்களை நெருங்குகிற எவரையும் கொன்றுவிட வேண்டும்" என்றான்.
9ஆசாரியன் யோய்தாவின் ஆணைப்படி தளபதிகள் செயல்பட்டார்கள். ஒவ்வொரு
வரும் தம் ஆட்களை அழைத்தனர். சனிக்கிழமை ஒரு குழு யோவாசை பாதுகாத்தது. மற்ற குழுக்கள் மற்ற நாட்களில் காவல்காத்து வந்தனர். எல்லோரும் ஆசாரியன் யோய்தாவிடம் வந்தனர்.
10ஆசாரியனோ தளபதிகளுக்கு ஈட்டி கேடயம் போன்றவற்றைக் கொடுத்தான். இவை அனைத்தும் அரசன் தாவீதால் ஒரு காலத்தில் கர்த்தருடைய ஆலயத்திற்குள் வைக்கப்பட்டிருந்தன.
11இக்காவலர்கள் ஆயுதங்களோடு வலது மூலையிலிருந்து ஆலயத்தின் இடது மூலைவரை நின்றனர். பலிபீடம், ஆலயம் போன்றவற்றைச் சுற்றிலும் நின்றனர். அரசன் ஆலயத்திற்குப் போகும்போதும் அவனைச்சுற்றி நின்றனர்.
12அவன் (யோய்தா) யோவாசை வெளியே அழைத்துவந்தான். அவன் தலையில் மகுடத்தைச் சூடி அரசனுக்கும் தேவனுக்கும் இடையில் ஒப்பந்தத்தை கொடுத்தனர். அவனுக்கு அபிஷேகம் செய்து புதிய அரசனாக நியமித்தனர். அவர்கள் கைகளைத் தட்டி, ஓசையெழுப்பி "அரசன் பல்லாண்டு வாழ்க!" என்று வாழ்த்தினார்கள்.
13அரசி அத்தாலியாள் காவலர்களிடமிருந்தும், ஜனங்களிடமிருந்தும் எழுந்த

*இச்சத்தத்தைக் கேட்டாள். அவள் கர்த்தரு
டைய ஆலயத்திற்குள் போனாள். 14அரசன்
வழக்கமாக நிற்கும் தூணருகில் நின்றுக்
கொண்டிருப்பதைக் கண்டாள். அரசனுக்காக
அதிகாரிகள் எக்காளம் வாசிப்பதையும் கண்
டாள். ஜனங்கள் மகிழ்ச்சியோடு இருப்பதை
யும் பார்த்தாள். அத்தாலியாள் அவள்
நிலை குலைந்ததைக் காட்ட தன் ஆடை
களைக் கிழித்துக்கொண்டாள். பின் அவள்
“துரோகம்! துரோகம்!” என்று கத்தினாள்.
15படைவீரர்களைத் தன் கட்டுப்பாட்டில்
வைத்திருக்கும் தளபதிகளுக்கு ஆசாரியன்
யோய்தா கட்டளையிட்டான். யோய்தா,
“ஆலயத்தைவிட்டு வெளியே அத்தாலியா
ளைக் கொண்டுவாருங்கள். அவளைச்
சார்ந்தவர்களைக் கொல்லுங்கள். ஆனால்
கர்த்தருடைய ஆலயத்தில் கொல்லவேண்
டாம்” என்றான்.
16எனவே, அவளை ஆலையத்தைவிட்டு
வெளியே ‘குதிரை வாசலுக்கு’ இழுத்து
வந்து அங்கே அவளைக் கொன்றனர்.
17பிறகு கர்த்தருக்கும் அரசனுக்கும்
ஜனங்களுக்கும் இடையில் யோய்தா ஒரு
ஒப்பந்தம் செய்தான். இதன்படி அரசனும்
ஜனங்களும் கர்த்தருக்கு உரியவர்கள். பின்
யோய்தா அரசனுக்கும் ஜனங்களுக்கும்
இடையில் ஓர் ஒப்பந்தம் செய்தான்.
அதன்படி அரசன் ஜனங்களுக்கு நன்மை
செய்ய வேண்டும், ஜனங்களும் அரசனுக்குக்
கீழ்படிந்து வாழவேண்டும்.
18பிறகு அனைவரும் பொய்த் தெய்வமான
பாகாலின் ஆலயத்திற்குச் சென்றனர். பாகா
லின் உருவச் சிலைகளையும் பலிபீடங்
களையும் தூள்தூளாக நொறுக்கினர்.
பாகாலின் ஆசாரியனான மாத்தனையும்
பலிபீடத்தின் முன்னர் கொன்றனர்.
கர்த்தருடைய ஆலயத்தின் பொறுப்
பாளராகச் சில மனிதரை ஆசாரியன்
(யோய்தா) நியமித்தான். 19ஆசாரியன் ஜனங்
களை வழிநடத்தினான். அவர்கள் கர்த்தரின்
ஆலயத்திலிருந்து அரசனின் வீட்டிற்குச்
சென்றனர். அரசனோடு சிறப்பு காவலர்
களும் அதிகாரிகளும் சென்றனர். அவன்
அரசனது வீட்டின் வாசலுக்குச் சென்றான.
பிறகு (அரசன் யோவாஸ்) அவன் சிங்கா
சனத்தில் அமர்ந்தான். 20ஜனங்கள் அனை
வரும் மகிழ்ந்தனர். நகரம் சமாதானமா
யிருந்தது. வாளால் கொல்லப்பட்ட அரசி
அத்தாலியாள் அரண்மனைக்கருகில்
கொல்லப்பட்டாள்.
21யோவாஸ் அரசனாகும்போது அவ
னுக்கு ஏழு வயது.*

### யோவாஸ் தன் ஆட்சியைத் தொடங்கியது

12 *இஸ்ரவேலில் யெகூ தன் ஆட்சியை
ஏழாம் ஆண்டில் நடத்திக்கொண்டிருக்
கும்போது யோவாஸ் ஆட்சி செய்யத்
தொடங்கினான். அவன் எருசலேமில்* 40
*ஆண்டுகள் ஆண்டான். பெயெர்செபா
விலுள்ள சிபியாள் என்பவள் தான்
யோவாசின் தாயார். 2கர்த்தர் சொன்ன நல்ல
செயல்களை மட்டுமே யோவாஸ் செய்தான்.
அவன் தன் வாழ்நாள் முழுவதும்
கர்த்தருக்கு அடிபணிந்து வந்தான். யோய்தா
எனும் ஆசாரியன் அவனுக்கு கற்றுத்
தந்ததையே கடைபிடித்தான். 3ஆனால் அவன்
மேடைகளை அழிக்கவில்லை. ஜனங் கள்
பொய்த் தோய்வங்களின் தொழுது
கொள்ளும் இடங்களில் பலிகொடுப்பதும்
நறுமணப் பொருட்களை எரிப்பதுமாக
இருந்தனர்.*

### ஆலயத்தைச் செப்பனிட யோவாஸ் ஆணையிட்டான்

*4-5யோவாஸ் ஆசாரியர்களிடம்,
‘‘கர்த்தருடைய ஆலயத்தில் அதிக பணம்
இருக்கிறது. ஜனங்கள் கர்த்தருடைய ஆலயத்
திற்கு பரிசுத்தக் காணிக்கையாகப் பணம்
கொண்டு வந்திருக்கிறார்கள். ஆலயவரி
மற்றும் தம் விருப்பம்போல் கணக்குப்
பார்க்கப்படும் பொழுதெல்லாம் அவர்கள்
அதை செலுத்தியுள்ளார்கள். மற்றும் தம்
விருப்பம்போலவும் பணம் தருகின்றனர்.
ஆசாரியர்களாகிய நீங்கள் உங்களுக்கு அறி
முகமான ஒவ்வொருவரிடமிருந்தும் அவற்
றைப் பெற்றுக்கொள்ளவேண்டும். மேலும்
அப்பணத்தைக் கொண்டுத் தேவையான
இடத்தில் ஆலயப்பணி செய்யவேண்டும்”
என்றான்.
6ஆனால் ஆசாரியர்கள் பழுது பார்க்க
வில்லை. யோவாஸ் தனது* 23*வது
ஆட்சியாண்டில் கூட அவர்கள் ஆலயப்பணி
செய்யவில்லை. 7எனவே யோவாஸ் அரசன்
யோய்தா ஆசாரியனையும் மற்ற ஆசாரியர்
களையும் அழைத்து, “ஏன் நீங்கள் ஆலயத்
திருப்பணிகள் செய்யவில்லை? ஜனங்
களிடமிருந்து பணம் பெற்றுக்கொள்
வதையும், அவற்றை பயன்படுத்துவதையும்
நிறுத்துங்கள். ஜனங்களின் பணம் ஆலய
திருப்பணிக்கே பயன்பட வேண்டும்”
என்றான்.
8ஜனங்களிடமிருந்து பணம் பெறுவதை
நிறுத்தி விடுவதாக ஆசாரியர்கள் ஒப்புக்
கொண்டனர். அதோடு ஆலயத்தைச் செப்ப
னிடும் பணியைச் செய்வதில்லை என்றும்
முடிவுச்செய்தனர். 9எனவே, ஆசாரியனான
யோய்தா ஒரு பெட்டியை எடுத்து அதன்
மேல் பகுதியில் துவாரமிட்டான். அதனைப்
பலிபீடத்தின் தென் பகுதியில் வைத்தான்.
அப்பெட்டி கர்த்தருடைய ஆலயத்திற்குள்
நுழையும் கதவுக்கருகில் இருந்தது. சில
ஆசாரியர்கள் வாசலைக் காவல் செய்தனர்.
அவர்கள் கர்த்தருக்காக ஜனங்கள் தரும்
பணத்தை வாங்கிப் பெட்டிக்குள் போட்
டனர்.*

10பிறகு ஜனங்களே ஆலயத்திற்குப்
போகும்போதெல்லாம் பணத்தைப் பெட்டிக்
குள் போட ஆரம்பித்தனர். பெட்டியில்
ஏராளமாக பணம் இருப்பதை அரசனின்
எழுத்தரும் (செயலாளர்) தலைமை ஆசாரிய
ரும் பார்த்தால் அவர்கள் வந்து பெட்டியைத்
திறந்து பணத்தை எடுப்பார்கள். அவர்கள்
அப்பணத்தை பைகளில் போட்டு
எண்ணினார்கள். 11அப்பணம் எடை
போடப்பட்டவுடன் அப்பணத்தை கர்த்தரு
டைய ஆலயத்தில் வேலை செய்பவர்
களுக்குக் கொடுத்தனர். ஆலயத்தில்
பணியாற்றும் தச்சர்கள், கட்டிட வேலைக்
காரர்கள் போன்றோருக்கு அப்பணத்தைக்
கொடுத்தனர். 12அப்பணத்தைக் கல் வேலை
செய்பவர்களும் பெற்றனர். இப்பணத்தின்
மூலம் மரங்கள், கற்கள், கர்த்தருடைய
ஆலய கட்டிடத்திற்கு பழுதுபார்க்கத் தேவை
யான மற்ற பொருட்களையும் வாங்கி
னார்கள்.
13-14ஜனங்கள் கர்த்தருடைய ஆலயத்திற்
காகப் பணத்தைக் கொடுத்தனர். வெள்ளிக்
கிண்ணங்கள், இசைக்கருவிகள், எக்காளங்
கள், பொன் பாத்திரங்கள், வெள்ளிப்
பாத்திரங்கள் போன்றவற்றைச் செய்ய
ஆசாரியர்களால் அப்பணத்தை உபயோகிக்க
முடியாமல் போனது. வேலைக்காரர்களுக்குச்
சம்பளம் கொடுக்கவே இப்பணம் உபயோக
மானது. அந்த வேலைக்காரர்கள் கர்த்தரு
டைய ஆலயத்தைப் பழுதுபார்த்தார்கள்.
15எவரும் பணமுழுவதையும் எண்ணிப்
பார்க்கவில்லை. பணத்தை என்ன செய்தார்
கள் என வேலைக்காரர்களை வற்புறுத்தவும்
இல்லை. ஏனெனில் அவ்வேலைக்காரர்கள்
அனைவரும் நம்பிக்கைக்கு உரியவர்கள்!
16குற்றப்பரிகாரப் பலியாகவும், பாவப்
பரிகாரப் பலியாகவும் ஜனங்கள் பணம்
கொடுத்தார்கள். ஆனால் அப்பணத்தை
ஆலயத் திருப்பணி செய்யும் வேலைக்
காரர்களுக்குச் சம்பளம் தர பயன்படுத்தலில்
அது ஆசாரியர்களுக்கு உரியதாக இருந்தது.

### ஆசகேலிடமிருந்து எருசலேமை யோவாஸ் காப்பாற்றுகிறான்

17ஆசகேல் ஆராம் நாட்டு மன்னன்.
அவன் காத்தூர் நகரத்தோடு போரிடச்
சென்றான். அதனைத் தோற்கடித்தபின்
எருசலேமோடு போரிடத் திட்டமிட்டான்.
18யோசபாத், யோராம், அகசியா ஆகி
யோர் முன்பு யூதாவை ஆண்டனர். இவர்கள்
யோவாசின் முற்பிதாக்கள். அவர்கள்
கர்த்தருக்கு நிறைய பொருட்களைக் கொடுத்
திருந்தனர். அவை ஆலயத்தில் இருந்தன.
யோவாசும் ஆலயத்திற்குப் பொருட்களைக்
கொடுத்திருந்தான். யோவாஸ் தன்
அரண்மனை வீட்டிலும் ஆலயத்திலும்
இருந்த பொன்னையும் பொருளையும்
சேர்த்து ஆராம் (சீரியா) அரசன் ஆசகே
லுக்குக் கொடுத்தனுப்பினான். ஆசகேல்
எருசலேமுக்கு எதிராகப் போரிடவில்லை.
அவன் வெளியேப்போனான்.

### யோவாசின் மரணம்

19யோவாஸ் செய்த பெருமைக்குரிய
செயல்களெல்லாம் யூதா அரசர்களின்
வரலாறு என்ற புத்தகத்தில் எழுதப்
பட்டுள்ளது.
20யோவாசின் வேலைக்காரர்கள் (அதிகா
ரிகள்) அவனுக்கெதிராகச் சதி செய்தனர்.
அவர்கள் அவனை சில்லாவுக்குப் போகும்
வழியில் உள்ள மில்லோ வீட்டிலே கொன்
றனர். 21சிமியாதின் மகனான யோசகாரும்
சோமேரின் மகனான யோசபாத்தும் யோவா
சின் அதிகாரிகள். இவர்களே யோவாசைக்
கொன்றனர்.
தாவீது நகரத்தில் ஜனங்கள் யோவாசை
அவனது முற்பிதாக்களோடு அடக்கம் செய்
தனர். யோவாசின் மகனான அமத்சியா
அடுத்த புதிய அரசன் ஆனான்.

### யோவாகாசின் ஆட்சி தொடக்கம்

13 சமாரியாவில் யெகூவின் மகனான
யோவாகாஸ் இஸ்ரவேலின் புதிய
அரசன் ஆனான். இது அகசியாவின்
மகனான யோவாசின் 23வது ஆட்சியாண்
டின்போது ஏற்பட்டது. யோவாகாஸ் 17
ஆண்டுகள் ஆட்சி செய்தான்.
2கர்த்தருக்கு வேண்டாதவற்றையே யோ
வாகாஸ் செய்துவந்தான். இஸ்ரவேலரின்
பாவத்துக்குக் காரணமாயிருந்த நேபாத்தின்
மகனாகிய யெரொபெயாமின் பாவச்
செயல்களை இவனும் பின்பற்றினான்.
அதனைச் செய்வதை நிறுத்தவில்லை.
3அதனால் இஸ்ரவேலர் மேல் கர்த்தருக்கு
கோபம் வந்தது. எனவே அவர்களை கர்த்தர்
ஆராம் அரசன் ஆசகேலின் கையிலும்
ஆசகேலின் மகனான பெனாதாத் கையிலும்
ஒப்படைத்தார்.

### இஸ்ரவேல் ஜனங்கள் மீது கர்த்தர் இரக்கம் காட்டுகிறார்

4பிறகு தமக்கு உதவி செய்யும்படி
யோவாகாஸ் கர்த்தரிடம் கெஞ்சிக் கேட்டுக்
கொண்டான். கர்த்தரும் செவிசாய்த்தார்.
கர்த்தர் இஸ்ரவேலரின் துன்பங்களைப்
பார்த்தார். ஆராம் அரசன் இஸ்ரவேலரைக்
கொடுமை படுத்துவதைக் கவனித்தார்.
5எனவே கர்த்தர் இஸ்ரவேலரைக் காப்
பாற்ற ஒருவனை அனுப்பினார். இஸ்ர
வேலர்கள் ஆராமியர்களிடமிருந்து விடு
தலை பெற்றனர். முன்பு போல, அவர்கள்
தமது கூடாரங்களுக்கு (வீடுகள்) சென்றனர்.
6எனினும் அவர்கள் தாம் பாவம்
செய்வதை நிறுத்தவில்லை. இஸ்ரவேலர்கள்
பாவம் செய்வதற்குக் காரணமான யெரொ
பெயாமின் குடும்பத்தார் பாவங்களை

அவர்கள் தொடர்ந்து செய்தனர். அவர்கள்
சமாரியாவில் அஷெரா தூண்களையும்
வைத்திருந்தனர்.
7ஆராமின் அரசன் யோவாகாசின்
படையைத் தோற்கடித்தான். படையில் பல
வீரர்களைக் கொன்றான். 50 குதிரை
வீரர்கள், 10 இரதங்கள், 10,000 காலாட்
வீரர்களை மட்டுமே விட்டுவிட்டான்.
யோவாகாசின் வீரர்கள் காலடியில் மிதி
பட்ட தூசியைப்போன்று ஆனார்கள்.
8யோவாகாஸ் செய்த மற்ற அருஞ்
செயல்களைப் பற்றியும் அவனது வலிமை
பற்றியும் இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு
என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளது.
9யோவாகாஸ் மரித்ததும் அவனது முற்பிதாக்
களோடு அவனும் அடக்கம் செய்யப்
பட்டான். ஜனங்கள் அவனைச் சமாரியா
வில் அடக்கம் செய்தனர். பிறகு அவனது
மகன் யோவாஸ் அரசன் ஆனான்.

### யோவாஸ் இஸ்ரவேலை ஆண்டது

10யோவாகாசின் மகன் யோவாஸ்
சமாரியாவில் இஸ்ரவேலரின் அரசன்
ஆனான். இது யூதாவின் அரசனாகிய
யோவாசின் 37வது ஆட்சியாண்டில் நிகழ்ந்
தது. யோவாஸ் 16 ஆண்டுகள் இஸ்ரவேலை
ஆண்டான். 11யோவாசும் கர்த்தருக்குப்
பிடிக்காதவற்றைச் செய்தான். இஸ்ரவேலர்
களுக்குப் பாவத்தைத் தேடித்தந்த பாவத்தை
உண்டு பண்ணிய நேபாத்தின் மகனான
யெரொபெயாமின் பாவச்செயல்களைச்
செய்வதை இவனும் நிறுத்தவில்லை. அவன்
அவற்றைத் தொடர்ந்து செய்தான்.
12யோவாஸ் செய்த மற்ற அருஞ்செயல்களும்
அவனது வலிமையும் அவன் யூதாவின்
அரசனான அமத்சியாவோடு செய்த
போர்களும் பற்றி இஸ்ரவேல் அரசர்களின்
வரலாறு என்ற புத்தகத்தில் எழுதப்
பட்டுள்ளது. 13யோவாஸ் மரித்ததும்
இஸ்ரவேல் அரசர்களான அவனது
முற்பிதாக்களோடு சமாரியாவில் அடக்கம்
செய்யப்பட்டான். யோவாசின் சிம்மா
சனத்தில் யெரொபெயாம் அரசனாக
அமர்ந்தான்.

### யோவாஸ் எலிசாவைச் சந்திக்கிறான்

14எலிசா நோயுற்றான். பின், இந்த
நோயாலேயே அவன் மரித்து போனான்.
இஸ்ரவேல் அரசனான யோவாஸ், எலிசா
வைப் பார்க்கப்போனான். யோவாஸ்
எலிசாவுக்காக அழுதான். அவன் “என்
தந்தையே! என் தந்தையே! இது இஸ்ர
வேலின் இரதமும் அதன் குதிரைகளுக்கும்
ஏற்ற நேரமா?”* என்றான்.
15எலிசா அவனிடம், “ஒரு வில்லையும்
சில அம்புகளையும் எடுத்துக்கொள்”
என்றான்.
யோவாஸ் ஒரு வில்லையும், சில
அம்புகளையும் எடுத்துக்கொண்டான்.
16பிறகு எலிசா இஸ்ரவேல் அரசனிடம்,
“வில்லில் உனது கையை வை” என்றான்.
யோவாஸ் அவ்வாறே செய்தான். பிறகு
எலிசா தன் கையை அரசனின் கையோடு
வைத்தான். 17எலிசா, “கிழக்கு ஜன்னலைத்
திறவுங்கள்” என்றான், யோவாஸ் அவ்
வாறே திறந்தான். பிறகு எலிசா
“எய்துவிடு” என்றான்.
யோவாஸ் எய்தான். பிறகு எலிசா,
“இது கர்த்தருடைய வெற்றி அம்பு! இது
ஆராம் மேல் கொள்ளும் வெற்றியாகும்! நீ
ஆராமியர்களை ஆப்பெக்கில் வெல்வாய்.
அவர்களை அழிப்பாய்” என்றான்.
18எலிசா மேலும், “அம்புகளை எடு”
என்றான். யோவாஸ் எடுத்தான். “தரையின்
மேல் அடி” என்று இஸ்ரவேல் அரசனிடம்
கூறினான்.
யோவாஸ் மூன்று முறை தரையின்
மீது அடித்தான். பிறகு நிறுத்தினான்.
19அதனால் தேவமனிதனுக்கு (எலிசாவிற்கு)
யோவாசின் மேல் கோபம்வந்தது. அவன்,
“நீ ஐந்து அல்லது ஆறுமுறை அடித்திருக்க
வேண்டும்! அதனால் ஆராமை அது
அழியும்வரை தோற்கடித்திருப்பாய்! ஆனால்
இப்போது நீ மூன்றுமுறை மட்டுமே
ஆராமை வெல்வாய்!” என்றான்.

### எலிசாவின் கல்லறையில் நிகழ்ந்த அதிசயம்

20எலிசா மரித்தான், ஜனங்கள் அவனை
அடக்கம் செய்தனர். அடுத்த ஆண்டில்
ஒரு வசந்த காலத்தில் மோவாபிய வீரர்
களின் குழு ஒன்று படையெடுத்து
தாக்கியது. போருக்கான பொருட்களை
எடுப்பதற்காக அவர்கள் வந்தனர். 21சில
இஸ்ரவேலர்கள் மரித்த ஒருவனை அடக்கம்
செய்துக்கொண்டிருந்தனர். அவர்கள் வீரர்
கள் வருவதைப் பார்த்தார்கள். உடனே
(பயந்து) பிணத்தை எலிசாவின் கல்லறைக்
குள் வீசிவிட்டு ஓடினார்கள். பிணமானது
எலிசாவின் எலும்பின் மீது பட்டது,
அதற்கு உயிர் வந்தது, எழுந்து நின்றான்!

### ஆராமியர்களோடு போரிட்டு யோவாஸ் இஸ்ரவேலிய நகரங்களை மீட்டது

22யோவாகாசின் ஆட்சிகாலம் முழுவதும்,
ஆராமின் அரசனான ஆசகேல் இஸ்ரவேலர்
களுக்குத் துன்பம் கொடுத்துவந்தான்.
23ஆனால் கர்த்தர் இஸ்ரவேலர்கள் மேல்
கருணையோடு இருந்தார். அவர் ஆபிரகாம்,
ஈசாக்கு, யாக்கோபு ஆகியவர்களோடு செய்த

---

**இது இஸ்ரவேலின் … நேரமா** “தேவன் வந்து உன்னை எடுத்துக் கொள்வதற்காக நேரம் இதுதானா?” என்று அர்த்தம். பார்க்க 1 இராஜா. 2:12.

உடன்படிக்கையின் காரணமாக கர்த்தர்
இஸ்ரவேலர்களை அழிப்பதில்லை. இன்னும்
அவர்களைத் தூர எறியவில்லை.
24ஆராமின் அரசனான ஆசகேல் மரித்
தான், அவனது மகனான பெனாதாத் புதிய
அரசன் ஆனான். 25அவன் மரிக்கும் முன்னர்
ஆசகேல் யோவாசின் தந்தையான யோவ
காசுடன் போரிட்டுப் போரில் பல
நகரங்களைக் கைப்பற்றினான். ஆனால்
இப்போது யோவாஸ் ஆசகேலின் மகனான
பெனாதாத்தோடு போரிட்டு அந்நகரங்களை
எடுத்துக்கொண்டான். மூன்றுமுறை
யோவாஸ் பெனாதாத்தை வெற்றிபெற்று
இஸ்ரவேல் நகரங்களைத் திரும்ப எடுத்துக்
கொண்டான்.

### யூதாவில் அமத்சியா ஆட்சி செய்தல்

14 இஸ்ரவேலின் அரசனாகிய யோவா
காசின் மகன் யோவாசின் இரண்டாம்
ஆட்சி ஆண்டில் யூதாவின் அரசனாகிய
யோவாசின் மகன் அமத்சியா அரசன்
ஆனான். 2அவன் தனது 25வது வயதில்
அரசன் ஆனான். எருசலேமில் 29 ஆண்டுகள்
அரசாண்டான். அவனது தாய் எருசலேம்
நகரத்தைச் சேர்ந்த யொவதானாள். 3அவன்
கர்த்தரால் சரியானவை என்று சொல்லப்
பட்ட காரியங்களைச் செய்தான். ஆனால்
தனது முற்பிதா தாவீதைப்போன்று முழுமை
யாக தேவனைப் பின்பற்றவில்லை. தந்தை
யோவாஸ் செய்த பல செயல்களை இவனும்
செய்தான். 4இவனும் பொய்த் தெய்வங்களின்
கோவில்களை அழிக்கவில்லை. ஜனங்கள்
அங்கு தொழுதுகொள்ள பலிகள் இடுவதும்
நறுமணப் பொருட்களை எரிப்பதுமாக
இருந்தனர்.
5அமத்சியா கையில் ஆட்சி உறுதியான
போது, தனது தந்தையைக் கொன்ற
வேலைக்காரர்களை (அதிகாரிகளைக்)
கொன்றான். 6ஆனால் அவன் மோசேயின்
சட்டங்களின் புத்தகத்தில் எழுதியுள்ளபடி,
கொலையாளிகளின் குழந்தைகளைக்
கொல்லவில்லை. கர்த்தர் தன் ஆணை
களையே அந்த புத்தகத்தில் மோசே மூலம்
எழுதியுள்ளார். மோசே “குழந்தைகள் செய்த
தவறுக்காகப் பெற்றோர்கள் கொல்லப்படக்
கூடாது. பெற்றோர்கள் செய்த தவறுக்காகப்
பிள்ளைகள் கொல்லப்படக்கூடாது. ஒருவன்
தான் செய்த தவறுகளுக்கு மாத்திரமே
மரணத்தை அடையவேண்டும்” என்று
எழுதியுள்ளான்.

7அவன் 10,000 ஏதோமியர்களை உப்புப்
பள்ளத்தாக்கில் கொன்றுபோட்டான். சேலா
வைப் போர் மூலம் பிடித்து அதனை
“யொக்தியேல்” என்று அழைத்தான். அந்த
இடம் இன்றும் “யொக்தியேல்” என்று
அழைக்கப்படுகிறது.

### அமத்சியா யோவாசுக்கு எதிராகப் போர்செய்ய விரும்பியது

8அமத்சியா தூதுவர்களை யெகூவின்
மகனும் யோவாகாசின் மகனும், இஸ்ர
வேலின் அரசனுமான யோவாசிடம் அனுப்
பினான். அவன், “வா, நேரில் ஒருவரை
யொருவர் சந்தித்து போரிட்டுப் பார்ப்
போம்” என்று சொல்லிவிட்டான்.
9இஸ்ரவேலரின் அரசனான யோவாஸ்
அதற்குப் பதிலாக யூத அரசன் அமத்சியா
விற்கு, “லீபனோனிலுள்ள முட்செடியானது
கேதுரு மரத்தை நோக்கி, ‘நீ உன் மகளை
என் மகனுக்கு மணமுடித்துக் கொடு’
என்று சொல்லச்சொன்னது. ஆனாலும்
லீபனோனிலுள்ள ஒரு காட்டுமிருகம் அந்த
வழியாகப் போகும்போது அந்த
முட்செடியை மிதித்துப்போட்டது. 10நீ
ஏதோமியரைத் தோற்கடித்ததால் உன் மனம்
உன்னைக் கர்வம் கொள்ளச்செய்தது. நீ
பெருமை பாராட்டிக்கொண்டு உன்
வீட்டிலேயே இரு! நீ இதனைச் செய்தால், நீ
விழுவாய், யூதாவும் உன்னோடு விழும்”
என்றான்.
11ஆனாலும் அமத்சியா காதுகொடுத்து
கேட்கவில்லை. ஆகையால் இஸ்ரவேலின்
அரசனாகிய யோவாஸ் வந்தான். யூதா
விலுள்ள பெத்ஷிமேஸ் என்னும் இடத்தில்
அவனும் யூதாவின் அரசனுமான அமத்சி
யாவும் மோதிக்கொண்டனர். 12இஸ்ரவேல்
யூதாவைத் தோற்கடித்தது. யூதவீரர்கள்
வீட்டிற்கு ஓடிப்போனார்கள். 13பெத்ஷிமேஸ்,
என்னும் இடத்தில் இஸ்ரவேலின் அரசனான
யோவாஸ், அகசியாவின் மகன் யூதாவின்
அரசனான அமத்சியாவைச் சிறைபிடித்தான்.
அவனை எருசலேமுக்குக் கொண்டுபோய்,
எருசலேமிலுள்ள சுவரை, 600 அடி
நீளத்திற்கு எப்பிராயீம் வாசல் தொடங்கி
மூலை வாசல் மட்டும் இடித்துப்போட்டான்.
14பிறகு யோவாஸ் அங்கு பொன்னையும்
வெள்ளியையும் கர்த்தருடைய ஆலயத்தில்
உள்ள சகல பணிமூட்டுகளையும், அரண்
மனையின் காசாளர்களையும் கைப்பற்றி
னான். ஜனங்களையும் சிறைபிடித்து
சமாரியாவிற்குப் போனான்.
15யோவாஸ் செய்த மற்ற அருஞ்
செயல்களும் அவன், அமத்சியாவிற்கு எதி
ராக எவ்வாறு போரிட்டான் என்ற
விளக்கமும் ‘இஸ்ரவேல் அரசர்களின்
வரலாறு’ என்ற புத்தகத்தில் எழுதப்
பட்டுள்ளது. 16யோவாஸ் மரித்ததும் அவனது
முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்
பட்டான். அவன் இஸ்ரவேல் அரசர்களோடு
கூடவே சமாரியாவில் அடக்கமானான்.
யோவாசின் மகனான யெரொபெயாம் புதிய
அரசன் ஆனான்.

### அமத்சியாவின் மரணம்

17இஸ்ரவேல் அரசனான யோவாசின்

மகனான அமத்சியா, இஸ்ரவேலின் அரச
னான யோவாகாசின் மகனான யோவாஸ்
மரித்தபின், 15 ஆண்டுகள் உயிர் வாழ்ந்தான்.
18அமத்சியாவின் மற்ற அருஞ்செயல்கள்
எல்லாம் யூத அரசர்களின் வரலாறு என்ற
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளது. 19எருச
லேமில் அமத்சியாவிற்கு எதிராக ஜனங்கள்
திட்டமிட்டனர். அமத்சியா லாகீசுக்கு
ஓடிப்போனான். ஆனால் ஜனங்கள் லாகீசுக்கு
ஆட்களை அனுப்பினார்கள். அவர்கள்
அவனை அங்கே கொன்றனர். 20ஜனங்கள்
அமத்சியாவின் உடலைக் குதிரையில்
வைத்துக் கொண்டுவந்தனர். அவனைத்
தாவீதின் நகரத்தில் எருசலேமில் அவனது
முற்பிதாக்களோடு அடக்கம் செய்தனர்.

### யூதாவில் அசரியா தனது ஆட்சியைத் தொடங்குதல்

21பிறகு யூதாவிலுள்ள அனைத்து
ஜனங்கள், அமத்சியாவின் மகன்
அசரியாவைப் புதிய அரசனாக்கினர். அப்
போது அவனுக்கு 16 வயது. 22ஆகையால்
அமத்சியா அரசன் மரித்து அவனது
முற்பிதாக்களோடு அடக்கமான பிறகு
அசரியா மீண்டும் ஏலாதைக்கட்டி, அதனை
யூதாவிற்குத் திரும்பக்கொடுத்தான்.

### இஸ்ரவேலில் இரண்டாம் யெரொபெயாமின் ஆட்சி தொடங்கியது

23யோவாசின் மகனான யெரொபெயாம்
இஸ்ரவேல் அரசனாக சமாரியாவில்
ஆட்சியைத் தொடங்கி 41 ஆண்டுகள்
ஆட்சி செய்தான். அப்போது யூதாவின்
அரசனாகிய யோவாசின் மகன் அமத்சியா
பதினைந்தாம் ஆட்சியாண்டில் இருந்தான்.
24தவறென்று கர்த்தர் சொன்னவற்றையே
யெரொபெயாம் செய்துவந்தான். இஸ்ரவே
லுக்குப் பாவத்தைக் கொண்டுவந்த
நேபாத்தின் மகனான யெரொபெயாமின்
பாவச்செயல்களை இவன் நிறுத்தவில்லை.
25யெரொபெயாம் லெபோ ஆமாத்தின்
எல்லை முதல் அரபா கடல் மட்டுமுள்ள
இஸ்ரவேல் பகுதிகளைத் திரும்ப சேர்த்துக்
கொண்டான். இது, இஸ்ரவேலின் கர்த்தர்
தமது ஊழியக்காரனான அமித்தாயின்
மகனான யோனாவான காத்தேப்பேரி
லிருந்து வந்த தீர்க்கதரிசி மூலம் சொன்னபடி
நிகழ்ந்தது. 26இஸ்ரவேலில் ஒவ்வொருவரும்,
அவர்கள் அடிமைகளாகவோ அல்லது
சுதந்திரமானவர்களாகவோ இருந்தாலும்
அவர்கள் துன்பப்படுவதைக் கர்த்தர்
கண்டார். இஸ்ரவேலர்களுக்கு உதவ ஒருவர்
கூட மீதியாக இருக்கவில்லை. 27உலகத்திலி
ருந்து இஸ்ரவேலர்களின் பெயரை எடுத்து
விடவேண்டுமென்று கர்த்தர் என்றும்
சொன்னதில்லை. எனவே கர்த்தர் யோவா
சின் மகனான யெரொபெயாம் மூலம்
இஸ்ரவேல் ஜனங்களைக் காப்பாற்றினார்.
28யெரொபெயாம் செய்த மற்ற அருஞ்
செயல்களும் அவரது வலிமையும் ‘இஸ்ர
வேல் அரசர்களின் வரலாறு’ என்ற
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன. இதில்
யெரொபெயாம் தமஸ்குவையையும் ஆமாத்
தையும் போரிட்டு இஸ்ரவேலோடு சேர்த்துக்
கொண்டதும் உள்ளது. (இந்நகரங்கள்
யூதாவோடு சேர்ந்திருந்தது.) 29யெரொ
பெயாம் மரித்ததும் இஸ்ரவேல் அரசர்களான
முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்
பட்டான். யெரொபெயாமின் மகனான
சகரியா அடுத்த புதிய அரசன் ஆனான்.

### யூதாவில் அசரியா அரசாண்டது

15 இஸ்ரவேலின் அரசனான யெரொ
பெயாமின் 27வது ஆட்சியாண்டின்
போது அமத்சியாவின் மகனான அசரியா
யூதாவின் அரசனானான். 2அசரியா அரசாள
வந்தபோது அவனுக்கு 16 வயது.
அவன் எருசலேமில் 52 ஆண்டுகள் அரசாண்
டான். அவனது தாயார் எருசலேமின்
எக்கோலியாள் ஆகும். 3அசரியா தன்
தந்தையைப்போலவே, கர்த்தர் சொன்ன
சரியான வழியில் வாழ்ந்துவந்தான். அமத்
சியா செயலாற்றிய விதத்திலேயே
அசரியாவும் பின்பற்றிச் செயலாற்றினான்.
4இவன் பொய்த் தெய்வங்களின் ஆலய
மேடைகளை அழிக்கவில்லை. அந்த இடங்
களில் ஜனங்கள் தொடர்ந்து பலி
கொடுத்தும், நறுமணப் பொருட்களை
எரித்தும், தொழுதுகொண்டும் வந்தனர்.
5அசரியாவிற்குத் தொழுநோய் வரும்படி
கர்த்தர் செய்தார். மரிக்கும்வரை இவன்
தொழுநோயாளியாகவே இருந்தான். இவன்
தனி வீட்டில் வாழ்ந்தான். இவனது மகனான
யோதாம், அரண்மனையின் பொறுப்பை
ஏற்றுக்கொண்டு, ஜனங்களை நியாயம்
தீர்த்துவந்தான்.
6அசரியா செய்த மற்ற அருஞ்செயல்கள்
‘யூத அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்
தில் எழுதப்பட்டுள்ளது. 7அசரியா மரித்ததும்
தனது முற்பிதாக்களோடு தாவீது நகரத்திலே
அடக்கம் செய்யப்பட்டான். அசரியாவின்
மகனான யோதாம் அவனுக்குப்பிறகு புதிய
அரசனானான்.

### இஸ்ரவேலில் சகரியாவின் குறுகிய ஆட்சி

8யெரொபெயாமின் மகனான சகரியா
சமாரியாவிலிருந்து இஸ்ரவேலரை 6 மாத
காலத்திற்கு அரசாட்சி செய்தான். இது
யூதாவை அசரியா 38வது ஆண்டில் ஆளும்
போது நிகழ்ந்தது. 9கர்த்தரால் தவறானவை
என்று சொல்லப்பட்ட அனைத்துக் காரியங்
களையும் சகரியா செய்தான். அவன் தன்
முற்பிதாக்கள் செய்த பாவங்களையே
செய்தான். இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்
பண்ணின நேபாத்தின் குமாரனாகிய

*யெரொபெயாமின் பாவங்களை அவன் நிறுத்தவில்லை.*

10 *யாபேசின் மகனான சல்லூம் என்பவன் சகரியாவிற்கு எதிராக திட்டம் தீட்டினான். ஜனங்களுக்கு முன்பு இப்லேயிமில் கொன்றுவிட்டு புதிய அரசனானான்.* 11 *சகரியா செய்த மற்ற செயல்களைப்பற்றி 'இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு' என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளது.* 12 *இவ்வாறு கர்த்தருடைய வார்த்தைகள் உண்மையானது. கர்த்தர் யெகூவிடம் அவனது சந்ததியார் 4 தலைமுறையினர் இஸ்ரவேல் தேசத்தை ஆள்வார்கள் என்று கூறியிருந்தார்.*

### இஸ்ரவேலில் சல்லூமின் குறுகிய கால ஆட்சி

13 *யாபேசின் மகனான சல்லூம் என்பவன், யூதாவின் அரசனான உசியாவின் 39ம் ஆட்சியாண்டில் இஸ்ரவேலின் அரசனானான். சல்லூம் ஒரு மாதம் சமாரியாவிலிருந்து ஆண்டான்.*

14 *காதியின் மகனாகிய மெனாகேம் திர்சாவிலிருந்து சமாரியாவுக்கு வந்து யாபேசின் மகனான சல்லூமை வெட்டிக்கொன்றான். பிறகு அவன் புதிய அரசன் ஆனான்.*

15 *சகரியாவுக்கு எதிராக, சல்லூம் செய்த சதிகள் உட்பட, அவனுடைய எல்லா மீதியான செயல்களைப்பற்றியும் 'இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு' என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.*

### இஸ்ரவேலை மெனாகேம் ஆண்டது

16 *சல்லூம் மரித்தபிறகு, மெனாகேம் திப்சாவையும் அதன் சுற்றுப் பகுதிகளையும் தோற்கடித்தான். ஜனங்கள் அவனுக்கு நகரவாசலைத் திறக்க மறுத்தனர். எனவே அவன் அவர்களைத் தோற்கடித்ததும் நகரத்திலுள்ள கர்ப்பவதிகளையெல்லாம் கீறிப் போட்டான்.*

17 *மெனாகேம் எனும் காதியின் மகன் இஸ்ரவேலின் புதிய அரசன் ஆனபோது, யூதாவில் அசரியாவின் 39வது ஆட்சியாண்டு நடைபெற்றது. மெனாகேம் பத்து ஆண்டுகள் சமாரியாவிலிருந்து அரசாண்டான்.* 18 *கர்த்தரால் தவறு என்று குறிப்பிடப்பட்ட செயல்களையெல்லாம் மெனாகேம் செய்து வந்தான். இஸ்ரவேலைப் பாவஞ் செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்களை அவன் நிறுத்தவில்லை.*

19 *அசீரியாவின் அரசனான பூல், இஸ்ரவேலுக்கு எதிராகப் போரிடவந்தான். மெனாகேம் அவனுக்கு 75,000 பவுண்டு வெள்ளியைக் கொடுத்தான். இவ்வாறு கொடுத்ததன் மூலம் பூலின் உதவியைப் பெற்று தனது அரசை வலுப்படுத்திக் கொண்டான்.* 20 *அனைத்து செல்வர்களிடமும் வல்லமை உள்ளவர்களிடமும் வரி வசூல் செய்து மெனாகேம் செல்வத்தைப் பெருக்கினான். அவன் ஒவ்வொருவருக்கும் 50 வெள்ளி சேக்கல் வரி விதித்தான். பிறகு அதனை இவன் அசரியாவின் அரசனுக்குக் கொடுத்து வந்தான். எனவே, அசரியாவின் அரசன் இஸ்ரவேலில் தங்காமல் விலகிப் போனான்.*

21 *மெனாகேம் செய்த மற்ற அருஞ் செயல்கள் எல்லாம் 'இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு' என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.* 22 *மெனாகேம் மரித்ததும் இவனது முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்பட்டான். இவனுக்குப் பிறகு இவனது மகனான பெக்காகியா புதிய அரசன் ஆனான்.*

### இஸ்ரவேலை பெக்காகியா அரசாண்டது

23 *மெனாகேமின் மகனான பெக்காகியா இஸ்ரவேலை சமாரியாவிலிருந்து ஆளத் தொடங்கினான். அப்போது யூதாவில் அசரியாவின் 50வது ஆட்சியாண்டு நடந்துக் கொண்டிருந்தது. பெக்காகியா இரண்டு ஆண்டுகள் அரசாண்டான்.* 24 *கர்த்தரால் தவறு என்று சொல்லப்பட்ட செயல்களையெல்லாம் பெக்காகியா செய்துவந்தான். இவனும் இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப் பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்களை நிறுத்தவில்லை.*

25 *பெக்காகியாவின் படை அதிகாரியாக ரெமலியாவின் மகனான பெக்கா இருந்தான். பெக்கா பெக்காகியாவைச் சமாரியா அரசனின் அரண்மனையிலேயே கொன்று போட்டான். பெக்காகியாவைக் கொன்றபொழுது பெக்காவிடம் கீலேயாத்தின் 50 ஆட்கள் இருந்தனர். பிறகு அவன் புதிய அரசன் ஆனான்.*

26 *பெக்காகியா செய்த மற்ற அருஞ் செயல்கள் எல்லாம் 'இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு' என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.*

### இஸ்ரவேலைப் பெக்கா அரசாண்டது

27 *ரெமலியாவின் மகனான பெக்கா சமாரியாவிலிருந்து இஸ்ரவேலை அரசாண்டான். அப்போது யூதாவில் அசரியாவின் 52வது ஆட்சியாண்டு நடந்துக்கொண்டிருந்தது. பெக்கா 20 ஆண்டுகள் அரசாண்டான்.* 28 *கர்த்தரால் தவறென்று சொல்லப்பட்ட செயல்களையே பெக்கா செய்துவந்தான். இவன், இஸ்ரவேலைப் பாவஞ்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய யெரொபெயாமின் பாவங்களை அவன் நிறுத்தவில்லை.*

29 *அசீரியாவின் அரசனான திகிலாத் பிலேசர் வந்து இஸ்ரவேலுக்கு எதிராகப் போரிட்டான். அப்போது இஸ்ரவேலில் பெக்காவின் ஆட்சி நடந்துக் கொண்டி*

ருந்தது. திகிலாத்பிலேசர், ஈயோன்,
பெத்மாக்கா எனும் ஆபேல், யனோவாக்,
கேதேஸ், ஆத்சோர், கீலேயாத், கலிலேயா,
நப்தலியின் அனைத்து பகுதிகளையும்
கைப்பற்றி இப்பகுதியிலுள்ள ஜனங்களைச்
சிறைபிடித்து அசரியாவிற்குக் கொண்டு
போனான்.
30ஏலாவின் மகனான ஒசெயா என்பவன்
ரெமலியாவின் மகனான பெக்காவிற்கு
எதிராகச் சதிசெய்தான். அவனை உசியா
வின் மகனாகிய யோதாமின் 20ஆம்
ஆட்சியாண்டில் வெட்டிக்கொன்றான். புதிய
அரசனானான்.
31பெக்காவின் மற்ற அருஞ்செயல்கள்
அனைத்தும் ‘இஸ்ரவேல் அரசர்களின்
வரலாறு’ என்ற புத்தகத்தில் எழுதப்
பட்டுள்ளன.

### யூதாவை யோதாம் அரசாண்டது

32உசியாவின் மகனான யோதாம்
யூதாவின் அரசனானான். அப்போது இஸ்ர
வேலில் ரெமலியாவின் மகனான
பெக்காவின் இரண்டாவது ஆட்சியாண்டு
நடந்தது. 33யோதாம் ஆட்சிக்கு வந்தபோது
அவனுக்கு 25 வயது. இவன்
எருசலேமிலிருந்து 16 ஆண்டுகள் அரசாண்
டான். இவனது தாயின் பெயர் எருசாள்,
இவள் சாதோக்கின் மகள் ஆவாள்.
34யோதாம் தன் தந்தை உசியாவைப்
போன்று, கர்த்தர் சரி என்று சொன்னதை
செய்துவந்தான். 35ஆனால் இவன் பொய்த்
தெய்வங்களின் ஆலய மேடைகளை அழிக்க
வில்லை. ஜனங்கள் தொடர்ந்து அந்த
இடங்களில் பலியிட்டும் நறுமணப்
பொருட்களை எரித்தும் தொழுதுகொண்டும்
வந்தனர். கர்த்தருடைய ஆலயத்திலுள்ள
மேல் கதவைக் கட்டினான். 36யோதாமின்
மற்ற அருஞ்செயல்களெல்லாம் ‘யூத
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளன.
37அப்போது, கர்த்தர் ஆராமின் அரசனான
ரேத்சீனையும், ரெமலியாவின் மகனான
பெக்காவையும் யூதாவிற்கு எதிராகப்
போரிட அனுப்பத் தொடங்கினான்.
38யோதாம் மரித்ததும் தனது முற்பிதாக்
களோடு தாவீது நகரத்திலே அடக்கம்
செய்யப்பட்டான். இவனுக்குப் பிறகு
இவனது மகனான ஆகாஸ் என்பவன் புதிய
அரசன் ஆனான்.

### ஆகாஸ் யூதாவின் அரசன் ஆனது

16 யோதாமின் மகனான ஆகாஸ்
என்பவன் யூதாவின் அரசன் ஆனான்.
அப்போது இஸ்ரவேலில் ரெமலியாவின்
மகனான பெக்கா என்பவனின் 17வது
ஆட்சியாண்டு நடைபெற்றது. 2ஆகாஸ்
அரசனாகும்போது அவனது வயது 20.
அவன் எருசலேமிலிருந்து 16 ஆண்டுகள்
அரசாண்டான். நல்லதென்று கர்த்தர்
சொன்னவற்றை ஆகாஸ் செய்யவில்லை.
தேவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்த தனது
முற்பிதாவான தாவீதைப்போன்று இவன்
கர்த்தருக்குக் கீழ்ப்படியவில்லை. 3இவன்
இஸ்ரவேலின் மற்ற அரசர்களைப்போன்று
ஆண்டுவந்தான். அவன் தன் மகனையும்
தகனபலியாகக் கொடுத்தான். இஸ்ரவேலர்கள்
வந்தபொழுது, கர்த்தர் நாட்டைவிட்டுத்
துரத்திய ஜனங்கள் செய்துவந்தது போன்ற
பயங்கரமான பாவங்களைச் செய்துவந்தான்.
4ஆகாஸ் மேடைகளில் பலியிட்டும் நறு
மணப் பொருட்களை எரித்தும் வந்தான்.
மேடை, மலை உச்சி, ஒவ்வொரு மரத்தடி
என அனைத்து இடங்களிலும் தொழுது
கொண்டு வந்தான்.
5பிறகு, ஆராமின் அரசனான ரேத்சீன்
என்பவனும், இஸ்ரவேலின் அரசனாகிய
ரெமலியாவின் மகனான பெக்கா என்ப
வனும் எருசலேமிற்கு எதிராகப் போரிட
வந்தனர். அவர்கள் ஆகாசை முற்றுகை
யிட்டனர். ஆனால், தோற்கடிக்க முடிய
வில்லை. 6அப்போது ஆராம் அரசனான
ரேத்சீன் ஏலாத்தைத் திரும்பப்பெற்றான்.
ஏலாத்திலிருந்து யூதர்கள் அனைவரையும்
திரும்ப எடுத்துக் கொண்டான். ஆராமி
யர்கள் ஏலாத்தில் குடியேறினார்கள். இன்று
வரை அங்கே அவர்கள் இருக்கின்றனர்.
7ஆகாஸ் அசீரியாவின் அரசனான
திகிலாத்பிலேசரிடம் தூதுவனை அனுப்பி
னான். “நான் உங்கள் சேவகன். நான்
உங்களுக்கு மகனைப் போன்றவன். என்னை
ஆராம் அரசனிடமிருந்தும் இஸ்ரவேல்
அரசனிடமிருந்தும் வந்து காப்பாற்றுங்கள்.
அவர்கள் என்னோடு போர்செய்ய வருகி
றார்கள்!” என்று தூதுவிட்டான். 8ஆகாஸ்
கர்த்தருடைய ஆலயத்திலும் அரண்மனை
கருவூலத்திலும் உள்ள பொன்னையும்
வெள்ளியையும் எடுத்து அசீரியாவின்
அரசனுக்குக் காணிக்கையாக அனுப்
பினான். 9அசீரியாவின் அரசன், ஆகாஸ்
சொன்னதைக் கேட்டு தமஸ்குவுக்குப்போய்
அதற்கு எதிராகப் போரிட்டான். அவன்
அந்நகரத்தைக் கைப்பற்றி அங்குள்ள
வர்களைச் சிறைபிடித்து கீர்க்கு நாடு
கடத்தினான். (வெளியேற்றினான்.) அவன்
ரேத்சீனையும் கொன்றான்.
10அசீரியாவின் அரசனான திகிலாத்
பிலேசரைச் சந்திக்க அரசன் ஆகாஸ்
தமஸ்குவுக்குப் போனான். ஆகாஸ் அங்கே
பலிபீடத்தைப் பார்த்தான். அவன் அதனு
டைய மாதிரியையும் வடிவத்தையும்
ஆசாரியனாகிய உரியாவுக்கு அதேபோல
ஒரு பலிபீடம் செய்வதற்காக அனுப்பினான்.
11ஆகாஸ் தமஸ்குவிலிருந்து திரும்பி
வருவதற்குள் ஆசாரியன் உரியா அரசனால்
அனுப்பப்பட்ட மாதிரியின்படியே ஒரு
பலிபீடத்தைக் கட்டிமுடித்தான்.

12 ஆகாஸ் தமஸ்குவிலிருந்து திரும்பியதும்,
பலிபீடத்தைப் பார்த்தான். அதில் பலிகளைச்
செலுத்தினான். 13 அதில் அவன் தகன
பலியையும் தானிய காணிக்கைகளையும்
செலுத்தினான். அதோடு, பானங்களின்
காணிக்கையையும் சாமதானப் பலியின்
இரத்தத்தையும் இந்தப் பலிபீடத்தின்மேல்
தெளித்தான்.
14 கர்த்தருடைய முன்னிலையில் ஆலயத்
தின் முன்னாலிருந்த வெண்கலப் பலி
பீடத்தை ஆகாஸ் பெயர்த்தெடுத்தான். அந்த
வெண்கலப் பலிபீடம் ஆகாஸின் பலிபீடத்
திற்கும் கர்த்தருடைய ஆலயத்திற்கும் இடை
யில் இருந்தது. அந்த வெண்கலப்
பலிபீடத்தைத் தனது பலிபீடத்திற்கு
வடக்குப் பக்கத்தில் வைத்தான். 15 ஆசாரிய
னாகிய உரியாவிற்கு அரசன் ஒரு
கட்டளையிட்டான். அவன், “நீ இந்த பெரிய
பலிபீடத்தின் மேல் காலையின் சர்வாங்கத்
தகனபலியையும் மாலை தானியக்
காணிக்கையையும் தேசத்தின் ஜனங்களின்
சர்வாங்கத் தகனபலியையும் அவர்களது
தானியக் காணிக்கைகளையும் பானங்களின்
காணிக்கையையும் செலுத்தவேண்டும்.
அதன்மேல் சர்வாங்க தகனபலி மற்றும்
உயிர்பலிகளின் இரத்தத்தையும் தெளிப்பாய்.
நான் என் சொந்தப் பயனுள்ள தேவனிடம்
கேட்க, (விசாரிக்க), (வழிகாட்ட) மட்டும்
வெண்கலப் பலிபீடத்தைப் பயன்
படுத்துவேன்” என்று கூறினான். 16 அதன்
படியே ஆசாரியன் உரியா அனைத்தையும்
ஆகாஸ் அரசன் அவனுக்குக் கட்டளை
யிட்டபடி செய்தான்.
17 மேலும் ஆகாஸ் அரசன் வண்டிகளில்
உள்ள சவுக்குகளை (பீடங்களை) அறுத்
தான். அவற்றின் மேலுள்ள கொப்பறைகளை
எடுத்தான். வெண்கலக் காளைகளின் மேலி
ருந்த பெரிய (கடல்) தொட்டியை இறக்கி
கற்களின் தள வரிசையில் வைத்தான்.
18 ஆலயத்தின் உள்ளே கட்டப்பட்டிருந்த
ஓய்வுநாள் (மண்டபத்தை) ஆகாஸ் நீக்கி
னான். மேலும் அரசன் பிரவேசிக்கும்
மண்டபத்தையும் கர்த்தருடைய ஆலயத்தி
லிருந்து நீக்கினான். இவை அனைத்தையும்
ஆலயத்திலிருந்து நீக்கி அரசன் அவற்றை
அசீரியரின் அரசனுக்குக் கொடுத்தான்.
19 ஆகாஸ் செய்த மற்ற அருஞ்செயல்கள்
அனைத்தும் ‘யூத அரசர்களின் வரலாறு’
என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளது.
20 ஆகாஸ் மரித்ததும் தாவீது நகரத்திலே
தனது முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்
பட்டான். அவனுக்குப் பிறகு அவனது
மகனான எசேக்கியா புதிய அரசன் ஆனான்.

## இஸ்ரவேலை ஓசெயா ஆளத்தொடங்கியது

17 யூதாவின் அரசனாகிய ஆகாசின்
12ஆம் ஆட்சியாண்டில் ஏலாவின்
மகனாகிய ஓசெயா என்பவன் இஸ்ரவேலின்
அரசனானான். இவன் ஒன்பது ஆண்டுகள்
சமாரியாவில் இருந்து இஸ்ரவேலை
அரசாண்டான். 2 கர்த்தரால் தவறு என்று
குறிப்பிடப்பட்ட காரியங்களையே ஓசெயா
செய்துவந்தான். ஆனால் இவன் இதற்குமுன்
இஸ்ரவேலை ஆண்ட அரசர்களைப்போன்று
அவ்வளவு கெட்டவனாக இல்லை.
3 அசீரியாவின் அரசனான சல்மனாசார்
என்பவன் இவனுக்கு எதிராகப் போர்செய்ய
வந்தான். ஓசெயா சல்மனாசாரின் சேவகன்
ஆகி அவனுக்கு வரி செலுத்திவந்தான்.
4 ஆனால், பிறகு ஓசெயா தனக்கு எதிராகச்
சதி செய்வதை அசீரியா அரசன் அறிந்துக்
கொண்டான். ஓசெயா எகிப்து அரசனுக்குத்
தூதுவர்களை அனுப்பியிருந்தான். எகிப்து
அரசனின் பெயர் சோ ஆகும். அந்த
ஆண்டில், முன்னைய ஆண்டுகளைப்
போன்று ஓசெயா சல்மனாசாருக்கு வரி
செலுத்தவில்லை. அதனால் சல்மனாசார்
ஓசெயாவைப் பிடித்து சிறையில் போட்
டான்.
5 பிறகு அசீரிய அரசன் இஸ்ரவேல்
முழுவதும் பயணம் செய்தான். அவன்
சமாரியாவிற்கு வந்தான். அவன் அதனை
மூன்று ஆண்டுகள் முற்றுகையிட்டான்.
6 இஸ்ரவேலின் அரசனான ஓசெயாவின்
ஒன்பதாவது ஆட்சியாண்டில் அசீரிய
அரசன் சமாரியாவைப் பிடித்தான். இஸ்ர
வேலர்களைச் சிறைபிடித்து அசீரியாவுக்குக்
கொண்டுபோனான். அவன் அவர்களை
கோசான் ஆற்று ஓரமான ஆலாகிலும்
ஆபோரிலும் மேதியரின் நகரங்களிலும்
குடிவைத்தான்.
7 இஸ்ரவேலர்கள் தங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்ததால்
அவர்களுக்கு இவ்வாறு நடந்தது. கர்த்தர்
தாமே இஸ்ரவேலர்களை எகிப்தின் பார்
வோனிடமிருந்து மீட்டு வெளியே கொண்டு
வந்தார்! ஆனால் அவர்கள் வேறு தெய்வங்
களை தொழுதுகொள்ள ஆரம்பித் தனர்.
8 அவர்களுக்கு முன்பு (அந்நிலப் பகுதியில்)
அங்கிருந்து கர்த்தர் துரத்தியிருந்த
நாட்டினரின் பழக்கங்களை அவர்கள்
பின்பற்றினார்கள். அவர்களும் தங்கள் அரசர்
கள் செய்து கொண்டிருந்தவற்றையே (தீமை)
செய்தனர். 9 இஸ்ரவேலர்கள் இரகசியமாக
தங்கள் தேவனாகிய கர்த்தருக்கு எதிராகக்
காரியங்களைச் செய்தனர். அந்தக்
காரியங்கள் தவறாயின.
இஸ்ரவேலர்கள் தங்களது சிறிய நகரங்கள்
முதல் பெரிய கோட்டையமைந்த நகரங்
கள்வரை அவர்களின் எல்லா நகரங்களிலும்
மேடைகளை பொய்த் தெய்வங்களின்
ஆலயங்களைக் கட்டினார்கள். 10 இவர்கள்
ஞாபகக் கற்களையும் அசெரியா தூண்
களையும் ஒவ்வொரு மலையின் உச்சியிலும்
ஒவ்வொரு பச்சை மரத்தடிகளிலும் உருவாக்
கினார்கள். 11 இஸ்ரவேலர்கள் அங்கு நறு

மணப் பொருட்களை எரித்து தொழுது
கொண்டனர். ஏற்கனவே கர்த்தரால்
அந்நாட்டைவிட்டு வெளியே துரத்தப்பட்ட
நாட்டினரைப்போன்றே இவர்களும் செய்து
வந்தனர். இஸ்ரவேலர்கள் தீயச்செயல்களைச்
செய்துக்கொண்டிருந்தனர். அது கர்த்தரைக்
கோபங்கொள்ள செய்தது. 12கர்த்தர், "நீங்கள்
இதனைச் செய்யக்கூடாது" என்று ஏற்
கனவே சொல்லியிருந்தாலும் அவர்கள்
விக்கிரகங்களுக்குச் சேவைசெய்தனர்.
13இஸ்ரவேலர்களையும் யூத ஜனங்களை
யும் ஒவ்வொரு தீர்க்கதரிசிகள் மூலமும்
ஞானதிருஷ்டிக்காரர்கள் மூலமும் கர்த்தர்
எச்சரித்து வந்தார். கர்த்தர், "நீங்கள் செய்யும்
கெட்ட செயல்களில் இருந்து திரும்புங்கள்.
எனது கட்டளைகளுக்கும் சட்டங்களுக்கும்
கீழ்ப்படியுங்கள். உங்கள் முற்பிதாக்களுக்கு
நான் கொடுத்த சட்டங் களைப்
பின்பற்றுங்கள். இச்சட்டங்களை நான்
உங்களுக்கு எனது ஊழியக்காரராகிய
தீர்க்கதரிசிகள் மூலம் கொடுத்துவந்தேன்"
என்றார்.
14ஆனால் ஜனங்கள் அதனைக் கவனிக்க
வில்லை. அவர்கள் தம் முற்பிதாக்களைப்
போலவே பிடிவாதமுள்ளவர்களாய் இருந்
தனர். அவர்களின் முற்பிதாக்களும் தமது
தேவனாகிய கர்த்தரை நம்பவில்லை. 15ஜனங்
கள் கர்த்தருடைய சட்டங்களை மறுத்தனர்.
தமது முற்பிதாக்களோடு கர்த்தர் செய்து
கொண்ட உடன்படிக்கையும் மறுத்தனர்.
கர்த்தருடைய எச்சரிக்கைகளையும் அவர்
கள் கவனிக்க மறுத்தனர். அவர்கள் பய
னற்ற விக்கிரகங்களை தொழுதுகொண்டு
பயனற்றுப்போனார்கள். அவர்கள் தம்மைச்
சுற்றியுள்ள ஜனங்களைப் போன்று வாழ்ந்
தனர். ஆனால் அது கர்த்தரால் விலக்கப்
பட்ட வாழ்க்கையாய் இருந்தது.

16ஜனங்கள் அவர்களது தேவனாகிய
கர்த்தருடைய கற்பனைகளைப் பின்பற்று
வதை நிறுத்தினார்கள். அவர்கள் இரண்டு
பொற்கன்றுக் குட்டிகளையும் உருவத் தூண்
களை நாட்டி வானத்தில் உள்ள நட்சத்திரங்
களையெல்லாம் தொழுதுகொண்டனர். பாகா
லுக்குச் சேவைசெய்தனர். 17நெருப்பில்
தங்கள் மகன்களையும் மகள்களையும் அவர்
கள் பலியாகக் கொடுத்தனர். எதிர்காலத்தை
அறிந்துகொள்ள மந்திரங்களையும் சூனியங்
களையும் பயன்படுத்தினார்கள். பாவம்
என்று கர்த்தர் சொன்னவற்றுக்கு அவர்கள்
தம்மைத்தாமே பலியாக்கிக்கொண்டு கர்த்தரு
டைய கோபத்துக்கு ஆளானார்கள். 18எனவே
இஸ்ரவேலில் கர்த்தர் மிகவும் கோபங்
கொண்டு அவர்களைத் தம் பார்வையி
லிருந்து அப்புறப்படுத்தினார். யூதாவின்
கோத்திரத்தைத் தவிர, வேறு எந்த இஸ்ர
வேலர்களையும் கர்த்தர் அங்கு விட்டு
வைக்கவில்லை.

### யூத ஜனங்களும் குற்றவாளியானது

19யூத ஜனங்களும் கூட தங்கள் தேவனா
கிய கர்த்தருடைய கட்டளைகளுக்குக்
கீழ்ப்படியவில்லை. அவர்களும் இஸ்ரவேல்
ஜனங்களைப்போலவே வாழ்ந்தனர்.
20இஸ்ரவேலின் வழிவந்தவர்கள் அனை
வரையும் கர்த்தர் விலக்கினார். அவர்களுக்கு
நிறைய துன்பங்களைக் கொடுத்தார். அவர்
களது எதிரிகளால் அவர்களை அழிய
விட்டார். இறுதியில், தமது பார்வையில்
இருந்து தூர விலக்கினார். 21கர்த்தர் இஸ்ர
வேலைத் தாவீதின் (வீட்டைவிட்டுப்)
குடும்பத்தை பிரித்தார், நேபாத்தின் மகனான
யெரொபெயாமை இஸ்ரவேலருக்கு அரச
னாக்கினர். அப்போது அவன் இஸ்ர
வேலரைக் கர்த்தரைவிட்டு விலகவும் பெரும்
பாவங்கள் செய்யவும் வைத்துவிட்டான்.
22எனவே இஸ்ரவேலர் யெரொபெயாமின்
பாவங்களைப் பின்பற்றினார்கள். அப்பாவங்
களைச் செய்து கொண்டிருக்காத படி
23தம்மை கர்த்தர் தமது பார்வையிலிருந்து
அவர்களை விலக்கும்வரை தடுத்துக்
கொள்ளவில்லை. ஏற்கனவே இவ்வாறு
நடக்கும் என்று கர்த்தர் கூறியிருந்தார்.
இதனைத் தனது தீர்க்கதரிசிகள் மூலம்
சொல்லிவந்தார். எனவே, இஸ்ரவேலர்கள்
தங்கள் நாட்டிலிருந்து அசீரியாவிற்குக்
கொண்டு செல்லப்பட்டனர். இன்றுவரை
அங்கேயே இருக்கின்றனர்.

### சமாரியர்களின் தொடக்கம்

24அசீரியாவின் அரசன் இஸ்ரவேலரை
சமாரியாவிலிருந்து வெளியேற்றினான்.
பிறகு அவன் பாபிலோன், கூத்தா, ஆபா,
ஆமாத், செப்பர்வாயிமிலும் ஆகிய நாடு
களிலிருந்து ஜனங்களை அங்கே குடியேற்றி
னான். அவர்கள் சமாரியாவிலும் அதைச்
சுற்றியுள்ள இடங்களிலும் வாழ்ந்தனர்.
25அவர்கள் சமாரியாவில் வாழத்தொடங்கிய
போது, கர்த்தரை உயர்வாக மதிக்கவில்லை.
எனவே, கர்த்தர் சிங்கங்களை அனுப்பி
அவர்களைத் தாக்கினார். அவர்களில்
சிலரை அச்சிங்கங்கள் கொன்றுபோட்டன.
26சிலர் அசீரியாவின் அரசனிடம், "நீங்கள்
வெளியிடங்களில் இருந்து கொண்டுவந்து
சமாரியாவில் குடியேற்றிய ஜனங்கள்
அந்நாட்டு தெய்வத்தின் சட்டங்களைத்
தெரிந்துகொள்ளவில்லை. அதனால் அந்த
தெய்வம் அவர்களைத் தாக்க சிங்கங்களை
அனுப்புகிறார். அவை அந்நாட்டு தெய்
வத்தின் சட்டங்களை அறியாதவர்களைக்
கொன்றுபோடுகிறது" என்றார்கள்.
27அதற்கு அசீரியாவின் அரசன், "நீங்கள்
சமாரியாவிலிருந்து சில ஆசாரியர்களை
அழைத்துவந்தீர்கள் அல்லவா. சமாரியா
வுக்கு நான் கைப்பற்றி வந்த ஆசாரியர்களில்
ஒருவனைத் திருப்பியனுப்பி அவனை
அங்கே வாழும்படி விடுங்கள். பிறகு அவன்

ஜனங்களுக்கு அந்நாட்டின் தெய்வத்தின்
சட்டங்களைக் கற்றுத்தருவான்" என்றான்.
28எனவே அவ்வாறே சமாரியாவிலிருந்து
அழைத்துப்போயிருந்த ஆசாரியர்களில்
ஒருவனை பெத்தேல் என்னும் இடத்தில்
வாழவைத்தனர். அவன் கர்த்தரை எவ்வாறு
கனப்படுத்துவது என்று ஜனங்களுக்குக்
கற்றுத்தந்தான்.
29ஆனால் அந்தந்த ஜாதியைச் சேர்ந்த
வர்கள் தங்கள் தெய்வங்களை உருவாக்கி
னார்கள். அவற்றை அவர்கள் குடியேறிய
நகரங்களில் சமாரியர் உருவாக்கிய
மேடைகளின் கோவில்களில் வைத்தனர்.
30பாபிலோனிய ஜனங்கள் சுக்கோத்பெனோத்
என்னும் பொய்த் தெய்வத்தையும், கூத்தின்
ஜனங்கள் நேர்கால் என்னும் பொய்த்
தெய்வத்தையும், ஆமாத்தின் ஜனங்கள்
அசிமா என்னும் பொய்த் தெய்வத்தையும்,
31ஆவியர்கள் நிபேகாஸ், தர்தாக் என்னும்
பொய்த் தெய்வங்களையும் உண்டாக்கி
னார்கள். செப்பர்வியர் செப்பர்வாயிமின்
தெய்வங்களாகிய அத்ரமலேக்குக்கும் அன்ன
மலேக்குக்கும் தங்கள் பிள்ளைகளை நெருப்
பில் தகனபலி கொடுத்துவந்தனர்.
32அவர்கள் கர்த்தருக்கும் ஆராதனைச்
செய்தார்கள். அவர்கள் பொய்த் தெய்வங்
களுக்கு அவர்களுக்குள் ஆசாரியர்களைத்
தேர்ந்தெடுத்துக் கொண்டனர். இந்த
ஆசாரியர்கள் ஜனங்களுக்காக அவ்வாலயங்
களில் பலிகொடுத்து வந்தனர். 33அவர்கள்
கர்த்தரை மதித்தார்கள். அதே சமயத்தில்
தமக்குச் சொந்தமான பொய்த் தெய்வங்
களையும் சேவித்தார்கள். தம் சொந்த
நாடுகளில் வழிபட்டு வந்த விதத்திலே
தம் சொந்தத் தெய்வங்களை அங்கும்
சேவித்துவந்தனர்.
34இன்றும் அவர்கள் முன்பு போலவே
வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் கர்த்தரை
கனப்படுத்துவதில்லை. அவர்கள் இஸ்ர
வேலர்களின் விதிகளுக்கும் கற்பனை
களுக்கும் அடிபணிவதில்லை. இஸ்ரவேல்
என்று பெயரிட்ட யாக்கோபுவின் ஜனங்
களுக்குக் கற்பித்த சட்டத்திற்கும் கற்பனை
களுக்கும் அடிபணிவதில்லை. 35இஸ்ரவேல்
ஜனங்களோடு கர்த்தர் ஒரு உடன்படிக்கைச்
செய்துகொண்டார். அவர் அவர்களிடம்,
"நீங்கள் அந்நிய தெய்வங்களை மதிக்கக்
கூடாது. அதோடு அவற்றைத் தொழுது
கொள்ளவோ, அவற்றுக்குச் சேவை
செய்யவோ பலிகள் செலுத்தவோ கூடாது.
36ஆனால் நீங்கள் கர்த்தரைப் பின்பற்ற
வேண்டும். தேவனாகிய கர்த்தரே உங்களை
எகிப்திலிருந்து மீட்டார். உங்களைக்
காப்பாற்ற கர்த்தர் தனது பெரிய
வல்லமையைப் பயன்படுத்தினார். நீங்கள்
கர்த்தரைத் தொழுதுகொண்டு அவருக்குப்
பலிகள் தரவேண்டும். 37நீங்கள் அவர்
உங்களுக்காக எழுதிய விதிகளுக்கும்,
சட்டங்களுக்கும், போதனைகளுக்கும்,
கட்டளைகளுக்கும் அடிபணியவேண்டும்.
எப்பொழுதும் இவற்றுக்கு அடிபணிய
வேண்டும். வேறு தெய்வங்களை மதிக்கக்
கூடாது. 38நான் உங்களோடு செய்த
உடன்படிக்கையை மறக்கக்கூடாது. நீங்கள்
பிற தெய்வங்களை மதிக்கக்கூடாது. 39உங்கள்
தேவனாகிய கர்த்தரை மட்டுமே நீங்கள்
மதிக்கவேண்டும்! பிறகு அவர் உங்கள்
பகைவர்களிடமிருந்து உங்களைக்
காப்பாற்றுவார்" என்றார்.
40ஆனால் இஸ்ரவேலர்கள் இதற்கு
செவிசாய்க்கவில்லை. அவர்கள் அதற்கு
முன்னால் செய்தவற்றையே மீண்டும்
தொடர்ந்து செய்துவந்தனர். 41எனவே,
இப்போது வேறு நாட்டினர் கர்த்தரை
மதிப்பதோடு தங்கள் தெய்வங்களையும்
சேவித்து வருகின்றனர். அவர்களின்
பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் இதனை
தங்கள் முற்பிதாக்கள் செய்ததுபோலவே
தொடர்ந்து இன்றுவரையிலும்கூட அவர்கள்
செய்து வருகின்றனர்.

### யூதாவில் எசேக்கியா அரசாள தொடங்கியது

18 எசேக்கியா என்பவன் யூத அரசன்
ஆகாஸின் மகன் ஆவான். இவன்
ஆளத்தொடங்கும் போது இஸ்ரவேலில்
ஏலாவின் மகன் ஓசெயா என்பவனின்
மூன்றாம் ஆட்சியாண்டு நிகழ்ந்தது.
2எசேக்கியா அரசாள வந்தபோது அவனுக்கு
25 வயது. இவன் எருசலேமில் 29 ஆண்டுகள்
அரசாண்டான். இவனது தாயின் பெயர்
ஆபி ஆகும். இவள் சகரியாவின்
மகளாவாள்.
3இவன் தனது முற்பிதாவாக தாவீதைப்
போன்றே கர்த்தர் சொன்ன சரியான
செயல்களைச் செய்துவந்தான்.
4எசேக்கியா மேடைகளை பொய்த்
தெய்வங்களின் ஆலயத்தை அழித்தான்.
அவர்களின் ஞாபகக் கற்களையும்கூட
உடைத்தான். அசெரியாவின் உருவத்
தூண்களை வெட்டிப்போட்டான். மோசே
செய்த வெண்கல பாம்பை உடைத்துப்
போட்டான். இஸ்ரவேல் ஜனங்கள் அதற்கு
நறுமணப் பொருட்களை எரித்தனர்.
இவ்வெண்கலப் பாம்பானது 'நிகுஸ்தான்'
என்று அழைக்கப்பட்டது. ஏனெனில்
அன்றுவரை இஸ்ரவேலர்கள் இந்த
வெண்கலப் பாம்பை தொழுதுவந்தனர்.
5அவன் இஸ்ரவேலரின் தேவனாகிய
கர்த்தர்மேல் நம்பிக்கை வைத்தான். யூதாவின்
அரசர்கள் அனைவரிலும் எசேக்கியாவைப்
போன்று அவனுக்கு முன்னும் அவனுக்குப்
பின்னும் ஆட்கள் இல்லை. 6எசேக்கியா
கர்த்தருக்கு மிகவும் நம்பிக்கை உள்ளவனாக
இருந்தான். இவன் கர்த்தரைப் பின்
பற்றுவதை விடவில்லை. மோசேக்குக்

கர்த்தர் கொடுத்த கட்டளைகளுக்கும் அவன்
கீழ்ப்படிந்து வந்தான். 7கர்த்தரும் எசேக்கியா
வோடு இருந்தார். எசேக்கியா தான் செய்கிற
அனைத்திலும் வெற்றிகரமாக இருந்தான்.
எசேக்கியா அசீரியாவின் ஆட்சித்
தலையை உடைத்தெறித்தான். அசீரி
யாவின் அரசனுக்குச் சேவைசெய்வதை
நிறுத்தி விட்டான். 8எசேக்கியா பெலிஸ்தி
யர்களைத் தோற்கடித்தான். காசாவரையும்
அதன் சுற்று வட்டாரங்களையும் வென்
றான். பெலிஸ்தியரின் சிறியதும் பெரிய
துமான (கோட்டையமைந்த) நகரங்களை
யெல்லாம் தோற்கடித்து விட்டான்.

### அசீரியர்கள் சமாரியாவைக் கைப்பற்றியது

9அசீரியாவின் அரசனான சல்மனாசார்
சமாரியாவிற்கு எதிராகச் சண்டையிட் டான்.
அவனது படை நகரத்தைச் சுற்றிக்
கொண்டது. யூதாவில் எசேக்கியாவின்
நான்காம் ஆட்சியாண்டின் போது இது
நடந்தது. (இது இஸ்ரவேல் அரசனான
ஏலாவின் மகன் ஓசேயாவின் ஏழாம்
ஆட்சியாண்டு.) 10மூன்று ஆண்டுகளுக்குப்
பிறகு சல்மனாசார் சமாரியாவைக் கைப்
பற்றினான். யூத அரசனான எசேக்கியாவின்
ஆறாம் ஆட்சியாண்டில் சமாரியாவை இவன்
பிடித்துக்கொண்டான். (இது இஸ்ர வேல்
அரசனான ஓசேயாவின் ஒன்பதாம்
ஆட்சியாண்டு.) 11அசீரியாவின் அரசன்
இஸ்ரவேலர்களை அசீரியாவுக்குச் சிறை
பிடித்துக் கொண்டுசென்றான். அவன்
அவர்களை கோசான் ஆற்றோரங்களிலுள்ள
ஆலாக், ஆபோர், மேதியரின் நகரங்கள்
ஆகியவற்றில் குடியேற்றினான். 12இஸ்ர
வேலர்கள் தமது தேவனாகிய கர்த்தருக்கு
அடிபணியாததால் இது இவ்வாறு நிகழ்ந்தது.
அவர்கள் கர்த்தருடைய உடன்படிக்கையை
உடைத்தனர். அவர்கள், கர்த்தருடைய
தாசனாகிய மோசே கட்டளையிட்ட
வற்றுக்கு அவர்கள் அடிபணியவில்லை.
இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தருடைய உடன்
படிக்கையைக் கேட்காததோடு, அதனை
அவர்கள் செய்யவில்லை.

### அசீரியா யூதாவைப் பிடிக்கத் தயாராகிறது

13எசேக்கியாவின் 14வது ஆட்சியாண்டின்
போது சனகெரிப் எனும் அசீரியாவின்
அரசன், யூதாவிலுள்ள கோட்டையமைந்த
நகரங்கள் அனைத்திலும் தாக்குதல் நடத்தி
னான். இவன் எல்லா நகரங்களையும்
தோற்கடித்தான். 14பிறகு யூதாவின் அரச
னான எசேக்கியா, லாகீசிலிருந்த
அசீரியாவின் அரசனுக்கு தூது அனுப்பி
னான். அவன், "நான் தவறு செய்து
விட்டேன். என்னைத் தனியாக விட்டு
விடுங்கள். பிறகு உங்களுக்கு வேண்டியதை
நான் தருவேன்" என்றான்.
பிறகு அசீரியாவின் அரசன் யூத
அரசனான எசேக்கியாவிடம் 300 தாலந்து
வெள்ளியையும் 30 தாலந்து பொன்னையும்
கட்டும்படி கூறினான். 15கர்த்தருடைய
ஆலயத்திலும் அரண்மனை கருவூலத்திலும்
உள்ள வெள்ளி முழுவதையும் எசேக்கியா
கொடுத்தான். 16அப்பொழுது, கர்த்தருடைய
ஆலய வாசலில் உள்ள கதவுகளிலும் நிலை
களிலும் தான் பதித்திருந்த பொன்னையும்
எடுத்து அசீரிய அரசனுக்குக் கொடுத்தான்.

### அசீரியாவின் அரசன் எருசலேமிற்கு ஆட்களை அனுப்புகிறான்

17அசீரியாவின் அரசன் தனது மூன்று
மிக முக்கியமான படைத்தளபதி உள்ளப்
பெரும் படையோடு எருசலேமிற்கு எசேக்
கியா அரசனிடம் அனுப்பினான். அவர்கள்
லாகீசிலிருந்து எருசலேமிற்குச் சென்றனர்.
அவர்கள் வண்ணார் துறையின் வழியி
லுள்ள மேல்குளத்து வாய்க்காலில் நின்றனர்.
18அவர்கள் அரசனை வரவழைத் தார்கள்.
அப்பொழுது இல்க்கியாவின் மகனான
எலியாக்கீம் எனும் அரண்மனை விசாரிப்
புக்காரனும் செப்னா என்னும் சம்பிரதியும்
ஆசாப்பின் குமாரனாகிய யோவாக் எனும்
கணக்கனும் அவர்களைச் சந்திக்கப்
போனார்கள்.
19தளபதிகளில் ஒருவன் (அவனுக்கு
ரப்சாக்கே என்ற பட்டம் இருந்தது)
அவர்களிடம், "மாபெரும் அசீரிய அரசன்
சொன்னதை எசேக்கியாவிடம் கூறவும்"
என்று சொன்னான். அவை வருமாறு:
எதன் மேல் உன் நம்பிக்கையை
வைத்திருக்கிறாய்? 20நீ வீணான
வார்த்தைகளையே பேசுகிறாய். நீ,
"போருக்கான ஆலோசனையும்
பலமும் உண்டு" என்று சொல்கிறாயா!
நீ எனக்கு எதிராகக் கலகம் செய்ய,
யார் மீது நம்பிக்கை வைத்திருக்
கிறாய்? 21உடைந்த நாணல் புல்லால்
ஆன கைத்தடியை நம்புகிறாய். எகிப்து
இத்தகைய கைத்தடியைப் போன்றது!
ஒருவன் இக்கைத்தடியின் மீதே
முழுக்கச் சாய்ந்தால், அதுவும்
உடையும் கையைக் கிழித்து காயத்தை
உருவாக்கும். எகிப்தும் தன்னை
நம்புகிறவர் களுக்கு இவ்வாறே
செய்துவருகிறது. 22ஒரு வேளை நீ,
"எங்கள் தேவனாகிய கர்த்தரை
நம்புகிறோம்" என்று சொல்லலாம்.
ஆனால் எசேக்கியா கர்த்தருடை
மேடைகளையும் பலிபீடங்களையும்
அகற்றினான். அவன் யூதாவையும்
எருசலேமையும் நோக்கி,
"எருசலேமில் உள்ள பலிபீடத்தின்
முன் மட்டுமே ஆராதிக்கவேண்டும்"

என்று கூறினானே. 23இப்பொழுது
எங்கள் எஜமானனான அசீரிய அரச
னோடு இந்த ஒப்பந்தம் செய்துகொள்.
நான் 2,000 குதிரைகளை உன்னிடம்
போதுமான சவாரி செய்பவர்கள்
இருந்தால் கொடுப்பதாக உறுதி கூறுகி
றேன். 24உன்னால் எங்கள் எஜமான
னின் அதிகாரிகளைக் கூட வெல்ல
முடியாது! இரதங்களுக்கும் குதிரை
வீரர்களுக்கும் நீங்கள் எகிப்தைச்
சார்ந்து இருக்கவேண்டும்! 25நான்
கர்த்தருடைய துணை இல்லாமல்
எருசலேமை அழிக்க வரவில்லை.
கர்த்தர் என்னிடம், "அந்த நாட்டிற்கு
எதிராகப் போய் அதனை
அழித்துவிடு!" என்றார்' என்றுச்
சொன்னான்.

26அப்போது இல்க்கியாவின் மகனான
எலியாக், செப்னா, யோவாக் மூவரும்
தளபதியான ரப்சாக்கேயைப் பார்த்து,
"எங்களோடு தயவு செய்து ஆராமிக் மொழி
யில் பேசும். அந்த மொழிதான் எங்களுக்குப்
புரியும். யூதமொழியில் எங்களோடு பேச
வேண்டாம். ஏனெனில் சுவரிலுள்ள ஜனங்
களின் காதுகளும் அவற்றைக் கேட்கும்!"
என்றார்கள்.
27ஆனால் ரப்சாக்கே அவர்களிடம்,
"எனது ஆண்டவன் உங்களிடமும் உங்கள்
அரசரிடமும் மட்டும் பேச அனுப்பவில்லை.
சுவருக்கு மேலேயுள்ள ஜனங்களுடனும் நான்
பேசுகிறேன்! அவர்கள் உங்களோடு தங்கள்
மலத்தைத் தின்று சிறுநீரைக் குடித்துக்
கொள்வார்கள்!" என்றான்.
28பிறகு தளபதி யூத மொழியில் மிகச்
சத்தமாக, "இச்செய்தியை கேளுங்கள்!
அசீரியாவின் மிகப்பெரிய அரசன் உங்க
ளுக்குச் செய்தி அனுப்பியுள்ளான். 29அரசன்,
'எசேக்கியா உங்களை முட்டாளாக்கும்படி
விடாதீர்கள்! எனது பலத்திலிருந்து உங்
களை அவனால் காப்பாற்ற முடியாது!'
என்கிறான். 30அதுபோல் கர்த்தர் மீது
நம்பிக்கையை அவன் ஏற்படுத்தும்படியும்
விடாதீர்கள். ஏனென்றால் எசேக்கியா,
'கர்த்தர் நம்மைக் காப்பாற்றுவார்!
இந்நகரத்தை அசீரிய அரசனால் தோற்கடிக்க
முடியாது!' என்று கூறுகிறான். 31ஆனால்
அவன் கூறுவதைக் கேட்கவேண்டாம்!
"அசீரிய அரசன்: 'என்னோடு சமாதான
மாக இருங்கள். என்னோடு வெளியே
வாருங்கள். பிறகு ஒவ்வொருவரும் தம்
சொந்த திராட்சை பழங்களைத் தின்னலாம்,
அத்திப்பழங்களைத் தின்னலாம், சொந்தக்
கிணற்றிலுள்ளத் தண்ணீரைக் குடிக்கலாம்.
32நீங்கள் இதனை நான் உங்களை
அழைத்துப்போய் இதுபோன்ற இன்னொரு
நாட்டில் குடியேற்றும்வரை செய்யலாம்.
அந்த நிலம் தானியங்களும் திராட்சைரசமும்
நிறைந்தது, அப்பமும் திராட்சைக்
கொடிகளும் நிறைய ஒலிவமும் தேனும்
நிறைந்தது. பிறகு நீங்கள் மரிக்கவேண்டாம்,
வாழலாம். எசேக்கியா கூறுவதை கேளாதீா
கள். அவன் உங்கள் மனதை மாற்ற
முயல்கிறான். அவனோ, 'கர்த்தர் நம்மைக்
காப்பார்' என்கிறான். 33இதுபோல் வேறு
எந்த நாட்டிலாவது அங்குள்ள தேவர்கள்
அந்த நாட்டை அசீரிய அரசனிடமிருந்து
காப்பாற்றி இருக்கிறதா? இல்லையே!
34ஆமாத் மற்றும் அர்பாத் எனும் தெய்வங்கள்
என்ன ஆனார்கள்? செப்பர்வாயிம், ஏனா,
ஈவாப் நகரங்களின் தெய்வங்கள் எங்கே?
அவர்கள் சமாரியாவை என்றைக்காவது
காப்பாற்றியதுண்டா? இல்லை! 35வேறு எந்த
நாட்டிலேனும் வேறு எந்த தெய்வங்களும்
என்னிடமிருந்து அந்நாட்டைக் காப்பாற்றிய
துண்டா? இல்லை! கர்த்தர் என்னிடமிருந்து
எருசலேமைக் காப்பாற்றுவாரா? காப்பாற்ற
முடியாது" என்றான்.
36ஆனால் ஜனங்கள் அமைதியாக இருந்
தனர். அவர்கள் தளபதிக்கு ஒரு வார்த்தை
கூட கூறவில்லை. ஏனென்றால் அரச னான
எசேக்கியா அவர்களுக்குக் கட்டளை
யிட்டிருந்தான். அவன், "நீங்கள் அவனுக்கு
எதையும் சொல்லவேண்டாம்" என்று கூறி
இருந்தான்.
37இல்க்கியா என்பவனின் மகனான
எலியாக்கீம், (அரசனின் அரண்மனைக்குப்
பொறுப்பானவன் எலியாக்கீம்.) செப்னா
(செயலாளர்.) ஆகாப் என்பவனின் மகன்
யோவாக் (பதிவேடுகள் பாதுகாப்பாளர்.)
எல்லாரும் எசேக்கியாவிடம் வந்தார்கள்.
அவர்களின் ஆடைகள் கிழிந்தவை.
(அவர்களின் துக்கத்தையும் கவலையையும்
காட்டியது.) ஆசாரியன் தளபதி சொன்னதை
யெல்லாம் எசேக்கியாவிடம் அவர்கள்
சொன்னார்கள்.

### அரசனான எசேக்கியா தீர்க்கதரிசியான ஏசாயாவோடு பேசியது

19 அரசனான எசேக்கியா அவற்றைக்
கேள்விப்பட்டான். தன் ஆடைகளைக்
கிழித்துக்கொண்டு முரட்டு துணியை
அணிந்தான். தனது துக்கத்தையும் பாதிப்
பையும் வெளிப்படுத்தினான். பிறகு அவன்
கர்த்தருடைய ஆலயத்திற்குள் சென்றான்.
2அவன் ஆமோத்சின் மகனான தீர்க்கதரிசி
ஏசாயாவிடம் அரண்மனை விசாரிப்புக்
காரனான எலியாக்கீம் என்பவனையும்,
செயலாளனான செப்னா என்பவனையும்
மூத்த ஆசாரியர்களையும் அனுப்பி
வைத்தான். அவர்கள் தங்கள் கவலையை
வெளிப்படுத்தும் முறையில் முரட்டு
ஆடையை அணிந்திருந்தனர். 3அவர்கள்
ஏசாயாவிடம், "'இன்று பிரச்சனைக்குரிய
நாள். நாம் தவறாக உள்ளோம் என்பதைக்
காட்டும் நாள். இது குழந்தைகளின் பிரசவ

காலம்போல் உள்ளது. ஆனால் குழந்தையைப் பெறுவதற்கோ பலமில்லை.
4அசீரிய அரசனின் தளபதியால், ஜீவனுள்ள தேவனைப்பற்றிய கெட்ட செய்திகள் சொல்லி அனுப்பப்பட்டன. உங்கள் தேவனாகிய கர்த்தர் இவை எல்லாவற்றையும் கேட்கலாம். ஒருவேளை கர்த்தர் பகைவனைத் தண்டிக்கலாம். இப்போதும் உயிரோடுள்ளவர்களுக்காக வேண்டுதல் செய்க' என்று எசேக்கியா கூறினார்" என்றான்.
5எசேக்கியா அரசனின் அதிகாரிகள் ஏசாயாவிடம் சென்றனர். 6ஏசாயா அவர்க
ளிடம், "எசேக்கியா என்னும் உங்கள் அரசனிடம் இதைக்கூறுங்கள்: 'என்னைப் பற்றி அசீரியாவின் அதிகாரிகள் வேடிக்கையாகச் சொன்னதைப்பற்றி பயப்பட
வேண்டாம். 7நான் அவனில் ஒரு ஆவியை வைப்பேன். அவன் ஒரு வதந்தியைக் கேட்பான். பிறகு அவன் தன் சொந்த நாட்டுக்கு ஓடிப்போவான். அவன் சொந்த நாட்டில் வாளால் கொல்லப்படும்படி செய்வேன் என்று கர்த்தர் கூறுகிறார்'" என்று சொன்னான்.

### எசேக்கியாவை அசீரிய அரசன் மீண்டும் எச்சரிக்கிறான்

8அசீரிய அரசன் லாகீசை விட்டுப் புறப்பட்டுவிட்டதை அசீரிய தளபதி கேள்விப்பட்டான். அவன் திரும்பிவந்த தனது அரசன் லிப்னாவில் சண்டையிடுவதாக அறிந்தான்.
9அசீரிய அரசன் எத்தியோப்பியா அரசனான தீராக்காப்பற்றி ஒரு வதந்தியைக் கேள்விப்பட்டான். அது, "உனக்கு எதிராக சண்டையிட தீராக்கா வந்துள்ளான்!" என்று சொன்னது.

எனவே அசீரிய அரசன் மீண்டும் ஒரு தூதுவனை எசேக்கியாவிடம் அனுப்பினான். அவன் அவர்களிடம் செய்தியைச் சொன்னான். அவன் சொன்னது:

10யூத அரசனான எசேக்கியாவிடம் கூறுங்கள்!

"நீ நம்புகின்ற தேவன் உன்னை முட்டாளாக்குவதற்கு விடாதே. அவனோ, 'அசீரிய அரசன் எருசலேம் நகரை வெல்லமாட்டான்!' என்று சொல்கிறான். 11அசீரிய அரசன் மற்ற நாடுகளில் செய்துள்ளவற்றைப்பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய். நாங்கள் அவற்றை முழுமையாக அழித்து விட்டோம்! நீ காப்பாற்றப்படுவாயா? இல்லை!
12அந்நாட்டின் தெய்வங்கள் அந்நாட்டு ஜனங்களைக் காப்பாற்றவில்லை. எனது முற்பிதாக்கள் அவர்களை அழித்தனர். கோசான், ஆரான், ரேத்சேப், தெலாசாரிலிருந்த ஏதேனின் ஜனங்கள் ஆகியோரையும் அழித்தனர்!
13ஆமாத்சின் அரசன் எங்கே? அர்பாத்தின் அரசன் எங்கே? செப்பர்வாயிம் நகர அரசன் எங்கே? ஏனா ஈவா நகரங்களின் அரசர்களும் எங்கே? அவர்கள் அழிக்கப்பட்டார்கள்" என்றான்.

### எசேக்கியா கர்த்தரிடம் ஜெபிக்கிறான்

14தூதுவர்களிடமிருந்து கடிதங்களை வாங்கி எசேக்கியா வாசித்துப் பார்த்தான். பிறகு கர்த்தருடைய ஆலயத்திற்குச் சென்றான். அக்கடிதத்தைக் கர்த்தருக்கு
முன்பாக வைத்தான். 15கர்த்தருக்கு முன்னால் ஜெபம் செய்து, "கர்த்தாவே! இஸ்ரவேலரின் தேவனே! கேருபீன்களின் மத்தியில் (அரசரைப்போன்று) வீற்றிருக்கிறவரே! நீர் ஒருவரே தேவன். பூமியின் அரசுகளுக்கெல்லாம் அரசன். நீர் வானத்தையும்
பூமியையும் படைத்தீர்கள். 16கர்த்தாவே, நான் சொல்வதைக் கேளும். கர்த்தாவே, உமது கண்களை திறந்து இக்கடிதத்தைப் பாரும். சனகெரிப் ஜீவனுள்ள தேவனை நிந்தித்து சொன்ன வார்த்தைகளைக் கேளும்!
17கர்த்தாவே இது உண்மை. அசீரிய அரசன் இந்த ஜனங்களையும் இந்த நாடுகளையும்
அழித்துவிட்டான்! 18அவர்கள் அந்த ஜனங்களின் தெய்வங்களை நெருப்பிலே தூக்கியெறிந்தார்கள். ஆனால் அவை உண்மையில் தெய்வங்கள் அல்ல. அவை மனிதர்களால் செய்யப்பட்ட மரத்தாலும் கல்லாலும் ஆன சிலைகள். அதனால்தான் அசீரிய அரசர்கள் அவற்றை அழிக்க
முடிந்தது. 19எனவே இப்போது தேவனாகிய கர்த்தாவே அசீரிய அரசனிடமிருந்து எங்களைக்காப்பாற்றும். பிறகு பூமியிலுள்ள அனைத்து அரசுகளும் நீர் ஒருவரே தேவனாகிய கர்த்தர் என்பதை அறிந்து கொள்ளும்" என்றான்.
20அப்போது ஆமோத்சின் மகனான ஏசாயா எசேக்கியாவிற்கு ஒரு செய்தியை அனுப்பினான். அவன், "இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்தர், 'நீ அசீரிய அரசனான சனகெரிபிற்கு எதிராக செய்த ஜெபங்களை நான் கேட்டுக்கொண்டேன்' என்று சொன்னார்" என்றான்.
21"சனகெரிப் பற்றிய கர்த்தருடைய செய்தி இவ்வாறு இருந்தது:

சீயோனின் (எருசலேமின்)
கன்னிப்பெண் உன்னை முக்கியமாக
நினைக்கவில்லை.
உன்னைப்பற்றி கேலிச் செய்கிறாள்!
எருசலேமிலுள்ள பெண் அவளது
தலையை உனக்குப் பின்னால்
குலுக்குகிறாள்.
22 ஆனால் நீ அவமானப்படுத்தியதும்
கேலிச் செய்ததும் யாரை?

யாருக்கு எதிராக நீ உனது குரலை
உயர்த்தியிருக்கிறாய்?
நீ இஸ்ரவேலின் பரிசுத்தமானவருக்கு
எதிரானவன்!
நீ அவரைவிடச் சிறந்தவனைப்போல்
நடித்தாய்!
23 கர்த்தரை அவமானப்படுத்தவே
நீ உன் தூதுவர்களை
அனுப்பினாய்.
“நான் ஏராளமான இரதங்களோடு
மலை உச்சிகளுக்கு வந்தேன்.
லீபனோனின் உள்புறத்துக்கும்
வந்தேன்.
நான் லீபனோனின்
உயர்ந்த கேதுரு மரங்களையும்
சிறந்த தேவதாரு மரங்களையும்
வெட்டினேன்.
நான் லீபனோனின்
உயர்ந்த பகுதிகளுக்கும்
அடர்ந்த காடுகளுக்கும் போனேன்.
24 நான் புதிய இடங்களில்
கிணறுகளைத் தோண்டி
தண்ணீரைக் குடித்தேன்.
நான் எகிப்து ஆறுகளை
வற்றச்செய்து அந்த நாட்டினில்
நடந்து சென்றேன்”
என்று சொன்னாய்.
25 இதைத்தான் நீ சொன்னாய்.
ஆனால் தேவன் சொன்னதை
நீ கேட்டிருக்கவில்லை.
“நான் (தேவன்) நீண்ட காலத்திற்கு
முன்பே அதனைத் திட்டமிட்டேன்.
பழங்காலத்திலிருந்தே நான் அதனைத்
திட்டமிட்டேன்.
இப்போது, நிகழும்படி செய்கிறேன்.
கோட்டையமைந்த நகரங்களை
அழிக்க உன்னை அனுமதித்தேன்.
அவற்றை பாறைகளாகும்படி
மாற்றினேன்.
26 அந்நகரங்களில் உள்ள ஜனங்களுக்கு
சக்தி இருக்கவில்லை.
அந்த ஜனங்கள் பயந்து,
குழம்பினார்கள்.
அவர்கள் வயல்புறத்தில் வெட்டி
எறியப்படப்போகிற
புல்லைப்போலவும்,
செடியைப்போலவும் இருந்தார்கள்.
அவர்கள் வீட்டின்மேல் வளர்ந்த
செடியைப் போன்றவர்கள்
வளர்வதற்கு முன்பே
அழிந்துபோனவர்கள்.
27 நீ உட்கார்ந்திருப்பதையும்
நான் அறிவேன்.
நான் நீ போருக்குப்போகும்
பொழுதையும் அறிவேன்.
நீ வீட்டிற்கு வந்ததையும் அறிவேன்.
நீ என்னிடம் அலுத்துக்
கொண்டதையும் அறிவேன்.
28 ஆமாம் நீ என்னிடம்
அலுத்துக்கொண்டாய்.
உனது பெருமிதமான நிந்தனைகளைக்
கேட்டேன்.
எனவே நான் உனது மூக்கில்
துறட்டை மாட்டுவேன்.
நான் உனது வாயிலே
எனது கடிவாளத்தை மாட்டுவேன்.
பிறகு நான் உன்னை
சுற்றிவிடுவேன்.
வந்த வழியே திரும்பிப்போகச்
செய்வேன்”
என்றிருந்தார்.

### எசேக்கியாவிற்கு கர்த்தருடைய செய்தி

29“நான் உனக்கு உதவி செய்வேன்
என்பதற்கு இதுதான் அடையாளம்: இவ்
வாண்டில் நீங்கள் தானாக விளைந்த
தானியங்களைத் தின்பீர்கள். அடுத்த ஆண்டு
அதன் விதையில் வளர்ந்த தானியத்தை
உண்பீர்கள். ஆனால் மூன்றாவது ஆண்டில்
நீங்கள் பயிர் செய்தவற்றிலிருந்து தானியத்
தைப் பெறுவீர்கள். நீங்கள் திராட்சைத்
தோட்டங்களைப் பயிர்செய்து அவற்றி
லுள்ள திராட்சைப் பழங்களை உண்பீர்கள்.
30யூதாவின் குடும்பத்திலிருந்து தப்பித்து
பிழைத்த ஜனங்கள் மீண்டும் வளரத்
தொடங்குவார்கள். 31ஏனென்றால் சிலர்
உயிரோடு இருப்பார்கள். அவர்கள் எருச
லேமைவிட்டு வெளியேறுவார்கள். உயிர்
பிழைத்தவர்கள் சீயோன் மலையிலிருந்து
வெளியேறுவார்கள். கர்த்தருடைய உறு
தியான வைராக்கியமே இதைச்செய்யும்.
32எனவே, அசீரிய அரசனைப்பற்றிக்
கர்த்தர் இவ்வாறு கூறுகிறார்:

“அவன் இந்நகரத்திற்குள் வரமாட்டான்.
அவன் இந்நகரத்திற்குள்
ஒரு அம்பையும் எய்யமாட்டான்.
அவன் இந்நகரத்திற்குள்
கேடயங்களைக் கொண்டு
வரமாட்டான்.
அவன் இந்நகரச் சுவர்களைத்
தாக்குவதற்கு கொத்தளம்
அமைக்கப்போவதில்லை.
33 அவன் வந்த வழியாகவே
திரும்பிப்போவான்.
அவன் இந்நகரத்திற்குள்
வரமாட்டான்.
இதனைக் கர்த்தர் கூறுகிறார்!
34 நான் இந்நகரத்தைப் பாதுகாத்து
காப்பாற்றுவேன்.
இதனை நான் எனக்காகவும்
என் தொண்டன் தாவீதிற்காகவும்
செய்வேன்.”

### அசீரியப்படை அழிந்தது

35அன்று இரவு, கர்த்தருடைய தூதன்

போய் 1,85,000 ஜனங்களை அசீரியப் படையில் கொன்றுபோட்டான். ஜனங்கள் காலையில் எழுந்தபோது, மரித்த உடல் களைப் பார்த்தனர்.
36எனவே அசீரிய அரசனான சனகெரிப் என்பவன் விலகிப்போய் நினிவே நகரத்திற்கு திரும்பிப்போனான். 37ஒரு நாள் சனகெரிப் தனது தெய்வமான நிஸ்ரோகின், ஆலயத்தில் தொழுகைச் செய்துகொண் டிருந்தான். அப்போது அவனை அவனது மகன்களான அத்ரமலேக் என்பவனும் சரேத்சேர் என்பவனும் சேர்ந்து வாளால் கொன்றனர். பிறகு அவர்கள் அங்கிருந்து தப்பித்து ஆரராத் நாட்டிற்கு ஓடினார்கள். சனகெரிப்பிற்குப் பிறகு அவனது மகன் எசரத்தோன் என்பவன் புதிய அரசன் ஆனான்.

### எசேக்கியா நோயுற்று மரணத்தை நெருங் குதல்

20 அப்போது, எசேக்கியா நோயுற்று மரண நிலையை நெருங்கினான். ஆமோத்சின் மகனாகிய ஏசாயா என்னும் தீர்க்கதரிசி எசேக்கியாவிடம் சென்று, "நீ உனது வீட்டை ஒழுங்குபடுத்திவிடு. ஏனெ னில், நீ மரிக்கப்போகிறாய். நீ வாழப் போவதில்லை! என்று கர்த்தர் கூறுகிறார்" என்றான்.
2எசேக்கியா தனது முகத்தைச் சுவரின் பக்கம் திருப்பிக்கொண்டான். அவன் கர்த்தரிடம் ஜெபம் செய்து, 3"கர்த்தாவே! நான் உண்மையாக என் முழுமனதோடு உமக்குச் சேவை செய்திருக்கிறேன் என் பதை நினைத்துப்பாரும். நீர் நல்லதென்று சொன்ன செயல்களை மட்டுமே நான் செய்திருக்கிறேன்" என்றான். பிறகு எசேக்கியா மிகப்பலமாக அழுதான்.
4ஏசாயா பாதி முற்றத்தை விட்டு விலகுமுன், கர்த்தருடைய செய்தி அவனுக்கு வந்தது. கர்த்தர் அவனிடம், 5"திரும்பிப் போய் எசேக்கியாவிடம் பேசு. எனது ஜனங்களின் தலைவனான அவனிடம், 'கர்த்தரும் உனது முற்பிதாவான தாவீதின் தேவனும் சொல்லுவதாவது, "நான் உனது ஜெபத்தைக் கேட்டேன். உனது கண்ணீரைப் பார்த்தேன். எனவே நான் உன்னைக் குணப்படுத்துவேன். மூன்றாவது நாள் நீ கர்த்தருடைய ஆலயத்திற்குப் போவாய்.
6நான் உனது வாழ்நாளில் 15 ஆண்டுகளை அதிகரித்திருக்கிறேன். நான் உன்னையும் இந்த நகரத்தையும் அசீரிய அரசனின் வல்லமையிலிருந்து காப்பாற்றியிருக்கிறேன். நான் இந்த நகரத்தைப் பாதுகாப்பேன். நான் இவற்றை எனக்காகவே செய்வேன். ஏனென்றால் எனது தொண்டன் தாவீதுக்கு வாக்குறுதியளித்திருக்கிறேன்'என்று சொல்" என்று கூறினார்.
7பிறகு ஏசாயா அரசனிடம், "அத்திப் பழத்தின் அடையைப் பிசைந்து புண்களின் மேல் பற்று போடுங்கள்" என்றான்.
அவ்விதமாகவே அத்திப்பழத்தின் அடை யைப் பிசைந்து எசேக்கியாவின் புண்ணின் மேல் பூசினார்கள். பிறகு எசேக்கியா குணமானான்.

### எசேக்கியாவிற்கு ஒரு அடையாளம்

8எசேக்கியா ஏசாயாவிடம், "கர்த்தர் என்னைக் குணப்படுத்துவார் என்பதற்கான அடையாளம் எது? மூன்றாவது நாள் நான் கர்த்தருடைய ஆலயத்திற்கு போவதற் கான அடையாளமும் எது?" என்று கேட்டான்.
9ஏசாயாவோ, "நீ என்ன விரும்புகிறாய்? நிழல் பத்தடி முன்னே போகவேண்டுமா, பத்தடி பின்னே போகவேண்டுமா?* இது தான் கர்த்தர் தான் சொன்னபடியே செய்வார் என்று நிரூபிப்பதற்கான அடை யாளமாகும்" என்றான்.
10எசேக்கியா, "நிழல் பத்தடி முன்னே போவது என்பது எளிதானது. அதைவிட நிழல் பத்தடி பின்னே போகவேண்டும்" என்று பதில் சொன்னான்.
11பிறகு ஏசாயா, கர்த்தரிடம் வேண்டுதல் செய்தான். கர்த்தரும் ஆகாசுடைய (சூரிய கடியாரத்தில்) காலடிக்கு முன்போன நிழல் பின்னிட்டுத் திரும்பும்படி செய்தார்.

### எசேக்கியாவும் பாபிலோன் ஆண்களும்

12அப்போது, பாபிலோனின் அரசனான பலாதானின் மகனான பெரோதாக் பலாதான் என்பவன் இருந்தான். அவன் எசேக்கியா விற்காக சில அன்பளிப்புகளையும் கடிதங் களையும் கொடுத்து அனுப்பினான். எசேக்கியா நோயுற்றிருக்கிறான் என்பதைக் கேள்விப்பட்டே அவன் இவ்வாறு செய் தான்.
13எசேக்கியா, பாபிலோனிலிருந்து வந்த ஜனங்களை வரவேற்றான். தன் வீட்டில் உள்ள விலைமதிப்புள்ள பொருட் களையெல்லாம் அவர்களுக்கு காட்டினான். அவன் பொன், வெள்ளி, வாசனைப் பொருட்கள் விலைமதிப்புள்ள தைலங்கள், ஆயுதங்கள் கருவூலத்திலுள்ள மற்ற பொருட்கள் எல்லாவற்றையும் காட்டினான். தனது அரண்மனையிலும் அரசாங்கத்திலும் அவன் அவர்களுக்குக் காட்டாத பொருள் ஏதுமில்லை.
14பிறகு ஏசாயா தீர்க்கதரிசி அரசன் எசேக்கியாவிடம் வந்து, "இவர்கள் என்ன சொன்னார்கள்? இவர்கள் எங்கிருந்து வருகி றார்கள்?" என்று கேட்டான்.

---

**நிழல் பத்தடி … போகவேண்டுமா?** சிறப்பான கட்டிடத்தின் வெளிநிழலின் தூரத்தை வைத்து எசேக்கியா கடிகாரமாக கணக்கிட்டான். சூரியன் படிகளின்மேல் படும்போது நிழலானது அந்த நாளின் நேரத்தைக்கணக்கிட்டு காட்டியது என்று அர்த்தம்.

எசேக்கியா, “இவர்கள் வெகுதூரத்தி
லுள்ள நாடான பாபிலோனிலிருந்து
வருகிறார்கள்” என்று பதிலுரைத்தான்.
15 “இவர்கள் உன் வீட்டில் எதையெல்லாம்
பார்த்திருக்கிறார்கள்?” என்று ஏசாயா
கேட்டான்.

அதற்கு எசேக்கியா, “இவர்கள் என்
வீட்டிலுள்ள அனைத்தையும் பார்த்து
விட்டார்கள், நான் அவர்களுக்குக்
காட்டாதது என் கருவூலத்தில் எதுவும்
இல்லை” என்று சொன்னான்.
16 பிறகு ஏசாயா எசேக்கியாவிடம்,
“கர்த்தரிடமிருந்து வார்த்தையைக் கேள்.
17 உன்னாலும் உன் முற்பிதாக்களாலும்
சேமித்து வைக்கப்பட்ட உன் வீட்டிலும்
கருவூலத்திலுமுள்ள பொருட்கள் எல்லாம்
பாபிலோனுக்கு எடுத்துச்செல்லும் காலம்
வந்துக்கொண்டிருக்கிறது. எதுவும் மீதியாக
வைக்கப்படாது. இதனைக் கர்த்தர்
கூறுகிறார். 18 பாபிலோனியர்கள் உனது
மகன்களையும் எடுத்துச்செல்வார்கள்.
பாபிலோனிய அரசனின் அரண்மனையில்
உனது மகன்கள் அலிகளாக இருப்பார்கள்”
என்றான்.
19 பிறகு எசேக்கியா ஏசாயாவிடம்,
“கர்த்தரிடமிருந்து வந்த இந்த செய்தி நல்லது
தான்” என்றான்.

மேலும் எசேக்கியா, “என் வாழ்
நாளிலேயே உண்மையான சமாதானம்
இருப்பது நல்லதுதான்” என்றான்.
20 எசேக்கியா செய்த மற்ற அருஞ்
செயல்களும் அவனது வல்லமையும் ‘யூத
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளன. அதில் அவன் ஒரு
குளத்தை உருவாக்கி, குழாய் மூலம்
நகரத்திற்கு தண்ணீர் கொண்டுவந்ததும்
சொல்லப்பட்டுள்ளன. 21 எசேக்கியா மரித்
ததும் தன் முற்பிதாக்களோடு அடக்கம்
செய்யப்பட்டான். எசேக்கியாவின் மகனான
மனாசே என்பவன் புதிய அரசன் ஆனான்.

## யூதாவில் மனாசே தனது கெட்ட ஆட்சியைத் துவங்குகிறான்

21 மனாசே ஆட்சிக்கு வந்தபோது அவ
னுக்கு 12 வயது. அவன் எருசலேமில்
55 ஆண்டுகள் அரசாண்டான். அவனது
தாயின் பெயர் எப்சிபாள்.
2 கர்த்தரால் தவறு என்று சொல்லப்பட்ட
காரியங்களையே மனாசே செய்துவந்தான்.
மற்ற தேசத்தினர் செய்த பயங்கரச் செயல்
களையே இவனும் செய்தான். (இஸ்ரவேலர்
கள் வந்தபோது அத்தகைய தேசத்தினரைக்
கர்த்தர் நாட்டைவிட்டுத் துரத்தினார்.) 3 தன்
தந்தை எசேக்கியா அழித்த மேடைகளை
பொய்த் தெய்வங்களின் கோவில்களை
இவன் மீண்டும் கட்டினான். இவன்
பாகாலின் பலிபீடங்களையும் அசெரியா
வின் உருவத்தூண்களையும் இஸ்ரவேல்
அரசன் ஆகாப் செய்தது போன்றே கட்டி
னான். இவன் வானில் உள்ள நட்சத்திரங்
களையும் தொழுதுகொண்டு வந்தான்.
4 கர்த்தருக்கான ஆலயங்களில் இவன்
(பொய்த் தெய்வங்களுக்கான) பலிபீடங்
களைக் கட்டினான். (“என் நாமத்தை
எருசலேமில் வைப்பேன்” என்று இந்த
இடத்தைதான் கர்த்தர் சொல்லியிருந்தார்.)
5 கர்த்தருடைய ஆலயத்தின் இரு முற்றங்க
ளிலும் வானில் உள்ள கோளங்களுக்கு
(நட்சத்திரங்களுக்கு) பலிபீடங்களைக் கட்டி
னான். 6 தன் சொந்த மகனைப் பலியிட்டு
நெருப்பில் தகனம் செய்தான். இவன்
எதிர்காலத்தை அறிந்துகொள்ள பலவழி
களில் முயன்றான். அவன் மந்திரவாதி
களையும் குறிச் சொல்லுகிறவர்களையும்
அணுகினான்.

இவ்வாறு கர்த்தர் தவறென்று சொன்ன
பல செயல்களை மனாசே செய்துவந்தான்.
இது கர்த்தருக்குக் கோபத்தைக் கொடுத்தது.
7 அசெராவின் உருவம் செதுக்கிய சிலை
ஒன்றை அவன் உருவாக்கினான். அதனை
ஆலயத்தில் நிறுவினான். கர்த்தர் இந்த
ஆலயத்தைப்பற்றி தாவீதிடமும் அவன் மகன்
சாலொமோனிடமும், “இஸ்ரவேலிலுள்ள
மற்ற நகரங்களை எல்லாம் விட்டுவிட்டு
எருசலேமைத் தேர்ந்தெடுத்தேன். இந்நகரத்தி
லுள்ள ஆலயத்தில் என் பெயரை எப்போ
தும் விளங்கவைப்பேன். 8 இஸ்ரவேலர்கள்
தங்கள் முற்பிதாக்களுக்குக் கொடுக்கப்பட்ட
நாட்டிலிருந்து வெளியேற வைக்க
மாட்டேன். எனது கட்டளைகளுக்கும் என்
தாசனாகிய மோசே மூலம் கொடுத்த
போதனைகளின் படியும் கீழ்ப்படிந்து நடப்ப
வர்களை இங்கே தங்கச்செய்வேன்” என்று
சொல்லியிருந்தார். 9 ஆனால் ஜனங்கள்
தேவன் சொன்னதைக் கவனிக்கவில்லை.
இஸ்ரவேலர்கள் வருவதற்கு முன்னதாக
கானானில் வாழ்ந்த தேசத்தவர்கள் செய்ததை
விடவும் மனாசே அதிகமாகத் தீய
காரியங்களைச் செய்தான். இஸ்ரவேலர்கள்
தங்கள் நிலத்திற்கு வந்தபொழுது கர்த்தர்
அந்த தேசத்தவர்களை அழித்தார்.
10 தனது ஊழியக்கரரான தீர்க்கதரிசி
களைப் பயன்படுத்தி, கீழ்க்கண்ட செய்தியை
கர்த்தர் சொல்லச்செய்தார்: 11 “யூத அரசனான
மனாசேயின் செயல்கள் வெறுக்கத்தக்கவை
(மிக அருவருப்பானவை.) இவன் இவனுக்கு
முன்பு செய்த எமோரியர்களைவிட கெட்ட
செயல்களைச் செய்கிறான். தனது விக்கிர
கங்கள் மூலம் யூதர்களையும் பாவத்துக்
குள்ளாக்குகிறான். 12 எனவே இஸ்ரவேலர்
களின் கர்த்தர், ‘பார்! நான் எருசலேமிற்கும்
யூதாவிற்கும் எதிராகப் பெருந்துன்பத்தைத்
தருவேன். இதைப்பற்றிக் கேட்கும் ஒவ்
வொருவரும் அதிர்ச்சி அடைவார்கள்.
13 எனவே எருசலேமின்மேல் சமாரியாவின்

மட்ட நூலையும் ஆகாப் வீட்டின் தூக்கு
நூலையும் பிடிப்பேன். ஒருவன் ஒரு தட்டை
கழுவி துடைத்து கவிழ்த்து வைப்பது
போன்று எருசலேமைச் செய்வேன். 14இங்கே
இன்னும் எனக்கு வேண்டிய சிலர்
இருக்கிறார்கள். அதனால் அவர்களை
விட்டுவிடுவேன். மற்றவர்களைப் பகைவர்
களிடம் ஒப்படைப்பேன். பகைவர்கள்
அவர்களைக் கைதிகளாகச் சிறைபிடித்துச்
செல்வார்கள். போரில் வீரர்கள் எடுத்துச்
செல்லும் விலைமதிப்புடைய பொருட்
களைப்போல அவர்கள் இருப்பார்கள்.
15ஏனென்றால் என்னுடைய ஜனங்களாகிய
இவர்கள் நான் தவறென்று சொன்னவற்றைச்
செய்தார்கள். இவர்களின் முற்பிதாக்கள்
எகிப்திலிருந்து வெளிவந்த நாள் முதலா
கவே எனக்குக் கோபமூட்டும்படி செய்து
வருகிறார்கள். 16மனாசே பல அப்பாவி
ஜனங்களைக் கொன்றுவிட்டான். அவன்
எருசலேமை ஒரு மூலையில் இருந்து
இன்னொரு மூலைக்கு இரத்தத்தாலேயே
நிரப்பினான். இப்பாவங்கள் எல்லாம்
யூதாவிலுள்ள ஜனங்களை இன்னும் பாவம்
செய்ய சேர்க்கையாக இருந்தது. கர்த்தர்
தவறென்று சொன்னதை யூதர்கள் செய்
வதற்கு மனாசே காரணமானான்.'"
17மனாசே செய்த மற்ற அனைத்து
செயல்களும் அவன் செய்த பாவங்கள்
உட்பட 'யூத அரசர்களின் வரலாறு' என்ற
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன. 18மனாசே
மரித்ததும், தன் முற்பிதாக்களோடு அடக்கம்
செய்யப்பட்டான். அவனை வீட்டுத்
தோட்டத்திலேயே அடக்கம் செய்தனர்.
அத்தோட்டத்தின் பெயர் "ஊசா தோட்டம்"
மனாசேயின் மகனான ஆமோன் புதிய
அரசன் ஆனான்.

### ஆமோனின் குறுகிய கால ஆட்சி

19ஆமோன் ஆட்சிக்கு வந்தபோது
அவனுக்கு 22 வயது. அவன் எருசலேமில்
இரண்டு ஆண்டுகள் அரசாண்டான். அவ
னது தாயின் பெயர் மெசுல்லேமேத். இவள்
யோத்பா ஊரானாகிய ஆருத்சியின் மகள்.
20இவனும் தன் தந்தை மனாசேவைப்
போல், கர்த்தருக்கு வேண்டாததையே
செய்துவந்தான். 21அவன் தன் தந்தையைப்
போலவே வாழ்ந்தான். தன் தந்தை செய்த
விக்கிரகங்களையே தொழுதுகொண்டான்.
22இவன் தன் முற்பிதாக்களின் தேவனாகிய
கர்த்தரைவிட்டு விலகி அவருக்கு விருப்ப
மான வழியில் வாழாமல் போனான்.
23ஆமோனின் வேலைக்காரர்கள் இவனுக்
கெதிராகச் சதிசெய்து இவனை வீட்டிலேயே
கொன்றுவிட்டனர். 24பொது ஜனங்களோ
அரசன் ஆமோனைக் கொன்றவர்களைக்
கொன்றனர். பிறகு ஜனங்கள் இவனது
மகனான யோசியா என்பவனை அரசனாக்
கினார்கள்.

25ஆமோன் செய்த மற்ற அனைத்து
செயல்களும் 'யூத அரசர்களின் வரலாறு'
என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.
26ஆமோன் ஊசா தோட்டத்தில் உள்ள
கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டான்.
ஆமோனின் மகனான யோசியா என்பவன்
புதிய அரசனானான்.

### யூதாவில் யோசியா ஆளத்தொடங்கியது

22 யோசியா ஆட்சிக்கு வந்தபோது
அவனுக்கு 8 வயது. அவன் எருச
லேமில் 31 ஆண்டுகள் அரசாண்டான்.
இவனது தாயின் பெயர் எதிதாள் ஆகும்.
இவள் போஸ்காத்திலுள்ள அதாயாவின்
மகள் ஆவாள். 2கர்த்தர் நல்லதென்று
சொன்னதன்படியே இவன் வாழ்ந்துவந்தான்.
தன் முற்பிதாவான தாவீதுபோலவே
தேவனை பின்பற்றினான். யோசியா தேவ
னுடைய போதனைகளுக்குக் கீழ்ப்படிந்தான்.
தேவன் விரும்பியவற்றைக் கொஞ்சம்கூட
மாற்றவில்லை.

### யோசியா ஆலயத்தைப் பழுதுபார்க்க கட்டளையிட்டது

3தனது 18வது ஆட்சியாண்டில் யோசியா,
மெசுல்லாமின் மகனாகிய அத்சலியாவின்
மகனாகிய சாப்பான் என்னும் செயலா
ளனை கர்த்தருடைய ஆலயத்திற்கு அனுப்பி
னான். 4அவனிடம், "நீ தலைமை
ஆசாரியனாகிய இல்க்கியாவினிடம் போ.
கர்த்தருடைய ஆலயத்திற்கு ஜனங்கள்
கொண்டுவந்த பணம் அவனிடம் இருக்கும்.
அது வாயில் காவலர்கள் ஜனங்
களிடமிருந்து வசூலிக்கப்பட்டு சேகரித்துக்
கொடுத்த பணம். அதனை கர்த்தருடைய
ஆலயத்துக்குக் கொண்டுவர வேண்டும்.
5பிறகு அப்பணத்தை கர்த்தருடைய
ஆலயத்தைப் பழுதுபார்க்கும் வேலை
செய்கிறவர்களைக் கண்காணிப்பவர்
களுக்குக் கொடுக்கவேண்டும். அக்கண்
காணிப்பாளர்கள் அப்பணத்தை ஆலயத்தில்
வேலை செய்பவர்களுக்குக் கொடுக்க
வேண்டும். 6அங்கு தச்சுவேலை செய்ப
வர்களும், கட்டுபவர்களும், கல் உடைப்பவர்
களும் உள்ளனர். அப்பணத்தால் ஆலயத்
தைச் செப்பனிட மரமும் கல்லும் வாங்க
வேண்டும். 7வேலைக்காரர்களுக்குக் கொடுக்
கும் பணத்துக்குக் கணக்கு கேட்க
வேண்டாம். ஏனென்றால் அவர்கள்
நம்பிக்கைக்கு உரியவர்கள் என்று சொல்"
என்றான்.

### சட்டங்களின் புத்தகம் ஆலயத்தில் கண்டெடுக்கப்படல்

8செயலாளராகிய சாப்பானிடம் தலைமை
ஆசாரியர் இல்க்கியா, "கர்த்தருடைய
ஆலயத்தில் சட்டங்களின் புத்தகத்தைக்
கண்டெடுத்தேன்!" என்று கூறினான். அவன்

சாப்பானிடம் அதனைக் கொடுத்தான்.
சாப்பான் அதனை வாசித்தான்.
9செயலாளராகிய சாப்பான் அரசனான
யோசியாவிடம் வந்து, “உங்கள் வேலைக்
காரர்கள் ஆலயத்திலுள்ள பணத்தை
யெல்லாம் சேகரித்துவிட்டார்கள். அதனை
அவர்கள் வேலையைக் கண்காணிப்ப
வர்களிடம் கொடுத்துவிட்டார்கள்” என்
றான். 10பிறகு சாப்பான் அரசனிடம்,
“ஆசாரியனான இல்க்கியா என்னிடம் இந்த
புத்தகத்தைக் கொடுத்தான்” என்று கூறி
அரசனுக்கு அதனை வாசித்துக் காட்டி
னான்.
11அச்சட்ட புத்தகத்திலுள்ள வார்த்தை
களைக் கேட்டதும் (துக்கத்தின் மிகுதியால்)
அரசன் தனது ஆடைகளைக் கிழித்துக்
கொண்டான். 12பிறகு அவன், ஆசாரிய
னாகிய இல்க்கியாவுக்கும், சாப்பானின்
மகனான அகீக்காமுக்கும், மிகாயாவின்
மகனான அக்போருக்கும் செயலாளரான
சாப்பானுக்கும் அரசனின் வேலைக்
காரனான அசாயாவுக்கும் அரசன் ஆணை
கள் இட்டான். 13அரசன் இவர்களிடம்,
“சென்று நாம் என்ன செய்யவேண்டு
மென்று கர்த்தரிடம் கேளுங்கள். எனக்காகக்
கர்த்தரிடம் இந்த ஜனங்களுக்காகவும் யூத
நாட்டிற்காகவும் கேளுங்கள். இப்புத்தகத்தில்
காணப்படும் வார்த்தைகளைப்பற்றி கேளுங்
கள். கர்த்தர் நம்மீது கோபமாக இருக்கிறார்.
ஏனென்றால் நமது முற்பிதாக்கள்
இப்புத்தகத்தில் கூறியுள்ளவற்றை கவனிக்கா
மல் போனார்கள். நமக்காக எழுதப்பட்ட
இதன்படி அவர்கள் செய்யவில்லை!”
என்றான்.

### யோசியாவும் உல்தாள் எனும் பெண் தீர்க்கதரிசியும்

14எனவே இல்க்கியா எனும்
ஆசாரியனும், அகீக்காமும், அக்போரும்,
சாப்பானும் அசாயாவும், பெண் தீர்க்கதரிசி
உல்தாவிடம் சென்றனர். அவள் அர்காசின்
மகனான திக்வாவின் மகனான சல்லூம்
என்பவனின் மனைவி. அவன்
ஆசாரியர்களின் துணி களுக்குப்
பொறுப்பானவன். அவள் எருச லேமின்
இரண்டாம் பகுதியில் குடியிருந் தாள்.
அவர்கள் போய் அவளோடு பேசினார்கள்.
15பிறகு உல்தாள் அவர்களிடம்,
“என்னிடம் உங்களை அனுப்பியவனிடம்
போய், இஸ்ரவேலரின் தேவனாகிய கர்த்தர்
சொல்கிறதாவது: 16‘இந்த இடத்திற்குத்
துன்பத்தைக் கொண்டுவருவேன். இங்குள்ள
ஜனங்களுக்கும் துன்பத்தைக் கொண்டு
வருவேன். யூத அரசனால் வாசிக்கப்பட்ட
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ள துன்பங்கள்
இவையே. 17யூத ஜனங்கள் என்னை
விட்டுவிட்டு அந்நியத் தெய்வங்களுக்கு
நறுமணப் பொருட்களை எரிக்கின்றனர்.
அவர்கள் எனக்கு மிகுதியான கோபத்தை
உண்டாக்குகிறார்கள். அவர்கள் ஏராளமான
விக்கிரகங்களை ஏற்படுத்தியுள்ளனர்.
அதனால்தான் நான் இவர்களுக்கு எதிராக
என் கோபத்தைக் காட்டுகிறேன். என்
கோபம் தடுக்கமுடியாத நெருப்பைப்போன்று
விளங்கும்!’
18-19“யூதாவின் அரசனாகிய யோசியா,
உங்களை அனுப்பி கர்த்தருடைய ஆலோ
சனைகளைக் கேட்கிறான். அவனிடம் இவற்
றைக் கூறுங்கள்: ‘இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் நீங்கள் கேள்விப்பட்ட செய்திகளைக்
கூறுகிறார். இந்த நாட்டைப்பற்றியும், இங்கு
வசிப்பவர்களைப்பற்றியும் நான் சொன்
னதை நீங்கள் கேட்டீர்கள். உங்கள் இதயம்
மென்மையாக ஆயிற்று. எனவே, அதைக்
கேட்டதும் நீங்கள் மிகவும் வருத்தம்
கொண்டீர்கள். இந்த இடத்தில் (எருசலேமில்)
பயங்கரமான சம்பவங்கள் நடக்கப்
போகின்றன என்று சொல்லி இருக்கிறேன்.
உன் துக்கத்தைப் புலப்படுத்த உன்
ஆடையைக் கிழித்துக்கொண்டு அழத்
தொடங்கினாய். அதற்காகத்தான் நீ
சொன்னதைக் கேட்டேன்’ கர்த்தர் இதைச்
சொன்னார். 20‘எனவே, இப்போது உன்னை
உனது முற்பிதாக்களிடம் சேர்ப்பேன். நீ
சமாதானத்தோடு உன் கல்லறையில்
சேர்வாய். நான் எருசலேமிற்குத் தரப்
போகும் துன்பங்கள் எல்லாவற்றையும் உன்
கண்கள் பார்க்காது’ என்று சொல்லுங்கள்”
என்றாள்.
பிறகு இதனை அரசனிடம் போய்
ஆசாரியனாகிய இல்க்கியா, அகீக்கா, அக்
போர், சாப்பான், அசாயா ஆகியோர்
சொன்னார்கள்.

### சட்டங்களை ஜனங்கள் கேட்கிறார்கள்

23 தன்னைச் சந்திக்கும்படி யூதர் தலை
வர்களையும் எருசலேம் தலைவர்
களையும் அரசன் யோசியா அழைத்தான்.
2பிறகு அரசன் கர்த்தருடைய ஆலயத்திற்குச்
சென்றான். யூத ஜனங்களும் எருசலேமி
லுள்ள ஜனங்களும் அவனோடு சென்றனர்.
ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும் ஜனங்
களுள் முக்கியமானவர்களும் முக்கியம்
இல்லாதவர்களும் அவனோடு சென்றனர்.
பிறகு அரசன் உடன்படிக்கைப் புத்தகத்தை
வாசித்துக் காட்டினான். இந்த சட்டப்புத்தகம்
கர்த்தருடைய ஆலயத்தில் கண்டெடுக்கப்
பட்டது. அரசன் அதனை வாசித்தபோது
ஜனங்களால் அதனைக் கேட்கமுடிந்தது.
3அரசன் (மேடை மேல்) தூண் அருகே
நின்றுக்கொண்டு கர்த்தரோடு ஒரு உடன்
படிக்கைச் செய்துக்கொண்டான். கர்த்தரைப்
பின்பற்றவும், அவரது கட்டளைகளுக்கும்
உடன்படிக்கைக்கும் கீழ்ப்படியவும் ஒப்புக்

*கொண்டான். அவன் அதனை முழு
மனதோடும் ஆத்துமாவோடும் செய்வதாக
ஒப்புக்கொண்டான். இப்புத்தகத்தில் எழுதப்
பட்ட உடன்படிக்கைக்குக் கீழ்ப்படியவும்
ஒப்புக்கொண்டான். சுற்றி நின்ற ஜனங்களும்
உடன்படிக்கைக்கு ஒப்புக்கொள்வதாக உறுதி
கூறினார்கள்.*
4 *பிறகு அரசன் தலைமை ஆசாரியனான
இல்க்கியாவுக்கும் மற்ற ஆசாரியர்களுக்கும்
வாயில் காவலர்களுக்கும் பாகாலுக்கும்
அசெரியாவிற்கும் வானுலக நட்சத்திரங்
களுக்கும் கர்த்தருடைய ஆலயத்திற்குள்
அமைக்கப்பட்டிருந்த சகல வழிபாட்டுப்
பொருட்களையும் நீக்கி வெளியே போடச்
சொன்னான். பிறகு யோசியா அவற்றை
எருசலேமிற்கு வெளியே கீதரோன்
வெளிகளில் எரித்துப்போட்டான். பின்
அவற்றின் சாம்பலை பெத்தேலுக்கு
கொண்டுவந்தனர்.*
5 *யூத அரசன் ஆசாரியர்களாகப் பணி
செய்ய மிகச்சாதாரண ஆட்களைத் தேர்ந்
தெடுத்திருந்தான். இவர்கள் ஆரோன்
வம்சத்தில் உள்ளவர்கள் அல்ல. அப்பொய்
ஆசாரியர்கள் மேடையில் எருசலேமிலும்
அதைச்சுற்றியுள்ள யூத நகரங்களிலும்
நறுமணப் பொருட்களை எரித்துவந்தனர்.
அவர்கள் பாகால், சூரியன், சந்திரன்,
கிரகங்கள், வானுலக நட்சத்திரங்கள் போன்ற
வற்றுக்கு நறுமணப் பொருட்களை
எரித்தனர். ஆனால் இல்க்கியா அப்போலி
ஆசாரியர்களைத் தடுத்து நிறுத்திவிட்டார்.*
6 *யோசியா கர்த்தருடைய ஆலயத்தி
லிருந்து அசேரா என்னும் தேவதையின்
விக்கிரகத்தை அகற்றினான். அதனை
நகரத்திற்கு வெளியே கொண்டுபோய்
கீதரோன் வெளியில் எரித்துப்போட்டான்.
பின் அவன் எரிந்தவற்றை அடித்து
சாம்பலாக்கி சாதாரண ஜனங்களின் கல்ல
றையில் தூவிவிட்டான்.*
7 *பின் அரசனான யோசியா கர்த்தருடைய
ஆலயத்திற்குள் விபசாரம் செய்து
கொண்டிருந்த ஆண்களின் வீடுகளை
நொறுக்கினான். பெண்களும் அவ்வீடு
களைப் பயன்படுத்தி வந்தனர். அசேராவுக்
காக என்றும் (பொய்த் தேவதைக்காக)
அங்கே சிறு கூடாரங்களை அமைத்
திருந்தனர்.*
8-9 *அப்போது, ஆசாரியர்கள் எருசலே
மிற்கு பலிகளைக் கொண்டுவந்து ஆலயத்
திற்குள் பலியிடவில்லை. ஆசாரியர்கள் யூத
நாடு முழுவதிலும் வாழ்ந்தனர். ஆனால்
பொய்த் தெய்வங்களுக்கு நறுமணப்
பொருட்களை எரித்து பலியிட்டு வழிபாடு
செய்துவந்தனர். இப்பொய்த் தெய்வங்களுக்
கான மேடைகள் கேபா முதல் பெயெர்செபா
மட்டும் நிறைந் திருந்தன. ஆசாரியர்கள்
சாதாரண ஜனங்களோடு புளிப்பில்லாத
அப்பங்களை உண்டுவந்தனர். எருசலேமின்
ஆலயத்தில் ஆசாரியர்களுக்கென இருந்த
சிறப்பு இடத்தில் அவர்கள் உண்ணவில்லை.
ஆனால் அரசன் (யோசியா) அப்பொய்த்
தெய்வங்களின் மேடைகளை அழித்து, அந்த
ஆசாரியர்களை எருசலேமிற்கு அழைத்து
வந்தான். இல்க்கியாவும் பட்டணத்து
வாசலுக்குப்போகும் வழியின் இடது
புறமிருந்த யோசுவாவினால் கட்டப்பட்ட
மேடையை அழித்தான். (யோசுவா அந்நகரை
ஆட்சி செய்தவன்.)*
10 *தோப்பேத் இன்னோமின் மகனது
பள்ளத்தாக்கிலுள்ள ஒரு இடம். அங்கே
ஜனங்கள் தம் பிள்ளைகளைக் கொன்று
பலிபீடத்தில் எரித்து மோளேகு என்ற
பொய்த் தெய்வத்தை மகிமைப்படுத்தி
வந்தனர். அரசன் இந்த இடத்தையும் ஜனங்
கள் மீண்டும் பயன்படுத்த முடியாதபடி
அழித்துப்போட்டான்.* 11 *முன்பு, யூத அரசன்
கர்த்தரின் ஆலய வாசல் அருகில்
குதிரைகளையும் இரதங்களையும் வைத்திருந்
தான். இது நாத்தான்மெலெக் எனும்
அதிகாரியின் அறையின் அருகில் இருந்தது.
இவை சூரியத் தெய்வத்தை சிறப்பிப்
பதற்காக வைக்கப்பட்டிருந்தது. அரசன்
குதிரைகளை அப்புறப்படுத்திவிட்டு சூரிய
னின் இரதங்களை எரித்துவிட்டான்.*
12 *முன்பு, யூத அரசர்கள் ஆகாப்
கட்டிடத்தின் கூரைமீது பலிபீடங்களைக்
கட்டியிருந்தார்கள். மனாசேவும் கர்த்தரு
டைய இரு ஆலய முற்றத்திலும் பலிபீடங்
களைக் கட்டியிருந்தான். யோசியா
இப்பலிபீடங்கள் அனைத்தையும் அழித்து
அவற்றின் துண்டுகளையும் தூளையும்
கீதரோன் பள்ளத்தாக்கில் எறிந்தான்.*
13 *முன்பு, சாலொமோன் அரசன்
எருசலேம் அருகிலுள்ள நாசமலையின்
அருகில் பொய்த் தெய்வங்களுக்கான மேடை
களை அமைத்தான். அவை மலையின்
தென்புறத்தில் இருந்தன. சீதோனியர்களால்
தொழுதுகொள்ளப்பட்ட அருவருப்புமிக்க
அஸ்தரோத்திற்கும், மோவாபியரின் அரு
வெருப்பு தெய்வமான காமோசிற்கும்,
அம்மோனியரின் அருவெருப்பு தெய்வமான
மில்கோமுக்கும் மேடைகளைச் சாலொ
மோன் அரசன் அமைத்திருந்தான். ஆனால்
யோசியா அவையனைத்தையும் அழித்துப்
போட்டான்.* 14 *அதோடு யோசியா அரசன்
ஞாபகக் கற்களையும் அசெரா என்னும்
பெண்தேவதையின் விக்கிரகங்களையும்
உடைத்து நொறுக்கினான். பின் மரித்துப்
போனவர்களின் எலும்புகளை அவற்றின்
மீது தூவினான்.*
15 *இவன் பெத்தேலில் உள்ள பலிபீடத்
தையும் மேடையையும் உடைத்தெறிந்தான்.
இப்பலிபீடத்தை நேபாத்தின் மகனான
யெரொபெயாம் என்பவன் ஏற்படுத்தியிருந்
தான். இவனே இஸ்ரவேலர்களின் பாவத்
திற்கு காரணமாக இருந்தான். இவன்*

அமைத்த பலிபீடம் மேடை ஆகிய
இரண்டையும் யோசியா அழித்தான். அவன்
பலிபீடக்கல்லை துண்டுத் துண்டாக
உடைத்தெறிந்தான். பின் அவற்றைத் தூளாக்
கினான். அசேரா விக்கிரகத்தூணையும்
எரித்தான். 16யோசிய திரும்பிப்பார்த்த
போது மலையின்மீது கல்லறைகளைக் கண்
டான். அவன் ஆட்களை அனுப்பி
அவற்றிலுள்ள எலும்புகளை எடுத்துவரச்
செய்தான். இப்படி நடக்கும் என்று தீர்க்கத்
தரிசி சொன்னபடியே அவைகளை அந்தப்
பலிபீடத்தின்மேல் எரித்தான்.

பின் யோசியா சுற்றிப்பார்த்து தேவ
மனிதனின் கல்லறையைக் கண்டான்.
17யோசியா, "நான் பார்க்கும் அந்த
நினைவு சின்னம் என்ன?" என்று
கேட்டான்.

நகர ஜனங்கள் அவனிடம், "இது
யூதாவிலிருந்து வந்த ஒரு தேவமனிதரின்
(தீர்க்கதரிசியின்) கல்லறை. பெத்தேல்
என்னும் பலிபீடத்தில் நீ செய்தவற்றைப்
பற்றி இவர் முன்னரே கூறியுள்ளார்"
என்றனர்.

18யோசியா, "அவரது கல்லறையை
விட்டுவிடுங்கள். அவரது எலும்புகளை
எடுக்கவேண்டாம்" என்று கூறினான்.
எனவே அவனது எலும்புகளை சமாரியா
விலிருந்து வெளியே வந்த தீர்க்கதரிசியின்
எலும்புகளோடு அவர்கள் விட்டுவிட்டனர்.

19யோசியா சமாரியாவிலுள்ள பொய்த்
தெய்வங்களின் மேடைகளையும் அழித்துப்
போட்டான். இஸ்ரவேல் அரசர்கள்
அவற்றைக் கட்டியிருந்தனர். இதனால் கர்த்த
ருக்குப் பெருங்கோபம் உண்டாகி இருந்தது.
பெத்தேலில் உள்ளவற்றை அழித்தது
போலவே, யோசியா இவற்றையும் அழித்து
விட்டான்.

20சமாரியாவின் பொய்த்தெய்வங்களுக்குத்
தொழுகைச்செய்த ஆசாரியர்கள் அனை
வரையும் யோசியா கொன்றான். பலிபீடங்
களைக் கவனித்த ஆசாரியர்களையும்
கொன்றான். மனித எலும்புகளை பலி
பீடத்தின் மேல் எரித்தான். இவ்வாறு
தொழுகைக்குரிய இடங்கள் எல்லாவற்றை
யும் கறைப்படுத்தினான். பின் எருச
லேமிற்குத் திரும்பிச்சென்றான்.

### யூத மக்கள் பஸ்காவைக் கொண்டாடியது

21யோசியா அரசன் ஜனங்களுக்கு ஒரு
கட்டளையிட்டான். அவன், "உங்கள்
தேவனாகிய கர்த்தருக்குப் பஸ்காவைக்
கொண்டாடுங்கள். உடன்படிக்கைப் புத்தகத்
தில் எழுதியிருக்கிறபடியே செய்யுங்கள்"
என்றான்.

22நியாயாதிபதிகள் இஸ்ரவேலை ஆளத்
தொடங்கிய நாள் முதல் ஜனங்கள் பஸ்கா
பண்டிகையை இந்த விதத்தில் கொண்டாடிய
தில்லை. இஸ்ரவேல் அரசர்களோ யூத
அரசர்களோ இதுபோல் சிறப்பாகப்
பஸ்காவை கொண்டாடவில்லை. 23யோசியா
வின் 18வது ஆட்சியாண்டில் அவர்கள்
எருசலேமில் கர்த்தருக்காக பஸ்கா பண்டி
கையைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள்.

24யோசியா, இஸ்ரவேலிலும் யூதாவிலும்
ஜனங்களால் தொழுதுகொண்டு வந்த சிறு
தெய்வங்களையும் மற்ற மந்திரவாதிகளையும்
குறிச் சொல்லுகிறவர்களையும் விக்கிரகங்
களையும் அழித்துவிட்டான். இவன், இதனை
இல்க்கியாவால் கர்த்தருடைய ஆலயத்தில்
கண்டெடுக்கப்பட்ட புத்தகத்தில் உள்ள
சட்டத்திற்குக் கீழ்ப்படியவே இவ்வாறு
நடந்துக்கொண்டான்.

25யோசியாவைப்போன்ற ஒரு அரசன்
இதற்கு முன்னால் எப்போதும் இருந்த
தில்லை. இவனுக்குப்பின்னும் இருந்ததில்லை.
யோசியா தன் முழு மனதோடும் தன்
முழு ஆத்துமாவோடும் தன் முழு
பலத்தோடும் கர்த்தருடைய பக்கம்
திரும்பினான். வேறு எந்த அரசனும்
யோசியாவைப் போன்று மோசேயின்
சட்டத்தைப் பின்பற்றவில்லை.

26ஆனாலும் கர்த்தர் யூத ஜனங்கள் மீது
தான் கொண்டக் கோபத்தை நிறுத்திக்
கொள்ளவில்லை. மனாசே செய்த அனைத்து
செயல்களுக்காக கர்த்தர் அவர்கள் மீது
இன்னமும் கோபங்கொண்டிருந்தார். 27கர்த்தர்,
"நான் இந்த நாட்டிலிருந்து இஸ்ரவேலர்களை
அகற்றிவிட்டேன். இதையே யூதர்களுக்கும்
செய்வேன். அவர்களை என் பார்வையி
லிருந்து அப்புறப்படுத்துவேன். என்னால்
எருசலேமை ஏற்றுக்கொள்ள முடியாது. ஆம்
நான் எருசலேமைத் தேர்ந்தெடுத்தேன்.
ஆனால் அங்குள்ள ஆலயத்தை நான்
அழிப்பேன். 'என் பெயர் அங்கு இருக்க
வேண்டும்' என்று நான் சொன்னபோது
குறிபிட்டது இந்த இடத்தை தான்" என்றார்.

28யோசியா செய்த மற்ற அனைத்து
செயல்களும் 'யூத அரசர்களின் வரலாறு'
என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.

### யோசியாவின் மரணம்

29யோசியாவின் காலத்தில், எகிப்திய
அரசனான பார்வோன்நேகோ ஐபிராத்து
ஆற்றுக்கு அசீரியாவின் அரசனுக்கு
எதிராகப் போரிடச்சென்றான். யோசியா
பார்வோனுக்கு எதிராகப் போரிடப்
போனான். ஆனால் மெகிதோ என்ற
இடத்தில் யோசியாவை பார்வோன்நேகோ
கண்டதும் கொன்றுவிட்டான். 30மரித்துப்
போன யோசியாவின் உடலை அவனது
வேலைக்காரர்கள் மெகிதாவிலிருந்து எருச
லேமிற்குத் இரதத்தில் எடுத்துச்சென்றனர்.
அவனது சொந்தக் கல்லறையில் அவனை
அடக்கம் செய்தனர்.

பிறகு பொதுஜனங்கள் யோசியாவின்
மகனான யோவாகாசை அரசனாக அபி
ஷேகம் செய்து அவனைப் புதிய அரச
னாக்கினர்.

### யோவாகாஸ் யூதாவின் அரசனாகிறான்

31யோவாகாஸ் அரசனானபோது, அவ
னுக்கு 23 வயது. இவன் எருசலேமை
மூன்று மாதங்கள் அரசாண்டான். இவனது
தாயின் பெயர் அமுத்தாள் ஆகும். இவள்
லிப்னாவைச்சேர்ந்த எரேமியாவின் மகள்
ஆவாள். 32தவறானவை என்று கர்த்தரால்
சொல்லப்பட்டக் காரியங்களையே யோவா
காஸ் செய்துவந்தான். தன் முற்பிதாக்கள்
செய்த அதேப் பாவங்களையே அவனும்
செய்துவந்தான்.
33பார்வோன்நேகோ, ஆமாத் நாட்டிலுள்ள
ரிப்லாவில் யோவாகாசைப் பிடித்துக்
கட்டினான். இதனால் அவனால் எருச
லேமை ஆளமுடியவில்லை. பார்வோன்
நேகோ யூதாவை வற்புறுத்தி 100 தாலந்து
வெள்ளியையும் ஒரு தாலந்து பொன்னையும்
அபராதமாக பெற்றான்.
34பார்வோன்நேகோ யோவாகாசின் மக
னான எலியாக்கீமை புதிய அரசனாக்கி
னான். எலியாக்கீம் தன் தந்தையின்
இடத்தை எடுத்துக்கொண்டான். பார்வோன்
நேகோ எலியாக்கீமின் பெயரை
யோயாக்கீம் என்று மாற்றினான்.
பார்வோன் யோவாகாசை எகிப்துக்கு
கொண்டு போனான். அங்கேயே அவன்
மரணமடைந்தான். 35யோயாக்கீம் பார்
வோன் நேகோவிற்கு வெள்ளியும்
பொன்னும் அபராதமாக செலுத்திவந்தான்.
ஆனாலும் இவன் இந்த அபராதத்தை
ஜனங்கள் மீது வரியாகச் சுமத்தினான்.
எனவே நாட்டி லுள்ள ஒவ்வொருவனும்
பொன்னும் வெள்ளியும் கொடுக்க
வேண்டிவந்தது. இவற் றைத் தொகுத்து
அதை அவன் பார்வோன் நேகோவிற்கு
செலுத்தினான்.
36யோயாக்கீம் அரசனானபோது அவ
னுக்கு 25 வயது. அவன் எருசலேமில்
11 ஆண்டுகள் அரசாண்டான். அவனது
தாயின் பெயர் செபுதாள் ஆகும். அவள்
ரூமாவைச் சேர்ந்த பெதாயாமின் மகள்
ஆவாள். 37தவறானவையென்று கர்த்தரால்
குறிக்கப்பட்ட காரியங்களையே அவனும்
செய்துவந்தான். தன் முற்பிதாக்களைப்
போலவே அதே செயல்களைச் செய்தான்.

### அரசனான நேபுகாத்நேச்சார் யூதாவிற்கு வருகிறான்

24 அவனது காலத்தில், பாபிலோனை
நேபுகாத்நேச்சர் என்பவன் அரசாண்
டான். அவன் யூத நாட்டிற்கு வந்தான்.
மூன்றாண்டு காலத்திற்கு யோயாக்கீம்
நேபுகாத்நேச்சர்க்கு பணிவிடைச் செய்தான்.
பிறகு நேபுகாத்நேச்சாருக்கு எதிராகக் கலகம்
செய்தான். 2யோயாக்கீமிற்கு எதிராகப்
போரிடும் பொருட்டு பாபிலோனியர்
களையும் ஆராமியர்களையும் மோவாபியர்
களையும் அம்மோனியர்களையும் கர்த்தர்
கூட்டம் கூட்டமாக அனுப்பிவைத்தார்.
யூதாவை அழிப்பதற்காக கர்த்தர் இவ்வாறு
அனுப்பினார். இது கர்த்தர் சொன்னபடியே
நடந்தது. கர்த்தர் இவற்றைத் தம் ஊழியக்
காரர்களாகிய தீர்க்கதரிசிகள் மூலம்
சொல்லியிருக்கிறார்.
3யூதாவில் இவையெல்லாம் நடக்கும்படி
கர்த்தர் கட்டளையிட்டார். இவ்வாறு, அவன்
யூதர்களை அவனது பார்வை யிலிருந்து
அப்புறப்படுத்தினான். மனாசே செய்த
அனைத்து பாவங்களுக்காகவும் அவர்
இதனைச் செய்தார். 4மனாசே பல அப்பாவி
ஜனங்களைக் கொன்றான். அவர் களின்
இரத்தத்தால் எருசலேமை நிரப்பி னான்.
இத்தகைய பாவங்களை கர்த்தர்
மன்னிக்காமலிருந்தார்.
5யோயாக்கீம் செய்த மற்ற அனைத்து
செயல்களும் 'யூத அரசர்களின் வரலாறு'
என்ற புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.
6யோயாக்கீம் மரித்தான் பிறகு அவன் தனது
முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்
பட்டான். இவனுக்குப் பின் இவனது
மகனான யோயாக்கீன் என்பவன் புதிய
அரசன் ஆனான்.
7அதற்குப்பின் எகிப்தின் அரசன் தன்
நாட்டிலிருந்து வரவில்லை. ஏனென்றால்
எகிப்து ஆறுமுதல் ஐபிராத்து ஆறுவரை
யுள்ள எகிப்து அரசனுக்குரிய பகுதியைப்
பாபிலோனிய அரசன் பிடித்துக்
கொண்டான்.

### நேபுகாத்நேச்சார் எருசலேமைக் கைப்பற்றுகிறான்

8யோயாக்கீன் அரசனான போது
அவனுக்கு 18 வயது ஆகும். இவன்
எருசலேமில் 3 மாதங்கள் ஆண்டான்.
இவனது தாயின் பெயர் நெகுஸ்தாள் ஆகும்.
இவள் எருசலேமிலுள்ள எல்நாத்தானின்
மகள் ஆவாள். 9தவறென்று கர்த்தர் சொன்ன
வற்றையே அவன் செய்தான். அவனுடைய
தந்தை செய்த அனைத்து காரியங்களையும்
அவனும் செய்தான்.
10அக்காலத்தில், பாபிலோனிய அரசனான
நேபுகாத்நேச்சாரின் அதிகாரிகள் எருச
லேமிற்கு வந்து அதனை முற்றுகை யிட்டனர்.
11பிறகு பாபிலோனிய அரசனான
நேபுகாத்நேச்சாரே அவனது வேலைக்
காரர்கள் முற்றுகையிட்ட நகரத்திற்கு
வந்தான். 12யூத அரசனான யோயாக்கீன்
பாபிலோனிய அரசனைச் சந்திக்கச் சென்

*றான். அவனோடு அவனது தாய்,*
*அதிகாரிகள், தலைவர்கள் அலுவலகர்கள்*
*அனைவரும் சென்றனர். பின் பாபிலோனிய*
*அரசன் யோயாக்கீனைச் சிறைபிடித்தான்.*
*இது நேபுகாத்நேச்சாரின் 8வது ஆட்சி*
*யாண்டில் நடந்தது.*
**13** *நேபுகாத்நேச்சார், கர்த்தருடைய ஆலயத்*
*திலும் அரண்மனையிலும் உள்ள கருவூலங்*
*களில் உள்ளப் பொருட்களையெல்லாம்*
*எடுத்துக்கொண்டுப் போனான். சாலொ*
*மோன் அரசன் கர்த்தருடைய ஆலயத்தில்*
*அமைத்திருந்த தங்கத்தட்டுகளையும் வெட்டி*
*எடுத்துக்கொண்டான். இதுவும் கர்த்தர்*
*சொன்னபடியே நடந்தது.*
**14** *நேபுகாத்நேச்சார் எருசலேமிலுள்ள*
*அனைவரையும் கைதுசெய்தான். தலைவர்*
*களையும் செல்வர்களையும் கைதுசெய்தான்.*
*அவன் 10,000 ஜனங்களைக் கைதிகளாக்கி*
*அழைத்துக்கொண்டு வந்தான். அவன்*
*திறமைமிக்க வேலைக்காரர்களையும்*
*கைவினைக்காரர்களையும் அழைத்துக்*
*கொண்டுச் சென்றான். ஏழ்மையான சாதா*
*ரண பொது ஜனங்களைத் தவிர வேறுயா*
*ரையும் இவன் விட்டுவைக்கவில்லை.*
**15** *நேபுகாத்நேச்சார் யோயாக்கீனைச் சிறை*
*பிடித்து பாபிலோனுக்குக் கொண்டு*
*சென்றான். அதோடு அரசனின் தாய்,*
*மனைவிமார்கள், அதிகாரிகள் மற்றும்*
*தலைவர்களையும் கொண்டுசென்றான்.*
*இவர்களை அவன் எருசலேமிலிருந்து பாபி*
*லோனுக்குக் கைதிகளாகவே அழைத்துக்*
*கொண்டு போனான்.* **16** *அதில் 7,000 வீரர்கள்*
*இருந்தனர். இவ்வெல்லா வீரர்களையும்*
*தகுதிமிக்க 1,000 திறமையுள்ள வேலைக்*
*காரர்களையும் கைவினைக் கலைஞர்*
*களையும் அழைத்துக்கொண்டு போனான்.*
*வீரர்கள் நன்கு பயிற்சி பெற்று போருக்குத்*
*தயாராக இருந்தனர். பாபிலோன் அரசன்*
*இவர்களைப் பாபிலோனுக்கு கைதிகளா*
*கவே கொண்டுசென்றான்.*

### சிதேக்கியா அரசன்

**17** *பாபிலோன் அரசன் மத்தனியா என்பவ*
*னை புதிய அரசனாக்கினான். அவன்*
*யோயாக்கீனின் சிறிய தகப்பன் ஆவான்.*
*அவனது பெயரை சிதேக்கியா என மாற்றி*
*விட்டான்.* **18** *சிதேக்கியா அரசனானபோது*
*அவனுக்கு 21 வயது. அவன் 11 ஆண்டுகள்*
*எருசலேமில் ஆண்டான். அவனது தாயின்*
*பெயர் அமுத்தாள் ஆகும். இவள் லிப்னா*
*விலுள்ள எரேமியாவின் மகள்.* **19** *தவறான*
*தென்று கர்த்தர் சொன்னவற்றையே*
*அவனும் செய்துவந்தான். யோயாக்கீன்*
*செய்த அனைத்து செயல்களையும் அவன்*
*செய்தான்.* **20** *எருசலேம் மற்றும் யூதா மீது*
*கர்த்தர் மிகுந்த கோபங்கொண்டு அங்குள்ள*
*ஜனங்களை அப்புறப்படுத்தினார்.*

### நேபுகாத்நேச்சார் சிதேக்கியாவின் ஆட்சியை முடித்தது

*சிதேக்கியா பாபிலோன் அரசனுக்கு*
*அடிபணிய மறுத்து அவனுக்கு எதிராகக்*
*கலகம் செய்தான்.*
**25** *எனவே, பாபிலோன் அரசனும்,*
*அவனது படைகளும், எருசலேமிற்கு*
*எதிராகப் போரிட வந்தனர். இது சிதேக்கி*
*யாவின் 9வது ஆட்சியாண்டின் பத்தாம்*
*மாதத்தின் பத்தாம் நாளில் நடந்தது.*
*நேபுகாத்நேச்சார் தன் படையை நிறுத்தி*
*நகரத்திற்குள் யாரும் போகாமலும் வெளி*
*யேறாமலும் தடுத்துவிட்டான். பின்*
*நகரத்தைச்சுற்றி கொத்தளச்சுவரைக்*
*கட்டினான்.* **2** *யூத நாட்டின் அரசனாகிய*
*சிதேக்கியாவின் 11ம் ஆட்சியாண்டுவரை*
*நேபுகாத்நேச்சாரின் படை எருசலேமைச்*
*சுற்றிலும் தங்கியிருந்தது.* **3** *நகரத்தின்*
*நிலையைப் பஞ்சம் மேலும் மோசமாக்கிற்று.*
*நாலாவது மாதத்தின் ஒன்பதாம் நாளில்*
*உண்ண பொதுஜனங்களுக்கு உணவே*
*இல்லை என்ற நிலை வந்தது.*
**4** *நேபுகாத்நேச்சாரின் படை இறுதியில்*
*நகரச்சுவரை உடைத்தது. அன்று இரவு*
*சிதேக்கியாவும் அவனது ஆட்களும்*
*வெளியே ஓடிப்போனார்கள். அவர்கள்*
*இரகசிய கதவைப் பயன்படுத்தி அரசனின்*
*தோட்டத்தின் வழியே இரு மதில்களுக்கு*
*நடுவே ஓடிப்போயினர். பகைவரின் படை*
*நகரைச்சுற்றிலும் இருக்க பாலைவனத்திற்குச்*
*செல்லும் வழியே தப்பிச் சென்றார்கள்.*
**5** *பாபிலோன் படை அவர்களைத் துரத்திப்*
*போய் எரிகோ சமவெளியில் பிடித்துக்*
*கொண்டது. சிதேக்கியாவை விட்டுவிட்டு*
*அவனது வீரர்கள் தப்பித்துக்கொண்டனர்.*
**6** *பாபிலோனியர்கள் சிதேக்கியாவைப்*
*பிடித்து ரிப்லாவிலிருந்த பாபிலோனிய*
*அரசனிடம் கொண்டுசென்றார்கள். அவர்கள்*
*அவனைத் தண்டிக்க விரும்பினார்கள்.*
**7** *சிதேக்கியாவின் மகன்களை அவன் கண்*
*முன்னாலேயே கொன்றனர். பின் இவனது*
*கண்களைப் பிடுங்கினார்கள். பிறகு*
*சங்கிலியால் பாபிலோனுக்குக் கொண்டு*
*சென்றனர்.*

### எருசலேம் அழிக்கப்படுகிறது

**8** *நேபுகாத்நேச்சாரின் 19வது ஆட்சி*
*யாண்டின் ஐந்தாம் மாதத்தின் ஏழாவது*
*நாளில் நேபுகாத்நேச்சார் எருசலேமிற்கு வந்*
*தான். நெபுசராதான் பாபிலோனிய அரசனது*
*பெரிய படையின் ஆணை அதிகாரியாக*
*இருந்தான்.* **9** *இவன் கர்த்தருடைய ஆலயத்தை*
*யும் அரண்மனையையும் பெரிய வீடு*
*களையும் கட்டிடங்களையும் எரித்தான்.*
**10** *எருசலேமை சுற்றியிருந்த சுவரையும்*
*நெபுசராதானின் பாபிலோனிய படை*
*உடைத்து தள்ளியது.* **11** *பாபிலோனிய படை*
*யின் ஆணை அதிகாரியான நெபுசராதான்*

நகரத்தில் மேலும் மீதியாக இருந்த ஜனங்
களையும் பாபிலோனிய அரசனுக்கு
வெளியே விழுந்து அழிந்தவர்களையுங்கூட
(ஆள முயன்றவர்களையும்) இவன் கைது
செய்து நாடு கடத்திவிட்டான். 12அவன்
மிக எளிய ஜனங்களையே அங்கே
தங்கும்படி விட்டான். இவர்கள் இங்குள்ள
திராட்சைத் தோட்டங்களையும் பயிர்களை
யும் பார்த்துக்கொண்டனர்.
13பாபிலோனிய வீரர்கள் கர்த்தருடைய
ஆலயத்திலுள்ள வெண்கல தூண்களை
எல்லாம் உடைத்துப்போட்டனர். அதோடு
வெண்கல அடிப்பகுதிகளையும், வண்டிகள்,
தொட்டிகள் போன்றவற்றையும் உடைத்
தனர். பின் அவற்றைப் பாபிலோனுக்கு
எடுத்துச்சென்றனர். 14பாபிலோனியர்கள்
கர்த்தருடைய ஆலயத்தில் இருந்த செப்புச்சட்
டிகள், சாம்பல் பாத்திரங்கள், கத்திகள்,
தூபகலசங்கள், ஆராதனைக்கு பயன்படும்
சகலக் கருவிகள் போன்றவற்றை எடுத்துச்
சென்றனர். 15நெபுசராதானும் படைத்தலை
வனும் சுத்தப் பொன்னிலும் வெள்ளியிலு
மான தூபகலசங்களையும் கலசங்களையும்
எடுத்துக்கொண்டனர். 16-17எனவே இவர்கள்
எடுத்துக்கொண்டவை:

இரண்டு தூண்கள் ஒவ்வொன்றும்
27 அடி உயரமும் 4 1/2 அடி
உயரமுள்ள வெண்கலத்தலைப்பும்
உடையவை. இவை
வெண்கலத்தால் பின்னலும்
மாதளம் பழங்களுமான மாதிரியில்
செய்யப்பட்டிருந்தன. இரண்டும்
ஒரே மாதிரியாய் இருந்தன.
ஒரு பெரிய வெண்கலத்தொட்டி
கர்த்தருடைய ஆலயத்தில்
சாலொமோனால்
செய்துவைக்கப்பட்ட வண்டிகள்.

இவ்வெண்கலத்தின் எடையானது
அளந்து காணமுடியாத அளவிற்கு இருந்தது.

### யூத ஜனங்கள் கைதிகளாதல்

18நெபுசராதான், தலைமை
ஆசாரியனாகிய செராயாவையும்
இரண்டாம் ஆசாரியனாகிய
செப்பனியாவையும் வாயில்
காப்பாளர் மூவரையும்
லயத்திலிருந்து கைப்பற்றினான்.

19நகரத்திலிருந்து நெபுசராதான்
படைக்குப்பொறுப்பான
1 அதிகாரியையும் நகரத்திலேயிருந்த
5 அரச ஆலோசகர்கள்
1 படைத் தளபதியினுடைய
செயலாளர். அவன்தான் பொது
ஜனங்களின் ஜனத்தொகையைக்
கணக்கெடுத்து அவர்களில்
சிலரைப் படைவீரர்களாகத்
தேர்ந்தெடுக்கும் பொறுப்பில்
இருந்தான்
நகரத்தில் அகப்பட்ட
60 பேர்கள் எடுத்துக்கொண்டான்.

20-21பிறகு நெபுசராதான் அவர்கள் அனை
வரையும் பாபிலோனுக்கு அழைத்துச்
சென்று ரிப்லாவில் இருந்த பாபிலோனிய
அரசனிடம் கொண்டுபோனான். அவர்
களைப் பாபிலோன் அரசன் ஆமாத்
தேசத்தின் பட்டணமான ரிப்லா என்னும்
இடத்தில் வெட்டிக் கொன்றுபோட்டான்.
இவ்வாறே யூத ஜனங்களும் தங்கள் தேசத்
திலிருந்து சிறைக்கு கொண்டுப்போகப்
பட்டனர்.

### யூத நாட்டின் ஆளுனரான கெதலியா

22யூத நாட்டிலே சிலரை மட்டுமே
பாபிலோன் அரசனான நேபுகாத்நேச்சார்
விட்டுவைத்தான், அங்கு சாப்பானின்
மகனாகிய அகீக்காமின் மகனாகிய
கெதலியா இருந்தான். யூத ஜனங்களுக்கு
ஆளுநராக நெபுசராதான் கெதலியாவை
ஆக்கினான்.
23நெத்தானியாவின் மகனான இஸ்ம
வேலும், கரேயாவின் மகனான யோகனா
னும் நெத்தோப்பாத்தியனாகிய தன்கூமேத்
தின் மகன் செராயாவும் மாகாத்தியன்
ஒருவனது மகன் யசனியாவும் படை
அதிகாரிகளாவார்கள். இவர்களும் அவர்
களைச் சேர்ந்தவர்களும் கெதலியாவை யூத
ஆளுநராக ஆக்கியதுபற்றி கேள்விப்
பட்டனர். எனவே, அவர்கள் மிஸ்பாவிற்குப்
போய் கெதலியாவைச் சந்தித்தனர்.
24கெதலியா அவர்களுக்கு ஒரு வாக்குறுதி
அளித்தான். அவன், “பாபிலோனிய
அதிகாரிகளுக்குப் பயப்படவேண்டாம்.
இங்கிருந்து அரசருக்குச்சேவைச் செய்க.
பிறகு உங்களுக்கு எல்லாம் சரியாக
இருக்கும்” என்றான்.
25எலிசாமாவின் மகனாகிய நெத்தானியா
வின் மகன் இஸ்மவேல் அரச குடும்பத்தி
லிருந்து வந்தவன். ஏழாவது மாதத்தில்
அவன் பத்துபேரோடு மிஸ்பாவுக்கு வந்து
கெதலியாவையும் அவனோடு இருந்த
யூதர்களையும் பாபிலோனியர்களையும்
கொன்றுபோட்டான். 26பிறகு படை
அதிகாரிகளும் ஜனங்களும் எகிப்துக்கு
ஓடிப்போனார்கள். அப்போது முக்கியமுள்ள
வர்கள், இல்லாதவர்கள் என்று அனைவரும்
ஓடிப்போனார்கள். ஏனென்றால் அவர்
களுக்கு பாபிலோனியர்களிடம் பயம்
அதிகம்.
27பிறகு பாபிலோனின் அரசனாக ஏவில்
மெரொதாக் ஆனான். இவன் யூத அரசனான
யோயாக்கீனை விடுதலை செய்தான். இது
இவன் சிறைப்பட்ட 37வது ஆண்டு. தான்
ஆட்சிக்கு வந்த 12வது மாதத்தின் 27வது

*நாளில் செய்தான்.* 28*ஏவில் மெரொதாக்*
*யோயாக்கீனுடன் கருணையோடு இருந்தான்.*
*அவன், பாபிலோனில் (கைது செய்யப்பட்டு)*
*இருந்த மற்ற அரசர்களைவிட யோயாக்கீ*
*னுக்கு நல்ல இருக்கை அளித்தான்.*
29*யோயாக்கீன் கைதியின் ஆடை அணிவதை*
*அரசன் தடுத்துவிட்டான். அவன் அரச*
*னோடு சமமாக ஒரே மேஜையில் அமர்ந்து*
*தனது மீதியான காலம் முழுவதும் உணவு*
*உண்டான்.* 30*ஏவில்மெரொதாக், யோயாக்கீ*
*னுக்கு அவனது வாழ்நாள் முழுவதும்*
*ஒவ்வொரு நாளும் உணவளித்து வந்தான்.*

# நாளாகமத்தின் முதலாம் புத்தகம்

### ஆதாம் முதல் நோவா வரையுள்ள குடும்ப வரலாறு

1 [1-3]ஆதாம், சேத், ஏனோஸ், கேனான், மகலாலெயேல், யாரேத், ஏனோக்கு, மெத்தூசலா, லாமேக்கு, நோவா.
[4]சேம், காம், யாப்பேத் ஆகியோர் நோவாவின் மகன்கள்.

### யாப்பேத்தின் சந்ததியினர்

[5]கோமர், மாகோகு, மாதாய், யாவான், தூபால், மேசேக்கு, தீராஸ் ஆகியோர் யாப்பேத்தின் மகன்கள்.
[6]அஸ்கினாஸ், ரீப்பாத்து, தொகர்மா, ஆகியோர் கோமரின் மகன்கள்.
[7]எலீசா, தர்ஷீஸ், கித்தீம், தொதானீம் ஆகியோர் யாவானின் மகன்கள்.

### காமின் சந்ததியினர்

[8]கூஷ், மிஸ்ராயிம், பூத், கானான் ஆகியோர் காமின் மகன்களாவார்கள்.
[9]சேபா, ஆவிலா, சப்தா, ராமா, சப்திகா ஆகியோர் கூஷின் மகன்களாவார்கள். சேபா, திதான், ஆகியோர் ராமாவின் மகன்களாவார்கள்.
[10]நிம்ரோதின் சந்ததியான கூஷ், வளர்ந்து பலமுள்ள தைரியமிக்க வீரனாக உலகில் விளங்கினான்.
[11]லுதீமியர், ஆனாமியர், லெகாபியர், நப்தூகியர் ஆகியோரின் தந்தை மிஸ்ராயிம் (எகிப்து) [12]மேலும் மிஸ்ராயும் பத்ரூசியர், கஸ்லூகியர் கப்தோரியர் ஆகியோருக்கும் தந்தை (பெலிஸ்தியர்கள் கஸ்லூகியரிலிருந்து வந்தவர்கள்.)
[13]கானான் சீதோனின் தந்தை ஆவான். சீதோன் இவனது மூத்த மகன். கானான் சீதோனுக்கும் கேத்துக்கும் தந்தை ஆவான். [14]அவன் எபூசியரையும், எமோரியரையும், கிர்காசியரையும், [15]ஏவியரையும், அர்கீயரையும், சீனியரையும், [16]அர்வாதியரையும், செமாரியரையும், காமாத்தியரையும் பெற்றான்.

### சேமின் சந்ததியினர்

[17]ஏலாம், அசூர், அர்பக்சாத், லூத், ஆராம், ஊத்ஸ், கூல், கேத்தெர், மேசக் ஆகியோர் சேமின் மகன்களாவார்கள்.
[18]அர்பக்சாத் சாலாவின் தந்தை. சாலா ஏபேரின் தந்தை.
[19]ஏபேருக்கு இரண்டு மகன்கள் இருந்தார்கள். ஒரு மகனின் பெயர், பேலேகு* ஆகும். ஏனென்றால், இவனது வாழ்நாளில் தான் பூமியிலுள்ள ஜனங்கள் மொழிவாரியாகப் பிரிக்கப்பட்டனர். பேலேகின் சகோதரனது பெயர் யொக்தான் ஆகும். [20]அல்மோதாத், சாலேப், ஆசர்மாவேத், யேராகை, [21]அதோராம், ஊசால், திக்லா, [22]ஏபால், அபிமாவேல், சேபா, [23]ஓப்பீர், ஆவிலா, யோபாப் ஆகியோரை யொக்தான் பெற்றான். கீழ்க்கண்ட அனைவரும் யோக்தானின் மகன்களாவார்கள்.

### ஆபிரகாமின் குடும்பம்

[24]சேம், அர்பக்சாத், சாலா, [25]ஏபேர், பேலேகு, ரெகூ, [26]செரூகு, நாகோர், தேராகு, [27]ஆபிராமாகிய ஆபிரகாம் ஆகியோர்.
[28]ஈசாக்கும், இஸ்மவேலும் ஆபிரகாமின் மகன்களாவார்கள். [29]கீழ்க்கண்டவர்கள் இவர்களது சந்ததியாவார்கள்:

*ஆகாரின் சந்ததியினர்:*

இஸ்மவேலின் மூத்த மகனான நெபாயோத், மற்ற மகன்களான கேதார், அத்பியேல், மிப்சாம், [30]மிஷ்மா, தூமா, மாசா, ஆதாத், தேமா, [31]யெத்தூர், நாபீஸ், கேத்மா, ஆகியோர்.

*கேத்தூராளின் மகன்கள்:*

[32]கேத்தூராள் ஆபிரகாமின் பெண் வேலைக்காரி* சிம்ரான், யக்ஷான், மேதான், மீதியான், இஸ்பாக், சூவா ஆகியோர் இவளது பிள்ளைகள்.
சேபாவும் தேதானும் யக்ஷானின் பிள்ளைகள்.
[33]ஏப்பா, ஏப்பேர், ஆனோக்கு, அபீதா, எல்தாகா ஆகியோர் மீதியானின் மகன்கள்.
இவர்கள் எல்லோரும் கேத்தூராளின் சந்ததியார்.

---

**பேலேகு** இந்த பெயரின் அர்த்தம் "பிரிவு" என்பதாகும்.

**வேலைக்காரி** அல்லது, "மறுமனையாட்டி." ஒருவனுக்கு மனைவியைப்போல இருக்கும் ஒரு அடிமைப்பெண்.

சாராளின் மகன்கள்:
34 ஆபிரகாம் ஈசாக்கின் தந்தை. ஏசாவும், இஸ்ரவேலும் ஈசாக்கின் மகன்கள்.
35 எலீப்பாஸ், ரெகுவேல், எயூஷ், யாலாம், கோராகு ஆகியோர் ஏசாவின் மகன்கள்.
36 தேமான், ஓமார், செப்பி, கத்தாம், கேனாஸ், திம்னா, அமலேக்கு ஆகியோர் எலீப்பாசின் மகன்கள்.
37 நகாத், சேராகு, சம்மா, மீசா ஆகியோர் ரெகுவேலின் மகன்கள்.

### சேயீரிடமிருந்து ஏதோமியர்கள்

38 லோத்தான், சோபால், சிபியோன், ஆனா, தீசோன், எத்சேர், தீசான் ஆகியோர் சேயீரின் மகன்கள்.
39 ஓரியும் ஓமாமும் லோத்தானின் மகன்கள். திம்னாள் லோத்தானின் சகோதரி ஆவாள்.
40 அல்வான், மானகாத், ஏபால், செப்பி, ஓனாம் ஆகியோர் சோபாலின் மகன்கள்.

அயாவும், ஆனாகும் சிபியோனின் மகன்கள்.
41 ஆனாகின் மகன்களில் திஷோனும் ஒருவன்.

அம்ராம், எஸ்பான், இத்தரான், கெரான் ஆகியோர் திஷோனின் மகன்கள்.
42 பில்கான், சகவான், யாக்கான் ஆகியோர் ஏத்சேரின் மகன்கள்.

ஊத்ஸ், அரான் ஆகியோர் திஷானின் மகன்கள்.

### ஏதோமின் அரசர்கள்

43 இஸ்ரவேல்ஜனங்களை அரசனொருவன் ஆள்வதற்கு முன்பே ஏதோம் நிலத்தை பல அரசர்கள் ஆண்டு வந்தார்கள். அந்த அரசர்களின் பெயர்கள்:

பேயோரின் மகன் பேலா. இவனது நகரத்தின் பெயர் தின்காபா ஆகும்.
44 பேலா மரித்ததும் போஸ்ராவைச் சேர்ந்த சேராகின் மகன் யோபாப் இவனுக்குப் பதில் அரசன் ஆனான்.
45 யோபாப் மரித்ததும், தேமானியரின் நாட்டானாகிய ஊசாம் புதிய அரசன் ஆனான்.
46 ஊசாம் மரித்த பின், பேதாதின் மகன் ஆதாத் அவனுக்குப் பதில் அரசன் ஆனான். இவன் மீதியானியரை மோவாபின் நாட்டிலே தோற்கடித்தான். இவனது நகரத்தின் பெயர் ஆவீத் ஆகும்.
47 ஆதாத் மரித்த பின், மஸ்ரேக்கா ஊரைச் சேர்ந்த சம்லா அவனுக்குப் பதில் அரசன் ஆனான்.
48 சம்லா மரித்த பின் சவுல் புதிய அரசன் ஆனான். இவன் ஐபிராத்து ஆற்றின் கரையில் உள்ள ரேகோபோத்தைச் சேர்ந்தவன்.
49 சவுல் மரித்த பின், அக்போரின் மகனான பாகாலானான் அவனுக்குப் பதில் அரசன் ஆனான்.
50 பாகாலானான் மரித்த பின், ஆதாத் அவனுக்குப் பின் புதிய அரசன் ஆனான். இவனது நகரத்திற்கு பாகி என்று பெயரிடப் பட்டது. ஆதாத்தின் மனைவியின் பெயர் மெகேதபேல் ஆகும். மாத்திரேத்தின் மகள் மெகேதபேல் ஆவாள். மேசகாபின் மகள் மாத்திரேத் ஆவாள். பிறகு, ஆதாத் மரித்தான்.
51 ஆதாத் மரித்த பின்,

ஏதோமில் திம்னா, அல்யா, எதேத்,
52 அகோலிபாமா,ஏலா, பினோன், 53 கேனாஸ், தேமான், மிப்சார், 54 மக்தியேல், ஈராம் ஆகியோர் ஏதோமின் தலைவர்கள் ஆனார்கள்.

### இஸ்ரவேலின் மகன்கள்

2 ரூபன், சிமியோன், லேவி, யூதா, இசக்கார், செபுலோன், 2 தாண், யோசேப்பு, பென்யமீன், நப்தலி, காத், ஆசேர் ஆகியோர் இஸ்ரவேலின் மகன்களாவார்கள்.

### யூதாவின் மகன்கள்

3 ஏர், ஓனான், சேலா ஆகியோர் யூதாவின் மகன்கள். இந்த மூன்றுபேரும் பத்சூவா பெற்ற பிள்ளைகள். இவள் கானான் நாட்டுப்பெண். யூதாவின் முதல் மகனான ஏர், கெட்டவனாக இருப்பதைக் கர்த்தர் கண்டார். அதனால் கர்த்தர் அவனை கொன்றுவிட்டார். 4 யூதாவின் மருமகளான தாமார் அவனுக்குப் பாரேஸ், சேரா எனும் இருவரைப் பெற்றாள். ஆக யூதாவுக்கு 5 மகன்கள் இருந்தார்கள்.
5 எஸ்ரோனும் ஆமூலும், பாரேசின் மகன்களாவார்கள்.
6 சேராவுக்கு 5 மகன்கள். சிம்ரி, ஏத்தான், ஏமான், கல்கோல், தாரா ஆகியோர் ஆவார்கள்.
7 சிம்ரியின் மகன் கர்மீ. கர்மீயின் மகன் ஆகார். ஆகார் இஸ்ரவேலுக்குப் பல தொல்லைகளை வரவழைத்தவன். இவன் போரில் சில பொருட்களை எடுத்துக்கொண்டான். அவற்றை அவன் தேவனுக்குக் கொடுத்திருக்க வேண்டும். ஆனால், அவ்வாறு செய்யவில்லை.
8 அசரியா ஏத்தானின் மகன்.
9 யெர்மெயேல், ராம், கெலுபா ஆகியோர் எஸ்ரோனின் பிள்ளைகள்.

### ராமின் சந்ததியினர்

10 ராம், அம்மினதாபின் தந்தை ஆவார். அம்மினதாப், நகசோனின் தந்தை ஆவார்.
நகசோன், யூத ஜனங்களின் பிரபு. 11 நகசோன்
சல்மாவின் தந்தை. சல்மா போவாசின்
தந்தை. 12 போவாஸ் ஓபேதின் தந்தை. ஓபேத்
ஈசாவின் தந்தை. 13 ஈசாய் எலியாபின்
தந்தை. இவன் அவனது மூத்த மகன். இவனது இரண்டாவது மகன் அபினதாப். இவனது மூன்றாவது மகன் சிம்மா.
14 இவனது நான்காவது மகன் நெதனெயேல்,

இவனது ஐந்தாவது மகன் ரதாயி. 15இவனது
ஆறாவது மகன் ஓத்சேம், ஏழாவது மகன்
தாவீது. 16செருயாளும் அபிகாயிலும் இவர்
களது சகோதரிகள். செருயாளிற்கு அபிசாய்,
யோவாப், ஆசகேல் என மூன்று மகன்கள்.
17அபிகாயில் அமாசாவின் தாய், இஸ்ம
வேலனாகிய யெத்தேர் அமாசாவின் தந்தை.

### காலேப்பின் சந்ததியினர்

18காலேப் எஸ்ரோனின் மகன். காலேப்
பிற்கு பிள்ளைகளும் அசுபா என்ற மனை
வியும் இருந்தனர். அசுபா எரீயோத்தின்
மகள். ஏசேர், சோபாப், அர்தோன் ஆகி
யோர் அவனது பிள்ளைகளாவார்கள்.
19அசுபா மரித்ததும் காலேப் எப்ராத்தை
மணந்துகொண்டான். இருவருக்கும் ஒரு
மகன் பிறந்தான். அவர்கள் அவனுக்கு
ஊர் என்று பெயரிட்டனர். 20ஊர் ஊரியின்
தந்தையானான். ஊரி பெசலெயேலின்
தந்தையானான்.
21பின்னர், எஸ்ரோனுக்கு அறுபது வயது
ஆனதும், அவன் மாகீரின் மகளை மணந்துக்
கொண்டான். மாகீர் கிலெயாத்தின் தந்தை.
எஸ்ரோன் மாகீரின் மகளோடு பாலின
உறவு கொண்டான். அவள் செகூப்பை
பெற்றாள். 22செகூப் யாவீரின் தந்தை.
யாவீருக்கு கிலேயாத் நிலத்தில் 23 நகரங்கள்
இருந்தன. 23ஆனால் கேசூரும் ஆராமும்
யாவீரின் ஊர்களை எடுத்துக்கொண்
டார்கள். அவற்றுள் ஜாயிர் நகர் மற்றும்
கேனாத் நகரும் அதனைச் சுற்றியுள்ள 60
சிற்றூர்களும் அடங்கும். இந்நகரங்களும்
ஊர்களும் கிலேயாத்தின் தந்தையான,
மாகீரின் மகன்களுக்கு உரியவை.
24எஸ்ரோன் எப்ராத்தாவில் உள்ள
ஊரான காலேப்பில் மரித்தான். மரித்த
பிறகு, அவன் மனைவியான அபியாள்
ஒரு மகனைப் பெற்றாள். அவனது பெயர்
அசூர். அவன் தெக்கொவாவின் தந்தை.

### யெர்மெயேலின் சந்ததியினர்

25யெர்மெயேல் எஸ்ரோனின் முதல் மகன்.
யெர்மெயேலுக்கு ராம், பூனா, ஒரென்,
ஓத்சேம், அகியா எனும் பிள்ளைகள் இருந்
தனர். இவர்களில் ராம் மூத்த மகன்.
26யெர்மெயேலுக்கு, அத்தாராள் எனும்
பேருடைய இன்னொரு மனைவியும் இருந்
தாள். இவள் ஓனாமின் தாய்.
27யெர்மெயேலின் மூத்த மகனான
ராமிற்குப் பிள்ளைகள் இருந்தனர். அவர்கள்
மாஸ், யாமின், எக்கேர் ஆகியோராகும்.
28ஓனாவிற்கு சம்மாய், யாதா என்ற
பிள்ளைகள் இருந்தனர். சம்மாயிற்கு நாதாப்,
அபிசூர் எனும் பிள்ளைகள் இருந்தனர்.
29அபிசூரின் மனைவியின் பெயர் அபியா
யேல், அவர்களுக்கு இரண்டு மகன்கள்
இருந்தனர். அக்பான், மோளித் என்பவை
அவர்களின் பெயர்.
30சேலேத்தும், அப்பாயிமும் நாதாப்பின்
மகன்கள். சேலேத் பிள்ளைப்பேறு இல்லாம
லேயே மரித்துப்போனான்.
31அப்பாயீமின் மகன் இஷி, இஷியின்
மகன் சேசான், சேசானின் மகன் அக்லாய்,
32யாதா சம்மாயின் சகோதரன். யெத்தெ
ரும் யோனத்தானும் யாதாவின் மகன்கள்.
யெத்தெர் பிள்ளைப்பேறு இல்லாமலே
மரித்துப்போனாள்.
33பேலேத்தும் சாசாவும் யோனத்தானின்
மகன்கள். இதுவே யெர்மெயேலின் குடும்
பப்பட்டியலாகும்.
34சேசானுக்கு மகன்கள் இல்லை.
அவனுக்கு குமாரத்திகளே இருந்தனர். சேசா
னுக்கு எகிப்திலுள்ள யர்கா என்ற பேருள்ள
வேலைக்காரன் இருந்தான். 35சேசான்
யர்காவைத் தன் மகள் மணந்துகொள்ளும்படி
அனுமதித்தான். அவர்களுக்கு ஒரு மகன்
இருந்தான். அவனது பெயர் அத்தாயி.
36அத்தாயி நாதானின் தந்தை, நாதான்
சாபாத்தின் தந்தை, 37சாபாத் எப்லாலின்
தந்தை, எப்லால் ஓபேத்தின் தந்தை, 38ஓபேத்
ஏகூவின் தந்தை, ஏகூ அசரியாவின் தந்தை,
39அசரியா ஏலேத்ஸின் தந்தை, ஏலேத்ஸ்
எலெயாசாவின் தந்தை, 40எலெயாசா
சிஸ்மாயின் தந்தை, சிஸ்மாய் சல்லூமின்
தந்தை, 41சல்லூம் எக்கமியாவின் தந்தை,
எக்கமியா எலிசாமாவின் தந்தை.

### காலேபின் குடும்பம்

42காலேப் யெர்மெயேலின் சகோதரன்.
காலேபின் முதல் மகன் மேசா. மேசா
சீப்பின் தந்தை. மேசாவின் மற்றொரு
மகன் மெரேசா. மெரேசா எப்ரோனின்
தந்தை.
43கோராகு, தப்புவா, ரெக்கேம், செமா
ஆகியோர் எப்ரோனின் மகன்கள். 44செமா
ராகிமின் தந்தை. ராகிம் யோர்க்கேயாமின்
தந்தை. ரெக்கேம் சம்மாயின் மகன். 45சம்மாய்
மாகோனின் தந்தை, மாகோன் பெத்சூரின்
தந்தை.
46காலேபின் வேலைக்காரியாக எப்பாள்
இருந்தாள். அவள் ஆரான், மோசா, காசே
ஆகியோரின் தாய். ஆரான் காசேசின்
தந்தை.
47ரேகேம், யோதாம், கேசாம், பேலேத்,
எப்பா, சாகாப் ஆகியோர் யாதாயின்
மகன்கள்.
48மாகா காலேப்பின் இன்னொரு
வேலைக்காரி. அவள் சேபேர் திர்கானா
ஆகியோரின் தாயானாள். 49மாகா, சாகாப்,
சேவா ஆகியோருக்கும் தாயானாள். சாகாப்
மத்மன்னாவின் தந்தையானான். சேவா
மக்பேனாவுக்கும் கீபேயாவுக்கும் தந்தையா
னான். காலேபின் மகள் அக்சாள்.
50இது காலேபின் சந்ததியாரின் விபர
மாகும். ஊர், காலேபின் முதல் மகன்.
அவன் எப்ராத்தாளிடம் பிறந்தான். கீரியாத்

யாரீமை உருவாக்கிய சோபால், [51]பெத்லெ
கேமை உருவாக்கிய சல்மா, பெத்காதேரை
உருவாக்கிய ஆரேப்பு ஆகியோர் ஊரின்
மகன்கள் ஆவார்கள்.
[52]சோபால் கீரியாத்யாரீமினை உருவாக்கி
யவன். இது சோபாலின் சந்ததியாரின்
விபரம்: ஆராவோ, ஆசியம் மெனுகோத்தின்
பாதியளவு ஜனங்களும் [53]கீரியாத்யாரீமின்
கோத்திரங்களும் எத்திரியர், பூகியர்,
சுமாத்தியர், மிஸ்ராவியர் ஆகியோர் ஆவார்
கள். மிஸ்ராவியரிடமிருந்து சோராத்தியரும்
எஸ்தவோலியரும் பிறந்தார்கள்.
[54]இது சல்மா சந்ததியின் விபரமாகும்:
பெத்லேகேம், நேத்தோபாத், அதரோத், பெத்
யோவாப் ஆகிய நகர ஜனங்களும் மானாத்தி
யரில் பாதி ஜனங்களும் சோரியரில் பாதி
ஜனங்களும் [55]யாபேசில் குடியிருந்த எழுத்
தாளர்களின் குடும்பங்கள், திராத்தியரும்,
சிமாத்தியரும் சுக்காத்தியரும் ஆவர்.
பெத்ரேகாப்பின் தந்தையான அம்மாத்திலி
ருந்து வந்த கேனியர்களே கணக்கர்கள்.

### தாவீதின் மகன்கள்

3 தாவீதின் சில மகன்கள், எப்ரோன்
என்னும் நகரத்திலே பிறந்தனர். இது
தாவீதின் மகன்களின் விபரம்.
தாவீதின் முதல் மகன் அம்னோன்.
அம்னோனின் தாய் அகிநோவாம். அவள்
யெஸ்ரேயேல் எனும் ஊரினள்.
இரண்டாவது மகனின் பெயர் தானியேல்
ஆகும். இவனது தாயின் பெயர் அபிகாயேல்.
இவள் கர்மேல் யூதா எனும் ஊரினள்.
[2]மூன்றாவது மகன் அப்சலோம். இவனது
தாய் மாக்கா, இவள் தல்மாயின் மகள்.
தல்மாய் கேசூரின் அரசன்.
நான்காவது மகன் அதோனியா. இவனது
தாய் ஆகீத்.
[3]ஐந்தாவது மகன் செப்பத்தியா. இவனது
தாய் அபித்தாள்.
ஆறாவது மகன் இத்ரேயாம். இவனது
தாய் எக்லாள். இவளும் தாவீதின் மனைவி
தான். [4]இந்த ஆறு மகன்களும் எப்ரோனில்
தாவீதிற்குப் பிறந்தவர்கள். தாவீது, எப்ரோ
னில் ஏழு ஆண்டுகளும் ஆறு மாதங்களும்
ஆண்டான்.
தாவீது எருசலேமில் 33 ஆண்டுகள்
அரசாண்டான். [5]கீழ்க்கண்டவர்கள் தாவீ
திற்கு எருசலேமில் பிறந்த மகன்கள்:
பத்சுவாளுக்கு, நான்கு மகன்கள் பிறந்
தனர். இவள் அம்மியேலின் மகள். சிமீயா,
சோபாப், நாத்தான், சாலொமோன் ஆகி
யோர் பத்சுவாளின் மகன்கள். [6-8]இப்கார்,
எலிசாமா, எலிப்பெலேத், நோகா, நேபேக்,
யப்பியா, எலிசாமா, எலியாதா, எலிபே
லேத் ஆகிய ஒன்பது பேரும் தாவீதின்
மகன்களே. [9]தாவீது தனது பிற மகன்களைத்
தனது வைப்பாட்டிகளிடம் பெற்றெடுத்தான்.
தாமார் தாவீதின் மகளாவாள்.

### தாவீதின் காலத்திற்குப் பிறகு வந்த யூத அரசர்கள்

[10]ரெகொபெயாம் சாலொமோனின் மகன்.
ரெகொபெயாமின் மகன் அபியா. அபி
யாவின் மகன் ஆசா. ஆசாவின் மகன்
யோசபாத். [11]யோசபாத்தின் மகன் யோராம்.
யோராமின் மகன் அகசியா, அகசியாவின்
மகன் யோவாஸ். [12]யோவாஸின் மகன்
அமத்சியா, அமத்சியாவின் மகன் அசரியா,
அசரியாவின் மகன் யோதாம். [13]யோதாவின்
மகன் ஆகாஸ், ஆகாஸின் மகன் எசேக்கியா,
எசேக்கியாவின் மகன் மனாசே. [14]மனா
சேயின் மகன் ஆமோன், ஆமோனின் மகன்
யோசியா.
[15]யோசியாவின் மகன்களின் பட்டியல்
இது: முதல் மகன் யோகனான். இரண்டாம்
மகன் யோயாக்கீம். மூன்றாம் மகன் சிதேக்
கியா. நான்காம் மகன் சல்லூம்.
[16]யோயாக்கீமின் மகன் எகொனியா. இவ
னது மகன் சிதேக்கியா.*

### பாபிலோனிய அடிமைத்தனத்திற்குப் பிறகு தாவீதின் குடும்பம்

[17]எகொனியா பாபிலோனியாவில் கைதி
யாக இருந்த பிறகு அவனுக்கு மகன்கள்
பிறந்தனர்: சாலாத்தியேல், [18]மல்கீராம்,
பெதாயா, சேனாசார், யெகமியா, ஒசாமா,
நெதபியா ஆகியோர்கள் அவர்கள்.
[19]செருபாபேல், சிமேயி ஆகியோர்
பெதாயாவின் மகன்கள். மெசுல்லாம், அன
னியா ஆகியோர் செருபாபேலின் மகன்கள்.
செலோமீத் இவர்களின் சகோதரி. [20]செருபா
பேலுக்கு மேலும் ஐந்து மகன்கள் இருந்தனர்.
அவர்கள் அசூபா, ஒகேல், பெரகியா, அச
தியா, ஊசாபேசேத் ஆகியோராவர்.
[21]அனனியாவின் மகன் பெலத்தியா.
எசாயா இவனது மகன் ரெபாயா. ரெபாயா
வின் மகன் அர்னான். இவனது மகன்
ஒபதியா. ஒபதியாவின் மகன் செக்கனியா.
[22]இது செக்கனியாவின் சந்ததியினரின்
பட்டியல்: இவனது மகன் செமாயா. செமா
யாவிற்கு அத்தூஸ், எகெயால், பாரியா,
நெயாரியா, செப்பாத் எனும் ஆறு மகன்கள்
இருந்தனர்.
[23]எலியோனாய், எசேக்கியா, அஸ்ரீக்காம்
எனும் மூன்றுபேரும் நெயாரியாவின் மகன்
கள்.
[24]ஒதாயா, எலியாசிப், பெலாயா, அக்கூப்,
யோகனான், தெலாயா, ஆனானி எனும்
ஏழுபேரும் எலியோனாயின் மகன்கள்.

---

**யோயாக்கீமின் மகன் ... சிதேக்கியா** இது இரண்டு வகையாக விளக்கம் சொல்லப்படுகிறது. (1) "இந்த சிதேக்கியா யோயாக்கீமின் மகனும் எகோனியாவின் சகோதரனும் ஆனான்." (2) "இந்த சிதேக்கியா எகோனியாவின் மகனாகவும் யோயாக்கீமின் பேரனும் ஆவான்."

### யூதாவின் மற்ற கோத்திரங்கள்

4 யூதாவின் மகன்களின் பட்டியல் பின்
வருமாறு: பாரேஸ், எஸ்ரோன், கர்மீ,
ஊர், சோபால் ஆகியோர் யூதாவின் மகன்
கள்.
2 சோபாலின் மகன் ராயா. இவன்
யாகாத்தின் தந்தை. யாகாத் அகுமாயிக்கும்
லாகாதுக்கும் தந்தை. இவர்களின் சந்ததிகளே
சோரத்தியர்கள்.
3 யெஸ்ரெயேல், இஷ்மா, இத்பாஸ்
ஆகியோர் ஏதாமின் மகன்கள். அத்செலெல்
போனி இவர்களின் சகோதரி.
4 பெனுவேல் கேதோருக்குத் தந்தை. எசேர்
உஷாவிற்கு தந்தை.
இவர்கள் ஊரின் மகன்கள். ஊர்
எப்ராத்தாவின் முதல் மகன். எப்ராத்தோ
பெத்லெகேமுக்குத் தந்தை.
5 அசூர் தெக்கோவாவுக்குத் தந்தை. தெக்
கோவாவுக்கு ஏலாள், நாராள் என்ற இரு
மனைவியர்கள். 6 நாராள் அசூருக்கு அகு
சாம், எப்பேர், தெமனி, ஆகாஸ்தாரி ஆகிய
மகன்களைப் பெற்றாள். 7 ஏலாளிக்கு சேரேத்,
எத்சோகார், எத்னான், கோஸ் எனும்
மகன்கள் இருந்தனர். 8 கோஸ் அனூப்,
சோபேபாக் எனும் இருவரின் தந்தை. கோஸ்
அகர்கேல் கோத்திரத்திற்கும் தந்தை
யானான். அகர்கேல் ஆருமின் மகன்.
9 யாபேஸ் மிக நல்லவன். அவன் தனது
சகோதரர்களைவிடச் சிறந்தவன். அவனது
தாய், "நான் அவனுக்கு யாபேஸ் என்று
பெயரிட்டேன். ஏனென்றால் நான் அவ
னைப் பெற்றபோது பெருந்துன்பம் அடைந்
தேன்" என்றாள். 10 யாபேஸ் இஸ்ரவேலின்
தேவனிடம் ஜெபித்து, "நீர் என்னை உண்
மையாகவே ஆசீர்வதிக்க வேண்டும் என்று
விரும்புகிறேன். நீர் எனக்கு மிகுதியான
நிலத்தைத் தரவேண்டும் என்று விரும்பு
கிறேன். என்னோடு நெருக்கமாக இரும்.
என்னை எவரும் காயப்படுத்தாதபடி பார்த்
துக்கொள்ளும். அதனால் நான் துன்பம்
இல்லாமல் இருக்கவேண்டும்" என்று
கேட்டுக்கொண்டான். அவன் கேட்டதை
தேவன் அவனுக்குக் கொடுத்தார்.

11 கேலூப் சூகாவின் சகோதரன். கேலூப்
மேகீரின் தந்தை. மேகீர் எஸ்தோனின்
தந்தை. 12 எஸ்தோன் பெத்ராபா, பசேயாக்,
தெகினாக் ஆகியோரின் தந்தை. தெகினாக்
இர்நாகாஷின் தந்தை. இவர்கள் அனைவரும்
ரேகாவைச் சேர்ந்தவர்கள்.
13 ஒத்னியேல், செராயா ஆகியோர் கேனா
சின் மகன்கள். ஒத்னியேலின் மகன்கள்
ஆத்தாத் மற்றும் மெயோனத்தாய் ஆகியோர்.
14 மெயோனத்தாய் என்பவன் ஒபிராவுக்கு
தந்தை ஆனான்.
செராயா யோவாபைப் பெற்றான்.
யோவாப் கராஷீமன் பள்ளத்தாக்குக்கு வித்
திட்டவர். அவர்கள் திறமைமிக்க தொழி
லாளிகளாக இருந்ததினால் ஜனங்கள் இந்தப்
பெயரால் அவர்களை அழைத்தார்கள்.
15 காலேப் எப்புன்னேயின் மகன். ஈரு,
ஏலா, நாகாம் ஆகியோர் காலேப்பின்
மகன்கள். ஏலாவின் மகன் கேனாஸ்.
16 சீப், சீப்பா, திரியா, அசாரெயேல்
ஆகியோர் எகலெலேலின் மகன்கள்.
17-18 யெத்தேர், மேரேத், ஏப்பேர், யாலோன்
ஆகியோர் எஸ்றாவின் மகன்கள். மேரேத்,
மிரியாமுக்கும் சம்மாயிக்கும் இஸ்பாவுக்கும்
தந்தையானான். இஸ்பா எஸ்தெமோவா
வுக்குத் தந்தை ஆனான். மேரேத்திற்கு
எகிப்திலுள்ள மனைவி ஒருத்தி உண்டு.
அவளுக்கு யாரேது, ஏபேர், எக்குத்தியேல்
எனும் மகன்கள் இருந்தனர். யாரேது
கேதோரின் தந்தை. ஏபேர் சோக்கோவின்
தந்தை. எக்குத்தியேல் சனோவாவிற்குத்
தந்தை. இவர்கள் பித்தியாளின் மகன்கள்.
பித்தியாள் பார்வோனின் மகள். இவள்
எகிப்திலிருந்து வந்த மேரேத்தின் மனைவி.
19 நாகாமின் சகோதரியும் மேரேத்தின்
மனைவிதான். இவள் யூதாவிலிருந்து வந்த
வள். இவளுடைய மகன்களே கேயிலா
விற்கும் எஸ்தேமோவாவிற்கும் தந்தையா
வர். ஆபிகேயிலா கர்மியன் ஜனங்களிட
மிருந்தும் எஸ்தேமோவா மாகாத்திய ஜனங்
களிடமிருந்தும் வந்தவர்கள். 20 அம்னோன்,
ரின்னா, பென்கானான், தீலோன் ஆகியோர்
ஷீமோனின் மகன்கள்.
சோகேதும் பென் சோகேதும் இஷியின்
மகன்கள்.
21-22 யூதாவின் மகன் சேலாக். ஏர், லெகா,
லாதா, யோக்கீம் ஆகியோரும் கோசேபா
வின் ஆண்களும், யோவாஸும், சாராப்பும்
சேலாக்கின் ஜனங்களாவர். ஏர் லேக்கா
வூரின் தந்தை. லாதா மரேசாவூரின் தந்தை.
அஸ்பெயா வீட்டு கோத்திரத்தினர் மெல்லிய
புடவை நெய்யும் தொழிலாளர் ஆயினர்.
யோவாஸும் சாராப்பும் மோவாபிய பெண்
களை மணந்துகொண்டனர். பிறகு அவர்
கள் பெத்லெகேமுக்குத் திரும்பிப் போயினர்.
இக்குடும்பத்தைப் பற்றிய எழுத்துக்கள்
எல்லாம் பழையவை. 23 சேலாக்கின்
பிள்ளைகள் அனைவரும் குயவரின் வேலை
யைச் செய்துவந்தனர். அவர்கள் நெத்தாயி
மிலும் கெதேராவிலும் வாழ்ந்தனர். அவர்
கள் அங்கு வாழ்ந்து அரசனுக்குப் பணி
செய்து வந்தனர்.

### சிமியோனின் பிள்ளைகள்

24 நெமுவேல், யாமின் யாரீப், சேரா,
சவுல் ஆகியோர் சிமியோனின் மகன்கள்.
25 சவுலின் மகன் சல்லூம், சல்லூமின் மகன்
மிப்சாம், மிப்சாமின் மகன் மிஸ்மா,
26 மிஸ்மாவின் மகன் அம்முவேல், அம்மு
வேலின் மகன் சக்கூர், சக்கூரின் மகன்
சீமேயி, 27 சீமேயிக்கு 16 மகன்களும் 6

மகள்களும் இருந்தனர். ஆனால் சீமேயியின்
சகோதரர்களுக்கு அதிகப் பிள்ளைகள்
இல்லை! அவர்களுக்குப் பெரியக் குடும்பமும்
இல்லை. அது யூதாவின் மற்ற கோத்தி
ரங்களைப்போல பெரிதாக வளரவில்லை.
28சீமேயியின் சந்ததியினர் பெயெர்செபா
விலும், மொலாதாவிலும், ஆத்சார்சூவாவி
லும், 29பில்லாவிலும், ஏத்சாமிலும், தோலா
திலும், 30பெத்தூவேலிலும், ஓர்மாவிலும்,
சிக்லாகிலும், 31பெத்மர்காபோத்திலும், ஆத்
சார் சூசிமிலும், பெத்பிரியிலும், சாராயிமி
லும் குடியிருந்தார்கள். தாவீது அரசனாகும்
வரை இவர்கள் இந்நகரங்களில் வாழ்ந்தனர்.
32இந்நகரங்களின் அருகில் ஐந்து கிராமங்கள்
இருந்தன. அவை, ஏத்தாம், ஆயின்,
ரிம்மோன், தோகேன், ஆசான் ஆகியவையா
கும். 33பாலாத்தைப் போன்று தொலைவில்
மற்ற கிராமங்களும் இருந்தன. இவற்றில்
இவர்கள் வாழ்ந்தனர். அவர்கள் தம் குடும்ப
வரலாற்றையும் எழுதி வைத்தனர்.
34-38இவர்களது கோத்திரங்களில் உள்ள
தலைவர்களின் பட்டியல் இது. மெசோபா
பும், யம்லேகும், அமத்சியாவின் மகன்
யோஷாவும், யோவேலும் ஆசியேலின்
மகனான செராயாவும், செராயாவின் மகன்
யோசிபியாவும், யோசிபியாவின் மகன்
ஏகூவும், எலியோனாயும், யாக்கோபாவும்,
யெசொகொயாவும், அசாயாவும் ஆதியேலும்
யெசிமியேலும் பெனாயாவும், சீப்பியின்
மகனான சீசாவும், அல்லோனின் மகனான
சீப்பியும், யெதாயாவின் மகனான அல்லோ
னும், சிம்ரியின் மகனான யெதாயாவும்,
செமாயாவின் மகனான சிம்ரியும்.

அவர்களின் குடும்பங்கள் மிகப் பெரிதாக
வளர்ந்தன. 39இவர்கள் தேதோரின் எல்லை
யாகிய பள்ளத்தாக்கின் கிழக்குப் பகுதிவரை
சென்றார்கள். தம் ஆடு மாடுகளுக்குரிய
மேய்ச்சல் பூமியைத் தேடி இவ்வாறு
சென்றார்கள். 40அவர்கள் ஏராளமாகப் புல்
உள்ள நல்ல வயல்வெளிகளைக் கண்டு
பிடித்தனர். அப்பூமி சமாதானத்தோடும்,
சப்தமின்றியும் இருந்தது. பண்டைக் காலத்
தில் அங்கு காமின் சந்ததியார் வாழ்ந்தார்கள்.
41யூதாவின் அரசனாக எசேக்கியா இருந்த
போது இது நிகழ்ந்தது. அவர்கள் கேதாருக்கு
வந்து காமியமக்களுக்கு எதிராகச் சண்டை
யிட்டனர். அவர்கள் காமியரின் கூடாரங்
களை அழித்தனர். அதோடு அங்கு வாழ்ந்த
மௌனியர்களுக்கு எதிராகவும் சண்டை
யிட்டு அவர்களை அழித்தனர். இன்னும்
அவர்களைச் சேர்ந்த எவரையும் அங்கு
விட்டு வைக்கவில்லை. எனவே இவர்கள்
அங்கு வாழத் தொடங்கினார்கள். காரணம்
அந்நிலம் அவர்களின் ஆடுகளுக்கான புல்
நிரம்பியிருந்தது.
42சிமியோனின் கோத்திரத்திலிருந்து 500
ஜனங்கள் சேயீர் மலைநாட்டுக்குச் சென்
றனர். இஷியின் மகன்கள் இவர்களை வழி
நடத்தினர். அவர்கள், பெலத்தியா, நெகரியா,
ரெப்பாயா, ஊசியேல் ஆகியோராகும்.
சிமியோர் ஜனங்கள் அங்கே வாழ்ந்தவர்
களோடு சண்டையிட்டனர். 43அங்கே சிறிது
அமலேக்கியரே வாழ்ந்து வந்தனர். அவர்கள்
இவர்களோடு சண்டையிட்டுக் கொன்றனர்.
அன்று முதல் இன்றுவரை இவர்கள் அங்கே
வாழ்ந்து வருகின்றனர்.

### ரூபனின் சந்ததியினர்

5 1-3இஸ்ரவேலுக்கு முதல் மகன் ரூபன்.
இவன் மூத்த மகன் என்ற சிறப்பு
உரிமைகளைப் பெற்றிருக்க வேண்டும்.
ஆனால் ரூபன் தன் தந்தையின் மனைவி
யோடு பாலின உறவு கொண்டிருந்தான்.
எனவே அந்த உரிமைகள் யோசேப்பின்
மகன்களுக்குக் கொடுக்கப்பட்டது. வம்ச
வரலாற்றில் ரூபனின் பெயர் முதல்
மகனாகப் பட்டியலிடப் படவில்லை. யூதா
தனது சகோதரர்களைவிடப் பலமுள்ளவ
னாக ஆனான். எனவே அவனது குடும்பத்
தில் இருந்து தலைவர்கள் வந்தனர். ஆனால்,
யோசேப்பின் குடும்பம் மூத்தமகனின் குடும்
பத்திற்கான சிறப்பு உரிமைகளைப் பெற்றது.
ஆனோக்கு, பல்லூ, எஸ்ரோன், கர்மீ
ஆகியோர் ரூபனின் மகன்கள்.
4இவை யோவேலின் சந்ததியினரின்
பெயர்கள். யோவேலின் மகன் செமாயா,
செமாயாவின் மகன் கோக், கோக்கின்
மகன் சிமேய், 5சிமேய்யின் மகன் மீகா,
மீகாவின் மகன் ராயா, ராயாவின் மகன்
பாகால், 6பாகாலின் மகன் பேரா, தில்காத்
பில்தேசர் எனும் அசீரியாவின் அரசன்
பேரா தனது வீட்டைவிட்டு வெளி
யேறும்படி பலவந்தப் படுத்தினான். எனவே
பேரா அரசனின் கைதியானான். ரூபனின்
கோத்திரத்தில் பேரா ஒரு தலைவனாயிருந்
தான்.
7யோவேலின் சகோதரர்களும், அவனது
கோத்திரங்களும் வம்ச வரலாற்றில் எழுதப்
பட்டுள்ளபடியே பட்டியலிடப்பட்டுள்ளது.
ஏயேல் முதல் மகன், பிறகு சகரியாவும்
பேலாவும். 8பேலா ஆசாசின் மகன். ஆசாஸ்
சேமாவின் மகன். சேமா யோவேலின்
மகன். இவர்கள் ஆரோவேரிலும் நேபோ
மட்டும் பாகால்மெயோன் மட்டும் வாழ்ந்து
வந்தனர். 9பேலாவின் ஜனங்கள் கிழக்கே
ஐபிராத்து ஆறுமுதல் வனாந்தரத்தின்
எல்லைவரை வாழ்ந்தனர். காரணம் அவர்
களின் ஆடுமாடுகள் கீலேயாத் நாட்டில்
அதிகமாக இருந்தன. 10சவுல் அரசனாக
இருந்தபோது, பேலாவின் ஜனங்கள்
ஆகாரியரோடு சண்டையிட்டனர். இவர்கள்
அவர்களைத் தோற்கடித்தனர். ஆகாரியரின்
கூடாரங்களில் பேலா ஜனங்கள் வாழ்ந்தனர்.
அதோடு கீலேயாத்தின் கீழ்ப்பகுதி முழுவதும்
பயணம் செய்தனர்.

### காத்தின் சந்ததியினர்

11காத்தின் கோத்திரத்தினர், ரூபனின்
கோத்திரத்தினருக்கு அருகிலேயே வாழ்ந்த
னர். காத்தியர்கள் பாசானில் சல்கா
செல்லும் வழியெங்கும் வாழ்ந்தார்கள்.
12பாசானின் முதல் தலைவனாக யோவேல்
இருந்தான், சாப்பாம் இரண்டாவது தலை
வனாக இருந்தான். பிறகு, யானாய்
பாசானின் தலைவன் ஆனான். 13மிகாவேல்,
மெசுல்லாம், சேபா, யோராயி, யாக்கான்,
சீகா, ஏபேர் என்னும் ஏழுபேரும் இந்த
குடும்பத்தில் உள்ள சகோதரர்கள். 14இவர்கள்
அனைவரும் அபியேலின் சந்ததியினர்.
அபியேல் ஊரியின் மகன், ஊரி
யெரொவாவின் மகன், யெரொவா
கீலேயாத்தின் மகன், கீலேயாத்
மிகாவேலுக்கு மகன், மிகாவேல் எசிசாயி
யின் மகன், எசிசாயி யாதோவின் மகன்,
யாதோ பூசுவின் மகன். 15அகி அபியேலின்
மகன், அபியேல் கூனியின் மகன், அகி
அந்த வம்சத்தின் தலைவன்.
16காத் கோத்திரத்தினர் கீலேயாத் பகுதி
யில் வாழ்ந்தனர். அவர்கள் பாசான்
பகுதியிலும் அதைச் சுற்றியிருந்த சிறிய
நகரங்களிலும் சாரோனின் வயல்வெளிகளி
லும் அவற்றின் எல்லைப் பகுதிகளிலும்
வாழ்ந்து வந்தனர்.
17யோதாம் மற்றும் யெரொபெயாமின்
காலங்களில் இவர்கள் அனைவரும் காத்தின்
குடும்ப வரலாற்றில் எழுதப்பட்டார்கள்.
யோதாம் யூதாவின் அரசன். யெரொபெயாம்
இஸ்ரவேலின் அரசன்.

### சில வீரர்களின் போர்த் திறமை

18ரூபனின் ஜனங்களிலும், காத்தியரிலும்
மனாசேயின் பாதிக் கோத்திரத்தினரிலும்
44,760 பேர் போர் செய்வதற்குத் தயாராக
இருந்தனர். அவர்கள் போரில் திறமை
உடையவர்கள். அவர்கள் கேடயங்களையும்
வாட்களையும் தாங்கினார்கள். வில்லிலும்
அம்புகளிலும் வல்லவர்களாக இருந்தனர்.
19அவர்கள் ஆகாரிய ஜனங்களுக்கு எதிராகச்
சண்டையைத் தொடங்கினார்கள். பின்
யெத்தூர் நோதாப் நாப்பீஸ் ஆகியோர்
களோடும் சண்டை செய்தனர். 20மனாசே,
ரூபன், காத் ஆகியக் கோத்திரங்களின்
ஜனங்கள் போரில் தேவனிடம் ஜெபித்தனர்.
அவர்கள் தேவனை நம்பியதால் வெற்றிக்கு
உதவும்படி ஜெபித்தனர். எனவே, தேவன்
உதவினார். அவர்கள் ஆகாரியர்களை
வெல்லுவதற்கு தேவன் அனுமதித்தார். ஆகா
ரியர்களோடு சேர்ந்த மற்ற எதிரிகளையும்
அவர்கள் தோற்கடித்தனர். 21அவர்கள்
ஆகாரியர்கள் உரிமையுடைய மிருகங்
களைக் கவர்ந்துக் கொண்டனர். 50,000
ஒட்டகங்களையும், 2,50,000 ஆடுகளையும்,
2,000 கழுதைகளையும், 1,00,000 ஜனங்களை
யும் கவர்ந்துக் கொண்டனர். 22ஏராளமான
ஆகாரியர்கள் கொல்லப்பட்டனர். ஏனென்
றால் தேவன் ரூபனின் ஜனங்கள் போரில்
வெல்லும்படி உதவினார். பிறகு மனாசே,
ரூபன், காத் ஆகிய கோத்திரங்கள் ஆகாரிய
ரின் நிலங்களில் வசித்தனர். அவர்கள்
அங்கே பாபிலோனின் படைகள் வந்து
சிறைபிடித்து போகும்வரை வாழ்ந்தனர்.
23மனாசே கோத்திரத்தினரில் பாதி ஜனங்
கள் பாசான் பகுதி தொடங்கி பாகால்
எர்மோன், செனீர், எர்மோன் மலைவரை
பரவியிருந்தனர். இவர்கள் மிகப் பெருங்
கூட்டமாகப் பெருகி இருந்தனர்.
24இவர்கள் மனாசேயின் பாதி கோத்திரங்
களின் ஜனங்களுக்குத் தலைவர்கள். இவர்கள்
ஏப்பேர், இஷி, ஏலியேல், அஸ்ரியேல்,
எரேமியா, ஒதாவியா, யாதியேல் ஆகி
யோராவர். அவர்கள் வலிமையும், தைரிய
மும் கொண்டவர்களாய் இருந்தனர். அவர்
கள் புகழ் பெற்றவர்களாயிருந்தனர். அவர்
கள்தமது குடும்பத்தலைவர்களாகவும் இருந்த
னர். 25ஆனால் அத்தலைவர்கள் தமது
முற்பிதாக்கள் தொழுதுவந்த தேவனுக்கு
எதிராகப் பாவம் செய்தனர். அவர்கள்
அங்கு வாழ்ந்த தேவனால் அழிக்கப்பட
ஜனங்கள் தொழுதுகொண்ட பொய்த் தெய்
வங்களை தொழுதுவந்தனர்.
26இஸ்ரவேலரின் தேவன் பூலைப் போருக்
குப் போகும்படி செய்தார். பூல் அசீரியாவின்
அரசன், அவனது இன்னொரு பெயர்
தில்காத் பில்நேசர். இவன் மனாசே, ரூபன்,
காத் ஆகிய கோத்திரங்களோடு சண்டை
யிட்டான். அவர்களை வீட்டிலிருந்து
வெளியேறி கைதிகளாகும்படி பலவந்தப்
படுத்தினான். பூல் அவர்களைப் பிடித்து
ஆலா, ஆபோர், ஆரா, கோசான் ஆற்றங்கரை
போன்ற இடங்களுக்குக் கொண்டுபோனான்.
அந்தக் கோத்திரத்தினர் அவ்விடங்களில்
அன்று முதல் இந்நாள்வரை வாழ்ந்து வரு
கின்றனர்.

### லேவியின் சந்ததியார்

6 கெர்சோன், கோகாத், மெராரி ஆகியோர்
லேவியின் மகன்கள்.
2அம்ராம், இத்சார், எப்ரோன், ஊசியேல்
ஆகியோர் கோகாத்தின் மகன்கள்.
3அம்ராம், மோசே, மிரியாம் ஆகியோர்
அம்ராமின் மகன்கள்.
நாதாப், அபியூ, எலெயாசார், இத்தாமார்
ஆகியோர் அம்ராமின் பிள்ளைகள். 4எலெயா
சார் பினெகாசின் தந்தை, பினெகாஸ்
அபிசுவாவின் தந்தை. 5அபிசுவா புக்கியின்
தந்தை, புக்கி ஊசியின் தந்தை. 6ஊசி
செராகியாவின் தந்தை, செராகியா மெரா
யோதின் தந்தை. 7மெராயோத் அமரியாவின்
தந்தை, அமரியா அகிதூபின் தந்தை.
8அகிதூப் சாதோக்கின் தந்தை, சாதோக்
அகிமாசின் தந்தை. 9அகிமாஸ் அசரியாவின்
தந்தை, அசரியா யோகானானின் தந்தை.

[10]யோகானான் அசரியாவின் தந்தை. (இவன்
தான் சாலொமோன் எருசலேமில் ஆல
யத்தைக் கட்டியபோது ஆசாரிய பணியைச்
செய்தவன்.) [11]அசரியா அமரியாவின் தந்தை,
அமரியா அகிதூபின் தந்தை. [12]அகிதூப்
சாதோக்கின் தந்தை, சாதோக் சல்லூமின்
தந்தை. [13]சல்லூம் இல்க்கியாவின் தந்தை,
இல்க்கியா அசரியாவின் தந்தை. [14]அசரியா
செராயாவின் தந்தை, செராயா யோசதாக்
கின் தந்தை.

[15]யூதர்களையும், எருசலேம் ஜனங்களை
யும் கர்த்தர் வெளியேற்றியபோது யோசதாக்
கினையும் கட்டாயமாக வெளியேற்றினார்.
இவர்கள் இன்னொரு நாட்டில் அடிமைகளா
னார்கள். நேபுகாத்நேசரைப் பயன்படுத்தி
கர்த்தர் இவர்களைச் சிறைபிடித்தார்.

### லேவியின் மற்ற சந்ததியினர்

[16]கெர்சோம், கோகாத், மெராரி ஆகியோர்
லேவியின் மகன்கள்.

[17]லிப்னி, சிமேயி ஆகியோர் கெர்சோமின்
மகன்கள்.

[18]கோகாத்தின் மகன்கள் அம்ராம், இத்சார்,
எப்ரோன், ஊசியேல் ஆகியோர்.

[19]மெராரியின் மகன்கள் மகேலி, மூசி
ஆகியோர். இதுதான் லேவியின் கோத்திரத்
தில் உள்ள குடும்பங்களின் விபரமாகும்.
அவர்கள் தம் தந்தை பெயர்களோடு
சேர்க்கப்பட்டனர்.

[20]இது கெர்சோமின் சந்ததியினரின்
விபரம்: கெர்சோமின் மகன் லிப்னி, லிப்னி
யின் மகன் யாகாத், யாகாத்தின் மகன்
சிம்மா. [21]சிம்மாவின் மகன் யோவா, யோவா
வின் மகன் இத்தோ, இத்தோவின் மகன்
சேரா, சேராவின் மகன் யாத்திராயி.

[22]இது கோகாத்தின் சந்ததியினரின்
விபரம்: கோகாத்தின் மகன் அம்மினதாப்,
அம்மினதாபின் மகன் கோராகு, கோராகு
வின் மகன் ஆசீர். [23]ஆசிரின் மகன் எல்க்
கானா, எல்க்கானாவின் மகன் அபியாசாப்,
அபியாசாப்பின் மகன் ஆசிர். [24]ஆசிரின்
மகன் தாகாத், தாகாத்தின் மகன் ஊரியேல்,
ஊரியேலின் மகன் ஊசியா, ஊசியாவின்
மகன் சவுல்.

[25]அமாசாயியும், ஆகிமோத்தும் எல்க்கா
னாவின் மகன்கள். [26]எல்க்கானாவின் இன்
னொரு மகன் சோபாய், சோபாயின் மகன்
நாகாத். [27]நாகாத்தின் மகன் எலியாப்,
எலியாப்பின் மகன் எரோகாம், எரோகா
மின் மகன் எல்க்கானா.

[28]சாமுவேலின் மூத்த மகன் யோவேல்.
இரண்டாவது மகன் அபியா.

[29]இவர்கள் மெராரியின் பிள்ளைகள்.
மெராரியின் மகன்களில் ஒருவன் மகேலி.
மகேலியின் மகன் லிப்னி, லிப்னியின்
மகன் சிமேயி, சிமேயியின் மகன் ஊசா.
[30]ஊசாவின் மகன் சிமெயா, சிமெயாவின்
மகன் அகியா, அகியாவின் மகன் அசாயா.

### ஆலயத்தின் இசைக் கலைஞர்கள்

[31]கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்
டியை கூடாரத்திற்குள் வைத்தபோது,
அதைப் பாதுகாக்கவென தாவீதால் இசைச்
சேவை செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்
களின் பெயர்கள் பின்வருமாறு. [32]இவர்கள்
பரிசுத்தக் கூடாரத்தில் பாடிச் சேவை
செய்தனர். இப்பரிசுத்தக் கூடாரம் ஆசரிப்புக்
கூடாரமென்றும் அழைக்கப்பட்டது. எருச
லேமில் சாலொமோன் கர்த்தருடைய ஆல
யத்தை கட்டும்வரை இவர்கள் சேவை
செய்தனர். இவர்களது வேலைக்கான சட்டங்
களைப் பின்பற்றி சேவை செய்து வந்தனர்.
[33]கீழ்க்கண்ட பெயர்கள் இசை மூலம்
சேவை செய்த ஆண்கள் மற்றும் அவர்களது
மகன்களுக்குடையவை:

கோகாத் குடும்பத்தின் சந்ததியினர்:
ஏமான் என்பவன் ஒரு பாடகன். இவன்
யோவேலின் மகன், யோவேல் சாமுவேலின்
மகன். [34]சாமுவேல் எல்க்கானாவின் மகன்,
எல்க்கானா யெரொகாமின் மகன்,
யெரொகாம் எலியேலின் மகன், எலியேல்
தோவாகின் மகன். [35]தோவாக் சூப்பின்
மகன், சூப் இல்க்கானாவின் மகன், இல்க்
கானா மாகாத்தின் மகன், மாகாத் அமாசா
யின் மகன். [36]அமாசாய் எல்க்கானாவின்
மகன், எல்க்கானா யோவேலின் மகன்,
யோவேல் அசரியாவின் மகன், அசரியா
செப்பனியாவின் மகன், [37]செப்பனியா
தாகாதின் மகன், தாகாத் ஆசீரின் மகன்,
ஆசீர் எபியாசாப்பின் மகன், எபியாசாப்
கோராகின் மகன். [38]கோராக் இத்சாரின்
மகன், இத்சார் கோகாத்தின் மகன், கோகாத்
லேவியின் மகன், லேவி இஸ்ரவேலின்
மகன்.

[39]ஏமானின் உறவினன் ஆசாப். இவன்
ஏமானின் வலதுபுறத்தில் பணிசெய்வான்.
ஆசாப் பெரகியாவின் மகன், பெரகியா
சிமேயாவின் மகன். [40]சிமேயா மிகாவேலின்
மகன். மிகாவேல் பாசெயாவின் மகன்,
பாசெயா மல்கியாவின் மகன். [41]மல்கியா
எத்னியின் மகன், எத்னி சேராவின் மகன்,
சேரா அதாயாவின் மகன். [42]அதாயா
ஏத்தானின் மகன், ஏத்தான் சிம்மாவின்
மகன், சிம்மா சீமேயின் மகன். [43]சீமேயி
யாகாதின் மகன், யாகாத் கெர்சோமின்
மகன், கெர்சோம் லேவியின் மகன்.

[44]இவர்களுடைய சகோதரர்கள் மெராரி
யின் சந்ததியினர். இவர்கள் ஏமானின்
இடது பக்கத்தில் நின்று பாடினார்கள்.
ஏதான் கிஷியின் மகன், கிஷி அப்தியின்
மகன், அப்தி மல்லூகின் மகன். [45]மல்லூக்
அஸபியாவின் மகன், அஸபியா அமத்சியா
வின் மகன், அமத்சியா இல்க்கியாவின்
மகன். [46]இல்க்கியா அம்சியின் மகன், அம்சி
பானியின் மகன், பானி சாமேரின் மகன்.
[47]சாமேர் மகேலியின் மகன், மகேலி மூசியின்

*மகன், மூசி மெராரியின் மகன், மெராரி
லேவியின் மகன்.*
48 *ஏமானும் ஆசாப்பின் சகோதரர்களும்
லேவியின் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள்.
லேவியின் கோத்திரத்தில் வந்தவர்கள் லேவி
யர்கள் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள்
பரிசுத்தக் கூடாரத்தில் சேவைசெய்ய தேர்ந்
தெடுக்கப்பட்டார்கள். இப்பரிசுத்தக் கூடா
ரமே தேவனுடைய ஆலயம்.* 49 *ஆனால்
ஆரோனின் சந்ததியினர் மட்டுமே நறுமணப்
பொருட்களை தகனபலிக்காக பலிபீடத்தில்
எரிக்க அனுமதிக்கப்பட்டனர். இதனை
ஆரோனின் சந்ததியினர் தேவனுடைய
ஆலயத்திலுள்ள மகா பரிசுத்தமான இடத்தில்
செய்துவந்தனர். அவர்கள் இஸ்ரவேலரைச்
சுத்தமாக்கும் சடங்குகளையும் செய்துவந்த
னர். மோசே கட்டளையிட்ட சட்டங்களை
யும், அவர்கள் பின்பற்றி வந்தனர். மோசே
தேவனுடைய ஊழியன்.*

### ஆரோனின் சந்ததியினர்

50 *கீழ்க்கண்டவர்கள் ஆரோனின் மகன்கள்:
ஆரோனின் மகன் எலெயாசார், எலெயா
சாரின் மகன் பினெகாஸ், பினெகாஸின்
மகன் அபிசுவா.* 51 *அபிசுவாவின் மகன்
புக்கி, புக்கியின் மகன் ஊசி, ஊசியின்
மகன் செராகியா.* 52 *செராகியாவின் மகன்
மெராயோத், மெராயோத்தின் மகன்
அமரியா, அமரியாவின் மகன் அகித்தூப்.*
53 *அகித்தூப்பின் மகன் சாதோக், சாதோக்கின்
மகன் அகிமாஸ்.*

### லேவியர் குடும்பங்களுக்கான வீடுகள்

54 *ஆரோனின் சந்ததியினர் வாழ்ந்த
இடங்கள் பின் வருவன: இவர்களுக்குக்
கொடுக்கப்பட்ட நிலங்களில் அமைக்கப்
பட்ட முகாம்களில் வாழ்ந்தார்கள். கோகாத்
குடும்பத்தினர் லேவியர்களுக்குக் கொடுக்கப்
பட்ட முதல் பங்கைப் பெற்றனர்.* 55 *அவர்
களுக்கு எப்ரோன் நகரமும் அதைச்சுற்றி
யுள்ள வயல்வெளிகளும் கொடுக்கப்பட்டன.
இவ்விடங்கள் யூதாவின் ஒரு பகுதியாக
உள்ளது.* 56 *ஆனால் அந்நகரத்தின் வயல்களை
யும் கிராமங்களையும் எப்புன்னேயின்
மகனாகிய காலேபுக்குக் கொடுத்தார்கள்.*
57 *ஆரோனின் சந்ததியினருக்கு எப்ரோன்
எனும் நகரம் கொடுக்கப்பட்டது. இது
அடைக்கலம் தேடுபவர்களுக்கான நகரமாக**
*விளங்கியது. அதோடு அவர்களுக்கு லிப்னா,
யாத்தீர், எஸ்தெமோவா,* 58 *ஈலேன், தெபீர்,*
59 *ஆசான், பெத்சேமேசஸ், ஆகிய நகரங்களை
யும் அதைச் சுற்றியுள்ள வெளிநிலங்களையும்
கொடுத்தனர்.* 60 *பென்யமீன் கோத்திரத்தினர்
கேபா, அலெமேத், ஆனதோத், ஆகிய
நகரங்களையும் அதன் வெளிநிலங்களையும்
பெற்றனர்.*
*கோகாத் கோத்திரத்தினருக்கு* 13 *நகரங்கள்
கொடுக்கப்பட்டன.*
61 *மற்ற கோகாத்தின் சந்ததியினர்* 10
*நகரங்களைப் பெற்றனர். இவை மனாசே
கோத்திரத்தின் பாதி பேர்களிடம் இருந்து
பெறப்பட்டன.*
62 *கெர்சோமின் கோத்திரத்தினர்* 13 *நக
ரங்களைப் பெற்றனர். அவர்கள் அவற்றை,
இசக்கார், ஆசேர், நப்தலி, பாசானில் உள்ள
மனாசேயின் ஒரு பகுதி, கோத்திரத்தினரிட
மிருந்தும் பெற்றுக்கொண்டனர்.*
63 *மெராரி கோத்திரத்தினர்* 12 *நகரங்களைப்
பெற்றனர். அவர்கள் அவற்றை ரூபன்,
காத், செபுலோன் ஆகிய கோத்திரங்களில்
இருந்து பெற்றுக்கொண்டனர். அவர்கள்
அவற்றைச் சீட்டுக் குலுக்கல் முறையில்
பெற்றுக்கொண்டனர்.*
64 *எனவே, இஸ்ரவேல் ஜனங்கள் அந்த
நகரங்களையும் வயல்களையும் லேவியர்
களுக்குக் கொடுத்தனர்.* 65 *அந்நகரங்கள்
எல்லாம் யூதா, சிமியோன், பென்யமீன்
ஆகியோர்களிடமிருந்து வந்தன. அவர்கள்
இதனைச் சீட்டு குலுக்கல் மூலமே தீர்மானம்
செய்தனர்.*
66 *சில நகரங்களை எப்பிராயீம் கோத்தி
ரத்தினர் கோகாத் ஜனங்களுக்குக் கொடுத்த
னர். அந்நகரங்கள் சீட்டு குலுக்கல் மூலம்
தேர்ந்தெடுக்கப்பட்டன.* 67 *அவர்களுக்குச்
சீகேம் எனும் நகரமும் கொடுக்கப்பட்டது.
இது பாதுகாப்பான நகரம். அவர்களுக்கு
கேசேரும் அதைச் சுற்றிய வெளிநிலங்களும்
கொடுக்கப்பட்டன.* 68 *அதோடு யோக்மேயாம்,
பேத் ஓரோன்,* 69 *ஆயலோன், காத்ரிம் மோன்
ஆகிய நகரங்களையும் வெளிநிலங்களையும்
பெற்றனர். அந்நகரங்கள் எப்பிராயீம் மலை
நாட்டிற்குள் இருந்தன.* 70 *மனாசே கோத்தி
ரத்தினரின் பாதி குடும்பங்களுடைய ஆனேர்
மற்றும் பீலியாம் நகரங்களை இஸ்ரவேல்
ஜனங்கள் கோகாத் கோத்திரத்தினருக்கு
கொடுத்தனர். அந்நகரங்களைச் சுற்றியுள்ள
வெளிநிலங்களையும் கோகாத் கோத்திரத்தி
னர் பெற்றனர்.*

### *மற்ற* லேவிய குடும்பத்தினர் வீடுகள் பெற்றது

71 *கெர்சோம் குடும்பங்கள் மனாசே கோத்தி
ரத்தின் பாதி குடும்பங்களிடமிருந்து பாசான்
மற்றும் அஸ்தரோத் ஆகிய பகுதிகளிலிருந்த
கோலானின் நகரங்களைப் பெற்றன. இந்
நகரங்களின் சுற்று வட்டாரத்தில் உள்ள
நிலங்களையும் அவர்கள் பெற்றார்கள்.*
72-73 *கெர்சோம் கோத்திரத்தினர் கேதேஸ்,
தாபிராத், ராமோத், ஆனேம் ஆகிய நகரங்
களையும் அவற்றின் சுற்றுப்புறத்தில் உள்ள*

---

**அடைக்கலம் தேடுபவர்களுக்கான நகரம்** *இது ஒரு சிறப்பான நகரம். இதில் ஒரு இஸ்ரவேலன் யாராவது ஒருவரை விபத்தில் கொன்றுவிட்டால், அவரது கோபமிக்க உறவினர்களிடமிருந்து தப்பித்து ஓடிவிட முடியும். யோசுவா* 20:1-9.

நிலங்களையும் பெற்றனர். இவை இசக்கார் கோத்திரத்தினருக்குரியவை.
74-75கெர்சோம் கோத்திரத்தினர் மாஷால், அப்தோன், உக்கோக், ரேகோப் ஆகிய நகரங்களையும் அவற்றின் சுற்றுப்புறத்தில் உள்ள நிலங்களையும் பெற்றுக்கொண்டனர். இவை ஆசேர் கோத்திரத்தைச் சேர்ந்தது.
76கெர்சோம் கோத்திரத்தினர் கலிலேயாவிலுள்ள கேதேஸ், அம்மோன், கீரியாத்தாயீம் ஆகிய நகரங்களையும், அவற்றின் சுற்றிலுமுள்ள நிலங்களையும் பெற்றுக்கொண்டனர். இவை நப்தலி கோத்திரத்தினருக்கு உரியவை.
77மெராரியின் மற்ற ஜனங்களுக்கு ரிம்மோன், தாபோர் ஆகிய நகரங்களையும் அவற்றின் சுற்றுப்புற நிலங்களையும் பெற்றனர். இவை செபுலோன் கோத்திரத்தினருக்குரியவை.
78-79மெராரி கோத்திரத்தினர் மேலும் வனாந்திரத்திலிருந்த பேசேர் யாத்சா, கேதேமோத், மேப்பாத் ஆகிய நகரங்களையும், அவற்றைச் சுற்றியுள்ள நிலங்களையும் பெற்றனர். இவை ரூபன் கோத்திரத்தினருக்குரியவை. ரூபன் கோத்திரத்தினர், எரிகோவுக்கப்புறமுள்ள யோர்தான் ஆற்றுக்குக் கிழக்கே வாழ்ந்தனர்.
80-81மெராரி கோத்திரத்தினர் மேலும் கீலேயாத்திலுள்ள ராமோத், மக்னாயீம், எஸ்போன், யாசேர் ஆகிய நகரங்களையும், அவற்றைச் சுற்றியும் உள்ள நிலங்களையும் பெற்றனர். இவை காத் கோத்திரத்தினருக்குரியவை.

### இசக்காரின் சந்ததியினர்

7 இசக்காருக்கு 4 மகன்கள் இருந்தார்கள். அவர்களுக்குத் தோலா, பூவா, யசுப், சிம்ரோன் ஆகிய பெயர்களுண்டு.
2ஊசி, ரெப்பாயா, யெரியேல், யக்மாயி, இப்சாம், சாமுவேல் ஆகியோர் தோலாவின் மகன்கள். அவர்கள் அனைவரும் தம் குடும்பத்தலைவர்களாக இருந்தனர். அவர்களும் அவர்களின் சந்ததிகளும் மிகப் பலமுள்ளவர்களாயிருந்தனர். தாவீது அரசனாகும் காலம்வரை அவர்களின் குடும்பம் வளர்ந்தது. அவர்களில் 22,600 பேர் போர் செய்ய தயாரானவர்கள்.
3ஊசியாவின் மகன்களில் ஒருவன் இஸ்ரகியா. இஸ்ரகியாவுக்கு மிகாயேல், ஒபதியா, யோவேல், இஷியா ஆகிய மகன்கள் இருந்தனர். இந்த 5 பேரும் அவர்களின் குடும்பத் தலைவராக இருந்தனர்.
4இவர்களில் 36,000 பேர் போர் செய்யத் தகுதியுடைய வீரர்களாக இருந்தனர் என வம்ச வரலாறு கூறும். அவர்கள் ஏராளமான மனைவியரும், பிள்ளைகளும் பெற்றதால் குடும்பம் பெரிதாயிற்று.
5இசக்காரின் கோத்திரங்களில் ஆக மொத்தம் 87,000 பலமிக்க வீரர்கள் இருந்தனர் என்று குடும்ப வரலாறு கூறுகிறது.

### பென்யமீனின் சந்ததியினர்

6பேலா, பெகேர், யெதியாயேல் எனும் மூன்றுபேரும் பென்யமீனின் மகன்கள்.
7பேலாவிற்கு எஸ்போன், ஊசி, ஊசியேல், யெரிமோத், இரி எனும் மகன்கள் இருந்தனர். இவர்கள் தத்தம் குடும்பங்களின் தலைவர்களாக இருந்தனர். இவர்களிடம் 22,034 வீரர்கள் இருந்தார்கள் என குடும்ப வரலாறு கூறுகிறது.
8செமிரா, யோவாஸ், எலியேசர், எலியோனாய், உம்ரி, யெரிமோத், அபியா, ஆனாதோத், அதுமேத் ஆகியோர் பெகேரின் மகன்கள். இவர்கள் பெகேரின் பிள்ளைகள்.
9இவர்களின் குடும்ப வரலாறு குடும்பத் தலைவர்களைப்பற்றி கூறுகிறது. இவர்களிடம் 20,200 வீரர்கள் இருந்தனர் என்பதை குடும்ப வரலாறு காட்டுகிறது.
10யெதியாயேலின் மகன்களில் ஒருவன் பில்கான். ஏயூஷ், பென்யமீன், ஏகூத், கெனானா, சேத்தான், தர்ஷீஸ், அகிஷாகார் ஆகியோர் பில்கானின் மகன்கள்.
11யெதியாயேலின் மகன்கள் குடும்பத் தலைவர்களாக இருந்தனர். அவர்கள் போருக்குத் தயாராக 17,200 வீரர்கள் இருந்தனர்.
12சுப்பீமியர்களும், உப்பீமியர்களும் ஈரின் சந்ததியினர். ஊசிம் ஆகேரின் மகன்களில் ஒருவன்.

### நப்தலியின் சந்ததியினர்

13யாத்சியேல், கூனி, எத்சேர், சல்லூம் ஆகியோர் நப்தலியின் மகன்கள்.
இவர்கள் பில்காளியின் சந்ததியினர்.

### மனாசேயின் சந்ததியினர்

14கீழ்க்கண்டவர்கள் மனாசேயின் சந்ததியினர்: மனாசே அராமிய வேலைக்காரி மூலம் அஸ்ரியேல் என்ற மகன் பிறந்தான். அவர்களுக்கு மாகீர் என்ற மகனும் இருந்தான். இவன் கீலேயாத்தின் தந்தை.
15மாகீர் உப்பீமியர் மற்றும் சுப்பீமியர்களிடமிருந்தும் ஒரு பெண்ணை மணந்துக் கொண்டான். அவளது பெயர் மாக்காள். மாகீரின் சகோதரியின் பெயரும் மாக்காள். மாக்காளின் இரண்டாவது மனைவியின் பெயர் செலோப்பியாத். செலோப்பியாத்திற்கு மகள்கள் மட்டுமே இருந்தார்கள்.
16மாகீரின் மனைவியான மாக்காளிற்கு ஒரு மகன் இருந்தான். மாக்காள் தனது மகனுக்குப் பேரேஸ் என்று பெயரிட்டாள். பேரேஸின் சகோதரனின் பெயர் சேரேஸ். சேரேசுக்கு, ஊலாம், ரேகேம் எனும் மகன்கள் இருந்தனர்.
17ஊலாம் மகன் பேதான்.
இவர்கள் கீலேயாத்தின் சந்ததியினர். கீலே

யாத் மாகீரின் மகன், மாகீர் மனாசேயின்
மகன், 18மாகீரின் சகோதரியான அம்மொளே
கேத்திற்கு இஸ்கோத், அபியேசர், மாகலா
ஆகியோர் மகன்கள்.
19அகியான், சேகேம், லிக்கே, அனியாம்
ஆகியோர் செமிதாவின் மகன்கள்.

### எப்பிராயீமின் சந்ததியினர்

20கீழ்க்கண்டவை எப்பிராயீமின் சந்ததியி
னரின் பெயர்கள்: எப்பிராயீமின் மகன்
சுத்தெலாக். எப்பிராயீமின் மகன்களில்
ஒருவன் சுத்தெலாக், சுத்தெலாக்கின் மகன்
பேரேத், பேரேத்தின் மகன் தாகாத். 21தாகாத்
தின் மகன் எலாதா, எலாதாவின் மகன்
தாகாத், தாகாத்தின் மகன் சாபாத், சாபாத்
தின் மகன் சுத்தெலாக்.
காத் நகரில் வளர்ந்த சிலர் எத்சோர்,
எலீயாத் ஆகியோரை கொன்றனர். எசேரும்,
எலீயட்டும் ஆடுமாடுகளைத் திருடும் பொ
ருட்டு காத் நகருக்குச் சென்றார்கள் என்னும்
காரணத்தால் இவர்கள் கொல்லப்பட்டார்கள்.
22எத்சேர், எலீயாத் ஆகியோரின் தந்தை
எப்பிராயீம். இவர்கள் மரித்துப்போனதால்
இவன் அதிக நாட்கள் துக்கம் கொண்டாடி
னான். எப்பிராயீமின் குடும்பத்தினர் வந்து
ஆறுதல் சொன்னார்கள். 23பிறகு, இவன்
தன் மனைவியோடு பாலின உறவு கொண்
டான். அவள் கர்ப்பமுற்று ஒரு மகனைப்
பெற்றாள். அவன் தன் மகனுக்குப் பெரீயா
என்று பெயர் வைத்தான். ஏனென்றால்
அவன் பிறந்தபொழுது குடும்பத்துக்குப் பல
தீங்குகள் ஏற்பட்டன. 24எப்பிராயீமின் மகள்
பெயர் சேராள். இவள் கீழ்பெத்ரோன்,
மேல்பெத்ரோன், கீழ் ஊசேன் சேரா, மேல்
ஊசேன் சேரா ஆகியவற்றைக் கட்டினாள்.
25எப்பிராயீமின் மகன் ரேப்பாக், ரேப்பாக்
கின் மகன் ரேசேப், ரேசேப்பின் மகன்
தேலாக், தேலாக்கின் மகன் தாகான். 26தாகா
னின் மகன் லாதான், லாதானின் மகன்
அம்மியூத், அம்மியூத்தின் மகன் எலிஷாமா.
27எலிஷாமாவின் மகன் நூன், நூனின் மகன்
யோசுவா.
28கீழ்க்கண்ட நகரங்களிலும், அதைச்
சுற்றியுள்ள கிராமங்களிலும் எப்பிராயீமின்
சந்ததியினர் குடியிருந்தனர். அவை, பெத்தே
லும் அதைச் சார்ந்த கிராமங்களும், கீழ்ப்புற
முள்ள நாரானும், மேற்கேயுள்ள கேசேரும்,
அதைச் சார்ந்த கிராமங்களும், சீகேமும்
அதைச் சார்ந்த கிராமங்களும், அய்யா
வரையுள்ள இடங்களும் அதைச்சார்ந்த
கிராமங்களும், 29மனாசே ஜனங்களின்
எல்லையுள்ள மெத்செயானும் அதைச்சார்ந்த
கிராமங்களும் தானாக், மெகிதோ, தோர்
ஆகிய நகரங்களும் அவற்றின் அருகில்
உள்ள சிறு நகரங்களும். இவ்விடங்களில்
யோசேப்பின் சந்ததியினர் குடியிருந்தார்கள்.
யோசேப்பு இஸ்ரவேலின் மகன்.

### ஆசேரின் சந்ததியினர்

30இம்னா, இஸ்வா, இஸ்வி, பெரீயா
ஆகியோர் ஆசேரின் மகன்கள். இவர்களது
சகோதரியின் பெயர் சேராள்.
31ஏபேர், மல்கியேல் ஆகியோர் பெரீயா
வின் மகன்கள். மல்கியேல் பிர்சாவீத்தின்
தந்தை.
32ஏபேர், யப்லேத்தையும் சோமேரையும்
ஒத்தாமையும் இவர்களின் சகோதரியான
சூகாளையும் பிள்ளைகளாகப் பெற்றான்.
33யப்லேத்திற்குப் பாசாக், பிம்மால், அஸ்
வாத் ஆகிய மகன்கள் பிறந்தனர். இவர்கள்
யப்லேத்தின் பிள்ளைகள்.
34அகி, ரோகா, எகூபா, ஆராம் ஆகியோர்
சோமேரின் மகன்கள்.
35சோமேரின் சகோதரன் ஏலேம். சோபாக்,
இம்னா, சேலேஸ், ஆமால் ஆகியோர் ஏலே
மின் மகன்கள்.
36சூவாக், அர்னெப்பர், சூகால், பேரி,
இம்ரா. 37பேசேர், ஓத், சம்மா, சில்சா, இத்
ரான், பேரா ஆகியோர் சோபாக்கின் மகன்
கள்.
38யெத்ரேனுக்கு எப்புனே, பிஸ்பா, ஆரா
ஆகிய மகன்கள் இருந்தனர்.
39உல்லாவிற்கு ஆராக், அன்னியேல்,
ரித்சியா ஆகிய மகன்கள் இருந்தனர்.
40இவர்கள் அனைவரும் ஆசேரின் சந்ததி
யினர். இவர்கள் குடும்பத் தலைவர்கள்,
இவர்கள் மகத்தான மனிதர்கள், இவர்கள்
வலிமைமிக்க வீரர்கள், திறமைமிக்க வீரர்
களான இவர்களில் 26,000 பேர் போர்
செய்வதற்குத் தயாரான வீரர்களாக இருந்
தார்கள்.

### சவுல் அரசனின் குடும்ப வரலாறு

8 பென்யமீன் பேலாவின் தந்தை. பேலா
பென்யமீனின் மூத்த மகன். அஸ்பால்
பென்யமீனின் இரண்டாவது மகன். அகராக்
பென்யமீனின் மூன்றாவது மகன். 2நோகா,
பென்யமீனின் நான்காவது மகன். ரப்பா,
பென்யமீனின் ஐந்தாவது மகன்.
3-5ஆதார், கேரா, அபியூத், அபிசுவா,
நாமான், அகோவா, கேரா, செப்புப்பான்,
ஊராம் ஆகியோர் பேலாவின் மகன்கள்.
6-7இவர்கள் ஏகூதின் சந்ததியினர். கேபா
வின் குடும்பங்களுக்குத் தலைவர்களாக
இருந்தனர். இவர்கள், தம் வீடுகளை விட்டு
விட்டு மனாகாத்துக்குப் போகும்படி கட்
டாயப்படுத்தப்பட்டார்கள். நாமான், அகியா,
கேரா ஆகியோர் ஏகூதின் சந்ததியினர்.
கேரா இவர்களைக் கட்டாயமாக வீட்டை
விட்டு அழைத்துச் சென்றான். ஊசா,
அகியூத் ஆகியோர் தந்தையானான் கேரா.
8மோவாப்பில் சகாராயீம் தன் மனைவிக
ளான ஊசிம், பாராள் ஆகியோரை விவாக
ரத்து செய்தான். பின்னர் பிற மனைவி
யோடு சில பிள்ளைகளைப் பெற்றான்.
9-10சகாராயீம் தன் மனைவியான ஓதேசா

லிடம் யோவாப், சீபியா, மேசா, மல்காம்,
எயூஸ், சாகியா, மிர்மா, ஆகிய பிள்ளை
களைப் பெற்றான். இவர்கள் சகாராயீமின்
மகன்கள். 11சகாராயீமுக்கும் ஊசீமுக்கும்
இரண்டு மகன்கள். அவர்களின் பெயர்
அபிதூப், எல்பால்.
12-13எல்பாலின் மகன்களாக ஏபேர்,
மீஷாம், சாமேத், பெரீயா, சேமா ஆகியோர்
பிறந்தனர். சாமேத் ஓனா, லோத் ஆகிய
நகரங்களையும், லோத்தைச் சுற்றிலும் சிறிய
ஊர்களையும் உருவாக்கினான். பெரீயாவும்,
சேமாவும் ஆயயோன் ஜனங்களின் தலைவர்
களாயிருந்தனர். இவர்கள் காத்தியர்களைக்
கட்டாயப்படுத்தி வெளியேற்றினர்.
14பெரீயாவின் மகன்களாக சாஷாக்,
ஏரேமோத், 15செபதியா, ஆராத், ஆதேர்,
16மிகாயேல், இஸ்பா, யோகா ஆகியோர்
பிறந்தனர். 17எல்பாலின் மகன்களாக செப
தியா, மெசுல்லாம், இஸ்கி, ஏபேர், 18இஸ்
மெராயி, இஸ்லியா, யோபாப் ஆகியோர்
பிறந்தனர்.
19சிமேயின் மகன்களாக யாக்கீம், சிக்ரி,
சப்தி, 20எலியேனாய், சில்தாய், எலியேல்,
21அதாயா, பெராயா, சிம்ராத், ஆகியோர்
பிறந்தனர்.
22சாஷாக்கின் மகன்களாக இஸ்பான்,
ஏபேர், ஏலியேல், 23அப்தோன், சிக்ரி,
ஆனான், 24அனனியா, ஏலாம், அந்தோதியா,
25இபிதியா, பெனூயேல் ஆகியோர் பிறந்த
னர்.
26எரொகோமின் மகன்களாகச் சம்சேராய்,
செகரியா, அத்தாலியா, 27யரெஷியா,
எலியா, சிக்ரி என்பவர்கள் பிறந்தனர்.
28இவர்கள் அனைவரும் குடும்பத்
தலைவர்கள். இவர்களின் வம்ச வரலாற்றில்
அவ்வாறுதான் எழுதப்பட்டுள்ளது. இவர்கள்
எருசலேமில் வாழ்ந்தனர்.
29யேயேல் கிபியோனின் தந்தை. இவன்
கிபியோனில் குடியிருந்தான். யேயேலின்
மனைவியின் பெயர் மாக்காள். 30இவனது
மூத்த மகன் அப்தோன். மற்றவர்கள் சூர்,
கீஸ், பாகால், நாதாப், 31கேதோர், அகியோ,
சேகேர் ஆகியோர். 32மிக்லோத், சிமியாவின்
தந்தை. இப்பிள்ளைகள் எருசலேமில் தம்
உறவினர்களோடு வாழ்ந்தனர்.
33நேர், கீசின் தந்தை. கீஸ் சவுலின்
தந்தை. சவுல் யோனத்தான் மல்கிசூவா,
அபினதாப், எஸ்பால் ஆகியோரின் தந்தை.
34யோனத்தானின் மகன் மேரிபால்.
மேரிபாலின் மகன் மீகா.
35மீகாவின் மகன்கள் பித்தோன், மேலேக்,
தரேயா, ஆகாஸ் ஆகியோர்.
36ஆகாஸ் யோகதாவின் தந்தை. யோகதா,
அலமேத்துக்கும் அஸ்மாவேத்துக்கும் சிம்ரிக்
கும் தந்தை. சிம்ரி மோசாவின் தந்தை.
37மோசா, பினியாவின் தந்தை. பினியா,
ரப்பாவின் தந்தை. ரப்பா, எலியாசாவின்
தந்தை. எலியாசா, ஆத்சேலின் தந்தை.
38ஆத்சேலுக்கு ஆறு மகன்கள்.
அவர்களின் பெயர்: அஸ்ரீக்காம், பொக்குரு,
இஸ்மவேல், செகரியா, ஒபதியா, ஆனான்
ஆகியோர். இவர்கள் அனைவரும் ஆத்சே
லின் பிள்ளைகள்.
39ஆத்சேலின் சகோதரன் ஏசேக். ஏசேக்
கின் முதல் மகன் ஊலாம், அவனது
இரண்டாவது மகன் ஏகூஸ், அவனது
மூன்றாவது மகன் எலிபேலேத், 40ஊலாமின்
பிள்ளைகள் வீரமுடையவர்களாக வில் வீரர்
களாய் இருந்தனர். அவர்களுக்கும் நிறைய
பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளும் இருந்த
னர். மொத்தத்தில் அவர்களின் எண்ணிக்கை
150 ஆகும்.
இவர்கள் அனைவரும் பென்யமீனின்
சந்ததியினர் ஆவார்கள்.

9 இஸ்ரவேலர்களின் பெயர்கள் எல்லாம்
குடும்ப வரலாற்றில் சேர்க்கப்பட்டது.
அந்த குடும்பங்களின் வரலாறு ‘இஸ்ரவேல்
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளது.

### எருசலேம் ஜனங்கள்

யூதா ஜனங்கள் கைதிகளாக்கப்பட்டு பாபி
லோனுக்குப் பலவந்தமாகக் கொண்டு
போகப்பட்டார்கள். அவர்கள் தேவனுக்கு
உண்மையுள்ளவர்களாக இல்லாதபடியால்
அந்த இடத்துக்குக் கொண்டுபோகப்பட்டார்
கள். 2சில இஸ்ரவேலர்களும், ஆசாரியர்க
ளும், லேவியர்களும், ஆலயத்தில் பணியாற்
றும் வேலையாட்களும் முதலில் அங்கு
திரும்பிவந்து தங்கள் சொந்த நிலங்களிலும்
பட்டணங்களிலும் குடியேறினார்கள்.
3எருசலேமில் வாழ்ந்த யூதா, பென்யமீன்,
எப்பிராயீம், மனாசே ஆகிய கோத்திரங்
களைச் சார்ந்தவர்களின் பட்டியல் பின்வரு
மாறு:
4ஊத்தாய் அம்மியூதியின் மகன். அம்
மியூதி உம்ரியின் மகன். உம்ரி இம்ரியின்
மகன். இம்ரி பானியின் மகன். பானி
பேரேசின் சந்ததியைச் சேர்ந்தவன். பேரேஸ்
யூதாவின் மகன்.
5எருசலேமில் வாழ்ந்த சேலாவின் ஜனங்
கள்: அசாயா மூத்த மகன். இவனுக்கும்
மகன்கள் இருந்தனர்.
6எருசலேமில் வாழ்ந்த சேராவின் ஜனங்
கள், அவர்கள் யெகுவேலும், அவர்களின்
உறவினர்களும். அவர்கள் மொத்தம் 690
பேர்.
7எருசலேமில் வாழ்ந்த பென்யமீன் கோத்
திரத்தின் ஜனங்கள்: சல்லு மெசுல்லாவின்
மகன். மெசுல்லா ஓதாவியாவின் மகன்.
ஓதாவியா அசெனூவாவின் மகன். 8இப்
னெயா எரோகாமின் மகன். ஏலா ஊசியின்
மகன். ஊசி மிக்கிரியின் மகன். மெசுல்லாம்
செபதியாவின் மகன். செபதியா ரேகு
வேலின் மகன். ரேகுவேல் இப்னியாவின்
மகன். 9பென்யமீனின் குடும்ப வரலாறானது.

அவர்கள் 956 பேர் எருசலேமில் வாழ்ந்ததா
கக் கூறுகின்றது. அவர்கள் அனைவரும்
குடும்பத்தலைவர்கள்.
10எருசலேமில் வாழ்ந்த ஆசாரியர்கள்:
யெதாயா, யோயாரீப், யாகின், 11அசரியா.
அசரியா இல்க்கியாவின் மகன். இல்க்கியா
மெசுல்லாவின் மகன். மெசுல்லா சாதோக்
கின் மகன். சாதோக் மெராயோதின் மகன்.
மெராயோது அகிதூபின் மகன். இவன்
தேவனுடைய ஆலயத்தில் மிக முக்கியமான
அதிகாரியாக இருந்தான்.12அதோடு எரோகா
மின் மகனான அதாயாவும் அங்கே வாழ்ந்
தான். எரோகாம் பஸ்கூவின் மகன். பஸ்கூ
மல்கியாவின் மகன். ஆதியேலின் மகனான
மாசாயும் அங்கிருந்தான். ஆதியேல் யாசெரா
வின் மகன். யாசெரா மெசுல்லாமின் மகன்.
மெசுல்லாம் மெசிலேமித்தின் மகன். மெசி
லேமித் இம்மெரின் மகன்.
13அங்கே 1760 ஆசாரியர்கள் இருந்தனர்.
அவர்கள் தங்கள் குடும்பத் தலைவர்களாக
வும், தேவனுடைய ஆலயத்தில் பணிசெய்
யும் பொறுப்பாளர்களாகவும் இருந்தனர்.
14எருசலேமில் வாழ்ந்த லேவியர்
கோத்திரத்தைச் சேர்ந்த ஜனங்களின் பட்டி
யல்: செமாயா அசூபின் மகன். அசூப்
அஸ்ரீகாமுவின் மகன். அஸ்ரீகாமு அசபியா
வின் மகன். அசபியா மெராரியின் சந்த
தியைச் சேர்ந்தவன். 15பக்பக்கார், ஏரேஸ்,
காலால், மத்தானியா ஆகியோரும் எருசலே
மில் வாழ்ந்து வந்தார்கள். மத்தானியா
மிக்காவின் மகன். மிக்கா சிக்ரியின் மகன்.
சிக்ரி ஆசாப்பின் மகன். 16ஒபதியா செமாயா
வின் மகன். செமாயா காலாலின் மகன்.
காலால் எதுத்தூனின் மகன். எருசலேமில்
ஆசாவின் மகனான பெர்கியா வாழ்ந்தான்.
ஆசா எல்க்கானாவின் மகன். எல்க்கானா
நெத்தோபாத்தியரின் சிறு நகரங்களில்
வாழ்ந்தான்.

17எருசலேமில் வாழ்ந்த காவலாளர்கள்:
சல்லூம், அக்கூப், தல்மோன், அகிமான்
ஆகியோரும் அவர்களது உறவினருமே.
அவர்களின் தலைவனாகச் சல்லூம் இருந்
தான். 18சிலர் கிழக்கே இருக்கிற இராஜாவின்
வாசலைக் காவல் காத்தனர். இவர்கள்
லேவியரின் கோத்திரத்தின் வழிவந்த காவல்
காரர்கள். 19சல்லூம், கோரேயின் மகன்.
கோரே, எபியாசாவின் மகன். எபியாசா,
கோராகின் மகன். சல்லூம் மற்றும் அவனது
சகோதரர்கள் வாசலைக் காத்தனர். அவர்கள்
கோராகின் வம்சத்தில் வந்தவர்கள். அவர்
களுக்குப் பரிசுத்தக் கூடார வாசலைக்
காவல் காப்பது வேலை ஆயிற்று. அதனை
அவர்கள் அவர்களின் முற்பிதாக்கள் செய்
தது போன்றே செய்துவந்தனர். 20முன்பு
பினேகாசு வாசலைக் காக்கும் பொறுப்
பினை ஏற்றிருந்தான். பினேகாசு, எலியாசா
ரின் மகன். கர்த்தர் பினேகாசோடு இருந்தார்.
21மெசெலமியாவின் மகனான சகரியா பரி
சுத்தக் கூடாரத்தின் வாயிலின் காவல்கார
னாய் இருந்தான்.
22பரிசுத்தக் கூடாரவாசலைக் கண்காணிக்
கத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் எண்
ணிக்கை மொத்தம் 212. அவர்களின் பெயர்
கள் சிறு நகரங்களின் வரலாற்றில் இடம்
பெற்றுள்ளன. நம்பிக்கைக்கு உரிய அவர்
களை தாவீதும் சீயர்* ஆகிய சாமுவேலும்
அவர்களை இந்தப் பணிக்குத் தேர்ந்தெடுத்
தார்கள். 23இந்த வாயில் காவலர்களும்
அவர்களது சந்ததியினரும் கர்த்தருடைய
ஆலயமாகிய பரிசுத்தக் கூடாரத்தைக்
காக்கும் பொறுப்பை ஏற்று வந்தனர்.
24வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என்று
நான்கு பக்கமும் 4 வாசல்கள் இருந்தன.
25சில நேரங்களில் வாயில் காவலர்களின்
உறவினர்கள் சிறு நகரங்களிலிருந்து வந்து
அவர்களுக்குக் காவல் பணிக்கு உதவி
செய்தனர். அவர்கள் வருகை தந்த ஒவ்
வொரு முறையும் ஏழு நாட்கள் வாயில்
காவலர்களுக்கு உதவினார்கள்.
26நான்கு வாசல் காவலர்களுக்கும், நான்கு
தலைவர்கள் நியமிக்கப்பட்டனர். அவர்கள்
லேவியர்களாக இருந்தனர். அவர்களுக்கு
தேவனுடைய ஆலயத்தின் பண்டகச்சாலை
மற்றும் கருவூலங்களைக் காக்கும் பொறுப்பு
இருந்தது. 27அவர்கள் தேவனுடைய ஆல
யத்தில் இரவில் தங்கியிருந்து காத்தனர்.
ஒவ்வொரு நாள் காலையிலும் தேவாலயத்
தைத் திறப்பதும் அவர்களின் வேலையாய்
இருந்தது.
28சில வாசல் காவலர்களுக்கு, ஆலய
பணிக்குரிய பாத்திரங்களைப் பாதுகாக்கும்
பொறுப்பு இருந்தது. அவர்கள் அவற்றை
எண்ணிப் பார்த்தே வெளியே எடுப்பதும்
உள்ளே வைப்பதுமாய் இருந்தனர். 29வேறு
சில வாசல் காவலர்கள், மற்ற இருக்கை
போன்றவற்றையும் பரிசுத்தமான பாத்திரங்க
ளையும் கவனித்துக்கொள்ள தேர்ந்தெடுக்கப்
பட்டனர். அதோடு மெல்லிய மா, திராட்சை
ரசம், எண்ணெய், சாம்பிராணி, நறுமணப்
பொருட்கள் போன்றவற்றுக்குப் பொறுப்பா
ளிகளாயினர். 30வாசனைப் பொருட்களால்
சிறப்பான தைலத்தைக் கலக்கும் வேலை
யைச் சில ஆசாரியர்கள் செய்து வந்தனர்.
31ஒரு லேவியனின் பெயர் மத்தித்தியா.
பலியிடுவதற்காக அப்பம் சுடுகிற வேலை
அவனுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. சல்லூ
மின் மூத்த மகன் மத்தித்தியா. சல்லூம்,
கோரகியா குடும்பத்தில் வந்தவன். 32சில
வாசல் காப்பவர்கள் கோரகியா குடும்பத்தி
னர். அவர்களுக்கு ஓய்வு நாள்தோறும்
அப்பங்களைத் தயாரித்து மேஜையின் மேல்
அடுக்கும் பணி கொடுக்கப்பட்டது.

---

***சீயர்*** *தீர்க்கதரிசி.*

33லேவியர்களில் பாடுபவர்களும் குடும்பத்
தலைவர்களும் ஆலயத்தில் உள்ள அறை
களில் தங்கி இருந்தனர். அவர்கள் வேறு
வேலைகளைச் செய்யமாட்டார்கள். ஏனெ
ன்றால் அவர்களுக்கு இரவும் பகலும் ஆல
யத்தில் வேலை இருந்தது.
34இந்த லேவியர்கள் அனைவரும் அவர
வர்கள் குடும்பங்களுக்கு தலைவர்களாக
இருந்தனர். தம் குடும்ப வரலாற்றில் குடும்பத்
தலைவர்களாக அவர்கள் விவரிக்கப்பட்டுள்
ளனர். அவர்கள் எருசலேமில் வாழ்ந்தார்கள்.

## சவுல் அரசனின் குடும்ப வரலாறு

35யெகியேல், கிபியோனின் தந்தை. யெகி
யேல், கிபியோன் நகரில் வாழ்ந்தான்.
யெகியேலின் மனைவியின் பெயர் மாக்காள்.
36யெகியேலின் மூத்த மகனின் பெயர்
அப்தோன். மற்றவர்கள் சூர், கீஸ், பாகால்,
நேர், நாதாப், 37கேதோர், அகியோ, சகரியா,
மிக்லோத் ஆகியோர். 38மிக்லோத், சிமியா
மின் தந்தை. யெகியேலின் குடும்பம், அவர்க
ளது உறவினர்களோடு எருசலேமில்
வாழ்ந்து வந்தது.
39நேர் கீஸின் தந்தை. கீஸ் சவுலின்
தந்தை. சவுல் யோனத்தான், மல்கிசூவா,
அபினதாப், எஸ்பால் ஆகியோரைப்
பெற்றான்.
40யோனத்தானின் மகன் மெரிபால். மெரி
பால் மீகாவின் தந்தை.
41மீகாவிற்கு பித்தோன், மேலேக், தரேயா,
ஆகாஸ் எனும் மகன்கள் இருந்தனர். 42ஆகாஸ்
யாதாவின் தந்தை. யாதா யாராகின் தந்தை.
யாராக் என்பவன் அலெமேத், அஸ்மவேத்,
சிம்ரி ஆகிய மகன்களைப் பெற்றான். சிம்ரி
மோசாவின் தந்தை. 43மோசா பினியாவின்
தந்தை. பினியா ரப்பாயாவின் தந்தை.
ரப்பாயா எலியாசாவின் தந்தை. எலியாசா
ஆத்சேலின் தந்தை.
44ஆத்சேலுக்கு ஆறு மகன்கள் இருந்தனர்.
அவர்களின் பெயர்கள் அசரீக்காம், பொக்
குரு, இஸ்மவேல், சேராயா, ஒபதியா,
ஆனான் ஆகும். இவர்கள் அனைவரும்
ஆத்சேலின் பிள்ளைகள்.

## சவுல் அரசனின் மரணம்

10 பெலிஸ்தர்கள், இஸ்ரவேல் ஜனங்
களுக்கு எதிராகப் போர் செய்தார்கள்.
இஸ்ரவேல் ஜனங்கள் தோற்று ஓடிப்
போனார்கள். கில்போவா மலையில் அவர்
கள் வெட்டுண்டு மரித்துப்போனார்கள். 2சவு
லையும், அவனது மகன்களையும் பெலிஸ்தர்
கள் தொடர்ந்து துரத்திக்கொண்டு போனார்
கள். அவர்கள், இவர்களைப் பிடித்து
கொன்றார்கள். பெலிஸ்தர்கள் சவுலின் மகன்
களான யோனத்தான், அபினதாப், மல்கி
சூவா ஆகியோரைக் கொன்றனர். 3சவுலைச்
சுற்றி போர் பலமடைந்தது. வில் வீரர்
அவனை அம்பால் எய்து காயப்படுத்தி
னார்கள்.
4பிறகு சவுல் அவனது ஆயுதந்தாங்கி
யிடம், “உனது வாளை எடு. அதனால்
என்னைக் கொல். அதனால் அந்த அந்நியர்
கள் என்னைக் காயப்படுத்தமாட்டார்கள்.
அவர்கள் வரும்போது என்னைக் கேலிச்
செய்யமாட்டார்கள்” என்றான்.
ஆனால், சவுலின் ஆயுதந்தாங்கி பயந்
தான். அவன் சவுலைக் கொல்ல மறுத்தான்.
பிறகு சவுல், தனது சொந்த வாளையே
தன்னைக் கொல்வதற்கு பயன்படுத்தினான்.
5சவுல் மரித்துப்போனதை ஆயுதந்தாங்கி
பார்த்தான். பின் அவனும் தற்கொலை
செய்துகொண்டான். அவனும் சவுலைப்
போலவே தன் வாளின் நுனியிலே விழுந்து
மரித்துப்போனான். 6இவ்வாறு சவுலும்,
அவனது மூன்று மகன்களும் மரித்துப்
போனார்கள். சவுலின் குடும்பம் முழுவதுமே
மொத்தமாக மரித்துப்போனது.
7அப்பள்ளத்தாக்கில் வாழ்ந்த இஸ்ரவேலர்
கள் அனைவரும் தமது சொந்த படை
ஓடுவதைக் கண்டனர். சவுலும், அவனது
மகன்களும் மரித்துப்போனதைக் கண்டனர்.
எனவே, இவர்கள் தமது நகரங்களை விட்டு
ஓடிப்போனார்கள். இவர்கள் விட்டுப்போன
இடங்களில், பெலிஸ்தர்கள் வந்து நுழைந்த
னர். அவ்விடங்களிலே பெலிஸ்தர்கள் குடி
யேறினார்கள்.
8மறுநாள், பெலிஸ்தர்கள் மரித்துப்போன
வர்களின் உடலில் இருந்து விலைமதிப்பு
டைய பொருட்களை எடுக்க வந்தனர்.
அப்போது அவர்கள் சவுல் மற்றும் அவனது
மகன்களின் உடல்களைக் கில்போவா
மலையில் கண்டுபிடித்தனர். 9பெலிஸ்தர்கள்
சவுலின் உடம்பிலுள்ள சில பொருட்களை
எடுத்துக்கொண்டனர். அவர்கள் சவுலின்
தலையையும் ஆயுதங்களையும் எடுத்தனர்.
அவர்கள் தூதுவர்களை அனுப்பி தங்கள்
நாடுகளில் உள்ள ஜனங்களுக்கும், பொய்த்
தெய்வங்களுக்கும் செய்தியை பரப்பினார்
கள். 10பெலிஸ்தர்கள், சவுலின் ஆயுதங்களைத்
தமது பொய்த் தெய்வங்களின் ஆலயங்களில்
வைத்தனர். சவுலின் தலையைத் தாகோன்
ஆலயத்திலே தொங்கவிட்டனர்.
11பெலிஸ்தர்கள் சவுலுக்குச் செய்
தவற்றைப்பற்றி கீலேயாத் நாட்டு யாபேசு
நகரத்தவர்கள் கேள்விப்பட்டனர். 12சவுல்
மற்றும் அவனது மகன்களின் உடல்களைக்
கைப்பற்ற தைரியமுள்ள கீலேயாத் நாட்டு
யாபேசு நகரத்தவர்கள் போனார்கள்,
அவற்றை எடுத்து வந்தனர். அவர்கள்,
சவுல் மற்றும் மகன்களின் எலும்புகளை
யாபேசில் ஒரு பெரிய மரத்தடியில் அடக்கம்
செய்தனர். பின் ஏழு நாட்கள் உபவாச
மிருந்தார்கள்.
13சவுல் கர்த்தருக்கு உண்மையுள்ளவனாக
இல்லாதபடியால் அவன் கொல்லப்பட்டான்.

சவுல் கர்த்தருடைய வார்த்தைகளுக்குக் கீழ்ப்
படியவில்லை. 14அவன்தன் எதிர்காலத்தைப்
பற்றி கர்த்தரிடம் கேட்பதற்குப் பதிலாக
குறி சொல்வோரை நாடினான். அதனால்
தான் கர்த்தர் அவனைக் கொன்று ஆட்சியை
ஈசாயின் மகனான தாவீதிடம் தந்தார்.

### இஸ்ரவேலர்களுக்கு தாவீது அரசன் ஆகிறான்

11 இஸ்ரவேலர் அனைவரும் எப்ரோன்
நகரத்தில் தாவீதிடம் வந்தனர். அவர்
கள் தாவீதிடம், “நாங்கள் உம்முடைய
சொந்த சதையும் இரத்தமுமாய் இருக்கிறோம்.
2முன்பு, போரில் வழி நடத்தினீர். சவுல்
அரசனாக இருந்தபோதிலும் நீர் வழி
நடத்தினீர். கர்த்தர் உம்மிடம், “தாவீது, நீ
தான் என் இஸ்ரவேல் ஜனங்களின் மேய்ப்ப
னாக இருப்பாய், என் ஜனங்களின் தலை
வன் ஆவாய் என்று சொன்னார்” என்றார்
கள்.
3இஸ்ரவேலரின் தலைவர்கள் அனைவரும்
எப்ரோன் நகரில் தாவீதிடம் வந்தனர்.
தாவீது அவர்களிடம் கர்த்தருக்கு முன்பாக
எப்ரோனில் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்
டான். தலைவர்கள் தாவீதுக்கு அபிஷேகம்
செய்தனர். அதனால் அவன் இஸ்ரவேலருக்கு
அரசன் ஆனான். கர்த்தர் சொன்னபடியே
நடந்தது. கர்த்தர் அந்த வாக்குறுதியைக்
கூற சாமுவேலைப் பயன்படுத்தினார்.

### தாவீது எருசலேமை கைப்பற்றுகிறான்

4தாவீது, இஸ்ரவேல் ஜனங்களும் எருச
லேம் நகரத்திற்குச் சென்றனர். அப்போது
அந்நகரம் எபூசு என்று அழைக்கப்பட்டது.
அங்கு வாழ்ந்த ஜனங்கள் எபூசியர் என
அழைக்கப்பட்டனர். நகரத்தில் வாழ்ந்த
ஜனங்கள் 5தாவீதிடம், “எங்கள் நகருக்குள்
நீ நுழைய முடியாது” என்றனர். ஆனால்
தாவீது அவர்களைத் தோற்கடித்தான்.
தாவீது சீயோன் கோட்டையைக் கைப்பற்றி
னான். அது தாவீதின் நகரமாயிற்று.
6தாவீது, “எவனொருவன் எபூசியரோடு
போரிட வழிநடத்திச் சென்றானோ அவன்
என் படை முழுவதற்கும் தளபதியாவான்”
என்றான். எனவே, யோவாப் போருக்கு
வழிநடத்தினான். யோவாப், செருயாவின்
மகன். யோவாப் படைத்தளபதியானான்.
7தாவீது கோட்டைக்குள் தனது வீட்டை
அமைத்துக்கொண்டான். அதனால் அது
தாவீதின் நகரம் என்ற பெயரைப்பெற்றது.
8கோட்டையைச் சுற்றிலும் மில்லோவிலி
ருந்து சுற்றுச்சுவர் வரைக்கும் தாவீது
நகரத்தை நிர்மாணித்தான். நகரத்தின்
யோவாப் மற்ற பகுதிகளையும் தாவீது
பழுது பார்த்தான். 9தாவீது தொடர்ந்து
பெரியவன் ஆனான். சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் அவனோடு இருந்தார்.

### மூன்று வீரர்கள்

10தாவீதினுடைய படைவீரர்களின் சிறப்
பான தலைவர்கள் பட்டியல் இது. தாவீதின்
அரசாங்கத்தில் இவ்வீரர்கள் வல்லமை
உடையவர்களாக விளங்கினார்கள். இவர்க
ளும் இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும்
அவனுக்கு முழுமையாக உதவி அவனை
அரசன் ஆக்கினார்கள். இதுவும் தேவன்
சொன்னபடியே ஆயிற்று.
11இதுதான் தாவீதின் விசேஷ வீரர்களின்
விபரம்: அக்மோனியின் மகன் யாஷோபி
யாம். யாஷோபியாம், இரதப்படைத் தலை
வன். இவன் தனது ஈட்டியால் ஒரே
நேரத்தில் 300 பேர்களைக் கொன்று போட்
டான்.
12அடுத்து அகோயைச் சேர்ந்த தோதாயின்
மகன் எலெயாசார். இவன் மூன்று மாபெரும்
வீரர்களில் ஒருவன். 13எலெயாசார் தாவீ
தோடு பாஸ்தம்மீமில் இருந்தான். அங்கு
பெலிஸ்தர்கள் போரிடுவதற்காக வந்தனர்.
அங்கு ஒரு வயல் முழுவதும் பார்லி
பயிரிடப்பட்டிருந்தது. இஸ்ரவேலர்கள்
பெலிஸ்தர்களுக்குத் தப்பி ஓடினார்கள்.
14ஆனால் மூன்று வீரர்கள் அங்கே வயலில்
நின்று தோற்கடித்தனர். இஸ்ரவேலர்களுக்கு,
கர்த்தர் மாபெரும் வெற்றியைக் கொடுத்தார்.
15ஒருமுறை, தாவீது அதுல்லாம் குகையில்
இருந்தான். அப்போது பெலிஸ்தியர் படை
ரெப்பாயீம் பள்ளத்தாக்கில் முகாமிட்டது.
முப்பது வீரர்களில் மூன்றுபேர் தரையில்
ஊர்ந்துபோய் குகையில் இருந்த தாவீதை
அடைந்தார்கள்.
16இன்னொரு முறை, தாவீது கோட்டை
யில் இருந்தான். அப்போது பெலிஸ்தர்
படைக்குழு ஒன்று பெத்லெகேமில் இருந்தது.
17அவனது சொந்த ஊரில் உள்ள தண்ணீர்
மீது அவனுக்குத் தாகம் ஏற்பட்டது.
எனவே, அவன் “பெத்லேகேம் வாசல்
அருகேயுள்ள கிணற்று தண்ணீர் மீது
எனக்குத் தாகமாய் உள்ளது. யாராவது
ஒருவர் கொண்டுவந்து தரவேண்டும் என
விரும்புகிறேன்” என்றான். அவன் உண்
மையில் அந்த தண்ணீரின் மீது தாகம்
கொள்ளவில்லை. எனினும் அவன் அவ்
வாறு பேசிக்கொண்டான்.
18ஆனால் மூன்று பேரும் பெலிஸ்தரோடு
வழியில் போரிட்ட பிறகே உள்ளே நுழைய
முடிந்தது. அவர்கள் பெத்லேகேம் வாசல்
அருகில் உள்ள கிணற்று தண்ணீரைக்
கொண்டுவந்து தாவீதிடம் கொடுத்தனர்.
தாவீது அதனைக் குடிக்க மறுத்து விட்
டான். அதனை கர்த்தருக்கு காணிக்கை
யாகத் தரையில் ஊற்றினான். 19பிறகு
தாவீது, “தேவனே! என்னால் இத்தண்
ணீரைக் குடிக்க முடியாது. தங்கள் உயிரைப்
பணயம் வைத்து இவர்கள் இத்தண்ணீரைக்
கொண்டுவந்தனர். இதனைக் குடிப்பது இவர்
களின் இரத்தத்தைக் குடிப்பது போன்றதா

கும்” என்றான். இதற்காகத்தான் தாவீது
அந்த தண்ணீரைக் குடிக்க மறுத்தான்.
இதுபோல பல்வேறு சாகசங்களை மூன்று
வீரர்களும் செய்தனர்.

### தாவீதின் மற்ற வீரர்கள்

20 மூன்று வீரர்களுக்கும் தலைவனாக அபி
சாய் இருந்தான். இவன் யோவாப்பின்
சகோதரன். அவன் 300 வீரர்களோடு சண்
டையிட்டு தன் ஈட்டியால் அவர்களைக்
கொன்றான். மூன்று வீரர்களைப்போன்றே
அபிசாயும் பிரபலமாக இருந்தான். 21 இவன்
அவர்களைவிட இரண்டு மடங்கு பிரபலமாக
இருந்தான். இவன் அவர்களில் ஒருவனாக
இல்லாவிட்டாலும் இவன் அவர்களின்
தலைவன் ஆனான்.

22 பெனாயா, யோய்தாவின் மகன்.
யோய்தா ஒரு வல்லமை மிக்கவன். இவன்
கப்சேயேல் ஊரான். பெனாயாவும் வல்
லமை கொண்டவன். இவன் மோவாப்பில்
உள்ள இரு பலம் பொருந்திய மனிதர்களைப்
போரிட்டுக் கொன்றான். ஒருமுறை பனி
பெய்துகொண்டிருக்கும் சமயத்தில், அவன்
ஒரு குகைக்குள்ளே சென்று ஒரு சிங்கத்தைக்
கொன்றான். 23 மேலும் அவன் ஒரு எகிப்திய
வீரனையும் கொன்றான். அவன் 7 1/2
அடி உயரம் உள்ளவன். எகிப்திய வீரனிடம்
இருந்த ஈட்டி மிக நீளமாகவும் கனமுள்ளதா
கவும் இருந்தது. அது நெய்கிறவனின் படை
மரக்கனதிபோல் பெரிதாய் இருந்தது.
பெனாயாவிடம் ஒரு தடி மட்டுமே இருந்தது.
பெனாயா அவனிடமுள்ள ஈட்டியைப்
பிடுங்கி அதனாலேயே அவனைக் கொன்
றான். 24 யோய்தாவின் மகனாகிய பெனாயா
இதுபோல் பல வேலைகளைச் செய்தான்.
பெனாயாவும் மூன்று வீரர்களைப்போன்று
பிரபலமாக இருந்தான். 25 இவன், முப்பது
வீரர்களை விடவும் பிரபலமானவன். ஆனா
லும் அவன் அம்மூன்று வீரர்களுள் ஒருவன்
அல்ல. தாவீது, இவனை மெய்க்காப்பாளர்க
ளின் தலைவனாக ஆக்கினான்.

### முப்பது வீரர்கள்

26 முப்பது நாயகர்களானவர்கள்: ஆசகேல்,
யோவாபின் சகோதரன்; பெத்லகேமைச்
சேர்ந்த தோதோவின் மகனான எல்க்கா
னான், 27 ஆரோதியனான சம்மோத், பெலோ
னியனாகிய ஏலெஸ், 28 தெக்கோவியனான
இக்கேசின் மகன் ஈரா, ஆன தோத்தியனான
அபியேசர், 29 ஊசாத்தியனான சிபெக்காய்,
ஆகோகியனான ஈலாய், 30 நெத்தோபாத்திய
னான மகராயி, நெத்தோபாத்தியனான
பானாவின் மகன் ஏலேத், 31 பென்யமீன்
வம்சத்தானான இபேயா ஊரைச் சேர்ந்த
ரிபாயின் மகனான இத்தாயி, பிரத்தோனிய
னான பெனாய, 32 காகாஸ் நீரோடை
நாட்டானான ஊராயி, அர்பாத்தியனான
அபியேல், 33 பகரூமியனான அஸ்மாவேத்,
சால்போனியனான எலியாபா, 34 கீசோனிய
னான ஆசேமின் மகன்கள், 35 ஆராரியனாகிய
சாகியின் மகனான யோனத்தான், ஆராரிய
னாகிய சாக்காரின் மகன் அகியாம், ஊரின்
மகன் எலிபால், 36 மெகராத்தியனான எப்
பேர், பெலோனியனான அகியா, 37 கர்மேலி
யனான எஸ்ரோ, எஸ்பாயின் மகன் நாராயி,
38 நாத்தானின் சகோதரனான யோவேல்,
அகரியின் மகனான மிப்கார், 39 அம்மோனிய
னான சேலேக், செருயாவின் மகனான
யோவாபின் ஆயுததாரியான பெரோத்திய
னான நாராயி, 40 இத்தரியனான ஈரா, இத்
தாரியனான காரெப், 41 ஏத்தியனான உரியா,
அக்லாயின் மகன் சாபாத், 42 ரூபனியரின்
கோத்திரத்திலிருந்துசீசாவின்மகன் அதினா,
அவனோடு சேர்ந்த 30 பேர், 43 மாகாவின்
மகன் ஆனான், மிதினியனான யோசபாத்,
44 அஸ்தரேத்தியனான உசியா, ஆரோவேரிய
னாகிய ஒத்தாமின் மகன் சமா, யேகியேல்,
45 சிம்ரியின் மகன் எதியாயேல், தித்சியனான
அவன் சகோதரன் யோகா, 46 மாகாவியரின்
மகன் எலியேல், எல்நாமின் மகன் எலிபாய்,
யொசவியா, மோவாபியனான இத்மா,
47 மெசோபாயா ஊராராகிய எலியேல்,
ஓபேது, யாசீயேல் ஆகியோர்.

### தாவீதோடு சேர்ந்த துணிச்சல்காரர்கள்

12 தாவீது சிக்லாகில் இருக்கும்போது
அவனிடம் வந்தவர்களின் பட்டியல்:
கீசின் மகனாகிய சவுலுக்குப் பயந்து
மறைந்துகொள்ளும் காலமது. இவர்கள்
போரில்தாவீதிற்குஉதவினார்கள். 2 இவர்கள்
தம் வில்களிலிருந்து அம்புகளை வலது
அல்லது இடது கைகளால் எய்தனர். இவர்
கள் தம் வலது அல்லது இடது கைகளால்
கற்களை கவண்களிலிருந்தும் எய்தனர்.
இவர்கள் சவுலின் உறவினர்கள், பென்யமீன்
கோத்திரத்தில் இருந்து வந்தவர்கள். அவர்
களின் பெயர்களாவன:

3 அகியேசர் எனும் தலைவன், கிபியேத்தி
யனான சேமாவின் மகன் யோவாசு, அஸ்மா
வேத்தின் மகனான எசியேல், அஸ்மா
வேத்தின் மகனான பேலேத்து, பெராக்கா,
மற்றும் ஆனதோத்தியனான ஏகூ ஆகியோர்.
4 கிபியோனியனான இஸ்மாயா 30 வீரர்களில்
வல்லவன்; அந்த 30 வீரர்களுக்கும் அவன்
தலைவன். எரேமியா, யகாசியேல், யோக
னான், கெதேரூரானான யோசபாத், 5 எலு
சாயி, எரிமோத், பிகலியா, செமரியா,
அருப்பியனான செப்பத்தியா, 6 எல்க்கானா,
எஷியா, அசாரியேல், யொவேசேர், யாசொ
பெயாம் என்னும் கோரேகியனும், கோரா
வின் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். 7 யொ
வேலா, செபதியா என்னும் கேதோர் ஊரா
னான எரோகாமின் மகன்கள்.

### காத்தியர்கள்

8அந்த வனாந்தரத்திலே, காத்தியரின்
கோத்திரத்தில் ஒரு பகுதியினர் தாவீதின்
பக்கம் அவனது கோட்டைக் காவலர்களாகச்
சேர்ந்துக்கொண்டனர். அவர்கள் போர்
பயிற்சி கொண்டவர்கள், வலிமையுள்ளவர்
கள். அவர்கள் போரில் ஈட்டியும் கேடயமும்
கையாளுவதில் வல்லவர்கள். அவர்கள்
சிங்கத்தைப் போன்று காட்சியளித்தார்கள்.
மலையிலிருந்த கசேலியர்களைப் போன்று
வேகமானவர்கள்.
9எத்சேர் படைத்தலைவன். இவன் காத்
தியர் கோத்திரத்தைச் சேர்ந்தவன். இரண்
டாம் தலைமை நிலையில் ஒபதியா இருந்
தான். எலியாப் மூன்றாவது தலைமை
நிலையில் இருந்தான். 10மிஸ்மன்னா நாலாவ
தாகவும், எரேமியா ஐந்தாவதாகவும், 11அத்
தாயி ஆறாவதாகவும், எலியேல் ஏழாவதாக
வும், 12யோகனான் எட்டாவதாகவும், எல்
சபாத் ஒன்பதாகவும், 13எரேமியா பத்தாவதா
கவும், மக்பன்னாயி பதினோராவதாகவும்
இருந்தனர்.
14இவர்கள் காத்தியப் படைவீரர்களின்
தலைவர்கள். இவர்களில் பலவீனமானவர்
கள் 100 பேருக்கும் பலமுள்ளவன் 1,000
பேருக்கும் எதிராகப் போரிட வல்லவர்கள்.
15காத்தியர்க ளின் கோத்திரத்தைச் சேர்ந்த
இவர்கள் யோர்தான் கரைபுரண்டு ஓடிய
ஆண்டின் முதல் மாதத்தில் ஆற்றைக்
கடந்தனர். அப்பள்ளத்தாக்கில் உள்ளவர்
களை விரட்டி அடித்தனர். இவர்கள்
அவர்களைக் கிழக்கிலிருந்து மேற்காகத்
துரத்தினார்கள்.

### தாவீதோடு சேர்ந்த மற்ற வீரர்கள்

16பென்யமீன் மற்றும் யூதா கோத்திரங்
களில் உள்ளவர்களும் கோட்டைக்கு வந்து
தாவீதோடு சேர்ந்துகொண்டனர். 17தாவீது
அவர்களைச் சந்திக்க வெளியே வந்தான்
தாவீது அவர்களிடம், "எனக்கு உதவும்
எண்ணத்தோடு சமாதானமாய் வந்தால்,
உங்களை வரவேற்கிறேன். என்னோடு
சேர்ந்துகொள்ளுங்கள். அவ்வாறில்லாமல்
நான் ஒரு தவறும் செய்யாமல் இருக்கும்
போது, என்னைக் கவனித்து எதிரிகளிடம்
காட்டிக்கொடுக்க நீங்கள் வந்திருந்தால், நம்
முற்பிதாக்களின் தேவன் உங்கள் தீய
காரியங்களைக் கவனித்து அதற்குரிய தண்ட
னையைக் கொடுப்பார்" என்றான்.
18முப்பது வீரர்களின் தலைவன் அமா
சாயி, அவன் மேல் ஆவி வந்து இறங்கியது.
அதனால் அவன்,

"தாவீது! நாங்கள் உம்முடையவர்கள்,
ஈசாயின் மகனே!
நாங்கள் உம்மோடு இருப்போம்,
சமாதானம், உனக்குச் சமாதானம்!
உனக்கு உதவுபவர்களுக்கும்
சமாதானம்!
ஏனென்றால்? உன் தேவன்
உனக்கு உதவுகிறார்!" என்றான்.

எனவே தாவீது அவர்களை வரவேற்
றான். அவர்களைப் படைக்குத் தலைவர்க
ளாக்கினான்.
19மனாசேயின் கோத்திரத்தில் உள்ள சிலர்
தாவீதோடு சேர்ந்துகொண்டனர். அவன்
பெலிஸ்தர்களோடு சேர்ந்துகொண்டு சவு
லுக்கு எதிராகச் சண்டை செய்யப் போன
போது மனாசே கோத்திரத்தினர் அவனோடு
சேர்ந்தனர். ஆனால், தாவீதும் அவனது
ஆட்களும் உண்மையில் பெலிஸ்தர்களுக்கு
உதவி செய்யவில்லை. பெலிஸ்திய தலைவர்
கள் தாவீது தமக்கு உதவுவதாகப் பேசிக்
கொண்டனர். ஆனால், பிறகு அவனை
அனுப்பிவிட முடிவு செய்தனர். இராஜாக்
கள், "தாவீது தனது எஜமான் சவுலோடு
போய் சேர்ந்துகொண்டால் பிறகு நமது
தலைகள் அறுபடும்" என்றனர். 20தாவீது
சிக்லாகுக்குத் திரும்பிப் போகும்போது
கீழ்க்கண்ட மனாசேயர்கள் அவனோடு
சேர்ந்துக் கொண்டனர்: அத்னாக், யோச
பாத், எதியாவேல், மிகாயேல், யோசபாத்,
எலிகூ, சில்த்தாயி ஆகியோர். இவர்கள்
மனாசே கோத்திரத்தினர். தாவீதின் படைக்
குழு தலைவர்களானார்கள். 21இவர்கள், தாவீ
தின் தீயவர்களுக்கு எதிராகப்போரிட உதவி
னார்கள். அத்தீயவர்கள் நாடு முழுவதும்
சுற்றி ஜனங்களிடம் கொள்ளையடித்தனர்.
மனாசேயின் வீரர்கள் அனைவரும் பலசாலி
கள். இவர்கள் தாவீதின் படையில் தலைவர்
களானார்கள்.
22ஒவ்வொரு நாளும் மேலும் மேலும்
வீரர்கள் தாவீதிற்கு உதவ வந்தனர். எனவே
தாவீதிடம் ஒரு பெரியப் பலமிக்க படை
இருந்தது.

### எப்ரோனில் தாவீதோடு சேர்ந்த மற்ற வீரர்கள்

23எப்ரோன் நகரத்தில் கீழ்க்கண்ட ஆட்கள்
தாவீதோடு சேர்ந்துகொண்டனர். அவர்கள்
போர் செய்ய தயாராக இருந்தனர். சவுலின்
அரசைத் தாவீதிற்கு அளிப்பதற்காக அவர்
கள் வந்தனர். அது கர்த்தர் சொன்னபடி
நிகழ்ந்தது. இது அவர்களின் எண்ணிக்கை
யாகும்.
24யூதா கோத்திரத்தில் இருந்து 6,800
பேர் போர் செய்ய தயாராயிருந்தனர்.
அவர்கள் ஈட்டிகளையும் கேடயங்களையும்
கொண்டுவந்தனர்.
25சிமியோனின் கோத்திரத்தில் இருந்து
7,100 பேர் வந்தனர். அவர்கள் தைரிய
முள்ளவர்களாக போர் செய்யத் தயாராக
இருந்தனர்.
26லேவியின் கோத்திரத்தில் இருந்து 4,600
பேர் வந்தனர். 27யோயதாவும் அந்த குழுவில்

உள்ளவன். இவன் ஆரோனின் கோத்திரத்தில்
உள்ளவன். இவனும் தலைவன். யோய்தா
வுடன் 3,700 பேர் இருந்தனர். 28சாதோக்கும்
அந்தக் குழுவில் இருந்தான். இவன் வீரமிக்க
இளைஞன். இவன் தன் குடும்பத்தில் உள்ள
22 வீரர்களோடு வந்தான்.
29பென்யமீனின் கோத்திரத்திலிருந்து 3,000
பேர் வந்தனர். இவர்கள் சவுலின் உறவினர்
கள். இதுவரை இவர்கள் சவுலின் குடும்பத்
துக்கு உண்மையுள்ளவர்களாக இருந்தனர்.
30எப்பிராயீம் கோத்திரத்திலிருந்து 20,800
பேர் வந்தனர். இவர்கள் பலமிக்க வீரர்கள்.
இவர்கள் தம்தம் குடும்பங்களில் பிரபலமா
னவர்கள்.
31மனாசே கோத்திரத்தின் பாதிப்பிரிவில்
இருந்து 18,000 பேர் வந்தனர். தாவீதை
அரசனாக்குவதற்காக அவர்கள் ஒவ்வொருவ
ராகப் பேர் சொல்லி அழைக்கப்பட்டனர்.
32இசக்காரின் கோத்திரத்திலிருந்து 200
அறிஞர்கள் வந்தனர். இவர்கள் சரியான
காலத்தில்சரியானவற்றை இஸ்ரவேலர்களுக்
குச் செய்யத் தெரிந்தவர்கள். இவர்களின்
உறவினர்கள் இவர்களுக்குக் கீழாக இவர்
களின் கட்டளைப்படி இருந்தனர்.
33செபுலோனின் கோத்திரத்திலிருந்து
50,000 பயிற்சிப் பெற்ற வீரர்கள் வந்தனர்.
இவர்கள் எல்லாவிதமான ஆயுதங்களையும்
பயன்படுத்த பயிற்சிப் பெற்றிருந்தனர். இவர்
கள் தாவீதிற்கு உண்மையுள்ளவர்களாக
இருந்தனர்.
34நப்தலி கோத்திரத்திலிருந்து 1,000 அதி
காரிகள் வந்தனர். இவர்களோடு 37,000
வீரர்கள் இருந்தனர். இவர்கள் ஈட்டியையும்
கேடயத்தையும் கொண்டுவந்தனர்.
35தாணின் கோத்திரத்திலிருந்து 28,600
பேர் போர் செய்ய தயாராக இருந்தனர்.
36ஆசேரின் கோத்திரத்திலிருந்து 40,000
பயிற்சிப் பெற்ற போர் வீரர்கள் போர்
செய்ய தயாராய் இருந்தார்கள்.
37யோர்தான் ஆற்றுக்குக் கீழ்ப்பகுதியில்
இருந்து 1,20,000 பேர் வந்தனர். இவர்கள்
ரூபன், காத் மற்றும் பாதி மனாசே
கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களிடம்
எல்லா வகையான ஆயுதங்களும் இருந்தன.
38இவர்கள் அனைவரும் பலமிக்க போர்
வீரர்கள். இவர்கள் தாவீதை அரசனாக்கு
வதற்கு சம்மதம் தெரிவித்தே எப்ரோன்
நகருக்கு வந்தனர். இஸ்ரவேலில் உள்ள
மற்ற ஜனங்களும் தாவீது அரசனாக
வேண்டும் என எண்ணினார்கள் 39இவர்கள்
எப்ரோனில் தாவீதோடு 3 நாட்களைக்
கழித்தனர். இவர்களின் உறவினர்கள் உணவு
தயாரித்துக் கொடுத்ததால் இவர்கள் உண்ணு
வதும், குடிப்பதுமாய் இருந்தனர். 40இசக்கார்,
செபுலோன், நப்தலி ஆகிய கோத்திரங்கள்
வசிக்கிற இடத்தின் அக்கம்பக்கத்தில் இருப்ப
வர்கள் கழுதைகள், ஒட்டகம், கோவேறு
கழுதை, மாடுகள் மீது உணவைக் கொண்டு
வந்தனர். இவர்கள் மாவு, அத்திப்பழ
அடைகள், காய்ந்த திராட்சைப் பழங்கள்,
திராட்சைரசம், எண்ணெய், ஆடுமாடுகள்
ஆகியவற்றைக் கொண்டுவந்தனர். இஸ்ர
வேல் ஜனங்கள் பெரிதும் மகிழ்ந்தனர்.

## உடன்படிக்கைப் பெட்டியைத் திரும்ப கொண்டுவந்தது

13 தாவீது தனது படையின் அனைத்து
அதிகாரிகளோடும் பேசினான். 2பிறகு
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரையும்
அழைத்தான். அவன் அவர்களிடம், “இது
நல்ல யோசனை என்று நீங்கள் நினைத்தால்,
கர்த்தருடைய விருப்பமும் இருந்தால், இஸ்ர
வேலின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள
நமது சகோதரர்களுக்குச் செய்தியை
அனுப்புவோம். ஆசாரியர்களுக்கும், நகரங்
களிலும், வெளிநிலங்களிலும், நமது
சகோதரர்களோடு வாழும் லேவியர்களுக்கும்
செய்தியை அனுப்புவோம். நம்முடன் வந்து
சேர்ந்து கொள்ளும்படி செய்தி அவர்
களுக்குச் சொல்லப்படட்டும். 3நமது கர்த்தரு
டைய உடன்படிக்கைப் பெட்டியை திரும்ப
வும் எருசலேமுக்குக் கொண்டு வருவோம்.
சவுல் அரசனாக இருந்தபோது உடன்
படிக்கைப் பெட்டியை கொண்டுவர அக்
கறை இல்லாமல் இருந்துவிட்டோம்”
என்றான். 4எனவே இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும் தாவீது சொன்னதை ஒப்புக்
கொண்டார்கள். அவர்கள் அனைவரும்
இதுவே செய்வதற்கேற்ற சரியான செயல்
என்று எண்ணினர்.
5எகிப்திலுள்ள சீகோர் ஆறுமுதல்
லெபோ ஆமாத்தின் எல்லைவரையுள்ள
அனைத்து ஜனங்களையும் தாவீது கூட்டி
னான். அவர்கள் அனைவரும் உடன்
படிக்கைப் பெட்டியை கீரியாத்யாரீமிலிருந்து
கொண்டு வருவதற்காகக் கூடினார்கள்.
6தாவீதும் அவனோடு இருந்த மற்ற இஸ்ர
வேலர்களும் யூதாவிலுள்ள பாலாவிற்குச்
சென்றனர். (பாலா என்பது கீரியாத்யாரீமின்
இன்னொரு பெயர்.) உடன்படிக்கைப்
பெட்டியை எடுத்துவர அவர்கள் அங்கே
போனார்கள். உடன்படிக்கைப் பெட்டி
என்பது தேவனாகிய கர்த்தருடைய பெட்டி.
அவர் கேருபீன்களுக்கு மேலே அமர்ந்தி
ருக்கிறார். இப்பெட்டி கர்த்தருடைய
நாமத்தாலேயே அழைக்கப்படுகிறது.
7ஜனங்கள் உடன்படிக்கைப் பெட்டியை
அபினதாபின் வீட்டிலிருந்து தூக்கி வந்தனர்.
அதனைப் புதிய வண்டியில் வைத்தனர்.
ஊசாவும் அகியாவும் அவ்வண்டியை
ஓட்டினார்கள்.
8தாவீதும், இஸ்ரவேல் ஜனங்கள் அனை
வரும் தேவனுக்கு முன்பாக கொண்டாடி
னார்கள். அவர்கள் தேவனை புகழ்ந்து
பாடினார்கள். அவர்கள் சுரமண்டலங்

களையும், மேளங்களையும், கைத்தாளங்க
ளையும், எக்காளங்களையும் இசைத்தனர்.
9அவர்கள் கீதோனின் தானியத்தைப்
பிரித்தெடுக்கும் களம் வந்தனர். வண்டியை
இழுத்து வந்த மாடுகள் இடறின. உடன்
படிக்கைப் பெட்டியானது ஏறக்குறைய
விழுவது போலானது. ஊசா, அதனை
ஒரு கையால் விழாமல் பிடித்துக்கொள்ள
கையை நீட்டினான். 10ஊசாவின் மேல்
கர்த்தருக்கு பெருங்கோபம் உண்டாயிற்று.
ஊசா பெட்டியைத் தொட்டதால் கர்த்தர்
அவனைக் கொன்றுபோட்டார். எனவே
அவன் தேவனுக்கு முன்னால் மரித்துப்
போனான். 11தேவன் தனது கோபத்தை
ஊசாவின் மேல் காட்டினார். இதனால்
தாவீதுக்குக் கோபம் வந்தது. அன்று முதல்
இன்றுவரை இந்த இடம் "பேரேஸ் ஊசா"
என்றே அழைக்கப்படுகிறது.
12தாவீது அன்று தேவனுக்குப் பயந்தான்.
தாவீது, "தேவனுடைய உடன்படிக்கைப்
பெட்டியை இங்கு என்னிடம் என்னால்
கொண்டுவர முடியாது!" என்றான்.
13எனவே தாவீது தனது நகரத்திற்கு உடன்
படிக்கைப் பெட்டியை எடுத்துச் செல்ல
வில்லை. அவன் உடன்படிக்கைப் பெட்
டியை ஓபேத் ஏதோமின் வீட்டில்
விட்டுவிட்டுப் போனான். இவன் காத்
நகரத்தைச் சேர்ந்தவன். 14உடன்படிக்கைப்
பெட்டியானது ஓபேத் ஏதோமின் வீட்டில்
மூன்று மாதங்களுக்கு இருந்தது. ஓபேத்
ஏதோமின் குடும்பத்தையும், அவனுக்குரிய
அனைத்தையும் கர்த்தர் ஆசீர்வதித்தார்.

## தாவீதின் அரசு வளர்ந்தது

14 ஈராம், தீரு எனும் நகரத்தின் அரசன்.
ஈராம், தாவீதுக்கு தூதுவனை அனுப்
பியிருந்தான். அதோடு கேதுரு மரத்தடிகளை
யும், கல்தச்சர்களையும், மரவெட்டிகளையும்
அனுப்பியிருந்தான். தாவீதிற்கு வீடு
கட்டவே ஈராம் இவற்றை அனுப்பினான்.
2உண்மையிலேயே கர்த்தர் தன்னை இஸ்ர
வேலின் அரசனாக்கியதைத் தாவீது அறிய
முடிந்தது. தாவீதின் அரசாங்கத்தைக் கர்த்தர்
பலமுள்ளதாகவும் பெரிதானதாகவும் ஆக்கி
னார். தேவன், தாவீதையும் இஸ்ரவேல்
ஜனங்களையும் நேசித்ததால் இவ்வாறு
செய்தார்.
3எருசலேம் நகரத்தில் தாவீது மேலும்
பெண்களை மணந்துக்கொண்டான். அவ
னுக்கு ஏராளமாக ஆண் பிள்ளைகளும் பெண்
பிள்ளைகளும் பிறந்தனர். 4இவை எருச
லேமில் தாவீதின் பிள்ளைகளின் பெயர்களா
கும்: சம்முவா, சோபாப், நாத்தான், சாலொ
மோன், 5இப்கார், எலிசூவா, எல்பெலேத்,
6நோகா, நெப்பேக், யப்பியா, 7எலிஷாமா,
பெலியாதா, எலிப்பெலேத் ஆகியோர்.

## தாவீது பெலிஸ்தர்களை வெல்கிறான்

8இஸ்ரவேலின் அரசனாகத் தாவீது தேர்ந்
தெடுக்கப்பட்டதை பெலிஸ்தர்கள் அறிந்த
னர். எனவே பெலிஸ்தர்கள் அனைவரும்
தாவீதை தேடுவதற்காக வந்தார்கள். இத
னைத் தாவீது கேள்விப்பட்டான். பிறகு
தாவீது பெலிஸ்தர்களோடு போரிடச் சென்
றான். 9பெலிஸ்தர்கள், ரெப்பாயீம் பள்ளத்
தாக்கிலே உள்ள ஜனங்களைத் தாக்கி
அவர்களது பொருட்களைக் கொள்ளை
அடித்தனர். 10தாவீது தேவனிடம், "நான்
பெலிஸ்தர்களுக்கு எதிராகப் போரிடலாமா?
நான் அவர்களைத் தோற்கடிக்கும்படி செய்
வீரா?" என்று கேட்டான்.
அதற்குக் கர்த்தர் தாவீதிடம், "போ,
நான் உன்னைப் பெலிஸ்தர்களை வெல்லும்
படிச் செய்வேன்" என்று பதிலுரைத்தார்.
11பிறகு, தாவீதும் அவனது ஆட்களும்
பாகால்பிராசீம் வரை சென்றனர். அங்கே
தாவீதும், அவனது ஆட்களும் பெலிஸ்தர்
களைத் தோற்கடித்தனர். தாவீது அவர்களி
டம், "உடைந்த அணையிலிருந்து தண்ணீர்
பெருக்கெடுத்து வருவதைப்போல, என்
எதிரிகளிடமிருந்து தேவன் வெற்றிக்
கண்டுள்ளார்! தேவன், இதனை என் மூலம்
செய்தார்" என்றான். அதனால் அந்த இடம்
பாகால்பிராசீம் என்ற பெயரைப் பெற்றது.
12பெலிஸ்தர்கள் பாகால்பிராசீமில் தங்கள்
விக்கிரகங்களை விட்டுவிட்டு ஓடிப்போனார்
கள். அவற்றை எரித்துப் போடும்படி தாவீது
கட்டளையிட்டான்.

## பெலிஸ்தர் மீது மேலும் வெற்றிபெற்றது

13பெலிஸ்தர்கள், மீண்டும் ரெப்பாயீம்
பள்ளத்தாக்கிலே உள்ள ஜனங்களைத்
தாக்கினார்கள். 14தாவீது மீண்டும் தேவனிடம்
ஜெபித்தான். தாவீதின் ஜெபத்திற்குத் தேவன்
பதில் சொன்னார், தேவன், "நீ பெலிஸ்
தர்களைத் தாக்கும்போது அவர்களுக்கு
முன்பாகப் போகாதே. அதற்குப் பதிலாக
அவர்களைச் சுற்றிக்கொண்டு செல். நறு
மணம் வீசும் திரவங்கள் வடியும் மரங்
களுக்குப்பின் மறைந்துக்கொள். 15அவற்றின்
மீது ஏறு. அதன் மேலிருந்து உன்னால்
படைகளின் வருகை ஒலியைக் கேட்க
முடியும். அப்போது, பெலிஸ்தர்களை நீ
தாக்கு. நான் (தேவன்) உனக்கு முன்னால்
போய் பெலிஸ்தர்களைத் தோற்கடிப்பேன்!"
என்றார். 16தேவன் சொன்னபடியே தாவீது
செய்தான். அதனால் தாவீதும், அவனது
ஆட்களும் பெலிஸ்தரின் படைகளை
வென்றனர். பெலிஸ்தர் வீரர்களைக் கிபி
யோன் முதல் காசேர் வரை அவர்கள்
கொன்றார்கள். 17எனவே, தாவீது அனைத்து
நாடுகளிலும் பிரபலமானான். தாவீதிற்கு
அனைத்து தேசங்களும் பயப்படும்படி
கர்த்தர் செய்தார்.

### உடன்படிக்கைப் பெட்டி எருசலேமில்

15 தாவீதின் நகரத்திலே தாவீது தனக்காக
வீடுகளைக் கட்டினான். பிறகு,
உடன்படிக்கைப் பெட்டியை வைக்கவும்
ஒரு இடத்தைக் கட்டினான். அதற்காகக்
கூடாரத்தை அமைத்தான். 2 பிறகு தாவீது,
“உடன்படிக்கைப் பெட்டியைத் தூக்கிவர
லேவியர்கள் மட்டுமே அனுமதிக்கப்படு
வார்கள். உடன்படிக்கைப் பெட்டியையும்
தூக்கிச் செல்லவும் அவருக்கு எக்காலத்துக்
கும் பணிவிடை செய்யவும் கர்த்தர் லேவி
யர்களையே தேர்ந்தெடுத்துள்ளார்” என்றான்.
3 தாவீது, எருசலேமில் ஜனங்களை
எல்லாம் கூட்டி, உடன்படிக்கைப் பெட்டிக்
காக அவன் தயார் செய்த இடத்திற்கு
அதைக் கொண்டுவர ஏற்பாடு செய்தான்.
4 தாவீது, ஆரோன் மற்றும் லேவியர்களின்
சந்ததியினரை எல்லாம் அழைத்தான்.
5 கோகாத் கோத்திரத்தில் இருந்து 120 பேர்
வந்தனர். ஊரியேல் அவர்களின் தலைவன்.
6 மெராரியின் கோத்திரத்தில் இருந்து 220
பேர் வந்தனர். அசாயா அவர்களின் தலை
வன். 7 கெர்சோன் கோத்திரத்தில் இருந்து
130 பேர். யோவேல் அவர்களின் தலைவன்.
8 எலிசாப்பான் கோத்திரத்தில் இருந்து 200
பேர். செமாயா அவர்களின் தலைவன்.
9 எப்ரோன் கோத்திரத்தில் இருந்து 80 பேர்.
எலியேல் அவர்களின் தலைவன். 10 ஊசி
யேல் கோத்திரத்தில் இருந்து 112 பேர்.
அமினதாப் அவர்களின் தலைவன்.

### தாவீது ஆசாரியர்களோடும் லேவியர்களோடும் பேசுதல்

11 பிறகு தாவீது சோதாக் மற்றும் அபியத்
தார் ஆசாரியர்களை அழைத்தான். தாவீது
கீழ்க்கண்ட லேவியர்களையும் அழைத்தான்,
ஊரியேல், அசாயா, யோவேல், செமாயா,
எலியேல், அம்மினதாப் ஆகியோர். 12 தாவீது
அவர்களிடம், “நீங்கள் லேவியர் கோத்திரத்தி
லிருந்து வந்த தலைவர்கள். நீங்களும் மற்ற
லேவியர்களும் உங்களைப் பரிசுத்தமாக
வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு உடன்
படிக்கைப் பெட்டியை அதற்குரிய இடத்தில்
வைப்பதற்காக எடுத்து வாருங்கள். 13 சென்ற
முறை, உடன்படிக்கைப் பெட்டியை எவ்
வாறு எடுத்து வரவேண்டும் என்று
கர்த்தரிடம் கேட்கவில்லை. லேவியர்களா
கிய நீங்கள் அதனைத் தூக்கி வரவில்லை,
அதனால் கர்த்தர் நம்மைத் தண்டித்தார்”
என்றான்.
14 பிறகு ஆசாரியர்களும், லேவியர்களும்
தம்மைப் பரிசுத்தமாக்கிக் கொண்டனர்.
எனவே அவர்களால் இஸ்ரவேலரின் தேவ
னாகிய கர்த்தருடைய உடன்படிக்கைப்
பெட்டியை தூக்கிவர முடிந்தது. 15 மோசே
கட்டளையிட்டபடியே, லேவியர்கள்
உடன்படிக்கைப் பெட்டியைத் தோளில்
தூக்கிவர சிறப்பான தடிகளைப் பயன்
படுத்தினர். கர்த்தர் சொன்னபடியே அவர்கள்
அப்பெட்டியைத் தூக்கிவந்தனர்.

### பாடகர்கள்

16 தாவீது, லேவியர்களிடம் அவர்களது
சகோதரர்களான பாடகர்களை அழைக்கச்
சொன்னான். பாடகர்கள் தங்கள் சுரமண்ட
லம், கைத்தாளம், ஆகியவற்றோடு வந்து
மகிழ்ச்சியுடன் பாடுமாறு கேட்டான்.
17 பிறகு லேவியர்கள், ஏமானையும்,
அவனது சகோதரர்களான ஆசாப்பையும்,
ஏத்தானையும் அழைத்தனர். ஏமான் யோவே
லின் மகன். ஆசாப் பெரகியாவின் மகன்.
ஏத்தான் குஷாயாவின் மகன். இவர்கள்
அனைவரும் மெராரியின் கோத்திரத்தினர்.
18 அங்கே லேவியர்களின் இரண்டாவது
குழுவும் இருந்தது. அதில் சரியா, பேன்,
யாசியேல், செமிரமோத், யெகியேல், உன்னி,
எலியாப், பெனாயா, மாசெயா, மத்தித்தியா,
எலிப்பெலேகு, மிக்னேயா, ஒபேத்ஏதோம்,
ஏயேல் ஆகியோர் இருந்தனர். இவர்கள்
லேவியக் காவலர்கள் ஆவார்கள்.
19 ஏமான், ஆசாப், ஏத்தான் ஆகிய
பாடகர்கள் தம் வெண்கலக் கைத்தாளங்
களை ஒலித்து பாடினார்கள். 20 சகரியா,
ஆசியேல், செமிரமோத், யெகியேல், உன்னி,
எலியாப், மாசெயா, பெனாயா ஆகியோர்
அல்மோத் என்னும் இசையில் தம்புருவை
வாசித்தனர். 21 மத்தித்தியா, எலிப்பெலேகு,
மிக்னேயா, ஓபேத் ஏதோம், ஏயேல்,
அச்சியா, ஆகியோர் செமனீத் எனும் இசை
யில் சுரமண்டலங்களை வாசித்தனர்.
இதுவே இவர்களின் வேலையாகும். 22 பாட
லுக்குரிய பொறுப்பு லேவியர் தலைவனா
கிய கெனானியாவிடம் இருந்தது. இவன்
பாடுவதில் வல்லவன். எனவே அவன்
அந்த வேலையைச் செய்தான்.
23 பெரகியாவும், எல்க்கானாவும் உடன்
படிக்கைப் பெட்டியைக் காவல் காத்தனர்.
24 செபனியா, யோசபாத், நெதனெயேல்,
அமாசாயி, சகரியா, பெனாயா, எலியேசர்
ஆகிய ஆசாரியர்கள் தேவனுடைய உடன்
படிக்கைப் பெட்டிக்கு முன்பு எக்காளங்
களை ஊதினார்கள். ஓபேத்ஏதோமும்,
எகியாவும் உடன்படிக்கைப் பெட்டிக்கு
வாசல் காவலர்களாக இருந்தனர்.
25 தாவீதும், இஸ்ரவேல் தலைவர்களும்,
சேர்வைக்காரர்களும் உடன்படிக்கைப் பெட
்டியைக் கொண்டுவரச் சென்றனர். அவர்கள்
அதனை ஓபேத்ஏதோமின் வீட்டிலிருந்து
கொண்டு வந்தனர். ஒவ்வொருவரும்
மகிழ்ச்சி அடைந்தனர்! 26 உடன்படிக்கைப்
பெட்டியைத் தூக்கி வரும்படி லேவியருக்குத்
தேவன் உதவியபடியால், அவர்கள் ஏழு
காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்களை
யும் பலியிட்டனர். 27 உடன்படிக்கைப்
பெட்டியைத் தூக்கிவந்த அனைத்து லேவிய
ரும் மெல்லிய ஆடையான சால்வைகளை

அணிந்திருந்தனர். பாடகரின் தலைவனாகிய
கெனானியாவும், மற்ற பாடகர்களும்,
மெல்லிய ஆடையான சால்வையை அணிந்
திருந்தனர். தாவீது மெல்லிய சணலால்
ஆன ஏபோத்தை அணிந்திருந்தான்.
28 எனவே இஸ்ரவேல் ஜனங்கள் அனை
வரும் உடன்படிக்கைப் பெட்டியைக் கொண்
டுவந்தனர். அவர்கள் ஆரவாரம் செய்தனர்,
எக்காளங்களை ஊதினர், பூரிகைகளை
ஊதினர், கைத்தாளங்களை ஒலித்தனர்.
தம்புருக்களையும், சுரமண்டலங்களையும்
வாசித்தனர்.
29 உடன்படிக்கைப் பெட்டியானது தாவீ
தின் நகரத்திற்குள் வந்தபோது, தன்
ஜன்னலின் வழியாக மீகாள் பார்த்தாள்.
மீகாள் சவுலின் மகள். அரசனான தாவீது
ஆடிப்பாடி வருவதையும் கண்டாள். அவ
ளுக்குத் தாவீது மீது இருந்த மரியாதை
போயிற்று. அவனை அவள், ஒரு முட்டாளாக
எண்ணினாள்.

16 லேவியர்கள், உடன்படிக்கைப்
பெட்டியைக் கொண்டுவந்து அதற்
காகத் தாவீது கட்டியிருந்த இடத்தில்
வைத்தனர். பிறகு தேவனுக்கு அவர்கள்
சர்வாங்க தகனபலியையும், சமாதான பலி
யையும் கொடுத்தனர். 2 தாவீது சர்வாங்க
தகனபலியையும், சமாதான பலியையும்
கொடுத்த பிறகு, கர்த்தருடைய பேரால்
ஜனங்களை ஆசீர்வதித்தான். 3 பிறகு அவன்,
ஒரு துண்டு அப்பத்தையும், இறைச்சி
துண்டையும் உலர்ந்த திராட்சைகளையும்,
எல்லா இஸ்ரவேலிய ஆண்களுக்கும், பெண்
களுக்கும் கொடுத்தான்.
4 உடன்படிக்கைப் பெட்டிக்கு முன்பு
சேவை செய்வதற்காகத் தாவீது சில
லேவியர்களைத் தேர்ந்தெடுத்தான். அவர்
களுக்கு இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்த
ருக்கு துதிப்பாடுவதும், அவருக்கு நன்றி
சொல்வதும் வேலையாய் இருந்தது. 5 ஆசாப்
முதல் குழுவின் தலைவன். இது
கைத்தாளாங்களை இசைத்தனர். சகரியா
இரண்டாவது குழுவின் தலைவன். மற்ற
லேவியர்கள்: ஏயேல், செமிரமோத், யெகி
யேல், மத்தித்தியா, எலியாப், பெனாயா,
ஓபேத்ஏதோம், ஏயெல் ஆகியோர். இவர்கள்
தம்புரு, சுரமண்டலம் என்னும் கீதவாத்தியங்
களை இசைத்தனர். 6 பெனாயாவும், யாகாசி
யேலும் ஆசாரியர்கள். இவர்கள் எப்போதும்
கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டிக்கு
முன்பு எக்காளங்களை ஊதினார்கள்.
7 தாவீது கர்த்தரைத் துதித்து பாடுமாறு
ஆசாப்பிடமும் அவனது சகோதரனிடம்
இவ்வேலையைக் கொடுத்தான்.

### தாவீதின் நன்றிப்பாடல்

8 கர்த்தரை துதியுங்கள்,
அவரது நாமத்தை அழையுங்கள்,
ஜனங்களிடம் கர்த்தருடைய மகத்தான
செயல்களைக் கூறுங்கள்.
9 கர்த்தரை பாடுங்கள்,
கர்த்தருடைய துதிகளைப் பாடுங்கள்,
அவரது அதிசயங்களையும்
கூறுங்கள்.
10 கர்த்தருடைய பரிசுத்த நாமத்துக்காகப்
பெருமைப்படுங்கள்,
கர்த்தரிடம் வருகிற நீங்கள்
அனைவரும் மகிழ்ச்சியோடு
இருங்கள்!
11 கர்த்தரையும், அவரது பலத்தையும்
பாருங்கள்,
எப்பொழுதும் அவரிடம் உதவிக்குப்
போங்கள்.
12 கர்த்தர் செய்திருக்கிற அற்புதங்களை
நினைத்துப் பாருங்கள்,
அவரது தீர்மானங்களை நினைத்துப்
பாருங்கள்,
அவர் செய்த வல்லமை வாய்ந்த
செயல்களையும் கூட.
13 இஸ்ரவேலர்கள்
கர்த்தருடைய தொண்டர்கள்.
யாக்கோபின் சந்ததியினர்,
கர்த்தரால்
தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.
14 கர்த்தர் நமது தேவன்,
அவரது வல்லமை எங்கும்
உள்ளது.
15 அவரது உடன்படிக்கையை
எப்போதும் நினைவுகொள்ளுங்கள்,
ஆயிரமாயிரம் தலைமுறைகளுக்கும்
அவர் கட்டளையிட்டுள்ளார்.
16 கர்த்தர் ஆபிரகாமோடு செய்த
உடன்படிக்கையை
நினைவுகொள்ளுங்கள்,
அவர் ஈசாக்குக்கு செய்த
வாக்குறுதியையும் கூட.
17 கர்த்தர் யாக்கோபுக்காக சட்டத்தைச்
செய்தார்,
இது இஸ்ரவேலோடு செய்த
உடன்படிக்கை,
இது என்றென்றும் தொடரும்.
18 கர்த்தர் இஸ்ரவேலிடம் சொன்னது:
“கானான் நாட்டை
நான் உங்களுக்குக் கொடுப்பேன்.
வாக்களிக்கப்பட்ட நிலம்
உங்களுக்குரியதாகும்.”

19 அங்கே சில ஜனங்களே இருந்தனர்,
சில அந்நியர்களும் இருந்தனர்.
20 அவர்கள், ஒரு நாட்டிலிருந்து
இன்னொன்றுக்குப் போனார்கள்,
அவர்கள் ஒரு அரசிலிருந்து
இன்னொன்றுக்குப் போனார்கள்.
21 ஆனால் கர்த்தர், அவர்களை
எவரும் புண்படுத்தாதபடி செய்தார்;

அவர்களைப் புண்படுத்தாதபடி
அரசர்களை எச்சரித்தார்.

22 கர்த்தர் அந்த அரசர்களிடம்
சொன்னது,
“என்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட
ஜனங்களையும் எனது
தீர்க்கதரிசிகளையும்
புண்படுத்தாதீர்கள்.”
23 கர்த்தரை பாடுங்கள், பூமியெங்கும்
கர்த்தர் நம்மை காப்பாற்றும்
நற்செய்தியை ஒவ்வொரு நாளும்
சொல்லவேண்டும்.
24 கர்த்தருடைய மகிமையை
அனைத்து நாடுகளுக்கும் கூறுங்கள்,
எவ்வளவு அற்புதமானவர்
என்பதையும் கூறுங்கள்.
25 கர்த்தர் பெரியவர்,
அவர் துதிக்கத்தக்கவர்.
அறிநிய தெய்வங்களைவிட
கர்த்தர் பயப்படத்தக்கவர்.
26 ஏனென்றால், உலகிலுள்ள அனைத்து
தெய்வங்களும் பயனற்ற உருவச்
சிலைகளே.
ஆனால் கர்த்தர் ஆகாயத்தை
உண்டாக்கினார்!
27 வலிமையும், மகிழ்ச்சியும்
கர்த்தர் வசிக்கும் இடத்தில்
உள்ளன.
கர்த்தர் ஒரு பிரகாசமான
வெளிச்சத்தைப்
போன்றவர்.
28 குடும்பங்களே, ஜனங்களே
கர்த்தருடைய மகிமையையும்
வல்லமையையும் துதியுங்கள்.

29 கர்த்தருடைய மகிமையைத்
துதியுங்கள்,
அவரது பெயருக்கு மரியாதை
செலுத்துங்கள்,
கர்த்தருக்கு காணிக்கை கொண்டு
வாருங்கள்,
கர்த்தரை பரிசுத்த அலங்காரத்துடன்
தொழுதுகொள்ளுங்கள்.
30 கர்த்தருக்கு முன்னால்
உலகமுழுவதும் நடுங்குகிறது!
ஆனால் அவர் பூமியை
வலிமை உள்ளதாகச் செய்தார்,
இந்த பூமி (நகராது) அசையாது.
31 பூமியும், வானமும்
மகிழ்ச்சியடையட்டும்,
“கர்த்தர் ஆள்கிறார்!”
என்று ஒவ்வொருவரும் எங்கும்
சொல்லட்டும்.
32 கடலும், அதிலுள்ளவையும்
முழங்கட்டும்!
வயலும், அதிலுள்ள அனைத்தும்
மகிழட்டும்!
33 கர்த்தருக்கு முன்னால் காட்டு
மரங்களும் மகிழ்ச்சியுடன்
பாடட்டும்!
ஏனென்றால், கர்த்தர்
வந்துக்கொண்டிருக்கிறார்.
உலகை நியாயந்தீர்க்க அவர்
வருகிறார்.
34 ஓ, கர்த்தருக்கு நன்றி சொல்லுங்கள்,
அவர் நல்லவர்.
கர்த்தருடைய அன்பு என்றென்றும்
தொடர்வதாக.
35 கர்த்தரிடம்,
“எங்களைக் காத்திடும் தேவனே,
எங்கள் மீட்பரே,
எங்களை ஒன்றுக் கூட்டிடும்,
மற்ற ஜனங்களிடமிருந்து
எங்களைக் காப்பாற்றும்,
பிறகு உமது பரிசுத்த நாமத்தைத்
துதிப்போம்,
பிறகு உம்மை எங்கள் பாடல்களால்
துதிப்போம்” என்று சொல்லுங்கள்.
36 இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்
எப்பொழுதும் துதிக்கத் தக்கவர்,
அவர் எப்பொழுதும்
துதிக்கப்படட்டும்!

அனைத்து ஜனங்களும் கர்த்தரைத்
துதித்து “ஆமென்!” என்று சொன்னார்கள்.
37 பிறகு தாவீது, ஆசாப்பையும் அவனது
சகோதரர்களையும் உடன்படிக்கைப் பெட்டி
யின் முன் வீட்டுவிட்டு வந்தான். அவர்கள்
ஒவ்வொரு நாளும் பெட்டிக்கு முன்பு சேவை
செய்யவைத்தான். 38 தாவீது, அங்கே ஆசாப்பு
மற்றும் அவன் சகோதரர்களோடு ஓபேத்
ஏதோமையும் 68 லேவியர்களையும் சேவைச்
செய்ய விட்டுவிட்டு வந்தான். ஓபேத்ஏதோ
மும் ஓசாவும் வாசல் காவல்காரர்கள்.
ஓபேத்ஏதோம் எதித்தூனின் மகன் ஆவான்.
39 கிபியோனிலுள்ள மேட்டில் இருக்கிற
கர்த்தருடைய கூடாரத்தில் சேவை செய்வதற்
காகத் தாவீது சோதாக்கையும் மற்ற
ஆசாரியர்களையும் விட்டு வைத்தான்.
40 ஒவ்வொரு நாள் காலையிலும், மாலையி
லும் சோதாக்கும், மற்ற ஆசாரியர்களும்
பலிபீடத்தில் சர்வாங்க தகன பலிகளைக்
கொடுத்தனர். கர்த்தர் இஸ்ரவேலுக்கு எழுத்
தின் மூலமாக வழங்கிய சட்டத்தின்படி
அவர்கள் செய்தார்கள். 41 ஏமானையும், எதித்
தூனையும், மற்ற லேவியர்களையும் கர்த்த
ரைத் துதித்துப் பாடுவதற்காகத் தேர்ந்தெடுத்
தனர். ஏனென்றால், கர்த்தருடைய அன்பு
என்றும் தொடர்ந்திருக்கும் போன்ற பாடல்
களை பாட 42 ஏமானும், எதித்தூனும் அவர்க
ளோடு இருந்தனர். அவர்களின் வேலை
எக்காளத்தை ஊதுவதும், கைத்தாளம் இடு
வதும் ஆகும். தேவனுக்காக பாடல்கள்
பாடப்பட்டபோது அவர்கள் வேறு இசைக்

*கருவிகளையும் இசைத்துவந்தனர். எதித்தூ
னின் மகன்கள் வாசலைக் காத்தனர்.*
43*விழா முடிந்த பிறகு, மிஞ்சியுள்ள
ஜனங்கள் தங்கள் தங்கள் வீட்டிற்குப்
போனார்கள். தாவீதும் தன் வீட்டாரை
ஆசீர்வதிக்கச் சென்றான்.*

### கர்த்தர் தாவீதிற்கு வாக்குறுதியளித்தல்

17 *தாவீது, தன் வீட்டிற்குச் சென்றபிறகு,
அவன் தீர்க்கதரிசி நாத்தானிடம்,
"பார், நான் கேதுரு மரங்களால் ஆன
வீட்டில் இருக்கிறேன், ஆனால் உடன்
படிக்கைப் பெட்டியோ கூடாரத்தில் இருக்கி
றது. எனவே தேவனுக்காக நான் ஒரு
ஆலயம் கட்ட விரும்புகிறேன்" என்றான்.*
2*நாத்தான் தாவீதிற்கு, "நீர் என்ன விரும்பு
கிறீரோ அதனைச் செய். உன்னோடு தேவன்
இருக்கிறார்" என்று பதிலுரைத்தான்.*
3*ஆனால், அன்று இரவு தேவனுடைய
வார்த்தை நாத்தானுக்கு வந்தது.* 4*தேவன்,
"போய் எனது தொண்டனான தாவீதிடம்
கூறு: 'தாவீது, எனக்காக ஆலயம் கட்ட
வேண்டியவன் நீயல்ல.* 5-6*இஸ்ரவேலர்களை
எகிப்திலிருந்து வெளியே அழைத்து வந்த
நாள் முதல் இன்றுவரை நான் ஒரு
வீட்டிலும் வசித்ததில்லை. நான் கூடாரத்து
டனேயே திரிந்து கொண்டிருந்தேன். இஸ்ர
வேலர்களுக்காகச் சிறப்பான தலைவர்
களைத் தேர்ந்தெடுத்தேன். அவர்கள், எனது
ஜனங்களின் மேய்ப்பர்களைப் போன்றவர்
கள். இஸ்ரவேலுக்குள் நான் பல்வேறு
இடங்களுக்குத் திரிந்து கொண்டிருந்தபோது,
நான் அந்தத் தலைவர்களிடம் எனக்குக்
கேதுரு மரங்களால் ஆலயம் கட்டுமாறு
சொன்னதில்லை, எனவே நீங்கள் ஏன்
கேதுரு மரங்களால் ஆலயம் கட்டவில்லை?'
என்று அவர்களை நான் ஒருபொழுதும்
கேட்டதில்லை.*
7*"இப்போது, இவற்றை என் தொண்ட
னான தாவீதிடம் கூறு: அவர் சர்வ
வல்லமையுள்ள கர்த்தர், 'நீ, வயல்களில்
ஆடு மேய்த்துக் கொண்டிருந்தபோது நான்
உன்னைத் தேர்ந்தெடுத்தேன். என் இஸ்ர
வேல் ஜனங்களுக்கு உன்னை அரசனாக்கி
னேன்.* 8*நீ எங்கே போனாலும் அங்கெல்லாம்
நான் உன்னோடு இருந்தேன். நான் உனக்கு
முன்னால் போய் உன் பகைவர்களை
அழித்தேன். இப்போது, உன்னைப் பூமியி
லேயே மிக புகழ்ப் பெற்றவர்களில் ஒருவ
னாக ஆக்குவேன்.* 9*இந்த இடத்தை நான்
என் இஸ்ரவேல் ஜனங்களுக்குக் கொடுக்கி
றேன். அவர்கள் இதில் மரங்களை நடுவார்
கள், அம்மரங்களுக்கு அடியில் சமாதானத்
தோடு இருப்பார்கள். அவர்கள் எதைப்பற்றி
யும் கவலைப்படமாட்டார்கள். தீயவர்கள்
முன்புபோல அவர்களுக்குத் தீங்கு செய்ய
மாட்டார்கள்.* 10*பல தீமைகள் உங்களுக்கு
ஏற்பட்டன ஆனால் இஸ்ரவேல் ஜனங்
களைப் பாதுகாக்க தலைவர்களைத் தேர்ந்
தெடுத்தேன். உங்கள் பகைவர்களையும்
தோற்கடிப்பேன்.*
*"'கர்த்தர் உனக்கு ஒரு வீட்டைக்
கட்டுவார் என்று நான் உனக்குக் கூறுகி
றேன்.* 11*நீ மரித்தபிறகு, உன் முற்பிதாக்க
ளோடு சேருவாய். பிறகு, உன் சொந்த
மகனைப் புதிய அரசன் ஆக்குவேன். அவன்
உனது மகன்களில் ஒருவன். அவனது
அரசைப் பலமாக்குவேன்.* 12*உனது மகன்
எனக்கு ஒரு ஆலயத்தைக் கட்டுவான்.
நான் உனது மகனின் சந்ததியை என்றென்
றும் ஆட்சி செலுத்தும்படி செய்வேன்.*
13*நான் அவனது தந்தையாக இருப்பேன்.
அவன் எனது மகனாக இருப்பான். உனக்கு
முன்பு சவுல் அரசனாக இருந்தான். நான்
அவனுக்கு அளித்த ஆதரவை நீக்கினேன்.
ஆனால் நான் உன் மகன் மீது கொண்ட
அன்பை நிறுத்தமாட்டேன்.* 14*நான் அவனை
எனது ஆலயத்திற்கும் அரசாங்கத்திற்கும்
என்றென்றும் பொறுப்பாளியாக்குவேன்.
அவனது ஆட்சி என்றென்றும் தொடர்ந்தி
ருக்கும்!'" என்றார்.*
15*நாத்தான் தான் கண்டத் தரிசனத்தைத்
தாவீதிடம் கூறினான், தேவன் சொன்னதை
யும் கூறினான்.*

### தாவீதின் ஜெபம்

16*பிறகு தாவீது அரசன் பரிசுத்தக்
கூடாரத்திற்குப் போனான். கர்த்தருக்கு
முன்பு உட்கார்ந்தான். தாவீது, "தேவனாகிய
கர்த்தாவே, நீர் எனக்காகவும் என்
குடும்பத்துக்காகவும்எவ்வளவோ செய்திருக்
கிறீர். இது ஏன் என்பது எனக்குப் புரிய
வில்லை.* 17*இவற்றுக்கெல்லாம் மேலாக,
எதிர்காலத்தில் என் குடும்பத்திற்கு என்
னென்ன நடைபெறும் என்பதையும் நான்
அறியுமாறு செய்து விட்டீர். நீர் என்னை
ஒரு மிக முக்கியமான மனிதனாக நடத்தினீர்.*
18*இதற்கு மேல் நான் சொல்ல என்ன
இருக்கிறது? நீர் எனக்காக எவ்வளவோ
செய்திருக்கிறீர். நான் உமது ஊழியன்.
இதை நீர் அறிவீர்.* 19*கர்த்தாவே, எனக்காக
இந்த அற்புதங்களைச் செய்துள்ளீர். நீர்
இவற்றைச் செய்தீர் ஏனென்றால், இவற்றை
நீர் விரும்பினீர்.* 20*உம்மைப்போல் எவரு
மில்லை கர்த்தாவே. உம்மைத் தவிர வேறு
தேவன் இல்லை. வேறு எந்தத் தெய்வமும்
இதுபோல் அற்புதங்களைச் செய்ததாக
நாங்கள் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை!*
21*இஸ்ரவேலைப்போன்று வேறு நாடுகளும்
இல்லை. இந்த அதிசயங்களை நீர் செய்த
நாடு பூமியிலேயே இஸ்ரவேல் ஒன்று
மட்டும்தான். நீர் எங்களை எகிப்திலிருந்து
விடுவித்தீர், என்னைச் சுதந்தரமாக்கினீர்.
உமக்கே நீர் புகழ் சேர்த்தீர்! உமது
ஜனங்களுக்கு முன்னால் நீர் சென்றீர். மற்ற
ஜனங்கள் தமது நாடுகளை எங்களுக்காக*

விட்டுச் செல்லும்படி செய்தீர்! 22இஸ்ரவேல்
ஜனங்களை என்றென்றும் உமது ஜனங்க
ளாக ஏற்றுக்கொண்டீர்! கர்த்தாவே, நீர்
அவர்களின் தேவனும் ஆனீர்!
23“கர்த்தாவே, நீர் இந்த வாக்குறுதியை
எனக்காகவும் எனது குடும்பத்திற்காகவும்
செய்தீர். இப்போது, உமது வாக்குறுதிகளை
என்றென்றும் காப்பாற்றுவீர், சொன்ன
படியே செய்யும்! 24நம்பிக்கைக்கு நீர்
உரியவர் என்பதைக் காட்டும். ஜனங்கள்
உமது நாமத்தை எப்போதும் பெருமைபடுத்
துவார்கள், ‘சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இஸ்ரவேலரின் தேவன்!’ என்று என்றென்
றும் ஜனங்கள் கூறுவார்கள். நான் உமது
தொண்டன். எனது குடும்பத்தைப் பலமுள்ள
தாக்கி என்றென்றும் உமக்குச் சேவைச்
செய்ய அனுமதியும்.
25“என் தேவனே, உமது ஊழியக்கார
னாகிய என்னிடம் பேசினீர். எனது குடும்
பத்தை அரச குடும்பம் ஆக்குவீர் என்பதைத்
தெளிவாக்கிவிட்டீர். அதனால் நான்
தைரியமாய் இருக்கிறேன். அதனால்தான்
உம்மிடம் வேண்டுதல்களை வைத்த வண்
ணம் இருக்கிறேன். 26கர்த்தாவே, நீரே
தேவன், நீரே இந்த நன்மைகளெல்லாம்
எனக்குச் செய்வதாகக் கூறிவிட்டீர்.
27கர்த்தாவே! எனது குடும்பத்தை ஆசீர்
வதிக்க மனம் கொண்டீர். வாக்களிக்கும்
அளவிற்குக் கருணை கொண்டுள்ளீர். எனது
குடும்பம் என்றென்றும் உமக்குச் சேவை
செய்யும் பாக்கியத்தையும் கருணையோடு
தந்துள்ளீர். கர்த்தாவே, நீரே எனது குடும்
பத்தை ஆசீர்வதித்துவிட்டீர். எனவே எனது
குடும்பம் என்றென்றும் ஆசீர்வாதத்திற்கு
உட்பட்டது!” என்றாள்.

### தாவீது பல நாடுகளை வெல்கிறான்

18 பிறகு தாவீது பெலிஸ்தரைத் தாக்கித்
தோற்கடித்தான். காத் நகரங்களையும்
அதைச் சுற்றியுள்ள சிறு நகரங்களையும்
பெலிஸ்தரின் வசமிருந்து கைப்பற்றினான்.
2பிறகு தாவீது மோவாப் நாட்டைத்
தோற்கடித்தான். மோவாப்பியர்கள் தாவீதின்
வேலைக்காரர்களானார்கள். அவர்கள்
தாவீதிற்கு புகழுரைகளைச் செலுத்தினார்
கள்.
3தாவீது, ஆதாரேசரின் படைகளுக்கு
எதிராகவும் சண்டையிட்டான். ஆதாரேசர்
சோபா நாட்டின் அரசன். தாவீது,
அப்படைகளோடு ஆமாத் நகரத்தின் வரை
போரிட்டான். தாவீது இவ்வாறு செய்
வதற்குக் காரணம் என்னவென்றால் ஆதா
ரேசர் தனது அரசை ஐபிராத்து நதிவரை
பரப்ப விரும்பினான். 4தாவீது, ஆதா
ரேசரிடமிருந்து 1,000 இரதங்களையும் 7,000
இரதமோட்டிகளையும் 20,000 வீரர்களையும்
கைப்பற்றினான். ஆதாரேசரின் பெரும்பா
லான குதிரைகளைத் தாவீது முடமாக்கி
னான். அவை தேர் இழுக்கப் பயன்படுவன.
ஆனால் தாவீது, அவற்றில் நூறு
இரதக்குதிரைகளை மட்டும் வைத்துக்
கொண்டான்.
5தமஸ்குஸ் நகரத்தில் இருந்து ஆர்மீனியர்
கள் ஆதாரேசருக்கு உதவி செய்ய வந்தனர்.
ஆனால் தாவீது, அவர்களையும் தோற்
கடித்து 22,000 ஆர்மீனியர்களைக் கொன்
றான். 6பிறகு தாவீது, ஆராமில் உள்ள
தமஸ்குஸ் நகரில் கோட்டை அமைத்தான்.
ஆர்மீனியர்கள் தாவீதின் வேலைக்காரர்க
ளாகி அவனுக்குப் புகழுரைகளைக்
கொண்டு வந்தனர். தாவீது எங்கெங்கு
போனானோ அங்கெல்லாம் கர்த்தர் அவ
னுக்கு வெற்றிகளைத் தந்தார்.
7தாவீது ஆதாரேசரின் படைத்தளபதிகளி
டமிருந்து தங்கள் கேடயங்களைப் பறித்து
எருசலேமிற்குக் கொண்டு வந்தான். 8திப்
காத்திலும் கூனிலுமுள்ள வெண்கலத்தை
யும் தாவீது எடுத்து வந்தான். இந்நகரங்கள்
ஆதாரேசருக்கு உரியவை. பிறகு சாலொ
மோன் இந்த வெண்கலத்தை ஆலயத்திற்
குரிய வெண்கலத்தொட்டி, தூண், தட்டு
முட்டு போன்றவற்றைச் செய்வதற்குப் பயன்
படுத்தினான்.
9ஆமாத் நகரத்தின் அரசன் தோயூ.
ஆதாரேசர் சோபா நாட்டின் அரசன். தோயூ,
தாவீது ஆதாரேசரின் படைகளை வென்று
விட்டதை அறிந்தான். 10எனவே, தோயூ
அவனது மகனான ஆதோராமை அரசன்
தாவீதினிடம் அனுப்பி சமாதானத்தைத் தெரி
வித்து ஆசீர்வாதத்தை வேண்டினான்.
தாவீது ஆதாரேசரின் படைகளுக்கு எதி
ராகப் போரிட்டுத் தோற்கடித்ததால் அவன்
இவ்வாறு நடந்துகொண்டான். முன்பு
போர்க்களத்தில் ஆதாரேசர் தோயூவோடு
இருந்தான். ஆதோராம், தாவீதிற்குத் தங்கம்,
வெள்ளி, வெண்கலம் போன்றவற்றால் செய்
யப்பட்டவற்றை அன்பளிப்பாகக் கொடுத்
தான். 11தாவீது அரசன் அவற்றைப்
பரிசுத்தப்படுத்தி கர்த்தருக்கு கொடுத்து
விட்டான். ஏதோம், மோவாப், அம்மோனி
யர், பெலிஸ்தர், அமலேக்கியர் ஆகியோரிட
மிருந்து பெற்ற பொன், வெள்ளி போன்ற
வற்றையும் தாவீது இவ்வாறே செய்து
பரிசுத்தப்படுத்தினான்.
12உப்பு பள்ளத்தாக்கிலே செருயாவின்
மகனான அபிசாயி, 18,000 ஏதோமியரைக்
கொன்றான். 13அபிசாயி ஏதோமில் அரண்
அமைத்தான். அனைத்து ஏதோமியரும் தாவீ
தின் வேலைக்காரர்களானார்கள். தாவீது
செல்லுமிடங்களில் எல்லாம் கர்த்தர்
வெற்றியளித்தார்.

### தாவீதின் முக்கிய அதிகாரிகள்

14தாவீது,அனைத்து இஸ்ரவேலர்களுக்கும்
அரசன் ஆனான். அவன் ஒவ்வொருவருக்கும்
சரியானதையும், நியாயமானதையும் செய்

தான். [15]செருயாவின் மகனான யோவாப் தாவீதின் படைத் தளபதியாக இருந்தான். ஆகிலூதின் மகனாகிய யோசபாத் வரலாறு எழுதுபவனாக இருந்தான். [16]சாதோக்கும், அபிமெலேக்கும் ஆசாரியர்கள். சாதோக் அகிதூபின் மகன். அபிமெலேக் அபியதாரின் மகன். சவிஷா எழுத்துக்காரன். [17]பெனாயா, கிரேத்தியருக்கும் பிலேத்தியருக்கும் தலைவனாய் இருந்தான். பெனாயா யோய்தாவின் மகன். தாவீதின் மகன்களும் முக்கிய அதிகாரிகளாய் இருந்தனர். அவர்கள் தாவீதின் பக்கம் தொண்டு செய்தனர்.

### தாவீதின் ஆட்களை அம்மோனியர் அவமானப்படுத்தியது

19 நாகாஸ் என்பவன் அம்மோனியர்களின் அரசனாக இருந்தான். நாகாஸ் மரித்ததும், அவனது மகன் அரசன் ஆனான். [2]பிறகு தாவீது, "நாகாஸ் என்னிடம் அன்பாய் இருந்தான், எனவே நான் அவனது மகன் ஆனூனிடம் அன்பாய் இருப்பேன்" என்றான். அதனால் தாவீது தூதுவர்களை ஆனூனுக்கு ஆறுதல்சொல்ல அனுப்பினான். தாவீதின் தூதுவர்கள் அம்மோன் நாட்டிற்கு ஆனூனுக்கு ஆறுதல் சொல்லச் சென்றனர்.

[3]ஆனால் அம்மோனிய தலைவர்கள் ஆனூனிடம், "முட்டாளாகாதே, தாவீது உண்மையிலேயே உனக்கு ஆறுதல் சொல்லவும், மரித்துப்போன உன் தந்தையைக் கௌரவப்படுத்தவும் தூதுவர்களை அனுப்பவில்லை! அவன் உன்னையும், உன் நாட்டையும் உளவறியவே தூதுவரை அனுப்பியுள்ளான். அவன் உண்மையில் உன் நாட்டை அழிக்கவே விரும்புகிறான்!" என்றனர். [4]எனவே, ஆனூன் தாவீதின் தூதுவர்களைக் கைதுசெய்து அவர்களது தாடியை வெட்டினான். இடுப்புப்பக்கத்தில் அவர்களின் ஆடையையும் வெட்டினான். பிறகு வெளியே துரத்திவிட்டான்.

[5]தாவீதின் ஆட்களுக்கு வீட்டிற்குத் திரும்பிப்போக அவமானமாக இருந்தது. சிலர் தாவீதிடம் சென்று தங்களுக்கு ஏற்பட்டதைச் சொன்னார்கள். எனவே தாவீது தன் ஆட்களுக்கு, "உங்களது தாடி முழுவதும் வளரும்வரை எரிகோவிலேயே தங்கியிருங்கள். பிறகு உங்கள் வீட்டிற்கு வரலாம்" என்று செய்தி அனுப்பினான்.

[6]அம்மோனியர்கள் தமது செயல்களாலேயே தாம் தாவீதிற்குப் பகையானதைக் கண்டனர். பின் ஆனூனும் அம்மோனியர்களும் 75,000 பவுண்டு வெள்ளியை செலவிட்டு மெசொப்பொத்தாமியாவிலிருந்து இரதங்களையும் இரதமோட்டிகளையும் வாங்கினார்கள். அவர்கள், இரதங்களையும் இரதமோட்டிகளையும் மாக்கா, சோபா எனும் சீரியரின் நாடுகளிலிருந்தும் பெற்றனர். [7]அம்மோனியர்கள் 32,000 இரதங்களை வாங்கினார்கள். அவர்கள் மாக்காவின் அரசுக்கு அதனுடைய படைகள் வந்து உதவுவ தற்காகப் பணம் செலுத்தினர். மாக்காவின் அரசின் ஆட்களும் வந்து மேதேபாவுக்கு அருகில் பாசறை அமைத்தனர். அம்மோனியர்கள் தம் நகரங்களை விட்டு வெளியே வந்து போருக்குத் தயாரானார்கள்.

[8]அம்மோனியர்கள் போருக்குத் தயாராக இருப்பதைத் தாவீது அறிந்தான். எனவே, அவன் யோவாபையும், இஸ்ரவேலின் முழு படையையும் அனுப்பினான். [9]அம்மோனியர்கள் வெளியே வந்து போருக்குத் தயாரானார்கள். அவர்கள் நகர வாசல்களுக்கு அருகில் இருந்தார்கள். உதவி செய்வதற்கு வந்த அரசர்களும் வயல் வெளிகளில் தனியாகத் தங்கியிருந்தார்கள்.

[10]யோவாப், தனக்கு எதிராக இரண்டு படைகள் போர்ச்செய்ய தயாராக இருப்பதைக் கண்டான். ஒரு படை தனக்கு முன்பும் இன்னொரு படை தனைக்குப் பின்னாலும் இருப்பதை அறிந்தான். உடனே தமது படையில் உள்ள சிறந்த வீரர்களைத் தேர்ந்தெடுத்தான். அவர்களை ஆராம் படையோடு போரிட அனுப்பினான். [11]மீதமிருந்த இஸ்ரவேலியப் படையை யோவாப் அபிசாயின் தலைமையின் கீழ் அமைத்தான். அபிசாயி அவனது சகோதரன். அவ்வீரர்கள் அம்மோனிய படையோடு போரிடச் சென்றனர். [12]யோவாப் அபிசாயிடம், "ஆராமிலுள்ள படைகள் என்னைவிட பலமானதாக இருந்தால், நீ வந்து உதவவேண்டும். ஆனால், அம்மோனியப் படைகள் உன்னைவிடப் பலமானதாக இருந்தால், நான் வந்து உனக்கு உதவுவேன். [13]நாம் நமது ஜனங்களுக்காகவும் தேவனுடைய நகரங்களுக்காகவும் போராடும் போது பலமாகவும், தைரியமாகவும் இருக்க வேண்டும். தனக்குச் சரி என்று எண்ணுவதைக் கர்த்தர் செய்வார்!" என்றான்.

[14]யோவாபும், அவனது படையும் ஆராம் படையைத் தாக்கியது. ஆராம்படை தோற்று ஓடியது. [15]அம்மோனியரின் படை ஆராம் படை ஓடுவதைப் பார்த்து, தானும் ஓடியது. அது அபிசாயிடமும் அவனது படைகளிடம் இருந்து ஓடியது. அம்மோனியர்கள் தம் நகரங்களுக்கும் யோவாப் எருசலேமிற்கும் திரும்பிச் சென்றனர்.

[16]ஆராமிய தலைவர்கள், இஸ்ரவேலரால் தாம் தோற்கடிக்கப்பட்டதை அறிந்தனர். எனவே, அவர்கள் உதவிக்காகத் தூதுவர்களை ஐபிராத்து நதிக்கு கிழக்குப்புறத்தில் வசிப்பவர்களிடம் அனுப்பினார்கள். ஆராமில் இருந்து வந்த ஆதாரேசரின் படைத் தலைவன் சோப்பாக். அவனும் மற்ற ஆராமிய வீரர்களை வழிநடத்தினான்.

[17]ஆராமியர்கள் மீண்டும் போருக்குத் தயாராகக் கூடுவதை தாவீது கேள்விப்பட்டான். எனவே அவனும் எல்லா இஸ்ரவேலர்களையும் கூட்டினான். யோர்தான்

நதியைக் கடந்து தாவீது வழிநடத்தினான்.
அவர்கள் ஆராமியர்களுக்கு நேருக்கு நேராக
வந்தனர். தாவீது போருக்குத் தயாராகி
ஆராமியர்களைத் தாக்கினான். 18 ஆராமியர்
கள் இஸ்ரவேலரிடம் தோற்று ஓடினார்கள்.
தாவீதும் அவனது படைகளும் 7,000 ஆரா
மிய இரதமோட்டிகளையும் 40,000 ஆராமிய
வீரர்களையும் கொன்றனர். தாவீதின் படை
ஆராமியப்படையின் தளபதியான சோபாக்
கையும் கொன்றது.

19 ஆதாரேசரின் அதிகாரிகள், தாம் இஸ்ர
வேலர்களால் தோற்கடிக்கப்படுவது அறிந்த
தும் தாவீதோடு சமாதானம் செய்து
கொண்டனர். அவர்கள் தாவீதின் வேலைக்
காரர்கள் ஆனார்கள். எனவே ஆராமியர்கள்
அம்மோனியர்களுக்கு மீண்டும் உதவ மறுத்
துவிட்டனர்.

### யோவாப் அம்மோனியர்களை அழிக்கிறான்

20 அடுத்த ஆண்டு வசந்த கால வேளை
யில், இஸ்ரவேல் படையைக்காட்டி
யோவாப் போருக்குத் தயார் செய்தான்.
பொதுவாக அரசர்கள் போருக்கு வெளியே
புறப்பட்டுச் செல்லும் காலம் அது, ஆனால்
தாவீது எருசலேமில் இருந்தான். இஸ்ரவேல்
படை அம்மோன் நாட்டிற்குப் போய் அதை
அழித்தது. பிறகு அவர்கள் ரப்பா நாட்
டிற்குச் சென்று அங்கே முற்றுகையிட்டது.
ஆட்களை உள்ளேயோ, வெளியேயோ
போகவிடாமல் செய்தனர். யோவாப்பும்
இஸ்ரவேல் படையும் அந்நகரம் அழியும்
வரை போரிட்டனர்.

2 தாவீது அம்மோனிய அரசர்களின்
கிரீடத்தை எடுத்தான். அந்தத் தங்க மகுடம்
75 பவுண்டு இருந்தது. அதில் விலையுயர்ந்த
கற்கள் இருந்தன. அம்மகுடம் தாவீதின்
தலையில் சூட்டப்பட்டது. பிறகு தாவீது
ரப்பா நகரிலிருந்து மேலும் விலையுயர்ந்த
பொருட்களை எடுத்துக்கொண்டான்.
3 தாவீது ரப்பாவிலிருந்து ஜனங்களைக்
கூட்டிவந்து அவர்களைப் பலவந்தமாக
ரம்பம், இரும்பு ஊசிகள், கோடரி போன்ற
வற்றால் வேலை செய்யவைத்தான். தாவீது
இதனை அனைத்து அம்மோனிய நகரங்க
ளின் ஜனங்களுக்கும் விதித்தான். பிறகு
தாவீதும், அவனது படையும் எருசலேமுக்
குத் திரும்பியது.

### இராட்சத பெலிஸ்தர் வீரர்கள் கொல்லப்படுகிறார்கள்

4 பிறகு இஸ்ரவேல் ஜனங்கள் பெலிஸ்தர்க
ளுடன் கேசேர் நகரில் போரிட்டனர்.
அப்போது ஊசாத்தியனாகிய சிபெக்காய்
இராட்சத மகனான சிப்பாயி என்பவனைக்
கொன்றான். எனவே பெலிஸ்தர்கள் இஸ்ர
வேலர்களுக்கு அடிமைகளானார்கள்.

5 இன்னொரு தடவை, மீண்டும் இஸ்ர
வேலர்கள் பெலிஸ்தர்களோடு போரிட்டனர்.
யாவீரின் மகன் எல்க்கனான். இவன் லாகே
மியைக் கொன்றான். லாகெமி கோலியாத்
தின் சகோதரன். கோலியாத் காத் நகரைச்
சேர்ந்தவன். லாகேமியின் ஈட்டி மிகப்பெரிதா
கவும் பலமானதாகவும் இருந்தது. அது
தாங்கு நெய்கிறவர்களின் படைமரம் போல்
இருந்தது.

6 பிறகு இஸ்ரவேலர் பெலிஸ்தர்களோடு
காத் நகரில் இன்னொரு தடவை போரிட்
டனர். இந்நகரில் ஒரு பெரிய மனிதன்
இருந்தான். அவனுக்கு 24 கை விரல்களும்
கால்விரல்களும் இருந்தன. அவனுக்கு
ஒவ்வொரு கையிலும், ஒவ்வொரு காலிலும்
ஆறு விரல்கள் இருந்தன. எனவே அவன்
இராட்சதர்களின் மகன்தான். 7 அவன் இஸ்ர
வேலரைக் கேலிச் செய்தபோது, யோனத்
தான் அவனைக் கொன்றான். யோனத்தான்
சிமேயாவின் மகன். சிமேயா தாவீதின்
சகோதரன் ஆவான்.

8 பிலித்தியர்கள் காத்திலுள்ள இராட்சதர்
களுக்கும் பிறந்தவர்கள். தாவீதும் அவனு
டைய வீரர்களும் இவர்களைக் கொன்றனர்.

### இஸ்ரவேலரை எண்ணுவதினால் தாவீது பாவம் செய்கிறான்

21 இஸ்ரவேல் ஜனங்களுக்கு எதிராக
சாத்தான் எழுந்தான். அவன் இஸ்ர
வேல் ஜனங்களை எண்ணி கணக்கிடத்
தாவீதை ஊக்கப்படுத்தினான். 2 எனவே
தாவீது யோவாப்பிடமும், ஜனங்கள் தலை
வர்களிடமும், "போய் அனைத்து இஸ்ர
வேலரின் எண்ணிக்கையையும் கணக்கிடு.
நாட்டிலுள்ள ஒவ்வொருவரையும் பெயர்
செபா முதல் தாண் வரையுள்ள அனை
வரையும் கணக்கிடு. பிறகு எனக்குச் சொல்.
மொத்தத்தில் ஜனங்கள் தொகை எத்தனை
என்று கணக்கிட்டு எனக்குச் சொல்"
என்றான்.

3 ஆனால் யோவாப், "இப்போது இருக்கிற
ஜனங்களைவிட நூறு மடங்காக கர்த்தர்
செய்வார்! ஐயா, இஸ்ரவேலரின் அனைத்து
ஜனங்களும் உங்கள் தொண்டர்கள். எனது
அரசனும் ஆண்டவனும் ஆனவரே! இந்தச்
செயலை ஏன் செய்ய விரும்புகிறீர்? நீங்கள்
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரையும்
பாவம் செய்த உணர்வுக்கு உள்ளாக்குவீர்
கள்!" என்று சொன்னான்.

4 ஆனால், தாவீது அரசனோ உறுதியாக
இருந்தான். அரசன் சொன்னபடியே
யோவாப் செய்தான். எனவே அவன்
இஸ்ரவேலின் முழுவதற்கும் போய் கணக்
கிட்டான். பிறகு அவன் எருசலேமிற்குத்
திரும்பிவந்தான். 5 அவன் தாவீதிடம்
ஜனங்களின் எண்ணிக்கையைச் சொன்
னான். இஸ்ரவேலில் 1,100,000 பேர் வாளைப்
பயன்படுத்தத் தெரிந்தவர்கள். யூதாவில்
வாளைப் பயன்படுத்தத் தெரிந்தவர்கள்

4,70,000 பேர். [6]யோவாப், லேவி மற்றும்
பென்யமீன் கோத்திரங்களைக் கணக்கிட
வில்லை. ஏனென்றால் அவன் தாவீது
அரசனின் கட்டளையை விரும்பவில்லை.
[7]தேவனுடைய பார்வையில் தாவீது இந்த
தீயச்செயலைச் செய்துவிட்டான். எனவே,
தேவன் இஸ்ரவேலரைத் தண்டித்தார்.

### தேவன் இஸ்ரவேலரைத் தண்டிக்கிறார்

[8]பிறகு தாவீது தேவனிடம், "நான் முட்
டாள்தனமான செயலைச் செய்து விட்டேன்.
இஸ்ரவேல் ஜனங்களை எண்ணி ஒரு தீய
பாவத்தைச் செய்துவிட்டேன். இப்போது
உங்கள் தொண்டனாகிய எனது பாவத்தை
என்னிடமிருந்து நீக்குமாறு கெஞ்சுகிறேன்"
என்றான்.
[9-10]காத் என்பவன் தாவீதின் தீர்க்கதரிசி
ஆவான். கர்த்தர் காத்திடம், "போய் தாவீதி
டம், 'இதுதான் கர்த்தர் கூறியது: நான்
உனக்குத் தேர்ந்தெடுக்க மூன்று காரியங்க
ளைத் தருகிறேன். அவற்றில் ஏதாவது
ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும். பிறகு நீ
தேர்ந்தெடுத்த முறையிலேயே உன்னைத்
தண்டிப்பேன்' என்று கூறு" என்றார்.
[11-12]பிறகு காத் தாவீதிடம் சென்று, அவ
னிடம், "தாவீதே நீ விரும்புகிற தண்டனை
யைத் தேர்ந்தெடுத்துக்கொள்: மூன்று ஆண்டு
கள் உணவில்லாமல் இருப்பது, அல்லது
மூன்று மாதங்கள் உனது பகைவர்கள் தம்
ஆயுதங்களால் துரத்த ஓடிக்கொண்டே
இருப்பது, அல்லது மூன்று நாட்கள் கர்த்தர்
தரும் தண்டனை. இதனால் பயங்கரமான
நோய் நாடு முழுவதும் பரவும், கர்த்தருடைய
தூதன் இஸ்ரவேல் முழுவதுமுள்ள ஜனங்
களை அழிப்பான்' என்று கர்த்தர் சொல்
கிறார். தேவன் என்னை அனுப்பினார்.
இப்போது, நான் அவருக்கு என்ன பதில்
சொல்லவேண்டும் என்று நீ முடிவு செய்"
என்றான்.
[13]தாவீது காத்திடம், "நான் இக்கட்டில்
அகப்பட்டுக்கொண்டேன்! என்னை மனிதர்
களின் கைகளில் அகப்பட்டுக் கொள்ள
விடாதே. மனிதர்கள் என் தண்டனையை
முடிவு செய்வதை நான் விரும்பவில்லை.
கர்த்தர் இரக்கம் உள்ளவர், எனவே அவரே
என் தண்டனையை முடிவு செய்யட்டும்"
என்றான்.
[14]எனவே கர்த்தர் கொடிய நோயை
இஸ்ரவேலரிடம் பரப்பினார். 70,000 பேர்
மரித்தனர். [15]தேவன், எருசலேமை அழிக்க
ஒரு தூதனை அனுப்பினார். ஆனால்,
அத்தூதன் எருசலேமை அழிக்கத் தொடங்
கும்போது, கர்த்தர் அதனைப் பார்த்து
வருத்தப்பட்டார். கர்த்தர் அத்தூதனிடம்,
"நிறுத்து! இது போதும்!" என்றார்.
கர்த்தருடைய தூதன் எபூசியனாகிய ஓர்னா
னின் களத்தருகில் நின்றான்.
[16]கர்த்தருடைய தூதன் ஆகாயத்தில் நிற்
பதைத் தாவீது கண்களை ஏறெடுத்துப்
பார்த் தான். அத்தூதன் எருசலேம் நகரை
நோக்கி தன் வாளை உருவிக்கொண்டு
நின்றான். தாவீதும், மற்ற தலைவர்களும்
தரையில் முகம்படும்படி குனிந்து
வணங்கினார்கள். தாவீதும், தலைவர்களும்
தங்கள் துக்கத்தை வெளிக்காட்ட சிறப்பான
ஆடையை அணிந் திருந்தனர். [17]தாவீது
தேவனிடம், 'பாவம் செய்தவன் நான்
ஒருவனே! ஜனங்களை எண்ணி
கணக்கிடும்படி நானே கட்டளையிட்டேன்!
நானே தவறு செய்தவன்! இஸ்ரவேல்
ஜனங்கள் எந்தத் தவறையும் செய்யவில்லை!
தேவனாகிய கர்த்தாவே, என்னையும் என்
குடும்பத்தையும் தண்டியும்! உமது
ஜனங்களை அழிக்கும் கொடிய நோயை
நிறுத்தும்!" என்றான்.
[18]பிறகு கர்த்தருடைய தூதன் காத்திடம்
பேசினான். அவன், "தாவீதிடம் கர்த்தரை
தொழுதுகொள்ள ஒரு பலிபீடம் கட்டுமாறு
கூறு. தாவீது, அப்பலிபீடத்தை எபூசியனா
கிய ஓர்னானின் களத்திலே கட்ட வேண்
டும்" என்றான். [19]காத் இவற்றைத் தாவீதிடம்
கூற, தாவீது ஓர்னானின் களத்துக்குப்
போனான்.
[20]ஓர்னா கோதுமையை அடித்துக்
கொண்டிருந்தான். அவன் திரும்பி தேவ
தூதனைப் பார்த்தான். ஓர்னானின் நான்கு
மகன்களும் ஓடி ஒளிந்துக்கொண்டார்கள்.
[21]தாவீது ஓர்னாவிடம் சென்றான், ஓர்னா
களத்தைவிட்டு வெளியே வந்தான். தாவீதின்
அருகிலே போய் அவன் முன்பு தரைமட்டும்
குனிந்து வணங்கினான்.
[22]தாவீது ஓர்னாவிடம், "உனது களத்தை
எனக்கு விற்றுவிடு. நான் உனக்கு முழு
விலையையும் தருவேன். பிறகு இந்த
இடத்தை கர்த்தரை தொழுது கொள்வ
தற்கான பலிபீடத்தைக் கட்டப் பயன்படுத்து
வேன். அதன் பிறகே இப்பயங்கர நோய்
போகும்" என்றான்.
[23]ஓர்னா தாவீதிடம், "களத்தை எடுத்துக்
கொள்ளுங்கள். நீங்கள் எனது அரசன்,
மற்றும் ஆண்டவன். உமது விருப்பப்படி
செய்யும். நான் உங்களுக்கு தகன பலியிட
மாடுகளும், விறகுகளும் தருவேன். தானியக்
காணிக்கைக்காக,கோதுமையைத் தருவேன்.
நான் இவை அனைத்தையும் தருவேன்!"
என்றான்.
[24]ஆனால் தாவீது அரசன், "இல்லை,
நான் உனக்கு முழு விலையையும் தருவேன்.
நான் உனக்குரிய எதையும் எடுத்து
கர்த்தருக்கு கொடுக்கமாட்டேன். இலவசமாக
எதையும் எடுத்து காணிக்கை செலுத்த
மாட்டேன்" என ஓர்னாவிடம் கூறினான்.
[25]எனவே தாவீது ஓர்னாவுக்கு 15 பவுண்டு
தங்கத்தைக் கொடுத்தான். [26]தாவீது
கர்த்தருக்கு அங்கே பலிபீடத்தைக் கட்டி
னான். தாவீது சர்வாங்க தகனபலியையும்,

*சமாதானப் பலியையும் அளித்தான். தாவீது,
கர்த்தரிடம் ஜெபம் செய்தான். வானிலிருந்து
அக்கினியை வரவழைத்து, கர்த்தர்
தாவீதிற்குப் பதில் சொன்னார். அந்த அக்
கினி தகனபலிபீடத்தில் வந்து விழுந்தது.
27 பிறகு கர்த்தர் தூதனுக்கு அவனது வாளை
உறையில் போடும்படி கட்டளையிட்டார்.
28 ஒர்னாவின் களத்தில் கர்த்தர் தனக்குப்
பதில் சொன்னதைத் தாவீது கண்டான்.
எனவே, தாவீது கர்த்தருக்கு தானே பலி
களைச் செலுத்தினான். 29 தகன பலிபீடமும்
பரிசுத்தக் கூடாரமும் மலைமீது கிபியோனில்
இருந்தது. இஸ்ரவேல் ஜனங்கள் வனாந்
தரத்தில் இருக்கும்போது மோசே இந்தப்
பரிசுத்தக் கூடாரத்தை அமைத்தான்.
30 தாவீது, பரிசுத்தக் கூடாரத்திற்குள் தேவ
னோடு பேச நுழையவில்லை. ஏனென்றால்
அவனுக்கு அச்சம் ஏற்பட்டது. கர்த்தருடைய
தூதனுக்கும் அவனது வாளுக்கும் தாவீது
மிகவும் பயந்தான்.*

22 *தாவீது, “தேவனாகிய கர்த்தருடைய
ஆலயமும் சர்வாங்க தகனபலிக்கான
பலிபீடமும் இங்கே கட்டப்படும்” என்றான்.*

### தாவீது ஆலயத்திற்கு திட்டமிடுகிறான்

*2 தாவீது இஸ்ரவேலில் வாழும் அயல்
நாட்டுக்காரர்களைக் கூடும்படிக் கட்டளை
யிட்டான். அவர்களில் கல்தச்சர்களைத்
தேர்ந்தெடுத்தான். தேவனுடைய ஆலயத்
திற்கானக் கற்களை வெட்டும்படி அவர்
களுக்கு கட்டளையிட்டான். 3 தாவீது வாசல்
கதவுக்கான ஆணிகளுக்கும் கீல்களுக்கும்
தேவையான இரும்பையும் பெற்றான்.
நிறுத்து பார்க்க முடியாத அளவிற்கு வெண்
கலத்தையும் பெற்றான். 4 எண்ண முடிகிற
அளவிற்கும் அதிகமான அளவில் கேதுரு
மரங்களையும் பெற்றான். சீதோன், தீரி
போன்ற நகர ஜனங்கள் கேதுரு மரங்களை
தாவீதிற்குக் கொண்டு வந்தனர்.
5 தாவீது, “நாம் கர்த்தருக்காக மிகவும்
மகத்தான ஆலயத்தை கட்டவேண்டும்.
ஆனால் என் மகன் சாலொமோன் இளைஞ
னாக இருக்கிறான். அவன் எதையெதை
அறிந்துக்கொள்ள வேண்டுமோ அதனை
இன்னும் அறிந்துகொள்ளவில்லை. கர்த்தரு
டைய ஆலயமானது மிக மகத்தானதாக
இருக்கவேண்டும். அது தன் உயர்வாலும்
அழகாலும் அனைத்து நாடுகளிலும் புகழ்
பெறும். எனவே, நான் கர்த்தருடைய
ஆலயத்தைக் கட்ட திட்டமிடுகிறேன்” என்
றான். எனவே தாவீது இறப்பதற்கு முன்பு
ஆலயம் கட்டுவதற்கான திட்டங்களை
அமைத்தான்.
6 பிறகு தாவீது தன் மகன் சாலொமோனை
அழைத்தான், இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தருக்கு ஆலயம் கட்டுமாறு சொன்னான்.
7 தாவீது சாலொமோனிடம், “என் மகனே,
எனது தேவனாகிய கர்த்தருக்கு ஆலயம்
கட்ட நான் விரும்பினேன். 8 ஆனால் கர்த்தர்
என்னிடம், ‘தாவீது, நீ பல போர்களைச்
செய்து அதில் பலரைக் கொன்றிருக்கிறாய்.
எனவே எனது நாமத்தில் நீ ஆலயம்
கட்டக்கூடாது. 9 ஆனால் உனக்கு ஒரு
மகன் இருப்பான். அவன் சமாதான புருஷ
னாக இருப்பான். நான் உனது மகனுக்குச்
சமாதானத்திற்குரிய காலத்தைக் கொடுப்
பேன். அவனைச் சுற்றியுள்ள பகைவர்கள்
அவனுக்குத் தொந்தரவு செய்யமாட்டார்கள்.
அவனது பெயர் சாலொமோன். சாலொ
மோன் அரசனாக இருக்கும்போது இஸ்ர
வேல் ஜனங்களுக்குச் சமாதானமும்
அமைதியும் தருவேன். 10 சாலொமோன்
எனது நாமத்துக்காக ஆலயம் கட்டுவான்.
அவன் எனது மகனாக இருப்பான், நான்
அவனது தந்தையாக இருப்பேன். நான்
சாலொமோனின் அரசைப் பலமுள்ளதாக்கு
வேன். அவனது குடும்பத்தில் உள்ளவர்கள்
என்றென்றும் இஸ்ரவேலை ஆள்வார்கள்’
என்றார்!” என்றான்.
11 தாவீது மேலும், “இப்போது மகனே,
கர்த்தர் உன்னோடு இருக்கட்டும். உன்
செயல்களில் வெற்றி கிடைக்கட்டும். உனது
தேவனாகிய கர்த்தருடைய நாமத்தால்
ஆலயம் கட்டுவாய். அவர் சொன்னது
போலவே கட்டாயம் நீ செய்வாய். 12 கர்த்தர்
உன்னை இஸ்ரவேலின் அரசனாக்குவார்.
ஜனங்களை வழி நடத்தவும் கர்த்தருடைய
சட்டங்களை மதித்து கட்டுப்பட்டு நடக்கவும்
தேவையான ஞானத்தையும், புரிந்து
கொள்ளும் திறனையும் தேவனாகிய கர்த்தர்
உனக்கு வழங்கட்டும். 13 நீ வெற்றிமிக்கவ
னாய் இருப்பாய். இஸ்ரவேலுக்காகக் கர்த்தர்
மோசேயிடம் கொடுத்த கட்டளைகளுக்கும்,
நியாயங்களுக்கும் நீ கவனமாகக் கீழ்ப்படிய
வேண்டும். பலமாகவும், தைரியமாகவும் இரு.
பயப்படாதே.
14 “சாலொமோன், நான் கடினமான
வேலை செய்து கர்த்தருக்கு ஆலயம் கட்ட
திட்டமிட்டேன். நான் 3,750 டன் தங்கம்
கொடுத்திருக்கிறேன். 37,500 டன் வெள்ளி
கொடுத்திருக்கிறேன். நிறுத்துபார்க்க முடி
யாத அளவிற்கு வெண்கலமும் இரும்பும்
கொடுத்திருக்கிறேன். மரமும் கற்களும்
கொடுத்திருக்கிறேன். சாலொமோன், உன்
னால் மேலும் சேர்க்க முடியும். 15 உன்னிடம்
ஏராளமான கல்தச்சர்களும் மரத்தச்சர்களும்
உள்ளனர். எல்லா வேலைகளையும் செய்யும்
திறமை உடையவர்களும் உனக்கு இருக்கின்
றனர். 16 அவர்கள் பொன், வெள்ளி,
வெண்கலம், இரும்பு போன்ற வேலை
செய்வதில் வல்லவர்கள். எண்ணி பார்க்க
முடியாத அளவிற்கு அதிகமாக உள்ளனர்.
இப்போதே வேலையைத் தொடங்கு. கர்த்தர்
உன்னோடு இருக்கட்டும்” என்றான்.
17 பிறகு தாவீது, இஸ்ரவேலின் தலை
வர்கள் அனைவருக்கும் தனது மகன்*

சாலொமோனுக்கு உதவும்படி கட்டளை
யிட்டான். 18தாவீது தலைவர்களிடம்,
“தேவனாகிய கர்த்தர் உங்களோடு இருக்
கிறார். அவர் சமாதானத்திற்குரிய காலத்
தைக் கொடுத்திருந்தார். நம்மைச் சுற்றி
இருப்பவர்களைத் தோற்கடிக்கக் கர்த்தர்
உதவினார். கர்த்தருக்கும், அவரது ஜனங்
களுக்கும் இப்போது இந்த நிலம்
கட்டுப்பட்டிருக்கிறது. 19இப்போது உங்கள்
தேவனாகிய கர்த்தரிடம் உங்கள்
இதயத்தையும் ஆத்துமாவையும் கொடுங்கள்.
அவர் சொன்னபடி செய்யுங்கள். தேவ
னாகிய கர்த்தருக்கு பரிசுத்த இடத்தைக்
கட்டுங்கள். கர்த்தருடைய நாமத்துக்காக
ஆலயம் கட்டுங்கள். பிறகு உடன்படிக்கைப்
பெட்டியைக் கொண்டுவாருங்கள். மற்ற
பரிசுத்தமான பொருட்களையும் ஆலயத்திற்
குள் கொண்டு வாருங்கள்” என்றான்.

### லேவியர்கள் ஆலயத்திற்கு சேவை செய்யத் திட்டமிடுகிறார்கள்

23 தாவீது முதியவன் ஆனான். எனவே
இஸ்ரவேலின் புதிய அரசனாகத் தன்
மகன் சாலொமோனை ஆக்கினான்.
2அனைத்து இஸ்ரவேல் தலைவர்களையும்,
ஆசாரியர்களையும், லேவியர்களையும்
தாவீது ஒன்றுக்கூட்டினான். 3அவன் லேவிய
ர்களில் 30 வயதும் அதற்கும் மேற்பட்டவர்
களை எண்ணினான். ஆக மொத்தம் 38,000
பேர் இருந்தனர். 4தாவீது அவர்களிடம்,
“24,000 லேவியர்கள் கர்த்தருடைய ஆலயத்
தின் வேலையை மேற்பார்வை பார்க்க
வேண்டும். 6,000 லேவியர் அதிகாரிகளாக
வும் நீதிபதிகளாகவும் இருக்கவேண்டும்.
54,000 லேவியர்கள் வாசல் காவலர்களாக
இருக்கட்டும். 4,000 லேவியர்கள் இசைக்
கலைஞர்களாக இருக்கட்டும். அவர்களுக்காக
சிறப்பான இசைக்கருவிகளை தயாரித்து
வைத்துள்ளேன். கர்த்தரை துதித்துப்பாட
அவர்கள் அக்கருவிகளைப் பயன்படுத்து
வார்கள்” என்றான்.
6தாவீது லேவியர்களை 3 குழுவாகப்
பிரித்தான். அவர்கள் லேவியின் மூன்று
மகன்களான கெர்சோன், கோகாத், மெராரி
ஆகியோரின் கோத்திரத்தினராக இருந்தனர்.

### கெர்சான் கோத்திரத்தினர்

7லாதானும், சிமேயும், கெர்சோன் கோத்தி
ரத்தில் இருந்து வந்தவர்கள். 8லாதானுக்கு
மூன்று மகன்கள் இருந்தார்கள். மூத்த
மகனின் பெயர் யெகியேல் ஆகும். அவனது
மற்ற மகன்கள் சேத்தாம், யோவேல்.
9சிமேயின் மகன்கள் செலோமித், ஆசியேல்,
ஆரான் எனும் மூன்று பேர்கள். இவர்கள்
லாதானின் குடும்பத் தலைவர்களாக
இருந்தனர்.
10சிமேயிற்கு நான்கு பிள்ளைகள் இருந்
தார்கள். யாகாத், சீனா, எயூஷ், பெரீயா
என்பவை அவர்களின் பெயர்கள் ஆகும்.
11யாகாத் மூத்த மகன். சீனா அடுத்த
மகன். ஆனால் எயூஷீக்கும் பெரீயாவுக்கும்
அதிகப் பிள்ளைகள் இல்லை. எனவே
இருவரும் ஒரே குடும்பமாக எண்ணப்
பட்டனர்.

### கோகாத் கோத்திரத்தினர்

12கோகாத்திற்கு 4 பிள்ளைகள் இருந்தார்
கள். அவர்கள் அம்ராம், இத்சார், எப்ரோன்,
ஊசியேல் ஆகியோர். 13அம்ராமிற்கு
ஆரோன், மோசே என இரு பிள்ளைகள்
இருந்தார்கள். ஆரோன் சிறப்புக்குரியவ
னாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். ஆரோனும்
அவனது சந்ததியினரும் எல்லா காலங்களி
லும், எல்லா இடங்களிலும் சிறப்பானவர்க
ளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கர்த்தரு
டைய சேவைக்குப் பரிசுத்தப் பொருட்க
ளைத் தயார் செய்வதற்காகத் தேர்ந்தெடுக்கப்
பட்டனர். ஆரோனும், அவனது சந்ததியின
ரும் நறுமணப் பொருட்களை கர்த்தருக்கு
முன்பு எரிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
இவர்கள் ஆசாரியர்களாகப் பணியாற்ற
தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் கர்த்தரு
டைய நாமத்தைப் பயன்படுத்தி எல்லாக்
காலத்திலும் ஜனங்களுக்கு ஆசீர்வாதம்
அளித்தனர்.
14மோசே தேவனுடைய மனிதன். லேவி
கோத்திரத்தினரின் ஒரு பகுதியினர், மோசே
யின் பிள்ளைகள் ஆவார்கள். 15கெர்சோமும்,
எலியேசரும் மோசேயின் மகன்கள். 16செபு
வேல், கெர்சோமின் மூத்த மகன். 17ரெகபியா,
எலியேசரின் மூத்த மகன். எலியேசருக்கு
வேறு பிள்ளைகள் இல்லை. ஆனால் ரெகபி
யாவிற்கு ஏராளமான மகன்கள் இருந்தனர்.
18செலோமித், இத்சாரின் மூத்தமகன்.
19எரியா எப்ரோனின் மூத்த மகன்.
அமரியா இரண்டாவது மகன். யாகாசியேல்
மூன்றாவது மகன். எக்காமியாம் நான்காவது
மகன்.
20ஊசியேல் மீகாவின் மூத்த மகன்,
இஷியா இரண்டாவது மகன்.

### மெராரி கோத்திரத்தினர்

21மகேலியும், மூசியும் மெராரியின் மகன்
கள் ஆவார்கள். மகேலிக்கு எலெயாசார்,
கீஸ் எனும் மகன்கள் இருந்தனர். 22எலெயா
சார் ஆண் பிள்ளைகள் இல்லாமலேயே
மரித்துப்போனான். அவனுக்குப் பெண்
பிள்ளைகள் மட்டுமே இருந்தனர். எலெயாசா
ரின் மகள்கள் உறவினரையே மணந்து
கொண்டனர். அவர்களின் உறவினர்கள்
கீஸின் மகன்கள். 23மூசியின் மகன்களாக
மகலி, ஏதேர், எரேமோத் எனும் மூன்று
பேர் இருந்தனர்.

### லேவியர்களின் வேலை

24இவர்கள் லேவியரின் சந்ததியினர்.

அவர்கள் குடும்ப வாரியாகக் கணக்
கிடப்பட்டனர். அவர்கள் குடும்பத் தலைவர்
களாக இருந்தனர். ஒவ்வொருவரின் பெயரும்
பட்டியலிடப்பட்டது. இருபதும், அதற்கு
மேலும் உள்ள வயதினர் பட்டியலிடப்பட்
டனர். அவர்கள் கர்த்தருடைய ஆலயத்தில்
பணி செய்தனர்.
25தாவீது, "இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் தனது ஜனங்களுக்குச் சமாதா
னத்தைக் கொடுத்திருந்தார். கர்த்தர், எருசலே
மிற்கு எல்லாக் காலத்திலும் வாழ்வதற்கு
வந்திருந்தார். 26எனவே பரிசுத்தக் கூடா
ரத்தை இனி தூக்கிக்கொண்டு செல்லும்
வேலை லேவியர்களுக்கு இல்லை. ஆலயப்
பணியில் பயன்படுத்தப்பட்ட வேறு
பொருட்களைத் தூக்குகிற வேலையும்
இல்லை" என்றான்.
27இஸ்ரவேல் ஜனங்களுக்கு, லேவியர்
கோத்திரத்தை எண்ணிக் கணக்கிடும்படி
தாவீது கடைசியாக அறிவுறுத்தினான்.
அவர்கள் இருபதும் அதற்கும் மேலும் வயது
கொண்டவர்களை எண்ணினார்கள்.
28ஆரோனின் சந்ததியினர் கர்த்தருடைய
ஆலயத்தில் சேவை செய்யும்போது லேவியர்
கள் உதவுவதை வேலையாகக் கொண்டனர்.
அவர்கள் ஆலயத்தின் பிரகாரங்களையும்
பக்கத்து அறைகளையும் கவனித்துக் கொண்
டனர். எல்லாப் பரிசுத்தமானப் பொருட்க
ளையும் சுத்தப்படுத்தும் வேலையைச் செய்த
னர். தேவனுடைய ஆலயத்திற்குள் பணி
செய்வதில் இது அவர்களின் வேலையாய்
இருந்தது. 29ஆலய மேஜையின் மேல்
அப்பத்தை வைக்கும் பொறுப்பு இவர்
களுடையது. மாவு, தானியக் காணிக்கை,
புளிக்காத மாவில் அப்பம் செய்யும் வேலை
போன்றவற்றைக் கவனித்துக்கொண்டனர்.
சட்டிகளில் சுடுகிற வேலைக்கும், கலவை
பலிகளுக்கும் அவர்களே பொறுப்பாளர்க
ளாக இருந்தனர். எல்லா வகையான
அளவிடுகின்ற வேலைகளையும் செய்தார்
கள். 30லேவியர்கள் ஒவ்வொரு காலையிலும்
கர்த்தருக்கு முன்பு நின்று நன்றி சொல்லியும்
துதித்தும் பாடினார்கள். இதனை ஒவ்வொரு
மாலையிலும் கூடச்செய்து வந்தனர்,
31சிறப்பு ஓய்வு நாட்கள், மாதப்பிறப்பு
நாட்கள், திருவிழாக்கள், சிறப்பு விடுமுறை
நாட்கள் ஆகிய காலங்களில் அவர்கள்
கர்த்தருக்குத் தகன பலியைச் செலுத்தினார்
கள். அவர்கள் ஒவ்வொரு நாளும் கர்த்தருக்கு
முன்னால் பணிவிடைச் செய்தார்கள்.
ஒவ்வொரு வேளையும் எத்தனை லேவியர்
கள் பணிவிடைச் செய்யவேண்டும்
என்பதிலும் சில சட்டவிதிகள் இருந்தன.
32லேவியர்கள் எதையெதைச் செய்யவேண்
டும் என்று எதிர்பார்க்கப்படுகிறார்களோ,
அவற்றையெல்லாம் செய்தனர். பரிசுத்தக்
கூடாரத்தின் பொறுப்பை எடுத்துக்கொண்
டனர். பரிசுத்த இடத்தின் பொறுப்பையும்
எடுத்துக்கொண்டனர். அவர்கள் ஆரோனின்
சந்ததியினர். தமது உறவினர்களுக்கும்,
ஆசாரியர்களுக்கும் உதவினார்கள். கர்த்தரு
டைய ஆலயத்தில் பணிவிடைகளை ஆசாரி
யர்களுக்கு உதவியாகச் செய்துவந்தனர்.

### ஆசாரியர்களின் குழுக்கள்

24 ஆரோன் மகன்களின் கீழ்க்கண்ட
குழுக்கள்: நாதாப், அபியூ, எலெயா
சார், இத்தாமார் ஆகியோர் ஆரோனின்
மகன்கள். 2ஆனால் நாதாபும், அபியூவும்
தந்தைக்கு முன்னரே செத்துவிட்டனர்.
அவர்களுக்கு மகன்களும் இல்லை. எனவே
எலெயாசாரும் இத்தாமரும் ஆசாரியர்களாக
தொண்டாற்றினார்கள். 3எலியாசர், இத்தாமர்
ஆகிய இரண்டு கோத்திரங்களையும் வேறு
வேறு குழுக்களாகத் தாவீது பிரித்து வைத்
தான். தமக்கு ஒப்படைக்கப்பட்ட வேலை
களைச் சரிவரச் செய்யும் பொருட்டு தாவீது
இக்குழுக்களை இவ்விதம் பிரித்தான். தாவீது
இதனை சாதோக், அகிமெலேக் ஆகியோரின்
உதவியைக் கொண்டு இவ்வாறு செய்தான்.
சாதோக் எலெயாசாரின் சந்ததியைச் சேர்ந்த
வன். அகிமெலேக்கு இத்தாமரின் சந்ததியைச்
சேர்ந்தவன். 4இத்தாமரின் குடும்பத்தைவிட
எலெயாசாரின் குடும்பத்தில் ஏராளமான
தலைவர்கள் இருந்தனர். எலெயாசாரின்
குடும்பத்தில் 16 தலைவர்களும் இத்தாமரின்
குடும்பத்தில் இருந்து 8 தலைவர்களும்
இருந்தனர். 5ஒவ்வொரு குடும்பத்தில் இருந்
தும் ஆண்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
அவர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்
தெடுக்கப்பட்டனர். சிலர் பரிசுத்த இடத்தின்
பொறுப்புக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
மற்றவர்கள் ஆசாரியர்களாகச் சேவை
செய்ய தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்கள்
அனைவரும் எலெயாசார், இத்தாமர் ஆகிய
வம்சங்களில் இருந்து வந்தனர்.
6செமாயா செயலாளனாக இருந்தான்.
இவன் நெதனெயேலின் மகன். செமாயா,
லேவியர் கோத்திரத்திலிருந்து வந்தவன்.
இவன் அவர்களின் சந்ததியினரின் பெயர்
களை எழுதினான். அவன் இதனைத் தாவீது
அரசன் மற்றும் சாதோக் ஆசாரியர்களின்
தலைவர்கள், அகிமெலேக், ஆசாரிய
குடும்பங்களின்தலைவர்கள், லேவியர்களின்
தலைவர்கள் ஆகியோரின் முன்னிலையில்
செய்தான். அகிமெலேக் அபியதாரின் மகன்.
அவர்கள் ஒவ்வொரு முறையும் சீட்டுக்
குலுக்கல் மூலம் தேர்ந்தெடுத்தனர். செமாயா
இவர்களின் பெயர்களை எழுதினான்.
எனவே, எலெயாசார் மற்றும் இத்தாமர்
கோத்திரங்களிடையே வேலைகளைப் பங்
கிட்டனர்.

7 யோயாரீபின் குழு முதல் குழு.
யெதாயாவின் குழு இரண்டாவது
குழு.

8 ஆரிமின் குழு முன்றாம் குழு.
செயோரீமின் குழு நான்காவது
குழு.
9 மல்கியாவின் குழு ஐந்தாம் குழு.
மியாமீனின் குழு ஆறாம் குழு.
10 அக்கோத்சின் குழு ஏழாம் குழு.
அபியாவின் குழு எட்டாவது குழு.
11 யெசுவாவின் குழு ஒன்பதாவது
குழு.
செக்கனியாவின் குழு பத்தாவது
குழு.
12 எலியாசீபின் குழு பதினோராவது
குழு.
யாக்கீமின் குழு பன்னிரண்டாவது
குழு.
13 உப்பாவின் குழு பதின்மூன்றாவது
குழு.
எசெபெயாவின் குழு
பதினான்காவது குழு.
14 பில்காவின் குழு பதினைந்தாவது
குழு.
இம்மேரின் குழு பதினாறாவது
குழு.
15 ஏசீரின் குழு பதினேழாவது குழு.
அப்சேசின் குழு பதினெட்டாவது
குழு.
16 பெத்தகியாவின் குழு
பத்தொன்பதாவது குழு.
எகெசெக்கியேலின் குழு
இருபதாவது குழு.
17 யாகின் குழு இருபத்தொன்றாவது
குழு.
காமுவேலின் குழு
இருபத்திரண்டாவது குழு.
18 தெலாயாவின் குழு இருபத்தி
மூன்றாவது குழு.
மாசியாவின் குழு இருபத்தி
நான்காவது குழு.

19 இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்
ஆரோனுக்கு கட்டளைகளைக் கற்பித்தார்.
இவர்கள் ஆலயத்தில் சேவை செய்யத்
தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்கள் ஆரோ
னின் விதிகளை ஆலயத்தில் சேவை செய்
யக் கடைபிடித்தனர்.

### மற்ற லேவியர்கள்

20 மற்ற லேவியின் சந்ததியாரின் பெயர்கள்
இவை:

அம்ராமின் சந்ததியினர்: சூபவேல்,
சூபவேலின் சந்ததியினர்: எகேதியா;
21 ரெகபியாவின் வழிவந்த இஷியா,
(இஷியா மூத்த மகன்.)
22 இத்சாரியின் கோத்திரத்தில் இருந்து
செலெமோத்,
செலெமோத்தின் குடும்பத்தில்
இருந்து யாகாத்,
23 எப்ரோனின் மூத்த மகன் எரியா,
இரண்டாம் மகன் அம்ரியா
மூன்றாம் மகன் யாகாசியேல்,
நான்காம் மகன் எக்காமியாம்,
24 ஊசியேலின் மகன் மீகா,
மீகாவின் மகன் சாமீர்,
25 மீகாவின் சகோதரன் இஷியா,
இஷியாவின் மகன் சகரியா,
26 மெராரியின் சந்ததியினர் மகேலி
மூசி ஆகியோர்,
யாசியாவின் மகன் பேனோ,
27 மெராரியின் மகன் யாசியேல்,
யாசியேலுக்கு பேனோ, சோகாம்,
சக்கூர், இப்ரி ஆகியோர்.
28 மகேலியின் மகனான எலெயாசார்,
எலெயாசாருக்கு மகன்கள் இல்லை.
29 கீசின் மகனான யெராமியேல்.
30 மூசியின் மகன்களாக மகேலி,
ஏதேர், எரிமோத் ஆகியோர்.

இவை அனைத்தும் லேவியர் குடும்பங்
களின் தலைவர்கள் பெயர்கள் ஆகும்.
அவர்களின் குடும்ப வரிசைப்படி இப்
பெயர்கள் பட்டியலிடப்பட்டிருக்கின்றன.
31 இவர்கள் சிறப்பு வேலைகளுக்காகத்
தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் ஆசாரி
யர்களான தங்கள் உறவினர்களைப்
போன்று, சீட்டுக்குலுக்கல் போட்டனர்.
ஆரோனின் சந்ததியினர் ஆசாரியரானார்கள்.
அரசனான தாவீது, சாதோக், அகிமெலேக்,
ஆசாரியர்களின் தலைவர்கள் மற்றும்
லேவியர் குடும்பத்தினர் முன்னால் இவர்கள்
சீட்டுக்குலுக்கல் போட்டனர். வேலைகளைத்
தேர்ந்தெடுப்பதில் மூத்த வம்சத்தினரும்
இளைய வம்சத்தினரும் ஒன்று போலவே
நடத்தப்பட்டனர்.

### இசைக் குழுவினர்

25 தாவீதும், படைத்தலைவர்களும் ஆசா
ப்பின் மகன்களை சிறப்பு வேலைக்
காகத் தனியாகப் பிரித்தனர். ஆசாப்பின்
மகன்கள் ஏமான், எதுத்தூன் ஆகியோர்.
அவர்கள் தீர்க்கதரிசனம் சொல்வதைத் தேவ
னுக்கு சிறப்புப் பணியாகக் கொண்டனர்.
இதனைச் சுரமண்டலங்கள், தம்புருகள்,
கைத்தாளங்கள் போன்றவற்றால் செய்தனர்.
இவ்வகையில் பணி செய்தவர்களின் பெயர்
பட்டியல் இது:
2 ஆசாப்பின் குடும்பத்தில், சக்கூர், யோசே
ப்பு, நெதானியா, அஷாரேலா ஆகியோர்.
தாவீது அரசன், ஆசாப்பைத் தீர்க்கதரிசனம்
சொல்லத் தேர்ந்தெடுத்தான். ஆசாப் மகன்
களுக்கு வழிகாட்டினான்.
3 எதுத்தானின் குடும்பத்திலிருந்து
கெதலியா, சேரீ, எஷாயா, சீமேயி, அஷ
பியா, மத்தித்தியா எனும் ஆறுபேர்.
எதுத்தான் தன் மகன்களுக்கு வழிகாட்டி
னான். எதுத்தான் சுரமண்டலங்களைப்

பயன்படுத்தி தீர்க்கதரிசனம் சொன்னான்.
கர்த்தருக்கு நன்றி சொல்லுவதும் துதிப்பது
மாக இருந்தான்.
4ஏமானின் மகன்களான புக்கியா, மத்த
னியா, ஊசியேல், செபுவேல், எரிமோத்,
அனனியா, அனானி, எலியாத்தா, கிதல்தி,
ரொமந்தியேசர், யோஸ்பெகாஷா, மலோத்தி,
ஒத்திர், மகாசியோத் ஆகியோர் பணி
செய்தனர். 5இவர்கள் அனைவரும் ஏமானின்
மகன்கள். ஏமான் தாவீதின் தீர்க்கதரிசி.
ஏமானைப் பலப்படுத்துவதாக தேவன் வாக்
களித்துள்ளார். எனவே ஏமானுக்கு அதிக
மகன்கள். தேவன் அவனுக்கு 14
மகன்களையும் 3 மகள்களையும் கொடுத்தார்.
6ஏமான் தன் மகன்களை ஆலயத்தில் பாடு
வதற்குப் பயிற்சி கொடுத்தான். அவர்கள்
சுரமண்டலங்கள், தம்புருக்கள், கைத்தாளங்
கள் போன்றவற்றைப் பயன்படுத்தினார்கள்.
இவ்வாறு அவர்கள் தேவாலயத்தில் பணி
செய்தனர். தாவீது அரசன் அவர்களைத்
தேர்ந்தெடுத்தான். 7அவர்களும் அவர்களது
உறவினர்களும் லேவியர்களின் கோத்தி
ரத்தில் உள்ளவர்கள் பயிற்சிபெற்றனர்.
அவர்களில் 288 பேர் கர்த்தரை துதித்துப்
பாடக் கற்றிருந்தனர். 8அவர்கள் சீட்டுக்
குலுக்கல் மூலம் அவர்களுக்குரிய வேலை
களை ஒதுக்கினான். எல்லோரும் ஒரே
விதமாக நடத்தப்பட்டனர். முதியவர்களும்,
இளைஞர்களும் ஒரே விதமாக நடத்தப்பட்ட
னர். குருக்களும், மாணவர்களும் ஒரே
விதமாக நடத்தப்பட்டனர்.
9முதலில், ஆசாப்பின் மகன்களிடமும்,
உறவினர்களிடமும் இருந்தும் 12 பேர்கள்
தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
இரண்டாவதாகக், கெதலியா மகன்
களிடமும், உறவினர்களிடமும் இருந்து 12
பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
10மூன்றாவதாக, சக்கூரின் மகன்களிடமும்,
உறவினர்களிடமும் இருந்து 12 பேர் தேர்ந்
தெடுக்கப்பட்டனர்.
11நான்காவதாக, இஸ்ரியின் மகன்
களிடமும், உறவினர்களிடமும் இருந்து 12
பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
12ஐந்தாவதாக, நெத்தனியாவின் மகன்
களிடமும், உறவினர்களிடமும் இருந்து 12
பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
13ஆறாவதாக, புக்கியாவின் மகன்
களிடமும், உறவினர்களிடமும் இருந்து 12
பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
14ஏழாவதாக, எசரேலாவின் மகன்
களிடமும், உறவினர்களிடமும் இருந்து 12
பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
15எட்டாவதாக, எஷாயாவின் மகன்
களிடமும், உறவினர்களிடமும் இருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
16ஒன்பதாவதாக, மத்தனீயாவின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
17பத்தாவதாக, சிமேயாவின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
18பதினொன்றாவதாக அசாரியேலின்
மகன்கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
19பன்னிரெண்டாவதாக, அஷாபியாவின்
மகன்கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
20பதிமூன்றாவதாக, சுபவேலின் மகன்கள்
மற்றும் உறவினர்களிடமிருந்து 12 பேர்கள்
தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
21பதினான்காவதாக, மத்தித்தியாவின்
மகன்கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
22பதினைந்தாவதாக,எரேமோத்தின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
23பதினாறாவதாக, அனனியாவின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
24பதினேழாவதாக, யோஸ்பேக்காஷாவின்
மகன்கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
25பதினெட்டாவதாக, ஆனானியின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
26பத்தொன்பதாவதாக, மலோத்தின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
27இருபதாவதாக, எலியாத்தாவின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
28இருபத்தொன்றாவதாக, ஒத்திரின் மகன்
கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
29இருபத்திரெண்டாவதாக கிதல்தியின்
மகன்கள் மற்றும் உறவினர்களிடமிருந்து 12
பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
30இருபத்துமூன்றாவதாக, மகாசியோத்
தின் மகன்கள் மற்றும் உறவினர்களிட
மிருந்து 12 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
31இருபத்துநான்காவதாக, ரொமந்தியேச
ரின் மகன்கள் மற்றும் உறவினர்களிடமி
ருந்து 12 பேர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

### வாயில் காவலர்கள்

26 வாயில் காவலர் குழு:
இவர்கள் கோராகிய வம்சத்தினர்.
மெஷெலேமியாவும் அவனது மகன்களும்
ஆவார்கள். மெஷெலேமியா கோரேயின்
மகன். இவன் ஆசாப்பின் கோத்திரத்தைச்
சேர்ந்தவன். 2மெஷெலேமியாவிற்கு மகன்கள்
இருந்தனர். சகரியா மூத்த மகன். எதியாயேல்
இரண்டாவது மகன். செபதியா மூன்றாவது
மகன். யதனியேல் நான்காவது மகன்,
3ஏலாம் ஐந்தாவது மகன், யோகனான்

ஆறாவது மகன், எலியோனாய் ஏழாவது
மகன்.
[4]ஓபேத்ஏதோமினுக்கு மகன்கள் இருந்தனர்.
மூத்த மகன் செமாயா, இரண்டாவது மகன்
யோசபாத், மூன்றாவது மகன் யோவாக்,
நான்காவது மகன் சாக்கார், ஐந்தாவது
மகன் நெதநெயேல், [5]ஆறாவது மகன் அம்மி
யேல், ஏழாவது மகன் இசக்கார், எட்டாவது
மகன் பெயுள்தாயி. தேவன் உண்மையாகவே
ஓபேத்ஏதோமை ஆசீர்வதித்திருந்தார். [6]ஓபேத்
ஏதோமின் மகனான செமாயாவிற்கு
மகன்கள் இருந்தனர். அவர் பலமுள்ளவர்
களாகத் தங்கள் குடும்பத்தலைவர்களாக
இருந்தனர். [7]செமாயாவுக்கு ஒத்னி, ரெப்பா
யேல், ஓபேத், எல்சாபாத், எலிகூ, செமகியா
எனும் மகன்கள் இருந்தனர். எல்சாபாத்தின்
உறவினர் திறமையுள்ள வேலையாட்கள்.
[8]இவர்கள் அனைவரும் ஓபேத்ஏதோமின்
சந்ததியினர். இவர்களும் இவர்களின் மகன்
களும் உறவினர்களும் வல்லமையுள்ளவர்
கள், நல்ல காவலர்கள். ஓபேத்ஏதோமிற்கு
62 சந்ததியினர் இருந்தனர்.
[9]மெஷெலேமியாவின் மகன்களும் உறவி
னர்களும் பலம் பொருந்தியவர்களாக இருந்
தார்கள். மொத்தத்தில் மகன்களும் உறவினர்
களுமாக 18 பேர்கள் இருந்தார்கள்.
[10]மெராரியின் குடும்பத்தைச் சேர்ந்தவர்
கள் வாயில் காவலர்கள் ஓசாவும் இருந்தான்.
சிம்ரி முதன்மையானவனாகத் தேர்ந்தெடுக்
கப்பட்டான். உண்மையில், இவன் மூத்த
மகன் அல்ல. ஆனால் அவனது தந்தை
இவனை முதலில் பிறந்தவனாக வைத்தான்.
[11]இல்க்கியா இவனது இரண்டாவது மகன்,
தெபலியா மூன்றாவது மகன், சகரியா
நான்காவது மகன். ஆக மொத்தம் ஓராவின்
மகன்களும் உறவினர்களுமாக 13 பேர்
இருந்தனர்.
[12]இவர்கள் வாயில் காவல் குழுவின்
தலைவர்கள். இவர்கள் சிறப்பான வழியில்
கர்த்தருடைய ஆலயத்தில் பணிச்செய்து
வந்தனர், இது இவர்களின் உறவினர்கள்
செய்தது போன்றது. [13]ஒவ்வொரு குடும்
பத்திற்கும் காவல் காப்பதற்கென ஒரு வாசல்
கொடுக்கப்பட்டது. வாசலைத் தேர்ந்தெடுக்க
இவர்கள் சீட்டுக்குலுக்கல் முறையைப்
பயன்படுத்தினார்கள். முதியவர்கள், இளை
ஞர்களும் சமமாக நடத்தப்பட்டனர்.
[14]மெஷெலேமியா கிழக்கு வாசல்
காவலுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டான். பிறகு
மெஷெலேமியாவின் மகனான சகரியாவிற்கு
சீட்டு குலுக்கிப்போட்டனர். இவன் ஞான
முள்ள ஆலோசகனாக இருந்தான். வடவாசல்
காவலுக்கு இவன் தேர்ந்தெடுக்கப்பட்டான்.
[15]ஓபேத்ஏதோம் தென்வாசல் காவலுக்குத்
தேர்ந்தெடுக்கப்பட்டான். இவனது மகன்கள்
விலையுயர்ந்த பொருட்கள் வைக்கப்
பட்டிருந்த வீட்டின் காவலுக்குத் தேர்ந்
தெடுக்கப்பட்டான். [16]மேற்குவாசல் காவ
லுக்கு சூப்பீமும் ஓசாவும் தேர்ந்
தெடுக்கப்பட்டனர். மேல் சாலையில் இருந்த
ஷெல்லகத் வாசலையும் காவல் செய்தனர்.
காவலர்கள் பக்கம் பக்கமாக நின்றனர்.
[17]ஒவ்வொரு நாளும் ஆறு லேவியர்கள்
கிழக்குவாசலில் நின்றனர். நான்கு லேவி
யர்கள் தினமும் வடக்கு வாசலில் நின்றனர்.
ஒவ்வொரு நாளும் நான்கு லேவியர்கள்
தெற்கு வாசலில் நின்றார்கள். இரண்டு
லேவியர்கள் விலையுயர்ந்த பொருட்கள்
வைக்கப்பட்டிருந்த வீட்டு வாசலைக் காவல்
காத்தனர். [18]நான்கு லேவியர்கள் மேற்குப்
புறமான வழியில் இருந்தனர். வெளிப்
புறமான வழியில் இரண்டு லேவியர்கள்
காவல் செய்தனர். [19]இவர்களே வாயில்
காவலர் குழுவினர். இவர்கள் கோராக்
மற்றும் மெராரி குடும்பத்தினர்.

## கருவூல அதிகாரிகளும் மற்ற அதிகாரிகளும்

[20]அகியா, லேவியர் கோத்திரத்தில் உள்ள
வன். தேவனுடைய ஆலயத்தில் உள்ள
விலையுயர்ந்த பொருட்கள் வைக்கப்பட்ட
பொக்கிஷ அறைக்குப் பொறுப்பாளியாக
இருந்தான். பரிசுத்தமான பொருட்கள் வைக்
கப்பட்ட அறைக்கும் பொறுப்பாளியாக
இவன் இருந்தான்.
[21]லாதான் கெர்சோனியானின் குடும்
பத்தில் உள்ளவன். லாதானின் கோத்திரத்தில்
யெகியேலி தலைவர்களுள் ஒருவனாயிருந்
தான். [22]யெகியேலியின் மகன் சேத்தாம்,
சேத்தாமின் சகோதரன் யோவேல். இவர்கள்
கர்த்தருடைய ஆலயத்திலுள்ள விலையு
யர்ந்த பொருட்களுக்குப் பொறுப்பாளர்க
ளாக இருந்தனர்.
[23]மற்ற தலைவர்கள் அமரம், இத்சாகார்,
எப்ரோன், ஊசியேல் ஆகியோரின் கோத்தி
ரங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர்.
[24]செபுவேல் கருவூலப் பொறுப்பாளனாக
இருந்தான். இவன் கெர்சோமின் மகன்.
கெர்சோம் மோசேயின் மகன். [25]கீழ்க்கண்
டவர்கள் சுபவேலின் உறவினர்கள். எலி
யேசர் மூலமாக வந்த உறவினர்கள். எலி
யேசரின் மகனான ரெகபியா, ரெகபியாவின்
மகனான எஷாயா, எஷாயாவின் மகனான
யோராம், யோராமின் மகனான சிக்கிரி,
சிக்கிரியின் மகனான செலோமித். [26]செலோ
மித்தும் இவனது உறவினர்களும் ஆலயத்திற்
காக தாவீது சேகரித்த அனைத்துப்
பொருட்களுக்கும் பொறுப்பாளரானார்கள்.
படையில் உள்ள அதிகாரிகளும்
ஆலயத்திற்காகப் பொருட்களைக் கொடுத்த
னர். [27]அவர்கள் போரில் கைப்பற்றிய
பொருட்களைக் கொடுத்தனர். அவர்கள்
கர்த்தருடைய ஆலயம் கட்டுவதற்குப் பயன்
படும் பொருட்களைத் தந்தார்கள். [28]செலோ
மித்தும், அவனது உறவினரும் தீர்க்கதரிசி

யான சாமுவேலும், கீஸின் மகனான
சவுலும், நேரின் மகனான அப்னேரும்,
செருயாவின் மகனான யோவாபும் கொடுத்த
பரிசுத்தமானப் பொருட்களைப் பாதுகாக்கும்
பொறுப்பினை ஏற்றுக்கொண்டனர்.
ஜனங்கள் கொடுத்த பரிசுத்தமானப் பொருட்
களையும் பாதுகாத்தனர்.
29இத்சாகார் குடும்பத்திலிருந்து கெனானி
யாவும் அவனது மகன்களும் ஆலயத்துக்கு
வெளியேயுள்ளவற்றைக் கவனித்துக்கொண்
டனர். அவர்கள் காவலர்களாகவும், நீதிபதி
களாகவும் இஸ்ரவேலின் பல இடங்களிலும்
பணியாற்றினார்கள். 30எப்ரோன் குடும்பத்
தில் அசபியா தோன்றினான். இவனும்
இவனது உறவினர்களும் கர்த்தருக்கான
வேலைகள் அனைத்துக்கும் பொறுப்பா
ளிகளாக இருந்தனர். யோர்தான் ஆற்றுக்கு
மேற்கே உள்ள இஸ்ரவேல் பகுதியில் அரச
னது வேலைகளையும் கவனித்துக்கொண்ட
னர். 1,700 பலமிக்கவர்கள் அசபியாவின்
குழுவில் இருந்தனர். 31எப்ரோனின் வம்சவர
லாறு இவர்களின் தலைவனாக எரியா
இருந்ததாகக் கூறும். தாவீதின் 40வது
ஆட்சியாண்டில் குடும்ப வரலாற்றின் மூலம்
திறமையும் சக்தியும் கொண்டவர்களைத்
தேடும்படி கட்டளையிட்டான். அவர்களில்
சிலர் எப்ரோன் வம்சத்தவர்களாக கீலேயாத்
நாட்டின் ஏசேரில் கண்டுபிடித்தனர்.
32எரியாவிற்கு 2,700 உறவினர்கள் இருந்தனர்.
அவர்கள் வல்லமை வாய்ந்தவர்களாகவும்
குடும் பத் தலைவர்களாகவும் இருந்தனர்.
அவர்க ளுக்கு தாவீது அரசன், தேவன்
மற்றும் அரசனின் எல்லா வேலைகளையும்
செய்யு மாறு ஆணையிட்டான். ரூபினியர்,
காதியர், மனாசேயின் கோத்திரத்தில்
பாதிப்பேர்கள் ஆகியோரைக் கவனிக்கும்
படியும் வைத்தான்.

### படைக் குழுக்கள்

27 அரசனது படையில் பணியாற்றும்
இஸ்ரவேல் ஜனங்களின் பட்டியல்
இது. ஒவ்வொரு குழுவும் ஒவ்வொரு ஆண்டி
லும் ஒவ்வொரு மாதத்தில் பணியாற்றினார்
கள். அவர்களில் குடும்பத் தலைவர்களும்,
தளபதிகளும், படைத்தலைவர்கள், காவல்
வீரர்களும் இருந்தனர். ஒவ்வொரு குழுவி
லும் 24,000 பேர் இருந்தனர்.
2முதல் மாதத்தில் முதல் குழுவின்
பொறுப்பாளனாக யஷொபெயாம் இருந்
தான். இவன் சப்தியேலின் மகன். இவனது
குழுவில் 24,000 பேர் இருந்தனர். 3யஷொ
பெயாம், பேரேசின் சந்ததியாரில் ஒருவன்.
இவன் முதல் மாதத்திற்குரிய அனைத்து
படைத்தலைவர்களுக்கும் தலைவன்.
4இரண்டாவது மாதப் படைக்குழுவிற்குத்
தோதாயி பொறுப்பாளி. இவன் அகோ
கியன். இவனது குழுவில் 24,000 பேர்
இருந்தனர்.
5மூன்றாவது தளபதி பெனாயா ஆவான்.
இவன் மூன்றாவது மாதத்தின் பொறுப்பாளி.
பெனாயா யோய்தாவின் மகன். யோய்தா
தலைமை ஆசாரியன். இவனது குழுவில்
24,000 பேர் இருந்தனர். 6பெனாயா 30
நாயகர்களில் ஒருவனாகவும், அவர்களின்
தலைவனுமாகவும் இருந்தான். பெனாயா
வின் குழுவிற்கு அவனது மகனான
அமிசபாத் பொறுப்பாளியாயிருந்தான்.
7ஆசகேல் நான்காவது தளபதி ஆவான்.
இவன் நான்காவது மாதத்திற்கு பொறுப்ப
ாளி. இவன் யோவாபின் சகோதரன். பின்பு
ஆசகேலின் மகனான செபதியா இவனது
பதவியை வகித்தான். ஆசகேலின் குழுவில்
24,000 பேர் இருந்தனர்.
8சம்கூத் ஐந்தாவது தளபதி ஆவான்.
இவன் ஐந்தாவது மாதத்திற்குரியவன். இவன்
இஸ்ராகியின் வம்சத்தவன். இவனது குழு
வில் 24,000 பேர் இருந்தனர்.
9ஆறாவது தளபதி ஈரா ஆவான். இவன்
ஆறாவது மாதத்திற்குரியவன். இவன் இக்
கேசின் மகன். இக்கேசு தெக்கோவியா
நாட்டினன். இவனது குழுவில் 24,000 பேர்
இருந்தனர்.
10ஏழாவது தளபதி ஏலேஸ் ஆவான்.
இவன் ஏழாவது மாதத்திற்குரியவன். இவன்
எப்பிராயீம் சந்ததியிலிருந்து வந்தவன்,
பெலோனிய நாட்டவன். இவனது குழுவில்
24,000 பேர் இருந்தனர்.
11எட்டாவது தளபதி சிபெக்காயி
ஆவான். இவன் எட்டாவது மாதத்திற்குரிய
வன். இவன் ஊஷாத்தியன். இவன் சாரிய
குடும்பத்தைச் சேர்ந்தவன். இவனது குழுவில்
24,000 பேர் இருந்தனர்.
12ஒன்பதாவது தளபதி அபியேசர் ஆவான்.
இவன் ஒன்பதாவது மாதத்திற்குரியவன்.
இவன் ஆனதோத் நகரத்தவன். பென்யமீன்
கோத்திரத்தைச் சேர்ந்தவன். இவனது குழு
வில் 24,000 பேர் இருந்தனர்.
13பத்தாவது தளபதி மக்ராயி ஆவான்.
இவன் பத்தாவது மாதத்திற்குரியவன். இவன்
நெத்தோபாத்தியன், சாரிய குடும்பத்தைச்
சேர்ந்தவன். இவனது குழுவில் 24,000 பேர்
இருந்தனர்.
14பதினொன்றாவது தளபதி பெனாயா
ஆவான். இவன் பதினொன்றாவது மாதத்திற்
குரியவன். இவன் பிரத்தோனியன், எப்பிரா
யீம் கோத்திரத்தைச் சேர்ந்தவன். இவனது
குழுவில் 24,000 பேர் இருந்தனர்.
15பன்னிரெண்டாவது தளபதி எல்தாயி.
இவன் பன்னிரெண்டாவது மாதத்திற்குரி
யவன். இவன் நெத்தோபாத்தியன், ஒத்னி
யேல் குடும்பத்தைச் சேர்ந்தவன். இவனது
குழுவில் 24,000 பேர் இருந்தனர்.

### கோத்திரங்களின் தலைவர்கள்

16இஸ்ரவேல் கோத்திரங்களின் தலைவர்
கள் பெயர் பின்வருமாறு:

ரூபனியருக்கு சிக்ரியின் மகனான
எலியேசர் தலைவன்.
சிமியோனியருக்கு மாக்காவின்
மகனான செப்பத்தியா தலைவன்.
17 லேவியருக்கு கேமுவேலின் மகனான
அஷாபியா தலைவன்.
ஆரோனியருக்குச் சாதோக்
தலைவன்.
18 யூதாவுக்கு தாவீதின் சகோதர்களில்
ஒருவனான எலிகூ தலைவன்.
இசக்காரருக்கு மிகாவேலின்
மகனான ஒம்ரி தலைவன்.
19 செபுலோனுக்கு ஒபதியாவின்
மகனான இஸ்மாயா தலைவன்.
நப்தலிக்கு அஸ்ரியேலின் மகனான
எரிமோத் தலைவன்.
20 எப்பிராயீமியருக்கு அசசியாவின்
மகனான ஓசெயா தலைவன்.
மனாசேயின்
பாதிக்கோத்திரத்தாருக்குப்
பெதாயாவின் மகனான யோவேல்
தலைவன்.
21 கீலேயாத்திலுள்ள மனாசேயின்
பாதிக்கோத்திரத்திற்குச்
சகரியாவின் மகனான இத்தோ
தலைவன்.
பென்யமீனுக்கு அப்னேரின் மகனான
யாசியேல் தலைவன்.
22 எரோகாமின் மகனான அசாரியேல்
தாணின் தலைவன்.

இவர்கள் இஸ்ரவேலரின் தலைவர்கள்.

### தாவீது இஸ்ரவேலர்களை எண்ணிக் கணக்கிட்டது

23தாவீது, இஸ்ரவேலர்களில் ஆண்களைக்
கணக்கிட திட்டமிட்டான். அவர்கள் பெரும்
எண்ணிக்கையில் இருந்தனர். ஏனென்றால்
தேவன், இஸ்ரவேலர்களை வானத்து நட்சத்
திரங்களைப் போன்று பெருக்குவதாக வாக்க
ளித்திருந்தார். எனவே தாவீது இஸ்ர
வேலர்களில் இருபதும் அதற்கு மேலும்
வயதுள்ள ஆண்களை எண்ணிக் கணக்கிட்
டான். 24செருயாவின் மகனான யோவாப்
இஸ்ரவேலர்களை எண்ணத் தொடங்கி
னான், ஆனால் அவன் அதைச் செய்து
முடிக்கவில்லை. தேவன் இஸ்ரவேல் ஜனங்
களிடம் கோபங்கொண்டார். இதனால்தான்
‘தாவீது அரசனின் வரலாறு’ என்ற
புத்தகத்தில் ஜனங்கள் தொகை குறிக்கப்பட
வில்லை.

### அரசனின் நிர்வாகிகள்

25அரசனது சொத்துக்களை நிர்வகித்தவர்
களின் பட்டியல் இது:

அரசனது பொக்கிஷங்களுக்கு
ஆதியேலின் மகனான அஸ்மாவேத்
அதிகாரியானான்.
சிறிய பட்டணங்கள், கிராமங்கள்,
கோபுரங்கள் போன்றவற்றின்
பொக்கிஷங்களுக்கு உசியாவின்
மகன் யோனத்தான்
அதிகாரியானான்.
26 நிலத்தைப் பயிரிடும்
வயல்வெளிகளில்
வேலை செய்பவர்களுக்கு
கேலூப்பின் மகன் எஸ்ரி
அதிகாரியானான்.
27 திராட்சைத் தோட்டங்களுக்கு
ராமாத்தியனான சீமேயும்,
திராட்சைரசம் வைக்கும்
இடங்களுக்கு சிப்மியனாகிய
சப்தியும் அதிகாரிகளானார்கள்.
28 மேற்கு மலை நாடுகளிலுள்ள ஒலிவ
மரங்களுக்கும், ஆலமரங்களுக்கும்
கெதேரியனான பால்கானான்
அதிகாரியானான்.
எண்ணெய் கிடங்குகளுக்கு யோவாசு
அதிகாரியானான்.
29 சாரோனில் மேய்கிற மாடுகளுக்கு
சரோனியனான சித்ராய்
அதிகாரியானான்.
பள்ளத்தாக்குகளிலுள்ள மாடுகளுக்கு
அத்லாயின் மகன் சாப்பாத்
அதிகாரியானான்.
30 ஒட்டகங்களுக்கு இஸ்மவேலியனான
ஓபில் அதிகாரியானான்.
கழுதைகளுக்கு
மெரோனோத்தியனாகிய எகெதியா
அதிகாரியானான்.
31 ஆடுகளுக்கு ஆசாரியனான யாசிசு
அதிகாரியானான்.

இவர்கள் அனைவரும் தாவீதின்
உடைமைகளுக்கு அதிகாரிகளாய் இருந்தனர்.
32யோனத்தான் ஞானமிக்க ஆலோசனைக்
காரனாகவும் எழுதும் பயிற்சி பெற்றவனாக
வும் இருந்தான். இவன் தாவீதின் சிறிய
தகப்பன். அக்மோனியின் மகனான யெகி
யேல் அரசனின் மகன்களைப் பொறுப்
பேற்றுக்கொண்டான். 33அகித்தோப்பேல்
அரசனுக்கு ஆலோசனைக்காரனாக இருந்
தான். ஊஷாயி அரசனின் நண்பன். இவன்
அர்கியன். 34யோய்தாவும் அபியத்தாரும்
அகித்தோப்பேலின் பதவியைப் பெற்று
அரசனுக்கு ஆலோசனை கூறினார்கள்.
யோய்தா பெனாயாவின் மகன். யோவாப்
அரசனின் படைத்தலைவனாக இருந்தான்.

### ஆலயத்திற்கான தாவீதின் திட்டங்கள்

28 இஸ்ரவேல் ஜனங்களின் தலைவர்
களையெல்லாம் தாவீது கூட்டினான்.
அவர்களை எருசலேமிற்கு வரும்படி கட்ட
ளையிட்டான். தாவீது கோத்திரங்களின்
தலைவர்களையும், அரசனது படையில்

பணியாற்றும் தளபதிகளையும், பிரதானி
களையும் கூட்டினான். அரசனுக்கும் அவ
னது மகன்களுக்கும் உரிய சொத்துக்களை
யும் மிருகங்களையும் நிர்வகிக்கும் அதிகாரி
களையும் கூட்டினான், அதோடு முக்கியமான
அதிகாரிகளையும், வலிமைமிக்க வீரர்களை
யும், தைரியமிக்க வீரத்தலைவர்களையும்
கூட்டினான்.
2 தாவீது எழுந்து நின்று அவர்களிடம்,
“நான் சொல்வதைக் கவனியுங்கள், எனது
ஜனங்களே, சகோதரர்களே, கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியை வைக்க ஒரு
இடத்தை உருவாக்கவேண்டும் என்று மன
தில் நினைத்துள்ளேன். தேவனுடைய பாதப்
படியை வைப்பதற்காக ஒரு இடத்தைக்
கட்ட விரும்புகிறேன். தேவனுக்காக ஆலயம்
கட்ட திட்டமிட்டுள்ளேன். 3 ஆனால் தேவன்
என்னிடம், ‘வேண்டாம் தாவீது, எனது
பேரால் நீ ஆலயம் கட்டவேண்டாம்.
ஏனென்றால் நீ ஒரு போர்வீரன், நீ பலரைக்
கொன்றிருக்கிறாய்’ என்றார்.
4 “இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் யூதா
வின் கோத்திரத்தை, இஸ்ரவேலின் பன்னி
ரண்டு இனங்களை வழிநடத்தத் தேர்ந்
தெடுத்தார். யூதாவின் கோத்திரத்தில் கர்த்தர்
என் தந்தையின் வம்சத்தைத் தேர்ந்தெடுத்
தார். அக்குடும்பத்திலும் என்னை தேவன்
இஸ்ரவேலின் அரசனாகத் தேர்ந்தெடுத்தார்!
தேவன் என்னை என்றென்றைக்கும் இஸ்ர
வேலின் அரசனாக்க விரும்பினார்! 5 கர்த்தர்
எனக்கு பல மகன்களைத் தந்துள்ளார்.
அவர்களினுள்ளும், இஸ்ரவேலின் புதிய
அரசனாகச் சாலொமோனைத் தேர்ந்தெடுத்
துள்ளார். ஆனால் உண்மையில், கர்த்தரு
டைய அரசாங்கம் இஸ்ரவேல் ஜனங்களிட
த்தில் உள்ளது. 6 கர்த்தர் என்னிடம், ‘தாவீது,
உன் மகனான சாலொமோன் எனக்கு
ஆலயத்தைக் கட்டுவான். அதைச் சுற்றிய
இடங்களையும் கட்டுவான். ஏனென்றால்
நான் அவனை எனது மகனாகத் தேர்ந்
தெடுத்திருக்கிறேன், நான் அவனது தந்தை
யாக இருப்பேன். 7 சாலொமோன் என்
சட்டங்களுக்கும் கட்டளைகளுக்கும் அடிப
ணிகிறான். அவன் தொடர்ந்து இவ்வாறு
எனது சட்டங்களுக்கு அடிபணிந்து வந்தால்,
அவனது அரசை என்றென்றைக்கும் பல
முள்ளதாக ஆக்குவேன்!’ என்றார்.”
8 “இப்போது இஸ்ரவேல் ஜனங்களின் முன்
பாகவும், தேவனுக்கு முன்பாகவும், நான்
கூறுகிறேன். தேவனாகிய கர்த்தருடைய
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதில் கவனமாக
இருங்கள்! அப்போதுதான் இந்த நல்ல
நிலம் உங்களுடையதாக இருக்கும்.
என்றென்றும் இதனை உங்கள்
சந்ததிகளுக்கும் தர இயலும்.
9 “என் மகன் சாலொமோனாகிய நீ உன்
தந்தையின் தேவனைப் பற்றி அறிவாய்,
சுத்தமான இருதயத்தோடு தேவனுக்குச்
சேவை செய். தேவனுக்குச் சேவை செய்வ
தில் மனதில் மகிழ்ச்சிகொள். ஏனென்றால்,
கர்த்தருக்கு ஒவ்வொருவரின் மனதினுள்ளும்
என்ன இருக்கிறது என்பது தெரியும். நீ
நினைக்கிற அனைத்தையும் கர்த்தர் புரிந்து
கொள்வார். நீ உதவிக்கு கர்த்தரிடம்
போனால், அவர் பதில் தருவார். ஆனால்
நீ கர்த்தரிடமிருந்து விலகினால் அவர்
என்றென்றைக்கும் விட்டுவிடுவார். 10 சாலொ
மோன், கர்த்தர் தன் ஆலயத்தை கட்ட
உன்னையே தேர்ந்தெடுத்திருக்கிறார் என்
பதைத் தெரிந்துகொள். உறுதியாக இருந்து
இதனைச் செய்து முடி” என்றான்.
11 பிறகு அவன் தன் மகன் சாலொ
மோனுக்கு ஆலயத்தை கட்டுவதற்கான
திட்டங்களைப் பற்றிக் கூறினான். நுழைவு
மண்டபம், கட்டிடங்கள், அறைகள், கருவூல
அறைகள், அதன் மேல் வீடுகள், அதின்
உள்ளறைகள், கிருபாசனம் போன்றவற்றின்
மாதிரிகளைக் கொடுத்தான். 12 தாவீது
ஆலயத்தின் அனைத்து பாகங்களுக்கும் திட்
டம் வைத்திருந்தான். அவன் அவற்றைச்
சாலொமோனிடம் கொடுத்தான். அவன் கர்த்
தருடைய ஆலயத்தைச் சுற்றியுள்ள பிரகாரத்
தின் திட்டங்களையும் கொடுத்தான். அவன்
கருவூல அறைகளுக்கும் பரிசுத்தமானப்
பொருட்கள் வைக்கும் அறைகளுக்கும் உரிய
திட்டங்களையும் கொடுத்தான். 13 ஆசாரியர்
குழுக்களைப் பற்றியும் லேவியர்களைப்
பற்றியும் சாலொமோனுக்குத் தாவீது
கூறினான். கர்த்தருடைய ஆலயத்தில் செய்ய
வேண்டிய சேவைகளைப் பற்றியும் சேவை
களுக்குரிய பொருட்களைப் பற்றியும் கூறி
னான். 14 ஆலயத்தில் பயன்படுத்த வேண்டிய
தங்கம், வெள்ளி பற்றிய அளவினையும்
கூறினான். 15 தங்க விளக்குகள் மற்றும்
விளக்குத்தண்டுகள் பற்றியும் திட்டங்க
ளுண்டு. வெள்ளி விளக்குகள், மற்றும்
விளக்குத் தண்டுகள் பற்றியும் திட்டங்க
ளுண்டு. இவ்விளக்குகளுக்கும் விளக்குத்
தண்டுகளுக்கும் எவ்வளவு தங்கமும்
வெள்ளியும் தேவைப்படும் என்பதையும்
சொன்னான். தேவைப்படுகிற இடங்களில்
வெவ்வேறு விளக்குத் தண்டுகள் இருந்தன.
16 பரிசுத்த அப்பம் வைப்பதற்குரிய மேஜை
செய்ய தேவையான தங்கம் பற்றியும் கூறி
னான். வெள்ளி மேஜைகளுக்கு வேண்டிய
வெள்ளியின் அளவைப் பற்றியும் தாவீது
கூறினான். 17 முள் குறடுகளுக்கும் தூவப்
பயன்படும் கலங்களுக்கும், தட்டுகளுக்கும்
வேண்டிய தங்கத்தைப் பற்றியும் கூறினான்.
பொன் கிண்ணங்களுக்குத் தேவையான
பொன்னின் அளவையும், வெள்ளிக்
கிண்ணங்களுக்கு தேவையான வெள்ளியின்
அளவையும் தாவீது கூறினான். 18 நறுமணப்
பொருட்கள் எரிக்கும் பீடத்திற்கு வேண்டிய
பரிசுத்த பொன்னின் அளவைப் பற்றியும்
கூறினான். தேவனுடைய உடன்படிக்கைப்

*பெட்டியை மூடும் பொன் கேரூபின்களான
வாகனத்தின் மாதிரியையும் கொடுத்தான்.
இவை தங்கத்தால் ஆனவை.*
[19]*தாவீது, “கர்த்தருடைய வழிகாட்டுதலால்
இத்திட்டங்களை நான் எழுதினேன். அவரது
உதவியால்தான் அனைத்தும் திட்டமிடப்
பட்டது” என்றான்.* [20]*தாவீது மேலும் தன்
மகன் சாலொமோனிடம், “உறுதியாக இரு.
தைரியமாக இந்த வேலையை முடித்துவிடு.
பயப்படாதே, ஏனென்றால் என் தேவனாகிய
கர்த்தர் உன்னோடும் இருப்பார். அனைத்து
வேலைகளும் முடியும்வரை அவர் உனக்கு
உதவுவார். அவர் உன்னை விட்டுப்
போகமாட்டார். கர்த்தருடைய ஆலயத்தை
நீ கட்டி முடிப்பாய்.* [21]*ஆசாரியர்களின்
குழுவும், லேவியர்களும் தேவாலயத்தின்
எல்லா வேலைகளுக்கும் தயாராக உள்ளனர்.
திறமையுள்ள ஒவ்வொருவரும் தயாராக
இருக்கின்றனர். இவர்கள் அனைவரும்
ஆலயத்தின் வேலைகளுக்கு உதவுவார்கள்.
உனது அனைத்து ஆணைகளுக்கும், அதி
காரிகளும் ஜனங்களும் கீழ்ப்படிவார்கள்”
என்றான்.*

## ஆலயம் கட்டுவதற்கான அன்பளிப்புகள்

29 *அங்கே கூடியிருந்த அனைத்து இஸ்ர
வேல் ஜனங்களிடமும் தாவீது, “என்
மகன் சாலொமோனைத் தேவன் தேர்ந்
தெடுத்துள்ளார். அவன் இளைஞன். இந்த
வேலையைச் செய்துமுடிக்கும் தேவை
களைப் பற்றிய அறிவு இல்லாதவன். ஆனால்
இந்த வேலையோ மிகவும் முக்கியமானது.
இது ஜனங்களுக்கான வீடு அன்று, இது
தேவனாகிய கர்த்தருக்கான வீடு.* [2]*எனது
தேவனுடைய ஆலயத்தைக் கட்டுவதற்கான
திட்டங்களை என்னால் முடிந்தவரை
செய்துள்ளேன். நான் தங்கப்பொருட்கள்
செய்வதற்கான தங்கத்தைக் கொடுத்துள்
ளேன். வெள்ளிப் பொருட்களைச் செய்வதற்
கான வெள்ளியையும் நான் கொடுத்துள்
ளேன். வெண்கலப் பொருட்களைச் செய்வ
தற்கான வெண்கலத்தையும் நான் கொடுத்
துள்ளேன். இரும்பு பொருட்களைச் செய்வ
தற்கான இரும்பையும் நான் கொடுத்துள்
ளேன். மரப்பொருட்கள் செய்வதற்கான
மரத்தையும் நான் கொடுத்துள்ளேன்.
பதிப்பதற்குத் தகுந்த ஒளிமிக்க கற்களையும்,
பலவண்ண கற்களையும், வெண்கற்பாளங்
களையும், விலையுயர்ந்த சகலவித இரத்தி
னங்களையும், கோமேதகம் போன்ற
கற்களையும் நான் கொடுத்துள்ளேன். இது
போல் பலவிதமான பொருட்களைக் கர்த்தரு
டைய ஆலயத்திற்காக நான் கொடுத்திருக்கி
றேன்.* [3]*எனக்குச் சொந்தமான பொன்னை
யும், வெள்ளியையும் என் தேவனுடைய
ஆலயத்திற்கு அன்பளிப்பாகக் கொடுத்துள்
ளேன். இதனை நான் எதற்காகச் செய்தேன்
என்றால் என் தேவனுடைய ஆலயம்
கட்டி முடிக்கப்படவேண்டும் என்று உண்
மையிலேயே விரும்புகிறேன். அதனால்
அனைத்து பொருட்களையும் பரிசுத்த
ஆலயத்திற்கு கொடுத்துவிட்டேன்.* [4]110 *டன்
சுத்தமான பொன்னை நான் ஓபிரிலிருந்து
கொடுத்தேன்.* 260 *டன் சுத்தமான வெள்ளி
யையும் நான் கொடுத்திருக்கிறேன். இவ்
வெள்ளி ஆலயச் சுவர்களை மூடிட பயன்ப
டும்.* [5]*தங்கத்தாலும் வெள்ளியாலும் ஆன
பொருட்களுக்குத் தேவையான தங்கத்தையும்
வெள்ளியையும் கொடுத்திருக்கிறேன். இந்தப்
பொன்னினாலும் வெள்ளியாலும் திறமை
யுடையவர்கள் ஆலயத்திற்குத் தேவையான
பல்வேறு வகை பொருட்களைச் செய்ய
லாம். இப்போது இஸ்ரவேலர்களில் எத்தனை
பேர் ஆலயப் பணிக்காக, உங்களைக்
கர்த்தருக்கு கொடுக்கத் தயாராக இருக்கிறீர்
கள்?” என்று கேட்டான்.*
[6]*குடும்பத்தலைவர்களும்,இஸ்ரவேல் கோத்
திரங்களின் தலைவர்களும், ஆயிரம் பேருக்
கான அதிபதிகளும், நூறுபேருக்கான அதி
பதிகளும், அரசனின் மந்திரிகளான தலை
வர்களும் ஒப்புக்கொண்டு தங்களது மதிப்பு
வாய்ந்த பொருட்களைக் கொடுக்க முன்
வந்தனர்.* [7]*அவர்கள், தேவாலயத்திற்குக்
கொடுத்த பொருட்களின் பட்டியல் இது:* 190
*டன் தங்கம்,* 375 *டன் வெள்ளி,* 675
*டன் வெண்கலம்,* 3,750 *டன் இரும்பு,*
[8]*ஜனங்கள் விலையுயர்ந்த கற்களைக் கர்த்த
ருடைய ஆலயத்திற்கு கொடுத்தனர். யெகி
யேல் இக்கற்களைக் காக்கும் பொறுப்பாளி
ஆனான். இவன் கெர்சோன் குடும்பத்தவன்.*
[9]*தலைவர்கள் மகிழ்ச்சியோடு இவ்வாறு
பொருட்களைக் கொடுத்ததால் ஜனங்களும்
மகிழ்ச்சியடைந்தனர். தலைவர்கள் நல்ல
மனதோடு கொடுத்தனர். தாவீது அரசனும்
மகிழ்ந்தான்.*

## தாவீதின் அழகான ஜெபம்

[10]*பிறகு தாவீது அனைத்து ஜனங்களின்
முன்பாகக் கர்த்தரை துதித்தான். தாவீது:*

*“இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தாவே,
எங்கள் தந்தையே,
எல்லா காலங்களிலும்
உமக்கு துதி உண்டாவதாக!*
11 *மாட்சிமை, வல்லமை, மகிமை,
வெற்றி, மகத்துவம்
அனைத்தும் உமகுரியவை.
ஏனென்றால் மண்ணிலும்,
விண்ணிலும் உள்ள அனைத்தும்
உமக்குரியவை;
கர்த்தாவே இராஜ்யம் உமக்குரியது,
நீரே தலைவர்,
எல்லாவற்றுக்கும் ஆட்சியாளர்
நீரே.*

12 செல்வமும், மகத்துவமும்
உம்மிடம் இருந்துவரும்.
நீர் எல்லாவற்றையும் ஆள்கிறீர்.
உமது கையில் வல்லமையும்
அதிகாரமும் உள்ளது!
எவரையும் வல்லமையும்,
அதிகாரமும்
உள்ளவனாக்கும் வல்லமையும்
உமது கையில் உள்ளது!
13 இப்போது எங்கள் தேவனே,
உமக்கு நன்றி.
நாங்கள் உமது பெருமைக்குரிய
நாமத்தைத் துதிப்போம்!
14 இந்தப் பொருட்கள் அனைத்தும்
என்னிடமும்,
என் ஜனங்களிடமும் இருந்து
வந்ததல்ல!
அனைத்தும் உம்மிடமிருந்தே வந்தன.
நாங்கள் அவற்றை உமக்குத்
திருப்பித்தருகிறோம்.
15 நாங்கள் எங்கள் முற்பிதாக்களைப்
போன்று உலகமெங்கும் பயணம்
செய்துகொண்டு பரதேசிகளாக
இருக்கிறோம்.
இவ்வுலகில் எங்கள் வாழ்வு கடந்து
செல்லும் நிழல் போன்றுள்ளது.
இதனை நிறுத்த முடியவில்லை.

16 எங்கள் தேவனாகிய கர்த்தாவே,
நாங்கள் இவ்வளவு பொருட்களையும்
ஆலயத்திற்காக சேகரித்துள்ளோம்.
உமது பெயரைப் பெருமைபடுத்த
ஆலயம் கட்டுகிறோம்.
ஆனால் அனைத்தும் உம்மிடம்
இருந்து வந்தன.
எல்லாம் உமக்குரியன.
17 எனது தேவனே, நீர் ஜனங்களைச்
சோதிப்பதை நான் அறிவேன்,
ஜனங்கள் நன்மை செய்தால்
நீர் மகிழ்ச்சி அடைவீர்.
நான் மகிழ்ச்சியோடு சுத்தமான,
நேர்மையான மனதோடு இவற்றைத்
தருவேன்.
நான் உமது ஜனங்கள்
கூட்டியுள்ளதை நான் பார்த்தேன்.
இப்பொருட்களை உமக்குக்
கொடுப்பதில், அவர்கள்
மகிழ்ச்சியோடு இருக்கிறார்கள்.
18 கர்த்தாவே, எங்கள் முற்பிதாக்களான,
ஆபிரகாம், ஈசாக்கு, இஸ்ரவேல்
ஆகியோரின் தேவன்.
சரியானவற்றைத் திட்டமிடுவதில் உம்
ஜனங்களுக்குத் தயவுசெய்து
உதவும்!
உம்மிடம் உண்மையாகவும்,
தாழ்மையாகவும் இருக்க உதவும்.
19 என் மகன் சாலொமோன் உமக்கு
உண்மையாக இருக்கவும்,
உமது ஆணைகளுக்கும்,
சட்டங்களுக்கும், விதிகளுக்கும்
கூட கீழ்ப்படிய உதவும்.
இவற்றைச் செய்ய சாலொமோனுக்கு
உதவும்.
நான் திட்டமிட்டபடி இத்தலைநகரைக்
கட்ட அவனுக்கு உதவும்"
என்றான்.

20 பிறகு தாவீது அனைத்து குழு
ஜனங்களிடமும், இப்போது உங்கள்,
"தேவனாகிய கர்த்தரை துதியுங்கள்" என்
றான். எனவே அனைத்து ஜனங்களும்
துதித்தனர். தரையில் குனிந்து கர்த்தரையும்
அரசனையும் வணங்கினார்கள்.

### சாலொமோன் அரசனாகிறான்

21 மறுநாள் ஜனங்கள் கர்த்தருக்கு பலிகள்
இட்டனர். தகனபலிகளைக் கொடுத்தனர்.
அவர்கள் 1,000 காளைகள், 1,000 ஆட்டுக்
கடாக்கள், 1,000 ஆட்டுக் குட்டிகள், போன்ற
வற்றையும் பானங்களின் காணிக்கைகளை
யும் செலுத்தினர். அவர்கள் இஸ்ரவேலின்
அனைத்து ஜனங்களுக்காகவும் பலவற்றை
யும் பலியிட்டனர். 22 அன்று ஜனங்கள்
மகிழ்ச்சியோடு கர்த்தருடன் உண்பதும்
குடிப்பதுவுமாய் இருந்தனர்.
அவர்கள் தாவீதின் மகனான சாலொ
மோனை இரண்டாம் முறையாக அரசனாக்கி
னார்கள். அவர்கள் சாலொமோனை அரச
னாகவும், சாதோக்கை ஆசாரியனாகவும்
அபிஷேகம் செய்தனர். கர்த்தர் இருக்கிற
இடத்திலேயே அவர்கள் இதைச் செய்தார்
கள்.
23 பிறகு சாலொமோன் கர்த்தருடைய
சிங்காசனத்தின் மேல் அமர்ந்தான். அவன்
தனது தந்தையின் இடத்தை எடுத்துக்
கொண்டான். அவன் வெற்றியுள்ளவனாயி
ருந்தான். இஸ்ரவேலர்கள் அவனுக்குக்
கீழ்ப்படிந்தனர். 24 அனைத்து தலைவர்களும்,
வீரர்களும் தாவீதின் மகனான சாலொ
மோனை அரசனாக ஏற்றுக்கொண்டனர்.
அனைவரும் சாலொமோனுக்குக் கீழ்ப்
படிந்தனர். 25 கர்த்தர் சாலொமோனை மிகப்
பெரியவனாக்கினார். கர்த்தர் சாலொ
மோனைப் பெரியவராக்கிவிட்டார் என்
பதை இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும்
தெரிந்துகொண்டனர். ஒரு அரசனுக்குரிய
பெருமையைக் கர்த்தர் அவனுக்குக் கொடுத்
தார். வேறு எந்த அரசனுக்கும் இஸ்ரவேலில்
இவ்வளவு ராஜரீக மகத்துவம் கிடைத்த
தில்லை.

### தாவீதின் மரணம்

26-27 ஈசாயின் மகனான தாவீது 40 ஆண்டு
கள் இஸ்ரவேல் முழுவதற்கும் அரசனாக
இருந்தான். எப்ரோன் நகரில் தாவீது 7
ஆண்டுகளுக்கு அரசனாக இருந்தான். பிறகு

தாவீது எருசலேம் நகரில் 33 ஆண்டுகள்
அரசனாக இருந்தான். 28 தாவீது முது
மையடைந்ததும் மரித்தான். தாவீது ஒரு நீண்ட நல்ல வாழ்க்கையை வாழ்ந்தான். தாவீது பல செல்வங்களையும் பெருமை களையும் பெற்றான். அவனுக்குப் பிறகு அவனது மகனான சாலொமோன் புதிய அரசன் ஆனான்.
29 தொடக்க முதல், இறுதிவரை தாவீது செய்தவற்றையெல்லாம் தீர்க்கதரிசியான நாத்தானும், ஞானதிருஷ்டிக்காரனான சாமு வேலும், ஞானதிருஷ்டிக்காரனான காத்தும் தங்கள் புத்தகங்களில் எழுதியுள்ளனர்.
30 தாவீது இஸ்ரவேலின் அரசனாகச் செய்த வற்றையெல்லாம் அந்த எழுத்துக்கள் கூறுகின்றன. அவை தாவீதின் வலிமையை யும், அவனுக்கு நேர்ந்தவற்றையும் கூறுகின் றன. அவை இஸ்ரவேலுக்கும் அதைச் சுற்றியுள்ள அரசுகளுக்கும் ஏற்பட்டவற்றை யும் கூறும்.

# நாளாகமத்தின் இரண்டாம் புத்தகம்

### சாலொமோன் ஞானத்தை கேட்கிறான்

1 சாலொமோன் பலமுள்ள அரசனாக
விளங்கினான். ஏனென்றால் தேவனாகிய
கர்த்தர் அவனோடு இருந்தார். கர்த்தர்
அவனை மிகப் பெரியவனாக்கினார். 2இஸ்ர
வேல் ஜனங்களோடு சாலொமோன்
பேசினான். அத்துடன் எல்லா தலைவர்க
ளோடும், பொது அதிகாரிகளோடும், நீதிபதி
களோடும், இஸ்ரவேலில் உள்ள ஒவ்வொரு
வழிகாட்டிகளோடும், ஒவ்வொரு குடும்பத்
தலைவர்களோடும் பேசினான். 3பிறகு
சாலொமோனும் மற்றும் அனைவரும் கூடி
கிபியோனில் இருக்கிற மேடைக்குப்
போனார்கள். அங்கு தேவனுடைய ஆசரிப்
புக் கூடாரம் இருந்தது. இதனைக் கர்த்தரு
டைய ஊழியக்காரனான மோசே வனாந்த
ரத்தில் இருக்கும்போது அமைத்தான்.
4தாவீது தேவனுடைய உடன்படிக்கைப்
பெட்டியைக் கீரியாத்யாரீமிலிருந்து எருசலே
மிற்குக் கொண்டுவந்தான். அவன் எருச
லேமில் தேவனுடைய உடன்படிக்கைப்
பெட்டியை வைக்கும்படி ஒரு கூடாரத்தை
அமைத்திருந்தான். 5ஊரியின் மகனான
பெசலெயேல் வெண்கலப் பலிபீடத்தைச்
செய்தான். அது பரிசுத்தக் கூடாரத்தின்
முன்பாக கிபியோனில் இருந்தது. எனவே
சாலொமோனும் ஜனங்களும் கிபியோனுக்
குக் கர்த்தருடைய ஆலோசனை பெற
சென்றனர். 6சாலொமோன் மேலே ஆசரிப்புக்
கூடாரத்தில் கர்த்தருக்கு முன்பிருந்த வெண்
கல பலிபீடத்தின் அருகிலே சென்றான்.
அப்பலிபீடத்தில் சாலொமோன் 1,000 தகன
பலிகளைக் கொடுத்தான்.
7அன்று இரவு தேவன் சாலொமோனிடம்,
“நான் உனக்கு என்ன தரவேண்டும் என
விரும்புகிறாய் என்பதைக் கேள்” என்றார்.
8சாலொமோன் தேவனிடம், “என் தந்தை
யான தாவீதிடம் நீர் மிகவும் கருணையோடு
இருந்தீர். என் தந்தையின் இடத்திற்கு
என்னைப் புதிய அரசனாகத் தேர்ந்தெடுத்
திருக்கிறீர். 9இப்போது தேவனாகிய கர்த்
தாவே! என் தந்தை தாவீதிற்குக் கொடுத்த
வாக்குறுதியைக் காப்பாற்றும். இப்பெரிய
நாட்டிற்கு என்னை அரசனாகத் தேர்ந்தெடுத்
திருக்கிறீர். பூமியில் உள்ள புழுதியைப்
போன்று ஏராளமான அளவில் ஜனங்கள்
வசிக்கின்றனர். 10இப்போது எனக்கு அறி
வையும் ஞானத்தையும் நீர் தர வேண்டும்.
அதனால் இந்த ஜனங்களை சரியான வழி
யில் நடத்திச் செல்வேன். உம்முடைய உதவி
இல்லாமல் எவராலும் இந்த ஜனங்களை
ஆள இயலாது!” என்றான்.
11தேவன் சாலொமோனிடம், “உனக்கு
நீதியான மனப்பான்மை உள்ளது. நீ செல்வத்
தையோ, பொருட்களையோ, பெருமை
யையோ கேட்கவில்லை. உன் பகைவர்
களை அழிக்கவேண்டும் என்றும் கேட்க
வில்லை. நீ நீண்ட வாழ்நாளையும் கேட்க
வில்லை. நீ இத்தகையவற்றைக் கேட்க
வில்லை. நீ என்னிடம் அறிவையும் ஞானத்
தையும் வேண்டுகிறாய். எனவே என்னால்
தேர்ந்தெடுக்கப்படும் உன்னால் என் ஜனங்
களுக்காக சரியான முடிவுகளை எடுக்க
இயலும். 12ஆகையால் நான் உனக்கு அறிவும்
ஞானமும் தருகிறேன். ஆனால் அதோடு
உனக்குச் செல்வத்தையும் பொருட்களையும்
பெருமையையும் தருவேன். இதற்கு முன்
னால் இருந்த எந்த அரசனுக்கும் கிடைக்காத
அளவிற்கு உனக்குச் செல்வமும் சிறப்பும்
தருவேன். எதிர்காலத்திலும் இதுபோல் எந்த
அரசனும் செல்வமும் சிறப்பும் பெறப்போவ
தில்லை” என்றார்.
13எனவே, சாலொமோன் கிபியோனில்
தொழுதுகொள்ளும் இடத்திற்குச் சென்றான்.
பிறகு சாலொமோன் ஆசரிப்புக்
கூடாரத்தைவிட்டு எருசலேமிற்கு இஸ்ரவே
லின் அரசனாக அரசாளத் திரும்பிச்
சென்றான்.

### சாலொமோன் தனது படையையும் செல்வத்தையும் சேர்க்கிறான்

14சாலொமோன் தனது படைக்காகக் குதி
ரைகளையும் இரதங்களையும் சேகரிக்க
ஆரம்பித்தான். சாலொமோனிடம் 1400
இரதங்களும் 12,000 குதிரை வீரர்களும்
இருந்தார்கள். அவற்றை அவன் இரதத்துக்
குரிய நகரங்களில்* இருக்கச்செய்தான்.
அவர்களில் சிலரை அரண்மனையிருந்த
எருசலேமிலும் இருக்கச் செய்தான்.
15எருசலேமில் சாலொமோன் ஏராளமாகத்
தங்கத்தையும் வெள்ளியையும் சேகரித்தான்.

---

**இரதத்துக்குரிய நகரம்** குதிரைகளைம் இரதங்களைம் வைப்பதற்கேற்ற சிறந்த இடங்களைக் கொண்ட நகரங்கள்.

*அங்கே பொன்னும் வெள் ளியும் கற்களைப்
போன்று ஏராளமாகக் குவிக்கப்பட்டிருந்தன.
சாலொமோன் கேதுரு மரங்களையும் ஏரா
ளமாகச் சேகரித்தான். அவை மேற்கு மலை
பள்ளத்தாக்கில் உள்ள காட்டத்தி மரங்
களைப் போன்று ஏராளமாக இருந்தன.
16சாலொமோன் எகிப்திலிருந்தும் கியூவி
லிருந்தும் குதிரைகளை வாங்கிவந்தான்.
அரசனின் வியாபாரிகள் கியூவிலி
ருந்து குதிரைகளை வாங்கிவந்தனர்.
17சாலொமோனின் வியாபாரிகள் 600 சேக்கல்
வெள்ளிக்கு ஒரு இரத்தையும் 150 சேக்கல்
வெள்ளிக்கு ஒரு குதிரையையும் வாங்கி
வந்தனர். பிறகு இதே விதத்தில் அந்த
வியாபாரிகள் குதிரைகளையும் இரதங்களை
யும் ஏத்தியரின் அரசர்களுக்கும் ஆராம்
அரசர்களுக்கும் கொண்டுபோய் விற்றார்கள்.*

### ஆலயத்தையும் அரண்மனையையும் கட்ட சாலொமோன் திட்டமிடுகிறான்

*2 கர்த்தருடைய நாமத்துக்கு மகிமை உண்
டாக்க சாலொமோன் ஆலயம் கட்ட
திட்டமிட்டான். மேலும் தனக்காக ஒரு
அரண்மனை கட்டிக்கொள்ளவும் சாலொ
மோன் திட்டமிட்டான். 2மேலும் மலையில்
கல் உடைக்கும் பொருட்டுச் சாலொ
மோனிடம் 70,000 தொழிலாளர்களும் 80,000
கல் தச்சர்களும் இருந்தார்கள். மேற்பார்வை
செய்யும் பொருட்டு 3,600 பேரைத்
தேர்ந்தெடுத்தான்.*

*3பிறகு சாலொமோன் ஈராம் என்பவ
னுக்கு தூது அனுப்பினான். ஈராம் தீரு
என்னும் நாட்டின் அரசன். சாலொமோன்,
“என் தந்தையான தாவீதிற்கு உதவிச்
செய்தது போன்று எனக்கும் உதவிச்
செய்யுங்கள் நீங்கள் கேதுரு மரக்கட்டை
களை அனுப்பினீர்கள். அதனால் அவர்
தனக்கு அரண்மனை கட்டிக்கொண்டார்.
4நான் எனது தேவனாகிய கர்த்தருடைய
பெயரை மகிமைப்படுத்துவதற்காக ஒரு
ஆலயம் கட்டப்போகிறேன். ஆலயத்தில்
கர்த்தருக்கு முன்பாக நாங்கள் நறுமணப்
பொருட்களை எரிக்கப்போகிறோம். சிறப்புக்
குரிய மேஜையில் பரிசுத்த அப்பத்தை*
வைக்கப்போகிறோம். ஒவ்வொரு நாளும்
காலையிலும் மாலையிலும் தகனபலிகளை
செலுத்தப்போகிறோம். ஓய்வுநாட்களிலும்,
பிறைச்சந்திர நாட்களிலும் நமது தேவ
னாகிய கர்த்தர் கொண்டாடச் சொன்ன
பண்டிகை நாட்களிலும் தகனபலிகளை
செலுத்தப்போகிறோம். இஸ்ரவேல் ஜனங்கள்
எக்காலத்திற்கும் கீழ்ப்படிய வேண்டிய
சட்டம் இது.*

*5“நமது தேவன் மற்ற எல்லாத் தெய்வங்
களைவிட பெரியவர். எனவே நான் அவருக்
காகப் பெரிய ஆலயத்தைக் கட்டுவேன்.
6உண்மையில் எவராலும் நம் தேவனுக்கு
ஆலயம் கட்டமுடியாது. வானமும் வானாதி
வானமும் கூட அவரைத் தாங்கிக்கொள்ள
முடியாது. எனவே என்னாலும் நமது
தேவனுக்கு ஆலயம் கட்டமுடியாது. என்
னால் முடிந்ததெல்லாம் அவரை மகிமைப்
படுத்த அவருக்கு நறுமணப் பொருட்களை
எரிக்க ஒரு இடத்தை அமைப்பதுதான்.*

*7“இப்போது நான் உங்களிடம் ஒரு
மனிதனை அனுப்பிவைக்கும்படி கேட்டுக்
கொள்கிறேன். அவனுக்குப் பொன், வெள்ளி,
வெண்கலம், இரும்பு போன்ற வேலைகளில்
திறமை இருக்கவேண்டும். அவனுக்கு
இரத்தாம்பர நூலிலும், சிவப்பு நூலிலும்,
இளநீல நூலிலும் வேலைச்செய்யத் தெரிந்
திருக்கவேண்டும். அவன் இங்கு யூதாவிலும்
எருசலேமிலும் இருக்கின்றவர்களோடும்
என் தந்தை தாவீதால் தேர்ந்தெடுக்கப்பட்
டவர்களோடும் வேலைச்செய்ய வேண்டும்.
8லீபனோனில் உள்ள கேதுரு, தேவதாரு,
வாசனை மரங்கள் போன்றவற்றின் பலகை
களையும் அனுப்பவேண்டும். உனது
வேலைக்காரர்கள் லீபனோனில் உள்ள
மரங்களை வெட்டத் தெரிந்தவர்கள் என்பது
எனக்குத் தெரியும். எனது வேலைக்காரர்கள்
உனது வேலைக்காரர்களுக்கு உதவுவார்கள்.
9எனக்கு ஏராளமான மரப்பலகைகள்
தேவை. ஏனென்றால் நான் கட்டப்போகும்
ஆலயமானது பெரியதாகவும் அழகானதாக
வும் இருக்கும். 10பலகைகளுக்காக மரத்தை
வெட்டப்போகும் உன்னுடைய வேலைக்
காரர்களுக்கு நான் கொடுக்கப்போகும் கூலி
இதுதான். நான் அவர்களின் உணவுக்காக
20,000 மரக்கால் கோதுமையையும், 20,000
மரக்கால் வாற்கோதுமையையும், 20,000
குடம் திராட்சைரசத்தையும், 20,000 குடம்
எண்ணெயையும் கொடுப்பேன்” என்று
சொல்லி அனுப்பினான்.*

*11பிறகு ஈராம் சாலொமோனுக்குப் பதில்
அனுப்பினான். ஈராம் அனுப்பிய செய்தியில்
அவன், “சாலொமோன், கர்த்தர் தமது
ஜனங்களை நேசிக்கிறார். அதனால்தான்
அவர்களுக்கு அரசனாக உன்னைத் தேர்ந்
தெடுத்திருக்கிறார்” எனக்குறிப்பிட்டான்.
12ஈராம் மேலும், “இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தரைத் துதியுங்கள்! அவர் வானத்தையும்
பூமியையும் உண்டாக்கினார். அவர்
தாவீதிற்கு ஞானமுடைய மகனைக் கொடுத்
தார். சாலொமோன், உன்னிடம் ஞானமும்
அறிவும் உள்ளது. நீ கர்த்தருக்காக ஆலயம்
கட்டிக்கொண்டிருக்கிறாய். நீ உனக்காக ஒரு
அரண்மனையும் கட்டுகிறாய். 13நான்
உன்னிடம் ஈராம் அபி என்னும் கைதேர்ந்த
நிபுனனை அனுப்புவேன். 14அவனது தாய்
தாண் என்னும் கோத்திரத்தைச் சேர்ந்தவள்.
அவனது தந்தை தீரு என்னும் நாட்டிலிருந்து*

---

***பரிசுத்த அப்பம்** இது பரிசுத்தக் கூடாரத்தில் வைக்கப்பட்ட சிறப்புக்குரிய அப்பமாகும். இது “சமூகத்தின் அப்பம்” என்றும் அழைக்கப்படுகிறது. லேவி. 24:5-9.*

வந்தவன். ஈராம் அபி பொன், வெள்ளி,
வெண்கலம், இரும்பு, கல், மரம் போன்ற
வற்றில் திறமையாக வேலைச் செய்பவன்.
மேலும் அவன் கருஞ்சிவப்பு, நீலம், சிவப்புத்
துணிகள் மற்றும் மென்பட்டுத்துணி போன்ற
வற்றில் வேலைச்செய்யும் திறமையும்
கொண்டவன். அவனால் வரைபடம் அமைக்
கவும் நீ சொல்வதுபோல கட்டவும் அவ
னால் முடியும். அவன் உனது கைத்தொழில்
வல்லுநர்களோடும் உனது தந்தையான
அரசன் தாவீதின் கைத்தொழில் வல்லுநர்க
ளோடும் பணியாற்றுவான்.
15“இப்போது ஐயா, எங்களுக்கு கோதுமை
யையும், வாற்கோதுமையையும், திராட்சை
ரசமும், எண்ணையும் தருவதாக நீங்கள்
கூறினீர்கள். அவை அனைத்தையும் என்
வேலைக்காரர்களிடம் கொடுங்கள். 16நாங்கள்
லீபனோன் நாட்டிலிருந்து மரங்களை
வெட்டுவோம். நாங்கள் தேவையான அள
விற்கு மரங்களை வெட்டுவோம். நாங்கள்
மரப்பலகைகளைக் கட்டி தெப்பங்களைப்
போன்று கடல் வழியாக யோப்பாவரை
கொண்டுவருவோம். பிறகு நீங்கள் எருச
லேமிற்கு அவற்றை எடுத்துச் செல்லலாம்”
என்றான்.
17பிறகு, சாலொமோன் இஸ்ரவேல் நாட்
டில் வாழும் அந்நியர்களின் தொகையைக்
கணக்கெடுத்தான். இதுபோல ஏற்கனவே
தாவீது அரசனும் கணக்கெடுத்திருக்கிறான்.
தாவீது சாலொமோனின் தந்தையாகும்.
அவர்கள் 1,53,600 அந்நியர்கள் இருப்பதை
அறிந்தனர். 18அவர்களில் 70,000 பேரைப்
பொருட்களைத் தூக்கிச்செல்ல தேர்ந்தெடுத்
தான். 80,000 பேரை, மலையில் கல்லை
வெட்டத் தேர்ந்தெடுத்தான். 3,600 பேரை,
மேற்பார்வை செய்யத் தேர்ந்தெடுத்தான்.

## சாலொமோன் ஆலயத்தைக் கட்டுகிறான்

3 எருசலேமில் உள்ள மோரியா என்னும்
மலைமீது கர்த்தருடைய ஆலயத்தைக்
கட்டும் வேலையை சாலொமோன் ஆரம்பித்
தான். மோரியா மலையில்தான் கர்த்தர்
சாலொமோனின் தந்தையான தாவீதிற்குக்
காட்சியளித்தார். தாவீது தயார்செய்து
வைத்திருந்த இடத்திலேயே சாலொமோன்
ஆலயம் கட்டினான். இந்த இடம் எபூசியனா
கிய ஒர்னானின் களத்தில் இருந்தது.
2சாலொமோன் இஸ்ரவேலின் அரசனான
நான்காவது ஆண்டின் இரண்டாவது மாதத்
தில் ஆலய வேலையைத் தொடங்கினான்.
3தேவாலயத்தின் அடித்தளத்திற்கு சாலொ
மோன் பயன்படுத்திய அளவு முறைகள்
வருமாறு: அடித்தளமானது 90 அடி நீளமும்,
30 அடி அகலமும் உடையது. சாலொமோன்
ஆலயத்தை அளந்தபொழுது பழைய அளவு
முறையையே பயன்படுத்தினான். 4முகப்பு
மண்டபமானது ஆலயத்திற்கு முன்பாய்
இருபது முழ நீளமும் 180 அடி உயரமுமாய்
இருந்தது. சாலொமோன் முகப்பு மண்டபத்
தின் உட்பாகத்தை சுத்தமான தங்கத்
தகட்டால் மூடினான். 5ஆலயத்தின் பெரிய
மாளிகை சுவர்களைத் தேவதாரு மரப்பல
கைகளால் செய்தான். அவற்றைப் பசும்
பொன்னால் இழைத்தான். அதன்மேல்
பேரீச்சு வேலைகளையும், சங்கிலி வேலைக
ளையும் சித்தரித்தான். 6அந்த மாளிகையை
இரத்தினங்களால் அலங்கரித்தான். இவன்
பயன்படுத்திய தங்கமானது பர்வாயீமினுடை
யது. 7அந்த ஆலயத்தின் உத்திரங்கள், நிலை
கள், சுவர்கள், கதவுகள் போன்றவற்றைப்
பொன் தகட்டால் மூடினான். சுவர்களிலே
கேருபீன்களைச் செய்து வைத்தான்.
8பிறகு, சாலொமோன் மகா பரிசுத்தமான
இடத்தையும் கட்டினான். இது 20 முழ
நீளமும், 20 முழ அகலமும் உடையதாய்
இருந்தது. இதன் அகலம் ஆலயத்தைப்
போன்றதே. இதன் சுவர்களைப் பசும்பொன்
னால் இழைத்தான். இப்பொன்னின் எடை
600 தாலமாகும். 9தங்க ஆணிகள் 50
சேக்கல் எடையுள்ளது. மேல் அறைகளை
யும் பொன்னால் இழைத்தான். 10சாலொ
மோன் இரண்டு கேருபீன்களைச் செய்து
மகா பரிசுத்தமான இடத்தில் வைத்தான்.
அவற்றையும் பொன் தகட்டால் மூடினான்.
11கேருபீன்களின் ஒவ்வொரு சிறகும் 5
முழ நீளமுடையது. ஆகமொத்தம் சிறகுகளின்
நீளம் 20 முழ நீளமாயிருந்தது. முதல்
கேருபீனின் ஒரு சிறகான அந்த அறையின்
ஒரு சுவரைத் தொட்டது. அதன் இன்னொரு
சிறகு இன்னொரு கேருபீனின் சிறகைத்
தொட்டது. 12இரண்டாவது கேருபீனின்
இன்னொரு சிறகானது அவ்வறையின் இன்
னொரு சுவரைத் தொட்டது.
13கேருபீன்களின் சிறகுகள் மொத்தமாக 30
அடி நீளத்தில் பரவியிருந்தன. கேருபீன்கள்
பரிசுத்த இடத்தை நோக்கிய வண்ணம்
நின்றன.

14சாலொமோன் திரையை இளநீலம்,
சிவப்பு, இரத்தாம்பரம் மெல்லிய லினன்
போன்ற நூல்களால் செய்தான். அதன்மேல்
கேருபீன் வடிவங்களையும் அமைத்தான்.
15சாலொமோன் ஆலயத்திற்கு முன்னால்
இரண்டு தூண்களை அமைத்தான்.
அவற்றின் உயரம் 35 முழமாகும். அவற்றின்
மேல் முனையில் 5 முழ உயர கும்பங்
களையும் வைத்தான். 16சாலொமோன்
சங்கிலிகளையும் செய்தான். அவற்றைத்
தூண்களின் மேல் முனையில் பொருத்தி
னான். அச்சங்கிலிகளில் 100 மாதளம்பழங்
களைச் செய்து தொங்கவிட்டான். 17பிறகு
சாலொமோன் அத்தூண்களை ஆலயத்திற்கு
முன்னர் தூக்கி நிறுத்தினான். ஒரு தூண்
வலதுபக்கத்திலும் இன்னொரு தூண்
இடதுபக்கத்திலும் நிறுத்தினான். வலதுபக்க

முள்ள தூணுக்குச் சாலொமோன் "யாகீன்"*
என்றும் இடதுபக்கமுள்ள தூணுக்குப்
"போவாஸ்"* என்றும் பெயரிட்டான்.

### ஆலயத்திற்கானப் பொருட்கள்

4 சாலொமோன் ஒரு பலிபீடத்தை வெண்
கலத்தால் செய்தான். அது 30 அடி
நீளமும், 30 அடி அகலமும், 18 அடி
உயரமும் கொண்டது. 2பிறகு ஒரு பெரிய
தொட்டியைச் செய்ய சாலொமோன்
உருக்கிய வெண்கலத்தைப் பயன்படுத்தி
னான். இது வட்ட வடிவத்தில் ஒரு
விளிம்பிலிருந்து மறுவிளிம்புவரை 18 அடி
அகலம் கொண்டதாக இருந்தது. 7 1/2 அடி
உயரமும், 45 அடி சுற்றளவும் கொண்டி
ருந்தது. 3தொட்டியின் கீழ்ப்புறமாய் காளை
களின் உருவங்கள் வெண்கலத்தால்
வார்க்கப்பட்டு 18 அடி உயரத்தில் வைக்கப்
பட்டிருந்தது இரண்டு வரிசைகளில்
காளையின் உருவங்கள் தொட்டியோடு
வார்க்கப்பட்டன. 4இத்தொட்டி 12 காளை
உருவங்களின்மேல் வைக்கப்பட்டது. அவற்
றில் 3 காளைகள் வடக்கு நோக்கியும், 3
காளைகள் மேற்கு நோக்கியும், 3 காளைகள்
கிழக்கு நோக்கியும், 3 காளைகள் தெற்கு
நோக்கியும் இருந்தன. பெரிய தொட்டி
யானது இக்காளைகளின்மேல் இருந்தது.
அவற்றின் பின்பக்கம் உட்புறமாய் இருந்தது.
5பெரிய வெண்கலத்தொட்டியின் கனம் 4
விரல்கடை அளவுள்ளது. தொட்டியின் விளி
ம்பானது கப்பின் விளிம்புபோல் இருந்தது.
அவ்விளிம்பானது லீலி பூ போலவும்
இருந்தது. இது 3,000 குடம் தண்ணீர்
கொள்ளளவு கொண்டது. 6சாலொமோன்
10 குழாய்கள் பொருத்தப்பட்ட கிண்ணங்
களைச் செய்தான். இவற்றில் 5 கிண்ணங்க
ளைத் தொட்டியின் வலதுபக்கத்திலும், 5
கிண்ணங்களை இடதுபக்கத்திலும் வைத்
தான். தகனபலிக்கான பொருட்களைச்
சுத்தப்படுத்த இக்கோப்பைகள் பயன்பட்டன.
பலிகளைக் கொடுக்கும் முன்பு குளித்து
பரிசுத்தமாகும் பொருட்டு ஆசாரியர்களால்
வெண்கலத்தொட்டி பயன்படுத்தப்பட்டது.
7சாலொமோன் 10 விளக்குத் தண்டுகளைத்
தங்கத்தில் செய்தான். அவன் விளக்குத்
தண்டுகளைச் செய்வதற்கான விதிமுறை
களைப் பயன்படுத்தினான். அவன் அவ்
விளக்குத் தண்டுகளை ஆலயத்தில் வைத்
தான். 5 விளக்குத் தண்டுகளை வலதுபக்கத்
திலும், 5 விளக்குத் தண்டுகளை இடதுபக்கத்
திலும் வைத்தான். 8சாலொமோன் 10
மேஜைகளைச் செய்து ஆலயத்தில் வைத்
தான். அவற்றில் 5 மேஜைகளை வலதுபக்
கத்திலும், 5 மேஜைகளை இடதுபக்கத்திலும்
வைத்தான். சாலொமோன் 100 குழாய்
பொருத்தப்பட்ட கிண்ணங்களைத் தங்கத்
தால் செய்தான். 9சாலொமோன் ஆசாரியர்
களின் பிரகாரத்தையும், பெரிய பிரகாரத்
தையும், மற்ற பிரகாரங்களையும் வாசலோடு
அமைத்தான். அவன் பிரகாரக் கதவுகளை
வெண்கலத் தகடுகளால் மூடினான். 10தொட்
டியை ஆலயத்தின் வலதுபுறத்தில் தென்
கிழக்காக வைத்தான்.
11ஈராம் செப்புச்சட்டிகளையும், சாம்பல்
கரண்டிகளையும், கலங்களையும் செய்தான்.
பிறகு அவன் கர்த்தருடைய ஆலயத்திற்காகச்
சாலொமோன் அரசனுக்குச் செய்ய
வேண்டிய வேலைகளைச் செய்துமுடித்தான்.
12அதுவரை அவன் இரண்டு தூண்களையும்,
தூண்களின் மேல் உள்ள கும்பங்களையும்
குமிழ்களையும் இவற்றை மூடுவதற்கான
வலைகளையும் செய்திருந்தான். 13இரண்டு
வலைகளையும் அலங்கரிப்பதற்காக 400
மாதளம் பழங்களையும் செய்தான். ஒவ்
வொரு வலையிலும் இருவரிசையாக மாத
ளம் பழங்களைத் தொங்கவிட்டான்.
இவ்வலைகள் இரண்டு தூண்களின்
மேலுள்ள கும்பங்களை மூடிக்கொண்டிருந்
தன. 14தாங்கிகளையும் தாங்கிகளின்
மேலுள்ள பாத்திரங்களையும் ஈராம் செய்
தான். 15ஈராம் ஒரு பெரிய வெண்கலத்
தொட்டியையும் அதற்கடியில் 12 காளை
களையும் செய்துமுடித்தான். 16ஈராம் செப்புச்
சட்டிகளையும், சாம்பல் கரண்டிகளையும்,
முள் துறடுகள் போன்ற பணி மூட்டுகள்
போன்றவற்றையும் அரசன் சாலொமோ
னுக்கு கர்த்தருடைய ஆலயத்திற்காகச்
செய்தான். இவை பளபளப்பாக்கப்பட்ட
வெண்கலத்தால் செய்யப்பட்டன. 17அரசன்
சாலொமோன் முதலில் இவற்றைக் களிமண்
வார்ப்படங்களில் வடித்தான். அக்களிமண்
வார்ப்படங்கள் யோர்தான் பள்ளத்தாக்கில்
சுக்கோத் மற்றும் சரேத்தா ஆகிய
ஊர்களுக்கு இடையில் செய்யப்பட்டன.
18இதுபோல் ஏராளமான பொருட்களைச்
சாலொமோன் செய்தான். இதற்குரிய
வெண்கலத்தின் எடையை அளக்க யாரும்
முயற்சி செய்யவில்லை.

19தேவனுடைய ஆலயத்திற்கு வேண்டிய
அனைத்து பொருட்களையும் சாலொமோன்
செய்தான். அவன் தங்கத்தாலான பலி
பீடத்தைச் செய்தான். சமுகத்து அப்பங்களை
வைக்கும் மேஜைகளையும் அவன் செய்
தான். 20சாலொமோன் விளக்குத் தண்டுகளை
யும் அதன்மேல் வைக்க விளக்குகளையும்
சுத்தமான தங்கத்தால் செய்தான். உள்புற
மிருந்த பரிசுத்த இடத்தில் சன்னதிக்கு
முன்பு முறைப்படி விளக்கு ஏற்றுவதற்காக
இவை செய்யப்பட்டன. 21பூக்களையும்,
விளக்குகளையும், இடுக்கிகளையும், 22கத்திக

---

**யாகீன்** எபிரெய மொழியில் "அவர் நிலை நாட்டுகிறார்" எனப் பொருள்படும்.

**போவாஸ்** எபிரெய மொழியில் போவாஸ் என்பதற்கு "அவரில் பலமிருக்கிறது" எனப் பொருள்படும்.

ளையும், கலங்களையும், கலயங்களையும்,
தூப கலசங்களையும் செய்ய சாலொமோன்
தூய பொன்னையே பயன்படுத்தினான். மகா
பரிசுத்தமான இடத்தின் உட்கதவுகளையும்
ஆலயத்தின் கதவுகளையும் வாசல் கதவு
களையும் பொன்னால் செய்வித்தான்.

5 பிறகு கர்த்தருடைய ஆலயத்திற்காக
சாலொமோன் செய்யவேண்டிய வேலை
யெல்லாம் முடிக்கப்பட்டது. ஆலயத்திற்காக
தாவீது தந்த பொருட்களையெல்லாம்
சாலொமோன் கொண்டுவந்தான். பொன்னா
லும் வெள்ளியாலும் செய்யப்பட்ட
அனைத்துப் பொருட்களையும் மேஜை
நாற்காலிகளையும் கொண்டுவந்து தேவனு
டைய ஆலயத்தில் கருவூலத்தின் அறைகளில்
வைத்தான்.

### பரிசுத்தப் பெட்டி ஆலயத்திற்குள் கொண்டு வரப்படுகிறது

2 இஸ்ரவேலில் இருக்கிற மூத்தவர்களை
யும், எல்லாக் கோத்திரங்களின் தலைவர்க
ளையும், குடும்பத்தலைவர்களையும் சாலொ
மோன் எருசலேமில் ஒன்றாகக் கூட்டினான்.
தாவீதின் நகரிலிருந்து கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியைக் கொண்டு
வரவே இவ்வாறு செய்தான். சீயோன்
தாவீதின் நகரமாகும். 3 இஸ்ரவேலின்
அனைத்து ஆட்களும் சாலொமோனுடன்
அடைக்கல கூடாரப் பண்டிகை விருந்தில்
கூடினார்கள். இவ்விருந்து ஏழாவது மாதத்
தில் (செப்டம்பர்) நடைபெற்றது.
4 இஸ்ரவேலின் மூப்பர்கள் அனைவரும்
கூடியதும் லேவியர்கள் உடன்படிக்கைப்
பெட்டியைத் தூக்கினார்கள். 5 உடனே
ஆசாரியர்களும் லேவியர்களும் எருச
லேமுக்கு உடன்படிக்கைப் பெட்டியைத்
தூக்கிக்கொண்டு வந்தனர். மேலும் ஆசாரி
யர்களும் லேவியர்களும் ஆசரிப்புக் கூடாரத்
தையும், கூடாரத்திற்குள் இருந்த பரிசுத்த
மானப் பொருட்களையும் கூட எருச
லேமுக்குக் கொண்டுவந்தனர். 6 சாலொமோன்
அரசனும் இஸ்ரவேல் ஜனங்களும் உடன்
படிக்கைப் பெட்டிக்கு முன்பாக ஒன்றாகக்
கூடினார்கள். அவர்கள் செம்மறியாட்டுக்
கடாக்களையும் காளைகளையும் பலி
கொடுத்தனர். எவராலும் எண்ணி கணக்கிட
முடியாத செம்மறியாட்டுக்கடாக்கள் மற்றும்
காளைகளின் எண்ணிக்கை மிகுதியாக
இருந்தது. 7 பிறகு ஆசாரியர்கள் கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியை அதனை
வைப்பதற்காகச் செய்யப்பட்ட மகா பரி
சுத்தமான இடத்திற்கு ஆலயத்திற்குள் கொண்
டுவந்தார்கள். அவர்கள் அதனைக் கேரு
பீன்களின் சிறகுகளுக்கு அடியில்
வைத்தனர். 8 உடன்படிக்கைப் பெட்டிக்கு
மேலே கேருபீன்கள் தமது சிறகுகளை
விரித்து அதனை மூடியவண்ணம் இருந்தது.
அச்சிறகுகள் அப்பெட்டியைத் தூக்கப்
பயன்படும் தண்டுகளையும் மூடிக்கொண்டி
ருந்தன. 9 மகா பரிசுத்த இடத்தின் முன்பி
ருந்து காணத்தக்கவையாகப் பெட்டியி
லிருந்த தண்டுகள் மிகவும் நீளமானவையாக
இருந்தன. அதனை எவராலும் ஆலயத்திற்கு
வெளியே இருந்து காணமுடியவில்லை.
ஆனால் அத்தண்டுகள் இன்றும் கூட
அங்கேயே உள்ளன. 10 அந்த உடன்படிக்கைப்
பெட்டிக்குள் இரண்டு கற்பலகைகளைத்
தவிர வேறு எதுவும் இல்லை. மோசே
ஓரேப் மலையில் வைத்து இந்த இரண்டு
கற்பலகைகளையும் பெட்டிக்குள் வைத்தான்.
ஓரேபில்தான் கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்க
ளோடு ஒரு உடன்படிக்கைச் செய்து
கொண்டார். இது இஸ்ரவேலர்கள் எகிப்தை
விட்டு வெளியே வந்த பிறகு நடந்தது.
11 அங்கிருந்த ஆசாரியர்கள் எல்லாம்
தங்களை பரிசுத்தமாக்கிக்கொள்ள சடங்கு
களைச் செய்தார்கள். அவர்கள் அனைவரும்
பரிசுத்த இடத்தைவிட்டு வெளியே வந்ததும்
தங்களுடைய விசேஷ குழுக்களின்படி
யில்லாமல் ஒன்றாக சேர்ந்து நின்றார்கள்.
12 லேவியப் பாடகர்கள் அனைவரும் பலி
பீடத்தின் கிழக்குப்பகுதியில் நின்றுக்கொண்
டனர். ஆசாப், எமான் மற்றும் எதுத்தூனிய
பாடல் குழுவினர் அனைவரும் தமது
மகன்களுடனும் உறவினர்களுடனும் அங்கு
இருந்தார்கள். அவர்கள் வெண்ணிற மென்
மையான ஆடையை அணிந்திருந்தனர்.
அவர்களிடம் கைத்தாளங்களும் சுரமண்ட
லங்களும் தம்புருக்களும் இருந்தன. லேவியப்
பாடகர்களோடு 120 ஆசாரியர்களும் இருந்
தனர். இந்த 120 ஆசாரியர்களும் எக்காளங்
களை ஊதினார்கள். 13 எக்காளங்களை ஊதி
யவர்களும் பாடல்களைப் பாடியவர்களும்
ஒரே ஆளைப்போல இருந்தார்கள். அவர்கள்
கர்த்தரைப் புகழ்ந்தும் கர்த்தருக்கு நன்றி
சொல்லியும் ஒரே குரலில் ஒருமித்துப்
பாடினார்கள். வாத்தியக்கருவிகளையும்,
இசைக்கருவிகளையும், தாளக் கருவிகளை
யும் ஒன்றாக மீட்டி பெருத்த ஓசையை
அவர்கள் எழுப்பினார்கள். அவர்கள் பாடிய
பாட்டு இதுதான்: கர்த்தரைத் துதியுங்கள்
ஏனென்றால் கர்த்தர் நல்லவர். கர்த்தருடைய
கருணை என்றென்றும் நிலைத்திருக்கிறது.
பிறகு கர்த்தருடைய ஆலயமானது மேகங்
களால் மூடப்பட்டது. 14 மேகத்தின் இடையூ
றால் ஆசாரியர்களால் தொடர்ந்து பணிச்
செய்ய முடியவில்லை. கர்த்தருடைய
மகிமை தேவனுடைய ஆலயத்தை நிரப்
பிற்று.

6 பிறகு சாலொமோன், “இந்த இருண்ட
மேகத்தில் நான் இருப்பேன் என்று
கர்த்தர் கூறினார். 2 கர்த்தாவே, நீர் வாழ்வதற்
காக நான் ஒரு ஆலயத்தைக் கட்டினேன்.
இது உயரமான வீடு. என்றென்றும் நீர்
இருப்பதற்குரிய இடம்!” என்றான்.

### சாலொமோனின் பேச்சு

3தனக்கு முன்னால் கூடியிருந்த இஸ்ரவேல்
ஜனங்களின் பக்கம் திரும்பி அரசன் சாலொ
மோன் அவர்களை ஆசீர்வாதம் செய்தான்.
4அவன், “இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்த
ரைத் துதியுங்கள். என் தந்தையான தாவீ
தோடு பேசும்போது கர்த்தர் வாக்களித்தபடி
இப்போது செய்துமுடித்துள்ளார். தேவனா
கிய கர்த்தர், 5‘எகிப்திலிருந்து இஸ்ரவேல்
ஜனங்களை வெளியேற்றி அழைத்துக்
கொண்டு வந்த நாள் முதலாக நான்
இஸ்ரவேலின் எந்த கோத்திரத்திலிருந்தும்
என் நாமத்தில் ஒரு வீட்டைக் கட்டிக்
கொள்ள எந்த நகரத்தையும் தேர்ந்
தெடுக்கவில்லை; என் இஸ்ரவேல் ஜனங்
களை வழி நடத்திச்செல்ல எந்த தலை
வனையும் தேர்ந்தெடுக்க வில்லை, 6ஆனால்
இப்போது எனது நாமத்திற்காக எருச
லேமைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். மேலும்
என்னுடைய இஸ்ரவேல் ஜனங்களை வழி
நடத்திச்செல்ல தாவீதைத் தேர்ந்தெடுத்தி
ருக்கிறேன்.’

7“இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரு
டைய நாமத்திற்காக ஆலயம் கட்ட
வேண்டுமென்று என் தந்தை தாவீது விரும்
பினார். 8ஆனால் கர்த்தர் என் தந்தையிடம்,
‘தாவீது, எனது பேரால் ஆலயம் கட்ட
விரும்புகிறாய். உனது எண்ணம் நல்லது
தான். 9ஆனால் உன்னால் ஆலயம்
கட்டமுடியாது. உன் மகன் என் பேரால்
ஆலயத்தைக் கட்டுவான்’ என்றார். 10இப்
போது கர்த்தர் தான் என்ன செய்யப்
போவதாகச் சொன்னாரோ அதனைச்
செய்து முடித்துவிட்டார். என் தந்தையின்
இடத்தில் நான் புதிய அரசனாக
இருக்கிறேன். தாவீது என்னுடைய தந்தை.
இப்போது நான் இஸ்ரவேலரின் அரசன்.
இதுதான் கர்த்தர் அளித்த வாக்குறுதி,
நான் இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரு
டைய நாமத்திற்காக ஆலயம் கட்டி
விட்டேன். 11ஆலயத்திற்குள் கர்த்தருடைய
உடன்படிக்கைப் பெட்டியை வைத்துவிட்
டேன். உடன்படிக்கைப் பெட்டி கர்த்தரு
டைய உடன்படிக்கையைக் கொண்டுள்ளது.
கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களோடு இந்த
உடன்படிக்கையைச் செய்தார்” என்றான்.

### சாலொமோனின் ஜெபம்

12சாலொமோன் கர்த்தருடைய பலிபீடத்
திற்கு முன்பாக நின்றான். அவன் கூடியிருக்
கிற எல்லா இஸ்ரவேல் ஜனங்களின்
முன்பாக நின்றான். அவன் தன் கைகளை
விரித்தான். 13சாலொமோன் வெண்கலத்தால்
ஒரு மேடை செய்திருந்தான். அது 5 முழ
நீளமும் 5 முழ அகலமும் 3 முழ உயரமும்
கொண்டது. அதனை வெளிப்பிரகாரத்தின்
மத்தியில் வைத்தான். பிறகு அவன்
மேடையின் மேல் ஏறினான். இஸ்ரவேல்
ஜனங்களின் முன்னால் முழங்கால் போட்டு
நின்றான். சாலொமோன் தனது கைகளை
வானத்தை நோக்கி விரித்து உயர்த்தினான்.
14சாலொமோன்,

“இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தாவே,
வானத்திலும் பூமியிலும் உம்மை போன்ற
ஒரு தேவன் இல்லை. நீர் உம்முடைய
அன்பினாலும் இரக்கத்தினாலும் ஆன
உடன்படிக்கையை காப்பாற்றி வருகிறீர்.
தம் முழு இருதயத்துடன் நேர்மையாக
வாழ்ந்து உமக்கு பணிந்து நடக்கும்போது,
உம்முடைய ஊழியக்காரர்களோடும் உடன்
படிக்கையைக் காப்பாற்றி வருகிறீர்.
15உம்முடைய ஊழியக்காரனான தாவீதிற்கு
நீர் தந்த வாக்குறுதியை காப்பாற்றினீர்.
தாவீது என்னுடைய தந்தை. வாய்வழியாக
நீர் வாக்குறுதி தந்தீர். மேலும் இன்று
உம்முடைய கரங்களினால் அந்த வாக்குறுதி
நிறைவேறுமாறு செய்திருக்கிறீர். 16இப்
பொழுது, இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தாவே, உம்முடைய ஊழியக்காரானான
தாவீதிற்குத் தந்த வாக்குறுதியைக் காப்பாற்
றும். நீர், ‘தாவீது, என் முன்னிலையில்
இஸ்ரவேலரின் சிங்காசனத்தில் உனது
குடும்பத்திலிருந்து ஒருவனை அமரச் செய்
வதில் நீ தோல்வி அடையமாட்டாய். தாங்கள்
செய்வதில் உன் மகன்கள் கவனமாக
இருந்தால்தான் இது நடைபெறும். அவர்கள்
எனது சட்டங்களுக்கு நீ அடிபணிந்தது
போலவே பணியவேண்டும்’ என்று
வாக்குறுதி கொடுத்தீர். 17இப்போது
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தாவே,
உமது வாக்குறுதி உண்மையாகட்டும். நீர்
இந்த வாக்குறுதியை உமது ஊழியக்காரா
னான தாவீதிற்குக் கொடுத்திருக்கிறீர்.

18“ஆனால் தேவனாகிய நீர் உண்மையில்
ஜனங்களோடு பூமியில் வசிக்கமாட்டீர்
என்பதை நாங்கள் அறிவோம். பரலோகமும்
அதற்கு மேலானதும் கூட உம்மை கட்டுப்
படுத்த முடியாது. நான் கட்டியுள்ள இந்த
ஆலயமும் கூட உம்மை வைத்திருக்காது
என்பதை அறிவோம். 19எனினும் எனது
ஜெபத்தைக் கேளும். நான் இரக்கத்திற்காக
கெஞ்சுகிறேன். எனது தேவனாகிய கர்த்
தாவே, உம்மை அழைக்கும் என் குரலைக்
கேளும் உம்மை நோக்கி நான் செய்யும்
ஜெபங்களையும் கேளும் நான் உம்முடைய
ஊழியக்காரன். 20இரவும் பகலும் இவ்வால
யத்தை கண்ணோக்கிப் பாரும் என்று
ஜெபித்துக்கொள்கிறேன். இந்த இடத்தில்
உமது நாமத்தை இடுவதாக நீர் சொன்னீர்.
உம்முடைய அடியானாகிய நான் இவ்வால
யத்தை நோக்கும்பொழுது செய்யும் ஜெபத்
தைக் கேளும். 21எனது ஜெபங்களைக்
கேளும். உம்முடைய இஸ்ரவேல் ஜனங்களின்
ஜெபங்களையும் கேளும். நாங்கள்
இவ்வாலயத்தை நோக்கி ஜெபிக்கும்போது
செவிகொடும். நீர் பரலோகத்தில் இருந்தா

லும் எங்களை கவனிப்பீராக. எங்கள்
ஜெபங்களை நீர் கேட்கும் போதெல்லாம்
எங்கள் மீறுதல்களை மன்னியும்.
22“ஒருவன் இன்னொருவனுக்கு எதிராகக்
குற்றம் செய்து இருக்கலாம். அப்படி நேரும்
போது, குற்றம் சாட்டப்பட்டவன் தன்னை
நிரபராதி என்று நிரூபிக்கும் பொருட்டு
உமது நாமத்தைப் பயன்படுத்தி வாக்குறுதிச்
செய்யலாம். ஆலயத்தில் உள்ள உமது
பலிபீடத்தின் முன்னிலையில் அங்கனம்
ஒருவன் வந்து வாக்குறுதிச் செய்யும்போது,
23அதனை பரலோகத்தில் இருந்து செவி
கொடுத்துக் கேளும். பிறகு அவர்களுக்குத்
தீர்ப்பு வழங்கும்! கெட்டவர்களைத் தண்டி
யும். அவன் பிறருக்கு எத்தகைய துன்பத்
தைத் தந்தானோ அத்தகைய துன்பத்தை
அவன் பெறும்படி செய்யவேண்டும் நேர்மை
யானதைச் செய்தவன் அப்பாவி என்பதை
நிரூபியும்.
24“உம்முடைய இஸ்ரவேல் ஜனங்கள்
உமக்கு எதிராகப் பாவம் செய்து அதனால்
அவர்கள் தம் எதிரிகளால் தோற்கடிக்கப்பட
லாம். அதற்குப் பின் அவர்கள் உம்மிடம்
திரும்பி வந்து உம்முடைய பேரைச்
சொல்லி ஜெபித்து உமது ஆலயத்தில்
கெஞ்சலாம். 25அப்பொழுது பரலோகத்திலி
ருந்து அதனைக் கேட்டு அவர்களது பாவங்
களை மன்னியும். நீர் அவர்களுக்கும் அவரது
முற்பிதாக்களுக்கும் கொடுத்த நாட்டிற்கு
அவர்களைத் திரும்பக் கொண்டுவாரும்.
26“வானம் மூடிக்கொள்வதால் மழை
வராமல் போகலாம். இது இஸ்ரவேல் ஜனங்
கள் உமக்கு எதிராகப் பாவம் செய்யும்
போது நிகழும். இதன்பிறகு இஸ்ரவேல்
ஜனங்கள் மனம் மாறி வருந்தி இவ்வாலயத்
திற்கு வந்து ஜெபம் செய்தால் உம்முடைய
பேரைச் சொல்லி முறையிட்டு, உம்முடைய
தண்டனையால் தம் பாவங்களையும் விட்டு
விட்டால், 27அவர்களின் முறையீட்டை
பரலோகத்திலிருந்து கேளும். அவர்களது
பாவங்களை மன்னியும். இஸ்ரவேல் ஜனங்
கள் அனைவரும் உம்முடைய ஊழியர்கள்.
அவர்கள் சரியான முறையில் வாழ்வதற்குக்
கற்றுக்கொடுங்கள். உம்முடைய நிலத்திற்கு
மழையைக் கொடும். இது உம்மால் உம்மு
டைய ஜனங்களுக்கு கொடுக்கப்பட்ட நாடு.
28“நிலத்தில் பெரும் பஞ்சமோ, கொடிய
நோயோ, வறட்சி, சாவி, வெட்டுக்கிளி,
பச்சைக்கிளி போன்றவற்றால் பயிரழிவோ
ஏற்படலாம். அல்லது பகைவர்கள் இஸ்ர
வேலரின் நகரங்களைத் தாக்கலாம். அல்லது
இஸ்ரவேலில் ஏதாவது நோய் வரலாம்.
29உமது இஸ்ரவேல் ஜனங்களில் எவராவது
வந்து ஜெபம்செய்து கெஞ்சினால், ஒவ்வொ
ருவரும் தங்கள் துன்பங்களையும் வலி
யையும் உணர்ந்து இவ்வாலயத்தை நோக்கித்
தம் கைகளை விரித்து முறையிட்டால்,
30பரலோகத்திலிருந்து அதனைக் கேளும். நீர்
இருக்கிற பரலோகத்திலிருந்து அவற்றைக்
கேட்டு மன்னித்துவிடும். ஒவ்வொருவனும்
பெறத்தக்கது எதுவோ அதனைக் கொடும்.
ஏனென்றால் ஒவ்வொருவனின் மனதிலும்
இருப்பதை நீர் அறிவீர். பிறகு, நீர் மட்டுமே
ஒருவருடைய மனதில் இருப்பதை அறிவீர்.
31ஜனங்கள் எங்கள் முற்பிதாக்களுக்கு நீர்
கொடுத்த நிலத்தில் வசிக்கும்வரை உமக்கு
பயந்து கீழ்ப்படிவார்கள்.
32“ஒருவன் அந்நியனாக, இஸ்ரவேலரின்
ஒருவனாக இல்லாமல் இருக்கலாம். எனினும்
அவன் தூர நாட்டிலிருந்து இவ்வாலயத்
திற்கு உம்முடைய மகத்தான நாமத்தின்
நிமித்தமும், உம்முடைய வலிமையான
கரத்தின் நிமித்தமும், தண்டிக்கின்ற உம்மு
டைய கரத்தின் நிமித்தமும் வரலாம். அவ்
வாறு அவன் வந்து உமது ஆலயத்தில்
ஜெபம் செய்தால், 33அதனை பரலோகத்திலி
ருந்து கேளும். நீர் இருக்கிற பரலோகத்திலி
ருந்தே அவனுக்கு வேண்டியதைச் செய்யும்.
அதனால் பூமியில் உள்ள அனைவரும்
உம்முடைய நாமத்தை அறிந்து உம்மை
மதிப்பார்கள். அவர்களும் இஸ்ரவேல் ஜனங்
களைப் போன்றே மதிப்பார்கள். பூமியில்
உள்ள அனைத்து ஜனங்களும், என்னால்
கட்டப்பட்ட இவ்வாலயம் உமது நாமத்தால்
அழைக்கப்படும் என்பதை அறிவார்கள்.
34“உம்முடைய ஜனங்களைத் தம் பகைவர்
களுக்கு எதிராக நீர் சண்டையிட அனுப்பும்
போது அவர்கள் அங்கிருந்து உம்மால்
தேர்ந்தெடுக்கப்பட்ட இந்நகரத்தையோ உம்மு
டைய நாமத்திற்காக என்னால் கட்டப்பட்ட
இவ்வாலயத்தைப் பார்த்தோ ஜெபம்
செய்தால், 35பரலோகத்தில் இருந்து அதனைக்
கேளும். உதவிக்காக அவர்கள் கெஞ்சும்
போது அதனைக் கேளும். கேட்டு அவர்க
ளுக்கு உதவும்.
36“ஜனங்கள் உமக்கு எதிராகப் பாவம்
செய்வார்கள். பாவம் செய்யாதவர் யாரு
மில்லை. அவர்கள் மீது உமக்கு கோபம்
வரும். அவர்களை எதிரி தோற்கடிக்குமாறு
செய்வீர். மேலும் அவர்கள் சிறைபிடிக்கப்
பட்டு அருகிலோ தொலைவிலோ இருக்கிற
நிலத்திற்குக் கொண்டு செல்லப்படுமாறு
செய்வீர். 37அவர்கள் சிறையிருக்கிற நிலப்ப
குதியில் உண்மையை உணர்ந்து மனம்
திரும்பி உம்மிடம் கெஞ்சுவார்கள். அவர்கள்
‘நாங்கள் பாவம் செய்தோம். நாங்கள் தவறு
செய்துவிட்டோம். கேடு புரிந்துவிட்டோம்’
என்று சொல்வார்கள். 38பிறகு அவர்கள்
கைதிகளாக உள்ள நிலத்தில் தங்கள் முழு
இருதயத்தோடும் முழு ஆத்துமாவோடும்
உம்மிடம் திரும்பிவருவார்கள். அவர்கள்
உம்மால் தேர்ந்தெடுக்கப்பட்டு தமது முற்
பிதாக்களுக்குக் கொடுக்கப்பட்ட இந்நாட்டை
நோக்கி ஜெபம் செய்யலாம். உம்முடைய
பேரால் நான் கட்டிய இவ்வாலயத்தை
நோக்கியும் அவர்கள் வணங்கி ஜெபம்

செய்யலாம். 39அப்போது பரலோகத்தி
லிருந்து நீர் அவற்றைக் கேளும். நீர்
இருக்கும் பரலோகத்திலிருந்தே அவர்களது
ஜெபங்களை ஏற்றுக்கொண்டு உதவும்.
உமக்கு எதிராகப் பாவம் செய்த உம்மு
டைய ஜனங்களை மன்னியும். 40இப்போது
எனது தேவனே, உம்முடைய கண்களையும்
செவிகளையும் திறக்கும்படி கேட்டுக்கொள்
கிறேன். நாங்கள் இங்கிருந்து ஜெபிப்பதை
யெல்லாம் கேட்டு அதில் கவனம் செலுத்
தும்.

41 “இப்போது தேவனாகிய கர்த்தாவே
எழுந்திரும்.
உம்முடைய பலத்தைக் காட்டும்.
இந்த உடன்படிக்கைப் பெட்டி
வீற்றிருக்கும் இடத்திற்கு வருக!
உம்முடைய ஆசாரியர்கள்
இரட்சிப்பின் ஆடையை
அணியட்டும்.
இத்தகைய நல்ல காரியங்களைப்பற்றி
உம்முடைய உண்மையான
தொண்டர்கள் மகிழட்டும்.
42 தேவனாகிய கர்த்தாவே!
அபிஷேகிக்கப்பட்ட உம்முடைய
அரசனை ஏற்றுக்கொள்ளுங்கள்.
உம்முடைய உண்மையுள்ள
ஊழியக்காரனான தாவீதை
நினைத்துக்கொள்ளும்” என்றான்.

## கர்த்தருக்கென்று ஆலயம் அர்ப்பணிக்கப்படுகிறது

7 சாலொமோன் தனது ஜெபத்தை முடித்த
போது வானத்திலிருந்து அக்கினி
வந்தது. அது தகனபலிகளையும் காணிக்கை
களையும் எரித்தது. கர்த்தருடைய மகிமை
ஆலயத்தை நிரப்பியது. 2கர்த்தருடைய
மகிமை ஆலயத்தில் நிரம்பியிருந்ததால் ஆசா
ரியர்களால் ஆலயத்திற்குள் நுழைய முடிய
வில்லை. 3வானுலகத்திலிருந்து அக்கினி
இறங்கி வருவதை இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும் பார்த்தார்கள். அந்த ஜனங்கள்
கர்த்தருடைய மகிமை ஆலயத்திற்குள் நிரம்
பியிருப்பதையும் பார்த்தனர். அவர்கள்
தரையில் முகங்குப்புற விழுந்து தொழுது
கொண்டு கர்த்தருக்கு நன்றி சொன்னார்கள்.
அவர்கள், “கர்த்தர் நல்லவர். அவரது
கிருபை என்றென்றைக்கும் தொடர்கிறது”
என்றனர்.
4கர்த்தருக்கு முன்னால் சாலொமோனும்
ஜனங்களும் பலிகளைச் செலுத்தினர்.
5சாலொமோன் அரசன் 22,000 காளைகளை
யும், 1,20,000 வெள்ளாடுகளையும் பலி
யிட்டான். அரசனும் அனைத்து ஜனங்களும்
தேவனுடைய ஆலயத்தைப் பரிசுத்தமாக
வைத்துக்கொண்டனர். அவ்வாலயத்தை
தேவனை ஆராதிப்பதற்கு மட்டுமே பயன்
படுத்தினார்கள். 6ஆசாரியர்கள் தமது
பணியைச் செய்ய எப்போதும் தயாராக
இருந்தார்கள். லேவியர்களும் கர்த்தரைப்
பாட எப்பொழுதும் தயாராக இசைக்
கருவிகளோடு நின்றனர். இந்த இசைக்
கருவிகள் தாவீது அரசனால் கர்த்தருக்கு
நன்றி சொல்வதற்காக உருவாக்கப்பட்டவை.
ஆசாரியர்களும் லேவியர்களும், “கர்த்தரைத்
துதியுங்கள், அவருடைய அன்பு என்
றென்றும் தொடர்கிறது”* என்றனர். ஆசாரி
யர்கள் தங்கள் எக்காளங்களை லேவியர்க
ளுக்கு எதிராக நின்று ஊதினார்கள். இஸ்ர
வேல் ஜனங்கள் அனைவரும் நின்றுக்
கொண்டு இருந்தனர்.
7சாலொமோன் பிரகாரத்தின் நடுப்பகுதி
யைத் பரிசுத்தமாக்கினான். அது கர்த்தரு
டைய ஆலயத்திற்கு முன்பாக இருந்தது. அந்த
இடத்தில்தான் சாலொமோன் தகன
பலிகளையும், சமாதான பலியின் கொழுப்
பையும் கொடுத்தான். வெண்கல பலி
பீடமானது எல்லா தகனபலிகளையும், தானி
யக் காணிக்கைளையும், நிணத்தையும் தாங்
காது என்பதாலேயே சாலொமோன் இந்த
நடுப்பகுதியைப் பயன்படுத்தினான்.
8சாலொமோனும் இஸ்ரவேல் ஜனங்களும்
ஏழுநாள் பண்டிகையைக் கொண்டாடினார்
கள். சாலொமோனோடு பெரிய அளவிலான
கூட்டம் சேர்ந்திருந்தது. அவர்கள், ஆமாத்
நகரத்தின் எல்லையிலிருந்து எகிப்தின் நதி
மட்டும் கூடினார்கள். 9எட்டாவதுநாள் அவர்
களுக்குப் பரிசுத்தக்கூட்டம் இருந்தது.
ஏனென்றால் அவர்கள் ஏழுநாட்கள் பண்
டிகை கொண்டாடினார்கள். அவர்கள் பலி
பீடத்தைப் பரிசுத்தமாக்கினார்கள். அதனை
கர்த்தரை தொழுதுக்கொள்வதற்கு மட்டுமே
பயன்படுத்தினார்கள். அவர்கள் அந்தப்
பண்டிகையை ஏழுநாட்கள் கொண்டாடி
னார்கள். 10ஏழாவது மாதத்தின் 23வது
நாளில் சாலொமோன் ஜனங்களை வீட்டிற்
குத் திரும்ப அனுப்பினான். ஜனங்கள்
மகிழ்ச்சியாக இருந்தனர். அவர்களின் இதயம்
மகிழ்ச்சியால் நிரம்பியது. ஏனென்றால்
கர்த்தர் தாவீதிடமும் சாலொமோனிடமும்
இஸ்ரவேல் ஜனங்களிடமும் அன்பாக இருந்
தார்.

## சாலொமோனிடம் கர்த்தர் வருகிறார்

11சாலொமோன் கர்த்தருடைய ஆலயத்தை
யும் அரண்மனையையும் கட்டிமுடித்தான்.
கர்த்தருடைய ஆலயத்திலும் தன் அரண்ம
னையிலும் திட்டமிட்டபடியே வெற்றி
கரமாகக் கட்டிமுடித்தான். 12பிறகு இரவில்
சாலொமோனிடம் கர்த்தர் வந்தார். கர்த்தர்
அவனிடம், “சாலொமோன், நான் உனது
ஜெபத்தைக் கேட்டேன். நான் இந்த இடத்தை
எனக்குப் பலிகள் தருவதற்குரிய இடமாகத்

---

**கர்த்தரைத் துதியுங்கள் … தொடர்கிறது** பார்க்க 1 நாளா. 16:41, சங். 118 மற்றும் 136.

தேர்ந்தெடுத்தேன். 13நான் வானத்தை மூடி
னால் பின் மழை வராமல்போகும். நான்
வெட்டுக்கிளிகளுக்கு கட்டளையிட்டால்
அது பயிரை அழித்துப்போடும் அல்லது
என் ஜனங்களிடம் நான் நோயை அனுப்பு
வேன். 14என் நாமத்தால் அழைக்கப்படும்
என் ஜனங்கள் மனம் வருந்தி, ஜெபம்
செய்து என்னைத் தேடினால், மேலும்
தம் பாவங்களை விட்டுவிட்டால் நான்
பரலோகத்திலிருந்து அவர்களின் ஜெபங்
களைக் கேட்பேன். அவர்களது பாவங்களை
மன்னித்து இந்த நாட்டை வளப்படுத்து வேன்.
15இப்போது என் கண்கள் திறந்திருக்
கின்றன. இந்த இடத்திலிருந்து ஜெபம்
செய்யப்படுபவற்றைக் கேட்க என் காதுகள்
திறந்திருக்கின்றன. 16நான் இவ்வாலயத்தைத்
தேர்ந்தெடுத்தேன். இதனைப் பரிசுத்தப்
படுத்தினேன். எனவே எனது நாமம் இங்கு
என்றென்றும் நிலைத்திருக்கும். எனது
கண்ணும் மனமும் எப்பொழுதும் இங்கே
இந்த ஆலயத்திலேயே இருக்கும்.
17“இப்போது சாலொமோனே, உன்
தந்தையைப் போலவே நீயும் என் முன்பாக
வாழ்ந்தால், என் கட்டளைகளுக்கெல்லாம்
நீ கீழ்ப்படிந்துவந்தால் எனது சட்டங்களை
யும் விதிகளையும் கடைபிடித்தால், 18பிறகு
நான் உன்னைப் பலமுள்ள அரசனாக
ஆக்குவேன். உனது அரசு பெருமைக்குரிய
தாக இருக்கும். உனது தந்தையான
தாவீதோடு நான் செய்துகொண்ட உடன்
படிக்கை இதுதான். நான் அவனிடம்,
‘தாவீது, இஸ்ரவேலின் அரசனாகிறவன்
எப்பொழுதும் உனது குடும்பத்திலிருந்தே
வருவான்’ என்று கூறினேன்.
19“ஆனால் நான் அளித்த சட்டங்களுக்கும்
கட்டளைகளுக்கும் நீங்கள் கீழ்ப்படிய
வில்லையென்றால், நீங்கள் மற்ற தெய்
வங்களை தொழுதுகொண்டு சேவை
செய்வீர்களானால், 20நான் கொடுத்த எனது
நிலத்திலிருந்து இஸ்ரவேல் ஜனங்களை
வெளியேற்றுவேன். எனது நாமத்தைப்
பரிசுத்தப் படுத்துவதற்காகக் கட்டிய இவ்வா
லயத்தை விட்டுவிலகுவேன். எல்லா நாட்டி
னரும் இவ்வாலயத்தைப்பற்றி தீயதாகப்
பேசும்படி செய்வேன். 21மிக்க உயர்ந்த
மாட்சிமை கொண்ட இவ்வாலயத்தைக்
கடந்துபோகிற ஒவ்வொருவனும் வியந்து
போகும்படி செய்வேன். அவர்கள், ‘ஏன்
கர்த்தர் இதுபோன்ற மோசமான காரியத்தை
இந்த நாட்டிற்கும் ஆலயத்திற்கும் செய்தார்?’
என்று கூறுவார்கள். 22அதற்கு மற்ற
ஜனங்கள், ‘இதன் காரணம் என்னவென்றால்
இஸ்ரவேல் ஜனங்கள் தமது முற்
பிதாக்களைப் போன்று தேவனாகிய கர்த்
தருக்கு கீழ்ப்படிய மறுத்தனர். இந்த தேவன்
தான் அவர்களை எகிப்தைவிட்டு வெளியே
மீட்டு வந்தார். ஆனால் இஸ்ரவேல் ஜனங்கள்
அந்நிய தெய்வங்களை ஏற்றுக்கொண்டனர்.
அவர்கள் விக்கிரகங்களை தொழுது
கொள்ளவும் சேவை செய்யவும் தொடங்கி
விட்டனர். அதனால் தான் கர்த்தர் இஸ்ர
வேல் ஜனங்களுக்கு இத்தகைய துன்பங்க
ளைக் கொடுத்துள்ளார் என்பார்கள்” என்ற
னர்.

### சாலொமோன் கட்டிய நகரங்கள்

8 சாலொமோன் கர்த்தருக்கான ஆலயத்தை
யும் தனது அரண்மனையையும்
கட்டிமுடிக்க 20 ஆண்டு காலமாயிற்று.
2ஈராம் தனக்குக் கொடுத்த நகரங்களைப்
பிறகு சாலொமோன் கட்டத் தொடங்கி
னான். அந்நகரங்களில் சாலொமோன் இஸ்ர
வேல் ஜனங்களில் சிலரை வாழ அனுமதித்
தான். 3இதற்குப் பிறகு சாலொமோன்
ஆமாத்சோபாவிற்குச் சென்று அதனைக்
கைப்பற்றினான். 4சாலொமோன் வனாந்தரத்
திலே தத்மோர் என்ற நகரத்தையும்
கட்டினான். சாலொமோன் ஆமாத் நாட்டிலே
பொருட்களைச் சேமித்து வைப்பதற்கான
நகரங்களைக் கட்டினான். 5சாலொமோன்
மீண்டும் மேல்பெத்தொரோனையும் கீழ்ப்பெத்
தொரோனையும் கட்டினான். அந்த
ஊர்களைப் பலமான கோட்டைகளாக்கி
னான். இந்நகரங்களுக்கு பலமான கதவுகளை
யும் வாசல்களையும் தாழ்ப்பாள்களையும்
அமைத்தான். 6சாலொமோன் மீண்டும்
பாலாத்தையும் தனது பொருட்களைச் சேமித்
துவைத்த வேறு சில ஊர்களையும் மீண்டும்
கட்டினான். இரதங்களை நிறுத்திவைப்பதற்
கான எல்லா நகரங்களையும் குதிரை
யோட்டிகள் வாழ்வதற்கான எல்லா
நகரங்களையும் நிர்மாணித்தான். எருசலேம்,
லீபனோன் மற்றும் தான் அரசனாயிருந்த
நாடு முழுவதும் தான் விரும்பியவற்றை
எல்லாம் கட்டிமுடித்தான்.
7-8இஸ்ரவேலர் அல்லாத வேறு இனத்தின
ரும் அங்கு வாழ்ந்தனர். ஏத்தியர், எமோரி
யர், பெரிசியர், ஏவியர், எபூசியர் என
அவர்கள் பலவகையினர், சாலொமோன்
இவர்களை அடிமை வேலைச்செய்யுமாறு
கட்டாயப்படுத்தினான். இவர்கள் இஸ்ர
வேலர் அல்லாதவர்கள். அவர்கள் இஸ்ர
வேலர்களால் அழிக்கப்படாத இந்நிலப்பகு
தியை விட்டுப்போனவர்களின் சந்ததியினர்.
இது இன்றைக்கும் அங்கே தொடர்ந்திருக்
கிறது. 9சாலொமோன் இஸ்ரவேலர் எவரை
யும் அடிமை வேலைச்செய்யுமாறு பலவந்தப்
படுத்தவில்லை. இஸ்ரவேலர்கள் சாலொமோ
னின் போர் வீரர்களாகப் பணியாற்றினார்
கள். இவர்கள் சாலொமோனின் படையில்
தளபதிகளாகவும் அதிகாரிகளாகவும் இருந்த
னர். இவர்கள் சாலொமோனின் தேர்ப்படை
அதிகாரிகளாகவும் குதிரை வீரர்களின் அதி
காரிகளாகவும் இருந்தனர். 10இஸ்ரவேலரில்
சிலர் சாலொமோனின் முக்கியமான அதி
காரிகளுக்கான தலைவர்களாக இருந்தனர்.

இவ்வாறு 250 பேர் ஜனங்களை மேற்
பார்வை செய்யும் தலைவர்களாக இருந்தார்
கள்.
11 சாலொமோன் பார்வோனின் மகளைத்
தாவீதின் நகரத்திலிருந்து அழைத்துவந்து,
அவளுக்காகக் கட்டியிருந்த மாளிகையில்
குடிவைத்தான். சாலொமோன், "என்
மனைவி தாவீதின் வீட்டிலே இருக்கக்
கூடாது. ஏனென்றால் கர்த்தருடைய உடன்
படிக்கைப் பெட்டி இருந்ததால் அவ் விடங்கள்
பரிசுத்தமானவை" என்றான்.
12 பிறகு சாலொமோன் கர்த்தருக்காக தகன
பலிகளை கர்த்தருடைய பலிபீடத்தில் அளித்
தான். இந்தப்பலிபீடத்தைச் சாலொமோன்
ஆலய மண்டபத்திற்கு முன்பு அமைத்திருந்
தான். 13 மோசே கட்டளையிட்டபடி ஒவ்
வொரு நாளும் சாலொமோன் பலி களைச்
செலுத்திவந்தான். ஓய்வுநாட்களி லும்,
மாதப்பிறப்பு* நாட்களின் கொண்
டாட்டங்களிலும், ஆண்டின் மூன்று விடு
முறை நாட்களிலும் பலிகள் செலுத்தப்பட
வேண்டியிருந்தன. புளிப்பில்லாத அப்பண்
டிகை, வாரங்களின் பண்டிகை மற்றும்
அடைக்கலக் கூடாரப் பண்டிகை ஆகியவை
ஆண்டின் மூன்று விடுமுறை நாட்கள்.
14 சாலொமோன் தனது தந்தை தாவீதின்
அறிவுரைகளைப் பின்பற்றினான். மேலும்
சாலொமோன் ஆசாரியர் குழுவினரை
அவர்களது சேவைகளுக்காகத் தேர்ந்தெடுத்
தான். தம் பணிகளைச் செய்யுமாறு
லேவியர்களையும் நியமித்தான். ஆலயப்
பணிகளில் ஒவ்வொரு நாளும் லேவியர்கள்
துதிப்பாடல் இசைப்பதில் முதன்மையாக
இருந்தும் ஆசாரியர்களுக்கு உதவியும்
வந்தார்கள். அவன் வாசல் காவல் குழுவில்
இருந்து பலரை வாயிலைக் காப்பதற்காகத்
தேர்ந்தெடுத்தான். இவ்வாறுதான் தேவமனித
னான தாவீது அறிவுறுத்தியிருந்தான். 15 ஆசா
ரியர்களுக்கும் லேவியர்களுக்கும் சாலொ
மோன் இட்டக் கட்டளைகளில் எதனையும்
இஸ்ரவேல் ஜனங்கள் மாற்றவோ மீறவோ
இல்லை. மதிப்புவாய்ந்த பொருட்களைக்
காக்கும் வழிமுறையிலும் அவர்கள் சாலொ
மோனின் கட்டளைகளை மீறவில்லை. கரு
வூலங்களையும் இவ்வாறே காத்துவந்தனர்.
16 சாலொமோனின் அனைத்து வேலை
களும் முடிந்தன. கர்த்தருடைய ஆலயப்பணி
தொடங்கிய நாள் முதல் முடியும்வரை
திட்டமிட்டபடியே மிகச் சிறப்பாக நடந்தன.
எனவே கர்த்தருடைய ஆலய வேலையும்
முடிந்தது.
17 பிறகு சாலொமோன் எசியோன் கேபர்,
ஏலோத் ஊர்களுக்குச் சென்றான். இவ்வூர்
கள் ஏதோம் நாட்டில் செங்கடல் ஓரத்தில்
உள்ளன. 18 ஈராம் என்பவன் தனது
கப்பல்களைச் சாலொமோனுக்கு அனுப்பி
னான். ஈராமின் ஆட்களே கப்பலை
ஓட்டினார்கள். அவர்கள் கடலில் கப்பல்
ஓட்டுவதில் வல்லவர்கள். இவர்களோடு
சாலொமோனின் வேலையாட்களும் சேர்ந்து
ஓபிர் என்னும் நகருக்குச் சென்றனர். அங்கி
ருந்து சாலொமோன் அரசனுக்கு 450
தாலந்து பொன்னைக் கொண்டு வந்தனர்.

### சீபா நாட்டு அரசி சாலொமோனைப் பார்க்க வருகிறாள்

9 சீபா நாட்டு அரசி சாலொமோனின்
மேன்மையை அறிந்தாள். அவள் எருச
லேமிற்கு வந்து சாலொமோனைக் கடின
மான கேள்விகளால் சோதிக்க விரும்பினாள்.
அவளோடு ஒரு பெரிய குழுவும் வந்தது.
அவள் தனது ஒட்டகங்களில் மணப்
பொருட்களையும், பொன்னையும், இரத்தி
னங்களையும் கொண்டுவந்தாள். அவள்
சாலொமோனிடம் வந்து அவனிடம் பேசி
னாள். சாலொமோனிடம் கேட்பதற்கு
அவளிடம் ஏராளமான கேள்விகள் இருந்தன.
2 சாலொமோன் அவளுடைய கேள்விகள்
அனைத்திற்கும் விடையளித்தான். பதில்
சொல்லவோ, விளக்கம் தரவோ சாலொ
மோனுக்கு எதுவும் கடினமாக இல்லை.
3 சீபா அரசி சாலொமோனின் அறிவு ஞானத்
தையும், அவன் கட்டிய அரண்மனையையும்
பார்த்தாள். 4 அவள் சாலொமோனின் மேஜை
யில் இருந்த உணவு வகைகளையும் அவ
னது முக்கிய அதிகாரிகளையும் பார்த்தாள்.
சாலொமோனின் வேலைக்காரர்கள் பணி
செய்யும் முறையையும், அவர்கள் ஆடைகள்
அணிந்திருக்கும் விதத்தையும் கவனித்தாள்.
அவள் சாலொமோனின் திராட்சைரசம்
பரிமாறுபவர்களையும் அவர்களது ஆடை
களையும் கவனித்தாள். கர்த்தருடைய ஆல
யத்தில் சாலொமோன் கொடுத்த தகனப
லிகளையும் கண்டாள். அனைத்தையும்
அவள் கண்டு வியப்பில் மூழ்கினாள்.
5 பிறகு அவள் சாலொமோன் அரசனிடம்,
"நான் உங்கள் அறிவைப்பற்றியும் அரிய
வேலைகளைப்பற்றியும் எனது நாட்டில்
கேள்விப்பட்டதெல்லாம் உண்மைதான்.
6 நான் இங்குவந்து என் கண்ணால் இவற்
றைக் காணும்வரை நம்பாமல் இருந்தேன்.
உங்கள் மகத்தான ஞானத்தில் பாதியளவுகூட
எனக்குச் சொல்லப்படவில்லை. நான்
கேள்விப்பட்டதை விடவும் நீங்கள் மகத்
தானவர்! 7 உங்கள் மனைவிகளும் அதிகாரிக
ளும் பாக்கியசாலிகள்! அவர்கள் உங்க
ளுக்குச் சேவைச் செய்யும்போது உங்கள்
ஞானத்தை அனுபவிக்கும் வாய்ப்பைப்
பெறுகின்றனர்! 8 உங்கள் தேவனாகிய
கர்த்தரைத் துதிப்போம். அவர் உங்களால்
மகிழ்கிறார். தமது சிங்காசனத்தில் உங்களை
அமரச்செய்திருக்கிறார். உங்கள் தேவன்

---

**மாதப்பிறப்பு** இது எபிரெய மாதத்தின் முதல் நாள். இந்நாட்களில் தேவனை தொழுதுகொள்ள சிறப்புக் கூட்டங்கள் இருந்தன.

*இஸ்ரவேலின் மீது அன்பு வைத்திருக்கிறார். அவர் என்றென்றும் இஸ்ரவேலுக்கு உதவுகிறார். இதனால்தான், நியாயமானதையும் சரியானதையும் செய்வதற்காகக் கர்த்தர் உங்களை இஸ்ரவேலின் அரசனாக்கியுள்ளார்" என்றாள்.*

9*பிறகு சீபா அரசி சாலொமோன் அரசனுக்கு 120 தாலந்து பொன்னையும் மிகுதியான உணவில் சேர்க்கும் நறுமணப் பொருட்களையும் இரத்தினங்களையும் கொடுத்தாள். சீபா அரசி கொடுத்தது போன்று சாலொமோன் அரசனுக்கு உணவில் சேர்க்கும் மிக உயர்ந்த நறுமணப் பொருட்களை யாரும் கொடுத்ததில்லை.*

10*ஈராமின் வேலைக்காரர்களும் சாலொமோனின் வேலைக்காரர்களும் ஓப்பீரிலிருந்து தங்கத்தைக் கொண்டுவந்தார்கள். அவர்கள் அங்கிருந்து வாசனை மரங்களையும் இரத்தின கற்களையும் கொண்டுவந்தனர்.*
11*அந்த வாசனை மரங்களால் கர்த்தருடைய ஆலயத்திற்கும் அரண்மனைக்கும் சாலொமோன் படிக்கட்டுகளை அமைத்தான். சாலொமோன் அம்மரத்தால் பாடகர்களுக்காகச் சுரமண்டலங்களையும் தம்புருக்களையும் செய்தான். யூதா நாட்டிலே வாசனை மரங்களால் செய்யப்பட்ட பொருட்கள் இவைபோன்று இதற்கு முன்பு இருந்ததை எவரும் பார்த்ததில்லை.*

12*சாலொமோன் அரசன் சீபா அரசிக்கு அவள் விரும்பியதையும் கேட்டவற்றையும் கொடுத்தான். அவள் அவனுக்குக் கொடுத்தவற்றைவிட அதிக அளவில் அவன் அவளுக்கு கொடுத்தான். பிறகு சீபா அரசியும் அவளது வேலைக்காரர்களும் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் தம் நாட்டிற்குத் திரும்பிச்சென்றார்கள்.*

### சாலொமோனின் பெரும் செல்வம்

13*ஓராண்டு காலத்திற்குள் சாலொமோன் அறுநூற்று அறுபத்தாறு தாலந்துப் பொன்னைப் பெற்றான்.*
14*பயணம்செய்யும் வியாபாரிகளும் வணிகர்களும் மேலும் அதிகமான பொன்னைக் கொண்டுவந்தனர். அரேபியாவின் எல்லா அரசர்களும் நிலங்களை ஆள்பவர்களும் சாலொமோனுக்கு பொன்னையும் வெள்ளியையும் கொண்டுவந்து கொடுத்தனர்.*
15*சாலொமோன் அடித்த பொன் தகட்டால் 200 பெரிய கேடயங்களைச் செய்தான். ஒவ்வொரு கேடயமும் 600 சேக்கல் எடை கொண்டதாக இருந்தது.*
16*சாலொமோன் அரசன், அடித்த பொன் தகட்டால் 300 சிறிய கேடயங்களைச் செய்தான். ஒவ்வொரு கேடயமும் 300 சேக்கல் பொன் எடையுள்ளதாக இருந்தது. சாலொமோன் இவற்றை லீபனோனின் காட்டு அரண்மனையில் வைத்தான்.*

17*சாலொமோன் அரசன் தந்தத்தால் ஒரு பெரிய சிங்காசனத்தைச் செய்தான். அவன் அதனை பரிசுத்த தங்கத்தால் மூடினான்.*
18*அந்த சிங்காசனம் 6 படிகட்டுகளைக் கொண்டது. அதற்குத் தங்கத்தாலான பாதப்படியும் இருந்தது. சிங்காசனத்தின் இருக்கையின் இரண்டு பக்கங்களிலும் கை சாய்மானங்கள் வைக்கப்பட்டன. இந்த இரண்டு சாய்மானங்களுக்கும் கீழே சிங்கத்தின் உருவங்கள் நிறுத்தப்பட்டன.*
19*ஆறு படிக்கட்டுகளிலும் 12 சிங்கங்களின் உருவங்கள் வைக்கப்பட்டன. ஒவ்வொரு படிக்கட்டின் ஒவ்வொரு பக்கத்திலும் ஒவ்வொரு சிங்கம் இருந்தது. எந்த அரசாங்கத்திலும் இதுபோன்ற சிங்காசனம் இருந்ததில்லை.*
20*சாலொமோன் அரசனது அனைத்து தண்ணீர் கோப்பைகளும் தங்கத்தால் செய்யப்பட்டிருந்தன. லீபனோனில் உள்ள வனமாளிகையில் உள்ள பொருட்கள் அனைத்தும் தூயபொன்னால் செய்யப்பட்டிருந்தன. சாலொமோனின் காலத்தில் வெள்ளியானது விலைமதிப்புள்ளதாகக் கருதப்படவில்லை.*
21*தார்ஷிஸ் என்னும் நகருக்குச் செல்ல சாலொமோனிடம் கப்பல்கள் இருந்தன. சாலொமோனின் கப்பல்களை ஈராமின் ஆட்கள் செலுத்தினர். மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை கப்பல்கள் தங்கம், வெள்ளி, தந்தம், குரங்கு, மயில் போன்றவற்றோடு தார்ஷிஸிலிருந்து திரும்பிவந்தன.*

22*பூமியில் உள்ள மற்ற அரசர்களைவிட செல்வத்திலும் ஞானத்திலும் சாலொமோன் பெரியவனாக இருந்தான்.*
23*பூமியிலுள்ள அனைத்து அரசர்களும் சாலொமோனிடம் வந்து அவனது ஆலோசனைகளைக் கேட்டனர். தேவன் அவனுக்கு ஞானத்தைக் கொடுத்தார்.*
24*ஒவ்வொரு ஆண்டும் அரசர்கள் சாலொமோனுக்கு அன்பளிப்புகளைக் கொண்டுவந்தனர். அவர்கள் வெள்ளியாலானப் பொருட்கள், தங்கத்தாலானப் பொருட்கள், துணிகள், ஆயுதங்கள், மணப் பொருட்கள், குதிரைகள், கோவேறு கழுதைகள் ஆகியவற்றைக் கொண்டுவந்தனர்.*

25*சாலொமோனிடம் இரதங்களையும் குதிரைகளையும் நிறுத்திவைக்க 4,000 லாயங்கள் இருந்தன. அவனிடம் 12,000 இரதம் ஓட்டுபவர்கள் இருந்தனர். சாலொமோன் இரதங்களை அவற்றுக்குரிய சிறப்பு நகரங்களிலும் தன்னுடன் எருசலேமிலும் வைத்திருந்தான்.*
26*ஐபிராத்து ஆறுமுதல் பெலிஸ்தரின் நாடுவரைக்கும் எகிப்தின் எல்லைவரைக்கும் உள்ள அனைத்து அரசர்களையும் சாலொமோன் ஆண்டான்.*
27*எருசலேமிலே அரசன் சாலொமோனிடம் கற்களைப்போன்று ஏராளமான வெள்ளி இருந்தது. பள்ளத்தாக்குகளிலே உள்ள காட்டத்தி மரங்களைப் போன்று சாலொமோனிடம் கேதுரு மரங்கள் இருந்தன.*
28*எகிப்திலிருந்தும் மற்ற நாடுகளில் இருந்தும் ஜனங்கள் சாலொமோனுக்குக்குதிரைகளை கொண்டுவந்தனர்.*

### சாலொமோனின் மரணம்

29தொடக்கக் காலமுதல் இறுதிவரை
சாலொமோன் செய்த மற்ற செயல்களைப்
பற்றிய குறிப்புகள் தீர்க்கதரிசியான நாத்தா
னின் எழுத்துக்களிலும் சீலோவின் அகியா
வினது தீர்க்கதரிசனங்களிலும் நோபாத்தின்
மகனாகிய யெரொபெயாமைப்பற்றி எழுதிய
ஞானதிருஷ்டிக்காரனாகிய இத்தோவினது
தரிசனங்களிலும் உள்ளன. 30எருசலேமில்
சாலொமோன் 40 ஆண்டுகள் இஸ்ரவேலின்
அரசனாக இருந்தான். 31பிறகு அவன் தன்
முற்பிதாக்களோடு நித்திரையடைந்தான்.
அவனுடைய தந்தையாகிய தாவீதின் நகரத்
திலேயே ஜனங்கள் அவனை அடக்கம்
செய்தனர். சாலொமோனது இடத்தில் அவ
னது மகனான ரெகொபெயாம் அரசன்
ஆனான்.

### ரெகொபெயாம் முட்டாள்தனமாக நடந்துக்கொள்கிறான்

10 இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரும்
ரெகொபெயாமை அரசனாக்க விரும்
பியதால் அவன் சீகேம் நகரத்திற்குப்
போனான். 2யெரொபெயாம், சாலொமோ
னுக்கு அஞ்சி ஓடி எகிப்தில் இருந்தான்.
அவன் நேபாத்தின் மகன். ரெகொபெயாம்
புதிய அரசனாகப்போகிற செய்தியை
யெரொபெயாம் கேள்விப்பட்டான். எனவே
யெரொபெயாம் எகிப்திலிருந்து திரும்பிவந்
தான். 3இஸ்ரவேல் ஜனங்கள் யெரொ
பெயாமைத் தங்களோடு வரும்படி அழைத்
தனர். பிறகு யெரொபெயாமும் இஸ்ரவேல்
ஜனங்களும் ரெகொபெயாமிடம் சென்றனர்.
அவர்கள் அவனிடம், "ரெகொபெயாம்,
4உனது தந்தை எங்கள் வாழ்க்கையைக்
கடினமாக்கிவிட்டார். இது பெரிய
பாரத்தைச் சுமப்பதுபோல் உள்ளது. இப்
பாரத்தை எளிதாக்கும். பிறகு நாங்கள்
உமக்கு சேவைச்செய்வோம்" என்றனர்.
5ரெகொபெயாம் அவர்களிடம், "மூன்று
நாட்களுக்குப் பிறகு என்னிடம் திரும்பி
வாருங்கள்" என்றான். எனவே எல்லோரும்
புறப்பட்டுச் சென்றார்கள்.
6பிறகு அரசன் ரெகொபெயாம் தன்
தந்தையான சாலொமோனுடன் கூடவே
இருந்த மூத்த பெரியவர்களுடன் கலந்து
ஆலோசித்தான். அவர்களிடம் அவன், "இந்த
ஜனங்களுக்கு நான் என்ன பதில்
சொல்லவேண்டும்?" என்று கேட்டான்.
7அம்முதியவர்கள் அவனிடம், "நீங்கள்
அந்த ஜனங்களோடு கருணையோடு இருந்
தால், அவர்கள் மனம் மகிழும்படி செய்
யுங்கள். நல்லமுறையில் பேசுங்கள் பின்
அவர்கள் உங்களுக்கு என்றென்றும் சேவை
செய்வார்கள்" என்றனர்.
8ஆனால் ரெகொபெயாம் முதியவர்கள்
சொன்ன ஆலோசனைகளை ஏற்றுக்கொள்ள
வில்லை. அவன் தன்னோடு வளர்ந்து
தனக்குச் சேவை செய்துவரும் இளைஞர்களி
டம் ஆலோசனை கேட்டான். 9அவர்களிடம்
அவன், "நீங்கள் என்ன ஆலோசனை கூறுகி
றீர்கள். அவர்களுக்கு நான் என்ன பதில்
சொல்லவேண்டும்? நான் அவர்களின்
வேலை பாரத்தைக் குறைக்கவேண்டும்
எனக்கேட்கிறார்கள். என் தந்தை அவர்கள்
மேல் சுமத்திய பாரத்தை குறைக்க வேண்டும்
என்று விரும்புகிறார்கள்" என்று கேட்
டான்.
10ரெகொபெயாமோடு வளர்ந்த இளைஞர்
களோ அவனிடம், "உன்னுடன் பேசிய
ஜனங்களிடம் நீ சொல்ல வேண்டியது
இதுதான். ஜனங்கள் உன்னிடம், 'உங்கள்
தந்தை எங்கள் வாழ்க்கையைக் கடினமாக்கி
விட்டார். இது பெருஞ்சுமையை சுமப்பது
போல் உள்ளது. ஆனால் நீங்கள் அந்தச்
சுமையைக் குறைக்கவேண்டும் என்று
விரும்புகிறோம்' என்று சொன்னார்கள்.
ஆனால் அவர்களுக்கு இந்தப் பதிலைத்தான்
நீ கூறவேண்டும். 'எனது சுண்டு விரலானது
என் தந்தையின் இடுப்பைவிட பெரியது!
11என் தந்தை உங்கள் மீது பெருஞ்சுமையை
ஏற்றினார். நானோ அதைவிடப் பெருஞ்
சுமையை ஏற்றுவேன். என் தந்தை உங்
களைச் சவுக்கினால் தண்டித்தார். நானோ
கூரான உலோக முனைகளைக் கொண்ட
சவுக்கினால் உங்களைத் தண்டிப்பேன்'
என்று கூறு" என்று ஆலோசனை வழங்கி
னர்.
12மூன்று நாட்களுக்குப் பிறகு யெரொ
பெயாமும் இஸ்ரவேல் ஜனங்களும் ரெகொ
பெயாமிடம் வந்தனர். அரசன் ரெகொ
பெயாம், "மூன்று நாட்களுக்குப் பிறகு
வாருங்கள்" என்று அவர்களிடம் சொல்லி
இருந்தான். 13பிறகு ரெகொபெயாம் அரசன்
அவர்களோடு மிகக் கடுமையாகப்
பேசினான். முதியவர்கள் சொன்ன ஆலோச
னையை ஏற்றுக்கொள்ளவில்லை. 14ரெகொ
பெயாம் அரசன் இளைஞர்கள் ஆலோசனை
சொன்னபடியே பேசினான். அவன், "என்
தந்தை உங்கள் சுமையை அதிகமாக்கினார்.
நான் அதைவிட அதிகமாக்குவேன். அவர்
உங்களைச் சவுக்கால் தண்டித்தார். நானோ
கூரான உலோக முனைகளைக் கொண்ட
சவுக்கினால் உங்களைத் தண்டிப்பேன்"
என்றான். 15எனவே அரசன் ரெகொபெயாம்
ஜனங்கள் கூறியதைக் கேட்கவில்லை.
இம்மாற்றங்கள் தேவனிடமிருந்து வந்ததி
னால் அவன் ஜனங்கள் கூறியதைக்
கேட்கவில்லை. தேவன் இந்த விளைவை
ஏற்படுத்தினார். அகியாவின் மூலமாக
யெரொபெயாமுடன் கர்த்தர் பேசிய அவரது
வார்த்தை உண்மையாகும்படி இது நடந்தது.
அகியா சிலோனிய ஜனங்களிடமிருந்து
வந்தவன். யெரொபெயாம் நேபாத்தின் மகன்.
16இஸ்ரவேல் ஜனங்கள் தம் அரசனான
ரெகொபெயாம் தமது வார்த்தைகளை

ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைக் கண்ட
னர். பிறகு அவர்கள் அரசனிடம், "நாங்க
ளும் தாவீது குடும்பத்தைச் சேர்ந்தவர்களா?
ஈசாயின் நிலத்தின் நாங்கள் ஏதாவது
பெற்றோமா? எனவே இஸ்ரவேலராகிய நாம்
நமது வீடுகளுக்குப் போவோம். தாவீதின்
மகன் தன் சொந்த ஜனங்களை ஆண்டு
கொள்ளட்டும்!" என்றனர். பிறகு இஸ்ரவேல்
ஜனங்கள் தமது வீடுகளுக்குத் திரும்பினார்
கள். [17]ஆனால் யூத நகரங்களில் இஸ்ரவேல்
ஜனங்கள் பலர் இருந்தனர். ரெகொபெயாம்
அவர்களை ஆண்டுவந்தான்.

[18]கட்டாயமாக வேலைசெய்ய வேண்டும்
என நியமிக்கப்பட்ட ஜனங்களுக்கெல்லாம்
அதோனிராம் பொறுப்பாளியாக இருந்தான்.
அவனை ரெகொபெயாம் இஸ்ரவேல் ஜனங்க
ளிடம் அனுப்பிவைத்தான். ஆனால் அவனை
இஸ்ரவேல் ஜனங்கள் கல்லெறிந்து
கொன்றனர். ரெகொபெயாம் ஓடிப்போய்
தேரில் ஏறிக்கொண்டான். அவன் தப்பித்து
எருசலேமிற்கு ஓடினான். [19]அன்று முதல்
இன்றுவரை இஸ்ரவேல் ஜனங்கள் தாவீதின்
குடும்பத்துக்கு எதிராகவே இருந்து
வருகின்றனர்.

11 ரெகொபெயாம் எருசலேம் வந்தபோது
1,80,000 சிறந்த வீரர்களை அணி
திரட்டினான். இவ்வீரர்களை யூதா மற்றும்
பென்யமீன் ஆகிய கோத்திரங்களிடமிருந்து
அணி திரட்டினான். இஸ்ரவேலர்களுக்கு
எதிராகச் சண்டையிடவே அவர்களை
அணி திரட்டினான். இதன் மூலம் அவர்
களை தன் ஆட்சிக்குள் வைத்திருக்க முடியும்
என்று நம்பினான். [2]ஆனால் கர்த்தரிடமி
ருந்து ஒரு செய்தி செமாயாவிற்கு வந்தது.
அவன் தேவனுடைய மனிதன். கர்த்தர்
அவனிடம், [3]"யூதாவின் அரசனாகிய
சாலொமோனின் மகன் ரெகொபெயாமிட
மும், இஸ்ரவேலிலும், யூதாவிலும்,
பென்யமீனிலும் உள்ள ஜனங்களிடமும் கூறு
என்று [4]கர்த்தர் சொன்ன செய்திகள் இவை
தான்: 'உன் சகோதர்களோடு நீ சண்டை
போடாதே! ஒவ்வொருவரையும் தம் சொந்த
வீட்டுக்குப் போகவிடு. நான் இவ்வாறு
நிகழும்படிச் செய்தேன்.'" எனவே ரெகொ
பெயாமும் அவனது படையும் கர்த்தருடைய
வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து திரும்பிவந்தது.
அவர்கள் யெரொபெயாமைத் தாக்கவில்லை.

### ரெகொபெயாம் யூதாவை பலப்படுத்துகிறான்

[5]ரெகொபெயாம் எருசலேமில் வாழ்ந்தான்.
தாக்குதல்களில் இருந்து தப்பிக்க யூதாவில்
அவன் பலமான நகரங்களை நிர்மாணித்
தான். [6]அவன் பெத்லேகம், ஏத்தாம், தெக்
கொவா, [7]பெத்சூர், சோகோ அதுல்லாம்,
[8]காத்து, மரேஷா, சீப்பு, [9]அதோராயீம்,
லாகீசு, அசேக்கா, [10]சோரா ஆயிலோன்,
எப்ரோன் ஆகிய நகரங்களைச் செப்பனிட்
டான். யூதாவிலும் பென்யமீனிலுமிருந்த
இந்த நகரங்கள் பலப்படுத்தப்பட்டன.
[11]ரெகொபெயாம் இவற்றைப் பலப்படுத்திய
பிறகு அவற்றில் தலைவர்களை நியமித்தான்.
அவர்களுக்கு உணவு, எண்ணெய், திராட்
சைரசம் போன்றவற்றை விநியோகித்தான்.
[12]இவன் ஈட்டிகளையும் கேடயங்களையும்
வைத்து அந்நகரங்களைப் பலப்படுத்தினான்.
யூதா, பென்யமீன் ஆகிய நாடுகளின் நகரங்
களையும் ஜனங்களையும் தன் ஆட்சிக்குள்
வைத்திருந்தான்.

[13]இஸ்ரவேலில் உள்ள அனைத்து ஆசா
ரியர்களும் லேவியர்களும் ரெகொபெயா
மோடு சேர்ந்துகொண்டு அவனுக்கேற்றவர்
கள் ஆனார்கள். [14]லேவியர்கள் தம் புல்
வெளிகளையும் வயல்களையும் விட்டுவிட்டு
யூதாவுக்கும் எருசலேமிற்கும் வந்தனர்.
காரணம் யெரொபெயாமும் அவனது மகன்
களும் லேவியர்கள். கர்த்தருக்கு ஆசாரியர்
களாக சேவைச் செய்வதை மறுத்தனர்.
[15]யெரொபெயாம் தன் சொந்த ஆசாரியர்க
ளையே மேடைகளில்* பலிசெலுத்த தேர்ந்
தெடுத்தான். அவன் செய்த ஆடு மற்றும்
கன்றுக்குட்டியின் விக்கிரகங்களை அந்த
மேடைகளில் அமைத்தான். [16]லேவியர்கள்
இஸ்ரவேலைவிட்டு விலகியதும், இஸ்ர
வேலின் தேவனாகிய கர்த்தர் மீது
நம்பிக்கைகொண்ட இஸ்ரவேலின் அனைத்
துக் கோத்திரங்களிலுமிருந்த ஜனங்களும்
எருசலேமுக்கு வந்தார்கள். அவர்கள் தங்க
ளது முன்னோர்களின் தேவனாகிய கர்த்த
ருக்கு காணிக்கை செலுத்த எருசலேமுக்கு
வந்தார்கள். [17]அவர்கள் யூத அரசைப்
பலமுள்ளதாக்கினார்கள். அவர்கள் மூன்று
ஆண்டு காலத்திற்குச் சாலொமோனின் மக
னான ரெகொபெயாமிற்கு உதவினார்கள்.
அவர்கள் இக்காலகட்டத்தில் தாவீதைப்
போலவும் சாலெமோனைப்போலவும்
வாழ்ந்ததால் இவ்வாறு செய்தனர்.

### ரெகொபெயாமின் குடும்பம்

[18]ரெகொபெயாம் மகலாத் என்னும்
பெண்ணை மணந்தான். அவளது தந்தை
எரிமோத். அவளது தாய் அபியாயேல்.
எரிமோத் தாவீதின் மகன். அபியாயேல்
எலியாப்பின் மகள். எலியாப் ஈசாயின்
மகன். [19]மகலாத் ரெகொபெயாமிற்கு ஏயூஸ்,
சமரியா சாகாம் என்னும் மகன்களைப்
பெற்றாள். [20]பிறகு ரெகொபெயாம் மாக்கா
என்னும் பெண்ணையும் மணந்தான். அவள்
அப்சலோமின் பேத்தி. இவள் இவனுக்கு
அபியா, அத்தாயி, சீசா, செலேமித் ஆகி
யோரைப் பெற்றாள். [21]ரெகொபெயாம் தனது
மற்ற மனைவியரையும் வேலைக்காரிகளை
யும் விட மாக்காவைப் பெரிதும் நேசித்தான்.

---

**மேடைகள்** தொழுதுகொள்ளுவதற்குரிய இடங்கள்.

அவனுக்கு 18 மனைவியரும் 60 வேலைக்
காரிகளும் இருந்தனர். இவனுக்கு 28
மகன்களும் 60 மகள்களும் இருந்தனர்.
22ரெகொபெயாம் அபியாவைத் தனது
சகோதர்களுக்கும் மேலான தலைவனாகத்
தேர்ந்தெடுத்தான். அவன் இவனை அரச
னாக்க விரும்பியதால் இவ்வாறு செய்தான்.
23ரெகொபெயாம் புத்திசாலித்தனமாகத் தன்
மகன்களை யூதா மற்றும் பென்யமீன் ஆகிய
நாடுகளில் பரவலாக ஒவ்வொரு பலமான
நகரத்திலும் இருக்கும்படி செய்தான். அவர்
களுக்கு வேண்டியவற்றை விநியோகம்
செய்தான். அவர்களுக்குத் திருமணம் செய்து
வைத்தான்.

### எகிப்தின் அரசனான சீஷாக் எருசலேமைத் தாக்குகிறான்

12 ரெகொபெயாம் ஒரு பலமிக்க அரசன்
ஆனான். அவன் தனது ஆட்சியையும்
பலமுள்ளதாக்கினான். பின்னர் அவனும்
அவனது யூதா கோத்திரத்தினரும் கர்த்தரு
டைய சட்டங்களுக்குக் கீழ்ப்படிய மறுத்த
னர். 2சீஷாக் எருசலேம் நகரத்தை
ரெகொபெயாமின் ஐந்தாவது ஆட்சியாண்
டில் தாக்கினான். இவன் எகிப்தின் அரசன்.
ரெகொபெயாமும் அவனது ஆட்சிகளும்
கர்த்தருக்கு உண்மையுள்ளவர்களாக இல்லாத
தால் இவ்வாறு நடந்தது. 3சீஷாக்கிடம் 12,000
இரதங்களும் 60,000 குதிரை வீரர்களும்
எவராலும் எண்ணிக்கையிட முடியாத
அளவுடைய படைவீரர்களும் இருந்தனர்.
இவனது பெரியப் படையில் லிபியன்
வீரர்களும் சூக்கிய வீரர்களும் எத்தோப்பிய
வீரர்களும் இருந்தனர். 4சீஷாக் யூதாவிலுள்ள
பலமிக்க நகரங்களை வென்றான். பிறகு
தனது படையை எருசலேமிற்குக் கொண்டு
வந்தான்.
5பிறகு செமாயா எனும் தீர்க்கதரிசி
ரெகொபெயாமிடமும் யூதத் தலைவர்களிட
மும் வந்தான். அந்த யூதத் தலைவர்கள்
எருசலேமில் கூடியிருந்தனர். ஏனென்றால்
அவர்கள் சீஷாக்குக்குப் பயந்தனர். செமாயா
அவர்களிடம், "கர்த்தரால் சொல்லப்பட்டது
இதுதான்: 'ரெகொபெயாம்! நீயும் உனது
ஜனங்களும் என்னைவிட்டு விலகி எனது
சட்டங்களுக்கு கீழ்ப்படிய மறுத்துவிட்டீர்
கள். எனவே இப்போது உன்னைவிட்டு
நான் விலகி நான் உங்களைச் சீஷாக்கின்
கையில் அகப்படச் செய்வேன்'" என்றான்.
6பிறகு யூதத் தலைவர்களும் ரெகொ
பெயாம் அரசனும் வருத்தத்துடனும் பணி
வுடனும் இருந்தனர். "கர்த்தர் சொல்வது
சரிதான்" என்றனர்.
7யூதத் தலைவர்களும் அரசனும் அடங்கிப்
போனதைக் கர்த்தர் கவனித்தார். பிறகு
கர்த்தரிடமிருந்து செமாயாவுக்குச் செய்தி
வந்தது. கர்த்தர் செமாயாவிடம், "யூதத்
தலைவர்களும் அரசனும் அடக்கமாயினர்.
எனவே நான் அவர்களை அழிக்க
மாட்டேன். நான் விரைவில் அவர்களைக்
காப்பேன். எனது கோபத்தை தீர்க்க
சீஷாக்கை எருசலேமின் மீது அனுப்பமாட்
டேன். 8ஆனால் எருசலேம் ஜனங்கள்
சீஷாக்கின் வேலைக்காரர்கள் ஆவார்கள்.
இதனால் அவர்களுக்கு எனக்கு சேவைச்
செய்வதற்கும் மற்ற தேசத்து அரசர்களுக்கு
சேவைச்செய்வதற்கும் உள்ள வேறுபாடு
புரியும்" என்றார்.
9சீஷாக் எருசலேமைத் தாக்கினான். கர்த்த
ருடைய ஆலயத்தில் இருந்த கருவூலத்தைக்
கைப்பற்றிக்கொண்டான். அரண்மனையில்
இருந்த கருவூலத்தையும் கைப்பற்றிக்கொண்
டான். அவன் அனைத்தையும் எடுத்துக்
கொண்டு வெளியேறினான். சாலொமோன்
செய்த தங்கக் கேடயங்களையும் எடுத்துக்
கொண்டான். 10அவற்றுக்குப்பதிலாக ரெகொ
பெயாம் அரசன் வெண்கல கேடயங்களைச்
செய்தான். அக்கேடயங்களை ரெகொ
பெயாம் அரண்மனை வாசல் காவல்காரர்
களின் தலைவர்கள் கையில் கொடுத்தான்.
11அரசன் கர்த்தருடைய ஆலய வாசலுக்குள்
நுழையும்போது காவலர்கள் வந்து கேடயங்
களை எடுத்துக்கொண்டு வருவார்கள். பிறகு
அவர்கள் அக்கேடயங்களைத் தம் அறை
யிலே வைத்து பூட்டிவிடுவார்கள்.
12ரெகொபெயாம் தனக்குள்ளே அடக்கமா
கத் தாழ்வாக இருந்தபோது கர்த்தர் அவன்
மீதுள்ள கோபத்தை விலக்கிக்கொண்டார்.
எனவே, கர்த்தர் ரெகொபெயாமை முழுவ
துமாக அழிக்கவில்லை. ஏனென்றால் யூதா
வில் சிலவற்றை நன்மையானதாகக் கண்
டார்.
13ரெகொபெயாம் தன்னை எருசலேமில்
பலமுள்ள அரசனாக ஆக்கிக்கொண்டான்.
இவன் அரசனாகும்போது 41 வயது. இவன்
எருசலேமில் 17 ஆண்டுகள் அரசனாக
இருந்தான். இந்நகரம் கர்த்தரால் இஸ்ரவேல்
கோத்திரங்களில் எல்லாம் சிறந்ததாகத்
தேர்ந்தெடுக்கப்பட்டது. கர்த்தர் தனது
பெயரை எருசலேமில் விளங்கும்படி
செய்தார். ரெகொபெயாமின் தாய் நாமாள்.
நாமாள் அம்மோன் நாட்டிலிருந்து வந்தவள்.
14ரெகொபெயாம் தீயச்செயல்களைச் செய்
தான். ஏனென்றால் அவனது மனதில்
கர்த்தருக்கு ஊழியம் செய்யவேண்டும் என்ற
எண்ணம் இல்லை.
15ரெகொபெயாம் தொடக்கக் காலமுதல்,
ஆட்சியின் இறுதிவரை செய்தச் செயல்க
ளெல்லாம் தீர்க்கதரிசியான செமாயா மற்றும்
ஞானதிருஷ்டிக்காரனான இத்தோ ஆகி
யோரின் எழுத்துக்களில் உள்ளன. இவர்கள்
குடும்ப வரலாறுகளை எழுதினார்கள்.
ரெகொபெயாமுக்கும், யெரொபெயாமுக்கும்
அவர்கள் இருவரும் ஆட்சிபுரிந்தக் காலம்
முழுவதும் போர் நடந்தது. 16ரெகொபெயாம்

மரித்து தன் முற்பிதாக்களோடு சேர்ந்தான்.
அவனைத் தாவீதின் நகரத்திலே அடக்கம்
செய்தனர். பிறகு ரெகொபெயாமின் மகன்
அபியா புதிய அரசனானான்.

### யூதாவின் அரசனான அபியா

13 இஸ்ரவேலில் யெரொபெயாமின்
18வது ஆட்சியாண்டில், அபியா
யூதாவின் புதிய அரசனானான். 2அபியா
எருசலேமில் 3 ஆண்டுகள் அரசனாக
இருந்தான். அபியாவின் தாய் மாக்கா
ஆவாள். மாக்கா ஊரியேலின் மகள்.
ஊரியேல் கிபியா என்னும் ஊரைச்
சேர்ந்தவன். அபியாவிற்கும் யெரொ
பெயாமிற்கும் சண்டை ஏற்பட்டது.
3அபியாவின் படையில் 4,00,000 பலமிக்க
வீரர்கள் இருந்தனர். அவர்களை அபியா
போரில் ஈடுபடுத்தினான். யெரொபெயாமின்
படையில் 8,00,000 வீரர்கள் இருந்தனர்.
யெரொபெயாம் அபியாவோடு போரிடத்
தயரானான்.
4பிறகு அபியா மலைநாடான
எப்பிராயீமில் செமராயீம் என்னும் மலை
மீது ஏறி நின்றான். அபியா, “யெரொ
பெயாமே! இஸ்ரவேல் ஜனங்களே! நான்
சொல்வதைக் கேளுங்கள். 5இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தர் தாவீதிற்கும் அவரது
பிள்ளைகளுக்கும் இஸ்ரவேல் அரசனாக
என்றென்றைக்கும் இருக்கும்படியான உரி
மையைக் கொடுத்திருக்கிறார் என்பது
உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.
தேவன் இந்த உரிமையை தாவீதிற்கு மாறாத
உடன்படிக்கையாகக் கொடுத்திருக்கிறார்.
6ஆனால் யெரொபெயாம் தன் எஜமானுக்கு
எதிராகிவிட்டான். நேபாத்தின் மகனான
யெரொபெயாம் சாலொமோனின் வேலைக்
காரர்களில் ஒருவன். சாலொமோன் தாவீதின்
மகன். 7பயனற்ற மோசமான நண்பர்களோடு
சேர்ந்து யெரொபெயாம் சாலொமோனின்
மகனான ரெகொபெயாமுக்கு எதிரானான்.
அவன் இளைஞனாகவும் அனுபவம் இல்லாத
வனாகவும் இருந்தான். அதனால் அவனால்
யெரொபெயாமையும் அவனது தீய நண்பர்
களையும் தடுக்கமுடியவில்லை.
8“இப்போது யெரொபெயாமாகிய நீயும்
இஸ்ரவேல் ஜனங்களும் கர்த்தருடைய
அரசாட்சிக்கு எதிராகத் திட்டமிடுகிறீர்கள்.
கர்த்தருடைய அரசாங்கம் தாவீதின் சந்ததி
யாருக்கு உரியது. உங்களில் அனேகம்
பேர் யெரொபெயாமால் செய்யப்பட்ட
பொன் கன்றுக் குட்டிகளை தெய்வங்களாக
வழிபடுகின்றீர்கள். 9நீங்கள் கர்த்தருடைய
ஆசாரியர்களையும் லேவியர்களையும் விரட்
டிவிட்டீர்கள். ஆசாரியர்கள் அனைவரும்
ஆரோனின் சந்ததியினர். நீங்கள் உங்கள்
ஆசாரியர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டீர்
கள். இதைத்தான் மற்ற நாட்டினரும்
செய்கின்றனர். ஒரு காளைக்கன்றுக் குட்டி
யுடன் அல்லது ஏழு செம்மறியாட்டுக்
கடாக்களுடன் தன்னைப் பரிசுத்தப் படுத்திக்
கொள்ள வருகிற எவனும் ‘தெய்வங்கள்
இல்லாத உருவச்சிலைகளுக்கு’ ஆசாரியனா
கலாம்.
10“ஆனால் எங்களுக்கோ கர்த்தரே தேவன்.
யூத ஜனங்களாகிய நாங்கள் தேவனுக்கு
கீழ்ப்படிய மறுக்கவில்லை. நாங்கள் அவரை
விட்டு விலகவில்லை. கர்த்தருக்குச் சேவை
செய்கிற ஆசாரியர்கள் அனைவரும்
ஆரோனின் சந்ததிகளே. மேலும் கர்த்தருக்
குச் சேவைசெய்ய ஆசாரியர்களுக்கு லேவி
யர்கள் உதவுகிறார்கள். 11அவர்கள் தகனபலி
செலுத்துவார்கள். ஒவ்வொருநாள் காலையி
லும் மாலையிலும் கர்த்தருக்கு நறுமணப்
பொருட்களை எரிக்கிறார்கள். ஆலயத்தில்
பரிசுத்தமான மேஜையின்மேல் சமூகத்தப்பங்
களை அடுக்கிவைக்கிறார்கள். ஒவ்வொரு
நாள் மாலையில் விளக்கை அதற்குரிய
தங்கத் தண்டின்மேல் ஏற்றிவைக்கிறார்கள்.
எனவே அது ஒவ்வொரு மாலைப் பொழுதி
லும் வெளிச்சத்துடன் பிரகாசிக்கிறது. எங்
கள் தேவனாகிய கர்த்தருடைய கட்டளை
களுக்கு கீழ்ப்படிவோம். ஆனால் யெரொ
பெயாமாகிய நீயும் இஸ்ரவேல் ஜனங்களும்
கர்த்தருக்கு கீழ்ப்படியவில்லை. நீங்கள்
அவரைவிட்டு விலகிவிட்டீர்கள். 12தேவன்
தாமே எங்களோடு இருக்கிறார். அவரே
எங்களை ஆள்பவர். அவரது ஆசாரியர்களே
எங்களோடு இருக்கின்றனர். தேவனுடைய
ஆசாரியர்கள் எக்காளங்களை ஊதி
உங்களுக்கு எதிராகப் போரிட அழைத்தனர்.
இஸ்ரவேல் ஜனங்களே உங்கள் முற்
பிதாக்களின் தேவனாகிய கர்த்தருக்கு
எதிராகப் போர் செய்யாதீர்கள். ஏனென்றால்
உங்களால் வெற்றிபெற இயலாது” என்றான்.
13ஆனால் யெரொபெயாம் ஒரு படைக்கு
ழுவை அபியாவின் படைக்குப் பின்புற
மாக அனுப்பினான். யெரொபெயாமின்
படையோ அபியாவிற்கு முன்னால் இருந்
தது. மறைவாகச்சென்ற படைக்குழுவோ
அபியாவின் படைக்குப் பின்னால் இருந்தது.
14அபியாவின் படைவீரர்கள் தம்மைச்
சுற்றிப்பார்த்தபோது யெரொபெயாமின்
படைவீரர்கள் சுற்றி நின்று முன்னும்
பின்னும் தாக்குவதைக் கண்டனர் உடனே
யூத ஜனங்கள் கர்த்தரை நோக்கிக்
கூப்பிட்டார்கள். ஆசாரியர்கள் எக்காளங்
களை ஊதினார்கள். 15பின்னர் அபியாவின்
படையிலுள்ள ஜனங்கள் ஆர்ப்பரித்தனர்.
யூத ஜனங்கள் ஆர்ப்பரித்தபோது தேவன்
யெரொபெயாமைத் தோற்கடித்தார். யெரொ
பெயாமின் இஸ்ரவேல் படைவீரர்களை,
அபியாவின் யூதப்படை தோற்கடித்தது.
16இஸ்ரவேல் ஆண்கள், யூதாவின் ஆண்களை
விட்டு ஓடிப்போனார்கள். இஸ்ரவேல் படை
களைத் தோற்கடிக்க தேவன் யூதப் படை
களை அனுமதித்தார். 17அபியாவும் அவனு

டைய படைவீரர்களும் இஸ்ரவேல் படை
வீரர்களைத் தோற்கடித்து 5,00,000 வீரர்
களைக் கொன்றுவிட்டனர். 18இவ்வகையில்
இஸ்ரவேல் ஜனங்கள் தோற்கடிக்கப்பட்டனர்.
யூத ஜனங்கள் வென்றனர். யூதப்படை
வென்றதற்கான காரணம் அவர்கள் தம்
முற்பிதாக்களின் தேவனாகிய கர்த்தரைச்
சார்ந்திருந்ததுதான்.
19அபியாவின் படை யெரொபெயாமின்
படையைத் துரத்திச்சென்றது. அபியாவின்
படை பெத்தேல், எஷானா, எப்பெரோன்
ஆகிய நகரங்களையும் அவற்றைச் சுற்றி
யுள்ள கிராமங்களையும் கைப்பற்றினார்கள்.
20அபியா உயிரோடு இருந்தவரை யெரொ
பெயாம் பலமுள்ளவனாக ஆக முடிய
வில்லை. கர்த்தர் தாமே யெரொபெயாமைக்
கொன்றார். 21ஆனால் அபியா பலமுள்ளவன்
ஆனான். அவன் 14 பெண்களை மணந்துக்
கொண்டான். 22 மகன்களுக்கும் 16 மகள்
களுக்கும் தந்தையானான். 22அபியாவின்
மற்ற செயல்கள் இத்தோ தீர்க்கதரிசியின்
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன.

14 அபியா தன் முற்பிதாக்களோடு
சேர்க்கப்பட்டான். ஜனங்கள் அவ
னைத் தாவீதின் நகரத்திலே அடக்கம்
செய்தனர். பிறகு அபியாவின் மகனான
ஆசா புதிய அரசனானான். ஆசாவின்
காலத்தில் நாட்டில் பத்தாண்டு காலம்
சமாதானம் இருந்தது.

### யூத அரசனான ஆசா

2ஆசா தன் தேவனாகிய கர்த்தருக்கு
முன்பாக நல்லனவற்றையும் சரியானவற்றை
யும் செய்தான். 3ஆசா அந்நிய தெய்வங்களின்
பலிபீடங்களையும் மேடைகளையும் அகற்றி
னான். சிலைகளை உடைத்தான். விக்கிரகத்
தோப்புகளை அழித்தான். 4யூத ஜனங்கள்
தேவனாகிய கர்த்தரைப் பின்பற்றும்படி
கட்டளையிட்டான். அவரே நம் முற்
பிதாக்களால் ஆராதிக்கப்பட்ட தேவன்.
அவரது கட்டளைகளையும் சட்டங்களையும்
கைக்கொள்ள வேண்டும் என்றான். 5ஆசா
யூதா நாட்டிலுள்ள அனைத்து நகரங்களிலும்
அமைக்கப்பட்ட மேடைகளையும் நறுமணப்
பொருட்கள் எரிக்கப்படும் பலீபீடங்களை
யும் அகற்றினான். எனவே ஆசா அரசனாக
இருந்த காலத்தில் அவனது அரசு
சமாதானமாக இருந்தது. 6இந்த சமாதானமான
காலத்தில் ஆசா யூதா நாட்டில் பலமிக்க
நகரங்களை உருவாக்கினான். இக்கால
கட்டத்தில் ஆசா எந்தவிதமான போரிலும்
ஈடுபடவில்லை. ஏனென்றால் கர்த்தர்
அவனுக்கு சமாதானத்தைக் கொடுத்தார்.
7ஆசா யூத ஜனங்களிடம், “இந்த நகரங்
களை உருவாக்கி இவற்றைச்சுற்றி சுவர்
களை எழுப்புவோம். கோபுரங்களையும்,
வாசல்களையும், வாசல்களுக்குத் தாழ்ப்பாள்
களையும் அமைப்போம். இந்த நாட்டில்
நாம் இன்னும் வாழ்ந்துக்கொண்டிருக்கின்ற
காலத்தில் இதைச் செய்வோம். இந்நாடு
நமக்குரியது. ஏனென்றால் நாம் தேவனாகிய
கர்த்தரைப் பின்பற்றுகிறோம். அவர் நம்
மைச் சுற்றிலும் சமாதானத்தை உருவாக்கி
னார்” என்றான். எனவே அவர்கள்
அவ்வாறே கட்டினார்கள்; தம் செயல்களில்
வெற்றி பெற்றனர்.
8ஆசாவின் படையில் 3,00,000 பேர்
கொண்ட படை யூதா கோத்திரத்திலிருந்தும்,
2,80,000 பேர் கொண்ட படைக்குழு
பென்யமீனின் கோத்திரத்திலிருந்தும் சேர்ந்தி
ருந்தனர். யூத வீரர்கள் பெரிய கேடயங்களை
யும் ஈட்டிகளையும் சுமந்து வந்தனர்.
பென்யமீன் வீரர்கள் சிறிய கேடயங்களை
யும் வில்லம்புகளையும் தாங்கினார்கள்.
இவர்கள் அனைவரும் தைரியமும் பலமும்
மிக்கவீரர்கள்.
9அப்போது ஆசாவின் படைகளுக்கு
எதிராகச் சேரா என்பவன் கிளம்பினான்.
சேரா எத்தோப்பியன். அவனிடம் 10,00,000
வீரர்களும் 300 இரதங்களும் இருந்தன.
அவனது படை மரேசாவரை வந்தது.
10ஆசா சேராவுக்கு எதிராகப் போரிட
வந்தான். மரேசாவில் உள்ள செப்பத்தா
என்னும் பள்ளத்தாக்கிலே ஆசாவின் படை
வீரர்கள் போரிடத் தயாராக இருந்தனர்.
11ஆசா தனது தேவனாகிய கர்த்தரை
அழைத்து, “கர்த்தாவே, பலமானவர்களை
எதிர்க்கும் பலவீனர்களுக்கு உதவ உம்மால்
தான் முடியும்! எங்களுக்கு உதவும்! எங்கள்
தேவனாகிய கர்த்தாவே! நாங்கள் உம்மை
யேச் சார்ந்துள்ளோம். உமது பேரால்
இப்பெரும் படையோடு போரிடப்போகி
றோம். கர்த்தாவே, நீர் எங்கள் தேவன்.
உமக்கு எதிராக எவரையும் வெல்லும்படி
விடாதீர்!” என்றான்.
12பிறகு கர்த்தர் எத்தியோப்பியா
படையை வெல்ல ஆசாவின் படையைப்
பயன்படுத்தினார். எத்தியோப்பியா படை
யினர் ஓடிப்போயினர். 13ஆசாவின் படை
யினர் எத்தியோப்பியா படையினரைக்
கேரார்வரை விரட்டிக்கொண்டு சென்றனர்.
எத்தியோப்பியா வீரர்கள் மீண்டும் கூடிப்
போரிட முடியாதபடி கொல்லப்பட்டனர்.
கர்த்தராலும் அவரது படையினராலும்
நசுக்கப்பட்டனர். பகைவரிடமிருந்து ஆசா
வும் அவனது படையினரும் விலையுயர்ந்த
பொருட்களைக் கைப்பற்றிக்கொண்டனர்.
14ஆசாவும் அவனது படையினரும் கேரார்
அருகிலுள்ள அனைத்து நகரங்களையும்
தோற்கடித்தனர். அந்நகரங்களில் வாழ்ந்த
ஜனங்கள் கர்த்தருக்கு பயந்தார்கள். அந்நகரங்
களில் ஏராளமாக விலையுயர்ந்தப் பொருட்
கள் இருந்தன. அவற்றிலிருந்து ஆசாவின்
படையினர் அந்த விலையுயர்ந்த பொருட்
களை அள்ளிக்கொண்டு வந்தார்கள். 15ஆசா

வின் படை மேய்ப்பர்களின் கூடாரங்களை
யும் தாக்கியது. அவர்கள் அங்கிருந்த
நிறைய வெள்ளாடுகளையும் ஒட்டகங்களை
யும் கவர்ந்தனர். பிறகு ஆசாவின்
படையினர் எருசலேமிற்குத் திரும்பிச்
சென்றனர்.

## ஆசாவின் மாற்றங்கள்

15 தேவனுடைய ஆவி அசரியாவின் மீது
வந்தது. அசரியா ஓபேதின் மகன்.
2 அசரியா ஆசாவைச் சந்திக்கச் சென்றான்.
அசரியா, “ஆசாவே, யூதா மற்றும்
பென்யமீனின் எல்லா ஜனங்களே!
என்னைக் கவனியுங்கள். நீங்கள் கர்த்தரோடு
இருக்கும்போது அவரும் உங்களோடு
இருப்பார். நீங்கள் கர்த்தரைத் தேடினால்
கண்டுகொள்ளலாம். ஆனால் நீங்கள் அவரை
விட்டு விலகினால் அவரும் விலகிவிடுவார்.
3 நீண்ட காலத்திற்கு இஸ்ரவேலர்கள் உண்
மையான தேவன் இல்லாமல் இருந்தனர்.
மேலும் அவர்கள் போதிக்கும் ஆசாரியர்
இல்லாமலும், சட்டங்கள் இல்லாமலும்
இருந்தார்கள். 4 ஆனால் இஸ்ரவேல் ஜனங்
களுக்குத் துன்பம் வந்தபோது அவர்கள்
மீண்டும் கர்த்தருடைய பக்கம் திரும்பினார்
கள். அவரே இஸ்ரவேலின் தேவன். அவர்கள்
கர்த்தரைத் தேடினார்கள்; கண்டு கொண்ட
னர். 5 அந்தக் கஷ்டகாலங்களில் எவராலும்
பாதுகாப்பாகப் பயணம் செய்ய முடிய
வில்லை. எல்லா நாடுகளிலும் துன்பங்கள்
ஏற்பட்டன. 6 ஒரு நாடு இன்னொரு நாட்டை
அழித்தது. ஒரு நகரம் இன்னொரு நகரத்தை
அழித்தது. தேவன் அவர்களுக்கு எல்லாவித
மான துன்பங்களையும் கொடுக்கவேண்டும்
என்று எண்ணியதால் இவ்வாறு நிகழ்ந்தது.
7 ஆனால் ஆசா, நீயும் யூதா மற்றும்
பென்யமீனின் ஜனங்களும் பலமுடையவர்க
ளாக இருங்கள். பலவீனமாய் இருக்காதீர்கள்.
எதையும் கைவிட்டு விடாதீர்கள். ஏனென்
றால் உங்கள் பணிகளுக்குத் தக்க வெகுமதி
கிடைக்கும்!” என்றான்.
8 ஆசா இந்த வார்த்தைகளையும்
தீர்க்கதரிசியான ஓபேதின் வார்த்தைகளை
யும் கேட்டதும் ஊக்க உணர்வை அடைந்
தான். பிறகு அவன் யூதா மற்றும்
பென்யமீன் பகுதிகளில் இருந்த வெறுக்கத்
தக்க விக்கிரகங்களை அப்புறப்படுத்தினான்.
எப்பிராயீம் மலைநாட்டில் தான் காப்பற்றிய
ஊர்களில் இருந்த வெறுக்கத்தக்க விக்கிரகங்
களையும் அப்புறப்படுத்தினான். கர்த்தரு
டைய ஆலய முன்வாயிலின் முன்னால்
இருந்த கர்த்தருடைய பலிபீடத்தைப் புதுபித்
தான்.
9 பிறகு ஆசா, யூதா மற்றும் பென்யமீன்
ஜனங்கள் அனைவரையும் எருசலேமில்
கூட்டினான். அவன், எப்பிராயீம், மனாசே,
சிமியோன் ஆகிய கோத்திரத்தினர்களையும்
கூட்டினான். அவர்கள் வாழ்வதற்காக இஸ்ர
வேல் நாட்டிலிருந்து யூதாவிற்குக்
குடியேறியவர்கள், இதுபோல் ஏராளமான
ஜனங்கள் யூதாவிற்கு வந்தனர். ஏனென்றால்
ஆசாவின் தேவனாகிய கர்த்தர் ஆசாவோடு
அங்கே இருப்பதைக் கண்டனர்.
10 ஆசாவும், அந்த ஜனங்கள் அனைவரும்
எருசலேமில் கூடினார்கள். அது ஆசாவின்
15வது ஆட்சியாண்டின் மூன்றாவது மாதமா
கும். 11 அப்போது அவர்கள் 700 காளைகளை
ளயும், 7,000 ஆடுகளையும் பலியிட்டனர்.
இப்பலிப் பொருட்களையும் மற்ற விலையு
யர்ந்தவற்றையும் ஆசாவின் படையினர் தம்
எதிரிகளிடமிருந்து அபகரித்து வந்தனர்.
12 பிறகு அவர்கள் தம் மனப்பூர்வமாகவும்
ஆத்மபூர்வமாகவும் தேவனாகிய கர்த்தருக்கு
சேவைசெய்வதாக ஒரு ஒப்பந்தம் செய்து
கொண்டனர். அவரே அவர்களது முற்
பிதாக்களால் சேவைசெய்யப்பட்ட தேவன்.
13 எவனொருவன் தேவனாகிய கர்த்தருக்குச்
சேவைசெய்ய மறுக்கிறானோ அவன்
கொல்லப்பட்டான். அவன் முக்கியமான
வனா அல்லது முக்கியம் இல்லாதவனா,
அவன் ஆணா அல்லது பெண்ணா என்பது
ஒரு பொருட்டல்ல. 14 பிறகு ஆசாவும்
ஜனங்களும் கர்த்தருக்கு முன்னால் ஒரு
சபதம் செய்தார்கள். அவர்கள் மிக
உரத்தகுரலில் கூவினார்கள். மேலும்
செம்மறியாட்டுக் கடாவின் கொம்புகளை
யும், எக்காளங்களையும் ஊதினார்கள்.
15 யூதா ஜனங்கள் அனைவரும் அந்த
உறுதிமொழியைக் குறித்து மகிழ்ச்சிய
டைந்தனர். ஏனென்றால் அவர்கள் தம்
மனப்பூர்வமாகச் சத்தியம் செய்தனர். அவர்
கள் மனப்பூர்வமாகத் தேவனைப் பின்
பற்றினர், அவர்கள் தேவனைத் தேடிக்
கண்டடைந்தனர். எனவே கர்த்தர் நாடு
முழுவதிலும் உள்ள ஜனங்களுக்குச் சமா
தானத்தை அளித்தார்.
16 ஆசா அரசன் தன் தாயான மாகாளை
ராஜாத்தி என்ற பதவியிலிருந்து நீக்கி
விட்டான். ஏனென்றால் அவள் அஷா
என்னும் தேவதையை வழிபடும் கம்பத்தை
உருவாக்கினாள். ஆசா அந்த அஷா
கம்பத்தை உடைத்து துண்டுதுண்டாக
நொறுக்கி விட்டான். பிறகு அத்துண்டு
களை கீதரோன் சமவெளியில் சுட்டெ
ரித்தான். 17 பல மேடைகளோ யூதா நாட்டில்
இன்னும் அழிக்கப்படாமல் இருந்தன.
எனினும் ஆசாவின் இதயம் அவனது
வாழ்நாள் முழுவதும் கர்த்தரோடு இருந்தது.
18 ஆசா, தானும் தன் தந்தையும் அளித்த
பரிசுத்த அன்பளிப்புகளை தேவனுடைய
ஆலயத்தில் கொண்டுவந்து வைத்தான்.
அவை பொன்னாலும் வெள்ளியாலும்
செய்யப்பட்டவை. 19 ஆசாவின் 35வது ஆட்சி
யாண்டுவரை நாட்டில் போர் இல்லாமல்
இருந்தது.

### ஆசாவின் இறுதி ஆண்டுகள்

16 ஆசாவின் 36வது ஆட்சி ஆண்டில்
யூதா நாட்டினை பாஷா தாக்கினான்.
பாஷா இஸ்ரவேலின் அரசன் ஆவான்.
அவன் ராமா என்னும் நகருக்குச் சென்று
அதையே ஒரு கோட்டையாகக் கட்டினான்.
ஜனங்கள் யூதாவின் அரசனான ஆசாவிடம்
செல்வதையோ அல்லது அவனிடமிருந்து
திரும்புவதையோ தடுப்பதற்கான இடமாக
ராமா ஊரினைப் பயன்படுத்தினான்.
2கர்த்தருடைய ஆலயத்தில் கருவூலத்தில்
இருந்த பொன்னையும் வெள்ளியையும் ஆசா
வெளியே எடுத்தான். அரண்மனை கரு
வூலத்தில் உள்ள பொன்னையும் வெள்ளியை
யும் ஆசா எடுத்தான். பிறகு அவன்
பென்னாதாத்துக்கு தூது அனுப்பினான்.
பென்னாதாத் ஆராம் நாட்டு அரசன். அவன்
தமஸ்கு நகரத்தில் இருந்தான். ஆசாவின்
செய்தி இது: 3“பென்னாதாத் நீயும் நானும்
ஒரு ஒப்பந்தம் செய்துக்கொள்வோம், உன்
தந்தையும் என் தந்தையும் செய்த ஒப்பந்தம்
போன்று இருக்கட்டும், நான் உனக்குப்
பொன்னும் வெள்ளியும் அனுப்புவேன். நீ
இப்போது பாஷாவுடன் உள்ள ஒப்பந்தத்தை
ஒரு முடிவுக்கு கொண்டுவந்துவிடு. அதனால்
அவன் எனக்குத் துன்பம் தராமல்
விலகிவிடுவான்.”
4பென்னாதாத் சொன்னவற்றை ஆசா
அரசனோடு ஒத்துக்கொண்டான். அவன்
தனது படைத்தளபதிகளை அனுப்பி இஸ்ர
வேல் நகரங்களைத் தாக்கினான் அவர்கள்
ஈயோன், தாண், ஆபேல்மாயீம், நப்தலிப்
பகுதியில் இருந்த ஊர்கள் ஆகியவற்றைத்
தாக்கினார்கள். இந்நகரங்களில் கருவூலங்க
ளும் பண்டகச்சாலைகளும் இருந்தன. 5இஸ்ர
வேல் நகரங்கள் தாக்கப்படுவதைப் பாஷா
கேள்வியுற்றான். எனவே அவன் ராமாவில்
கோட்டை கட்டுவதை விட்டுவிட்டு விலகிப்
போனான். 6பிறகு ஆசா அரசன் யூதா
ஜனங்கள் அனைவரையும் ஒன்றாகக் கூட்டி
னான். அவர்கள் ராமா நகரத்திற்குச்
சென்றார்கள். அங்கு கோட்டை கட்டுவதற்
காக பாஷா வைத்திருந்த கல், மரம்
போன்றவற்றை எடுத்துக்கொண்டு வந்து
விட்டார்கள். அவற்றால் அவர்கள் கேபா,
மிஸ்பா ஆகிய நகரங்களைப் பலமுள்ளதாகக்
கட்டினார்கள்.
7அப்போது யூதாவின் அரசனான ஆசா
விடம் அனானி எனும் ஞானதிருஷ்டிக்காரன்
வந்தான். அனானி அரசனிடம், “ஆசா, நீ
உதவிக்காக ஆராம் நாட்டு அரசனையே
சார்ந்திருந்தாய். உனது தேவனாகிய கர்த்த
ரைச் சார்ந்திருக்கவில்லை. நீ உன் உதவிக்
காக கர்த்தரைச் சார்ந்திருக்க வேண்டும்.
ஆனால் உதவிக்காகக் கர்த்தரைச் சாராததால்
ஆராம் நாட்டு படையும் உன் கைகளில்
இருந்து விலகிப்போனது. 8எத்தியோப்பியர்
களிடம் லூபியர்களிடமும் வலிமைமிக்க
பெரியபடை இருந்தது. அவர்களிடம் ஏராள
மான இரதங்களும் குதிரை வீரர்களும்
இருந்தனர். ஆனால் நீ உதவிக்கு கர்த்தரை
நாடியபோது அவர் இவர்களை வெல்லும்
படி உதவினார். 9கர்த்தருடைய கண்கள்
பூமியில் உள்ள அனைவர் மீதும் சுற்றிவரும்.
தனக்கு உண்மையானவர்களை அவர் தேடி
அவர்களைப் பலமுள்ளவர் ஆக்குவார். ஆசா
நீ முட்டாள்தனமாக நடந்துக்கொண்டாய்.
எனவே இப்போது முதல் நீ போர்களைச்
சந்திப்பாய்” என்றான்.
10ஆசாவிற்கு அனானி மீது அவன்
பேசிய சொற்களுக்காக கோபம் வந்தது.
அவன் எந்தவித காரணமின்றி அனா
னியைச் சிறையில் அடைத்தான். இக்கால
கட்டத்தில் ஆசா பலரிடம் கொடூரமாக
நடந்துக்கொண்டான்.
11தொடக்கம் முதல் இறுதிவரை ஆசா
செய்த செயல்கள் ‘யூதா மற்றும் இஸ்ரவேல்
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளன. 12ஆசாவின் 39வது
ஆட்சி யாண்டில் அவனது காலில் நோய்
வந்தது. இது மிக மோசமான நோய்.
எனினும் கர்த்தருடைய உதவியை
நாடவில்லை. உத விக்காக மருத்துவர்களை
நாடினான். 13ஆசா தனது 41வது
ஆட்சியாண்டில் மரித்தான். அவன் தன்
முற்பிதாக்களோடு சேர்க்கப்பட்டான்.
14தாவீதின் நகரத்திலே ஆசா தனக்கென்று
ஒரு கல்லறை அமைத்திருந் தான். ஜனங்கள்
அவனை அதிலேயே அடக்கம் செய்தனர்.
அவனை வாசனைப் பொருட்களாலும்
பலவகை மணக் கலவைகளாலும்
அமைக்கப்பட்ட மெத்தை மீது ஆசாவை
வைத்தனர். ஆசாவைக் கௌரவிப்பதற்காக
ஜனங்கள் ஒரு பெரும் நெருப்பை
உண்டாக்கினார்கள்.

### யூதாவின் அரசனான யோசபாத்

17 யூதாவின் புதிய அரசனான ஆசாவின்
இடத்திலே அவனது மகனான
யோசபாத் ஆனான். இவன் யூதாவைப்
பலமுள்ளதாக ஆக்கினான். இஸ்ரவேலை
எதிர்த்துப் போரிடும் அளவுக்கு அவன்
யூதாவைப் பலப்படுத்தினான். 2அவன் யூதா
வின் அனைத்து நகரங்களிலும் படை
வீரர்கள் அடங்கிய குழுக்களை நிறுத்தி
னான். அந்நகரங்கள் எல்லாம் யூதாவிலும்,
அவன் தந்தையால் கைப்பற்றப்பட்ட
எப்பிராயீம் நகரங்களிலும் யோசபாத்
கோட்டைகளைக் கட்டினான்.
3கர்த்தர் யோசபாத்தோடு இருந்தார்.
ஏனென்றால் இவனது சிறுவயதில் இவன்
தன் முற்பிதாவான தாவீதைப்போன்று
நற்செயல்களைச் செய்தான். இவன் பாகால்
விக்கிரகங்களைப் பின்பற்றவில்லை. 4யோச
பாத் தன் முற்பிதாக்களைப்போன்றே

தேவனைப் பின்பற்றினான். அவன் தேவ
னுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தான்.
இவன் இஸ்ரவேல் ஜனங்களைப் போன்று
வாழ்க்கை நடத்தவில்லை. 5யோசபாத்தை
யூதாவின் பலம் பொருந்திய அரசனாக
கர்த்தர் ஆக்கினார். யூதாவிலுள்ள அனைத்து
ஜனங்களும் அவனுக்கு அன்பளிப்புகளைக்
கொண்டுவந்தனர். இதனால் யோசபாத்
பெருஞ்செல்வமும் பெருமையும் அடைந்
தான். 6யோசபாத்தின் மனம் கர்த்தருடைய
வழியில் மகிழ்ச்சியைக் கண்டது. அவன்
யூதா நாட்டில் மேடைகளை அகற்றினான்,
விக்கிரகங்களையும் அழித்தான்.

7யோசபாத் தன் தலைவர்களை யூத
நகரங்களில் கற்பிக்கச் செய்தான். இவை
இவனது மூன்றாவது ஆட்சியாண்டில்
நடந்தது. பென்னாயில், ஒபதியா, சகரியா,
நெதனெயேல், மிகாயா, ஆகியோர் இவனால்
அனுப்பப்பட்ட தலைவர்கள். 8இவர்களோடு
லேவியர்களையும் அனுப்பினான். லேவியர்
களில் செமாயா, நெதனியா, செபதியா,
ஆசகேல், செமிரமோத், யோனத்தான்,
அதோனியா, தொபியா, தோபத்தோனியா,
ஆகியோர் இருந்தனர். இவர்களோடு ஆசாரி
யர்களில் எலிஷாமா, யோராம் ஆகியோ
ரையும் அனுப்பினான். 9இவர்கள் யூதாவி
லுள்ள ஜனங்களுக்குப் போதித்தனர். அவர்
களிடம் கர்த்தருடைய சட்ட புத்தகம்
இருந்தது. அவர்கள் யூதாவின் அனைத்து
நகரங்களுக்கும் சென்று அதனைப்
போதித்தனர்.

10யூதாவின் அருகிலுள்ள மற்ற நாட்டி
னரும் கர்த்தருக்குப் பயந்தனர். எனவே
அவர்கள் யோசபாத்துக்கு எதிராகப்
போரைத் தொடங்காமல் இருந்தனர். 11சில
பெலிஸ்திய ஜனங்களும் யோசபாத்துக்கு
அன்பளிப்புகளைக் கொண்டுவந்தார்கள்.
அவர்கள் யோசபாத்துக்கு வெள்ளியையும்
கொண்டுவந்தார்கள். ஏனென்றால், அவன்
ஒரு வலிமைமிக்க அரசனென்பதை அவர்கள்
அறிந்திருந்தார்கள். சில அரபியர்கள் ஆடு
களைக் கொடுத்தனர். அவர்கள் 7,700
ஆட்டுக்கடாக்களையும் 7,700 வெள்ளாட்டுக்
கடாக்களையும் கொடுத்தனர்.

12யோசபாத் மிக பலமுள்ளவனாக
ஆனான். அவன் கோட்டைகளையும்
பொருட்கள் வைப்பதற்கான கருவூலங்
களையும் யூதாவில் கட்டினான். 13யூதா
நகரங்களில் பொருட்களை விநியோகம்
செய்தான். எருசலேமில் யோசபாத் பயிற்
சிமிக்க படைவீரர்களை வைத்திருந்தான்.
14இவ்வீரர்கள் தம் கோத்திரங்களின்படி
பட்டியலிடப்பட்டனர். இதுதான் அவர்கள்
விபரம்:

யூதாவிலே ஆயிரத்துக்கு அதிபதிகளில்
அத்னா தலைவனாக இருந்தான். 3,00,000
வீரர்களுக்கு அவன் தளபதியாக இருந்தான்.
15யோகனான் எனும் தளபதியிடம் 2,80,000
வீரர்கள் இருந்தனர். 16அமசியா எனும்
தளபதியிடம் 2,00,000 வீரர்கள் இருந்தனர்.
அமசியா சிக்ரியின் மகன், அமசியா,
தன்னை கர்த்தருடைய சேவையில் ஈடுபடுத்
துவதில் மகிழ்ச்சியடைந்தான்.

17பென்யமீனின் கோத்திரத்தில் இருந்து
பின்வரும் சேனாதிபதிகள் இருந்தனர்.
எலியாதாவிடம் 2,00,000 வீரர்கள் இருந்தனர்.
இவர்கள் வில், அம்பு, கேடயம் ஆகிய
வற்றைப் பயன்படுத்தினார்கள். எலியாதா
மிகப்பலம் பொருந்திய வீரன். 18யோச
பாத்திடம் 1,80,000 வீரர்கள் போருக்குத்
தயாரானவர்களாக இருந்தனர். 19அனைவரும்
யோசபாத் அரசனுக்குச் சேவைச் செய்து
வந்தனர். அரசனுக்கு யூத நாட்டு கோட்டை
களில் பணிசெய்ய வேறு வீரர்களும்
இருந்தனர்.

### மிகாயா ஆகாப் அரசனை எச்சரிக்கிறான்

18 யோசபாத்துக்கு மிகுந்த செல்வமும்
சிறப்பும் இருந்தது. இவன் ஆகாப்
அரசனோடு ஒரு திருமண ஒப்பந்தம்
செய்துகொண்டான். 2சில ஆண்டுகளுக்குப்
பிறகு யோசபாத் ஆகாப்பைப் பார்க்க
சமாரியா நகரத்திற்குச் சென்றான். ஆகாப்
பல ஆடுகளையும் பசுக்களையும் பலி
கொடுத்தான். யோசபாத்துக்கும் அவனோடு
உள்ள ஜனங்களுக்கும் அவற்றைக் கொடுத்
தான். ஆகாப் யோசபாத்திடம் ராமோத்
கிலியாத்தைத் தாக்கும்படி உற்சாகப் படுத்
தினான். 3ஆகாப் யோசபாத்திடம், “கிலே
யாத்திலுள்ள ராமோத்துக்கு என்னோடு
வருகின்றீரா?” என்று கேட்டான். ஆகாப்
இஸ்ரவேலின் அரசன். யோசபாத் யூதாவின்
அரசன். யோசபாத் ஆகாப்பிடம், “நான்
உன்னைப் போன்றவன். என் ஜனங்களும்
உன் ஜனங்களைப் போன்றவர்களே. நாங்கள்
உங்களோடு போரிலே சேர்ந்துக்கொள்
வோம்” என்றான். 4யோசபாத் மேலும்
ஆகாபிடம், “ஆனால் முதலில், நாம் நமது
கர்த்தரிடமிருந்து செய்தியை எதிர்
பார்போம்” என்றான்.

5எனவே அரசன் ஆகாப் 400 தீர்க்க
தரிசிகளை அணிதிரட்டினான். ஆகாப் அவர்
களிடம், “நம்மால் ராமோத் கீலேயாத்துக்கு
எதிராகப் போகமுடியுமா அல்லது முடி
யாதா?” என்று கேட்டான். தீர்க்கதிரிசி
களோ, “போகமுடியும். இராமோத், கீலே
யாத்தைத் தோற்கடிக்க தேவன் உதவுவார்”
என்றனர்.

6ஆனால் யோசபாத், “கர்த்தருடைய தீர்க்க
தரிசி யாராவது இங்கே இருக்கிறார்களா?
கர்த்தருடைய விருப்பத்தை அவர் மூலம்
கேட்க விரும்புகிறேன்” என்றான்.

7பிறகு அரசன் ஆகாப் யோசபாத்திடம்,
“இன்னும் ஒருவன் இங்கே இருக்கிறான்.
அவன் மூலமாக நாம் கர்த்தரிடம் கேட்க

லாம். ஆனால் நான் அந்த மனிதனை
வெறுக்கிறேன். ஏனென்றால் அவன் எனக்
காக கர்த்தரிடமிருந்து எந்த நல்லச் செய்தி
யையும் சொல்லமாட்டான். எப்பொழுதும்
அவன் எனக்காகக் கெட்ட செய்திகளையே
வைத்திருப்பான். அவனது பெயர் மிகாயா.
அவன் இம்லாவின் மகன்” என்றான்.
ஆனால் யோசபாத்தோ, “ஆகாப், நீ அப்படிச்
சொல்லக்கூடாது!” என்றான்.
8 பிறகு அரசன் ஆகாப் தனது ஒரு
அதிகாரியை அழைத்து, “வேகமாகப் போய்,
இம்லாவின் மகனான மிகாயாவை அழைத்து
வா” என்றான்.
9 இஸ்ரவேலின் அரசனான ஆகாப்பும்,
யூதாவின் அரசனான யோசபாத்தும் அரச
உடை அணிந்துகொண்டனர். அவர்கள்
தம் சிங்காசனங்களில் சமாரியாவின் ஒலி
முகவாசலுக்கு அருகே உள்ள களத்தில்
அமர்ந்திருந்தனர். அந்த 400 தீர்க்கதரிசிகளும்
இரு அரசர்களின் முன் தங்கள் செய்தியைச்
சொன்னார்கள். 10 கெனானாவின் மகனான
சிதேக்கியா தனக்கு இரும்பு கொம்புகளைச்
செய்தான். அவன், “இதுதான் கர்த்தர்
சொன்னது: ‘நீ இந்த இரும்பு கொம்புகளை
அணிந்துக்கொண்டு அராமியரை அழிந்து
போகும்வரை தாக்குவாய்” என்றான்.
11 அனைத்து தீர்க்கதரிசிகளும் இதனையே
சொன்னார்கள். அவர்கள், “ராமோத் கீலே
யாத் நகரத்திற்கு செல். நீ வெற்றிபெறுவாய்.
அராமிய ஜனங்களை வெல்லும்படி கர்த்தர்
உதவுவார்” என்றனர்.
12 மிகாயாவை அழைத்துவரப்போன தூது
வன் அவனிடம் போய், “மிகாயா! கவனி.
அனைத்து தீர்க்கதரிசிகளும் ஒரே மாதிரி
கூறுகின்றனர். அரசன் வெற்றிபெற முடியும்
என அவர்கள் கூறுகின்றனர். எனவே
அவர்கள் சொல்வதையே நீயும் கூறு. நீயும்
நல்ல செய்தியைக் கூறவேண்டும்” என்றான்.
13 ஆனால் மிகாயா, “கர்த்தருடைய ஜீவ
னைக் கொண்டு சொல்கிறேன், எனது
தேவன் சொல்வதையே நான் சொல்ல
முடியும்” என்று பதிலளித்தான்.
14 பிறகு மிகாயா ஆகாப் அரசனிடம்
வந்தான். அரசன் அவனிடம், “மிகாயா
நாங்கள் ராமோத் கீலேயாத் நகரத்திற்குப்
போரிடப் போகலாமா வேண்டாமா?” என்று
கேட்டான். அதற்கு மிகாயா, “போ
அவர்களோடு போர் செய். அந்த ஜனங்களை
வெல்ல கர்த்தர் துணை செய்வார்”
என்றான்.
15 அரசன் ஆகாப் மிகாயாவிடம், “கர்த்த
ருடைய நாமத்தால் என்னிடம் உண்மையை
மட்டுமே கூறவேண்டுமென்று பலமுறை
உன்னை நான் சத்தியம் செய்யவைத்தேன்”
என்றான்.
16 பிறகு மிகாயா, “இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும் மலைப்பகுதியில் சிதறி ஓடு
வதை நான் பார்த்தேன். அவர்கள் மேய்ப்பன்
இல்லாத ஆடுகளைப்போல் உள்ளனர்.
கர்த்தர், ‘அவர்களுக்குத் தலைவன் இல்லை.
ஒவ்வொருவரும் பத்திரமாக வீட்டிற்குப்
போகட்டும்’ என்று கூறினார்” என்றான்.
17 இஸ்ரவேல் அரசனான ஆகாப் யோச
பாத்திடம், “கர்த்தரிடமிருந்து எனக்கு
மிகாயா நல்ல செய்தியைச் சொல்லமாட்
டான் என்று ஏற்கனவே கூறியிருக்கிறேன்.
அவன் எனக்கு கெட்டச் செய்திகளை
மட்டுமே கூறுவான்” என்றான்.
18 அதற்கு மிகாயா, “கர்த்தரிடமிருந்து வந்த
செய்தியைக் கேள்: கர்த்தர் தன்
சிங்காசனத்தில் அமர்ந்திருப்பதை நான்
பார்த்தேன். பரலோகத்தின் படை அவரது
வலதுபுறமும் இடதுபுறமும் உள்ளன.
அனைத்து படைகளும் அவரைச் சுற்றிலும்
நின்றுக் கொண்டிருக்கிறது. 19 கர்த்தர்,
‘ராமோத் கீலேயாத் நகரின்மேல் படை
யெடுக்குமாறு செய்து அப்போரில் ஆகாப்
மரிக்குமாறு செய்ய, யாரால் தந்திரமாய்ச்
செயல்பட முடியும்?’ என்று கேட்டார். அதற்கு
ஒவ்வொருவரும் வெவ்வேறானதைக்
கூறினார்கள். 20 பிறகு ஒரு ஆவி வந்து
கர்த்தருக்கு முன்பாக நின்றது. அந்த ஆவி,
‘நான் ஆகாபிடம் தந்திரமாய்ச் செயல்படு
கிறேன்’ என்று கூறியது. அதனிடம்,
‘எப்படி?’ என்று கர்த்தர் கேட்டார். 21 அதற்கு
அது, ‘நான் போய் ஆகாபின்
தீர்க்கதரிசிகளின் வாயில் பொய் சொல்லும்
ஆவியாக இருப்பேன்’ என்றது. அதற்குக்
கர்த்தர், ‘நீ ஆகாபை ஏமாற்றுவதில் வெற்றி
பெறுவாய். எனவே போய் அவ்வாறே
செய்’ என்றார்.

22 “இப்போது ஆகாப், கவனி. பொய்
சொல்லும் ஆவியை உன் தீர்க்கதரிசிகளின்
வாயில் கர்த்தர் இருக்கச் செய்துள்ளார்.
எனவே கர்த்தர் சொன்னபடி உனக்கு
தீமையே ஏற்படும்” என்றான்.
23 பிறகு சிதேக்கியா மிகாயாவின் அருகில்
சென்று அவனது முகத்திலே அறைந்தான்.
சிதேக்கியாவின் தந்தை கெனானா. சிதேக்
கியா, “மிகாயா, கர்த்தருடைய ஆவி எந்த
வழியாய் என்னைவிட்டு உன்னிடம் வந்து
இவ்வாறு பேசவைத்தது?” என்று கேட்
டான். 24 அதற்கு மிகாயா, “சிதேக்கியா! நீ
உள்ளறைக்குள்ளே ஓடி பதுங்கும் நாளிலே
அதனைக் காண்பாய்” என்றான்.
25 பிறகு ஆகாப் அரசன், “மிகாயாவை
அழைத்துக்கொண்டு நகர ஆளுநராகிய
ஆமோனிடத்திலும் அரச குமாரனாகிய
யோவாசிடத்திலும் செல்லுங்கள். 26 அவர்
களிடம், ‘இது தான் அரசன் சொன்னது:
மிகாயாவைச் சிறையிலே அடையுங்கள்.
நான் போரிலிருந்து திரும்பி வரும்வரை
சிறிது அப்பத்தையும் தண்ணீரையும் தவிர
வேறு எதையும் தராதீர்கள்’ எனக் கூறுங்
கள்” என்றான்.

27அதற்கு மிகாயா, “ஆகாப்! நீ
போர்களத்திலிருந்து பத்திரமாகத் திரும்பி
வந்தால், பிறகு கர்த்தர் என் மூலமாகப்
பேசவில்லை. ஜனங்களே! நான் சொல்
வதைக் கேட்டு நினைவில் வைத்துக்
கொள்ளுங்கள்!” என்றான்.

### ராமோத் கீலேயாத்தில் ஆகாப் கொல்லப்படுகிறான்

28இஸ்ரவேல் அரசனான ஆகாபும் யூதா
வின் அரசனான யோசபாத்தும் ராமோத்
கீலேயாத்தைத் தாக்கினார்கள். 29ஆகாப்
அரசன் யோசபாத்திடம், “நான் போர்க்
களத்திற்குள் நுழையுமுன் என் தோற்றத்தை
மாற்றிக்கொள்வேன். ஆனால் நீ உனது
உடையையே அணிந்துகொள்” என்றான்.
எனவே இஸ்ரவேலின் அரசனாகிய ஆகாப்
தன் ஆடையை மாற்றிக் கொண்டான்.
இருவரும் போர்க்களத்துக்குச் சென்றார்கள்.
30ஆராம் அரசன் தனது இரதப்படைத்
தளபதியிடம் ஒரு கட்டளையிட்டான்.
அவன் அவர்களிடம், “எவரோடும் சண்டை
யிடவேண்டாம். அவன் பெரியவனாயினும்
சரி, சிறியவனாயினும் சரியே. ஆனால்
இஸ்ரவேலின் அரசனான ஆகாபிடம் மட்டும்
சண்டையிடுங்கள்” என்றான். 31இரதப்
படைத்தளபதிகள் யோசபாத்தைக் கண்டதும்
“இஸ்ரவேலின் அரசனான ஆகாப் அங்கே
இருக்கிறான்!” என்று எண்ணினார்கள்.
எனவே யோசபாத்தைத் தாக்க அவர்கள்
திரும்பினார்கள். ஆனால் யோசபாத் சத்த
மிட்டு வேண்டினபடியால் கர்த்தர் அவனுக்கு
உதவினார். தேவன் இரதப்படைத் தளபதி
களை யோசபாத்தைவிட்டு விலகும்படி
செய்தார். 32அவர்களுக்கு இவன் இஸ்ரவேல்
அரசனான ஆகாப் இல்லை என்று
தெரிந்ததும் துரத்துவதை விட்டுவிட்டனர்.
33ஆனால் ஒரு வீரன் எந்தவித குறியும்
இல்லாமல் ஒரு அம்பை விட்டான். அது
இஸ்ரவேல் அரசனான ஆகாபின் மீது
பாய்ந்தது. அது ஆகாபின் உடலில் கவசம்
இல்லாத பகுதியின்மேல் பாய்ந்தது. ஆகாப்
தன் இரதவோட்டியிடம், “இரதத்தைத் திருப்
பிக்கொள். நான் காயப்பட்டிருக்கிறேன்.
என்னை போர்க்களத்துக்கு வெளியே
கொண்டுசெல்!” என்றான். 34அன்று போர்
மிகவும் மோசமாக நடைபெற்றது. அன்று
மாலைவரை ஆகாப் ஆராமியருக்கு எதிராக
இரதத்தில் நின்றுக்கொண்டிருந்தான். சூரியன்
மறைந்ததும் அவன் மரித்தான்.

19 யூதாவின் அரசனான யோசபாத்
எருசலேமிலுள்ள தன் வீட்டிற்குப்
பாதுகாப்பாக வந்து சேர்ந்தான். 2யெகூ
என்னும் ஞானதிருஷ்டிக்காரன் யோச
பாத்தைச் சந்திக்கவந்தான். அவனது தந்தை
யின் பெயர் அனானி. அவன் அரசனிடம்,
“ஏன் கெட்டவர்களுக்கு உதவினாய்?
கர்த்தரை வெறுப்பவர்கள் மேல் ஏன் அன்பு
செலுத்தினாய். அதனால்தான் கர்த்தர் உன்
மீது கோபமாக இருக்கிறார். 3ஆனால் உனது
வாழ்வில் சில நன்மைகளும் உள்ளன. நீ
விக்கிரகங்களை அழித்தாய். நீ மனப்
பூர்வமாகத் தேவனைப் பின்பற்ற வேண்டும்
என்று எண்ணினாய்” என்றான்.

### யோசபாத் நீதிபதிகளைத் தேர்ந்தெடுக்கிறான்

4யோசபாத் எருசலேமில் வாழ்ந்தான்.
பெயர்செபா நகரம் முதல் எப்பிராயீம்
மலைநாடு வரை வாழும் ஜனங்களுடன்
சேர்ந்து வாழும்பொருட்டு, மீண்டும் யோச
பாத் வெளியேறினான். அந்த ஜனங்களை
அவன் அவர்கள் முற்பிதாக்களின் தேவ
னாகிய கர்த்தரிடம் திரும்பக் கொண்டு
வந்தான். 5யோசபாத் யூதாவில் நீதிபதிகளைத்
தேர்ந்தெடுத்தான். அவன் தேர்ந்தெடுத்த
நீதிபதிகளை ஒவ்வொரு கோட்டையிலும்
இருக்கச்செய்தான். 6யோசபாத் நீதிபதி
களிடம், “நீங்கள் என்ன செய்கிறீர்கள்
என்பதில் கவனமாக இருங்கள். ஏனென்றால்
நீங்கள் ஜனங்களுக்காக நியாயந்தீர்க்க
வில்லை. கர்த்தருக்காக நியாயந்தீர்க்கிறீகள்.
நீங்கள் ஒரு முடிவு எடுக்கும்போது கர்த்தர்
உங்களோடு இருக்கிறார். 7இப்போது
உங்களில் ஒவ்வொருவரும் கர்த்தருக்குப்
பயப்படவேண்டும். நீங்கள் என்ன செய்ய
வேண்டும் என்பதில் கவனமாக இருங்கள்.
ஏனென்றால் நமது தேவனாகிய கர்த்தர்
நியாயமானவர். அவர் அநீதியானவற்றை
யாருக்கும் செய்யமாட்டார். மேலும் தனது
நியாயத்தீர்ப்புகளை மாற்றிக்கொள்ள பணத்
தைப் பெற்றுக்கொள்ளமாட்டார்” என்றான்.
8எருசலேமில், யோசபாத் சில லேவியர்
களையும் ஆசாரியர்களையும் இஸ்ரவேல்
கோத்திரங்களையும் நீதிபதிகளாகத் தேர்ந்
தெடுத்தான். இவர்கள் எருசலேமில் உள்ள
ஜனங்களின் சிக்கல்களைத் தேவனுடைய
சட்டத்தால் சரி செய்யவேண்டும். 9யோச
பாத் அவர்களுக்குக் கட்டளையிட்டான்.
அவன், “நீங்கள் உங்கள் மனப்பூர்வமாகவும்
உண்மையாகவும் சேவைச் செய்யவேண்டும்.
நீங்கள் கர்த்தருக்குப் பயப்படவேண்டும்.
10உங்களிடம் கொலை, சட்டப்பிரச்சனைகள்,
கட்டளை, விதிமுறை அல்லது வேறு சில
சட்டங்கள் பற்றிய வழக்குகள் வரும்.
அனைத்து வழக்குகளிலும் நீங்கள் ஜனங்
களைக் கர்த்தருக்கு எதிராகப் பாவம்
செய்யாதபடிக்கு எச்சரிக்கை செய்ய
வேண்டும். நீங்கள் உண்மையாகச் சேவைச்
செய்யாவிட்டால் கர்த்தருடைய கோபம்
உங்கள் மேலும் உங்கள் சகோதரர்கள்
மேலும் ஏற்படும். நீங்கள் இப்படி செய்தால்
குற்றவாளியாகமாட்டீர்கள். 11அமரியா
தலைமை ஆசாரியன். கர்த்தரைப் பற்றிய
காரியங்களில் அவன் உங்களுக்கு மேலாக

இருப்பான். அரசனைப்பற்றிய விவகாரங்
களில் செபதியா உங்களுக்கு உயர்ந்தவனாக
இருப்பான். செபதியாவின் தந்தையின்
பெயர் இஸ்மவேல். செபதியா யூதா
கோத்திரத்தின் தலைவனாக இருக்கிறான்.
லேவியர்கள் உங்களுக்கு எழுத்தாளர்களாகச்
சேவை செய்வார்கள். நீங்கள் செய்யும்
அனைத்து செயல்களிலும் உறுதியாக இருங்
கள். சரியானவற்றைச் செய்கின்ற ஜனங்
களோடு கர்த்தர் துணை இருப்பாராக"
என்றான்.

### யோசபாத் போரை எதிர் நோக்கியிருக்கிறான்

20 பிறகு மோவாபிய ஜனங்களும்,
அம்மோன் ஜனங்களும், சில மியூனிய
ஜனங்களும்* யோசபாத்துக்கு எதிராகப்
போரிடத் தொடங்கினார்கள். 2சிலர் யோச
பாத்திடம் வந்து, "உங்களுக்கு எதிராகப்
போரிட ஏதோமிலிருந்து ஒரு பெரும்படை
வந்து கொண்டிருக்கிறது. அவர்கள் மரணக்
கடலின் மறுகரையில் இருந்துவருகிறார்கள்.
அவர்கள் ஏற்கனவே ஆசாசோன் தாமாரில்
உள்ளார்கள்!" என்றான். (ஆசாசோன்
தாமார் எங்கேதி என்றும் அழைக்கப்
படுகிறது.) 3யோசபாத்துக்குப் பயம் ஏற்
பட்டது. என்ன செய்யவேண்டும் என்று
கர்த்தரிடம் கேட்கத் தீர்மானித்தான். யூதாவி
லுள்ள எல்லோரும் உபவாசம் இருக்க ஒரு
நேரத்தைக் குறித்தான். 4யூதாவிலுள்ள
ஜனங்கள் ஒன்று கூடி கர்த்தரிடம் உதவி
கேட்டனர். யூதாவின் அனைத்து நகரங்
களிலிருந்தும் ஜனங்கள் வந்து கர்த்தருடைய
உதவியை வேண்டினார்கள்.
5யோசபாத் கர்த்தருடைய ஆலயத்தில்
இருந்தான். அங்கு புதுப்பிரகாரத்திற்கு முன்
னால் இருந்தான். யூதாவிலிருந்தும் எரு
சலேமிலிருந்தும் வந்த ஜனங்கள் கூட்டத்தின்
முன்னர் நின்று பேசினான். 6அவன்
சொன்னதாவது:
"எங்கள் முற்பிதாக்களின் தேவனாகிய
கர்த்தாவே நீர் பரலோகத்திலிருக்கிற தேவன்.
அனைத்து நாடுகளிலும் உள்ள அரசுகளை
நீர் ஆண்டுவருகிறீர். உமக்கு அதிகாரமும்
பலமும் உள்ளது. உமக்கு எதிராக எவரா
லும் நிற்கமுடியாது. 7நீரே எங்களுடைய
தேவன். இந்த நிலத்திலிருந்து ஜனங்கள்
வெளியேறுமாறு நீர் கட்டாயப்படுத்தினீர்.
இதனை உம்முடைய இஸ்ரவேல் ஜனங்
களின் முன்னிலையிலேயே நீர் செய்தீர். நீர்
இந்த நிலத்தை ஆபிரகாமின் சந்ததி
யினருக்கு எக்காலத்திற்கும் உரியதாக்கினீர்.
ஆபிரகாம் உமது நண்பர். 8ஆபிரகாமின்
சந்ததியினர் இந்த நிலத்தில் வாழ்ந்தார்கள்.
உமது நாமத்தால் ஒரு ஆலயத்தைக்
கட்டினார்கள். 9அவர்கள், 'எங்களுக்கு
வாளாலோ, தண்டனையாலோ, நோயாலோ,
பஞ்சத்தாலோ துன்பங்கள் வந்தால் நாங்கள்
உமது ஆலயத்தின் முன்னால் உமக்கு முன்
நிற்போம். உம்முடைய நாமம் இவ்வால
யத்தின்மேல் உள்ளது. நாங்கள் துன்பத்தில்
இருக்கும்போது உம்மை நோக்கிச் சத்த
மிடுவோம். பின் நீர் அதைக் கேட்டு
எங்களைக் காப்பாற்றுவீர்.'
10"ஆனால் இப்போது, இங்கே அம்மோன்,
மோவாப், சேயீர் மலை ஆகிய ஜனங்கள்
இருக்கின்றனர். இஸ்ரவேலர் எகிப்திலிருந்து
வெளியேறி வந்தபோது அவர்களது நிலத்
தின் வழியாகச் செல்ல நீர் அனுமதிக்க
வில்லை. எனவே இஸ்ரவேல் ஜனங்கள்
இவர்களைவிட்டு விலகி, அழிக்காமல்
போனார்கள். 11ஆனால் பாரும் நாங்கள்
அவர்களை அழிக்காமல் விட்டதற்கு அவர்
கள் எங்களுக்குத் தரும் வெகுமதியைப்
பாரும். அவர்கள் உம்முடைய நாட்டை
விட்டு வெளியேறுமாறு எங்களைக் கட்டா
யப்படுத்துகிறார்கள். இந்த நாட்டை நீர்
எங்களுக்கு கொடுத்தீர். 12எங்களுடைய
தேவனே, அந்த ஜனங்களைத் தண்டியும்.
எங்களுக்கு எதிராக வந்திருக்கும் இப்பெரும்
படையை எதிர்க்க எங்களிடம் பலம்
இல்லை. என்ன செய்யவேண்டும் என்று
எங்களுக்குத் தெரியவில்லை. அதனால்
நாங்கள் உம்மிடம் உதவியை வேண்டு
கிறோம்!" என்றான்.
13யூதாவிலுள்ள அனைத்து ஜனங்களும்
தங்களுடைய மனைவி, குழந்தைகள் மற்றும்
பிள்ளைகளுடன் கர்த்தருக்கு முன்னால்
நின்றார்கள். 14பிறகு கர்த்தருடைய ஆவி
யகாசியேல் என்பவன் மீது வந்தது. யகாசி
யேல் சகரியாவின் மகன். சகரியா பெனாயா
வின் மகன். பெனாயா ஏயெலின் மகன்.
ஏயேல் மத்தனியாவின் மகன். யகாசியேல்
ஒரு லேவியன். இவன் ஆசாபின் சந்ததியான்.
கூட்டத்தின் நடுவில் 15யகாசியேல், "நான்
சொல்வதைக் கேளுங்கள். யோசபாத்
அரசனே, யூதா மற்றும் எருசலேமில் உள்ள
ஜனங்களே. கர்த்தர் உங்களுக்கு இதனைக்
கூறுகிறார், 'இப்பெரும் படையைக் கண்டு
அஞ்சவோ கவலைப்படவோ வேண்டாம்.
ஏனென்றால் இது உங்களுடைய போரல்ல.
இது தேவனுடைய போர். 16நாளை கீழே
இறங்கிப்போய் அவர்களோடு சண்டையிடுங்
கள். அவர்கள் சிஸ் என்ற மேட்டு வழியாக
வருகிறார்கள். அவர்களை நீங்கள் யெரு
வேல் எனும் வனாந்தரத்திற்கு எதிரான
பள்ளத்தக்கின் முடிவில் சந்திப்பீர்கள்.
17இப்போரில் நீங்கள் சண்டையிடவே
வேண்டாம். உங்கள் இடங்களில் உறுதியாக
நில்லுங்கள். கர்த்தர் உங்களைக் காப்பாற்று
வதைக் காண்பீர்கள். யூதா நாட்டினரே!
எருசலேமியர்களே! அஞ்சாதீர்கள். கவலை

---

**மியூனிய ஜனங்கள்** சில பழங்காலத்து கிரேக்க மொழிபெயர்ப்புகளில் "மியூனியர்" என்றிருக்கிறது. எபிரெய மொழியில் "அம்மேனியர்" என்றிருக்கிறது.

படாதீர்கள்! கர்த்தர் உங்களோடு இருக்கிறார்.
எனவே நாளை அவர்களுக்கு எதிராகச்
செல்லுங்கள்’ என்றார்” என்று சொன்னான்.
18யோசபாத் குனிந்து வணங்கினான்.
அவனது முகம் தரையைத் தொட்டது.
யூதாவில் வாழும் ஜனங்களும் எருசலேமில்
வாழும் ஜனங்களும் கர்த்தருக்கு முன்பாக
தரையில் விழுந்து வணங்கினார்கள். அவர்
கள் அனைவரும் கர்த்தரை தொழுது
கொண்டனர். 19இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தரை, கோகாத் மற்றும் கேரா ஆகிய
கோத்திரத்தில் உள்ள லேவியர்கள் எழுந்து
நின்று துதித்தனர். அவர்கள் கர்த்தரை
மிகச் சத்தமாகத் துதித்தனர்.
20அதிகாலையில் யோசபாத்தின் படையா
னது தெக்கொவா வனாந்தரத்திற்குப்
போனது. அவர்கள் புறப்படும்போது யோச
பாத் நின்ற வண்ணம், “யூதா மற்றும்
எருசலேமில் உள்ள ஜனங்களே! நான்
சொல்வதைக் கேளுங்கள். உங்கள் தேவ
னாகிய கர்த்தரை நம்புங்கள். விசுவாசத்தில்
உறுதியாயிருங்கள். கர்த்தருடைய தீர்க்க
தரிசிகளை நம்புங்கள். அதனால் வெற்றி
பெறுவீர்கள்” என்றான்.
21பிறகு யோசபாத் ஜனங்களை அறிவுரை
களால் உற்சாகப்படுத்தினான். பின்னர்
கர்த்தரைத் துதித்துப்பாடப் பாடகர்களைத்
தேர்ந்தெடுத்தான். கர்த்தர் பரிசுத்தமும் அற்பு
தமும் கொண்டவர். இவரைத் துதித்துப்
பாடிக்கொண்டே பாடகர்கள் படைக்கு முன்
னால் சென்றார்கள். அவர்கள், “கர்த்தரைத்
துதியுங்கள். ஏனென்றால் அவரது அன்பு
என்றென்றும் நிலைத்திருக்கும்!” என்று
பாடினார்கள். 22தேவனை இவர்கள் பாடித்
துதிக்கத் தொடங்கியதும். கர்த்தர் அம்மோ
னியர், மோவாபியர், சேயீர் மலைநாட்டினர்
ஆகியோர் மீது ஒரு மறைமுகத் தாக்குதல்
நடத்தினார். இவர்களே யூதா நகரின்மேல்
போர் தொடுத்து வந்தவர்கள். அவர்கள்
அடிக்கப்பட்டார்கள். 23அம்மோனியர்களும்
மோவாபியர்களும் சேர்ந்து சேயீர் மலை
நாட்டினர் மீது போரிடத் தொடங்கினார்கள்.
அம்மோனியர்களும், மோவாபியர்களும்
சேயீர் மலைநாட்டினரைக் கொன்று அழித்
தார்கள். சேயீர் மலைநாட்டினரைக் கொன்று
முடித்த பிறகு தமக்குள்ளாகவே போரிட்டுக்
கொல்லத் தொடங்கினார்கள்.
24யூதா ஜனங்கள் வனாந்தரத்தில் பார்ப்
பதற்கு வசதியான ஒரு இடத்திற்கு வந்தனர்.
அங்கிருந்து அவர்கள் பெரும் படையைக்
கவனித்தனர். அவர்கள் செத்துப்போன
பிணங்களைத் தான் பார்க்கமுடிந்தது. எவ
ரும் அங்கு உயிரோடு இல்லை. 25யோச
பாத்தும் அவனது படையும் வந்து மரித்து
போனவர்களிடம் இருந்து விலையுயர்ந்த
பொருட்களை எடுத்துச்சென்றார்கள். அவர்
கள் பல மிருகங்களையும் செல்வங்களையும்
ஆடைகளையும் விலையுயர்ந்த பொருட்
களையும் கைப்பற்றினார்கள். அவர்கள்
அவற்றைத் தமக்கு எடுத்துக்கொண்டனர்.
அவர்கள் இவ்வாறு விலையுயர்ந்த பொருட்
களை மூன்று நாட்களாக கொள்ளை
யிட்டனர். ஏனென்றால் அவற்றின் அளவு
அவ்வளவு மிகுதியாயிருந்தது. 26நான்காவது
நாள் யோசபாத்தும் அவனது படைகளும்
பெராக்கா பள்ளத்தாக்கில் கூடினார்கள்.
அந்த இடத்தில் அவர்கள் கர்த்தரைத்
துதித்தனர். எனவே அந்த இடம் “பெராக்கா*
பள்ளத்தாக்கு” என்று இதுவரையிலும்
அழைக்கப்படுகிறது.
27பிறகு யோசபாத் யூதா மற்றும் எரு
சலேம் ஜனங்களை எருசலேமிற்குத் திரும்ப
அழைத்துக் கொண்டுபோனான். அவர்களின்
பகைவர்கள் அழிக்கப்பட்டதால் அவர்
களைக் கர்த்தர் மிகவும் மகிழ்ச்சியோடு
வைத்தார். 28அவர்கள் எருசலேமிற்குத்
தம்புருக்களோடும் சுரமண்டலங்களோடும்
எக்காளங்களோடும் வந்து கர்த்தருடைய
ஆலயத்திற்குச் சென்றனர்.
29அனைத்து நாடுகளிலும் உள்ள
அனைத்து அரசுகளும் கர்த்தருக்கு அஞ்சி
னார்கள். ஏனென்றால் அவை இஸ்ரவேலின்
எதிரிகளோடு கர்த்தர் போரிட்டதைப்பற்றி
கேள்விப்பட்டனர். 30அதனால் யோசபாத்தின்
அரசாங்கம் சமாதானமாக இருந்தது.
யோசபாத்தின் தேவன் அவனைச் சுற்றிலும்
சமாதானத்தைத் தந்தார்.

### யோசபாத் ஆட்சியின் முடிவு

31யோசபாத் யூதா நாடு முழுவதையும்
அரசாண்டான். இவன் ஆளத்தொடங்கும்
போது இவனுக்கு வயது 35, இவன்
எருசலேமில் 25 ஆண்டுகள் ஆண்டான்.
இவனது தாயின் பெயர் அசுபாள். இவள்
சில்கியின் மகள். 32யோசபாத் தனது தந்தை
ஆசாவைப் போன்று சரியான வழியில்
வாழ்ந்தான். அவன் ஆசாவின் வழியைப்
பின்பற்றுவதில் இருந்து மாறவில்லை.
கர்த்தருடைய பார்வையில் நல்லவற்றையேச்
செய்தான். 33ஆனால் மேடைகள் அகற்றப்பட
வில்லை. தம் முற்பிதாக்கள் பின்பற்றிய
தேவனைப் பின்பற்றுவதற்காக ஜனங்கள்
தங்களுடைய இருதயத்தைத் திருப்பவில்லை.
34யோசபாத் செய்த மற்ற செயல்களைப்
பற்றி தொடக்க முதல் இறுதிவரை உள்ள
வற்றைப்பற்றி ஆனானியின் மகனாகிய
யெகூவின் ஆவணங்களில் எழுதப்பட்டுள்
ளன. பிரதி செய்யப்பட்டு, ‘இஸ்ரவேல்
அரசர்களின் வரலாறு’ என்னும் புத்தகத்தில்
இவை சேர்க்கப்பட்டன.
35பிறகு யூதாவின் அரசனான யோசபாத்
இஸ்ரவேல் அரசனான அகசியாவோடு ஒரு
ஒப்பந்தம் செய்துக்கொண்டான். அகசியா

---

**பெராக்கா** இச்சொல்லிற்கு “ஆசீர்வாதம்” அல்லது “துதி” எனப் பொருள்படும்.

தீமைச் செய்தான். 36யோசபாத் அகசியா
வோடு சேர்ந்துகொண்டு தர்ஷீசுக்குச் செல்ல
கப்பல் கட்டினான். அவர்கள் கப்பல்களை
எசியோன் கேபேரிலே கட்டினார்கள்.
37பிறகு எலியேசர் யோசபாத்துக்கு எதி
ராகப் பேசினான். எலியேசரின் தந்தை
பெயர் தொதொவா. எலியேசர் மரேசா
ஊரினன். அவன், “யோசபாத், நீ அகசியா
வோடு சேர்ந்துவிட்டாய். அதனால் தான்
கர்த்தர் உனது வேலைகளை அழிப்பார்”
என்றான். கப்பல்கள் நொறுங்கிப்போயின.
அதனால் யோசபாத்தும் அகசியாவும் தம்
ஆட்களை தர்ஷீசுக்கு அனுப்பமுடியாமல்
போயிற்று.

21 யோசபாத் மரித்ததும் தன் முற்
பிதாக்களோடு அடக்கம் செய்யப்
பட்டான். அவன் தாவீதின் நகரிலே
அடக்கம் செய்யப்பட்டான். யோராம்
யோசபாத்தின் இடத்தில் புதிய அரசன்
ஆனான். யோராம் யோசபாத்தின் மகன்.
2அசரியா, ஏகியேல், சகரியா, அசரியா,
மிகாவேல், செப்பத்தியா எனும் சகோதரர்
கள் யோராமிற்கு இருந்தனர். இவர்கள்
யோசபாத்தின் மகன்கள். யோசபாத் யூதா
வின் அரசன் ஆவான். 3யோசபாத் தன்
மகன்களுக்கு வெள்ளி, பொன், விலை
யுயர்ந்த பொருட்கள் என்று பல பரிசு
களைக் கொடுத்தான். பலமான கோட்டை
களையும் அவர்களின் பொறுப்பில் விட்
டான். ஆனால் அவன் தனது ஆட்சியை
யோராமிடம் கொடுத்தான். ஏனென்றால்
அவன் தான் மூத்த மகன்.

## யூதா அரசனான யோராம்

4யோராம் தனது தந்தையின் அரசை
ஏற்றுக்கொண்டதும் தன்னைப் பலப்படுத்திக்
கொண்டான். பிறகு வாளால் தன்
சகோதரர்கள் அனைவரையும் கொன்றான்.
இஸ்ரவேல் தலைவர்கள் சிலரையும் இவன்
கொன்றான். 5யோராம் ஆட்சிக்கு வந்த
போது அவனுக்கு 32 வயது. அவன்
எருசலேமில் 8 ஆண்டுகள் ஆண்டான்.
6இஸ்ரவேல் அரசர்களின் வழியிலேயே அவ
னும் ஆண்டான். ஆகாபின் குடும்பத்தைப்
போன்றே அவனும் வாழ்ந்தான். ஏனென்
றால் அவன் ஆகாபின் மகளை மணந்தி
ருந்தான். கர்த்தருடைய பார்வையில்
யோராம் தீயவற்றைச் செய்தான். 7ஆனால்
கர்த்தர் தாவீதின் வம்சத்தை அழிக்க விரும்ப
வில்லை. ஏனென்றால் கர்த்தர் தாவீதோடு
ஏற்கனவே உடன்படிக்கை செய்திருந்தார்.
தாவீதிற்கும் அவனது குடும்பத்திற்கும் என்
றென்றைக்கும் விளக்கேற்றி வைப்பதாகக்
கர்த்தர் வாக்களித்திருந்தார்.

8யோராமின் காலத்தில் யூதாவின் ஆட்சிக்
குள்ளிருந்த ஏதோம் தனியாகப் பிரிந்தது.
அவர்கள் தங்களுக்கென்று ஒரு அரசனை
யும் தேர்ந்தெடுத்துக்கொண்டனர். 9எனவே
யோராம் தனது அனைத்து தளபதிகளோடும்
இரதங்களோடும் ஏதோமிற்குச் சென்றான்.
ஏதோமியப்படை யோராமையும் அவனது
இரதப்படையையும் சூழ்ந்துக்கொண்டனர்.
ஆனால் இரவில் யோராம் அவர்களை
முறியடித்தான். 10அந்த நேரத்திலிருந்து
இன்றுவரை ஏதாம் நாடு யூதாவிற்கு எதி
ராகக் கலகம் செய்தவாறு உள்ளது. லீப்னா
ஊரினைச் சேர்ந்தவர்களும் யோராமுக்கு
எதிராகத் திரும்பினார்கள். யோராம் தேவ
னாகிய கர்த்தரை விட்டு நீங்கியதால் இது
நடந்தது. யோராமின் முற்பிதாக்கள் பின்
பற்றிய தேவன் அவரே. 11யோராமும் யூதா
வின் மலைப்பகுதிகளில் மேடைகளை
அமைத்தான். எருசலேம் ஜனங்கள் தேவன்
விரும்புவதைச் செய்யாதவாறு யோராம்
ஆண்டான். அவன் யூதாவின் ஜனங்களைக்
கர்த்தரை விட்டு விலக்கி வழிநடத்திச்
சென்றான்.

12எலியா தீர்க்கதரிசியிடமிருந்து யோராம்
ஒரு செய்தியைப் பெற்றான். அந்தச் செய்தி
சொன்னதாவது: “தேவனாகிய கர்த்தர்
சொன்னது இது தான். உனது தந்தையான
தாவீது பின்பற்றிய தேவன் இவர்தான்.
‘யோராம்! நீ உனது தந்தை யோசபாத்
வாழ்ந்த வழியில் வாழவில்லை. யூதாவின்
அரசனான ஆசா வாழ்ந்த வழியிலும் நீ
வாழவில்லை. 13நீயோ இஸ்ரவேலின்
அரசர்கள் வாழ்ந்தது போன்று வாழ்ந்து
வருகிறாய். யூதா மற்றும் எருசலேம்
ஜனங்கள் தேவன் விரும்புகிறதைச் செய்யா
திருக்க செய்துள்ளாய். ஆகாபும் அவன்
குடும்பத்தினரும் செய்தது இதுவே. அவர்கள்
தேவனுக்கு நன்றியுடையவர்களாக இல்லை.
நீ உன்னுடைய சகோதரர்களைக் கொன்றி
ருக்கிறாய். உனது சகோதரர்கள் உன்னை
விட நல்லவர்கள். 14எனவே, இப்போது
கர்த்தர் விரைவில் உனது ஜனங்களை
அதிக தண்டனை கொடுத்துத் தண்டிப்பார்.
உனது குழந்தைகள், மனைவிகள், உனக்
குரிய சொத்துக்கள் ஆகிய அனைத்தையும்
கர்த்தர் தண்டிப்பார். 15நீ கொடிய குடல்
நோயால் அவதிப்படுவாய். இது நாளுக்கு
நாள் மிகுதியாகும். பிறகு உனது கொடூர
மான நோயால், உனது குடல் வெளியில்
வரும்’ என்று கர்த்தர் கூறுகிறார்.”

16கர்த்தர் பெலிஸ்திய ஜனங்களையும்
எத்தியோப்பியர்களுக்கு அருகில் வசித்த
ஆராப் ஜனங்களையும் யோராமின்
மீது கோபங்கொள்ளுமாறு விளைவித்தார்.
17அவர்கள் யூதா நாட்டைத் தாக்கினார்கள்.
அரசனது வீட்டிற்குச் சொந்தமான
அனைத்துச் செல்வங்களையும் அவர்கள்
எடுத்துச்சென்றார்கள். யோராமின் மனைவி
களையும் பிள்ளைகளையும் கைப்பற்றினர்.
யோராமின் இளைய மகன்மட்டும் விடப்

பட்டான். அவனது பெயர் யோவாகாஸ்.*
18இவையனைத்தும் நிகழ்ந்த பிறகு கர்த்தர்
யோராமிற்குக் குடல்நோய் வரும்படிச் செய்
தார். அது குணப்படுத்த முடியாத அளவிற்கு
இருந்தது. 19பிறகு இரண்டாண்டுகள் கழிந்து
அவனது நோயின் காரணமாக குடல்
வெளியில் வந்தது. அவன் மிகுந்த வலியால்
மரித்துப்போனான். இவனது தந்தைக்கு
வாசனை பொருட்களை எரித்ததுபோல்
இவனுக்கு ஜனங்கள் எரிக்கவில்லை.
20யோராம் அரசனானபோது 32 வயதுள்ளவ
னாயிருந்து 8 வருஷம் எருசலேமில் அர
சாண்டு மரித்துப்போனான். அவன்
மரித்ததும் அவனுக்காக எவரும் துக்கப்பட
வில்லை. ஜனங்கள் யோராமை தாவீதின்
நகரத்திலே அடக்கம் செய்தனர். ஆனால்
அரசர்களுக்குரிய கல்லறையில் அடக்கம்
செய்யவில்லை.

## யூதாவின் அரசனான அகசியா

22 யோராமின் இடத்திற்கு எருசலேம்
ஜனங்கள் அகசியாவைப் புதிய அரச
னாகத் தேர்ந்தெடுத்தனர். அகசியா யோரா
மின் இளைய மகன் ஆவான். யோராமின்
முகாமை அரபியர்களுடன் சேர்ந்துக்
கொண்டு வந்தவர்கள் தாக்கியபோது,
யோராமின் மூத்த மகன்களைக் கொன்று
விட்டனர். எனவே அகசியா மட்டுமே
மீதியாகயிருந்ததால் யூதாவின் அரசனா
னான். 2அகசியா ஆட்சிக்கு வந்தபோது
அவனுக்கு 22 வயது. அகசியா எருசலேமில்
ஓராண்டு ஆட்சி செய்தான். அவனது
தாயின் பெயர் அத்தாலியாள். அவள்
ஓம்ரியின் மகள். 3அகசியாவும் ஆகாப்பின்
குடும்பத்தினரைப் போலவே வாழ்ந்தான்.
இவன் இவ்வாறு வாழ்வதற்கு இவனது
தாயே காரணமாக இருந்தாள். இவன் தவறு
செய்ய அவள் தூண்டினாள். 4கர்த்தருடைய
பார்வையில் அகசியா தீமைச் செய்து
வந்தான். இதைத்தான் ஆகாப் குடும்பத்தின
ரும் செய்துவந்தனர். அகசியாவின் தந்தை
மரித்த பிறகு ஆகாபின் குடும்பத்தினர்
இவனுக்கு தீய அறிவுரைகளைக் கூறிவந்த
னர். அவை அவனுக்கு மரணத்துக்கு
ஏதுவாயிற்று. 5ஆகாப்பின் குடும்பத்தினர்
தந்த அறிவுரைகளை அகசியா பின்பற்றி
னான். இவன் யோராமோடு சேர்ந்து
கொண்டு ஆராமின் அரசனான ஆசகேலுக்கு
எதிராகச் சண்டையிட ராமோத் கீலேயாத்
நகரத்திற்குச் சென்றான். யோராமின்
தந்தையின் பெயர் ஆகாப். இவன் இஸ்ர
வேலின் அரசன். ஆனால் ஆராமியர்கள்
போரில் யோராமைக் காயப்படுத்தினர்.
6யோராம் தன்னைக் குணப்படுத்திக்கொள்ள
யெஸ்ரெயேல் நகரத்திற்குத் திரும்பிப்
போனான். இவன் ஆராம் அரசனான ஆசகே
லுக்கு எதிராக ராமோத்தில் சண்டையிட்ட
போது இக்காயங்களை அடைந்தான். பிறகு
யோராமைப் பார்க்க அகசியா யெஸ்ரெயேல்
நகரத்திற்கு சென்றான். அகசியாவின்
தந்தையின் பெயர் யோராம். இவன்
யூதாவின் அரசன். யோராமின் தந்தையின்
பெயர் ஆகாப். யோராம் காயம்பட்டதால்
யெஸ்ரெயேல் நகரத்தில் இருந்தான்.
7யோராமைப் பார்க்க அகசியா சென்ற
பொழுது, தேவன் அகசியாவிற்கு மர
ணத்தை விளைவித்தார். அகசியா வந்ததும்
யோராமோடு யெகூவைச் சந்திக்கப்
போனான். யெகூவின் தந்தை நிம்சி. ஆகா
பின் குடும்பத்தை அழிக்க கர்த்தர் யெகூ
வைத் தேர்ந்தெடுத்தார். 8யெகூ ஆகாபின்
குடும்பத்தைத் தண்டித்துக்கொண்டிருந்தான்.
அதோடு அவன் அகசியாவிற்குச் சேவை
செய்த யூதாவின் தலைவர்களையும் அகசியா
வின் உறவினர்களையும் கண்டுபிடித்து
அவர்களைக் கொன்றான். 9பிறகு யெகூ
அகசியாவைத் தேடினான். அவன் சமாரியா
நகரத்திலே ஒளிந்துகொள்ள முயன்றபோது
யெகூவின் ஆட்கள் பிடித்துக்கொண்டனர்.
அவனை அவர்கள் யெகூவிடம் கொண்டு
வந்தனர். அவர்கள் அவனைக் கொன்று
அடக்கம் செய்தனர். அவர்கள், “அகசியா
யோசபாத்தின் சந்ததியான். யோசபாத் தன்
முழுமனதோடு கர்த்தரைப் பின்பற்றினான்”
என்று கூறினர். அகசியாவின் குடும்பத்தின
ருக்கு யூதா முழுவதையும் ஆள்வதற்குரிய
பெலன் இல்லாமல் போனது.

## அத்தாலியாள் அரசி

10அத்தாலியாள் அகசியாவின் தாய்
ஆவாள். இவள் தன் மகன் மரித்துப்
போனதை அறிந்ததும், யூதாவில் உள்ள
அரசர்களின் எல்லா பிள்ளைகளையும்
கொன்று போட்டாள். 11ஆனால் யோசே
பியாத் அகசியாவின் மகனான யோவாசை
எடுத்து மறைத்துவைத்தாள். அவள் யோவா
சையும் அவனது தாதிகளையும் படுக்கை
யறைக்குள்ளே ஒளித்தாள். யோசேபியாத்
யோராம் அரசனின் மகள். அவள்
யோய்தாவின் மனைவி. யோய்தா ஒரு
ஆசாரியன். யோசேபியாத் அகசியாவின்
சகோதரி. அத்தாலியாள் யோவாசைக்
கொல்லவில்லை. காரணம் அவன் மறைக்கப்
பட்டான். 12யோவாஸ் ஆசாரியர்களோடு
தேவனுடைய ஆலயத்தில் ஆறு ஆண்டு
களுக்கு மறைக்கப்பட்டான். அக்காலக்
கட்டத்தில், அத்தாலியாள் அந்நாட்டை
அரசியைப்போல ஆண்டுவந்தாள்.

## யோய்தா ஆசாரியனும் யோவாஸ் அரசனும்

23 ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு
யோய்தா தனது பலத்தைக் காட்டி

---

**யோவாகாஸ்** இது அகாசியா என்றும் உச்சரிக்கப்பட்டது.

னான். அவன் எல்லா படைத்தலைவர்
களுடனும் ஒரு ஒப்பந்தம் செய்துக்
கொண்டான். எரோகாமின் மகன் அசரியா,
யோகனானின் மகன் இஸ்மவேல், ஓபேதின்
மகன் அசரியா, ஆதாயாவின் மகன்
மாசெயா, சிக்ரியின் மகன் எலிஷாபாத்
ஆகியோர் அந்த படைத்தலைவர்கள். 2அவர்
கள் யூதா முழுவதும் சுற்றி யூதாவின்
நகரங்களில் இருந்த லேவியர்களைக் கூட்டி
னார்கள். இஸ்ரவேல் கோத்திரங்களின்
தலைவர்களையும் கூட்டினார்கள். பிறகு
அவர்கள் எருசலேமிற்குச் சென்றனர்.
3அனைத்து ஜனங்களும் கூடி, தேவனுடைய
ஆலயத்தில் அரசனோடு ஒரு ஒப்பந்தம்
செய்துக்கொண்டனர்.

யோய்தா அவர்களிடம், "அரசனது மகன்
ஆட்சி செய்வான். இதுதான் தாவீதின்
சந்ததியினரைக் குறித்துக் கர்த்தர் வாக்க
ளித்தது. 4இப்போது, நீங்களும் செய்ய
வேண்டியது இதுதான். ஆசாரியர்களிலும்
லேவியர்களிலும் மூன்றில் ஒரு பகுதியினர்
ஓய்வுநாளில் கடமையாற்றச் செல்லும்
பொழுது கதவுகளைக் காவல் காக்க
வேண்டும். 5அடுத்த மூன்றில் ஒரு பங்கினர்
அரசனின் இருப்பிடத்தைக் காவல்
காக்கவேண்டும். மேலும் மூன்றில் ஒரு
பங்கினர் அஸ்திவார வாசலைக் காவல்
காக்கவேண்டும். ஆனால் மற்றவர்கள் அனை
வரும் கர்த்தருடைய ஆலயப் பிரகாரங்களில்
இருக்கவேண்டும். 6ஒருவரையும் கர்த்தரு
டைய ஆலயத்திற்குள் அனுமதிக்க வேண்
டாம். ஆசாரியர்கள் மற்றும் லேவியர்களை
மட்டும் அனுமதிக்கவேண்டும். அவர்கள்
கர்த்தருடைய ஆலயத்தில் சேவைச் செய்
பவர்கள். அதோடு பரிசுத்தமானவர்கள் மற்ற
வர்கள் தங்கள் பணிகளைச் செய்வார்களாக.
7லேவியர்கள் அரசனுக்கு அருகில் தங்கி
யிருக்க வேண்டும். ஒவ்வொருவரும் தங்கள்
வாளைத் தங்களோடு வைத்திருக்கவேண்டும்.
மற்றவர்கள் எவராவது ஆலயத்திற்குள்
நுழைய முயன்றால் அவர்களைக் கொல்ல
வேண்டும். அரசன் எங்கே சென்றாலும்
அவனோடு நீங்கள் செல்லவேண்டும்" என்
றான்.

8லேவியர்களும் யூதா ஜனங்களனைவரும்
யோய்தா ஆசாரியன் சொன்னவற்றுக்
கெல்லாம் கீழ்ப்படிந்தனர். யோய்தா ஆசாரி
யக் குழுவிலுள்ள எவரையும் விட்டுவைக்க
வில்லை. எனவே ஒவ்வொரு தளபதிகளும்
தங்கள் ஆட்களோடு முறைப்படி ஓய்வுநாளில்
வந்து முறைப்படி ஓய்வுநாளில் போய்க்
கொண்டு இருந்தனர். 9தாவீது அரசனுக்குரிய
ஈட்டிகளையும் சிறியதும் பெரியதுமான
கேடயங்களையும் யோய்தா ஆசாரியன்
அதிகாரிகளுக்குக் கொடுத்தான். இந்த ஆயுதங்
கள் எல்லாம் தேவனுடைய ஆலயத்திற்குள்
வைக்கப்பட்டிருந்தன. 10பிறகு யோய்தா
ஆட்களிடம் எங்கெங்கே நிற்கவேண்டும்
என்று கட்டளையிட்டான். ஒவ்வொருவரும்
தங்கள் ஆயுதங்களைக் கையில் வைத்திருந்த
னர். ஆலயத்தின் வலதுபக்கத்தில் இருந்து
ஆலயத்தில் இடதுபக்கம்வரை வரிசையாக
ஆட்கள் நின்றுக்கொண்டிருந்தனர். அவர்கள்
பலிபீடத்தின் அருகிலும், ஆலயத்திலும்,
அரசன் அருகிலும் நின்றனர். 11அவர்கள்
அரசனின் மகனை வெளியே அழைத்துவந்து
அவனுக்கு முடிச்சூட்டினார்கள். அவனுக்குச்
சட்டப் புத்தகத்தின் ஒரு பிரதியைக்
கொடுத்தனர். பிறகு அவர்கள் யோவாசை
அரசனாக்கினாகள். யோய்தாவும் அவனது
மகன்களும் அவனுக்கு அபிஷேகம் செய்
தனர். அவர்கள், "அரசன் பல்லாண்டு
வாழ்க!" என்று வாழ்த்தினார்கள்.

12ஜனங்கள் ஆலயத்தை நோக்கி ஓடு
வதையும் அங்கே அவர்கள் அரசனை
வாழ்த்துவதையும் அத்தாலியாள் கேட்டாள்.
அவளும் கர்த்தருடைய ஆலயத்திற்கு ஜனங்
களிடையே வந்தாள். 13அவள் அரசனைக்
கண்டாள். முன்வாயிலுக்கு முன்னால் உள்ள
தூணுக்கருகில் அரசன் நின்றுக்கொண்டிருந்
தான். அதிகாரிகளும், எக்காளம் ஊதுகி
றவர்களும் அரசனுக்கருகில் நின்றுக்
கொண்டிருந்தனர். அந்த நாட்டு ஜனங்கள்
மகிழ்ச்சியோடு எக்காளம் ஊதினார்கள்,
பாடகர்களும் இசைக்கருவிகளை இயக்கி
னார்கள். அவர்கள் ஜனங்களையும் துதித்துப்
பாடும்படிச் செய்தனர். அத்தாலியாள்
இதனைப் பார்த்து தன் ஆடைகளைக்
கிழித்துக்கொண்டு, "துரோகம் துரோகம்"
என்று கத்தினாள்.

14யோய்தா ஆசாரியன் படைத்தளபதி
களை அழைத்தான். அவன் அவர்களிடம்,
"அத்தாலியாளைப் பிடித்து வெளியே
கொண்டுபோங்கள். அவளை யாராவது பின்
பற்றினால், அவர்களைக் கொல்ல உங்கள்
வாள்களைப் பயன்படுத்துங்கள்" என்றான்.
அதோடு ஆசாரியர் வீரர்களிடம், "அத்தாலி
யாளைக் கர்த்தருடைய ஆலயத்தில்
கொன்றுவிடாதீர்கள்" என்று எச்சரித்தான்.
15அத்தாலியாள் அரசனின் வீட்டுக் குதிரை
வாயிலுக்குள் நுழைய முயன்றபோது
வீரர்கள் அவளைப் பிடித்தார்கள். பிறகு
அவளை அங்கேயே கொன்றனர்.

16பிறகு யோய்தா அரசனோடும்
அனைத்து ஜனங்களோடும் ஒரு ஒப்பந்தம்
செய்துக்கொண்டான். அவர்கள் அனை
வரும் கர்த்தருடைய ஜனங்கள் என்பதை
ஒப்புக்கொண்டனர். 17ஜனங்கள் அனைவரும்
பாகால் ஆலயத்திற்குப்போய் அதை இடித்
தனர். அவர்கள் பலிபீடங்களையும் விக்கிர
கங்களையும் நொறுக்கினார்கள். பாகாலின்
பூசாரியான மாத்தானைப் பலிபீடத்துக்கு
முன்பாகவே கொன்றுபோட்டனர்.

18பிறகு கர்த்தருடைய ஆலயப் பொறுப்
புக்கான ஆசாரியர்களை யோய்தா தேர்ந்

தெடுத்தான். அவர்கள் லேவியர்களாக
இருந்தனர். தாவீதே அவர்களுக்கு கர்த்தரு
டைய ஆலயப் பொறுப்பினைக் கொடுத்துள்
ளார். மோசேயின் சட்டத்தின்படியே அவர்
கள் கர்த்தருக்குத் தகனபலிகளைத் தந்தனர்.
தாவீதின் கட்டளைபடியே அவர்கள் மகிழ்ச்
சியோடு பாடியவண்ணம் காணிக்கைகளைத்
தந்தனர். 19யோய்தா கர்த்தருடைய ஆலயத்தி
லுள்ள அனைத்து வாசல்களிலும் காவலர்
களை நியமித்தான். அதனால் சுத்தமில்லா
தவர்களும் ஆலயத்திற்குள் நுழையாதபடி
செய்தான்.
20யோய்தா படைத்தளபதிகளையும் பெரிய
வர்களையும், ஆட்சியாளர்களையும், அந்த
நாட்டில் வசித்த அனைவரையும் ஒன்றாய்த்
திரட்டினான். பிறகு கர்த்தருடைய ஆலயத்தி
லிருந்து அரசனை வெளியே அழைத்துவந்து
உயர்ந்த வாசல்வழியாக அரண்மனைக்கு
அழைத்துச்சென்றான். அங்கே அவனைச்
சிங்காசனத்தின்மேல் அமரவைத்தனர். 21யூதா
விலுள்ள ஜனங்கள் அனைவரும் மகிழ்ச்சி
யோடு இருந்தனர். எருசலேம் நகரம்
சமாதானமடைந்தது. ஏனென்றால் அத்தாலி
யாள் வாளால் கொல்லப்பட்டாள்.

### யோவாஸ் ஆலயத்தை மீண்டும் கட்டுகிறான்

24 யோவாஸ் அரசனானபோது அவ
னுக்கு 7 வயது. அவன் எருச
லேமில் 40 ஆண்டுகள் ஆண்டான். அவனது
தாயின் பெயர் சிபியாள். அவள் பெயர்
செபா நகரத்தவள். 2யோய்தா ஆசாரியன்
உயிரோடிருந்தவரை, யோவாஸ் கர்த்தரு
டைய முன்னிலையில் சரியானதைச் செய்து
வந்தான். 3யோய்தா, யோவாசுக்கு இரண்டு
மனைவியரைத் தேர்ந்தெடுத்தான். அவனுக்கு
மகன்களும் மகள்களும் இருந்தனர்.
4பின்னர், யோவாஸ் கர்த்தருடைய
ஆலயத்தை மீண்டும் கட்ட முடிவுச்செய்தான்.
5யோவாஸ் ஆசாரியர்களையும் லேவியர்
களையும் ஒன்றாகத் திரட்டினான். அவன்
அவர்களிடம், “யூதாவின் நகரங்களுக்குச்
சென்று அனைத்து இஸ்ரவேல் ஜனங்களிட
மிருந்தும் பணத்தைச் சேகரியுங்கள். ஆண்டு
தோறும தேவனுடைய ஆலயத்தைப் பழுது
பார்த்து மேலும் கட்டவேண்டும். வேகமாகப்
போய் இதனைச் செய்யுங்கள்” என்றான்.
ஆனால் லேவியர்கள் அவசரப்படவில்லை.
6எனவே, அரசன் தலைமை ஆசாரிய
னான யோய்தாவை அழைத்தான். அவனி
டம் அரசன், “யோய்தா, யூதாவிலும் எருச
லேமிலும் வரியை வசூலிக்க நீங்கள் ஏன்
லேவியர்களை அனுப்பவில்லை? கர்த்த
ருடைய ஊழியக்காரனான மோசேயும்
இஸ்ரவேல் ஜனங்களும் அந்த வரிப்பணத்தை
பரிசுத்தக் கூடாரத்திற்குப் பயன்படுத்தி
னார்களே” என்றான்.
7முற்காலத்தில் அத்தாலியாளின் மகன்கள்
கர்த்தருடைய ஆலயத்திற்குள் உடைத்துக்
கொண்டு சென்றார்கள். அவர்கள் இங்குள்ள
பரிசுத்தமானப் பொருட்களை எல்லாம்
கொண்டுபோய் பாகால் ஆலயத்தில் பயன்
படுத்தினார்கள். அத்தாலியாள் மிகவும் தீயப்
பெண்.
8ஒரு பெட்டியைச் செய்து வாசலுக்கு
வெளியில் கர்த்தருடைய ஆலயத்தில்
வைக்கு மாறு யோவாஸ் அரசன் கட்டளை
யிட்டான். 9பிறகு யூதாவிலும் எருச
லேமிலும் லேவியர்கள் ஒரு அறிவிப்பு
செய்தனர். கர்த்தருக்கு வரிப்பணத்தைக்
கொண்டுவரும்படி அவர்கள் ஜனங்களை
வேண்டிக் கேட்டுக்கொண்டனர். இஸ்ர
வேலர்கள் பாலைவனத்தில் இருந்தபோது,
தேவனின் ஊழியனான மோசே எங்களிடம்
கொடுக்கும்படி கேட்டுக்கொண்ட பணத்தின்
அளவுதான் இவ்வரிப்பணமும் ஆகும்.
10அனைத்து தலைவர்களும் ஜனங்களும்
மகிழ்ந்தனர். அவர்கள் தம் பணத்தைக்
கொண்டுவந்து பெட்டியில் போட்டனர்.
பெட்டி நிரம்பும்வரை அவர்கள் போட்டுக்
கொண்டிருந்தனர். 11பின்னர் லேவியர்கள்
அந்தப் பெட்டியை அரசனின் அதிகாரி
களிடம் எடுத்துச்சென்றார்கள். அப்பெட்டி
முழுவதும் பணம் இருப்பதை அவர்கள்
கண்டனர். அரசனின் செயலாளரும்
தலைமை ஆசாரியனின் அதிகாரிகளும்
வந்து பணத்தைப் பெட்டிக்குள்ளிருந்து
வெளியே எடுத்தனர். பிறகு அவர்கள் அந்தப்
பெட்டியை அதன் இடத்தில் வைத்த னர்.
இதை அடிக்கடி அவர்கள் செய்து நிறையப்
பணம் சேர்த்தார்கள். 12பிறகு யோவாஸ்
அரசனும் யோய்தா ஆசாரியனும்
அப்பணத்தைக் கர்த்தருடைய ஆலயத்தில்
வேலைச் செய்பவர்களுக்குக் கொடுத்தனர்.
கர்த்தருடைய ஆலயத்தைத் திரும்பக்
கட்டுவதற்காக மரம் குடைவதில் திறமைப்
பெற்றவர்களையும் தச்சர்களையும்
வேலைக்கு அமர்த்தினார்கள். மேலும் அவர்
கள் கர்த்தருடைய ஆலயத்தைத் திரும்பக்
கட்டுவதற்காக இரும்பிலும் வெண்கலத்தி
லும் வேலைச் செய்வதில் திறமைமிக்கவர்
களையும் வேலைக்கு அமர்த்தினார்கள்.
13வேலையை மேற்பார்வை செய்பவர்கள்
உண்மையானவர்கள். கர்த்தருடைய ஆலயத்
தைப் புதுப்பிக்கும் வேலை வெற்றியடைந்
தது. அவர்கள் தேவனுடைய ஆலயத்தை
முன்பு இருந்ததுபோலவே அழகாகவும் பல
மாகவும் கட்டினார்கள். 14எல்லா வேலை
களும் முடிந்தபிறகு மீதியான பணத்தை
அரசனிடமும் யோய்தா ஆசாரியனிடமும்
கொண்டுவந்தனர். கர்த்தருடைய ஆலயத்
திற்குத் தேவையான பொருட்களை வாங்கு
வதற்காக அவர்கள் அப்பணத்தைச் செலவு
செய்தனர். அப்பொருட்கள் ஆலயத்தில்
சேவைச்செய்யவும் சர்வாங்கத் தகனபலிகள்
போன்றவற்றை செய்யவும் பயன்பட்டன.

அவர்கள் கலசங்களையும் வேறு பொருட்
களையும் பொன்னாலும் வெள்ளியாலும்
செய்தனர். யோய்தா உயிரோடு இருக்கும்
வரை ஆசாரியர்கள் கர்த்தருடைய
ஆலயத்தில் தினந்தோறும் தகனபலிகளைக்
கொடுத்துவந்தனர்.
15யோய்தா முதியவனானான். நீண்ட
வாழ்க்கை வாழ்ந்து பின் மரித்துப்போனான்.
அவன் மரிக்கும்போது அவனுக்கு 130
வயது. 16யோய்தாவைத் தாவீதின் நகரத்திலே
அரசர்களை அடக்கம் செய்யக்கூடிய இடத்
தில் ஜனங்கள் அடக்கம் செய்தனர்.
இஸ்ரவேலில் தேவனுக்கும், தேவாலயத்திற்
கும் ஏராளமான அளவில் நற்சேவை
செய்திருக்கிறான் என்பதாலேயே ஜனங்கள்
அந்த இடத்தில் அவனை அடக்கம்
செய்தனர்.
17யோய்தா மரித்தப் பிறகு, யூதாவின்
தலைவர்கள் அரசன் யோவாசிடம் வந்து
பணிந்து வணங்கினார்கள். அவர்கள் கூறு
வதை அரசன் கவனித்தான். 18அரசனும்
அந்தத் தலைவர்களும் தேவனாகிய கர்த்த
ருடைய ஆலயத்தைவிட்டு விலகினார்கள்.
இவர்களது முற்பிதாக்கள் தேவனாகிய
கர்த்தரைப் பின்பற்றி வந்தனர். இவர்களோ
விக்கிரங்களையும் சிலைகளையும் வழிபட்ட
னர். அரசனும் தலைவர்களும் தவறு
செய்ததால் தேவன் யூதா மற்றும் எருசலேம்
ஜனங்கள் மீதுக் கோபங்கொண்டார்.
19தேவன் தீர்க்கதரிசிகளை அனுப்பி ஜனங்
களைத் தன்னிடம் திரும்ப அழைக்க முயன்
றார். தீர்க்கதரிசிகள் ஜனங்களை எச்சரித்த
னர். ஜனங்கள் கேட்க மறுத்துவிட்டனர்.
20தேவனுடைய ஆவி சகரியா மீது வந்
தது. சகரியாவின் தந்தை ஆசாரியனாகிய
யோய்தா ஆவான். சகரியா ஜனங்களின்
முன்பு நின்று, “தேவன் சொல்வது இது
தான்: ‘நீங்கள் ஏன் கர்த்தருடைய கட்டளை
களுக்குக் கீழ்ப்படிய மறுக்கின்றீர்கள்? நீங்கள்
வெற்றியடையமாட்டீர்கள். நீங்கள் கர்த்தரை
விட்டு விலகிவிட்டீர்கள். எனவே கர்த்தரும்
உங்களைவிட்டு விலகிவிட்டார்!’” என்றான்.
21ஆனால் ஜனங்கள் சகரியாவிற்கு
எதிராகத் திட்டமிட்டனர். சகரியாவைக்
கொல்லும்படி அரசன் கட்டளையிட்டான்.
எனவே அவன் மரிக்கும்வரை ஜனங்கள்
அவன் மீது கற்களை எறிந்தார்கள். ஜனங்
கள் இதனை ஆலய பிரகாரத்திலேயே
செய்தனர். 22யோய்தா தன் மீது காட்டிய
கருணையை யோவாஸ் அரசன் நினைவுக்
கூறவில்லை. யோய்தா சகரியாவின் தந்தை.
எனினும் யோவாஸ் யோய்தாவின் மகனா
கிய சகரியவைக் கொன்றான். மரிப்பதற்கு
முன்பு சகரியா, “நீ செய்வதை கர்த்தர்
பார்த்துக்கொண்டிருக்கிறார். அவர் உன்
னைத் தண்டிப்பார்!” என்றான்.
23ஆண்டு முடிவில், யோவாசுக்கு எதிராக
ஆராமியப்படை வந்தது. அவர்கள் யூதாவை
யும் எருசலேமையும் தாக்கினார்கள். மேலும்
அவர்கள் அந்த ஜனங்களின் தலைவர்கள்
அனைவரையும் கொன்றார்கள். தமஸ்கு
அரசனுக்கு விலையுயர்ந்தப் பொருட்கள்
அனைத்தையும் அனுப்பிவைத்தனர். 24மிக
வும் குறைந்த எண்ணிகையுள்ள வீரர்
களுடைய குழுவுடனேயே ஆராமியப்படை
வந்தது. ஆயினும் அது பெரும் அளவுடைய
யூதாவின் படையை வெல்லுமாறு கர்த்தர்
அருளினார். யூதாவின் ஜனங்கள் தம்
முற்பிதாக்கள் வழிபட்ட தேவனாகிய
கர்த்தரை விட்டு விலகியதால், கர்த்தர்
இவ்வாறுச் செய்தார். எனவே யோவாஸ்
தண்டிக்கப்பட்டான். 25ஆராமியர்கள் யோவா
சைவிட்டுப் போகும்போது அவன் பெருத்த
காயம் அடைத்திருந்தான். யோவாசின்
சொந்த வேலைக்காரர்களும் அவனுக்கெதி
ராகத் திட்டமிட்டனர். அவன் யோய்தா
ஆசாரியனின் மகனான சகரியாவைக்
கொன்றான் என்பதனால் அவர்கள் இதைச்
செய்தார்கள். வேலைக்காரர்கள் யோவாசை
அவனுடைய படுக்கையிலேயே கொன்று
போட்டனர். யோவாஸ் மரித்ததும், அவ
னைத் தாவீதின் நகரத்திலேயே அடக்கம்
செய்தனர். ஆனால் அரசர்களை அடக்கம்
செய்யும் இடத்தில் அவனை அடக்கம்
செய்யவில்லை.
26யோவாசுக்கு எதிராகத் திட்டமிட்ட
வேலைக்காரர்கள் சாபாத்தும் யோசபாத்தும்
ஆவார்கள். சாபாத்தின் தாயின் பெயர்
சீமாத் ஆகும். இவள் அம்மோனியப் பெண்
ஆவாள். யோசபாத்தின் தாயின் பெயர்
சிம்ரீத் ஆகும். இவள் மோவாபியப் பெண்
ஆவாள். 27யோவாசின் மகன்களைப்
பற்றியும் அவனுக்கு எதிரான தீர்க்கதரிசனங்
களைப் பற்றியும் தேவனுடைய ஆலயத்தை
அவன் புதுப்பித்ததைப் பற்றியும் அரசர்
களின் சரித்திரம் என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளது. யோவாசுக்குப் பிறகு
அமத்சியா புதிய அரசனானான். அமத்சியா
யோவாசின் மகன்.

### யூதாவின் அரசனான அமத்சியா

25 அரசனானபோது அமத்சியாவுக்கு 25
வயது. அவன் எருசலேமிலிருந்து
29 ஆண்டுகள் அரசாண்டான். அவனது
தாயின் பெயர் யோவதானாள். இவள்
எருசலேமியப் பெண். 2கர்த்தர் என்ன
செய்யவேண்டும் என்று விரும்பினாரோ
அதையே அமத்சியா செய்தான். ஆனால்
அவன் அவற்றை முழு மனதோடு செய்ய
வில்லை. 3அமத்சியா பலமுள்ள அரசன்
ஆனான். தன் தந்தையைக் கொன்ற அதி
காரிகளைக் கொன்றான். 4ஆனால் அவன்
அந்த அதிகாரிகளின் பிள்ளைகளைக்
கொல்லவில்லை. ஏனென்றால் மோசேயின்
புத்தகத்தில் எழுதப்பட்ட சட்டங்களுக்கு
அவன் அடிபணிந்தான். கர்த்தர், “பிள்ளை

களின் செயல்களுக்காகப் பெற்றோர்கள்
கொல்லப்படக்கூடாது. பெற்றோர்கள் செய்த
செயல்களுக்காகப் பிள்ளைகளும் கொல்லப்
படக்கூடாது. ஒருவன் தான் செய்த
பாவத்துக்காக மட்டுமே தண்டிக்கப்பட
வேண்டும்" என்று கட்டளையிட்டிருக்கி
றார்.
5அமத்சியா யூதாவின் ஜனங்களை அனை
வரையும் ஒன்றாகத் திரட்டினான். சில
குழுக்களாக அவர்களை அவன் பிரித்தான்.
பிறகு அக்குழுக்களுக்கு தளபதிகளையும்,
தலைவர்களையும் நியமித்தான். அவர்கள்
யூதா மற்றும் பென்யமீன் கோத்திரத்தின்
வீரர்களுக்குத் தலைவர்களாக இருந்தனர்.
இருபதும் அதற்கு மேலும் வயதுடைய
வீரர்களைத் தேர்ந்தெடுத்தான். இவர்கள்
ஈட்டியும் கேடயமும் கொண்டு போரிடும்
வீரர்கள் 3,00,000 பேர் இருந்தனர். 6அமத்சியா
இஸ்ரவேலில் இருந்து 1,00,000 வீரர்களை
அழைத்தான். அவர்களுக்கு 100 தாலந்து
வெள்ளியைக் கூலியாகக் கொடுத்தான்.
7ஆனால் ஒரு தேவமனிதன் (தீர்க்கதரிசி)
ஒருவன் அமத்சியாவிடம் வந்தான். அவன்,
"அரசனே, இஸ்ரவேல் வீரர்களை உன்
னோடு அழைத்துக்கொண்டு போகாதே.
கர்த்தர் இஸ்ரவேலர்களோடு இல்லை.
எப்பிராயீம் ஜனங்களோடும் கர்த்தர் இல்லை.
8உன்னை நீயே பலப்படுத்திக்கொண்டு
போருக்குத் தயாராகலாம். ஆனால் நீ வெற்றி
பெறவோ அல்லது தோல்வியடையவோ
தேவன் உதவுவார்" என்றான். 9அமத்சியா
தேவமனிதனிடம், "இஸ்ரவேல் படைக்கு
நான் ஏற்கனவே கொடுத்தப் பணத்துக்கு
என்ன செய்ய?" என்று கேட்டான். அதற்கு
தேவமனிதன், "கர்த்தரிடம் ஏராளமாக உள்
ளது. அவர் உனக்கு அவற்றைவிட
மிகுதியாகக் கொடுப்பார்" என்றான்.
10எனவே, அமத்சியா இஸ்ரவேல்
படையை எப்பிராயீமுக்குத் திருப்பி
அனுப்பி விட்டான். அவர்களுக்கு அரசன்
மீதும் யூதா ஜனங்கள் மீதும் கோபம்
மிகுந்தது. அவர்கள் கோபத்தோடு வீட்
டிற்குத் திரும்பினார்கள்.
11பிறகு அமத்சியா மிகுந்த தைரியத்தோடு
தனது படையை ஏதோம் நாட்டிலுள்ள
உப்புப் பள்ளத்தாக்குக்கு நடத்திச்சென்றான்.
அங்கே அமத்சியாவின் படையானது 10,000
சேயீர் ஆண்களைக் கொன்றது. 12யூதாவின்
படை சேயீரிலிருந்து 10,000 ஆண்களையும்
பிடித்தது. அவர்களை ஒரு மலை உச்சிக்குக்
கொண்டுபோனார்கள். அந்த ஆட்கள்
இன்னமும் உயிருடன் இருந்தார்கள். பின்னர்
யூதாவின்படை அவர்களை மலையுச்சியில்
இருந்து கீழே வீசி எறிந்தது. அவர்களது
உடல்கள் கீழேயிருந்த பாறைகளில்மேல்
உடைந்தன.
13அதே நேரத்தில், இஸ்ரவேல் படை
யானது யூதா நகரங்களைத் தாக்கியது.
அவர்கள், பெத்தொரோன் முதல் சமாரியா
வரையுள்ள நகரங்களை எல்லாம் தாக்கி
னார்கள். அவர்கள் 3,000 பேரை கொன்று
விலைமதிப்புள்ள பொருட்களைக் கைப்பற்
றிக்கொண்டனர். அவர்களை அமத்சியா
தன்னோடு போருக்கு அழைத்து போகாத
தால் அவர்கள் கோபமாக இருந்தனர்.
14ஏதோமிய ஜனங்களை வென்றபிறகு
அமத்சியா வீட்டிற்குத் திரும்பினான். சேயீர்
ஜனங்கள் தொழுதுகொண்ட தெய்வ விக்கி
ரகங்களை அவன் கொண்டுவந்தான். அமத்
சியா அவற்றைத் தொழுதுகொள்ள ஆரம்
பித்துவிட்டான். அவற்றின் முன்னால்
அவன் தரையில் விழுந்து வணங்கி அவற்
றுக்கு நறுமணப் பொருட்களை எரித்தான்.
15அதனால் அமத்சியாவின் மேல் கர்த்த
ருக்குக் கோபம் உண்டானது. அவர் அவனி
டம் ஒரு தீர்க்கதரிசியை அனுப்பினார்.
அத்தீர்க்தரிசி, "அமத்சியா, அந்த ஜனங்கள்
தொழுதுகொண்ட தெய்வகளை நீ ஏன்
தொழுதுகொள்கிறாய்? அத்தெய்வங்களால்
அவர்களை உன்னிடம் இருந்து கூட
காப்பாற்ற முடியவில்லையே!" என்றான்.
16அவ்வாறு அந்த தீர்க்கதரிசி பேசி
முடித்ததும், அரசன் அவனிடம், "அரசனுக்கு
ஆலோசனை சொல்லும்படி உன்னை
நியமிக்கவில்லை! ஆகவே சும்மாயிரு.
இல்லாவிட்டால் நீ கொல்லப்படுவாய்"
என்றான். தீர்க்கதரிசி அமைதியானான்.
ஆனால் பிறகு, "தேவன் உண்மையில்
உன்னை அழிக்கவேண்டும் என்று முடிவு
செய்துவிட்டார். ஏனென்றால் நீ தீயவற்றைச்
செய்ததோடு எனது ஆலோசனைகளையும்
கேட்கவில்லை" என்றான்.
17யூதாவின் அரசனான அமத்சியா, தனது
ஆலோசகர்களோடு ஆலோசனை செய்தான்.
பிறகு அவன் இஸ்ரவேலின் அரசனான
யோவாசுக்குத் தூது அனுப்பினான். அமத
சியா யோவாசிடம், "நாம் இருவரும் நேருக்
குநேர் சந்திப்போம்" என்று அழைத்தான்.
யோவாஸ் யோவாகாசின் மகன் ஆவான்.
யோவாகாஸ் யெகூவின் மகன் ஆவான்.
18பிறகு யோவாஸ் தனது பதிலை
அமத்சியாவிற்கு அனுப்பினான். யோவாஸ்
இஸ்ரவேலின் அரசன். அமத்சியா யூதாவின்
அரசன். யோவாஸ், "லீபனோனில் உள்ள
முட்செடியானது லீபனோனில் உள்ள
கேதுரு மரத்திற்குத் தூது அனுப்பி, 'நீ
உன் மகளை என் மகனுக்கு மணமுடித்து
தருவாயா' என்று கேட்டது. ஆனாலும் ஒரு
காட்டு மிருகம் அந்த வழியாகப்
போகும்போது அந்த முட்செடியை மிதித்துப்
போட்டது. 19நீ உனக்குள்ளே, 'நான்
ஏதோமியரை வென்றிருக்கிறேன்' என்று
கூறுகிறாய். அதற்காக நீ பெருமைப்படு
கிறாய். ஆனால் நீ உன் வீட்டிலேயே
இரு. நீ துன்பத்தில் சிக்கிக்கொள்ள வேண்
டிய தேவையில்லை. என்னிடம் போரிட

வந்தால் நீயும் யூதாவும் அழிந்துப்போவீர்
கள்" என்று சொல்லி அனுப்பினான்.
20ஆனால் அமத்சியா அதனைக் கேட்க
வில்லை. இது தேவனால் உண்டானது.
தேவன் இஸ்ரவேல் மூலம் யூதாவைத் தோற்
கடிக்க எண்ணினார். அதற்கு காரணம், யூதா
நகர ஜனங்கள் ஏதோமியரின் தெய்வங்
களைப் பின்பற்றி தொழுதுகொண்டு வந்த
னர் என்பதாகும். 21ஆகையால் இஸ்ரவேல்
அரசனான யோவாஸ் யூதாவின் அரசனான
அமத்சியாவை நேருக்குநேராக பெத்ஷி
மேசிலே சந்தித்தான். பெத்ஷிமேசு யூதாவிலே
உள்ளது. 22இஸ்ரவேல் யூதாவைத் தோற்
கடித்தது யூதாவைச் சேர்ந்த ஒவ்வொரு
வனும் தன் வீட்டிற்கு ஓடிப்போனான்.
23யோவாஸ் அமத்சியாவைப் பிடித்து எருச
லேமிற்குக் கொண்டுபோனான். அமத்சியா
வின் தந்தையின் பெயர் எகோவஸ்.
இஸ்ரவேல் அரசன் எருசலேமின் அலங்கத்
திலே எப்பிராயீம் வாசல் முதல் மூலை
வாசல் வரை 400 முழ நீளம் இடித்துப்
போட்டான். 24பிறகு யோவாஸ் தேவனு டைய
ஆலயத்தில் இருந்த பொன்னையும்
வெள்ளியையும் இன்னும் பல பொருட்க
ளையும் கொண்டுப்போனான். ஓபேத்
ஏதோம் ஆலயத்திலுள்ள பொருட்களுக்குப்
பொறுப்பாளியாக இருந்தான். யோவாஸ்
அரண்மனையிலுள்ள விலையுயர்ந்த
பொருட்களையும் எடுத்துக்கொண்டான்.
சிலரைச் சிறைப்பிடித்தான். பின் சமாரியா
விற்குத் திரும்பிப்போனான்.
25யோவாஸ் மரித்தபிறகு அமத்சியா 15
ஆண்டுகள் வாழ்ந்தான். அமத்சியாவின்
தந்தை யூதாவின் அரசனான யோவாஸ்
ஆவான். 26அமத்சியா தொடக்கத்திலிருந்தது
முதல் இறுதிவரை செய்த மற்ற செயல்கள்
எல்லாவற்றைப் பற்றியும் 'யூதா மற்றும்
இஸ்ரவேல் அரசர்களின் வரலாறு' என்ற
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளது. 27அமத்சியா
கர்த்தருக்குக் கீழ்ப்படிந்து நடப்பதை
நிறுத்தியதும் எருசலேமிலுள்ள ஜனங்கள்
அரசனுக்கு எதிராகத் திட்டமிட்டான்.
அமத்சியா லாகீசுக்கு ஓடிப்போனான். ஜனங்
கள் அங்கும் ஆட்களை அனுப்பி அமத்சி
யாவைக் கொன்றனர். 28பிறகு அமத்சியா
உடலை அங்கிருந்து குதிரையில் வைத்துக்
கொண்டு வந்தனர். அவனை யூதாவின்
நகரத்தில் அவனது முற்பிதாக்களோடு
அடக்கம் செய்தனர்.

### யூதாவின் அரசனான உசியா

26 யூதா ஜனங்கள் அமத்சியாவின் இடத்
தில் உசியா என்பவனைப் புதிய
அரசனாகத் தேர்ந்தெடுத்தனர். அமத்சியா,
உசியாவின் தந்தை ஆவான். இது இவ்வாறு
நிகழும்போது உசியாவின் வயது 16.
2உசியா மீண்டும் ஏலோத் நகரத்தைக் கட்டி
யூதாவிற்குத் திருப்பிக்கொடுத்தான். அமத்
சியா மரித்தபிறகு உசியா இதனைச் செய்
தான். அமத்சியாவை அவனது முற்பிதாக்
களோடு அடக்கம் செய்தனர்.
3உசியா அரசனாகும் போது அவனுக்கு
16 வயது. அவன் எருசலேமில் 52
ஆண்டுகள் அரசாண்டான். அவனது தாயின்
பெயர் எக்கோலியாள். இவள் எருசலேம்
நகரத்தவள். 4கர்த்தருடைய விருப்பம்
போலவே உசியா காரியங்களைச் செய்தான்.
அவனது தந்தை அமத்சியாவைப்போலவே
தேவனுக்கு அடிபணிந்து வாழ்ந்துவந்தான்.
5சகரியாவின் வாழ்நாளிலே உசியா
தேவனைப் பின்பற்றினான். சகரியா அவ
னுக்கு எவ்வாறு தேவனுக்கு மரியாதை
செலுத்துவது என்பதைப் பற்றியும் தேவ
னுக்கு கீழ்ப்படிவது பற்றியும் சொல்லித்தந்
தான். உசியா கர்த்தரிடம் கீழ்ப்படிந்து
இருந்தவரை தேவனும் அவனுக்கு வெற்றி
யைத் தந்தார்.
6உசியா பெலிஸ்தர்களுக்கு எதிராகப்
போரிட்டான். காத், யப்னே, அஸ்தோத் ஆகிய
நகர சுவர்களை இடித்து வீழ்த்தினான்.
அஸ்தோத் நகரத்தின் அருகிலே இவன் புதிய
நகரங்களைக் கட்டினான். பெலிஸ்திய
ஜனங்களுக்கிடையில் வேறு இடங்களிலும்
ஊர்களை கட்டினான். 7பெலிஸ்தர்
களுடனான போரிலும், கூர்பாகாலில் இருந்த
அரபியரோடான போரிலும், மெகுனியரு
டான போரிலும் வெற்றிபெற உசியாவுக்குப்
பெருமளவில் தேவன் உதவினார். 8அம்மோ
னியர்கள் உசியாவிற்குக் காணிக்கைகளைக்
கொடுத்தனர். எகிப்தின் எல்லைவரை
உசியாவின் புகழ் பரவி இருந்தது. இவன்
பலமிக்கவன் ஆதலால் பெரும் புகழையும்
பெற்றான்.
9உசியா எருசலேமில் மூலைவாசலிலும்
பள்ளத்தாக்கு வாசலிலும் சுவர்களின் முடி
விலும் கோபுரங்களைக் கட்டினான். அவற்
றைப் பலப்படுத்தினான். 10உசியா வனாந்
தரத்திலே கோபுரங்களைக் கட்டினான். பல
கிணறுகளைத் தோண்டினான். இவனுக்கு
மலைநாடுகளிலும் சமவெளிகளிலும் ஏராள
மான ஆடுகள் இருந்தன. உசியா மலை
நாடுகளில் விவசாயிகளைப் பெற்றிருந்தான்.
பயிர்கள் நன்றாக விளைந்தன. திராட்சைத்
தோட்டத்தைக் கவனிப்பவர்களும் இருந்த
னர். உசியா விவசாயத்தைப் பெரிதும்
விரும்பினான்.
11பயிற்சிபெற்ற வீரர்கள் நிறைந்த படை
உசியாவிடம் இருந்தது. அவ்வீரர்கள் பல
குழுக்களாக்கப் பிரிக்கப்பட்டனர். செயலாள
னான ஏயெலியும் அதிகாரியான மாசேயா
வும் இப்பிரிவுகளைச் செய்தனர். அனனி
யாவும் அரசனின் அதிகாரிகளுள் ஒருவன்.
இவன் மற்ற அதிகாரிகளுக்குத் தலைவன்.
12இந்த வீரர்களுக்கு 2,600 தலைவர்கள்
இருந்தனர். 13இக்குடும்பத் தலைவர்களே
மிகுந்த ஆற்றலுடன் போரிடவல்ல 3,07,500

வீரர்களுக்கும் பொறுப்பாளர்களாக இருந்
தனர். வில்வீரர்கள் அனைவரும் பகைவர்
களுக்கு எதிராக வெல்ல அரசனுக்கு
உதவினார்கள். 14உசியா படைக்குக் கேடயங்
கள், ஈட்டிகள், தலைகவசங்கள், மார்க்கவ
சங்கள், வில்கள், கவன்களுக்குக் கற்கள்
ஆகியவற்றைக் கொடுத்தான். 15எருசலேமில்
உசியா, புத்திசாலிகளால் அமைக்கப்பட்ட
எந்திரங்களை கோபுரங்களின் மேலும்
சுவர்களின் மேலும் வைத்தான். இந்த
எந்திரங்கள் அம்புகளையும் கற்களையும்
எறிந்தன. இதனால் உசியா பெரும்புகழ்
பெற்றான். வெகு தொலை நாடுகளிலுள்ள
ஜனங்களும் இவனைப்பற்றி அறிந்துகொண்
டனர். அதிகமான உதவியைப் பெற்று
அவன் வலிமைமிக்க ஒரு அரசனானான்.
16ஆனால் உசியா பலமுள்ளவனாக
ஆனதும் அவனது தற்பெருமை அவனுக்கு
அழிவை விளைவித்தது. அவன் தனது
தேவனாகிய கர்த்தருக்கு உண்மையுள்ள
வனாக இல்லை. அவன் நறுமணப்
பொருட்களை எரிக்கும் பலிபீடத்தின் மீது
நறுமணப் பொருட்களை எரிப்பதற்காக
கர்த்தருடைய ஆலயத்திற்குள் சென்றான்.
17அசரியா என்ற ஆசாரியனும் கர்த்தருடைய
ஆசாரியர்களுள் தைரியமிக்க 80 ஆசாரியர்
களும் உசியாவைப் பின்தொடர்ந்து
ஆலயத்திற்குள் சென்றனர். 18அவர்கள்
உசியாவின் தவறுகளை எடுத்துச்சொன்
னார்கள். அவர்கள் அவனிடம், “உசியாவே,
கர்த்தருக்குத் தூபம் காட்டுவது உனது
வேலையல்ல. இவ்வாறு செய்வது உனக்கு
நல்லதன்று. இந்த ஆசாரியர்கள் பரிசுத்தமான
நறுமணப் பொருட்களை எரிப்பதற்குப்
பயிற்சிபெற்றவர்கள். ஆசாரியர்களும் ஆரோ
னின் சந்ததியார் மட்டுமே இதனைச் செய்ய
வேண்டும். மகா பரிசுத்தமான இடத்தை
விட்டு வெளியே போ. நீ உண்மை
யுள்ளவனாக இல்லை. இதற்காக தேவனாகிய
கர்த்தர் உம்மை கனம்பண்ணமாட்டார்”
என்றனர்.
19இதனால் உசியா கோபம் கொண்டான்.
அவன் தன் கையில் நறுமணப் பொருட்
களை எரிப்பதற்காக ஒரு கலசத்தை
வைத்திருந்தான். அத்தோடு அவன் ஆசாரி
யர்களோடு கோபமாகப் பேசியபோது
அவன் நெற்றியில் தொழுநோய் தோன்றி
யது. இது ஆசாரியர்களுக்கு முன்பாக
கர்த்தருடைய ஆலயத்தின் பலிபீடத்தின்
அருகில் நறுமணப் பொருட்களை எரிக்கும்
போது நடந்தது. 20தலைமை ஆசாரியனாகிய
அசரியாவும் மற்ற ஆசாரியர்களும் இதனைக்
கண்டனர். அவர்கள் அவனது நெற்றியில்
ஏற்பட்ட தொழுநோயையும் கண்டனர்.
உடனே உசியாவை ஆலயத்தைவிட்டு
வெளியேறும்படி அவர்கள் கூறினார்கள்.
கர்த்தர் அவனைத் தண்டித்து விட்டதால்
அவனும் வேகமாக ஆலயத்தைவிட்டு வெளி
யேறினான். 21உசியா எனும் அரசன் தொழு
நோயாளியானான். அவனால் கர்த்தருடைய
ஆலயத்திற்குள் நுழைய முடியவில்லை. ஒரு
தனிவீட்டில் அவன் வசிக்க வேண்டியதா
யிற்று. அவனது மகனான யோதாம் அரண்
மனையைக் கட்டுபடுத்தினான். அவனே
ஜனங்களின் ஆளுநர் ஆனான்.
22தொடக்ககாலம் முதல் இறுதிவரை
உசியா செய்த வேறு செயல்கள், ஆமோத்
சின் மகனான ஏசாயா எனும் தீர்க்க
தரிசியால் எழுதப்பட்டுள்ளன. 23உசியா
மரித்ததும் அவனது முற்பிதாக்களோடு அவ
னும் அடக்கம் செய்யப்பட்டான். அரசர்
களின் கல்லறைகளுக்கு அருகில் உள்ள
வயல் வெளிகளில் உசியாவை அடக்கம்
செய்தனர். ஜனங்கள், “உசியாவிற்குத்
தொழுநோய் இருந்தது” என்றனர் என்பதே
இதன் காரணம். யோதாம் புதிய அரசனாக
உசியாவின் இடத்தில் அரசேற்றான்.
யோதாம் உசியாவின் மகன் ஆவான்.

### யூதாவின் அரசனான யோதாம்

27 யோதாம் அரசனானபோது அவ
னுக்கு 25 வயது ஆகும். இவன்
எருசலேமில் 16 ஆண்டுகள் அரசாண்டான்.
இவனது தாயின் பெயர் எருசாள் ஆகும்.
இவள் சாதோக்கின் மகள் ஆவாள். 2கர்த்தர்
செய்யவிரும்பியதையே, யோதாம் செய்து
வந்தான். அவன் தன் தந்தை உசியாவைப்
போலவே தேவனுக்குக் கீழ்ப்படிந்து
வந்தான். ஆனால் தன் தந்தையைப்போல
யோதாம் கர்த்தருடைய ஆலயத்திற்குள்
நுழைந்து நறுமணப் பொருட்களை எரிக்க
முயலவில்லை. எனினும் ஜனங்கள்
தொடர்ந்து தவறுசெய்தனர். 3யோதாம் மீண்
டும் கர்த்தருடைய ஆலயத்தின்மேல் வாச
லைக் கட்டினான். ஓபேலின் மதில் சுவர்
மீது அனேக கட்டிடங்களைக் கட்டினான்.
4யூதாவின் மலைநாட்டில் புதிய நகரங்
களையும் கட்டினான். யோதாம் காடுகளில்
கோட்டைகளையும் கோபுரங்களையும்
கட்டினான். 5யோதாம் அம்மோனிய அரசர்
களுக்கு எதிராகப் போரிட்டான். அவர்களது
படைகளை அவன் தோற்கடித்தான். எனவே
ஆண்டுதோறும் அம்மோனியர்கள் அவ
னுக்கு 100 தாலந்து வெள்ளியையும் பதினா
யிரங்கலக் கோதுமையையும் பதினாயி
ரங்கல வாற்கோதுமையையும் கொடுத்தார்
கள். இவ்வாறு மூன்று ஆண்டுகள் கொடுத்
தனர்.
6யோதாம் உண்மையாகவே தேவனாகிய
கர்த்தருக்குக் கீழ்ப்படிந்ததால், பலமுள்ளவன்
ஆனான். 7யோதாம் செய்த மற்ற செயல்களும்
போர்களும் ‘யூதா மற்றும் இஸ்ரவேல்
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளன. 8யோதாம் 25 வயதில்
அரசனானான். அவன் எருசலேமில் 16
ஆண்டுகள் அரசாண்டான். 9பிறகு யோதாம்

மரிக்க அவனை அவனது முற்பிதாக்களோடு அடக்கம் செய்தனர். அவன் தாவீது நகரத்திலே* அடக்கம் செய்யப்பட்டான். யோதாமின் இடத்திலே புதிய அரசனாக ஆகாஸ் வந்தான். ஆகாஸ் யோதாமின் மகன்.

### யூதாவின் அரசனான ஆகாஸ்

28 ஆகாஸ் அரசனானபோது அவனுக்கு
20 வயது. அவன் எருசலேமில் 16
ஆண்டுகள் அரசாண்டான். தனது முற்
பிதாவான தாவீதைப்போன்று ஆகாஸ்
சரியான வழியில் வாழவில்லை. கர்த்தர்
விரும்பியவற்றை ஆகாஸ் செய்யவில்லை.
2 இஸ்ரவேல் அரசர்களின் தவறான முன்
மாதிரிகளை கடைபிடித்தான். அவன்
பாகால் தெய்வங்களைத் தொழுதுகொள்ள
வார்ப்புச் சிலைகளைச் செய்தான். 3 ஆகாஸ்
பென் இன்னோம் பள்ளத்தாக்கில்* நறுமணப்
பொருட்களை எரித்தான். தன் சொந்த
மகன்களை நெருப்பில் எரித்துப் பலிக்கொ
டுத்தான். அந்நாடுகளில் வாழ்ந்தோர் செய்த
பயங்கரமான பாவங்களையே அவனும்
செய்தான். இஸ்ரவேல் ஜனங்கள் அந்நாட்டுக்
குள் நுழைந்தபோது ஏற்கனவே அங்கிருந்த
பாவமிக்க ஜனங்களை கர்த்தர் வெளியே
துரத்தியிருந்தார். 4 மலைகளில் இருந்த
மேடைகளிலும் ஒவ்வொரு பசுமையான
மரத்தின் அடியிலும் ஆகாஸ் பலிகளைக்
கொடுத்து நறுமணப் பொருட்களை எரித்
தான்.
5-6 ஆகாஸ் பாவங்களைச் செய்ததால்,
ஆராமின் அரசன் ஆகாஸை வெல்லும்படி
தேவனாகிய கர்த்தர் செய்தார். ஆராமின்
அரசனும் அவனது படைகளும் ஆகாஸைத்
தோற்கடித்து யூத ஜனங்களில் பலரைச்
சிறைபிடித்தனர். ஆராம் அரசன், சிறைக்கை
திகளைத் தமஸ்கு என்ற நகரத்திற்கு
அழைத்துச்சென்றான். மேலும் கர்த்தர், இஸ்ர
வேல் அரசனான பெக்கா ஆகாஸை
வெல்லும்படிச் செய்தார். பெக்காவின்
தந்தையின் பெயர் ரெமலியா ஆகும். ஒரே
நாளில் பெக்காவும் அவனது படையும்
யூதாவில் 1,20,000 வீரர்களைக் கொன்றனர்.
பெக்கா யூதா வீரர்களை வென்றதற்குக்
காரணம் அவர்கள் தம் முற்பிதாக்களின்
தேவனாகிய கர்த்தருக்கு அடிபணியவில்லை
என்பது ஆகும். 7 எப்பிராயீமில் சிக்ரி
என்பவன் பலமிக்க வீரன். அவன் ஆகாஸ்
அரசனின் மகனான மாசேயாவையும்,
அரண்மனைத்தலைவனாகிய அஸ்ரிக்காமை
யும் எல்க்கானாவையும் கொன்றான. எல்க்
கானா அரசனுக்கு இரண்டாவது நிலையில்
இருந்தார்.
8 இஸ்ரவேலிய படையானது யூதாவில்
வாழ்ந்த தம் சொந்த உறவினர்களான
2,00,000 பேரைச் சிறைபிடித்தனர். அவர்கள்
பெண்களையும் குழந்தைகளையும் அடிமை
களாகக் கொண்டு சென்றார்கள். அவர்கள்
யூதாவிலிருந்து பல விலையுயர்ந்த பொருட்
களை அபகரித்துச் சென்றார்கள். அந்த
அடிமைகளையும் அப்பொருட்களையும்
இஸ்ரவேலர்கள் சமாரிய நகருக்குக் கொண்டு
வந்தார்கள். 9 ஆனால் அங்கே கர்த்தருடைய
தீர்க்கதரிசி ஒருவன் அங்கிருந்தான். அவனது
பெயர் ஒதேத். சமாரியாவிற்கு வந்த
இஸ்ரவேல் படையை ஒதேத் சந்தித்தான்.
ஓதேத் இஸ்ரவேல் படையினரிடம், "உங்கள்
முற்பிதாக்கள் பணிந்த தேவனாகிய கர்த்தர்
நீங்கள் யூதாவின் ஜனங்களைத் தோற்கடிக்க
விட்டார்கள். ஏனென்றால் அவர்கள் மீது
அவர் கோபமாயிருந்தார். மிக மோசமான
முறையில் நீங்கள் யூதாவின் ஜனங்களைக்
கொன்று தண்டித்தீர்கள். இப்போது தேவன்
உங்கள் மீது கோபமாக இருக்கிறார். 10 நீங்கள்
யூதாவின் ஜனங்களையும் எருசலேமையும்
அடிமையாக்கத் திட்டமிட்டுள்ளீர்கள். உங்க
ளது தேவனாகிய கர்த்தருக்கு எதிராக
நீங்களும் பாவம் செய்திருக்கிறீர்கள். 11 இப்
போது நான் சொல்வதைக் கவனியுங்கள்.
நீங்கள் கைப்பற்றிய உங்கள் சகோதர
சகோதரிகளைத் திருப்பி அனுப்புங்கள்.
கர்த்தருடைய கடுமையான கோபம் உங்கள்
மீது உள்ளது. எனவே நான் சொன்னபடி
செய்யுங்கள்" என்று சொன்னான்.
12 பிறகு எப்பிராயீம் தலைவர்கள், இஸ்ர
வேல் வீரர்கள் போர்க்களத்திலிருந்து வீட்
டிற்குத் திரும்புவதைப் பார்த்தனர். அந்தத்
தலைவர்கள் இஸ்ரவேல் வீரர்களைச்
சந்தித்து எச்சரிக்கைச் செய்தனர். யோகனா
னின் மகன் அசரியா, மெஷிலேமோத்தின்
மகனான பெரகியா, சல்லூமின் மகனான
எகிஸ்கியா, அத்லாயின் மகனான அமாசா
ஆகியோர் அந்தத் தலைவர்களாகும். 13 அவர்
கள் இஸ்ரவேல் வீரர்களிடம், "யூதாவி
லிருந்து கைதிகளை இங்கே கொண்டுவராதீர்
கள். அவ்வாறு செய்தால் அது கர்த்தருக்கு
எதிராக நாம் பாவம் செய்வதுபோல் ஆகும்.
நமது பாவங்களையும் குற்ற உணர்வையும்
அது மோசமாக்கும். கர்த்தர் இஸ்ரவேலுக்கு
எதிராகக் கோபம் கொள்வார்" என்றார்கள்.
14 எனவே, வீரர்கள் கைதிகளையும் விலை
யுயர்ந்த பொருட்களையும் தலைவர்களிட
மும் ஜனங்களிடமும் கொடுத்தனர். 15 உடனே
அசரியா, பெரக்கியா, எகிஸ்கியா, அமாசா
ஆகிய தலைவர்கள் கைதிகளுக்கு உதவி
னார்கள். அந்நால்வரும் இஸ்ரவேல் படை
அபகரித்த ஆடைகளை எடுத்து நிர்வாணமா
யிருந்த கைதிகளுக்குக் கொடுத்தனர். அவர்

---

**தாவீது நகரம்** இது எருசலேமின் இன்னொரு பெயர்.

**பென் இன்னோம் பள்ளத்தாக்கு** இந்த பென் இன்னோம் பள்ளத்தாக்கு எருசலேமின் தென் மேற்கில் இருந்தது. இந்தப் பள்ளத்தாக்கில் பல குழந்தைகளும் சிறுபிள்ளைகளும் பொய்த் தெய்வங்களுக்குப் பலியிடப்பட்டனர்.

களுக்குச் பாதரட்சைகளைக் கொடுத்தனர்.
உண்ணவும் குடிக்கவும் கைதிகளுக்கு
உணவுப் பொருட்களைக் கொடுத்தனர்.
அவர்களுக்கு எண்ணை தடவினார்கள்.
பிறகு அந்த எப்பிராயீம் தலைவர்கள் பல
வீனமான கைதிகளைக் கழுதைமேல் ஏற்றி
எரிகோவில் உள்ள அவர்களது வீட்டிற்கு
அனுப்பிவைத்தனர். எரிகோ பேரீச்ச
மரங்கள் நிறைந்த பட்டணம். பிறகு அந்தத்
தலைவர்கள் நால்வரும் தம் நகரமான
சமாரியாவிற்குத் திரும்பினார்கள்.
16-17 அதே நேரத்தில் ஏதோம் நாட்டு
ஜனங்கள் யூதாவைத் தோற்கடித்தனர். ஏதோ
மியர் ஜனங்களைச் சிறைபிடித்து கைதி
களாக கொண்டுசென்றார்கள். எனவே
ஆகாஸ் அரசன் அசீரியா அரசனிடம்
உதவுமாறு வேண்டினான். 18 பெலிஸ்தர்களும்
மலைநாட்டு நகரங்களையும் யூதாவின் தென்
பகுதியையும் தாக்கினார்கள். இவர்கள்
பெத்ஷிமேஸ் ஆயலோன், கெதெரோத்,
சொக்கோ, திம்னா மற்றும் கிம்சோ ஆகிய
ஊர்களைக் கைப்பற்றினார்கள். மேலும்
அவர்கள் அந்த ஊர்களுக்கு அருகிலிருந்த
கிராமங்களையும் கைப்பற்றினார்கள். பிறகு
பெலிஸ்தியர்கள் அந்த ஊர்களில் வாழ்ந்
தார்கள். 19 யூதா ஜனங்களுக்கு கர்த்தர்
கடுமையான துன்பங்களைத் தந்தார்.
ஏனென்றால் ஆகாஸ் அரசன் யூதா ஜனங்கள்
பாவம் செய்யும்படி தூண்டினான். அவன்
கர்த்தருக்கு உண்மை இல்லாதவனாக
நடந்துக்கொண்டான். 20 அசீரியாவின் அரச
னான தில்காத்பில்நேசர் உதவுவதற்குப்
பதிலாகத் துன்பங்களைத் தந்தார். 21 ஆகாஸ்
கர்த்தருடைய ஆலயம், அரண்மனை,
இளவரசர்களின் அரண்மனை ஆகியவற்றில்
இருந்து விலையுயர்ந்த பொருட்களை
எடுத்துவந்தான். அவற்றை அசீரியா
அரசனுக்குக் கொடுத்தான். எனினும் அது
ஆகாசுக்கு உதவவில்லை.
22 இவ்வளவு இடையூறுகளுக்கு நடுவிலும்
ஆகாஸ் மேலும் மோசமான பாவங்களையே
தொடர்ந்து செய்தான். இதனால் கர்த்தருக்கு
மிகவும் உண்மையற்றவனாக இருந்தான்.
23 தமஸ்கு ஜனங்கள் தொழுதுகொண்ட
தெய்வங்களுக்கே இவன் பலிகளைக்
கொடுத்து வந்தான். தமஸ்கு ஜனங்கள்
ஆகாஸைத் தோற்கடித்தனர். அதனால்
ஆகாஸ், "ஆராம் ஜனங்களுக்கு அவர்கள்
தொழுதுகொண்ட தெய்வங்கள் உதவுகி
ன்றன. எனவே நானும் அத்தெய்வங்
களுக்குப் பலியிட்டால் அத்தெய்வங்கள்
எனக்கும் உதவும்" என்று எண்ணினான்.
ஆகாஸ் அத்தெய்வங்களைத் தொழுது
கொண்டான். இவ்வாறு இவன் தானும்
பாவம் செய்து இஸ்ரவேல் ஜனங்களையும்
பாவம் செய்யவைத்தான்.
24 ஆகாஸ் தேவனுடைய ஆலயத்தில்
இருந்து பொருட்களை எடுத்து உடைத்துப்
போட்டான். பிறகு அவன் கர்த்தருடைய
ஆலய கதவுகளை மூடினான். அவன்
பலிபீடங்களைச் செய்து எருசலேமின்
ஒவ்வொரு தெரு முனையிலும் வைத்தான்.
25 ஆகாஸ் யூதாவின் ஒவ்வொரு நகரங்களிலும்
மேடைகள் அமைத்து நறுமணப் பொருட்
களை எரித்து தெய்வங்களை தொழுது
கொண்டான். ஆகாஸ் தன் முற்பிதாக்க
ளால் தொழுதுகொள்ளப்பட்ட தேவனாகிய
கர்த்தரை மேலும் கோபமூட்டினான்.
26 ஆகாஸ் தொடக்ககாலம் முதல் இறு
திவரை செய்த மற்ற செயல் எல்லாமும்
'யூதா மற்றும் இஸ்ரவேல் அரசர்களின்
வரலாறு' என்ற புத்தகத்தில் எழுதப்
பட்டுள்ளன. 27 ஆகாஸ் மரித்ததும் அவனை
அவனது முற்பிதாக்களுக்கு அருகில்
அடக்கம் செய்தனர். ஜனங்கள் அவனை
எருசலேம் நகரிலேயே அடக்கம் செய்தனர்.
ஆனால் அவனை இஸ்ரவேல் அரசர்களை
அடக்கம் செய்யும் இடத்துக்கருகில் அடக்கம்
செய்யவில்லை. ஆகாசின் இடத்தில் புதிய
அரசனாக எசேக்கியா வந்தான். எசேக்கியா
ஆகாசின் மகன்.

### யூதாவின் அரசனான எசேக்கியா

29 எசேக்கியா அவனது 25வது வயதில்
அரசன் ஆனான். அவன் எருசலேமில்
29 ஆண்டுகள் அரசாண்டான். அவனது
தாயின் பெயர் அபியாள். இவள்
சகரியாவின் மகள். 2 அவன் செய்யவேண்டு
மென கர்த்தர் விரும்பியபடியே எசேக்கியா
செயல்களைச் செய்துவந்தான். இவனது
முற்பிதாவான தாவீது சரியானவை என்று
எவற்றைச் செய்தானோ அவற்றையே
இவனும் செய்துவந்தான்.
3 எசேக்கியா கர்த்தருடைய ஆலயத்திற்குக்
கதவுகளைப் பொருத்தினான். அதனைப்
பலமுள்ளதாக ஆக்கினான். எசேக்கியா மீண்
டும் ஆலயத்தைத் திறந்தான். அவன்
அரசனான முதல் ஆண்டின் முதல் மாதத்
திலேயே இதனைச் செய்தான். 4-5 எசேக்கியா
ஆசாரியர்களையும் லேவியர்களையும் ஒரே
மன்றத்தில் கூட்டினான். ஆலயத்தின்
கிழக்குப் பகுதியில் உள்ள திறந்த வெளி
பிரகாரத்தில் அவர்களோடு கூட்டம்
போட்டான். எசேக்கியா அவர்களிடம்,
"லேவியர்களே! நான் சொல்வதைக் கவனி
யுங்கள். பரிசுத்தமான சேவைக்கு உங்களைத்
தயார் செய்துக்கொள்ளுங்கள். தேவனாகிய
கர்த்தருடைய ஆலயத்தையும் பரிசுத்த
சேவைக்குறிய இடமாக ஆக்குங்கள். உங்கள்
முற்பிதாக்களால் தொழுதுகொள்ளப்பட்ட
தேவன் அவர். ஆலயத்திற்குச் சொந்தமில்
லாத பொருட்களை அங்கிருந்து வெளியே
எடுத்துவிடுங்கள். அப்பொருட்கள் ஆலயத்
தைப் பரிசுத்தப்படுத்தமாட்டாது. 6 நமது முற்
பிதாக்கள் கர்த்தரை விட்டு விலகினார்கள்.
தங்கள் முகங்களை கர்த்தருடைய ஆலயத்

திலிருந்து திருப்பிக்கொண்டனர். 7அவர்கள்
ஆலயக் கதவுகளை மூடிவிட்டனர், விளக்கு
களை அணைத்தனர், இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தருக்கு அவரது பரிசுத்தமான
இடத்தில் நறுமணப் பொருட்கள் எரிப்பதை
யும் தகனபலியிடுவதையும் விட்டனர்.
8எனவே, யூதா மற்றும் எருசலேம் ஜனங்கள்
மீது கர்த்தர் பெரும் கோபங்கொண்டார்.
கர்த்தர் அவர்களைத் தண்டித்தார். மற்றவர்
கள் இதனைப்பார்த்து பயந்தனர். யூதா
மற்றும் எருசலேம் ஜனங்களுக்குக் கர்த்தர்
செய்தவற்றைப் பார்த்து திகைத்துவிட்டனர்.
அவர்கள் எருசலேம் ஜனங்களுக்காக
வெறுப்புடனும் வெட்கத்துடனும் தலையை
அசைத்தார்கள். இவையனைத்தும் உண்மை
என்பது உங்களுக்குத் தெரியும். இவற்றை
உங்களது கண்களாலேயே நீங்கள் பார்க்க
லாம். 9அதனால்தான் நமது முற்பிதாக்கள்
போரில் கொல்லப்பட்டனர். நமது மகன்
களும் மகள்களும் மனைவியரும் சிறை
பிடிக்கப்பட்டனர். 10எனவே, இப்பொழுது
நான், எசேக்கியா, இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தருடன் ஒரு உடன்படிக்கை
செய்துகொள்ள முடிவு செய்துவிட்டேன்.
பிறகு அவர் நம்மோடு மேற்கொண்டு
கோபங்கொள்ளமாட்டார். 11எனவே என்
மகன்களே, சோம்பேறிகளாக இராதீர்கள்.
நேரத்தை வீணாக்காதீர்கள். கர்த்தர் தனக்குச்
சேவைசெய்ய உங்களைத் தேர்ந்தெடுத்திருக்
கிறார். அவர், ஆலயத்தில் சேவைசெய்யவும்
நறுமணப் பொருட்களை எரிக்கவும் உங்
களைத் தேர்ந்தெடுத்து இருக்கிறார்” என்று
சொன்னான்.

12-14வேலைசெய்ய ஆரம்பித்த லேவியர்
களின் பட்டியல் இது: கோரா குடும்பத்தி
லிருந்து அமாசாயின் மகனான மாகாத்து
என்பவனும், அசரியாவின் மகன் யோவேல்
என்பவனும், மெராரி குடும்பத்திலிருந்து
அப்தியின் மகன் கீசும் என்பவனும்
எகலேலின் மகன் அசரியா என்பவனும்,
கெர்சோனிய குடும்பத்திலிருந்து சிம்மாவின்
மகன் யோவாகு என்பவனும், யோவாகின்
மகன் ஏதேன் என்பவனும், எளச்சாப்பான்
சந்ததியிலிருந்து சிம்ரி, ஏயெல் என்பவர்
களும், ஆசாப்பின் சந்ததியிலிருந்து சகரியா,
மத்தனியா என்பவர்களும், ஏமானின் சந்ததி
யிலிருந்து எகியேல், சிமியி என்பவர்களும்,
எதுத்தானின் சந்ததியிலிருந்து செமாயா
ஊசியேல் என்பவர்களும், அந்த பட்டியலில்
அடங்கும். 15பிறகு இந்த லேவியர்கள் தம்
சகோதரர்களையும் சேர்த்துக்கொண்டு தங்
களைக் கர்த்தருடைய ஆலயத்தில் பரிசுத்த
சேவைசெய்யத் தயார் செய்துக்கொண்டார்
கள். கர்த்தரிடமிருந்து வந்த அரசனின்
கட்டளைக்கு அவர்கள் பணிந்தனர். சுத்தம்
செய்து பரிசுத்தப்படுத்துவதற்காக அவர்கள்
கர்த்தருடைய ஆலயத்திற்குள் சென்றார்கள்.
16ஆசாரியர்கள் சுத்தம் செய்யும் பொருட்டு
ஆலயத்தின் உட்பகுதிக்குள் சென்றனர்.
அவர்கள் கர்த்தருடைய ஆலயத்திற்குள்
கண்ட சுத்தமில்லாத பொருட்கள் அனைத்
தையும் வெளியே எடுத்துப்போட்டனர்.
அவற்றை அவர்கள் கர்த்தருடைய ஆலயப்
பிரகாரத்தில் கொண்டுவந்து போட்டனர்.
பிறகு அவை அனைத்தையும் லேவியர்கள்
கீதரோன் பள்ளத்தாக்குக்குக் கொண்டுச்
சென்றனர். 17முதல் மாதத்தின் முதல் நாளில்,
லேவியர்கள் பரிசுத்தச் சேவைசெய்ய
தம்மை தயார் செய்துக்கொண்டனர். அந்த
மாதத்தின் எட்டாவது நாள் லேவியர்கள்
கர்த்தருடைய ஆலய முற்றத்திற்கு வந்தார்
கள். பரிசுத்தக் காரியங்களுக்குப் பயன்
படுத்தத் தயார் செய்வதற்காக அவர்கள்
மேலும் 8 நாட்கள் கர்த்தருடைய ஆல
யத்தைச் சுத்தம் செய்தார்கள். முதல் மாதத்
தில் 16வது நாள் அதைச் செய்து முடித்
தார்கள்.

18பிறகு அவர்கள் எசேக்கியா அரசனிடம்
சென்றனர். அவர்கள் அவனிடம், “எசேக்
கியா அரசனே! கர்த்தருடைய ஆலயம்
முழுவதையும் சுத்தம் செய்துவிட்டோம்.
தகனபலி கொடுக்க பலிபீடத்தையும் மற்ற
பொருட்களையும் தயார் செய்துவிட்டோம்.
சமூகத்தப்பங்களின் மேஜையையும் அதன்
சகல பணிமூட்டுகளையும் சுத்தம் செய்து
விட்டோம். 19ஆகாஸ் அரசாளும்போது,
அவன் தேவனுக்கு உண்மையுள்ளவனாக
இல்லாமல் ஆலயத்தில் உள்ள பல பொருட்
களை வெளியில் எறிந்தான். இப்போது
நாங்கள் சுத்தப்படுத்தி பரிசுத்தமாகப் பயன்
படுகிற அளவிற்கு ஆலயத்தின் உள்ளே
வைத்துவிட்டோம். இப்போது அவை கர்த்த
ருடைய பலிபீடத்தின் எதிரில் உள்ளது”
என்றனர்.

20எசேக்கியா அரசன் நகர அதிகாரி
களைக் கூட்டினான். மறுநாள் காலையில்
அவர்களுடன் கர்த்தருடைய ஆலயத்திற்குள்
நுழைந்தான். 21அவர்கள் 7 காளைகளையும்,
7 ஆண் ஆட்டுக்கடாக்களையும், 7
ஆட்டுக்குட்டிகளையும், 7 வெள்ளாட்டுக்
கடாக்களையும், பாவப்பரிகாரப் பலிக்காகக்
கொண்டுவந்தனர். இதன் மூலம் அவர்கள்
யூதா அரசாங்கம், பரிசுத்த இடம், யூதா
ஜனங்கள் ஆகியோரைப் பரிசுத்தப்படுத்தி
னார்கள். கர்த்தருடைய பலிபீடத்தில் இவற்
றைப் பலியிடுமாறு ஆசாரியர்களுக்கு
எசேக் கியா அரசன் கட்டளையிட்டான். இவ்
வாசாரியர்கள் ஆரோனின் சந்ததியினர்
ஆவார்கள். 22எனவே, ஆசாரியர்கள் காளை
களைக் கொன்று இரத்தத்தைச் சேகரித்தனர்.
பிறகு அதனைப் பலிபீடத்தின்மேல் தெளித்த
னர். பின்னர் செம்மறி ஆட்டுக்கடாக்களைக்
கொன்று அவற்றின் இரத்தத்தைப் பலி
பீடத்தின்மேல் தெளித்தனர். பிறகு ஆட்டுக்
குட்டிகளைக் கொன்று அவற்றின்
இரத்தத்தைப் பலிபீடத்தின்மேல் தெளித்தனர்.

23-24பின்னர் ஆசாரியர்கள் ஆண் ஆட்டுக்
கடாக்களை அரசனுக்கு முன்பு கொண்டு
வந்தனர். ஜனங்களும் கூடினார்கள். இவை
பாவப்பரிகாரப் பலிக்குரியவை. எனவே
ஆசாரியர்கள் தம் கைகளை அவற்றின்
தலையில் வைத்துவிட்டு கொன்றனர். ஆசா
ரியர்கள் அவற்றின் இரத்தத்தைப் பலி
பீடத்தின்மேல் தெளித்து பாவப்பரிகாரம்
செய்தனர். அவர்கள் இவ்வாறு செய்ததால்
தேவன் இஸ்ரவேலர்களது பாவங்களை
மன்னித்துவிட்டார். அரசன் அந்த தகனபலி
களும் பாவப்பரிகாரப் பலிகளும் இஸ்ரவேல்
ஜனங்கள் அனைவருக்கும் செய்யப்பட
வேண்டும் என்றான்.
25எசேக்கியா அரசன் லேவியர்களைக்
கர்த்தருடைய ஆலயத்தில் கைத்தாளங்கள்,
தம்புருக்கள், சுரமண்டலங்கள் ஆகியவற்
றோடு தொண்டு செய்ய நியமித்தான். இது
தாவீதும், அரசனின் ஞானதிருஷ்டிக்கார
னாகிய காத்தும், தீர்க்கதரிசியாகிய நாத்தா
னும் காட்டிய வழியாகும். இந்த ஆணைகள்
கர்த்தரிடமிருந்து தீர்க்கதரிசிகள் மூலம்
வந்தன. 26எனவே லேவியர்கள் தாவீதின்
இசைக்கருவிகளோடு தயாராக நின்றனர்.
ஆசாரியர்கள் தம் பேரிகைகளோடு தயாராக
நின்றார்கள். 27பிறகு எசேக்கியா, பலி
பீடத்தின்மேல் தகனபலிகளும் காணிக்கை
களும் கொடுக்குமாறு கட்டளையிட்டான்.
தகனபலி தொடங்கியதும் கர்த்தருக்காகப்
பாடுவதும் தொடங்கியது. எக்காளங்கள்
ஊதப்பட்டன. தாவீதின் இசைக்கருவிகளும்
இசைக்கப்பட்டன. 28அங்கே கூடியிருந்தவர்
கள் பணிந்து நின்றனர். இசைக்கலைஞர்கள்
பாடினார்கள். எக்காளங்களை இசைப்பவர்
கள் அவற்றை ஊதினார்கள். இது தகனபலி
முடியும்வரை நிகழ்ந்தது.
29பலிகள் முடிவுற்றதும் எசேக்கியா அரச
னும் ஜனங்களும் குணிந்து தொழுதுகொண்
டார்கள். 30எசேக்கியா அரசனும் அவனது
அதிகாரிகளும் லேவியர்களை கர்த்தரைத்
துதிக்கும்படி கட்டளையிட்டனர். அவர்கள்,
தாவீதும் ஞானதிருஷ்டிக்காரனாகிய ஆசாபும்
எழுதிய பாடல்களைப் பாடினார்கள். அவர்
கள் தேவனைத் துதித்துப்பாடி மகிழ்ந்தனர்.
அவர்கள் பணிந்து தேவனைத் தொழுது
கொண்டனர். 31எசேக்கியா, “இப்போது யூதா
ஜனங்களாகிய நீங்கள் உங்களையே
கர்த்தருக்காகக் கொடுத்துவிட்டீர்கள். அவ
ரண்டைக்கு வாருங்கள். கர்த்தருடைய
ஆலயத்திற்குத் தகனபலிகளையும், ஸ்தோத்
திரப் பலிகளையும், கொண்டுவாருங்கள்”
என்று சொன்னான். பிறகு ஜனங்களும்
அவ்வாறே தகனபலிகளையும் ஸ்தோத்திரப்
பலிகளையும் கொண்டுவந்தனர். விடுப்பட்ட
வர்கள் எல்லாம் கொண்டுவந்தனர். 32கூடியி
ருந்தவர்கள் கொண்டுவந்த தகனபலிகளின்
விபரம்: 70 காளைகள், 100 ஆட்டுக்கடாக்கள்,
200 ஆட்டுக்குட்டிகள், இவை அனைத்தும்
கர்த்தருக்குத் சர்வாங்க தகனபலிகளாகக்
கொடுக்கப்பட்டன. 33600 காளைகளும் 3,000
செம்மறி ஆடுகளும் ஆட்டுக்கடாக்களும்
பரிசுத்தப் பலிகளாகக் கொடுக்கப்பட்டன.
34எனினும் ஆசாரியர்களின் எண்ணிக்கை
குறைவாய் இருந்ததால். அவர்களால்
தகனபலிகளின் மிருகங்களை வெட்டி தோல்
உரிக்க முடியாமல் போனது. எனவே,
அவர்களின் உறவினர்களான லேவியர்கள்
அவர்களுக்கு உதவினார்கள். அவர்கள்
வேலையை முடிக்கும்வரையிலும் மற்ற
ஆசாரியர்கள் தம்மைப் பரிசுத்தம் செய்யும்
வரையிலும் உதவினார்கள். ஆசாரியர்களை
விட லேவியர்கள் கர்த்தருக்குச் சேவை
செய்வதற்குத் தங்களைத் தயார் செய்துக்
கொள்வதில் தீவிரமாக இருந்தார்கள். 35தகன
பலிகளும், சமாதானப் பலிகளின் கொழுப்
பும், பானங்களின் காணிக்கைகளும்
மிகுதியாயிற்று. இவ்வாறு மீண்டும் கர்த்த
ருடைய ஆலயத்தில் சேவை ஆரம்பமா
யிற்று. 36எசேக்கியாவும் ஜனங்களும் தேவன்
தம் ஜனங்களுக்காக ஆலயத்தைத் தயார்
செய்ததைப்பற்றி மகிழ்ந்தனர். இவ்வளவு
விரைவாக கர்த்தர் செய்து முடித்ததால்
அவர்கள் மேலும் மகிழ்ந்தனர்.

### எசேக்கியா பஸ்கா கொண்டாடுகிறான்

30 இஸ்ரவேல் மற்றும் யூதா ஜனங்
களுக்கு எசேக்கியா அரசன் செய்தி
களை அனுப்பினான். அவன் எப்பிராயீம்
மற்றும் மனாசேயின் ஜனங்களுக்கும் கடிதம்
எழுதினான். எருசலேமில் உள்ள கர்த்த
ருடைய ஆலயத்திற்கு ஜனங்கள் அனை
வரையும் எசேக்கியா அழைத்தான். அவன்
எல்லா ஜனங்களையும் வந்திருந்து இஸ்ர
வேலின் தேவனாகிய கர்த்தருக்குப் பஸ்கா
பண்டிகையைக் கொண்டாட அழைத்தான்.
2எசேக்கியா அரசன் தனது அனைத்து
அதிகாரிகளிடமும் எருசலேமில் உள்ள
சபையார்களிடமும் பஸ்காவை இரண்டாம்
மாதத்தில் கொண்டாட ஒப்புக்கொண்டான்.
3அவர்கள் சரியான வேளையில் பஸ்கா
வைக் கொண்டாட முடியவில்லை. ஏனென்
றால் பரிசுத்தச் சேவைச்செய்வதற்குப்
போதுமான ஆசாரியர்கள் தம்மைச் சுத்தப்ப
டுத்திக் கொள்ளவில்லை. எருசலேமில்
ஜனங்கள் அனைவரும் ஒன்றாகக் கூடாததும்
இன்னொரு காரணமாகும். 4இந்த ஒப்பந்தம்
எசேக்கியா அரசனையும் சபையோரையும்
திருப்தி படுத்தியது. 5எனவே, இஸ்ரவேலில்
உள்ள ஒவ்வொரு இடத்திலும் பெயர்செபா
முதல் தாண் நகரம் வரை இதுபற்றி
அறிவிப்பு செய்தனர். இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தருக்குப் பஸ்கா பண்டிகை
கொண்டாட அனைவரையும் வரும்படி
அவர்கள் ஜனங்களிடம் சொன்னார்கள்.
பஸ்கா பண்டிகையை எவ்வாறு கொண்
டாட வேண்டும் என்று மோசே சொன்ன

படி நீண்ட நாட்களாக பெரும்பகுதி
இஸ்ரவேல் ஜனங்கள் கொண்டாடவில்லை.
6 எனவே தூதுவர்கள் இஸ்ரவேல் மற்றும்
யூதா முழுவதும் அரசனின் கடிதத்தைக்
கொண்டுபோய் காட்டினார்கள். கடிதத்தில்
உள்ள செய்தி இதுதான்:

இஸ்ரவேல் பிள்ளைகளே! ஆபிர
காம், ஈசாக்கு மற்றும் இஸ்ரவேல்
ஆகியோர் அடிபணிந்த தேவனாகிய
கர்த்தரிடம் திரும்புங்கள். பின்னர்,
அசீரியா அரசர்களிடமிருந்து தப்பி
இன்னும் உயிர்வாழ்கிற ஜனங்களாகிய
உங்களிடம் தேவன் திரும்பிவருவார்.
7 உங்கள் தந்தையரைப் போலவும்
சகோதரர்களைப் போன்றும் இராதீர்
கள். கர்த்தரே அவர்களின் தேவன்.
ஆனால் அவர்கள் அவருக்கு எதிராகி
விட்டனர். எனவே அவர்களை மற்ற
வர்கள் வெறுக்கும்படியாகவும் அவர்
களுக்கு எதிராகத் தீயவைகளைப்
பேசும்படியும் கர்த்தர் செய்தார். இது
உண்மை என்பதை உங்கள் சொந்தக்
கண்களால் காணலாம். 8 உங்கள்
முற்பிதாக்களைப் போன்று பிடிவாத
மாக இருக்காதீர்கள். மனப்பூர்வமான
விருப்பத்தோடு கர்த்தருக்குக் கீழ்ப்
படியுங்கள். மகா பரிசுத்தமான இடத்
திற்கு வாருங்கள். பின்பு மகா பரிசுத்த
மான இடத்தைக் (ஆலயத்தை) கர்த்தர்
எக்காலத்திற்கும் பரிசுத்தமாக்கியுள்
ளார். உங்கள் தேவனாகிய கர்த்த
ருக்குச் சேவை செய்யுங்கள். பிறகு
கர்த்தருடைய அஞ்சத்தக்க கோபம்
உங்களைவிட்டு விலகும். 9 நீங்கள்
திரும்பிவந்து கர்த்தருக்கு அடிபணிந்
தால் பிறகு உங்கள் உறவினர்களும்
பிள்ளைகளும் சிறைபிடித்தவர்களிடம்
இருந்து இரக்கத்தைப் பெறுவார்கள்.
உங்கள் உறவினர்களும் பிள்ளைகளும்
இந்த நாட்டிற்குத் திரும்பிவருவார்கள்.
உங்கள் தேவனாகிய கர்த்தர் அன்பும்
இரக்கமும் கொண்டவர். நீங்கள் அவரி
டம் திரும்பிவந்தால் அவர் உங்களை
விட்டு விலகிப் போகமாட்டார்.

10 தூதுவர்கள் எப்பிராயீம் மனாசே ஆகிய
வற்றில் உள்ள ஒவ்வொரு நகரங்களுக்கும்
சென்றனர். செபுலோன் நாடுவரையுள்ள வழி
எங்கும் போயினர். ஆனால் ஜனங்கள்
அவர்களைப் பார்த்து சிரித்து கேலிச்
செய்தனர். 11 ஆனால் ஆசேர், மனாசே,
செபுலோன் ஆகிய நாடுகளில் சிலர் அவற்
றைக் கேட்டுப் பணிவுடன் எருசலேம்
சென்றனர். 12 மேலும், யூதாவில் ஜனங்கள்
அரசனுக்கும் அவனது அதிகாரிகளுக்கும்
கீழ்ப்படியுமாறு தேவனுடைய வல்லமை
ஜனங்களை ஒன்றிணைத்தது. இந்த விதமாக
அவர்கள் கர்த்தருடைய வார்த்தைக்குக்
கீழ்ப்படிந்தார்கள்.
13 எருசலேமிற்கு ஏராளமான ஜனங்கள்
இரண்டாவது மாதத்தில் புளிப்பில்லா
அப்பப்பண்டிகையைக் கொண்டாட
வந்தார்கள். அது மிகப் பெருங்கூட்டமாக
இருந்தது. 14 அவர்கள் அங்குள்ள அந்நிய
தெய்வகளின் பலிபீடங்களை அகற்றினார்
கள். அவற்றுக்கான நறுமணப் பொருட்கள்
எரிக்கும் பீடங்களையும் அகற்றி அவற்றை
கீதரோன் பள்ளத்தாக்கிலே எறிந்தார்கள்.
15 பின்னர் அவர்கள் இரண்டாவது மாதத்தின்
14வது நாளன்று பஸ்காவுக்கான ஆட்டுக்
குட்டியை கொன்றார்கள். ஆசாரியரும்
லேவியரும் வெட்கப்பட்டனர். தங்களை
அவர்கள் பரிசுத்தச் சேவைக்காகத் தயார்
செய்துக்கொண்டனர். ஆசாரியர்களும் லேவி
யர்களும் தகனபலிகளை கர்த்தருடைய
ஆலயத்திற்குள் கொண்டுவந்தனர். 16 தேவமனி
தனாகிய மோசேயின் சட்டம் சொன்னபடி
அவர்கள் ஆலயத்தில் தங்களது வழக்கமான
இடத்தில் இருந்தார்கள். லேவியர்கள் இரத்
தத்தை ஆசாரியர்களிடம் கொடுத்தனர். பிறகு
ஆசாரியர்கள் இரத்தத்தைப் பலிபீடத்
தின்மேல் தெளித்தனர். 17 அக்குழுவில் உள்ள
ஏராளமான ஜனங்கள் பரிசுத்தச் சேவைக்குத்
தம்மைத் தயார் செய்துக்கொள்ளவில்லை.
எனவே அவர்கள் பஸ்கா ஆட்டுக்குட்டி
களைக் கொல்ல அனுமதிக்கப்படவில்லை.
அதனால் தான் சுத்தமாக இல்லாது ஒவ்
வொருவருக்காகவும் லேவியர்கள் பஸ்கா
ஆட்டுக் குட்டிகளைக் கொல்வதற்குப்
பொறுப்பேற்று, பஸ்கா ஆட்டுக்குட்டிகளைக்
கொன்றனர். லேவியர்கள் ஒவ்வொரு ஆட்டுக்
குட்டியையும் கர்த்தருக்குப் பரிசுத்தப்
படுத்தினார்கள்.
18-19 எப்பிராயீம், மனாசே, இசக்கார்,
செபுலோன் ஆகிய நகரங்களிலுள்ள பெரும்
பாலான ஜனங்கள் பஸ்கா பண்டிகையை
சரியான வழியில் கொண்டாடத் தம்மைத்
தயார் செய்துக்கொள்ளவில்லை. மோசேயின்
சட்டம் கூறியபடி அவர்கள் பஸ்காவை
முறையாகக் கொண்டாடவில்லை. ஆனால்
அவர்களுக்காக எசேக்கியா ஜெபம் செய்
தான். எனவே அவன், “தேவனாகிய
கர்த்தாவே! நீர் நல்லவர். இந்த ஜனங்கள்
உண்மையிலேயே உம்மை சரியாக தொழு
துக்கொள்ள விரும்புகிறார்கள். ஆனால்
அவர்கள் தம்மை சட்டப்படி பரிசுத்தப்
படுத்திக்கொள்ளவில்லை. தயவுசெய்து
அவர்களை மன்னியும். நீர் எங்கள்
முற்பிதாக்கள் கீழ்ப்படிந்த தேவன். சிலர்
மகா பரிசுத்தமான இடத்திற்குத் தக்கவாறு
தம்மை பரிசுத்தப்படுத்திக்கொள்ளா
விட்டாலும் அவர்களை மன்னித்தருளும்”
என்று ஜெபித்தான். 20 எசேக்கியாவின்
ஜெபத்தைக் கர்த்தர் கேட்டார். அவர்
ஜனங்களை மன்னித்தார். 21 இஸ்ரவேலின்

ஜனங்கள் எருசலேமில் புளிப்பில்லா அப்பப்
பண்டிகையை 7 நாட்கள் கொண்டாடினார்
கள். அவர்கள் மகிழ்ச்சி அடைந்தனர்.
லேவியர்களும் ஆசாரியர்களும் தினந்
தோறும் கர்த்தரைத் தங்கள் முழுபலத்தோடு
போற்றித் துதித்தனர். 22எசேக்கியா அரசன்,
எவ்வாறு கர்த்தருக்குச் சேவை செய்ய
வேண்டும் என்பதை அறிந்த லேவியர்களை
உற்சாகப்படுத்தினான். ஜனங்கள் 7 நாட்கள்
இப்பண்டிகையைக் கொண்டாடி சமாதானப்
பலிகளைக் கொடுத்துவந்தனர். தம் முற்
பிதாக்களின் தேவனாகிய கர்த்தரை அவர்
கள் நன்றியுடன் போற்றித்துதித்தார்கள்.
23அனைத்து ஜனங்களும் இன்னும் 7
நாட்களுக்குத் தங்கிட ஒப்புக்கொண்டனர்.
அவர்கள் மேலும் 7 நாட்கள் பஸ்கா
பண்டிகையைக்* கொண்டாடுவது குறித்து
மகிழ்ச்சி அடைந்ததனர். 24எசேக்கியா அர
சன் 1,000 காளைகளையும், 7,000 செம்மறி
ஆடுகளையும் சபையோருக்குக் கொடுத்து
கொன்று உண்ணச் சொன்னான். தலைவர்
கள் 1,000 காளைகளையும், 10,000 ஆடுகளை
யும் சபையோருக்குக் கொடுத்தனர். பல
ஆசாரியர்கள் பரிசுத்தச் சேவைசெய்வதற்குத்
தம்மைத் தயார் செய்துக்கொண்டனர்.
25யூதாவின் அனைத்து சபையோர்களும்
ஆசாரியர்களும், லேவியர்களும், இஸ்ர
வேலில் இருந்துவந்த சபையோர்களும்,
இஸ்ரவேலிலிருந்து யூதாவிற்குப் பயணி
களாகச் செல்வோரும் மிகவும் மகிழ்ந்தனர்.
26எனவே எருசலேம் மிகுந்த மகிழ்ச்சியோடு
இருந்தது. இஸ்ரவேலின் அரசனான தாவீதின்
மகனான சாலொமோனின் காலத்திலிருந்து
இதுபோன்ற கொண்டாட்டம் இதுவரை
நடந்ததில்லை. 27ஆசாரியர்களும் லேவியர்க
ளும் எழுந்து நின்று கர்த்தரிடம் ஜனங்களை
ஆசீர்வதிக்கும்படி வேண்டினார்கள். தேவன்
அவற்றைக் கேட்டார். அவர்களின் ஜெபங்
கள் கர்த்தருடைய பரிசுத்த வீடான பர
லோகத்திற்கு வந்தது.

### எசேக்கியா அரசன் செய்த முன்னேற்றங்கள்

31 பஸ்கா பண்டிகை முடிவடைந்தது.
இஸ்ரவேல் ஜனங்கள் எருசலே
மிலிருந்து பஸ்கா முடிந்ததும் யூதாவின்
ஊர்களுக்கு வெளியேறினார்கள். அந்த
நகரங்களில் இருந்த பொய்த் தெய்வங்களின்
விக்கிரகங்களை நொறுக்கினார்கள். அவை
பொய்த் தெய்வங்களை தொழுதுகொள்வ
தற்கான இடங்களாயிருந்தன. அவர்கள் விக்
கிரகத் தோப்புகளை அழித்தனர். அதோடு
மேடைகளையும் பலிபீடங்களையும் அழித்
தனர். யூதா மற்றும் பென்யமீன் நாட்டில்
தொழுகை இடங்களையும் பலிபீடங்களை
யும் அழித்தனர். ஜனங்கள் இல்லத்திலேயே
எப்பிராயீம் மற்றும் மனாசே நாடுகளிலும்
பொய்யான தெய்வங்களை தொழுதுகொள்
வதற்கு பயன்படுத்தப்பட்ட எல்லாப்
பொருட்களையும் அழிக்கும் வரைக்கும்
ஜனங்கள் இவற்றைச் செய்தார்கள். பின்னர்
எல்லா இஸ்ரவேலர்களும் தங்கள் ஊர்களி
லுள்ள வீடுகளுக்குத் திரும்பிச்சென்றனர்.
2ஆசாரியர்களும் வேவியர்களும் குழுக்க
ளாகப் பிரிக்கப்பட்டார்கள். ஒவ்வொரு குழு
வுக்கும் சிறப்பான பணி இருந்தது. எனவே
எசேக்கியா அரசன் இக்குழுவினர்களிடம்
தம் வேலைகளை மீண்டும் செய்யுமாறு
கூறினான். எனவே லேவியர்களும் ஆசாரி
யர்களும் தகனபலிகள் மற்றும் சமாதானப்
பலிகள் கொடுக்கும் வேலையைச் செய்தனர்.
கர்த்தருடைய ஆலயத்தின் வாசலில் தேவ
னைத் துதித்துப் பாடுவது என்றும் ஆல
யத்தில் சேவைசெய்வது என்றும்
நியமித்தான் அரசன். 3எசேக்கியா தனது
சொந்த மிருகங்களையும் தகனபலி இடுவதற்
காகத் தந்தான். இம்மிருகங்கள் தினந்தோறும்
காலை, மாலை வேலைகளில் செலுத்தப்
படும் தகனபலிகளுக்குப் பயன்பட்டன.
இம்மிருகங்கள் ஓய்வுநாட்களிலும் பிறைச்
சந்திரநாள் பண்டிகைகளிலும் மற்ற சிறப்புக்
கூட்டங்களிலும் சர்வாங்க தகனபலிகள்
செலுத்தப் பயன்பட்டன. இவை கர்த்த
ருடைய சட்டத்தில் எழுதப்பட்டபடியே
நடந்தேறின. 4ஜனங்கள் தம் அறு
வடையிலும் மற்ற பொருட்களிலும் ஒரு
பகுதியை ஆசாரியர்களுக்கும், லேவியர்க
ளுக்கும் கொடுக்கவேண்டும் என்று
இருந்தது. எனவே எசேக்கியா அரசன்
எருசலேம் நகர ஜனங்களிடம் தம் பங்கை
அளிக்குமாறு கட்டளையிட்டான். இவ்வாறு
ஆசாரியர்களும் லேவியர்களும் தங்களுக்கு
என்ன செய்யவேண்டும் என்று சட்ட
நெறிகளின்படி விதிக்கப்பட்டுள்ளதோ அவ்
வாறு செய்வதிலேயே தன் வாழ்நாளைச்
செலவு செய்தனர். 5நாடு முழுவதிலும்
உள்ள ஜனங்கள் இந்த கட்டளையைக்
கேள்விப்பட்டார்கள். எனவே இஸ்ரவேல்
ஜனங்கள் முதல் பஸ்காவுக்காக தமது
அறுவடை, திராட்சை, எண்ணெய், தேன்,
வயலில் விளைந்த மற்ற பொருட்கள்
ஆகியவற்றில் பத்தில் ஒருபங்கைக் கொடுத்
தனர். 6யூதாவின் ஊர்களில் வசித்த இஸ்ர
வேல் மற்றும் யூதாவின் ஆண்கள் தமது
கால் நடைகளிலும் செம்மறி ஆடுகளிலும்
பத்தில் ஒருபங்கைக் கொண்டுவந்தனர்.
மேலும், கர்த்தருக்காக மட்டும் என்று
ஒரு சிறப்பான இடத்தில் வைத்திருந்த
பொருட்களில் பத்தில் ஒருபங்கையும்

---

**பஸ்கா பண்டிகை** இது யூதர்களுக்கு ஒரு முக்கியமான விடுமுறையாகும். அவர்கள் இந் நாளில் ஒவ்வொரு ஆண்டும் சிறப்பான உணவை உண்பார்கள். மோசேயின் காலத்தில் அவர்களைத் தேவன் எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து விடு தலை செய்ததை நினைவுபடுத்தும் பண்டிகை யாகும்.

அவர்கள் கொண்டு வந்தார்கள். இவை
அனைத்தையும் இவர்கள் தமது தேவனாகிய
கர்த்தருக்குக் கொடுத்தனர். அவர் இவற்றைக்
குவியலாக வைத்தனர்.
7 இக்குவியல்களை அவர்கள் மூன்றாம்
மாதத்தில் (மே/ஜூன்) தொடங்கி ஏழாவது
மாதத்தில் (செப்டம்பர்/அக்டோபர்) முடித்
தனர். 8 எசேக்கியாவும் தலைவர்களும் வந்த
போது தொகுக்கப்பட்ட குவியல்களைக்
கண்டனர். அவர்கள் கர்த்தரையும் அவரது
ஜனங்களாகிய, இஸ்ரவேல் ஜனங்களைப்
போற்றினார்கள்.
9 பிறகு எசேக்கியா ஆசாரியர்களிடமும்
லேவியர்களிடமும் குவியல்களைப்பற்றி
விசாரித்தான். 10 சாதோக்கின் குடும்பத்தை
சேர்ந்த தலைமை ஆசாரியனாகிய அசரியா
என்பவன் எசேக்கியா அரசனிடம்,
“ஜனங்கள் கர்த்தருடைய ஆலயத்திற்குக்
காணிக்கை பொருட்களைக் கொண்டுவரத்
தொடங்கிய நாள்முதல் எங்களுக்கு உணவு
ஏராளமாய் உள்ளது. நாங்கள் எவ்வளவு
தான் அதிகமாக தின்றாலும் ஏராளமாக
மிதியாக உள்ளது. கர்த்தர் உண்மையாகவே
தம் ஜனங்களை ஆசீர்வதித்துள்ளார். அத
னால் தான் இவ்வளவு மீதியாக உள்ளது”
என்று பதில் சொன்னான்.
11 பின்னர் எசேக்கியா கர்த்தருடைய ஆல
யத்திற்காக பண்டகச்சாலைகளை அமைக்க
கட்டளையிட்டான். அவ்வாறே ஆயிற்று.
12 பிறகு ஆசாரியர்கள் காணிக்கைகளையும்,
பத்தில் ஒருபாகத்தையும் கர்த்தருக்கு மட்டுமே
கொடுப்பதற்கென்று இருந்த மற்றப்
பொருட்களையும் எடுத்து வைத்தார்கள்.
இவ்வாறு சேகரிக்கப்பட்ட அனைத்தும்
ஆலயத்தின் சேமிப்பு அறையில் வைக்கப்
பட்டது. இவற்றிற்கு பொறுப்பாளனாக
கொனனியா என்ற லேவியன் இருந்தான்.
அவனது தம்பியாகிய சிமேயு இரண்டாவது
நிலை பொறுப்பாளனாக இருந்தான்.
13 கொனனியாவும் அவனது தம்பி சிமேயியும்
யெகியேல், அசசியா, நாகாத், ஆசகேல்,
யெரிமோத், யோசபாத், ஏலியேல், இஸ்ம
கியா, மாகாத், பெனாயா ஆகியோர்
மேற்பார்வை செய்தனர். எசேக்கியா அரச
னும் அசரியா எனும் தேவனுடைய ஆலய
அதிகாரியும் இவர்களைத் தேர்ந்தெடுத்தனர்.
14 தேவனுக்கு ஜனங்கள் தாராளமாய்க்
கொடுக்கப்பட்ட காணிக்கைகளுக்குக் கோரே
பொறுப்பாளியாக இருந்தான். கர்த் தருக்குப்
பரிசுத்தமாக்கப்பட்ட காணிக்கை களைத்
திருப்பி விநியோகிக்கும் பொறுப்பும்
அவனுக்கு இருந்தது. கோரே கிழக்கு
வாசலுக்குக் காவல்காரனாக இருந்தான்.
லேவியனாகிய இம்னா என்பவன் அவனது
தந்தை ஆவான். 15 ஏதோன், மின்யமீன்,
யெசுவா, செமாயா, அமரியா, செக்கனியா
ஆகியோர் கோரேவுக்கு உதவியாக இருந்த
னர். ஆசாரியர்கள் வாழ்ந்துக் கொண்டி
ருக்கும் நகரங்களில் இவர்கள் உண்மையுடன்
சேவைசெய்தனர். இவர்கள் வசூலித்த
பொருட்களைத் தம் உறவினர்களுக்கும்
ஒவ்வொரு ஆசாரியர் குழுவுக்கும் கொடுத்
தார்கள். அதே அளவு பொருட்களை அவன்
முக்கியம் உள்ளவர்களுக்கும் முக்கியம்
இல்லாதவர்களுக்கும் கொடுத்தான். 16 இவர்கள்
வசூலிக்கப்பட்ட பொருட்களை, லேவியர்
குடும்ப வரலாறுகளில் தம் பெயர்களைக்
கொண்டுள்ள மூன்றும் அதற்கு மேற்பட்ட
வயதும் கொண்ட ஆண்களுக்குக் கொடுத்
தான். இந்த ஆடவர்கள் அனைவரும் தங்கள்
பொறுப்பிலுள்ள வேலைகளைச் செய்வ
தற்காக தினசரி சேவைக்காகக் கர்த்தருடைய
ஆலயத்திற்குள் நுழையவேண்டியிருந்தது.
ஒவ்வொரு லேவியக் குழுவினருக்கும்
அவர்களுக்கென்று பொறுப்புகள் இருந்தன.
17 வசூலில் ஒரு குறிப்பிட்டப் பங்கானது
ஆசாரியர்களுக்கும் கொடுக்கப்பட்டது.
குடும்ப வரலாறுகளில் பட்டியலின்படி
வரிசைக்கிரமமாக ஒவ்வொரு குடும்பமும்
இப்படி கொடுத்தது. இருபதும் அதற்கு
மேற்பட்ட வயதும் கொண்ட லேவியர்
களுக்கு பங்கு கொடுக்கப்பட்டது. இவை
அனைத்தும் அவரவரது குழுவின்படியும்
பொறுப்பின்படியும் கொடுக்கப்படட்து.
18 லேவியர்களின் குழந்தைகள், மனைவியர்,
மகன்கள், மகள்கள் ஆகியோரும் தங்கள்
பங்கினைப் பெற்றனர். இது அனைத்து
லேவியர்களுக்கும் அவர் தம் குடும்ப வர
லாற்று பட்டியலின்படியே கொடுக்கப்
பட்டது. ஏனென்றால் லேவியர்கள்
நம்பிக்கை உள்ளவர்களாகவும் எப்பொழு
தும் தம்மை பரிசுத்தமாக வைத்துக்கொள்
பவர்களாகவும் சேவைக்குத் தயாரானவர்
களாகவும் இருந்தனர். 19 ஆசாரியர்களாகிய
ஆரோனின் சந்ததியினர்களில் சிலர், லேவி
யர்கள் குடியிருக்கிற நகரங்களின் அருகில்
வயல்களை வைத்திருந்தனர். நகரங்களில்
ஆரோனின் சந்ததியினர் மேலும் சிலர்
வாழ்ந்தனர். இவர்களின் பெயர்களைத் தேர்ந்
தெடுத்து இந்த ஆரோனின் சந்ததியினருக்கும்
அவர்களுக்குரிய பங்குப் பொருள்கள்
கொடுக்கப்பட்டது. லேவியர்களில் அனைத்து
ஆண்பிள்ளைகளுக்கும் அட்டவணையில்
எழுதப்பட்டவர்களுக்கும் பங்கு கொடுக்கப்
பட்டது.
20 யூதா முழுவதிலும் இத்தகைய நல்லச்
செயல்களை எசேக்கியா அரசன் செய்தான்.
அவன் தனது தேவனாகிய கர்த்தருக்கு
முன் எது நல்லதோ, எது சரியானதோ,
எது உண்மையுள்ளதோ அவற்றைச் செய்
தான். 21 அவன் தொடங்கிய அனைத்து
வேலைகளிலும் வெற்றிகரமாய்த் திகழ்ந்
தான். தேவனுடைய ஆலயச் சேவையிலும்
சட்டத்திற்கும் கட்டளைகளுக்கும் அடி
பணிகிற செயலிலும் தேவனைப் பின்
பற்றும் முறையிலும் வெற்றிகரமாய்த

திகழ்ந்தான். எசேக்கியா இவற்றையெல்லாம்
தன் முழு இருதயத்தோடு செய்தான்.

### அசீரியா நாட்டு அரசன் எசேக்கியா விற்குத் துன்பம் கொடுக்கிறான்

32 இவையனைத்தையும் எசேக்கியா
உண்மையுடன் செய்துமுடித்தப்
பிறகு, சனகெரிப் எனும் அசீரியா அரசன்
யூதா நாட்டைத் தாக்கவந்தான். சனகெரிப்பும்
அவனது படைகளும் கோட்டைக்கு
வெளியே முகாமிட்டனர். அந்நகரங்களைத்
தோற்கடிக்கத் திட்டங்கள் தீட்டும் பொருட்டு
அவன் இவ்வாறுச் செய்தான். அவன்
அனைத்து நகரங்களையும் தானே வென்று
விட விரும்பினான். 2எருசலேமைத் தாக்கு
வதற்காக சனகெரிப் வந்திருக்கும் செய்தியை
எசேக்கியா அறிந்துகொண்டான். 3பிறகு
எசேக்கியா தனது அதிகாரிகளோடும் படை
அதிகாரிகளோடும் கலந்தாலோசித்தான்.
அவர்கள் அனைவரும் நகரத்துக்கு வெளியே
தண்ணீரை விநியோகிக்கும் ஊற்றுக்
கண்களை அடைத்துவிட ஒப்புக் கொண்ட
னர். அந்த அதிகாரிகளும் அலுவலர்களும்
எசேக்கியாவிற்கு உதவினார்கள். 4நாட்டின்
நடுவில் ஓடிக்கொண்டிருந்த ஓடைகளையும்
ஊற்றுகளையும் ஏராளமான ஜனங்கள்
சேர்ந்துவந்தடைத்தனர். அவர்கள், "அசீரியா
அரசன் இங்கு வரும்போது அவனுக்கு
அதிகம் தண்ணீர் கிடைக்காது!" என்றனர்.
5எசேக்கியா எருசலேமைப் பலமுள்ளதாக
ஆக்கினான். இடிந்துபோன சுவர்களை மீண்
டும் கட்டினான். சுவர்களின்மேல் கோபுரங்
களைக் கட்டினான். முதல் சுவருக்கு அடுத்த
தாக இரண்டாம் சுவரையும் கட்டினான்.
எருசலேமின் பழைய பகுதியில் உள்ள
கிழக்கு பாகத்தைப் பலமுள்ளதாகக் கட்டி
னான். அவன் பல்வேறு ஆயுதங்களையும்
கேடயங்களையும் செய்தான். 6-7ஜனங்
களுக்குத் தலைமைத் தாங்கும் போர்த்
தலைவர்களை எசேக்கியா தேர்ந்தெடுத்தான்.
நகர வாசலுக்கருகில் அவன் இந்த அதி
காரிகளை அழைத்துப் பேசினான்.
எசேக்கியா அவர்களோடு பேசி அவர்களை
உற்சாகப்படுத்தினான். அவன், "நீங்கள் பல
மாகவும் தைரியமாகவும் இருங்கள். அசீரியா
அரசனைப்பற்றியோ அவனது பெரும்
படையைப்பற்றியோ பயமும் கவலையும்
அடையாதீர்கள். அசீரியா அரசனுக்கு இருக்
கிற பலத்தைவிட மாபெரும் வல்லமை
நமக்கு பலமாக இருக்கிறது! 8அசீரியா
அரசனிடம் மனிதர்கள் மட்டுமே உள்ளனர்.
ஆனால் நம்மிடமோ நமது தேவனாகிய
கர்த்தர் இருக்கிறார்! நமது தேவன் நமக்கு
உதவுவார். நமது போர்களில் அவர்
சண்டையிடுவார்" என்று பேசினான். இவ்
வாறு யூதா அரசனான எசேக்கியா ஜனங்
களை உற்சாகப்படுத்தி அவர்களைப் பலமுள்
ளவர்களாக உணரச்செய்தான்.

9சனகெரிப்பும் அவனது படைகளும்
லாகீசுக்கு எதிராக முற்றுகை இட்டனர்.
அதனைத் தோற்கடிக்க முடியும் என்றும்
எண்ணினர். சனகெரிப் தனது வேலைக்
காரர்களை யூதாவின் அரசனான எசேக்கி
யாவிடமும் எருசலேமில் உள்ள யூதா
ஜனங்களிடமும் அனுப்பினான். எசேக்கியா
விற்கும், எருசலேமில் உள்ள ஜனங்களுக்கும்
எடுத்துச்சொல்ல சனகெரிப்பின் வேலைக்
காரர்களிடம் ஒரு செய்தி இருந்தது. 10அவர்
கள், "அசீரியாவின் அரசனான சனகெரிப்
சொல்வதாவது, 'முற்றுகை இடப்பட்ட
எருசலேமிற்குள் எந்த நம்பிக்கையின் பேரில்
நீங்கள் அனைவரும் இருக்கிறீர்கள்? 11எசேக்
கியா உங்களை முட்டாளாக்குகிறான். நீங்
கள் தந்திரமாக எருசலேமிற்குள் தங்க
வைக்கப்படுகிறீர்கள். எனவே நீங்கள் பசியா
லும் தாகத்தாலும் மரித்துப்போவீர்கள்.
எசேக்கியா உங்களிடம், "நமது தேவனாகிய
கர்த்தர் அசீரியா அரசனிடமிருந்து நம்மைக்
காப்பாற்றுவார்" என்று கூறுகிறான்.
12எசேக்கியாவே கர்த்தருடைய மேடைகளை
யும் பலிபீடங்களையும் அப்புறப்படுத்தி
னான். அவன் யூதாவுக்கும் எருசலேமிற்கும்
ஒரே பலிபீடத்தையே தொழுதுகொள்ளுங்
கள், நறுமணப் பொருட்களை எரியுங்கள்
என்று சொன்னான். 13நானும் என் முற்
பிதாக்களும் மற்ற நாடுகளிலிருந்த அனைத்து
ஜனங்களுக்கும் என்ன செய்தோம் என்பதை
நீங்கள் அறிவீர்கள். மற்ற நாடுகளில் உள்ள
தெய்வங்களால் தம் ஜனங்களையே காப்
பாற்றமுடியாமல் போனது. அந்தத் தெய்
வங்களின் ஜனங்களை நான் அழிக்கும்
போது கூட, அவர்களால் அதைத் தடுக்க
முடியவில்லை. 14என் முற்பிதாக்கள் அந்நாடு
களை அழித்தார்கள். தனது ஜனங்களை
அழிப்பதிலிருந்து என்னைத் தடுக்கும்
தேவன் யாரும் இல்லை. எனவே, உங்கள்
தெய்வம் என்னிடமிருந்து உங்களைக்
காப்பாற்றுவார் என்று நினைக்கிறீர்களா?.
15எசேக்கியா உங்களை முட்டாளாக்கவோ,
உங்களிடம் தந்திரம் செய்யவோ அனுமதிக்
காதீர்கள். அவனை நம்பாதீர்கள். ஏனென்
றால் எந்த நாட்டையும் அரசையும் என்னிட
மிருந்தும் என் முற்பிதாக்களிடமிருந்தும்
எந்தத் தெய்வமும் காப்பாற்றவில்லை.
எனவே என்னுடைய தாக்குதலில் இருந்து
உங்கள் தெய்வம் உங்களைக் காப்பாற்று
வார் என்று எண்ணாதீர்கள்" என்றார்கள்

16அசீரியா அரசனின் வேலைக்காரர்கள்,
தேவனாகிய கர்த்தருக்கும் அவரது தொண்ட
னான எசேக்கியாவுக்கும் எதிராக மிக
மோசமாகப் பேசினார்கள். 17அசீரியா அர
சன் மேலும் தேவனாகிய கர்த்தரை நிந்தித்து
கடிதங்கள் பல எழுதினான். அசீரியா
அரசன் தம் கடிதத்தில் எழுதியிருந்த
செய்திகள் பின் வருமாறு: "மற்ற நாடுகளில்
உள்ள தெய்வங்களால் தம் ஜனங்களைக்

கூட என்னிடமிருந்து காப்பாற்ற முடிய
வில்லை. இதைப்போலவே எசேக்கியாவின்
தெய்வம் உங்களை எனது தாக்குதலிலிருந்து
காப்பாற்ற முடியாது.” 18பிறகு அசீரியா
அரசனின் வேலைக்காரர்கள் சுவர்களின்
மேலே இருந்த எருசலேமின் ஜனங்களைப்
பார்த்து சத்தமிட்டார்கள். அப்போது அவர்
கள் எபிரெய மொழியைப் பயன்படுத்தினர்.
எருசலேம் ஜனங்கள் அஞ்சவேண்டும்
என்பதற்காகவே இவ்வாறு நடந்துக்
கொண்டனர். தாம் அந்நகரத்தைக் கைப்பற்றி
விடுவோம் என்று நம்பினார்கள். 19உலக
ஜனங்கள் தொழுதுகொண்ட தேவனுக்கு
எதிராக அந்த வேலைக்காரர்கள் கெட்ட
செய்திகளைக் கூறினார்கள். அந்த தெய்
வங்கள் அந்த ஜனங்களின் கைகளால்
செய்யப்பட்ட பொருட்கள் மட்டுமே. இதைப்
போலவே எருசலேமின் தேவனுக்கும் அதே
போன்ற தீமைகளை அந்த வேலைக்காரர்கள்
செய்தார்கள்.
20இந்தப் பிரச்சனையைப்பற்றி எசேக்கியா
அரசனும், ஆமோத்தின் மகனாகியா ஏசாயா
தீர்க்கதரிசியும் கர்த்தரிடம் ஜெபம் செய்தார்
கள். அவர்கள் பரலோகத்தை நோக்கி
மிகச் சத்தமாக ஜெபம் செய்தனர். 21பிறகு
கர்த்தர் அசீரியா அரசனின் முகாமிற்கு ஒரு
தேவதூதனை அனுப்பினார். தேவதூதன்
அசீரியாவின் படையில் உள்ள எல்லா
வீரர்களையும் தலைவர்களையும் அதிகாரி
களையும் கொன்றான். எனவே, அசீரியா
அரசன் தனது சொந்த நாட்டிற்குத் திரும்பிப்
போனான். அவனது ஜனங்கள் அவனுக்காக
வெட்கப்பட்டனர். அவன் தனது பொய்த்
தெய்வங்களின் கோவிலிற்குப் போனான்.
அங்கே அவனது மகன்கள் அவனை
வாளால் கொன்றனர். 22இவ்வாறு கர்த்தர்,
அசீரியா அரசனாகிய சனகெரிப்பிட
மிருந்தும் மற்ற ஜனங்களிடமிருந்தும் எசேக்
கியாவையும் அவனது ஜனங்களையும்
காப்பாற்றினார். கர்த்தர் எசேக்கியா மீதும்
எருசலேம் ஜனங்கள் மீதும் அக்கறைக்
கொண்டார். 23எருசலேமில் உள்ள கர்த்த
ருடைய ஆலயத்திற்கு பலரும் காணிக்கை
களைக் கொண்டுவந்தனர். அவர்கள் யூதா
அரசனாகிய எசேக்கியாவுக்கும் விலை
யுயர்ந்த பொருட்களைக் கொண்டுவந்தனர்.
அந்நாளிலிருந்து அனைத்து நாடுகளும்
எசேக்கியாவை மதித்தன.
24அந்நாட்களில் எசேக்கியா நோய்வாய்ப்
பட்டு மரணப்படுக்கையில் விழுந்தான்.
அவன் கர்த்தரிடம் ஜெபித்தான். கர்த்தர்
எசேக்கியாவிடம் பேசினார். அவனுக்கு ஒரு
அடையாளம் காட்டினார். 25ஆனால்
எசேக்கியாவின் மனதில் கர்வ உணர்வு
தோன்றியது. எனவே அவன் தேவனுடைய
கருணைக்காக அவருக்கு நன்றி செலுத்த
வில்லை. இதனால் தேவனுக்கு எசேக்கியா
வின் மீது கோபம் ஏற்பட்டது. அதோடு
யூதா மற்றும் எருசலேம் ஜனங்கள் மீதும்
கோபம் ஏற்பட்டது. 26ஆனால் எசேக்கியா
வும் எருசலேமில் உள்ள ஜனங்களும் தங்கள்
இதயத்தையும் வாழ்வையும் மாற்றிக்
கொண்டார்கள். அவர்கள் பணிவுள்ளவர்கள்
ஆனார்கள். பெருமை உணர்வுக்கொள்வதை
நிறுத்தினார்கள். அவர்கள்மேல் கர்த்தருக்கு
எசேக்கியா உயிரோடு இருந்தவரை கோபம்
வரவில்லை.
27எசேக்கியாவுக்கு ஏராளமான செல்வமும்
சிறப்பும் இருந்தது. அவன் வெள்ளி, தங்கம்,
விலைமதிப்புள்ள நகைகள், நறுமணப்
பொருட்கள், கேடயங்கள் மற்றும் அனைத்
துப் பொருட்களைப் பண்டகசாலைகள்
கட்டி சேமித்தான். 28ஜனங்கள் அனுப்பித்
தரும் உணவு தானியங்களையும், புதிய
திராட்சைரசத்தையும், எண்ணையையும்
சேகரித்துவைக்கும் கட்டிடங்கள் அவனிடம்
இருந்தன. அவன் ஆடுகளுக்கும் மாடுகளுக்
கும் தொழுவங்களை அமைத்தான். 29எசேக்
கியா அநேக நகரங்களையும் கட்டினான்.
அவன் ஏராளமான ஆட்டு மந்தைகளையும்
மாட்டு மந்தைகளையுங்கூட பெற்றான்.
கர்த்தர் அவனுக்கு ஏராளமான செல்வத்தைக்
கொடுத்தார். 30எசேக்கியா கீயோன் என்னும்
ஆற்றிலே அணையைக் கட்டினான். அந்த
நீரை மேற்கேயிருந்து தாழ தாவீதின்
நகரத்திற்குத் திரும்பினான். அவனது செயல்
கள் அனைத்திலும் வெற்றிபெற்றான்.
31ஒருமுறை பாபிலோனில் உள்ள தலை
வர்கள் எசேக்கியாவுக்குத் தூதுவர்களை
அனுப்பினார்கள். அவர்கள் தம் நாட்டில்
ஏற்பட்ட ஒரு புதுவிதமான அடையாளத்
தைப் பற்றிக் கேட்டனர். அப்போது தேவன்
அவனைத் தனியாக விட்டார். அவன்
இதயத்தில் உண்டான அத்தனையையும்
அறியும்படி அவனைச் சோதித்தார்.
32எசேக்கியா செய்த மற்ற செயல்களும்
அவன் எவ்வாறு கர்த்தரை நேசித்தான்
என்ற விபரமும் ஆமோத்தின் மகனாகிய
ஏசாயாவின் தரிசனம் என்ற புத்தகத்திலும்
யூதா மற்றும் இஸ்ரவேல் அரசர்களின்
வரலாறு என்ற புத்தகத்திலும் எழுதப்
பட்டுள்ளன. 33எசேக்கியா மரித்தான். அவன்
தன் முற்பிதாக்களோடு அடக்கம் செய்யப்
பட்டான். தாவீதின் முற்பிதாக்கள் அடக்கம்
செய்யப்பட்ட கல்லறைகள் உள்ள மலைப்
பகுதியில் அடக்கம் செய்யப்பட்டான்.
எசேக்கியா மரித்ததும் யூதா மற்றும்
எருசலேமில் வாழ்ந்த ஜனங்கள் அனைவரும்
அவனுக்கு மரியாதைச் செய்தார்கள்.
மனாசே என்பவன் அவனுக்குப் பிறகு
எசேக்கியாவின் இடத்தில் புதிய அரசன்
ஆனான். மனாசே எசேக்கியாவின் மகன்.

### யூதாவின் அரசனான மனாசே

33 மனாசே யூதாவின் அரசனானபோது
அவனுக்கு 12 வயது. அவன் எருச

லேமில் 55 ஆண்டுகள் அரசாண்டான்.
2கர்த்தர் தவறென்று சொன்னவற்றையே
மனாசே செய்தான். இஸ்ரவேல் ஜனங்களுக்கு
முன்னதாக கர்த்தர் கட்டாயமாக வெளி
யேற்றிய மற்ற தேசத்தவர்களின் பயங்கர
மானதும் பாவமானதுமான வழிகளையே
அவன் பின்பற்றினான். 3மனாசே மீண்டும்
தன் தந்தை உடைத்தெறிந்த மேடைகளைக்
கட்டினான். பாகால் தெய்வத்துக்கு
பலிபீடங்க ளையும் விக்கிரகத் தோப்புகளை
யும் அவன் கட்டினான். வானத்தின்
சேனைகளையும் நட்சத்திரக் கூட்டங்களை
யும் அவன் தொழுதுகொண்டான். 4மனாசே
கர்த்தருடைய ஆலயத்திலும் பொய்த்
தெய்வங்களுக்கும் பலிபீடங்களையும் கட்டி
னான். கர்த்தர், ஆலயத்தைப்பற்றி, “என்
நாமம் எருசலேமில் எப்பொழுதும்
இருக்கும்” என்றார். 5மனாசே, கர்த்தருடைய
ஆலயத்தில் உள்ள இரண்டு பிரகாரங்களிலும்
வானத்து நட்சத்திரக் கூட்டங்களுக்கெல்லாம்
பலிபீடத்தைக் கட்டினான். 6மனாசே பென்
இன்னோம் பள்ள தாக்கிலே தன்
பிள்ளைகளையே நெருப்பில் எரித்து பலி
கொடுத்தான். இவன் நிமித்தம், குறிபார்ப்பது,
பில்லிசூனியங்களை அனு சரித்து
மந்திரவாதிகளையும் குறிசொல்லுகி
றவர்களையும் அணுகினான். அவன் கர்த்தர்
தவறு என்று சொன்ன பலவற்றைச்
செய்தான். மனாசேயின் பாவங்கள் கர்த்த
ருக்குக் கோபத்தைத் தந்தது. 7அவன் ஒரு
விக்கிரகத்தின் உருவச்சிலையைச் செய்து
அதனை தேவனுடைய ஆலயத்திற்குள்
வைத்தான். தேவன் ஆலயத்தைப்பற்றி தாவீ
திடமும் அவனது மகன் சாலொமோனிடமும்
பேசியிருக்கிறார். அவர், “நான் எனது
பெயரை இவ்வாலயத்திலும் எருசலேமிலும்
என்றென்றைக்கும் வைத்திருப்பேன். இஸ்ர
வேலின் அனைத்து கோத்திரங்களிலி
ருந்தும் நான் எருசலேமைத் தேர்ந்தெடுத்
தேன். 8நான் இஸ்ரவேலர்களிடமிருந்து
மீண்டும் அவர்களின் முற்பிதாக்களுக்குக்
கொடுத்த நாட்டை எடுத்துக்கொள்ளமாட்
டேன். ஆனால் அவர்கள் எனது கட்டளை
களுக்கு அடிபணிய வேண்டும். இஸ்ரவேல்
ஜனங்கள் அனைத்து சட்டங்க ளுக்கும்,
விதிகளுக்கும், கட்டளைகளுக்கும்
கீழ்ப்படியவேண்டும் இவற்றை நான்
மோசேக்குக் கொடுத்துள்ளேன்” என்றார்.

9யூதா ஜனங்களையும் எருசலேமில்
வாழ்ந்த ஜனங்களையும் மனாசே தவறு
செய்ய ஊக்குவித்தான். இஸ்ரவேலர்களுக்கு
முன்னதாக அந்த நிலத்தில் வாழ்ந்து
கர்த்தரால் அழிக்கப்பட்ட தேசத்தவர்களை
விட அவர்கள் மோசமானவர்களாக இருந்
தார்கள். பாவங்களைச் செய்தனர்.

10மனாசே மற்றும் அவனது ஜனங்களிட
மும் கர்த்தர் பேசினார். ஆனால் அவர்கள்
அதைக் கவனிக்க மறுத்துவிட்டனர்.
11எனவே கர்த்தர் அசீரியா நாட்டு தளபதி
களை அழைத்து வந்து யூதாவைத்
தாக்கினார். அந்தத் தளபதிகள் மனாசேயைப்
பிடித்து அவனது உடலில் கொக்கிகளை
மாட்டினார்கள். அவனது கைகளில் வெண்
கலச் சங்கிலிகளைப் போட்டார்கள். அவ
னைக் கைதியாக பாபிலோனுக்குக் கொண்டு
போனார்கள்.

12மனாசே கஷ்டப்பட்டான். அப்போது
அவன் தேவனாகிய கர்த்தரிடம் ஜெபித்தான்.
தன் முற்பிதாக்களின் தேவனிடம் மிகப்பணி
வாக நடந்துக்கொண்டான். 13மனாசே கர்த்த
ரிடம் கெஞ்சி தன்னைக் காப்பாற்றும்படி
ஜெபித்தான். கர்த்தர் அவனது வேண்டு
கோளை கேட்டார். அவனுக்காக வருத்தப்
பட்டார். பிறகு கர்த்தர் அவனை எருச
லேமிற்குத் திரும்பி தனது சிங்காசனத்தில்
அமரும்படிச் செய்தார். பின்னர் கர்த்தர்
தான் உண்மையான தேவன் என்பதை
மனாசே தெரிந்துகொண்டான்.

14இது நடந்தப்பிறகு, மனாசே தாவீதின்
நகரத்திற்கு ஒரு வெளிச்சுவரைக் கட்டினான்.
இந்த வெளிச்சுவர் கிதரான் பள்ளத்தாக்கில்
கியோன் நீரூற்றுக்கு மேற்கிலிருந்து மீன்
வாசல் வரை இருந்தது. ஒபேலைச் சுற்றிலும்
அதனை வளைத்துக் கட்டினான். அதனை
மிக உயரமாகக் கட்டினான். பிறகு அவன்
யூதாவிலுள்ள அனைத்து கோட்டைக
ளுக்கும் அதிகாரிகளை நியமித்தான்.
15மனாசே அந்நிய தெய்வங்களையும் விக்கி
ரகங்களையும் கர்த்தருடைய ஆலயத்தில்
இருந்து வெளியே எடுத்தான். அவன்
எருசலேமிலும் மலை நகரங்களிலும்
அமைத்த பலிபீடங்களையும் நீக்கினான்.
அவன் இவை அனைத்தையும் எருசலேம்
நகருக்கு வெளியே தூக்கி எறிந்தான். 16பிறகு
அவன் கர்த்தருக்காக பலிபீடத்தை
அமைத்தான். அதில் அவன் சமாதானப்
பலியையும் நன்றிக்குறிய பலியையும்
செலுத்தினான். இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தருக்குச் சேவை செய்யுமாறு யூதாவி
லுள்ள ஜனங்களுக்கெல்லாம் கட்டளை
யிட்டான். 17ஜனங்கள் தொடர்ந்து மேடை
களிலும் பலிகள் கொடுத்துவந்தனர். ஆனா
லும் அவர்கள் தங்கள் தேவனாகிய
கர்த்தருக்கென்றே செய்தனர்.

18மனாசே செய்த மற்ற செயல்களும்
அவன் தேவனிடம் செய்த ஜெபங்களும்
இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தருடைய
நாமத்தில் அவனோடு ஞானதிருஷ்டிக்காரர்
கள் பேசிய பேச்சும் இஸ்ரவேல் அரசர்களின்
புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன. 19மனாசே
யின் வேண்டுதல்களும் அதனைக் கேட்டு
தேவன் எப்படி வருத்தப்பட்டார் என்பதும்
தீர்க்கதரிசிகளின் புத்தகத்தில் எழுதப்பட்
டுள்ளது. இதில் பணிவதற்கு முன் அவன்
செய்த தவறுகளும் பாவங்களும் அவன்

கட்டிய மேடைகளும் விக்கிரக தோப்பு
களைப்பற்றியும் எழுதப்பட்டுள்ளன. [20]அவன்
மரித்ததும் தனது முற்பிதாக்களோடு அடக்
கம் செய்யப்பட்டான். எனவே அவனை
ஜனங்கள் அவனது சொந்த அரண்
மனையிலேயே அடக்கம் செய்தனர்.
மனாசேயின் இடத்தில் ஆமோன் புதிய
அரசன் ஆனான். அவன் மனாசேயின்
மகன் ஆவான்.

### யூதாவின் அரசனான ஆமோன்

[21]ஆமோன் அரசனாகும்போது அவனுக்கு
22 வயது. அவன் எருசலேமில் 2 ஆண்டுகள்
அரசனாக இருந்தான். [22]ஆமோன் கர்த்தருக்கு
முன்பாக எல்லா வகையான தீயச்செயல்
களையும் செய்தான். அவனது தந்தை
மனாசே செய்ததுபோன்று நல்ல காரியங்
களை ஆமோன் செய்யவேண்டும் என்று
கர்த்தர் விரும்பினார். ஆனால் ஆமோன்,
மனாசே வைத்த விக்கிரகங்க ளுக்கு
பலிகளை கொடுத்தான். இவ்விக்கி
ரகங்களை ஆமோன் வழிபட்டான். [23]அவ
னது தந்தையாகிய மனாசே கர்த்தருக்கு
முன்னால் பணிவாக இருந்ததுபோல, கர்த்த
ருக்கு முன்னால் ஆமோன் தன்னைத்தானே
பணிவுடையவனாக்கிக் கொள்ளவில்லை.
ஆனால் அவன் மேலும் மேலும் பாவங்
களைச் செய்துக்கொண்டிருந்தான். [24]ஆமோ
னின் வேலைக்காரர்கள் அவனுக்கு எதி
ராகத் திட்டங்கள் தீட்டினார்கள். அவர்கள்
அவனை அவனது சொந்த வீட்டிலேயே
கொன்றனர். [25]ஆனால் யூதா ஜனங்கள்
அவ்வேலைக்காரர்கள் அனைவரையும்
கொன்றனர். பிறகு ஜனங்கள் யோசி
யாவைப் புதிய அரசனாகத் தேர்ந்தெடுத்த
னர். யோசியா ஆமோனின் மகன்.

### யூதாவின் அரசனான யோசியா

34 யோசியா அரசனாகும்போது அவ
னுக்கு 8 வயது. அவன் எருசலேமில்
31 ஆண்டுகள் அரசனாக இருந்தான்.
[2]யோசியா சரியான செயல்களையே செய்
தான். கர்த்தருடைய விருப்பப்படியே நல்ல
காரியங்களையே அவன் செய்தான். அவன்
தனது முற்பிதாவான தாவீதைப்போன்று
நல்ல செயல்களைச் செய்துவந்தான்.
யோசியா நல்ல காரியங்களைச் செய்வதில்
இருந்து திரும்பவே இல்லை. [3]யோசியா
ஆட்சிப் பொறுப்பேற்ற எட்டாவது ஆண்
டில் அவன் தனது முற்பிதாவான தாவீது
தேவனைப் பின்பற்றியது போலவே
பின்பற்ற ஆரம்பித்துவிட்டான். யோசியா
தேவனைப் பின்பற்றும்போது மிகவும்
இளையவனாக இருந்தான். யோசியா அரச
னானப் பன்னிரண்டாம் ஆண்டில் அவன்
மேடைகளையும் விக்கிரகங்களையும் அழித்
தான். யூதா மற்றும் எருசலேமில் உள்ள
அந்நிய விக்கிரகங்களையும் அகற்றினான்.
[4]பாகால் தெய்வங்களான எல்லா பலி
பீடங்களையும் ஜனங்கள் உடைத்தனர்.
அவர்கள் யோசியாவின் முன்னிலையி
லேயே இதனைச் செய்தனர். பிறகு
ஜனங்களின் முன்னே உயரமாய் நின்றிருந்த
நறுமணப் பொருட்களை எரிக்கும் பீடங்
களை யோசியா இடித்தான். செதுக்கப்பட்ட
விக்கிரகங்களையும் வார்க்கப்பட்ட விக்கி
ரகங்களையும் அவன் உடைத்தான். அவன்
அவற்றைத் தூளாக்கி, பாகால் தெய்வங்
களை தொழுதுகொண்டு மரித்துப்போனவர்
களின் கல்லறைகள் மீது தூவினான்.
[5]யோசியா பாகால் தெய்வத்துக்குச் சேவை
செய்த ஆசாரியர்களின் எலும்புகளை அவர்
கள் பலிபீடங்களிலேயே எரித்தான். இவ்
வாறு யோசியா யூதா மற்றும் எருசலேமின்
விக்கிரகங்களையும் விக்கிரக ஆராதனை
களையும் அழித்தான். [6]மனாசே, எப்பிராயீம்,
சிமியோன் மற்றும் நப்தலி செல்லும் வழி
முழுவதுமான பகுதிகளில் இருந்த ஊர்
களுக்கும் யோசியா அதையேச் செய்தான்.
அந்த ஊர்களுக்கு அருகாமையிலிருந்த
பாழடைந்த பகுதிகளுக்கும் அவன் அதையே
செய்தான். [7]யோசியா பலிபீடங்களையும்
விக்கிரக தோப்புகளையும் அழித்தான்.
அவன் விக்கிரகங்களைத் தூளாக்குமாறு
உடைத்தான். இஸ்ரவேல் நாட்டில் பாகாலை
தொழுதுகொள்ள வைத்திருந்த அனைத்து
பலிபீடங்களையும் நொறுக்கினான். பிறகே
அவன் எருசலேமிற்குத் திரும்பினான்.
[8]யோசியா ஆட்சிப்பொறுப்பேற்ற 18வது
ஆண்டில், சாப்பான், மாசெயா மற்றும்
யோவா ஆகியோரைத் தனது தேவனாகிய
கர்த்தருடைய ஆலயத்தை மீண்டும் கட்டி
அமைக்க அனுப்பினான். சாப்பானின்
தந்தை பெயர் அத்சலியா. மாசெயா என்ப
வன் நகரத் தலைவன் ஆவான். யோவாவின்
தந்தை பெயர் யோவாகாஸ் ஆகும். நடக்கும்
நிகழ்ச்சிகளையெல்லாம்எழுதுபவன் யோவா
ஆவான். (அவன் பதிவுச் செய்பவன்).
எனவே யோசியா ஆலயம் பழுது
பார்க்கப்பட வேண்டும் என்று கட்டளை
யிட்டான். அதன் மூலம் யூதாவையும்
ஆலயத்தையும் சுத்தப்படுத்தலாம் என்று
நம்பினான். [9]அவர்கள் தலைமை ஆசாரிய
னான இல்க்கியாவிடம் வந்தனர். தேவனு
டைய ஆலயத்திற்காக ஜனங்கள் கொடுத்த
பணத்தை அவர்கள் இல்க்கியாவிடம்
கொடுத்தனர். வாயிற்காவலர்களான லேவி
யர்கள் இப்பணத்தை மனாசே, எப்பிராயீம்
மற்றும் வெளியேறிய இஸ்ரவேலர்
அனைவரிடமிருந்தும் வசூலித்திருந்தனர்.
அவர்கள் யூதா, பென்யமீன், மற்றும் எருச
லேமில் உள்ள அனைத்து ஜனங்களிடமிருந்
தும் பணத்தை வசூலித்திருந்தனர். [10]பிறகு
லேவியர்கள் கர்த்தருடைய ஆலயத்தில்
வேலையை மேற்பார்வை செய்பவர்களிடம்
பணத்தைக் கொடுத்தனர். மேற்பார்வையா

ளர்களோ அப்பணத்தைக் கர்த்தருடைய
ஆலயத்தில் வேலைச் செய்பவர்களுக்குக்
கொடுத்தனர். 11அவர்கள் அப்பணத்தை
மரத்தச்சர்களிடமும் கொத்தனார்களிடமும்
கொடுத்தனர். சதுரக் கற்களும் மரப்பலகை
களும் வாங்குவதற்காக அப்பணத்தை அவர்
களிடம் கொடுத்தனர். மீண்டும் கட்டிடங்
களைக் கட்டவும் உத்திரங்களை அமைக்க
வும் பயன்பட்டன. முற்காலத்தில் யூதாவின்
அரசர்கள் எவரும் ஆலயக் கட்டிடத்தைப்
பற்றி அக்கறை கொள்ளவில்லை. அக்கட்
டிடங்கள் பழையதாகி அழிந்துக்கொண்டி
ருந்தன. 12-13எல்லா ஆட்களும் உண்மையாக
உழைத்தார்கள். யாகாத்தும் ஒபதியாவும்
அவர்களின் மேற்பார்வையார்கள். இவர்கள்
லேவியர்கள். இவர் மெராரியின் சந்ததியி
னர். சகரியாவும் மெசுல்லாமும் மேற்பார்வை
யாளர்கள்தான். இவர்கள் கோகாத்தின்
சந்ததியினர். இசைக்கருவிகளை இயக்கு
வதில் திறமைபெற்ற லேவியர்கள் வேலைச்
செய்பவர்களை மேற்பார்வை பார்ப்பதும்
மற்ற வேலைகளைச் செய்வதுமாய் இருந்த
னர். சில லேவியர்கள் செயலாளர்களாகவும்
அதிகாரிகளாகவும் வாயிற்காவலர்களாகவும்
இருந்தனர்.

### சட்டப் புத்தகம் கண்டுபிடிக்கப்படுகிறது

14கர்த்தருடைய ஆலயத்தில் இருக்கிற
பணத்தை லேவியர்கள் வெளியே கொண்டு
வந்தனர். அதே நேரத்தில் இல்க்கியா எனும்
ஆசாரியன் கர்த்தருடைய சட்டப் புத்த
கத்தைக் கண்டு பிடித்தான். அது மோசே
யால் கொடுக்கப்பட்டிருந்தது. 15இல்க்கியா
காரியக்காரனான சாப்பானிடம், “சட்டப்
புத்தகத்தை கர்த்தருடைய ஆலயத்தில்*
கண்டு எடுத்திருக்கிறேன்” என்றான். இல்க்
கியா அந்தப் புத்தகத்தைச் சாப்பானிடம்
கொடுத்தான். 16சாப்பான் அந்தப் புத்தகத்தை
யோசியா அரசனிடம் எடுத்துவந்தான்.
அவன் அரசனிடம், “உங்கள் வேலைக்
காரர்கள் நீங்கள் சொன்னதுபோலவே
அனைத்தையும் செய்து கொண்டிருக்கிறார்
கள். 17அவர்கள் கர்த்தருடைய ஆலயத்தில்
இருந்த பணத்தை சேகரித்து, அதனை
மேற்பார்வையாளர்களுக்கும் வேலைக்காரர்
களுக்கும் கொடுக்கின்றனர்” என்றான்.
18மேலும் சாப்பான் அரசனிடம், “ஆசாரி
யனான இல்க்கியா ஒரு புத்தகத்தை
என்னிடம் கொடுத்திருக்கிறான்” என்றான்.
பிறகு சாப்பான் அந்தப் புத்தகத்தை வாசித்
துக் காட்டினான். அவன் வாசிக்கும்போது
அரசனுக்கு முன்பு இருந்தான். 19யோசியா
அரசன் சட்டத்தின் வார்த்தைகளைக் கேட்ட
போது அவன் தன் ஆடைகளைக் கிழித்துக்
கொண்டான். 20பிறகு அவன் இல்க்கி
யாவுக்கும், சாப்பானின் மகனான அகிக்கா
முக்கும், மீகாவின் மகனான அப்தோனுக்கும்,
சம்பிரதியாகிய சாப்பானுக்கும், ராஜாவின்
ஊழியக்காரனாகிய அசாயாவுக்கும் கட்ட
ளையிட்டான். 21அரசன், “செல்லுங்கள்
எனக்காக கர்த்தரிடம் கேளுங்கள். இஸ்ர
வேலிலும் யூதாவிலும் மிச்சமுள்ள ஜனங்
களுக்காகக் கேளுங்கள். கண்டுபிடிக்கப்
பட்ட புத்தகத்தில் உள்ள சொற்களைப்பற்றி
கேளுங்கள். நமது முற்பிதாக்கள் அவரது
வார்த்தைகளுக்கு அடிபணியவில்லை என்ப
தால் கர்த்தர் நம் மீது கோபமாக இருக்கிறார்.
இந்தப் புத்தகம் செய்ய சொன்னவற்றை
யெல்லாம் அவர்கள் செய்யவில்லை!” என்
றான்.
22இல்க்கியாவும் அரசனின் வேலைக்காரர்
களும் உல்தாள் எனும் தீர்க்கதரிசி பெண்ணி
டம் சென்றனர். உல்தாள் சல்லூமின்
மனைவி. சல்லூம் திக்வாதின் மகன்.
திக்வாத் அஸ்ராவின் மகன். அஸ்ரா அரச
னின் ஆடைகளுக்குப் பொறுப்பாளன்.
உல்தாள் எருசலேமின் புதிய பகுதியில்
வாழ்ந்துவருகிறாள். இல்க்கியாவும் அரச
னின் வேலைக்காரர்களும் அவளிடம் நடந்
ததை எல்லாம் சொன்னார்கள். 23உல்தாள்
அவர்களிடம், “இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் கூறுவது இதுதான்: “அரசனான
யோசியாவிடம் கூறுங்கள். 24கர்த்தர்
சொல்வதாவது: ‘நான் இந்த இடத்திற்கும்
இங்குவாழும் ஜனங்களுக0கும் தொந்தரவு
களைத் தருவேன். யூதா அரசனின்
முன்னிலையில் வாசிக்கப்பட்ட புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ள எல்லா கொடூரமான
வற்றையும் கொண்டுவருவேன். 25ஜனங்கள்
என்னைவிட்டு விலகி அந்நிய தெய்வங்
களுக்கு நறுமணப் பொருட்களை எரிக்க
போய்விட்ட காரணத்தால் நான் இவற்றைச்
செய்வேன். தம்முடைய தீயச்செயல்களால்
அவர்கள் எனக்கு மிகுதியான கோபத்தை
மூட்டிவிட்டார்கள். எனவே நான் இந்த
இடத்தில் எனது கோபத்தைக் கொட்டுவேன்.
நெருப்பைப் போன்று கோபம் அவியாது.’
26“ஆனால் யூதாவின் அரசனான யோசி
யாவிடம் கூறு. அவன் உங்களைக்
கர்த்தரைக் கேட்குமாறு அனுப்பியிருக்
கிறான். சற்று நேரத்திற்கு முன்னர் நீ
கேட்டவற்றைப்பற்றி இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தர் கூறுவது இதுதான்.
27‘யோசியா நீ மனம் இளகி பணிந்து
கொண்டாய், உனது ஆடைகளைக் கிழித்துக்
கொண்டாய், எனக்கு முன்பு நீ அழுதாய்.
இவ்வாறு உன் மனம் இளகியதால் 28உன்
முற்பிதாக்களுடன் இருப்பதற்கு நான்
உன்னை அழைத்துச்செல்வேன். நீ உனது
கல்லறைக்கு சமாதானத்தோடு போவாய்.
அதனால் நான் இந்த இடத்துக்கும் இங்குள்ள
ஜனங்களுக்கும் கொடுக்கப்போகும் பயங்கர
மான துன்பங்களை நீ காணமாட்டாய்’”

---

**கர்த்தருடைய ஆலயத்தில்** இது எருசலேமிலுள்ள ஆலயத்திற்கான இன்னொரு பெயர்.

என்றார். இல்க்கியாவும் அரசனின் வேலைக்
காரர்களும் இந்தச் செய்தியை யோசியா
அரசனிடம் கொண்டுவந்தனர்.
29 பிறகு யோசியா யூதா மற்றும்
எருசலேமில் உள்ள மூப்பர்களை அழைத்து
அவர்களைச் சந்தித்தான். 30 அரசன் கர்த்த
ருடைய ஆலயத்திற்குள் சென்றான். யூதாவி
லுள்ள ஜனங்களும் எருசலேமில் உள்ள
ஜனங்களும், ஆசாரியர்களும், லேவியர்களும்,
முக்கியமானவர்களும் முக்கியமற்றவர்களும்
அரசனோடு சென்றனர். உடன்படிக்கைப்
புத்தகத்தில் உள்ள அனைத்தையும் அரசன்
அவர்களுக்கு வாசித்துக் காட்டினான்.
அப்புத்தகம் கர்த்தருடைய ஆலயத்தில்
கண்டெடுத்த புத்தகம் ஆகும். 31 பிறகு அரசன்
தனது இடத்தில் எழுந்து நின்றான். பிறகு
அவன் கர்த்தரோடு ஒரு உடன்படிக்கைச்
செய்தான். கர்த்தரைப் பின்பற்றுவதாகவும்
அவரது கட்டளைகளுக்கும் சட்டங்களுக்கும்
அடிபணிவதாகவும் சொன்னான். முழு
இருதயத்தோடும் ஆத்துமாவோடும் அவன்
கீழ்ப்படிவதற்கு ஒப்புக்கொண்டான். உடன்
படிக்கைப் புத்தகத்தில் எழுதப்பட்ட அனைத்
துக்கும் அடிபணிவதாக ஒப்புக்கொண்டான்.
32 பிறகு யோசியா எருசலேம் மற்றும்
பென்யமீன் நாட்டிலுள்ள அனைத்து ஜனங்க
ளையும் உடன்படிக்கையை ஒப்புக்கொள்கிற
வகையில் வாக்குறுதி தரச்செய்தான். தமது
முற்பிதாக்கள் கீழ்ப்படிந்த தேவனுடைய
உடன்படிக்கையை எருசலேம் ஜனங்களும்
கீழ்ப்படிந்தார்கள். 33 இஸ்ரவேல் ஜனங்கள்
பல்வேறு நாடுகளிலிருந்து விக்கிரகங்களைக்
கொண்டுவந்து வைத்திருந்தனர். ஆனால்
யோசியா அந்த கொடூரமான விக்கிரகங்
களை எல்லாம் அழித்து விட்டான். அரசன்
இஸ்ரவேல் ஜனங்கள் அனைவரையும்
தேவனாகிய கர்த்தருக்குச் சேவைசெய்யு
மாறுச் செய்தான். யோசியா உயிரோடு
இருந்தவரை ஜனங்கள் தமது முற்பிதாக்க
ளின் தேவனாகிய கர்த்தருக்குச் சேவை
செய்தனர்.

### யோசியா பஸ்காவைக் கொண்டாடுகிறான்

35 எருசலேமில் கர்த்தருக்கு யோசியா
அரசன் பஸ்காவைக் கொண்டாடி
னான். பஸ்கா ஆட்டுக்குட்டி முதல் மாதத்தில்
14வது நாளன்று கொல்லப்பட்டது.
2 யோசியா ஆசாரியர்களை அவர்தம் கடமை
களைச் செய்யத் தேர்ந்தெடுத்தான். அவன்
ஆசாரியர்கள் கர்த்தருடைய ஆலயத்தில்
சேவைசெய்யும்போது உற்சாகப்படுத்தி
னான். 3 யோசியா லேவியர்களோடு பேசி
னார். அந்த லேவியர்கள் இஸ்ரவேலர்களுக்
குக் கற்பிக்கிறவர்கள், கர்த்தருக்குச் செய்யும்
சேவைகளால் பரிசுத்தமானவர்களாக ஆக்கப்
பட்டவர்கள். அவன் அவர்களிடம், "சாலொ
மோன் கட்டிய ஆலயத்தில் பரிசுத்தப்
பெட்டியை வையுங்கள். சாலொமோன் தாவீ
தின் மகன். தாவீது இஸ்ரவேலின் அரசனாக
இருந்தான். மீண்டும் நீங்கள் பரிசுத்தப்
பெட்டியை உங்கள் தோளில் சுமந்து இடம்
விட்டு இடம் அலையாதீர்கள். இப்போது
உங்கள் தேவனாகிய கர்த்தருக்குச் சேவை
செய்யுங்கள். தேவனுடைய ஜனங்களான
இஸ்ரவேலர்களுக்குச் சேவைசெய்யுங்கள்.
4 ஆலயத்தில் உங்கள் கோத்திரத்தின் சார்
பாகச் சேவைசெய்ய தயாராகுங்கள். தாவீது
அரசனும் சாலொமோன் அரசனும் உங்க
ளுக்கு ஒதுக்கிய வேலைகளைச் செய்யுங்கள்.
5 லேவியர் குழுவுடன் பரிசுத்தமான இடத்தில்
நில்லுங்கள். நீங்கள் இதனை வெவ்வேறு
கோத்திரங்களினால் செய்யுங்கள். இது
அவர்களுக்கு உதவியாக இருக்கும். 6 பஸ்கா
ஆட்டுக்குட்டியைக் கொல்லுங்கள். கர்த்த
ருக்கு முன்பு பரிசுத்தமாக இருங்கள். இஸ்ர
வேல் ஜனங்களாகிய உங்கள் சகோதரர்
களுக்கு ஆட்டுக்குட்டிகளைத் தயார்
செய்யுங்கள். கர்த்தர் நமக்கு கட்டளை
யிட்டவற்றை எல்லாம் செய்யுங்கள். கர்த்தர்
நமக்கு மோசே மூலம் பல கட்டளைகளை
கொடுத்திருக்கிறார்" என்றான்.
7 யோசியா 30,000 செம்மறியாடுகளையும்
ஆட்டுக்கடாக்களையும் இஸ்ரவேல் ஜனங்
களுக்கு பஸ்காவில் பலியாகக் கொல்வ
தற்குக் கொடுத்தான். அவன் ஜனங்களுக்கு
3,000 கால்நடைகளையும் கொடுத்தான். இந்த
விலங்குகள் அனைத்தும் யோசியா அரச
னின் சொந்த விலங்குகள். 8 யோசியாவின்
அதிகாரிகளும் இலவசமாக ஆடுகளையும்
பொருட்களையும் ஜனங்களுக்கும் ஆசாரியர்
களுக்கும் லேவியர்களுக்கும் பஸ்கா காணிக்
கைக்காக கொடுத்தனர். தலைமை
ஆசாரியனான இல்க்கியா, சகரியா மற்றும்
யெசியேல் ஆகியோர் ஆலயத்தின் பொறுப்
பான அதிகாரிகள். அவர்கள் ஆசாரியர்
களுக்கு 2,600 ஆட்டுக்குட்டிகளையும், 300
காளைகளையும் பஸ்கா பலியாகக் கொடுத்
தார்கள். 9 மேலும், தனது சகோதர்களான
செமாயா மற்றும் நத்தானியேல் ஆகியவர்
களுடனும் அசாபியா, ஏயேல் மற்
றும் நத்தானியேல் ஆகியவர்களுடனும்
இணைந்து கொனானியா, 500 செம்மறி
ஆடுகளையும், காளைகளையும் பஸ்கா
பலியாக லேவியர்களுக்குக் கொடுத்தான்.
அவர்கள் லேவியர்களின் தலைவர்கள்.
10 பஸ்கா சேவைத் தொடங்குவதற்கு
அனைத்தும் தயாராக இருந்தபொழுது ஆசா
ரியர்களும் லேவியர்களும் அவர்களின்
இடத்திற்குச் சென்றனர். இதுவே அரசனின்
கட்டளையாகும். 11 பஸ்கா ஆடுகள் கொல்லப்
பட்டன. பிறகு லேவியர்கள் தோலை
உரித்தனர். இரத்தத்தை ஆசாரியர்களிடம்
கொடுத்தனர். ஆசாரியர்கள் இரத்தத்தைப்
பலிபீடத்தின்மேல் தெளித்தனர். 12 பிறகு
அவர்கள் தகன பலிகளுக்காக வெவ்வேறு
கோத்திரங்களுக்கு மிருகங்களைக் கொடுத்த

னர். மோசேயின் சட்டம் தகனபலிகள்
எவ்வாறு அளிக்கப்படவேண்டும் என்று
போதித்ததோ அவ்வாறே இது செய்யப்
பட்டது. 13லேவியர்கள் தங்களுக்குக்
கட்டளையிட்டபடியே பஸ்கா பலிகளை தீயில்
வறுத்தார்கள். அவர்கள் பரிசுத்தமான
பலிகளைப் பானைகளிலும் கொப்பரைகளி
லும் சட்டிகளிலும் சமைத்தனர். உடனடி
யாக அவர்கள் அவற்றை ஜனங்களுக்குக்
கொடுத்தனர். 14இவை முடிந்தப்பிறகு,
லேவியர்கள் தங்களுக்கென்று இறைச்சியைப்
பெற்றுக்கொண்டனர். ஆரோனின் சந்ததி
களான ஆசாரியர்களும் பெற்றுக்கொண்ட
னர். ஆசாரியர்கள் இருட்டுகிறவரை கடின
மான வேலையை செய்தார்கள். அவர்கள்
தகனபலிகளை எரிப்பதும் கொழுப்பை
எரிப்பதுமாக இருந்தார்கள். 15ஆசாப்
குடும்பத்தைச் சேர்ந்த லேவியப் பாடகர்கள்
அரசன் தாவீது தங்களுக்கு ஒதுக்கிய
இடத்தை அடைந்தார்கள். அவர்கள் ஆசாப்,
ஏமான், அரசனின் தீர்க்கதரிசியான எதுத்தா
னும் சொன்னபடியே தங்கள் இடங்களில்
நின்றுக்கொண்டிருந்தார்கள். வாசல் காவலர்
கள் ஒவ்வொரு வாசலிலும் நின்றார்கள்.
அவர்கள் தங்கள் வேலையைவிட்டு விலகா
மல் இருந்தார்கள். ஏனென்றால் அவர்
களுக்காக அவர்களின் சகோதரரான லேவி
யர்கள் பஸ்காவில் அனைத்தையும் தயார்
செய்துவிட்டனர்.

16எனவே, யோசியா அரசனின் கட்ட
ளைப்படி அன்று நடைபெற வேண்டிய
வேலைகள் அனைத்தும் நடந்தேறின. கர்த்த
ருடைய பலிபீடத்தில் தகனபலிகள்
கொடுக்கப்பட்டு பஸ்கா பண்டிகை கொண்
டாடப்பட்டது. 17அங்கிருந்த இஸ்ரவேல்
ஜனங்கள் பஸ்காவையும் புளிப்பில்லா
அப்பப் பண்டிகையையும் ஏழு நாட்களாகக்
கொண்டாடினார்கள். 18தீர்க்கதரிசி சாமுவேல்
காலத்திலிருந்து இன்றுவரை பஸ்கா
பண்டிகை இதுபோல் எப்போதும் கொண்
டாடப்படவில்லை. எந்தவொரு அரசனும்
இஸ்ரவேலில் இதுபோல் பஸ்காவைக்
கொண்டாடவில்லை. யோசியா அரசன்,
ஆசாரியர்கள், லேவியர்கள், யூதா ஜனங்கள்,
எருசலேமில் இருந்த இஸ்ரவேல் ஜனங்கள்
அனைவரும் பஸ்காவைச் சிறப்பான
முறையில் கொண்டாடினார்கள். 19அவர்கள்
யோசியா ஆட்சிப்பொறுப்பேற்ற 18வது
ஆண்டில் இந்தப் பஸ்காவைக் கொண்டாடி
னார்கள்.

### யோசியாவின் மரணம்

20யோசியா ஆலயத்திற்கு அனைத்து நல்ல
செயல்களையும் செய்து முடித்தான். பிறகு
எகிப்து அரசனான நேகோ தன் படை
களோடு ஐபிராத்து ஆற்றின் கரையிலுள்ள
கர்கேமிஸ் நகரத்தின் மீது போர்செய்ய
சென்றான். உடனே யோசியா அரசனும்
அவனோடு போரிடச் சென்றான். 21ஆனால்
நேகோ யோசியாவுக்குத் தூதுவர்களை
அனுப்பினான். அவர்கள், “யோசியா அர
சனே! இந்தப் போர் உங்களுக்கு எதிரானது
அல்ல. நான் உனக்கு எதிராகச் சண்டை
செய்ய வரவில்லை. நான் என் பகைவர்
களுக்கு எதிராகச் சண்டை செய்ய வந்திருக்
கிறேன். தேவன் என்னை விரைவாகச்
செல்லுமாறு சொன்னார். தேவன் என்
பக்கத்தில் உள்ளார். எனவே எனக்கு
எதிராகப் போரிட வேண்டாம். நீ எனக்கு
எதிராகப் போரிட்டால் தேவன் உன்னை
அழிப்பார்!” என்றனர். 22ஆனால் யோசியா
அங்கிருந்து விலகவில்லை. அவன் நேகோ
வோடு போரிட முடிவுசெய்தான். எனவே
அவன் உருவத்தை மாற்றிக்கொண்டு
போரிட களத்துக்குச் சென்றான். தேவ
னுடைய கட்டளையைப்பற்றி நேகோ
சொன்னதை யோசியா ஏற்றுக்கொள்ள
மறுத்து விட்டான். யோசியா போரிட
மெகிதோ பள்ளத்தாக்குக்குச் சென்றான்.
23போர்க்களத்தில் அரசன் யோசி
யாவின்மேல் அம்புகள் பாய்ந்தன,
அவன் தன் வேலைகாரர்களிடம், “நான்
பலமாகக் காயப்பட்டிருக்கிறேன். நீங்கள்
என்னைத் தூக்கிச் செல்லுங்கள்!” என்றான்.
24எனவே, வேலைக்காரர்கள் யோசி
யாவை அவனது இரதத்திலிருந்து இறக்கி,
வேறோரு இரதத்தில் ஏற்றினார்கள். இரண்
டாவது இரதமும் அவனால் போர்க்களத்துக்
குக் கொண்டுவரப்பட்டதுதான். பின்
யோசியாவை எருசலேமிற்கு அழைத்துச்
சென்றனர். அங்கே அவன் மரித்தான்.
அவன் முற்பிதாக்களின் கல்லறைகளுக்கு
அருகில் அடக்கம் செய்யப்பட்டான். யூதா
மற்றும் எருசலேமில் உள்ள ஜனங்கள்
அனைவரும் யோசியாவின் மரணத்திற்காகப்
பெரிதும் துக்கப்பட்டார்கள். 25யோசியா
விற்காக எரேமியா புலம்பல் பாடல்களை
எழுதிப்பாடினான். இன்றும் ஆண் பெண்
பாடகர்கள் அப்பாடல்களைப் பாடிவரு
கிறார்கள். அவை இன்றுவரை இஸ்ரவேலில்
வழங்கிவருகிறது. புலம்பல் பாடல்கள் என்ற
புத்தகத்தில் அவை எழுதப்பட்டுள்ளன.

26-27யோசியாவின் தொடக்க காலமுதல்
முடிவுவரை அவன் செய்த அனைத்து
செயல்களும் ‘யூதா மற்றும் இஸ்ரவேல்
அரசர்களின் வரலாறு’ என்ற புத்தகத்தில்
எழுதப்பட்டுள்ளது. கர்த்தரிடம் அவன்
எவ்வளவு உண்மையானவனாக இருந்தான்
என்பதையும் கர்த்தருடைய சட்டங்களுக்கு
எவ்வாறு அடிபணிந்தான் என்பதையும்
அப்புத்தகம் விளக்குகிறது.

### யூதாவின் அரசனான யோவாகாஸ்

36 எருசலேமில் யூதாவின் புதிய
அரசனாக யோவாகாசை ஜனங்கள்
தேர்ந்தெடுத்தனர். யோவாகாஸ் யோசியா

வின் மகன். 2யோவாகாஸ் தனது 23வது
வயதில் யூதாவின் அரசன் ஆனான். அவன்
எருசலேமில் மூன்று மாதங்களே அரசனாக
இருந்தான். 3பிறகு எகிப்து அரசனான
நேகோ யோவாகாஸைக் கைதியாக்கினான்.
3 1/4 டன் எடையுள்ள வெள்ளியும் 75
பவுண்டு எடையுள்ள தங்கமும் அபராத
மாகச் செலுத்த வேண்டுமென யூதா
ஜனங்களிடம் எகிப்து அரசனான நேகோ
சொன்னான். 4யோவாகாசின் சகோதரனை
யூதா மற்றும் எருசலேமின் புதிய அரசனாக
நேகோ தேர்ந்தெடுத்தான். யோவாகாசின்
சகோதரனின் பெயர் எலியாக்கீம் ஆகும்.
அவனது பெயரை யோயாக்கீம் என்று
நேகோ மாற்றினான். ஆனால் நேகோ
யோவாகாசை எகிப்திற்கு அழைத்துச் சென்
றான்.

### யூதாவின் அரசனான யோயாக்கீம்

5யோயாக்கீம் யூதாவின் புதிய அரசனான
போது அவனது வயது 25. அவன்
எருசலேமில் 11 ஆண்டுகள் ஆண்டான்.
கர்த்தர் செய்யவேண்டும் என்று விரும்பிய
வற்றை யோயாக்கீம் செய்யவில்லை. அவன்
தேவனாகிய கர்த்தருக்கு எதிராக பாவம்
செய்தான்.
6யூதாவைப் பாபிலோனில் இருந்து நேபு
காத்நேச்சார் தாக்கினான். அவன் யோயாக்
கீமை கைதுசெய்து வெண்கலச் சங்கிலியால்
கட்டினான். பிறகு அவனைப்
பாபிலோனுக்கு இழுத்துச்சென்றான்.
7நேபுகாத்நேச்சார் கர்த்தருடைய ஆலயத்தில்
இருந்து பொருட்களை எடுத்துச்சென்றான்.
அவற்றைப் பாபிலோனுக்கு எடுத்துச்
சென்று தனது அரண்மனையில் வைத்துக்
கொண்டான். 8யோயாக்கீம் செய்த மற்ற
செயல்களும் பாவங்களும் அவனது பயங்
கரமான தவறுகளும், இஸ்ரவேல் மற்றும்
யூதா அரசர்களின் வரலாறு என்ற புத்த
கத்தில் எழுதப்பட்டுள்ளன. யோயாக்கீன்
புதிய அரசனாக யோயாக்கீம் இடத்தில்
ஆனான். இவன் யோயாக்கீமின் மகன்.

### யூதாவின் மன்னனான யோயாக்கீன்

9யோயாக்கீன் யூதாவின் அரசனாக ஆன
போது அவனது வயது 18 ஆகும். அவன்
எருசலேமின் அரசனாக 3 மாதங்களும் 10
நாட்களும் இருந்தான். கர்த்தர் செய்ய
விரும்பியதை அவன் செய்யவில்லை.
அவன் கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்
தான். 10வசந்தகாலத்தில் தொடக்கத்தில்
நேபுகாத்நேச்சார் வேலைக்காரர்களை
அனுப்பி யோயாக்கீனை வரவழைத்தான்.
அவர்கள் அவனோடு கர்த்தருடைய ஆல
யத்தில் உள்ள விலைமதிப்பற்ற பொருட்க
ளையும் பாபிலோனுக்கு எடுத்துச்சென்றனர்.
நேபுகாத்நேச்சார் சிதேக்கியாவைத் தேர்ந்
தெடுத்து யூதா மற்றும் எருசலேமின் அரச
னாக்கினான். சிதேக்கியா யோயாக்கீனின்
உறவினன் ஆவான்.

### சிதேக்கியா யூதாவின் அரசன்

11சிதேக்கியா யூதாவின் அரசனானபோது
அவனது வயது 21 ஆகும். அவன் எருச
லேமில் 11 ஆண்டுகள் அரசனாக இருந்தான்.
12சிதேக்கியா கர்த்தருடைய விருப்பப்படி
செயல்களைச் செய்யவில்லை. சிதேக்கியா
கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்தான்.
எரேமியா என்ற தீர்க்கதரிசி கர்த்தரிட
மிருந்து செய்தியைச் சொன்னான். ஆனால்
சிதேக்கியா பணிவடையாமல் எரேமியா
வின் பேச்சைக் கேட்கவில்லை.

### எருசலேம் அழிக்கப்பட்டது

13சிதேக்கியா நேபுகாத்நேச்சார் அரசனுக்கு
எதிராக ஆனான். முன்பு நேபுகாத்நேச்சார்
சிதேக்கியாவிடம் தனக்கு உண்மையாக
நடந்துகொள்ள வேண்டும் என்று வாக்கு
றுதி வாங்கியிருந்தான். சிதேக்கியா தேவன்
மேல் ஆணைச் செய்திருந்தான். ஆனால்
அவன் கடின மனதுள்ளவனாக இஸ்ர
வேலின் தேவனாகிய கர்த்தருடைய பக்கம்
திரும்பாமல் இருந்தான். 14ஆசாரியர்களின்
தலைவர்களும் யூதா ஜனங்களின் தலை
வர்களும் கொடிய பாவங்களைச் செய்து
கர்த்தருக்கு எதிராகிப்போனார்கள். அவர்கள்
பிற நாடுகளின் தீயச்செயல்களைப் பின்
பற்றினார்கள். அவர்கள் கர்த்தருடைய
ஆலயத்தை அழித்தார்கள். கர்த்தர் எரு
சலேமில் தன் ஆலயத்தைப் பரிசுத்தமாக
வைத்திருந்தார். 15அவர்களது முற்பிதாக்க
ளின் தேவனாகிய கர்த்தர் அவர்களை
எச்சரிக்கப் பல்வேறு தீர்க்கதரிசிகளை
மீண்டும் மீண்டும் அனுப்பினார். கர்த்தர்
அவர்களுக்காகவும்தமது ஆலயத்துக்காகவும்
வருத்தப்பட்டார். அதனால் அவர் இவ்
வாறுச் செய்தார். கர்த்தர் அவர்களையும்
ஆலயத்தையும் அழித்துவிட விரும்ப
வில்லை. 16ஆனால் தேவனுடைய ஜனங்கள்
தேவனுடைய தீர்க்கதரிசிகளைக் கேலிச்
செய்தனர். தேவனுடைய தீர்க்கதரிசனங்
களைக் கேட்க அவர்கள் மறுத்தனர்.
அவர்கள் தேவனுடைய செய்திகளை
வெறுத்தார்கள். இறுதியில் தேவனால்
அவரது கோபத்தை அதற்கு மேல் அடக்க
முடியவில்லை. 17எனவே தேவன் பாபி
லோனின் அரசனை யூதா மற்றும் எருசலேம்
ஜனங்களைத் தாக்கிட அழைத்து வந்தார்.
பாபிலோன் அரசன் இளைஞர்களை அவர்
கள் ஆலயத்தில் இருந்தபோதுங்கூட கொன்
றான். அவன் யூதா மற்றும் எருசலேம்
ஜனங்களிடம் இரக்கம் காட்டவில்லை. பாபி
லோனிய அரசன் இளைஞர்கள், முதிய
வர்கள், ஆண்கள், பெண்கள், நோயாளிகள்,
ஆரோக்கியமுடையவர்கள் என அனை

வரையும் கொன்றான். யூதா மற்றும்
எருசலேம் ஜனங்களைத் தண்டிக்கும்படி
தேவன் நேபுகாத்நேச்சரை விட்டுவிட்டார்.
18நேபுகாத்நேச்சார் தேவனுடைய ஆலயத்தில்
உள்ள அனைத்து பொருட்களையும் பாபி
லோனுக்கு எடுத்துச்சென்றான். ஆலயம்,
அரசனது அரண்மனை, அதிகாரிகளின் வீடு
என எல்லா இடங்களிலும் இருந்த விலை
மதிப்பற்ற பொருள்களையும் அவன்
எடுத்துச் சென்றான். 19நேபுகாத்நேச்சாரும்
அவனது படையும் ஆலயத்தை எரித்தனர்.
எருசலேம் சுவர்களை இடித்தனர். அரசன்
மற்றும் அதிகாரிகளின் வீடுகளை இடித்துச்
சிதைத்து எரித்தனர். அவர்கள் விலை
யுயர்ந்த பொருட்களை அழிப்பதும் எடுத்து
செல்வதுமாய் இருந்தனர். 20நேபுகாத்நேச்சார்
உயிரோடு மிதியாக உள்ள ஜனங்களைப்
பாபிலோனுக்குக் கொண்டுபோய் அவர்
களைக் கட்டாயப்படுத்தி அடிமையாக்கி
னான். பெர்சிய அரசு பாபிலோனிய அரசை
அழிக்கும்வரை அவர்கள் அங்கு அடிமை
களாகவே இருந்தனர். 21எரேமியா தீர்க்கதரிசி
மூலம் இஸ்ரவேல் ஜனங்களுக்குக் கர்த்தர்
சொன்னது யாவும் நடந்தது. கர்த்தர்
எரேமியா மூலம் சொன்னது: "இந்த இடம்
இன்னும் 70 ஆண்டுகளுக்கு பாழாய்க்கிடக்
கும். நிலங்களுக்கு ஜனங்களால் வழங்கப்
படாமல்போன ஓய்வு ஆண்டுகளுக்காக
சரிசெய்வதுபோல் இது இருக்கும்."
22பெர்சியா அரசனான கோரேசின் முத
லாம் ஆண்டில் கர்த்தர் கோரேசின் மூலமாக
ஒரு அறிக்கையை வெளியிட்டார். அவன்
இதனைச் செய்ததால் கர்த்தர் எரேமியா
தீர்க்கதரிசியின் மூலம் வாக்களித்ததும் நிறை
வேறும். கோரேசு தன் அரசின் அனைத்து
பகுதிகளுக்கும் தூதுவர்களை அனுப்பினான்.
அவர்கள் இந்தச் செய்தி எடுத்துச்சென்றனர்.

23பெர்சியா அரசனாகிய கோரேசு
கூறுவது: பரலோகத்தின் தேவனாகிய
கர்த்தர் என்னைப் பூமி முழுவதற்கும்
அரசன் ஆக்கினார். எருசலேமில் அவர்
தனக்கொரு ஆலயத்தைக் கட்டும்படி
பொறுப்பளித்துள்ளார். இப்பொழுது
தேவனுடைய பிள்ளைகளாகிய நீங்கள்
எருசலேமிற்குப் போகும்படி விடுவிக்கி
றேன். உங்கள் தேவனாகிய கர்த்தர்
உங்களோடு இருப்பாராக.

# எஸ்றாவின் புத்தகம்

### சிறைக்கைதிகள் திரும்பிச்செல்ல கோரேசு உதவுகிறான்

1 பெர்சியாவின் அரசனாக கோரேசு வீற்றி
ருந்த முதல் ஆண்டில்,* கர்த்தர் அவனை
உற்சாகப்படுத்தி ஓர் அறிவிப்பு கொடுக்கச்
சொன்னார். அவன் அந்த அறிவிப்பை
எழுத்து மூலமாகவே எழுதி, அரசாங்கத்
திலே உள்ள எல்லா இடங்களிலும்
வாசிக்கும்படி செய்தான். எரேமியாவின்
மூலமாகக் கர்த்தர் சொன்னது உண்மையா
கும்படி இவ்வாறு நிகழ்ந்தது. இதுதான் அந்த
அறிவிப்பு:

2 “பெர்சியாவின் அரசனான கோரேசிட
மிருந்து:

பரலோகத்தின் தேவனாகிய கர்த்தர்,
எனக்கு பூமியிலுள்ள அரசுகளை
யெல்லாம் கொடுத்தார். யூதா நாட்டி
லுள்ள எருசலேமில், அவருக்கு ஒரு
ஆலயத்தைக் கட்டும்படி கர்த்தர்
என்னைத் தேர்ந்தெடுத்துள்ளார். 3 இஸ்ர
வேலின் தேவனாகிய கர்த்தர், அவர்
எருசலேமில் இருக்கிற தேவன். உங்க
ளோடு தேவனுடைய மனிதர்கள் யாரா
வது இருப்பின், தேவன் அவர்களை
ஆசீர்வதிக்கும் பொருட்டு நான்
ஜெபிக்கிறேன். அவர்களை நீங்கள்
யூதா நாட்டிலுள்ள எருசலேமிற்கு
அனுப்பவேண்டும். அவர்கள் சென்று
கர்த்தருடைய ஆலயத்தைக் கட்டவும்
நீங்கள் அனுப்பவேண்டும். 4 பிழைத்
திருக்கிற இஸ்ரவேலர்கள் எங்கெங்கு
இருக்கிறார்களோ, அங்குள்ளவர்கள்
அவர்களுக்கு ஆதரவு தரவேண்டும்.
அந்த ஜனங்களுக்கு வெள்ளி, பொன்,
பசுக்கள் மற்றும் மற்ற பொருட்களைக்
கொடுக்க வேண்டும். எருசலேமில்
உள்ள தேவனுடைய ஆலயத்திற்காக
அன்பளிப்புகளை அவர்களுக்குக்
கொடுங்கள்” என்பதாகும்.

5 எனவே, யூதா மற்றும் பென்யமீனின்
கோத்திரங்களின் தலைவர்களும் ஆசாரியர்
களும், லேவியர்களும் எருசலேமிற்குச்
செல்லத் தயாரானார்கள். எருசலேமில்
கர்த்தருடைய ஆலயத்தைக் கட்டுவதற்காக
அவர்கள் போனார்கள். தேவன் உற்சாக
மூட்டின ஒவ்வொருவரும் எருசலேமிற்குப்
போகத் தயாரானார்கள். 6 அவர்களின்
அண்டை வீட்டுக்காரர்கள் ஏராளமான பரிசு
களைக் கொடுத்தனர். அவர்கள் வெள்ளி,
பொன், பசுக்கள் மற்றும் விலையுயர்ந்த
பொருட்களைக் கொடுத்தார்கள். இவற்றை
யெல்லாம் அவர்கள் இலவசமாகக் கொடுத்
தார்கள். 7 கோரேசு அரசன் கர்த்தருடைய
ஆலயத்தில் உள்ள பொருட்களையெல்லாம்
வெளியே கொண்டுவந்தான். நேபுகாத்
நேச்சார் அப்பொருட்களை எருசலேமிலி
ருந்து வெளியே எடுத்திருந்தான். அவன்
அவற்றை அவனது பொய்த் தெய்வங்கள்
இருக்கும் ஆலயத்தில் வைத்திருந்தான்.
8 பெர்சியாவின் அரசனான கோரேசு
அப்பொருட்களை வெளியே கொண்டு
வரும்படி கருவூலக்காரனிடம் சொன்னான்.
அவனது பெயர் மித்திரேதாத். அவன்
அதனை எடுத்துவந்து யூதாவின் தலைவ
னான சேஸ்பாத்சாரிடத்தில் கொடுத்தான்.
9 கர்த்தருடைய ஆலயத்தில் இருந்து
மித்திரேதாத் எடுத்து வந்த பொருட்களின்
விபரம்:

| | | |
|---|---|---|
| | தங்கத் தட்டுக்கள் | 30 |
| | வெள்ளித் தட்டுக்கள் | 1,000 |
| | கத்திகளும், சட்டிகளும் | 29 |
| 10 | பொற்கிண்ணங்கள் | 30 |
| | தங்கக் கிண்ணங்களைப் போன்ற வெள்ளிக்கிண்ணங்கள் | 410 |
| | மற்ற தட்டுக்கள் | 1,000 |

11 ஆக மொத்தம், பொன்னாலும் வெள்ளி
யாலும் செய்யப்பட்டப் பொருட்கள் 5,400.
கைதிகள் பாபிலோனில் இருந்து எருச
லேமிற்குத் திரும்பிப் போனபோது சேஸ்ப
ாத்சார்* இப்பொருட்களைக் கொண்டு
வந்தான்.

---

**முதல் ஆண்டு** அதாவது கி.மு 538ல்.

**சேஸ்பாத்சார்** இது உண்மையில் செருபாபேலின் பெயராகும். இதன் அர்த்தம், “பாபிலோனுக்கு அந்நியமானவன்.” அல்லது “அவன் பாபிலோனை விட்டு விலகினான். “சேஸ்பாத்சார் என்பது உண்மையின் அவனது ஆராமியப் பெயராகும்.”

### திரும்பிச்சென்ற கைதிகளின் பட்டியல்

2 அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்த
அப்பகுதி ஜனங்கள் இவர்கள். முன்பு,
பாபிலோனின் அரசனான நேபுகாத்நேச்சார்
இவர்களைப் பாபிலோனுக்குக் கைதிகளாகக்
கொண்டுபோயிருந்தான். இவர்கள் இப்போது
எருசலேம் மற்றும் யூதாவிற்குத் திரும்பி
வந்தார்கள். ஒவ்வொருவரும் தமது சொந்த
ஊருக்குத் திரும்பிச் சென்றார்கள். 2செரு
பாபேலோடு* திரும்பிய ஜனங்களின்
விபரம்: யெசுவா, நெகேமியா, செராயா,
ரெலாயா, மொர்தெகாய், பில்சான், மிஸ்பார்,
பிக்வாய், ரேகூம், பானா. இஸ்ரவேலில்
இருந்து திரும்பிய ஜனங்களின் பெயர்களும்
எண்ணிக்கையும் கீழ்வருமாறு:

3 பாரோஷின் சந்ததியினர் 2,172
4 செபத்தியாவின் சந்ததியினர் 372
5 ஆராகின் சந்ததியினர் 775
6 யெசுவா மற்றும் யோவாபின்
குடும்பத்திலிருந்து பாகாத்
மோவாபின் சந்ததியினர் 2,812
7 ஏலாமின் சந்ததியினர் 1,254
8 சத்தூவின் சந்ததியினர் 945
9 சக்காயின் சந்ததியினர் 760
10 பானியின் சந்ததியினர் 642
11 பெபாயின் சந்ததியினர் 623
12 அஸ்காதின் சந்ததியினர் 1,222
13 அதொனிகாமின் சந்ததியினர் 666
14 பிக்வாயின் சந்ததியினர் 2,056
15 ஆதீனின் சந்ததியினர் 454
16 எசேக்கியாவின்
குடும்பம் வரைக்கும்
அதேரின் சந்ததியினர் 98
17 பேசாயின் சந்ததியினர் 323
18 யோராகின் சந்ததியினர் 112
19 ஆசூமின் சந்ததியினர் 223
20 கிபாரின் சந்ததியினர் 95
21 பெத்லகேமின் ஊரிலிருந்து 123
22 நெத்தோபாவின் ஊரிலிருந்து 56
23 ஆனதோத்தின் ஊரிலிருந்து 128
24 அஸ்மாவேத்தின் ஊரிலிருந்து 42
25 கீரியாத்யாரீம், கெபிரா,
பேரோத் ஆகியோர்
ஊரிலிருந்து 743
26 ராமா, காபா ஆகியோரின்
ஊரிலிருந்து 621
27 மிக்மாசின் ஊரிலிருந்து 122
28 பெத்தேல், ஆயி ஊரிலிருந்து 223
29 நேபோவின் ஊரிலிருந்து 52
30 மக்பீஷின் ஊரிலிருந்து 156
31 ஏலாமின் ஊரிலிருந்து 1,254
32 ஆரீமின் ஊரிலிருந்து 320
33 லோத், ஆதீத், ஓனோ
ஊரிலிருந்து 725
34 எரிகோவின் ஊரிலிருந்து 345
35 சேனாகின் ஊரிலிருந்து 3,630

36 பின்வரும் பட்டியல்
ஆசாரியர்களுடையவை:
யெசுவாவின் குடும்பம் வழியாய்
யெதாயாவின் சந்ததியினர் 973
37 இம்மேரின் சந்ததியினர் 1,052
38 பஸ்கூரின் சந்ததியினர் 1,247
39 ஆரீமின் சந்ததியினர் 1,017

40 கீழே குறிப்பிடப் பட்டிருப்பவர்கள் லேவி
யின் கோத்திரத்தைச் சார்ந்தவர்கள்:

ஓதாயாவின் குடும்பம் முடிய
யெசுவா மற்றும் கத்மியேல்
சந்ததியினர் 74

41 பாடகர்கள்:
ஆசாபின் சந்ததியினர் 128

42 கீழ் வருபவர்கள் ஆலய வாசல் காவலாளர்
களின் சந்ததியினர்:
சல்லூம், அதேர், தல்மோன்,
அக்கூப், அதிதா, சோபா
சந்ததியினர் 139

43 ஆலயச் சிறப்பு பணியாளர்களின் சந்ததி
யினர்:
சீகா, அசுபா, தபாகோத்,
44 கேரோஸ், சீயாகா, பாதோன்,
45 லெபானாக், அகாபா, அக்கூப்,
46 ஆகாப், சல்மாய், ஆனான்,
47 கித்தேல், காகார், ராயாக்,
48 ரேத்சீன், நெகோதா, காசாம்,
49 ஊசா, பாசெயா, பேசாய்,
50 அஸ்னா, மெயூனீம், நெபுசீம்,
51 பக்பூக், அகுபா, அர்கூர்,
52 பஸ்லூத், மெகிதா, அர்ஷா,
53 பர்கோஸ், சிசெரா, தாமா,
54 நெத்சியா, அதிபா.

55 சாலொமோனின் வேலைக்காரர்களது
சந்ததியினர்:
சோதாய், சொபெரேத், பெருதா,
56 யாலாக், தர்கோன், கித்தேல்,
57 செபத்தியா, அத்தீல்,
செபாயீமிலுள்ள பொகெரேத்
எசாபயிம், ஆமி.
58 ஆலயப் பணியாட்களும்
சாலொமோனின் வேலைக்காரர்களும்
மொத்தம் 392

59 எருசலேமிற்குச் சில ஜனங்கள் தெல்மெ
லாக், தெல்அர்சாவி, கேருப், ஆதோன்,
இம்மேர் ஆகிய இடங்களில் இருந்து
வந்தனர். ஆனால் இந்த ஜனங்களால் தங்க

---

**செருபாபேல்** அவன் சேஸ்பாத்சார் என்றும் அழைக்கப்படுகிறான்.

ளுடைய குடும்பங்கள் இஸ்ரவேல் குடும்பத்
திலிருந்து வந்தவை என நிரூபிக்க
முடியவில்லை.
60 தெலாயா, தொபியா,
நெகோதா சந்ததியினர் 652
61 ஆசாரியர்களின் குடும்பங்களில் இருந்து
வரும் சந்ததியினரின் பெயர்கள் கீழே
கொடுக்கப்பட்டுள்ளன:

அபாயா, கோஸ், பர்சிலாய்
(ஒருவன் பர்சிலாயின் மகள்களில்
ஒருத்தியைத் திருமணம் செய்து
கொண்டான். அவர்களும் பர்சிலாயின்
சந்ததியினரோடு சேர்த்து எண்ணப்
பட்டான்.)

62 இந்த ஜனங்கள் தங்கள் குடும்ப
வரலாற்றைத் தேடினார்கள், ஆனால் கண்டுப்
பிடிக்க முடியவில்லை. தங்கள் முற்பிதாக்கள்
ஆசாரியர்கள், என்பதை நிரூபிக்க முடிய
வில்லை. எனவே, ஆசாரியர்களாகச் சேவை
செய்ய முடியவில்லை. ஆசாரியர்களின்
ஜனங்கள் பட்டியலில், இவர்கள் இடம்பெற
முடியவில்லை. 63 இவர்கள் பரிசுத்தமான
உணவுப்பொருட்கள் எதையும் உண்ணக்
கூடாது என்று ஆளுநர் கட்டளையிட்டார்.
ஓர் ஆசாரியன் ஊரீமையும் தும்மீமையும்
பயன்படுத்தி, தேவனிடம் என்ன செய்ய
வேண்டும் என்பதைக் கேட்கும் வரைக்கும்
அவர்களால் அந்த உணவு எதையும்
உண்ண முடியவில்லை.
64-65 ஆகமொத்தம், 42,360 பேர் திரும்பி வந்த
குழுவில் இருந்தார்கள். அவர்களின்
வேலைக்காரர்களான 7,337 ஆண்கள் மற்றும்
பெண்களையும் சேர்க்கவில்லை, அவர்
களோடு 200 பாடகர்கள், ஆண்களும்
பெண்களுமாய் இருந்தனர். 66-67 அவர்களிடம்
736 குதிரைகள், 245 கோவேறு கழுதைகள்,
435 ஒட்டகங்கள், 6,720 கழுதைகள் இருந்தன.
68 இக்கூட்டம் எருசலேமிலுள்ள கர்த்தரு
டைய ஆலயத்திற்குப் போய்ச் சேர்ந்தது.
பிறகு குடும்பத்தலைவர்கள் கர்த்தருடைய
ஆலயத்திற்காக அன்பளிப்புகளைக் கொடுத்
தனர், ஆலயம் அழிக்கப்பட்ட இடத்திலேயே
புதிய ஆலயத்தைக் கட்ட எண்ணினார்கள்.
69 ஜனங்கள் தங்களால் முடிந்தவரை
கொடுத்தனர். அவர்கள் ஆலயத்தைக் கட்டு
வதற்காகக் கொடுத்த பொருட்கள் வருமாறு:
61,000 தங்கக்காசுகள், 5,000 இராத்தல்
வெள்ளி, 100 ஆசாரியர்களுக்கான ஆடை
கள்.
70 எனவே ஆசாரியர்களும், வேலையர்
களும், மற்றும் பலரும் எருசலேமிலும்
அதைச் சுற்றிய இடங்களுக்கும் போனார்கள்.
இவர்களோடு ஆலயப் பாடகர்களும், வாயில்
காவலர்களும், ஆலயப் பணியாளர்களும்
இருந்தனர். இஸ்ரவேலின் மற்ற ஜனங்கள்
தங்கள் சொந்த நகரங்களில் தங்கினார்கள்.

### பலிபீடத்தைத் திரும்பவும் கட்டுதல்

3 எனவே ஏழாவது மாதத்திலே, இஸ்ர
வேல் ஜனங்கள் தங்கள் சொந்த
நகரங்களுக்குப் போய்ச் சேர்ந்திருந்தார்கள்.
அப்போது, எருசலேமில் அனைத்து ஜனங்
களும் கூடினர். அவர்கள் அனைவரும் ஒரே
இனமாகக் கூடினர். 2 பிறகு யோசதாக்கின்
மகனாகிய யெசுவாவும், அவனுடனிருந்த
ஆசாரியர்களும், செயல்தியேலின் மகனான
செருபாபேலும், அவனது ஆட்களும்
இஸ்ரவேலின் தேவனுடைய பலிபீடம்
கட்டினார்கள். அதன் மீது அவர்கள்
பலிகளை செலுத்தமுடியும் என்ப தால்,
இஸ்ரவேலின் தேவனுடைய பலி பீடத்தைக்
கட்டினார்கள். மோசேயின் சட்டத்தில்
உள்ளபடி அவர்கள் கட்டி னார்கள். மோசே
தேவனின் சிறப்புக்குரிய ஊழியன் ஆவான்.
3 அந்த ஜனங்கள் தமக்கு அருகில் வாழும்
மற்றவர்களைக் கண்டு பயந்தார்கள். ஆனால்
அது அவர்களை நிறுத்தவில்லை, அவர்கள்
பழைய பலிபீடத்தின் அஸ்திபாரத்தின்
மேலேயே கட்டி, அதில் கர்த்தருக்குத்
தகனபலிகளைக் கொடுத்தனர். அவர்கள்
இப்பலிகளைக் காலையிலும் மாலையிலும்
கொடுத்தனர். 4 பிறகு, மோசேயின் சட்டத்தில்
சொல்லப்பட்டபடியே அடைக்கலக் கூடாரப்
பண்டிகையைக்* கொண்டாடினர். பண்டி
கையின் ஒவ்வொரு நாளிலும் அவர்கள்
குறிப்பிட்ட கணக்கின்படி தகனபலிகளைக்
கொடுத்து வந்தனர். 5 அதற்குப் பிறகு, கர்த்தர்
கட்டளையிட்டபடியே ஒவ்வொரு நாளும்,
பிறைச்சந்திர நாளிற்காகவும், அனைத்து
பரிசுத்த பண்டிகைகளுக்கும், விடுமுறை
களுக்கும் தகனபலிகளைக் கொடுக்கத்
தொடங்கினார்கள். மேலும் இவற்றைத் தவிர
கர்த்தருக்காக கொடுக்க விரும்பிய மற்ற
பரிசுகளையும் ஜனங்கள் கொடுக்கத் துவங்கி
னார்கள். 6 எனவே, ஏழாவது மாதத்தின்
முதல் நாளில் இஸ்ரவேல் ஜனங்கள் மீண்டும்
கர்த்தருக்குப் பலிகளைக் கொடுக்க ஆரம்பித்
தனர். ஆலயம் இன்னும் கட்டப்படா
விட்டாலுங்கூட இது நிகழ்ந்தது.

### ஆலயத்தைத் திரும்பக் கட்டுதல்

7 பிறகு அடிமைகளாக இருந்து திரும்பி
வந்த அந்த ஜனங்கள், கல்தச்சர்களுக்கும்
மரத்தச்சர்களுக்கும் பணம் கொடுத்தார்கள்
அதோடு அந்த ஜனங்கள் உணவு, திராட்சை
ரசம், ஒலிவ எண்ணெய் போன்றவற்றையும்
கொடுத்தனர். இவற்றை லீபனோனில்
இருந்து கேதுரு மரங்களைக் கொண்டு
வருவதற்குத் தீரியர் மற்றும் சீதோன்
ஜனங்களுக்குப் பணம் கொடுக்கப் பயன்

---

**அடைக்கலக் கூடாரப் பண்டிகை** இந்த பண்டிகை அறுவடைக்கு நன்றி கூறி ஏழாவது மாதத்தில் கொண்டாடப்பட்டது. இது ஏழு நாட்கள் தொடர்ந்தது. பார்க்க யாத். 23:16, லேவி. 23:34-36,43.

37“நாங்கள் கர்த்தருடைய ஆலயத்தில்
உள்ள சேமிப்பு அறைகளுக்கு ஆசாரியர்களி
டம் இவற்றைக் கொண்டுவருவோம்: எங்கள்
பிசைந்த மாவில் முதல் பாகத்தையும்,
எங்களது முதல் தானியக் காணிக்கை
களையும், எங்களது அனைத்து மரங்
களிலிருந்து முதல் பழங்களையும், புதிய
திராட்சைரசம் மற்றும் எண்ணெயின் முதல்
பாகத்தையும் கொண்டுவருவோம். அதோடு
எங்கள் விளைச்சலில் பத்தில் ஒரு பாகத்தை
லேவியர்களுக்குக் கொண்டுவருவோம்.
ஏனென்றால் நாம் வேலைச் செய்கிற எல்லா
பட்டணங்களிலும் லேவியர்கள் அவற்றைச்
சேகரித்தனர். 38அவர்கள் விளைச்சலைப்
பெறும்போது லேவியர்களோடு ஆரோனின்
குடும்பத்திலுள்ள ஒரு ஆசாரியர் இருக்க
வேண்டும். பிறகு லேவியர்கள் அப்பொருட்
களை எங்கள் தேவனுடைய ஆலயத்திற்குக்
கொண்டுவரவேண்டும். பிறகு அவர்கள்
ஆலய கருவூலத்தில் அவற்றை போடவேண்
டும். 39இஸ்ரவேல் ஜனங்களும் லேவியர்களும்
அவர்களின் அன்பளிப்புகளைச் சேமிப்பு
அறைகளுக்குக் கொண்டுவரவேண்டும்.
அவர்கள் தமது தானியம், புதிய திராட்சை
ரசம், எண்ணெய் ஆகிய அன்பளிப்புகளைக்
கொண்டுவருவார்கள். ஆலயத்திற்குரிய
அனைத்துப் பொருட்களும் அச்சேமிப்பு
அறைகளில் வைக்கப்படும். அங்கே பணியி
லுள்ள ஆசாரியர்கள் தங்குவார்கள். பாடகர்
களும், வாசல் காவலாளர்களும் அங்கே
தங்குவார்கள்.

“எங்கள் தேவனுடைய ஆலயத்தின்
பொறுப்பை நாங்கள் ஏற்றுக்கொள்வோம்
என்று நாங்கள் அனைவரும் வாக்குக்
கொடுக்கிறோம்” என்றனர்.

### புதிய மக்கள் எருசலேமிற்குள் நுழைகின்றனர்

11 இஸ்ரவேல் ஜனங்களின் தலைவர்கள்
இப்பொழுது எருசலேம் நகரத்திற்குள்
நுழைந்தனர். இஸ்ரவேலின் மற்ற ஜனங்கள்
இனி நகரத்திற்குள் யார் நுழையவேண்டும்
என்று முடிவெடுத்தனர். எனவே அவர்கள்
சீட்டு குலுக்கிப் போட்டனர். தங்களுக்குள்
பத்து பேரில் ஒருவனைப் பரிசுத்த நகரமான
எருசலேமில் வாழவைத்தனர். மற்ற ஒன்பது
பேர் அவர்களது சொந்தப் பட்டணங்களில்
வாழமுடிந்தது. 2சில ஜனங்கள் எருசலேமில்
குடியிருக்கத் தாமாகவே முன்வந்தனர். மற்ற
ஜனங்கள் அவர்களுக்கு நன்றி சொல்லி
வாழ்த்தினர்.

3எருசலேமில் குடியிருந்த தலைவர்கள்
இத்தகையவர்கள். (இஸ்ரவேல் ஜனங்களில்
சிலர் ஆசாரியர்கள், லேவியர்கள், ஆலயப்
பணியாளர்கள், சாலொமோனின் வேலைக்
காரர்களின் சந்ததியினர். இவர்கள் யூதாவின்
நகரங்களில் வாழ்ந்தனர். ஒவ்வொருவரும்
தங்களுக்குச் சொந்தமான வெவ்வேறு
பட்டணங்களில் வாழ்ந்தனர். 4எருசலேம்
நகரத்தில் யூதா மற்றும் பென்யமீன்
குடும்பத்தினரில் மற்ற ஜனங்கள் வாழ்ந்தனர்.)

யூதாவின் சந்ததியினர் இவர்கள்
எருசலேமிற்குள் நுழைந்தனர். உசியாவின்
மகனான அத்தாயாவும், (உசியா சகரியா
வின் மகன், அவன் அமரியாவின் மகன்,
அவன் செபதியாவின் மகன், அவன்
மகலாலெயேலின் மகன், அவன் பேரேசின்
சந்ததியில் ஒருவன்.) 5பாருக்கின் மகனான
மாசெயாவும், (பாருக் கொல்லோசேயின்
மகன், அசாயாவின் மகன் கொல்லோசே,
அதாயாவின் மகன் அசாயா, யோயாரிப்பு
வின் மகன் அதாயா. யோயாரிப்பு சகரியா
வுக்கு மகன், அவன் சீலோனின் சந்ததியில்
ஒருவன்). 6எருசலேமில் வாழ்ந்துக் கொண்
டிருந்த பேரேசின் சந்ததியினர் 468 என்ற
எண்ணிக்கையுயைவர்கள். அவர்கள் அனை
வரும் தைரியசாலிகள்.

7இவர்கள் எருசலேமிற்குள் நுழைந்த
பென்யமீனின் சந்ததியினர்: மெசுல்லாமின்
மகனான சல்லூ, (மெசுல்லாம் யோயத்தின்
மகன், இவன் பெதாயாவுக்கு மகன், இவன்
கொலாயாவுக்கு மகன், இவன் மாசெயா
வுக்கு மகன், இவன் இதியேலுக்கு மகன்,
இவன் எசாயாவுக்கு மகன்) 8எசாயாவைப்
பின்பற்றியவர்கள் கப்பாய், சல்லாய்
ஆகியோர் அவர்கள் அனைவரும் சேர்ந்து
928 பேர். 9அவர்களுக்கு சிக்ரியின் மகன்
யோவேல் பொறுப்பாளனாக இருந்தான்.
எருசலேம் பட்டணத்தின் இரண்டாவது
மாவட்டத்துக்கு செனுவாவின் மகனான
யூதா பொறுப்பாளனாக இருந்தான்.

10இவர்கள் எருசலேமிற்குள் நுழைந்த
ஆசாரியர்கள்: யோயாரிப், யாகின் மகன்.
11இல்க்கியாவின் மகனான செராயா (இல்க்
கியா மெசுல்லாமின் மகன், அவன்
சாதோக்கின் மகன், அவன் மொராயோத்தின்
மகன், அவன் அகிதூபின் மகன், இவன்
தேவனுடைய ஆலயத்தின் மேற்பார்வை
யாளன்). 12சகோதரர்களாகிய 822 பேர்
ஆலயத்தில் பணிவிடைச் செய்தனர். எரோ
காமுக்கு மகனான அதாயாவும் (எரோகாம்
பெல்லியாவின் மகன், அவன் அம்சியின்
மகன், அவன் சகரியாவின் மகன், அவன்
பஸ்கூரின் மகன், அவன் மல்கியாவின்
மகன்.) 13மல்கியாவின் சகோதரர்களான 242
பேர் (இவர்கள் அவர்களது குடும்பத்
தலைவர்கள்.) அசரியேலின் மகனான
அமாசாயும் (அசரியேல் அகெசாயின் மகன்,
அவன் மெசில்லேமோத்தின் மகன், அவன்
இம்மோரின் மகன்.) 14இம்மோரின் சகோதரர்
களான 128 பேர். (இவர்கள் தைரியமான
வீரர்கள். இவர்களின் அதிகாரியாக
அகெதோலிமின் மகனான சப்தியேல்
இருந்தான்.)

15எருசலேமிற்குள் நுழைந்த லேவியர்கள்

இவர்கள்: அகூபின் மகனான செமாயா
(அசூப் அஸ்ரிக்காமின் மகன், அவன்
அசபியாவின் மகன், அவன் புன்னியின்
மகன்.), 16சபெதாயும்யோசபாத்தும் (இவ்விரு
வரும் லேவியர்களின் தலைவர்கள்
தேவாலயத்தின் வெளிவேலைகளின்
பொறுப்பாளர்களாக இருந்தனர்.) 17மத்த
னியா (மத்தனியா மீகாவின் மகன். அவன்
சப்தியின் மகன். அவன் ஆசாபின் மகன்.
அவன் பாடகர்கள் குழுவுக்கு இயக்குனர்.
ஜெபத்தில் துதிப்பாடலை பாட ஜனங்களை
வழிநடத்தினான்) பக்பூக்கியா (பக்பூக்கியா
அவனது சகோதரனுக்கு மேல் இரண்டாவது
பொறுப்பாளனாக இருந்தான். சமுவாவின்
மகனான அப்தா (சம்முவா, கலாலின்
மகன் அவன் எதுத்தூனின் மகன்) 18எனவே
284 லேவியர்கள் பரிசுத்த நகரமான
எருசலேமிற்குள் நுழைந்தனர்.

19எருசலேமிற்குள்நுழைந்த வாசல்காவலா
ளர்கள்: அக்கூப், தல்மோன் மற்றும் 172
சகோதரர்கள். நகரத்தின் வாசல்களை
அவர்கள் காவல் காத்தனர்.

20மற்ற இஸ்ரவேல் ஜனங்கள், மற்ற
ஆசாரியர்கள் மற்றும் லேவியர்கள் யூதாவின்
அனைத்து நகரங்களிலும் வாழ்ந்தனர்.
ஒவ்வொருவனும் தனது முற்பிதாவிற்குச்
சொந்தமான நாட்டில் வாழ்ந்தனர். 21ஆலய
வேலைக்காரர்கள் ஓபேல் மலையில்
குடியிருந்தார்கள். அவர்களின் மேல் சீகாவும்
கிஸ்பாவும் அதிகாரிகளாக இருந்தார்கள்.

22எருசலேமில் லேவியர்களின் அதிகாரி
யாக ஊசி இருந்தான். ஊசி பானியின்
மகனாக இருந்தான். (பான் அசபியாவின்
மகனாக இருந்தான், அவன் மத்தானியாவின்
மகனாக இருந்தான், அவன் மீகாவின்
மகனாக இருந்தான்.) ஊசி ஆசாபின்
சந்ததியான். ஆசாபின் சந்ததியினர் பாடகர்
களாகவும் தேவனுடைய ஆலயத்தில் பணிப்
பொறுப்பாளர்களாகவும் இருந்தனர்.
23பாடகர்கள் அரசனின் ஆணைகளுக்குக்
கீழ்ப்படிபவர்களாக இருந்தனர். அரசனிட
மிருந்து வரும் ஆணைகள் அப்பாடகர்க
ளுக்கு ஒவ்வொரு நாளும் என்ன செய்ய
வேண்டும் என்று சொல்லின. 24அரசன்
செய்ய விரும்புவதை ஜனங்களிடம் சொல்ப
வனின் பெயர் பெத்தகியா. (பெத்தகியா
மெசெசாபெயேலின் மகன். அவன்
சேராக்கின் சந்ததியில் ஒருவன். சேராக்
யூதாவின் மகன்.)

25இப்பட்டணங்களில் யூதாவின் ஜனங்கள்
வாழ்ந்தனர். கீரியாத் அர்பாவிலும் அதனைச்
சுற்றியுள்ள கிராமங்களிலும், தீபோனிலும்
அதனைச் சுற்றியுள்ள கிராமங்களிலும்,
எகாப் செயேலிலும் அதனைச் சுற்றியுள்ள
கிராமங்களிலும் 26யெசுவாவிலும், மோலாதா
கிலும் பெத்பெலேதிலும், 27ஆத்சார்சூகாவி
லும், பெயெர்செபாவிலும் அதன் கிராமங்க
ளிலும். 28சிக்லாகிலும், மேகோனாகிலும்
அதன் கிராமங்களிலும், 29என்ரிம்மோனி
லும், சாரேயாகிலும், யர்மூத்திலும்,
30சானோவாகிலும், அதுல்லாமிலும் அவற்
றின் கிராமங்களிலும், லாகீசிலும் அதன்
நாட்டுப்புறங்களிலும், அசெக்காவிலும்
அதன் கிராமங்களிலும், பெயெர்செபா
தொடங்கி இன்னோமீன் பள்ளத்தாக்கு வரை
குடியேறினார்கள்.

31கேபாவிலிருந்து வந்த பென்யமீன் சந்ததி
யினர் மிக்மாஸ், ஆயா, பெத்தேல் ஊர்களி
லும் அதன் கிராமங்களிலும், 32ஆனதோத்,
நோப், அனனியா, 33ஆத்சோர், ராமா,
கித்தாயிம், 34ஆதீத், செபோயிம், நெபலாத்,
35லோத், ஓனோ, என்னும் ஊர்களிலும்,
சிற்பிகளின் பள்ளத்தாக்கிலும் குடியிருந்த
னர். 36லேவியரிலோ சிலப் பிரிவினர்
பென்யமீனிலும் இருந்தனர்.

## ஆசாரியர்களும் லேவியர்களும்

12 யூதா நாட்டிற்குத் திரும்பிவந்த
ஆசாரியர்களும் லேவியர்களும்
இவர்கள். அவர்கள் செயல்தியேலின் மகனா
கிய செருபாபேலோடும் யெசுவாவோடும்
வந்தனர். இதுதான் அவர்களின் பெயர்
பட்டியல்: செராயா, எரேமியா, எஸ்றா,
2அமரியா, மல்லூக், அத்தூஸ், 3செகனியா,
ரெகூம், மெரெமோத், 4இத்தோ, கிநேதோ,
அபியா, 5மியாமின், மாதியா, பில்கா,
6செமாயா, யோயாரிப், யெதாயா, 7சல்லு,
ஆமோக், இல்க்கியா, யெதாயா, ஆகியோர்.
இவர்கள் யெசுவாவின் காலத்தில் ஆசாரி
யருக்கும் தங்கள் சகோதரர்களுக்கும் தலை
வர்களாயிருந்தார்கள்.

8லேவியர்களானவர்கள்: யெசுவா, பின்
னூயி, கத்மியேல், செரெபியா, யூதா,
மத்தனியா, என்பவர்கள். இவனும் மத்தனி
யாவின் உறவினர்கள் ஆகியோர் தேவ
னுக்குத் துதிப்பாடல்களைப் பாடும்
பொறுப்புடையவர்களாக இருந்தார்கள்.
9பக்புக்கியா, உன்னியும், லேவியர்களின்
உறவினர்கள். அவர்கள் இருவரும் பணியில்
அவர்களுக்கு எதிராக நின்றார்கள்.
10யெசுவா யொயகீமின் தந்தை. யொயகீம்
எலியாசிபின் தந்தை. எலியாசிப் யொயதா
வின் தந்தை, 11யொயதா யோனத்தானின்
தந்தை. யோனத்தான் யதுவாவின் தந்தை.

12யொயகீமின் காலத்திலே ஆசாரியர்
குடும்பங்களின் தலைவர்களாக கீழ்க்
கண்டவர்கள் இருந்தனர்;

செரோயாவின் குடும்பத்தில்
மெராயா தலைவன்.
எரேமியாவின் குடும்பத்தில்
அனனியா தலைவன்.
13 எஸ்றாவின் குடும்பத்தில்
மெசுல்லாம் தலைவன்.
அமரியாவின் குடும்பத்தில்
யோகனான் தலைவன்.

14 மெலிகுவின் குடும்பத்தில்
யோனத்தான் தலைவன்.
செபனியாவின் குடும்பத்தில்
யோசேப்பு தலைவன்.
15 ஆரீமின் குடும்பத்தில் அத்னா
தலைவன்.
மெராயோதின் குடும்பத்தில் எல்காய்
தலைவன்.
16 இத்தோவின் குடும்பத்தில் சகரியா
தலைவன்.
கிநெதோனின் குடும்பத்தில்
மெசுல்லாம் தலைவன்.
17 அபியாவின் குடும்பத்தில் சிக்ரி
தலைவன்.
மினியாமீன்மொவதியா
என்பவர்களின் குடும்பங்களில்
பில்தாய் தலைவன்.
18 பில்காவின் குடும்பத்தில் சம்முவா
தலைவன்.
செமாயாவின் குடும்பத்தில்
யோனத்தான் தலைவன்.
19 யோயரிபின் குடும்பத்தில் மத்தனா
தலைவன்.
யெதாயாவின் குடும்பத்தில் ஊசி
தலைவன்.
20 சல்லாயின் குடும்பத்தில் கல்லாய்
தலைவன்.
ஆமோக்கின் குடும்பத்தில் ஏபேர்
தலைவன்.
21 இல்க்கியாவின் குடும்பத்தில்
அசபியா தலைவன்.
யெதாயாவின் குடும்பத்தில்
நெதனெயேல் தலைவன் ஆகியோர்

22எலியாசிப், யொயதா, யோகனான்,
யதுவா ஆகியோரின் காலங்களிலுள்ள
லேவியர், ஆசாரியர்களின் குடும்பத்தலைவர்
களின் பெயர்கள், பெர்சியா அரசன்
தரியூவின் ஆட்சியின்போது எழுதப்பட்டன.
பெர்சியனாகிய தரியுவின் இராஜ்ய
பாரமட்டும் இருந்த ஆசாரியர்களும் அப்
படியே எழுதப்பட்டனர். 23லேவியர்களாகிய
சந்ததியின் தலைவர் எலியாசிபின்
மகனாகிய யோகனானின் காலம்வரை
நாளாகமப் புத்தகத்தில் எழுதப்பட்டார்கள்.
24இவர்கள் லேவியர்களின் தலைவர்கள். அச
பியா, செரெபியா, கத்மியேலின் மகனான
யெசுவாவும் அவர்களின் சகோதரர்களும்,
அவர்களின் சகோதரர்கள் துதிப்பாட
அவர்களுக்கு முன்னால் நின்று தேவனுக்கு
மகிமைச் செலுத்தினார்கள். ஒரு குழு
இன்னொரு குழுவிற்குப் பதில் சொன்னது.
அதுதான் தேவமனிதனான தாவீதால்
கட்டளையிடப்பட்டது.
25வாசல்களுக்கு அடுத்துள்ள சேமிப்பு
அறைகளைக் காத்து நின்ற வாசல்
காவலாளர்கள்: மத்தனியா, பக்புக்கியா,
ஒபதியா, மெசுல்லாம், தல்மோன், அக்கூப்,
26அவ்வாசல் காவலாளர்கள் யொயகீமின்
காலத்தில் பணிச்செய்தனர். யொயகீம் யெசு
வாவின் மகன். யெசுவா யோத்சதாக்கின்
மகன். அந்த வாசல் காவலர்களும்
நெகேமியா ஆளுநராயிருந்த காலத்திலும்
ஆசாரியனும், வேதபாரகனுமான எஸ்றா
வின் காலத்திலும் பணிச்செய்தனர்.

### எருசலேமின் சுவர் பிரதிஷ்டை

27ஜனங்கள் எருசலேமின் சுவரைப்
பிரதிஷ்டை செய்தனர். அவர்கள் அனைத்து
லேவியர்களையும் எருசலேமிற்குக் கொண்டு
வந்தனர். லேவியர்கள் தாம் வாழ்ந்த
பட்டணங்களிலிருந்து வந்தனர். அவர்கள்
எருசலேமின் சுவரைப் பிரதிஷ்டைச்
செய்யும் விழாவிற்கும், லேவியர்கள் தேவ
னுக்கு நன்றி சொல்லியும், துதித்தும்
பாடல்களை பாடவும் வந்தனர். அவர்கள்
தமது கைத்தாளம், தம்புரு, சுரமண்டலம்
ஆகியவற்றை இசைத்தனர்.
28-29அனைத்து பாடகர்களும் எருச
லேமிற்கு வந்தனர். அவர்கள் எருசலேமைச்
சுற்றியுள்ள பட்டணங்களிலிருந்து வந்தனர்.
அவர்கள் நெத்தோபாத்தியரின் கிராமங்களி
லிருந்தும், பெத்கில்காலிலும், கேபா,
அஸ்மாவேத் ஊர்களின் நாட்டுப்புறங்களி
லும் இருந்துவந்து கூடினார்கள். பாடகர்கள்
எருசலேமைச் சுற்றியுள்ள பகுதிகளில் தங்க
ளுக்காக சிறு ஊர்களைக் கட்டியிருந்தனர்.
30ஆசாரியரும் லேவியரும் தங்களை ஒரு
சடங்கில் சுத்தம் பண்ணிக்கொண்டனர்.
பிறகு அவர்கள் ஜனங்கள், வாசல்கள்,
எருசலேமின் சுவரை ஆகியவற்றை
சடங்கில் சுத்தம் பண்ணினார்கள்.
31நான் யூதாவின் தலைவர்களிடம் மேலே
ஏறி சுவரின் உச்சியில் நிற்கவேண்டும்
என்று சொன்னேன். தேவனுக்கு நன்றி
செலுத்துவதற்கு இரண்டு பாடகர் குழுவை
நான் தேர்ந்தெடுத்தேன். ஒரு குழு சுவரின்
உச்சிக்கு மேலே ஏறி வலது பக்கத்தில்
சாம்பல் குவியல் வாயிலை நோக்கிப்
போனார்கள். 32ஒசாயாவும் யூதாவின்
தலைவர்களில் பாதி பேரும் அவர்களைப்
பின்தொடர்ந்துப் போனார்கள். 33அசரியா,
எஸ்றா, மெசுல்லாம், 34யூதா, பென்யமீன்,
செமாயா, எரேமியா ஆகியோரும் பின்
தொடர்ந்துச் சென்றனர். 35ஆசாரியர்களில்
சிலர் எக்காளங்களோடு சுவர்வரையிலும்
பின்தொடர்ந்துச் சென்றனர். சகரியாவும்
பின்தொடர்ந்து சென்றான். (சகரியா
யோனத்தானின் மகன். அவன் செமாயாவின்
மகன். அவன் மத்தனியாவின் மகன். அவன்
மீகாயாவின் மகன். அவன் சக்கூரின் மகன்.
அவன் அஸ்பாவின் மகன். 36அங்கே
அஸ்பாவின் சகோதரர்களும் இருந்தனர்.
அவர்கள் செமாயா, அசரெயேல், மிலாலாய்,
கிலாலாய், மகாய், நெதனெயேல், யூதா,

அனானி ஆகியோரும் போனார்கள். அவர்
களிடம் தேவமனிதனான தாவீது செய்த
இசைக்கருவிகளும் இருந்தன. போதகனான
எஸ்றா அந்த ஜனங்கள் குழுவை
நடத்திச்சென்று சுவரைப் பிரதிஷ்டை
செய்யச்சென்றான். 37அவர்கள் நீரூற்றுள்ள
வாசலுக்குச் சென்றனர். தாவீதின் நக
ரத்துக்கான வழியிலுள்ள படிக்கட்டுகளில்
அவர்கள் நடந்துச்சென்றனர். அவர்கள்
நகரச்சுவரின்மேல் நின்றார்கள். அவர்கள்
தாவீதின் வீட்டின்மேல் நடந்து நீரூற்று
வாசலுக்குச் சென்றனர்.
38இரண்டாவது இசைக்குழு அடுத்தத்
திசையில் இடதுபுறமாகச் சென்றனர். நான்
அவர்களை பின்தொடர்ந்தேன். அவர்கள்
சுவரின் உச்சிக்குச் சென்றனர். ஜனங்களில்
பாதிபேர் அவர்களைப் பின்தொடர்ந்தனர்.
மேல் சூளைகளின் கோபுரத்தைக் கடந்து
அகல் சுவர்மட்டும் போனார்கள். 39பிறகு
அவர்கள் எப்பிராயீம் வாசல், பழைய
வாசல், மீன் வாசல் அனானெயேல்
கோபுரம், நூறு கோபுரம் மற்றும் ஆட்டு
வாசல் மட்டும் புறப்பட்டு காவல் வீட்டு
வாசலில் நின்றார்கள். 40பிறகு இரு இசைக்
குழுக்களும் தேவனுடைய ஆலயத்திலுள்ள
தங்களது இடத்திற்குச் சென்றனர். நான்
எனது இடத்தில் நின்றேன். ஆலயத்தில்
அதிகாரிகளில் பாதிபேர் தங்கள் இடங்களில்
நின்றார்கள். 41பிறகு இந்த ஆசாரியர்கள்
ஆலயத்திலுள்ள தங்களது இடங்களில்
நின்றார்கள்: எலியாக்கீம், மாசெயா, மினியா
மீன், மிகாயா, எலியோனாய், சகரியா,
அனானியா, இந்த ஆசாரியர்கள் தங்களுடன்
எக்காளங்களை வைத்திருந்தனர். 42பிறகு
ஆலயத்தில் இந்த ஆசாரியர்கள் தங்கள்
இடங்களில் நின்றார்கள்: மாசெயா,
செமாயா, எலெயாசார், ஊசி, யோகனான்,
மல்கியா, ஏலாம், ஏசேர்.
பிறகு இரண்டு பாடகர் குழுக்களும்
யெஷரகியாவின் தலைமையில் பாட
ஆரம்பித்தனர். 43எனவே அந்தச்சிறப்பு
நாளில் ஆசாரியர்கள் ஏராளமான பலி
களைச் செலுத்தினார்கள். ஒவ்வொருவரும்
மிகவும் மகிழ்ச்சியாக இருந்தார்கள். தேவன்
ஒவ்வொருவரையும் மகிழ்ச்சியுடன் வைத்தி
ருந்தார். பெண்களும் குழந்தைகளுங்கூட
மகிழ்ச்சியோடு இருந்தார்கள். எருசலேமில்
இருந்து வருகின்ற மகிழ்ச்சிகரமான ஓசை
களை தொலைதூரத்தில் உள்ள ஜனங்க
ளால்கூட கேட்கமுடிந்தது.
44அந்தநாளில் சேமிப்பு அறைகளுக்கான
பொறுப்பாளர்களைத் தேர்ந்தெடுத்தனர்.
ஜனங்கள் தங்களது முதல் பழங்களையும்,
விளைச்சலில் பத்தில் ஒரு பங்கையும்
கொண்டுவந்தனர். எனவே அதற்குப்
பொறுப்பானவர்கள் அப்பொருட்களை
சேமிப்பு அறைகளில் வைத்தனர். ஆசாரியர்
களும் லேவியர்களும் தங்கள் கடமையில்
சரியாக இருப்பதைப் பார்த்து யூதஜனங்கள்
மகிழ்ச்சியடைந்தனர். எனவே அவர்கள்
சேமிப்பு அறைகளில் வைப்பதற்குப்
பலவற்றைக் கொண்டுவந்தனர். 45ஆசாரியர்க
ளும் லேவியர்களும் தங்கள் தேவனுக்குச்
செய்யவேண்டிய வேலைகளைச் செய்தனர்.
அவர்கள் ஜனங்களை சுத்தமாக்கும் சடங்கு
களைச் செய்தனர். பாடகர்களும் வாசல்
காவலர்களும் தங்கள் பங்கைச் செய்தனர்.
அவர்கள் தாவீதும் சாலொமோனும்
கட்டளையிட்டபடியே செய்தனர். 46(நீண்ட
காலத்துக்கு முன்னால், தாவீதின் காலத்தில்
ஆசாப் இயக்குநராக இருந்தான். அவனிடம்
ஏராளமான துதிப்பாடல்கள் மற்றும்
தேவனுக்கு நன்றி உரைக்கும் பாடல்களும்
இருந்தன.)
47எனவே செருபாபேலின் காலத்திலும்
நெகேமியாவின் காலத்திலும் இஸ்ரவேல்
ஜனங்கள் அனைவரும் பாடகர்களுக்கும்,
வாசல் காவலாளர்களுக்கும் ஒவ்வொரு
நாளும் உதவி செய்துவந்தனர். ஜனங்கள்,
மற்ற லேவியர்களுக்குக் கொடுக்கவேண்டி
யதைக் கொடுக்க ஏற்பாடுச் செய்தனர்.
லேவியர்கள் ஆரோனின் (ஆசாரியர்) சந்ததிக்
கென்று உரிய பங்கைக் கொடுக்க ஏற்பாடு
செய்தனர்.

## நெகேமியாவின் இறுதி கட்டளைகள்

13 அந்தநாளில், மோசேயின் புத்தகம்
உரக்க வாசிக்கப்பட்டது. எனவே,
அனைத்து ஜனங்களாலும் கேட்கமுடிந்தது.
அவர்கள் இந்தச்சட்டம் மோசேயின் புத்த
கத்தில் எழுதப்பட்டிருப்பதை கண்டுக்கொண்
டனர்: அம்மோனியரும் மோவாபியரும்
தேவசபையில் ஒன்றுகூட அனுமதிக்கக்
கூடாது. 2அந்தச்சட்டம் எழுதப்பட்டது.
ஏனென்றால், அந்த ஜனங்கள் இஸ்ரவேல்
ஜனங்களுக்கு தண்ணீரும் உணவும்
கொடுக்கவில்லை. அந்த ஜனங்கள் இஸ்ர
வேல் ஜனங்களைச் சபிக்கும்படி பலாமுக்குப்
பணம் கொடுத்தனர். ஆனால் நமது தேவன்
அச்சாபத்தை ஆசீர்வாதமாக மாற்றினார்.
3எனவே, இஸ்ரவேல் ஜனங்கள் இச்சட்டம்
இருப்பதைக் கேட்டவுடன் அவர்கள் அதற்குக்
கீழ்ப்படிந்தனர். அவர்கள் தம்மை
அயலவர்களின் சந்ததிகளிடமிருந்து தனியே
விலக்கிக்கொண்டனர்.
4-5ஆனால் அது நிகழும் முன்னால்,
ஆலயத்தின் அறையை எலியாசிப் தொபியா
வுக்குக் கொடுத்திருந்தான். தேவனுடைய
ஆலயத்தில் எலியாசிப் சேமிப்பு அறைக
ளின் அதிகாரியாக இருந்தான். எலியாசிப்,
தொபியாவின் நெருங்கிய நண்பனாக
இருந்தான். அந்த அறையானது தானியக்
காணிக்கைகளையும், நறுமணப் பொருட்
களையும், ஆலயப் பாத்திரங்களையும்
பொருட்களையும் வைக்கப் பயன்பட்டது.

*அவர்கள் பத்தில் ஒரு பங்காக வந்த
தானியத்தையும் புதிய திராட்சைரசத்தையும்
லேவியர் பாடகர் மற்றும் வாசல் காவலர்
களுக்கான எண்ணெயையும் அந்த அறை
யில் வைத்திருந்தனர். அவர்கள் ஆசா
ரியர்களுக்கான அன்பளிப்புகளையும் அந்த
அறையில் வைத்தனர். ஆனால் அந்த
அறையை எலியாசிப் தொபியாவுக்குக்
கொடுத்தான்.*

6 *இவை அனைத்தும் நிகழும்போது நான்
எருசலேமில் இல்லை. நான் பாபிலோன்
அரசனிடம் மறுபடியும் போயிருந்தேன்.
பாபிலோன் அரசனான அர்தசஷ்டாவின்
முப்பத்திரண்டாவது ஆட்சியாண்டில்* மறு
படியும் போனேன். பின்னர் நான்
அரசனிடம் எருசலேமிற்குத் திரும்பிப்போக
அனுமதி கேட்டேன்.* 7 *எனவே நான்
எருசலேமிற்குத்திரும்பிவந்தேன். எலியாசிப்
செய்திருந்த வருத்தத்திற்குரிய செயலை நான்
கேள்விப்பட்டேன். நமது தேவனுடைய
ஆலயத்தில் உள்ள ஒரு அறையை
எலியாசிப் தொபியாவுக்குக் கொடுத்திருந்
தான்.* 8 *எலியாசிப் செய்திருந்த செயலுக்காக
நான் மிகவும் கோபமாக இருந்தேன். எனவே
நான் அறையிலிருந்த தொபியாவின்
பொருட்களை எல்லாம் எடுத்து வெளியே
எறிந்தேன்.* 9 *அந்த அறையைச் சுத்தமும்
பரிசுத்தமும் செய்யும்படி நான் கட்டளை
யிட்டேன். பிறகு நான் ஆலயப் பாத்திரங்க
ளையும், பொருட்களையும், தானியக்
காணிக்கைகளையும், நறுமணப் பொருட்க
ளையும் மீண்டும் அந்த அறையில்
வைத்தேன்.*

10 *ஜனங்கள் தங்களது பங்கை
லேவியர்களுக்குக் கொடுக்கவில்லை என்ப
தையும் நான் கேள்விப்பட்டேன். எனவே
லேவியர்களும் பாடகர்களும் தங்கள் வயல்
களில் வேலைச்செய்ய திரும்பப் போயிருந்த
னர்.* 11 *எனவே நான் அதிகாரிகளிடம் அவர்
கள் தவறு செய்தனர் என்று கூறினேன்.
நான் அவர்களிடம், "நீங்கள் தேவனுடைய
ஆலயப் பொறுப்பை ஏன் கவனிக்க
வில்லை" என்று கேட்டேன். பிறகு நான்
லேவியர்கள் அனைவரையும் கூட்டினேன்.
அவர்கள் ஆலயத்தில் தங்களுக்குரிய
இடங்களுக்குச் சென்று தங்கள் பணியைச்
செய்யுமாறு நான் சொன்னேன்.* 12 *பிறகு
யூதாவிலுள்ள ஒவ்வொருவரும் தங்கள்
தானிய விளைச்சலில் பத்தில் ஒரு
பாகத்தையும் புதிய திராட்சைரசத்தையும்,
ஆலயத்துக்கான எண்ணெயையும் கொண்டு
வந்தனர். அவை சேமிப்பு அறைகளில்
வைக்கப்பட்டன.*

13 *நான் சேமிப்பு அறைகளின் பொறுப்
பாளர்களாகக் கீழ்க்கண்டவர்களை நியமித்
தேன். ஆசாரியனாகிய செலேமியா, வேத
பாரகனாகிய சாதோக், லேவியரில்
பெதாயா, இவர்களுக்குத் துணையாக மத்த
னியாவின் மகனான சக்கூரின் மகன்
ஆனான் ஆகியோரை நியமித்தேன். இவர்
களை நம்பமுடியும் என்று நான் அறிந்தேன்.
எனவே அவர்கள் உறவினர்களுக்குப் பங்
கிட்டு வழங்குகிற பொறுப்பு அவர்களுடை
யது.*

14 *தேவனே நான் செய்திருப்பவற்றை
நினைத்துப்பாரும். நான் தேவனுடைய ஆல
யத்திற்கும் அதன் சேவைகளுக்கும் நான்
உண்மையோடு செய்திருப்பதை மறக்க
வேண்டாம்.*

15 *யூதாவில் அந்தக் காலத்தில், ஜனங்கள்
ஓய்வுநாளில் வேலை செய்வதை நான்
பார்த்தேன். ஜனங்கள் திராட்சைரசத்தைச்
செய்ய திராட்சைகளை மிதிப்பதைப் பார்த்
தேன். ஜனங்கள் தானியங்களைக் கொண்டு
வந்து கழுதைகள் மீது சுமை ஏற்றுவதைப்
பார்த்தேன். ஜனங்கள் திராட்சைப்பழங்கள்,
அத்திப்பழங்கள், மற்றும் அனைத்துப்
பொருட்களையும் நகரத்தில் சுமந்து செல்
வதைப் பார்த்தேன். ஓய்வுநாளில் அவர்கள்
இவை எல்லாவற்றையும் எருசலேமிற்குள்
கொண்டுவந்தனர். எனவே, நான் இதைப்
பற்றி அவர்களை எச்சரித்தேன். நான்
அவர்களிடம் ஓய்வுநாளில் உணவை விற்கக்
கூடாது என்று சொன்னேன்.*

16 *எருசலேமில் தீரு நகரத்திலுள்ள சில
மனிதர்கள் வாழ்ந்துக்கொண்டிருந்தனர்.
அவர்கள் ஓய்வுநாளில் மீனையும் மற்றும்
சில பொருட்களையும் எருசலேமிற்குள்
கொண்டுவந்து விற்றனர். அவற்றை யூதர்கள்
வாங்கிக்கொண்டிருந்தனர்.* 17 *யூதாவில் உள்ள
முக்கியமான ஜனங்களிடம் நான் அவர்கள்
தவறு செய்துக்கொண்டிருக்கிறார்கள் என்று
சொன்னேன். நான் அந்த முக்கிய
மனிதர்களிடம், "நீங்கள் மிக மோசமான
செயலைச் செய்கிறீர்கள். நீங்கள் ஓய்வு
நாளை அழித்துக்கொண்டிருக்கிறீர்கள். நீங்
கள் ஓய்வுநாளை மற்ற நாட்களைப்போன்று
ஆக்கிவிட்டீர்கள்.* 18 *உங்கள் முற்பிதாக்கள்
இதைப்போன்றே செய்தார்கள் என்று
உங்களுக்குத் தெரியும். அதனால்தான் நமது
தேவன் எல்லாத் துன்பங்களையும் அழிவு
களையும் நமக்கும் இந்த நகருக்கும் கொண்டு
வந்தார். இப்பொழுது அதையே நீங்கள்
செய்துக்கொண்டிருக்கிறீர்கள். இதைவிட
அதிகமாக இஸ்ரவேலுக்குத் தீமைகள் ஏற்
படும். ஏனென்றால் நீங்கள் ஓய்வுநாளை
அசுத்தம் செய்து, இது ஒரு முக்கியமான
நாளல்ல என கருதுகிறீர்கள்" என்றேன்.*

19 *எனவே நான் இதைத்தான் செய்தேன்,
ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையிலும்
இருட்டுவதற்கு முன்னால், வாசல் காவ
லாளர்களிடம் எருசலேமின் கதவுகளை மூடி
தாழ்ப்பாள் போடுமாறு கட்டளையிட்டேன்.
ஓய்வுநாள் முடியும் வரை அவர்கள் கதவைத்*

---

**32 வது ஆண்டு** *கி.மு.* 432.

திறக்கக்கூடாது. வாசல்களில் நான் எனது
சொந்த மனிதர்கள் சிலரை நியமித்தேன்.
அவர்களுக்கு உறுதியாக ஓய்வுநாளில்
எருசலேமிற்குள் எந்த சுமையையும் கொண்
டுவரக்கூடாது என்று ஆணையிடப்பட்
டேன்.
20ஒன்று அல்லது இரண்டு தடவை
வியாபாரிகளும் விற்பனையாளர்களும்
எருசலேமிற்கு வெளியே இரவில் தங்கும்படி
ஏற்பட்டது, 21ஆனால் நான் அந்த
வியாபாரிகளையும் விற்பனையாளர்களை
யும் எச்சரிக்கை செய்தேன். அவர்களிடம்
நான், "இரவில் சுவருக்கு முன்னால்
தங்கவேண்டாம். நீங்கள் மீண்டும் இவ்வாறு
செய்தால் நான் உங்களைக் கைது
செய்வேன்" என்று கூறினேன் எனவே
அந்நாளிலிருந்து அவர்கள் ஓய்வுநாளில்
தங்கள் பொருட்களை விற்க வருவதில்லை.
22பிறகு நான் லேவியர்களிடம் தங்களை
பரிசுத்தமாக்க கட்டளையிட்டேன். அத
னைச் செய்தபிறகு அவர்கள் வாயில்களைக்
காக்கச் செல்லவேண்டும். ஓய்வுநாள் பரிசுத்த
மான நாளாக அனுசரிக்கப்பட்டது என்பதை
உறுதிப்படுத்த இது செய்யப்பட்டது.

தேவனே, நான் இவற்றையெல்லாம் செய்
ததற்காக என்னை நினைத்துப்பாரும். என்
னிடம் இரக்கமாக இரும். உமது பெரும்
அன்பை என்னிடம் காட்டும்.
23அந்நாட்களில், சில யூதர்கள் அஸ்தோத்,
அம்மோன், மோவாப் ஆகிய நாடுகளில்
உள்ள பெண்களை மணந்துக்கொண்டதைக்
கவனித்தேன். 24அத்திருமணங்களால் வந்த
குழந்தைகளில் பாதி பேருக்கு யூத
மொழியை எப்படி பேசுவது என்று தெரிய
வில்லை. அக்குழந்தைகள் அஸ்தோத்,
அம்மோன் அல்லது மோவாப் மொழிகளைப்
பேசின. 25எனவே நான் அந்த மனிதர்களிடம்
அவர்கள் தவறு செய்தார்கள் என்று
சொன்னேன். நான் அவர்களிடம் கடின
வார்த்தைகளைச் சொன்னேன். அத்தகைய
மனிதர் சிலரை நான் அடித்தேன். நான்
அவர்களின் தலை மயிரைப் பிடித்து
இழுத்தேன். நான் அவர்களை தேவனுடைய
பேரால் வாக்குறுதியளிக்குமாறு பலவந்தப்
படுத்தினேன். நான் அவர்களிடம், "நீங்கள்
அந்த ஜனங்களின் பெண்களை மணந்து
கொள்ளக் கூடாது. உங்கள் மகன்களை
அயல்நாட்டு ஜனங்களின் பெண்கள்
மணந்துகொள்ளும்படி விடக்கூடாது.
உங்கள் மகள்களை அயல்நாட்டு ஜனங்
களின் மகன்களை மணந்துகொள்ளும்படி
விடக்கூடாது. 26இதுபோன்ற திருமணங்கள்
சாலொமோனைப் பாவம் செய்யும்படி
செய்தது என்று உங்களுக்குத் தெரியும்.
அனைத்து நாடுகளிலும் சாலொமோனைப்
போன்ற பேரரசன் இல்லை. தேவன்
சாலொமோனை நேசித்தார். தேவன் சாலொ
மோனை இஸ்ரவேல் தேசத்தின் முழுவ
தற்கும் பேரரசனாகச் செய்தார். ஆனாலும்
சாலொமோன் வெளிநாட்டுப் பெண்களால்
பாவம் செய்யும்படி ஆயிற்று. 27இப்பொழுது
நீங்களும் இந்தப் பயங்கரமான பாவத்தைச்
செய்வதாக நான் கேள்விப்படுகிறேன்.
நீங்கள் தேவனுக்கு உண்மையுள்ளவர்களாக
இல்லை. நீங்கள் அயல்நாட்டுப் பெண்களை
மணந்துகொண்டிருக்கிறீர்கள்" என்றேன்.
28யொயதா, தலைமை ஆசாரியனாகிய
எலியாசிபின் மகன். யொயதாவின் மகன்க
ளில் ஒருவன் ஆரானிலுள்ள சன்பல்லாத்தின்
மருமகனாக இருந்தான். நான் அவனை இந்த
இடத்தைவிட்டுப் போகும்படி வற்புறுத்
தினேன். அவனை ஓடிவிடும்படி வற்புறுத்தி
னேன்.
29எனது தேவனே, அந்த ஜனங்களைத்
தண்டியும். அவர்கள் ஆசாரிய பதவியை
அசுத்தம் செய்கிறார்கள். அது முக்கிய
மில்லை என்பது போல் நடந்துக்கொள்
கிறார்கள். நீர் ஆசாரியர்களோடும், லேவியர்
களோடும் செய்த உடன்படிக்கைக்கு அவர்
கள் அடிபணிய மறுக்கிறார்கள். 30எனவே,
நான் ஆசாரியர்களையும், லேவியர்களையும்
சுத்தமாக்கினேன். வெளிநாட்டவர்களையும்,
அவர்களின் உபதேசங்களையும் எடுத்துப்
போட்டேன். நான் லேவியர்களுக்கும்,
ஆசாரியர்களுக்கும் அவர்களது கடமை
களையும், பொறுப்புகளையும் கற்றுக்
கொடுத்தேன். 31சரியான காலத்தில் ஜனங்கள்
அன்பளிப்பாக விறகையும் முதற்பலன்களை
யும் கொண்டுவருவதை உறுதிபடுத்தினேன்.

எனது தேவனே, இத்தகைய நல்ல காரி
யங்களைச் செய்ததற்காக என்னை நினை
வுக்கொள்ளும்.

# எஸ்தரின் சரித்திரம்

### வஸ்தி ராணி அரசனுக்கு கீழ்ப்படியமறுக்கிறாள்

1 அகாஸ்வேரு அரசனாக இருந்த காலத்தில்
இது நடைபெற்றது. அகாஸ்வேரு, இந்தியா
முதல் எத்தியோப்பியா வரையுள்ள 127
நாடுகளை ஆண்டான். 2 அரசன் அகாஸ்வேரு
சூசான் என்ற தலைநகரில் சிங்காசனத்
திலிருந்து அரசாண்டான்.
3 அகாஸ்வேருவின், மூன்றாவது ஆட்சி
யாண்டில், அவன் தனது அதிகாரிகளுக்கும்,
பிரபுக்களுக்கும் விருந்து கொடுத்தான். படை
அதிகாரிகளும், பெர்சியா மற்றும் மேதியா
விலுள்ள முக்கிய தலைவர்களும் அங்கே
இருந்தனர். 4 விருந்தானது 180 நாட்களுக்குத்
தொடர்ந்தன. அந்தக் காலம் முழுவதும்
அகாஸ்வேரு அரசன் தனது இராஜ்யத்தின்
செல்வச் சிறப்பைக் காட்டிக் கொண்டிருந்
தான். அவன் ஒவ்வொருவரிடம் தன் அரண்
மனையின் கம்பீரமான அழகையும், செல்வத்
தையும் காட்டிக்கொண்டிருந்தான். 5 அந்த
180 நாட்களும் முடிந்தபோது, அகாஸ் வேரு
அரசன் இன்னொரு விருந்தை ஏழு
நாட்கள் தொடர்ந்து கொடுத்தான். அந்த
விருந்து அரண்மனை தோட்டத் திற்குள்ளே
நடைபெற்றது. சூசான் தலை நகரத்தில்
உள்ள அனைத்து முக்கியமானவர்களும்,
முக்கியமற்றவர்களும் அழைக்கப்பட்டிருந்
தனர். 6 அந்த உள்தோட்டத்தில் அறையைச்
சுற்றி வெள்ளையும் நீலமுமான மெல்லிய
திரைகள் தொங்கின. அத்தொங்கல்கள்
வெண்கலத் தூண்களிலே, வெள்ளி
வளையங்களிலே மெல்லிய நூலும், சிவப்பு
நூலுமான கயிறுகளால் கட்டப்பட்டிருந்தன.
அங்கே பொன்னாலும், வெள்ளியாலும்
செய்யப்பட்ட இருக்கைகள் இருந்தன. அவை
சிவப்பும், நீலமும், வெள்ளையும், கறுப்
புமான கற்கள் பதித்திருந்த தளவரிசையின்
மேல் வைக்கப்பட்டிருந்தன. 7 பொற் கிண்
ணங்களில் திராட்சைரசம் கொடுக்கப்
பட்டது. ஒவ்வொரு கிண்ணமும் வித்தியாச
மாக இருந்தது! அங்கே முதல் தரமான
திராட்சைரசம் அரசர்களுக்கு ஏற்ற வகை
யில் தாராளமாகக் கொடுக்கப்பட்டது.
8 அரசன் தனது வேலைக்காரர்களுக்கு ஒரு
கட்டளை இட்டிருந்தான். ஒவ்வொரு
விருந்தாளியும் அவரது விருப்பம் போல்
திராட்சைரசத்தைக் குடிக்கட்டும் என்று
சொல்லியிருந்தான். திராட்சைரசம் பரிமாறு
பவன் அரசனுக்குக் கீழ்ப்படிந்தான்.
9 அரசனது அரண்மனையில் இராணி
வஸ்தியும் பெண்களுக்கு ஒரு விருந்து
கொடுத்தாள்.
10-11 விருந்தின் ஏழாவது நாளில், அகாஸ்
வேரு அரசன் திராட்சைரசத்தால் உச்சப்
போதையில் இருந்தான். அவன் ஏழு
பிரதானிகளுக்குக் கட்டளையிட்டான். அந்த
பிரதானிகள்: மெகுமான், பிஸ்தா,
அற்போனா, பிக்தா, அபக்தா, சேதார்,
கர்காஸ் ஆகியோர். அவன் இந்த ஏழு
பேரிடம் இராணி வஸ்தியை இராஜகிரீடம்
அணிவித்து அழைத்துவருமாறு கட்டளை
யிட்டான். அவள் அழகை முக்கியமான
ஜனங்களுக்கும் தலைவர்களுக்கும் காட்ட
வேண்டும் என்று அரசன் விரும்பினான்.
ஏனென்றால் அவள் மிகவும் அழகாக
இருந்தாள்.
12 ஆனால், அந்த வேலைக்காரர்கள் போய்
இராணி வஸ்தியிடம் அரசனின் கட்டளை
யைச் சொன்னதும் அவள் வர மறுத்தாள்.
அதனால் அரசன் மிகவும் கோபம்
கொண்டான். 13-14 சட்டம் மற்றும் தண்ட
னையைப்பற்றிய ஆலோசனைகளை தேர்ந்
தவர்களிடம் கேட்பது ராஜாவின் வழக்கம்.
எனவே, அரசன் அகாஸ்வேரு சட்டங்
களைப் புரிந்துகொண்ட ஞானிகளிடம்
பேசினான். அந்த ஞானிகள் அரசனுக்கு
நெருக்கமானவர்களாக இருந்தனர். அவர்
களின் பெயர்கள் வருமாறு: கர்ஷேனா,
சேதார், அத்மாதா, தர்ஷீஸ், மேரேஸ்,
மர்சேனா, மெமுகான் ஆகியோர். இவர்கள்
பெர்சியா மற்றும் மேதியாவிலுள்ள ஏழு
முக்கியமான அதிகாரிகள். அவர்களுக்கு
அரசனைப் பார்க்கச் சிறப்பு சலுகைகள்
உண்டு. அவர்கள் அரசாங்கத்தில் உயர்
அதிகாரிகளாக இருந்தனர். 15 அரசன்
அவர்களிடம், “இராணி வஸ்தியை என்ன
செய்யலாம் என்று சட்டம் கூறுகிறது?
அரசன் அகாஸ் வேருவின் கட்டளையை
பிரதானிகள் கொண்டு போனபோது அதற்கு
அவள் அடிபணியவில்லை” என்று
சொன்னான்.
16 பிறகு, மெமுகான் மற்ற அதிகாரிகள்
கவனித்துக் கொண்டிருக்கையில், “இராணி
வஸ்தி தவறு செய்தாள். அவள் அரசனுக்கு

எதிராகவும், எல்லா தலைவர்களுக்கு
எதிராகவும், அகாஸ்வேரு அரசனது
அரசாட்சியில் உள்ள எல்லா ஜனங்களுக்கு
எதிராகவும் தவறு செய்தாள். 17மற்ற
எல்லாப் பெண்களும் இராணி வஸ்தி
செய்ததைக் கேள்விப்படுவார்கள். பிறகு,
அவர்கள் தம் கணவர்களுக்கு அடிபணிவதை
நிறுத்துவார்கள். அவர்கள் தம் கணவர்
களிடம், 'அரசன் அகாஸ்வேரு இராணி
வஸ்தியை அழைத்துவருமாறு கட்டளை
யிட்டான். ஆனால் அவள் வர மறுத்து
விட்டாள்' என்பார்கள்.
18"இன்றைக்கு பெர்சியா மற்றும்
மேதியாவிலுள்ள தலைவர்களின் மனைவி
களும் இராணி செய்ததைக் கேள்விப்
பட்டிருக்கிறார்கள். அப்பெண்களும் இராணி
யின் செயலால் தூண்டப்படுவார்கள்.
அப்பெண்களும் அரசனது முக்கிய தலை
வர்களுக்கு அவ்வாறே செய்வார்கள்.
அதனால் மிகுதியான மதிப்பின்மையும்
கோபமும் பிறக்கும்.
19"எனவே, அரசனுக்கு விருப்பமானால்,
நான் ஒரு கருத்தைக் கூறுகிறேன். அரசன்
ஒரு அரச கட்டளையைக் கொடுக்கலாம்.
அது பெர்சியா மற்றும் மேதியாவிற்குச்
சட்டமாக எழுதப்படலாம். பெர்சியா
மற்றும் மேதியாவின் சட்டங்கள் மாற்ற
முடியாதவை. வஸ்தி மீண்டும் அரசன்
அகாஸ்வேருவுக்கு முன்னால் வரக்கூடாது
என்பதுதான் அரச கட்டளையாக இருக்க
வேண்டும். அதோடு அரசன் அவளைவிடச்
சிறந்த பெண்ணுக்கு இராணியின் உயர்
இடத்தைக் கொடுக்கவேண்டும். 20பிறகு
அரசனது கட்டளை அவனது பெரிய
நாடு முழுவதும் அறிவிக்கப்படும்போது,
பெரியோர் முதல் சிறியோர் வரையுள்ள
எல்லாப் பெண்களும் தம் கணவர்களை
மதிப்பார்கள்" என்று பதில் சொன்னான்.
21அரசனும் அவனுடைய முக்கிய அதி
காரிகளும் இந்த ஆலோசனையால் பெரிதும்
மகிழ்ந்தனர். எனவே அகாஸ்வேரு அரசன்
மெமுகானின் ஆலோசனையின்படிச் செய்
தான். 22அரசன் அகாஸ்வேரு தனது அரசி
லுள்ள அனைத்து பகுதிகளுக்கும் கடிதம்
அனுப்பினான். அவன் அக்கடிதங் களை
ஒவ்வொரு பகுதிக்கும் அதன் சொந்த
மொழியிலேயே எழுதி அனுப்பினான்.
அவன் அக்கடிதங்களை ஒவ்வொரு நாட்டிற்
கும் அதன் மொழியிலேயே எழுதி அனுப்
பினான். அக்கடிதங்கள் ஒவ்வொரு மனித
னின் மொழியிலும் அறிவிக்கப் பட்டது.
ஒவ்வொருவனும் தன் குடும்பத்தை ஆள்ப
வனாக இருக்கவேண்டும்.

### எஸ்தர், இராணி ஆகிறாள்

2 அகாஸ்வேரு அரசன் தன்னுடைய
கோபம் தணிந்த பிறகு, வஸ்தி செய்தி
ருந்ததை நினைத்துப்பார்த்தான். அவன்
அவளைப்பற்றிய கட்டளையை நினைத்துப்
பார்த்தான். 2பிறகு அரசனின் தனிப்பட்ட
வேலைக்காரர்களுக்கு ஒரு கருத்து இருந்தது.
அவர்கள், "அரசனுக்கு அழகான இளம்
கன்னிகளைத் தேடவேண்டும். 3அரசன்
தனது அரசின் ஒவ்வொரு நாட்டிலும்
ஒரு தலைவனைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.
பிறகு, ஒவ்வொரு தலைவனும், ஒவ்வொரு
அழகான இளம் கன்னிப்பெண்ணை சூசான்
தலைநகரத்திற்கு அழைத்துக்கொண்டு வர
வேண்டும். அப்பெண்கள் அரசனின்
பெண்கள் எனும் குழுவிற்குள் சேர்க்க
வேண்டும். அவர்கள் யேகாயின் வசத்தில்
ஒப்புவிக்கப்பட வேண்டும். அவன் அரச
னின் பிரதானி. அவனே பெண்களுக்கான
அதிகாரி. பிறகு அவர்களுக்கு அலங்காரப்
பொருட்களைக் கொடுக்கவேண்டும். 4பிறகு
அரசனின் கண்களுக்கு ஏற்றப்பெண்
வஸ்திக்குப் பதிலாகப்பட்டத்து ராணியாக
வேண்டும்" என்றார்கள். அரசனும் இந்தக்
கருத்தை விரும்பினான். எனவே, அதனை
ஒத்துக்கொண்டான்.
5இப்பொழுது அங்கே மொர்தெகாய்
என்னும் பெயருள்ள பென்யமீன் கோத்திரத்
திலுள்ள யூதன் ஒருவன் இருந்தான். அவன்
யாவீரின் மகன். யாவீர், கீசின் மகன்.
மொர்தெகாய், தலைநகரான சூசானில்
இருந்தான். 6மொர்தெகாய் பாபிலோன்
அரசன் நேபுகாத்நேச்சாரால் எருசலே
மிலிருந்து சிறைபிடிக்கப்பட்டவன். அவன்
யூத அரசனான எகோனியாவைச் சிறை
பிடித்தபோது, அக்குழுவில் இருந்தவன்.
7மொர்தெகாயிடம் அவனது சிறிய தகப்பன்
மகளாகிய அத்சாள் இருந்தாள். அவளுக்கு
தந்தையோ அல்லது தாயோ இல்லை.
எனவே, மொர்தெகாய் அவளைக் கவனித்து
வந்தான். அவளது தந்தையும், தாயும் மரித்த
போது, அவன் அவளை மகளாகத்
தத்தெடுத்தான். அத்சாள், எஸ்தர் என்றும்
அழைக்கப்பட்டாள். எஸ்தருக்கு அழகான
முகமும், பார்ப்பதற்கு ரூபவதியாகவும்
இருந்தாள்.
8அரசனது கட்டளையை கேட்டபோது
பலபெண்கள் தலைநகரமான சூசானுக்குக்
கொண்டுவரப்பட்டனர். அப்பெண்கள்
யேகாயின் பொறுப்பில் விடப்பட்டனர்.
எஸ்தரும் அவர்களுள் ஒருத்தி. எஸ்தர்
அரசனின் அரண்மனைக்கு அழைத்துச்
செல்லப்பட்டு யேகாயின் பொறுப்பில்
விடப்பட்டாள். யேகா அரசனது பெண்
களின் பொறுப்பை ஏற்றிருந்தான்.
9யேகாவுக்கு எஸ்தரைப் பிடித்தது. அவள்
அவனது விருப்பத்திற்குரியவளானாள்.
எனவே, யேகா விரைவாக எஸ்தருக்கு
அலங்கார பொருட்களையும், சிறப்பான
உணவையும் கொடுத்தான். அரண்மனை
யிலிருந்து யேகா ஏழு தாதிப் பெண்களைத்
தேர்ந்தெடுத்து எஸ்தருக்குக் கொடுத்தான்.

அரசனது பெண்கள் வாழ்கிற சிறப்பான
இடத்திற்கு எஸ்தரையும், அவளது ஏழு
தாதிப் பெண்களையும் இருக்கச்செய்தான்.
[10]எஸ்தர் யாரிடமும் தான் யூத குலத்தைச்
சேர்ந்தவள் என்று சொல்லவில்லை. அவள்
யாரிடமும் தனது குடும்பப் பின்னனியை
பற்றிச் சொல்லவில்லை. ஏனென்றால்,
மொர்தெகாய் அவ்வாறு சொல்லக்கூடாது
என்று சொல்லியிருந்தான். [11]ஒவ்வொரு
நாளும் அரசனது பெண்கள் இருக்கும்
இடத்திற்கு அருகில் மொர்தெகாய் உலாவி
வந்தான். எஸ்தர் எப்படி இருக்கிறாள்?
அவளுக்கு என்ன நடக்கிறது? என்பதை
அறிந்துக்கொள்ளவே அவன் அவ்வாறு
செய்தான்.
[12]அரசன் அகாஸ்வேருவின் முன்
போவதற்கு முன்னால், ஒரு பெண் செய்ய
வேண்டியது இதுதான்: அவள் பன்னிரண்டு
மாதங்கள் அழகு சிகிச்சை செய்யப்
பட்டிருக்க வேண்டும். அதாவது, ஆறு
மாதங்கள் வெள்ளைப் போளத் தைலத்தா
லும், ஆறு மாதம் சுகந்த வர்க்கங்களினாலும்
பல வகை அலங்காரங்களாலும், அழகு
செய்யப்பட்டிருக்க வேண்டும். [13]ஒரு பெண்
இப்படி அலங்கரிக்கப்பட்டு அரசனிடம்
போவாள். கன்னிமாடத்திலிருந்து தன்
னுடன் அரசனின் அரண்மனைக்குப்
போக, தனக்கு வேண்டுமென்று கேட்டவை
எல்லாம் கொடுக்கப்படும். [14]மாலையில்,
அப்பெண் அரசனின் அரண்மனைக்குச்
செல்லவேண்டும். காலையில் அவள்
இன்னொரு பகுதிக்குத் திரும்பவேண்டும்.
பிறகு, அவள் சாஸ்காசுடைய பொறுப்பில்
வைக்கப்படுவாள். சாஸ்காஸ் அரசனுடைய
பிரதானி. அவன் அரசனது ஆசைப்
பெண்களின்* அதிகாரி. அரசன் விரும்பி
அழைத்தால் தவிர ஒரு பெண் மீண்டும்
அரசனிடம் செல்லக்கூடாது. பிறகு, அரசன்
அவளது பேரைச் சொல்லி திரும்பவரும்படி
அழைக்கலாம்.
[15]எஸ்தருக்கு அரசனிடம் போகவேண்டிய
முறை வந்தபோது, அவள் எதையும்
கேட்கவில்லை. அவள் யேகா தன்னிடம்
எதை எடுத்துக் செல்லவேண்டும் என்று
கூறினானோ, அவற்றை மட்டும் கேட்டாள்.
அவன் அரசனின் பிரதானி. அரசனது
பெண்களின் பொறுப்பான அதிகாரி.
(எஸ்தர் மொர்தெகாயின் வளர்ப்பு மகள்.
அவனது சிறிய தகப்பனான அபியாயேலின்
மகள்) எஸ்தரைப் பார்க்கிற ஒவ்வொருவரும்
அவளை விரும்பினார்கள். [16]எனவே, எஸ்தர்
அரண்மனைக்கு அரசன் அகாஸ்வேருவிடம்
அழைத்துச் செல்லப்பட்டாள். இது, அவனது
ஏழாம் ஆட்சியாண்டில் தேபேத்மாதமாகிய
பத்தாம் மாதத்தில் நிகழ்ந்தது.

[17]அரசன், மற்றப் பெண்களைவிட
எஸ்தரை மிகுதியாக நேசித்தான். அவனுக்கு
அவளைப் பிடித்துப்போனது. அவன் மற்ற
பெண்களைவிட அவளை மிகுதியாக
ஏற்றுக்கொண்டான். எனவே, அகாஸ்வேரு
அரசன் எஸ்தரின் தலையில் கிரீடத்தை
அணிவித்து வஸ்தியின் இடத்தில் அவளைப்
புதிய அரசியாகச் செய்தான். [18]அரசன்
எஸ்தருக்காக ஒரு பெரிய விருந்தைக்
கொடுத்தான். இது அவனது முக்கியமான
தலைவர்களுக்கும், அதிகாரிகளுக்குமாக
இருந்தது. எல்லா நாடுகளுக்கும் அவன்
அன்று விடுமுறை வழங்கினான். அவன்
ஜனங்களுக்கு அன்பளிப்புகளைக் கொடுத்
தான். ஏனென்றால், அவன் ஒரு தாராளமான
குணமுடைய அரசன்.

## மொர்தெகாய் ஒரு தீயதிட்டத்தைப் பற்றி அறிகிறான்

[19]மொர்தெகாய் அரசனது வாசலுக்கு
அடுத்து, பெண்கள் இரண்டாவது முறை
கூடியபோது உட்கார்ந்திருந்தான். [20]எஸ்தர்
தான் யூதகுலத்தை சேர்ந்தவள் என்பதை
அதுவரை இரகசியமாக வைத்திருந்தாள்.
அவள் தனது குடும்பத்தைப்பற்றி யாரிடமும்
கூறவில்லை. அவ்வாறு செய்யும்படி
மொர்தெகாய் அவளுக்குச் சொல்லியிருந்
தான். அவள் மொர்தெகாய்க்குக் கீழ்ப்
படிந்தாள்.
[21]மொர்தெகாய் அரசனது வாசலை
அடுத்து உட்கார்ந்திருந்தபோது, இது
நடந்தது: பிக்தான், தேரேசு எனும் இரண்டு
அரசனது வாசல் காவல் அதிகாரிகள்
அரசன் மீது கோபங்கொண்டனர். அவர்கள்
அரசன் அகாஸ்வேருவை கொல்ல சதித்
திட்டமிட ஆரம்பித்தனர். [22]ஆனால், மொர்
தெகாய் அவர்களது திட்டத்தை அறிந்துக்
கொண்டு எஸ்தர் அரசியிடம் கூறினான்.
பிறகு, அரசி எஸ்தர் அதனை அரசனிடம்
கூறினாள். அவள் இத்தீய திட்டத்தை
அறிந்து சொன்னவன் மொர்தெகாய்
என்றும் கூறினாள். [23]பிறகு இந்த காரியம்
சோதிக்கப்பட்டது. மொர்தெகாய் சொன்னது
உண்மையென அறியப்பட்டது. அரசனைக்
கொல்ல சதித் திட்டமிட்ட இரு காவலர்
களும் கம்பத்தில் தூக்கிலிடப்பட்டனர்.
இவை அனைத்தும் அரசனுக்கு முன்பாக
அரசனது வரலாற்றுப் புத்தகத்தில் எழுதி
வைக்கப்பட்டது.

## யூதர்களை அழிப்பதற்கான ஆமானின் திட்டம்

3 இவை நிகழ்ந்த பிறகு, அகாஸ்வேரு
அரசன் ஆமானைக் கௌரவித்தான்.
ஆமான், அம்மெதாத்தாவின் மகன். இவன்
ஆகாகியன். அரசன் ஆமானுக்குப் பதவி
உயர்வு கொடுத்து மற்ற அதிகாரிகளைவிட
உயர் அதிகாரியாகச் செய்தான். [2]அரசனின்

---

**ஆசைப்பெண்கள்** ஒருவனுக்கு மனைவிகளைப் போலுள்ள பெண்கள்.

வாசலில் உள்ள அனைத்து அதிகாரிகளும்,
ஆமானுக்குப் பணிந்து வணங்கி மரியாதைச்
செய்தனர். அவ்வாறுதான் செய்யவேண்டும்
என்று அரசன் அவர்களுக்குக் கட்டளை
யிட்டிருந்தான். ஆனால் மொர்தெகாய்
அவனுக்குப் பணிந்து மரியாதை அளிக்க
மறுத்துவிட்டான். 3 பிறகு, அரச வாசலில்
உள்ள அரசனின் அதிகாரிகள் அவனிடம்,
“நீ ஏன் அரச கட்டளைபடி ஆமானுக்குப்
பணிந்து கீழ்ப்படிவதில்லை?” என்று
கேட்டனர்.

4 நாளுக்கு நாள் அந்த அரச அதிகாரிகள்
மொர்தெகாயிடம் பேசினார்கள். ஆனால்
மொர்தெகாய் கட்டளையின்படி ஆமானை
வணங்க மறுத்துவிட்டான். எனவே, அந்த
அதிகாரிகள் இதைப்பற்றி ஆமானிடம்
சொன்னார்கள். ஆமான், மொர்தெகாய்
விஷயத்தில் என்ன செய்யப்போகிறான்
என்பதை அறிய அவர்கள் விரும்பினார்கள்.
மொர்தெகாய் அவர்களிடம் நான் ஒரு
யூதன் என்று சொல்லியிருந்தான். 5 மொர்தெ
காய் தனக்கு பணிந்து வணங்குவதில்லை
என்பதையும், மரியாதை கொடுப்பதில்லை
என்பதையும் ஆமான் அறிந்தபோது, அவன்
மிகவும் கோபங்கொண்டான். 6 மொர்தெகாய்
ஒரு யூதன் என்பதை ஆமான் அறிந்திருந்
தான். ஆனால் அவன் மொர்தெ காயை
மட்டும் கொன்றுவிடுவதில் திருப்தி
யடையவில்லை. ஆமான், மொர்தெகாயின்
ஆட்களையும், அகாஸ்வேருவின் இராஜ்ஜி
யம் முழுவதுமுள்ள யூதர்களையும் அழிக்க
ஒரு வழிவேண்டும் என்று விரும்பினான்.
7 அகாஸ்வேருவின் பன்னிரண்டாவது
ஆட்சியாண்டின் முதல் மாதமான நிசானில்
ஆமான் ஒரு சிறப்பு மாதத்தையும் நாளையும்
சீட்டு* குலுக்கி எடுத்தான். பன்னிரண்டா
வது மாதமான ஆதார் தேர்ந்தெடுக்கப்
பட்டது. (அக்காலத்தில் சீட்டுக் குலுக்கல்
‘பூர்’ என்று அழைக்கப்பட்டது.) 8 பிறகு,
ஆமான் அகாஸ்வேரு அரசனிடம் வந்தான்.
அவன், “அகாஸ்வேரு அரசே, உமது
ஆட்சியிலுள்ள நாடுகளில் எல்லாம் ஒருவித
ஜனங்கள் சிதறிக்கிடக்கிறார்கள். அவர்கள்
மற்ற ஜனங்களிடமிருந்து தங்களைத்தனியே
பிரித்து வைத்துள்ளனர். அவர்களது
பழக்கவழக்கங்கள் மற்றவர்களிடமிருந்து
வேறுபட்டதாக உள்ளன. அவர்கள் அரச
னது சட்டங்களுக்கு கீழ்ப்படிவதில்லை.
அவர்களை உமது அரசாட்சியில் வாழ
அனுமதிப்பது அரசனாகிய உமக்கு
நல்லதல்ல.

9 இது அரசனுக்கு விருப்பமானதாக
இருந்தால், நான் ஒரு கருத்து சொல்கிறேன்.
அந்த ஜனங்களை அழிப்பதற்கு எனக்கு
ஒரு கட்டளை கொடும். நான் 10,000
வெள்ளிக்காசுகளை அரசனின் பொக்கிஷ
தாரரிடம் செலுத்திவிடுகிறேன். அப்
பணத்தை இவ்வேலையைச் செய்பவர்களுக்
குக் கொடுக்கலாம்” என்றான்.
10 எனவே, அரசன் தனது விரலில் உள்ள
முத்திரை மோதிரத்தைக் கழற்றி ஆமானிடம்
கொடுத்தான். ஆமான் ஆகாகியனான அம்
மெதாத்தாவின் மகன். ஆமான் யூதர்களின்
எதிரி. 11 பிறகு அரசன் ஆமானிடம்,
“பணத்தை வைத்துக்கொள். அந்த ஜனங்
களை என்ன செய்யவேண்டுமோ அதனைச்
செய்” என்றான்.

12 பிறகு, முதல் மாதத்தின் 13வது நாள்
அரசனின் செயலாளர்கள் அனைவரும்
அழைக்கப்பட்டனர். ஒவ்வொரு மாகாணத்
தில் உள்ள மொழிகளில் ஆமானின்
கட்டளைகளை எழுதினார்கள். அவர்கள்
அரசனது நாட்டு அதிகாரிகளுக்கும், பல்
வேறு மாகாண ஆளுநர்களுக்கும், பல்வகை
ஜனங்களின் தலைவர்களுக்கும், எழுதினார்
கள். அரசன் அகாஸ்வேருவின் அதிகாரத்
தின்படியும் அவனது சொந்த மோதிரத்தின்
முத்திரையிட்டும் அவர்கள் கடிதம் எழுதி
னார்கள்.

13 தூதுவர்கள் அரசனது அனைத்து
மாகாணங்களுக்கும் கடிதங்களைக் கொண்டு
சென்றனர். அக்கடிதத்தில் யூதர்கள் அனை
வரையும் முழுமையாக அழிக்கவும், கொல்ல
வும் அரசனது கட்டளை இருந்தது. அதாவது
இளைஞர்கள், முதியவர்கள், பெண்கள்,
சிறுபிள்ளைகள் அனைவரையும் அழிக்க
வேண்டும். ஒரே நாளில் யூதர்கள் அனை
வரையும் கொல்லவேண்டும் என்று
கட்டளை இருந்தது. அந்நாளும் ஆதார்
எனும் பன்னிரண்டாவது மாதத்தின் 13வது
நாளாக இருக்கவேண்டும். யூதர்களுக்குரிய
உடைமைகளை எடுத்துக்கொள்ளவேண்டும்
என்றும் கட்டளை இருந்தது.

14 கடிதத்தின் ஒரு பிரதி சட்டமாக்கப்
படுவதற்குக் கொடுக்கப்பட்டு அவனது
ஆட்சிக்குள்ளிருந்த அனைத்து மாகாணங்
களிலும் சட்டமாக்கப்பட்டது. அனைத்து
ஜனங்களுக்கும் இது அறிவிக்கப்பட்டது.
பிறகு அந்நாளுக்காக ஜனங்கள் அனைவரும்
தயாராக இருப்பார்கள். 15 அரசனது கட்டளை
யோடு தூதுவர்கள் விரைந்துக் கொண்டி
ருந்தனர். அந்த கட்டளை தலை நகரமான
சூசானில் கொடுக்கப்பட்டது. அரசனும்,
ஆமானும் குடித்துக் கொண்டிருந்தார்கள்.
ஆனால் சூசான் நகரம் குழம்பிக் கொண்டி
ருந்தது.

### மொர்தெகாய் உதவிக்காக எஸ்தரை தூண்டுகிறான்

4 நடந்த அனைத்தையும் மொர்தெகாய்
கேள்விப்பட்டான். யூதர்களுக்கு எதி

---

***சீட்டு*** *மரக்கட்டைகள், கற்கள் அல்லது எலும்புத் துண்டுகள் ஆகியவை முடிவெடுக்கும் தாயக் கட்டைகளாகப் பயன்படுத்தப்பட்டன. நீதி.* 16:33.

ரான அரசனது கட்டளையைக் கேட்டதும்
அவன் தனது ஆடையைக் கிழித்தான்.
துக்கத்திற்கு அடையாளமான ஆடையை
அணிந்து தலையில் சாம்பலை போட்டுக்
கொண்டான். பிறகு அவன் நகரத்திற்குள்
உரத்தக்குரலில் அழுதவண்ணம் சென்றான்.
2 ஆனால், மொர்தெகாய் அரசனது வாசல்
வரைதான் போனான். துக்கத்திற்குரிய
ஆடையை அணிந்திருந்த எவரையும் வாச
லில் நுழைய அனுமதிக்கமாட்டார்கள்.
3 எல்லா நாடுகளிலும் அரசனது கட்டளை
போய்ச்சேர்ந்தது. அதனால் யூதர்களிடம்
அழுகையும், துக்கமும் அதிகரித்தன.
அவர்கள் உரத்த அழுகையுடன் உபவாசத்
தை கடைப்பிடித்தனர். பல யூதர்கள்
துக்கத்திற்கான ஆடையை அணிந்தும்,
தலைகளில் சாம்பலைப் போட்டுக்கொண்டும்
தரையில் விழுந்துகிடந்தனர்.

4 எஸ்தரின் பெண் வேலைக்காரிகளும்,
பிரதானிகளும் வந்து அவளிடம் மொர்தெகா
யைப்பற்றிச் சொன்னார்கள். அது எஸ்தர்
அரசியைக் கலங்கவும் துக்கப்படவும்
வைத்தது. அவள் அவனுக்குத் துக்கத்திற்
குரிய ஆடையை எடுத்துவிட்டு அணிந்து
கொள்ள வேறு ஆடைகளைக் கொடுத்து
அனுப்பினாள். ஆனால், அவன் அந்த
ஆடைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. 5 பிறகு,
எஸ்தர் ஆத்தாகை அழைத்தாள். ஆத்தாகு
அரசனின் பிரதானிகளுள் ஒருவன். அவன்
அவளுக்குச் சேவைச் செய்வதற்காகத் தேர்ந்
தெடுக்கப்பட்டான். மொர்தெகாயை
அழவைத்து துக்கப்படுத்தியது எதுவென
அறிந்துவரும்படி அவள் அவனுக்கு
கட்டளையிட்டாள். 6 எனவே, அவன்
வெளியே போய் வாசலுக்கு முன்னால்
திறந்த வெளியில் மொர்தெகாய் இருக்கும்
இடத்தை அடைந்தான். 7 பிறகு, மொர்தெகாய்
ஆத்தாகிடம் அவனுக்கு ஏற்பட்டதைப்பற்றி
சொன்னான். அதோடு அவன் ஆத்தாகிடம்
ஆமான் யூதர்களைக் கொல்வதற்கு எவ்
வளவு பணம் அரசனின் பொக்கிஷ
சாலைக்குக் கொடுப்பதாக வாக்களித்
துள்ளான் என்பதையும் சொன்னான். 8 மொர்
தெகாய் ஆத்தாகிடம் யூதர்களைக் கொல்வ
தற்குரிய அரசனது கட்டளைப் பிரதி
களையும் கொடுத்தான். அக்கட்டளை
சூசான் தலைநகரம் முழுவதும் போயிருந்
தது. அவன் ஆத்தாகிடம், அதனை எஸ்த
ருக்குக் காட்டி எல்லாவற்றையும் சொல்லும்
படிக் கூறினான். எஸ்தர் அரசனிடம்
சென்று, அரசனிடம் மொர்தெகாய்க்கும்,
அவளது ஜனங்களுக்கும் இரக்கம் காட்டிக்
காக்குமாறு வேண்டிக்கொள்ளச் சொன்
னான்.

9 ஆத்தாகு எஸ்தரிடம் போய் மொர்தெ
காய்சொன்னவற்றையெல்லாம் சொன்னான்.
10 பிறகு, எஸ்தர் ஆத்தாகிடம், மொர்
தெகாயிடம் சொல்லுமாறு சொல்லியனுப்
பினது இதுவே: 11 “மொர்தெகாய், அரசனின்
தலைவர்கள் அனைவரும் அரசனது
நாடுகளில் உள்ள ஜனங்கள் அனைவரும்
இதனை அறிவார்கள். அரசனிடம் ஒரு சட்டம்
உள்ளது. அதாவது, ஒரு ஆணோ,
பெண்ணோ அழைக்கப்படாமல் அரசனிடம்
போகக்கூடாது. போனால், அவன் மரணத்
திற்குள்ளாவான். அந்த ஆள் மீது அரசனது
பொற் செங்கோல்* நீட்டப்பட்டால் ஒழிய
அவன் அச்சட்டத் திலிருந்து தப்பமுடியாது.
அரசன் அவ்வாறு செய்தால், பிறகு
அவனது உயிர் காப்பாற்றப்படும். 30
நாட்களாக நான் அரசனைப் போய் பார்க்க
அழைக்கப்படவில்லை” என்று சொல்லச்
சொன்னாள்.

12-13 எஸ்தரின் செய்தி மொர்தெ காய்க்குக்
கொடுக்கப்பட்டது. மொர்தெகாய் அவளது
செய்தியைப் படித்து விட்டு, அவன்
அவளுக்குப் பதில் அனுப்பினான். அதில்,
“எஸ்தர், நீ அரசனது அரண்மனையில்
வாழ்வதால் யூத பெண்ணாகிய நீ மட்டும்
தப்பித்துக்கொள்ளலாம் என்று நினைக்
காதே. 14 நீ இப்போது அமைதியாக இருந்
தால், யூதர்களுக்கான உதவியும் விடு
தலையும் வேறு இடத்திலிருந்து வரும்.
ஆனால் நீயும் உனது தந்தையின் குடும்பமும்
அழியும். யாருக்குத் தெரியும்? ஒரு வேளை
நீ இப்படிப்பட்ட காலத்தில் உதவுவதற்
காகவே இராணியாகத் தேர்ந்தெடுக்கப்
பட்டிருக்கலாம்” என்று எழுதியிருந்தான்.
15-16 பிறகு, எஸ்தர் மொர்தெகாய்க்கு இந்தப்
பதிலை அனுப்பினாள்: “மொர்தெகாய்,
சூசானிலுள்ள எல்லா யூதர்களையும் ஒன்று
சேர்த்து எனக்காக உபவாசம் இருங்கள்.
மூன்று நாட்கள் இரவும் பகலும் உண்ணா
மலும் குடிக்காமலும் இருங்கள். நானும்
உங்களைப் போன்றே உபவாசம் இருப்பேன்.
என் வேலைக்காரப் பெண்களும் உபவாசம்
இருப்பார்கள். நான் உபவாசம் இருந்த
பிறகு அரசனிடம் செல்வேன். அரசன்
அழைக்காமல் போவது என்பது சட்டத் திற்கு
எதிரானது என்று எனக்குத் தெரியும்.
ஆனால் நான் எவ்வாறாகிலும் செய்வேன்.
நான் மரித்தால் மரிக்கிறேன்.”

17 எனவே, மொர்தெகாய் வெளியே போ
னான். அவன் எஸ்தர் சொன்னபடி
எல்லாவற்றையும் செய்தான்.

## எஸ்தர் அரசனிடம் பேசுகிறாள்

5 மூன்றாவது நாள், எஸ்தர் அவளுக்குரிய
அரச உடைகளை அணிந்துக் கொண்
டாள். பிறகு, அவள் அரசனது அரண்மனை
உட்பகுதிக்குள் போய் நின்றாள். அப்பகுதி
அரசனது சபைக்கு முன்னால் இருந்தது.
அரசன் தனது சிங்காசனத்தில் உட்கார்ந்

---

**செங்கோல்** ஒரு அரசன் தனது கையில் வைத்திருக்கிற சிறப்பான கோல்.

திருந்தான். அவன் அரண்மனை வாசலுக்கு
எதிரான கொலு மண்டபத்தில் இருந்தான்.
2 பிறகு, அரசன் எஸ்தர் அரசி முற்றத்தில்
நிற்பதைப் பார்த்தான். அவன் அவளைப்
பார்த்தபோது மகிழ்ச்சியடைந்தான். அத
னால், அவன் அவளை நோக்கி தனது
கையிலுள்ள செங்கோலை நீட்டினான்.
எனவே, எஸ்தர் அந்த அறைக்குள் சென்று
அரசன் அருகில் போனாள். பிறகு அவள்
அரசனது பொற் செங்கோலின் முனையைத்
தொட்டாள்.

3 பிறகு அரசன், “எஸ்தர் அரசியே, நீ
விரும்புகிறது என்ன? நீ என்னிடம் என்ன
வேண்டுமென கேட்கிறாய்? நீ என்ன
கேட்டாலும் நான் உனக்குத் தருவேன்.
எனது பாதி இராஜ்யம் கேட்டாலும்
தருவேன்” என்றான்.

4 அதற்கு எஸ்தர், “நான் உங்களுக்கும்
ஆமானுக்கும் ஒரு விருந்து ஏற்பாடு
செய்திருக்கிறேன். இன்று அந்த விருந்துக்கு
நீங்களும் ஆமானும் வரமுடியுமா?” என்று
கேட்டாள்.

5 பிறகு அரசன், “ஆமானை விரைவாக
அழைத்து வா. எனவே எஸ்தர் என்ன
கேட்கிறாளோ அதன்படிச் செய்வோம்”
என்றான்.

எனவே, அரசனும் ஆமானும் எஸ்தர்
தயார்செய்த விருந்துக்குப் போனார்கள்.
6 அவர்கள் திராட்சைரசம் குடித்துக் கொண்டி
ருக்கும்போது அரசன் மீண்டும் எஸ்தரிடம்,
“இப்போது எஸ்தரே, என்னிடம் நீ என்ன
கேட்க விரும்புகிறாய்? நான் அதனை
உனக்குக் கொடுப்பேன். நீ என்ன
விரும்புகிறாய்? நீ என்ன விரும்பினாலும்
அதனை நான் உனக்குக் கொடுப்பேன். நான்
எனது பாதி இராஜ்யம் வரை கொடுப்பேன்”
என்றான். 7 எஸ்தர், “இதுதான் நான்
உம்மிடம் கேட்க விரும்பியது. 8 அரசன்
எனக்கு ஆதரவு கொடுத்தால், அரசன்
என்னிடம் தயவாக இருந்தால், அரசனும்
ஆமானும் நாளையும் வரவேண்டும். நாளை
அரசனுக்கும் ஆமானுக்கும் இன்னொரு
விருந்து ஏற்பாடு செய்வேன். அப்பொழுது,
நான் உண்மையில் என்ன விரும்புகிறேன்
என்று சொல்வேன்” எனப் பதிலுரைத்தாள்.

### மொர்தெகாய் மீது ஆமானின் கோபம்

9 அரசனது வீட்டைவிட்டு ஆமான்
மிகவும் மகிழ்ச்சியோடு சென்றான். அவன்
நல்ல மனநிலையில் இருந்தான். ஆனால்,
அவன் மொர்தெகாயை அரசனது வாசலில்
பார்த்ததும் அவனுக்கு மொர்தெகாய் மீது
கோபம் வந்தது. ஆமான் மொர்தெகாய் மீது
மிகுந்த கோபமடைந்தான். ஏனென்றால்,
அவன் ஆமான் நடந்து வரும்போது எவ்வித
மரியாதையையும் தரவில்லை. மொர்தெகாய்
ஆமானைக் கண்டு பயப்படவில்லை. அது
அவனை மேலும் கோபத்திற்குள்ளக்கிற்று.
10 ஆனால் ஆமான் தனது கோபத்தை
அடக்கிக்கொண்டு வீட்டிற்குப் போனான்.
பிறகு, ஆமான் தனது நண்பர்களையும்,
மனைவி சிரேஷையும் அழைத்தான். 11 தான்
எவ்வளவு செல்வமுடையவன் என்று
பெருமையோடு பேச ஆரம்பித்தான். அவன்
தனது பல மகன்களைப் பற்றியும் அரசன்
எவ்வழியில் எல்லாம் தன்னை பெருமை
படுத்துகிறான் என்பதைப்பற்றியும் பெருமை
யோடு பேசினான். மற்ற அதிகாரிகளை விட
தன்னை எவ்வளவு உயர்ந்த பதவியில்
வைத்திருக்கிறான் என்பதையும் பெருமை
யோடு பேசினான். 12 ஆமான், “அதுமட்டு
மல்ல, அரசி எஸ்தர் அரசனுக்குக் கொடுத்த
விருந்தில் என்னை மட்டுமே அழைத்திருந்
தாள். அவள் நாளை மீண்டும் விருந்துக்கு
வருமாறு அழைத்தாள். 13 ஆனால், இவை
யாவும் என்னை மகிழ்ச்சியடைய செய்ய
வில்லை. அந்த யூதனான மொர்தெகாய்
அரசனின் வாசலில் உட்கார்ந்திருப்பதைக்
காணும்போது, உண்மையில் எனக்கு
மகிழ்ச்சி இல்லை” என்று சொன்னான்.

14 பிறகு ஆமானின் மனைவி சிரேஷ்
மற்றும் நண்பர்கள் ஒரு கருத்தைச் சொன்
னார்கள். அவர்கள், “யாராவது ஒருவரை
அவனைத் தூக்கிலிட கம்பம் கட்டச் சொல்.
அதனை 75 அடி உயரமுள்ளதாகச் செய்.
பிறகு, காலையில் மொர்தெகாயை அதில்
தூக்கில் போடுமாறு அரசனைக் கேள்.
பிறகு, அரசனோடு விருந்துக்குப்போ.
அப்போது உன்னால் மகிழ்ச்சியோடு இருக்க
முடியும்” என்றனர்.

ஆமான் இக்கருத்தை விரும்பினான்.
எனவே, அவன் சிலரிடம் தூக்கு மரக் கம்பம்
செய்யுமாறு கட்டளையிட்டான்.

### மொர்தெகாய் கௌரவிக்கப்படுகிறான்

6 அதே இரவில், அரசனால் தூங்க
முடியவில்லை. எனவே, அவன் ஒரு
வேலைக்காரனிடம் வரலாற்று புத்தகத்தைக்
கொண்டுவந்து வாசிக்கும்படி கட்டளை
யிட்டான். (அரசர்களது வரலாற்று புத்தகத்
தில் அரசர்களின் ஆட்சியில் நடை பெற்ற
வற்றின் பட்டியல் இருந்தது.) 2 வேலைக்
காரன் அரசனிடம் அதை வாசித்தான்.
அவன் அரசன் அகாஸ்வேருவை கொல்
வதற்கான தீய திட்டத்தையும் வாசித்தான்.
அது மொர்தெகாய் கண்டுபிடித்த பிக்தானா
மற்றும் தேரேசின் திட்டமாகும். அந்த
இரண்டு பேரும் அரசனது வாசல் கதவை
காக்கிற அதிகாரிகள். அவர்கள் அரசனைக்
கொல்லவேண்டும் எனத் திட்டம் போட்ட
னர். ஆனால் மொர்தெகாய் அத்திட்டத்தைப்
பற்றி அறிந்து அதனை யாரோ ஒருவரிடம்
சொன்னான்.

3 அதற்கு அரசன், “என்ன சிறப்பும்
பெருமையும் இதற்காக மொர்தெகாய்க்குக்

கொடுக்கப்பட்டிருக்கிறது?” என்று கேட்
டான்.
வேலைக்காரர்கள் அரசனிடம், “மொர்
தெகாய்க்கு எதுவும் செய்யப்படவில்லை”
என்றனர்.
4அப்போது, அரசனது அரண்மனையின்
வெளிப்பகுதியில் ஆமான் நுழைந்தான்.
அவன் தான் கட்டிய தூக்கு மரத்தில்
மொர்தெகாயைத் தூக்கில் போடுவதற்காக
அரசனைக் கேட்கவந்தான். அவன் முற்றத்
தில் வரும்போது அரசன், “இப்போது
முற்றத்தில் யார் இருக்கிறார்கள்?” என்று
கேட்டான். 5அரசனது வேலைக்காரர்கள்
“முற்றத்தில் ஆமான் நின்றுக் கொண்டிருக்
கிறார்” என்றார்கள்.
எனவே அரசன், “அவனை அழைத்து
வாருங்கள்” என்றான்.

6ஆமான் உள்ளே வந்தபோது, அரசன்
அவனிடம், “ஆமான், அரசன் பெருமைப்
படுத்த விரும்புகிற ஒருவனுக்கு என்னச்
செய்யலாம்?” என்று கேள்வி கேட்டான்.
ஆமான் தனக்குள் இப்படியாக நினைத்துக்
கொண்டான். “என்னை விட அதிகமாக
பெருமைபடுத்தும்படி அரசன் விரும்பு
கிறவன் யாராக இருக்க முடியும்? அரசன்
என்னைப் பெருமைபடுத்துவதைப் பற்றியே
உறுதியாகப் பேசுகிறான்.”
7ஆகையால், ஆமான் அரசனுக்கு,
“அரசன் பெருமைபடுத்த வேண்டும் என
விரும்புகிறவனுக்கு இதனைச் செய்யும்:
8அரசன் அணிகிற உயர்ந்த ஆடையைக்
கொண்டுவாருங்கள். அரசன் ஏறிச் செல்கிற
குதிரையையும் கொண்டு வாருங்கள். அவர்
தலையில் வைக்கிற அரசமுடியையும்
கொண்டுவாருங்கள். 9பிறகு, அந்த ஆடையும்
குதிரையும் அரசனது முக்கியமான தலை
வனின் கையில் கொடுக்கப்பட வேண்டும்.
அரசன் பெருமைபடுத்த விரும்புகிற மனி
தனை அலங்கரித்து, குதிரையின் மேலேற்றி
நகரவீதியில் உலா வரும்படி விடவேண்டும்.
அரசனின் முக்கிய தலைவன் அந்த மனி
தனை குதிரை மீது நகர வீதியில் அழைத்து
வரும்போது, ‘இதுபோலவே அரசன்
பெருமைபடுத்த விரும்புகிறவன் நடத்தப்பட
வேண்டும்’ என்று அறிவிக்க வேண்டும்”
என்று பதில் சொன்னான்.
10அரசன் ஆமானிடம், “வேகமாகப்போ”
என கட்டளையிட்டு, “ஆடையையும்,
குதிரையையும் கொண்டுவா. இதனை நீ
சொன்னபடி யூதனான மொர்தெகாய்க்குச்
செய். மொர்தெகாய் அரசனது வாசலருகில்
உட்கார்ந்துக்கொண்டிருக்கிறான். நீ சொன்ன
படி எல்லாவற்றையும் செய்” என்றான்.
11எனவே ஆமான் ஆடையையும், குதிரை
யையும் எடுத்தான். ஆடையை மொர்
தெகாய்க்கு அணிவித்தான். பிறகு,
அவனைக் குதிரையில் உட்கார வைத்து
நகரவீதிகளில் உலா கொண்டுபோனான்.
ஆமான் மொர்தெகாய் பற்றி, “இதுபோல்
தான் அரசன் பெருமைப்படுத்த விரும்புகிற
மனிதன் நடத்தப்பட வேண்டும்” என்று
அறிவித்தான்.
12பிறகு, மொர்தெகாய் அரசனது
வாசலுக்குத் திரும்பிப்போனான். ஆனால்
ஆமான் வீட்டிற்கு விரைவாகப் போனான்.
அவன் தன் தலையை மூடிக்கொண்டான்.
ஏனென்றால், அவன் சஞ்சலமும் அவமான
மும் அடைந்தான். 13பிறகு, ஆமான் தன்
மனைவி சிரேஷையிடமும் நண்பர்கள்
அனைவரிடமும் தனக்கு ஏற்பட்டதை
யெல்லாம் சொன்னான். ஆமானின் மனைவி
யும் ஆட்களும் அவனுக்கு ஆலோசனைச்
சொன்னார்கள். அவர்கள், “மொர்தெகாய்
யூதனாக இருப்பின் நீ வெல்லமுடியாது. நீ
ஏற்கனவே வீழ்ச்சியடைய ஆரம்பித்து
விட்டாய். உறுதியாக நீ அழிக்கப்படுவாய்”
என்றனர்.
14இவ்வாறு அவர்கள் ஆமானுடன் பேசிக்
கொண்டிருக்கும்போது, அரசனின் பிரதானி
கள் ஆமானின் வீட்டிற்கு வந்தார்கள்.
எஸ்தர் ஏற்பாடு செய்த விருந்துக்கு
வரும்படி ஆமானை அவர்கள் விரைவு
படுத்தினார்கள்.

### ஆமான் தூக்கிலிடப்படுகிறான்

7 எனவே, அரசனும் ஆமானும் அரசி
எஸ்தரோடு விருந்து உண்ணச் சென்ற
னர். 2பிறகு இரண்டாம் நாள் விருந்தில்
அவர்கள் திராட்சைரசம் குடிக்கும் போது,
அரசன் மீண்டும் அரசியிடம் கேள்வி
கேட்டான். அவன், “எஸ்தர் அரசியே, நீ
என்னிடம் என்ன கேட்க விரும்புகிறய்?
எதை வேண்டுமானாலும் கேள். அது
உனக்குக் கொடுக்கப்படும். உன்னுடைய
விருப்பம் என்ன? எனது நாட்டில் பாதி
வேண்டுமானாலும் நான் உனக்குக்
கொடுப்பேன்” என்றான்.
3பிறகு, எஸ்தர் அரசி, “அரசே, நீர்
என்னை விரும்பினால், இது உமக்கு
விருப்பமானால், என்னை வாழவிடுங்கள்.
எனது ஜனங்களையும் வாழவிடுங்கள்
என்று கேட்கிறேன். அதுதான் உம்மிடம்
வேண்டுகிறேன். 4ஏனென்றால், நானும்
எனது ஜனங்களும் அழியவும் கொல்லப்
படவும் விற்கப்பட்டோம். அடிமைகளாக
விற்கப்பட்டால் கூட நான் மௌனமாக
இருப்பேன். ஏனென்றால் அது அரசனைத்
துன்புறுத்துகிற ஒரு பிரச்சினையாக இருக்க
முடியாது” என்றாள்.
5பிறகு அரசன் அகாஸ்வேரு, எஸ்தர்
அரசியிடம், “இதனை உனக்குச் செய்தவன்
யார்? உனது ஜனங்களுக்கு இத்தகைய
கொடுமையைச் செய்ய துணிந்த மனிதன்
எங்கே இருக்கிறான்?” என்று கேட்டான்.

[6]எஸ்தர், "எங்களுக்கு எதிரானவன்,
எங்கள் பகைவன் இந்த கெட்ட ஆமான்
தான்" என்றாள்.
பிறகு, அரசன் மற்றும் அரசி முன்னால்
ஆமான் திகில் அடைந்தான். [7]அரசன்
மிகவும் கோபம் அடைந்தான். அவன்
எழுந்து திராட்சைரச விருந்தை விட்டு,
தோட்டத்திற்குள் சென்றான். ஆனால்
ஆமான் உள்ளே இருந்து எஸ்தர் அரசியிடம்
தன் உயிரைக் காப்பாற்றுமாறு கெஞ்சி
னான். அவன் தன் உயிருக்காக மன்றாடி
னான். ஏனென்றால், அவனைக் கொல்லு
மாறு ஏற்கனவே அரசன் முடிவுச் செய்து
விட்டதை அவன் அறிந்தான். [8]அரசன்
தோட்டத்திலிருந்து திரும்பி விருந்து
அறைக்குள்ளே நுழையும்போது, அரசி
எஸ்தர் உட்கார்ந்திருக்கிற மெத்தை யில்
ஆமான் விழுந்து கிடந்தான். அரசன் மிகவும்
கோபமான குரலில், "நான் இந்த வீட்டில்
இருக்கும்போதே நீ அரசியைத் தாக்கு
கிறாயோ?" எனக் கேட்டான்.

அரசன் இவ்வாறு சொன்ன உடனேயே
வேலைக்காரர்கள் வந்து ஆமானின் முகத்தை
மூடினார்கள். [9]பிரதானிகளில் ஒருவனான
அரசனுக்குச் சேவைச் செய்பவனின் பெயர்
அற்போனா. அவன் அரசனிடம், "ஆமானின்
வீட்டின் அருகில் 75 அடி உயரத்தில்
ஒரு தூக்கு மரம் கட்டப்பட்டுள்ளது. அதில்
மொர்தெகாயைத் தூக்கிலிடவேண்டும் என்
றே ஆமான் அதைக் கட்டினான். மொர்
தெகாய் உமக்கு உதவிச் செய்த ஆள்.
உம்மைக் கொல்லத் திட்டமிட்டத் தீயவர்
களைப்பற்றி உமக்குச் சொன்னவன்"
என்றான்.
அரசன், "ஆமானை அதே மரத்தில்
தூக்கில் போடுங்கள்" என்றான்.
[10]எனவே, அவர்கள் ஆமானை அவன்
மொர்தெகாய்க்காக கட்டிய தூக்கு மரத்தில்
போட்டனர். பிறகு அரசன் தன் கோபத்தை
நிறுத்தினான்.

### யூதர்களுக்கு உதவும்படியான அரசக் கட்டளை

8 அதே நாளில், அகாஸ்வேரு அரசன்,
எஸ்தர் அரசியிடம் யூதரின் எதிரியாக
இருந்த ஆமானின் அத்தனை உடைமைக
ளையும் கொடுத்தான். எஸ்தர், அரசனிடம்
மொர்தெகாய் தனது உறவினன் என்று
சொன்னாள். பிறகு மொர்தெகாய் அரச
னைப் பார்க்கவந்தான். [2]அரசன் ஆமானிட
மிருந்து தனது மோதிரத்தை வாங்கிவைத்
திருந்தான். அவன் தன் விரலிலிருந்து
மோதிரத்தை எடுத்து மொர்தெகாயிடம்
கொடுத்தான். பிறகு எஸ்தர், ஆமானுக்குச்
சொந்தமான அனைத்துக்கும் மொர்தெ
காயைப் பொறுப்பாளியாக நியமித்தாள்.

[3]பிறகு எஸ்தர் மீண்டும் அரசனிடம்
பேசினாள். அவள் அரசனின் காலில்
விழுந்து அழத்தொடங்கினாள். ஆகாகிய
னான ஆமானின் தீயத்திட்டத்தை நீக்கும்படி
அவள் மன்றாடினாள். ஆமான் யூதர்களை
அழிக்கத் திட்டமிட்டிருந்தான்.
[4]பிறகு அரசன் தனது பொற் செங்கோலை
எஸ்தரிடம் நீட்டினான். எஸ்தர் எழுந்து
அரசன் முன்னால் நின்றாள். [5]பிறகு எஸ்தர்,
"அரசே, நீர் என்னை விரும்புவதானால்,
உமக்கும் மகிழ்ச்சியானால் எனக்காக இத
னைச் செய்யும். இது நல்ல யோசனை
என்று நீர் நினைத்தால் இதனைச் செய்யும்.
அரசன் என்னோடு சந்தோஷமாக இருக்கிற
தானால், ஆமான் அனுப்பிய கட்டளையை
விலக்கும்படி ஒரு கட்டளை எழுதி
அனுப்பும். அரசனின் அனைத்து நாடுகளி
லும் உள்ள யூதர்களை அழித்துவிட
வேண்டுமென்று ஆகாகியனான ஆமான்
ஒரு திட்டம் வைத்து அதை நடத்திட
கட்டளை அனுப்பினான். [6]நான் அரசரை
மன்றாடிக் கேட்கிறேன். ஏனெனில் என்
ஜனங்களுக்கு இத்தகைய பயங்கரம் ஏற்படு
வதை என்னால் தாங்கிக்கொள்ள முடியாது.
எனது குடும்பம் கொல்லப்படுவதை
என்னால் பார்க்க முடியாது" என்றாள்.

[7]அகாஸ்வேரு அரசன் எஸ்தர் அரசிக்கும்,
யூதனான மொர்தெகாய்க்கும் பதில் சொன்
னான். அரசன், "ஆமான் யூதர்களுக்கு
எதிரியாக இருந்ததால், நான் அவனது
சொத்துக்களை எஸ்தருக்குக் கொடுத்திருக்
கிறேன். என் வீரர்கள் ஆமானைத் தூக்கு
மரத்தில் தொங்கப்போட்டனர். [8]இப்பொழுது
அரசனது அதிகாரப்படி இன்னொரு
கட்டளையை எழுதுங்கள். யூதர்களுக்கு
உதவ எது சிறப்பான வழியாகத் தோன்று
கிறதோ அப்படி எழுதி, அந்த கட்டளையை
அரசனது சிறப்பு மோதிரத்தில் முத்திரையிடு.
அரசனது அதிகாரத்துடன் எழுதப்பட்டு
அவனது சிறப்பு மோதிர முத்திரை பொறிக்
கப்பட்ட எந்தக்கடிதமும் ரத்து செய்யப்படக்
கூடாது" என்றான்.
[9]மிக விரைவாக அரசனின் செயலாளர்
கள் அழைக்கப்பட்டனர். இது சீவான்
என்னும் மூன்றாவது மாதத்தின் 23வது
நாளில் நடந்தது. அச்செயலாளர்கள்
மொர்தெகாயின் அனைத்து கட்டளை
களையும் யூதர்கள், தலைவர்கள், ஆளுநர்கள்,
127 மாகாணங்களில் உள்ள அதிகாரிகள்
என அனைவருக்கும் எழுதினார்கள். அம்
மாகாணங்கள் இந்தியா முதல் எத்தியோப்
பியாவரை இருந்தது. இந்த கட்டளை
ஒவ்வொரு மாகாணத்தின் மொழியிலும்
எழுதப்பட்டது. ஒவ்வொரு குழு ஜனங் களின்
மொழியிலும் இந்த கட்டளை மொழி
பெயர்க்கப்பட்டது. இந்த கட்டளை யூதர்
களின் சொந்த மொழியிலும், சொந்த

எழுத்திலும் எழுதப்பட்டது. [10]மொர்தெகாய், அரசன் அகாஸ்வேருவின் அதிகாரத்தால் கட்டளைகளை எழுதினான். பிறகு அவன் அரசனது முத்திரை மோதிரத்தால் கடிதங்களை முத்திரையிட்டான். பிறகு தூதர்களைக் குதிரைகளின் மேல் அனுப்பினான். அவர்கள் அரசனுக்காக வளர்க்கப்பட்ட குதிரைகளில் வேகமாக போனார்கள்.
[11]அரசனது கட்டளைகளாகக் கடிதங்களில் சொல்லப்பட்டவை இதுதான்:

ஒவ்வொரு நகரங்களிலும் உள்ள யூதர்கள் அனைவரும் கூடி சேர்ந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்கின்ற உரிமையுடையவர்கள். அவர்களுக்கு தங்களையோ, தங்கள் பெண்களையோ, பிள்ளைகளையோ தாக்கும் எதிரிகளைத் தாக்கவோ, கொல்லவோ, அழிக்கவோ உரிமை உண்டு. யூதர்களுக்கு தங்கள் பகைவர்களின் சொத்தை அபகரிக்கவோ, அழிக்கவோ உரிமை உண்டு.

[12]இதைச் செய்வதற்காக யூதர்களுக்கு பன்னிரண்டாவது மாதமான ஆதார் மாதத்தின் 13வது நாள் நியமிக்கப்பட்டிருந்தது. யூதர்கள் இதனை அகாஸ்வேரு அரசனின் இராஜ்யத்தின் எல்லாப் பகுதிகளிலும் செய்ய அனுமதிக்கப்பட்டனர்.
[13]அரசனின் கட்டளைப் பிரதி ஒன்று அனுப்பப்பட்டு அது சட்டமாயிற்று. எல்லா மாகாணங்களிலும் அது சட்டமானது. இராஜ்யத்திலுள்ள எல்லா நாடுகளின் ஜனங்களுக்கும் இது அறிவிக்கப்பட்டது. இது அறிவிக்கப்பட்டதால் யூதர்கள் அந்த சிறப்பு நாளுக் காகத் தயாராக இருந்தனர். யூதர்கள் தம் எதிரிகளுக்குத் திருப்பிக்கொடுக்க அனுமதிக்கப்பட்டனர்.
[14]தூதுவர்கள் அரசனது குதிரையில் மிக வேகமாகச் சென்றனர். அரசன் அவர்களிடம் வேகமாகச் செல்லும்படி கட்டளையிட்டான். இந்த கட்டளை, தலைநகரமான சூசானிலும் அறிவிக்கப்பட்டது.
[15]மொர்தெகாய் அரசனைவிட்டுப் போனான். அவன் அரசனிடமிருந்து பெற்ற சிறப்பான ஆடையை அணிந்திருந்தான். அவனது ஆடை வெண்மையும், நீலமுமாய் இருந்தது; பெரிய பொற்கிரீடமும், சிறந்த பட்டும், இரத்தாம்பரமும் அணிந்திருந்தான். சூசானின் சிறப்பு விழா நடைபெற்றது. ஜனங்கள் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தனர்.
[16]யூதர்களுக்குத் தனி மகிழ்ச்சியுடைய நாளாக இருந்தது. இது மிகுந்த மகிழ்ச்சிக்கும் சந்தோஷத்திற்கும் உரிய நாளாக இருந்தது.
[17]அரசனது கட்டளை எந்தெந்த நாடுகளுக்கெல்லாம் சென்றனவோ, அங்கெல்லாம் மகிழ்ச்சியும் உற்சாகமும் யூதர்களிடையே ஏற்பட்டன. யூதர் விருந்துடன் அதனைக் கொண்டாடினர். யூதர்களுக்குப் பயந்ததினால் மற்ற குழுவிலுள்ள ஜனங்களும் யூதர்களாயினர்.

### யூதர்களுக்கு வெற்றி

9 ஆதார் என்னும் 12ம் மாதத்தின் 13வது நாள், ஜனங்கள் அரசனது கட்டளைக்குக் கட்டுப்பட வேண்டும். அன்றுதான் யூதர்களின் பகைவர்கள் அவர்களைத் தோற்கடிக்க நம்பியிருந்த நாள். இப்பொழுது அந்த நிலை மாறி யூதர்கள் தம்மை வெறுத்த பகைவர்களைவிட பலமுள்ளவர்களானார்கள்.
[2]யூதர்கள் அகாஸ்வேரு அரசனின் நாடுகளில் எல்லாம் ஒன்று கூடினர். தம்மை அழிக்க நினைத்தவர்களைத் தாக்க போதுமான பலமுடையவர்களாயினர். எனவே, அவர்களுக்கு எதிராக நிற்க எவருக்கும் பலமில்லை. அந்த ஜனங்கள் யூதர்களுக்குப் பயந்தனர்.
[3]எல்லா மாகாணங்களின் அதிகாரிகளும், தலைவர்களும், ஆளுநர்களும், யூதர்களுக்கு உதவினார்கள். ஏனென்றால், அவர்கள் மொர்தெகாய்க்குப் பயந்தனர்.
[4]அரசனது அரண்மனையில் மொர்தெகாய் மிக முக்கியமான நபராகிவிட்டான். அரசனது மாகாணங்களிலுள்ள அனைவரும் அவனது பெயரையும், அவன் எவ்வளவு முக்கியமானவன் என்பதையும் அறிந்திருந்தனர். மொர்தெகாய் மேலும் மேலும் அதிகாரம் உள்ளவன் ஆனான்.

[5]யூதர்கள் தம் பகைவர் அனைவரையும் தோற்கடித்தனர். அவர்கள் தம் பகைவரைக் கொன்று அழிக்க வாளைப் பயன்படுத்தினார்கள். தம்மை வெறுத்த ஜனங்களைத் தம் விருப்பம்போல் யூதர்கள் செய்தார்கள்.
[6]யூதர்கள் சூசான் தலைநகரில் 500 பேரைக் கொன்றழித்தார்கள்.
[7]யூதர்கள் கீழ்க்கண்டவர்களைக் கொன்றனர்: பர்சான்தாத்தா, தல்போன், அஸ்பாதா,
[8]பொராதா, அதலியா, அரிதாத்தா,
[9]பர்மஷ்டா, அரிசாய், அரிதாய், வாய்சாதா.
[10]இவர்கள் ஆமானின் 10 மகன்கள். அம்மெதாத்தாவின் மகனான ஆமான் யூதர்களின் பகைவன். யூதர்கள் இவர்கள் அனைவரையும் கொன்றனர். ஆனால் அவர்களது பொருட்கள் எதையும் கொள்ளையடிக்கவில்லை.
[11]தலைநகரமான சூசானில் எத்தனை பேர் கொன்று அழிக்கப்பட்டனர் என்று அரசன் கேள்விப்பட்டான்.
[12]எனவே அரசன் எஸ்தர் அரசியிடம், "யூதர்கள் சூசானில் ஆமானின் 10 மகன்களையும் சேர்த்து 500 பேரை கொன்றுள்ளனர். இப்பொழுது வேறு மாகாணங்களில் என்ன செய்யவேண்டும் என்று நீ விரும்புகிறாய்? எனக்குச் சொல். நான் அதனை நடத்துவேன். சொல் நான் அதனைச் செய்வேன்" என்றான்.

13எஸ்தர், "அரசருக்கு விருப்பமானால்,
சூசானில் யூதர்கள் இதைப்போன்றே நாளை
யும் செய்ய அனுமதி கொடுக்கவேண்டும்.
ஆமானின் 10 மகன்களின் உடலையும்
தூக்கில் தொங்கவிட அனுமதிக்க வேண்
டும்" என்று கேட்டாள்.
14எனவே, அரசன் அந்த கட்டளையைக்
கொடுத்தான். அந்தச் சட்டம் அடுத்த நாளும்
இருந்தது. அவர்கள் ஆமானின் 10
மகன்களின் உடல்களை தொங்கவிட்டனர்.
15சூசானிலுள்ள யூதர்கள் ஆதார் மாதத்தின்
14வது நாளில் ஒன்று கூடினார்கள். அவர்கள்
சூசானில் 300 பேரைக் கொன்றனர். ஆனால்
அவர்கள் கொள்ளை அடிக்கவில்லை.
16அதே நேரத்தில், வேறு நாடுகளில்
வாழ்ந்த யூதர்களும் ஒன்று கூடினார்கள்.
அதனால் தம்மைக் காத்துக்கொள்ளும் அளவு
பலமுள்ளவர்களாக இருந்தனர். எனவே,
அவர்கள் பகைவர்களைத் தாக்க முடிந்தது.
யூதர்கள் தம் பகைவரான 75,000 பேரைக்
கொன்றனர். ஆனால் அவர்கள் கொள்ளை
அடிக்கவில்லை. 17இது ஆதார் மாதத்தின்
13வது நாளில் நடைபெற்றது. 14வது நாள்
அவர்கள் ஓய்வு எடுத்தனர். யூதர்கள்
அந்நாளை மகிழ்ச்சிகரமான விடுமுறை
நாளாக ஆக்கினார்கள்.

## பூரீம் விழா

18சூசானிலுள்ள யூதர்கள் ஆதார்
மாதத்தின் 13 மற்றும் 14ஆம் நாட்களில்
ஒன்று கூடினார்கள். 15வது நாள் அவர்கள்
ஓய்வெடுத்தனர். அவர்கள் 15வது நாளை
மகிழ்ச்சிகரமான விடுமுறை நாள் ஆக்கினர்.
19எனவே, நகரங்களிலும் கிராமங்களிலும்
வாழ்ந்த யூதர்கள் 14வது நாளை பூரீம்
விழாவாகக் கொண்டாடினார்கள். அதனை
மகிழ்ச்சிகரமான விடுமுறை நாள் ஆக்கினார்
கள். அன்று விருந்தும் ஒருவருக்கொருவர்
அன்பளிப்பும் கொடுத்து மகிழ்ந்தனர்.
20மொர்தெகாய் நிகழ்ந்த எல்லாவற்றையும்
எழுதினான். பிறகு அவன் அகாஸ்வேரு
அரசனின் மாகாணங்களில் உள்ள
அனைத்து யூதர்களுக்கும் கடிதம் எழுதி
னான். அவன் அருகிலும் தொலைவிலும்
உள்ள அனைவருக்கும் கடிதம் அனுப்பி
னான். 21மொர்தெகாய் அதில் யூதர்கள்
ஒவ்வொரு ஆண்டும் ஆதார் மாதத்தின் 14
மற்றும் 15ஆம் நாட்களில் பூரீம் விழாவை
கொண்டாடும்படி எழுதினான். 22யூதர்கள்
அந்நாட்களைக் கொண்டாடினார்கள்.
ஏனென்றால், அந்நாட்களில் அவர்கள் தம்
பகைவர்களை அழித்தனர். அம்மாதத்தில்
அவர்களின் துயரமெல்லாம் மகிழ்ச்சியாக
மாறியதால், அம்மாதத்தைக் கொண்டாடி
னார்கள். இம்மாதத்தில் அவர்களது அழுகை
மாறி குதூகலமாய் கொண்டாடும் மாதமாக
மாறிற்று. மொர்தெகாய் அனைத்து யூதர்
களுக்கும் கடிதம் எழுதினான். அவன்
அவர்களிடம் அந்நாளை மகிழ்ச்சிகரமான
விடுமுறை நாளாகக் கொண்டாடச் சொன்
னான். அவர்கள் ஒருவருக்கொருவர் விருந்
தும் அன்பளிப்பும் கொடுத்து, ஏழைகளுக்குப்
பரிசு கொடுத்து அந்த நாளை கொண்டாடச்
சொன்னான்.
23எனவே, யூதர்கள் மொர்தெகாய் எழுதிய
வற்றை ஏற்றுக்கொண்டனர். அவர்கள்
தொடங்கிய விழாவை தொடர ஒப்புக்
கொண்டனர்.
24அம்மெதாத்தாவின் மகனான ஆமான்
என்னும் ஆகாகியன் யூதர்களின் பகைவன்.
யூதர்களை அழிக்க அவன் ஒரு தீய
திட்டத்தை வைத்திருந்தான். அவன் யூதர்
களை அழிக்கும் நாளை குலுக்கல் சீட்டு
போட்டுத் தேர்ந்தெடுத்து வைத்திருந்தான்.
அக்காலத்தில் குலுக்கல் சீட்டானது "பூர்"
என்று அழைக்கப்பட்டது. எனவே, விடு
முறை நாளும் "பூரீம்" என அழைக்கப்
ஸ்ரீபட்டது. 25ஆமான் அவற்றைச் செய்தான்.
ஆனால் எஸ்தர் அரசனிடம் பேசச் சென்
றாள். எனவே, அவன் புதிய கட்டளைகளை
அனுப்பினான். அந்த கட்டளைகள் ஆமா
னின் திட்டத்தை அழித்ததோடு, ஆமானுக்
கும் அவனது குடும்பத்திற்கும் அதே தீமை
ஏற்படும்படியும் ஆயிற்று. எனவே, ஆமானும்
அவனது மகன்களும் தூக்கு மரத்தில்
தொங்கினார்கள்.
26-27இப்போது, குலுக்கல் சீட்டு "பூரீம்"
என்று அழைக்கப்பட்டது. எனவே, இந்த
விடுமுறை நாளும் "பூரீம்" என்று அழைக்
கப்பட்டது. மொர்தெகாய் யூதர்களுக்குக்
கடிதம் எழுதி இந்நாளைக் கொண்டாடச்
சொன்னான். எனவே, யூதர்கள் ஆண்டில்
இரண்டு நாளைக் கொண்டாடும் வழக்
கத்தைக் கொண்டனர். 28இது அவர்கள்
தங்களுக்கு நேர்ந்ததை நினைவுப் படுத்து
வதாக இருந்தது. யூதர்களும் மற்ற ஜனங்
களும் சேர்ந்து சரியான காலத்தில் சரியான
முறையில் ஒவ்வொரு ஆண்டும் இரு நாட்கள்
கொண்டாடினார்கள். ஒவ்வொரு தலை
முறையும் ஒவ்வொரு குடும்பமும் இந்த
இரண்டு நாட்களையும் நினைவுபடுத்தினர்.
அவர்கள் இந்த விடுமுறையை ஒவ்வொரு
மாகாணத்திலும், ஒவ்வொரு நகரிலும்
கொண்டாடினார்கள். யூதர்கள் என்றென்றும்
பூரீம் விழாவைக் கொண்டாடுவதை நிறுத்தக்
கூடாது. யூதர்களின் சந்ததிகளும் எப்பொழு
தும் இவ்விடு முறையை நினைத்துக்கொள்ள
வேண்டும்.
29எனவே அபியாயேலின் மகளான
எஸ்தர் அரசியும், யூதனான மொர்தெகாயும்
பூரீம் பற்றி ஒரு அதிகாரப்பூர்வமான கடி
தத்தை எழுதினார்கள். இரண்டாவது கடிதம்
உண்மையானது என்பதை நிரூபிக்க அரச
னின் முழு அதிகாரத்தோடு கடிதம் எழுதி
னார்கள். 30எனவே, மொர்தெகாய் அகாஸ்

வேரு அரசனின் 127 மாகாணங்களுக்கும்
கடிதம் அனுப்பினான். அந்த விழா
யூதர்களிடம் சமாதானத்தையும், ஒருவர் மீது
ஒருவருக்கு நம்பிக்கையையும் உருவாக்கும்
என்று மொர்தெகாய் எழுதினான். 31மொர்
தெகாய் யூதர்களுக்குப் பூரீம் விழாவை
கொண்டாட ஆரம்பிக்கும்படி எழுதினான்.
எப்பொழுது இப்புதிய விடு முறை நாளை
கொண்டாடவேண்டும் என்றும் எழுதி னான்.
யூதனான மொர்தெ காயும் அரசியான
எஸ்தரும் யூதர்களுக்கு இக்கட்டளையை
இட்டனர். அவர்கள் இவ்விரு நாட்களையும்
விடுமுறை கொண்டாட்டமாக தங்களுக்கும்
தங்கள் சந்ததிகளுக்கும் ஏற்படுத்தவேண்டும்.
அவர்கள் மற்ற விடுமுறை நாட்களில்
உபவாசம் இருந்து, அழுது, நடந்த
தீமைகளுக்கு இரங்கி நினைப்பது போன்று
இந்த இரு நாட்களையும் கொண்டாடுவார்
கள். 32எஸ்தரின் கடிதம் பூரீம் விழாவின்
விதிகளை அதிகாரப் பூர்வமானதாக
ஆக்கிற்று. இவை ஒரு புத்தகத்தில்
எழுதப்பட்டன.

### மொர்தெகாய் கௌரவிக்கப்படுகிறான்

10 அகாஸ்வேரு அரசன் ஜனங்களை
வரிசெலுத்தும்படிச் செய்தான். அவ
னது இராஜ்யத்திலுள்ள அனைத்து ஜனங்
களும், தொலைதூரத்தில் கடல் கடந்து
வாழும் ஜனங்களும், வரிசெலுத்தி வந்தனர்.
2அரசன் அகாஸ்வேரு செய்த அரும்பெரும்
செயல்கள் மேதியா மற்றும் பெர்சியா
அரசர்களின் வரலாற்றுப் புத்தகத்தில்
எழுதப்பட்டன. அந்த வரலாற்றுப் புத்தகங்
களில் மொர்தெகாய் செய்தவையும் எழுதப்
பட்டன. அரசன் மொர்தெகாயைப் பெரிய
மனிதனாக்கினான். 3யூதனான மொர் தெகாய்
அரசனுக்கு அடுத்த இரண்டாவது முக்கிய
மனிதனானான். யூதர்களில் மொர் தெகாய்
மிக முக்கிய மனிதன் ஆனான். அவனை
மற்ற யூதர்கள் மிகவும் மதித்தனர். அவர்கள்
மொர்தெகாயை மதித்தனர். ஏனென்றால்,
அவன் தன் ஜனங்களின் நன்மைக்காக
கடினமான வேலைகளைச் செய்தான்.
மொர்தெகாய் அனைத்து யூதர்களுக்கும்
சமாதானத்தைக் கொண்டுவந்தான்.

# யோபுடைய சரித்திரம்

### நல்ல மனிதனாகிய யோபு

1 ஊத்ஸ் என்னும் நாட்டில் யோபு என்னும்
பெயருள்ள மனிதன் வாழ்ந்து வந்தான்.
யோபு நல்லவனும் உண்மையுள்ள மனித
னுமாக இருந்தான். தேவனுக்கு பயந்து
தீயக் காரியங்களைச்செய்ய மறுத்தான்.
2யோபுவுக்கு ஏழு மகன்களும் மூன்று
மகள்களும் இருந்தனர். 3யோபுவுக்கு 7,000
ஆடுகளும், 3,000 ஒட்டகங்களும், 1,000
காளைகளும், 500 பெண் கழுதைகளும்
இருந்தன. அவனிடம் வேலையாட்கள் பலர்
இருந்தனர். கிழக்குப் பகுதியில் யோபுவே
பெரிய செல்வந்தனாக இருந்தான்.
4யோபுவின் மகன்கள் ஒருவருக்குப் பின்
ஒருவராகத் தங்கள் வீடுகளில் விருந்து
வைத்து, அவர்களின் சகோதரிகளை
அழைப்பது வழக்கம். 5அவனது பிள்ளை
களின் விருந்து முடிந்தப்பின் யோபு அதி
காலையில் எழுந்தான். ஒவ்வொரு பிள்ளைக்
காகவும் அவன் தகனபலியை அளித்தான்.
அவன், “என் பிள்ளைகள் கவலையீனமாக
இருந்து, விருந்தின்போது தேவனுக்கெதிராக
தங்கள் இருதயங்களில் தூஷிப்பதினால்
பாவம் செய்திருக்கக் கூடும்” என்று
எண்ணினான். அவனது பிள்ளைகள்
பாவங்களிலிருந்து மன்னிப்புப் பெறும்படி
யாக யோபு எப்போதும் இவ்வாறு
செய்தான்.
6தேவதூதர்கள்* கர்த்தரைச் சந்திக்கும்
நாள் வந்தது. சாத்தானும் தேவதூதர்களோடு
வந்தான். 7கர்த்தர் சாத்தானிடம், “நீ எங்
கிருந்து வருகிறாய்?” என்று கேட்டார்.
சாத்தான் கர்த்தரை நோக்கி, “நான்
பூமியைச் சுற்றிப்பார்த்து வந்தேன்”
என்றான்.
8அப்போது கர்த்தர் சாத்தானிடம், “நீ
எனது தாசனாகிய யோபுவைக் கண்டாயா?
பூமியில் அவனைப் போன்றோர் எவரு
மில்லை. யோபு உத்தமனும் உண்மையுள்ள
வனுமாயிருக்கிறான். அவன் தேவனுக்கு
பயந்து தீயவற்றை விட்டு விலகியிருக்
கிறான்” என்றார்.
9சாத்தான், “ஆம்! ஆனால் யோபு
தேவனுக்குப் பயப்படுவதற்கு தக்க காரணங்
கள் உள்ளன! 10நீர் எப்போதும் அவனையும்,
அவனது குடும்பத்தையும், அவனுக்கிருக்கும்
எல்லாவற்றையும் வேலியடைத்துப் பாது
காக்கிறீர். அவன் செய்கின்ற எல்லாவற்
றிலும் அவனை வெற்றி காணச்செய்தீர்.
ஆம். நீர் அவனை ஆசீர்வதித்திருக்கிறீர். நாடு
முழுவதும் அவனது மந்தைகளும்
விலங்குகளும் பெருகி, அவன் மிகுந்த
செல்வந்தனாக இருக்கிறான். 11ஆனால்
அவனுக்கிருப்பவை அனைத்தையும் நீர்
உமது கையை நீட்டி அழித்துவிட்டால் உம்
முகத்திற்கு நேராக உம்மை அவன்
சபிப்பான் என்று உறுதியளிக்கிறேன்”
என்று பதிலளித்தான்.
12கர்த்தர் சாத்தானிடம், “அப்படியே ஆகட்
டும். யோபுக்குச் சொந்தமான பொருள்களின்
மேல் உன் விருப்பப்படி எது வேண்டு
மானாலும் செய். ஆனால் அவன் உடம்பைத்
துன்புறுத்தாதே” என்றார்.
பின்பு சாத்தான் கர்த்தருடைய சந்நிதியை
விட்டுச் சென்று விட்டான்.

### யோபு எல்லாவற்றையும் இழக்கிறான்

13ஒருநாள், மூத்த சகோதரனின் வீட்டில்
யோபுவின் மகன்களும், மகள்களும் உண்டு,
திராட்சைரசம் அருந்திக்கொண்டிருந்தார்கள்.
14அப்போது ஒருவன் யோபுவிடம் வந்து,
“காளைகள் உழுதுக்கொண்டிருந்தன, கழு
தைகள் அருகே புல் மேய்ந்துக்கொண்டி
ருந்தன. 15ஆனால் சபேயர் எங்களைத் தாக்கி
விட்டு உமது மிருகங்களை கவர்ந்துக்
கொண்டார்கள்! சபேயர்* என்னைத் தவிர
எல்லா வேலையாட்களையும் கொன்று
விட்டார்கள். உம்மிடம் சொல்லும்படியாக
தப்பிவர முடிந்தவன் நான் மட்டுமே!” எனச்
செய்தியைக் கூறினான்.
16அவன் இதனைக் கூறிக்கொண்டிருக்கும்
போது மற்றொருவன் யோபுவிடம் வந்தான்.
இரண்டாம் ஆள், “வானிலிருந்து மின்னல்
மின்னி உமது ஆடுகளையும் வேலையாட்
களையும் எரித்துவிட்டது. நான் ஒருவன்
மட்டுமே தப்பினேன். உமக்கு அந்தச்
செய்தியை கூறும் படியாக வந்தேன்!”
எனக் கூறினான்.

---

**தேவதூதர்கள்** “தேவகுமாரர்கள்” எனப் பொருள்படும்.

**சபேயர்** பாலைவனப்பகுதியைச் சார்ந்த ஜனங்கள். அவர்கள் ஜனங்களைத் தாக்கி, அவர்களின் பொருள்களைக் கவர்ந்து செல்வார்கள்.

[17]அந்த ஆள் இவ்வாறு சொல்லிக்கொண்
டிருக்கும்போதே, இன்னொருவன் வந்தான்.
இந்த மூன்றாவது ஆள், "கல்தேயர் மூன்று
குழுக்களை அனுப்பி, எங்களைத் தாக்கி,
ஒட்டகங்களைக் கவர்ந்து சென்றுவிட்டார்
கள்! அவர்கள் வேலையாட்களையும்
கொன்றுவிட்டார்கள். நான் மட்டுமே தப்பி
னேன் இந்தச் செய்தியை உமக்குச் சொல்
லும்படியாக வந்தேன்!" என்றுச் சொன்
னான்.
[18]மூன்றாம் ஆள் பேசிக்கொண்டிருக்கும்
போதே, மற்றும் ஒருவன் வந்தான். நான்
காவது ஆள், "உமது மகன்களும் மகள்களும்
மூத்த சகோதரனின் வீட்டில் உண்டு,
திராட்சைரசம் பருகிக்கொண்டிருந்தார்கள்.
[19]அப்போது ஒரு பலத்தக் காற்று பாலை
வனத்திலிருந்து வீசி, வீட்டை அழித்தது,
உமது மகன்களின் மீதும், மகள்களின் மீதும்
வீடு வீழ்ந்ததால், அவர்கள் மரித்துப்
போனார்கள். நான் ஒருவன் மட்டுமே
தப்பித்தேன். எனவே உம்மிடம் இந்த
செய்தியை தெரிவிக்க வந்தேன்!" என்றான்.
[20]யோபு இதைக் கேட்டபோது, அவனது
துக்கத்தை வெளிப்படுத்தும் பொருட்டு
ஆடைகளைக் கிழித்துக்கொண்டான், தலை
யை மழித்துவிட்டான். பின்பு யோபு தரை
யில் விழுந்து, தேவனை ஆராதித்தான்.
[21]"நான் இந்த உலகத்தில் பிறந்தபோது
நிர்வாணமாக இருந்தேன், என்னிடம் எது
வும் இருக்கவில்லை. நான் மரித்து இந்த
உலகை விட்டு நீங்கிச் செல்லும்போது,
நான் நிர்வாணமாக எதுவுமின்றி செல்லு
வேன். கர்த்தர் கொடுத்தார், கர்த்தர்
எடுத்துக்கொண்டார். கர்த்தருடைய நாமத்
தைத் துதியுங்கள்!" என்றான்.
[22]இவையெல்லாம் நிகழ்ந்தாலும், யோபு
பாவம் செய்யவில்லை. தேவன் தவறு
செய்திருந்தார் என்று யோபு குறை சொல்ல
வுமில்லை.

### சாத்தான் யோபுவுக்கு மீண்டும் தொல்லைத் தருகிறான்

2 மற்றொருநாள், தேவதூதர்கள் கர்த்தரைச்
சந்திக்க வந்தார்கள். சாத்தானும் கர்த்
தரைச் சந்திப்பதற்காக வந்தான். [2]கர்த்தர்
சாத்தானிடம், "நீ எங்கிருந்து வருகின்றாய்?"
என்று கேட்டார்.
சாத்தான் கர்த்தருக்கு, "நான் பூமியெங்கும்
சுற்றித் திரிந்துக்கொண்டிருந்தேன்" என்று
பதில் கூறினான்.
[3]அப்போது கர்த்தர் சாத்தானை நோக்கி,
"என் தாசனாகிய யோபுவைக் கண்டாயா?
பூமியில் அவனைப் போன்றோர் எவரு
மில்லை. அவன் உண்மையுள்ளவனுமாயிருக்
கிறான். அவன் தேவனுக்கு பயந்து தீய
வற்றைவிட்டு விலகுகிறான். எக்காரணமு
மின்றி அவனுக்குள்ளவை அனைத்தையும்
அழிக்கும்படி நீ கேட்டும் கூட, அவன்
இன்னும் உண்மையுள்ளவனாக இருக்
கிறான்" என்றார்.
[4]சாத்தான், "தோலுக்குத் தோல்!* என்று
பதில் சொன்னான். ஒருவன் தான் உயிரை
காப்பதற்காக தன்னிடமுள்ள எல்லாவற்
றையும் கொடுப்பான். [5]அவனது உடம்பைத்
துன்புறுத்தும்படி நீர் உமது கையை
நீட்டுவீரானால், அப்போது உமது முகத்
திற்கு நேராக அவன் உம்மைச் சபிப்
பான்!"* என்றான்.
[6]அப்போது கர்த்தர் சாத்தானைப் பார்த்து,
"அது சரி, யோபு உன் ஆற்றலுக்குக்
கீழ்ப்பட்டிருக்கிறான். ஆனால் அவனைக்
கொல்வதற்கு மட்டும் உனக்கு அனுமதி
யில்லை" என்றார்.
[7]பின்பு சாத்தான் கர்த்தரிடமிருந்து
சென்று, யோபுவுக்கு வேதனைமிக்க புண்
களைக் கொடுத்தான். அவனது பாதங்களின்
அடிப்பகுதியிலிருந்து தலையின் உச்சி
வரைக்கும் வேதனை தரும் அப்புண்கள்
யோபுவின் உடலெங்கும் காணப்பட்டன.
[8]எனவே யோபு குப்பைக் குவியலின்
அருகே உட்கார்ந்தான். அவனது புண்
களைச் சுரண்டுவதற்கு உடைந்த மண்
பாண்டத்தின் ஒரு துண்டைப் பயன்
படுத்தினான். [9]யோபுவின் மனைவி அவனை
நோக்கி, "நீ இன்னும் தேவனுக்கு உண்மை
யுள்ளவனாய் இருக்கிறாயா? நீர் தேவனைச்
சபித்த வண்ணம் மரித்துவிடு?" என்று
கேட்டாள்.
[10]பிறகு யோபு தனது மனைவியிடம்,
"நீ மூடத்தனமானவளைப் போலப் பேசு
கிறாய்! தேவன் நல்லவற்றைக் கொடுக்கும்
போது, நாம் அவற்றை ஏற்கிறோம். எனவே
நாம் தொல்லைகளையும் ஏற்கவேண்டும்,
முறையிடக்கூடாது" என்று பதில் தந்தான்.
எல்லாத் தொல்லைகளின்போதும் யோபு
பாவம் செய்யவில்லை. அவன் தேவனுக்கு
எதிராக எதுவும் பேசவில்லை.

### யோபுவின் மூன்று நண்பர்கள் அவனைக் காண வருகிறார்கள்

[11]தேமானிலிருந்து எலிப்பாசும், சூகியி
லிருந்து பில்தாதும், நாகமாவிலிருந்து சோப்
பாரும் யோபுவின் மூன்று நண்பர்கள்.
யோபுவுக்கு நேரிட்ட எல்லா தீயகாரியங்
களைபற்றி கேள்விப்பட்டார்கள். அம்மூவ
ரும் தங்கள் வீடுகளிலிருந்து புறப்பட்டு
ஓரிடத்தில் சந்தித்தார்கள். அவர்கள் அவனி
டம் போய், தாங்கள் அனுதாபத்தைத்
தெரிவிக்கவும் ஆறுதல் கூறவும் முடிவெடுத்
தார்கள் (தீர்மானித்தார்கள்). [12]ஆனால் அம்

---

**தோலுக்குத் தோல்** இதற்கு ஒருவன் வலியைத் தவிர்க்க எதைவேண்டுமானாலும் செய்வான் என்ப் பொருள்படும்.

**சபிப்பான்** பிறருக்குத் தீமை நேரிடும்படி கேட்பது.

மூவரும் யோபுவைத் தூரத்தில் கண்ட
போது, (அவன் யோபுவா என ஐயுற்றார்
கள்) யோபு மிகவும் வித்தியாசமாகக்
காணப்பட்டதால், அவன் யோபு என
நம்புவது சிரமமாக இருந்தது! அவர்கள்
சத்தமிட்டு அழுதார்கள். அவர்கள் தங்கள்
ஆடைகளைக் கிழித்துக்கொண்டார்கள், துக
ளைக் காற்றிலும் தலையிலும் வீசியெறிந்து,
தங்கள் துக்கத்தையும் மனக்கலக்கத்தையும்
வெளிப்படுத்தினார்கள். 13பின்பு அந்த
மூன்று நண்பர்களும் யோபுவோடு தரையில்
ஏழு பகல்களும் ஏழு இரவுகளும் அமர்ந்திருந்
தார்கள். யோபு மிகவும் துன்புற்றுக்கொண்டி
ருந்ததால், ஒருவரும் யோபுவோடு எதையும்
பேசவில்லை.

### யோபு தான் பிறந்தநாளைச் சபிக்கிறான்

3 பின்பு யோபு தன் வாயைத்திறந்து தான்
பிறந்தநாளைச் சபித்தான்.
2-3அவன், “நான் பிறந்தநாள் என்றென்றும்
இராதபடி அழிக்கப்படட்டும் என நான்
விரும்புகிறேன். ‘அது ஒரு ஆண்’ என
அவர்கள் கூறிய இரவு, என்றும் இருந்
திருக்கக் கூடாதென நான் விரும்புகிறேன்!
4அந்நாள் இருண்டு போக விரும்பு
கிறேன். அந்நாளைத் தேவன் மறக்க வேண்டு
மென விரும்புகிறேன். அந்நாளில் ஒளி
பிரகாசித்திருக்கக் கூடாதென விரும்பு
கிறேன்.
5மரணம் எவ்வளவு இருட்டோ
அதுபோல், அந்நாள் அவ்வளவு இருளா
யிருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன்.
இருண்ட மேகங்கள் அந்நாளை மறைக்கட்டு
மெனவும், நான் பிறந்தநாளிலிருந்த இருண்ட
மேகங்கள் ஒளியை அச்சுறுத்தட்டும் எனவும்
நான் விரும்புகிறேன்.
6இருள் நான் பிறந்த அந்த இரவை
ஆக்கிரமிக்கட்டும். நாள்காட்டியிலிருந்து
அந்த இரவு நீக்கப்படட்டும். எந்த மாதத்
திலும் அந்த இரவைச் சேர்க்கவேண்டாம்.
7அந்த இரவு எதையும் விளைவிக்கா
திருக்கட்டும். அவ்விரவில் மகிழ்ச்சியான
எந்த ஒலியும் கேளாதிருக்கட்டும்.
8சில மந்திரவாதிகள் லிவியாதானை*
எழுப்ப விரும்புகிறார்கள். அவர்கள் சாபங்
கள் இடட்டும் நான் பிறந்தநாளை அவர்கள்
சபிக்கட்டும்.
9அந்நாளின் விடிவெள்ளி இருளாகட்டும்.
அந்த இரவு விடியலின் ஒளிக்காகக் காத்
திருக்கட்டும், ஆனால் அந்த ஒளி ஒருபோதும்
வராதிருக்கட்டும் சூரியனின் முதல் கதிர்
களை அது பார்க்காதிருக்கட்டும்.
10ஏனெனில், அந்த இரவு நான்
பிறப்பதைத் தடைசெய்யவில்லை. இத்
தொல்லைகளை நான் காணாதிருக்கும்படி,
அந்த இரவு என்னைத் தடை செய்ய
வில்லை.
11நான் பிறந்தபோதே ஏன் மரிக்கவில்லை?
நான் ஏன் பிறப்பில் மடியவில்லை?
12ஏன் என் தாய் என்னை அவளது
முழங்காலில் தாங்கிக்கொண்டாள்? ஏன்
என் தாயின் மார்புகள் எனக்குப் பாலூட்
டின?
13-14நான் பிறந்தபோதே மரித்திருந்தால்,
இப்போது சமாதானத்தோடு இருந்திருப்பேன்.
முற்காலத்தில் பூமியில் வாழ்ந்த அரசர்
களோடும் ஞானிகளோடும் நான் உறக்கமாகி
ஓய்வுக்கொண்டிருக்க விரும்புகிறேன். இப்
போது அழிக்கப்பட்டுக் காணாமற்போன
இடங்களைத் தங்களுக்காக அவர்கள் கட்டிக்
கொண்டிருந்தார்கள்.
15அவர்கள் தங்கள் வீடுகளைப்*
பொன்னாலும் வெள்ளியாலும் நிரப்பினர்,
அவர்களோடு கூட புதைக்கப்பட்டிருக்க
வேண்டுமென நான் விரும்புகிறேன்.
16பிறப்பில் மரித்துப் புதைக்கப்பட்ட
குழந்தையாய் நான் ஏன் இருக்கவில்லை?
பகலின் ஒளியைக் கண்டிராத குழந்தையைப்
போன்று இருந்திருக்க மாட்டேனா என
விரும்புகிறேன்.
17கல்லறையில் இருக்கும்போது தீயோர்,
தொல்லை தருவதை நிறுத்துகிறார்கள்.
சோர்வுற்ற ஜனங்கள் கல்லறையில்
ஓய்வெடுக்கிறார்கள்.
18சிறைக் கைதிகளும் கூட கல்லறையில்
சுகம் காண்கிறார்கள். அவர்களைக் காப்
போர் அவர்களை நோக்கிக் கூக்குரல்
இடுவதை அவர்கள் கேட்பதில்லை.
19முக்கியமானவர்களும் முக்கியமற்ற
வர்களும் எனப் பலவகை ஜனங்கள்
கல்லறையில் இருக்கிறார்கள். அடிமையுங்
கூட எஜமானனிடமிருந்து விடுதலைப்
பெற்றிருக்கிறான்.
20“துன்புறும் ஒருவன் ஏன் தொடர்ந்து
வாழவேண்டும்? கசந்த ஆன்மாவுடைய ஒரு
வனுக்கு ஏன் உயிர் தரவேண்டும்?
21அம்மனிதன் மரிக்க விரும்புகிறான்,
ஆனால் மரணம் வருவதில்லை. துக்கமுள்ள
அம்மனிதன் மறைந்த பொக்கிஷத்தைப் பார்க்
கிலும் மரணத்தைத் தேடுகிறான்.
22அந்த ஜனங்கள் தங்கள் கல்லறைகளைக்
காண்பதில் மகிழச்சியாய் இருக்கிறார்கள்.
அவர்கள் தங்கள் புதை குழியைக் (கல்லறை
யை) கண்டு களிப்படைகிறார்கள்.
23ஆனால் தேவன் எதிர்காலத்தை இரகசிய
மாக வைத்திருக்கிறார். அவர்களைப் பாது
காப்பதற்காகச் சுற்றிலும் ஒரு சுவரை
எழுப்புகிறார்.

**லிவியாதான்** இங்கு இது உண்மையில் கடல் மிருகமான ராட்சசனாகும். சில ஜனங்கள் இது தான் சூரியனை விழுங்கும் என்று எண்ணுகின்றனர், இதுவேசூரிய கிரகணத்திற்குக் காரணம்.

**வீடுகள** “கல்லறைகள்.”

24 சாப்பிடும் நேரத்தில் நான் துன்பத்தால்
பெருமூச்சு விடுகிறேன். மகிழ்ச்சியினால்
அல்ல. என் முறையீடுகள் தண்ணீரைப்
போல வெளிப்படுகின்றன.
25 ஏதோ பயங்கரம் எனக்கு நிகழலாம் என
அஞ்சியிருந்தேன். அதுவே எனக்கு
நிகழ்ந்துள்ளது! நான் மிகவும் அஞ்சியது
எனக்கு நேரிட்டது!
26 நான் அமைதியுற முடியவில்லை. என்
னால் இளைப்பாற முடியவில்லை. நான்
ஓய்வெடுக்க இயலவில்லை. நான் மிகவும்
கலங்கிப்போயிருக்கிறேன்!" என்றான்.

## எலிப்பாஸ் பேசுகிறான்

4 1-2 தேமானிலுள்ள எலிப்பாஸ், "யாரா
வது உம்முடன் பேச முயன்றால்
உன்னைக் கலக்கமுறச் செய்யுமா? ஆனாலும்
பேசாமல் அடக்கிக்கொள்ள யாரால் கூடும்?
3 யோபுவே, நீ பலருக்குக் கற்பித்தாய்.
நீ பெலவீனமான கரங்களுக்கு பெலனைத்
தந்தாய்.
4 வீழ்பவர்களுக்கு உன் சொற்கள் உதவின.
தாமாக நிற்க முடியாதவர்களுக்கு நீ பெல
னளித்தாய்.
5 ஆனால் இப்போது உனக்குத் தொல்லை
கள் நேர்கின்றன, நீ துணிவிழக்கிறாய்.
தொல்லைகள் உன்னைத் தாக்குகின்றன, நீ
கலங்கிப்போகிறாய்!
6 நீ தேவனை கனம்பண்ணுகிறாய் அவரை
நம்புகிறாய். நீ நல்லவன். எனவே, அதுவே
உன் நம்பிக்கையாயிருக்க வேண்டுமல்லவா?
7 யோபுவே, இதைச் சிந்தித்துப்பார்: களங்
கமற்றவன் எவனும் அழிக்கப்பட்டதில்லை.
நல்லோர் என்றும் அழிக்கப்பட்டதில்லை.
8 நான் தீமையை விளைவிப்போரையும்
கொடுமையை விதைப்பவரையும் கண்டிருக்
கிறேன். அவர்கள் எதை விதைத்தார்களோ
அதையே அறுவடைச் செய்வதைக் கண்டி
ருக்கின்றேன்!
9 தேவனுடைய சுவாசம் அந்த ஜனங்
களைக் கொல்கிறது. தேவனுடைய நாசியின்
காற்று அவர்களை அழிக்கிறது.
10 தீயோர் கர்ஜித்துச் சிங்கங்களைப்போல்
முழங்குகிறார்கள். தீயோர் அமைதியா
யிருக்கும்படி தேவன் செய்கிறார், தேவன்
அவர்களின் பற்களை நொறுக்கிறார்.
11 ஆம், அத்தீயோர், கொல்வதற்கு மிருகங்
களைக் காணாத சிங்கங்களைப் போன்றிருக்
கிறார்கள். அவர்கள் இறக்கிறார்கள், அவர்
கள் ஜனங்கள் அலைந்து திரிகிறார்கள்.
12 "இரகசியமாக எனக்கு ஒரு செய்தி
தரப்பட்டது. என் காதுகள் அதனை மெல்
லிய குரலில் கேட்டன.
13 இரவின் கெட்ட கனவாய், அது என்
தூக்கத்தைக் கெடுத்தது.
14 நான் பயந்து நடுங்கினேன். என் எலும்பு
கள் எல்லாம் நடுங்கின.
15 ஒரு ஆவி என் முகத்தைக் கடந்தது.
என் உடலின் மயிர்கள் குத்திட்டு நின்றன.
16 ஆவி அசையாது நின்றது, என்னால்
அது என்னவென்று பார்க்க முடியவில்லை.
என் கண்களின் முன்னே ஒரு உருவம்
நின்றது, அப்போது அமைதியாயிருந்தது.
அப்போது மிக அமைதியான ஒரு குரலைக்
கேட்டேன்:
17 'மனிதன் தேவனைவிட நீதிமானாக
இருக்க முடியுமா? தன்னை உண்டாக்கின
வரைக் காட்டிலும் மனிதன் தூய்மையாக
இருக்க முடியுமா?
18 பாரும், தேவன் அவரது பரலோகத்தின்
பணியாட்களிடம்கூட நம்பிக்கை வைப்ப
தில்லை. தேவன் தனது தேவதூதர்களிடமும்
குற்றங்களைக் காண்கிறார்.
19 எனவே நிச்சயமாக ஜனங்கள் மிகவும்
மோசமானவர்கள்! அவர்கள் களிமண் வீடு
களில்* வசிக்கிறார்கள். இக்களிமண் வீடு
களின் அஸ்திவாரங்கள் புழுதியேயாகும்.
பொட்டுப்பூச்சியைக் காட்டிலும் எளிதாக
அவர்கள் நசுக்கிக் கொல்லப்படுகிறார்கள்.
20 ஜனங்கள் சூரிய உதயந் தொடங்கி
சூரியனின் மறைவு மட்டும் மரிக்கிறார்கள்,
யாரும் அதைக் கவனிப்பதுங்கூட இல்லை.
அவர்கள் மரித்து என்றென்றும் இல்லாதபடி
மறைந்துப் போகிறார்கள்.
21 அவர்கள் கூடாரங்களின் கயிறுகள்
இழுக்கப்பட்டன. அந்த ஜனங்கள் ஞான
மின்றி மடிகிறார்கள்.
5 "யோபுவே, விரும்பினால் கூப்பிடு,
ஆனால் யாரும் பதில் தரமாட்டார்கள்!
நீ எந்த தேவதூதனிடம் திரும்பி பார்ப்பீர்?
2 ஒரு மூடனின் கோபம் அவனைக்
கொல்லும், ஒரு மூடனின் வலிய உணர்
வுகள் அவனைக் கொல்லும்.
3 தான் பாதுகாப்பானவன் என எண்ணிய
ஒரு மூடனைக் கண்டேன். ஆனால் திடீரென
அவன் மாண்டான்.*
4 யாரும் அவனது ஜனங்களுக்கு உதவ
முடியவில்லை. நியாயச் சபையில் அவர்
களுக்கு ஆதரவளிப்பார் எவருமில்லை.
5 அவர்களின் பயிர்களையெல்லாம் பசித்
தோர் உண்டனர். முட்களின் நடுவே வளரும்
தானியங்களையும் கூட பசியுள்ள அந்த
ஜனங்கள் எடுத்துக்கொண்டனர். அவர்
களின் பொருட்களையெல்லாம் பேராசை
யுள்ளோர் எடுத்துக்கொண்டனர்.
6 தூசிகளிலிருந்து தீயக் காலங்கள்
வருவதில்லை. பூமியிலிருந்து தொல்லை
முளைப்பதில்லை.

---

**களிமண் வீடு** இதற்கு மனித சரீரம் எனப் பொருள்படும்.

**ஆனால் ... மாண்டான்** "ஆனால் திடீரென அவன் வீடு சபிக்கப்பட்டது."

7ஆனால் மனிதனோ நெருப்பிலிருந்து
பொறிகள் மேலே எழும்புவது எத்தனை
நிச்சயமோ அவ்வாறே, தொல்லையனு
பவிக்கப் பிறந்திருக்கிறான்.
8ஆனால் யோபுவே, நான் உன்னைபோல்
இருந்திருந்தால், தேவனிடம் திரும்பி என்
கஷ்டங்களைக் கூறியிருப்பேன்.
9தேவன் செய்கிற அற்புதமான காரியங்
களை ஜனங்கள் புரிந்துகொள்ள முடியாது.
தேவன் செய்கிற அதிசயங்களுக்கு முடிவே
யில்லை.
10தேவன் பூமிக்கு மழையை அனுப்பு
கிறார். அவர் வயல்களுக்கு தண்ணீரை
அனுப்புகிறார்.
11எளிமையானவனைத் தேவன் உயர்த்து
கிறார், அவர் துயரமுள்ளவனை மகிழ்ச்சி
யாக்குகிறார்.
12புத்திசாலித்தனமுள்ள, தீயோரின்
திட்டங்களை, அவர்கள் வெற்றியடைய
முடியாதபடி தேவன் தடுக்கிறார்.
13ஞானமுள்ளோரையும் அவர்கள் கண்ணி
களிலேயே விழும்படி செய்து புத்திசாலித்
தனமான அத்திட்டங்கள் வெற்றியடைய
முடியாதபடி தேவன் செய்கிறார்.
14அத்தகைய திறமைசாலிகள் பகலிலேயே
தடுமாறுகிறார்கள். இருளில்தன் பாதையைக்
காணத் தடுமாறுகின்றவனைப்போல, அவர்
கள் நண்பகலிலும் காணப்படுகிறார்கள்.
15தேவன் ஏழைகளைக் காப்பாற்றுகிறார்.
திறமைசாலிகளின் கைக்கும் அவர் ஏழை
களை காப்பாற்றுகிறார்.
16எனவே ஏழைகள் நம்பிக்கையோடிருக்
கிறார்கள். நியாயமற்ற தீய ஜனங்களைத்
தேவன் அழிக்கிறார்.
17"தேவன் திருத்தும் மனிதன் பாக்கிய
வான். சர்வ வல்லமையுள்ள தேவன் உன்
னைத் தண்டிக்கும்போது முறையிடாதே.
18தேவன் தான் ஏற்படுத்தும் காயங்களைக்
கட்டுகிறார். அவர் சிலருக்குக் காய
முண்டாக்கலாம், ஆனால் அவர் கைகளே
அவற்றைக் குணமாக்கும்.
19ஆறுவகை தொல்லைகளிலிருந்தும்
அவர் உன்னைக் காப்பாற்றுவார். ஆம், ஏழு
தொல்லைகளிலும் நீர் புண்படமாட்டீர்!
20பஞ்சக்காலத்திலும் தேவன் உன்னை
மரணத்திலிருந்து காப்பாற்றுவார். போர்க்
காலத்திலும் தேவன் உன்னை மரணத்
திலிருந்து பாதுகாப்பார்!
21தங்கள் கூரிய நாவுகளால் ஜனங்கள்
உங்களைக் குறித்துத் தீயவற்றைக் கூறலாம்.
ஆனால் தேவன் உன்னைப் பாதுகாப்பார்.
தீயன நிகழும்போது நீ அஞ்சத் தேவை
யில்லை!
22அழிவைக் கண்டும் பஞ்சத்தைப் பார்த்
தும் நீ நகைப்பாய். காட்டு மிருகங்
களைக் கண்டும் நீ அஞ்சமாட்டாய்.
23உன்னுடைய உடன்படிக்கையின்படி
வயலின் பாறைகளும் கூட அந்த உடன்
படிக்கையில் பங்குகொள்ளும். காட்டு
மிருகங்களும் கூட உன்னோடு சமாதானம்
செய்துக்கொள்ளும்.
24உனது கூடாரம் பாதுகாப்பாக
இருப்பதால் நீர் சமாதானத்தோடு (அமைதி
யாக) வாழ்வாய். உனது சொத்துக்களை
எண்ணிப்பார்த்து ஒன்றும் காணாமல்
போகாதிருப்பதைக் காண்பாய்.
25உனக்குப் பல குழந்தைகள் பிறப்பார்கள்.
அவர்கள் பூமியின் புற்களைப்போன்று
பலராவார்கள்
26அறுவடைக்காலம் வரைக்கும் வளரும்
கோதுமையைப் போல் நீர் இருப்பீர். ஆம்,
நீர் முதிர் வயது வரைக்கும் வாழ்வீர்.
27"யோபுவே, நாங்கள் இவற்றைக் கற்று,
உண்மையென்று அறிந்திருக்கிறோம். என
வே, யோபுவே, நாங்கள் சொல்வதைக்
கேட்டு, நீயாகவே அதைக் கற்றுக்கொள்"
என்று கூறினான்.

### யோபு எலிப்பாசுக்குப் பதில் கூறுகிறான்

6 1-2அப்போது யோபு, "என் துன்பங்களை
நிறுத்துப் பார்க்கக் கூடுமானால், என்
தொல்லைகள் தராசில் வைக்கப்படக் கூடுமா
னால், நீ என் துயரத்தைப் புரிந்து
கொள்வாய்.
3கடற்கரை மணலைக் காட்டிலும் என்
துயர் பாரமானது. அதனால்தான் என்
வார்த்தைகள் மூடத்தனமானவையாகத்
தோன்றுகின்றன.
4சர்வ வல்லமையுள்ள தேவனுடைய
அம்புகள் என்னுள்ளே இருக்கின்றன. அந்த
அம்புகளின் விஷத்தை என் ஆவி பருகு
கின்றது! தேவனுடைய கொடிய ஆயுதங்கள்
எனக்கெதிராக அணிவகுத்து நிற்கின்றன.
5எந்தத் தீமையும் நிகழாதபோது நீ
கூறியவற்றைச் சொல்வது சுலபம் (எளிது).
காட்டுக் கழுதையும் தின்பதற்குப் புல்
அகப்படும்போது முறையிடாது. பசுவுக்கும்
தன் உணவு கிடைக்கும்போது முறை
யிடாது.
6உப்பற்ற உணவு சுவைக்காது.
முட்டையின் வெண்பகுதிக்குச் சுவை
யில்லை.
7நான் அதைத் தொட மறுக்கிறேன்;
அத்தகைய உணவு எனக்குச் சலிப்பைத்
தருகிறது! உனது வார்த்தைகளும் இப்போது
எனக்கு அவ்வாறே உள்ளன.
8"நான் கேட்பவை எனக்குக் கிடைக்க
வேண்டுமென விரும்புகிறேன். நான் விரும்
பியவற்றைத் தேவன் எனக்குத் தருவார்
என விரும்புகிறேன்.
9தேவன் என்னை நசுக்கிப் போட
வேண்டும் என விரும்புகிறேன். அவருடைய
கரத்தின் மூலமாக என்னை அழித்திடலாம்.
10அவர் என்னைக் கொன்றுவிட்டால்
நான் ஒரு காரியத்தைக் குறித்து ஆறுதலடை
வேன். நான் ஒரு காரியத்தைக் குறித்து

மகிழ்ச்சியடைவேன். இத்தனை வேதனை
களை அனுபவித்துங்கூடபரிசுத்தமானவரின்
வார்த்தைகளை கீழ்ப்படிய நான் மறுக்க
வில்லை.
11“என் வலிமை குறைந்துப் போயிற்று,
எனவே தொடர்ந்து வாழ்வதில் எனக்கு
நம்பிக்கை இல்லை. எனக்கு என்ன நேரு
மென அறியேன், எனவே, நான் பொறுமை
யுடன் இருப்பதற்கு காரணமில்லை.
12நான் பாறையைப் போன்று பலம்
பொருந்தியவனா. என் உடம்பு வெண்
கலத்தால் ஆனதா?
13எனக்கு நானே உதவும் ஆற்றல்
எனக்கில்லை. ஏனெனில், வெற்றியோ
என்னிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டது.
14“ஒருவனுக்குத் தொல்லைகள் நேர்கை
யில், அவனது நண்பர்கள் அவனிடம்
இரக்கமாயிருக்கட்டும். ஒருவன் அவனது
நண்பனிடம், அவன் சர்வ வல்லமையுள்ள
தேவனிடமிருந்து விலகிச் சென்றால் கூட,
நம்பிக்கைக்குரியவனாக நடந்துக் கொள்ளட்
டும்.
15ஆனால் என் சகோதரராகிய நீங்களோ
நம்பிக்கைக்குரியவர்களாக இல்லை. நான்
உங்களைச் சார்ந்திருக்க முடியாது.
சிலகாலம் பாய்ந்தும், மற்றும் சிலகாலம்
பாயாமலும் இருக்கின்ற நீரோடைகளைப்
போல நீங்கள் காணப்படுகிறீர்கள்.
16பனிக் கட்டியாலும் உருகும் பனியாலும்
நிரம்பியிருக்கின்ற நீரூற்றுக்களைப்போல,
நீங்கள் பொங்கிப் பாய்கிறீர்கள்.
17உலர்ந்த வெப்பக்காலத்தில் தண்ணீர்
பாய்வது நின்றுவிடுகிறது, நீரூற்றும்
மறைந்து விடுகிறது.
18வியாபாரிகள் பாலைவனத்தின் வளைவு
களையும் நெளிவுகளையும் பின்தொடர்ந்து,
காணாமல் போய்விடுகிறார்கள்.
19தேமாவின் வியாபாரிகள் தண்ணீரைத்
தேடுகிறார்கள். சேபாவின் பிரயாணிகள்
(பயணிகள்) நம்பிக்கையோடு பார்க்கிறார்
கள்.
20அவர்கள் தண்ணீரைக் கண்டடைவதில்
நம்பிக்கையோடு இருக்கிறார்கள், ஆனால்
ஏமாற்றமடைகிறார்கள்.
21இப்போது, நீங்கள் அந்த நீரூற்றுக்களைப்
போல் இருக்கிறீர்கள். என் தொல்லைகளைக்
கண்டு அஞ்சுகிறீர்கள்.
22நான் உங்களிடம் உதவியை
நாடினேனா? எனக்காக நீங்கள் யாரிட
மாவது வெகுமானம் கொடுக்க வேண்டி
னேனா?
23‘பகைவனிடமிருந்து என்னைக் காப்
பாற்றுங்கள்! கொடியோரிடமிருந்து என்
னைக் காப்பாற்றுங்கள்!’ என்று நான்
உங்களிடத்தில் கூறினேனா?
24“எனவே இப்போது எனக்குக் கற்பி
யுங்கள், நான் அமைதியாக இருப்பேன்.
நான் செய்த தவற்றைச் சுட்டிக்காட்டுங்கள்.
25நேர்மையான வார்த்தைகள் ஆற்றல்
மிக்கவை. ஆனால் உங்கள் விவாதங்கள்
எதையும் நிரூபிக்கவில்லை.
26என்னை விமர்சிக்கத் திட்டமிட்டுள்
ளீர்களா? மேலும் சோர்வு தரும் வார்த்தை
களைச் சொல்லப்போகிறீர்களா?
27தந்தைகளற்ற பிள்ளைகளின் பொருள்
களைப் பெற, நீங்கள் சூதாடவும் செய் வீர்கள்.
உங்கள் சொந்த நண்பனையே விற்பீர்கள்.
28ஆனால் இப்போது, என் முகத்தை
ஆராயுங்கள். நான் உங்களிடம் பொய்
கூறமாட்டேன்.
29எனவே இப்போது உங்கள் மனதை
மாற்றுங்கள். அநீதியாய் செயல்படாதீர்கள்,
மீண்டும் சிந்தித்துப் பாருங்கள். நான்
தவறேதும் செய்யவில்லை.
30நான் பொய் கூறவில்லை. நான்
சரியானவற்றை தவறுகளிலிருந்து பிரித்தறி
வேன்” என்றான்.

7 யோபு மீண்டும், “பூமியில் மனிதனுக்கு
மிகுந்த கஷ்டங்களுண்டு வேலைக்கென
வாங்கப்பட்ட பணியாளின் நாட்களைப்
போன்றது அவன் நாட்கள்.
2வெப்பநாளில் மிகுந்த உழைப்பிற்குப்
பின் குளிர்ந்த நிழலை நாடும் அடிமையைப்
போன்றவன் மனிதன். சம்பள நாளுக்காகக்
காத்திருக்கும் அப்பணியாளைப் போன்றிருக்
கிறான்.
3ஏமாற்றந்தரும் மாதங்கள் ஒன்றன்பின்
ஒன்றாய் கழிந்தன. துன்பந்தரும் இரவுகளை
ஒன்றன்பின் ஒன்றாய் அனுபவித்தேன்.
4நான் படுத்திருக்கும்போது, ‘எழுவதற்கு
எத்தனை சமயம் இருக்கிறது?’ என்று
எண்ணுகிறேன். ஆனால் இரவு நீண்டுக்
கொண்டே போகிறது. நான் திரும்பியும்
புரண்டும் சூரியன் உதிக்கும்வரை படுத்திருக்
கிறேன்.
5என் உடம்பில் புழுக்களும் அழுக்குகளும்
படிந்திருக்கின்றன. என் தோல் உரிந்து
புண்களால் நிரம்பியிருக்கின்றன.
6“நெய்பவனின் நாடாவைக்* காட்டிலும்
என் நாட்கள் வேகமாகக் கழிகின்றன.
என் வாழ்க்கை நம்பிக்கையின்றி முடிவடை
கிறது.
7தேவனே, என் வாழ்க்கை ஒரு மூச்சே
என நினைவுகூறும். நான் இனிமேல் (மீண்
டும்) நன்மையைப் பார்க்கப்போவதில்லை.
8நீங்கள் என்னை மீண்டும் பார்க்கப்
போவதில்லை. என்னைத் தேடுவீர்கள்,
ஆனால் நான் அழிந்துப் போயிருப்பேன்.
9மேகம் மறைந்து காணாமற்போகிறது.
அதைப்போன்று, ஒருவன் மரித்துக் கல்லறை

**நெய்பவனின் நாடா** துணிகளை நெய்யும் ஒரு கருவி, ஒரு நூலை மற்ற நூற்களினூடே செலுத்துவதற்கு இந்தக் கருவி பயன்படுகிறது.

யில் அடக்கம் பண்ணப்படுகிறான், அவன்
மீண்டும் வருவதில்லை.
10அவனது பழைய வீட்டிற்கு அவன்
மீண்டும் வரப்போவதில்லை. அவன் வீடு
அவனை இனி ஒருபோதும் அறியாது.
11"எனவே, நான் அமைதியாக இருக்கமா
ட்டேன்! நான் வெளிப்படையாகப் பேசு
வேன்! என் ஆவி துன்புறுகிறது! என்
ஆத்துமா கசந்து போயிருப்பதால் நான்
முறையிடுவேன்.
12தேவனே, ஏன் எனக்குக் காவலா
யிருக்கிறீர்? நான் கடலா, கடல் அரக்கனா?
13என் படுக்கை எனக்கு ஆறுதல் தரு
மென்று நம்பிக்கொண்டிருந்தேன். என்
கட்டில் எனக்கு ஓய்வையும் நிம்மதியையும்
தருமென்று எதிர்பார்த்தேன்.
14ஆனால் தேவனே, நான் படுத்திருக்
கையில் நீர் என்னைக் கனவுகளால்
பயமுறுத்துகிறீர், என்னைத் தரிசனங்
களால்* அச்சுறுத்துகிறீர்.
15எனவே நான் வாழ்வதைக் காட்டிலும்
மூச்சடைத்து மரிப்பதை விரும்புகிறேன்.
16நான் என் வாழ்க்கையை வெறுக்
கிறேன். நான் என்றென்றும் வாழ விரும்ப
மாட்டேன். என்னைத் தனிமையாக
விட்டுவிடுங்கள்! ஏனெனில் என் வாழ்க்கை
பொருளற்றது (அர்த்தமற்றது)
17தேவனே, உமக்கு மனிதன் ஏன்
அத்தனை முக்கியமானவன்? ஏன் அவனைப்
பெருமைப்படுத்துகிறீர்? ஏன் அவனைக்
கண்டுக்கொள்கிறீர்?
18ஏன் அவனைக் கரிசனையோடு காலை
வேளைகளில் சந்தித்து, ஒவ்வொரு விநா
டியும் சோதிக்கிறீர்?
19தேவனே, என்னைவிட்டுத் தூர நீர்
பார்ப்பதில்லை. என்னைவிட்டு ஒரு கண
மும் நீர் விலகுவதில்லை.
20தேவனே, நீர் ஜனங்களை கவனித்து
காப்பாற்றுகிறீர். நான் பாவம் செய்திருந்
தால், நான் என்ன செய்யமுடியும். நீர்
என்னை உமது இலக்காக ஏன் பயன்
படுத்துகிறீர்? நான் உமக்குத் தொல்லையாகி
போனேனா?
21ஏன் நீர் என் தவறை மன்னிக்கக்
கூடாது? என் பாவங்களை நீர் ஏன்
மன்னிக்கக்கூடாது? நான் விரைவில் மடிந்து
கல்லறைக்குள் வைக்கப்படுவேன். அப்போது
என்னைத் தேடுவீர்கள், நான் அழிந்துப்
போயிருப்பேன்" என்றான்.

### பில்தாத் யோபுவிடம் பேசுகிறான்

8 அப்போது சூகியனான பில்தாத் பதி
லாக,
2 "எத்தனை காலம் இவ்வாறு பேசுவீர்?
பலத்த காற்றைப்போன்று உமது சொற்கள்
வெளிப்படுகின்றன.
3தேவன் நியாயத்தை மாற்றுவாரோ? சர்வ
வல்லமையுள்ள தேவன் சரியானவற்றை
மாற்றுவாரோ?
4உமது பிள்ளைகள் தேவனுக்கெதிராகப்
பாவம் செய்தபோது அவர் அவர்களை
தண்டித்தார். அவர்கள் தங்கள் பாவங்களுக்
காகத் தண்டனைப் பெற்றார்கள்.
5ஆனால் இப்போது யோபுவே, தேவ
னைப் பார்த்து சர்வ வல்லமையுள்ள அவரி
டம் ஜெபம் செய்யும்.
6நீர் தூய்மையும் உத்தமனாகவும் இருந்
தால், அவர் விரைந்து உமக்கு உதவ
வருவார். உமது குடும்பத்தை மீண்டும்
உமக்குத் தருவார்.
7தொடக்கம் அற்பமாக இருந்தாலும் உமது
எதிர்காலம் ஆசீர்வாதமானதாக இருக்கும்.
8"வயது முதிர்ந்தோரைக் கேளும்,
அவர்கள் முற்பிதாக்கள் அறிந்து
கொண்டதைத் தெரிந்துகொள்ளும்.
9ஏனெனில் நாம் நேற்றுப் பிறந்தோம்.
ஒன்றும் நாம் அரியோம், ஏனெனில் பூமியில்
நம் நாட்கள் நிழலைப்போன்று மிகவும்
குறுகியவை.
10முதிர்ந்தோர் உமக்குக் கற்பிக்கக் கூடும்.
அவர்கள் அறிந்துக்கொண்டவற்றை உமக்
குச் சொல்லக்கூடும்" என்று கூறினான்.
11பில்தாத் மேலும், "பாப்பிரஸ்* உலர்ந்த
பூமியில் ஓங்கி வளருமோ? தண்ணீரின்றி
கோரைப்புற்கள் வளரக்கூடுமோ?
12இல்லை, தண்ணீர் வற்றிப் போகும்
போது அவை உலர்ந்துபோகும். அவற்றை
வெட்டிப் பயன்படுத்த முடியாதபடி சிறியன
வாக இருக்கும்.
13தேவனை மறப்போரும் அப்புற்களைப்
போலிருக்கிறார்கள். தேவனை மறக்கும்
மனிதனுக்கு எத்தகைய நம்பிக்கையும்
அழிந்துப்போகும்.
14அம்மனிதன் சாய்ந்து நிற்க எதுவு
மில்லை. அவன் பாதுகாவல் ஒரு சிலந்தி
வலையைப் போன்றது.
15சிலந்தி வலையில் ஒருவன் சாய்ந்தால்,
அந்த வலை அறுந்துப்போகும். அவன்
வலையைப் பற்றிக்கொள்வான், ஆனால்
அது அவனைத் தாங்கிக்கொள்ளாது.
16அந்த மனிதனோ சூரிய ஒளி உதிக்கும்
முன் இருக்கிற பச்சை செடியைப் போலிருக்
கிறான். தோட்டம் முழுவதும் அதன் கிளை
கள் பரவி நிற்கும்.

---

**காட்சிகள்** தேவன் மனிதனோடு பேசுவதற்குப் பயன்படுத்தும் கனவைப்போன்ற கருவி.

**பாப்பிரஸ்** தாளை உண்டாக்கப் பயன்படுத்தப்படும் ஒரு வகை தாவரம் அதன் பட்டை படகுகள், மரக்கலங்கள் ஆகியவற்றின் மேற்பகுதியைச் செய்யப் பயன்படுத்தப்பட்டது.

17பாறைகளைச் சுற்றிலும் அதன் வேர்கள் படர்ந்திருக்கும். பாறைகளினூடே வளர் வதற்கு அது ஓர் இடம் தேடும்.
18ஆனால் அத்தாவரத்தை அவ்விடத் திலிருந்து அகற்றினால் அது வாடிப்போகும், அது அங்கிருந்தது என்பதையும் ஒருவரும் அறியமாட்டார்கள்.
19ஆனால், அத்தாவரம் மகிழ்ச்சி யடைந்தது. அது இருந்த இடத்தில் மற்றொரு தாவரம் முளைத்தது.
20தேவன் களங்கமற்றோரைக் கைவிட மாட்டார். அவர் கொடியோருக்கு உதவ மாட்டார்.
21தேவன் இன்னும் உமது வாயை நகைப் பினாலும் உதடுகளை மகிழ்ச்சி ஆரவாரங் களினாலும் நிரப்புவார்.
22ஆனால் உனது பகைவர்கள் வெட்கத் தை ஆடையாக அணிந் துகொள்வார்கள். தீய ஜனங்களின் வீடுகள் அழிக்கப்படும்" என்றான்.

### யோபு பில்தாத்திற்குப் பதில் கூறுகிறான்

9 அப்போது யோபு,
2"ஆம், நீர் கூறுவது உண்மையென அறிவேன். ஆனால் ஒரு மனிதன் எப்படி தேவனுக்கு முன் நீதிமானாயிருக்க முடியும்?
3ஒருவன் தேவனிடம் வாதாட முடியாது! தேவன் 1,000 கேள்விகளைக் கேட்கமுடியும், ஒருவனும் ஒரு கேள்விக்குக்கூட பதில் கூறமுடியாது!
4தேவன் மிகுந்த ஞானமுள்ளவர், அவரது வல்லமை மிகப்பெரியது! ஒருவனும் தேவ னோடு போராடி, காயமுறாமலிருக்க முடி யாது.
5தேவன் கோபமாயிருக்கும்போது பர்வ தங்களை அசைக்கிறார், அவை அதனை அறியாது.
6பூமியை அசைக்கும்படி தேவன் பூமி யதிர்ச்சியை அனுப்புகிறார். தேவன் பூமி யின் அஸ்திவாரங்களை அசைக்கிறார்.
7தேவன் சூரியனிடம் பேசமுடியும், அதை உதயமாகாமல் செய்யமுடியும். அவர் விண் மீன்களை ஒளிவிடாதபடி பூட்டமுடியும்.
8தேவன் மட்டுமே வானங்களை உண்டாக் கினார், அவர் சமுத்திரத்தின் அலைகளின் மேல் நடக்கிறார்.
9அவர் துருவச்சக்கர நட்சத்திரங்களையும், மிருக சீரிஷத்தையும், அறு மீனையும், தட்சண மண்டலங்களையும் உண்டாக் கினார்.
10மனிதர் புரிந்துகொள்ள முடியாத அற்புத மான காரியங்களைத் தேவன் செய்கிறார். தேவனுடைய எண்ணிமுடியாத அதிசயங் களுக்கு முடிவேயில்லை!
11தேவன் என்னைக் கடந்துச் செல்கை யில் நான் அவரைப் பார்க்க முடியாது. தேவன் என்னைக் கடந்துச் செல்கையில் நான் அவரைக் கவனிப்பதில்லை.
12தேவன் எதையாவது எடுத்துக் கொண்டால் அவரை யாரும் தடுக்க முடியாது. 'நீர் என்ன செய்கிறீர்?' என்று யாரும் அவரைக் கேட்கமுடியாது.
13தேவன் தமது கோபத்தை அடக்கிக் கொள்ளமாட்டார். ராகாபின்* உதவி யாளருங்கூட தேவனுக்குப் பயந்திருக் கிறார்கள்.
14எனவே நான் தேவனுக்கு பதில் கொடுக்க முடியாது. அவரிடம் என்ன சொல்லவென்பதை நான் அறியேன்.
15நான் களங்கமற்றவன், ஆனால் என்னால் அவருக்குப் பதில் கூறமுடியாது. என் நீதிபதியிடம் (தேவனிடம்) இரக்கத்திற்காக மன்றாட மட்டுமே என்னாலாகும்.
16நான் கூப்பிட்டு அவர் பதில் தந்தாலும், அவர் உண்மையாகவே எனக்குச் செவி கொடுக்கிறார் என்பதை நான் நம்ப முடி யாது.
17தேவன் என்னை நசுக்குவதற்குப் புயல்களை அனுப்புகிறார். எக்காரணமு மின்றி எனக்கு இன்னுமதிகமான காயங் களைத் தருகிறார்.
18மீண்டும் இன்னொரு முறை சுவாசிக்க தேவன் என்னை அனுமதிக்கமாட்டார். அவர் எனக்கு இன்னும் தொல்லைகளைத் தருகிறார்.
19தேவன் மிகுந்த வல்லமையுள்ளவர்! யார் தேவனை நியாயசபைக்கு அழைத்துவந்து, நியாயம் வழங்கும்படி சொல்ல முடியும்?
20நான் களங்கமற்றவன், ஆனால் நான் கூறுபவை என்னைக் குற்றவாளியாகக் காட்டக்கூடும். நான் உத்தமன், ஆனால் நான் பேசினால் என் வாய் என்னைக் குற்றவாளியாக நிரூபிக்கிறது.
21நான் களங்கமற்றவன், நான் எதைச் சிந்திப்பதென அறியேன். நான் என் சொந்த வாழ்க்கையையே வெறுக்கிறேன்.
22நான் எனக்குள்ளே, 'இதே மாதிரி எல்லோருக்கும் நிகழ்கிறது' களங்கமற்ற வர்களும் குற்றவாளிகளும் முடிவை காண பார்கள்' என்று சொல்லிக்கொள்கிறேன்.
23கொடிய செயலொன்று நிகழ்ந்து களங்கமற்றவன் கொல்லப்பட்டால் தேவன் அவரைப் பார்த்து நகைப்பாரா?
24தீயவன் ஒருவன் ஒரு நிலத்தைத் தனதாக்கிக் கொள்ளும்போது, நிகழ்வன வற்றைத் தலைவர்கள் காணாதபடி தேவன் செய்கிறாரா? அது உண்மையானால் தேவன் யார்?
25"ஓர் ஓட்டக்காரனைக் காட்டிலும் என் நாட்கள் வேகமாகக் கழிகின்றன. என் நாட்கள் பறக்கின்றன, அவற்றில் சந்தோஷ மில்லை.

---

**ராகாப்** ஒரு ராட்சசன் அல்லது கடல்மிருகம். ராகாப் கடலைக்கட்டுப்படுத்துவதாக ஜனங்கள் நினைத்தனர். ராகாப் தேவனின் பகைவரது அடையாளம் அல்லது தீமைக்குரிய ஏதோ ஒன்று.

26வேகமாய் ஓடுகின்ற கப்பல்களைப்
போலவும் இரையைப் பிடிக்க பாய்கின்ற
கழுகுகளைப் போலவும் என் நாட்கள்
கடந்துச் செல்கின்றன.
27'நான் முறையிடுவதில்லை, என்
வேதனையை மறப்பேன், என் முகத்தில்
புன்னகை பொலிவேன்!' என்று நான்
கூறினால்,
28அது எந்த மாற்றத்தையும் உண்மையாக
ஏற்படுத்துவதில்லை! துன்பங்கள் என்னை
அச்சுறுத்துகின்றன.
29நான் ஏற்கனவே குற்றவாளியாக
நியாயந்தீர்க்கப்பட்டேன். எனவே, நான்
ஏன் முயன்று கொண்டிருக்க வேண்டும்?
'அதை மறந்து விடு!' என நான் சொல்
கிறேன்.
30பனியால் என்னைக் கழுவினாலும்,
சவுக்காரத்தினால் (சோப்பினால்) என் கை
களைச் சுத்தம் செய்தாலும்,
31தேவன் என்னைச் சேற்றுக் குழியில்*
தள்ளுவார். அப்போது என் உடைகளும்
என்னை வெறுக்கும்.
32தேவன் கூறும் குற்றங்களுக்கு பதில் கூற
என்னைப் போன்று மனிதன் அல்ல,
நியாயசபையில் நாங்கள் ஒருவருக்கொருவர்
சந்திக்க முடியாது.
33இரு பக்கங்களிலும் நியாயம் கேட்க
ஒருவர் இருந்தால், நல்லதென நான்
விரும்புகிறேன்.* எங்களை நியாயமாக (தக்க
முறையில்) நியாயந்தீர்க்க வல்லவர் ஒருவர்
இருக்கமாட்டாரா என நான் விரும்புகிறேன்.
34தேவனுடைய தண்டிக்கும் கோலை
என்னிடத்திலிருந்து எடுத்துப்போடுவார்.
ஒருவர் இருக்கமாட்டாரா என விரும்பு
கிறேன். அப்போது அவருடைய பயமுறுத்து
தல்கள் என்னை அச்சுறுத்தாது.
35அப்போது தேவனைப்பற்றிப் பயப்
படாமல், நான் சொல்ல விரும்புவன
வற்றைக் கூற முடியும். ஆனால் இப்போது
நான் அவ்வாறு செய்ய முடியாது"
என்றான்.

10 நான் என் சொந்த வாழ்க்கையை
வெறுக்கிறேன். எனவே நான் தாராள
மாக முறையிடுவேன். என் ஆத்துமா கசந்து
போயிற்று, எனவே நான் இப்போது பேசு
வேன்.
2நான் தேவனிடம், 'என்னைக் குற்றம்
சாட்டாதேயும்! நான் செய்த தவற்றை
எனக்குக் கூறும், எனக்கெதிராக உமது
காரியம் என்ன?' என்பேன்.
3தேவனே, என்னைத் துன்புறுத்துவது
உமக்கு மகிழ்ச்சித் தருகிறதா? நீர் உண்டாக்
கினதைக் குறித்து நீர் கவலைப்பட்டதாகத்
தெரியவில்லை. அல்லது தீயோர் செய்த
திட்டங்களில் நீர் மகிழ்ச்சிச்கொள்கிறீரா?
4தேவனே, உமக்கு மனிதரின் கண்கள்
உண்டா? மனிதர் காண்பதுபோல் நீர்
காரியங்களைப் பார்க்கிறீரா?
5எங்களைப்போல உமது வாழ்க்கையும்
குறுகியதா? மனிதனின் வாழ்க்கையைப்
போல் உமது வாழ்க்கையும் குறுகியதா?
இல்லை! எனவே அது எப்படிப்பட்டது
என்பதை எவ்வாறு அறிவீர்?
6எனது தவறுகளைப் பார்க்கிறீர், என்
பாவங்களைத் தேடுகிறீர்.
7நான் களங்கமற்றவன் என்பதை நீர்
அறிந்திருந்தும் உமது ஆற்றலிலிருந்து
தப்பித்துக்கொள்ள வழியில்லை!
8தேவனே, உமது கைகள் என்னை
உண்டாக்கி, என் உடலுக்கு வடிவளித்தன.
இப்போது அவை என்னை மூடிக்கொண்டு
அழிக்கின்றன.
9தேவனே, என்னைக் களிமண்ணைப்
போல உருவாக்கினீர் என நினைத்துப்
பாரும். என்னை மீண்டும் களிமண்ணாக
மாற்றுவீரா?
10என்னைப் பாலைப்போன்று வெளியே
ஊற்றினீர். தயிரைக் கடைந்து வெண்ணெய்
எடுப்பவனைப்போன்று என்னைக்
கடைந்து உருமாற்றினீர்.
11எலும்புகளாலும் தசைகளாலும் எனக்கு
உருவளித்தீர். பின்னர் தோலாலும் தசை
யாலும் உடுத்தினீர்.
12எனக்கு உயிரளித்தீர், என்னிடம்
இரக்கமாயிருந்தீர். நீர் என்னை பராமரித்தீர்,
என் ஆவியைப் பாதுகாத்தீர்.
13ஆனால் நீர் இதை உமது இருதயத்தில்
மறைத்து வைத்திருக்கிறீர். நீர் இரகசியமாக
உமது இருதயத்தில் திட்டமிட்டது இது
என்பதை நான் அறிவேன்.
14நான் பாவம் செய்தால், நீர் அதைக்
கவனித்துக்கொண்டிருந்தீர், எனவே நீர் என்
தவறுகளுக்கு என்னைத் தண்டிக்க முடியும்.
15நான் பாவம் செய்யும்போது குற்றவாளி
யாகிறேன், அது எனக்குத் தீமையானது.
ஆனால் நான் களங்கமற்றவனாயிருக்கும்
போதும், என் தலையை உயர்த்திப்பார்க்க
முடியவில்லை! நான் வெட்கப்பட்டு
அவமானமடைந்திருக்கிறேன்.
16எனக்கு வெற்றி கிடைத்து நான் பெரு
மைப்பட்டால், ஒருவன் சிங்கத்தை வேட்டை
யாடுவதைப்போல என்னை வேட்டையாடு
கீறீர். எனக்கெதிராக உமது ஆற்றலை
மீண்டும் காட்டுகீறீர்.
17நான் தவறு செய்தேன் என்று நிறுவ
உமக்கு எப்போதும் யாரேனும் கிடைப்
பர். பல வழிகளில் உமது கோபத்தை
மீண்டும் மீண்டும் வெளிப்படுத்துவீர் அவை
எனக்கெதிராக ஒன்றன்பின் ஒன்றாக
படைகளை அனுப்புவது போன்றிருக்கும்.
18எனவே, தேவனே, ஏன் என்னைப்

---

**சேற்றுக்குழி** பிணங்கள் அழுகும் கல்லறை.

**இரு பக்கங்களிலும் ... விரும்புகிறேன்** "நடு நிலைமையாளர்."

பிறக்க அனுமதித்தீர்? யாரேனும் என்னைக்
காணும் முன்பே நான் மரித்திருக்க வேண்டு
மென நான் விரும்புகிறேன்.
19நான் ஒருபோதும் வாழ்ந்திருக்க
வேண்டாமென விரும்புகிறேன். தாயின்
கருவிலிருந்து நேரே கல்லறைக்கு என்னைச்
சுமந்துப் போயிருக்க வேண்டுமென விரும்பு
கிறேன்.
20என் வாழ்க்கை ஏறக்குறைய முடிந்து
விட்டது. எனவே என்னைத் தனித்து
விடுங்கள்!
21யாரும் திரும்பிவராத, இருளும்
மரணமுமுள்ள இடத்திற்கு நான் போகும்
முன்பு, மிஞ்சியுள்ள சில காலத்தை நான்
சந்தோஷமாய் அனுபவிக்க அனுமதியுங்கள்.
22யாரும் பார்க்கமுடியாத, இருளும் நிழல்
களும் குழப்பமும் நிரம்பிய இடத்திற்கு
நான் போகும் முன்பு, மிஞ்சியுள்ள சில
காலத்தை நான் மகிழ்ந்திருக்க அனுமதி
யுங்கள். அங்கு ஒளியும் கூட இருளாகும்"
என்றான்.

### சோப்பார் யோபுவிடம் பேசுகிறான்

11 அப்போது நாகமாவின் சோப்பார்
யோபுவுக்குப் பதில் கூறினான்.
2"இவ்வார்த்தைப் பெருக்குக்குப் பதில்
தரப்பட வேண்டும்! இத்தனை பேச்சுக்களும்
யோபுவுக்கு நீதி வழங்குகின்றனவா?
இல்லை!
3யோபுவே, உனக்குச் சொல்ல எங்களிடம்
பதில் இல்லை என்று நினைக்கிறாயா? நீ
நகைத்து பேசும்போது உன்னை எச்சரிக்க
ஒருவருமில்லை என நினைக்கிறாயா?
4யோபுவே, நீ தேவனிடம், 'என் விவாதங்
கள் சரியானவை, நான் தூயவன் என நீர்
காணமுடியும்' என்கிறாய்.
5யோபுவே, தேவன் உனக்குப் பதில்
சொல்லி, நீ கருதுவது தவறென உனக்குச்
சொல்வார் என விரும்புகிறேன்.
6தேவன் ஞானத்தின் இரகசியங்களை
உனக்குச் சொல்லமுடியும். ஏனெனில்
ஞானத்திற்கு இரண்டு பக்கங்கள் உண்டு
என்பதை அவர் உனக்குச் சொல்வார்.
தேவன் உன்னைத் தண்டிக்க வேண்டிய
அளவிற்கு அவர் தண்டிப்பதில்லை.
7யோபுவே, நீ உண்மையாகவே தேவ
னைப் புரிந்துகொண்டதாக நினைக்கிறாயா?
சர்வவல்லமையுள்ள தேவனுடைய அறிவை
நீ புரிந்துகொள்ள முடியுமோ?
8அது பரலோகத்திற்கும் உயர்ந்தது.
மரணத்தின் இடத்தைக் காட்டிலும் ஆழ
மானது. அது பற்றி நீர் அறியக்கூடுமோ?
9தேவனுடைய அறிவின் அளவு
உயர்ந்தது பூமியைக் காட்டிலும் கடல் களைக்
காட்டிலும் பெரியது.
10"தேவன் உன்னைச் சிறைபிடித்து
நியாயசபைக்கு அழைத்துவந்தால், ஒரு
வனும் அவரைத் தடுக்க முடியாது.
11உண்மையாகவே, யார் தகுதியற்ற
வரென்று தேவன் அறிகிறார்.
தேவன் தீமையைப் பார்க்கும்போது
அதை நினைவுக்கூர்கிறார்.
12ஒரு காட்டுக் கழுதை மனிதனை ஈன்
றெடுக்காது. மூடனான மனிதன் ஒருபோதும்
ஞானம் பெறமாட்டான்.
13"ஆனால் யோபுவே, உன் இருதயத்தைத்
தேவனுக்கு நேராக தயார்ப்படுத்த வேண்டும்,
உன் கரங்களை அவருக்கு நேராக உயர்த்தி
அவரைத் தொழுதுகொள்ள வேண்டும்.
14உன் வீட்டிலிருக்கும் பாவத்தை நீ
அகற்றிப்போட வேண்டும். உன் கூடாரத்தில்
தீமை தங்கியிருக்க விடாதே.
15அப்போது நீ தேவனை வெட்கமின்றிப்
பார்க்கக்கூடும். நீ தைரியமாக நின்று,
அச்சமில்லாது இருக்க முடியும்.
16அப்போது நீ உன் தொல்லைகளை
மறக்கக்கூடும் வழிந்தோடும் வெள்ளத்தைப்
போல் உன் தொல்லைகள் நீங்கிவிடும்.
17நண்பகலில் சூரியனின் பிரகாசத்தைக்
காட்டிலும், உன் வாழ்க்கை ஒளிமயமாக
இருக்கும். வாழ்க்கையின் இருண்ட
நேரங்களும் காலை சூரியனைப் போன்று
பிரகாசிக்கும்.
18அப்போது நீ பாதுகாவலை உணர்வாய்.
ஏனெனில், உனக்கு நம்பிக்கை உண்டு.
தேவன் உன்னைக் கவனித்து உனக்கு
ஓய்வளிப்பார்.
19நீ ஓய்வெடுக்கப் படுத்துக்கொள்வாய்,
யாரும் உனக்குத் தொல்லை தர மாட்டார்
கள். பலர் உன்னிடம் உதவி நாடி
வருவார்கள்.
20தீயோர் உன்னிடம் உதவியை எதிர்
பார்ப்பர், அவர்கள் தங்கள் தொல்லை
களிலிருந்து தப்பமுடியாது. அவர்களின்
நம்பிக்கை அவர்களை மரணத்திற்கு நேராக
மட்டுமே வழிநடத்தும்" என்றான்.

### யோபு சோப்பாருக்குப் பதிலளிக்கிறான்

12 பின்பு யோபு சோப்பாருக்குப் பதி
லாக,
2"நீங்கள் மட்டுமே ஞானவான் என
நீங்கள் எண்ணுகின்றீர்கள் என நான் உறுதி
யாகக் கருதுகிறேன். நீங்கள் மரிக்கும்போது
ஞானமும் உங்களோடு அழிந்துப்போகும்.
3நானும் உன்னைப் போன்றே புத்திசாலி.
உங்களிலும் நான் தாழ்ந்தவன் அல்ல.
இப்படிப்பட்டவைகளை அறியாதவர்கள்
யார்?
4"என் நண்பர்கள் இப்போது என்னைக்
கண்டு நகைக்கிறார்கள். அவர்கள், "அவன்
தேவனிடம் ஜெபித்தான், அவன் பதிலைப்
பெற்றான் என்று சொல்கிறார்கள். "உத்தம
னாகிய நீதிமான் பரியாசம் பண்ணப்
படுகின்றான்.
5தொல்லைகளற்றோர் தொல்லையுடை

யோரைக் கண்டு நகைக்கிறார்கள். அவர்கள்
வீழும் மனிதனைத் தாக்குகிறார்கள்.
6ஆனால் திருடரின் கூடாரங்கள் பாதிக்கப்
படவில்லை. தேவனை கோபங்கொள்ளச்
செய்வோர் சமாதானமாக வாழ்கிறார்கள்.
அவர்களின் சொந்த வலிமையே அவர்களது
ஒரே தேவன்.
7“ஆனால் மிருகங்களைக் கேளுங்கள்,
அவை உங்களுக்குப் போதிக்கும். வானத்துப்
பறவைகளைக் கேளுங்கள், அவை உங்க
ளுக்குச் சொல்லும்.
8அல்லது பூமியிடம் பேசுங்கள்,அது
உங்களுக்குக் கற்பிக்கும். அல்லது கடலின்
மீன்கள் தங்கள் ஞானத்தை உங்களுக்குச்
சொல்லட்டும்.
9கர்த்தருடைய கரம் அவற்றை உண்டாக்
கினது என்பதை ஒவ்வொருவரும் அறிகி
றோம்.
10வாழும் ஒவ்வொரு மிருகமும் மூச்சு
விடும் ஒவ்வொரு மனிதனும் தேவனுடைய
வல்லமைக்குக் கட்டுப்பட்டவர்கள்.
11நாவு உணவைச் சுவைப்பதுப்போல
காதுகள் கேட்கும் சொற்களை ஆராய்ந்து
பார்க்கும்.
12முதிர்ந்தோர் ஞானவான்கள், புரிந்து
கொள்ளும் ஆற்றலையுடையவருக்கு நீண்ட
ஆயுள் உண்டு.
13ஞானமும் ஆற்றலும் தேவனுக்குரியவை.
ஆலோசனையும் புரிந்து கொள்ளுதலும்
அவருக்குரியவை.
14தேவன் எதையேனும் கிழித்து அழித்
தால் ஜனங்கள் அதை மீண்டும் உருவாக்க
முடியாது. தேவன் ஒருவனைச் சிறைக்குள்
அகப்படுத்தினால் ஜனங்கள் அவனை
விடுவிக்க முடியாது.
15தேவன் மழையைப் பெய்யாதிருக்கச்
செய்தால், பூமி உலர்ந்து போகும். தேவன்
மழையைத் தாராளமாகப் பெய்யச் செய்தால்,
அது பூமியில் வெள்ளப் பெருக்கெடுக்கும்.
16தேவன் வல்லமையுள்ளவரும் வெற்றி
பெறுவர். ஏமாந்தவரும் மற்றும் ஏமாற்று
கின்றவரும் அவருக்கு கீழிருக்கிறீர்கள்,
17தேவன் ஆலோசனைக் கூறுவோரின்
ஞானத்தை அகற்றுகிறார், அவர் தலை
வர்களை மூடர்களைப்போல் நடக்கும்படி
செய்கிறார்.
18அரசர்கள் ஜனங்களைச் சிறைகளில்
அடைக்கக்கூடும், ஆனால் தேவன் அந்த
ஜனங்களை விடுவித்து ஆற்றலுள்ளோராக்கு
கிறார்.
19தேவன் ஆசாரியர் ஆற்றலை அகற்று
கிறார், அவர் ஆலயப் பணியாட்களை
முக்கியமற்றோராக்குகிறார்.
20நம்பிக்கையுள்ள ஆலோசகர்களை அமை
தியாயிருக்கும்படி தேவன் செய்கிறார்,
முதிர்ந்தோரின் ஞானத்தை அவர் அகற்றி
விடுகிறார்.
21தேவன் தலைவர்களை முக்கிய மற்றோ
ராக்குகிறார், தலைவர்களின் ஆற்றலை
அவர் நீக்கிவிடுகிறார்.
22இருண்ட இரகசியங்களையும் கூட
தேவன் அறிகிறார், மரணம் போன்ற
இருளுள்ள இடங்களிலும் அவர் ஒளியைப்
பாய்ச்சுகிறார்.
23தேவன் தேசங்களைப் பெரிதாகவும்
வல்லமை மிக்கதாகவும் செய்கிறார். பின்பு
அவர் அவற்றை அழிக்கிறார். அவர் தேசங்
களைப் பெரிதாக வளரும்படி செய்கிறார்,
பின்பு அவர் அங்குள்ள ஜனங்களைச்
சிதறடிக்கிறார்.
24தேவன் தலைவர்களை மூடராக்குகிறார்,
அவர்கள் குறிக்கோளின்றி பாலை
வனத்தில் அலையும்படிச் செய்கிறார்.
25அத்தலைவர்கள் இருளில் தடுமாறி
வழி தேடுகின்றவனைப்போல் இருக்
கிறார்கள். குடித்து போகும்வழியை
அறியாது செல்கிறவனைப்போல் இருக்கி
றார்கள்” என்றான்.

13 யோபு, “நான் இவற்றையெல்லாம்
முன்னரே பார்த்திருக்கிறேன். நீங்கள்
கூறுகின்றவற்றையெல்லாம் நான் ஏற்கனவே
கேட்டிருக்கிறேன். அவற்றையெல்லாம் நான்
புரிந்துகொள்கிறேன். 2உங்களுக்கு தெரிந்த
வற்றை நான் அறிவேன். நானும் உங்களைப்
போலவே புத்திசாலி. 3ஆனால் நான்
உங்களோடு வாதாட விரும்பவில்லை. சர்வ
வல்லமையுள்ள தேவனோடு நான் பேச
விரும்புகிறேன். என் தொல்லைகளைப்பற்றி
நான் தேவனோடு வாதாட விரும்புகிறேன்.
4ஆனால் நீங்கள் மூவரும் உங்கள் அறியா
மையைப் பொய்களால் மறைக்க முயல்
கிறீர்கள். ஒருவரையும் குணப்படுத்த முடி
யாத தகுதியற்ற மருத்துவர்களைப்போல்
இருக்கிறீர்கள். 5நீங்கள் அமைதியாயிருக்க
வேண்டும் என விரும்புகிறேன். நீங்கள்
செய்யத்தக்க மிகுந்த ஞானமுள்ள காரியம்
அதுவேயாகும்.
6“இப்போது என் விவாதத்திற்கும் செவி
கொடுங்கள். நான் சொல்லவேண்டிய
வற்றிற்குச் செவிகொடுங்கள்.
7நீங்கள் தேவனுக்காகப் பொய் கூறுவீர்
களா? நீங்கள் கூறும் பொய்களை, நீங்கள்
கூறவேண்டுமென்று தேவன் விரும்பியதாக
நீங்கள் உண்மையாகவே நம்புகிறீர்களா?
8எனக்கெதிராக தேவனை ஆதரித்துப்
பேச முயன்றுக் கொண்டிருக்கிறீர்களா?
தேவனுக்காக வழக்குகள் கொண்டுவர
முடியுமா?
9உங்களைத் தேவன் கூர்ந்து ஆராய்ந்தால்,
நீங்கள் சரியானவர்கள் என காண்பிப்
பாரா? நீங்கள் ஜனங்களை மூடராக்குவது
போல் தேவனை முட்டாளாக்க முடியும் என
உண்மையாகவே எண்ணுகிறீர்களா?
10ஒரு மனிதன் முக்கியமானவன் என்ப
தால் மட்டும் நீதிமன்றத்தில் இரகசியமாக
அவன் பக்கம் சாய முடிவுசெய்தால், தேவன்

உங்களை விசாரணை செய்வார் என்பதை
நீங்கள் அறிவீர்கள்.
11 தேவனுடைய மகத்துவம் (முக்கியத்
துவம்) உங்களை அச்சுறுத்துகிறது. நீங்கள்
அவரைக் கண்டு பயப்படுகிறீர்கள்.
12 உங்கள் வாக்குவாதங்கள் சாம்பலைப்
போல் எந்தப் பயனுமற்றவை
உங்கள் பதில்கள் சேற்றுக்குவியல்கள்
போல பலனற்றவை.
13 “அமைதியாயிருங்கள், என்னைப் பேச
விடுங்கள்! பிறகு எனக்கு நேரிடும்
அனைத்தையும் நான் ஏற்றுக்கொள்கிறேன்.
14 நான் என்னை ஆபத்திற்குட்படுத்தி என்
உயிரை என் கைகளில் எடுப்பேன்.
15 தேவன் என்னைக் கொன்றாலும் நான்
அவரைத் தொடர்ந்து நம்புவேன். அவருக்கு
முன்பாக என் பொருட்டு வாதாடுவேன்.
16 தேவன் என்னை வாழவிட்டால், அது
நான் அவரிடம் துணிந்து பேசியதன்
விளைவாகும். தீயவன் ஒருவனும் தேவனை
முகத்துக்கு முகம் பார்க்கத் துணிவதில்லை.
17 நான் சொல்கின்றவற்றிற்குக் கவனமாகச்
செவிகொடுங்கள். நான் விவரித்துத் கூற
அனுமதியுங்கள்.
18 நான் எனக்காக வாதாட தயாராயிருக்
கிறேன். எனது வாதங்களைக் கவனமாகச்
சொல்வேன்.நான் குற்றமற்றவன் என்று
தீர்க்கப்படுவேனென்று அறிவேன்.
19 நான் தவறென யாரேனும் நிரூபித்தால்
உடனே நான் வாய் பேசாதிருப்பேன்
(அமைதியாக இருப்பேன்)
20 “தேவனே, எனக்கு இரண்டு காரியங்
களைத் தாரும், அப்போது உம்மிடமிருந்து
ஒளிந்திருக்கமாட்டேன்.
21 என்னைத் தண்டிப்பதை நிறுத்தும்,
பயங்கரங்களால் என்னை அச்சுறுத்துவதை
நிறுத்தும்.
22 பின்பு என்னைக் கூப்பிடும், நான் பதில்
தருவேன். அல்லது என்னைப் பேச விடும்,
நீர் எனக்குப் பதில் தாரும்.
23 நான் எத்தனை பாவங்கள் செய்துள்
ளேன்? நான் என்ன தவறு செய்தேன்? என்
பாவங்களையும்
எனது தவறுகளையும் எனக்குக் காட்டும்.
24 தேவனே, ஏன் என்னைவிட்டு விலகு
கிறீர்? ஏன் உமது பகைவனைப்போல்
என்னை நடத்துகிறீர்?
25 என்னை அச்சுறுத்த முயன்றுக் கொண்
டிருக்கிறீரா? நான் காற்றில் பறக்கும் ஒரு
இலை மட்டுமேயாவேன். ஒரு சிறிய காய்ந்த
வைக்கோல் துண்டினை நீர் தாக்குகிறீர்.
26 தேவனே, எனக்கெதிராகக் கசப்பான
வற்றைக் கூறுகிறீர். நான் இளமையில்
செய்த பாவங்களுக்காக என்னை துன்புறச்
செய்கிறீரா?
27 என் பாதங்களின் நீர் விலங்குகளை
இட்டீர். நான் எடுக்கும் ஒவ்வோர் அடியை
யும் நீர் கண்ணோக்குகிறீர்.
28 எனது ஒவ்வோர் அசைவையும் நீர்
கண்ணோக்குகிறீர். அரித்துப்போகின்ற மரத்
தைப் போலவும், அந்த பூச்சிகளால்
அரிக்கப்படும் துணியைப்போலவும் நான்
சோர்ந்து அழிந்துப்போகிறேன்” என்றான்.

14 யோபு, “நாமெல்லோரும் மனித
ஜீவிகளே.* நம் வாழ்க்கை குறுகிய
தும் தொல்லைகள் நிரம்பியதுமாகும். 2 மனி
தனின் வாழ்க்கை ஒரு மலரைப்போன்றது.
அவன் விரைவாக வளருகிறான், பின்பு
மடிந்துப்போகிறான். மனிதனின் வாழ்க்கை
ஒரு நிழலைப்போன்றது. அது குறுகிய
காலம் இருந்து, பின்பு மறைந்துப்போகும்.
3 அது உண்மையே, ஆனால் ஒரு மனி
தனாகிய என்னைத் தேவன் நோக்கிப்
பார்ப்பாரா? நீர் என்னோடு நியாய சபைக்கு
வருவீரா? அங்கு நாம் இருவரும் நம்
விவாதங்களை முன் வைப்போம்.
4 “ஆனால் அழுக்குப்படிந்த ஒரு பொரு
ளுக்கும் தூய்மையான ஒரு பொருளுக்கு
மிடையே இருக்கும் ஒற்றுமை என்ன?
ஒன்றுமில்லை!
5 மனிதனின் வாழ்க்கை ஒரு எல்லை
உடையது. தேவனே, ஒரு மனிதன் எத்த
னைக் காலம் வாழ்கிறான் என்பதை நீர்
முடிவு செய்கிறீர். ஒரு மனிதனுக்கு அந்த
எல்லைகளை நீர் முடிவெடுக்கிறீர், எதுவும்
அதை மாற்ற முடியாது.
6 எனவே, தேவனே எங்களைக் கவனிப்
பதை நிறுத்தும். எங்களைத் தனித்துவிடும்.
எங்கள் காலம் முடியும் வரைக்கும் எங்கள்
கடின வாழ்க்கையை நாங்கள் வாழ விடும்.
7 “ஒரு மரத்திற்கும் நம்பிக்கை உண்டு. அது
வெட்டப்பட்டால், மீண்டும் வளரக்கூடும்.
அது புது கிளைகளைப் பரப்பியபடி நிற்கும்.
8 அதன் வேர்கள் பலகாலம் மண்ணிற்குள்
வளரும், அதன் அடிப்பகுதி புழுதியில்
மடியும்.
9 ஆனால் தண்ணீரினால் அது மீண்டும்
வளரும். புதுச்செடியைப் போன்று அதில்
கிளைகள் தோன்றும்.
10 ஆனால் மனிதன் மரிக்கும்போது, அவன்
அழிந்துப்போகிறான். மனிதன் மரிக்கும்
போது, அவன் காணாமற்போகிறான்.
11 நதிகள் வற்றிப்போகும் படியாகவும்கடல்
தண்ணீர் முழுவதும் வற்றிப்போகும்படியாக
தண்ணீர் இறைத்தாலும் மனிதன் மரித்த
வனாகவே கிடப்பான்.
12 ஒருவன் மரிக்கும்போது அவன் படுத்
திருக்கிறான், மீண்டும் எழுகிறதில்லை.
அவர்கள் எழும் முன்னே வானங்கள்
எல்லாம் மறைந்துபோகும். ஜனங்கள் அந்த
உறக்கத்திலிருந்து எழுவதேயில்லை.
13 “நீர் என் கல்லறையில் என்னை ஒளித்து
வைப்பீரென விரும்புகிறேன். நீர் உமது
கோபம் ஆறும் வரை என்னை அங்கு

---

***மனித ஜீவிகள்*** *பெண்ணிடமிருந்து பிறந்தவர்கள்.*

ஒளித்து வைப்பீரென விரும்புகிறேன். பின்பு
என்னை நினைவுகூரும் காலத்தை நீர்
தேர்ந்தெடுக்கலாம்.
14 ஒருவன் இறந்தால், அவன் மீண்டும்
வாழ்வானா? நான் விடுதலையாகும் வரை
எத்தனை காலமாயினும் காத்திருந்தேயாக
வேண்டும்!
15 தேவனே, நீர் என்னைக் கூப்பிடுவீர்,
நான் உமக்குப்பதில் தருவேன். நீர் என்னை
சிருஷ்டித்தீர், நான் உமக்கு முக்கியமானவன்.
16 நான் எடுக்கும் ஒவ்வோர் அடியையும்
நீர் கண்ணோக்குகிறீர். ஆனால், நீர் என்
பாவங்களை நினைவுக்கூர்வதில்லை.
17 நீர் என் பாவங்களை ஒரு பையில்
கட்டிவைப்பீர். அதை முத்திரையிடும், அதை
வீசியெறிந்து போடும்!
18 "பர்வதங்கள் விழுந்து நொறுங்கிப்
போகும். பெரும் பாறைகள் தளர்ந்து
உடைந்து விழும்.
19 கற்களின் மீது பாயும் வெள்ளம்
அவற்றைக் குடையும். பெருவெள்ளம் நிலத்
தின் மேற்பரப்புத்துகளை அடித்துச் (இழுத்து)
செல்லும். தேவனே, அவ்வாறே ஒருவனின்
நம்பிக்கையை நீர் அழிக்கிறீர்.
20 அவனை முற்றிலும் தோற்கடித்து,
பின்பு விலகிப் போகிறீர்.அவனைத் துயரங்
கொள்ளச் செய்து, மரணத்தின் இடத்திற்கு
என்றென்றைக்கும் அனுப்புகிறீர்.
21 அவன் மகன்கள் பெருமையடையும்
போது, அவன் அதை அறியான்.அவன்
மகன்கள் தவறு செய்யும்போது, அவன்
அதைக் காணான்.
22 அம்மனிதன் தனது உடம்பின் வலியை
மட்டுமே உணருகிறான், அவன் தனக்காக
மட்டுமே உரக்க அழுகிறான்" என்றான்.

## எலிப்பாஸ் யோபுக்குப் பதில் கூறுகிறான்

15 அப்போது தேமானைச் சார்ந்த
எலிப்பாஸ் யோபுக்குப் பதிலாக,
2 "யோபுவே, நீ உண்மையாகவே ஞான
முள்ளவனாக இருந்தால், நீ பிரயோஜனமற்ற
வெறும் வார்த்தைகளால் பதில் கூற
மாட்டாய். வெப்பமான காற்று நிரம்பிய
வனாக ஞானவான் இருக்கமாட்டான்.
3 பொருளற்ற பேச்சுக்களாலும் தகுதியற்ற
வார்த்தைகளாலும் ஒரு ஞானவான்
விவாதிப்பானென்று நீ நினைக்கிறாயா?
4 யோபுவே, நீ கூறும்படி நடந்தால், ஒரு
வனும் தேவனை மதித்து, அவரிடம்
ஜெபிக்கமாட்டான்.
5 நீ கூறும் காரியங்கள் உனது பாவத்தைத்
தெளிவாகக் காட்டுகின்றன. யோபுவே,
உனது புத்திசாலித்தனமான சொற்களால்
உனது பாவங்களை நீ மறைக்க முயன்றுக்
கொண்டிருக்கிறாய்.
6 நீ செய்வது தவறென நான் உன்னிடம்
நிரூபிக்கத் தேவையில்லை. உனது வாயி
னால் கூறும் சொற்களே உனது தவற்றைச்
சுட்டிக் காட்டுகின்றன. உனது சொந்த
உதடுகளே உனக்கு எதிராகப் பேசுகின்றன.
7 "யோபுவே, பிறந்தவர்களில் நீதான்
முதல் மனிதன் என எண்ணுகிறாயா?
மலைகள் தோன்றும் முன்னே நீ பிறந்தாயா?
8 நீ தேவனுடைய இரகசிய திட்டங்
களுக்குச் செவிசாய்த்தாயா? நீ மட்டுமே
ஞானமுள்ளவனென நினைக்கிறாயா?
9 யோபுவே, உன்னைக் காட்டிலும் நாங்
கள் மிகுதியாக அறிவோம். உனக்குப்
புரிகின்றக் காரியங்களை நாங்கள் புரிந்து
கொள்கிறோம்.
10 நரைமயிருள்ளோரும் வயது முதிர்ந்
தோரும் எங்களோடு ஒத்திருக்கிறார்கள்.
ஆம், உனது தந்தையைக் காட்டிலும் வயது
முதிர்ந்தோரும் எங்கள் பக்கத்தில் இருக்
கிறார்கள்.
11 தேவன் உனக்கு ஆறுதல் கூற முயற்சிக்
கிறார், ஆனால் அது உனக்குப் போத
வில்லை. தேவனுடைய செய்தியை நயமாக
நாங்கள் உனக்குக் கூறினோம்.
12 யோபுவே, ஏன் நீ புரிந்துகொள்ள
வில்லை? ஏன் நீ உண்மையைக் காண
இயலவில்லை?
13 நீ கோபமான இந்தச் சொற்களைப்
பேசும்போது நீ தேவனுக்கு எதிராக இருக்
கிறாய்.
14 "ஒரு மனிதன் உண்மையில் தூயவனாக
இருக்க முடியாது. பெண் வயிற்றில் பிறந்த
ஒருவன் நியாயமுள்ளவனாக இருக்க முடி
யாது.
15 தேவன் அவரது தூதர்களைக்கூட*
நம்புகிறதில்லை. வானங்களும் அவரது
பார்வையில் தூய்மையானவை அல்ல.
16 மனிதன் இன்னும் கேவலமானவன்,
மனிதன் அழுக்கானவனும் அழியக்கூடிய
வனும் ஆவான். தண்ணீரைப்போன்று
அவன் கொடுமையைப் பருகுகிறான்.
17 "யோபுவே, எனக்குச் செவிகொடு, நான்
உனக்கு விவரிப்பேன். எனக்குத் தெரிந்ததை
நான் உனக்குக் கூறுவேன்.
18 ஞானவான்கள் எனக்குக் கூறியவற்றை
நான் உனக்குச் சொல்வேன். ஞானவான்
களின் முற்பிதாக்கள் அவர்களுக்கு இவற்
றைக் கூறினார்கள். அவர்கள் எந்த
இரகசியங்களையும் என்னிடமிருந்து மறைக்
கவில்லை.
19 அவர்கள் மட்டுமே அவர்களின் நாட்டில்
வாழ்ந்தார்கள். கடந்து செல்லும்போது
அந்நியர்கள் அங்கு இருக்கவில்லை. எனவே
ஒருவரும் அவர்களுக்கு வேடிக்கையான
கருத்துக்களைச் சொல்லவில்லை.
20 தீயவன் வாழ்க்கை முழுவதும்
துன்புறுகிறான். கொடியவன் வரையறுக்கப்

**தூதர்களை** எழுத்தின் பிராகாரமாக, "பரிசுத்தமான ஒன்று" எனப் பொருள்படும்.

*பட்ட அவன் ஆயுள் முழுவதும் துன்புறு*
*கிறான்.*
[21]*ஒவ்வொரு சத்தமும் அவனை அச்சுறுத்*
*துகிறது, அவன் பாதுகாப்பாக இருப்பதாக*
*எண்ணும்போது அவனது பகைவன் அவ*
*னைத் தாக்குவான்.*
[22]*தீயவன் நம்பிக்கையற்றுக் கலங்கு*
*கிறான், மரண இருளிலிருந்து தப்புவதற்கு*
*அவனுக்கு எந்த நம்பிக்கையுமில்லை.*
*அவனைக் கொல்லக் காத்துக்கொண்*
*டிருக்கும் வாள் ஒன்று எங்கோ உள்ளது.*
[23]*அவன் அங்குமிங்கும் அலைந்துத் திரி*
*கிறான், ஆனால் அவன் உடல் பருந்து*
*களுக்கு இரையாகும். அவனது மரணம்**
*மிக அருகாமையிலுள்ளது என்பதை அவன்*
*அறிகிறான்.*
[24]*கவலையும் துன்பமும் அவனை*
*அச்சுறுத்தும் அவனை அழிக்கத் தயாரா*
*யிருக்கிற அரசனைப்போன்று அவை*
*அவனைத் தாக்கும்.*
[25]*ஏனெனில், தீயவன் தேவனுக்குக்*
*கீழ்படிய மறுக்கிறான். அவன் தனது கை*
*முட்டியைத் தேவனுக்கு எதிராக உயர்த்தி,*
*சர்வ வல்லமையுள்ள தேவனுக்கு எதிராகச்*
*செயல்படுகின்றான். தோற்கடிக்க முயல்*
*கிறான்.*
[26]*தீயவன் மிகவும் அடம்பிடிப்பவன்.*
*அவன் கெட்டியான, வலிமையான கேடயத்*
*தால் தேவனைத் தாக்க முயல்கிறான்.*
[27]*“அவன் செல்வந்தனும் கொழுத்தவனாக*
*இருப்பான்,*
[28]*ஆனால் அவன் ஊர் அழிக்கப்படும்,*
*அவன் வீடு பாழாகும், அவன் வீடு*
*வெறுமையாகும்,*
[29]*தீயவன் பலகாலம் செல்வனாக இருக்க*
*மாட்டான். அவன் செல்வம் நிலைக்காது.*
*அவனது பயிர்கள் செழிப்பாக வளராது*
[30]*தீயவன் இருளிலிருந்து தப்பமாட்டான்.*
*நோயினால் மடியும் இலைகளையும் காற்றி*
*னால் பறக்கடிக்கப்படும் இலைகளையும்*
*கொண்ட மரத்தைப் போலிருப்பான்.*

[31]*தீயவன் தகுதியற்றவற்றைநம்பி தன்னை*
*மூடனாக்கிக்கொள்ளக் கூடாது. ஏனெனில்*
*அவன் எதையும் அடையமாட்டான்.*
[32]*அவன் வாழ்க்கை முடியும் முன்பே,*
*தீயவன் வயதாகி வாடிப்போவான். என்றும்*
*பசுமையுற முடியாத, உலர்ந்த கிளையைப்*
*போல அவன் இருப்பான்.*
[33]*இன்னும் பழுக்காத திராட்சைக் கனி*
*களை இழக்கின்ற திராட்சைக் கொடியைப்*
*போன்று தீயவன் இருப்பான். மொட்டுக்*
*களை இழக்கும் ஒலிவ மரத்தைப்போன்று*
*அம்மனிதன் இருப்பான்.*
[34]*ஏனெனில் தேவனற்ற மனிதர்களுக்கு*
*எதுவுமில்லை (ஒன்றுமில்லை). பணத்தை*
*நேசிப்போரின் வீடுகள் நெருப்பால் அழியும்.*
[35]*தீயனச் செய்து, தொல்லை விளை*
*விப்பதற்குத் தீயோர் வழிகளைத் திட்டமிடு*
*கிறார்கள். ஜனங்களை ஏமாற்றும் வழிகளை*
*அவர்கள் எப்போதும் திட்டமிடுகிறார்கள்”*
*என்று கூறினான்.*

### யோபு எலிப்பாசுக்குப் பதிலளிக்கிறான்

16 *அப்போது யோபு பதிலாக,*
[2]*“நான் இவற்றையெல்லாம் முன்பே*
*கேட்டிருக்கிறேன். நீங்கள் மூவரும் எனக்குத்*
*தொல்லையை அல்லாமல் ஆறுதலைத்*
*தரவில்லை.*
[3]*உங்கள் நீண்ட பேச்சுகளுக்கு முடிவே*
*யில்லை! ஏன் தொடர்ந்து விவாதிக்கிறீர்கள்?*
[4]*எனக்கு வந்த தொல்லைகள் உங்களுக்கு*
*ஏற்பட்டால் நீங்கள் சொல்வதையே நானும்*
*சொல்லக்கூடும். நானும் ஞானமுள்ள*
*காரியங் களை உங்களுக்குச் சொல்லி, என்*
*தலையை உங்களுக்கு நேர் அசைக்கக்கூடும்.*
[5]*நான் கூறும் காரணங்களால் உங்களுக்கு*
*உற்சாகமூட்டி உங்களுக்கு நம்பிக்கையளிக்க*
*முடியும்.*
[6]*“ஆனால் நான் கூறுபவை எதுவும்*
*என் வேதனையை அகற்ற முடியாது!*
*ஆயினும் மௌனமாய் இருப்பதிலும் பயன்*
*இல்லை.*
[7]*தேவனே, உண்மையாகவே என்*
*பலத்தை எடுத்துப் போட்டீர். என் குடும்பம்*
*முழுவதையும் அழித்தீர்.*
[8]*நீர் என்னை இணைத்து பலவீனமாக்கி*
*னீர் அதனால் நான் குற்றவாளியே என*
*ஜனங்கள் நினைக்கிறார்கள்.*
[9]*தேவன், என்னைத் தாக்குகிறார், அவர்*
*என் மீது கோபங்கொண்டு, என் உடம்பைக்*
*கிழித்தெறிகிறார். தேவன் எனக்கெதிராக*
*அவரது பற்களைக் கடிக்கிறார். என் பகை*
*வனின் கண்கள் என்னை வெறுப்போடு*
*(பகையோடு) பார்க்கின்றன.*
[10]*ஜனங்கள் என்னைச் சூழ்ந்து ஒன்றுக்*
*கூடி, என்னை பார்த்து நகைத்து, என்*
*முகத்தில் அறைகிறார்கள்.*
[11]*தேவன் என்னைத் தீய ஜனங்களிடம்*
*ஒப்படைத்தார். அத்தீயர் என்னைக் காயப்*
*படுத்தும்படி விட்டார்.*
[12]*எனக்கு எல்லாம் நல்லபடியாக இருந்*
*தன, ஆனால், பின்பு தேவன் என்னை*
*நசுக்கினார்! ஆம், அவர் என்னைக் கழுத்தில்*
*பிடித்து, என்னைத் துண்டுகளாக நொறுக்*
*கினார்! தேவன் என்னை இலக்காகப்*
*பயன்படுத்தினார்.*
[13]*தேவனுடைய வில்வீரர்கள்* என்னைச்*
*சூழ்ந்து நிற்கிறார்கள். அவர் என் சிறுநீரகங்*
*கள்மேல் அம்புகளை எய்கிறார். அவர்*

---

***மரணம்*** *எழுத்தின் பிராகாரமாக, “இருளின் நாள்” எனப் பொருள்படும்.*

***வில்வீரர்கள்*** *போரில் வில்லையும் அம்பையும் பயன்படுத்தும் வீரர்கள்.*

இரக்கம் காட்டவில்லை. என் ஈரலின் பித்த*
தண்ணீரைத் தரையில் சிந்தச் செய்கிறார்.
14மீண்டும், மீண்டும் தேவன் என்னைத்
தாக்குகிறார். யுத்தம் செய்யும் வீரனைப்
போல் அவர் என்மேல் பாய்கிறார்.
15“நான் மிகவும் துயரமுற்றிருக்கிறேன்,
எனவே துயரத்தைக் காட்டும் இந்த ஆடை
களை அணிந்திருக்கிறேன். நான் இங்குத்
துகளிலும் சாம்பலிலும் உட்கார்ந்திருக்கி
றேன், நான் தோற்கடிக்கப்பட்டதாய் உணரு
கிறேன்.
16அழுது என் முகம் சிவந்திருக்கிறது.
கருவளையங்கள் என் கண்ணைச் சுற்றிலும்
காணப்படுகின்றன.
17நான் யாரிடமும் கொடுமையாக நடந்துக்
கொண்டதில்லை, ஆனால் இத்தீய காரியங்கள்
எனக்கு நேரிட்டுள்ளன. என் ஜெபங்கள்
தூய்மையும் நேர்மையுமானவை.
18“பூமியே, எனக்குச் செய்யப்பட்ட அநீதி
களை மறைக்காதே. நியாயத்திற்கான என்
வேண்டுதல் (நிறுத்த) தடுக்கப்படாமல்
இருக்கட்டும்.
19இப்போதும் பரலோகத்தில் யாரேனும்
இருந்தால், அவர்கள் எனக்காக பேசு
வார்கள். மேலிருந்து யாராவது எனக்காக
சாட்சி கூறுவார்கள்.
20என் கண்கள் தேவனுக்கு முன்னால்
கண்ணீரைச் சொரிகையில் என் நண்பர்கள்
எனக்கு எதிராகப் பேசுகிறார்கள்.
21நண்பனுக்காக வாதாடுகின்ற ஒரு
மனிதனைப்போன்று எனக்காகத் தேவனை
வேண்டுகிற ஒருவன் எனக்கு வேண்டும்!
22“சில ஆண்டுகளில் திரும்பமுடியாத
அந்த இடத்திற்கு, (மரணம்) நான்
போவேன்.”

17 என் ஆவி நொறுங்கிப் போயிற்று;
நான் விட்டுவிலகத் தயாராயிருக்
கிறேன். என் வாழ்க்கை முடியும் நிலை
யிலுள்ளது. கல்லறை எனக்காகக் காத்துக்
கொண்டிருக்கிறது.
2ஜனங்கள் என்னைச் சூழ்ந்து நின்று,
என்னைப் பார்த்து நகைக்கிறார்கள். அவர்
கள் என்னைக் கேலிச்செய்து, அவமானப்
படுத்துவதைப்
பார்த்துக்கொண்டிருக்கிறேன்.
3“தேவனே, நீர் என்னை ஆதரிக்கிறீர்
என்பதை எனக்குக் காட்டும். வேறெவரும்
என்னை ஆதரிக்கமாட்டார்கள்.
4நீர் என் நண்பர்களின் மனத்தை
மூடிவைத்திருக்கிறீர், அவர்கள் என்னை
புரிந்துக்கொள்ளார்கள். தயவுசெய்து அவர்
கள் வெற்றியடையாதபடிச் செய்யும்.
5ஜனங்கள் கூறுவதை நீர் அறிவீர்:
‘ஒருவன் அவனது நண்பர்களுக்கு உதவு
வதற்காகத் தன் பிள்ளைகளைக் கூடப்
பொருட்படுத்தமாட்டான்’* ஆனால் என்
நண்பர்களோ எனக்கெதிராகத் திரும்பியிருக்
கிறார்கள்.
6எல்லோருக்கும் ஒரு கெட்ட சொல்லாக,
தேவன் என் பெயரை மாற்றியிருக்கிறார்.
ஜனங்கள் என் முகத்தில் உமிழ்கிறார்கள்.
7என் கண்கள் குருடாகும் நிலையில்
உள்ளன ஏனெனில், நான் மிகுந்த துக்கமும்
வேதனையும் உள்ளவன். என் உடம்பு
முழுவதும் ஒரு நிழலைப்போல மெலிந்து
விட்டது.
8நல்லோர் இதைப்பற்றிக் கலங்கிப்
போயிருக்கிறார்கள். தேவனைப் பற்றிக்
கவலையுறாத ஜனங்களுக்கு எதிராக, களங்க
மற்றோர் கலக்கமடைந்துள்ளனர்.
9ஆனால் நல்லோர் நல்ல வழியில்
தொடர்ந்து வாழ்கிறார்கள். களங்கமற்றோர்
இன்னும் வலிமை பெறுவார்கள்.
10“ஆனால் நீங்கள் எல்லோரும் வாருங்
கள், இது எனது தவறால் விளைந்ததே
எனக் காட்ட முயலுங்கள். உங்களில்
ஒருவரும் ஞானமுடையவன் அல்லன்.
11என் வாழ்க்கை கடந்து போகிறது, என்
திட்டங்கள் அழிக்கப்பட்டன. என் நம்பிக்கை
போயிற்று.
12ஆனால் என் நண்பர்கள் குழம்பிப்
போயிருக்கிறார்கள். அவர்கள் இரவைப்
பகலென்று நினைக்கிறார்கள். அவர்கள்
இருள் ஒளியை விரட்டிவிடுமென நினைக்
கிறார்கள்.
13“கல்லறையே என் புது வீடாகும் என
நான் எதிர்பார்க்கலாம். இருண்ட கல்லறை
யில் என் படுக்கையை விரிக்கலாம் என
நான் எதிர்பார்க்கலாம்.
14நான் கல்லறையிடம், ‘நீயே என் தந்தை’
என்றும் புழுக்களிடம், ‘என் தாய்’ அல்லது
‘என் சகோதரி’ என்றும் கூறலாம்.
15ஆனால் அதுவே என் ஒரே நம்பிக்கை
யாயிருந்தால், அப்போது எனக்கு நம்பிக்கை
யே இல்லை! அதுவே என் ஒரே
நம்பிக்கையாக இருந்தால், அந்த நம்பிக்கை
நிறைவுப்பெறுவதை காண்பவர் யார்?
16என் நம்பிக்கை என்னோடு மறையுமோ?
அது மரணத்தின் இடத்திற்குக் கீழே
போகுமா? நாம் ஒருமித்துத் துகளில் இறங்கு
வோமா?” என்றான்.

### பில்தாத் யோபுவுக்குப் பதில் கூறுகிறான்

18 சூகியனான பில்தாத் அப்போது
பதிலாக:
2“யோபுவே, நீ எப்போது பேசுவதை
நிறுத்துவாய்? அமைதியாயிருந்து கேளும்.

**பித்தம்** ஈரலின் மேலிருக்கும் பித்தப் பையில் பித்த தண்ணீர் சுரக்கும். பித்தப்பையைப் பிளந்தால் பித்த தண்ணீர் சிந்தும். கசப்பானதும் வேதனை தருவதுமான நிகழ்ச்சியைத் தாங்கிக்கொள்வதை இது குறிக்கும்.

**ஜனங்கள் … மாட்டான்** எழுத்தின் பிராகாரமாக, “அவன் தனது நண்பர்களுக்கு ஒரு பங்கைத் தர வாக்குறுதியளிக்கிறான். அவனது பிள்ளைகளின் கண்கள் குருடாகும்” எனப் பொருள்படும்.

நாங்கள் சிலவற்றைச் சொல்லவிடும் (அனு
மதியும்).
[3]நாங்கள் பசுக்களைப்போல் மூடரென
நீ நினைப்பதேன்?
[4]யோபுவே, உனது கோபம் உன்னையே
துன்புறுத்துகிறது. உனக்காக ஜனங்கள்
பூமியைவிட்டுச் செல்லவேண்டுமா? உன்
னைத் திருப்திப்படுத்துவதற்காக தேவன்
பர்வதங்களை அசைப்பார் என்று நினைக்
கிறாயா?
[5]“ஆம், தீயவனின் தீபம் அணைந்துப்
போகும். அவனது நெருப்பு எரிவதை
நிறுத்தும்.
[6]வீட்டின் ஒளி இருளாகும். அவனருகே
ஒளிவிடும் விளக்கு அணைந்துவிடும்.
[7]அவன் அடிகள் வலியதாகவும் விரை
வாகவும் இராது. ஆனால் அவன் மெது
வாகவும் சோர்வாகவும் நடப்பான். அவனது
சொந்த தீய திட்டங்களே அவனை விழச்
செய்யும்.
[8]அவனது பாதங்கள் அவனைக் கண்ணிக்
குள் வழிநடத்தும். அவன் கண்ணிக்குள்
நடந்து அதிலே அகப்பட்டுக்கொள்வான்.
[9]அவன் குதிகாலை ஒரு கண்ணிப்
பிடிக்கும். ஒரு கண்ணி அவனை இறுகப்
பிடிக்கும்.
[10]தரையிலுள்ள ஒரு கயிறு அவனை
அகப்படுத்தும். அவன் வழியில் ஒரு கண்ணி
அவனுக்காகக் காத்துக்கொண்டிருக்கும்.
[11]சுற்றிலும் பயங்கரம் அவனுக்காகக்
காத்துக்கொண்டிருக்கும். அவன் எடுக்கும்
ஒவ்வோர் அடியிலும் பயங்கள் அவனைத்
தொடரும்.
[12]கெட்ட தொல்லைகள் அவனுக்காகப்
பசித்திருக்கும். அழிவும், கேடும் அவன்
விழும்போது அவனுக்காகத் தயாராக
இருக்கும்.
[13]கொடிய நோய் அவனது தோலை
அரிக்கும். அது அவனது கரங்களையும்
கால்களையும் அழுகச்செய்யும்.
[14]தீயவன் அவனது வீட்டின்
பாதுகாப்பிலிருந்து அகற்றப்படுவான். பயங்
கரங்களின் அரசனைச் சந்திக்க அவன்
அழைத்துச் செல்லப்படுவான்.
[15]அவன் வீட்டில் ஒன்றும் மிஞ்சியிராது.
ஏனெனில், அவன் வீடு முழுவதும் எரியும்
கந்தகம் நிரம்பியிருக்கும்.
[16]கீழேயுள்ள அவன் வேர்கள் உலர்ந்துப்
(காய்ந்து) போகும், மேலேயுள்ள அவன்
கிளைகள் மடிந்துபோகும்.
[17]பூமியின் ஜனங்கள் அவனை நினைவுகூர
மாட்டார்கள். ஒருவனும் இனிமேல் அவனை
நினைத்துப்பார்க்க மாட்டார்கள்.
[18]ஜனங்கள் அவனை ஒளியிலிருந்து
இருளுக்குள் தள்ளிவிடுவார்கள். அவர்கள்
அவனை இந்த உலகிற்கு வெளியே துரத்தி
விடுவார்கள்.
[19]அவனுக்குப் பிள்ளைகளோ, பேரப்
பிள்ளைகளோ இருக்காது. அவன் குடும்பத்
தில் எவரும் உயிரோடு விட்டுவைக்கப்பட
மாட்டார்கள்.
[20]மேற்கிலுள்ள ஜனங்கள் அத்தீயவனுக்கு
நிகழ்ந்ததைக் கேள்விப்படும்போது, அதிர்ச்சி
யடைவார்கள். கிழக்கிலுள்ள ஜனங்கள்
பயங்கர பீதியடைந்து வாயடைத்துப்
போவார்கள்.
[21]தீயவனின் வீட்டிற்கு அது உண்மை
யாகவே நடக்கும். தேவனைப்பற்றிக்
கவலைப்படாதவனுக்கு இப்படியே நிகழும்!”
என்றான்.

### யோபு பதில் கூறுகிறான்

19 அப்போது யோபு பதிலாக:
[2]“எத்தனை காலம் நீங்கள் என்னைத்
துன்புறுத்தி, வார்த்தைகளால் என்னை
உடைப்பீர்கள்?
[3]நீங்கள் இப்போது என்னைப் பத்துமுறை
இழிவுப் படுத்தியிருக்கிறீர்கள். நீங்கள்
என்னைத் தாக்கும்போது வெட்கமடைய
வில்லை?
[4]நான் பாவம் செய்திருந்தாலும் அது
எனது தொல்லையாகும். அது உங்களைத்
துன்புறுத்தாது.
[5]என்னைக் காட்டிலும் உங்களைச்
சிறந்தவர்களாக காட்ட நீங்கள் விரும்பு
கிறீர்கள். என் தொல்லைகள் என் சொந்தத்
தவறுகளால் நேர்ந்தவை என்று நீங்கள்
கூறுகிறீர்கள்.
[6]ஆனால் தேவனே எனக்குத் தவ
றிழைத்தார். என்னைப் பிடிப்பதற்கு அவர்
ஒரு கண்ணியை வைத்தார்.
[7]‘அவர் என்னைத் துன்புறுத்தினார்!’
என நான் கத்துகிறேன். ஆனால் எனக்குப்
பதிலேதும் கிடைக்கவில்லை. நான் உரக்க
உதவிக்காகக் கூப்பிட்டாலும், நியாயத்
திற்காக வேண்டும் என் குரலை ஒருவரும்
கேட்கவில்லை.
[8]தேவன் என் வழியை அடைத்ததால் நான்
தாண்டிச்செல்ல முடியவில்லை. அவர் என்
பாதையை இருளால் மறைத்திருக்கிறார்.
[9]தேவன் என் பெருமையை எடுத்துப்
போட்டார். அவர் என் தலையின்
கிரீடத்தை (முடியை) எடுத்தார்.
[10]தேவன் நான் அழியும் வரைக்கும்
என்னை எல்லாப் பக்கங்களிலுமிருந்து
தாக்குகிறார். வேரோடு வீழ்ந்த மரத்தைப்
போன்று அவர் என் நம்பிக்கையை
அகற்றினார்.
[11]தேவனுடைய கோபம் எனக்கெதிராக
எரிகிறது. அவர் என்னைத் தமது பகைவன்
என்று அழைக்கிறார்.
[12]தேவன் தமது படையை என்னைத்
தாக்குவதற்கு அனுப்புகிறார். என்னைத் தாக்
குவதற்கு என்னைச் சுற்றிலும் கோபுரங்
களை எழுப்புகிறார்கள். என் கூடாரத்தைச்

சுற்றிலும் அவர்கள் முற்றுகையிட்டிருக்
கிறார்கள்.
13“என் சகோதரர்கள் என்னை வெறுக்கும்
படி தேவன் செய்தார். என் நண்பர்களுக்கு
நான் ஒரு அந்நியனானேன்.
14என் உறவினர்கள் என்னை விட்டு
சென்றார்கள். என் நண்பர்கள் என்னை
மறந்துப்போனார்கள்.
15என்னை ஒரு அந்நியனைப் போலவும்
வெளிநாட்டினனைப் போலவும் என்
வீட்டிற்கு வரும் விருந்தினர்களும் பணி
விடைப் பெண்களும் பார்க்கிறார்கள்.
16நான் என் பணியாளைக் கூப்பிடும்
போது, அவன் பதில் தருவதில்லை. நான்
உதவிக்காகக் கெஞ்சும்போதும் என் பணி
யாள் பதில் தரமாட்டான்.
17என் மனைவி என் மூச்சின் வாசனை
யை வெறுக்கிறாள். என் சொந்த சகோ
தரர்கள் என்னை வெறுக்கிறார்கள்.
18சிறு குழந்தைகளும் என்னைக் கேலிச்
செய்கிறார்கள். நான் அவர்கள் அருகே
வரும்போது அவர்கள் கெட்டவற்றைச்
சொல்கிறார்கள்.
19என் நெருங்கிய நண்பர்கள் என்னை
வெறுக்கிறார்கள். நான் நேசிக்கும் ஜனங்கள்
கூட எனக்கெதிராகத் திரும்பியிருக்கிறார்கள்.
20“நான் மிகவும் மெலிந்துபோனேன். என்
தோல் எலும்போடு ஒட்டித் தொங்குகிறது.
எனக்குச் சற்றே உயிர் மீந்திருக்கிறது.
21“என் நண்பர்களே, எனக்கு இரங்குங்
கள்! எனக்கு இரங்குங்கள்! ஏனெனில்,
தேவன் எனக்கு எதிராக இருக்கிறார்.
22தேவன் செய்வதைப் போன்று நீங்கள்
ஏன் என்னைத் தண்டிக்கிறீர்கள்? என்னைத்
துன்புறுத்துவதால் நீங்கள் தளர்ந்துப்
போகவில்லையா?
23“நான் சொல்வதை யாரேனும் நினை
வில் வைத்து ஒரு புத்தகத்தில் எழுத
மாட்டீர்களா? என விரும்புகிறேன். என்
வார்த்தைகள் ஒரு சுருளில் எழுதப்படாதா?
என விரும்புகிறேன்
24நான் சொல்பவை என்றென்றும்
நிலைக்கும்படி ஈயத்தின்மேல் ஒரு இரும்புக்
கருவியால் பொறிக்கப்படவோ அல்லது
பாறையில் செதுக்கப்படவோ வேண்டுமென
விரும்புகிறேன்.
25என் மீட்பர் உயிரோடு இருக்கிறார்
என்று எனக்குத் தெரியும்! முடிவில் அவர்
பூமியின்மேல் எழுந்து நின்று என்னைக்
காப்பாற்றுவார்!
26நான் என் உடலைவிட்டுச் சென்றாலும்
(நான் உயிர் நீத்தாலும்), என் தோல்
அழிந்துப்போனாலும், பின்பு நான் என்
தேவனைக் காண்பேன் என அறிவேன்!
27என் சொந்த கண்களால் நான்
தேவனைக் காண்பேன்! நானே,
வேறெவருமல்ல, தேவனைக் காண்பேன்!
நான் எத்தனை உணர்ச்சி வசப்பட்டவனாக
உணருகிறேன் என்பதை என்னால் உங்க
ளுக்குச் சொல்ல முடியாது.
28“நீங்கள், ‘நாம் யோபுவைத் துன்புறுத்து
வோம். அவனைக் குற்றம் சாட்ட ஒரு
காரணத்தைக் காண்போம்’ என்று கூறலாம்.
29ஆனால் நீங்களே அஞ்சுவீர்கள். ஏனெ
னில், தேவன் குற்றவாளிகளைத் தண்டிக்
கிறார். தேவன் வாளைப் பயன்படுத்தி
உங்களைத் தண்டிப்பார். அப்போது
நியாயந்தீர்க்கும் காலம் ஒன்று உண்டு
என்பதை நீங்கள் அறிவீர்கள்” என்றான்.

### சோப்பார் பதிலளிக்கிறான்

20 அப்போது நாகமாவின் சோப்பார்
பதிலாக:
2“யோபுவே, உன்னிடம் குழப்பமான
எண்ணங்கள் மிகுந்துள்ளன. எனவே நான்
உனக்குப் பதில் கூறவேண்டும். நான்
நினைத்துக்கொண்டிருப்பதை விரைந்து
உனக்குக் கூறவேண்டும்.
3நீ உனது பதில்களால் எங்களை
அவமானப்படுத்தினாய்! ஆனால் நான் ஞான
முள்ளவன் உனக்கு எவ்வாறு பதில்
தரவேண்டும் என்பதை நான் அறிவேன்.
4-5“தீயவனின் மகிழ்ச்சி நீண்டகாலம்
நிலைக்காது என்பதை நீ அறிவாய். ஆதாம்,
பூமியில் வந்த காலம் முதல் அதுவே
உண்மையாக உள்ளது. தேவனைப்பற்றிக்
கவலைப்படாதவனின் மகிழ்ச்சி குறுகிய
காலமே நிலைக்கும்.
6தீயவனின் பெருமை வானத்தை எட்ட
லாம், அவன் தலை மேகங்களைத்
தொடலாம்.
7அவன் தன் மலத்தைப் போலவே,
என்றென்றும் அழிக்கப்படுவான். அவனை
அறிந்த ஜனங்கள் ‘அவன் எங்கே?’ என்பார்
கள்.
8கனவைப் போன்று, அவன் பறந்துப்
போவான். ஒருவனும் அவனைக் கண்ட
டைய முடியாது. அவன் துரத்தப்பட்டு,
ஒரு கெட்ட கனவாய்* மறக்கப்படுவான்.
9அவனைப் பார்த்த ஜனங்கள் மீண்டும்
அவனைக் காணமாட்டார்கள். அவன்
குடும்பத்தினர் அவனை மீண்டும் பார்ப்ப
தில்லை.
10அவன் ஏழைகளிடமிருந்து எடுத்ததை
அத்தீயவனின் பிள்ளைகள் திரும்பக் கொடுப்
பார்கள். தீயவனின் சொந்தக் கைகளே
அவனது செல்வத்தைத் திருப்பிக் கொடுக்
கும்.
11அவன் இளைஞனாயிருந்த போது,
அவன் எலும்புகள் பெலனுள்ளவையாக
இருந்தன. ஆனால், உடம்பின் பிற பகுதி
களைப் போன்று, அவை விரைவில்
துகளில் கிடக்கும்.
12“கெட்ட மனிதனின் வாய் தீமையை

---

**கெட்ட கனவு** “இரவில் வரும் காட்சி.”

இனிமையாக ருசிக்கும். அவன் அதை
முழுவதும் சுவைப்பதற்காக அவனது
நாவின் அடியில் வைப்பான்.
13கெட்ட மனிதன் தீமையில் களிப்பான்.
அவன் அதை விட்டுவிட விரும்பமாட்டான்.
அது அவனது வாய்க்குள்ளிருக்கும் இனிப்
பைப் போலிருக்கும்.
14ஆனால் அத்தீமை அவன் வயிற்றில்
நஞ்சாகும். பாம்பின் விஷத்தைப்போன்று
அது அவனுள் கசப்பான விஷமாக மாறும்.
15தீயவன் செல்வங்களை விழுங்கியிருக்
கிறான். ஆனால் அவன் அவற்றை
வாந்தியெடுப்பான். தீயவன் அவற்றை
வாந்தியெடுக்கும்படி தேவன் செய்வார்.
16பாம்புகளின் விஷத்தைப்போன்று, தீய
வன் பருகும் பானமும் இருக்கும். பாம்பின்
நாக்கு அவனைக் கொல்லும்.
17அப்போது, அத்தீயவன் தேனாலும்
பாலாலும் ஓடுகிற நதிகளைக் கண்டு களிக்க
மாட்டான்.
18-19தீயவன், அவன் சம்பாதித்த செல்வங்
களையெல்லாம் திருப்பித் தரும்படி
கட்டாயப் படுத்தப்படுவான். தன்னுடைய
உழைப்பின் பலனை அவன் அனுபவிக்க
அனுமதிக்கமாட்டான். அவன் மற்றவர்கள்
கட்டியிருந்த வீடுகளை அபகரித்துக் கொண்
டான்.
20“தீயவன் ஒருபோதும் திருப்தியடை
வதில்லை. அவனது செல்வம் அவனைக்
காப்பாற்றாது.
21அவன் சாப்பிடுகிறபோது, எதுவும்
மீதியாகிருப்பதில்லை. அவன் வெற்றி தொட
ராது.
22தீயவனுக்கு மிகுதியாக இருக்கும்போது
அவன் துன்பங்களால் அழுத்தப்படுவான்.
அவனது சிக்கல்கள் அவன்மேல் வந்து
அழுத்தும்!
23தீயவன் அவனுக்குத் தேவையான
வற்றையெல்லாம் உண்ட பின்பு, அவனுக்
கெதிராக தேவன் அவரது எரியும்
கோபத்தை வீசுவார். தீயவன் மேல் தேவன்
தண்டனையைப் பொழிவார்.
24தீயவன் இரும்பு வாளுக்குத் தப்பி ஓடி
விடலாம், ஆனால் ஒரு வெண்கல அம்பு
அவனை எய்து வீழ்த்தும்.
25அவன் உடம்பின் வழியாக அந்த
வெண்கல அம்புச் சென்று முதுகின்
வழியாக வெளிவரும். அதன் பிரகாசிக்கும்
(ஒளி விடும்) முனை அவனது ஈரலைப்
பிளக்கும். அவன் பயங்கர பீதி அடைவான்.
26அவன் பொக்கிஷங்கள் அழிந்துபோகும்.
எந்த மனிதனும் பற்ற வைக்காத ஒரு
நெருப்பு அவனை அழிக்கும். அவன் வீட்டில்
மீந்திருக்கும் ஒவ்வொரு பொருளையும் அந்த
நெருப்பு அழிக்கும்.
27தீயவன் குற்றவாளி என்று பரலோகம்
நிரூபிக்கும் (நிறுவும்) பூமி அவனுக்கெதிராக
சாட்சிச் சொல்லும்.
28தேவனுடைய கோப வெள்ளத்தில்
அவன் வீட்டிலுள்ளவை எல்லாம் இழுத்துச்
செல்லப்படும்.
29தீயோருக்குத் தேவன் இவற்றைச்
செய்யத் திட்டமிடுகிறார். அவர்களுக்கு
அதையே கொடுக்கத் தேவன் திட்ட
மிடுகிறார்” என்றான்.

### யோபு பதில் கூறுகிறான்

21 அப்போது யோபு பதிலாக:
2“நான் சொல்வதற்குச் செவிகொடும்.
அதுவே, நீர் எனக்கு ஆறுதல் கூறும்
வகையாயிருக்கும்.
3நான் பேசும்போது பொறுமையாயிரும்.
நான் பேசி முடித்தபின்பு, நீங்கள் என்னைக்
கேலிச் செய்யலாம்.
4“நான் ஜனங்களைப்பற்றிக் குறை கூற
வில்லை. நான் பொறுமையாயிராததற்குத்
தக்க காரணம் இருக்கிறது.
5என்னைக் கண்டு அதிர்ச்சியடையும்,
உம் கையை வாயில் வைத்து, அதிர்ச்சியால்
என்னைப் பாரும்!
6எனக்கு நேர்ந்ததைப்பற்றி நான்
எண்ணும்போது, நான் அஞ்சுகிறேன், என்
உடம்பு நடுங்குகிறது!
7தீயோர் ஏன் நீண்ட ஆயுளோடு வாழ்
கிறார்கள்? அவர்கள் ஏன் நீண்ட
ஆயுளுடையவர்களாகவும் வெற்றிபெற்றவர்
களாகவும் இருக்கிறார்கள்?
8அவர்கள் பிள்ளைகள் தங்களோடு
வளர்வதைத் தீயோர் பார்க்கிறார்கள். அவர்
களின் பேரப்பிள்ளைகளைப் பார்க்கும்படித்
தீயோர் வாழ்கிறார்கள்.
9அவர் வீடுகள் பாதுகாப்பாக உள்ளது,
அவர்கள் பயப்படுவதில்லை. தீயோரைத்
தண்டிப்பதற்குத் தேவன் ஒரு கோலையும்
பயன்படுத்துவதில்லை.
10அவர்களின் காளைகள் புணரத் தவறு
வதில்லை. அவர்களின் பசுக்கள் கன்றுகளை
ஈனுகின்றன. அக்கன்றுகள் பிறக்கும்போது
மடிவதில்லை.
11ஆட்டுக்குட்டிகளைப்போல்
விளையாடுவதற்குத் தீயோர் அவர்கள்
குழந்தைகளை அனுப்புகிறார்கள். அவர்கள்
குழந்தைகள் சுற்றிலும் நடனமாடுகிறார்கள்.
12தம்புறா, யாழ், குழல் ஆகியவற்றின்
ஓசைக்கேற்ப அவர்கள் பாடி, நடனமாடுகி
றார்கள்.
13தீயோர் அவர்கள் வாழ்க்கையில்
வெற்றிக் காண்கிறார்கள். பின்பு, அவர்கள்
மடிந்து துன்பமின்றி அவர்களின் கல்ல
றைக்குப் போகிறார்கள்.
14ஆனால் தீயோர் தேவனை நோக்கி,
‘எங்களை விட்டு விடும்! நாங்கள் செய்வதற்
கென நீர் விரும்புவதைப்பற்றி நாங்கள்
கவலைப்படுவதில்லை!’ என்கிறார்கள்.

15தீயோர், 'சர்வ வல்லமையுள்ள தேவன்
யார்? நாம் அவருக்குச் சேவை செய்யத்
தேவையில்லை! அவரிடம் ஜெபிப்பது
உதவாது, என்கிறார்கள்!
16"அது உண்மையே, தீயோர் அவர்களாக
வெற்றிக் காண்பதில்லை. அவர்கள்
அறிவுரையை நான் பின்பற்ற முடியாது.
17ஆனால், தேவன் தீயோரின் ஒளியை
எத்தனை முறை அணைக்கிறார்? எத்தனை
முறை தீயோருக்குத் துன்பம் நேர்கிறது?
எப்போது தேவன் அவர்களிடம் கோபங்
கொண்டு, அவர்களைத் தண்டித்தார்?
18காற்று புல்லைப் பறக்கடிப்பதைப்
போலவும், பெருங்காற்று தானியத்தின் உமி
யைப் பறக்கடிப்பதைப் போலவும், தேவன்
தீயோரைப் பறக்கடிக்கிறாரா?
19ஆனால் நீங்கள், 'தந்தையின் பாவத்
திற்கென்று தேவன் ஒரு பிள்ளையைத்
தண்டிக்கிறார்' என்கிறீர்கள். இல்லை!
தேவன் தாமே தீயோனைத் தண்டிக்கட்டும்.
அப்போது அத்தீயோன், அவன் செய்த
பாவங்களுக்குத் தண்டனை பெற்றதை
அறிவான்!
20பாவம் செய்தவன் தான் பெற்ற
தண்டனையைப் பார்க்கட்டும் சர்வ வல்ல
மையுள்ள தேவனின் கோபத்தை அவன்
உணரட்டும்.
21தீயவனின் வாழ்க்கை முடியும் போது,
அவன் மடிகிறான், அவன் தன்பின்னே
விட்டுச் செல்லும் குடும்பத்தைப்பற்றி அவன்
கவலைப்பட வேண்டியதில்லை.

22"ஒருவனும் தேவனுக்கு அறிவைப்
போதிக்க முடியாது. உயர்ந்த இடங்களிலிருக்
கிற ஜனங்களையும் கூட தேவன் நியாயந்
தீர்க்கிறார்.
23ஒரு முழுமையும் வெற்றிகரமுமான
வாழ்க்கைக்குப் பின் ஒருவன் மரிக்கிறான்.
அவன் முழுக்க பாதுகாப்பான, சுகமான
வாழ்க்கை வாழ்கிறான்.
24அவன் உடல் போஷாக்குடையதாக
உள்ளது. அவன் எலும்புகள் இன்னும்
வலிவோடு காணப்படுகின்றன.
25ஆனால், மற்றொருவன் கடின வாழ்க்கை
வாழ்ந்து, கசப்பான ஆன்மாவோடு மரிக்
கிறான். அவன் நல்லவற்றில் களிப்படைந்த
தில்லை.
26இறுதியில், இருவரும் ஒருமித்துத்
மண்ணில் கிடப்பார்கள். அவர்கள் இருவரை
யும் பூச்சிகள் சூழ்ந்துக்கொள்ளும்.
27"ஆனால், நீங்கள் நினைப்பதை நான்
அறிவேன், என்னைத் துன்புறுத்த நீங்கள்
விரும்புகிறீர்கள் என அறிவேன்.
28நீங்கள், 'நல்லவன் ஒருவனின் வீட்டை
எனக்குக் காட்டுங்கள். இப்போது, தீயோர்
வாழுமிடத்தை எனக்குக் காட்டுங்கள்'
என்கிறீர்கள்.
29"நீங்கள் நிச்சயமாக பயணிகளிடம் பேசி
யிருக்கலாம் நிச்சயமாக நீங்கள் அவர்களின்
கதைகளை ஏற்கலாம்.
30அழிவு வரும்போது தீயோர் தவிர்க்கப்
பட்டுள்ளார்கள். தேவன் தமது கோபத்தைக்
காட்டும் போது, அவர்கள் அதற்குத்
தப்பியிருக்கிறார்கள்.
31யாரும் தீயவனை அவன் செய்த
தவறுகளுக்காக அவனெதிரே விமர்சிக்கிற
தில்லை. அவன் செய்த தீமைகளுக்காக
ஒருவரும் அவனைத் தண்டிக்கிறதில்லை.
32அத்தீயவனைக் கல்லறைக்குச் சுமந்துச்
செல்லும்போது, அவன் கல்லறையருகே ஒரு
காவலாளி நிற்கிறான்.
33எனவே பள்ளத்தாக்கின் மண்ணும்
அத்தீயவனுக்கு இன்பமாயிருக்கும். அவன்
கல்லறையின் அடக்கத்திற்கு ஆயிரக்
கணக்கான ஜனங்கள் செல்வார்கள்.
34"எனவே நீங்கள் உங்கள் வெறுமையான
வார்த்தைகளால் எனக்கு ஆறுதல்கூற
முடியாது. உங்கள் பதில்கள் எனக்கு உதவ
மாட்டாது!" என்றான்.

### எலிப்பாஸ் பதில் கூறுகிறான்

22 அப்போது தேமானின் எலிப்பாஸ்
பதிலாக,
2"தேவனுக்கு நமது உதவி தேவையா?
இல்லை! மிகுந்த ஞானவானும் உண்மை
யாகவே தேவனுக்குப் பயன்படுவதில்லை.
3நீ தக்க நெறியில் வாழ்ந்தது தேவனுக்கு
உதவுமா? இல்லை! நீ தேவனைப் பின்பற்று
வதால் சர்வ வல்லமையுள்ள தேவனுக்கு
ஏதேனும் கிடைக்குமா? இல்லை!
4"யோபுவே, ஏன் தேவன் உன்னைத்
தண்டித்து, உன்னில் குறை காண்கிறார்.
நீ அவரை தொழுதுகொள்வதாலா?
5இல்லை! நீ மிகுதியாகப் பாவம்
செய்திருப்பதால்தான். யோபுவே, நீ பாவம்
செய்வதை நிறுத்துவதில்லை!
6நீ உன் சகோதரன் ஒருவனுக்குக்
கொஞ்சம் பணத்தைக் கடனாகக் கொடுத்து,
அவன் உனக்குத் திருப்பித் தருவதற்கு
அடையாளமாக எதையேனும் கொடுக்க
வற்புறுத்தியிருக்கலாம். நீ கடனுக்கு ஈடாக
ஏதேனும் ஏழை மனிதனின் ஆடைகளை
எடுத்திருக்கலாம். இல்லையெனில்,
எக்காரணமுமின்றி அவ்வாறு செய்திருக்க
லாம்.
7சோர்ந்த, பசித்த ஜனங்களுக்கு நீ
தண்ணீரும், உணவும் கொடாது இருந்திருக்க
லாம்.
8யோபுவே, உனக்கு மிகுதியான விளை
நிலங்கள் உண்டு, ஜனங்கள் உன்னை
மதிக்கிறார்கள்.
9விதவைகளுக்கு எதுவும் கொடாது
அவர்களை நீ துரத்தியிருக்கலாம், யோபுவே,
நீ அநாதைகளை ஏமாற்றியிருக்கலாம்.
10ஆகவே, உன்னைச் சுற்றிலும் கண்ணி

கள் அமைந்துள்ளன, திடீர்பயம் உன்னை
அஞ்சவைக்கிறது.
11ஆகவே, நீ பார்க்க முடியாதபடி மிகுந்த
இருள் சூழ்ந்திருக்கிறது, வெள்ளப் பெருக்கு
உன்னை மூடுகிறது.
12“தேவன் பரலோகத்தின் மிக உயர்ந்த
இடத்தில் வாழ்கிறார். விண்மீன்கள் எத்
தனை உயரத்தில் உள்ளன எனப்பாருங்கள்.
மிக உயர்ந்த நட்சத்திரத்தை தேவன் கீழே
நோக்கிப் பார்க்கிறார்.
13ஆனால் யோபுவே, ‘நீ சொல்லலாம்
தேவன் என்ன அறிவார்? இருண்ட மேகங்
கள் வழியாகப் பார்த்து, தேவன் நம்மை
நியாயந்தீர்க்கக் கூடுமா?
14அடர்த்தியான மேகங்கள் அவரை
நம்மிடமிருந்து மறைக்கின்றன, எனவே,
அவர் வானத்தின் விளிம்பைத் தாண்டி
நடக்கிறபோது நம்மைப் பார்க்க முடி
வதில்லை’ எனக் கூறுவாய்.
15“யோபுவே, பல காலம் முன்பு தீயோர்
நடந்த அந்தப் பழைய பாதையில் நீ
நடந்துக் கொண்டிருக்கிறாய்.
16அவர்கள் இறக்க வேண்டிய காலத்திற்கு
முன்னரே, அத்தீயோர் அழிக்கப்பட்டார்கள்.
அவர்கள் வெள்ளப் பெருக்கில் அடித்துச்
செல்லப்பட்டார்கள்.
17அவர்கள் தேவனைப் பார்த்து, ‘எங்
களைத் தனித்து விட்டு விடும்! சர்வ
வல்லமையுள்ள தேவன் எங்களை என்னச்
செய்ய முடியும்!’ என்பார்கள்.
18நற்காரியங்களால் அவர்கள் வீடுகளை
நிரப்பியவர் தேவனே! இல்லை, என்னால்
தீயோரின் அறிவுரையைப் பின்பற்ற முடி
யாது.

19அவர்கள் அழிவதை நல்லோர் காண்
பார்கள். அந்த நல்ல ஜனங்கள் மகிழ்ச்சி
யடைவார்கள். களங்கமற்ற ஜனங்கள்
தீயோரைக் கண்டு நகைப்பார்கள்,
20‘உண்மையாகவே நம் பகைவர்கள்
அழிக்கப்பட்டார்கள். நெருப்பு அவர்களின்
செல்வத்தைத் கொளுத்துகிறது!’
21“இப்போது, யோபுவே, உன்னைத்
தேவனுக்குக் கொடுத்து அவரோடு சமா
தானம் செய்துக்கொள். இதைச் செய், உனக்கு
நல்லவை பல வாய்க்கும்.
22அவரது போதனையை ஏற்றுக்கொள்.
அவர் சொல்வதைக் கவனமாகக் கேள்.
23யோபுவே, சர்வ வல்லமையுள்ள தேவ
னிடம் திரும்பி வா, உன் பழைய நிலைக்கு
அழைத்துச் செல்லப்படுவாய் ஆனால், நீ
உனது வீட்டிலிருந்து தீமையை அகற்ற
வேண்டும்.
24உனது பொன்னை நீ தூசியாகக்
கருதவேண்டும். பள்ளத்தாக்கின் பாறை
களைப்போல, உனது உயர்ந்த பொன்னைக்
கருதவேண்டும்.
25சர்வ வல்லமையுள்ள தேவனே,
உனக்குப் பொன்னாகட்டும் அவரே உனக்கு
வெள்ளிக் குவியல் ஆகட்டும்.
26அப்போது நீ சர்வ வல்லமையுள்ள
தேவனுக்கு களிகூருவாய். அப்போது நீ
தேவனை நோக்கிப் பார்ப்பாய்.
27நீ அவரிடம் ஜெபிப்பாய். அவர் உன்
னைக் கேட்பார். நீ செய்வதாக உறுதியளித்த
காரியங்களை, அப்போது நீ செய்யமுடியும்.
28நீ ஏதேனும் செய்யத் தீர்மானித்தால்,
அது வெற்றியடையும், உனது எதிர்காலம்
ஒளிமயமாக இருக்கும்.
29தேவன் பெருமையுள்ளோரை வெட்க
மடையச் செய்கிறார். ஆனால் தேவன்
எளியோருக்கு உதவுகிறார்.
30அப்போது நீ தவறு செய்யும் ஜனங்
களுக்கு உதவ முடியும். நீ தேவனிடம்
ஜெபிப்பாய் அவர் அந்த ஜனங்களுக்கு
மன்னிப்பார். ஏனெனில் நீ அத்தனை
பரிசுத்தமாக இருப்பாய்” என்றான்.

### யோபு பதில் கூறுகிறான்

23 அப்போது யோபு பதிலாக:
2“நான் இன்றைக்கு இன்னும் மனங்
கசந்து முறையிடுகிறேன். ஏனெனில் நான்
இன்னும் துன்புற்றுக் கொண்டிருக்கிறேன்.
3எங்கே தேவனைப் பார்க்கக் கூடுமென
நான் அறிந்திருக்க வேண்டுமென்று விரும்பு
கிறேன். தேவனிடம் போகும் வழியை
அறிய விரும்புகிறேன்.
4நான் தேவனிடம் என் நியாயத்தை
விளக்குவேன். நான் களங்கமற்றவனெனக்
காட்டும் விவாதங்களால் என் வாய் நிரம்பி
யிருக்கும்.
5என் விவாதங்களுக்குத் தேவன் எவ்
வாறு பதிலளிப்பார் என்று அறிவேன்.
தேவனுடைய பதில்களைப் புரிந்து கொள்
வேன்.
6தேவன் எனக்கெதிராக அவரது வல்ல
மையைப் பயன்படுத்துவாரா? இல்லை
அவர் எனக்குச் செவிகொடுப்பார்!
7நான் ஒரு நேர்மையான மனிதன். என்
கதையை நான் கூற, தேவன் அனுமதிப்பார்.
அப்போது என் நீதிபதி என்னை விடுதலை
யாக்குவார்!
8“ஆனால் நான் கிழக்கே போனால்,
அங்கே தேவன் இல்லை. நான் மேற்கே
போனால், அங்கும் நான் தேவனைக்
காணேன்.
9தேவன் வடக்கே பணி செய்யும்போது,
நான் அவரைப் பார்க்க முடியவில்லை.
தேவன் தெற்கே திரும்பும்போதும், நான்
அவரைக் காணவில்லை
10ஆனால் தேவன் என்னை அறிவார்.
அவர் என்னைப் பரிசோதித்துக் கொண்
டிருக்கிறார், நான் பொன்னைப்போன்று
தூயவனெனக் காண்பார்.
11தேவன் விரும்புகிறபடியே நான் எப்
போதும் வாழ்ந்திருக்கிறேன். நான்

தேவனைப் பின்பற்றுவதை நிறுத்திய
தேயில்லை.
12நான் தேவனுடைய கட்டளைகளுக்கு
எப்போதும் கீழ்ப்படிகிறேன். என் உண
வைக் காட்டிலும்* அதிகமாக தேவனுடைய
வாயிலிருந்து வரும் வார்த்தைகளை நான்
நேசிக்கிறேன்.
13“ஆனால் தேவன் மாறுகிறதில்லை. ஒரு
வனும் தேவனுக்கெதிராக நிற்கமுடியாது.
தேவன் தான் விரும்புகின்றவற்றையெல்லாம்
செய்கிறார்.
14தேவன் எனக்கென்று அவர் திட்ட
மிட்டவற்றைச் செய்வார். எனக்காக வேறு
பல திட்டங்களையும் அவர் வைத்திருக்
கிறார்.
15அதனாலே நான் தேவனுக்குப்
பயந்திருக் கிறேன். இக்காரியங்களை நான்
புரிந்துக் கொள்கிறேன். ஆகையால் நான்
தேவனுக்குப் பயந்திருக்கிறேன்.
16தேவன் என் இருதயத்தை இளைக்கச்
(சோர்வடைய) செய்கிறார், நான் என்
தைரியத்தை இழக்கிறேன். சர்வ வல்லமை
யுள்ள தேவன் என்னை அஞ்சச் செய்கிறார்.
17என் முகத்தை மூடும் கருமேகத்தைப்
போன்று எனக்கு நேர்ந்த தீயகாரியங்கள்
உள்ளன. ஆனால் அந்த இருள் என்னை
அடக்காது.
24 “சர்வ வல்லமையுள்ள தேவன்,
ஜனங்களின் வாழ்வில் கேடுகள்
நிகழும் காலத்தை அறிந்தபோதும் அவர்
அதற்குப் பரிகாரம் செய்யும் காலத்தை
அவரைப் பின்பற்றுவோர் அறியமுடியாம
லிருப்பது ஏன்?
2“அயலானின் நிலத்தின் பகுதியை
அடைவதற்காக ஜனங்கள் எல்லைக் குறிப்பு
களை மாற்றுகிறார்கள். ஜனங்கள் மந்தை
களைத் திருடி, வேறு மேய்ச்சல் நிலங்
களுக்கு அழைத்துச் செல்கிறார்கள்.
3பெற்றோரற்ற அனாதைப் பிள்ளை
களுக்குச் சொந்தமான கழுதையை அவர்கள்
திருடுகிறார்கள். விதவை தான் பட்ட
கடனைத் திருப்பிச் செலுத்தும் வரை
அவளது பசுவைக் கவர்ந்து சென்று
விடுகிறார்கள்.
4ஏழைகள் வீடின்றி ஓரிடத்திலிருந்து
மற்றோர் இடத்திற்கு அலையும்படி வற்புறுத்
துகிறார்கள். தீயோரிடமிருந்து அந்த
ஏழைகள் தங்களை ஒளித்துக்கொள்ளும்படி
கட்டாயப்படுத்தப்படுகிறார்கள்.
5“பாலைவனத்தில் உணவு தேடி
அலையும் காட்டுக் கழுதைகளைப்போல்
ஏழைகள் இருக்கிறார்கள். அவர்கள் உணவு
தேடுவதற்காக அதிகாலையில் எழுந்திருக்
கிறார்கள். அவர்களின் குழந்தைகளுக்காக
உணவு பெறும் பொருட்டு அவர்கள்
மாலையில் வெகு நேரம் வரை
உழைக்கிறார்கள்.
6வயல்களில் வைக்கோலும் புல்லும்
வெட்டியபடி ஏழைகள் இரவில் வெகுநேரம்
உழைக்கவேண்டும். வயல்களில் திராட்சைப்
பழங்களைப் பறித்துச் சேர்ப்பவர்களாய்,
அவர்கள் செல்வந்தர்களுக்காக உழைக்க
வேண்டும்.
7இரவு முழுவதும் ஆடையின்றி ஏழைகள்
தூங்கவேண்டும். குளிரிலிருந்து காப்பதற்கு
அவர்களுக்குப் போர்வைகள் இல்லை.
8அவர்கள் பர்வதங்களில் மழையால்
நனைந்திருக்கிறார்கள். குளிரிலிருந்து காப்
பதற்கு அவர்களுக்கு எதுவும் இல்லை.
எனவே அவர்கள் பெரிய பாறைகளுக்கு
அருகே அண்டிக் கொள்கிறார்கள்.
9தீயோர் பால் மணம் மாறாத
குழந்தையை அதன் தாயிடமிருந்து பிரிக்
கிறார்கள். கடனுக்கு உறுதிப்பொருளாக
அவர்கள் ஒரு ஏழையின் குழந்தையை
எடுத்துக் கொள்கிறார்கள்.
10ஏழைகளுக்கு ஆடையில்லை. எனவே
அவர்கள் வேலை செய்யும்போது நிர்வாண
மாயிருக்கிறார்கள். தீயோருக்கு அவர்கள்
தானியக்கட்டுகளைச்* சுமந்துச் செல்
கிறார்கள். ஆனால் அந்த ஏழைகள் பசியோ
டிருக்கிறார்கள்.

11ஏழைகள் ஒலிவ எண்ணெயைப் பிழிந்
தெடுக்கிறார்கள். திராட்சைரசம் பிழியும்
இடத்தில்* அவர்கள் திராட்சைக்கனிகளின்
மேல் நடக்கிறார்கள். ஆனால் அவர்களுக்குப்
பருகுவதற்கு எதுவுமில்லை.
12நகரத்தில் மரிப்போரின் துயரக்குரல்
களை நீ கேட்க முடியும். துன்புறும்
அந்த ஜனங்கள் உதவிக்காக குரலெழுப்பு
கிறார்கள். ஆனால் தேவன் செவி சாய்ப்ப
தில்லை.
13“சிலர் ஒளிக்கு எதிராகக் கலகம்
செய்கிறார்கள். தேவன் விரும்புவது எது
வென அவர்கள் அறிய விரும்பமாட்டார்கள்.
தேவன் விரும்புகிறபடி அவர்கள் வாழ
மாட்டார்கள்.
14ஒரு கொலைகாரன் அதிகாலையில்
எழுந்து திக்கற்ற ஏழைகளைக் கொல்கிறான்.
இரவில் அவன் ஒரு திருடனாகிறான்.
15விபச்சாரம் செய்பவன் (தகாத நெறியில்
ஒழுகுபவன்) இரவுக்காகக் காத்திருக்கிறான்.
‘யாரும் என்னைப் பார்க்கமாட்டார்கள்’

**உனவைக் காட்டிலும்** எழுத்தின் பிரகாரமாக “என்னுடைய வழக்கமான பழக்கத்தைக் காட்டிலும், வழக்கமான பழக்கத்தில் சாப்பாடு சாப்பிடுகிற நேரம் முதலானவைகளைச் சேர்த்து கொள்ளலாம்.”

**தானியக்கட்டுகள்** கட்டி வைத்திருக்கும் தானியக் கதிர்கள்.

**திராட்சை பிழியும் இடம்** திராட்சைப் பழங்களிலிருந்து சாறு எடுக்கும் இடம். சில வேளைகளில் பூமியிலுள்ள பாறையில் காணப் படும் ஓர் ஆழமற்ற துவாரமாகவே அந்த இடம் இருக்கும்.

என அவன் நினைக்கிறான். ஆயினும்
அவன் தனது முகத்தை மூடிக்கொள்கிறான்.
16 இரவில் இருள் சூழ்ந்திருக்கும் போது,
தீயோர் ஜனங்களின் வீடுகளை உடைத்து
உள்ளே நுழைகிறார்கள். ஆனால் பகலொளி
யில், அவர்கள் தங்கள் வீடுகளுக்குள்ளேயே
இருந்துகொண்டு பூட்டிக்கொள்கிறார்கள்.
அவர்கள் ஒளியைவிட்டு விலகியிருக்
கிறார்கள்.
17 தீயோருக்கு மிக இருண்ட இரவுகள்
காலை நேரத்தைப் போன்றது. ஆம், அந்த
மரண இருளின் பயங்கரத்தை அவர்கள்
நன்றாக அறிவார்கள்!
18 "வெள்ளப் பெருக்கில் அடித்துச் செல்லப்
படும் பொருள்களைப் போன்று தீயோர்
அகற்றப்படுவார்கள். அவர்களுக்குச் சொந்த
மான நிலம் சபிக்கப்பட்டது, எனவே
அவர்கள் தங்கள் வயல்களிலிருந்து திராட்
சைக் கனிகளைத் திரட்டமாட்டார்கள்.
19 குளிர் காலத்துப் பனியிலிருந்து வரும்
தண்ணீரை, வெப்பமும், உலர்ந்ததுமான
காலம் கவர்ந்து விடும். எனவே அந்தப்
பாவிகள் கல்லறைக்குக் கொண்டு செல்லப்
படுவார்கள்.
20 தீயவன் மரிப்பான், அவனது சொந்த
தாயார் கூட அவனை மறந்து விடுவார்.
அவன் உடலைத் தின்னும் புழுக்களே,
அவனை விரும்புகிறவளாயிருக்கும். ஜனங்
கள் அவனை நினைவுகூர மாட்டார்கள்.
எனவே அத்தீயவன் மரத்துண்டைப்
போன்று உடைந்துபோவான்
21 குழந்தைகளற்ற பெண்களைத் (மலடி
களை) தீயோர் துன்புறுத்துவர். கணவர்
களை இழந்த பெண்களுக்கு (விதவை
களுக்கு) உதவ அவர்கள் மறுக்கிறார்கள்.
22 ஆற்றலுள்ள மனிதர்களை அழிக்க,
தீயோர் தங்கள் ஆற்றலைப் பயன்படுத்து
கிறார்கள். தீயோர் ஆற்றல் பெறக்கூடும்,
ஆனால், அவர்களுக்குத் தங்கள் சொந்த
வாழ்க்கையின் மீது நிச்சயமில்லை.
23 தீயோர் குறுகியகாலம் பாதுகாப்பாகவும்
ஆபத்தின்றியும் உணரலாம். தேவன் அவர்
களை கவனித்துக் கொண்டிருக்கிறார்.
24 தீயோர் சிலகாலம் வெற்றியடையலாம்.
ஆனால் அவர்கள் அழிந்துப்போவார்கள்.
தானியத்தைப் போன்று அவர்கள் அறுக்கப்
படுவார்கள். அத்தீய ஜனங்கள் பிறரைப்
போலவே எல்லோராலும் வெட்டி வீழ்த்தப்
படுவார்.கள்
25 "இவை உண்மையென நான் வாக்குறுதி
யளிக்கிறேன்! நான் பொய் கூறியதாக
யார் நிரூபிக்கக் கூடும்? நான் தவறிழைத்
தேனென யார் காட்டக்கூடும்?" என்றான்.

### பில்தாத் யோபுக்குப் பதில் கூறுகிறான்

25 சூகியனான பில்தாத் பதிலாக:
2 "தேவனே அரசாள்பவர். ஒவ்வொரு
மனிதனையும் அவருக்கு பயந்து மதிக்கச்
செய்கிறார். தேவன் தமது உன்னதமான
இடத்தில் சமாதானமாக வைக்கிறார்.
3 அவரது நட்சத்திரங்களை* எவரும்
எண்ண முடியாது. தேவனுடைய வெளிச்சம்
எல்லோர் மேலும் உதிக்கிறது.
4 தேவனுக்கு முன்பாக நீதிமான் யார்
இருக்க முடியும்? மனித இனத்தில்* ஒருவனும்
உண்மையில் தூயவனாக இருக்க முடியாது.
5 தேவனுடைய கண்களுக்கு சந்திரன் ஒளி
யுடையதோ அல்ல. நட்சத்திரங்களும் அவ
ருடைய பார்வையில் தூயவை அல்ல.
6 ஜனங்கள் இன்னும் தூய்மையில் குறைந்த
வர்கள். பூச்சியைப்* போன்றும், புழுக்
களைப் போன்றும் பயனற்றவர்கள்!"
என்றான்.

### யோபு பில்தாதுக்குப் பதில் தருகிறான்

26 அப்போது யோபு பதிலாக,
2 "பில்தாத், சோப்பார், எலிப்பாஸ்
ஆகியோரே, சோர்வற்று நலிந்த இம்மனித
னுக்கு நீங்கள் எப்படி உதவிசெய்தீர்கள்?
ஆம், நீங்கள் உண்மையிலேயே நல்ல
ஊக்கமூட்டுபவர்களாக இருந்திருக்கிறீர்கள்!
3 ஆம், ஞானமற்றவனுக்கு நீங்கள்
அற்புதமான அறிவுரையைத் தந்திருக்
கிறீர்கள்! நீங்கள் எத்தனை ஞானவான்கள்
என்பதை உண்மையாகவே காட்டியிருக்
கிறீர்கள்!*
4 இவற்றைச் சொல்ல உங்களுக்கு
உதவியவர் யார்? யாருடைய ஆவி உங்
களுக்கு எழுச்சியூட்டியது?
5 "பூமிக்கு அடியிலுள்ள வெள்ளங்களில்
மரித்தோரின் ஆவிகள் பயத்தால் நடுங்கு
கின்றன.
6 ஆனால் தேவனால் மரணத்தின் இடத்தில்
தெளிவாகப் பார்க்க முடியும். மரணம்*
தேவனிடமிருந்து மறைந்திருக்கவில்லை.
7 வெறுமையான இடத்தில் தேவன்
வடக்கு வானத்தைப் பரப்பினார். வெற்றிடத்
தின் மேல் தேவன் பூமியைத் தொங்க
விட்டார்.
8 தேவன் அடர்ந்த மேகங்களை தண்ணீ
ரால் நிரப்புகிறார். மிகுந்த பாரம் மேகங்

---

**அவரது நட்சத்திரங்கள்** "அவரது சேனைகள்." தேவனுடைய விண்ணின் படைகளை இது குறிக்கும். எல்லாத் தூதர்களையும் அல்லது வானின் எல்லா விண்மீன்களையும் இது குறிப்பிடலாம்.

**மனித இனம்** "பெண்ணின் வயிற்றில் பிறப்பவர்கள்."

**பூச்சிகள்** புழுவைப்போன்ற ஒரு பூச்சி, ஈயாக மாறுவது பொதுவாக, இதனை பிணத்தின் மீதும் அழுகிய பொருள்களிலும் காணலாம்.

**வாக்கியம் 2-3** யோபு இங்கே சொல்வதைப்போல் உண்மையில் அர்த்தம் கொள்ளவில்லை. யோபு பலியிடப்படுகிறான். அவன் இதனை அவ்வாறு அர்த்தம்கொள்ளவில்லை என்பதைப்போல் பேசுகிறான்.

**மரணம்** "அபெத்தோன் அல்லது அழிவு" (பார்க்க: வெளிப்படுத்தின விசேஷம் 9:11).

களை உடைத்துத் திறக்காதபடி தேவன்
பார்க்கிறார்.
9 முழு நிலாவின் முகத்தை தேவன் மூடு
கிறார். அவர் தமது மேகங்களை அதன்
மீது விரித்து அதைப் போர்த்துகிறார்.
10 தேவன் ஒரு எல்லைக் கோடுபோன்ற
வளையத்தை கடலில் வரைந்து ஒளியும்,
இருளும் சந்திக்கும்படிச் செய்தார்.
11 தேவன் பயமுறுத்தும்போது வானைத்
தாங்கும் அஸ்திவாரங்கள் அச்சத்தால்
நடுங்கு கின்றன.
12 தேவனுடைய வல்லமை கடலை அமை
திப்படுத்துகிறது. தேவனுடைய ஞானம்
ராகாபின் உதவியாளர்களை அழித்தது.
13 தேவனுடைய மூச்சு வானங்களைத்
தெளிவாக்கும். தப்பிச்செல்ல முயன்ற பாம்
பைத் தேவனுடைய கை அழித்தது.*
14 தேவன் செய்கிற வியக்கத்தக்க காரியங்
களில் இவை சிலவே. தேவனிடமிருந்து
ஒரு சிறிய இரகசிய ஒலியையே நாம்
கேட்கிறோம். தேவன் எத்தனை மேன்மை
யானவரும் வல்லமையுள்ளவரும் என்பதை
ஒருவனும் உண்மையாகப் புரிந்துகொள்ள
முடியாது” என்றான்.

27 பின்பு யோபு தன் விரிவுரையைத்
தொடர்ந்தான். அவன்,
2 “உண்மையாகவே, தேவன்உயிரோடிருக்
கிறார். தேவன் உண்மையாக வாழ்வதைப்
போல, அவர் உண்மையாக என்னோடு
அநீதியாய் நடக்கிறார். ஆம், சர்வ வல்லமை
யுள்ள தேவன் என் வாழ்க்கையைக்
கசப்பாக்கினார்.
3 ஆனால் என்னில் உயிருள்ள வரை
யிலும் தேவனுடைய உயிர்மூச்சு என்
மூக்கில் இருக்கும் மட்டும்
4 என் உதடுகள் தீயவற்றைப் பேசாது,
என் நாவு ஒருபோதும் பொய் கூறாது.
5 நீங்கள் சொல்வது சரியென நான் ஏற்றுக்
கொள்ள மாட்டேன். நான் மரிக்கும் நாள்
மட்டும், நான் களங்கமற்றவன் என்று
தொடர்ந்துச் சொல்வேன்.
6 நான் செய்த நல்லவற்றைக் கெட்டியாகப்
(இறுகப்) பிடித்துக்கொள்வேன். நியாயமாக
நடப்பதை விட்டுவிட மாட்டேன். நான்
வாழும்வரை என் மனச்சாட்சி என்னை
உறுத்தாது.
7 “ஜனங்கள் எனக்கெதிராக எழுந்து
நிற்கிறார்கள். தீயோர் தண்டிக்கப்படுவதைப்
போல என் பகைவர்கள் தண்டனை
பெறுவார்கள் என நம்புகிறேன்.
8 ஒருவன் தேவனைப்பற்றிக் கவலைப்படா
விட்டால், அவன் மரிக்கும்போது, அவ
னுக்கு ஒரு நம்பிக்கையுமில்லை. தேவன்
அவன் உயிரை எடுக்கும்போது, அம்மனித
னுக்கு நம்பிக்கை எதுவுமில்லை.
9 அத்தீயவனுக்குத் தொல்லைகள் விளை
யும், அவன் தேவனை நோக்கி உதவி
வேண்டுவான். ஆனால் தேவன் அவனுக்குச்
செவிசாய்க்க மாட்டார்!
10 சர்வ வல்லமையுள்ள தேவனிடம் பேசு
வதில் அவன் களிப்படைந்திருக்க வேண்டும்.
எப்போதும் அம்மனிதன் தேவனிடம் ஜெபம்
செய்திருக்கவேண்டும்.
11 “தேவனுடைய வல்லமையைக் குறித்து
நான் உங்களுக்குப் போதிப்பேன். சர்வ
வல்லமையுள்ள தேவனுடைய திட்டங்களை
நான் உங்களிடம் மறைக்கமாட்டேன்.
12 உங்கள் சொந்தக் கண்களால் தேவ
னுடைய வல்லமையைக் கண்டிருக்கிறீர்கள்.
எனவே அந்தப் பயனற்ற காரியங்களை
நீங்கள் ஏன் சொல்கிறீர்கள்?
13 தீயோருக்காகத் தேவன் திட்டமிட்டது
இதுவே சர்வ வல்லமையுள்ள தேவனிட
மிருந்து கொடியோர் இதையே பெறு
வார்கள்.
14 தீயவனுக்குப் பல பிள்ளைகள் இருக்க
லாம். ஆனால் அவனது பிள்ளைகள் மரிப்
பார்கள். தீயவனின் பிள்ளைகளுக்கு உண்
பதற்கு போதிய உணவு இராது.
15 அவனது எல்லாப் பிள்ளைகளும்
மரிப்பார்கள். அவனது விதவை அவனுக்
காகத் துக்கப்படமாட்டாள்.
16 தீயோனுக்குத் துகளைப்போன்று மிகுதி
யான வெள்ளி கிடைக்கலாம். களிமண்
குவியலைப்போன்று அவனிடம் பல ஆடை
கள் இருக்கலாம்.
17 ஆனால் அவனது ஆடைகள் நல்ல
வனுக்குக் கிடைக்கும். களங்கமற்ற ஜனங்கள்
அவனது வெள்ளியைப் பெறுவார்கள்.
18 தீயவன் ஒரு வீட்டைக் கட்டலாம், ஆனால்
அது நீண்டகாலம் நிலைக்காது. அது
ஒரு சிலந்தி வலையைப் போன்றும்,
காவலாளியின் கூடாரத்தைப் போன்றும்
இருக்கும்.
19 தீயவன் ஒருவன் படுக்கைக்குப் போகும்
போது, செல்வந்தனாக இருக்கலாம். ஆனால்
அவனது கண்களை அவன் திறக்கும்போது,
எல்லா செல்வங்களும் மறைந்திருக்கும்.
20 அவன் அச்சமடைவான். அது வெள்ளப்
பெருக்கைப் போன்றும், புயல்வீசி எல்லா
வற்றையும் அடித்துச் செல்வதைப்போன்றும்
இருக்கும்.
21 கிழக்குக் காற்று அவனை அடித்துச்
செல்லும், அவன் அழிந்துபோவான். புயல்
அவன் வீட்டிலிருந்து அவனை இழுத்துச்
செல்லும்.
22 புயலின் வல்லமையிலிருந்து தீயவன்
ஓடிப்போக முயல்வான் ஆனால், இரக்க
மின்றி புயல் அவனைத் தாக்கும்.
23 தீயவன் ஓடிப்போகும்போது, மனிதர்கள்
கைகொட்டுவார்கள். தீயவன் வீட்டைவிட்டு

---

***தப்பி ... ழித்தது*** “தப்பும் மிருகம்.” பாம்பு என்பது ராகாபிற்கு மற்றொரு பெயராக இருக்கலாம்.

ஓடுகிறபோது, அவர்கள் அவனைப் பார்த்து சீட்டியடிப்பார்கள்.

28 "வெள்ளியை ஜனங்கள் பெறும் சுரங்கங்கள் உண்டு, ஜனங்கள் பொன் னை உருக்கிப் புடமிடும் (தூயதாக்கும்) இடங்கள் உண்டு.
[2]மனிதர்கள் நிலத்திலிருந்து இரும்பை வெட்டியெடுக்கிறார்கள், செம்பு பாறை யிலிருந்து உருக்கி எடுக்கப்படுகிறது.
[3]வேலையாட்கள் குகைகளுக்குள் விளக்கு களை எடுத்துச்செல்கிறார்கள். அவைகள் குகைகளின் ஆழமான பகுதிகளில் தேடு கிறார்கள். ஆழ்ந்த இருளில் அவர்கள் பாறை களைத் தேடிப் பார்க்கிறார்கள்.
[4]தாது இருக்கும் பகுதிகளைத் தேடி, வேலையாட்கள் நிலத்தினுள் ஆழமாகத் தோண்டுகிறார்கள். ஜனங்கள் வசிக்காத (வாழாத) தூரமான இடங்களிலும், ஒருவரும் சென்றிராத இடங்களிலும், அவர்கள் நிலத் தினுள் ஆழமாகப் போகிறார்கள். மற்ற ஜனங்களைக் காட்டிலும் ஆழமான இடங் களில், அவர்கள் கயிறுகளிலிருந்து தொங்கு கிறார்கள்.
[5]நிலத்தின் மேல் உணவு விளைகிறது, ஆனால் நிலத்திற்குக் கீழே, அனைத்தும் நெருப்பினால் உருக்கப்பட்டதுபோல, அது வேறு மாதிரியாகத் தோன்றுகிறது.
[6]நிலத்தின் கீழே இந்திர நீலக்கற்கள்* காணப்படும். அங்குத் தூயப் பொன் பொடி கள் உண்டு.
[7]நிலத்தின் கீழுள்ள பாதைகளைப்பற்றிக் காட்டுப் பறவைகள் கூட அறியாது. அந்த இருண்ட பாதைகளை வல்லூறும்* பார்த்த தில்லை.
[8]காட்டு மிருகங்கள் அப்பாதையில் நடந்த தில்லை. சிங்கங்கள் அவ்வழியில் பயணம் செய்ததில்லை.
[9]வேலையாட்கள் மிகக் கடினமான பாறைகளைத் தோண்டுகிறார்கள். அப்பணி யாட்கள் பர்வதங்களை தோண்டி அதனை வெட்டாந் தரையாக்குகிறார்கள்.
[10]வேலையாட்கள் பாறைகளினூடே நீர்க்கால்களை வெட்டுகிறார்கள். எல்லா பாறைகளின் பொக்கிஷங்களையும் அவர்கள் பார்க்கிறார்கள்.
[11]பணியாட்கள் தண்ணீரைத் தடை செய்ய, அணைகளைக் கட்டுகிறார்கள். அவர்கள் மறை பொருளை வெளிச்சத் திற்குக் கொண்டுவருகிறார்கள்.
[12]"ஆனால் ஒருவன் ஞானத்தை எங்கே காண்பான்? நாம் எங்கு புரிந்து கொள்ளு தலைக் காணமுடியும்?
[13]ஞானம் எத்தனை விலையுயர்ந்தது என நாம் அறியோம். பூமியின் ஜனங்கள் நிலத்தைத் தோண்டி, ஞானத்தைக் கண்ட டைய முடியாது.
[14]ஆழமான சமுத்திரம், 'ஞானம் இங்கு என்னிடம் இல்லை' என்கிறது. கடல், 'ஞானம் இங்கு என்னிடம் இல்லை' என்கிறது.
[15]மிகத்தூய பொன்னாலும் கூட, உங்க ளால் ஞானத்தை வாங்கமுடியாது! ஞானத்தை வாங்கப் போதுமான அளவு வெள்ளி இவ்வுலகில் இராது!
[16]ஓபீரின் தங்கத்தாலோ, கோமேதகத்தா லோ, இந்திர நீலக்கல்லாலோ, நீங்கள் ஞானத்தை வாங்கமுடியாது.
[17]ஞானம் பொன் அல்லது படிகத்தைக் காட்டிலும் சிறப்பானது! பொன்னில் பதிக்கப்பெற்ற விலையுயர்ந்த கற்களால் ஞானத்தை வாங்க முடியாது.
[18]பவளம், சூரியகாந்தம் ஆகியவற்றிலும் ஞானம் உயர்ந்தது. சிவந்தக் கற்களைக் காட்டிலும் ஞானம் விலையுயர்ந்தது.
[19]எத்தியோப்பியா நாட்டின் புஷ்பராகம் ஞானத்தைப் போன்று விலைமதிப்புடைய தல்ல. தூயப் பொன்னால் உங்களால் ஞானத் தை வாங்கமுடியாது.
[20]"எனவே ஞானம் எங்கிருந்து வருகிறது? எங்கு நாம் புரிந்துகொள்ளுதலைக் காண முடியும்?

[21]பூமியின் உயிரினங்களுக்கு எல்லாம் ஞானம் மறைந்திருக்கிறது. வானத்துப் பறவைகள் கூட ஞானத்தைக் காண முடியாது.
[22]மரணமும் அழிவும், 'நாங்கள் ஞானத் தைக் கண்டதில்லை. நாங்கள் அதைக் குறித்த வதந்திகளைக் காதினால் மட்டும் கேட்டோம்' என்கின்றன.
[23]"தேவன் மட்டுமே ஞானத்தின் வழியை அறிகிறார். தேவன் மட்டுமே ஞானம் இருக் குமிடத்தை அறிகிறார்.
[24]பூமியின் இறுதிப் பகுதிகளையும் தேவனால் பார்க்க முடிகிறது. வானின் கீழுள்ள எல்லாவற்றையும் தேவன் பார்க் கிறார்.
[25]தேவன் காற்றிற்கு அதன் வல்லமையை அளித்தார். கடல்களை எத்தனை பெரிதாக படைக்கவேண்டுமென்று தேவன் முடிவெடுத் தார்.
[26]எங்கே மழையை அனுப்புவதென்றும், இடிமுழக்கங்களை எங்கே செலுத்து வதென்றும் தேவன் முடிவெடுக்கிறார்.
[27]தேவன் ஞானத்தைக் கண்டு, அதைப் பற்றி யோசித்தார். ஞானத்தின் மதிப்பைத் தேவன் கண்டு, அதனை ஏற்றுக்கொண்டார்.
[28]தேவன் மனிதரை நோக்கி, "கர்த்தருக்கு பயப்படுங்கள், அவரை மதியுங்கள். அதுவே ஞானம் ஆகும். தீமைச் செய்யாதீர்கள் அதுவே புரிந்துகொள்ளும் திறன் ஆகும்!" என்றார்.

---

**இந்திர நீலக்கற்கள்** மிக அபூர்வமான, விலையுயர்ந்த கல்.

**வல்லூறு** பருந்தைப்போன்ற ஒரு வகைப் பறவை.

### யோபு அவனது பேச்சைத் தொடர்கிறான்

29 யோபு அவனுடைய பேச்சைத்
தொடர்ந் தான்.
2யோபு: “தேவன் என்னைக் கண்காணித்
துக் கவனித்து வந்தபோது, பல மாதங்
களுக்கு முன்பு இருந்தாற்போன்று என்
வாழ்க்கை அமையாதா என விரும்புகிறேன்.
3அந்நாட்களில் தேவனுடைய ஒளி என்
மீது பிரகாசித்ததால், நான் இருளின் ஊடே
நடக்க முடிந்தது தேவன் நான் வாழ
வேண்டிய சரியான வழியைக் காண்பித்தார்.
4நான் வெற்றிகரமானவனாகவும், தேவன்
எனக்கு நெருங்கிய நண்பராகவும் இருந்த
நாட்களை நான் விரும்புகிறேன்.
அந்நாட்களில் தேவன் என் வீட்டை
ஆசீர்வதித்தார்.
5சர்வ வல்லமையுள்ள தேவன் என்னோ
டிருந்தும், என் பிள்ளைகள் என்னருகே
இருந்ததுமான காலத்தை நான் விரும்பு
கிறேன்.
6என் வாழ்க்கை மிக நன்றாக இருந்த
காலம் அது. நான் பாலேட்டில் என்
கால்களைக் கழுவினேன், சிறந்த எண்
ணெய்கள் என்னிடம் ஏராளம் இருந்தன.
7“நான் நகரவாயிலுக்குச் சென்று, பொது
ஜனங்கள் கூடும் இடத்தில் நகர மூப்பர்
களுடன் வீற்றிருந்த நாட்கள் அவை.

8அங்கு எல்லா ஜனங்களும் எனக்கு
மதிப்பளித்தார்கள்! நான் வருவதைப்
பார்க்கும்போது இளைஞர்கள் என் பாதை
யிலிருந்து (எனக்கு வழிவிட்டு) விலகி
நின்றார்கள். முதியோர் எழுந்து நின்றனர்.
என்னை அவர்கள் மதித்ததைக் காட்டும்
பொருட்டு அவர்கள் எழுந்தனர்.
9ஜனங்களின் தலைவர்கள் பேசுவதை
நிறுத்தினார்கள். பிறரும் அமைதியாயிருக்
கும்படி அவர்கள் தங்கள் கைகளை வாய்
களில் வைத்தார்கள்.
10மிக முக்கியமான தலைவர்கள் கூட
தங்கள் சத்தத்தைக் குறைத்து (தாழ்ந்த
தொனியில்) பேசினார்கள். ஆம், அவர்கள்
நாவு வாயின் மேல் அன்னத்தில் ஒட்டிக்
கொண்டாற் போலத் தோன்றிற்று.
11ஜனங்கள் எனக்குச் செவி
கொடுத்தார்கள், என்னைப்பற்றி நல்ல
காரியங்களைச் சொன்னார்கள்.
12ஏனெனில், ஏழை உதவிக்காக
கூப்பிட்டபோது, நான் உதவினேன். நான்
பெற்றோரற்ற பிள்ளைகளுக்கும், கவனிப்
பாரற்ற பிள்ளைகளுக்கும் உதவினேன்.
13கெட்டுப்போன மனிதன் என்னை
ஆசீர்வதித்தான். உதவி தேவைப்பட்ட
விதவைகளுக்கு நான் உதவினேன்.
14நேர்மையான வாழ்க்கையை நான்
ஆடையாக உடுத்தியிருந்தேன். நியாயம்
எனக்கு அங்கியாகவும், தலைப்பாகையா
கவும் அமைந்தது.
15குருடர்களுக்கு நான் கண்களானேன்.
அவர்கள் போகவேண்டிய இடத்திற்கு வழி
நடத்தினேன். முடவருக்கு நான் காலானேன்.
அவர்கள் போகவேண்டிய இடத்திற்கு அவர்
களைச் சுமந்து சென்றேன்.
16நான் ஏழைகளுக்குத் தந்தையைப்
போன்றிருந்தேன். நான் அறிந்திராத ஜனங்
களுக்கு உதவினேன். நியாயசபையில்
அவர்களின் வழக்கு வெற்றிப்பெற உதவி
னேன்.
17நான் தீயோரின் ஆற்றலை அழித்தேன்.
அவர்களிடமிருந்து களங்கமற்றோரைக் காப்
பாற்றினேன்.
18“என் குடும்பத்தினர் என்னைச் சூழ்ந்
திருக்க வயது முதிர்ந்தவனாக நீண்ட காலம்
வாழ்வேன் என எண்ணியிருந்தேன்.
19பனிப் படர்ந்த கிளைகளும் தண்ணீரை
மிகுதியாகப் பெற்ற வேர்களையுமுடைய
ஆரோக்கியமான செடியைப் போல நானும்
ஆரோக்கியமாயிருப்பேன் என எண்ணி
யிருந்தேன்.
20என் பெலன் தொடர்ந்து புதுப்பிக்கப்
பட்டது. என் கையிலுள்ள வில் புதுப் பெலன்
கொண்டது.
21“கடந்தக் காலத்தில், ஜனங்கள் எனக்குச்
செவிகொடுத்தார்கள். அவர்கள் எனது
அறிவுரைக்காகக் காத்திருந்தபோது அமைதி
யாக இருந்தார்கள்.
22நான் பேசி முடித்தப் பின்பு, எனக்குச்
செவிகொடுத்த ஜனங்கள், அதற்குமேல்
எதையும் கூறவில்லை. என் வார்த்தைகளை
அவர்கள் மகிழ்ச்சியாக ஏற்றுக்கொண்டனர்.
23மழைக்காக காத்திருப்பதைப்போல நான்
பேசுவதற்காக ஜனங்கள் காத்திருந்தார்கள்.
வசந்த காலத்தில் தரை மழையை
உறிஞ்சுவதுபோல, அவர்கள் என் வார்த்தை
களை குடித்தார்கள்.
24நான் அந்த ஜனங்களோடு சேர்ந்து
சிரித்தேன். அவர்களால் அதை நம்ப
முடியவில்லை. என் புன்னகை அவர்களுக்கு
நல்லுணர்வைக் கொடுத்தது.
25நான் ஜனங்களுக்குத் தலைவனாக
இருந்தும் கூட, நான் அந்த ஜனங்
களோடிருப்பதைத் தேர்ந்தெடுத்தேன். பாளை
யத்தில் தனது சேனைகளோடு வீற்றிருக்கும்
அரசனைப் போன்று,
நான் துயரமுற்ற ஜனங்களுக்கு ஆறுதல்
சொல்லிக்கொண்டிருந்தேன்.

30 ஆனால் இப்போது என்னைக் காட்டி
லும் இளைஞர்கள் கூட என்னைக்
கேலிச் செய்கிறார்கள். அவர்களின் தந்தை
களை நான் என் மந்தையைக் காக்கும்
நாய்களோடே வைக்கவும் வெட்கப்பட்டிருப்
பேன்.
2அந்த இளைஞர்களின் தந்தைகள் எனக்கு
உதவமுடியாதபடிச் சோர்ந்திருக்கிறார்கள்.
அவர்கள் வயது முதிர்ந்தவர்கள், அவர்

களின் களைத்துப்போன தசைநார்கள் வலி
மையும் ஆற்றலுமற்றுக் காணப்படுகின்றன.
3அவர்கள் மரித்தவர்களைப் போலிருக்
கிறார்கள்- அவர்கள் உண்பதற்கு எதுவுமில்
லாமல் பட்டினியாயிருக்கிறார்கள். எனவே
அவர்கள் பாலைவனத்தின் உலர்ந்த
அழுக்கை உண்கிறார்கள்.
4அவர்கள் பாலைவனத்திலுள்ள உப்புத்
தாவரங்களைப் பறித்தெடுக்கிறார்கள். மரத்
தின் வேர்களை அவர்கள் தின்றார்கள்.
5அவர்கள் பிற ஜனங்களிடமிருந்து
துரத்தப்பட்டார்கள். அவர்கள் கள்ளர் என
ஜனங்கள் அவர்களை உரத்தக் குரலில்
சத்தமிட்டார்கள.
6அவர்கள் உலர்ந்த ஆற்றுப் படுகை
களிலும், மலைப்பக்கத்துக் குகைகளிலும்
நிலத்தின் துவாரங்களிலும் வாழவேண்டும்.
7அவர்கள் புதர்களில் ஊளையிடுகிறார்
கள். முட்புதர்களின் கீழே அவர்கள்
ஒதுங்கியிருக்கிறார்கள்.
8தங்கள் நாட்டைவிட்டு விரட்டியடிக்கப்
பட்ட,பெயரற்ற, தகுதியில்லாத ஒரு கூட்டம்
ஜனங்கள் அவர்கள்!
9“இப்போது அந்த மனிதர்களின் மகன்கள்
என்னைக் கேலிச் செய்யும் பாடல்களை
பாடுகிறார்கள். என் பெயர் அவர்களுக்கு
ஒரு கெட்ட வார்த்தை ஆயிற்று.
10அந்த இளைஞர்கள் என்னை வெறுக்
கிறார்கள், அவர்கள் என்னிலிருந்து தூரத்
தில் போய் நிற்கிறார்கள். அவர்கள்
என்னைக் காட்டிலும் சிறந்தவர்கள் என
நினைக்கிறார்கள். அவர்கள் என் முகத்தில்
உமிழவும் செய்கிறார்கள்!
11தேவன் என் வில்லின் நாணை
அறுத்துப்போட்டு என்னைத் தளர்ச்சி
யடையச் செய்தார். அந்த இளைஞர்கள்
தாங்களாகவே நிறுத்தாது, எனக்கெதிராகத்
தங்கள் கோபத்தையெல்லாம் காட்டினார்கள்.
12அவர்கள் என் வலது பக்கத்தில் தாக்கு
கிறார்கள். அவர்கள் என் பாதங்களை அகல
தள்ளிவிட்டார்கள். நான் தாக்கப் படும்
நகரத்தைப்போல் இருக்கிறேன். என் னைத்
தாக்கி அழிப்பதற்கு அவர்கள் என்
சுவர்களுக்கெதிராக அழுக்குகளைக் கட்டு
கிறார்கள்.
13அவர்கள் என் பாதையை கெடுத்தார்கள்
அவர்கள் என்னை அழிப்பதில் வெற்றி
யடைகிறார்கள். அவர்களுக்கு உதவுவதற்கு
யாரும் தேவையில்லை.
14அவர்கள் சுவரில் துளையிடுகிறார்கள்.
அவர்கள் அதன் வழியாக விரைந்து வரு
கிறார்கள். உடையும் கற்கள் என்மீது
விழுகின்றன.
15நான் பயத்தால் நடுங்குகிறேன். காற்று
பொருள்களைப் பறக்கடிப்பதைப்போல அந்த
இளைஞர்கள் என் மகிமையைத் துரத்தி
விடுகிறார்கள். என் பாதுகாப்பு ஒரு
மேகத்தைப்போன்று மறைகிறது.
16“இப்போது என் உயிர் நீங்கும் நிலை
யில் உள்ளது. நான் விரைவில் மடிவேன்.
துன்பத்தின் நாட்கள் என்னைப் பற்றிக்
கொண்டன.
17என் எலும்புகள் எல்லாம் இரவில்
வலிக்கின்றன. என்னைக் கடித்துக்குதறும்
வேதனை நிற்கவேயில்லை.
18தேவன் என் மேற்சட்டையின் கழுத்துப்
பட்டையைப் பற்றியிழுத்து என் ஆடை
களை உருவின்றி சிதைத்தார்.
19தேவன் என்னைச் சேற்றினுள் தள்ளி
னார். நான் அழுக்கைப் போன்றும் சாம்ப
லைப் போன்றும் ஆனேன்.
20“தேவனே, உம்மிடம் உதவிக்காக
வேண்டுகிறேன், ஆனால் நீர் பதிலளிப்ப
தில்லை. நான் எழுந்து நின்று ஜெபம்
செய்கிறேன், ஆனால் நீர் என்னிடம் பாரா
முகமாயிருக்கிறீர்.
21தேவனே, நீர் என்னிடம் கொடுமையாக
நடந்தீர். என்னைத் தாக்குவதற்கு நீர் உமது
வல்லமையைப் பயன்படுத்தினீர்.
22தேவனே, பலத்த காற்று என்னைப்
பறக்கடிக்குமாறு செய்தீர். புயலில் நீர்
என்னை வெளியே வீசினீர்.
23நீர் என்னை மரணத்திற்கு வழி
நடத்துவீர் என அறிவேன். ஒவ்வொரு
மனிதனும் மடிய (மரிக்க) வேண்டும்.
24“ஆனால், ஏற்கனவே அழிந்தவனை
மீண்டும் நிச்சயமாய் ஒருவனும் தாக்க
மாட்டான்.
25தேவனே, தொல்லைகளுள்ள ஜனங்
களுக்காக நான் அழுதேன் என்பதை நீர்
அறிவீர். ஏழைகளுக்காக என் இருதயம்
துயருற்றது என்பதை நீர் அறிவீர்.
26நான் நல்லவற்றை எதிர்பார்த்த போது,
தீயவை நேர்ந்தன. நான் ஒளியைத் தேடிய
போது, இருள் வந்தது.
27நான் உள்ளே கிழிந்து போனேன், என்
துன்பம் நிற்கவில்லை. இன்னும் வரப்
போகும் துன்பங்கள் மிகுதி.
28நான் எப்போதும் துக்கமாயிருக்கிறேன்,
அதனால் நான் எந்த ஆறுதலும் பெற
வில்லை. நான் சபையில் எழுந்து நின்று,
உதவிக்காகக் கூக்குரலிட்டேன்.
29நான் காட்டு நாய்களைப் போலவும்
நெருப்புக் கோழிகளை போலவும் தனித்தவ
னானேன்.
30என் தோல் நெருப்பினுல் எரிந்து உரிந்து
கழன்று போகிறது. என் உடல் காய்ச்சலால்
சுடுகிறது.
31துக்கமான பாடல்களைப் பாட என்
தம்புரு மீட்டப்பட்டுள்ளது. துக்கமான
அழுகையைப் போன்று என் புல்லாங்
குழலின் குரல் ஒலிக்கிறது.

31 “என்னைக் கவர்கின்ற ஒரு
கன்னிப்பெண்ணைப் பாராதிருக்கும்
படி என் கண்களோடு நான் ஒரு ஒப்பந்தம்
செய்துக்கொண்டேன்.

[2]சர்வ வல்லமையுள்ள தேவன் ஜனங்
களுக்கு என்ன செய்கிறார்? உயரத்திலுள்ள
பரலோகத்தின் வீட்டிலிருந்து எவ்வாறு
தேவன் ஜனங்களுக்குத் திரும்பக் கொடுக்
கிறார்?
[3]தேவன் தொல்லையையும் அழிவையும்
கெட்ட ஜனங்களுக்கு அனுப்புகிறார். தவறு
செய்வோர்க்கு அழிவை அனுப்புகிறார்.
[4]நான் செய்கிற ஒவ்வொன்றையும் தேவன்
அறிகிறார். நான் எடுக்கும் ஒவ்வோர்
அடியையும் தேவன் காண்கிறார்.
[5]“நான்பொய்களாலானவாழ்க்கை வாழ்ந்
திருந்தால் அல்லது நான் பொய் சொல்லவும்
ஜனங்களை ஏமாற்றவும் ஓடியிருந்தால்,
[6]அப்போது, தேவன் என்னைச்
சீர்தூக்கிப் பார்ப்தற்குத் தக்க அளவு
கோலைப் பயன் படுத்தட்டும். அப்போது
நான் களங்கமற்றவன் என்பதைத் தேவன்
அறிவார்!
[7]நான் சரியான பாதைக்குப் புறம்பே
நடந்தால், என் கண்கள் என் இருதயத்தை
தீமைக்கு நேரே நடத்தினால், என் கைகளில்
பாவத்தின் அழுக்குப் படிந்திருந்தால், அப்
போது தேவன் அறிவார்,
[8]அப்போது நான் நட்ட பயிர்களைப் பிறர்
உண்ணட்டும், என் பயிர்கள் பிடுங்கப்
படட்டும்.
[9]“நான் பெண்களிடம் காம இச்சை
(மோகம்) கொண்டிருந்தால். அயலானின்
மனைவியோடு தகாத நெறியில் நடக்கும்படி
அவன் கதவருகே காத்திருந்தால்,
[10]அப்போது, எனது மனைவி மற்றொரு
வனின் உணவைச் சமைக்கட்டும், பிற
மனிதன் அவளோடு படுத்திருக்கட்டும்.
[11]ஏனெனில் உடலுறவால் விளையும்
பாவம் அவமானத்திற்குரியது. அது தண்ட
னை பெறக்கூடியப் பாவமாகும்.
[12]பாலின உறவு சம்மந்தமான பாவம்
அனைத்தையும் அழிக்கும்வரை எரியும்
நெருப்பைப் போன்றது. நான் இதுவரைச்
செய்த அனைத்தையும், எனது உடமைகள்
யாவற்றையும் அது அழித்துவிடும்!
[13]“என் அடிமைகளுக்கு என்னிடம் ஏதோ
குறைபாடு ஏற்பட்டபோது அவர்களிடம்
நியாயமாயிருக்க நான் மறுத்திருந்தால்,
[14]நான் தேவனைச் சந்திக்கும்போது
என்ன செய்வேன்? நான் செய்ததைக்
குறித்து தேவன் விளக்கம் கேட்டால் நான்
என்ன சொல்வேன்?
[15]என் தாயின் கர்ப்பத்தில் தேவன்
என்னை உண்டாக்கினார், தேவன் என்
அடிமைகளையும் உண்டாக்கினார், நம்
முடைய தாயின் கருவில் தேவன் நமக்கு
உருவம் கொடுத்தார்.
[16]“நான் ஏழைகளுக்கு உதவ ஒருபோதும்
மறுத்ததில்லை. விதவைகளுக்குத் தேவை
யானவற்றை நான் எப்போதும் கொடுத்
தேன்.
[17]நான் உணவைப் பொறுத்தமட்டில்
சுயநலம் பாராட்டியதில்லை. நான் எப்
போதும் அநாதைகளுக்கு உணவளித்தேன்.
[18]தந்தையற்ற பிள்ளைகளுக்கு என்
வாழ்க்கை முழுவதும், நான் ஒரு தந்தையைப்
போன்றிருந்தேன். என் வாழ்க்கை முழு
வதும், நான் விதவைகளை ஆதரித்து
வந்திருக்கிறேன்.
[19]ஆடையில்லாததால் ஜனங்கள் துன்புறு
வதைக் கண்டபோதும், மேற்சட்டையில்லாத
ஏழையைக் கண்டபோதும்.
[20]நான் அவர்களுக்கு எப்போதும் ஆடை
களைக் கொடுத்தேன். என் ஆடுகளின்
மயிரைப் பயன்படுத்தி, அவர்கள் குளிர்
நீங்கச் செய்தேன். அவர்கள் தங்கள் முழு
இருதயத்தோடு என்னை ஆசீர்வதித்தார்கள்.
[21]வாயிலில் ஒரு அநாதை வந்து உதவி
வேண்டி நிற்கும்போது நான் என்
கைமுட்டியை ஒருபோதும் ஆட்டிய
தில்லை.*

[22]நான் எப்போதேனும் அப்படிச் செய்
திருந்தால், அப்போது என் கரம்
தோளிலிருந்து விழுந்திருக்கும் என நான்
நம்புகிறேன்! நான் எப்போதேனும் அப்படிச்
செய்திருந்தால், என் கரம் எலும்புக் குழியி
லிருந்து அகற்றப்பட்டிருக்கும் என நான்
நம்புகிறேன்!
[23]ஆனால் நான் அத்தகைய தீயகாரியங்கள்
எதையும் செய்யவில்லை. நான் தேவனு
டைய தண்டனைக்கு அஞ்சியிருக்கிறேன்.
அவரது மகத்துவம் என்னை அச்சுறுத்து
கிறது.*
[24]“நான் என் செல்வங்களில் நம்பிக்கை
வைத்ததில்லை. எனக்கு உதவுவதற்காக
நான் எப்போதும் தேவனையே நம்பி
யிருந்தேன். தூய பொன்னிடம், ‘நீயே
என் நம்பிக்கை’ என்று நான் கூறியதில்லை,
[25]நான் செல்வந்தனாக இருந்தேன். ஆனால்
அது என்னைப் பெருமைக்காரனாக்க
வில்லை! நான் மிகுதியான பொருளைச்
சம்பாதித்தேன். ஆனால், என்னைச்
சந்தோஷப்படுத்தியது அதுவல்ல!

[26]நான் ஒளிவிடும் சூரியனையோ, அழகிய
சந்திரனையோ ஒருபோதும் தொழுது
கொண்டதில்லை.
[27]சூரியன் அல்லது சந்திரனை தொழுது
கொள்ளுமளவிற்கு நான் ஒருபோதும்
மூடனாக இருந்ததில்லை.
[28]அதுவும் தண்டிக்கப் படவேண்டிய
பாவம் ஆகும். நான் அப்பொருள்களை
தொழுதுகொண்டிருந்திருப்பேனாகில் சர்வ

---

**21ம் வசனம்** நியாயசபையில் எனக்கு ஆதரவு இருந்தபோதும் நான் ஒரு அநாதையைப் பயமுறுத்தியதில்லை.

**அவரது ... அச்சுறுத்துகிறது** அவரது மகத்துவத்திற்கு முன்னால் என்னால் நிற்கமுடியவில்லை.

வல்லமையுள்ள தேவனிடம் உண்மையற்ற
வனாவேன்.
29“என் பகைவர்கள் அழிந்தபோது நான்
மகிழ்ச்சியடைந்ததில்லை. தீயவை என்
பகைவர்களுக்கு நேரிட்டபோது, நான் அவர்
களைக் கண்டு நகைத்ததில்லை.
30என் பகைவர்களைச் சபிப்பதாலோ,
அவர்கள் மரிக்க வேண்டும் என விரும்
பியோ என் வாய் பாவம் செய்ய நான்
ஒருபோதும் அனுமதித்ததில்லை.
31நான் அந்நியருக்கு எப்போதும் உணவ
ளித்தேன் என்பதை என் வீட்டிலுள்ளோர்
எல்லோரும் அறிவார்கள்.
32அந்நியர்கள் இரவில் தெருக்களில் தூங்
காதபடி நான் எப்போதும் அவர்களை
வீட்டினுள்ளே வரவேற்றேன்.
33பிறர் தங்கள் பாவங்களை மறைக்க
முயல்கிறார்கள். ஆனால் நான் என்
குற்றத்தை மறைத்ததில்லை.
34ஜனங்கள் என்ன சொல்வார்களோ?
என்று நான் அஞ்சியதில்லை. அந்த அச்சம்
என்னை அமைதியாயிருக்கச்செய்ததில்லை.
நான் வெளியே போகாமலிருக்க அது
தடையாயிருக்கவில்லை. என்னை ஜனங்கள்
வெறுப்பதற்கு (ஜனங்களின் வெறுப்புக்கு)
நான் அஞ்சவில்லை.
35“ஓ! யாரேனும் எனக்குச் செவிகொடுக்க
வேண்டுமென விரும்புகிறேன்! நான் எனது
நியாயத்தை விளக்கட்டும். சர்வ வல்லமை
யுள்ள தேவன் எனக்குப் பதில் தருவார்
என விரும்புகிறேன். நான் செய்தவற்றில்
தவறென அவர் நினைப்பதை அவர்
எழுதிவைக்கட்டும் என்று நான் விரும்பு
கிறேன்.

36அப்போது என் கழுத்தைச் சுற்றிலும்
அந்த அடையாளத்தை அணிந்து
கொள்வேன். ஒரு கிரீடத்தைப் போன்று
அதை என் தலைமேல் வைப்பேன்.
37தேவன் அதைச் செய்தால், நான் செய்த
ஒவ்வொன்றையும் விளக்கிக் கூறமுடியும்.
தலை நிமிர்ந்தபடியே ஒரு தலைவனைப்
போன்று நான் தேவனிடம் வரமுடியும்.
38“மற்றொருவனிடமிருந்து நான் என்
நிலத்தைத் (அபகரிக்கவில்லை) திருட
வில்லை. நிலத்தைத் திருடியதாக ஒருவனும்
என் மீது குற்றம் சாட்ட முடியாது.
39நிலத்திலிருந்து நான் பெற்ற
உணவிற்காக எப்போதும் உழவர்களுக்கு
ஊதியம் கொடுத்துள்ளேன். ஒருவருக்குச்
சொந்தமான நிலத்தை கைப்பற்ற நான்
ஒருபோதும் முயன்றதில்லை.
40நான் அத்தீயக்காரியங்களை எப்போ
தேனும் செய்திருந்தால் அப்போது என்
வயல்களில் கோதுமை, பார்லி* ஆகிய
வற்றிற்குப் பதிலாக முள்ளும் களைகளும்
முளைக்கட்டும்!” என்றான். யோபின் வார்த்
தைகள் (சொற்கள்) முடிவடைந்தன.

### எலிகூ விவாதத்தில் பங்குக் கொள்கிறான்

32 அப்போது யோபுவின் நண்பர்கள்
மூவரும் யோபுவுக்குப் பதில் கூற
முயல்வதை விட்டு விட்டார்கள். தான்
உண்மையாகவே களங்கமற்றவன் என
யோபு உறுதியாக இருந்ததால், அவர்கள்
தங்கள் முயற்சியைக் கைவிட்டார்கள்.
2ஆனால், அங்கு எலிகூ என்னும் பெயருள்ள
ஒரு இளைஞன் இருந்தான். அவன்
பரகெயேலின் மகன். அவன் பூசு என்னும்
பெயருள்ள ஒரு மனிதனின் சந்ததியில்
வந்தவன். எலிகூ ராம் குடும்பத்தினன்.
எலிகூ யோபுவிடம் மிகுந்தக் கோபமடைந்
தான். ஏனெனில், யோபு தானே சரியாக
நடந்துக்கொண்டான் எனச் சொல்லிக்
கொண்டிருந்தான். தேவனைக் காட்டிலும்
தானே நியாயமானவன் என்று யோபு
சொல்லிக்கொண்டிருந்தான். 3யோபுவின்
நண்பர்கள் மூவரிடமும் எலிகூ கோபங்
கொண்டான். ஏனெனில், யோபுவின்
கேள்விகளுக்கு அம்மூவரும் பதில் கூற
முடியவில்லை. யோபு தவறு செய்தானென
அவர்களால் நிறுவ முடியவில்லை. 4எலிகூ
அங்கிருந்தவர்களில் வயதில் இளைய
வனாயிருந்தான். அதனால், பிறர் ஒவ்வொரு
வரும் பேசி முடிக்கும்வரை காத்திருந்தான்.
அப்போது அவன் பேசத் தொடங்கலாம் என
உணர்ந்தான். 5யோபுவின் மூன்று
நண்பர்களும் சொல்வதற்கு இனி ஏதும்
இல்லை என அப்போது எலிகூ கண்டான்.
அதனால் அவன் கோபமடைந்தான்.
6எனவே, அவன் பேசத் தொடங்கினான்.
அவன்:
“நான் இளைஞன், நீங்கள் முதியவர்கள்.
ஆகவேதான் நான் நினைப்பதை உங்க
ளுக்குச் சொல்ல அஞ்சினேன். 7நான்
எனக்குள், ‘முதியோர் முதலில் பேச
வேண்டும். முதியோர் பல ஆண்டுள் வாழ்ந்
திருக்கிறார்கள். எனவே அவர்கள் பல
காரியங்களைக் கற்றிருக்கிறார்கள்’ என்று
சிந்தித்தேன்.
8ஆனால் தேவனுடைய ஆவி ஒருவனை
ஞானமுள்ளவனாக்குகிறது. சர்வ வல்லமை
யுள்ள தேவனுடைய ‘மூச்சு’ ஜனங்களைப்
புரிய வைக்கிறது.
9முதியோர் மட்டுமே ஞானவான்கள்
அல்லர். சரியானதைப் புரிந்துகொள்வோர்
முதியோர் மட்டுமல்லர்.
10“எனவே தயவுசெய்து எனக்குச் செவி
கொடுங்கள்! நான் நினைப்பதை உங்க
ளுக்குச் சொல்வேன்.
11நீங்கள் பேசும்போது நான் பொறுமை
யாகக் காத்திருந்தேன். யோபுவுக்கு நீங்கள்
கூறிய பதில்களைக் கேட்டேன்.
12நீங்கள் கூறியவற்றை நான் கவனமாகக்

**பார்லி** ஒரு வகை தானியம்.

கேட்டேன். உங்களில் ஒருவரும் யோபுவை
குற்றம்கூறவில்லை. அவனுடைய விவாதத்
திற்கு உங்களில் ஒருவரும் பதில் கூற
வில்லை.
13 நீங்கள் மூவரும் ஞானத்தைக்
கண்டடைந்ததாகக் கூறமுடியாது. மனித
ரல்ல, தேவன் யோபுவின் விவாதங்களுக்குப்
பதில் கூறவேண்டும்.
14 யோபு அவனது விவாதங்களை என்
னிடம் முன் வைக்கவில்லை. எனவே நீங்கள்
மூவரும் பயன்படுத்திய விவாதங் களை
நான் பயன்படுத்த மாட்டேன்.
15 “யோபுவே, இம்மனிதர்கள் தங்கள் விவா
தத்தில் தோற்றார்கள். அவர்கள் மேலும்
கூற எதுவுமில்லை. அவர்களிடம் வேறு
பதில்கள் இல்லை.
16 யோபுவே, இம்மனிதர்கள் உமக்குப்
பதில் கூறும்படி நான் காத்திருந்தேன்.
ஆனால் இப்போது அவர்கள் அமைதியா
யிருக்கிறார்கள். அவர்கள் உம்மோடு விவா
திப்பதை நிறுத்தியிருக்கிறார்கள்.
17 எனவே இப்போது என் பதிலை நான்
உமக்குச் சொல்வேன். ஆம், நான் நினைப்
பதை உமக்குக் கூறுவேன்.
18 “நான் சொல்வதற்கு நிரம்ப இருக்கிறது.
நான் அவற்றைக் கொட்டிவிடப் போகிறேன்.

19 திறக்கப்படாத புது திராட்சைரசம்
நிரம்பிய புட்டியைப் போலிருக்கிறேன்.
உடைத்துத் திறப்பதற்கு தயாராயிருக்கிற புது
திராட்சைரசம் உடைய தோல்பையை*
போலிருக்கிறேன்.
20 எனவே நான் பேசவேண்டும். அப்போது
நான் நலமடைவேன். நான் பேசவேண்டும்,
நான் யோபுவின் விவாதத்திற்குப் பதில் கூற
வேண்டும்.
21 “பிறரை நடத்துவதைப்போல், நான்
யோபுவையும் நடத்தவேண்டும். அவனிடம்
நல்லவற்றைச் சொல்ல நான் முயல
மாட்டேன். நான் சொல்ல வேண்டியதைச்
சொல்வேன்.
22 நான் ஒருவனை மற்றொருவனைக்
காட்டிலும் சிறப்பாக நடத்த முடியாது. நான்
அவ்வாறு செய்தால், அப்போது தேவன்
என்னைத் தண்டிப்பார்!
33 “இப்போது, யோபுவே, என்னைக்
கவனித்துக்கேளும்: நான்
சொல்கிறவற்றிற்குச் செவிகொடும்.
2 நான் பேச தயாராயிருக்கிறேன்.
3 என் இருதயம் நேர்மையானது, எனவே
நேர்மையான வார்த்தைகளைப் பேசுவேன்.
எனக்குத் தெரிந்தவற்றைக் குறித்து நான்
உண்மை பேசுவேன்.
4 தேவனுடைய ஆவி என்னை உண்டாக்
கிற்று. என் உயிர் சர்வ வல்லமையுள்ள
தேவனிடமிருந்து வந்தது.
5 யோபுவே, நான் சொல்வதைக் கேளும்,
உனக்கு முடிந்தால் எனக்குப் பதில் சொல்
லும். உனது பதிலைத் தயாராக வைத்திரும்,
அப்போது நீ என்னோடு விவாதிக்க
முடியும்.
6 தேவனுக்கு முன்பாக நீயும் நானும்
சமமானவர்களே. தேவன் மண்ணைப் பயன்
படுத்தி நம்மிருவரையும் உண்டாக்கினார்.
7 யோபுவே, எனக்கு அஞ்சாமல் இரும்.
நான் உன்னிடம் கடினமாயிருக்க மாட்டேன்.
8 “ஆனால் யோபுவே, நீ சொன்னதை
நான் கேட்டேன்.
9 நீ, ‘நான் பரிசுத்தமானவன் நான்
களங்கமற்றவன். நான் தவறேதும் செய்ய
வில்லை. நான் குற்றமற்றவன்.
10 நான் தவறேதும் செய்யவில்லை.
ஆனால் தேவன் எனக்கு எதிராக இருக்
கிறார். தேவன் என்னை ஒரு பகைவனைப்
போல் நடத்தினார்.
11 தேவன் என் கால்களில் விலங்கிட்டார்.
நான் செய்கிற ஒவ்வொன்றையும் தேவன்
கண்ணோக்குகிறார்’ என்று சொன்னாய்.
12 “ஆனால் யோபுவே, நீ இவ்விஷயத்தில்
தவறியிருக்கிறாய். நீ தவறு செய்கிறாய்
என்பதை நான் நிரூபிப்பேன். ஏனெனில்
தேவன் எல்லா மனிதர்களையும் விட
அதிகமாக அறிந்திருக்கிறார்.*
13 யோபுவே, நீ தேவனோடு விவாதிக்
கிறாய். தேவன் எல்லாவற்றையும் உனக்கு
விளக்கவேண்டுமென நீ நினைக்கிறாய்.
14 தேவன் தாம் செய்கிற எல்லாவற்றையும்
விளக்கலாம். வெவ்வேறு வகைகளில்
தேவன் பேசலாம், ஆனால் ஜனங்கள் புரிந்து
கொள்ளமாட்டர்கள்.
15-16 தேவன் கனவில் ஜனங்களோடு பேச
லாம், அல்லது இரவில் அவர்கள் ஆழ்ந்த
நித்திரைக் கொள்ளும்போது தரிசனம் தந்து
பேசலாம், அவர்கள் தேவனுடைய எச்சரிக்
கையைக் கேட்கும்போது மிகவும் அச்சம்
கொள்ளலாம்.
17 ஜனங்கள் தவறு செய்வதை நிறுத்தவும்
பெருமை கொள்வதை விடவும் தேவன்
எச்சரிக்கை செய்கிறார்.
18 மரணத்தின் இடத்திற்குப்* போகாதபடி
அவர்களைக் காப்பதற்காகத் தேவன் ஜனங்
களை எச்சரிக்கிறார். ஒருவன் அழியாதபடி
காப்பதற்குத் தேவன் அவ்வாறு செய்கிறார்.
19 “அல்லது ஒருவன் படுக்கையில் கிடந்து
தேவனுடைய தண்டனையை அனுபவிக்கும்
போது ஒருவன் தேவனுடைய சத்தத்தைக்
கேட்கக்கூடும். வேதனையால் அம்மனி

---

**புது … தோல்பையை** தோலினால் ஆன பையில் திராட்சைரசத்தை அடைத்து வைக்கும் பழக்கம் யூதர்களிடம் இருந்தது.

**தேவன் … அறிந்திருக்கிறார்** தேவன் எல்லோரைக் காட்டிலும் மிகவும் பெரியவர்.

**மரணத்தின் இடம்** “குழி” ஜனங்கள் மரிக்கும்போது போகும் இடம்.

*தனைத் தேவன் எச்சரிக்கிறார். எலும்பெல்*
*லாம் நொறுங்கும்படி அம்மனிதன் நோவை*
*அனுபவிக்கிறான்.*
20*அப்போது அம்மனிதன் உண்ண*
*முடியாது. மிகச் சிறந்த உணவையும்*
*வெறுக்கும்படி அவன் மிகுந்த நோவை*
*அனுபவிக்கிறான்.*
21*அவன் மிகவும் மெலிந்து எலும்புகள்*
*வெளித்தோன்றும் வரை அவன் உடம்பு*
*மெலிந்துபோகும்.*
22*அம்மனிதன் மரணத்தின் இடத்திற்கு*
*அருகே இருக்கிறான். அவன் வாழ்க்கை*
*மரணத்திற்கு அருகாமையில் உள்ளது.*
23"*தேவனிடம் ஆயிரக்கணக்கான*
*தூதர்கள் இருப்பார்கள். அத்தூதர்களுள்*
*ஒருவன் அம்மனிதனைக் கண்ணோக்கிக்*
*கொண்டிருக்கலாம். அந்த தூதன் அம்மனி*
*தனுக்காகப் பரிந்துபேசி அவன் செய்த*
*நற்செயல்களை எடுத்துரைக்கலாம்.*

24*அந்த தூதன் அம்மனிதனிடம் இரக்கம்*
*காட்டலாம். அத்தூதன் தேவனிடம், 'மரணத்*
*தின் இடத்திலிருந்து அம்மனிதனைக் காப்*
*பாற்றும். அவன் பாவத்திற்குப் பரிகாரமாக*
*நான் ஒரு வழியைக் கண்டு பிடித்*
*திருக்கிறேன்' எனலாம்.*
25*அப்போது அம்மனிதனின் உடல்*
*மீண்டும் இளமையும், வலிமையும்பெறும்.*
*அவன் இளமையிலிருந்தாற் போன்று*
*இருப்பான்.*
26*அம்மனிதன் தேவனிடம் ஜெபிப்பான்,*
*தேவன் அவனுடைய ஜெபத்திற்குப் பதில்*
*தருவார். அம்மனிதன் களிப்பால் ஆர*
*வாரித்து, தேவனைத் தொழுதுகொள்வான்.*
*அப்போது அம்மனிதன் மீண்டும் நல்*
*வாழ்க்கை வாழ்வான்.*
27*அப்போது அம்மனிதன் ஜனங்களிடம்*
*அறிக்கையிடுவான். அவன், 'நான் பாவம்*
*செய்தேன். நான் நல்லதைக் கெட்டதாக்கி*
*னேன். ஆனால் தேவன் என்னைத் தண்டிக்க*
*வேண்டிய அளவு தண்டிக்கவில்லை.*
28*மரணத்தின் இடத்திற்குப் போகாதபடி,*
*தேவன் என் ஆத்துமாவைக் காப்பாற்றினார்.*
*இப்போது மீண்டும் என் வாழ்க்கையை நான்*
*அனுபவிக்கமுடியும்' என்பான்.*
29"*அம்மனிதனுக்காக மீண்டும், மீண்டும்*
*தேவன் எல்லாவற்றையும் செய்கிறார்.*
30*ஏனென்றால், அம்மனிதனை எச்சரித்து,*
*அவனது ஆத்துமாவை மரணத்தின்*
*இடத்திலிருந்து காப்பதால் அம்மனிதன்*
*வாழ்க்கையை அனுபவிக்க முடியும் என்ப*
*தற்காக இதைச் செய்கிறார்.*
31"*யோபுவே, என்னைக் கவனியும். நான்*
*கூறுவதைக் கேளும். அமைதியாக இரும்,*
*என்னை பேசவிடும்.*
32*ஆனால் யோபுவே, நீர் என்னோடு*
*கருத்துவேறுபாடு கொள்ளவிரும்பினால்,*
*அப்போது நீர் பேசத் தொடங்கும். உமது*
*விவாதத்தைக் கூறும், ஏனெனில், நான்*
*உம்மைத் திருத்த விரும்புகிறேன்.*
33*ஆனால் யோபுவே, நீர் கூற எதுவு*
*மில்லையெனில், நான் சொல்வதைக் கேளும்.*
*அமைதியாக இரும், உமக்கு ஞானத்தைப்*
*போதிப்பேன்" என்றான்.*

34 *பின்பு எலிகூ தொடர்ந்து பேசினான்.*
*அவன்:*
2"*நான் கூறுபவற்றை கேளுங்கள், ஞானி*
*களே, நான் சொல்வதைக் கவனியுங்கள்,*
*அறிஞர்களே*
3*உங்கள் நாவு, அது தொடுகிற உணவை*
*ருசிக்கிறது. உங்களது காது, அது கேட்கிற*
*வார்த்தைகளைச் சோதிக்கிறது.*
4*எனவே நாம் அந்த விவாதங்களைச்*
*சோதிப்போம், எது சரியென நாமே முடிவு*
*செய்வோம். எது நல்லதென நாம்*
*ஒருமித்திருந்து கற்போம்.*
5*யோபு, 'யோபாகிய நான் களங்க*
*மற்றவன், தேவன் என்னிடம் நியாயமுடைய*
*வராயிருக்கவில்லை.*
6*நான் களங்கமற்றவன், ஆனால் நீதி*
*எனக்கெதிராக வழங்கப்பட்டது, அது நான்*
*பொய்யனெனக் கூறுகிறது. நான் களங்க*
*மற்றவன், ஆனால் மிக மோசமாகக் காயமுற்*
*றேன்' என்கிறான்.*
7"*யோபைப் போல வேறெவனாகிலும்*
*இருக்கிறானா? நீங்கள் அவமானப்படுத்தி*
*னால் யோபு அதைப் பொருட்படுத்து*
*வதில்லை.*
8*யோபு தீயோரோடு நட்புடையவனா*
*யிருந்தான். யோபு கெட்ட ஜனங்களோ*
*டிருக்க விரும்புகிறான்.*
9*ஏன் நான் அவ்வாறு சொல்கிறேன்?*
*ஏனெனில் யோபு, 'ஒருவன் தேவனைத்*
*தவறான வழிகளில் சந்தோஷப்படுத்த*
*முயற்சி செய்தால் அதனால் அவனுக்கு*
*நன்மையேதும் வாய்க்காது' என்கிறான்.*
10"*உங்களால் புரிந்துகொள்ள முடியும்,*
*எனவே நான் சொல்வதைக் கேளுங்கள்.*
*தேவன் தீயவற்றை ஒருபோதும் செய்ய*
*மாட்டார்! சர்வ வல்லமையுள்ள தேவன்*
*தவறிழைக்க மாட்டார்!*
11*ஒருவன் செய்யும் காரியங்களுக்கேற்ற*
*படியே தேவன் பலனளிப்பார். ஒருவனுக்கு*
*உரியதைத் தேவன் அவனுக்குக் கொடுக்*
*கிறார்.*
12*இதுவே உண்மை, தேவன் தவறிழைக்க*
*மாட்டார், சர்வ வல்லமையுள்ள தேவன்*
*எப்போதும் நியாயந்தீர்ப்பார்.*
13*பூமிக்குப் பொறுப்பாக இருக்கும்படி*
*தேவனை எந்த மனிதனும் தேர்ந்தெடுக்க*
*வில்லை, உலகம் முழுவதற்கும் பொறுப்பை*
*தேவனுக்கு ஒருவனும் கொடுக்கவில்லை.*
*தேவன் எல்லாவற்றையும் படைத்தார். எல்*
*லாம் அவரது ஆதிக்கத்தின் கீழ் இருக்*
*கின்றன.*
14*தேவன் மனிதனது ஆவியை எடுக்க*

முடிவெடுத்தால், அவனது மூச்சை நீக்கிவிட
முடிவெடுத்தால்,
15அப்போது பூமியின் ஜனங்கள்
எல்லோரும் மரிப்பார்கள். எல்லா
ஜனங்களும் மீண்டும் மண்ணாவார்கள்.
16“நீங்கள் ஞானிகளாயிருந்தால், நான்
சொல்வதற்குச் செவி கொடுப்பீர்கள்.
17ஒருவன் நியாயஞ் செய்வதை வெறுத்
தால், அவன் அரசனாக இருக்கமுடியாது.
யோபுவே, தேவன் வல்லவரும் நல்லவரு
மானவர். அவரைக் குற்றவாளியாக நியாயந்
தீர்க்க முடியும் என்று நினைக்கிறீர்களா?
18தேவனே அரசர்களிடம், ‘நீங்கள் தகுதி
யற்றவர்கள்’ என்கிறார். தேவனே தலைவர்
களிடம், ‘நீங்கள் தீயவர்கள்’ என்கிறார்!
19தேவன் ஜனங்களைக் காட்டிலும் தலை
வர்களை நேசிப்பதில்லை. தேவன் ஏழை
களைக் காட்டிலும் செல்வந்தரை நேசிப்ப
தில்லை. ஏனெனில், தேவனே ஒவ்வொரு
வரையும் உண்டாக்கினார்.
20ஜனங்கள் நள்ளிரவில் திடீரென மரிக்க
முடியும். ஜனங்கள் நோயுற்று மடிவார்கள்.
தெளிவான காரணமின்றி வலிமையான
ஜனங்களும் கூட மரிப்பார்கள்.
21“ஜனங்கள் செய்வதைத் தேவன்
கண்ணோக்குகிறார். ஒருவன் வைக்கிற
ஒவ்வோர் அடியையும் தேவன் அறிகிறார்.
22தேவனிடமிருந்து ஒளிப்பதற்கேற்ற இருள்
நிரம்பிய இடம் எதுவும் தீயோருக்குக்
கிடைப்பதில்லை.

23ஜனங்களைச் சோதித்துப் பார்க்கும்
நேரத்தைத் தேவன் தேர்ந்தெடுக்க வேண்டிய
தில்லை. தேவன் நியாயந்தீர்ப்பதற்குத்
தனக்கு முன்னிலையில் ஜனங்களைக்
கொண்டுவர தேவையில்லை.
24வல்லமையுள்ள ஜனங்கள் தீய
காரியங்களைச் செய்யும்போது, தேவன்
கேள்விகளைக் கேட்கத் தேவையில்லை.
தேவன் அந்த ஜனங்களை அழித்துவிடுவார்,
வேறு ஜனங்களைத் தலைவர்களாகத் தேர்ந்
தெடுப்பார்.
25எனவே ஜனங்கள் செய்வது என்ன
என்பதைத் தேவன் அறிகிறார். அதனால்
விரைவில் தேவன் தீயோரைத் தோற்கடித்து
அவர்களை ஒரே இரவில் அழித்து விடுவார்.
26கெட்ட ஜனங்கள் செய்த தீய காரியங்
களுக்காக, தேவன் அவர்களைத் தண்டிப்
பார். பிற ஜனங்கள் காணும்படியாக அந்த
ஜனங்களைத் தேவன் தண்டிப்பார்.
27ஏனெனில், கெட்ட ஜனங்கள்
தேவனுக்குக் கீழ்ப்படிவதை நிறுத்தி
விட்டார்கள். தேவன் விரும்புகிறபடியே
செய்வதற்கும் அந்த ஜனங்கள் கவலைப்
படுவதில்லை.
28அந்தக் கெட்ட ஜனங்கள் ஏழைகளைத்
துன்புறுத்துகிறார்கள். தேவனை நோக்கி
அவர்கள் உதவி வேண்டி அழும்படிச்
செய்கிறார்கள். ஏழைகள் உதவி கேட்டு
அழுவதைத் தேவன் கேட்கிறார்.
29ஆனால் ஏழைகளுக்கு உதவ வேண்டா
மென்று தேவன் முடிவுச் செய்தால்,
ஒருவரும் தேவனைக் குற்றவாளியாக
நியாயந்தீர்க்க முடியாது. தேவன் ஜனங்
களிடமிருந்து தன்னை மறைத்துக் கொண்
டாரானால் அப்போது அவரை ஒருவரும்
பார்க்க முடியாது. தேவனே ஜனங்களுக்கும்
தேசங்களுக்கும் அரசர்.
30ஒரு அரசன் தீயவனாக இருந்து பிறர்
பாவம் செய்யும்படி பண்ணினால், அப்
போது, தேவன் அவனை அரசாளும்படி
அனுமதிக்கமாட்டார்.
31“ஒரு மனிதன் தேவனிடம், ‘நான் குற்ற
வாளி, இனிமேல் பாவம் செய்ய மாட்டேன்.
32தேவனே, நான் உம்மைப் பார்க்க
முடியாவிட்டாலும் தக்க நெறியில் வாழும்
வகையைத் தயவுசெய்து எனக்குப்
போதியும். நான் தவறு செய்திருந்தால்,
மீண்டும் அதைச் செய்யமாட்டேன்’ என்று
கூறலாம்.
33“யோபுவே, தேவன் உனக்குப் பரிசளிக்க
(பலன் தர) வேண்டுமென நீ விரும்புகிறாய்.
ஆனால் நீயோ உன்னை மாற்றிக்கொள்ள
மறுக்கிறாய். யோபுவே, இது உம் முடிவு,
என்னுடையதல்ல, நீ நினைப்பதை எனக்குச்
சொல்லும்.

34“ஒரு ஞானி நான் சொல்வதைக் கேட்
பான். ஒரு ஞானி,
35‘யோபு அறியாமையுடையவனைப்
போலப் பேசுகிறான். யோபு சொல்கின்றவை
பொருள் தருவன அல்ல’ என்பான்
36யோபு இன்னும் அதிகமாகத் தண்டிக்கப்
பட வேண்டுமென்று நான் நினைக்கிறேன்.
ஏனெனில் ஒரு தீயவன் பதில் சொல்கிறாற்
போல, யோபுவும் எங்களுக்குப் பதில்
சொல்கிறான்.
37யோபு தனது பிற பாவங்களோடு
இன்னும் பாவங்களை அதிகமாக்கினார்.
எங்களுக்கு முன்பாக யோபு அமர்ந்திருக்
கிறான், அவர் எங்களை அவமானப்
படுத்துகிறான், தேவனைக் கேலிச் செய்
கிறான்!” என்றான்.

35 எலிகூ பேசுவதைத் தொடர்ந்தான்.
அவன்,
2“யோபுவே, ‘நான் தேவனைக் காட்டிலும்
நியாயமானவன்’ எனக் கூறுவது சரியல்ல
3யோபுவே, நீ தேவனை, ‘ஒருவன்
தேவனைச் சந்தோஷப்படுத்த விரும்பினால்
அவனுக்கு லாபம் என்ன? நான் பாவம்
செய்யாதிருந்தால், அது எனக்கு என்ன
நன்மையைத் தரும்?’ என்று கேளும்.
4“யோபுவே, நான் (எலிகூ) உனக்கும்,
உன்னோடு இங்கிருக்கும் உமது நண்பர்
களுக்கும் பதில் கூற விரும்புகிறேன்.
5யோபுவே, வானத்தை நோக்கிப்பாரும்,

உனக்கும்மேல் உயர்ந்திருக்கிற மேகங்களை
அண்ணாந்து பாரும்.
6 யோபுவே, நீ பாவஞ்செய்தால், அது
தேவனைத் துன்புறுத்தாது. யோபுவே உன்
னிடம் பாவங்கள் மிகுதியாயிருந்தால், அது
தேவனை ஒன்றும் செய்யாது.
7 யோபுவே, நீ நல்லவனாக இருந்தால்,
அது தேவனுக்கு உதவாது. தேவன் உன்னிட
மிருந்து எதையும் பெறமாட்டார்.
8 யோபுவே, நீ செய்யும் நல்ல காரியங்
களோ, தீயகாரியங்களோ உன்னைப்
போன்ற பிறரை மட்டுமே பாதிக்கும். அவை
தேவனுக்கு உதவவோ, அவரைத் துன்புறுத்
தவோ செய்யாது.
9 “தீயோர் துன்புறுத்தப்பட்டால், அவர்கள்
உதவிக்காக கூக்குரலிடுவார்கள். அவர்கள்
வல்லமையுள்ள ஜனங்களிடம் சென்று
உதவிக்காக கெஞ்சி கேட்பார்கள்.
10 ஆனால் அத்தீயோர் தேவனிடம் உதவிக்
கேட்கமாட்டார்கள். அவர்கள், ‘என்னை
உண்டாக்கின தேவன் எங்கே? ஜனங்கள்
மனக்கவலையோடிருக்கையில் தேவன்
அவர்களுக்கு உதவுவார். எனவே அவர்
எங்கிருக்கிறார்?
11 தேவன் நம்மை பறவைகள், மிருகங்
களைக் காட்டிலும் ஞானமுள்ளவராக்கு
கிறார்? எனவே அவர் எங்கிருக்கிறார்?’
என்று கேட்பார்கள்.
12 “அல்லது, அத்தீயோர் தேவனிடம் உதவி
வேண்டினால் தேவன் அவர்களுக்குப்
பதிலளிக்கமாட்டார். ஏனெனில் அவர்கள்
மிகவும் பெருமை (அகந்தை) உடையவர்கள்.
அவர்கள் மிகவும் முக்கியமானவர்களென்று
இன்னமும் நினைக்கிறார்கள்.
13 தேவன் அவர்களின் தகுதியற்ற கெஞ்சு
தலுக்குச் செவிசாய்க்கமாட்டார் என்பது
உண்மை. சர்வ வல்லமையுள்ள தேவன்
அவர்களைக் கவனிக்கமாட்டார்.
14 எனவே யோபுவே, நீ தேவனைப்
பார்க்கவில்லை என்று கூறும்போது தேவன்
உனக்குச் செவிசாய்க்கமாட்டார். தேவனைச்
சந்திக்கும் வாய்ப்பை எதிர்பார்த்து நீ
களங்கமற்றவனென்று நிரூபிக்கக் காத்துக்
கொண்டிருப்பதாகக் கூறுகிறாய்.
15 யோபுவே, தேவன் தீயோரைத் தண்டிப்ப
தில்லை எனவும், தேவன் பாவங்களைக்
கவனிப்பதில்லை எனவும் நீ நினைக்கிறாய்.
16 “எனவே யோபு அவனது தகுதியற்ற
பேச்சைத் தொடருகிறான். யோபு தான்
முக்கியமானவனாக பாவித்துக் கொண்டிருக்
கிறான். யோபு தான் பேசிக்கொண்டிருப்
பதைப்பற்றி அறியான் என்பதை எளிதாகக்
காணமுடியும்” என்றான்.

36 எலிகூ தன் பேச்சைத் தொடர்ந்தான்.
அவன்,
2 “என்னோடு இன்னும் கொஞ்சம்
பொறுமையாயிரும். இன்னும் சில வார்த்தை
களைக் கூட நான் பேச தேவன் விரும்பு
கிறார்.
3 நான் எனது அறிவை எல்லோரோடும்
பகிர்ந்துக்கொள்வேன். தேவன் என்னை
உண்டாக்கினார், தேவன் நியாயமானவரென
நான் நிரூபிப்பேன்.
4 யோபுவே, நான் உண்மையைக் கூறிக்
கொண்டிருக்கிறேன். நான் எதைக் குறித்துப்
பேசுகிறேன் என்று நான் அறிவேன்.
5 “தேவன் மிகுந்த வல்லமையுள்ளவர்,
ஆனால் அவர் ஜனங்களை வெறுப்ப
தில்லை. தேவன் மிகுந்த வல்லமையுள்ளவர்,
ஆனால் அவர் மிகுந்த ஞானமுள்ளவர்.
6 தேவன் தீய ஜனங்களை வாழவிட
மாட்டார், தேவன் ஏழைகளை எப்போதும்
நியாயமாக நடத்துகிறார்.
7 தக்க வழியில் நடப்போரைத் தேவன்
கண்ணோக்குகிறார். அவர் நல்லோரை
அரசர்களாயிருக்க அனுமதிக்கிறார். தேவன்
நல்லோருக்கு என்றென்றும் மகிமையைக்
கொடுக்கிறார்.
8 எனவே ஜனங்கள் தண்டிக்கப்பட்டால்,
அவர்கள் விலங்குகளினாலும் கயிறு
களினாலும் கட்டப்பட்டால், அப்போது
அவர்கள்தவறு செய்தவர்களாயிருப்பார்கள்.
9 அவர்கள் செய்தது என்னவென்பதைத்
தேவன் சொல்வார். அவர்கள் பாவம்
செய்தார்கள் என்பதை தேவன் சொல்வார்.
அவர்கள் பெருமையாயிருந்தார்கள் என்
பதை தேவன் சொல்வார்.
10 தேவன் தனது எச்சரிக்கைக்குச் செவி
சாய்க்குமாறு அந்த ஜனங்களைக் கட்டாயப்
படுத்துவார். அவர்கள் பாவம் செய்வதை
நிறுத்துமாறு தேவன் கட்டளையிடுவார்.
11 அந்த ஜனங்கள் தேவனுக்குச் செவி
கொடுத்து அவருக்குக் கீழ்ப்படிந்தால்,
தேவன் அவர்கள் வெற்றிக் காணச் செய்
வார். அவர்கள் மகிழ்ச்சியான வாழ்க்கையை
வாழ்வார்கள்.
12 ஆனால் அந்த ஜனங்கள் தேவனுக்குக்
கீழ்ப்படிய மறுத்தால், அப்போது அவர்கள்
அழிக்கப்படுவார்கள். அவர்கள், அறியாமை
யுடையவர்களாக மரித்துப்போவார்கள்.
13 “தேவனைப் பற்றிக் கவலைப்படாத
ஜனங்கள் எப்போதும் கசப்பானவர்கள்.
தேவன் அவர்களைத் தண்டிக்கிற போதும்
கூட,அவர்கள் தேவனிடம் உதவிக்காக
ஜெபம் செய்ய மறுக்கிறார்கள்.
14 அவர்கள் ஆண் விபசாரிகளைப்* போல
இளமையிலேயே மரித்துபோவார்கள்.
15 ஆனால் தேவன் ஜனங்கள் பெறும்
தொல்லைகளால் அவர்களைத் தாழ்மையான
வர்களாக்குவார். ஜனங்கள் எழுந்து அவ

---

**ஆண் விபசாரிகள்** பெரும்பாலும் பிற ஆண்களோடு கொண்ட உடலுறவு பாவத்தில் தங்கள் உடலை விற்ற ஆண்கள் பொய் தெய்வங்களை வழிபடும் கானானிய வழிபாட்டின் ஒரு பகுதி இது.

ருக்குச் செவிகொடுப்பதற்காக தேவன்
அத்தொல்லைகளைப் பயன்படுத்துகிறார்.
16"யோபுவே, தேவன் உனக்கு உதவ
விரும்புகிறார். தொல்லைகளிலிருந்து
உன்னை விடுவிக்க தேவன் விரும்புகிறார்.
உனக்கு வாழ்க்கையை எளிதாக்க தேவன்
விரும்புகிறார். உன் மேசையில் மிகுதியான
உணவு இருக்கும்படியாகச் செய்ய தேவன்
விரும்புகிறார்.
17ஆனால் இப்போது யோபுவே, நீ
குற்றவாளியாக நியாயந் தீர்க்கப்பட்டாய்.
எனவே ஒரு தீயவனைப்போன்று நீ
தண்டிக்கப்பட்டாய்.
18யோபுவே, செல்வங்கள் உன்னை மூட
னாக்கவிடாதேயும். பணம் உனது மனத்தை
மாற்ற விடாதேயும்.
19உனது பணம் இப்போது உனக்கு
உதவாது. வல்லமையுள்ளோர் உமக்கு உதவ
வும் முடியாது.
20இரவின் வருகையை விரும்பாதேயும்.
ஜனங்கள் இரவில் மறைந்துபோக முயல்
கிறார்கள். அவர்கள் தேவனிடமிருந்து
ஒளிந்துக்கொள்ள முடியும் என்று நினைக்
கிறார்கள்.*
21யோபுவே, நீ மிகவும் துன்புற்றிருக்
கிறாய் ஆனால் தீமையைத் தேர்ந்து
கொள்ளாதேயும். தவறுசெய்யாதபடி எச்சரிக்
கையாயிரும்.
22"தேவன் தமது வல்லமையினால்
மேன்மையுற்றிருக்கிறார். தேவன் எல்லோ
ரினும் மிகவும் சிறந்த போதகர்!
23தேவன் செய்ய வேண்டுவதென்ன
என்று ஒருவனும் தேவனுக்குக் கூற
முடியாது. 'தேவனே, நீர் தவறு செய்கிறீர்'
என்று ஒருவனும் தேவனிடம் கூறமுடியாது!
24"தேவன் செய்த காரியங்களுக்காக
அவரைத் துதிக்க வேண்டுமென
நினைவுகூருங்கள். தேவனைத் துதிக்கும்
பல பாடல்களை ஜனங்கள் எழுதியிருக்
கிறார்கள்.
25தேவன் செய்தவற்றை ஒவ்வொருவனும்
காணமுடியும். தூரத்து நாடுகளின் ஜனங்
களும் அவற்றைப் பார்க்க இயலும்.
26ஆம், தேவன் மேன்மையானவர். ஆனால்
அவரது மேன்மையை நாம் புரிந்துகொள்ள
முடியாது, எத்தனை காலமாக தேவன்
வாழ்ந்திருக்கிறார் என்பதையும் நாம் அறிய
முடியாது.
27"தேவன் பூமியிலிருந்து தண்ணீரை,
மேலே எடுத்து, அதைப் பனியாகவும்
மழையாகவும் மாற்றுகிறார்.
28ஆகையால் மேகங்கள் தண்ணீரைப்
பொழிகின்றன. மழை பலர் மீது பெய்கிறது.
29தேவன் மேகங்களை எவ்வாறு பரப்பு
கிறார் என்பதையும் வானத்தில் இடிமுழக்கம்
எவ்வாறு ஏற்படுகிறது என்பதையும் ஒரு
வனும் புரிந்துகொள்ள முடியாது.
30பாரும்! தேவன் பூமியின் மீது மின்ன
லைப் பரப்பி, சமுத்திரங்களின் ஆழமான
பகுதிகளை மூடினார்.
31தேசங்களை அடக்கியாள்வதற்கும்
அங்கு மிகுதியான உணவுப் பொருட்களைக்
கொடுப்பதற்கும், தேவன் அவற்றைப் பயன்
படுத்துகிறார்.
32தேவன் அவரது கைகளால் மின்னலைப்
பிடிக்கிறார், அவருக்கு விருப்பமான இடங்
களில் தாக்குமாறு அதற்குக் கட்டளையி
டுகிறார்.
33புயல் வந்துகொண்டிருப்பதை இடி
எச்சரிக்கிறது. அது வந்துகொண்டிருப்பதை
ஆடு மாடுகள் கூட அறிகின்றன" என்றான்.

37 "இடியும், மின்னலும் என்னை
அச்சுறுத்துகின்றன. இதயம் என்
நெஞ்சத்தில் துடிக்கிறது.
2"ஒவ்வொருவரும் செவிகொடுங்கள்!
தேவனுடைய சத்தம் இடியைப்போல முழங்
குகிறது. தேவனுடைய வாயிலிருந்து வரும்
இடியைப்போன்ற சத்தத்திற்குச் செவி
கொடுங்கள்.
3முழுவானத்திற்கும் குறுக்காக மின்னும்
படி, தேவன் அவரது மின்னலை அனுப்பு
கிறார். அது பூமி முழுவதும் ஒளிர்ந்தது.
4மின்னல் ஒளிவீசி மறைந்த பிறகு,
தேவனுடைய முழங்கும் சத்தத்தைக் கேட்க
முடியும். தேவன் அவரது அற்புதமான
சத்தத்தால் முழங்குகிறார்! மின்னல் மின்னும்
போது, தேவனுடைய சத்தம் முழங்குகிறது.
5தேவனுடைய முழங்கும் சத்தம் அற்புத
மானது! நாம் புரிந்துகொள்ள முடியாத,
மேன்மையான காரியங்களை அவர் செய்
கிறார்.
6தேவன் பனியிடம், 'பூமியின் மேல் பெய்'
என்கிறார். மேலும் தேவன் மழை யிடம்,
'பூமியின் மேல் பொழி' என்கிறார்.
7தேவன் உண்டாக்கின எல்லா மனிதர்
களும் அவர் என்ன செய்யமுடியும் என்ப
தை அறியுமாறு தேவன் அதைச் செய்கிறார்.
அது அவரது சான்று.
8மிருகங்கள் அவற்றின் குகைகளுக்குள்
புகுந்து அங்கேயே தங்கும்.
9தெற்கேயிருந்து சூறாவளி வரும்.
வடக்கேயிருந்து குளிர் காற்று வரும்.
10தேவனுடைய மூச்சு பனிக்கட்டியை
உண்டாக்கும், அது சமுத்திரங்களை
உறையச் செய்யும்.
11தேவன் மேகங்களை தண்ணீரினால்
நிரப்புகிறார், அவர் இடிமேகங்களைச் சிதற
டிக்கிறார்.
12பூமியில் எங்கும் சிதறிப்போகும்படி
தேவன் மேகங்களுக்குக் கட்டளையிடுகிறார்.
தேவன் கட்டளையிடுகின்றவற்றை மேகங்
கள் செய்யும்.

---

**19-20 வசனங்கள்** எபிரெய மொழியில் புரிந்துக்கொள்ள அரியதாக உள்ளன.

[13]பெருவெள்ளத்தை வரச்செய்து ஜனங்
களைத் தண்டிக்கவோ, அல்லது வெள்
ளத்தை வருவித்து அவரது அன்பை
வெளிப்படுத்தவோ, தேவன் மேகங்களை
உருவாக்குகிறார்.
[14]“யோபுவே, ஒரு நிமிடம் நின்று
கவனித்துக்கேள். தேவன் செய்கிற
அற்புதமான காரியங்களைக் குறித்துச் சற்று
நின்று எண்ணிப் பார்.
[15]யோபுவே, தேவன் எவ்வாறு மேகங்
களை அடக்கியாள்கிறார் என்பது உனக்குத்
தெரியுமா? அவரது மின்னலை எவ்வாறு
தேவன் ஒளிவிட வைக்கிறார் என்பது
உனக்குத் தெரியுமா?
[16]மேகங்கள் வானில் எவ்வாறு தொங்கு
கின்றன என்பது உனக்குத் தெரியுமா?
தேவன் செய்த அற்புதமான காரியங்களுக்கு
மேகங்கள் ஒரு எடுத்துக்காட்டு மட்டு
மேயாகும்! அவற்றைப் பற்றிய யாவும்
தேவனுக்குத் தெரியும்.
[17]ஆனால் யோபுவே, உனக்கு இக்காரியங்
கள் தெரியாது. நீ வியர்க்கிறாய் என்பதும்,
உன் ஆடைகள் உடம்பில் ஒட்டிக்கொள்
கின்றன என்பதும், தெற்கிலிருந்து வெப்ப
மான காற்று வீசும்போது, எல்லாம் அசை
யாமல் இருக்கின்றன என்பது மட்டுமே
உனக்குத் தெரியும்.

[18]யோபுவே, வானைப் பரப்புவதற்கு நீ
தேவனுக்கு உதவமுடியுமா? தேய்த்த பள
பளப்பான கண்ணாடியைப்போல அது
ஒளிரும்படி செய்யக்கூடுமா?
[19]“யோபுவே, நாங்கள் தேவனுக்கு என்ன
சொல்லவேண்டும் என்று கூறு! எங்
களுக்குச் சரிவரத் தெரியாததால் சொல்வது
குறித்து எண்ண இயலாமலிருக்கிறோம்.
[20]நான் அவரிடம் பேசவேண்டும் என்று
தேவனிடம் கூறமாட்டேன். அழிவு வேண்
டும் என்று கேட்கமாட்டேன்.
[21]ஒரு மனிதன் சூரியனை ஏறெடுத்துப்
பார்க்க முடியாது. காற்று மேகங்களை
அடித்துச் சென்றபின் அது வானில் மிகப்
பிரகாசமாக ஒளிதருகிறது.
[22]தேவனும் அவ்வாறே இருக்கிறார்!
பரிசுத்த மலையிலிருந்து தேவனுடைய
பொன்னான மகிமை பிரகாசிக்கிறது. தேவ
னைச் சுற்றிலும் பிரகாசமான ஒளி இருக்
கிறது.
[23]சர்வ வல்லமையுள்ள தேவன் மேன்மை
யானவர்! நாம் தேவனைப் புரிந்துகொள்ள
முடியாது! தேவன் மிகுந்த வல்லமை
உள்ளவர். ஆனால் அவர் நமக்கு நல்லவரும்
நியாயமானவரும் ஆவார். தேவன் நம்மைத்
துன்புறுத்த விரும்பமாட்டார்.
[24]ஆகவே தான் ஜனங்கள் தேவனை
மதிக்கிறார்கள். ஆனால் தங்களை ஞானி
களாக நினைக்கிற அகங்காரம் உள்ளவர்
களைத் தேவன் மதிக்கமாட்டார்” என்றான்.

## தேவன் யோபுவிடம் பேசுகிறார்

38 அப்போது கர்த்தர் சூறாவளியி
லிருந்து யோபுவிடம் பேசினார்.
தேவன்:
[2]“மூடத்தனமானவற்றைக் கூறிக்கொண்
டிருக்கும், இந்த அறியாமையுள்ள மனிதன்
(அஞ்ஞானி) யார்? *
[3]யோபுவே, நீ இடையைக் கட்டிக்கொள்*
நான் கேட்கப்போகும் கேள்விகளுக்குப் பதில்
சொல்வதற்கு ஆயத்தமாகு.
[4]“யோபுவே, நான் பூமியை உண்டாக்கின
போது, நீ எங்கே இருந்தாய்? நீ அத்தனை
கெட்டிக்காரனானால், எனக்குப் பதில் கூறு.
[5]நீ அத்தனை கெட்டிக்காரனானால்,
உலகம் எவ்வளவு பெரிதாக இருக்க
வேண்டுமென யார் முடிவெடுத்தவர்? அளவு
நூலால் யார் உலகை அளந்தார்?
[6]பூமியின் அஸ்திவாரம் எங்கு நிலைத்
திருக்கிறது? அதன் முதற்கல்லை (கோடிக்
கல்லை) வைத்தவர் யார்?
[7]காலை நட்சத்திரங்கள் சேர்ந்து பாடின,
அது நிகழ்ந்தபோது தேவதூதர்கள்*
மகிழ்ச்சியால் ஆர்ப்பரித்தனர்!
[8]“யோபுவே, கடல் பூமியின் ஆழத்
திலிருந்து பாய்ந்தபோது, கடலைத் தடை
செய்யும் பொருட்டு வாயில்களை அடைத்
தது யார்?
[9]அப்போது நான் அதனை மேகங்களால்
மூடி, அதனை இருளால் பொதிந்து வைத்
தேன்.
[10]நான் கடலுக்கு எல்லையை வகுத்து,
அதை அடைத்த வாயிலுக்குப் பின்னே
நிறுத்தினேன்.
[11]நான் கடலிடம், ‘நீ இதுவரை வரலாம்,
இதற்கு அப்பால் அல்ல, உனது பெருமை
யான அலைகள் இங்கே நின்று விடும்’
என்றேன்.
[12]“யோபுவே, உன் வாழ்க்கையில் என்
றைக்காவது நீ காலையை ஆரம்பிக்கவோ,
ஒரு நாளைத் தொடங்கவோ கூறமுடியுமா?
[13]யோபுவே, பூமியைப் பிடித்து, தீயோரை
அவர்கள் மறைவிடங்களிலிருந்து வெளி
வருமாறு உதறிவிட காலையொளிக்கு நீ
கூற முடியுமா?
[14]மலைகளையும் பள்ளத்தாக்கையும் எளி
தில் காலையொளியில் காணலாம். பக
லொளி பூமிக்கு வரும்போது அங்கியின்
மடிப்புக்களைப்போல இந்த இடங்களின்
அமைப்புக்கள் (வடிவங்கள்) வெளித்தோன்
றும். முத்திரையிடப்பட்ட களிமண்ணைப்
போல அவ்விடங்கள் வடிவங்கொள்ளும்.

---

**மூடத்தனமான … யார்?** “அறியாமையுள்ள வார்த்தைகளால் அறிவுரையை மறைக்கும் இம்மனிதன் யார்?”

**இடையைக் கட்டிக் கொள்** ஒரு வீரனைப்போல் தயாராகு, அதாவது யுத்தத்திற்குத் தயாராகு.

**தேவதூதர்கள்** “தேவனின் மகன்கள்.”

15தீயோர் பகலொளியை விரும்பார்கள்.
பிரகாசமாக அது ஒளிவிடும்போது, அவர்
கள் தீயக் காரியங்களைச் செய்யாதபடி
தடுக்கும்.
16“யோபுவே, கடல் புறப்படும் கடலின்
ஆழமான பகுதிகளுக்கு நீ எப்போதாவது
சென்றிருக்கிறாயா? சமுத்திரத்தின் அடிப்
பகுதியில் நீ எப்போதாவது நடந்திருக்
கிறாயா?
17மரித்தோரின் உலகத்திற்கு வழிகாட்டும்
வாயிற்கதவுகளை நீ எப்போதாவது பார்த்
திருக்கிறாயா? மரணத்தின் இருண்ட இடத்
திற்கு வழிகாட்டும் வாயிற்கதவுகளை நீ
எப்போதாவது பார்த்திருக்கிறாயா?
18யோபுவே, பூமி எவ்வளவு பெரிய
தென்று நீ உண்மையில் அறிந்திருக்கிறாயா?
நீ இவற்றை அறிந்திருந்தால், எனக்குக்
கூறு.
19“யோபுவே, ஒளி எங்கிருந்து வருகிறது?
எங்கிருந்து இருள் வருகிறது?
20யோபுவே, ஒளியையும், இருளையும்
அவை புறப்படும் இடத்திற்கு நீ திரும்ப
கொண்டு செல்ல முடியுமா? அந்த இடத்
திற்குப் போகும் வகையை நீ அறிவாயா?
21யோபுவே, நீ நிச்சயமாக இக்காரியங்
களை அறிவாய். நீ வயது முதிர்ந்தவனும்
ஞானியுமானவன். நான் அவற்றை உண்டாக்
கியபோது நீ உயிரோடிருந்தாய் அல்லவா?*
22“யோபுவே, பனியையும் கல்மழையை
யும் வைத்திருக்கும் பண்டசாலைக்குள் நீ
எப்போதாவது சென்றிருக்கிறாயா?
23தொல்லைகள் மிக்க காலங்களுக்காகவும்,
போரும் யுத்தமும் நிரம்பிய காலங்களுக்
காகவும், நான் பனியையும், கல்மழையையும்
சேமித்து வைக்கிறேன்.
24யோபுவே, சூரியன் மேலெழுந்து வரு
மிடத்திற்கு, அது கிழக்குக் காற்றைப் பூமி
யெங்கும் வீசச் செய்யுமிடத்திற்கு நீ
எப்போதாவது சென்றிருக்கிறாயா?*
25யோபுவே, மிகுந்த மழைக்காக வானத்
தில் பள்ளங்களைத் தோண்டியவர் யார்?
இடிமுழக்கத்திற்குப் பாதையை உண்டாக்
கியவர் யார்?
26யோபுவே, ஜனங்கள் வாழாத இடங்
களிலும், மழையைப் பெய்யப் பண்ணு
கிறவர் யார்?
27பாழான அந்நிலத்திற்கு மழை மிகுந்த
தண்ணீரைக் கொடுக்கிறது, புல் முளைக்க
ஆரம்பிக்கிறது.
28யோபுவே, மழைக்குத் தகப்பன் (தந்தை)
உண்டா? பனித்துளிகள் எங்கிருந்து
தோன்றுகின்றன?
29யோபுவே, பனிக்கட்டிக்கு தாய்
உண்டா? வானிலிருந்து விழும் உறை
பனியைப் பிறப்பிக்கிறவர் யார்?
30பாறையைப் போல் கடினமாக நீர்
உறைகிறது. சமுத்திரத்தின் மேற்பரப்பும்
உறைந்து போகிறது!
31“நட்சத்திர கூட்டங்களை* நீ இணைக்கக்
கூடுமா? மிருக சீரிஷத்தின்* கட்டை நீ
அவிழ்க்க முடியுமா?
32யோபுவே, நீ சரியான நேரங்களில்
விண்மீன் கூட்டங்களை வெளிக் கொணர
முடியுமா? (துருவச்சக்கர நட்சத்திரமும்
அதைச் சார்ந்த நட்சத்திரங்களும்) கரடியை*
அதன் குட்டிகளோடு நீ வெளிநடத்த
இயலுமா?
33யோபுவே, வானை ஆளுகிற விதிகளை
நீ அறிவாயா? பூமியை அவை ஆளும்படிச்
செய்ய உன்னால் முடியுமா?
34“யோபுவே, நீ மேகங்களை உரக்கக்
கூப்பிட்டு உன்னை மழையில் மூடும்படி
கட்டளையிட முடியுமா?
35மின்னல்களுக்கு நீ கட்டளை பிறப் பிக்கக்
கூடுமா? அவை உன்னிடம் வந்து, ‘நாங்கள்
இங்கு இருக்கிறோம். ஐயா, உனக்கு என்ன
வேண்டும்’ எனக் கூறுமா? அவை
எங்கெங்குப் போகவேண்டுமென்று நீ
விரும்புகிறாயோ, அங்கெல்லாம் அவை
செல்லுமா?
36“யோபுவே, யார் ஜனங்களை ஞானி
களாக்குகிறார்? அவர்களுக்குள்ளே ஆழமாக
ஞானத்தை வைப்பவன் யார்?
37யோபுவே, மேகங்களை எண்ணுமள
விற்கும் அவற்றின் மழையைப் பொழியத்
தூண்டும்படியும் ஞானம் படைத்தவன் யார்?
38அதனால் துகள்கள் சேறாக மாறி,
அழுக்குகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொள்
கின்றன.
39“யோபுவே, நீ சிங்கங்களுக்கு இரை
தேடமுடியுமா? அவற்றின் பசித்த குட்டி
களுக்கு நீ உணவுக் கொடுக்கிறாயா?
40அச்சிங்கங்கள் அவற்றின் குகைகளில்
படுத்திருக்கின்றன. அவற்றின் இரையைத்
தாக்குவதற்கு அவை புல்லினுள்ளே
பதுங்கிக்கொள்கின றன.
41காக்கைக் குஞ்சுகள் தேவனை நோக்கிக்
கத்தும்போதும், உணவின்றி அங்குமிங்கும்

**வசனங்கள் 19-21.** தேவன் இதை அவ்வாறே பொருள்படும்படி கூறவில்லை. கிண்டல் தொனியில் பேசுகிறார். உண்மையல்லாதனவற்றை உண்மையல்லாதன என அறியும்படியாகப் பேசும் முறை இது.

**வசனம் 24** உறை பனி பரவுமிடம் எது? பூமியெங்கும் கிழக்குக் காற்று சிதறும் இடம் எது?

**நட்சத்திரக் கூட்டங்கள்** புகழ்பெற்ற விண்மீன் கூட்டம். “ஏழு சகோதரிகள்” எனவும் இது அழைக்கப்படும்.

**மிருக சீரிஷம்** புகழ்பெற்ற விண்மீன் கூட்டம். இது ஒரு வேட்டைக்காரனைப் போலவோ, ஆற்றலுள்ள வீரனைப்போலவோ தோன்றும்.

**கரடி** புகழ்பெற்ற விண்மீன் கூட்டம். இது கரடியைப்போலத் தோன்றும். ‘துருவச் சக்கரம் எனவும்’ அழைக்கப்படும். இதனருகே இருக்கும் சிறிய விண்மீன் கூட்டம் ஒரு சிறிய கரடியைப்போலத் தோன்றும்.

அலையும்போதும் யோபுவே, அவற்றிற்கு
உணவு ஊட்டுபவன் யார்? என்றார்.

39 “யோபுவே, மலையாடுகள் எப்போது
பிறக்கின்றன என்பது உனக்குத்
தெரியுமா? பெண்மான் குட்டியை ஈனு
வதைக் கவனித்திருக்கிறாயா?
2 யோபுவே, மலையாடுகளும், பெண்மான்
களும் எத்தனை மாதங்கள் அவற்றின்
குட்டிகளைச் சுமக்க வேண்டுமென்பதை நீ
அறிவாயா? அவை பிறப்பதற்கேற்ற நேர
மெப்போதென அறிவாயா?
3 அம்மிருகங்கள் கீழே படுத்துக்கொள்ளும்,
அவற்றின் பிரசவ வலியை உணரும்போது,
குட்டிகள் பிறந்துவிடும்.
4 அக்குட்டி மிருகங்கள் வயல்களில்
வலிமையாக வளரும். அவை தங்கள் தாய்
விலங்குகளை விட்டுச் செல்லும், பின்பு
அவை திரும்பி வராது.
5 “யோபுவே, காட்டுக் கழுதைகளைச்
சுதந்திரமாக அலைய விட்டவர் யார்?
அவற்றின் கயிறுகளை அறுத்துவிட்டவர்
யார்?
6 பாலைவனம் காட்டுக் கழுதையின்
இருப்பிடமாகும்படி நான் (தேவன்)
செய்தேன். உவர் நிலத்தை அவை வாழு
மிடமாகக் கொடுத்தேன்.
7 காட்டுக் கழுதைகள் இரைச்சலான
ஊர்களை நோக்கி சிரிக்கும் ஒருவனும்
அவற்றை அடக்கியாள முடியாது.
8 காட்டுக் கழுதைகள் மலைகளில் வாழும்.
அவை அவற்றின் மேய்ச்சலிடம். அங்கு
அவை உண்பதற்கு இரைத் தேடும்.
9 “யோபுவே, காட்டுக் காளை உனக்குச்
சேவை புரியச் சம்மதிக்குமா? அது உன்
தொழுவத்தில் இரவில் தங்குமா?
10 யோபுவே, நீ உன் வயல்களை உழு
வதற்குக் காட்டுக் கழுதையின் மீது கயிறு
களைக் கட்ட அவை அனுமதிக்குமா?
11 காட்டுக் காளை மிகவும் பலம்
வாய்ந்தது! உன் வேலைகளைச் செய்ய நீ
அதனை நம்பக்கூடுமா?
12 உன் தானியத்தைச் சேகரித்து உன்
களஞ்சியத்திற்குக்* கொண்டுவரும் என
அதை நம்புவாயா?
13 “தீக்கோழி வியப்புற்று அதன் சிறகு
களை அடிக்கும். ஆனால் தீக்கோழியால்
பறக்க முடியாது, தீக்கோழியின் சிறகுகள்
கொக்கின் சிறகுகளைப் போன்றவை அல்ல.
14 தீக்கோழி நிலத்தில் அதன் முட்டைகளை
இடும், அவை மணலினுள் வெப்பமுறும்.
15 யாரேனும் அதன் முட்டைகளின்மேல்
நடக்கக்கூடும் என்பதையோ, சில காட்டு
விலங்குகள் அவற்றை உடைக்கக்கூடும்
என்பதையோ தீக்கோழி மறந்து விடுகிறது.
16 தீக்கோழி அதன் குஞ்சுகளை விட்டுச்
செல்கிறது. அவை தனக்குரியனவல்ல
என்பதைப்போல் அவற்றைக் கருதுகிறது
(நடத்துகிறது). அதன் குஞ்சுகள் மரித்துப்
போனால், அது வருந்துவதில்லை. அதன்
உழைப்பு வீணானதுதான்.
17 ஏனெனில், நான் (தேவன்) தீக்கோழிக்கு
ஞானத்தைக் கொடுக்கவில்லை. தீக்கோழி
முட்டாள்தனமானது, நான் அதனை
அவ்வாறு படைத்திருக்கிறேன்.
18 ஆனால் தீக்கோழி ஓடுவதற்கென எழுந்
திருக்கும்போது, அது குதிரையையும் அதில்
சவாரி செய்பவனையும் பார்த்துச் சிரிக்கும்.
ஏனெனில் எந்தக் குதிரையையும் விட
அதனால் வேகமாக ஓட இயலும்.
19 “யோபுவே, நீ குதிரைக்கு அதன்
வலிமையைக் கொடுத்தாயா? அதன் பிடரி
யில் பிடரிமயிரை* வளரச் செய்தாயா?
20 யோபுவே, நீ குதிரையை ஒரு வெட்டுக்
கிளியைப்போல, வெகுதூரம் தாண்ட
வைப்பாயா? குதிரை உரக்க கனைக்கிறது,*
அது ஜனங்களைப் பயப்படுத்துகிறது.
21 குதிரை அதன் மிகுந்த வலிமையால்
சந்தோஷப்படும். அது பூமியைத் தன்
பாதங்களால் கீறி, விரைந்து போருக்கென
ஓடி நுழையும்.
22 அச்சத்தைப் பார்த்துக் குதிரை
நகைக்கும் அது அஞ்சுவதில்லை! அது
யுத்தத்திற்கஞ்சி (யுத்தத்திலிருந்து) ஓடு
வதில்லை.
23 குதிரையின் புறத்தே வீரனின் அம்பறாத்
தூணி* அசையும். அதனை சவாரிச் செய்
பவன் ஏந்தும் ஈட்டியும் போர்க்கருவிகளும்
சூரியனின் ஒளியில் பிரகாசிக்கும்.
24 குதிரை மிகவும் உணர்ச்சி வசப்
படுகிறது! அது பூமியில் மிக விரைந்
தோடுகிறது.* எக்காள சத்தத்தைக் குதிரை
கேட்கும்போது அதனால் அமைதியாக
இருக்க இயலாது.
25 எக்காளம் ஒலிக்கும்போது, குதிரை
ஆர்ப்பரிக்கும். அது யுத்தத்தைத் தூரத்
திலேயே நுகரும்! அது அதிகாரிகளின்
கட்டளைகளையும் யுத்தத்தின் பிற ஒலிகளை
யும் கேட்கும்.
26 “யோபுவே, ராஜாளி அதன் செட்டை
களை விரித்துத் தெற்கு* நோக்கிப் பறக்க
நீ கற்பித்தாயா?
27 யோபுவே, நீ தான் கழுகிடம் உயரே
வானத்தில் பறக்கச் சொன்னாயா? மலை
களின் உயரமான இடங்களில் அதன் கூட்
டைக் கட்டச் சொன்னாயா?

---

**களஞ்சியம்** தானியத்தை அடித்து அல்லது மிதித்து உமியைப் போக்கிச் சேர்க்கும் இடம்.

**பிடரிமயிர்** இது குதிரையின் கழுத்துப் பகுதியில் இருக்கும்.

**கனைக்கிறது** இது குதிரை ஏற்படுத்தும் சத்தம்.

**அம்பறாத்தூணி** அம்புகள் வைக்கப்படும் பை.

**அது … ஓடுகிறது** “பூமியை விழுங்குகிறது.”

**தெற்கு** தேமான்.

28கழுகு மலை முகப்பில் வாழ்கிறது.
மலைச்சிகரமே கழுகின் கோட்டை.*
29அதன் உயரமான கோட்டையிலிருந்து
கழுகு அதன் இரையை நோக்கும். மிகுந்த
தூரத்திலுள்ள இரையையும் கழுகால் பார்க்க
முடியும்.
30பிணங்கள் இருக்குமிடத்தில் கழுகுகள்
கூடும். அதன் குஞ்சுகள் இரத்தத்தைக்
குடிக்கும்" என்றான்.

40 கர்த்தர் யோபுவை நோக்கி:
2"யோபுவே, நீ சர்வ வல்லமையுள்ள
தேவனோடு விவாதித்தாய். தவறிழைத்த
குற்றமுடையவனாக என்னை நீ நியாயந்
தீர்த்தாய்! நீ தவறு செய்தாயென இப்போது
நீ ஒப்புக் கொள்வாயா? நீ எனக்குப் பதில்
கூறுவாயா?" என்றார்.
3அப்போது யோபு, தேவனுக்குப் பதி
லுரைத்தான். அவன்:
4"நான் பேசுவதற்கும் தகுதியற்றவன்!*
நான் உம்மிடம் என்ன கூறமுடியும்? நான்
உமக்கு பதில் கூறமுடியாது! நான் என்
கைகளை வாயின் மீது வைப்பேன்.
5நான் ஒரு முறை பேசினேன், ஆனால்
நான் மீண்டும் பேசமாட்டேன். நான் இரு
முறை பேசினேன், ஆனால், இனிமேல்
எதுவும் கூறமாட்டேன்" என்றான்.
6அப்போது புயலிலிருந்து கர்த்தர்
மீண்டும் யோபுவிடம் பேசினார். கர்த்தர்,
7"யோபுவே, உன் இடையைக் கட்டிக்
கொண்டு நான் உன்னிடம் கேட்கப்போகும்
கேள்விகளுக்குப் பதில் கூறு,
8"யோபுவே, நான் நியாயமற்றவனென்று
நீ நினைக்கிறாயா? என்னை தவறிழைக்கும்
குற்றவாளியாகக் கூறுவதால், நீ களங்கமற்ற
வனெனக் காட்ட நினைக்கிறாய்!
9யோபுவே, உன் கரங்கள் தேவனுடைய
கரங்களைப்போன்று வலிமையுடையனவா?
இடிபோல முழங்க வல்ல தேவனுடைய
குரலைப்போன்ற குரல் உனக்கு உள்ளதா?
10நீ தேவனைப் போலிருந்தால்,
பெருமையடைந்து உன்னை நீயே
மகிமைப்படுத்திக் கொள்ளமுடியும். நீ
தேவனைப் போலிருந்தால், ஆடையைப்
போன்று மகிமையையும், மேன்மையையும்
நீ உடுத்திக்கொள்ள முடியும்.
11நீ தேவனைப் போலிருந்தால், உன்
கோபத்தை வெளிப்படுத்தி அகங்காரமுள்ள
ஜனங்களைத் தண்டிக்க முடியும். அந்த
அகங்காரமுள்ள ஜனங்களைத் தாழ்மையுள்
ளோராக்க முடியும்.
12ஆம், யோபுவே, அந்த அகங்காரம்
நிரம்பிய ஜனங்களைப் பார், அவர்களைத்
தாழ்மையுள்ளோராக்கு. தீயோர் நிற்குமிடத்
திலேயே அவர்களை நசுக்கிவிடு.
13அகங்காரமுள்ள ஜனங்கள் எல்லோரை
யும் மண்ணுக்குள் புதைத்துவிடு. அவர்கள்
உடலை துணியால் சுற்றி அவர்களின்
கல்லறைக்குள் வைத்துவிடு.
14யோபுவே, உன்னால் இக்காரியங்களை
யெல்லாம் செய்ய முடிந்தால், அப்போது
நான் கூட உன்னை வாழ்த்துவேன். உன்
சொந்த ஆற்றலால் உன்னை நீ
காப்பாற்றிக்கொள்ளக்கூடும் என்பதை நான்
ஒப்புக்கொள்வேன்.
15"யோபுவே, பிகெமோத்தை நீ
கவனித்துப் பார். நான் (தேவன்)
பிகெமோத்தை* உண்டாக்கினேன், உன்
னையும் உண்டாக்கினேன். பிகெமோத்தை
பசுவைப்போல, புல்லைத் தின்கிறது.
16பிகெமோத்தின் உடம்பு மிகுந்த வல்
லமை பொருந்தியது. அதன் வயிற்றின்
தசைகள் வல்லமை மிக்கவை.
17பிகெமோத்தின் வால் கேதுரு மரத்தைப்
போல் ஆற்றலோடு காணப்படுகிறது. அதன்
கால் தசைகள் மிகுந்த பலமுள்ளவை.
18பிகெமோத்தின் எலும்புகள் வெண்கலம்
போன்று பலமுள்ளவை. அதன் கால்கள்
இரும்புக் கம்பிகளைப் போன்றவை.
19நான் (தேவன்) உண்டாக்கிய மிருகங்
களுள் பிகெமோத் மிகவும் வியக்கத்தக்கது.
ஆனால் நான் அதை வெல்ல (தோற்கடிக்க)
முடியும்.

20காட்டு மிருகங்கள் விளையாடும் மலை
களில் வளரும் புல்லைப் பிகெமோத்
தின்கிறது.
21தாமரைக் கொடிகளின்* கீழே பிகெ
மோத் படுத்திருக்கிறது. அது உளையிலுள்ள
(சேற்றிலுள்ள) நாணல்களின் கீழ் மறைந்துக்
கொள்ளும்.
22தாமரைக் கொடிகள் அவற்றின் நிழலில்
பிகெமோத்தை மறைக்கும். நதியருகே
வளரும் அலரி மரங்களின் கீழே அது
வாழும்.
23நதியில் வெள்ளம் பெருக்கெடுத்தால்,
பிகெமோத் ஓடிப்போய் விடாது. யோர்தான்
நதியின் தண்ணீர் அதன் முகத்தில் அடித்
தாலும் அது அஞ்சாது.
24பிகெமோத்தின் கண்களை ஒருவனும்
குருடாக்கி அதனை வலையில் அகப்படுத்த
வும் முடியாது.

41 "யோபுவே, உன்னால் லிவியா
தானை* ஒரு தூண்டிலினால் பிடிக்க

---

**கோட்டை** பாதுகாப்பிற்கான உயர்ந்த, வலிய சுவர்களை உடைய கட்டிடம் அல்லது நகரம்.

**தகுதியற்றவன்** முக்கியமற்றவன்.

**பிகெமோத்** இது என்ன விலங்கு என்று உறுதியாக நமக்குத்தெரியாது. இது காண்டா மிருகமாகவே அல்லது யானையாகவோ இருக்க லாம்.

**தாமரைக் கொடி** ஒருவகை மரம். அதன் இலைகள் மிகுதியான நிழலைக் கொடுக்கின்றன.

**லிவியாதான்** இது என்ன விலங்கு என்று நமக்கு உறுதியாக தெரியாது. இது ஒரு முதலையாகவே அல்லது ஒரு ராட்சச கடல் விலங்காகவோ இருக்கலாம்.

முடியுமா? அதன் நாவை உன்னால் ஒரு
கயிற்றினால் கட்டமுடியுமா?
2யோபுவே, லிவியாதானின் மூக்கில் ஒரு
கயிற்றை நுழைக்கமுடியுமா? அல்லது, அதன்
தாடையில் ஒரு ஆணியைச் செருகமுடியுமா?
3யோபுவே, அதனை விடுதலைச் செய்யு
மாறு லிவியாதான் உன்னை இரந்து
வேண்டுமா? மென்மையான சொற்களால்
அது உன்னோடு பேசுமா?
4யோபுவே, லிவியாதான் உன்னோடு ஒரு
ஒப்பந்தம் செய்துகொண்டு என்றென்றும்
உனக்குச் சேவை புரிய வாக்குறுதி தருமா?
5யோபுவே, நீ லிவியாதானோடு ஒரு
பறவையிடம் விளையாடுவதைப்போன்று
விளையாடுவாயா? உன் பணிப்பெண்கள்
அதனோடு விளையாடுமாறு அதனை ஒரு
கயிற்றால் கட்டுவாயா?
6யோபுவே, மீன் பிடிப்போர் உன்னிட
மிருந்து லிவியாதானை வாங்க முயல்வார்
களா? அவர்கள் அதைத் துண்டுகளாக்கி,
வியாபாரிகளுக்கு அதை விற்பார்களா?
7யோபுவே, நீ லிவியாதானின் தோலிலோ
அல்லது தலையிலோ ஈட்டியை எறிய (வீச)
முடியுமா?
8யோபுவே, நீ லிவியாதானைத் தாக்க
ஒருமுறை முயன்றால், பின்பு ஒருபோதும்
அதனைச் செய்யமாட்டாய்! எத்தகைய
யுத்தம் நடக்கும் என்பதைச் சற்றே
யோசித்துப்பார்!
9நீ லிவியாதானைத் தோற்கடிக்க முடியு
மென எண்ணினால் அதை மறந்து விடு!
எந்த நம்பிக்கையும் இல்லை! (நம்பிக்கை
யற்றுப் போவாய்)! அதைப் பார்த்தாலே
பீதி (அச்சம்) விளையும்!
10அதனை எழுப்பிக் கோபமுறுத்த எந்த
மனிதனுக்கும் தைரியம் (துணிவு) இல்லை.
ஒருவனும் என்னை எதிர்த்து நிற்க
முடியாது!*
11நான் (தேவன்) ஒருவனுக்கும் கடமைப்
பட்டவன் அல்லன். பரலோகத்தின் கீழ்
உள்ளவை அனைத்தும் எனக்குரியன.*
12யோபுவே, லிவியாதானின் கால்களைப்
பற்றியும் அதன் வலிமை, அழகிய வடிவம்
ஆகியவற்றைப்பற்றியும் நான் உனக்குக்
கூறுவேன்.
13ஒருவனும் அதன் தோலைக் குத்திப்
பிளக்கமுடியாது. அதன் தோல் ஒரு கேடயத்
தைப் போன்றது!*
14லிவியாதானின் தாடையைத் திறக்கு
மாறு செய்ய ஒருவனும் அதனை வற்புறுத்த
முடியாது. அதன் வாயிலுள்ள பற்கள்
ஜனங்களைப் பயமுறுத்தும்.
15லிவியாதானின் முதுகில் இறுக்கமாக
இணைக்கப்பட்டுள்ள கேடய வரிசைகள்
காணப்படும்.
16அக்கேடயங்கள் காற்றும் நுழைய
முடியாதபடி. இறுகிப் பிணைந்திருக்கும்,
17கேடயங்கள் ஒன்றோடொன்று இணைந்
திருக்கும். அவை பிரிக்க முடியாதபடி
ஒன்றோடொன்று இறுக்கமாக இணைக்கப்
பட்டிருக்கும்.
18லிவியாதான் தும்மும்போது, மின்னல்
மின்னுவதைப் போன்றிருக்கும். அதன் கண்
கள் உதயகால ஒளிபோல் பிரகாசிக்கும்.
19அதன் வாயிலிருந்து தீப்பந்தங்கள் வெளி
வரும். நெருப்புப் பொறிகள் வெளிப்படும்.
20கொதிக்கும் பானையின் அடியில்
எரியும் புதரைப்போல் லிவியாதானின்
மூக்கிலிருந்து புகை கிளம்பும்.
21லிவியாதானின் மூச்சு நிலக்கரியை
எரிக்கும், அதன் வாயிலிருந்து நெருப்பு
எழும்பும்.
22லிவியாதானின் கழுத்து மிகுந்த வல்ல
மை கொண்டது. ஜனங்கள் பயந்து அதனிட,
மிருந்து ஓடிப்போகிறார்கள்.
23அதன் தோலில் மிருதுவான பகுதி
கிடையாது. அது இரும்பைப்போல கடின
மானது.
24லிவியாதானின் இருதயம் பாறையைப்
போன்றது. அதற்கு அச்சம் கிடையாது.
(அது அஞ்சுவதில்லை). அது எந்திரத்தின்
அடிக்கல்லைப் போல் கடினமாயிருக்கும்.
25லிவியாதான் எழுகையில் வலியோர்
அஞ்சுவர். லிவியாதான் வாலை வீசும்போது
அவர்கள் ஓடிவிடுவர்.

26வாட்கள், ஈட்டிகள், மற்றும் வல்லயம்
லிவியாதானைத்தாக்கும்.ஆனால் அவையே
எகிறி விழும். அக்கருவிகள் அதைத் காயப்
படுத்துவதேயில்லை!
27லிவியாதான் இரும்பைப்புல்லைப்போல்
உடைக்கும். உளுத்துப்போன (அரித்துப்
போன) மரத்தைப்போன்று அது வெண்
கலத்தை உடைக்கும்.
28அம்புகள் லிவியாதானை ஓடச்
செய்யாது, உலர்ந்த புல்லாய் பாறைகள்
அதனின்று விலகி வீழும்.
29பெருந்தடிகள் லிவியாதானைத் தாக்கும்
போது, அவற்றை அது புல்லாய் உணரும்.
மனிதர் அதன் மீது ஈட்டிகளை எறியும்
போது, அது சிரிக்கும்.
30கடினமான, கூரிய, உடைந்த, மட்பாண்
டத்தின் துண்டுகளைப்போல், லிவியா
தானின் உடம்பின் அடியிலுள்ள தோல்
இருக்கும். தாற்றுக்கோலைப் போன்று அது
சேற்றின் மீது அடையாளமிட்டுச் செல்லும்.
31கொதிக்கும் பானையைப் போன்று
லிவியாதான் தண்ணீரைக் கலக்குகிறது.

---

**ஒருவனும் … முடியாது** ஒருவனும் எழுந்து நின்று அதனோடு போரிட முடியாது.

**நான் … உரியன** “லிவியாதானை நெருங்கிய ஒருவனும் உயிரோடு மீண்டதில்லை -விண்ணின் கீழ் உள்ள ஒருவன் கூட.”

**அதன் மேல் … போன்றது** “கடிவாளத்தால் ஒருவனும் அதனை நெருங்க முடியாது.

பானையின் கொதிக்கும் எண்ணெயைப்
போன்று அது குமிழிகளை எழுப்பும்.
32 லிவியாதான் நீந்தும்போது, அதன்
பின்னே ஒரு பாதையை விட்டுச்செல்லும்.
அது தண்ணீரைக் கலக்கும், அதன் பின்னே
வெண்மையான நுரையைத் தள்ளிச்
செல்லும்.
33 லிவியாதானைப் போன்று உலகில்
வேறெந்த மிருகமும் இல்லை. அச்சமின்றி
படைக்கப்பட்ட மிருகம் அது.
34 கர்வம் மிக்க மிருகங்களையும் லிவியா
தான் நகைப்போடு பார்க்கும். அது எல்லா
காட்டுமிருகங்களுக்கும் அரசன். கர்த்தராகிய
நான் லிவியாதானைப் படைத்தேன்!”
என்றார்.

### யோபு கர்த்தருக்குப் பதில் கூறுகிறான்

42 அப்போது யோபு கர்த்தருக்குப்
பதிலளித்தான். யோபு,
2 “கர்த்தாவே! நீர் எல்லாவற்றையும்
செய்ய வல்லவர் என்பதை நான் அறிவேன்.
நீர் திட்டமிடுகிறீர், எதனாலும் உமது
திட்டங்களை மாற்றவோ, தடுக்கவோ முடி
வதில்லை.
3 கர்த்தாவே, நீர் இக்கேள்வியைக் கேட்டீர்:
‘இம்மூடத்தனமான காரியங்களை சொல்லிக்
கொண்டிருக்கும் இந்த அஞ்ஞானி யார்?’
“கர்த்தாவே,நான் புரிந்துகொள்ளாதவற்றைக்
குறித்துப் பேசினேன். என்னால் புரிந்து
கொள்ள முடியாத மிகுந்த வியக்கத்தக்க
காரியங்களைப் பற்றிப் பேசினேன்.
4 “கர்த்தாவே, நீர் என்னிடம், ‘யோபுவே
கவனி, நான் உன்னோடு பேசுவேன், நான்
உன்னிடம் கேள்விகளைக் கேட்பேன், நீ
எனக்குப் பதில் கூறுவாய்’ என்றீர்.
5 கர்த்தாவே, முன்பு, நான் உம்மைக்
குறித்துக் கேள்விப்பட்டிருக்கிறேன். இப்
போது என் சொந்தக் கண்களாலேயே
உம்மைப் பார்க்கிறேன்!
6 கர்த்தாவே, நான் என்னைக் குறித்து
வெட்கமுறுகிறேன். கர்த்தாவே, நான்
மன்னிப்புக் கேட்கிறேன். நான் தூசியிலும்
சாம்பலிலும் உட்கார்ந்து கொண்டே,* என்
இருதயத்தையும் என் வாழ்க்கையையும்
மாற்றிக்கொள்ள உறுதியளிக்கிறேன்” என்
றான்.

### கர்த்தர் யோபுவின் செல்வத்தை மீண்டும் அளிக்கிறார்

7 கர்த்தர் யோபுவிடம் பேசிமுடித்த பின்பு,
அவர் தேமானிலிருந்து வந்த எலிப்பாசிடம்
பேசினார். கர்த்தர் எலிப்பாசை நோக்கி,
“நான் உன்னிடமும் உனது இரண்டு நண்பர்
களிடமும் கோபமாயிருக்கிறேன். ஏனெனில்,
நீங்கள் என்னைப்பற்றிய சரியான கருத்துக்
களைக் கூறவில்லை. யோபுவே என்னைப்
பற்றிய சரியான செய்திகளைச் சொன்னான்.
ஆனால் யோபு எனது தாசன். யோபு
என்னைப்பற்றிய சரியான செய்திகளைச்
சொன்னான். 8 எனவே இப்போது எலிப்
பாசே, ஏழு காளைகளையும் ஏழு ஆட்டுக்
கடாக்களையும் கொண்டு வா. அவற்றை
எனது தாசன் யோபுவிடம் கொண்டு
செல். அவற்றைக் கொன்று, உனக்காக
தகனபலியாகச் செலுத்து. என் தாசன்
யோபு உனக்காக ஜெபம் செய்வான். நான்
அவன் ஜெபத்திற்குப் பதிலளிப்பேன். உனக்
குரிய தண்டனையை அப்போது நான்
உனக்கு அளிக்கமாட்டேன். நீ மிகுந்த
மூடனாக இருந்ததால் நீ தண்டிக்கப்பட
வேண்டும். நீ என்னைப்பற்றிய சரியான
தகவலைக் கூறவில்லை. ஆனால் என்
தாசனாகிய (பணியாளாகிய) யோபு
என்னைப்பற்றிய சரியான கருத்துக்களைக்
கூறினான்.” என்றார்.
9 எனவே தேமானின் எலிப்பாசும், சூகிய
னான பில்தாதும், நாகமாவின் சோப்பாரும்
கர்த்தருக்குக் கீழ்ப்படிந்தார்கள். அப்போது
கர்த்தர் யோபுவின் ஜெபத்திற்குப் பதிலளித்
தார்!
10 யோபு அவனது நண்பர்களுக்காக
ஜெபம் செய்தான். தேவன் யோபுவை
மீண்டும் வெற்றிபெறச் செய்தார். கர்த்தர்
யோபுவுக்கு முன்பிருந்ததைக் காட்டிலும்
இரண்டு மடங்காக எல்லாவற்றையும்
கொடுத்தார். 11 யோபுவின் எல்லா சகோதரர்
களும், சகோதரிகளும் அவனை அறிந்த
அனைத்து ஜனங்களும் யோபுவின் வீட்டிற்கு
வந்தார்கள். அவர்கள் யோபுவோடு கூட
ஒரு பெரிய விருந்துணவை உட்கொண்
டார்கள். அவர்கள் யோபுவுக்கு ஆறுதல்
கூறினார்கள். கர்த்தர் யோபுவுக்கு மிகுந்த
தொல்லைகளைக் கொடுத்ததற்காக அவர்கள்
வருந்தினார்கள். ஒவ்வொருவரும் ஒரு
வெள்ளிக்காசும்*, ஒரு பொன் மோதிரமும்
யோபுவுக்குக் கொடுத்தார்கள்.
12 யோபுவின் வாழ்க்கையின் முதல்
பகுதியைக் காட்டிலும் இரண்டாம் பகுதி
யைக் கர்த்தர் ஆசீர்வதித்தார்! யோபுவுக்கு
14,000 ஆடுகளும், 6,000 ஒட்டகங்களும், 2,000
பசுக்களும், 1,000 பெண் கழுதைகளும்
சொந்தமாக இருந்தன. 13 யோபுவுக்கு ஏழு
மகன்களும் மூன்று மகள்களும் இருந்தனர்.
14 யோபு, முதல் மகளுக்கு எமீமாள் என்று
பேரிட்டான். யோபு, இரண்டாவது
மகளுக்குக் கெத்சீயாள் என்று பெய

**நான் ... கொண்டே** தங்கள் மிகுந்த துக்கத்தை வெளிப்படுத்தும் பொருட்டு ஜனங்கள் துகளிலும் சாம்பலிலும் உட்கார்ந்திருப்பர்.

**வெள்ளிக்காசு** “கேஷிதா” தந்தையர்களின் காலத்தில் பயன்படுத்தப்பட்ட நாணயம். பார்க்க: ஆதி. 33:19, யோசுவா 24:32.

ரிட்டான். மூன்றாவது மகளுக்குக் கேரே
னாப்புக் என்று பெயர் கொடுத்தான்.
15தேசத்தில் யோபுவின் மகள்களே மிகுந்த
அழகிகளாக இருந்தார்கள்! யோபு, அவனது
மகள்களுக்கும் சொத்திலுள்ள பாகத்தைக்
கொடுத்தான். அவர்களின் சகோதரர்களைப்
போலவே சொத்தில் அவர்களும் பங்கைப்
பெற்றார்கள்.

sw16அவ்வாறு யோபு இன்னும் 140 ஆண்
டுகள் வாழ்ந்தான். அவனது பிள்ளை
களையும், பேரப்பிள்ளைகளையும், பேரர்
களின் பிள்ளைகளையும், பேரர்களின் பேரர்
களையும் பார்க்கும்படி அவன் வாழ்ந்தான்.
17பின்பு யோபு மரித்தான். யோபு ஒரு
நல்ல வாழ்க்கையை வாழ்ந்தான். அவன்
மிகவும் முதிர்ந்தவனாகும்வரை வாழ்ந்தான்.

# சங்கீத புத்தகம்

## புத்தகம் 1

### சங்கீதம் 1

1தீய ஜனங்களின் அறிவுரையைக் கேளா
மலும், பாவிகளைப்போன்று வாழாமலும்,
தேவனை மதிக்காத ஜனங்களோடு சேரா
மலும்,இருக்கிற மனிதன் உண்மையிலேயே
மகிழ்ச்சியாக இருப்பான்.
2ஒரு நல்ல மனிதன் கர்த்தருடைய போத
னைகளை நேசிக்கிறான். அவற்றைக் குறித்து
அவன் இரவும் பகலும் தியானிக்கிறான்.
3அம்மனிதன் நீரோடைகளின் கரையில்
நடப்பட்ட ஒரு மரத்தைப்போன்று வலிமை
யுள்ளவனாக இருக்கிறான். தக்க சமயத்தில்
பலன் தருகிற மரத்தைப்போல் அவன்
காணப்படுகிறான். உதிராமலிருக்கிற இலைக
ளைக் கொண்ட மரத்தைப்போல் அவன்
இருக்கிறான். அவன் செய்கின்ற செயல்கள்
எல்லாவற்றிலும் அவன் வெற்றி பெறுவான்.
4ஆனால் தீயோர் அப்படியிரார்கள்.
அத்தீய ஜனங்கள் காற்றில் பறக்கிற உமி
யைப் போன்றவர்கள்.
5ஒரு நீதிமன்றத்தின் வழக்கை முடிவு
கட்டுவதற்காக நல்ல ஜனங்கள் கூடியிருக்கும்
போது தீயோர் குற்றவாளிகளாக நிரூபிக்கப்
படுவார்கள். அந்தப் பாவிகள் குற்ற
மற்றவர்களாகக் கருதப்படமாட்டார்கள்.
6ஏன்? கர்த்தர் நல்ல ஜனங்களைக் காப்
பாற்றுகிறார். தீயோரை அவர் அழிக்கிறார்.

### சங்கீதம் 2

1யூதரல்லாத மனிதர்கள் ஏன் இவ்வளவு
கோபமாயிருக்கிறார்கள்? ஏன் அந்தத் தேசங்
கள் மதியீனமான திட்டங்களை வகுக்கின்
றன?
2அவர்களுடைய அரசர்களும், தலைவர்க
ளும் கர்த்தரையும், கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்
பட்ட அரசனையும் எதிர்க்க ஒன்றுகூடினார்
கள்.
3அந்நாடுகளின் தலைவர்கள், “நாம் தேவ
னையும், அவர் தேர்ந்தெடுத்த அரசனையும்
எதிர்த்துக் கலகம் செய்வோம். அவரிட
மிருந்து நம்மை விடுவித்துக் கொள்வோம்!”
என்றார்கள்.
4ஆனால் என் ஆண்டவர் பரலோகத்தின்
அரசர், அவர் அந்த ஜனங்களைப் பார்த்து
நகைக்கிறார்.
5-6தேவன் கோபமடைந்து அந்த ஜனங்
களை நோக்கி, “நான் இம்மனிதனை அரச
னாகத் தேர்ந்தெடுத்தேன்! அவன் சீயோன்
மலையில் அரசாளுவான். சீயோன் என்னு
டைய பரிசுத்த மலை” என்கிறார். அது
மற்ற தலைவர்களை பயமுறுத்தும்.

7இப்போது கர்த்தருடைய உடன்படிக்
கையை உனக்குக் கூறுவேன். கர்த்தர்
என்னிடம், “இன்று நான் உனக்குத் தந்தை
யானேன்! நீ எனக்கு மகன்.
8நீ என்னைக் கேட்டால், நான் உனக்குத்
தேசங்களையெல்லாம் கொடுப்பேன். பூமி
யின் ஜனங்களெல்லாம் உன்னுடையவர்
களாவார்கள்!
9இரும்புத் தடியால் மண்குடத்தை உடைப்
பதைப்போல நீ அத்தேசங்களை அழிக்க
முடியும்” என்றார்.
10எனவே அரசர்களே, ஞானமுள்ளவர்
களாய் இருங்கள். அரசாளுபவர்களே, இப்
பாடத்தை கற்றுக்கொள்ளுங்கள்.
11மிகுந்த அச்சத்தோடு கர்த்தருக்குக் கீழ்ப்
படியுங்கள்.
12தேவனுடைய குமாரனுக்கு நீங்கள் உண்
மையானவர்கள் என்பதைக் காட்டுங்கள்,
நீங்கள் இவ்வாறு செய்யாவிட்டால் ஆண்ட
வர் உங்களை அழிக்க தன் கோபத்தைக்
காட்டத் தயாராக இருக்கிறார். கர்த்தரை
நம்பும் ஜனங்கள் சந்தோஷமாயிருப்பார்கள்.
ஆனால் மற்ற ஜனங்கள் கவனமாக இருக்க
வேண்டும். கர்த்தர் தமது கோபத்தை வெளிப்
படுத்தத் தயாராக இருக்கிறார்.

### சங்கீதம் 3

**தன் குமாரனாகிய அப்சலோமிடமிருந்து தப்பிச் சென்றபோது தாவீது பாடிய பாட்டு**

1கர்த்தாவே, எனக்குப் பகைவர்கள் அநே
கர், பல ஜனங்கள் எனக்கெதிராக எழும்பு
கின்றனர்.
2பலர் என்னைக் குறித்து, “தேவன்
அவனைத் தொல்லையிலிருந்து மீட்கமாட்
டார்!” என்று பேசுகின்றனர்.
3ஆனால் கர்த்தாவே, நீரே எனக்குக்
கேடகம். நீரே என் மகிமை. கர்த்தாவே, நீர்
என்னை பிரதானமானவனாக்குகிறீர்!

4நான் கர்த்தரிடம் ஜெபிப்பேன். அவரது
பரிசுத்த மலையிலிருந்து அவர் எனக்குப்
பதில் தருவார்!
5நான் படுத்து ஓய்வெடுக்க முடியும், நான்
எழும்புவேன் என்பதும் எனக்குத் தெரியும்.
இதை நான் எப்படி அறிவேன்? கர்த்தர்
என்னை மூடிப் பாதுகாக்கிறார்!
6ஆயிரம் வீரர்கள் என்னைச் சூழக்கூடும்.
ஆனால் நான் அப்பகைவர்களுக்கு அஞ்
சேன்!
7கர்த்தாவே, எழும்பு! எனது தேவனே,
வந்து என்னைப் பாதுகாப்பீராக! நீர்
வல்லமையுள்ளவர்! என் தீய பகைவரைக்
கன்னத்தில் நீர் அறைந்தால் அவர்கள் பற்
களெல்லாம் நொறுங்கும்.
8கர்த்தரே தம் ஜனங்களைப் பாதுகாக்
கிறார். கர்த்தாவே, உம்முடைய ஜனங்க
ளுக்கு நல்லவராயிரும்.

## சங்கீதம் 4

***தாவீதின் சங்கீதம். இசைக்குழுவின் தலைவ னுக்கு நரம்புக் கருவிகளால் இசைக்கப்பட்டது.***

1என் நல்ல தேவனே, நான் உம்மிடம்
ஜெபிக்கையில் ஜெபத்தைக் கேட்டருளும்.
என் விண்ணப்பத்தைக் கேளும், என்னிடம்
இரக்கமாயிரும்! என் தொல்லைகளிலிருந்து
எனக்கு சற்று விடுதலை தாரும்!
2ஜனங்களே, எத்தனை நாள் என்னைக்
குறித்து அவதூறு பேசுவீர்கள்? என்னைப்
பற்றிச் சொல்ல புதுப்புதுப் பொய்களைத்
தேடிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அப்
பொய்களைச் சொல்ல விரும்புகிறீர்கள்.
3கர்த்தர் தம் நல்ல ஜனங்களின் ஜெபத்
தைக் கேட்கிறார். கர்த்தரை நோக்கி ஜெபிக்
கும்போது, எனக்குச் செவிகொடுக்கிறார்
என்பதை நீங்கள் அறிவீர்கள்.
4உங்களை ஏதோ ஒன்று துன்புறுத்துவ
தினால், நீங்கள் கோபங்கொண்டாலும்,
பாவம் செய்யாதீர்கள். படுக்கைக்குச் செல்
கையில் அவற்றைப்பற்றிச் சிந்தியுங்கள்,
அப்போது அமைதி அடைவீர்கள்.

5தேவனுக்கு நல்ல பலிகளைக் கொடுத்துக்
கர்த்தர் மேல் நம்பிக்கை வையுங்கள்!
6“நமக்குத் தேவனுடைய நன்மையைக்
காட்டுவது யார்? கர்த்தாவே! பிரகாசமான
உமது முகத்தை நாங்கள் காணட்டும்!”
என்று பலர் கூறுகிறார்கள்.
7கர்த்தாவே! நீர் எனக்கு மகிழ்ச்
சியுண்டாக்கினீர்! தானியமும் திராட்சை
ரசமும் பெருகிய பண்டிகை நாட்களாகிய
அறுவடைக் காலத்தைக் காட்டிலும் இப்
போது நான் மகிழ்கிறேன்.
8நான் படுக்கைக்குச் சென்று சமாதா
னமாய் உறங்குகிறேன் ஏனெனில், கர்த்
தாவே, நீர் என்னைப் பாதுகாப்பாய் தூங்கச்
செய்கிறீர்.

## சங்கீதம் 5

***புல்லாங்குழலில் வாசிக்க இசைக்குழுவின் தலைவனிடம் அளிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.***

1கர்த்தாவே, என் வார்த்தைகளைக்
கேளும். நான் சொல்ல முயற்சிப்பதை
புரிந்து கொள்ளும்.
2எனது தேவனாகிய அரசனே, என்
ஜெபத்தைக் கேளும்.
3கர்த்தாவே, என் அன்பளிப்புகளை
காலைதோறும் உமக்கு படைக்கிறேன்.
உம்மை உதவிக்காக நோக்குகிறேன், நீர்
என் ஜெபங்களைக் கேளும்.
4தேவனே, தீய ஜனங்கள் உம்மருகே
வருவதை நீர் விரும்புகிறதில்லை. தீய
ஜனங்கள் உம்மை ஆராதிக்க முடியாது.
5மூடர் உம்மிடம் வர இயலாது தீமை
செய்யும் ஜனங்களை நீர் வெறுக்கிறீர்
6பொய் கூறும் ஜனங்களை நீர் அழிக்கிறீர்.
பிறரைத் தாக்குவதற்காக இரகசியமாகத்
திட்டமிடுவோரைக் கர்த்தர் வெறுக்கிறார்.
7கர்த்தாவே, உமது மிகுந்த இரக்கத்தினால்
நான் உமது ஆலயத்திற்கு வருவேன். உமது
பரிசுத்த ஆலயத்தை நோக்கித் தலை தாழ்த்தி
அச்சத்தோடும், மரியாதையோடும் உம்மை
வணங்குவேன்.
8கர்த்தாவே, சரியான வாழ்க்கை வாழ
உமது வழியைக்காட்டும். ஜனங்கள் எனது
குறைகளைத் தேடுகிறார்கள். எனவே நான்
எவ்வாறு வாழ நீர் விரும்புகிறீரோ, அவ்
வழியை எனக்குக் காட்டும்.

9அந்த ஜனங்கள் உண்மை பேசுவதில்லை
அவர்கள் உண்மையைப் புரட்டும் பொய்யர்
கள். அவர்கள் வாய்கள் திறந்த கல்லறை
களைப் போன்றவை. அவர்கள் பிறரிடம்
நயமான மொழிகளைச் சொல்வார்கள்,
ஆனால் அவர்கள் கண்ணியில் சிக்க வைப்
பதற்காகவே அவ்வாறு செய்வார்கள்.
10தேவனே, அவர்களைத் தண்டியும்.
அவர்கள் தங்கள் வலையிலேயே விழட்டும்
அந்த ஜனங்கள் உமக்கெதிராகத் திரும்பு
கிறார்கள், எனவே அவர்களின் எண்ணிக்
கையற்ற குற்றங்களுக்காக அவர்களைத்
தண்டியும்.
11ஆனால் தேவனை நம்பும் ஜனங்கள்
களிகூரட்டும். என்றென்றும் அவர்கள்
மகிழ்ச்சியடையட்டும். தேவனே, உமது
நாமத்தை நேசிக்கும் ஜனங்களைப் பாது
காத்து, பெலனைத் தாரும்.
12கர்த்தாவே, நல்லோருக்கு நீர் நன்மை
செய்தால் அவர்களைக் காக்கும் பெருங்
கேடகமாவீர்.

## சங்கீதம் 6

***செமினீத்தால் நரம்புக் கருவிகளை இசைப் போரின் இராகத்தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.***

1கர்த்தாவே, கோபத்தில் என்னைக் கண்
டிக்காதிரும். என் மீது கோபமடையாமலும்
என்னைத் தண்டியாமலும் இரும்
2கர்த்தாவே, என்னிடம் தயவாயிரும்.
நான் நோயுற்றுத் தளர்ந்தேன். என்னைக்
குணமாக்கும்! என் எலும்புகள் நடுங்கு
கின்றன.
3என் முழு உடம்பும் நடுங்குகிறது.
கர்த்தாவே, நீர் என்னைக் குணப்படுத்த
எவ்வளவு காலம் நீடிக்கும்?
4கர்த்தாவே, என்னை வலிமையாக்கும்.
நீர் தயவுள்ளவர், என்னைக் காப்பாற்றும்.
5கல்லறையிலுள்ள மரித்த மனிதர்கள்
உம்மை நினையார்கள். மரணத்தின் இடத்தி
லுள்ள ஜனங்கள் உம்மைத் துதிக்க மாட்
டார்கள். எனவே என்னை நீர் குணமாக்கும்!
6கர்த்தாவே, இரவு முழுவதும் நான்
உம்மிடம் ஜெபம் செய்தேன். என் கண்
ணீரால் என் படுக்கை நனைந்தது. என்
படுக்கையிலிருந்து கண்ணீர் சிந்துகின்றது.
உம்மை நோக்கி அழுவதால் நான் பெல
னற்றுப் போகிறேன்.
7எனது பகைவர்கள் எனக்குத் துன்பம்
பல செய்தனர். வருத்தத்தால் என் துயரம்
பெருகிற்று. தொடர்ந்து அழுவதினால் என்
கண்கள் சோர்ந்தன.
8தீயோரே அகன்று போங்கள்! ஏனெனில்
கர்த்தர் என் அழுகையைக் கேட்டார்.
9கர்த்தர் என் விண்ணப்பத்தைக் கேட்
டார். கர்த்தர் என் ஜெபத்தைக் கேட்டு பதில்
தந்தார்.
10எனது எதிரிகள் எல்லோரும் மன
முடைந்து கலங்கினார்கள். ஏதோ திடீரென
நிகழும், அவர்கள் வெட்கமுற்றுத் திரும்பிச்
செல்வார்கள்.

## சங்கீதம் 7

***கர்த்தரை நோக்கித் தாவீது பாடிய பாடல், பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த கீசின் மகனாகிய சவுலைப் பற்றியது இந்தப் பாடல்.***

1எனது தேவனாகிய கர்த்தாவே, நான்
உம்மை நம்புகிறேன், என்னைத் துரத்தும்
மனிதரிடமிருந்து என்னைக் காப்பாற்றும்.
என்னை மீட்டுக்கொள்ளும்!
2நீர் எனக்கு உதவாவிட்டால், சிங்கத்தால்
பிடிக்கப்பட்ட மிருகத்தைப் போலாவேன்.
என்னைக் கவர்ந்து செல்கையில் யாரும்
என்னைக் காப்பாற்ற இயலாது!
3எனது தேவனாகிய கர்த்தாவே, நான்
தவறு ஒன்றும் செய்யவில்லை. நான் தவறி
ழைக்கவில்லையென்று உறுதியளிக்கிறேன்!
4என் நண்பர்களுக்கு நான் தீங்கேதும்
செய்யவில்லை. என் நண்பர்களின் பகை
வர்க்கு உதவவுமில்லை.
5ஆனால் ஒரு பகைவன் என்னைத்
துரத்துகிறான். அவன் என்னைக் கொல்ல
ஆவலாயிருக்கிறான். அவன் என் ஜீவனைத்
தரையில் வீழ்த்தி நசுக்க விரும்பி அழுக்
குக்குள் என் ஆத்துமாவை அழுத்துகிறான்.
6கர்த்தாவே எழுந்து உமது கோபத்தைக்
காட்டும்! என் பகைவன் கோபங்கொண்டி
ருக்கிறான், எழுந்து அவனோடு போர்
புரியும். கர்த்தாவே, எழுந்து நீதி செய்யும்.
7கர்த்தாவே, ஜனங்களை நியாயந்தீரும்.
உம்மைச் சுற்றிலும் தேசங்களை ஒன்று
சேரும்.
8கர்த்தாவே எனக்கு நியாயம் வழங்கும்.
எனது நேர்மையையும், நான் களங்கமற்ற
வன் என்பதையும் நிரூபியும்.
9தீயோரைத் தண்டியும், நல்லோருக்கு உத
வும். தேவனே, நீர் நல்லவர். நீர் ஜனங்களின்
இருதயங்களைப் பார்க்க வல்லவர்.
10நேர்மையான இருதயம் கொண்ட ஜனங்
களுக்குத் தேவன் உதவுகிறார். தேவன்
என்னைப் பாதுகாப்பார்.
11தேவன் ஒரு நல்ல நீதிபதி, எந்நேரமும்
அவர் தீமைக்கு எதிராக தன் கோபத்தைக்
காட்டுவார்.
12தேவன் ஒரு முடிவெடுத்தால் அவர்
அதிலிருந்து மாறுவதில்லை.
13தீய ஜனங்களைத் தண்டிக்க தேவன்
ஆயுத்தமாயிருக்கிறார்.*
14சில ஜனங்கள் எப்போதும் தீயவற்றைத்
திட்டமிடுவார்கள். அவர்கள் இரகசியமாய்
திட்டமிடுவார்கள், பொய்யுரைப்பார்கள்.
15அவர்கள் பிறரை வலைக்குட்படுத்தித்
துன்புறுத்த முயல்வார்கள். ஆனால் தங்கள்
வலைகளில் தாங்களே சிக்கித் துன்புறுவார்
கள்.
16அவர்கள் தங்களுக்கான தண்டனை
யைப் பெறுவார்கள். அவர்கள் பிறரிடம்
கொடுமையாய் நடந்து கொண்டனர். ஆனால்
அவர்களுக்குத்தகுதியானதைப்பெறுவார்கள்.
17கர்த்தர் நல்லவராயிருப்பதால் அவரைத்
துதிப்பேன். மகா உன்னதமான கர்த்தரு
டைய நாமத்தைத் துதிப்பேன்.

---

**தேவன் … ஆயத்தமாயிருக்கிறார்** எழுத்தின் பிரகாரம் “அவர் திரும்பிவிடமாட்டார். அவர் தன் வாளைக் கூர்மைபடுத்துவார். தம் வில்லை வளைத்து குறிபார்ப்பார். மரண ஆயுதத்தைத் தயாரித்திருக்கிறார். நெருப்பு அம்புகளைச் செய்திருக்கிறார்” எனப் பொருள்படும்.

## சங்கீதம் 8

***கித்தீத் என்ற இசைக் கருவியில் வாசிக்க இராகத் தலைவனுக்குத் தந்த தாவீதின் சங்கீதம்.***

1எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே,
உமது நாமம் பூமியின் எல்லா இடத்திலும்
மிகுந்த அற்புதமானது! விண்ணுலகிலும்
உமது நாமம் உமக்குத் துதிகளைக் கொண்டு
வருகிறது.
2பிள்ளைகள், குழந்தைகள் வாயிலுமி
ருந்து உம்மைத் துதிக்கும் பாடல்கள்
வெளிப்படும். உம் பகைவரை அமைதிப்
படுத்த இவ்வல்லமையான பாடல்களைக்
கொடுத்தீர்.
3கர்த்தாவே, உமது கைகளால் நீர் செய்த
வானங்களை நான் கண்டேன். நீர் படைத்த
நிலாவையும், நட்சத்திரங்களையும் நான்
கண்டு ஆச்சரியமடைந்தேன்.
4ஏன் மனிதர்கள் உமக்கு முக்கியமாயினர்?
ஏன் அவர்களை நீர் நினைவுகூருகிறீர்? ஏன்
அவர்களைக் கவனிக்கிறீர்?
5ஆனால் மனிதர்கள் உமக்கு முக்கியமா
யினர்! அவர்களை ஏறக்குறைய தேவர்க
ளைப் போலவே உண்டாக்கினீர். மனிதரை
மகிமையாலும், மேன்மையாலும் முடிசூட்டி
னீர்.
6நீர் உண்டாக்கின எல்லாவற்றிற்கும்
அவர்களை அதிகாரிகளாக வைத்தீர்.
7ஆடுகள், பசுக்கள், காட்டு மிருகங்கள்
அனைத்தையும் மனிதர்கள் ஆண்டனர்.
8வானத்துப் பறவைகளையும் சமுத்திரத்
தில் நீந்தும் மீன்களையும் அவர்கள் ஆண்ட
னர்.
9எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே,
உமது நாமம் உலகத்தில் எங்கும் மிகவும்
மிகவும் அற்புதமானது!

## சங்கீதம் 9

***முத்லபேன் என்ற இசைக்கருவியில் வாசிக்க இராகத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.***

1என் முழு இருதயத்தோடும் நான் கர்த்
தரைத் துதிப்பேன். கர்த்தாவே, நீர் செய்த
எல்லா அற்புதமான காரியங்களையும் நான்
எடுத்துக் கூறுவேன்.
2நீர் என்னை மிகவும் சந்தோஷப்படுத்து
கிறீர். உன்னதமான தேவனே, நான் உமது
நாமத்தைத் துதிப்பேன்.
3என் பகைவர்கள் உம்மிடமிருந்து ஓட
முயன்றார்கள். ஆனால் அவர்கள் விழுந்து
அழிந்தார்கள்.
4நீர் நல்ல நீதிபதி. உமது சிங்காசனத்தில்
நீதிபதியாக அமர்ந்தீர். கர்த்தாவே, என்
வழக்கைக் கேட்டீர், எனக்குரிய நீதியான
முடிவை அளித்தீர்.
5பிற ஜனங்களை நீர் கண்டித்தீர் கர்த்
தாவே, நீர் அந்தத் தீயோரை அழித்தீர்.
உயிருள்ள ஜனங்களின் பட்டியலிலிருந்து
என்றென்றும் அவர்கள் பெயரை அகற்றி
னீர்.
6பகைவன் ஒழிக்கப்பட்டான்! கர்த்தாவே,
அவர்கள் நகரங்களை அழித்தீர், அழிந்த
கட்டிடங்களே இன்று உள்ளன. அத்தீ
யோரை நினைவுபடுத்த எதுவும் இன்று
இல்லை.
7ஆனால் கர்த்தர் என்றென்றும் அரசாளு
வார். கர்த்தர் அவர் அரசை வலுவாக்கு
வார். உலகிற்கு நியாயத்தை வழங்க அவர்
இதைச் செய்தார்.
8உலகில் உள்ள எல்லா ஜனங்களுக்கும்
கர்த்தர் நியாயமான தீர்ப்பு வழங்குவார்.
எல்லா நாடுகளுக்கும் நீதியோடு தீர்ப்பு
வழங்குவார்.
9பல குழப்பங்கள் இருப்பதால் பல
ஜனங்கள் அகப்பட்டுக் காயமுற்றனர். அவர்
கள் தங்கள் துன்பங்களின் பாரத்தால் நசுங்கு
ண்டு போயினர். கர்த்தாவே, நீர் அவர்
களுக்கு அடைக்கலமாயிரும்.
10உமது நாமத்தை அறிந்த ஜனங்கள்
உம்மை நம்பவேண்டும். கர்த்தாவே, ஜனங்
கள் உம்மிடம் வந்தால் அவர்களுக்கு உத
வாது விடமாட்டீர்.
11சீயோனில் வாழும் ஜனங்களே கர்த்த
ரைத் துதித்துப் பாடுங்கள். கர்த்தர் செய்த
பெரிய காரியங்களைப் பிற தேசங்களில்
கூறுங்கள்.
12உதவிநாடிப் போனோரைக் கர்த்தர்
நினைவுகூருவார். அந்த ஏழை ஜனங்கள்
உதவிக்காக அவரிடம் சென்றனர். கர்த்தர்
அவர்களை மறக்கவில்லை.
13நான் தேவனிடம் இந்த ஜெபத்தைக்
கூறினேன்: "கர்த்தாவே, என்னிடம் தயவா
யிரும். பாரும், என் பகைவர்கள் என்னைத்
தாக்குகிறார்கள். 'மரணவாசலில்' இருந்து
என்னைக் காப்பாற்றும்.
14அப்போது கர்த்தாவே, எருசலேமின்
வாசல்களில் நான் உம்மைத் துதித்துப்
பாடக்கூடும். என்னை நீர் காப்பாற்றியதால்
நான் மிகவும் மகிழ்ச்சி கொள்வேன்."
15பிறரை அகப்படுத்த யூதரல்லாத ஜனங்
கள் குழிகளைத் தோண்டினார்கள். அக்கு
ழிகளில் அவர்களே வீழ்ந்தனர். பிறரை
அகப்படுத்த வலைகளை விரித்தனர். அவ்வ
லைகளில் அவர்களே சிக்குண்டனர்.
16கர்த்தர் அத்தீயோரைப் பிடித்தார்.
தீயவை செய்வோரைக் கர்த்தர் தண்டிப்பா
ரென அந்த ஜனங்கள் அறிந்துகொண்டனர்.
17தேவனை மறக்கும் ஜனங்கள் தீயோர்கள்.
அந்த ஜனங்கள் மரணத்தின் இடங்களுக்குச்
செல்வார்கள்.
18துன்பப்பட்ட ஜனங்களைத் தேவன்
மறந்துவிட்டாரெனச் சில நேரங்களில்
தோன்றும். அந்த ஏழைகள் நம்பிக்கையிழக்

கும் நிலை வந்ததென்று தோன்றும். ஆனால்
தேவன் அவர்களை என்றென்றும் மறப்ப
தில்லை.
19 கர்த்தாவே, எழுந்து தேசங்களை நியா
யந்தீரும். தாங்கள் வல்லமை மிகுந்தோரென
ஜனங்கள் தங்களை நினையாதபடி செய்யும்.
20 ஜனங்களுக்குப் பாடம் கற்பியும். அவர்
கள் தாங்கள் சாதாரண மனிதப் படைப்பு
மட்டுமே என்றறியச் செய்யும்.

## சங்கீதம் 10

1 கர்த்தாவே, ஏன் தூரத்தில் தங்கியிருக்
கிறீர்? தொல்லைக்குள்ளான மனிதர்கள் உம்
மைக் காண இயலாது.
2 பெருமையும்தீமையும்நிறைந்த ஜனங்கள்
தீய திட்டங்களை வகுக்கிறார்கள். அவர்கள்
ஏழை ஜனங்களைத் துன்புறுத்துகிறார்கள்.
3 தீய ஜனங்கள் தங்களுடைய இச்சை
களைக் குறித்து பெருமை கொள்வார்கள்.
பேராசைமிக்க அந்த ஜனங்கள் தேவனைச்
சபிப்பார்கள். இவ்வகையாகக் கர்த்தரைத்
தாங்கள் வெறுப்பதைத் தீயோர் வெளிக்
காட்டுவார்கள்.
4 தீயோர் தேவனைப் பின்பற்றக்கூடாத
அளவிற்கு அதிகப் பெருமை பாராட்டுவார்
கள். அவர்கள் தீய திட்டங்களையே
வகுப்பார்கள். தேவனே இல்லை என்பது
போல அவர்கள் நடந்து கொள்வார்கள்.
5 தீயோர் எப்போதும் கோணலானவற்
றையே செய்வார்கள். அவர்கள் தேவனு
டைய சட்டங்களையும், நல்ல போதகத்தை
யும் கவனிப்பதில்லை.* தேவனுடைய பகை
வர்கள் அவரது போதனைகளை அசட்டை
செய்வார்கள்.
6 தீயவை அவர்களை ஒருபோதும் அணுகு
வதில்லை என நினைப்பார்கள். அவர்கள்,
“நாம் களிகூருவோம், நமக்குத் தண்டனை
யில்லை” என்பார்கள்.
7 அந்த ஜனங்கள் எப்போதும் சபிப்பார்
கள். அவர்கள் பிறரைக் குறித்து எப்போதும்
தீமையே பேசுவார்கள். அவர்கள் தீயவற்
றையே திட்டமிடுவார்கள்.
8 அந்த ஜனங்கள் மறைவிடங்களில்
இருந்து ஜனங்களைப் பிடிக்கக் காத்திருப்
பார்கள். ஜனங்களைக் காயப்படுத்த மறைந்
திருப்பார்கள். ஒன்றும் அறியாத ஜனங்களை
அவர்கள் கொல்லுவார்கள்.
9 மிருகங்களை உண்பதற்காய் கொல்லக்
காத்திருக்கும் சிங்கங்களைப் போலாவார்கள்.
ஏழைகளை அவர்கள் தாக்குவார்கள்.
தீயோர் விரிக்கும் வலையில் அவர்கள்
சிக்குவார்கள்.
10 மீண்டும் மீண்டும் ஏழைகளையும் பிறரை
யும் துன்புறுத்துவார்கள்.
11 எனவே, “தேவன் எங்களை மறந்தார்.
என்றென்றும் தேவன் நம்மிடமிருந்து வில
கிச்சென்றார். நமக்கு ஏற்படும் தீமையைத்
தேவன் பாரார்!” என்று அந்த ஏழைகள்
எண்ணத் தொடங்குவார்கள்.
12 கர்த்தாவே, எழுந்து செயல்படும்!
தேவனே, அத்தீயோரைத் தண்டியும்! ஏழை
களை மறவாதேயும்!
13 தீயோர் தேவனுக்கு எதிராவார்கள்?
ஏனென்றால் தேவன் தங்களைத் தண்டியா
ரென்று எண்ணுவார்கள்.
14 கர்த்தாவே, தீயோர் செய்யும் கொடுமை
களையும் தீமைகளையும் நீர் காண்கிறீர்.
அவற்றைப் பார்த்து ஏதேனும் செய்யும்!
தொல்லைக்குள்ளான ஜனங்கள் உதவிகேட்டு
உம்மிடம் வருவார்கள். கர்த்தாவே, நீரே
அனாதைகளுக்கு உதவுகிறவர். எனவே
அவர்களுக்கு உதவும்!
15 கர்த்தாவே, தீயோரை அழித்துவிடும்.
16 உமது நாட்டிலிருந்து அவர்களை அகற்
றும். அப்பொழுது ஆண்டவராகிய நீரே
நித்திய ராஜா என்பதை எல்லோரும் உணரு
வார்கள்.
17 கர்த்தாவே, ஏழை ஜனங்களின்
தேவையைக் கேட்டறிந்தீர். அவர்கள் ஜெபங்
களைக் கேட்டு, அதன்படி செய்யும்.
18 கர்த்தாவே, பெற்றோரற்ற பிள்ளை
களைக் காப்பாற்றும். துயரப்பட்டுக் கொண்
டிருக்கும் ஜனங்களை மேலும் தொல்லை
களால் வருந்தவிடாதிரும். தீயோர் இங்கு
வாழாதபடி அவர்களை அச்சுறுத்தும்.

## சங்கீதம் 11

***இராகத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்***

1 கர்த்தரை, நான் நம்பியிருக்கிறேன். ஏன்
என்னை ஓடி ஒளிந்துகொள்ளச் சொல்லு
கிறீர்கள்? நீங்கள் என்னிடம், “உன் மலைக்
குப் பறவையைப்போல் பறந்துசெல்!” என்
றீர்கள்.
2 தீயோர் வேட்டைக்காரனைப் போன்
றோர். இருளில் அவர்கள் ஒளிவார்கள்.
அவர்கள் வில்லை வளைத்து அம்பைக்
குறிவைப்பார்கள். நல்ல, நேர்மையான இருத
யமுள்ள ஜனங்களின் மேல் எய்வார்கள்.
3 நல்லவற்றை அவர்கள் அழித்தால் என்ன
நிகழும்? நல்லோர் அப்போது என்ன செய்
வார்கள்?
4 கர்த்தர் அவரது பரிசுத்த ஆலயத்தில்
இருக்கிறார். பரலோகத்தில் தனது சிங்காச
னத்தில் கர்த்தர் வீற்றிருக்கிறார். நடப்ப
வற்றை கர்த்தர் கண்காணிக்கிறார். கர்த்தரு
டைய கண்கள் ஜனங்களை நல்லோரா,
தீயோரா எனக் கண்டறியும்.
5 கர்த்தர் நல்லோரைத் தேடுகிறார். கர்த்தர்
தீயவரையும், கொடியோரையும், வெறுக்
கிறார்.

---

***அவர்கள் … கவனிப்பதில்லை*** *எழுத்தின் பிரகாரமாக, “உமது நீதி அவனை காட்டிலும் உயரமாயிருக்கிறது” எனப் பொருள்படும்.*

[6]தீயோர்மேல் வெப்பமான நிலக்கரியை
யும், எரியும் கந்தகத்தையும் மழையாய்ப்
பொழியச் செய்வார். வெப்பமான எரியும்
காற்றை மட்டுமே அத்தீயோர் அனுபவிப்
பார்கள்.
[7]ஆனால் கர்த்தர் நல்லவர். நல்லதைச்
செய்யும் ஜனங்களை அவர் நேசிக்கிறார்.
நல்லோர் அவருடன் இருப்பார்கள், அவர்
முகத்தைக் காண்பார்கள்.

## சங்கீதம் 12

***செமினீத் என்னும் இசைக் கருவியில் வாசிக்க இராகத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.***

[1]கர்த்தாவே, என்னைக் காப்பாற்றும்.
நல்லோர் மடிந்துபோயினர். பூமியிலுள்ள
ஜனங்களிடையே உண்மையான நம்பிக்கை
யுள்ளோர் எவருமில்லை.
[2]அண்டை வீட்டாரிடம் ஜனங்கள் பொய்
பேசுகிறார்கள். பொய்களால் அயலானைப்
புகழ்ந்து பேசுகிறார்கள்.
[3]பொய் கூறும் நாவைக் கர்த்தர் அறுத்
தெறிவார். தங்களையே புகழ்வோரின் நாக்கு
களைக் கர்த்தர் துண்டித்தெறிவார்.
[4]அந்த ஜனங்கள், "நாங்கள் தக்க பொய்யு
ரைப்போம். எங்கள் நாக்குகளின் மூலமாக,
நாங்கள் பெரியவர்களாவோம். யாரும் எங்
கள் எஜமானராக இயலாது!" என்கிறார்கள்.
[5]ஆனால் கர்த்தரோ, "தீயோர் ஏழைகளின்
பொருள்களைத் திருடுவார்கள். உதவியற்ற
ஜனங்களின் பொருள்களை அபகரிப்பார்கள்.
களைப்புற்றோரை இப்போது நான் எழுந்து
பாதுகாப்பேன்" என்கிறார்.
[6]கர்த்தருடைய சொற்கள் உண்மையும்
தூய்மையுமானவை. நெருப்பில் உருக்கப்
பட்ட வெள்ளியைப்போல் அவை தூய்மை
யானவை. ஏழுமுறை உருக்கித் தூய்மை
யாக்கப்பட்ட வெள்ளியைப் போல் அவை
தூய்மையானவை.
[7]கர்த்தாவே, உதவியற்ற ஜனங்களைப்
பாதுகாத்தருளும். இப்போதும் எப்போதும்
அவர்களைப் பாதுகாப்பீராக.
[8]அத்தீயோர் முக்கியமானவர்களைப்
போன்று நடிப்பார்கள். உண்மையில் அவர்
கள் போலி நகைகளைப் போன்றவர்கள்.
அவை விலையுயர்ந்ததாய் தோன்றும்
ஆனால் அவை மலிவானவை.

## சங்கீதம் 13

***இராகத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.***

[1]கர்த்தாவே, எத்தனை காலம் என்னை
மறப்பீர்? என்றென்றும் மறந்திருப்பீரோ?
என்னை ஏற்க எத்தனைக் காலம் மறுப்பீர்?
[2]எவ்வளவு காலத்துக்கு நீர் என்னை
மறந்திருப்பீர். என் இருதயத்தில் எத்தனைக்
காலம் துக்கம் அனுபவிக்கட்டும்? எத்தனைக்
காலம் என் பகைவன் என்னை வெற்றி
கொள்வான்?
[3]எனது தேவனாகிய கர்த்தாவே,
என்னைப் பாரும்! எனக்குப் பதில் தாரும்!
என் பதிலை நான் அறியட்டும்! இல்லை
யெனில் நான் மடிவேன்.
[4]அது நடந்தால் என் பகைவன், "நான்
அவனை வென்றேன்" என்பான். என்னைத்
தோற்கடித்தால் என் பகைவன் மகிழ்வான்.
[5]கர்த்தாவே, எனக்கு உதவும் உம் அன்
பில் நான் நம்பிக்கை வைத்தேன். நீர்
என்னைக் காத்து என்னை மகிழச் செய்தீர்.
[6]கர்த்தர் நல்லதை எனக்குச் செய்ததால்
சந்தோஷப் பாடலைப் கர்த்தருக்காய் பாடு
வேன்.

## சங்கீதம் 14

***தாவீது இராகத் தலைவனுக்கு அளித்த பாடல்.***

[1]"தேவன் இல்லை" என்று மூடன் தன்
உள்ளத்தில் சொல்லிக்கொள்வான். கொடிய,
சீர்கெட்ட காரியங்களை மூடர்கள் செய்
வார்கள். அவர்களுள் ஒருவனும் நல்லதைச்
செய்வதில்லை.
[2]கர்த்தர் பரலோகத்திலிருந்து கீழே ஜனங்
களைப் பார்ப்பார். ஞானவானைப் பார்க்க
கர்த்தர் முயன்றார். (ஞானமுள்ளவன் தேவனி
டம் உதவி கேட்பான்.)
[3]ஆனால் எல்லோரும் தேவனைவிட்டு
விலகிப்போனார்கள். எல்லா ஜனங்களும்
தீயோராய் மாறினார்கள். ஒருவன் கூட
நல்லதைச் செய்யவில்லை.
[4]தீயோர் என் ஜனங்களை அழித்தனர்.
அத்தீயோர் தேவனை அறியார்கள். தீயோ
ருக்கு மிகுதியாய் உணவு உண்டு. கர்த்தரை
அவர்கள் ஆராதிப்பதில்லை.
[5-6]ஏழையின் அறிவுரையை அத்தீயோர்
கேளார்கள். ஏனெனில் ஏழை தேவனை
நம்பி வாழ்வான். தேவன் நல்லவர்களோடு
இருப்பார். எனவே தீயோர் மிகவும் அச்சம்
கொள்வார்கள்.
[7]சீயோன்* (மலை) மேல் உள்ளவரே
இஸ்ரவேலைக் காப்பாற்ற முடியும். கர்த்தர்
தாமே இஸ்ரவேலைக் காப்பவர்! கர்த்த
ருடைய ஜனங்கள் அழைத்துச் செல்லப்
பட்டுச் சிறைக் கைதிகளாக்கப்பட்டனர்.
ஆனால் கர்த்தரோ தம் ஜனங்களைத் திரும்ப
அழைத்து வருவார். அப்போது யாக்கோ
புக்கு (இஸ்ரவேல்) மிகவும் மகிழ்ச்சியுண்டா
கும்.

---

**சீயோன்** இது தென்கிழக்கிலுள்ள எருசலேம் கட்டப்பட்டிருக்கிற மலைப்பகுதியாகும். சில வேளைகளில் இதற்கு எருசலேமில் வாழுகிற தேவனுடைய ஜனங்கள் எனப் பொருள்படும்.

## *சங்கீதம்* 15

***தாவீதின் பாடல்.***

1 *கர்த்தாவே, உமது பரிசுத்த கூடாரத்தில்**
*யார் வாழக்கூடும்? உமது பரிசுத்த மலை*
*களில்* யார் வாழக்கூடும்?*
2 *தூய வாழ்க்கை வாழ்ந்து, நற்செயல்களை*
*செய்பவனும், உள்ளத்திலிருந்து உண்மை*
*யைப் பேசுபவனும் உமது மலையில் வாழ*
*முடியும்.*
3 *அம்மனிதன் பிறரைக் குறித்துத் தீமை*
*கூறான். அம்மனிதன் அயலானுக்குத் தீங்கு*
*செய்யான். அம்மனிதன் அவன் குடும்பத்*
*தைக் குறித்து வெட்கம் தரும் மொழிகளைச்*
*சொல்லான்.*
4 *தேவனை வெறுப்போரை அவன் மதி*
*யான். ஆனால் கர்த்தரைச் சேவிப்போரை*
*யெல்லாம் அம்மனிதன் மதிப்பான். அவன்*
*அயலானுக்கு வாக்களித்தால் அவற்றைச்*
*சரியாகக் கடைப்பிடிப்பான்.*
5 *அவன் கடன் கொடுத்தால், வட்டி*
*கேளான். குற்றமற்ற மனிதருக்குத் தீங்கிழைப்*
*பதற்கு அவன் பணம் பெறான். அந்த*
*நல்ல மனிதனைப்போல வாழும் ஒருவன்*
*எப்போதும் நீங்காது தேவனுடைய அருகே*
*இருப்பான்.**

## *சங்கீதம்* 16

***தாவீதின் மிக்தாம் என்னும் பாடல்***

1 *தேவனே, நாம் உம்மைச் சார்ந்தி*
*ருப்பதால் என்னைக் காத்துக்கொள்ளும்.*
2 *நான் கர்த்தரை நோக்கி, “கர்த்தாவே,*
*நீர் என் ஆண்டவர், என்னிடமுள்ள நற்கா*
*ரியம் ஒவ்வொன்றும் உம்மிடமிருந்து*
*வருகிறது” என்றேன்.*
3 *பூமியிலுள்ள தன் சீடருக்குக் கர்த்தர்*
*அற்புதமானவற்றைச் செய்கிறார். அந்த*
*ஜனங்களை உண்மையாய் நேசிப்பதைக்*
*கர்த்தர் காட்டுகிறார்.*
4 *பிற தெய்வங்களைத் தொழுதுகொள்ள*
*ஓடும் ஜனங்களோ வேதனைக்கு ஆளாவார்*
*கள். அவ்விக்கிரகங்களுக்கு அவர்கள்*
*படைக்கும் இரத்த பலிகளில் நான்*
*பங்குகொள்ள மாட்டேன். அவ்விக்கிரகங்*
*களின் பெயர்களையும் கூட நான் கூற*
*மாட்டேன்.*
5 *என் பங்கும் பாத்திரமும் கர்த்தரிடமி*
*ருந்தே வரும். கர்த்தாவே, எனக்கு உதவும்,*
*என் பங்கை எனக்குத் தாரும்.*
6 *என் பரம்பரைச் சொத்து* அற்புதமா*
*னது. நான் பெற்ற பங்கு* மிக அழகானது.*
7 *எனக்கு நன்கு போதித்த கர்த்தரைத்*
*துதிப்பேன். இரவில் என் உள்ளத்தின்*
*ஆழத்திலிருந்து இந்த ஆலோசனைகள் வரு*
*கின்றன.*
8 *என் கர்த்தரை எப்பொழுதும் எனக்கு*
*முன்பாக வைத்திருக்கிறேன். அவர் என்*
*வலது புறத்திலிருப்பதால் நிச்சயமாய் விலக*
*மாட்டேன்.*
9 *என் இருதயமும் ஆத்துமாவும் மிகவும்*
*மகிழும். என் உடலும் பாதுகாப்பாய்*
*வாழும்.*
10 *ஏனெனில் கர்த்தாவே, என் ஆத்து*
*மாவை மரணத்தின் இடத்தில் இருக்க*
*விடமாட்டீர். உம்மீது நம்பிக்கை வைத்த*
*ஒருவரையும் கல்லறையில் அழுகிப்போக*
*அனுமதிக்கமாட்டீர்.*
11 *சரியான வழியில் வாழ நீர் எனக்குப்*
*போதிப்பீர். கர்த்தாவே, உம்மோடிருப்பதே*
*எனக்குப் பூரண ஆனந்தம் தரும். உமது*
*வலதுபுறத்தில் தங்குவதே என்றென்றும்*
*இன்பம் தரும்.*

## *சங்கீதம்* 17

***தாவீதின் ஒரு ஜெபம்***

1 *கர்த்தாவே, நியாயத்திற்கான என் ஜெபத்*
*தைக் கேளும். எனது ஜெபப் பாடலுக்குச்*
*செவி கொடுத்தருளும். எனது நேர்மையான*
*ஜெபத்தைக் கேளும்.*
2 *என்னைப் பற்றிய சரியான முடிவு*
*எடுப்பீர். உம்மால் உண்மையைக் காணமுடி*
*யும்.*
3 *நீர் என் இருதயத்தின் ஆழத்தைப் பார்த்*
*தீர். இரவு முழுவதும் என்னோடிருந்தீர்.*
*என் இருதயத்தை ஆராய்ந்து என்னில் ஒரு*
*குற்றத்தையும் நீர் காணவில்லை. நான்*
*எந்தத் தீய செயல்களையும் திட்டமிட*
*வில்லை.*
4 *உமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதற்கு*
*என்னால் இயன்றமட்டும் முயன்றேன்.*
5 *உமது வழிமுறைகளை பின்பற்றினேன்.*
*உமது வாழ்க்கை வழிகளிலிருந்து என்*
*பாதங்கள் விலகவில்லை.*
6 *தேவனே, உம்மைக் கூப்பிட்டபோதெல்*
*லாம், எனக்குப் பதிலளித்தீர். எனவே,*
*இப்போதும் எனக்குச் செவிகொடும்.*
7 *தேவனே, உம்மை நம்புகிற உமது*
*வலது பக்கத்திலிருக்கும் ஜனங்களுக்கு*
*உதவுகிறீர். உம்மைப் பின்பற்றுகிறவனின்*
*இந்த ஜெபத்திற்குச் செவிகொடும்.*

---

***பரிசுத்த கூடாரம்*** *இந்தச் சிறப்புக்குரிய கூடாரத்தில் இஸ்ரவேல் ஜனங்கள் தேவனை தொழுது கொண்டனர். இங்கே உண்மையில் இது எருச லேமில் உள்ள ஆலயத்தைக் குறிக்கும்.*

***பரிசுத்த மலை*** *சீயோன், எருசலேம் கட்டப்பட்டிருக்கிற மலை.*

***அவன் ... இருப்பான்*** *எழுத்தின் பிரகாரமாக, “அந்த ஆள் விலக்கப்படமாட்டான்” எனப் பொருள்படும்.*

***பரம்பரை சொத்து*** *இங்கே உண்மையான அர்த்தம், ஒவ்வொரு யூதனும் தேவன் தன் குடும்பத்துக்குக் கொடுத்த நாட்டுப் பகுதியைத் தம் பங்காகப் பெற்றான்.*

***பங்கு*** *அல்லது “பூமியின் பகுதி.”*

8கண்ணின் மணியைப்போல என்னைப்
பாதுகாத்துக்கொள்ளும். உமது சிறகுகளின்
நிழலில் என்னை மறைத்துக்கொள்ளும்.
9கர்த்தாவே, என்னை அழிக்க நினைக்கிற
தீயோரிடமிருந்து என்னை மீட்டருளும்.
என்னைத் தாக்க முயல்கிற ஜனங்களிட
மிருந்து என்னைப் பாதுகாத்துக்கொள்ளும்.
10தங்களைப் பற்றிப் பெருமைபாராட்டுகிற
அத்தீயோர் தேவனுக்குச் செவிசாய்க்க முடி
யாதபடி பெருமையுடையோராய் இருக்கி
றார்கள்.
11அந்த ஜனங்கள் என்னைத் துரத்தினார்
கள். இப்போது அவர்கள் என்னைச் சூழ்ந்
திருக்கிறார்கள். என்னைத் தாக்குவதற்குத்
தயாராக இருக்கிறார்கள்.*
12பிற விலங்குகளைக் கொன்று சாப்பிடக்
காத்திருக்கும் சிங்கத்தைப் போன்று அத்தீ
யோர் காணப்படுகிறார்கள். தாக்கக் காத்தி
ருக்கும்சிங்கத்தைப்போல் மறைந்திருக்கிறார்
கள்.
13கர்த்தாவே, எழுந்து* பகைவரிடம்
சென்று, அவர்கள் சரணடையச் செய்யும்.
உமது வாளால் அத்தீயோரிடமிருந்து என்
னைக் காப்பாற்றும்.
14கர்த்தாவே, உயிருள்ளோர் வாழும்
தேசத்திலிருந்து அத்தீயோரை உமது வல்ல
மையால் அப்புறப்படுத்தும். கர்த்தாவே, பலர்
உம்மிடம் உதவிக்காக வருவார்கள். இவ்
வாழ்க்கையில் அதிகம் பலனில்லை. அவர்க
ளுக்கு அதிக உணவளியும். வேண்டுவன
வற்றை அவர்கள் பிள்ளைகளுக்குக் கொடும்.
அவர்களின் பிள்ளைகளுக்கும் மிகுந்திருக்
கும்படியாக அப்பிள்ளைகளுக்குத் திருப்தி
யாய் உணவளியும்.
15நான் நீதிக்காக ஜெபிக்கிறேன். கர்த்
தாவே, உமது முகத்தைக் காண்பேன்.
கர்த்தாவே, உம்மைப் பார்ப்பதால் முழுமை
யான திருப்திக் கொள்வேன்.

## சங்கீதம் 18

***இசைத் தலைவனுக்கு கர்த்தருடைய ஊழியனாகிய தாவீது எழுதிய பாடல். சவுலிடமிருந்தும் பிற பகைவர்களிடமிருந்தும் கர்த்தர் அவனைத் தப்புவித்தப்போது இப்பாடலை எழுதினான்.***

1அவன், "எனது பெலனாகிய கர்த்தாவே,
நான் உம்மை நேசிக்கிறேன்!" என்று சொன்
னான்.

2கர்த்தர் என் பாறையாகவும்,* கோட்
டையாகவும், எனக்குப் பாதுகாப்பான
இடமாகவும் இருக்கிறார். பாதுகாப்பிற்காக
ஓடும் பாறையாக என் தேவன் இருக்கிறார்.
தேவன் எனக்குக் கேடகம். அவரது வல்
லமை என்னைக் காப்பாற்றும். உயர்ந்த
மலைகளில் மறைவிடமாக கர்த்தர் எனக்கு
விளங்குகிறார்.
3எனது விரோதிகள் என்னை காயப்
படுத்த முயன்றனர். ஆனால் நான் கர்த்தரு
டைய உதவியை நாடினேன், நான் என்
பகைவரிடமிருந்து காப்பாற்றப்பட்டேன்.
4என் பகைவர்கள் என்னைக் கொல்ல
முயன்று கொண்டிருந்தார்கள்! மரணத்தின்
கயிறுகள் என்னைச் சூழ்ந்திருந்தன. மரணத்
தின் இடங்களுக்கு* என்னைக் கொண்டு
செல்லும் பெருவெள்ளத்தில் நான் அகப்பட்
டேன்.
5கல்லறையின் கயிறுகள் என்னைச் சுற்றி
லுமிருந்தன. மரணக் கண்ணிகள் என்
முன் கிடந்தன.

6நெருக்கத்தில் கர்த்தருடைய உதவியை
நாடினேன். ஆம், என் தேவனை நான்
கூப்பிட்டேன். தேவன் அவரது ஆலயத்தில்
இருந்தார். என் குரலைக் கேட்டார். என்
அபயக் குரல் அவர் காதில் விழுந்தது.
7பூமி அதிர்ந்து நடுங்கிற்று. விண்ணின்
அஸ்திபாரங்கள் அதிர்ந்தன. ஏனெனில் கர்த்
தர் கோபமாயிருந்தார்!
8தேவனுடைய மூக்கில் புகை கிளம்பிற்று.
தேவனுடைய வாயில் நெருப்புக்கொழுந்து
கள் தோன்றின. அவரிடமிருந்து எரியும்
ஜூவாலைகள் பறந்தன.
9கர்த்தர் வானத்தைக் கிழித்துக் கீழிறங்கி
னார்! திரண்ட காரிருளின் மேல் நின்றார்!
10கர்த்தர் காற்றின் மேல் எழுந்து பறக்கும்
கேரூபீன்கள் மேலேறிப் பறந்துகொண்டி
ருந்தார்.
11அவரைச்சுற்றி கூடாரம்போல் சூழ்ந்தி
ருந்த கருமேகங்களுக்குள் கர்த்தர் மறைந்தி
ருந்தார். இடி மேகங்களினுள் அவர் ஒளிந்தி
ருந்தார்.
12அப்போது தேவனுடைய பிரகாசிக்கும்
ஒளி மேகங்களைக் கிழித்து வெளிவந்தது.
புயலும் மின்னலும் தோன்றின.
13கர்த்தர் வானத்திலிருந்து இடி இடித்தார்.
உன்னதமான தேவன் அவரது குரலைக்
கேட்கச் செய்தார். கல் மழையும், மின்னல்
ஒளியும் தோன்றின.
14கர்த்தர் அம்புகளைச்* செலுத்திப் பகை
வரைச் சிதறடித்தார். கர்த்தர் மின்னலை

---

**என்னைத் ... இருக்கிறார்கள்** அல்லது "அவர்கள் தரையில் விழும்படி முடிவு செய்தனர்."

**கர்த்தாவே எழுந்து** ஜனங்கள் அவர்கள் உடன்படிக்கை பெட்டியைத் தூக்கிக் கொண்டபோது போர்க்களத்துக்குக் கொண்டு சென்றனர் என சொன்னார்கள். இது தேவன் அவர்களோடு இருந்தார் என்பதைக் காட்டியது. எண்ணா. 10:35,36.

**பாறை** இது தேவனுடைய நாமம். அவர் பலமுள்ள பாதுகாப்புக்கான இடம்.

**மரணத்தின் இடம்** அல்லது "திரும்புதல் இல்லாத இடம், கல்லறை.

**அம்புகள்** அது "மின்னல்."

*அனுப்பினார் ஜனங்கள் குழப்பத்தில் சிதற*
*டிக்கப்பட்டனர்.*
15*கர்த்தாவே, நீர் வல்லமையாகப் பேசி*
*னீர், உமது வாயிலிருந்து வல்லமையுள்ள*
*காற்று வீசிற்று, தண்ணீரானது பின்னே*
*தள்ளப்பட்டது. கடலின் அடிப்பகுதியைப்*
*பார்க்க முடிந்தது. பூமியின் அஸ்திபாரங்கள்*
*எங்கள் கண்களுக்குப் புலப்பட்டன.*
16*கர்த்தர் மேலிருந்து கீழிறங்கி என்னைக்*
*காப்பாற்றினார். கர்த்தர் என்னைப் பிடித்து*
*ஆழமான தண்ணீரிலிருந்து வெளியே*
*எடுத்தார்.*
17*எனது பகைவர்கள் என்னிலும் பல*
*வான்கள். அவர்கள் என்னைப் பகைத்*
*தார்கள். என்னைக் காட்டிலும் என் பகை*
*வர்கள் பலசாலிகள். எனவே தேவன்*
*என்னைக் காப்பாற்றினார்.*
18*நான் தொல்லையில் சிக்குண்டபோது*
*என் பகைவர்கள் என்னைத் தாக்கினார்கள்.*
*ஆனால் கர்த்தரோ எனக்கு ஆதரவளித்தார்.*
19*கர்த்தர் என்னை நேசிக்கிறார், எனவே*
*என்னைக் காப்பாற்றினார். என்னைப் பாது*
*காப்பான இடத்திற்கு அழைத்துச் சென்றார்.*
20*நான் ஒன்றும் அறியாதவன் எனவே*
*கர்த்தர் எனக்குரிய பலனைத் தருவார்.*
*நான் தவறேதும் செய்யவில்லை, எனவே*
*எனக்காக அவர் நன்மைகளைச் செய்வார்.*
21*ஏனெனில் நான் கர்த்தருக்குக் கீழ்ப்படிந்*
*தேன். என் தேவனுக்கு எதிராகப் பாவம்*
*செய்யவில்லை.*

22*கர்த்தருடைய முடிவுகளை நான்*
*நினைவு கூர்ந்தேன். அவர் சட்டங்களுக்குக்*
*கீழ்ப்படிந்தேன்!*
23*அவருக்கு முன் என்னைத் தூய்மையாக*
*வும் களங்கமின்றியும் வைத்துக்கொண்டேன்.*
24*அதனால் கர்த்தர் எனக்கு வெகுமதி*
*கொடுப்பார். ஏனெனில் நான் கபடமற்றவன்.*
*தேவனுடைய பார்வையில் நான் தவறிழைக்*
*கவில்லை. அவர் எனக்கு நன்மைகள்*
*செய்வார்.*
25*கர்த்தாவே! ஒருவன் உம்மை உண்மை*
*யாய் நேசித்தால் நீர் உமது உண்மையான*
*அன்பை அவனுக்குக் காண்பிப்பீர். ஆண்ட*
*வரே ஒருவன் உமக்கு உண்மையாய் இருந்*
*தால் நீரும் அவனுக்கு உண்மையாய் இருப்*
*பீர்.*
26*கர்த்தாவே, நல்லோருக்கும் தூயோருக்*
*கும் நீர் நல்லவர், தூயவர். ஆனால் இழி*
*வானவர்களையும், கபடதாரிகளையும் நீர்*
*மிக நன்கு அறிவீர்.*
27*கர்த்தாவே, நீர் தாழ்மையுள்ளோருக்கு*
*உதவுகிறீர். அகந்தையுள்ளோரைத் தாழ்த்து*
*வீர்*
28*கர்த்தாவே, என் விளக்கை ஏற்றுகிறீர்.*
*என் தேவனுடைய வெளிச்சம் என்னைச்*
*சூழ்ந்த இருளை போக்குகிறது!*
29*கர்த்தாவே, உமது உதவியால், நான்*
*வீரரோடு ஓடுவேன். தேவனுடைய உதவி*
*யால், பகைவரின் சுவர்களில் ஏறுவேன்.*
30*தேவனுடைய வல்லமை முழுமையா*
*னது. கர்த்தருடைய வார்த்தைகள் புடமிடப்*
*பட்டிருக்கிறது. அவரை நம்பும் ஜனங்களை*
*அவர் பாதுகாக்கிறார்.*
31*கர்த்தரைத் தவிர தேவன் எவருமில்லை.*
*நமது தேவனைத் தவிர வேறு பாறை*
*இல்லை.*
32*தேவன் எனக்குப் பெலன் தந்து தூய*
*வாழ்க்கை வாழ உதவுவார்.*
33*மானைப்போல ஓடுவதற்குத் தேவன்*
*உதவுகிறார். உயர்ந்த இடங்களில் என்னை*
*உறுதியாக நிலை நிறுத்துகிறார்.*
34*தேவன் என்னை யுத்தங்களுக்குப் பழக்கு*
*கிறார் எனவே எனது கரங்கள் வலிய*
*வில்லை வளைக்கும்.*
35*தேவனே, நீர் என்னைப் பாதுகாத்து*
*வெற்றியடையச் செய்தீர். உமது வலது*
*கரத்தால் என்னைத் தாங்கினீர். என் சத்து*
*ருக்களை நான் வெல்ல உதவி செய்தீர்.*
36*நான் தடுமாறாமல் விரைந்து நடக்*
*கும்படிக்கு உதவி செய்தீர். எனது கால்*
*களையும், மூட்டுக்களையும் பலப்படுத்தினீர்.*
37*நான் என் பகைவர்களைத் துரத்திப்*
*பிடிக்கமுடியும். அவர்கள் அழியும் வரை*
*நான் திரும்பேன்.*
38*எனது பகைவரைத் தோற்கடிப்பேன்.*
*அவர்கள் மீண்டும் எழுந்திரார்கள். என்*
*பகைவர்கள் என் பாதங்களுக்குக் கீழி*
*ருப்பார்கள்.*

39*தேவனே, என்னை யுத்தங்களில் பல*
*வான் ஆக்கினீர். என் பகைவர்கள் என்*
*முன்னே விழும்படி செய்தீர்.*
40*என் பகைவரின் கழுத்தை முறிக்கப்*
*பண்ணி, அவர்களை அழிக்கச் செய்தீர்.*
41*என் பகைவர்கள் உதவி வேண்டி*
*னார்கள். அவர்களைக் காப்பவர் எவரு*
*மில்லை. கர்த்தரை நோக்கி முறையிட்டனர்,*
*அவர் பதிலளிக்கவில்லை.*
42*நான் என் பகைவரைத் துண்டிப்பேன்.*
*அவர்கள் காற்றில் பறக்கும் தூளைப்போலா*
*வார்கள். அவர்களைத் துண்டாக நசுக்கு*
*வேன்.*
43*என்னிடம் போர் செய்கிற ஜனங்களிட*
*மிருந்து என்னைக் காப்பாற்றும். என்னை*
*அத்தேசங்களின் தலைவனாக்கும். எனக்குத்*
*தெரியாத ஜனங்களும் என்னைச் சேவிப்பார்*
*கள்.*
44*அந்த ஜனங்கள் என்னைக் குறித்துக்*
*கேள்விப்படுவார்கள். எனக்கு உடனே கீழ்ப்*
*படிவார்கள். அந்த அயலார்கள் என்னைக்*
*கண்டு அஞ்சுவார்கள். அந்த அயலார்*
*நடுங்கி வீழ்வார்கள்.*
45*அவர்கள் தைரியமிழந்து தங்கள் மறை*
*விடங்களிலிருந்து நடுங்கிக்கொண்டே வெளி*
*வருவார்கள்.*

46கர்த்தர் உயிரோடிருக்கிறார்! நான் என்
பாறையை (தேவனை) துதிப்பேன்! தேவன்
என்னைக் காப்பாற்றுகிறார். அவர் மேன்
மையானவர்.
47தேவன் எனக்காக என் பகைவர்களைத்
தண்டித்தார். என் கட்டுப்பாட்டின் கீழ்
ஜனங்களைக் கொண்டு வந்தார்.
48கர்த்தாவே, நீர் என் பகைவரிடமிருந்து
என்னைக் காப்பாற்றினீர். எனக்கு எதிரான
ஜனங்களைத் தோற்கடிக்க உதவினீர். கொடி
யோரிடமிருந்து என்னை மீட்டீர்.
49கர்த்தாவே, தேசங்களுக்கு முன்பாக
உம்மைத் துதிப்பேன். உமது நாமத்தைக்
குறித்துப் பாடல்கள் இசைப்பேன்.
50தான் ஏற்படுத்தின அரசன் யுத்தங்கள்
பலவற்றில் வெல்ல கர்த்தர் உதவுகிறார்!
தான் தேர்ந்தெடுத்த அரசனுக்குத் தன்
உண்மையான அன்பை உணர்த்துகிறார்.
அவர் தாவீதுக்கும் அவன் சந்ததியினருக்கும்
என்றென்றும் உண்மையுள்ளவராக இருக்
கிறார்.

## சங்கீதம் 19

**இசைத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.**

1வானங்கள் தேவனுடைய மகிமையைக்
கூறுகின்றன. தேவனுடைய கரங்கள் செய்த
நல்ல பொருள்களை ஆகாயங்கள் அறி
விக்கின்றன.
2ஒவ்வொரு புதுநாளும் அந்தக் கதையை
மேலும் கூறும். ஒவ்வொரு இரவும் தேவனு
டைய வல்லமையை மேலும் மேலும்
உணர்த்தும்.
3உண்மையில் பேச்சையோ, வார்த்தை
யையோ கேட்கமுடியாது. நாம் கேட்க வல்ல
சத்தத்தை அவை எழுப்புவதில்லை.
4ஆனால் அவற்றின் "குரல்" உலகமெங்கும்
செல்கிறது. அவற்றின் "வார்த்தைகள்" பூமி
யின் இறுதியை எட்டுகின்றன. ஆகாயம்
சூரியனின் வீட்டைப் போன்றிருக்கும்.
5படுக்கையறையிலிருந்து வெளிவரும்
மகிழ்ச்சியான மணமகனைப்போல் சூரியன்
வெளிப்படும். பந்தயத்திற்கு ஆசையாய் காத்
திருக்கும் ஓட்ட வீரனைப்போல் சூரியன்
வானத்தின் குறுக்கே தன் வழியில் செல்லும்.
6ஆகாயத்தின் ஒரு முனையில் தொடங்கி
அதன் மறுமுனை வரைக்கும் சூரியன்
எங்கும் ஓடும். அதன் வெப்பத்திற்கு எதுவும்
தப்ப இயலாது. கர்த்தருடைய போதனைக
ளும் அப்படிப்பட்டவையே.
7கர்த்தருடைய போதனைகள் குறையற்
றவை. அவை தேவனுடைய ஜனங்களுக்குப்
பெலனைக் (ஆற்றலை) கொடுக்கும். கர்த்தரு
டைய உடன்படிக்கை நம்பத்தக்கது. அறிவற்
றோர் ஞானமடைவதற்கு அது உதவும்.
8கர்த்தருடைய சட்டங்கள் நியாயமா
னவை. அவை ஜனங்களைச் சந்தோஷப்படுத்
தும். கர்த்தருடைய கட்டளைகள் நல்லவை.
வாழத்தக்க வழியை அவை ஜனங்களுக்குக்
காட்டும்.
9கர்த்தரைத் தொழுதுகொள்வது எப்போ
தும் வெளிச்சமாய் பிரகாசிக்கிற ஒளி
போன்றது. கர்த்தருடைய நியாயத்தீர்ப்புகள்
நல்லவை, செம்மையானவை. அவை முற்றி
லும் சரியானவை.
10கர்த்தருடைய போதனைகள் சுத்தமான
பொன்னைக்காட்டிலும் பெருமதிப்புடை
யவை. தேனடையிலிருந்து வரும் உயர்ந்த
தேனைக் காட்டிலும் அவை இனிமையா
னவை.
11கர்த்தருடைய போதனைகள் அவர்
வேலையாளை எச்சரிக்கின்றன. அவருக்குக்
கீழ்ப்படிவதால் நல்லவை நிகழும்.
12கர்த்தாவே, ஒருவனும் தன் எல்லா
பிழைகளையும் காணமுடியாது. எனவே
மறைவான பாவங்கள் நான் செய்யாதிருக்க
உதவும்.
13கர்த்தாவே, நான் செய்ய விரும்பும்
பாவங்களிலிருந்து என்னை விலக்கும். அப்
பாவங்கள் என்னை ஆள அனுமதியாதிரும்.
நீர் உதவினால் நான் பாவங்களிலிருந்து
விலகி தூயவனாய் இருக்க முடியும்.
14என் வார்த்தைகளும் எண்ணங்களும்
உமக்கு ஏற்றதாய் இருக்கட்டும். கர்த்தாவே,
நீர் என் பாறை. நீரே என்னை விடு
விப்பவர்.

## சங்கீதம் 20

**இசைத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.**

1தொல்லைகள் சூழ்ந்திருக்கையில் நீ
கர்த்தரை நோக்கிக் கூப்பிடும்போது கர்த்தர்
பதிலளிக்கட்டும். யாக்கோபின் தேவன் உன்
பெயரை முக்கியமாக்கட்டும்.
2அவரது பரிசுத்த இடத்திலிருந்து தேவன்
உதவி அனுப்பட்டும். சீயோனிலிருந்து அவர்
உனக்குத் துணை நிற்கட்டும்.
3நீ அளித்த அன்பளிப்புகளை தேவன்
நினைவுகூரட்டும். உன் பலிகளையெல்லாம்
அவர் ஏற்றுக் கொள்ளட்டும்.
4தேவன் உனக்குத் தேவையான எல்லா
வற்றையும் தருவார் என நம்புகிறேன்.
உன் எல்லாத் திட்டங்களையும் நிறை
வேற்றுவார் என நம்புகிறேன்.
5தேவன் உனக்கு உதவும்போது நாம்
மகிழ்வடைவோம். நாம் தேவனுடைய
நாமத்தைத் துதிப்போம். நீ கேட்பவற்றை
யெல்லாம் கர்த்தர் தருவார் என்று நான்
நம்புகிறேன்.
6கர்த்தர் தான் தேர்ந்தெடுத்த அரசனுக்கு
உதவுகிறார் என இப்போது அறிகிறேன்.
தேவன் அவரது பரிசுத்த பரலோகத்தில்
இருந்தார். அவர் தேர்ந்தெடுத்த அரசனுக்குப்
பதில் தந்தார். அவனைப் பாதுகாக்க தேவன்
தன் உயர்ந்த வல்லமையைப் பயன்படுத்தி
னார்.

7சிலர் தங்கள் இரதங்களை நம்புகின்றனர்.
மற்றோர் தங்கள் வீரர்களை நம்புகின்றனர்.
ஆனால் நாங்களோ எங்கள் தேவனாகிய
கர்த்தரை நினைக்கின்றோம். அவரின் நாமத்
தைச் சொல்லிக் கூப்பிடுவோம்.
8அவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். அவர்
கள் யுத்தத்தில் மடிந்தனர். ஆனால் நாங்கள்
வென்றோம்! நாங்கள் வெற்றிபெற்றவர்கள்.
9கர்த்தர் தாம் தேர்ந்தெடுத்த அரசனை
மீட்டார்! தேவன் தேர்ந்தெடுத்த அரசன் உதவி
வேண்டினான். தேவன் பதில் தந்தார்!

## சங்கீதம் 21

***இசைத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.***

1கர்த்தாவே, உமது பெலன் அரசனை
மகிழ்விக்கிறது. நீர் அவனை மீட்கும்போது
அவன் மிகவும் சந்தோஷமடைகிறான்.
2நீர் அரசனுக்கு வேண்டியவற்றைக்
கொடுத்தீர். அரசன் சிலவற்றைக் கேட்டான்.
கர்த்தாவே, அவன் கேட்டவற்றை நீர்
கொடுத்தீர்.
3கர்த்தாவே, நீர் உண்மையாகவே அர
சனை ஆசீர்வதித்தீர். அவன் தலையில்
பொற்கிரீடத்தைச் சூட்டினீர்.
4தேவனே அரசன் உம்மிடம், ஆயுளைக்
கேட்டான். நீர் அதை அவனுக்குக் கொடுத்
தீர். நீர் அவனுக்கு என்றென்றும் நிலைத்துத்
தொடரும் நீண்ட ஆயுளைக் கொடுத்தீர்.
5வெற்றிக்கு நேராக நீர் அரசனை வழி
நடத்தினீர். அவனுக்குப் பெரும் மேன்மை
யைத் தந்தீர். அவனுக்குப் பெருமையையும்,
புகழையும் தந்தீர்.
6தேவனே, நீர் உண்மையாகவே என்
றென்றைக்கும் தேர்ந்தெடுத்த அரசனை ஆசீர்
வதித்தீர். உமது உயர்ந்த வல்லமையை
உபயோகித்து அரசனைப் பாதுகாத்தீர்.
அரசன் உம் முகத்தைப் பார்க்கும்போது
அது அவனை மகிழச் செய்யும்.
7அரசன் கர்த்தரை நம்புகிறான். உன்னத
மான தேவனாகிய நீர் அவனை ஏமாற்ற
மாட்டீர்.
8தேவனே, உமது பகைவர்க்கு உம்
பெலனை உணர்த்துவீர். உம்மைப் பகைக்
கிற அந்த ஜனங்களை உமது வல்லமை
வெல்லும்.
9கர்த்தாவே, நீர் அரசனோடு இருக்கும்
போது, அவர் எல்லாவற்றையும் கொளுத்தி
விடும் உலையைப் போல் இருப்பார். அவர்
தன் பகைவர்களை அழிப்பார்.
10அவரது பகைவர்களின் குடும்பங்கள்
அழிக்கப்படும். அவர்கள் பூமியிலிருந்து
அகற்றப்படுவார்கள்.
11ஏனெனில் கர்த்தாவே, அந்த ஜனங்கள்
தீயவற்றை உமக்கெதிராய் திட்டமிட்டார்
கள். அவர்கள் தீயன செய்யத் திட்டமிட்டும்
வெற்றி பெறவில்லை.
12கர்த்தாவே, அந்த ஜனங்களை அடிமை
களைப் போலாக்கினீர். நீர் அவர்களைக்
கயிறுகளால் கட்டினீர். அவர்களின் கழுத்
துக்களைச் சுற்றி கயிறுகளால் வளைத்தீர்.
அடிமைகளைப் போல் உம்மைக் குனிந்து
வணங்கச் செய்தீர்.
13கர்த்தாவே, உமது மகத்துவத்தில் நீர்
உயர்ந்திரும். கர்த்தருடைய மேன்மையைப்
பாடல்களால் பாடி இசைப்போம்!

## சங்கீதம் 22

***“உதயத்தின் மான்” என்னும் இராகத்தில் இசைப்பதற்கு இசைத் தலைவனுக்குத் தாவீது தந்த பாடல்.***

1என் தேவனே, என் தேவனே! ஏன்
என்னைக் கைவிட்டீர்? என்னை மீட்பதற்கு
இயலாதபடி வெகு தூரத்திற்குச் சென்றீர்!
உதவிவேண்டிக் கதறும் என் குரலைக்
கேளாதபடி வெகு தூரத்தில் இருக்கிறீர்!
2என் தேவனே, பகல் பொழுதில் உம்
மைக் கூப்பிட்டேன். நீர் எனக்குப் பதில்
தரவில்லை. இரவிலும் தொடர்ந்து உம்மைக்
கூப்பிட்டேன்.
3தேவனே, நீர் பரிசுத்தர். நீர் அரசனைப்
போல் அமர்கிறீர். கர்த்தாவே, உமது
சிங்காசனம் இஸ்ரவேலின் துதிகளின் மத்தி
யில் உள்ளது.
4எங்கள் முற்பிதாக்கள் உம்மை நம்பினார்
கள். ஆம் தேவனே, அவர்கள் உம்மை
நம்பினார்கள். நீர் அவர்களை மீட்டீர்.
5தேவனே, எங்கள் முற்பிதாக்கள் உதவிக்
காய் உம்மை அழைத்தனர். அவர்கள்
பகைவர்களிடமிருந்து தப்பித்தனர். அவர்கள்
உம்மை நம்பினார்கள். அவர்கள் ஏமாந்து
போகவில்லை.
6நான் மனிதனன்றி, புழுவா? ஜனங்கள்
என்னைக் கண்டு வெட்கினார்கள். ஜனங்கள்
என்னைப் பழித்தனர்.
7என்னைப் பார்ப்போர் பரிகாசம் செய்த
னர். அவர்கள் தலையை அசைத்து,
உதட்டைப் பிதுக்கினர்.
8அவர்கள் என்னை நோக்கி, “நீ கர்த்த
ரிடம் உதவி கேள். அவர் உன்னை
மீட்கக்கூடும். உன்னை அவர் மிகவும்
நேசித்தால், அவர் உன்னை நிச்சயம் காப்
பாற்றுவார்!” என்றார்கள்.
9தேவனே, நான் உம்மை முற்றிலும்
சார்ந்திருக்கிறேன் என்பதே உண்மை. நான்
பிறந்த நாளிலிருந்தே என்னைக் காப்பாற்றி
வருகிறீர். என் தாயிடம் பால் பருகும்
காலத்திலிருந்தே நீர் உறுதியான நம்பி
க்கையை தந்து எனக்கு ஆறுதல் அளித்தீர்.
10நான் பிறந்த நாளிலிருந்தே நீரே என்
தேவன். என் தாயின் உடலிருந்து வெளி
வந்தது முதல் உமது பாதுகாப்பில் நான்
வாழ்கிறேன்.

11எனவே, தேவனே, என்னை விட்டு
நீங்காதிரும்! தொல்லை அருகே உள்ளது,
எனக்கு உதவுவார் எவருமில்லை.
12ஜனங்கள் என்னைச் சூழ்ந்துள்ளனர்.
முரட்டுக் காளைகள்போல் என்னைச் சுற்றி
லும் இருக்கின்றனர்.
13கெர்ச்சித்துக்கொண்டு விலங்கைக் கிழித்
துண்ணும்சிங்கத்தைப்போல்அவர்கள் வாய்
கள் திறந்திருக்கின்றன.
14நிலத்தில் ஊற்றப்பட்ட நீரைப்போன்று
என் வலிமை அகன்றது. என் எலும்புகள்
பிரிக்கப்பட்டிருந்தன. என் தைரியம்
மறைந்தது.
15உடைந்த மண்பாண்டத்தின் துண்டைப்
போன்று என் வாய் உலர்ந்து போயிற்று.
என் வாயின் மேலண்ணத்தில் என் நாவு
ஒட்டிக்கொண்டது. “மரணத் தூளில்” நீர்
என்னைப் போட்டீர்.
16“நாய்கள்” என்னைச் சூழ்ந்திருக்கின்றன.
தீயோர் கூட்டத்தின் கண்ணியில் விழுந்
தேன். சிங்கத்தைப்போன்று என் கைகளை
யும் கால்களையும் அவர்கள் கிழித்தெறிந்
தார்கள்.*
17என் எலும்புகளை நான் காண்கிறேன்.
ஜனங்கள் என்னை முறைத்தனர்! அவர்கள்
என்னைக் கவனித்துக் கொண்டேயிருக்கி
றார்கள்.!
18அந்த ஜனங்கள் என் ஆடைகளைத்
தங்களுக்குள் பகிர்ந்து கொள்கிறார்கள். என்
அங்கியின்பொருட்டு சீட்டெழுதிப் போடு
கின்றார்கள்.
19கர்த்தாவே, என்னை விட்டு விலகாதே
யும். நீரே என் வலிமை. விரைந்து
எனக்கு உதவும்!
20கர்த்தாவே, என் உயிரை வாளுக்குத்
தப்புவியும். அந்த நாய்களிடமிருந்து என்
அருமையான உயிரை மீட்டருளும்.
21சிங்கத்தின் வாயிலிருந்து என்னை விடு
வியும். காளையின் கொம்புகளுக்கு என்
னைத் தப்புவியும்.
22கர்த்தாவே, என் சகோதரர்களுக்கு உம்
மைப்பற்றிச் சொல்லுவேன். பெரும்
சபைகளில் நான் உம்மைத் துதிப்பேன்.
23கர்த்தரைத் துதியுங்கள். ஜனங்களே!
அவரைத் தொழுதுகொள்ளுங்கள் இஸ்ரவே
லின் சந்ததியினரே, கர்த்தரை மகிமைப்
படுத்துங்கள். இஸ்ரவேலின் எல்லா ஜனங்
களே, கர்த்தருக்குப் பயந்து அவரை மதி
யுங்கள்.
24தொல்லைகளில் உழலும் ஏழைகளுக்கு
கர்த்தர் உதவுகிறார். கர்த்தர் அவர்களைக்
குறித்து வெட்கப்படுவதில்லை. கர்த்தர்
அவர்களை வெறுப்பதில்லை. கர்த்தரிடம்
ஜனங்கள் உதவி கேட்கையில் அவர்களைக்
கண்டு அவர் ஒளிப்பதில்லை.
25கர்த்தாவே, மகாசபையில் எனது
வாழ்த்துதல்கள் உம்மிடமிருந்தே வருகின்
றன. உம்மைத் தொழுதுகொள்வோர் முன்
பாக, நான் உமக்குச் சொன்ன வாக்குறு
தியான பலிகளைச் செலுத்துவேன்.
26ஏழைகள் உண்டு திருப்தியுறுவார்கள்.
கர்த்தரைத் தேடிவரும் ஜனங்களே, அவரைத்
துதியுங்கள். உங்கள் இருதயம் என்றென்றும்
மகிழ்வதாக!*
27தூரத்து நாடுகளின் ஜனங்கள் கர்த்தரை
நினைத்து அவரிடம் மீண்டும் வரட்டும்.
எல்லா அயல் நாடுகளின் ஜனங்களும்
கர்த்தரைத் தொழுதுகொள்ளட்டும்.
28ஏனெனில் கர்த்தரே அரசர். அவர்
எல்லா தேசங்களையும் ஆளுகிறார்.
29பெலமுள்ள, ஆரோக்கியமான ஜனங்கள்
உண்டு, தேவனுக்குமுன் வணங்கியிருக்கி
றார்கள். எல்லா ஜனங்களும், ஏற்கனவே
இறந்தவரும், மரிக்கப் போவோரும் தேவ
னுக்கு முன்பாக நாம் ஒவ்வொருவரும்
குனிந்து வணங்குவோம்.
30வருங்காலத்தில், நம் சந்ததியினர் கர்த்த
ருக்குச் சேவை செய்வார்கள். என்றென்றும்
ஜனங்கள் அவரைக் குறித்துச் சொல்வார்கள்.
31பிறக்கவிருக்கும் பிள்ளைகளுக்கு அவர்
கள் தேவனுடைய நன்மையைச் சொல்வார்
கள். தேவன் உண்மையாகச் செய்த நல்ல
காரியங்களை அவர்கள் சொல்வார்கள்.*

## சங்கீதம் 23

**தாவீதின் பாடல்.**

1கர்த்தர் என் மேய்ப்பர். எனக்குத்
தேவையானவை எப்போதும் என்னிடமி
ருக்கும்.
2அவர் பசுமையான புல்வெளிகளில்
என்னை இளைப்பாறச் செய்கிறார். குளிர்ந்த
நீரோடைகளருகே அவர் என்னை
வழிநடத்துகிறார்.
3அவர் நாமத்தின் நன்மைக்கேற்ப, என்
ஆத்துமாவிற்குப் புது வலிமையைத் தருகி
றார். அவர் நல்லவரெனக் காட்டும்படி,
நன்மையின் பாதைகளில் என்னை நடத்து
கிறார்.
4மரணத்தின் இருண்ட பள்ளத்தாக்குகளில்
நான் நடந்தாலும் எந்தத் தீமைக்கும் பயப்
படமாட்டேன். ஏனெனில் கர்த்தாவே, நீர்
என்னோடிருக்கிறீர். உமது கோலும் தடியும்
எனக்கு ஆறுதல் நல்கும்.

---

**சிங்கத்தை ... கிழித்தெறிந்தார்கள்** கிரேக்க மொழி பெயர்ப்பில் “அவர்கள் எனது கைகளையும் கால்களையும் கிழித்தெறிந்தார்கள்” என்றுள்ளது. மிகச்சின்ன மாற்றத்துடன் (ஒருஎவுத்தை நீட்டி) எபிரெய மொழி பெயர்ப்பில், “சிங்கத்தைப் போன்று அவர்கள் கிழித்தனர்” என்றுள்ளது.

**மகிழ்வதாக** எழுத்தின் பிரகாரமாக “வாழு”

**பிறக்கவிருக்கும் ... சொல்வார்கள்** ஒவ்வொரு சந்ததினரும் தேவன் செய்த மகத்தான காரியங்களை தங்கள் பிள்ளைகளுக்கு சொல்லுவார்கள்.

5கர்த்தாவே, என் பகைவர்களின் முன்னி
லையில் என் பந்தியை ஆயத்தமாக்கினீர்.
என் தலையில் எண்ணெயை ஊற்றினீர்.
என் பாத்திரம் நிரம்பி வழிகிறது.
6என் ஆயுள் முழுவதும் உமது நன்மையும்
இரக்கமும் என்னோடிருக்கும். நித்திய கால
மாக நான் கர்த்தருடைய ஆலயத்தில் அமர்ந்
திருப்பேன்.

## சங்கீதம் 24

### தாவீதின் பாடல்.

1பூமியும் அதிலுள்ள எல்லாப் பொருள்க
ளும் கர்த்தருடையவை. உலகமும் அதன்
ஜனங்களும் அவருக்கே உரிமையாம்.
2கர்த்தர் பூமியை தண்ணீரின் மேல்
உண்டாக்கினார். ஆறுகளின் மீது அதை
உண்டாக்கினார்.
3கர்த்தருடைய மலைகளின் மேல் யார்
ஏறக்கூடும்? கர்த்தருடைய பரிசுத்த ஆலயத்
தில் யார் நிற்கக்கூடும்? யார் அங்கு
வழிபட முடியும்?
4தீயவை செய்யாத ஜனங்களும் பரிசுத்த
இருதயம் உடையோரும் பொய்யை உண்
மையெனக் கூறுவதற்கு என் பெயரைப்*
பயன்படுத்தாதோரும் பொய்யும் பொய்யான
வாக்குறுதிகளும் அளிக்காதோரும் மட்டுமே
அங்கு தொழுதுகொள்ள முடியும்
5நல்ல ஜனங்கள் கர்த்தரிடம் மற்ற ஜனங்
களை ஆசீர்வதிக்கச் சொல்வார்கள். அந்த
நல்ல ஜனங்கள் தங்கள் இரட்சகராகிய
தேவனை நல்லக் காரியங்களைச் செய்யச்
சொல்வார்கள்.
6அந்த நல்லோர் தேவனைப் பின்பற்ற
முயல்வார்கள். யாக்கோபின் தேவனிடம்
உதவி வேண்டி அவர்கள் செல்வார்கள்.
7வாசல்களே, உங்கள் தலைகளை உயர்த்
துங்கள்! பழமையான கதவுகளே! திறவுங்
கள்! மகிமை வாய்ந்த அரசர் உள்ளே
வருவார்.
8யார் இந்த மகிமை மிக்க அரசர்?
கர்த்தரே அந்த அரசர். அவரே வல்லமை
யுள்ள வீரர். கர்த்தரே அந்த அரசர்.
அவரே போரின் நாயகன்.
9வாசல்களே, உங்கள் தலைகளை உயர்த்
துங்கள்! பழமையான கதவுகளே, திறவுங்
கள்! மகிமை மிக்க அரசர் உள்ளே வரு
வார்.
10யார் அந்த மகிமை மிக்க அரசர்? சர்வ
வல்லமையுள்ள கர்த்தரே அந்த அரசர்.
அவரே மகிமை மிக்க அரசர்.

## சங்கீதம் 25

### தாவீதின் பாடல்

1கர்த்தாவே, நான் என்னை உமக்கு
அளிக்கிறேன்.
2என் தேவனே, நான் உம்மை நம்புகி
றேன். நான் வெட்கப்பட்டுப் போக மாட்
டேன். என் பகைவர்கள் என்னைக் கண்டு
நகைப்பதில்லை.
3ஒருவன் உம்மை நம்பினால் அவன்
வெட்கப்பட்டுப் போக மாட்டான். ஆனால்
வஞ்சகர் ஏமாந்து போவார்கள். அவர்க
ளுக்கு எதுவும் கிடைப்பதில்லை.
4கர்த்தாவே, உமது வழிகளைக் கற்றுக்
கொள்ள உதவும். உமது வழிகளை எனக்குப்
போதியும்.
5எனக்கு வழிகாட்டி உமது உண்மை
களைப் போதியும். நீரே என் தேவன்,
என் மீட்பர். அனுதினமும் நான் உம்மை
நம்புகிறேன்.
6கர்த்தாவே, என்னிடம் தயவாயிருக்க
நினைவுகூரும். எப்போதுமுள்ள உமது மென்
மையான அன்பை எனக்குக் காட்டும்.
7எனது பாவங்களையும் என் சிறுவய
தின் தீய செயல்களையும் நினைவில் கொள்
ளாதேயும். கர்த்தாவே, உமது நல்ல நாமத்
திற்கேற்ப, என்னை அன்பிலே நினைத்தரு
ளும்.
8கர்த்தர் உண்மையாகவே நல்லவர். பாவி
களுக்கு வாழ்வதற்குரிய வழியை அவர்
போதிக்கிறார்.
9தாழ்மைப்பட்டவர்களுக்கு அவர் தம்
வழியைப் போதிக்கிறார். அவர் அந்த
ஜனங்களை நியாயமாக நடத்துகிறார்.
10அவரது உடன்படிக்கையையும், வாக்கு
றுதிகளையும்* பின்பற்றும் ஜனங்களுக்குக்
கர்த்தர் தயவுள்ளவரும், உண்மையுமானவர்.
11கர்த்தாவே, நான் பிழையான காரியங்
கள் பலவற்றைச் செய்தேன். ஆனால் உம்
நன்மை வெளிப்படும் பொருட்டு நான்
செய்தவற்றையெல்லாம் மன்னித்தீர்.
12கர்த்தரைப் பின்பற்றுவதை ஒருவன்
தெரிந்துகொண்டால் அவன் வாழ்வதற்குரிய
நல் வழியை தேவன் காட்டுவார்.
13அம்மனிதன் நல்லவற்றை அனுபவிப்
பான். தேவன் வாக்களித்த தேசத்தை அவன்
பிள்ளைகள் பெறுவார்கள்.
14தன்னைப் பின்பற்றுவோருக்குக் கர்த்தர்
தன் இரகசியங்களைச் சொல்வார். அவரைப்
பின்பற்றுவோருக்குத் தமது உடன்படிக்கை
யைக் கற்பிக்கிறார்.
15உதவிக்காக நான் எப்போதும் கர்த்தரை
நோக்கியிருக்கிறேன். தொல்லைகளிலிருந்து

---

**என் பெயர்** எழுத்தின் பிரகாரமாக “என் ஆத்துமா” எனப் பொருள்படும்.

**உடன்படிக்கையின் வாக்குறுதி** இதன் உண்மையான அர்த்தம் மோசேயின் சட்டமாகும், அதாவது இஸ்ரவேல் ஜனங்களோடு தேவன் செய்துகொண்ட உடன்படிக்கையாகும்.

அவர் எப்போதும் முடிவு உண்டாக்கு
கிறார்.*
16கர்த்தாவே, நான் காயமுற்றுத் தனித்தி
ருக்கிறேன். என்னிடம் திரும்பி எனக்கு
இரக்கத்தைக் காட்டும்.
17என் தொல்லைகளிலிருந்து என்னை
விடுவியும். என் சிக்கல்களைத் தீர்க்க
எனக்கு உதவும்.
18கர்த்தாவே, என் தொல்லைகளையும்,
துன்பத்தையும் பாரும். நான் செய்த பாவங்க
ளையெல்லாம் மன்னியும்.
19என் பகைவர்களையெல்லாம் பாரும்.
அவர்கள் என்னைப் பகைத்துத் தாக்க
விரும்புகிறார்கள்.
20தேவனே, என்னைப் பாதுகாத்து மீட்ட
ருளும். நான் உம்மை நம்புகிறேன், என்னை
ஏமாற்றமடையச் செய்யாதேயும்.
21தேவனே, நீர் உண்மையாகவே நல்லவர்.
நான் உம்மை நம்புவதால் என்னைப் பாது
காத்தருளும்.
22தேவனே, இஸ்ரவேல் ஜனங்களை அவர்
களது பகைவர்கள் எல்லோரிடமிருந்தும்
மீட்டுக்கொள்ளும்.

## சங்கீதம் 26
### தாவீதின் பாடல்.

1கர்த்தாவே, என்னை நியாயந்தீரும். நான்
தூய வாழ்க்கை வாழ்ந்ததை நிரூபியும்.
கர்த்தரை நம்புவதை என்றும் நான்
நிறுத்தியதில்லை.
2கர்த்தாவே, என்னை சோதித்துப்பாரும்.
என் இருதயத்தையும், மனதையும் கவன
மாகப் பாரும்.
3நான் எப்போதும் உமது மென்மையான
அன்பைக் காண்கிறேன். உமது உண்மை
களால் நான் வாழ்கிறேன்.
4நான் பொய்யரோடும் மோசடிக்கார
ரோடும் ஒருபோதும் சேர்ந்ததில்லை. அவ்
வகையான பயனற்ற ஜனங்களோடு ஒரு
போதும் சேர்ந்ததில்லை.
5அத்தீய கூட்டத்தாரை நான் வெறுக்கி
றேன். தீங்கு செய்யும் அக்கூட்டத்தாரோடு
நான் சேரமாட்டேன்.
6கர்த்தாவே, நான் தூய்மையானவன்
என்று காண்பிக்க என் கைகளைக் கழுவிக்
கொண்டு உமது பலிபீடத்திற்கு வருகிறேன்.*
7கர்த்தாவே, உம்மைத் துதித்துப் பாடல்
களைப் பாடுகிறேன். நீர் செய்த அற்புதமான
காரியங்களைப்பற்றிப் பாடுகிறேன்.
8கர்த்தாவே, உமது ஆலயத்தை* நேசிக்கி
றேன். மகிமைபொருந்திய உமது கூடாரத்தை
நேசிக்கிறேன்.
9கர்த்தாவே, அந்தப் பாவிகளோடு என்
னைச் சேர்க்காதேயும். அக்கொலைகாரர்க
ளோடு என்னைக் கொல்லாதேயும்.
10அந்த ஜனங்கள் பிறரை ஏமாற்றக்கூடும்.
தீமை செய்வதற்கு அவர்கள் பணம் பெறக்
கூடும்.
11ஆனால் நான் களங்கமற்றவன். எனவே,
தேவனே, என்னிடம் தயவாயிருந்து
என்னை மீட்டுக்கொள்ளும்.
12நேர்மையான வழியில் நான் தொடர்கி
றேன். கர்த்தாவே, உம்மைப் பின்பற்றுவோர்
சந்திக்கையில் நான் உம்மைத் துதிக்கிறேன்.

## சங்கீதம் 27
### தாவீதின் பாடல்

1கர்த்தாவே, நீரே என் ஒளியும் இரட்சக
ருமானவர். யாருக்கும் நான் பயப்பட
மாட்டேன்! கர்த்தர் என் வாழ்க்கையின்
பாதுகாப்பானவர். எந்த மனிதனுக்கும் நான்
அஞ்சேன்.
2தீய ஜனங்கள் என்னைத் தாக்கக்கூடும்.
என்னைத் தாக்கி என் சரீரத்தை அழிக்க
என் பகைவர்கள் முயலக்கூடும்.
3ஒரு படையே என்னைச் சூழ்ந்தாலும்
நான் அஞ்சமாட்டேன். போரில் ஜனங்கள்
என்னைத் தாக்கினாலும் நான் பயப்படேன்.
ஏனெனில் நான் கர்த்தரை நம்புகிறேன்.
4எனக்குத் தருமாறு ஒன்றையே நான்
கர்த்தரிடம் ிகேட்பேன். இதுவே என்
கோரிக்கை: "என் வாழ்க்கை முழுவதும்
கர்த்தருடைய ஆலயத்தில் தங்கி கர்த்த
ருடைய அழகைக் கண்டு அவர் அரண்
மனையைத் தரிசிக்க அனுமதியும்."
5ஆபத்தில் நான் இருக்கையில் கர்த்தர்
என்னைக் காப்பார். அவரது கூடாரத்தில்
என்னை ஒளித்து வைப்பார். அவரது
பாதுகாப்பிடம்வரைக்கும் என்னை அழைத்
துச்செல்வார்.
6என் பகைவர்கள் என்னைச் சூழ்ந்துள்ள
னர். அவர்களைத் தோற்கடிக்கக் கர்த்தர்
எனக்கு உதவுவார். அப்போது அவரது
கூடாரத்தில் பலிகளைச் செலுத்துவேன்.
மகிழ்ச்சி ஆரவாரத்தோடு என் பலிகளை
அளிப்பேன். கர்த்தரை, மகிமைப்படுத்தும்
பாடல்களை இசைத்துப் பாடுவேன்.
7கர்த்தாவே, என் குரலைக் கேட்டு
எனக்குப் பதில் தாரும், என்னிடம் தயவாயி
ரும்.
8கர்த்தாவே, உம்மோடு பேச விரும்புகி
றேன். என் இருதயத்திலிருந்து உம்மிடம்

---

**தொல்லைகளில் ... உண்டாக்குகிறார்** அவர் என் கால்களை வலையிலிருந்து விடுவிக்கிறார்.

**உமது ... வருகிறேன்** அல்லது "ஆகையால் நான் உமது பலிபீடத்தைச் சுற்றி வருகின்றேன்" இதற்கு உண்மையான அர்த்தம், பாடலைப் பாடுகின்ற ஆள் ஆசாரியார் அல்லது ஒரு லேவியன் ஆலயத்தில் சேவை செய்ய தன்னைத் தயார்படுத்திக் கொண்டிருக்கிறான்.

**ஆலயம்** எருசலேமில் உள்ள யூதர்களின் வழிபாட்டுக்குரிய சிறப்பான கட்டிடம்.

பேச வாஞ்சிக்கிறேன். கர்த்தாவே, உம்மிடம்
பேசுவதற்காக உமக்கு முன்பாக வருகிறேன்.
9கர்த்தாவே, என்னிடமிருந்து விலகா
தேயும்! உமது ஊழியனாகிய என்னிடம்
கோபங்கொண்டு, என்னைவிட்டு விலகா
தேயும்! எனக்கு உதவும்! என்னைத் தூரத்
தள்ளாதிரும். என்னை விட்டு விடாதிரும்!
என் தேவனே, நீரே என் இரட்சகர்!
10என் தந்தையும் தாயும் என்னை கை
விட்டனர். ஆனால் கர்த்தர் என்னை எடுத்து
தமக்குரியவன் ஆக்கினார்.
11கர்த்தாவே, எனக்குப் பகைவருண்டு.
எனவே உமது வழிகளை எனக்குப் போதி
யும். சரியான காரியங்களைச் செய்வதற்கு
எனக்குப் போதியும்.
12எனது சத்துருக்கள் என்னைத் தாக்கி
னார்கள். என்னைப் பற்றிப் பொய்யுரைத்த
னர். என்னைத் துன்புறுத்த பொய் கூறினர்.
13நான் மரிக்கும் முன்னர்* கர்த்தருடைய
நன்மையைக் காண்பேன் என நான்
உண்மையாகவே நம்புகிறேன்.
14கர்த்தருடைய உதவிக்குக் காத்திரு.
பெலத்தோடும் தைரியத்தோடும் இருந்து
கர்த்தருக்குக் காத்திரு.

## சங்கீதம் 28

### தாவீதின் ஒரு பாடல்

1கர்த்தாவே, நீர் என் பாறை. உதவிக்காக
உம்மை அழைத்துக் கொண்டிருக்கிறேன்.
என் ஜெபங்களுக்கு உமது காதுகளை
மூடிக்கொள்ளாதிரும். உதவி கேட்கும் என்
கூக்குரலுக்கு நீர் பதிலளிக்காதிருந்தால் கல்
லறைக்குச் சென்ற பிணத்தைக் காட்டிலும்
நான் மேலானவனில்லை என எண்ணு
வேன்.
2கர்த்தாவே, என் கரங்களை உயர்த்தி,
உமது மகாபரிசுத்த இடத்திற்கு* நேராக
ஜெபம் செய்வேன். உம்மை நோக்கி நான்
கூப்பிடும்போது செவிகொடும். எனக்கு
இரக்கம் காட்டும்.
3கர்த்தாவே, தீமை செய்யும் தீயோரைப்
போல என்னை எண்ணாதேயும். “ஷா
லோம்” என்று அவர்கள் தங்கள் அயலாரை
வாழ்த்துவார்கள். ஆனால் அவர்களைக்
குறித்துத் தீயவற்றைத் தங்கள் இருதயங்களில்
எண்ணுகிறார்கள்.
4கர்த்தாவே, அவர்கள் பிறருக்குத் தீய
காரியங்களைச் செய்வார்கள். எனவே அவர்
களுக்குத் தீங்கு வரச்செய்யும். அவர்களுக்குத்
தக்க தண்டனையை நீர் கொடுத்தருளும்.
5கர்த்தர் செய்யும் நல்லவற்றைத் தீயோர்
புரிந்துகொள்வதில்லை. தேவன் செய்யும்
நல்ல காரியங்களை அவர்கள் பார்ப்ப
தில்லை. அவர்கள் அதைப் புரிந்துகொள்வ
தில்லை. அவர்கள் அழிக்க மட்டுமே
முயல்வார்கள்.
6கர்த்தரைத் துதிப்பேன், இரக்கம் காட்டு
மாறு கேட்ட என் ஜெபத்தை அவர் கேட்
டார்.
7கர்த்தரே என் பெலன், அவரே என்
கேடகம். அவரை நம்பினேன். அவர் எனக்கு
உதவினார். நான் மிகவும் மகிழ்கிறேன்!
அவரைத் துதித்துப் பாடல்களைப் பாடு
வேன்.
8கர்த்தர் தாம் தேர்ந்தெடுத்தவனைக் காக்
கிறார். கர்த்தர் அவனை மீட்கிறார். கர்த்தரே
அவன் பெலன்.
9தேவனே, உம் ஜனங்களை மீட்டருளும்.
உமது ஜனங்களை ஆசீர்வதியும்! அவர்களை
வழிநடத்தி என்றென்றும் கனப்படுத்தும்!

## சங்கீதம் 29

### தாவீதின் பாடல்

1தேவனுடைய புத்திரரே,* கர்த்தரைத்
துதியுங்கள்! அவரது மகிமையையும் வல்ல
மையையும் துதியுங்கள்.
2கர்த்தரைத் துதித்து அவர் நாமத்தைக்
கனப்படுத்துங்கள்! உங்கள் விசேஷ ஆடை
களை* அணிந்து அவரைத் தொழுதுகொள்
ளுங்கள்.
3கடலின்மேல் கர்த்தர் தமது குரலை
எழுப்புகிறார். மகிமைபொருந்திய தேவனு
டைய குரல் பெரும் சமுத்திரத்தின்மேல்
இடியாய் முழங்கும்.
4கர்த்தருடைய குரல் அவர் வல்லமை
யைக் காட்டும். அவரது குரல் அவர்
மகிமையைக் காட்டும்.
5கர்த்தருடைய குரல் பெரிய கேதுரு
மரங்களையும் சின்னஞ்சிறு துண்டு
களாக்கும். லீபனோனின் பெரிய கேதுரு
மரங்களை கர்த்தர் உடைத்தெறிகிறார்.
6கர்த்தர் லீபனோனைக் குலுக்குகிறார்.
இளங்கன்று நடனமாடினாற்போன்று அது
தோன்றுகிறது. எர்மோன் மலை நடுங்கு
கிறது. இளமையான வெள்ளாடு குதிப்பதைப்
போன்று அது தோன்றுகிறது.
7கர்த்தருடைய குரல் மின்னலைப்போல்
ஒளிவிட்டுத் தாக்குகிறது.

---

**மரிக்கும் முன்னர்** எழுத்தின் பிரகாரமாக, “ஜீவிக்கிறவர்களின் நிலத்தில்” எனப் பொருள்படும்.

**மகாபரிசுத்த இடம்** பரிசுத்த கூடாரம் அல்லது ஆலயத்தில் உள்ள மிக முக்கியமான அறை. அதில் உடன்படிக்கைப் பெட்டி வைக்கப் பட்டிருக்கும். இது தேவன் இஸ்ரவேலின் அரசராக வீற்றிருக்கும் சிங்காசனத்தை போன்றது.

**தேவனுடைய புத்திரரே** அல்லது “தேவர்களின் புத்திரரே” இதற்கு தேவதூதர்கள் அல்லது ஆசாரியர்கள் என்று அர்த்தம்.

**விஷேச ஆடைகள்** இந்தச் சிறப்பான ஆடைகளை ஜனங்கள் தேவனை தொழுதுகொள்ள ஆலயத்திற்குச் செல்லும்போது அணிந்து கொண்டனர்.

8கர்த்தருடைய குரல் பாலைவனத்தைக்
குலுக்குகிறது. கர்த்தருடைய குரலால்
காதேஸ் பாலைவனம்* நடுங்குகிறது.
9கர்த்தருடைய குரல் மானை அஞ்சச்செய்
யும். கர்த்தர் காடுகளை அழிக்கிறார். அவரது
அரண்மனையில், ஜனங்கள் அவரது
மகிமையைப் பாடுகிறார்கள்.
10வெள்ளப்பெருக்கின்போது கர்த்தர் அரச
ராயிருந்தார். என்றென்றும் கர்த்தரே அரசர்.
11கர்த்தர்தாமே அவரது ஜனங்களைப்
பாதுகாப்பாராக. கர்த்தர் அவரது ஜனங்
களைச் சமாதானத்தோடு வாழும்படி ஆசீர்வ
திப்பாராக.

## சங்கீதம் 30

***தாவீது பாடிய பாடல்களுள் ஒன்று. ஆலயத் தின் அர்ப்பணிப்புக்காகப் பாடிய பாடல்.***

1கர்த்தாவே, என் தொல்லைகளினின்று
என்னை விடுவித்தீர். எனது பகைவர்கள்
என்னைத் தோற்கடித்து என்னை நோக்கி
நகைக்காமல் இருக்கச் செய்தீர். எனவே நான்
உம்மை கனப்படுத்துவேன்.
2என் தேவனாகிய கர்த்தாவே, நான்
உம்மிடம் ஜெபித்தேன். நீர் என்னைக்
குணமாக்கினீர்.
3கல்லறையினின்று என்னை விடுவித்தீர்.
என்னை வாழவிட்டீர். குழிகளில்* இருக்கும்
பிணங்களோடு நான் தங்கியிருக்க நேர
வில்லை.
4தேவனைப் பின்பற்றுவோர் கர்த்தருக்குத்
துதிகளைப் பாடுவார்கள்! அவரது பரிசுத்தப்
நாமத்தைத்* துதியுங்கள்!
5தேவன் கோபங்கொண்டார். அதன்
முடிவு “மரணமே.” ஆனால் அவர் அன்பை
வெளிப்படுத்தினார், எனக்கு “உயிரைக்”*
கொடுத்தார். இரவில் அழுதபடி படுத்திருந்
தேன். மறுநாள் காலையில் மகிழ்ச்சியோடு
பாடிக்கொண்டிருந்தேன்!
6இப்போது இவ்வாறு நான் கூறமுடியும்.
அது உண்மையென நிச்சயமாய் நான்
அறிவேன். “நான் ஒருபோதும் தோற்கடிக்
கப்பட மாட்டேன்!”
7கர்த்தாவே, என்னிடம் தயவாயிருந்தீர்,
எதுவும் என்னை வெல்ல முடியாது என
உணர்ந்தேன். சிலகாலம், நீர் என்னை விட்டு
விலகினீர், நான் மிகவும் பயந்தேன்.
8தேவனே, நான் உம்மிடம் திரும்பி
ஜெபித்தேன். எனக்கு இரக்கம் காட்டுமாறு
வேண்டினேன்.
9நான், “தேவனே, நான் மரித்துக் கல்ல
றைக்குள் அடக்கம் பண்ணப்பட்டால் என்ன
பயன்? மரித்தோர் புழுதியில் கிடப் பார்கள்.
அவர்கள் உம்மைத் துதிப்பதில்லை!
என்றென்றும் தொடரும் உம் நன்மையை
அவர்கள் பேசார்கள்” என்றேன்.
10கர்த்தாவே என் ஜெபத்தைக் கேளும்,
என்னிடம் தயவாயிரும்! கர்த்தாவே,
எனக்கு உதவும்.
11நான் ஜெபித்தேன், நீர் எனக்கு உதவி
னீர்! என் அழுகையை நடனக் களிப்பாய்
மாற்றினீர். அழுகையின் ஆடைகளை நீர்
அகற்றிப் போட்டீர், மகிழ்ச்சியால் என்
னைப் பொதிந்து வைத்தீர்.
12எனது தேவனாகிய கர்த்தாவே, உம்மை
என்றென்றும் நான் துதிப்பேன். ஒருபோதும்
அமைதியாயிராமல் நான் இதைச் செய்வேன்.
எப்போதும் யாராவது ஒருவர் உம்மைக்
கனப்படுத்திக் கொண்டிருப்பார்கள்.

## சங்கீதம் 31

***இசைத்தலைவனுக்காகத் தாவீது பாடிய பாடல்.***

1கர்த்தாவே, நான் உம்மை நம்பியிருக்கி
றேன். என்னை ஏமாற்றாதேயும். என்னிடம்
தயவாயிருந்து என்னைக் காப்பாற்றும்.
2தேவனே, எனக்குச் செவிகொடும்.
விரைந்துவந்து என்னைக் காப்பாற்றும்.
எனது பாறையாய் இரும். எனக்குப் பாது
காப்பான இடமாயிரும். எனக்குக் கோட்டை
யாயிரும். என்னைப் பாதுகாத்தருளும்.
3தேவனே, நீரே என் பாறை. எனவே,
உமது நாமத்தின் நன்மையால் என்னை
நடத்தி, வழிகாட்டும்.
4என் பகைவர்கள் எனக்கு முன்னே
கண்ணியை வைத்தார்கள். அவர்கள் கண்
ணிக்கு என்னைக் காப்பாற்றும். நீரே
என் பாதுகாப்பிடம் ஆவீர்.
5கர்த்தாவே, நான் நம்பவல்ல தேவன்
நீரே. என் உயிரை உமது கரங்களில் நான்
வைத்தேன். என்னைக் காப்பாற்றும்!
6பொய்த் தெய்வங்களைத் தொழுது
கொள்ளும் ஜனங்களை நான் வெறுக்கிறேன்.
கர்த்தரை மட்டுமே நான் நம்புகிறேன்.
7தேவனே, உமது தயவு எனக்கு மிகுந்த
களிப்பூட்டுகிறது. நீர் எனது தொல்லை
களைக் கண்டுள்ளீர். என் தொல்லைகளை
நீர் அறிகிறீர்.
8எனது பகைவர்கள் என்னை வெற்றி
கொள்ள விடமாட்டீர். அவர்கள் கண்ணி
களிலிருந்து என்னை விடுவியும்.
9கர்த்தாவே, எனக்குத் தொல்லைகள் பல
உண்டு, எனவே என்னிடம் தயவாயிரும்.
என் மனத்துன்பத்தினால் என் கண்கள்

---

**காதேஸ் பாலைவனம்** இது சிரியாவில் உள்ள பாலைவனம். இதற்கு “பரிசுத்த பாலைவனம்” எனப் பொருள்படும்.

**குழி** அல்லது “மரித்த ஜனங்களின் உலகம்” எனப் பொருள்படும்.

**நாமம்** எழுத்தின் பிரகாரமாக, “நினைவு” அல்லது “நினைவிடம்.”

**உயிர்** எழுத்தின் பிரகாரமாக, “ஆவி” எனப் பொருள்படும்.

*நோகின்றன. என் தொண்டையும் வயிறும்*
*வலிக்கின்றன.*
10*என் வாழ்க்கைத் துயரத்தில் முடிந்து*
*கொண்டிருக்கிறது. பெருமூச்சால் என்*
*வயது கழிந்து போகிறது. என் தொல்லைகள்*
*என் வலிமையை அழிக்கின்றன. என்*
*ஆற்றல் என்னைவிட்டு விலகிக் கொண்டி*
*ருக்கிறது.**
11*என் பகைவர்கள் என்னை வெறுக்கி*
*றார்கள். என் அக்கம் பக்கத்தாரும் என்னை*
*வெறுக்கிறார்கள். என் உறவினர்கள் தெரு*
*வில் என்னைப் பார்க்கிறார்கள். அவர்கள்*
*எனக்குப் பயந்து என்னை விட்டு விலகுகி*
*றார்கள்.*
12*காணாமற்போன கருவியைப் போலா*
*னேன். ஜனங்கள் என்னை முற்றிலும்*
*மறந்தார்கள்.*
13*ஜனங்கள் என்னைக்குறித்துப் பேசும்*
*கொடிய காரியங்களை நான் கேட்டேன். அந்த*
*ஜனங்கள் எனக்கு எதிராகத் திரும்பி*
*னார்கள். அவர்கள் என்னைக் கொல்லத்*
*திட்டமிடுகிறார்கள்.*
14*கர்த்தாவே, நான் உம்மை நம்புகிறேன்.*
*நீரே என் தேவன்.*
15*என் உயிர் உமது கைகளில் உள்ளது.*
*என் பகைவரிடமிருந்து என்னைக் காப்பாற்*
*றும். சில ஜனங்கள் என்னைத் துரத்துகிறார்*
*கள்**. *அவர்களிடமிருந்து என்னைக் காப்*
*பாற்றும்.*
16*உமது வேலையாளை வரவேற்று ஏற்*
*றுக்கொள்ளும். என்னிடம் தயவாயிருந்து*
*என்னைக் காப்பாற்றும்!*
17*கர்த்தாவே, உம்மிடம் ஜெபித்தேன்.*
*எனவே நான் ஏமாந்துபோக மாட்டேன்.*
*தீயோர் ஏமாந்து போவார்கள். அமைதி*
*யாய்க் கல்லறைக்குச் செல்வார்கள்.*
18*அத்தீயோர் நல்லோரைக் குறித்துத் தீமை*
*யும் பொய்யும் உரைப்பார்கள். அத்தீயோர்*
*பெருமைக்காரர். ஆனால் அவர்களின் பொய்*
*கூறும் உதடுகள் அமைதியாகிவிடும்.*
19*தேவனே, உம்மைப் பின்பற்றுவோருக்*
*காக பல அதிசயமான காரியங்களை நீர்*
*மறைவாய் வைத்திருக்கிறீர். உம்மை நம்பும்*
*ஜனங்களுக்கு எல்லோர் முன்பாகவும் நற்*
*காரியங்களைச் செய்கிறீர்.*
20*தீயோர் நல்லோரைத் தாக்க ஒருமித்துக்*
*கூடுகிறார்கள். அத்தீயோர் சண்டையிட*
*முயல்கிறார்கள். ஆனால் அந்நல்லோரை*
*மறைத்து அவர்களைக் காப்பாற்றும். உமது*
*அடைக்கலத்தில் வைத்து அவர்களைப்*
*பாதுகாத்தருளும்.*
21*கர்த்தருக்கு ஸ்தோத்திரம். நகரம் பகைவர்*
*களால் சூழப்பட்டபோது அவர் தம்*
*உண்மையாக அன்பை அதிசயமாக எனக்கு*
*வெளிப்படுத்தினார்.*
22*நான் அஞ்சினேன், "தேவன் பார்க்கமுடி*
*யாத இடத்தில் நான் இருக்கிறேன்" என்*
*றேன். ஆனால் தேவனே, நான் உம்மிடம்*
*ஜெபித்தேன். உதவிக்கான என் உரத்த*
*ஜெபங்களை நீர் கேட்டீர்.*
23*தேவனைப் பின்பற்றுவோரே, நீங்கள்*
*கர்த்தரை நேசியுங்கள். தம்மிடம் விசுவாச*
*முள்ள ஜனங்களைக் கர்த்தர் காக்கிறார்.*
*ஆனால் தங்கள் வல்லமையைக் குறித்துப்*
*பெருமை பாராட்டுவோரை கர்த்தர் தண்டிக்*
*கிறார். அவர்களுக்கான தண்டனையைத்*
*தேவன் அளிக்கிறார்.*
24*கர்த்தருடைய உதவிக்காகக் காத்துக்*
*கொண்டிருக்கிற ஜனங்களே, வலிமையும்*
*துணிவும் உடையோராயிருங்கள்!*

## *சங்கீதம்* 32

***மஸ்கீல், என்னும் தாவீதின் பாடல்.***

1*பாவங்கள் மன்னிக்கப்பட்ட மனிதன்*
*ஆசீர்வதிக்கப்பட்டவன். பாவங்கள் நீக்கப்*
*பட்ட மனிதன் ஆசீர்வதிக்கப்பட்டவன்.*
2*குற்றமற்றவன் எனக் கர்த்தர் கூறும்*
*மனிதன் ஆசீர்வதிக்கப்பட்டவன். இரகசிய*
*மான பாவங்களை மறைக்க முயலாதி*
*ருக்கிறவன் ஆசீர்வதிக்கப்பட்டவன்.*
3*தேவனே, நான் மீண்டும் மீண்டும் உம்*
*மிடம் ஜெபித்தேன், ஆனால் என் இரகசிய*
*மான பாவங்களைக் குறித்து நான் பேச*
*வில்லை. நான் ஜெபித்த ஒவ்வொரு முறை*
*யும் என் வலிமை குன்றிப்போயிற்று.*
4*தேவனே, இரவும் பகலும் என் வாழ்க்*
*கையை மென்மேலும் கடினமாக்கினீர்.*
*கோடைக் காலத்தில் உலர்ந்து காய்ந்து*
*போன நிலத்தைப் போலானேன்.*
5*என் பாவங்களையெல்லாம் கர்த்தரிடம்*
*அறிக்கையிடத் தீர்மானித்தேன். கர்த்தாவே,*
*உம்மிடம் என் பாவங்களைப் பற்றிக்*
*கூறினேன். என் குற்றங்கள் எதையும் நான்*
*மறைக்கவில்லை. என் பாவங்களை எல்லாம்*
*நீர் எனக்கு மன்னித்தீர்.*
6*இதற்காக, தேவனே, உம்மைப் பின்பற்று*
*வோர் உம்மிடம் ஜெபம் செய்யவேண்டும்.*
*வெள்ளப் பெருக்கைப்போல் தொல்லைகள்*
*வந்தாலும் உம்மைப் பின்பற்றுவோர்*
*ஜெபிக்கவேண்டும்.*
7*தேவனே, நீர் எனக்கு மறைவிடமாயி*
*ருக்கிறீர். என் தொல்லைகளிலிருந்து நீர்*
*என்னைக் காக்கிறீர். நீர் என்னைச் சூழ்ந்து*
*என்னைக் காக்கிறீர். எனவே நீர் என்னைப்*
*பாதுகாத்த வகையை நான் பாடுகிறேன்.*
8*கர்த்தர், "நீ வாழவேண்டிய வழியை*
*உனக்கு போதித்து வழிநடத்துவேன். உன்*

---

**என் ஆற்றல் என்னைவிட்டு விலகிக் கொண்டிருக்கிறது** *எழுத்தின் பிரகாரமாக, "என் எலும்புகள் வீணாகப்போய்க் கொண்டிருக்கின்றன."*

**என்னைத் துரத்துதல்** *அல்லது "என்னைத் தண்டிக்க" "என்னைக் காயப்படுத்த."*

னைக் காத்து உனக்கு வழிகாட்டியாயி
ருப்பேன் என்று கூறுகிறார்.
9எனவே குதிரையை அல்லது கழுதை
யைப்போல் மூடனாகாதே. அம்மிருகங்களை
வழிநடத்துவோர் கடிவாளங்களையும் வார்
களையும் பயன்படுத்தாமல் அவற்றை கட்டுப்
படுத்த இயலாது" என்கிறார்.
10தீயோருக்கு வேதனைகள் பெருகும்.
கர்த்தரை நம்புவோரைத் தேவனுடைய உண்
மையான அன்பு சூழ்ந்துகொள்ளும்.
11நல்லோரே, கர்த்தருக்குள் மகிழ்ந்து
களிகூருங்கள். பரிசுத்த இருதயமுள்ள ஜனங்
களே! களிப்படையுங்கள்.

## சங்கீதம் 33

1நல்லோரே, கர்த்தருக்குள் களிப்படையுங்
கள்! நல்ல நேர்மையான ஜனங்களே, அவ
ரைத் துதியுங்கள்!
2சுரமண்டலத்தை* மீட்டிக் கர்த்தரைத்
துதியுங்கள்! பத்து நரம்பு வீணையை மீட்டிக்
கர்த்தரைப் பாடுங்கள்.
3புதுப்பாட்டை* அவருக்குப் பாடுங்கள்!
மகிழ்ச்சியான இராகத்தை இனிமையாய்
மீட்டுங்கள்.
4தேவனுடைய வாக்கு உண்மையானது!
அவர் செய்பவற்றை உறுதியாக நம்புங்கள்!
5நன்மையையும் நேர்மையையும் தேவன்
நேசிக்கிறார். கர்த்தர் பூமியை அவரது
அன்பினால் நிரப்பியுள்ளார்.
6கர்த்தர் கட்டளையிட, உலகம் உருவா
யிற்று. தேவனுடைய வாயின் மூச்சு பூமியி
லுள்ள அனைத்தையும் உருவாக்கிற்று.
7கடலின் தண்ணீரை ஒரே இடத்தில்
தேவன் ஒன்று திரட்டினார். அவர் சமுத்தி
ரத்தை அதற்குரிய இடத்தில் வைக்கிறார்.
8பூமியிலுள்ளோர் யாவரும் கர்த்தருக்குப்
பயந்து அவரை மதிக்க வேண்டும். உலகில்
வாழும் ஜனங்கள் எல்லோரும் அவருக்கு
அஞ்சவேண்டும்.
9ஏனெனில் தேவன் கட்டளையிட, அக்
காரியம் நிறைவேறுகிறது. அவர் "நில்!"
எனக்கூற, அக்காரியம் நின்றுவிடும்.
10எல்லோருடைய அறிவுரையையும்
பயனற்றுப்போகச் செய்ய கர்த்தராலாகும்.
அவர்கள் திட்டங்களை கர்த்தர் அழிக்கக்
கூடும்.
11கர்த்தருடைய அறிவுரை என்றென்றும்
நல்லது. தலைமுறை தலைமுறைக்கும் அவர்
திட்டங்கள் நன்மை தரும்.
12கர்த்தரைத் தேவனாக ஏற்றுக்கொண்ட
ஜனங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். தேவன்
தனது சொந்த ஜனங்களாக அவர்களைத்
தேர்ந்தெடுத்தார்.
13பரலோகத்திலிருந்து கர்த்தர் கீழே
பார்த்து, எல்லா ஜனங்களையும் கண்டார்.
14அவரது உயர்ந்த சிங்காசனத்திலிருந்து
பூமியில் வாழும் மனிதர்களையெல்லாம்
பார்த்தார்.
15ஒவ்வொருவனின் மனதையும் தேவன்
படைத்தார். ஒவ்வொருவனின் எண்ணத்தை
யும் தேவன் அறிகிறார்.
16அரசன் தனது சொந்த வல்லமையால்
காப்பாற்றப்படுவதில்லை. ஒரு வீரன் தனது
மிகுந்த பெலத்தால் காப்பாற்றப்படுவதில்லை.
17போரில் குதிரைகள் உண்மையான
வெற்றியைத் தருவதில்லை. அவற்றின் ஆற்
றல் நம்மை தப்புவிக்க வகை செய்வ
தேயில்லை.
18கர்த்தர் அவரைப் பின்பற்றுவோரைக்
கவனித்துக் காப்பாற்றுகிறார். அவரது
பேரன்பு அவரைத் தொழுதுகொள்வோரைக்
காக்கும்.
19தேவன் அந்த ஜனங்களை மரணத்தி
னின்று காக்கிறார். அவர்கள் பசித்திருக்
கையில் அவர் பெலனளிக்கிறார்.
20எனவே நாம் கர்த்தருக்காகக் காத்தி
ருப்போம். அவரே நமக்கு உதவியும் கேடக
முமாயிருக்கிறார்.
21தேவன் என்னை மகிழ்ச்சியடையச்
செய்கிறார். அவரது பரிசுத்த நாமத்தை நான்
உண்மையாக நம்புகிறேன்.
22கர்த்தாவே, நாங்கள் உம்மை உண்மை
யாக தொழுதுகொள்கிறோம்! உமது
பேரன்பை எங்களுக்குக் காண்பியும்.

## சங்கீதம் 34*

***தாவீதின் வேஷத்தைக் கண்டு அபிமெலேக்கு அவனைத் துரத்தியபோது தாவீது பாடியது. இவ்வாறு தாவீது அவனை விட்டுப் பிரிந்தான்.***

1நான் எந்தக் காலத்திலும் கர்த்தரை
ஸ்தோத்தரிப்பேன். என் உதடுகள் எப்
போதும் அவரைத் துதிக்கும்.
2தாழ்மையான ஜனங்களே, செவிக்
கொடுத்து மகிழுங்கள். என் ஆத்துமா
கர்த்தரைக் குறித்துப் பெருமைகொள்ளும்.
3தேவனுடைய மேன்மையை எனக்குக்
கூறுங்கள். அவரது நாமத்தை என்னோடு
சேர்ந்து துதியுங்கள்.
4உதவிவேண்டி தேவனிடம் போனேன்.
அவர் கேட்டார், நான் அஞ்சிய எல்லாக்
காரியங்களிலிருந்தும் அவர் என்னை மீட்
டார்.

---

**சுரமண்டலம்** பல நரம்புகளை உடைய இசைக்கருவி யாழைப் போன்றது.

**புதுப்பாட்டு** தேவன் தன் ஜனங்களுக்காக புதியவற்றையும் அதிசயங்களையும் செய்யும் பொழுதெல்லாம் ஜனங்கள் அதைப்பற்றி புதிய பாடல்களை எழுதுவார்கள்.

**சங்கீதம் 34** எபிரெய மொழியில் இந்த சங்கீதத்தில் ஒவ்வொரு வாக்கியமும் ஆரம்ப வரிசையில் அடுத்த எழுத்திலிருந்து ஆரம்பிக்கின்றன.

5உதவிக்காகத் தேவனை நாடுங்கள். அவர்
உங்களை ஏற்றுக்கொள்ளுவார். வெட்கம
டையாதீர்கள்.
6இந்த ஏழை உதவிக்காகக் கர்த்தரைக்
கூப்பிட்டான். கர்த்தர் எனக்குச் செவிகொ
டுத்தார். என் தொல்லைகளிலிருந்து
என்னை மீட்டார்.
7கர்த்தரை நம்புவோரைச் சுற்றிலும் கர்த்த
ருடைய தூதன் ஒரு பாளையமிடுகிறான்.
கர்த்தருடைய தூதன் அவர்களைக் காத்து
அவர்களுடைய துன்பங்களிலிருந்து விடு
தலை அளிக்கிறான்.
8கர்த்தரை நல்லவர் என்று ருசித்து
அறியுங்கள். கர்த்தரைச் சார்ந்து வாழும்
மனிதன் உண்மையாகவே சந்தோஷமடை
வான்.
9கர்த்தருடைய பரிசுத்த ஜனங்கள் அவ
ரைத் தொழுதுகொள்ளட்டும். கர்த்தரைப்
பின்பற்றுவோருக்கு வேறெந்த அடைக்கல
மும் தேவையில்லை.
10வல்லமையுள்ள ஜனங்கள் சோர்ந்து
பசியடைவார்கள். ஆனால் தேவனிடம்
உதவிவேண்டிச் செல்வோர் நல்லவற்றை
யெல்லாம் அடைவார்கள்.
11பிள்ளைகளே, எனக்குச் செவிகொடுங்
கள், கர்த்தரை எப்படி மதிக்கமேண்டு
மென்று உங்களுக்குப் போதிப்பேன்.
12தன் வாழ்க்கையை நேசித்து, நீண்ட
ஆயுளை விரும்பும்,

13மனிதன் தீயவற்றைப் பேசக்கூடாது.
அம்மனிதன் பொய் பேசக்கூடாது.
14தீமை செய்வதை அவன் விட்டுவிட
வேண்டும். நல்லவற்றைச் செய்.
சமாதானத்திற்காகப் பாடுபடு. அதை
அடையும்வரை அதற்கென முயற்சி செய்.
15நல்லோரைக் கர்த்தர் பாதுகாக்கிறார்.
அவர்கள் ஜெபங்களை அவர் கேட்கிறார்.
16கர்த்தர் தீயோருக்கு எதிரானவராயி
ருந்து அவர்களை முற்றிலும் அழிக்கிறார்.
17கர்த்தரிடம் ஜெபியுங்கள். அவர் உங்கள்
விண்ணப்பங்களைக் கேட்பார். உங்கள்
எல்லாத் தொல்லைகளிலிருந்தும் உங்களைக்
காப்பார்.
18சிலருக்குத் தொல்லைகள் மிகுதியாகும்
பொழுது அவர்கள் பெருமையை விட்
டொழிப்பர், கர்த்தர் அவர்களருகே இருந்து
தாழ்மையான அந்த ஜனங்களைக் காக்கிறார்.
19நல்லோருக்குத் தொல்லைகள் பல நேரிட்
டாலும் அவர்கள் தொல்லைகளிலிருந்து
கர்த்தர் அவர்களை மீட்பார்.
20அவர்கள் எலும்புகளில் ஒன்றும் முறிந்து
போகாதபடி கர்த்தர் அவற்றைப் பாது
காப்பார்.
21தீயோரைத் தொல்லைகள் கொல்லும்.
நல்லோரின் பகைவர்கள் அழிக்கப்படு
வார்கள்.
22தமது ஊழியர்களின் ஆத்துமாக்களைக்
கர்த்தர் மீட்கிறார். அவரைச் சார்ந்திருக்கும்
ஜனங்களை அழியவிடமாட்டார்.

## சங்கீதம் 35

### தாவீதின் பாடல்

1கர்த்தாவே, என் யுத்தங்களையும் என்
போர்களையும் நீரே நடத்தும்.
2கர்த்தாவே, சிறியதும் பெரியதுமான
கேடகத்தை எடுத்துக்கொள்ளும். எழுந்தி
ருந்து எனக்கு உதவும்.
3ஈட்டியை எடுத்து என்னைத் துரத்தும்
ஜனங்களோடு போரிடும். கர்த்தாவே, என்
ஆத்துமாவை நோக்கி, "நான் உன்னைக்
காப்பாற்றுவேன்" என்று கூறும்.
4சிலர் என்னைக் கொல்ல முயல்கிறார்கள்.
அவர்கள் ஏமாறவும் வெட்கமடையவும்
செய்யும். அவர்கள் திரும்பி ஓடிவிடச்
செய்யும். அவர்கள் என்னைக் காயப்படுத்தத்
திட்டமிடுகிறார்கள். அவர்கள் வெட்க
மடையச் செய்யும்.
5காற்றால் பறக்கடிக்கும் பதரைப்போல்
அவர்களை மாற்றும். கர்த்தருடைய தூதன்
அவர்களைத் துரத்தட்டும்.
6கர்த்தாவே, அவர்களின் பாதை இரு
ளாகவும், வழுக்கலுடையதாகவும் ஆகட்டும்.
கர்த்தருடைய தூதன் அவர்களைத் துரத்தட்
டும்.
7நான் பிழையேதும் செய்யவில்லை,
ஆனால் அவர்கள் என்னைத் தங்கள் கண்
ணியில் சிக்கவைக்க முயல்கிறார்கள். கார
ணமின்றி அவர்கள் என்னைச் சிக்க வைக்க
முயல்கிறார்கள்.
8எனவே கர்த்தாவே, அவர்களே தங்கள்
கண்ணிகளில் விழட்டும். அவர்கள் தங்கள்
வலைகளில் தடுமாறட்டும். அறியாத தீங்கு
அவர்களைப் பிடிக்கட்டும்.
9அப்போது நான் கர்த்தரில் களிகூருவேன்.
அவர் என்னை மீட்கும்போது நான் சந்
தோஷம் கொள்வேன்.
10"கர்த்தாவே, உம்மைப் போன்றோர்
யாருமில்லை. கர்த்தாவே, வலிய ஜனங்க
ளிடமிருந்து நீர் ஏழையைக் காப்பாற்றுகிறீர்.
ஏழையினும் கீழ்ப்பட்ட ஏழைகளின்
பொருள்களைக் கவரும் கயவர்களிடமிருந்து
அவர்களைக் காப்பாற்றுகிறீர்" என்று என்
முழுமனதோடும் கூறுவேன்.
11சாட்சிகள் சிலர் என்னைத் துன்புறுத்தத்
திட்டமிடுகின்றனர். அந்த ஜனங்கள் கேள்வி
கள் எழுப்புகின்றனர். அவர்கள் பேசுவதைக்
குறித்து நான் அறியேன்.
12நான் நற்காரியங்களையே செய்திருக்கி
றேன். ஆனால் அந்த ஜனங்கள் எனக்குத்
தீய காரியங்களைச் செய்கின்றனர். கர்த்
தாவே, தகுதியான நற்காரியங்களை எனக்
குத் தாரும்.
13அந்த ஜனங்கள் நோயுற்றபோது, அவர்
களுக்காக வருந்தினேன். உணவு உண்ணா

மல் என் துக்கத்தை வெளிப்படுத்தினேன். அவர்களுக்காக ஜெபித்ததினால் நான் பெறும் பலன் இதுவா?
14அந்த ஜனங்களுக்காகத் துக்கத்தின் ஆடைகளை உடுத்திக்கொண்டேன். அந்த ஜனங்களை என் நண்பர்களைப் போலவும், என் சகோதரர்களைப் போலவும் நடத்தினேன். தாயை இழந்த மனிதன் அழுவதைப் போன்று நான் துக்கமுற்றேன். அந்த ஜனங்களுக்காக என் துக்கத்தை வெளிப்படுத்துவதற்குக் கறுப்பு நிற ஆடைகளை உடுத்திக்கொண்டேன். துக்கத்தால் தலை குனிந்து நடந்தேன்.
15ஆனால் என் தவற்றுக்கு அந்த ஜனங்கள் நகைத்தனர். அந்த ஜனங்கள் உண்மை நண்பர்கள் அல்ல. அந்த ஜனங்களை நான் அறிந்திருக்கவில்லை. அந்த ஜனங்கள் என்னைச் சூழ்ந்து தாக்கினார்கள்.
16அவர்கள் தீய மொழிகளைப் பேசி என்னைப் பரிகசித்தார்கள். அவர்கள் பற்களைக் கடித்துத் தங்கள் கோபத்தை வெளிப்படுத்தினார்கள்.
17என் ஆண்டவரே, அத்தீய காரியங்கள் நடப்பதை எத்தனைக் காலம் பொறுத்திருப்பீர்? அந்த ஜனங்கள் என்னை அழிக்க முயலுகிறார்கள். கர்த்தாவே, என் உயிரைக் காப்பாற்றும் குரூரமான சிங்கம் போன்றவர்களாகிய அத்தீயோரிடமிருந்து என் ஆருயிரைக் காப்பாற்றும்.
18கர்த்தாவே, பெரும்சபையில் உம்மைத் துதிப்பேன். வல்லமைமிக்க ஜனங்கள் மத்தியில் உம்மைத் துதிப்பேன்.
19பொய் பேசுகிற என் பகைவர்கள் எப்போதும் நகைத்துக் கொண்டிருக்க முடியாது. தங்களின் இரகசிய திட்டங்களுக்காக என் பகைவர்கள் கண்டிப்பாகத் தண்டனை பெறுவார்கள்.
20என் பகைவர்கள் சமாதானத்திற்கான திட்டங்களை நிச்சயமாக வகுக்கவில்லை. இந்நாட்டிலுள்ள சமாதானமான ஜனங்களுக்குத் தீமைகள் செய்வதற்கு இரகசிய திட்டங்களை அவர்கள் வகுக்கிறார்கள்.
21என் பகைவர்கள் என்னைக்குறித்துத் தீய காரியங்களையே பேசுகிறார்கள். அவர்கள் மகிழ்ச்சியடைந்து "ஆஹா! நீ என்ன செய்கிறாய் என்பதை நாங்கள் அறிவோம்" என்கிறார்கள்.
22கர்த்தாவே, உண்மையில் நடப்பவற்றை நீர் நிச்சயமாகப் பார்க்கமுடியும். எனவே சும்மா இராதேயும். என்னை விட்டு விலகாதேயும்.
23கர்த்தாவே விழித்தெழும், எழுந்திரும். என் தேவனே, என் ஆண்டவரே, எனக்காகப் போரிட்டு நியாயமளியும்.
24எனது தேவனாகிய கர்த்தாவே, தக்கமுறையில் என்னை நியாயந்தீரும். அந்த ஜனங்கள் என்னைப்பார்த்து நகைக்க விடாதேயும்.
25அந்த ஜனங்கள், "ஆஹா! எங்களுக்கு வேண்டியதைப் பெற்றோம்" எனக் கூறவிடாதேயும். கர்த்தாவே, "நாங்கள் அவனை அழித்தோம்!" என அவர்கள் கூறவிடாதேயும்.
26என் பகைவர்கள் வெட்கி, நாணுவார்கள் என நம்புகிறேன். எனக்குத் தீயக் காரியங்கள் நிகழ்ந்தபோது அந்த ஜனங்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். என்னைக்காட்டிலும் தாங்கள் சிறந்தவர்கள் என்று அவர்கள் எண்ணினார்கள். எனவே அந்த ஜனங்கள் வெட்கத்தினாலும் இழிவினாலும் மூடப்படட்டும்.
27எனக்கு நல்ல காரியங்கள் நிகழட்டுமென்று சில ஜனங்கள் விரும்புகிறார்கள். அந்த ஜனங்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு வாழுவார்கள் என நான் நம்புகிறேன். அந்த ஜனங்கள் எப்போதும், "கர்த்தர் மேன்மையானவர்! அவரது வேலையாளுக்கு நல்லது எதுவோ அதையே அவர் விரும்புவார்" என்று கூறுகிறார்கள்.
28எனவே கர்த்தாவே, நீர் எவ்வளவு நல்லவர் என்பதை ஜனங்களுக்குக் கூறுவேன். ஒவ்வொரு நாளும் நான் உம்மைத் துதிப்பேன்.

## சங்கீதம் 36

### இராகத் தலைவனுக்கு, கர்த்தருடைய ஊழியனாகிய, தாவீது கொடுத்த பாடல்

1தீயவன் ஒருவன் தனக்குள், "நான் தேவனுக்கு பயப்படவோ, அவரை மதிக்கவோ மாட்டேன்" எனக் கூறும்போது அவன் மிகத் தீமையான காரியத்தைச் செய்கிறான்.
2அம்மனிதன் தனக்குத்தானே பொய் பேசுகிறான். அம்மனிதன் தனது சொந்தத் தவறுகளைப் பார்ப்பதில்லை. எனவே அவன் மன்னிப்பும் கேட்பதில்லை.
3அவன் வார்த்தைகள் பயனற்ற பொய்களாகும். அவன் ஞானம் பெறவுமில்லை, நல்லதைச் செய்யக் கற்றுக் கொள்ளவுமில்லை.
4இரவில், அவன் தீய செயல்களைத் திட்டமிடுகிறான். எழுந்து, நல்லவற்றைச் செய்வதில்லை. ஆனால் தீயவற்றைச் செய்வதற்கு அவன் மறுப்பதில்லை.
5கர்த்தாவே, உமது உண்மை அன்பு வானத்திலும் உயர்ந்தது. உம் நேர்மை மேகங்களிலும் உயர்ந்தது.
6கர்த்தாவே, உமது நன்மை உயரமான மலைகளைக்* காட்டிலும் உயர்ந்தது. உமது

---

**உயர்ந்த மலை** எழுத்தின் பிரகாரமாக, "எல்ஸ் மலை" இது சிரியாவில் உள்ள விசேஷ மலையாக இருக்கலாம். அல்லது "தேவனுடைய மலை." இந்த இடத்தில்தான் தேவன் தன் தூதர்களை சந்திக்கிறார்.

*நியாயம் ஆழமான சமுத்திரத்திலும் ஆழமா
னது. கர்த்தாவே, நீர் மனிதனையும் மிருகங்
களையும் காப்பாற்றுகிறீர்.*
7*உமது அன்பான இரக்கத்தைக் காட்டி
லும் விலையுயர்ந்தது எதுவுமில்லை. ஜனங்
கள் உம்மிடத்தில் அடைக்கலம் புகுகின்
றனர். உமது கருணையான பாதுகாப்பில்
மகிழ்கிறார்கள்.*
8*கர்த்தாவே, உம் வீட்டின் நற்காரியங்க
ளால் அவர்கள் புது வலிமை பெறுகி
றார்கள். அற்புதமான நதியிலிருந்து அவர்
களைப் பருகப்பண்ணுவீர்.*
9*கர்த்தாவே, ஜீவஊற்று உம்மிடமிருந்து
புறப்படுகிறது. உமது வெளிச்சம் நாங்கள்
ஒளியைக் காண உதவுகிறது.*
10*கர்த்தாவே, உம்மை உண்மையில் அறி
யும் ஜனங்களைத் தொடர்ந்து நேசியும்.
உமக்கு உண்மையாயிருக்கிற அந்த ஜனங்
களுக்கு உமது நன்மை எப்போதும் இருக்
கட்டும்.*
11*கர்த்தாவே, பெருமை நிரம்பியோர்
என்னை அகப்படுத்தாதிருக்கட்டும். தீயவர்
கள் என்னைப் பிடிக்கவிடாதிரும்.*
12*"துன்மார்க்கர் இங்கே விழுந்து நசுக்
கப்பட்டனர். அவர்கள் மீண்டும் எழுந்தி
ருப்பதில்லை" என்பதை அவர்கள் கல்ல
றைகளில் பொறித்து வையுங்கள்.*

## *சங்கீதம்* 37

***தாவீதின் பாடல்***

1*தீயோரைக் கண்டு கலங்காதே. தீய
காரியங்களைச் செய்வோரைக் கண்டு
பொறாமை கொள்ளாதே.*
2*விரைவில் வாடி மடிந்துபோகும் புல்
லைப்போன்று தீயோர் காணப்படுகிறார்கள்.*
3*கர்த்தரை நம்பி நல்லவற்றைச் செய்தால்,
பூமி கொடுக்கும் பல நற்பலன்களை நீங்கள்
அனுபவித்து வாழுவீர்கள்.*
4*கர்த்தருக்குச் சேவை செய்வதில் மகிழுங்
கள், அவர் உங்களுக்குத் தேவையான
வற்றைக் கொடுப்பார்.*
5*கர்த்தரைச் சார்ந்திருங்கள், அவரை
நம்புங்கள், செய்யவேண்டியதை அவர் செய்
வார்.*
6*நண்பகல் சூரியனைப்போன்று உன்னு
டைய நற்குணத்தையும் நீதியையும் பிர
காசிக்க செய்வாராக.*
7*கர்த்தரை நம்பு, அவர் உதவிக்காகக்
காத்திரு. தீயோர் வெற்றியடையும்போது
கலங்காதே. தீய ஜனங்கள் கொடிய திட்டங்
களை வகுக்கும்போதும், அதில் அவர்கள்
வெற்றியடையும்போதும் கலங்காதே.*
8*கோபமடையாதே! மனக்குழப்பமடை
யாதே! தீய காரியங்களைச் செய்ய முடி
வெடுக்குமளவிற்கு நீ கலக்கமடையாதே!*
9*ஏனெனில் தீயோர் அழிக்கப்படுவார்கள்.
ஆனால் கர்த்தருடைய உதவியை நாடும்
ஜனங்கள் தேவன் வாக்களித்த தேசத்தைப்
பெறுவார்கள்.*
10*இன்னும் சில காலத்திற்குப் பின் தீயோர்
இரார். அந்த ஜனங்களைத் தேடிப் பார்க்கை
யில் அவர்கள் அழிந்துபோயிருப்பார்கள்.*
11*தேவன் வாக்களித்த தேசத்தை தாழ்
மையான ஜனங்கள் பெறுவார்கள். அவர்கள்
சமாதானத்தை அனுபவிப்பார்கள்.*
12*தீயோர் நல்லோருக்கெதிராக தீய காரி
யங்களைத் திட்டமிடுவார்கள். நல்லோரை
நோக்கிப் பற்கடித்து தங்கள் கோபத்தை
வெளிப்படுத்துவார்கள்.*
13*ஆனால் நம் ஆண்டவர் அத்தீயோரைக்
கண்டு நகைப்பார். அவர்களுக்கு நேரிடவி
ருப்பதை அவர் காண்கிறார்.*
14*தீயோர் வாளை எடுக்கிறார்கள், வில்
லைக் குறிபார்க்கிறார்கள், இயலாத ஏழை
களையும், நேர்மையானவர்களையும்
கொல்ல விரும்புகிறார்கள்.*
15*அவர்கள் வில் முறியும். அவர்கள்
வாள்கள் அவர்கள் இதயங்களையே துளைக்
கும்.*
16*ஒரு கூட்டம் தீயோரைக்காட்டிலும் நல்
லோர் சிலரே சிறந்தோராவர்.*
17*ஏனெனில் தீயோர் அழிக்கப்படுவார்கள்.
கர்த்தர் நல்லோரைத் தாங்குகிறார்.*
18*தூய்மையுள்ள வாழ்நாள் முழுவதும்
கர்த்தர் பாதுகாக்கிறார். கர்த்தர் அவர்களுக்
குத் தரும் பரிசு என்றென்றும் தொடரும்.*
19*தொல்லை நெருங்குகையில் நல்லோர்
அழிக்கப்படுவதில்லை. பஞ்ச காலத்தில் நல்
லோருக்கு மிகுதியான உணவு கிடைக்கும்.*
20*ஆனால் தீயோர் கர்த்தருடைய பகை
வர்கள். அவர்களின் பள்ளத்தாக்குகள்
வறண்டு எரிந்துபோகும். அவர்கள் முற்
றிலும் அழிக்கப்படுவார்கள்.*
21*தீய மனிதன் பணத்தைக் கடனாகப்
பெற்றுத் திரும்பச் செலுத்துவதில்லை.
ஆனால் ஒரு நல்ல மனிதன் பிறருக்குத்
தாராளமாகக் கொடுக்கிறான்.*
22*நல்லவன் ஒருவன் பிறரை ஆசீர்வதித்
தால் தேவன் வாக்களித்த நிலத்தை அவர்கள்
பெறுவார்கள். ஆனால் அவன் தீமை நிகழும்
படி கேட்டால் அந்த ஜனங்கள் அழிக்கப்
படுவார்கள்.*
23*ஒரு வீரன் கவனமாக நடப்பதற்குக்
கர்த்தர் உதவுகிறார். அவன் விழாதபடிக்
கர்த்தர் வழிநடத்துகிறார்.*
24*வீரன் ஓடி பகைவனை எதிர்த்தால்
கர்த்தர் வீரனின் கைகளைப் பிடித்து அவன்
விழாதபடி தாங்கிக்கொள்கிறார்.*
25*நான் இளைஞனாக இருந்தேன். இப்
போது வயது முதிர்ந்தவன். நல்லோரைத்
தேவன் கைவிடுவதை நான் பார்த்ததில்லை.
நல்லோரின் பிள்ளைகள் உணவிற்காக
பிச்சையெடுப்பதை நான் பார்த்ததில்லை.*
26*ஒரு நல்ல மனிதன் பிறருக்குத் தாராள*

மாகக் கொடுக்கிறான். நல்ல மனிதனின்
பிள்ளைகள் ஆசீர்வாதமாக இருப்பார்கள்.
27 தீமை செய்ய மறுத்து நல்லவற்றையே
நீ செய்தால் என்றென்றும் நீ வாழ்வாய்.
28 கர்த்தர் நீதியை விரும்புகிறார். அவரைப்
பின்பற்றுவோரை உதவியின்றிக் கைவிட்ட
தில்லை. கர்த்தர் அவரைப் பின்பற்று
வோரை எப்போதும் பாதுகாக்கிறார்.
ஆனால் கெட்ட ஜனங்களை அவர் அழித்து
விடுவார்.
29 தேவன் வாக்களித்த தேசத்தை நல்லோர்
பெறுவார்கள், அங்கு அவர்கள் எந்நாளும்
வாழ்வார்கள்.
30 ஒரு நல்ல மனிதன் நல்ல போதனையை
கொடுக்கிறான். அவன் முடிவுகள் ஒவ்வொரு
வருக்கும் நியாயமுள்ளவைகள்.
31 கர்த்தருடைய போதனைகள் அவன்
இருதயத்தில் இருக்கும். அவன் நல்வழியில்
வாழ்வதை விட்டு விலகான்.
32 தீயோர் நல்லோரைத் துன்புறுத்தும் வழி
களை நாடுவார்கள். தீயோர் நல்லோரைக்
கொல்ல முனைவார்கள்.
33 அவர்கள் அவ்வாறு செயல்பட தேவன்
விடார் நல்லோர் தீயோரென நியாயந்தீர்க்
கப்பட கர்த்தர் விடார்.
34 கர்த்தருடைய உதவிக்காகக் காத்தி
ருங்கள், கர்த்தரைப் பின்பற்றுங்கள். தீயோர்
அழிக்கப்படுவார்கள். ஆனால் கர்த்தர்
உனக்கு முக்கியத்துவமளிப்பார், தேவன்
வாக்களித்த தேசத்தை நீ பெறுவாய்.
35 வல்லமைமிக்க தீயோரை நான் கண்
டேன். அவன் பசுமையான, வலிய மரத்
தைப் போலிருந்தான்.
36 ஆனால் அவன் மடிந்தான், அவனை
நான் தேடியபோது அவன் காணப்பட
வில்லை.
37 தூய்மையாகவும், உண்மையாகவும்
இருங்கள். ஏனெனில் அது சமாதானத்தைத்
தரும். சமாதானத்தை விரும்பும் ஜனங்க
ளுக்கு பல சந்ததியினர் இருப்பார்கள்.
38 சட்டத்தை மீறுகிற ஜனங்கள் அழிக்
கப்படுவார்கள். அவர்களின் சந்ததி நாட்டை
விட்டு வெளியேற நேரிடும்.
39 கர்த்தர் நல்லோரை மீட்கிறார். நல்லோர்
வேதனைப்படும்போது கர்த்தர் அவர்களின்
பெலனாவார்.
40 கர்த்தர் நல்லோருக்கு உதவிசெய்து
அவர்களைப் பாதுகாக்கிறார். நல்லோர் கர்த்
தரைச் சார்ந்திருப்பார்கள், அவர் அவர்
களைத் தீயோரிடமிருந்து காக்கிறார்.

## சங்கீதம் 38

***நினைவுகூரும் நாளுக்கான தாவீதின் பாடல்.***

1 கர்த்தாவே, நீர் கோபத்திலே என்னைக்
கடிந்து கொள்ளாதேயும். என்னை ஒழுங்கு
படுத்துகையில் கோபமடையாதேயும்.
2 கர்த்தாவே, நீர் என்னைத் துன்புறுத்து
கிறீர். உமது அம்புகள் என்னை ஆழமாகத்
தாக்கியுள்ளன.
3 நீர் என்னைத் தண்டித்தீர். இப்போது
என் உடல் முழுவதும் புண்களாயி
ருக்கின்றன. நான் பாவம் செய்ததினால்,
நீர் என்னைத் தண்டித்தீர். என் எலும்புகள்
எல்லாம் வலிக்கின்றன.
4 தீய காரியங்களைச் செய்ததினால் நான்
குற்றவாளியானேன். என் தோளில் அக்குற்ற
ங்கள் பாரமாக உள்ளன.
5 நான் அறிவில்லாத காரியமொன்றைச்
செய்தேன். இப்போது ஆறாத காயங்கள்
என்னில் உள்ளன.
6 நான் குனிந்து வளைந்தேன். நாள்
முழுவதும் நான் வருத்தமடைந்திருக்கிறேன்.
7 காய்ச்சலினாலும் வலியினாலும் என்
உடல் முழுவதும் துன்புறுகிறது.
8 நான் பெரிதும் தளர்ந்து போகிறேன்.
வலியினால் முனகவும், அலறவும் செய்
கிறேன்.
9 என் ஆண்டவரே, என் அலறலின் சத்
தத்தைக் கேட்டீர். என் பெருமூச்சு உமக்கு
மறைவாயிருக்கவில்லை.
10 என் காய்ச்சலினால் என் பெலன்
மறைந்தது. என் பார்வை பெரிதும் மங்கிப்
போயிற்று.
11 என் நோயினிமித்தம் என் நண்பர்களும்,
அயலகத்தாரும் என்னைச் சந்திப்பதில்லை.
என் குடும்பத்தாரும் என்னை நெருங்குவ
தில்லை.
12 என் பகைவர்கள் என்னைக் குறித்துத்
தீய காரியங்களைச் சொல்கிறார்கள். பொய்
யையும், வதந்திகளையும் அவர்கள் பரப்புகி
றார்கள். என்னைக் குறித்து எப்போதும்
பேசுகிறார்கள்.
13 நான் கேட்கமுடியாத செவிடனைப்
போலானேன். நான் பேசமுடியாத ஊமை
யைப் போலானேன்.
14 நான், ஒருவனைக் குறித்தும் பிறர்
கூறுபவற்றைக் கேட்க முடியாத மனிதனைப்
போலானேன். என் பகைவர்கள் தவறு
செய்கிறார்கள் என்பதை நிருபிக்க என்னால்
இயலவில்லை.
15 கர்த்தாவே எனக்கு ஆதரவளியும். எனது
தேவனாகிய ஆண்டவரே, நீர் எனக்காகப்
பேசவேண்டும்.
16 நான் ஏதேனும் பேசினால், என்
பகைவர்கள் என்னைப் பார்த்து நகைப்
பார்கள். நான் நோயுற்றிருப்பதை அவர்கள்
காண்பார்கள். செய்த தவற்றிற்கு நான்
தண்டனை அனுபவிப்பதாக அவர்கள்
கூறுவார்கள்.
17 தீயக் காரியங்களைச் செய்த குற்றவாளி
நான் என்பதை அறிவேன். என் நோவை
என்னால் மறக்க இயலாது.
18 கர்த்தாவே, நான் செய்த தீயக்
காரியங்களைக் குறித்து உம்மிடம் பேசி

னேன். என் பாவங்களுக்காகக் கவலை
யடைகிறேன்.
19என் பகைவர்கள் உயிரோடும் ஆரோக்
கியத்தோடும் இருக்கிறார்கள். அவர்கள் பல
பல பொய்களைக் கூறியுள்ளார்கள்.
20என் பகைவர்கள் எனக்குத் தீயக்
காரியங்களைச் செய்தனர் ஆனால் நான்
அவர்களுக்கு நல்லவற்றையே செய்தேன்.
நான் நல்லவற்றை மட்டுமே செய்ய முயன்
றேன், ஆனால் அந்த ஜனங்கள் எனக்கெ
திராகத் திரும்பினார்கள்.
21கர்த்தாவே, என்னை விட்டு விலகாதே
யும். என் தேவனே, என் அருகே தங்கி
யிரும்.
22விரைந்து வந்து எனக்கு உதவும்! என்
தேவனே, என்னை மீட்டருளும்.

## சங்கீதம் 39

***எதுதூன் என்னும் தலைவனுக்குத் தாவீதின் பாடல்.***

1நான், "நான் கூறும் காரியங்களில்
கவனமாக இருப்பேன். என் நாவினால்
நான் பாவம் செய்யாதபடி நான் தீய
ஜனங்களின் அருகே இருக்கையில் வாய்மூடி
மௌனமாக இருப்பேன்" என்றேன். 2நான்
பேச மறுத்தேன். நான் எதையும் கூற
வில்லை. ஆனால் உண்மையில் கலங்கிப்
போனேன்.
3நான் மிகவும் கோபமடைந்தேன், அதை
நினைக்கும்போதெல்லாம் என் கோபம்
பெருகியபடியால், நான் ஏதோ கூறினேன்.
4கர்த்தாவே, எனக்கு என்ன நேரிடும்?
எத்தனை காலம் நான் வாழ்வேன் என
எனக்குச் சொல்லும். என் ஆயுள் எவ்வளவு
குறுகியதென எனக்குத் தெரியப்படுத்தும்.
5கர்த்தாவே, எனக்கு அற்ப ஆயுளைக்
கொடுத்தீர். என் ஆயுள் உமக்குப் பொருட்
டல்ல, ஒவ்வொருவனின் ஆயுளும் மேகத்
தைப் போன்றது. ஒருவனும் நிரந்தரமாக
வாழ்வதில்லை!
6நாம் வாழும் வாழ்க்கை கண்ணாடியில்
காணும் தோற்றத்தைப் போன்றது. நமது
தொல்லைகளுக்குக் காரணமேதுமில்லை.
நாம் பொருள்களைச் சேர்த்துவைக்கிறோம்.
ஆனால் யார் அதை அனுபவிப்பாரென்பதை
நாம் அறியோம்.
7எனவே, ஆண்டவரே, நான் வேறு
எதிலும் நம்பிக்கை வைக்கவில்லை. நீரே
என் நம்பிக்கை!
8கர்த்தாவே, நான் செய்த தீய செயல்க
ளிலிருந்து என்னைக் காப்பாற்றும். ஒரு
துன்மார்க்கனைப்போல நான் நடத்தப்பட
அனுமதியாதிரும்.
9நான் என் வாயைத் திறந்து, எதையும்
கூறப்போவதில்லை. கர்த்தாவே, செய்ய
வேண்டியதை நீர் செய்தீர்.
10தேவனே, என்னைத் தண்டிப்பதை
நிறுத்தும். நீர் நிறுத்தாவிட்டால் நான்
அழிந்துபோவேன்.
11கர்த்தாவே, ஜனங்கள் தவறு செய்வ
தனால் நீர் தண்டிக்கிறீர். நேர்மையான
வாழ்க்கை வாழ போதிக்கிறீர். பூச்சி
துணியை அரிப்பதுபோல் ஜனங்கள் நேசிக்
கிறவற்றை அழிக்கிறீர். எங்களுடைய
வாழ்க்கை விரைவில் மறையும் சிறு மேகம்
போன்றது.
12கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேளும்.
நான் உம்மை நோக்கிக் கூப்பிடும் வார்த்தை
களைக் கவனியும். என் கண்ணீரைப் பாரும்.
உம்மோடு வாழ்க்கையைத் தாண்டிச்
செல்கிற ஒரு பயணியாகவே நான் இருக்கி
றேன். என் முற்பிதாக்களைப்போல சில
காலம் மட்டுமே இங்கு நான் வாழ்கிறேன்.
13கர்த்தாவே, என்னைத் தனித்து விட்டு
விடும். நான் மரிக்கும் முன்பு மகிழ்ச்சியாக
இருக்கட்டும்.

## சங்கீதம் 40

***இராகத் தலைவனுக்குத் தாவீதின் பாடல்***

1கர்த்தரைக் கூப்பிட்டேன், அவர் என்
னைக் கேட்டார். அவர் என் கூப்பிடுதலைக்
கேட்டார்.
2அழிவின் குழியிலிருந்து கர்த்தர் என்
னைத் தூக்கியெடுத்தார். சேற்றிலிருந்து*
என்னைத் தூக்கினார். என்னைத் தூக்கி
யெடுத்துப் பாறையின் மீது வைத்தார். என்
பாதங்களை உறுதியாக்கினார்.
3தேவனை வாழ்த்திப் பாடும் புதுப்
பாடலைக் கர்த்தர் என் வாயில் வைத்தார்.
எனக்கு நிகழ்ந்த காரியங்களைப் பலர்
காண்பார்கள். அவர்கள் தேவனைத் தொழு
துகொள்வார்கள். அவர்கள் கர்த்தரை
நம்புவார்கள்.
4ஒருவன் கர்த்தரை நம்பினால் அவன்
உண்மையாகவே மகிழ்ச்சியோடிருப்பான்.
பிசாசுகளிடமும், பொய்த் தெய்வங்களிடமும்
உதவிகேட்டு செல்லாத ஒருவன் உண்மை
யாகவே மகிழ்ச்சியோடிருப்பான்.
5எனது தேவனாகிய கர்த்தாவே, நீர்
அற்புதமான காரியங்கள் பலவற்றைச்
செய்திருக்கிறீர்! எங்களுக்காக அற்புதமான
திட்டங்களை வகுத்திருக்கிறீர்! கர்த்தாவே,
உம்மைப் போன்றோர் வேறெவருமில்லை!
நீர் செய்த காரியங்களைக் குறித்து நான்
மீண்டும் மீண்டும் கூறுவேன். அவை எண்
ணிலடங்காதவை.

**சேற்று** பழங்காலத்து கதைகளில் சீயோன் மரண
இடமாக கூறப்படுகின்றது. இது இருண்ட சுற்றிலும்
சேறு நிறைந்த கல்லறை போன்ற இடமாகும்.

[6]கர்த்தாவே, நீர் இவற்றை எனக்குத் தெளிவாக்கினீர்! உமக்குப் பலிகளோ, தானியக் காணிக்கைகளோ தேவையில்லை. உமக்குத் தகன பலிகளோ, பாவப்பரிகார பலிகளோ தேவையில்லை.
[7]எனவே நான், "இதோ, நானிருக்கிறேன் என்னை ஏற்றுக்கொள்ளும், நான் வருகிறேன் புத்தகத்தில் என்னைக் குறித்து இது எழுதப்பட்டிருக்கிறது.
[8]என் தேவனே, நீர் விரும்புவதைச் செய்ய நான் விரும்புகிறேன். உமது போதனைகளை நான் படித்திருக்கிறேன்.
[9]பலர் கூடிய சபையில் உமது நன்மையின் நற்செய்தியை நான் எடுத்துரைப்பேன். நான் வாய்மூடி மௌனியாயிருப்பதில்லை. கர்த்தாவே, நீர் அதை அறிவீர்.
[10]கர்த்தாவே, உமது நன்மைகளை நான் கூறுவேன். அவற்றை என் இருதயத்தில் மறைத்து வைக்கமாட்டேன். கர்த்தாவே, மீட்படைவதற்கு ஜனங்கள் உம்மை நம்பலாமென நான் அவர்களுக்குக் கூறுவேன். சபையின் ஜனங்களுக்கு நான் உமது தயவையும் உண்மையையும் மறைக்கமாட்டேன்.
[11]கர்த்தாவே, என்னிடமிருந்து உமது இரக்கத்தை மறைக்காதேயும். உமது தயவும் உண்மையும் என்னை எப்பொழுதும் பாதுகாக்கட்டும்" என்றேன்.

[12]தீயோர் என்னைச் சூழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் எண்ணிக்கைக்கடங்காதவர்கள். என் பாவங்கள் என்னைப் பிடித்தன, நான் அவற்றினின்று தப்ப இயலாது. என் தலைமுடியைக் காட்டிலும் அதிக பாவங்கள் என்னில் உள்ளன. என் தைரியத்தை இழந்துபோனேன்.
[13]கர்த்தாவே, என்னிடம் ஓடி வந்து என்னைக் காப்பாற்றும்! கர்த்தாவே, விரைந்து வந்து எனக்கு உதவும்.
[14]அத்தீயோர் என்னைக் கொல்ல முயலுகிறார்கள். கர்த்தாவே, அவர்கள் அவமானமும் ஏமாற்றமும் அடையச் செய்யும். அவர்கள் என்னைக் காயப்படுத்த விரும்புகிறார்கள். அவர்கள் அவமானத்தால் ஓடிப் போகட்டும்.
[15]அத்தீயோர் என்னைக் கேலி செய்கிறார்கள். அவர்கள் பேசமுடியாதபடி தடுமாறச் செய்யும்.
[16]ஆனால் உம்மை நோக்கிப் பார்க்கும் ஜனங்கள் மகிழ்ச்சி அடையட்டும், அந்த ஜனங்கள் எப்போதும், "கர்த்தரைத் துதிப்போம்" என்று கூறட்டும். உம்மால் காப்பாற்றப்பட்டதால் அந்த ஜனங்கள் உம்மை நேசிக்கிறார்கள்.
[17]ஆண்டவரே, நான் ஏழையும் உதவியற்றவனுமான மனிதன் எனக்கு உதவும், என்னைக் காப்பாற்றும். என் தேவனே, மிகவும் தாமதியாதேயும்.

## சங்கீதம் 41

***இராகத் தலைவனுக்குத் தாவீதின் பாடல்.***

[1]ஏழைகள் வெற்றிபெற உதவி செய்யும் ஒருவன் பல ஆசீர்வாதங்களைப் பெறுவான்.* தொல்லைகள் வரும்போது கர்த்தர் அவனை மீட்பார்.
[2]கர்த்தர் அவனைக் காத்து அவன் வாழ்வை மீட்பார். பூமியில் அவன் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பான். அவனை அழிக்க அவனுடைய பகைவர்களைத் தேவன் அனுமதிக்கமாட்டார். [3]அவன் நோயுற்றுப் படுக்கையில் விழும்போது கர்த்தர் அவனுக்குப் பலமளிப்பார். அவன் நோயுற்றுப் படுக்கையில் இருக்கலாம், ஆனால் கர்த்தர் அவனைக் குணப்படுத்துவார்.
[4]நான், "கர்த்தாவே, என்னிடம் இரக்கமாயிரும். நான் உமக்கெதிராகப் பாவம் செய்தேன். ஆனால் என்னை மன்னித்து என்னைக் குணப்படுத்தும்!" என்றேன்.
[5]என் பகைவர்கள் என்னைக் குறித்துத் தீமையானவற்றைப் பேசினார்கள். அவர்கள், "அவன் எப்போது மரித்து, மறக்கப் படுவான்?" என்றார்கள்.
[6]சிலர் என்னைச் சந்திக்க வந்தார்கள். ஆனால் அவர்கள் உண்மையில் நினைப்பதை என்னிடம் கூறவில்லை. அவர்கள் என்னைப் பற்றியச் செய்திகளை தெரிந்து கொள்ள வந்தார்கள். அதன் பிறகு அவர்கள் சென்று வதந்திகளை பரப்புகிறார்கள்.
[7]என்னைப்பற்றிய தீய சொற்களை என் பகைவர்கள் இரகசியமாக முணுமுணுக்கிறார்கள். அவர்கள் எனக்கெதிராகத் திட்டமிடுகிறார்கள்.
[8]அவர்கள், "அவன் ஏதோ தவறு செய்தான், எனவே நோயுற்றான். அவன் குணப்படப் போவதில்லை" என்கிறார்கள்.
[9]என் சிறந்த நண்பன் என்னோடு சாப்பிட்டான். நான் அவனை நம்பினேன். ஆனால் இப்போது அவனும் எனக்கெதிராகத் திரும்பிவிட்டான்.
[10]எனவே கர்த்தாவே, என்னிடம் இரக்கமாயிரும். நான் குணமாகி எழுந்திருக்கட்டும், அவர்களுக்குப் பதில் அளிப்பேன்.
[11]கர்த்தாவே, என் பகைவர்கள் என்னை காயப்படுத்தாதிருக்கட்டும். அப்போது நீர் என்னை ஏற்றுக் கொண்டீர் என்பதை அறிவேன்.
[12]நான் களங்கமற்றிருந்தேன். நீர் எனக்கு ஆதரவளித்தீர். என்னை எழுந்திருக்கப் பண்ணி, என்றென்றும் உமக்குச் சேவை செய்யப்பண்ணும்.
[13]இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரை வாழ்த்துங்கள். இவர் இருந்தவரும் இருக்கிறவருமானவர். ஆமென்! ஆமென்!

---

**பல ஆசீர்வாதங்களைப் பெறுவான்** அல்லது "உண்மையில் சந்தோஷம் (மகிழ்ச்சி)" அடைவான்.

# புத்தகம் 2

## சங்கீதம் 42

### கோராகின் குடும்பத்தின் மஸ்கீல் என்னும் இராகத் தலைவனிடம் கொடுக்கப்பட்ட தாவீதின் பாடல்

1நீரூற்றின் தண்ணீருக்காக மானானது
தாகங் கொள்ளுகிறது. அவ்வாறே என்
ஆத்துமா தேவனே, உமக்காகத் தாகமடை
கிறது.
2என் ஆத்துமா ஜீவனுள்ள தேவனுக்காகத்
தாகமடைகிறது. அவரைச் சந்திக்க நான்
எப்போது போவேன்?
3என் பகைவன் எப்போதும் என்னைக்
கேலிசெய்து, ''உன் தேவன் எங்கே? உன்
னைக் காப்பாற்றுவதற்காக அவர் இன்னமும்
வரவில்லையா?" என்று கேட்கிறபடியால்
இரவும் பகலும் என் கண்ணீரே என்
உணவாயிற்று.
4தேவனுடைய ஆலயத்திற்குக் கூட்டத்தி
னரை வழிநடத்தி நடந்ததையும் பலரோடு
ஓய்வு நாளைக் கொண்டாடியதையும் துதித்
துப் பாடல்களைப் பாடி மகிழ்ந்ததையும்
நான் நினைவு கூரும்போது என் உள்ளம்
உடைந்துபோகிறது.
5ஏன் நான் மிகவும் துக்கமாயிருக்க
வேண்டும்? ஏன் நான் மிகவும் கலங்கிப்
போகவேண்டும்? நான் தேவனுடைய உத
விக்காகக் காத்திருப்பேன். அவரைத்
துதிக்கும் வாய்ப்பு இன்னும் எனக்குக்
கிடைக்கும். அவர் என்னை மீட்பார்.
6என் தேவனே, நான் மிகவும் துக்கமாயி
ருக்கிறேன். எனவே நான் உம்மைக் கூப்பிட்
டேன். யோர்தான் பள்ளத்தாக்கிலிருந்து
எர்மோன் மலை வரைக்கும் பின் மிசார்
மலை (சிறுமலை) வரைக்கும் போனேன்.
7பூமியின் ஆழங்களிலிருந்து பொங்கியெ
ழும் தண்ணீரைப் போன்றும், கடலிலிருந்து
அலைகள் தொடர்ந்து எழும்புவதைப்
போன்றும் மீண்டும் மீண்டும் தொல்லைகள்
என்னைச் சூழ்ந்தன. கர்த்தாவே, உமது
அலைகள் என்னைச் சூழ்ந்து தாக்குகின்றன.
உமது அலைகள் என்னை மூடிக்
கொண்டன!
8ஒவ்வொரு நாளும் கர்த்தர் தமது
உண்மை அன்பை வெளிப்படுத்துகிறதினால்
ஒவ்வொரு இரவும் அவரது பாடல்களை
நான் பாடுகிறேன். ஜீவனுள்ள தேவனிடம்
நான் ஜெபிக்கிறேன்.
9என் பாறையான தேவனிடம் நான்
பேசுவேன். நான், "கர்த்தாவே, ஏன் என்னை
மறந்தீர்? என் பகைவரிடமிருந்து தப்பும்
வழியை எனக்கு நீர் ஏன் காட்டவில்லை"
என்பேன்.
10என் பகைவர்கள் என்னை இடை
விடாது கேலிசெய்து, "உன் தேவன் எங்கே?
உன்னைக் காப்பாற்ற இன்னமும் அவர்
வரவில்லையா?" என்று என்னைக் கேட்டு
அவர்களின் வெறுப்பைக் காட்டுகிறார்கள்.
11ஏன் நான் துக்கமாயிருக்க வேண்டும்?
ஏன் நான் கலக்கம் கொள்ளவேண்டும்?
நான் தேவனுடைய உதவிக்காகக்
காத்திருப்பேன். அவரைத் துதிக்கும்
வாய்ப்பு இன்னும் எனக்குக் கிடைக்கும்.
அவர் என்னை மீட்பார்!

## சங்கீதம் 43

1தேவனே, உம்மைப் பின்பற்றாதவன்
ஒருவன் இருக்கிறான். அவன் வஞ்சகன்,
பொய்யன். தேவனே, நான் நீதிமான் என்
பதை நிரூபியும், என்னைப் பாதுகாத்தரு
ளும். அம்மனிதனிடமிருந்து என்னைத் தப்
புவியும்.
2தேவனே, நீர் என் பாதுகாப்பிடம். ஏன்
என்னைக் கைவிட்டீர்? பகைவரிட மிருந்து
தப்பும் வழியை நீர் ஏன் எனக்குக்
காட்டவில்லை?
3தேவனே, உமது ஒளியும் உண்மையும்
என்மேல் பிரகாசிப்பதாக. உமது பரிசுத்த
மலைக்கு அவை வழிகாட்டும். உமது
வீட்டிற்கு அவை என்னை வழிநடத்தும்.
4நான் தேவனுடைய பலிபீடத்திற்கு வரு
வேன். என்னை மிகவும் மகிழ்ச்சியடையச்
செய்கிற தேவனிடம் நான் வருவேன்.
தேவனே, என் தேவனே, உம்மைச் சுரமண்
டலத்தால் வாழ்த்துவேன்.
5ஏன் நான் துக்கமாயிருக்க வேண்டும்?
ஏன் நான் கலக்கம் கொள்ளவேண்டும்?
நான் தேவனுடைய உதவிக்காகக் காத்தி
ருப்பேன். அவரைத் துதிக்கும் வாய்ப்பு
இன்னும் எனக்கு கிடைக்கும். அவர்
என்னை மீட்பார்.

## சங்கீதம் 44

### கோராகின் குடும்பத்தைச் சேர்ந்த இராகத் தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட 'மஸ்கீல்' என்னும் பாடல்.

1தேவனே, நாங்கள் உம்மைக் குறித்துக்
கேள்விப்பட்டிருக்கிறோம். எங்கள் முற்பி
தாக்கள் அவர்களுடைய வாழ்நாளில் நீர்
செய்தவற்றை எங்களுக்குக் கூறியிருக்கிறார்
கள். கடந்தகாலத்தில் நீர் செய்தவற்றை
அவர்கள் எங்களுக்குக் கூறியிருக்கிறார்கள்.
2தேவனே, உமது மிகுந்த வல்லமையி
னால் பிறரிடமிருந்து இத்தேசத்தை எடுத்து
எங்களுக்கு நீர் கொடுத்தீர். அந்நியர்களை
அழித்தீர்.
இத்தேசத்தினின்று அவர்களைத் துரத்தி
விலக்கினீர்.
3எங்கள் முற்பிதாக்களின் வாள்கள் தேசத்
தைக் கைப்பற்றவில்லை. அவர்களின் பல
மான கரங்கள் அவர்களை வெற்றி வீரர்க
ளாக்கவில்லை. நீர் எங்கள் முன்னோரோடி

ருந்ததால் அவ்வாறு நிகழ்ந்தது. தேவனே, உமது பெரிய வல்லமை எங்கள் முற்பிதாக்களைக் காத்தது. ஏனெனில் நீர் அவர்களை நேசித்தீர்.
4என் தேவனே, நீர் என் அரசர். நீர் கட்டளையிடும், யாக்கோபின் ஜனங்களை வெற்றிக்கு நேராக வழிநடத்தும்.
5என் தேவனே, உமது உதவியால் பகைவர்களைத் துரத்துவோம். உமது பெயரின் உதவியோடு பகைவர்கள்மீது நடப்போம்.
6நான் என் வில்லுகளையும், அம்புகளையும் நம்பமாட்டேன். என் வாள் என்னைக் காப்பாற்றாது.
7தேவனே, நீர் எங்களை எகிப்திலிருந்து மீட்டீர். எங்கள் பகைவர்களை வெட்கமடையச் செய்தீர்.
8தேவனை நாங்கள் எப்பொழுதும் துதிப்போம். உமது நாமத்தை எந்நாளும் துதிப்போம்!
9ஆனால், தேவனே, நீர் எங்களை விட்டு விலகினீர். நீர் எங்களை வெட்கமடையச் செய்கிறீர். யுத்தத்திற்கு நீர் எங்களோடு வரவில்லை.
10எங்கள் பகைவர்கள் எங்களைத் துரத்தச் செய்தீர். எங்கள் பகைவர்கள் எங்கள் செல்வத்தை எடுத்துக்கொண்டனர்.

11உணவாகும் ஆடுகளைப்போல் எங்களைக் கொடுத்துவிட்டீர். தேசங்களில் எல்லாம் எங்களைச் சிதறடித்தீர்.
12தேவனே, உமது ஜனங்களை எந்தப் பயனுமின்றி விற்றுப்போட்டீர். நீர் எங்களை விலை பேசவுமில்லை.
13எங்கள் அயலாரிடம் எங்களை நிந்தையாக்கினீர். அயலார்கள் எங்களைப் பார்த்து நகைத்து எங்களைக் கேலி செய்கிறார்கள்.
14ஜனங்கள் கூறும் வேடிக்கைக் கதைகளில் ஒன்றானோம். தங்களுக்கென நாடற்ற ஜனங்கள்கூட எங்களைப் பார்த்து நகைத்துத் தலையைக் குலுக்குகிறார்கள்.
15நான் நாணத்தால் மூடப்பட்டேன். நான் முழுவதும் வெட்கத்தால் நாணுகிறேன்.
16என் பகைவர்கள் என்னை அவமானப்படச் செய்தனர் என் பகைவர்கள் என்னைக் கேலி செய்வதின் மூலம் பழி வாங்க முயற்சி செய்கிறார்கள்.
17தேவனே, நாங்கள் உம்மை மறக்கவில்லை. ஆயினும் நீர் இவற்றையெல்லாம் எங்களுக்குச் செய்கிறீர். உம்மோடு உடன்படிக்கை செய்து கொண்டபோது நாங்கள் பொய்யுரைக்கவில்லை.
18தேவனே, நாங்கள் உம்மை விட்டு விலகிச் செல்லவில்லை. உம்மைப் பின்பற்றுவதை நிறுத்தவில்லை.
19ஆனால் தேவனே, ஓநாய்கள் வாழும் இடத்தில் எங்களைத் தள்ளினீர். மரண இருளைப்போன்ற இடத்தில் எங்களை வைத்தீர்.
20தேவனுடைய நாமத்தை நாங்கள் மறந்தோமா? பிற தெய்வங்களிடம் ஜெபித்தோமா? இல்லை!
21உண்மையாகவே, தேவன் இவற்றை அறிகிறார். எங்கள் ஆழ்ந்த இரகசியங்களையும் அவர் அறிந்திருக்கிறார்.
22தேவனே, உமக்காக ஒவ்வொரு நாளும் நாங்கள் கொல்லப்படுகிறோம். கொல்லப்படுவதற்கு அழைத்துச் செல்லப்படும் ஆடுகளைப் போலானோம்.
23என் ஆண்டவரே, எழுந்திரும்! ஏன் நித்திரை செய்கிறீர்? எழுந்திரும்! எப்பொழுதும் எங்களைக் கைவிட்டு விடாதேயும்.
24தேவனே, எங்களிடமிருந்து ஏன் ஒளிந்து கொண்டிருக்கிறீர்? எங்கள் வேதனைகளையும், தொல்லைகளையும் நீர் மறந்து விட்டீரா?
25நாங்கள் புழுதியில் தள்ளப்பட்டோம், தரையின்மேல் தலைகுப்புறப் படுத்துக் கொண்டிருக்கிறோம்.
26தேவனே, எழுந்திருந்து எங்களுக்கு உதவும். உமது உண்மையான அன்பினால் எங்களைப் பாதுகாத்தருளும்.

## சங்கீதம் 45

***"சோஷனீம்" என்னும் இசைக்கருவியில் வாசிக்க கோரா குடும்பத்தினரின் இராகத் தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட, ஒரு நேசத்தின் பாடல்.***

1அரசனுக்கு இவற்றை எழுதுகையில் அழகு சொற்கள் என் இதயத்தை நிரப்பும். தேர்ந்த எழுத்தாளனின் எழுதுகோல் வெளிப்படுத்தும் சொற்களாய் என் நாவிலிருந்து சொற்கள் வெளிப்படுகின்றன.
2நீரே யாவரினும் அழகானவர்! நீர் பேச்சில் வல்லவர். எனவே தேவன் உம்மை என்றென்றும் ஆசீர்வதிப்பார்.
3வாளை எடும். மேன்மையான ஆடைகளை அணியும்.
4நீர் அற்புதமாகக் காட்சியளிக்கிறீர்! நன்மைக்காகவும் நீதிக்காகவும் சென்று போரில் வெல்லும், அதிசயங்களைச் செய்வதற்கு வல்லமை மிக்க உமது வலக்கரத்தைப் பயன்படுத்தும்.
5உமது அம்புகள் ஆயத்தமாயுள்ளன. நீர் பலரைத் தோற்கடிப்பீர். உமது பகைவர்கள் மீது அரசனாயிரும்.
6தேவனே,* உமது ஆட்சி என்றென்றும் தொடரும். நன்மையே உமது செங்கோலாகும்.
7நீர் நன்மையை விரும்பித் தீமையைப் பகைக்கிறீர். எனவே உமது தேவன் உம்

**தேவனே** இது தேவனை ஒரு அரசனைப்போன்று புகழ்ந்துபாடும் பாடல். அல்லது இங்கு அந்த எழுத்தாளர் அரசனுடைய பட்டமாக "தேவன்" என்ற சொல்லைப் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

நண்பர்களுக்கு மேலாக உம்மை அரசனாக்கி
னார்.*
8வெள்ளைப்போளம், இலவங்கம், சந்தனம்
ஆகியவற்றின் நறுமணம் உம் ஆடைகளில்
வீசும். தந்தத்தால் மூடப்பட்ட அரண்மனை
களிலிருந்து உம்மை மகிழ்வூட்டும் இசை
பரவும்.
9மணத் தோழியரே அரசனின் குமாரத்தி
கள் ஆவர். உமது வலப் பக்கத்தில்
மணப்பெண் பொன்கிரீடம் சூடி நிற்கிறாள்.
10மகளே, கேள், கவனமாகக் கேள், நீ
புரிந்துகொள்வாய். உன் ஜனங்களையும்,
உன்தந்தையின் குடும்பத்தையும் மறந்துவிடு.
11அரசர் உன் அழகை விரும்புகிறார்.
அவர் உன் புது மணமகன். நீ அவரைப்
பெருமைப்படுத்துவாய்.
12தீருவின் செல்வந்தர்கள் ஜனங்கள்
உனக்குப் பரிசுகள் தருவார்கள். அவர்கள்
உன்னைக் காண விரும்புவார்கள்.
13அரச குமாரத்தி பொன்னில் பதிக்கப்
பெற்ற விலையுயர்ந்த அழகிய மணியைப்
போன்றவள்.
14மணமகள் அழகிய ஆடையணிந்து அரச
னிடம் அழைத்துவரப்பட்டாள். மணத்
தோழியர் அவளைத் தொடர்ந்தனர்.
15அவர்கள் மகிழ்ச்சி பொங்க வந்தனர்.
மனமகிழ்வோடு அரண்மனைக்குள் நுழைந்த
னர்.
16அரசே, உம் மகன்கள் உமக்குப் பின்
ஆட்சி செய்வார்கள். தேசம் முழுவதும்
அவர்களை ஆளச்செய்வீர்.
17உமது நாமத்தை என்றென்றும் புகழ்
பெறச் செய்வேன். என்றென்றும் ஜனங்கள்
உம்மைத் துதிப்பார்கள்.

## சங்கீதம் 46

**அலமோத் என்னும் கருவியில் வாசிக்கும்படி கொடுக்கப்பட்ட கோராகின் குடும்பத்தின் இராகத் தலைவனுக்கு, ஒரு பாடல்**

1தேவன் நம் வல்லமையின் ஊற்றாயிருக்
கிறார். தொல்லைகள் சூழ்கையில் நாம்
அவரிடமிருந்து எப்பொழுதும் உதவி
பெறலாம்.
2எனவே பூமி நடுங்கினாலும், மலைகள்
கடலில் வீழ்ந்தாலும் நாம் அஞ்சோம்.
3கடல் கொந்தளித்து இருள் சூழ்ந்தாலும்
பர்வதங்கள் நடுங்கி அதிர்ந்தாலும் நாம்
அஞ்சோம்.
4உன்னத தேவனுடைய பரிசுத்த நகரத்
திற்கு, மகிழ்ச்சி அளிக்கிற ஓடைகளை
யுடைய நதி ஒன்று இருக்கிறது.
5அந்நகரம் அழியாதபடி தேவன் அங்கி
ருக்கிறார். சூரிய உதயத்திற்குமுன் தேவன்
அதற்கு உதவுவார்.
6தேசங்கள் பயத்தால் நடுங்கும். கர்த்தர்
சத்தமிடுகையில் அந்த இராஜ்யங்கள் விழும்,
பூமி சீர்குலையும்.
7சர்வ வல்லமையுள்ள கர்த்தர் நம்மோடி
ருக்கிறார். யாக்கோபின் தேவன் நமது
பாதுகாப்பிடம்.
8கர்த்தர் செய்யும் வல்லமை மிக்க காரியங்
களைப் பாருங்கள். அவர் பூமியின்மேல்
செய்துள்ள பயத்திற்குரிய காரியங்களைப்
பாருங்கள்
9பூமியில் எவ்விடத்தில் போர் நிகழ்ந்தா
லும் கர்த்தர் அதை நிறுத்த வல்லவர்.
வீரர்களின் வில்லுகளை அவர் முறித்து
அவர்கள் ஈட்டிகளைச் சிதறடிக்கிறார். இரதங்
களை நெருப்பினால் அழிக்க தேவன்
வல்லவர்.
10தேவன், "நீங்கள் சண்டையிடுவதை
நிறுத்தி அமைதியாயிருந்து நானே தேவன்
என உணருங்கள்! நான் பூமியில் பெரு
மையுற்று தேசங்களில் வாழ்த்தப்படுவேன்"
என்று கூறினார்.
11சர்வ வல்லமையுள்ள கர்த்தர் நம்மோடி
ருக்கிறார். யாக்கோபின் தேவன் நமது
பாதுகாப்பிடம்

## சங்கீதம் 47

**கோராகின் குடும்பத்தின் இராகத் தலைவனுக்கு அளிக்கப்பட்ட, ஒரு பாடல்.**

1சகல ஜனங்களே, கைகளைத் தட்டுங்கள்,
தேவனை நோக்கி மகிழ்ச்சியால் சத்தமிடுங்
கள்.
2உன்னதமான கர்த்தர் நமது பயத்திற்
குரியவர். பூமியெங்கும் அவர் பேரரசர்.
3பிறரைத் தோற்கடிக்க அவர் நமக்கு
உதவுகிறார். அத்தேசங்களை நம் ஆளு
கைக்குட்படுத்துகிறார்.
4தேவன் நம் தேசத்தை நமக்காகத்
தேர்ந்தெடுத்தார். தான் நேசித்த யாக்கோபிற்
காக அந்த அதிசய தேசத்தைத் தேர்ந்
தெடுத்தார்.
5எக்காளமும் கொம்பும் முழங்க, கர்த்தர்
அவரது சிங்காசனத்தில் ஏறுகிறார்.
6தேவனைத் துதித்துப் பாடுங்கள், துதித்
துப் பாடுங்கள். நம் அரசரைத் துதித்துப்
பாடுங்கள், துதித்துப் பாடுங்கள்.
7அகில உலகத்திற்கும் தேவனே அரசர்.
துதிப் பாடல்களைப் பாடுங்கள்.
8பரிசுத்த சிங்காசனத்தில் தேவன் அமரு
கிறார். எல்லாத் தேசங்களையும் தேவன்
ஆளுகிறார்.
9ஆபிரகாமின் தேவனுடைய ஜனங்களைத்
தேசங்களின் தலைவர்கள் சந்திப்பார்கள்.

---

**நண்பர்களுக்கு … அரசனாக்கினார்** எழுத்தின் பிரகாரமாக, "உம் நண்பர்களைவிட உம்மீது இனிய எண்ணெயை ஊற்றினார். இது ஆலயத்தில் வைக்கப்பட்டுள்ள சிறப்பான எண்ணையாகும். இதனை அரசர்கள், ஆசாரியர்கள் தீர்க்கதரிசிகள் ஆகியோருக்கு அபிஷேகம் செய்யப் பயன்படுத்துவார்கள்.

எல்லாத் தேசங்களின் எல்லாத் தலை
வர்களும் தேவனுக்குரியவர்கள். தேவனே
எல்லோரிலும் மேன்மையானவர்.

## சங்கீதம் 48

### கோராகின் புத்திரருக்கு அளிக்கப்பட்ட ஒரு துதியின் பாடல்

1 கர்த்தர் மேன்மையானவர். தேவன் தமது
பரிசுத்த நகரில் துதிக்குரியவர்.
2 தேவனுடைய பரிசுத்த நகரம்* அழகா
னது. அது உலகை சுற்றியுள்ள அனைத்து
ஜனங்களையும் மகிழ்ச்சியடையச் செய்யும்.
சீயோன் மலை உயர்ந்த, பரிசுத்த மலை.
அதுவே பேரரசரின் நகரமாகும்.
3 அந்நகரத்து அரண்மனைகளில் தேவனே
கோட்டை என்று எண்ணப்படுவார்.
4 ஒருமுறை, சில அரசர்கள் சந்தித்து,
இந்நகரைத் தாக்கத் திட்டமிட்டார்கள். அவர்
கள் ஒருமித்து நகரை நோக்கி அணி
வகுத்தார்கள்.
5 அவ்வரசர்கள் அந்நகரைக் கண்டதும்,
ஆச்சரியமடைந்து, பயந்து, திரும்பி ஓடி
னார்கள்.
6 அச்சம் அவர்களை ஆட்கொண்டது.
அவர்கள் பயத்தால் நடுங்கினார்கள்.
7 தேவனே, நீர் வலிய கிழக்குக் காற்றால்
பெருங் கப்பல்களை உடைத்தீர்.
8 ஆம், உமது வல்லமையான காரியங்
களை நாங்கள் கேள்விப்பட்டோம். ஆனால்,
சர்வ வல்லமையுள்ள கர்த்தருடைய நகரில்,
எங்கள் தேவனுடைய நகரில் அது நிகழக்
கண்டோம். தேவன் அந்நகரை என்றும்
வலிமையுள்ள நகராக்கினார்.
9 தேவனே, உமது ஆலயத்தில் உமது
அன்பான தயவைக் கவனமாக நினைத்து
பார்த்தோம்.
10 தேவனே, நீர் புகழ் வாய்ந்தவர். பூமியெங்
கும் ஜனங்கள் உம்மைத் துதிக்கின்றனர்.
நீர் மிக நல்லவர் என்பதை அனைவரும்
அறிவோம்.
11 தேவனே, உமது நல்ல முடிவுகளால்
சீயோன் மலை மகிழ்கிறது. யூதாவின்
ஊர்கள் களிகூருகின்றன.
12 சீயோனைச் சுற்றி நட. நகரைப் பார்.
கோபுரங்களை எண்ணிப்பார்.
13 அந்த உயர்ந்த சுவர்களைப் பார். சீயோ
னின் அரண்மனைகளை வியப்புடன் பார்.
வரும் தலைமுறைக்கு அதைப்பற்றி நீ
கூறலாம்.
14 இந்த தேவன் என்றென்றும் உண்மை
யாகவே நமது தேவன். அவர் என்றென்றும்
நம்மை வழிநடத்துவார்.

---

**தேவனுடைய பரிசுத்த நகரம்** எழுத்தின் பிரகாரமாக, ஸாபான் சிகரம். கானானியர்களின் கதைகளில் ஸாபான் மலை, தெய்வங்கள் வாழும் மலையாக உள்ளது.

## சங்கீதம் 49

### கோராகின் புத்திரரின், இராகத் தலைவனுக்கு அளிக்கப்பட்ட ஒரு பாடல்

1 எல்லா தேசங்களே, இதைக் கேளுங்கள்.
பூமியில் வாழும் ஜனங்களே, எல்லோரும்
இதைக் கேளுங்கள்.
2 ஏழையும் பணக்காரருமான ஒவ்வொரு
வரும் கேட்கவேண்டும்.
3 ஞானமும் புத்திசாலித்தனமுமான சில
செய்திகளை நான் உங்களுக்குக் கூறுவேன்.
4 நான் உவமையான கதைகளைக் கேட்
டேன். இப்போது என் சுரமண்டலத்தை
இசைத்து அக்கதைகளின் பாடல்களை உங்க
ளுக்குப் பாடுவேன்.
5 தொல்லைகள் வரும்போது நான் ஏன்
அஞ்சவேண்டும்? தீயோர் என்னைச் சூழ்ந்து
அகப்படுத்த முயலும்போது நான் ஏன்
அஞ்சவேண்டும்?
6 பலமும் செல்வமும் தங்களைப் பாது
காக்குமென்று சிலர் நினைக்கிறார்கள்.
ஆனால் அந்த ஜனங்கள் மூடர்களே,
7 மனிதனான எந்த நண்பனும் உன்னை
மீட்க இயலாது. நீ தேவனுக்கு லஞ்சம் தர
முடியாது.
8 ஒருவன் தனது ஜீவனை மீட்டுக்கொள்வ
தற்குரிய பணத்தை ஒருபோதும் சம்பாதித்து
விட முடியாது.
9 என்றென்றும் வாழும் உரிமையைப்
பெறவும் கல்லறையில் தன் உடல் அழியா
மல் காக்கவும் தேவையான பணத்தை
ஒருவன் ஒருபோதும் அடைய முடியாது.
10 பாருங்கள், மூடரும் அறிவீனரும்
மடிவதைப்போலவே ஞானிகளும் இறக்கி
றார்கள், பிறர் அவர்களின் செல்வத்தைப்
பெறுகிறார்கள்.
11 கல்லறையே என்றென்றும் ஒருவனது
புது வீடாகும். அவர்களுக்குச் சொந்தமான
பல நிலங்கள் எந்த மாற்றத்தையும் ஏற்
படுத்துவதில்லை.
12 சிலர் செல்வந்தராயிருந்தாலும் இங்கே
நிரந்தரமாக வாழ்ந்துவிட முடியாது. எல்
லோரும் மிருகங்களைப் போலவே மடிவார்
கள்.
13 மூடரான மனிதருக்கும், தங்கள் செல்வங்
களினால் திருப்தியடைந்திருக்கிற அனைவ
ருக்கும் இதுவே சம்பவிக்கிறது.
14 எல்லா ஜனங்களும் ஆட்டு மந்தையைப்
போன்றே இருக்கின்றனர். கல்லறையே அவர்
கள் வாசஸ்தலம், மரணமே அவர்கள் மேய்ப்
பன். அவர்கள் சரீரங்கள் அழிந்து கல்ல
றைக்குள் நாறும்.
15 ஆனால் தேவன் எனக்கான விலையைக்
கொடுத்து என் உயிரை மீட்பார். கல்லறை
யின் வலிமையிலிருந்து என்னை அவர்
மீட்பார்!
16 சிலர் செல்வந்தராயிருப்பதினால் அவர்க
ளுக்கு அஞ்சாதீர்கள். சிலர் பெரிய அழகிய

மாளிகைகளில் வசிப்பதால் அவர்களுக்கு
அஞ்சாதீர்கள்.
17அவர்கள் இறக்கும்போது தங்களோடு
எந்தப் பொருளையும் எடுத்துச் செல்ல
மாட்டார்கள். அந்த அழகிய பொருட்களில்
எதையும் அவர்கள் எடுத்துச் செல்ல
முடியாது
18மனிதர்கள் வாழ்நாளின்போது தேவனை
வாழ்த்தவேண்டும். தேவன் மனிதருக்கு நல்ல
வற்றைச் செய்கையில் அவர்கள் தேவனை
வாழ்த்தவேண்டும்.
19அந்த ஜனங்கள் தங்கள் முற்பிதாக்களே
ளாடு சென்று அடையுங்காலம் வரும்.
அவர்கள் மீண்டும் பகலின் ஒளியைக்
காண்பதில்லை.
20ஜனங்கள் செல்வத்தைத் தங்களுக்கென
வைத்துக்கொள்ள முடியாது. மிருகங்களைப்
போலவே ஒவ்வொருவனும் மரிப்பான்.

## சங்கீதம் 50

### ஆசாபின் பாடல்களில் ஒன்று

1தெய்வங்களுக்கெல்லாம் தேவனாகிய
கர்த்தர் பேசுகிறார். சூரியன் உதிக்குமிடத்
திலிருந்து அது மறைகிற இடம் வரைக்கு
முள்ள பூமியின் எல்லா ஜனங்களையும்
அழைக்கிறார்.
2சீயோனிலிருந்து பிரகாசிக்கும் தேவன்
அழகானவர்.
3நம் தேவன் வருகிறார், அவர் அமை
தியாக இரார். அவருக்கு முன்னே நெருப்பு
எரியும். அவரைச் சூழ்ந்து புயல் வீசும்.
4தமது ஜனங்களை நியாயந்தீர்ப்பதற்கு
நமது தேவன் பூமியையும் வானத்தையும்
அழைக்கிறார்.
5தேவன் கூறுகிறதாவது, "என்னைப்
பின்பற்றுகிறவர்களே, என்னைச் சூழ்ந்து
நில்லுங்கள். என்னை வணங்குகிறவர்களே,
வாருங்கள். நாம் ஒருவருக்கொருவர் ஒரு
உடன்படிக்கை செய்துள்ளோம்."
6தேவனே நியாயாதிபதி, வானங்கள்
அவரது நன்மைகளைக் கூறும்.
7"எனது ஜனங்களே, நான் கூறுவதைக்
கேளுங்கள்! இஸ்ரவேலின் ஜனங்களே,
உங்களுக்கு எதிரான எனது சாட்சியைக்
காட்டுவேன். நானே உங்கள் தேவன்.
8உங்கள் பலிகளைக் குறித்து நான்
குறை கூற மாட்டேன். எப்போதும் இஸ்ர
வேலராகிய நீங்கள் உங்கள் தகனபலிகளை
என்னிடம் கொண்டு வந்தீர்கள். ஒவ்வொரு
நாளும் அவற்றை எனக்குக் கொடுக்கிறீர்கள்.
9உங்கள் வீட்டின் எருதுகளையோ உங்
கள் மந்தையின் ஆடுகளையோ நான்
எடுத்துக்கொள்வதில்லை.
10எனக்கு அம்மிருகங்கள் தேவையில்லை.
காட்டின் மிருகங்கள் எனக்குச் சொந்தமா
னவை. மலைகளிலுள்ள பல்லாயிரம் மிருகங்
கள் எல்லாம் எனக்குச் சொந்தமானவை.
11உயர்ந்த மலையின் ஒவ்வொரு பறவை
யையும் நான் அறிவேன். மலையின்மேல்
அசையும் பொருட்களெல்லாம் என்னுடை
யவை.
12எனக்குப் பசியில்லை! எனக்குப்
பசித்தாலும் உணவுக்காக உன்னைக் கேட்க
மாட்டேன். உலகமும் அதன் அனைத்துப்
பொருள்களும் எனக்குச் சொந்தமானவை.
13எருதுகளின் மாமிசத்தை நான் புசிப்ப
தில்லை. ஆடுகளின் இரத்தத்தை நான்
குடிக்கமாட்டேன்" என்று தேவன் கூறு
கிறார்.
14எனவே ஸ்தோத்திர பலிகளை தேவ
னுக்குக் கொண்டுவந்து அவரோடு இருக்கும்
படி வாருங்கள். நீங்கள் மிக உன்னதமான
தேவனுக்கு வாக்குறுதி பண்ணினீர்கள். என
வே வாக்களித்த பொருள்களை அவருக்குக்
கொடுங்கள்.
15தேவன், "இஸ்ரவேலரே, துன்பம் நேர்
கையில் என்னிடம் விண்ணப்பம் செய்யுங்
கள்! நான் உங்களுக்கு உதவுவேன். நீங்கள்
அப்போது என்னை மகிமைப்படுத்த முடி
யும்" என்று கூறுகிறார்.
16தேவன் தீயோரைப் பார்த்து, "நீங்கள்
எனது சட்டங்களைக் குறித்துப் பேசு
கிறீர்கள். எனது உடன்படிக்கையைக்
குறித்துப் பேசுகிறீர்கள்.
17ஆனால் நான் உங்களைத் திருத்தும்
போது அதை ஏன் வெறுக்கிறீர்கள்? நான்
கூறும் காரியங்களை ஏன் புறக்கணிக்
கிறீர்கள்?
18நீங்கள் ஒரு திருடனைப் பார்க்கிறீர்கள்,
அவனோடு சேர்வதற்காக ஓடுகிறீர்கள்.
விபச்சாரமாகிய பாவத்தைச் செய்கிறவர்க
ளோடு நீங்களும் படுக்கையில் குதிக்கிறீர்கள்.
19நீங்கள் தீயவற்றைப் பேசிப் பொய்
களைச் சொல்கிறீர்கள்.
20உங்கள் சொந்த சகோதரரையும் பிறரை
யும் குறித்து எப்போதும் தீயவற்றையே
சொல்கிறீர்கள்.
21நீங்கள் இத்தீய செயல்களைச் செய்கிறீர்
கள், நான் அமைதியாக இருப்பேன் என்று
நினைக்கிறீர்கள். நீங்கள் எதையும் சொல்லா
திருக்கிறீர்கள், நானும் அமைதியாக இருப்
பேன் என்று நினைக்கிறீர்கள் ஆனால் நான்
அமைதியாக இரேன்! நீங்கள் அதைத்
தெளிவாக உணரும்படி நான் செய்வேன்.
உங்கள் முகத்திற்கெதிராக உங்களை விமர்
சிப்பேன்!
22நீங்கள் தேவனை மறந்திருக்கிறீர்கள்.
உங்களைக் கிழித்தெறியும் முன்னர் நீங்கள்
அதை நன்கு புரிந்து கொள்ளுங்கள்! அது
நிகழ்ந்தால் உங்களை மீட்பவர் எவரு
மில்லை!
23எனவே ஒருவன் ஸ்தோத்திர காணிக்கை
செலுத்தினால் அவன் என்னை உண்மை
யிலேயே மகிமைப்படுத்துகிறான். ஒருவன்
அவனது வாழ்க்கையை மாற்றியமைத்தால்

அப்போது நான் அவனுக்கு தேவனுடைய
காக்கும் வல்லமையைக் காட்டுவேன்”
என்கிறார்.

## சங்கீதம் 51

***இராகத் தலைவனுக்குத் தாவீது எழுதிய பாடல். பத்சேபாளோடு தாவீது செய்த பாவத்திற்குப் பிறகு தீர்க்கதரிசியாகிய நாத்தான் தாவீதிடம் சென்ற காலத்தில் இது பாடப்பட்டது.***

1தேவனே, உமது மிகுந்த அன்பான
தயவினாலும் மிகுந்த இரக்கத்தினாலும் என்
னிடம் இரக்கமாயிரும். என் பாவங்களை
அழித்துவிடும்.
2தேவனே, எனது குற்றத்தைத் துடைத்து
விடும். என் பாவங்களைக் கழுவிவிடும்.
என்னை மீண்டும் தூய்மைப்படுத்தும்!
3நான் பாவம் செய்தேனென அறிவேன்.
அப்பாவங்களை எப்போதும் நான் காண்
கிறேன்.
4நீர் தவறெனக் கூறும் காரியங்களைச்
செய்தேன். தேவனே, நான் உமக்கு விரோ
தமாக பாவம் செய்தேன். நான் தவறு
செய்தவன் என்பதையும், நீர் நியாயமானவர்
என்பதையும் ஜனங்கள் அறியும்பொருட்டு
இவற்றை அறிக்கையிடுகிறேன். உமது முடி
வுகள் நியாயமானவை.
5நான் பாவத்தில் பிறந்தேன். என் தாய்
என்னைப் பாவத்தில் கருவுற்றாள்.
6தேவனே! நான் உண்மையும் நேர்மையும்
உள்ளவனாக விரும்பினால் உண்மையான
ஞானத்தை என்னுள்ளே வையும்.
7ஈசோப் செடியால் என்னைத் தூய்மை
யாக்கும். பனியைக் காட்டிலும் நான்
வெண்மையாகும் வரை என்னைக் கழுவும்!
8என்னை மகிழ்ச்சியாக்கும். மீண்டும்
மகிழ்ச்சியாக இருக்கும் வகையைக் கூறும்.
நீர் நொறுக்கின என் எலும்புகள் மீண்டும்
மகிழ்ச்சியடையட்டும்
9எனது பாவங்களைப் பாராதேயும்!
அவற்றையெல்லாம் நீக்கி விடும்!
10தேவனே, எனக்குள் ஒரு பரிசுத்த
இருதயத்தைச் சிருஷ்டியும்! எனது ஆவியை
மீண்டும் பலமாக்கும்.
11என்னைத் தூரத்தள்ளாதேயும்! என்
னிடமிருந்து உமது பரிசுத்த ஆவியை
எடுத்து விடாதேயும்!
12உமது உதவி என்னை மகிழ்விக்கிறது!
மீண்டும் அந்தச் சந்தோஷத்தை எனக்குக்
கொடும். எனது ஆவியைப் பலப்படுத்தி
உமக்குக் கீழ்ப்படிவதற்குத் தயாராக இருக்கச்
செய்யும்.
13நீர் கூறும் வாழ்க்கை நெறியைப் பாவி
களுக்குப் போதிப்பேன், அவர்கள் உம்மிடம்
திரும்புவார்கள்.
14தேவனே, என்னைக் கொலைக் குற்றவா
ளியாக்காதேயும் என் தேவனே, நீரே எனது
மீட்பர். நீர் எவ்வளவு நல்லவர் என்பதை
நான் பாடச்செய்யும்.
15என் ஆண்டவரே, நான் என் வாயைத்
திறந்து உம்மைத் துதித்துப் பாடுவேன்!
16நீர் பலிகளை விரும்பவில்லை. நீர்
விரும்பாத பலிகளை நான் கொடுக்கத்
தேவையில்லை!
17தேவன் விரும்பும் பலி பணிவான
ஆவியே. தேவனே, உடைந்து நொறுங்கிப்
போன இருதயத்தோடு உம்மிடம் வருபவரை
நீர் தள்ளிவிட மாட்டீர்.
18தேவனே, சீயோனிடம் நல்லவராகவும்
இரக்கமுடையவராகவும் இரும். எருசலேமின்
சுவர்களை எழுப்பும்.
19அப்போது நீர் நல்ல பலிகளையும்
தகனபலி முழுவதையும் ஏற்று மகிழமுடியும்.
ஜனங்கள் மீண்டும் உமது பலிபீடத்தில்
காளைகளைப் பலியிடுவார்கள்.

## சங்கீதம் 52

***இராகத் தலைவனுக்குத் தாவீது அளித்த மஸ்கீல் என்னும் பாடல் “தாவீது அபிமெலேக்கின் வீட்டில் இருக்கிறான்” என்று ஏதோமியனாகிய தோவேக் சவுலிடம் போய் கூறிய சமயத்தில் பாடப்பட்ட பாடல்.***

1பெரிய மனிதனே, நீ செய்யும் தீய
செயல்களைக் குறித்து ஏன் பெருமை
கொள்கிறாய்? நீ தேவனுக்கு முன் மதிப்
பற்றவனாவாய். நாள் முழுவதும் தீமை
செய்யவே திட்டமிடுகிறாய்.
2நீ மூடத்தனமான திட்டங்களை வகுக்கி
றாய், உன் நாவு தீட்டப்பட்ட சவரக்கத்
தியைப் போன்று ஆபத்தானது. நீ எப்போ
தும் பொய் பேசி, யாரையேனும் ஏமாற்ற
முயல்கிறாய்.
3நீ நன்மையைப் பார்க்கிலும் தீமையை
விரும்புகிறாய். உண்மையைக் காட்டிலும்
பொய் பேச முயல்கிறாய்.
4நீயும் உனது பொய்கூறும் நாவும்
ஜனங்களைத் துன்புறுத்த விரும்பும்.
5எனவே தேவன் உன்னை என்றைக்கும்
அழிப்பார்! அவர் உன்னை உனது வீட்டி
லிருந்து* இழுத்து எறிவார். அவர் உன்
னைக் கொல்வார், உனக்குச் சந்ததி இராது.
6நல்லோர் இதனைக் காண்பார்கள்.
தேவனுக்குப் பயந்து அவரை மதித்து
வாழ அவர்கள் கற்பார்கள். அவர்கள்
உன்னைப் பார்த்து நகைத்து,
7“தேவனைச்சார்ந்து வாழாத மனிதனுக்கு
நிகழ்ந்ததைப் பாருங்கள். அம்மனிதன் தனது
செல்வமும்,பொய்களும் தன்னைக் காக்கும்
என்று நம்பிக்கொண்டிருந்தான்” என்பார்
கள்.

---

**வீடு** இது சரீரத்தைக் குறிக்கும். தேவன் ஒருவனை அழிப்பார் என்பதைக் கவிதையில் சொல்லும் வகை இது.

8ஆனால் நான் தேவனுடைய ஆலயத்தில்,
நெடுங்காலம் வாழும் பச்சையான ஒலிவ
மரத்தைப் போலிருப்பேன். தேவனுடைய
அன்பை நான் என்றென்றும் நம்புவேன்.
9தேவனே, நீர் செய்த காரியங்களுக்காக
நான் உம்மைத் துதிப்பேன். நான் உமது
நாமத்தை உமது சீடர்களுக்கு முன்பாகப்
பேசுவேன். ஏனெனில் அது மிகவும் நல்
லதாக இருக்கிறது.

## சங்கீதம் 53

***மகலாத் என்னும் கருவியை இசைக்கும் இராகத் தலைவனுக்குத் தாவீது அளித்த ஒரு மஸ்கீல் என்னும் பாடல்.***

1தேவன் இல்லை என்று மூடன் மட்டுமே
நினைப்பான். அத்தகைய மனிதர்கள் கெட்ட
வர்களாகவும் தீயவர்களாகவும் அருவருப்
பானவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள்
நல்ல காரியங்களைச் செய்வதில்லை.
2தேவனுக்காக எதிர்நோக்கியிருக்கும்
ஞானமுள்ளவர்கள் உண்டோ என்று
பரலோகத்திலிருந்து தேவன் நம்மைக்
கவனித்துக்கொண்டிருக்கிறார்.
3ஆனால் ஒவ்
வொருவரும் தேவனை விட்டு வழி விலகிப்
போனார்கள். ஒவ்வொரு மனிதனும் தீயவன்.
நன்மையான காரியத்தைச் செய்பவன் ஒரு
வன் கூட இல்லை.
4தேவன்: “அத்தீயோர் நிச்சயமாக உண்
மையை அறிவர்! ஆனால் அவர்கள் என்
னிடம் ஜெபிப்பதில்லை. தங்கள் உணவை
உண்பதைப் போல் தீயோர் விரைந்து
என் ஜனங்களை அழிக்கக் காத்திருக்கி
றார்கள்” என்கிறார்.
5ஆனால் அந்த தீயோர்கள் முன்பு ஒரு
போதும் அஞ்சாத அளவுக்கு அஞ்சுவார்கள்.
அத்தீயோர் இஸ்ரவேலரின் பகைவர்கள்.
அத்தீயோரைக் தேவன் தள்ளிவிட்டார்
எனவே தேவனுடைய ஜனங்கள் அவர்
களைத் தோற்கடிப்பார்கள். அத்தீயோரின்
எலும்புகளை தேவன் சிதறடிப்பார்.
6சீயோனிலிருந்து இஸ்ரவேலருக்கு வெற்றி
வருவதாக. தேவன், அவர்கள் வெற்றிபெற
உதவுவார். அடிமைத்தனத் திலிருந்து தேவன்
தமது ஜனங்களை மீட்கும் போது யாக்கோபு
களிகூருவான். இஸ்ரவேல் மிகுந்த மகிழ்ச்சி
கொள்வான்.

## சங்கீதம் 54

***இசைக் கருவிகளை இசைக்கும் இராகத் தலைவனுக்குத் தாவீது அளித்த மஸ்கீல் என்னும் பாடல்களுள் ஒன்று. சீப்பூரார் சவுலிடம் வந்து, “எங்கள் ஜனங்கள் மத்தியில் தாவீது ஒளிந்திருக்கிறார்” எனக் கூறிய காலத்தில் பாடியது.***

1தேவனே, உமது வல்லமையான நாமத்
தைப் பயன்படுத்தி என்னைக் காப்பாற்றும்.
உமது வல்லமையைப் பயன்படுத்தி என்னை
விடுதலையாக்கும்.
2தேவனே, என் ஜெபத்தைக் கேளும். நான்
கூறும் காரியங்களைக் கேளும்.
3தேவனை தொழுதுகொள்ளாத அந்நியர்
கள் எனக்கு எதிராகத் திரும்புகிறார்கள்.
அந்த பலசாலிகள் என்னைக் கொல்ல
முயல்கிறார்கள்.
4பாருங்கள், என் தேவன் எனக்கு உதவு
வார். என் ஆண்டவர் எனக்குத் துணை
நிற்பார்.
5எனக்கு எதிராகத் திரும்பியுள்ள ஜனங்
களை என் தேவன் தண்டிப்பார். தேவன்
எனக்கு உண்மையானவராக இருப்பார்,
அவர் அந்த ஜனங்களை அறவே அழிப்பார்.
6தேவனே, நான் மனவிருப்பத்தின்படி
காணிக்கைகளை உமக்குத் தருவேன். கர்த்
தாவே, நான் உமது நாமத்தைத் துதிப்பேன்.
7என் எல்லாத் தொல்லைகளிலுமிருந்து
என்னை விடுவிக்கும்படி நான் உம்மை
வேண்டுகிறேன். எனது பகைவர்கள் தோற்க
டிக்கப்படுவதை நான் பார்க்கட்டும்.

## சங்கீதம் 55

***இசைக்கருவிகளை இசைக்கும் இராகத்தலைவனுக்குத் தாவீது அளித்த மஸ்கீல் என்னும் பாடல்.***

1தேவனே, என் ஜெபத்தைக் கேளும்.
இரக்கத்திற்கான என் ஜெபத்தை ஒதுக்கா
திரும்.
2தேவனே, எனக்குச் செவிசாய்த்துப் பதி
லளியும். என் குறைகளை உம்மிடம் நான்
முறையிடுவேன்.
3என் பகைவன் என்னிடம் தீய காரியங்
களைக் கூறினான். கெட்ட மனிதர்கள்
என்னை நோக்கிக் கூக்குரலிட்டார்கள். என்
பகைவர்கள் கோபங்கொண்டு என்னைத்
தாக்கினார்கள். என்னை வீழ்த்தும்படி
தொல்லைகளை எனக்குச் செய்தார்கள்.
4என் இருதயம் எனக்குள் நடுங்கித்
துன்புறுகிறது. நான் மரணபயம் அடைந்
தேன்.
5நான் அஞ்சி நடுங்கினேன். பயத்தால்
தாக்குண்டேன்.
6ஒரு புறாவைப்போல் சிறகுகள் எனக்கு
வேண்டுமென விரும்பினேன். அப்போது
நான் பறந்து போய் ஓய்வுகொள்ளும் இடத்
தைத் தேடியிருப்பேன்.
7நான் தூரத்திற்குப் போய், பாலைவனத்
திற்குச் செல்வேன்.
8நான் ஓடி தப்பித்துக்கொள்வேன். துன்பங்
களாகிய புயலிலிருந்து ஓடி விடுவேன்.
9-10என் ஆண்டவரே, அவர்கள் பொய்
களை நிறுத்தும். இந்நகரில் அதிகமான
கொடுமைகளையும், சண்டைகளையும் நான்
காண்கிறேன்.

என்னைச் சுற்றிலும் இரவும் பகலும் ஊரின் ஒவ்வொரு பகுதியிலும் குற்றங்கள், கொடுமைகளும் நிரம்பியுள்ளன. இந்த ஊரில் பயங்கரமான காரியங்கள் நிகழ்கின்றன.
[11]தெருக்களில் பெருங் குற்றங்கள் நேரிடுகின்றன. ஜனங்கள் பொய்களைக்கூறி, எங்கும் ஏமாற்றுகிறார்கள்.
[12]ஒரு பகைவன் என்னைத் தாக்கினால் நான் பொறுத்துக்கொள்வேன். என் பகைவர்கள் என்னைத் தாக்கினால் நான் ஒளிந்துக் கொள்வேன்.
[13]ஆனால் எனக்குச் சமமானவனும், என்னுடன் வாழ்பவனும், என் நண்பனுமாகிய நீயே எனக்குத் தொல்லைகளைத் தந்து கொண்டிருக்கிறாய்.
[14]நாங்கள் எங்கள் இரகசியங்களைப் பகிர்ந்து கொண்டோம். தேவனுடைய ஆலயத்தில் நாங்கள் ஒருமித்து வழிப்பட்டோம்.
[15]என் பகைவர்கள் அவர்கள் காலத்திற்கு முன்னே மரிப்பார்கள் என நம்புகிறேன். அவர்கள் உயிரோடே புதைக்கப்படுவார்கள் என நம்புகிறேன்! ஏனெனில் அவர்கள் தங்கள் வீடுகளில் மிகப் பயங்கரமான காரியங்களைத் திட்டமிடுகிறார்கள்.
[16]உதவிக்காக நான் தேவனைக் கூப்பிடுவேன். கர்த்தர் எனக்குப் பதில் தருவார்.
[17]நான் தேவனோடு மாலை, காலை, நடுப்பகல் வேளைகளில் பேசுவேன். என் முறையீடுகளை தேவனுக்குச் சொல்வேன். அவர் நான் கூறுபவற்றைக் கேட்கிறார்!

[18]நான் பல யுத்தங்களில் போரிட்டுள்ளேன். ஆனால் தேவன் எல்லாவற்றிலும் என்னைக் காப்பாற்றி, என்னைப் பத்திரமாகத் திரும்பவும் அழைத்து வந்தார்.
[19]தேவன் நான் கூறுவதைக் கேட்கிறார். நித்திய அரசர் எனக்கு உதவுவார்.
[20]என் பகைவர்கள் தங்கள் வாழ்க்கையை மாற்றமாட்டார்கள். அவர்கள் தேவனுக்குப் பயப்படவோ, அவரை மதிக்கவோ மாட்டார்கள்.
[21]என் பகைவர்கள் தங்கள் சொந்த நண்பர்களைத் தாக்குகிறார்கள். அவர்கள் செய்வதாக ஒப்புக்கொள்ளும் காரியங்களைச் செய்யமாட்டார்கள்.
[22]என் பகைவர்கள் மென்மையாகப் பேசுகிறார்கள், அவர்கள் சமாதானத்தைக் குறித்துப் பேசுகிறார்கள். ஆனால் உண்மையில் யுத்தங்களுக்குத் திட்டமிடுகிறார்கள். அவர்கள் சொற்கள் எண்ணெயைப்போல் மிருதுவானவை, ஆனால் அவை கத்தியைப்போல் ஊடுருவக் கூடியவை.
[23]உங்கள் கவலைகளைக் கர்த்தரிடம் ஒப்படைத்து விடுங்கள், அவர் உங்களை ஆதரிப்பார். நல்ல ஜனங்கள் தோல்வி காண்பதற்குக் கர்த்தர் அனுமதியார்.
[24]உடன்படிக்கையின் உமது பங்காக, தேவனே அந்தப் பொய்யர்களையும், கொலைகாரர்களையும் அவர்களின் பாதி வாழ்க்கை கழியும்முன்பே அவர்களைக் கல்லறைக்கு அனுப்பிவிடும்! உடன்படிக்கையின் எனது பங்காக நான் உம்மேல் நம்பிக்கை வைப்பேன்.

## சங்கீதம் 56

***“தூரத்து ஒக் மரத்தின் புறா” என்னும் இசையில் வாசிக்க இசைத்தலைவனுக்குத் தாவீது அளித்த மிக்தாம் என்ற பாடல். பெலிஸ்தர் தாவீதைக் காத் என்னும் இடத்தில் பிடித்தபோது பாடியது.***

[1]தேவனே, ஜனங்கள் என்னைத் தாக்குகிறார்கள், நீர் என்மேல் இரக்கமாயிரும். அவர்கள் என்னைப் பின்தொடர்ந்து வந்து பகலும் இரவும் என்னோடு போரிடுகிறார்கள்.
[2]என் பகைவர்கள் தொடர்ந்து என்னைத் தாக்குகிறார்கள். என்னோடு போரிடுபவர்கள் எண்ணிக்கைக்கு அடங்காதவர்கள்.
[3]நான் அஞ்சும்போது, உம்மிடம் நம்பிக்கை வைத்தேன்.
[4]நான் தேவனை நம்புகிறேன், எனவே அஞ்சேன். ஜனங்கள் என்னைத் துன்புறுத்த முடியாது! தேவன் எனக்குத் தந்த வாக்குறுதிக்காக தேவனைத் துதிப்பேன்.
[5]என் பகைவர்களோ என் வார்த்தைகளை எப்போதும் புரட்டுகிறார்கள். அவர்கள் எப்போதும் எனக்கெதிராகத் திட்டங்களை வகுக்கிறார்கள்.
[6]என்னைக் கொல்லும் வகைதேடி, அவர்கள் ஒருமித்து ஒளிந்திருந்து என் ஒவ்வொரு அசைவையும் கண்காணிக்கிறார்கள்.
[7]தேவனே, அவர்களைத் தப்பவிடாதேயும். அவர்கள் செய்த தீய காரியங்களுக்காக அவர்களை அந்நிய தேசத்தாரிடம் அனுப்பி அவர்களின் கோபத்தால் துன்புறச் செய்யும்.
[8]என் வருத்தத்தை நீர் அறிகிறீர் என் ஓயாத அழுகையை நீர் அறிகிறீர். என் கண்ணீரை நீர் நிச்சயமாகக் கணக்கிட்டு வைத்திருக்கிறீர்.
[9]எனவே நான் உம்மிடம் உதவி வேண்டும்போது, என் பகைவர்களைத் தோல்வியடையச் செய்யும். நீர் அதைச் செய்யக் கூடுமென்பதை அறிவேன். நீரே தேவன்!
[10]தேவன் தந்த வாக்குறுதிக்காக நான் அவரைத் துதிப்பேன். கர்த்தர் எனக்களித்த வாக்குறுதிக்காகநான்அவரைத் துதிப்பேன்.
[11]நான் தேவனை நம்பியிருப்பதால் அஞ்சேன். ஜனங்கள் என்னைத் துன்புறுத்த முடியாது!
[12]தேவனே, நான் உமக்கு விசேஷ பொருத்தனைகளைப் பண்ணினேன். நான் சொன்ன பொருத்தனைகளை நிறைவேற்றுவேன். என் ஸ்தோத்திரபலியை உமக்குச் செலுத்துவேன்.

13ஏனெனில் நீர் என்னை மரணத்தினின்று
காத்தீர். பிறரிடம் நான் தோல்வியடை
யாதவாறு செய்தீர். எனவே நான் தேவனை
ஒளியில் தொழுதுகொள்வேன். அதை
ஜீவனுள்ளோர் மட்டும் பார்க்க முடியும்.

## சங்கீதம் 57

***“அழிக்காதே” என்னும் பாடலின் இசைத் தலைவனுக்குத் தாவீது அளித்த மிக்தாம் என்னும் பாடல். சவுலிடமிருந்து தப்பி தாவீது குகையில் ஒளிந்திருந்தபோது பாடியது.***

1தேவனே, என்னிடம் இரக்கமாயிரும்.
என் ஆத்துமா உம்மை நம்புவதால் என்
னிடம் இரக்கமாயிரும். துன்பங்கள் என்
னைக் கடந்து செல்கையில் பாதுகாப்பிற்
காக நான் உம்மிடம் வந்துள்ளேன்.
2மிக உன்னதமான தேவனிடம் உதவி
வேண்டி நான் ஜெபிக்கிறேன். தேவன்
என்னை முற்றிலும் கண்காணித்துக் கொள்
கிறார்.
3பரலோகத்திலிருந்து அவர் எனக்கு
உதவி செய்து, என்னைக் காப்பாற்றுகிறார்.
எனக்குத் தொல்லைதரும் ஜனங்களை தோல்
விகாணச் செய்கிறார்.
தேவன் தனது உண்மையான அன்பை
எனக்குக் காட்டுகிறார்.
4என் வாழ்க்கை ஆபத்தில் சிக்கியிருக்கி
றது. என் பகைவர்கள் என்னைச் சூழ்ந்தி
ருக்கிறார்கள். அவர்கள் மனிதரை உண்ணும்
சிங்கங்களைப் போலிருக்கிறார்கள், அவர்
கள் பற்கள் ஈட்டிகளைப் போலவும், அம்பு
களைப் போலவும் கூர்மையானவை, அவர்
கள் நாவுகள் வாளைப்போன்று கூரியவை.
5தேவனே, நீர் வானங்களின்மேல் மிக
உயரத்தில் இருக்கிறீர். உமது மகிமை
பூமியை மூடிக்கொள்கிறது.
6அவர்கள் எனக்கு கண்ணி வைத்துப்
பிடிக்க விரும்புகின்றனர். நான் விழுவதற்
காக அவர்கள் ஒரு ஆழமான குழியை
வெட்டினார்கள். ஆனால் தாங்களே அக்
கண்ணியில் விழுந்தார்கள்.
7ஆனால் தேவன் என்னைப் பத்திரமாகக்
காப்பார். அவர் என்னைத் துணி
வுடனிருக்கச் செய்கிறார். நான் அவரைத்
துதித்துப் பாடுவேன்.
8என் ஆத்துமாவே, எழுந்திரு. வீணையே,
சுரமண்டலமே* இசைக்கத் தொடங்குங்கள்
அதிகாலையை விழித்தெழச் செய்வோமாக!
9என் ஆண்டவரே, ஒவ்வொருவரிடமும்
உம்மைத் துதிப்பேன். ஒவ்வொரு தேசத்தி
லும் உம்மைப்பற்றியத் துதிப் பாடல்களைப்
பாடுவேன்.
10உமது உண்மையான அன்பு வானத்தின்
உயர்ந்த மேகங்களைக் காட்டிலும் உயர்ந்
தது.
11தேவன் வானங்களுக்கு மேலாக எழுந்த
ருளியிருக்கிறார். அவரது மகிமை பூமியை
மூடிக்கொள்கிறது.

## சங்கீதம் 58

***“அழிக்காதே” என்னும் பாடலின் இசைத்தலைவனுக்குத் தாவீது அளித்த மிக்தாம் என்னும் ஒரு பாடல்.***

1நியாயாதிபதிகளாகிய நீங்கள் உங்கள்
தீர்ப்புகளில் நியாயமானவர்களாக இருக்க
வில்லை. நீங்கள் ஜனங்களுக்குச் சரியான
நீதி வழங்கவில்லை.
2நீங்கள் தீயகாரியங்களைச் செய்வதைக்
குறித்தே எண்ணுகிறீர்கள். இந்நாட்டில் நீங்
கள் கொடிய குற்றங்களைச் செய்கிறீர்கள்.
3அத்தீயோர் அவர்கள் பிறந்த உடனேயே
தவறுகளைச் செய்ய ஆரம்பித்தார்கள். பிறந்
ததுமுதலே அவர்கள் பொய்யர்களாக
வாழ்கிறார்கள்.
4அவர்கள் பாம்புகளைப் போன்று ஆபத்
தானவர்கள். காது கேளாத விரியன் பாம்பு
களைப் போன்று, அவர்கள் உண்மையைக்
கேட்க மறுக்கிறார்கள்.

5பாம்பாட்டிகளின் இசையையோ, பாடல்
களையோ விரியன் பாம்புகளால் கேட்க
முடிவதில்லை. அத்தீயோரும் அப்பாம்பு
களைப் போன்றவர்களே.
6கர்த்தாவே, அந்த ஜனங்கள் சிங்கங்
களைப் போன்றவர்கள். எனவே கர்த்தாவே,
அவர்கள் பற்களை உடைத்துவிடும்.
7வழிந்தோடுகிற தண்ணீரைப்போன்று
அந்த ஜனங்கள் மறைந்து போகட்டும்.
பாதையின் களைகளைப்போல் அவர்கள
சிதைக்கப்படட்டும்.
8அவர்கள், அசையும்போதெல்லாம் கரைந்
துபோகிற நத்தையைப் போலாகட்டும்.
அவர்கள் பகலின் ஒளியைக் காணாமல்
பிறக்கும்போதே மரித்துப்போன குழந்தை
யைப்போல இருக்கட்டும்.
9நெருப்பில் வைக்கப்படும் பானையைச்
சூடேற்றுவதற்காக விரைந்து எரியும் முட்
களைப் போன்று அவர்கள் விரைவில்
அழியட்டும்.
10நல்லவனுக்குத் தீமைசெய்த ஜனங்கள்
தண்டிக்கப்படுவதை, அவன் பார்க்கையில்
மகிழ்ச்சியடைவான். அக்கெட்ட மனிதர்க
ளின் இரத்தத்தால் அவன் தனது பாதங்
களைக் கழுவுவான்.
11அவ்வாறு நிகழும்போது, ஜனங்கள்,
“நல்லோர் உண்மையிலேயே பயன்பெறுவர்,
உலகை நியாயந்தீர்க்கும் தேவன் உண்மை
யாகவே இருக்கிறார்” என்பார்கள்.

---

**சுரமண்டலம்** *பல நரம்புகளை உடைய இசைக்கருவி யாழைப் போன்றது.*

## சங்கீதம் 59

***"அழிக்காதே" என்னும் பாடலின் இசைத்தலைவனுக்குத் தாவீது அளித்த மிக்தாம் என்னும் ஒரு பாடல். தாவீதைக் கொல்வதற்காகச் சவுல் தாவீதின் வீட்டைக் கண்காணிப்பதற்காக ஆட்களை அனுப்பியபோது பாடியது.***

1 தேவனே, என் பகைவரிடமிருந்து என்
னைக் காப்பாற்றும். என்னோடு போரிட
வந்துள்ள ஜனங்களை வெல்வதற்கு எனக்கு
உதவும்.
2 தீமை செய்யும் ஜனங்களிடமிருந்து என்
னைக் காப்பாற்றும். அக்கொலைகாரரிட
மிருந்து என்னைக் காப்பாற்றும்.
3 பாரும், பலவான்கள் எனக்காகக் காத்தி
ருக்கிறார்கள். அவர்கள் என்னைக் கொல்லக்
காத்திருக்கிறார்கள். ஆனால் நான் பாவமோ,
குற்றமோ செய்யவில்லை.
4 அவர்கள் என்னைத் துரத்துகிறார்கள்,
ஆனால் நானோ தவறேதும் செய்யவில்லை.
கர்த்தாவே, நீரே வந்து அதைப் பாரும்.
5 நீர் இஸ்ரவேலரின் தேவனாகிய, சர்வ
வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர்,
எழுந்து அந்த ஜனங்களைத் தண்டியும்.
அத்தீய ஏமாற்றுக்காரருக்கு இரக்கம் காட்டா
தேயும்

6 அத்தீயோர், ஊரினுள் மாலையில்
நுழைந்து ஊளையிட்டு அலையும் நாய்
களைப் போன்றவர்கள்.
7 அவர்களின் பயமுறுத்தல்களையும் நிந்த
னையையும் கேளும். அவர்கள் கொடிய
வற்றைச் சொல்கிறார்கள். அவற்றை யார்
கேட்டாலும் அவர்கள் கவலைப்படமாட்
டார்கள்.
8 கர்த்தாவே, அவர்களைப் பார்த்து நகைத்
தருளும், அந்த ஜனங்களையெல்லாம் கேலிக்
குள்ளாக்கும்.
9 தேவனே, நீரே என் பெலன், நான்
உமக்காகக் காத்திருக்கிறேன். தேவனே,
உயர்ந்த மலைகளில் நீரே என் பாது
காப்பான இடமாவீர்.
10 தேவன் என்னை நேசிக்கிறார், நான்
வெற்றியை காண அவர் எனக்கு உதவுவார்.
என் பகைவர்களைத் தோற்கடிக்க அவர்
எனக்கு உதவுவார்.
11 தேவனே, அவர்களை வெறுமனே
கொன்றுவிடுவீரானால், என் ஜனங்கள்
அதனை மறந்து விடுவார்கள். என் ஆண்ட
வரும் பாதுகாவலருமானவரே, உமது வல்ல
மையால் அவர்களைச் சிதறடித்துத் தோல்
வியை காணச் செய்யும்.
12 அத்தீயோர் சபித்துப் பொய்க் கூறுவர்.
அவர்கள் கூறியவற்றிற்காக அவர்களைத்
தண்டியும். அவர்கள் அகந்தையே அவர்
களுக்குக் கண்ணியாகட்டும்.
13 உமது கோபத்தில் அவர்களை அழியும்,
அவர்களை முற்றிலுமாக அழியும்! யாக்
கோபின் ஜனங்களையும், உலகம் முழுமை
யையும் தேவன் ஆளுகிறார் என்பதை
அப்போது ஜனங்கள் அறிவார்கள்!
14 ஊர் முழுவதும் உறுமியவாறே சுற்றிய
லையும் நாய்களைப் போன்று அத்தீயோர்
இரவில் ஊருக்குள் வந்தனர்.
15 அவர்கள் உணவுக்காகத் தேடியலைவார்
கள், ஆனால் உணவேதும் அவர்களுக்கு
அகப்படுவதில்லை, அவர்களுக்கு உறங்க
இடமும் இராது.
16 ஆனால் நான் உம்மைப் பாடல்களால்
வாழ்த்தித் துதிப்பேன். ஒவ்வொரு காலையும்
உமது அன்பில் நான் களிகூருவேன் ஏனெ
னில் நீரே உயர்ந்த மலைகளில் எனது
பாதுகாப்பாயிருக்கிறீர். தொல்லைகள் வரும்
பொழுது நான் உம்மிடம் ஓடிவரலாம்.
17 உம்மை வாழ்த்தும் என் பாடல்களை
நான் பாடுவேன். ஏனெனில் நீரே உயர்ந்த
மலைகளில் எனது பாதுகாப்பாயிருக்கிறீர்.
நீரே என்னை நேசிக்கும் தேவன்.

## சங்கீதம் 60

***"உடன்படிக்கையின் லில்லி" என்ற பாடலின் இசைத்தலைவனுக்குத் தாவீது அளித்த பாடல். இது போதிப்பதற்குரியது. தாவீது ஆராம் நகராயீம், ஆராம் சோபா ஆகிய நாட்டினரோடு யுத்தம் பண்ணிய காலத்தில், யோவாப் திரும்பிவந்து 12,000 ஏதோமிய வீரர்களை உப்புப் பள்ளத்தாக்கில் வெட்டிக் கொன்றபோது பாடியது.***

1 தேவனே, எங்களோடு சினங்கொண்டீர்,
எனவே எங்களை நிராகரித்து அழித்தீர்.
தயவாய் எங்களிடம் திரும்பி வாரும்.
2 நீர் பூமியை அசைத்து அதைப் பிளக்கப்
பண்ணினீர். நம் உலகம் பிரிந்து விழுந்தது.
அருள்கூர்ந்து அவற்றை ஒன்றாக இணைத்து
விடும்.
3 நீர் உமது ஜனங்களுக்குப் பல தொல்லை
களை அனுமதித்தீர். நாங்களோ தள்ளாடி
விழுகின்ற குடிவெறியர்களைப் போலா
னோம்.
4 உம்மைத் தொழுதுகொள்ளும் ஜனங்
களை நீர் எச்சரித்தீர். அவர்கள் இப்போது
பகைவனிடமிருந்து தப்பிச்செல்ல முடியும்.
5 உமது மிகுந்த வல்லமையைப் பயன்
படுத்தி எங்களைக் காப்பாற்றும்! என்
ஜெபத்திற்குப் பதில் தாரும், நீர் நேசிக்கிற
ஜனங்களைக் காப்பாற்றும்.
6 தேவன் அவரது ஆலயத்தில்* பேசினார்:
"நான் யுத்தத்தில் வென்று, அவ்வெற்றியால்
மகிழ்வேன்! இந்நாட்டை எனது ஜனங்க
ளோடு பகிர்ந்து கொள்வேன். அவர்களுக்குச்
சீகேமைக் கொடுப்பேன். அவர்களுக்குச்
சுக்கோத் பள்ளத்தாக்கையும் கொடுப்பேன்.
7 கீலேயாத்தும், மனாசேயும் என்னுடை

---

**ஆலயத்தில்** "அவரது பரிசுத்தத்தில்."

யவை. எப்பிராயீம் எனது தலைக்குப்
பெலன். யூதா என் நியாயத்தின் கோல்.*
8மோவாப் என் பாதங்களைக் கழுவும்
பாத்திரம் ஏதோம் என் மிதியடிகளைச்
சுமக்கும் அடிமை. நான் பெலிஸ்தரை
வென்று என் வெற்றியை முழக்கமிடுவேன்!”
9-10தேவனே நீர் எங்களை விட்டு விலகி
னீர்! வலிய, பாதுகாவலான நகரத்திற்குள்
யார் என்னை அழைத்துச் செல்வார்?
ஏதோமிற்கு எதிராகப் போர் செய்ய யார்
என்னை வழி நடத்துவார்? தேவனே, நீர்
மட்டுமே எனக்கு உதவக்கூடும். ஆனால்
நீரோ எங்களை விட்டு விலகினீர்! நீர்
எங்கள் சேனையோடு செல்லவில்லை.
11தேவனே, எங்கள் பகைவரை வெல்ல
எங்களுக்கு உதவும்! மனிதர்கள் எங்களுக்கு
உதவ முடியாது!
12தேவன் மட்டுமே எங்களைப் பலப்படுத்த
முடியும். தேவன் எங்கள் பகைவர்களை
வெல்லமுடியும்.

## சங்கீதம் 61

### நரம்புக் கருவிகளை இசைக்கும் இசைத்தலைவனுக்குத் தாவீது அளித்த பாடல்களில் ஒன்று.

1தேவனே, என் ஜெபப் பாடலைக்
கேட்டருளும். என் ஜெபத்தைக் கேளும்.
2நான்எங்கிருந்தாலும், எப்படிச் சோர்ந்து
போனாலும் நான் உம்மை உதவிக்குக்
கூப்பிடுவேன். எட்டாத உயரத்தின் பாது
காவலான இடத்திற்கு என்னைச் சுமந்து
செல்லும்.
3நீரே எனக்குப் பாதுகாப்பான இடம்!
நீரே என் பகைவரிடமிருந்து என்னைக்
காக்கும் பலமான கோபுரம்.
4நான் என்றென்றும் உம்முடைய கூடாரத்
தில்* வாழ்ந்திருப்பேன். நீர் என்னைப்
பாதுகாக்கத்தக்க இடத்தில் நான்
ஒளிந்திருப்பேன்.
5தேவனே, நான் உமக்குப் பண்ணின
பொருத்தனையைக் கேட்டீர். உம்மைத்
தொழுதுகொள்வோரின் ஒவ்வொரு பொரு
ளும் உம்மிடமிருந்து வருவதேயாகும்.
6அரசனுக்கு நீண்ட ஆயுளைக் கொடும்.
அவர் என்றென்றும் வாழட்டும்!
7அவர் என்றென்றும் தேவனோடு வாழட்
டும்! உமது உண்மையான அன்பால் அவ
ரைப் பாதுகாத்துக்கொள்ளும்.
8நான் என்றைக்கும் உமது நாமத்தைத்
துதிப்பேன். நான் உமக்குக் கூறிய உறுதி
மொழியின்படியே, ஒவ்வொரு நாளும் செய்
வேன்.

## சங்கீதம் 62

### எதுதூன் என்னும் இராகத்தலைவனுக்குத் தாவீது அளித்த பாடல்களில் ஒன்று

1என்ன நடந்தாலும் பரவாயில்லை என்
ஆத்துமா பொறுமையோடு தேவன் என்னை
மீட்கும்படி காத்திருக்கிறது. என் இரட்சிப்பு
அவரிடத்திலிருந்து மட்டுமே வருகிறது.
2எனக்கு அநேக விரோதிகள் இருக்கிறார்
கள். ஆனால் தேவனே எனக்கு அரணாக*
இருக்கிறார். தேவன் என்னைக் காப்பாற்றுகி
றார். உயரமான மலைகளில் தேவனே என்
பாதுகாவலான இடம். பெரும் படை களும்
என்னைத் தோற்கடிக்க இயலாது.
3எத்தனை காலம் என்னைத் தாக்குவீர்.
நானோ சாய்ந்த சுவரைப் போலவும் வீழும்
நிலையிலுள்ள வேலியைப் போலவும் இருக்
கிறேன்.
4மேன்மையான என் நிலையை எண்ணி
அந்த ஜனங்கள் என்னைக் கொல்லத்
திட்டமிடுகிறார்கள். அவர்கள் என்னைக்
குறித்துப் பொய்களைக் கூறுவதில் மகிழ்ச்சி
அடைகிறார்கள். வெளிப்படையாக அவர்
கள் என்னைப் பற்றி நல்லவற்றைப் பேசினா
லும் இரகசியமாக என்னை சபிக்கிறார்கள்.
5தேவன் என்னை மீட்க வேண்டுமென்று
பொறுமையோடு என் ஆத்துமா காத்திருக்
கிறது. தேவன் ஒருவரே என் நம்பிக்கை.
6தேவனே என் அரண், தேவன் என்னைக்
காப்பாற்றுகிறார். உயரமான மலைகளில்
தேவனே என் பாதுகாவலான இடம்.
7என் பெருமையும் வெற்றியும் தேவனிட
மிருந்து வருகிறது. அவர் எனக்குப் பலமான
அரண். தேவன் எனக்குப் பாதுகாவலான
இடம்.
8ஜனங்களே, எப்போதும் தேவனை
நம்புங்கள்! தேவனிடம் உங்கள் தொல்லை
களைக் கூறுங்கள்! தேவனே நமக்குப்
பாதுகாவலான இடம்.
9மனிதர்கள் உண்மையாகவே உதவ
முடியாது. உண்மையான உதவிக்கு நீங்கள்
அவர்களை நம்பமுடியாது. தேவனோடு
ஒப்பிடுகையில் அவர்கள் லேசான காற்றைப்
போல்ஒன்றுமில்லாதவர்களாயிருக்கிறார்கள்.
10கட்டாயமாகப் பொருளைப் பறிக்கும்
வல்லமையை நம்பாதீர்கள். திருடுவதால்
பொருளைப்பெற முடியுமென நினைக்காதீர்
கள். நீங்கள் செல்வந்தரானால் அச்செல்வங்
கள் உங்களுக்கு உதவுமென நம்பாதீர்கள்.
11நீங்கள் உண்மையிலேயே சார்ந்து நிற்க
வல்ல பொருள் ஒன்று உண்டு என்று

---

**கோல்** ஒரு விசேஷமான கோல். அரசர்களும் தலைவர்களும் தாங்கள் ஆட்சியாளர்கள் என்பதைக் குறிக்க ஒரு கோல் ஏந்தியிருப்பர்.

**கூடாரம்** எருசலேமின் ஆலயம் அல்லது அந்த ஆலயம் கட்டப்படுமுன்னர் ஜனங்கள் தேவனை வழிபட்ட பரிசுத்தக் கூடாரம்.

**அரண்** பாதுகாவலுக்கான உயரமும் பலமும் உள்ள ஒரு கட்டிடம் அல்லது நகரம்.

தேவன் சொல்கிறார். வல்லமை தேவனிட
மிருந்து வருகிறது.
12என் ஆண்டவரே, உமது அன்பு உண்
மையானது. ஒருவன் செய்யும் காரியங்
களுக்கேற்ப நீர் மனிதனைத் தண்டிக்கவோ,
அவனுக்கு உதவவோ செய்கிறீர்.

## சங்கீதம் 63

***யூதாவின் பாலைவனத்தில் இருந்தபோது தாவீது பாடிய ஒரு பாடல்.***

1தேவனே, நீரே என் தேவன். நீர்
எனக்கு மிகவும் தேவையானவர். நீரற்று
உலர்ந்து பாழாய்ப்போன தேசத்தைப்
போன்று என் ஆத்துமாவும் சரீரமும் உமக்
காகத் தாகமாயிருக்கிறது.
2உமது ஆலயத்தில் நான் உம்மைக்
கண்டேன். நான் உமது வல்லமையையும்
மகிமையையும் கண்டேன்.
3ஜீவனைக் காட்டிலும் உமது அன்பு
சிறந்தது. என் உதடுகள் உம்மைத் துதிக்கும்.
4என் வாழ்நாளில் நான் உம்மைத் துதிப்
பேன். உமது நாமத்தைக் கூறி ஜெபத்தோடு
என் கைகளை உயர்த்துவேன்.
5சுவையான உணவு வகைகளை உண்
டதுபோல் நான் திருப்தியடைவேன்.
மகிழ்ச்சி நிறைந்த உதடுகளுள்ள என்
வாய் உம்மைத் துதிக்கும்.
6என் படுக்கையில் நான் உம்மை நினைவு
கூருவேன். நள்ளிரவிலும் உம்மை நான்
நினைவுகூருவேன்.
7நீர் உண்மையாகவே எனக்கு உதவினீர்!
நீர் என்னைப் பாதுகாத்ததால் நான் மகிழ்
கிறேன்.
8என் ஆத்துமா உம்மைப் பற்றிக்கொள்கி
றது. நீர் என் கைகளைப் பிடித்துக்கொள்
கிறீர்.
9சில ஜனங்கள் என்னைக் கொல்ல
முயல்கிறார்கள். ஆனால் அவர்கள் அழிக்கப்
படுவார்கள். அவர்கள் தங்கள் கல்லறைக்
குள்ளே போவார்கள்.
10அவர்கள் பட்டயத்தால் கொல்லப்படு
வார்கள். அவர்கள் பிணங்களைக் காட்டு
நாய்கள் தின்னும்.
11ஆனால் அரசனோ அவரது தேவனோடு
மகிழ்ச்சியாயிருப்பார். அவருக்குக் கீழ்ப்ப
டிவதாக உறுதி தந்த ஜனங்கள் தேவனைத்
துதிப்பார்கள். ஏனெனில் அவர் எல்லாப்
பொய்யர்களையும் தோற்கடித்தார்.

## சங்கீதம் 64

***இராகத் தலைவனுக்குத் தாவீதின் ஒரு பாடல்.***

1தேவனே நான் கூறுவதைக் கேளும்.
நான் என் பகைவர்களுக்கு அஞ்சுகிறேன்.
என் ஜீவனைப் பகைவரிடமிருந்து காத்த
ருளும்.
2என் பகைவரின் இரகசிய திட்டங்களி
லிருந்து என்னைக் காப்பாற்றும். அத்தீய
ஜனங்களிடமிருந்து என்னை மறைத்துவை
யும்.
3அவர்கள் என்னைக் குறித்து இழிவான
பொய்கள் பலவற்றைக் கூறினார்கள். அவர்
கள் நாவுகளோ கூரிய வாள்களைப் போன்
றவை. அவர்களின் கசப்பான வார்த்தைகள்
அம்புகளுக்கு ஒப்பானவை.
4அவர்கள் ஒளிந்திருந்து உடனடியாக
எவ்வித பயமுமின்றி* தங்கள் அம்புகளை
நேர்மையான, சாதாரண ஒரு மனிதனை
நோக்கி எய்கிறார்கள்.
5அவர்கள் ஒவ்வொருவரும் தீங்கு செய்வ
தற்கு தங்களைத் தாங்களே உற்சாகப்படுத்திக்
கொண்டனர். அவர்கள் பொய்களைக் கூறி,
கண்ணிகளை வைக்கிறார்கள். அவர்கள்
ஒவ்வொருவரையும் நோக்கி "நாம் கண்ணி
வைப்பதை யாரும் பார்க்கமாட்டார்கள்"
என்று சொல்லிக் கொள்கிறார்கள்.
6அவர்கள் கண்ணிகளை மறைத்து
வைத்திருக்கிறார்கள். அவர்கள் பலியை
எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறார்கள்.*
ஜனங்கள் நினைப்பதை அறிவது கடினமா
னது.
7ஆனால் தேவனும் தமது "அம்புகளை"
எய்யக்கூடும்! தீயோர் அதை அறிந்துகொள்
ளும் முன்னமே காயமுற்றிருப்பார்கள்.
8தீயோர் பிறருக்குத் தீயவற்றைச் செய்ய
நினைப்பார்கள். ஆனால் தேவனால் அவர்
கள் திட்டத்தை அழிக்க முடியும். அத்தீய
காரியங்கள் அவர்களுக்கே நிகழுமாறு
செய்ய இயலும். அவர்களைக் காணும்
ஒவ்வொருவரும் ஆச்சரியத்தால் தங்கள்
தலைகளை அசைப்பார்கள்.
9தேவன் செய்ததை ஜனங்கள் அறிந்து
கொள்வார்கள். அவரைக் குறித்து அந்த
ஜனங்கள் பிறருக்குச் சொல்வார்கள். அப்
போது ஒவ்வொருவரும் தேவனைக் குறித்து
அதிகமாக அறிவார்கள். தேவனுக்கு அஞ்சி,
அவரை மதிக்க அவர்கள் கற்றுக்
கொள்வார்கள்.
10நல்லோர் கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயி
ருப்பார்கள். அவர்கள் தேவனில் நம்பிக்கை
கொள்வார்கள். நல்லோராகிய நீங்கள் எல்
லோரும் கர்த்தரைத் துதியுங்கள்.

---

***எவ்வித பயமுமின்றி*** அல்லது "எவ்வித கௌரவமும் இன்றி" எனப் பொருள்படும்.

***அவர்கள் கண்ணிகளை ... கொண்டிருக்கிறார்கள்*** அல்லது "அவர்கள் நம்மிடம் சரியான திட்டம் உள்ளது" என்று கூறி அவர்கள் தீய திட்டங்களோடு உள்ளனர்.

## சங்கீதம் 65

### இராகத் தலைவனுக்குத் தாவீது அளித்த ஒரு துதிப் பாடல்.

1சீயோனின் தேவனே, நான் உம்மைத்
துதிக்கிறேன். நான் வாக்குறுதி பண்ணி
னவற்றை உமக்குத் தருவேன்.
2நீர் செய்த காரியங்களைக் குறித்து
நாங்கள் கூறுவோம். நீர் எங்கள் ஜெபங்
களைக் கேட்கிறீர். உம்மிடம் வருகிற ஒவ்
வொருவரின் ஜெபத்தையும் நீர் கேட்கிறீர்.
3எங்கள் பாவங்கள் மிகுந்த பாரமாயிருக்
கையில் அப்பாவங்களை நீர் மன்னித்தரு
ளும்.
4தேவனே, நீர் உமது ஜனங்களைத்
தேர்ந்தெடுத்தீர். நாங்கள் உமது ஆலயத்தில்
வந்து தொழுதுகொள்ளுமாறு நீர் எங்களைத்
தேர்ந்தெடுத்தீர். நாங்கள் மிகவும் மகிழ்ச்
சியடைகிறோம்! உமது பரிசுத்த இடமாகிய
உமது ஆலயத்தில் எல்லா அதிசயக் காரியங்
களையும் நாங்கள் பெற்றோம்.
5தேவனே, நீர் எங்களைக் காப்பாற்றும்.
நல்லோர் உம்மிடம் ஜெபம் செய்வார்கள்,
நீர் அவர்கள் ஜெபத்திற்குப் பதிலளிப்பீர்.
அவர்களுக்குப் பல அதிசயமான காரியங்
களைச் செய்வீர். உலகத்தின் பல பாகங்க
ளில் வாழ்வோர் உம்மை நம்புவார்கள்.
6தேவன் தமது வல்லமையால் மலைகளை
உண்டாக்கினார். அவரது வல்லமையை
நம்மைச் சுற்றிலும் நாம் காண்கிறோம்.
7சீறும் கடலைத் தேவன் அமைதியாக்கி
னார். “சமுத்திரம்” போல ஜனங்களைத்
தேவன் பூமியில் உண்டாக்கினார்.
8நீர் செய்யும் அதிசயமான காரியங்களைக்
கண்டு உலகமெங்கும் வாழும் ஜனங்கள்
வியப்படைவார்கள். சூரிய உதயமும், சூரி
யன் மறைவும் எங்களுக்கு மிகுந்த
மகிழ்ச்சியூட்டும்.
9நீர் நிலத்தைப் பாதுகாக்கிறீர். நீரூற்றி,
தாவரங்கள் வளர வகை செய்கிறீர்.
தேவனே, நீர் நீரூற்றுகளில் தண்ணீரை
நிரப்பி, பயிர்களை வளரச்செய்கிறீர்.
இவ்வாறு நீர் இதனைச் செய்கிறீர்:
10உழுத நிலங்களில் மழை தண்ணீரை
ஊற்றுகிறீர். வயல்களை தண்ணீரால்
நனையப்பண்ணுகிறீர். நிலத்தை மழையால்
மிருதுவாக்குகிறீர். இளம்பயிர்கள் வளர்ந்
தோங்கச் செய்கிறீர்.
11நல்ல அறுவடையால் புத்தாண்டை
ஆரம்பிக்கிறீர். பயிர்களால் வண்டிகளில்
பாரமேற்றுகிறீர்.
12பாலைவனங்களும் மலைகளும் புற்க
ளால் நிரம்பின.
13புல் வெளிகளில் ஆட்டு மந்தைகள்
நிரம்பின. பள்ளத்தாக்குகளில் தானியங்கள்
நிரம்பின. ஒவ்வொருவரும் மகிழ்ச்சியால்
ஆடிப் பாடிக் கொண்டிருந்தனர்.

## சங்கீதம் 66

### இராகத் தலைவனுக்கு, ஒரு துதிப் பாடல்.

1பூமியிலுள்ள அனைத்தும் தேவனை
நோக்கி மகிழ்ச்சியால் ஆர்ப்பரிக்கும்.
2அவரது மகிமைமிக்க நாமத்தைத் துதி
யுங்கள்! துதிப்பாடல்களால் அவரைப்
பெருமைப் படுத்துங்கள்!
3அவரது வேலைப்பாடுகள் எவ்வளவு
அதிசயமானவை என்று தேவனுக்குக்
கூறுங்கள்! தேவனே, உமது வல்லமை மிகப்
பெரியது! உமது பகைவர்கள் குனிந்து
வணங்குவார்கள். அவர்கள் உம்மைக் கண்டு
அஞ்சுவார்கள்.
4உலகம் முழுவதும் உம்மை தொழுது
கொள்ளட்டும். ஒவ்வொருவரும் உமது
நாமத்தை துதித்துப் பாடட்டும்
5தேவன் செய்த காரியங்களைப் பாருங்
கள்! அக்காரியங்கள் நம்மை வியக்க
வைக்கும்.
6தேவன் கடலை வறண்ட நிலமாக்கினார்.
மகிழ்ச்சியுடைய அவரது ஜனங்கள் நதியைக்
கடந்து போனார்கள்.
7தேவன், அவரது மிகுந்த வல்லமையால்
உலகத்தை ஆளுகிறார். எல்லா இடங்களிலு
முள்ள ஜனங்களை தேவன் கண்ணோக்கு
கிறார். ஒருவனும் அவரை எதிர்த்துப்
போராட முடியாது.
8ஜனங்களே, நம் தேவனைத் துதியுங்கள்,
உரத்த குரலில் துதிப்பாடல்களை அவ
ருக்குப்பாடுங்கள்.
9தேவன் நமக்கு உயிரைத் தந்தார், தேவன்
நம்மைக் காப்பாற்றுகிறார்.
10ஜனங்கள் வெள்ளியை நெருப்பிலிட்டுப்
பரிசோதிப்பதைப் போல தேவன் நம்மைப்
பரிசோதித்தார்.
11தேவனே, நீர் எங்களைக் கண்ணியில்
விழச்செய்தீர். கனமான பாரத்தை நீர் எங்
கள் மேல் வைக்கிறீர்.
12எங்கள் பகைவர்கள் எங்கள்மீது நடக்க
நீர் அனுமதித்தீர். நெருப்பின் வழியாகவும்
தண்ணீரின் வழியாகவும் நடக்குமாறு
எங்களைச் வழிநடத்தினீர். ஆனால் ஒரு
பத்திரமான இடத்திற்கு எங்களை அழைத்து
வந்தீர்.
13-14எனவே நான் உமது ஆலயத்திற்குப்
பலிகளைக் கொண்டு வருவேன். நான்
தொல்லையில் சிக்குண்டபோது உதவிக்காக
உம்மைக் கேட்டேன். உமக்குப் பல பொருத்
தனைகளைப் பண்ணினேன். இப்போது,
நான் பொருத்தனைப் பண்ணினதை உமக்
குக் கொடுக்கிறேன்.
15நான் பாவப்பரிகார பலிகளை உமக்குக்
கொடுக்கிறேன். நான் ஆட்டுக் கடாக்களோடு
நறுமணப்பொருட்களைப் புகையிடுவேன்.
நான் உமக்குக் காளைகளையும் செம்மறி
ஆடுகளையும் தருவேன்.

16தேவனைத் தொழுதுகொள்கிற எல்லா
ஜனங்களே, வாருங்கள், தேவன் எனக்குச்
செய்தவற்றை உங்களுக்குக் கூறுவேன்.
17நான் அவரிடம் ஜெபித்தேன், நான்
அவரைத் துதித்தேன்.
18என் இருதயம் தூய்மையாயிருந்தது,
எனவே என் ஆண்டவர் நான் கூறியவற்
றைக் கேட்டார்.
19தேவன் நான் கூறியவற்றைக் கேட்டார்,
தேவன் என் ஜெபத்தைக் கேட்டார்.
20தேவனைத் துதியுங்கள், தேவன் என்
னிடம் பாராமுகமாக இருக்கவில்லை, அவர்
என் ஜெபத்தைக் கேட்டார். தேவன் அவரது
அன்பை என்னிடம் காட்டியருளினார்.

## சங்கீதம் 67

### இசைக்கருவிகளை இசைக்கும் இராகத் தலைவனுக்கு ஒரு துதிப் பாடல்.

1தேவனே, என்னிடம் இரக்கம் காட்டி
என்னை ஆசீர்வதியும். தயவாய் எங்களை
ஏற்றுக்கொள்ளும்!
2தேவனே, பூமியிலுள்ள ஒவ்வொருவனும்
உம்மைக் குறித்துத் தெரிந்துகொள்கிறான்
என நம்புகிறேன். நீர் எவ்வாறு ஜனங்களை
மீட்கிறீரென்று ஒவ்வொரு தேசமும் பார்க்
கட்டும்.
3தேவனே, ஜனங்கள் உம்மைத் துதிக்
கட்டும்! எல்லா ஜனங்களும் உம்மைத்
துதிக்கட்டும்.
4எல்லா தேசங்களும் களிக்கூர்ந்து மகி
ழட்டும்! ஏனெனில் நீர் ஜனங்களைத் தகு
தியாக நியாயந்தீர்க்கிறீர், நீர் ஒவ்வொரு
தேசத்தையும் அரசாளுகிறீர்.
5தேவனே, ஜனங்கள் உம்மைத் துதிக்
கட்டும். எல்லா ஜனங்களும் உம்மைத்
துதிக்கட்டும்.
6தேவனே, எங்கள் தேவனே, எங்களை
ஆசீர்வதியும். எங்கள் தேசம் நல்ல அறு
வடையை எங்களுக்குக் கொடுக்கட்டும்.
7தேவன் நம்மை ஆசீர்வதிக்கட்டும். பூமி
யிலுள்ள எல்லா மனிதரும் தேவனுக்குப்
பயந்து அவரை மதிக்கட்டும்.

## சங்கீதம் 68

### இராகத்தலைவனுக்குத் தாவீது அளித்த துதிப் பாடல்களுள் ஒன்று.

1தேவனே, எழுந்து உமது பகைவர்களைச்
சிதறடிக்கச் செய்யும். அவனது பகைவர்கள்
எல்லோரும் அவனை விட்டு ஓடிப்
போகட்டும்.
2காற்றால் சிதறடிக்கப்படும் புகையைப்
போன்று உமது பகைவர்கள் சிதறுண்டு
போகட்டும். நெருப்பில் உருகும் மெழுகைப்
போன்று உமது பகைவர்கள் அழிந்து
போகட்டும்.
3ஆனால் நல்லோர் மகிழ்ச்சியாயிருப்பார்
கள். நல்லோர் தேவனோடுகூட மகிழ்ச்சியாய்
காலம் கழிப்பார்கள். நல்லோர் களிப்ப
டைந்து மிகவும் மகிழ்ச்சி கொள்வார்கள்.
4தேவனை நோக்கிப் பாடுங்கள், அவர்
நாமத்தைத் துதித்துப் பாடுங்கள். தேவனுக்கு
வழியை உண்டுபண்ணுங்கள், அவர்
பாலைவனத்தில் அவரது இரதத்தைச்
செலுத்துகிறார். அவர் நாமம் யேகோவா*
அவரது நாமத்தைத் துதியுங்கள்.
5அவரது பரிசுத்த ஆலயத்தில், தேவன்
அநாதைகளுக்குத் தந்தையைப் போன்றவர்.
தேவன் விதவைகளைக் கவனித்துக்கொள்
கிறார்.
6தேவன் தனிமையில் வாழும் ஜனங்
களுக்கு வீட்டைக் கொடுக்கிறார். தேவன்
அவரது ஜனங்களைச் சிறையிலிருந்து தப்பு
விக்கிறார். அவர்கள் மிகுந்த மகிழ்ச்சியா
யிருக்கிறார்கள். ஆனால் தேவனுக்கு எதி
ராகத் திரும்பும் ஜனங்களோ கொடிய
சிறையிலே உழல்வார்கள்.
7தேவனே, உமது ஜனங்களை எகிப்தி
லிருந்து வழிநடத்தினீர், நீர் பாலைவனத்தின்
குறுக்காகக் கடந்து சென்றீர்.
8பூமி அதிர்ந்தது, இஸ்ரவேலின் தேவன்
சீனாய் மலைக்கு வந்தார், வானம் உருகிற்று.
9தேவனே, பயனற்ற பாழ் நிலத்தை
மீண்டும் பலன்பெறும்படி செய்வதற்காக
மழையைப் பெய்யப்பண்ணினீர்.
10உமது மிருகங்கள் அத்தேசத்திற்குத்
திரும்பின. தேவனே, அங்கு ஏழைகளுக்குப்
பல நல்ல பொருள்கள் கிடைக்கும்படி
செய்தீர்.
11தேவன் கட்டளையிட்டார், பலர் நற்
செய்தியைக் கூறச் சென்றனர்.
12“வல்லமையுள்ள அரசர்களின் படைகள்
ஓடிப்போயின! வீரர் போருக்குப்பின் தந்த
பொருள்களை வீட்டில் பெண்கள் பங்கிட்ட
னர். வீட்டில் தங்கியிருந்தோர் செல்வத்தைப்
பகிர்ந்துகொண்டனர்.
13அவர்கள் வெள்ளியால் மூடப்பட்ட
(விலை உயர்ந்த நகைகள்.) புறாக்களின்
சிறகுகளை பெறுவார்கள். அச்சிறகுகள்
பொன்னால் பளபளத்து ஒளிரும்.”
14சல்மோன் மலையில், பகையரசர்களை
தேவன் சிதறடித்தார். அவர்கள் வீழும்
பனியைப் போலானார்கள்.
15பாசான் மலை பல சிகரங்களையுடைய
பெரிய மலை.
16பாசான் மலையே, ஏன் சீயோன்
மலையை இழிவாகப் பார்க்கிறாய்? தேவன்
அம்மலையை (சீயோன்) நேசிக்கிறார். என்
றென்றும் வாழும்படி கர்த்தர் அம்மலையைத்
தேர்ந்தெடுத்தார்.

---

**யேகோவா** தேவனைக் குறிக்கும் எபிரெய சொல். வழக்கமாக கர்த்தர் என்று மொழி பெயர்க்கப் படுகிறது.

17 பரிசுத்த சீயோன் மலைக்குக் கர்த்தர்
வருகிறார். அவரை இலட்சக்கணக்கான
இரதங்கள் பின் தொடருகின்றன.
18 உயர்ந்த மலையில் அவர் ஏறினார்.
சிறைப்பட்டோரின் கூட்டத்தை அவர்
வழிநடத்தினார். எதிராகத் திரும்பியவர்கள்
உட்பட, மனிதரிடமிருந்து அவர் பரிசுகளை
ஏற்றார்.* தேவனாகிய கர்த்தர் அங்கு
வசிப்பதற்கு ஏறிச்சென்றார்.
19 கர்த்தரைத் துதியுங்கள்! ஒவ்வொரு
நாளும் நாம் சுமக்கவேண்டிய பாரங்களைச்
சுமப்பதற்கு அவர் உதவுகிறார். தேவன்
நம்மை மீட்கிறார்.
20 அவரே நமது தேவன் அவரே நம்மை
மீட்கும் தேவன். நமது தேவனாகிய கர்த்தர்
நம்மை மரணத்திலிருந்து காப்பாற்றுகிறார்.
21 தேவன் அவரது பகைவர்களைத் தோற்க
டிக்கிறார் என்பதைக் காட்டுகிறார். அவரை
எதிர்த்த ஜனங்களைத் தேவன் தண்டிக்
கிறார்.*
22 என் ஆண்டவர், "பாசானிலிருந்து பகை
வனை வரவழைப்பேன். மேற்கிலிருந்து
பகைவனை வரவழைப்பேன்.
23 நீ அவர்களின் இரத்தத்தில் நடப்பாய்,
உன் நாய்கள் அவர்களின் இரத்தத்தை
நக்கும்" என்றார்.
24 வெற்றி ஊர்வலத்தைத் தேவன் நடத்திச்
செல்வதை பாருங்கள். என் அரசராகிய
பரிசுத்த தேவன் வெற்றி ஊர்வலத்தை
நடத்திச்செல்வதை ஜனங்கள் காண்பார்கள்.
25 பாடகர் முன்னால் வீர நடையிட்டுச்
செல்வார்கள். பின்னர் தம்புரு மீட்டும்
இளம்பெண்கள் வருவார்கள். இசைக்
கலைஞர்கள் பின்னே வீர நடையிடுவார்கள்.
26 சபைக்கூடும் கூட்டத்தில் தேவனைத்
துதியுங்கள்! இஸ்ரவேலின் ஜனங்களே, கர்த்
தரைத் துதியுங்கள்!
27 சின்ன பென்யமீன் அவர்களை
வழிநடத்திச் செல்கிறான், அங்கு யூதாவின்
பெரிய குடும்பமும் இருக்கிறது, அங்கு
செபுலோன், நப்தலியின் தலைவர்களும் உள்
ளனர்.
28 தேவனே, எங்களுக்கு உமது வல்ல
மையைக் காட்டும்! கடந்த காலத்தில் எங்க
ளுக்காய் பயன்படுத்தின உமது வல்ல
மையைக் காட்டும்.
29 எருசலேமிலுள்ள உமது அரண்
மனைக்கு, அரசர்கள் தங்கள் செல்வத்தை
உமக்காகக் கொண்டு வருவார்கள்..

30 நீர் விரும்புவதை அந்த "மிருகங்கள்"
செய்யும்படி உமது கோலைப் பயன்படுத்தும்.
அத்தேசங்களின் "காளைகளும்" "பசுக்களும்"
உமக்குக் கீழ்ப்படியச் செய்யும். போரில்
அத்தேசங்களை நீர் வென்றீர். இப்போது
அவர்கள் வெள்ளியை உம்மிடம் கொண்டு
வரச்செய்யும்.
31 எகிப்திலிருந்து அவர்கள் செல்வத்தைக்
கொண்டுவரச் செய்யும். தேவனே, எத்தி
யோப்பியர்கள் அவர்களது செல்வத்தை
உம்மிடம் கொண்டுவரச் செய்யும்.
32 பூமியிலுள்ள அரசர்களே, தேவனைப்
பாடுங்கள்! நமது ஆண்டவருக்கு துதிப்
பாடல்களைப் பாடுங்கள்!
33 தேவனைப் பாடுங்கள்! பழைய வானங்
களினூடே அவர் தமது இரதத்தைச் செலுத்
துகிறார். அவரது வல்லமையான குரலுக்குச்
செவிக்கொடுங்கள்!
34 உங்கள் தெய்வங்களைப் பார்க்கிலும்
தேவன் மிகவும் வல்லமையுள்ளவர். இஸ்ர
வேலரின் தேவன் தமது ஜனங்களை பெல
மும், வல்லமையும் உள்ளோராக்குகிறார்.
35 தேவன் அவரது ஆலயத்தில் அதிசயமா
னவர். இஸ்ரவேலரின் தேவன் அவரது
ஜனங்களுக்கு பெலத்தையும், வல்லமையை
யும் கொடுக்கிறார். தேவனைத் துதியுங்கள்!

## சங்கீதம் 69

***"லீலிப் பூக்கள்" என்ற இசையில் பாடும்படி இராகத்தலைவனுக்கு தாவீது அளித்த பாடல்.***

1 தேவனே, எல்லாத் தொல்லைகளிலு
மிருந்து என்னைக் காப்பாற்றும். என்
வாய்வரை வெள்ளம் நிரம்பியுள்ளது.
2 நான் நிற்பதற்கு இடமில்லை. சேற்
றுக்குள் அமிழ்ந்து கொண்டிருக்கிறேன்.
ஆழமான தண்ணீரினுள் இருக்கிறேன். அலை
கள் என்னைச் சுற்றிலும் மோதிக் கொண்டி
ருக்கின்றன. நான் அமிழும் நிலையில்
உள்ளேன்.
3 உதவி வேண்டிக் கூப்பிடுவதால் நான்
சோர்ந்து போகிறேன். என் தொண்டை
புண்ணாகிவிட்டது. நான் காத்திருக்கிறேன்,
என் கண்கள் நோகும்வரை உமது உத
விக்காக நோக்கியிருக்கிறேன்.
4 என் தலையின் முடிகளைக் காட்டிலும்
எனக்கு அதிகமான பகைவர்கள் இருக்கி
றார்கள். எக்காரணமுமின்றி அவர்கள்
என்னை வெறுக்கிறார்கள். என்னை அழிப்
பதற்கு அவர்கள் மிகவும் முயன்றார்கள்.
என் பகைவர்கள் என்னைக் குறித்துப்
பொய்களைப் பேசுகிறார்கள். நான் திருடிய
தாக அவர்கள் பொய்களைக் கூறினார்கள்.
நான் திருடாத பொருள்களுக்கு அபராதம்
செலுத்தும்படி அவர்கள் என்னை
வற்புறுத்தினார்கள்.

---

**எதிராகத் ... ஏற்றார்** "மனிதர்களைப் பரிசாக ஏற்றார்." அல்லது "அவர் மனிதருக்குப் பரிசைக் கொடுத்தார்" என்று மிகப்பழம் சிரியா அல்லது அராமிய மொழிபெயர்ப்புகளிலும் எபேசியர் 4:8லும் உள்ளன.

**தேவன் ... தண்டிக்கிறார்** "தேவன் அவரது பகைவர்களின் தலைகளை நசுக்குகிறார். குற்ற மனசாட்சியுடன் நடப்பவர்களின் முடிநிறைந்தத் தலையை அவர் நசுக்குகிறார்," என்பதே பொருள்.

5 தேவனே, என் பாவங்களை நீர் அறிவீர். நான் உம்மிடமிருந்து எனது பாவங்களை மறைக்கமுடியாது.

6 என் ஆண்டவரே, சர்வ வல்லமையுள்ள கர்த்தரே, உம்மைப் பின்பற்றுவோர் என்னைக் கண்டு வெட்கப்படாதபடி செய்யும். இஸ்ரவேலின் தேவனே, உம்மைத் தொழுது கொள்வோர் என்னால் அவமானப் படாதபடிச் செய்யும்.

7 என் முகம் வெட்கத்தால் மூடப்பட்டிருக்கிறது. உமக்காக இவ்வெட்கத்தை நான் சுமக்கிறேன்.

8 என் சகோதரர்கள் என்னை ஒரு அந்நியனைப்போல நடத்துகிறார்கள். என் தாயின் பிள்ளைகள் என்னை ஒரு அயல் நாட்டவனைப் போல நடத்துகிறார்கள்.

9 உமது ஆலயத்தின் மீது கொண்ட என் ஆழ்ந்த உணர்ச்சிகள்* என்னை அழித்துக் கொண்டிருக்கின்றன. உம்மைக் கேலி செய்யும் ஜனங்களின் அவதூறுகளை நான் ஏற்கிறேன்.

10 நான் அழுது, உபவாசம்* மேற்கொண்டேன், அவர்கள் என்னைக் கேலி செய்தார்கள்.

11 துக்கத்தை வெளிப்படுத்துவதற்கு முரட்டு ஆடைகளை உடுத்துகிறேன். ஜனங்கள் என்னைக் குறித்து வேடிக்கை பேசுகிறார்கள்.

12 பொது இடங்களில் அவர்கள் என்னைப் பற்றிப் பேசுகிறார்கள். குடிகாரர்கள் என்னைப்பற்றிப் பாடல்களைப் பாடுகிறார்கள்.

13 ஆனால் இது கர்த்தராகிய உம்மை நோக்கி நான் உமக்காக ஜெபிக்கும் ஜெபம் நீர் என்னை ஏற்றுக்கொள்ள வேண்டுமென விரும்புகிறேன். தேவனே, அன்போடு நீர் எனக்குப் பதில் அளிப்பீரென எதிர்ப்பார்க்கிறேன். நான் மீட்படைவதற்கு உம்மீது நம்பிக்கை வைக்க முடியுமென நான் அறிவேன்.

14 என்னைச் சேற்றிலிருந்து இழுத்து வெளியேற்றும், நான் சேற்றில் அமிழ்ந்து போகாதபடி செய்யும். என்னைப் பகைக்கும் ஜனங்களிடமிருந்து என்னைக் காப்பாற்றும். ஆழமான தண்ணீரிலிருந்து என்னைக் காப்பாற்றும்.

15 அலைகள் என்னை அமிழ்த்தாதபடிச் செய்யும். ஆழத்தின் குழி என்னை விழுங்காதபடிச் செய்யும். கல்லறை என் மீது தன் வாயை அடைத்துக் கொள்ளாதபடிச் செய்யும்.

16 கர்த்தாவே, உமது அன்பு நல்லது. உமது முழுமையான அன்பினால் எனக்குப் பதிலளியும் உமது மிகுந்த தயவினால் என்னிடம் திரும்பி எனக்கு உதவும்!

17 உமது பணியாளிடமிருந்து விலகிப் போய் விடாதேயும். நான் தொல்லையில் சிக்கியிருக்கிறேன்! விரைந்து எனக்கு உதவும்.

18 வந்து, என் ஆத்துமாவைக் காப்பாற்றும். என் பகைவரிடமிருந்து என்னை மீட்டுக் கொள்ளும்.

19 நான் அடைந்த வெட்கத்தை நீர் அறிந்திருக்கிறீர். என் பகைவர்கள் என்னை அவமானப்படுத்தியதை நீர் அறிகிறீர். அவர்கள் எனக்கு அக்காரியங்களைச் செய்ததை நீர் கண்டீர்.

20 வெட்கம் என்னை நசுக்கிற்று! வெட்கத்தால் நான் இறக்கும் நிலைக்கு ஆளானேன். எனக்காகப் பரிதபிப்பவர்களுக்காகக் காத்திருந்தேன். ஆனால் ஒருவரையும் நான் பார்க்க முடியவில்லை எனக்கு ஆறுதல் கூறுவோருக்காக நான் காத்திருந்தேன். ஆனால் ஒருவரும் வரவில்லை.

21 அவர்கள் எனக்கு உணவையல்ல, விஷத்தைக் கொடுத்தார்கள். அவர்கள் எனக்குத் திராட்சைரசத்தையல்ல, காடியைக் கொடுத்தார்கள்.

22 அவர்கள் மேசைகள் உணவால் நிரம்பியிருந்தன. ஐக்கிய பந்திக்கான உணவு வகைகள் நிரம்பியிருந்தன. அந்த உணவுகளே அவர்களை அழிக்குமென நம்புகிறேன்.

23 அவர்கள் குருடாகி, அவர்கள் முதுகுகள் தளர்ந்துபோகும் என நான் நம்புகிறேன்.

24 உமது கோபத்தை அவர்கள் உணரட்டும்.

25 அவர்கள் வீடுகள் வெறுமையடையச் செய்யும். யாரும் அங்கு வாழ விடாதேயும்.

26 அவர்களைத் தண்டியும், அவர்கள் ஓடிப் போவார்கள். அப்போது அவர்கள் பேசிக் கொள்ளும்படியாக அவர்களுக்கு வலியும் காயங்களும் உண்டாகும்.

27 அவர்கள் செய்த தீய காரியங்களுக்காக அவர்களைத் தண்டியும் நீர் எவ்வளவு நல்லவர் என்பதை அவர்களுக்குக் காட்டாதேயும்.

28 ஜீவ புத்தகத்திலிருந்து அவர்கள் பெயர்களை எடுத்துபோடும். நல்லோரின் பெயர்களோடு அவர்கள் பெயர்களை அப்புத்தகத்தில் எழுதாதேயும்.

29 நான் கவலையும் புண்பட்டவனுமானேன். தேவனே, என்னைத் தூக்கிவிடும், என்னைக் காப்பாற்றும்.

30 நான் தேவனுடைய நாமத்தைப் பாடல்களால் துதிப்பேன். நான் அவரை நன்றி நிறைந்த பாடல்களால் துதிப்பேன்.

31 இது தேவனைச் சந்தோஷப்படுத்தும்! ஒரு காளையைக் கொன்று, அதனை முழுமையாகப் பலி செலுத்துவதைக் காட்டிலும் இது சிறந்தது.

32 ஏழை ஜனங்களே, நீங்கள் தேவனைத் தொழுதுகொள்ள வந்தீர்கள். நீங்கள் இக்காரியங்களை அறிந்துகொண்டு மகிழ்வீர்கள்.

---

**ஆழ்ந்த உணர்ச்சிகள்** எபிரெய மொழியில் இது அன்பு, பகை, கோபம், எழுச்சி, பொறாமை போன்றவற்றைக் குறிக்கும்.

**உபவாசம்** விசேஷ விண்ணப்பத்திற்கும் வழிபாட்டிற்கும் உணவின்றி இருத்தல்.

[33]கர்த்தர் ஏழைகளுக்கும் திக்கற்றோருக்கும்
செவிசாய்க்கிறார். சிறைப்பட்ட ஜனங்களை
யும் கர்த்தர் விரும்புகிறார்.
[34]பரலோகமும், பூமியும் தேவனைத்
துதிக்கட்டும் கடலும் அதிலுள்ள அனைத்
தும் கர்த்தரைத் துதிக்கட்டும்.
[35]கர்த்தர் சீயோனை மீட்பார். கர்த்தர்
யூதாவின் நகரங்களை கட்டியெழுப்புவார்.
நிலத்தின் சொந்தக்காரர்கள் அங்கு மீண்டும்
வாழ்வார்கள்.
[36]அவரது பணியாட்களின் தலைமுறை
யினர் அத்தேசத்தைப் பெறுவார்கள். அவ
ரது நாமத்தை நேசிக்கும் ஜனங்கள் அங்கு
வாழ்வார்கள்.

## சங்கீதம் 70

**ஜனங்கள் நினைவுக்கு உதவும்படியாக இராகத் தலைவனுக்குத் தாவீது அளித்த பாடல்களில் ஒன்று.**

[1]தேவனே, என்னை மீட்டருளும்! தேவனே,
விரைந்து எனக்கு உதவும்!
[2]ஜனங்கள் என்னைக் கொல்ல முயல்கி
றார்கள். அவர்கள் ஏமாற்றமடையச் செய்
யும்! அவர்கள் நாணமுறச் செய்யும்!
[3]ஜனங்கள் என்னை ஏளனம் செய்தார்கள்.
அவர்கள் விழுந்து வெட்கமடைவார்கள்
என நம்புகிறேன்.
[4]உம்மைத் தொழுதுகொள்ளும் ஜனங்கள்
மிகவும் மகிழ்ச்சி கொள்வார்கள் என
நம்புகிறேன். உமது உதவியை வேண்டும்
(நாடும்) ஜனங்கள் எப்போதும் உம்மைத்
துதிக்க முடியும் என நம்புகிறேன்.
[5]நான் ஏழையான, உதவியற்ற மனிதன்.
தேவனே, விரைந்து வந்து என்னை மீட்ட
ருளும்! தேவனே, நீர் மட்டுமே என்னைக்
காப்பாற்ற முடியும். மிகவும் தாமதியாதேயும்!

## சங்கீதம் 71

[1]கர்த்தாவே, நான் உம்மை நம்புகிறேன்,
எனவே நான் என்றும் ஏமாற்றமடைய
மாட்டேன்.
[2]உமது நல்ல செயலினால், நீர் என்னை
மீட்பீர். நீர் என்னைக் காப்பாற்றுவீர்.
நான் சொல்வதைக் கேளும், என்னை
மீட்டருளும்.
[3]பாதுகாப்பிற்காக ஓடிவரக்கூடிய புகலிட
மான அரணாக நீர் எனக்கு இரும். நீர்
என் கன்மலை என் பாதுகாப்பிடம். எனவே
என்னைக் காப்பதற்குரிய ஆணையைக்
கொடும்.
[4]என் தேவனே, கெட்ட ஜனங்களிட
மிருந்து என்னை மீட்டருளும். கொடி
யோரும் தீயோருமான ஜனங்களிடமிருந்து
என்னை மீட்டருளும்.
[5]என் ஆண்டவரே, நீரே என் நம்பிக்கை.
நான் சிறுவனாக இருந்தபோதே உம்மை
நம்பினேன்.
[6]நான் பிறப்பதற்கு முன்பிருந்தே உம்
மையே சார்ந்திருக்கிறேன். என் தாயின்
கருவில்போதே நான் உம்மைச் சார்ந்தி
ருந்தேன். நான் உம்மிடம் எப்போதும்
ஜெபம் பண்ணினேன்.
[7]நீரே என் பெலத்தின் இருப்பிடம்
எனவே நான் பிற ஜனங்களுக்கு ஒரு
எடுத்துக்காட்டானேன்.
[8]நீர் செய்யும் அற்புதமான காரியங்களைக்
குறித்து நான் எப்போதும் பாடிக் கொண்டி
ருக்கிறேன்.
[9]நான் வயது முதிர்ந்தவனாகி விட்டதால்
என்னைத் தள்ளிவிடாதேயும். என்
பெலனை நான் இழக்கையில் என்னை
விட்டுவிடாதேயும்.
[10]என் பகைவர்கள் எனக்கெதிராகத் திட்
டங்கள் வகுத்தார்கள். அந்த ஜனங்கள்
உண்மையிலேயே ஒருமித்துச் சந்தித்தார்கள்,
அவர்கள் என்னைக் கொல்லத் திட்ட
மிட்டார்கள்.
[11]என் பகைவர்கள், “போய் அவனைப்
பிடியுங்கள்! தேவன் அவனைக் கைவிட்
டார். அவனுக்கு ஒருவரும் உதவமாட்
டார்கள்” என்றனர்.
[12]தேவனே, நீர் என்னை விட்டு விலகாதே
யும்! தேவனே, விரையும்! வந்து என்னைக்
காப்பாற்றும்!
[13]என் பகைவர்களைத் தோற்கடியும்!
அவர்களை முழுமையாக அழித்துவிடும்.
அவர்கள் என்னைத் தாக்க முயல்கிறார்கள்.
அவர்கள் வெட்கமும் இகழ்ச்சியும் அடை
வார்கள் என நான் நம்புகிறேன்.

[14]பின் நான் உம்மை எப்போதும் நம்பு
வேன், நான் உம்மை மென்மேலும் துதிப்
பேன்.
[15]நீர் எவ்வளவு நல்லவர் என்பதை
நான் ஜனங்களுக்குக் கூறுவேன். நீர்
என்னை மீட்ட காலங்களைக் குறித்து நான்
ஜனங்களுக்குக் கூறுவேன். எண்ண முடியாத
பல காலங்கள் உள்ளன.
[16]என் ஆண்டவராகிய கர்த்தாவே, உமது
பெருமையைப் பற்றி நான் கூறுவேன்.
உம்மையும் உமது நற்குணங்களையும் நான்
பேசுவேன்.
[17]தேவனே, நான் சிறுவனாக இருக்கையி
லேயே நீர் எனக்குப் போதித்துள்ளீர். இன்று
வரை நீர் செய்துள்ள அற்புதமான காரியங்
களைக் குறித்து நான் ஜனங்களுக்குக்
கூறியுள்ளேன்.
[18]இப்போது நான் வயது முதிர்ந்தவன்,
என் தலைமுடி நரைத்துவிட்டது. ஆனாலும்
தேவனே, நீர் என்னை விட்டுவிட மாட்டீர்
என்பதை நான் அறிவேன். உமது வல்லமை
யையும், பெருமையையும் ஒவ்வொரு புதிய
தலைமுறையினருக்கும் நான் சொல்லுவேன்.
[19]தேவனே, உமது நன்மை வானங்க
ளுக்கும் மேலாக எட்டுகிறது. தேவனே,

உம்மைப்போன்ற தேவன் வேறொருவரு
மில்லை. நீர் அற்புதமான காரியங்களைச்
செய்திருக்கிறீர்.
20தொல்லைகளையும் தீயகாலங்களையும்
நான் காணச் செய்தீர். ஆனாலும் அவை
எல்லாவற்றினின்றும் நீர் என்னை மீட்டு,
உயிரோடு வைத்தீர். எத்தனை ஆழத்தில்
மூழ்கியும் தொல்லைகளிலிருந்து நீர் என்
னைத் தூக்கி நிறுத்தினீர்.
21முன்னிலும் பெரியக் காரியங்களைச்
செய்ய, நீர் எனக்கு உதவும். தொடர்ந்து
எனக்கு ஆறுதல் அளியும்.
22வீணையை மீட்டி, நான் உம்மைத்
துதிப்பேன். என் தேவனே, நீர் நம்பிக்கைக்
குரியவர் என்பதைப் பாடுவேன். இஸ்ர
வேலின் பரிசுத்தருக்காக, என் சுர
மண்டலத்தில் பாடல்களை இசைப்பேன்.
23நீர் என் ஆத்துமாவைக் காத்தீர். என்
ஆத்துமா மகிழ்ந்திருக்கும். என் உதடுகளால்
துதிப்பாடல்களை நான் பாடுவேன்.
24எப்போதும் உமது நன்மையை என்
நாவு பாடும். என்னைக் கொல்ல விரும்பிய
ஜனங்கள், தோற்கடிக்கப்பட்டு இகழ்ச்சி
அடைவார்கள்.

## சங்கீதம் 72

*சாலொமோனுக்கு*

1தேவனே, அரசனும் உம்மைப் போன்று
ஞானமுள்ள முடிவுகளை எடுக்க அவருக்கு
உதவும். உமது நல்லியல்பை அரசனின்
மகனும் அறிந்துகொள்ள உதவும்.
2அரசன் உமது ஜனங்களுக்குத் தகுதியான
நீதி வழங்க உதவும். உமது ஏழை ஜனங்
களுக்காக ஞானமுள்ள முடிவுகளை எடுக்க
அவனுக்கு உதவும்.
3தேசம் முழுவதும் சமாதானமும் நீதியும்
நிலவட்டும்.
4ஏழைகளுக்கு அரசன் நல்லவனாக
இருக்கட்டும். திக்கற்றோருக்கு அவன் உத
வட்டும். அவர்களைத் தாக்குவோரை அவன்
தண்டிக்கட்டும்.
5சூரியன் ஒளிவிடும் மட்டும், சந்திரன்
வானிலுள்ள மட்டும் ஜனங்கள் அரசனுக்குப்
பயந்து அவனை மதிப்பார்கள் என நான்
நம்புகிறேன். என்றென்றும் ஜனங்கள் அவ
னுக்குப் பயந்து அவனை மதிப்பார்கள் என
நான் நம்புகிறேன்.
6வயலில் விழும் மழையைப்போன்றிருக்க
அரசனுக்கு உதவும். பூமியில் விழும் தூற
லைப்போன்றிருக்க அவனுக்கு உதவும்.
7அவன் அரசனாக இருக்கும்போது
நன்மை மலரட்டும். சந்திரன் இருக்கும்மட்டும்
சமாதானம் நிலவட்டும்.
8ஐபிராத்து நதியிலிருந்து பூமியின்
தூரத்து எல்லை வரைக்கும் கடலிலிருந்து
கடல் வரைக்கும் அவன் அரசு பெருகட்டும்.
9பாலைவனத்தில் வாழும் எல்லா ஜனங்
களும் அவனுக்குத் தலை வணங்குவார்கள்.
புழுதியில் முகத்தைப் புதைத்து அவன்
பகைவர்கள் அவனுக்கு முன்பாக விழுந்து
வணங்கட்டும்.
10தர்ஷீசின் அரசர்களும் தூரத்துத் தேசங்
களின் அரசர்களும் அவனுக்குப் பரிசுகளைக்
கொண்டுவரட்டும். ஷேபாவிலும், சேபாவி
லுமுள்ள அரசர்கள் தங்கள் கப்பத்தை
அவனுக்குக் கொண்டுவரட்டும்.
11எல்லா அரசர்களும் நமது அரசனை
விழுந்து வணங்கட்டும் எல்லா தேசங்களும்
அவனுக்குச் சேவை செய்யட்டும்.
12நமது அரசன் திக்கற்றோருக்கு உதவு
கிறார். ஏழையான திக்கற்ற ஜனங்களுக்கு
நம் அரசன் உதவுகிறார்.
13ஏழையான திக்கற்ற ஜனங்கள் நம்
அரசனைச் சார்ந்திருப்பார்கள். அரசன்
அவர்களை உயிரோடு வாழச் செய்கிறார்.
14அவர்களைத் துன்புறுத்த முயலும்
கொடியோரிடமிருந்து அரசன் அவர்களைக்
காப்பாற்றுகிறார். அந்த ஏழை ஜனங்களின்
உயிர்கள் அரசனுக்கு மிகமுக்கியமானவை.
15அரசன் நீடூழி வாழ்க! அவர் சேபாவின்
பொன்னைப் பெறட்டும். எப்போதும் அரச
னுக்காக ஜெபம் செய்யுங்கள். ஒவ்வொரு
நாளும் அவரை ஆசீர்வதியுங்கள்.

16வயல் நிலங்கள் மிகுதியான தானியத்தை
விளைவிக்கட்டும். மலைகளும் பயிர்களால்
நிரம்பட்டும். நிலங்களில் புல் வளர்வது
போன்று நகரங்கள் ஜனங்களால் நிரம்பட்
டும்.
17அரசன் என்றென்றும் புகழ் பெறட்டும்.
சூரியன் ஒளிவிடும் மட்டும் ஜனங்கள்
அவர் நாமத்தை நினைவுகூரட்டும். ஜனங்கள்
அவரால் ஆசீர்வதிக்கப்படட்டும். அவர்கள்
எல்லோரும் அவரை வாழ்த்தட்டும்.
18இஸ்ரவேலரின் தேவனாகிய, கர்த்தரா
கிய தேவனைத் துதியுங்கள். தேவன் ஒரு
வரே அத்தகைய அற்புதமான காரியங்க
ளைச் செய்யமுடியும்.
19அவரது மகிமைபொருந்திய நாமத்தை
என்றென்றும் துதியுங்கள்! அவரது மகிமை
முழு உலகத்தையும் நிரப்பட்டும்! ஆமென்,
ஆமென்! *
20ஈசாயின் மகனாகிய தாவீதின் ஜெபங்கள்
இங்கு முடிகின்றன.

---

**ஆமென்** “உண்மையாகவே” “நிச்சயமாகவே” எனப் பொருள்படும் எபிரெயச் சொல். கூறப்பட்ட வற்றை ஒருவன் ஏற்றுக்கொள்கிறான் என்பதை இது காட்டுகிறது.

# புத்தகம் 3

## சங்கீதம் 73

### ஆசாபின் துதிப்பாடல்

1 தேவன் உண்மையாகவே இஸ்ரவேலுக்கு நல்லவர். பரிசுத்த இருதயமுள்ள ஜனங்களுக்குத் தேவன் நல்லவர்.

2 நான் தவறி வீழ்ந்து, பாவம் செய்யத் தொடங்கும் நிலையில் இருந்தேன்.

3 கெட்ட ஜனங்கள் வெற்றியடைந்ததைக் கண்டேன். பெருமைபாராட்டும் அந்த ஜனங்களைக் கண்டு பொறாமை கொள்ள ஆரம்பித்தேன்.

4 அந்த ஜனங்கள் ஆரோக்கியமுள்ளவர்கள். வாழ்வதற்கு அவர்கள் போராட வேண்டாம்.*

5 எங்களைப் போல அந்தப் பெருமைக்காரர்கள் தொல்லைப்படுவதில்லை. பிறரைப் போன்று அவர்களுக்குத் தொல்லைகள் இல்லை.

6 எனவே அவர்கள் பெருமை மிக்கவர்களாய், வெறுக்கத்தக்கவர்களாய் உள்ளனர். அவர்கள் அணியும் அணிகலன்களையும் அழகிய ஆடைகளையும் போன்று அது விரைவில் கண்டுகொள்ளத் தக்கது.

7 தாங்கள் பார்க்கும் எதையும் அந்த ஜனங்கள் விரும்பினால் போய் தங்களுக்கென அதை எடுத்துக் கொள்கின்றனர். தாங்கள் செய்ய நினைப்பவற்றை அவர்கள் செய்து முடிக்கிறார்கள்.

8 பிறரைப்பற்றிக் கொடிய, தீய காரியங்களை அவர்கள் கூறுகிறார்கள். அவர்கள் பெருமையும் பிடிவாதமும் உடையவர்கள். அவர்கள் எப்போதும் மற்றவர்களிடமிருந்து அனுகூலம் பெறும் வழிகளைத் திட்டமிடுகிறார்கள்.

9 தங்களைத் தெய்வங்களென்று அப்பெருமைக்காரர்கள் நினைத்துக் கொள்கிறார்கள் பூமியின் அரசர்களென்று அவர்கள் தங்களைக் கருதிக் கொள்கிறார்கள்.

10 எனவே தேவஜனங்கள் கூட அவர்களிடம் சென்று அவர்கள் கூறுபவற்றைச் செய்கிறார்கள்.

11 அத்தீயோர், “நாங்கள் செய்து கொண்டிருப்பவற்றைத் தேவன் அறியார்! உன்னதமான தேவன் அறியார்!” என்கிறார்கள்.

12 அப்பெருமைக்காரர்கள் துர்க்குணம் மிக்கவர்கள். ஆனால் அவர்கள் செல்வந்தராகவும், நாளுக்கு நாள் செல்வத்தை பெறுவோராகவும் காணப்படுகிறார்கள்.

13 எனவே நான் ஏன் என் இருதயத்தைத் தூயதாக்க வேண்டும்? ஏன் நான் எனது கைகளைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும்?

14 தேவனே, நான் நாள் முழுவதும் துன்புறுகிறேன், ஒவ்வொரு நாள் காலையிலும் நீர் என்னைத் தண்டிக்கிறீர்.

15 தேவனே, நான் இவற்றைக் குறித்துப் பிறரிடம் பேச விரும்பினேன். அப்படிச் செய்தால் உமது ஜனங்களுக்கு நான் துரோகம் செய்தவனாவேன்.

16-17 இக்காரியங்களைப் புரிந்துகொள்ள நான் மிகவும் முயன்றேன். ஆனால் நான் உமது ஆலயத்திற்குச் செல்லும்வரை இவையனைத்தும் எனக்கு மிகவும் கடினமாயிருந்தன. நான் தேவனுடைய ஆலயத்திற்குப் போனேன், அப்போது அதை நான் உணர்ந்துக் கொண்டேன்.

18 தேவனே, நீர் அந்த ஜனங்களை ஆபத்தான நிலையில் வைத்திருக்கிறீர். விழுந்து அழிவதென்பது அவர்களுக்கு மிகவும் சுலபமானது.

19 தொல்லைகள் திடீரென நேரும், அப்போது அப்பெருமைக்காரர்கள் அழிந்து விடுவார்கள். கொடியக் காரியங்கள் அவர்களுக்கு நேரிடும், அப்போது அவர்கள் அழிந்துப் போவார்கள்.

20 கர்த்தாவே, நாங்கள் விழித்தெழும்போது மறந்துவிடும் கனவைப்போல அந்த ஜனங்கள் இருப்பார்கள். எங்கள் கனவில் வரும் பெரும் விலங்குகளைப்போல் அந்த ஜனங்கள் மறைந்து போகும்படி நீர் செய்வீர்.

21-22 நான் மூடனாக இருந்தேன். நான் செல்வ த்தைக் குறித்தும் கெட்ட ஜனங்களைக் குறித்தும். எண்ணிக் கலங்கினேன். தேவனே, நான் மனங்கலங்கி, உம்மிடம் கோபங்கொண்டேன். மூடத்தனமும் அறியாமையுமுள்ள மிருகத்தைப்போல் நடந்து கொண்டேன்.

23 எனக்குத் தேவையானவை எல்லாம் என்னிடம் உள்ளன. நான் எப்போதும் உம்மோடிருக்கிறேன். தேவனே, நீர் என் கையைப் பிடித்துக்கொண்டிருக்கிறீர்.

24 தேவனே, நீர் என்னை வழிநடத்தி, எனக்கு நல்ல போதனையைத் தருவீர். பின்பு என்னை மகிமைக்கு நேராக வழி நடத்துவீர்

25 தேவனே, பரலோகத்தில் நீர் எனக்காக இருக்கிறீர். நான் உம்மோடிருக்கையில் இப்பூமியில் எனக்கு என்ன வேண்டும்?

26 என் மனமும் சரீரமும் அழிந்துப்போகலாம், ஆனால் நான் நேசிக்கும் கன்மலையாகிய தேவன் எனக்காக இருக்கிறீர். என்றென்றும் எனக்காகத் தேவன் இருக்கிறீர்.

27 தேவனே, உம்மை விட்டு விலகும் ஜனங்கள் அழிந்துபோவார்கள். உமக்கு உண்மையாயில்லாத ஜனங்களை நீர் அழித்துவிடுவீர்.

---

**வாழ்வதற்கு அவர்கள் போராட வேண்டாம்** எழுத்தின் பிரகாரமாக, “அவர்கள் தங்கள் மரணத்திற்கு அடிமைகளல்ல” எனப் பொருள் படும்.

[28]என்னைப் பொருத்தமட்டும், நான் தேவ
னிடம் வந்திருக்கிறேன். அதுவே எனக்கு
நலமானது. என் ஆண்டவராகிய கர்த்தரை
என் பாதுகாப்பிடமாக வைத்திருக்கிறேன்.
தேவனே, நீர் செய்துள்ள எல்லாவற்றையும்
குறித்துக் கூற நான் வந்துள்ளேன்.

## சங்கீதம் 74

### ஆசாபின் ஒரு மஸ்கீல்

[1]தேவனே, என்றென்றும் நீர் எங்களை
விட்டு விலகினீரா? உமது ஜனங்களிடம் நீர்
இன்னும் கோபமாயிருக்கிறீரா?
[2]பல்லாண்டுகளுக்கு முன் நீர் வாங்கிய
உமது ஜனங்களை நினைவுகூரும். நீர்
எங்களை மீட்டீர். நாங்கள் உமக்குச் சொந்த
மானவர்கள். நீர் வாழ்ந்த இடமாகிய சீயோன்
மலையை நினைவுகூரும்.
[3]தேவனே, பழமையான இந்த இடிபாடுக
ளுக்கு மத்தியில் நீர் நடந்துவாரும். பகைவன்
அழித்த பரிசுத்த இடத்திற்குத் திரும்ப
வாரும்.
[4]ஆலயத்தில் பகைவர்கள் தங்கள் யுத்த
ஆரவாரத்தைச் செய்தார்கள். போரில் தங்கள்
வெற்றியைக் குறிப்பதற்கு ஆலயத்தில் அவர்
கள் தங்கள் கொடிகளை ஏற்றினார்கள்.
[5]பகைப்படை வீரர்கள் கோடரியால்
களைகளை அழிக்கும் ஜனங்களைப் போன்
றிருந்தார்கள்.
[6]தேவனே, அவர்கள் தங்கள் கோடாரி
களையும், சம்மட்டிகளையும் பயன்படுத்தி,
உமது ஆலயத்தில் மரத்தினாலான சித்திர
வேலைப்பாடுகளை நாசம் செய்தார்கள்.
[7]அந்த வீரர்கள் உமது பரிசுத்த இடத்தை
எரித்து விட்டார்கள். அந்த ஆலயம் உமது
நாமத்தின் மகிமைக்காகக் கட்டப்பட்டது.
அவர்கள் அதைத் தரையில் விழும்படி
இடித்துத் தள்ளினார்கள்.
[8]பகைவன் எங்களை முழுமையாக
அழிக்க முடிவு செய்தான். தேசத்தின் ஒவ்
வொரு பரிசுத்த இடத்தையும்* அவர்கள்
எரித்தார்கள்.
[9]எங்களுக்கான அடையாளங்கள் எதை
யும் நாங்கள் காண முடியவில்லை. எந்தத்
தீர்க்கதரிசிகளும் இங்கு இல்லை. யாருக்கும்
என்ன செய்வதென்று தெரியவில்லை.
[10]தேவனே, எத்தனைக் காலம்வரைக்கும்
பகைவன் எங்களைப் பரிகாசம் பண்ணு
வான்? உமது நாமத்தை அவர்கள் என்
றென்றும் இழிவுபடுத்த நீர் அனுமதிப்பீரா?
[11]தேவனே, நீர் ஏன் எங்களைக் கடு
மையாகத் தண்டிக்கிறீர்? நீர் உமது மிகுந்த
வல்லமையைப் பயன்படுத்தி, எங்களை
முற்றிலும் அழித்துவிட்டீர்.
[12]தேவனே, நீண்டகாலம் நீரே எங்கள்
அரசராக இருந்தீர். இத்தேசத்தில் பல போர்
களில் வெல்ல நீர் எங்களுக்கு உதவினீர்.
[13]தேவனே, நீர் மிகுந்த வல்லமையைப்
பயன்படுத்தி செங்கடலைப் பிளக்கச் செய்தீர்.
[14]கடலின் பெரிய விலங்குகளை நீர்
தோற்கடித்தீர்! லிவியாதானின் தலைகளை
நீர் சிதைத்துப் போட்டீர் பிற விலங்குகள்
உண்ணும்படி அதன் உடலை விட்டுவிட்டீர்.
[15]நீர் நீரூற்றுக்களும் நதிகளும் பாயும்படி
செய்கிறீர். நதிகள் உலர்ந்து போகும்படியும்
செய்கிறீர்.
[16]தேவனே, நீர் பகலை ஆளுகிறீர், நீர்
இரவையும் ஆளுகிறீர், நீர் சந்திரனையும்
சூரியனையும் உண்டாக்கினீர்.
[17]பூமியிலுள்ள ஒவ்வொன்றிற்கும் நீர் எல்
லையை வகுத்தீர். நீர் கோடையையும்
குளிர்காலத்தையும் உண்டாக்கினீர்.
[18]தேவனே, இவற்றை நினைவுகூரும்.
பகைவன் உம்மை இழிவுபடுத்தினான் என்
பதை நினைவுகூரும். அம்மூடர்கள் உமது
நாமத்தை வெறுக்கிறார்கள்.
[19]அக்கொடிய விலங்குகள் உமது புறாவை
எடுத்துக்கொள்ள விடாதேயும்! என்றென்
றும் உமது ஏழை ஜனங்களை மறந்து
விடாதேயும்.
[20]நமது உடன்படிக்கையை நினைவுகூரும்!
இத்தேசத்தின் ஒவ்வொரு இருண்ட இடத்
திலும் கொடுமை நிகழ்கிறது.
[21]தேவனே, உமது ஜனங்கள் மோசமாக
நடத்தப்பட்டார்கள். இனிமேலும் அவர்கள்
துன்புறாதபடி பாரும். உமது திக்கற்ற,
ஏழை ஜனங்கள் உம்மைத் துதிப்பார்கள்.
[22]தேவனே, எழுந்து போரிடும்! அம்
மூடர்கள் உம்மோடு போட்டியிடுகிறார்கள்
என்பதை நினைவுகூரும்.
[23]உமது பகைவர்களின் கூக்குரலை மறவா
தேயும். மீண்டும் மீண்டும் அவர்கள் உம்மை
இழிவுபடுத்தினார்கள்.

## சங்கீதம் 75

### "அழிக்காதே" என்னும் பாடலின் இசைத் தலைவனுக்கு ஆசாப் அளித்த துதிப் பாடல்களுள் ஒன்று

[1]தேவனே, நாங்கள் உம்மைத் துதிக்கி
றோம். நாங்கள் உம்மைத் துதிக்கிறோம். நீர்
அருகாமையில் இருக்க, ஜனங்கள் நீர்
செய்யும் அற்புதமான காரியங்களைக்
குறித்து கூறுகிறார்கள்.
[2]தேவன் கூறுகிறார்: "நியாயத்தீர்ப்பின்
காலத்தை நான் தெரிந்தெடுத்திருக்கிறேன்.
நான் தகுந்தபடி நியாயந்தீர்ப்பேன்.
[3]பூமியும் அதிலுள்ள அனைத்தும் நடுங்
கிவிழும் நிலையில் இருக்கும். ஆனால்
நான் அதைத் திடமாக இருக்கச் செய்வேன்"
[4-5]"சிலர் அதிகமாக பெருமையுள்ளவர்கள்,
தாங்கள் வலிமை மிக்கவர்கள் என்றும்

---

**பரிசுத்த இடம்** ஜனங்கள் தேவனைச் சந்திக்கச் சென்ற ஒவ்வொரு இடத்தையும் இது குறிக்கும்.

முக்கியமானவர்கள் என்றும் அவர்கள்
நினைக்கிறார்கள். ஆனால் நான் அவர்
களிடம் 'வீம்பு பேசாதீர்கள்!' 'பெருமை
பாராட்டாதீர்கள்!' என்று கூறுவேன்" என்
கிறார்.
6ஒருவனை முக்கியமானவனாக்கும் வல்
லமை எதுவும் இப்பூமியில் இல்லை.
7தேவனே நீதிபதி, யார் முக்கியமானவர்
என்பதைத் தேவன் முடிவெடுக்கிறார்.
தேவன் ஒருவனை உயர்த்தி அவனை
முக்கியமானவனாக்குகிறார். தேவன் மற்றொ
ருவனைத் தாழ்த்தி அவனை முக்கியமற்
றவனாக்குகிறார்.
8தேவன் தீயோரைத் தண்டிக்கத் தயாராய்
இருக்கிறார். கர்த்தர் கையில் ஒரு கோப்பை
உள்ளது, அக்கோப்பை விஷம் கலந்த
திராட்சைரசத்தால் நிரம்பியுள்ளது. அவர்
அத்திராட்சைரசத்தை (தண்டனையை)
ஊற்றுவார், கடைசித்துளி மட்டும் கெட்ட
ஜனங்கள் அதனைக் குடிப்பார்கள்.
9நான் எப்போதும் ஜனங்களுக்கு இவற்
றைப் பற்றிக் கூறுவேன். இஸ்ரவேலரின்
தேவனுக்கு நான் துதிப் பாடுவேன்.
10கெட்ட ஜனங்களிடமிருந்து நான் வல்ல
மையை அகற்றிவிடுவேன், நான் நல்ல
ஜனங்களுக்கு வல்லமையை அளிப்பேன்.

## சங்கீதம் 76

**இசைக் கருவிகளை இசைக்கும் இசைத் தலைவனுக்கு ஆசாப் அளித்த துதிப்பாடல்**

1யூதாவின் ஜனங்கள் தேவனை அறிவார்
கள். இஸ்ரவேலின் ஜனங்கள் தேவனுடைய
நாமத்தை மதிக்கிறார்கள்.
2தேவனுடைய ஆலயம் சாலேமில்*
இருக்கிறது. தேவனுடைய வீடு சீயோன்
மலையில் இருக்கிறது.
3அவ்விடத்தில் தேவன் வில்கள்,
அம்புகள், கேடயங்கள், வாள்கள், மற்றும்
போர்க் கருவிகளையெல்லாம் உடைத்
தெறிந்தார்.
4தேவனே, நீர் உமது பகைவர்களை
முறியடித்தபோது மலைகளிலிருந்து மகிமை
பொருந்தியவராய் வெளிப்பட்டீர்.
5அவர்கள் வலிமையுள்ளவர்கள் என
அந்த வீரர்கள் நம்பினார்கள். ஆனால் இப்
போது அவர்கள் களங்களில் (வயல்களில்)
மரித்துக் கிடக்கிறார்கள். அவர்கள் அணிந்
திருந்தவையெல்லாம் அவர்கள் உடம்பிலி
ருந்து அகற்றப்பட்டன. அவ்வலிய வீரர்க
ளில் எவரும் தங்களை பாதுகாத்துக்கொள்ள
முடியவில்லை.
6யாக்கோபின் தேவன் அவ்வீரர்களிடம்
குரல் உயர்த்திக் கண்டித்தார். இரதங்
களோடும் குதிரைகளோடும் கூடிய அப்படை
யினர் மரித்து வீழ்ந்தனர்.
7தேவனே, நீர் பயங்கரமானவர்! நீர்
சினமடையும்போது ஒருவனும் உமக்கெ
திராக நிற்க முடிவதில்லை.
8-9கர்த்தர் நீதிபதியாக இருந்து, அவரது
முடிவை அறிவிக்கிறார். தேசத்தின் எளிய
ஜனங்களைத் தேவன் மீட்டார். பரலோகத்தி
லிருந்து அவர் இம்முடிவைத் தந்தார். பூமி
முழுவதும் அமைதியாகப் பயத்தோடு
காணப்பட்டது.
10தேவனே, நீர் தீயோரைத் தண்டிக்கும்
போது ஜனங்கள் உம்மை மதிக்கிறார்கள்.
நீர் உமது கோபத்தை வெளிப்படுத்தும்,
தப்பித்து வாழ்பவர்கள் வலிமையுள்
ளோராவார்கள்.
11ஜனங்களே, உங்கள் தேவனாகிய கர்த்த
ருக்கு வாக்குறுதிப் பண்ணினீர்கள். இப்
போது, வாக்குறுதிப் பண்ணினவற்றை
நீங்கள் அவருக்குக் கொடுங்கள். எல்லா
இடங்களிலும் ஜனங்கள் தேவனுக்குப்
பயந்து அவரை மதிக்கிறார்கள். அவர்கள்
அவருக்குப் பரிசுகளைக் கொண்டு வருகி
றார்கள்.
12தேவன் பெருந்தலைவர்களைத் தோற்க
டிக்கிறார். பூமியின் எல்லா அரசர்களும்
அவருக்குப் பயப்படுகிறார்கள்.

## சங்கீதம் 77

**எதுதூன் என்னும் இராகத் தலைவனுக்கு ஆசாபின் பாடல்களுள் ஒன்று**

1தேவனை நோக்கி உதவிக்காக நான்
உரக்கக் கூப்பிடுகிறேன். தேவனே, நான்
உம்மிடம் ஜெபிக்கிறேன். நான் சொல்வதைக்
கேளும்.
2என் ஆண்டவரே, தொல்லைகள் வரும்
போது நான் உம்மிடம் வருகிறேன். இரவு
முழுவதும் நான் உம்மை நெருங்க முயன்
றேன். என் ஆத்துமா ஆறுதல் அடைய
மறுத்தது.
3நான் தேவனைப் பற்றி நினைக்கிறேன்,
நான் உணரும் விதத்தை அவருக்குச்
சொல்ல முயல்கிறேன், ஆனால் என்னால்
முடியவில்லை.
4நீர் என்னை உறங்கவொட்டீர். நான்
ஏதோ சொல்ல முயன்றேன், ஆனால் மிகவும்
வருத்தமடைந்தேன்.
5நான் நீண்ட காலத்தில் நடந்ததைப்
பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன். முற்கா
லத்தில் நிகழ்ந்தவற்றைப் பற்றி நினைத்துக்
கொண்டிருந்தேன்.
6இரவில், எனது பாடல்களைப் பற்றி
நினைக்க முயல்கிறேன். நான் என்னோடு
பேசி, புரிந்துகொள்ள முயல்கிறேன்.
7நான், "எங்கள் ஆண்டவர் என்றைக்கும்
எங்களை விட்டு விலகிவிட்டாரா? மீண்டும்

**சாலேம்** இது எருசலேமுக்கு மற்றொரு பெயர். இப்பெயருக்கு "சமாதானம்" எனப் பொருள்படும்.

அவர் எப்போதும் நம்முடன் மகிழ்ச்சியோடு
இருப்பாரா?
8தேவனுடைய அன்பு என்றென்றும் வில
கிவிட்டதா? அவர் நம்மோடு மீண்டும்
பேசுவாரா?
9இரக்கம் என்னவென்பதைத் தேவன்
மறந்துவிட்டாரா? அவரது நீடிய பொறுமை
கோபமாயிற்றா?" என்று வியக்கிறேன்.
10பின்பு நான், "என்னை உண்மை
யிலேயே பாதிப்பது இது. 'மிக உன்னதமான
தேவன் அவரது வல்லமையை இழந்து
விட்டாரா?'" என எண்ணினேன்.
11கர்த்தர் செய்தவற்றை நான் நினைவு
கூருகிறேன். தேவனே, நீர் முற்காலத்தில்
செய்த அற்புதமான காரியங்களை நான்
நினைவுகூருகிறேன்.
12நீர் செய்தவற்றைக் குறித்து யோசித்
தேன். அக்காரியங்களை நான் நினைத்தேன்.
13தேவனே, உமது வழிகள் பரிசுத்தமா
னவை. தேவனே, உம்மைப் போன்று
உயர்ந்தவர் (மேன்மையானவர்) எவரு
மில்லை.
14அற்புதமானக் காரியங்களைச் செய்த
தேவன் நீரே. நீர் ஜனங்களுக்கு உமது
மிகுந்த வல்லமையைக் காண்பித்தீர்.
15உமது வல்லமையால் உமது ஜனங்
களைக் காத்தீர். நீர் யாக்கோபையும்
யோசேப்பின் சந்ததியினரையும் காத்தீர்.
16தேவனே, தண்ணீர் உம்மைக் கண்டு
பயந்தது. ஆழமான தண்ணீர் பயத்தால்
நடுங்கிற்று.
17கரு மேகங்கள் தண்ணீரைப் பொழிந்தன.
உயர்ந்த மேகங்களில் உரத்த இடிமுழக்கத்தை
ஜனங்கள் கேட்டார்கள். அப்போது மின்னல்
களாகிய உமது அம்புகள் மேகங்களினூடே
பிரகாசித்தன.
18உரத்த இடிமுழக்கங்கள் உண்டாயின,
உலகத்தை மின்னல் ஒளியால் நிரப்பிற்று.
பூமி அதிர்ந்து நடுங்கிற்று.
19தேவனே, நீர் ஆழமான தண்ணீரில்
(வெள்ளத்தில்) நடந்து சென்றீர். நீர் ஆழமான
கடலைக் கடந்தீர், ஆனால் உமது
பாதச்சுவடுகள் அங்குப் பதியவில்லை.
20உமது ஜனங்களை மந்தைகளைப்போல்
வழிநடத்துவதற்கு நீர் மோசேயையும் ஆரோ
னையும் பயன்படுத்தினீர்.

## சங்கீதம் 78

### ஆசாபின் ஒரு மஸ்கீல்

1என் ஜனங்களே, என் போதனைகளுக்கு
செவிக்கொடுங்கள். நான் கூறுவனவற்றைக்
கவனித்துக் கேளுங்கள்.
2நான் உங்களுக்கு இந்தக்கதையைக் கூறு
வேன். நான் உங்களுக்கு இப்பழங்கதையைக்
கூறுவேன்.
3நாங்கள் இக்கதையைக் கேட்டோம்,
அதை நன்றாக அறிந்தோம். எங்கள் தந்
தையர் இக்கதையைக் கூறினார்கள்.
4நாங்கள் இக்கதையை மறக்கவும் மாட்
டோம். இறுதி தலைமுறை வரைக்கும்
எங்கள் ஜனங்கள் இக்கதையைச் சொல்லிக்
கொண்டேயிருப்பார்கள். நாம் அனைவரும்
கர்த்தரைத் துதிப்போம், அவர் செய்த
அற்புதமான காரியங்களைக் குறித்துச்
சொல்வோம்.
5கர்த்தர் யாக்கோபோடு* ஒரு உடன்படிக்
கையைச் செய்தார். தேவன் இஸ்ரவேல
ருக்குச் சட்டத்தைக் (நீதிமுறையை) கொடுத்
தார். நம் முற்பிதாக்களுக்குத்* தேவன் கட்
டளைகளை அளித்தார். தமது பின்
சந்ததியினருக்கு* அந்தச் சட்டங்களைப்
போதிக்குமாறு அவர் நம் முற்பிதாக்களுக்குக்
கூறினார்.
6புது குழந்தைகள் பிறப்பார்கள், அவர்கள்
இளைஞராக வளருவார்கள். அவர்கள்
அக்கதைகளைத் தங்கள் குழந்தைகளுக்குச்
சொல்வார்கள். இவ்வகையில் கடைசி
தலைமுறையினர் வரைக்கும் எல்லோரும்
சட்டத்தை அறிந்திருப்பார்கள்.
7எனவே அந்த ஜனங்கள் எல்லோரும்
தேவனை நம்புவார்கள். தேவன் செய்த
வற்றை அவர்கள் மறக்கமாட்டார்கள். அவர்
கள் கவனமாக அவரது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிவார்கள்.
8தங்கள் தேவனுடைய கட்டளைகளை
ஜனங்கள் அவர்கள் குழந்தைகளுக்குச் சொல்
வார்களானால், அந்தக் குழந்தைகள்
அவர்களின் முற்பிதாக்களைப் போல் இருக்
கமாட்டார்கள். அவர்கள் முற்பிதாக்கள்
தேவனுக்கு எதிராகத் திரும்பினார்கள்.
அவர்கள் அவருக்குக் கீழ்ப்படிய மறுத்
தார்கள். அந்த ஜனங்கள் பிடிவாதமாக
இருந்தார்கள். அவர்கள் தேவ ஆவியான
வருக்கு உண்மையாக இருக்கவில்லை.
9எப்பிராயீமின் மனிதர்கள் ஆயுதங்களைத்
தாங்கியிருந்தார்கள், ஆனால் அவர்கள்
யுத்தத்திலிருந்து ஓடிப்போனார்கள்.
10அவர்கள் தேவனோடு செய்த உடன்
படிக்கையைப் பின்பற்றவில்லை. அவரது
போதனைகளுக்குக் கீழ்ப்படிய அவர்கள்
மறுத்தார்கள்.
11தேவன் செய்த பெரிய காரியங்களை
எப்பிராயீமின் மனிதர்கள் மறந்துவிட்டார்
கள். அவர் காட்டிய அற்புதமான காரியங்
களை அவர்கள் மறந்துப்போனார்கள்.

---

**யாக்கோபு** இஸ்ரவேலுக்கு மற்றொரு பெயர். பார்க்க. ஆதியாகமம் 32:22-28.

**முற்பிதாக்கள்** "தந்தையர்" என்பது. இது ஒருவனின் பெற்றோர், பெற்றோரின் பெற்றோர், அவர்களுக்கு முற்பட்ட சந்ததியினர் ஆகியோரைக் குறிக்கும்.

**பின் சந்ததி** ஒருவனின் குழந்தைகளும் பின்வரும் சந்ததியினரும்.

12 எகிப்தின் சோவானில் தேவன் அவர்
களின் தந்தையருக்குத் தனது மிகுந்த வல்ல
மையை வெளிப்படுத்தினார்.
13 தேவன் செங்கடலைப் பிளந்து ஜனங்
களை அதனூடே நடத்திச் சென்றார்.
இருபுறங்களிலும்தண்ணீரானது உறுதியான
சுவராய் எழுந்து நின்றது.
14 ஒரு உயர்ந்த மேகத்தினால் தேவன்
அவர்களை ஒவ்வொரு பகலிலும் வழி
நடத்தினர். ஒவ்வோர் இரவும் ஒரு நெருப்புத்
தூணின் ஒளியினால் தேவன் அவர்களை
வழிநடத்தினார்.
15 பாலைவனத்தின் பாறையைத் தேவன்
பிளந்தார். நிலத்தின் ஆழத்திலிருந்து அவர்
அந்த ஜனங்களுக்கு தண்ணீரைக் கொடுத்
தார்.
16 கன்மலையிலிருந்து ஆறாகப் பெருக்
கெடுக்கும் தண்ணீரைத் தேவன் வர
வழைத்தார்!
17 ஆனால் ஜனங்கள் தேவனுக்கெதிராகத்
தொடர்ந்து பாவம் செய்தனர். பாலைவ
னத்திலும் அவர்கள் மிக உன்னதமான
தேவனுக்கெதிராகத் திரும்பினார்கள்.
18 பின் அந்த ஜனங்கள் தேவனைச்
சோதிக்க விரும்பினார்கள். தங்கள் இச்
சையை நிறைவேற்றிக் கொள்வதற்காக
அவர்கள் தேவனிடம் உணவைக் கேட்
டார்கள்.
19 அவர்கள் தேவனை குறித்து முறை
யிட்டு, “பாலைவனத்தில் தேவன் நமக்கு
உணவைக் கொடுக்கக்கூடுமா?
20 தேவன் பாறையை அடித்தார், பெரு
வெள்ளம் வெளிப்பட்டது. நிச்சயமாக, அவர்
நமக்கு ரொட்டியும் (அப்பமும்) இறைச்சியும்
கொடுக்க முடியும்” என்றார்கள்.
21 அந்த ஜனங்கள் கூறியவற்றை கர்த்தர்
கேட்டார். யாக்கோபிடம் தேவன் கோப
மடைந்தார். தேவன் இஸ்ரவேலிடம் கோப
மடைந்தார்.
22 ஏனெனில் ஜனங்கள் அவரை நம்ப
வில்லை. தேவன் அவர்களைக் காக்கக்கூடு
மென அவர்கள் நம்பவில்லை.
23-24 ஆனால் தேவன் மேலேயுள்ள மேகங்க
ளைத் திறந்தார், உணவுக்கான மன்னா*
அவர்கள் மீது பொழிந்தது. வானில் கதவுகள்
திறக்கப்பட்டு வானிலுள்ள கிடங்கிலிருந்து
தானியங்கள் கீழே கொட்டினாற் போல
காட்சி தந்தது.
25 தேவதூதர்களின் உணவை ஜனங்கள்
உண்டார்கள். அவர்கள் திருப்தியடையும்
வரை தேவன் மிகுதியான உணவை அனுப்
பினார்.
26-27 தேவன் கிழக்கிலிருந்து ஒரு பெருங்
காற்று வீசுமாறு செய்தார், காடைகள்*
மழையைப் போன்று அவர்கள் மீது
வீழ்ந்தன. தேமானிலிருந்து தேவன் காற்றை
வீசச் செய்தார், பறவைகள் மிகுதியாக
இருந்தமையால் நீலவானம் இருண்டது.
28 பாளையத்தின் நடுவே கூடாரங்களைச்
சுற்றிலும் அப்பறவைகள் வீழ்ந்தன.
29 அவர்களுக்கு உண்பதற்கு மிகுதியான
உணவு இருந்தது, ஆனால் தங்களின் பசி
யால் தாங்களே பாவம் செய்யும்படி தங்
களை அவர்கள் ஆட்படுத்திக் கொண்டார்
கள்.
30 அவர்கள் தங்கள் பசியை அடக்கிக்
கொள்ளவில்லை. எனவே அவர்கள் பறவை
களின் இரத்தம் வடிந்து போகும்வரை
காத்திராது அக்காடைகளை உண்டார்கள்.
31 தேவன் அந்த ஜனங்களிடம் மிகவும்
கோபங்கொண்டார், அவர்களில் பலரைக்
கொன்று போட்டார். பல ஆரோக்கியமான
இளைஞர்கள் இறக்கும்படி செய்தார்.
32 ஆனால் ஜனங்களோ இன்னும் பாவம்
செய்தார்கள்! தேவன் செய்ய வல்ல அற்புத
மான காரியங்களை அவர்கள் சார்ந்திருக்க
வில்லை.
33 எனவே தேவன் அவர்கள் பயனற்ற
வாழ்க்கையைச் சில அழிவுகளினால் முடி
வுறச் செய்தார்.
34 தேவன் சிலரைக் கொன்றபோது மற்
றோர் அவரைப் பின்பற்றினார்கள். அவர்கள்
தேவனுக்குப் பின்னே விரைந்தோடி வந்தார்
கள்.
35 தேவனே அவர்கள் கன்மலையென்று
அந்த ஜனங்கள் நினைவுக்கூர்ந்தார்கள். மிக
உன்னதமான தேவன் அவர்களைக் காப்பாற்
றினார் என்பதை நினைத்து பார்த்தார்கள்.
36 அவர்கள் அவரை நேசித்ததாக கூறி
னார்கள், ஆனால் பொய் கூறினார்கள்.
அவர்கள் உறுதியாக இருக்கவில்லை.
37 அவர்கள் இருதயங்கள் உண்மையாகவே
தேவனோடு இருக்கவில்லை. ஆண்டவர்
அவர்களோடு செய்த உடன்படிக்கைக்கு
நம்பிக்கைக்குரியவர்களாக நடந்துக்கொள்ள
வில்லை.
38 ஆனால் தேவன் இரக்கமுள்ளவரா
யிருந்தார், அவர்கள் பாவங்களுக்காக அவர்
அவர்களை மன்னித்தார். அவர் அவர்களை
அழிக்கவில்லை. பலமுறை தேவன் அவரது
கோபத்தை அடக்கிக்கொண்டார். தேவன்
தாம் மிகுந்த கோபமடையாதபடி பார்த்துக்
கொண்டார்.
39 அவர்கள் ஜனங்களே என்பதைத் தேவன்
நினைவுக்கூர்ந்தார். ஜனங்கள் வீசும்
காற்றைப் போன்றவர்கள், பின்பு அது
மறைந்துப்போகும்.

---

**மன்னா** பாலைவனத்தில் நாற்பது ஆண்டுகளாக இஸ்ரவேலர் அலைந்து திரிந்தபோது தேவன் அவர்களுக்காக அனுப்பிய விசேஷ உணவு.

**காடை** ஒருவகை பறவை.

40 ஓ! அந்த ஜனங்கள் பாலைவனத்தில்
தேவனுக்கு மிகவும் வருத்தத்தை ஏற்படுத்
தினார்கள்! அவருக்கு மிகுந்த விசன
மடையச் செய்தார்கள்.
41 மீண்டும் மீண்டும் அந்த ஜனங்கள்
தேவனுடைய பொறுமையைச் சோதித்
தார்கள். இஸ்ரவேலின் பரிசுத்தரை அவர்கள்
உண்மையாகவே புண்படுத்தினார்கள்.
42 தேவனுடைய வல்லமையை அந்த
ஜனங்கள் மறந்து விட்டார்கள். பகைவரிட
மிருந்து பலமுறை தேவன் அவர்களைக்
காத்தார் என்பதை அவர்கள் மறந்தார்கள்.
43 எகிப்தில் ஆண்டவர் நடத்திய அற்புதங்
களையும், சோவானின் களங்களில் (வயல்
களில்) நடந்த அற்புதங்களையும் அவர்கள்
மறந்தார்கள்.
44 தேவன் ஆறுகளை இரத்தமாக்கினார்.
எகிப்தியர்கள் அந்த தண்ணீரைப் பருக
முடியவில்லை.
45 தேவன் கூட்டமாக வண்டுகளை அனுப்
பினார், அவை எகிப்தியரைக் கடித்தன.
தேவன் தவளைகளை அனுப்பினார். அவை
எகிப்தியரின் வாழ்க்கையைக் கெடுத்தன.
46 தேவன் அவர்கள் பயிர்களைப் புழு
பூச்சிகளுக்குக் கொடுத்தார், அவர்களின் பிற
தாவரங்களை வெட்டுக்கிளிகளுக்குக் கொடுத்
தார்.
47 தேவன் அவர்களின் திராட்சைக்
கொடிகளைக் கல்மழையால் அழித்தார்.
அவர்களின் மரங்களை அழிக்கப் பெருங்
கல்மழையைப் பயன்படுத்தினார்.
48 கல்மழையால் தேவன் அவர்கள் விலங்கு
களைக் கொன்றார், அவர்கள் மந்தைகள்
(ஆடு மாடுகள்) மின்னலால் தாக்குண்டு
மடிந்தன.
49 தேவன் எகிப்தியருக்கு அவரது கோபத்
தைக் காண்பித்தார். அவர்களுக்கு எதிராக
அழிக்கும் தேவதூதர்களை அனுப்பினார்.
50 தேவன் தமது கோபத்தைக் காட்ட
ஒரு வழியைக் கண்டார். அவர் அந்த
ஜனங்கள் வாழ அனுமதிக்கவில்லை.
கொடிய நோயால் அவர்கள் மடியச் செய்
தார்.
51 எகிப்தின் முதற்பேறான ஆண் குழந்தை
களைத் தேவன் கொன்றார். காமின்* குடும்
பத்தில் முதற்பேறான எல்லாவற்றையும்
அவர் கொன்றார்.
52 அப்போது தேவன் இஸ்ரவேலரை ஒரு
மேய்ப்பனைப்போல் வழி நடத்தினார். அவர்
தமது ஜனங்களை மந்தைகளைப் போல்
பாலைவனத்தினூடே வழி நடத்திச் சென்
றார்.
53 அவர் தமது ஜனங்களைப் பத்திரமாக
வழிகாட்டி நடத்தினார். தேவனுடைய ஜனங்
கள் அஞ்ச வேண்டியது எதுவுமில்லை.
தேவன் அவர்களது பகைவர்களைச் செங்க
டலில் அமிழச் செய்தார்.
54 தேவன் அவரது ஜனங்களை அவரது
பரிசுத்த தேசத்திற்கு வழி நடத்தினார்,
தமது வல்லமையால் எடுத்துக்கொண்ட
மலைக்கு அவர்களை அழைத்துச் சென்றார்.
55 பிற தேசத்தினரை அந்நாட்டிலிருந்து
போகும்படியாகத் தேவன் கட்டாயப்படுத்தி
னார். தேவன் ஒவ்வொரு குடும்பத்தின
ருக்கும் தேசத்தில் அவரவர்களின் பங்கைக்
கொடுத்தார். தேவன் ஒவ்வொரு இஸ்ரவேல்
கோத்திரத்தினருக்கும் வசிப்பதற்கு வீட்டைத்
தந்தார்.
56 ஆனால் அவர்கள் மிக உன்னதமான
தேவனைச் சோதித்து அவரை விசனத்
திற்குள்ளாக்கினார்கள். அந்த ஜனங்கள்
தேவனுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய
வில்லை.
57 இஸ்ரவேலர் தேவனிடமிருந்து விலகிச்
சென்றார்கள். அவர்கள் தந்தையர் செய்தாற்
போன்று அவர்கள் அவருக்கெதிராகத் திரும்
பினார்கள். எறியும் வில்லைப் போன்று
அவர்கள் தங்கள் போக்கினை மாற்றிக்
கொண்டார்கள்.
58 இஸ்ரவேலர் உயர்ந்த பீடங்களைக்*
கட்டி, தேவனை கோபமடையச் செய்
தார்கள். அவர்கள் பொய்த் தெய்வங்களுக்குச்
சிலைகளை எழுப்பி, தேவனை பொறாமை
அடையச் செய்தார்கள்.
59 தேவன் இதைக் கேட்டு மிகுந்த கோப
மடைந்தார், அவர் இஸ்ரவேலரை முற்றிலும்
தள்ளினார்.
60 தேவன் சீலோவிலுள்ள பரிசுத்தக் கூடா
ரத்தை விட்டு நீங்கினார். ஜனங்களோடு
கூட தேவன் அக்கூடாரத்தில் வாழ்ந்தி
ருந்தார்.
61 பிற தேசங்கள் அவரது ஜனங்களைச்
சிறை பிடிக்க, தேவன் அனுமதித்தார்.
பகைவர்கள் தேவனுடைய “அழகிய
நகையை” எடுத்துக் கொண்டார்கள்.
62 தேவன் அவரது ஜனங்களுக்கெதிராகத்
தமது கோபத்தைக் காட்டினார். அவர்கள்
போரில் கொல்லப்படும்படியாக அனுமதித்
தார்.
63 இளைஞர்கள் மரணமடையும்படியாக
எரிக்கப்பட்டார்கள், அவர்கள் மணக்க
வேண்டிய இளம் பெண்கள் திருமணப்பாடல்
எதையும் பாடவில்லை.
64 ஆசாரியர்கள் கொல்லப்பட்டார்கள்,
ஆனால் அவர்களின் விதவைகள் அவர்களுக்
காக அழவில்லை.
65 இறுதியாக, தூக்கத்திலிருந்து விழித்
தெழும் ஒரு மனிதனைப்போல நம் ஆண்ட
வர் எழுந்திருந்தார், அவர் மிகுதியாகத்

---

***காம்*** *எகிப்தியர்கள் காமின் சந்ததியினர். பார்க்க. ஆதி.* 10:6-10.

***உயர்ந்த பீடங்கள்*** *தேவனையோ அல்லது பொய்த் தெய்வத்தையோ வழிபடும் இடங்கள். அந்த இடங்கள் பெரிதும் மலைகளிலோ, குன்றுகளிலோ இருந்தன.*

திராட்சைரசத்தைப் பருகிய வீரனைப்போல
காணப்பட்டார்.
66தேவன் தமது பகைவர்களை பின்
வாங்கச் செய்து, அவர்களை முறியடித்தார்.
தேவன் தமது பகைவர்களைத் தோற்கடித்து,
என்றென்றும் அவர்கள் அவமானமுறும்படி
செய்தார்.
67ஆனால் தேவன் யோசேப்பின் குடும்
பத்தை நிராகரித்தார். எப்பிராயீமின் குடும்
பத்தாரைத் தேவன் ஏற்கவில்லை.
68இல்லை, தேவன் யூதாவின் கோத்திரத்
தினரைத் தேர்ந்தெடுத்தார். தேவன், தாம்
நேசிக்கும் சீயோன் மலையைத் தேர்ந்துக்
கொண்டார்.
69அம்மலையின் மேல் உயரத்தில் தேவன்
அவரது பரிசுத்த ஆலயத்தைக் கட்டினார்.
பூமியைப்போல என்றென்றும் இருக்கும்படி
யாகத் தேவன் அவரது பரிசுத்த ஆலயத்தைக்
கட்டினார்.
70தனது விசேஷ பணியாளாகத் தேவன்
தாவீதைத் தேர்ந்தெடுத்தார். தாவீது ஆட்டுத்
தொழுவங்களைக் காத்துக் கொண்டிருந்தான்.
ஆனால் தேவன் அவனை அப்பணியி
லிருந்து அகற்றினார்.
71தாவீது மந்தை ஆடுகளை மேய்த்துக்
கொண்டிருந்தான். ஆனால் தேவன் அவனை
அவ்வேலையிலிருந்து அகற்றினார். தேவன்
அவரது ஜனங்களைக் கவனிக்கும் வேலை
யைத் தாவீதுக்குக் கொடுத்தார். தேவனு
டைய சொத்தாகிய யாக்கோபின் ஜனங்
களையும் இஸ்ரவேலரின் ஜனங்களையும்
கவனிக்கும் பொறுப்பை அவனுக்கு அளித்
தார்.
72தாவீது அவர்களை பரிசுத்த இருதயத்
தோடும், மிகுந்த ஞானத்தோடும் வழி
நடத்தினான்.

## சங்கீதம் 79

### ஆசாபின் துதிப் பாடல்களுள் ஒன்று

1தேவனே, சில ஜனங்கள் மற்ற நாடு
களிலிருந்து உமது ஜனங்களோடு போரிட
வந்தார்கள். அந்த ஜனங்கள் உமது பரிசுத்த
ஆலயத்தை அழித்தார்கள். அவர்கள் எருச
லேமைப் பாழாக்கிச் சென்றார்கள்.
2காட்டுப் பறவைகள் உண்ணும்படி பகை
வர்கள் உமது ஊழியக்காரனின் சரீரங்
களைக் கொடுத்தார்கள். உம்மைப் பின்பற்
றுவோரின் சரீரங்களைக் காட்டு விலங்குகள்
உண்ணும்படி விட்டுச் சென்றார்கள்.
3தேவனே, இரத்தம் தண்ணீராகப் பெருக்
கெடுத்தோடும் வரைக்கும் பகைவன் உமது
ஜனங்களைக் கொன்றான். மரித்த உடல்
களைப் புதைப்பதற்கென ஒருவனும் விட்டு
வைக்கப்படவில்லை.
4எங்களைச் சுற்றிலுமுள்ள நாடுகள்
எங்களை இழிவுப்படுத்தின, எங்களைச் சூழ
வாழ்ந்த ஜனங்கள் எங்களை மனம் நோகச்
செய்தனர்.
5தேவனே, என்றென்றும் எங்களோடு
கோபம் கொள்வீரா? உமது ஆழ்ந்த உணர்ச்
சிகள் தொடர்ந்து நெருப்பைப்போல் எரி
யுமா?
6தேவனே, உம்மை அறியாத தேசங்களின்
மீது உமது கோபத்தைத் திருப்பும். உமது
நாமத்தை தொழுதுகொள்ளாத தேசங்களின்
மீது உமது கோபத்தைத் திருப்பும்.
7அத்தேசங்கள் யாக்கோபை அழித்தன.
அவர்கள் யாக்கோபின் நாட்டை அழித்
தார்கள்.
8தேவனே, எங்கள் முற்பிதாக்களின்
பாவத்திற்காக எங்களைத் தண்டியாதேயும்.
விரையும், எங்களுக்கு உமது இரக்கத்தை
காட்டும்! நீர் எங்களுக்கு மிகவும் தேவையா
னவர்!
9எங்கள் மீட்பராகிய தேவனே, எங்க
ளுக்கு உதவும்! எங்களுக்கு உதவும்! எங்க
ளைக் காப்பாற்றும்! உமது நாமத்துக்கு
அது மகிமையை தரும். உமது நாமத்தின்
நன்மைக்காக எங்கள் பாவங்களை அழித்து
விடும்.
10பிற தேசங்கள் எங்களிடம், “உங்கள்
தேவன் எங்கே? அவர் உங்களுக்கு உதவக்
கூடாதா?” என்று கேட்க விடாதேயும்.
தேவனே, நாங்கள் பார்க்கும்படி அவர்
களைத் தண்டியும். உமது பணியாட்களைக்
கொன்றதற்காக அவர்களைத் தண்டியும்.
11சிறைப்பட்டவர்களின் துன்பக் குரலை
நீர் கேளும்! தேவனே, உமது மிகுந்த
வல்லமையைப் பயன்படுத்தி மரணத்திற்
கென்று தேர்ந்துகொண்ட அந்த ஜனங்
களைக் காப்பாற்றும்.
12தேவனே, எங்களைச் சுற்றிலும் வாழும்
ஜனங்கள் எங்களுக்குச் செய்ததைப் பார்க்கி
லும் ஏழு மடங்கு அவர்களைத் தண்டியும்.
உம்மை அவமானப்படுத்தியதற்காய் அவர்
களைத் தண்டியும்.
13நாங்கள் உமது ஜனங்கள். நாங்கள்
உமது மந்தையின் ஆடுகள். நாங்கள் உம்மை
என்றென்றும் துதிப்போம். தேவனே, என்
றென்றும் எப்போதும் நாங்கள் உம்மைத்
துதிப்போம்.

## சங்கீதம் 80

### “உடன்படிக்கையின் அல்லிகள்” என்னும் பாடலை இசைக்கும் இராகத் தலைவனுக்கு ஆசாப் அளித்த துதிப் பாடல்களுள் ஒன்று

1இஸ்ரவேலின் மேய்ப்பரே, என்னைக்
கேளும், நீர் யோசேப்பின் ஆடுகளை (ஜனங்
களை) வழிநடத்துகிறீர். கேருபீன்கள் மேல்
அரசராக நீர் வீற்றிருக்கிறீர். நாங்கள்
உம்மைப் பார்க்கட்டும்.
2இஸ்ரவேலின் மேய்ப்பரே, உமது
பெருமையை எப்பிராயீமுக்கும் பென்யமீ

னுக்கும், மனாசேக்கும் காட்டும். வந்து
எங்களைக் காப்பாற்றும்.
3தேவனே, எங்களை மீண்டும் ஏற்றுக்
கொள்ளும். எங்களை ஏற்றருளும், எங்க
ளைக் காப்பாற்றும்.
4சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்
தாவே, எப்போது நீர் எங்கள் ஜெபங்களைக்
கேட்பீர்? என்றென்றைக்கும் எங்களோடு
கோபமாயிருப்பீரா?
5உமது ஜனங்களுக்கு நீர் கண்ணீரையே
உணவாகக் கொடுத்தீர். உமது ஜனங்களின்
கண்ணீர் நிரம்பிய பாத்திரத்தையே உமது
ஜனங்களுக்கு நீர் கொடுத்தீர். அதுவே
அவர்கள் பருகும் தண்ணீராயிற்று.
6எங்கள் சுற்றத்தினர் சண்டையிடுவதற்
கான பொருளாக எங்களை மாற்றினீர்.
எங்கள் பகைவர்கள் எங்களைப் பார்த்து
நகைக்கிறார்கள்.
7சர்வ வல்லமையுள்ள தேவனே, எங்
களை மீண்டும் ஏற்றுக்கொள்ளும். எங்களை
ஏற்றருளும், எங்களைக் காப்பாற்றும்.
8கடந்த காலத்தில் எங்களை முக்கியமான
ஒரு தாவரத்தைப் போன்று நடத்தி வந்தீர்.
நீர் உமது "திராட்சைக்கொடியை" எகிப்
திலிருந்து கொண்டு வந்தீர். இத்தேசத்தி
லிருந்து பிறர் விலகிப்போகுமாறு
கட்டாயப்படுத்தினீர். உமது "திராட்சைக்
கொடியை" நீர் இங்கு நட்டு வைத்தீர்.
9"திராட்சைக்கொடிக்காக" நீர் நிலத்தைப்
பண்படுத்தினீர். அதன் வேர்கள் வேரூன்றிச்
செல்வதற்கு நீர் உதவினீர். உடனே அத்
"திராட்சைக்கொடி" தேசமெங்கும் படர்ந்தது.
10அது பர்வதங்களை மூடிற்று. அதன்
இலைகள் பெரும் கேதுரு மரங்களுக்கு நிழல்
தந்தன.
11அதன் கொடிகள் மத்தியதரைக் கடல்
வரைக்கும் படர்ந்தது. அதன் கிளைகள்
ஐபிராத்து நதி வரைக்கும் சென்றது.
12தேவனே, உமது "திராட்சைக்கொடி"
யைப் பாதுகாக்கும் சுவர்களை ஏன்
இடித்துத் தள்ளினீர்? இப்போது வழிநடந்து
செல்பவன் ஒவ்வொருவனும் திராட்சைக்
கனிகளைப் பறித்துச் செல்கிறான்.
13காட்டுப்பன்றிகள் வந்து உமது
"திராட்சைக்கொடியின்" மீது நடந்து
செல்கின்றன. காட்டு மிருகங்கள் வந்து அதன்
இலைகளைத் தின்கின்றன.
14சர்வ வல்லமையுள்ள தேவனே, மீண்டும்
வாரும். பரலோகத்திலிருந்து கீழே உமது
"திராட்சைக்கொடி"யைப் பார்த்து அதனைப்
பாதுகாத்துக்கொள்ளும்.
15தேவனே, உமது கைகளால் நட்ட
"திராட்சைக்கொடியைப்" பாரும். நீர்
வளர்த்தெடுத்த இளமையான செடியை* நீர்
பாரும்.
16உலர்ந்த சருகைப்போல் உமது "திராட்
சைக்கொடி" நெருப்பில் எரிக்கப்பட்டது.
நீர் அதனிடம் கோபங்கொண்டு, அதனை
அழித்தீர்.
17தேவனே, உமது வலது பக்கத்தில்
நின்ற உமது மகனை நெருங்கும். நீர்
வளர்த்தெடுத்த உமது மகனிடம் நெருங்கி
வாரும்.
18அவர் மீண்டும் உம்மை விட்டுச் செல்
லமாட்டார். அவர் வாழட்டும், அவர் உமது
நாமத்தைத் தொழுதுகொள்வார்.
19சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்
தரே, எங்களிடம் மீண்டும் வாரும். எங்களை
ஏற்றுக்கொள்ளும், எங்களைக் காப்பாற்றும்.

## சங்கீதம் 81

***சித்தீத் என்னும் இசைக்கருவியை வாசிக்கும் இராகத் தலைவனுக்கு ஆசாப் அளித்த பாடல்களுள் ஒன்று***

1நமது பெலனாகிய தேவனைப் பாடி
மகிழ்ச்சியாயிருங்கள். இஸ்ரவேலரின்
தேவனை நோக்கி மகிழ்ச்சியால் ஆர்ப்
பரியுங்கள்.
2இசையைத் தொடங்குங்கள், தம்புராவை
வாசியுங்கள். வீணையையும் சுரமண்ட
லத்தையும் இசையுங்கள்.
3மாதப்பிறப்பு நாளில்* எக்காளம்
ஊதுங்கள். முழு நிலவின் நாளில் எக்காளம்
ஊதுங்கள். அப்போது நம் விடுமுறை
ஆரம்பமாகிறது.
4அது இஸ்ரவேலருக்கு சட்டமாக வகுக்
கப்பட்டிருந்தது. தேவன் அக்கட்டளையை
யாக்கோபிற்குக் கொடுத்தார்.
5தேவன் யோசேப்பை* எகிப்திலிருந்து
அழைத்துச் சென்றபோது அவனோடு இந்த
உடன்படிக்கையைச் செய்தார். எகிப்தில்,
எங்களால் புரிந்துகொள்ள முடியாத
மொழியை நாங்கள் கேட்டோம்.
6தேவன், "உனது தோள்களிலிருந்து
பாரத்தை இறக்கியிருக்கிறேன், உன்னிட
மிருந்து பணியாட்களின் கூடையை
விழப்பண்ணினேன்.
7"நீங்கள் தொல்லைகளில் சிக்குண்டிருந்தீர்
கள். நீங்கள் உதவிக்காகக் கூப்பிட்டீர்கள்,
நான் உங்களை விடுவித்தேன். புயல்
மேகங்களில் மறைந்திருந்து உங்களுக்குப்
பதிலளித்தேன். மேரிபாவின் தண்ணீரண்டை
யில் நான் உங்களைச் சோதித்தேன்.
8"எனது ஜனங்களே, நான் சொல்வதைக்
கேளுங்கள், அப்போது என் உடன்படிக்
கையை உங்களுக்குத் தருவேன். இஸ்ர

**இளமையான செடி** எழுத்தின் பிரகாரமாக, "மகன்" எனப் பொருள் தரும்.

**மாதப்பிறப்பு நாள்** எபிரெய மாதத்தின் முதல் நாள். இந்நாட்களில் தேவனை தொழுதுகொள்ள சிறப்புக் கூட்டங்கள் நடத்துவார்கள்.

**யோசேப்பு** இங்கு இது யோசேப்பின் குடும்பம் என்று அர்த்தம், இவர்கள் இஸ்ரவேல் ஜனங்கள்.

வேலே, நான் சொல்வதைத் தயவாய்க்
கேள்!
9வேற்றுநாட்டார் தொழுதுகொள்ளும்
பொய்த் தெய்வங்களை நீ தொழுது
கொள்ளாதே.
10கர்த்தராகிய நானே உன் தேவன்.
நான் உன்னை எகிப்திலிருந்து வரவழைத்
தேன். இஸ்ரவேலே, உன் வாயைத் திற,
நான் உன்னைப் போஷிப்பேன்.
11“ஆனால் என் ஜனங்கள் எனக்குச்
செவிசாய்க்கவில்லை. இஸ்ரவேல் எனக்குக்
கீழ்ப்படியவில்லை.
12எனவே அவர்கள் செய்ய விரும்பி
யதைச் செய்யுமாறு அனுமதித்தேன். இஸ்ர
வேலர் அவர்கள் விரும்பியவற்றையெல்லாம்
செய்தார்கள்.
13என் ஜனங்கள் நான் கூறுவதைக்
கேட்டு நடந்தால், என் விருப்பப்படியே
வாழ்ந்தால்,
14அப்போது நான் அவர்கள் பகை
வர்களைத் தோற்கடிப்பேன். இஸ்ர
வேலருக்குத் தொல்லை தரும் ஜனங்களைத்
தண்டிப்பேன்” என்றார்.
15கர்த்தருடைய பகைவர்கள் அச்சத்தால்
நடுங்குவார்கள். அவர்கள் என்றென்றைக்கும்
தண்டிக்கப்படுவார்கள்.
16தேவன் அவரது ஜனங்களுக்குச் சிறந்த
கோதுமையை கொடுப்பார். அவர்கள் திருப்
தியடையும்வரை கன்மலையானவர் அவரது
ஜனங்களுக்குத் தேனைக் கொடுப்பார்.”

## சங்கீதம் 82

### ஆசாபின் துதிப் பாடல்களுள் ஒன்று.

1தேவன் தேவர்களின் சபையில்* நிற்
கிறார். தேவர்களின் கூட்டத்தில் அவரே
நீதிபதி.
2தேவன், “எத்தனைக் காலம் நீங்கள்
ஜனங்களைத் தகாதபடி நியாயந்தீர்ப்பீர்கள்?
தீயவர்களைத் தண்டனை இல்லாமல் எவ்வ
ளவு காலம் தப்பிக்கச் செய்வீர்கள்?”
3“ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் ஆதர
வளியுங்கள். அந்த ஏழைகளின் உரிமை
களுக்குப் பாதுகாப்பளியுங்கள்.
4ஏழைகளுக்கும் திக்கற்றோருக்கும் உதவுங்
கள். அவர்களைத் தீயோரிடமிருந்து காப்
பாற்றுங்கள்.
5“அவர்கள் நிகழ்வது என்னவென்று அறி
யார்கள். அவர்கள் புரிந்துகொள்ளார்கள்!
அவர்கள் செய்துகொண்டிருப்பதை அவர்
கள் அறியார்கள். அவர்கள் உலகம் அவர்
களைச் சுற்றிலும் வீழ்ந்து கொண்டிருக்
கிறது!” என்கிறார்.
6நான் (தேவன்), “நீங்கள் தேவர்கள். மிக
உன்னதமான தேவனுடைய மகன்கள்.
7ஆனால் நீங்கள் எல்லா ஜனங்களும்
மடிவதைப்போல மடிவீர்கள். பிற எல்லாத்
தலைவர்களையும் போல நீங்களும் மடிவீர்
கள்” என்று சொல்லுகிறேன்.
8தேவனே! எழுந்தருளும்! நீரே நீதிபதியா
யிரும்! தேவனே, தேசங்களுக்கெல்லாம் நீரே
தலைவராயிரும்!

## சங்கீதம் 83

### ஆசாபின் துதிப் பாடல்களுள் ஒன்று.

1தேவனே, அமைதியாய் இராதேயும்!
உமது செவிகளை மூடிக்கொள்ளாதேயும்!
தேவனே தயவாய் எதையாவது பேசும்.
2தேவனே, உமது பகைவர்கள் உமக்கெதி
ராகத் திட்டங்கள் வகுக்கிறார்கள். உமது
பகைவர்கள் உடனே தாக்குதல் ஆரம்பிக்கக்
கூடும்.
3உமது ஜனங்களுக்கு எதிராக அவர்கள்
இரகசிய திட்டங்களை வகுக்கிறார்கள். நீர்
நேசிக்கும் ஜனங்களுக்கு எதிராக உமது
பகைவர்கள் திட்டங்களை கலந்து ஆலோ
சிக்கிறார்கள்.
4பகைவர்கள் இவ்வாறு சொல்லிக்
கொண்டிருக்கிறார்கள்; “வாருங்கள், நாம்
பகைவர்களை முற்றிலும் அழிப்போம்.
பின்பு ஒருநாளும் ஒருவனும் ‘இஸ்ரவேல்’
என்னும் பெயரை நினைவு கூரமாட்டான்.”
5தேவனே, அந்த ஜனங்கள் எல்லோரும்
உமக்கும் நீர் எங்களோடு செய்த உமது
உடன்படிக்கைக்கும் எதிராகப் போராட
ஒருமித்துக் கூடினார்கள்.
6-7அப்பகைவர்கள் எங்களை எதிர்க்க
ஒருமித்துச் சேர்ந்தார்கள். இஸ்மவேலராகிய
ஏதோமியரும், மோவாபியரும், ஆகாரின்
சந்ததியினரும், கேபாலரும், அம்மோனிய
ரும், அமலேக்கியரும், பெலிஸ்தரும், தீருவில்
வசிக்கும் ஜனங்களும், ஆகிய எல்லோரும்
எங்களை எதிர்க்க ஒருமித்துக் கூடினார்கள்.
8அசீரியரும்கூட அந்த ஜனங்களோடு
சேர்ந்தார்கள். லோத்தின் சந்ததியினர் மிகுந்த
வல்லமை பெறும்படிச் செய்தார்கள்
9தேவனே, மீதியானியரைத் தோற்கடித்
ததைப்போலவும் கீசோன் நதியருகே சிசெரா
மற்றும் யாபீன் ஜனங்களைத் தோற்கடித்
ததைப் போலவும் பகைவனைத் தோற்கடி
யும்.
10நீர் அவர்களை எந்தோரில் தோற்கடித்
தீர், அவர்கள் சரீரங்கள் நிலத்தில் விழுந்து
அழிந்தன.
11தேவனே, பகைவனின் தலைவர்களைத்
தோற்கடியும். ஓரேபுக்கும் சேபுக்கும் செய்த

---

**தேவர்களின் சபை** தேவனும் அந்நிய தெய்வங்களும் சந்தித்துப் பூமியில் உள்ள ஜனங்களுக்குச் செய்ய வேண்டிய காரியங்களைத் தீர்மானித்தனர் என்று பிற தேசத்தார் போதித்தனர். பல வேளைகளில் தலைவர்களும் அரசர்களும் கூட தெய்வங்கள் என அழைக்கப்பட்டனர். எனவே இச்சங்கீதம் இஸ்ரவேல் தலைவர்களுக்குத் தேவன் கொடுத்த எச்சரிக்கையாக இருக்கலாம்.

படியே செய்யும். சேபாவுக்கும் சல்முனா
வுக்கும் செய்தபடியே செய்யும்.
12தேவனே, அந்த ஜனங்கள் உமது தேசத்
தை விட்டுப் போகும்படியாக எங்களை
வற்புறுத்த விரும்பினார்கள்!
13தேவனே, அந்த ஜனங்களைக் காற்றில்
பறக்கும் பதராகப் பண்ணும். காற்றுப்
பறக்கடிக்கும் புல்லைப் போல் அந்த ஜனங்
களைச் சிதறடியும்.
14நெருப்பு காட்டை அழிப்பதைப் போல
வும் பெருநெருப்பு மலைகளைச் சுடுவது
போலவும் பகைவனை அழித்துப்போடும்.
15தேவனே, புயலில் அலைக்கழிக்கப்படும்
துகளைப்போல அந்த ஜனங்களை துரத்தி
விடும். அவர்களை அசையும், அவர்களைப்
பெருங்காற்றைப் போல நின்று பறக்கடியும்.
16தேவனே அவர்கள் உண்மையிலேயே
சோர்வுடையவர்கள் என்பதை அந்த ஜனங்
கள் அறியும்படி அவர்களுக்குப் போதியும்.
அப்போது அவர்கள் உமது நாமத்தை
தொழுதுகொள்ள விரும்புவார்கள்!
17தேவனே, அந்த ஜனங்களை அச்சுறுத்தி,
அவர்கள் என்றென்றும் வெட்கமடையச்
செய்யும். அவர்களை இழிவுப்படுத்தி, அழித்
துப்போடும்.
18அப்போது நீரே தேவனென்று அவர்கள்
அறிவார்கள். உமது நாமம் யேகோவா
என்பதையும் அவர்கள் அறிவார்கள். மிக
உன்னதமான தேவனாகிய நீர் உலகம்
முழுவதற்கும் தேவன் என்பதையும் அவர்கள்
அறிவார்கள்.

## சங்கீதம் 84

***கீத்தித் என்னும் வாத்தியத்தில் இசைக்கும் இராகத் தலைவனுக்குக் கோராகின் குடும்பம் அளித்த ஒரு துதிப் பாடல்.***

1சர்வ வல்லமையுள்ள தேவனே, உமது
ஆலயம்* உண்மையிலேயே இனிமையானது.
2கர்த்தாவே, உமது ஆலயத்திற்குள் நுழை
வதற்கு என்னால் காத்திருக்க முடியாது.
ஏனெனில் நான் மிகுந்த ஆவலாய் இருக்
கிறேன். என் அவயவங்கள் ஒவ்வொன்றும்
ஜீவனுள்ள தேவனோடு இருப்பதையே
விரும்புகிறது.
3என் அரசரே, என் தேவனே, சர்வ
வல்லமையுள்ள கர்த்தாவே, குருவிகளுக்கும்,
அடைக்கலான் குருவிகளுக்கும் உம்முடைய
ஆலயத்தில் வீடுகள் உண்டு. உமது பலிபீடத்
தருகே அப்பறவைகள் தங்கள் கூடுகளை
அமைக்கும், அங்கு அவற்றின் குஞ்சுகளைப்
பெறும்.
4உமது ஆலயத்தில் வாழும் ஜனங்கள்
மிகுந்த பாக்கியமுள்ளவர்களாக இருக்கிறார்
கள். அவர்கள் எப்போதும் உம்மைத்
துதித்துகொண்டிருக்கிறார்கள்.

**ஆலயம்** அல்லது “வாசஸ்தலம்.”

5தங்கள் இருதயத்தில் கீதங்களைப் பாடிக்
கொண்டு ஆலயத்திற்கு வருகிற ஜனங்கள்
மிகுந்த சந்தோஷமாயிருக்கிறார்கள்.
6அவர்கள் அழுகையின் பள்ளத்தாக்கின்
வழியாகப் பயணம் செய்கிறார்கள். தேவன்
அதை ஒரு நீருற்றாகச் செய்கிறார். இலை
யுதிர்கால மழையின் தண்ணீரால் குளங்கள்
தோன்றும்.
7தேவனைச் சந்திப்பதற்காக சீயோனுக்குச்
செல்லும் வழியில் ஜனங்கள் ஒரு ஊரி
லிருந்து மற்றொரு ஊருக்கு பயணமாகிறார்
கள்.
8சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்
தாவே, என் ஜெபத்தைக் கேளும். யாக்கோ
பின் தேவனே, எனக்குச் செவிகொடும்.
9தேவனே, எங்கள் பாதுகாவலரைப்
(கேடகத்தைப்) பாதுகாத்துக் கொள்ளும்.
நீர் தேர்ந்தெடுத்த அரசன் மீது இரக்கமா
யிரும்.
10வேறிடங்களில் செலவிடும் ஆயிரம் நாட்
களைக் காட்டிலும் உமது ஆலயத்தில்
இருக்கும் ஒரே நாள் நல்லது. எனது
தேவனுடைய வீட்டின் வாசலில் நிற்பதோ
தீயவனின் வீட்டில் வாழ்வதைக் காட்டிலும்
நல்லது.
11கர்த்தர் நமது கேடகமும் மகிமை
வாய்ந்த அரசருமானவர்,* தயவினாலும்
மகிமையாலும் தேவன் நம்மை ஆசீர்வதிக்
கிறார். அவரைப் பின்பற்றிக் கீழ்ப்படிகிற
ஜனங்களுக்குத் தேவன் எல்லா நல்ல
பொருள்களையும் தருகிறார்.
12சர்வ வல்லமையுள்ள தேவனே, உம்மை
நம்புகிற ஜனங்கள் உண்மையாகவே சந்தோ
ஷமானவர்கள்.

## சங்கீதம் 85

***கோராகின் குடும்பம் இராகத் தலைவனுக்கு அளித்த ஒரு துதிப் பாடல்***

1கர்த்தாவே, உமது தேசத்தின்மேல் தயவா
யிரும். யாக்கோபின் ஜனங்கள் ஒரு அந்நிய
தேசத்தில் அடிமைகளாக இருக்கிறார்கள்.
அடிமைப்பட்டவர்களை மீண்டும் அவர்கள்
தேசத்திற்கு அழைத்து வாரும்.
2கர்த்தாவே, உமது ஜனங்களை மன்னி
யும்! அவர்கள் பாவங்களை போக்கிவிடும்!
3கர்த்தாவே, சினமாயிருப்பதை நீர் நிறுத்
தும். கடுங்கோபமாக இராதேயும்.
4எங்கள் தேவனும் இரட்சகருமானவரே,
எங்களிடம் கோபமாயிருப்பதை விட்டு
விட்டு எங்களை மீண்டும் ஏற்றுக்கொள்ளும்.
5நீர் என்றென்றும் கோபங்கொள்வீரோ?
6தயவுகூரும், எங்களை மீண்டும் வாழச்
செய்யும். உமது ஜனங்களைச் சந்தோஷப்
படுத்தும்.

**கேடகமும் … அரசனுமானவர்** “சூரியனும் கேடகமும்” எனப் பொருள்படும்.

7கர்த்தாவே, எங்களைக் காப்பாற்றும்,
நீர் எங்களை நேசிப்பதை எங்களுக்குக்
காட்டும்.
8தேவனாகிய கர்த்தர் கூறியதை நான்
கேட்டேன். அவரது ஜனங்களுக்கும், உண்
மையான சீடர்களுக்கும் சமாதானம் உண்டா
குமென்று கர்த்தர் கூறினார். எனவே மூடத்
தனமான வாழ்க்கை முறைக்கு அவர்கள்
மீண்டும் திரும்பிச் செல்லக்கூடாது.
9தேவன் தம்மைப் பின்பற்றுவோரை
விரைவில் மீட்பார். நமது தேசத்தில் நாம்
பெருமையோடு விரைவில் வாழுவோம்.
10தேவனுடைய உண்மையான அன்பு
அவரை பின்பற்றுவோரை வந்தடையும்.
நன்மையும் சமாதானமும் முத்தமிட்டு அவர்
களை வாழ்த்தும்.
11பூமியின் ஜனங்கள் தேவனிடம் நேர்மை
யானவர்களாயிருப்பார்கள். பரலோகத்தின்
தேவனும் அவர்களுக்கு நல்லவராக இருப்
பார்.
12கர்த்தர் நமக்குப் பல நல்ல பொருள்
களைத் தருவார். நிலம் பல நல்ல பயிர்களை
விளைவிக்கும்.
13நன்மை தேவனுக்கு முன்பாகச் செல்
லும், அது அவருக்கு வழியை ஆயத்தப்
படுத்தும்.

## சங்கீதம் 86

### தாவீதின் விண்ணப்பம்

1நான் ஒரு ஏழை, உதவியற்ற மனிதன்.
கர்த்தாவே, தயவாய் எனக்குச் செவி
கொடுத்து என் ஜெபத்திற்குப் பதில் தாரும்.
2கர்த்தாவே, நான் உம்மைப் பின்பற்று
பவன். தயவாய் என்னைப் பாதுகாத்துக்
கொள்ளும்! நான் உமது பணியாள். நீரே
என் தேவன். நான் உம்மை நம்புகிறேன்.
எனவே என்னைக் காப்பாற்றும்.
3என் ஆண்டவரே, என்னிடம் தயவா
யிரும். நாள் முழுவதும் நான் உம்மிடம்
ஜெபித்துக் கொண்டிருக்கிறேன்.
4ஆண்டவரே, உமது கைகளில் என்
ஜீவனை வைக்கிறேன். என்னை மகிழ்ச்சி
யாக்கும். நான் உமது பணியாள்.
5ஆண்டவரே, நீர் நல்லவர், கிருபையுள்ள
வர். உமது ஜனங்கள் உதவிக்காக உம்மைக்
கூப்பிடுவார்கள். நீர் உண்மையாகவே அந்த
ஜனங்களை நேசிக்கிறீர்.
6கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேளும்.
இரக்கத்திற்கான ஜெபத்திற்குச் செவிகொடும்.
7கர்த்தாவே, தொல்லைமிக்க காலத்தில்
நான் உம்மிடம் ஜெபித்துக் கொண்டிருக்
கிறேன். நீர் பதிலளிப்பீர் என்பதை நான்
அறிவேன்.
8தேவனே, உம்மைப் போன்றோர் வேறெ
வருமில்லை. நீர் செய்தவற்றை வேறெவரும்
செய்ய முடியாது.
9ஆண்டவரே, நீர் ஒவ்வொருவரையும்
உண்டாக்கினீர். அவர்கள் எல்லோரும் வந்து
உம்மை தொழுதுகொள்வார்கள் என் றும்
அவர்கள் எல்லோரும் உமது நாமத்தை
பெருமைப்படுத்துவார்கள் என்றும் நான்
நம்புகிறேன்.
10தேவனே, நீர் மேன்மையானவர்! நீர்
அற்புதமான காரியங்களைச் செய்கிறீர், நீரே,
நீர் மட்டுமே தேவன்!
11கர்த்தாவே, உமது வழிகளை எனக்குப்
போதியும், நான் வாழ்ந்து உமது சத்தியங்
களுக்குக் கீழ்ப்படிவேன். உமது நாமத்தைத்
தொழுதுகொள்வதையே என் வாழ்க்கையின்
மிக முக்கியமான காரியமாகக் கொள்ள
எனக்கு உதவும்.
12என் ஆண்டவராகிய தேவனே, என்
முழு இருதயத்தோடும் உம்மைத் துதிக்
கிறேன். உமது நாமத்தை என்றென்றும்
துதிப்பேன்.
13தேவனே, என்னிடம் மிகுந்த அன்பு
காட்டுகிறீர். கீழே மரணத்தின் இடத்தி
லிருந்து என்னைக் காப்பாற்றும்.
14தேவனே, பெருமைமிக்க மனிதர்கள்
என்னைத் தாக்குகிறார்கள். கொடிய மனிதர்
களின் கூட்டம் என்னைக் கொல்ல முயல்
கிறது, அம்மனிதர்கள் உம்மை மதிப்ப
தில்லை.
15ஆண்டவரே, நீர் தயவும் இரக்கமும்
உள்ள தேவன். நீர் பொறுமையுடையவர்,
உண்மையும் அன்பும் நிறைந்தவர்.
16தேவனே, நீர் எனக்குச் செவிகொடுப்
பதை எனக்குக் காண்பித்து, என்மீது
தயவாயிரும். நான் உமது பணியாள்.
எனக்குப் பெலனைத் தாரும். நான் உமது
பணியாள். என்னைக் காப்பாற்றும்.
17தேவனே, நீர் எனக்கு உதவுவீர் என்ப
தற்கு ஒரு அடையாளத்தை தாரும். என்
பகைவர்கள் அந்த அடையாளத்தைக் கண்டு,
ஏமாற்றம் கொள்வார்கள். நீர் என் ஜெபத்
தைக் கேட்டு எனக்கு உதவுவீர் என்பதை
அது காட்டும்.

## சங்கீதம் 87

### கோராகின் குடும்பம் அளித்த ஒரு துதிப் பாடல்

1எருசலேமின் பரிசுத்த மலைகளில்
தேவன் தமது ஆலயத்தைக் கட்டினார்.
2இஸ்ரவேலின் வேறெந்த இடத்தைக்
காட்டிலும் சீயோனின் வாசற் கதவுகளைக்
கர்த்தர் நேசிக்கிறார்.
3தேவனுடைய நகரமே, ஜனங்கள் உன்
னைக் குறித்து ஆச்சரியமான காரியங்
களைக் கூறுகிறார்கள்.
4தேவன் தமது எல்லா ஜனங்களின்
பட்டியலையும் வைத்திருக்கிறார். அவர்
களுள் சிலர் எகிப்திலும் பாபிலோனிலும்

வசிக்கிறார்கள். அவர்களுள் சிலர் பெலிஸ்
தியாவிலும், தீருவிலும், எத்தியோப்பியா
விலும் பிறந்தார்கள்.
5சீயோனில் பிறந்த ஒவ்வொருவரையும்
தேவன் அறிகிறார். மிக உன்னதமான தே
வன் அந்நகரத்தைக் கட்டினார்.
6தேவன் தமது எல்லா ஜனங்களின்
பட்டியலையும் வைத்திருக்கிறார். ஒவ்வொரு
வனும் எங்கே பிறந்தான் என்பதையும்
தேவன் அறிகிறார்.
7விசேஷ ஓய்வு நாட்களைக் கொண்டாடு
வதற்குத் தேவனுடைய ஜனங்கள் எருச
லேமுக்குப் போகிறார்கள். அவர்கள் மிக
மகிழ்ச்சியாயிருக்கிறார்கள். அவர்கள்
பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டுமிருக்கிறார்
கள். அவர்கள், "எல்லா நல்லவையும்
எருசலேமிலிருந்து வருகின்றன" என்றார்
கள்.

## சங்கீதம் 88

***கோராகின் குடும்பம் இராகத் தலைவனுக்கு அளித்த துதிப் பாடல். இது வேதனை தரும் ஒரு நோயைப் பற்றியது. இது எஸ்ராகியனாகிய ஏமானின் மஸ்கீல் என்னும் ஒரு பாடல்.***

1தேவனாகிய கர்த்தாவே, நீரே எனது
மீட்பர். இரவும் பகலும் நான் உம்மை
நோக்கி ஜெபம் பண்ணிக்கொண்டிருக்
கிறேன்.
2தயவாய் என் ஜெபங்களைக் கவனித்துக்
கேளும். இரக்கத்திற்காய் வேண்டும் என்
ஜெபங்களுக்குச் செவிகொடும்.
3இந்த நோயினால் என் ஆத்துமா துயர
மாயிருக்கிறது, நான் விரைவில் மரிப்பேன்.
4ஏற்கெனவே ஜனங்கள் என்னை மரித்த
வனைப் போன்றும் வாழ பெலனற்ற மனித
னைப் போன்றும் கருதி நடத்துகிறார்கள்.
5மரித்தோரிடம் என்னைத் தேடிப்
பாருங்கள். உங்களிடமிருந்தும் உங்கள் பாது
காப்பிலிருந்தும் தொடர்பிழந்த நீங்கள்
மறந்துபோன மரித்த ஜனங்களில் ஒரு
வனைப்போலவும், கல்லறையில் கிடக்கும்
பிணத்தைப்போலவும் நான் இருக்கிறேன்.
6பூமியிலுள்ள அந்தத் துவாரத்தில் நீர்
என்னை வைத்தீர். ஆம், நீர் என்னை
இருண்ட இடத்தில் வைத்தீர்.
7தேவனே, நீர் என்னிடம் கோபமா
யிருந்தீர், என்னைத் தண்டித்தீர்.
8என் நண்பர்கள் என்னை விட்டுப்
பிரிந்தார்கள். யாரும் தொடவிரும்பாத ஒரு
வனைப் போன்றும் அவர்கள் என்னை
விட்டு விலகினார்கள். நான் வீட்டில்
அடைக்கப்பட்டேன், நான் வெளியே செல்ல
முடியவில்லை.
9என் எல்லாத் துன்பங்களுக்காகவும் அழு
வதால் என் கண்கள் புண்படுகின்றன.
தேவனே, உம்மிடம் தொடர்ந்து ஜெபம்
செய்கிறேன்! ஜெபத்தில் என் கரங்களை
உமக்கு நேராக உயர்த்துகிறேன்.
10கர்த்தாவே, மரித்தவர்களுக்காக அற்புதங்
கள் நிகழ்த்துவீரா? ஆவிகள் எழுந்து உம்
மைத் துதிக்குமா? இல்லை!
11கல்லறைகளில் இருக்கும் மரித்தோர்
உமது அன்பைக் குறித்துப் பேசமுடியாது.
மரித்தோரின் உலகத்திலுள்ளவர்கள் உமது
உண்மையைக் குறித்துப் பேசமுடியாது.
12இருளில் கிடக்கும் மரித்தோர் நீர் செய்
யும் அற்புதமான காரியங்களைப் பார்க்க
முடியாது. மறக்கப்பட்டோரின் உலகிலுள்ள
மரித்தோர் உமது நன்மையைக் குறித்துச்
சொல்லமுடியாது.
13கர்த்தாவே, நீர் எனக்கு உதவவேண்டு
மென உம்மைக் கேட்டுக் கொண்டிருக்
கிறேன்! ஒவ்வொரு நாளும் அதிகாலையில்
நான் உம்மிடம் ஜெபம் செய்கிறேன்.
14கர்த்தாவே, ஏன் என்னைக் கைவிட்டீர்?
ஏன் எனக்குச் செவிகொடுக்க மறுக்கிறீர்?
15என் இளமைப் பருவத்திலிருந்தே நான்
சோர்ந்து நோயாளியாயிருக்கிறேன். உமது
கோபத்தால் துன்புற்றேன், நான் திக்கற்றவன்.
16கர்த்தாவே, நீர் என்னிடம் கோபம்
கொண்டிருந்தீர், உமது தண்டனை என்
னைக் கொன்று கொண்டிருக்கிறது.
17வலியும் நோயும் எப்போதும் என்னை
வருத்துகின்றன. என் வலியிலும் நோயிலும்
நான் அமிழ்ந்துகொண்டிருப்பதாக உணரு
கிறேன்.
18கர்த்தாவே, என் நண்பர்களையும், அன்
பர்களையும், என்னை விட்டு விலகுமாறு
செய்தீர். இருள் மட்டுமே என்னிடம் நிலை
கொண்டது.

## சங்கீதம் 89

***எஸ்ராகியனாகிய ஏத்தானின் ஒரு மஸ்கீல்***

1கர்த்தருடைய அன்பை குறித்து என்
றைக்கும் நான் பாடுவேன். என்றென்று
முள்ள அவரது உண்மையைப் பற்றி நான்
பாடுவேன்.
2கர்த்தாவே, உமது அன்பு என்றென்றும்
நிலைக்கும் என்று உண்மையாகவே நான்
நம்புகிறேன். உமது உண்மை வானத்தைப்
போலத் தொடர்கிறது.
3தேவன், "நான் தேர்ந்தெடுத்த அரசனோடு
ஒரு உடன்படிக்கை செய்துகொண்டேன்.
4தாவீதே, உன் குடும்பம் என்றென்றும்
நிலைத்திருக்கும்படிச் செய்வேன். என்றென்
றைக்கும் உமது அரசு தொடருமாறு செய்
வேன்" என்றார்.
5கர்த்தாவே, நீர் வியக்கத்தக்க காரியங்
களைச் செய்கிறீர். விண்ணுலகம் இதற்காக
உம்மைத் துதிக்கும். ஜனங்கள் உம்மைச்
சார்ந்திருக்க முடியும். பரிசுத்தரின் கூட்டம்
இதைப்பற்றிப் பாடும்.

6 பரலோகத்தில் கர்த்தருக்கு நிகரானவர்
எவருமில்லை. “தெய்வங்களில்” எவரையும்
கர்த்தரோடு ஒப்பிட முடியாது.
7 தேவன் பரிசுத்தமானவரைச் சந்திக்கிறார்.
அவருடைய தூதர்கள் அவரைச் சுற்றியிருப்
பார்கள். அவர்கள் தேவனுக்குப் பயந்து
அவரை மதிப்பார்கள். அவரைக் கண்டு
பயபக்தியோடு நிற்பார்கள்.
8 சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்
தாவே, உம்மைப் போன்றோர் வேறெவரு
மில்லை. உம்மை நாங்கள் முழுமையாக
நம்பமுடியும்.
9 நீர் பெருமிதத்தோடு கடலை ஆளுகிறீர்.
அதன் கோபமான அலைகளை நீர் அமைதிப்
படுத்த முடியும்.
10 தேவனே, நீர் ராகாபைத் தோற்கடித்தீர்.
உமது சொந்த வல்லமைமிக்க கரங்களால்
நீர் உமது பகைவர்களைச் சிதறடித்தீர்.
11 தேவனே, பரலோகத்திலும், பூமியிலு
முள்ள அனைத்தும் உமக்குரியவை. உலகை
யும் அதிலுள்ள அனைத்தையும் நீரே உண்
டாக்கினீர்.
12 வடக்கு, தெற்கு, அனைத்தையும் நீர்
படைத்தீர். தாபோர் மலையும் எர்மோன்
மலையும் உமது நாமத்தைத் துதித்துப்பாடும்.
13 தேவனே, உமக்கு வல்லமை உண்டு!
உமது வல்லமை மேன்மையானது! வெற்றி
யும் உமக்குரியதே!
14 உண்மையிலும் நீதியிலும் உமது
அரசு கட்டப்பட்டது. அன்பும் நம்பிக்கையும்
உமது சிங்காசனத்திற்கு முன்பு நிற்கும்
பணியாட்கள்.
15 தேவனே, உம்மை நேர்மையாகப் பின்
பற்றுவோர் உண்மையிலேயே மகிழ்ச்சியா
யிருக்கிறார்கள். அவர்கள் உமது தயவின்
ஒளியில் வாழ்கிறார்கள்.
16 உமது நாமம் அவர்களை எப்போதும்
மகிழ்ச்சியாக்கும். அவர்கள் உமது நன்மை
யைத் துதிக்கிறார்கள்.
17 நீரே அவர்களின் வியக்கத்தக்க பெலன்.
அவர்களுடைய வல்லமை உம்மிடமிருந்து
வரும்.
18 கர்த்தாவே, நீரே எமது பாதுகாவலர்.
இஸ்ரவேலின் பரிசுத்தமானவரே எங்கள்
ராஜா.
19 உம்மைப் பின்பற்றுவோருக்குத் தரிசனம்
தந்த நீர், “கூட்டத்திலிருந்து ஒரு இளைஞ
னை நான் தேர்ந்தெடுத்தேன். அந்த இளைஞ
னை முக்கியமானவனாக்கினேன். அந்த
இளம் வீரனை ஆற்றலுடையவனாக்கினேன்.
20 நான் எனது பணியாளாகிய தாவீதைக்
கண்டெடுத்தேன். விசேஷமான எண்ணெ
யால் அவனை அபிஷேகம் செய்தேன்.
21 என் வலது கரத்தால் தாவீதைத் தாங்கி
னேன். எனது வல்லமையால், அவனை
வலிமையுள்ளவனாக்கினேன்.
22 தேர்ந்தெடுத்த அந்த அரசனைப் பகை
வன் தோற்கடிக்க முடியாமற் போயிற்று.
தீயோர் அவனைத் தோற்கடிக்க இயல
வில்லை.
23 அவனது பகைவர்களை நான் அழித்
தேன். நான் தேர்ந்தெடுத்த அரசனைப்
பகைத்த வர்களை நான் தோற்கடித்தேன்.
24 நான் தேர்ந்தெடுத்த அரசனை எப்
போதும் நேசித்து அவனைத் தாங்குவேன்.
அவனை எப்போதும் ஆற்றல் பெறச் செய்
வேன்.
25 நான் தேர்ந்தெடுத்த அரசனைக் கட
லுக்கு அதிகாரியாக வைத்தேன். அவன்
ஆறுகளைக் கட்டுப்படுத்துவான்.
26 அவன் என்னை நோக்கி, ‘நீரே என்
தந்தை. நீர் என் தேவன், என் பாறை,
என் மீட்பர்’ என்பான்.
27 நான் அவனை என் முதற்பேறான
மகனாக்குவேன். அவன் பூமியின் முதன்
மையான அரசனாக இருப்பான்.
28 நான் தேர்ந்தெடுத்த அரசனை என்
அன்பு என்றென்றும் பாதுகாக்கும். அவ
னோடு நான் செய்த உடன்படிக்கை ஒருபோ
தும் மாறாது.
29 அவன் குடும்பம் என்றென்றும் தொட
ரும், அவன் அரசு வானங்களிருக்கும்வரை
நிலைக்கும்,

30 அவனது சந்ததியினர் என் சட்டத்தைப்
பின்பற்றாது விலகும்போதும், அவர்கள்
என் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாது மீறும்
போதும் நான் அவர்களைத் தண்டிப்பேன்.
31 நான் தேர்ந்தெடுத்த அரசனின் சந்ததி
யினர் எனது சட்டங்களை மீறி, என்
கட்டளைகளை உதாசீனப்படுத்தினால்
32 அப்போது நான் அவர்களைக் கடுமை
யாகத் தண்டிப்பேன்.
33 ஆனால் அந்த ஜனங்களிடமிருந்து என்
அன்பை விலக்கமாட்டேன். நான் அவர்
களிடம் எப்போதும் நேர்மையாக இருப்
பேன்.
34 நான் தாவீதோடு செய்த உடன்படிக்கை
யை மீறமாட்டேன். நான் எனது உடன்படிக்
கையை மாற்றமாட்டேன்.
35 எனது பரிசுத்தத்தினால் நான் அவனுக்கு
ஒரு வாக்குறுதி அளித்தேன். நான் தாவீதிடம்
பொய் கூறமாட்டேன்!
36 தாவீதின் குடும்பம் என்றென்றும்
நிலைத்திருக்கும். சூரியன் இருக்கும்வரை
அவன் அரசு நிலைக்கும்.
37 சந்திரன் இருக்கும்வரை என்றென்றும்
அது தொடரும். வானங்கள் அந்த உடன்
படிக்கைக்கு சான்று. அந்த உடன்படிக்
கையை நம்பலாம்” என்றீர்.
38 ஆனால் தேவனே, நீர் தேர்ந்தெடுத்த
அரசனிடம் கோபங்கொண்டு, அவனைத்
தன்னந்தனியாக விட்டீர்.
39 நீர் உமது உடன்படிக்கையைத் தள்ளி
னீர். நீர் அரசனின் கிரீடத்தைத் தரையிலே
வீசினீர்.

40அரசனின் நகரத்தின் சுவர்களை நீர்
கீழே வீழ்த்தினீர். அவனது கோட்டைகளை
யெல்லாம் அழித்தீர்.
41கடந்து செல்லும் ஜனங்கள் அவனிட
மிருந்த பொருட்களைத் திருடினார்கள். அவ
னது அயலார் அவனைக் கண்டு நகைத்தனர்.
42நீர் அரசனின் பகைவர்கள் அனை
வரையும் மகிழ்ச்சியடையச் செய்தீர். அவ
னது பகைவர்கள் போரில் அவனை
வெற்றிக்கொள்ள அனுமதித்தீர்.
43தேவனே, அவர்கள் தங்களைப் பாது
காத்துக்கொள்ள உதவினீர். உமது அரசன்
யுத்தத்தில் வெல்ல நீர் உதவவில்லை.
44நீர் அவன் வெல்ல விடவில்லை. நீர்
அவனது சிங்காசனத்தை தரையில் வீசினீர்.
45நீர் அவனது ஆயுளைக் குறைத்தீர்.
நீர் அவனை அவமானப்படுத்தினீர்.
46கர்த்தாவே, இது எத்தனை காலம்
தொடரும்? எதுவரைக்கும் நீர் எங்களை
உதாசீனப்படுத்துவீர்? என்றென்றும் உமது
கோபம் நெருப்பைப்போல் எரியுமா?
47என் ஆயுள் எத்தனை குறுகியது
என்பதை நினைவுகூரும். குறைந்த காலங்கள்
வாழ்ந்து, மடியும்படி நீர் எங்களைப் படைத்
தீர்.
48ஒருவனும் வாழ்ந்து, பின் மடியாமல்
இருப்பதில்லை. ஒருவனும் கல்லறைக்குத்
தப்புவதில்லை.
49தேவனே, கடந்த காலத்தில் நீர் காட்டிய
அன்பு எங்கே? நீர் தாவீதின் குடும்பத்திற்கு
நேர்மையாக இருப்பதாக அவனுக்கு
வாக்குப்பண்ணினீர்.
50-51ஆண்டவரே, உமது பணியாளை
எவ்வாறு ஜனங்கள் அவமானப்படுத்தி
னார்கள் என்பதைத் தயவாய் நினைவுகூரும்.
கர்த்தாவே, உமது பகைவரின் எல்லா
அவமானச் சொற்களுக்கும் நான் செவி
கொடுக்க நேரிட்டது. நீர் தேர்ந்தெடுத்த
அரசனை அந்த ஜனங்கள் அவமானப்
படுத்தினார்கள்.
52கர்த்தருக்கே என்றென்றும் ஸ்தோத்திரம்!
ஆமென், ஆமென்!

## புத்தகம் 4

### சங்கீதம் 90

**தேவனுடைய மனிதனாகிய மோசேயின் ஜெபம்**

1ஆண்டவரே, என்றென்றும் எப்போதும்
நீரே எங்கள் புகலிடம்.
2தேவனே, பர்வதங்கள் பிறக்கும்முன்பும்,
பூமியும் உலகமும் உருவாக்கப்படும்முன்பும்
நீரே தேவன். தேவனே, நீர் எப்போதும்
இருந்தவர், நீர் எப்போதும் இருக்கும்
தேவன்!
3நீர் உலகில் ஜனங்களைக் கொண்டு
வந்தீர், நீர் அவர்களை மீண்டும் தூளாக
மாற்றுகிறீர்.
4ஓராயிரம் ஆண்டுகள் உமக்கு முந்திய
நாளைப்போலவும் கடந்த இரவைப்போலவும்
இருக்கும்.
5நீர் எங்களைப் பெருக்கித் தள்ளுகிறீர்.
எங்கள் வாழ்க்கை ஒரு கனவைப் போன்றது,
காலையில் நாங்கள் மறைந்து போகிறோம்.
நாங்கள் புல்லைப் போன்றவர்கள்.
6காலையில் புல் வளரும், மாலையில்
அது காய்ந்து, வாடிப்போகும்.
7தேவனே, நீர் கோபமாயிருக்கும்போது
நாங்கள் அழிக்கப்படுவோம். உமது கோபம்
எங்களை அச்சுறுத்துகிறது!
8எங்கள் பாவங்கள் அனைத்தையும் நீர்
அறிகிறீர். தேவனே, எங்கள் இரகசிய
பாவங்கள் ஒவ்வொன்றையும் நீர் காண்கிறீர்.
9உமது கோபம் எங்கள் வாழ்க்கையை
முடிவுறச் செய்யும். காதில் இரகசியமாகச்
சொல்லும் சொல்லைப்போன்று எங்கள்
உயிர்கள் மறைந்துபோகும்.
10நாங்கள் எழுபது ஆண்டுகள் வாழக்
கூடும். பலமுடையவர்களாயின் எண்பது
ஆண்டுகள் வாழலாம். எங்கள் வாழ்க்கை
கடும் உழைப்பினாலும், நோயினாலும் நிரம்
பியவை. திடீரென, எங்கள் வாழ்க்கை
முடிவுறும்! நாங்கள் பறந்து மறைவோம்
11தேவனே, உமது கோபத்தின் முழு
வல்லமையையும் ஒருவரும் அறியார்.
ஆனால் தேவனே, எங்கள் பயமும்,
உம் மிடம் நாங்கள் கொண்டுள்ள மதிப்பும்
உமது கோபத்தைப் போன்று பெரியவை.
12நாங்கள் உண்மையிலேயே ஞான
முடையவர்களாகும்படி எங்கள் வாழ்க்கை
எத்தனை குறுகியது என்பதை எங்களுக்குக்
கற்பியும்.
13கர்த்தாவே, எங்களிடம் எப்போதும்
திரும்பி வாரும். உமது பணியாட்களிடம்
இரக்கமாயிரும்.
14ஒவ்வொரு காலையிலும் உமது அன்
பால் எங்களை நிரப்பும். நாங்கள் மகிழ்ந்து
எங்கள் வாழ்க்கையில் களிகூரச் செய்யும்.
15எங்கள் வாழ்க்கையில் மிகுந்த துன்பத்
தையும் குழப்பங்களையும் தந்தீர். இப்போது
எங்களைச் சந்தோஷப்படுத்தும்.
16நீர் செய்யும் அற்புதச் செயல்களை உமது
ஊழியர்கள் காணச்செய்யும் உம் முடைய
மகிமையை அவர்களின் பிள்ளை கள்
காணச்செய்யும்.
17எங்கள் தேவனாகிய ஆண்டவரே, எங்
களிடம் தயவாயிரும். நாங்கள் செய்யும்
ஒவ்வொன்றையும் செம்மைப்படுத்தும் தேவ
னே நாங்கள் செய்யும் எல்லாவற்றிலும்
நன்மையை வழங்குவீராக.

### சங்கீதம் 91

1மிக உன்னதமான தேவனிடம் மறைந்து
கொள்ள நீ போகமுடியும். சர்வ வல்லமை

யுள்ள தேவனிடம் பாதுகாப்பிற்காக நீ
போகமுடியும்.
2நான் கர்த்தரை நோக்கி, “நீரே என்
பாதுகாப்பிடம், என் கோட்டை, என்
தேவனே, நான் உம்மை நம்புகிறேன்”
என்று கூறுகிறேன்.
3மறைவான ஆபத்துக்களிலிருந்தும் ஆபத்
தான நோய்களிலிருந்தும் தேவன் உன்னைக்
காப்பாற்றுகிறார்.
4நீ தேவனைப் பாதுகாப்பிற்காக அணுக
முடியும். அவர் உன்னை ஒரு பறவை சிறகை
விரித்துத் தன் குஞ்சுகளைக் காப்
பதைப்போன்று காப்பார். தேவன் ஒரு
கேடகத்தைப் போன்றும் சுவரைப் போன்
றும் உன்னைப் பாதுகாக்கிறார்.

5இரவில் நீ அஞ்சத்தக்கது எதுவுமில்லை,
நீ பகலில் பகைவரின் அம்புக்கும் பயப்
படமாட்டாய்.
6இருளில் வரும் கொடிய நோய்களுக்கும்,
நடுப்பகலில் வரும் கொடிய நோய்களுக்கும்
நீ அஞ்சமாட்டாய்.
7நீ ஆயிரம் பகைவர்களைத் தோற்கடிப்
பாய். உன் சொந்த வலதுகை பதினாயிரம்
பகை வீரர்களைத் தோற்கடிக்கும். உன்
பகைவர்கள் உன்னைத் தொடக்கூட மாட்
டார்கள்.
8சற்றுப்பார், அத்தீயோர் தண்டிக்கப்
பட்டதை நீ காண்பாய்!
9ஏனெனில் நீ கர்த்தரை நம்புகிறாய்.
மிக உன்னதமான தேவனை நீ உன்
பாதுகாப்பிடமாகக் கொண்டாய்.
10தீயவை உனக்கு நிகழாது, உன் வீட்டில்
எந்தவிதமான நோய்களும் இருப்பதில்லை.
11தேவன் அவரது தூதர்களை உனக்காகக்
கட்டளையிடுவார். நீ போகுமிடங்களி
லெல்லாம் அவர்கள் உன்னைப் பாதுகாப்
பார்கள்.

12உன் கால் பாறையில் மோதாதபடிக்கு
அவர்கள் கைகள் உன்னைப் பிடித்துக்
கொள்ளும்.
13சிங்கங்களின் மேலும் விஷம் நிரம்பிய
பாம்புகளின் மேலும் நடக்கும் வல்லமை
உனக்கு வாய்க்கும்.
14கர்த்தர்: “ஒருவன் என்னை நம்பினால்,
நான் அவனை மீட்பேன். என் நாமத்தை
தொழுதுகொண்டு என்னைப் பின்பற்று
வோரை நான் காப்பாற்றுவேன்” என்கிறார்.
15என்னைப் பின்பற்றுவோர் உதவிக்காக
என்னை அழைப்பார்கள். நான் அவர்
களுக்குப் பதில் கொடுப்பேன். அவர்களுக்குத்
தொல்லை நேரும்போது நான் அவர்களோடு
இருப்பேன். நான் அவர்களைக் காப்பாற்றிப்
பெருமைப்படுத்துவேன்.
16என்னைப் பின்பற்றுவோருக்கு நான்
நீண்ட ஆயுளைக் கொடுப்பேன். நான்
அவர்களைக் காப்பாற்றுவேன்.

## சங்கீதம் 92

### ஓய்வு நாளின் துதிப் பாடல்

1மிக உன்னதமான தேவனாகிய கர்த்த
ரைத் துதிப்பது நல்லது. உமது நாமத்தைத்
துதிப்பது நல்லது.
2காலையில் உமது அன்பைப் பற்றியும்
இரவில் உமது நம்பிக்கையைப் பற்றியும்
பாடுவது நல்லது.
3தேவனே பத்து நரம்பு வாத்தியங்
களாலும் வீணையினாலும் தம்புருவினா
லும் இசை மீட்டி உம்மைப் பாடுவது
நல்லது.
4கர்த்தாவே, நீர் செய்த காரியங்களால்
எங்களை உண்மையாகவே மகிழ்ச்சிப்
படுத்துகிறீர். அக்காரியங்களைக் குறித்து
நாங்கள் சந்தோஷமாகப் பாடுவோம்.
5கர்த்தாவே, நீர் மேன்மையான காரியங்
களைச் செய்தீர். உமது எண்ணங்களை
எங்களால் புரிந்துகொள்ள முடியாது.
6உம்மோடு ஒப்பிடுகையில் ஜனங்கள்
மூடமிருகங்களைப்போல் இருக்கிறார்கள்.
நாங்கள் எதையும் புரிந்துகொள்ள முடியாத
மூடர்களைப்போல் இருக்கிறோம்.
7களைகளைப்போல் தீயோர் வாழ்ந்து
மறைகிறார்கள். அவர்கள் செய்யும் பயனற்ற
காரியங்களே என்றென்றும் அழிக்கப்படும்.
8ஆனால் தேவனே, நீர் என்றென்றும்
மகிமைப்படுத்தப்படுவீர்.
9கர்த்தாவே, உமது பகைவர்கள் எல்லோ
ரும் அழிக்கப்படுவார்கள். தீயவை செய்யும்
எல்லா ஜனங்களும் அழிக்கப்படுவார்கள்.
10ஆனால் நீர் என்னைப் பெலனுடைய
வனாகச் செய்கிறீர். பலத்த கொம்புகளை
யுடைய ஆட்டைப் போலாவேன். விசேஷ
வேலைக்காக நீர் என்னைத் தேர்ந்தெடுத்தீர்.
உமது புது எண்ணெயை என்மீது ஊற்றி
னீர்.
11என் பகைவர்களை என்னைச் சுற்றிலும்
காண்கிறேன். என்னைத் தாக்க வருகிற
பெருங்காளைகளைப் போல அவர்கள்
காணப்படுகிறார்கள். அவர்கள் என்னைக்
குறித்துச் சொல்பவற்றை நான் கேட்கிறேன்.
12-13செழிப்பாக வளருகின்ற பனைமரத்
தைப்போல் நீதிமான் இருப்பான். லீபனோ
னின் கேதுரு மரத்தைப்போல் நல்லவன்
இருப்பான். கர்த்தருடைய ஆலயத்தில் நடப்
பட்ட மரங்களைப்போல் நல்லோர் வலிமை
யுடன் இருப்பார்கள். தேவனுடைய ஆலய
முற்றத்தில் அவர்கள் வலிமையோடு
வளருவார்கள்.
14வயது முதிர்ந்தபோதும் அவர்கள்
தொடர்ந்து கனிகளைத் தருவார்கள். அவர்
கள் செழுமையும், பசுமையுமான மரங்
களைப்போல் இருப்பார்கள்.
15கர்த்தர் நல்லவர் என்பதை எல்லோ
ருக்கும் காண்பிப்பார்கள். அவர் என்

பாறை அவர் ஒருபோதும் தீமை செய்
வதில்லை.

## சங்கீதம் 93

1கர்த்தர் அரசர். அவர் மகத்துவத்தையும்
வல்லமையையும் ஆடையைப்போல் அணிந்
திருக்கிறார். அவர் ஆயத்தமாயிருப்பதால்
உலகம் பாதுகாப்பாய் உள்ளது, அது
அசைக்கப்படுவதில்லை.
2தேவனே, உமது அரசு என்றென்றும்
தொடருகிறது. தேவனே, நீர் என்றென்
றைக்கும் வாழ்கிறீர்!
3கர்த்தாவே, ஆறுகளின் ஒலி மிகுந்த
இரைச்சலுடையது. மோதும் அலைகள்
இரைச்சலெழுப்புகின்றன.
4கடலின் மோதும் அலைகள் ஒலி மிகுந்து
வல்லமை மிகுந்தவையாக உள்ளன. ஆனால்
மேலேயுள்ள கர்த்தர் இன்னும் மிகுந்த
வல்லமையுள்ளவர்.
5கர்த்தாவே, உமது சட்டங்கள் என்றென்
றும் தொடரும்.* உமது பரிசுத்த ஆலயம்
வெகுகாலம் நிலைநிற்கும்.

## சங்கீதம் 94

1கர்த்தாவே, நீர் ஜனங்களைத் தண்டிக்கும்
தேவன். நீர் வருகிறவரும் ஜனங்களுக்குத்
தண்டனையைத் தருகிறவருமான தேவன்.
2நீர் முழு பூமிக்கும் நீதிபதி. பெருமை
யுடைய ஜனங்களுக்கு, அவர்களுக்குரிய
தண்டனையைக் கொடும்.
3கர்த்தாவே, எத்தனை காலம் தீயவர்கள்
கேளிக்கைகளில் திளைத்திருப்பார்கள்?
4எதுவரைக்கும் அக்குற்றவாளிகள் அவர்
கள் செய்த தீய காரியங்களைப் பற்றிப்
பெருமை பாராட்டுவார்கள்?
5கர்த்தாவே, அவர்கள் உமது ஜனங்
களைத் தாக்குகிறார்கள். உமது ஜனங்கள்
துன்புறும்படி அவர்கள் செய்கிறார்கள்.
6அத்தீயோர் விதவைகளையும் இத்தேசத்
தைப் பார்க்க வருவோரையும் கொல்கிறார்
கள். பெற்றோரில்லாத பிள்ளைகளை அவர்
கள் கொலை செய்கிறார்கள்.
7அவர்கள் அத்தீயக் காரியங்களைச் செய்
வதைக் கர்த்தர் பார்ப்பதில்லை என்று
அவர்கள் சொல்கிறார்கள். நிகழ்வதை இஸ்ர
வேலின் தேவன் அறியார் என்று அவர்கள்
சொல்கிறார்கள்.
8தீய ஜனங்களாகிய நீங்கள் மூடர்கள்.
நீங்கள் எப்போது உங்கள் பாடத்தைக்
கற்பீர்கள்? கொடிய ஜனங்களாகிய நீங்கள்
அறிவில்லாதவர்கள்! நீங்கள் புரிந்துகொள்ள
முயலவேண்டும்.
9தேவன் நமது காதுகளை உண்டாக்கி
னார், நிச்சயமாக அவருக்கும் காதுகள்
உள்ளன, அவரால் நிகழ்வதைக் கேட்கமு
டியும்! தேவன் நமது கண்களை உண்டாக்கி
னார், நிச்சயமாக அவருக்கும் கண்கள்
உள்ளன. அவரால் நிகழ்வதைக் காண
முடியும்!
10தேவன் அந்த ஜனங்களை ஒழுங்கு
படுத்துவார். தேவன் அவர்கள் செய்ய
வேண்டியவற்றை அவர்களுக்குக் கற்பிப்பார்.
11ஜனங்கள் நினைப்பதைத் தேவன் அறி
கிறார். வெளிப்படும் சிறிய அளவு காற்றைப்
போன்றவர்கள் ஜனங்கள் என்பதைத்
தேவன் அறிகிறார்.
12கர்த்தர் ஒழுங்குபடுத்தும் மனிதன்
மகிழ்ச்சியாயிருப்பான். சரியான வழியில்
வாழ்வதற்குத் தேவன் அவனுக்குக் கற்பிப்
பார்.
13தேவனே, குழப்பம் நேருகையில் அவன்
அமைதியாயிருக்க நீர் அவனுக்கு உதவுவீர்.
தீயோர் கல்லறைக்குள் வைக்கப்படும்வரை
அவன் அமைதியாயிருக்க நீர் அவனுக்கு
உதவுவீர்.
14கர்த்தர் அவரது ஜனங்களை விட்டு
விலகுவதில்லை. உதவியின்றி அவரது
ஜனங்களை அவர் விட்டுவிடுவதில்லை.
15நீதி திரும்பும், அது நியாயத்தைக்
கொண்டுவரும், அப்போது நல்ல, உண்மை
யான ஜனங்கள் வாழ்வார்கள்.
16தீயோரை எதிர்ப்பதற்கு ஒருவனும் உதவ
வில்லை. தீமை செய்வோரை எதிர்க்கும்
போது ஒருவனும் எனக்குத் துணை வர
வில்லை.
17கர்த்தர் எனக்கு உதவியிராவிட்டால்
நான் மரணத்தினால் மௌனமாக்கப்பட்டிருப்
பேன்!
18நான் விழத் தயாராயிருப்பதை அறி
கிறேன், ஆனால் கர்த்தர் தம்மைப் பின்பற்று
பவனுக்கு உதவுகிறார்.
19நான் கவலையடைந்து கலங்கியிருந்
தேன். ஆனால் கர்த்தாவே, நீர் எனக்கு
ஆறுதல் கூறி எனக்கு மகிழ்ச்சியளித்தீர்.
20தேவனே, நீர் அநீதியுள்ள நீதிபதிகளுக்கு
உதவுவதில்லை. ஜனங்களின் வாழ்க்கை
கடினமாவதற்கு அத்தீய நீதிபதிகள் சட்டங்
களைப் பயன்படுத்துகிறார்கள்.
21அந்நீதிபதிகள் நல்லோரைத் தாக்குகிறார்
கள். களங்கமற்ற ஜனங்களைக் குற்ற
வாளிகள் எனக்கூறி, அவர்களைக் கொல்
கிறார்கள்.
22ஆனால் உயரமான பர்வதங்களில்
கர்த்தர் எனக்குப் பாதுகாப்பிடம் என்
கன்மலையான தேவன் என் பாதுகாப்பிடம்.
23அத்தீய நீதிபதிகள் செய்த தீய காரியங்
களுக்காகத் தேவன் அவர்களைத் தண்டிப்
பார். அவர்கள் பாவம் செய்ததால் தேவன்
அவர்களை அழிப்பார். எங்கள் தேவனாகிய
கர்த்தர் அத்தீய நீதிபதிகளை அழிப்பார்.

---

**கர்த்தாவே ... தொடரும்** "உமது உடன்படிக்கை உண்மையாக நம்பக்கூடியது" எனப்பொருள்படும்.

## சங்கீதம் 95

1வாருங்கள், நாம் கர்த்தரைத் துதிப்போம்!
நம்மைக் காப்பாற்றுகின்ற பாறையை
நோக்கி துதிகளை உரக்கக் கூறுவோம்.
2கர்த்தருக்கு நன்றி கூறும் பாடல்களைப்
பாடுவோம். அவருக்கு மகிழ்ச்சியான துதிப்
பாடல்களைப் பாடுவோம்.
3ஏனெனில் கர்த்தர் மேன்மையான தே
வன்! பிற “தெய்வங்களை” எல்லாம் ஆள்
கின்ற பேரரசர் அவர்.
4ஆழமானகுகைகளும் உயரமான பர்வதங்
களும் கர்த்தருக்கு உரியவை.
5சமுத்திரம் அவருடையது அவரே
அதைப் படைத்தார். தேவன் உலர்ந்த
நிலத்தைத் தமது சொந்த கைகளால்
உண்டாக்கினார்.
6வாருங்கள், நாம் தாழ்ந்து குனிந்து
அவரைத் தொழுதுகொள்வோம். நம்மை
உண்டாக்கின தேவனை நாம் துதிப்போம்.
7அவரே நமது தேவன்! நாம் அவரது
ஜனங்கள். அவரது சத்தத்திற்கு நாம் செவி
கொடுத்தால் இன்று நாம் அவரது ஆடுகளா
யிருப்போம்.
8தேவன்: “பாலைவனத்தில் மேரிபாவில்
செய்தது போலவும், மாசாவில் செய்தது
போலவும் அடம்பிடிக்காதீர்கள்” என்று கூறி
னார்.
9உங்கள் முற்பிதாக்கள் என்னைச் சோதித்
தார்கள். அவர்கள் என்னைச் சோதித்த
போது நான் செய்யக் கூடியவற்றைக் கண்
டார்கள்.
10நாற்பது ஆண்டுகள் அந்த ஜனங்களிடம்
நான் பொறுமையாக இருந்தேன். அவர்கள்
உண்மையில்லாதவர்கள் என நான்
அறிவேன். அந்த ஜனங்கள் என் போதனை
களைப் பின்பற்ற மறுத்தார்கள்.
11எனவே நான் கோபமடைந்தேன், எனது
இளைப்பாறுதலின் தேசத்தில் அவர்கள்
நுழைவதில்லை. என ஆணையிட்டேன்.

## சங்கீதம் 96

1கர்த்தர் செய்த புதுக்காரியங்களைப் பற்றி
ஒரு புதுப்பாடலைப் பாடுங்கள்! உலகம்
முழுவதும் கர்த்தரை நோக்கிப் பாடட்டும்.
2கர்த்தரை நோக்கிப் பாடுங்கள்! அவரது
நாமத்தை ஸ்தோத்தரியுங்கள்! நற்செய்தியைக்
கூறுங்கள்! ஒவ்வொரு நாளும் அவர் நம்மை
பாதுகாப்பதைப் பற்றிச் சொல்லுங்கள்!
3தேவன் உண்மையிலேயே அற்புத
மானவர் என்பதை ஜனங்களுக்குக் கூறுங்
கள். தேவன் செய்கிற வியப்பிற்குரிய
காரியங்களை எங்குமுள்ள ஜனங்களுக்குச்
சொல்லுங்கள்.
4கர்த்தர் மேன்மையானவர், துதிகளுக்
குரியவர். வேறெந்த “தெய்வங்களைக்” காட்
டிலும் அவர் அஞ்சத்தக்கவர்.
5பிற தேசங்களின் “தெய்வங்கள்” எல்லா
ரும் வெறும் சிலைகளே. ஆனால் கர்த்தரோ
வானங்களை உண்டாக்கினவர்.
6அவருக்கு முன்னே அழகிய மகிமை
ஒளிவீசும். தேவனுடைய பரிசுத்த ஆலயத்தில்
பெலனும் அழகும் விளங்கும்.
7குடும்பங்களும் தேசங்களும் கர்த்தருக்கு
மகிமையும், துதியும் நிரம்பிய பாடல்களைப்
பாடுவார்கள்.
8கர்த்தருடைய நாமத்தைத் துதியுங்கள்.
உங்கள் காணிக்கைகளோடு ஆலயத்திற்குச்
செல்லுங்கள்.
9கர்த்தருடைய அழகான ஆலயத்தில் அவ
ரைத் தொழுதுகொள்ளுங்கள். கர்த்தரைப்
பூமியிலுள்ள ஒவ்வொருவரும் தொழுது
கொள்ளுங்கள்.
10கர்த்தரே அரசரென்று தேசங்களுக்
கெல்லாம் அறிவியுங்கள்! அதனால் உலகம்
அழிக்கப்படுவதில்லை. கர்த்தர் ஜனங்களை
நியாயமாக அரசாளுவார்.
11விண்ணுலகங்களே! மகிழ்ச்சி கொள்ளுங்
கள். பூமியே! களிகூரு. கடலும் அதிலுள்ள
வையும் களிப்பால் குரல் எழுப்பட்டும்!
12வயல்களும் அதில் விளைந்துள்ள
அனைத்தும் மகிழ்ச்சி கொள்ளட்டும்! வனத்
தின் மரங்களே, பாடி மகிழுங்கள்!
13கர்த்தர் வருகிறார் ஆதலால் மகிழ்ச்சி
யடையுங்கள். கர்த்தர் உலகை ஆளுகை
செய்ய வந்து கொண்டிருக்கிறார். நீதி
யோடும் நியாயத்தோடும் அவர் உலகை
ஆளுகை செய்வார்.

## சங்கீதம் 97

1கர்த்தர் ஆளுகிறார், பூமி மகிழும்.
தூரத்துத் தேசங்கள் எல்லாம் மகிழ்கின்றன.
2அடர்ந்த இருண்ட மேகங்கள் கர்த்தரைச்
சூழும். நன்மையும் நீதியும் அவர் அரசை
வலிமையாக்கும்.
3கர்த்தருக்கு முன்னே ஒரு அக்கினி
செல்கிறது, அது பகைவரை அழிக்கிறது.
4வானத்தில் அவரது மின்னல் மின்னு
கிறது. ஜனங்கள் அதைக் கண்டு அஞ்சு
கிறார்கள்.
5கர்த்தருக்கு முன்பு மலைகள் மெழுகு
போல உருகும். பூமியின் ஆண்டவருக்கு
முன்பாக அவை உருகும்.
6வானங்களே, அவரது நன்மையைக் கூறு
ங்கள்! ஒவ்வொருவரும் தேவனுடைய மகி
மையைக் காணட்டும்!
7ஜனங்கள் அவர்களது விக்கிரகங்களை
தொழுதுகொள்கிறார்கள். அவர்கள் தங்கள்
“தெய்வங்களைப்”பற்றிப் பெருமைப்படு
கிறார்கள். ஆனால் அந்த ஜனங்கள் வெட்க
மடைவார்கள். அவர்கள் “தெய்வங்கள்”
குனிந்து வணங்கி கர்த்தரைத் தொழுது
கொள்வார்கள்.
8சீயோனே, செவிக்கொடுத்து மகிழ்வா
யாக! யூதாவின் நகரங்களே, மகிழ்ச்சிக்

கொள்ளுங்கள்! ஏனெனில் கர்த்தர் ஞான
முள்ள முடிவுகளை எடுக்கிறார்.
9 மகா உன்னதமான தேவனே, மெய்யா
கவே நீரே பூமியின் அரசர். பிற தெய்வங்
களைக் காட்டிலும் நீர் மகத்துவமுள்ளவர்.
10 கர்த்தரை நேசிக்கும் ஜனங்கள் தீமையை
வெறுப்பார்கள். எனவே தேவன் தம்மைப்
பின்பற்றுவோரைக்காப்பாற்றுகிறார். தீயோ
ரிடமிருந்து தேவன் தம்மைப் பின்பற்று
வோரைக் காப்பாற்றுகிறார்.
11 நல்லோர் மீது ஒளியும் மகிழ்ச்சியும்
பிரகாசிக்கும்.
12 நல்லோரே, கர்த்தருக்குள் மகிழ்ச்சியா
யிருங்கள்! அவரது பரிசுத்த நாமத்தை
பெருமைப்படுத்துங்கள்!

## சங்கீதம் 98
### ஒரு துதிப் பாடல்

1 புதிய வியக்கத்தக்க காரியங்களைச் செய்
ததால் கர்த்தருக்கு புதுப்பாட்டைப் பாடுங்
கள்.
2 அவரது பரிசுத்த வலது கை மீண்டும்
அவருக்கு வெற்றியைத் தரும்.
3 கர்த்தர் தமது மீட்பின் வல்லமையை
தேசங்களுக்குக் காட்டினார். கர்த்தர் அவர்
களுக்குத் தமது நன்மையைக் காட்டினார்.
4 இஸ்ரவேலரிடம் தேவன் காட்டிய
உண்மையை அவரைப் பின்பற்றுவோர்
நினைவுகூர்ந்தனர். தூர தேசத்து ஜனங்கள்
நம் தேவனுடைய மீட்பின் வல்லமையைக்
கண்டனர்.
5 பூமியிலுள்ள ஒவ்வொருவரும் கர்த்தரை
நோக்கிக் களிப்போடு சத்தமிடுங்கள். துதிப்
பாடல்களைப் பாடத் தொடங்குங்கள்.
6 சுரமண்டலங்களே, கர்த்தரைத் துதியுங்
கள். சுரமண்டலங்களின் இசையே, அவரைத்
துதியுங்கள்.
7 எக்காளங்களையும் மற்றும் கொம்பு
களையும் ஊதுங்கள். எங்கள் அரசராகிய
கர்த்தரைக் களிப்போடு ஆர்ப்பரியுங்கள்.
8 கடலும் பூமியும் அவற்றிலுள்ளவை
யாவும் உரக்கப் பாடட்டும்.
9 ஆறுகளே, கைகளைத் தட்டுங்கள். எல்லா
மலைகளும் இணைந்து பாடுங்கள்!
10 கர்த்தர் உலகை ஆளுகை* செய்ய
வருவதால் அவருக்கு முன்பாகப் பாடுங்கள்.
அவர் உலகை நியாயமாக ஆளுகை
செய்வார். அவர் ஜனங்களை நன்மையோடு
அரசாள்வார்.

## சங்கீதம் 99

1 கர்த்தர் அரசர். எனவே தேசங்கள்
அச்சத்தால் நடுங்கட்டும். கேருபின் தூதர்
களுக்கு மேலே தேவன் அரசராக வீற்றிருக்
கிறார். எனவே உலகம் அச்சத்தால் நடுங்
கட்டும்.
2 சீயோனில் கர்த்தர் மேன்மையானவர்.
ஜனங்கள் எல்லோருக்கும் அவர் பெரிய
தலைவர்.
3 எல்லா ஜனங்களும் உமது நாமத்தைத்
துதிக்கட்டும். தேவனுடைய நாமம் அஞ்சத்
தக்கது. தேவன் பரிசுத்தர்.
4 வல்லமையுள்ள அரசர் நீதியை நேசிக்
கிறார். தேவனே, நீரே நன்மையை உண்டாக்
கினீர். யாக்கோபிற்கு (இஸ்ரவேல்) நீர்
நன்மையையும் நியாயத்தையும் தந்தீர்.
5 நமது தேவனாகிய கர்த்தரைத் துதியுங்
கள். அவரது பரிசுத்த பாதபடியில்* தொழுது
கொள்ளுங்கள்.
6 மோசேயும் ஆரோனும் அவரது ஆசாரி
யர்களில் இருவர். அவர் நாமத்தை அழைத்த
மனிதர்களில் சாமுவேலும் ஒருவன். அவர்
கள் கர்த்தரிடம் ஜெபித்தபோது அவர்
அவர்களுக்குப் பதில் தந்தார்.
7 உயர்ந்த மேகத்திலிருந்து தேவன் பேசி
னார் அவர்கள் அவரது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிந்தார்கள். தேவன் அவர்களுக்குச்
சட்டத்தைக் கொடுத்தார்.
8 எங்கள் தேவனாகிய கர்த்தாவே, நீர்
அவர்கள் ஜெபங்களுக்குப் பதில் தந்தீர்.
ஜனங்கள் செய்யும் தீய காரியங்களுக்கு
அவர்களைத் தண்டிப்பவர் என்பதையும்
மன்னிக்கும் தேவன் நீரே என்பதையும்
அவர்களுக்கு நீர் காட்டினீர்.
9 நமது தேவனாகிய கர்த்தரைத் துதி
யுங்கள். அவரது பரிசுத்த மலையை நோக்கி
விழுந்து வணங்கி அவரைத் தொழுது
கொள்ளுங்கள். நமது தேவனாகிய கர்த்தர்
உண்மையிலேயே பரிசுத்தர்.

## சங்கீதம் 100
### நன்றி கூறும் பாடல்

1 பூமியே, கர்த்தரைப் பாடு.
2 கர்த்தருக்குப் பணிவிடை செய்யும்போது
மகிழுங்கள்! மகிழ்ச்சியான பாடல்களோடு
கர்த்தருக்கு முன்பாக வாருங்கள்!
3 கர்த்தரே தேவனென்று அறியுங்கள். அவ
ரே நம்மை உண்டாக்கினார். நாம் அவரது
ஜனங்கள். நாம் அவரது ஆடுகள்.
4 நன்றி நிறைந்த பாடல்களோடு அவரது
நகரத்தினுள் நுழையுங்கள். துதிப் பாடல்
களோடு அவரது ஆலயத்திற்குள் வாருங்கள்.
அவரைப் பெருமைப்படுத்தி, அவர் நாமத்
தைத் துதியுங்கள்.
5 கர்த்தர் நல்லவர். அவர் அன்பு என்றென்
றும் உள்ளது. என்றென்றைக்கும் எப்போ
தும் நாம் அவரை நம்பமுடியும்.

---

**ஆளுகை** அல்லது "தீர்ப்புசெய்ய."

**பாதபடி** இதன் உண்மையான அர்த்தம் ஆலயமாகும்.

## சங்கீதம் 101

### தாவீதின் ஒரு சங்கீதம்

1நான் அன்பையும் நியாயத்தையும் பற்றிப்
பாடுவேன். கர்த்தாவே, நான் உம்மை
நோக்கிப் பாடுவேன்.
2நான் கவனமாகப் பரிசுத்த வாழ்க்கை
வாழுவேன். என் வீட்டில் நான் பரிசுத்த
வாழ்க்கை வாழுவேன். கர்த்தாவே, நீர்
எப்போது என்னிடம் வருவீர்?
3என் முன்னால் நான் விக்கிரகங்களை*
வைக்கமாட்டேன். ஜனங்கள் அப்படி உமக்கு
எதிராகத் திரும்புவதை நான் வெறுக்கிறேன்.
நான் அதைச் செய்யமாட்டேன்!
4நான் நேர்மையாக இருப்பேன். நான்
தீயக் காரியங்களைச் செய்யமாட்டேன்.
5யாராவது ஒருவன் தனது அயலானைக்
குறித்து இரகசியமாகத் தீயக் காரியங்களைக்
கூறினால் நான் அவனைத் தடுத்துவிடுவேன்.
நான் பிறரைப் பெருமைப்படவோ, தாங்கள்
பிறரை காட்டிலும் சிறந்தவர்கள் என்று
எண்ணவோ விடமாட்டேன்.
6நம்பத்தக்க ஜனங்களைத் தேசம் முழு
வதும் தேடிப்பார்ப்பேன். அவர்கள் மட்டுமே
எனக்குச் சேவைச் செய்ய அனுமதிப்பேன்.
பரிசுத்த வாழ்க்கை வாழும் ஜனங்கள்
மட்டுமே என் பணியாட்களாக முடியும்.
7பொய்யர்கள் என் வீட்டில் வாழ நான்
அனுமதிக்கமாட்டேன். என் அருகே பொய்
யர்கள் தங்கவும் அனுமதியேன்.
8இந்நாட்டில் வாழும் தீயோரை நான்
எப்போதும் அழிப்பேன். கர்த்தருடைய
நகரை விட்டுத் தீயோர் நீங்குமாறு நான்
வற்புறுத்துவேன்.

## சங்கீதம் 102

### துன்பப்படும் ஒரு மனிதனின் ஜெபம். அவன் சோர்வடையும்போது தனது குறைகளைக் கர்த்தரிடம் சொல்லிக் கொள்வதாக உள்ளது.

1கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேளும்.
உதவிக்காக நான் கதறும்போது கவனியும்.
2கர்த்தாவே, தொல்லைகள் எனக்கு நேரும்
போது என்னைவிட்டு உம்மை திருப்பிக்
கொள்ளாமலிரும். உதவிக்காக நான்
வேண்டிக் கேட்கும்போது, விரைந்து
எனக்குப் பதில் தாரும்.
3என் வாழ்க்கை புகையைப்போல்
மாயந்து கொண்டிருக்கிறது. எரிந்துபோகும்
நெருப்பைப்போல் என் வாழ்க்கை உள்ளது.
4என் வலிமை போயிற்று. நான் உலர்ந்து
மடியும் புல்லைப் போலிருக்கிறேன். நான்
என் உணவை உட்கொள்வதற்கும் மறந்து
போகிறேன்.
5என் துயரத்தினால் என் எடை குறைந்து
கொண்டிருக்கிறது.*
6பாலைவனத்தில் வாழும் ஆந்தையைப்
போல் தனித்திருக்கிறேன். பாழடைந்த
பழைய கட்டிடங்களில் வாழும் ஆந்தையைப்
போல் நான் தனித்திருக்கிறேன்.
7என்னால் தூங்க இயலவில்லை. கூரை
யின் மேலிருக்கும் தனித்த பறவையைப்
போல் உள்ளேன்.
8என் பகைவர்கள் என்னை எப்போதும்
அவமானப்படுத்துகிறார்கள். அவர்கள் என்
னைக் கேலிபண்ணிச் சாபமிடுகிறார்கள்.
9என் மிகுந்த துயரம் மட்டுமே எனக்கு
உணவாகிறது. என் பானங்களில் என்
கண்ணீர் விழுகிறது.
10ஏனெனில் கர்த்தாவே, நீர் என்னிடம்
கோபமாயிருக்கிறீர். நீர் என்னைத்
தூக்கி யெடுத்தீர், பின்பு நீர் என்னைத் தூர
எறிந்து விட்டீர்.
11பகலின் இறுதியில் தோன்றும் நீளமான
நிழல்களைப் போன்று என் வாழ்க்கை
முடிவடையும் நிலையில் உள்ளது. நான்
உலர்ந்து மடியும் புல்லைப்போல் இருக்
கிறேன்.

12ஆனால் கர்த்தாவே, நீர் என்றென்றும்
வாழ்வீர்! உமது நாமம் என்றென்றும்
எப்போதும் தொடரும்!
13நீர் எழுந்து சீயோனுக்கு ஆறுதலளிப்பீர்.
நீர் சீயோனிடம் இரக்கமாயிருக்கும் காலம்
நெருங்கிக் கொண்டிருக்கிறது.
14உமது பணியாட்கள் அதின் (சீயோ
னின்) கற்களை நேசிக்கிறார்கள். அவர்கள்
எருசலேமின் தூசியைக்கூட நேசிக்கிறார்
கள்.
15ஜனங்கள் கர்த்தருடைய நாமத்தைத்
தொழுதுகொள்வார்கள். தேவனே, பூமியின்
எல்லா அரசர்களும் உம்மைப் பெருமைப்
படுத்துவார்கள்.
16கர்த்தர் மீண்டும் சீயோனைக் கட்டுவார்.
ஜனங்கள் மீண்டும் அதன் மகிமையைக்
காண்பார்கள்.
17தாம் உயிரோடு விட்ட ஜனங்களின்
ஜெபங்களுக்குத் தேவன் பதில் தருவார்.
தேவன் அவர்கள் ஜெபங்களுக்குச் செவி
கொடுப்பார்.
18வரும் தலைமுறையினருக்காக இக்காரி
யங்களை எழுது. எதிர்காலத்தில் அந்த
ஜனங்கள் கர்த்தரைத் துதிப்பார்கள்.
19மேலேயுள்ள தமது பரிசுத்த இடத்தி
லிருந்து கர்த்தர் கீழே பார்ப்பார். பரலோகத்
திலிருந்து கர்த்தர் பூமியைக் கீழே நோக்கிப்
பார்ப்பார்.

---

**விக்கிரகங்கள்** "கொடிய காரியங்கள்."

**என் துயரத்தினால் … கொண்டிருக்கிறது** "என் எலும்புகள் தோலோடு ஒட்டிக் கொண்டிருக்கின்றன."

20சிறைப்பட்டோரின் ஜெபங்களை அவர்
கேட்பார். மரண தண்டனை பெற்ற ஜனங்
களை அவர் விடுவிப்பார்.
21அப்போது சீயோனின் ஜனங்கள் கர்த்த
ரைக் குறித்துக் கூறுவார்கள். அவர்கள்
அவர் நாமத்தை எருசலேமில் துதிப்பார்கள்.
22தேசங்கள் ஒருமித்துச் சேரும். அரசுகள்
கர்த்தருக்குச் சேவைச்செய்ய வரும்.
23என் ஆற்றல் என்னை விட்டகன்றது.
என் ஆயுள் குறைந்தது.
24எனவே நான், “இளைஞனாயிருக்கும்
போதே நான் மரிக்க விடாதேயும். தேவனே,
நீர் என்றென்றும் எப்போதும் வாழ்வீர்.
25பல காலத்திற்கு முன்பு, நீர் உலகை
உண்டாக்கினீர். உமது சொந்தக் கைகளால்
நீர் வானத்தை உண்டாக்கினீர்!
26உலகமும் வானமும் ஒழிந்துபோகும்
ஆனால் நீரோ என்றென்றும் வாழ்வீர்.
அவை ஆடையைப்போன்று கிழிந்து
போகும். ஆடையைப்போன்று நீர் அவற்றை
மாற்றுகிறீர். அவையெல்லாம் மாறிப்
போகும்.
27ஆனால் தேவனாகிய நீர் என்றும்
மாறுவதில்லை. நீர் என்றென்றும் வாழ்வீர்!
28நாங்கள் இன்று உமது பணியாட்கள்.
நம் பிள்ளைகள் இங்கு வாழ்வார்கள். அவர்
களின் சந்ததியினரும் கூட இங்கு வந்து
உம்மைத் தொழுதுகொள்வார்கள்” என்றேன்.

## சங்கீதம் 103
**தாவீதின் ஒரு பாடல்.**

1என் ஆத்துமாவே, கர்த்தரைத் துதி! என்
ஒவ்வொரு அவயங்களே அவரது பரிசுத்த
நாமத்தைத் துதியுங்கள்.
2என் ஆத்துமாவே, கர்த்தரைத் துதி!
அவர் உண்மையிலேயே தயவுள்ளவர் என்
பதை மறக்காதே.
3நாம் செய்யும் பாவங்களையெல்லாம்
தேவன் மன்னிக்கிறார். அவர் நமது நோய்
களையெல்லாம் குணமாக்குகிறார்.
4தேவன் கல்லறையிலிருந்து நம் உயிரை
மீட்கிறார். அவர் நமக்கு அன்பையும் தய
வையும் தருகிறார்.
5தேவன் நமக்கு மிகுதியான நல்ல
பொருட்களைத் தருகிறார். அவர் நம்மைக்
கழுகைப்போன்று இளமையாக்குகிறார்.
6கர்த்தர் நியாயமானவர். பிறரால் புண்
படுத்தப் பட்டிருக்கிறவர்களுக்கு தேவன்
நியாயத்தைக் கொண்டு வருகிறார்.
7தேவன் அவரது சட்டங்களை மோ
சேக்குக் கற்பித்தார். அவர் செய்யத்தக்க
வல்லமையுள்ள காரியங்களை இஸ்ரவேல்
காணுமாறு தேவன் செய்தார்.
8கர்த்தர் தயவும் இரக்கமும் உள்ளவர்.
தேவன் பொறுமையும் மிகுந்த அன்பும்
உடையவர்.
9கர்த்தர் எப்போதும் குற்றங்காண்ப
தில்லை. கர்த்தர் என்றென்றும் நம்மிடம்
கோபங்கொண்டிருப்பதில்லை.
10நாங்கள் தேவனுக்கு எதிராகப் பாவம்
செய்தோம், ஆனால் நமக்குரிய தண்டனை
யைத் தேவன் வழங்கவில்லை.
11வானம் பூமிக்கு எவ்வளவு உயரத்தில்
உள்ளதோ, அதைப்போன்று தம்மைப் பின்
பற்றுவோரிடம் தேவன் காட்டும் அன்பும்
மிக மேலானது.
12மேற்கிலிருந்து கிழக்கு எவ்வளவு தூர
மோ அந்த அளவு தேவன் நமது பாவங்
களை நம்மை விட்டு வெகுதூரத்திற்கு
விலக்கிவிட்டார்.
13தந்தை தனது பிள்ளைகளிடம்
இருப்பதைப்போன்று கர்த்தரும் அவரைப்
பின்பற்றுவோரிடம் இரக்கமாக இருக்கிறார்.
14தேவன் நம்மைப்பற்றிய எல்லா
வற்றையும் அறிந்திருக்கிறார். நாம் மண்ணி
லிருந்து படைக்கப்பட்டவர்கள் என்பதை
யும் தேவன் அறிகிறார்.
15நம் வாழ்க்கை குறுகியது என்பதைத்
தேவன் அறிகிறார். நம் வாழ்க்கை புல்லைப்
போன்றது என்பதை அவர் அறிகிறார்.
16நாம் சிறிய காட்டுப் பூக்களைப் போன்ற
வர்கள் என்பதைத் தேவன் அறிகிறார்.
அம்மலர் சீக்கிரம் மலர்கிறது. வெப்பமான
காற்று வீசும்போது, அம்மலர் மடிகிறது.
பின்னர் அம்மலர் இருந்த இடத்தைக்கூட
உன்னால் கூற முடியாது.
17ஆனால் தேவன் எப்போதும் தம்மைப்
பின்பற்றுவோரை நேசிக்கிறார். என்றென்
றைக்கும் எப்போதும் அவர் தம்மைப்
பின்பற்றுவோரை நேசிப்பார். தேவன் அவர்
களுடைய பிள்ளைகளுக்கும், அவர்களின்
பிள்ளைகளின் பிள்ளைகளுக்கும் நல்லவர்.
18அவரது உடன்படிக்கைக்குக் கீழ்ப்படிகிற
ஜனங்களுக்குத் தேவன் நல்லவர். அவரது
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிகிற ஜனங்
களுக்குத் தேவன் நல்லவர்.
19பரலோகத்தில் தேவனுடைய சிங்கா
சனம் உள்ளது. அவர் எல்லாவற்றின் மீதும்
அரசாள்கிறார்.
20தேவதூதர்களே, கர்த்தரைத் துதியுங்கள்!
தேவதூதர்களாகிய நீங்கள் தேவனுடைய
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிகிற வல்லமை
வாய்ந்த வீரர்களாவீர்கள். நீங்கள் தேவ
னுக்குச் செவிகொடுத்து அவர் கட்டளை
களுக்குக் கீழ்ப்படியுங்கள்.
21அவரது எல்லா சேனைகளே,* கர்த்த
ரைத் துதியுங்கள். நீங்கள் அவரது பணி

---

**சேனைகள்** “சேனைகள்” “தேவதூதர்கள்” அல்லது “நட்சத்திரங்களும் கிரகங்களும்” எனப் பொருள்படலாம். “சர்வ வல்லமையுள்ள கர்த்தர்” என்கிறப் பெயரின் ஒரு பகுதி மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. எல்லா உலகங்களின் ஆற்றல்களையும் தேவன் அடக்கி ஆள்கிறார் என்பதை இது காட்டும்.

யாட்கள். தேவன் விரும்புகிற காரியங்களை
நீங்கள் செய்யுங்கள்.
22எல்லா இடத்திலுமுள்ள எல்லா
வற்றையும் கர்த்தர் உண்டாக்கினர். எல்லா
இடத்திலுமுள்ள எல்லாவற்றையும் தேவன்
ஆளுகிறார். அவை அனைத்தும் கர்த்தரைத்
துதிக்கவேண்டும். என் ஆத்துமாவே,
கர்த்தரைத் துதி.

## சங்கீதம் 104

1என் ஆத்துமாவே, கர்த்தரைத் துதி!
என் தேவனாகிய கர்த்தாவே. நீர் மிக
மேன்மையானவர்! நீர் மகிமையையும், கனத்
தையும் அணிந்திருக்கிறீர்.
2ஒருவன் அங்கியைத் தரித்திருப்பதைப்
போல நீர் ஒளியை அணிந்துகொண்டிருக்
கிறீர். நீர் வானங்களைத் திரைச் சீலையைப்
போல விரிக்கிறீர்.
3தேவனே நீர் அவற்றிற்கு மேலாக உமது
வீட்டைக் கட்டியிருக்கிறீர். அடர்த்தியான
மேகங்களை இரதமாக நீர் பயன்படுத்திக்
காற்றின் சிறகுகளின் மீது அமர்ந்து வானத்
தின் குறுக்காகச் செல்கிறீர்.
4தேவனே, உமது தூதர்களைக் காற்றைப்
போல் உண்டாக்கினீர்.* உமது ஊழியக்
காரரை அக்கினிப்போல் உருவாக்கினீர்.
5தேவனே, நீர் பூமியை அதன் அஸ்தி
பாரங்களின் மீது ஸ்தாபித்தீர், எனவே அது
ஒருபோதும் அழிக்கப்படுவதில்லை.
6நீர் அதனைத் தண்ணீரால் போர்வை
யைப் போன்று மூடினீர். தண்ணீர் மலை
களை மூடிற்று.
7நீர் கட்டளையிட்டபோது, தண்ணீர்
விலகியோடிற்று. தேவனே, நீர் தண்ணீரைப்
பார்த்துச் சத்தமிட்டீர், அது விலகி
யோடிற்று.
8தண்ணீர் பர்வதங்களிலிருந்து கீழே
பாய்ந்து பள்ளத்தாக்குகளில் சென்று, பின்பு
நீர் அவற்றிற்கென வைத்த இடங்களுக்
கெல்லாம் சென்றது.
9நீர் கடல்களுக்கு எல்லையை வைத்தீர்.
தண்ணீர் மீண்டும் ஒருபோதும் பூமியை
மூடுவதற்கென எழும்பாது.
10தேவனே, நீரூற்றுகளிலிருந்து நீரோடை
களாக நீர் ஓடும்படி செய்தீர். பர்வதங்களின்
நீரோடைகளினூடே அது கீழே பாய்கிறது.
11நீரோடைகள் எல்லா காட்டு மிருகங்
களுக்கும் தண்ணீரைத் தருகின்றன. காட்டுக்
கழுதைகளும் அங்கு வந்து தண்ணீரைப்
பருகுகின்றன.
12வனத்தின் பறவைகள் குளங்களின்
அருகே வாழ வரும். அருகேயுள்ள மரங்
களின் கிளைகளில் அவை பாடும்.
13மலைகளின்மேல் தேவன் மழையைப்
பெய்யப்பண்ணுகிறார். தேவன் செய்த
பொருட்கள் பூமிக்குத் தேவையான எல்லா
வற்றையும் கொடுக்கின்றன.
14மிருகங்கள் உண்ணும்படியாக தேவன்
புல்லை முளைத்தெழச் செய்கிறார். அவர்
நமக்குத் தாவரங்களைத் தருகிறார், நம்
உழைப்பில் அவற்றை வளர்க்கிறோம். அத்
தாவரங்கள் பூமியிலிருந்து நமக்கு உணவைத்
தருகின்றன.
15நம்மை மகிழ்விக்கும் திராட்சைரசத்தை
யும் நமது தோலை மிருதுவாக்கும்*
எண்ணெயையும், நம்மை வலுவாக்கும்
உணவையும் தேவன் நமக்குத் தருகிறார்.
16லீபனோனின் பெரிய கேதுரு மரங்கள்
கர்த்தருக்குரியவை. கர்த்தர் அம்மரங்களை
நாட்டி, அவற்றிற்குத் தேவையான தண்ணீ
ரைக் கொடுக்கிறார்.
17அம்மரங்களில் பறவைகள் தங்கள் கூடு
களைக் கட்டும். பெரிய கொக்குகள் தேவ
தாரு மரங்களில் வாழும்.
18காட்டு ஆடுகளுக்கு உயர்ந்த பர்வதங்கள்
இருப்பிடமாகும். குழிமுயல்களுக்குக் கன்
மலைகள் மறைவிடமாகும்.
19தேவனே, விடுமுறை காலம் தொடங்கு
வதை அறிவிக்கும்படி எங்களுக்குச் சந்திர
னைத் தந்தீர். எப்போது மறைய வேண்டு
மென்பதைச் சூரியன் எப்போதும் அறியும்.
20எல்லா காட்டு மிருகங்களும் வெளியே
வந்து சுற்றித்திரிகிற காலமாகிய இரவாகும்
படி இருளை நீர் உண்டாக்கினீர்.
21தேவன் கொடுக்கிற உணவிற்காக
வேண்டுகிறதுபோல தாக்கும் சிங்கங்கள்
கெர்ச்சிக்கும்.
22அப்போது சூரியன் எழும்பும், மிருகங்
கள் தங்கள் இருப்பிடங்களுக்குப் போய்
ஓய்வெடுக்கும்.
23அப்போது ஜனங்கள் தங்கள் வேலை
களுக்காகச் செல்வார்கள், அவர்கள் மாலை
வரை பணிபுரிவார்கள்.
24கர்த்தாவே, நீர் பல அற்புதமான காரியங்
களைச் செய்திருக்கிறீர். பூமி, நீர் உண்டாக்
கின பல பொருள்களால் நிரம்பியிருக்கிறது.
நீர் செய்யும் ஒவ்வொன்றிலும் உமது ஞானத்
தைக் காண்கிறோம்.
25சமுத்திரத்தைப் பாருங்கள், அது எவ்வ
ளவு பெரியது! பல உயிர்கள் அங்கு
வாழ்கின்றன! எண்ணமுடியாத சிறியதும்
பெரியதுமான உயிரினங்கள் அங்கு வாழ்
கின்றன.
26நீர் உண்டாக்கின கடல் விலங்கான
லிவியாதான் கடலில் விளையாடும்போது
கப்பல்கள் சமுத்திரத்தின் மேல் பயணம்
செய்கின்றன.

---

**தேவனே … உண்டாக்கினீர்** அல்லது "உமது தூதர்களை ஆவியாக உருவாக்கினீர்" எனப்படும்.

**தோளை மிருதுவாக்கும்** எழுத்தின் பிரகாரமாக, "நம்முடைய முகத்தை பிரகாசிக்க செய்கிறது" இது "நம்மை மகிழ்ச்சியாக்கும்" எனவும் பொருள் படும்.

27தேவனே, எல்லாக்காரியங்களும் உம்
மைச் சார்ந்திருக்கின்றன. தக்க நேரத்தில்
நீர் அவற்றிற்கு உணவைக் கொடுக்கிறீர்.
28தேவனே, எல்லா உயிரினங்களுக்கும்
அவை உண்ணும் உணவை நீர் கொடுக்கிறீர்.
நல்ல உணவால் நிரம்பிய உமது கைகளை
நீர் திறக்கிறீர், அவை வயிறு நிரம்பும்வரை
அவற்றை உண்ணும்.
29நீர் அவற்றை விட்டு விலகும்போது
அவை அஞ்சும். அவற்றின் சுவாசம்
அவற்றை விட்டு நீங்கும். அவை சோர்ந்து
மரிக்கும்; அவற்றின் உடல்கள் மீண்டும்
புழுதியாகிவிடும்.
30ஆனால் கர்த்தாவே, நீர் உமது ஆவியை
அனுப்பும்போது அவை ஆரோக்கியம்
பெறும்! நீர் மீண்டும் நிலத்தைப் புதிதாக
மாற்றுவீர்.
31கர்த்தருடைய மகிமை என்றென்றும்
தொடரட்டும்! கர்த்தர் தாம் உண்டாக்கின
பொருள்களைக் கண்டு களிப்படையட்டும்.
32கர்த்தர் பூமியைச் சற்றே பார்த்தால்
அது அதிரும். அவர் மலைகளைத் தொட
நேர்ந்தால் அவற்றிலிருந்து புகையெழத்
தொடங்கும்.
33என் ஆயுள் முழுவதும் நான் கர்த்தரைப்
பாடுவேன். நான் வாழும்வரை கர்த்தரைத்
துதித்துப் பாடுவேன்.
34நான் கூறுபவை அவரை மகிழ்ச்சி
யாக்கும் என நம்புகிறேன். நான் கர்த்த
ருக்குள் மகிழ்ச்சியாயிருக்கிறேன்.
35பூமியிலிருந்து பாவம் மறைந்து
போகட்டும். தீயோர் என்றென்றும் அழிந்து
போவார்களாக. என் ஆத்துமாவே, கர்த்த
ரைத் துதி! கர்த்தரை துதியுங்கள்!

## சங்கீதம் 105

1கர்த்தருக்கு நன்றி கூறுங்கள். அவர்
நாமத்தைத் தொழுதுகொள்ளுங்கள். அவர்
செய்யும் அற்புதங்களைத் தேசங்களுக்குக்
கூறுங்கள்.
2கர்த்தரை நோக்கிப் பாடுங்கள். அவ
ருக்குத் துதிகளைப் பாடுங்கள். அவர்
செய்யும் வியக்கத்தக்க காரியங்களைக்
குறித்துக் கூறுங்கள்.
3கர்த்தருடைய பரிசுத்த நாமத்தைக்
குறித்துப் பெருமைகொள்ளுங்கள். ஜனங்
களாகிய நீங்கள் கர்த்தரைத் தேடி வந்தீர்கள்.
சந்தோஷமாயிருங்கள்!
4வல்லமைக்காகக் கர்த்தரிடம் போங்கள்.
உதவிக்காக எப்போதும் அவரிடம் போங்
கள்.
5அவர் செய்யும் வியப்பிற்குரிய காரியங்
களை நினைவுகூருங்கள். அவர் செய்த
அதிசயங்களையும் ஞானமுள்ள முடிவு
களையும் எண்ணிப்பாருங்கள்.
6நீங்கள் அவரது பணியாளாகிய ஆபிர
காமின் சந்ததியினர். நீங்கள் தேவனால்
தேர்ந்தெடுக்கப்பட்ட யாக்கோபின் சந்ததி
யினர்.
7கர்த்தரே நமது தேவன். கர்த்தர் உலகம்
முழுவதையும் ஆள்கிறார்.*
8தேவனுடைய உடன்படிக்கையை என்
றென்றும் நினைவுகூருங்கள். ஆயிரம் தலை
முறை வரையிலும் அவரது கட்டளைகளை
நினைவுகூருங்கள்.
9தேவன் ஆபிரகாமோடு ஒரு உடன்
படிக்கை செய்தார். தேவன் ஈசாக்கோடு ஒரு
வாக்குறுதியைச் செய்தார்.
10பின்பு அவர் அதனை யாக்கோபிற்கு
ஒரு சட்டமாகச் செய்தார். தேவன் இஸ்ர
வேலோடு ஒரு உடன்படிக்கை செய்தார்.
அது என்றென்றும் தொடரும்!
11தேவன்: "நான் கானானின் தேசத்தை
உனக்குக் கொடுப்பேன். அத்தேசம் உனக்குச்
சொந்தமாகும்" என்றார்.

12ஆபிரகாமின் குடும்பம் சிறியதாயிருந்த
போது தேவன் அவ்வாக்குறுதியை அளித்
தார். அவர்கள் அங்கு அந்நியராகச் சில
காலத்தைக் கழித்தனர்.
13அவர்கள் ஒரு அரசிலிருந்து மற்றோர்
அரசிற்கும், ஒரு தேசத்திலிருந்து மற்றொரு
தேசத்திற்கும் பயணம் செய்தார்கள்.
14ஆனால் ஜனங்கள் அவர்களைத் தகாத
படி நடத்த தேவன் அனுமதிக்கவில்லை.
அவர்களைத் துன்புறுத்தாதபடிக்குத் தேவன்
அரசர்களை எச்சரித்தார்.
15தேவன் "நான் தேர்ந்தெடுத்த ஜனங்
களுக்குத் தீமை செய்யாதீர்கள். எனது
தீர்க்கதரிசிகளுக்கு எந்தத் தீமையும் செய்யா
தீர்கள்" என்றார்.
16தேவன் தேசத்தில் பஞ்சம் வரப்பண்ணி
னார். ஜனங்களுக்கு உண்பதற்குத் தேவை
யான உணவு இருக்கவில்லை.
17ஆனால் அவர்களுக்கு முன்னே தேவன்
யோசேப்பு என்ற மனிதனை அனுப்பினார்.
யோசேப்பு ஒரு அடிமையாக விற்கப்
பட்டான்.
18யோசேப்பின் கால்களை அவர்கள் ஒரு
கயிற்றால் கட்டினார்கள். அவன் கழுத்தைச்
சுற்றிலும் ஒரு இரும்பு வளையத்தை அணி
வித்தார்கள்.
19அவர் சொன்ன காரியங்கள் அப்படியே
நிகழும்வரை யோசேப்பு அடிமையாக இருந்
தான். யோசேப்பு நேர்மையானவன் என்
பதைக் கர்த்தருடைய செய்தி நிரூபித்தது.
20எனவே எகிப்திய அரசன் அவனை
விடுதலை செய்தான். தேசத்தின் தலைவன்
அவனைச் சிறையினின்று விடுவித்தான்.
21அவர் அவனுக்குத் தமது வீட்டின்
பொறுப்பைக் கொடுத்தார். அவருக்குச்

**கர்த்தர் … ஆள்கிறார்** எழுத்தின் பிரகாரமாக, "முழு பூமிக்கும் அவருடைய கட்டளைகள் உரியவை" எனப்படும்.

*சொந்தமான அனைத்தையும் யோசேப்பு*
*கண்காணித்து வந்தான்.*
22 *பிற தலைவர்களுக்கு யோசேப்பு ஆணை*
*கள் அளித்தான். யோசேப்பு முதியவர்*
*களுக்குக் கற்பித்தான்.*
23 *பின்பு இஸ்ரவேல் எகிப்திற்கு வந்தான்.*
*யாக்கோபு காமின் நாட்டில் வாழ்ந்தான்.*
24 *யாக்கோபின் குடும்பம் பெருகிற்று.*
*அவர்களின் பகைவர்களைக் காட்டிலும்*
*அவர்கள் பலவான்களானார்கள்.*
25 *எனவே எகிப்தியர்கள் யாக்கோபின்*
*குடும்பத்தைப் பகைக்கத் தொடங்கினார்கள்.*
*அவர்களின் அடிமைகளுக்கு எதிரான*
*திட்டங்கள் வகுத்தார்கள்.*
26 *எனவே தேவன் தமது தாசனாகிய*
*மோசேயை அனுப்பினார். தேவன் தேர்ந்*
*தெடுத்த ஆசாரியனாக ஆரோன் இருந்தான்.*
27 *காமின் நாட்டில் பல அதிசயங்களைச்*
*செய்வதற்குத் தேவன் மோசேயையும் ஆரோ*
*னையும் பயன்படுத்தினார்.*
28 *தேவன் மிகக் கடும் இருளை அனுப்பி*
*னார், ஆனால் எகிப்தியர்கள் அவருக்குச்*
*செவிசாய்க்கவில்லை.*
29 *எனவே தேவன் தண்ணீரை இரத்தமாக்கி*
*னார். எல்லா மீன்களும் மடிந்தன.*
30 *அவர்கள் நாடு தவளைகளால் நிரம்*
*பிற்று. அரசனின் படுக்கையறையில் கூட*
*தவளைகள் இருந்தன.*
31 *தேவன் கட்டளையிட்டார். ஈக்களும்*
*பேன்களும் வந்தன. அவை எங்கும் நிரம்*
*பின.*
32 *தேவன் கல்மழையைப் பெய்யப் பணணி*
*னார். நாடு முழுவதையும் மின்னல் பாதித்*
*தது.*
33 *தேவன் அவர்களது திராட்சைக் கொடி*
*களையும் அத்திமரங்களையும் அழித்தார்.*
*அந்நாட்டின் ஒவ்வொரு மரத்தையும் தேவன்*
*அழித்தார்.*
34 *தேவன் கட்டளையிட்டார், வெட்டுக்*
*கிளிகளும் புல்புழுக்களும் வந்தன. அவை*
*எண்ணமுடியாத அளவு இருந்தன!*
35 *வெட்டுக்கிளிகளும் பச்சைப்புழுக்களும்*
*நாட்டின் எல்லா தாவரங்களையும், வயலின்*
*எல்லா பயிர்களையும் அவைத் தின்றன.*
36 *பின்பு தேவன் நாட்டின் முதற்பேறான*
*ஒவ்வொன்றையும் கொன்றார். தேவன் முத*
*லில் பிறந்த மகன்களைக் கொன்றார்.*
37 *பின்பு தேவன் தமது ஜனங்களை*
*எகிப்திலிருந்து வெளியே அழைத்துச்*
*சென்றார். அவர்கள் பொன்னையும் வெள்ளி*
*யையும் எடுத்துச் சென்றனர். தேவனுடைய*
*ஜனங்கள் எவரும் தடுக்கி விழவில்லை.*
38 *தேவனுடைய ஜனங்கள் செல்வதைக்*
*கண்டு எகிப்து மகிழ்ந்தது. ஏனெனில்*
*அவர்கள் தேவனுடைய ஜனங்களுக்கு*
*அஞ்சினார்கள்.*
39 *தேவன் தமது மேகத்தை ஒரு போர்*
*வையாகப் பரப்பினார். தமது ஜனங்களுக்கு*
*இரவில் ஒளிதரும்படி ஒரு நெருப்புத்*
*தூணைத் தேவன் பயன்படுத்தினார்.*
40 *ஜனங்கள் உணவுக்காக வேண்டி*
*னார்கள், தேவன் காடைகளைக் கொணர்ந்*
*தார். தேவன் பரலோகத்திலிருந்து மிகுதி*
*யான உணவைக் கொடுத்தார்.*
41 *தேவன் கன்மலையைப் பிளந்தார், தண்*
*ணீர் கொப்பளித்து வெளியேறிற்று. பாலை*
*வனத்தில் ஒரு நதி ஓட ஆரம்பித்தது.*
42 *தேவன் அவரது பரிசுத்த வாக்குறுதியை*
*நினைவுக்கூர்ந்தார். தேவன் அவரது தாச*
*னாகிய ஆபிரகாமுக்குக் கொடுத்த வாக்*
*குறுதியை நினைவுக்கூர்ந்தார்.*
43 *தேவன் அவரது ஜனங்களை எகிப்திலி*
*ருந்து வெளியே வரவழைத்தார். மகிழ்ச்சி*
*யான பாடல்களைப் பாடிக்கொண்டு ஜனங்*
*கள் களிப்போடு எகிப்தைவிட்டுப் புறப் பட்டு*
*வந்தார்கள்!*
44 *பிற ஜனங்கள் வாழ்ந்து கொண்டிருந்த*
*நாட்டைத் தேவன் தமது ஜனங்களுக்குக்*
*கொடுத்தார். பிற ஜனங்கள் உழைத்துப்*
*பெற்ற பொருட்களைத் தேவனுடைய ஜனங்*
*கள் பெற்றனர்.*
45 *ஏன் தேவன் இதைச் செய்தார்?*
*அப்போது தான் அவரது ஜனங்கள் அவர*
*ளித்த சட்டங்களுக்கு கீழ்ப்படிய முடியும்.*
*அவர்கள் கவனமாக அவரது போதனை*
*களுக்குக் கீழ்ப்படிய முடியும். கர்த்தரைத்*
*துதியுங்கள்!*

## *சங்கீதம்* 106

1 *கர்த்தரைத் துதியுங்கள்! கர்த்தர் நல்லவர்,*
*எனவே அவருக்கு நன்றி கூறுங்கள்!*
*தேவனுடைய அன்பு என்றென்றைக்கு*
*முள்ளது!*
2 *உண்மையாகவே கர்த்தர் எவ்வளவு*
*பெரியவர் என்பதை ஒருவரும் விவரிக்க*
*முடியாது. ஒருவரும் போதுமான அளவு*
*தேவனை துதித்துவிட இயலாது*
3 *தேவனுடைய கட்டளைகளுக்குக் கீழ்*
*படிகிற ஜனங்கள் மகிழ்ச்சியானவர்கள் எப்*
*போதும் அந்த ஜனங்கள் நல்ல காரியங்*
*களையே செய்கிறார்கள்.*
4 *கர்த்தாவே, உம்முடைய ஜனங்களிடம்*
*இரக்கமாயிருக்கும்போது என்னை நினைவு*
*கூர்ந்து இரட்சியும்.*
5 *கர்த்தாவே, நீர் தேர்ந்தெடுத்த உமது*
*ஜனங்களுக்கு நீர் செய்யும் நன்மைகளை*
*நானும் பகிர்ந்துக்கொள்ளச் செய்யும். என்*
*னையும் உம் ஜனங்களோடு மகிழ்ச்சியாய்*
*இருக்கும்படி செய்யும். உம்மைப் புகழ்வதில்*
*என்னையும் உம் ஜனங்களோடு இணையச்*
*செய்யும்.*
6 *எங்கள் முற்பிதாக்கள் பாவம் செய்ததுப்*
*போல் நாங்களும் பாவம் செய்தோம். நாங்*
*கள் தவறு செய்தோம், நாங்கள் தீயவற்றைச்*
*செய்தோம்.*

7 கர்த்தாவே, எகிப்திலுள்ள எங்கள் முற்
பிதாக்கள் நீர் செய்த அதிசயங்களிலிருந்து
எதையும் கற்கவில்லை. செங்கடலின்
அருகே எங்கள் முற்பிதாக்கள் உமக்கெதி
ராகத் திரும்பினார்கள்.
8 ஆனால் தேவன் நம் முற்பிதாக்களை
அவரது சொந்த நாமத்தின் காரணமாகக்
காப்பாற்றினார். அவரது மிகுந்த வல்லமை
யைக் காட்டும்பொருட்டுத் தேவன் அவர்
களைக் காப்பாற்றினார்.
9 தேவன் கட்டளையிட்டார், செங்கடல்
வறண்டுபோனது, ஆழமான கடலினூடே,
பாலைவனத்தைப் போன்ற உலர்ந்த தரை
யின்மேல் தேவன் நம் முற்பிதாக்களை
வழிநடத்தினார்.
10 தேவன் நமது முற்பிதாக்களை அவர்கள்
பகைவர்களிடமிருந்து காப்பாற்றினார்.
அவர்கள் பகைவரிடமிருந்து தேவன் அவர்
களைப் பாதுகாத்தார்.
11 தேவன் அவர்கள் பகைவர்களைக்
கடலால் மூடினார். அவர்கள் பகைவர்களில்
ஒருவன்கூட தப்பவில்லை!
12 அப்போது நம் முற்பிதாக்கள் தேவனை
நம்பினார்கள். அவர்கள் அவருக்குத் துதி
களைப் பாடினார்கள்.
13 ஆனால் நம் முற்பிதாக்கள் தேவன்
செய்த காரியங்களை விரைவில் மறந்து
போனார்கள். அவர்கள் தேவனுடைய அறி
வுரைக்குச் செவிசாய்க்கவில்லை.
14 பாலைவனத்தில் நம் முற்பிதாக்களுக்குப்
பசியுண்டாயிற்று, மனிதர்களில்லாத இடத்
தில் அவர்கள் தேவனைப் பரிசோதித்
தார்கள்.
15 ஆனால் தேவனோ நம் முற்பிதாக்களுக்கு
அவர்கள் கேட்ட பொருள்களைக் கொடுத்
தார். கொடிய நோயையும் தேவன் அவர்
களுக்குக் கொடுத்தார்.
16 ஜனங்கள் மோசேயிடம் பொறாமை
கொண்டார்கள். அவர்கள் கர்த்தருடைய
பரிசுத்த ஆசாரியனாகிய ஆரோனிடம் பொ
றாமை கொண்டார்கள்.
17 எனவே தேவன் பொறாமையுள்ள அந்த
ஜனங்களைத் தண்டித்தார். தரை பிளந்து
தாத்தானை விழுங்கியது. தரை ஒன்றுசேர்ந்த
போது அபிராமின் கூட்டத்தாரை மூடிக்
கொண்டது.
18 பின்பு ஜனங்கள் கூட்டத்தை நெருப்பு
எரித்தது. அத்தீயோரை நெருப்பு எரித்தது.
19 ஓரேப் மலையில் அந்த ஜனங்கள் பொன்
னினால் ஒரு கன்றுக்குட்டியைச் செய்
தார்கள். அவர்கள் ஒரு சிலையைத் தொழுது
கொண்டார்கள்.
20 அந்த ஜனங்கள் புல் தின்னும் காளை
யின் சிலைக்காக மகிமைபொருந்திய தங்கள்
தேவனை விட்டுவிட்டார்கள்.
21 தேவன் நமது முற்பிதாக்களைக் காப்பாற்
றினார், ஆனால் அவர்கள் அவரை முற்றி
லும் மறந்துபோனார்கள். எகிப்தில் அதி
சயங்கள் செய்த தேவனை அவர்கள் மறந்து
போனார்கள்.
22 காமின் தேசத்தில் தேவன் வியக்கத்தக்கக்
காரியங்களைச் செய்தார். செங்கடலின்
அருகே ஆச்சரியமான காரியங்களைத்
தேவன் செய்தார்.
23 தேவன் அந்த ஜனங்களை அழிக்க
விரும்பினார், ஆனால் அவர் தேர்ந்தெடுத்த
மோசே அவரைத் தடுத்தான். மோசே தேவன்
தேர்ந்தெடுத்த பணியாள். தேவன் மிகுந்த
கோபங் கொண்டார், ஆனால் மோசே
தடுத்து, தேவன் ஜனங்களை அழிக்காதபடி
செய்தான்.
24 ஆனால் பின்பு அந்த ஜனங்கள் அற்புத
மான கானான் தேசத்திற்குள் நுழைய
மறுத்தார்கள். தேவன் அத்தேசத்தில் வாழும்
ஜனங்களை முறியடிப்பதில் அவர்களுக்கு
உதவுவார் என்பதை அவர்கள் நம்பவில்லை.
25 அவர்களின் கூடாரங்களிலிருந்து
ஆண்டவருக்கு எதிராகக் குறைகூறி தேவ
னுக்குக் கீழ்ப்படிய மறுத்தனர்.
26 எனவே அவர்கள் பாலைவனத்தில் மடி
வார்கள் என்று தேவன் சபதமிட்டார்.
27 அவர்கள் சந்ததியினரை அந்நியர் தோற்
கடிக்க அனுமதிப்பதாகத் தேவன் கூறினார்.
தேசங்களிலெல்லாம் நம் முற்பிதாக்களைச்
சிதறடிப்பதாகத் தேவன் ஆணையிட்டார்.
28 பின்பு பாகால்பேயோரில், தேவ
னுடைய ஜனங்கள் பாகாலைத் தொழுது
கொள்ள கூடினார்கள். தேவனுடைய ஜனங்
கள் தீய விருந்துகளில் கலந்து மரித்தோ
ரைப்* பெருமைப்படுத்தும் பலிகளை உண்
டார்கள்.
29 தமது ஜனங்களிடம் தேவன் மிகுந்த
கோபமடைந்தார். தேவன் அவர்களை மிக
வும் நோயுறச் செய்தார்.
30 ஆனால் பினெகாஸ் தேவனிடம் ஜெபம்
செய்தான். தேவன் அந்நோயைத் தடுத்தார்.
31 பினெகாஸ் செய்தது மிக நல்ல காரியம்
என்பதைத் தேவன் அறிந்தார். தேவன்
நோயைத் தடுத்தார். தேவன் இதை என்றென்
றைக்கும் நினைவுக்கூருவார்.
32 மேரிபாவில் ஜனங்கள் கோபமடைந்
தனர். மோசே தவறு செய்வதற்கு ஜனங்கள்
காரணமாயினர்.
33 மோசே மிகவும் குழப்பமடையும்படி
அந்த ஜனங்கள் செய்தனர். எனவே சரியாக
சிந்திக்காமல் மோசே பேசினான்.
34 கானானில் வாழும் பிற தேசத்தினரைத்
தோற்கடிக்குமாறு கர்த்தர் ஜனங்களுக்குக்
கூறினார். ஆனால் இஸ்ரவேல் ஜனங்களோ
தேவனுக்குக் கீழ்ப்படியவில்லை.

---

**மரித்தோரை** அல்லது “மரித்தோரின் சிலைகளைக் அல்லது “உயர்ந்த தெய்வங்கள்” ஜனங்கள் அடிக்கடிக் கூடி, பொய்த் தெய்வங்களையும் மரித்தவர்களையும் கௌரவிக்க கல்லறையினருகே உண்டனர்.

35 *அவர்கள் பிற ஜனங்களோடு கலந்தார்*
*கள், அந்த ஜனங்கள் செய்தவற்றையெல்லாம்*
*செய்தார்கள்.*
36 *தேவனுடைய ஜனங்களுக்கு அவர்கள்*
*கண்ணியாக அமைந்தார்கள். பிறஜனங்கள்*
*தொழுதுகொண்ட தெய்வங்களை அவர்*
*களும் தொழுதுகொள்ளத் தொடங்கினார்கள்.*
37 *தேவனுடைய ஜனங்கள் தங்கள் சொந்த*
*பிள்ளைகளையே கொன்று பிசாசிற்குக்*
*காணிக்கையாக்கினார்கள்.*
38 *தேவனுடைய ஜனங்கள் களங்கமற்*
*றோரைக் கொன்றார்கள். அவர்கள் தங்கள்*
*சொந்த பிள்ளைகளையே கொன்று அவர்*
*களைப் பொய்த் தெய்வங்களுக்குக் காணிக்*
*கையாக்கினார்கள்.*
39 *எனவே தேவனுடைய ஜனங்கள் பிற*
*ஜனங்களின் பாவங்களால் அழுக்கடைந்*
*தார்கள். தேவனுடைய ஜனங்கள் தங்கள்*
*தேவனிடம் அவ நம்பிக்கை கொண்டு,*
*பிறர் செய்த காரியங்களையேச் செய்தார்கள்.*
40 *தேவன் அவரது ஜனங்களிடம் கோபங்*
*கொண்டார். தேவன் அவர்களிடம் வெறுப்*
*படைந்தார்.*
41 *தேவன் அவரது ஜனங்களைப் பிற*
*தேசத்தாரிடம் கொடுத்தார். தேவன் அவர்*
*களது பகைவர்கள் அவர்களை ஆளுமாறு*
*செய்தார்.*
42 *தேவனுடைய ஜனங்களின் பகைவர்கள்*
*அவர்களை அடக்கியாண்டு அவர்களின்*
*வாழ்க்கை கடினமாகும்படி செய்தாார்கள்.*
43 *தேவன் அவரது ஜனங்களைப் பலமுறை*
*காப்பாற்றினார், ஆனால் அவர்கள் தேவனுக்*
*கெதிராகத் திரும்பி, தாங்கள் விரும்பிய*
*வற்றையெல்லாம் செய்தார்கள். தேவ*
*னுடைய ஜனங்கள் பற்பல தீய காரியங்*
*களைச் செய்தார்கள்.*
44 *ஆனால் தேவனுடைய ஜனங்கள் துன்பத்*
*திலிருந்தபோதெல்லாம் தேவனிடம் உதவிக்*
*காக ஜெபித்தனர். ஒவ்வொரு முறையும்*
*தேவன் அவர்கள் ஜெபங்களுக்குச் செவி*
*கொடுத்தார்.*
45 *தேவன் எப்போதும் அவரது உடன்படிக்*
*கையை நினைவுக்கூர்ந்து தமது மிகுந்த*
*அன்பினால் அவர்களுக்கு ஆறுதல் அளித்*
*தார்.*
46 *பிற தேசத்தார் அவர்களைச் சிறைவாசி*
*களாக்கினார்கள். ஆனால் தம் ஜனங்களிடம்*
*அவர்கள் இரக்கம் காட்டும்படி தேவன்*
*செய்தார்.*
47 *நம் தேவனாகிய கர்த்தர் நம்மைக்*
*காப்பாற்றினார்! தேவன் அத்தேசங்களி*
*லிருந்து மீண்டும் நம்மை அழைத்து வந்தார்.*
*எனவே நாம் அவரது பரிசுத்த நாமத்தைத்*
*துதிப்போம், எனவே நாம் அவருக்குத்*
*துதிகளைப் பாடுவோம்.*
48 *இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் ஆசீர்*
*வதிக்கப்படட்டும் தேவன் எப்போதும் வாழ்*
*கிறவர். அவர் என்றென்றும் வாழ்வார்.*
*எல்லா ஜனங்களும், “ஆமென்! கர்த்தரைத்*
*துதியுங்கள்” என்று சொல்லக்கடவர்கள்.*

# *புத்தகம்* **5**

## *சங்கீதம்* **107**

1 *கர்த்தர் நல்லவர், எனவே அவருக்கு*
*நன்றி கூறுங்கள்! அவரது அன்பு என்றென்*
*றைக்கும் உள்ளது!*
2 *கர்த்தரால் மீட்கப்பட்ட ஒவ்வொரு மனி*
*தனும் இதைத்தான் சொல்லவேண்டும் கர்த்தர்*
*பகைவரிடமிருந்து அவர்களைக் காப்பாற்றி*
*னார்.*
3 *கர்த்தர் அவரது ஜனங்களைப் பல்வேறு*
*வித்தியாசமான நாடுகளிலுமிருந்து ஒரு*
*மித்துக் கூடும்படிச் செய்தார். அவர்களைக்*
*கிழக்கிலும் மேற்கிலுமிருந்தும் வடக்கிலும்*
*தெற்கிலுமிருந்தும் வரச்செய்தார்.*
4 *அவர்களுள் சிலர் பாலைவனத்தில்*
*அலைந்து திரிந்தார்கள், அவர்கள் வாழ*
*ஒரு இடம் தேடினார்கள், ஆனால் அவர்*
*களால் ஒரு நகரத்தைக் கண்டுபிடிக்க முடிய*
*வில்லை.*
5 *அவர்கள் பசியாலும் தாகத்தாலும்*
*வருந்தி, சோர்வடைந்து போனார்கள்.*
6 *எனவே அவர்கள் உதவிக்காகக் கர்த்த*
*ரைக் கூப்பிட்டார்கள். அவர் அவர்களின்*
*தொல்லைகளிலிருந்து அவர்களை மீட்டார்.*
7 *தேவன் அந்த ஜனங்களை அவர்கள்*
*வாழவிருக்கும் நகரத்திற்கு நேராக நடத்*
*தினார்*
8 *அவர் ஜனங்களுக்காகச் செய்த வியத்தகு*
*காரியங்களுக்காகவும் அவரது அன்பிற்*
*காகவும் கர்த்தருக்கு நன்றி கூறுங்கள்.*
9 *தேவன் தாகமடைந்த ஆத்துமாவைத்*
*திருப்திப்படுத்துகிறார். பசியுள்ள ஆத்து*
*மாவை நன்மைகளால் தேவன் நிரப்புகிறார்.*
10 *தேவனுடைய ஜனங்களில் சிலர் சிறை*
*வாசிகளாக இருந்தார்கள், அவர்கள்*
*இருண்ட சிறைகளுக்குள் கம்பிகளுக்குப்*
*பின்னே அடைக்கப்பட்டார்கள்.*
11 *ஏனெனில் அவர்கள் தேவன் சொன்ன*
*வற்றிற்கு எதிராகப் போராடினார்கள். மிக*
*உன்னதமான தேவனுடைய அறிவுரைக்குச்*
*செவிசாய்க்க மறுத்தார்கள்.*
12 *அவர்கள் செய்த காரியங்களால் தேவன்*
*அந்த ஜனங்களின் வாழ்க்கையைக் கடின*
*மாக்கினார். அவர்கள் இடறி வீழ்ந்தார்கள்,*
*அவர்களுக்கு உதவ ஒருவனும் இருக்க*
*வில்லை.*
13 *அந்த ஜனங்கள் துன்பத்தில் சிக்குண்*
*டிருந்தார்கள், அவர்கள் கர்த்தரிடம் உதவி*
*வேண்டினார்கள். தேவன் அவர்கள் துன்பங்*
*களிலிருந்து அவர்களைக் காப்பாற்றினார்.*
14 *அவர்களை இருண்ட சிறைகளிலிருந்து*
*தேவன் வெளியேற்றினார். அவர்களைக்*

கட்டியிருந்த கயிறுகளைத் தேவன் அறுத்
தெறிந்தார்.
15அவரது அன்பிற்காகவும் அவர் ஜனங்
களுக்காகச் செய்கிற வியக்கத்தக்க காரியங்
களுக்காகவும் கர்த்தருக்கு நன்றி கூறுங்கள்.
16நாம் நமது பகைவரை முறியடிப்பதற்குத்
தேவன் உதவுகிறார். அவர்களின் வெண்
கலக் கதவுகளைத் தேவனால் உடைக்க
முடியும். அவர்களின் வாயிற் கதவுகளின்
இரும்புக் கம்பிகளை தேவனால் சிதறடிக்க
முடியும்.
17சிலர் தங்கள் பாவங்களின் காரணமாக
அறிவற்றவர்களாக மாறினார்கள். தங்க
ளுடைய குற்றங்களுக்காக அவர்கள் மிகவும்
துன்பப்பட்டார்கள்.
18 அந்த ஜனங்கள் உண்ண மறுத்தார்கள்,
அவர்கள் மரிக்கும் நிலையை அடைந்
தார்கள்.
19அவர்கள் துன்பத்தில் சிக்குண்டிருந்
தார்கள், கர்த்தரை நோக்கி உதவிக்கென
வேண்டினார்கள். அவர் அவர்களைத்
துன்பங்களினின்று விடுவித்தார்.
20தேவன் தமது வார்த்தையினால்
கட்டளையிட்டு, அவர்களைக் குணமாக்கி
னார். எனவே அந்த ஜனங்கள் கல்லறை
யிலிருந்து காப்பாற்றப்பட்டார்கள்.
21அவரது அன்பிற்காகவும், அவர் ஜனங்
களுக்காகச் செய்கிற வியக்கத்தக்க காரியங்
களுக்காகவும் கர்த்தருக்கு நன்றிகூறுங்கள்.
22அவர் செய்த எல்லாவற்றிற்காகவும் பலி
களைச் செலுத்தி கர்த்தருக்கு நன்றிகூறுங்
கள். கர்த்தர் செய்தவற்றை மகிழ்ச்சியோடு
கூறுங்கள்.
23சில ஜனங்கள் கடலைக் கடந்து
படகுகளில் சென்றார்கள், பெருங்கடலின்
குறுக்கே வேலைகளின் பொருட்டு அவர்கள்
சென்றார்கள்.
24கர்த்தர் செய்யக்கூடியதை அந்த ஜனங்
கள் கண்டார்கள். கடலில் அவர் செய்த
வியக்கத்தக்க காரியங்களை அவர்கள் கண்
டார்கள்.
25தேவன் கட்டளையிட்டார், ஒரு பெருங்
காற்று வீச ஆரம்பித்தது, அலைகள் உயர
மாக, மேலும் உயரமாக எழும்பின.
26அலைகள் அவர்களை வானத்திற்கு
நேராகத் தூக்கி, மீண்டும் கீழே விழச்
செய்தது. மனிதர்கள் தங்கள் தைரியத்தை
இழக்கும்படி ஆபத்தாக புயல் வீசிற்று.
27அவர்கள் நிலைதளர்ந்து குடிவெறியர்
களைப்போல வீழ்ந்தார்கள். மாலுமிகளாகிய
இவர்களுடைய திறமை வீணாய்ப் போ
யிற்று.
28அவர்கள் துன்பத்தில் இருந்தார்கள்,
எனவே உதவிக்காகக் கர்த்தரைக் கூப்பிட்
டார்கள். அவர்கள் துன்பங்களிலிருந்து
அவர் அவர்களைக் காப்பாற்றினார்.
29தேவன் புயலை நிறுத்தினார். அவர்
அலைகளை அமைதிப்படுத்தினார்.
30கடல் அமைதியுற்றதைக் கண்டு மாலுமி
கள் மகிழ்ந்தார்கள். அவர்கள் போக
வேண்டிய இடத்திற்குத் தேவன் அவர்
களைப் பாதுகாப்பாகக் கொண்டு சேர்த்தார்.
31அவரது அன்பிற்காகவும், அவரது ஜனங்
களுக்காக செய்கிற வியக்கத்தக்க காரியங்
களுக்காகவும் கர்த்தருக்கு நன்றிகூறுங்கள்.
32பெரிய கூட்டத்தில் தேவனை வாழ்த்துங்
கள். முதிய தலைவர்கள் ஒன்று கூடும்போது
அவரை வாழ்த்துங்கள்.
33தேவன் நதிகளைப் பாலைவனமாக்
கினார். நீரூற்றுக்கள் பெருக்கெடுப்பதை
தேவன் நிறுத்தினார்.
34தேவன் வளமிக்க தேசத்தை மாற்றினார்,
அது பயனற்ற உப்பு நிலமாக மாறிற்று.
ஏனெனில் அங்குத் தீயோர் வாழ்ந்தனர்.
35தேவன் பாலைவனத்தை மாற்றினார்,
அது குளங்களுள்ள நிலம் ஆயிற்று, தேவன்
உலர்ந்த நிலத்திலிருந்து நீரூற்றுக்களில் தண்
ணீர் புறப்படச் செய்தார்.
36தேவன் பசியுள்ள ஜனங்களை அந்த
நல்ல தேசத்திற்கு வழிநடத்தினார். அவர்கள்
அங்கு வாழ ஒரு நகரத்தை அமைத்தார்கள்.
37அவர்கள் வயல்களில் விதைகளை
நட்டார்கள். அவர்கள் வயல்களில் திராட்சை
களை நட்டார்கள். அவர்கள் நல்ல அறு
வடை செய்தார்கள்.
38தேவன் அந்த ஜனங்களை ஆசீர்வதித்
தார். அவர்கள் குடும்பங்கள் பெருகின.
அவர்களுக்குப் பற்பல மிருகங்கள் இருந்தன.
39திடீரென ஏற்பட்ட பேரிழப்பினாலும்
துன்பங்களினாலும் அவர்கள் குடும்பங்கள்
குறுகி பெலவீனமாயின.
40தேவன் அவர்கள் தலைவர்களை அவ
மானப்படுத்தி, வெட்கப்படச் செய்தார்.
பாதைகளற்ற பாலைவனத்தின் வழியாக
அவர்கள் அலையும்படி தேவன் செய்தார்.
41பின்பு தேவன் அந்த ஏழை ஜனங்களை
அவர்களது துயரங்களிலிருந்து மீட்டார்.
இப்போது அவர்கள் குடும்பங்கள் ஆட்டு
மந்தைகளைப்போல் பெருகியுள்ளன.
42நல்ல ஜனங்கள் இதைக்கண்டு மகிழ்ச்சி
யடைவார்கள். ஆனால் தீய ஜனங்களோ
இதைக் காணும்போது, என்ன சொல்வ
தென்று அறியார்கள்.
43ஒருவன் ஞானமுள்ளவனாக இருந்தால்
இக்காரியங்களை நினைவுகூருவான். அப்
போது தேவனுடைய அன்பு உண்மை
யாகவே இத்தகையதென்று புரிந்துகொள்ளத்
தொடங்குவான்.

## சங்கீதம் 108

### தாவீதின் துதிப் பாடல்களுள் ஒன்று

1தேவனே, நான் ஆயத்தமாக இருக்கிறேன்.
எனது இருதயமும் ஆத்துமாவும் துதிப்
பாடல்களைப் பாடவும் இசைக்கவும் தயா
ராக இருக்கிறது.

[2]சுரமண்டலங்களே, வீணைகளே*, நாம்
சூரியனை எழச்செய்வோம்.
[3]கர்த்தாவே, நாங்கள் உம்மை எல்லா
தேசங்களிலும் துதிப்போம். பிற ஜனங்கள்
மத்தியில் நாங்கள் உம்மைத் துதிப்போம்.
[4]கர்த்தாவே, உமது அன்பு வானங்களைக்
காட்டிலும் உயர்ந்தது. உமது சத்தியம்
உயரமான மேகங்களைக் காட்டிலும் உயர்ந்
தது,
[5]தேவனே, விண்ணிற்கு மேல் எழும்பும்!
உலகமெல்லாம் உமது மகிமையைக் காணட்
டும்.
[6]தேவனே, உமக்கு வேண்டியவர்களைக்
காப்பாற்ற இதைச்செய்யும். எனது ஜெபத்
திற்குப் பதில் தாரும், உமது மிகுந்த
வல்லமையை மீட்பதற்குப் பயன்படுத்தும்.
[7]தேவன் அவரது ஆலயத்திலிருந்து பேசி,
“நான் போரில் வென்று அவ்வெற்றியைக்
குறித்து மகிழ்ச்சியடைவேன்! என் ஜனங்
களுக்கு இத்தேசத்தைப் பங்கிடுவேன். அவர்
களுக்குச் சீகேமைக் கொடுப்பேன். அவர்
களுக்குச் சுக்கோத் பள்ளத்தாக்கைக் கொடுப்
பேன்” என்றார்.
[8]கீலேயாத்தும் மனாசேயும் எனக்குரியன
வாகும். எப்பிராயீம் என் தலைக்குப் பெல
னான அணியாகும். யூதா என் நியாயம்
அறிவிக்கும் கோல்
[9] மோவாப் என் பாதங்களைக் கழுவும்
பாத்திரம். ஏதோம் என் மிதியடிகளைச்
சுமக்கும் அடிமை. நான் பெலிஸ்தியரைத்
தோற்கடித்து வெற்றி ஆரவாரம் செய்வேன்.”
[10]யார் என்னைப் பகைவனின் கோட்
டைக்குள் வழி நடத்துவான்? யார் என்னை
ஏதோமோடு போராட அழைத்துச் செல்
வான்?
[11]தேவனே, இக்காரியங்களைச் செய்ய
நீரே உதவமுடியும். ஆனால் நீர் எங்களை
விட்டு விலகினீர். நீர் எங்கள் சேனை
களோடு செல்லவில்லை!
[12]தேவனே, நாங்கள் பகைவர்களைத்
தோற்கடிப்பதற்குத் தயவாய் உதவும்! ஜனங்
கள் எங்களுக்கு உதவமுடியாது!
[13]தேவன் மட்டுமே எங்களை வலிமை
யுடையவர்களாக்க முடியும். தேவன் எங்கள்
பகைவர்களைத் தோற்கடிப்பார்.

## சங்கீதம் 109

***இராகத் தலைவனுக்குத் தாவீது அளித்த துதிப் பாடல்களில் ஒன்று***

[1]தேவனே, என் ஜெபத்திற்கு உமது
காதுகளை மூடிக்கொள்ளாதேயும்.
[2]தீயோர் என்னைப்பற்றிப் பொய்களைக்
கூறுகிறார்கள். உண்மையற்ற காரியங்களை
அவர்கள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.
[3]என்னைப்பற்றி ஜனங்கள் வெறுப்பை
டயும் காரியங்களைச் சொல்லிக் கொண்
டிருக்கிறார்கள். எந்தக் காரணமுமின்றி
அவர்கள் என்னைத் தாக்குகிறார்கள்.
[4]நான் அவர்களை நேசித்தேன், அவர்
களோ என்னைப் பகைக்கிறார்கள். எனவே
இப்போது, தேவனே, உம்மை நோக்கி
ஜெபம் செய்கிறேன்.
[5]நான் அந்த ஜனங்களுக்கு நன்மையான
காரியங்களைச் செய்தேன், ஆனால் அவர்
களோ எனக்குத் தீய காரியங்களைச் செய்
கிறார்கள். நான் அவர்களை நேசித்தேன்,
ஆனால் அவர்களோ, என்னைப் பகைத்
தார்கள்.
[6]அவன் செய்த தீயக் காரியங்களுக்காக
எனது பகைவனைத் தண்டியும். அவன்
தவறானவனென்று நிரூபிக்கும் ஒருவனைக்
கண்டுபிடியும்.

[7]என் பகைவன் தவறு செய்ததையும்,
அவனே குற்றவாளி என்பதையும் நீதிபதி
முடிவு செய்யட்டும். என் பகைவன் கூறு
பவை யாவும் அவனுக்கே மேலும் தீமை
யைத் தேடித் தரட்டும்.
[8]என் பகைவன் உடனே மடியட்டும்.
அவன் பதவியை மற்றொருவன் பெறட்டும்.
[9]என் பகைவனின் குழந்தைகள், அநாதை
களாகி, அவன் மனைவி விதவையாகட்டும்.
[10]அவர்கள் தங்கள் வீட்டை இழந்து
பிச்சைக்காரர்களாகட்டும்.
[11]என் பகைவனிடம் கடன்பட்டிருக்கிற
ஜனங்கள் அவனுக்குச் சொந்தமான பொருள்
களை எடுத்துக் கொள்ளட்டும். அவன்
உழைத்த எல்லாப் பொருட்களையும் எவரா
வது எடுத்துக்கொள்ளட்டும்.
[12]என் பகைவனுக்கு ஒருவனும் இரக்கம்
காட்டமாட்டான். என நான் நம்புகிறேன்.
ஒருவனும் அவனது குழந்தைகளுக்குக் கிரு
பை காட்டமாட்டான் எனவும் நான் நம்பு
கிறேன்.
[13]என் பகைவனை முற்றிலும் அழியும்.
அடுத்த தலைமுறையினர் அவன் பெயரை
எல்லாவற்றிலிருந்தும் அகற்றிப்போடட்டும்.
[14]என் பகைவனின் தந்தையின் பாவங்
களைக் கர்த்தர் நினைவில் கொள்வார்.
என்று நான் நம்புகிறேன். அவனது தாயின்
பாவங்கள் என்றும் நீக்கப்படுவதில்லை.
என நான் நம்புகிறேன்.
[15]கர்த்தர் அப்பாவங்களை என்றென்றும்
நினைவுகூருவார். என நான் நம்புகிறேன்.
ஜனங்கள் என் பகைவனை முற்றிலும்
மறந்துப்போகும்படி அவர் ஜனங்களை
வற்புறுத்துவார் என நான் நம்புகிறேன்.
[16]ஏனெனில் அத்தீய மனிதன் ஒருபோதும்
நன்மை செய்ததில்லை. அவன் ஒருபோதும்
எவரையும் நேசித்ததில்லை, அவன் ஏழை
கள், திக்கற்றோர் ஆகியோரின் வாழ்க்கை
கடினமாகும்படி செய்தான்.

---

**வீணை** பல நரம்புகளாலாகிய இசைக்கருவி.

[17]பிறருக்குத் தீயவை நிகழ வேண்டுமெனக்
கேட்பதில் அத்தீயவன் ஆர்வமுடையவனாக
இருந்தான். எனவே அத்தீமைகள் அவனுக்கு
நேரிடட்டும். அத்தீய மனிதன் ஒருபோதும்
ஜனங்களுக்கு நல்லவை நிகழ வேண்டு
மெனக் கேட்டதில்லை.
[18]சாபங்கள் அவன் ஆடைகளாகட்டும்,
சாபங்கள் அவன் பருகும் தண்ணீராகட்டும்,
சாபங்கள் அவன் சரீரத்தின் மீது எண்ணெ
யாகட்டும்.
[19]சாபங்கள் அத்தீயோனைச் சுற்றியிருக்
கும் ஆடைகளாகட்டும். சாபங்கள் அவன்
இடுப்பைச் சுற்றியிருக்கும் கச்சையாகட்டும்.
[20]என் பகைவனுக்கு அக்காரியங்கள்
அனைத்தையும் கர்த்தர் செய்வார் என
நான் நம்புகிறேன். என்னைக் கொல்ல
முயன்று கொண்டிருக்கிற எல்லா ஜனங்
களுக்கும் கர்த்தர் அவற்றைச் செய்வார்
என நான் நம்புகிறேன்.
[21]கர்த்தாவே, நீரே என் ஆண்டவர்.
எனவே உமது நாமத்துக்குப் பெருமைதரும்
வழியில் என்னைக் கவனியும். உமக்கு
மிகுதியான அன்பு உண்டு எனவே என்
னைக் காப்பாற்றும்.
[22]நான் ஏழையும் திக்கற்றவனுமான மனி
தன். நான் உண்மையிலேயே கவலையடை
கிறேன், என் இருதயம் நொறுங்கிப்
போகிறது.
[23]என் வாழ்க்கை பகலின் முடிவை
அறிவிக்கும் நீண்ட நிழலைப்போன்றது என
நான் உணர்கிறேன். சிலர் தள்ளிவிடும்
பூச்சியைப்போல் உணருகிறேன்.
[24]நான் பசியாயிருப்பதால் என் முழங்
கால்கள் சோர்ந்துள்ளன. நான் எடை
குறைந்து மெலிந்து போகிறேன்.
[25]தீய ஜனங்கள் என்னை அவமானப்
படுத்துகிறார்கள். அவர்கள் என்னைப்
பார்த்துத் தலையைக் குலுக்கிக் கொள்
கிறார்கள்.
[26]என் தேவனாகிய கர்த்தாவே, எனக்கு
உதவும்! உமது உண்மையான அன்பை
வெளிப்படுத்தி, என்னைக் காப்பாற்றும்!
[27]நீர் எனக்கு உதவினீரென்று அப்போது
அந்த ஜனங்கள் அறிவார்கள். உமது வல்ல
மை எனக்கு உதவிற்று என்பதையும்
அவர்கள் அப்போது அறிவார்கள்.
[28]அத்தீயோர் என்னைச் சபித்தனர், ஆனா
லும் கர்த்தாவே, நீர் என்னை ஆசீர்வதிக்க
முடியும். அவர்கள் என்னைத் தாக்கினார்கள்,
அவர்களைத் தோற்க்கடியும். அப்போது
உமது ஊழியனாகிய நான் சந்தோஷமடை
வேன்.
[29]என் பகைவர்களை வெட்கப்படுத்தும்!
அவர்கள் தங்கள் வெட்கத்தை ஒரு மேலா
டையைப்போல் அணிந்துகொள்ளட்டும்.
[30]நான் கர்த்தருக்கு நன்றிக் கூறுகிறேன்.
பலர் முன்னிலையில் நான் அவரைத் துதிப்
பேன்.
[31]ஏனெனில் கர்த்தர் திக்கற்றோருக்குச்
சார்பாக இருக்கிறார். அவர்களை மரணத்திற்
கென்று குற்றம்சாட்ட முயல்வோரிடமிருந்து
தேவன் அவர்களைக் காப்பாற்றுகிறார்.

## சங்கீதம் 110

### தாவீதின் துதிப் பாடல்களுள் ஒன்று

[1]கர்த்தர் என் ஆண்டவரை நோக்கி,
"என் வலது பக்கத்தில் அமரும், நான்
உமது பகைவர்களை உமது ஆளுகையின்
கீழ் வைப்பேன்"* என்றார்
[2]உமது அரசு பெருக கர்த்தர் உதவுவார்.
உமது அரசு சீயோனில் ஆரம்பிக்கும்,
பிற நாடுகளிலும் நீர் உமது பகைவர்களை
ஆளும்வரைக்கும் அது பெருகும்.
[3]நீர் உமது படையை ஒன்று திரட்டும்
போது உமது ஜனங்கள் தாங்களே விருப்பத்
துடன் வருவார்கள் அவாகள் சிறப்பு
ஆடைகளை அணிவார்கள். அவர்கள் அதி
காலையில் சந்திப்பார்கள். அந்த இளைஞர்
கள் தரைமேல் உள்ள பனித்துளியைப்போல்
உம்மைச் சுற்றி இருப்பார்கள்.
[4]கர்த்தர் ஒரு வாக்குறுதி அளித்தார்,
அவர் மனம் மாறமாட்டார். "நீர் என்றென்
றும் ஆசாரியராயிருப்பீர். மெல்கிசேதேக்
கைப் போன்ற ஆசாரியராயிருப்பீர்."
[5]என் ஆண்டவர் உமது வலது பக்கம்
இருக்கிறார். அவர் கோபமடையும்போது
மற்ற அரசர்களைத் தோற்கடிப்பார்.
[6]தேவன் தேசங்களை நியாயந்தீர்ப்பார்.
பூமி பிரேதங்களால் நிரப்பப்படும். தேவன்
வல்லமையுள்ள நாட்டின் தலைவர்களை
தண்டிப்பார்.
[7]வழியின் நீரூற்றில் அரசர் தண்ணீரை
பருகுகிறார். அவர் உண்மையாகவே அவ
ரது தலையை உயர்த்தி, மிகுந்த ஆற்றலோடு
காணப்படுவார்!

## சங்கீதம் 111*

[1]கர்த்தரைத் துதியுங்கள்! நல்லோர் கூடிச்
சந்திக்கும் கூட்டங்களில் நான் கர்த்தருக்கு
முழு இருதயத்தோடும் நன்றி செலுத்துவேன்.
[2]கர்த்தர் அற்புதமான காரியங்களைச் செய்
கிறார். தேவனிடமிருந்து வரும் நல்ல
காரியங்களை ஜனங்கள் விரும்புகிறார்கள்.
[3]உண்மையிலேயே மகிமையும் அற்புதமு
மான காரியங்களைத் தேவன் செய்கிறார்.
அவரது நன்மை என்றென்றைக்கும் தொடரு
கிறது.

---

**நான் ... வைப்பேன்** "நான் உமது பகைவர்களை உமது பாதங்களுக்கு கீழ்ப்படுத்துவேன்" எனப் பொருள்.

***சங்கீதம் 111*** இச்சங்கீதத்தின் ஒவ்வொரு வசனத்தின் ஒவ்வொரு பகுதியும் எபிரெய மொழியிலுள்ள அடுத்த எழுத்தைக்கொண்டு ஆரம்பிக்கிறது.

4 கர்த்தர் தயவும் இரக்கமுமுள்ளவர் என்
பதை நாம் நினைவுக்கூரும்படி தேவன்
வியக்கத்தக்க காரியங்களைச் செய்கிறார்.
5 தேவன் அவரைப் பின்பற்றுவோருக்கு
உணவளிக்கிறார். அவரது உடன்படிக்கை
யைத் தேவன் என்றென்றும் நினைவுகூரு
கிறார்.
6 அவர் தமது தேசத்தைத் தமது ஜனங்
களுக்குக் கொடுக்கப்போகிறார் என்பதைத்
தேவன் செய்த வல்லமையான காரியங்கள்
காட்டும்.
7 தேவன் செய்பவை ஒவ்வொன்றும்
நல்லவையும் நியாயமுள்ளவையும் ஆகும்.
அவரது கட்டளைகள் நம்பத்தக்கவை.
8 தேவனுடைய கட்டளைகள் என்றென்
றும் தொடரும். அக்கட்டளைகளைத் தேவன்
கொடுப்பதற்கான காரணங்கள் நேர்மையும்
தூய்மையானவையுமாகும்.
9 தேவன் தம் ஜனங்களைக் காப்பாற்ற
ஒருவரை அனுப்புகிறார். தேவன் அவர்
களுடன் உடன்படிக்கை என்றென்றும்
தொடருமாறு செய்தார். தேவனுடைய
நாமம்அஞ்சத்தக்கதும்பரிசுத்தமானதுமாகும்.
10 தேவனுக்குப் பயப்படுவதும் அவரை
மதிப்பதுமே ஞானத்தின் தொடக்கமா
யிருக்கிறது. தேவனுக்குக் கீழ்ப்படிகிற ஜனங்
கள் மிகுந்த ஞானமுள்ளவர்கள். என்றென்
றும் தேவனுக்குத் துதிகள் பாடப்படும்.

## *சங்கீதம்* 112*

1 கர்த்தரைத் துதியுங்கள்! கர்த்தருக்குப்
பயந்து அவரை மதிக்கிற மனிதன் சந்தோஷ
மாயிருப்பான். அவன் தேவனுடைய கட்ட
ளைகளை நேசிக்கிறான்.
2 அவன் சந்ததியினர் பூமியில் பெரியோரா
யிருப்பார்கள். நல்லோரின் சந்ததியினர்
நிச்சயமாக ஆசீர்வதிக்கப்படுவார்கள்.
3 அம்மனிதனின் குடும்பம் செல்வத்தில்
சிறந்திருக்கும். அவன் நன்மை என்றென்
றைக்கும் தொடரும்.
4 தேவன் நல்லோருக்கு இருளில் பிரகா
சிக்கும் ஒளியைப் போன்றவர். தேவன்
நன்மையும், தயவும், இரக்கமுமுள்ளவர்.
5 தயவும், தயாளகுணமும் பெற்றிருப்பது
ஒருவனுக்கு நல்லது. தனது வியாபாரத்தில்
நியாயமாயிருப்பது ஒருவனுக்கு நல்லது.
6 அவன் விழமாட்டான், ஒரு நல்ல
மனிதன் என்றென்றும் நினைவுகூரப்படு
வான்.
7 அவன் தீய செய்திக்குப் பயப்பட
மாட்டான். அவன் கர்த்தரை நம்புகிறதால்
தன்னம்பிக்கையோடிருப்பான்.
8 அவன் தன்னம்பிக்கையுள்ளவன். அவன்
பயப்படமாட்டான். அவன் தனது பகை
வர்களைத் தோற்கடிப்பான்.
9 அவன் ஏழைகளுக்கு இலவசமாகப்
பொருள்களைக் கொடுக்கிறான். அவனது
நன்மை என்றென்றைக்கும் தொடரும்.
10 தீயோர் இதைக்கண்டு கோபமடை
வார்கள். அவர்கள் கோபத்தால் தங்கள்
பற்களைக் கடிப்பார்கள், பின்பு அவர்கள்
மறைந்து போவார்கள். தீயோர் அவர்கள்
மிகவும் விரும்புவதைப் பெறுவதில்லை.

## *சங்கீதம்* 113

1 கர்த்தரைத் துதியுங்கள். கர்த்தருடைய
ஊழியர்களே, அவரைத் துதியுங்கள்! கர்த்த
ருடைய நாமத்தைத் துதியுங்கள்.
2 கர்த்தருடைய நாமம் என்றென்றும் ஆசீர்
வதிக்கப்படுவதாக
3 சூரியன் உதிக்கும் கிழக்கிலிருந்து சூரி
யன் மறைகிற மேற்குவரை கர்த்தருடைய
நாமம் துதிக்கப்படுவதாக
4 எல்லா தேசங்களிலும் கர்த்தர் உயர்ந்
தவர். வானங்கள் மட்டும் அவரது மகிமை
எழும்புகிறது.
5 எங்கள் தேவனாகிய கர்த்தரைப் போன்
றோர் எவருமில்லை. தேவன் பரலோகத்தின்
உயரத்தில் வீற்றிருக்கிறார்.
6 வானத்தையும் பூமியையும் கீழே குனிந்து
நோக்கும் வண்ணம் தேவன் நமக்கு மேலே
மிக உயரத்தில் இருக்கிறார்.
7 தூசியிலிருந்து ஏழைகளைத் தேவன்
தூக்கி விடுகிறார். குப்பைக்குவியலிலிருந்து
தேவன் பிச்சைக்காரர்களை வெளியேற்று
கிறார்.
8 அந்த ஜனங்களைத் தேவன் முக்கிய
மானவர்களாக்குகிறார். அந்த ஜனங்களைத்
தேவன்முக்கியமானதலைவர்களாக்குகிறார்.
9 ஒரு பெண்ணிற்குக் குழந்தைகள் இல்லா
மல் இருக்கலாம், ஆனால் தேவன் அவ
ளுக்குக் குழந்தைகளைத் தந்து அவளை
மகிழ்ச்சியாக்குவார். கர்த்தரைத் துதியுங்கள்!

## *சங்கீதம்* 114

1 இஸ்ரவேல் எகிப்தை விட்டு நீங்கினான்.
யாக்கோபு அந்நியநாட்டை விட்டுச் சென்
றான்.
2 யூதா தேவனுக்கு விஷேசமான ஜனங்
களானார்கள். இஸ்ரவேல் அவருடைய
இராஜ்யமானது.
3 செங்கடல் இதைக்கண்டு விலகி ஓடிற்று.
யோர்தான் நதியோ திரும்பி ஓடிப்போயிற்று.
4 ஆட்டுக்கடாக்களைப்போல் மலைகள்
நடனமாடின. ஆட்டுக்குட்டிகளைப்போல்
மலைகள் நடனமாடின.
5 செங்கடலே, நீ ஏன் ஓடிப்போனாய்?
யோர்தான் நதியே, நீ ஏன் திரும்பி ஓடிப்
போனாய்?

---

***சங்கீதம் 112*** எபிரெய மொழியில் இச்சங்கீதத்தின் ஒவ்வொரு வசனத்தின் ஒவ்வொரு பகுதியும் எபிரெய மொழியிலுள்ள அடுத்தடுத்த எழுத்துக் களைக் கொண்டு ஆரம்பிக்கும்.

[6]மலைகளே, நீங்கள் ஏன் ஆட்டுக்கடாக்
களைப்போல் நடனமாடினீர்கள்? மலைகளே,
நீங்களும் ஏன் ஆட்டுக்குட்டிகளைப்போல்
நடனமாடினீர்கள்?
[7]யாக்கோபின் தேவனும் கர்த்தருமாகிய
ஆண்டவருக்கு முன்னே பூமி நடுங்கி அதிர்ந்
தது.
[8]கன்மலையிலிருந்து தண்ணீர் பெருகி
ஓடச்செய்தவர் தேவனேயாவார். கெட்டி
யான பாறையிலிருந்து நீரூற்றின் வெள்ளத்
தைப் பாய்ந்தோடச் செய்தவர் தேவனேயா
வார்.

## சங்கீதம் 115

[1]கர்த்தாவே, நாங்கள் எந்த மகிமையையும்
ஏற்றுக்கொள்வதில்லை. மகிமை உமக்கே
உரியது. உமது அன்பினாலும் நாங்கள்
உம்மை நம்பக்கூடும் என்பதாலும் மகிமை
உமக்கே உரியது.
[2]எங்கள் தேவன் எங்கே என்று ஏன்
தேசங்கள் ஆச்சரியப்படவேண்டும்?
[3]தேவன் பரலோகத்தில் இருக்கிறார். அவர்
தாம் விரும்புகின்றவற்றையெல்லாம் செய்
கிறார்.
[4]அத்தேசங்களின் “தெய்வங்கள்” பொன்
னாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட
சிலைகள் மட்டுமே. அவை சில மனிதர்கள்
செய்த சிலைகள் மட்டுமே.
[5]அச்சிலைகளுக்கு வாய் உண்டு, ஆனால்
பேச இயலாது. அவற்றிற்குக் கண்கள்
உண்டு, ஆனால் காண இயலாது.
[6]அவற்றிற்குக் காதுகளுண்டு, ஆனால்
கேட்க இயலாது. அவற்றிற்கு மூக்குகள்
உண்டு, ஆனால் முகர இயலாது.
[7]அவற்றிற்குக் கைகள் உண்டு, ஆனால்
உணர இயலாது. அவற்றிற்குக் கால்கள்
உண்டு, ஆனால் நடக்க இயலாது. அவற்றின்
தொண்டையிலிருந்து எந்த விதமான சத்த
மும் வெளிவருவதில்லை.
[8]அச்சிலைகளைச் செய்து, அவற்றில் நம்
பிக்கை வைக்கிற ஜனங்களும் அவற்றைப்
போலாவார்கள்.
[9]இஸ்ரவேலின் ஜனங்களே, கர்த்தரை
நம்புங்கள்! கர்த்தர் அவர்களின் பெலனும்,
கேடகமுமானவர்.
[10]ஆரோனின் குடும்பத்தாரே, கர்த்தரை
நம்புங்கள்! கர்த்தர் அவர்களின் பெலனும்
கேடகமுமானவர்.
[11]கர்த்தரைப் பின்பற்றுகிறவர்களே, கர்த்த
ரை நம்புங்கள்! கர்த்தர் அவர்களின் பெல
னும் கேடகமுமானவர்.
[12]கர்த்தர் நம்மை நினைவுக்கூருகிறார்,
கர்த்தர் நம்மை ஆசீர்வதிப்பார். கர்த்தர்
இஸ்ரவேலை ஆசீர்வதிப்பார். கர்த்தர் ஆரோ
னின் குடும்பத்தாரை ஆசீர்வதிப்பார்.
[13]கர்த்தர் தம்மைப் பின்பற்றும் உயர்ந்தோ
ரையும் தாழ்ந்தோரையும் ஆசீர்வதிப்பார்.
[14]கர்த்தர் உங்களுக்கும் உங்கள் குழந்தை
களுக்கும் அதிகமதிகமாகக் கொடுப்பார்
என்று நான் நம்புகிறேன்.
[15]கர்த்தர் பரலோகத்தையும் பூமியையும்
உண்டாக்கினார். கர்த்தர் உங்களை
வரவேற்கிறார்!
[16]பரலோகம் கர்த்தருக்குச் சொந்தமானது,
ஆனால் பூமியை ஜனங்களுக்குக் கொடுத்தார்.
[17]மரித்தவர்களும், கல்லறைக்குச் செல்பவர்
களும் கர்த்தரைத் துதிப்பதில்லை.
[18]நாம் கர்த்தரை துதிப்போம். இதுமுதல்
என்றென்றைக்கும் நாம் அவரை துதிப்
போம். அல்லேலூயா. கர்த்தரைத் துதிப்
போம்.

## சங்கீதம் 116

[1]கர்த்தர் எனது ஜெபங்களைக் கேட்பதை
நான் நேசிக்கிறேன்.
[2]நான் உதவிக்காகக் கூப்பிடும்போது
அவர் எனக்குச் செவிகொடுப்பதை நான்
நேசிக்கிறேன்.
[3]நான் மரித்தவன் போலானேன்! மரணக்
கயிறுகள் என்னைச் சூழ்ந்துக்கொண்டன,
கல்லறை என்னை மூடிற்று. நான் அஞ்சிக்
கலங்கினேன்.
[4]அப்போது நான் கர்த்தருடைய நாமத்
தைக் கூப்பிட்டேன். நான்: “கர்த்தாவே,
என்னைக் காப்பாற்றும்!” என்று கூறினேன்.
[5]கர்த்தர் நல்லவரும், இரக்கம் நிறைந்த
வருமாவார். தேவன் தயவுள்ளவர்.
[6]கர்த்தர் திக்கற்ற ஜனங்களைக் கவனித்
துக்கொள்கிறார். நான் உதவியற்றவனா
னேன், கர்த்தர் என்னைக் காப்பாற்றினார்.
[7]என் ஆத்துமாவே, நீ இளைப்பாறு!
கர்த்தர் உன்னைக் கவனித்துக்கொள்கிறார்.
[8]தேவனே, நீர் என் ஆத்துமாவை மரணத்
திலிருந்து காப்பாற்றினீர். நீர் என் கண்ணீ
ரை நிறுத்தினீர். நான் விழாதபடி பார்த்துக்
கொண்டீர்.
[9]நான் உயிருள்ளோரின் தேசத்தில்
தொடர்ந்து கர்த்தருக்குச் சேவைசெய்வேன்.
[10]“நான் அழிந்துபோனேன்!” என்று
கூறியபோதும். நான் தொடர்ந்து நம்பிக்கை
வைத்தேன்.
[11]நான் பயப்பட்டபோதும் “மனிதர்கள்
எல்லோரும் பொய்யர்களே!” என்றேன்.
[12]நான் கர்த்தருக்கு எதைக் கொடுக்க
முடியும்? என்னிடம் இருக்கும் எல்லாவற்றை
யும் கர்த்தரே கொடுத்தார்.
[13]அவர் என்னைக் காப்பாற்றினார்.
எனவே நான் அவருக்கு ஒரு பானங்களின்
காணிக்கையை அளிப்பேன். நான் கர்த்த
ருடைய நாமத்தைக் கூப்பிடுவேன்.
[14]நான் வாக்குறுதி அளித்தவற்றைக் கர்த்த
ருக்குக் கொடுப்பேன். இப்போது அவரது
ஜனங்கள் எல்லோருக்கும் முன்பாக நான்
போவேன்.

15கர்த்தரைப் பின்பற்றுபவர்களில் ஒரு
வனின் மரணம் கர்த்தருக்கு மிக முக்கிய
மானது! கர்த்தாவே, நான் உமது ஊழியர்
களில் ஒருவன்!
16நான் உமது பணியாள். உமது பணிப்
பெண் ஒருத்தியின் பிள்ளைகளுள் ஒருவன்
நான். கர்த்தாவே, நீரே என்னுடைய முதல்
போதகர்.
17நான் உமக்கு ஒரு நன்றியறிதலின்
காணிக்கையைக் கொடுப்பேன். நான் கர்த்த
ருடைய நாமத்தைக் கூப்பிடுவேன்.
18நான் வாக்குறுதி அளித்தவற்றைக் கர்த்த
ருக்குக் கொடுப்பேன். நான் இப்போது
அவரது எல்லா ஜனங்களுக்கும் முன்பாகப்
போவேன்.
19நான் எருசலேமின் ஆலயத்திற்குப் போ
வேன். கர்த்தரைத் துதிப்போம்!

## சங்கீதம் 117

1எல்லா தேசங்களே, கர்த்தரைத் துதி
யுங்கள். ஜனங்கள் எல்லோரும் கர்த்தரைத்
துதியுங்கள்.
2தேவன் நம்மை அதிகமாக நேசிக்கிறார்!
என்றென்றைக்கும் தேவன் நமக்கு உண்மை
யாக இருப்பார். கர்த்தரைத் துதிப்போம்!

## சங்கீதம் 118

1கர்த்தரே தேவன் என்பதால் அவரை
மகிமைப்படுத்துங்கள். அவரது உண்மை
அன்பு என்றென்றைக்கும் தொடரும்!
2இஸ்ரவேலே, இதைக்கூறு, “அவரது உண்
மை அன்பு என்றென்றும் தொடரும்!”
3ஆசாரியர்களே, இதைக் கூறுங்கள்:
“அவரது உண்மை அன்பு என்றென்றும்
தொடரும்!”
4கர்த்தரைத் தொழுதுகொள்கிற ஜனங்
களே, இதைக் கூறுங்கள்: “அவரது உண்மை
அன்பு என்றென்றும் தொடரும்!”
5நான் தொல்லையில் உழன்றேன். எனவே
உதவிக்காகக் கர்த்தரைக் கூப்பிட்டேன்.
கர்த்தர் எனக்குப் பதிலளித்து என்னை
விடுவித்தார்.
6கர்த்தர் என்னோடிருப்பதால் நான் பயப்
படமாட்டேன். என்னைத் துன்புறுத்த ஜனங்
கள் எதையும் செய்யமுடியாது.
7கர்த்தர் எனக்கு உதவி செய்கிறவர்.
என் பகைவர்கள் தோல்வியுறுவதை நான்
காண்பேன்.
8ஜனங்களை நம்புவதைக் காட்டிலும் கர்த்
தரை நம்புவது நல்லது.
9உங்கள் தலைவர்களை நம்புவதைக் காட்
டிலும் கர்த்தரை நம்புவது நல்லது.
10பல பகைவர்கள் என்னைச் சூழ்ந்திருக்கி
றார்கள். ஆனால் கர்த்தருடைய வல்லமை
யால் நான் அவர்களைத் தோற்கடிப்பேன்.
11பகைவர்கள் பலர் என்னை மீண்டும்
மீண்டும் சூழ்ந்துகொண்டார்கள். கர்த்த
ருடைய வல்லமையால் நான் அவர்களைத்
தோற்கடித்தேன்.
12தேனீக்களின் கூட்டத்தைப்போல பகை
வர்கள் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள்.
ஆனால் வேகமாக எரியும் பதரைப்போல்
அவர்கள் சீக்கிரமாக அழிந்துபோனார்கள்.
கர்த்தருடைய வல்லமையால் நான் அவர்
களைத் தோற்கடித்தேன்.
13என் பகைவர்கள் என்னைத் தாக்கி
அழிக்க முயன்றனர். ஆனால் கர்த்தர் எனக்கு
உதவினார்.
14கர்த்தர் எனக்குப் பெலனும் வெற்றியின்
பாடலுமாயிருக்கிறார். கர்த்தர் என்னைக்
காப்பாற்றுகிறார்!
15நல்லோரின் வீடுகளில் வெற்றியின்
கொண்டாட்டத்தை நீங்கள் கேட்கமுடியும்.
கர்த்தர் தமது மிகுந்த வல்லமையை மீண்டும்
காட்டினார்.
16கர்த்தருடைய கரங்கள் வெற்றியால்
உயர்த்தப்பட்டன. கர்த்தர் தமது மிகுந்த
வல்லமையை மீண்டும் காட்டினார்.
17நான் வாழ்வேன், மரிக்கமாட்டேன்.
கர்த்தர் செய்தவற்றை நான் கூறுவேன்.
18கர்த்தர் என்னைத் தண்டித்தார், ஆனால்
அவர் என்னைச் மரிக்கவிடமாட்டார்.
19நல்ல வாயிற்கதவுகளே, எனக்காகத் திற
வுங்கள், நான் உள்ளே வந்து கர்த்தரைத்
தொழுதுகொள்வேன்.
20அவை கர்த்தருடைய கதவுகள், நல்லோர்
மட்டுமே அவற்றின் வழியாகச் செல்ல
முடியும்.
21கர்த்தாவே, என் ஜெபத்திற்குப் பதிலளித்
ததற்காக நான் உமக்கு நன்றிக் கூறுவேன்.
நீர் என்னைக் காப்பாற்றியதற்காக நான்
உமக்கு நன்றிக் கூறுவேன்.
22கட்டிடம் கட்டுவோர் வேண்டாமெனத்
தள்ளிய கல்லே தலைக்கல்லாயிற்று.
23கர்த்தரே இதைச் செய்தார், அது அற்புத
மானதென நாங்கள் நினைக்கிறோம்.
24இந்நாள் கர்த்தர் செய்த நாள். இன்று
நாம் களிப்போடு மகிழ்ச்சியாயிருப்போம்!
25ஜனங்கள், “கர்த்தரைத் துதிப்போம்!
கர்த்தர் நம்மைக் காப்பாற்றினார்!
26கர்த்தருடைய நாமத்தால் வருகிற மனி
தனை வரவேற்றுக்கொள்ளுங்கள்” என்றார்
கள். ஆசாரியர்கள், “நாங்கள் உங்களைக்
கர்த்தருடைய வீட்டிற்கு வரவேற்கிறோம்!
27 கர்த்தரே தேவன், அவர் எங்களை
ஏற்றுக்கொள்கிறார். பலிக்காக ஆட்டுக்குட்டி
யைக் கட்டி, பலிபீடத்தின் கொம்புகளுக்குச்
சுமந்துச்செல்லுங்கள்” என்றார்கள்.
28கர்த்தாவே, நீரே என் தேவன், நான்
உமக்கு நன்றிக் கூறுகிறேன். நான் உம்மைத்
துதிக்கிறேன்.
29கர்த்தர் நல்லவர், எனவே அவரைத்
துதியுங்கள். அவரது உண்மை அன்பு
என்றென்றைக்கும் நிலைக்கும்.

## சங்கீதம் 119

### ஆலெப*

[1]பரிசுத்த வாழும் வாழ்க்கை ஜனங்கள் மகிழ்ச்சியாயிருக்கிறாாகள். அந்த ஜனங்கள் கர்த்தருடைய போதனைகளைப் பின்பற்று கிறார்கள்.
[2]கர்த்தருடைய உடன்படிக்கைக்குக் கீழ்ப் படிகிற ஜனங்கள் மகிழ்ச்சியாயிருக்கிறார் கள். அவர்கள் தங்கள் முழுஇருதயத்தோடும் கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறார்கள்.
[3]அந்த ஜனங்கள் தீயவற்றைச் செய் வதில்லை. அவர்கள் கர்த்தருக்குக் கீழ்ப் படிகிறார்கள்.
[4]கர்த்தாவே, நீர் எங்களுக்கு உமது கட்ட ளைகளைக் கொடுத்தீர். அந்தக் கட்டளை களுக்கு முற்றிலுமாகக் கீழ்ப்படியுமாறு கூறினீர்.
[5]கர்த்தாவே, நான் எப்போதும் உமது சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்தால் ஒருபோதும் அவமானப்படமாட்டேன்
[6]நான் உமது கட்டளைகளைப் படிக்கும் போது நான் ஒருபோதும் அவமானத்திற்கு உள்ளாக்கப்படுவதில்லை.
[7]உமது நியாயத்தையும் நன்மையையும் குறித்துப் படிக்கும்போது உம்மை உண்மை யாகவே மகிமைப்படுத்தமுடியும்.
[8]கர்த்தாவே, நான் உமது கட்டளை களுக்குக் கீழ்ப்படிவேன். எனவே தயவு செய்து என்னை விட்டு விலகாதேயும்!

### பேத

[9]ஒரு இளைஞன் எவ்வாறு பரிசுத்த வாழ்க்கை வாழமுடியும்? உமது வழிகாட்டு தலின்படி நடப்பதால் மட்டுமே.
[10]நான் என் முழுஇருதயத்தோடும் தேவ னுக்குச் சேவைசெய்ய முயல்வேன். தேவ னே, உமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய எனக்கு உதவும்.
[11]நான் மிகவும் கவனமாக உமது போத னைகளைக் கற்றுக்கொள்ளுகிறேன். ஏனெ னில் அப்போது நான் உமக்கெதிராகப் பாவம் செய்யமாட்டேன்.
[12]ஆண்டவரே நீர் ஸ்தோத்தரிக்கப்பட்ட வர். உமது சட்டங்களை எனக்குப் போதியும்.
[13]உமது ஞானமான முடிவுகளைப்பற்றி நான் பேசுவேன்.
[14]வேறெதைக் காட்டிலும் உமது உடன் படிக்கையைக் கற்பதில் களிப்படைவேன்.
[15]நான் உமது சட்ட விதிகளை கலந்து ஆலோசிப்பேன். உமது வாழ்க்கை முறை களைப் பின்பற்றுவேன்.
[16]நான் உமது சட்டங்களில் களிப்படை கிறேன். உமது வார்த்தைகளை நான் மறக்கமாட்டேன்.

### கிமெல்

[17]உமது ஊழியனாகிய என்னிடம் நல்ல வராயிரும். அதனால் நான் வாழ்ந்து உமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படியமுடியும்.
[18]கர்த்தாவே, எனது கண்களைத் திறவும். நான் உமது போதனைகளைப் பார்க்கட்டும், நீர் செய்த அற்புதமான காரியங்களைப் பற்றிப் படிக்கட்டும்.
[19]நான் இத்தேசத்தில் ஒரு அந்நியன். கர்த்தாவே, என்னிடமிருந்து உமது போத னைகளை மறைக்காதேயும்.
[20]நான் எப்போதும் உமது நியாயங்களைக் கற்க விரும்புகிறேன்.
[21]கர்த்தாவே, நீர் பெருமைக்காரர்களைக் குறைகூறுகிறீர். அவர்களுக்குத் தீமைகள் நேரிடும். அவர்கள் உமது கற்பனைகளுக்குக் கீழ்ப்படிய மறுக்கிறார்கள்.
[22]நான் வெட்கமுற்று அவமானப்படச் செய்யாதேயும். நான் உமது உடன்படிக் கைக்குக் கீழ்ப்படிகிறேன்.
[23]தலைவர்களும்கூட என்னைப்பற்றித் தீய வற்றைக் கூறினார்கள். ஆனால் கர்த்தாவே, நான் உமது பணியாள், நான் உமது சட்டங்களைக் கற்றுக்கொள்கிறேன்.
[24]உமது உடன்படிக்கை என் நல்ல நண்பனைபோல உள்ளது அது நல்ல அறிவுரையை எனக்குத் தருகிறது.

### டாலெத்

[25]நான் விரைவில் மரிப்பேன். கர்த்தாவே, கட்டளையிடும், என்னை வாழவிடும்.
[26]நான் என் வாழ்க்கையைப்பற்றி உமக்குக் கூறினேன். நீர் எனக்கு பதில ளித்தீர். இப்போது, உமது சட்டங்களை எனக்குக் கற்பியும்.
[27]கர்த்தாவே, உமது சட்டங்களை நான் புரிந்துகொள்ள எனக்கு உதவும். நீர் செய்த அற்புதமான காரியங்களை நான் படிக் கட்டும்.
[28]நான் வருத்தமடைந்து களைத்துப் போ னேன், நீர் கட்டளையிடும், என்னை மீண் டும் பலப்படுத்தும்.
[29]கர்த்தாவே, நான் பொய்யாக வாழாத படிச் செய்யும். உமது போதனைகளால் என்னை வழிநடத்தும்.
[30]கர்த்தாவே, நான் உம்மிடம் நேர்மை யாயிருப்பதைத் தேர்ந்தெடுத்தேன். உமது ஞானமுள்ள முடிவுகளை நான் கவனமாகக் கற்கிறேன்.
[31]கர்த்தாவே, நான் உமது உடன் படிக்கையில் உறுதியாயிருக்கிறேன். நான் வெட்கமடைய விடாதிரும்.

---

**ஆலெப்** எபிரெய அரிச்சுவடியின் முதலெழுத்து, எபிரெய மொழியில் இப்பாடலின் ஒவ்வொரு பகுதியும் அடுத்தடுத்தஎழுத்துக்களில் ஆரம்பிக்கும்.

[32]நான் மகிழ்ச்சியோடு உமது கட்டளை
களுக்குக் கீழ்ப்படிவேன். கர்த்தாவே, உமது
கட்டளைகள் என்னை மகிழ்ச்சியாக்கும்.

### ஏ

[33]கர்த்தாவே, உமது சட்டங்களை
எனக்குப் போதியும், நான் அவற்றைப்
பின்பற்றுவேன்.
[34]நான் புரிந்துகொள்ள உதவும். நான்
உமது போதனைகளுக்குக் கீழ்ப்படிவேன்.
நான் அவற்றிற்கு முற்றிலும் கீழ்ப்படிவேன்.
[35]கர்த்தாவே, என்னை உமது கட்டளை
களின் பாதையில் வழிநடத்தும். நான்
அவ்வாழ்க்கை முறையை உண்மையாகவே
நேசிக்கிறேன்.
[36]செல்வந்தனாவதைப் பற்றி நினைப்பதைப்
பார்க்கிலும் உமது உடன்படிக்கையைப்பற்றி
நினைக்க எனக்கு உதவும்.
[37]கர்த்தாவே, பயனற்ற காரியங்களைப்
பார்க்க விடாதேயும். உமது வழியில் வாழ
எனக்கு உதவும்.
[38]ஜனங்கள் உம்மை மதிக்கும்படி உமது
ஊழியனுக்கு உறுதியளித்தபடியே செய்யும்,
[39]கர்த்தாவே, நான் அஞ்சும் வெட்கத்தை
எடுத்துப்போடும். உமது ஞானமுள்ள முடிவு
கள் நல்லவை.
[40]பாரும், நான் உமது கட்டளைகளை
நேசிக்கிறேன். எனக்கு நல்லவராக இருந்து,
என்னை வாழவிடும்.

### வௌ

[41]கர்த்தாவே, உமது உண்மை அன்பைக்
காட்டும். நீர் வாக்களித்தபடி என்னைக்
காப்பாற்றும்.
[42]அப்போது என்னை அவமானப்படுத்திய
ஜனங்களுக்கு நான் பதிலளிக்கமுடியும். கர்த்
தாவே, நீர் கூறும் காரியங்களை நான்
உண்மையாகவே நம்புகிறேன்.
[43]உமது உண்மையான போதனைகளை
நான் எப்போதும் பேசட்டும். கர்த்தாவே,
நான் உமது ஞானமுள்ள முடிவுகளைச்
சார்ந்திருக்கிறேன்.
[44]கர்த்தாவே, என்றென்றைக்கும் எப்போ
தும் உமது போதனைகளைப் பின்பற்று
வேன்.
[45]நான் விடுதலையாவேன், ஏனெனில்
நான் உமது சட்டங்களுக்குக் கீழ்ப்படிய
மிகவும் முயல்கிறேன்.
[46]நான் உமது உடன்படிக்கையை அரசர்
களோடு கலந்து ஆலோசிப்பேன். அவர்கள்
என்னை ஒருபோதும் அவமானப்படுத்த
மாட்டார்கள்.
[47]கர்த்தாவே, உமது கட்டளைகளைக் கற்
பதில் களிப்படைகிறேன். நான் அக்கட்ட
ளைகளை நேசிக்கிறேன்.
[48]கர்த்தாவே, நான் உமது கட்டளை
களைத் துதிக்கிறேன். அவற்றை நேசிக்
கிறேன். நான் அவற்றைக் கற்பேன்.

### சாயீன்

[49]கர்த்தாவே, நீர் எனக்குத் தந்த வாக்குறு
தியை நினைவுக்கூரும். அவ்வாக்குறுதி
எனக்கு நம்பிக்கையைத் தருகிறது.
[50]நான் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன்,
நீர் எனக்கு ஆறுதல் கூறினீர். உமது
வார்த்தைகள் என்னை மீண்டும் வாழச்
செய்தன.
[51]என்னைவிட உயர்ந்தோராகக் கருதிக்
கொள்வோர் என்னைத் தொடர்ந்து அவ
மானப்படுத்திக் கொண்டிருந்தனர். ஆனால்
நான் உமது போதனைகளைப் பின்பற்று
வதை நிறுத்தவில்லை.
[52]உமது ஞானமுள்ள முடிவுகளை நான்
எப்போதும் நினைவுக்கூருகிறேன். கர்த்
தாவே, உமது ஞானமுள்ள முடிவுகள்
எனக்கு ஆறுதல் தருகின்றன.
[53]தீயோர் உமது போதனைகளைப் பின்
பற்றுவதை விட்டுவிடுகின்றனர், அதைப்
பார்க்கும்போது நான் கோபமடைகிறேன்.
[54]உமது சட்டங்கள் எனது வீட்டின்*
பாடல்களாகின்றன,
[55]கர்த்தாவே, நான் இரவில் உமது
நாமத்தை நினைவுக்கூருகிறேன், நான் உமது
போதனைகளை நினைவுக்கூருகிறேன்.
[56]நான் உமது கட்டளைகளுக்குக் கவன
மாகக் கீழ்ப்படிவதால் இவ்வாறு நிகழ்கிறது.

### கேத்

[57]கர்த்தாவே, உமது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிவதே என் கடமை என நான்
முடிவு செய்தேன்.
[58]கர்த்தாவே, நான் உம்மை முற்றிலும்
சார்ந்திருக்கிறேன். நீர் வாக்குறுதியளித்த
படியே என்னிடம் தயவாயிரும்.
[59]என் வாழ்க்கையைப்பற்றி மிகவும் கவன
மாகச் சிந்தித்தேன். உமது உடன்படிக்கைக்கு
நேராகத் திரும்பிவந்தேன்.
[60]தாமதமின்றி உமது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிவதற்கென விரைந்துவந்தேன்.
[61]தீயோர்களின் கூட்டமொன்று என்னைப்
பற்றி தீயவற்றைக் கூறின. ஆனால் கர்த்தா
வே, நான் உமது போதனைகளை மறக்க
வில்லை.
[62]உமது நல்ல முடிவுகளுக்காக நன்றி
கூறும்படி நள்ளிரவில் நான் எழுகிறேன்.
[63]உம்மைத் தொழுதுகொள்கிற ஒவ்வொரு
வருக்கும் நான் நண்பன். உமது கட்டளை
களுக்குக் கீழ்ப்படிகிற ஒவ்வொருவருக்கும்
நான் நண்பன்.
[64]கர்த்தாவே, உமது உண்மை அன்பு
பூமியை நிரப்புகிறது. உமது சட்டங்களை
எனக்குப் போதியும்.

---

**வீட்டில்** அல்லது “நான் வாழுகின்ற ஆலயத்தில்.”

### தேத்

65கர்த்தாவே, நீர் உமது பணியாளாகிய
எனக்கு நல்லவற்றைச் செய்தீர். நீர் செய்
வதாக எனக்கு உறுதியளித்தபடியே செய்தீர்.
66கர்த்தாவே, ஞானமுள்ள முடிவுகளை
எடுப்பதற்குரிய அறிவை எனக்குத் தாரும்.
உமது கட்டளைகளை நான் நம்புகிறேன்.
67நான் துன்புறும்முன்பு, பல தவறுகளைச்
செய்தேன். ஆனால் இப்போது, நான் உமது
கட்டளைகளுக்குக் கவனமாகக் கீழ்ப்படி
கிறேன்.
68தேவனே, நீர் நல்லவர், நீர் நல்ல
காரியங்களைச் செய்கிறீர். உமது சட்டங்
களை எனக்குப் போதியும்.
69என்னைக் காட்டிலும் உயர்ந்தோரெனத்
தங்களைக் கருதியவர்கள் என்னைப்பற்றித்
தீய பொய்களைக் கூறினார்கள். ஆனால்
கர்த்தாவே, நான் என் முழு இருதயத்தோடும்
உமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதைத்
தொடர்ந்தேன்.
70அந்த ஜனங்கள் மூடர்கள், ஆனால்
நானோ உமது போதனைகளைக் கற்பதில்
களிப்படைகிறேன்.
71துன்புறுவது எனக்கு நல்லது. நான்
உமது சட்டங்களைக் கற்றிருக்கிறேன்.
72கர்த்தாவே, உமது போதனைகள்
எனக்கு நல்லவை. ஆயிரம் பொன்னையும்
வெள்ளியையும் பார்க்கிலும் அவை
நல்லவை.

### யோட்

73கர்த்தாவே, நீர் என்னை உருவாக்கினீர்
உமது கைகளால் நீர் என்னைத் தாங்குகிறீர்.
உமது கட்டளைகளைக் கற்கவும் புரிந்து
கொள்ளவும் நீர் எனக்கு உதவும்.
74கர்த்தாவே, உம்மைப் பின்பற்றுவோர்
என்னைப் பார்க்கிறார்கள், என்னை மதிக்
கிறார்கள். நீர் சொல்வதை நான் நம்புவதால்
அவர்கள் மகிழ்ச்சியாயிருக்கிறார்கள்.
75கர்த்தாவே, உமது முடிவுகள் நியாய
மானவை என்பதை நான் அறிகிறேன்.
நீர் என்னைத் தண்டிப்பதும் நியாயமே
யாகும்.
76இப்போது, உமது உண்மை அன்பினால்
எனக்கு ஆறுதலளியும். நீர் உறுதியளித்த
படியே எனக்கு ஆறுதல் தாரும்.
77கர்த்தாவே, எனக்கு ஆறுதல் தந்து
என்னை வாழவிடும். நான் உண்மையாகவே
உமது போதனைகளில் களிப்படைகிறேன்.
78என்னிலும் உயர்ந்தோராகத் தங்களைக்
கருதும் ஜனங்கள் என்னைப்பற்றிப் பொய்
கூறினார்கள். அந்த ஜனங்கள் வெட்கமடைந்
தார்கள் என நான் நம்புகிறேன். கர்த்தாவே,
நான் உமது சட்டங்களைக் கற்கிறேன்.
79உமது உடன்படிக்கையை அறியும்படி
உம்மைப் பின்பற்றுவோர் என்னிடம்
திரும்பி வருவார்கள் என நான் நம்புகிறேன்.
80கர்த்தாவே, நான் உமது கட்டளை
களுக்குச் சிறிதும் பிசகாது கீழ்ப்படியச்
செய்யும், எனவே நான் வெட்கப்பட
மாட்டேன்.

### கப்

81நீர் என்னை மீட்கும்படி காத்திருந்து
சாகும் தறுவாயில் உள்ளேன். ஆனால்
கர்த்தாவே, நீர் கூறியவற்றை நான் நம்பு
கிறேன்.
82நீர் உறுதியளித்தவற்றிற்காக நான்
பார்த்துக்கொண்டிருக்கிறேன். என் கண்
களோ தளர்ந்துபோகின்றன. கர்த்தாவே,
நீர் எப்போது எனக்கு ஆறுதலளிப்பீர்?
83குப்பை மேட்டில் கிடக்கும் காய்ந்த
தோல் பைபோல ஆனாலும் நான் உமது
சட்டங்களை மறக்கமாட்டேன்.
84எத்தனை காலம் நான் உயிரோடிருப்
பேன்? கர்த்தாவே, என்னைத் துன்பப்படுத்து
கிற ஜனங்களை நீர் எப்போது தண்டிப்பீர்?
85சில பெருமைக்காரர்கள் தங்கள் பொய்
களால் என்னைக் குத்தினார்கள். அது
உமது போதனைகளுக்கு எதிரானது.
86கர்த்தாவே, ஜனங்கள் உமது கட்டளை
களையெல்லாம் நம்பமுடியும். அவர்கள் என்
னைத் தவறாகத் துன்புறுத்துகிறார்கள்,
எனக்கு உதவும்!
87அந்த ஜனங்கள் ஏறக்குறைய என்னை
அழித்துவிட்டார்கள். ஆனால் நான் உமது
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதை நிறுத்த
வில்லை.
88கர்த்தாவே, உமது உண்மை அன்பைக்
காட்டி என்னை வாழவிடும். நீர் கூறிய
காரியங்களை நான் செய்வேன்.

### லாமேட்

89கர்த்தாவே, உமது வார்த்தை என்றென்
றும் தொடரும். உமது வார்த்தை என்றென்
றும் பரலோகத்தில் தொடரும்.
90நீர் என்றென்றும் எப்போதும் நேர்மை
யானவர். கர்த்தாவே, நீர் பூமியை உண்டாக்
கினீர், அது இன்னும் நிலைத்திருக்கிறது.
91உமது சட்டங்களாலும், அவற்றிற்கு ஒரு
அடிமையைப் போன்று பூமி கீழ்ப்படி
வதாலும் அது இன்றுவரை நிலைத்திருக்
கிறது.
92உமது போதனைகள் நண்பர்களைப்
போல் எனக்கு இல்லாவிட்டால் எனது
துன்பங்களே என்னை அழித்திருக்கும்.
93கர்த்தாவே, நான் உமது கட்டளைகளை
என்றைக்கும் மறக்கமாட்டேன். ஏனெனில்
அவை என்னை வாழவைக்கின்றன.
94கர்த்தாவே, நான் உம்முடையவன்,
எனவே என்னைக் காப்பாற்றும். ஏனெனில்
நான் உம்முடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்
படிவதற்கு மிகவும் முயல்கிறேன்.

95தீயோர் என்னை அழிக்க முயன்றார்கள்.
ஆனால் உமது உடன்படிக்கை என்னை
ஞானமுள்ளவனாக்கிற்று.
96உமது சட்டங்களைத் தவிர, எல்லா
வற்றிற்கும் ஒரு எல்லை உண்டு.

### மேம்

97கர்த்தாவே, நான் உமது போதனைகளை
நேசிக்கிறேன். எல்லா வேளைகளிலும் நான்
அவற்றைக் குறித்துப் பேசுகிறேன்.
98கர்த்தாவே, உமது கட்டளைகள் என்
னை என் பகைவரைக் காட்டிலும் ஞான
முள்ளவனாக்கும். உமது சட்டம் எப்போதும்
என்னோடிருக்கும்.
99உமது உடன்படிக்கையை நான்
கற்பதால் என் ஆசிரியர்களைக் காட்டிலும்
நான் ஞானமுள்ளவன்.
100நான் உமது கட்டளைகளின்படி
நடப்பதால், முதியத்தலைவர்களைக் காட்டி
லும் அதிகமாகப் புரிந்துக்கொள்கிறேன்.
101வழியில் ஒவ்வொரு அடியிலும் நான்
தவறான பாதையில் செல்லாதபடி காக்கிறீர்.
எனவே, கர்த்தாவே, நீர் கூறுகின்றவற்றை
நான் செய்ய முடிகிறது.
102கர்த்தாவே, நீரே என் ஆசிரியர். ஆகை
யால் உமது சட்டங்களுக்குக் கீழ்ப்படிவதை
நிறுத்தமாட்டேன்.
103என் வாயிலுள்ள தேனைக்காட்டிலும்
உமது வார்த்தைகள் சுவையானவை.
104உமது போதனைகள் என்னை ஞான
முள்ளவனாக மாற்றின. எனவே நான்
தவறான போதனைகளை வெறுக்கிறேன்.

### நூன்

105கர்த்தாவே, உமது வார்த்தைகள் என்
பாதைக்கு ஒளி காட்டும் விளக்காகும்.
106உமது சட்டங்கள் நல்லவை. நான்
அவற்றிற்குக் கீழ்ப்படிவேனென உறுதியளிக்
கிறேன். நான் என் வாக்குறுதியை நிறை
வேற்றுவேன்.
107கர்த்தாவே, நான் நீண்டகாலம் துன்ப
மடைந்தேன். தயவுசெய்து நான் மீண்டும்
வாழும்படி கட்டளையிடும்.
108கர்த்தாவே, என் துதியை ஏற்றுக்
கொள்ளும். உமது சட்டங்களை எனக்குப்
போதியும்.
109என் வாழ்க்கை எப்போதும் ஆபத்துள்
ளதாயிருக்கிறது. ஆனால் நான் உமது
போதனைகளை மறக்கவில்லை.
110தீயோர் என்னைக் கண்ணியில் சிக்க
வைக்கப் பார்க்கிறார்கள். ஆனால் நான்
உமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படியா
மலிருந்ததில்லை.
111கர்த்தாவே, நான் உமது உடன்
படிக்கையை என்றென்றைக்கும் பின்பற்று
வேன். அது என்னை மிகவும் மகிழ்ச்சிக்
குள்ளாக்குகிறது.
112உமது சட்டங்களுக்குக் கீழ்ப்படிவதற்கு
நான் எப்போதும் கடினமாக முயல்வேன்.

### சாமெக்

113கர்த்தாவே, உம்மிடம் முற்றிலும் நேர்
மையாக இராத ஜனங்களை நான் வெறுக்
கிறேன். ஆனால் நான் உமது போதனை
களை நேசிக்கிறேன்.
114என்னை மூடிமறைத்துப் பாதுகாத்துக்
கொள்ளும். கர்த்தாவே, நீர் கூறுகிற ஒவ்
வொன்றையும் நான் நம்புகிறேன்.
115கர்த்தாவே, தீய ஜனங்கள் என்னருகே
வரவிடாதேயும். நான் என் தேவனுடைய
கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவேன்.
116கர்த்தாவே, நீர் வாக்குறுதியளித்தபடியே
என்னைத் தாங்கி உதவும். நானும் வாழ்
வேன். நான் உம்மை நம்புகிறேன், நான்
ஏமாற்றமடையாதபடிச் செய்யும்
117கர்த்தாவே, எனக்கு உதவும், நான்
காப்பாற்றப்படுவேன். நான் உமது கட்டளை
களை என்றென்றைக்கும் கற்பேன்.
118கர்த்தாவே, உமது சட்டங்களை மீறுகிற
ஒவ்வொருவரையும் நீர் தள்ளிவிடுகிறீர்.
ஏனெனில் அந்த ஜனங்கள் உம்மைப் பின்
பற்றச் சம்மதித்தபோது பொய் கூறினார்கள்.
119கர்த்தாவே, நீர் பூமியிலுள்ள தீயோரைக்
களிம்பைப்போல் அகற்றி விடுகிறீர். எனவே
நான் உமது உடன்படிக்கையை என்றென்
றைக்கும் நேசிப்பேன்.
120கர்த்தாவே, நான் உம்மைக்கண்டு பயப்
படுகிறேன். நான் உமது சட்டங்களுக்குப்
பயந்து அவற்றை மதிக்கிறேன்.

### ஆயின்

121நான் நியாயமும் நல்லதுமானவற்றைச்
செய்கிறேன். கர்த்தாவே, என்னைத் துன்
புறுத்த விரும்புவோரிடம் என்னை ஒப்பு
வியாதேயும்.
122என்னிடம் நல்லவராக இருக்க உறுதி
யளியும். நான் உமது ஊழியன். கர்த்தாவே,
அந்தப் பெருமைக்காரர்கள் என்னைத் துன்
புறுத்த விடாதேயும்.
123கர்த்தாவே, உம்மிடமிருந்து உதவியை
எதிர்நோக்கியும், ஒரு நல்ல வார்த்தையை
எதிர்பார்த்தும், என் கண்கள் தளர்ந்து
போய்விட்டன.
124நான் உமது ஊழியன். உமது உண்மை
அன்பை எனக்குக் காட்டும். உமது சட்டங்
களை எனக்குப் போதியும்.
125நான் உமது ஊழியன். உமது உடன்
படிக்கையை நான் அறிந்துகொள்ளும்
படியான புரிந்துகொள்ளுதலைப் பெற
எனக்கு உதவும்.
126கர்த்தாவே, நீர் ஏதேனும் செய்வதற்கு
இதுவே தக்கநேரம். ஜனங்கள் உமது சட்டத்
தை மீறிவிட்டார்கள்.
127கர்த்தாவே, மிகவும் தூய்மையான

பொன்னைக் காட்டிலும் நான் உமது
கட்டளைகளை நேசிக்கிறேன்.
128 நான் உமது கட்டளைகளுக்கெல்லாம்
கவனமாகக் கீழ்ப்படிகிறேன். தவறான போத
னைகளை நான் வெறுக்கிறேன்.

### பே

129 கர்த்தாவே, உமது உடன்படிக்கை
அற்புதமானது. அதனால் நான் அதைப்
பின்பற்றுகிறேன்.
130 ஜனங்கள் உமது வார்த்தையைப் புரிந்து
கொள்ளத் தொடங்கும்போது அது சரியான
படி வாழ்வதற்கு வழிகாட்டும் ஒளியைப்
போன்றிருக்கிறது. உமது வார்த்தை
சாதாரண ஜனங்களையும் ஞானமுள்ளோ
ராக்கும்.
131 கர்த்தாவே, நான் உண்மையாகவே
உமது கட்டளைகளைக் கற்க விரும்பு
கிறேன். நான் சிரமமாய் மூச்சு விட்டுக்
கொண்டு பொறுமையின்றிக் காத்திருக்கும்
மனிதனைப்போல் இருக்கிறேன்.
132 தேவனே, என்னைப் பாரும், என்னிடம்
தயவாயிரும். உமது நாமத்தை நேசிக்கும்
ஜனங்களுக்குத் தகுந்தவையான காரியங்
களைச் செய்யும்.
133 கர்த்தாவே, நீர் வாக்குறுதி அளித்தபடி
என்னை வழிநடத்தும். தீமையேதும் எனக்கு
நிகழாதபடி பார்த்துக்கொள்ளும்.
134 கர்த்தாவே, என்னைத் துன்புறுத்து
வோரிடமிருந்து என்னைக் காப்பாற்றும்.
நான் உமது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிவேன்,
135 கர்த்தாவே, உமது ஊழியனை ஏற்றுக்
கொள்ளும், உமது சட்டங்களை எனக்குப்
போதியும்.
136 ஜனங்கள் உமது போதனைகளுக்குக்
கீழ்ப்படியாததால் என் கண்ணீர் ஆற்றைப்
போல பெருக்கெடுத்து ஓடுகிறது.

### த்சாதே

137 கர்த்தாவே, நீர் நல்லவர், உமது சட்டங்
கள் நியாயமானவை.
138 நீர் உமது உடன்படிக்கையில் எங்
களுக்கு நல்ல சட்டங்களைத் தந்தீர். நாங்கள்
அவற்றை உண்மையாகவே நம்பமுடியும்.
139 என் ஆழமான உணர்வுகள் என்னை
சோர்வடையச் செய்கின்றன. என் பகை
வர்கள் உமது கட்டளைகளை மறந்தபடியால்
நான் மிகவும் கலங்கியிருக்கிறேன்.
140 கர்த்தாவே, உமது வார்த்தைகளை
நாங்கள் நம்பமுடியும் என்பதற்குச் சான்று
கள் இருக்கிறது. நான் அதை நேசிக்கிறேன்.
141 நான் ஒரு இளைஞன், ஜனங்கள் என்
னை மதிப்பதில்லை. ஆனால் நான் உமது
கட்டளைகளை மறக்கமாட்டேன்.
142 கர்த்தாவே, உமது நன்மை என்றென்
றைக்கும் இருக்கும். உமது போதனைகள்
நம்பக்கூடியவை.
143 எனக்குத் தொல்லைகளும் கொடிய
காலங்களும் இருந்தன. ஆனால் நான் உமது
கட்டளைகளில் களிப்படைகிறேன்.
144 உமது உடன்படிக்கை என்றென்
றைக்கும் நல்லது. நான் வாழும்படி, அதைப்
புரிந்துக்கொள்ள எனக்கு உதவும்.

### கோப்

145 கர்த்தாவே, என் முழு இருதயத்தோடும்
உம்மைக் கூப்பிடுகிறேன். எனக்குப் பதில்
தாரும்! நான் உமது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிகிறேன்.
146 கர்த்தாவே, நான் உம்மைக் கூப்பிடு
கிறேன். என்னைக் காப்பாற்றும்! நான்
உமது உடன்படிக்கைக்குக் கீழ்ப்படிவேன்.
147 நான் உம்மிடம் ஜெபம் செய்வதற்கு
அதிகாலையில் எழுந்தேன். நீர் சொல்
பவற்றை நான் நம்புகிறேன்.
148 உமது வார்த்தைகளைக் கற்பதற்கு இர
வில் வெகுநேரம் நான் விழித்திருந்தேன்.
149 உமது முழு அன்பினாலும் எனக்குச்
செவிகொடும். கர்த்தாவே, நீர் சரியெனக்
கூறும் காரியங்களைச் செய்து, என்னை
வாழவிடும்.
150 ஜனங்கள் எனக்கெதிராக கொடிய
திட்டங்களை வகுக்கிறார்கள். அந்த ஜனங்
கள் உமது போதனைகளைப் பின்பற்ற
வில்லை.
151 கர்த்தாவே, நீர் எனக்கு நெருக்கமான
வர். உமது கட்டளைகள் நம்பக்கூடியவை.
152 பல காலத்திற்கு முன்பு நான் உமது
உடன்படிக்கையின் மூலம், உமது போதனை
கள் என்றென்றும் தொடரும் என்பதை
நான் கற்றேன்.

### ரேஷ்

153 கர்த்தாவே, என் துன்பங்களைக் கண்டு,
என்னை விடுவியும், நான் உமது போதனை
களை மறக்கவில்லை.
154 கர்த்தாவே, எனக்காக நீர் போரிட்டு,
என்னைக் காப்பாற்றும். நீர் வாக்குறுதி
அளித்தபடி என்னை வாழவிடும்.
155 தீயோர் உமது சட்டங்களைப் பின்
பற்றாததால் அவர்கள் வெற்றிபெற மாட்டார்
கள்.
156 கர்த்தாவே, நீர் மிகுந்த தயவுள்ளவர்.
நீர் சரியென நினைப்பவற்றைச் செய்யும்,
என்னை வாழவிடும்.
157 என்னைத் துன்புறுத்த முயலும் பல
பகைவர்கள் எனக்குண்டு. ஆனால் நான்
உமது உடன்படிக்கையைப் பின்பற்றுவதை
நிறுத்தவில்லை.
158 நான் அந்தத் துரோகிகளைப் பார்க்
கிறேன், கர்த்தாவே, அவர்கள் உமது வார்த்
தைகளுக்குக் கீழ்ப்படிவதில்லை. நான் அதை
வெறுக்கிறேன்.
159 பாரும், நான் உமது கட்டளைகளுக்குக்
கீழ்ப்படிய மிகவும் முயல்கிறேன். கர்த்தாவே,

உமது முழுமையான அன்பினால், என்னை
வாழவிடும்.
160 கர்த்தாவே, துவக்கம் முதலாகவே உமது
வார்த்தைகள் எல்லாம் நம்பக்கூடியவை.
உமது நல்ல சட்டம் என்றென்றும் நிலைத்
திருக்கும்.

### ஷீன்

161 எக்காரணமுமின்றி வல்லமையுள்ள
தலைவர்கள் என்னைத் தாக்கினார்கள்.
ஆனால் நான் உமது சட்டத்திற்கு மட்டுமே
பயந்து, அதை மதிக்கிறேன்.
162 கர்த்தாவே, மிகுந்த பொக்கிஷத்தைக்
கண்டெடுத்த மனிதன் பெறும் சந்தோஷத்
தைப்போல உமது வார்த்தைகள் என்னை
மகிழ்விக்கின்றன.
163 நான் பொய்களை வெறுக்கிறேன்! நான்
அவற்றை அருவருக்கிறேன்! ஆனால் கர்த்தா
வே, நான் உமது போதனைகளை நேசிக்
கிறேன்.
164 உமது நல்ல சட்டங்களுக்காக ஒரு
நாளில் ஏழுமுறை உம்மைத் துதிக்கிறேன்.
165 உமது போதனைகளை நேசிக்கும் ஜனங்
கள் உண்மையான சமாதானத்தைக் காண்
பார்கள். அந்த ஜனங்களை வீழ்த்த எதனா
லும் முடியாது.
166 கர்த்தாவே, நீர் என்னைக் காப்பாற்றுவீ
ரெனக் காத்துக்கொண்டிருக்கிறேன். நான்
உமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தேன்.
167 நான் உமது உடன்படிக்கையைப் பின்
பற்றினேன். கர்த்தாவே, நான் உமது சட்டங்
களை மிகவும் நேசிக்கிறேன்.
168 நான் உமது உடன்படிக்கைக்கும் கட்ட
ளைகளுக்கும் கீழ்ப்படிகிறேன். கர்த்தாவே,
நான் செய்தவற்றையெல்லாம் நீர் அறிந்
திருக்கிறீர்.

### தௌ

169 கர்த்தாவே, என் மகிழ்ச்சியான பாட
லுக்குச் செவிகொடும். நீர் வாக்குறுதி
தந்தபடியே என்னை ஞானமுள்ளவனாக்கும்.
170 கர்த்தாவே, என் ஜெபத்திற்குச் செவி
கொடும். நீர் வாக்களித்தபடி என்னைக்
காப்பாற்றும்.
171 நான் துதிப் பாடல்களைப் பாடிக்
களிப்படைகிறேன். ஏனெனில் நீர் உமது
சட்டங்களை எனக்குப் போதித்தீர்.
172 உமது வார்த்தைகளுக்கு மறு உத்தரவு
கொடுக்க எனக்கு உதவும், எனது பாடல்
களை நான் பாடட்டும். கர்த்தாவே, உமது
எல்லா சட்டங்களும் நல்லவை.
173 என்னருகில் வந்து எனக்கு உதவும்.
ஏனெனில் நான் உமது கட்டளைகளைப்
பின்பற்றுவதெனத் தீர்மானித்தேன்.
174 கர்த்தாவே, நீர் என்னைக் காப்பாற்ற
வேண்டுமென விரும்புகிறேன். ஆனால்
உமது போதனைகள் என்னை மகிழ்விக்
கின்றன.
175 கர்த்தாவே, நான் வாழ்ந்து உம்மைத்
துதிக்கட்டும். உமது சட்டங்கள் எனக்கு
உதவட்டும்.
176 காணாமற்போன ஆட்டைப்போன்று
நான் அலைந்து திரிந்தேன். கர்த்தாவே,
என்னைத் தேடிவாரும். நான் உமது ஊழி
யன், நான் உமது கட்டளைகளை மறக்க
வில்லை.

## சங்கீதம் 120

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்.

1 நான் தொல்லைகளில் சிக்குண்டிருந்த
போது, உதவிக்காக நான் கர்த்தரைக்
கூப்பிட்டேன், அவர் என்னைக் காப்பாற்றி
னார்!
2 கர்த்தாவே, என்னைப்பற்றிப் பொய்
கூறியவர்களிடமிருந்து என்னைக் காப்பாற்
றும். உண்மையில்லாதவற்றை அந்த ஜனங்
கள் கூறினார்கள்.
3 பொய்யரே, நீங்கள் பெறப்போவதை
அறிவீர்களா? நீங்கள் அடையப்போவதை
அறிவீர்களா?
4 வீரனின் கூரிய அம்புகளும், சுடும்
தழலும் உன்னைத் தண்டிக்கும்.
5 பொய்யர்களின் அருகே வாழ்வது
மேசேக்கில் வாழ்வதைப் போன்றதும் கேதா
ரின் கூடாரங்களண்டையில் வாழ்வதைப்
போன்றதுமாகும்.*
6 சமாதானத்தை வெறுக்
கிற ஜனங்களோடு நான் நீண்டகாலம்
வாழ்ந்திருக்கிறேன்.
7 நான் சமாதானம் வேண்டும் என்றேன்.
ஆனால் அவர்கள் போரை விரும்புகிறார்கள்.

## சங்கீதம் 121

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்

1 நான் மலைகளுக்கு நேராகப் பார்க்
கிறேன், ஆனால் எனக்கு உதவி உண்மை
யாகவே எங்கிருந்து வரப்போகிறது?
2 எனக்கு உதவி பரலோகத்தையும் பூமி
யையும் படைத்த கர்த்தரிடமிருந்து வரும்,
3 தேவன் உன்னை விழவிடமாட்டார்.
உன்னைப் பாதுகாப்பவர் தூங்கமாட்டார்.
4 இஸ்ரவேலின் பாதுகாவலர் தூங்குவதில்
லை. தேவன் ஒருபோதும் உறங்கார்.
5 கர்த்தர் உன் பாதுகாவலர். அவரது
மிகுந்த வல்லமையால் உன்னைப் பாதுகாக்
கிறார்.
6 பகல் வேளையில் சூரியன் உன்னைத்
துன்புறுத்தாது. இரவில் சந்திரன் உன்னைத்
துன்புறுத்தாது.

---

**மேசேக்கில் … போன்றதுமாகும்** இவ்விடங்களில் வாழ்ந்த ஜனங்கள் போரில் சண்டையில் புகழ் பெற்றவர்கள்.

[7]எல்லா ஆபத்துக்களிலிருந்தும் கர்த்தர்
உன்னைக் காப்பாற்றுவார். கர்த்தர் உன்
ஆத்துமாவைக் காப்பாற்றுவார்.
[8]நீ வரும்போதும் போகும்போதும் கர்த்தர்
உனக்கு உதவுவார். இப்போதும் என்றென்
றும் கர்த்தர் உனக்கு உதவுவார்.

## சங்கீதம் 122

**ஆலயத்திற்குப் போகும்போது பாடும்படி தாவீது அளித்த பாடல்**

[1]ஜனங்கள், "கர்த்தருடைய ஆலயத்திற்குப்
போவோம்" என்று கூறியபோது நான்
மிகவும் மகிழ்ந்தேன்.
[2]இதோ, நாங்கள் எருசலேமின் வாசல்கள்
அருகே நின்று கொண்டிருக்கிறோம்.
[3]இது புதிய எருசலேம். ஒரே நகரமாக
இது மீண்டும் கட்டியெழுப்பப்பட்டிருக்கிறது.
[4]இங்கே இஸ்ரவேலின் கோத்திரங்கள்
போவதுண்டு. கர்த்தருடைய நாமத்தைத்
துதிப்பதற்கு இஸ்ரவேல் ஜனங்கள் அங்கே
செல்வார்கள். அவை கர்த்தருக்குரிய கோத்
திரங்கள் ஆகும்.
[5]அங்கு அரசர்கள் ஜனங்களை நியாயந்
தீர்ப்பதற்குத் தங்கள் சிங்காசனங்களை நிறு
வினார்கள். தாவீதின் குடும்பத்து அரசர்கள்
அங்குத் தங்கள் சிங்காசனங்களை அமைத்
தார்கள்.
[6]எருசலேமின் சமாதானத்திற்காக ஜெபம்
செய்யுங்கள். "உம்மை நேசிக்கும் ஜனங்கள்
அங்கு சமாதானத்தைக் காண்பார்கள் என
நான் நம்புகிறேன். உங்கள் வீடுகளின்
உள்ளே சமாதானம் நிலவும் என நான்
நம்புகிறேன். உங்கள் பெரிய கட்டிடங்களில்
பாதுகாப்பு இருக்கும் என நான் நம்பு
கிறேன்."
[7]என் சகோதரர்கள், சுற்றத்தினர் ஆகியோ
ரின் நன்மைக்காக, இங்கு சமாதானம் நிலவ
வேண்டுமென நான் ஜெபிக்கிறேன்.
[8]நமது தேவனாகிய கர்த்தருடைய ஆலயத்
தின் நன்மைக்காக, இந்நகரில் நன்மைகள்
நிகழ வேண்டுமென நான் ஜெபம் செய்
கிறேன்.

## சங்கீதம் 123

**ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்**

[1]தேவனே, நான் மேலே நோக்கி, உம்
மிடம் ஜெபம் செய்கிறேன். நீர் பரலோகத்
தில் அரசராக வீற்றிருக்கிறீர்.
[2]தங்களுக்குத் தேவையான பொருள்களுக்
காக அடிமைகள் தங்களின் எஜமானரைச்
சார்ந்திருக்கிறார்கள்.
[3]அவ்வாறே, நாமும் நமது தேவனாகிய
கர்த்தரைச் சார்ந்திருக்கிறோம். நம்மிடம்
இரக்கம் காட்டுமாறு நாம் தேவனுக்காகக்
காத்திருக்கிறோம்.
[4]கர்த்தாவே, எங்களிடம் இரக்கமாயிரும்.
நாங்கள் நீண்டகாலம் அவமானப்படுத்தப்
பட்டதால் எங்களிடம் கிருபையாயிரும்.
[5]நாங்கள் வெறுப்படையும் அளவுக்கு
இழிவுரைகளையும் அவமானங்களையும்,
சோம்பேறி ஜனங்களாகிய பெருமைக்காரர்
களினால் பெற்றிருந்தோம். பிறரைக் காட்டி
லும் தாங்கள் மேலானவர்கள் என்று அவர்
கள் நினைக்கிறார்கள்.

## சங்கீதம் 124

**ஆலயத்திற்குப் போகும்போது பாடுவதற்கென்று தாவீது அளித்த பாடல்.**

[1]கர்த்தர் நமது சார்பில் இருந்திரா
விட்டால், நமக்கு என்ன நேர்ந்திருக்கும்?
இஸ்ரவேலே, எனக்குப் பதில் கூறு.
[2]ஜனங்கள் நம்மைத் தாக்கியபோது, கர்த்
தர் நமது சார்பில் இருந்திராவிட்டால்
நமக்கு என்ன நேர்ந்திருக்கும்?
[3]கோபம் வந்தபோதெல்லாம் நம் பகை
வர்கள் நம்மை உயிரோடு விழுங்கி
யிருப்பார்கள்.
[4]நம்மை அடித்துச்செல்லும் பெருவெள்ளத்
தைப் போன்றும், நம்மை அமிழ்த்துவிடும்
நதியைப் போன்றும் நம் பகைவர்களின்
சேனைகள் நம்மிடம் நடந்து கொண்
டிருக்கும்.
[5]நம் வாய்மட்டும் எழுந்து நம்மை
அமிழ்த்திவிடும் தண்ணீரைப்போன்று அப்
பெருமைக்காரர்கள் நடந்துக்கொண்டிருப்
பார்கள்.
[6]கர்த்தரைத் துதியுங்கள்! நம் பகைவர்கள்
நம்மைப் பிடித்துக்கொல்வதற்குக் கர்த்தர்
அனுமதிக்கவில்லை.
[7]வலையில் அகப்பட்டுப் பின்னர் தப்பிச்
சென்ற பறவையைப்போல நாம் இருக்
கிறோம். வலை அறுந்தது, நாம் தப்பினோம்.
[8]நமக்கு உதவி கர்த்தரிடமிருந்து வந்தது.
கர்த்தரே பரலோகத்தையும் பூமியையும்
உண்டாக்கினார்.

## சங்கீதம் 125

**ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்**

[1]கர்த்தருக்குள் நம்பிக்கை வைக்கிறவர்கள்
சீயோன் மலையைப் போன்றிருப்பார்கள்.
அவர்கள் அசைக்கப்படுவதில்லை. அவர்கள்
என்றென்றைக்கும் நிலைத்திருப்பார்கள்.
[2]எருசலேமைச் சுற்றிலும் மலைகள்
உள்ளதுபோல, கர்த்தர் அவரது ஜனங்
களைச் சுற்றிலும் இருக்கிறார். என்றென்
றைக்கும் எப்போதும் அவர் தமது ஜனங்
களைக் காப்பார்.
[3]நல்ல ஜனங்களின் நாட்டைக் கொடிய
ஜனங்கள் நிரந்தரமாக ஆளப்போவதில்லை.

அவ்வாறு நிகழ்ந்தால் நல்லோரும்கூட தீய
காரியங்களைச் செய்ய ஆரம்பிப்பார்கள்.
4கர்த்தாவே, நல்லோருக்கு நல்லவராக
இரும். பரிசுத்த இருதயம் உள்ளோரிடம்
நல்லவராக இரும்.
5கொடிய ஜனங்கள் தவறான காரியங்
களைச் செய்கிறார்கள். அக்கொடியோரைக்
கர்த்தர் தண்டிப்பார். இஸ்ரவேலில் சமா
தானம் நிலவட்டும்!

## சங்கீதம் 126

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்

1கர்த்தர் நம்மை மீண்டும் விடுவிக்கும்
போது அது ஒரு கனவைப் போன்றிருக்கும்.
2நாம் சிரித்துக்கொண்டும் மகிழ்ச்சியுடன்
பாடல்களைப் பாடிக்கொண்டும் இருப்போம்!
பிற தேசத்து ஜனங்கள், “இஸ்ரவேலின்
ஜனங்களுக்குக் கர்த்தர் ஒரு அற்புதமான
காரியத்தைச் செய்தார்!” என்பார்கள்.
3ஆம், கர்த்தர் அந்த அற்புதமான காரியத்
தை நமக்குச் செய்ததால் நாம் மகிழ்ச்சி
யடைய வேண்டும்.
4கர்த்தாவே, பாலைவன நீரூற்றுக்கள்
மீண்டும் ஓடிவரும் வெள்ளத்தின் தண்ணீரால்
நிரம்புவதைப்போல எங்களை மீண்டும்
விடுவியும்.
5ஒருவன் விதைகளை விதைக்கும்போது
துக்கமாயிருக்கலாம். ஆனால் அவன் பயிர்
களின் பலனை அறுவடை செய்யும்போது
மகிழ்ச்சியோடிருப்பான்.
6அவன் விதைகளை வயலுக்கு எடுத்துச்
செல்லும்போது அழக்கூடும், ஆனால் அறு
வடையைக் கொண்டு வரும்போது அவன்
மகிழ்ச்சியோடிருப்பான்.

## சங்கீதம் 127

### ஆலயத்திற்குப் போகும்போது பாடுவதற்கான சாலொமோனின் பாடல்

1கர்த்தர் ஒரு வீட்டைக் கட்டாவிட்டால்
அதைக் கட்டுகிறவன் காலத்தை வீணாக்கு
கிறான். கர்த்தர் ஒரு நகரத்தைக் கண்காணிக்
காவிட்டால் அதைக் காப்போர் காலத்தை
வீணாக்குகிறார்கள்.
2வாழ்க்கை வாழ்வதற்காக காலையில்
எழுவதும் இரவில் வெகுநேரம் விழித்திருப்ப
தும் பொழுதை வீணாக்குவதாகும். தேவன்
தாம் நேசிக்கிற ஜனங்களை அவர்கள்
உறங்கும்போது கவனித்துக் காக்கிறார்.
3பிள்ளைகள் கர்த்தரால் வரும் பரிசாகும்.
குழந்தைகள் ஒரு தாயின் சரீரத்திலிருந்து
வரும் வெகுமதியாகும்.
4ஒரு இளைஞனின் மகன்கள் ஒரு வீரன்
அம்புகளை வைத்திருக்கும் பையிலுள்ள
அம்புகளுக்கு ஒப்பாவார்கள்.
5தன் அம்புகள் வைக்கும் பையை மகன்
களால் நிரப்பும் மனிதன் மிகவும் மகிழ்ச்சி
யடைவான்.
6அம்மனிதன் ஒருநாளும் தோற்கடிக்கப்பட
மாட்டான். அவனது பகைவர்களுக்கு எதி
ராகப் பொது இடங்களில் போராடி அவனது
மகன்கள் அவனைக் காப்பார்கள்.

## சங்கீதம் 128

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்

1கர்த்தரைப் பின்பற்றுகிறவர்கள் எல்லோ
ரும் மகிழ்ச்சியாயிருக்கிறார்கள். தேவன்
விரும்புகிறபடியே அவர்கள் வாழ்கிறார்கள்.
2நீங்கள் உழைத்துப்பெறுகிற பொருள்
களால் களிப்படைவீர்கள். நீங்கள் மகிழ்ச்சி
யாயிருப்பீர்கள், உங்களுக்கு நல்லவை
நிகழும்.
3வீட்டில் உன் மனைவி பலன்தரும்
திராட்சைக் கொடியைப் போல் இருப்பாள்.
மேசையைச் சுற்றிலும் உன் பிள்ளைகள்
நீ வளர்க்கும் ஒலிவ மரங்களைப்போன்று
இருப்பார்கள்.
4கர்த்தர் தம்மைப் பின்பற்றுவோரை உண்
மையாகவே இவ்வாறு ஆசீர்வதிப்பார்.
5கர்த்தர் உங்களைச் சீயோனிலிருந்து
ஆசீர்வதிப்பார் என நம்புகிறேன். வாழ்க்கை
முழுவதும் எருசலேமின் ஆசீர்வாதங்களால்
நீ களிப்படைவாய் என நான் நம்புகிறேன்.
6நீ உன் பேரப்பிள்ளைகளை காணும்படி
வாழ்வாய் என நான் நம்புகிறேன். இஸ்ர
வேலில் சமாதானம் நிலவட்டும்!

## சங்கீதம் 129

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்

1என் வாழ்க்கை முழுவதும் எனக்குப்
பகைவர்கள் பலர் இருந்தனர். இஸ்ரவேலே,
அந்தப் பகைவர்களைப் பற்றிச்சொல்.
2என் வாழ்க்கை முழுவதும் எனக்குப்
பகைவர்கள் பலர் இருந்தனர். ஆனால்
அவர்கள் என்னை மேற்கொள்ளவில்லை.
3என் முதுகில் ஆழமான காயங்கள்
ஏற்படும்வரை அவர்கள் என்னை அடித்
தார்கள். எனக்கு நீளமான, ஆழமான காயங்
கள் ஏற்பட்டன.
4ஆனால் நல்லவராகியக் கர்த்தர்
கயிறுகளை அறுத்துக் கொடியோரிட
மிருந்து என்னை விடுவித்தார்.
5சீயோனை வெறுத்த ஜனங்கள் தோற்
கடிக்கப்பட்டார்கள். அவர்கள் போரிடுவதை
நிறுத்தி, ஓடிப்போய் விட்டார்கள்.
6அவர்கள் கூரையின் மேலுள்ள புல்லைப்
போன்றவர்கள். வளரும் முன்னே அப்புல்
வாடிப்போகும்.

7ஒரு வேலையாளுக்கு ஒரு கை நிரம்ப
அந்த புல் கிடைக்காது. ஒரு குவியல்
தானியமும் கிடைப்பதில்லை.
8அவர்களருகே நடக்கும் ஜனங்கள், “கர்த்
தர் உங்களை ஆசீர்வதிக்கட்டும்” என்று
கூறமாட்டார்கள். ஜனங்கள், “கர்த்தருடைய
நாமத்தில் நாங்கள் உங்களை ஆசீர்வதிக்
கிறோம்” என்று அவர்களிடம் வாழ்த்துக்
கூறமாட்டார்கள்.

## சங்கீதம் 130

### ஆலயத்திற்குப் போகும் போது பாடும் பாடல்

1கர்த்தாவே, நான் மிகுந்த துன்பத்திற்
குள்ளாயிருக்கிறேன், எனவே நான் உதவிக்
காக உம்மைக் கூப்பிட்டுக் கொண்டிருக்
கிறேன்.
2என் ஆண்டவரே, எனக்குச் செவி
கொடும். உதவிக்காக எழுப்பும் என் குர
லைக் கேளும்.
3கர்த்தாவே, ஜனங்கள் செய்கிற எல்லாப்
பாவங்களுக்காகவும் நீர் அவர்களைத் தண்
டித்தால் ஒருவனும் உயிரோடிருக்க
மாட்டான்.
4கர்த்தாவே, உமது ஜனங்களை மன்னி
யும். அப்போது உம்மைத் தொழுதுகொள்
வதற்கு ஜனங்கள் இருப்பார்கள்.
5கர்த்தர் எனக்கு உதவும்படி, நான்
காத்துக்கொண்டிருக்கிறேன். என் ஆத்துமா
அவருக்காகக் காத்திருக்கிறது. கர்த்தர் கூறு
வதை நான் நம்புகிறேன்.
6நான் என் ஆண்டவருக்காகக் காத்துக்
கொண்டிருக்கிறேன். காலை வேளைக்கெனக்
காத்து நிற்கும் காவலாளரைப்போல் நான்
இருக்கிறேன்.
7இஸ்ரவேலே, கர்த்தரை நம்பு. கர்த்தரிடம்
மட்டுமே உண்மையான அன்பைக் காண
முடியும். கர்த்தர் நம்மை மீண்டும் மீண்டும்
காப்பாற்றுகிறார். கர்த்தர் இஸ்ரவேலை
அவர்களின் எல்லாப் பாவங்களுக்காகவும்
மன்னிப்பார்.

## சங்கீதம் 131

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்

1கர்த்தாவே, நான் பெருமையுடையவன்
அல்ல. நான் முக்கியமானவனாக நடிக்க
முயலவில்லை. நான் பெரியக்
காரியங்களைச் செய்ய முயலவில்லை.
எனக்கு மிகவும் கடினமான காரியங்களைக்
குறித்து நான் கவலைப்படமாட்டேன்.
2நான் அமைதியாக இருக்கிறேன். என்
ஆத்துமா அமைதியாக இருக்கிறது.
3தாயின் கரங்களில் இருக்கும் திருப்
தியான குழந்தையைப்போன்று என் ஆத்
துமா சமாதானமாகவும் அமைதியாகவும்
இருக்கிறது.
4இஸ்ரவேலே, கர்த்தரை நம்பு. அவரை
இப்போது நம்பு, அவரை என்றென்றைக்கும்
நம்பு.

## சங்கீதம் 132

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் சங்கீதம்

1கர்த்தாவே, தாவீது துன்புற்ற வகையை
நினைத்துப்பாரும்.
2தாவீது கர்த்தருக்கு ஒரு வாக்குறுதி
அளித்தான். யாக்கோபின் வல்லமையுள்ள
தேவனுக்குத் தாவீது ஒரு விசேஷ வாக்
குறுதி அளித்தான்.
3தாவீது, “நான் என் வீட்டிற்குள் போக
மாட்டேன், நான் என் படுக்கையில் படுக்க
மாட்டேன்,
4நான் தூங்க மாட்டேன், என் கண்கள்
ஓய்வெடுக்க விடமாட்டேன்,
5கர்த்தருக்கு ஒரு வீட்டை நான்
கண்டுபிடிக்கும் மட்டும், யாக்கோபின் வல்ல
மையுள்ள தேவனுக்குரிய வீட்டை நான்
காணும்மட்டும், இக்காரியங்களில் ஒன்றையும்
நான் செய்யமாட்டேன்!” என்றான்.
6எப்பிராத்தாவில்* நாங்கள் இதைப்பற்றிக்
கேள்விப்பட்டோம். கீரியாத் யாரீமில்*
உடன்படிக்கைப் பெட்டியை நாங்கள் கண்
டோம்.
7நாம் பரிசுத்தக் கூடாரத்திற்குச் செல்
வோம். தேவன் பாதங்களை ஓய்வாக வைக்
கும் பாதப்படியில்* நாம் தொழுதுகொள்
வோம்.
8கர்த்தாவே நீர் ஓய்வுக்கொள்ளும் இடத்தி
லிருந்து எழும்பும், கர்த்தாவே, உமது
வல்லமையுள்ள பெட்டியோடு எழும்பும்.
9கர்த்தாவே, உமது ஆசாரியர்கள் நன்மை
யை அணிந்திருக்கிறார்கள். உம்மைப் பின்
பற்றுவோர் மிகவும் மகிழ்ச்சியாயிருக்
கிறார்கள்.
10உமது பணியாளாகிய தாவீதின்
நன்மைக்காக, நீர் தேர்ந்தெடுத்த அரசனைத்
தள்ளிவிடாதேயும்.
11கர்த்தர் தாவீதுக்கு ஒரு வாக்குறுதியை
அருளினார். தாவீதிடம் நேர்மையோடிருப்ப
தாகக் கர்த்தர் வாக்களித்தார். தாவீதின்
குடும்பத்திலிருந்து அரசர்கள் வருவார்கள்
என்று கர்த்தர் வாக்குறுதி அளித்தார்.
12கர்த்தர், “தாவீதே, உனது பிள்ளைகள்
என் உடன்படிக்கைக்கும் நான் கற்பிக்கும்

---

**எப்பிராத்தா** பெத்லெகேம் தாவீது பிறந்த ஊர்.

**கீரியாத் யாரீம்** எழுத்தின் பிரகாரமாக, “காட்டின் வயல்கள்” காடு என்பதைக் குறிக்கும் எபிரெயச் சொல் இந்நகரின் பெயராயிற்று.

**தேவன் ... பாதப்படி** இது உடன்படிக்கைப் பெட்டி அல்லது பரிசுத்த கூடாரம் அல்லது ஆலயத்தைக் குறிக்கலாம். தேவன் அரசனாக சிங்காசனத்தில் வீற்றிருந்து, ஜனங்கள் வணங்கு மாறு பாதங்களை ஓரிடத்தில் வைத்திருப்பதைக் காட்டும்.

சட்டங்களுக்கும் கீழ்ப்படிந்தால், உன்
குடும்பத்தில் யாரேனும் ஒருவர் என்றென்
றும் அரசராக இருப்பார்கள்” என்றார்.
13 அவரது ஆலயத்திற்குரிய இடமாக
விரும்பி கர்த்தர் சீயோனைத் தேர்ந்
தெடுத்தார். அந்த இடத்தையே தம்முடைய
ஆலயத்திற்காக விரும்பினார்.
14 கர்த்தர் “என்றென்றைக்கும் எப்போதும்
இதுவே என் இடமாக இருக்கும். நான்
இருக்கப்போகும் இடமாக இதனைத் தேர்ந்
தெடுக்கிறேன்” என்று சொன்னார்.
15 நான் இந்நகரை மிகுதியான உண
வினால் நிரப்பி ஆசீர்வதிப்பேன். ஏழை
களுக்கும் உண்ணும் உணவு மிகுதியாகக்
கிடைக்கும்.
16 மீட்பினால் ஆசாரியர்களை நான்
உடுத்துவிப்பேன். என்னைப் பின்பற்று
வோர் இங்கு மிகுந்த மகிழ்ச்சியடைவார்கள்.
17 இங்கு நான் தாவீதைப் பலப்படுத்து
வேன். நான் தேர்ந்தெடுத்த அரசனுக்கு ஒரு
விளக்கை அளிப்பேன்.
18 தாவீதின் பகைவர்களை வெட்கத்தால்
மூடுவேன். ஆனால் நான் தாவீதின் அரசைப்
பெருகும்படி செய்வேன்” என்றார்.

## சங்கீதம் 133

### ஆலயத்திற்குப் போகும்போது பாடுவதற்கென தாவீது அளித்த பாடல்களுள் ஒன்று

1 சகோதரர்கள் ஒருமித்து உட்கார்ந்து உண்
மையாகவே ஒன்றுபடுவது மிகவும் நல்லதும்
இன்பமுமானது.
2 அது ஆரோனின் தலையிலிருந்து ஊற்ற
பட்டு, கீழே அவன் தாடியிலும் பிறகு
அவன் விசேஷ ஆடைகளிலும் வழிந்தோடும்
வாசனையுள்ள எண்ணெயைப்போன்றது.
3 எர்மோன் மலையிலிருந்து சீயோன்
மலையில் வீழும் மென்மையான மழையைப்
போன்றுமிருக்கும்.
4 ஏனெனில் சீயோனில் இருந்துதான் நித்
திய வாழ்க்கைக்கான ஆசீர்வாதத்தைக் கர்த்
தர் தந்தருளினார்.

## சங்கீதம் 134

### ஆலயத்திற்குப் போகும்போது பாடும் பாடல்

1 கர்த்தருடைய எல்லா ஊழியர்களும்
கர்த்தரைத் துதியுங்கள்! இரவு முழுவதும்
ஊழியர்களாகிய நீங்கள் ஆலயத்தில் சேவை
செய்தீர்கள்.
2 ஊழியர்களே, உங்கள் கரங்களை
உயர்த்தி, கர்த்தரைப் போற்றுங்கள்.
3 கர்த்தர் உங்களைச் சீயோனிலிருந்து
ஆசீர்வதிப்பாராக. கர்த்தர் பரலோகத்தையும்
பூமியையும் உண்டாக்கினார்.

## சங்கீதம் 135

1 கர்த்தரைத் துதிப்போம்! கர்த்தருடைய
நமாத்தைத் துதிப்போம்! கர்த்தருடைய ஊழி
யர்களே, அவரைத் துதியுங்கள்!
2 தேவனுடைய ஆலய முற்றத்தில், கர்த்த
ருடைய ஆலயத்தில் நிற்கும் ஜனங்களே,
அவரைத் துதியுங்கள்.
3 கர்த்தர் நல்லவர், எனவே அவரைத்
துதியுங்கள். அவரது நாமத்தைத் துதியுங்கள்,
ஏனெனில் அது இன்பமானது.
4 கர்த்தர் யாக்கோபைத்* தேர்ந்தெடுத்தார்.
இஸ்ரவேல் தேவனுக்கு உரியது.
5 கர்த்தர் உயர்ந்தவர் என நான் அறி
கிறேன்! நமது ஆண்டவர் எல்லாத் தெய்வங்
களிலும் மேன்மையானவர்!
6 பரலோகத்திலும், பூமியிலும், கடல்களி
லும் ஆழமான சமுத்திரங்களிலும், கர்த்தர்
அவருக்கு வேண்டியவற்றையெல்லாம் செய்
கிறார்.
7 பூமியின்மேல் மேகங்களைத் தேவன்
உண்டாக்குகிறார். தேவன் மின்னலையும்
மழையையும் உண்டாக்குகிறார். தேவன்
காற்றையும் உண்டாக்குகிறார்.
8 எகிப்தின் எல்லா முதற்பேறான ஆண்
களையும், எல்லா முதற்பேறான மிருகங்
களையும் தேவன் அழித்தார்.
9 எகிப்தில் தேவன் பல அற்புதங்களையும்
அதிசயங்களையும் நிகழ்த்தினார். பார்வோ
னுக்கும் அவனது அதிகாரிகளுக்கும் தேவன்
அக்காரியங்களை நிகழப்பண்ணினார்.
10 தேவன் பல தேசங்களை முறியடித்தார்.
தேவன் வல்லமையுடைய அரசர்களைக்
கொன்றார்.
11 எமோரியரின் அரசனாகிய சீகோனைத்
தேவன் தோற்கடித்தார். பாஷானின் அரசனா
கிய ஓகையும் தேவன் தோற்கடித்தார்.
கானானின் எல்லாத் தேசங்களையும் தேவன்
தோற்கடித்தார்.
12 தேவன் இஸ்ரவேலருக்கு அவர்களின்
தேசத்தைக் கொடுத்தார். அவரது ஜனங்
களுக்குத் தேவன் அத்தேசத்தைக் கொடுத்
தார்.
13 கர்த்தாவே, உமது நாமம் என்றென்றும்
புகழ் வாய்ந்ததாயிருக்கும். கர்த்தாவே, ஜனங்
கள் உம்மை என்றென்றைக்கும் எப்போதும்
நினைவுக்கூருவார்கள்.
14 கர்த்தர் தேசங்களைத் தண்டித்தார்.
ஆனால் கர்த்தர் அவரது ஊழியரிடம்
தயவுடையவராயிருந்தார்.
15 பிற ஜனங்களின் தெய்வங்கள் வெறும்
பொன்னாலும் வெள்ளியாலுமாகிய சிலை
கள் மட்டுமே. அவர்களின் தெய்வங்கள்
ஜனங்கள் செய்த வெறும் சிலைகள் மட்
டுமே.

---

**யாக்கோபு** இஸ்ரவேலின் இன்னொரு பெயர். பார்க்க ஆதி. 32:22-28.

16சிலைகளுக்கு வாய்கள் இருந்தன,
ஆனால் பேச முடியவில்லை. சிலைகளுக்குக்
கண்கள் இருந்தன, ஆனால் பார்க்க முடிய
வில்லை.
17சிலைகளுக்குக் காதுகள் இருந்தன,
ஆனால் கேட்க முடியவில்லை. சிலைகளுக்கு
மூக்குகள் இருந்தன, ஆனால் முகர்ந்து பார்க்க
முடியவில்லை.
18அச்சிலைகளைச் செய்த ஜனங்களும்
அவற்றைப் போலாவார்கள். ஏனெனில் அச்
சிலைகள் அவர்களுக்கு உதவ வேண்டு
மென்று அவர்கள் நம்பினார்கள்.
19இஸ்ரவேலின் குடும்பமே, கர்த்தரை
ஸ்தோத்திரியுங்கள்! ஆரோனின் குடும்பமே,
கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்!
20லேவியின் குடும்பமே, கர்த்தரை
ஸ்தோத்திரியுங்கள்! கர்த்தரைப் பின்பற்று
வோரே, கர்த்தரை ஸ்தோத்திரியுங்கள்!
21கர்த்தர் சீயோனிலிருந்தும், அவரது
வீடாகிய எருசலேமிலிருந்தும் போற்றப்
படுகிறார். கர்த்தரைத் துதியுங்கள்!

## சங்கீதம் 136

1கர்த்தர் நல்லவர், எனவே அவரைத்
துதியுங்கள். அவரது உண்மை அன்பு
என்றென்றும் தொடரும்.
2தேவாதி தேவனைத் துதியுங்கள்! அவரது
உண்மை அன்பு என்றென்றும் தொடரும்.
3கர்ததாதி கர்த்தரைத் துதியுங்கள்! அவ
ரது உண்மை அன்பு என்றென்றும் தொட
ரும்.
4ஒருவராய் அற்புதமான அதிசயங்களைச்
செய்கிறவராகிய தேவனைத் துதியுங்கள்!
அவ்ரது உண்மை அன்பு என்றென்றும்
தொடரும்.
5வானங்களை உண்டாக்குவதற்கு ஞானத்
தைப் பயன்படுத்திய தேவனைத் துதியுங்கள்!
அவரது உண்மை அன்பு என்றென்றும்
தொடரும்.
6தேவன் கடலின்மேல் உலர்ந்த தரையை
உண்டாக்கினார். அவரது உண்மை அன்பு
என்றென்றும் தொடரும்.
7தேவன் பெரிய ஒளிகளை (சூரிய சந்திர
நட்சத்திரங்களை) உண்டாக்கினார். அவரது
உண்மை அன்பு என்றென்றும் தொடரும்.
8தேவன் பகலை ஆளச் சூரியனை
உண்டாக்கினார். அவரது உண்மை அன்பு
என்றென்றும் தொடரும்.
9தேவன் இரவை ஆளச் சந்திரனையும்
நட்சத்திரங்களையும் உண்டாக்கினார். அவ
ரது உண்மை அன்பு என்றென்றும் தொட
ரும்.
10எகிப்தில் முதற்பேறான ஆண்களையும்
விலங்குகளையும் தேவன் கொன்றார்.
அவரது உண்மை அன்பு என்றென்றும்
தொடரும்.
11தேவன் இஸ்ரவேலரை எகிப்திலிருந்து
அழைத்துச் சென்றார். அவரது உண்மை
அன்பு என்றென்றும் தொடரும்.
12தேவன் அவரது மிகுந்த வல்லமை
யையும், பெலத்தையும் காட்டினார். அவரது
உண்மை அன்பு என்றென்றும் தொடரும்.
13தேவன் செங்கடலை இரண்டாகப் பிளந்
தார். அவரது உண்மை அன்பு என்றென்றும்
தொடரும்.
14தேவன் இஸ்ரவேலரைக் கடலின் வழி
யாக அழைத்துச் சென்றார். அவரது
உண்மை அன்பு என்றென்றும் தொடரும்.
15தேவன் செங்கடலில் பார்வோனையும்
அவனது படையையும் அமிழ்த்தினார். அவ
ரது உண்மை அன்பு என்றென்றும் தொட
ரும்.
16தேவன் ஜனங்களை வனாந்தரத்தின்
வழியாக நடத்திச்சென்றார். அவரது உண்
மை அன்பு என்றென்றும் தொடரும்.
17தேவன் வல்லமையுள்ள அரசர்களைத்
தோற்கடித்தார். அவரது உண்மை அன்பு
என்றென்றும் தொடரும்.
18தேவன் பலமுள்ள அரசர்களைத் தோற்
கடித்தார். அவரது உண்மை அன்பு என்
றென்றும் தொடரும்.
19தேவன் எமோரியரின் அரசனாகிய
சீகோனைத் தோற்கடித்தார். அவரது உண்
மை அன்பு என்றென்றும் தொடரும்.
20தேவன் பாஷானின் அரசனாகிய ஓகைத்
தோற்கடித்தார். அவரது உண்மை அன்பு
என்றென்றும் தொடரும்.
21தேவன் அவர்களது தேசத்தை இஸ்ரவே
லருக்குக் கொடுத்தார். அவரது உண்மை
அன்பு என்றென்றும் தொடரும்.
22இஸ்ரவேலருக்குப் பரிசாக தேவன்
அத்தேசத்தைக் கொடுத்தார். அவரது
உண்மை அன்பு என்றென்றும் தொடரும்.
23நாம் தோற்கடிக்கப்பட்டபோது தேவன்
நம்மை நினைவுக்கூர்ந்தார். அவரது
உண்மை அன்பு என்றென்றும் தொடரும்.
24தேவன் நமது பகைவர்களிடமிருந்து
நம்மை விடுவித்தார். அவரது உண்மை
அன்பு என்றென்றும் தொடரும்.
25தேவன் ஒவ்வொருவருக்கும் உணவளிக்
கிறார். அவரது உண்மை அன்பு என்றென்
றும் தொடரும்.
26பரலோகத்தின் தேவனைத் துதியுங்கள்!
அவரது உண்மை அன்பு என்றென்றும்
தொடரும்.

## சங்கீதம் 137

1பாபிலோனின் நதிகளின் அருகே
நாங்கள் அமர்ந்து சீயோனை நினைத்தவாறே
அழுதோம்.
2அருகேயிருந்த அலரிச்செடிகளில் எங்கள்
கின்னரங்களைத் தொங்கவிட்டோம்.
3பாபிலோனில் எங்களைப் பிடித்தவர்கள்
எங்களைப் பாடச் சொன்னார்கள். அவர்கள்

எங்களிடம் மகிழ்ச்சியான பாடல்களைப்
பாடச் சொன்னார்கள். சீயோனைக் குறித்
துப் பாடல்களைப் பாடச் சொன்னார்கள்.
4ஆனால் வெளிநாட்டில் நாங்கள் கர்த்த
ருடைய பாடல்களைப் பாட முடியவில்லை!
5எருசலேமே, நான் உன்னை எப்போ
தேனும் மறந்தால், நான் என்றும் பாடலை
பாடமாட்டேன் என்று நம்புகிறேன்.
6எருசலேமே, நான் உன்னை எப்போ
தேனும் மறந்தால், நான் என்றும் பாடேன்.
நான் உன்னை ஒருபோதும் மறக்கமாட்டே
னென வாக்களிக்கிறேன்.
7ஆண்டவரே ஏதோமியர்களை நினையும்.
எருசலேம் வீழ்ந்த நாளில் அவர்கள்,
“அதைத் தரைமட்டமாக இடித்து அழித்து
விடுங்கள்” என்று சொல்லிக்கொண்டிருந்
தார்கள்.
8பாபிலோனே, நீ அழிக்கப்படுவாய்! நீ
பெறவேண்டிய தண்டனையை அளிக்கும்
மனிதன் ஆசீர்வதிக்கப்பட்டவன் எங்களை
நீ துன்புறுத்தியதைப்போல் உன்னையும்
துன்புறுத்துகிற மனிதன் ஆசீர்வதிக்கப்பட்ட
வன்.
9உனது குழந்தைகளை இழுத்துச்சென்று,
அவர்களைப் பாறையில் மோதி அழிக்கிற
மனிதன் ஆசீர்வதிக்கப்பட்டவன்.

## சங்கீதம் 138

*தாவீதின் ஒரு பாடல்*

1தேவனே, என் முழு இருதயத்தோடும்
உம்மைத் துதிக்கிறேன். எல்லாத் தெய்வங்
களின் முன்பாகவும் நான் உமது பாடல்
களைப் பாடுவேன்.
2தேவனே, உமது பரிசுத்த ஆலயத்திற்கு
நேராக நான் குனிந்து வணங்குவேன்.
நான் உமது நாமத்தையும், உண்மை அன்பை
யும் நேர்மையையும் துதிப்பேன். உமது
வார்த்தையின் வல்லமையால் நீர் புகழ்
பெற்றவர். இப்போது நீர் அதை இன்னமும்
மேன்மையாகச் செய்தீர்.
3தேவனே, உதவிக்காக நான் உம்மைக்
கூப்பிட்டேன். நீர் எனக்குப் பதில் தந்தீர்!
நீர் எனக்குப் பெலன் அளித்தீர்.
4கர்த்தாவே, நீர் சொல்கின்றவற்றைக்
கேட்கும்போது பூமியின் எல்லா அரசர்களும்
உம்மைத் துதிப்பார்கள்.
5அவர்கள் கர்த்தருடைய வழியைக்
குறித்துப் பாடுவார்கள். ஏனெனில் கர்த்த
ருடைய மகிமை மிக மேன்மையானது.
6தேவன் மிக முக்கியமானவர், ஆனால்
அவர் தாழ்மையான ஜனங்களுக்காக
கவலைப்படுகிறார். பெருமைக்காரர்கள் செய்
வதைத் தேவன் அறிகிறார், ஆனால் அவர்
அவர்களிடமிருந்து வெகுதூரம் விலகியிருக்
கிறார்.
7தேவனே, நான் தொல்லையில் சிக்
குண்டால், என்னை உயிரோடு வாழவிடும்.
என் பகைவர்கள் என்னிடம் கோபமா
யிருந்தால், அவர்களிடமிருந்து என்னைக்
காப்பாற்றும்.
8கர்த்தாவே, நீர் வாக்களித்தவற்றை
எனக்குத்தாரும் கர்த்தாவே, உமது உண்மை
அன்பு என்றென்றும் தொடரும் கர்த்தாவே,
நீர் எங்களை உண்டாக்கினீர், எனவே
எங்களை விட்டுவிடாதேயும்!

## சங்கீதம் 139

*இராகத் தலைவனுக்குத் தாவீது அளித்த துதிப் பாடல்களுள் ஒன்று*

1கர்த்தாவே, நீர் என்னை சோதித்தீர்,
என்னைப்பற்றிய எல்லாவற்றையும் நீர்
அறிகிறீர்.
2நான் உட்காரும்பொழுதும் எழும்பொழு
தும் நீர் அறிகிறீர். வெகு தூரத்திலிருந்தே
எனது எண்ணங்களை நீர் அறிகிறீர்.
3கர்த்தாவே, நான் போகுமிடத்தையும்
நான் படுக்கும் இடத்தையும் நீர் அறிகிறீர்.
நான் செய்யும் ஒவ்வொன்றையும் நீர்
அறிகிறீர்.
4கர்த்தாவே, நான் சொல்ல விரும்பும்
வார்த்தைகள் என் வாயிலிருந்து வெளி
வரும் முன்பே நீர் அறிகிறீர்.
5கர்த்தாவே, என்னைச் சுற்றிலும்,
எனக்கு முன்புறமும் பின்புறமும் நீர்
இருக்கிறீர். நீர் உமது கைகளை என் மீது
மென்மையாக வைக்கிறீர்.
6நீர் அறிகின்றவற்றைக் கண்டு நான்
ஆச்சரியப்படுகிறேன். நான் புரிந்துக்
கொள்வதற்கு மிகவும் அதிகமானதாக அது
உள்ளது.
7நான் போகுமிடமெல்லாம் உமது ஆவி
உள்ளது. கர்த்தாவே, நான் உம்மிடமிருந்து
தப்பிச்செல்ல முடியாது.
8கர்த்தாவே, நான் பரலோகத்திற்கு ஏறிச்
சென்றாலும் நீர் அங்கு இருக்கிறீர். மரணத்
தின் இடத்திற்கு நான் கீழிறங்கிச் சென்
றாலும் நீர் அங்கும் இருக்கிறீர்.
9கர்த்தாவே, சூரியன் உதிக்கும் கிழக்கிற்கு
நான் சென்றாலும் நீர் அங்கே இருக்கிறீர்.
நான் மேற்கே கடலுக்குச் சென்றாலும்
நீர் அங்கேயும் இருக்கிறீர்.
10அங்கும் உமது வலது கை என்னைத்
தாங்கும், என் கைகளைப் பிடித்து நீர்
வழிநடத்துகிறீர்.
11கர்த்தாவே, நான் உம்மிடமிருந்து
ஒளிந்துக்கொள்ள முயன்றாலும், பகல்
இரவாக மாறிப்போயிற்று. “இருள் கண்டிப்
பாக என்னை மறைத்துக்கொள்ளும்” என்
பேன்.
12ஆனால் கர்த்தாவே, இருளும் கூட
உமக்கு இருளாக இருப்பதில்லை. இரவும்
பகலைப்போல உமக்கு வெளிச்சமா
யிருக்கும்.

13கர்த்தாவே, நீரே என் முழு சரீரத்தையும்
உண்டாக்கினீர். என் தாயின் கருவில்
நான் இருக்கும்போதே நீர் என்னைப்பற்றிய
எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர்.
14கர்த்தாவே, நான் உம்மைத் துதிக்கிறேன்!
நீர் என்னை வியக்கத்தக்க, அற்புதமான
வகையில் உண்டாக்கியிருக்கிறீர். நீர் செய்
தவை அற்புதமானவை என்பதை நான்
நன்கு அறிவேன்!
15நீர் என்னைப்பற்றிய எல்லாவற்றையும்
அறிகிறீர். என் தாயின் கருவில்* மறைந்
திருந்து என் சரீரம் உருவெடுக்கும்போது
என் எலும்புகள் வளர்வதை நீர் கவனித்
திருக்கிறீர்.
16என் சரீரத்தின் அங்கங்கள் வளர்வதை
நீர் கவனித்தீர். உமது புத்தகத்தில் நீர்
அவைகள் எல்லாவற்றையும் பட்டியல்
இட்டீர். நீர் என்னை ஒவ்வொரு நாளும்
கவனித்தீர். அவற்றில் ஒன்றும் காணாமற்
போகவில்லை.
17உமது எண்ணங்கள் எனக்கு முக்கிய
மானவை தேவனே, உமக்கு மிகுதியாகத்
தெரியும்.
18நான் அவற்றை எண்ண ஆரம்பித்தால்
அவை மணலைக்காட்டிலும் அதிகமா
யிருக்கும். நான் விழிக்கும் போது இன்னும்
உம்மோடுகூட இருக்கிறேன்.
19தேவனே, கெட்ட ஜனங்களைக் கொல்
லும். அக்கொலைகாரரை என்னிடமிருந்து
அகற்றிவிடும்.
20அத்தீயோர் உம்மைக் குறித்துத் தீய
வற்றைக் கூறுகிறார்கள். அவர்கள் உம்
நாமத்தை குறித்துத் தீயவற்றைக் கூறுகிறார்
கள்.*
21கர்த்தாவே, உம்மை வெறுப்போரை
நான் வெறுக்கிறேன். உமக்கெதிராகத்
திரும்புவோரை நான் வெறுக்கிறேன்.
22அவர்களை முற்றிலும் நான் வெறுக்
கிறேன். உம்மைப் பகைப்பவர்கள் எனக்கும்
பகைவர்களே.
23கர்த்தாவே, என்னைப்பார்த்து என்
இருதயத்தை அறிந்துகொள்ளும். என்னைச்
சோதித்து என் நினைவுகளை அறிந்து
கொள்ளும்.
24என்னிடம் கொடிய எண்ணங்கள் உள்ள
னவா எனப்பாரும். நித்தியத்திற்குரிய பாதை
யில் என்னை வழிநடத்தும்.*

---

**தாயின் கருவில்** எழுத்தின் பிரகாரமாக, "பூமியின் ஆழமான பகுதி" நாம் அறிந்திராத இடத்தைப் பற்றிக் கூறும் தொடர்.

**அவர்கள் … கூறுகிறார்கள்** எபிரெய வசனம் புரியமுடியாதபடி உள்ளது.

**நித்தியத்திற்குரிய … வழிநடத்தும்** அல்லது பழமையான பாதைகளில் என்னை வழிகாட்டி நடத்தும்."

## சங்கீதம் 140

### இராகத் தலைவனுக்கு தாவீது அளித்த துதிப் பாடல்

1கர்த்தாவே, என்னைப் பொல்லாதவர்
களிடமிருந்து காப்பாற்றும். கொடியோரிட
மிருந்து என்னைப் பாதுகாத்துக்கொள்ளும்.
2அந்த ஜனங்கள் பொல்லாதவற்றைச்
செய்யத் திட்டமிடுகிறார்கள். அவர்கள் எப்
போதும் சண்டையிட ஆரம்பிக்கிறார்கள்.
3அவரது நாவுகள் விஷமுள்ள பாம்பு
களைப் போன்றவை. அவர்களது நாவுகளின்
கீழ் பாம்பின் விஷம் இருக்கும்
4கர்த்தாவே, கெட்ட ஜனங்களிடமிருந்து
என்னைக் காப்பாற்றும். கொடியோரிட
மிருந்து என்னைப் பாதுகாத்துக்கொள்ளும்.
அவர்கள் என்னைத் துரத்தி என்னைக்
காயப்படுத்த முயல்கிறார்கள்.
5அப்பெருமைக்காரர்கள் எனக்காக ஒரு
கண்ணியை வைத்தார்கள். என்னைப்
பிடிக்க அவர்கள் ஒரு வலையை விரித்
தார்கள். அவர்கள் என் பாதையில் ஒரு
கண்ணியை வைத்தார்கள்.
6கர்த்தாவே, நீரே என் தேவன். கர்த்
தாவே, நீர் என் ஜெபத்திற்குச் செவிகொடும்.
7கர்த்தாவே, நீர் என் பெலனான ஆண்ட
வர். நீரே என் மீட்பர். போரில் என்
தலையைக் காக்கும் கவசத்தைப்போன்று
இருக்கிறீர்.
8கர்த்தாவே, அந்தத் தீய ஜனங்கள் பெற
விரும்புகின்றவற்றை பெற அனுமதிக்கா
திரும். அவர்கள் திட்டங்கள் வெற்றியடை
யாமல் போகச்செய்யும்.
9கர்த்தாவே, என் பகைவர்கள் வெற்றி
பெற விடாதேயும். அந்த ஜனங்கள் தீய
காரியங்களைத் திட்டமிடுகிறார்கள். ஆனால்
அத்தீமைகள் அவர்களுக்கே நேரிடுமாறு
செய்யும்.
10நெருப்புத் தழலை அவர்கள் தலையின்
மீது ஊற்றும். என் பகைவர்களை நெருப்
பில் வீசும். அவர்களைக் குழியில் தள்ளும்,
அவர்கள் மீண்டும் வெளியேறி வராதபடி
செய்யும்.
11கர்த்தாவே, அப்பொய்யர்களை வாழ
விடாதேயும். அத்தீயோருக்குத் தீமைகள்
நிகழச்செய்யும்.
12கர்த்தர் ஏழைகளைத் தக்கபடி நியாயந்
தீர்ப்பார் என நான் அறிவேன். தேவன்
திக்கற்றோருக்கு உதவுவார்.
13கர்த்தாவே, நல்லோர் உமது நாமத்தைத்
துதிப்பார்கள். நல்லோர் உம்மைத் தொழுது
கொள்வார்கள்.

## சங்கீதம் 141

### தாவீதின் துதிப் பாடல்களுள் ஒன்று

1கர்த்தாவே, நான் உதவிக்காக உம்மைக்
கூப்பிடுகிறேன். நான் உம்மிடம் ஜெபம்

செய்யும்போது, எனக்குச் செவிகொடும். விரைவாக எனக்கு உதவும்!
2கர்த்தாவே, என் ஜெபத்தை ஏற்றுக்
கொள்ளும். எரியும் நறுமணப் பொருள்களின் பரிசைப்போலவும், மாலையின் பலியாகவும் அது இருக்கட்டும்.
3கர்த்தாவே, நான் கூறுபவற்றில் கட்டுப்
பாட்டோடிருக்க எனக்கு உதவும் நான் கூறுபவற்றில் கவனமாக இருக்க எனக்கு உதவும்.
4தீயவற்றை செய்ய நான் விரும்பா
திருக்கும்படி பாரும், தீயோர் தவறுகளைச் செய்யும்போது அவர்களோடு சேராதிருக்குமாறு என்னைத் தடுத்துவிடும். தீயோர்களிப்போடு செய்யும் காரியங்களில் நான் பங்குகொள்ளாதிருக்கும்படி செய்யும்.
5நல்லவன் ஒருவன் என்னைத் திருத்த
முடியும். அது அவன் நற்செயலாகும். உம்மைப் பின்பற்றுவோர் என்னை விமர்சிக்கட்டும். அது அவர்கள் செய்யத்தக்க நல்ல காரியமாகும். நான் அதை ஏற்றுக் கொள்வேன். ஆனால் தீயோர் செய்யும் தீயவற்றிற்கெதிராக நான் எப்போதும் ஜெபம் செய்கிறேன்.
6அவர்களின் அரசர்கள் தண்டிக்கப்
படட்டும். அப்போது நான் உண்மை பேசினேன் என்பதை ஜனங்கள் அறிவார்கள்.
7ஜனங்கள் நிலத்தைத் தோண்டி உழு
வார்கள், சேற்றை எங்கும் பரப்புவார்கள். அவ்வாறே கல்லறையில் எங்கள் எலும்புகளும் எங்கும் பரந்து கிடக்கும்.
8என் ஆண்டவராகிய கர்த்தாவே, நான்
உதவிக்காக உம்மை நோக்கிப் பார்ப்பேன். நான் உம்மை நம்புகிறேன். தயவுசெய்து என்னை மரிக்கவிடாதேயும்.
9தீயோர் எனக்குக் கண்ணிகளை வைத்
தார்கள். அவர்கள் கண்ணிகளில் நான் விழாதபடி செய்யும். அவர்கள் என்னைக் கண்ணிக்குள் அகப்படுத்தாதபடி பாரும்.
10நான் பாதிக்கப்படாது நடந்து செல்கை
யில் கெட்ட ஜனங்கள் தங்கள் கண்ணிக்குள் தாங்களே விழட்டும்.

## சங்கீதம் 142

### தாவீதின் பாடல்களில் ஒன்று. அவன் குகையிலிருந்தபோது செய்த ஜெபம்.

1நான் கர்த்தரை உதவிக்காகக் கூப்பிடு
வேன். நான் கர்த்தரிடம் ஜெபம் செய்வேன்.
2நான் கர்த்தரிடம் என் சிக்கல்களைச்
சொல்வேன். நான் கர்த்தரிடம் என் தொல்லைகளைச் சொல்வேன்.
3என் பகைவர்கள் எனக்குக் கண்ணி
வைத்திருக்கிறார்கள். நான் எல்லாவற்றையும் விட்டுவிடத் தயாராயிருக்கிறேன். ஆனால் கர்த்தர் எனக்கு நடக்கின்றவற்றை அறிந்திருக்கிறார்.
4நான் சுற்றிலும் பார்த்தேன், என் நண்பர்
களைக் காணவில்லை. எனக்கு ஓடிச்செல்ல இடமில்லை. என்னைக் காப்பாற்ற முயல்பவர் எவருமில்லை.
5எனவே நான் கர்த்தரிடம் உதவிக்காக
அழுதேன். கர்த்தாவே, நீரே என் பாதுகாப்பிடம். கர்த்தாவே, என்னைத் தொடர்ந்து வாழவிட உம்மால் ஆகும்.
6கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேளும்.
நீர் எனக்கு மிகுதியாகத் தேவைப்படுகிறீர். என்னைத் துரத்தி வருகிற ஜனங்களிடமிருந்து என்னைக் காப்பாற்றும். அவர்கள் என்னைக் காட்டிலும் மிகுந்த பலவான்கள்.
7இந்தக் கண்ணியிலிருந்து தப்பிச்செல்ல
எனக்கு உதவும். அப்போது நான் உமது நாமத்தைத் துதிப்பேன். நீர் என்னைக் கவனித்து வந்ததால் நல்லோர் என்னோடு சேர்ந்து கொண்டாடுவார்கள்.

## சங்கீதம் 143

### தாவீதின் துதிப் பாடல்களுள் ஒன்று

1கர்த்தாவே, என் ஜெபத்தைக்கேளும். என்
ஜெபத்திற்குச் செவிகொடும். நீர் என் ஜெபத்திற்குப் பதில் தாரும். நீர் உண்மையாகவே நல்லவரும் நேர்மையானவருமானவர் என்பதை எனக்குக் காட்டும்.
2உமது ஊழியனாகிய என்னை நியாயந்
தீர்க்காதேயும், என் ஆயுள் முழுவதும் ஒருபோதும் களங்கமற்றவன் என நான் நியாயந்தீர்க்கப்படமாட்டேன்.
3ஆனாலும் என் பகைவர்கள் என்னைத்
துரத்துகிறார்கள். அவர்கள் என் உயிரை புழுதிக்குள் தள்ளி விட்டார்கள். அவர்கள் நீண்டகாலத்திற்கு முன் மரித்தோரைப் போன்று என்னை இருண்ட கல்லறைக்குள் தள்ளுகிறார்கள்.
4நான் எல்லாவற்றையும் விட்டுவிடத்
துணிகிறேன். என் தைரியத்தை நான் இழந்துகொண்டிருக்கிறேன்.
5ஆனால் பல்லாண்டுகளுக்கு முன் நிகழ்ந்த
காரியங்களை நான் நினைவுக்கூருகிறேன். நீர் செய்த பலக் காரியங்களையும் நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். உமது மிகுந்த வல்லமையால் நீர் செய்தக் காரியங்களைக் குறித்து நான் பேசிக்கொண்டிருக்கிறேன்!
6கர்த்தாவே, நான் என் கரங்களைத்
தூக்கி, உம்மிடம் ஜெபம் செய்கிறேன். வறண்டநிலம் மழைக்காக எதிர் நோக்கியிருப்பதைப்போல நான் உமது உதவிக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன்.
7விரையும், கர்த்தாவே, எனக்கு பதில்
தாரும். நான் என் தைரியத்தை இழந்தேன். என்னிடமிருந்து அகன்று திரும்பி விடாதேயும். கல்லறையில் மாண்டு கிடக்கும் மரித்தோரைப்போன்று நான் மரிக்க விடாதேயும்.

8கர்த்தாவே, இக்காலையில் உமது
உண்மை அன்பை எனக்குக் காட்டும். நான்
உம்மை நம்புகிறேன். நான் செய்ய
வேண்டியவற்றை எனக்குக் காட்டும். நான்
என் உயிரை உமது கைகளில் தருகிறேன்.
9கர்த்தாவே, நான் பாதுகாப்பு நாடி
உம்மிடம் வருகிறேன். என் பகைவர்
களிடமிருந்து என்னைக் காப்பாற்றும்.
10நான் செய்யவேண்டுமென நீர் விரும்பு
கின்றவற்றை எனக்குக் காட்டும். நீரே
என் தேவன்.
11கர்த்தாவே, என்னை வாழவிடும். அப்
போது ஜனங்கள் உமது நாமத்தைத் துதிப்
பார்கள். நீர் உண்மையாகவே நல்லவ
ரென்பதை எனக்குக் காட்டும், என பகைவர்
களிடமிருந்து என்னைக் காப்பாற்றும்.
12கர்த்தாவே, உமது அன்பை எனக்குக்
காட்டும். என்னைக் கொல்ல முயல்கிற
என் பகைவர்களைத் தோற்கடியும். ஏனெ
னில் நான் உமது ஊழியன்.

## சங்கீதம் 144

### தாவீதின் ஒரு பாடல்

1கர்த்தர் என் கன்மலை கர்த்தரைப்
போற்றுங்கள். கர்த்தர் என்னைப் போ
ருக்குப் பழக்கப்படுத்துகிறார். கர்த்தர் என்
னை யுத்தத்திற்குப் பழக்குவிக்கிறார்.
2கர்த்தர் என்னை நேசித்து என்னைப்
பாதுகாக்கிறார். மலைகளின் உயரத்தில் கர்த்
தரே என் பாதுகாப்பிடம். கர்த்தர் என்னை
விடுவிக்கிறார். கர்த்தர் எனது கேடகம்.
நான் அவரை நம்புகிறேன். நான் என்
ஜனங்களை ஆள்வதற்குக் கர்த்தர் உதவு
கிறார்.
3கர்த்தாவே, நீர் ஏன் ஜனங்களை முக்கிய
மானவர்களாகக் கருதுகிறீர்? நீர் ஏன் அவர்
களைக் கண்ணோக்கிக் கொண்டு இருக்கிறீர்?
4ஊதும் காற்றைப்போன்று ஒருவனின்
வாழ்க்கை உள்ளது. மறையும் நிழலைப்
போன்றது மனித வாழ்க்கை.
5கர்த்தாவே, வானங்களைக் கிழித்துக்
கீழே வாரும். மலைகளைத் தொடும், அவற்றி
லிருந்து புகை எழும்பும்.
6கர்த்தாவே, மின்னலை அனுப்பி என்
பகைவர்களை ஓடிவிடச் செய்யும். உமது
“அம்புகளைச்” செலுத்தி அவர்கள் ஓடிப்
போகச் செய்யும்.
7கர்த்தாவே, பரலோகத்திலிருந்து இறங்கி
வந்து என்னைக் காப்பாற்றும்! பகைவர்
களின் கடலில் நான் அமிழ்ந்துபோக விடா
தேயும். இந்த அந்நியர்களிடமிருந்து என்
னைக் காப்பாற்றும்.
8இப்பகைவர்கள் பொய்யர்கள். அவர்கள்
உண்மையில்லாதவற்றைக் கூறுகிறார்கள்.
9கர்த்தாவே, நீர் செய்யும் அற்புதமான
காரியங்களைப்பற்றி நான் ஒரு புதிய
பாடலைப் பாடுவேன். நான் உம்மைத்
துதிப்பேன். பத்து நரம்பு வீணையை நான்
மீட்டுவேன்.
10அரசர்கள் போர்களில் வெற்றிகாண,
கர்த்தர் உதவுகிறார். பகைவர்களின் வாள்
களிலிருந்து கர்த்தர் அவரது ஊழியனாகிய
தாவீதைக் காப்பாற்றினார்.
11இந்த அந்நியர்களிடமிருந்து என்னைக்
காப்பாற்றும். இப்பகைவர்கள் பொய்யர்கள்.
அவர்கள் உண்மையில்லாதவற்றைக் கூறு
கிறார்கள்.
12நம் இளமகன்கள் பலத்த மரங்களைப்
போன்றவர்கள். நம் இளமகள்கள் அரண்
மனையின் அழகிய அலங்கார ஒப்பனை
களைப் போன்றிருக்கிறார்கள்.
13நம் களஞ்சியங்கள் பலவகை தானியங்
களால் நிரம்பியிருக்கின்றன. நம் வயல்களில்
ஆயிரமாயிரம் ஆடுகள் உள்ளன.
14நம் வீரர்கள் பாதுகாப்பாயிருக்கிறார்கள்.
எந்தப் பகைவனும் உள்ளே நுழைய முயல
வில்லை. நாங்கள் போருக்குச் செல்ல
வில்லை. ஜனங்கள் நம் தெருக்களில்
கூக்குரல் எழுப்பவில்லை.
15இத்தகைய காலங்களில் ஜனங்கள் மிக
வும் மகிழ்ச்சியாயிருக்கிறார்கள். கர்த்தர்
அவர்கள் தேவனாக இருக்கும்போது ஜனங்
கள் மிகவும் மகிழ்ச்சியாயிருக்கிறார்கள்.

## சங்கீதம் 145

### தாவீதின் ஜெபங்களுள் ஒன்று

1என் தேவனும் அரசருமாகிய உம்மைத்
துதிக்கிறேன். உமது நாமத்தை நான்
என்றென்றும் எப்போதும் போற்றுகிறேன்.
2நான் ஒவ்வொரு நாளும் உம்மைத்
துதிக்கிறேன். நான் உமது நாமத்தை
என்றென்றும் எப்போதும் துதிக்கிறேன்.
3கர்த்தர் பெரியவர். ஜனங்கள் அவரை
அதிகம் துதிக்கிறார்கள். அவர் செய்கிற
பெருங்காரியங்களை நாம் எண்ணமுடியாது.
4கர்த்தாவே, நீர் செய்யும் காரியங்
களுக்காக ஜனங்கள் உம்மை என்றென்றும்
எப்போதும் துதிப்பார்கள். நீர் செய்யும்
உயர்ந்த காரியங்களைக் குறித்து அவர்கள்
சொல்வார்கள்.
5உமது பெருமைக்குரிய தோற்றமும் மகி
மையும் அற்புதமானவை. உமது அதிசயங்
களைப்பற்றி நான் சொல்வேன்.
6கர்த்தாவே, நீர் செய்யும் வியக்கத்தக்க
காரியங்களைப்பற்றி ஜனங்கள் சொல்வார்
கள். நீர் செய்யும் மேன்மையான காரியங்
களைப்பற்றி நான் சொல்வேன்.
7நீர் செய்யும் நல்ல காரியங்களைப்பற்றி
ஜனங்கள் சொல்வார்கள். உமது நன்மை
யைப்பற்றி ஜனங்கள் பாடுவார்கள்.
8கர்த்தர் தயவும் இரக்கமுமுள்ளவர். கர்த்தர்
பொறுமையும் மிகுந்த அன்புமுள்ளவர்.

9கர்த்தர் எல்லோருக்கும் நல்லவர். தேவன்
தாம் உண்டாக்கின எல்லாவற்றிற்கும் அவ
ரது இரக்கத்தைக் காட்டுகிறார்.
10கர்த்தாவே, நீர் செய்பவை யாவும்
உமக்குத் துதிகளைக் கொண்டுவரும். உம்
மைப் பின்பற்றுவோர் உம்மை ஆசீர்வதிக்
கிறார்கள்.
11உமது அரசு எவ்வளவு மேன்மையானது
என அவர்கள் சொல்வார்கள். நீர் எவ்வளவு
மேன்மையானவர் என்பதை அவர்கள்
சொல்வார்கள்.
12கர்த்தாவே, அப்போது பிறர் நீர் செய்யும்
உயர்ந்த காரியங்களைப்பற்றி அறிந்துகொள்
கிறார்கள். உமது அரசு எவ்வளவு மேன்மை
யும் அற்புதமுமானது என்பதை அவர்கள்
அறிந்துகொள்கிறார்கள்.
13கர்த்தாவே, உமது அரசு என்றென்றும்
தொடரும். நீர் என்றென்றும் அரசாளுவீர்.
14கர்த்தர் வீழ்ந்து கிடக்கின்ற ஜனங்களைத்
தூக்கி விடுகிறார். கர்த்தர் தொல்லையில்
சிக்குண்ட ஜனங்களுக்கு உதவுகிறார்.
15கர்த்தாவே, தங்கள் உணவுக்காக எல்லா
உயிரினங்களும் உம்மை நோக்கியிருக்
கின்றன. அவற்றிற்குத் தக்க நேரத்தில் நீர்
உணவளிக்கிறீர்.
16கர்த்தாவே, நீர் உமது கைகளைத்
திறந்து, ஒவ்வொரு உயிரினத்திற்கும் தேவை
யான எல்லாவற்றையும் கொடுக்கிறீர்.
17கர்த்தர் செய்கின்ற எல்லாம் நல்ல
வையே. அவர் செய்பவை எல்லாம் அவர்
எவ்வளவு நல்லவர் என்பதைக் காட்டும்.
18கர்த்தரிடம் உதவி கேட்கிற ஒவ்வொரு
வனிடமும் அவர் நெருக்கமுள்ளவரா
யிருக்கிறார். உண்மையாகவே அவரைத்
தொழுதுகொள்கிற ஒவ்வொருவரிடமும்
அவர் நெருக்கமுள்ளவராயிருக்கிறார்.
19கர்த்தர் தம்மைப் பின்பற்றுவோர்
விரும்புகின்றவற்றைச் செய்கிறார். கர்த்தர்
தம்மைப் பின்பற்றுவோருக்குச் செவிகொடுக்
கிறார். அவர்களின் ஜெபங்களுக்கு அவர்
பதிலளித்து அவர்களைக் காப்பாற்றுகிறார்.
20கர்த்தர் தம்மை நேசிக்கிற ஒவ்வொரு
வரையும் காப்பாற்றுகிறார். ஆனால் கர்த்தர்
தீயோரை அழிக்கிறார்.
21நான் கர்த்தரைத் துதிப்பேன்! என்றென்
றைக்கும் எப்போதும் அவரது பரிசுத்த
நாமத்தை ஒவ்வொருவரும் துதிக்க வேண்டு
மென நான் விரும்புகிறேன்.

## சங்கீதம் 146

1கர்த்தரைத் துதி! என் ஆத்துமாவே,
கர்த்தரைத் துதி!
2என் வாழ்க்கை முழுவதும் நான் கர்த்த
ரைத் துதிப்பேன். என் வாழ்க்கை முழுவதும்
நான் அவருக்குத் துதிகளைப் பாடுவேன்.
3உதவிக்காக உங்கள் தலைவர்களைச்
சார்ந்திராதீர்கள் ஜனங்களை நம்பாதீர்கள்.
ஏனெனில் ஜனங்கள் உங்களைக் காப்பாற்ற
முடியாது.
4ஜனங்கள் மரித்தபின் புதைக்கப்படுவார்
கள். அப்போது உதவி செய்வதற்கான
அவர்கள் திட்டங்கள் எல்லாம் மறைந்து
போகும்.
5ஆனால் தேவனிடம் உதவி வேண்டுகிற
ஜனங்கள் மகிழ்ச்சியாயிருக்கிறார்கள். அந்த
ஜனங்கள் அவர்களின் தேவனாகிய கர்த்த
ரைச் சார்ந்திருக்கிறார்கள்.
6கர்த்தர் பரலோகத்தையும், பூமியையும்
உண்டாக்கினார். கர்த்தர் கடலையும் அதி
லுள்ள எல்லாவற்றையும் உண்டாக்கினார்.
கர்த்தர் அவற்றை என்றென்றும் பாது
காப்பார்.
7ஒடுக்கப்பட்ட ஜனங்களுக்கு ஆண்டவர்
நீதி வழங்குகிறார். தேவன் ஏழைகளுக்கு
உணவளிக்கிறார். சிறைகளில் பூட்டி
வைக்கப்பட்ட ஜனங்களைக் கர்த்தர் விடு
விக்கிறார்.
8குருடர் மீண்டும் காண்பதற்குக் கர்த்தர்
உதவுகிறார். தொல்லையில் சிக்குண்ட
ஜனங்களுக்குக் கர்த்தர் உதவுகிறார். கர்த்தர்
நல்லோரை நேசிக்கிறார்.
9நம் நாட்டிலுள்ள அந்நியர்களைக் கர்த்தர்
காப்பாற்றுகிறார். விதவைகளையும் அநா
தைகளையும் கர்த்தர் கவனித்துக் காக்கிறார்.
ஆனால் கர்த்தர் தீயோரை அழிக்கிறார்.
10கர்த்தர் என்றென்றும் அரசாளுவார்!
சீயோனே, உன் தேவன் என்றென்றும்
எப்போதும் அரசாளுவார்! கர்த்தரைத் துதி
யுங்கள்!

## சங்கீதம் 147

1கர்த்தர் நல்லவர், எனவே அவரைத்
துதியுங்கள். எங்கள் தேவனுக்கு துதிகளைப்
பாடுங்கள். அவரைத் துதிப்பது நல்லதும்
களிப்புமானது.
2கர்த்தர் எருசலேமைக் கட்டினார். சிறைப்
பிடித்துச் செல்லப்பட்ட இஸ்ரவேலரைத்
தேவன் மீண்டும் அழைத்து வந்தார்.
3தேவன் அவர்களின் உடைந்த இருதயங்
களைக் குணமாக்கி, அவர்கள் காயங்களைக்
கட்டுகிறார்.
4தேவன் நட்சத்திரங்களின் எண்ணிக்கை
யை அறிகிறார். ஒவ்வொன்றின் பெயரையும்
தெரிந்திருக்கிறார்.
5நம் ஆண்டவர் மிகவும் மேன்மையான
வர். அவர் மிகவும் வல்லமையுள்ளவர்.
அவர் அறிகிற காரியங்களுக்கு எல்லை
யில்லை.
6கர்த்தர் எளியோரைத் தாங்கி உதவு
கிறார். ஆனால் அவர் தீயோரை அவமானப்
படுத்துகிறார்.
7கர்த்தருக்கு நன்றி சொல்லுங்கள். கின்ன
ரங்களால் நமது தேவனைத் துதியுங்கள்.
8தேவன் வானத்தை மேகங்களால் நிரப்பு
கிறார். தேவன் பூமிக்காக மழையைப்

பெய்யப்பண்ணுகிறார். தேவன் மலைகளின்
மேல் புல் வளரும்படி செய்கிறார்.
9 தேவன்மிருகங்களுக்கு உணவளிக்கிறார்.
தேவன் பறவைக் குஞ்சுகளுக்கு உணவூட்டு
கிறார்.
10 போர்க் குதிரைகளும் வல்லமையுள்ள
வீரர்களும் அவரை மகிழ்ச்சிப்படுத்த மாட்
டார்கள்.
11 கர்த்தரைத் தொழுதுகொள்கிற ஜனங்கள்
அவரை மகிழ்ச்சியாக்குகிறார்கள். அவரது
உண்மை அன்பை நம்புகிற ஜனங்களைக்
கண்டு அவர் சந்தோஷமடைகிறார்.
12 எருசலேமே, கர்த்தரைத் துதி! சீயோனே,
உன் தேவனைத் துதி!
13 எருசலேமே, தேவன் உன் கதவுகளை
உறுதியாக்குகிறார். தேவன் உன் நகரத்தின்
ஜனங்களை ஆசீர்வதிக்கிறார்.
14 உன் நாட்டிற்கு தேவன் சமாதானத்தைக்
கொண்டுவந்தார். எனவே பகைவர்கள்
போரில் உன் நாட்டுத் தானியத்தைக்
கவர்ந்து செல்லவில்லை. உனக்கு உண
விற்குத் தேவையான தானியம் மிகுதியாக
இருக்கிறது.
15 பூமிக்கு தேவன் கட்டளையிடுகிறார்,
அது உடனே கீழ்ப்படிகிறது.
16 நிலம் கம்பளியைப்போன்று வெண்மை
யாகும்வரை தேவன் பனியை விழப்பண்ணு
கிறார். உறைந்த பனி காற்றினூடே தூசி
யைப்போல வீசும்படி தேவன் செய்கிறார்.
17 தேவன் வானத்திலிருந்து கற்களைப்
போல கல்மழையை பெய்யப் பண்ணுகிறார்.
அவர் அனுப்பும் குளிரைத் தாங்கிக்கொள்ள
ஒருவனாலும் ஆகாது.
18 அப்போது, தேவன் மற்றொரு கட்டளை
யைத் தருகிறார், உடனே வெப்பமான
காற்று மீண்டும் வீசுகிறது. பனி உருகுகிறது,
தண்ணீர் பாய்ந்தோடத் தொடங்குகிறது.
19 தேவன் யாக்கோபிற்குத் தமது கட்டளை
களைக் கொடுத்தார். தேவன் இஸ்ரவேலுக்கு
அவரது சட்டங்களைக் கொடுத்தார்.
20 தேவன் வேறெந்த தேசத்திற்கும் இதைச்
செய்யவில்லை. தேவன் வேறெந்த ஜனங்
களுக்கும் தனது சட்டங்களைப் போதிக்
கவில்லை. கர்த்தரைத் துதியுங்கள்!

## சங்கீதம் 148

1 கர்த்தரைத் துதியுங்கள்! மேலேயுள்ள
தேவதூதர்களே, பரலோகத்திலிருந்து கர்த்
தரைத் துதியுங்கள்!
2 தேவதூதர்கள் எல்லோரும் கர்த்தரைத்
துதியுங்கள்! அவரது சேனைகள்* எல்லோ
ரும் அவரைத் துதியுங்கள்!
3 சூரியனும் சந்திரனும் கர்த்தரைத் துதியுங்
கள்! நட்சத்திரங்களும் வானின் விளக்கு
களும் அவரைத் துதியுங்கள்!
4 மிக உயரத்திலுள்ள பரலோகமே கர்த்த
ரைத் துதியுங்கள்! வானின் மேலுள்ள
வெள்ளங்களே, அவரைத் துதியுங்கள்!
5 கர்த்தருடைய நாமத்தைத் துதி. ஏனெ
னில் தேவன் கட்டளையிட்டபோது,
நாமெல்லோரும் படைக்கப்பட்டோம்!
6 இவையனைத்தும் என்றென்றும் தொடரு
மாறு தேவன் செய்தார். என்றும் முடிவடை
யாத சட்டங்களைத் தேவன் உண்டாக்கி
னார்.
7 பூமியிலுள்ள அனைத்தும் கர்த்தரைத்
துதியுங்கள்! சமுத்திரத்தின் பெரிய விலங்
குகளே, கர்த்தரைத் துதியுங்கள்!
8 தேவன் நெருப்பையும் கல்மழையையும்
பனியையும் புகையையும் எல்லாவிதமான
புயற்காற்றையும் உண்டாக்கினார்.
9 மலைகளையும்குன்றுகளையும் கனிதரும்
மரங்களையும் கேதுருமரங்களையும் தேவன்
உண்டாக்கினார்.
10 எல்லாக் காட்டு மிருகங்களையும் நாட்டு
மிருகங்களையும் ஊர்வனவற்றையும் பறவை
களையும் தேவன் உண்டாக்கினார்.
11 பூமியின் தேசங்களையும் அரசர்களையும்
தேவன் உண்டாக்கினார். தலைவர்களையும்
நீதிபதிகளையும் தேவன் உண்டாக்கினார்.
12 இளைஞர்களையும் இளம்பெண்களையும்
தேவன் உண்டாக்கினார். முதியோரையும்
இளையோரையும் தேவன் உண்டாக்கினார்.
13 கர்த்தருடைய நாமத்தைத் துதியுங்கள்!
அவர் நாமத்தை என்றென்றும் மகிமைப்
படுத்துங்கள்! பரலோகத்திலும், பூமியிலு
முள்ள அனைத்தும் அவரைத் துதிக்கட்டும்!
14 தேவன் அவரது ஜனங்களைப் பலப்
படுத்துகிறார். தேவனைப் பின்பற்றுவோரை
ஜனங்கள் வாழ்த்துவார்கள். ஜனங்கள் இஸ்ர
வேலை வாழ்த்துவார்கள். தேவன் அவர்
களுக்காகப் போராடுகிறார். கர்த்தரைத்
துதியுங்கள்.

## சங்கீதம் 149

1 கர்த்தரைத் துதியுங்கள். கர்த்தர் செய்த
புதிய காரியங்களுக்காக ஒரு புதுப்பாடலைப்
பாடுங்கள்! அவரைப் பின்பற்றுவோர்
ஒருமித்துக் கூடும் சபையில் அவரைத்
துதித்துப்பாடுங்கள்.
2 தங்களைப் படைத்தவரோடு இஸ்ரவேல்
களிப்படைவார்களாக சீயோனின் ஜனங்கள்
அவர்களின் அரசரோடு மகிழ்ந்து களிப்பார்
களாக.
3 தம்புருக்களையும் வீணைகளையும் மீட்டு
வதோடு ஆடிப்பாடி அந்த ஜனங்கள் தேவ
னைத் துதிக்கட்டும்.
4 கர்த்தர் அவரது ஜனங்களோடு மகிழ்ச்சி
யாயிருக்கிறார். அவரது எளிய ஜனங்

---

**அவரது சேனைகள்** “தேவதூதர்கள்” அல்லது “நட்சத்திரங்களும் கிரகங்களும்” அல்லது “படை வீரர்கள்” எனப்பொருள் தரும்.

களுக்கு தேவன் ஒரு அற்புதமான காரியத்
தைச் செய்தார். அவர் அவர்களை மீட்டார்!
5தேவனைப் பின்பற்றுவோரே, உங்களது
வெற்றியால் மகிழ்ந்து களிப்படையுங்கள்!
படுக்கைக்குப் போன பின்னரும் மகிழ்ச்சியா
யிருங்கள்.
6ஜனங்கள் தேவனைத் துதித்துக் குர
லெழுப்பட்டும். அவர்களது கைகளில் வாள்
களை ஏந்தட்டும்.
7அவர்கள் போய் பகைவர்களைத் தண்டிக்
கட்டும். அந்த ஜனங்களிடம் சென்று அவர்
களைத் தண்டிக்கட்டும்.
8தேவனுடைய ஜனங்கள் அந்த அரசர்
களுக்கும் அங்குள்ள முக்கியமான ஜனங்
களுக்கும் விலங்குகளைப் பூட்டுவார்கள்.
9தேவன் கட்டளையிட்டபடி தேவனு டைய
ஜனங்கள் அவர்களைத் தண்டிப் பார்கள்.
தேவனைப் பின்பற்றுவோர் எல் லோரும்
அவரை மகிமைப்படுத்துவார்கள். கர்த்தரைத்
துதியுங்கள்!

## சங்கீதம் 150

1கர்த்தரைத் துதியுங்கள்! தேவனை அவ
ரது ஆலயத்தில் துதியுங்கள்! பரலோகத்தில்
அவரது வல்லமையைத் துதியுங்கள்!
2அவர் செய்கிற பெரிய காரியங்
களுக்காகத் தேவனைத் துதியுங்கள்! அவரது
எல்லா மேன்மைகளுக்காகவும் அவரைத்
துதியுங்கள்!
3எக்காளத் தொனியோடு தேவனைத்
துதியுங்கள்! வீணைகளோடும் சுரமண்டலத்
தோடும் அவரைத் துதியுங்கள்!
4தேவனைத் தம்புருக்களோடும் நடனத்
தோடும் துதியுங்கள்! நரம்புக் கருவிக
ளோடும் புல்லாங்குழலோடும் அவரைத் துதி
யுங்கள்!
5ஓசையெழுப்பும் தாளங்களோடும் தேவ
னைத் துதியுங்கள்! பேரோசையெழுப்பும்
தாளங்களோடும் அவரைத் துதியுங்கள்!
6எல்லா உயிரினங்களும் கர்த்தரைத்
துதிக் கட்டும்! கர்த்தரைத் துதிப்போம்!

# நீதிமொழிகள்

### முகவுரை

1 இவை தாவீதின் மகனான சாலொமோன்
கற்பித்த ஞான போதனைகள். சாலொ
மோன் இஸ்ரவேலின் அரசனாக இருந்தான்.
2 ஜனங்கள் புத்திசாலிகளாக இருக்கும்பொ
ருட்டும், செய்யத்தக்க நேர்மையான காரியங்
களைச் செய்யும்பொருட்டும் இந்த ஞான
வார்த்தைகள் எழுதப்பட்டுள்ளன. இந்த
வார்த்தைகள், ஜனங்கள் ஞான போதனை
களைப் புரிந்துகொள்ள உதவும். 3 இந்த
ஞானவார்த்தைகள் ஜனங்களுக்குத் தங்களு
டைய மனம் நேர்மையான வழியில் செல்ல
போதிக்கும். ஜனங்கள் நேர்மையோடும்,
நியாயத்தோடும் நல்லவர்களாகவும் தங்கள்
புத்தியைச் சரியான வழியில் செலுத்த
இந்த ஞானவார்த்தைகள் போதிக்கும்.
4 ஞானத்தை அடைய விரும்பும் ஜனங்க
ளுக்கு இந்த ஞானவார்த்தைகள் போதிக்கும்.
இந்த ஞானவார்த்தைகள் இளந்தலைமுறையி
னருக்கு அவர்கள் அறிய வேண்டியவற்
றையும் அதை எப்படி உபயோகப்படுத்த
வேண்டும் என்பதைக் குறித்தும் போதிக்கும்.
5 அறிவாளிகள்கூட இந்த வார்த்தைகளைக்
கவனிக்கவேண்டும். இதை அவர்கள் கற்று
மேலும் ஞானிகளாவார்கள். பிரச்சனைக
ளைச் சரிசெய்துகொள்ளும் திறமை
கொண்ட ஜனங்கள் இவற்றின்மூலம் மேலும்
புரிந்துகொள்ளும் திறமையைப் பெறலாம்.
6 பின்னர் நீதிக் கதைகளையும், அதன் அர்த்
தங்களையும் அந்த ஜனங்களால் புரிந்து
கொள்ள முடியும். அறிவாளிகள் சொல்வதை
அந்த ஜனங்களால் புரிந்துகொள்ள முடியும்.
7 ஒருவன் செய்யவேண்டிய முதலாவது
காரியம், கர்த்தருக்கு கனம் செலுத்துவதை
யும் அவருக்குக் கீழ்ப்படிவதையும் கற்றுக்
கொள்ள வேண்டும். அது தம்மை உண்மை
யான ஞானத்தைப் பெற வழிநடத்தும்.
ஆனால், தீய ஜனங்கள் உண்மையான
ஞானத்தையும் ஒழுக்கத்தையும் வெறுக்கி
றார்கள்.

### சாலொமோன் தன் மகனுக்குச் சொன்ன அறிவுரை

8 என் மகனே! உன் தந்தை உன்னை
திருத்தும்போது கீழ்ப்படிய வேண்டும். நீ
உன் தாயின் போதனைகளையும் தள்ளிவிட
வேண்டாம். 9 உனது தாயும் தந்தையும்
சொல்லுகிற வார்த்தைகள் உன் தலைக்கு
அலங்காரமான கிரீடமாக இருக்கும். அவை
உன் கழுத்துக்கு அழகான மாலையாக
விளங்கும்.

### தீயவர்களோடு சேராதபடி தடுக்கும் எச்சரிக்கை

10 என் மகனே!* பாவத்தை விரும்புகி
றவர்கள், அவர்கள் உன்னையும் தீயசெயல்
களை செய்யும்படி தூண்டுவார்கள். நீ
அவர்களைப் பின்பற்றக் கூடாது. 11 அந்தப்
பாவிகள் உன்னிடம், “எங்களோடு வா,
நாம் ஒளிந்திருப்போம். ஒன்றும் அறியாதவர்
களைக் கொல்லும்படிக் காத்திருப்போம்.
12 நாம் அவர்களை மரண இடத்திற்கு
அனுப்புவோம். நாம் அவர்களை அழித்து
கல்லறைக்கு அனுப்புவோம். 13 நாம் விலை
மதிப்புள்ள உயர்ந்த பொருட்களையெல்லாம்
திருடுவோம். நாம் இவற்றால் நம் வீடுகளை
நிரப்புவோம். 14 எனவே எங்களோடு வா.
இவற்றைச் செய்ய உதவு. இதில் கிடைப்
பதை நாம் பங்கிட்டுக் கொள்வோம்” என்
பார்கள்.
15 என் மகனே அவர்களைப் பின்பற்றிச்
செல்லாதே. அவர்கள் வாழ்கிற வாழ்க்கை
முறையில் ஒரு அடிகூட எடுத்து வைக்காதே.
16 அந்தத் தீயவர்கள் எப்போதும் தீமை
செய்யவே தயாராக இருப்பார்கள். எப்போ
தும் அவர்கள் ஜனங்களைக் கொல்வதையே
விரும்புவார்கள்.
17 ஜனங்கள் வலையை விரித்துப் பறவை
களைப் பிடிக்கிறார்கள். ஆனால் பறவைகள்
கவனித்துக் கொண்டிருக்கும்போது அத
னைப் பிடிக்க வலையை விரிப்பது வீண்.
18 அந்தத் தீயவர்கள் மறைந்துகொண்டு மற்ற
வர்களைக் கொல்ல வலை விரிப்பார்கள்.
ஆனால் அவர்கள் உண்மையில் தங்களுக்கா
கவே வலையை விரிக்கிறார்கள். அவர்கள்
தம் சொந்த வலையாலேயே அழிந்து
போவார்கள். 19 பேராசை உடையவர்கள்
எப்பொழுதும் அதனாலேயே அழிந்து
போவார்கள்.

---

**என் மகனே** நீதிமொழிகளின் புத்தகமானது உண்மையிலேயே இளைஞனாகப் போகிற சிறுவனுக்காக எழுதப்பட்டது. இந்தப் புத்தகம் தேவனை நேசிக்கவும், மதிக்கவும் செய்கிற இளைஞனுக்கு எவ்வாறு பொறுப்புள்ளவனாக இருக்கவேண்டும் என்பதைக் கற்பிக்கிறது.

### நல்ல பெண்மணியான ஞானம்

20 கவனியுங்கள்! ஞானம் ஜனங்களுக்குப்
போதிக்க முயற்சி செய்கிறாள். வீதிகளிலும்
சந்தையிலும் நின்று அவள் (ஞானம்) சத்
தமிடுகிறாள். 21 அவள் நெரிசலான தெரு
முனைகளில் நின்று கூப்பிடுகிறாள். நகர
வாசல் அருகில் நின்றுகொண்டு ஜனங்கள்
தன்னைக் கவனிக்கும்படி முயற்சி செய்கி
றாள்.
22 ஞானம் சொல்கிறதாவது, “நீங்கள் முட்
டாள்கள், நீங்கள் தொடர்ந்து எவ்வளவு
காலம் முட்டாள்தனமாக செயல்படுவீர்கள்?
நீங்கள் எவ்வளவு காலம் ஞானத்தைக்
கேலிச் செய்வீர்கள்? நீங்கள் தொடர்ந்து
எவ்வளவு காலத்துக்கு அறிவை வெறுப்
பீர்கள்? 23 நீங்கள் எனது ஆலோசனைகளை
யும், போதனைகளையும் கேட்டிருக்க வேண்
டும். எனக்குத் தெரிந்த எல்லாவற்றையும்
நான் உங்களுக்குச் சொல்லியிருந்திருப்பேன்.
என் அறிவையெல்லாம் உங்களுக்கு வழங்கி
யிருந்திருப்பேன்.
24 “நான் சொல்வதைக் கவனிக்க நீங்கள்
மறுத்துவிட்டீர்கள். நான் உதவ முயன்றேன்.
நான் கைகொடுக்க வந்தேன். ஆனால்
என் உதவியை ஏற்க மறுத்து விட்டீர்கள்.
25 எனது அறிவுரைகளைக் கேட்காமல் நீங்கள்
திரும்பிக் கொண்டீர்கள். என் வார்த்தை
களை ஏற்றுக்கொள்ள மறுத்தீர்கள்.
26 எனவே, உங்கள் துன்பத்தைக் கண்டு
நான் சிரிப்பேன். உங்களுக்குத் துன்பம்
வருவதைப் பார்த்து நான் மகிழ்ச்சி அடை
வேன். 27 ஒரு கொடிய புயலைப்போன்று
பெருந்துன்பம் உங்களுக்கு வரும். பெருங்
காற்றைப்போன்று அது உங்கள்மேல்
மோதும். உங்கள் துன்பமும் கவலைகளும்
உங்கள்மேல் சுமையாக அழுத்தும்.
28 “இவையெல்லாம் நடக்கும்போது நீங்கள்
என்னை உதவிக்காக அழைப்பீர்கள்.
ஆனால் நான் உதவிசெய்ய மாட்டேன்.
என்னை நீங்கள் தேடுவீர்கள், ஆனால்
உங்களால் என்னைக் கண்டுபிடிக்க
முடியாது. 29 நீங்கள் என் அறிவை விரும்பாத
தால் நான் உதவி செய்யமாட்டேன். நீங்கள்
கர்த்தருக்குப் பயப்படவும் அவரை மதிக்க
வும், கனப்படுத்தவும் மறுத்தீர்கள். 30 நீங்கள்
என்னுடைய அறிவுரைகளைக் கேட்க மறுத்
தீர்கள். நான் உங்களுக்குச் சரியான பாதை
யைக் காட்டியபோது நீங்கள் கேட்கவில்லை.
31 நீங்கள் உங்கள் சொந்த வழியிலேயே
செயல்களைச் செய்தீர்கள். நீங்கள் உங்கள்
சொந்த ஆலோசனையைப் பின்பற்றினீர்கள்.
உங்கள் சொந்த செய்கைகளினால் வந்த
விளைவுகளை நீங்கள் இப்பொழுது ஏற்றுக்
கொள்ளத்தான் வேண்டும்.
32 “முட்டாள்கள் அறிவைப் பின்பற்ற
மறுப்பதால் மரணமடைவார்கள். தங்கள்
முட்டாள்தனமான பாதையில் தொடர்ந்து
செல்வதில் அவர்கள் மகிழ்ச்சி அடைகிறார்
கள். இது அவர்களை அழித்துவிடும்.
33 ஆனால் எனக்குக் கீழ்ப்படிகிறவன் பாது
காப்பாக இருப்பான். அவன் வசதியாக
இருப்பான். அவன் தீமைக்குப் பயப்பட
வேண்டியதில்லை.”

### ஞானத்தின் உரையைக் கேளுங்கள்

2 என் மகனே நான் சொல்லுகின்றவற்றை
ஏற்றுக்கொள். என் கட்டளைகளை
நினைவில்கொள். 2 ஞானத்தின் குரலைக்
கேட்டு உன்னால் முடிந்தவரை புரிந்து
கொள்ள முயற்சிசெய். 3 ஞானத்தைக் கூப்பிடு.
புரிந்து கொள்ளுவதற்காகச் சத்தமிடு.
4 ஞானத்தை வெள்ளியைப்போல் தேடு,
மறைந்துள்ள புதையல்களைத் தேடுவது
போன்று தேடு. 5 நீ இவற்றைச் செய்தால்,
கர்த்தரை மதிக்கக் கற்றுக்கொள்வாய். நீ
உண்மையிலேயே தேவனைப்பற்றிக் கற்றுக்
கொள்ளலாம்.
6 கர்த்தர் ஞானத்தைக் கொடுக்கிறார். அவ
ரது வாயிலிருந்து அறிவும் புரிந்துகொள்ளுத
லும் வருகின்றன. 7 நல்லவர்களுக்கும் நேர்
மையானவர்களுக்கும் அவர் உதவி செய்கி
றார். 8 மற்றவர்களிடம் நேர்மையாக நடந்து
கொள்பவர்களை அவர் காப்பாற்றுகிறார்.
அவர் தனது பரிசுத்தமான ஜனங்களைக்
காக்கிறார்.
9 கர்த்தர் உனக்கு ஞானத்தைக் கொடுப்
பார். அப்போது நீ நல்லவற்றையும்,
நேர்மையானவற்றையும், சரியானவற்றை
யும் புரிந்துகொள்ளுவாய். 10 ஞானம் உனது
இருதயத்திற்குள் வரும். உனது ஆத்துமா
அறிவால் மகிழ்ச்சி அடையும்.
11 ஞானம் உன்னைக் காப்பாற்றும். புரிந்து
கொள்ளுதல் உன்னைப் பாதுகாக்கும்.
12 ஞானமும் புரிந்துகொள்ளுதலும் கெட்டவர்
களைப்போன்று தீயவழியில் செல்வதைத்
தடுக்கும். அந்த ஜனங்களின் வார்த்தைக
ளில்கூட தீமை இருக்கும். 13 அவர்கள் நேர்மை
யையும், நன்மையையும் விட்டுவிட்டு பாவத்
தின் இருளில் வாழ்கிறார்கள். 14 அவர்கள்
தீமை செய்வதில் மகிழ்ச்சி அடைகிறார்கள்.
கெட்டவழிகளில் செல்வதில் சந்தோஷம்
அடைகிறார்கள். 15 அவர்கள் நம்பிக்கைக்குரி
யவர்களல்ல. அவர்கள் பொய் சொல்லு
வார்கள், ஏமாற்றுவார்கள். ஆனால் உனது
ஞானமும் புரிந்துகொள்ளுதலும் இவை
அனைத்திலுமிருந்து உன்னை விலக்கி
வைக்கும்.
16 அந்நிய பெண்ணிடமிருந்து ஞானம்
உன்னைப் பாதுகாக்கும். மென்மையான
வார்த்தைகளைப் பேசி உன்னைத் தன்
னோடு சேர்ந்து பாவம்செய்யத் தூண்டும்
அவளிடமிருந்து ஞானம் உன்னைக் காக்கும்.
17 அப்பெண் இளமையில் திருமணமாகித்
தன் கணவனைவிட்டு விலகியிருக்கலாம்.
அவள் தேவனுக்கு முன் செய்த தனது
திருமண ஒப்பந்தத்தை மறந்தாள். 18 அவளு

டைய வீட்டிற்குள் செல்வது மரணத்திற்கு
வழிவகுக்கும். தொடர்ந்து அவளைப்
பின்பற்றி நீ சென்றால் அவள் உன்னைக்
கல்லறைக்கு அழைத்துச் செல்வாள். 19அவள்
ஒரு கல்லறையைப் போன்றவள். அவளிடத்
தில் செல்பவன் ஒருபோதும் திரும்பி
வருவதில்லை. அவன் தன் வாழ்வை இழப்
பான்.
20ஞானம் நீ நல்லவர்களை முன்மாதிரி
யாகக் கொண்டு பின்பற்றிச் செல்ல உதவி
செய்யும். நல்லவர்களின் வழியில் நீ வாழ
ஞானம் உதவி செய்யும். 21சரியான வழியில்
வாழ்கிறவர்கள் தங்கள் நாட்டிலேயே வாழ்
வார்கள். எளிமையானவர்களும் நேர்மையா
னவர்களும் தம் சொந்த ஊரில் தொடர்ந்து
வாழலாம்.
22ஆனால் பொய்பேசுகிறவர்களும் ஏமாற்
றுகிறவர்களும் தம் நாட்டை இழப்பார்கள்.
தீயவர்கள் தம் சொந்த நாட்டிலிருந்து
வெளியேற்றப்படுவார்கள்.

## சரியான வாழ்க்கை உன் வாழ்நாட்களைக் கூட்டும்!

3 என் மகனே! என் போதனைகளை
மறவாதே. நான் செய்யச் சொல்பவற்றை
நினைத்துக் கொள். 2நான் போதிக்கும்
பாடங்கள் உனக்கு நீண்ட, மகிழ்ச்சியான,
அதிக சமாதானமுள்ள வாழ்வைத் தரும்.
3அன்பு செலுத்துவதை விட்டுவிடாதே.
எப்பொழுதும் உண்மையுள்ளவனாகவும்,
நம்பிக்கைக்குரியவனாகவும் இரு. நீ
இவற்றை உன்னில் ஒரு பகுதியாக வைத்துக்
கொள். இவற்றை உன் கழுத்தைச் சுற்றி
அணிந்துகொள். இதனை உன் இதயத்தில்
எழுதிக்கொள். 4தேவனும், ஜனங்களும்
உன்னை ஞானவான் என்று எண்ணுவார்
கள். தேவனுக்கும், மனிதருக்கும் நீ நல்லவ
னாக இருப்பாய்.

## கர்த்தரை நம்பு

5கர்த்தரை முழுமையாக நம்பு. உன்
சொந்த அறிவைச் சார்ந்து இருக்காதே. 6நீ
செய்கிற எல்லாவற்றிலும் தேவனுடைய
சித்தத்தை அறிந்திட முயற்சிசெய். அப்
போது அவர் உனக்கு உதவுவார். 7உன்
சொந்த ஞானத்தைச் சார்ந்து இருக்காதே.
ஆனால் கர்த்தரை மதித்து தீயவற்றில்
இருந்து விலகியிரு. 8நீ இதனைச் செய்தால்,
இது உன் உடலுக்கு மருந்தைப் போன்றது.
இது உன்னை பலப்படுத்தும் புத்துணர்ச்சி
யான பானத்தைப் போன்றது.

## கர்த்தருக்குக் கொடு

9உனது செல்வத்தால் கர்த்தரை மகிமைப்
படுத்து. உன்னிடம் இருப்பதில் சிறப்பா
னதை அவருக்குக் கொடு. 10அப்போது
உனக்குத் தேவையான அனைத்தையும் நீ
பெறுவாய். உனது களஞ்சியங்கள் தானியங்
களால் நிரம்பும். உனது பாத்திரங்கள்
திராட்சைரசத்தால் நிரம்பும்.

## கர்த்தருடைய தண்டனையை ஏற்றுக்கொள்

11என் மகனே! சில நேரங்களில் நீ
தவறு செய்துவிட்டதாகக் கர்த்தர் அறிவுறுத்
தலாம். ஆனால் இந்தத் தண்டனைகளுக்காகக்
கோபப்படாதே. அதிலிருந்து கற்றுக்கொள்ள
முயற்சிசெய். 12ஏனென்றால் கர்த்தர் தான்
நேசிக்கிற ஜனங்களைச் செம்மைப்படுத்துகி
றார். ஆம் தேவன் ஒரு தந்தையைப்
போன்று தாம் நேசிக்கும் மகனைத் தண்டிக்
கிறார்.

## ஞானத்தின் ஆசீர்வாதம்

13ஞானத்தை அடைகிற மனிதன் மிகவும்
மகிழ்ச்சியாக இருப்பான். அவன் புரிந்துக்
கொள்ளத் தொடங்கும்போது ஆசீர்வதிக்கப்ப
டுகிறான். 14ஞானத்தால் வருகிற இலாபமா
னது வெள்ளியைவிட உயர்வானது. ஞானத்
தால் வருகிற இலாபமானது சுத்தத் தங்கத்தை
விட உயர்வானது. 15ஞானமானது நகை
களைவிட மதிப்புமிக்கது. ஞானத்தைப்
போன்று விலைமதிப்புடையது வேறொன்
றும் உனக்குத் தேவையாகாது.
16ஞானமானது உனக்கு நீண்ட வாழ்நா
ளையும் செல்வத்தையும் மதிப்பையும் தரும்.
17ஞானமுடையவர்கள் சமாதானத்தோடும்
மகிழ்ச்சியோடும் வாழ்கின்றனர். 18ஞானமா
னது வாழ்வளிக்கும் மரம்* போன்றது.
அதனை ஏற்றுக்கொள்பவர்களுக்கு முழு
வாழ்க்கையையும் தருகின்றது. ஞானத்தைப்
பெற்றவர்கள் உண்மையில் மகிழ்ச்சியோடு
இருக்கிறார்கள்.
19இப்பூமியை உருவாக்கக் கர்த்தர் ஞானத்
தைப் பயன்படுத்தினார். வானத்தை உரு
வாக்கக் கர்த்தர் தன் அறிவாற்றலைப்
பயன்படுத்தினார். 20கடலையும் மழையைக்
கொடுக்கும் மேகத்தையும் உருவாக்கக்
கர்த்தர் தன் அறிவாற்றலைப் பயன்படுத்தி
னார். ஞானத்தின் மூலம் வானம் மழையைப்
பொழிந்தது.
21என் மகனே, எப்போதும் உனது
ஞானத்தையும், புரிந்துகொள்ளும் சக்தியை
யும் பாதுகாத்துக்கொள். உனது சிந்தனை
யையும், ஆற்றலையும், அறிவுப்பூர்வமாகத்
திட்டமிடும் திறமையையும் காத்துக்கொள்.
22ஞானமும், அறிவும் உனக்கு வாழ்க்கை
யைக் கொடுத்து அதனை அழகுள்ளதாக்கும்.
23அதனால் நீ பாதுகாப்பாக வாழலாம்.
நீ விழாமல் இருக்கலாம். 24நீ படுத்தி
ருந்தாலும் பயப்படவேண்டாம். நீ ஓய்வாக
இருந்தால் உன் தூக்கம் சமாதானமாக

---

**வாழ்வளிக்கும் மரம்** இம்மரத்தின் பழம் வாழ்வதற்கான வல்லமையை ஜனங்களுக்குத் தருகின்றது. பார்க்க ஆதி. 3:22 மற்றும் வெளி. 22:1-2.

இருக்கும். 25-26திடீரென உனக்கு ஏற்படுகின்ற அழிவுக்கு பயப்படாதே, தீய ஜனங்கள் என்ன செய்வார்களோ என்று பயப்படாதே, ஏனென்றால் கர்த்தர் உனக்குப் பெலன் தந்து கண்ணியிலிருந்து உன்னை விலக்கிக் காப்பார்.

### சரியான வாழ்வுக்கான ஞானம்

27உன்னால் முடிந்த எல்லா நேரத்திலும், உன் உதவியைத் தேவையானவர்களுக்குச் செய். 28உன் அயலான் உன்னிடம் இருப்பதில் ஏதாவது கேட்டால் அவனுக்கு அதனை உடனேயே கொடுத்துவிடு; “நாளை மீண்டும் வா” என்று சொல்லாதே.

29உன் அண்டைவீட்டானுக்கு எதிராக எந்தத் திட்டங்களையும் போடாதே. பாதுகாப்புக்காக நீங்கள் ஒருவருக்கொருவர் நெருங்கி வாழுங்கள்.

30சரியான காரணமின்றி ஒருவனை நீ நீதி மன்றத்துக்கு இழுக்காதே. அவன் உனக்குத் தீமை செய்யாதபட்சத்தில் நீ அவ்வாறு செய்யாதே.

31சில ஜனங்கள் விரைவிலே கோபங்கொண்டு உடனே தீமை செய்வார்கள். நீ அவ்வாறு இராதே.

32ஏனென்றால் கெட்டவர்களைக் கர்த்தர் வெறுக்கிறார். மேலும் கர்த்தராகிய தேவன் நல்லவர்களையும், நேர்மையானவர்களையும் ஆதரிக்கிறார்.

33தீயவர்களின் குடும்பங்களுக்குக் கர்த்தர் எதிராக உள்ளார். ஆனால் நல்லவர்களின் குடும்பத்தை அவர் ஆசீர்வதிக்கிறார்.

34ஒருவன் பெருமைக்கொண்டு மற்றவர்களை இகழ்ச்சி செய்தால் கர்த்தர் அவனைத் தண்டிப்பார். அதோடு அவனைக் கேலிக்குள்ளாக்குவார். தாழ்மையுள்ளவர்களிடம் கர்த்தர் தயவோடு இருக்கிறார்.

35ஞானமுள்ள ஜனங்கள் வாழும் வாழ்க்கை பெருமையைக் கொண்டுவரும். மூடர் வாழும் வாழ்க்கை அவமானத்தைக் கொண்டுவரும்.

### ஞானம், அறிந்துகொள்ளுதல் - இதன் முக்கியத்துவம்

4 பிள்ளைகளே, உங்கள் தந்தையின் போதனைகளைக் கேளுங்கள். கவனமுடன் கேளுங்கள். அப்பொழுதுதான் நீங்கள் புரிந்துக்கொள்வீர்கள். 2ஏனென்றால் நான் உங்களுக்குப் போதிப்பவையெல்லாம் மிக முக்கியமானவை, நல்லவை. எனவே எனது போதனைகளை எக்காலத்திலும் மறக்க வேண்டாம்.

3ஒரு காலத்தில் நானும் இளமையாக இருந்தேன். நான் என் தந்தையின் சிறிய பையனாகவும், என் தாயின் ஒரே மகனாகவும் இருந்தேன். 4என் தந்தை இவற்றை எனக்குக் கற்றுத் தந்தார். அவர், “நான் சொல்லுகின்றவற்றை நினைவில் வைத்துக் கொள். எனது கட்டளைகளுக்கு அடிபணி. அப்போது நீ வாழ்வாய். 5ஞானத்தையும் புரிந்துகொள்ளுதலையும் பெற்றுக்கொள். என் வார்த்தைகளை மறக்காதே, எப்பொழுதும் என் அறிவுரைகளைப் பின்பற்று. 6ஞானத்திலிருந்து விலகாதே, பிறகு ஞானம் உன்னைக் காப்பாற்றும். ஞானத்தை நேசி, ஞானம் உன்னைப் பாதுகாக்கும்” என்றார்.

7நீ ஞானத்தைப் பெற விரும்பும்போதே உன்னில் ஞானம் துவங்கும். எனவே, ஞானத்தைப் பெற உனக்குச் சொந்தமான எல்லாவற்றையும் பயன்படுத்து. பின்னர் நீ ஞானத்தைப் பெறுவாய். 8ஞானத்தை நேசி. ஞானம் உன்னைப் பெரியவனாக்கும். ஞானத்தை முக்கியமுள்ளதாக்கு. ஞானம் உனக்கு மதிப்பைக் கொண்டுவரும். 9உன் வாழ்வில் நிகழும் அனைத்திலும் ஞானமே மிக உயர்ந்ததாக இருக்கும்.

10மகனே, நான் சொல்வதைக் கவனி. நான் சொல்லுகிறபடி செய்தால் நீ நீண்ட காலம் வாழலாம். 11நான் உனக்கு ஞானத்தைப்பற்றிப் போதித்திருக்கிறேன். நான் நேரான பாதையில் உன்னை வழி நடத்திச் சென்றிருக்கிறேன். 12இப்பாதையில் தொடர்ந்து செல், உனது கால்கள் எந்த வலைக்குள்ளும் அகப்படாது. இடறிவிழாமல் உன்னால் ஓடமுடியும். நீ செய்ய முயலுகிற செயல்களில் எல்லாம் பாதுகாப்பாக இருக்கலாம். 13எப்போதும் இந்த அறிவுரைகளை நினைவில் வைத்துக்கொள். அவற்றை மறக்காதே. அவை உனது ஜீவனாகும்.

14தீயவர்கள் நடந்துசெல்லுகிற பாதையில் நீ போகவேண்டாம். அவர்களைப்போல் வாழாதே. அவர்களைப்போன்று இருக்கவும் முயலவேண்டாம். 15பாவத்திலிருந்து விலகி இரு. அதன் அருகில் போகாதே. நேராகக் கடந்துசெல். 16தீமையைச் செய்துமுடிக்கும் வரை கெட்டவர்களால் தூங்கமுடியாது. அடுத்தவனைப்புண்படுத்தாமல் அவர்களால் தூங்கமுடியாது. 17அவர்களால் மற்றவர்களுக்குத் தீமை செய்யாமலும் மற்றவர்களைப் புண்படுத்தாமலும் வாழமுடியாது.

18நல்லவர்கள் அதிகாலை வெளிச்சத்தைப் போன்றவர்கள். சூரியன் உதிக்கும்போது நாளனது பிரகாசமும், மகிழ்ச்சியும் அடைகின்றது. 19ஆனால் தீயவர்களோ இருண்ட இரவைப் போன்றவர்கள். அவர்கள் இருளில் காணாமற் போவார்கள். அவர்கள் தங்களால் பார்க்க முடியாதவற்றில் விழுந்துவிடுவார்கள்.

20என் மகனே, நான் சொல்லுகின்றவற்றைக் கவனி. என் வார்த்தைகளை ஜாக்கிரதையுடன் கேள். 21என் வார்த்தைகள் உன்னைவிட்டுப் போகாதபடி பார்த்துக் கொள். நான் சொல்லுகின்றவற்றை நினைவுபடுத்திக்கொள். 22என்னைக் கவனிக்கின்றவர்களுக்கு எனது போதனைகள் வாழ்வைத்

தரும். எனது வார்த்தைகள் உடலுக்கு நல்ல
ஆரோக்கியத்தைத் தரும்.
23உன் எண்ணங்களில் எச்சரிக்கையாக
இருப்பது உனக்கு மிக முக்கியமானதாகும்.
உன் எண்ணங்கள் உன் வாழ்வைக்
கட்டுப்படுத்தும்.
24உண்மையை வளைக்காதே. சரியில்லாத
வற்றைச் சரியென்று சொல்லாதே. பொய்
களைச் சொல்லாதே. 25நல்ல மற்றும் ஞான
முள்ள உன் குறிக்கோள்களிலிருந்து விலகி
விடாதே. 26நீ செய்கின்றவற்றில் எச்
சரிக்கையாக இரு. நல்ல வாழ்க்கையை
நடத்து. 27நேரான பாதையில் இருந்து
விலகாதே. அப்பாதையே நல்லதும் சரி
யானதும் ஆகும். ஆனால் எப்பொழுதும்
தீமையில் இருந்து விலகியிரு.

## விபச்சாரத்தை விட்டு விலக்கும் ஞானம்

5 என் மகனே, எனது ஞானமுள்ள
போதனையைக் கவனமுடன் கேள்.
அறிவைப்பற்றிய என் வார்த்தைகளில்
கவனம் செலுத்து. 2பிறகு ஞானத்தோடு
வாழ்வதற்கு நினைவு கொள்வாய். நீ என்ன
சொல்வாயோ அதில் கவனமாக
இருப்பாய். 3அடுத்தவனின் மனைவியினு
டைய வார்த்தைகள் இனிமையாகத் தோன்ற
லாம். அவளது வார்த்தைகள் இனிப்பாகவும்,
கவர்ச்சியாகவும் தோன்றலாம். 4ஆனால்
முடிவில் அவள் உனக்குக் கசப்பையும்
வேதனையுமே தருவாள். அந்த வேதனையா
னது விஷத்தைபோன்று கொடுமையானதா
கவும், வாளைப்போன்று கூர்மையானதா
கவும் இருக்கும். 5அவளது கால்கள் மர
ணத்தை நோக்கிப்போகும். அவள் உன்னை
நேரடியாகக் கல்லறைக்கே அழைத்துச் செல்
வாள். 6அவளைப் பின்பற்றிச் செல்லாதே.
அவள் சரியான பாதையைத்தவறி விட்ட
வள். அவளுக்கு அதைப்பற்றியும் தெரியாது.
எச்சரிக்கையாக இரு. வாழ்வுக்கான
வழியை பின்பற்றிச் செல்.

## விபச்சாரம் உன்னை அழித்து விடும்

7என் பிள்ளைகளே! இப்பொழுது நான்
சொல்வதைக் கவனியுங்கள். நான் சொல்லு
கின்றவற்றை மறந்துவிடாதீர்கள். 8விபச்சா
ரம் என்னும் பாவத்தைச் செய்கின்ற
பெண்ணிடமிருந்து விலகி நில். அவளது
வீட்டுக் கதவின் அருகில் போகாதே. 9நீ
அவற்றை செய்தால் நீ பெறவேண்டிய
மதிப்பை மற்ற ஜனங்கள் பெறுவார்கள்.
நீ வருடக்கணக்கில் உழைத்துப் பெற்றப்
பொருட்களை அந்நியன் ஒருவன் பெறு
வான். முடிவில் உன் வாழ்வை இழப்பாய்.
தீயவர்கள் உன்னிடமிருந்து அதனை எடுத்
துக்கொள்வார்கள். 10உனக்குத் தெரியாத
வர்கள் வந்து உன் செல்வத்தை எடுத்துக்
கொள்வார்கள். உனது உழைப்பின் பலனை
மற்றவர்கள் அடைவார்கள். 11உன் வாழ்வின்
முடிவில் நீ உனது செயலைக்குறித்து வருத்
தப்படுவாய். உன் வாழ்க்கையை நீயே
அழித்துக்கொள்கிறாய். ஆரோக்கியமும்
உனக்குச் சொந்தமான அனைத்தும் அழியும்.
12-13பிறகு நீ, “நான் ஏன் என் பெற்றோர்கள்
சொன்னதைக் கேட்காமல் போனேன். என்
போதகர்கள் சொன்னதை ஏன் கேட்காமல்
போனேன். நான் ஒழுக்கமாய் இருக்க மறுத்
தேன். நான் திருத்தப்பட மறுத்தேன். 14இப்
போது ஏறக்குறைய எல்லாவித பிரச்சனைக
ளிலும் அகப்பட்ட எனக்கு நேர்ந்த அவமா
னத்தை ஜனங்கள் அனைவரும் பார்க்கின்
றனர்” என்று சொல்லுவாய்.

## உன் சொந்த மனைவியோடு மகிழ்ச்சியாக இரு

15-16உன் சொந்த கிணற்றில் ஊறுகிற
தண்ணீரை மட்டும் குடி. உனது தண்ணீர்
தெருக்களில் வழிந்து ஓடும்படி விட்டு
விடாதே. நீ உன் மனைவியிடம் மட்டும்
பாலின உறவு வைத்துக் கொள்ளவேண்டும்.
உன் சொந்த வீட்டுக்கு வெளியே உள்ள
பிள்ளைகளுக்கும் தந்தை ஆகாதே. 17உனது
பிள்ளைகள் உனக்கு மட்டுமே உரியவர்க
ளாக இருக்கவேண்டும். உன் வீட்டுக்கு
வெளியே உள்ளவர்களோடு உன் பிள்ளை
களைப் பகிர்ந்துகொள்ளாதே. 18எனவே உன்
சொந்த மனைவியோடு மகிழ்ச்சியாக இரு.
நீ இளமையாக இருக்கும்போது மணந்து
கொண்ட மனைவியோடு மகிழ்ச்சியாக இரு.
19அவள் ஒரு அழகான மானைப் போன்ற
வள், அன்பான பெண்ணாடு போன்றவள்.
அவளது அன்பால் திருப்தி அடைவாய்.
அவளது அன்பு உன்னைக் கவரட்டும்.
20ஆனால் அந்நிய பெண்ணின் கரங்களுள்
நீ தடுமாறி விழாதே. இன்னொருவனது
மனைவியின் அன்பு உனக்குத் தேவை
யில்லை.
21நீ செய்கிற அனைத்தையும் கர்த்தர்
தெளிவாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.
நீ எங்கே போகிறாய் என்று கவனிக்கிறார்.
22கெட்டவர்களின் பாவங்கள் அவர்களைச்
சிக்கவைக்கும், அப்பாவங்கள் அவர்களைக்
கயிறுகளைப் போன்று கட்டிக்கொள்ளும்.
23அத்தீயவன் மரித்துப்போவான், ஏனென்
றால் ஒழுக்கமாய் இருக்க அவன் மறுத்து
விட்டான். அவன் தன் சொந்த ஆசைகளி
லேயே சிக்கி அழிவான்.

## ஒருவனுக்கு கடன் வாங்கிக்கொடுக்க உதவுவதால் வரும் ஆபத்து

6 என் மகனே! அடுத்தவனது கடனுக்கு
நீ பொறுப்பாளி ஆகாதே. அடுத்தவன்
தன் கடனைச் செலுத்த முடியாதபோது

*நீ அக்கடனைச் செலுத்துவதாக வாக்குறுதி*
*அளித்திருக்கிறாயா? அடுத்தவன் வாங்கும்*
*கடனுக்கு உன்னைப் பொறுப்பாளியாக*
*ஆக்கிக்கொண்டாயா?* 2*அப்படியானால் நீ*
*அகப்பட்டுக் கொண்டாய். உன் சொந்த*
*வார்த்தைகளாலேயே நீ அகப்பட்டுக் கொண்*
*டாய்.* 3*நீ அடுத்தவனது அதிகாரத்தின் கீழ்*
*இருக்கிறாய். எனவே அவனிடம் போய்*
*உன்னை விடுவித்துக்கொள். உன்னை*
*அக்கடனிலிருந்து விடுவிக்கும்படி வேண்டிக்*
*கொள்.* 4*அதுவரை தூங்காதே, ஓய்வுக்*
*கொள்ள எண்ணாதே.* 5*வேட்டைக்காரனிட*
*மிருந்து மான் தப்பி ஓடுவதுபோன்று,*
*நீ அந்த வலையிலிருந்து தப்பி ஓடு, வலை*
*யிலிருந்து பறவை தப்புவதுபோன்று தப்பி*
*விடு.*

### சோம்பேறியாக இருப்பதில் உள்ள ஆபத்து

6*சோம்பேறியே! நீ எறும்பைப்போல*
*இருக்கவேண்டும். எறும்பு என்ன செய்கிறது*
*என்று பார். அதனிடமிருந்து கற்றுக்கொள்.*
7*அந்த எறும்புக்கு ஒரு அரசனோ, தலை*
*வனோ, எஜமானோ இல்லை.* 8*ஆனால்*
*அது கோடைக்காலத்தில் தனக்கு வேண்டிய*
*உணவைச் சேகரித்துக்கொள்ளும். தன்*
*உணவை அது பாதுகாக்கிறது. மழைக்காலத்*
*தில் போதுமான அளவுக்கு அதனிடத்தில்*
*உணவு உள்ளது.*
9*சோம்பேறியே! எவ்வளவு நாட்கள்*
*அங்கேயே படுத்துக்கொண்டு கிடப்பாய்.*
*உனது ஓய்வை முடித்துக்கொண்டு நீ எப்*
*போது எழப்போகிறாய்?* 10*அந்தச் சோம்*
*பேறி, "எனக்கு சிறிது தூக்கம் வேண்டும்.*
*நான் இங்கே சிறிதுநேரம் படுத்து ஓய்வு*
*எடுப்பேன்" என்பான்.* 11*ஆனால் அவன்*
*மீண்டும் மீண்டும் தூங்கிக் கொண்டிருக்கி*
*றான். அவன் மேலும் மேலும் வறுமைக்*
*குள்ளாவான். விரைவில் அவனிடம் ஒன்று*
*மேயில்லாமற் போகும். ஒரு திருடன் வந்து*
*அனைத்தையும்அபகரித்துக்கொண்டு போன*
*துபோல் இருக்கும்.*

### தீய மனிதன்

12*ஒன்றுக்கும் உதவாத தீயமனிதன் பொய்*
*யையும் தீயவற்றையும் கூறுகிறான்.* 13*அவன்*
*தன் கண்ணைச் சிமிட்டி, கைகளாலும்*
*கால்களாலும் சைகைக்காட்டி ஜனங்களை*
*ஏமாற்றுகிறான்.* 14*அவன் கெட்டவன். அவன்*
*எப்பொழுதும் தொல்லை செய்யவே திட்ட*
*மிடுவான். அவன் எல்லா இடங்களிலும்*
*தொல்லை செய்வான்.* 15*ஆனால் அவன்*
*தண்டிக்கப்படுவான். எதிர்பாராத நேரத்தில்*
*திடீரென்று அவனுக்குத் துன்பம் வரும்.*
*அவன் விரைவில் அழிந்துப்போவான்.*
*எவராலும் அவனுக்கு உதவிசெய்ய முடி*
*யாது.*

### கர்த்தரால் வெறுக்கப்படும் ஏழு காரியங்கள்

16*கர்த்தர் இந்த ஆறு அல்லது ஏழு*
*காரியங்களையும் வெறுக்கிறார்.*
17*கர்வம் கொண்ட கண்கள், பொய்களைக்*
*கூறும் நாவுகள், அப்பாவி ஜனங்களைக்*
*கொல்லும் கைகள்,*
18*தீயவற்றைச் செய்யத் திட்டமிடும் மனது,*
*கெட்டவற்றைச் செய்ய ஓடும் கால்கள்,*
19*வழக்கு மன்றத்தில் பொய்யைச் சொல்லு*
*பவன், உண்மையில்லாதவற்றைக் கூறு*
*பவன், விவாதங்களைத் தொடங்கி வைத்து*
*அடுத்தவர்களுக்குள் சண்டை மூட்டுபவன்.*
20*என் மகனே, உன் தந்தையின் கட்ட*
*ளைகளை நினைவுப் படுத்திக்கொள் உன்*
*தாயின் போதனைகளையும் மறக்காதே.*
21*அவர்களது வார்த்தைகளை எப்போதும்*
*நினைவு படுத்திக்கொள். அவற்றை உன்*
*கழுத்தைச் சுற்றிலும் கட்டிக்கொள். அவை*
*களை உன் இருதயத்தின்மேல் வைத்துக்*
*கொள்.* 22*நீ எங்கே சென்றாலும் அவர்களின்*
*போதனைகள் உனக்கு வழிகாட்டும். நீ*
*தூங்கும்போதும் அவை உன்னைக் கவனித்*
*துக் கொள்ளும். நீ விழித்து எழுந்ததும்*
*அவை உன்னோடு பேசி உனக்கு வழிகாட்*
*டும்.*
23*உன் பெற்றோர்களின் கட்டளைகளும்*
*போதனைகளும் உனக்குச் சரியான பாதை*
*யைக் காட்டும் விளக்குகளைப் போன்றவை.*
*அவை உன்னைத் திருத்தும்; வாழ்க்கைக்*
*கான பாதையில் நீ செல்ல உனக்குப்*
*பயிற்சி தரும்.* 24*பாவமுள்ள பெண்ணிடம்*
*உன்னைப் போகவிடாமல் தடுக்கும். அவர்*
*களது போதனைகள், தன் கணவனை*
*விட்டு விலகிவந்த பெண்களின் மென்மை*
*யான வார்த்தைகளிலிருந்து உன்னைக்*
*காப்பாற்றும்.* 25*அப்பெண் அழகுள்ளவளாக*
*இருக்கலாம். ஆனால், அந்த அழகு உன்*
*உள்ளத்தை அழித்து உன்னைத் தூண்டாமல்*
*பார்த்துக்கொள். அவளது கண்கள்*
*உன்னைக் கவர்ந்துக்கொள்ள விடாதே.*
26*வேசியானவள் ஒரு ரொட்டித் துண்டுக்*
*குரிய விலையையே பெறுவாள். ஆனால்*
*அடுத்தவன் மனைவியோ உனது வாழ்க்கை*
*யையே இழக்கச் செய்வாள்.*
27*ஒருவன் தன் மடியிலே நெருப்பை*
*வைத்திருந்தால் அது அவனது ஆடைகளை*
*எரித்துவிடும்.* 28*ஒருவன் நெருப்புக்குள்*
*இறங்கி நடந்தால் அவனது பாதங்கள்*
*எரிந்து கருகும்.* 29*இதுபோலவே இன்னொ*
*ருவனது மனைவியோடு படுப்பவன் துன்பப்*
*படுவான்.*
30-31*பசியின் காரணமாக ஒருவன் உண்ப*
*தற்காக உணவைத் திருடலாம். அகப்பட்டுக்*
*கொண்டால், திருடியதைப்போல ஏழு மடங்*
*குக்கு அதிகமாக அபராதம் செலுத்த*
*வேண்டும். அது அவனுடைய அனைத்துப்*
*பொருட்களுக்கும் ஈடானதாக இருக்கும்.*

ஆனால் மற்றவர்கள் அவனைப் புரிந்துக்
கொள்வார்கள். அவனது மரியாதையைக்
குறைத்துக்கொள்ள மாட்டார்கள்.
32ஆனால் ஒருவன் முட்டாள்தனமாக
விபச்சாரமாகிய பாவத்தைச் செய்தால்,
அவன் தன்னையே அழித்துக் கொள்கிறான்.
அவனது அழிவிற்கு அவனே காரணம்.
33ஜனங்களிடம் அவன் தனது மதிப்பு
முழுவதையும் இழந்துவிடுவான். இந்த அவ
மானத்தை அவனால் எப்பொழுதும் நீக்க
முடியாது. 34அப்பெண்ணின் கணவன்
பொறாமை கொள்ளுவான். அவன் கோப
மாகவும் இருப்பான். அவன் இவனைத்
தண்டிக்க எதையாவது செய்வான். 35அவ
னது கோபத்தைத் தடுக்க எந்தப் பொருளை
யும் எவ்வளவு தொகையையும் தர இயலாது.

### ஞானம் உன்னை விபச்சாரத்திலிருந்து காக்கும்

7 என் மகனே! எனது வார்த்தைகளை
நினைவுப்படுத்திக்கொள். நான் உனக்குத்
தந்த கட்டளைகளை மறக்காதே. 2எனது
கட்டளைகளுக்குக் கீழ்ப்படி. உனக்கு வாழ்வு
கிடைக்கும். உனது வாழ்க்கையில் எனது
போதனைகளை மிக முக்கியமானதாக
வைத்துக்கொள். 3எனது போதனைகளையும்
கட்டளைகளையும் நீ எப்பொழுதும் உன்
னோடேயே வைத்திரு. அவற்றை உன்
விரல்களைச் சுற்றி அணிந்துகொள்.
அவற்றை உன் இதயத்தில் எழுதிக்கொள்.
4ஞானத்தை உன் சகோதரியைப் போன்று
நடத்து. புரிந்துகொள்ளுதலை உன் குடும்பத்
திலுள்ள ஒரு பாகமாக நினைத்துக்கொள்.
5அப்போது அவை உன்னை அந்நிய பெண்
களிடமிருந்து காப்பாற்றும். பாவத்துக்கு
வழிநடத்திச் செல்லும் பிறபெண்களின்
மென்மையான வார்த்தைகளிலிருந்து உன்
னைக் காக்கும்.
6ஒரு நாள் ஜன்னல் வழியே நான்
வெளியே பார்த்தேன். 7பல முட்டாள்
இளைஞர்களையும் பார்த்தேன். அவர்களில்
ஒரு இளைஞன் மிகவும் அறிவீனனாக
இருந்தான். 8அவன் ஒரு மோசமான பெண்
ணின் வீடு இருக்கும் தெருவுக்குப் போனான்.
அவன் அவளது வீட்டின் அருகில்
போனான். 9அது ஏறக்குறைய இருட்டும்
நேரம். சூரியன் மறைந்து, இரவு தொடங்கி
விட்டது. 10அந்தப்பெண் அவனைச் சந்திக்க
வெளியே வந்தாள். அவள் ஒரு வேசியைப்
போன்று ஆடையணிந்திருந்தாள். அவள்
அவனோடு பாவம் செய்யத் திட்டமிட்டாள்.
11அவள் அடங்காதவளாகவும் எதிர்ப்பவளா
கவும் இருந்தாள். அவள் எப்பொழுதும்
வீட்டில் தங்குவதில்லை. 12அதனால் அவள்
தெருக்களில் நடந்து அலைவாள். பிரச்ச
னைக்காக இங்கும் அங்கும் அலைந்து
கொண்டிருந்தாள். 13அவள் அந்த இளை
ஞனைத் தழுவி முத்தமிட்டாள். அவள்
வெட்கமில்லாமல், 14“என்னிடம் சமாதானப்
பலிகளின் விருந்து உள்ளது. நான் கொடுப்
பதாக வாக்களித்தவற்றைக் கொடுத்து விட்
டேன். 15இன்னும் என்னிடம் விருந்து மீத
முள்ளது. எனவே, என்னோடு உன்னைச்
சேர்த்துக் கொள்ள அழைப்பதற்காக
வெளியே வந்துள்ளேன். நான் உனக்காகவே
காத்துக் கொண்டிருந்தேன். இப்போது நான்
உன்னைக் கண்டுபிடித்தேன். 16என் படுக்கை
யின்மேல் சுத்தமான விரிப்பை விரித்துள்
ளேன். அது எகிப்திலுள்ள அழகான
விரிப்பு. 17நான் என் படுக்கையின்மேல்
மணப்பொருட்களைத் தூவியுள்ளேன். வெள்
ளைப்போளம், சந்தனம், இலவங்கப்பட்டை
ஆகியவற்றால் என் படுக்கையை மணம்
வீசச்செய்திருக்கிறேன். 18வா, நாம் விடியும்
வரை அன்போடு சேர்ந்திருப்போம். இரவு
முழுவதும் ஒருவருக்கொருவர் மகிழ்ச்சி
யோடு இருப்போம். 19என் கணவன்
வெளியே சென்றிருக்கிறான். அவன் வியா
பாரத்திற்காகத் தூரதேசங்களுக்குச் சென்றி
ருக்கிறான். 20அவன் நீண்ட பயணத்துக்குப்
போதுமான பணத்தை எடுத்துப்போயிருக்கி
றான். அவன் இரண்டு வாரங்களுக்கு வீட்
டிற்கு வர மாட்டான்” என்றாள்.
21அவள் இப்படிப்பட்ட வார்த்தைகளைச்
சொல்லி அந்த இளைஞனுக்கு ஆசைகாட்டி
னாள். அவளது மென்மையான வார்த்தை
கள் அவனைத் தூண்டின. 22அந்த இளைஞன்
அவளது வலைக்குள் விழுந்தான். பலியிடப்
போகும் காளையைப்போன்று அவன் சென்
றான். அவன் வலையை நோக்கிப்போகும்
மானைப் போன்று சென்றான். 23வேட்டைக்
காரன் அந்த மானின் நெஞ்சில் அம்பை
வீசத்தயாராக இருந்தான். அவன் வலைக்குள்
பறந்துபோகும் பறவையைப்போன்று இருந்
தான். அவன் தனக்கு வரப்போகும் ஆபத்தை
அறிந்துகொள்ளவில்லை.
24மகன்களே! இப்போது கவனியுங்கள்.
நான் சொல்லும் வார்த்தைகளைக் கேளுங்
கள். 25ஒரு மோசமான பெண் உன்னை
அழைத்துச் செல்லும்படி வைத்துக்கொள்
ளாதே. அவளது வழிகளை பின்பற்றிச்
செல்லாதே. 26பல ஆண்கள் விழுவதற்குக்
காரணமாக அவள் இருந்திருக்கிறாள். அவள்
பல ஆண்களை அழித்திருக்கிறாள். 27அவ
ளது வீடு மரணத்திற்குரிய இடமாகும்.
அவளது பாதையானது மரணத்திற்கு நேரடி
யாக அழைத்துப்போகும்.

### ஞானம் ஒரு நல்ல பெண்

8 கவனியுங்கள்! ஞானமும், அறிவும்
கவனிக்கும்படி உங்களை அழைக்கின்
றன.
2அவை, மலையின் உச்சிமீது நிற்கின்றன.
சாலையின் பக்கத்தில், பாதைகள் சந்திக்கும்
இடத்தில் நிற்கின்றது.

3அவை நகர வாசல்களின் அருகில்
உள்ளன. திறந்த கதவுகளின் வெளியே
அவை அழைக்கின்றன.
4ஞானம் சொல்கிறதாவது: “ஜனங்களே,
உங்களை நோக்கி அழைக்கிறேன். நான்
எல்லா ஜனங்களையும் அழைக்கிறேன்.
5நீங்கள் முட்டாள்களாக இருந்தால், ஞான
வான்களாகக் கற்றுக்கொள்ளுங்கள். முட்
டாள் மனிதர்களே, புரிந்துகொள்ள கற்றுக்
கொள்ளுங்கள்.
6கவனியுங்கள், நான் கற்றுத்தருபவை
முக்கியமானவை நான் சரியானவற்றையே
உங்களுக்குச் சொல்லுகிறேன்.
7எனது வார்த்தைகள் உண்மையானவை.
நான் பொய்யான பாவங்களை வெறுக்கி
றேன்.
8நான் சொல்வதெல்லாம் சரியானவை.
என் வார்த்தைகளில் தவறோ பொய்யோ
இல்லை.
9புரிந்துகொள்ளும் திறமை உடையவர்
களுக்கு என் வார்த்தைகள் அனைத்தும்
தெளிவானவை. அறிவுள்ள ஒருவன் இத
னைப் புரிந்துகொள்வான்.
10எனது ஒழுக்கத்தை ஏற்றுக்கொள். இது
வெள்ளியைவிட விலை மதிப்புடையது.
இது சிறந்த பொன்னைவிட மதிப்பிற்குரி
யது.
11ஞானமானது முத்துக்களைவிட மதிப்பு
மிக்கது. ஒருவன் விரும்புகிற அனைத்துப்
பொருட்களையும்விட இது மிகவும் மதிப்
புடையது” என்று ஞானம் கூறுகிறது.

### ஞானம் செய்வது என்ன?

12நான் ஞானம். நான் நல்ல தீர்ப்புகளோடு
வாழ்கிறேன். நீ என்னை அறிவாலும்
நல்ல தீர்மானங்களாலும் கண்டுக்கொள்ள
முடியும்.
13ஒருவன் கர்த்தரை மதிக்கும்போது
அவன் தீயவைகளை வெறுக்கிறான். ஞா
னமாகிய நான் பெருமையை வெறுக்கிறேன்.
மற்றவர்களைவிட தன்னைப் பெரியவனாக
நினைப்பவர்களையும் நான் வெறுக்கிறேன்.
நான் தீய வழிகளையும், பொய்சொல்லும்
வாய்களையும் வெறுக்கிறேன்.
14ஆனால் ஞானமாகிய நான் ஜனங்களுக்கு
நல்ல முடிவுகளை எடுக்கும் திறமைகளையும்
நல்ல தீர்ப்புகளையும் வழங்குகிறேன். நான்
புரிந்துகொள்ளும் வல்லமையும் கொடுக்கி
றேன்.
15அரசர்கள் ஞானமாகிய என்னை ஆட்
சிக்குப் பயன்படுத்துவார்கள். ஆளுபவர்கள்
என்னை நியாயமான சட்டங்களை ஏற்
படுத்தப் பயன்படுத்துவார்கள்.
16பூமியில் உள்ள ஒவ்வொரு நல்ல ஆட்சி
யாளனும் என்னைப் பயன்படுத்தி தனக்குக்
கட்டுப்பட்ட ஜனங்களை ஆள்கிறான்.
17என்னை நேசிக்கிற ஜனங்களை ஞா
னமாகிய நான் நேசிக்கிறேன். என்னைக்
கண்டுக்கொள்ள ஜனங்கள் கடுமையாக
முயற்சித்தால் அவர்கள் கண்டுகொள்
வார்கள்.
18ஞானமாகிய என்னிடமும் கொடுப்பதற்
கென்று செல்வமும் மதிப்பும் உள்ளன. நான்
உண்மையான செல்வத்தையும் வெற்றி
யையும் தருவேன்.
19நான் தருகின்ற பொருட்கள் சிறந்த
பொன்னைவிட உயர்ந்தவை எனது அன்ப
ளிப்புகள் சுத்தமான வெள்ளியைவிட உயர்ந்
தவை.
20ஞானமாகிய நான் ஜனங்களை நல்
வழியிலேயே நடத்திச் செல்வேன். நான்
அவர்களைச் சரியான நியாயத்தீர்ப்பின்
வழியில் நடத்திச் செல்வேன்.
21என்னை நேசிக்கின்றவர்களுக்கு நான்
செல்வத்தைத் தருவேன் ஆம், அவர்களின்
வீட்டைக் களஞ்சியத்தால் நிரப்புவேன்.
22நீண்டகாலத்துக்கு முன் துவக்கத்தில்
முதலாவதாக ஞானமாகிய நானே படைக்கப்
பட்டேன்.
23ஞானமாகிய நான் துவக்கத்தில் உரு
வாக்கப்பட்டேன் உலகம் படைக்கப்படும்
முன்பே நான் படைக்கப்பட்டேன்.
24ஞானமாகிய நான் கடல்களுக்கு முன்பே
உருவாக்கப்பட்டேன். நான் தண்ணீருக்கு
முன்னமே படைக்கப்பட்டேன்.
25ஞானமாகிய நான் மலைகளுக்கு முன்
னமே பிறந்தவள். நான் குன்றுகளுக்கு
முன்னமே பிறந்தேன்.
26கர்த்தர் பூமியைப் படைப்பதற்கு முன்
னமே ஞானமாகிய நான் பிறந்தேன். நான்
வயல் வெளிகளுக்கு முன்னமே பிறந்தேன்.
நான் உலகில் முதல் மண் உருவாக்கப்படும்
முன்னமே தேவனால் பிறப்பிக்கப்பட்டேன்.
27கர்த்தர் வானத்தைப் படைக்கும்போது
ஞானமாகிய நான் அங்கிருந்தேன். கர்த்தர்
கடலின் எல்லைகளை நிலத்தைச்சுற்றி வட்
டங்களாக வரைந்தபோதும் ஞானமாகிய
நான் அங்கிருந்தேன்.
28கர்த்தர் வானத்தில் மேகங்களை வைப்
பதற்கு முன்னரே நான் பிறப்பிக்கப்பட்டேன்.
கர்த்தர் கடலில் தண்ணீரை ஊற்றும்போதே
நான் அங்கிருந்தேன்.
29கடல்களில் தண்ணீரின் அளவைக் கர்த்
தர் நிர்ணயித்தபோதே நான் அங்கிருந்தேன்.
தண்ணீரானது கர்த்தருடைய அனுமதியின்றி
உயர்ந்திட முடியாது. கர்த்தர் உலகத்தின்
அஸ்திபாரத்தை உண்டாக்கியபோது நான்
அங்கிருந்தேன்.
30நான் அவரது அருகில் திறமையுள்ள
வேலைக்காரனாக இருந்தேன். கர்த்தர் என்
னால் ஒவ்வொரு நாளும் மகிழ்ச்சி அடைந்
தார். நான் அவரை எப்பொழுதும் மகிழ்ச்
சியோடு சிரிக்கச் செய்தேன்.
31தான் படைத்த உலகத்தைப் பார்த்து
கர்த்தர் மகிழ்ந்தார். அவர் அதிலுள்ள
ஜனங்களைப் பார்த்து மகிழ்ந்தார்.

32“குழந்தைகளே! இப்பொழுது நான்
சொல்வதை கவனியுங்கள். நீங்களும் மகிழ்ச்
சியாக இருக்கலாம். ஆனால் எனது வழி
களைப் பின்பற்ற வேண்டும்.
33எனது போதனைகளைக் கேட்டு ஞானம்
பெறுங்கள். அதைக் கவனிக்க மறுக்காதீர்
கள்.
34என்னைக் கவனிக்கிற எவனும் மகிழ்ச்
சியாக இருப்பான். அவன் ஒவ்வொரு
நாளும் என் வழிகளைக் கவனிப்பான்.
அவன் என் வழியருகில் காத்திருப்பான்.
35என்னைக் கண்டுக்கொள்கிறவன் வாழ்
வைக் கண்டுக்கொள்கிறான். அவன் கர்த்த
ரிடமிருந்து நல்லவற்றைப் பெறுவான்.
36ஆனால் எனக்கு எதிராகப் பாவம்
செய்கிறவன் தன்னையே புண்படுத்திக்
கொள்கிறான். என்னை வெறுக்கிற அனை
வரும் மரணத்தை விரும்புகிறார்கள்.”

## ஞானமும் முட்டாள்தனமும்

9 ஞானம் தனது வீட்டைக் கட்டி அதில்
ஏழு தூண்களையும்* அமைத்துக்
கொண்டாள். 2ஞானம் இறைச்சியைச்
சமைத்து, திராட்சைரசத்தைத் தயாரித்து
அவைகளை மேஜைமீது வைத்தாள். 3பிறகு
தன் வேலைக்காரர்களை அனுப்பி நகரத்தி
லிருந்து ஜனங்களை மலைக்கு வந்து தன்
னோடு உணவருந்தும்படி அழைத்தாள்.
4அவள், “வாருங்கள், கற்க அவசியமுள்ளவர்
களே வாருங்கள்” என்று அழைத்தாள்.
அறிவில்லாதவர்களையும் அவள் வரவழைத்
தாள். 5“வாருங்கள், ஞானமாகிய உணவை
உண்ணுங்கள். நான் தயாரித்த திராட்சை
ரசத்தைப் பருகுங்கள். 6உங்கள் பழைய
முட்டாள்தனமான வழிகளை விட்டு விடுங்
கள். உங்களுக்கு வாழ்க்கை இருக்கிறது.
புரிந்துகொள்ளுதலின்வழியைப் பின்பற்றுங்
கள்” என்றாள்.
7பெருமை கொண்டவனிடம் சென்று
அவன் வழிகள் தவறானவை என்று நீ
சொல்ல முயற்சித்தால், அவன் உன்னிடமே
குற்றம் கண்டுபிடித்து இழிவாகப் பேசுவான்.
அவன் தேவனுடைய ஞானத்தையும் கேலிச்
செய்வான். ஒரு கெட்டவனிடம் அவன்
தவறானவன் என்று நீ சொன்னால் அவன்
உன்னையும் கேலிச் செய்வான். 8எனவே
ஒருவன் மற்றவர்களைவிட தான் மேலான
வன் என எண்ணிக்கொண்டிருந்தால்,
அவன் வழிகள் தவறானவை என்று
அவனிடம் சொல்லவேண்டாம். இதற்காக
அவன் உன்னை வெறுப்பான். ஆனால் நீ
ஒரு புத்திசாலிக்கு உதவி செய்தால் அவன்
உன்னை மதித்துப் போற்றுவான். 9நீ
அறிவாளிக்குப் போதித்தால் அவன் மேலும்
ஞானத்தைப் பெறுகிறான். நீ நல்லவனுக்குப்
போதித்தால் அவன் மேலும் கற்றுக் கொள்
வான்.
10கர்த்தருக்கு மதிப்பது தான் ஞானம்
பெறுவதற்கான முதல் படியாகும். கர்த்தரைப்
பற்றிய அறிவைப் பெறுவதுதான் அறிவைப்
பெறுவதற்கான முதல் படியாகும். 11நீ
ஞானம் உடையவனாக இருந்தால், உன்
ஆயுள்காலம் நீண்டதாக இருக்கும். 12நீ
ஞானம் உடையவனாக ஆனால் உனது
சொந்த நன்மைக்கு நீ ஞானம் உடைய
வனாகிறாய். ஆனால் நீ வீண்பெருமை
கொண்டவனாகி மற்றவர்களைக் கேலி
செய்தால், உனது துன்பங்களுக்கு நீயே
பொறுப்பாளி ஆகிறாய்.
13ஒரு முட்டாள் சத்தமாகப் பேசும் தீய
பெண்ணைப் போன்றவன். அவளுக்கு அறி
வில்லை. 14அவள் தன் வீட்டுக் கதவருகில்
உட்கார்ந்திருப்பாள். நகரத்து மலை மீது
இருக்கை போட்டு அமர்ந்திருப்பாள். 15அவ்
வழியாக ஜனங்கள் போகும்போது அவள்
அவர்களை அழைக்கிறாள். அவர்களுக்கு
அவளைப்பற்றி எந்த ஆர்வமும் இல்லா
விட்டாலும் அவள், 16“கற்றுக்கொள்ள
வேண்டியவர்கள் எல்லாரும் வாருங்கள்”
என்பாள். அவள் முட்டாள் ஜனங்களையும்
அழைக்கிறாள். 17ஆனால் முட்டாள்தன
மாகிய அந்தப்பெண், “நீங்கள் தண்ணீரைத்
திருடினால் அது உங்கள் சொந்தத் தண்ணீ
ரைவிடச் சுவையானதாக இருக்கும். நீங்கள்
ரொட்டியைத் திருடினால், அது நீங்களாக
சமைத்த ரொட்டியைவிடச் சுவையானதாக
இருக்கும்” என்பாள்.
18அவள் வீடு முழுவதும் கெட்ட ஆவிக
ளால் நிறைந்திருக்கும் என்று முட்டாள்
களுக்குத் தெரிந்திருக்கவில்லை. அவள்
அவர்களை மரணத்தின் ஆழமான பகுதிக
ளுக்கு அழைத்துச் செல்வாள்.

## சாலொமோனின் நீதிமொழிகள்

10 இவை அனைத்தும் சாலொமோனின்
நீதிமொழிகள் (ஞானவார்த்தைகள்)
ஒரு ஞானமுள்ள மகன் தன் தந்தைக்கு
மகிழ்ச்சியைத் தருகிறான். ஆனால் ஒரு
முட்டாள் மகனோ தன் தாயைத் துன்பப்
படுத்துகிறான்.
2ஒருவன் தீயச் செயல்கள் மூலம் பொருள்
சம்பாதித்திருந்தால் அவை பயனற்றவை.
ஆனால் நல்ல செயல்களைச் செய்வது
உன்னை மரணத்திலிருந்து காப்பாற்றும்.
3கர்த்தர்நல்லவர்களைப்பற்றியே அக்கறை
கொள்கிறார். அவர் அவர்களுக்குத் தேவை
யான உணவைக் கொடுக்கிறார். தீய ஜனங்
கள் விரும்புகிறவற்றை கர்த்தர் அவர்
களிடமிருந்து எடுத்துக்கொள்கிறார்.
4ஒரு சோம்பேறி ஏழ்மையாக இருப்பான்;

---

**ஏழு தூண்கள்** பழங்காலத்து இஸ்ரவேலில், பல வீடுகள் நான்கு முக்கியமான அறைகளையும், கூரையை தாங்கும் ஏழு தூண்களையும் கொண்டவையாக இருந்தன. இது ஞானம் ஒரு நல்ல உறுதியான வீட்டைக் கொண்டிருந்தது என்பதைக் காட்டும்.

ஆனால் கடினமாக உழைக்கிற ஒருவன்
செல்வந்தனாகிறான்.
5சுறுசுறுப்பானவன் சரியான நேரத்தில்
அறுவடை செய்துகொள்கிறான். ஆனால்
அறுவடைக்காலத்தில் தூங்கிவிட்டு, பயிர்
களைச் சேகரிக்காமல் இருப்பவன், வெட்கத்
திற்குரியவனாவான்.
6நல்லவர்களை ஆசீர்வதிக்கும்படி ஜனங்
கள் தேவனை வேண்டுகின்றனர். தீயவர்க
ளும் நல்லவற்றைப்பற்றிக் கூறலாம். ஆனால்
அது, அவர்களின் கெட்ட செயல்களுக்கான
திட்டங்களை மறைப்பதாக இருக்கும்.
7நல்லவர்கள் நல்ல நினைவுகளை விட்டு
விட்டுச் செல்கின்றனர் தீயவர்கள் விரைவில்
மறக்கப்படுகின்றனர்.
8யாராவது நல்லவற்றைச் செய்யவேண்
டும் எனக்கூறினால் அறிவாளி அதற்குக்
கீழ்ப்படிகிறான். ஆனால் அறிவில்லாத
வனோ வீண்விவாதம் செய்து தனக்குத்
துன்பத்தைத் தேடிக்கொள்கிறான்.
9ஒரு நல்ல நேர்மையான மனிதன் பாது
காப்பாக இருக்கிறான். ஆனால் கோணல்
வழியில் செல்பவன் பிடிபடுவான்.
10உண்மையை மறைக்கிறவன் துன்பங்க
ளுக்குக் காரணமாகிறான். வெளிப்படை
யாகப் பேசுபவன் சமாதானத்தை உருவாக்கு
கிறான்.
11நல்லவனின் வார்த்தைகள் வாழ்வைச்
சிறப்புள்ளதாக்கும். ஆனால் தீயவனின்
வார்த்தைகள் அவனுக்குள்ளிருக்கும் தீயவற்
றையே வெளிக்காட்டும்.
12வெறுப்பு விவாதங்களுக்குக் காரண
மாகும். ஆனால் அன்பானது ஜனங்கள்
செய்கிற தவறுகளை மன்னித்து விடும்.
13அறிவுள்ளவர்கள் கேட்கத்தக்கவற்றைப்
பேசுகிறார்கள். ஆனால் அறிவில்லாதவர்
களோ பாடம் கற்றுக்கொள்வதற்கு முன்னதா
கவே தண்டிக்கப்பட வேண்டும்.
14அறிவுள்ளவர்கள் அமைதியாக இருந்து
புதியவற்றைக் கற்றுக் கொள்கிறார்கள்.
ஆனால் அறிவில்லாதவர்கள் வீணாகப் பேசி
தமக்குத்தாமே துன்பத்தை வரவழைத்துக்
கொள்கிறார்கள்.
15செல்வமானது செல்வந்தர்களைக் காப்
பாற்றுகிறது. வறுமையோ ஏழைகளை
அழிக்கிறது.
16ஒருவன் நன்மை செய்தால் அதற்காகப்
பாராட்டப்படுவான். அவனுக்கு வாழ்க்கை
கொடுக்கப்படுகிறது. தீமையோ தண்ட
னையை மட்டுமே பெற்றுத்தருகிறது.
17ஒருவன் தனது தண்டனைகளிலிருந்து
கற்றுக்கொண்டால் அது மற்றவர்களின்
வாழ்க்கைக்கு உதவும். ஆனால் கற்றுக்
கொள்ள மறுக்கிறவன் ஜனங்களைத் தவ
றான வழியிலேயே அழைத்துச் செல்வான்.
18வெறுப்பை மறைக்கிறவனால் பொய்
சொல்ல முடியும். ஆனால் ஒரு முட்டாளால்
வதந்தியை மட்டுமே பரப்ப முடியும்.
19அதிகமாகப் பேசுகிற ஒருவன் துன்பத்
திற்கு ஆளாகிறான். ஞானம் உள்ளவன்
அமைதியாக இருக்கக் கற்றுக்கொள்கிறான்.
20நல்லவனின் வார்த்தைகள் சுத்தமான
வெள்ளியைப் போன்றவை. தீயவனின் எண்
ணங்களோ பயனற்றவை.
21நல்லவனின் வார்த்தைகள் பலருக்கு
உதவியாக இருக்கும். ஆனால் முட்டாள்
களோ அறிவீனத்தால் அழிந்துபோவார்கள்.
22கர்த்தருடைய ஆசீர்வாதம் உனக்கு உண்
மையான செல்வத்தைக் கொண்டு வரும்.
அது துன்பத்தைக் கொண்டு வராது.
23அறிவில்லாதவர்களோதவறு செய்வதில்
மகிழ்ச்சி அடைவார்கள். அறிவுள்ளவனோ
ஞானத்தால் மகிழ்ச்சி அடைகிறான்.
24தீயவர்கள் தாங்கள் அஞ்சுகிறவற்றா
லேயே தோற்கடிக்கப்படுவார்கள். ஆனால்
நல்லவர்களோ தாங்கள் விரும்புவதைப்
பெறுவார்கள்.
25தங்களுக்கு நேரும் பிரச்சனைகளாலேயே
தீயவர்கள் அழிவார்கள். ஆனால் நல்லவர்
களோ எல்லாக் காலங்களிலும் உறுதியாக
நிற்பார்கள்.
26ஒரு சோம்பேறியை உனக்காக எதுவும்
செய்ய அனுமதிக்காதே. ஏனென்றால் அவர்
கள் பற்களுக்குக் காடியைப் போன்றும்
கண்களுக்குப் புகையைப் போன்றும் இருப்
பார்கள்.
27நீ கர்த்தரை மதித்தால் நீண்டகாலம்
வாழலாம். ஆனால் தீயவர்களோ தம் வாழ்
நாளில் பல ஆண்டுகளை இழப்பார்கள்.
28நல்லவர்கள் நம்புகிறவை மகிழ்ச்சியைக்
கொண்டுவரும். கெட்டவர்கள் நம்புகிற
வையோ அழிவைக் கொண்டுவரும்.
29கர்த்தர் நல்லவர்களைப் பாதுகாக்கிறார்.
ஆனால் தவறு செய்பவர்களையோ கர்த்தர்
அழிக்கிறார்.
30நல்ல மனிதர்கள் எப்பொழுதும் பாது
காக்கப்படுவார்கள். தீயவர்கள் தேசத்தை
விட்டுப்போகக் கட்டாயப்படுத்தப்படுவார்
கள். ஆண்டவர் நல்ல ஜனங்களைப் பாது
காப்பார். அவர் தீய செயல்களைச் செய்யும்
ஜனங்களை அழிப்பார்.
31நல்லவர்கள் ஞானமுள்ளவற்றைப் பேசு
வார்கள். தொல்லை உண்டாக்கும் காரியங்
களைப் பேசுபவர்களின் வார்த்தைகளை
ஜனங்கள் கேட்காமல் நிறுத்திவிடுவார்கள்.
32நல்லவர்கள் சரியானவற்றைச் சொல்ல
அறிந்துள்ளனர். ஆனால் கெட்டவர்களோ
தொல்லை தருவதையே பேசுகின்றனர்.

11 பொருள்களைச் சரியாக எடை
போடாத தராசுகளைச் சிலர் பயன்
படுத்துகின்றனர். அவர்கள் அவற்றை ஜனங்
களை ஏமாற்றவே பயன்படுத்துகின்றனர்.
கர்த்தர் அப்பொய் அளவுகளை வெறுக்கி
றார். கர்த்தருக்கு விருப்பமானது சரியான
அளவுகளே.
2வீண்பெருமையும் அகந்தையும் உடைய

வர்கள் முக்கியமற்றுப் போகிறார்கள். ஆனால் அடக்கமாக இருக்கிற ஜனங்கள் ஞானம் பெறுகிறார்கள்.

3 நல்ல குணமும் உத்தம குணமும் கொண்டவர்கள் உத்தமத்தால் வழிநடத்தப்படுவர். ஆனால் கெட்டவர்களோ மற்றவர்களை ஏமாற்றுவதால் தங்களை அழித்துக்கொள்கிறார்கள்.

4 தேவனுடைய நியாயத்தீர்ப்பு நாளில் பணம் பயனற்றதாகப் போகும். ஆனால் நன்மை ஜனங்களை மரணத்திலிருந்து காப்பாற்றும்.

5 நல்லவன் உத்தமனாகவும் இருந்தால் அவனது வாழ்க்கை எளிதானதாக இருக்கும். ஆனால் தீயவனோ தான் செய்கிற கெட்ட செயல்களால் அழிக்கப்படுகிறான்.

6 நன்மை உத்தமனைக் காப்பாற்றுகிறது. ஆனால் தீயவர்களோ தாம் விரும்புகிற கெட்ட செயல்களால் சிக்கிக்கொள்கின்றனர்.

7 தீயவன்மரித்துப்போன பிறகு அவனுக்கு எந்த நம்பிக்கையும் இல்லை. அவன் நம்பியவை எல்லாம் போகும்; ஒன்றுமில்லாமல் பயனற்றுப்போகும்.

8 துன்பங்களில் இருந்து நல்லவன் தப்பித்துக் கொள்கிறான். அத்துன்பமானது தீயவர்களுக்குப் போய்ச் சேரும்.

9 தீயவன், தன் சொற்களால் பிறரைப் புண்படுத்துவான். ஆனால் நல்லவர்களோ தங்களுடைய ஞானத்தால் காப்பாற்றப்படுவார்கள்.

10 நல்லவர்கள் வெற்றிபெறும்போது, நகரம் முழுவதும் மகிழும். கெட்டவர்கள் அழியும்போது ஜனங்கள் மகிழ்ச்சியோடு சத்தமிடுவார்கள்.

11 உத்தமமானவர்கள் இருந்து ஆசீர்வதிப்பதால் நகரம் சிறப்புடையதாகிறது. தீயவர்களின் பேச்சால் நகரம் அழிந்துபோகிறது.

12 ஒருவன் நல்லுணர்வு இல்லாதவனாக இருந்தால் பக்கத்தில் உள்ளவர்களைப்பற்றி அவதூறாகப் பேசுகிறான். ஆனால் ஞானம் உள்ளவனோ எப்போது அமைதியாக இருக்கவேண்டும் என்பதைத் தெரிந்துகொள்கிறான்.

13 அடுத்தவனது இரகசியங்களைச் சொல்லும் யாரையும் நம்ப இயலாது. ஆனால் நம்பத் தகுந்த ஒருவன் பொய்ச் செய்திகளைப் பரப்பமாட்டான்.

14 பலவீனமான தலைவர்களை உடைய நாடு வீழ்ந்துபோகும். ஆனால் பல நல்ல ஆலோசனை உடையவர்கள் நாட்டைக் காப்பாற்றுகிறார்கள்.

15 நீ அடுத்தவனது கடனைத் தீர்ப்பதாக வாக்களித்திருந்தால் அதனால் வருத்தப்படுவாய், நீ இத்தகைய செயல்களை மறுத்துவிட்டால் பாதுகாப்பாக இருப்பாய்.

16 கருணையும் ஒழுக்கமும் உள்ள பெண் மதிக்கப்படுவாள். வல்லமையுள்ளவர்களோ செல்வத்தை மட்டுமே பெறுவார்கள்.

17 இரக்கமுள்ள மனிதன் நன்மையை அடைகிறான். ஆனால் மோசமான மனிதனோ தன்னைத் தானே அழித்துக்கொள்கிறான்.

18 தீயவனோ ஜனங்களை ஏமாற்றி பொருளைக் கவர்ந்துகொள்கிறான். ஆனால் நல்லவனாகவும் நேர்மையானவனாகவும் இருக்கிறவன் உண்மையான பரிசினைப் பெறுகிறான்.

19 உண்மையில்நன்மையானது வாழ்வைக் கொண்டுவரும். ஆனால் தீயவர்களோ தீமையைப் பின்தொடர்ந்து மரணத்தை அடைகின்றனர்.

20 தீமை செய்ய விரும்புகிறவர்களைக் கர்த்தர் வெறுக்கிறார். ஆனால் நன்மை செய்ய முயல்பவர்களில் மகிழ்ச்சி அடைகிறார்.

21 தீயவர்கள் தண்டனை பெறுவது உண்மை. நல்லவர்களோ விடுவிக்கப்படுகிறார்கள்.

22 அழகான பெண் முட்டாளாக இருப்பது, பன்றியின் மூக்கில் உள்ள பொன் மூக்குத்திக்குச் சமம்.

23 நல்லவர்கள் தாம் விரும்புவதைப் பெறுவார்களானால் அதனால் மிகுந்த நன்மை விளையும். தீயவர்கள் தாம் விரும்புவதைப் பெறுவார்களானால் அதனால் தொல்லைகளே விளையும்.

24 ஒருவன் தாராளமாகக் கொடுத்தால் அவன் மேலும் மேலும் பெறுவான். ஆனால் ஒருவன் கொடுக்க மறுத்தால் பிறகு அவன் ஏழ்மையாவான்.

25 ஒருவன் தாராளமாகக் கொடுத்தால் அவன் லாபம் அடைகிறான். நீ அடுத்தவர்களுக்கு உதவினால் நீயும் நன்மை பெறுவாய்.

26 தானியங்களைக் கட்டிவைத்து விற்க மறுப்பவர்கள்மீது ஜனங்கள் கோபம் அடைகிறார்கள். ஆனால் தானியங்களை மற்றவர்களுக்கு விற்பவர்கள்மேல் ஜனங்கள் மகிழ்ச்சி அடைகின்றனர்.

27 நன்மை செய்ய முயலுகிற ஒருவனை ஜனங்கள் மதிக்கின்றனர். ஆனால் தீமை செய்கிறவனோ துன்பத்தைத் தவிர வேறு எதையும் பெறுவதில்லை.

28 தன் செல்வத்தை மட்டும் நம்புகிறவன் காய்ந்த இலையைப்போன்று உதிர்ந்து விழுகிறான். ஆனால் நல்லவனோ பச்சையான இலையைப்போன்று வளர்கிறான்.

29 ஒருவன் தன் குடும்பத்தின் துன்பத்துக்குக் காரணமாக இருந்தால், அவன் எதையும் பெறமாட்டான். அதோடு அறிவில்லாதவன் முடிவில் ஞானமுள்ளவனுக்குச் சேவை செய்ய கட்டாயப்படுத்தப்படுவான்.

30 நல்லவன் செய்கிற செயல்கள் எல்லாம் வாழ்வுதரும் மரம் போன்றவை. ஞானமுள்ளவன் ஜனங்களுக்குப் புதிய வாழ்க்கையைக் கொடுக்கிறான்.

31பூமியில் நல்லவர்கள் தமக்குரிய வெகு
மதியைப் பெறும்போது, தீயவர்களும் தங்க
ளுக்குப் பொருத்தமானதைப் பெறுவார்கள்.

12 ஒருவன் ஞானமுள்ளவனாக விரும்பி
னால், அவனது தவறினை மற்ற
வர்கள் சுட்டிக் காட்டும்போது கோபம்
கொள்ளாமல் இருக்கவேண்டும். அதை
வெறுக்கிறவனோ முட்டாளாகக் கருதப்படு
கிறான்.
2நல்லவர்களில் கர்த்தர் மகிழ்ச்சி அடை
கிறார். ஆனால் தீயவன் தண்டனை பெறும்
படி கர்த்தர் தீர்ப்பளிக்கிறார்.
3தீயவர்கள் என்றென்றும் பாதுகாப்பாக
இருக்கமுடியாது. ஆனால் நல்லவர்களோ
பாதுகாப்பாக இருக்கின்றனர்.
4நல்ல மனைவியை அடைந்த கணவன்
மகிழ்ச்சியாகவும் பெருமை உடையவனாக
வும் இருக்கிறான். ஆனால் ஒருபெண் தன்
கணவனை அவமானப்பட வைத்தால்,
அவள் அவனது உடம்பை உருக்கும் நோய்
போன்று கருதப்படுகிறாள்.
5நல்லவர்கள் தாம் செய்யத் திட்டமிட்ட
வற்றைச் சரியாகவும் நேர்மையாகவும்
செய்து விடுகின்றனர். ஆனால் தீயவர்கள்
சொல்லுகின்றவற்றை மட்டும் நம்பாதே.
6தீயவர்கள் தம் வார்த்தைகளால் பிறரைப்
புண்படுத்துவார்கள். ஆனால் நல்லவர்களின்
வார்த்தைகள் மற்றவர்களை ஆபத்திலிருந்து
காப்பாற்றும்.
7தீயவர்கள் அழிக்கப்படுவார்கள்; அவர்
களில் எதுவும் மிச்சம் இராது. ஆனால்
நல்லவர்களை ஜனங்கள் அவர்கள் காலத்
திற்குப்பின்பும் நீண்டகாலம் நினைவுகூரு
வார்கள்.
8ஞானமுள்ளவர்களை ஜனங்கள் போற்று
வார்கள். ஆனால் அறிவில்லாதவர்களை
ஜனங்கள் மதிப்பதில்லை.
9ஒருவன் ஆகாரமில்லாதவனாக இருந்தும்
தன்னை முக்கிய மனிதனாகக் காட்டுவதைக்
காட்டிலும் கடினமாக உழைக்கும் சாதாரண
மனிதனாக இருப்பதே நல்லதாகும்.
10நல்லவன் தன் மிருகங்களைக் கவனித்
துக்கொள்கிறான். கெட்டவனோ கருணை
உள்ளவனாக இருக்கமாட்டான்.
11தன் நிலத்தில் வேலைசெய்கிற விவசாயி
தனக்குரிய உணவைப் பெறுகிறான். ஆனால்
பயனற்ற சிந்தனைகளில்நேரத்தை வீணாக்கு
கிறவன் முட்டாளாகிறான்.
12தீயவர்கள் எப்போதும் தவறானவற்றைச்
செய்யவே விரும்புவார்கள். ஆனால் நல்ல
வர்கள் வேர்களைப்போன்று ஆழமாகப்
போகும் ஆற்றல் கொண்டுள்ளனர்.
13தீயவன் முட்டாள்தனமானவற்றைச்
சொல்லி அவ்வார்த்தைகளாலேயே அகப்பட்
டுக் கொள்கிறான். ஆனால் நல்லவன் இத்
தகைய துன்பங்களிலிருந்து தப்பித்துக்
கொள்கிறான்.
14ஒருவன் தான் சொல்கிற நல்லவற்றுக்
காகப் பரிசுபெறுகிறான். இதுபோலவே
அவன் செய்கிற வேலையும் பலனளிக்கிறது.
15அறிவில்லாதவன் தனது வழியையே
சிறந்தவழி என்று நினைத்துக் கொள்கிறான்.
ஆனால் ஞானமுள்ளவனோ மற்றவர்கள்
சொல்லுவதைக் கவனிக்கிறான்.
16அறிவில்லாதவன் சுலபமாகக் கவலைய
டைகிறான். ஆனால் அறிவுள்ளவனோ
மற்றவர்கள் தவறாகப் பேசுவதை மன்னித்து
விடுகிறான்.
17ஒருவன் உண்மையைப் பேசுபவனாக
இருந்தால் அவன் சொல்பவற்றில் நேர்மை
இருக்கும். ஆனால் ஒருவன் பொய் சொன்
னால் அது அவனைத் துன்பத்திற்கே
அழைத்துச் செல்லும்.
18ஒருவன் சிந்திக்காமல் பேசினால் அவ்
வார்த்தைகள் வாளைப்போன்று மற்றவர்
களை துன்புறுத்தும். ஆனால் ஞானமுள்ள
வனோ தான் சொல்பவற்றில் எச்சரிக்கை
யாக இருப்பான். அவனது வார்த்தைகள்
புண்ணைக் குணப்படுத்தும்.
19ஒருவன் பொய் சொன்னால் அவ்
வார்த்தைகள் வீணாகிப்போகும். ஆனால்
உண்மை என்றென்றைக்கும் வாழும்.
20தீயவர்கள் எப்பொழுதும் துன்பம் செய்
யவே எண்ணுவார்கள். ஆனால் சமா
தானத்திற்காகவேலைசெய்பவர்கள் மகிழ்ச்சி
யாக இருப்பார்கள்.
21நல்லவர்கள் கர்த்தரால் பாதுகாப்பாக
வைக்கப்படுவார்கள். ஆனால் தீயவர்க
ளுக்கோ நிறைய துன்பங்கள் இருக்கும்.
22கர்த்தர் பொய் சொல்லுபவர்களை
வெறுக்கிறார். ஆனால் கர்த்தர் உண்மை
சொல்பவர்களில் மகிழ்ச்சியாக இருக்கிறார்.
23அறிவுள்ளவன் தனக்குத் தெரிந்த எல்
லாவற்றையும் சொல்லமாட்டான். ஆனால்
அறிவில்லாதவனோ எல்லாவற்றையும்
சொல்லி தன்னை முட்டாளாகக் காட்டிக்
கொள்வான்.
24கடினமாக உழைக்கிறவர்கள் மற்ற
உழைப்பாளிகளுக்கு பொறுப்பாளி ஆவார்
கள். சோம்பேறியோ அடிமையைப்போன்று
மற்றவர்களின்கீழ் வேலை செய்வான்.
25கவலையானது ஒருவனின் மகிழ்ச்சியை
எடுத்துவிடும். ஆனால் இரக்கமான
வார்த்தைகள் ஒருவனை மகிழ்ச்சிப்படுத்தும்.
26தான் தேர்ந்தெடுக்கிற நண்பர்களைப்
பற்றி நல்லவன் மிகுந்த எச்சரிக்கையாக
இருப்பான். ஆனால் தீயவர்களோ கெட்ட
நண்பர்களையே தேர்ந்தெடுப்பார்கள்.
27சோம்பேறி தான் விரும்பியவற்றை
செய்து முடிப்பதில்லை. ஆனால் கடினமாக
உழைக்கிறவனிடம் செல்வம் வந்துசேரும்.
28நீ சரியாக வாழ்ந்தால் உண்மையான
வாழ்க்கையை அடைவாய். அதுவே என்
றென்றும் வாழ்வதற்குரிய வாழ்வாகும்.

13 ஒரு ஞானமுள்ள மகன், தான்
செய்யவேண்டியது என்னவென்று

தன் தந்தை கூறும்போது அவன் அதனைக்
கவனமாகக் கேட்பான். ஆனால் வீண்
பெருமையுள்ளவனோ, ஜனங்கள் தன்னைத்
திருத்த முயலும்போது கவனிப்பதில்லை.
2நல்லவர்கள், தாம் சொல்லுகிற நல்லவற்
றுக்காகத் தகுந்த வெகுமதிகளை அடைகி
றார்கள். ஆனால் தீயவர்களோ எப்பொழு
தும் தவறானவற்றைச் செய்ய விரும்புகின்
றனர்.
3ஒருவன் தான் சொல்லுகின்றவற்றில்
எச்சரிக்கையோடு இருந்தால் அது அவன்
வாழ்வைக் காப்பாற்றும். ஆனால் சிந்தித்துப்
பார்க்காமல் பேசுகின்றவர்களின் வாழ்க்கை
அழிந்துப்போகும்.
4சோம்பேறி பலவற்றை விரும்புவான்,
ஆனால் அவனால் அவற்றை அடைய
முடிவதில்லை. ஆனால் கடினமாக உழைக்
கிறவர்கள் தாம் விரும்புவதைப் பெற்றுக்
கொள்வார்கள்.
5நல்லவர்கள் பொய்யை வெறுக்கிறார்கள்.
தீயவர்களோ அவமானமடைவார்கள்.
6நல்ல குணமானது நேர்மையானவர்
களைக் காப்பாற்றுகிறது. ஆனால் தீமையோ
பாவங்களை நேசிக்கிறவர்களைத் தோற்
கடிக்கும்.
7சிலர் செல்வந்தர்களைப்போன்று நடிக்கி
றார்கள். ஆனால் அவர்களிடம் எதுவு
மில்லை. மற்றும் சிலரோ ஏழையைப்
போன்று நடிக்கிறார்கள், ஆனால் அவர்கள்
உண்மையில் செல்வந்தர்களாக இருப்பார்
கள்.
8செல்வமுள்ளவன் சில சமயங்களில் தன்
உயிரைக் காப்பாற்ற ஒரு தொகையைச்
செலுத்த வேண்டியதாயிருக்கும். ஆனால்
ஏழைக்கு இதுபோன்ற மிரட்டல்கள் எதுவும்
ஏற்படாமல் இருக்கும்.
9ஒரு நல்லவன் பிரகாசமாக எரிகிற
விளக்கைப் போன்றவன். கெட்டவனோ
இருண்டுபோகிற விளக்கைப்போன்றவன்.
10மற்றவர்களைவிட தம்மைச் சிறந்தவர்க
ளாக நினைப்பவர்கள் துன்பத்தையே உரு
வாக்குகிறார்கள். ஆனால் மற்றவர்கள்
சொல்வதைக் கவனிப்பவர்கள் ஞானம்
உடையவர்கள்.
11ஒருவன் பணம் பெறுவதற்காக
மற்றவனை ஏமாற்றலாம்,பிறகு அப்பணமும்
அவனை விட்டு உடனடியாகப் போய்விடும்.
ஆனால் கடினமாக சம்பாதிக்கிறவனின் பண
மானது மென்மேலும் வளர்ந்து பெருகும்.
12நம்பிக்கை எதுவும் இல்லாவிட்டால்
மனம் சோர்வடையும். நீ விரும்புவதுபோல
எல்லாம் நடந்தால் நீ மகிழ்ச்சியால்
நிரப்பப்படுவாய்.
13மற்றவர்கள் உதவிசெய்ய முயற்சிக்கும்
போது ஒருவன் அவர்களது வார்த்தை
களைக் கவனிக்காமல் புறக்கணித்தால்,
பிறகு அவன் தனக்குத்தானே துன்பத்தை
வரவழைத்துக் கொள்கிறான். ஆனால்
மற்றவர்கள் சொல்வதைக் கவனிக்கிறவன்
அதற்குத் தகுந்த வெகுமதியைப் பெறுகி
றான்.
14ஞானம் உள்ளவனின் போதனைகள்
வாழ்வைத்தரும். அந்த வார்த்தைகள் துன்ப
காலத்தில் உதவும்.
15புரிந்துகொள்ளும் நல்ல உணர்வுள்ளவர்
களை ஜனங்கள் விரும்புவார்கள். ஆனால்
நம்ப முடியாதவர்கள் வாழ்வு கடினமாகிப்
போகிறது.
16ஞானமுள்ளவர்கள் எதையும் செய்வ
தற்கு முன் சிந்திக்கிறார்கள். ஆனால் அறி
வில்லாதவர்களோ, தம் செயல்கள்மூலம்
தமது முட்டாள்தனத்தைக் காட்டிக் கொள்
வார்கள்.
17ஒரு தூதுவனை நம்ப முடியாவிட்டால்
அவனைச் சுற்றிலும் துன்பங்களே ஏற்படும்.
ஆனால் ஒருவன் நம்பிக்கைக்கு உரியவனாக
இருந்தால் சமாதானம் உண்டாகும்.
18ஒருவன் தன் தவறுகளிலிருந்து பாடம்
கற்றுக்கொள்ள மறுத்தால், அவன் ஏழை
யாகவும் அவமானத்துக்குரியவனாகவும்
இருப்பான். ஆனால் தான் விமர்சிக்கப்படும்
போதும் தண்டனைக்குட்படும்போதும்
கவனிக்கிறவன் பயன் அடைகிறான்.
19ஒருவன் ஒன்றை விரும்பி, அதனைப்
பெற்றுக்கொண்டால் அவன் மகிழ்ச்சி
அடைகிறான். ஆனால் முட்டாள்களோ
தீயதை விரும்பி, மாற மறுக்கிறார்கள்.
20ஞானமுள்ளவர்களோடு நட்பாக இரு,
நீயும் ஞானம் அடைவாய். ஆனால் நீ
முட்டாள்களை நண்பர்களாக்கினால் உனக்
குத் துன்பங்கள் ஏற்படும்.
21பாவிகள் எங்கே போனாலும் துன்பங்
கள் அவர்களைத் துரத்தும். ஆனால் நல்ல
வர்களுக்கு நல்லவையே நடக்கும்.
22நல்லவர்களுக்குத் தம் பிள்ளைகளுக்கும்
பேரப்பிள்ளைகளுக்கும் கொடுக்கிற அளவிற்
குச் செல்வம் இருக்கும். தீயவர்களிடம் உள்ள
அனைத்தையும் முடிவில் நல்லவர்கள்
பெற்றுக்கொள்வார்கள்.
23ஒரு ஏழை, ஏராளமான விளைச்சலைத்
தரும் நல்ல நிலத்தை வைத்திருக்கலாம்.
ஆனால் அவன் தவறான தீர்மானங்கள்
செய்தால் பட்டினியாக இருப்பான்.
24ஒருவன் உண்மையாகவே தன் பிள்ளை
களை நேசித்தால், அவர்கள் தவறு செய்யும்
போது அவற்றைத் திருத்தவேண்டும். நீ உன்
மகனை நேசித்தால் அவனுக்குச் சரியான
பாதையைப் போதிக்கவேண்டும்.
25நல்லவர்கள், தமக்கு எது தேவையோ
அவற்றைப் பெற்றுக்கொள்வார்கள். ஆனால்
தீயவர்களோ, முக்கியமானவற்றைப் பெறாம
லேயே இருப்பார்கள்.

14 ஞானமுள்ள பெண் தன் ஞானத்தால்
ஒரு வீடு எவ்வாறு அமைய
வேண்டுமோ அவ்வாறு உருவாக்குகிறாள்.
ஆனால் அறிவற்ற பெண்ணோ தன்

முட்டாள்தனமான செயலால் தன் வீட்டையே
அழித்துவிடுகிறாள்.
2சரியான வழியில் வாழ்கிறவர்கள் கர்த்
தரை மதிக்கிறார்கள. ஆனால் நேர்மையாக
இல்லாதவன் கர்த்தரை வெறுக்கிறான்.
3அறிவற்றவனின் வார்த்தைகள் அவனது
துன்பத்திற்குக் காரணமாகின்றன. ஆனால்
ஞானமுள்ளவனின் வார்த்தைகள் அவனைக்
காக்கும்.
4வேலை செய்வதற்கு எருதுகள் இல்லா
விட்டால் களஞ்சியங்கள் வெறுமையாக
இருக்கும். எருதுகளின் பலத்தைப் பயன்
படுத்தி ஜனங்கள் அதிக விளைச்சலைப்
பெறமுடியும்.
5உண்மையானவன் பொய் சொல்வ
தில்லை. அவனே ஒரு நல்ல சாட்சியாக
இருக்க முடியும். ஆனால் நம்பத் தகாதவனோ
உண்மையைச் சொல்வதில்லை. அவன் ஒரு
பொய் சாட்சிக்காரன்.
6தேவனைக் கேலிச்செய்பவர்கள் ஞானத்
தைத் தேடலாம். ஆனால் அவர்கள் அத
னைக் கண்டடைய மாட்டார்கள். தேவனை
நம்புகிறவர்கள் உண்மையான ஞானமுடைய
வர்கள். அவர்களுக்கு அறிவு எளிதாக
வரும்.
7முட்டாளோடு நட்பு கொள்ளாதே. உனக்கு
போதிக்கும் அளவுக்கு அவனிடம் எதுவும்
இல்லை.
8புத்திசாலிகள் அறிவுள்ளவர்கள். ஏனென்
றால் அவர்கள் தாம் செய்யப்போவதைப்
பற்றி எச்சரிக்கையோடு சிந்திக்கிறார்கள்.
ஏமாற்றிப் பிழைத்துவிடலாம் என்று
நினைக்கிற காரணத்தால் அறிவீனர்கள்
முட்டாள்களாக இருக்கிறார்கள்.
9மூடர்கள் தாம் செய்யும் தவறான செயல்
களுக்கு தண்டனை வழங்கப்படும் என்ற
கருத்தை ஏளனம் செய்கின்றனர். ஆனால்
அறிவாளிகளோ ஏற்புடையவர்கள் ஆவதற்
குப் பெரும் முயற்சி செய்வார்கள்.
10ஒருவன் வருத்தமாயிருந்தால் அந்த
வருத் தத்தை அவனால் மட்டுமே உணர்ந்து
கொள்ளமுடியும். இதுபோலவே ஒருவனது
மகிழ்ச்சியையும் அவனால் மட்டுமே உணர்ந்
துகொள்ளமுடியும்.
11தீயவனின் வீடு அழிக்கப்படும், நல்ல
வனின் வீடு என்றும் வாழும்.
12ஜனங்கள் சில வழிகளைச் சரியானது
என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.
ஆனால் அவ்வழி மரணத்திற்கே அழைத்துச்
செல்லும்.
13ஒருவன் வெளியே சிரித்துக்கொண்டிருந்
தாலும் உள்ளே சோகமாக இருக்கலாம்.
அச்சிரிப்புக்குப் பிறகும்கூட, அத்துயரமா
னது அவனோடேயே இருக்கிறது.
14தீயவர்கள் தாம் செய்யும் தவறுகளுக்குத்
தண்டனை பெறுவார்கள். நல்லவர்கள் தாம்
செய்யும் நற்செயல்களுக்காக விருது பெறு
கிறார்கள்.
15முட்டாள் தான் கேட்கிற அனைத்தையும்
நம்புகிறான். ஆனால் அறிவுள்ளவனோ
எல்லாவற்றைப்பற்றியும் ஆழமாகச் சிந்திக்கி
றான்.
16அறிவுள்ளவன் கர்த்தரை மதித்து,
தீயவற்றிலிருந்து விலகி இருப்பான். ஆனால்
அறிவற்றவனோ எதையும் சிந்திக்காமல்
செய்வான்; எச்சரிக்கையாக இருக்க
மாட்டான்.
17விரைவில் கோபம்கொள்கிறவன் முட்
டாள்தனமான செயல்களையே செய்வான்.
ஆனால் அறிவுள்ளவனோ பொறுமையாக
இருப்பான்.
18அறிவற்றவர்கள் தங்கள் மூடத்தனத்
திற்காகத் தண்டிக்கப்படுவார்கள். ஆனால்
அறிவாளிகளோ ஞானத்தையே வெகுமதியா
கப் பெறுவார்கள்.
19நல்லவர்கள் தீயவர்களுக்கு எதிராக
வெற்றிபெறுவார்கள்.தீயவர்கள் அவர்களின்
உதவிக்காகக் கெஞ்சும்படி கட்டாயப்படுத்
தப்படுவார்கள்.
20ஏழைகளுக்கு அவர்களுடைய பக்கத்து
வீட்டாரும்கூட நண்பர்களாக இருப்பதில்லை.
ஆனால் செல்வர்களுக்கோ ஏராளமான
நண்பர்கள்.

21உனது பக்கத்து வீட்டுக்காரர்களைப்
பற்றி கெட்டவற்றை நினையாதே. நீ
மகிழ்ச்சியாக இருக்கவேண்டும் என்று
நினைத்தால், ஏழை ஜனங்களிடம் இரக்கமாக
இரு.
22தீமைபுரியத் திட்டமிடும் எவனுமே
தவறு செய்தவனாகிறான். ஆனால் ஒருவன்
நன்மைசெய்ய முயல்வதால் நிறைய நண்
பர்களைப் பெறுகிறான். எல்லோரும்
அவனை நேசித்து நம்புகின்றனர்.
23நீ கடினமாக உழைத்தால் உனக்குத்
தேவையானதை நீ பெறுவாய். ஆனால் நீ
எதையும் செய்யாமல் பேசிக்கொண்டே
இருந்தால் ஏழையாவாய்.
24அறிவுள்ளவர்கள் செல்வத்தால் வெகு
மதிகளைப் பெறுவர். ஆனால் அறிவற்றவர்
களோ முட்டாள்தனத்தையே பெறுகின்றனர்.
25உண்மையைப்பேசுகிறவர்கள் மற்றவர்க
ளுக்கு உதவியாக இருக்கிறார்கள். பொய்
சொல்லுகிறவன் மற்றவர்களின் மனதைப்
புண்படுத்துகிறான்.
26கர்த்தரை மதிக்கிறவன் பாதுகாப்பாக
இருப்பான். அவனது பிள்ளைகளும் பாது
காப்பாக வாழ்வார்கள்.
27கர்த்தரை மதிப்பது உண்மையான வாழ்
வைத் தரும். அது அவன் மரணவலையில்
விழாமல் அவனைக் காப்பாற்றும்.
28ஒரு அரசன் ஏராளமான ஜனங்களை
ஆட்சிசெய்தால் அவன் பெரியவன் ஆகி
றான். ஆனால் ஆளுவதற்கு ஜனங்கள்
இல்லாதவனோ ஒன்றும் இல்லாதவன்
ஆகிறான்.

29பொறுமையுள்ளவன் மிகவும் புத்திசாலி.
விரைவில் கோபப்படுபவன் முட்டாள் என்
பதைக் காட்டிக்கொள்கிறான்.
30மனதில் சமாதானம் உள்ள ஒருவன்,
உடலிலும் ஆரோக்கியமாக இருப்பான்.
ஆனால் பொறாமையோ நோய்களுக்குக்
காரணமாகிறது.
31ஏழைகளுக்குத் துன்பம் செய்கிறவன்
தேவனுக்கு மரியாதை செய்யாதவன் எனக்
காண்பித்துக் கொள்கிறான். ஏனென்றால்
இருவரையும் தேவனே படைத்துள்ளார்.
ஆனால் ஒருவன் ஏழைகளிடம் தயவாக
இருந்தால் அவன் தேவனையும் மகிமைப்
படுத்துகிறான்.
32தீய மனிதன் தன்னுடைய துன்மார்க்
கத்தினால் தோற்கடிக்கப்படுவான். ஆனால்
நல்ல மனிதனோ மரணகாலத்திலும் கூட
அடைக்கலம் பெறுவான்.
33அறிவுள்ளவன் அறிவுள்ளவைகளையே
சிந்திக்கிறான். ஆனால் அறிவற்றவர்களோ
அறிவைப்பற்றிக் கொஞ்சமும் அறிந்து
கொள்ள மாட்டார்கள்.
34நல்ல குணம் நாட்டைப் பெருமைக்கு
ரியதாகும். ஆனால் பாவமோ ஜனங்களை
வெட்கப்பட வைக்கும்.
35அறிவுள்ள தலைவர்கள் இருந்தால் அர
சன் மகிழ்ச்சியோடு இருப்பான். ஆனால்
முட்டாள்தனமான தலைவர்கள்மேல் அரசன்
கோபப்படுவான்.

15 ஒரு சமாதானமான பதில் கோபத்தைக்
மறையச் செய்யும். ஆனால் கடுமை
யான பதிலோ கோபத்தை அதிகப்படுத்தும்.
2அறிவுள்ளவன் பேசும்போது மற்றவர்கள்
அதைக் கேட்க விரும்புவார்கள். ஆனால்
அறிவற்றவன் முட்டாள்தனமாகவே பேசு
வான்.
3எல்லா இடங்களிலும் என்ன நடை
பெறுகிறது என்று கர்த்தர் பார்த்துக்
கொண்டிருக்கிறார். நல்லவர்கள் தீயவர்கள்
அனைவரையும் கர்த்தர் கவனித்துக் கொண்
டிருக்கிறார்.
4தயவான வார்த்தைகள் வாழ்வளிக்கும்
மரம் போன்றது. ஆனால் பொய்யான
வார்த்தைகள் மனிதனின் ஆவியை அழித்து
விடும்.
5முட்டாள்தனமான மனிதன் தன் தந்தை
யின் அறிவுரைகளைக் கேட்க மறுத்துவிடு
வான். ஆனால் அறிவுள்ளவனோ, ஜனங்கள்
தனக்குப் போதிக்க வரும்போது கவனித்துக்
கேட்கிறான்.
6நல்லவர்கள்பலவற்றில் செல்வந்தர்களாக
இருக்கிறார்கள். ஆனால் தீய மனிதனிடத்தி
லுள்ளவை அவனைத் துன்பத்திற்குக் கார
ணமாக்குகின்றன.
7அறிவுள்ளவர்கள் பேசும் பேச்சு உனக்
குப் புதிய தகவல்களைத் தருபவையாக
இருக்கும். அறிவில்லாதவர்கள் பேசுவதோ
கேட்கப் பயனில்லாததாக இருக்கும்.
8தீயவர்கள் கொடுக்கிற பலிகளைக்
கர்த்தர் வெறுக்கிறார். ஆனால் நல்லவர்க
ளின் ஜெபங்களைக் கேட்பதில் கர்த்தர்
மகிழ்கிறார்.
9தீயவர்களின் வாழ்க்கை முறையைக்
கர்த்தர் வெறுக்கிறார். நல்லவற்றைச் செய்ய
முயல்கிறவர்களைக் கர்த்தர் நேசிக்கிறார்.
10ஒருவன் தவறாக வாழத்தொடங்கினால்
அவன் தண்டிக்கப்படுவான். கண்டிக்கப்படு
வதை வெறுப்பவன் அழிக்கப்படுவான்.
11கர்த்தருக்கு எல்லாம் தெரியும். மரண
இடத்திலும் என்ன நடக்கும் என்பதையும்
அவர் அறிவார். எனவே கர்த்தர் ஜனங்
களின் மனதிலும் இருதயத்திலும் என்ன
இருக்கிறது என்பதை நிச்சயமாகவே அறி
வார்.
12அறிவற்றவன் தவறு செய்யும்போது
தான் சுட்டிக் காட்டப்படுவதை வெறுக்கி
றான். அவன் அறிவுள்ளவர்களிடம் அறிவு
ரைக் கேட்பதை வெறுக்கிறான்.
13ஒருவன் மகிழ்ச்சியாக இருந்தால் அவ
னது முகம் அதனைக் காட்டிவிடும். ஆனால்
ஒருவன் தன் இருதயத்தில் துக்கம் உடை
யவனாக இருந்தால் அதை அவனது ஆவி
வெளிப்படுத்தும்.
14அறிவுள்ளவன் மேலும் அறிவைப்பெற
விரும்புகிறான். அறிவில்லாதவனோ மேலும்
முட்டாள் ஆவதை விரும்புகிறான்.
15சில ஏழைகள் எப்போதும் துக்கமாக
இருக்கிறார்கள். ஆனால் மனதில் மகிழ்ச்சி
கொண்ட ஜனங்களுக்கு வாழ்க்கை ஒரு
விருந்தாகும்.
16ஒருவன் ஏழையாக இருந்து கர்த்தரை
மதிப்பது சிறந்ததாகும். ஒருவன் செல்வனாக
இருந்து துன்பப்படுவதைவிட இது மேலான
தாகும்.
17வெறுப்புள்ள இடத்தில் ஏராளமாக
உண்பதை விட அன்புள்ள இடத்தில் கொஞ்
சம் உண்பதே நல்லது.
18எளிதில் கோபப்படுகிறவர்கள் துன்பங்க
ளுக்குக் காரணமாக இருக்கிறார்கள். பொறு
மையுள்ளவர்களோ சமாதானத்துக்குரியவர்
கள்.
19எல்லா இடங்களிலும் சோம்பேறி
துன்பம் அடைகிறான். ஆனால் நேர்மையா
னவனுக்கு வாழ்வு எளிதாக இருக்கும்.
20அறிவுள்ள மகன் தந்தைக்கு மகிழ்ச்
சியைத் தருகிறான். ஆனால் அறிவற்றவனோ
தாய்க்கு அவமானத்தைத் தருகிறான்.
21முட்டாள்தனமானவற்றைச் செய்வதில்
அறிவற்றவன் மகிழ்கிறான். அறிவுள்ள
வனோ சரியானவற்றைச் செய்வதில் எச்
சரிக்கையாக இருக்கிறான்.
22ஒருவன் போதுமான அறிவுரையைப்
பெறாவிட்டால் அவனது திட்டங்கள் தோல்
வியுறும். ஆனால் அறிவுள்ளவர்களின் அறி
வுரைகளைக் கவனமுடன் கேட்கிறவன் தன்
செயல்களில் வெற்றிப் பெறுகிறான்.

23நல்ல பதிலைத் தருபவன் மகிழ்ச்சி
அடைகிறான். சரியான நேரத்தில் சரியான
வார்த்தைகள் சொல்வது மிகவும் நல்லது.
24வாழ்விக்கும் வழியைக் கடைப்பிடித்து
வாழ்வடையும் நல்லவன் கீழ் நோக்கிச்
செல்லும் மரணத்தின் பாதையைத் தவிர்த்து
விடுகிறான்.
25வீண் பெருமை கொண்ட ஒருவனுக்கு
ரிய எல்லாவற்றையும் கர்த்தர் அழிப்பார்.
ஒரு விதவைக்குரிய அனைத்தையும் கர்த்தர்
பாதுகாக்கிறார்.
26கர்த்தர் கெட்ட எண்ணங்களை வெறுக்
கிறார். ஆனால் கர்த்தர் தயவுமிக்க வார்த்தை
களில் மகிழ்கிறார்.
27ஏமாற்றிப் பொருட்களைப் பெற்றுக்
கொள்பவன், தன் குடும்பத்துக்குத் தானே
துன்பத்தை வரவழைத்துக் கொண்டவனா
வான். நேர்மையாக இருப்பவனுக்கோ துன்
பம் இல்லை.
28நல்லவர்கள் பதில் சொல்லுமுன் சிந்திக்
கிறார்கள். ஆனால் தீயவர்கள் சிந்திக்கும்
முன்னரே பேசுகின்றனர். அவை அவர்
களுக்குத் துன்பம் தரும்.
29தீயவர்களிடமிருந்து கர்த்தர் வெகு
தூரத்தில் உள்ளார். ஆனால் நல்லவர்களின்
ஜெபங்களை எப்போதும் கேட்கிறார்.
30ஒருவனின் புன்னகை மற்றவர்களை
மகிழச் செய்கிறது. நல்ல செய்திகள் ஜனங்
களை நல்லுணர்வுக்கொள்ளச் செய்கின்றன.
31நீ தவறு செய்கிறாய் என்று சொல்ப
வர்களைக் கவனிப்பவன் மிகவும் புத்திசாலி
ஆகிறான்.
32ஒருவன் கற்றுக்கொள்ள மறுத்தால்,
அவன் தன்னைத்தானே அழித்துக்கொள்கி
றான். தன் தவறுகளைச் சுட்டிக்காட்டுகி
றவனின் பேச்சைக் கவனிப்பவன் மேலும்
புரிந்துகொள்கிறான்.
33கர்த்தரை மதிக்கிறவன் அறிவுள்ளவ
னாகக் கற்றுக்கொள்கிறான். ஒருவன் உண்
மையாகவே கர்த்தரை மதிப்பதற்கு முன்பு
அவன் பணிவுள்ளவனாக இருக்கவேண்டும்.

16 ஜனங்கள் திட்டமிடுகின்றனர். ஆனால்
காரியங்களை நிறைவேறச் செய்ப
வரோ கர்த்தர்.
2ஒருவன் தான் செய்வதெல்லாம் சரி
என்று நினைத்துக் கொண்டிருக்கின்றான்.
ஆனால் கர்த்தர் செயல்களின் காரணங்களை
நியாயம் தீர்க்கின்றார்.
3நீ செய்கிற அனைத்து செயல்களுக்கும்
கர்த்தரிடம் உதவிக்கு அணுகினால் நீ
வெற்றி அடைவாய்.
4ஒவ்வொரு காரியத்திற்க்கும் கர்த்தரிடம்
ஒரு திட்டம் உள்ளது. கர்த்தருடைய
திட்டத்தில் தீயவர்கள் அழிக்கப்படுகிறார்கள்.
5மற்றவர்களைவிடத் தான் சிறந்தவன்
என்று நினைப்பவர்களைக் கர்த்தர் வெறுக்
கிறார். இவ்வாறு பெருமை கொள்கின்றவர்
களை எல்லாம் கண்டிப்பாகக் கர்த்தர்
தண்டிப்பார்.
6உண்மையான அன்பும் நேர்மையும்
உன்னைப் பரிசுத்தமாக்கும். கர்த்தரை
மதித்து தீயவற்றிலிருந்து விலகியிரு.
7ஒருவன் நல்ல வாழ்க்கை வாழ்ந்து,
கர்த்தருக்குப் பிரியமானவற்றைச் செய்தால்,
அவனது பகைவன்கூட அவனுடன் சமா
தானமாக வாழ்வான்.
8ஒருவன் பிறரை ஏமாற்றி அதிகப்
பொருள் சம்பாதிப்பதைவிட நல்ல வழியில்
கொஞ்சம் பொருள் சம்பாதிப்பது நல்லது.
9ஒருவன் தான் விரும்புகிறபடியெல்லாம்
செய்வதற்குத் திட்டமிடலாம். ஆனால் எது
நடக்கவேண்டுமென முடிவு செய்பவர் கர்த்
தரே.
10அரசன் பேசும்போது, அவனது
வார்த்தைகள் சட்டமாகும். அவனது முடிவு
கள் எப்பொழுதும் சரியாக இருக்க
வேண்டும்.
11எல்லா அளவுக் கருவிகளும் சரியாக
இருக்கவேண்டும் என்றும், அனைத்து
வியாபார ஒப்பந்தங்களும் நேர்மையாக
இருக்கவேண்டும் என்றும் கர்த்தர்
விரும்புகின்றார்.
12தீமை செய்பவர்களை அரசர்கள் வெறுக்
கின்றனர். நன்மை அவனது அரசாங்கத்தை
வலுவுள்ளதாக்கும்.
13அரசர்கள் உண்மையைக் கேட்க விரும்
புகின்றனர். ஜனங்கள் பொய் சொல்லாமல்
இருப்பதை அரசர்கள் விரும்புகின்றனர்.
14அரசனுக்குக் கோபம் வந்தால் அவன்
ஒருவனைக் கொல்லலாம். அறிவுள்ளவர்கள்
அரசனை எப்பொழுதும் மகிழ்ச்சி உடைய
வர்களாகச் செய்வார்கள்.
15அரசன் மகிழ்ச்சியாக இருக்கும்போது,
அனைவரின் வாழ்வும் நன்றாக இருக்கும்.
உன் காரியங்களால் அரசன் மகிழ்ச்சி
கொண்டானெனில், அது மேகத்தில் இருந்து
வசந்தகால மழை பொழிவதற்கு ஒப்பாகும்.
16தங்கத்தைவிட அறிவு மதிப்பு மிக்கது.
புரிந்துகொள்ளுதல் வெள்ளியைவிட மதிப்பு
டையது.
17நல்லவர்கள் தம் வாழ்வைத் தீமையில்
இருந்து விலக்கி வைப்பார்கள். தன் வாழ்
வில் கவனமாக இருக்கிற ஒருவன், தன்
ஆத்துமாவைக் காப்பாற்றிக் கொள்கிறான்.
18ஒருவன் கர்வம் கொண்டவனாக இருந்
தால் அவன் அழிவின் ஆபத்தில் இருக்
கிறான். மற்றவர்களைவிடத் தான் சிறந்தவன்
என்று நினைப்பவன் தோல்வியின் ஆபத்
தில் இருக்கிறான்.
19மற்றவர்களைவிடத் தம்மைச் சிறந்தவர்க
ளாக நினைப்பவர்களோடு செல்வத்தைப்
பங்கிட்டு வாழ்வதைவிட, பணிவாகவும்,
ஏழை ஜனங்களோடும் சேர்ந்து வாழ்வதும்
சிறந்ததாகும்.
20ஜனங்களின் போதனைகளைக் கவ

னமாகக் கேட்பவன் பயன் அடைவான். கர்த்தர் மேல் நம்பிக்கை வைப்பவன் ஆசீர்வதிக்கப்படுகிறான்.
21ஒருவன் அறிவுள்ளவனாக இருப்பதை ஜனங்கள் அறிந்துகொள்வார்கள். வார்த்தைக ளைத் தேர்ந்தெடுத்து கவனமாகப் பேசுபவன் நிரூபிக்கும் ஆற்றல் உடையவனாக இருக்க முடியும்.
22அறிவானது ஜனங்களுக்கு உண்மை யான வாழ்க்கையைத் தரும். ஆனால் அறி வற்றவர்களோ மேலும் முட்டாள் ஆவ தையே விரும்புவார்கள்.
23அறிவுள்ளவர்கள் எப்பொழுதும் பேசு வதற்குமுன்பு சிந்திப்பார்கள். அவர்கள் சொல்லும் வார்த்தைகள் நல்லவையாகவும் உயர்வானவையாகவும் இருக்கும்.
24கருணைமிக்க வார்த்தைகள் தேனைப் போன்றவை. அவை ஏற்றுக்கொள்ள எளி மையானவை, உடல் நலத்திற்கும் நல்லது.
25ஜனங்களுக்குச் சில வழிகள் சரியான தாக தோன்றும். அவ்வழிகள் மரணத்துக்கே அழைத்துச் செல்லும்.
26உழைப்பாளியின் பசிதான் அவனைத் தொடர்ந்து உழைக்க வைக்கிறது. உண்ணும் பொருட்டு வேலை செய்யும் தூண்டுதலைப் பசியே கொடுக்கிறது.
27பயனற்றவன் கெட்ட செயல்களைச் செய்யவே திட்டமிடுவான். அவனது அறி வுரை நெருப்பைப் போன்று அழிக்கும்.
28தொல்லையை உருவாக்குகிறவன் எப் பொழுதும் பிரச்சனைகளை உண்டு பண்ணு கிறான். பொய்ச் செய்திகளைப் பரப்புகிற வன் நெருங்கிய நண்பர்களுக்குள் துன்பத்தை ஏற்படுத்துவான்.
29தொல்லையை உருவாக்குகிறவன் பல தொல்லைகளுக்குக் காரணமாகிறான். தனது நண்பர்களுக்கு நன்மைதராத வழிகளில் அவர்களை அழைத்துச் செல்கிறான்.
30அவன் தன் கண்களால் ஜாடை செய்து சிலவற்றை அழிக்கத் திட்டமிடுகிறான். தனது பக்கத்து வீட்டுக்காரனைத் துன்புறுத்த சிரித்துக்கொண்டே திட்டமிடுகிறான்.
31நல் வாழ்க்கை வாழ்பவர்களின் நரை முடியானது கிரீடத்தைப் போன்று உயர்வா னது.
32வலிமைமிக்க வீரனாக இருப்பதைவிட ஒருவன் பொறுமை மிக்கவனாக இருப்பது நல்லது. ஒரு நகரத்தை அடக்கி ஆள்வதை விட உன் கோபத்தை அடக்குவது நல்லது.
33ஜனங்கள் குலுக்கல் சீட்டு மூலம் முடி வெடுக்கின்றனர். ஆனால் அனைத்து முடி வுகளும் தேவனிடமிருந்தே வருகின்றன.
17 எப்பொழுதும் வாதமிடுகிறவர்களின் வீட்டில் முழுச்சாப்பாடு உண்பதை விட, ஒருதுண்டு காய்ந்த ரொட்டியை சமாதானத்தோடு தின்பது நல்லது.
2அறிவுத்திறமுள்ள வேலைக்காரன் தன் எஜமானின் மூட மகனையும் அடக்கி ஆள்வான். அவ்வேலைக்காரன் மகனைப் போல நடத்தப்பட்டு, பரம்பரைச் சொத்தில் பங்கும் பெறுவான்.
3பொன்னையும் வெள்ளியையும் தூய் மைப்படுத்தவே நெருப்பில் போடுகிறார்கள். ஆனால் ஜனங்கள் இதயங்களை கர்த்தர் ஒருவரே சுத்தம் செய்கிறார்.
4தீயவர்கள் மற்றவர்கள் சொல்லும் தீய வற்றையே கவனிக்கின்றனர். பொய்யர்கள் பொய்யையே கவனிக்கின்றனர்.
5சிலர் ஏழை ஜனங்களைக் கேலிச் செய் வார்கள். தொல்லைகளுக்கு உள்ளானவர் களைப் பார்த்து அவர்கள் சிரிப்பார்கள். தம்மைப் படைத்த தேவனை அவர்கள் மதிப்பதில்லை என்பதையே இது காட்டுகி றது. அத்தீய ஜனங்கள் தண்டிக்கப்படுவார் கள்.
6பேரப்பிள்ளைகள் முதியவர்களை மகிழ்ச் சிப் படுத்துகிறார்கள். பிள்ளைகள் தம் பெற்றோர்களைப் பற்றிப் பெருமைப்படுகி றார்கள்.
7அறிவற்றவன் அதிகமாகப் பேசுவது அறிவுள்ள செயல் அல்ல. இதுபோலவே, ஆள்பவன் பொய் சொல்லுவதும் அறிவுள்ள செயல் அல்ல.
8சிலர், லஞ்சத்தை இனிமையான அதிர்ஷ்டப்பொருளாக நினைக்கிறார்கள். அவர்கள் எங்கு போனாலும் அது பணி யைச் செய்துமுடிக்கப் பயன்படுவதாக நினைக்கிறார்கள்.

9ஒருவன் செய்த தவறை நீ மன் னித்துவிட்டால் நீங்கள் நண்பர்கள் ஆகலாம். ஆனால் அவன் செய்த தவறையே தொடர்ந்து நீ நினைத்துக்கொண்டிருந்தால் உங்கள் நட்பை அது அழித்து விடும்.
10சுறுசுறுப்பானவன் தன் தவறுகளிலி ருந்தும் கற்றுக்கொள்கிறான். ஆனால் அறி வில்லாதவனோ, எதையும் கற்றுக்கொள் ளமாட்டான். நூறு பாடங்களுக்குப் பிறகும் கற்றுக்கொள்ள மாட்டான்.
11தீயவன் தவறுகளைச் செய்யவே விரும் புகிறான். முடிவில் தேவன் தன் தூதனை அனுப்பி அவனைத் தண்டிப்பார்.
12தன் குட்டிகளைப் பறிகொடுத்த கோபம் கொண்ட பெண் கரடியை எதிர் கொள்வது, மிகவும் ஆபத்தானது. ஆனால் எப்பொழுதும் மூடத்தனமான செயல்களைச் செய்யும் அறி வில்லாதவனைச் சந்திப்பதைக் காட்டிலும் அது எளிதானது.
13உனக்கு நன்மை செய்கிறவர்களுக்கு, நீ தீமை செய்யாதே. அவ்வாறு செய்தால் நீ உனது எஞ்சிய வாழ்க்கை முழுவதும் துன்பம் அடைவாய்.
14வாதம் செய்ய ஆரம்பிப்பது, பெரிய அணைக்கட்டில் துளை விழுந்தது போன்றா கும். அது மிகப் பெரிதாக ஆவதற்கு முன் வாதத்தை நிறுத்து.

[15]தவறே செய்யாதவர்களைத் தண்டிப்
பதும், குற்றம் செய்தவர்களை தப்பவிடு
வதுமான இரண்டு காரியங்களும் கர்த்தரால்
வெறுக்கப்படும்.
[16]அறிவற்றவனிடம் செல்வம் இருந்தால்
அது பயனற்றது. ஏனென்றால் அவன் தன்
செல்வத்தை அறிவைப் பெறுவதற்குப்
பயன்படுத்தமாட்டான்
[17]ஒரு நண்பன் எப்பொழுதும் நேசிக்கி
றான். உண்மையான சகோதரன் உனக்கு
எப்பொழுதும் உதவுகிறான். துன்ப காலங்
களிலும்கூட உதவி செய்கிறான்.
[18]அடுத்தவன் கடனுக்கு தான் பொறுப்
பாளியென அறிவற்றவனே வாக்குறுதி
கொடுப்பான்.
[19]வாதம் செய்வதில் மகிழ்ச்சி அடைகிற
வன். பாவம் செய்வதிலும் மகிழ்ச்சியடைகி
றான். நீ உன்னையே பெருமைப்படுத்திப்
பேசினால் நீயே துன்பங்களை வரவழைத்
துக் கொள்கிறாய்.
[20]தீயவன் நன்மை பெறமாட்டான். பொய்
யன் துன்பமடைவான்.
[21]அறிவற்றவனின் தந்தை மிகவும் சோகம்
அடைவான். அறிவற்றவனின் தந்தையால்
மகிழ்ச்சியாக இருக்கமுடியாது.
[22]மகிழ்ச்சி என்பது நல்ல மருந்தைப்
போன்றது. ஆனால் துக்கமோ நோயைப்
போன்றது.
[23]தீயவன் மற்றவர்களை ஏமாற்றுவதற்காக
இரகசியமாகப் பணத்தைப் பெறுகிறான்.
[24]அறிவுள்ளவன் மிகச்சிறந்த செயல்
களைச் செய்வதைப்பற்றியே எண்ணிக்
கொண்டு இருப்பான். ஆனால் அறிவற்ற
வனோ தூரத்து இடங்களைப்பற்றியே கனவு
காண்பான்.
[25]ஒரு அறிவற்ற மகன் தந்தைக்குத் துக்
கத்தைத் தருகிறான். அவன் தன்னைப்
பெற்றெடுத்தத் தாய்க்கும் துன்பத்தைத்
தருகிறான்.
[26]தவறு செய்யாதவனைத் தண்டிப்பது
தப்பாகும். தலைவர்கள் நேர்மையானவர்க
ளாக இருக்கும்போது அவர்களைத் தண்
டிப்பதும் தவறாகும்.
[27]அறிவுள்ளவன் தன் வார்த்தைகளைக்
கவனமாகக்கையாளுகிறான். அறிவுள்ளவன்
எளிதில் கோபம் கொள்ளமாட்டான்.
[28]அறிவற்றவனும் அமைதியாக இருந்தால்
அறிவாளியைப்போன்று தோன்றுவான்.
அவன் எதையும் பேசாவிட்டால், ஜனங்கள்
அவனை அறிவாளியாக நினைத்துக் கொள்
வார்கள்.

18 சிலர் மற்றவர்களைச் சுற்றி இருப்பதை
விரும்பமாட்டார்கள். அவர்கள் தாம்
செய்ய விரும்புவதையே செய்வார்கள்.
யாரேனும் இவர்களுக்கு அறிவுரை சொல்
லப்போனால், அது இவர்களைக் கோப
மடையச் செய்யும்.
[2]மற்றவர்களிடமிருந்து கற்றுக்கொள்வதை
அறிவற்றவர்கள் விரும்பமாட்டார்கள். அவர்
கள் தம் சொந்த எண்ணங்களைச் சொல்வ
தையே விரும்புகின்றனர்.
[3]ஜனங்கள் தீயவர்களை விரும்பமாட்டார்
கள். ஜனங்கள் அந்த அறிவற்றவர்களைக்
கேலிச் செய்வார்கள்.
[4]ஞானமுள்ளவனின் வார்த்தைகள் ஆழ
மான ஞானக் கிணற்றிலிருந்து வெளியேறும்
நீரோட்டத்தைப் போன்றது.
[5]ஜனங்களை நியாயந்தீர்ப்பதில் நேர்மை
யாக இரு. நீ குற்றம் செய்தவர்களை
விட்டுவிடுவாயானால் அது நல்லவர்களுக்கு
நன்மை செய்ததாக இராது.
[6]அறிவற்றவன் தான் பேசும் வார்த்தை
களாலேயே துன்பத்தை அடைகிறான். அவ
னது வார்த்தைகள் சண்டையை மூட்டும்.
[7]அறிவற்றவன் பேசும்போது, அவன்
தன்னையே அழித்துக்கொள்வான். அவனது
சொந்த வார்த்தையே அவனை ஆபத்துக்குள்
ளாக்கும்.
[8]ஜனங்கள் எப்பொழுதும் வம்புகளை
விரும்பிக் கேட்பார்கள். இது அவர்களுக்கு
நல்ல உணவு வயிற்றுக்குள் போவதைப்
போன்றிருக்கும்.
[9]ஒருவன் கெட்ட செயல்களைச் செய்வது,
பொருட்களை அழிப்பது போன்றதாகும்.
[10]கர்த்தருடைய நாமத்தில் மிகுந்த பலம்
உண்டு. இது உறுதியான கோபுரத்தைப்
போன்றது. நல்லவர்கள் அவரிடம் ஓடிச்
சென்று பாதுகாப்பைப் பெறுகின்றனர்.
[11]செல்வந்தர்கள், தங்கள் செல்வம் தங்
களைக் காக்குமென்று நம்புகின்றனர். அது
வலிமையான கோட்டையைப் போன்றது
என எண்ணுகின்றனர்.
[12]பெருமை கொண்ட ஒருவன் விரைவில்
அழிந்துபோவான். பணிவாக இருப்பவன்
கனத்தைப் பெறுகிறான்.
[13]நீ பதில் சொல்வதற்குமுன்பு, மற்றவர்
பேசி முடிக்கவிடு. இது உனக்கு அவமா
னத்தைத் தராது. உன்னை முட்டாளாகவும்
ஆக்காது. அப்படியானால் நீ சிக்கலில்
மாட்டிக்கொள்ளவும், மூடனாகக் காணப்பட
வும் மாட்டாய்.
[14]நம்பிக்கையுடைய ஒருவன் நோயிலி
ருந்து விடுபடமுடியும். ஆனால் ஒருவன்
தன்னை இழந்துபோனவனாக எண்ணினால்
அனைத்து நம்பிக்கைகளும் போய்விடும்.
[15]அறிவுள்ளவன் மேலும் கற்றுக்கொள்ள
விரும்புவான். அவன் மிகுதியான அறிவுக்
காகக் கவனமாகக் கேட்பான்.
[16]நீ முக்கியமான மனிதர்களைச் சந்திக்கச்
சென்றால் அவர்களுக்குப் பரிசு கொண்டு
போ. அப்போது நீ அவர்களை எளிதில்
சந்திக்கலாம்.
[17]இன்னொருவன் வந்து கேள்வி கேட்கும்
வரை ஒருவன் பேசுவது சரியானது
போலவே தோன்றும்.

18 வலிமையான இரண்டுபேர் வாதம் செய்துக்கொண்டிருந்தால், குலுக்கல் சீட்டு மூலமே வாத முடிவைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

19 நீ உன் நண்பனை அவமானப்படுத்தினால், அவனை வசப்படுத்துவது வலிமையான சுவர்களை உடைய நகரத்தை வெல்வதை விடக் கடினமானதாகிவிடும். குறுக்குக் கம்பிகள் கொண்ட அரண்மனைக் கதவுகளின் தடுப்பைப்போல விவாதங்கள் ஜனங்களைப் பிரிக்கின்றன.

20 நீ சொல்பவை உன் வாழ்வைப் பாதிக்கும். நீ நன்மையைச் சொன்னால் உனக்கு நன்மை ஏற்படும். நீ தீயவற்றைச் சொன்னால் உனக்கும் தீமை ஏற்படும்.

21 மரணம் அல்லது வாழ்வு நேரும்படியாக நாவால் பேசமுடியும். எனவே பேசுவதை நேசிக்கிறவர்கள் அதன் பலனையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கவேண்டும்.

22 மனைவியைக் கண்டுபிடிப்பது நன்மையைக் கண்டுபிடித்ததற்குச் சமமாகும். கர்த்தர் உன்னோடு மகிழ்ச்சியாய் இருப்பதை அவள் காட்டுகிறாள்.

23 ஒரு ஏழை உதவிக்காகக் கெஞ்சுகிறான், ஆனால் செல்வந்தனோ கடினமாகப் பதில் சொல்கிறான்.

24 பேசிச் சிரிக்க நல்லவர்களாக சில நண்பர்கள் இருப்பார்கள். ஆனால் ஒரு நல்ல நண்பன் சொந்த சகோதரனைவிடச் சிறந்தவன்.

19 ஒரு முட்டாளாக இருந்து பிறரை ஏமாற்றிப் பொய் சொல்கிறவனாக இருப்பதைவிட ஏழையாகவும் நேர்மையானவனாகவும் இருப்பது நல்லது.

2 சிலவற்றைப்பற்றி பரவசப்படுவது போதாது. நீ செய்வது என்ன என்று உனக்குத் தெரியவேண்டும். எதையாவது அவசரமாகச் செய்வாயானால் அதைத் தவறாகச் செய்துவிடுவாய்.

3 ஒருவனது சொந்த முட்டாள்தனம் அவனது வாழ்வை அழித்துவிடும். ஆனால் அவன் கர்த்தர் மீது பழி சொல்லுவான்.

4 ஒருவன் செல்வந்தனாக இருந்தால், அவனது செல்வம் பல நண்பர்களைத் தரும். ஆனால் ஒருவன் ஏழையாக இருந்தால் எல்லா நண்பர்களும் அவனைவிட்டு விலகுவார்கள்.

5 இன்னொருவனுக்கு எதிராகப் பொய் சொல்பவன் தண்டிக்கப்படுவான். பொய் சொல்பவனுக்குப் பாதுகாப்பில்லை.

6 ஆள்பவரோடு நட்புக்கொள்ளவே பலரும் விரும்புகின்றனர். மேலும், பரிசு தருபவரோடு நட்புக்கொள்ள ஒவ்வொருவரும் விரும்புகின்றனர்.

7 ஒருவன் ஏழையாக இருந்தால், அவனது குடும்பம் கூட அவனுக்கு எதிராக இருக்கும். அவனது நண்பர்களும்கூட அவனை விட்டு விலகுவார்கள். அந்த ஏழை அவர்களிடம் உதவி கேட்கலாம். எனினும் அவனருகில் அவர்கள் போகமாட்டார்கள்.

8 ஒருவன் உண்மையிலேயே தன்னை நேசித்தால், அறிவைப்பெறக் கடுமையாக உழைக்கவேண்டும். அவன் கடினமாக முயற்சிசெய்து புரிந்துகொள்ளுதலை அடையவேண்டும். அவன் அதற்குரிய வெகுமதியைப் பெறுவான்.

9 பொய்சாட்சி சொல்பவன் தண்டிக்கப்படுவான். தொடர்ந்து பொய்சொல்பவன் அழிக்கப்படுவான்.

10 ஒரு முட்டாள் செல்வந்தனாகக் கூடாது. இது ஒரு அடிமை இளவரசனை ஆள்வதைப் போன்றது.

11 ஒருவன் அறிவுள்ளவனாக இருந்தால், அந்த அறிவு அவனுக்குப் பொறுமையைத் தரும். அவனுக்குத் தீமை செய்தவர்களை மன்னிப்பது அருமையானது.

12 ஒரு அரசன் கோபத்தோடு இருக்கும் போது, அது சிங்கத்தின் கெர்ச்சிப்பு போன்று இருக்கும். ஆனால் அவன் உன்னோடு மகிழ்ச்சியாக இருப்பது, மென்மையாக மழை பொழிவது போன்று இருக்கும்.

13 ஒரு முட்டாள் மகன் தன் தந்தைக்கு வெள்ளம் போல நிறையத் தொல்லைகளைக் கொண்டுவருகிறான். ஓயாது குறைகளைச் சொல்லிக் கொண்டிருக்கிற மனைவி சொட்டுச்சொட்டாக ஒழுகிக்கொண்டிருக்கும் தண்ணீர் போன்றவள். அது மிகவும் துன்புறுத்தும்.

14 ஜனங்கள் தம் பெற்றோர்களிடமிருந்து வீட்டையும் செல்வத்தையும் பெறுகிறார்கள். ஆனால் ஒரு நல்ல மனைவி கர்த்தரிடமிருந்து கிடைக்கும் வெகுமதி ஆகும்.

15 ஒரு சோம்பேறி மிகுந்த உறக்கத்தைப் பெறலாம். ஆனால் அவனுக்கு மிகுந்த பசி இருக்கும்.

16 ஒருவன் சட்டத்திற்குப் பணிந்திருந்தால், அவன் தன்னைத்தானே காத்துக்கொள்கிறான். ஆனால் ஒருவன் அதனை முக்கியமில்லை என்று கருதினால், பின் அவன் கொல்லப்படுவான்.

17 ஏழைகளுக்குப் பண உதவி செய்வது கர்த்தருக்குக் கடன் கொடுப்பது போன்றது ஆகும். அவர்கள் மீது தயவாய் இருந்ததற்காகக் கர்த்தர் அவற்றைத் திருப்பித் தருவார்.

18 உன் மகனுக்குக் கற்றுக்கொடு, அவன் தவறு செய்யும்போது தண்டனைகொடு. அதுதான் ஒரே நம்பிக்கை. இதனை நீ செய்ய மறுத்தால், பிறகு அவன் தன்னையே அழித்துக்கொள்ள நீ உதவுவதாக இருக்கும்.

19 ஒருவன் மிக எளிதில் கோபம் கொண்டால், அதற்குரிய விலையை அவன் கொடுக்க வேண்டியதிருக்கும். அவனை நீ துன்பத்திலிருந்து தப்புவித்தால், அவன் அதனையே மீண்டும் மீண்டும் செய்வான்.

20 அறிவுரைகளைக் கேள்; ஒழுக்கத்தை ஏற்றுக்கொள். அப்போது நீ அறிவாளி ஆவாய்.

21 ஜனங்களுக்கு பலவித எண்ணங்கள் தோன்றலாம். எனினும் கர்த்தருடைய திட்டங்களே நிறைவேறும்.

22 ஜனங்கள்உண்மையாகவும் நேர்மையாகவும் இருப்பவனை விரும்புகிறார்கள். எனவே ஜனங்களால் நம்பப்படாதவனாக இருப்பதைவிட ஏழையாக இருப்பதே மேல்.

23 கர்த்தரை மதிக்கிறவன் நல்ல வாழ்வைப் பெறுகிறான். அவன் தன் வாழ்வில் திருப்தியடைகிறான். அவன் துன்பங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

24 சோம்பேறி, தன் உணவிற்குத் தேவையான வேலைகளைக் கூடச் செய்யமாட்டான். தட்டிலிருந்து உணவை எடுத்து வாயில் வைக்கவும் சோம்பல்படும் அளவுக்கு அவன் முழுச் சோம்பேறி ஆவான்.

25 சிலர் எதற்கும் மரியாதை காட்டமாட்டார்கள். அவர்கள் தண்டிக்கப்படவேண்டும். அறிவற்றவன் தன் பாடத்தைக் கற்றுக்கொள்ள கட்டாயப்படுத்தப்படுகிறான். ஆனால் சிறு சிட்சையே அறிவாளிகளைக் கற்றுக்கொள்ளச் செய்யும்.

26 ஒருவன் தன் தந்தையிடமிருந்து திருடி, தன் தாயை பலவந்தமாக வெளியேற்றினால் அவன் மிகவும் மோசமானவன். அவன் தனக்குத்தானே அவமானத்தையும் அவமரியாதையையும் தேடிக்கொள்கிறான்.

27 போதனைகளைக் கவனமாகக் கேட்பதை நிறுத்தினால் நீ முட்டாள்தனமான தவறுகளைச் செய்துகொண்டே இருப்பாய்.

28 சாட்சி சொல்ல வருகிறவன் நேர்மையற்றவனாக இருந்தால், தீர்ப்பும் சரியானதாக இராது. தீயவர்கள் சொல்வது தீமையைத் தரும்.

29 மற்றவர்களைவிடத் தன்னைச் சிறந்தவனாக நினைப்பவன் தண்டிக்கப்படுவான். அறிவற்றவன் தனக்கான தண்டனையைப் பெறுகிறான்.

20 திராட்சைரசமும் மதுவும் ஜனங்களின் சுயக்கட்டுப்பாட்டைக் குலைத்து விடுகிறது. அவர்கள் சத்தமிட்டு ஆரவாரம் செய்வார்கள். அவர்கள் போதை ஏறி முட்டாள்தனமான செயல்களைச் செய்வார்கள்.

2 ஒரு அரசனின் கோபமானது சிங்கத்தின் கர்ஜனையைப் போன்றது. நீ ஒரு அரசனைக் கோபப்படுத்தினால் உன் வாழ்வை இழந்து விடுவாய்.

3 எந்த முட்டாளும் ஒரு வாதத்தைத் தொடங்கலாம். எனவே வாதம்செய்ய மறுப்பவனை நீ மதிக்கவேண்டும்.

4 ஒரு சோம்பேறி விதைகளை விதைக்கவும் சோம்பேறித்தனமாயிருக்கிறான். ஆனால், அறுவடைக் காலத்தில் உணவை எதிர்பார்த்தாலும் அவன் எதையும் பெறுவதில்லை.

5 நல்ல அறிவுரையானது ஆழமான கிணற்றிலிருந்து பெறும் தண்ணீரைப் போன்றது. ஆனால் ஒரு அறிவாளி அடுத்தவனிடமிருந்து கற்றுக்கொள்ளக் கடுமையாக முயற்சிப்பான்.

6 பலர்தம்மை உண்மையுள்ளவர்களாகவும் அன்புள்ளவர்களாகவும் கூறிக்கொள்வார்கள். ஆனால் உண்மையிலேயே அப்படிப்பட்டவர்களைக் கண்டுபிடிப்பது அரிது.

7 நல்லவன் நல்ல வாழ்க்கையை வாழ்கின்றான். அவன் பிள்ளைகள் ஆசீர்வதிக்கப்படுகின்றனர்.

8 ஒரு அரசன் நியாயந்தீர்க்க ஆசனத்தில் உட்காரும்போது அவன் தன் கண்களால் சகல தீமைகளையும் கவனிக்க முடியும்.

9 ஒருவன் உண்மையாகவே, தான் செய்கிறவைகளைத் தன்னாலியன்றவரை நன்றாகச் செய்கிறேன் என்று சொல்லமுடியுமா? ஒருவன் பாவம் இல்லாதவன் என்று உண்மையில் சொல்லமுடியுமா? முடியாது.

10 தவறான அளவுக் கருவிகளையும் எடைக் கற்களையும் பயன்படுத்தி மற்றவர்களை ஏமாற்றுகிறவர்களைக் கர்த்தர் வெறுக்கிறார்.

11 ஒரு குழந்தைகூடத் தனது செயலால் நல்லதா கெட்டதா என்று வெளிப்படுத்த முடியும். அது நல்லதா நேர்மையானதா என்பதை நீ கவனித்தால் அறிந்துகொள்ள முடியும்.

12 பார்ப்பதற்குக் கண்களையும் கேட்பதற்குக் காதுகளையும் கர்த்தர் நமக்காகப் படைத்துள்ளார்.

13 நீ தூக்கத்தை நேசித்தால், நீ ஏழையாகி விடுவாய். உனது நேரத்தை உழைப்பதில் செலவிடு. உனக்கு உணவு ஏராளமாகக் கிடைக்கும்.

14 உன்னிடமிருந்து எதையாவது வாங்கியவன், "இது நன்றாயில்லை. இதன் விலை அதிகம்" என்கிறான். பிறகு வேறு ஆட்களிடம் போய் தான் நல்ல வியாபாரம் செய்ததாகச் சொல்லிக்கொள்வான்.

15 தங்கமும் வெள்ளியும் ஒருவனைப் பணக்காரன் ஆக்கும். ஆனால் எதைப்பற்றிப் பேசுகிறோமோ, அதை முழுக்க அறிந்துள்ள ஒருவனின் மதிப்பு மிகவும் பெரியது.

16 அடுத்தவனின் கடனுக்கு நீ பொறுப்பேற்றுக் கொண்டால் நீ உனது சட்டையையும் இழந்து விடுவாய்.

17 ஒருவனை ஏமாற்றிப் பெற்றவை நல்லது போன்று தோன்றலாம். ஆனால், முடிவில் அது பயனற்றுப் போய்விடும்.

18 திட்டமிடுவதற்கு முன்பு நல்ல அறிவுரைகளைப் பெறவேண்டும். நீ ஒரு போரைத் துவங்கினால், போர் நடவடிக்கைகளில் சிறந்த அறிவுடையவர்களின் வழிகாட்டுதலைப் பெற்றுக்கொள்.

19அடுத்தவர்களைப்பற்றி வம்பு பேசுகிற
வர்கள் நம்பத்தகாதவர்கள். எனவே அதிக
மாகப் பேசுபவர்களோடு நட்பு கொள்ளாதே.
20ஒருவன் தன் தந்தைக்கோ தாய்க்கோ
எதிராகப் பேசினால், அவன் அணைந்து
கொண்டிருக்கும் விளக்கைப் போன்றவன்.
21உனது செல்வமானது பெறுவதற்கு
எளிதானதாக இருந்தால், அது உனக்கு
அத்தனை உயர்வாகத் தோன்றாது.
22எவனாவது உனக்கு எதிராக எதையா
வது செய்தால் நீயாக அவனைத் தண்டிக்க
முயலாதே. கர்த்தருக்காகக் காத்திரு. இறுதி
யில் உன்னை அவர் வெற்றிபெறச் செய்
வார்.
23சிலர்சரியில்லாத அளவு முறைகளையும்
எடைகளையும் பயன்படுத்துவார்கள். அத
னால் அவர்கள் மற்றவர்களை ஏமாற்றுகின்
றனர். கர்த்தர் இதனை வெறுக்கிறார். அது
அவனை மகிழ்ச்சிக்குட்படுத்தாது.
24ஒவ்வொருவருக்கும் என்ன நிகழும் என்
பதைக் கர்த்தர் முடிவு செய்கிறார். எனவே
ஒருவனுடைய வாழ்க்கையில் என்ன நடக்
கும் என்பதை அவன் எவ்வாறு புரிந்து
கொள்ள முடியும்.
25தேவனுக்கு ஏதாவது கொடுப்பதாக
வாக்குறுதி சொல்லுமுன் நன்றாகச் சிந்திக்க
வேண்டும். இல்லை என்றால் இந்த வாக்கு
றுதியைத் தராமலேயே இருந்திருக்கலாம்
என்று பின்னால் நீ வருந்துவாய்.
26யார் தீயவர் என்னும் முடிவை
அறிவாளியான அரசனே எடுப்பான். அந்த
அரசனே அவர்களைத் தண்டிப்பான்.
27ஒரு மனிதனின் ஆவி கர்த்தருக்கு
முன்பாக ஒரு விளக்கைப்போலிருக்கிறது.
அவனுள் இருப்பது என்ன என்பதையும்
கர்த்தர் அறிவார்.
28அரசன் உண்மையானவனாகவும் நேர்
மையானவனாகவும் இருந்தால் அவன் தன்
அதிகாரத்தைக் காத்துக்கொள்வான். அவ
னது உண்மையான அன்பு ஆட்சியைப்
பலப்படுத்தும்.
29நாம் ஒரு இளைஞனை அவனது வலி
மைக்காக விரும்புகிறோம். முதியவரை அவ
ரது முழுமையான வாழ்க்கையைக் காட்டும்
நரைத்த முடிக்காக மதிக்கிறோம். அவரது
நரைத்த தலைமுடி அவர் ஒரு முழுமையான
வாழ்வை வாழ்ந்திருக்கிறார் என்று பொருள்
தரும்.
30நாம் தண்டிக்கப்பட்டால் தவறு செய்
வதை நிறுத்திவிடுவோம். வேதனையானது
ஒருவனை மாற்றும்.

21 விவசாயிகள் சிறு வாய்க்கால்களைத்
தோண்டி தம் வயல்களில் நீர்ப்
பாய்ச்சுவார்கள். மற்ற வாய்க்கால் வழிகளை
அடைத்து குறிப்பிட்ட ஒரு வாய்க்கால்
வழியே மட்டும் நீர் பாய்ச்சுவார்கள். இது
போல்தான் அரசனின் மனதையும் கர்த்தர்
கட்டுப்படுத்துகிறார். அவன் எங்கெல்லாம்
போகவேண்டும் என்று விரும்புகிறாரோ
அங்கெல்லாம் அவனைக் கர்த்தர் வழி
நடத்துகிறார்.
2ஒருவன் தான் செய்வதையெல்லாம் சரி
என்றே நினைக்கிறான். ஜனங்களின் செயல்
களுக்காகக் கர்த்தரே சரியான காரணங்க
ளோடு தீர்ப்பளிக்கிறார்.
3சரியானதும் நேர்மையானதுமான செயல்
களைச் செய்யுங்கள். பலிகளைவிட இத்
தகையவற்றையே கர்த்தர் விரும்புகிறார்.
4கர்வமுள்ள பார்வையும், பெருமையான
எண்ணங்களும் பாவமானவை. ஒருவன்
தீயவன் என்பதை அவை காட்டுகின்றன.
5கவனமான திட்டங்கள் இலாபத்தைத்
தரும். ஆனால் ஒருவன் கவனம் இல்லாமலும்
எதையும் அவசரகதியுமாகச் செய்துகொண்
டும் இருந்தால், அவன் ஏழையாவான்.
6நீ செல்வந்தனாவதற்காகப் பிறரை
ஏமாற்றினால் உன் செல்வம் உன்னைவிட்டு
வெகுவிரைவில் விலகிவிடும். உன் செல்வம்
உன்னை மரணத்துக்கே அழைத்துச் செல்
லும்.
7தீயவர்களின் செயல்கள் அவர்களை
அழித்துவிடும். அவர்கள் சரியானவற்றைச்
செய்ய மறுக்கின்றனர்.
8கெட்டவர்கள் எப்பொழுதும் மற்றவர்
களை ஏமாற்றவே முயற்சி செய்கிறார்கள்.
ஆனால் நல்லவர்களோ நேர்மையானவர்
களாகவும் சிறந்தவர்களாகவும் இருக்கின்ற
னர்.
9எப்போதும் எதற்கெடுத்தாலும் வாக்கு
வாதம் செய்கிற மனைவியோடு வீட்டில்
வாழ்வதைவிட கூரையின்மேல் வாழ்வது
நல்லது.
10தீயவர்கள் மேலும் தீமையே செய்ய
விரும்புகின்றனர். இவர்கள் தம்மைச் சுற்றி
யிருப்பவர்கள் மீது இரக்கம் காட்டமாட்டார்
கள்.

11தேவனைக் கேலிச் செய்கிறவனைத்
தண்டித்துவிடு. இதனால் அறிவற்றவர்கள்
பாடம் கற்பார்கள். அவர்கள் அறிவாளி
களாகின்றனர். அவர்கள் மேலும் மேலும்
அறிவைப் பெறுகின்றனர்.
12தேவன் நல்லவர். தீயவர்கள் என்ன
செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதைத்
தேவன் அறிவார், அவர்களைத் தண்டிப்பார்.
13ஒருவன் ஏழைகளுக்கு உதவ மறுத்தால்,
அவனுக்கு உதவி தேவைப்படும் தருணத்தில்
உதவிசெய்ய யாரும் முன்வரமாட்டார்கள்.
14ஒருவன் உன்மீது கோபமாக இருந்தால்,
இரகசியமாக அவனுக்கு ஒரு அன்பளிப்பைக்
கொடு. அது அவனது கோபத்தைத் தடுக்கும்.
15நேர்மையான தீர்ப்பு நல்லவர்களை
மகிழ்ச்சியாக்கும். ஆனால் அது தீயவர்
களைப் பயப்படுத்தும்.
16அறிவைவிட்டு விலகி நடப்பவன்
அழிவை நோக்கியே செல்கிறான்.

17வேடிக்கை செய்வதையே முதன்
மையாகக் கருதுபவன் ஏழ்மையடைவான்.
அவன் திராட்சைரசத்தையும் உணவையும்
விரும்பினால், அவனால் செல்வந்தனாக
முடியாது.
18நல்லவர்களுக்குத் தீயவர்கள் செய்யும்
தீமைகளுக்கெல்லாம் விலை கொடுக்கவேண்
டும். நேர்மையற்றவர்கள் நேர்மையானவர்க
ளுக்குச் செய்தவற்றுக்காக விலைதர வேண்
டும்.
19முன் கோபமும் வாக்குவாதம் செய்வதில்
ஆர்வமும்கொண்ட மனைவியோடு வாழ்வ
தைவிட பாலைவனத்தில் வாழ்வது நல்லது.
20அறிவுள்ளவன் தனக்குத் தேவையான
வற்றைச் சேகரித்துக்கொள்கிறான். அறிவற்ற
வனோ தான் பெற்றதை பெற்ற வேகத்தி
லேயே செலவுசெய்து விடுகிறான்.
21எப்பொழுதும் அன்பையும், கருணை
யையும் காட்டுகிற ஒருவன் நல்வாழ்வும்
செல்வமும் சிறப்பும் பெறுவான்.
22அறிவுள்ளவனால் அனைத்தையும் செய்
யமுடியும். அவனால் வலிமைமிக்க வீரர்
களின் காவலில் உள்ள நகரங்களையும்
தாக்கமுடியும். அவர்களைக் காக்கும் என்று
நம்பியவைகளையும் தகர்க்கமுடியும்.
23ஒருவன் தான் சொல்வதைப்பற்றி எச்ச
ரிக்கை உடையவனாக இருந்தால், அவன்
தன்னைத் துன்பங்களிலிருந்து காத்துக்கொள்
கிறான்.
24பெருமை கொண்டவன் மற்றவர்களை
விடத் தன்னைச் சிறந்தவனாக நினைக்கி
றான். அவன் தனது செயல்கள் மூலம்
தீயவன் என்று காட்டுகிறான்.
25-26சோம்பேறி மேலும் மேலும் ஆசைப்
படுவதால் தன்னையே அழித்துக்கொள்கி
றான். அவன் அதற்கென உழைக்க மறுப்ப
தால் தன்னைத்தானே அழித்துக் கொள்கி
றான். ஆனால் நல்லவனிடம் ஏராளமாக
இருப்பதால் அவனால் கொடுக்கமுடியும்.
27தீயவர்கள் பலிதரும்போது, குறிப்பாக
அவர்கள் கர்த்தரிடமிருந்து சிலவற்றைப்
பெற முயற்சிக்கும்போது கர்த்தர் மகிழ்ச்சி
யடைவதில்லை.
28பொய் சொல்பவன் அழிக்கப்படுவான்.
அப்பொய்யை நம்புகிறவனும் அவனோடு
அழிந்துவிடுவான்.

29தான் செய்வது சரி என்பதை எப்
போதும் நல்லவன் அறிவான். ஆனால்
தீயவனோ நடிக்கிறான்.
30கர்த்தர் எதிராக இருக்கும்போது வெற்
றியடையக்கூடிய திட்டமிடுகிற அளவிற்கு
யாருக்கும் அறிவில்லை.
31ஜனங்களால் போருக்கான அனைத்து
ஏற்பாடுகளையும், குதிரைகளையும்கூடத்
தயார் செய்ய முடியும். ஆனால் கர்த்தர்
வெற்றியைக் கொடுக்காவிட்டால் அவர்
களால் வெல்ல இயலாது.

22 ஒருவன் செல்வந்தனாக இருப்பதை
விட மரியாதைக்குரியவனாக வாழ்
வது நல்லது. பொன் மற்றும் வெள்ளியை
விட நல்ல பெயர் முக்கியமானது.
2செல்வந்தராக இருப்பினும் ஏழைகளாக
இருப்பினும் எல்லாரும் சமமே. அனை
வரையும் கர்த்தரே படைத்துள்ளார்.
3அறிவுள்ளவர்கள் துன்பம் வருவதைப்
பார்த்து அதிலிருந்து விலகிக் கொள்வார்கள்.
ஆனால் அறிவற்றவர்களோ நேராகத் துன்
பத்தை நோக்கிப் போய் அதில் சிக்கிக்
கொள்வார்கள்.
4கர்த்தரை மதித்துப் பணிவுள்ளவர்களாக
இருங்கள். அப்போது உங்களுக்குச் செல்வ
மும் மதிப்பும் உண்மையான வாழ்வும்
கிடைக்கும்.
5தீயவர்கள் பல துன்பங்களில் அகப்பட்
டுக் கொள்கிறார்கள். ஆனால் தங்கள் ஆத்து
மாவைப் பற்றி எச்சரிக்கையாக இருப்பவர்
கள் துன்பங்களிலிருந்து விலகி வாழ்கின்ற
னர்.
6ஒரு பிள்ளை இளமையாக இருக்கும்
போதே வாழ்வதற்கான நல்ல வழிகளை
அவனுக்குப் போதியுங்கள். அப்போது
அவன் வளர்ந்தபிறகும் தொடர்ந்து நல்ல
வழியிலேயே நடப்பான்.
7ஏழைகள் எல்லாம் செல்வந்தர்களுக்கு
அடிமையாக இருக்கின்றனர். கடன் வாங்கிய
வன் கடன் கொடுத்தவனுக்கு வேலைக்கார
னாக இருக்கிறான்.
8துன்பத்தை விதைக்கிறவன் துன்பத்
தையே அறுக்கிறான். முடிவில் அடுத்தவர்க
ளுக்குக் கொடுத்த துன்பத்தாலேயே அவன்
அழிந்துபோகிறான்.
9தாராளமாகக் கொடுப்பவன் ஆசீர்வதிக்
கப்படுகிறான். தன் உணவை ஏழைகளோடு
பகிர்ந்துகொள்வதால் அவன் ஆசீர்வதிக்கப்
படுகிறான்.
10ஒருவன் மற்றவர்களைவிடத் தன்னைப்
பெரிதாக நினைத்துக்கொண்டிருந்தால்
அவனை விலகும்படி வற்புறுத்து. அவன்
விலகும்போது அவனோடு துன்பங்களும்
விலகுகின்றன. பின் வாதங்களும் விரோத
மும் விலகும்.
11நீ சுத்தமான இருதயத்தையும் கருணை
மிக்கவார்த்தைகளையும் விரும்புகிறவனாயி
ருந்தால் அரசனும் உனக்கு நண்பன் ஆவான்.
12தேவனை அறிகின்ற ஜனங்களைக்
கர்த்தர் கவனித்து காப்பாற்றுகிறார். ஆனால்
தனக்கு எதிரானவர்களை அவர் அழித்துப்
போடுகிறார்.
13சோம்பேறியோ, "என்னால் வேலைக்
குப் போகமுடியாது. வெளியே ஒரு சிங்கம்
உள்ளது. அது என்னைக் கொன்றுவிடும்"
என்று கூறுகிறான்.
14விபச்சாரம் என்பது வலை போன்றது.
இவ்வலையில் விழுபவர்களின் மீது கர்த்தர்
மிகுந்த கோபங்கொள்கிறார்.

[15]சிறுவர்கள் முட்டாள்தனமான செயல்க
ளைச் செய்கிறார்கள். நீ அவர்களைத்
தண்டித்தால், அவற்றைச் செய்யாமல் இருக்
கக் கற்றுக்கொள்கிறார்கள்.
[16]நீ செல்வந்தனாகும்பொருட்டு ஏழை
களைத் துன்புறுத்துவதும், செல்வந்தர்க
ளுக்கு அன்பளிப்புகளைக் கொடுப்பதும்
ஆகிய இரண்டு செயல்களும் உன்னை
ஏழையாக்கும்.

### முப்பது ஞான மொழிகள்

[17]நான் சொல்லுகிறதைக் கவனியுங்கள்.
அறிவாளிகள் சொல்லியிருக்கின்றவற்றை
நான் உங்களுக்குப் போதிக்கிறேன். இப்போத
னைகளிலிருந்து கற்றுக்கொள்ளுங்கள். [18]நீ
இவற்றை நினைவில் வைத்திருந்தால் இது
உனக்கு நல்லது. நீ இவ்வார்த்தைகளைச்
சொன்னால் இவை உனக்குப் உதவியாக
இருக்கும். [19]இப்பொழுது இவற்றை நான்
உனக்கு போதிக்கிறேன். நீ கர்த்தரை நம்ப
வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.
[20]நான் உனக்காக முப்பது அறிவுரைகளை
எழுதியிருக்கிறேன். இவை அறிவும் ஞான
மும் உடையவை. [21]இவை உனக்கு
உண்மையானவற்றையும் முக்கியமானவற்
றையும் போதிக்கும். அப்போது உன்னை
அனுப்பியவருக்கு நீ நல்ல பதில்களைக்
கூறமுடியும்.

- 1 -

[22]ஏழைகளிடமிருந்து திருடுவது எளிது.
ஆனால் அதனைச் செய்யாதே. வழக்கு
மன்றத்தில் ஏழைகளைச் சுரண்டாதே.
[23]கர்த்தர் அவர்கள் பக்கம் இருக்கிறார்.
அவர்களுக்கு அவர் உதவுகிறார். அவர்களிட
மிருந்து எடுத்துக்கொண்ட எந்தப் பொரு
ளையும் அவர் திரும்ப எடுத்துக்கொள்கிறார்.

- 2 -

[24]மிக சீக்கிரத்தில் கோபங்கொள்கிறவர்
களோடு நட்பு கொள்ளாதே. விரைவில்
நிதானம் இழப்பவர்கள் பக்கத்தில் போகாதே.
[25]நீ அவ்வாறு செய்தால், நீயும் அவர்
களைப்போன்று ஆகக் கற்றுக்கொள்வாய்.
பிறகு அவர்களுக்குரிய அதே துன்பம்
உனக்கும் வரும்.

- 3 -

[26]அடுத்தவன்பட்ட கடனுக்குப் பொறுப்
பேற்பதாக நீ வாக்குறுதி தராதே. [27]உன்னால்
அந்தக் கடனைத் தீர்க்க முடியாவிட்டால்,
உன்னிடமுள்ள அனைத்தையும் இழந்து
போவாய். நீ தூங்கும் படுக்கையை எதற்காக
இழக்கவேண்டும்?

- 4 -

[28]உன் முற்பிதாக்களால் குறிக்கப்பட்ட
பழைய எல்லை அடையாளங்களை மாற்
றாதே.

- 5 -

[29]ஒருவன் தனது வேலையில் திறமை
யுடையவனாக இருந்தால் அவன் அரசனி
டம் பணியாற்றும் தகுதியைப் பெறுகிறான்.
அவன், முக்கியமில்லாதவர்களுக்குப் பணி
யாற்றும் தேவை இருக்காது.

- 6 -

23 ஒரு முக்கியமான மனிதனோடு
அமர்ந்து உண்ணும்போது நீ யாரு
டன் இருக்கிறாய் என்பதை
எண்ணிப்பார். [2]எவ்வளவுதான் பசியோடு
இருந்தாலும் அளவுக்கு மீறி உண்ணாதே.
[3]அவன் கொடுக்கும் உயர்ந்த உணவை
அதிகமாக உண்ணாதே. இது ஒரு தந்திரமாக
இருக்கலாம்.

- 7 -

[4]செல்வந்தனாக முயன்று உனது உடல்
நலத்தைக் கெடுத்துக் கொள்ளாதே. நீ அறி
வுள்ளவனாக இருந்தால் பொறுமையாக
இரு. [5]ஒரு பறவை சிறகு முளைத்துப்
பறந்துசென்று விடுவதைப்போல செல்வம்
மிக வேகமாகக் கரைந்துவிடும்.

- 8 -

[6]கருமியோடு அமர்ந்து உணவு உண்
ணாதே. அவன் விரும்பும் சிறப்பு உணவி
லிருந்து தூர விலகியிரு. [7]எப்பொழுதும்
அவன் அதன் விலையையே நினைத்துக்
கொண்டிருக்கும் தன்மையுடையவன். அவன்
உன்னிடம்: "உண்ணு, பருகு" என்று
கூறலாம். ஆனால் அவனது விருப்பம்
உண்மையானது அல்ல. [8]அவனது உணவை
உண்டால், நீ நோயாளி ஆவாய். உனது
வார்த்தைகளின் புகழுரையும், நன்றிகளும்
வீணாகப் போய்விடும்.

- 9 -

[9]முட்டாளுக்குக் கற்றுக்கொடுக்க முய
லாதே. அவன் உனது புத்திமதி வார்த்தை
களைக் கேலிச் செய்வான்.

- 10 -

[10]பழைய சொத்துக்களின் எல்லையை
மாற்றாதே. அநாதைகளுக்குரிய நிலத்தை
அபகரிக்காதே. [11]கர்த்தர் உனக்கு எதிராக
இருப்பார். கர்த்தர் சர்வ வல்லமையுள்ளவர்.
அந்த அநாதைகளை அவரே பாதுகாக்கிறார்.

- 11 -

[12]உனது போதகரைக் கவனி, உன்னால்
முடிந்தவரை கற்றுக்கொள்.

- 12 -

13தேவைப்படும்பொழுது குழந்தைக்குத்
தண்டனை கொடு. அவனைப் பிரம்பால்
அடித்தால் அது அவனை அழிக்காது.
14அவனைப் பிரம்பால் அடிப்பதன்மூலம்
அவனது வாழ்க்கையைக் காப்பாற்றி விடு
கிறாய்.

- 13 -

15என் மகனே! நீ அறிவாளியானால்,
நான் மிகவும் மகிழ்வேன். 16நீ சரியான
வற்றைப் பேசுவதை நான் கேட்டால் என்
மனதில் மிகவும் மகிழ்வேன்.

- 14 -

17தீயவர்களைப் பார்த்து பொறாமைப்
படாதே. ஆனால் எப்பொழுதும் உறுதியாக
கர்த்தருக்கு மரியாதை செலுத்து 18எப்
பொழுதும் நம்பிக்கைக்கு இடம் உண்டு.
உனது நம்பிக்கை வீண்போகாது.

- 15 -

19என் மகனே கவனி. அறிவுள்ளவனாக
இரு. சரியான வழியில் வாழ்வதில் எச்ச
ரிக்கையாக இரு. 20மிகுதியான இறைச்சியை
உண்பவர்களோடும் மிகுதியான மதுவைக்
குடிப்பவர்களோடும் நட்பாக இருக்காதே!
21மிகுதியாக உண்பவனும் குடிப்பவனும்
ஏழையாகி விடுகிறான். அவர்கள் செய்
பவையெல்லாம் உண்பது, குடிப்பது மற்றும்
தூங்குவது மட்டுமே. விரைவில் அவர்கள்
ஒன்றும் இல்லாமல் போகிறார்கள்.

- 16 -

22உன் தந்தை சொல்வதைக் கவனமாகக்
கேள். உன் தந்தை இல்லாவிட்டால் நீ
பிறந்திருக்க முடியாது. எவ்வளவுதான் முதி
யவளாக இருந்தாலும் உன் தாய்க்கு
மரியாதை கொடு. 23உண்மை, ஞானம்,
கல்வி, புரிந்துகொள்ளுதல் ஆகியவை விலை
மதிப்புள்ளவை. இவைகளை விற்கமுடியாது.
ஏனெனில் இவை மிகவும் விலையுயர்ந்
தவை. 24நல்லவனின் தந்தை மகிழ்ச்சியாக
இருக்கிறார். ஒருவன் அறிவுள்ள பிள்ளை
யைப் பெற்றால் அப்பிள்ளை மகிழ்ச்சியைத்
தருகிறான். 25எனவே உன் தந்தையையும்
தாயையும் உன்னோடு மகிழ்ச்சியாக இருக்
கும்படி செய். உன் தாயை ஆனந்தமாக
வைத்திரு.

- 17 -

26என் மகனே, நான் சொல்வதைக்
கவனமாகக் கேள். என் வாழ்க்கை உனக்கு
எடுத்துக்காட்டாக இருக்கட்டும். 27வேசிகளும்
மோசமான பெண்களும் வலைகளைப்
போன்றவர்கள். அவர்கள் உன்னால் வெளி
யேற முடியாத அளவுக்கு ஆழமான
கிணற்றைப் போன்றவர்கள். 28மோசமான
பெண் திருடனைப் போன்று உனக்காக
காத்திருப்பாள். பலரை அவள் பாவி
களாக்குகிறாள்.

- 18 -

29-30நிறைய மது குடிப்பவர்களுக்கு அநே
கத் தீங்கு உண்டாகிறது. தங்களுக்குள்
அடித்துக்கொண்டு சண்டைகளும் விவாதங்
களும் செய்வார்கள். அவர்களின் கண்கள்
சிவக்கின்றன. தங்களுக்குள் சண்டையிட்டுப்
புலம்பி தங்களைத் தாங்களே காயப்படுத்திக்
கொள்கின்றனர். அவர்களால் இத்துன்பங்
களைத் தவிர்த்திருக்க முடியும்.
31மதுவைப்பற்றி எச்சரிக்கையாக இரு.
அது அழகாகவும் சிவப்பாகவும் இருக்கிறது.
அது கிண்ணத்திற்குள் பளபளப்பாக உள்
ளது. குடிக்கும்போது அது மென்மையாகவும்
மெதுவாகவும் வயிற்றில் இறங்குகிறது. 32முடி
வில் அது ஒரு பாம்பைப்போன்று கடித்து
விடுகிறது.
33மதுவானது உன்னை விநோதமான
வற்றைப் பார்க்கவைக்கும். உன் மனம்
குழப்பமடையும். 34நீ படுத்திருக்கும்போது,
நீ கடலுக்குமேல் படுத்திருப்பதுபோல்
தோன்றும். நீ கப்பலில் படுத்திருப்பது
போல் தோன்றும். 35“அவர்கள் என்னை
அடித்தார்கள், ஆனால் அதை நான் உணர
வில்லை. அவர்கள் என்னைத் தாக்கி
னார்கள். அது எனக்கு நினைவில்லை.
இப்போது என்னால் எழ முடியவில்லை.
எனக்கு மேலும் குடிக்கவேண்டும்போல்
உள்ளது” என்று நீ சொல்வாய்.

- 19 -

24 தீயவர்களைப் பார்த்து நீ பொறாமைப்
படாதே. உனது காலத்தை அவர்க
ளோடு வீணாக்காதே. 2அவர்கள் தங்கள்
மனதில் தீமைசெய்ய நினைத்திருக்கிறார்கள்.
துன்பம் செய்வதைப்பற்றியே பேசுகிறார்கள்.

- 20 -

3ஞானத்தினாலும் புரிந்துகொள்தலினா
லும் நல்ல வீடு கட்டப்படுகிறது. 4அறிவு
அறைகளை அரிய அழகுள்ள திரவியங்க
ளால் நிரப்புகிறது.

- 21 -

5ஞானம் ஒருவனை மிகவும் வலிமை
யுள்ளவனாக்கும். அறிவு ஆற்றலைத் தரு
கிறது. 6நீ ஒரு போரைத் துவங்குமுன்
கவனமாகத் திட்டமிட வேண்டும். நீ
வெற்றியை விரும்பினால், அநேக நல்ல
ஆலோசகர்களை வைத்திருக்க வேண்டும்.

- 22 -

7முட்டாள்களால் ஞானத்தை உணர்ந்து
கொள்ள முடியாது. முக்கியமானவற்றைப்
பற்றி ஜனங்கள் கலந்தாலோசிக்கும்போது
முட்டாள்களால் எதுவும் சொல்ல முடியாது.

*- 23 -*

[8]*நீ எப்பொழுதும் மற்றவர்களுக்குத் தீமை செய்வதைப்பற்றியே திட்டமிட்டுக் கொண்டிருந்தால், தொந்தரவுகளை உருவாக்குபவன் என்று ஜனங்கள் உன்னை நினைத்துக் கொள்வார்கள். நீ சொல்வதை அவர்கள் கேட்க மாட்டார்கள். [9]அறிவற்றவன் செய்யத் திட்டமிடுபவை அனைத்தும் பாவத்திலேயே முடிகின்றன. மற்றவர்களைவிடத் தன்னைப் பெரிதாக நினைப்பவனை ஜனங்கள் வெறுப்பார்கள்.*

*- 24 -*

[10]*துன்பக்காலத்தில் நீ தைரியமிழந்து போவாயானால், உண்மையிலேயே நீ பலவீனன் ஆவாய்.*

*- 25 -*

[11]*ஜனங்கள் ஒருவனைக் கொலைசெய்யத் திட்டமிடுகையில், உன்னால் முடிந்தால் அவனைக் காப்பாற்ற வேண்டும். [12]"இது எனது வேலை இல்லை" என்று கூறாதே. அனைத்தையும் கர்த்தர் அறிவார். நீ எதற்காக அவற்றைச் செய்கிறாய் என்பதையும் அவர் அறிவார். கர்த்தர் உன்னைக் கவனிக்கிறார், அவர் அறிகிறார். உனக்கு தகுந்த வெகுமதிகளைக் கர்த்தர் தருவார்.*

*- 26 -*

[13]*என் மகனே, தேனைப் பருகு. அது நல்லது. தேனடையிலுள்ள தேன் மிகவும் சுவையானது. [14]இதுபோலவே ஞானமானது உன் ஆத்துமாவுக்கு நல்லது. உன்னிடம் ஞானம் இருக்குமானால் உன்னிடம் நம்பிக்கையும் இருக்கும். உன் நம்பிக்கைக்கு முடிவிருக்காது.*

*- 27 -*

[15]*நல்லவனிடமிருந்து பொருளைத் திருடும் அல்லது அவன் வீட்டையே அபகரிக்கும் திருடனைப்போல நீ இருக்காதே. [16]நல்லவன் ஏழுமுறை விழுந்தாலும் மீண்டும் எழுந்து விடுவான். ஆனால் தீயவர்களோ எப்பொழுதும் துன்பங்களால் தோற்கடிக்கப்படுவார்கள்.*

*- 28 -*

[17]*உன் எதிரிக்குத் துன்பம் வரும்போது அதைக்கண்டு மகிழ்ச்சி அடையாதே. அவன் விழும்போதும் மகிழ்ச்சி அடையாதே. [18]நீ அவ்வாறு செய்தால் கர்த்தர் அதனைக் காண்பார். அதற்காகக் கர்த்தர் மகிழ்ச்சியடையமாட்டார். கர்த்தர் உன் எதிரிக்கே உதவி செய்வார்.*

*- 29 -*

[19]*தீயவர்களைக் குறித்து கவலைப்படாதே. அவர்களைக் கண்டு பொறாமையும் அடையாதே. [20]தீயவர்களுக்கு எவ்வித நம்பிக்கையும் இல்லை. அவர்களின் விளக்கு அணைந்துபோகும்.*

*- 30 -*

[21]*மகனே! கர்த்தருக்கும் அரசனுக்கும் மரியாதை செய். அவர்களுக்கு எதிரானவர்களோடு சேராதே. [22]ஏனென்றால் அத்தகையவர்கள் விரைவில் அழிக்கப்படுவார்கள். தேவனும் அரசனும் தம் எதிரிகளுக்கு எவ்வளவு துன்பத்தைக் கொடுப்பார்கள் என்பது உனக்குத் தெரியாது.*

### மேலும் ஞானமொழிகள்

[23]*இவை ஞானம் உள்ளவர்களின் வார்த்தைகள். ஒரு நீதிபதி நேர்மையாக இருக்க வேண்டும். ஒருவன் தெரிந்தவன் என்பதற்காக அவனுக்கு சார்பாக இருக்கக் கூடாது.*

[24]*ஒரு நீதிபதி தவறு செய்தவனை விடுதலைசெய்து தீர்ப்பு அளித்தால், ஜனங்கள் அவனுக்கு எதிராக மாறுவார்கள். மற்ற நாட்டு ஜனங்களும்கூட அவனை இழிவாகக் கூறுவார்கள். [25]ஆனால் ஒரு நீதிபதி தவறு செய்தவனைத் தண்டித்தால் அதற்காக ஜனங்கள் மகிழ்ச்சி அடைவார்கள்.*

[26]*ஒரு நேர்மையான பதில் ஜனங்கள் அனைவரையும் மகிழ்ச்சிப்படுத்தும். அது உதடுகளில் இடுகிற முத்தத்தைப் போன்றது.*

[27]*உனது வயலில் நடுவதற்கு முன்னால் வீடு கட்டாதே. வாழ்வதற்கான வீட்டைக் கட்டும் முன்னால் உணவுக்காகப் பயிர் செய்வதற்கான உறுதியான ஏற்பாடுகளைச் செய்துக்கொள்.*

[28]*சரியான காரணம் இல்லாமல் ஒருவனுக்கு எதிராகப் பேசாதே. பொய் சொல்லாதே.*

[29]*"அவன் என்னைக் காயப்படுத்தினான். எனவே அதுபோல் நானும் அவனைக் காயப்படுத்துவேன், அவன் எனக்குச் செய்தற்காக நான் அவனைத் தண்டிப்பேன்" என்று சொல்லாதே.*

[30]*சோம்பேறியான ஒருவனுக்குச் சொந்தமான வயலைக் கடந்து நான் நடந்து சென்றேன். ஞானம் இல்லாத ஒருவனுக்குச் சொந்தமான திராட்சைத் தோட்டத்தின் வழியாக நான் நடந்து சென்றேன்.*

[31]*அனைத்து இடங்களிலும் முட்செடிகள் வளர்ந்திருந்தன. தரையில் பயனற்ற புதர்களும் வளர்ந்திருந்தன. தோட்டத்தைச் சுற்றுலுமிருந்த சுவர்கள் உடைந்து விழுந்து கிடந்தன. [32]நான் இவற்றைப் பார்த்து அதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். பின் நான் இவற்றிலிருந்து ஒரு பாடத்தைக் கற்றுக் கொண்டேன். [33]ஒரு சிறு தூக்கம், ஒரு சிறு ஓய்வு, கைகளை மடக்கிக்கொண்டு சிறு தூக்கம் எனலாமா? [34]இதுபோன்ற செயல்கள் விரை*

வில் உன்னை ஏழையாக்கிவிடும். உன்
னிடம் ஒன்றும் இருக்காது. ஒரு திருடன்
கதவை உடைத்துவந்து வீட்டிலுள்ள
அனைத்தையும் எடுத்துப்போனதுபோல்
இருக்கும்.

### சாலொமோனிடமிருந்து மேலும் ஞானமொழிகள்

25 இது சாலொமோன் சொன்ன மேலும்
சில ஞானமொழிகள். இவ்வார்த்தை
கள் யூதாவின் அரசனான எசேக்கியா
என்பவனின் வேலைக்காரர்கள் பார்த்து
எழுதியவை.
2 நாம் அறிந்துகொள்ளக்கூடாது என்று
தேவன் எண்ணும் காரியங்களை மறைத்து
வைக்கும் உரிமை தேவனுக்கு உண்டு.
ஆனால், தான் சொல்லும் காரியங்களுக்காக
ஒரு அரசன் பெருமைக்குரியவன் ஆகிறான்.
3 வானம் நமக்கு மேலே மிகவும் உயரத்தில்
உள்ளது. பூமியில் ஆழங்கள் உள்ளன.
இதுபோலவே அரசனுடைய மனமும் உள்
ளது. இவற்றை நம்மால் புரிந்துகொள்ள
முடியாது.
4 நீ வெள்ளியிலிருந்து கசடுகளையும்
அசுத்தங்களையும் நீக்கிவிட்டால், அதைக்
கொண்டு ஒரு தொழிலாளியால் நல்ல
அழகான பொருட்களைச் செய்யமுடியும்.
5 இதுபோலவே, ஒரு அரசனிடமிருந்து
தீய ஆலோசகர்களை நீக்கிவிட்டால், நன்மை
அவனது ஆட்சியை வலிமையுள்ளதாக்கும்.
6 அரசனுக்கு முன்னால் உன்னைப்பற்றிப்
பெருமை பேசாதே. நீ புகழ்பெற்றவன்
என்றும் கூறாதே. 7 அரசன் உன்னை அவ
னாக வரவழைப்பதுதான் மிக நல்லது.
ஆனால் நீயாகப் போனால் மற்றவர்கள்
முன்பு நீ அவமானப்பட்டுப் போவாய்.
8 நீ உன் கண்ணால் பார்த்ததை நீதிபதி
யிடம் சொல்ல அவசரப்படாதே. வேறு
ஒருவன் நீ சொல்வது தவறென்று நிரூபித்து
விட்டால் பிறகு நீ அவமானப்படுவாய்.
9 நீயும் இன்னொருவனும் ஒத்துப்போகா
விட்டால் இனி என்ன செய்யலாம்
என்பதை உங்களுக்குள் பேசி முடிவு செய்.
அடுத்தவனின் இரகசியத்தை வெளியில்
கூறாதே. 10 நீ அவ்வாறு செய்தால், பிறகு
அவமானப்படுவாய். அதற்குப் பிறகு உன்
அவப்பெயர் எப்போதும் நீங்காது.
11 நீ சரியான நேரத்தில் சரியானதைக்
கூறுவது, தங்க ஆப்பிளை வெள்ளித் தட்டில்
வைப்பது போன்றது.
12 ஞானமுள்ளவன் உன்னை எச்சரித்தால்,
அது தங்க மோதிரங்களை விடவும், சுத்த
மான தங்கத்தால் செய்த நகைகளை விடவும்
மதிப்புள்ளது.
13 நம்பிக்கைக்குரிய தூதுவன் அவனை
அனுப்பியவனுக்குப்பயனுள்ளவனாக இருப்
பான். அவன் வேனிற்கால அறுவடையின்
போது கிடைக்கும் குளிர்ந்த தண்ணீரைப்
போன்றவன்.
14 சிலர் அன்பளிப்பு கொடுப்பதாக வாக்கு
றுதி தருவார்கள். ஆனால் அவற்றைத்
தரமாட்டார்கள். இவர்கள் மழை தராத
மேகமும் காற்றும் போன்றவர்கள்.
15 பொறுமையான பேச்சு யாருடைய
சிந்தனையையும் மாற்ற வல்லது. அது
அரசனையும் மாற்றும் மென்மையான பேச்சு
மிகுந்த வலிமை உடையது.
16 தேன் நல்லது. ஆனால் அதை அதிகம்
உண்ணாதே. அவ்வாறு செய்தால் நீ
வியாதிக்குள்ளாவாய். 17 இதுபோலவே
உனது அயலான் வீட்டிற்கு அடிக்கடிப்
போகாதே. அவ்வாறு செய்தால் அவன்
உன்னை வெறுக்கத் துவங்குவான்.
18 உண்மையைச் சொல்லாதவன் ஆபத்தா
னவன். அவன் தண்டாயுதத்திற்கும் வாளுக்
கும் கூர்மையான அம்புக்கும் சமமானவன்.
19 துன்பகாலத்தில் பொய் சொல்பவனை
நம்பி இருக்காதே. வலி கொடுக்கும் பல்லைப்
போன்றும், வாதத்தால் சூம்பிய காலைப்
போன்றும் அவன் இருப்பான். அவனது
தேவை வரும்போது துன்புறுத்துவான்.
20 வருத்தத்தோடு இருக்கிறவன் முன்னால்
மகிழ்ச்சியான பாடல்களைப் பாடுவது ஒரு
வன் குளிரால் வருந்தும்போது ஆடையைப்
பறிப்பது போன்றதாகும். அது வெடிப்பின்
மேல் காடியைக் கலப்பது போன்றது ஆகும்.
21 உன் எதிரி பசியோடு இருந்தால் அவ
னுக்கு உணவு கொடு. உன் எதிரி தாகமாக
இருந்தால் குடிக்க தண்ணீரைக் கொடு.
22 இவ்வாறு செய்வதின்மூலம் நீ அவனை
வெட்கப்படுத்தமுடியும். இது எரிகிற நெருப்
புத் தழல்களை அவன் தலையின்மேல்
போடுவதற்குச் சமமாகும். உன் எதிரிக்கு நீ
நல்லதைச் செய்தபடியால் கர்த்தர் உனக்கு
நற்பலனைத் தருவார்.
23 வடக்கே இருந்து வரும் காற்று மழை
யைக் கொண்டுவரும். இதுபோலவே வம்பா
னது கோபத்தைக் கொண்டுவரும்.
24 உன்னோடு ஓயாமல் வாக்குவாதம் செய்
கிற மனைவியோடு வீட்டிற்குள் வாழ்வதை
விட கூரைமேல் வாழ்வது நல்லது.
25 தூரமான இடத்திலிருந்து வரும் நல்ல
செய்தி வெப்பமாகவும் தாகமாகவும் இருக்
கும்போது கிடைக்கும், குளிர்ந்த தண்ணீ
ரைப் போன்றதாகும்.
26 ஒரு நல்ல மனிதன் பலவீனமாகி கெட்ட
வன் பின்னால் போவது என்பது நல்ல
தண்ணீரை அழுக்காவதைப் போன்றதாகும்.
27 நீ தேனை மிகுதியாகப் பருகினால்
அது உனக்கு நல்லதல்ல. இதுபோலவே
உனக்கு மிக அதிகளவு பெருமையைத்
தேடிக்கொள்ள முயலாதே.
28 ஒருவன் தன்னைத்தானே கட்டுப்படுத்த
முடியாவிட்டால், அவன் மதில் உடைந்துப்
போன நகரைப்போன்று இருப்பான்.

### அறிவற்றவர்களைப்பற்றிய ஞான மொழிகள்

26 கோடைக்காலத்தில் பனி விழக்கூடாது. அறுவடை காலத்தில் மழை பெய்யக்கூடாது. அது போலவே ஜனங்கள் அறிவற்றவர்களைப் பெருமைப்படுத்தக் கூடாது.

2 ஒருவன் உனக்குக் கேடு ஏற்படும்படி சபித்தால் அதற்காகக் கவலைப்படாதே. நீ தவறு செய்யாமல் இருந்தால் உனக்கு எந்தக் கேடும் ஏற்படாது. அவர்களின் வார்த்தைகள் நிற்காமல் பறந்து செல்லும். தடுக்க முடியாத பறவைகளைப் போன்றிருக்கும்.

3 குதிரைக்கு ஒரு சவுக்கு வேண்டும். கழுதைக்குக் கடிவாளம் வேண்டும். முட்டாளுக்கு அடிகொடுக்க வேண்டும்.

4 இங்கே ஒரு இக்கட்டான சூழ்நிலை: ஒரு முட்டாள் மூடத்தனமான கேள்வியைக் கேட்டால் நீயும் ஒரு மூடத்தனமான பதிலைக் கொடுக்க வேண்டாம். ஏனென்றால் நீயும் முட்டாளைப்போன்று தோன்றுவாய்.
5 ஆனால் ஒரு முட்டாள் ஒரு மூடத்தனமான கேள்வியைக் கேட்டால் நீயும் ஒரு மூடத்தனமான பதிலையே கூறவேண்டும். இல்லையெனில் அவன் தன்னை ஞானியாக நினைத்துகொள்வான்.

6 உனது செய்தியை ஒரு முட்டாள் எடுத்துச் செல்லும்படி அனுமதிக்காதே. நீ அவ்வாறு செய்தால் உனது காலை நீயே வெட்டிக்கொள்வது போன்றது. நீயே துன்பத்தைத் தேடிக்கொள்கிறாய்.

7 ஒரு முட்டாள் புத்திசாலித்தனத்தோடு பேச முயற்சிப்பது ஊனமான ஒருவன் நடக்க முயற்சிசெய்வது போன்றதாகும்.

8 ஒரு முட்டாளுக்குப் பெருமை சேர்ப்பது, கவணிலே கல்லைக் கட்டுவதுப் போல் இருக்கும்.

9 ஒரு முட்டாள் ஞானமுள்ள ஒன்றைச் சொல்ல முயல்வது ஒரு குடிகாரன் தன் கரத்திலுள்ள முள்ளை எடுக்க முயற்சி செய்வது போன்றதாகும்.

10 ஒரு முட்டாளையோ, அல்லது யாரோ ஒரு வழிப்போக்கனையோ வேலைக்கு வைத்துக்கொள்வது ஆபத்தானது. அவன் யாருக்குத் துன்பம் தருவான் என்பதைத் தீர்மானிக்க முடியாது.

11 ஒரு நாய் எதையாவது தின்னும், பிறகு அதை வாந்தி எடுக்கும், பின் அதனையே தின்னும். இது போலவே முட்டாள்களும் மூடத்தனத்தையே திரும்பத் திரும்பச் செய்வார்கள்.

12 ஞானமுள்ளவனாக ஒருவன் இல்லாமல் இருந்தும் தன்னை ஞானியாக நினைப்பது முட்டாளைவிட மோசமானது.

### சோம்பேறிகளைப் பற்றிய ஞானமொழிகள்

13 "என்னால் வீட்டைவிட்டுச் செல்ல முடியாது. தெருவில் சிங்கம் உள்ளது" என்று ஒரு சோம்பேறி கூறுகிறான்.

14 ஒரு சோம்பேறி கதவைப் போன்றவன். கதவு கீல் முனையில் அசைவது போன்று சோம்பேறியும் படுக்கையில் அசைந்துக் கொண்டு இருக்கிறான்.

15 சோம்பேறி தனது தட்டில் உள்ள உணவை வாயில் வைக்கவும் முடியாமல் சோம்பேறித் தனமாக நடந்துக்கொள்கிறான்.

16 சோம்பேறி மிகுந்த புத்தியுள்ளவனாகத் தன்னைச் நினைத்துக்கொள்கிறான். தன் கருத்துக்களுக்கு சரியான காரணம் சொல்லும் ஏழு பேரைக் காட்டிலும் ஞானவானாகத் தன்னை நினைத்துக் கொள்கிறான்.

17 இரண்டுபேர் செய்யும் விவாதத்திற்கிடையில் சிக்கிக்கொள்வது மிகவும் ஆபத்தானது. இது தெருவில் போகும் நாயின் காதைப்பிடித்து இழுப்பது போன்றதாகும்.

18-19 ஒருவன் தந்திரமாக இன்னொருவனை வஞ்சித்துவிட்டு பிறகு வேடிக்கைக்காகச் செய்தேன் என்று கூறுவது தவறு. இது ஒரு பைத்திகாரன் காற்றில் அம்பை எய்து யாரையாவது எதிர்பாராதவிதமாகக் கொன்று போடும் விபத்தைப் போன்றது.

20 நெருப்புக்கு விறகு இல்லாவிட்டால் அது அணைந்துப்போகும். இதுபோலவே வம்பு இல்லாவிட்டால் வாதங்களும் முடிந்துப்போகும்.

21 கரி நெருப்பை எரிய வைக்கிறது. விறகும் நெருப்பை எரிய வைக்கிறது. இதுபோலவே துன்பம் செய்கிறவர்கள் வாதங்களை விடாமல் வைத்துள்ளனர்.

22 ஜனங்கள் வம்புப்பேச்சை விரும்புவார்கள். அது அவர்களுக்கு நல்ல உணவு உண்பதைப்போல் இருக்கும்.

23 தீய திட்டங்களைச் சிலர் நல்ல வார்த்தைகளால் மூடி மறைத்து வைத்திருப்பார்கள். இது குறைந்த விலையுள்ள மண்பாத்திரத்தின்மீது வெள்ளியைப் பூசியது போன்று இருக்கும்.
24 ஒரு தீயவன் தனது பேச்சின் மூலம் தன்னை நல்லவனைப் போன்று காட்டிக் கொள்ளலாம். ஆனால் அவன் தன் தீய திட்டங்களை தன் இருதயத்தில் மறைத்து வைக்கிறான்.
25 அவன் சொல்லும் காரியங்கள் நலமாகத் தோன்றலாம். எனினும் அவனை நம்பவேண்டாம். அவனது மனம் முழுவதும் தீமையால் நிறைந்திருக்கும்.
26 அவன் தனது தீய திட்டங்களை மென்மையான வார்த்தைகளால் மறைத்து வைத்திருக்கிறான். எனினும் அவனது கெட்டச் செயல்கள் முடிவில் ஜனங்கள் முன்பு வெளிப்பட்டுவிடும்.

27 ஒருவன் இன்னொருவனைத் தந்திரத்தால் வசப்படுத்த விரும்பினால் அவனே தந்திரத்திற்கு சிறையாவான். ஒருவன் இன்னொருவன் மீது கல்லை உருட்ட விரும்பினால் அவனே கல்லுக்கடியில் நசுங்கிப்போவான்.

28பொய் சொல்லும் மனிதன் யாரைக்
காயப்படுத்துகிறானோ அவரை வெறுக்கி
றான். ஒருவன் அர்த்தமற்றவற்றைப் பேசி
னால் அவன் தன்னையே காயப்படுத்திக்
கொள்கிறான்.

27 எதிர் காலத்தில் நடப்பதைப்பற்றி
பெருமையாகப் பேசாதே. நாளை
நடப்பதைப் பற்றியே உனக்கு ஒன்றும்
தெரியாது.
2உன்னைப்பற்றி நீயே புகழ்ந்து கொள்
ளாதே. மற்றவர்கள் உன்னைப் புகழும்படி
செய்.
3கல் கனமானது. மணலும் சுமப்பதற்குக்
கனமானது. ஆனால் மிகுந்த கோபமுடைய
முட்டாளால் ஏற்படும் துன்பம் இவ்வி
ரண்டையும் விட சுமப்பதற்கு அதிகக்
கனமானது.
4கோபம் கொடுமையும் பயங்கரமுமானது.
இது அழிவுக்குக் காரணமாகும். ஆனால்
பொறாமை இதைவிட மோசமானது.
5வெளிப்படையான விமரிசனமானது
மறைத்து வைக்கப்படும் அன்பைவிடச்
சிறந்தது.
6உனது நண்பன் சில நேரங்களில் உன்
னைப் புண்படுத்தலாம். ஆனால் அதை
விரும்பிச் செய்யவில்லை. எதிரியோ வித்தி
யாசமானவன். அவன் உன்னிடம் கருணை
யோடு இருந்தாலும் காயப்படுத்தவே
விரும்பு வான்.
7உனக்குப் பசி இல்லாதபோது, நீ
தேனைக்கூட பருக முடியாது. ஆனால் நீ
பசியோடு இருந்தால், சுவையற்றவற்றையும்
கூட தின்றுவிடுவாய்.
8ஒருவன் வீட்டைவிட்டு விலகியிருப்பது
கூட்டைவிட்டுப் பிரிந்து இருக்கிற பறவை
யைப் போன்றதாகும்.
9மணப்பொருட்களும் இனிய வாசனைப்
பொருட்களும் உன்னை மகிழ்ச்சிப்படுத்தும்.
ஆனால் துன்பங்களோ உனது அமைதியான
மனதை அழித்துவிடும்.
10நீ உனது நண்பர்களையும் உனது
தந்தையின் நண்பர்களையும் மறந்துவிடாதே.
உனக்குத் துன்பம் நேரும்போது, உதவிக்
காகத் தூரத்தில் உள்ள உன் சகோதரனை
நாடிப் போகாதே. தூரத்தில் உள்ள உன்
சகோதரனைத் தேடிப்போவதைவிட அருகில்
உள்ளவனிடம் சென்று உதவி கேட்பது
நல்லது.
11என் மகனே, ஞானியாக இரு. அது
என்னை மகிழ்ச்சிப்படுத்தும். அப்போது
என்னை விமர்சிக்கிற எவனுக்கும் நான்
பதில் சொல்ல இயலும்.
12துன்பம் வருவதை உணர்ந்து ஞானிகள்
விலகிவிடுவார்கள். அறிவற்றவர்களோ
நேராகப் போய் துன்பத்தில் அகப்பட்டுக்
கொண்டு அதனால் பாடுபடுகிறார்கள்.
13அடுத்தவன் பட்ட கடனுக்கு நீ பொறுப்
பேற்றால் உனது சட்டையையும் நீ இழந்து
விடுவாய்.
14நீ உனது அயலானை உரத்த குரலில்
'காலை வணக்கம்' கூறி எழுப்பாதே. இது
அவனை எரிச்சல் படுத்தும். அவன் இதனை
வாழ்த்தாக எடுத்துக்கொள்ளாமல் சாபமாக
எடுத்துக் கொள்வான்.
15எப்போதும் வாக்குவாதம் செய்துக்
கொண்டிருப்பதை விரும்பும் மனைவி
அடைமழை நாளில் ஓயாமல் ஒழுகுவதைப்
போன்றவள்.
16அவளைத் தடுத்துநிறுத்த முயல்வது
காற்றைத் தடுப்பது போன்றதாகும். அது
கையில் எண்ணெயைப் பிடிக்க முயற்சி
செய்வதுபோன்றதாகும்.
17இரும்புக் கத்தியைக் கூராக்க ஜனங்கள்
இரும்பையே பயன்படுத்துவார்கள். இதே
விதத்தில் ஒருவரிடமிருந்து ஒருவர் அறிந்து
கொள்வதன் மூலம், இருவருமே கூர்மை
அடைய முடியும்.
18அத்திமரத்தை வளர்ப்பவன் அதன்
பழத்தை உண்பான். இதுபோலவே, தன்
எஜமானனைக் கவனிக்கிறவனும் அதனால்
பல்வேறு பயன்களைப் பெறுவான். எஜமா
னனும் அவனைக் கவனித்துக்கொள்வான்.
19ஒருவன்தண்ணீருக்குள் பார்க்கும்போது,
தன் முகத்தையே பார்த்துக்கொள்ள முடியும்.
இதைப்போன்றே, ஒரு மனிதன் எத்தகைய
வன் என்பதை அவனது இதயமே காட்டி
விடும்.
20ஜனங்கள் ஏறக்குறைய சவக் குழியைப்
போன்றவர்கள். சாவுக்கும் அழிவுக்கும்
இடமாக விளங்கும் சவக்குழியைப் போன்ற
ஜனங்கள் எப்போதும் மேலும் மேலும்
ஆசையுடையவர்களாக இருப்பார்கள்.
21தங்கத்தையும் வெள்ளியையும் சுத்தப்
படுத்த ஜனங்கள் நெருப்பைப் பயன்படுத்து
கின்றனர். இது போலவே மனிதனும் ஜனங்
கள் தனக்கு அளிக்கும் புகழ்ச்சியால் சோதிக்
கப்படுகிறான்.
22ஒரு முட்டாளை நீ நசுக்கி அழித்துவிட
முடியும். ஆனால் உன்னால் அவனது முட்
டாள்தனத்தை அவனிடமிருந்து பலவந்தமாக
அகற்ற முடியாது.
23உனது ஆடுகளையும் மந்தையையும்
கவனமாகப் பார்த்துக்கொள். உன்னால்
இயன்ற வரை அவற்றைக் கவனமாக
காத்துக்கொள்.
24செல்வம் எப்பொழுதும் நிலைப்ப
தில்லை. தேசங்களும் எப்பொழுதும் நிலைக்
காது.
25புல்லை வெட்டினால் புதிய புற்கள்
முளைக்கும். எனவே மலை மீது வளரும்
புல்லை வெட்டு. 26உனது ஆட்டுக்குட்டி
மீதுள்ள மயிரை வெட்டி கம்பளிச் செய்.
உனது ஆடுகளை விற்று நிலத்தை வாங்கு.
27உனக்கும் உனது குடும்பத்திற்கும்
தேவையான பால் ஏராளமாக இருக்கும்.

உனது வேலைக்காரிகளின் உடல் நலத்திற்கும் அது உதவும்.

28 தீயவர்கள் எல்லாவற்றுக்கும் அஞ்சுவார்கள். ஆனால் ஒரு நல்லவன் சிங்கத்தைப்போலதைரியமானவன் ஆவான்.
2ஒரு நாடு அடிபணிய மறுத்தால், அது குறுகிய காலமே ஆளும் தீய தலைவர்களைப் பெறும். ஆனால் ஒரு நாட்டிற்கு நல்லவனும் ஞானவானுமாகிய ஒருவன் தலைவனாக இருந்தால், அங்கே நீண்டக் காலம் நிலைத்த ஆட்சி நடைபெறும்.
3அரசன் ஏழைகளுக்குத் துன்பம் செய்தால், பயிரை அழிக்கிற பெருமழை போன்று இருப்பான்.
4நீ சட்டத்திற்கு அடிபணிய மறுத்தால் தீயவர்களைச் சார்ந்தவனாவாய். ஆனால் நீ சட்டத்திற்கு அடிபணிந்தால் அவர்களுக்கு எதிரானவனாவாய்.
5தீயவர்கள் நேர்மையைப்பற்றிப் புரிந்துகொள்ள மாட்டார்கள். ஆனால் கர்த்தரை நேசிப்பவர்கள் அதனை அறிந்துகொள்வார்கள்.
6ஒருவன் செல்வந்தனாகவும் தீயவனாகவும் இருப்பதைவிட நல்லவனாகவும் ஏழையாகவும் இருப்பது நல்லது.
7சட்டத்திற்கு அடிபணிபவன் புத்திசாலி. ஆனால் தகுதியற்றவர்களோடு நட்பு கொள்கிறவன் தன் தந்தைக்கு அவமானத்தைத் தேடித்தருகிறான்.
8ஏழைகளை ஏமாற்றி அதிக அளவில் வட்டியை வாங்கி நீ செல்வந்தன் ஆனால், அச்செல்வத்தை நீ விரைவில் இழந்துவிடுவாய். இரக்கம் உள்ளவனிடம் அச்செல்வம் போய்ச் சேர்ந்துவிடும்.
9ஒருவன் தேவனுடைய போதனைகளைக் கேட்க மறுத்தால், தேவன் அவனது ஜெபங்களையும் கேட்க மறுத்துவிடுவார்.
10ஒரு தீயவன், ஒரு நல்லவனைப் புண்படுத்தவே பல திட்டங்களைத் தீட்டமுடியும். ஆனால் அத்தீயவன் தனது சொந்த வலையிலேயே விழுவான். நல்லவனுக்கு நன்மையே ஏற்படும்.
11செல்வந்தர்கள் எப்பொழுதும் தம்மைப் பெரிய ஞானிகளாக நினைத்துக் கொள்கிறான். ஆனால் ஏழையும் பெரிய ஞானியுமானவன், உண்மையைக் கண்டுகொள்கிறார்கள்.
12நல்லவர்கள் தலைவர்களாக வந்தால் எல்லோரும் மகிழ்வார்கள். தீயவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால், எல்லோரும் போய் ஒளிந்துக்கொள்வார்கள்.
13ஒருவன் தன் பாவங்களை மறைக்க முயன்றால் அவனால் வெற்றிபெற இயலாது. ஆனால் ஒருவன் தன் பாவங்களுக்கு வருந்தி, தன் பாவங்களை ஒப்புக்கொண்டு தவறு செய்வதை நிறுத்திவிட்டால், தேவனும், மற்ற எல்லா ஜனங்களும் அவனுக்கு இரக்கம் காண்பிப்பார்கள்.
14ஒருவன் எப்பொழுதும் கர்த்தருக்கு மரியாதை செய்தால், அவன் ஆசீர்வதிக்கப்படுவான். ஆனால் ஒருவன் பிடிவாதமாக கர்த்தருக்கு மரியாதை தர மறுத்தால், பிறகு அவனுக்குத் துன்பங்களே ஏற்படும்.
15பலவீனமானவர்கள் மீது அதிகாரம் செலுத்தும் தீயவன் கோபங்கொண்ட சிங்கத்தைப் போன்றும், சண்டைக்குத் தயாரான கரடியைப் போன்றும் இருப்பான்.
16ஆட்சி செய்பவன் ஞானமுள்ளவனாக இல்லாவிட்டால், தனக்குக் கீழுள்ள ஜனங்களைத் துன்புறுத்துவான். ஆனால் நேர்மையாய் ஆட்சிசெய்து, ஜனங்களை ஏமாற்றுவதை வெறுக்கிறவன் நீண்டகாலம் ஆட்சி செய்வான்.
17அடுத்தவனைக் கொன்ற குற்றவாளிக்கு எப்பொழுதும் சமாதானம் இருக்காது. அவனுக்கு ஆதரவு தராதே.
18ஒருவன் சரியான வழியில் வாழ்ந்தால் அவன் பாதுகாப்பாக இருப்பான். ஆனால் தீயவனாக இருப்பவன் இருந்தால் தன் வல்லமையை இழந்துவிடுவான்.
19கடினமாக உழைப்பவன் உணவை ஏராளமாகப் பெறுவான். ஆனால் எப்போதும் கனவுகள் கண்டு தன் காலத்தை வீணாக்குபவன் ஏழையாகவே இருப்பான்.
20தேவன் தன்னைப் பின்பற்றுபவனை ஆசீர்வதிக்கிறார். ஆனால் செல்வந்தனாக மாறுவதற்கு மட்டும் முயற்சிப்பவன் தண்டிக்கப்படுவான்.

21ஒரு நீதிபதி நேர்மையானவனாக இருக்க வேண்டும். ஒருவன் இன்னான் என்ற காரணத்திற்காகவே அவனுக்குச் சார்பாகப் பேசக்கூடாது. ஆனால் சில நியாயதிபதிகள் தனக்குத் தரப்படும் சிறு தொகைகளுக்காகக்கூட தங்கள் முடிவுகளை மாற்றிக் கொள்கின்றனர்.
22சுயநலக்காரன் செல்வந்தன் ஆவதற்கே முயற்சி செய்கிறான். தன் பேராசை வறுமையின் எல்லைக்கே கொண்டுசெல்லும் என்பதை அவன் அறியாமல் இருக்கிறான்.
23ஒருவன் செய்கிற தவறைச் சுட்டிக்காட்டி அவனுக்கு உதவிசெய்தால் பிற்காலத்தில் உன்னோடு மகிழ்ச்சியாக இருப்பான். எப்பொழுதும் மென்மையான வார்த்தைகளையே பேசுவதைவிட இது நல்லது.
24சிலர் தம் தந்தையிடமிருந்தும் தாயிடமிருந்தும் திருடிக் கொள்கின்றனர். அவர்கள் "இது தவறில்லை" என்று சொல்கிறார்கள். ஆனால் அவன் வீட்டுக்குள் நுழைந்து எல்லாப் பொருட்களையும் நொறுக்கும் தீயவனைப் போன்றவன்.
25சுயநலக்காரன் துன்பத்துக்குக் காரணமாக இருப்பான். கர்த்தர் மேல் நம்பிக்கை வைப்பவன் பரிசுகளைப் பெறுகிறான்.
26ஒருவன் தன்னில் தானே நம்பிக்கை வைத்தால், அவன் ஒரு மூடன். ஆனால்

ஒருவன் ஞானியாக இருந்தால், அவன்
துன்பத்தில் இருந்து தப்பித்துக்கொள்வான்.
27ஏழை ஜனங்களுக்கு உதவி செய்பவன்,
தனக்குத் தேவையான எல்லாவற்றையும்
பெற்றுக்கொள்ளுவான். ஆனால் ஏழை
களுக்கு உதவி செய்ய மறுப்பவனுக்கோ
அதிகத் தொல்லைகள் வரும்.
28தீயவன் ஒருவன் அரசாளுவதற்குத் தேர்ந்
தெடுக்கப்பட்டால் அவன் நாட்டு ஜனங்கள்
ஒளிந்துக் கொள்வார்கள். ஆனால் தீயவன்
தோற்கடிக்கப்பட்டால், நல்லவர்கள் மீண்டும்
ஆள்வார்கள்.

29 ஒருவன் எப்பொழுதும் பிடிவாதமான
வனாக இருந்து, தன்னைச் சரிப்
படுத்துவோரிடம் கோபித்துக்கொண்டே
இருந்தால், அவன் திடீரென்று ஆபத்தைச்
சந்திக்க நேரிடும். அவன் அதிலிருந்து தப்
பிக்க முடியாது.
2ஆள்பவன் நல்லவனாக இருந்தால்,
அனைவரும் மகிழ்ச்சியாக இருப்பார்கள்.
ஆனால் தீயவன் ஆள வந்தால் ஜனங்கள்
அனைவரும் புகார் சொல்வார்கள்.
3ஒருவன் ஞானத்தை விரும்பினால் அவ
னது தந்தை மகிழ்ச்சி அடைவார். ஆனால்
தன் செல்வத்தை விபச்சாரிகளிடம் செல
விடுபவன் தன் செல்வத்தை எல்லாம்
இழப்பான்.
4அரசன் நேர்மையுள்ளவனாக இருந்தால்,
நாடு பலமுடையதாக இருக்கும். ஆனால்
அரசன் சுயநலக்காரனாக இருந்தால் எல்லா
வற்றுக்கும் மக்கள் அரசனுக்குப் பணம்
செலுத்த வேண்டியதாக இருந்தால், நாடு
பலவீனமடையும்.
5ஒருவன்தான் விரும்புவதைத் தந்திரமான
வார்த்தைகளைப்பேசிப் பெற முயன்றால்
அவன் தனக்குத்தானே வலைவிரிக்கிறான்.
6தீயவர்கள் தம் சொந்தப் பாவங்களா
லேயே தோற்கடிக்கப்படுகிறார்கள். ஆனால்
நல்லவர்களோ பாடிக்கொண்டும், மகிழ்ச்சி
யோடும் இருக்கிறார்கள்.
7நல்லவர்கள் ஏழை ஜனங்களுக்கு நேர்மை
யான காரியங்களைச் செய்யவே விரும்பு
கின்றனர். தீயவர்களோ இதைப்பற்றிக்
கவலைப்படுவதில்லை.
8மற்றவர்களைவிடத் தான் பெரியவன்
என்று நினைப்பவன் பல துன்பங்களுக்குக்
காரணமாக இருக்கிறான். அவர்களால் முழு
நகரத்தையுமே குடிப்பதில் ஆழ்த்த முடியும்.
ஆனால் ஞானம் உள்ளவர்களோ சமா
தானத்தை உருவாக்க முடியும்.
9ஞானமுள்ளவன் முட்டாளோடு ஒரு
பிரச்சனையைத் தீர்க்க முயற்சிசெய்தால்,
அந்த முட்டாள் வாதம்செய்து முட்டாள்
தனமாகப் பேசுவான். இருவரும் எப்போதும்
ஒத்துப்போக மாட்டார்கள்.
10கொலைக்காரர்கள் நேர்மையானவர்
களை எப்பொழுதும் வெறுக்கின்றனர்.
அவர்கள் நல்லவர்களையும், நேர்மையான
வர்களையும் கொலைசெய்யப் பார்க்கிறார்
கள்.
11ஒரு முட்டாள் விரைவில் கோபம்
அடைகிறான். ஆனால் ஞானமுள்ளவனோ
பொறுமையாகத் தன்னைக் கட்டுப்படுத்திக்
கொள்கிறான்.
12ஆள்பவன் பொய்யைக் கேட்டுக்
கொள்வானேயானால், அவனது அதிகாரிக
ளும் தீயவர்களாகி விடுகின்றனர்.
13ஏழையும் ஏழையிடம் திருடுபவனும்
ஒரே வகையைச் சேர்ந்தவர்கள். இருவரை
யும் கர்த்தரே படைத்துள்ளார்.
14அரசன் ஏழைகளிடம் நேர்மையாக
இருந்தால் அவன் நீண்டகாலம் ஆட்சி
செய்வான்.
15பிள்ளைகளுக்கு அடியும், போதனையும்
நல்லது. தம் பிள்ளைகளை எது வேண்டுமா
னாலும் செய்து கொள்ளட்டும் என்று
பெற்றோர் விட்டுவிட்டால், அப்பிள்ளை
கள் தம் தாய்க்கு அவமானத்தையே தருவார்
கள்.
16தீயவர்கள் நாட்டை ஆண்டால், எங்கும்
பாவமே நிறைந்திருக்கும். இறுதியில் நல்ல
வர்களே வெல்வார்கள்.
17உன் மகன் தவறு செய்யும்போது
அவனைத் தண்டித்துவிடு. பிறகு அவனைப்
பற்றி நீ பெருமைப்படலாம். அவன் உன்னை
அவமானப்படுத்தமாட்டான்.
18ஒரு நாடு தேவனால் வழி நடத்தப்படா
விட்டால், அந்நாட்டில் சமாதானம் இருக்
காது. ஆனால், தேவனுடைய சட்டங்க
ளுக்குக் கீழ்படியும் நாடு மகிழ்ச்சி அடையும்.
19நீ வெறுமனே பேசிக்கொண்டு மட்டும்
இருந்தால் வேலைக்காரன் பாடம் கற்றுக்
கொள்ள மாட்டான். அவன் உன் வார்த்தை
களைப் புரிந்துகொள்ளலாம், ஆனால் கீழ்ப்
படிய மாட்டான்.
20சிந்தனை செய்யாமல் பேசுபவனுக்கு
நம்பிக்கையில்லை. இதைவிட முட்டாளுக்கு
நம்பிக்கையுண்டு.
21நீ உனது வேலைகாரனின் விருப்பப்படி
எல்லாவற்றையும் கொடுப்பாயானால், இறு
தியில் அவன் நல்ல வேலைக்காரனாக
இருக்கமாட்டான்.
22கோபமுள்ளவன் துன்பத்திற்குக் காரண
மாகிறான். விரைவில் கோபம் கொள்கிறவன்
பல பாவங்களுக்குப் பொறுப்பாகிறான்.
23மற்றவர்களைவிடத் தன்னைப் பெரியவ
னாக ஒருவன் நினைத்துக்கொண்டால், அந்த
எண்ணமே அவனை அழித்துவிடும். ஆனால்
ஒருவன் பணிவாக இருக்கும்போது, மற்ற
வர்கள் அவனை மதிப்பார்கள்.
24சேர்ந்து வேலைசெய்யும் இரண்டு
திருடர்கள் பகைவர்களாக இருக்கிறார்கள்.
ஒருவன் அடுத்தவனை பயமுறுத்தி மிரட்டு
வான். எனவே வழக்குமன்றத்தில் உண்மை
யைச் சொல்லும்படி வற்புறுத்தப்பட்டால்,

அவன் வாயைத் திறந்து பேசவே பயப்படு
வான்.
25அச்சம் என்பது வலையைப் போன்றது.
ஆனால் நீ கர்த்தர் மீது நம்பிக்கை வைத்தால்
பாதுகாப்பாக இருப்பாய்.
26ஆள்வோரோடு நட்புக்கொள்ள பலர்
விரும்புவார்கள், ஆனால் கர்த்தர் ஒருவரே
ஜனங்களைச் சரியாக நியாயந்தீர்க்கிறார்.
27நேர்மையற்றவர்களை நல்லவர்கள்
வெறுக்கின்றனர். தீயவர்களோ உண்மையுள்
ளவர்களை வெறுக்கின்றனர்.

## யாக்கேயின் மகனாகிய ஆகூரின் ஞானமொழிகள்

30 இவை அனைத்தும் யாக்கேயின் மக
னான ஆகூரின் ஞான மொழிகள்.
இது ஈத்தியேலுக்கும் ஊகாலுக்கும் அளித்த
செய்தி:
2பூமியில் நான்தான் மிகவும் மோசமான
வன். நான் புரிந்துகொள்ள வேண்டிய
விதமாகப் புரிந்துகொள்ளவில்லை. 3ஞானி
யாக இருக்க நான் கற்றுக்கொள்ளவில்லை.
தேவனைப் பற்றியும் எதுவும் அறிந்து
கொள்ளவில்லை.
4பரலோகத்தில் உள்ளவற்றைப்பற்றி எவ
ரும் எப்போதும் கற்றுக்கொண்டதில்லை.
எவரும் காற்றைக் கையால் பிடித்ததில்லை.
எவரும் தண்ணீரை துணியில் கட்டிய
தில்லை. எவருமே உண்மையில் பூமியின்
எல்லையை அறிந்ததேயில்லை. இவற்றை
எவராவது செய்ய முடியுமா? யார் அவர்?
எங்கே அவரது குடும்பம் இருக்கிறது?
5தேவன் சொல்லுகிற அனைத்தும் பூரண
மானவை. தேவன் அவரிடம் செல்லுகிறவர்
களுக்குப் பாதுகாப்பான இடமாக இருக்கி
றார். 6எனவே தேவன் சொன்னவற்றை
மாற்றுவதற்கு முயற்சி செய்யாதே. நீ
அவ்வாறு செய்தால், அவர் உன்னைத்
தண்டிப்பார், நீ பொய் சொல்கிறாய் என்
பதையும் நிரூபிப்பார்.
7கர்த்தாவே, நான் மரித்துப்போவதற்கு
முன்பு எனக்காக நீர் இரண்டு செயல்களைச்
செய்யவேண்டும். 8நான் பொய் சொல்லாமல்
இருக்க உதவிசெய்யும். மிக ஏழையாகவோ
அல்லது மிகச் செல்வந்தனாகவோ என்னை
ஆக்கவேண்டாம். அன்றாடம் எது
தேவையோ அதை மட்டும் எனக்குத் தாரும்.
9ஒருவேளை, என்னிடம் தேவைக்கு அதிக
மான பொருட்கள் இருந்தால், நீர் எனக்குத்
தேவையில்லை என்று எண்ணத் தொடங்கு
வேன். ஒருவேளை நான் ஏழையாக
இருந்தாலோ திருடலாம். இதனால் நான்
தேவனுடைய நாமத்திற்கு அவமானத்தைத்
தேடித் தருவேன்.
10எஜமானனிடம் அவனது வேலைக்கார
னைப் பற்றிக் குற்றம் சொல்லாதே. நீ
அவ்வாறு செய்தால், எஜமான் உன்னை
நம்பமாட்டான். உன்னைக் குற்றம் உடைய
வனாக நினைப்பான்.
11சிலர் தங்கள் தந்தைகளுக்கு எதிராகப்
பேசுவார்கள். அவர்கள் தம் தாய்மார்களுக்கு
மரியாதை செலுத்த மாட்டார்கள்.
12சிலர் தம்மை நல்லவர்களாக எண்ணிக்
கொள்வார்கள். ஆனால் உண்மையில் அவர்
கள் மிக மோசமாக இருப்பார்கள்.
13சிலர் தம்மை மிகவும் நல்லவர்களாக
எண்ணிக்கொள்வார்கள். அவர்கள் மற்றவர்
களை விடத் தம்மை மிக நல்லவர்களாக
எண்ணிக்கொள்வார்கள்.
14சிலரது பற்கள் வாள்களைப் போன்று
உள்ளன. அவர்களது தாடைகள் கத்தி
களைப் போன்றுள்ளன. அவர்கள் ஏழை
ஜனங்களிடமிருந்து எவ்வளவு எடுத்துக்
கொள்ள முடியுமோ அவ்வளவு எடுத்துக்
கொள்வார்கள்.
15சிலர் தம்மால் பெற முடிந்ததையெல்லாம்
எடுத்துக்கொள்ள விரும்புவார்கள். அவர்கள்
சொல்வதெல்லாம், “எனக்குத் தா, எனக்குத்
தா, எனக்குத் தா” என்பதே. திருப்தி
அடையாதவை மூன்று உண்டு. உண்மை
யில் போதும் என்று சொல்லாதவை நான்கு
உண்டு. 16மரணத்திற்குரிய இடம், மலட்டுப்
பெண், மழை தேவைப்படுகிற வறண்ட
நிலம், அணைக்கமுடியாத நெருப்பு ஆகிய
வையே அவை.
17தன் தந்தையைக் கேலிசெய்கிறவனும்
தாயின் ஆணைகளுக்குக் கீழ்ப்படிய மறுப்ப
வனும் தண்டிக்கப்படுவான். அத்தண்டனை
அவனது கண்களைக் காகங்களும், கழுகின்
குஞ்சுகளும் தின்னும்படியான பயங்கரமுடை
யது.
18என்னால் புரிந்துகொள்ளமுடியாத காரி
யங்கள் மூன்று உண்டு. உண்மையில்
புரிந்துகொள்ளக் கடினமான விஷயங்கள்
நான்கு உண்டு. 19வானத்தில் பறக்கும்
கழுகு, பாறைமேல் ஊர்ந்து செல்லும்
பாம்பு, கடலில் அசையும் கப்பல், ஒரு
பெண்ணின் மேல் அன்பு கொண்டிருக்கும்
ஆண் ஆகிய நான்கையும் என்னால் புரிந்து
கொள்ள இயலவில்லை.
20தன் கணவனுக்கு உண்மையில்லாத
பெண், தான் எதுவும் தவறு செய்யாதவ
ளைப் போன்று நடிக்கிறாள். அவள் சாப்பிடு
கிறாள், குளிக்கிறாள், தான் எவ்விதத்
தவறும் செய்யவில்லை என்று கூறுகிறாள்.
21பூமியில் தொல்லை விளைவிக்கக் கூடி
யவை மூன்று உண்டு. உண்மையில் பூமி
யால் தாங்க முடியாதவை நான்கு. 22அரசனா
கிவிட்ட அடிமை, தனக்குத் தேவைப்படுகிற
அனைத்துமுடைய முட்டாள். 23மனதில்
முழுமை வெறுப்புடையவளாயிருந்தும் ஒரு
கணவனுக்கு வாழ்க்கைப்படும் பெண், தான்
வேலை செய்த எஜமானிக்கே எஜமானியா
கிற வேலைக்காரப்பெண் ஆகிய நால்வ
ரையும் பூமி தாங்காது.

24உலகில் உள்ள மிகச்சிறியவை நான்கு.
ஆனால் இவை மிகவும் ஞானமுடையவை.
25எறும்புகள் மிகச் சிறியவை, பலவீனமா
னவை. எனினும் அவை தங்களுக்குத்
தேவையான உணவைக் கோடைக்காலம்
முழுவதும் சேகரித்துக் கொள்ளும்.
26குழி முயல்கள் மிகச்சிறிய மிருகம்,
ஆனாலும் இது தன் வீட்டைப் பாறைக
ளுக்கு இடையில் கட்டிக் கொள்ளும்.
27வெட்டுக்கிளிகளுக்கு அரசன் இல்லை.
எனினும் அவை சேர்ந்து வேலைச்செய்கின்
றன.
28பல்லி மிகச் சிறிது. அவற்றை நம்
கையால் பிடித்துக்கொள்ளலாம். எனினும்
அவை அரண்மனையிலும் வசிக்கின்றன.
29நடக்கும்போது முக்கியமானவைகளாகத்
தோன்றுபவை மூன்று.உண்மையில்அவை
கள்நான்காகும்.
30சிங்கம் எல்லா மிருகங்களைவிடவும்
மிகவும் பலம் பொருந்தியது. அது எதைக்
கண்டும் ஓடுவதில்லை.
31பெருமையோடு நடக்கும் சேவல், வெள்
ளாடு, தம் ஜனங்களிடையே இருக்கும் ஒரு
அரசன்.
32உன்னைப் பற்றி நீயே பெருமையாக
நினைத்துக் கொண்டு தீங்கு செய்யத் திட்ட
மிடும் முட்டாளாக இருந்தால், அவற்றை
நிறுத்திவிட்டு உன் செயல்களைப்பற்றி
சிந்திக்க வேண்டும்.
33பாலைக் கடைந்தால் வெண்ணெய்
கிடைக்கும். ஒருவன் இன்னொருவனின் மூக்
கில் அடித்தால் இரத்தம் வரும். இது
போலவே, நீ ஜனங்களைக் கோபங்கொள்ள
வைத்தால், நீ தான் துன்பத்துக்கு காரண
மாயிருப்பாய்.

## லேமுவேல் என்னும் அரசனது ஞான மொழிகள்

31 இவை, லேமுவேல் அரசன் சொன்ன
ஞானமொழிகள். இவற்றை அவனது
தாய் அவனுக்குக் கற்பித்தாள்.
2ஜெபத்தின் மூலம் பெற்ற நீயே என்
அன்பிற்குரிய மகன். 3உனது வல்லமைப்
பெண்களிடம் இழக்காதே. பெண்கள் அரசர்
களை அழித்திருக்கிறார்கள். எனவே
உன்னை அவர்களிடத்தில் தராதே. 4லேமு
வேலே, அரசர்கள் மதுவைக் குடிப்பது
அறிவுள்ள செயல் அல்ல. ஆளுபவர்கள்
மதுவை விரும்புவது அறிவுடையது அல்ல.
5அவர்கள் மிகுதியாகக் குடித்துவிட்டு
சட்டங்களை மறந்து விடுவார்கள். பின்
அவர்கள் ஏழை ஜனங்களின் உரிமைகளை
எடுத்துவிடக்கூடும். 6ஏழை ஜனங்களுக்கு
மதுவைக் கொடு. திராட்சைரசத்தை
துன்பப்படுகிற ஜனங்களுக்குக் கொடு. 7பிறகு
அவர்கள் அதனைக் குடித்துவிட்டு தாம்
ஏழை என்பதை மறக்கட்டும். அவர்கள்
குடித்துவிட்டு தம் எல்லா துன்பங்களையும்
மறக்கட்டும்.
8ஒருவன் தனக்குத்தானே உதவிக்கொள்ள
முடியாவிட்டால், நீ அவனுக்கு உதவ
வேண்டும். எவனால் பேசமுடியாதோ, அவ
னுக்காக பேசு. துன்பப்படுகிற அனைத்து
ஜனங்களுக்கும் நீ உதவவேண்டும். 9சரி
யென்று தெரிந்தவற்றின் பக்கம் நில்.
நேர்மையாக நியாயம் தீர்த்துவிடு. ஏழை
ஜனங்களின் உரிமையைக் காப்பாற்று.
தேவையிலிருக்கும் ஜனங்களுக்கு உதவு.

## பரிபூரணமுள்ள மனைவி

10*“பரிபூரணமுள்ள மனைவியைக்” கண்
டுபிடிப்பது கடினம். ஆனால் அவள்
நகைகளைவிட அதிக விலைமதிப்புடைய
வள்.
11அவள் கணவன் அவளைச் சார்ந்தி
ருப்பான். அவன் ஒருபோதும் ஏழையாக
மாட்டான்.
12தன் வாழ்வு முழுவதும் அவள் தன்
கணவனுக்கு நன்மையே செய்வாள். அவ
னுக்கு ஒருபோதும் துன்பம் உண்டாக்
கமாட்டாள்.
13அவள் எப்பொழுதும் ஆட்டு மயி
ரையும் சணல்நூலையும் சேகரிப்பாள். தனது
கைகளினாலேயே ஆடைகளை மகிழ்ச்சி
யோடு தயாரிப்பாள்.
14அவள் வெகுதூரத்திலிருந்து வரும் கப்
பல்களைப் போன்றவள். எல்லா இடங்களி
லிருந்தும் உணவு கொண்டுவருவாள்.
15அதிகாலையில் எழும்பி தன் குடும்பத்
துக்கு உணவு சமைப்பாள். வேலைக்காரர்
களுக்கு அவர்களுடைய பங்கைக் கொடுப்
பாள்.
16அவள் நிலத்தைப் பார்த்து வாங்குவாள்.
அவள் பணத்தைச் சம்பாதித்துச் சேர்த்து
திராட்சைக் கொடிகளை நடுவாள்.
17அவள் கடினமாக உழைப்பாள். அவள்
தனது எல்ல வேலைகளையும் செய்யும் பலம்
கொண்டவள்.
18தன் உழைப்பால் உருவான பொருட்
களை விற்கும்போது எப்பொழுதும் அவள்
லாபத்தை அடைவாள். அவள் இரவில் அதிக
நேரம் வேலைச்செய்த பிறகே ஓய்வெடுக்கி
றாள்.
19அவள் தனக்குத் தேவையான நூலைத்
தானே தயாரிக்கிறாள். தனக்குத் தேவையான
ஆடைகளைத் தானே நெய்கிறாள்.
20ஏழைகளுக்கு எப்போதும் அள்ளித் தரு
கிறாள். தேவையானவர்களுக்கு உதவி செய்
கிறாள்.

---

**வசனங்கள் 10-31** எபிரெய மொழியில், இப்பாடலின் ஒவ்வொரு வசனமும் அகரவரிசையின் இரண்டாவது எழுத்தில் தொடங்கும். எனவே இந்தப் பாடல் ஒரு பெண்ணின் அனைத்து நல்ல குணங்களையும் காட்டுகின்றது.

21 பனிக் காலத்தில் அவள் தன் குடும்பத்
தைப் பற்றிக் கவலைப்படமாட்டாள்.
ஏனென்றால் அனைவருக்கும் நல்ல வெப்
பமான ஆடைகளை அவள் தந்துள்ளாள்.
22 அவள் கம்பளங்களைச் செய்து படுக்கை
யில் விரிக்கிறாள். மிக அழகான புட
வையை அணிகிறாள்.
23 ஜனங்கள் அவளது கணவனை மதிக்கின்
றனர். அவன் அந்நாட்டுத் தலைவர்களுள்
ஒருவன்.
24 அவள் ஒரு நல்ல வியாபாரி. அவள்
ஆடைகளையும் கச்சைகளையும் தயாரிக்கி
றாள். இவற்றை வியாபாரிகளிடம் விற்கி
றாள்.
25 அவள் போற்றப்படுவாள்.* ஜனங்கள்
அவளை மதிக்கின்றனர். அவள் எதிர்
காலத்தை நம்பிக்கையோடு நோக்குகிறாள்.
26 அவள் ஞானத்தோடு பேசுகிறாள். ஜனங்
கள் அன்போடும் கருணையோடும் இருக்க
வேண்டும் என்று அவள் போதிக்
கின்றாள்.
27 அவள் ஒருபோதும் சோம்பேறியாக
இருப்பதில்லை. தன் வீட்டிலுள்ள பொருட்
களையெல்லாம் அக்கறையோடு பார்த்துக்
கொள்கிறாள்.
28 அவளது குழந்தைகள் அவளைப்பற்றி
நல்லவற்றைக் கூறுவார்கள். அவளது கண
வனும் அவளைப் பாராட்டிப் பேசுகிறான்.
29 “எத்தனையோ நல்ல பெண்கள் இருக்கி
றார்கள். ஆனால் நீ தான் சிறந்தவள்”
என்கிறான்.
30 ஒரு பெண்ணின் தோற்றமும் அழகும்
உன்னை ஏமாற்றலாம். ஆனால் கர்த்தருக்கு
பயப்படுகிற பெண்ணே பாராட்டுக்குரிய
வள்.
31 அவளுக்குப் பொருத்தமான பரிசைக்
கொடு. எல்லோரும் அறியும்வகையில் அவ
ளது செயல்களைப் பாராட்டு.

---

**அவள் போற்றப்படுவாள்** அல்லது “அவள் பலமுள்ளவளாக இருக்கிறாள்.”

# பிரசங்கி

1 இவை பிரசங்கியின் வார்த்தைகள். பிர
சங்கி தாவீதின் மகனும் எருசலேமின்
அரசனுமானவன்.
2 எல்லாமே பொருளற்றவை. எல்லாமே
வீணானவை என்று பிரசங்கி கூறுகிறான்.
3 தங்கள் வாழ்க்கையில் ஜனங்கள் செய்யும்
கடினமான வேலைகளுக்கு உண்மையில்
ஏதாவது பயன் உண்டா?

### காரியங்கள் என்றும் மாறுவதில்லை

4 ஜனங்கள் வாழ்கிறார்கள், ஜனங்கள் மரிக்
கிறார்கள்; ஆனால், பூமியோ எப்பொழுதும்
நிலைத்திருக்கின்றது. 5 சூரியன் உதயமா
கிறது. சூரியன் அஸ்தமிக்கிறது. பின்
சூரியன் மீண்டும் அதே இடத்தில் உதயமா
கவே விரைந்து செல்கிறது.
6 காற்று தெற்கு நோக்கி அடிக்கிறது;
வடக்கு நோக்கியும் அடிக்கிறது. காற்று
சுழன்று சுழன்று அடிக்கிறது. பின்னர் அது
திரும்பிப் புறப்பட்ட இடத்திற்கே திரும்பவும்
வீசுகின்றது.
7 அனைத்து ஆறுகளும் மீண்டும் மீண்டும்
ஒரே இடத்திற்கே பாய்கின்றன. எல்லாம்
கடலிலேயே பாய்கின்றன. ஆனாலும் கடல்
நிரம்புவதில்லை.
8 வார்த்தைகள் ஒன்றைக் குறித்து முழு
மையாக விளக்குவதில்லை. ஆனாலும்
ஜனங்கள் தொடர்ந்து பேசுகிறார்கள். நம்
காதுகளுக்கு வார்த்தைகள் மீண்டும் மீண்டும்
வருகின்றன. எனினும் காதுகள் நிறைவ
தில்லை. நம் பார்வைகள் மூலம் கண்களும்
நிரம்புவதில்லை.

### எதுவும் புதியதல்ல

9 துவக்கத்தில் இருந்ததுபோலவே அனைத்
துப் பொருட்களும் இருக்கின்றன. எல்லாம்
ஏற்கெனவே செய்யப்பட்டதுபோலவே செய்
யப்படுகின்றன. வாழ்க்கையில்* எதுவும்
புதியதில்லை.
10 ஒருவன், "பாருங்கள் இது புதிது" என்று
கூறலாம். ஆனால் அந்தப் பொருள்
ஏற்கெனவே இங்கே இருக்கிறது. நாம்
இருப்பதற்கு முன்னரே அவை இருக்கின்றன.
11 நீண்டகாலத்திற்கு முன்பு நடந்ததை
ஜனங்கள் நினைவில் வைத்திருப்பதில்லை.
எதிர்காலத்தில், இப்பொழுது என்ன நடந்து
கொண்டிருக்கிறது என்பதையும் நினைவில்
வைத்திருக்கப்போவதில்லை. பின்னர் மற்ற
வர்களுக்கும் தங்களுக்கு முன்னிருந்தவர்கள்
என்ன செய்தார்களென்பது நினைவில் இருக்
காது.

### ஞானம் மகிழ்ச்சியைக் கொண்டுவருமா?

12 பிரசங்கியாகிய நான் எருசலேமில் இஸ்ர
வேலரின் அரசனாக இருந்தேன். 13 நான்
கற்றுக்கொள்ள முடிவுசெய்தேன். எனது
ஞானத்தைப் பயன்படுத்தி வாழ்விலுள்ள
அனைத்தையும் கற்றுக்கொள்ள விரும்பி
னேன். தேவன் நாம் செய்யும்படி கொடுத்த
வேலைகளெல்லாம் கடினமானவை என்று
நான் கற்றுக்கொண்டேன். 14 பூமியின்மேல்
செய்யப்படுகிற அனைத்து செயல்களையும்
நான் பார்த்தேன். அவை அனைத்தும்
காலத்தை வீணாக்கும் காரியம் என்பதையும்
அறிந்துகொண்டேன். இது காற்றைப் பிடிப்
பது போன்றதாகும். 15 நீ இவற்றை மாற்ற
இயலாது. ஏதாவது வளைந்து இருந்தால்,
அது நேராக இருக்கிறது என்று உன்னால்
கூறமுடியாது. ஒரு பொருள் தொலைந்து
விட்டால் அது இருக்கிறது என்று உன்னால்
கூறமுடியாது.
16 நான் எனக்குள்: "நான் மிகவும் ஞான
முள்ளவன். எனக்கு முன்னால் எருசலேமை
ஆண்ட மற்ற அரசர்களைவிட நான் ஞான
முள்ளவன். உண்மையில் ஞானம் என்பதும்
அறிவு என்பதும் எத்தகையவை என்பதை
நான் அறிவேன்" என்று கூறினேன்.
17 முட்டாள்தனமாகச் சிந்திப்பதைவிட,
ஞானமும் அறிவும் எவ்வகையில் சிறந்தது
என்பதைக் கற்றுக்கொள்ள நான் முடிவு
செய்தேன். ஆனால் ஞானத்தை அடைய
முயல்வது காற்றைப் பிடிக்க முயல்வது
போன்றது என்பதை நான் கற்றுக்
கொண்டேன். 18 மிகுதியான ஞானத்திலே
மிகுதியான சலிப்பும் உள்ளது. அதிகமான
ஞானத்தைப் பெறுகிற எவனும் அதிகமான
வருத்தத்தையும் அடைகிறான்.

### கேளிக்கைகளை அனுபவிப்பது மகிழ்ச்சியைக் கொண்டுவருமா?

2 நான் எனக்குள்: "நான் வேடிக்கை
செய்வேன். என்னால் முடிந்தவரை

---

**வாழ்க்கையில்** - எழுத்தின் பிரகாரம் "சூரியனுக்கு கீழ்" எனப் பொருள்படும்.

எல்லாவற்றிலும் மகிழ்ச்சி அடைவேன்”
என்று சொன்னேன். ஆனால் நான் இவை
யும் பயனற்றவை என்று கற்றுக்
கொண்டேன். 2 எல்லா நேரத்திலும் சிரித்துக்
கொண்டிருப்பது முட்டாள்தனமானது.
கேளிக்கையை அனுபவிப்பது எந்த நன்மை
யையும் செய்யாது.
3 எனவே என் மனதை ஞானத்தால்
நிரப்பும்போது என் உடலை திராட்சை
ரசத்தால் நிரப்ப முடிவு செய்தேன். இந்த
முட்டாள்தனத்தை நான் முயற்சி செய்தேன்.
ஏனென்றால் நான் மகிழ்ச்சியடைவதற்குரிய
வழியைக் கண்டுபிடிக்க எண்ணினேன்.
ஜனங்களின் குறுகிய வாழ்வில் அவர்கள்
என்ன நன்மை செய்யக்கூடும் என்று பார்க்க
விரும்பினேன்.

### கடின உழைப்பு மகிழ்ச்சியைத் தருமா?

4 பிறகு நான் பெரிய செயல்களைச்
செய்யத் துவங்கினேன் வீடுகளைக் கட்டி
னேன். திராட்சைத் தோட்டங்களை எனக்
காக நட்டேன். 5 நான் தோட்டங்களை
அமைத்தேன், பூங்காவனங்களை உருவாக்கி
னேன். எல்லாவகையான பழமரங்களையும்
நட்டேன். 6 நான் எனக்காக குளங்களை
அமைத்தேன். அதன் மூலம் பழமரங்களுக்கு
தண்ணீர் பாய்ச்சினேன். 7 நான் ஆண்
களையும் பெண்களையும் அடிமைகளாக
வாங்கினேன். என் வீட்டிலும் அடிமைகள்
பிறந்தனர். பல பெருஞ்செல்வங்கள் எனக்குச்
சொந்தமாயின. எனக்கு மாட்டுமந்தையும்
ஆட்டுமந்தையும் இருந்தன. எருசலேமில்
மற்றவர்களைவிட எனக்கு ஏராளமான
செல்வங்கள் இருந்தன.
8 நான் எனக்காகப் பொன்னையும் வெள்
ளியையும் சேகரித்தேன். அரசர்களிடமி
ருந்தும் அவர்களின் நாடுகளிலிருந்தும்
பொக்கிஷங்களை எடுத்துக்கொண்டேன்.
எனக்காகப் பாடிட ஆண்களும் பெண்களும்
இருந்தனர். எவரும் விரும்பத்தக்க அனைத்
துப் பொருட்களும் என்னிடம் இருந்தன.
9 நான் செல்வந்தனாகவும் புகழுடைய
வனாகவும் ஆனேன். எனக்குமுன் எருச
லேமில் வாழ்ந்த எந்த மனிதரையும்விட
நான் பெரிய ஆளாக இருந்தேன். எப்
பொழுதும் எனது ஞானம் எனக்கு உதவு
வதாக இருந்தது. 10 என் கண்கள் பார்த்து
நான் விரும்பியதை எல்லாம் பெற்றேன்.
நான் செய்தவற்றிலெல்லாம் மனநிறைவு
பெற்றேன். என் இதயம் பூரித்தது,
இம்மகிழ்ச்சியே எனது அனைத்து கடின
உழைப்பிற்கும் கிடைத்த வெகுமதி.
11 ஆனால் பின்னர் நான் செய்த
அனைத்தையும் கவனித்தேன். நான் செய்த
கடின உழைப்பை எல்லாம் நினைத்துப்
பார்த்தேன். அவை அனைத்தும் காலவிரயம்
என்று முடிவு செய்தேன். இது காற்றைப்
பிடிப்பது போன்றது. நம் வாழ்க்கையில்
நாம் செய்த அனைத்திலிருந்தும் இலாபகர
மானது எதுவுமில்லை.

### ஒருவேளை ஞானமே பதிலாயிருக்கலாம்

12 ஒரு அரசனால் செய்ய முடிந்ததைவிட
ஒரு மனிதனால் அதிகமாகச் செய்ய
முடியாது. சில அரசர்கள் ஏற்கெனவே
நீங்கள் செய்யவிரும்புவதையே செய்திருக்கி
றார்கள். அந்த அரசர்கள் செய்ததையும்
காலவிரயம் என்று நான் கற்றுக் கொண்
டேன். எனவே மீண்டும் நான் ஞானமுள்
ளவனாக இருப்பதைப்பற்றியும், அறிவற்ற
வனாக இருப்பதைப்பற்றியும் பைத்தியக்
காரத்தனமான செயல்களைப்பற்றியும்
எண்ணினேன். 13 இருட்டைவிட ஒளி சிறந்த
து. அதுபோலவே முட்டாள்தனத்தைவிட
ஞானம் சிறந்தது என்று கண்டேன். 14 ஞான
முள்ளவன் தான் செல்லுமிடத்தை அறிய
சிந்தனையைக் கண்களாகப் பயன்படுத்துகி
றான். ஆனால் முட்டாளோ, இருட்டில்
நடப்பவனைப் போன்றுள்ளான்.
ஆனால் ஞானமுள்ளவனுக்கும் முட்டா
ளுக்கும் ஒரே வழியிலேயே முடிவு ஏற்
படுகிறது என்பதைக் கண்டேன். இருவரும்
மரித்துப்போகின்றனர். நான் எனக்குள்,
15 “ஒரு முட்டாளுக்கு ஏற்படுவதே எனக்கும்
ஏற்படுகின்றது. எனவே நான் ஞானம்பெற
ஏன் இவ்வளவு கடினமாக உழைத்திருக்
கிறேன்” என்று எண்ணினேன். நான்
எனக்குள், “ஞானமுள்ளவனாக இருப்பதும்
பயனற்றதே” என்று சொன்னேன். 16 ஞான
முள்ளவனும் முட்டாளும் மரித்துப்போகின்ற
னர். ஜனங்கள் ஞானவான்களையும்,
முட்டாள்களையும் என்றென்றும் நினைவில்
வைத்திருப்பதில்லை. எதிர்காலத்தில் தாங்
கள் செய்தவற்றையெல்லாம் ஜனங்கள்
மறந்துபோகிறார்கள். எனவே ஞானமுள்ளவ
னும் முட்டாளும் உண்மையில் ஒன்றுபோ
லவே இருக்கிறார்கள்.

### வாழ்க்கையில் உண்மையான மகிழ்ச்சி உண்டா?

17 இது என்னை வாழ்வை வெறுக்கும்படி
செய்தது. இவ்வாழ்வில் உள்ள அனைத்துமே
பயனற்றது என்ற எண்ணம் எனக்கு வருத்
தத்தைத் தந்தது. இது காற்றைப் பிடிப்பது
போன்ற முயற்சி.
18 நான் செய்த கடினமான உழைப்பு
அனைத்தையும் வெறுத்தேன். நான்
கடினமாக உழைத்திருக்கிறேன். ஆனால்
நான் உழைத்தவற்றுக்கான பலனை எனக்
குப் பின்னால் வாழ்பவர்களுக்கு வைத்துப்
போக வேண்டும். நான் அவற்றை என்
னோடு எடுத்துச்செல்ல இயலாது. 19 வேறு
ஒருவன் நான் உழைத்ததும், கற்றதுமான
அனைத்தையும் ஆளுவான். அவன் ஞான
முள்ளவனா முட்டாளா என்பதை நான்
அறியேன். இதுவும் அறிவற்றதுதான்.

*20எனவே, நான் செய்த அனைத்து
உழைப்பைப்பற்றியும் வருத்தம் அடைந்
தேன். 21ஒருவனால் தனது ஞானம், அறிவு,
திறமை ஆகியவற்றைப் பயன்படுத்தி
உழைக்கமுடியும். ஆனால் அவன் இறந்ததும்,
அவனது உழைப்பை மற்றவர்கள் பெறுகின்
றனர். அவர்கள் எந்த உழைப்பையும் செய்
வதில்லை. ஆனால் அனைத்தையும் பெறு
கின்றனர். இது எனக்குச் சோர்வுண்டாக்கு
கிறது. இது நேர்மையற்றதாகவும் அர்த்தமற்ற
தாகவும் உள்ளது. 22ஒருவனது அனைத்து
உழைப்புக்கும் போராட்டங்களுக்கும் பிறகு
வாழ்வில் அவனுக்கு என்ன கிடைக்கிறது?
23அவனது வாழ்வு முழுவதும் வலியும்,
சலிப்பும், கடின உழைப்புமே மிஞ்சுகிறது.
இரவிலும்கூட அவனது மனம் ஓய்வு பெறு
வதில்லை. இதுவும் அர்த்தமற்றதுதான்.*
*24-25என்னைவிட வேறு எவராது
வாழ்வில் மகிழ்ச்சிபெற முயற்சி செய்த
துண்டா? எனவே ஒரு மனிதன் செய்ய
வேண்டியது என்னவென்றால் நன்றாக உண்
பது, குடிப்பது, செய்ய வேண்டியவற்றை
மட்டும் மகிழ்ச்சியாக செய்வதுதான்.
இதையே நான் கற்றுக்கொண்டேன். இவை
தேவனிடமிருந்து வருகிறது என்பதையும்
நான் பார்த்தேன். 26ஒருவன் நன்மையைச்
செய்து தேவனைப் பிரியப்படுத்தினால்,
தேவன் அவனுக்கு ஞானம், அறிவு, மகிழ்ச்சி
ஆகியவற்றைக் கொடுக்கிறார். ஆனால்
பாவம் செய்கிறவனுக்கு கூட்டுகிற வேலை
யையும், சுமக்கிற வேலையையும் தருகிறார்.
தேவன் கெட்டவர்களிடம் உள்ளவற்றை
எடுத்து நல்லவர்களுக்குக் கொடுக்கிறார்.
ஆனால் இவை அனைத்தும் பயனற்றவை.
இது காற்றைப் பிடிக்கும் முயற்சிதான்.*

## ஒரு காலம் உண்டு

*3எல்லாவற்றுக்கும் ஒரு சரியான காலம்
உண்டு. பூமியில் உள்ள ஒவ்வொன்றுக்
கும் ஒரு சரியான காலமுண்டு.*
*2பிறப்பதற்கு ஒரு காலமுண்டு, மரிப்பதற்கு
ஒரு காலமுண்டு, நடுவதற்கு ஒரு காலமுண்டு,
பிடுங்குவதற்கும் ஒரு காலமுண்டு.*
*3கொல்வதற்கு ஒரு காலமுண்டு, குணப்
படுத்தவும் ஒரு காலமுண்டு, அழிப்பதற்கு
ஒரு காலமுண்டு, கட்டுவதற்கும் ஒரு கால
முண்டு.*
*4அழுவதற்கு ஒரு காலமுண்டு, சிரிப்பதற்
கும் ஒரு காலமுண்டு, வருத்தப்படுவதற்கு
ஒரு காலமுண்டு, மகிழ்ச்சியால் நடனமாடு
வதற்கும் ஒரு காலமுண்டு.*
*5ஆயுதங்களை எறிவதற்கு ஒரு கால
முண்டு, ஆயுதங்களை எடுப்பதற்கும் ஒரு
காலமுண்டு* தழுவிக்கொள்ள ஒரு கால
முண்டு, தழுவிக்கொள்ளாமல் இருக்கவும்
ஒரு காலமுண்டு.*
*6சிலவற்றைத் தேட ஒரு காலமுண்டு,
இழந்துவிட்டதாகக் கருதவும் ஒரு கால
முண்டு, பொருட்களைப் பாதுகாக்க ஒரு
காலமுண்டு, பொருட்களைத் தூக்கி எறிய
வும் ஒரு காலமுண்டு.*
*7துணிகளைக் கிழிப்பதற்கு ஒரு கால
முண்டு, அதனைத் தைப்பதற்கும் ஒரு கால
முண்டு, அமைதியாக இருப்பதற்கு ஒரு
காலமுண்டு, பேசுவதற்கும் ஒரு காலமுண்டு.*
*8அன்பு செய்ய ஒரு காலமுண்டு,
வெறுக்கவும் ஒரு காலமுண்டு, சண்டை
யிடுவதற்கு ஒரு காலமுண்டு, சமாதானம்
கொள்வதற்கும் ஒரு காலமுண்டு.*

## தேவன் தன் உலகைக் கட்டுப்படுத்துகிறார்

*9ஒருவன் உண்மையில் தன் கடின உழைப்
பின் மூலம் எதையாவது பெறுகிறானா?
10தேவன் நமக்குக் கொடுத்த அனைத்து
கடின வேலைகளையும் நான் பார்க்கிறேன்.
11அவரது உலகத்தைப்பற்றிச் சிந்தித்துப்
பார்க்கும் திறனைத் தேவன் நமக்குக் கொடுத்
திருக்கிறார். எனினும் தேவன் செய்யும்
அனைத்தையும் நாம் முழுவதும் புரிந்து
கொள்வதில்லை. ஆனால் இதுவரை தேவன்
அனைத்தையும் சரியான காலத்திலேயே
செய்துவருகிறார்.*
*12ஜனங்கள் வாழ்கிற காலம்வரை
மகிழ்ச்சியாக இருப்பதும், சந்தோஷம் அனுப
விப்பதும் நல்ல செய்கை என்பதை நான்
கற்றேன். 13எல்லோரும் உண்ணவும் குடிக்க
வும் அவரது வேலையில் மகிழ்ச்
சியடையவும் வேண்டும் என்று தேவன்
விரும்புகிறார். இவை தேவனிடமிருந்து
வரும் அன்பளிப்புகள்.*
*14தேவன் செய்வது என்றென்றும் தொட
ரும் என்பதை அறிந்தேன். தேவனுடைய
கிரியையோடு ஜனங்கள் எதையும் சேர்த்துக்
கொள்ள முடியாது. தேவனுடைய கிரியை
யிலிருந்து ஜனங்கள் எதையும் எடுத்துக்
கொள்ளவும் முடியாது. தேவன் இதனைச்
செய்கிறார். எனவே தேவனுக்கு ஜனங்கள்
மரியாதை செலுத்தவேண்டும். 15ஏற்கெனவே
நடந்து முடிந்தவை முடிந்தவையே. அவற்றை
நாம் மாற்ற முடியாது. எதிர்காலத்தில்
நடப்பவை நடந்தே தீரும். நாம் அவற்றையும்
மாற்ற முடியாது. ஆனால் தேவன்,
மிகமோசமாக நடத்தப்படுபவர்களுக்கு உதவி
செய்ய விரும்புகிறார்.**

---

***ஆயுதங்களை ... காலமுண்டு*** *எழுத்தின் பிரகாரம் “கற்களை எறிவதற்கு ஒரு காலமுண்டு, கற்களை எடுப்பதற்கும் ஒரு காலமுண்டு.”*

***வசனம் 15*** *அல்லது “இப்பொழுது என்ன நடக்கிறதோ அது ஏற்கெனவே கடந்த காலத்தில் நடப்பவை கூட ஏற்கெனவே முன்னால் நடந்தது தேவன் செயலை மீண்டும் மீண்டும் நிகழ்த்து கிறார்”*

[16]நான் இவை அனைத்தையும் இந்த
வாழ்க்கையில் பார்த்தேன். வழக்கு
மன்றமானது நன்மையாலும் நேர்மையாலும்
நிறைந்திருக்க வேண்டும் என்று எதிர்
பார்த்தேன். ஆனால் அதில் தீமையே நிறைந்
திருந்தது. [17]எனவே நான் எனக்குள்ளே:
“தேவன் எல்லாவற்றிற்கும் ஒரு காலத்தைத்
திட்டமிட்டுள்ளார். ஜனங்களின் செயலை
நியாயந்தீர்க்கவும் ஒரு காலத்தைத் தேவன்
திட்டமிட்டுள்ளார். தேவன் நல்லவர்களையும்
கெட்டவர்களையும் நியாயந்தீர்ப்பார்” என்கி
றேன்.

### ஜனங்கள் விலங்குகளைப் போன்றவர்கள்தானா?

[18]ஜனங்கள் ஒருவருக்கொருவர் செய்யும்
செயலைப்பற்றி நான் நினைத்துப் பார்க்கி
றேன். நான் எனக்குள்ளே, “ஜனங்கள்
தாங்கள் மிருகங்களைப் போன்று இருப்பதை
உணர தேவன் விரும்புகிறார்” என்று
சொல்லிக்கொண்டேன். [19]மனிதன் மிருகத்தை
விட சிறந்தவனாக இருக்கிறானா? ஏனென்
றால், எல்லாம் பயனற்றவை. மரணம்
என்பது மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும்
ஒரே மாதிரியாக நிகழ்கின்றது. “உயிர்
மூச்சும்” மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும்
ஒன்றுபோல் இருக்கிறது. மரித்துப்போன
மனிதர்களிடமிருந்து மரித்துப்போன மிருகம்
வேறுபடுகிறதா? [20]மனித உடல்களும் மிருக
உடல்களும் ஒன்றுபோலவே முடிகின்றன.
அவை மண்ணிலிருந்து வந்தன. முடிவில்
அவை மண்ணுக்கே போகின்றன. [21]ஒரு
மனிதனின் ஆவிக்கு என்ன நிகழும் என்
பதை யார் அறிவார்? மனிதனின் ஆவி
மேலே தேவனிடம் போகும்போது,
மிருகத்தின் ஆவி கீழே பூமிக்குள் போகிறது
என்பதை யார் அறிவார்?
[22]எனவே, ஒருவன் செய்யவேண்டிய
நற்செயல் என்னவென்றால் தனது செய்
கையில் மகிழ்வதுதான் என்று நான் கண்டு
கொண்டேன். அதையே அவன் அடைந்
திருக்கிறான். ஒருவன் எதிர் காலத்தைப்பற்றி
கவலைப்படக்கூடாது. ஏனென்றால் அவ
னுக்கு எதிர்காலத்தில் என்ன நடக்கும்
என்பதைக் கண்டு சொல்ல யாராலும்
முடியாது.

### மரித்துப்போவது நல்லதா?

4 ஏராளமான ஜனங்கள் மோசமாக நடத்தப்
படுவதை மீண்டும் நான் பார்த்தேன்.
அவர்களது கண்ணீரைப் பார்த்தேன். துக்கப்
படும் அவர்களை எவரும் சமாதானப்
படுத்தாமல் இருப்பதையும் அங்கே நான்
பார்த்தேன். கொடுமையானவர்களிடம்
எல்லா அதிகாரங்களும் இருப்பதைப் பார்த்
தேன். புண்பட்ட அவர்களை எவரும்
சமாதானப்படுத்தாமல் இருப்பதையும் நான்
பார்த்தேன். [2]இன்னும் உயிரோடிருப்பவர்
களைவிட மரித்துப்போனவர்கள் பாக்கிய
சாலிகள் என்று முடிவுசெய்தேன். [3]பிறப்பி
லேயே மரிப்பவர்கள் இன்னும் பாக்கியசா
லிகள். ஏனென்றால் அவர்கள் இவ்வுலகில்
நடைபெறும் தீமைகளைப் பார்க்காமலேயே
போவார்கள்.

### ஏன் இவ்வளவு கடினமாக வேலை செய்யவேண்டும்?

[4]பிறகு நான் “ஏன் ஜனங்கள் இவ்வளவு
கடினமாக வேலை செய்கிறார்கள்?” என்று
நினைத்தேன். ஜனங்கள் வெற்றிபெறவும்
மற்றவர்களைவிடச் சிறப்புபெறவும் முயற்சி
செய்வதை நான் பார்த்தேன். ஏனென்றால்
ஜனங்கள் அனைவரும் பொறாமை உடைய
வர்கள். அவர்கள் தம்மைவிட மற்றவர்
அதிகம் பெறுவதை விரும்பமாட்டார்கள்.
இது அர்த்தமற்றது. இது காற்றைப் பிடிக்க
முயற்சி செய்வதைப் போன்றது என
எண்ணினேன்.
[5]சிலர், “கையைக் கட்டிக்கொண்டு வெறு
மனே இருப்பது முட்டாள்தனம். நீ உழைக்
காவிட்டால் பட்டினிகிடந்து மரிப்பாய்”
என்று கூறுகிறார்கள். [6]அது உண்மையாக
இருக்கலாம். எப்பொழுதும் அதிகமான
வற்றைப் பெறுவதற்குப் போராடிக் கொண்
டிருப்பதைவிட, இருக்கின்றவற்றை வைத்து
திருப்தி அடைவது நல்லது என்று நான்
சொல்லுவேன்.
[7]மீண்டும், அர்த்தமில்லாத சிலவற்றை
நான் பார்த்தேன். [8]ஒருவனுக்குக் குடும்பம்
இல்லாமல் இருக்கலாம். அவனுக்கு ஒரு
மகனோ அல்லது சகோதரனோகூட இல்
லாமல் இருக்கலாம். இருந்தாலும் அவன்
தொடர்ந்து கடினமாக உழைக்கிறான். அவன்
தன்னிடம் இருப்பதைக் கொண்டு திருப்தி
அடைவதில்லை. அவன் மிகுதியாக உழைக்
கிறான். அவன் வேலைசெய்வதை நிறுத்தி,
“நான் யாருக்காகக் கடினமாக உழைத்துக்
கொண்டிருக்கிறேன். நான் ஏன் வாழ்க்
கையை அனுபவிக்கக் கூடாது?” என்று
தன்னைத்தான் கேட்பதில்லை. இதுவும் மிக
மோசமானதும், அர்த்தமற்றதுமான ஒன்றா
கும்.

### நண்பர்களும் குடும்பமும் பலம் கொடுக்கிறது

[9]ஒருவனாக இருப்பதைவிட இரண்டு
பேராக இருப்பது நல்லது. இரண்டு பேர்
சேர்ந்து வேலைசெய்தால், அவர்கள் தங்கள்
வேலையிலிருந்து அதிகம் பெறலாம்.
[10]ஒருவன் விழுந்தால், இன்னொருவன்
அவனுக்கு உதவலாம். ஆனால் ஒருவன்
தனியாக இருந்து விழும்போது உதவுவதற்கு
யாரும் இல்லாமல் கிடப்பது மிகவும் மோச
மானது.

11இரண்டு பேர் சேர்ந்து படுப்பது
கதகதப்பாக இருக்கும். தனியாக படுத்திருப்
பது கதகதப்பாக இராது.
12ஒருவனாக இருப்பவனைப் பகைவன்
எளிதில் தோற்கடித்து விடுவான். அவனால்
இருவரைத் தோற்கடிப்பது கடினம். மூன்று
பேராய் இருப்பது இன்னும் பலம். அவர்கள்
மூன்று புரிகளை உடைய கயிறு
அறுப்பதற்குக் கடினமாய் இருப்பதைப்
போன்றவர்கள்.

### ஜனங்கள், அரசியல் மற்றும் புகழ்

13ஏழையாகவும் ஆனால் ஞானமுள்ளவ
னாகவும் உள்ள இளையதலைவன், முதியவ
னாகவும் முட்டாளாகவும் உள்ள அரசனை
விடச் சிறந்தவன். முதிய அரசன் எச்ச
ரிக்கைகளைக் கவனிக்கமாட்டான். 14இந்த
ஆட்சியில் அந்த இளைய அரசன்
ஏழ்மையில் பிறந்திருக்கலாம். ஒருவேளை
அவன் சிறையிலிருந்து நாட்டை ஆள்வதற்கு
வந்திருக்கலாம். 15ஆனால் இந்த
வாழ்க்கையில் ஜனங்களைக் கவனித்துக்
கொண்டிருக்கிறேன். நான் இதனை
அறிவேன். ஜனங்கள் அந்த இளைய
தலைவனைப் பின்பற்றுகிறார்கள். அவன்
புதிய அரசனாக வருவான். 16ஏராளமான
ஜனங்கள் அவனைப் பின்பற்றுவார்கள்.
ஆனால் பிறகு, அதே ஜனங்கள் அவனை
விரும்பமாட்டார்கள். இதுவும் அர்த்தமற்றது.
இது காற்றைப் பிடிக்க முயற்சி செய்வதைப்
போன்றது.

### பொருத்தனை செய்வதைப் பற்றி எச்சரிக்கையாயிரு

5 நீங்கள் தேவனைத் தொழுதுகொள்ளப்
போகும்போது கவனமாக இருங்கள்.
அறிவற்ற ஜனங்களைப்போன்று நீங்கள்
தேவனுக்குப் பலிகளைக் கொடுப்பதைவிட
அவர் கூறுவதைக் கவனிப்பது நல்லது.
அறிவற்றவர்கள் தொடர்ந்து தீமைகளைச்
செய்வார்கள், அவர்கள் அதைப்பற்றி
தெரியாதவர்களாக இருப்பார்கள். 2தேவ
னிடம் பொருத்தனை செய்யும்போது கவன
மாக இருங்கள். தேவனிடம் சொல்லும்
செய்திகளைப்பற்றியும் கவனமாக இருங்கள்.
நீங்கள் சிந்திக்காமல் பேச உங்கள்
உணர்ச்சிகள் காரணமாகாதபடி பார்த்துக்
கொள்ளுங்கள். தேவன் பரலோகத்தில்
இருக்கிறார். நீங்கள் பூமியில் இருக்கிறீர்கள்.
எனவே தேவனிடம் சிலவற்றை பேசுகின்ற
அவசியமே உள்ளது. இந்த வார்த்தை
உண்மையானது:
3 மிக அதிகமான கவலைகளால் கெட்ட
கனவுகள் வருகின்றன. முட்டாள்களிட
மிருந்து மிகுதியான வார்த்தைகள் வரு
கின்றன.
4நீ தேவனுக்கு பொருத்தனை செய்தால்
அதனைக் காப்பாற்று. நீ பொருத்தனை
செய்ததை நிறைவேற்ற தாமதிக்காதே.
முட்டாள்களின்மேல் தேவன் மகிழ்ச்சியாக
இருக்கமாட்டார். தேவனுக்குக் கொடுப்பதாக
வாக்களித்தவற்றைஅவருக்கு கொடுத்துவிடு.
5நீ பொருத்தனை செய்து அதனை
நிறைவேற்ற முடியாமல் இருப்பதைவிட,
பொருத்தனை செய்யாமல் போவதே நல்லது.
6எனவே உனக்குப் பாவம் ஏற்படும்படி நீ
வார்த்தைகளைப் பயன்படுத்தாதே. "நான்
சொன்னதை அந்த அர்த்தத்துடன் சொல்ல
வில்லை" என்று ஆசாரியனிடம் சொல்
லாதே. இவ்வாறு நீ செய்தால், தேவன்
உன் வார்த்தைகளால் கோபங்கொண்டு, நீ
செய்த வேலைகளை எல்லாம் அழித்து
விடுவார். 7உனது பயனற்ற கனவுகளும்
வீண்பேச்சும் உனக்குத் துன்பம் தராதபடி
பார்த்துக்கொள். நீ தேவனை மதிக்க
வேண்டும்.

### ஒவ்வொரு அரசனுக்கும் ஒரு அரசன் உண்டு

8சில நாடுகளில் ஏழைகள் கடினமாக
உழைக்கும்படிக் கட்டாயப்படுத்தப்படுவதை
நீ காணலாம். இது ஏழைகளுக்குச் செய்யும்
நேர்மையல்ல. இது ஏழை ஜனங்களின்
உரிமைகளுக்கு எதிரானது, ஆனால்
ஆச்சரியப்படாதே. ஜனங்களைக் கட்டாயப்
படுத்தி வேலைவாங்குகிற அரசனைக்
கட்டாயப்படுத்த ஒரு அரசன் இருப்பான்.
இவர்கள் இருவரையும் கட்டாயப்படுத்த
இன்னொரு அரசன் இருப்பான். 9ஒருவன்
அரசனாக இருந்தாலும் தன் சொந்த நாட்டில்
அடிமையாகி விடுகிறான்.

### செல்வத்தால் மகிழ்ச்சியை வாங்க முடியாது

10செல்வத்தையே விரும்புகிற ஒருவன்
தன்னிடமுள்ள செல்வத்தால் மட்டும் திருப்தி
அடைய மாட்டான். அவன் மேலும் மேலும்
செல்வத்தைப் பெற்றாலும் திருப்தி
அடையமாட்டான். இதுவும் அர்த்தமற்றது.
11ஒருவன், மிகுதியான செல்வத்தைப்
பெறும்போது அதைச் செலவுசெய்ய
'உதவும்' மிகுதியான "நண்பர்"களைப் பெறு
கிறான். எனவே அந்த செல்வந்தன் உண்மை
யில் ஆதாயமடைவது ஒன்றுமில்லை. அவன்
தன் செல்வத்தைப் பார்க்க மட்டுமே முடியும்.
12ஒருவன், பகல் முழுவதும் கடுமையாக
உழைத்தால் இரவில் சமாதானமாகத்
தூங்குகிறான். அவனுக்கு உண்பதற்கு
மிகுதியாக உள்ளதா குறைவாக உள்ளதா
என்பதைப்பற்றிக் கவலையில்லை. ஆனால்
செல்வந்தன் தன் செல்வத்தைப்பற்றிக்
கவலைபட்டுக்கொண்டு தூங்காமல் இருக்கி
றான்.

[13]இந்த வாழ்க்கையில் நிகழும் மிகவும்
சோகமான ஒரு காரியத்தை நான்
கண்டிருக்கிறேன். ஒருவன் தன் செல்வத்தை
எதிர்காலத்திற்காகவே சேமித்து வைக்
கிறான். [14]அதன் பிறகு ஏதாவது கெட்ட
காரியம் நிகழும்போது எல்லாவற்றையும்
இழக்கின்றான். தன் மகனுக்குக் கொடுக்க
எதுவும் இல்லாமல் போகிறது.

### நாம் எதுவுமில்லாமல் வருகிறோம் எதுவுமில்லாமல் போகிறோம்

[15]ஒருவன் தன் தாயின் உடலிலிருந்து
வெளியே வரும்போது எதுவும் இல்லாம
லேயே வருகிறான். அவன் மரிக்கும்போதும்
எதுவும் இல்லாமலேயே போகிறான்.
பொருட்களைப் பெறுவதற்காகக் கடுமை
யாக உழைக்கிறான். ஆனால் மரிக்கும்போது
எதையும் எடுத்துச் செல்வதில்லை. [16]இது
மிகவும் சோகமானது அவன் வந்தது
போலவே இந்த உலகைவிட்டு விலகியும்
போகிறான். ‘‘காற்றைப் பிடிக்கும் முயற்சி
யால்’’ ஒருவன் பெறப்போவது என்ன?
[17]அவனது வாழ்நாட்கள் சோகத்தாலும்
துன்பத்தாலும் நிறைந்துபோகும். முடிவில்
அவன் சலிப்பும், நோயும், வெறுப்பும்,
கோபமும் அடைவான்.

### வாழ்வின் பணியை அனுபவி

[18]உண்டு, குடித்து, இவ்வுலகில் வாழும்
குறுகிய வாழ்வில் தான் செய்யும் வேலை
யில் இன்பம் காண்பதுதான் ஒருவன்
செய்யும் சிறப்பான செயல்கள் என்று நான்
எண்ணுகிறேன். அவனுக்கு இருப்ப
தெல்லாம் தேவன் கொடுத்த குறுகிய
வாழ்க்கை மட்டுமே. அவனுக்கு வேறெதுவும்
இல்லை.
[19]தேவன், ஒருவனுக்குச் செல்வத்தையும்
சொத்துக்களையும் அவற்றை அனுபவிப்ப
தற்கான உரிமையையும் கொடுத்திருக்கும்
போது அவன் அவற்றை அனுபவித்து
மகிழ வேண்டும். இதனை ஏற்றுக்கொண்டு
அவன் தனது வேலையில் இன்பம் காண
வேண்டும். இது தேவனால் கொடுக்கப்பட்ட
பரிசு. [20]ஒருவனால் நீண்டகாலம் வாழ
முடியாது. எனவே அவன் இதனை வாழ்வு
முழுவதும் நினைவில் வைத்திருக்க வேண்
டும். ஒருவன் செய்ய விரும்புகிற வேலை
களில் தேவன் அவனைச் சுறுசுறுப்பாக
வைத்துள்ளார்.

### செல்வம் மகிழ்ச்சியைக் கொண்டு வராது

6 வாழ்க்கையில் நான் நேர்மையாக
இல்லாத இன்னொன்றையும் பார்த்திருக்
கிறேன். இதனைப் புரிந்துக்கொள்ளவும்
கடினமாக இருக்கிறது. [2]ஒருவனுக்குத் தேவன்
பெருஞ்செல்வத்தையும், சிறப்பையும்,
சொத்துக்களையும் கொடுக்கிறார். ஒருவன்
தனக்குத் தேவையானவற்றையும் தான்
விரும்புகின்றவற்றையும் பெற்றுக்கொள்
கிறான். ஆனால் தேவன் அவனை அவற்றை
அனுபவிக்கும்படி விடுவதில்லை. எவனோ
ஒரு அந்நியன் வந்து அவற்றை எடுத்துக்
கொண்டு போகிறான். இது மிகவும் மோச
மான அர்த்தமற்ற ஒன்றாகும்.
[3]ஒருவன் நீண்டகாலம் வாழலாம். அவ
னுக்கு 100 பிள்ளைகள் இருக்கலாம். ஆனால்,
அவன் நல்லவற்றில் திருப்தி அடையா
விட்டால், அவன் மரித்தப்பிறகு அவனை
எவரும் நினைவில் வைத்துக்கொள்ளா
விட்டால், அவனைவிட பிறக்கும் முன்பே
மரித்துப்போகும் குழந்தை சிறந்தது என்று
என்னால் சொல்ல முடியும். [4]ஒரு குழந்தை
மரித்தே பிறக்குமானால் அது உண்மையில்
பொருளற்றது. அது விரைவில் இருண்ட
கல்லறைக்குள்ளே பெயர்கூட இல்லாமல்
புதைக்கப்படும். [5]அது சூரியனைப் பார்த்த
தில்லை. அது எதையும் அறிந்துக்கொள்
வதில்லை. தேவன் கொடுத்தவற்றை
அனுபவிக்காத ஒருவனைவிட அது அதிக
ஓய்வைப் பெறும். [6]அவன் 2,000 ஆண்டுகள்
வாழ்ந்தவனாக இருக்கலாம்.எனினும் அவன்
வாழ்க்கையில் மகிழ்ச்சியை அனுபவிக்கா
விட்டால், மரித்துப் பிறக்கும் குழந்தை
அதே முடிவுக்குச் செல்ல எளிய பாதையைக்
கண்டடைகிறது.
[7]ஒருவன் மேலும் மேலும் வேலை
செய்கிறான். ஏனென்றால், அவன் தனக்கு
உணவு தேடிக்கொள்ளவே அவ்வாறு
உழைக்கிறான். அதனால் அவன் திருப்தி
அடைவதில்லை. [8]இந்த வழியில், ஞான
முள்ள ஒருவன் அறிவற்றவனைவிடச்
சிறந்தவன் இல்லை. வாழ்க்கையை அதன்
இயல்பிலேயே ஏற்றுக்கொள்வதை அறிந்த
ஏழையாக இருப்பது நல்லது. [9]நாம் மேலும்
மேலும் பெறவேண்டும் என்று விரும்புவதை
விட இருப்பதை வைத்துக்கொண்டு மகிழ்ச்சி
அடைவதே நல்லது. எப்பொழுதும் மேலும்
மேலும் விரும்புவது பயனற்றது. அது
காற்றைப் பிடிக்கும் முயற்சியைப் போன்
றது.
[10-11]ஒரு மனிதன் தான் உருவாக்கப்பட்ட
வண்ணமே, அதாவது மனிதனாக மாத்திரம்
இருக்கிறான். இதைப்பற்றி விவாதம் செய்
வது வீணானது. ஒருவன் இதைப்பற்றி
தேவனிடம் வாக்குவாதம் செய்ய முடியாது.
ஏனென்றால், தேவன் மனிதனைவிட
வல்லமை வாய்ந்தவர். நீண்ட விவாதங்கள்
உண்மையை மாற்றிவிட முடியாது.
[12]பூமியில்ஒருவனது குறுகிய வாழ்நாளில்,
எது சிறந்தது என்று எவருக்குத் தெரியும்?
அவனது வாழ்க்கை நிழலைப்போன்று
கடந்துபோனது. பின்னால் என்ன நடக்கும்
என்பதை எவராலும் சொல்ல முடியாது.

### ஞான மொழிகளின் ஒரு தொகுப்பு

7 நல்ல மணமிக்கப் பொருட்களைவிட
நல்ல பெயரைப் பெறுவது நல்லது.
ஒருவனது பிறந்தநாளைவிட மரித்தநாளும்
சிறந்ததுதான்.
2 விருந்துகளுக்குச் செல்வதைவிட கல்ல
றைக்குச் செல்வதும் சிறந்ததுதான். ஏனென்
றால் எல்லோரும் மரிக்க வேண்டியவர்களே.
வாழ்கின்ற அனைவரும் இதனை ஒப்புக்
கொள்ள வேண்டும்.
3 சிரிப்பைவிடச் சோகம் சிறந்தது.
ஏனென்றால் நமது முகம் சோகமடையும்
போது நமது இதயம் நல்லதாகிறது.
4 ஞானமுள்ளவன் மரணத்தைப் பற்றிச்
சிந்திக்கிறான். ஆனால் அறிவற்றவனோ
எப்பொழுதும் நல்ல நேரத்தைப்பற்றியே
நினைத்துக் கொண்டிருக்கிறான்.
5 ஞானமுள்ளவனால் விமர்சிக்கப்படுவது
அறிவற்றவர்களால் புகழப்படுவதைவிட
நல்லது.

6 அறிவற்றவர்களின் சிரிப்பு பயனற்றது.
அது பானையின் கீழே எரியும் முட்களைப்
போன்றது. முட்கள் வேகமாக எரியும்,
எனவே பானை சூடாகாது.
7 எவராவது போதுமான பணம் கொடுப்
பதானால் ஞானமுள்ளவர்கள் தம் ஞானத்தை
மறக்கத் தயார். அப்பணம் அவனது புரிந்து
கொள்ளுதலை அழித்துவிடும்.
8 ஒன்றைத் துவங்குவதைவிட முடிப்பது
நல்லது. ஒருவன் வீண் பெருமையும்
பொறுமையின்மையும் கொள்வதைவிட
கனிவும் பொறுமையும் சிறந்தது.

9 விரைவாகக் கோபம் அடையாதே.
ஏனென்றால் கோபம் முட்டாளாக்கும்.
10 "இந்நாட்களை விட 'அக்கால நாட்கள்'
நன்றாக இருந்தன என்று சொல்லாதே.
என்ன நடந்தது?" என்று கேட்காதே.
அந்தக் கேள்வியைக் கேட்கும்படி ஞானம்
நம்மை வழிநடத்தாது.
11 உன்னிடம் செல்வம் இருக்குமானால்
ஞானம் அதைவிடச் சிறந்தது. உண்மையில்
ஞானமுள்ளவர்கள் தேவைக்கு மிகுதி
யாகவே செல்வத்தைப் பெறுகிறார்கள்.
12 ஞானமுள்ளவனால்செல்வந்தனாக முடியும்.
ஞானம் அதன் சொந்தக்காரனைப் பாது
காக்கும்.
13 தேவனால் படைக்கப்பட்ட பொருட்
களைப் பாருங்கள். ஒருவேளை அது தவறு
என்று நினைத்தாலும் உன்னால் எதையும்
மாற்ற முடியாது. 14 வாழ்க்கை நல்லதாக
இருந்தால், அனுபவி. வாழ்க்கை கடினமாக
இருக்கும்போது, தேவன் நமக்கு நல்ல
காலத்தையும் கஷ்டகாலத்தையும் கொடுக்
கிறார் என்று நினைத்துக்கொள். எதிர்
காலத்தில் என்ன நிகழும் என்பது எவருக்
கும் தெரியாது.

### ஜனங்களால் உண்மையில் நல்லவர் களாக முடியாது

15 எனது குறுகிய வாழ்வில் நான்
எல்லாவற்றையும் பார்த்திருக்கிறேன். நல்ல
வர்கள் இளமையிலேயே மரித்துப் போகிறார்
கள். தீயவர்கள் நீண்டகாலம் வாழ்வதையும்
பார்த்திருக்கிறேன். 16-17 ஏன் நீ உன்னையே
கொன்று கொள்கிறாய். அதிக நல்லவனா
கவும் அதிக கெட்டவனாகவும் இராதே. நீ
அதிக ஞானமுள்ளவனாகவும் அதிக முட்டா
ளாகவும் இராதே. உனக்குரிய காலத்திற்கு
முன் நீ ஏன் மரிக்கவேண்டும்?
18 இதில் கொஞ்சம் அதில் கொஞ்சமுமாய்
இருக்க முயற்சி செய். தேவனுடைய பக்தர்
களும் கூட கொஞ்சம் நல்லவர்களாகவும்
கொஞ்சம் தீயவர்களாகவும் இருக்கின்றனர்.
19-20 பாவமே செய்யாமல் எப்பொழுதும்
நல்லதையே செய்துகொண்டிருக்கிற மனிதன்
பூமியில் ஒருவனும் இல்லை.
ஞானம் ஒருவனுக்குப் பலத்தைக் கொடுக்
கிறது. பட்டணத்திலுள்ள பத்து முட்டாள்
தலைவர்களைவிட ஒரு ஞானவான் பலமுள்
ளவன்.
21 ஜனங்கள்சொல்லுகின்ற அனைத்தையும்
நீ கேட்காதே. உனது சொந்த வேலைக்
காரனே உனக்கு எதிராகப் பேசுவதை நீ
கேட்கலாம். 22 மற்றவர்களைப்பற்றி நீயே
பலதடவை அவதூறு சொல்லியிருப்பதை
நீ அறியலாம்.
23 நான் எனது ஞானத்தைப் பயன்படுத்தி
நான் இவற்றைப்பற்றிச் சிந்தித்தேன். நான்
உண்மையில் ஞானமுள்ளவனாக இருக்க
விரும்பினேன். ஆனால் அது முடியாமற்
போனது. 24 ஏன் பல விஷயங்கள் இவ்வாறு
இருக்கின்றன என்று எனக்குத் தெரிய
வில்லை. இதனைப் புரிந்துக்கொள்வது எவ
ருக்கும் கடினம்தான். 25 நான் சற்றுக் கடினப்
பட்டு முயன்று ஞானத்தைப் பெற்றேன்.
நான், எல்லாவற்றுக்கும் காரணம் கண்டு
கொள்ள விரும்பினேன். நான் என்ன
கற்றுக்கொண்டேன்? கெட்டவனாக இருப்
பது முட்டாள்தனம் என்பதைக் கற்றேன். ஒரு
அறிவற்றவனைப்போன்று நடிப்பதும்
பைத்தியகாரத்தனமானதுதான்.
26 சில பெண்கள் கண்ணிகளைப்போன்று
ஆபத்தானவர்கள் என்பதை அறிந்துக்
கொண்டேன். அவர்களின் இதயம் வலை
களைப்போன்றது, அவர்களது கைகள் சங்
கிலிகளைப் போன்றவை. இத்தகைய பெண்
களிடம் அகப்பட்டுக்கொள்வது மரணத்தை
விட பயங்கரமானது. தேவனைப் பின்பற்று
கிற ஒருவன் இத்தகைய பெண்களிடம்
இருந்து விலகி ஓடுவான். பாவியோ இவர்
களிடம் அகப்பட்டுக்கொள்வான்.
27-28 பிரசங்கி, "என்னால் எத்தகைய
பதிலைக் கண்டுபிடிக்கமுடியும் என்பதற்
காகவே நான் இவற்றையெல்லாம் சேர்க்
கிறேன். நான் இன்னும் பதில்களை எதிர்

பார்த்துக் கொண்டிருக்கிறேன். நான் ஆயிரத்
தில் ஒருவனை நல்லவனாகக் கண்டு
பிடித்தேன். ஆனாலும் ஒரு நல்ல
பெண்ணைக்கூடக் கண்டுபிடிக்க முடிய
வில்லை.”
29“தேவன் மனிதனை நல்லவனாகவே
படைத்தார். ஆனால் ஜனங்கள் கெட்டுப்
போக பலவழிகளைக் கண்டுபிடித்தனர். இது
வும் நான் கற்றுக்கொண்ட இன்னொரு
பாடமாகும்” என்று கூறுகிறான்.

## ஞானமும் வல்லமையும்

8 ஒரு ஞானமுள்ளவனைப்போன்று எவரா
லும் ஒன்றைப் புரிந்துக்கொள்ளவும்,
விளக்கவும் முடியாது. அவனது ஞானம்
அவனை மகிழ்ச்சிப்படுத்துகிறது. இது ஒரு
வனது சோகமுள்ள முகத்தை மகிழ்ச்சியுள்ள
தாக மாற்றும்.
2நீங்கள் அரசனின் கட்டளைகளுக்கு எப்
பொழுதும் கீழ்ப்படிய வேண்டும் என்று
நான் உங்களுக்குக் கூறுகிறேன். நீ இதனைச்
செய்யவேண்டும். ஏனென்றால் ஏற்கெனவே
தேவனுக்கு வாக்களித்து இருக்கிறாய்.
3அரசனுக்கு ஆலோசனை சொல்ல அஞ்ச
வேண்டாம். தவறான ஒன்றுக்கு ஆதரவு
செலுத்த வேண்டாம். அரசன் தனக்குப்
பிடித்தமான ஆணைகளையே தருகிறான்.
4அரசனுக்கு ஆணைகளைத் தரும் அதிகாரம்
உள்ளது. எதைச் செய்யவேண்டும் என்று
எவரும் அவனுக்குச் சொல்வதில்லை. 5அரச
னது ஆணைகளுக்குக் கீழ்படிந்தால் ஒருவன்
பாதுகாப்பாக இருப்பான். இதைச் செய்ய
வேண்டிய சரியான காலத்தை ஞான
முள்ளவன் அறிவான். சரியானவற்றை
எப்போது செய்யவேண்டும் என்பதையும்
அவன் அறிவான்.
6எல்லாவற்றையும் செய்ய ஒருவனுக்குச்
சரியான காலமும், சரியான வழியும் உள்
ளன. எனவே ஒவ்வொருவனும் ஒரு வாய்ப்
பை எடுத்துக்கொண்டு எதைச் செய்ய
வேண்டும் என்பதை முடிவெடுக்க வேண்
டும். எதிர்காலத்தில் என்ன நடக்கும்
என்பதில் குழப்பம் இருந்தாலும், பல
துன்பங்களில் உழன்றாலும் ஒருவன்
அதனைச் செய்யவேண்டும். 7ஏனென்றால்
எதிர்காலத்தில் என்ன நடக்கும் என்று
எவரும் அவனிடம் சொல்வதில்லை.
8எவருக்கும் தன் ஆவியை விடாமல்
தங்கவைக்கும் வலிமை இல்லை. எவருக்கும்
தன் சாவைத் தடுக்கும் அதிகாரமில்லை.
போர்க்காலத்தில் தன் விருப்பப்படி போய்
வர ஒரு போர் வீரனுக்கு சுதந்திரம் இல்
லை. இதுபோலவே, ஒருவன் பாவம் செய்
தால் அது அவனை சுதந்திரம் உள்ளவனாக
இருக்கும்படி செய்யாது
9நான் அனைத்தையும் பார்த்தேன்.
உலகில் நடைபெறுகிற அத்தனையையும்
பற்றி நான் கடுமையாகச் சிந்தித்தேன்.
ஜனங்கள் எப்பொழுதும் மற்றவர்களை
ஆள்வதற்கான வல்லமையைப் பெறுவதற்
காகப் போராடுகிறார்கள் என்பதை நான்
பார்த்தேன். இது அவர்களுக்குக் கெட்டது.
10தீய ஜனங்களுக்கு அழகான சிறந்த
சவ அடக்கங்கள் நடைபெறுவதை நான்
பார்த்தேன். அடக்கச் சடங்கு முடிந்து
ஜனங்கள் வீட்டிற்குப் போனதும் மரித்துப்
போன தீயவர்களைப்பற்றி நல்லவற்றைக்
கூறினார்கள். இத்தகைய காரியங்கள் தீயவன்
வாழ்ந்த அதே நகரத்திலேயே நடந்து வரு
கின்றன. இது அர்த்தமற்றது.

## நியாயம், வெகுமதிகள், தண்டனை

11சில நேரங்களில் ஜனங்கள் தாம் செய்கிற
தீமைக்கு உடனே தண்டிக்கப்பட மாட்டார்
கள். அவர்களுக்கான தண்டனை? மெதுவாக
வரும். இது மற்றவர்களையும் தீமை செய்யும்
படி தூண்டும்.
12ஒரு பாவி நூற்றுக்கணக்கான தீமை
களைச் செய்யலாம். அவனுக்கு நீண்ட
வாழ்க்கையும் இருக்கலாம். ஆனால், தேவ
னுக்குக் கீழ்ப்படிவதும் மரியாதை செலுத்து
வதும் இன்னும் சிறந்ததாக நான் கருது
கிறேன். 13தீயவர்கள் தேவனுக்கு மரியாதை
செலுத்துவதில்லை. எனவே அவர்கள் நல்ல
வற்றைப் பெறுவதில்லை. அவர்கள் நீண்ட
வாழ்க்கையைப் பெறுவதில்லை. சூரியன்
அஸ்தமிக்கும்போது நிழல் நீண்டு தோன்று
வது போன்று, அவர்களின் வாழ்க்கை
வளருவதில்லை.
14நியாயமாகத் தோன்றாத சில காரியமும்
உலகில் நடக்கிறது. கெட்டவைகள் கெட்ட
வர்களுக்கும்,நல்லவைகள் நல்லவர்களுக்கும்
நிகழவேண்டும். ஆனால் சில நேரங்களில்
நல்லவர்களுக்கு தீயவைகளும் தீயவர்களுக்கு
நல்லவைகளும் ஏற்படலாம். எனினும்
அவை நல்லதன்று. 15எனவே நான் வாழ்க்
கையை அனுபவிப்பதுதான் நல்லது என்று
முடிவு செய்தேன். ஏனென்றால், ஜனங்கள்
தம் வாழ்வில் செய்யவேண்டிய நல்ல
காரியங்களாவன: உண்பது, குடிப்பது
வாழ்க்கையை அனுபவிப்பதுமேயாகும்.
தேவன் இவ்வுலகில் தங்களுக்குக் கொடுத்த
கடினமான வேலையில் இன்பம் காண்பதற்
காகவாவது இவை உதவும்.

## தேவன் செய்வதையெல்லாம் நம்மால் புரிந்துக்கொள்ள முடிவதில்லை

16இந்த வாழ்வில் ஜனங்கள் செய்வதை
எல்லாம் நான் கவனமாகப் படித்திருக்
கிறேன். ஜனங்கள் எவ்வளவு சுறுசுறுப்பாக
இருக்கிறார்கள் என்பதைப் பார்த்தேன்.
அவர்கள் இரவும் பகலும் உழைக்கிறார்கள்.
அவர்கள் பெரும்பாலும் தூங்குவதே இல்
லை. 17நானும் தேவன் செய்கிறவற்றைப்
பார்த்தேன். உலகில் தேவன் செய்கிறவற்றை
ஜனங்களால் புரிந்துக்கொள்ள முடிய

*வில்லை. ஒருவன் அதனைப் புரிந்துகொள்ள முயற்சி செய்யலாம், ஆனால் அவனால் முடியாது. ஞானமுள்ள ஒருவன் தேவ னுடைய செயல்களைப் புரிந்து கொண்ட தாகக் கூறலாம். ஆனால் அதுவும் உண்மையில்லை. இவற்றையெல்லாம் ஒருவ ராலும் புரிந்துகொள்ள முடியாது.*

### *மரணம் நியாயமானதா?*

9 *நான் இவை அனைத்தையும்பற்றி வெகு கவனமாகச் சிந்தித்தேன். தேவன், நல்ல வர்களும் ஞானவான்களும் செய்வதையும் அவர்களுக்கு ஏற்படுவதையும் கட்டுப் படுத்துவதை நான் பார்த்தேன். அவர்கள் அன்பு செலுத்தப்படுவார்களா அல்லது வெறுக்கப்படுவார்களா என்று அவர் களுக்குத் தெரியாது. எதிர்காலத்தில் என்ன நடைபெறும் என்பதும் அவர்களுக்குத் தெரியாது.*

2 *ஆனால், நாம் அனைவரும் மரிக்கிறோம். இது அனைவருக்கும் நிகழ்கிற ஒன்று. மரணம் நல்லவர்கள் தீயவர்கள் என அனை வருக்கும் ஏற்படுகின்றது. சுத்தமானவர்கள் சுத்தமில்லாதவர்கள் என அனைத்து ஜனங் களுக்கும் மரணம் ஏற்படுகின்றது. பலி கொடுப்பவர்கள் பலிகொடுக்காதவர்கள் என அனைவருக்கும் மரணம் ஏற்படுகின்றது. பாவியைப் போன்றே நல்லவனும் மரித்துப் போகிறான். தேவனுக்குச் சிறப்பான பொருத் தனைகள் செய்கிறவனைப் போன்றே தேவ னுக்குப் பொருத்தனை செய்யப் பயப்படு கிறவனும் மரித்துப்போகிறான்.*

3 *நமது வாழ்வில் நடைபெறும் அனைத்து காரியங்களிலும் மிக மோசமான காரியம் அனைத்து ஜனங்களும் ஒரே வழியில் முடிந்து போவதுதான். ஜனங்கள் எப்பொழு தும் பாவங்களையும் முட்டாள்தனங்களை யும் சிந்தித்துக் கொண்டிருப்பதும் கெட்டது தான். அவ்வகை எண்ணங்கள் மரணத் திற்கே அழைத்துச் செல்லுகின்றன.*
4 *வாழ்ந்துகொண்டிருக்கிற எவருக்கும் நம்பிக் கையுண்டு. அவன் யார் என்பது அக்கறை யில்லை. ஆனால்*

*“மரித்துப்போன சிங்கத்தை விட உயி ரோடு உள்ள நாய் சிறந்தது” என்னும் கூற்று உண்மையானது.*

5 *உயிரோடுள்ளவர்கள் தாம் மரித்துப் போவோம் என்பதை அறிந்தவர்கள். ஆனால் மரித்துப்போனவர்கள் எதையும் அறிய மாட்டார்கள். மரித்துப்போனவர்களுக்கு எந்த விருதும் இல்லை. ஜனங்கள் அவர் களை விரைவில் மறந்துவிடுவார்கள்.*
6 *ஒருவன் மரித்த பிறகு, அவனது அன்பு, வெறுப்பு, பொறாமை அனைத்தும் போய் விடுகின்றது. மரித்துப்போனவர்களுக்குப் பூமியில் நிகழ்ந்த இத்தனையிலும் பங் கில்லை.*

### *முடியும்போது வாழ்க்கையை அனுபவி*

7 *இப்போது போய் உனது உணவை உண்டு மகிழ்ச்சியைப் பெறு. உனது திராட்சைரசத்தைக் குடித்து மகிழ்ச்சி அடைவாய். நீ இவற்றைச் செய்வது தேவ னுக்கு உடன்பாடானதுதான்.*
8 *சிறந்த ஆடை களை அணிந்து அழகாகக் காட்சியளி.*
9 *நீவிரும்புகிற மனைவியோடு வாழ்க்கையை அனுபவி. குறுகிய உனது வாழ்க்கையின் ஒவ்வொரு நாளையும் அனுபவி. பூமியில் குறுகிய இந்த வாழ்வை தேவன் உனக்குக் கொடுத்திருக்கிறார். உனக்குரியது எல்லாம் இதுதான். எனவே இவ்வாழ்வில் நீ செய்ய வேண்டிய வேலைகளுக்கு மகிழ்ச்சி அடை வாய்.*
10 *எப்பொழுதெல்லாம் வேலைச்செய்ய வாய்ப்பு கிடைக்கிறதோ, அதை எவ்வளவு சிறப்பாகச் செய்ய முடியுமோ, அதனைச் செய். கல்லறையில் உனக்கு வேலையில்லை. அங்கு சிந்தனையும் அறிவும், ஞானமும் இல்லை. நாம் அனைவரும் மரணம் என்ற இடத்துக்கே போய்க் கொண்டிருக்கிறோம்.*

### *அதிர்ஷ்டமா? துரதிர்ஷ்டமா? நாம் என்ன செய்யலாம்?*

11 *நான் வாழ்க்கையில் நியாயமற்ற சிலவற்றைப் பார்த்தேன். வேகமாக ஓடு கிறவன் பந்தயத்தில் எப்பொழுதும் வெற்றி பெறுவதில்லை; வலுமிக்க படை போரில் எப்பொழுதும் வெற்றி பெறுவதில்லை; ஞானத்தில் சிறந்தவன் எப்பொழுதும் அதிக மாகச் சம்பாதிப்பதில்லை. அறிவுக்கூர்மை மிக்கவன் எப்பொழுதும் செல்வத்தைப் பெறுவதில்லை. கல்வி அறிவுமிக்கவன் எப்பொழுதும் தனக்குரிய பாராட்டுகளைப் பெறுவதில்லை; நேரம் வரும்போது ஒவ்வொருவருக்கும்தீமையே ஏற்படுகின்றன.*
12 *அடுத்து என்ன நடக்கும் என்று ஒருவனால் என்றைக்கும் அறிய முடியாது. அவன் வலைக்குள் அகப்பட்ட மீனைப் போன்று இருக்கிறான். அம்மீனுக்கு என்ன நடக்கும் என்பது தெரியாது. அவன் கண்ணியில் அகப்பட்ட பறவையைப் போன்றவன். அப்பறவை அடுத்து நடக்கப் போவதை அறியாது. இதுபோலவே, ஒருவன் தீயவற்றால் கண்ணியில் அகப்படுகிறான். அது திடீரென்று அவனுக்கு ஏற்படுகின்றது.*

### *ஞானத்தின் வல்லமை*

13 *இந்த வாழ்வில் ஒருவன் ஞானமுள்ள வற்றைச் செய்வதை நான் பார்த்தேன். எனக்கு அது மிக முக்கியமாகப்பட்டது.*
14 *மிகக் குறைந்த எண்ணிக்கைக்கொண்ட ஜனங்களையுடைய நகரம் இருந்தது. ஒரு அரசன் அதனைச் சுற்றி தன் படை வீரர்களை நிறுத்தி அதற்கு எதிராகப் போரிட்டான்.*
15 *ஆனால் அந்நகரில் ஒரு ஞானி இருந்தான். அவன் ஏழை. ஆனால் அந்நகரைக் காப்பாற்ற தனது ஞானத்தைப்*

பயன்படுத்தினான். எல்லாம் நடந்து
முடிந்தபிறகு, அந்த ஏழையை ஜனங்கள்
மறந்து விட்டார்கள். 16எனினும் நான்
இப்பொழுதும் ஞானம் பலத்தைவிட
சிறந்தது என்பேன். அந்த ஜனங்கள்
ஏழையின் ஞானத்தை மறந்து விட்டார்கள்.
அவன் சொன்னதைக் கவனிப்பதை நிறுத்தி
விட்டார்கள். ஞானமே சிறந்தது என்று நான்
இன்னமும் நம்புகிறேன்.
17 ஒரு முட்டாள் அரசனால் மிகச்
சத்தமாகச் சொல்லப்படுகிற வார்த்தைகளை
விட ஒரு ஞானியின் மென்மையான வார்த்
தைகள் சிறந்தவை.
18 போரில் ஞானமானது வாள்களையும்
ஈட்டிகளையும்விடச் சிறந்தவை. ஆனால்
ஒரு முட்டாளால் பல நல்லவற்றை அழிக்க
முடியும்.

10 மிகச்சிறந்த நறுமணப் பொருட்களைக்
கூட சில மரித்துப்போன ஈக்கள்
கெடுத்து நாற்றமடையச் செய்துவிடும்.
இதைப்போலவே, மிகுதியான ஞானத்தையும்
மரியாதையையும் முட்டாள்தனம் கெடுத்து
விடும்.
2ஞானமுள்ளவனின் எண்ணங்கள்
அவனைச் சரியான வழியில் நடத்திச்
செல்லும். முட்டாளின் எண்ணங்கள் அவ
னைத் தவறான வழியில் நடத்திச்செல்லும்.
3ஒரு முட்டாள் சாலையில் நடந்துபோகும்
போதுகூடத் தனது முட்டாள்தனத்தைக்
காட்டிக்கொண்டிருப்பான். எனவே ஒவ்
வொருவனும் அவனை முட்டாள் என்று
கண்டு கொள்வான்.
4எஜமான் உன்மீது கோபத்தோடு
இருக்கிறான் என்பதற்காக உனது வேலை
யை விட்டுவிடாதே. நீ அமைதியாகவும்
உதவியாகவும் இருந்தால் பெரிய தவறு
களைக்கூட நீ திருத்திக் கொள்ளலாம்.
5இந்த வாழ்வில் நான் சிலவற்றைப்
பார்த்திருக்கிறேன். ஆனால் அவை
சரியன்று. இது ஆள்பவர்கள் செய்கின்ற
தவறுகள். 6முக்கியமான பொறுப்புகள்
முட்டாள்களுக்குக் கொடுக்கப்படுகின்றன;
செல்வம் உள்ளவர்களோ முக்கியம் இல்லாத
பொறுப்புகளைப்பெறுகின்றனர். 7பிரபுக்கள்
வேலைக்காரர்களைப்போன்று பின்னால்
நடந்துபோகும்போது, வேலைக்காரர்கள்
குதிரையின்மீது சவாரி செய்வதைப் பார்த்
தேன்.

### ஒவ்வொரு வேலையும் அதற்குரிய ஆபத்துகளைக் கொண்டவை

8குழிதோண்டுகிற ஒருவன் அந்தக் குழிக்
குள்ளேயே விழுவான். சுவரை இடித்துத்
தள்ளுகிற ஒருவன் பாம்பு கடித்து மரிப்பான்.
9பெருங்கற்களை நகர்த்திக் கொண்டிருக்
கிறவன் அதனாலேயே காயப்படுவான்.
ஒருவன் மரங்களை வெட்டுவதும் ஆபத்
தானது. அம்மரம் அவன்மேலேயே விழுந்து
விடலாம்.
10ஆனால் ஞானம் அந்த வேலையையும்
எளிமைப்படுத்தும். மழுங்கலான கத்தியால்
வெட்டுவது கடினம். ஒருவன் அந்தக்
கத்தியைக் கூர்மைப்படுத்தினால் வேலை
எளிதாகும். ஞானமும் இதைப் போன்றது
தான்.
11ஒருவனுக்குப் பாம்புகளை எவ்வாறு
கட்டுப்படுத்துவது என்பது தெரிந்திருக்க
லாம். ஆனால் அவன் அருகில் இல்லாத
போது அந்தப் பாம்பு வேறு எவரையாவது
கடித்துவிடுவதால் அவனது திறமை பயனற்
றது. ஞானமும் இதைப் போன்றதுதான்.
12ஞானமுள்ளவனின் வார்த்தைகள்
பாராட்டைப் பெற்றுத் தரும். ஆனால்
முட்டாளின் வார்த்தைகள் அழிவைக்
கொண்டுவரும்.
13முட்டாள் முட்டாள்தனமானவற்றைக்
கூறத்தொடங்குவான். முடிவில் அவன்
பைத்தியக்காரத்தனமாகக் கூறுவான். 14ஒரு
முட்டாள் எப்பொழுதும் அவன் செய்யப்
போவதைப் பற்றியே பேசிக்கொண்
டிருப்பான். ஆனால் எதிர்காலத்தில் என்ன
நடக்கும் என்பது எவருக்கும் தெரியாது.
ஒருவனும் பின்னால் என்ன நடக்கும்
என்பதைக் கூறவில்லை.
15முட்டாள் தன் வீட்டுக்குரிய வழியை
அவ்வளவு சுறுசுறுப்பாக அறிந்து கொள்ள
மாட்டான். எனவே வாழ்நாள் முழுவதும்
கஷ்டப்பட்டு வேலைச் செய்வான்.

### உழைப்பின் மதிப்பு

16ஒரு அரசன் குழந்தையைப்போன்று
இருந்தால், அது நாட்டிற்குப் பெருங்
கேடாகும். அரசன் தன் காலத்தை உண்பதில்
கழித்தாலும் ஒரு நாட்டிற்குக் கேடுதான்.
17அரசன் நல்ல குடும்பத்திலிருந்து வந்த
வனாக இருந்தால் நாட்டுக்கு அது மிகவும்
நல்லது. ஆட்சியாளர்கள் குடிப்பதையும்
உண்பதையும் கட்டுப்படுத்திக் கொண்டால்,
நாட்டுக்கு நல்லதுதான். இத்தகையவர்கள்
உண்பதும் குடிப்பதும் பலம் பெறுவதற்
காகத்தானே ஒழிய குடித்து வெறிப்பதற்காக
அல்ல.
18ஒருவன் வேலை செய்வதற்குச் சோம்
பேறியாக இருந்தால் அவனது வீடு ஒழுக
ஆரம்பித்துவிடும். வீட்டுக்கூரை விழுந்து
விடும்.
19ஜனங்கள் உண்பதில் மகிழ்ச்சியடை
கிறார்கள். திராட்சைரசம் வாழ்வை
மகிழ்ச்சிக்குள்ளாக்குகிறது. ஆனால் பணம்
பல சிக்கல்களைத் தீர்க்கிறது.

### வீண் பேச்சு

20அரசனைப்பற்றிக் கெட்ட செய்திகளைக்
கூறாதே. அவனைப்பற்றிக் கெட்டதாகவும்
நினைக்காதே. செல்வந்தர்களைப்பற்றியும்

கெட்ட செய்திகளைக் கூறாதே. நீ உன்
வீட்டில் தனியாக இருந்தாலும் இவ்வாறு
கூறாதே. ஏனென்றால், சிறுபறவைகூட
பறந்துபோய் அந்தச் செய்தியை அவர்
களிடம் கூறிவிடும்.

### எதிர்காலத்தைத் தைரியமாக எதிர்கொள்

11 நீ எங்கு சென்றாலும் நல்லவற்றையே
செய். அப்போது நீ செய்த நன்மைகள்
உனக்கே திரும்ப வரும்.
2உனக்குரிய பொருட்களைப் பல்வேறு
நற்காரியங்களுக்காகப் பங்கிட்டுக் கொடு.
பூமியில் என்னென்ன கேடுகள் நடைபெறும்
என்று உனக்குத் தெரியாது.
3நீ சிலவற்றை உறுதிப்படுத்திக் கொள்ள
லாம். மேகம் மழையால் நிறைந்திருந்தால்,
அது பூமியில் தண்ணீரை ஊற்றும்.
மரமானது வடக்கே விழுந்தாலும் தெற்கே
விழுந்தாலும் விழுந்த இடத்திலேயே
கிடக்கும்.
4ஆனால் சிலவற்றைப்பற்றி உன்னால்
உறுதியாகக் கூறமுடியாது. நீ ஒரு வாய்ப்
பைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.
ஒருவன் சரியான பருவம் வரட்டுமென்று
காத்திருந்தால் அவனால் விதைக்க முடி
யாது. ஒவ்வொரு மேகத்தையும் பார்த்து
மழை வருமோ என்று அஞ்சுகிறவன்
ஒருபோதும் அறுவடை செய்ய மாட்டான்.
5காற்றின்வழி யாதென்று உனக்குத்
தெரியாது. தாயின் கருவிலே ஒரு குழந்தை
எவ்வாறு வளர்கின்றது என்பதும் உனக்குத்
தெரியாது. இதைப்போலவே, தேவன் என்ன
செய்வார் என்பதும் உனக்குத் தெரியாது.
அவர் எல்லாவற்றையும் நிறைவேற்றுவார்.
6எனவே அதிகாலையிலே நடுவை செய்.
மாலைவரை உன் வேலையை நிறுத்தாமல்
செய். ஏனென்றால், எது உன்னை செல்வந்த
னாக்கும் என்பதும் உனக்குத் தெரியாது.
நீ செய்கிற அனைத்துமே உனக்கு வெற்றி
யைத் தரலாம்.
7உயிரோடு இருப்பது நல்லது. சூரிய
வெளிச்சத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது
நல்லது. 8உன் வாழ்நாளில் உள்ள ஒவ்வொரு
நாளையும் நீ அனுபவிக்க வேண்டும்.
எவ்வளவுகாலம் வாழ்வாய் என்பதுபற்றிக்
கவலையில்லை. ஆனால் நீ மரித்துப்
போவாய் என்பதை நினைத்துக்கொள். நீ
உயிரோடிருக்கும் நாட்களைவிட மரித்த
பின் உள்ள நாட்களே மிக அதிகம். நீ
மரித்த பிறகு எதையும் செய்ய முடியாது.

### இளமையாக இருக்கும்போது தேவனுக்குச் சேவை செய்

9இளைஞர்களே! இளமையாய் இருக்கும்
போதே மகிழ்ச்சியாக இருங்கள் அனுபவி
யுங்கள். உங்கள் மனம் போனபடி இருங்கள்.
நீங்கள் விரும்புகிறவற்றைச் செய்யுங்கள்.
ஆனால் உங்கள் செயல்களையெல்லாம்
தேவன் நியாயந்தீர்ப்பார் என்பதை மறந்து
விடாதீர்கள். 10உங்கள் கோபம் உங்களைக்
கட்டுப்படுத்தும்படி விடாதீர்கள். உங்கள்
உடல் உங்களைப் பாவம்செய்யத் தூண்டும்
படி விடாதீர்கள். ஜனங்கள், இளமையாய்
இருக்கும்போது முட்டாள்தனமானவற்றை
யே செய்வார்கள்.

### முதுமையின் பிரச்சனைகள்

12 நீ இளமையாக இருக்கும்போது உன்
னைப் படைத்தவரை நினைவுகூரு.
முதுமையின் தீய நாட்கள் வருவதற்குமுன்
நினைத்துக்கொள். "நான் என் வாழ்வைப்
பயனற்றதாகக் கழித்துவிட்டேன்" என்று
நீ சொல்லப்போகும் ஆண்டுகளுக்கு முன்
நினைவுவை.
2நீ இளமையாக இருக்கும்போதே, சூரிய
னும் சந்திரனும் நட்சத்திரங்களும் உன்
கண்களுக்கு இருண்டுபோகும் காலம்
வருவதற்குமுன்னரே உன்னைப் படைத்த
வரை நினைத்துக்கொள். ஒரு புயலுக்குப்
பின் மீண்டும் மீண்டும் புயல் வருவது
போன்று உனக்குத் துன்பங்கள் வந்
துகொண்டிருக்கும்.
3அப்போது உனது கைகள் தம் பலத்தை
இழக்கும். உனது கால்கள் பலவீனமாகி
வளைந்துபோகும். உனது பற்கள் எல்லாம்
விழுந்துபோய் உணவை நீ தின்னமுடியாத
நிலைமை ஏற்படும். உன் கண்கள்
தெளிவாகப் பார்க்காது. 4உன் காதுகள்
கேட்க கஷ்டப்படும். வீதியில் உள்ள சப்தங்
களை உன் காதுகள் கேட்காது. தானியங்
களை அரைக்கிற கல் எந்திரம் கூட
உனக்கு அமைதியுடன் இருப்பதாகத் தோன்
றும். பெண்களின் பாடலை உன்னால்
கேட்கமுடியாது. பறவைகளின் பாடல்
ஒலிகூட உன்னை அதிகாலையில் எழுப்பி
விடும். ஏனென்றால் உன்னால் தூங்க
முடியாது.
5நீ மேடான இடங்களைக் கண்டு பயப்
படுவாய். உன் வழியில் எதிர்ப்படும் சிறிய
வற்றுக்குக்கூடப் பயப்படுவாய். வாதுமை
மரத்தின் பூக்களைப்போன்று உனது
தலைமயிர் வெளுத்துப்போகும். வெட்டுக்
கிளியைப் போன்று நீ உன்னையே
இழுத்துக் கொண்டுதிரிவாய். வாழ்வதற்கான
ஆசையை நீ இழந்து விடுவாய். பிறகு நீ
நிரந்தரமான கல்லறை வீட்டிற்குச் செல்வாய்.
துக்கம் கொண்டாடுகிறவர்கள் தெருவில் கூடி
உனது உடலை கல்லறைக்கு எடுத்துச்
செல்வார்கள்.

### மரணம்

6நீ இளமையாக இருக்கும்போதே
வெள்ளிக் கயிறுகள் கட்டுவிட்டு, பொன்
கிண்ணங்கள் நொறுங்கும் முன்னால் கிணற்
றிலே சால் உடைவதுபோல் உன் வாழ்வு

பயனற்றதாக போகும்முன்னால், கிணற்றிலே
மூடப்பட்டிருக்கும் கல் உடைந்து நொறுங்கி
விழுவதுபோல், உன் வாழ்வு பயனற்றுப்
போகும்முன்னால், உன்னைப் படைத்தவரை
நினைத்துக்கொள்.
7 உன் உடல் பூமியிலிருந்து வந்தது. நீ
மரித்துப் போகும்போது, உன் உடல்
திரும்பவும் மண்ணுக்குப் போகும். ஆனால்
உனது ஆவி தேவனிடமிருந்து வந்தது. நீ
மரித்துப் போகும்போது உனது ஆவி
திரும்பவும் தேவனிடமே போகும்.
8 இவ்வாறு அனைத்தும் பொருளற்றுப்
போகும். இவை அனைத்தும் காலம்
வீணானதிற்குச் சமம் என்று பிரசங்கி
கூறுகிறார்.

### முடிவுரை

9 பிரசங்கி ஞானமுடையவர். அவர் தனது
ஞானத்தைப் பயன்படுத்தி ஜனங்களுக்குக்
கற்றுக் கொடுத்தார். பிரசங்கி மிக கவன
மாகப் படித்து தன் பாடங்களைக் கற்றுத்தர
ஒழுங்கு படுத்தினார். 10 சரியான வார்த்தை
களைத் தேர்ந்தெடுக்க பிரசங்கி மிகக்கடுமை
யாக முயற்சி செய்தார். அவர் உண்மை
யானதும் செம்மையானதுமான போதனை
களை எழுதிவைத்தார்.
11 ஞானிகளின் வார்த்தைகள் மிருகங்களை
வழிநடத்தப் பயன்படும் கூர்மையான கோல்
களைப்போல இருக்கும். அவர்களின் போத
னைகள் என்றும் உடைந்துபோகாத உறுதி
யான ஆப்புகளைப் போன்றிருக்கும். வாழ்க்
கைக்கு வழிகாட்டும் இப்போதனைகள்
நம்பிக்கைக்கு உரியவை. இந்த ஞானப்
போதனைகள் எல்லாம், அதே மேய்ப்பனிட
மிருந்து (தேவன்) வந்தவை. 12 எனவே
மகனே! அப்போதனைகளைக் கற்றுக்கொள்.
ஆனால் மற்ற புத்தகங்களைப்பற்றி ஜாக்கிர
தையாக இரு. ஜனங்கள் எப்பொழுதும்
புத்தகங்களை எழுதிக்கொண்டிருக்கிறார்
கள். அதிகமாக வாசிப்பதும் உன்னைச்
சோர்வுக்குள்ளாக்கிவிடும்.
13-14 இப்போது, இந்தப் புத்தகத்தில் எழுதப்
பட்டுள்ளவற்றிலிருந்து நாம் கற்றுக்
கொள்ளக்கூடிய முக்கிய காரியம் என்ன?
ஒரு மனிதனால் செய்யக்கூடிய மிக முக்கிய
மான செயல் என்னவென்றால்; தேவனுக்கு
மரியாதை செய்து, அவரது கட்டளை
களுக்கு அடிபணிய வேண்டும். ஏனென்றால்,
தேவன் நாம் செய்யும் அனைத்தையும்,
இரகசியமான செயல்கள் உட்பட அறிந்திருக்
கிறார். அவருக்கு அனைத்து நற்செயல்
களைப்பற்றியும், அனைத்து தீய செயல்
களைப்பற்றியும் தெரியும். ஜனங்கள் செய்யும்
அனைத்தையும் அவர் நியாயம் தீர்ப்பார்.

# சாலொமோனின் உன்னதப்பாட்டு

1 இது சாலொமோனின் மிகவும் அற்புத
மான பாடல்

### பெண் தான் நேசிக்கிற மனிதனுக்கு

2 என்னை முத்தங்களால் மூடிவிடும்
திராட்சைரசத்தைவிட உமது அன்பு சிறந்
தது.
3 உமது வாசனைத் திரவியங்கள் அற்புத
மானவை, ஆனால் உமது நாமம் சிறந்த
வாசனைப் பொருட்களைவிட இனிமை
யானது. அதனால்தான் இளம்பெண்கள்
உம்மை விரும்புகின்றனர்.
4 என்னை உம்மோடு சேர்த்துக்கொள்ளும்.
நாம் ஓடிவிடுவோம். அரசன் என்னைத் தன்
அறைக்கு எடுத்துச்சென்றார்.

### எருசலேமின் பெண்கள் மனிதனுக்கு

நாங்கள் உம்மில் களிப்படைந்து மகிழ்வோம்.
திராட்சைரசத்தைவிட உமது அன்பு சிறந்
தது என்பதை மனதில்கொள்ளும். நல்ல
காரணங்களுக்காகவே இளம் பெண்கள்
உம்மை விரும்புகின்றனர்.

### அவள் பெண்களோடு பேசுகிறாள்

5 எருசலேமின் மகள்களே, கேதார் மற்றும்
சாலொமோனின் கூடாரங்களைப்போல
நான் கறுப்பாகவும் அழகாகவும் இருக்
கிறேன்.
6 நான் எவ்வளவு கறுப்பென்று பார்க்க
வேண்டாம். வெய்யில் என்னை இவ்வளவு
கறுப்பாக்கிவிட்டது. என் சகோதரர்கள்
என்மீது கோபம் அடைந்தார்கள். அவர்
களின் திராட்சைத் தோட்டங்களைக்
கவனிக்கும்படி என்னைக் கட்டாயப்வு
படுத்தினர். எனவே என்னை நானே
கவனித்துக்கொள்ள முடியவில்லை.

### அவள் அவனிடம் பேசுகிறாள்

7 நான் என் முழு ஆத்துமாவோடும்
உம்மை நேசிக்கிறேன். எனக்குச் சொல்லும்;
உமது மந்தையை எங்கே மேய விடுகிறீர்?
மதியானத்தில் அதனை எங்கே இளைப்
பாறச் செய்வீர்? நான் உம்மோடு இருக்க
வரவேண்டும். அல்லது உமது நண்பர்களின்
மந்தைகளைப் பராமரிப்பதற்கு அமர்த்தப்
பட்டபெண்ணைப்போல் இருப்பேன்.

### அவன் அவளோடு பேசுகிறான்

8 நீ எவ்வளவு அழகான பெண் என்ன
செய்யவேண்டுமென்று உனக்கு நிச்சயமாய்
தெரியும். மந்தையைப் பின்தொடர்ந்து போ
மேய்ப்பர்களின் கூடாரத்தினருகே இளம்
ஆட்டுக்குட்டிகளை மேயவிடு.
9 என் அன்பே! பார்வோனின் இரதங்களில்
பூண்டிய ஆண்குதிரைகளுக்குக் கிளர்ச்சி
யூட்டும் பெண்குதிரையைவிட நீ என்னைக்
கிளர்ச்சியூட்டி மகிழ்விக்கிறாய். அக்குதிரை
கள் தங்கள் முகத்தின் பக்கவாட்டிலும்
கழுத்தை சுற்றிலும் அலங்கரிக்கப்பட்டுள்
ளன.
10-11 பொன்னாலான தலையணியும் வெள்
ளியாலான கழுத்துமாலையும் உனக்குரிய
அலங்காரங்களாயிருக்கின்றன. உனது கன்
னங்கள் மிக அழகானவை. அவை பொன்
னால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. உனது
கழுத்தும் மிக அழகானது அது வெள்ளியால்
அலங்கரிக்கப்பட்டுள்ளது.

### அவள் பேசுகிறாள்

12 எனது வாசனைப்பொருளின் மண
மானது கட்டிலின்மேல் இருக்கும் அரசனை
யும் சென்றடைகிறது.
13 என் நேசர் என் கழுத்தை சுற்றிலும்
கிடந்து இரவில் மார்பகங்களுக்கிடையில்
இருக்கும் வெள்ளைப்போளப் பையைப்
போன்றவர்.
14 என் நேசர் எனக்கு எங்கேதி
திராட்சைத் தோட்டங்களில் முளைத்துள்ள
மருதோன்றிப் பூங்கொத்துப் போன்றவர்.

### அவன் பேசுகிறான்

15 என் அன்பே, நீ மிகவும் அழகானவள்
ஓ... நீ மிக அழகானவள் உனது கண்கள்
புறாக்களின் கண்களைப் போன்றவை.

### அவள் பேசுகிறாள்

16 என் நேசரே! நீரும் மிக அழகானவர்
நீர் மிகவும் கவர்ச்சியானவர். நமது படுக்கை
புதியதாகவும், மனதை மகிழ்விப்பதாகவும்
உள்ளது.
17 நமது வீட்டின் உத்திரங்கள் கேதுரு
மரங்களாலானவை. நமது மேல்வீடு தேவ
தாரு மரத்தாலானவை.

2 நான் சாரோனில் பூத்த ரோஜாபள்ளத்
தாக்குகளில் மலர்ந்த லீலி புஷ்பம்!

### அவன் பேசுகிறான்

2 எனது அன்பே! முட்களுக்கு இடையில்
லீலிபுஷ்பம்போல் நீ மற்ற பெண்களுக்
கிடையில் இருக்கிறாய்

### அவள் பேசுகிறாள்

3 என் அன்பரே! காட்டு மரங்களுக்
கிடையில் கிச்சிலி மரத்தைப்போல் மற்ற
ஆண்களுக்கிடையில் நீர் இருக்கிறீர்.

### அவள் பெண்களுடன் பேசுகிறாள்

எனது நேசரின் நிழலில் உட்கார்ந்து
கொண்டு நான் மகிழ்கிறேன். அவரின்
கனி எனது சுவைக்கு இனிப்பாக உள்ளது.
4 என் நேசர் என்னை விருந்து சாலைக்கு
அழைத்துப் போனார். என் மீதுள்ள நேசத்
தை வெளிப்படுத்துவதே அவரது நோக்கம்.
5 காய்ந்த திராட்சையினால் செய்யப்பட்ட
பலகாரத்தால் என்னைப் பலப்படுத்துங்கள்.
கிச்சிலிப்பழங்களால் எனக்குப் புத்துணர்ச்சி
ஊட்டுங்கள். ஏனென்றால் நான் நேசத்தி
னிமித்தம் பலவீனமாகியுள்ளேன்.
6 என் நேசரின் இடதுகை என் தலையின்
கீழுள்ளது. அவரது வலது கை என்னை
அணைத்துக் கொள்கிறது.
7 எருசலேமின் பெண்களே, நான்
தயாராகும்வரை, நீங்கள் என் அன்பை
விழிக்கச் செய்யாமலும், அல்லது எழுப்பா
மலும் இருக்க மான்கள்மீதும் காட்டு மான்
கள் மீதும் வாக்குறுதி கொடுங்கள்.

### அவள் மீண்டும் பேசுகிறாள்

8 நான் என் நேசரின் சத்தத்தைக் கேட்
டேன். இங்கே அது வந்தது. மலைகளுக்கு
மேல் துள்ளி வந்தது. குன்றுகளுக்குமேல்
சறுக்கி வந்தது.
9 என் நேசர் வெளிமான் அல்லது குட்டி
மானைப் போன்றவர். அவர் எங்கள்
சுவற்றுக்குப் பின்னால் நிற்பதையும், ஜன்
னல் திரையின் வழியாகப் பார்ப்பதையும்
நீங்கள் பார்க்கலாம்.
10 என் நேசர் என்னிடம், “எழுந்திரு
என் அன்பே! என் அழகே! வெளியே
போகலாம்.
11 பார். மழைக்காலம் போய்விட்டது.
மழை வந்து போனது.
12 பூமியில் பூக்கள் மலர்ந்துள்ளன. இது
பாடுவதற்குரிய காலம். கவனி, புறாக்கள்
திரும்பி விட்டன.
13 அத்தி மரங்களில் காய்கள் தோன்றி
யுள்ளன. திராட்சைக் கொடிகள் மணம்
வீசுவதை நுகர்ந்து பார் எழுந்திரு என்
அன்பே, அழகே நாம் வெளியே போகலாம்!
14 என் புறாவே நீ கன்மலையின் வெடிப்பு
களிலும் மலைகளிள் மறைவிடங்களிலும்
மறைந்துள்ளாய். உன்னைப் பார்க்க விடு,
உன் குரலைக் கேட்க விடு, உன் குரல்
மிக இனிமையானது. நீ மிக அழகானவள்”
என்று கூறுகிறார்.

### அவள் பெண்களுடன் பேசுகிறாள்

15 திராட்சை தோட்டங்களை அழிக்கிற
சிறு நரிகளையும், குழிநரிகளை எங்களுக்
காக பிடியுங்கள். நம் திராட்சைத் தோட்டங்
கள் இப்போது பூத்துள்ளன.
16 என் நேசர் எனக்குரியவர். நான்
அவருக்குரியவள்.
17 பகல் தனது கடைசி மூச்சை
சுவாசிக்கும் போதும் நிழல் சாயும் போதும்,
அவர் லீலி மலர்களுக்கிடையில் மேய்கிறார்.
என் அன்பரே திரும்பும், இரட்டைக் குன்று
களின் பகுதிகளிலுள்ள வெளி மான்களைப்
போலவும், குட்டிமான்களைப்போலவும்
இரும்.

### அவள் பேசுகிறாள்

3 இரவில் என் படுக்கைமேல் நான் நேசருக்
காகக் காத்திருக்கிறேன். நான் அவருக்
காக எதிர்பார்த்திருந்தேன். ஆனால் என்
னால் அவரைக்கண்டுபிடிக்க இயலவில்லை.
2 இப்போது எழுந்திருந்து நான் நகரைச்
சுற்றி வருவேன் அங்குள்ள வீதிகளிலும்
சந்துக்கங்களிலும் என் நேசரைத் தேடுவேன்.
நான் அவருக்காகக் காத்துக்கொண்டிருக்
கிறேன். ஆனால் என்னால் அவரைக்
காணமுடியவில்லை.
3 நகரக் நேசர்கள் என்னைக் கண்டார்கள்.
நான் அவர்களிடம், “எனது நேசரைக்
கண்டீர்களா?” எனக் கேட்டேன்.
4 காவலர்கள் என்னைவிட்டுப் போனதும்,
நான் என் நேசரைக் கண்டுபிடித்தேன்.
அவரைப் பற்றிக்கொண்டேன். என் தாய்
வீட்டில் என்னைப் பெற்றெடுத்த, என்
தாயின் அறைக்கு அவரை நான் அழைத்துச்
செல்லும்வரை நான் அவரைப் போக
விடவில்லை.

### அவள் பெண்களோடு பேசுகிறாள்

5 எருசலேமின் பெண்களே, நான் தயா
ராகும்வரை, என் அன்பை விழிக்கச் செய்து
எழுப்பாமலிருக்க மான்களின் மீதும் மான்
குட்டிகளின்மீதும் வாக்குறுதி கொடுங்கள்.

### அவனும் அவனது மணப்பெண்ணும்

6 பெரும் ஜனங்கள் கூட்டத்தோடு
வனாந்தரத்திலிருந்து வருகின்ற அந்தப்
பெண் யார்? மேகங்களின் கூட்டத்தைப்
போல வெள்ளைப்போளத்திலும், சாம்பிரா
ணியிலும், சகல நறுமணத்திலும் வரும்
புகைபோல அவர்களுக்குப் பின்னால் புழுதி
எழும்புகிறது.

[7]பார், சாலொமோனின் இந்தப் பல்லக்கு*
இஸ்ரவேலின் பலம் வாய்ந்த 60 வீரர்கள்
அதனைச் சுற்றிப் பாதுகாத்து நிற்கிறார்கள்.
[8]அவர்கள் அனைவரும் போர்ப் பயிற்சி
பெற்றவர்கள். அவர்களின் இடுப்பில்
வாள்கள் உள்ளன. இரவில் எந்த ஆபத்
துக்கும் தயாராக உள்ளனர்.
[9]சாலொமோன் அரசன் தனக்காக ஒரு
பல்லக்கு செய்திருக்கிறான். அதற்கான மரம்
லீபனோனில் இருந்து கொண்டுவரப்பட்டது.
[10]அதன் தூண்கள் வெள்ளியால் ஆனது.
அதன் இருக்கை நீலங்கலந்த சிவப்பு நிறமான
துணியால் மூடப்பட்டிருந்தது. எருசலேமின்
பெண்கள் அதன் உட்பகுதியை மிகப்பிரியத்
தோடு அன்பால் அலங்கரித்திருக்கிறார்கள்.
[11]சீயோனின் பெண்களே! வெளியே
வாருங்கள். சாலொமோன் அரசனைப்
பாருங்கள். திருமண நாளில் அவனது
தலைமேல் அவன் தாய் அணிவித்த கிரீடத்
தை பாருங்கள். அந்த நாளில் அவன் மிகுந்த
சந்தோஷமாய் இருந்தான்.

### அவன் அவளோடு பேசுகிறான்

4 என் அன்பே! நீ அழகானவள். ஓ நீ
அழகானவள். உன் முக்காட்டின் நடுவே
உனது கண்கள் புறாக்களின் கண்களைப்
போன்றுள்ளன. உன் நீண்ட கூந்தல்
கீலேயாத் மலைச்சரிவில் நடனமாடிக்
கொண்டிருக்கும் வெள்ளாட்டு மந்தைபோல
அசைந்து கொண்டிருக்கிறது.
[2]உன் பற்கள் வெள்ளைப் பெண்
ஆட்டுக்குட்டிகள் குளித்து கரையேறுவது
போன்றுள்ளன. அவை இரட்டைக் குட்டிகள்
போட்டு எந்தக் குட்டியையும் இழக்காத
ஆட்டினைப் போன்றுள்ளன.
[3]உனது உதடுகள் சிவந்த பட்டுக்
கயிற்றைப் போன்றுள்ளன. உனது வாய்
அழகானது. உனது கன்னங்கள் முக்காட்டின்
நடுவே வெட்டி வைக்கப்பட்ட மாதுளம்
பழம்போல் உள்ளன.
[4]உன் கழுத்து நீண்டு மென்மையாக
தாவீதின் கோபுரம்போல் உள்ளது.*
அக்கோபுரத்தின் சுவர்கள் ஆயிரம் வீரர்
களின் கேடயங்களால் அலங்கரிக்கப்
பட்டுள்ளது.
[5]உன் இரண்டு மார்பகங்களும் லீலி
மலர்களை மேயும் வெளிமானின் இரட்டைக்
குட்டிகளைப் போலுள்ளன.
[6]பகலின் கடைசி மூச்சு இருக்கும் போதும்
நிழல் சாயும் போதும், நான் வெள்ளைப்
போள மலைக்கும் சாம்பிராணி மலைக்கும்
போவேன்.
[7]என் அன்பே, முழுவதும் நீ அழகானவள்
உனக்கு எதிலும் குறைவில்லை.
[8]என்னோடு வா, என் மணமகளே
லீபனோனிலிருந்து என்னோடு வா. அமனா
மலையின் உச்சியிலிந்து வா. சேனீர்
எர்மோனின்சிகரங்களிலிருந்தும் வா சிங்கக்
குகைகளிலிருந்தும் சிறுத்தைகளினுடைய
மலைகளிலிருந்தும் வா.
[9]என் அன்பே!* என் மணமகளே!
என்னைக் கவர்ந்தவள் நீ உன் ஒரு
கண்ணால், உன் கழுத்திலுள்ள ஒரு நகை
யால் என் இதயத்தைக் கவர்ந்துவிட்டாய்.
[10]என் அன்பே, என் மணமகளே, உன்
அன்பு மிக அழகானது உன் அன்பு
திராட்சைரசத்தைவிடச் சிறந்தது. உன்
பரிமள தைலங்களின் மணம் சகல சுகந்த
வர்க்கங்களின் மணத்தை விடச் சிறந்தது.
[11]என் மணமகளே! உன் உதடுகளில்
தேன் ஒழுகுகிறது. உன் நாவின் அடியில்
பாலும் தேனும் ஊறுகிறது. உன் ஆடை
களின் மணம் லீபனோனின் மணம்போல்
உள்ளது.
[12]என் அன்பே! என் மணமகளே! நீ
சுத்தமானவள். நீ பூட்டப்பட்ட தோட்டத்
தைப் போன்றும், பூட்டிவைக்கப்பட்ட
குளத்தைப் போன்றும், அடைக்கப்பட்ட
நீரூற்றைப் போன்றும் இருக்கிறாய்.
[13]உன் பக்க உறுப்புகள் ஒரு தோட்டம்
மாதளஞ் செடிகளாலும் மற்ற பழமரங்
களாலும் நிறைந்துள்ளதுபோல் உள்ளன.
நளதம்,
[14]குங்குமம், வசம்பு, லவங்கம், தூபவர்க்க
மரங்களும் வெள்ளைபோளச் செடிகளும்
சந்தன மரங்களும் சகலவித மணப்பொருள்
செடிகளும் உள்ள தோட்டம் போலுள்ளன.
[15]நீ தோட்டத்து நீரூற்று போன்றவள்
சுத்தமான தண்ணீருள்ள கிணறும், லீப
னோன் மலையிலிருந்து ஓடிவரும் ஓடை
களும் அதிலே உள்ளன.

### அவள் பேசுகிறாள்

[16]வாடைக் காற்றே எழும்பு தென்றலே
வா என் தோட்டத்தில் வீசு உன் இனிய
மணத்தைப் பரப்பு. என் அன்பரைத் தன்
தோட்டத்திற்குள் நுழையவிடு. அவர் இனிய
பழங்களைச் சாப்பிடட்டும்.

### அவன் பேசுகிறான்

5 என் அன்பே! என் மணமகளே! நான்
என் தோட்டத்திற்குள் நுழைந்தேன் நான்
என் வெள்ளைப் போளங்களையுரம் கந்த

---

**பல்லக்கு** செல்வந்தர்கள் பயணம் செய்யும் இரதம்.

**உன் கழுத்து ... கோபுரம்போல் உள்ளது** அல்லது "உனது கழுத்து கற்களின் வரிசையால் கட்டப்பட்டது. தாவீதின் கோபுரம்போல் உள்ளது" அவள் பல அபரனங்கள் கழுத்தில் அணிந்திருக்காறாள். அவை ஒன்றின் மேல் ஒன்றாக, கோபுரத்தில் உள்ள கல்வரிசைபோல் உள்ளது என்பது இதன் பொருளாகும்.

**அன்பே** எழுத்தின் பிரகாரமாக, "சகோதரி" எனப் பொருள்படும்.

வர்க்கங்களையும் சேகரித்தேன். நான் எனது
தேனை தேன் கூட்டோடு தின்றேன் நான்
எனது திராட்சைரசத்தையும், பாலையும்
குடித்தேன்.

## பெண்கள் அன்பர்களிடம் பேசுகிறார்கள்

அன்பர்களே! உண்ணுங்கள், குடியுங்கள்
அன்பின் போதை நிறைந்தவர்களாய் இருங்
கள்.

## அவள் பேசுகிறாள்

2 நான் தூங்குகிறேன் ஆனால் என் இதயம்
விழித்திருக்கிறது. என் நேசர் தட்டுவதைக்
நான் கேட்கிறேன். "எனக்காகத் திற என்
இனியவளே என் அன்பே என் புறாவே,
என் மாசற்ற அழகியே என் தலை பனி
யால் நனைந்துவிட்டது. என் தலைமயிர்
இரவின் தூறலால் நனைந்துபோனது."
3 "நான் என் ஆடையைக் கழற்றிப்போட்
டேன் நான் அதனை மீண்டும் அணிந்துக்
கொள்ள விரும்பவில்லை. நான் என் பாதங்
களைக் கழுவியிருக்கிறேன். அது மீண்டும்
அழுக்காவதை நான் விரும்பவில்லை"
4 ஆனால் என் நேசர் தனது கையை
கதவுத்துவாரத்தின் வழியாக நீட்டினார்.
நான் அவருக்காக வருத்தப்பட்டேன்.
5 என் நேசருக்காகக் கதவைத் திறக்க
எழுந்தேன். என் கையிலிருந்து வெள்ளைப்
போளமும் என் விரல்களிலிருந்து வெள்
ளைப் போளமும் வடிந்து கதவின் கைப்
பிடிமீது வழிந்தது.
6 என் நேசருக்காகத் திறந்தேன் ஆனால்
அவர் திரும்பிப் போய்விட்டார், அவர்
இல்லை. அவர் வந்துபோனபோது நான்
ஏறக்குறைய மரித்தவள் போலானேன். நான்
அவரைத் தேடினேன் ஆனால் கண்டுபிடிக்க
முடியவில்லை. நான் அவரை அழைத்தேன்
ஆனால் அவர் எனக்குப் பதில் சொல்ல
வில்லை.
7 நகரக் காவலர்கள் என்னைப் பார்த்
தார்கள். அவர்கள் என்னை அடித்துக்
காயப்படுத்தினர். அந்தச் சுவரின்மேல் நின்ற
காவலர்கள் என் முக்காட்டை எடுத்துக்
கொண்டனர்.
8 எருசலேமின் பெண்களே! நான் உங்
களுக்குக் கூறுகிறேன் என் நேசரைக்
கண்டால், நான் நேசத்தால் மெலிந்து
கொண்டிருக்கிறேன் எனக் கூறுங்கள்.

## எருசலேமின் பெண்கள் அவளுக்குப் பதில் கூறுகிறார்கள்

9 அழகான பெண்ணே, உன் அன்பர் மற்ற
நேசர்களிலிருந்து எவ்வாறு வேறுபடு
கிறார்? உன் நேசர் மற்றவர்களைவிடச்
சிறந்தவரா? எனவேதான் நீ எங்களிடம் இந்த
வாக்குறுதியைக் கேட்கிறாயா?

## எருசலேம் பெண்களுக்கு அவள் பதில் கூறுகிறாள்

10 என் நேசர் சிவப்பானவர், வெண்மை
யானவர். பத்தாயிரம் பேரிலும் தனிச்
சிறப்பானவர்.
11 அவரது தலை சுத்தமான தங்கத்தைப்
போன்றிருக்கும். அவரது தலைமுடி
சுருளுடையதாயிருக்கும். அது காகத்தைப்
போன்று கறுப்பாயிருக்கும்.
12 அவரது கண்கள் நீரோடைகளின் அருகி
லுள்ள புறாவின் கண்களைப் போலிருக்கும்,
பால் நிரம்பிய குளத்திலுள்ள புறாக்களைப்
போலவும், பதிக்கப்பட்ட நகைபோலவும்
இருக்கும்.
13 அவரது கன்னங்கள் மணம்மிகுந்த
வாசனைப் பூக்கள் நிறைந்த தோட்டம்
போலிருக்கும் அவரது உதடுகள் லீலி
மலர்களைப்போல் இருக்கும் அதிலிருந்து
வெள்ளைப்போளம் வடியும்.
14 அவரது கைகள் படிகப் பச்சை
நகைகளால் அலங்கரிக்கப்பட்டது போலி
ருக்கும். அவரது உடல் மென்மையான தந்தம்.
இந்திரநீல இரத்தினங்கள் இழைத்தது
போன்று இருக்கும்.
15 அவரது கால்கள் பளிங்குத் தூண்கள்
பொன் பீடத்தில் இருப்பதுபோல் இருக்கும்
அவர் நின்றால் லீபனோனில் நிற்கும் கேதுரு
மரம்போல் இருக்கும்.
16 ஆம், எருசலேமின் பெண்களே! என்
நேசர் மிகவும் விரும்பத்தக்கவர். அவரது
வாய் இனிமையுள்ள அனைத்திலும் இனிமை
யானது. இப்படிப்பட்டவரே என் நேசர்
இத்தகையவரே என் நேசர்.

## எருசலேம் பெண்கள் அவளிடம் பேசுகிறார்கள்

6 அழகான பெண்ணே உன் நேசர் எங்கே
போனார்? உன் நேசர் எந்த வழியாகப்
போனார்? எங்களிடம் சொல், அவரைத் தேட
உனக்கு உதவிசெய்வோம்.

## அவள் எருசலேம் பெண்களுக்கு பதிலளிக்கிறாள்

2 என் நேசர் கந்தவர்க்கப் பூக்களுக்காக
தோட்டத்தில் மேய லீலி மலர்களைக் கொய்ய
தன் தோட்டத்திற்குப் போனார்.
3 நான் அவருக்குரியவள் அவர் எனக்
குரியவர். அவர் லீலிகளை மேய்பவர்.

## அவன் அவளிடம் பேசுகிறான்

4 என் அன்பே நீ திர்சாவைப்போன்று
அழகானவள் எருசலேமைப்போன்று இனி
மையானவள். நீ கம்பீரமான நகரங்களைப்
போன்றவள்.
5 என்னைப் பாராதே உன் கண்கள்
என்னை வென்றுவிட்டன. உன் கூந்தல்
கீலேயாத் மலைச்சரிவில் நடனமாடும் வெள்

*ளாட்டு மந்தையைப்போல் அசைந்து
கொண்டிருக்கிறது.*
6 *உன் பற்கள் வெள்ளைப் பெண் ஆட்டுக்
குட்டிகள் குளித்து கரையேறுவது போலுள்
ளன. அவை இரட்டைக் குட்டிகள் போட்டு,
எந்தக் குட்டியையும் இழக்காத ஆட்டினைப்
போலுள்ளது.*
7 *உனது கன்னங்கள் முக்காட்டின் நடுவே
வெட்டிவைக்கப்பட்ட மாதளம் பழங்களைப்
போன்றுள்ளன.*
8 *அறுபது ராணிகள் இருக்கலாம் எண்பது
மறுமனையாட்டிகள் இருக்கலாம். எண்ண
முடியாத அளவிற்கு இளம் பெண்கள் இருக்க
லாம்.*
9 *ஆனால் எனக்காக ஒரே ஒரு பெண்ணே
இருக்கிறாள், எனது புறாவே நீயே எனது
பரிபூரணமானவள். அவளே தன் தாய்க்கு
மிகவும் பிரியமான மகள், அவளே தன்னைப்
பெற்றவளால் மிகவும் நேசிக்கப்படுபவள்.
இளம் பெண்கள் அவளைப் பார்த்து
பாராட்டுகிறார்கள். ராணிகளும் மறுமனை
யாட்டிகளும் அவளைப் பாராட்டுகிறார்கள்.*

### பெண்கள் அவளைப் பாராட்டுகிறார்கள்

10 *யார் இந்த இளம் பெண்? விடியலின்
வானம்போல் பிரகாசிக்கிறாள். நிலவைப்
போல் அழகாக இருக்கிறாள் சூரியனைப்
போல் ஒளி வீசுகிறாள், வானத்தில் உள்ள
படைகளைப்போல்* கம்பீரமாக விளங்கு
கிறாள்.*

### அவள் பேசுகிறாள்

11 *பள்ளத்தாக்குகளில் பழுத்த கனிகளை
யும், திராட்சைத் தோட்டத்தில் தோன்றிய
துளிர்களையும் மதளஞ்செடிகளால் மலர்ந்த
பூக்களையும் காண, நான் வாதுமைத்
தோட்டத்திற்குப் போனேன்.*
12 *நான் உணர்ந்து கொள்வதற்கு முன்பே,
என் ஆத்துமா என்னை அரசர்களின்
இரதங்களுக்குள் அமரச்செய்கிறது.*

### எருசலேம் பெண்கள் அவளை அழைக்கிறார்கள்

13 *திரும்பிவா சூலமித்தியே திரும்பிவா,
திரும்பிவா, திரும்பிவா; அப்பொழுதுதான்
உன்னைப் பார்க்க முடியும் சூலமித்தியை
நீங்கள் ஏன் பார்க்கிறீர்கள்? அவள் மகான
னம் நடனம்* ஆடுகிறாள்.*

### அவன் அவளது அழகைப் புகழ்கிறான்

7 *இளவரசியே! மிதியடியணிந்த உன்
பாதங்கள் மிக அழகாயுள்ளன. உன்
இடுப்பின் வளைவுகள் ஒரு தொழில் கலைஞ
னால் செய்யப்பட்ட நகை போன்றுள்ளது.*
2 *உன் தொப்புள் திராட்சைரசம் நிறைந்த
வட்டமான கிண்ணம்போல* உள்ளது. உன்
வயிறானது லீலிமலர்கள் சூழ்ந்த கோதுமைக்
குவியல் போன்றுள்ளது.*
3 *உன் இரு மார்பகங்களும் வெளிமானின்
இரு குட்டிகள் போன்றுள்ளன.*
4 *உன் கழுத்து தந்தக் கோபுரம் போலுள்
ளது. உன் கண்கள் பத்ரபீம் வாயிலருகே
உள்ள எஸ்போன் குளங்கள்போல உள்ளன.
உன் மூக்கு தமஸ்குவின் திசையை நோக்கி
யுள்ள லீபனோனின் கோபுரம் போன்
றுள்ளது.*
5 *உன் தலையானது கர்மேல் மலையைப்
போன்றுள்ளது. உன் தலைமுடி பட்டு
போன்றுள்ளது. உன் நீண்ட அசையும்
கூந்தலானது அரசனையும் சிறைபிடிக்க
வல்லது.*
6 *நீ மிகவும் அழகானவள். நீ மனதிற்கு
மகிழ்ச்சியைத் தருபவள். நீ அன்பான,
மகிழ்வளிக்கிற இளம்கன்னி.*
7 *நீ பனை மரத்தைப்போன்று உயர
மானவள். உன் மார்பகங்கள் அம்மரத்தில்
உள்ள கனிகளைப் போன்றுள்ளன.*
8 *நான் இம்மரத்தில் ஏற விரும்புகிறேன்
இதன் கிளைகளைப் பற்றிக்கொள்வேன்.
இப்போது உன் மார்பகங்கள் திராட்சைக்
குலைகளைப்போலவும், உன் சுவாசத்தின்
வாசனை கிச்சிலிப் பழங்கள்போலவும்
இருப்பதாக.*
9 *உன் வாய் என் அன்பிற்குள் நேராக
இறங்கும் தூங்குகிறவர்களின் உதடுகளிலும்
இறங்கும் சிறந்த திராட்சைரசத்தைப் போன்
றிருப்பதாக.*

### அவள் அவனோடு பேசுகிறாள்

10 *நான் என் நேசருக்கு உரியவள் அவ
ருக்கு நான் தேவை.*
11 *என் நேசரே வாரும் வயல்வெளி
களுக்குப் போவோம் இரவில் கிராமங்களில்
தங்குவோம்.*
12 *அதிகாலையில் எழுந்து திராட்சைத்
தோட்டங்களுக்குப் போவோம். திராட்சைக்
கொடிகள் பூப்பதைப் பார்ப்போம். மாதளஞ்
செடிகள் பூத்ததையும் பார்ப்போம். அங்கே
என் நேசத்தை உமக்குத் தருவேன்.*

---

**வானத்தில் உள்ள படைகளைப் போல்** *வானத்தில் இரவில் தென்படும் நட்சத்திரக் கூட்டங்கள் இங்கு வானத்தில் உள்ள படைகள் என்று குறிப்பிடப்படுகின்றன.*

**மகானனம் நடனம்** *அல்லது “வெற்றி நடனம்” அல்லது “இரு அணியினரின் நடனம்”*

**வட்டமான கிண்ணம்** *அல்லது “வளைந்த கோப்பை” இது கல் கோப்பை. இது கடைசல் எந்திரத்தில் செய்யப்பட்டு திராட்சைரசத்தைக் கலக்குவதற்கு கிண்ணத்தில் ஊற்றுவதற்கு முன் பயன்படுத்தினார்கள். இது வளர்பிறை, பிறை சந்திரனைப்போன்று இருந்தது எனப் பொருள் படும்.*

[13]தூதாயீம் பழத்தின் மணம் வீசும்
எல்லாவகைப் பூக்களும் நம் வாசலருகில்
உள்ளன. ஆம் என் அன்பரே உமக்காக
நான் பல மகிழ்ச்சியான பொருட்களை
சேர்த்து வைத்திருக்கிறேன். அவை பழை
யதும் புதியதுமாக அருமையாக உள்ளன.
8 நீர் என் தாயிடம் பால் குடித்த என்
இளைய சகோதரனைப்போன்று இருந்
தால் நான் உம்மை வெளியில் சந்திக்கும்
போது உம்மை முத்தமிட முடியும். இதனைத்
தவறு என்று எவரும் சொல்லமாட்டார்கள்.
[2]நான் உம்மை என் தாயின் வீட்டிற்கு
அழைத்துச் செல்வேன். என்தாய் எனக்குக்
கற்பித்த அறைக்கும் அழைத்துச் செல்வேன்.
நான் உமக்கு மாதளம் பழரசத்தைக் குடிக்கக்
கொடுப்பேன். கந்தவர்க்கமிட்ட திராட்சை
ரசத்தையும் கொடுப்பேன்.

### அவள் பெண்களிடம் பேசுகிறாள்

[3]அவரது இடது கை என் தலைக்குக்கீழ்
இருக்கும் அவரது வலது கை என்னை
அணைத்துக் கொள்ளும்.
[4]எருசலேம் பெண்களே! வாக்குறுதி
கொடுங்கள். நான் தயாராகும்வரை என்
அன்பை விழிக்கச்செய்து எழுப்பவேண்
டாம்.

### எருசலேம் பெண்கள் பேசுகிறார்கள்

[5]இந்தப் பெண் யார்? தன் நேசரின்மேல்
சார்ந்துகொண்டு வனாந்திரத்திலிருந்து வரு
கிறாள்.

### அவள் அவனிடம் பேசுகிறாள்

கிச்சிலி மரத்தடியில் உம்மை எழுப்பி
னேன், அங்கே உம்மை உமது தாய்
பெற்றாள், அங்கே உம் தாய் உம்மை
துன்பப்பட்டு பெற்றாள்.
[6]என்னை உமதருகில் வைத்துக்
கொள்ளும், உம் இதயத்தின்மேல் ஒரு
முத்திரையைப்போல் கையில் அணிந்துக்
கொள்ளும் ஒரு முத்திரை மோதிரத்தைப்
போன்று. நேசமானது மரணத்தைப்போன்று
வலிமையானது. ஆசையானது கல்லறை
யைப்போன்று வலிமையானது அதன்
பொறிகள் ஜீவாலை ஆகின்றன. பின் அது
பெரிய நெருப்பாக வளர்கின்றது.
[7]ஒரு வெள்ளம் அன்பை அழிக்க
முடியாது ஒரு ஆறு அன்பை இழுத்துச்
செல்ல முடியாது. ஒருவன் தன்னுடைய
எல்லா சொத்துக்களையும் அன்பிற்காகக்
கொடுத்துவிட்டால் ஜனங்கள் அவனை
இழிவாகவோ அல்லது மட்டமாகவோ கருது
வார்களா?

### அவளது சகோதரர்கள் பேசுகிறார்கள்

[8]எங்களுக்கு ஒரு சிறிய சகோதரி
இருக்கிறாள் அவளது மார்பகங்கள் இன்னும்
வளரவில்லை ஒருவன் அவனை மணக்க
வரும்போது எங்கள் சகோதரிக்காக நாங்கள்
என்ன செய்வோம்?
[9]அவள் ஒருமதில் சுவராக இருந்தால்
நாங்கள் அதைச்சுற்றி வெள்ளிக் கோட்டை
யைக் கட்டுவோம். அவள் ஒரு கதவாக
இருந்தால் அவளைச் சுற்றி கேதுருமரப்
பலகைகளை இணைப்போம்.

### அவள் சகோதரர்களுக்குப் பதில் கூறுகிறாள்

[10]நான் ஒரு சுவர் எனது மார்பகங்களே
என்னுடைய கோபுரங்கள். அவர் என்னில்
திருப்தி அடைகிறார்.

### அவன் பேசுகிறான்

[11]சாலொமோனுக்குப் பாகால் ஆமோனில்
ஒரு திராட்சைத் தோட்டம் இருந்தது.
அத்தோட்டத்தின் காவலுக்காக அவன்
சிலரை நியமித்தான். ஒவ்வொருவரும் 1,000
வெள்ளிகாசு பெறுமான திராட்சைப் பழங்
களைக் கொண்டுவந்தான்.
[12]சாலொமோனே, நீர் உமது 1,000
வெள்ளிகாசுகளையும் வைத்துக் கொள்ள
லாம். ஒவ்வொருவனுக்கும் அவன் கொண்டு
வந்த திராட்சைகளுக்காகக் 200 வெள்ளிகள்
கொடும் ஆனால் எனது சொந்தத்
திராட்சைத் தோட்டத்தை நானே கவனித்துக்
கொள்வேன்.

### அவன் அவளிடம் பேசுகிறான்

[13]தோட்டத்தில் அமர்ந்திருக்கிறவளே, உன்
குரலை நண்பர்கள் கேட்கின்றார்கள் நானும்
அதைக் கேட்க விடு.

### அவள் அவனிடம் பேசுகிறாள்

[14]என் நேசரே வேகமாக வாரும் மணப்
பொருட்கள் நிறைந்த மலைகளின்மேல்
திரியும் வெளிமானைப் போலவும், மரை
களின் குட்டிகளைப் போலவும் இரும்.

# ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகம்

1 ஆமோத்சின் மகனான ஏசாயாவின் தரி
சனம்.* தேவன் யூதேயாவுக்கும், எருச
லேமுக்கும் என்ன நிகழப்போகிறது என்
பதைப் பற்றி ஏசாயாவுக்குக் காட்டினார்.
யூதாவின் ராஜாக்களாகிய உசியா,*
யோதாம்,* ஆகாஸ்,* எசேக்கியா* இவர்
களின் காலங்களில் ஏசாயா இவற்றைப்
பார்த்தான்.

### தன் ஜனங்களுக்கு எதிரான தேவனுடைய வழக்கு

2 பரலோகமே, பூமியே, கர்த்தர் சொல்லு
வதைக் கேளுங்கள்! கர்த்தர் கூறுகிறார்:
“நான் எனது பிள்ளைகளை வளர்த்தேன்.
நான் எனது பிள்ளைகள் வளர உதவினேன்.
ஆனால் எனது பிள்ளைகள் எனக்கு எதிரா
னார்கள்.

3 ஒரு பசு தன் எஜமானனை அறியும்.
ஒரு கழுதை தன் எஜமானன் தனக்கு
உணவிடும் இடத்தையும் அறியும். ஆனால்
எனது இஸ்ரவேல் ஜனங்கள் என்னை
அறியார்கள். என் ஜனங்கள் என்னை
புரிந்துகொள்ளவில்லை.”

4 இஸ்ரவேல் நாடு முழுவதும் குற்றங்களால்
நிரம்யிற்று. இக்குற்றங்கள் ஜனங்கள் சுமக்
கத்தக்க கனமிக்க பாரமாயிற்று. அந்த
ஜனங்கள் பொல்லாத குடும்பத்தில் பிறந்த
கெட்ட பிள்ளைகளைப்போல் இருக்கிறார்
கள். அவர்கள் கர்த்தரை விட்டு விலகி
னார்கள். அவர்கள் இஸ்ரவேலின் பரிசுத்
தமான தேவனை அவமானப்படுத்திவிட்ட
னர். அவர்கள் அவரை விட்டுப்போய்
அயலானைப்போல் நடந்துகொண்டார்கள்.

5 தேவன் கூறுகிறார்: “ஏன் என் ஜனங்
களாகிய உங்களைத் தொடர்ந்து தண்டித்து
வருகிறேன்? நான் உங்களைத் தண்டித்தேன்,
ஆனால் நீங்களோ மாறவில்லை. நீங்கள்
எனக்கு எதிராகத் தொடர்ந்து கலகம்
செய்து வருகிறீர்கள். இப்பொழுது ஒவ்
வொரு தலையும் இதயமும் நோயுற்று
விட்டது. 6 உங்கள் காலடியில் இருந்து
உச்சந்தலைவரை உங்களது உடலின்
ஒவ்வொரு பாகமும் காயமடைந்திருக்கிறது,
வெட்டுப்பட்டுள்ளது, புண்ணாகியுள்ளது.
நீங்கள் உங்கள் புண்களுக்காகக் கவலைப்பட
வில்லை. உங்கள் காயங்கள் சுத்தப்படுத்தப்
படவில்லை, மூடிவைக்கப்படவில்லை.

7 “உங்கள் நிலங்கள் அழிக்கப்பட்டன.
உங்கள் நகரங்கள் நெருப்பால் எரிக்கப்
பட்டன. உங்கள் பகைவர்கள் உங்கள்
நிலங்களைக் கைப்பற்றிக் கொண்டனர்.
படைகளால் அழிக்கப்பட்ட நாடு போன்று
உங்கள் நிலங்கள் அழிக்கப்பட்டன. 8 சீயோ
னின் மகள் (எருசலேம்), இப்பொழுது,
திராட்சைத் தோட்டத்தில் விடப்பட்ட
காலியான கூடாரம் போல் இருக்கின்றாள்.
அது வெள்ளரித்தோட்டத்தில் உள்ள ஒரு
பழைய வீடு போலவும் காணப்படுகின்றது.
அது பகைவர்களால் தோற்கடிக்கப்பட்ட
ஒரு நகரம்போல் உள்ளது.” 9 இது
உண்மையானாலும், சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் சில ஜனங்களைத் தொடர்ந்து வாழ
அனுமதித்தார். நாம் சோதோம் மற்றும்
கொமோரா* போல முழுவதுமாக அழிக்
கப்படவில்லை.

### உண்மையான சேவையைத் தேவன் விரும்புகிறார்

10 சோதோமின் தலைவர்களாகிய நீங்கள்
கர்த்தர் சொல்லும் செய்தியைக் கேளுங்கள்!
கொமோராவின் ஜனங்களாகிய நீங்கள்,
தேவன் சொல்லும் போதனைகளைக் கேளுங்
கள். 11 தேவன் கூறுகிறார்: “நீங்கள் ஏன்
தொடர்ந்து எனக்கு இத்தனை பலி* கொடுக்
கிறீர்கள்? நான் போதுமான அளவிற்கு
உங்களிடமிருந்து ஆடு, காளை, ஆட்டுக்
குட்டிகள், கடாக்கள் ஆகியவற்றின் கொழுப்
பின் பலிகளையும் பெற்றுவிட்டேன்.

---

**தரிசனம்** கனவு போன்றது. தேவன் அவரது சிறப்பான ஜனங்களுக்கு அவர்கள் பார்க்கவும் கேட்கவும் காட்சி தந்து செய்தியைத் தருவார்.

**உசியா** யூதாவின் அரசன் கி.மு. 767-740ல் ஆண்டான்.

**யோதாம்** யூதாவின் அரசன் கி.மு. 740-735ல் ஆண்டான்.

**ஆகாஸ்** யூதாவின் அரசன் கி.மு. 735-727ல் ஆண்டான்.

**எசேக்கியா** யூதாவின் அரசன் கி.மு. 727-687ல் ஆண்டான்.

**சோதோம், கொமோரா** தேவனால் அழிக்கப்பட்ட இரண்டு நகரங்கள். ஏனென்றால், ஜனங்கள் அவ்வளவு தீயவர்களாக இருந்தனர்.

**பலிகள்** தேவனுக்கான காணிக்கைகள். சில நேரங்களில் இவை சிறப்பான வகை மிருகங்களாக இருக்கும். இவை கொல்லப்பட்டு பலி பீடத்தில் எரிக்கபடும்.

[12]“என்னைச சந்திக்க வரும்பொழுது
சகலத்தையும் என் பிரகாரத்தில் மிதிக்கிறீர்
கள். இப்படி செய்யும்படி உங்களுக்குச்
சொன்னது யார்?
[13]“தொடர்ந்து எனக்குப் பயனற்ற பலி
களைக் கொண்டுவர வேண்டாம். நீங்கள்
எனக்குத் தருகிற நறுமணப் பொருட்களை*
நான் வெறுக்கிறேன். புது மாதப்பிறப்பின்
நாளில்,* ஓய்வுநாளில்,* விடுமுறை நாட்
களில் நீங்கள் கொடுக்கும் விருந்தை
என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.
பரிசுத்த கூட்டங்களில் நீங்கள் செய்யும்
தீமைகளை நான் வெறுக்கிறேன். [14]நான்
முழுமையாக உங்கள் மாதக்கூட்டங்களையும்
பண்டிகைகளையும் வெறுக்கிறேன். அவை
எனக்குப் பெரும் பாரமாக உள்ளன.
அப்பாரங்களைத் தாங்கி நான் சோர்ந்து
போனேன்.
[15]“நீங்கள் உங்கள் கைகளை உயர்த்தி
என்னிடம் ஜெபம் செய்ய வருகிறீர்கள்.
ஆனால், நான் உங்களை பார்க்க மறுக்
கிறேன். நீங்கள் அதிகமதிகமாய் ஜெபங்களை
சொல்கிறீர்கள். ஆனால் நான் உங்களைக்
கவனிக்க மறுக்கிறேன். ஏனென்றால், உங்
கள் கைகள் இரத்தத்தால் கறைப்பட்டுள்ளன.
[16]“உங்களைக் கழுவுங்கள். உங்களைச்
சுத்தப்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் செய்
யும் தீய செயல்களை நிறுத்துங்கள். நான்
அத்தீயச் செயல்களைப் பார்க்க விரும்பவில்
லை. தவறுகளை நிறுத்துங்கள்! [17]நல்லவற்
றைச் செய்யக் கற்றுக்கொள்ளுங்கள். அடுத்த
வர்களோடு நேர்மையாக இருங்கள். மற்ற
வர்களைத் துன்புறுத்துகிறவர்களைத் தண்டி
யுங்கள். பெற்றோர் இல்லாத பிள்ளைகளுக்கு
உதவுங்கள். கணவனை இழந்த விதவைப்
பெண்களுக்கு உதவுங்கள்.”
[18]கர்த்தர் மேலும், “வாருங்கள், நாம்
இதைப்பற்றி விவாதிப்போம். உங்களது
பாவங்கள் இரத்தினக் கம்பளம்* போல்
சிவப்பாக இருக்கிறது. ஆனால், அவைகள்
கழுவப்பட்டு நீங்கள் பனிபோன்று வெண்
மையாகலாம். உங்கள் பாவங்கள் பிரகாச
மான சிவப்பாக இருக்கின்றன, ஆனால்,
நீங்கள் வெள்ளை கம்பளியைப் போன்று
வெண்மையாக முடியும்.
[19]“நான் சொல்கிறவற்றை நீங்கள் கவனிப்
பீர்களேயானால், இந்நாட்டிலிருந்து நன்மை
களைப் பெறுவீர்கள். [20]ஆனால் நீங்கள்
கவனிக்க மறுத்தால் எனக்கு எதிரா வீர்கள்.
உங்கள் பகைவர்கள் உங்களை
அழிப்பார்கள்” என்றார்.
கர்த்தர் தாமே இவற்றைக் கூறினார்.

### எருசலேம்
### தேவனுக்கு உண்மையாக இல்லை

[21]தேவன் கூறுகிறார்: “எருசலேமைப்
பாருங்கள். அது என்னை நம்பி என்னைப்
பின்பற்றிய நகரமாக இருந்தது. அது இன்று
ஒரு வேசியைப்போன்று மாறக் காரணம்
என்ன? இப்போது அவள் என்னைப்
பினபற்றவில்லை. எருசலேம் முழுவதும்
நீதி குடியிருந்தது. எருசலேமில் வாழ்கின்ற
ஜனங்கள் தேவனுடைய விருப்பம்போல
வாழ வேண்டும். ஆனால் இப்போது, அதில்
கொலைகாரர்கள் வாழ்கிறார்கள்.”
[22]“நன்மை என்பது வெள்ளியைப்போன்
றது. ஆனால் உங்கள் வெள்ளி இப்போது
பயனற்றதாகிவிட்டது. தண்ணீருடன் கலந்த
திராட்சைரசத்தைப்போல உங்களுடைய
0நன்மை இப்போது பலன் குறைந்து போ
யிற்று. [23]உங்கள் அதிபதிகளும் நியாயா
திபதிகளும் கலகக்காரர்களாகவும் கள்ளர்க
ளின் நண்பர்களாகவும் இருக்கின்றனர். உங்
கள் அதிபதிகளும், நியாயாதிபதிகளும் இலஞ்
சத்தை எதிர்பார்க்கின்றனர். தீமை செய்வ
தற்குப் பணம் பெறுகிறார்கள். உங்கள்
அதிபதிகளும், நியாயாதிபதிகளும் பெற்
றோரை இழந்த பிள்ளைகளுக்கு உதவி
செய்வதில்லை. உங்கள் அதிபதிகளும் நியா
யாதிபதிகளும் கணவனை இழந்த விதவை
களின் தேவைகளுக்குச் செவிகொடுக்க
வில்லை.”
[24]இத்தனையும் செய்ததால் சர்வ வல்லமை
யுள்ள கர்த்தராகிய ஆண்டவர், இஸ்ரவேலின்
வல்லமைமிக்க தேவன் கூறுகிறதாவது: “என்
பகைவர்களே, உங்களைத் தண்டிப்பேன்.
உங்களால் எனக்குத் தொல்லை கொடுக்க
முடியாது. [25]ஜனங்கள் வெள்ளியைச் சுத்தப்
படுத்த புடமிடுவதுபோல* உங்கள் தீமை
களை உங்களிடமிருந்து விலக்குவேன்.
உங்களிடமிருந்து பயனற்றவற்றை நீக்கு
வேன். [26]ஆரம்ப நாட்களில் உங்களிடமிருந்த
நீதிபதிகளைப் போன்றவர்களை மீண்டும்
கொண்டுவருவேன். உங்களது ஆலோச
கர்கள் முன்பிருந்த ஆலோசகர்களைப்போல
இருப்பார்கள். அப்போது நீங்கள் இதனை
‘நல்ல நம்பிக்கைக் குரிய நகரம்’ என்று
அழைப்பீர்கள்” என்றார்.
[27]தேவன் நல்லவர். அவர் நீதியானவற்றை
மட்டுமே செய்வார். அவர் சீயோனையும்*

**நறுமனப்பொருட்கள்** ஒரு வகை மணப்பொருள். எரிக்கப்படும்போது நல்ல மணம் வீசும். இது தேவனுக்குக் காணிக்கை போன்று எரிக்கப்படும்.

**மாதப்பிறப்பின் நாள்** யூத மாதத்தில் முதல் நாள். இது வழிபாட்டுக்குரிய சிறப்பான நாளாக இருந்தது.

**ஓய்வு நாள்** சனிக்கிழமை யூதர்களுக்கு ஓய்வுகொள்ளவும் வழிபாடு செய்யவும் சிறந்த நாள்.

**இரத்தின கம்பளம்** விலை உயர்ந்த கெட்டியான சிவப்பான ஆடை.

**புடம்** சோப்பு போன்ற இரசாயனப் பொருள்.

**சீயோன்** எருசலேம் கட்டப்பட்ட மலையின் தென் கிழக்குப் பகுதி. சில நேரங்களில் தேவனு டைய ஜனங்கள் எருசலேமில் வாழுமிடம் என்றும் பொருள்.

*அதற்குத் திரும்பி வருகிறவர்களையும் மீட்*
*பார். 28ஆனால் அனைத்து குற்றவாளிகளும்*
*பாவிகளும் அழிக்கப்படுவார்கள். (அவர்கள்*
*கர்த்தரைப் பின்பற்றாதவர்கள்.)*

*29நீங்கள் தொழுதுகொள்வதற்கு தேர்ந்*
*தெடுத்த கருவாலி* மரங்களையும் தோப்பு*
*களையும்* கண்டு வருங்காலத்தவர்கள் அவ*
*மானப்படுவார்கள். 30இது நிறைவேறும்.*
*ஏனென்றால் நீங்கள் காய்ந்துபோன கரு*
*வாலி மரங்களைப்போன்றும் தண்ணீரில்*
*லாத சோலையைபோன்றும் அழிக்கப்படுவீர்*
*கள். 31வலிமையான ஜனங்கள் காய்ந்து*
*சிறு மரத்துண்டுகளைப் போலாவார்கள்.*
*வல்லமையுள்ள ஜனங்களும் அவர்களின் தீய*
*செயல்களும் எரிந்துபோகும். அவர்*
*களுடைய தீய செயல்கள் தீப்பொறிகள்*
*போன்று இருக்கும். அதை எவரும்*
*அணைக்க முடியாது.*

2 *ஆமோத்சின் மகனான ஏசாயா யூதா*
*மற்றும் எருசலேம் பற்றியச் செய்தியைப்*
*பார்த்தான்.*

*2கர்த்தருடைய ஆலயம் மலையின் மேல்*
*இருக்கும். இறுதி நாட்களில், அம்மலை*
*அனைத்து குன்றுகளையும்விட உயரமாக*
*இருக்கும். அனைத்து நாடுகளிலும் உள்ள*
*ஜனங்கள் தொடர்ச்சியாக அங்கு வரு*
*வார்கள். 3ஏராளமான ஜனங்கள் அங்கு*
*போவார்கள். அவர்கள், “நாம் கர்த்தருடைய*
*மலைக்குப் போவோம்! நாம் யாக்கோபின்*
*தேவனுடைய ஆலயத்திற்குப் போவோம்.*
*பின் தேவன் நமக்கு வாழும் வழியைக்*
*கற்றுத்தருவார். நாம் அவரைப் பின்*
*பற்றுவோம்” என்பார்கள்.*

*தேவனாகிய கர்த்தருடைய போதனை*
*களும் செய்தியும் சீயோன் மலையிலுள்ள*
*எருசலேமில் துவங்கி, உலகம் முழுவதும்*
*பரவும். 4பிறகு, தேவனே அனைத்து*
*நாடுகளிலும் உள்ள ஜனங்களுக்கும் நீதி*
*பதியாவார். தேவன் பலரது வாக்குவாதங்*
*களை முடித்துவைப்பார். சண்டைக்காகத்*
*தங்கள் ஆயுதங்களைப் பயன்படுத்துவதை*
*ஜனங்கள் நிறுத்துவார்கள். அவர்கள் தங்கள்*
*வாள்களை கலப்பையின் கொழுவாகச்*
*செய்வார்கள். அவர்கள் தங்கள் ஈட்டிகளி*
*லிருந்து செடிகளை வெட்டும் கருவிகளைச்*
*செய்வார்கள். ஜனங்கள், மற்றவர்களோடு*
*சண்டையிடுவதை நிறுத்துவார்கள். ஜனங்*
*கள் மீண்டும் யுத்தத்திற்குரிய பயிற்சி*
*பெறமாட்டார்கள்.*

*5யாக்கோபின் குடும்பத்தினரே, வாருங்*
*கள், நீங்கள் கர்த்தருடைய வெளிச்சத்திலே*
*நடக்கவேண்டும்! 6நான் இவற்றை உங்க*
*ளுக்குக் கூறுகிறேன். ஏனென்றால், நீங்கள்*

---

***கர்வாலி மரம்*** *இம்மரங்கள் ஜனங்களால் வணங்கப்படுகிற உருவங்களைப் போன்று விளங்கும்.*

***தோப்பு*** *பொய்த் தெய்வங்களை ஜனங்கள் வணங்கும் இடம்.*

*உங்களது ஜனங்களை விட்டு விட்டீர்கள்.*
*உங்கள் ஜனங்கள் கிழக்கு நாட்டு ஜனங்*
*களின் தவறான எண்ணங்களைத் தமக்குள்*
*நிரப்பிக்கொண்டனர். நீங்கள் பெலிஸ்தியர்*
*களைப்* போன்று எதிர்காலத்தைத் தெரிந்து*
*கொள்ள முயற்சி செய்கிறீர்கள். உங்கள்*
*ஜனங்கள் அந்த விநோத எண்ணங்களை*
*முழுமையாக ஏற்றுக்கொண்டனர். 7பிற*
*நாடுகளிலுள்ள பொன்னாலும் வெள்ளியா*
*லும் உங்கள் தேசம் நிறைந்துள்ளது. அங்கே*
*ஏராளமான கருவூலங்கள் உள்ளன. உங்கள்*
*தேசம் குதிரைகளாலும் நிறைந்துள்ளது.*
*அங்கே ஏராளமான இரதங்களும் உள்ளன.*
*8உங்கள் தேசம் ஜனங்கள் தொழுதுகொள்*
*ளும் சிலைகளாலும் நிறைந்துள்ளது. ஜனங்*
*கள் அந்த விக்கிரகங்களைச் செய்தனர்.*
*ஜனங்கள் அவற்றைத் தொழுதுகொண்டனர்.*
*9ஜனங்கள் மேலும் மேலும் மோசமானார்*
*கள். ஜனங்கள் மிகவும் கீழானவர்கள்.*
*தேவன், அவர்களை நிச்சயமாக மன்னியா*
*மல் இருப்பார்.**

### தேவனுடைய பகைவர்கள் அஞ்சுவார்கள்

*10பாறைகளுக்கு பின்னால் மண்ணில்*
*ஒளித்துக்கொள்ள போ! நீ கர்த்தருக்குப்*
*பயப்படவேண்டும். அவரது மகா வல்லமை*
*யிலிருந்து மறைய வேண்டும்!*

*11இறுமாப்புடையவர்கள் இனிமேல் இறு*
*மாப்புடையவர்களாக இருக்கமாட்டார்கள்.*
*அவர்கள் அவமானத்தால் தரையளவு தாழ்த்*
*தப்படுவார்கள். அப்போது, கர்த்தர் ஒருவரே*
*உயர்த்தப்படுவார்.*

*12கர்த்தர் ஒரு சிறப்பு நாளுக்குத் திட்ட*
*மிட்டார். அன்று, கர்த்தர் பெருமிதம்*
*கொண்டவர்களையும் வீண் பெருமை பேசு*
*பவர்களையும் தண்டிப்பார். பிறகு அவர்கள்*
*முக்கியமற்றவர்களாக ஆக்கப்படுவார்கள்.*
*13அவர்கள் லீபனோனிலுள்ள* உலர்ந்த*
*கேதுரு மரங்களைப் போலிருக்கிறார்கள்.*
*அவர்கள் பாசானில்* உள்ள கர்வாலி*
*மரங்களைப் போன்றவர்கள். ஆனாலும்*
*தேவன் அவர்களைத் தண்டிப்பார். 14அவர்*
*கள் உயர்ந்த மலைகளையும் உயர்ந்த சிகரங்*
*களையும்போன்றவர்கள்; 15அவர்கள் உயர்ந்த*
*கோபுரங்களைப் போன்றவர்கள். பலமான*
*சுவர்களைப் போன்றவர்கள். ஆனால்*
*தேவன் அவர்களைத் தண்டிப்பார்.*
*16அவர்கள் தர்ஷீசின் கப்பல்களைப் போன்ற*
*வர்கள். (அக்கப்பல்கள் முக்கியமான*

---

***பெலிஸ்தியர்கள்*** *பெலிஸ்திய நாட்டின் கடற்கரையோரமாக வாழும் ஜனங்கள். இஸ்ரவேலரின் பகைவர்களுள் ஒருவர்.*

***தேவனே ... இரும்*** *உறுதியாக நீ அவர்களை எழுப்புவதில்லை.*

***லீபனோன்*** *இஸ்ரவேலின் வடபகுதி. இது கேதுரு மரங்களுக்கும் பைன் மரங்களுக்கும் பேர் பெற்றது.*

***பாசான்*** *இஸ்ரவேலின் வட கிழக்கு பகுதி.*

பொருட்களால் நிறைந்தவை) எனினும்
தேவன் அவர்களைத் தண்டிப்பார்.
17அப்போது, ஜனங்கள் பெருமை
அடைவதை நிறுத்துவார்கள். இப்போது
பெருமிதம் கொள்பவர்கள் தரைமட்டும் பணி
வார்கள். அப்போது கர்த்தர் மட்டுமே
உயரமாக நிற்பார். 18அனைத்து (பொய்த்
தெய்வங்கள்) சிலைகளும் அழிந்துபோகும்.
19ஜனங்கள் பாறைகளுக்குப் பின்னும் நிலப்பி
ளவுகளிலும் ஒளிந்துகொள்வார்கள். ஜனங்
கள் கர்த்தருக்கும் அவரது பெரும் வல்ல
மைக்கும் பயப்படுவார்கள். பூமி நடுங்கும்படி
கர்த்தர் எழுந்து நிற்கும்போது இது நடை
பெறும்.
20அப்போது, ஜனங்கள் தமது பொற்
சிலைகளையும், வெள்ளிச் சிலைகளையும்
தூர எறிவார்கள். (ஜனங்கள் அந்த உருவங்
களைச்செய்து தொழுதுகொண்டு வந்தனர்.)
மூஞ்சூறுகளும் துரிஞ்சில்களும் வாழ்கிற
நிலப்பிளவுகளுக்குள் ஜனங்கள் அந்தச் சிலை
களை எறிவார்கள். 21பிறகு ஜனங்கள்
பாறைப் பிளவுகளுக்குள் ஒளிந்துகொள்ளு
வார்கள். அவர்கள் கர்த்தருக்கும் அவரது
பெரும் வல்லமைக்கும் அஞ்சுவதால்,
அப்படிச் செய்வார்கள். பூமி நடுங்கும்படி
கர்த்தர் எழுந்து நிற்கும்போது இது நடக்கும்.

## இஸ்ரவேலர்கள் தேவனை நம்பவேண்டும்

22உங்களைக் காப்பாற்றிக்கொள்ள மற்ற
ஜனங்களை நம்புவதை நிறுத்தவேண்டும்.
அவர்கள் வெறும் ஜனங்களே. ஜனங்கள்
மரிப்பார்கள். எனவே, அவர்கள் தேவனைப்
போன்று வல்லமையுள்ளவர்கள் என்று
எண்ணக்கூடாது.

3 நான் சொல்லுவதை நீங்கள் புரிந்து
கொள்ளுங்கள். சர்வ வல்லமையுள்ள
கர்த்தராகிய ஆண்டவர், யூதாவும் எருச
லேமும் நம்பியிருக்கும் அனைத்தையும்
விலக்குவார். தேவன் அங்குள்ள உணவுப்
பொருட்களையும் தண்ணீரையும் விலக்கி
விடுவார். 2தேவன், அங்குள்ள தலைவர்
களையும், வீரர்களையும், நீதிபதிகளையும்,*
தீர்க்கதரிசிகளையும், மந்திரவாதிகளையும்,
மூப்பர்களையும் விலக்கிவிடுவார். 3தேவன்,
அங்குள்ள படைத் தலைவர்களையும்
ஆட்சித்தலைவர்களையும், திறமையுள்ள
ஆலோசகர்களையும், மந்திரம் செய்கிற புத்தி
சாலிகளையும் வருங்காலம்பற்றிக் கூறுபவர்
களையும் விலக்கிவிடுவார்.
4தேவன் கூறுகிறார்; “இளஞ்சிறுவர்கள்
உங்கள் தலைவர்களாகும்படி செய்வேன்.
5ஒவ்வொருவனும் இன்னொருவனுக்கு எதி
ராவான். இளைஞர்கள் முதியவர்களுக்கு
மரியாதை செலுத்தமாட்டார்கள். பொது
ஜனங்கள் முக்கியமான ஜனங்களுக்கு மரி
யாதை செலுத்தமாட்டார்கள்.”
6அப்போது, ஒருவன் தன் சொந்த குடும்
பத்திலுள்ள சகோதரனைப் பிடிப்பான்.
அவன் தன் சகோதரனிடம், “உன்னிடம்
மேலாடை* உள்ளது. எனவே, நீதான்
எங்களது தலைவர், நீயே இந்த எல்லா
சீர்கேட்டுக்கும், இக்கட்டுக்கும் மேலான
தலைவனாக இரு” என்பான்.
7ஆனால் சகோதரனோ: “என்னால்
உனக்கு உதவமுடியாது. எனது வீட்டில்
போதுமான அளவு உணவும் உடையும்
இல்லை. நான் உங்கள் தலைவனாக
முடியாது” என்பான்.
8எருசலேம் விழுந்து தீமைசெய்ததால்
இவ்வாறு நடைபெறும். யூதா விழுந்து
விட்டது. அது தேவனைப் பின்பற்றுவதை
விட்டுவிட்டது. அவர்கள் சொல்லுகிற
வையும், செய்கிறவையும் கர்த்தருக்கு எதிரா
னவை. கர்த்தருடைய மகிமையான கண்கள்
இவை அனைத்தையும் காண்கின்றது.
9தாங்கள் குற்றவாளிகள் என்றும் தாங்கள்
செய்வது தவறு என்றும், அவர்களின்
முகங்கள் காட்டும். அவர்கள் தங்கள் பாவங்
களுக்காகப் பெருமை அடைகிறார்கள்.
அவர்கள் சோதோம் நகர ஜனங்களைப்
போன்று தங்கள் பாவங்களை யார் கவனிக்
கிறார்கள் என்பதைப்பற்றிக் கவலைப்பட
வில்லை. இது அவர்களுக்கு மிகக் கேடு
தரும். அவர்கள் தமக்கே பெரும் தொந்த
ரவுகளை ஏற்படுத்திக் கொள்கிறார்கள்.
10நல்லவர்களுக்கு நன்மை ஏற்படும் என்று
சொல்லுங்கள். அவர்கள் தாங்கள் செய்யும்
நன்மைகளுக்குப் பரிசு பெறுவார்கள்.
11ஆனால் தீமை செய்பவர்களுக்குக் கேடு
ஏற்படும். அவர்களுக்குப் பெரும் தொந்
தரவுகள் ஏற்படும். அவர்கள் செய்த தீமைக
ளுக்குத் தண்டனை பெறுவார்கள். 12என்
ஜனங்களைச் சிறுபிள்ளைகள் தோற்கடிப்
பார்கள். அவர்களைப் பெண்கள் ஆளுவார்
கள். உங்கள் வழிகாட்டிகள் தவறான
வழியைக் காட்டிவிட்டார்கள். அவர்கள்
நல்லவழியில் இருந்து திருப்பி விட்டு
விட்டார்கள்.

## அவரது ஜனங்களைப் பற்றிய தேவனுடைய முடிவு

13ஜனங்களை நியாயம்தீர்க்க கர்த்தர்
எழுந்து நிற்பார். 14கர்த்தர் தலைவர்களையும்
மூப்பர்களையும் அவர்களின் செயல்க
ளுக்காக நியாயம் தீர்ப்பார்.
கர்த்தர் கூறுகிறார்: “நீங்கள் யூதாவாகிய
இந்தத் திராட்சைத் தோட்டத்தை எரித்துப்
போட்டீர்கள். ஏழைகளின் பொருட்களை

---

***நீதிபதிகள்*** *இஸ்ரவேலில் ஜனங்களை நியாயந்தீர்த்து, வழிநடத்தி, காப்பாற்றுகிறவர்கள்.*

***மேலாடை*** *கயிறு, இது ஒருவனை ஜனங்கள் தலைவன் என்று காட்டிடும்.*

*எடுத்துக்கொண்டீர்கள். அவை உங்கள்*
*வீடுகளில் இருக்கின்றன. 15என் ஜனங்களைத்*
*துன்புறுத்தும் உரிமையை உங்களுக்கு*
*கொடுத்தது யார்? ஏழைகளின் முகங்களைப்*
*புழுதிக்குள் தள்ளும் உரிமையை உங்களுக்கு*
*அளித்தது யார்?" என்னிடம், எங்கள்*
*ஆண்டவராகிய சர்வ வல்லமையுள்ள*
*கர்த்தர் இவற்றைச் சொன்னார்.*

*16கர்த்தர்: "சீயோனில் உள்ள பெண்கள்*
*பெருமிதம் கொண்டிருந்தனர். அவர்கள் காற்*
*றில் தம் தலைகளைத் தூக்கிய வண்ணம்*
*நடந்தனர். மற்றவர்களைவிடச் சிறந்தவர்*
*களைப் போன்று நடித்தனர். அவர்கள்*
*கண்ணடித்து, தம் கால் தண்டைகள் ஒலிக்க*
*ஒய்யாரமாக நடந்து திரிந்தனர்" என்றார்.*

*17சீயோனிலுள்ள பெண்களின் உச்சந்த*
*லையை என் ஆண்டவர் புண்ணாக்குவார்.*
*அவர்களின் முடிகளைல்லாம் உதிர்ந்து*
*மொட்டையாகும்படிச் செய்வார். 18அப்*
*போது, பெருமைக்காரர்களிடம் உள்ள*
*பொருட்களைக் கர்த்தர் எடுத்துக்கொள்வார்.*
*அழகான தண்டைகளையும், சுட்டிகளையும்,*
*சூரியனும், பிறையும் போன்ற சிந்தாக்கு*
*களையும் எடுத்துக்கொள்வார். 19ஆரங்களை*
*யும், அஸ்தகடகங்களையும் தலைமுக்காடு*
*களையும், 20தலை அணிகலன்களையும், பாத*
*சரங்களையும், மார்க்கச்சைகளையும், சுகந்த*
*பரணிகளையும்,* 21தாயித்துகளையும், மோதி*
*ரங்களையும், மூக்குத்திகளையும், 22விநோத*
*ஆடைகளையும், சால்வைகளையும், போர்*
*வைகளையும், குப்பிகளையும், 23கண்ணாடி*
*களையும், சல்லாக்களையும், குல்லாக்*
*களையும், துப்பட்டாக்களையும் உரிந்துப்*
*போடுவார்.*

*24இப்பொழுது அப்பெண்களிடம் சுகந்த*
*நறுமணம் வீசுகிறது. ஆனால் அப்பொழுது*
*அவர்களிடம் துர்மணமும் அழுகியவாசமும்*
*வீசும். இப்பொழுது அவர்கள் கச்சைகளை*
*அணிந்திருக்கின்றனர். ஆனால் அப்போது*
*வெறும் கயிறுகளைக் கட்டியிருப்பார்கள்.*
*இப்பொழுது அவர்கள் தலை மயிரை*
*அலங்காரமாக வைத்திருக்கின்றனர். ஆனால்*
*அப்போது மொட்டையாக இருப்பார்கள்.**
*இப்பொழுது அவர்கள் ஆடம்பரமான ஆடை*
*களை அணிந்துள்ளன். ஆனால் அப்*
*பொழுது, துக்கத்துக்குரிய ஆடைகளையே*
*அணிந்திருப்பார்கள். இப்பொழுது அவர்*
*களின் முகங்களில் அழகான அடையாளங்*
*கள் உள்ளன. ஆனால் அப்பொழுது*
*அவர்களின் முகத்தில் கருகிய தீ வடு*
*போடப்படும்.*

*25அப்போது உங்கள் ஆட்கள் வாளால்*
*கொல்லப்படுவார்கள். உங்கள் வீரர்கள்*
*போரில் மரிப்பார்கள். 26நகர வாசல்களின்*
*சந்திகளில் அழுகை ஒலியும், துக்கமும்*
*நிறைந்திருக்கும். எருசலேமோ, கள்ளர்களி*
*டமும் கொள்ளைக்காரர்களிடமும் அனைத்*
*தையும் இழந்துவிட்ட பெண்ணைப்போன்று*
*இருப்பாள். அவள் தரையில் அமர்ந்து*
*அழுவாள்.*

4 *அப்போது, ஏழு பெண்கள் ஒருவனை*
*பற்றிக்கொள்வார்கள். அவர்கள், "நாங்*
*கள் எங்கள் சொந்த உணவை உண்கிறோம்.*
*நாங்கள் எங்கள் சொந்த ஆடைகளை*
*அணிந்துகொள்கிறோம். இவை அனைத்*
*தையும் நாங்களே எங்களுக்குச் செய்து*
*கொள்கிறோம். எங்களை நீ திருமணம்*
*செய்துகொள்ள வேண்டும் என்பதை*
*மட்டுமே உன்னிடமிருந்து எதிர்பார்க்*
*கிறோம். நாங்கள் உன் பெயரை மட்டும்*
*வைத்துக்கொள்வோம். எங்கள் அவமா*
*னத்தை நீக்கு" என்று சொல்வார்கள்.*

*2அப்போது, கர்த்தருடைய செடியானது*
*(யூதா) அழகாகவும் உயர்வாகவும் இருக்கும்.*
*இஸ்ரவேலில் வாழ்ந்துகொண்டிருக்கும்*
*ஜனங்கள் தம் நாட்டின் வளர்ச்சியைக்*
*கண்டு பெருமிதம் அடைவார்கள். 3அப்*
*போது, சீயோனிலும் எருசலேமிலும் வாழ்*
*கின்ற மீதியான ஜனங்கள் பரிசுத்த*
*மானவர்கள் என்று அழைக்கப்படுவார்கள்.*
*சிறப்புப் பெயர் பட்டியலில் தம் பெயருள்ள*
*அனைவருக்கும் இது நிகழும். பட்டியலில்*
*உள்ளவர்கள் மட்டும் தொர்ந்து வாழ அனும*
*திக்கப்படுவார்கள்.*

*4சீயோன் பெண்களின் இரத்தத்தைக்*
*கர்த்தர் கழுவிவிடுவார். எருசலேமில் உள்ள*
*அனைத்து இரத்தக் கறைகளையும் கர்த்தர்*
*கழுவி போக்குவார். தேவன் நீதியின்*
*ஆவியினால் நியாயம் தீர்ப்பார். சுட்டெரிப்*
*பின் ஆவியினால் அனைத்தையும் சுத்தப்*
*படுத்துவார்.*

*5அப்போது, தேவன் தன் ஜனங்களோடு*
*இருப்பதை நிரூபிப்பார். அந்நாளின் பகலில்,*
*தேவன் புகை மேகத்தை தோன்றச்செய்வார்.*
*இரவில், தேவன் ஒளிரும் நெருப்புச்சுட*
*ரையும் தோன்றச்செய்வார். இச்சாட்சிகள்*
*வானத்தில் ஒவ்வொரு கட்டிடத்தின் மேலும்*
*சீயோன் மலையில் நடைபெறும் ஒவ்வொரு*
*ஜனங்கள் கூட்டத்தின் மேலும் தோன்றும்.*
*ஒவ்வொருவரைச் சுற்றிலும் அவர்களைப்*
*பாதுகாக்க ஒரு மூடி அமையும். 6இம்மூடி*
*யானது பாதுகாப்புக்கான இடம். இது*
*ஜனங்களை சூரியனின் வெப்பத்திலிருந்து*
*காக்கும். இம்மூடி வெள்ளம் மற்றும் மழை*
*யிலிருந்து காத்துக்கொள்ள உதவும்.*

### இஸ்ரவேல் தேவனுடைய விசேஷமான தோட்டம்

5 *இப்பொழுது, நான் எனது நண்பருக்காக*
*(தேவன்) ஒரு பாடல் பாடுவேன்.*

---

**சுகந்த பரணி** *ஜனங்கள் இதனை கழுத்தணியாகக் கொள்வார்கள். இவை தீமையிலிருந்தும் ஆபத்திலிருந்தும் காப்பாற்றும் என்று நம்பினார்கள்.*

**ஆனால் … இருப்பார்கள்** *இவர் அடிமைகள் ஆவார்கள் என்று பொருள்.*

இப்பாடல் என் நண்பர் திராட்சைத்
தோட்டத்தின் (இஸ்ரவேல்) மேல் வைத்த
அன்பைப் பற்றியது. எனது நண்பருக்கு
வளமான வெளியில் ஒரு திராட்சைத்
தோட்டம் இருந்தது.

2எனது நண்பர் அதனைச் சுத்தப்
படுத்தினார். அதில் சிறந்த திராட்சைக்
கொடிகளை நட்டார். அதன் நடுவில் ஒரு
கோபுரம் அமைத்தார். அதில் நல்ல
திராட்சை வளரும் என்று நம்பினார்
ஆனால் அதில் கெட்ட திராட்சைகளே
இருந்தன.

3எனவே தேவன் சொன்னார்: "எருச
லேமில் வாழும் ஜனங்களே* யூதாவில்
உள்ள மனிதர்களே* என்னையும் என்
திராட்சைத் தோட்டத்தையும் எண்ணிப்
பாருங்கள்.

4எனது திராட்சைத் தோட்டத்திற்காக
நான் இன்னும் என்ன செய்ய முடியும்?
என்னால் முடிந்தவற்றை நான் செய்து
விட்டேன். நல்ல திராட்சை வளரும் என்று
நம்பினேன். ஆனால் கெட்ட திராட்சைகளே
உள்ளன. ஏன் இவ்வாறு ஆயிற்று?

5இப்பொழுது, எனது திராட்சைத்
தோட்டத்தில் என்ன செய்யப் போகிறேன்
என்று சொல்வேன். நான் முட்புதர்களை
விலக்குவேன். அவை வயலைக் காக்கின்
றன. அவற்றை எரித்துப் போடுவேன்.
கற்சுவர்களை இடித்துப்போடுவேன். அது
மிதியுண்டு போகும்.

6என் திராட்சைத்தோட்டத்தை காலியாக
வைப்பேன். எவரும் கொடிகளைப்பற்றி
கவலைப்படமாட்டார்கள். எவரும் தோட்
டத்தில் வேலை செய்யமாட்டர்கள். முட்
களும் புதர்களும் வளரும். தோட்டத்தில்
மழைபொழிய வேண்டாம் என்று நான்
மேகங்களுக்குக் கட்டளை இடுவேன்."

7சர்வ வல்லமையுள்ள கர்த்தருக்கான
திராட்சைத் தோட்டம் என்பது இஸ்ரவேல்
நாட்டைக் குறிக்கும். கர்த்தருடைய மன
மகிழ்ச்சியின் செடியானது யூதாவின்
ஜனங்களே. கர்த்தர் நியாயத்துக்குக் காத்
திருந்தார். ஆனால் கொலைகளே நடை
பெற்றன. கர்த்தர் நீதிக்காகக் காத்திருந்தார்.
ஆனால் அழுகைகளே இருந்தன. மோசமாக
நடத்தப்பட்டவர்கள் முறையிட்டார்கள்.

8ஜனங்களாகிய நீங்கள் மிக நெருங்கி
வாழ்கிறீர்கள். வேறு எவருக்கும் இடமில்
லாதபடி உங்கள் வீடுகளைக் கட்டுங்கள்.
ஆனால் கர்த்தர் உங்களைத் தண்டிப்பார்.
உங்களைத் தனித்து வாழும்படி செய்வார்.
முழு நாட்டில் நீங்கள் மட்டும் தனியாக
வாழுவீர்கள்! 9சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இதை என்னிடம் சொன்னார். அவர்
அவரிடம், "இப்பொழுது ஏராளமான
வீடுகள் உள்ளன. உறுதியாகச் சொல்கிறேன்,
எல்லா வீடுகளும் அழிக்கப்படும். இப்
பொழுது அழகான பெரிய வீடுகள் உள்ளன.
ஆனால் அவை காலியாகிப்போகும். 10அப்
போது, பத்து ஏக்கர் அளவுள்ள பெரிய
திராட்சைத் தோட்டம் குறைந்த திராட்சை
ரசத்தை தரும். பல மூட்டை நிறைந்த
விதைகள் சிறிய அளவு தானியங்களையே
விளைவிக்கும்."

11ஜனங்களாகிய நீங்கள் அதிகாலையில்
எழுந்து, மதுபானம் குடிக்கப் போகிறீர்கள்.
இரவு நெடுநேரம் தூங்காமல் மதுவைக்
குடித்து களிக்கிறீர்கள். 12நீங்கள் மது,
சுரமண்டலம்,* தம்புரு, மேளம், நாகசுரம்
போன்றவற்றோடு விருந்து கொண்டாடு
கிறீர்கள். கர்த்தர் செய்த செயல்களை நீங்கள்
பார்ப்பதில்லை. கர்த்தருடைய கைகள்
பலவற்றைச் செய்துள்ளன. ஆனால் நீங்கள்
அவற்றைக் கவனிக்கவில்லை. அதனால்,
இவை உங்களுக்குக் கேடு தரும்.

13கர்த்தர், "என் ஜனங்கள் சிறை பிடிக்கப்
பட்டு வெளியேற்றப்படுவார்கள். ஏனென்
றால், அவர்கள் என்னை உண்மையில்
அறிந்துகொள்ளவில்லை. இஸ்ரவேலில் வாழ்
கின்ற சிலர் இப்பொழுது முக்கியமானவர்
களா உள்ளனர். அவர்கள் தம் எளிமையான
வாழ்வில் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள்.
ஆனால் அவர்கள் அனைவரும் தாகத்தா
லும், பசியாலும் துன்பமடைவார்கள்.
14பிறகு அவர்கள் மரித்து கல்லறைக்குப்
போவார்கள். பாதாளம் மேலும் மேலும்
ஜனங்களைப் பெறும். அது அளவில்லாமல்
தன் வாயைத் திறந்து வைத்திருக்கும்.
அனைவரும் பாதாளத்துக்குப் போவார்கள்"
என்றார்.

15ஜனங்கள் பணிவுள்ளவர்களாக இருப்
பார்கள். அப்பெரியவர்கள் தலை தரையை
பார்த்தவாறு, தலை குனிந்து வணங்குவார்
கள். 16சர்வ வல்லமையுள்ள கர்த்தர் நீதி
வழங்குவார். ஜனங்கள் அவரை உயர்வா
னவர் என்று அறிந்துகொள்வார்கள். பரிசுத்
தமான தேவன் சரியானவற்றை மட்டுமே
செய்வார். ஜனங்கள் அவருக்கு மரியாதை
செய்வார்கள். 17தேவன், இஸ்ரவேல் ஜனங்
களைத் தம் நாட்டை விட்டு போகும்படி
செய்வார். நாடு காலியாக இருக்கும். ஆடுகள்
தாம் விரும்பிய இடத்துக்குப் போகும்.
செல்வந்தர்கள் ஒருகாலத்தில் வைத்திருந்த
நிலங்களில் பரதேசிகள் நடந்து திரிவார்கள்.

18அந்த ஜனங்களைப் பாருங்கள்! அவர்கள்
தம் குற்றங்களையும் பாவங்களையும் வண்டி
களைக் கயிறு கட்டி இழுத்துச் செல்வது
போன்று இழுத்துச் செல்கிறார்கள். 19அந்த
ஜனங்கள், "தேவன் சீக்கிரமாய் செயல்

**எருசலேமின் ... ஜனங்களே** எருசலேமின் தலைவர்கள்.

**யூதாவில் ... மனிதர்** யூதாவின் அரசன்.

**சுரமண்டலம்** பல நரம்புகளைக் கொண்ட இசைக் கருவி.

*புரிய விரும்புகிறோம். அவர் திட்டமிட்டபடி
செய்து முடிக்கட்டும். பிறகு, அவை
நிறைவேறவேண்டும் என்று எங்களுக்குத்
தெரியும். கர்த்தருடைய விருப்பம் விரைவில்
நிறைவேறும் என்று விரும்புகிறோம்.
பின்னரே அவரது திட்டம் என்னவென்று
எங்களுக்குத் தெரியும்" என்றார்கள்.*

*20அந்த ஜனங்கள், நல்லதைக் கெட்ட
தென்றும் கெட்டதை நல்லது என்றும்
கூறுகிறார்கள். அவர்கள் இருளை வெளிச்
சம் என்றும் வெளிச்சத்தை இருள் என்றும்
நினைக்கிறார்கள். அவர்கள் இனிப்பைக்
கசப்பு என்றும் கசப்பை இனிப்பு என்றும்
எண்ணுகிறார்கள். 21அந்த ஜனங்கள் தங்
களை ஞானிகள் என்றும் நினைக் கிறார்கள்.
அவர்கள் தங்களை மிகவும் புத்திசாலிகள்
என்று நினைக்கிறார்கள். 22அவர்கள் மது
குடிப்பதிலே புகழ் பெற்றவர்கள். அவர்கள்
குடிவகைகளைக் கலப்பதில் பராக்கிராமசா
லிகள். 23நீங்கள் அவர்களுக்கு இலஞ்சம்
கொடுத்தால், அவர்கள் குற்றவாளிகளை
விடுவிப்பார்கள். ஆனால் அவர்கள் நல்லவர்
களுக்கு நியாயமாக நீதி வழங்கமாட்டார்கள்.
24அவர்கள் அனைவருக்கும் கேடு ஏற்படும்.
அவர்களின் சந்ததி முழுமையாக அழிக்கப்
படும். அவர்கள் காய்ந்த புல் நெருப்பில்
எரிவது போன்று அழிவார்கள். அவர்களின்
சந்ததி வேர் வாடி, தூசியைப் போல்
பறந்துபோகும். அவர்கள் நெருப்பில் எரியும்
பூக்களைப்போன்று எரிந்து, காற்றில்
சாம்பல் பறப்பது போன்று ஆவார்கள்.*

*சர்வ வல்லமையுள்ள கர்த்தருடைய
போதனைகளுக்கு* அடிபணிய அவர்கள்
மறுத்துவிட்டனர். இஸ்ரவேலரின் பரிசுத்
தமான தேவனிடமிருந்து வரும் செய்தியை
அவர்கள் வெறுத்தனர். 25எனவே இந்த
ஜனங்கள்மீது கர்த்தர் மிகுந்த கோபமாயிருக்
கிறார். கர்த்தர் தன் கையை உயர்த்தி
அவர்களைத் தண்டிப்பார். மலைகள் கூட
அவருக்குப் பயப்படும். மரித்துப்போன
உடல்கள் தெருக்களில் குப்பைபோன்று
குவியும். ஆனாலும் தேவன் மேலும்
கோபமாக இருப்பார். அவரது கை மேலும்
உயர்ந்து அவர்களைத் தண்டிக்கும்.*

### இஸ்ரவேலர்களைத் தண்டிக்க தேவன் படைகளைக் கொண்டுவருவார்

*26பாருங்கள்! தேவன் தூர நாடுகளுக்கு
ஒரு அடையாளம் காட்டிவிட்டார். தேவன்
ஒரு கொடியை உயர்த்திவிட்டார். அவர்
அவர்களைச் சத்தமிட்டு அழைப்பார். அவர்
கள் தூர நாடுகளில் இருந்து வந்துகொண்டி
ருப்பார்கள். அவர்கள் விரைவில் நாட்
டுக்குள் நுழைவார்கள். அவர்கள் வேகமாக
நகருவார்கள். 27பகைவர்கள் எப்பொழுதும்
சோர்ந்து விழுவதில்லை. அவர்கள் தூக்கம்
வந்து தூங்குவது இல்லை. அவர்களின்
ஆயுதக் கச்சைகள் எப்போதும் தயாராக
இருக்கும். அவர்களது பாதரட்சைகளின்
கயிறுகள் அவிழ்வது இல்லை. 28பகைவரின்
அம்புகள் கூர்மையானதாக இருக்கும். அவர்
களது வில்லுகள் எய்யத் தயாராக இருக்கும்.
குதிரைகளின் குளம்புகள் பாறையைப்
போன்று கடுமையாக இருக்கும். அவர்களின்
இரதங்களுக்குப் பின்னே புழுதி மேகங்கள்
எழும்பும்.*

*29பகைவர்கள் சத்தமிடுவார்கள். அச்சத்தம்
சிங்கம் கர்ச்சிப்பதுபோல் இருக்கும். அது
இளஞ்சிங்கத்தின் சத்தம்போல் இருக்கும்.
பகைவர்கள் தமக்கு எதிராகச் சண்டை
யிடுபவர்களை பிடித்துக்கொள்வார்கள்.
ஜனங்கள் போராடி தப்ப முயற்சி செய்வார்
கள். ஆனால் அவர்களைக் காப்பாற்ற
யாரும் இல்லை. 30ஆகவே, "சிங்கங்களின்"
சத்தமானது கடலலைகளின் இரைச்சல்போல்
கேட்கும். கைப்பற்றப்பட்ட ஜனங்கள் தரை
யைப் பார்ப்பார்கள். அதில் இருள் மட்டுமே
இருக்கும். கெட்டியான மேகத்தால் வெளிச்
சம் கூட இருட்டாகி விடும்.*

### தேவன் ஏசாயாவைத் தீர்க்கதரிசியின் ஊழியத்திற்கு அழைக்கிறார்

*6 உசியா அரசன் மரித்த ஆண்டிலே,*
நான் எனது ஆண்டவரைப் பார்த்தேன்.
அவர் மிகவும் உயரமான ஆச்சரியகரமான
சிங்காசனத்தின் மேல் அமர்ந்திருந்தார். அவ
ரது நீண்ட அங்கியானது ஆலயத்தை
நிறைத்தது. 2சேராபீன்கள்* கர்த்தரைச் சுற்றி
நின்றார்கள். ஒவ்வொரு சேராபீனுக்கும் ஆறு
சிறகுகள் இருந்தன. அவர்கள் இரு சிற
குகளால் தங்கள் முகத்தை மூடிக்கொண்ட
னர். இன்னும் இரு சிறகுகளால் தம்
பாதங்களை மூடிக்கொண்டனர். அவர்கள்
இரண்டு சிறகுகளைப் பறப்பதற்குப் பயன்
படுத்தினார்கள். 3ஒருவரை ஒருவர் அழைத்து,
அவர்கள்: "பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர்,
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் மகாபரிசுத்
தமானவர். அவரது மகிமை பூமியை
நிரப்பியது" என்றனர். அவர்களின் சத்தம்
மிகவும் பலமாக இருந்தது. 4அவர் களின்
சத்தம் கதவின் நிலைகளை அசையப்
பண்ணிற்று. பிறகு ஆலயமானது புகையால்
நிரம்பியது.*

---

***போதனைகள்*** *இது "சட்டங்கள்" என்றும் பொருள்படும். தேவன் மோசேக்குக் கொடுத்தச் சட்டங்களையும் குறிக்கும்.*

***உசியா மரித்த ஆண்டு*** *கி.மு.* 740.

***சேராபீன்*** *தேவனுடைய சிறப்புக்குரிய தூதர்கள். அவர்கள் நெருப்பைப் போன்று பிரகாசமானவர்கள்.*

5நான் மிகவும் பயந்துவிட்டேன். நான்:
“ஓ! நான் அழிக்கப்படுவேன். நான் தேவ
னோடு பேசுகிற அளவிற்கு பரிசுத்தமான
வன் இல்லை. என்னைச்சுற்றி இருப்பவர்
களும் தேவனோடு பேசுகிற அளவிற்கு
பரிசுத்தமானவர்கள் இல்லை. எனினும், நான்
சர்வ வல்லமையுள்ள கர்த்தராகிய நமது
அரசரைப் பார்த்தேன்” என்றேன்.
6பலிபீடத்தின்மேல் நெருப்பு இருந்தது.
ஒரு சேராபீன் பலிபீடத்திலிருந்து தன்
கையிலே பிடித்த குறட்டால் ஒரு நெருப்புத்
தழலை எடுத்தான். அவன் என்னிடத்தில்
நெருப்புத்தழலோடு பறந்து வந்தான். 7அந்த
தனது நெருப்புத் தழலால் என் வாயைத்
தொட்டான். பிறகு அவன், “பார்! இது
உன் உதடுகளைத் தொட்டதால் உன் தீய
செயல்கள் எல்லாம் மறைந்தன. உனது
பாவங்கள் துடைக்கப்பட்டன” என்றான்.
8பிறகு நான் என் கர்த்தருடைய சத்தத்
தைக் கேட்டேன். கர்த்தர், “நான் யாரை
அனுப்புவேன்? நமக்காக யார் போவார்?”
என்று சொன்னார்.
எனவே நான்: “நான் இருக்கிறேன்.
என்னை அனுப்பும்!” என்றேன்.
9பிறகு கர்த்தர் சொன்னார்: “போ,
இதனை ஜனங்களிடம் சொல்: ‘கவனமாகக்
கேளுங்கள்! ஆனால் புரிந்துகொள்ளாமல்
இருங்கள்! கவனமாகப் பாருங்கள். ஆனால்
அறிந்துகொள்ளாமல் இருங்கள்!’ 10ஜனங்
களைக் குழப்பமடைய செய். ஜனங்கள்
தாங்கள் கேட்பவற்றையும் காண்பவற்றையும்
புரிந்துகொள்ளாதபடிக்குச் செய். நீ அவ்
வாறு செய்யாவிட்டால், ஜனங்கள் தங்கள்
காதால் கேட்பவற்றையும் புரிந்துகொள்வார்
கள். அவர்கள் மனதில் உண்மையை உண
ர்ந்து கொள்வார்கள். இவற்றை அவர்கள்
செய்தால், பிறகு அந்த ஜனங்கள் என்னிடம்
திரும்பி வந்து குணமாவார்கள்!” என்றார்.
11பிறகு நான், “ஆண்டவரே, நான்
எவ்வளவு காலம் இதனைச் செய்ய
வேண்டும்?” எனக் கேட்டேன்.
அதற்குக் கர்த்தர், “நகரங்கள் அழிந்து
போகும்வரை இதனைச் செய். ஜனங்கள்
போகும்வரை செய். வீடுகளில் எவரும்
வாழாத நிலை வரும்வரை செய். பூமி
அழிந்து காலியாகும்வரை செய்,” என்றார்.
12கர்த்தர் அந்த ஜனங்களை வெகு தூரத்
திற்குப் போகச்செய்வார். நாட்டில் காலி
யான இடங்கள் அதிகமாக இருக்கும்.
13ஆனால் பத்தில் ஒரு பாகமான ஜனங்கள்
மட்டும் இந்நாட்டில் வாழ அனுமதிக்கப்
படுவார்கள். அவர்கள் அழிக்கப்படமாட்டார்
கள். ஏனென்றால், அவர்கள் கர்த்தரிடம்
திரும்பி வருவார்கள். இவர்கள் கர்வாலிமரம்
போன்றவர்கள். இது வெட்டுண்டுபோன
பிறகு அடிமரம் மட்டும் நிற்கும் இந்த
அடிமரம் (மீதியான ஜனங்கள்) மகா விசே
ஷித்த ஒரு வித்தாக இருக்கும்.

### ஆராமுக்கு ஏற்பட்ட தொல்லைகள்

7 ஆகாஸ் யோதாமின் மகன். யோதாம்
உசியாவின் மகன். ரேத்சீன்* ஆராமின்
அரசன். ரெமலியாவின் மகனான
பெக்கா* இஸ்ரவேலின் அரசன். ஆகாஸ்
யூதாவின் அரசனாக இருந்த காலத்திலே,
ரேத்சீனும் பெக்காவும் எருசலேமிற்குப்
போய் அதற்கு எதிராகச் சண்டையிட்டனர்.
ஆனால் அவர்களால் அந்நகரத்தைத் தோற்
கடிக்க முடியவில்லை.
2“ஆராமின் படையும் இஸ்ரவேலின்
படையும் சேர்ந்துகொண்டு அவை இரண்
டும் போருக்கு வந்துள்ளன” என்ற செய்தி
தாவீதின் குடும்பத்திற்குச் சொல்லப்பட்டது.
ஆகாஸ் அரசன் இதனைக் கேள்விப்
பட்டதும், அவனும் ஜனங்களும் மிகவும்
பயந்தனர். அவர்கள் புயல் காற்றில்
அகப்பட்ட மரங்களைப் போன்று நடுங்
கினார்கள்.
3பிறகு கர்த்தர் ஏசாயாவிடம், “நீயும்
உனது மகனான சேயார் யாசூபும் வெளியே
போய் ஆகாசிடம் பேசுங்கள். மேல் குளத்தில்
தண்ணீர் பாய்கிற இடத்துக்குப் போங்கள்.
இது வண்ணார நிலத்துக்குப் போகும்
தெரு.
4“ஆகாசிடம், ‘எச்சரிக்கையாக இரு,
ஆனால் அமைதியாக இரு. அஞ்சாதே,
ரேத்சீனையும் ரெமலியாவின் மகனையும்
உனக்கு அச்சம் ஏற்படுத்தும்படி விடாதே!
அவர்கள் இருவரும் இரண்டு எரிந்த கட்டை
களைப் போன்றவர்கள். முன்பு எரிந்தார்கள்.
இப்போது அவர் வெறுமனே புகைகிறார்கள்.
ரேத்சீன், ஆராம், ரெமலியாவின் மகன்
ஆகிய அனைவரும் கோபமாக இருக்கிறார்
கள். 5அவர்கள் உனக்கு எதிராகத் திட்டம்
தீட்டினார்கள். 6அவர்கள்: நாம் போய்
யூதாவிற்கு எதிராகச் சண்டையிடுவோம்.
நாம் யூதாவை நமக்காகப் பங்கிட்டுக்
கொள்வோம். நாம் தாபேயாலின் மகனை
யூதாவின் புதிய அரசனாக்குவோம் என்
றனர்.’”
7எனது கர்த்தராகிய ஆண்டவர், “அவர்
களின் திட்டம் வெற்றி பெறாது. அது
நிறைவேறாது. 8தமஸ்குவின்* அரசனாக
ரேத்சீன் இருக்கும்வரை இது நடக்காது.
எப்பிராயீம் (இஸ்ரவேல்) இப்போது ஒரு
தேசம். ஆனால் எதிர்காலத்தில் 65ஆண்டு
களுக்குப் பிறகு இது ஒரு நாடாக இருக்காது.
9சமாரியா எப்பிராயீமின் (இஸ்ரவேலின்)
தலைநகரமாக இருக்கும்வரை இது நடக்
காது. ரெமலியாவின் மகன் சமாரியாவின்
அரசனாக இருக்கும் அவர்களின் திட்டம்

---

**ரேத்சீன்** ஆராமின் அரசன். கி.மு. 740-731ல் ஆண்டவன்.

**பெக்கா** வட இஸ்ரவேலின் அரசன். கி.மு. 740-731ல் ஆண்டவன்.

**தமஸ்கு** சீரியா நாட்டு நகரம்.

*நிறைவேறாது. நீங்கள் இந்தச் செய்தியை*
*நம்பாவிட்டால் பிறகு ஜனங்கள் உன்னை*
*நம்பமாட்டார்கள்" என்றார்.*

### இம்மானுவேல்,
### தேவன் நம்மோடு இருக்கிறார்

[10]*பிறகு கர்த்தர் தொடர்ந்து ஆகாசோடு*
*பேசினார். கர்த்தர், "இவையெல்லாம் உண்*
*மை என்று உங்களுக்கு நிரூபிக்க ஒரு*
*அடையாளத்தைக் கேளுங்கள். நீங்கள்*
*விரும்புகிற எந்த அடையாளத்தையும் நீங்*
*கள் கேட்கலாம். அந்த அடையாளம் பாத*
*ாளம் போன்ற ஆழமான இடத்தில் இருந்தும்*
*வரலாம்: அல்லது அந்த அடையாளம்*
*வானம் போன்ற உயரமான இடத்திலிருந்தும்*
*வரலாம்" என்றார்.*
[12]*ஆனால் ஆகாஸ், "அதை நிரூபிக்க*
*நான் அடையாளத்தைக் கேட்கமாட்டேன்.*
*நான் கர்த்தரைச் சோதிக்க மாட்டேன்"*
*என்றான்.*
[13]*பிறகு ஏசாயா, "தாவீதின் குடும்பமே,*
*கவனமாகக் கேளுங்கள்! நீங்கள் ஜனங்கள்*
*பொறுமையைச் சோதிக்கிறீர்கள். அது*
*உங்களுக்கு முக்கியமாகப்படவில்லை. என*
*வே இப்பொழுது என் தேவனுடைய*
*பொறுமையைச் சோதிக்கிறீர்கள்.* [14]*ஆனால்*
*எனது தேவனாகிய ஆண்டவர் உனக்கு*
*ஒரு அடையாளம் காட்டுவார்.*

*இந்த இளம் கன்னிப்பெண்ணைப் பாரும்.*
*இவள் கர்ப்பமாக இருக்கிறாள். இவள்*
*ஒரு மகனைப் பெறுவாள் அவள் அவருக்கு*
*இம்மானுவேல்* என்று பெயரிடுவாள்.*
[15]*இம்மானுவேல் வெண்ணெயையும் தேனை*
*யும் தின்பார், அவர் இவ்வாறு வாழ்வார்,*
*நல்லவற்றை எவ்வாறு செய்வது என்றும்*
*பாவத்தை எவ்வாறு செய்யாமல் விடுவது*
*என்றும் வாழ்ந்துக்காட்டுவார்.*
[16]*ஆனால் அக்குழந்தை நன்மை தெரிந்து*
*தீமையை வெறுக்க கற்றுக்கொள்ளும். வயது*
*வரும் முன்னால், எப்பிராயீம் (இஸ்ரவேல்)*
*மற்றும் ஆராம் நாடு காலியாகிவிடும்.*

*"நீ இப்பொழுது அந்த இரண்டு நாட்டு*
*அரசர்கள் பற்றியும் பயப்படுகிறாய்.*
[17]*ஆனால் நீ கர்த்தருக்குப் பயப்படவேண்டும்.*
*ஏனென்றால், கர்த்தர் உனக்கு துன்பக்*
*காலங்களைக் கொண்டு வருவார். அத்து*
*ன்பங்கள் உனது ஜனங்களுக்கும் உன்*
*தந்தையின் குடும்பத்து ஜனங்களுக்கும் ஏற்ப*
*டும். தேவன் என்ன செய்வார்? தேவன்*
*அசீரியாவின்* அரசனை உனக்கு எதிராகப்*
*போரிட அழைத்து வருவார்.*
[18]*"அப்பொழுது, கர்த்தர் 'ஈயை' அழைப்*
*பார். (அந்த 'ஈக்கள்' இப்போது எகிப்து*
*ஓடைக் கரைகளில் உள்ளன.) கர்த்தர்*
*'தேனீக்களை' அழைப்பார். (இந்த 'தேனீக்*
*கள்' இப்பொழுது அசீரியா நாட்டி லுள்ளன.)*
*இந்தப் பகைவர்கள் உன் நாட்டிற்குள்*
*வருவார்கள்.* [19]*இந்தப் பகைவர் கள்,*
*வனாந்தரங்களின் பள்ளத்தாக்குகளிலும்,*
*கல்மலைகளின் வெடிப்புகளிலும், எல்லா*
*முள்காடுகளிலும், மேய்ச்சல் காடுகளிலும்*
*தங்குவார்கள்.* [20]*கர்த்தர் யூதாவைத் தண்டிக்க*
*அசீரியாவைப் பயன்படுத்துவார். அசீரியா*
*வாடகைக்கு வாங்கப்பட்ட சவரக்கத்தியைப்*
*போலிருக்கும். கர்த்தர் யூதாவை தலையி*
*லிருந்து கால்வரை சவரம் செய்வது நீக்கு*
*வது போனன்றிக்கும். அது யூதாவின்*
*தாடியை கர்த்தர் நீக்குவது போன்று*
*இருக்கும்.**
[21]*"அப்போது, ஒருவன் ஒரு பசுவையும்*
*இரு ஆடுகளையும் மட்டும் உயிரோடு*
*பாதுகாப்பான்.* [22]*அவன் வெண்ணெய் தின்*
*பதற்குரிய பாலை மட்டுமே பெறுவான்.*
*அந்நாட்டிலுள்ள ஒவ்வொருவனும் வெண்*
*ணெயையும் தேனையும் உண்பார்கள்.*
[23]*இந்தத் தேசத்தில், இப்பொழுது* 1,000
*திராட்சைத் தோட்டங்கள் உள்ளன.*
*ஒவ்வொன்றும்* 1,000 *வெள்ளிகள் மதிப்*
*புடையது. ஆனால் இந்தத் தேசம் முள்ளும்*
*புதரும் நிறைந்ததாகும்.* [24]*அவை காடாத*
*இருப்பதால் வேட்டைக்கு மட்டுமே பயன்*
*படும்.* [25]*ஜனங்கள் ஒரு காலத்தில் உழைத்து*
*இக்குன்றுகளில் உணவுப் பொருட்களை*
*விளைய வைத்தனர். ஆனால் அப்போது*
*ஜனங்கள் அங்கே செல்வதில்லை அந்தத்*
*தேசம் முள்ளாலும் பதராலும் நிறைந்து*
*விடும். அது ஆடு மாடுகள் செல்வதற்குரிய*
*இடங்களாகும்" என்றான்.*

### அசீரியா விரைவில் வரும்

**8** *கர்த்தர் என்னிடம் கூறினார்: "ஒரு*
*பெரிய சுருளை* எடுத்துக்கொள். இந்த*
*வார்த்தைகளை எழுத ஒரு பேனாவை**
*எடுத்துக்கொள் அதில் மகேர்-சாலால்-அஷ்-*
*பாஸ் ('அங்கே விரைவில் களவும் சூறையா*
*டலும் நடக்கும்' என்பது பொருள்") என்று*
*எழுது" என்றார்.*
[2]*நான் சிலரைச் சேகரித்தேன். அவர்கள்*
*நம்பிக்கைக்குரிய சாட்சிகள். (அவர்கள்*
*ஆசாரியனான உரியா, சகரியா, யெபெரெ*
*கியா ஆகியோர்.) இவர்கள் நான் எழுதுவ*
*தைக் கவனித்தார்கள்.* [3]*பிறகு நான் தீர்க்க*
*தரிசியான ஒரு பெண்ணிடம் சென்றேன்.*
*நான் அவளோடு இருந்தபிறகு அவள்*
*கர்ப்பவதியானாள். அவள் ஒரு மகனைப்*
*பெற்றாள். பிறகு கர்த்தர் என்னிடம், "அப்*

---

**இம்மானுவேல்** *தேவன் நம்மோடு இருக்கிறார் என்று பொருள்.*

***அசீரியா*** *இஸ்ரவேலின் வடகிழக்கு நாடு, பலமுள்ளது.*

**யூதாவில் ... இருக்கும்** *யூதா ஜனங்கள் அடிமைகளானார்கள் எனக் காட்டும்.*

***சுருள்*** *களிமண் அல்லது கல்லால் ஆனது.*

**பேனா** *களிமண்ணில் அல்லது கல்லால் ஆனது.*

*மையனுக்கு மகேர்-சாலால்-அஷ்-பாஸ் என்*
*னும் பெயரிடு. [4]ஏனென்றால், இவன்*
*'அம்மா' 'அப்பா' என்று சொல்லக் கற்ப*
*தற்கு முன்னால் தேவன், தமஸ்கு மற்றும்*
*சமரியாவிலுள்ள* செல்வங்களை எடுத்து*
*அசீரியாவின் அரசனுக்குக் கொடுத்து விடு*
*வார்" என்றார்.*

*[5]மீண்டும் கர்த்தர், என்னிடம் கூறினார்.*
*[6]என் ஆண்டவர், "இந்த ஜனங்கள் மெது*
*வாய் ஓடுகிற சீலோவாவின்* தண்ணீரை*
*மறுத்துவிட்டார்கள். இவர்கள் ரேத்சீனையும்*
*ரெமலியாலின் மகனையும் ஏற்று மகிழ்ச்சி*
*கொண்டார்கள். [7]ஆனால் கர்த்தராகிய நான்*
*அசீரியாவின் அரசனையும் அவனது வல்ல*
*மையையும் உங்களுக்கு எதிராகக் கொண்டு*
*வருவேன். அவர்கள் ஐபிராத்து ஆற்றின்*
*பெருவெள்ளத்தைப் போன்று வருவார்கள்.*
*அது குளத்தில் தண்ணீர்மட்டம் உயருவது*
*போன்று இருக்கும். [8]அந்த வெள்ளம் ஆற்றி*
*லிருந்து வெளியே வந்து யூதாவின்மேல்*
*பாய்வதுபோல இருக்கும். அந்த வெள்ளம்*
*யூதாவின் கழுத்துவரை வந்து அதனை*
*மூழ்கடிக்கும்.*

*"இம்மானுவேலே, உமது நாடு முழுவ*
*திலும் பரவும்வரை அந்த வெள்ளம் வரும்"*
*என்றார்.*

### கர்த்தர் தம் ஊழியக்காரர்களைக் காப்பாற்றுகிறார்

*[9]நாடுகளே, நீங்கள் போருக்குத் தயாராகுங்*
*கள்! நீங்கள் தோற்கடிக்கப்படுவீர்கள். கவனி*
*யுங்கள், தூர நாடுகளில் உள்ளவர்களே!*
*போருக்குத் தயாராகுங்கள் நீங்கள் தோற்க*
*டிக்கப்படுவீர்கள்.*

*[10]போருக்கான திட்டங்களைத் தீட்டுங்கள்.*
*உங்கள் திட்டங்கள் தோற்கடிக்கப்படும். உங்*
*கள் படைகளுக்கு கட்டளையிடுங்கள்! உங்*
*கள் கட்டளைகள் பயனற்றுப் போகும்.*
*ஏனென்றால், தேவன் எங்களோடு இருக்கி*
*றார்!*

### ஏசாயாவிற்கு எச்சரிக்கைகள்

*[11]கர்த்தர் தன் பெரும் வல்லமையோடு*
*என்னுடன் பேசினார். கர்த்தர், மற்ற ஜனங்*
*களைப்போன்று இருக்க வேண்டாம் என்று*
*என்னை எச்சரித்தார். [12]கர்த்தர், "ஒவ்வொரு*
*வரும் மற்றவர்கள் தனக்கெதிராகத் திட்டம்*
*தீட்டுவதாகக் கூறுகின்றனர். நீ அவற்றை*
*நம்பவேண்டாம். அவர்கள் பயப்படுகின்ற*
*வற்றுக்கு நீங்கள் பயப்படவேண்டாம்"*
*என்றார்!*

*[13]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் ஒருவ*
*ருக்கே நீ பயப்பட வேண்டும். அவர் ஒரு*
*வருக்கே நீ மரியாதை செலுத்த வேண்டும்.*
*அவர் ஒருவருக்கே நீ அஞ்சவேண்டும். [14]நீ*
*கர்த்தரை மதித்து அவரைப் பரிசுத்*
*தமானவர் என்று எண்ணுவாயேயானால்,*
*அவரே உனக்கேற்ற பாதுகாப்பான இட*
*மாயிருப்பார் ஆனால் நீ அவரை மதிப்ப*
*தில்லை. எனவே, அவர் நீங்கள் விழத்தக்கப்*
*பாறையைப் போன்றிருப்பார். இஸ்ரவேலின்*
*இரு குடும்பங்களை இடறச்செய்யும் பாறை*
*இது. கர்த்தர் எருசலேம் ஜனங்களைப்*
*பிடிக்கின்ற வலையைப் போன்று இருக்கி*
*றார். [15](ஏராளமானோர் இப்பாறையில் விழுந்*
*தார்கள். அவர்கள் விழுந்து நொறுங்கிப்*
*போவார்கள். அவர்கள் வலைக்குள்ளே*
*அகப்படுவார்கள்.)*

*[16]ஏசாயா, "ஒரு ஒப்பந்தத்தைச்செய்து முத்*
*திரை இடுவோம். எதிர்காலத்திற்காக என்*
*போதனைகளைப் பத்திரப்படுத்துங்கள். என்*
*னைப் பின்பற்றுகிறவர்கள் கவனித்துக்*
*கொண்டிருக்கும்போதே இதனைச் செய்யுங்*
*கள்.*

*[17]இது தான் அந்த ஒப்பந்தம்:*

*நமக்கு உதவும்படி நான் கர்த்தருக்காகக்*
*காத்திருப்பேன். யாக்கோபின் குடும்பத்தைப்*
*பற்றி கர்த்தர் அவமானமடைகிறார். அவர்*
*களைப் பார்க்க அவர் மறுத்துவிட்டார்.*
*ஆனால் நான் கர்த்தருக்காகக் காத்திருப்பேன்*
*அவர் நம்மைக் காப்பாற்றுவார்.*

*[18]"இஸ்ரவேல் ஜனங்களின் அடையாளமா*
*கவும் ஆதாரமாகவும் நானும் எனது பிள்ளை*
*களும் இருக்கிறோம். சீயோன் மலையில்*
*குடியிருக்கும் சர்வ வல்லமையுள்ள கர்த்தர்*
*எங்களை அனுப்பியிருக்கிறார்" என்றான்.*

*[19]சிலர், "என்ன செய்யலாம் என்பதையும்*
*எதிர்காலம் பற்றி சொல்பவர்களையும் அஞ்*
*சனம் பார்க்கிறவர்களையும் கேளுங்கள்"*
*என்றனர். (குறி சொல்லுகிறவர்களும், அஞ்ச*
*னம் பார்க்கிறவர்களும் பறவைகளைப்*
*போன்று பேசுவார்கள். மறைபொருள் அறிந்*
*தவர்கள் என்று கேட்பவர்கள் எண்ணும்*
*படியாக கிசுகிசுத்து அவர்கள் பேசுவார்கள்.*
*ஆனால், நான் சொல்கிறேன் ஜனங்கள்*
*உதவிக்காக தம் தேவனைக் கேட்க வேண்*
*டும்! குறிசொல்லுகிறவர்களும், அஞ்சனம்*
*பார்க்கிறவர்களும் என்ன செய்யலாம்*
*என்று மரித்துப்போனவர்களைக் கேட்கிறார்*
*கள். உயிரோடு இருக்கிறவர்கள் மரித்துப்*
*போனவர்களிடம் ஏன் இதுபோல் கேட்க*
*வேண்டும்?*

*[20]நீங்கள் போதனைகளையும், ஒப்பந்தத்தை*
*யும் பின்பற்ற வேண்டும். அந்தக் கட்ட*
*ளைகளை நீங்கள் பின்பற்றாவிட்டால், பின்*
*னர் நீங்கள் தவறான கட்டளைகளைப்*
*பின்பற்றுவீர்கள். (தவறான கட்டளைகள்*
*என்பது குறிகாரர்களும் அஞ்சனக்காரர்களும்*
*கூறுவதாகும். அக்கட்டளைகள் பயனற்ற*
*வை. அக்கட்டளைகளைப் பின்பற்றுவதன்*
*மூலம் நீங்கள் எந்த பயனையும் பெற*
*முடியாது.)*

---

***சமாரியா** வட இஸ்ரவேலின் தலை நகரம்.*

***சீலோவா** எருசலேமிலுள்ள குளம். புதிய ஏற்பாட்டில் இது 'சீலோவாம்' என்று அழைக்கப்படுகிறது.*

21நீங்கள் அந்தத் தவறான கட்டளை
களைப் பின்பற்றினால், நாட்டில் துன்பமும்
பசியும் ஏற்படும். ஜனங்களுக்குப் பசி
ஏற்படும். எனவே, அவர்கள் கோபங்
கொண்டு தம் அரசனுக்கும் அவனது தெய்
வங்களுக்கும் எதிராகப் பேசுவார்கள். பிறகு
அவர்கள் தம் உதவிக்கு தேவனிடம் வேண்டு
வார்கள். 22அவர்கள் அந்த நாட்டில் தம்மைச்
சுற்றிலும் பார்த்தால், அவர்கள் துன்பத்தை
யும் கடும் இருளையும் காண்பார்கள். அத்
துன்பமாகிய இருள் அவர்களை நாட்டை
விட்டு வெளியேறச் செய்யும். அந்த இருள்
வலைக்குள் சிக்கிக் கொண்டவர்கள் அதிலி
ருந்து விடுதலை பெறமுடியாது.

## ஒரு புதிய நாள் வருகிறது

9 கடந்த காலத்தில், ஜனங்கள் செபுலோன்
நாட்டையும் நப்தலி நாட்டையும் முக்கி
யமானதாகக் கருதவில்லை. ஆனால்
பிற்காலத்தில், அந்த நாட்டைத் தேவன்
மேம்படுத்துவார். அது கடலுக்கு அருகில்
உள்ள நாடும், யோர்தான் நதிக்கு அப்பு
றத்திலுள்ள நாடும், யூதரல்லாதவர்கள்
வாழும் கலிலேயா நாடும் சேர்ந்ததாகும்.
2இப்போது இருளில் வாழ்கின்றனர்.
அவர்கள் பெரும் வெளிச்சத்தைப் பார்ப்பார்
கள். அவர்கள் ஓரிடத்தில் வாழ்கின்றனர்.
அது மரண இருளை போன்ற இடம். ஆனால்
அவர்கள் மேல் "பெரிய வெளிச்சம்"
உதிக்கும்.
3தேவனே, நாட்டை வளரும்படிச் செய்ய
வேண்டும். ஜனங்களை நீர் மகிழ்ச்சிப்படுத்த
வேண்டும். ஜனங்கள் தம் மகிழ்ச்சியை
உம்மிடம் காட்டுவார்கள். அது அறுவடை
காலத்தின் மகிழ்ச்சியைப் போன்று இருக்
கும். போரில் வென்று ஜனங்கள் தம்
பங்கைப் பகிர்ந்து கொள்ளும்போதுள்ள
மகிழ்ச்சியைப்போன்று அது இருக்கும்.
4ஏனென்றால், நீர் அவர்களின் மிகுந்த
பாரத்தை நீக்குவீர். ஜனங்களின் முதுகில்
இருக்கும் பெரிய நுகத்தடியை நீக்குவீர்.
உமது ஜனங்களைப் பகைவர்கள் தண்டிக்கப்
பயன்படுத்திய கோலையும் விலக்கி விடுவீர்.
இது நீங்கள் மீதியானியரைத் தோற்கடித்த
காலத்தைப் போன்று இருக்கும்.
5போர் செய்வதற்காக நடந்து சென்ற
ஒவ்வொரு காலணியும் அழிக்கப்படும்.
இரத்தம் தோய்ந்த ஒவ்வொரு சீருடையும்
அழிக்கப்படும். அவை நெருப்பிலே வீசப்
படும். 6விசேஷித்த மகன் பிறக்கும்போது
இவைகளெல்லாம் நடைபெறும். தேவன்
நமக்கு ஒரு மகனைக் கொடுப்பார், இவரே
ஜனங்களை வழிநடத்திச் செல்லும் பொறுப்
புள்ளவராக இருப்பார். அவரது நாமமானது
"ஆலோசகர், வல்லமை மிக்க தேவன்,
நித்திய பிதா, அதிசயமுள்ளவர், சமாதானத்
தின் இளவரசர்" என்று இருக்கும். 7அவரது
அரசாங்கத்தில் பலமும் சமாதானமும்
இருக்கும். தாவீதின் குடும்பத்திலிருந்து வரும்
இந்த அரசர் நன்மையையும் நீதியையும்
பயன்படுத்தி தமது அரசாங்கத்தை என்றென்
றைக்கும் ஆண்டு வருவார்.
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் தம் ஜனங்
களிடம் ஆழ்ந்த அன்பு கொண்டவர். அந்தப்
பலமான அன்பு இவற்றையெல்லாம் செய்யக்
காரணமாய் இருக்கின்றது.

## தேவன் இஸ்ரவேலைத் தண்டிப்பார்

8எனது கர்த்தர் யாக்கோபின் ஜனங்க
ளுக்கு (இஸ்ரவேல்) எதிராக ஒரு கட்ட
ளையிட்டார். இஸ்ரவேலின்மேல் அந்தக்
கட்டளை வரும். 9பிறகு எப்பிராயீமில்
(இஸ்ரவேலில்) உள்ள ஒவ்வொருவரும்,
சமாரியாவில் உள்ள தலைவர்களும்கூட
தேவன் அவர்களைத் தண்டித்தார் என்பதை
அறிந்துகொள்வார்கள்.
இப்போது அந்த ஜனங்கள் பெருமையும்
ஆணவமும் உடையவர்களாக இருக்கிறார்
கள். அவர்கள், 10"இந்தச் செங்கற்கள் விழ
லாம், ஆனால் நாங்கள் மீண்டும் கட்டுவோம்.
நாங்கள் பலமான கற்களால் கட்டுவோம்.
இந்தச் சிறு மரங்கள் வெட்டப்படலாம்.
ஆனால் நாங்கள் புதிய மரங்களை நடுவோம்.
அப்புதிய மரங்கள் பெரியதாகவும், உறு
தியுடையதாகவும் இருக்கும்" என்றனர்.
11எனவே, கர்த்தர் இஸ்ரவேலுக்கு எதி
ராகப் போரிட ஜனங்களைக் கண்டுபிடிப்
பார். கர்த்தர் ரேத்சீனின் பகைவர்களை
அவனுக்கு எதிராகக் கொண்டுவருவார்.
12கர்த்தர் கிழக்கிலிருந்து ஆராமியரையும்
மேற்கிலிருந்து பெலிஸ்தர்களையும் கொண்டு
வருவார். அவர்கள் தம் படையால் இஸ்ர
வேலர்களைத் தோற்கடிப்பார்கள். ஆனால்,
கர்த்தர் மேலும் இஸ்ரவேலர்களோடு கோப
மாக இருப்பார். கர்த்தர் அந்த ஜனங்களை
மேலும் தண்டிக்கத் தயாராக இருப்பார்.
13தேவன் அவர்களைத் தண்டிப்பார்.
ஆனால் அவர்கள் தங்கள் பாவங்களை
நிறுத்தமாட்டார்கள். அவர்கள் அவரிடம்
திரும்பமாட்டார்கள். சர்வ வல்லமையுள்ள
கர்த்தரைப் பின்பற்றமாட்டார்கள். 14எனவே
கர்த்தர் இஸ்ரவேலின் தலையையும்
வாலையும் வெட்டி வீசுவார். ஒரே நாளில்
கர்த்தர் கிளைகளையும் நாணலையும்
வெட்டிப் போடுவார். 15(தலை என்றால்
மூப்பர்கள் மற்றும் முக்கிய தலைவர்கள்
என்று பொருள். வால் என்றால் பொய்
சொல்லும் தீர்க்கதரிசிகள் என்று பொருள்.)
16ஜனங்களை வழிநடத்துபவர்கள் தவ
றான பாதையில் வழிநடத்திச் செல்கி
றார்கள். அவர்களைப் பின்பற்றும் ஜனங்கள்
அழிந்துபோகிறார்கள். 17அனைத்து ஜனங்
களும் தீமையானவர்கள். எனவே இளைஞர்
களைப்பற்றிக் கர்த்தர் மகிழ்ச்சியடையமாட்
டார். அவர்களின் விதவைகளிடமும்,
அநாதைகளிடமும் அவர் இரக்கம் காட்ட

மாட்டார். ஏனென்றால், அனைவரும் தீமையானவர்கள். ஜனங்கள் செய்வதெல்லாம் தேவனுக்கு எதிரானவையே. ஜனங்கள் பொய் பேசுகிறார்கள். எனவே, தேவன் தொடர்ந்து ஜனங்களிடம் கோபமாக உள்ளார். தேவன் தொடர்ந்து அந்த ஜனங்களை தண்டிக்கிறார்.

18தீமையானது சிறு நெருப்பைப் போன்றது. முதலில் அது முட்களையும் நெருஞ்சியையும் எரிக்கும். பிறகு அது காட்டிலுள்ள பெரும் புதர்களை எரிக்கின்றது. இறுதியாக அது பெருநெருப்பாகி எல்லாம் புகையோடு போகும்.

19சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கோபமாக இருக்கிறார். எனவே, இந்த நாடு எரியும். எல்லா ஜனங்களும் நெருப்பில் எரிவார்கள். எவரும் தன் சகோதரனைக் காப்பாற்ற முயல மாட்டார்கள். 20ஜனங்கள் வலது பக்கத்திலிருந்து பிடுங்கித் தின்றாலும் பசியோடு இருப்பார்கள்; இடது பக்கத்திலிருந்து பிடுங்கித் தின்றாலும் பசியோடு இருப்பார்கள். பிறகு ஒவ்வொருவரும் திரும்பித் தங்களையே தின்பார்கள். 21(இதற்கு மனாசே எப்பிராயீமையும், எப்பிராயீம் மனாசேயையும் எதிர்த்துப் போராடுவார்கள். பிறகு இருவரும் யூதாவிற்கு எதிராகத் திரும்புவார்கள் என்று பொருள்.)

கர்த்தர் இன்னும் இஸ்ரவேலுக்கு எதிராகக் கோபமாக இருக்கிறார். கர்த்தர் அந்த ஜனங்களைத் தண்டிக்கத் தயாராக உள்ளார்.

10 தீமையான சட்டங்களை எழுதுகின்ற சட்ட நிபுணர்களுக்கு ஐயோ! அந்தச் சட்டமியற்றுபவர்கள் எழுதும் சட்டங்கள் ஜனங்களது வாழ்வைக் கடுமையாக்குகிறது. 2அந்தச் சட்டவல்லுநுனர்கள் ஏழைகளுக்கு நீதி வழங்குவதில்லை. அவர்கள் ஏழைகளின் உரிமைகளை பறித்துக்கொண்டனர். விதவைகள் மற்றும் அநாதைகளிடமிருந்து திருடுமாறு அவர்கள் அனுமதித்தனர்.

3சட்டமியற்றுபவர்களே, நீங்கள் செய்தவற்றுக்கெல்லாம் விளக்கம் தரவேண்டும். அப்போது என்ன செய்வீர்கள்? உங்களுக்குத் தூர நாட்டிலிருந்து அழிவு வரும். உதவிக்கு நீங்கள் எங்கே ஓடுவீர்கள்? உங்கள் பணமும் செல்வமும் உங்களுக்கு உதவி செய்யாது. 4நீங்கள் சிறைக்கைதியைப் போன்று பணிந்து வாழவேண்டும். நீங்கள் மரித்துப் போனவனைப் போன்று கீழே விழவேண்டும். ஆனாலும் அது உங்களுக்கு உதவாது! தேவன் இன்னும் கோபமாக இருக்கிறார். தேவன் இன்னும் உங்களைத் தண்டிக்கத் தயாராக இருக்கிறார்.

5தேவன், "நான் அசீரியாவை ஒரு தடியைப் போன்று பயன்படுத்துவேன். கோபத்தில் நான் இஸ்ரவேலைத் தண்டிக்க அசீரியாவைப் பயன்படுத்துவேன். 6நான் அசீரியாவை அனுப்பி தீமை செய்கிற என் ஜனங்களுக்கு எதிராகப் போராடச் சொல்லுவேன். நான் அந்த ஜனங்கள்மேல் கோபமாக இருக்கிறேன். அவர்களை எதிர்த்துப் போரிடுமாறு அசீரியாவிற்குக் கட்டளையிட்டேன். அசீரியா அவர்களைத் தோற்கடிக்கும். அவர்களது செல்வங்களை அசீரியா எடுத்துக்கொள்ளும். இஸ்ரவேல் அசீரியாவிற்குத் மதிக்கப்படுகிற அழுக்கைப்போலிருக்கும்.

7"ஆனால் நான்தான் அதனைப் பயன்படுத்துகிறேன் என்பது அசீரியாவிற்குத் தெரியாது. எனக்கு அது ஒரு கருவி என்பது அசீரியாவிற்கு புரியாது. மற்றவர்களை அழிக்கவேண்டும் என்று மட்டுமே அசீரியா விரும்புகிறது. அசீரியா பல நாடுகளை அழிக்கவேண்டும் என்று மட்டுமே திட்டமிடுகிறது. 8அசீரியா தனக்குள் 'எனது தலைவர்களெல்லாம் அரசர்களைப் போன்றவர்கள்! 9கல்னோ நகரமானது கர்கேமிசைப் போன்றது. ஆமாத் நகர் அர்பாத்தைப்போன்றது. சமாரியா தமஸ்குவைப் போன்றது. 10நான் அந்தத் தீமையான அரசுகளைத் தோற்கடித்தேன், இப்போது அவற்றை நான் கட்டுப்படுத்துகிறேன். அவர்களால் தொழுதுகொள்ளப்படுகிற விக்கிரகங்கள் எருசலேம் மற்றும் சமாரியாவில் உள்ள விக்கிரகங்களைவிட எண்ணிக்கையில் மிகுந்தவை. 11நான்சமாரியாவையும் அதிலுள்ள விக்கிரகங்களையும் தோற்கடித்தேன். நான் எருசலேமையும் அந்த ஜனங்கள் செய்த விக்கிரகங்களையும் தோற்கடிப்பேன்' என்றனர்'" என்பார்.

12எனது ஆண்டவர், எருசலேமில் சீயோன் மலையிலும் செய்யவேண்டுமென்று திட்டமிட்டவற்றைச் செய்து முடிப்பார். பிறகு கர்த்தர் அசீரியாவைத் தண்டிப்பார். அசீரியாவின் அரசன் வீண்பெருமை கொண்டவன். அவனது பெருமை அவனைப் பல தீய செயல்களைச் செய்ய வைத்தது. எனவே, தேவன் அவனைத் தண்டிப்பார்.

13அசீரியாவின் அரசன், "நான் ஞானமுள்ளவன். எனது சொந்த ஞானத்தாலும் பெலத்தாலும் நான் பல பெரியக் காரியங்களைச் செய்திருக்கிறேன். நான் பல நாடுகளைத் தோற்கடித்துள்ளேன். நான் அவற்றின் செல்வங்களைப் பறித்துள்ளேன். அங்குள்ள ஜனங்களை நான் அடிமைகளாக எடுத்துள்ளேன். நான் மிகவும் பெலமுள்ளவன். 14எனது சொந்தக் கைகளால் அனைத்து ஜனங்களின் செல்வங்களையும் ஒருவன் ஒரு பறவையின் முட்டைகளையெல்லாம், எடுத்துக்கொள்வதுபோல் எடுத்துக்கொண்டேன். பறவை தன் கூட்டையும் முட்டைகளையும் விட்டுவிட்டுப் போகும். அக்கூட்டைக் காப்பாற்ற எதுவுமில்லை. எந்தப் பறவையும் தன் அலகாலும் இறக்கைகளாலும் எதிர்த்துப் போரிடாது. எனவே, ஜனங்கள் முட்டைகளை எடுத்துக் கொள்கிறார்கள். அதைப்போலவே, பூமியில்

*உள்ள ஜனங்களையெல்லாம் நான் எடுத்துக்*
*கொள்வதை, எவரும் தடுக்க முடியாது”*
*என்றார்.*

### அசீரியாவின் பலத்தைத் தேவன் கட்டுப்படுத்துகிறார்:

15ஒரு கோடரி அதைப் பயன்படுத்தி
வெட்டுகிறவனைவிடச் சிறந்ததல்ல அரிவா
ளானது அதை வைத்திருப்பவனைவிடச்
சிறந்ததல்ல. ஆனால் அசீரியாவோ தன்னைத்
தேவனைவிட முக்கியமானதாகவும் பெலமு
டையதாகவும் நினைக்கிறது. தடியானது
தன்னைப் பயன்படுத்தி தண்டிப்பவனைவிட
பெலமுள்ளதாகவும் முக்கியமானதாகவும்
நினைப்பது போன்றதாகும்.

16அசீரியா தன்னைப் பெரிதாக நினைத்து
கொள்ளும். ஆனால் சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் அசீரியாவிற்கு எதிராக மிகப்
பயங்கரமான நோயை அனுப்புவார். நோயுற்
றவன் தன் எடையை இழப்பது போன்று
அசீரியா தனது செல்வத்தையும் பெலத்தை
யும் இழக்கும். பிறகு அசீரியாவின் மகி
மையும் அழியும். எல்லாம் அழியும்வரை
நெருப்பு எரிவதுபோல் அது இருக்கும்.
17இஸ்ரவேலின் வெளிச்சமானவர் (தேவன்)
ஒரு நெருப்பைப் போன்றவர். பரிசுத்தமா
னவர் ஜுவாலையைப் போன்றவர். அது
ஒரு நெருப்பைப் போன்று முதலில் முட்
களையும் நெருஞ்சிகளையும் எரிக்கும்.
18பிறகு, அது பெரிய மரங்களையும், திராட்
சைத் தோட்டங்களையும் எரிக்கும். இறுதி
யாக, ஜனங்கள் உட்பட எல்லாமே அழிக்
கப்படும். தேவன் அசீரியாவை அழிக்கும்
போது அப்படி இருக்கும். அசீரியா அழுகிய
தடியைப்போன்றிருக்கும். 19காட்டில் சில
மரங்கள் மட்டும் அவனுக்காக விடப்பட்டி
ருக்கும். ஒரு சிறுபிள்ளைகூட அவற்றை
எண்ண முடியும்.

20அப்போது, இஸ்ரவேலில் மீதியுள்ள
ஜனங்களும், யாக்கோபின் வம்சத்தில் தப்பி
னவர்களும் தம்மை அடித்தவர்களைச் சார்ந்
திருக்கமாட்டார்கள். அவர்கள் இஸ்ரவேலின்
பரிசுத்தமானவரான கர்த்தரை உண்மை
யாகவே சார்ந்திருக்கக் கற்றுக்கொள்வார்கள்.
21யாக்கோபின் குடும்பத்தில் மீதியுள்ள ஜனங்
கள் மீண்டும் வல்லமைமிக்க தேவனைப்
பின்பற்றுவார்கள்.

22உங்கள் ஜனங்கள் மிகுதியானவர்கள்.
அவர்கள் கடற்கரையின் மணலைப் போன்ற
வர்கள். ஆனால் கொஞ்சம் ஜனங்களே
தேவனிடம் திரும்பி வருவார்கள். ஆனால்
முதலில் உனது நாடு அழிக்கப்படும்.
நாட்டை அழித்துவிடுவதாகத் தேவன் அறி
வித்திருக்கிறார். பிறகே, நாட்டுக்கு நன்மை
வந்து சேரும். இது ஆறு நிரம்பிவருவது
போன்றது. 23சர்வ வல்லமையுள்ள எனது
கர்த்தராகிய ஆண்டவர், நிச்சயமாக இந்த
நாட்டை அழிப்பார்.

24எனது ஆண்டவராகிய சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர், “சீயோன் மலையில் வாழும்
என் ஜனங்களே, அசீரியாவுக்கு அஞ்ச
வேண்டாம்! முன்பு உங்களை எகிப்து
அடித்தது போன்று அது அடிக்கும்.
உங்களைக் காயப்படுத்த அசீரியா தடியைப்
பயன்படுத்தியது போன்று அது இருக்கும்.
25ஆனால் சிறிது காலத்தில் என் கோபம்
நிறுத்தப்படும். அசீரியா உங்களைப் போது
மான அளவிற்குத் தண்டித்து விட்டது
என்று நான் திருப்தி அடைவேன்” என்றார்.

26பிறகு சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
அசீரியாவை ஒரு சவுக்கால் அடிப்பார்.
கடந்த காலத்தில், கர்த்தர் மீதியானியர்களை
காகத்தின் பாறை* அருகில் தோற்கடித்தார்.
கர்த்தர் அசீரியாவைத் தாக்குவதுப்போல்
இருக்கும். முன்பு கர்த்தர் எகிப்தைத் தண்
டித்தார். அவர் தன் தடியைக் கடலுக்குமேல்
ஓங்கினார். தம் ஜனங்களை எகிப்திலிருந்து
அழைத்து வந்தார். அது அசீரியாவிலிருந்து
கர்த்தர் தம் ஜனங்களைக் காப்பாற்றியது
போலவே இருக்கும்.

27உங்களுக்கு அசீரியா துன்பங்களைக்
கொண்டு வரும். அந்தத் துன்பங்கள் உங்கள்
தோளில் நுகம் வைத்துத் தாங்குகிற அள
விற்கு இருக்கும். ஆனால், அந்த நுகமானது
உங்கள் தோளில் இருந்து விலக்கப்படும்.
அந்நுகம் தேவனால் உடைக்கப்படும்.

### இஸ்ரவேலுக்குள் அசீரியப் படைகள் நுழைதல்

28*படையானது “ஆயாத்து” அருகில்
நுழையும். அப்படை மிக்ரோன் வரை
கடந்து செல்லும். அப்படை மிக்மாசிலே
தன் உணவுப் பொருட்களை வைத்திருக்கும்.
29அப்படை ஆற்றை மாபாலில் “கடக்கும்”
அது கேபாவில்* தூங்கும். ராமா அதைப்
பார்த்து அஞ்சும். சவுலின் ஊராகிய
கிபியாவின் ஜனங்கள் ஓடிச்செல்வார்கள்.

30பாத் காலீமே* சத்தமிட்டு அழு! லாயீஷா
கவனி. ஆனதோத்தே பதில் சொல்! 31மத்
மேனாலின் ஜனங்கள் ஓடிப்போனார்கள்.
கேபிமின் ஜனங்கள் ஒளிந்துகொண்டார்கள்.
32இந்நாளில், படையானது நோபிலே நிறுத்
தப்படும். அப்படையானது எருசலேம் மலை
யான சீயோனுக்கு எதிராகப் போரிடத்
தயார் செய்யும்.

---

**காகத்தின் பாறை** பார்க்க: எண்ணாகமம் 22:1.

**வசனங்கள் 28-32** அசீரியா படைகள் வந்து யூதாவிற்கு எதிராக எவ்வாறு போரிட்டன என்று காட்டுகிறார். இது ஒரு வார்த்தை விளையாட்டு.

**கேபா, ராமா, கிபியா** எருசலேமின் வடபகுதி பட்டணங்கள்.

**பாத் காலீம்** எருசலேமின் தென் பகுதியிலுள்ள நகரம். ‘அலைகளின் மகள்’ என்றும் ‘கடற்பறவை’ என்றும் பொருள். அப்பறவைகள் அதிக சத்தத்தை எழுப்பும்.

33கவனி! சர்வ வல்லமையுள்ள கர்த்த
ராகிய எனது ஆண்டவர், அசீரியா என்னும்
மரத்தை வெட்டித் தள்ளுவார். கர்த்தர்
தமது பெரும்பலத்தால் இதனைச் செய்து
முடிப்பார். பெரிய முக்கிய ஜனங்கள்
வெட்டி வீசப்படுவார்கள், அவர்கள் முக்
கியம் இல்லாமல் போவார்கள். 34கர்த்தர்
அக்காட்டினைத் தனது கோடரியால்
வெட்டுவார். லீபனோனில் உள்ள (முக்கிய
ஜனங்களான) பெரிய மரங்களும் விழும்.

### சமாதானத்தின் அரசர் வந்துகொண்டிருக்கிறார்

11 ஈசாய் என்னும் அடிமரத்திலிருந்து ஒரு
குழந்தை துளிர் தோன்றி வளரத்
தொடங்கியது. அந்தக் கிளையானது ஈசா
யின் குடும்பத்தில் வேரிலிருந்து தோன்றி
வளரும். 2கர்த்தருடைய ஆவி அந்தச் சிறு
(பிள்ளையின்) துளிர்மேல் இருக்கும்.
ஆவியானவர் ஞானம், புரிந்துகொள்ளுதல்,
வழிநடத்துதல், வல்லமை போன்றவற்றைத்
தருகிறார். ஆவியானவர் அந்த பிள்ளைக்குக்
கர்த்தரைத் தெரிந்துகொள்ளவும், அவரை
மதிக்கவும் உதவுவார். 3இந்தப் பிள்ளை
கர்த்தருக்கு மரியாதை கொடுக்கும். பிள்ளை
யை இது மகிழ்ச்சி உடையதாகச் செய்யும்.
அவர் தமது கண்கண்டபடி நியாயம்
தீர்க்கமாட்டார். அவர் தமது காதில் கேட்ட
படி தீர்ப்பு அளிக்கமாட்டார். 4-5அவர்
ஏழை ஜனங்களை நீதியுடனும் பொறு
மையுடனும் நியாயம் தீர்ப்பார். இந்த
நாட்டிலுள்ள ஏழை ஜனங்களுக்குச் சரியா
கத் தீர்ப்பு செய்து காரியங்களைச் செய்வார்.
அவர் ஜனங்களை அடிக்க வேண்டும்
என்று முடிவு செய்தால், பிறகு அவர்
கட்டளையிடுவார், அந்த ஜனங்கள் அடிக்
கப்படுவார்கள். ஜனங்கள் மரிக்க வேண்டும்
என்று அவர் முடிவு செய்தால், அவர்
கட்டளையிட, பாவிகள் கொல்லப்படுவார்
கள். நன்மையும் நீதியும் இந்தக் குழந்தைக்குப்
பலத்தைக் கொடுக்கும். அவை அவருக்கு
இடுப்பைச்சுற்றிக் கட்டப்படும் கச்சையைப்
போல இருக்கும்.
6அப்போது, ஓநாய்கள் ஆட்டுக்குட்டிக
ளோடு சமாதானமாய் வாழும். புலிகள்
வெள்ளாட்டுக் குட்டிகளோடு சமாதானமாய்
படுத்துக்கொள்ளும். கன்றுக்குட்டியும் இளஞ்
சிங்கமும் காளையும் சமாதானமாக ஒரே
இடத்தில் வாழும். ஒரு சிறுபிள்ளை அவை
களை வழிநடத்துவான். 7பசுக்களும் கரடியும்
சமாதானமாக சேர்ந்து மேயும். அவற்றின்
குட்டிகள் ஒன்றையொன்று காயப்படுத்தாமல்
சேர்ந்து படுத்துக்கொள்ளும். சிங்கமானது,
பசுவைப்போன்று புல்லைத் தின்னும். பாம்பு
களும் கூட ஜனங்களைக் கடிக்காது. 8ஒரு
குழந்தை நல்லபாம்பின் புற்றினருகில்
விளையாட முடியும். ஒரு குழந்தை ஒரு
விஷமிக்க பாம்பின் துளையில் கையை
விடமுடியும்.
9இவையனைத்தும் சமாதானத்தைக் காட்
டும். ஒருவரும் மற்றவரைத் துன்புறுத்த
மாட்டார்கள். எனது பரிசுத்தமான மலை
யிலுள்ள ஜனங்கள் பொருட்களை அழிக்க
விரும்பமாட்டார்கள். ஏனென்றால், ஜனங்
கள் உண்மையிலேயே கர்த்தரை அறிந்தி
ருக்கின்றனர். கடல் நிறைய தண்ணீர்
இருப்பது போன்று அவர்களிடம் கர்த்தரைப்
பற்றிய அறிவு நிறைந்திருக்கும்.
10அப்போது, ஈசாயின் குடும்பத்தில்
இருந்து ஒருவர் வருவார். அவர் ஒரு
கொடியைப்போல இருப்பார். “அக்கொடி”
அனைத்து நாடுகளையும் காட்டி அவரைச்
சுற்றிவரும். நாடுகளெல்லாம் தான் செய்ய
வேண்டியதைப்பற்றி அவரிடம் கேட்கும்.
அவர் இருக்கின்ற இடமெல்லாம் மகிமை
நிறைந்திருக்கும்.
11அப்போது, என் ஆண்டவரான தேவன்,
மீண்டும் தமது கையை உயர்த்தி மீதியான
ஜனங்களை அழைத்துக்கொள்வார். இத
னைத் தேவன் இரண்டாம் முறையாகச்
செய்கின்றார். (இவர்கள் தேவனுடைய
ஜனங்கள். இவர்கள் அசீரியா, வட எகிப்து,
தென் எகிப்து, எத்தியோப்பியா, ஏலாம்,
பாபிலோனியா, ஆமாத், மற்றும் தூரநாடு
களிலும் மீதியாயிருந்தவர்கள்.)
12தேவன் இந்தக் “கொடியை” அனைத்து
ஜனங்களுக்கும் அடையாளமாக ஏற்றுவார்.
யூதா மற்றும் இஸ்ரவேலில் உள்ள ஜனங்கள்
தம் நாட்டை விட்டுப் போகும்படி பலவந்
தப்படுத்தப்படுவார்கள். ஜனங்கள் பூமியில்
உள்ள தூரநாடுகளுக்கெல்லாம் சிதறிப்
போனார்கள். ஆனால் தேவன் அனைவ
ரையும் ஒன்று சேர்ப்பார்.
13அப்போது, எப்பிராயீம் யூதாவின் மீது
பொறாமை கொள்ளாது. யூதாவில் எந்தப்
பகைவரும் விடுபட மாட்டார்கள். யூதா
எப்பிராயீமுக்கு எவ்விதத் துன்பமும்
கொடுக்காது. 14ஆனால் எப்பிராயீமும்
யூதாவும் பெலிஸ்தர்களைத் தாக்குவார்கள்.
இந்த இரு நாடுகளும் சிறு மிருகங்களைப்
பிடிக்கும் பறவைகளைப் போன்று சேர்ந்து
பறக்கும். அவர்கள் இருவரும் கிழக்கு
நாட்டு ஜனங்களின் ஐசுவரியத்தை கொள்
ளையிடுவார்கள். எப்பிராயீமும் யூதாவும்
ஏதோம், மோவாப்* மற்றும் அம்மோன்*
ஜனங்களைக் கட்டுப்படுத்துவார்கள்.
15கர்த்தர் கோபங்கொண்டு எகிப்திலுள்ள
கடலை இரண்டாகப் பிளந்தார். இதுபோல,
கர்த்தர் தனது கையை ஐபிராத்து ஆற்றின்
மேல் அசைப்பார். அவர் ஆற்றை அடித்ததும்

---

**ஏதோம், மோவாப்** இஸ்ரவேலின் கிழக்குப் பகுதி நாடுகள். இவைகள் பல ஆண்டுகளாக இஸ்ரவேலின் பகைவர்களாக இருந்தனர்.

**அம்மோன்** இஸ்ரவேலின் கிழக்குப் பகுதி நாடு.

அது ஏழு சிறு ஆறுகளாகப் பிரியும்.
இந்தச் சிறு ஆறுகள் ஆழம் குறைந்தவை.
இவற்றில் ஜனங்கள் தம் பாதரட்சைக்
கால்களோடு எளிதாக நடந்துபோகலாம்.
16தேவனுடைய ஜனங்கள் அசீரியாவை
விட்டுச் செல்ல ஒரு பாதை கிடைக்கும்.
இது தேவன் எகிப்தை விட்டு ஜனங்களை
வெளியே கொண்டுவந்தது போல இருக்கும்.

### தேவனைத் துதிக்கும் பாடல்

12 அப்போது நீ கூறுவாய்: "கர்த்தாவே,
நான் உம்மைத் துதிக்கிறேன் நீர்
என் மீது கோபமாக இருந்தீர். ஆனால்
இப்போது கோபமாக இருக்கவேண்டாம்!
என் மீது உமது அன்பைக் காட்டும்."
2என்னைத் தேவன் காப்பாற்றுகிறார்.
நான் அவரை நம்புகிறேன். நான் அஞ்ச
வில்லை. அவர் என்னைக் காப்பாற்றுகிறார்.
கர்த்தராகிய யேகோவா எனது பெலம்.
அவர் என்னைக் காப்பாற்றுகிறார். நான்
அவரைத் துதிக்கும் பாடல்களைப் பாடுகி
றேன்.
3உனது தண்ணீரை இரட்சிப்பின் ஊற்று
களிலிருந்து பெற்றுக்கொள். பிறகு நீ மகிழ்ச்
சியாய் இருப்பாய்.
4பிறகு நீ கூறுவாய்: "கர்த்தரைத் துதியுங்
கள்! அவரது நாமத்தைத் தொழுதுகொள்
ளுங்கள்! அவர் செய்தவற்றை அனைத்து
ஜனங்களிடமும் கூறுங்கள்!"
5கர்த்தரைத் துதிக்கும் பாடல்களைப்
பாடுங்கள்! ஏனென்றால், அவர் பெரிய
செயல்களைச் செய்துள்ளார். உலகம் முழு
வதும் தேவனுடைய செயல்களைக் குறித்த
செய்தியைப் பரப்புங்கள். எல்லா ஜனங்
களும் இதனை அறியும்படி செய்யுங்கள்.
6சீயோனின் ஜனங்களே, இந்தகாரியங்க
ளைப்பற்றிச் சத்தமிடுங்கள்! இஸ்ரவேலின்
பரிசுத்தர் பலமிக்க வழியில் உங்களோடு
இருக்கிறார். எனவே மகிழ்ச்சியோடு
இருங்கள்!

### பாபிலோனுக்குத் தேவனுடைய செய்தி

13 ஆமோத்சின் மகனான ஏசாயாவுக்கு
தேவன் பாபிலோன்பற்றிய சோகச்
செய்தியைக் காட்டினார். 2தேவன், "எதுவும்
வளராத அந்த இடத்தில், மலை மீது
கொடியை ஏற்றுங்கள். அந்த மனிதர்களை
அழையுங்கள். உங்கள் கைகளை அசை
யுங்கள். அவர்கள் முக்கியமானவர்களுடைய
வாசல்களில் நுழையும்படி கூறுங்கள்!"
என்றார்.
3தேவன்: "நான் அவர்களை ஜனங்
களிடமிருந்து பிரித்திருக்கிறேன். நானே
அவர்களுக்கு ஆணையிடுவேன். நான் கோப
மாக இருக்கிறேன். ஜனங்களைத் தண்டிக்க
எனது மிகச் சிறந்தவர்களை கூட்டிச் சேர்த்
தேன். மகிழ்ச்சியுள்ள இவர்களைப்பற்றி
பெருமிதமடைகிறேன்!
4"மலைகளில் உரத்த சத்தம் உள்ளது.
அச்சத்தத்தைக் கவனியுங்கள்! அது பல
மனிதர்களின் சத்தம் போலுள்ளது. பல
அரசாங்கங்களிலிருந்து ஜனங்கள் அங்கு
கூடியிருக்கின்றார்கள். சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் தம் படைகளைக் கூட்டியிருக்கிறார்.
5கர்த்தரும் அவரது படைகளும் தூர
நாடுகளிலிருந்து வந்துள்ளனர். அவர்கள்
பூமியின் எல்லைகளுக்கு அப்பாலிருந்து
வருகிறார்கள் கர்த்தர் தன் கோபத்தைக்
காட்ட இவர்களை ஆயுதமாகப் பயன்படுத்து
கிறார். இந்தப் படை முழு நாட்டையும்
அழிக்கும்" என்றார்.
6கர்த்தருடைய விசேஷ நாள் நெருங்கு
கிறது. எனவே அழுங்கள். உங்களுக்காகச்
சோகமாக இருங்கள். பகைவர்கள் உங்கள்
செல்வங்களைப் பறிக்கும் காலம் வந்து
கொண்டிருக்கிறது. சர்வ வல்லமையுள்ள
தேவன் இதனை நிறைவேற்றுவார். 7ஜனங்
கள் தம் தைரியத்தை இழப்பார்கள். ஜனங்
களை அச்சம் பெலவீனப்படுத்தும். 8ஒவ்வொ
ருவரும் அஞ்சுவார்கள். இந்த அச்சம்
அவர்களின் வயிற்றில் பிரசவ வேதனை
போன்ற துன்பத்தைத் தரும். அவர்களின்
முகங்கள் நெருப்பைப்போன்று சிவக்கும்.
ஒருவரையொருவர் பார்த்து பிரமித்துப்போ
வார்கள். காரணம் எல்லாருடைய முகங்களி
லும் அச்சம் நிரம்பியிருக்கும்.

### பாபிலோனுக்கு எதிரான தேவனுடைய தீர்ப்பு

9பார்! கர்த்தருடைய விசேஷ நாள் வருகி
றது! இது பயங்கரமான நாள். தேவன்
மிகவும் கோபம் அடைந்து, நாட்டினை
அழிப்பார். பாவம் செய்த அனைவரையும்
தேவன் அழித்துப்போடுவார். 10வானம்
இருட்டாகும். சூரியன், சந்திரன், நட்சத்
திரங்கள் எல்லாம் ஒளி வீசாது.
11தேவன் கூறுகிறார்: "உலகத்திற்கு கேடு
ஏற்பட நான் காரணமாக இருப்பேன்.
கெட்டவர்களை அவர்களது பாவத்துக்காகத்
தண்டிப்பேன். ஆணவம் கொண்டவர்கள்
தங்கள் ஆணவத்தை விடும்படி செய்வேன்.
மற்றவர்களுக்கு அற்பமாகத் தெரியும்படி
செயல்புரிகிறவர்களின் வாயாட்டத்தை நான்
தடுப்பேன். 12கொஞ்சம்பேர் மட்டுமே விடுபடு
வார்கள். அதிகம்பேர் இருக்கமாட்டார்கள்.
தங்கத்தைப் போன்று அரிதாக இருப்பார்கள்.
இவர்கள் சுத்தமான தங்கத்தைவிட விலை
மதிப்புள்ளவர்கள். 13எனது கோபத்தால்
வானத்தை நடுங்க வைப்பேன். பூமி தன்
இடத்திலிருந்து நகரும்."
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் தன் கோபத்
தைக் காட்டும் நாளில் இவை அனைத்தும்
நிறைவேறும். 14பிறகு, காயம்பட்ட மானைப்
போல, பாபிலோனை விட்டு ஜனங்கள்
ஓடுவார்கள். மேய்ப்பன் இல்லாத ஆடுகளைப்

போல, அவர்கள் ஓடுவார்கள். ஒவ்வொரு
வரும் திரும்பி தங்கள் சொந்த நாட்டிற்கும்
ஜனங்களிடமும் ஓடுவார்கள். 15ஆனால்
பாபிலோனிய ஜனங்களைப் பகைவர்கள்
துரத்துவார்கள். பகைவன் ஒருவனைப்
பிடிக்கும்போது, அவனை வாளால்
கொல்வான். 16அவர்களது வீடுகளிலுள்ள
அனைத்தும் களவாடப்படும். அவர்களின்
மனைவிகள் கற்பழிக்கப்படுவார்கள். அவர்க
ளின் சிறிய குழந்தைகள், ஜனங்கள் பார்த்
துக்கொண்டிருக்கும்போதே அடித்துக் கொல்
லப்படுவார்கள்.

17தேவன் கூறுகிறார்: “கவனி, மீதியானி
யப்படைகள் பாபிலோனைத் தாக்க நான்
காரணமாக இருப்பேன். மீதியானியப் படை
களுக்குப் பொன்னும், வெள்ளியும் கொடுத்
தாலும்கூட தங்கள் தாக்குதலை நிறுத்தாது.
18பாபிலோனிலுள்ள இளைஞர்களைப்
படைவீரர்கள் தாக்கிக்கொல்வார்கள். படை
வீரர்கள் குழந்தைகளிடம் இரக்கம் காட்ட
மாட்டார்கள். படைவீரர்கள் சிறுபிள்ளை
களிடமும் தயவோடு இருக்க மாட்டார்கள்.
பாபிலோன் அழிக்கப்படும். அது சோதோம்
கொமோரா ஆகியவற்றின் அழிவைப்போல்
இருக்கும். தேவன் இந்த அழிவுக்குக் காரண
மாக இருப்பார். எதுவும் விடுபடாது.

19“எல்லா இராஜ்யங்களையும்விட பாபி
லோன் மிகவும் அழகானது. பாபிலோனிய
ஜனங்கள் தமது நகரத்தைப்பற்றிப் பெருமை
யோடு இருக்கிறார்கள். 20ஆனால் தொடர்ந்து
பாபிலோன் அழகுடையதாக இருக்காது.
வருங்காலத்தில் அங்கு ஜனங்கள் தொடர்ந்து
வாழமாட்டார்கள். அரேபியர்கள் அங்கே
தமது கூடாரங்களை அமைக்கமாட்டார்கள்.
மேய்ப்பர்கள் தங்கள் ஆடுகளை அங்கே
மேய்ச்சலுக்குக் கொண்டுவரமாட்டார்கள்.
21அங்கே வனாந்திரத்திலுள்ள காட்டு
மிருகங்கள் மட்டுமே வாழும். பாபிலோனின்
வீடுகளில் ஜனங்கள் வசிக்கமாட்டார்கள்.
வீடு முழுவதும் ஆந்தைகளும், பெரிய
பறவைகளும் வசிக்கும். காட்டு ஆடுகள்
வீடுகளில் விளையாடும். 22காட்டு நாய்களும்,
நரிகளும் பாபிலோனில் மிகப்பெரிய
அழகான கட்டிடங்களில் ஊளையிடும்.
பாபிலோன் அழியும். பாபிலோனின் முடிவு
அருகிலுள்ளது. பாபிலோனின் அழிவை
நான் தாமதமாக்க விடமாட்டேன்” என்று
தேவன் கூறுகிறார்.

### இஸ்ரவேலர்கள் வீட்டிற்குத் திரும்புவார்கள்

14 வருங்காலத்தில், கர்த்தர் மீண்டும்
யாக்கோபிடம் தமது அன்பைக்
காட்டுவார். கர்த்தர் மீண்டும் இஸ்ரவேல்
ஜனங்களைத் தேர்ந்தெடுப்பார். அந்த
நேரத்தில், கர்த்தர் அந்த ஜனங்களுக்கு
அவர்களின் நாட்டைக் கொடுப்பார். பிறகு
யூதரல்லாத ஜனங்கள் யூத ஜனங்களோடு
தாங்களாகவே சேர்ந்துகொள்வார்கள்.
இரண்டு ஜனங்களும் சேர்ந்து ஒரே குடும்
பமாக யாக்கோபின் குடும்பமாக ஆவார்கள்.
2அந்த நாடுகள், இஸ்ரவேல் ஜனங்களை
மீண்டும் இஸ்ரவேல் நாட்டிற்குக் கொண்டு
செல்லும். மற்ற நாடுகளில் உள்ள அந்த
ஆண்களும், பெண்களும் இஸ்ரவேலருக்கு
அடிமைகளாக ஆவார்கள். கடந்த காலத்தில்
அந்த ஜனங்கள் இஸ்ரவேல் ஜனங்களைத்
தமது அடிமைகளாக இருக்க வற்புறுத்தி
னார்கள். ஆனால் இந்தக் காலத்தில் இஸ்ர
வேல் ஜனங்கள் அந்த நாடுகளைத் தோற்
கடித்து, அவர்கள் மேல் ஆட்சி செய்
கின்றனர். 3கர்த்தர் உங்களது கடின வேலை
களை எடுத்துப் போட்டு உங்களுக்கு
ஆறுதலைத் தருவார். கடந்த காலத்தில்
நீங்கள் அடிமைகளாக இருந்தீர்கள். மனிதர்
கள் உங்களைக் கடினமான வேலை செய்யும்
படி வற்புறுத்தினார்கள். ஆனால் கர்த்தர்
உங்கள் கடின வேலைகளை முடிவுக்குக்
கொண்டுவருவார்.

### பாபிலோனிய அரசனைப் பற்றிய பாடல்

4அந்த நேரத்தில், பாபிலோன் அரசனைப்
பற்றிய இந்தப் பாடலைப் பாடத் துவங்
குங்கள்: அரசன் நம்மை ஆளும்போது,
ஈனமாக ஆண்டான். ஆனால் இப்போது
அவனது ஆட்சி முடிந்து விட்டது.

5கர்த்தர் தீய அரசர்களின் கொடுங்கோலை
உடைப்பார். கர்த்தர் அவர்களின் அதி
காரத்தை எடுத்துக்கொள்வார்.

6கோபத்தில் பாபிலோனிய அரசன் ஜனங்
களை அடித்தான். ஜனங்களை அடிப்பதை
அவன் ஒருபோதும் நிறுத்தவில்லை. அத்தீய
அரசன் ஜனங்களைக் கோபத்துடன் ஆண்
டான். அவன் எப்பொழுதும் ஜனங்களைத்
துன்புறுத்துவதை நிறுத்தவில்லை.

7ஆனால் இப்பொழுது, முழு நாடும்
ஓய்வெடுக்கிறது. நாடு அமைதியாக உள்ளது.
இப்பொழுது ஜனங்கள் கொண்டாடத்
துவங்குகின்றனர்.

8நீ தீய அரசனாக இருந்தாய். இப்பொழுது
நீ முடிந்து போனாய். பைன் மரங்களும்
கூட மகிழ்ச்சியாய் உள்ளன. லீபனோனில்
உள்ள கேதுரு மரங்களும் மகிழ்ச்சியாய்
உள்ளது. “அரசன் எங்களை வெட்டிச்
சாய்த்தான். ஆனால் இப்பொழுது அரசனே
விழுந்துவிட்டான். அவன் இனி ஒரு
போதும் நிற்கமாட்டான்” என்று மரங்கள்
சொல்கின்றன.

9மரணத்தின் இடமான பாதாளம் அதிர்கி
றது. ஏனென்றால் நீ வந்துகொண்டிருக்
கிறாய். உனக்காக பூமியில் இருந்த அனைத்
துத் தலைவர்களின் ஆவிகளையும் பாதாளம்
எழுப்பிக்கொண்டிருக்கிறது. அரசர்களை
அவர்களின் சிங்காசனத்திலிருந்து பாதாளம்
எழுந்து நிற்கச் செய்து கொண்டிருக்கிறது.

*உன் வருகைக்காக அவை தயாராக*
*உள்ளன.*
*10இந்த அனைத்துத் தலைவர்களும் உன்*
*னைக் கேலிசெய்வார்கள். "இப்பொழுது*
*எங்களைப் போன்று நீயும் மரித்த உடல்.*
*இப்பொழுது நீ சரியாக எங்களைப்*
*போன்றே இருக்கிறாய்" என்று அவர்கள்*
*சொல்வார்கள்.*
*11உங்கள் தற்பெருமை பாதாளத்திற்கு*
*அனுப்பப்பட்டிருக்கும். உங்கள் சுரவீணைக*
*ளிலிருந்து வரும் இசை, உங்கள் பெரு*
*மைக்குரிய ஆவியின் வரவைப் பற்றிக்*
*கூறும். பூச்சிகள் உங்கள் உடலை உண்ணும்.*
*பூச்சிகளின்மேல் படுக்கையைப்போல் நீ*
*படுத்திருப்பாய். புழுக்கள் உங்கள் உடலைப்*
*போர்வையைப் போல் மூடும்.*
*12நீ விடிவெள்ளியைப்போல் இருந்தாய்.*
*ஆனால், நீ வானத்திலிருந்து விழுந்து*
*விட்டாய். கடந்த காலத்தில், பூமியில்*
*உள்ள எல்லா நாடுகளும், உனக்குமுன்*
*பணிந்திருந்தது. ஆனால், இப்போது நீ*
*வெட்டித் தள்ளப்பட்டிருக்கிறாய்.*
*13நீ எப்பொழுதும் உனக்குள்ளேயே,*
*"நான் மிக உன்னதமான தேவனைப் போலா*
*வேன். நான் வானங்களுக்கு மேலே*
*போவேன். நான் எனது சிங்காசனத்தை*
*தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேல்*
*வைப்பேன். நான் பரிசுத்தமான மலையான*
*சாபோன் மீது அமர்வேன். நான், அந்த*
*மலைமேலே தெய்வங்களைச் சந்திப்பேன்.*
*14நான், மேகங்களிலுள்ள பலிபீடத்திற்கு*
*ஏறிப் போவேன் நான் மிக உன்னதமான*
*தேவனைப் போல் ஆவேன்" என்று*
*சொன்னாய்.*
*15ஆனால் அது நடைபெறவில்லை. நீ*
*தேவனோடு வானத்துக்குப் போகவில்லை.*
*நீ மரணத்தின் இடமான பாதாளத்தின்*
*பள்ளத்துக்குத் தள்ளப்பட்டாய்.*
*16ஜனங்கள் உன்னைக் கவனிக்கிறார்கள்.*
*உன்னைப்பற்றி சிந்திக்கிறார்கள். நீ ஒரு*
*மரித்துப்போன உடல் என்று ஜனங்கள்*
*பார்க்கின்றனர். ஜனங்கள் சொல்லுகிறார்கள்,*
*"பூமியிலுள்ள அனைத்து அரசுகளையும்*
*பெரும் பீதிக்கு உள்ளாக்கிய அதே மனிதன்*
*இவன்தானா?*
*17இதே மனிதன்தான் நகரங்களை அழித்து,*
*நாடுகளை வனாந்திரமாகச் செய்தவனா?*
*இதே மனிதன்தான் போரில் ஜனங்களைச்*
*சிறைப்பிடித்து அவர்களைத் தங்கள் வீடுக*
*ளுக்குப் போகவிடாமல் செய்தவனா?"*
*18பூமியில் ஒவ்வொரு அரசனும் மகிமை*
*யோடு மரித்திருக்கின்றனர். ஒவ்வொரு*
*அரசனும் தனது சொந்தக் கல்லறையை*
*வைத்திருக்கிறான்.*
*19ஆனால் தீய அரசனான நீ, உனது*
*கல்லறையிலிருந்து தூக்கி எறியப்பட்டாய்.*
*நீ மரத்திலிருந்து வெட்டப்பட்ட கிளையைப்*
*போல் வெட்டித் தூர எறியப்பட்டாய். நீ*
*போர்க்களத்தில் விழுந்து மரித்த மனிதனைப்*
*போலிருக்க மற்ற வீரர்கள் மிதித்துக்*
*கொண்டு சென்றனர். இப்பொழுது, நீ மற்ற*
*மரித்த மனிதர்களைப் போலிருக் கிறாய்.*
*கல்லறைத் துணிகளுக்குள் விழுந்து*
*கிடக்கிறாய்,*
*20மற்ற அரசர்கள் பலர் மரித்திருக்கின்*
*றனர். அவர்கள் அனைவரும் தம் சொந்தக்*
*கல்லறைகளை வைத்துள்ளனர். ஆனால்,*
*நீ அவர்களோடு சேரமாட்டாய். ஏனென்*
*றால், நீ உன் சொந்த நாட்டை அழித்து*
*விட்டாய். நீ உன் சொந்த ஜனங்களைக்*
*கொன்றாய். நீ செய்ததுபோல உன் பிள்ளை*
*கள் தொடர்ந்து, அழிவு வேலைகளைச்*
*செய்யமாட்டார்கள். உன் பிள்ளைகள்*
*நிறுத்தப்படுவார்கள்.*
*21அவனது பிள்ளைகளைக் கொலை*
*செய்யத் தயாராகுங்கள். அவர்களின் தந்தை*
*குற்றவாளி. அதனால் அவர்களைக் கொல்*
*லுங்கள். அவனது பிள்ளைகள் மீண்டும்*
*நாட்டின் அதிகாரத்தை எடுத்துக்கொள்ள*
*மாட்டார்கள். அவர்கள் மீண்டும் தமது*
*நகரங்களால் உலகத்தை நிரப்பமாட்டார்கள்.*
*22சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறினார்,*
*"அந்த ஜனங்களுக்கு எதிராக நான் நின்று*
*சண்டையிடுவேன். புகழ்பெற்ற நகரமான*
*பாபிலோனை நான் அழிப்பேன். பாபிலோ*
*னிலுள்ள அனைத்து ஜனங்களையும் நான்*
*அழிப்பேன். அவர்களின் பிள்ளைகளையும்*
*பேரப்பிள்ளைகளையும், பேரப்பிள்ளைக*
*ளின் பிள்ளைகளையும் நான் அழிப்பேன்"*
*என்றார். இவை அனைத்தையும் கர்த்தர்*
*தாமே கூறினார்.*
*23கர்த்தர்: "நான் பாபிலோனை மாற்று*
*வேன். அந்த இடம் ஜனங்களுக்காக இல்லா*
*மல் மிருகங்களுக்குரியதாகும். அந்த இடம்*
*தண்ணீருள்ள பள்ளத்தாக்கு ஆகும். நான்*
*'அழிவு என்னும் துடைப்பத்தை' எடுத்து*
*பாபிலோனைத் துடைத்துப் போடுவேன்"*
*என்றார். சர்வ வல்லமையுள்ள கர்த்தர்*
*இவற்றைச் சொன்னார்.*

### *தேவன் அசீரியாவையும் தண்டிப்பார்*

*24சர்வ வல்லமையுள்ள கர்த்தர் ஒரு*
*வாக்குறுதிச் செய்திருக்கிறார். "நான் வாக*
*குறுதிக் கொடுக்கிறேன். நான் நினைத்தது*
*போலவே இவை அனைத்தும் நிகழும்.*
*நான் திட்டமிட்ட வழியிலேயே இவை*
*அனைத்தும் சரியாக நிகழும். 25எனது*
*நாட்டிலுள்ள அசீரிய அரசனை நான்*
*அழிப்பேன். என் மலைகளின்மேல் அவனை*
*மிதித்துப் போடுவேன். அந்த அரசன் எனது*
*ஜனங்களை அவனது அடிமைகளாக்கினான்.*
*அவர்களின் பின் கழுத்தின்மேல் நுகத்தடி*
*யைப் பூட்டியிருக்கிறான். யூதா ஜனங்களின்*
*கழுத்திலிருந்து அந்தத்தடி நீக்கப்படும்.*
*அந்தப்பாரம் விலக்கப்படும். 26எனது ஜனங்க*
*ளுக்காக நான் திட்டமிட்டுள்ளது இதுதான்.*

அனைத்து நாடுகளையும் தண்டிக்க எனது புயத்தை பயன்படுத்துவேன்" என்று கர்த்தர் சொன்னார்.

27கர்த்தர் தனது திட்டத்தைச் செயல்படுத்தும்போது, அதனை எவரும் தடுக்க இயலாது. கர்த்தர் தனது கைகளை உயர்த்தி ஜனங்களைத் தண்டிக்கும்போது எவரும் அவரைத் தடுக்க முடியாது.

## பெலிஸ்தியாவுக்கான தேவனுடைய செய்தி

28இந்தத் துன்பச்செய்தியானது, ஆகாஸ் அரசன் மரித்த ஆண்டில்* கொடுக்கப்பட்டது.

29பெலிஸ்தியா நாடே உன்னை அடித்த அரசன் மரித்துப்போனதால் நீ மகிழ்ச்சியாக இருக்கிறாய். ஆனால் நீ உண்மையிலேயே மகிழ்ச்சியாக இருக்கமாட்டாய். அவனது ஆட்சி முடிந்துவிட்டது என்பது உண்மை. ஆனால் அரசனின் மகன் வந்து ஆட்சி செய்வான். இது, ஒரு பாம்பு அதை விட ஆபத்தான பாம்பைப் பெற்றது போன்றிருக்கும். இந்த புதிய அரசன் விரைவும் ஆபத்தும் கொண்டு பாம்புபோல உங்களுக்கு இருப்பான்.
30ஆனால் எனது ஏழை ஜனங்கள் பாதுகாப்புடன் உணவு உண்பார்கள். அவர்களின் பிள்ளைகளும் பாதுகாப்பாக இருப்பார்கள். எனது ஏழை ஜனங்கள் படுத்திருந்து பாதுகாப்பை உணர்வார்கள். ஆனால் உனது குடும்பத்தை நான் பட்டினியோடு கொல்வேன். மீதியுள்ள உனது ஜனங்கள் மடிந்துப்போவார்கள்.

31நகர வாசலருகில் உள்ள ஜனங்களே, கதறுங்கள்! நகரத்திலுள்ள ஜனங்களே, கதறுங்கள்! பெலிஸ்தியாவிலுள்ள அனைத்து ஜனங்களும் நடுங்குவார்கள். உங்கள் தைரியம் சூடான மெழுகுபோல் உருகிவிடும். வடக்கே பாருங்கள்! அங்கே புழுதி மேகம் இருக்கிறது! அசீரியாவிலிருந்து படையொன்று வந்துகொண்டிருக்கிறது! அந்தப் படையிலுள்ள அனைவரும் பலம் கொண்டவர்கள்!

32அந்தப்படை தம் நாட்டிற்கு தூதுவர்களை அனுப்பும். அந்தத் தூதுவர்கள் தம் ஜனங்களிடம், பெலிஸ்தியா தோற்கடிக்கப்பட்டது. ஆனால் கர்த்தர் சீயோனைப் பலப்படுத்தினார். அவரது ஏழை ஜனங்கள் அங்கு பாதுகாப்பாக இருக்கிறார்கள்" என்று அறிவிப்பார்கள்.

## மோவாபிற்கு தேவனுடைய செய்தி

15 இது மோவாபைப் பற்றி துக்கமான செய்தி. ஒரு இரவு, ஆர், மோவாப் ஆகியவற்றிலிருந்து படைகள் செல்வங்களை எடுத்தனர். அந்த இரவில் நகரம் அழிக்கப்பட்டது. ஒரு இரவு, கீர், மோவாப் ஆகியவற்றிலிருந்து படைகள் செல்வங்களை எடுத்தனர். அந்த இரவில் நகரம் அழிக்கப்பட்டது.

2அரசனது குடும்பத்தினரும் தீபோனின்* ஜனங்களும் அழுவதற்குத் தொழுதுகொள்கிற இடங்களுக்குப் போனார்கள். மோவாப்பின் ஜனங்கள் நேபோவுக்காகவும்* மேதெபாவுக்காகவும்* அழுதனர். ஜனங்கள் தம் தலைகளையும், தாடிகளையும் மழித்துக்கொண்டு அவர்கள் துக்கமாக இருப்பதாகக் காட்டினர்.
3மோவாபின் எல்லா இடங்களிலும், வீட்டுக் கூரைகளிலும், தெருக்களிலும், ஜனங்கள் துக்கத்தின் ஆடைகளை அணிந்து அழுதுகொண்டிருந்தனர்.

4எஸ்போன் மற்றும் எலெயாலே நகர ஜனங்கள் உரத்து அழுதுகொண்டிருந்தனர். வெகு தொலைவிலுள்ள யாகாஸ் நகரம் வரை அவர்களின் சத்தங்களை நீ கேட்கலாம். படைவீரர்களும்கூட கதறுகிறார்கள். அவர்கள் அச்சத்தால் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

5மோவாபுக்காக எனது இதயம் துயரத்தோடு அழுகிறது. ஜனங்கள் பாதுகாப்புக்காவா ஓடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வெகு தொலைவில் உள்ள சோவாருக்கு ஓடுகிறார்கள். அவர்கள் எக்லாத் செலிஸ்ஸியாவுக்கு ஓடுகிறார்கள். லூகித்துக்குப் போகும் மலைப்பாதையில் அவர்கள் ஏறிப்போகும்போது அழுகிறார்கள். ஒரோனாயீமின் வழியில் அவர்கள் நடந்து செல்லும்போது மிக உரத்து அழுகிறார்கள்.

6ஆனால் நிம்ரீம் புருக் பாலைவனமாகக் காய்ந்திருக்கிறது. அனைத்து தாவரங்களும் காய்ந்துள்ளன. எதுவும் பசுமையாக இல்லை.

7எனவே, ஜனங்கள் தமக்குச் சொந்தமான வற்றைச் சேகரித்துக் கொண்டு மோவாபை விட்டு விலகுகிறார்கள். அவர்கள் அவற்றைச் சுமந்துகொண்டு பாப்லர்கிரீக்கின்* எல்லையைக் கடக்கின்றனர்.

8மோவாபின் எல்லா இடங்களிலும் அழுகையைக் கேட்கலாம். வெகு தொலைவிலுள்ள எக்லாயிம் வரை ஜனங்கள் அழுதுகொண்டிருந்தனர். பெரேலீம் நகரத்தில் ஜனங்கள் அழுதுகொண்டிருந்தனர்.

9தீமோனின் தண்ணீரானது இரத்தத்தால் நிறைந்திருக்கும். தீமோனுக்கு மேலும் அதிகக் கேடுகளை நான் (கர்த்தர்) கொண்டுவருவேன். மோவாபில் வாழ்கிற சில ஜனங்கள் பகைவரிடமிருந்து தப்பியிருக்கிறார்கள்.

---

**ஆகாஸ் அரசன் மரித்த ஆண்டு** கி.மு. 727.

**தீபோன்** மோவாப் நாட்டிலுள்ள நகரம். 'துக்கமானது' என்று பொருள்.

**நேபோ** மோவாப் நாட்டு நகரம். பொய் தெய்வத்தின் பெயர்.

**மேதெபா** மோவாப் நாட்டு நகரம். 'துக்ககரமானது' என்று பொருள்.

**பாப்லர்கிரீக்** மோவாப் நாட்டின் சிற்றோடை.

ஆனால் நான் அவர்களை உண்ண சிங்
கங்களை அனுப்புவேன்.

16 நீங்கள் நாட்டின் அரசனுக்கு அன்ப
ளிப்பை அனுப்பவேண்டும். நீங்கள்
சேலாவிலிருந்து வனாந்தரம் வழியாக
சீயோன் மகளின் மலைக்கு (எருசலேம்)
ஒரு ஆட்டுக்குட்டியை அனுப்புங்கள்.
2மோவாபின் பெண்கள் அர்னோன் ஆற்
றைக் கடக்க முயன்றனர். அவர்கள்
உதவிக்காக ஒரு இடத்திலிருந்து இன்னொரு
இடத்துக்கு ஓடுகிறார்கள். மரத்திலிருந்து
கூடு விழுந்த பிறகு, அதை இழந்த பறவை
களைப் போன்றிருக்கின்றனர்.
3“எங்களுக்கு உதவுங்கள்! என்ன
செய்யவேண்டும் என்று எங்களுக்குச் சொல்
லுங்கள்! மதிய வெயிலிலிருந்து நிழலானது
எங்களைக் காப்பாற்றுவது போன்று
எங்கள் பகைவர்களிடமிருந்து காப்பாற்றுங்
கள். நாங்கள் எங்கள் பகைவர்களிடமிருந்து
ஓடிக்கொண்டிருக்கிறோம். எங்களை ஒளித்து
வையுங்கள். எங்களை எமது பகைவர்
களிடம் ஒப்படைத்துவிடாதீர்கள்” என்று
அவர்கள் சொல்கிறார்கள்.
4மோவாபிலிருந்த ஜனங்கள் தங்கள் வீடு
களிலிருந்து விலக பலவந்தப் படுத்தப்
பட்டனர். எனவே, அவர்கள் உங்கள்
நாட்டில் வாழட்டும். அவர்களின் பகைவர்க
ளிடமிருந்து அவர்களை மறைத்துவை
யுங்கள். கொள்ளையானது நிறுத்தப்படும்.
பகைவர்கள் தோற்கடிக்கப்படுவார்கள். மற்ற
ஜனங்களைக் காயப்படுத்திய மனிதர்கள்
இந்த நாட்டிலிருந்து வெளியே போவார்கள்.

5பிறகு, புதிய அரசர் வருவார் அந்த
அரசர் தாவீதின் குடும்பத்திலிருந்து வரு
வார். அவர் உண்மையுள்ளவராக இருப்பார்.
அவர் அன்பும் கருணையும் உள்ளவராக
இருப்பார். அந்த அரசர் சரியாக நியாயந்
தீர்ப்பார். அவர் சரியாகவும் நல்லதாகவும்
உள்ளவற்றையே செய்வார்.
6மோவாபிலுள்ள ஜனங்கள் பெருமையும்
மேட்டிமையும் கொண்டவர்கள் என்று
நாங்கள் கேள்விப்பட்டோம். அவர்கள் பிடி
வாதமும் தற்பெருமையும் உடையவர்கள்.
அவர்களின் தற்பெருமைகள் வெற்று வார்த்
தைகளாக உள்ளன.
7மோவாப் நாடு முழுவதுமே இந்த
அகங்காரத்தால் துன்புறும். மோவாபிலுள்ள
அனைத்து ஜனங்களும் அலறுவார்கள்,
ஜனங்கள் துக்கம் அடைவார்கள். அவர்கள்
கடந்துபோன காலத்தில் தாங்கள் கொண்டி
ருந்தவற்றின்மேல் ஆவல் கொள்வார்கள்.
அவர்கள் கிராரேசேத் ஊரில் செய்யப்பட்ட
அத்தி அப்பங்களை விரும்புவார்கள். 8எஸ்
போன் வயல்களும் சிப்மா ஊர் திராட்சைத்
தோட்டங்களும் வளர முடியவில்லையே
என்று வருத்தப்படுவார்கள். வெளிநாட்டு
அரசர்கள் திராட்சைக் கொடிகளை வெட்டிப்
போட்டனர். பகைப் படைகள் யாசேர்
நகரம் வரையும் வனாந்திரத்திலும் பரவி
இருக்கின்றன. அவர்கள் கடல் வரையி
லும்கூடப் பரவி இருந்தனர்.

### மோவாப் பற்றிய துயரப்பாடல்

9“நான் யாசேர் மற்றும் சிப்மா ஜனங்க
ளோடு அழுவேன், ஏனென்றால், திராட்
சைகள் அழிக்கப்பட்டுவிட்டன. நான்
எஸ்போனே மற்றும் எலெயாலே ஜனங்
களோடு அழுவேன், ஏனென்றால், அங்கே
அறுவடைக் நடைபெறாது. கோடைகாலப்
பழங்களும் இல்லாமல் போகும். மகிழ்ச்சி
ஆரவாரங்களும் இல்லாமல் போகும்.
10கர்மேலில் மகிழ்ச்சியும் பாடலும் இராது.
அறுவடைக் காலத்தில் அனைத்து மகிழ்ச்
சியையும் நிறுத்துவேன். திராட்சையானது
இரசமாக தயாராக உள்ளது. ஆனால் அவை
வீணாகப்போகும்.
11எனவே நான் மோவாபுக்காக மிகவும்
வருத்தமாக இருக்கிறேன். நான் கிர்கேரே
சுக்காக மிகவும் வருத்தமாக இருக்கிறேன்.
நான் இந்த நகரங்களுக்காக மிக மிக
வருத்தமாக இருக்கிறேன்.
12மோவாபிலுள்ள ஜனங்கள் தொழுது
கொள்ளும் தம் இடங்களுக்குச் செல்வார்கள்.
ஜனங்கள் ஜெபம் செய்ய முயல்வார்கள்.
ஆனால், என்ன நடைபெறும் என்று
பார்ப்பார்கள் அவர்கள் ஜெபம் செய்யக்கூட
முடியாத அளவுக்கு பலவீனமாக இருப்பார்
கள்.”
13பலமுறை, கர்த்தர் மோவாபைப் பற்றிய
இச்செய்திகளைச் சொன்னார். 14இப்பொ
ழுதும் கர்த்தர் கூறுகிறார்: “மூன்று ஆண்டு
களில், (ஒரு கூலிக்காரன் தனது காலத்தை
எண்ணுவது போன்று) அந்த ஜனங்கள்
அனைவரும் அவர்களின் தற்பெருமைக்கு
ரிய பொருட்களும் அழிந்துபோகும். அங்கு
சிலரே மீதியாக இருப்பார்கள். ஆனால்
அவர்கள் பலராக இருக்கமாட்டார்கள்.”

### ஆராமுக்குக் தேவனுடைய செய்தி

17 தமஸ்குவிற்கான துயரச் செய்தி இது.
தமஸ்குவுக்கு இவையனைத்தும் நிக
ழும் என்று கர்த்தர் கூறுகிறார்: “தமஸ்கு
இப்பொழுது நகரமாக இருக்கிறது. ஆனால்
தமஸ்கு அழிக்கப்படும். அழிக்கப்பட்டக்
கட்டிடங்கள் மட்டுமே தமஸ்குவில் இருக்கும்.
2ஆரோவேரின் நகரங்களைவிட்டு ஜனங்
கள் விலகுவார்கள். காலியான அந்தப்
பட்டணங்களில் ஆட்டு மந்தைகள் சுதந்தி
ரமாகத் திரியும்; அவற்றைத் தொந்தரவு
செய்ய அங்கே யாரும் இருக்கமாட்டார்கள்.
3எப்பிராயீமின் (இஸ்ரவேல்) அரணான
நகரங்கள் அழிக்கப்படும். தமஸ்குவில் உள்ள
அரசு முடிந்துவிடும். இஸ்ரவேலுக்கு ஏற்
பட்ட அனைத்தும் சீரியாவிற்கு ஏற்படும்.
முக்கியமான ஜனங்கள் அனைவரும்

வெளியே எடுத்துச்செல்லப்படுவார்கள்.”
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவை அனைத்
தும் நிகழும் என்று கூறினார்.
4அந்தக் காலத்தில், யாக்கோபின்
(இஸ்ரவேல்) செல்வம் அனைத்தும் போய்
விடும். யாக்கோபு நோய்வாய்ப்பட்டதினால்
பெலவீனமும் மெலிவும் கொண்ட மனித
னைப் போலவான்.
5அந்தக் காலம் ரெப்பாயீம்* பள்ளத்
தாக்கிலே தானிய அறுவடை நடைபெறு
வதுபோல் இருக்கும். வேலைக்காரர்கள்
வயலில் வளர்ந்த செடிகளை சேகரிக்கிறார்
கள். பிறகு அவர்கள் செடிகளிலிருந்து
தானியக் கதிர்களை வெட்டுகிறார்கள். பிறகு
அவர்கள் தானியத்தைச் சேகரிக்கின்றனர்.
6ஜனங்கள் ஒலிவமரத்தில் அறுவடை
செய்வது போன்று அந்தக்காலம் இருக்கும்.
ஜனங்கள் ஒலிவ மரத்திலிருந்து ஒலிவக்
காய்களைப் பறிப்பார்கள். மரத்தின் உச்சி
யில் சில ஒலிவக் காய்களை அவர்கள்
விட்டுவைப்பார்கள். நான்கு அல்லது ஐந்து
ஒலிவக் காய்களை அவர்கள் உயரத்திலுள்ள
கிளைகளில் விட்டு விடுவார்கள். இதுபோ
லவே அந்த நகரங்களுக்கும் ஏற்படும். சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைக் கூறினார்.
7அந்தக் காலத்தில், ஜனங்கள் தங்களைப்
படைத்த தேவனை நோக்கிப் பார்ப்பார்கள்.
அவர்களின் கண்கள் இஸ்ரவேலின் பரிசுத்
தரைப் பார்க்கும். 8அவர்களால் செய்யப்
பட்ட பலிபீடங்களுக்குத் திரும்பமாட் டார்கள்.
அவர்கள் பொய்த் தெய்வங்களுக்கு
தங்களால் அமைக்கப்பட்ட சிறப்பான தோட்
டங்களுக்கும், பலிபீடங்களுக்கும் போகமாட்
டார்கள்.
9அந்தக் காலத்தில், கோட்டை நகரங்கள்
எல்லாம் காலியாகும். இஸ்ரவேல் ஜனங்கள்
வருவதற்கு முன்னால் அந்தத் தேசத்தில்
மலைகளும் காடுகளும் இருந்தது போன்று
அந்த நகரங்கள் இருக்கும். கடந்த காலத்தில்,
அனைத்து ஜனங்களும் ஓடிப்போனார்கள்.
ஏனென்றால், இஸ்ரவேல் ஜனங்கள் அங்கு
வந்துகொண்டு இருந்தனர். வரும்காலத்தில்
மீண்டும் இந்தத் தேசம் காலியாகும். 10இது
நிகழும். ஏனென்றால், உங்களைப் பாதுகாக்
கிற தேவனை நீங்கள் மறந்துவிட்டீர்கள்.
உங்கள் பாதுகாப்புக்குரிய இடமாக இருக்
கும் தேவனை நீங்கள் நினைக்கவில்லை.
வெகு தொலைவிலுள்ள இடங்களிலி
ருந்து நீ சில நல்ல திராட்சைக் கொடிகளைக்
கொண்டுவந்தாய். நீ அவற்றை நட்டு வைக்
கலாம். ஆனால் அவை வளராது. 11ஒரு
நாள் உன் திராட்சைக் கொடிகளை நடுவாய்.
அவற்றை வளர்க்க முயல்கிறாய். மறுநாள்
அக்கொடிகள் வளரத்தொடங்கும். ஆனால்
அறுவடைக் காலத்தில் அச்செடிகளிலிருந்து
பழங்களைப் பறிக்கச் செல்வாய். ஆனால்
அனைத்தும் மரித்துப்போனதை காண்பாய்.
அனைத்து செடிகளையும் ஒரு நோய்
அழித்துவிடும்.
12ஏராளமான ஜனங்களை விசாரித்துக்
கேள்! அவர்கள் உரத்து கடல் இரைச்சலைப்
போன்று அலறிக்கொண்டிருக்கிறார்கள். சத்
தத்தைக் கேள். இது கடலில் அலைகள்
மோதிக்கொள்வதைப் போன்றிருக்கும்.
13ஜனங்களும் அந்த அலைகளைப்
போன்று இருப்பார்கள். தேவன் அந்த
ஜனங்களிடம் கடுமையாகப் பேசுவார். அவர்
கள் வெளியே ஓடிப்போவார்கள். ஜனங்கள்
காற்றால் துரத்தப்படுகிற பதரைப்போன்று
இருப்பார்கள். ஜனங்கள் புயலால் துரத்தப்ப
டுகிற துரும்பைப் போன்று இருப்பார்கள்.
காற்று அடிக்கும்போது பதர்கள் வெளி
யேறும்.
14அந்த இரவு, ஜனங்கள் அஞ்சுவார்கள்.
காலைக்கு முன்னால், எதுவும் விடுபடாது.
எனவே, நம் பகைவர்கள் எதனையும்
பெறமாட்டார்கள். அவர்கள் நம் நாட்டிற்கு
வருவார்கள். ஆனால் அங்கு எதுவும்
இராது.

## எத்தியோப்பியாவிற்குத் தேவனுடைய செய்தி

18 எத்தியோப்பியாவை அதன் ஆறு
களோடு பார். அந்த நாடு பூச்சிகளால்
நிறைந்திருக்கிறது. அவற்றின் சிறகுகளின்
இரைச்சலை உங்களால் கேட்க முடியும்.
2அந்த நாடு ஜனங்களை நாணல் படகுகளில்
கடலைக் கடந்து செல்லுமாறு அனுப்பியது.
விரைவாகச் செல்லும் தூதர்களே!
வளர்ச்சியும் பலமும் கொண்ட ஜனங்களிடம்
போங்கள். (எல்லா இடங்களிலும் உயரமும்
பலமும் கொண்ட ஜனங்களிடம் மற்ற
ஜனங்கள் பயப்படுவார்கள். அவர்கள் வல்ல
மைமிக்க தேசத்தை உடையவர்கள். அவர்
களின் தேசம் மற்ற தேசங்களைத் தோற்
கடிக்கிறது. ஆறுகளால் பிரிக்கப்படுகிற நாட்
டில் அவர்கள் இருக்கிறார்கள்.) 3அவர்க
ளுக்குக் கெட்டவை ஏற்படும் என்று அந்த
ஜனங்களை எச்சரிக்கை செய்யுங்கள். இந்த
உலகிலுள்ள அனைத்து ஜனங்களும் இவர்க
ளுக்கு ஏற்படப்போவதைக் காண்பார்கள்.
மலையில் ஏற்றப்பட்டக் கொடியைப்
போன்று, ஜனங்கள் இவற்றைத் தெளிவாகப்
பார்ப்பார்கள். இந்த உலகிலுள்ள அனைத்து
ஜனங்களும் இந்த உயர்ந்து வளர்ந்த ஜனங்
களுக்கு நிகழப்போவதைப்பற்றிக் கேள்விப்ப
டுவார்கள். போருக்கு முன் கேட்கும் எக்
காளத்தைப் போன்று தெளிவாக அவர்கள்
கேட்பார்கள்.
4கர்த்தர் என்னிடம், “நான் எனக்காகத்
தயார் செய்யப்பட்ட இடத்தில் இருப்பேன்.
நான் நிகழ்பவற்றை அமைதியாகக் கவனிப்
பேன். 5அழகான ஒரு கோடை நாளில்
நடுப்பகலில் ஜனங்கள் ஓய்வாக இருப்

**ரெப்பாயீம்** எருசலேமின் தென் மேற்கிலுள்ளது.

பார்கள். (இது வெப்பமுள்ள அறுவடைக் காலமாக இருக்கும். மழை இல்லாதபோது, காலைப்பனிமட்டும் இருக்கும்.) பிறகு ஏதோ பயங்கரமான ஒன்று நிகழும். பூக்கள் மலர்ச்சியடைந்த பிறகுள்ள காலமாக இருக்கும். புதிய திராட்சைகள் மொட்டு விட்டு வளர்ந்துகொண்டிருக்கும். ஆனால் அறுவடைக்கு முன்பு, பகைவர்கள் வந்து செடிகளை வெட்டிப்போடுவார்கள். பகை வர்கள் கொடிகளை வெட்டித்தூர எறிவார்
கள். 6திராட்சைக் கொடிகள் மலைப் பறவை களுக்கும், காட்டுமிருகங்களுக்கும் உண வாகக் கிடைக்கும். அக்கொடிகளில் பறவை கள் கோடை காலத்தில் தங்கும். மழைக் காலத்தில் காட்டு மிருகங்கள் அக்கொடி களைத் உண்ணும்" என்றார்.

7அந்த நேரத்தில், சர்வ வல்லமையுள்ள கர்த்தருக்கு ஒரு விசேஷ காணிக்கை கொண்டு வரப்படும். இக்காணிக்கை உயர மும், பலமும் கொண்ட ஜனங்களிடமிருந்து வரும். (எல்லா இடங்களிலும் உள்ள ஜனங்கள் இந்த உயரமும் பலமும் கொண்ட ஜனங்களுக்கு அஞ்சுவார்கள். அந்த வல் லமை மிக்க தேசத்தைக் கொண்டவர்க ளின் தேசம் மற்ற தேசங்களைத் தோற் கடிக்கும். ஆறுகளால் பிரிக்கப்பட்ட நாட்டில் அவர்கள் இருப்பார்கள்.) இந்தக் காணிக்கை சீயோன் மலையான, கர்த்தருடைய இடத் திற்குக் கொண்டுவரப்படும்.

### எகிப்துக்கு தேவனுடைய செய்தி

19 எகிப்தைப் பற்றியத் துயரமான செய்தி: பார்! விரைவான மேகத்தில் கர்த்தர் வந்துகொண்டிருக்கிறார். கர்த்தர் எகிப்துக்குள் நுழைவார். எகிப்திலுள்ள அனைத்து பொய்த் தெய்வங்களும் பயத்தால் நடுங்கும். எகிப்து தைரியமுடையது. ஆனால், அந்தத் தைரியம் சூடான மெழு கைப்போல உருகிப் போகும்.

2"எகிப்து ஜனங்கள் தங்களுக்கு எதிராகச் சண்டையிட்டுக்கொள்ள நான் காரணமாக இருப்பேன். ஜனங்கள் தம் சகோதரர்களோடு சண்டையிடுவார்கள். அயலாவர் தங்கள் அயலாருக்கு எதிராக இருப்பார்கள். பட்ட ணங்கள் பட்டணங்களுக்கு எதிராக இருக் கும். இராஜ்யங்கள் இராஜ்யங்களுக்கு எதி
ராக இருக்கும். 3எகிப்து ஜனங்கள் குழம்பிப் போவார்கள். ஜனங்கள் தமது பொய்த் தெய்வங்களையும், ஞானிகளையும் என்ன செய்யலாம் என்று கேட்பார்கள். ஜனங்கள் குறி சொல்பவர்களையும், மந்திரவாதிகளை யும் கேட்பார்கள். ஆனால் அவர்களது ஆலோசனைகள் பயனற்றுப் போகும்" என்று தேவன் சொல்கிறார்.

4சர்வ வல்லமையுள்ள கர்த்தராகிய ஆண்டவர் கூறுகிறார்: "நான் (தேவன்) எகிப்தை ஒரு கடினமான எஜமானனிடம் கொடுப்பேன். ஜனங்களின்மீது ஒரு வல்லமை வாய்ந்த அரசன் ஆட்சிசெய்வான்.
5நைல் நதி வறண்டு போகும். கடலிலிருந்து தண்ணீர் போய்விடும். 6அனைத்து ஆறுக ளும் மிகக் கெட்ட மணம் வீசும். எகிப் திலுள்ள கால்வாய்கள் வறண்டுபோகும். அதிலுள்ள தண்ணீரும் போய்விடும். எல்லா தண்ணீர்த் தாவரங்களும் வாடிப்போகும். ஆற்றங்கரைகளில் உள்ள செடிகள் எல்லாம் வாடும்; அவை பறக்கடிக்கப்படும். ஆற்றின் அருகே உள்ள அகன்ற இடங்களில் உள்ள செடிகளும் வாடிப்போகும்.

8"நைல் நதியில் மீன் பிடிக்கிற மீனவர்கள் அனைவரும் துயரப்படுவார்கள். அவர்கள் அலறுவார்கள். அவர்கள் தங்கள் உண விற்காக நைல் நதியை நம்பி இருந்தனர். ஆனால் அது வறண்டுபோகும். 9ஆடை
நெய்கிற அனைத்து ஜனங்களும் மிக மிகத் துன்பப்படுவார்கள். அந்த ஜனங்களுக்கு சல்லா துணிகளை நெய்ய சணல் தேவைப் படும். ஆனால் ஆறு வறண்டுபோகும். எனவே சணல் வளராது. 10தண்ணீரைத்
தேக்கி வைக்க அணை கட்டுகிறவர்களுக்கு வேலை இருக்காது. எனவே அவர்கள் துயரமாக இருப்பார்கள்.

11"சோவான் பட்டணத்திலுள்ள தலை வர்கள் மூடர்கள். 'பார்வோனின் ஞான முள்ள ஆலோசனைக்காரர்கள்' தவறான ஆலோசனைகளைக் கொடுக்கிறார்கள். தம்மை ஞானிகள் என்று அந்தத் தலை வர்கள் கூறுகிறார்கள். அரசர்களின் பழைய குடும்பத்திலிருந்து வந்ததாக அவர்கள் கூறு கிறார்கள். ஆனால் தாம் நினைப்பதுபோல அவர்கள் அத்தனை புத்திசாலிகள் அல்ல."

12எகிப்தே! உனது புத்திசாலிகள் எங்கே? சர்வ வல்லமையுள்ள கர்த்தர் எகிப்திற்காக என்ன திட்டமிட்டிருக்கிறார் என்று அந்தப் புத்திசாலிகள் தெரிந்துகொள்ள வேண்டும். என்ன நிகழும் என்பதை உங்களுக்குச் சொல்லும் ஜனங்களாக அவர்கள் இருக்க வேண்டும்.

13சோவானின் தலைவர்கள் மூடரானார் கள். நோப்பின் தலைவர்கள் பொய்யா னவற்றை நம்பினார்கள். எனவே, தலை வர்கள் எகிப்தை தவறான வழியில் நடத்திச்
சென்றனர். 14கர்த்தர் தலைவர்ளைக் குழப்பம டைய செய்தார். அவர்கள் அலைந்து திரிந்து எகிப்தை தவறான வழிகளில் நடத்திச் சென்றனர். தலைவர்கள் செய்கிற அனைத்தும் தவறாயின. அவர்கள் குடி காரர்கள் மயக்கத்தோடு தரையில் உருளு
வதுபோலக் கிடந்தனர். 15அந்தத் தலைவர் களால் செய்ய முடிந்தது எதுவுமில்லை. (இந்தத் தலைவர்கள் "தலைகளாகவும், வால்களாகவும்" இருக்கின்றனர். அவர்கள் "கிளையாகவும் நாணலாகவும்" இருக்கின் றனர்.)

16அந்தக் காலத்தில், எகிபதியர்கள் அச்ச முள்ள பெண்களைப் போன்றிருப்பார்கள்.

அவர்கள் சர்வ வல்லமையுள்ள கர்த்தருக்கு
பயப்படுவார்கள். ஜனங்களைத் தண்டிக்க
கர்த்தர் தம் கையைத் தூக்குவார். அவர்கள்
அஞ்சுவார்கள். [17]யூதாவின் தேசம் எகிப்
தியர்களுக்குப் பயங்கரமான இடமாக
இருந்தது. எகிப்திலுள்ள எவனும் யூதாவின்
பெயரைக் கேட்டால் நடுங்குவான். இவை
நிகழும், ஏனென்றால், சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் எகிப்திற்கு பயங்கரங்கள் நிகழத்
திட்டமிட்டிருக்கிறார். [18]அப்பொழுது, எகிப்
தில் ஐந்து நகரங்கள் இருக்கும். அங்குள்ள
ஜனங்கள் கானான் மொழியைப் (யூதமொழி)
பேசிக்கொண்டிருப்பார்கள். இந்நகரங்களுள்
ஒன்று ‘அழிவின் நகரம்’ என்று பெயர்
பெறும்.

சர்வ வல்லமையுள்ள கர்த்தரைப் பின்பற்
றுவதாக ஜனங்கள் வாக்களிப்பார்கள்.
[19]அந்தக் காலத்தில், ஒரு பலிபீடம் எகிப்தின்
மத்தியில் கர்த்தருக்காக இருக்கும். எகிப்தின்
எல்லையில் கர்த்தருக்கு மகிமை சேர்க்கும்
வகையில் நினைவுச் சின்னம் ஒன்று
இருக்கும். [20]சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
வல்லமை மிக்க செயல்களைச் செய்கிறார்
என்பதற்கு இது அடையாளமாக இருக்கும்.
கர்த்தரிடம் உதவி கேட்டு ஜனங்கள் எந்த
நேரத்தில் அலறினாலும் கர்த்தர் உதவியை
அனுப்புவார். ஜனங்களைக் காப்பாற்றி
பாதுகாக்கக் கர்த்தர் ஒருவனை அனுப்புவார்.
அந்த ஆள் இந்த ஜனங்களை அவர்களை
ஒடுக்கும் மற்ற ஜனங்களிடமிருந்து காப்பாற்
றுவான்.

[21]அந்தக் காலத்தில், எகிப்தின் ஜனங்கள்
கர்த்தரைப்பற்றி உண்மையாகத் தெரிந்து
கொள்வார்கள். எகிப்தின் ஜனங்கள்
தேவனை நேசிப்பார்கள். அந்த ஜனங்கள்
தேவனுக்குச் சேவை செய்வார்கள்; பல
பலிகளைக் கொடுப்பார்கள். அவர்கள் கர்த்
தருக்குப் பல வாக்குறுதிகளைக் கொடுப்பார்
கள். அவர்கள் அவ்வாக்குறுதிகளைக்
காப்பாற்றுவார்கள்.

[22]எகிப்தின் ஜனங்களைக் கர்த்தர்
தண்டிப்பார். பிறகு, கர்த்தர் அவர்களை
மன்னிப்பார். (குணப்படுத்துவார்) அவர்கள்
கர்த்தரிடம் திரும்பி வருவார்கள். கர்த்தர்
அவர்களது ஜெபங்களைக் கேட்டு அவர்
களைக் குணப்படுத்துவார். (மன்னிப்பார்.)

[23]அந்தக் காலத்தில், எகிப்திலிருந்து
அசீரியாவிற்கு ஒரு பெரும் பாதை இருக்கும்.
பிறகு, ஜனங்கள் அசீரியாவிலிருந்து எகிப்
திற்குப் போவார்கள். ஜனங்கள் எகிப்
திலிருந்து அசீரியாவிற்குப் போவார்கள்.
எகிப்து அசீரியாவோடு சேர்ந்து வேலை
செய்யும்.

[24]அந்தக் காலத்தில், இஸ்ரவேல் அசீரி
யாவுடனும் எகிப்துடனும் சேர்ந்து உடன்
பாடு செய்யும். இது நாட்டுக்கான ஆசீர்வா
தமாக விளங்கும். [25]சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் இந்த நாடுகளை ஆசீர்வதிப்பார்.
“எகிப்தியரே நீங்கள் என் ஜனங்கள்.
அசீரியாவே நான் உன்னை உருவாக்
கினேன். இஸ்ரவேலே நான் உன்னைச்
சொந்தமாக்கினேன். நீங்கள் அனைவரும்
ஆசீர்வதிக்கப்பட்டீர்கள்!” என்று அவர்
சொல்வார்.

## எகிப்தையும் எத்தியோப்பியாவையும் அசீரியா தோற்கடிக்கும்

20 அசீரியாவின் அரசனாகச் சர்கோன்
இருந்தான். சர்கோன்* தர்த்தானை*
அஸ்தோத்துக்கு எதிராகச் சண்டையிட
அனுப்பினான். தர்த்தான் அங்கே போய்
அந்நகரத்தைக் கைப்பற்றினான். [2]அந்த
நேரத்தில், கர்த்தர், ஆமோத்சின் மகனான
ஏசாயா மூலமாகப் பேசினார். “போ. உன்
இடுப்பில் இருந்து துயரமாகிய ஆடையை
எடு. உன் கால்களில் உள்ள பாதரட்
சைகளைக் கழற்று” என்று கர்த்தர்
கூறினார். ஏசாயா கர்த்தருக்குக் கீழ்ப்படிந்
தான். “ஏசாயா ஆடைகளும் பாதரட்சை
களும் இல்லாமல் நடந்தான்.

[3]பிறகு, “மூன்று ஆண்டு காலமாக ஏசாயா
ஆடைகளும் பாதரட்சைகளும் இல்லாமல்
நடந்து வந்தான். இது எகிப்துக்கும் எத்தி
யோப்பியாவுக்கும் ஒரு அடையாளமாக
இருக்கிறது. [4]அசீரியாவின் அரசன் எகிப்து
மற்றும் எத்தியோப்பியாவைத் தோற்கடிப்
பான். அசீரியா சிறைக்கைதிகளை அவர்
களது நாடுகளிலிருந்து அழைத்துச்செல்லும்.
முதியவர்களும் இளைஞர்களும், ஆடை
களும், பாதரட்சைகளும் இல்லாமல்
அழைத்துச் செல்லப்படுவார்கள். அவர்கள்
நிர்வாணமாக இருப்பார்கள். எகிப்திலுள்ள
ஜனங்கள் வெட்கம் அடைவார்கள். [5]அவர்
கள் எகிப்தின் மகிமையைப் பார்த்து
அதிசயித்தனர். அவர்கள் ஏமாந்து நாணம்
அடைவார்கள்” என்று கர்த்தர் சொன்னார்.

[6]கடற்கரையில் வாழ்ந்து கொண்டிருக்கிற
ஜனங்கள், “அவர்கள் எங்களுக்கு உதவு
வார்கள் என்று அந்த நாடுகளின் மீது
நாங்கள் நம்பிக்கை வைத்திருந்தோம். நாங்
கள் அவர்களிடம் ஓடிப்போனோம். ஆதலால்,
அவர்கள் எங்களை அசீரியா அரசனிடம்
இருந்து தப்புமாறு செய்வார்கள். ஆனால்
அவர்களைப் பாருங்கள் அவர்களின் நாடு
கள் கைப்பற்றப்பட்டன. எனவே எப்படி
நாங்கள் தப்பித்துக் கொள்வோம்?” என்று
சொல்வார்கள்.

## பாபிலோனுக்குத் தேவனுடைய செய்தி

21 கடல் வனாந்தரத்தைப்பற்றிய துயரச்
செய்தி: வனாந்தரத்திலிருந்து ஏதோ
வந்துகொண்டிருக்கிறது. இது நெகேவி

---

**சர்கோன்** அசீரியாவின் அரசன். கி.மு. 721-705ல் ஆண்டான்.

**தர்த்தான்** அசீரியா படைத் தளபதி.

*லிருந்து** வந்துகொண்டிருக்கும். காற்று
போல் உள்ளது. இது பயங்கரமான நாட்டி
லிருந்து வந்துகொண்டிருக்கிறது.*
[2]*ஒரு பயங்கரமான நிகழ்ச்சி நடக்கப்
போவதை நான் பார்த்திருக்கிறேன். துரோ
கிகள் உனக்கு எதிராகத் திரும்பியதை
நான் பார்க்கிறேன். ஜனங்கள் உன் செல்
வத்தை எடுத்துக்கொள்வதை நான் பார்க்
கிறேன். ஏலாமே! போய் ஜனங்களுக்கு
எதிராகப் போரிடு! மேதியாவே! நகரத்தைச்
சுற்றி உன் படைகளை நிறுத்தி அதனைத்
தோற்கடி! இந்த நகரத்தில் உள்ள கெட்டவற்
றையெல்லாம் முடித்து வைப்பேன்.*
[3]*அந்தப் பயங்கரமானவற்றை நான் பார்த்
தேன். இப்பொழுது நான் பயப்படுகிறேன்.
பயத்தால் என் வயிறு பாதிக்கப்பட்டுள்ளது.
அந்த வலியானது பிரசவவலி போன்றுள்
ளது. நான் கேள்விப்பட்ட செய்திகள்
எல்லாம் என்னை அச்சம்கொள்ளச் செய்
கிறது. நான் பார்த்தவை எல்லாம் என்னைப்
பயத்தால் நடுங்கச் செய்கிறது.* [4]*நான்
கவலைப்படுகிறேன். நான் பயத்தால்
நடுங்கிக்கொண்டிருக்கிறேன். என் இன்ப
மான மாலைப்பொழுது பயமுள்ள இரவா
யிற்று.*
[5]*எல்லாம் நன்றாக இருக்கிறது என்று
ஜனங்கள் நினைத்தனர். "மேசையைத் தயார்
செய்யுங்கள்! சாப்பிடுங்கள். குடியுங்கள்!"
என்று ஜனங்கள் சொன்னார்கள். அதே
நேரத்தில் படைவீரர்கள் "காவல்காரரை
நிறுத்துங்கள்! அதிகாரிகளே எழுந்து உங்கள்
கேடயங்களைப் பளபளப்பாக்குங்கள்!"
என்று சொல்லிக்கொண்டிருந்தனர்.*
[6]*எனது ஆண்டவர் என்னிடம், "போய்,
நகரத்தைக் காவல் செய்ய ஒருவனைக்
கண்டுபிடி. அவன் தான் பார்ப்பதை
யெல்லாம் நமக்குச் சொல்லிக்கொண்டிருக்க
வேண்டும்.* [7]*காவல்காரன் குதிரைவீரர்கள்,
கழுதைகள் அல்லது ஒட்டகங்கள் ஆகிய
வற்றின் வரிசையைப் பார்த்தால் அவன்
கவனமாக மிகக் கவனமாக உற்றுக்கேட்க
வேண்டும்" என்று சொன்னார்.*
[8]*பிறகு, ஒரு நாள், காவல்காரன் 'சிங்கம்'
என்று எச்சரிக்கைக் குரல் கொடுத்தான்.
அவன், "என் ஆண்டவனே! ஒவ்வொரு
நாளும் நான் காவல் கோபுரத்தில் காத்துக்
கொண்டிருந்தேன். ஒவ்வொரு இரவிலும்
நான் நின்றுகொண்டு காவல் செய்தேன்.*
[9]*பாருங்கள்! அவர்கள் வந்துகொண்டி
ருக்கிறார்கள்! நான் மனிதர்கள் மற்றும்
குதிரை வீரர்களின் வரிசைகளைப் பார்க்கி
றேன்" என்று காவல்காரன் சொல்லிக்
கொண்டிருந்தான்.*
*பிறகு, ஒரு தூதுவன், "பாபிலோன்
தோற்கடிக்கப்பட்டுவிட்டது. பாபிலோன்
தரையில் விழுந்து விட்டது. அங்குள்ள
பொய்த் தெய்வங்களின் சிலைகள் எல்லாம்
தரையில் வீசப்பட்டு துண்டுகளாக உடைக்
கப்பட்டிருக்கின்றன" என்று சொன்னான்.*
[10]*ஏசாயா, "எனது ஜனங்களே! இஸ்ர
வேலின் தேவனாகிய சர்வ வல்லமையுள்ள
கர்த்தரிடமிருந்து நான் கேட்ட, எல்லாவற்
றையும் உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன்.
நீங்கள் மாவு எந்திரத்தில் போடப்பட்ட
தானியம் போன்று அரைக்கப்படுவீர்கள்.*

**நெகேவ்** *யூதாவின் தென் பகுதி வனாந்திரம்.*

### ஏதோமிற்கு (சேயீருக்கு) தேவனுடைய செய்தி

[11]*"தூமா* பற்றி துயரச் செய்தி. யாரோ
ஒருவன் என்னை ஏதோமிலிருந்து அழைத்
தான். அவன், "காவல்காரனே! இரவு எவ்வ
ளவு போயிற்று? இரவு முடிய இன்னும்
எவ்வளவு நேரமிருக்கிறது?" என்று
கேட்டான்.*
[12]*அந்தக் காவல்காரன், "விடியற்காலம்
வந்துகொண்டிருக்கிறது. ஆனால் மீண்டும்
இரவு வரும். கேட்பதற்கு ஏதாவது இருந்
தால், பிறகு மீண்டும் வந்து கேளுங்கள்"
என்றான்.*

### அரேபியாவிற்குத் தேவனுடைய செய்தி

[13]*அரேபியா பற்றிய துயரமான செய்தி.
அரேபியாவின் வனாந்திரத்தில் திதானிய
பயணிகள்* சில மரங்களின் அருகில் இர
வில் தங்கினார்கள்.*
[14]*சில தாகமுள்ள பயணிகளுக்கு அவர்கள்
தண்ணீரைக் கொடுத்தார்கள். தேமாவின்
ஜனங்கள் பயணிகளுக்கு உணவு கொடுத்
தார்கள்.*
[15]*ஜனங்கள் வாள்களுக்கும், வில்லுகளுக்
கும் தப்பி ஓடுகிறார்கள். அந்த வாள்கள்
அழிக்கத் தயாராயிருந்தன, அந்த வில்லுகள்
எய்யப்பட தயாராயிருந்தன. கடினமான
போரிலிருந்து அவர்கள் ஓடிக்கொண்டிருக்கி
றார்கள்.*
[16]*எனது கர்த்தராகிய ஆண்டவர், நடக்கப்
போகிறவற்றையெல்லாம் எனக்குச் சொன்
னார். "ஒரு ஆண்டில் (கூலிக்காரனுடைய
கால எண்ணிக்கையைப் போன்று) கேதா
ருடைய* மகிமை எல்லாம் போய்விடும்.*
[17]*அந்த நேரத்தில், மிகச் சில வில் வீரர்களும்
கேதாரின் சிறந்த படைவீரர்கள் மட்டுமே
உயிரோடு விடப்படுவார்கள்" என்று கர்த்தர்
சொன்னார். இஸ்ரவேலின் தேவ னாகிய
கர்த்தர் அவற்றையெல்லாம் எனக் குச்
சொன்னார்.*

**தூமா** *ஏதோம். 'அமைதி' அல்லது 'அழிவு' எனும் பொருள்.*

**பயணிகள்** *வணிகர்களும் அவர்களது மிருகங்களும் செல்வத்தை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு எடுத்துச் செல்வார்கள்.*

**கேதார்** *இஸ்ரவேலின் கிழக்கேயுள்ள நாடு.*

### எருசலேமிற்குத் தேவனுடைய செய்தி

22 தரிசனப் பள்ளத்தாக்கைப்* பற்றிய
சோகமான செய்தி: ஜனங்களே உங்க
ளுக்கு என்ன தவறு ஏற்பட்டது? உங்கள்
வீட்டு மாடிகளில் ஏன் மறைந்து
கொண்டிருக்கிறீர்கள்?
2கடந்த காலத்தில் இந்நகரம் பரபரப்
புடைய நகரமாக இருந்தது. இந்த நகரம்
ஆரவாரமும் மகிழ்ச்சியும் உடையதாக
இருந்தது. ஆனால் இப்போது அவை மாறி
யுள்ளன. உனது ஜனங்கள் கொல்லப்பட்
டிருக்கலாம் ஆனால் வாள்களினால் அல்ல.
ஜனங்கள் மரித்தனர். ஆனால் போரிடும்
போது அல்ல.
3உங்கள் தலைவர்கள் எல்லோரும்
சேர்ந்து தூரத்துக்கு ஓடிப்போனார்கள்.
ஆனால் அவர்கள் அனைவரும் வில் இல்
லாமல் கைது செய்யப்பட்டார்கள், தலை
வர்கள் அனைவரும் சேர்ந்து தூர ஓடிப்
போனார்கள். ஆனால் அவர்கள் கைது
செய்யப்பட்டனர்.
4எனவே, “என்னைப் பார்க்கவேண்டாம்!
என்னை அழ விடுங்கள்! எருசலேமின்
அழிவைப்பற்றி நான் வருந்தும்போது
எனக்கு ஆறுதல் சொல்ல வரவேண்டாம்.”
5கர்த்தர் ஒரு விசேஷமான நாளைத்
தேர்ந்தெடுத்திருக்கிறார். அந்த நாளில்
அமளியும் குழப்பமும் ஏற்படும். தரிசனப்
பள்ளத்தாக்கில் ஜனங்கள் ஒருவர்மீது ஒருவர்
நடப்பார்கள். நகரச்சுவர்கள் கீழே தள்ளப்
படும். பள்ளத்தாக்கில் உள்ள ஜனங்கள்
நகரத்திலுள்ள மலை மேல் உள்ள ஜனங்
களைப் பார்த்து ஆர்ப்பரித்துக் கொண்டி
ருக்கிறார்கள். 6ஏலாமிலிருந்து வந்த குதிரை
வீரர்கள் தங்கள் அம்புகள் நிரப்பப்பட்ட
பைகளை எடுத்துக்கொண்டு போர் செய்யப்
போவார்கள். கீர் நாட்டு ஜனங்கள் தங்கள்
கேடயங்களோடு ஆரவாரம் செய்வார்கள்.
7உங்களது சிறப்பான பள்ளத்தாக்கில்
படைவீரர்கள் சந்திப்பார்கள். பள்ளத்தாக்
கானது இரதங்களால் நிறைந்துவிடும்.
குதிரை வீரர்களை நகர வாசலுக்கருகில்
நிறுத்தி வைப்பார். 8அந்த நேரத்தில், யூதா
விலுள்ள ஜனங்கள் தம் ஆயுதங்களைப்
பயன்படுத்த விரும்புவார்கள். அவர்கள்
அவற்றை பெத்-ஹ-யார்*ல் வைத்திருக்கி
றார்கள்.
யூதாவைப் பாதுகாக்கும் சுவர்களைப்
பகைவர்கள் இடித்துப் போடுவார்கள்.
9-11தாவீதின் நகரச் சுவர்கள் விரிசல் விடத்து
வங்கின. அந்த விரிசல்களை நீ பார்ப்பாய்.
எனவே நீ வீடுகளை எண்ணிக் கணக்கிடு
வாய். நீ வீட்டிலுள்ள கற்களைக் கொண்டு
சுவர்களை நிலைப்படுத்த பயன்படுத்துவாய்.
இரண்டு சுவர்களுக்கு இடையில் பழைய
ஓடையில் உள்ள தண்ணீரைச் சேமித்து
வைக்க இடம்பண்ணுவாய். நீ தண்ணீரைப்
பாதுகாப்பாய்.
உன்னைக் காத்துக்கொள்ள நீ இவ்வாறு
அனைத்தையும் செய்வாய். ஆனால் நீ
இவற்றையெல்லாம் செய்த தேவனை நம்ப
மாட்டாய். நீண்ட காலத்திற்கு முன்பே
இவற்றைச் செய்தவரை (தேவனை) நீ
பார்க்க மாட்டாய்.
12எனவே, சர்வ வல்லமையுள்ள எனது
கர்த்தராகிய ஆண்டவர். ஜனங்களிடம்
அவர்களது மரித்துப்போன நண்பர்களுக்காக
அழவும் சோகப்படவும் சொல்வார். ஜனங்
கள் தங்கள் தலைகளை மழித்துக்கொண்டு,
துக்கத்திற்குரிய ஆடைகளை அணிந்து
கொள்வார்கள்.
13ஆனால், பார்! ஜனங்கள் இப்பொழுது
மகிழ்ச்சியோடு இருக்கிறார்கள். அவர்கள்
சந்தோஷமாய் கொண்டாடுகிறார்கள். ஜனங்
கள் சொல்லுகிறதாவது: ஆடுகளையும் மாடு
களையும் கொல்லுங்கள். நாம் கொண்டாடு
வோம். உங்கள் உணவை உண்ணுங்கள்.
திராட்சைரசத்தைக் குடியுங்கள். உண்ணுங்
கள் குடியுங்கள். ஏனென்றால், நாளை
மரித்து விடுவோம் என்று சொல்லிக்
கொண்டிருக்கிறார்கள்.
14சர்வ வல்லமையுள்ள கர்த்தர் என்னிடம்
இவற்றையெல்லாம் சொன்னார். இவற்றை
நான் என் காதுகளால் கேட்டேன். “நீங்கள்
தவறு செய்திருக்கிறீர்கள். குற்றம் மன்னிக்கப்
படுவதற்கு முன்னால் நீங்கள் மரித்துப்
போவீர்கள் என்று நான் உறுதிபடக் கூறுகி
றேன்! சர்வ வல்லமையுள்ள எனது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைக் கூறினார்.

### செப்னாவிற்குத் தேவனுடைய செய்தி

15சர்வ வல்லமையுள்ள எனது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைக் கூறினார்:
“செப்னா என்ற வேலைக்காரனிடம் போ.
அந்த வேலைக்காரனே அரண்மனையின்
மேலாள். 16‘நீ இங்கே என்ன செய்துகொண்டி
ருக்கிறாய்? உன் குடும்பத்திலுள்ள யாராவது
இங்கே புதைக்கப்பட்டிருக்கிறார்களா? ஏன்
இங்கே ஒரு கல்லறையை உருவாக்கினாய்?’
என்று அந்த வேலைக்காரனைக் கேள்.”
அதற்கு ஏசாயா, “இந்த மனிதனைப்
பாருங்கள்! இவன் தனது கல்லறையை
உயர்ந்த இடத்தில் அமைத்துக்கொண்டிருக்கி
றான். இந்த மனிதன் அவனது கல்லறையை
அமைக்க பாறைக்குள் வெட்டிக்கொண்
டிருக்கிறான்.
17-18“மனிதனே, கர்த்தர் உன்னை நசுக்கி
விடுவார். கர்த்தர் உன்னை உருட்டி சிறு
உருண்டையாக்கி வெகு தொலைவிலுள்ள
இன்னொரு நாட்டின் திறந்த கைகளில்

---

**தரிசன பள்ளத்தாக்கு** எருசலேம் அருகிலுள்ள பள்ளதாக்கு.

**பெத்-ஹ-யார்** சாலோமோனின் அரண்மனையின் ஒரு பகுதி. அவனது ஆயுதங்களையும் செல்வத்தையும் சேர்த்து வைக்கும் இடம்.

*எறிந்து விடுவார். அங்கே நீ மரித்துப்
போவாய்” என்று கூறினான்.*

*கர்த்தர்: “நீ உனது இரதங்களைப்பற்றி
பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால்
அந்தத் தொலைதூர நாட்டிலுள்ள உனது
புதிய அரசன் உன்னுடையதைவிட சிறந்த
இரதங்களை வைத்திருப்பான். அவனது
அரண்மனையில் உனது இரதங்கள் முக்கியத்
துவம் பெறாது. 19உன்னை உன் பதவியை
விட்டுத் துரத்திவிடுவேன். உனது முக்கிய
மான வேலையிலிருந்து உன்னைப் புதிய
அரசன் எடுத்து விடுவான். 20அந்த நேரத்தில்,
எனது வேலைக்காரனான இல்க்கியாவின்
மகனான எலியாக்கீமை அழைப்பேன்.
21நான் உனது ஆடையை எடுத்து அந்த
வேலைக்காரன் மீது போடுவேன். நான்
அவனுக்கு உனது செங்கோலைக் கொடுப்
பேன். நான் உனக்குரிய முக்கியமான
வேலையை அவனுக்குக் கொடுப்பேன். அந்த
வேலைக்காரன் எருசலேம் ஜனங்களுக்கும்
யூதாவின் குடும்பத்திற்கும் ஒரு தந்தையைப்
போல இருப்பான்.*

*22“தாவீதின் வீட்டுச் சாவியை அந்த
மனிதனின் கழுத்தைச்சுற்றி நான் போடு
வேன். அவன் ஒரு கதவைத்திறந்தால்,
அக்கதவு திறந்தே இருக்கும். எந்த நபராலும்
அதனை அடைக்க முடியாது. அவன் ஒரு
கதவை அடைத்தால், அது மூடியே இருக்கும்
எந்த நபராலும் அதனைத் திறக்கவே முடி
யாது. அந்த வேலையாள், தந்தையின்
வீட்டிலுள்ள மதிப்பிற்குரிய நாற்காலி
யைப்போல இருப்பான். 23நான் மிகப்பல
மான பலகையில் அடிக்கப்பட்ட ஆணியைப்
போல அவனைப் பலமுள்ளவனாக்குவேன்.
24அவன் தந்தையின் வீட்டிலுள்ள அனைத்து
மதிப்பும், முக்கியத்துவமும் கொண்ட
பொருட்களெல்லாம் அவன்மேல் தொங்கும்.
முதியவர்களும், சிறுவர்களும் அவனைச்
சார்ந்து இருப்பார்கள். அந்த ஜனங்கள்
சிறு பாத்திரங்களும், தண்ணீர் நிரம்பிய
பெரிய பாட்டில்களும் அவனுக்குமேல்
தொங்குவதுபோல் இருக்கும்.*

*25“அந்த நேரத்தில், பலமான பலகையில்
அடிக்கப்பட்டிருந்த ஆணியானது (செப்னா)
பலவீனமாகி உடைந்துபோகும். அந்த ஆணி
தரையில் விழுந்துவிட அந்த ஆணியில்
தொங்கிக்கொண்டிருந்த அனைத்து பொருட்
களும் விழுந்து அழிந்துபோகும். பிறகு
நான் சொன்ன அனைத்தும் நிகழும்”
(இவையெல்லாம் நிகழும். ஏனென்றால்,
கர்த்தர் அவற்றைச் சொன்னார்.)*

## லீபனோனுக்குத் தேவனுடைய செய்தி

*23 தீருவைப் பற்றிய துயரச் செய்தி:
தார்ஷீஸ் கப்பல்களே, துக்கமாக இருங்
கள். உங்கள் துறைமுகம் அழிக்கப்பட்
டிருக்கிறது. (இந்தச் செய்தி கப்பலில் வந்த
ஜனங்களுக்கு, அவர்கள் கித்தீம்* தேசத்தி
லிருந்து வரும்போதே சொல்லப்பட்டது.)*

*2கடற்கரையில் வாழும் ஜனங்களே,
துக்கமாய் இருங்கள். தீரு “சீதோனின்
‘வியாபாரம்” ஆக இருந்தது. அக்கடற்கரை
நகரம் கடலைத் தாண்டி வணிகர்களை
அனுப்பியது. அவர்கள் உன்னைச் செல்
வத்தால் நிரப்பினார்கள். 3அந்த மனிதர்கள்
கடல்களில் பயணம் செய்து தானியங்களைத்
தேடினார்கள். தீருவிலிருந்து வந்த ஜனங்கள்
நைல் ஆற்றின் கரையில் விளைந்த தானி
யங்களை வாங்கி, மற்ற நாடுகளில் அவற்றை
விற்றனர்.*

*4சீதோனே, நீ மிகவும் துக்கமாக இருக்க
வேண்டும். ஏனென்றால், இப்போது கடலும்
கடற்கோட்டையும்* கூறுகிறது: எனக்குப்
பிள்ளைகள் இல்லை. நான் பிள்ளைப்
பேற்றின் வலியை உணர்ந்திருக்கவில்லை.
நான் பிள்ளைகளைப் பெற்றுக் கொண்ட
தில்லை. இளம் ஆண்களையும், பெண்களை
யும் நான் வளர்த்திருக்கவில்லை.*

*5தீருவைப் பற்றிய செய்திகளை எகிப்து
கேட்கும். இச்செய்திகள் எகிப்தை துக்கத்தி
னால் துன்புறச் செய்யும்.*

*6கப்பல்களே நீங்கள் தர்ஷீஸிக்குத்* திரும்
புங்கள். கடற்கரையில் வாழும் ஜனங்களே,
துக்கமாக இருங்கள்.*

*7கடந்த காலத்தில், தீரு நகரில் சந்
தோஷமாக இருந்தீர்கள். அந்நகரம் துவக்க
காலம் முதல் வளர்ந்து வந்தது. அந்நகர
ஜனங்கள் தொலை தூரங்களுக்குப் பயணம்
செய்து வாழ்ந்திருக்கின்றனர்.*

*8தீரு நகரம் பல தலைவர்களை உருவாக்கி
யிருக்கிறது. அந்நகர வணிகர்கள் இளவரசர்
களைப் போன்றிருக்கின்றனர். அதன் வியா
பாரிகள் எங்கும் மதிப்பு பெறுகிறார்கள்.
எனவே யார் தீருவுக்கு எதிராக திட்டங்கள்
தீட்டினார்கள்?*

*9சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இருந்தார்.
அவர்களை அவர் முக்கியத்துவம் இல்லாத
வர்களாகச் செய்ய முடிவு செய்தார்.*

*10தர்ஷீஸிலிருந்து வந்த கப்பல்களே!
உங்கள் நாட்டிற்குத் திரும்பிப்போங்கள்.
கடலை ஒரு சிறு ஆறு போன்று கடந்து
செல்லுங்கள். இப்பொழுது உங்களை
எவரும் தடுக்கமாட்டார்கள்.*

*11கர்த்தர் அவரது கையைக் கடலுக்கு
மேல் நீட்டியிருக்கிறார். தீருவுக்கு எதிராகப்
போரிட கர்த்தர் அரசுகளைச் சேகரித்துக்
கொண்டிருக்கிறார். தீருவின் அரண்களை*

---

***கித்தீம்*** *சைப்ரஸ் தீவு அல்லது கிரீட் தீவைக் குறிக்கும்.*

***கடற்கோட்டை*** *தீரு நகரின் இன்னொரு பெயர்.*

***தர்ஷீஸ்*** *இஸ்ரவேலுக்கு வெகு தூரத்தில், ஸ்பெயினில் உள்ள நகரம். பெரிய கப்பல்களுக்குப் புகழ் பெற்ற நகரம்.*

அழிக்க கர்த்தர் கானானுக்குக்* கட்டளையிட்டார்.

12கர்த்தர் கூறுகிறார், “கன்னியாகிய சீதோனின் மகளே, நீ அழிக்கப்படுவாய். நீ இனிமேல் மகிழ்ச்சி அடையமாட்டாய்.” ஆனால் தீரு ஜனங்கள் கூறுகிறார்கள், “நமக்கு சைப்ரஸ் உதவும்!” ஆனால் நீ கடலைக் கடந்து சைப்ரஸீக்குச் சென்றால் நீ ஓய்வெடுக்க ஒரு இடத்தைக் கண்டு கொள்ளமாட்டாய்.

13எனவே தீரு ஜனங்கள் கூறுகிறார்கள், “நமக்குப் பாபிலோன் ஜனங்கள் உதவுவார்கள்!” ஆனால் கல்தேயருடைய நாட்டைப் பார். இப்பொழுது பாபிலோன் ஒரு நாடாகவே இல்லை. அசீரியா பாபிலோனைத் தாக்கியது. அதைச்சுற்றிலும் போர்க் கோபுரங்களைக் கட்டியது. வீரர்கள், அழகான வீடுகளில் இருந்து எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டனர். பாபிலோனைக் காட்டு மிருகங்களுக்குரிய இடமாக அசீரியா செய்தது. பாபிலோனை அழிவுக்கேற்ற இடமாக மாற்றியது.

14எனவே, துக்கமாயிருங்கள், தர்ஷீஸிலிருந்து வந்த கப்பல்களே, உங்கள் பாதுகாப்புக்குரிய இடம் (தீரு) அழிக்கப்படும்.

1570 ஆண்டுகளுக்கு ஜனங்கள் தீருவை மறப்பார்கள். (இது ஒரு அரசனின் ஆட்சிக்கால அளவு). 70ஆண்டுகளுக்குப் பிறகு, தீரு இந்தப் பாடலில் வரும் வேசிக்குச் சமானமாய் இருக்கும்.

16ஆண்களால் மறக்கப்பட்ட பெண்ணே, உன் வீணையை எடுத்துக்கொண்டு நகரைச் சுற்றி நட. உன் பாடலை நன்றாக வாசி. உன் பாடலை அடிக்கடி பாடு. பிறகு, ஜனங்கள் உன்னை நினைவில் வைத்திருப்பார்கள்.

1770ஆண்டுகளுக்குப் பிறகு, தீருவின் வழக்கை கர்த்தர் மீண்டும் மதிப்பீடு செய்வார். அவர் அவளுக்கு ஒரு தீர்வைக் கொடுப்பார். மீண்டும் தீரு வணிகத்தைப் பெறும் பூமியின் அனைத்து நாடுகளுக்கும் தீரு வேசியாக விளங்கும். 18ஆனால் தீரு தான் சம்பாதிக்கும் பணத்தைத் தனக்கென்று வைக்காது. தனது வணிகத்தால் வரும் லாபத்தைத் தீரு கர்த்தருக்காகப் பாதுகாக்கும். தீரு அச்செல்வத்தைக் கர்த்தருக்குச் சேவை செய்யும் ஜனங்களுக்குக் கொடுக்கும். எனவே, கர்த்தருடைய ஊழியக்காரர்கள் முழுமையாக சாப்பிடுவார்கள், அவர்கள் மென்மையான ஆடைகளை அணிந்துகொள்வார்கள்.

**கானான்** கானானியர்கள் வாழும் இடம். இது, இஸ்ரவேலின் ஒரு பகுதியும், லீபனோன், சிரியா ஆகியவற்றைக் கொண்டது.

### தேவன் இஸ்ரவேலைத் தண்டிப்பார்

24 பார்! கர்த்தர் இந்த நாட்டை அழிப்பார். இந்த நாட்டிலுள்ள எல்லாவற்றையும் கர்த்தர் துடைத்து விடுவார். கர்த்தர் இங்குள்ள ஜனங்களை வெளியே துரத்துவார்.

2அந்த நேரத்தில், பொது ஜனங்களும், ஆசாரியர்களும் சமமாக இருப்பார்கள். அடிமைகளும், எஜமானர்களும் சமமாக இருப்பார்கள். பெண் அடிமைகளும் அவர்களது பெண் எஜமானர்களும் சமமாக இருப்பார்கள். வாங்குபவர்களும், விற்பவர்களும் சமமாக இருப்பார்கள். கடன் வாங்கும் ஜனங்களும், கடன் கொடுக்கும் ஜனங்களும் சமமாக இருப்பார்கள். வட்டி வாங்கினவனும், வட்டி கொடுத்தவனும் சமமாக இருப்பார்கள். 3ஜனங்கள் அனைவரும் நாட்டை விட்டு வெளியேற்றப்படுவார்கள். அனைத்து செல்வமும் எடுக்கப்படும். இது நிகழும். ஏனென்றால், கர்த்தர் கட்டளையிட்டிருக்கிறார். 4இந்த நாடு காலியாகவும் துக்கமாகவும் இருக்கும். உலகமே காலியாகவும் பலவீனமாகவும் இருக்கும். இந்நாட்டு பெருந்தலைவர்கள் பலவீனமானவர்கள்.

5ஜனங்கள் நாட்டைத் தீட்டுப்படுத்தினார்கள். இது எப்படி நிகழ்ந்தது? தேவனுடைய போதனைகளுக்கு எதிராக ஜனங்கள் தவறானவற்றைச் செய்தனர். தேவனுடைய சட்டங்களுக்கு அவர்கள் அடிபணியவில்லை. நீண்ட காலத்துக்கு முன்பு தேவனோடு இந்த ஜனங்கள் ஒரு உடன்படிக்கை செய்துக்கொண்டனர். ஆனால், அந்த ஜனங்கள் தேவனோடுள்ள உடன்படிக்கையை முறித்துவிட்டனர். 6இந் நாட்டில் வாழும் ஜனங்கள் தீமைகளைச் செய்த குற்றவாளிகள். எனவே, தேவன் இந்நாட்டை அழிப்பதாக உறுதி செய்தார். ஜனங்கள் தண்டிக்கப்படுவார்கள். மிகச்சிலர் மட்டுமே உயிரோடு இருப்பார்கள்.

7திராட்சைக் கொடிகள் வாடிக்கொண்டிருக்கும். புதிய திராட்சைரசம் மோசமாகும். கடந்த காலத்தில் ஜனங்கள் மகிழ்ச்சியோடு இருந்தார்கள். ஆனால், இப்போது அந்த ஜனங்கள் துக்கமாயுள்ளனர். 8ஜனங்கள் மகிழ்ச்சியாயிருப்பதை நிறுத்தியுள்ளனர். மகிழ்ச்சிகுரிய ஆரவாரங்கள் நிறுத்தப்பட்டன. வீணை மற்றும் முரசுகளிலிருந்து வரும் மகிழ்ச்சி இசையும் முடிக்கப்பட்டது. 9ஜனங்கள் தம் திராட்சைரசத்தைக் குடிக்கும் போது, மகிழ்ச்சிகரமான பாடல்களைப் பாடமாட்டார்கள். இப்பொழுது மதுபானம் அதைக் குடிக்கிறவர்களுக்குக் கசப்பாக இருக்கும்.

10“மொத்த குழப்பம்” என்பது இந்நகரத்திற்கான நல்ல பெயராக உள்ளது. நகரம் அழிக்கப்பட்டிருக்கிறது. ஜனங்கள் வீட்டிற்குள் நுழைய முடியாது. கதவுகள் அடை

பட்டிருக்கின்றன. 11“ஜனங்கள் இன்னும்
சந்தை இடங்களில் திராட்சைரசத்தைக்
கேட்டுக்கொண்டிருக்கின்றனர். ஆனால்
அனைத்து மகிழ்ச்சியும் போய்விட்டன.
சந்தோஷம் வெகு தொலைவுக்கு எடுத்துச்
செல்லப்பட்டிருக்கிறது. 12நகரத்தில் அழிவு
மட்டுமே விடப்பட்டுள்ளது. கதவுகள்கூட
நொறுக்கப்பட்டுள்ளன.
13அறுவடைக் காலத்தில், ஜனங்கள் ஒலிவ
மரத்திலிருந்து ஒலிவப்பழங்கள் உலுக்கு
வார்கள். ஆனால், சில ஒலிவப்பழங்கள்
விடப்பட்டிருக்கும். இதுபோலவே, மற்ற
தேசங்களால் சூழப்பட்டிருக்கும் இந்நாட்டில்
ஜனங்களின் மத்தியிலும் இருக்கும்.
14விடப்பட்ட ஜனங்கள் சத்தமிடத்
தொடங்குவார்கள். அவர்கள் கடலின் ஆர
வாரத்தைவிட மிகுதியாகச் சத்தமிடுவார்கள்.
கர்த்தர் பெரியவர் என்பதால் அவர்கள்
மகிழ்வார்கள்.
15அந்த ஜனங்கள், “கிழக்கில் உள்ள
ஜனங்கள், கர்த்தரைத் துதிக்கிறார்கள்!
தொலை நாட்டு ஜனங்கள் இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தருடைய நாமத்தைத்
துதிக்கின்றனர்” என்று சொல்வார்கள்.
16பூமியிலுள்ள ஒவ்வொரு இடத்தி
லிருந்தும் தேவனைத் துதிக்கும் பாடலைக்
கேட்போம். இப்பாடல்கள் நல்ல தேவனைத்
துதிக்கும். ஆனால், நான் சொல்கிறேன்:
“போதும்! எனக்கு போதுமானது உள்ளது!
நான் பார்க்கின்றவை பயங்கரமாக உள்ளன.
துரோகிகள் ஜனங்களுக்கு எதிராகத் திரும்பி,
அவர்களைக் காயப்படுத்துகிறார்கள்.

17அந்தத் தேசத்தில் வாழும் ஜனங்களுக்கு,
ஆபத்து வருவதைப் பார்க்கிறேன். அவர்
களுக்கு அச்சம், குழிகள், உலைகள்
இருப்பதைப் பார்க்கிறேன்.
18ஜனங்கள் ஆபத்தைப்பற்றி கேள்விப்
படுவார்கள். அவர்கள் அச்சப்படுவார்கள்.
சில ஜனங்கள் வெளியே ஓடுவார்கள்.
ஆனால், அவர்கள் குழிக்குள் விழுவார்கள்;
வலைக்குள் அகப்படுவார்கள். சில ஜனங்கள்
குழியிலிருந்து வெளியே ஏறி வருவார்கள்.
ஆனால், அவர்கள் இன்னொரு வலைக்குள்
அகப்படுவார்கள்” வானத்தில் உள்ள வெள்
ளத்தின் கதவுகள் திறக்கும். வெள்ளம்
பெருகத் தொடங்கும். பூமியின் அஸ்திபாரம்
அசையும்.

19நில நடுக்கம் ஏற்படும். பூமியானது
பிளந்து திறந்துக்கொள்ளும்.
20உலகத்தின் பாவங்கள் மிகவும் கனமா
னவை. எனவே, பாரத்திற்கு அடியில்
பூமி விழுந்துவிடும். பழைய வீடுபோன்று
பூமி நடுங்கும். குடிகாரனைப்போன்று பூமி
விழுந்துவிடும். பூமியானது தொடர்ந்து
இருக்க முடியாமல் போகும்.
21அந்த நேரத்தில், கர்த்தர் பரலோகத்தின்
சேனைகளை பரலோகத்திலும், பூமியிலுள்ள
அரசர்களைப் பூமியிலும் தீர்ப்பளிப்பார்.
22பல ஜனங்கள் சேர்ந்து கூடிக்கொள்
வார்கள். அவர்களில் சிலர் குழியில்
அடைக்கப்படுவார்கள். அவர்களில் சிலர்
சிறைக்குள் இருப்பார்கள். ஆனால் இறுதி
யில், நீண்ட நேரத்திற்குப் பிறகு, அவர்கள்
நியாயந்தீர்க்கப்படுவார்கள்.
23எருசலேமில், சீயோன் மலைமேல்
கர்த்தர், அரசனைப் போன்று ஆட்சிசெய்
வார். அவரது மகிமையானது மூப்பர்களுக்கு
முன் இருக்கும். அவரது மகிமையானது
மிகவும் பிரகாசமாயிருப்பதால் சூரியன்
நாணமடையும், சந்திரன் இக்கட்டான நிலை
யிலிருக்கும்.

## தேவனைத் துதிக்கும் ஒரு பாடல்

25 கர்த்தாவே, நீர் எனது தேவன். நான்
உம்மை கனம்பண்ணி, உமது
நாமத்தைத் துதிக்கிறேன். நீர் அதிசயமான
வற்றை செய்திருக்கிறீர். நீண்ட காலத்துக்கு
முன்னால் நீர் சொன்னவை, அனைத்தும்
முழுமையாக உண்மையாகியுள்ளது. இப்படி
இருக்கும் என்று நீர் சொன்ன ஒவ்வொன்
றும், சரியாக நீர் சொன்னபடியே ஆயிற்று.
2நீர் நகரத்தை அழித்திருக்கிறீர். அந்த
நகரமானது பலமான சுவர்களால் பாதுகாக்
கப்பட்டது. ஆனால் இப்போது அது
மண்மேடாயிற்று. அயல்நாட்டு அரண்மனை
அழிக்கப்பட்டிருக்கிறது. அது மீண்டும்
கட்டப்படமாட்டாது.
3வல்லமை மிக்க தேசங்களிலுள்ள
ஜனங்கள் உம்மை மதிப்பார்கள். பலமான
நகரங்களில் உள்ள வல்லமையுள்ள ஜனங்கள்
உமக்குப் பயப்படுவார்கள்.
4கர்த்தாவே, நீர் பாதுகாப்புத் தேவைபடு
கிற ஏழை ஜனங்களுக்குப் பாதுகாப்பான
இடம். இந்த ஜனங்களைத் தோற்கடிக்க பல
பிரச்சனைகள் தொடங்கும். ஆனால் நீர்
அவர்களைப் பாதுகாப்பீர். கர்த்தாவே, நீர்
வெள்ளத்திலிருந்தும், வெப்பத்திலிருந்தும்
ஜனங்களைக் காப்பாற்றும் வீடுபோல
இருக்கிறீர். தொல்லைகள் எல்லாம், பயங்க
ரமான காற்று மற்றும் மழை போன்று
இருக்கும். மழை சுவரைத் தாக்கி கீழே
விழச்செய்யும். ஆனால் வீட்டிற்குள் உள்ள
ஜனங்கள் பாதிக்கப்படமாட்டார்கள்.

5பகைவன் சத்தமிட்டு ஆரவாரத்தை
ஏற்படுத்துவான். பயங்கர பகைவன் சத்த
மிட்டு சவால் விடுவான். ஆனால் தேவ
னாகிய நீர் அவர்களைத் தடுப்பீர். கோடை
காலத்தில் வனாந்தரத்தில் செடிகள் வாடி
தரையில் விழும். அடர்த்தியான மேகங்கள்
கோடை வெப்பத்தைத் தடுக்கும். அதே
வழியில், நீர் பயங்கரமான பகைவர்களின்
சத்தங்களை நிறுத்துவீர்.

### தேவன் அவரது ஊழியர்களுக்கு அமைத்த விருந்து

[6]அந்த நேரத்தில், சர்வ வல்லமையுள்ள கர்த்தர், இந்த மலையில் உள்ள ஜனங்களுக்கு ஒரு விருந்து தருவார். அந்த விருந்தில் சிறந்த உணவும், திராட்சைரசமும் தரப்படும். மாமிசமானது புதிதாகவும் சிறந்ததாகவும் இருக்கும்.

[7]ஆனால் இப்போது, எல்லா தேசங்களின் மேலும் ஜனங்களின் மேலும் ஒரு முக்காடு கவிழ்ந்திருக்கிறது. அந்த முக்காடு "மரணம்" என்று அழைக்கப்படுகிறது. [8]ஆனால் மரண மானது எக்காலத்திற்கும் அழிக்கப்படும். கர்த்தராகிய எனது ஆண்டவர், ஒவ்வொரு முகத்திலும் வடியும் கண்ணீரைத் துடைப் பார். கடந்த காலத்தில், அவரது ஜனங்கள் எல்லாரும் துக்கமாயிருந்தார்கள். ஆனால், பூமியிலிருந்து தேவன் அந்தத் துக்கத்தை எடுத்து விடுவார். இவையெல்லாம் நிகழும். ஏனென்றால், இவ்வாறு நிகழும் என்று கர்த்தர் கூறினார்.

[9]அந்த நேரத்தில், ஜனங்கள், "இங்கே எங்கள் தேவன் இருக்கிறார். அவர், நாங்கள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற ஒருவர். நம் மைக் காப்பாற்றுவதற்காக அவர் வந்தி ருக்கிறார். நமது கர்த்தருக்காக நாம் காத்துக் கொண்டிருந்தோம். கர்த்தர் நம்மைக் காப் பாற்றும்போது, நாம் கொண்டாடுவோம், மகிழ்ச்சி அடைவோம்."

[10]இந்த மலைமீது கர்த்தருடைய வல்லமை உள்ளது, மோவாப் தோற்கடிக்கப்படும். கர்த்தர் பகைவரை மிதித்து நடந்து செல் வார். இது குப்பைகளில் உள்ள சருகுகள் மீது நடப்பது போலிருக்கும்.

[11]கர்த்தர் தமது கரங்களை நீச்சலடிக்கும் ஒருவரைப்போல் விரிப்பார். பிறகு கர்த்தர் அவர்களது பெருமைக்குரிய அனைத்தையும் சேகரிப்பார். கர்த்தர் அவர்களால் செய்யப் பட்ட அழகான அனைத்தையும் சேகரிப்பார். அவர் அவற்றைத் தூர எறிந்துப்போடுவார்.

[12]கர்த்தர் ஜனங்களின் உயர்ந்த சுவர்களை யும், பாதுகாப்பான இடங்களையும் அழிப் பார். கர்த்தர் அவற்றைத் தரையின் புழுதியில் எறிந்துவிடுவார்.

### தேவனைப் போற்றும் பாடல்

26 அந்த நேரத்தில் யூதாவில் இந்தப்பா டலை ஜனங்கள் பாடுவார்கள்; கர்த்தரே நமக்கு இரட்சிப்பைத் தருகிறார். நமக்குப் பலமான நகரம் உள்ளது. நமது நகரத்திற்குப் பலமான சுவர்களும், தற்காப்புக ளும் உள்ளன.

[2]கதவுகளைத் திறவுங்கள். நல்ல ஜனங்கள் நுழைவார்கள். தேவனுடைய நல்ல போத னைகளுக்கு அந்த ஜனங்கள் கீழ்ப் படிவார்கள்.

[3]கர்த்தாவே, உம்மை அண்டியுள்ள ஜனங் களுக்கும், உம்மை நம்புகிற ஜனங்களுக்கும், நீர் உண்மையான சமாதானத்தைக் கொடுக் கிறீர்.

[4]எனவே, எப்பொழுதும் கர்த்தரை நம்புங் கள். ஏனென்றால், கர்த்தராகிய யேகோவா வில்* உங்களுக்கு என்றென்றைக்கும் பாது காப்பான இடமுண்டு.

[5]ஆனால், கர்த்தர் தற்பெருமை கொண்ட நகரத்தை அழிப்பார். அங்கே வாழுகின்ற ஜனங்களை அவர் தண்டிப்பார். கர்த்தர் அந்த உயர்வான நகரத்தைத் தரையில் போடுவார். அது புழுதிக்குள் விழும்.

[6]பிறகு, ஏழ்மையும் பணிவும் உள்ள ஜனங்களின் கால்கள் அதனை மிதித்துச் செல்லும்.

[7]நல்ல ஜனங்களுக்குச் நேர்மையே சிறந்த பாதை. நல்ல ஜனங்கள் நேர்மையாகவும், உண்மையாகவும் உள்ள பாதையில் செல் வார்கள். தேவனே நீர் அந்தப் பாதையை மென்மையாக்கி எளிதாக செல்லும்படிச் செய்கிறீர்.

[8]ஆனால் கர்த்தாவே, நாங்கள் உமது நீதியின் பாதைக்காகக் காத்திருக்கிறோம். எங்கள் ஆத்துமா, உம்மையும் உமது நாமத் தையும் நினைவுகொள்ள விரும்புகின்றது.

[9]இரவில் எனது ஆத்துமா உம்மோடு இருக்க விரும்புகிறது. என்னுள் இருக்கிற ஆவி ஒவ்வொரு புதிய நாளின் அதி காலையிலும் உம்மோடு இருக்க விரும் புகிறது. தேசத்திற்கு உமது நீதியின் பாதை வரும்போது, ஜனங்கள் வாழ்வின் சரியான பாதையைக் கற்றுக்கொள்வார்கள்.

[10]தீயவன் நல்லவற்றை செய்ய கற்றுக் கொள்ளமாட்டான். அவனிடம் நீர் இரக்கம் மட்டும் காட்டினால், அவன் கெட்டவற்றை மட்டும் செய்வான். அவன் நல்லவர்களின் உலகில் வாழ்ந்தாலும் கூட, கர்த்தருடைய மகத்துவத்தை தீயவன் எப்பொழுதும் கண்டு கொள்ளமாட்டான்.

[11]ஆனால் கர்த்தாவே, நீர் அந்த ஜனங் களைத் தண்டித்தால் அவர்கள் அதனைப் பார்ப்பார்கள். கர்த்தாவே, தீயவர்களிடம் உமது ஜனங்கள்மேல் நீர் வைத்திருக்கிற பலமான அன்பைக் காட்டும். உண்மையா கவே தீய ஜனங்கள் அவமானப்படுவார்கள், உமது எதிரிகள் அவர்களது சொந்த நெருப்பிலேயே (தீமை) எரிக்கப்படுவார்கள்.

[12]கர்த்தாவே, நீர் நாங்கள் செய்ய முயன்ற காரியங்களை எங்களுக்காகச் செய்வதில் வெற்றியடைந்திருக்கிறீர். ஆதலால், எங்க ளுக்குச் சமாதானத்தைத் தாரும்.

### தேவன் அவரது ஜனங்களுக்கு புதிய வாழ்க்கையைக் கொடுப்பார்

[13]கர்த்தாவே, நீர் எங்களது தேவன், ஆ னால் கடந்த காலத்தில், நாங்கள் மற்ற தெய்வங்களைப் பின்பற்றினோம். நாங்கள்

---

**யேகோவா** தேவன்.

*மற்ற எஜமானர்களுக்கு உரியவர்களாய் இருந்தோம், ஆனால், இப்பொழுது நாங்கள் ஒரே ஒரு நாமத்தை, அதுவும் உமது நாமத்தை மட்டும் நினைவில் வைக்க விரும்புகிறோம்.*

*14அந்தப் பொய்த் தெய்வங்களெல்லாம் உயிரோடு இல்லை. அந்த ஆவிகள் மர*
*ணத்திலிருந்து எழுவதில்லை. அவற்றை அழித்துவிட நீர் முடிவு செய்தீர். அவற்றை நினைவூட்டுகிற அனைத்தையும் நீர் அழித்துவிட்டீர்.*

*15நீர் நேசித்த நாட்டிற்கு உதவியிருக்கிறீர்*
*மற்ற ஜனங்கள் அந்நாட்டை தோற்கடிக்காதபடி நீர் தடுத்தீர்.*

*16கர்த்தாவே, ஜனங்கள் துன்பத்தில்*
*இருக்கும்போது உம்மை நினைப்பார்கள். நீர் அவர்களைத் தண்டிக்கும்போது உம்மிடம் அமைதியான பிரார்த்தனைகளை ஜனங்கள் செய்வார்கள்.*

*17கர்த்தாவே, நாங்கள் உம்மோடு இல்லாத*
*போது, நாங்கள் குழந்தையைப் பெற்றெடுத்தப் பெண்ணைப்போல் இருக்கிறோம். அவள் பிரசவ வலியுடன் அழுகிறாள்.*

*18அதே வழியில், எங்களுக்கு வலி*
*உள்ளது. நாங்கள் குழந்தை பெற்றோம். ஆனால் அது காற்றாகியது. நாங்கள் உலகத்துக்காக புதிய ஜனங்களை உருவாக்கவில்லை. நாங்கள் தேசத்திற்கு இரட்சிப்பைக் கொண்டுவரவில்லை.*

*19ஆனால் கர்த்தர் கூறுகிறார், "உம்*
*முடைய ஜனங்கள் மரித்திருக்கிறார்கள் ஆனால் அவர்கள் மீண்டும் வாழ்வார்கள். எங்கள் ஜனங்களின் உடல்களும் மரணத்திலிருந்து எழும். மரித்த ஜனங்கள் மண்ணிலிருந்து எழுந்து மகிழ்வார்கள். உம்முடைய பனி செடிகொடிகளின் மேல் பெய்யும் பனி போல இருக்கும். புதிய நேரம் வந்துகொண்டிருப்பதை இது காட்டும். ஜனங்கள் இப்போது பூமியில் புதைக்கப்படுகிறார்கள். ஆனால் பூமியானது மரித்தவர்களை வெளியே அனுப்பும்.*

### *தீர்ப்பு: பரிசு அல்லது தண்டனை*

*20எனது ஜனங்களே! உங்கள் அறைக்குள்*
*போங்கள். உங்கள் கதவுகளை மூடுங்கள். கொஞ்ச காலத்திற்கு உங்கள் அறைகளில் ஒளிந்திருங்கள். தேவனுடைய கோபம் முடியும்வரை ஒளிந்திருங்கள்.*

*21கர்த்தர் அவரது இடத்தை விட்டு உலக*
*ஜனங்களை அவர்கள் செய்த தீமைக்காக நியாயந்தீர்க்க வருவார். கொல்லப்பட்ட ஜனங்களின் இரத்தத்தைப் பூமி காட்டும். இந்த ஜனங்களை இனி பூமி மூடி வைக்காது.*

27 *அந்தக் காலத்திலேயே, கர்த்தர் லிவியாதான் என்னும் கோணலான பாம்பை நியாயந்தீர்ப்பார். கர்த்தர் தனது கடினமும் வல்லமையும் கொண்ட பெரிய வாளை, லிவியாதான் என்னும் நீண்ட பாம்பைத் தண்டிக்கப் பயன்படுத்துவார். கடலில் உள்ள பெரிய பிராணியைக் கர்த்தர் கொல்வார்.*

*2அந்தக் காலத்திலே, ஜனங்கள் நல்ல*
*திராட்சைத் தோட்டத்தைப்பற்றிப் பாடுவார்கள்.*

*3"கர்த்தராகிய நான், அத்தோட்டத்தைக்*
*கவனித்துக் கொள்வேன். சரியான காலத்தில் நான் தோட்டத்திற்கு தண்ணீர் ஊற்றுவேன். இரவும் பகலும் நான் தோட்டத்தைக் காவல் செய்வேன். எவரும் தோட்டத்தைத் அழிக்க முடியாது.*

*4நான் கோபமாக இல்லை. ஆனால்*
*போர் இருந்தால், ஒருவர் முள்புதரால் சுவர் எழுப்பினால், பிறகு, நான் அதனை நோக்கிப்போய் அதனை எரிப்பேன்.*

*5ஆனால், எவராவது பாதுகாப்புக்காக*
*என்னிடம் வந்தால், என்னோடு சமாதானமாயிருக்க விரும்பினால், அவர்களை வரவிடுங்கள். அவர்கள் என்னோடு சமாதானம் கொள்ளட்டும்.*

*6ஜனங்கள் என்னிடம் வருவார்கள். அந்த*
*ஜனங்கள் யாக்கோபுக்கு உதவிசெய்து அவனை நல்ல வேர்கள் கொண்ட செடியைப்போல் பலமுள்ளதாக்குவார்கள். அந்த ஜனங்கள், இஸ்ரவேலை பூக்க ஆரம்பிக்கும் செடிபோல் வளரச் செய்வார்கள். பிறகு, செடிகளின் பழங்களைப்போல நாடு குழந்தைகளால் நிறைந்திருக்கும்."*

### தேவன் இஸ்ரவேலை அனுப்பிவிடுவார்

*7எப்படி கர்த்தர் அவரது ஜனங்களைத்*
*தண்டிப்பார்? கடந்த காலத்தில், பகைவர்கள் ஜனங்களைத் தாக்கினார்கள். அதே வழியில் கர்த்தர் அவர்களைத் தாக்குவாரா? கடந்த காலத்தில் நிறைய ஜனங்கள் கொல்லப்பட்டனர். கர்த்தரும் அதே வழியில் பலரைக் கொல்வாரா?*

*8கர்த்தர், இஸ்ரவேலரை வெகுதொலை*
*விற்கு அனுப்பிவிடுவதன் மூலம் தனது விவாதத்தை முடிக்க விரும்புகிறார். இஸ்ரவேலரிடம் கர்த்தர் கடுமையாகப் பேசுவார். அவரது வார்த்தைகள் சூடான வனாந்திரகாற்றைப்போல எரிக்கும்.*

*9யாக்கோபின் குற்றம் எப்படி மன்னிக்கப்*
*படும்? அவனது பாவங்கள் விலக்கப்பட என்ன நிகழும்? (இவை நிகழும்): பலிபீடத்திலுள்ள கற்கள் நொறுக்கப்பட்டு புழுதியில் கிடக்கும். சிலைகளும் பலிபீடங்களும் பொய்த் தெய்வங்களின் தொழுதுகொள்ளுதலுக்கு உரியதாய் இருந்தவைகளும் அழிக்கப்படும்.*

*10அந்தக் காலத்திலே, பெரு நகரம் காலி*
*யாகும். அது வனாந்தரம்போல் ஆகும். எல்லா ஜனங்களும் செல்வார்கள். அவர்கள் வெளியே ஓடுவார்கள். அந்த நகரமானது திறந்த மேய்ச்சல் நிலம்போல் ஆகும். இளம் கன்றுக்குட்டிகள் அங்கே புல் மேயும்.*

திராட்சைக் கொடிகளிலுள்ள இலைகளைக்
கன்றுக்குட்டிகள் உண்ணும். 11“திராட்சைக்
கொடிகள் உலர்ந்துபோகும். அவற்றின்
இலைகள் ஒடிந்துபோகும். பெண்கள் அக்கி
ளைகளை விறகாகப் பயன்படுத்துவார்கள்.
ஜனங்கள் புரிந்துகொள்ள மறுப்பார்கள்.
எனவே, அவர்களை உருவாக்கிய தேவன்
ஆறுதல் செய்யமாட்டார். அவர்களை உண்
டாக்கியவர் அவர்களிடம் கருணையோடு
இருக்கமாட்டார்.

12அந்தக் காலத்தில், கர்த்தர் தமது
ஜனங்களை மற்ற ஜனங்களிடமிருந்து
பிரித்து வைப்பார். அவர் ஐபிராத்து
ஆற்றிலிருந்து தொடங்குவார். கர்த்தர் தமது
ஜனங்களை ஐபிராத்து நதி முதல் எகிப்து
நதிவரை திரட்டுவார்.
இஸ்ரவேல் ஜனங்களாகிய நீங்கள் ஒவ்
வொருவராகச் சேர்க்கப்படுவீர்கள். 13எனது
ஜனங்களில் சிலர் இப்பொழுது அசீரியாவில்
காணாமல் போயிருக்கிறார்கள். எனது
ஜனங்களில் சிலர் எகிப்துக்கு ஓடிப்போயி
ருக்கிறார்கள். ஆனால் அந்தக் காலத்திலே,
ஒரு பெரும் எக்காளம் ஊதப்படும். அப்
பொழுது அந்த ஜனங்கள் எல்லோரும்
எருசலேமிற்குத் திரும்பி வருவார்கள். அந்த
ஜனங்கள் அந்தப் பரிசுத்த மலையின்மேல்
கர்த்தருக்கு முன்பு பணிவார்கள்.

### வட இஸ்ரவேலுக்கு எச்சரிக்கைகள்

28 சமாரியாவைப் பாருங்கள்! எப்பிராயீ
மின் குடிகார ஜனங்கள் அந்நகரைப்
பற்றித் தற்பெருமை கொள்கிறார்கள். மலை
க்கு மேலே வளமான பள்ளத்தாக்கு சூழ
இருக்கிறது. சமாரியா ஜனங்கள் தம்
நகரத்தை அழகான பூக்களாலான கிரீடம்
என்று நினைத்திருக்கின்றனர். ஆனால்,
அவர்கள் திராட்சைரசத்தைக் குடித்துக்
கொண்டிருக்கின்றனர். இந்த “அழகான
கிரீடமானது” வாடிப்போகும் செடிபோல்
உள்ளது.

2பார், எனது ஆண்டவர் பலமும் தைரிய
மும் கொண்டவராக இருக்கிறார். அவர்
பெருங்காற்றும் கல்மழையும் கொண்ட
நாட்டுக்குள் வருவார். அவர் ஒரு புயலைப்
போன்று நாட்டுக்குள் வருவார். அவர் ஒரு
சக்திவாய்ந்த ஆறு நாட்டுக்குள் பெருக்
கெடுத்து வருவது போன்று இருப்பார்.
அவர் அந்தக் கிரீடத்தை (சமாரியா) தரை
யில் தள்ளுவார்.

3எப்பிராயீமிலுள்ள குடிகார ஜனங்கள்
தமது ‘அழகான மகுடத்தைப்’ பற்றி பெரு
மை கொள்கிறார்கள். ஆனால், அந்த நகரம்
மிதியுண்டு போகும்.

4மலைக்குமேல் வளமான பள்ளத்தாக்கு
சுற்றிலும் இருக்க இந்நகரம் உள்ளது. அந்த
“அழகான பூக்களாலான மகுடம்” வாடும்
செடியைப் போன்றுள்ளது. அந்த நகரம்
கோடையில் முதலில் பழுத்த அத்திப்பழம்
போன்றது. ஒருவன் அப்பழத்தில் ஒன்றைப்
பார்க்கும்போது, அவன் உடனே அதனை
எடுத்துச் சாப்பிட்டு விடுகிறான்.

5அந்தக் காலத்திலே, சர்வ வல்லமையுள்ள
கர்த்தர், “அழகான மகுடமாக” ஆவார்.
அவர் “ஆச்சரியத்துக்குரிய பூக்களாலான
மகுடமாக” விடுபட்ட தன் ஜனங்களுக்கு
இருப்பார். 6பிறகு கர்த்தர் தமது ஜனங்களை
ஆளுகின்ற நீதிபதிகளுக்கு ஞானத்தைக்
கொடுப்பார். நகர வாசல்களில் நடைபெறும்
போர்களில் கர்த்தர் தம் ஜனங்களுக்குப்
பலத்தைக் கொடுப்பார். 7ஆனால் இப்போது,
அந்தத் தலைவர்கள் குடித்திருக்கிறார்கள்.
ஆசாரியர்களும், தீர்க்கதரிசிகளும் திராட்சை
ரசத்தையும் மதுவையும் குடித்திருக்கிறார்கள்.
அவர்கள் தடுமாறி கீழே விழுகிறார்கள்.
தீர்க்கதரிசிகள் தங்கள் கனவுகளைக் காணும்
போது குடித்திருக்கிறார்கள். நீதிபதிகள் தங்
கள் முடிவை எடுக்கும்போது குடித்திருக்
கிறார்கள். 8ஒவ்வொரு மேசையும் வாந்தி
யால் நிறைந்துள்ளது. சுத்தமான இடம்
எங்குமே இல்லை.

### தேவன் அவரது ஜனங்களுக்கு உதவ விரும்புகிறார்

9கர்த்தர் ஜனங்களுக்கு ஒரு பாடத்தைக்
கற்பிக்க விரும்புகிறார். கர்த்தருடைய போத
னைகளை ஜனங்கள் புரிந்துகொள்ள வேண்
டும். ஆனால், ஜனங்களோ சிறு குழந்தை
களைப் போன்று இருக்கின்றனர். அவர்கள்
கொஞ்ச காலத்துக்கு முன்னரே பால்குடிப்
பதை மறந்த குழந்தைகளைப் போன்று
இருக்கிறார்கள். 10எனவே, கர்த்தர் அவர்
களைக் குழந்தைகளாக எண்ணி:

சா லசவ் சா லசவ்
குவா லகுவா குவா லகுவா
சீர் ஷேம் சீர் ஷேம்*

11என்பதுபோன்ற விநோதமான மொழி
யில் பேசுவார். அவர் அந்த ஜனங்களோடு
வேறு மொழிகளையும் பயன்படுத்துவார்.

12கடந்த காலத்தில் தேவன் அந்த
ஜனங்களோடு பேசினார். அவர் “இங்கே
ஓய்விடம் உள்ளது. இது சமாதானமான
இடம். சோர்ந்துபோன ஜனங்கள் வந்து
ஓய்வு கொள்ளட்டும். இது சமாதானத்திற்
குரிய இடம்” என்றார்.
ஆனால், அந்த ஜனங்கள் தேவனைக்
கவனிக்க விரும்பவில்லை. 13எனவே, தேவ
னிடமிருந்து வந்த

---

**சா … ஷேம்** இது எபிரேய பாடல். குழந்தைகளுக்கு எப்படி எழுதுவது என்று கற்பிப்பது. குழந்தை அல்லது அந்நியர்கள் பேசுவது போன்றது, இதன் பொருள்: ஒரு ஆணை இங்கே ஒரு ஆணை அங்கே. ஒரு ஆட்சி இங்கே. ஒரு ஆட்சி அங் கே. ஒரு பாடம் இங்கே. ஒரு பாடம் அங்கே.

சா லசவ் சா லசவ்
குவா லகுவா குவா லகுவா
சீர் ஷேம் சீர் ஷேம்

என்பது போன்ற வார்த்தைகள் அவர்களுக்கு அந்நிய மொழியைப் போன்று இருந்தது.

ஜனங்கள் தங்கள் சொந்த வழிகளில் நடந்தார்கள். எனவே, ஜனங்கள் பின்னிட்டு விழுந்து தோற்கடிக்கப்பட்டார்கள். ஜனங்கள் வலையில் அகப்பட்டு கைப்பற்றப்பட்டனர்.

### தேவனுடைய நியாயத்தீர்ப்பிலிருந்து எவரும் தப்ப முடியாது

[14]கர்த்தருடைய செய்தியை எருசலேமி
லுள்ள தலைவர்களாகிய நீங்கள் கேட்க
வேண்டும். ஆனால் நீங்கள் அவர் சொல்
வதைக் கவனிக்க மறுக்கிறீர்கள். [15]நீங்கள்,
“நாங்கள் மரணத்தோடு ஒப்பந்தம் செய்தி
ருக்கிறோம். எங்களுக்கு மரணத்தின்
இடமாகிய பாதாளத்துடன் ஒப்பந்தம் உள்
ளது. எனவே நாங்கள் தண்டிக்கப்
படமாட்டோம். தண்டனை எங்களைக் கடந்
துபோகும். அது எங்களைப் பாதிக்காது.
நாங்கள் எங்களது தந்திரங்கள் மற்றும்
பொய்களுக்குப்பின் மறைந்துகொள்வோம்”
என்று சொல்கிறீர்கள்.
[16]ஆதலால், எனது கர்த்தராகிய ஆண்டவர்
கூறுகிறார், “நான்சீயோனில் அஸ்திபாரமாக
ஒரு கல்லை வைப்பேன். இது ஒரு விலை
உயர்ந்த கல்லாக இருக்கும். மிக முக்கியமான
கல்லின் மேலேயே எல்லாம் கட்டப்படும்.
அக்கல்லின்மேல் நம்பிக்கை வைக்கிற எவ
னும் ஏமாந்துபோகமாட்டான்.
[17]“சுவர் நேராக இருக்கிறது என்பதைக்
கண்டுகொள்ள ஒரு அளவுக் கருவியை
ஜனங்கள் பயன்படுத்துகின்றனர். அதே வழி
யில் நான் நீதியையும், நன்மையையும்
பயன்படுத்தி எது சரியென்று காட்டுகிறேன்.

“தீய ஜனங்களாகிய நீங்கள் உங்கள்
தந்திரங்கள் மற்றும் பொய்களுக்குப் பின்
னால் மறைகிறீர்கள். ஆனால் நீங்கள்
தண்டிக்கப்படுவீர்கள். ஒரு புயல் அல்லது
வெள்ளம் வருவதுபோன்று வந்து உங்கள்
மறைவிடங்களை அழிக்கும். [18]மரணத்தோடு
உங்களுக்குள்ள ஒப்பந்தம் நீக்கப்படும். பாதா
ளத்துடனுள்ள ஒப்பந்தம் உங்களுக்கு உத
வாது.

“எவனோ ஒருவன் வந்து உங்களைத்
தண்டிப்பான். அவன் உங்களைப் புழுதி
யாக்கி நடந்துபோவான். [19]அப்பகைவன்
இரவு பகலாகத் தன் சேனையுடன் உங்கள்
நாட்டின் மீது வருவான். இந்தச் செய்தியை
அறிபவர் யாராயினும் அச்சத்தால் நடுங்கு
வதைத் தவிர வேறொன்றும் செய்ய இய
லாது.
[20]“பிறகு, நீங்கள் இந்தக் கதையைப்
புரிந்துகொள்வீர்கள்: ஒருவன் அவனை
விடச் சிறிய ஒரு படுக்கையில் தூங்க
முயல்கிறான். அவனிடம் ஒரு போர்வை
உள்ளது. ஆனால் அது அவனை மூடப்
போதுமானதாக இல்லை. அந்தப் படுக்கை
யும் போர்வையும் பயனற்றவை. அவற்றைப்
போன்றே உங்கள் ஒப்பந்தங்களும் உள்ளன.”
[21]பெராத்சீம் மலையில் கர்த்தர் போர்
செய்ததுபோலவே செய்வார். கிபியோனின்
பள்ளத்தாக்கிலே இருந்ததுபோலவே, கர்த்தர்
கோபத்தோடு இருப்பார். பிறகு, தான்
செய்ய வேண்டியவற்றைக் கர்த்தர் செய்
வார். சில விநோதமானவற்றைக் கர்த்தர்
செய்வார். ஆனால் அவர் தன் வேலையை
முடிப்பார். அவரது வேலையும் விநோதமா
னதாகும். [22]இப்பொழுது, நீங்கள் அவற்றுக்கு
எதிராகப் போரிட வேண்டாம். நீங்கள்
செய்தால், உங்களைச் சுற்றியுள்ள கயிறுகள்
இறுக்கும்.

நான் கேட்ட வார்த்தைகள் மாறாது.
அந்த வார்த்தைகள் பூமியை ஆளுகின்ற
சர்வ வல்லமையுள்ள கர்த்தரிடமிருந்து
வந்தவை. இது நிகழ்ந்தே தீரும்.

### கர்த்தர் சரியாகத் தண்டிக்கிறார்

[23]நான் சொல்லிக் கொண்டிருக்கிற செய்
தியை நெருக்கமாகக் கவனியுங்கள். [24]எல்லா
நேரத்திலும் ஒரு விவசாயி உழுது கொண்
டிருப்பானா? இல்லை. [25]ஒரு விவசாயி
பூமியைத் தயார் செய்கிறான்; பிறகு அவன்
விதைகளை விதைக்கிறான். விவசாயி பல்
வேறு வழிகளில் பல்வேறு விதைகளைத்
தூவுகிறான். ஒரு விவசாயி உளுந்தைத்
தூவுகிறான், சீரகத்தைப் போடுகிறான். வரி
சைகளில் கோதுமையை விதைக்கிறான்;
வாற்கோதுமையை அதற்குரிய சிறப்பான
இடத்தில் தூவுகிறான்; கம்பை வயலின்
ஓரங்களில் விதைக்கிறான்.
[26]நமது தேவன் உங்களுக்கு ஒரு பாடத்
தைக் கற்பிக்க இதைப் பயன்படுத்திக்
கொண்டிருக்கிறார். தேவன் தன் ஜனங்
களைத் தண்டிக்கும்போது, அவர் நீதியாக
இருக்கிறார் என்பதை இந்த உதாரணம்
காட்டும். [27]ஒரு விவசாயி உளுந்து தாலத்
தாலே போரடிக்கச் செய்வானா? செய்ய
மாட்டான். ஒரு விவசாயி சீரகத்தின் மேல்
வண்டியின் உருளையைச் சுற்ற விடுவானா?
இல்லை. உளுந்தைக் கோலினாலும்
சீரகத்தை மிலாற்றினாலும் அடிப்பான்.
[28]ஒரு பெண் அப்பம் செய்யும் போது,
மாவைப் பிசைந்து கையால் அழுத்துவாள்.
ஆனால் அவள் இதனை எப்பொழுதும்
செய்யமாட்டாள். கர்த்தர் இதே வழியில்
தன் ஜனங்களைத் தண்டிக்கிறார். அவர்
வண்டிச் சக்கரத்தால் அவர்களைப் பயமுறுத்
துவார். ஆனால் அவர் முழுமையாக
நசுக்கிறதுமில்லை. அவர் பல குதிரைகள்
அவர்களை மிதிக்க விடுகிறதுமில்லை.
[29]இப்படி இந்த பாடம் சர்வ வல்லமையுள்ள

கர்த்தரிடமிருந்து வருகிறது. கர்த்தர் ஆச்சரி
யகரமான ஆலோசனைகளைத் தருகிறார்.
தேவன் உண்மையான ஞானம் உடையவர்.

### எருசலேம் மீது தேவனுடைய அன்பு

29 தேவன் கூறுகிறார், "அரியேலைப்
பாருங்கள்! தாவீது வாழ்ந்த நகரமே,
அரியேல். ஆண்டுதோறும் அவனது விடு
முறைகள் தொடர்ந்து வந்திருக்கின்றன.
2நான் அரியேலைத் தண்டித்திருக்கிறேன்.
அந்நகரம் துக்கத்தாலும் அழுகையாலும்
நிறைந்திருக்கிறது. ஆனால் அவள் எப்
பொழுதும் எனது அரியேலாகவே இருக்கி
றாள். 3"அரியேலே, நான் உன்னைச்சுற்றிப்
படைகளை வைத்துள்ளேன். நான் உனக்கு
எதிராகப் போர்க் கோபுரங்களை எழுப்பி
னேன். 4நீ தோற்கடிக்கப்பட்டுத் தரையில்
வீழ்த்தப்பட்டாய். இப்பொழுது ஒரு ஆவி
யின் சத்தத்தைப்போல உனது சத்தம் தரை
யிலிருந்து எழும்புவதை நான் கேட்கிறேன்."
5அங்கே பல அந்நியர்கள் புழுதியின்
சிறு துணுக்குகளைப்போல இருக்கிறார்கள்.
அங்கே சில கொடூரமான ஜனங்கள் காற்றில்
பறந்து வரும் பதர்களைப் போன்றுள்ளனர்.
6சர்வ வல்லமையுள்ள கர்த்தர் உன்னை நில
நடுக்கம், இடி, பலத்தகுரல், கூச்சல்
ஆகியவற்றால் தண்டிப்பார். அங்கே புயற்
காற்று, பெருங்காற்று, நெருப்பு ஆகியவை
தோன்றி அழிக்கவும் எரிக்கவும் செய்யும்.
7அரியேலுக்கு எதிராகப் பல நாடுகள்
போரிடும். இது இரவில் வருகிற பயங்கரக்
கனவு போன்றிருக்கும். படைகள் அரி
யேலை முற்றுகையிட்டு தண்டித்தன.
8ஆனால் அப்படைகளுக்கும் இது அத்தகைய
கனவாக இருக்கும். அவர்கள் தாம்
விரும்புகின்றவற்றைப் பெறுவதில்லை. இது,
பசியுள்ளவன் உணவைப்பற்றிக் கனவு
காண்பது போலிருக்கும். அவன் எழும்புகி
றபோதும் பசியாகவே இருப்பான். இது,
தாகமாயுள்ளவன் தண்ணீரைப்பற்றிக் கனவு
காண்பது போலிருக்கும். அவன் விழித்தெ
ழுகின்றபோதும் தாகமாகவே இருக்கும்.
சீயோனுக்கு எதிராகப் போரிடுகிற
அனைத்து நாடுகளும் இதுபோலவே இருக்
கும். அந்த நாடுகள் அவை விரும்புவதைப்
பெறுவதில்லை.
9ஆச்சரியப்படுங்கள்: பிரமிப்படையுங்கள்.
நீங்கள் நன்றாகக் குடித்திருப்பீர்கள், ஆனால்
மதுவினால் அல்ல. நீங்கள் தள்ளாடி
விழுவீர்கள், ஆனால் மதுவினால் அல்ல.
10கர்த்தர் உங்களைத் தூங்கச் செய்வார்.
கர்த்தர் உங்கள் கண்களை மூடச்செய்வார்.
(தீர்க்கதரிசிகள் உங்கள் கண்களாய் இருக்கி
றார்கள்.) கர்த்தர் உங்கள் தலைகளை
மூடுவார். (தீர்க்கதரிசிகள் உங்கள் தலை
களாய் இருக்கிறார்கள்.)
11இவை நிகழும் என்று நான்
உங்களுக்குக் கூறுகிறேன். ஆனால் நீங்கள்
என்னைப் புரிந்துகொள்ளவில்லை. என்னு
டைய வார்த்தைகள் மூடி முத்திரை
யிடப்பட்ட புத்தகத்தைப்போல உள்ளன.
12நீங்கள் அந்தப் புத்தகத்தை வாசிக்க முடிந்த
ஒருவனிடம் கொடுத்து வாசிக்கச் சொல்ல
லாம். ஆனால் அவன், "என்னால் இந்தப்
புத்தகத்தை வாசிக்க முடியாது. இது
மூடப்பட்டிருக்கிறது. என்னால் திறக்க
முடியாது" என்று சொல்வான். அல்லது
நீங்கள் அந்தப் புத்தகத்தை வாசிக்க முடியாத
ஒருவனிடம் கொடுத்து வாசிக்கச் சொல்ல
லாம். அதற்கு அவன், "நான் இந்தப் புத்த
கத்தை வாசிக்க முடியாது, ஏனென்றால்,
எப்படி வாசிக்க வேண்டும் என்று எனக்குத்
தெரியாது" என்பான்.
13எனது ஆண்டவர், "என்னை நேசிப்
பதாக இந்த ஜனங்கள் கூறுகிறார்கள்.
அவர்கள் தங்கள் வாயின் வார்த்தைகளால்
என்னைப் பெருமை படுத்துகிறார்கள்.
ஆனால் அவர்களது இருதயங்கள் என்னை
விட்டுத் தொலைவில் உள்ளன. அவர்கள்
எனக்குக் காட்டும் மரியாதையானது மனிதர்
கள் உண்டாக்கிய சட்டங்களைத் தாங்கள்
மனப்பாடம் செய்யும் அளவுக்கு மட்டுமே
இருந்தது. 14எனவே நான் அந்த ஜனங்களை
ஆச்சரியப்படுத்த சில வல்லமைமிக்க,
அதிசயப்படத்தக்கச் செயல்களைச் செய்
வேன். அவர்களது ஞானிகள் தங்கள்
ஞானத்தை இழப்பார்கள். அவர்களின் ஞானி
கள் புரிந்துகொள்ள முடியாமல் போவார்
கள்" என்று சொல்கிறார்.
15அந்த ஜனங்கள் சிலவற்றைக் கர்த்தரிடம்
மறைக்க முயல்கிறார்கள். கர்த்தர் இதனைப்
புரிந்துகொள்ளமாட்டார் என்று அவர்கள்
நினைக்கிறார்கள். அந்த ஜனங்கள் இருட்டில்
தங்கள் கெட்ட செயல்களைச் செய்கிறார்கள்.
அவர்கள் தமக்குள்: "எவரும் எங்களைப்
பார்க்க முடியாது. நாங்கள் யார் என்று
எவருக்கும் தெரியாது" எனக் கூறுகிறார்கள்.
16நீங்கள் குழம்பி இருக்கிறீர்கள். குயவனை
களிமண்ணுக்குச் சமமாக நீங்கள் நினைக்
கிறீர்கள். ஒருவனால் செய்யப்பட்ட பொருள்
அவனைப் பார்த்து 'நீ என்னை உன்டாக்க
வில்லை' என்று சொல்ல முடியும் என்று
நீங்கள் நினைக்கிறீர்கள். இது, ஒரு பானை
தன்னை உருவாக்கியவனிடம் 'நீ புரிந்து
கொள்கிறதில்லை' என்று சொல்வது
போன்றதாகும்.

### நல்ல நேரம் வந்துகொண்டிருக்கிறது

17இதுதான் உண்மை: கொஞ்ச நேரத்
திற்குப் பிறகு, கர்மேல் மலையைப் போன்று
லீபனோன் வளமான மண்ணைக் கொண்
டது. கார்மேல் மலை ஒரு அடர்த்தியான
காட்டைப் போன்றதாகும். 18புத்தகத்தில்
உள்ள வார்த்தைகளை ஒரு செவிடன்
கேட்க முடியும். குருடன் இருளுக்கும் அந்த
காரத்திற்கும் ஊடே பார்க்க முடியும்.

[19]கர்த்தர் ஏழைகளை மகிழ்ச்சியாக்குவார்.
இஸ்ரவேலின் பரிசுத்தரில் ஏழையான
ஜனங்கள் களிப்படைவார்கள்.
[20]அற்பர்களும் கொடியவர்களும் அழிந்த
பிறகு இது நிகழும். கெட்ட செயலில்
மகிழ்ச்சி அடைகிற ஜனங்கள் போனபிறகு
இது நிகழும். [21](அந்த ஜனங்கள் நல்ல
வர்களைப் பற்றிப் பொய் சொல்கிறார்கள்.
அவர்கள் நீதிமன்றத்தில் வலைக்குட்படுத்த
முயல்கிறார்கள். அவர்கள் அப்பாவி
ஜனங்களை அழித்துவிட முயல்கிறார்கள்.)
[22]எனவே, கர்த்தர் யாக்கோபின் குடும்
பத்தோடு பேசுகிறார். (இந்தக் கர்த்தர்தான்
ஆபிரகாமை விடுதலை செய்தவர்.) கர்த்தர்
கூறுகிறார், “இப்போது, யாக்கோபு (இஸ்ர
வேல் ஜனங்கள்) நாணமடைந்து வெட்கப்
பட்டுப் போவதில்லை. [23]அவன் அவரது
பிள்ளைகள் எல்லோரையும் பார்ப்பான்.
எனது பெயர் பரிசுத்தமானது என்று
அவன் கூறுவான். இந்தப் பிள்ளைகளை
நான் என் கைகளால் செய்தேன். யாக்கோ
பின் பரிசுத்தமானவர் (தேவன்) மிகவும்
சிறப்புடையவர் என்று இந்தப் பிள்ளைகள்
கூறுவார்கள். இஸ்ரவேலின் தேவனை இந்தப்
பிள்ளைகள் மதிப்பார்கள். [24]இந்த ஜனங்களில்
பலர் புரிந்துகொள்ளமாட்டார்கள். எனவே,
அவர்கள் தவறுகளைச் செய்வார்கள். இந்த
ஜனங்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள்.
ஆனால் அவர்கள் தமது பாடத்தைக் கற்றுக்
கொள்வார்கள்” என்கிறார்.

### இஸ்ரவேல் எகிப்தையல்ல, தேவனை நம்பவேண்டும்

30 கர்த்தர், “இந்தப் பிள்ளைகளைப்
பாருங்கள். அவர்கள் எனக்குக் கீழ்ப்
படிவதில்லை. அவர்கள் திட்டங்களைப்
போடுவார்கள். ஆனால், என்னிடம் உதவி
யைக் கேட்கமாட்டார்கள். அவர்கள் மற்ற
நாடுகளோடு ஒப்பந்தம் செய்கிறார்கள்.
ஆனால், எனது ஆவி அந்த ஒப்பந்தங்களை
விரும்புவதில்லை. இந்த ஜனங்கள் தங்
களுக்குள் மேலும் மேலும் பாவங்களைச்
சேர்த்துக்கொண்டே போகிறார்கள். [2]இந்தக்
குழந்தைகள் உதவிக்காக எகிப்துக்குப்
போய்க்கொண்டிருக்கிறார்கள். ஆனால், தாங்
கள் செய்வது சரிதானா என்பதை
என்னிடம் கேட்கவில்லை. அவர்கள் பார்
வோனால் காப்பாற்றப்படுவதாக நம்பி
னார்கள். எகிப்து அவர்களைக் காப்பாற்றும்
என்று நினைக்கிறார்கள்.
[3]ஆனால், எகிப்தில் ஒளிந்துக்கொள்வது
உங்களுக்கு உதவாது என்று நான் உங்க
ளுக்குக் கூறுகிறேன். எகிப்தால் உங்களைக்
காப்பாற்ற இயலாது. [4]உங்கள் தலைவர்கள்
சோவானுக்குப் போயிருக்கிறார்கள்; உங்கள்
வெளியுறவு அதிகாரிகள் ஆனேஸ் நாட்டுக்
குப் போயிருக்கிறார்கள். [5]ஆனால் அவர்கள்,
ஏமாற்றம் அடைவார்கள். அவர்களுக்கு
உதவிசெய்ய முடியாத ஜனத்தை அவர்கள்
சார்ந்துள்ளனர். எகிப்து பயனற்றது. அதி
னால் உதவிசெய்ய முடியாது. வெட்கத்
திற்கும் துக்கத்திற்குமே எகிப்து காரண மாக
அமையும்” என்றார்.

### யூதாவிற்கு தேவனுடைய செய்தி

[6]வனாந்திரத்தில் உள்ள மிருகங்களைப்
பற்றிய துக்க செய்தி:
வனாந்திரம் ஒரு ஆபத்தான இடம்.
இப்பூமியில் சிங்கங்களும் விஷப் பாம்புகளும்
வேகமாகச் செல்லும் பாம்புகளும் நிறைந்
துள்ளன. ஆனால் சில ஜனங்கள் எகிப்
துக்குப் போகிறவர்கள் இதின் வழியாகப்
பயணம் செய்வார்கள். அவர்கள் தங்கள்
செல்வங்களைக் கழுதையின் முதுகில்
ஏற்றிக்கொண்டு செல்வார்கள். ஒட்டகங்க
ளின் முதுகில் தங்கள் பொக்கிஷங்களை
வைத்திருப்பார்கள். இதற்குப் பொருள்,
ஜனங்கள் தமக்கு உதவ முடியாத ஜனத்
தையே சார்ந்து கொண்டிருக்கிறார்கள்.
[7]அந்தப் பயனற்ற நாடுதான் எகிப்து. எகிப
தின் உதவி எதற்கும் பயனற்றது. எனவே,
நான் எகிப்தை ‘எதுவும் செய்யாத அரக்
கன்’ என்று அழைப்பேன்.”
[8]இப்பொழுது, இதை அடையாளத்தின்
மேல் எழுது. எல்லா ஜனங்களும் இதனைப்
பார்க்க முடியும். இதனை ஒரு புத்தகத்தில்
எழுது. இறுதி நாட்களுக்காக இவற்றை
எழுது. இது நீண்டகாலத்துக்குப்பின் எதிர்
காலத்தில் இருக்கும்.

[9]இந்த ஜனங்கள் தம் பெற்றோருக்கு
அடிபணிய மறுக்கும் பிள்ளைகளைப்
போன்றுள்ளனர். கர்த்தருடைய போத
னைகளைக் கேட்க அவர்கள் மறுத்துப்
பொய் சொல்கிறார்கள். [10]“நாம் செய்ய
வேண்டிய காரியங்களைப்பற்றி கனவு
களைக் காணாதீர்கள். எங்களிடம்
உண்மைகளைச் சொல்லாதீர்கள். எங்க
ளுக்கு நலமானவற்றை மட்டும் சொல்
லுங்கள். எங்களுக்கு நல்லுணர்வை
உண்டாக்குங்கள். எங்களுக்காக நல்ல
வற்றை மட்டும் பாருங்கள். [11]உண்மை
யில் நிகழப்போவதைக் காணுவதை
நிறுத்துங்கள். எங்கள் வழியில் இருந்து
வெளியேறுங்கள். இஸ்ரவேலின் பரிசுத்
தரைப் பற்றி எங்களுக்குக் கூறுவதை
நிறுத்துங்கள்” என்று அவர்கள் தீர்க்க
தரிசிகளிடம் கூறுகிறார்கள்.

### தேவனிடமிருந்து மட்டுமே யூதாவிற்கு உதவி வருகிறது

[12]இஸ்ரவேலின் பரிசுத்தர் கூறுகிறார்,
“கர்த்தரிடமிருந்து வந்த செய்தியை ஏற்றுக்
கொள்ள நீங்கள் மறுக்கிறீர்கள். சண்டையும்,
பொய்யும் உங்களுக்கு உதவும் என்று
அதனைச் சார்ந்து இருக்க நீங்கள் விரும்

புகிறீர்கள். 13நீங்கள் இவற்றைப்பற்றிய குற்றம்
உள்ளவர்களாக இருக்கிறீர்கள். எனவே,
நீங்கள் விரிசல்களையுடைய உயரமான
சுவர்களைப்போல இருக்கிறீர்கள். அந்தச்
சுவர் விழுந்து சிறு துண்டுகளாக உடையும்.
14நீங்கள் பெரிய களிமண் ஜாடி உடைந்து
பற்பல சிறு துண்டுகளாக உடைந்ததைப்
பேல இருக்கிறீர்கள். அந்தத் துண்டுகள்
பயனற்றவை. நீங்கள் அதைக்கொண்டு
நெருப்பிலிருந்து எரியும் கரித்துண்டை
வெளியே எடுக்கவோ, குளத்திலே தண்ணீர்
எடுக்கவோ முடியாது.”

15இஸ்ரவேலில் பரிசுத்தராயிருக்கிற, கர்த்த
ராகிய எனது ஆண்டவர் சொல்கிறார்,
“என்னிடம் நீங்கள் திரும்பி வந்தால்
பாதுகாக்கப்படுவீர்கள். என்னை நம்பினால்
அது உங்களுக்கு வரப்போகிற உதவியாக
இருக்கும். ஆனால் நீங்கள் அமைதியாக
இருக்கவேண்டும்” என்கிறார்.

ஆனால் நீங்கள் அவற்றைச் செய்ய
விரும்பவில்லை! 16“இல்லை எங்களுக்கு
ஓடிப்போகக் குதிரைகள் வேண்டும்!” என்று
நீங்கள் கூறுகிறீர்கள். அது உண்மை. நீங்கள்
குதிரைகள் மேலேறி ஓடுவீர்கள். ஆனால்
பகைவர்கள் உங்களைத் துரத்துவார்கள்.
அவர்கள் உங்கள் குதிரைகளைவிட வேக
மாக இருப்பார்கள். 17ஒரு பகைவன் பயங்
காட்டுவான். உங்களில் ஆயிரக்கணக்கா
னவர்கள் அஞ்சி ஓடுவார்கள். ஐந்து பகைவர்
கள் பயங்காட்டுவார்கள். நீங்கள் அனை
வரும் அவர்களை விட்டு ஓடிவிடுவீர்கள்.
மலையின்மேல் உள்ள கொடிக் கம்பம்
மட்டுமே உங்கள் சேனையில் விடப்பட்டி
ருக்கும்.

18கர்த்தர் அவரது இரக்கத்தை உங்கள்மீது
காட்ட விரும்புகிறார். கர்த்தர் காத்துக்
கொண்டிருக்கிறார். கர்த்தர் எழுந்து உங்க
ளுக்கு ஆறுதல்செய்ய விரும்புகிறார். தேவ
னாகிய கர்த்தர் நீதி செய்கிறார். கர்த்த
ருடைய உதவிக்காகக் காத்திருக்கிற ஒவ்
வொருவரும் ஆசீர்வதிக்கப்படுவார்கள்.

19சீயோன் மலையின் மேலுள்ள எருச
லேமில் கர்த்தருடைய ஜனங்கள் வாழு
வார்கள். நீங்கள் தொடர்ந்து அழுது
கொண்டிருக்கமாட்டீர்கள். கர்த்தர் உங்க
ளுடைய அழுகையைக் கேட்டு ஆறுதல்
செய்வார். கர்த்தர் உங்களுக்குச் செவி
கொடுப்பார். அவர் உங்களுக்கு உதவுவார்.

## தேவன் அவரது ஜனங்களுக்கு உதவுவார்

20கடந்த காலத்தில், எனது ஆண்டவர்
(தேவன்) உங்களுக்குத் துன்பமும், தொல்லை
களும் கொடுத்தார். அது உங்களுக்கு தினமும்
உண்ணும் அப்பம் போன்றும் தண்ணீர்
போன்றும் இருந்தது. ஆனால் தேவன்
உங்கள் ஆசிரியர். அவர் உன்னிடமிருந்து
இனி தொடர்ந்து ஒளிந்துகொள்ளமாட்டார்.
நீ உனது ஆசிரியரை உனது சொந்தக்
கண்ணால் பார்க்கலாம். 21பிறகு, நீ தவறு
செய்தால், தவறான வழியில் போனால்
(வாழ்ந்தால்), (இடது பக்கமாகவோ வலது
பக்கமாகவோ) நீ உனக்கு பின்னால், “இது
தான் சரியான வழி. இந்த வழியில் நீ
போக வேண்டும்” என்ற ஒரு ஓசையைக்
கேட்பாய்.

22உங்களிடம் பொன்னாலும், வெள்ளி
யாலும் மூடப்பட்ட சிலைகள் உள்ளன.
அந்த பொய்த் தெய்வங்கள் உங்களை
கறைப்படுத்தியுள்ளது. ஆனால் அந்தப்
பொய்த் தெய்வங்களுக்குச் சேவை செய்
வதை நிறுத்துவீர்கள். நீ அந்த தெய்வங்
களைத் தீட்டுப்பட்ட ஆடைபோல தூர
எறிவாய்.

23அந்தக் காலத்தில், உனக்காகக் கர்த்தர்
மழையை அனுப்புவார். பூமியில் நீ விதை
களை விதைக்கலாம். பூமி உனக்காக உண
வை விளைய வைக்கும். நீ ஒரு பெரிய
அறுவடையைச் செய்வாய். உங்கள் மிருகங்
களுக்கு வயலில் ஏராளமான உணவு
இருக்கும். உன் ஆடுகளுக்கு அகலமான
மேய்ச்சல் இடம் இருக்கும். 24உனது
எருதுகளுக்கும் கழுதைகளுக்கும் தேவை
யான உணவு கிடைக்கும். அங்கு
ஏராளமான உணவு இருக்கும். உன் மிருகங்
கள் உண்பதற்கு முறத்தாலும், தூற்றுக்
கூடையாலும் தூற்றப்பட்ட கப்பிகள் உன்
னிடம் இருக்கும். 25ஒவ்வொரு மலையிலும்
மேடுகளிலும் தண்ணீர் நிறைந்த ஓடைகள்
இருக்கும். இவை ஏராளமான ஜனங்கள்
கொல்லப்பட்ட பிறகு, கோபுரங்கள் தரை
யிலே விழுந்தபிறகு நிகழும்.

26அந்தக் காலத்திலே, சந்திரனிலிருந்து
வருகிற ஒளியானது சூரியனின் ஒளிபோல
இருக்கும். சூரியனின் ஒளியானது இப்பொ
ழுது இருப்பதைவிட ஏழு மடங்கு மிகுதி
யாக இருக்கும். சூரியனிலுள்ள ஒரு நாள்
வெளிச்சம் ஒரு வாரம் (ஏழு நாள்)
வெளிச்சம்போல் இருக்கும். இவை கர்த்தர்
தமது உடைந்துபோன ஜனங்களின் அடிகளி
னிமித்தம் கட்டுகள் கட்டி அவற்றின் அடிக்
காயத்தைக் குணமாக்கும்போது நிகழும்.

27பார்! தொலைவிலிருந்து கர்த்தருடைய
நாமம் வந்துகொண்டிருக்கிறது. அவரது
கோபம் அடர்ந்த மேகப் புகையோடு
நெருப்பு போன்றுள்ளது. கர்த்தருடைய
வாய் கோபத்தால் நிறைந்துள்ளது. அவரது
நாக்கானது எரிகின்ற நெருப்புபோல் உள்
ளது. 28கர்த்தருடைய சுவாசமானது (ஆவி)
கழுத்து மட்டும் எட்டுகிற ஆற்று வெள்
ளத்தைப் போன்றுள்ளது. தேசங்களைக்
கர்த்தர் நியாயந்தீர்ப்பார். இது ‘நாசம் என்
னும் சல்லடையில்’ தேசங்களை அசைப்பது
போல இருக்கும். கர்த்தர் அவர்களைக்
கட்டுப்படுத்துவார். அது ஜனங்களின் வாயி

*லே போட்டு கட்டுப்படுத்துகிற கடி*
*வாளத்தைப் போன்றிருக்கும்.*
*29அந்தக் காலத்தில், நீங்கள் மகிழ்ச்சி*
*கரமான பாடல்களைப் பாடுவீர்கள். அந்த*
*நேரமானது, ஓய்வுநாளைத் தொடங்கும் இரவு*
*களைப் போன்றிருக்கும். கர்த்தருடைய*
*மலைக்கு நடந்துபோகையில், நீங்கள் மிக*
*மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். வழியில் புல்*
*லாங்குழலைக் கவனித்தவண்ணம் இஸ்ர*
*வேலின் கன்மலை அருகில் தொழுது*
*கொள்ளப் போகும்போது மகிழ்ச்சியாக*
*இருக்கிறீர்கள்.*
*30கர்த்தர் அவரது சிறந்த குரலை*
*ஜனங்கள் அனைவரும் கேட்குமாறு செய்*
*வார். கர்த்தர், தம் கரத்தின் வல்லமையை*
*ஜனங்கள் அனைவரும் காணும்படி கோபத்*
*துடன் இறங்கி வருவார். அந்தக் கையானது*
*பெரும் நெருப்பைபோல எல்லாவற்றையும்*
*எரிக்கத்தக்கதாக இருக்கும். கர்த்தருடைய*
*வல்லமையானது மழையோடும், கல்மழை*
*யோடும் வருகிற புயல்போல இருக்கும்.*
*31கர்த்தருடைய குரலைக் கேட்டதும் அசீ*
*ரியா அஞ்சும். கர்த்தர் அசீரியாவைக்*
*கோலால் அடிப்பார். 32கர்த்தர் அசீரியாவை*
*அடிப்பார். அது முரசின்மீது தாளம் போடு*
*வதுபோலவும், வீணைகளை மீட்டுவது*
*போலவும் இருக்கும். கர்த்தர் தமது சிறந்த*
*கையால் (வல்லமை) அசீரியாவைத் தாக்கு*
*வார்.*
*33தோப்பேத்* ஏற்கனவே நீண்ட காலத்*
*திற்கு முன்பே தயாராக வைக்கப்பட்டி*
*ருக்கிறது. இது அரசனுக்குத் தயாராக*
*உள்ளது. இது மிக ஆழமாகவும் அகல*
*மாகவும் அமைக்கப்பட்டது. அங்கே பெரிய*
*விறகுக் கட்டும், நெருப்பும் உள்ளது. கர்த்த*
*ருடைய ஆவியானவர் எரியும் கந்தக*
*ஓடைபோல வந்து அதனை எரிப்பார்.*

### தேவனுடைய வல்லமையைச் சார்ந்தே இஸ்ரவேல் இருக்க வேண்டும்

31 *எகிப்துக்கு ஜனங்கள் உதவி கேட்டுப்*
*போவதைப் பார். ஜனங்கள் குதி*
*ரைகளைக் கேட்கிறார்கள். குதிரைகள் தங்க*
*ளைக் காக்கும் என்று அவர்கள் நினைக்*
*கிறார்கள். எகிப்திலிருந்து வரும் பல*
*இரதங்களும், குதிரைவீரர்களும் அவர்களைக்*
*காப்பாற்றும் என்று நம்புகிறார்கள். படை*
*மிகப்பெரிதாய் இருப்பதால் தாங்கள் பாது*
*காப்புடன் இருப்பதாக ஜனங்கள் நினைக்*
*கின்றனர். இஸ்ரவேலின் பரிசுத்தமானவரை*
*(தேவனை) ஜனங்கள் நம்பவில்லை.*
*ஜனங்கள் கர்த்தரிடம் உதவி கேட்பதில்லை.*
*2ஆனால், கர்த்தர் ஞானமுள்ளவராய் இருக்*
*கிறார். அவர்களுக்கு எதிராகக் கர்த்தர்*
*தீங்கு வரப்பண்ணுகிறார். கர்த்தருடைய*
*கட்டளையை ஜனங்களால் மாற்ற முடியாது.*
*கர்த்தர் எழும்பி, தீய ஜனங்களுக்கு (யூதா)*
*எதிராகப் போரிடுவார். அவர்களுக்கு*
*உதவ முயல்கிற ஜனங்களுக்கு (எகிப்து)*
*எதிராகவும் கர்த்தர் போரிடுவார்.*
*3எகிப்து ஜனங்கள் தேவன் அல்ல*
*மனிதர்கள் மட்டுமே. எகிப்திலுள்ள குதிரை*
*கள் ஆவி அல்ல, மிருகங்கள் மட்டுமே.*
*கர்த்தர் தமது கரத்தை நீட்டுவார். உதவுப*
*வர்கள் (எகிப்து) தோற்கடிக்கப்படுவார்கள்.*
*உதவியை விரும்புகிற ஜனங்களும் (யூதா)*
*விழுவார்கள். எல்லா ஜனங்களும் சேர்ந்து*
*அழிவார்கள்.*
*4கர்த்தர் என்னிடம், “ஒரு சிங்கமோ*
*சிங்கக்குட்டியோ உண்பதற்காக ஒரு மிருகத்*
*தைப் பிடிக்கும்போது, அது மரித்த*
*மிருகத்தின் அருகில் நின்று கர்ச்சிக்கும்.*
*அப்போது அந்தச் சிறந்த சிங்கத்தை எதுவும்*
*பயமுறுத்தாது. மனிதர்கள் வந்து சிங்கத்தின்*
*அருகில் சத்தமிட்டால், அது அஞ்சாது.*
*மனிதர்கள் அதிகமாக ஓசை எழுப்பலாம்.*
*ஆனால் சிங்கம் வெளியே ஓடாது” என்று*
*கூறினார்.*
*அதுபோலவே, சர்வ வல்லமையுள்ள*
*கர்த்தரும் சீயோன் மலைக்கு வருவார்.*
*அம்மலையில் அவர் போரிடுவார். 5சர்வ*
*வல்லமையுள்ள கர்த்தர் எருசலேமை பற*
*வைகள் கூட்டுக்குமேல் பறப்பதைப் போன்று*
*காப்பாற்றுவார். அவளைக் கர்த்தர்*
*காப்பாற்றுவார். கர்த்தர் “கடந்து வந்து”*
*எருசலேமைக் காப்பாற்றுவார்.*

*6இஸ்ரவேலின் பிள்ளைகளாகிய நீங்கள்*
*தேவனுக்கு எதிராகத் திரும்பினீர்கள். நீங்கள்*
*தேவனிடம் திரும்பிவர வேண்டும். 7பிறகு,*
*நீங்கள் செய்த பொன்னாலும், வெள்ளி*
*யாலுமான விக்கிரகங்களைத் தொழுது*
*கொள்வதை ஜனங்கள் நிறுத்துவார்கள்.*
*நீங்கள் அந்த விக்கிரகங்களைச் செய்யும்*
*போது, உண்மையில் பாவம் செய்தீர்கள்.*
*8அசீரியா வாளால் தோற்கடிக்கப்படும்.*
*ஆனால், அந்த வாள் ஒரு மனிதனின்*
*வாளல்ல. அசீரியா அழிக்கப்படும். ஆனால்,*
*அந்த அழிவானது மனிதனின் வாளிலிருந்து*
*வராது. அசீரியா தேவனுடைய வாளிலி*
*ருந்து தப்பி ஓடுவான். ஆனால், இளைஞர்கள்*
*கைப்பற்றப்பட்டு அடிமைகளாக்கப்படு*
*வார்கள். 9அவர்களது பாதுகாப்புக்குரிய*
*இடம் அழிக்கப்படும். அவர்களின் தலை*
*வர்கள் தோற்கடிக்கப்பட்டு அவர்களின்*
*கொடியை விடுவார்கள்.*
*கர்த்தர் இவற்றைக் கூறினார். கர்த்த*
*ருடைய பலிபீடம் சீயோனில் இருக்கிறது.*
*கர்த்தருடைய அடுப்பு (பலிபீடம்) எருச*
*லேமில் இருக்கிறது.*

---

**தோப்பேத்** *கெகன்னா, இன்னோம் பள்ளத்தாக்கு. இதில் ஜனங்கள் தம் பிள்ளைகளைக் கொன்று பொய்த் தெய்வங்களைப் பெருமைப்படுத்துவார்கள்.*

### தலைவர்கள் நல்லவர்களாகவும் நேர்மை யானவர்களாகவும் இருக்கவேண்டும்

32 நான் சொல்லுகிறவற்றைக் கேளுங்கள்! ஒரு அரசன் நன்மையைத்தரும் ஆட்சி செய்ய வேண்டும். தலைவர்கள் ஜனங்களை வழிநடத்திச் செல்லும்போது நீதியான முடிவுகளை எடுக்க வேண்டும்.
[2]இது நிகழ்ந்தால், அரசன் காற்றுக்கும் மழைக்கும் மறைந்துகொள்வதற்கு ஏற்ற இடமாக இருப்பான். வறண்ட பூமிக்கு நீரோடை வந்ததுபோல இருக்கும். இது வெப்பமான பூமியில் பெருங்கன்மலையில் குளிர்ந்த நிழல்போல் இருக்கும்.
[3]ஜனங்கள் உதவிக்காக அரசனிடம் திரும்புவார்கள். ஜனங்கள் உண்மையில் அவர் சொல்லுவதைக் கவனிப்பார்கள்.
[4]குழம்பிப்போன ஜனங்கள் இப்பொழுது புரிந்துகொள்வார்கள். தெளிவாகப் பேசமுடியாத ஜனங்கள் இப்பொழுது தெளிவாகவும் பேசுவார்கள்.
[5]நாத்திகர்கள் உயர்ந்த மனிதர்கள் என்று அழைக்கப்படமாட்டார்கள். மோசடிக்காரர்கள் மதிப்பிற்குரியவர்கள் என்றழைக்கப் படமாட்டார்கள்.

[6]ஒரு நாத்திகன் தீயவற்றைப் பேசுகிறான். அவனது மனதில் தீயவற்றைச் செய்வதற்கே திட்டங்கள் இருக்கும். ஒரு துன்மார்க்கன் தவறானவற்றைச் செய்வதற்கே விரும்புகிறான். ஒரு துன்மார்க்கன் கர்த்தரைப்பற்றி கெட்டவற்றையே பேசுகிறான். ஒரு துன்மார்க்கன் பசித்த ஜனங்களைச் சாப்பிட அனுமதிக்கமாட்டான். ஒரு துன்மார்க்கன் தாகமாயிருக்கும் ஜனங்களைத் தண்ணீர் குடிக்க விடமாட்டான்.
[7]அந்த நாத்திகன் கெட்டவற்றைக் கருவியாகப் பயன்படுத்துவான். ஏழை ஜனங்களிடமிருந்து எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளும் வழிகளை அவன் திட்டமிடுவான். அந்த துன்மார்க்கன் ஏழை ஜனங்களைப்பற்றிப் பொய் சொல்லுகிறான். அவனது பொய்கள் ஏழை ஜனங்களை நேர்மையான தீர்ப்பு றுெவதிலிருந்து விலக்குகிறது.

[8]ஆனால் நல்ல தலைவன் நல்லவற்றைச் செய்யத் திட்டமிடுகிறான். அந்த நல்லவை அவனை நல்ல தலைவனாகச் செய்கிறது.

### கடினமான நேரங்கள் வந்து கொண்டிருக்கின்றன

[9]உங்களில் சில பெண்கள் இப்போது மிக அமைதியாக இருக்கிறீர்கள். நீங்கள் பாதுகாப்பை உணருகிறீர்கள். ஆனால், நான் சொல்லுகிற வார்த்தைகளை நீங்கள் நின்று கவனிக்க வேண்டும்.
[10]பெண்களாகிய நீங்கள் இப்போது அமைதியை உணருகிறீர்கள். ஆனால், ஒரு ஆண்டுக்குப் பிறகு தொல்லைக்குள்ளாவீர்கள். ஏனென்றால், அடுத்த ஆண்டு திராட்சைகளை நீங்கள் பறிக்க மாட்டீர்கள். ஏனென்றால், பறிப்பதற்குத் திராட்சைகள் இருக்காது.

[11]பெண்களே! இப்பொழுது நீங்கள் அமைதியாய் இருக்கிறீர்கள். ஆனால், நீங்கள் அச்சுறுத்தப்பட வேண்டும். பெண்களே! இப்போது நீங்கள் அமைதியை உணருகிறீர்கள். ஆனால் நீங்கள் கவலைக்குட்பட வேண்டும். உங்களது மென்மையான ஆடைகளை எடுத்துவிடுங்கள். துக்கத்திற்குரிய ஆடைகளை அணிந்துகொள்ளுங்கள். அந்த ஆடைகளை உங்கள் இடுப்பில் கட்டிக் கொள்ளுங்ள்.
[12]துக்கத்துக்குரிய ஆடைகளை துன்பம் நிறைந்த உங்கள் மார்புக்குமேல் போட்டுக்கொள்ளுங்கள்.

உங்கள் வயல்கள் காலியானதால் அலறுங்கள். உங்கள் திராட்சைத் தோட்டங்கள் ஒரு காலத்தில் திராட்சைப் பழங்களைத் தந்தன. ஆனால் இப்போது அவை காலியாக உள்ளன.
[13]எனது ஜனங்களின் பூமிக்காக அலறுங்கள். ஏனென்றால், இப்பொழுது முட்களும் நெருஞ்சியும் மட்டுமே வளரும். நகரத்திற்காக அலறுங்கள். ஒரு காலத்தில் மகிழ்ச்சியால் நிறைந்திருந்த வீடுகளுக்காக அலறுங்கள்.

[14]ஜனங்கள் தலைநகரத்தைவிட்டு வெளியேறுவார்கள். அரண்மனையும் கோபுரங்களும் காலியாகும். ஜனங்கள் வீடுகளில் வாழமாட்டார்கள். அவர்கள் குகைகளில் வாழுவார்கள். காட்டுக் கழுதைகளும் ஆடுகளும் நகரத்தில் வாழும். மிருகங்கள் அங்கே புல்மேயப் போகும்.

[15-16]தேவன் மேலேயிருந்து அவரது ஆவியைக் கொடுக்கும்வரை இது தொடரும். இப்பொழுது பூமியில் நன்மை இல்லை. இது இப்போது வனாந்திரம்போல் உள்ளது. ஆனால் எதிர்காலத்தில், இந்த வனாந்திரம் கர்மேல் போலாகும். அங்கே நேர்மையான தீர்ப்புகள் இருக்கும். கர்மேல் பசுமைக் காடுகளைப்போன்று ஆகும். நன்மை அங்கே வாழும்.
[17]என்றென்றைக்கும் இந்த நன்மை சமாதானத்தையும் பாதுகாப்பையும் கொண்டுவரும்.
[18]எனது ஜனங்கள் சமாதானத்தின் அழகிய வயலில் வாழுவார்கள். எனது ஜனங்கள் பாதுகாப்பின் கூடாரங்களில் வாழுவார்கள். அவர்கள் அமைதியும் சமாதானமும் உள்ள இடங்களில் வாழுவார்கள்.

[19]ஆனால் இவை நிகழும்முன்பு, காடுகள் விழ வேண்டும். நகரம் தோற்கடிக்கப்பட வேண்டும்.
[20]நீங்கள் தண்ணீர் நிலையுள்ள இடங்களில் விதைக்கிறீர்கள். அங்கே உங்கள் கழுதைகளையும் மாடுகளையும் சுதந்திரமாகத் திரியவும் மேயவும் விடுகிறீர்கள். நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பீர்கள்.

### தீமை மேலும் அதிகத் தீமையையே உண்டுபண்ணும்

33 பாருங்கள், நீங்கள் போரை உருவாக்குகிறீர்கள். ஜனங்களிடமிருந்து பொருளைத் திருடிக் கொள்கிறீர்கள். அந்த ஜனங்கள் உங்களிடமிருந்து எதையும் திருட

மாட்டார்கள். நீங்கள் ஜனங்களுக்கு எதி
ராகத் திரும்புகிறீர்கள்; ஜனங்கள் உங்களுக்கு
எதிராகத் திரும்பமாட்டார்கள். எனவே,
நீங்கள் திருடுவதை நிறுத்தும்போது, மற்ற
ஜனங்கள் உங்களிடமிருந்து திருடத் தொடங்
குவார்கள். நீங்கள் ஜனங்களுக்கு எதிராகத்
திரும்புவதை நிறுத்தும்போது, மற்ற ஜனங்
கள் உங்களுக்கு எதிராகத் திரும்பத் தொடங்
குவார்கள்.
பிறகு நீங்கள், 2“கர்த்தாவே, எங்களிடம்
தயவாயிரும். நாங்கள் உமது உதவிக்காகக்
காத்திருக்கிறோம். கர்த்தாவே ஒவ்வொரு
காலையிலும் பெலத்தைக் கொடும். நாங்கள்
தொல்லைக்குட்படும்போது எங்களைக்
காப்பாற்றும்.
3உமது வல்லமையான குரல் ஜனங்களை
அச்சுறுத்தும், அவர்கள் உம்மிடமிருந்து
ஓடிப்போவார்கள். உமது மகத்துவம் நாடு
களை ஓடிப்போக வைக்கும்” என்பீர்கள்.
4நீங்கள் போரில் பொருட்களைத் திருடி
னீர்கள். அப்பொருட்கள் உம்மிடமிருந்து
எடுக்கப்படும். ஏராளமான ஜனங்கள் வந்து,
உங்கள் செல்வங்களை எடுப்பார்கள்.
வெட்டுக்கிளிகள் வந்து உங்கள் பயிர்களை
உண்ட காலத்தைப்போன்று இது இருக்கும்.
5கர்த்தர் மிகப் பெரியவர். அவர் மிக
உயரமான இடத்தில் வாழ்கிறார். கர்த்தர்
சீயோனை நேர்மையாலும் நன்மையாலும்
நிரப்புவார்.
6எருசலேமே நீ செழிப்பாயிருக்கிறாய்.
நீ ஞானம் மற்றும் அறிவில் செழிப்
புடையவள். நீ கர்த்தரை மதிக்கிறாய்.
அது உன்னைச் செல்வச் செழிப்புள்ள
வளாகச் செய்கிறது. எனவே, நீ தொடர்ந்து
இருப்பாய் என்பதை நீ அறிந்துகொள்ளலாம்.
7ஆனால் கவனி! தேவதூதர்கள் வெளியே
அழுதுகொண்டிருக்கிறார்கள்.
சமாதானத்தைக் கொண்டுவரும் தூதர்கள்
வெளியே மிகக் கடினமாக அழுகிறார்கள்.
8சாலைகள் அழிக்கப்பட்டிருக்கின்றன. எவ
ரும் தெருக்களில் நடந்துகொண்டிருக்க
வில்லை. ஜனங்கள் தாங்கள் செய்த உடன்
படிக்கையை உடைத்துள்ளனர். சாட்சிகளி
லிருந்து நிரூபிக்கப்படுவதை ஜனங்கள் நம்ப
மறுக்கின்றனர். எவரும் மற்ற ஜனங்களை
மதிக்கிறதில்லை. 9நிலமானது நோயுற்று
செத்துக்கொண்டிருக்கிறது. லீபனோன்
வெட்கி வாடுகிறது. சாரோன் பள்ளத்தாக்கு
வறண்டு காலியாக உள்ளது. பாசானும்
கர்மேலும் ஒரு காலத்தில் அழகான செடி
களை வளர்த்தன. ஆனால் இப்போது அந்
தச் செடிகள் வளருவதை நிறுத்தி
யிருக்கின்றன.
10கர்த்தர் கூறுகிறார், “இப்போது, நான்
நின்று எனது சிறப்பைக் காட்டுவேன். நான்
ஜனங்களுக்கு முக்கியமானவராக இருப்
பேன். 11நீங்கள் பயனற்ற செயல்களைச்
செய்திருக்கிறீர்கள். அவை பதரைப்போல
வும் வைக்கோலைப் போலவும் இருக்கும்.
அவை எதற்கும் பயனற்றவை. உங்கள்
சுவாசம் நெருப்பைப் போன்றது. அது
உங்களை எரிக்கும். 12ஜனங்கள் அவர்களது
எலும்புகள் சுண்ணாம்பைப் போன்று
ஆகும்வரை எரிக்கப்படுவார்கள். ஜனங்கள்
விரைவாக முட்கள் மற்றும் காய்ந்த
புதர்களைப் போன்று எரிக்கப்படுவார்கள்.
13“வெகு தொலைவான நாடுகளில் உள்ள
ஜனங்கள், நான் செய்திருக்கிறவற்றைப்
பற்றிக் கேள்விப்படுவார்கள். என் அருகிலே
இருக்கிற நீங்கள் எனது வல்லமையைப்
பற்றி அறிந்துகொள்வீர்கள்.”
14சீயோனில் உள்ள பாவிகள் பயந்துகொ
ண்டிருக்கிறார்கள். தீயச் செயல்களைச்
செய்துகொண்டிருக்கிற ஜனங்கள் அச்சத்
தால் நடுங்குகிறார்கள். அவர்கள், “எங்களில்
எவரும் அழிக்கும் இந்த நெருப்பினூடே
உயிர் வாழ முடியுமா? என்றென்றும் எரிந்து
கொண்டிருக்கிற இந்நெருப்பின் அருகில்
எவரால் வாழமுடியும்?
15நல்லதும் நேர்மையானதுமான ஜனங்கள்,
பணத்துக்காக மற்றவர்களைத் துன்புறுத்தாத
வர்கள் அந்த நெருப்பிலிருந்து தப்பமுடியும்.
அந்த ஜனங்கள் லஞ்சம் பெற மறுக்
கிறார்கள், மற்றவர்களைக் கொலை
செய்வதற்குரிய திட்டங்களைக் கவனிக்க
மறுக்கிறார்கள்; தீயவற்றைச் செய்யத் திட்
டம் போடுவதைப் பார்க்க அவர்கள் மறுக்கி
றார்கள். 16உயரமான இடங்களில் அந்த
ஜனங்கள் பாதுகாப்பாக வாழுவார்கள்.
அவர்கள் உயரமான கல்கோட்டைக்குள்
பாதுகாப்பாக இருப்பார்கள். அந்த ஜனங்கள்
எப்பொழுதும், உணவும் தண்ணீரும் பெற்றி
ருப்பார்கள்.
17உங்கள் கண்கள் அரசரின் (தேவன்)
அழகைப் பார்க்கும். நீங்கள் பெரிய தேசத்
தைப் பார்ப்பீர்கள். 18-19கடந்த காலத்தில்
நீங்கள் பெற்றிருந்த தொல்லைகளை நீங்கள்
நினைத்துப் பார்ப்பீர்கள். “வேறு நாடுகளி
லிருந்து வந்த அந்த ஜனங்கள் எங்கே?
நாம் புரிந்துகொள்ள முடியாத ஒரு
மொழியுடைய அந்த அதிகாரிகளும் வரி
வசூலிப்பவர்களும் எங்கே? நமது பாது
காப்புக் கோபுரங்களை எண்ணிய ஒற்றர்கள்
எங்கே? அவர்கள் அனைவரும் போய்
விட்டார்கள்.”

### எருசலேமைத் தேவன் காப்பாற்றுவார்

20நமது மதப்பண்டிகையின் விடுமுறை
களைக் கொண்டாடும் நகரமாகிய சீயோ
னைப் பாருங்கள். ஓய்வெடுப்பதற்குரிய
அழகான இடமான எருசலேமைப் பாருங்
கள். எருசலேம் என்றும் நகர்த்தப்படாத
கூடாரம்போல் உள்ளது. இனி அதன்
முளைகள் என்றைக்கும் பிடுங்கப்படுவ
தில்லை. அதன் கயிறுகளில் ஒன்றும்
அறுந்து போவதில்லை. 21-23ஏனென்றால்

அங்கே வல்லமையுள்ள கர்த்தர் இருக்கிறார். அந்த நாடானது ஓடைகளும் அகன்ற ஆறுகளும் உள்ள இடமாக இருக்கிறது. ஆனால் அந்த ஆறுகளில் பகைவர்களின் படகுகளோ அல்லது சக்திவாய்ந்த கப்பல்களோ இருப்பதில்லை. அந்தப் படகுகளில் வேலைசெய்கிற நீங்கள் கயிறுகளோடு வேலையை உதற முடியும். பாய்மரத்தைப் பலமுள்ளதாக்க உங்களால் முடியாது. உங்களால் பாயை விரிக்கவும் முடியாமல் போகும். ஏனென்றால், கர்த்தர் நமது நீதிபதியாக இருக்கிறார். நமது சட்டங்களைக் கர்த்தர் உருவாக்குகிறார். கர்த்தர் நமது அரசர், அவர் நம்மைக் காப்பாற்றுகிறார். எனவே, கர்த்தர் நமக்கு மிகுந்த செல்வத்தைத் தருவார். முடவர்களும்கூட போரில் கொள்ளையிடுவதின் மூலம் பெருஞ்செல்வத்தைப் பெறுவார்கள். [24]அங்கே வாழ்கிற எவரும், “நான் நோயுற்றுள்ளேன்” என்று சொல்லமாட்டார்கள். அங்கே வாழ்கிற ஜனங்களின் பாவங்கள் மன்னிக்கப்பட்டிருக்கும்.

### தேவன் தமது பகைவர்களைத் தண்டிப்பார்

34 அனைத்து நாடுகளே, அருகில் வந்து கவனியுங்கள்! ஜனங்கள் அனைவரும் நன்கு கவனிக்க வேண்டும். பூமியும், பூமியிலுள்ள அனைத்து ஜனங்களும் இவற்றைக் கவனிக்க வேண்டும். [2]எல்லா நாடுகளின்மீதும், அவற்றிலுள்ள படைகளின் மீதும் கர்த்தர் கோபத்தோடு இருக்கிறார். அவர்கள் அனைவரையும் கர்த்தர் அழிப்பார். அவர்கள் அனைவரும் கொல்லப்படுவதற்கு அவர் காரணமாக இருப்பார். [3]அவர்களின் உடல்கள் வெளியே எடுத்தெறியப்படும். உடல்களிலிருந்து நாற்றம் கிளம்பும், மலைகளில் இரத்தம் வடியும். [4]வானங்கள் புத்தகச் சுருளைப்போலச் சுருட்டப் படும். நட்சத்திரங்கள் திராட்சைக் கொடியின் இலைகள் அல்லது அத்திமர இலைகள்போல உதிரும். வானத்திலுள்ள எல்லா நட்சத்திரங்களும் உருகிப்போகும். [5]“எனது வாளானது வானில் இரத்தத்தால் மூடப்படும்போது இது நிகழும்” என்று கர்த்தர் கூறுகிறார்.

பார்! கர்த்தருடைய வாள் ஏதோமை வெட்டிப்போடுகிறது. அந்த ஜனங்களைக் கர்த்தர் குற்றவாளியாகத் தீர்ப்பளித்தார். அவர்கள் மரிக்க வேண்டும். [6]கர்த்தருடைய வாள் ஆட்டுக்குட்டிகள் மற்றும் வெள்ளாடுகளின் இரத்தம் பூசப்பட்டு, செம்மறியாட்டு கொழுப்பினால் வழுவழுப்பாக்கப்பட்டதாயும் இருக்கிறது. ஏனென்றால், கர்த்தர் போஸ்றாவிலும்* ஏதோமிலும் கொல்வதற்கு இதுதான் நேரம் என்று முடிவு செய்தார். [7]எனவே, ஆட்டுக் குட்டிகள், கடாக்கள், பலமிக்க காளைகள் எல்லாம் கொல்லப்படும். அவற்றின் இரத்தத்தால் நாடு நிறைந்துவிடும். அதின் மண்ணானது கொழுப்பால் மூடப்படும்.

[8]இவையனைத்தும் நிகழும். ஏனென்றால், கர்த்தர் தண்டனைக்கென்று ஒரு காலத்தைத் தேர்தெடுத்திருக்கிறார். கர்த்தர் ஒரு வருடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். அவர்கள் சீயோனில் தாங்கள் செய்த பாவங்களுக்கு விலை தரவேண்டும். [9]ஏதோமின் ஆறுகள் சூடான தாரைப்போலாகும். ஏதோமின் பூமி எரிகிற கந்தகம் போன்று ஆகும். [10]இரவும் பகலும் நெருப்பு எரிந்துகொண்டிருக்கும். எவராலும் அதனை அணைக்க முடியாது. அதன் புகை ஏதோமிலிருந்து என்றென்றும் கிளம்பிக் கொண்டிருக்கும். அந்தப்பூமியானது சதாகாலமாக அழிக்கப்படும். மீண்டும் அந்த நாட்டின் வழியாக எந்த ஜனங்களாலும் பயணம் செய்யமுடியாது. [11]“பறவைகளும் சிறு மிருகங்களும் அந்த நாட்டைச் சொந்தமாக்கும். ஆந்தைகளும் காக்கைகளும் அங்கே வாழும். ‘காலியான வனாந்திரம்’ என்று அந்த நாடு அழைக்கப்படும். [12]பிரபுக்களும் தலைவர்களும் போய் விடுவார்கள். அவர்களுக்கு ஆட்சி செய்ய அங்கே எதுவும் இருக்காது.

[13]அங்குள்ள அழகான வீடுகளில் முட்செடிகளும் புதர்களும் வளரும். அந்த வீடுகளில் காட்டு நாய்களும், ஆந்தைகளும் வாழும். காட்டு மிருகங்கள் தம் வாழிடங்களை அங்கே அமைத்துக்கொள்ளும். அங்கு வளர்ந்துள்ள பெரிய புல்வெளிகளில் பெரிய பறவைகள் வாழும். [14]அங்கே காட்டுப் பூனைகள் ஓரிகளுடன் வாழும். காட்டு ஆடுகள் தம் நண்பர்களைக் கூப்பிடும். அங்கே சாக்குருவிகளும் ஓய்வெடுக்க இடம் தேடிக்கொள்ளும். [15]பாம்புகள் தங்கள் வீடுகளை அங்கே அமைத்துக்கொள்ளும். பாம்புகள் தங்கள் முட்டைகளை அங்கே இடும். அம்முட்டைகள் பொரித்து, சிறு பாம்புகள் இருட்டில் திரிந்துகொண்டிருக்கும். மரித்துப் போனவற்றைத் தின்னும் பறவைகள், பெண்கள் தம் நண்பர்களைப் பார்வையிடுவதுபோன்று சேர்ந்துகொள்ளும்.

[16]கர்த்தருடைய புத்தகச்சுருளைப் பாருங்கள் அதில் எழுதப்பட்டிருப்பதை வாசியுங்கள். எதுவும் குறையாமல் இருக்கும். அந்த மிருகங்கள் சேர்ந்திருக்கும் என்று அந்தச் புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது. தேவன் அவற்றை ஒன்று சேர்ப்பதாகச் சொன்னார். எனவே தேவனுடைய ஆவி அவற்றை ஒன்று சேர்க்கும். [17]அவர்களோடு என்ன செய்யவேண்டும் என்று தேவன் முடிவு செய்துவிட்டார். பிறகு அவர்களுக்காக தேவன் ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்தார். தேவன் ஒரு கோடு வரைந்து, அவர்களின் நாட்டை அவர்களுக்குக் காட்டினார். எனவே என்றென்றைக்கும் அந்த நாட்டைச்

---

**போஸ்றா** ஏதோமில் உள்ள நகரம்.

சொந்தமாக்கிக்கொண்டு அவர்கள் ஆண்
டாண்டு காலம் அங்கே வாழ்வார்கள்.

## தேவன் தம் ஜனங்களை ஆறுதல்படுத்துவார்

35 வறண்ட வனாந்திரம் மிகுந்த மகிழ்ச்
சியைப் பெறும். வனாந்திரம் சந்தோ
ஷம் அடைந்து பூவைப்போல வளரும்.
[2]வனாந்திரம் முழுவதும் பூக்களால் நிறைந்து
அதன் மகிழ்ச்சியைக் காட்டத் தொடங்கும்.
அது பார்ப்பதற்கு வனாந்திரம் மகிழ்ச்சி
யுடன் ஆடிக் கொண்டிருப்பதுபோலத் தோன்
றும். அந்த வனாந்திரமானது, லீபனோன்
காடுகளைப் போலவும், கர்மேல் மலையைப்
போலவும், சாரோன் பள்ளத்தாக்கு போல
வும் அழகாக மாறும். இது நிகழும்
ஏனென்றால், ஜனங்களனைவரும் கர்த்தரு
டைய மகிமையைக் காண்பார்கள். நம்
தேவனுடைய மேன்மையை ஜனங்கள்
காண்பார்கள்.

[3]பலவீனமான கைகளை மீண்டும்
பலப்படுத்துங்கள். பலவீனமான முழங்கால்
களை பலப்படுத்துங்கள். [4]ஜனங்கள் அஞ்சி
குழம்பினார்கள். அந்த ஜனங்களிடம்
கூறுங்கள், "பலமாக இருங்கள்! அஞ்சவேண்
டாம்!" பாருங்கள், உங்கள் தேவன் வருவார்.
உங்கள் பகைவர்களைத் தண்டிப்பார். அவர்
வருவார். உங்களுக்கு விருதினைத் தருவார்.
கர்த்தர் உங்களைக் காப்பாற்றுவார். [5]குரு
டர்களின் கண்கள் திறக்கப்படும். செவிடர்க
ளின் காதுகள் திறக்கும். [6]முடவர்கள்
மானைப்போல நடனம் ஆடுவார்கள். பேச
முடியாத ஜனங்கள் தங்கள் குரலைப்
பயன்படுத்தி மகிழ்ச்சிகரமான பாடல்களைப்
பாடுவார்கள். வனாந்தரத்தில் நீரூற்று
கிளம்பிப் பாயும்போது இது நிகழும்.
வறண்ட நிலங்களில் நீரூற்றுகள் பாயும்.
[7]இப்பொழுது ஜனங்கள் கானல் தண்ணீரைப்
பார்க்கின்றனர். இது தண்ணீரைப்போல
தோன்றும். ஆனால் அந்த நேரத்தில் அங்கே
உண்மையான தண்ணீர் குளங்களும் இருக்
கும். வறண்ட நிலத்தில் கிணறுகள் இருக்
கும். தண்ணீரானது பூமியிலிருந்து பாயும்.
ஒரு காலத்தில் காட்டு மிருகங்கள் இருந்த
இடத்தில் உயரமான நீர்த்தாவரங்கள்
வளரும்.

[8]அந்தக் காலத்திலே, அங்கே ஒரு சாலை
இருக்கும். இந்த நெடுஞ்சாலை "பரிசுத்தமான
சாலை" என்று அழைக்கப்படும். தீயவர்கள்
அச்சாலையில் நடக்க அனுமதிக்கப்படமாட்
டார்கள். தேவனைப் பின்பற்றாத எவரும்
அச்சாலையில் போகமாட்டார்கள். [9]அந்தச்
சாலையில் எவ்வித ஆபத்தும் இருக்காது.
ஜனங்களைக் கொல்லுகின்ற சிங்கங்கள்
அந்தச் சாலையில் இருக்காது. அந்தச்
சாலையில் ஆபத்தைத் தரும் மிருகங்கள்
எதுவும் இராது. அந்தச் சாலை தேவனால்
காப்பாற்றப்பட்டவர்களுக்கே உரியது.

[10]தேவன் அவரது ஜனங்களை விடுதலை
செய்வார். அந்த ஜனங்கள் அவரிடம்
திரும்பி வருவார்கள். இந்த ஜனங்கள் சீயோ
னுக்குள் வரும்போது அவர்கள் மகிழ்ச்சி
யோடு இருப்பார்கள். என்றென்றும் ஜனங்
கள் மகிழ்ச்சியோடு இருப்பார்கள். அவர்
களின் மகிழ்ச்சியானது அவர்களின் தலை
யில் கிரீடம் போன்று இருக்கும். மகிழ்ச்சியும்
சந்தோஷமும் அவர்களை நிரப்பும். துயரமும்,
துக்கமும் வெகுதூரம் விலகிப்போகும்.

## அசீரியர்கள் யூதாவைக் கைப்பற்றுதல்

36 எசேக்கியா யூதாவின் அரசனாக
இருந்தான். அசீரியாவின் அரசனாக
சனகெரிப் இருந்தான். எசேக்கியாவின்
14வது ஆட்சியாண்டில், யூதாவின் அரணாக
சூழ்ந்திருந்த நகரங்களுக்கு எதிராக சன
கெரிப் போரிட்டான். சனகெரிப் அந்நகரங்
களைத் தோற்கடித்தான். [2]சனகெரிப் எருச
லேமிற்கு எதிராகப் போரிட அவனது
தளபதியை அனுப்பினான். தளபதி லாகீசை
விட்டு எருசலேமில் இருந்த எசேக்கியா
அரசனிடம் சென்றான். அந்தத் தளபதி
தன்னோடு வல்லமையான படையை
அழைத்துச் சென்றான். தளபதியும் அவனது
படையும் வண்ணார்துறையின் அருகிலுள்ள
சாலைக்குச் சென்றனர். அந்தச் சாலை,
மேல் குளத்திலிருந்து வரும் தண்ணீர்க்
குழாயின் அருகில் இருந்தது.

[3]எருசலேமிலிருந்து மூன்று ஆண்கள்
தளபதியோடு பேச வெளியே வந்தனர். அந்த
ஆண்கள், இல்க்கியாவின் மகனான
எலியாக்கீம், ஆசாப்பின் மகனாகிய யோவா
க்கும், செப்னாவும் ஆவார்கள். எலியாக்கீம்
அரண்மனை மேலாளராக இருந்தான்.
யோவாக் பொருளாளராக இருந்தான். செப்
னா செயலாளராக இருந்தான்.

[4]தளபதி அவர்களிடம், "பின்வருவதை
நீங்கள் எசேக்கியா அரசனிடம் கூறுங்கள்:
"மகாராஜாவான, அசீரியாவின் அரசன்
கூறுகிறார்,

நீ நம்பி இருக்கிற இந்த நம்பிக்கை
என்ன? [5]நான் உங்களுக்குக் கூறு
கிறேன், நீங்கள் வல்லமையிலும் யுத்தத்
திற்கான சிறப்பு ஆலோசனையிலும்
நம்பிக்கை வைத்தால், அது பயனற்ற
தாக இருக்கும். அவை வெற்று வார்த்
தைகளே தவிர வேறு எதுவுமில்லை.
எனவே, எனக்கு எதிராக நீ ஏன்
போரிடுகிறாய்? இப்பொழுது நான்
உன்னைக் கேட்கிறேன். உனக்கு உதவ
யார்மேல் நீ நம்பிக்கை வைத்திருக்
கிறாய்? [6]உனது உதவிக்கு எகிப்தைச்
சார்ந்து இருக்கின்றாயா? எகிப்து ஒரு
உடைந்த கம்பு போலுள்ளது. உன்
னைத் தாங்குவதற்கு அதனை நீ
ஊன்றினால் அது உன்னைப் பாதிக்

கும். உன் கையில் ஓட்டையிடும். எகிப்தின் அரசனான பார்வோன், உதவி பெறுவதற்கு எவராலும் நம்பத் தகாதவன்.

7ஆனால் நீ, “நாங்கள் எங்கள் தேவனாகிய கர்த்தர் மீது எங்களுக்கு உதவுமாறு நம்பிக்கை வைத்தோம்” என்று கூறலாம். ஆனால் நான் கூறுகிறேன், எசேக்கியா கர்த்தருடைய பலிபீடங்களையும் தொழுது கொள்வதற்குரிய உயர் இடங்களையும் அழித்துவிட்டான். எசேக்கியா யூதா மற்றும் எருசலேமிடம் இவற்றைச் சொன்னான்: “எருசலேமில் உள்ள இந்த ஒரே ஒரு பலிபீடத்தை மட்டும் நீங்கள் தொழுதுகொள்ளவேண்டும்.”

8நீங்கள் இன்னும் போர் செய்ய விரும்பினால், எனது எஜமானரான, அசீரியாவின் அரசர் உன்னோடு இந்த ஒப்பந்தத்தை ஏற்படுத்துவார். அரசர் சொல்கிறார், “உங்களால் போருக்குக் குதிரைகளின்மீது சவாரி செய்யப் போதுமான ஆட்களைக் கண்டுகொள்ள முடியுமானால் நான் உங்களுக்கு 2,000 குதிரைகளைத் தருவேன். 9ஆனால் அதற்குப் பிறகும்கூட உன்னால் எனது எஜமானரின் அடிமைகளில் ஒருவனைத் தோற்கடிக்க முடியாது. எனவே, நீங்கள் ஏன் தொடர்ந்து எகிப்தின் குதிரைகளையும் இரதங்களையும் நம்பி இருக்கிறீர்கள்?

10அதோடு, நான் இந்த நாட்டிற்கு வந்து போரிட்டபோது கர்த்தர் என்னோடு இருந்தார் என்பதை நினைவுகொள்ள வேண்டும். நான் இந்த நகரங்களை அழித்தபோது கர்த்தர் என்னோடு இருந்தார். கர்த்தர் என்னிடம், “எழுந்து நில். இந்த நாட்டிற்குப் போ. இதனை அழித்துவிடு! என்று கூறினார்” என்று கூறுங்கள் என்றான்.

11எருசலேமிலிருந்து வந்த எலியாக்கீம், செப்னா, யோவாக் ஆகியோர் தளபதியிடம், “தயவுசெய்து எங்களோடு அரமேய மொழியில் பேசுங்கள். எங்களோடு எங்கள் யூத மொழியில் பேசாதீர்கள். நீங்கள் யூத மொழியைப் பயன்படுத்தினால், நகர சுவர்களுக்குமேல் இருக்கிற ஜனங்கள் நீங்கள் பேசுவதைப் புரிந்துகொள்வார்கள்” என்று சொன்னார்கள்.

12ஆனால் தளபதி, “எனது எஜமானர் இவற்றை உங்களிடமும் உங்கள் எஜமானர் எசேக்கியாவிடமும் மட்டும் கூற என்னை அனுப்பவில்லை. சுவர்களுக்கு மேல் உட்கார்ந்திருக்கிற அந்த ஜனங்களுக்கும் கூறுமாறு என்னை அனுப்பியுள்ளார். அந்த ஜனங்கள் போதுமான உணவையும் தண்ணீரையும் பெறுவதில்லை. அவர்கள் உங்களைப் போன்றே தங்கள் மலத்தைத் உண்ணவும் தங்கள் சிறுநீரைக் குடிக்கவும் செய்வார்கள்” என்றான்.

13பிறகு, தளபதி எழுந்துநின்று மிக உரத்தக் குரலில் யூத மொழியில் பேசினான். 14தளபதி சொன்னான், “மகாராஜாவான அசீரியா அரசனிடமிருந்து வரும் வார்த்தைகளைக் கவனியுங்கள்:

எசேக்கியா உங்களை முட்டாளாக்க விடாதீர்கள். அவனால் உங்களை என்னுடைய வல்லமையிலிருந்து பாதுகாக்க முடியாது!. 15எசேக்கியா, ‘கர்த்தர் மேல் நம்பிக்கை வையுங்கள். கர்த்தர் நம்மைக் காப்பாற்றுவார். அசீரியா அரசன் இந்த நகரத்தைத் தோற்கடிக்கும்படி கர்த்தர் விடமாட்டார்’ என்று சொல்லும்போது அதை நம்பாதீர்கள்.

16எசேக்கியாவிடமிருந்து வரும் அந்த வார்த்தைகளைக் கேட்காதீர்கள். அசீரியா அரசன் சொல்வதைக் கேளுங்கள். அசீரியா அரசன் கூறுகிறான், “நாம் ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும். நீங்கள் உங்கள் நகரத்தை விட்டு வெளியே என்னிடம் வர வேண்டும். பிறகு, ஒவ்வொருவரும் உங்கள் வீடுகளுக்குப் போக விடுதலை பெறுவீர்கள். ஒவ்வொருவருக்கும் தங்கள் சொந்தத் திராட்சைத் தோட்டத்தில் திராட்சைப்பழம் உண்ணும் சுதந்திரம் பெறுவீர்கள். ஒவ்வொருவரும் அவர்களது சொந்த அத்திமரத்தில் அத்திப் பழம் உண்ணும் சுதந்திரத்தைப் பெறுவீர்கள். ஒவ்வொருவரும் அவர்களது சொந்தக் கிணற்றின் தண்ணீரைக் குடிக்கும் சுதந்திரத்தைப் பெறுவீர்கள். 17இதனை, உங்கள் தேசத்தைப்போன்ற நாட்டிற்கு நான் வந்து உங்களை அழைத்துச் செல்லும்வரை நீங்கள் செய்யலாம். அந்தப் புதிய நாட்டில் உங்களுக்கு நல்ல தானியங்களையும், புதிய திராட்சைரசத்தையும் பெறுவீர்கள். அந்த நாட்டில் உணவும் திராட்சை வயல்களும் இருக்கும்.”

18எசேக்கியா உங்களை முட்டாளாக்கும்படி விடாதீர்கள். அவன் சொல்கிறான், “கர்த்தர் நம்மைக் காப்பாற்றுவார்” என்று. ஆனால் நான் உங்களைக் கேட்கிறேன், அசீரியாவின் வல்லமையிலிருந்து அந்த ஜனங்களை அந்நிய நாட்டு தெய்வங்கள் எவராவது காப்பாற்றினார்களா? இல்லை. 19ஆமாத் அர்பாத்* நகரங்களின் தெய்வங்கள்

*எங்கே? அவர்கள் தோற்கடிக்கப்பட்ட*
*னர். செப்பர்வாயீமின் தெய்வங்கள்*
*எங்கே? அவர்கள் தோற்கடிக்கப்பட்ட*
*னர். எனது வல்லமையிலிருந்து சமாரி*
*யாவின் தெய்வங்கள் தம் ஜனங்களை*
*காப்பாற்றினார்களா? இல்லை!* [20]*இந்த*
*நாடுகளில் என்னுடைய வல்லமையிலி*
*ருந்து தம் ஜனங்களைக் காப்பாற்றிய*
*ஏதாவது ஒரு தெய்வங்களுடைய*
*பெயரைக் கூறுங்கள். அவர்கள் அனை*
*வரையும் நான் தோற்கடித்துவிட்*
*டேன். எனவே, எனது வல்லமையிலி*
*ருந்து கர்த்தர் எருசலேமைக் காப்பாற்*
*றுவாரா? இல்லை" என்கிறார் என்*
*றான்.*

[21]*எருசலேமிலுள்ள ஜனங்கள் அமை*
*தியாக இருந்தார்கள். அவர்கள் தளபதிக்குப்*
*பதில் சொல்லவில்லை. ("தளபதிக்குப் பதில்*
*சொல்ல வேண்டாம்" என்று எசேக்கியா*
*ஜனங்களுக்கு கட்டளையிட்டிருந்தான்.)*
[22]*பிறகு அரண்மனை மேலாளரான*
*இல்க்கியாவின் மகனான எலியாக்கீம்,*
*செயலாலிரான செப்னா மற்றும் பொருளாள*
*ரான ஆசாப்பின் மகனான யோவாக்*
*ஆகியோர், தம் ஆடைகளைக் கிழித்துக்*
*கொண்டனர். (அவர்கள் துக்கமாய்*
*இருப்பதாக காட்டினார்கள்.) மூன்று பேரும்*
*எசேக்கியா விடம் சென்று தளபதி*
*அவர்களுக்குச் சொன்ன அனைத்தையும்*
*கூறினார்கள்.*

### *எசேக்கியா தேவனுடைய உதவிக்காக வேண்டுதல்*

37 *எசேக்கியா, தளபதியிடமிருந்து வந்த*
*செய்தியைக் கவனித்தான். அவன்*
*அந்தச் செய்தியைக் கேட்டதும் தான்*
*சோகமாயிருப்பதைக் காண்பிக்க தன் ஆடை*
*களைக் கிழித்துக்கொண்டான். பிறகு எசேக்*
*கியா துக்கத்தைக் குறிக்கும் சிறப்பான*
*ஆடைகளை அணிந்துகொண்டு கர்த்த*
*ருடைய ஆலயத்திற்குப் போனான்.* [2]*எசேக்*
*கியா அரண்மனை மேலாளரையும் (எலீக்*
*கியாம்) செயலாளனையும் (செப்னா)*
*ஆசாரியர்களின் மூப்பர்களையும் (தலைவர்*
*களையும்) ஆமோத்சின் மகனான ஏசாயா*
*தீர்க்கதரிசியிடம் அனுப்பினான். அந்த*
*மூன்று பேரும் துக்கத்தைக் குறிக்கும்*
*சிறப்பு ஆடைகளை அணிந்திருந்தனர்.*
[3]*அவர்கள் ஏசாயாவிடம், "அரசன்*
*எசேக்கியா, இன்று துக்கத்திற்கும் துயரத்திற்*
*குமான விசேஷ நாள் என்று கட்டளை*
*யிட்டிருக்கிறார். இன்று மிக துக்கமான*
*நாளாக இருக்கும். இது குழந்தையைப்*
*பெற்றெடுக்கவேண்டிய நாளைப் போன்ற*
*ஒரு நாளாக இருக்கும். ஆனால் குழந்தை*
*பெறவோ போதிய பெலன் தாய்க்கில்லை.*
[4]*(உமது தேவனான கர்த்தர் தளபதி சொன்ன*
*வற்றைக் கேட்டிருக்கலாம்.) அசீரியா அரசன்*
*தளபதியை அனுப்பி, ஜீவனுள்ள தேவனைப்*
*பற்றி மோசமாகப் பேசும்படி அனுப்பியி*
*ருக்கிறான். உமது தேவனாகிய கர்த்தர்*
*அந்தக் கெட்ட வார்த்தைகளைக் கேட்பார்.*
*ஒருவேளை சத்துரு தப்பானவன் என்று*
*கர்த்தர் நிரூபிக்கச் செய்வார்! தயவுசெய்து*
*இஸ்ரவேலில் மீதியாக இருக்கிற சில*
*ஜனங்களுக்காக ஜெபம் செய்யும்" என்றனர்.*
[5-6]*ஏசாயா அவர்களிடம், "இந்தத் தகவலை*
*உங்கள் எஜமானனான எசேக்கியாவிடம்*
*சொல்லுங்கள். கர்த்தர் சொல்கிறார்,*
*'தளபதியிடமிருந்து நீங்கள் கேட்ட வற்றைப்*
*பற்றிப் பயப்படவேண்டாம்! அசீரியா*
*அரசனது சிறுவர்கள் என்னைப் பற்றி*
*சொன்ன தீயவற்றை நம்பவேண்டாம்.*
[7]*பாருங்கள், நான் அசீரியாவிற்கு எதிராக*
*ஒரு ஆவியை அனுப்புவேன். அசீரியா*
*அரசன் அவனது நாட்டிற்கு வரவிருக்கும்*
*ஆபத்து பற்றிய எச்சரிக்கையைப் பெறு*
*வான். எனவே அவன் தனது நாட்டிற்குத்*
*திரும்பிப் போவான். அந்த நேரத்தில்*
*அவனது சொந்த நாட்டில் ஒரு வாளால்*
*அவனைக் கொல்லுவேன்" என்றார்.*

### *அசீரியா படை எருசலேமை விட்டு விலகியது*

[8-9]*அசீரியா அரசன் ஒரு அறிக்கையைப்*
*பெற்றான். அந்த அறிக்கை, "எத்தியோப்*
*பியா அரசனான திராக்கா உம்மோடு*
*போரிட வருகிறான்" என்று சொன்னது.*
*எனவே, அசீரியா அரசன் லாகீசை விட்டு*
*லிப்னாவுக்குத் திரும்பிப்போனான். தளபதி*
*இதனைக் கேள்விப்பட்டான். அவன் லிப்னா*
*நகரத்திற்குப் போனான். அங்கே அசீரியா*
*அரசன் போரிட்டுக் கொண்டிருந்தான். பிறகு*
*தளபதி எசேக்கியாவிற்குத் தூதுவர்களை*
*அனுப்பினான்.* [10]*"நீங்கள் இவற்றை யூத*
*அரசனான எசேக்கியாவிடம் சொல்லவேண்*
*டும்:*

*நீங்கள் நம்புகிற தெய்வங்களால்*
*முட்டாளாக வேண்டாம். அசீரியா*
*அரசனால் எருசலேம் தோற்கடிக்கப்ப*
*டும்படி தேவன் விடமாட்டார்" என்று*
*சொல்லாதீர்கள்.*

[11]*கவனியுங்கள், அசீரியாவின் அர*
*சர்கள் மற்ற நாடுகளுக்குச் செய்ததைப்*
*பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்*
*கள். அவர்கள் மற்றவர்களை முற்றி*
*லுமாய் அழித்தார்கள். நீங்கள் மீட்கப்*
*படுவீர்கள் என்று நம்புகிறீர்களா?*
*இல்லை!* [12]*அந்த ஜனங்களின் தெய்*
*வங்கள் அவர்களைக் காப்பாற்றினார்*

---

***ஆமாத், அர்பாத் செப்பர்வாயீம்*** *சிரியாவிலுள்ள நகரங்கள்.*

*களா? இல்லை. எனது முற்பிதாக்கள்*
*அவர்களை அழித்தனர். எனது ஜனங்*
*கள் கோசானையும், ஆரானையும், ரேத்*
*சேப்பையும், தெலாசாரிலிருந்த ஏதே*
*னின் ஜனங்களையும் தோற்கடித்தனர்.*
13*ஆமாத் அர்பாத் அரசர் எங்கே*
*இருக்கிறார்கள். செப்பர்வாயீம் அரசன்*
*எங்கே இருக்கிறான்? ஏனா, ஈவா*
*நகரங்களின் அரசர்கள் எங்கே இருக்கி*
*றார்கள்? அவர்கள் முறியடிக்கப்பட்*
*டனர்! அவர்கள் அனைவரும் அழிக்கப்*
*பட்டனர்!" என்று தளபதி சொன்*
*னான்.*

### எசேக்கியா தேவனிடம் ஜெபம் செய்கிறான்

14*எசேக்கியா தூதுவர்களிடமிருந்து செய்*
*தியைப் பெற்று வாசித்தான். பிறகு,*
*எசேக்கியா கர்த்தரின் ஆலயத்திற்குச் சென்*
*றான். எசேக்கியா கடிதத்தைத் திறந்து*
*கர்த்தருடைய முன்பு வைத்தான்.* 15*எசேக்*
*கியா கர்த்தரிடம் ஜெபம் செய்யத் தொடங்*
*கினான். எசேக்கியா சொன்னான்:*

16*"இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ*
*வல் லமையுள்ள கர்த்தாவே! நீர்*
*கேரூபீன்களின் மேல் அரசராக அமர்ந்*
*திருக்கிறீர். நீர் மட்டுமே பூமியி லுள்ள*
*அனைத்து அரசுகளையும் ஆளும்*
*தேவன்! நீர் வானத்தையும் பூமியையும்*
*படைத்தீர்!* 17*கர்த்தாவே நான் சொல்*
*வதைக் கேளும். சனகெரிப்பிடமிருந்து*
*வந்த செய்தியை உமது கண்களைத்*
*திறந்து பாரும். எனக்குச் சனகெரிப்*
*இந்தச் செய்தியை அனுப்பினான்.*
*ஜீவனுள்ள தேவனாகிய உம்மைப்பற்றி*
*தீயச் செய்திகளை இது சொல்கிறது.*
18*கர்த்தாவே, அசீரியாவின் அரசன்*
*உண்மையிலேயே அனைத்து நாடுக*
*ளையும் ஜனங்களையும் அழித்திருக்கி*
*றான்.* 19*கர்த்தாவே, அந்த நாடுகளில்*
*உள்ள தெய்வங்களை அசீரியாவின்*
*அரசர்கள் எரித்திருக்கிறார்கள் என்*
*பது உண்மைதான். ஆனால் அவை*
*உண்மையான தெய்வங்கள் அல்ல.*
*அவைகள் மனிதர்களால் செய்யப்பட்ட*
*சிலைகள்தான். அவைகள் மரமும்*
*கல்லும்தான். எனவேதான் அசீரியா*
*வின் அரசர்களால் அவற்றை அழிக்க*
*முடிந்தது.* 20*ஆனால் நீரோ எமது*
*தேவனாகிய கர்த்தர்! எனவே அசீரியா*
*அரசனின் வல்லமையிலிருந்து எங்க*
*ளைக் காப்பாற்றும். பிறகு, மற்ற*
*நாடுகள் எல்லாம் கர்த்தராகிய நீர்*
*மட்டுமே ஒரே தேவன் என்பதை*
*அறிந்துகொள்ளும்" என்று ஜெபித்*
*தான்.*

### எசேக்கியாவிற்கு தேவனுடைய பதில்

21*பிறகு ஆமோத்சின் மகனான ஏசாயா*
*எசேக்கியாவிற்குச் செய்தி அனுப்பினான்.*
*ஏசாயா, "இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்*
*சொல்லுவது என்னவென்றால், அசீரியா*
*அரசனாகிய சனகெரீப்பிடமிருந்து வந்த*
*செய்தியைப் பற்றி நீ ஜெபம் செய்தாய்.*
*"நான் உனது ஜெபத்தைக் கேட்டேன்.*
22*சனகெரிப்பைக் குறித்து கர்த்தரிடமி*
*ருந்து வந்த செய்தி இதுதான்: அசீரியா*
*அரசனே, சீயோனின் (எருசலேம்) கன்னி*
*மகள், 'நீ முக்கியமானவன்' என்று எண்ணு*
*வதில்லை. உன்னைப் பார்த்து அவள்*
*சிரிக்கிறாள். எருசலேமின் மகள் உன்னை*
*பரிகாசம் செய்கிறாள்.*
23*ஆனால், நீ யாரை பரிகாசம் செய்தாய்?*
*நீ யாருக்கு எதிராகப் பேசினாய்? நீ*
*இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு எதிராகப் பேசி*
*னாய். அவரைவிட நீ உத்தமன் போல*
*நடித்தாய்.*
24*எனது கர்த்தராகிய ஆண்டவரைப்பற்றி*
*எதிராகப் பேச உனது வேலைக்காரர்களைப்*
*பயன்படுத்தினாய். நீ, "நான் வல்லமையுள்ள*
*வன்! என்னிடம் பற்பல இரதங்கள் உள்ளன.*
*எனது வல்லமையால் நான் லீபனோனைத்*
*தோற்கடித்தேன். லீபனோனின் மலை*
*உச்சிகளில் நான் ஏறினேன். நான் லீபனோ*
*னில் உள்ள உயரமான மரங்களை*
*(படைகள்) வெட்டித் தள்ளினேன். நான்*
*மலையின் உச்சிக்கும் காட்டின் மிக ஆழ*
*மான பகுதிக்கும் சென்றிருக்கிறேன் என்று*
*கூறினாய்.*

25*நான் கிணற்றைத் தோண்டி புதிய*
*இடங்களிலிருந்து தண்ணீரைக் குடித்திருக்கி*
*றேன். எகிப்தின் ஆறுகளை வற்றச்செய்து*
*அந்நாட்டில் நான் நடந்து சென்றிருக்கிறேன்.*
26*இதைத்தான் நீ கூறினாய். ஆனால்*
*நான் சொன்னவற்றை நீ கேட்டாயா?*
*"நீண்ட காலத்துக்கு முன்னால் தேவனாகிய*
*நானே இவற்றைத் திட்டமிட்டேன். பழங்*
*காலத்திலிருந்து நானே அதைத் திட்ட*
*மிட்டேன். இப்போதும் நானே அதை*
*நடப்பித்தேன். பலமான நகரங்களையெல்*
*லாம் அழிக்கும்படி நான் உன்னை அனு*
*மதித்தேன். எனது வேலைக்காக உன்னைப்*
*பயன்படுத்தினேன். நான் அந்த நகரங்களைப்*
*பாழான மண்மேடாகும்படி மாற்றினேன்.*
27*அந்நகரங்களில் வாழ்ந்த ஜனங்கள் பல*
*வீனமானவர்களாக இருந்தார்கள். அவர்கள்*
*அச்சமும் குழப்பமும் கொண்டவர்களாக*
*இருந்தார்கள். அவர்கள் வயல்வெளியில்*
*உள்ள புல்லைப்போல வெட்டப்படுகிறவர்க*
*ளாக இருந்தார்கள். வீடுகளுக்கு மேலே*
*வளர்ந்துள்ள புல்லைப்போல அவர்கள்*
*இருந்தனர். அது உயரமாக வளருவதற்கு*
*முன் வனாந்தரத்து வெப்பக்காற்றால் எரிக்*
*கப்படுகிறது.*

28“உனது படையைப் பற்றியும், போர்
களைப் பற்றியும் எனக்குத் தெரியும். நீ
எப்பொழுது ஓய்வெடுத்தாய், எப்பொழுது
போருக்குப் போனாய் என்று எனக்குத்
தெரியும். போரிலிருந்து எப்பொழுது வீட்
டிற்கு வந்தாய் என்றும் எனக்குத் தெரியும்.
என்னிடத்தில் எப்போது கலக்கமடைந்தாய்
என்றும் எனக்குத் தெரியும்.
29என் மீது நீ கோபத்தோடு இருக்கிறாய்.
உனது பெருமையான சொற்களை நான்
கேட்டேன். எனவே, நான் உனது மூக்கில்
கொக்கியை மாட்டுவேன். நான் உனது
வாயில் கடிவாளத்தைப் போடுவேன். நீ
வந்த அதே சாலையில் என் நாட்டை
விட்டு நீ போகும்படி பலவந்தப்படுத்து
வேன்.”

## எசேக்கியாவிற்கு கர்த்தருடையச் செய்தி

30பிறகு கர்த்தர் எசேக்கியாவிடம், “நான்
சொன்னவையெல்லாம் உண்மை என்பதைக்
காட்ட உனக்கு ஒரு அடையாளம் தருவேன்.
இந்த ஆண்டு எந்த தானியத்தையும் விதைக்க
மாட்டாய். எனவே இந்த ஆண்டு நீ
சென்ற ஆண்டின் விளைச்சலில் காடுபோல
வளர்ந்த தானியம் மட்டுமே உண்பாய்.
ஆனால் மூன்று ஆண்டுகளில் நீ பயிர்
செய்த தானியத்தையே உண்பாய். நீ
அவற்றை அறுவடை செய்வாய். உண்ப
தற்கு உன்னிடம் ஏராளமாக இருக்கும். நீ
திராட்சையைப் பயிர் செய்து அதன்
பழங்களை உண்பாய்.
31யூதாவின் குடும்பத்தில் தப்பி மீதியாய்
இருக்கிற ஜனங்கள் மறுபடியும் வளர
ஆரம்பிப்பார்கள். அந்த ஜனங்கள், தரையில்
தன் வேர்களை ஆழமாகச் செலுத்தி உறுதி
யாக வளர்ந்த செடிகளைப் போன்றவர்கள்.
அந்த ஜனங்களுக்கு மிகுதியான பழங்கள்
(பிள்ளைகள்) பூமியின்மேல் இருக்கும்.
32ஏனெனில் எருசலேமை விட்டு வெளியே
வந்த சில ஜனங்கள் மட்டும் உயிரோடு
இருப்பார்கள். சீயோன் மலையில் இருந்து
உயிரோடு வந்தவர்களும் இருப்பார்கள்”
சர்வ வல்லமையுள்ள கர்த்தருடைய பலமான
அன்பு இதனைச் செய்யும்.
33எனவே, அசீரியா அரசனைப்பற்றி ஒரு
செய்தி கர்த்தர் இதைக் கூறுகிறார், “அவன்
இந்த நகரத்திற்குள் நுழையமாட்டான். இந்த
நகரத்தில் அவன் ஒரு அம்பைக்கூட
எய்யமாட்டான். அவனது கேடயங்களோடு
இந்த நகரத்திற்கு எதிராக சண்டையிட
நகரமாட்டான். நகரச் சுவர்களில் அவன்
கொத்தளம் அமைக்கமாட்டான்.
34அவன் வந்த சாலையிலேயே அவனது
சொந்த நாட்டிற்குத் திரும்பிப் போவான்.
அவன் இந்த நகரத்திற்குள் நுழையமாட்
டான்” கர்த்தர் இதைச் சொல்லுகின்றார்.
35இந்த நகரத்தை நான் பாதுகாத்து காப்
பாற்றுவேன். இதனை நான் எனக்காகவும்,
எனது தாசனாகிய தாவீதுக்காகவும்
செய்வேன்” என்று கர்த்தர் சொல்கிறார்.
36எனவே, அசீரியாவின் பாளையத்தில்
உள்ள 1,85,000 ஆட்களைக் கர்த்தருடைய
தூதன் போய்க் கொன்றான். மறுநாள்
காலையில் ஜனங்கள் எழுந்தனர். அவர்கள்
தங்களைச் சுற்றிலும் மரித்துப்போன ஆட்க
ளின் உடல்களைக் கண்டனர். 37எனவே,
அசீரியாவின் அரசனான சனகெரிப் நினி
வேக்குத் திரும்பிப்போய் அங்கே தங்கினான்.
38ஒரு நாள், சனகெரிப் அவனது தேவ
னான நிஸ்ரோகின் ஆலயத்தில் தொழுகை
செய்வதற்காக இருந்தான். அந்த நேரத்தில்
அவனது இரண்டு மகன்களான அத்ரம
லேக்கும் சரேத்சேரும் அவனை வாளால்
வெட்டிக் கொன்றனர். பிறகு, அந்த மகன்கள்
அரராத்துக்கு ஓடிப் போனார்கள். எனவே,
அசீரியாவின் புதிய அரசனாகச் சனகெரிப்
பின் மகனான எசரத்தோன் வந்தான்.

## எசேக்கியாவின் சுகவீனம்

38 அந்த நேரத்தில், எசேக்கியா சுகவீனம்
அடைந்தான். அவன் மரணத்துக்கு
சமீபமாயிருந்தான். ஆமோத்சின் மகனான
ஏசாயா தீர்க்கதரிசி அவனைப் பார்க்க
வந்தான்.
ஏசாயா அரசனிடம், “இவற்றை உன்
னிடம் சொல்லுமாறு கர்த்தர் கூறினார்:
‘நீ விரைவில் மரிப்பாய். எனவே, நீ
மரித்தபிறகு அவர்கள் என்ன செய்ய
வேண்டும் என்று உனது குடும்பத்தாரிடம்
சொல்ல வேண்டும். நீ மீண்டும் குண
மடையமாட்டாய்!’” என்று கூறினான்.
2எசேக்கியா ஆலயத்தின் சுவரின் பக்கம்
திரும்பி ஜெபம் செய்யத் தொடங்கினான்.
3“கர்த்தாவே, என் முழு இருதயத்தோடும்
உண்மையாக உமக்குச் சேவை செய்ததை
நினைத்தருளும். நீர் நல்லது என்று கூறி
யவற்றையே நான் செய்திருக்கிறேன்” என்று
அவன் சொன்னான். பிறகு எசேக்கியா மிக
உரத்த குரலில் கதறத் தொடங்கினான்.
4ஏசாயா கர்த்தரிடமிருந்து இந்தச் செய்தி
யைப் பெற்றான். 5ஏசாயா, “எசேக்கியா
விடம் போய் ‘உனது முற்பிதாவான தாவீ
தின் தேவனாகிய கர்த்தர் சொன்னவை
இதுதான் என்று அவனிடம் கூறு: உனது
ஜெபத்தை நான் கேட்டேன். உனது கண்
ணீரை நான் பார்த்தேன். நான் உனது
வாழ்க்கையில் 15 ஆண்டுகளைக் கூட்டு
வேன். 6நான் உன்னையும் இந்த நகரத்தையும்
அசீரியா அரசனிடமிருந்து காப்பாற்று
வேன்” நான் இந்த நகரத்தை பாதுகாப்
போன்” என்று கர்த்தர் கூறுகிறார் என்றான்.
22*ஆனால் எசேக்கியா ஏசாயாவிடம்,
“நான் குணமடைவேன் என்பதை நிரூபிக்
கும் கர்த்தருடைய அடையாளம் எது? நான்

கர்த்தருடைய ஆலயத்திற்குப் போக இயலும்
என்பதை நிரூபிக்கும் அடையாளம் எது?”
என்று கேட்டான்.
7அவர் இவற்றையெல்லாம் செய்வார் என்
பதைக் காண்பிக்கும்படி கர்த்தரிடமிருந்து
வந்த அடையாளம் இதுதான். 8“பார், ஆகாசு
சூரிய கடியாரத்தில் படிக்குப் படி இறங்கின
சூரிய நிழலை பத்துப்படிகள் பின்னிட்டுத்
திருப்புகிறேன். முன்பு இருந்த இடத்திலிருந்து
சூரிய நிழல் பத்துப்பாகை பின்னால்
போகும்” என்றான்.
21*பிறகு எசேக்கியாவிடம் ஏசாயா, “நீ
அத்திப்பழங்களை பசையை போன்று
குழைத்து உனது புண்ணின்மேல் தடவ
வேண்டும். பிறகு நீ குணம் பெறுவாய்”
என்றான்.
9எசேக்கியா நோயிலிருந்து குணமடைந்த
தும் அவனிடமிருந்து வந்த கடிதம் இதுதான்:
10நான் முதுமையடையும் வரை வாழ்
வேன் என்று நான் எனக்குள் சொன்னேன்.
ஆனால் பிறகு பாதாளத்தின் வாசல்கள்
வழியாகச் செல்லும் எனது நேரம் வந்தது.
இப்பொழுது நான் எனது எல்லா
நேரத்தையும் அங்கு செலவு செய்வேன்.
11எனவே, நான் சொன்னேன்: “கர்த்தரை
நான் இனிமேல் உயிரோடு இருக்கிறவர்க
ளின் நாட்டில் பார்க்கமாட்டேன். இனிமேல்
பூமியிலுள்ள ஜனங்களோடு இருந்து
ஜனங்களை நான் காணமாட்டேன்.
12எனது வீடு, எனது மேய்ப்பனுடைய
கூடாரம் கீழே தள்ளப்படுவதுபோல் என்னி
டமிருந்து எடுக்கப்படும். நெசவு செய்கி
றவன் பாவினை அறுப்பதுபோல் நான்
முடிந்து போகிறேன். எனது வாழ்வை
அவ்வளவு சிறிய காலத்திற்குள் நீ முடித்
தாய்!
13ஒரு சிங்கத்தைப் போன்ற நான் எல்லா
இரவுகளிலும் கதறினேன். ஆனால் எனது
நம்பிக்கைகள் சிங்கம் எலும்புகளைத் தின்
பது போன்று நொறுக்கப்பட்டன. இவ்வளவு
குறுகிய காலத்திற்குள் எனது வாழ்வை
நீ முடித்துவிட்டாய்!
14ஒரு புறாவைப் போன்று அலறினேன்.
ஒரு பறவையைப் போன்று அலறினேன்.
எனது கண்கள் சோர்ந்து போயின. ஆனால்
நான் தொடர்ந்து வானத்தைப் பார்த்துக்
கொண்டிருக்கிறேன். எனது ஆண்டவரே!
நான் அதிகமாய் ஒடுங்கிப் போகிறேன்.
எனக்கு உதவிட வாக்களிப்பீர்!”
15நான் என்ன சொல்ல முடியும். என்ன
நிகழும் என்று எனது ஆண்டவர் கூறினார்.
அவை நிகழ எனது எஜமானர் காரணமாக
இருப்பார். இந்தத் தொல்லைகளை நான்
எனது ஆத்துமாவிற்குள் வைத்திருந்தேன்.
எனவே இப்போது நான் எனது வாழ்வு
முழுவதும் பணிவுள்ளவனாக இருப்பேன்.
16எனது ஆண்டவரே! இந்தக் கடின
நேரத்தைப் பயன்படுத்தி எனது ஆவியை
மீண்டும் வாழச் செய்யும். என் ஆவி பல
மும் நலமும் பெற உதவும். நான் நலம்
பெற உதவும்! நான் மீண்டும் வாழ உதவும்!
17பார்! எனது தொல்லைகள் போகின்றன!
இப்போது எனக்கு சமாதானம் உள்ளது.
நீர் என்னை மிகவும் நேசிக்கிறீர். நான்
கல்லறையில் அழுகும்படி விடமாட்டீர்.
எனது பாவங்களையெல்லாம் மன்னித்தீர்.
எனது பாவங்களை வெகு தொலைவிற்கு
எறிந்தீர்.
18மரித்த ஜனங்கள் உம்மைப் புகழ்ந்து
பாடுவதில்லை. பாதாளத்திலுள்ள ஜனங்க
ளும் உம்மைத் துதிப்பதில்லை. மரித்த
ஜனங்கள் தமக்கு உதவுமாறு உம்மீது
நம்பிக்கை வைக்கமாட்டார்கள். அவர்கள்
தரையில் உள்ள பாதாளத்துக்குள் செல்கி
றார்கள். அவர்கள் மீண்டும் பேசமாட்டார்
கள்.
19இன்று என்னைப்போன்று உயிருடன்
இருக்கும் ஜனங்கள் உம்மைத் துதிக்கும்
ஜனங்களாக உள்ளனர். ஒரு தந்தை தன்
பிள்ளைகளிடம், “உம்மை நம்பமுடியும்”
என்று சொல்ல வேண்டும்.
20எனவே, நான் சொல்கிறேன்: “கர்த்தர்
என்னைக் காப்பாற்றினார் எனவே நாங்கள்
பாடுவோம். எங்கள் வாழ்நாள் முழுவதும்
கர்த்தருடைய ஆலயத்தில் பாடல்களை
இசைப்போம்.”

### பாபிலோனிலிருந்து தூதுவர்கள்

39 அந்த நேரத்தில், பலாதானின் மக
னான மெரோதாக் பலாதான் பாபி
லோனின் அரசனாக இருந்தான். எசேக்கி
யாவிற்கு மெரோதாக் கடிதங்களையும், அன்
பளிப்புகளையும் அனுப்பினான். எசேக்கியா
நோயுற்றிருந்து குணம் பெற்றதை மெரோ
தாக் கேள்விப்பட்டே அன்பளிப்புகளை
அனுப்பினான். 2இந்த அன்பளிப்புகள் எசேக்
கியாவை மிகவும் மகிழ்ச்சியடைய வைத்
தது. எனவே, எசேக்கியா தனது பொக்கி
ஷசாலையிலுள்ள விலையுயர்ந்தவற்றை
மெரோதாக்கின் ஆட்கள் பார்வையிட அனு
மதித்தான். அந்த ஆட்களிடம் எசேக்கியா
தனது செல்வங்களான வெள்ளி, தங்கம்,
எண்ணெய்வளம், விலைமதிப்புள்ள வாச
னைப் பொருட்கள் என அனைத்தையும்
காட்டினான். பிறகு அவன் போருக்குப்
பயன்படுத்தும் வாள்கள் மற்றும் கேடயங்
களையும் காட்டினான். தான் பாதுகாத்து
வைத்திருந்த அனைத்தையும் அவன்
அவர்களுக்குக் காட்டினான். அவன் தனது

---

**வசனம் 22** முத்திரிக்கப்பட்ட எபிரெய பிரதியில் இந்த வசனம் அதிகாரத்தின் கடைசி வரியில் உள்ளது.

**வசனம் 21** முத்திரிக்கப்பட்ட எபிரெய பிரதியில் இந்த வசனம் அதிகாரத்தின் கடைசி வரியில் உள்ளது.

வீட்டிலும், தனது நாட்டிலும் உள்ள எல்லா
வற்றையும் அவர்களுக்குக் காட்டினான்.
3தீர்க்கதரிசியான ஏசாயா, அரசனான
எசேக்கியாவிடம் சென்று, "இந்த ஆட்கள்
என்ன சொல்கிறார்கள்? இவர்கள் எங்கி
ருந்து வந்தார்கள்?" என்று கேட்டான்.

எசேக்கியா, "வெகு தொலைவிலுள்ள
நாட்டிலிருந்து இவர்கள் வந்தார்கள். இவர்
கள் பாபிலோனிலிருந்து வந்தார்கள்" என்று
கூறினான்.
4எனவே ஏசாயா அவனிடம் கேட்டான்,
"உனது வீட்டில் இவர்கள் என்ன பார்த்தார்
கள்?" என்று கேட்டான்.

எசேக்கியா, "இவர்கள் எனது அரண்
மனையில் உள்ள எல்லாவற்றையும் பார்த்
தார்கள். நான் எனது செல்வம் முழுவதையும்
காட்டினேன்" என்று கூறினான்.

5ஏசாயா எசேக்கியாவிடம், "சர்வ வல்
லமையுள்ள கர்த்தரிடமிருந்து வரும் வார்த்
தைகளைக் கவனி. 6எதிர்காலத்தில், உன்
அரண்மனையிலுள்ள அனைத்தும், இன்று
வரை உன் முற்பிதாக்கள் சேகரித்த உன்னிட
முள்ள அனைத்தும் பாபிலோனுக்கு எடுத்
துச் செல்லப்படும். எல்லா செல்வமும்
வெளியே எடுக்கப்படும். எதுவும் விடு
படாது! சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இதனைக் கூறினார். 7பாபிலோனின் அரசன்
உனது சொந்த மகன்களை எடுத்துச்
செல்வான்! பாபிலோன் அரசனின் அரண்
மனையில் உனது மகன்கள் வேலைக்
காரர்களாக இருப்பார்கள்" என்றான்.
8எசேக்கியா ஏசாயாவிடம்; "கர்த்தரிட
மிருந்து வந்த செய்தி நன்றாக உள்ளது"
என்று கூறினான். (எசேக்கியா இதனைச்
சொன்னான். ஏனென்றால், அவன் 'தான்
அரசனாக இருக்கும் போது தொல்லைகள்
இல்லாமல் சமாதானம் இருக்கும்' என்று
எண்ணினான்.)

### இஸ்ரவேலின் தண்டனை முடியும்

40 உனது தேவன் கூறுகிறார், "ஆறுதல்
படுத்துங்கள்! எனது ஜனங்களை
ஆறுதல் படுத்துங்கள்!
2எருசலேமுடன் அன்பாகப் பேசுங்கள்.
உனது சேவைக்கான காலம் முடிந்து விடுகி
றது. 'உனது பாவங்களுக்கான விலையைக்
கொடுத்துவிட்டாய்'" என்று எருசலேமிடம்
கூறு. கர்த்தர் எருசலேமை அவள் செய்த
ஒவ்வொரு பாவத்திற்கும் இருமுறை தண்
டித்தார்.
3கவனி! அங்கே ஒருவன் சத்தமிட்டுக்
கொண்டிருக்கிறான்! "கர்த்தருக்காக இந்த
வனாந்திரத்தில் ஒரு பாதையை தயார்
செய்யுங்கள்! நமது தேவனுக்காக வனாந்
திரத்தில் ஒரு சாலை அமையுங்கள்!
4ஒவ்வொரு பள்ளத்தாக்கையும் நிரப்புங்
கள். ஒவ்வொரு மலையையும் பள்ளத்
தாக்கையும் சமப்படுத்துங்கள். வளைவான
சாலைகளை நேராக்குங்கள். கரடு முரடான
சாலையை மென்மையாக்குங்கள்.
5பிறகு, கர்த்தருடைய மகிமை வெளிப்
படும். கர்த்தருடைய மகிமையை ஜனங்கள்
அனைவரும் காண்பார்கள். ஆம், கர்த்தர்
அவராகவே இவற்றைச் சொன்னார்!"
6ஒரு குரல் சொன்னது, "பேசு!" எனவே
ஒருவன் கேட்டான், "நான் என்ன சொல்ல
வேண்டும்?" அந்த குரல் சொன்னது, "ஜனங்
கள் என்றென்றைக்கும் வாழமாட்டார்கள்.
அனைத்து ஜனங்களும் புல்லைப் போன்
றவர்கள். அவர்களது நன்மை ஒரு காட்டு
மலர் போன்றது.
7கர்த்தரிடமிருந்து ஒரு வல்லமையான
காற்று புல்மேல் வீசும். அந்த புல்களும்
காட்டு மலர்களும் வாடி செத்துப்போகும்.
உண்மையாகவே அனைத்து ஜனங்களும்
புல்லைப் போன்றவர்கள்."
8புல் வாட்டம் அடையும். பூக்கள் வாடும்.
ஆனால், தேவனுடைய வார்த்தை என்றென்
றும் தொடர்ந்து இருக்கும்."

### மீட்பு: தேவனுடைய நற்செய்தி

9சீயோனே! உன்னிடம் சொல்வதற்கான
நற்செய்திகள் உள்ளன. உயரமான மலைக்கு
மேலே போய் நற்செய்திகளை சாத்தமாய்
சொல்! எருசலேமே! உன்னிடம், சொல்வதற்
கான நற்செய்திகள் உள்ளன அஞ்ச
வேண்டாம். சாந்தமாய் பேசு! யூதாவிலுள்ள
அனைத்து நகரங்களிலும் இந்தச் செய்தி
களைக் கூறு: "பார், உன் தேவன் இங்கே
இருக்கிறார்!
10எனது கர்த்தராகிய ஆண்டவர் வல்ல
மையோடு வருகிறார். எல்லா ஜனங்க
ளையும் ஆள அவர் தமது வல்லமையைப்
பயன்படுத்துவார். கர்த்தர் தமது ஜனங்
களுக்காக விருதுகளைக் கொண்டுவருவார்.
அவரோடு அவர்களது பலன் இருக்கும்.
11ஒரு மேய்ப்பன் தனது ஆடுகளை
வழிநடத்திச் செல்வது போன்று கர்த்தர் தமது
ஜனங்களை வழிநடத்துகிறார். கர்த்தர் தமது
வல்லமையைப் பயன்படுத்தி அவரது
ஆடுகளை ஒன்று சேர்ப்பார். கர்த்தர் சிறிய
ஆடுகளை எடுத்து தனது கைகளில் வைத்
துக்கொள்வார். அவற்றின் தாய் ஆடுகள்
அவர் பின்னால் நடக்கும்.

### தேவன் உலகைப் படைத்தார்; அவர் அதனை ஆளுகிறார்

12யார் கடல்களைக் கைப்பிடியால்
அளந்தார்கள்? யார் வானத்தை கையளவால்
அளந்தார்கள்? யார் பூமியில் உள்ள
மண்ணைக் கிண்ணத்தால் அளந்தார்கள்?
யார் அளவு கோல்களால் மலைகளையும்
பாறைகளையும் அளந்தார்கள்? அது கர்த்தர்
தான்.

[13]கர்த்தருடைய ஆவியிடம் அவர் என்ன
செய்யவேண்டும் என்று யாரும் சொல்ல
வில்லை. கர்த்தரிடம் அவர் எப்படிச்
செய்யவேண்டும் என யாரும் கூறவில்லை.
[14]கர்த்தர் யாருடைய உதவியையாவது
கேட்டாரா? கர்த்தருக்கு நேர்மையாக இருக்
கும்படி யாராவது கற்பித்தார்களா? கர்த்த
ருக்கு அறிவை யாராவது கற்பித்தார்களா?
கர்த்தருக்கு ஞானத்தோடு இருக்கும்படி யார்
கற்பித்தது? இல்லை! கர்த்தர் இவற்றைப்பற்றி
ஏற்கெனவே தெரிந்திருக்கிறார்.
[15]பார், நாடுகள் எல்லாம் வாளியில் ஒரு
சிறு துளி போன்றது. வெகு தொலை
விலுள்ள நாடுகளைக் கர்த்தர் எடுத்துக்
கொண்டால் அவரது தராசில் அவற்றை
வைத்தால் அவை மணலின் சிறு பொடிகள்
போன்று இருக்கும்.
[16]லீபனோனில் உள்ள அனைத்து மரங்
களும் கர்த்தருக்கு எரித்துப்போட போதாது.
லீபனோனில் உள்ள அனைத்து மிருகங்க
ளும் பலிக்காக கொல்வதற்குப் போதாது.
[17]தேவனோடு ஒப்பிடும்போது உலகி
லுள்ள அனைத்து நாடுகளும் ஒன்றுமில்லை.
தேவனோடு ஒப்பிடும்போது அனைத்து
நாடுகளும் ஈடு ஒன்றுமே இல்லாமல் போகும்.

### தேவன் எப்படிப்பட்டவர் என்று ஜனங்களால் கற்பனை செய்ய முடியாது

[18]எவற்றோடும் தேவனை ஒப்பிட முடி
யுமா? முடியாது! தேவனுடைய படத்தை
உருவாக்க முடியுமா? முடியாது!
[19]ஆனால், சில ஜனங்கள் பாறை அல்லது
மரத்தால் சிலைகள் செய்து அவர்கள்
அதனைத் தெய்வங்கள் என்று அழைக்கின்ற
னர். ஒரு வேலைக்காரன் ஒரு சிலையைச்
செய்கிறான். பிறகு, இன்னொரு வேலைக்
காரன் அதனைத் தங்கத்தால் மூடுகிறான்.
வெள்ளிச் சங்கிலிகளையும் அதற்காகச்
செய்கிறான்.
[20]அடிப்பகுதிக்காக அவன் ஒரு சிறப்பான
மரத்தைத் தேர்ந்தெடுக்கிறான். அது உளுத்
துப் போகாத மரவகையைச் சேர்ந்தது.
பிறகு, அவன் ஒரு சிறந்த மரத்தச்சனைக்
கண்டுபிடிக்கிறான். அந்த வேலைக்காரன்
விழாமல் இருக்கிற ஒரு தெய்வம் செய்கி
றான்.
[21]நீங்கள் உண்மையை நிச்சயமாக
அறிவீர்கள், இல்லையா? நீங்கள் நிச்சயமாகக்
கேள்விப்பட்டிருக்கிறீர்கள்! உங்களுக்கு நிச்ச
யமாக ஒருவன் நீண்ட காலத்துக்குமுன்
சொன்னான்! இந்த உலகத்தைப் படைத்தவர்
யார் என்று நிச்சயமாக நீ புரிந்திருக்கிறாய்!
[22]கர்த்தரே உண்மையான தேவனாய்
இருக்கிறார்! அவர் பூமி வளையத்தின்மேல்
அமர்ந்திருக்கிறார். அவரோடு ஒப்பிடும்
போது, ஜனங்கள் வெட்டுக்கிளிகளைப்
போலிருக்கிறார்கள். அவர் வானங்களை
ஒரு துண்டு துணியைப்போல் பரப்புகிறார்.
அவர் வானங்களைக் குடியிருப்பதற்கான
கூடாரமாக்குகிறார்.
[23]ஆளுவோரை அவர் முக்கியமற்றவர்க
ளாகச் செய்கிறார். அவர் இந்த உலகத்தில்
உள்ள நீதிபதிகளை முழுமையாகப் பயனற்
றவர்களாகச் செய்கிறார்.
[24]ஆளுவோர் தாவரங்களைப் போன்ற
வர்கள் அவர்கள் தரையில் நடப்படுகி
றார்கள். ஆனால், அவை தரைக்குள் தன்
வேர்களைச் செலுத்துவதற்குமுன், தேவன்
அத்தாவரங்களின்மேல் ஊதுகிறார். அவை
செத்து காய்ந்து போகின்றன. பெருங்காற்று
அவற்றை புல்லைப்போல அடித்துப்போகும்.
[25]பரிசுத்தமானவர் (தேவன்) சொல்கிறார்:
“என்னை எதனோடும் உன்னால் ஒப்பிட
முடியுமா? முடியாது. எனக்கு இணையாக
ஒருவரும் இல்லை.
[26]மேலே வானங்களைப் பாருங்கள். இந்த
நட்சத்திரங்களை எல்லாம் படைத்தது யார்?
வானத்தில் இந்தப் படைகளை எல்லாம்
படைத்தது யார்? ஒவ்வொரு நட்சத்திரங்
களின் பெயரும் யாருக்கு தெரியும்? உண்
மையான தேவன் மிக்க பலமும் வல்லமை
யும் கொண்டவர். எனவே, நட்சத்திரங்களில்
எதுவும் குறையாது.”
[27]யாக்கோபே, இது உண்மை. இஸ்ர
வேலே, நீ இதனை நம்ப வேண்டும்!
எனவே, நீ எதற்காக இதைக் கூறுகிறாய்?
“கர்த்தர் நான் வாழும் வழியை அறியமாட்
டார். தேவன் என்னைக் கண்டுபிடித்துத்
தண்டிக்க மாட்டார்.”
[28]தேவனாகிய கர்த்தர் மிகவும் ஞான
முள்ளவர் என்று நீ உறுதியாகக் கேள்விப்
பட்டு அறிந்திருக்கிறாய். ஜனங்கள்
அவருக்கு தெரிந்ததையெல்லாம் கற்றுக்
கொள்ள இயலாது. கர்த்தர் சோர்வடைய
மாட்டார். அவருக்கு ஓய்வு தேவையில்லை.
கர்த்தர் தொலைதூர இடங்களைப் பூமியில்
படைத்தார். கர்த்தர் என்றென்றும் ஜீவிக்
கிறார்.
[29]கர்த்தர் பலவீனமானவர்கள் பலம் பெற
உதவுகிறார். ஜனங்கள் வல்லமையில்லாமல்
இருந்தால் வல்லமை பெற கர்த்தர் காரண
மாகிறார்.
[30]இளைஞர்கள் சோர்வடைந்து ஓய்வு
தேவை என நினைக்கின்றனர். சிறு பையன்
களும்கூடத் தடுமாறி விழுகிறார்கள்.
[31]ஆனால், கர்த்தரை நம்புகிற ஜனங்கள்
புதிய சிறகுகள் முளைக்கின்ற கழுகுகளைப்
போல மீண்டும் பலம் பெறுகின்றனர்.
இந்த ஜனங்கள் ஓடினாலும் இளைப்படைய
மாட்டார்கள். இந்த ஜனங்கள் நடந்தாலும்
சோர்வடையமாட்டார்கள்.

### கர்த்தரே நித்திய சிருஷ்டிகர்

41 கர்த்தர் கூறுகிறார், “தூரத்திலுள்ள
நாடுகளே, அமைதியாக இருங்கள்
என்னிடம் வாருங்கள்! நாடுகளே மறுபடியும்

தைரியம் கொள்ளுங்கள். என்னிடம் வந்து
பேசுங்கள். நாம் சந்தித்து கூடுவோம். யார்
சரியென்று முடிவு செய்வோம்.
2 இந்த வினாக்களுக்கு என்னிடம் பதில்
சொல்லுங்கள்:
கிழக்கிலிருந்து வந்துகொண்டிருக்கிற
மனிதனை எழுப்பியது யார்? நன்மையா
னது அவரோடு நடக்கிறது. அவர் தமது
வாளைப் பயன்படுத்தி நாடுகளைத் தாக்கு
கிறார். அவைகள் தூசிபோல ஆகின்றன.
அவர் தமது வில்லைப் பயன்படுத்தி அரசர்
களை வென்றார். அவர்கள் காற்றால் அடித்
துச் செல்லப்படும் துரும்புகளைப் போன்று
ஓடிப்போனார்கள்.
3 அவர் படைகளைத் துரத்துகிறார். அவர்
காயப்படுத்தவில்லை. இதற்கு முன்னால்
போகாத இடங்களுக்கு எல்லாம் அவர்
போகிறார்.
4 இவை நிகழக் காரணமாக இருந்தது யார்?
இதனைச் செய்தது யார்? தொடக்கத்தி
லிருந்து அனைத்து ஜனங்களையும் அழைத்
தது யார்? கர்த்தராகிய நான் இதனைச்
செய்தேன். கர்த்தராகிய நானே முதல்வர்!
தொடக்கத்திற்கு முன்னரே நான் இங்கே
இருந்தேன். எல்லாம் முடியும்போதும் நான்
இங்கே இருப்பேன்.
5 வெகு தொலைவிலுள்ள இடங்களே
பாருங்கள்; பயப்படுங்கள்! பூமியிலுள்ள தொ
லைதூர இடங்களே அச்சத்தால் நடுங்குங்கள்.
இங்கே வந்து என்னைக் கவனியுங்கள்!”
அவர்கள் வந்தார்கள்.
6 “தொழிலாளிகள் ஒருவருக்கு ஒருவர்
உதவினார்கள். அவர்கள் பலம் பெற
ஒருவருக்கொருவர் உற்சாகப்படுத்தினார்கள்.
7 ஒரு வேலைக்காரன் சிலை செதுக்க மரம்
வெட்டினான். அவன் தங்க வேலை
செய்பவனை உற்சாகப்படுத்தினான். இன்
னொரு வேலைக்காரன் சுத்தியலைப்
பயன்படுத்தி உலோகத்தை மென்மைப்படுத்தி
னான். பிறகு, அந்த வேலைக்காரன் அடைக்
கல்லில் வேலை செய்பவனை உற்சாகப்
படுத்துகிறான். இந்த இறுதி வேலைக்காரன்,
‘இந்த வேலை நன்று. இந்த உலோகம்
வெளியே வராது’ என்று கூறுகிறான்.
எனவே, அவன் சிலையை ஒரு பீடத்தின்
மேல் அசையாமல் ஆணியால் இறுக்கு
கிறான். அந்தச்சிலை கீழே விழாது. அது
எப்பொழுதும் அசையாது!

### கர்த்தர் மாத்திரமே நம்மைக் காப்பாற்ற முடியும்

8 கர்த்தர் சொல்கிறார், “இஸ்ரவேலே, நீ
எனது தாசன். யாக்கோபே, நான் உன்னைத்
தேர்ந்தெடுத்தேன்.
ஆபிரகாமின் குடும்பத்திலிருந்து நீ வந்
தாய், நான் ஆபிரகாமை நேசிக்கிறேன்.
9 பூமியில் நீங்கள் வெகு தொலைவில்
இருந்தீர்கள். நீங்கள் தொலைதூர நாட்டில்
இருந்தீர்கள். ஆனால் நான் உன்னிடம்
தேடிவந்து உன்னை அழைத்துச் சொன்
னேன், ‘நீ எனது ஊழியன். நான் உன்னைத்
தேர்ந்தெடுத்தேன். நான் உன்னைத் தள்ளி
விடவில்லை!
10 “கவலைப்படாதே. நான் உன்னோடு
இருக்கிறேன். பயப்படாதே. நான் உனது
தேவன். நான் உன்னைப் பலமுள்ளவனாகச்
செய்திருக்கிறேன். நான் உனக்கு உதவுவேன்.
நான் எனது நன்மையாகிய வலது கையால்
உனக்கு உதவி செய்வேன்.
11 பார், சில ஜனங்கள் உன் மீது கோபத்
தோடு இருக்கிறார்கள். ஆனால் அவர்கள்
அவமானம் அடைவார்கள். உங்கள் பகைவர்
கள் மறைந்து தொலைந்து போவார்கள்.
12 நீங்கள் உங்களுக்கு எதிரான ஜனங்
களைத் தேடுவீர்கள். ஆனால் அவர்களை
உங்களால் காணமுடியாது. உங்களுக்கு எதி
ராகப் போரிடுகிற அனைவரும் முழுவது
மாக மறைந்து போவார்கள்.
13 நான் உனது தேவனாகிய கர்த்தர்.
நான் உனது வலது கையைப் பற்றியிருக்
கிறேன். நான் உனக்குச் சொல்கிறேன்:
பயப்படாதே! நான் உனக்கு உதவுவேன்.
14 விலையேறப்பெற்ற யூதாவே, பயப்
படாதே. எனது அருமை இஸ்ரவேல் ஜனங்
களே! கலங்க வேண்டாம்! நான் உங்களுக்கு
உண்மையாகவே உதவுவேன்.” கர்த்தர் தாமா
கவே இவற்றைக் கூறினார். இஸ்ரவேலின்
பரிசுத்தரும் (தேவன்) உன்னைக் காப்பாற்று
கிறவரும் இதனைக் கூறுகிறார்.
15 “பார்! நான் உன்னை போரடிப்பதற்கான
புதிய கருவியாக்குவேன். அது கூர்மையான
பற்களை உடையது. விவசாயிகள் இதனைப்
பயன்படுத்தி போரடிப்பார்கள். அவர்கள்
தானியத்தை அதிலிருந்து பிரிப்பார்கள். நீ
மலைகளின்மேல் நடந்து அவற்றை நசுக்கு
வாய். நீ குன்றுகளைப் பதர்களைப் போன்று
ஆக்கிவிடுவாய்.
16 நீ அவற்றைக் காற்றில் தூற்றி விடுவாய்.
அவற்றைக் காற்று அடித்துச் சென்று,
சிதறடித்துவிடும். பிறகு, நீ கர்த்தருக்குள்
மகிழ்ச்சியுடன் இருப்பாய். இஸ்ரவேலின்
பரிசுத்தமானவரைப்பற்றி (தேவன்) நீ மிகவும்
பெருமை அடைவாய்.”
17 “ஏழ்மையும் தேவையும் கொண்ட
ஜனங்கள் தண்ணீருக்காக அலைவார்கள்.
ஆனால் அவர்கள் எதையும் கண்டுகொள்ள
மாட்டார்கள். அவர்கள் தாகமாக இருக்கி
றார்கள். அவர்களின் நாக்கு உலர்ந்து
போயிற்று. அவர்களின் ஜெபத்திற்கு இஸ்ர
வேலின் தேவனும் கர்த்தருமாகிய நான்
பதில் சொல்வேன். நான் அவர்களை விட
மாட்டேன். அவர்கள் மரிக்கவும் விட
மாட்டேன்.
18 வறண்ட மலைகளில் நதிகளை நான்
பாயச் செய்வேன். பள்ளத்தாக்குகளில் நீரூற்
றுகளை நான் எழச்செய்வேன். வனாந்திரங்

களை தண்ணீர் நிறைந்த ஏரியாக நான்
மாற்றுவேன். வறண்ட நிலங்களில் நீரூற்று
கள் இருக்கும்.
[19]வனாந்திரங்களில் மரங்கள் வளரும்.
அங்கு கேதுரு மரங்களும், சித்தீம் மரங்களும்,
ஒலிவ மரங்களும், சைப்பிரஸ் மரங்களும்,
ஊசி இலை மரங்களும், பைன் மரங்களும்
இருக்கச் செய்வேன்.
[20]ஜனங்கள் இவற்றைப் பார்ப்பார்கள்.
கர்த்தருடைய வல்லமை இவற்றைச் செய்தது
என்று அவர்கள் அறிவார்கள். ஜனங்கள்
இவற்றைப் பார்ப்பார்கள். அவர்கள் புரிந்து
கொள்ளத் தொடங்குவார்கள், இஸ்ரவேலின்
பரிசுத்தமானவர் (தேவன்) இவற்றைச்
செய்தார்."

### பொய்த் தெய்வங்களுக்குக் கர்த்தர் சவால் விடுகிறார்

[21]யாக்கோபின் அரசரான கர்த்தர், "வா,
உனது வாதங்களைக் கூறு. உனது சான்று
களைக் காட்டு. சரியானவற்றை நாம் முடிவு
செய்வோம். [22]உங்கள் சிலைகள் (பொய்த்
தெய்வங்கள்) வந்து என்ன நடந்துகொண்டி
ருக்கிறது என்பதைச் சொல்ல வேண்டும்.
"தொடக்கத்தில் என்ன நடந்தது? எதிர்
காலத்தில் என்ன நடக்கும்? எங்களிடம்
கூறு. நாங்கள் கடினமாகக் கவனிப்போம்.
பிறகு அடுத்து என்ன நடக்கும் என்பதை
அறிவோம். [23]என்ன நடக்கும் என்பதை
நாங்கள் பார்க்கும்படி எங்களுக்குக் கூறுங்
கள். பிறகு நாங்கள் உங்களை உண்மையான
தெய்வங்கள் என்று நம்புவோம். ஏதாவது
செய்யுங்கள்! எதை வேண்டுமானாலும்
செய்யுங்கள், நல்லதோ அல்லது கெட்டதோ!
பிறகு நீங்கள் உயிரோடு இருப்பதாக நாங்கள்
பார்ப்போம். நாங்கள் உங்களைப் பின்பற்று
வோம்.
[24]"பாருங்கள். பொய்த் தெய்வங்களான
நீங்கள் ஒன்றுமில்லாமல் இருக்கிறீர்கள்! உங்
களால் எதுவும் செய்யமுடியாது! அரு
வருப்பானவன் மட்டுமே உங்களை வழிபட
விரும்புவான்!"

### கர்த்தர் தாமே ஒரே தேவன் என நிரூபிக்கிறார்

[25]"வடக்கே நான் ஒருவனை எழுப்
பினேன் அவன் சூரியன் உதிக்கிற கிழக்கே
இருந்து வந்துகொண்டிருக்கிறான். அவன்
எனது நாமத்தைத் தொழுதுகொள்கிறான்.
பானைகளைச் செய்பவன் களிமண்ணை
மிதிப்பதுபோல அந்தச் சிறப்பானவன் அர
சர்களை அழிப்பான் (மிதிப்பான்)."
[26]இது நடைபெறுவதற்கு முன்னால் யார்
இதைப்பற்றிச் சொன்னது. நாம் அவனைத்
தேவன் என்று அழைப்போம். எங்களுக்கு
இவற்றை உனது சிலைகளில் ஒன்று சொன்
னதா? இல்லை! சிலைகளில் எதுவும் எதை
யும் சொல்லவில்லை. அந்தச் சிலைகள்
ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. அந்தப்
பொய்த் தெய்வங்கள் நீங்கள் சொல்லும்
வார்த்தைகளையும் கேட்க முடியாது.
[27]கர்த்தராகிய நானே சீயோனிடம் இதைப்
பற்றிச் சொன்ன முதல் நபர். இந்தச்
செய்திகளோடு ஒரு தூதுவனை நான்
எருசலேமிற்கு அனுப்பினேன். "பாருங்கள்,
உங்கள் ஜனங்கள் திரும்பி வந்து கொண்டி
ருக்கிறார்கள்!"
[28]நான் அந்தப் பொய்த் தெய்வங்களைப்
பார்த்தேன். அவைகளில் ஒன்றும் எதுவும்
சொல்லும் வகையில் ஞானமுள்ளவையல்ல.
அவைகளிடம் நான் கேள்விகள் கேட்டேன்,
அவைகள் ஒரு வார்த்தையும் சொல்ல
வில்லை!
[29]அந்தத் தெய்வங்கள் அனைத்தும்
ஒன்றுமில்லாதவைகள்! அவைகளால் எது
வும் செய்யமுடியாது! அந்தச் சிலைகள்
முழுமையாகப் பயனற்றவை!

### கர்த்தருடைய விசேஷ ஊழியன்

42 "என் தாசனைப் பாருங்கள்! அவரை
நான் ஆதரிக்கிறேன். நான் தேர்ந்
தெடுத்த ஒருவர் அவரே. நான் அவரை
மிகவும் விரும்புகிறேன். அவரில் எனது
ஆவியை வைக்கிறேன். அவர் நாடுகளுக்கு
நியாயமாக நீதி வழங்குவார்.
[2]அவர் தெருக்களில் உரக்க பேசமாட்டார்
அவர் கூக்குரலிடவும்மாட்டார்.
[3]அவர் சாந்த குணமுள்ளவர். அவர்
நெரிந்த நாணலைக்கூட முறிக்கமாட்டார்.
அவர் மங்கி எரிகிற திரியைக்கூட
அணைக்கமாட்டார். அவர் நியாயத்தைத்
தீர்த்து உண்மையைக் கண்டுகொள்வார்.
[4]உலகத்தில் நியாயத்தைக் கொண்டு
வரும்வரை அவர் பலவீனராகவோ அல்லது
நொறுக்கப்படுபவராகவோ ஆவதில்லை.
ஜனங்கள் தொலைதூர இடங்களிலிருந்து
அவரது போதனைகளை நம்புவார்கள்."

### கர்த்தரே ஆளுகிறார்: உலகத்தை உருவாக்கினார்

[5]உண்மையான தேவனாகிய கர்த்தர்
இவற்றைச் சொன்னார். (கர்த்தர் வானங்க
ளைச் உருவக்கினார். கர்த்தர் பூமியின்மேல்
வானத்தை விரித்தார். அவர் பூமியின்மேல்
எல்லாவற்றையும் செய்தார். கர்த்தர் பூமியி
லுள்ள அனைத்து ஜனங்களுக்கும் சுவாசத்
தைக் கொடுக்கிறார். கர்த்தர் பூமியில் நடமா
டுகிற ஒவ்வொரு மனிதருக்கும் ஆவியைக்
கொடுக்கிறார்.)
[6]"கர்த்தராகிய நான், சரியானதைச் செய்ய
உன்னை அழைத்தேன். நான் உன் கையைப்
பற்றிக்கொள்வேன். நான் உன்னைப்
பாதுகாப்பேன். நான் ஜனங்களோடு ஏற்படுத்
திக்கொண்ட உடன்படிக்கையை பிறருக்குக்
காட்டுவதற்கு வெளிப்புற அடையாளமாக

நீ இருப்பாய். அனைத்து ஜனங்களுக்கும்
ஒளி வீசும் விளக்காக நீ இருப்பாய்.
7குருடர்களின் கண்களை நீ திறப்பாய்,
அவர்களால் பார்வையைப் பெறமுடியும்.
சிறையில் இருக்கிறவர்களை நீ விடு
விப்பாய். பலர் இருளில் இருக்கிறார்கள்.
அவர்களை அந்தச் சிறையில் இருந்து
வெளியே அழைத்து வருவாய்.
8"நானே கர்த்தர்! எனது நாமம்
யேகோவா! நான் எனது மகிமையை
வேறு ஒருவனுக்கும் கொடேன். நான்
எனக்குரிய பாராட்டை சிலைகளுக்கு
(பொய்த் தெய்வங்களுக்கு) கொடேன்.
9தொடக்கத்தில் சில காரியம் நடைபெறும்
என்று சொன்னேன். அவை நடந்தன.
இப்போது, இது நடக்கும் முன்னால்! நான்
சிலவற்றைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருக்
கிறேன். இவை எதிர்காலத்தில் நடைபெறும்.

## தேவனைத் துதிக்கும் ஒரு பாடல்

10ஒரு புதிய பாடலைக் கர்த்தருக்குப்
பாடுங்கள். தொலைதூர நாடுகளில் உள்ள
ஜனங்களே, கடலில் பயணம் செய்கிற
ஜனங்களே, கடலில் உள்ள மிருகங்களே,
தொலைதூர இடங்களில் உள்ள ஜனங்களே,
கர்த்தரைத் துதியுங்கள்.
11வனாந்திரங்களே, நகரங்களே, கேதாரிய
ரின் வயல்களே, கர்த்தரைத் துதியுங்கள்.
சீலோவில் வாழுகின்ற ஜனங்களே! மகிழ்ச்சி
யோடு பாடுங்கள். உங்கள் மலை உச்சியில்
இருந்து பாடுங்கள்.
12கர்த்தருக்கு மகிமையைக் கொடுங்கள்.
தொலைதூர நாடுகளில் உள்ள ஜனங்களே,
அவரைத் துதியுங்கள்.
13கர்த்தர் ஒரு பலம் பொருந்திய வீரனைப்
போல வெளியே போவார். அவர் போர்
செய்யத் தயாராக உள்ள வீரனைப் போன்றி
ருப்பார். அவர் மிகுந்த கிளர்ச்சியுள்ளவராக
இருப்பார். அவர் உரத்த குரலில் சத்தமி
டுவார். அவரது பகைவரைத் தோற்கடிப்பார்.

## தேவன் மிகவும் பொறுமையானவர்

14"நீண்ட காலமாக நான் எதையும்
சொல்லவில்லை. என்னை நான் கட்டுப்
படுத்திக் கொண்டேன். நான் எதுவும்
சொல்லவில்லை. ஆனால், இப்போது நான்
அலறுகிறேன், ஒரு பெண் பிள்ளை பெறும்
போது கதறுவதுபோல, நான் கடினமாகவும்
உரக்கவும் மூச்சு விடுகிறேன்.
15நான் மலைகளையும் குன்றுகளையும்
அழிப்பேன். நான் அங்கே வளருகின்ற
தாவரங்களை வாடச் செய்வேன். நான்
ஆறுகளை வறண்ட நிலமாக்குவேன். நான்
தண்ணீருள்ள குளங்களையும் வறளச்
செய்வேன்.
16பிறகு, நான் குருடர்களை அவர்கள்
அதுவரை அறியாத வழிகளில் நடத்திச்
செல்வேன். நான் குருடர்களை அவர்கள்
அதுவரை சென்றிராத இடங்களுக்கு அழைத்
துச் செல்வேன். நான் அவர்களுக்காக
இருளை வெளிச்சமாக்குவேன். நான் கரடு
முரடான பாதையை மென்மையாக்குவேன்.
நான் வாக்களித்ததைச் செய்வேன்! நான்
எனது ஜனங்களை விட்டுவிடமாட்டேன்.
17ஆனால், சிலர் என்னைப் பின்பற்று
வதை நிறுத்திவிட்டார்கள். அவர்களிடம்
பொன்னால் மூடப்பட்ட சிலைகள் இருக்
கின்றன. 'நீங்களே எங்கள் தெய்வங்கள்'
என்று அவர்கள் அந்தச் சிலைகளிடம்
கூறுகின்றனர். அந்த ஜனங்கள் அவர்களது
பொய்த் தெய்வங்களை நம்புகின்றனர்.
ஆனால் அந்த ஜனங்கள் ஏமாற்றப்படு
வார்கள்.

## தேவனுக்குச் செவிசாய்க்க இஸ்ரவேலர்கள் மறுத்தார்கள்

18செவிடர்களே, நான் சொல்வதைக்
கேளுங்கள்! குருடர்களே, என்னைப் பாருங்
கள், உங்களால் காணமுடியும்!
19உலகத்தில் என் தாசனே மிகவும் குரு
டன். இந்த உலகத்திற்கு நான் அனுப்பிய
தூதுவனே செவிடன். நான் உடன்படிக்கை
செய்துகொண்ட 'கர்த்தருடைய தாசனே'
மிகவும் குருடனாயிருக்கின்றான்.
20எனது தாசன் அவன் என்ன செய்ய
வேண்டும் என்பதைக் காண்கின்றான்.
ஆனால் அவன் எனக்குக் கீழ்ப்படியவில்லை.
அவன் தனது காதுகளால் கேட்க முடியும்.
ஆனால் அவன் நான் சொல்வதைக் கேட்க
மறுக்கிறான்."
21கர்த்தர் தமது தாசன் நல்லவனாக
இருக்க விரும்புகிறார். கர்த்தர் தமது அற்புத
மான போதனைகளை மகிமைப்படுத்த
விரும்புகிறார்.
22ஆனால் ஜனங்களைப் பாருங்கள். மற்ற
ஜனங்கள் அவர்களைத் தோற்கடித்திருக்கி
றார்கள். அவர்களிடமிருந்து பொருட்களைத்
திருடியிருக்கிறார்கள். இளைஞர்களெல்லாம்
பயப்படுகிறார்கள். அவர்கள் சிறைகளுக்குள்
அடைபட்டிருக்கிறார்கள். ஜனங்கள் அவர்க
ளிடமிருந்து பணத்தை எடுத்திருக்கிறார்கள்.
அவர்களைக் காப்பாற்ற அங்கே எவரு
மில்லை. மற்ற ஜனங்கள் அவர்களின்
பணத்தை எடுத்தார்கள். "அதனைத்
திருப்பிக் கொடு" என்று சொல்ல அங்கே
எவரு மில்லை.
23தேவனுடைய வார்த்தைகளை உங்களில்
எவரும் கவனித்தீர்களா? இல்லை! ஆனால்,
நீங்கள் அவரது வார்த்தைகளை மிகவும்
கவனமாகக் கேட்க வேண்டும். என்ன
நடந்தது என்று சிந்திக்க வேண்டும். 24யாக்
கோபு மற்றும் இஸ்ரவேலிடமிருந்து செல்
வத்தை எடுத்துக்கொள்ள ஜனங்களை
அனுமதித்தது யார்? கர்த்தர் அவர்களை
அனுமதித்தார். நாம் கர்த்தருக்கு எதிராகப்
பாவம் செய்தோம். எனவே கர்த்தர் நமது

செல்வங்களை எடுத்துக்கொள்ளும்படி அனு
மதித்துள்ளார். கர்த்தர் விரும்பிய வழியில்
இஸ்ரவேல் ஜனங்கள் வாழவில்லை. அவரது
போதனைகளையும் இஸ்ரவேல் ஜனங்கள்
கவனிக்கவில்லை. 25எனவே, கர்த்தர் அவர்
கள்மீது கோபங்கொண்டார். கர்த்தர் அவர்
களுக்கு எதிராக வலிமைமிக்கப் போர்களை
உண்டாக்கினார். இஸ்ரவேல் ஜனங்களைச்
சுற்றி நெருப்பு சூழ்ந்ததுபோல் இருந்தது.
ஆனால் அவர்கள் நிகழ்வதை அறியாமல்
இருந்தார்கள். அவர்கள் எரிந்துகொண்டிருப்
பதுபோல் இருந்தனர். ஆனால் அவர்கள்
நிகழ்ந்ததைப் புரிந்துகொள்ள முயற்சி செய்ய
வில்லை.

## தேவன் எப்போதும் தமது ஜனங்களோடு இருக்கிறார்

43 யாக்கோபே! கர்த்தர் உன்னைப்
படைத்தார்! இஸ்ரவேலே! கர்த்தர்
உன்னைப் படைத்தார்! இப்போது கர்த்தர்
கூறுகிறார், "அஞ்சாதே! நான் உன்னைக்
காப்பாற்றினேன். நான் உனக்குப் பெயரிட்
டேன். நீ என்னுடையவன். 2உனக்குத்
தொல்லைகள் இருக்கும்போது நான்
உன்னோடு இருக்கிறேன். நீ ஆறுகளைக்
கடக்கும்போது, நீ பாதிக்கப்படமாட்டாய்.
நீ நெருப்பினூடே நடக்கும்போது, நீ
எரிக்கப்படமாட்டாய். நெருப்புச் ஜூவாலை
கள் உன்னைப் பாதிக்காது. 3ஏனென்றால்,
கர்த்தராகிய நான் உனது தேவன். இஸ்ர
வேலின் பரிசுத்தரான நான் உனது மீட்பர்.
உன்னை மீட்கும் பொருளாக எகிப்தைக்
கொடுத்தேன். உன்னை என்னுடையவ
னாக்க எத்தியோப்பியாவையும், சேபாவை
யும் கொடுத்தேன். 4நீ எனக்கு மிகவும்
முக்கியமானவன். எனவே, நான் உன்னைப்
பெருமைப்படுத்துவேன். நான் உன்னை
நேசிக்கிறேன். நான் (உன் ஜீவனுக்குப்
பதிலாக) அனைத்து ஜனங்களையும் தேசங்க
ளையும் கொடுப்பேன். எனவே நீ வாழ
லாம்."

## தேவன் அவரது பிள்ளைகளை வீட்டிற்கு அழைப்பார்

5"அஞ்ச வேண்டாம்! நான் உன்னோடு
இருக்கிறேன். நான் உனது பிள்ளைகளைச்
சேர்த்து அவர்களை உன்னிடம் அழைத்து
வருவேன். நான் அவர்களைக் கிழக்கிலிருந்
தும் மேற்கிலிருந்தும் ஒன்று சேர்ப்பேன்.
6நான் வடக்குக்குச் சொல்வேன், எனது
ஜனங்களை எனக்குக் கொடு. தெற்குக்கு
நான் சொல்லுவேன், எனது ஜனங்களைச்
சிறையில் வைக்காதீர்கள். தொலைதூர
இடங்களில் இருந்து எனது மகன்களையும்,
மகள்களையும் என்னிடம் கொண்டு வாருங்
கள்! 7எனக்குரிய அனைத்து ஜனங்களையும்,
என்னிடம் கொண்டு வாருங்கள். எனது
நாமத்தை வைத்திருக்கிற ஜனங்களையும்
என்னிடம் கொண்டு வாருங்கள்! அவர்
களை நான் எனக்காக படைத்தேன். அவர்
களை நான் படைத்தேன். அவர்கள் என்னு
டையவர்கள்."

## இஸ்ரவேல் தேவனுடைய சாட்சியாக உலகத்திற்கு உள்ளது

8தேவன் கூறுகிறார், "கண்ணிலிருந்தும்
குருடாக இருக்கிற ஜனங்களை என்னிடம்
அழைத்து வா. காதிருந்தும் கேட்காதவர்
களை என்னிடம் அழைத்து வா. 9அனைத்து
ஜனங்களும் அனைத்து நாடுகளும் ஒன்றுசேர
வேண்டும். அவர்களது பொய்த் தெய்வங்
களில் ஒன்று தொடக்கத்தில் என்ன நடந்தது
என்பதைச் சொல்லட்டும். அவர்கள் தங்கள்
சாட்சிகளை அழைத்து வரட்டும். சாட்சிகள்
உண்மையைப் பேச வேண்டும். அவர்கள்
சரியானவர்கள் என்பதை இது காட்டும்."
10கர்த்தர் கூறுகிறார், "நீங்களே எனது
சாட்சிகள். நீயே நான் தேர்ந்தெடுத்த தாசன்.
நான் உங்களைத் தேர்ந்தெடுத்தேன். எனவே,
ஜனங்கள் என்னை நம்புவதற்கு நீங்கள்
உதவ வேண்டும். நான் உங்களைத் தேர்ந்
தெடுத்தேன். எனவே, நான்தான் அவர்
என்பதையும் நான் உண்மையான தேவன்
என்பதையும் நீங்கள் புரிந்துகொள்ள
வேண்டும். எனக்கு முன்பாக வேறு தேவன்
இருந்ததில்லை, எனக்குப் பிறகும் வேறு
தேவன் இருக்கப் போவதில்லை. 11நான்,
நானே கர்த்தர்! என்னைத்தவிர வேறு
இரட்சகர் இல்லை! நான் ஒருவர் மட்டுமே!
12உங்களோடு பேசியவர் நான் ஒருவரே. நான்
உங்களைக் காப்பாற்றினேன். நான் இவற்றை
உங்களிடம் சொன்னேன். உங்க ளோடு
இருப்பது வேறு யாரும் அந்நியர் அல்ல.
நீங்கள் என்னுடைய சாட்சிகள், நான்
தேவன்!" (கர்த்தர் தாமாகவே இதனைச்
சொன்னார்.) 13"நான் எப்பொழுதும் தேவ
னாக இருக்கிறேன். நான் ஏதாவது செய்
யும்போது, நான் செய்ததை எவராலும்
மாற்ற முடியாது. எனது வல்லமையிலிருந்து
எவரும் ஜனங்களைக் காப்பாற்ற முடியாது."
14இஸ்ரவேலின் பரிசுத்தமானவரான கர்த்
தர் உங்களைக் காப்பாற்றுகிறார். கர்த்தர்
சொல்கிறார், "நான் உங்களுக்காகப் படை
களை பாபிலோனுக்கு அனுப்புவேன். பலர்
சிறைப்பிடிக்கப்படுவார்கள். கல்தேயர்களான
அவர்கள் தங்கள் படகுகளில் எடுத்துச்
செல்லப்படுவார்கள். (அப்படகுகளைப்பற்றிக்
கல்தேயர்களுக்குப் பெருமை உண்டு.)
15நானே உனது பரிசுத்தரான கர்த்தர். நான்
இஸ்ரவேலைப் படைத்தேன். நானே உங்கள்
இராஜா."

## மீண்டும் தேவன் அவரது ஜனங்களைக் காப்பாற்றுவார்

16கர்த்தர் கடலின் வழியே சாலை
அமைப்பார். அது வலிமையான தண்ணீராக

இருந்தாலும், அவர் தமது ஜனங்களுக்காகப்
பாதை அமைப்பார். கர்த்தர் சொல்கிறார்,
17“எனக்கு எதிராகத் தங்கள் இரதங்களோ
டும், குதிரைகளோடும், படைகளோடும்
போரிடுகிற ஜனங்கள் தோற்கடிக்கப்படுவார்
கள். அவர்கள் மீண்டும் எழமாட்டார்கள்.
அவர்கள் அழிக்கப்படுவார்கள். ஒரு மெழு
கின் திரி அணைக்கப்படுகிறதுபோல் அவை
அணைந்துபோகும். 18எனவே, தொடக்கத்
தில் நிகழ்ந்ததை எண்ண வேண்டாம்.
வெகு காலத்திற்கு முன்னால் நடந்ததைப்
பற்றி நினைக்கவேண்டாம். 19ஏனென்றால்,
நான் புதியவற்றைச் செய்வேன். இப்போது
நீங்கள் புதிய செடியைப்போல வளருவீர்கள்.
இது உண்மை என்பதை நீங்கள் உறுதியாக
அறிந்தீர்கள். நான் உண்மையில் இந்த
வனாந்திரத்தில் சாலை அமைப்பேன். நான்
உண்மையில் இந்த வறண்ட நிலத்தில்
ஆறுகளை உருவாக்குவேன். 20காட்டு மிரு
கங்களும் எனக்கு நன்றியுடையவையாக
இருக்கும். பெரிய மிருகங்களும் பறவைகளும்
என்னைப் பெருமைப்படுத்தும். நான் வனாந்
திரத்திலே தண்ணீரை ஊற்றும்போது
அவை என்னை பெருமைப்படுத்தும்.
வறண்ட நிலத்தில் ஆறுகளைக் கொண்டு
வரும்போது அவை என்னைப் பெருமைப்
படுத்தும். எனது ஜனங்களுக்காக, என்னால்
தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனங்களுக்காகத் தண்
ணீர் கொடுக்கும்படி நான் இதனைச்
செய்வேன். 21நான் சிருஷ்டித்த ஜனங்கள்
இவர்கள்தான். இவர்கள் என்னைத் துதித்துப்
பாடுவார்கள்.

22“யாக்கோபே! நீ என்னிடம் ஜெபம்
செய்யவில்லை. ஏனென்றால், இஸ்ரவேலா
கிய நீ என்னிடத்தில் சோர்வடைந்து
விட்டாய். 23நீ உனது ஆடுகளை தகன
பலிகளாக எனக்குச் செலுத்தவில்லை. நீ
என்னை மகிமைப்படுத்தவுமில்லை. நீ எனக்
குப் பலிகளும் கொடுக்கவில்லை. நீ எனக்
குப் பலிகள் கொடுக்கும்படி நான் உன்னை
வற்புறுத்தவில்லை. நீ சோர்ந்துபோகும்வரை
நறுமணப் பொருட்களை எரிக்கும்படி நான்
உன்னை வற்புறுத்தவில்லை. 24என்னைக்
கனப்படுத்தும்படி படைக்கும் பொருட்களை
நீ வாங்கவில்லை. உனது அடிமையைப்
போல இருக்கும்படி நீ என்னை பலவந்
தப்படுத்தினாய். அதே சமயம், உனது
பாவங்களால் நீ என்னைப் பாரப்படுத்தி
னாய்.

25“நான், நான் ஒருவரே உனது பாவங்கள்
அனைத்தையும் துடைத்துப் போடுகிறவர்.
என்னைத் திருப்திப்படுத்திக் கொள்ளவே
நான் இதனைச் செய்கிறேன். நான் உனது
பாவங்களை நினைத்துப்பார்க்கமாட்டேன்.
26ஆனால், நீ என்னை நினைக்க வேண்டும்.
நாம் சந்தித்து எது சரியென்று முடிவு
செய்யலாம். நீ செய்திருப்பதைச் சொல்லி
நீ சரியென்று காட்டவேண்டும். 27உங்கள்
முதல் தந்தை பாவம் செய்தான். உங்களது
வழக்கறிஞர்களும் எனக்கு எதிராகச்
செய்தார்கள். 28உங்களது பரிசுத்தமான தலை
வர்களைப் பரிசுத்தமில்லாமல் ஆக்குவேன்.
யாக்கோபை முழுமையாக என்னுடையவ
னாக ஆக்குவேன். இஸ்ரவேலுக்குத் தீயவை
நிகழும்.”

## கர்த்தரே ஒரே தேவன்

44 “யாக்கோபே, நீ எனது தாசன்.
என்னைக் கவனி! இஸ்ரவேலே, நான்
உன்னைத் தேர்ந்தெடுக்கிறேன். நான் சொல்
வதைக் கேள். 2நானே கர்த்தர். நான் உன்
னைப் படைத்தேன். நீ எப்படி இருக்க
வேண்டுமென்று உன்னைப் படைத்தவர்
நான் ஒருவரே. நீ உன் தாயின் வயிற்றில்
இருக்கும்போதே, நான் உனக்கு உதவியி
ருக்கிறேன். எனது தாசனாகிய யாக்கோபே,
அஞ்சாதே! யெஷூரனே,* நான் உன்னைத்
தேர்ந்தெடுக்கிறேன்.

3“தாகமுள்ள ஜனங்களுக்கு நான் தண்ணீர்
ஊற்றுவேன். வறண்ட நிலங்களில் நீரூற்று
களைப் பாயச்செய்வேன். உனது பிள்ளை
கள்மீது எனது ஆவியையும் உனது சந்ததி
யார்மீது எனது ஆசீர்வாதத்தையும் ஊற்று
வேன். இது உங்கள் குடும்பத்தின்மீது பாய்
கிற நீரோடை போன்றிருக்கும். 4உலகிலுள்ள
ஜனங்கள் மத்தியில் அவர்கள் வளருவார்கள்.
தண்ணீர் கரையில் வளருகின்ற மரங்களைப்
போல அவர்கள் வளருவார்கள்.

5“ஒருவன் சொல்வான், ‘நான் கர்த்தருக்கு
உரியவன்’ இன்னொருவன் யாக்கோபின்
பெயரைப் பயன்படுத்துவான். இன்னொரு
வன் நான் கர்த்தருடையவன் என்று கை
யெழுத்து இடுவான், இன்னொருவன் ‘இஸ்ர
வேல்’ என்ற பெயரைப் பயன்படுத்துவான்.”

6கர்த்தர் இஸ்ரவேலின் அரசர். சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் இஸ்ரவேலைக்
காப்பாற்றுகிறார். கர்த்தர் கூறுகிறார், “நான்
ஒருவரே தேவன்! வேறு எந்தத் தெய்வமும்
இல்லை. நானே தொடக்கமும் முடிவுமாக
இருக்கிறேன்! 7என்னைப்போன்ற தேவன்
வேறு யாருமில்லை. அவ்வாறு இருந்தால்,
அந்த தெய்வம் இப்போது பேசட்டும். அந்த
தெய்வம் வந்து அவன் என்னைப் போன்ற
வன் என்று நிரூபிக்கட்டும். இந்த ஜனங்
களை நான் என்றென்றும் நிலைத்தி
ருக்கும்படி செய்தேனே. இதுவரை என்ன
நடந்தது என்று அந்த தெய்வம் எனக்குச்
சொல்லட்டும். எதிர்காலத்தில் என்ன
நடக்கும் என்பதை அவன் அறிந்திருந்தால்
அந்த தெய்வம் எனக்கு அடையாளம்
காட்டட்டும். 8அஞ்சாதே! கவலைப்படாதே!
என்ன நடக்கப்போகிறது என்பதை ஏற்
கெனவே நான் கூறியிருக்கிறேன். நீங்களே

---

**யெஷூரன்** இஸ்ரவேலின் இன்னொரு பெயர். ‘நல்ல’ அல்லது ‘நேர்மை’ என்று பொருள்.

எனது சாட்சிகள். வேறு தேவன் இல்லை. நான் ஒருவரே அந்த ஒருவர். வேறு ஒரு கன்மலை இல்லை. நானே அந்த ஒருவர் என்பதை நான் அறிவேன்.”

### பொய்த் தெய்வங்கள் பயனற்றவைகள்

[9]சில ஜனங்கள் சிலைகளைச் (பொய்த் தெய்வங்களை) செய்கிறார்கள். அவை வீணானவை. ஜனங்கள் அந்தச் சிலைகளை நேசிக்கிறார்கள். ஆனால் அந்தச் சிலைகள் பயனற்றவை. அந்த ஜனங்களே சிலைகளுக்குச் சாட்சிகளாக இருக்கிறார்கள். ஆனால் அவைகளால் பார்க்க முடியாது. அவைகளுக்கு எதுவும் தெரியாது. அவைகள் தம் செய்கைக்கு வெட்கப்படும் அளவிற்குத் தெரியாமல் இருக்கிறார்கள்.

[10]இந்தப் பொய்த் தெய்வங்களை யார் செய்தது? பயனற்ற இந்தச் சிலைகளைச் செய்தது யார்?”
[11]வேலைக்காரர்கள் இந்தச் தெய்வங்களைச் செய்தனர். அந்த வேலைக்காரர்கள் எல்லாம் மனிதர்கள், தெய்வங்கள் அல்ல. அவர்கள் அனைவரும் கூடி இதைப் பற்றி விவாதித்தால் இதற்காக அவர்கள் வெட்கமும் அச்சமும் அடைவார்கள்.

[12]ஒரு வேலைக்காரன் கருவிகளைப் பயன்படுத்தி சூடான உலையிலே இரும்பைக் காயவைத்தான். அவன் தன் சுத்தியைப் பயன்படுத்தி உலோகத்தை அடித்ததால் அது சிலையானது. இந்த மனிதன் தனது வல்லமை வாய்ந்த கைகளைப் பயன்படுத்தினான். ஆனால், அவனுக்குப் பசி வரும்போது தனது வல்லமையை இழக்கிறான். அவன் தண்ணீர் குடிக்காவிட்டால் பலவீனன் ஆகிறான்.

[13]இன்னொரு வேலைக்காரன் தனது நூலைப் பிடித்து மட்டப்பலகையால் மரத்தில் குறியிடுகிறான். எங்கே வெட்ட வேண்டும் என்பதை இது அவனுக்குக் காட்டுகிறது. அவன், தனது உளியைப் பயன்படுத்தி அந்த மரத்திலிருந்து சிலையைச் செதுக்குகிறான். அவன் தனது அளவு கருவியால் அச்சிலையை அளக்கிறான். இவ்வழியில், வேலைக்காரன் சரியாக மனிதனைப் போன்றே தோன்றும்படிச் சிலையைச் செய்கிறான். மனிதனின் இந்தச் சிலை வீட்டில் இருப்பதைத் தவிர வேறு எதுவும் செய்வதில்லை.

[14]ஒருவன் கேதுரு, மருதமரம் அல்லது கர்வாலி மரத்தை வெட்டுகிறான். (அந்த மனிதன் மரங்களை வளரச் செய்வதில்லை. அந்த மரங்கள் காட்டில் தன் சொந்த பலத்தாலேயே வளர்கிறது. ஒருவன் அசோக மரத்தை நட்டால் மழை அதை வளரச் செய்யும்.)
[15]பிறகு, அந்த மனிதன் எரிப்பதற்காக அந்த மரங்களை வெட்டுகிறான். அவன் அந்த மரத்தைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டுகிறான். அவன் அதனைச் சமைக்கவும், வெப்பப்படுத்திக் கொள்ளவும் பயன்படுத்திக் கொள்கிறான். அவன் சில மரத்துண்டுகளை எரித்து தனக்காக அப்பத்தைச் சுடுகிறான். ஆனால், அவன் சில துண்டுகளில் தெய்வத்தின் சிலை செய்து அதனைத் தொழுதுகொள்கிறான். அந்தத் தெய்வம் மனிதனால் செய்யப்பட்ட ஒரு சிலையாகும். ஆனால், அந்தச் சிலைகளுக்கு முன்னால் பணிந்து வணங்குகிறான்.
[16]மனிதன் பாதி மரத்துண்டுகளை நெருப்பில் எரித்தான். மனிதன் அந்த நெருப்பை இறைச்சியை சமைக்கப் பயன்படுத்தினான். அதனை வயிறு நிரம்பும்வரை சாப்பிடுகிறான். மனிதன் தன்னை வெப்பப்படுத்திக் கொள்ள மரத்துண்டுகளை எரிக்கிறான். மனிதன் கூறுகிறான், “நல்லது நான் இப்போது வெப்பமாக இருக்கிறேன். என்னால் பார்க்கமுடியும் ஏனென்றால், நெருப்பிலிருந்து ஒளி வருகிறது.”
[17]ஆனால், சிறு மரத்துண்டு மீதியுள்ளது எனவே மனிதன் அந்த மரத்திலிருந்து சிலை செய்து அதனைத் தெய்வம் என்று அழைக்கிறான். அந்த தெய்வத்திற்கு முன்பு அவன் அடி பணிந்து வணங்குகிறான். அவன் அந்த தெய்வத்தினிடம் ஜெபம் செய்து சொல்கிறான், “நீயே எனது தெய்வம். என்னைக் காப்பாற்று.”

[18]அந்த ஜனங்களுக்குத் தாம் என்ன செய்கிறோம் என்று தெரியவில்லை. அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. காணமுடியாதபடி அவர்களது கண்கள் கட்டப்பட்டதுபோல அது இருக்கிறது. அவர்களின் இதயங்கள் புரிந்துகொள்ளவும் முயல்வதில்லை.
[19]அந்த ஜனங்கள் இவற்றைப்பற்றி சிந்தித்திருக்கவில்லை. அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. அதனால் அவர்கள் தமக்குள், “நான் பாதி மரத்தை எரித்தேன். நான் நெருப்புத் துண்டுகளை எனது அப்பங்களைச் சுடவும், எனது இறைச்சியைச் சமைக்கவும் பயன்படுத்தினேன். பிறகு அந்த இறைச்சியை நான் தின்றேன். மீதியுள்ள மரத்தைப் பயன்படுத்தி இந்த அருவருப்பை செய்தேன். ஒரு மரத்துண்டை நான் தொழுதுகொண்டிருக்கிறேன்!” என்று எண்ணுவதில்லை.

[20]அந்த மனிதன், தான் என்ன செய்துகொண்டிருக்கிறான் என்பதை அறியவில்லை. அவன் குழம்பியிருக்கிறான். எனவே, அவனது இதயம் அவனை தவறான வழியில் செலுத்துகின்றது. அவன் தன்னை காப்பாற்றிக்கொள்ள முடியாது. அவனுக்குத் தான் தவறு செய்துகொண்டிருக்கிறோம் என்று அறியமுடியாது. அவன், “நான் பிடித்துக் கொண்டிருக்கின்ற இந்தச் சிலை பொய்த் தெய்வம்” என்று சொல்லமாட்டான்.

### உண்மையான தேவனாகிய கர்த்தரே இஸ்ரவேலுக்கு உதவுகிறார்

[21]யாக்கோபே இவற்றை நினைத்துப் பார்!

இஸ்ரவேலே, நீ எனது தாசன் என்பது
நினைவிருக்கட்டும். நான் உன்னைச் செய்
தேன். நீ எனது தாசன். எனவே, இஸ்ர
வேலே என்னை மறக்காதே.

22 உனது பாவங்கள் பெரிய மேகத்தைப்
போன்றிருந்தது. ஆனால், நான் அந்தப்
பாவங்களை துடைத்து விட்டேன். உங்
களது பாவங்கள் காற்றில் கலந்துவிடும்
மேகங்களைப் போன்று மறைந்துவிட்டன.
நான் உன்னை மீட்டுக் காப்பாற்றினேன்,
எனவே என்னிடம் திரும்பி வா."

23 வானங்கள் மகிழ்ச்சியோடு இருக்கின்றன
ஏனென்றால், கர்த்தர் பெரிய செயலைச்
செய்திருக்கிறார். பூமி மகிழ்ச்சியோடு
உள்ளது. பூமியின் தாழ்விடங்களும் மகிழ்கி
றது. மலைகள் தேவனுக்கு நன்றிசொல்லிப்
பாடுகின்றன. காட்டிலுள்ள மரங்களெல்லாம்
மகிழ்ச்சியோடு உள்ளன. ஏனென்றால்,
கர்த்தர் யாக்கோபைக் காப்பாற்றினார்.
கர்த்தர் இஸ்ரவேலுக்காகப் பெரிய காரியங்க
ளைச் செய்தார்.

24 நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்
படியே கர்த்தர் படைத்தார். நீங்கள் உங்கள்
தாயின் கர்ப்பத்தில் இருக்கும்போதே கர்த்தர்
இதனைச் செய்தார். கர்த்தர் கூறுகிறார்,
"கர்த்தராகிய நான், எல்லாவற்றையும் செய்
தேன். நானாகவே வானங்களை வைத்தேன்.
எனக்கு முன்னால் பூமியைப் பரப்பி வைத்
தேன்."

25 பொய்த் தீர்க்கதரிசிகள் பொய் சொல்கி
றார்கள். ஆனால் கர்த்தர் அவர்களின்
தீர்க்கதரிசனங்கள் போலியானவை என்று
காட்டுகிறார். கர்த்தர் மந்திர வேலை செய்
பவர்களை முட்டாளாக்குகிறார். கர்த்தர்
ஞானிகளைக் குழப்புகிறார். அவர்கள் தமக்கு
மிகுதியாகத் தெரியும் என்று நினைக்கிறார்
கள். ஆனால், கர்த்தர் அவர்களை
முட்டாளாக்குகின்றார். 26 கர்த்தர் அவரது
வேலைக்காரர்களை ஜனங்களிடம் தமது
செய்திகளைச் சொல்ல அனுப்புகிறார்.
கர்த்தர் அந்தச் செய்திகளை உண்மை
யாக்குகிறார். கர்த்தர் ஜனங்களிடம் அவர்கள்
செய்யவேண்டியதைச் சொல்லத் தூதுவர்
களை அனுப்புகிறார். கர்த்தர் அவர்களது
ஆலோசனைகளை நிறைவேற்றுவார்.

### தேவன் கோரேசை யூதாவைத் திரும்பக் கட்டத் தேர்ந்தெடுத்தார்

கர்த்தர் எருசலேமிடம் கூறுகிறார், "ஜனங்
கள் மீண்டும் உன்னிடம் வாழ்வார்கள்!"
யூதாவின் நகரங்களிடம் கர்த்தர் கூறுகிறார்:
"நீங்கள் மீண்டும் கட்டப்படுவீர்கள்!" அழிந்
துபோன நகரங்களிடம் கர்த்தர் கூறுகிறார்:
"நகரங்களே! உங்களை மீண்டும்
அமைப்பேன்."

27 ஆழமான தண்ணீரிடம் கர்த்தர் கூறு
கிறார்; "வற்றிப் போங்கள்! நான் உங்கள்
ஊற்றுகளை வற்றச் செய்வேன்!"

28 கர்த்தர் கோரேசிடம் கூறுகிறார்: "நீ
எனது மேய்ப்பன். நான் விரும்புவதை நீ
செய்வாய். நீ எருசலேமிடம் சொல்வாய்,
'நீ மீண்டும் கட்டப்படுவாய்' நீ தேவா
லயத்திடம் கூறுவாய், 'உனது அஸ்திரபாரம்
மீண்டும் கட்டப்படும்!'"

### இஸ்ரவேலை விடுதலை செய்ய தேவன் கோரேசை தேர்ந்தெடுக்கிறார்

45 கர்த்தர் தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட
அரசன், கோரேசைப் பற்றி இவற்
றைக் கூறுகிறார்: "நான் கோரேசின் வலது
கையைப் பற்றிக்கொள்வேன். அரசர்களிட
மிருந்து வல்லமையை எடுத்துக்கொள்ள
அவனுக்கு உதவுவேன். நகரக் கதவுகள்
கோரேசைத் தடுத்து நிறுத்தாது. நான்
நகரக் கதவுகளைத் திறப்பேன்."

2 "கோரேசே, உனது படைகள் புறப்
படட்டும். நான் உனக்கு முன்னால் செல்
வேன். நான் மலைகளைச் சமமாக்குவேன்.
நான் நகரத்தின் வெண்கலக் கதவுகளை
உடைப்பேன். நான் கதவுகளில் உள் இரும்
புச் சட்டங்களை வெட்டுவேன்.

3 நான் உனக்கு இருளில் பாதுகாக்கப்ப
டுகிற செல்வத்தைத் தருவேன். மறைக்கப்
பட்டச் செல்வங்களை நான் உனக்குத்
தருவேன். நான் இதனைச் செய்வேன்.
அதனால் நானே கர்த்தர் என்பதை நீ
அறிந்துகொள்வாய்! நான் இஸ்ரவேலரின்
தேவன்! நான் பெயர் சொல்லி உன்னை
அழைப்பேன்.

4 எனது தாசன் யாக்கோபுக்காக நான்
இவற்றைச் செய்கிறேன். இஸ்ரவேலில் தேர்ந்
தெடுக்கப்பட்ட ஜனங்களுக்காக நான் இவற்
றைச் செய்வேன். கோரேசே, நான் உன்
னைப் பெயர் சொல்லி அழைத்துக்கொண்டி
ருக்கிறேன். நீ என்னை அறியமாட்டாய்.
ஆனால் நான் உன்னைப் பெயர் சொல்லி
அழைத்துக்கொண்டிருக்கிறேன்.

5 நான் கர்த்தர்! நான் ஒருவரே தேவன்.
வேறு தேவன் இல்லை! நான் உனது
ஆடைகளை உன்மேல் போட்டேன். ஆனால்
இன்னும் என்னை நீ அறிந்துகொள்ள
வில்லை.

6 நான் இவற்றைச் செய்கிறேன். எனவே
நான்தான் தேவன் என்பதை அனைத்து
ஜனங்களும் அறிந்துகொள்வார்கள். கிழக்கி
லிருந்து மேற்குவரையுள்ள ஜனங்கள். நானே
கர்த்தர் என்பதை அறிந்துகொள்வார்கள்.
வேறு தேவனில்லை!

7 நான் ஒளியையும் இருளையும் படைத்
தேன். நான்சமாதானத்தையும் தொல்லையை
யும் படைத்தேன். நானே கர்த்தர்! நானே
இவை அனைத்தையும் செய்கிறேன்.

8 "வானத்திலுள்ள மேகங்கள், மழையைப்
போல நன்மையைப் பொழியட்டும். பூமி
திறக்கட்டும், இரட்சிப்பு வளரட்டும், அத

*னோடு நன்மையும் வளரட்டும். கர்த்தராகிய
நான் அவனைப் படைத்தேன்.*

### தேவன் அவரது படைப்புகளைக் கட்டுப்படுத்துகிறார்

9“*இந்த ஜனங்களைப் பாருங்கள்! அவர்கள்
தம்மைப் படைத்தவரோடு வாக்குவாதம்
செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள்
மண்பானையின் உடைந்துபோன துண்டு
களைப் போன்றுள்ளார்கள். ஒருவன் மென்
மையும் ஈரமுமான களிமண்ணைப் பானை
செய்யப் பயன்படுத்துகிறான். அந்தக்
களிமண் அவனிடம், ‘மனிதனே! நீ என்ன
செய்து கொண்டிருக்கிறாய்’ என்று கேட்ப
தில்லை. செய்யப்பட்ட எந்தப் பொருளுக்
கும் செய்தவனிடம் கேள்வி கேட்கும்
உரிமை இல்லை. ஜனங்களும் இந்த
களிமண்ணைப் போன்றவர்களே.* 10*ஒரு
தந்தை தன் பிள்ளைகளுக்கு வாழ்வு
தருகிறார். அந்தப் பிள்ளைகள் அவரிடம்,
‘எனக்கு ஏன் வாழ்க்கை கொடுத்தாய்’
என்று கேட்க முடியாது. அந்தப் பிள்ளைகள்
தம் தாயிடம், ‘எங்களை ஏன் பெற்றீர்கள்’
என்று கேட்க முடியாது.*

11*இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்
பரிசுத்தர். அவர் இஸ்ரவேலைப் படைத்தார்.
கர்த்தர் சொல்கிறார், “நான் படைத்த என்
பிள்ளைகளைக் குறித்து என்னை கேள்வி
கேட்க முடியுமா? நான் என்ன செய்ய
வேண்டும் என்று கட்டளையிடுவாயோ?*

12*எனவே, பாருங்கள். நான் பூமியைப்
படைத்தேன். இதில் வாழும் அனைத்து
ஜனங்களையும் படைத்தேன். நான் எனது
சொந்த கைகளைப் பயன்டுத்தி வானங்
களைச் செய்தேன். வானத்தின் சகல சேனை
களுக்கும் ஆணையிட்டேன்.*

13*நான் கோரேசுக்கு வல்லமையைக்
கொடுத்தேன். எனவே, அவன் நன்மை
களைச் செய்யவேண்டும். நான் அவனது
வேலையை எளிமையாக்குவேன். கோரேசு
எனது நகரத்தை மீண்டும் கட்டுவான்.
அவன் எனது ஜனங்களை விடுதலை
செய்வான். கோரேசு எனது ஜனங்களை
எனக்கு விற்கமாட்டான். இவற்றைச் செய்வ
தற்கு அவனுக்கு எதுவும் கொடுக்க
மாட்டேன். ஜனங்கள் விடுதலைச்
செய்யப்படுவார்கள். அதற்கான விலை
எதுவும் இருக்காது. சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் இவற்றைச் சொன்னார்.*

14*கர்த்தர் கூறுகிறார், “எகிப்தும் எத்தி
யோப்பியாவும் வளமாக உள்ளன. ஆனால்
இஸ்ரவேலே, அந்தச் செல்வத்தை நீ பெறு
வாய். சேபாவிலுள்ள வளர்ந்த ஜனங்கள்
உன்னுடையவர்கள் ஆவார்கள். அவர்கள்
உனக்குப் பின்னால் நடந்து வருவார்கள்.
அவர்களின் கழுத்துக்களைச் சுற்றிச் சங்கி
லிகள் கிடக்கும். அவர்கள் உனக்கு முன்பு
பணிவார்கள்; ஜெபம் செய்வார்கள்” இஸ்ர
வேலே, தேவன் உன்னோடு இருக்கிறார்.
வேறு தேவனில்லை.*

15*தேவனே! நீர்தான் ஜனங்களால் பார்க்க
முடியாத தேவன், நீர்தான் இஸ்ரவேலை
மீட்கிறவர்.*

16*பல ஜனங்கள் பொய்த் தெய்வங்களைச்
செய்கின்றனர். ஆனால், அவர்கள் ஏமாந்து
போவார்கள். அந்த ஜனங்கள் அனைவரும்
அவமானப்படுவார்கள்.*

17*ஆனால், கர்த்தரால் இஸ்ரவேல் காப்பாற்
றப்படும். அந்த இரட்சிப்பு என்றென்றும்
இருக்கும்! மீண்டும் இஸ்ரவேல் அவமானப்
படாது!*

18*கர்த்தரே தேவன்! அவர் வானத்தையும்
பூமியையும் படைத்தார். கர்த்தர் பூமியை
அதனுடைய இடத்தில் வைத்தார். கர்த்தர்
பூமியைப் படைத்ததும் அது காலியாக
இருப்பதை விரும்பவில்லை. அவர் அதனை
வாழ்வதற்குரியதாகப் படைத்தார். “நானே
கர்த்தர். வேறு தேவன் இல்லை.*

19*நான் இரகசியமாக எதுவும் பேச
வில்லை. நான் சுதந்திரமாகப் பேசியி
ருக்கிறேன். உலகத்திலுள்ள இருளில் என்
வார்த்தைகளை ஒளிக்கமாட்டேன். காலி
யான இடங்களில் என்னைத் தேடுமாறு,
யாக்கோபின் ஜனங்களிடம் சொல்லவில்லை.
நானே கர்த்தர். நான் உண்மையைப் பேசுகி
றேன். நான் உண்மையாக இருப்பதை
மட்டும் பேசுகிறேன்.”*

### கர்த்தர் தாம் ஒருவரே தேவன் என்று நிரூபிக்கிறார்

20*“மற்ற நாடுகளில் இருந்து நீங்கள் தப்பித்
திருக்கிறீர்கள். எனவே அனைவரும் ஒன்று
சேர்ந்து என் முன்பு வாருங்கள். (இந்த
ஜனங்கள் பொய்த் தெய்வங்களின் சிலை
களைத் தூக்கி வந்தனர். இந்த ஜனங்கள்
அந்தப் பயனற்ற தெய்வங்களிடம் ஜெபம்
செய்கின்றனர். ஆனால் அந்த ஜனங்களுக்குத்
தாங்கள் என்ன செய்கிறோம் என்பது
தெரியவில்லை.* 21*என்னிடம் வருமாறு அந்த
ஜனங்களிடம் கூறுங்கள். அவர்கள் இதைப்
பற்றி கூடிப்பேசட்டும்.)*

*“நீண்ட காலத்திற்கு முன்பு நடந்த இவற்
றைப்பற்றி உன்னிடம் யார் கூறியது?
மிக நீண்ட காலத்திற்கு முன்னரே நான்
இவற்றைத் தொடர்ந்து கூறிவருகிறேன். கர்த்
தராகிய நானே, இவற்றையெல்லாம் சொன்
னவர். நான் ஒருவரே தேவன். என்னைப்
போன்று வேறே தேவன் உண்டா? என்
னைப் போன்று வேறே மீட்பரும், நீதியுள்ள
தேவனும் உண்டோ? இல்லை! வேறு
தேவன் இல்லை.* 22*வெகு தொலைவில்
வாழுகின்ற ஜனங்களே, நீங்கள் பொய்த்
தெய்வங்களைப் பின்பற்றுவதை நிறுத்துங்
கள். என்னைப் பின்பற்றுவீர்களானல்
காப்பாற்றப்படுவீர்கள். நானே தேவன்! நான்
ஒருவரே தேவன்.*

[23]“எனது சொந்த வல்லமையால் நான்
ஒரு வாக்குறுதி செய்கிறேன். நான் எதையா
வது செய்வதாக வாக்களித்தால், அது
உண்மையாக இருக்கும். நான் ஏதாவது
நடக்கக் கட்டளையிட்டால், அது நடக்கும்.
ஒவ்வொருவரும் எனக்கு (தேவன்) முன்பு
அடிபணிவதாக” வாக்களிக்க வேண்டும்.
ஒவ்வொருவரும் என்னைப் பின்பற்றுவதாக
வாக்களிக்க வேண்டும். [24]‘நன்மையும் வல்ல
மையும் கர்த்தரிடமிருந்து மட்டும்தான்
வரும்’ என்று ஜனங்கள் கூறுவார்கள்.”

சில ஜனங்கள் கர்த்தர்மேல் கோபமா
ருக்கிறார்கள். ஆனால் கர்த்தருடைய சாட்சி
கள் வந்து அவருடைய செயல்களைப்
பற்றிக் கூறு வார்கள். அப்போது கோபமா
யிருந்த ஜனங்கள் அவமானமடைவார்கள்.
[25]நன்மையானதைச் செய்கிற இஸ்ரவேல்
ஜனங்களுக்கு கர்த்தர் உதவிசெய்வார், அவர்
கள் தங்கள் தேவனைப்பற்றி பெருமிதம்
கொள்வார்கள்.

### பொய்த் தெய்வங்கள் பயனற்றவை

46 பேலும் நேபோவும்* எனக்கு முன்
னால் அடிபணியும். அந்தப் பொய்த்
தெய்வங்கள் வெறும் சிலைகளே. மனிதர்கள்
அந்தச் சிலைகளை மிருகங்களின் முதுகில்
வைத்தனர். அவை சுமக்கத்தக்க சுமைகளே.
அப்பொய்த் தெய்வங்கள் ஜனங்களைக்
களைப்புறச் செய்வதைத்தவிர வேறெதுவும்
செய்வதில்லை. [2]அந்தப் பொய்த் தெய்வங்கள்
குனிந்து கீழே விழுவார்கள். அப்பொய்த்
தெய்வங்கள் தப்பிக்க இயலாது. அவைகள்
கைதிகளைப்போல எடுத்துச் செல்லப்ப
டுவார்கள்.

[3]“யாக்கோபின் குடும்பத்தினரே! நான்
சொல்வதைக் கேளுங்கள். இஸ்ரவேலர்களில்
இன்னும் உயிரோடு இருப்பவர்களே, கவனி
யுங்கள்! நான் உங்களைத் தாங்கியி
ருக்கிறேன். நீங்கள் உங்கள் தாயின்
கர்ப்பத்தில் இருந்தது முதல் நான் உங்களைத்
தாங்கியிருக்கிறேன். [4]நீங்கள் பிறந்ததும்,
உங்களைச் சுமந்தேன். நீங்கள் முதுமை
அடையும்வரை உங்களைத் தாங்குவேன்.
உங்கள் தலைமுடி நரைக்கும்வரை உங்க
ளைத் தாங்குவேன். ஏனென்றால், நான்
உங்களைப் படைத்தேன். நான் உங்களைத்
தொடர்ந்து தாங்குவேன், உங்களைப்
பாதுகாப்பேன்.

[5]“என்னை வேறு எவருடனும் ஒப்பிட
முடியுமா? இல்லை! எவரும் எனக்கு இணை
யில்லை. என்னைப் பற்றிய அனைத்தையும்
உங்களால் புரிந்துகொள்ள முடியாது.
என்னைப்போன்று எதுவுமில்லை. [6]சில
ஜனங்கள் பொன்னும் வெள்ளியும் கொண்டு
வளத்துடன் இருக்கிறார்கள். தங்கம் அவர்
களின் பைகளிலிருந்து விழுகிறது. அவர்கள்
தங்கள் வெள்ளியை எடைபோடுகிறார்கள்.
அந்த ஜனங்கள் ஒரு கலைஞனுக்குப் பணம்
கொடுத்து மரத்திலிருந்து ஒரு சிலையைச்
செதுக்கி, பிறகு அந்த ஜனங்கள் அதற்கு
முன்பு விழுந்து அதனைத் தொழுது
கொள்கிறார்கள். [7]அந்த ஜனங்கள் பொய்த்
தெய்வங்களைத் தோளில் வைத்து சுமக்கின்
றனர். அந்தப் பொய்த் தெய்வம் பயனற்றது.
ஜனங்கள் அதைச் சுமக்கவேண்டும். ஜனங்
கள் தரையில் அந்தச் சிலையை வைப்
பார்கள். அந்த தெய்வங்களால் நகர
முடியாது. அந்த பொய்த் தெய்வங்களால்
இடத்தை விட்டு எழுந்து நடக்க முடியாது.
ஜனங்கள் அதைக் கூப்பிட்டாலும். அது
பதில் சொல்லாது. அப்பொய்த் தெய்வம் ஒரு
சிலை மட்டும்தான். அது ஜனங்களை
அவர்களின் துன்பத்திலிருந்து காப்பாற்ற
முடியாது.

[8]“நீங்கள் பாவம் செய்திருக்கிறீர்கள்.
மீண்டும் நீங்கள் இவற்றைப்பற்றி சிந்திக்க
வேண்டும். இவற்றை நினைவுபடுத்தி பலமுள்
ளவர்கள் ஆகுங்கள். [9]நீண்ட காலத்திற்கு
முன் நடந்ததை நினைத்துப் பாருங்கள்.
நான் தேவன் என்பதை நினையுங்கள்.
வேறு தேவன் இல்லை. அப்பொய்த் தெய்
வங்கள் என்னைப்போன்று இல்லை.

[10]“தொடக்க காலத்தில், நான் முடிவில்
நடக்கப் போவதைப்பற்றிச் சொன்னேன்.
நீண்ட காலத்துக்கு முன்பு, இதுவரை
நடைபெறாததைப்பற்றிச் சொன்னேன். நான்
ஏதாவது திட்டமிட்டால் அது நடைபெறும்.
நான் செய்ய விரும்புவதைச் செய்வேன்.
[11]நான் கிழக்கே இருந்து ஒருவனை அழைத்
துக்கொண்டிருக்கிறேன். அம்மனிதன் கழு
கைப் போன்று இருப்பான். அவன் தொலை
தூர நாட்டிலிருந்து வருவான். நான் செய்ய
திட்டமிட்டிருப்பதை அவன் செய்வான்.
நான் செய்வேன் எனச் சொல்லிக்கொண்
டிருக்கிறேன். நான் அதனைச் செய்வேன்.
நான் அவனைப் படைத்தேன். நான் அவ
னைக் கொண்டுவருவேன்!

[12]“உங்களில் சிலர் உங்களுக்குப் பெரும்
வல்லமை இருப்பதாக நினைக்கிறீர்கள்.
ஆனால் நீங்கள் நல்லவற்றைச் செய்வ
தில்லை. எனக்குச் செவிகொடுங்கள்! [13]நான்
நல்லவற்றைச் செய்வேன். விரைவில் நான்
என் ஜனங்களைக் காப்பாற்றுவேன். நான்
சீயோனுக்கு இரட்சிப்பைக் கொண்டுவரு
வேண். எனது அற்புதமான இஸ்ரவேலுக்கும்
இரட்சிப்பைக் கொண்டுவருவேன்.”

### பாபிலோனுக்குத் தேவனுடைய செய்தி

47 “மண்ணிலே இறங்கிவந்து அங்கே
உட்காரு! கல்தேயரின் கன்னியே
தரையில் உட்காரு! இப்போது நீ ஆள்பவள்
இல்லை! இனிமேல் நீ மென்மையானவள்
என்று உன்னை ஜனங்கள் நினைக்க
மாட்டார்கள்.

---

**பேல், நேபோ** பொய் தெய்வங்கள்.

2இப்போது நீ கடினமாக வேலை
செய்யவேண்டும். எந்திரத்தை நீ எடுக்க
வேண்டும். தானியங்களை அரைத்து
மாவாக்கு. உனது முக்காட்டை நீக்கிவிடு.
உனது ஆடம்பர ஆடைகளை நீக்கி விடு.
உனது நாட்டை விட்டுச் சென்று விடு!
ஆண்கள் பார்க்கும்படி உன் ஆடையைத்
தொடைவரை தூக்கு, ஆறுகளைக் கடந்து
போ,
3ஆண்கள் உனது உடலைப் பார்க்கட்டும்.
உடல் ஆசைக்கு உன்னைப் பயன்படுத்
தட்டும். நீ செய்கிற கெட்டவற்றுக்கு உன்னை
விலை கொடுக்கும்படி செய்வேன். எந்த
மனிதனும் உனக்கு உதவி செய்ய
வரமாட்டான்.
4“எனது ஜனங்கள் சொல்கிறார்கள்,
‘தேவன் நம்மைக் காப்பார். அவரது நாமம்
சர்வ வல்லமையுள்ள கர்த்தர், இஸ்ரவேலின்
பரிசுத்தர்”
5“எனவே, பாபிலோனே, அங்கே உட்
காரு. அமைதலாக இரு. கல்தேயரின் மகளே,
இருளுக்குள் போ! ஏனென்றால், ‘இராஜ்
யங்களின் இராணியாக இனி நீ இருக்க
மாட்டாய்,’
6“நான் எனது ஜனங்களின் மீது கோபத்
தோடு இருக்கிறேன். அவர்கள் எனக்குச்
சொந்தமானவர்கள். ஆனால் நான் கோபமாக
இருந்தேன். எனவே அவர்களை முக்கியமற்ற
வர்களாக்கினேன். நான் அவர்களை
உனக்குக் கொடுத்தேன். நீ அவர்களைத்
தண்டித்துவிட்டாய். நீ அவர்களுக்கு இரக்கம்
காட்டவில்லை. வயதான ஜனங்களும்
கடுமையாக வேலை செய்யும்படி நீ
செய்தாய்.
7‘நான் என்றென்றும் வாழ்கிறேன். நான்
எப்பொழுதும் இராணியாகவே இருப்பேன்’
என்று நீ சொன்னாய். அந்த ஜனங்களுக்குச்
செய்த கெட்டவற்றைக்கூடக் கவனிக்க
வில்லை. என்ன நிகழும் என்று நீ நினைக்
கவில்லை.
8எனவே, மெல்லிய இயல்புடைய பெண்
ணே! இப்போது என்னைக் கவனி! நீ
பாதுகாப்பை உணருகிறாய், ‘நான் மட்டுமே
முக்கியமானவள். என்னைப் போன்று
முக்கியமானவள் எவருமில்லை. நான் எப்
போதும் விதவை ஆவதில்லை நான்
எப்போதும் பிள்ளைகளைக் கொண்டி
ருப்பேன்’ என்று நீ சொல்கிறாய்,
9இந்த இரண்டும் திடீரென்று உனக்கு
நிகழும். முதலில் நீ உனது பிள்ளைகளை
இழப்பாய். பிறகு நீ உனது கணவனை
இழப்பாய். ஆம் இவை உனக்கு உண்
மையில் நிகழும். உனது அனைத்து மந்தி
ரங்களும் தந்திரங்களும் உன்னைக் காப்
பாற்றாது.
10நீ கெட்டவற்றைச் செய்கிறாய். ஆனா
லும் நீ பாதுகாப்பாயிருப்பதாக நினைக்
கிறாய். நீ உனக்குள், ‘நான் செய்கிற தவ
றுகளை எவரும் பார்ப்பதில்லை’ என
நினைக்கிறாய். உனது ஞானமும், அறிவும்
உன்னைக் காப்பாற்றும் என்று எண்
ணுகிறாய். நான் ஒருத்தி மட்டுமே, என்னைப்
போன்று முக்கியமானவள் எவளுமில்லை
என்று நீ உனக்குள் நினைக்கிறாய்.
11“ஆனால், உனக்குத் துன்பங்கள் வரும்.
அவை எப்போது வரும் என்று உனக்குத்
தெரியாது. ஆனால் அழிவு வந்துகொண்டி
ருக்கிறது. நீ அந்தத் துன்பங்களைத் தடுத்திட
எதுவும் செய்ய முடியாது! என்ன நடக்
கிறது என்று தெரிந்துகொள்ளு முன்னரே
விரைவாக நீ அழிந்துபோவாய்.
12உன் வாழ்வு முழுவதும் கடுமையாக
உழைத்து தந்திரமும் மந்திரமும் கற்றாய்.
எனவே, உனது மந்திரத்தையும் தந்திரத்தை
யும் பயன்படுத்தத் தொடங்கு! ஒருவேளை
அந்தத் தந்திரங்கள் உனக்கு உதவும். ஒரு
வேளை உன்னால் வேறு எவரையாவது
பயங்காட்ட முடியும்.
13உனக்கு ஏராளமான ஆலோசகர்கள்
இருக்கிறார்கள். அவர்களது ஆலோசனைக
ளால் நீ சோர்வடைந்து விட்டாயா?
நட்சத்திரங்களை வாசிக்கிற உனது ஆட்
களை வெளியே அனுப்பு. எப்போது மாதம்
தொடங்கும் என்று அவர்களால் சொல்ல
முடியும். உனது துன்பங்கள் எப்போது
வரும் என்றும் அவர்களால் உனக்குச்
சொல்ல முடியும்.
14“ஆனால், அவர்களால் தங்களைக்கூடக்
காப்பாற்றிக்கொள்ள முடியாது. அவர்கள்
பதரைப் போன்று எரிந்துபோவார்கள்.
அவர்கள் விரைவாக எரிந்துபோவார்கள்.
அப்பம் சுடுவதற்கான கனல்கூட மீதியாகா
மல் எரிந்துபோகும். குளிர் காய்வதற்குக்கூட
நெருப்பு இல்லாமல் போகும்.
15இதுவரை நீ கடினப்பட்டு வேலை
செய்துள்ள அனைத்துக்கும் இது ஏற்படும்.
உனது வாழ்க்கை முழுவதும் எவருடன்
வியாபாரம் செய்தாயோ அவர்கள் உன்னை
விட்டு விலகிப்போவார்கள். ஒவ்வொருவ
ரும் அவரவர் வழி போவார்கள். உன்னைக்
காப்பாற்ற எவரும் மீதியாக இருக்கமாட்
டார்கள்.”

### தேவன் தனது உலகை ஆள்கிறார்

48 கர்த்தர் கூறுகிறார், “யாக்கோபின்
குடும்பமே! என்னைக் கவனி!
உங்களை நீங்கள் இஸ்ரவேல்’ என்று
அழைக்கிறீர்கள். யூதாவின் குடும்பத்தில்
இருந்து நீங்கள் வந்திருக்கிறீர்கள். வாக்கு
றுதிகள் கொடுக்க நீங்கள் கர்த்தருடைய
நாமத்தைப் பயன்படுத்துகிறீர்கள். இஸ்ர
வேலின் தேவனை நீங்கள் துதிக்கிறீர்கள்.
ஆனால் நீங்கள் இவற்றைச் செய்யும்போது
உண்மையாகவும் நேர்மையாகவும் இல்லா
மல் இருக்கிறீர்கள்.”

*2ஆம் பரிசுத்தமான நகரத்தின் பிர ஜைகள்*
*அவர்கள். அவர்கள் இஸ்ரவேலின் தேவ*
*னைச் சார்ந்து இருக்கிறார்கள். அவரது*
*நாமம் சர்வ வல்லமையுள்ள கர்த்தர்.*
*3முன்பே நான் நடக்கப் போவதை*
*உங்களுக்குச் சொன்னேன். நான் உங்களுக்கு*
*அவற்றைப்பற்றிச் சொன்னேன். பிறகு,*
*திடீரென்று அவை நடக்கும்படிச் செய்தேன்.*
*4நான் அதனைச் செய்தேன். ஏனென்றால்,*
*நீங்கள் பிடிவாதமுடையவர்கள் என்பது*
*எனக்குத் தெரியும். நான் சொன்ன எதையும்*
*நீங்கள் நம்ப மறுத்தீர்கள். நீங்கள் மிகவும்*
*பிடிவாதம் உடையவர்கள். நீங்கள் வளை*
*யாத இரும்பைப் போலவும் உறுதியான*
*வெண்கலம் போலவும் இருக்கிறீர்கள்.*
*5எனவே, நீண்ட காலத்துக்கு முன்பே*
*நான் என்ன நடக்குமென சொன்னேன்.*
*அவை நடப்பதற்கு நீண்ட காலத்திற்கு*
*முன்னரே நான் அவற்றைப்பற்றி உங்க*
*ளுக்குச் சொன்னேன். நான் இதைச் செய்*
*தேன். எனவே நீ, 'எங்கள் விக்கிரகங்கள்*
*(தெய்வங்கள்) இந்த நடபடிகளை நடக்க*
*செய்தன' என்று சொல்ல முடியாது. நான்*
*இதைச் செய்தேன். எனவே நீ, 'எங்கள்*
*விக்கிரகங்கள், எங்கள் சிலைகளால் இது*
*நிகழ்ந்தது' என்று சொல்லமுடியாது.*

### தேவன் இஸ்ரவேலைச் *சுத்தப்படுத்த தண்டிக்கிறார்*

*6"என்ன நடந்தது என்று நீங்கள் பார்த்*
*தீர்கள், கேட்டீர்கள். எனவே, நீங்கள் இந்தச்*
*செய்தியை பிற ஜனங்களிடம் சொல்ல*
*வேண்டும். இப்போது, நான் இதுவரை*
*நீங்கள் அறியாத புதிய செய்திகளைச்*
*சொல்லுவேன்.*
*7இவை நீண்டக் காலத்திற்கு முன் நடந்த*
*தல்ல. இவை இப்பொழுது நடந்து*
*கொண்டிருக்கிறது. இதற்கு முன்னால் நீங்கள்*
*இதைப்பற்றி கேள்விப்பட்டிருக்கமாட்டீர்கள்.*
*எனவே 'நாங்கள் ஏற்கெனவே அறி வோம்'*
*என்று நீங்கள் சொல்ல முடியாது.*
*8"ஆனாலும் வருங்காலத்தில் என்ன*
*நடக்குமென்று இப்பொழுது, நான் சொன்*
*னாலும் நீங்கள் கேட்க மறுப்பீர்கள். நீங்கள்*
*எதையும் கற்றுக்கொள்ளமாட்டீர்கள். நான்*
*சொன்ன எதையும் நீ எப்பொழுதும்*
*கேட்பதில்லை. நீ எப்பொழுதும் எனக்கு*
*எதிராக இருப்பாய் என்பதை நான்*
*தொடக்க முதலே அறிவேன். நீ பிறந்த நாள்*
*முதலாகவே எனக்கு எதிராகக் கலகம்*
*செய்திருக்கிறாய்.*
*9ஆனால், நான் பொறுமையாக இருப்*
*பேன். நான் இதனை எனக்காகச் செய்வேன்.*
*நான் கோபங்கொண்டு உன்னை அழிக்காத*
*தற்காக ஜனங்கள் என்னைப் போற்றுவார்*
*கள். காத்திருந்ததற்காக நீ என்னைப்*
*போற்றுவாய்.*

*10"பார், நான் உன்னைச் சுத்தப்படுத்து*
*வேன். ஜனங்கள் வெள்ளியைச் சுத்தப்படுத்த*
*நெருப்பைப் பயன்படுத்துகிறார்கள். ஆனால்*
*நான் உனக்குத் துன்பங்களைத் தந்து*
*உன்னைச் சுத்தப்படுத்துவேன்.*
*11எனக்காகவே, எனக்காகவே நான் இத*
*னைச் செய்வேன். நான் முக்கியமானவன்*
*அல்ல என்று நீ என்னை நடத்த முடியாது.*
*எனது துதியையும், மகிமையையும் பொய்த்*
*தெய்வங்கள் எடுத்துக்கொள்ள விடமாட்*
*டேன்.*
*12"யாக்கோபே, என்னைக் கவனி! இஸ்ர*
*வேலர்களே, நான் எனது ஜனங்களாக*
*உங்களை அழைத்தேன். எனவே என்னைக்*
*கவனியுங்கள்! நானே தொடக்கம், நானே*
*முடிவு!*
*13நான் பூமியை எனது சொந்தக் கையால்*
*செய்தேன்! எனது வலது கை ஆகாயத்தைச்*
*செய்தது! நான் அவற்றை அழைத்தால்*
*என் முன்னால் அவை கூடி வரும்.*
*14"நீங்கள் அனைவரும் இங்கே வாருங்கள்.*
*என்னைக் கவனியுங்கள். இவை நடக்கு*
*மென்று எந்தப் பொய்த் தெய்வங்களாவது*
*கூறினார்களா? இல்லை!" கர்த்தர் தெரிந்து*
*கொண்ட விசேஷ மனிதன் எதை விரும்புகி*
*றானோ அதைப் பாபிலோனுக்கும் கல்தேய*
*ருக்கும் செய்வான்.*

*15கர்த்தர் சொல்கிறார், "நான் அவனை*
*அழைப்பேன் என்று சொன்னேன். நான்*
*அவனைக் கொண்டுவருவேன். நான்*
*அவனை வெற்றியடையச் செய்வேன்.*
*16இங்கே வா, என்னைக் கவனி! பாபி*
*லோன் ஒரு தேசமாக ஆரம்பமாகும்போது*
*நான் அங்கிருந்தேன். தொடக்கத்திலேயிருந்து*
*நான் தெளிவாகப் பேசினேன். எனவே,*
*நான் என்ன சொன்னேன் என்று ஜனங்க*
*ளால் அறிய முடியும்."*
*பிறகு ஏசாயா சொன்னான், "இப்பொ*
*ழுது, எனது கர்த்தராகிய ஆண்டவர் என்*
*னையும் அவரது ஆவியையும் இவற்றை*
*உங்களிடம் சொல்ல அனுப்பியிருக்கிறார்.*
*17கர்த்தரும், மீட்பருமாகிய, இஸ்ரவேலின்*
*பரிசுத்தர் சொல்கிறார், "நானே உனது*
*தேவனாகிய கர்த்தர். பயனுள்ளதைச் செய்ய*
*நான் உனக்குக் கற்பிக்கிறேன். நீ போக*
*வேண்டிய பாதையில் உன்னை நான்*
*வழி நடத்துகிறேன்.*
*18நீ எனக்குக் கீழ்ப்படிந்திருந்தால், சமா*
*தானம் பாய்ந்து வரும் ஆற்றைப் போன்று*
*உன்னிடம் வந்திருக்கும். மீண்டும் மீண்டும்*
*நன்மை கடல் அலைகள் போன்று. உன்*
*னிடம் வந்திருக்கும்,*
*19நீ எனக்குக் கீழ்ப்படிந்தால், உனக்கு*
*நிறைய பிள்ளைகள் இருந்திருக்கும். அவர்*
*கள் மணல் துகள்களைப் போன்று இருந்தி*
*ருப்பார்கள். நீ எனக்குக் கீழ்ப்படிந்திருந்தால்,*

நீ அழிக்கப்படாமல் இருந்திருப்பாய். என்னோடு நீ தொடர்ந்து இருந்திருப்பாய்.”

20எனது ஜனங்களே, பாபிலோனிலிருந்து
புறப்படுங்கள்! எனது ஜனங்களே, கல்தே
யரை விட்டு ஓடுங்கள்! ஜனங்களிடம் இந்
தச் செய்தியை மகிழ்ச்சியோடு கூறுங்கள்!
பூமியிலுள்ள தொலைதூர இடங்களிலும்
இந்தச் செய்தியைப் பரப்புங்கள். ஜனங்
களிடம் சொல்லுங்கள். “கர்த்தர் அவரது
தாசனாகிய யாக்கோபை மீட்டார்!

21கர்த்தர் அவரது ஜனங்களை வனாந்
திரத்தின் வழியாக நடந்திச் செல்கிறார்.
அவர்களுக்கு எப்பொழுதும் தாகமாய்
இராது! ஏனென்றால், அவரது ஜனங்க
ளுக்காக அவர் கன்மலையிலிருந்து தண்
ணீரைப் பாயச்செய்வார்! அவர் பாறை
களைப் பிளந்தார்! தண்ணீர் வெளியே
பாய்ந்தது.”

22ஆனால் கர்த்தர் கூறுகிறார், “கெட்ட
ஜனங்களுக்குச் சமாதானம் இல்லை!”

### தேவன் தனது சிறப்புக்குரிய தாசனை அழைக்கிறார்

49 தொலை தூர இடங்களில் வாழும்
ஜனங்களே, என்னைக் கவனியுங்கள்!
பூமியில் வாழும் ஜனங்களே, கவனியுங்கள்!
நான் பிறப்பதற்கு முன்னரே கர்த்தர் தமக்குப்
பணிபுரிய அழைத்தார். நான் என் தாயின்
கர்ப்பத்தில் இருக்கும்போதே, கர்த்தர் என்
பெயரைச் சொல்லி அழைத்தார்.

2நான் அவருக்காகப் பேசும்படி கர்த்தர்
என்னைப் பயன்படுத்துகிறார். அவர் என்
னைக் கூர்மையான வாளைப்போன்று பயன்
படுத்துகிறார். அவர் என்னைக் காப்பாற்று
கிறார். தமது கையில் மறைக்கிறார். கர்த்தர்
என்னைக் கூர்மையான அம்பைப் போன்று
பயன்படுத்துகிறார். கர்த்தர் என்னை அம்பு
பையில் மறைத்து வைக்கி றார்.

3கர்த்தர் என்னிடம் சொன்னார், “இஸ்ர
வேலே, நீ எனது தாசன். நான் உனக்கு
அற்புதங்களைச் செய்வேன்.”

4நான் சொன்னேன், “நான் வீணாகக்
கஷ்டப்பட்டு வேலை செய்கிறேன். நான்
முழுவதுமாய் என்னை வெளிப்படுத்துகி
றேன். ஆனால் பயனற்றவற்றையே செய்
தேன். நான் எனது வல்லமை முழுவதையும்
பயன்படுத்துகிறேன். ஆனால் உண்மையில்
நான் எதையும் செய்யவில்லை. எனவே,
என்னுடன் எதைச் செய்வது என கர்த்தர்
முடிவு செய்யவேண்டும். தேவன் எனது
விருதினை முடிவு செய்யவேண்டும்.

5என்னைக் கர்த்தர் என் தாயின் கர்ப்பத்
தில் உருவாக்கினார். எனவே, நான் அவரது
தாசனாக இருக்கமுடியும். நான் யாக்கோ
பையும் இஸ்ரவேலையும் அவரிடம் திரும்ப
அழைத்துச் செல்ல முடியும். கர்த்தர் என்
னைக் கௌரவிப்பார். நான் எனது தேவ
னிடமிருந்து எனது பலத்தைப் பெறுவேன்.”
கர்த்தர் என்னிடம் சொன்னார்,

6“நீ எனக்கு மிக முக்கியமான தாசன்.
யாக்கோபின் கோத்திரத்தை உயர்த்தி
மீதியான இஸ்ரவேலை மீண்டும் நிலைநிறுத்
துவாய். ஆனால், இந்த வேலை போதாது
உனக்கு வேறு வேலை இருக்கிறது. அது
இதைவிட மிகவும் முக்கியமானது.
அனைத்து தேசங்களுக்காக நான் ஒரு
ஒளியை ஏற்படுத்துவேன். பூமியில் உள்ள
அனைத்து ஜனங்களையும் காக்க நீ எனது
வழியில் இருப்பாய்.”

7கர்த்தர், இஸ்ரவேலின் பரிசுத்தர். இஸ்ர
வேலைப் பாதுகாக்கிறவர் சொல்கிறார்,
“எனது தாசன் பணிவானவன். அவன்
ஆள்வோர்களுக்குச் சேவை செய்கிறான்
ஆனால், ஜனங்கள் அவனை வெறுக்கி
றார்கள். ஆனால், அரசர்கள் அவனைப்
பார்ப்பார்கள்; அவனைப் பெருமைப்படுத்த
எழுந்து நிற்பார்கள். பெருந்தலைவர்கள்
அவனுக்குப் பணிவார்கள்.” இது நடை
பெறும். ஏனென்றால் கர்த்தர், இஸ்ரவேலின்
பரிசுத்தர் இதனை விரும்புகிறார். கர்த்தர்
நம்பத்தக்கவர். உன்னைத் தேர்ந்தெடுத்தவர்
அவரே.

### இரட்சிப்பின் நாள்

8கர்த்தர் கூறுகிறார், “எனது தயவைக்
காட்டும் சிறப்பான நேரம் இருக்கிறது.
அப்போது, நான் உனது ஜெபங்களுக்குப்
பதில் தருவேன். நான் உன்னைக் காப்பாற்
றும்போது அது சிறப்பான நாளாக இருக்
கும். அந்த நேரத்தில் நான் உன்னைக்
காப்பாற்றுவேன். நான் உன்னைப் பாதுகாப்
பேன். எனக்கு ஜனங்களோடு ஒரு உடன்
படிக்கை இருந்தது என்பதற்கு நீங்களே
சாட்சியாக இருப்பீர்கள். இப்போது நாடு
அழிக்கப்படுகிறது. ஆனால் தேசத்தை
அதற்கு உரியவர்களிடம் நீ திருப்பிக்
கொடுப்பாய்.

9நீங்கள் சிறைக் கைதிகளிடம் கூறுவீர்கள்.
‘சிறையை விட்டு வெளியே வாருங்கள்’
இருளில் இருக்கிற ஜனங்களுக்கு நீங்கள்
சொல்வீர்கள்: ‘இருளை விட்டு வெளியே
வாருங்கள்’ ஜனங்கள் பயணம் செய்யும்
போது சாப்பிடுவார்கள். காலியான குன்றுக
ளிலும் அவர்கள் உணவு வைத்திருப்பார்கள்.

10ஜனங்கள் பசியுடன் இருக்கமாட்டார்கள்.
அவர்கள் தாகத்தோடு இருக்கமாட்டார்கள்.
வெப்பமான சூரியனும் காற்றும் அவர்
களைப் பாதிக்காது. ஏனென்றால் தேவன்
ஆறுதல் செய்கிறார்; தேவன் அவர்களை
வழிநடத்துகிறார். அவர் அவர்களை நீரூற்
றுகளின் அருகில் வழிநடத்திச் செல்வார்.

11“நான் எனது ஜனங்களுக்காகச் சாலை
அமைப்பேன். மலைகள் தரைமட்டமாக்கப்
படும், தாழ்வான சாலைகள் உயர்த்தப்படும்.

[12]“பாருங்கள்! வெகு தொலைவான இடங்
களிலிருந்தும் ஜனங்கள் என்னிடம் வந்து
கொண்டிருக்கிறார்கள். வடக்கிலிருந்தும்
மேற்கிலிருந்தும் ஜனங்கள் என்னிடம் வந்து
கொண்டிருக்கிறார்கள். எகிப்தின் அஸ்வனி
லிருந்து. ஜனங்கள் என்னிடம் வந்துகொண்
டிருக்கிறார்கள்.”
[13]வானங்களும் பூமியும் மகிழ்ச்சியோடு
இருக்கட்டும். மலைகள் மகிழ்ச்சியோடு
சத்தமிடட்டும். ஏனென்றால், கர்த்தர் தமது
ஜனங்களை ஆறுதல்படுத்துகிறார். கர்த்தர்
தமது ஏழை ஜனங்களிடம் நல்லவராக
இருக்கிறார்.

### சீயோன் கைவிடப்பட்ட பெண்

[14]ஆனால், இப்பொழுது சீயோன் கூறுகி
றாள், “கர்த்தர் என்னைக் கைவிட்டு
விட்டார். எனது ஆண்டவர் என்னை
மறந்துவிட்டார்.”
[15]ஆனால் நான் சொல்கிறேன், “ஒரு
பெண்ணால் தன் குழந்தையை மறக்க
முடியுமா? முடியாது! ஒரு பெண்ணால்
தன் கர்ப்பத்திலிருந்து வந்த குழந்தையை
மறக்க முடியுமா? இல்லை! ஒரு பெண்ணால்
தன் பிள்ளையை மறக்க முடியாது! ஆனால்
அவள் மறந்தாலும் நான்(கர்த்தர்) உன்னை
மறக்க முடியாது.
[16]பார், நான் உனது பெயரை என்
உள்ளங்கையில் செதுக்கி இருக்கிறேன். நான்
எப்பொழுதும் உன்னைப்பற்றி நினைத்துக்
கொண்டிருக்கிறேன்!
[17]உனது பிள்ளைகள் உன்னிடம் திரும்பி
வருவார்கள். ஜனங்கள் உன்னைத் தோற்
கடித்தார்கள். ஆனால் அந்த ஜனங்கள்
உன்னைத் தனியாக விடுவார்கள்!”

### இஸ்ரவேல் ஜனங்கள் திரும்புகின்றனர்

[18]மேலே பார்! உன்னைச் சுற்றிலும் பார்!
உனது பிள்ளைகள் அனைவரும் ஒன்றாகக்
கூடி உன்னிடம் வருகிறார்கள். “என்
உயிர்மேல் வாக்குறுதியாக இதனைச்
சொல்கிறேன் என்கிறார் கர்த்தர். உங்கள்
பிள்ளைகள் நகைகளைப் போன்றவர்கள்.
அவர்களைக் கழுத்தைச் சுற்றி அணிந்து
கொள். உங்கள் பிள்ளைகளை மணமகள்
அணியத்தக்க கழுத்துப் பதக்கம் போன்று
அணிந்து கொள்.
[19]இப்பொழுது நீங்கள் தோற்கடிக்கப்படுகி
றீர்கள்; அழிக்கப்படுகிறீர்கள், உங்கள் தேசம்
பயனற்றது. ஆனால் கொஞ்சக் காலத்திற்குப்
பிறகு, உன் நாட்டில் ஏராளமான ஜனங்கள்
இருப்பார்கள். உங்களை அழித்த ஜனங்கள்
வெகுதொலைவில் இருப்பார்கள்.
[20]நீங்கள் இழந்துப்போன பிள்ளைகளுக்
காக வருத்தப்பட்டீர்கள். ஆனால் அந்தப்
பிள்ளைகள் உங்களிடம், ‘இந்த இடம்
மிகவும் சிறிதாய் உள்ளது. நாங்கள்
வாழ்வதற்கு ஒரு பெரிய இடத்தைக் கொடு’
என்று சொல்வார்கள்.
[21]பிறகு நீ உனக்குள்ளேயே, ‘இந்தப்
பிள்ளைகளையெல்லாம் எனக்கு யார்
கொடுத்தது, இது மிகவும் நல்லது. நான்
தனியாகவும் சோகமாகவும் இருக்கிறேன்.
நான் தோற்கடிக்கப்பட்டு என் ஜனங்க
ளிடமிருந்து தொலைவில் உள்ளேன்.
எனவே, இந்த பிள்ளைகளை எனக்கு யார்
கொடுத்தது? பார், நான் தனியாக
விடப்பட்டுள்ளேன். இந்தப் பிள்ளைகள்
எல்லோரும் எங்கிருந்து வந்தார்கள்?”
என்று சொல்லிக்கொள்வாய்.
[22]எனது கர்த்தராகிய ஆண்டவர்
கூறுகிறார், “பார், நான் நாடுகளுக்கு என்
கையை ஆட்டுகிறேன். எல்லா ஜனங்களும்
பார்க்கும்படி நான் எனது கொடியை
ஏற்றுவேன். பிறகு உனது பிள்ளைகளை
உன்னிடம் அழைத்து வருவார்கள். அந்த
ஜனங்கள் உங்கள் பிள்ளைகளைத் தம்
தோள்களில் தூக்கிச் செல்வார்கள். அவர்கள்
தம் கைகளில் பிடித்துக்கொள்வார்கள்.
[23]அரசர் உன் பிள்ளைகளுக்கு ஆசிரியர்க
ளாக இருப்பார்கள். அரச குமாரிகள் அவர்
களைக் கவனித்துகொள்வார்கள். அந்த
அரசர்களும் இளவரசிகளும் உங்களுக்குப்
பணிவார்கள். அவர்கள் புழுதி படிந்த
உங்கள் கால்களை முத்தமிடுவார்கள். பிறகு
நான்தான் கர்த்தர் என்று நீங்கள் அறிவீர்கள்.
என்னை நம்புகிற எவனும் ஏமாற்றப்பட
மாட்டான் என்பதை நீங்கள் அறிவீர்கள்.”
[24]ஒரு பலமான வீரன் போரில் செல்
வத்தை அபகரித்தால், அவனிடமிருந்து நீங்
கள் அச்செல்வத்தைப் பெறமுடியாது. ஒரு
வல்லமையுள்ள வீரன் ஒரு கைதியைக்
காத்து நின்றால், அந்தக் கைதி அவனிட
மிருந்து தப்பமுடியாது.
[25]ஆனால் கர்த்தர் கூறுகிறார், “கைதிகள்
தப்பித்துக்கொள்வார்கள் எவனோ ஒருவன்,
பலமான வீரனிடமிருந்து கைதிகளை மீட்டுச்
செல்வான். இது எவ்வாறு நடக்கும்? உன்
னோடு போராடுபவர்களோடு போராடுவேன்
நான் பிள்ளைகளைக் காப்பாற்றுவேன்.
[26]“அந்த ஜனங்கள் உன்னைக் காயப்படுத்
துகிறார்கள். ஆனால், நான் அவர்கள்
தமது சொந்த உடலையே உண்ணும்படி
அவர்களை வற்புறுத்துவேன். அவர்களது
சொந்த இரத்தமே அவர்கள் குடிக்கும் திராட்
சைரசமாகும். பிறகு, கர்த்தர் உன்னைப்
பாதுகாத்தார் என்பதை எல்லோரும் அறி
வார்கள். அனைத்து ஜனங்களும், யாக்கோ
பின் வல்லமைமிக்கவர் உன்னைக் காப்பாற்
றினார் என்பதை அறிவார்கள்.”

### தங்கள் பாவத்திற்காக, இஸ்ரவேல் தண்டிக்கப்படுகிறது

50 கர்த்தர் சொல்கிறார், “இஸ்ரவேல்
ஜனங்களே! உனது தாயான எருச

லேமை விவாகரத்து செய்தேன் என்று நீ சொல்கிறாய். ஆனால், அவளை நான் விவாகரத்து செய்தேன் என்பதை நிரூபிக்கும் பத்திரம் எங்கே உள்ளது? எனது பிள்ளைகளே, யாருக்காவது பணம் கடன்பட்டேனா? எனது கடனுக்காக உங்களை விற்றேனா? இல்லை. நீங்கள் விற்கப்பட்டீர்கள். ஏனென்றால், நீங்கள் கெட்டச் செயல்களைச் செய்தீர்கள். நான் உங்கள் தாயை (எருசலேம்) அனுப்பினேன். ஏனென்றால், நீங்கள் கெட்டச் செயல்களைச் செய்தீர்கள்.

2நான் வீட்டிற்கு வந்தேன். அங்கே யாருமில்லை. நான் அழைத்து அழைத்துப் பார்த்தேன். எவரும் பதில் சொல்லவில்லை. நான் உன்னைக் காப்பாற்ற முடியாது என்று நினைத்தாயா? நான் உனது துன்பங்களிலிருந்து உன்னைக் காப்பாற்றும் வல்லமையைக் கொண்டிருக்கிறேன். பார், நான் கடலை வற்றிப்போகும்படி கட்டளையிட்டால் பிறகு அது வற்றிப்போகும். மீன், தண்ணீரில்லாமல் மரிக்கும். அவற்றின் உடல் அழுகும்.

3என்னால் வானத்தை இருளாக்க முடியும். நான் துக்கத்தின் ஆடையைப் போன்று வானத்தை இருளால் இருளடையச் செய்வேன்.”

### தேவனுடைய தாசன் உண்மையில் தேவனைச் சார்ந்திருப்பான்

4எனது கர்த்தராகிய ஆண்டவர் போதிக்கும் திறமையை எனக்குத் தந்தார். எனவே, இப்பொழுது நான் இந்தச் சோகமான ஜனங்களுக்குப் போதிக்கிறேன். ஒவ்வொரு காலையிலும் என்னை அவர் எழுப்பி ஒரு மாணவனுக்கு போதிப்பதைப் போன்று போதிக்கிறார். 5எனது கர்த்தராகிய ஆண்டவர் நான் கற்றுக்கொள்ள உதவினார். நான் அவருக்கு எதிராகத் திரும்பவில்லை. நான் அவரைப் பின்பற்றுவதை விடவில்லை. 6அந்த ஜனங்கள் என்னை அடிக்கும்படி விடுவேன். எனது தாடியில் உள்ள மயிரைப் பிடித்து அவர்கள் இழுக்கும்படி விடுவேன். அவர்கள் என்னைப்பற்றி கெட்டதாகப் பேசி என் மீது துப்பும்போது நான் எனது முகத்தை மறைக்கமாட்டேன். 7எனது கர்த்தராகிய ஆண்டவர் எனக்கு உதவுவார். அவர்கள் சொல்லும் கெட்டவை என்னைப் பாதிக்காது. நான் பலமுள்ளவனாக இருப்பேன். நான் ஏமாறமாட்டேன் என்று எனக்குத் தெரியும்.

8கர்த்தர் என்னோடு இருக்கிறார். நான் கபடமற்றவன் என்று அவர் காட்டுகிறார். எனவே, எவராலும் என்னைக் குற்றவாளி எனக் காட்ட முடியாது. நான் தவறானவன் என்று எவராவது காட்ட விரும்பினால் அவன் என்னிடம் வரட்டும், நாங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் சோதித்துக் கொள்ளலாம். 9ஆனால் பார்! எனது கர்த்தராகிய ஆண்டவர் எனக்கு உதவுகிறார். எனவே, எவரும் நான் கெட்டவன் என்று காட்ட முடியாது. அவர்கள் அனைவரும் பயனற்ற பழைய ஆடைகளைப் போன்று ஆவார்கள். பொட்டுப்பூச்சி அவர்களை அரிக்கும்.

10கர்த்தருக்கு மரியாதை செய்கின்ற ஜனங்கள் அவரது தாசனையும் கவனிப்பார்கள். அந்த தாசன் முழுவதும் தேவனை நம்பி என்ன நடக்கும் என்று தெரியாமல் வாழ்கிறான். அவன் உண்மையில் கர்த்தருடைய நாமத்தில் நம்பிக்கை வைக்கிறான். அந்த தாசன் அவனது தேவனைச் சார்ந்துள்ளான்.

11“பார், நீங்கள் உங்களது சொந்த வழியில் வாழவேண்டும் என்று விரும்புகிறீர்கள். உங்கள் நெருப்பையும் விளக்கையும் நீங்கள் பொருத்துகிறீர்கள். எனவே, உன் சொந்த வழியில் வாழ்வாயாக. ஆனால் நீ தண்டிக்கப்படுவாய். நீங்கள் உங்கள் நெருப்பில் விழுவீர்கள், நீங்கள் எரிக்கப்படுவீர்கள். நான் அது நடக்கும்படிச் செய்வேன்.”

### ஆபிரகாமைப் போன்று இஸ்ரவேலர் இருக்க வேண்டும்

51 “உங்களில் சிலர் நல்வாழ்வு வாழக் கஷ்டப்பட்டு உழைக்கிறீர்கள். உதவிக்காக நீங்கள் கர்த்தரிடம் போகிறீர்கள். என்னைக் கவனியுங்கள்! உங்கள் தந்தையான ஆபிரகாமை நீங்கள் பார்க்க வேண்டும். நீங்கள் கன்மலையாகிய அவனிடமிருந்து வெட்டி எடுக்கப்பட்டவர்கள். 2ஆபிரகாம் உங்களுடைய தந்தை. நீங்கள் அவனைப் பாருங்கள்! நீங்கள் சாராளைப் பாருங்கள்! உங்களைப் பெற்றவள் அவள். நான் அழைக்கும்போது ஆபிரகாம் தனியாக இருந்தான். பிறகு நான் அவனை ஆசீர்வதித்தேன். அவன் பெரிய குடும்பமாக ஆனான். அவனிடமிருந்து ஏராளமான ஜனங்கள் வந்தனர்.”

3அதே வழியில், கர்த்தர் சீயோனையும் அவளது எல்லா பாழான இடங்களையும் தேற்றுவார். அவளுக்காகவும், அவளது ஜனங்களுக்காகவும்கர்த்தர் வருத்தப்படுவார். அவளுக்காக அவர் பெரிய செயல்களைச் செய்வார். கர்த்தர் வனாந்திரத்தை மாற்றுவார். வனாந்திரம் ஏதேன் தோட்டத்தைப் போன்ற தோட்டமாகும். அந்தத் தேசம் காலியாய் இருந்தது. ஆனால் இது கர்த்தருடைய தோட்டம் போலாகும். அங்குள்ள ஜனங்கள் மிகவும் மகிழ்ச்சியோடு இருப்பார்கள். அவர்கள் வெற்றியைக் குறித்தும், நன்றிகூறியும் பாடுவார்கள்.

4“எனது ஜனங்களே! என்னைக் கவனியுங்கள்! எனது முடிவுகள் ஜனங்கள் எவ்வாறு வாழவேண்டும் என்பதைக் காட்டும் வெளிச்சங்களாக இருக்கும்.

[5]நான் நியாயமாக இருப்பதை விரைவில்
காட்டுவேன். நான் விரைவில் உன்னைக்
காப்பாற்றுவேன். நான் எனது வல்ல
மையைப் பயன்படுத்தி நாடுகளை எல்லாம்
நியாயம் தீர்ப்பேன். துரமான இடங்கள்
எல்லாம் எனக்காகக் காத்திருக்கின்றன.
அவர்கள் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள என்
வல்லமைக்காகக் காத்திருக்கிறார்கள்.

[6]வானத்தைப் பாருங்கள்! கீழே உள்ள
பூமியில் உங்களைச் சுற்றிப் பாருங்கள்!
வானங்கள் மறைந்துபோகும், மேகம் புகை
யைப் போன்றும், பூமியானது பயனற்ற
பழைய ஆடைகளைப் போன்று ஆகும்.
பூமியிலுள்ள ஜனங்கள் மரித்துப்போவார்
கள். ஆனால், எனது இரட்சிப்பு தொடர்ந்து
என்றென்றும் இருக்கும். எனது நன்மைக்கு
முடிவு இராது.

[7]நன்மையைப் புரிந்துகொண்ட ஜனங்கள்
என்னைக் கவனிக்கட்டும். என் போதனை
களைப் பின்பற்றுகிற ஜனங்கள் நான்
சொல்வதைக் கேட்க வேண்டும். தீயவர்க
ளுக்காக அஞ்ச வேண்டாம்! அவர்கள்
உன்னைப்பற்றிச் சொல்லும் தீயவற்றுக்கு
அஞ்ச வேண்டாம்!

[8]ஏனென்றால், அவர்கள் பழைய ஆடை
களைப் போன்றவர்கள். அவற்றைப் பொட்
டுப்பூச்சிகள் உண்ணும் அவர்கள் மரக்
கட்டையைப் போலாவார்கள். கரையான்
அவற்றைத் உண்ணும். ஆனால், எனது
நன்மை என்றென்றும் தொடரும். எனது
இரட்சிப்பு என்றென்றும் தொடரும்!"

**தேவனுடையச் சொந்த வல்லமை அவரது ஜனங்களைக் காப்பாற்றும்**

[9]கர்த்தருடைய கையே! (வல்லமை)
எழும்பு, எழும்பு, பலமாகு! உனது பலத்
தைப் பயன்படுத்து, நீண்ட காலத்துக்கு
முன்பு நீ செய்தது போன்றும் பழங்காலத்தில்
நீ செய்தது போன்றும். நீரே ராகாப்பைத்
தோற்கடிக்க வல்லமையாக இருந்தீர். நீர்
அந்த பயங்கர பிராணியைத் தோற்கடித்தீர்.

[10]கடலின் தண்ணீர் வறண்டுபோவதற்குக்
காரணமாக இருந்தீர்! நீர் பெரும் ஆழங்களில்
உள்ள தண்ணீரை வற்றச் செய்தீர்! கடலின்
ஆழமான இடங்களில் சாலைகளை அமைத்
தீர். சாலையைக் கடந்த உமது ஜனங்கள்
காப்பாற்றப்பட்டனர்.

[11]கர்த்தர் அவரது ஜனங்களைக் காப்பாற்
றுவார். அவர்கள் சீயோனுக்கு மகிழ்ச்சி
யோடு திரும்புவார்கள். அவர்கள் மிகுந்த
மகிழ்ச்சியாக இருப்பார்கள். அவர்களது
மகிழ்ச்சியானது அவர்களின் தலையில்
என்றென்றும் இருக்கிற கிரீடம்போல் இருக்
கும். அவர்கள் மகிழ்ச்சியோடு பாடுவார்கள்.
அனைத்து துக்கங்களும் வெளியே போகும்.

[12]கர்த்தர் கூறுகிறார், "உனக்கு ஆறுதல்
தருகிற ஒருவர் நான் மட்டுமே. எனவே,
நீங்கள் ஜனங்களுக்கு ஏன் பயப்பட
வேண்டும். அவர்கள் வாழவும் மரிக்கவும்
கூடிய ஜனங்கள்தான். அவர்கள் மானிடர்கள்
மட்டுமே. புழுக்களைப் போலவே மரிக்கி
றார்கள்."

[13]கர்த்தர் உன்னைப் படைத்தார்! அவர்
தமது வல்லமையால் பூமியைப் படைத்தார்!
அவர் தமது வல்லமையால் பூமிக்கு மேலே
வானத்தை விரித்து வைத்தார். ஆனால்,
நீ அவரையும் அவரது வல்லமையையும்
மறந்துவிட்டாய். எனவே, நீ எப்பொழுதும்
கோபங்கொண்ட உன்னைப் பாதிக்கும்
ஜனங்களுக்குப் பயப்படுகிறாய். அவர்கள்
உன்னை அழிக்கத் திட்டமிடுகிறார்கள்.
ஆனால் இப்போது அவர்கள் எங்கே உள்ள
னர்? அவர்கள் எல்லாம் போய்விட்டார்கள்.

[14]சிறையிலுள்ள ஜனங்கள் விரைவில்
விடுதலை செய்யப்படுவார்கள். அந்த
ஜனங்கள் சிறைக்குள் மரித்து அழுகமாட்
டார்கள். அந்த ஜனங்கள் போதிய
உணவைப் பெறுவார்கள்.

[15]"நானே உனது தேவனாகிய கர்த்தர்.
நான் கடலைக் கலக்கி அலைகளைச் செய்
தேன்" (சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
என்பது அவரது நாமம்.)

[16]"எனது தாசனே! நீ சொல்லவதற்குரிய
வார்த்தைகளை நான் உனக்குத் தருவேன்.
நான் எனது கைகளால் உன்னை மூடி
பாதுகாப்பேன். நான் புதிய வானத்தையும்,
புதிய பூமியையும் படைக்க உன்னைப்
பயன்படுத்துவேன். நான் உன்னைப் பயன்
படுத்தி இஸ்ரவேலரிடம், 'நீங்கள் எனது
ஜனங்கள்' என்று சொல்லுவேன்."

**தேவன் இஸ்ரவேலைத் தண்டித்தார்**

[17]எழும்பு! எழும்பு! எருசலேமே எழும்பு!
கர்த்தர் உன் மீது மிகவும் கோபமாய்
இருந்தார். எனவே, நீங்கள் தண்டிக்கப்
பட்டீர்கள். உங்களுக்கான இந்தத் தண்டனை
யானது ஒரு கிண்ணம் விஷத்தை குடிக்க
வேண்டியதுபோல இருந்தது. நீங்கள் அதைக்
குடித்தீர்கள்.

[18]எருசலேமில் பல ஜனங்கள் இருந்தனர்.
ஆனால், எவரும் அவளுக்காகத் தலைவர்கள்
ஆகவில்லை. அவள் வளர்த்த அந்தப்
பிள்ளைகளும் அவளை வழிநடத்திச் செல்
லும் வழிகாட்டிகளாக வரமாட்டார்கள்.
[19]துன்பங்கள் எருசலேமிற்கு இரு குழுக்க
ளாக, அதாவது, திருடுதலும் உடைத்தலும்
மற்றும் பெரும் பசியும் சண்டையும் என்று
வந்தது.

நீ துன்பப்படும்போது எவரும் உதவி
செய்யவில்லை. எவரும் உன்மீது இரக்கம்
கொள்ளவில்லை. [20]உனது ஜனங்கள் பல
வீனர் ஆனார்கள். அவர்கள் தரையில்
விழுந்து அங்கேயே கிடந்தார்கள். அந்த
ஜனங்கள் ஒவ்வொரு தெரு முனைகளிலும்
விழுந்து கிடந்தார்கள். அவர்கள் மிருகங்
களைப் போன்று வலைக்குட்பட்டிருந்தனர்.

அவர்கள் கர்த்தருடைய கோபத்திலிருந்து,
மேலும் தண்டனையைப் பெற முடியாத
அளவிற்கு தண்டிக்கப்பட்டனர். தேவன்
மேலும் தண்டனை கொடுக்கப்போவதாய்
சொன்னபோது, அவர்கள் மிகவும் பலவீனம்
உடையவர்களாய் இருந்தனர்.
[21]ஏழை எருசலேமே. எனக்குச் செவி
கொடு! குடிகாரனைப் போன்று நீ பலவீன
மாய் இருக்கிறாய். ஆனால், நீ திராட்சை
ரசத்தை குடிக்கவில்லை. நீ, "விஷக்
கோப்பையால்" பலவீனமாக இருக்கிறாய்.
[22]உனது தேவனும், கர்த்தராகிய ஆண்ட
வர் அவரது ஜனங்களுக்காகப் போரிடுவார்.
அவர் உன்னிடம், "பார், விஷக்கிண்
ணத்தை" (தண்டனை) உன்னிடமிருந்து
எடுத்து விடுகிறேன். உன்னிடமிருந்து
எனது கோபத்தை நீக்கிக்கொள்கிறேன்.
இனிமேல் எனது கோபத்தால் நீ தண்டிக்
கப்படமாட்டாய். [23]உன்னைப் பாதித்த
வர்களைத் தண்டிக்க எனது கோபத்தைப்
பயன்படுத்துவேன். அந்த ஜனங்கள் உன்
னைக் கொல்ல முயன்றார்கள். அவர்கள்,
'எங்கள் முன்பு பணியுங்கள்' நாங்கள்
உன்னை மிதித்துச் செல்வோம்' என்றனர்.
அவர்கள் முன்பு பணியுமாறு வற்புறுத்தி
னார்கள். பிறகு, உனது முதுகின்மேல்
புழுதியைப்போன்று மிதித்துச் சென்றனர்!
நீங்கள் நடந்து செல்வதற்கான சாலையைப்
போன்று இருந்தீர்கள்."

### இஸ்ரவேல் காப்பாற்றப்படும்

52 எழும்பு, சீயோனே எழும்பு, மகிமை
யான ஆடைகளை அணிந்துகொள்!
பலத்தை எடுத்துக்கொள்! பரிசுத்தமான எரு
சலேமே எழுந்து நில்! தேவனைப் பின்பற்ற
ஒப்புக்கொள்ளாத ஜனங்கள் மீண்டும்
உனக்குள் நுழைய முடியாது! அந்த ஜனங்
கள் சுத்தமும் பரிசுத்தமும் இல்லாதவர்கள்.
[2]தூசியை உதறுங்கள்! உங்கள் அற்பு
தமான ஆடைகளை அணிந்துகொள்ளுங்கள்!
எருசலேமே. சீயோனின் மகளே, நீங்கள்
சிறையில் இருந்தீர்கள். ஆனால் இப்பொழுது,
உங்கள் கழுத்தில் சுற்றிக் கிடந்த சங்கிலி
களில் இருந்து விடுதலை அடைந்தீர்கள்!
[3]கர்த்தர் கூறுகிறார், "நீங்கள் காசுக்காக
விற்கப்படவில்லை. எனவே, நான் உன்னை
விடுதலை செய்ய பணத்தைப் பயன்
படுத்தமாட்டேன்."
[4]எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறு
கிறார்: "என் ஜனங்கள் முதலில் எகிப்துக்கு
வாழச் சென்றனர். பிறகு, அவர்கள்
அடிமைகளானார்கள். பின்னர், அசீரியா
அவர்களை அடிமைப்படுத்தினான். [5]இப்
போது என்ன நடந்தது என்று பார்!
இன்னொரு நாடு எனது ஜனங்களை
எடுத்துக்கொண்டது. என் ஜனங்களை எடுத்
துக்கொள்ள அவர்கள் எதையும் கொடுக்
கவில்லை. இந்த நாடு என் ஜனங்களை
ஆளுகின்றனர், அவர்களைப் பார்த்து நகைக்
கின்றனர். அந்த ஜனங்கள் எப்பொழுதும்
என்னையும் என் நாமத்தையும் ஏளனம்
செய்கிறார்கள்."
[6]கர்த்தர் கூறுகிறார், "இது நடந்திருக்கி
றது. எனவே, என் ஜனங்கள் என்னைப்
பற்றி கற்றுக்கொள்வார்கள். நான் யாரென்று
என் ஜனங்கள் அறிவார்கள். என் ஜனங்கள்
என் நாமத்தை அறிவார்கள். பிறகு அவர்கள்
இதைச் சொல்கிறவர் நானே அவரென்று
அறிவார்கள்."
[7]ஒரு தூதுவன் நற்செய்தியோடு மலைக்கு
மேல் வருவதைப் பார்ப்பது அற்புதமான
ஒன்று. தூதுவன், "அங்கே சமாதானம்
உள்ளது. நாம் காப்பாற்றப்பட்டிருக்கிறோம்.
சீயோனே, உங்கள் தேவனே அரசர்" என்று
கூறுவதைக் கேட்பது அற்புதமான ஒன்று.
[8]நகரக் காவலர்கள் சத்தமிடத் தொடங்கி
னார்கள். அவர்கள் கூடிக் களித்தனர்.
ஏனென்றால், அவர்களில் ஒவ்வொருவரும்
கர்த்தர் சீயோனுக்குத் திரும்புவதைப் பார்க்கி
ன்றனர்.
[9]எருசலேமே, உனது அழிக்கப்பட்ட
கட்டிடங்கள் மீண்டும் மகிழும். நீங்கள்
கூடிக் களிப்பீர்கள். ஏனென்றால், கர்த்தர்
எருசலேமிடம் தயவோடு உள்ளார். கர்த்தர்
அவரது ஜனங்களை மீட்பார்.
[10]அனைத்து நாடுகளிலும் கர்த்தர் தமது
பரிசுத்தமான பலத்தைக் காட்டுவார். கர்த்தர்
அவரது ஜனங்களை எவ்வாறு காப்பாற்று
கிறார் என்பதைத் தொலைதூர நாடுகள்
எல்லாம் பார்க்கும்.
[11]நீங்கள் பாபிலோனை விட்டுப்போங்கள்.
அந்த இடத்தை விடுங்கள் ஆசாரியர்களே.
தொழுகைக்குரிய பொருட்களை எடுத்துச்
செல்லுங்கள். உங்களைச் சுத்தப்படுத்திக்
கொள்ளுங்கள். சுத்தமற்ற எதையும் தொடா
தீர்கள்.
[12]நீங்கள் பாபிலோனை விடுவீர்கள்.
ஆனால், அவர்கள் உங்களை அவசரப்படுத்தி
வெளியேற்ற முடியாது. நீங்கள் வெளியே
ஓடும்படி அவர்கள் உங்களைப் பலவந்தப்
படுத்த முடியாது. நீங்கள் வெளியேறி
நடப்பீர்கள், கர்த்தர் உங்களோடு நடப்பார்.
கர்த்தர் உங்கள் முன்னால் இருப்பார். இஸ்ர
வேலின் தேவன் உங்கள் பின்பக்கமும்
இருப்பார்.

### தேவனுடைய பாடுபடுகின்ற தாசன்

[13]"எனது தாசனைப் பார்! அவர் மிகவும்
வெற்றிகரமாவார். அவர் மிகவும் முக்கி
யமாவார். எதிர்காலத்தில், ஜனங்கள் அவ
ரைப் பெருமைபடுத்தி மரியாதை செய்
வார்கள்.
[14]"ஆனால் பலர் என் தாசனைப் பார்த்த
பொழுது, அதிர்ச்சி அடைந்தனர். அவர்
மனிதன் என்று கஷ்டப்பட்டு கண்டு
பிடிக்கும் வகையில் அவர் மோசமாகப்

பாதிக்கப்பட்டிருந்தான். 15ஆனால், மிகுதி
யான ஜனங்கள் தெளிவடைவார்கள்.
அரசர்கள் அவரைப் பார்த்து எதுவும்
சொல்லமாட்டார்கள். அந்த ஜனங்கள் எனது
தாசன் பற்றிய கதையைக் கேட்கவில்லை.
என்ன நடந்தது என்று பார்த்தனர். இந்த
ஜனங்கள் அந்தக் கதையைக் கேட்கவில்லை.
ஆனால் அவர்கள் புரிந்துகொண்டனர்."

53 நாங்கள் சொல்வதை யார் உண்மை
யில் நம்பினார்கள்? கர்த்தருடைய
தண்டனையை உண்மையில் யார் ஏற்றுக்
கொண்டார்கள்?

2கர்த்தருக்கு முன்னால் அவர் சிறு
செடியைப் போன்று வளர்ந்தார். வறண்ட
பூமியில் அவர் வேர் விட்டு வளருவது
போன்றிருந்தார். அவர் சிறப்பாகக் காணப்
படவில்லை. அவருக்குத் தனியான விசேஷ
மகிமை காணப்படவில்லை. அவரைப்
பார்க்கும்போது, நாம் அவரை விரும்பத்தக்க
சிறப்பான உருவம் அவருக்கு இல்லை.
3ஜனங்கள் அவரைக் கேலி செய்தனர்.
அவரது நண்பர்கள் விலகினார்கள். அவர்
மிகுதியான வலி கொண்ட மனிதராக
இருந்தார். அவர் நோயை நன்றாக அறிந்தி
ருந்தார். ஜனங்கள் அவரைப் பார்க்காமல்
அசட்டை செய்தனர். நாம் அவரைக்
கவனிக்கவில்லை.

4ஆனால், அவர் நமது நோய்களை எடுத்து
தனதாக்கிக் கொண்டார். அவர் நமது
வலியை எடுத்துக்கொண்டார். தேவன்
அவரைத் தண்டித்துவிட்டார் என்று நாம்
நினைத்தோம். அவர் செய்தவற்றுக்காகத்
தேவன் அவரை அடித்தார் என்று நாம்
நினைத்தோம். 5ஆனால், நாம் செய்த தவறுக
ளுக்குத் துன்பப்படவே அவர் வேதனை
யைப் பெற்றார். நமது குற்றங்களுக்காக
அவர் நசுக்கப்பட்டார். நாம் கொண்ட
கடனுக்காக நமது தண்டனை அவருக்குக்
கொடுக்கப்பட்டது. அவரது காயங்களால்
நாம் சுகமடைந்திருக்கிறோம். (மன்னிக்கப்
பட்டோம்). 6ஆனால், இதனைச் செய்தபிறகு
நாம் ஆடுகளைப்போல அலைந்து கொண்டி
ருந்தோம். நம்மில் ஒவ்வொருவரும் நமது
சொந்த வழியில் சென்றோம். கர்த்தர் நம்
குற்றத்திலிருந்து நம்மை விடுதலை செய்து
நமது குற்றங்களை அவர்மீது போட்ட
பிறகும் நாம் இதனைச் செய்தோம்.

7அவர் பாதிக்கப்பட்டார், தண்டிக்கப்பட்
டார். ஆனால், அவர் ஒருபோதும் எதிர்ப்பு
தெரிவிக்கவில்லை. கொல்லப்படுவதற்காக
கொண்டுப் போகப்படும் ஆட்டுக்குட்டியைப்
போன்று, அவர் எதுவும் சொல்லவில்லை!
தனது மயிரைக் கத்தரிக்கும்போது சத்தமி
டாமல் இருக்கும் ஆட்டைப்போல அவர்
அமைதியாக இருந்தார்! அவர் தன்னைக்
காப்பாற்றிக் கொள்வதற்காகத் தன் வாயைத்
திறக்கவில்லை. 8மனிதர்கள் அவரைப்
பலவந்தமாகப் பிடித்தனர், அவரை அவர்கள்
நேர்மையாக நியாயந்தீர்க்கவில்லை. எவரும்
அவரது எதிர்காலக் குடும்பத்தைப்பற்றி எது
வும் சொல்லவில்லை. ஏனென்றால், அவர்
உயிரோடு வாழ்கிறவர்களின் நாட்டிலிருந்து
பிரிக்கப்பட்டார். எனது ஜனங்களின் பாவங்
களுக்காக அவர் தண்டிக்கப்பட்டார்.

9அவர் மரித்தார். செல்வந்தர்களோடு
புதைக் கப்பட்டார். அவர் தீயவர்களோடு
புதைக்கப் பட்டார். அவர் எந்தத் தவறும்
செய்ய வில்லை. அவர் எப்பொழுதும்
பொய் சொன்னதில்லை. இருந்தாலும் இவை
அவருக்கு ஏற்பட்டன.

10அவரை நசுக்கிவிட கர்த்தர் முடிவு
செய்தார். அவர் துன்பப்பட வேண்டும்
என்று கர்த்தர் முடிவு செய்தார். எனவே
அந்தத் தாசன் தன்னைத்தானே மரிக்க
அனுமதித்தார். ஆனால், மிக நீண்ட
காலத்திற்குப் புதிய வாழ்க்கை வாழ்வார்.
அவரது ஜனங்களை அவர் பார்ப்பார்.
அவர் என்ன செய்யவேண்டுமென்று கர்த்தர்
விரும்பினாரோ அதனை அவர் முழு
மையாகச் செய்துமுடிப்பார்.

11அவர் தனது ஆத்துமாவில் பல்வேறு
வகையில் துன்புறுவார். ஆனால் அவர்
நடக்கும் நல்லவற்றைப் பார்ப்பார். அவர்
தான் கற்றுக்கொண்டவற்றின் மூலம் திருப்தி
அடைவார். எனவே, எனது நல்ல தாசன்
பல ஜனங்களைக் குற்றத்திலிருந்து விடு
விப்பார். அவர்களது பாவங்களை அவர்
எடுத்துக்கொள்வார். 12இந்தக் காரணத்
திற்காக, என் ஜனங்களிடையே அவரை
நான் பெரிய மனிதராக்குவேன். அவர்
பலமுள்ள ஜனங்களோடு அனைத்து
பொருள்களின் பங்கையும் பெறுவார். நான்
இதனை அவருக்காகச் செய்வேன். ஏனென்
றால், அவர் ஜனங்களுக்காக தன் உயிரைக்
கொடுத்து மரித்தார்.

ஜனங்கள் அவரை ஒரு பயங்கரக் குற்ற
வாளி எனக் கூறினார்கள். ஆனால் உண்மை
யென்னவெனில் அவர் பல்வேறு ஜனங்
களின் பாவங்களை தம்மேல் சுமந்து கொண்
டார். இப்போது அவர் பாவம் செய்த
ஜனங்களுக்காகப் பேசுகிறார்."

### தேவன் அவரது ஜனங்களை வீட்டிற்குக் கொண்டு வருகிறார்

54 பெண்களே மகிழ்ச்சியோடு இருங்கள்!
உங்களுக்கு எந்தப் பிள்ளைகளும்
இல்லை. ஆனால், நீங்கள் மிக மகிழ்ச்சியோடு
இருக்கவேண்டும்! கர்த்தர் கூறுகிறார்,
"தனியாக இருக்கும் பெண் கணவனோடு
இருக்கும் பெண்ணைவிட மிகுதியான பிள்
ளைகளைப் பெறுவாள்."

2உனது கூடாரத்தைப் பெரிதாக்கு. உனது
கதவுகளை அகலமாகத் திற. உன் வீட்டில்
சேர்த்துக்கொள்வதை நிறுத்தாதே. உனது
கூடாரத்தைப் பெரிதாகவும் பலமாகவும்
செய்.

[3]ஏனென்றால், நீ மிகவும் வளருவாய்.
உனது பிள்ளைகள் பல நாடுகளிலிருந்து
ஜனங்களைப் பெறுவார்கள். உனது பிள்ளை
கள், அழிந்துபோன இந்த நகரத்தில் மீண்டும்
வாழ்வார்கள்.
[4]அஞ்சாதே! நீ ஏமாற்றம் அடைய
மாட்டாய். உனக்கு எதிராக ஜனங்கள்
தீயவற்றைச் சொல்லமாட்டார்கள். நீ இலச்
சையடைவதில்லை. நீ இளைஞனாக இருந்து
அவமானத்தை உணர்ந்தாய். ஆனால்,
இப்போது அந்த அவமானத்தை மறந்து
விட்டாய். நீ உன் கணவனை இழந்தபோது
அடைந்த அவமானத்தை இப்போது
நினைக்கமாட்டாய்.
[5]ஏனென்றால், உன் கணவனாகிய ஒரு
வரே (தேவன்) உன்னைச் செய்தவர். அவ
ரது நாமம் சர்வ வல்லமையுள்ள கர்த்தர்.
இஸ்ரவேலைக் காப்பாற்றுகிறவர் அவர்
ஒருவரே. அவர் இஸ்ரவேலின் பரிசுத்தமான
வர். அவர் பூமி முழுவதற்குமான தேவன்
என்று அழைக்கப்படுவார்.
[6]கணவனால் கைவிடப்பட்ட பெண்
ணைப் போன்று நீ இருந்தாய். உன்
ஆவியில் மிகவும் துக்கமுடையவளாக இருந்
தாய். ஆனால், கர்த்தர் அவருடையவளாக
உன்னை அழைத்தார். இளம் வயதில் திரு
மணம் செய்து, கணவனால் கைவிடப்பட்ட
பெண்ணைப் போன்று நீ இருந்தாய்.
ஆனால், தேவன் உன்னை அவருடைய
வளாக அழைத்தார்.
[7]தேவன் கூறுகிறார், “நான் உன்னை
விட்டு விலகினேன். ஆனால், அது கொஞ்சக்
காலத்திற்குத்தான். நான் மீண்டும் உன்னை
என்னிடம் கூட்டிக்கொள்வேன். நான் உன்
னிடம் பெருங்கருணையைக் காட்டுவேன்.
[8]நான் மிகவும் கோபம் கொண்டேன்.
கொஞ்ச காலத்திற்கு உன்னிடமிருந்து
மறைந்திருந்தேன். ஆனால் என்றென்றும்
உன்னைத் தயவுடன் ஆறுதல்படுத்துவேன்”
உனது மீட்பரான கர்த்தர் இதனைக் கூறி
னார்.

### தேவன் எப்பொழுதும் அவரது ஜனங்களை நேசிக்கிறார்

[9]தேவன் கூறுகிறார், “நினைவுகொள்!
நோவாவின் காலத்தில் நான் உலகத்தை
வெள்ளத்தால் தண்டித்தேன். ஆனால், நான்
மீண்டும் இந்த உலகத்தை வெள்ளத்தால்
அழிக்கமாட்டேன் என்று நோவாவிற்கு
வாக்குறுதி அளித்தேன்! இதே வழியில்,
நான் மீண்டும் கோபங்கொண்டு உன்னைக்
கடிந்துகொள்வதில்லை என்று வாக்களிக்கி
றேன்.”
[10]கர்த்தர் கூறுகிறார், “மலைகள் மறைந்து
போகலாம்! குன்றுகள் புழுதி (தூள்)
ஆகலாம்! ஆனால், எனது தயவு உன்னை
விட்டு விலகாது! நான் உன்னோடு சமாதா
னம் செய்துகொள்வேன். அது எப்பொழு
தும் முடிவு பெறாது” கர்த்தர் உன்மீது
இரக்கம் காட்டுகிறார். இவற்றையெல்லாம்
சொன்னவர் அவர் ஒருவரே.
[11]“ஏழை நகரமே! பகைவர்கள் புயலைப்
போன்று உனக்கு எதிரே வந்தார்கள்.
எவரும் உனக்கு ஆறுதல் அளிக்கவில்லை.
ஆனால், நான் உன்னை மீண்டும் கட்டு
வேன். நான் ஒரு அழகான கல்லை
உனது சுவர்களுக்கு வைப்பேன். நான்
நீலரத்தினக் கற்களைப் பயன்படுத்தி அஸ்தி
பாரம் அமைப்பேன்.
[12]சுவர்களின் உச்சியில் இரத்தினங்களால்
செய்த கற்களை வைப்பேன். நான் வாசல்
களுக்கு மாணிக்கக் கற்களைப் பயன்ப
டுத்துவேன். உன்னைச் சுற்றி சுவர்கள்
கட்ட விலையுயர்ந்த கற்களைப் பயன்
படுத்துவேன்.
[13]உனது பிள்ளைகள் தேவனைப்
பின்பற்றுவார்கள். அவர்களுக்கு அவர்
கற்பிப்பார். உனது பிள்ளைகள் உண்மை
யான சமாதானத்தை அடைவார்கள்.
[14]நீ நன்மையால் கட்டப்படுவாய். எனவே
நீ கொடுமை மற்றும் அச்சத்திலிருந்து
காப்பாற்றப்படுவாய். உனக்குப் பயப்படு
வதற்கு எதுவுமில்லை. உன்னை எதுவும்
பாதிக்காது.
[15]உனக்கு எதிராக எந்தப்படையும் போரி
டாது. எந்தப்படையாவது உன்னைத் தாக்க
முயன்றால், நீ அந்தப் படையைத் தோற்க
டிப்பாய்.”
[16]“பார், நான் கொல்லனைப் படைத்தேன்.
அவன் நெருப்பை ஊதி மேலும் சூடாக்கு
கிறான். பிறகு, அவன் சூடான இரும்பை
எடுத்து அவனது விருப்பம்போல் கருவி
களைச் செய்கிறான். அதே வழியில்
பொருள்களை அழிக்கின்ற அழிவுக்காரனை
யும் படைத்தேன்.
[17]“ஜனங்கள் உனக்கு எதிராகப் போரிட
ஆயுதங்களைச் செய்வார்கள். ஆனால், அந்த
ஆயுதங்கள் உங்களைத் தோற்கடிக்காது.
சிலர் உங்களுக்கு எதிராகச் சிலவற்றை
சொல்வார்கள். ஆனால் ஒவ்வொரு மனித
னும் உனக்கு எதிராகப் பேசும்போது
அது தவறு என்று காட்டப்படும்.”
கர்த்தர் கூறுகிறார், “கர்த்தருடைய ஊழி
யர்கள் எதைப் பெறுவார்கள்.? என்னிட
மிருந்துவரும் நியாயமான நன்மை மட்டும்
பெறுவார்கள்.”

### திருப்தியளிக்கும் உணவைத் தேவன் கொடுக்கிறார்

55 “தாகமாயுள்ள ஜனங்களே! தண்
ணீரைக் குடிக்க வாருங்கள்! உங்க
ளிடம் பணம் இல்லாவிட்டால் வருந்த
வேண்டாம். வாருங்கள் உங்கள் வயிறு
நிறையும்வரை குடியுங்கள், உண்ணுங்கள்!

பாலுக்கும் திராட்சைரசத்திற்கும் விலை
யில்லை;
2உண்மையான உணவாக இல்லாதவற்றுக்
காக ஏன் நீ உன் பணத்தை வீணடிக்கிறாய்?
உன்னை உண்மையாகவே திருப்தி செய்
யாத வேலைகளை ஏன் நீ செய்கிறாய்?
என்னை மிக நெருக்கமாக கவனி! நீ
மிக நல்ல உணவை உண்பாய். உன்
ஆத்துமாவைத் திருப்திப்படுத்தும் உணவை
உண்டு மகிழலாம்.
3நான் சொல்லுகிறவற்றை நெருக்கமாகக்
கவனி. என்னைக் கவனி. அதனால் உன்
ஆத்துமா வாழும். என்னிடம் வா. நான்
என்றென்றும் தொடரும் ஒரு உடன்
படிக்கையை உன்னோடு செய்வேன். நான்
தாவீதோடு செய்த உடன்படிக்கையைப்
போன்று அது இருக்கும். நான் அவனை
நேசிப்பேன், என்றென்றும் அவனுக்கு
வேண்டியவனாக இருப்பேன் என்று தாவீ
துக்கு வாக்குறுதிச் செய்தேன். நீ அந்த
உடன்படிக்கையை நம்பலாம்.
4அனைத்து நாடுகளுக்கும் எனது வல்
லமையின் சாட்சியாக நான் தாவீதைப்
படைத்தேன். பல நாடுகளுக்கு அவன்
ஒரு தலைவனாகவும், தளபதியாகவும் வரு
வான் என்று நான் வாக்களித்தேன்."
5உனக்குத் தெரியாத நாடுகள் பல
உள்ளன. ஆனால் அந்த நாடுகளை அழைப்
பாய். அந்த நாடுகள் உன்னை அறியாது.
ஆனால் அவை உன்னிடம் ஓடிவரும்.
இது நடக்கும். ஏனென்றால், உனது
தேவனாகிய கர்த்தர் இதை விரும்புகிறார்.
இது நடக்கும். ஏனென்றால், இஸ்ரவேலின்
பரிசுத்தர் உன்னை மகிமைப்படுத்துகிறார்.
6இது மிக தாமதமாவதற்கு முன்னால் நீ
கர்த்தரைத் தேடவேண்டும். அவர் அருகில்
இருக்கும்போதே, இப்பொழுது நீ அவரை
அழைக்கவேண்டும்.
7கெட்டவர்கள் கெட்ட வழியில் செல்
வதை நிறுத்தவேண்டும். அவர்கள் தீய
வற்றை நினைப்பதை நிறுத்தவேண்டும்.
அவர்கள் மீண்டும் கர்த்தரிடம் வரவேண்டும்.
பிறகு கர்த்தர் அவர்களுக்கு ஆறுதல் தரு
வார். அந்த ஜனங்கள் கர்த்தரிடம் வரு
வார்கள் ஏனென்றால், நமது தேவன்
அவர்களை மன்னிக்கிறார்.

### ஜனங்கள் தேவனைப் புரிந்துகொள்ள முடியாது

8கர்த்தர் கூறுகிறார், "உங்களது சிந்தனை
கள் எனது சிந்தனைகளைப் போன்று
இல்லை. உனது வழிகள் எனது வழிகளைப்
போன்றில்லை.
9வானங்கள் பூமியைவிட உயரமானவை.
அதேபோன்று, என் வழிகள் உன் வழிகளை
விட உயர்வானவை. என் சிந்தனைகள்
உன் சிந்தனைகளைவிட உயர்வானவை"
கர்த்தர்தாமே இவற்றைக் கூறினார்.

10"வானத்திலிருந்து மழையும் பனியும்
பெய்கிறது. அவை தரையைத் தொட்டுத்
குளிரச் செய்யும்வரை, திரும்ப வானத்
துக்குப் போகாது. பிறகு தரையில் தாவரங்
கள் முளைத்து வளரும். இத்தாவரங்கள்
விவசாயிகளுக்கு விதைகளை உருவாக்கும்.
ஜனங்கள் இந்தத் தானியங்களைப் பயன்
படுத்தி தமக்கு உண்ண அப்பத்தைத் தயார்
செய்கிறார்கள்.

11இதே வழியில், எனது வார்த்தைகள்
என் வாயைவிட்டு வரும். அவை எதையும்
செய்யாமல் வெறுமனே என்னிடம் திரும்
பாது. எனது வார்த்தைகள் எதைச் செய்ய
வேண்டுமென்று நான் அனுப்புகிறேனோ
அவற்றைச் செய்யும்! எனது வார்த்தைகள்
எதைச் செய்ய நான் அனுப்பினேனோ
அதை வெற்றிகரமாகச் செய்யும்!
12எனது வார்த்தைகள் மகிழ்ச்சியோடு
வெளியே சென்று சமாதானத்தைக் கொண்டு
வரும். மலைகளும் குன்றுகளும் மகிழ்ச்சி
யோடு ஆடத்தொடங்கும். வயலிலுள்ள
மரங்கள் எல்லாம் தம் கைகளைத் தட்டும்.
13முட்செடிப் புதருக்குப் பதிலாக அவ்வி
டங்களில் பருத்த தேவதாரு மரங்கள் வளரும்.
களைகள் இருந்த இடத்தில் பசுமை யான
மரங்கள் வளரும். இவை கர்த்தரு டைய
புகழைப் பரப்பும். கர்த்தர் வல்லமை
யுடையவர் என்பதற்கு இவை சான்றாகும்.
இந்தச் சான்றுகள் ஒருபோதும் அழியாது."

### அனைத்து தேசங்களும் கர்த்தரைப் பின்பற்றும்

56 கர்த்தர் இவற்றைச் சொன்னார்,
"அனைத்து ஜனங்களிடமும் நியாய
மாக இருங்கள். நீதியானவற்றைச் செய்யுங்
கள். ஏனென்றால், எனது இரட்சிப்பு விரை
வில் உனக்கு வரும். உலகம் முழுவதற்கும்
எனது இரட்சிப்பு விரைவில் காட்டப்படும்."
2ஓய்வு நாளில் தேவனுடைய சட்டங்க
ளுக்கு அடிபணிந்து வாழ்கிறவன் ஆசீர்வ
திக்கப்படுவான். தீமை செய்யாதவன்
மகிழ்ச்சியுடன் இருப்பான். 3யூதரல்லாத சிலர்
கர்த்தரோடு தாங்களாகவே சேர்ந்துகொள்
வார்கள். அவர்கள், "கர்த்தர் தமது ஜனங்க
ளோடு எங்களைச் சேர்த்துக்கொள்ள
மாட்டார்" என்று சொல்லமாட்டார்கள். "நான்
ஒரு காய்ந்த மரத்துண்டு. நான்
குழந்தைகளைப் பெற முடியாதவன்" என்று
அலிகள் சொல்லக்கூடாது.
4-5அலிகள் இவ்வாறு சொல்லமாட்டார்
கள். ஏனென்றால், கர்த்தர் கூறுகிறார்,
"ஓய்வு நாளில் அலிகளில் சிலர், என்
உடன்படிக்கைகளுக்கு அடிபணிகிறார்கள்.
அவர்கள் நான் விரும்புகின்றவற்றைச் செய்
வதற்குத் தேர்ந்தெடுக்கிறார்கள். அவர்கள்
உண்மையில் என் உடன்படிக்கைகளைப்

பின்பற்றுகிறார்கள். எனவே, நான் ஆலயத்தில் ஒரு ஞாபகக்கல்லை அவர்களுக்காக வைப்பேன். அவர்களின் பெயர் என் நகரத்தில் நினைவுகூரப்படும். ஆம், நான் அந்த அலிகளுக்கு மகன்கள் மகள்கள் ஆகியோரைவிடச் சிறந்ததான சிலவற்றைக் கொடுப்பேன். நித்தியமான ஒரு பெயரை நான் அவர்களுக்குக் கொடுப்பேன். அவர்கள் எனது ஜனங்களிடமிருந்து வெட்டப்பட மாட்டார்கள்."

[6]கர்த்தரோடு யூதரால்லாத சில ஜனங்களும் சேருவார்கள். அவர்கள் இதைச் செய்வார்கள். எனவே, அவருக்குத் தொண்டு செய்ய முடியும். கர்த்தருடைய நாமத்தை நேசிக்கின்றனர். அவர்கள் தாங்களாகவே கர்த்தரோடு அவரது ஊழியக்காரர்களாகச் சேருவார்கள். அவர்கள் ஓய்வுநாளை வழிபாட்டுக்குரிய சிறந்த நாளாக எடுத்துக்கொள்வார்கள். அவர்கள் தொடர்ந்து எனது உடன்படிக்கையை (சட்டம்) நெருக்கமாகப் பின்பற்றுவார்கள்.

[7]கர்த்தர் கூறுகிறார், "எனது பரிசுத்தமான மலைக்கு நான் அந்த ஜனங்களை அழைத்து வருவேன். ஜெபக்கூடத்தில் அவர்களை மகிழ்ச்சியுடன் இருக்கச்செய்வேன். அவர்கள் தரும் காணிக்கைகளும் பலிகளும் என்னைத் திருப்திப்படுத்தும் ஏனென்றால், எனது ஆலயம் எல்லா நாடுகளுக்குமான ஜெபவீடாக அழைக்கப்படும்." [8]எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.

இஸ்ரவேல் ஜனங்கள் தம் நாட்டை விட்டுப்போக வற்புறுத்தப்பட்டனர். ஆனால் மீண்டும் கர்த்தர் அவர்களை ஒன்று சேர்த்துவிடுவார். கர்த்தர், "நான் மீண்டும் இந்த ஜனங்களை ஒன்று சேர்ப்பேன்" என்று கூறுகிறார்.

### தேவன் அவருக்குத் தொண்டு செய்ய அனைத்து ஜனங்களையும் அழைக்கிறார்

[9]காட்டு மிருகங்களே, வாருங்கள். உண்ணுங்கள்!

[10]காவல்காரர்கள் (தீர்க்கதரிசிகள்) குருடராய் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தாம் என்ன செய்கிறோம் என்று தெரியவில்லை. அவர்கள் குரைக்காத நாய்களைப் போன்றவர்கள். அவர்கள் தரையில் கிடந்து தூங்குகிறார்கள். அவர்கள் தூங்குவதை நேசிக்கிறார்கள்.

[11]அவர்கள் பசித்த நாய்களைப் போன்றவர்கள். அவர்கள் எப்பொழுதும் திருப்தி அடையமாட்டார்கள். மேய்ப்பர்களுக்கு என்ன செய்கிறோம் என்று தெரியவில்லை. அவர்கள் தம் ஆடுகளைப் போன்றுள்ளனர். அவை எப்பொழுதும் அலைந்துகொண்டிருக்கின்றன. அவர்கள் பேராசைக்காரர்கள். அவர்கள் அனைவரும் தங்கள் திருப்திக்காகச் செய்ய விரும்புகின்றனர்.

[12]அவர்கள் வந்து சொல்கிறார்கள், "நான் கொஞ்சம் திராட்சைரசம் குடிப்பேன். நான் கொஞ்சம் மது குடிப்பேன். நான் நாளையும் இதனையே செய்வேன். இன்னும் அதிகமாகக் குடிப்பேன்."

### இஸ்ரவேலர்கள் தேவனைப் பின்பற்றவில்லை

**57** நீதிமான்கள் அழிந்துவிட்டனர், எவரும் கவனிக்கவில்லை. நல்லவர்கள் ஒன்று கூடியிருக்கின்றனர். ஆனால் ஏனென்று புரிந்துகொள்வதில்லை. கஷ்டங்கள் வருகிறதென்றும், அதிலிருந்து தங்களைப் பாதுகாத்துக்கொள்வதற்காக அவர்கள் ஒன்று கூடியிருக்கிறார்களென்பதையும் அறிந்துகொள்ளவில்லை.

[2]ஆனால் சமாதானம் வரும். ஜனங்கள் தம் சொந்தப் படுக்கையில் ஓய்வு கொள்வார்கள். தேவன் விரும்பும் வழியில் அவர்கள் வாழ்வார்கள்.

[3]"சூனியக்காரியின் பிள்ளைகளே, இங்கே வாருங்கள்! உங்கள் தந்தை விபச்சாரம் செய்தான். உங்கள் தாயும் விபச்சாரத்திற்காகத் தன் உடலை விற்றவள். இங்கே வாருங்கள்!

[4]நீங்கள் கெட்டவர்கள். பொய்யான பிள்ளைகளாகிய நீங்கள் என்னை பரிகாசம் செய்கிறீர்கள். நீங்கள் எனக்கு எதிராக வாயைத் திறக்கிறீர்கள். நீங்கள் என்னைப் பார்த்து நாக்கை நீட்டுகிறீர்கள்.

[5]ஒவ்வொரு பச்சையான மரத்தினடியிலும் நீங்கள் பொய்த் தெய்வங்களைத் தொழுது கொள்ள விரும்புகிறீர்கள். ஒவ்வொரு ஓடை அருகிலும் பிள்ளைகளைக் கொல்கிறீர்கள். அவர்களைப் பாறைகளில் பலி கொடுக்கிறீர்கள்.

[6]ஆறுகளில் உள்ள வழு வழுப்பான கற்களை நீங்கள் தொழுதுகொள்ள விரும்புகிறீர்கள். அவற்றைத் தொழுதுகொள்ள அவற்றின் மீது திராட்சைரசத்தை ஊற்றுகிறீர்கள். அவற்றிற்கு நீங்கள் பலி கொடுக்கிறீர்கள். ஆனால், அந்தப் பாறைகளே நீ பெற்றுக் கொள்ளும் எல்லாம் ஆகும். இவை என்னை மகிழ்ச்சிப்படுத்தும் என்று நினைக்கிறாயா? இல்லை. இவை என்னை மகிழ்ச்சிப்படுத்தாது. ஒவ்வொரு மலையிலும் குன்றுகளிலும் உனது படுக்கையை நீ அமைக்கிறாய்.

[7]அந்த இடங்களுக்கு நீ ஏறிப்போய் பலிகளைத் தருகிறாய்.

[8]பிறகு நீ அந்தப் படுக்கையைப் பெற்று எனக்கு எதிராக, அந்தத் தெய்வங்களை நேசித்து பாவம் செய்கிறாய். அந்தத் தெய்வங்களை நேசிக்கிறாய். அவற்றின் நிர்வாண உடல்களைப் பார்த்து நீ சந்தோஷப்படுகிறாய். நீ என்னோடு இருந்தாய். ஆனால் என்னை விட்டு அவற்றோடு இருக்கிறாய். என்னை நினைவுப்படுத்துகிறவற்றை நீ

மறைத்து விடுகிறாய். கதவுகளுக்கும், நிலை
களுக்கும்* பின்னால் அவற்றை மறைக்
கிறாய். பிறகு, நீ அந்தப் பொய்த் தெய்வங்
களிடம் சென்று அவற்றோடு ஒப்பந்தம்
செய்துகொள்கிறாய்.
9நீ உனது தைலத்தையும், வாசனைப்
பொருட்களையும் பயன்படுத்தி மோளேகுக்
காக* அழகுபடுத்துகிறாய். தொலைதூர
நாடுகளுக்கு உனது தூதுவர்களை அனுப்பி
னாய். உன் செய்கை உன்னை மரண
இடமான பாதாளம்வரை கொண்டு போய்
விடும்.

### இஸ்ரவேல் தேவனை நம்பவேண்டும், சிலைகளை அல்ல

10"இவற்றைச் செய்ய நீங்கள் கடுமையாக
உழைத்திருக்க வேண்டும். ஆனால், நீ
எப்பொழுதும் சோர்வடைந்ததில்லை. நீ
புதிய பலத்தைக் கண்டுகொண்டாய். ஏனென்
றால், நீ அவற்றில் மகிழ்ச்சியடைந்தாய்.
11என்னை நீ நினைக்கவில்லை. என்னை
நீ கண்டுகொள்ளவும் இல்லை. எனவே
யாரைப்பற்றி நீ கவலைப்பட்டாய்? நீ
யாருக்கு அஞ்சிப் பயப்பட்டாய்? நீ ஏன்
பொய் சொன்னாய்? கவனி! நான் நீண்ட
காலமாக அமைதியாக இருக்கிறேன். நீ
என்னை மகிமைப்படுத்தவில்லை.
12உனது நல்ல வேலைகளைப்பற்றி நான்
சொல்ல முடிந்தது. நீ செய்த மதத் தொடர்பா
னவற்றையும் சொல்ல முடிந்தது. ஆனால்,
அவை பயனற்றவை.
13உனக்கு உதவி தேவைப்படும்போது,
அந்தப் பொய்த் தெய்வங்களிடம் கதறுகி
றாய். அவை உன்னைச் சுற்றியுள்ளன.
அவை உனக்கு உதவட்டும். ஆனால், நான்
உனக்குக் கூறுகிறேன். அவற்றைக் காற்று
அடித்துப் போகும். உன்னிடமிருந்து இவற்
றையெல்லாம் சிறு காற்று கொண்டு
போகும். ஆனால், என்னைச் சார்ந்திருக்கிற
ஒருவன் நான் வாக்குப்பண்ணின பூமியைப்
பெறுவான். அப்படிப்பட்டவன் எனது
பரிசுத்தமான மலையைப் பெறுவான்.

### கர்த்தர் அவரது ஜனங்களைக் காப்பாற்றுவார்

14சாலைகளைச் சுத்தம் செய்க! சாலை
களைச் சுத்தம் செய்க! எனது ஜனங்களுக்கு
வழி தெளிவாக இருக்கும்படி தடைகளை
நீக்குங்கள்!
15தேவன் உயர்ந்தவர்! உன்னதமானவர்.
தேவன் என்றென்றும் ஜீவிக்கிறார். தேவ
னுடைய நாமம் பரிசுத்தமானது. தேவன்
கூறுகிறார், "நான் உயர்ந்த பரிசுத்தமான
இடத்தில் வாழ்கிறேன். ஆனால், அதோடு
துக்கமும் பணிவும் கொண்ட ஜனங்களோ
டும் வாழ்கிறேன். நான் உள்ளத்தில் பணி
வுள்ள ஜனங்களுக்குப் புதிய வாழ்க்கையைக்
கொடுப்பேன். நான் தங்கள் இருதயங்களில்
துக்கமுள்ள ஜனங்களுக்குப் புதிய வாழ்க்கை
யைக் கொடுப்பேன்.
16நான் என்றென்றும் தொடர்ந்து போரிட
மாட்டேன். நான் எப்பொழுதும் கோபமாய்
இருக்கமாட்டேன். நான் தொடர்ந்து கோப
மாக இருந்தால், எனக்கு முன்னபாக மனி
தனின் ஆவியும், நான் அவர்களுக்குக்
கொடுத்த ஆத்துமாவும் சாகும்.
17இந்த ஜனங்கள் கெட்டவற்றைச் செய்
தனர். அது எனக்குக் கோபமூட்டியது.
எனவே, நான் இஸ்ரவேலைத் தண்டித்தேன்.
நான் அவனிடமிருந்து திரும்பினேன்.
ஏனென்றால் நான் கோபமாக இருந்தேன்.
இஸ்ரவேல் என்னைவிட்டு விலகியது. இஸ்ர
வேல் முரட்டாட்டம் செய்து, தனக்கு
இஷ்டமானத்தை செய்தது.
18இஸ்ரவேல் எங்கு சென்றாலும் நான்
பார்த்தேன். எனவே, நான் அவனைக்
குணப்படுத்துவேன். (மன்னிப்பேன்) நான்
அவனை நடத்தி அவனுக்கு ஆறுதல் கூறு
வேன். அவன் சமாதானம் அடையுமாறு
வார்த்தைகளைச் சொல்வேன். பிறகு, அவ
னும் அவனது ஜனங்களும் துக்கத்தை
உணரமாட்டார்கள்.
19நான் அவர்களுக்குச் 'சமாதானம்' எனும்
புதிய வார்த்தையைக் கற்றுத் தருவேன்.
என்னருகிலே உள்ள ஜனங்களுக்குச் சமாதா
னத்தைத் தருவேன். தொலை தூரத்திலுள்ள
ஜனங்களுக்கும் சமாதானத்தைத் தருவேன்.
நான் அந்த ஜனங்களைக் குணப்படுத்துவேன்
(மன்னிப்பேன்)." கர்த்தர் தாமே இவற்றைச்
சொன்னார்.
20ஆனால் தீய ஜனங்கள் கொந்தளிப்பான
கடலைப் போன்றவர்கள். அவர்களால்
அமைதியாகவும் சமாதானமாகவும் இருக்க
முடியாது. அவர்கள் கோபத்தோடு மண்
ணைக் கலக்கும் கடலைப் போன்று
உள்ளனர். 21"தீய ஜனங்களுக்கு சமாதானம்
இல்லை" என்று என் தேவன் கூறுகிறார்.

### தேவனைப் பின்பற்றுமாறு ஜனங்களுக்குச் சொல்லப்பட வேண்டும்

58 உன்னால் முடிந்தவரை சத்தமிடு!
நீயாக நிறுத்தாதே! எக்காளம்
போன்று உரக்கச் சத்தமிடு! ஜனங்கள்
செய்த தவறுகளைப்பற்றி அவர்களுக்குக்
கூறு! யாக்கோபின் குடும்பத்திற்கு அவர்க
ளின் பாவத்தைப்பற்றிக் கூறு!
2பிறகு அவர்கள் என்னைத் தொழுது
கொள்ள ஒவ்வொரு நாளும் வருவார்கள்.
எனது வழிகளை அந்த ஜனங்கள் கற்றுக்
கொள்ள விரும்புவார்கள். அவர்கள் நேர்மை
யாக வாழும் தேசமாவார்கள். தேவனுடைய
நல்ல கட்டளைகளைப் பின்பற்றுவதை

---

**கதவு நிலைகள்** தேவன் நினைக்கும்படியான அமைப்புள்ளவை.

**மோளேகு** பொய்த் தெய்வம்.

அவர்கள் விடமாட்டார்கள். அவர்களை நேர்மையாக நியாயந்தீர்க்குமாறு என்னைக் கேட்பார்கள். அவர்கள் தேவனிடம் அவர் கொடுக்கும் நேர்மையான முடிவுகளுக்காகப் போக விரும்புவார்கள்.
3இப்போது, அந்த ஜனங்கள், "உமக்கு மரியாதை செலுத்துவதற்காக நாங்கள் சாப்பிடுவதை நிறுத்துகிறோம். எங்களை ஏன் பார்க்கவில்லை? நாங்கள் உமக்கு மரியாதை செலுத்த எங்கள் உடலைக் காயப்படுத்துகிறோம். நீர் "ஏன் எங்களைக் கண்டுகொள்ளவில்லை?" என்று கூறுகின்றனர்.

ஆனால் கர்த்தர் கூறுகிறார்: "நீங்கள் உங்களையே திருப்திப்படுத்திக்கொள்ள சிறப்பு நாட்களில் சாப்பிடாமல் இருக்கிறீர்கள். நீங்கள் சொந்த உடல்களை அல்ல, உங்கள் வேலைக்காரர்களையே தண்டிக்கிறீர்கள்
4நீங்கள் பசியோடு இருக்கிறீர்கள். ஆனால், உணவுக்காக அன்று. நீங்கள் வாதம் செய்யவும் சண்டை செய்யவும் பசியாய் இருக்கிறீர்கள், அப்பத்துக்காக அல்ல. உங்கள் தீய கைகளால் ஜனங்களை அடிக்கப் பசியாய் இருக்கிறீர்கள். நீங்கள் உணவு உண்டதை நிறுத்துவது, எனக்காக அல்ல. நீங்கள் உங்கள் குரலைப் பயன்படுத்தி என்னைத் துதிக்க விரும்புவதில்லை.
5அந்தச் சிறப்பான நாட்களில் சாப்பிடாமல் இருந்து ஜனங்கள் தம் உடலை வருத்திக் கொள்ளவேண்டும் என்று நான் விரும்புகிறேன். என்று நீங்கள் நினைக்கிறீர்களா? ஜனங்கள் சோகமாகத் தோற்றமளிப்பதை விரும்புகிறேன் என்று நினைக்கிறீர்களா? ஜனங்கள் வாடிய செடிகளைப் போன்று தலைகுனிந்து துக்கத்துக்கான ஆடைகளை அணிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன் என்று நினைக்கிறீர்களா? ஜனங்கள் தம் துக்கத்தைக் காட்ட சாம்பலில் உட்கார்ந்திருப்பதை நான் விருபும்கிறேன் என்று நினைக்கிறீர்களா? இதையே உங்கள் சிறப்பான உபவாச நாட்களில் நீங்கள் செய்கிறீர்கள். கர்த்தர் இதைத்தான் விரும்புகிறார் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?
6"நான் விரும்புகின்ற சிறப்பான ஒரு நாளை உங்களுக்குச் சொல்வேன். ஜனங்களை விடுதலை பெறச்செய்யும் நாள். ஜனங்களின் சுமைகளை நீங்கள் எடுத்துக் கொள்ளும் ஒரு நாளை நான் விரும்புகிறேன். துன்பப்படுகிற ஜனங்களை நீங்கள் விடுதலை செய்யும் நாளை சிறப்பானதாக விரும்புகிறேன். அவர்களின் தோள்களிலிருந்து சுமையை எடுத்து விடும் ஒரு நாளை நான் விரும்புகிறேன்.
7நீங்கள் உங்கள் உணவை பசித்தவர்களோடு பங்கிட்டுக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். நீங்கள் வீடற்ற ஏழை ஜனங்களைக் கண்டுபிடித்து, அவர்களை உங்கள் வீட்டிற்கு அழைத்து வருவதை நான் விரும்புகிறேன். ஆடையில்லாத ஒரு மனிதனை நீங்கள் பார்க்கும்போது, உங்கள் ஆடைகளை அவனுக்குக் கொடுங்கள். அவர்களுக்கு உதவாமல் ஒளிந்துகொள்ளாதீர்கள். அவர்கள் உங்களைப் போன்றவர்களே."
8நீங்கள் இவற்றைச் செய்தால், உங்களது வெளிச்சம் விடியற்கால சூரியனைப் போன்று ஒளிவீசத் தொடங்கும். பிறகு, உங்கள் காயங்கள் குணமாகும். உங்கள் நன்மை (தேவன்) உங்களுக்கு முன்னால் நடந்து செல்லும். கர்த்தருடைய மகிமை உங்களைப் பின் தொடர்ந்துவரும்.
9பிறகு நீங்கள் கர்த்தரை அழைப்பீர்கள். கர்த்தர் உங்களுக்குப் பதில் சொல்வார். நீ கர்த்தரிடம் சத்தமிடுவாய். அவர் 'நான் இங்கே இருக்கிறேன்!' என்பார்.

### தேவனுடைய ஜனங்கள் சரியானவற்றைச் செய்ய வேண்டும்

ஜனங்களுக்குத் துன்பங்களையும், சுமைகளையும் கொடுப்பதை நிறுத்த வேண்டும். நீங்கள் அநியாயமான வார்த்தைகளைப் பயன்படுத்துவதையும்,மற்றவர்களைக் குறை சொல்வதையும் நிறுத்த வேண்டும்.
10பசியாயிருக்கிற ஜனங்களைப் பார்த்து நீ வருத்தப்பட வேண்டும். அவர்களுக்கு உணவு தரவேண்டும். துன்பப்படுகிறவர்களுக்கு நீ உதவ வேண்டும். அவர்களின் தேவைகளை நிறைவேற்ற வேண்டும். அப்போது உனது வெளிச்சம் இருளில் பிரகாசிக்கும். உனக்கும் துக்கம் இருக்காது. நீ நண்பகலில் உள்ள சூரியனைப் போன்று பிரகாசமாக இருப்பாய்.
11கர்த்தர் எப்பொழுதும் உன்னை வழிநடத்துவார். வறண்ட நிலங்களில் அவர் உனது ஆத்துமாவைத் திருப்திப்படுத்துவார். உனது எலும்புகளுக்குக் கர்த்தர் பெலன் தருவார். அதிகத் தண்ணீருள்ள தோட்டத்தைப் போன்று நீ இருப்பாய். எப்பொழுதும் தண்ணீருள்ள ஊற்றினைப் போன்று நீ இருப்பாய்.
12உனது நகரங்கள் பல ஆண்டுகளுக்கு அழிக்கப்பட்டிருக்கும். ஆனால், புதிய நகரங்கள் கட்டப்படும். இந்நகரங்களின் அஸ்திபாரங்கள் பல ஆண்டுகளுக்குத் தொடர்ந்து இருக்கும். நீ, "வேலிகளை கட்டுகிற ஒருவன்" என்று அழைக்கப்படுவாய். நீ, "சாலைகளையும் வீடுகளையும் கட்டுபவன்" என்றும் அழைக்கப்படுவாய்.
13ஓய்வுநாளில் தேவனுடைய சட்டத்திற்கு எதிராகப் பாவம் செய்வதை எப்பொழுது நீ நிறுத்துகிறாயோ அப்போது இது நிகழும். அந்தச் சிறப்புநாளில் உன்னை நீயே திருப்திபடுத்திக்கொள்ளும் செயல்கள் செய்வதை எப்பொழுது நிறுத்துவாயோ, அப்

போது இது நடக்கும். ஓய்வுநாளை மகிழ்ச்
சியான நாள் என்றும் நீ எண்ணவேண்டும்.
கர்த்தருடைய சிறப்பான நாளை நீ மகிமைப்
படுத்தவேண்டும். மற்ற நாட்களில் நீ
சொல்வதையும், செய்வதையும் அந்தச் சிறப்
புநாளில் செய்யாமல் நீ அதனை மகிமைப்
படுத்தவேண்டும்.
14பின் நீ கர்த்தரை உன்னிடம் தயவாயி
ருக்குமாறு கேட்கலாம். அவர் உன்னைப்
பூமிக்கு மேலுள்ள உயரமான இடங்களுக்கு
எடுத்துச் செல்வார். உனது தந்தை யாக்கோ
பிற்குரிய அனைத்தையும் அவர் தருவார்.
கர்த்தர்தாமே இவற்றைச் சொன்னார்.
எனவே இவை நடக்கும்.

## கெட்ட ஜனங்கள் தங்கள் வாழ்வை மாற்ற வேண்டும்

59 பார், உன்னைக் காப்பாற்ற கர்த்தரு
டைய வல்லமை போதுமானதாக
உள்ளது. நீ அவரிடம் உதவி கேட்கும்போது
அவரால் உனக்குப் பதில் தருவார். 2ஆனால்
உனது பாவங்கள் உன்னைத் தேவனிட
மிருந்து விலக்குகிறது. உனது பாவங்கள்
கர்த்தருடைய முகத்தை உன்னிடமிருந்து
மறையச்செய்கிறது. அப்போது அவர்
உனக்குச் செவிகொடுக்கமாட்டார்.
3உனது கைகள் அழுக்காக உள்ளன.
அவை இரத்தத்தால் மூடப்பட்டுள்ளன.
உனது விரல்கள் குற்றங்களால் மூடப்பட்டுள்
ளன. நீ உனது வாயால் பொய்களைச்
சொல்லுகிறாய். உனது நாக்கு தீயவற்றைக்
கூறுகிறது. 4எவரும் மற்றவர்களைப் பற்றிய
உண்மைகளைக் கூறுவதில்லை, ஜனங்கள்
ஒருவரோடு ஒருவர் வழக்காடு மன்றத்தில்
மோதுகிறார்கள். அவர்கள் தம் வழக்குகளில்
வெல்வதற்கு பொய்யான வாக்குவாதங்களை
நம்பி இருக்கிறார்கள். அவர்கள் ஒருவரைப்
பற்றி ஒருவர் பொய் சொல்லுகிறார்கள்.
அவர்களுக்கு முழுவதுமாகத் துன்பம்
உள்ளது. அவர்கள் தீமையைப் பெற்றெடுக்
கிறார்கள். 5விஷப் பாம்புகளிலிருந்து
முட்டைகள் வருவதுபோல இவர்களிட
மிருந்து தீமைகள் வருகின்றன. நீ அவற்றில்
ஒரு முட்டையைத் உண்டால் மரித்துப்
போவாய். அவற்றில் ஒரு முட்டையை
உடைத்தால், ஒரு விஷப்பாம்பு வெளியே
வரும். ஜனங்கள் பொய் சொல்கிறார்கள்.

அந்தப் பொய்கள் சிலந்தி வலை
போன்றுள்ளன. 6அந்த வலைகளை ஆடை
களுக்குப் பயன்படுத்த முடியாது. அந்த
வலைகளால் நீ உன்னை மூடிக்கொள்ள
முடியாது. சிலர் கெட்டச் செயல்களைச்
செய்வார்கள்.

மற்றவர்களுக்குக் கொடுமை செய்யத் தம்
கைகளைப் பயன்படுத்துவார்கள். 7அந்த
ஜனங்கள் தம் கால்களைத் தீமை செய்ய
ஓடுவதற்குப் பயன்படுத்துவார்கள். அவர்கள்
குற்றம் ஒன்றுமே செய்யாதவர்களைக்
கொலை செய்ய விரைவார்கள். அவர்கள்
தீய எண்ணங்களைச் சிந்திப்பார்கள். கலக
மும் கொள்ளையும் அவர்களின் வாழ்க்கை
முறையாக உள்ளது.
8அந்த ஜனங்கள் சமாதானத்தின் வழியை
அறிவதில்லை. அவர்களின் வாழ்வில்
நன்மை இல்லை. அவர்களின் வழிகள்
நேர்மையானதாக இல்லை. அவர்கள் வாழ்
வது போன்று வாழ்கிற எவரும் தம்
வாழ்வில் சமாதானத்தை அடையமாட்டார்
கள்.

## இஸ்ரவேலரின் பாவம் துன்பத்தைக் கொண்டுவருகிறது

9அனைத்து நேர்மையும், நன்மையும்
போனது. நமக்கு அருகில் இருள் மட்டுமே
உள்ளது. எனவே, நாம் வெளிச்சத்துக்காக
காத்திருக்க வேண்டும். நாம் பிரகாசமான
வெளிச்சத்தை எதிர்பார்க்கிறோம். ஆனால்,
நம்மிடம் இருப்பதெல்லாம் இருள்தான்.
10கண்கள் இல்லாத ஜனங்களைப் போன்றி
ருக்கிறோம். நாம் குருடர்களைப் போன்று
சுவர்களில் மோதுகிறோம். இருட்டில் இருப்
பதுபோல இடறிக் கீழே விழுகிறோம்.
பகலிலும்கூட நம்மால் பார்க்க முடிவ
தில்லை. மத்தியான வேளையில் நாம்
மரித்தவர்களைப் போன்று விழுகிறோம்.
11நாம் எல்லோரும் மிகுந்த துக்கத்தில்
இருக்கிறோம். நாம் கரடிகள் மற்றும்
புறாக்களைப் போன்று துக்க ஓசைகளைச்
எழுப்புகிறோம். நாம் ஜனங்கள் நியாயமாயி
ருக்கும் காலத்திற்காக காத்திருக்கிறோம்.
ஆனால் இதுவரை நியாயமில்லை. நாம்
காப்பாற்றப்படுவதற்காகக் காத்திருக்கிறோம்.
ஆனால், இரட்சிப்பு இன்னும் வெகு
தொலைவில் உள்ளது.
12ஏனென்றால், நாம் நமது தேவனுக்கு
எதிராகப் பல தீமைகளைச் செய்திருக்கி
றோம். நாம் தவறானவர்கள் என்பதை
நமது பாவங்கள் காட்டுகின்றன. இவற்றை
யெல்லாம் செய்த குற்றவாளிகள் என்பதை
நாம் அறிவோம்.
13நாம் பாவங்கள் செய்து கர்த்தருக்கு
எதிராகத் திரும்பினோம். நாம் அவரை
விட்டுத் திரும்பி அவரை விட்டு விலகி
னோம். நாம் தீயவற்றுக்குத் திட்டமிட்டோம்.
தேவனுக்கு எதிராக இருக்கும் செயல்க
ளுக்குத் திட்டமிட்டோம். நம்மிடம் இவற் றைப்
பற்றிய எண்ணங்கள் உண்டு. நமது
இதயத்தில் இவற்றைப்பற்றி திட்டமிட்டோம்.
14நம்மிடமிருந்து நீதி திரும்பிவிட்டது.
நேர்மையானது வெகு தொலைவில்
உள்ளது. உண்மையானது தெருக்களில்
விழுந்து கிடக்கின்றது. நன்மையானது நகரத்
திற்குள் நுழைய அனுமதிக்கப்படவில்லை.

15உண்மை போய்விட்டது. நன்மை
செய்ய வேண்டும் என்று முயற்சி செய்கி
றவர்கள் கொள்ளையடிக்கப்படுகிறார்கள்.
கர்த்தர் பார்த்தார். அவரால் எந்த நன்மையும்
கண்டுகொள்ள முடியவில்லை. கர்த்தர்
இதனை விரும்பவில்லை.
16கர்த்தர் பார்த்து ஆச்சரியப்பட்டார்.
ஜனங்களுக்கு உதவி செய்ய ஒருவனும்
நிற்பதைக் கண்டுகொள்ள முடியவில்லை.
எனவே, கர்த்தர் தனது சொந்த வல்லமை
யையும் நீதியையும் பயன்படுத்தினார். கர்த்
தர் ஜனங்களைக் காப்பாற்றினார்.
17கர்த்தர் போருக்குத் தயார் செய்தார்.
கர்த்தர் நீதியை மார்புக் கவசமாக்கினார்.
இரட்சிப்பைத் தலைக்குச் சீராவாக்கினார்.
தண்டனைகள் என்னும் ஆடைகளை அணிந்
துகொண்டார். உறுதியான அன்பைச் சால்
வையாகப் போர்த்தினார்.
18கர்த்தர் தனது பகைவர்கள்மீது கோபம்
கொண்டிருக்கிறார். எனவே, கர்த்தர்
அவர்களுக்கு ஏற்ற தண்டனையைக் கொடுப்
பார். கர்த்தர் தனது பகைவர்கள் மீது
கோபம் கொண்டிருக்கிறார். எனவே,
தொலைதூர இடங்களிலுள்ள ஜனங்களை
யும் கர்த்தர் தண்டிப்பார். கர்த்தர் அவர்
களுக்கு ஏற்ற தண்டனையைக் கொடுப்பார்.
19எனவே, மேற்கே உள்ள ஜனங்கள்
அஞ்சி, கர்த்தருடைய நாமத்திற்கு மரியாதை
தருவார்கள். கிழக்கே உள்ள ஜனங்கள்
அஞ்சி, கர்த்தருடைய மகிமைக்கு மரியாதை
தருவார்கள். கர்த்தர் விரைவில் வருவார்.
கர்த்தர் வேகமாகப் பாயும் ஆறு பலமான
காற்றால் அடித்து வருவதுபோல் விரைந்து
வருவார்.
20பிறகு, ஒரு மீட்பர் சீயோனுக்கு
வருவார். அவர் பாவம் செய்து பிறகு
தேவனிடம் திரும்பிய யாக்கோபின் ஜனங்
களிடம் வருவார்.
21கர்த்தர் கூறுகிறார், “அந்த ஜனங்களோடு
நான் ஒரு உடன்படிக்கைச் செய்வேன்.
எனது ஆவியும் வார்த்தையும் உனது
வாயில் போடப்பட்டுள்ளது. அவை உம்மை
விட்டு விலகாது. நான் வாக்களிக்கிறேன்.
அவை உங்கள் பிள்ளைகளிடமும், பிள்ளை
களின் பிள்ளைகளிடமும் இருக்கும். இவை
உங்களுடன் இப்பொழுதும் என்றென்றும்
இருக்கும்.”

### தேவன் வந்துகொண்டிருக்கிறார்

60 “எருசலேமே! என் வெளிச்சமே! எழு!
உனது வெளிச்சம் (தேவன்)
வந்துகொண்டிருக்கிறது. கர்த்தருடைய
மகிமை உன்மேல் ஒளிவீசும்.
2இப்போது பூமியை இருள் மூடியி
ருக்கிறது. ஜனங்கள் இருளில் உள்ளனர்.
ஆனால் கர்த்தர் உன்மேல் ஒளிவீசுகிறார்.
அவரது மகிமை உன் மேல் தோற்றம்
தரும்.
3தேசங்கள், உனது வெளிச்சத்திடம்
(தேவன்) வரும். அரசர்கள், உனது பிரகாச
மான வெளிச்சத்திடம் வருவார்கள்.
4உன்னைச் சுற்றிப் பார்! ஜனங்கள்
ஒன்றுகூடி உன்னிடம் வந்துகொண்டிருக்
கிறார்கள். அவர்கள் உனது மகன்கள்,
வெகு தொலைவிலிருந்து வருகிறார்கள்.
உனது மகள்களும் அவர்களோடு வருகிறார்
கள்.
5இது எதிர்காலத்தில் நடைபெறும்.
அப்போது, நீ உனது ஜனங்களைக் காண்
பாய். உனது முகம் மகிழ்ச்சியுடன் பிரகா
சிக்கும். முதலில் நீ பயப்படுவாய்! ஆனால்
பிறகு நீ கிளர்ச்சியடைவாய். கடல்களைத்
தாண்டி வரும் ஜனங்களின் கூட்டம் உன்
முன் இருக்கும். பலநாட்டு ஜனங்களும்
உன்னிடம் வருவார்கள்.
6மீதியான் ஏப்பாத் நாடுகளில் உள்ள
ஒட்டகக் கூட்டங்கள் உனது நாட்டைக்
கடக்கும். சேபாவிலிருந்து நீள வரிசையாக
ஒட்டகங்கள் வரும். அவர்கள் பொன்னையும்
நறுமணப் பொருட்களையும் கொண்டு வரு
வார்கள். ஜனங்கள் கர்த்தரைத் துதித்துப்
பாடுவார்கள்.
7கேதாரிலுள்ள அனைத்து ஆடுகளையும்
சேகரித்து ஜனங்கள் உன்னிடம் தருவார்கள்.
நெபாயோத்திலிருந்து அவர்கள் ஆட்டுக்
கடாக்களைக் கொண்டுவருவார்கள். எனது
பலிபீடத்தில் அந்த மிருகங்களை நீங்கள்
பலியிடுவீர்கள். நான் அவற்றை ஏற்றுக்
கொள்வேன். எனது அற்புதமான ஆலயத்தை
மேலும் நான் அழகுபடுத்துவேன்.
8ஜனங்களைப் பாருங்கள்! மேகங்கள்
விரைவாக வானத்தைக் கடப்பது போன்று
அவர்கள் உன்னிடம் விரைந்து வருகின்ற
னர். புறாக்கள் தம் கூடுகளுக்குப் பறந்து
போவதுபோல் போகின்றனர்.
9எனக்காகத் தொலைதூர நாடுகள்
எல்லாம் காத்திருக்கின்றன. பெரிய சரக்குக்
கப்பல்களும் பயணத்திற்குத் தயாராக
உள்ளன. அக்கப்பல்கள் தொலைதூர நாடுக
ளிலிருந்து, உனது பிள்ளைகளைக் கொண்டு
வரத் தயாராக உள்ளன. அவர்கள் பொன்
னையும், வெள்ளியையும் தங்களோடு
எடுத்து வந்து உங்கள் தேவனாகிய கர்த்த
ரும், இஸ்ரவேலின் பரிசுத்தருமானவரை
மகிமைப்படுத்துவார்கள். கர்த்தர் உனக்காக
அற்புதச் செயல்களைச் செய்கிறார்.
10“மற்ற நாடுகளில் உள்ள பிள்ளைகள்,
உனது சுவர்களை மீண்டும் கட்டுவார்கள்.
அவர்களின் அரசர்கள் உனக்குச் சேவை
செய்வார்கள். நான் கோபமாக இருந்தபோது,
நான் உன்னைக் காயப்படுத்தினேன். ஆனால்
இப்போது, நான் உன்னிடம் தயவாயிருக்க
விரும்புகிறேன். எனவே உனக்கு நான்
ஆறுதல் செய்வேன்.
11உனது கதவுகள் எப்போதும் திறந்திருக்
கும். அவை, இரவு அல்லது பகல் எவ்

வேளையிலும் மூடப்படாதவை. நாடுகளும்
அரசர்களும் தங்கள் செல்வங்களை உனக்குக்
கொண்டுவருவார்கள்.
[12]உனக்குச் சேவை செய்யாத எந்த
நாடும், இராஜ்யமும் அழிக்கப்படும்.
[13]லீபனோனில் உள்ள மிகச்சிறந்த பொருட்
கள் உனக்குக் கொடுக்கப்படும். ஜனங்கள்
உனக்குத் தேவதாரு, பாய்மரம், புன்னை
போன்ற மரங்களைக் கொண்டுவருவார்கள்.
இம்மரங்கள் எனது பரிசுத்தமான இடத்தைக்
கட்டவும் மேலும் அழகுபடுத்தவும் பயன்
படும். இந்த இடம் சிங்காசனத்திற்கு முன்பு
உள்ள சிறு நாற்காலிபோல் இருக்கும்.
நான் இதற்கு பெருமதிப்பு கொடுப்பேன்.
[14]கடந்த காலத்தில், ஜனங்கள் உன்னைக்
காயப்படுத்தினார்கள், அந்த ஜனங்கள் இப்
பொழுது உன் முன்னால் பணிவார்கள்.
கடந்த காலத்தில், ஜனங்கள் உன்னை
வெறுத்தனர். அந்த ஜனங்கள் உன் காலடி
யில் பணிவார்கள். அவர்கள் உன்னை
‘கர்த்தருடைய நகரம்’ ‘இஸ்ரவேலுடைய
பரிசுத்தமானவரின் சீயோன்’ என்றும்
அழைப்பார்கள்.

### புதிய இஸ்ரவேல்: சமாதானத்தின் நாடு

[15]“நீ மீண்டும் தனியாகக் கைவிடப்பட
மாட்டாய். நீ மீண்டும் வெறுக்கப்பட
மாட்டாய். நீ மீண்டும் வெறுமையாக்கப்பட
மாட்டாய். நான் என்றென்றும் உன்னை
பெரியவனாக்குவேன். நீ என்றென்றும்
மகிழ்ச்சியோடு இருப்பாய்.
[16]உனக்குத் தேவையான அனைத்தையும்
நாடுகள் தரும். இது குழந்தை தன் தாயிட
மிருந்து பால் குடிப்பது போன்று இருக்கும்.
ஆனால் நீ அரசர்களிடமிருந்து செல்வத்தைக்
குடிப்பாய். பிறகு நீ, அது நான் என்றும்
உன்னைக் காப்பாற்றும் கர்த்தர் என்றும்
அறிந்துகொள்வாய். யாக்கோபின் பெரிய
தேவன் உன்னைக் காப்பாற்றுகிறவர். என்
பதை நீ அறிந்துகொள்வாய்.
[17]“இப்போது, உன்னிடம் வெண்கலம்
உள்ளது. நான் உனக்குப் பொன்னைக்
கொண்டுவருவேன். இப்போது, உன்னிடம்
இரும்பு உள்ளது. நான் உனக்கு வெள்ளி
யைக் கொண்டுவருவேன். நான் உனது
மரத்தை வெண்கலமாக மாற்றுவேன். நான்
உனது கற்களை இரும்பாக மாற்றுவேன்.
நான் உனது தண்டனைகளைச் சமாதானம்
ஆக்குவேன். ஜனங்கள் இப்போது, உன்
னைப் புண்படுத்துகிறார்கள். ஆனால், ஜனங்
கள் உனக்காக நல்லவற்றைச் செய்வார்கள்.
[18]“உனது நாட்டில் வன்முறைபற்றிய
செய்திகள் இனி இராது. உனது நாட்டை
ஜனங்கள் மீண்டும் தாக்கி உனக்குள்ளதைப்
பறிக்கமாட்டார்கள். நீ உனது சுவர்களுக்கு
‘இரட்சிப்பு’ என்றும் உனது வாசல்களுக்கு
‘துதி’ என்றும் பெயரிடுவாய்.

[19]“பகலில் இனி சூரியன் உனக்கு
வெளிச்சத்தைத் தராது. இரவில் சந்திரன்
இனி உனக்கு வெளிச்சத்தைத் தராது.
ஏனென்றால், என்றென்றும் கர்த்தரே
உனக்கு வெளிச்சமாய் இருப்பார். உனது
தேவனே உனக்கு மகிமையுமாயிருப்பார்.
[20]உனது சூரியன் மீண்டும் அஸ்தமிக்காது.
உனது சந்திரன் மீண்டும் மறையாது.
ஏனென்றால், கர்த்தரே என்றென்றும் உன்
வெளிச்சமாய் இருப்பார்! உனது துக்கத்திற்
குரிய காலம் முடிந்துவிட்டது.
[21]“உனது ஜனங்கள் அனைவரும்
நல்லவர்கள் ஆவார்கள். அந்த ஜனங்கள்
பூமியை என்றென்றும் பெறுவார்கள். நான்
அந்த ஜனங்களைப் படைத்தேன். அவர்கள்
அற்புதமான செடிகள். நான் அவர்களை
எனது கைகளினால் படைத்தேன். [22]மிகச்
சிறிய குடும்பம்கூட மிகப்பெரிய கோத்தி
ரமாக வளரும்.

சிறிய குடும்பங்கள் வலிமை மிகுந்த
நாடாகும். காலம் சரியாகும்போது நான்
சீக்கிரமாய் வருவேன். நான் இவற்றை
யெல்லாம் நடக்கும்படிச் செய்வேன்.”

### விடுதலைப்பற்றிய கர்த்தருடைய செய்தி

61 கர்த்தருடைய ஊழியன் கூறுகிறான்,
“எனது கர்த்தராகிய ஆண்டவர், என்
மீது அவருடைய ஆவியை வைத்தார்.
தேவன் என்னை ஏழை ஜனங்களுக்கு
நற்செய்திகளைச் சொல்லவும், துக்கமுள்ள
வர்களுக்கு ஆறுதலளிக்கவும் தேர்ந்தெடுத்
தார். கட்டப்பட்டவர்களிடம் அவர்கள்
விடுதலை செய்யப்படுகிறார்கள் என்றும்
சிறைப்பட்டவர்களிடம் அவர்கள் விடுதலை
செய்யப்பட்டிருக்கிறார்கள் என்றும்,
சொல்ல தேவன் என்னை அனுப்பினார்.
[2]கர்த்தர் எப்பொழுது தமது தயவைக்
காட்டுவார் என்று தெரிவிக்க தேவன்
என்னை அனுப்பினார். தேவன் எப்பொ
ழுது தீயவர்களைத் தண்டிப்பார் என்பதைத்
தெரிவிக்க தேவன் என்னை அனுப்பினார்.
துக்கப்படுகிறவர்களுக்கு ஆறுதல் அளிக்க
தேவன் என்னை அனுப்பினார். [3]சீயோனி
லுள்ள துக்கப்பட்ட ஜனங்களிடம் தேவன்
என்னை அனுப்பினார். நான் அவர்களைக்
கொண்டாட்டத்திற்கு தயார் செய்வேன்.
நான் அவர்கள் தலையிலிருந்து சாம்பலை
எடுத்து விட்டு அவர்களுக்கு கிரீடத்தைக்
கொடுப்பேன். நான் அவர்களின் துக்கத்தை
எடுத்து விட்டு மகிழ்ச்சியின் எண்ணெயைக்
கொடுப்பேன். நான் அவர்களின் துயரத்தை
எடுத்துவிட்டு கொண்டாட்டத்தின் ஆடை
களைக் கொடுப்பேன். நான் ‘நல்ல மரங்கள்’
என்றும் ‘கர்த்தருடைய அற்புதமான செடி
கள்’ என்றும் அந்த ஜனங்களுக்குப் பெயரிட
தேவன் என்னை அனுப்பினார்.”

4"அந்தக் காலத்தில், அழிந்த பழைய
நகரங்கள் மீண்டும் கட்டப்படும். அவை
ஆரம்பத்தில் இருந்ததுபோலவே புதியதாக்கப்
படும். பற்பல ஆண்டுகளுக்கு முன்பு
அழிக்கப்பட்ட நகரங்கள் எல்லாம் புதியவை
போலக் கட்டப்படும்.
5"பிறகு, உனது பகைவர்கள் உன்னிடம்
வந்து உன் ஆடுகளைக் மேய்ப்பார்கள்.
உனது பகைவர்களின் பிள்ளைகள் உனது
வயல்களிலும் தோட்டங்களிலும் வேலை
செய்வார்கள். 6'கர்த்தருடைய ஆசாரியர்கள்'
என்றும், 'நமது தேவனுடைய ஊழியர்கள்'
என்றும் நீங்கள் அழைக்கப்படுவீர்கள். பூமி
யின் அனைத்து நாடுகளிலுமுள்ள செல்
வங்களும் உனக்கு வரும். நீ இவற்றைப்
பெற்றதைப்பற்றி பெருமை அடைவாய்.
7"கடந்த காலத்தில், மற்றவர்கள் உன்னை
அவமானப்படுத்தி, உன்மீது கெட்டவற்றைச்
சொன்னார்கள். மற்ற எந்த ஜனங்களையும்
விட நீ மிகுதியாக அவமானப்பட்டாய்.
எனவே, இரண்டு மடங்கு மிகுதியாகப்
பெறுவாய். நீ என்றென்றும் மகிழ்ச்சியைப்
பெறுவாய். 8இது ஏன் நடக்கும்? ஏனென்
றால், நானே கர்த்தர்! நான் நியாயத்தை
நேசிக்கிறேன். நான் திருட்டையும் தவறான
அனைத்தையும் வெறுக்கிறேன். எனவே,
நான் ஜனங்களுக்குரிய சம்பளத்தை அவர்க
ளுக்கு கொடுப்பேன். நான் எனது ஜனங்க
ளோடு ஒரு உடன்படிக்கையை என்றென்
றைக்குமாகச் செய்வேன். 9அனைத்து நாடுக
ளிலும் உள்ள ஒவ்வொருவரும் எனது
ஜனங்களை அறிவார்கள். எனது நாட்டி
லுள்ள பிள்ளகளை ஒவ்வொருவரும் அறி
வார்கள். அவர்களைப் பார்க்கிற எவரும்
கர்த்தர் அவர்களை ஆசீர்வதிக்கிறார் என்ப
தை அறிவார்கள்."

### தேவனுடைய ஊழியர் இரட்சிப்பையும் நன்மையையும் கொண்டுவருவார்

10"கர்த்தர் என்னை மிக மிக மகிழ்ச்
சியுடையவராகச் செய்கிறார். என் தேவனுக்
குள் என் ஆத்துமா மகிழ்ச்சியடைகிறது.
கர்த்தர் இரட்சிப்பாகிய ஆடையை என்
மேல் அணிவிக்கிறார். அந்த ஆடைகள்
திருமணத்தில் ஒருவன் அணிகிற மென்மை
யான ஆடையைப் போன்றது. கர்த்தர்
என்மீது நீதியின் சால்வையை அணிவிக்கி
றார். அச்சால்வை மணமகளும், மணமகனும்
திருமணத்தில் அணியும் அழகிய ஆடை
யைப் போன்றது.
11தாவரங்கள் வளர பூமி காரணமாக
இருந்தது. ஜனங்கள் தோட்டத்தில் விதைக
ளைத் தூவினார்கள். தோட்டம் அந்த
விதைகளை வளர வைத்தது. அதே வழியில்
கர்த்தர் நீதியை வளரச் செய்வார். அனைத்து
நாடுகளிலும் கர்த்தர் துதியை வளரச்
செய்வார்."

### புதிய எருசலேம்: நீதி முழுமையாக உள்ள நகரம்

62 "சீயோனை நான் நேசிக்கிறேன்.
எனவே, நான் தொடர்ந்து அவளுக்
காகப் பேசுவேன். எருசலேமை நான்
நேசிக்கிறேன். எனவே, நான் பேசுவதை
நிறுத்தமாட்டேன். பிரகாசமான வெளிச்சத்
தைப் போன்று நன்மை ஒளிவீசும்வரை
பேசுவேன். இரட்சிப்பானது ஜீவாலையைப்
போன்று எரியும்வரை பேசுவேன்.
2பிறகு, அனைத்து நாடுகளும் உன்
நன்மையைப் பார்க்கும். அனைத்து அரசர்க
ளும் உனது மகிமையைக் காண்பார்கள்.
பிறகு நீ புதிய பெயரைப் பெறுவாய்.
கர்த்தர் அவராகவே ஒரு புதிய பெயரைக்
கொடுப்பார்.
3கர்த்தர் உன்னைப்பற்றி மிகவும் பெருமை
கொள்வார். நீ கர்த்தருடைய கையில் உள்ள
அழகான கிரீடத்தைப்போல் இருப்பாய்.
4"தேவனால் கைவிடப்பட்ட ஜனங்கள்'
என்று மீண்டும் நீங்கள் அழைக்கப்பட
மாட்டீர்கள். "தேவன் அழித்த நாடு' என்று
உனது நாடு மீண்டும் அழைக்கப்படாது.
'தேவன் நேசிக்கும் ஜனங்கள்' என்று நீங்கள்
அழைக்கப்படுவீர்கள்.
'தேவனுடைய மணமகள்' என்று உனது
நாடு அழைக்கப்படும். ஏனென்றால், கர்த்தர்
உன்னை நேசிக்கிறார். உனது நாடு
அவருக்கு உரியதாகும்.
5ஒரு இளைஞன் ஒரு பெண்ணை நேசிக்
கும் போது அவளை மணக்கிறான். அவள்
அவனது மனைவி ஆகிறாள். அதே வழியில்
உனது நாடு உனது பிள்ளைகளுக்கு உரிய
தாகும். ஒருவன் தன் புதிய மனைவியோடு
மிக மகிழ்ச்சியாய் இருப்பதுபோல உன்
தேவன் உன்னோடு மகிழ்ச்சியாய்
இருப்பார்."

### தேவன் தனது வாக்குறுதியைக் காப்பாற்றுவார்

6"எருசலேமே! உனது மதில்களில் காவ
லர்களை (தீர்க்கதரிசிகள்) வைப்பேன். அந்தக்
காவலர்கள் மௌனமாக இருக்கமாட்டார்
கள்! அவர்கள் இரவும் பகலும் ஜெபம்
செய்வார்கள்! காவலர்களே! நீங்கள் கர்த்தரி
டம் ஜெபம் செய்ய வேண்டும். அவரது
வாக்குறுதியை நீ அவருக்கு நினைவுறுத்த
வேண்டும். எப்பொழுதும் ஜெபத்தை நிறுத்
தாதே.
7அவர் எருசலேமை மாநகரமாகச் செய்து,
பூமியில் உள்ள ஜனங்கள் எல்லாம் துதிக்கும்
வரையில் கர்த்தரிடம் நீ ஜெபம் செய்ய
வேண்டும்.
8கர்த்தர் ஒரு வாக்குறுதிச் செய்தார்.
கர்த்தர் தன் சொந்த வல்லமையைச் சான்
றாகப் பயன்படுத்தினார். கர்த்தர் தன் வாக்கு
றுதியைக் காப்பாற்ற தனது வல்லமையைப்
பயன்படுத்துவார்.

கர்த்தர் சொன்னார், “உங்கள் உணவை
உங்கள் பகைவர்களுக்கு மீண்டும் கொடுக்க
மாட்டேன் என்று வாக்களிக்கிறேன்.

நீங்கள் உருவாக்கிய திராட்சைரசத்தை
உங்கள் பகைவர்கள் மீண்டும் எடுத்துக்
கொள்ள விடமாட்டேன் என்று வாக்களிக்கி
றேன்.

9உணவைச் சேகரிக்கிறவன் அதனை
உண்ணுவான் அவன் கர்த்தரைத் துதிப்பான்.
திராட்சையைச் சேகரிக்கிறவன் அந்தத்
திராட்சையிலிருந்து ரசத்தைக் குடிப்பான்,
எனது பரிசுத்த தேசங்களில் இவை அனைத்
தும் உண்மையில் நடக்கும்.”

10வாசல்கள் வழியாக வாருங்கள். ஜனங்
களுக்காகப் பாதையைச் சுத்தப்படுத்துங்கள்.
சாலையைத் தயார் செய்யுங்கள்.
சாலையிலுள்ள கற்களை அப்புறப்படுத்துங்
கள் ஜனங்களுக்கு அடையாளமாகக் கொடி
யை ஏற்றுங்கள்.

11கவனியுங்கள்! தொலைதூர நாடுகளி
லுள்ள ஜனங்களோடு கர்த்தர் பேசிக்கொண்
டிருக்கிறார். “சீயோன் ஜனங்களிடம் கூறு:
பார், உன் இரட்சகர் வருகிறார். அவர்
உனக்குரிய விருதினைக் கொண்டு வருகி
றார். அவர் அவரோடு அவ்விருதினைக்
கொண்டு வருகிறார்.”

12“பரிசுத்தமான ஜனங்கள்” “கர்த்தருடைய
இட்சிக்கப்பட்ட ஜனங்கள்” என்று அவரது
ஜனங்கள் அழைக்கப்படுவார்கள்: “தேவன்
விரும்பும் நகரம்” “தேவனோடு இருக்கிற
நகரம்” என்று எருசலேம் அழைக்கப்படும்.

### கர்த்தர் தம் ஜனங்களை நியாயந்தீர்க்கிறார்

63 ஏதோமிலிருந்து வந்துகொண்டிருக்கிற
இவன் யார்? அவன் போஸ்றாவிலி
ருந்து வருகிறான். அவனது ஆடைகள்
கட்டிச் சிவப்பாக உள்ளது. அவனது
ஆடைகள் மகத்துவமாய் உள்ளது. அவன்
பெரும் வல்லமையோடு உயரமாக நடந்து
கொண்டிருக்கிறான்.

அவன், “உன்னைக் காக்கும் வல்லமை
என்னிடம் உள்ளது. நான் உண்மையைப்
பேசுகிறேன்” என்கிறான்.

2“உனது ஆடைகள் ஏன் சிவப்பாக
உள்ளன? அவை, திராட்சையை ரசமாக்
குகிற இடத்தில் நடந்து வந்தவனைப் போன்
றுள்ளன.”

3அவன் பதில் கூறுகிறான், “நான் திராட்
சைரச ஆலை வழியாக நடந்தேன். எவரும்
எனக்கு உதவவில்லை. நான் கோபமாக
இருக்கிறேன். நான் திராட்சைகளுக்குமேல்
நடந்தேன். அதன் சாறு என் ஆடைகள்மேல்
தெளித்தது. எனவே, எனது ஆடைகள்
அழுக்காக உள்ளன.

4ஜனங்களைத் தண்டிக்க நான் ஒரு
காலத்தைத் தேர்ந்தெடுக்கிறேன். இப்போது,
எனது ஜனங்களைக் காப்பாற்றவும், பாது
காக்கவும் உரிய நேரம் வந்துள்ளது.

5நான் சுற்றிலும் பார்த்தேன். ஆனால்
எவரும் எனக்கு உதவுவதைக் காண
வில்லை.

எவரும் எனக்கு உதவவில்லை என்று
நான் ஆச்சரியப்பட்டேன். எனவே, என்
ஜனங்களைக் காப்பாற்ற நான் என் சொந்த
வல்லமையைப் பயன்படுத்தினேன், என்
கோபம் என்னைத் தாங்கினது.

6நான் கோபமாக இருக்கும்போது, நான்
ஜனங்களை மிதித்தேன். என் கோபம்
அதிகமானபடியால் அவர்களைத் தண்டித்
தேன். நான் அவர்களது இரத்தத்தைத் தரை
யில் ஊற்றினேன்.”

### கர்த்தர் அவரது ஜனங்களிடம் தயவோடு இருக்கிறார்

7கர்த்தர் தயவாக இருக்கிறார் என்று
நினைவுகொள்வேன். கர்த்தரைத் துதிக்க
நான் நினைவுகொள்வேன். கர்த்தர் இஸ்ர
வேல் குடும்பத்திற்குப் பல நல்லவற்றைக்
கொடுத்தார். கர்த்தர் எங்களோடு மிகத்
தயவோடு இருந்திருக்கிறார். கர்த்தர் எங்
களிடம் இரக்கம் காட்டினார்.

8கர்த்தர், “இவர்கள் என்னுடைய
ஜனங்கள். இவர்கள் என்னுடைய மெய்யான
பிள்ளைகள்” என்றார். எனவே கர்த்தர் அந்த
ஜனங்களைக் காப்பாற்றினார். 9ஜனங்
களுக்கு நிறைய துன்பங்கள் இருந்தன. ஆ
னால் கர்த்தர் அவர்களுக்கு எதிராக இல்லை.
கர்த்தர் ஜனங்களை நேசித்தார். அவர்
களுக்காக வருத்தப்பட்டார். எனவே கர்த்தர்
அவர்களைக் காப்பாற்றினார். அவர் தமது
சிறப்பான தூதனை அவர்களைக் காப்பாற்ற
அனுப்பினார். கர்த்தர் என்றென்றும் அவர்
களிடம் அக்கறை கொண்டார். கர்த்தர்
அந்த ஜனங்களுக்காக அக்கறைகொள்வதை
நிறுத்த விரும்பவில்லை.

10ஆனால், அந்த ஜனங்கள் கர்த்தருக்கு
எதிராகத் திரும்பினார்கள். ஜனங்கள் அவ
ரது பரிசுத்த ஆவியை வருந்தும்படி செய்த
னர். எனவே, கர்த்தர் அவர்களின் பகை
வரானார். கர்த்தர் அவர்களுக்கு எதிராகப்
போராடினார்.

11ஆனால், கர்த்தர் நீண்ட காலத்திற்கு
முன்பு என்ன நடந்தது என்பதை இப்
போதும் நினைவுகொள்கிறார். அவர் மோசே
யையும் அவரது ஜனங்களையும் நினைவு
கொள்கிறார். கடல்வழியாக ஜனங்களைக்
கொண்டு வந்தவர் கர்த்தர் ஒருவரே. கர்த்தர்
தம் மந்தைகளை (ஜனங்கள்) வழிநடத்த
மேய்ப்பர்களைப் (தீர்க்கதரிசிகளை) பயன்
படுத்தினார். ஆனால் இப்போது, மோசேயில்
தன் ஆவியை வைத்தவர் எங்கே இருக்கி
றார்?

12கர்த்தர் மோசேயை அவரது வலது
கையால் வழிநடத்தினார். கர்த்தர்

மோசேயை வழிநடத்த அவரது அற்புத
வல்லமையைப் பயன்படுத்தினார். கர்த்தர்
தண்ணீரைப் பிரித்தார். அதனால் ஜனங்கள்
கடல் வழியாக நடக்க முடிந்தது. கர்த்தர்
இப்பெருஞ்செயலைச் செய்ததின் மூலமாக
தனது நாமத்தை நித்திய புகழுக்குரியதாக்கி
னார்.
[13]கர்த்தர் ஜனங்களை ஆழமான கடல்
வழியாக நடத்தினார். ஜனங்கள் கீழே
விழாமல் பாலைவனத்தின் வழியாக ஒரு
குதிரை செல்வதுபோல் சென்றனர்.
[14]ஒரு பசு வயலில் நடந்து செல்லும்போது
அது கீழே விழாது. அதே போன்று
ஜனங்கள் கடல் வழியாகப் போகும்போது
கீழே விழவில்லை. கர்த்தருடைய ஆவி
ஜனங்களை ஒரு ஓய்விடத்திற்கு அழைத்துச்
சென்றது. ஜனங்கள் முழுநேரமும் பாதுகாப்
பாக இருந்தனர். கர்த்தாவே, அதுதான் நீர்
உமது ஜனங்களை நடத்திய வழி. நீர்
ஜனங்களை வழிநடத்தினீர். நீர் உமது
நாமத்தை அற்புதமாக்கினீர்!

### அவரது ஜனங்களுக்கு உதவ தேவனிடம் ஒரு ஜெபம்

[15]கர்த்தாவே! வானத்திலிருந்து கீழே
பாரும்! இப்பொழுது, நிகழ்ந்துகொண்டிருப்ப
வற்றைப் பாரும்! பரலோகத்திலுள்ள உமது
பெருமையும், பரிசுத்தமும் கொண்ட வீட்
டிலிருந்து என்னைப் பாரும்! என் மீதிருந்த
உமது பலமான அன்பு எங்கே? உமது
ஆழத்திலிருந்து வரும் வல்லமையான உமது
வேலைகள் எங்கே? எனக்கான உமது
இரக்கம் எங்கே? என்னிடமிருந்து உமது
கருணையை ஏன் மறைத்தீர்?
[16]பாரும். நீர் எமது தந்தை! எங்களை
ஆபிரகாம் அறியமாட்டார். இஸ்ரவேல்
(யாக்கோபு) எங்களை அடையாளம் காண
வில்லை. கர்த்தாவே, நீர் எமது தந்தை.
எங்களை எப்போதும் காப்பாற்றுகிறவர்
நீர் ஒருவரே.
[17]கர்த்தாவே, எங்களை நீர் ஏன்
உம்மிடமிருந்து தள்ளுகிறீர். உம்மைப் பின்
தொடர்வதை நீர் ஏன் கடினமாக்கினீர்?
கர்த்தாவே எங்களிடம் திரும்பி வாரும்.
நாங்கள் உமது ஊழியர்கள். எங்களிடம்
வந்து எங்களைக் காப்பாற்றும். எங்கள்
குடும்பங்களும் உம்மைச் சார்ந்தது.
[18]உமது பரிசுத்தமான ஜனங்கள் அவர்
களின் நாடுகளில் கொஞ்சக் காலமே
வாழ்ந்தார்கள். பிறகு எங்கள் பகைவர்கள்
உமது பரிசுத்தமான ஆலயத்தை மிதித்தனர்.
[19]சிலர் உம்மைப் பின்பற்றவில்லை. அந்த
ஜனங்கள் உமது நாமத்தால் அழைக்கப்பட
வில்லை. நாங்களும் அந்த ஜனங்களைப்
போல் இருந்தோம்.
64 நீர் வானங்களைக் கிழித்து திறந்து
பூமிக்கு இறங்கிவந்தால், பிறகு
எல்லாம் மாறும். உமக்கு முன்னால் மலை
கள் உருகிப்போகும்.
[2]மலைகள் புதர் எரிவதுபோல எரிந்து
வரும். தண்ணீர் நெருப்பில் கொதிப்பது
போல மலைகள் கொதிக்கும். பிறகு, உமது
பகைவர்கள் உம்மைப்பற்றிக் கற்றுக்கொள்
வார்கள். அவர்கள் உம்மைப்பார்க்கும்
போது அனைத்து நாடுகளும் அச்சத்தால்
நடுங்கும்.
[3]ஆனால், நாங்கள் உண்மையில் நீர்
இவற்றைச் செய்வதை விரும்பவில்லை.
மலைகள் உமக்கு முன்னால் உருகிப்போகும்.
[4]உமது ஜனங்கள் என்றென்றும் உம்மை
உண்மையில் கவனிக்கவில்லை. உமது
ஜனங்கள் நீர் சொன்னதையெல்லாம் என்
றென்றும் கேட்கவில்லை. உம்மைப்போன்ற
தேவனை எவரும் காணவில்லை. வேறு
தேவன் இல்லை, நீர் மட்டுமே. ஜனங்கள்
பொறுமையாய் இருந்தால், நீர் அவர்களுக்கு
உதவும்படி காத்திருந்தால், பிறகு நீர்
அவர்களுக்காகப் பெருஞ்செயலைச்செய்வீர்.
[5]நீர் நன்மை செய்வதில் மகிழ்ச்சி
அடைகிற ஜனங்களோடு இருக்கிறீர். அந்த
ஜனங்கள் உமது வாழ்க்கை வழியை
நினைவுகொள்கிறார்கள். ஆனால் பாரும்!
கடந்த காலத்தில் நங்கள் உமக்கு எதிராகப்
பாவம் செய்தோம். எனவே நீர் எங்களோடு
கோபமுற்றீர். இப்போது, நாங்கள் எப்படி
காப்பாற்றப்படுவோம்?
[6]நாங்கள் பாவத்தால் அழுக்காகியுள்
ளோம். எங்களது அனைத்து நன்மைகளும்
பழைய அழுக்கு ஆடைபோன்று உள்ளன.
நாங்கள் செத்துப்போன இலைகளைப்
போன்றுள்ளோம். எங்கள் பாவங்கள் காற்
றைப்போல எங்களை அடித்துச் செல்லும்.
[7]யாரும் உம்மைத் தொழுதுகொள்ள
வில்லை. உமது நாமத்தின்மீது நம்பிக்கை
வைப்பதில்லை. உம்மைப் பின்பற்ற நாங்கள்
ஊக்கமுள்ளவர்களாக இல்லை. எனவே நீர்
எங்களிடமிருந்து திரும்பி விட்டீர். எங்கள்
பாவங்களினிமித்தம் உமக்கு முன்பு நாங்கள்
உதவியற்று இருக்கிறோம்.
[8]ஆனால் கர்த்தாவே! நீர் எங்களது
தந்தை. நாங்கள் களிமண்ணைப் போன்றவர்
கள். நீர்தான் குயவர். எங்கள் அனை
வரையும் உமது கைகள் செய்தன. [9]கர்த்
தாவே! எங்களோடு தொடர்ந்து கோபங்
கொள்ள வேண்டாம். நீர் என்றென்றும்
எமது பாவங்களை நினைவுகொள்ள வேண்
டாம். தயவுசெய்து எங்களைப் பாரும்!
நாங்கள் உமது ஜனங்கள்.
[10]உமது பரிசுத்தமான நகரங்கள் காலியாக
உள்ளன. இப்பொழுது, அந்நகரங்கள் வனாந்
திரங்களைப் போன்றுள்ளன. சீயோன் ஒரு
வனாந்திரம். எருசலேம் அழிக்கப்படுகிறது.
[11]பரிசுத்த ஆலயத்தில் உம்மை எங்கள்
முற்பிதாக்கள் தொழுதுகொண்டார்கள். அந்த
ஆலயம் எங்களுக்கு மிக உயர்வானது.

*எங்களது பரிசுத்தமான ஆலயம் நெருப்பால்*
*எரிக்கப்பட்டது. எங்களுக்கிருந்த நற்*
*செயல்கள் எல்லாம் இப்பொழுது அழிக்கப்*
*பட்டன.*
12*இவையனைத்தும் எப்பொழுதும் எங்க*
*ளிடம் அன்பு காட்டுவதிலிருந்து உம்மை*
*விலக்குமோ? நீர் தொடர்ந்து எதுவும்*
*பேசாமல் இருப்பீரோ? நீர் என்றென்றும்*
*எங்களைத் தண்டிப்பீரோ?*

### தேவனைப்பற்றி அனைவரும் கற்றுக்கொள்வார்கள்

65 *கர்த்தர் கூறுகிறார், "என்னிடம்*
*ஆலோசனை கேட்க வராதவர்க*
*ளுக்கும் நான் உதவினேன். ஜனங்கள்*
*என்னைத் தேடாமல் இருந்தும் கண்டு*
*கொண்டார்கள். எனது பெயரால் அழைக்*
*கப்பட தகுதியற்ற ஜனங்களிடமும் நான்*
*பேசினேன். 'இதோ நான் இங்கே இருக்*
*கிறேன்' 'இதோ நான் இங்கே இருக்கிறேன்'*
*என்று சொன்னேன்"*
2*"எனக்கு எதிராகத் திரும்பிய ஜனங்*
*களை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக*
*நின்றேன். என்னிடம் வருகின்ற ஜனங்க*
*ளுக்காக நான் காத்திருந்தேன். ஆனால்*
*அவர்கள் தொடர்ந்து நன்மையற்ற வழியில்*
*வாழ்ந்துகொண்டிருந்தனர். அவர்களின்*
*இதயங்கள் விரும்பிய எல்லாவற்றையும்*
*செய்தனர்.* 3*அந்த ஜனங்கள் எப்பொழுதும்*
*என் முன்னால் இருந்து என்னைக் கோப*
*மூட்டுகின்றனர். அந்த ஜனங்கள் சிறப்பான*
*தோட்டங்களில் பலி கொடுக்கிறார்கள்,*
*நறுமணப் பொருட்களை எரிக்கிறார்கள்.*
4*அந்த ஜனங்கள் கல்லறைகளுக்கு இடையில்*
*அமர்கிறார்கள். மரித்த ஜனங்களிடமிருந்து*
*செய்தி வரும் என்று காத்திருக்கின்றனர்.*
*அவர்கள் மரித்த உடல்களுக்கு இடையில்*
*வாழ்கிறார்கள். அவர்கள் பன்றி இறைச்*
*சியைத் தின்கிறார்கள். அவர்களின் கத்திக*
*ளும் கரண்டிகளும் அழுகிய இறைச்சியால்*
*அசுத்தமாயின.*
5*"ஆனால் அந்த ஜனங்கள் மற்றவர்க*
*ளிடம், 'என்னருகில் வராதீர்கள். நான்*
*உன்னைச் சுத்தம் செய்யும்வரை என்னைத்*
*தொடாதீர்கள், என்கின்றனர். அந்த*
*ஜனங்கள் என் கண்களில் படியும் புகை*
*யைப் போன்றவர்கள். அவர்களின் நெருப்பு*
*எப்பொழுதும் எரிகிறது."*

### இஸ்ரவேல் தண்டிக்கப்படவேண்டும்

6*"பார்! இங்கே, செலுத்தப்பட வேண்டிய*
*வற்றுக்கான பத்திரம் உள்ளது. உங்கள்*
*பாவங்களுக்கு நீர் குற்ற உணர்வு கொள்வ*
*தாக இந்தப் பத்திரம் காட்டுகிறது. நான்,*
*இந்தப் பத்திரத்திற்குறியதைச் செலுத்தும்*
*வரை அமைதியாக இருக்கமாட்டேன்.*
*உன்னைத் தண்டிப்பதன் மூலம் இந்தப்*
*பத்திரத்தைச் செலுத்துவேன்.*
7*"உனது பாவங்களும், உனது முன்னோர்*
*களின் பாவங்களும் ஒன்றுபோல்தான் உள்*
*ளன. கர்த்தர் இதைக் கூறுகிறார், "உங்கள்*
*முற்பிதாக்கள் மலைகளில் நறுமணப்*
*பொருட்களை எரித்தபோது இந்தப் பாவங்*
*களைச் செய்தனர். அம்மலைகளில் அவர்கள்*
*என்னை அவமானப்படுத்தினர். நான் அவர்*
*களை முதலில் தண்டித்தேன். அவர்களுக்கு*
*ஏற்ற தண்டனையையே நான் அவர்களுக்குக்*
*கொடுத்தேன்."*

### தேவன் முழுமையாக இஸ்ரவேலை அழிக்கமாட்டார்

8*கர்த்தர் கூறுகிறார், "ஒரு திராட்சைக்*
*குலையில் இரசம் காணப்படும்போது,*
*ஜனங்கள் இரசத்தைப் பிழிந்தெடுப்பார்கள்.*
*ஆனால், அவர்கள் திராட்சையை முழுமை*
*யாக அழிப்பதில்லை. அவர்கள் இதைச்*
*செய்கின்றனர். ஏனென்றால், அந்தத் திரா*
*ட்சைகள் மேலும் பயன்படுத்தப்படும். நான்*
*இதனையே என் ஊழியர்களுக்கும் செய்*
*வேன். நான் அவர்களை முழுமையாக*
*அழிக்க மாட்டேன்.* 9*யாக்கோபின் (இஸ்ர*
*வேல்) ஜனங்களில் சிலரைப் பாதுகாப்பேன்.*
*யூதாவிலுள்ள சில ஜனங்கள் எனது*
*மலையைப் பெறுவார்கள். அங்கே என்*
*ஊழியர்கள் வாழ்வார்கள். அங்கே வாழும்*
*ஜனங்களை நான் தேர்ந்தெடுப்பேன்.* 10*பிறகு,*
*சாரோன் சமவெளி ஆடுகளுக்கான மேய்ச்சல்*
*நிலமாகும். ஆகோரின் பள்ளத்தாக்கு மாடு*
*களுக்கான ஓய்விடமாகும். இவை அனைத்*
*தும் எனது ஜனங்களுக்காக என்னைத்*
*தேடுகிற ஜனங்களுக்கு உரியவையாகும்.*
11*"ஆனால் நீங்கள் கர்த்தரைவிட்டு*
*விலகினீர்கள். எனவே, நீங்கள் தண்டிக்கப்*
*படுவீர்கள். நீங்கள் எனது பரிசுத்தமான*
*மலையை மறந்துவிட்டீர்கள். நீங்கள்*
*அதிர்ஷ்டத்தைத் தொழுதுகொள்ள ஆரம்பித்*
*தீர்கள். நீங்கள் விதி என்னும் பொய்த்*
*தெய்வத்தின் முன்பு உணவு மற்றும் பான*
*பலிகளை படைத்து, அதைச் சார்ந்து*
*இருக்கிறீர்கள்.* 12*ஆனால், உங்கள் எதிர்*
*காலத்தை நான் தீர்மானித்துவிட்டேன்.*
*நீங்கள் வாளால் கொல்லப்படுவீர்கள் என்று*
*நான் தீர்மானித்தேன். நீங்கள் அனைவரும்*
*கொல்லப்படுவீர்கள். ஏனென்றால், நான்*
*உங்களை அழைத்தேன். ஆனால், எனக்குப்*
*பதில் சொல்ல மறுத்தீர்கள். நான் உங்க*
*ளோடு பேசினேன். நீங்கள் கவனிக்க*
*வில்லை. நான் தீமை என்று சொன்னதை*
*நீங்கள் செய்தீர்கள். நான் விரும்பாத*
*வற்றையெல்லாம் நீங்கள் செய்ய முடிவு*
*செய்தீர்கள்."*
13*எனவே, எனது கர்த்தராகிய ஆண்டவர்*
*இவற்றைச் சொன்னார். "எனது ஊழியர்கள்*
*உண்பார்கள். ஆனால் தீயவர்களாகிய நீங்கள்*
*பட்டினியாக இருப்பீர்கள். எனது ஊழியர்*

கள் குடிப்பார்கள். ஆனால், தீயவர்களாகிய
நீங்கள் தாகமாய் இருப்பீர்கள். எனது
ஊழியர்கள் மகிழ்வார்கள். ஆனால், தீயவர்க
ளாகிய நீங்கள் அவமானம் அடைவீர்கள்.
14எனது ஊழியர்கள் தம் இதயங்களில்
நன்மை கொண்டுள்ளனர். எனவே, அவர்கள்
மகிழ்வார்கள். ஆனால், தீயவர்களாகிய
நீங்கள் கதறுவீர்கள். ஏனென்றால், உங்கள்
இதயங்களில் உள்ள உங்கள் ஆவி உடைக்
கப்படும். நீங்கள் வருத்தம் கொள்வீர்கள்.
15எனது ஊழியர்களுக்கு உங்கள்
பெயர்கள் கெட்ட வார்த்தைகளைப் போல்
இருக்கும்." எனது கர்த்தராகிய ஆண்டவர்
உங்களைக் கொல்வார். அவர் தம் ஊழியர்
களைப் புதிய பெயரால் அழைப்பார்.
16ஜனங்கள் இப்போது பூமியிலிருந்து ஆசீர்
வாதத்தைக் கேட்கின்றனர். ஆனால் எதிர்
காலத்தில், அவர்கள் நம்பிக்கைக்குரிய
தேவனிடமிருந்து ஆசீர்வாதத்தைக் கேட்பார்
கள். இப்பொழுது ஜனங்கள் வாக்குறுதிச்
செய்யும்போது, பூமியின் வல்லமையை
நம்புகின்றனர். ஆனால் எதிர்காலத்தில்,
அவர்கள் நம்பிக்கைக்குரிய தேவன் மீது
நம்பிக்கை வைப்பார்கள். ஏனென்றால்
கடந்தகாலத்தில் உள்ள துன்பங்கள் எல்லாம்
மறக்கப்படும். என் ஜனங்கள் இந்தத் துன்பங்
களையெல்லாம் மீண்டும் நினைக்கவே
மாட்டார்கள்.

### புதிய காலம் வந்துகொண்டிருக்கிறது

17"நான் புதிய வானத்தையும், புதிய
பூமியையும் படைப்பேன். ஜனங்கள் கடந்த
காலத்தை நினைக்கமாட்டார்கள். அவற்றில்
எதையும் அவர்கள் நினைக்கமாட்டார்கள்.
18எனது ஜனங்கள் மகிழ்ச்சியோடு இருப்
பார்கள். அவர்கள் என்றும் என்றென்றும்
மகிழ்ச்சியோடு இருப்பார்கள். நான் என்ன
செய்யப் போகிறேன்? நான் மகிழ்ச்சி
நிறைந்த ஒரு எருசலேமை உருவாக்குவேன்.
அவர்களை மகிழ்ச்சி நிறைந்த ஜனங்கள்
ஆக்குவேன்.
19"பிறகு, நான் எருசலேமோடு மகிழ்ச்சி
யாக இருப்பேன். நான் என் ஜனங்களோடு
மகிழ்ச்சியாக இருப்பேன். அந்த நகரத்தில்
மீண்டும் அழுகையும் துக்கமும் இராது.
20இனி ஒருபோதும் ஒரு குழந்தை பிறந்த
வுடன் மரிக்காது. இனி நகரத்தில் எவனும்
குறுகிய வாழ்வுடன் மரிக்கமாட்டார்கள்.
ஒவ்வொரு குழந்தையும் நீண்ட காலம்
வாழும். ஒவ்வொரு வயோதிகனும் நீண்ட
காலம் வாழ்வான்.

100 ஆண்டுகள் வாழ்ந்த ஒருவன் இளை
ஞன் என்று அழைக்கப்படுவான். பாவம்
செய்தவன் 100 ஆண்டுகள் வாழ்ந்தாலும்
வாழ்வு முழுவதும் துன்பத்தை அடைவான்.
21"அந்த நகரத்தில், ஒருவன் வீடுகட்டினால்
அவன் அங்கே வாழ்வான். ஒருவன் திராட்
சைத் தோட்டத்தை வைத்தால், அவன்
அந்தத் தோட்டத்திலிருந்து திராட்சைகளைத்
உண்பான்.
22மீண்டும் ஒருவன் வீடுகட்ட இன்
னொருவன் அதில் குடியேற மாட்டான்.
மீண்டும் ஒருவன் திராட்சைத் தோட்டத்தை
அமைக்க இன்னொருவன் பழம் உண்ண
மாட்டான். எனது ஜனங்கள் மரங்கள்
வாழும்மட்டும் வாழ்வார்கள். நான் தேர்ந
தெடுத்த ஜனங்கள் தாங்கள் செய்தவற்றை
அனுபவித்து மகிழ்வார்கள்.
23பெறும் குழந்தை மரித்துப்போவதற்காக
இனிமேல் பெண்கள் பிரசவிக்கமாட்டார்கள்.
பிரசவத்தின்போது என்ன ஆகுமோ என்று
பெண்கள் இனிமேல் பயப்படமாட்டார்கள்.
எனது அனைத்து ஜனங்களும் அவர்களது
பிள்ளைகளும் கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படு
வார்கள்.
24அவர்கள் கேட்பதற்கு முன்பே
அவர்களுக்கு என்ன தேவை என்று நான்
அறிவேன். அவர்கள் கேட்டு முடிப்பதற்குள்
ளாக நான் அவர்களுக்கு உதவுவேன்.
25ஓநாயும் ஆட்டுக் குட்டிகளும் சேர்ந்து புல்
மேயும். சிங்கங்கள் மாடுகளோடு சேர்ந்து
வைக்கோலைத் உண்ணும். எனது பரிசுத்த
மான மலையில் தரையில் உள்ள பாம்பு
யாரையும் பயப்படுத்தாது. அது எவரையும்
தீண்டாது" கர்த்தர் இவை அனைத்தையும்
கூறினார்.

### அனைத்து தேசங்களையும் தேவன் நியாயம் தீர்ப்பார்

66 கர்த்தர் சொல்கிறது இதுதான்,
"வானங்கள் என்னுடைய சிங்காச
னம். பூமி எனது பாதப்படி. எனவே,
எனக்கு ஒரு ஆலயம் கட்ட முடியுமென்று
நீ நினைக்கிறாயா? முடியாது. உன்னால்
முடியாது! நான் ஓய்வெடுக்கும் இடத்தை
உன்னால் கொடுக்க முடியுமா? முடியாது!
உன்னால் முடியாது!
2நானே எனக்கு இவற்றையெல்லாம்
அமைத்துக்கொள்ள வேண்டும். அனைத்தும்
இங்கே உள்ளன. ஏனென்றால், நான் இவற்
றைப் படைத்தேன். கர்த்தர்தாமே இவற்றைக்
கூறினார். "எனக்குச் சொல், நான் எந்த
ஜனங்களைப் பாதுகாக்க வேண்டும். ஏழை
களையும், துயரப்படுபவர்களையும் பாது
காக்கிறேன். எளியவர்களுக்காகவும், துயரப்
படுவர்களுக்காகவும் பொறுப்பேற்கிறேன்.
எனது வார்த்தைகளுக்குக் கட்டுப்படுகிற
ஜனங்களை நான் பாதுகாக்கிறேன்.
3சில ஜனங்கள் காளைகளைப் பலியிடு
கிறார்கள். ஆனால், அவர்கள் ஜனங்களையும்
அடிக்கிறார்கள். அந்த ஜனங்கள் ஆடுகளைப்
பலியாகக் கொடுக்கிறார்கள். ஆனால், அவர்
கள் நாய்களின் கழுத்துகளையும் உடைக்
கிறார்கள். அவர்கள் பன்றியின் இரத்தத்தை
யும் எனக்கு பலியாகச் செலுத்துகிறார்கள்.
அந்த ஜனங்கள் நறுமணப் பொருட்களை

*எரிக்க நினைவுகொள்வார்கள். ஆனால், அவர்கள் தமது பயனற்ற விக்கிரகங்களை நேசிக்கிறார்கள். அவர்கள் எனது வழியை அல்ல. தங்கள் சொந்த வழியையே தேர்ந்து எடுப்பார்கள். அவர்கள் தங்களது பயங்கரமான விக்கிரகங்களை நேசிக்கிறார்கள்.*

4*எனவே, நான் அவர்களது தந்திரங்களையே பயன்படுத்த முடிவு செய்தேன். அதாவது அவர்கள் எதைக்கண்டு அதிகமாகப் பயப்படுகிறார்களோ, அதனாலேயே அவர்களைத் தண்டிப்பேன். நான் அந்த ஜனங்களை அழைத்தேன். ஆனால் அவர்கள் கவனிக்கவில்லை. நான் அவர்களோடு பேசினேன். ஆனால், அவர்கள் என்னைக் கேட்கவில்லை. எனவே, நான் அதனையே அவர்களுக்குச் செய்வேன். நான் விரும்பாதவற்றையே அவர்கள் செய்யத் தேர்ந்தெடுத்தனர்.”*

5*கர்த்தருடைய கட்டளைகளுக்கு அடிபணிகிற ஜனங்களாகிய நீங்கள் கர்த்தர் சொல்கிறவற்றையும் கேட்கவேண்டும். “உங்களை உங்கள் சகோதரர் வெறுத்தார்கள். அவர்கள் உங்களுக்கு எதிராக மாறினார்கள். ஏனென்றால், என்னை நீங்கள் பின்பற்றுகிறீர்கள். உங்கள் சகோதரர்கள் கூறினார்கள், ‘கர்த்தர் மகிமைப்படுத்தப்படும்போது, நாங்கள் உம்மிடம் திரும்பிவருவோம். பிறகு, நாங்கள் உங்களோடு மகிழ்ச்சியாக இருப்போம்’ அத்தீய ஜனங்கள் தண்டிக்கப்படுவார்கள்.*

### தண்டனையும் புதிய நாடும்.

6*கவனியுங்கள்! நகரத்திலிருந்தும், ஆலயத்திலிருந்தும் பேரோசை வந்துகொண்டிருக்கிறது. அது கர்த்தர் தனது பகைவர்களைத் தண்டிக்கும் ஓசை. அவர்களுக்கு ஏற்ற தண்டனையைக் கர்த்தர் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.*

7-8*“ஒரு பெண் பிரசவ வலியை உணர்வதற்கு முன்பு ஒரு குழந்தையைப் பெற முடியாது. ஒரு பெண் தான் பெற்றெடுக்கும் குழந்தையைப் பார்க்கும்முன் அதற்குரிய வலியை உணர வேண்டும். அதைப்போலவே, எவரும் ஒரு புதிய நாடு ஒரே நாளில் பிறப்பதைக் காண முடியாது. எவரும் ஒரு நாடு ஒரே நாளில் தோன்றியதைக் கேள்விப்பட்டிருக்க முடியாது. அந்த நாடு பிரசவ வலி போன்று முதலில் வலியை அறிய வேண்டும். பிரசவ வலிக்குப் பிறகே, நாடு தன் பிள்ளையாகிய புதிய நாட்டைப் பெற்றெடுக்கும்.*
9*இதைப் போலவே நான் புதிய ஒன்று பிறக்க இடமில்லாமல் வலிக்குக் காரணமாக இருக்கமாட்டேன்.”*

*கர்த்தர் இதனைச் சொல்கிறார், “நான் வாக்குறுதிச் செய்கிறேன். நான் உங்களது பிரசவ வலிக்குக் காரணமாக இருந்தால், புதிய நாட்டை உங்களுக்குத் தராமல் நிறுத்த மாட்டேன்.” உங்கள் தேவன் இதைச் சொன்னார்.*

10*எருசலேமே மகிழ்ச்சி கொள்! எருசலேமை நேசிக்கிற ஜனங்களாகிய நீங்கள் மகிழ்ச்சி அடையுங்கள்! எருசலேமிற்கு துன்பங்கள் ஏற்பட்டன. எனவே, ஜனங்களில் சிலர் வருத்தமாய் இருந்தீர்கள். ஆனால், இப்போது நீங்கள் மகிழ்ச்சியோடு இருக்கலாம்!*
11*ஏனென்றால், மார்பிலிருந்து பால் வருவது போன்று நீங்கள் இரக்கத்தைப் பெறுவீர்கள். அந்தப் பால் உண்மையில் உங்களைத் திருப்திப்படுத்தும். நீங்கள் அந்தப் பாலைக் குடிப்பீர்கள். நீங்கள் உண்மையில் எருசலேமின் மகிமையை அனுபவிப்பீர்கள்.*

12*கர்த்தர் கூறுகிறார், “பார், நான் உங்களுக்குச் சமாதானத்தைக் கொடுப்பேன். இந்தச் சமாதானம் உங்களுக்குப் பெருக்கெடுத்து வரும் ஆற்றினைப்போல் பாயும். அனைத்து நாடுகளில் உள்ள செல்வங்களும் உன்னிடம் பாய்ந்து வரும். அந்தச் செல்வம் வெள்ளம்போல் வரும். நீங்கள் சிறு குழந்தைகளைப் போன்று இருப்பீர்கள். நீங்கள் பாலைக் (செல்வம்) குடிப்பீர்கள்! நான் உங்களைத் தூக்கி எனது கைகளில் வைத்துக் கொள்வேன். நான் உங்களை எனது முழங்காலில் வைத்து தாலாட்டுவேன்.*

13*ஒரு தாய் தன் குழந்தையைத் தேற்றுவதுபோல நான் உங்களைத் தேற்றுவேன்! நீங்கள் எருசலேமில் ஆறுதல் செய்யப்படுவீர்கள்.*

14*நீங்கள் உண்மையில் மகிழ்ச்சியடைகிறவற்றைப் பார்ப்பீர்கள். நீங்கள் விடுதலை பெற்று புல்லைப்போல வளருவீர்கள். கர்த்தருடைய ஊழியர்கள் அவருடைய வல்லமையைக் காண்பார்கள். ஆனால், கர்த்தருடைய பகைவர்கள் அவரது கோபத்தைப் பார்ப்பார்கள்.*

15*பாருங்கள், கர்த்தர் நெருப்போடு வந்துகொண்டிருக்கிறார். கர்த்தருடைய படைகள் புழுதி மேகங்களோடு வந்துகொண்டிருக்கிறார்கள். கர்த்தர் அந்த ஜனங்களைத் தனது கோபத்தால் தண்டிப்பார். கர்த்தர் நெருப்பின் ஜீவாலையைப் பயன்படுத்தி, அவர் கோபமாக இருக்கையில் அந்த ஜனங்களைத் தண்டிப்பார்.*
16*கர்த்தர் ஜனங்களை நியாயந்தீர்ப்பார். பிறகு கர்த்தர் ஜனங்களை வாளாலும் நெருப்பாலும் அழிப்பார். கர்த்தர் அதிகமான ஜனங்களை அழிப்பார்.*

17*அந்த ஜனங்கள் அவர்களின் சிறப்பான தோட்டத்தில், தொழுதுகொள்வதற்காகத் தம்மைத்தாமே கழுவி சுத்தப்படுத்திக் கொள்வார்கள். அவர்களின் சிறப்பான தோட்டத்திற்கு அந்த ஜனங்கள் ஒருவரை ஒருவர் பின்தொடர்ந்து செல்வார்கள். பிறகு அவர்கள் தம் விக்கிரகங்களைத் தொழுது*

கொள்வார்கள். ஆனால் அனைத்து
ஜனங்களையும் கர்த்தர் அழிப்பார்.
“அந்த ஜனங்கள் பன்றிகள், எலிகள்
மற்றும் மற்ற அழுக்கானவற்றின் இறைச்
சியைத் உண்கிறார்கள். ஆனால் அந்த
அனைத்து ஜனங்களும் சேர்ந்து அழிக்கப்படு
வார்கள்.” (கர்த்தர் இவற்றை அவராகவே
சொன்னார்.)
18 “அந்த ஜனங்கள் தீய நினைவுகளைக்
கொண்டு தீயவற்றைச் செய்தனர். எனவே,
நான் அவர்களைத் தண்டிக்க வந்துகொண்டி
ருக்கிறேன். நான் அனைத்து நாடுகளையும்
அனைத்து ஜனங்களையும் ஒன்று
சேர்ப்பேன். அனைத்து ஜனங்களும் சேர்ந்து
வந்து எனது வல்லமையைப் பார்ப்பார்கள்.
19 நான் ஜனங்களில் சிலர் மீது அடை
யாளத்தை இடுவேன். நான் அவர்களைக்
காப்பாற்றுவேன். காப்பாற்றப்பட்ட ஜனங்க
ளில் சிலரை நான் தர்ஷீசு, லிபியா லூத்
(வில் வீரர்களின் நாடு), தூபால், கிரீஸ்
மற்றும் தொலைதூர நாடுகளுக்கும் அனுப்பு
வேன். அந்த ஜனங்கள் என்றும் எனது
போதனைகளைக் கேள்விப்பட்டிருக்க
மாட்டார்கள். அந்த ஜனங்கள் எனது
மகிமையை என்றும் பார்த்திருக்கமாட்டார்
கள். எனவே, காப்பாற்றப்பட்ட ஜனங்கள்
எனது மகிமையைப்பற்றி அந்நாடுகளில்
கூறுவார்கள். 20 அவர்கள் அனைத்து
நாடுகளிலும் உள்ள உங்கள் சகோதரர்கள்
மற்றும் சகோதரிகள் அனைவரையும்
அழைத்துக் கொண்டு வருவார்கள். உங்கள்
சகோதரர்கள் மற்றும் சகோதரிகள் அனை
வரையும் அவர்கள் எனது பரிசுத்தமான
மலையான எருசலேமிற்கு அழைத்து வரு
வார்கள். உங்கள் சகோதரர்கள் மற்றும்
சகோதரிகள் குதிரைகள், கழுதைகள்,
ஒட்டகங்கள், இரதங்கள் மற்றும் வண்டிகளில்
வருவார்கள். உங்கள் சகோதரர்கள் மற்றும்
சகோதரிகள் ஆகியோர் இஸ்ரவேலர்களால்
கர்த்தருடைய ஆலயத்திற்குச் சுத்தமான
தட்டில் வைத்து கொண்டு வரப்படும்
காணிக்கைகளைப் போன்று இருப்பார்கள்.
21 நானும் இந்த ஜனங்களில் சிலரை ஆசாரியர்
களாகவும் லேவியர்களாகவும் தேர்ந்தெடுப்
பேன்” கர்த்தர்தாமே இவற்றைச் சொன்னார்.

### புதிய வானங்களும் புதிய பூமியும்

22 நான் ஒரு புதிய உலகத்தைப்
படைப்பேன். புதிய வானங்களும்! புதிய
பூமியும் என்றென்றும் நிலைத்து இருக்கும்.
அவ்வாறே உங்கள் பெயர்களும், உங்கள்
பிள்ளைகளும் என்னோடு எப்பொழுதும்
இருப்பார்கள். 23 ஒவ்வொரு ஆராதனைக்குரிய
நாளிலும் அனைத்து ஜனங்களும் என்னை
ஆராதிக்க வருவார்கள். அவர்கள் ஒவ்வொரு
ஓய்வு நாளிலும் ஒவ்வொரு மாதத்தின்
முதல் நாளிலும் வருவார்கள்.
24 “இந்த ஜனங்கள் எனது பரிசுத்தமான
நகரத்தில் இருப்பார்கள். அவர்கள் அந்த
நகரத்தை விட்டு வெளியே போனால் எனக்கு
எதிராகப் பாவம் செய்தவர்களின் மரித்த
உடல்களைப் பார்ப்பார்கள். அந்த உடல்
களில் புழுக்கள் இருக்கும். அப்புழுக்கள்
என்றும் சாகாது. நெருப்பு அந்த உடல்களை
எரித்துப்போடும். அந்நெருப்பு அணையாமல்
இருக்கும்.”

# எரேமியா தீர்க்கதரிசியின் புத்தகம்

1 இவை எரேமியாவின் செய்திகள். இல்க்
கியா என்ற பெயருள்ள மனிதரின் மகன்
எரேமியா. ஆனதோத் என்ற நகரத்தில்
வாழ்ந்த ஆசாரியரின் குடும்பத்தைச் சார்ந்த
வனாக இருந்தான். அந்நகரமானது பென்யமீ
னின் கோத்திரத்தினருக்குரிய நாட்டில் இருந்
தது. 2கர்த்தர், யூத நாட்டின் அரசனாக
யோசியா இருந்தபோது அந்நாட்களில் எரே
மியாவுடன் பேசத்தொடங்கினார். யோசியா,
ஆமோன் என்ற பெயருடைய மனிதரின்
மகனாகும். கர்த்தர், யோசியாவின் ஆட்சி
யில் 13வது ஆண்டில்* எரேமியாவுடன்
பேச ஆரம்பித்தார். 3யூதாவின் அரசனாக
யோயாக்கீம் இருந்தபோதும் அந்தக்காலத்தில்
கர்த்தர் எரேமியாவுடன் தொடர்ந்து பேசி
னார். யோயாக்கீம் யோசியாவின் மகன்,
யூதாவின் அரசனாக சிதேக்கியா இருந்த
பதினோறு ஆண்டுகளும் ஐந்து மாதங்களும்
கர்த்தர் எரேமியாவுடன் தொடர்ந்து பேசி
னார். சிதேக்கியாவும் யோசியாவின் மக
னாக இருந்தான். சிதேக்கியா அரசனாக
இருந்த பதினொன்றாவது ஆண்டின் ஐந்தா
வது மாதத்தில் எருசலேமில் வாழ்ந்த ஜனங்
கள் சிறையெடுக்கப்பட்டனர்.

## தேவன் எரேமியாவை அழைக்கிறார்

4கர்த்தருடைய வார்த்தை எரேமியாவிற்கு
உண்டாகி, அவர்,
5“உனது தாயின் கருவில் நீ உரு
வாக்கப்படுவதற்குமுன்பே நான் உன்னை
அறிவேன். நீ பிறப்பதற்கு முன்பு உன்னதமா
னவேலைக்கு உன்னைத் தேர்ந்தெடுத்தேன்.
நாடுகளுக்குத் தீர்க்கதரிசியாக நான்
உன்னைத் தேர்ந்தெடுத்தேன்” என்றார்.
6பிறகு எரேமியா, “ஆனால் சர்வ வல்ல
மையுள்ள கர்த்தாவே, எப்படிப் பேசுவது
என்று எனக்குத் தெரியாது. ‘நான் ஒரு
சிறுவன்’ என்றான்.
7ஆனால் கர்த்தர் என்னிடம், “நீ சிறு
வன் என்றுச் சொல்லாதே. நான் அனுப்பு
கிற எல்லா இடங்களுக்கும் நீ போக
வேண்டும், நான் சொல்லுகிறவற்றை
எல்லாம் நீ பேச வேண்டும் என்றார்
8எவருக்கும் பயப்பட வேண்டாம், நான்
உன்னோடு இருக்கிறேன். நான் உன்னைக்
காப்பாற்றுவேன்” என்றார். இந்த வார்த்தை
கர்த்தரிடமிருந்து வருகிறது.
9பிறகு கர்த்தர் தனது கரத்தை நீட்டி
எனது வாயைத் தொட்டார், கர்த்தர் என்
னிடம், “எரேமியா, நான் எனது வார்த்
தைகளை உனது வாய்க்குள் வைக்கிறேன்.
10இன்று நான் உன்னை நாடுகளுக்கும்,
அரசுகளுக்கும் பொறுப்பாளியாக நியமித்
திருக்கிறேன். நீ வேரோடு பிடுங்கவும்,
இடிக்கவும், அழிக்கவும், கவிழ்க்கவும், கட்ட
வும், நாட்டவும் செய்வாய்” என்றார்.

## இரண்டு தரிசனங்கள்

11மறுபடியும் கர்த்தருடைய வார்த்தை
எனக்கு உண்டாகி, அவர், “எரேமியா, நீ
என்ன பார்க்கிறாய்?” என்றார். நான்
கர்த்தருக்கு, “நான் வாதுமை மரத்தின்
கிளையால் ஆனக் கம்பைப் பார்க்கிறேன்”
என்றார்.
12கர்த்தர் என்னிடம், “நீ நன்றாகப் பார்த்
தாய். நான் கவனித்துக் கொண்டிருக்கிறேன்.
உன்னிடம் வரும் எனது வார்த்தைகளை
சீக்கிரமாய் நிறைவேற்றுவேன், என்பதை
உறுதி செய்கிறேன்” என்றார்.
13மீண்டும் கர்த்தருடைய வார்த்தை
எனக்கு உண்டாகி, அவர், “எரேமியா, நீ
என்ன பார்க்கிறாய்?” என்றார். “நான் ஒரு
பானையில் கொதிக்கிற தண்ணீரைப்
பார்க்கிறேன், அந்தப் பானையின் வாய்
வடக்கேயிருந்து பார்க்கிறது” என்றார்.
14கர்த்தர் என்னிடம், “வடக்கிலிருந்து
பயங்கரமான ஒன்று வரும், இந்த நாட்டில்
வாழ்கிற அனைத்து ஜனங்களுக்கும் இது
ஏற்படும்.
15மிகக் குறுகிய காலத்தில் நான், வட
நாட்டு அரசுகளில் உள்ள அனைத்து ஜனங்
களையும் அழைப்பேன்” என்றார். இவற்றை
யெல்லாம் கர்த்தர் சொன்னார். “அந்நாடு
களில் உள்ள அரசர்கள் வந்து எருசலேமின்
வாசலருகில் தங்கள் சிங்காசனங்களை
போடுவார்கள், அவர்கள் எருசலேமின்
நகரச்சுவர்களைத் தாக்குவார்கள், மற்றும்
அவர்கள் யூதாவிலுள்ள அனைத்து நகரங்
களையும் தாக்குவார்கள்.
16நான் எனது ஜனங்களுக்கு எதிராக
என் தீர்ப்பினை அறிவிப்பேன். அவர்கள்
தீயவர்கள், எனவே நான் இவற்றைச் செய்

**13வது .... ஆண்டில்** *கி.மு.* 627.

வேன். அவர்கள் எனக்கு எதிராகத் திரும்
பியிருந்தார்கள். எனது ஜனங்கள் என்னை
விட்டு விலகினார்கள் அவர்கள் அந்நிய
தெய்வங்களுக்கு பலிகளைக் கொடுத்தனர்,
அவர்கள் தமது கைகளால் செய்திருந்த
விக்கிரகங்களைத் தொழுதுகொண்டனர்.
17 "ஆகவே எரேமியா, தயாராயிரு,
எழுந்து நில், ஜனங்களோடு பேசு, நான்
உன்னிடம் சொன்னவற்றையெல்லாம் நீ
அவர்களுக்குச் சொல். ஜனங்களைப் பார்த்து
பயப்படாதே, நீ ஜனங்களுக்குப் பயந்தால்,
பிறகு அவர்களுக்கு நீ பயப்படும்படி நல்ல
காரணங்களைத் தருவேன்.
18 என்னைப் பொருத்தவரை, இன்று உன்
னை பாதுகாப்பான நகரத்தைப் போன்று
வலிமையானவனாக ஆக்குவேன், இரும்புத்
தூண் போலவும், வெண்கலச்சுவர் போல
வும் செய்வேன்; தேசத்திலுள்ள எல்லா
வற்றுக்கும் முன்பும், யூத நாட்டிலுள்ள
அரசர்களுக்கு முன்பும், யூதாவின் தலைவர்
களுக்கு முன்பும், யூதாவின் ஆசாரியர்களுக்கு
முன்பும், யூதநாட்டின் ஜனங்களுக்கு முன்பும்
நிற்க முடிந்த ஒருவனாக ஆவாய். 19 அந்த
ஜனங்கள் அனைவரும் உனக்கு எதிராகப்
போரிடுவார்கள், ஆனால் அவர்கள் உன்
னைத் தோற்கடிக்கமாட்டார்கள். ஏனென்
றால், நான் உன்னோடு இருக்கிறேன், நான்
உன்னைக் காப்பாற்றுவேன்" என்றார். இந்த
வார்த்தைக் கர்த்தரிடமிருந்து வருகிறது.

### யூதா உண்மையாக இல்லை

2 கர்த்தருடைய வார்த்தை எரேமியாவிற்கு
உண்டாகி, அவர், 2 "எரேமியா, போ.
எருசலேம் ஜனங்களிடம் பேசு, அவர்களி
டம், 'நீ இளைய நாடாக இருந்த காலத்தில்
எனக்கு உண்மை உள்ளவளாக இருந்தாய்,
இளைய மணமகளைப் போன்று, என்னைப்
பின்பற்றினாய். வனாந்தரத்தின் வழியாக
என்னைப் பின்பற்றினீர்கள்; விவசாயத்திற்
குப் பயன்படுத்தாத நிலத்தின் வழியாக
என்னைப் பின்தொடர்ந்தீர்கள்.
3 இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தருக்கான பரி
சுத்த அன்பளிப்பாக இருந்தனர். அவர்கள்
கர்த்தரால் சேகரிக்கப்பட்ட முதல்கனியாக
இருந்தனர். அவர்கள் காயப்படுத்த முயலும்
எவரும் குற்றவாளியாகத் தீர்க்கப்படு
வார்கள். அத்தீயவர்களுக்குக் கெட்டவை
ஏற்படும்'" என்று சொல் என்றார். இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.
4 யாக்கோபின் குடும்பமே கர்த்தருடைய
வார்த்தையைக் கேள், இஸ்ரவேலின் கோத்
திரங்களே கர்த்தருடைய வார்த்தையைக்
கேளுங்கள்.
5 கர்த்தர் சொல்லுகிறது இது தான்: "நான்,
உங்கள் முற்பிதாக்களிடம் நீதியுடன் இல்லை
என நினைக்கிறீர்களா? அதனால் தான்
அவர்கள் என்னைவிட்டு விலகிப் போனார்
களா? உங்கள் முற்பிதாக்கள் பயனற்ற
விக்கிரகங்களைத் தொழுதுகொண்டனர்,
அவர்கள், தாங்களே உதவாக்கரைகள் ஆனா
ர்கள்.
6 உங்கள் முற்பிதாக்கள், 'கர்த்தர் எகிப்தி
லிருந்து எங்களைக் கொண்டுவந்தார், கர்த்
தர் எங்களை வனாந்திரத்தில் வழி நடத்தி
னார். கர்த்தர் எங்களை வறண்ட பாறை
நிலத்தின் வழியாக நடத்தினார், கர்த்தர்
எங்களை இருண்ட ஆபத்தான நாடுகள்
வழியாக நடத்தினார், ஜனங்கள் எவரும்
அங்கு இதற்குமுன்பு வாழவில்லை. ஜனங்கள்
அவ்வழியாகப் பயணம் செய்ததுமில்லை,
ஆனால் கர்த்தர் எங்களை அந்ததேசத்தின்
வழியாக நடத்தி வந்தார்; எனவே, இப்
போது அவர் எங்கே இருக்கிறார்?' என்று
சொல்லவில்லை.
7 கர்த்தர் கூறுகிறார்: "நான் உங்களை
நல்ல நாட்டிற்கு கொண்டுவந்தேன், பல
நன்மைகள் நிறைந்த ஒரு நாட்டிற்கு
கொண்டுவந்தேன். நான் இதனைச் செய்
தேன். எனவே நீ அங்கு வளர்ந்த பழங்கள்
மற்றும் அறுவடைகளை உண்ண முடியும்,
ஆனால் நீங்கள் என் நாட்டை 'அசுத்தம்'
மட்டுமே செய்தீர்கள். நான் அந்த நல்ல
நாட்டை உங்களுக்கு கொடுத்தேன், ஆனால்
நீங்கள் அதனைத்தீய இடமாகச்செய்தீர்கள்.
8 "'கர்த்தர் எங்கே?' என்று ஆசாரியர்கள்
கேட்கவில்லை, சட்டத்தை அறிந்தவர்கள்
என்னை அறிய விரும்பவில்லை, இஸ்ரவே
லின் ஜனங்களின் தலைவர்கள் எனக்கெ
திராகத் திரும்பினார்கள்; தீர்க்கதரிசிகள்
பாகால்* என்னும் பொய்த் தெய்வம் பெய
ரால் தீர்க்கதரிசனம் சொன்னார்கள். அவர்
கள் பயனற்ற விக்கிரகங்களைத் தொழுது
கொண்டார்கள்.
9 எனவே கர்த்தர் சொல்லுகிறதாவது:
"இப்பொழுது நான் மீண்டும் உன்னைக்
குற்றம்சாட்டுவேன், நான் உனது பேரப்
பிள்ளைகளையும் குற்றம்சாட்டுவேன் என்று
சொல்லுகிறார்.
10 கடலைக் கடந்து கித்திமின் தீவுக
ளுக்குப்* போ. கேதாருக்கு* யாராவது
ஒருவனை அனுப்பு, மிகக் கவனமாகப்
பார், எவராவது இதுபோல செய்திருக்கி
றார்களா, என்று பார்?
11 எந்த நாட்டவர்களாவது எப்போதாவது
புதிய தெய்வங்களை தொழுதுகொள்ள தங்
கள் பழைய தெய்வங்களைத் தொழுதுகொள்
வதை நிறுத்தினார்களா? அவர்களின்

---

**பாகால்** கானானியர்கள் பாகால் தொய்வம் மழையையும் புயலையும் கொண்டுவருமென்று நம்புகின்றனர். அவர்கள் நிலம் விளைவதும் செழிப்பதும் இதனால்தான் என்று எண்ணுகின் றனர்.

**கித்தீம் தீவுகள்** சைபரஸ்தீவு மத்தியதரைக் கடல் பகுதிகளிலுள்ள தீவுகளையும் குறிக்கும்.

**கேதார்** அரபிய வம்சத்தார். பாலஸ்தீனத்தின் கீழ்ப்பகுதியில் வாழ்பவர்கள்.

தெய்வங்கள், தெய்வங்களே அல்ல! ஆனால்,
என் ஜனங்கள், தங்கள் மகிமை மிக்க
தேவனை ஆராதிப்பதை விட்டு, எதற்கும்
பயனற்ற விக்கிரகங்களைத தொழுதுகொள்
ளத் தொடங்கினார்கள்.
12"வானங்களே, நடந்திருக்கும் இவற்றின்
நிமித்தம் திகைப்பால் வியப்படைந்து பெரும்
பயத்தால் நடுங்குங்கள்!" இந்த வார்த்தை
கர்த்தரிடமிருந்து வந்தது.
13"எனது ஜனங்கள் இரு தீயச்செயல்
களைச் செய்திருக்கின்றனர்; அவர்கள் என்
னிடமிருந்து விலகினார்கள், (நான் உயி
ருள்ள தண்ணீரின் ஊற்றாக இருக்கிறேன்.)
அவர்கள் தங்களுக்குரிய தண்ணீர்க் குழி
களைத் தோண்டினார்கள். (அவர்கள் அந்நிய
தெய்வங்களிடம் திரும்பினார்கள்.) ஆனால்,
அவர்களுடைய தண்ணீர்க்குழிகள் உடைந்
தன, அத்தொட்டிகளில் தண்ணீர் தங்கு
வதில்லை.
14"இஸ்ரவேல் ஜனங்கள் அடிமைகளாக
மாறினார்களா? அடிமையாகப் பிறந்த மனி
தனைப்போன்று இருந்தார்களா? இஸ்ரவேல்
ஜனங்களிடமிருந்து செல்வத்தை ஏன்
ஜனங்கள் எடுத்துக் கொண்டனர்? 15இஸ்ர
வேலை நோக்கி இளஞ்சிங்கங்கள் (பகைவர்
கள்) கெர்ச்சிக்கின்றன, சிங்கங்கள் முழங்கு
கின்றன, இஸ்ரவேல் தேசத்தை சிங்கங்கள்
அழித்திருக்கின்றன, இஸ்ரவேல் நகரங்கள்
எரிந்திருக்கின்றன, அவர்களில் எவரும்
மீதமில்லை.
16நோப், தகபானேஸ்* எனும் நகரங்களின்
ஜனங்கள் உன் உச்சந்தலையை நொறுக்கி
னார்கள்.
17இந்த தொந்தரவு உனது சொந்தக் குற்றம்!
உங்கள் தேவனாகிய கர்த்தர் உன்னை நல்
வழியில் நடத்தினார்; ஆனால், அவரிட
மிருந்து நீங்கள் விலகினீர்கள்.
18யூத ஜனங்களே, இதை நினையுங்கள்:
எகிப்துக்குப் போக இது உதவுமா? நைல்
நதியில் தண்ணீர் குடிக்க இது உதவுமா?
இல்லை! அசீரியாவிற்குச் செல்ல இது
உதவுமா? ஐபிராத்து ஆற்று தண்ணீரைக்
குடிக்கஇது உதவுமா? இல்லை!
19நீங்கள் தீயவற்றைச் செய்தீர்கள், அத்தீ
யவை உங்களுக்குத் தண்டனையைமட்டும்
கொண்டுவரும். துன்பம் உங்களுக்கு வரும்,
அத்துன்பம் உனக்குப் பாடத்தைக் கற்பிக்
கும். இதைப்பற்றி சிந்தி! பிறகு உன்
தேவனிடமிருந்து விலகுவது எவ்வளவு
கெட்டது என்பதை நீ புரிந்துகொள்வாய்;
என்னை மதிக்காததும் எனக்குப் பயப்படாத
தும் தவறு!" இச்செய்தி எனது ஆண்டவ
ராகிய சர்வ வல்லமையுள்ள கர்த்தரிட
மிருந்து வந்தது.
20"யூதாவே, நீண்ட காலத்திற்கு முன்பு
உன் நுகத்தை எறிந்தாய், நீ கயிறுகளை
அறுத்து எறிந்தாய், (அதனை உன்னைக்
கட்டுப்படுத்த வைத்திருந்தேன்.) 'நான் உனக்
குச் சேவை செய்ய மாட்டேன்!' என்று
நீ சொன்னாய். நீ வேசியைப் போன்று
மலைகளின் மேலும் ஒவ்வொரு பச்சையான
மரங்களின் கீழும் அலைந்தாய்.
21யூதாவே, நான் உன்னைச் சிறப்பான
திராட்சையைப்போன்று நட்டேன். நீங்கள்
அனைவரும் நல்ல விதைகளைப் போன்றி
ருந்தீர்கள், நீங்கள் தீய பழத்தைக்கொடுக்கும்
வேறுபட்ட திராட்சையாக எப்படி மாறினீர்
கள்?
22நீ உன்னை உவர்மண்ணால் கழுவினா
லும், நீ மிகுதியான சவுக்காரத்தைப் பயன்
படுத்தினாலும் நான் உனது குற்றத்தின்
கறையைக் காணமுடியும்" என்று தேவ
னாகிய கர்த்தர் சொல்லுகிறார்.
23"யூதாவே, நீ என்னிடம், 'நான் தீட்டாக
வில்லை, நான் பாகால் விக்கிரகங்களை
தொழுதுகொள்ளவில்லை' என்று எப்படிக்
கூறமுடியும்? பள்ளத்தாக்குகளில் நீ செய்த
வற்றைப்பற்றி எண்ணு, நீ இடத்திற்கு
இடம் வேகமாக ஓடுகிற பெண் ஒட்டகத்தைப்
போன்றவன்.

24நீ வனாந்தரத்திலே வாழ்கிற ஒரு கழுதை
யைப் போன்றவன். அது காமத்தின்போது
மோப்பம் பிடிக்கக்கூடியது, அது ஆசை
யோடு இருக்கும்போது, அதன் போக்கை
மாற்ற யாராலும் திருப்பிக்கொண்டு வரமு
டியாது. காமத்தின் போது ஒவ்வொரு
கழுதையும் தான் விரும்பும் பெண் கழு
தையை அடையும், அதனைக் கண்டு
பிடிப்பது எளிது.
25யூதாவே, விக்கிரகங்களின் பின்னால்
ஓடுவதைவிடு! அந்த தெய்வங்களுக்காகத்
தாகமாயிருப்பதை நிறுத்து. ஆனால் நீ,
'இதனால் பயனில்லை என்னால் அமைதி
யாக இருக்கமுடியாது, அந்த அந்நிய
தெய்வங்களை நான் நேசிக்கிறேன்,
அவற்றை நான் தொழுதுகொள்ள விரும்புகி
றேன்' என்கிறாய்.
26"ஒரு திருடன் பிடிபட்ட போது, வெட்
கப்படுகிறான், அதைப் போன்று, இஸ்ரவேல்
ஜனங்கள் அனைவரும் வெட்கப்படுகிறார்
கள். அரசர்களும் தலைவர்களும் வெட்கப்படு
கிறார்கள். ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும்
வெட்கப்படுகிறார்கள்.
27அந்த ஜனங்கள் மரத்துண்டுகளோடு
பேசுகிறார்கள்! அவர்கள், 'நீ என் தந்தை'
என்கிறார்கள். அந்த ஜனங்கள் பாறையோடு
பேசுகிறார்கள். அந்த ஜனங்கள், 'நீ எனக்குப்
பிறப்பைக் கொடுத்தாய்' என்றனர். அவர்கள்
அனைவரும் வெட்கப்படுவார்கள். அந்த
ஜனங்கள் என்னைப் பார்க்க மாட்டார்கள்.
அவர்கள் எனக்குத் தம் முதுகைக் காட்டி

---

**நோப் மற்றும் தம்பானேஸ்** எகிப்தின் இரு நகரங்கள்.

னார்கள். ஆனால் யூதாவின் ஜனங்கள்
துன்பம் அடையும்போது, அவர்கள் என்
னிடம், 'வந்து எங்களைக் காப்பாற்றும்!'
என்பார்கள்.
28அந்த விக்கிரகங்கள் வந்து உன்னைக்
காப்பாற்றட்டும்! நீங்களாகச் செய்த அந்த
விக்கிரகங்கள் எங்கே? நீங்கள் துன்பப்படும்
போது அந்த விக்கிரகங்கள் வந்து உங்க
ளைக் காப்பாற்றுகிறதா என்று பார்க்கலாம்!
யூதாவே, உனது எண்ணற்ற நகரங்களைப்
போன்றே நிறைய விக்கிரகங்களைப் பெற்
றுள்ளாய்!
29"ஏன் என்னோடு நீ வாதிடுகிறாய்?
நீங்கள் அனைவரும் எனக்கு எதிராக
உள்ளீர்கள்" என்று கர்த்தர் சொல்லுகிறார்.
30"யூதாவின் ஜனங்களே, நான் உங்களைத்
தண்டித்தேன். ஆனால் அது உதவவில்லை.
நீங்கள் தண்டிக்கப்பட்டபோது என்னிடம்
திரும்பி வரவில்லை. உங்களிடம் வந்த
தீர்க்கதரிசிகளை வாளால் கொன்றீர்கள்
நீங்கள் ஆபத்தான சிங்கத்தைப் போன்றவர்
கள். நீங்கள் தீர்க்கதரிசிகளைக் கொன்றீர்
கள்."
31இத்தலைமுறையில் உள்ளவர்களே, கர்த்
தருடைய செய்தியில் கவனம் செலுத்துங்
கள்! "இஸ்ரவேல் ஜனங்களுக்கு நான் வனாந்
தரத்தைப் போல் இருந்திருக்கிறேனா? நான்
அவர்களுக்கு இருண்டதும் பயங்கரமானது
மான நிலமாக இருந்திருக்கிறேனா? ஏன் என்
ஜனங்கள், 'நாங்கள் எங்கள் வழியில்
போகசுதந்தரம் உள்ளவர்கள். கர்த்தாவே,
நாங்கள் உம்மிடம் வர மாட்டோம்!' என்ற
னர். ஏன்? அவற்றை அவர்கள் சொன்னார்
கள்?
32ஒரு இளம் பெண்ணால் தன் நகைகளை
மறக்க முடியாது. ஒரு மணமகள் தனது
ஆடைகளை மறக்க முடியாது. ஆனால்
என் ஜனங்கள் பலமுறை என்னை மறந்து
விட்டார்கள், அவைகள் எண்ண முடியா
தவை.
33"யூதாவே, உனக்கு நேசர்களை (பொய்த்
தெய்வங்கள்) எவ்வாறு விரட்டிப்பிடிப்பது
என்று தெரியும். நீங்கள் உண்மையில்
தீமை செய்யக் கற்றிருக்கிறீர்கள்.
34உங்கள் கைகளில் இரத்தம் இருக்கிறது!
இது ஏழைகளின் இரத்தம்; அப்பாவிகளின்
இரத்தம். உங்கள் வீட்டை உடைத்தவர்களை
நீ பிடிக்கவில்லை! எவ்விதக் காரணமும்
இல்லாமல் அவர்களைக் கொன்றாய்!
35ஆனால் இன்றும் நீ, 'நான் அப்பாவி.
தேவனுக்கு என்மீது கோபமில்லை' என்று
சொல்லுகிறாய். எனவே நானும் உன்னைப்
'பொய்யன்' எனக் குற்றம் சாட்டுவேன்.
ஏனென்றால் நீ, 'நான் எவ்விதத் தப்பும்
செய்யவில்லை' என்று சொல்லுகிறாய்.
36உன் மனதை மாற்றிக்கொள்வது உனக்கு
மிக எளிதாகலாம். அசீரியா உன்னை
அதிருப்திப்படுத்தினான், எனவே அசீரி
யாவை விட்டு விலகினாய். உதவிக்காக
எகிப்திடம் போனாய். ஆனால் எகிப்தும்
உன்னை அதிருப்திப்படுத்தும்.
37எனவே நீ இறுதியாக எகிப்தையும்
விட்டுப் போய்விடுவாய். உன் முகத்தை
வெட்கத்திற்குள் மறைத்துக்கொள்வாய். நீ
அந்த நாடுகளை நம்பினாய், ஆனால் கர்த்தர்
அந்நாடுகளை வெறுத்தார், எனவே அவர்
களால் உன் வெற்றிக்கு உதவ முடியாது.

3 "ஒருவன் அவனது மனைவியை விவாக
ரத்து செய்கிறான். அவள் அவனை
விட்டு விலகுகிறாள். அவள் இன்னொ
ருவனை மணந்துகொள்கிறாள். அவனால்
அவனது மனைவியிடம் மீண்டும் வர
முடியுமா? இல்லை! அவன் அந்தப் பெண்
ணிடம் மீண்டும் போனால் பிறகு அந்நாடு
'அழுக்காகி' விடும். யூதாவே, பல நேச
ரோடே (பொய்த் தெய்வங்களோடு). நீ
ஒரு வேசியைப் போன்று நடந்தாய்.
இப்போது நீ என்னிடம் திரும்பி வா!" என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
2"யூதாவே, மலை உச்சி மீது கண்களை
ஏறெடுத்துப்பார். உன் நேசர்களோடு
(பொய்த் தெய்வங்கள்) பாலின உறவு
கொள்ளாத இடம் ஏதாவது இருக்கிறதா? ஒரு
அரபியன் பாலைவனத்தில் காத்திருப்
பதுபோன்று. நீ சாலை ஓரத்தில், உன்
நேசர்களுக்காகக் காத்திருந்தாய். நீ இந்த
நாட்டை 'அசுத்தம்' பண்ணிவிட்டாய்! இது
எப்படி? நீ பல தீயச்செயல்களைச் செய்தாய்.
எனக்கு விசுவாசமற்றவளாக இருந்தாய்.
3நீ பாவம் செய்தாய். எனவே மழை
பெய்யவில்லை. மழைகாலத்திலும் மழை
பெய்யவில்லை. ஆனால் இன்னும் நீ வெட்
கப்பட மறுக்கிறாய். ஒரு வேசி வெட்
கப்பட மறுக்கும்போது அவனின் முகம்
போன்று, உன் முகத்தின் தோற்றம் இருக்
கிறது. நீ செய்தவற்றுக்காக, வெட்கப்பட
மறுக்கிறாய்.
4ஆனால் இப்போது என்னை நீ 'தந்
தையே' என்றழைக்கிறாய். 'நான் சிறுவ
னாக இருந்தபோதிலிருந்தே நீர் எனது
நண்பனாக இருந்தீர்' என்று கூறுகிறாய்.
5'தேவன் எப்பொழுதும் என் மீது கோப
ங்கொள்வதில்லை. தேவனுடைய கோபம்
எப்பொழுதும் தொடராது' என்றும் கூறுகி
றாய். "யூதாவே, நீ அவற்றைக் கூறுகிறாய்.
ஆனால் நீ உன்னால் எவ்வளவு முடியுமோ
அவ்வளவு தீமையைச் செய்கிறாய்."

### இரண்டு தீய சகோதரிகள்: இஸ்ரவேல் மற்றும் யூதா

6யோசியா அரசன் யூதா நாட்டை ஆண்டு
கொண்டிருந்த காலத்தில், கர்த்தர் என்னோடு
பேசினார். அவர், "எரேமியா, இஸ்ரவேல்
செய்த தீமைகளை நீ பார்த்தாய். எவ்வாறு
அவள் எனக்கு விசுவாசமில்லாமல் நடந்து
கொண்டாள், என்பதை நீ அறிவாய். ஒவ்

வொரு மலை உச்சியின் மேலும் பச்சை
மரங்களின் கீழும், விக்கிரகங்களோடும்,
சோரம் போய் அவள் பாவம் செய்தாள்.
7நான் எனக்குள்ளே, 'இஸ்ரவேல் தீயவற்றை
யெல்லாம் செய்து முடித்த பிறகு, என்னிடம்
திரும்பி வருவாள்' என்றேன், ஆனால்
அவள் என்னிடம் திரும்பி வரவில்லை.
இஸ்ரவேலின் விசுவாசமில்லாத சகோத
ரியான யூதா, அவள் என்ன செய்தாள்
என்று பார்த்தாள். 8இஸ்ரவேல் விசுவாசம்
இல்லாமல் போனது. நான் ஏன் அவளை
அனுப்பினேன், என்று இஸ்ரவேல் அறிந்தது.
யூதா சோரமாகிய பாவத்தைச் செய்ததால்,
நான் அவளை விவாகரத்து செய்துவிட்
டேன் என்று இஸ்ரவேல் அறிந்துகொண்
டது. ஆனால் அது அவளது விசுவாசமற்ற
சகோதரியைப் பயப்படுத்தவில்லை. யூதா
பயப்படவில்லை. யூதா வெளியே போய்,
வேசியைப் போன்று நடித்தாள். 9யூதா
கவலைப்படாமல், அவள் வேசியைப்
போன்று நடித்துக் கொண்டிருந்தாள்.
எனவே அவள் தன் நாட்டை 'அசுத்தம்'
ஆக்கிவிட்டாள். கல்லாலும் மரத்தாலும்
ஆன விக்கிரகங்களைத் தொழுதுகொள்
வதின் மூலம் அவள் சோரமாகிய பாவத்
தைச் செய்தாள். 10இஸ்ரவேலின் விசுவாச
மற்ற சகோதரி (யூதா) என்னிடம் முழுமன
தோடு திரும்பி வரவில்லை. அவள் என்
னிடம் திரும்பி வந்ததாக நடித்தாள்" என்று
சொல்லுகிறார். 11கர்த்தர் என்னிடம் சொன்
னதாவது, "இஸ்ரவேல் என்னிடம் விசுவாச
மாக இருக்கவில்லை. ஆனால் விசுவாசமற்ற
யூதாவை விட அவளுக்கு சிறந்த காரணங்
கள் இருந்தன. 12எரேமியா, வடக்குத் திசை
யைப் பார்த்து இச்செய்தியைக் கூறு: 'விசு
வாசமற்ற இஸ்ரவேல் ஜனங்களே திரும்பி
வாருங்கள்' என்று கர்த்தர் சொல்லுகிறார்.
'நான் உங்கள் மேலுள்ள கோபத்தைக்
காட்டுவதில்லை. நான் இரக்கம் உள்ளவர்'
என்று கர்த்தர் சொல்லுகிறார். 'நான்
என்றென்றும் உங்கள் மேல் கோபங்கொள்ள
மாட்டேன்.

13ஆனால் நீ இதுவரை செய்த உன்பா
வத்தை ஒப்புக்கொள்ளவேண்டும். நீ உனது
தேவனாகிய கர்த்தருக்கு எதிராகத் திரும்பி
னாய், அதுவே உன் பாவம். மற்ற நாடுகளி
லிருந்து வந்த ஜனங்களின் விக்கிரகங்களை
நீ தொழுதுகொண்டாய். ஒவ்வொரு பச்சை
யான மரத்தின் அடியிலும் உள்ள விக்கிரகங்
களைத் தொழுதுகொண்டாய். நீ எனக்கு
அடிபணியவில்லை'" என்று கர்த்தர் சொல்
லுகிறார்.

14"ஜனங்களாகிய நீங்கள் விசுவாசமற்
றவர்கள். ஆனால் என்னிடம் திரும்பி
வாருங்கள்!" என்று கர்த்தர் சொல்லுகிறார்.

"நான் உனது ஆண்டவர். நான், ஒவ்
வொரு நகரத்திலிருந்து ஒருவனையும், ஒவ்
வொரு குடும்பத்திலிருந்து இரண்டுபேரையும்
எடுத்து சீயோனுக்குக்* கொண்டுவருவேன்.
15பிறகு நான் உங்களுக்குப் புதிய அரசர்
களைத் தருவேன். அந்த அரசர்கள் எனக்கு
விசுவாசமாக இருப்பார்கள். உங்களை அவர்
கள் அறிவோடும் கூர்ந்த உணர்வோடும்
வழிநடத்திச் செல்வார்கள். 16அந்த நாட்க
ளில், இந்த நாட்டில் நீங்களே மிகுதியாக
இருப்பீர்கள்" என்று கர்த்தர் சொல்லுகிறார்.

"அந்த நேரத்தில் ஜனங்கள், 'நான்
கர்த்தருடைய உடன்படிக்கைப்பெட்டி எங்க
ளோடு இருந்ததை நினைக்கிறேன்' என்று
சொல்லமாட்டார்கள். அவர்கள் ஒருபோதும்
இன்னொரு முறை பரிசுத்த பெட்டியை
நினைவுகூர மாட்டார்கள். அவர்கள் எப்
பொழுதும் பரிசுத்த பெட்டியைச் செப்பனிடு
வதுமில்லை. 17அந்நேரத்தில், எருசலேம்
நகரம் 'கர்த்தருடைய சிங்காசனம்' என்று
அழைக்கப்படும். எல்லா நாடுகளும் எருச
லேம் நகரத்தில் சேர்ந்து கர்த்தருடைய
நாமத்திற்கு மகிமைதரக் கூடுவார்கள். அவர்
கள் இனிமேல் தங்களது பொல்லாங்கான
கடின இதயம் சொல்வது போன்று நடக்க
மாட்டார்கள். 18அந்த நாட்களில், யூதாவின்
குடும்பம், இஸ்ரவேல் குடும்பத்தோடு சேரும்.
அவர்கள் வடக்கு நாட்டிலிருந்து வந்து
கூடுவார்கள். நான் அவர்களது முற்பிதாக்க
ளுக்குக் கொடுத்த நாட்டிற்கு அவர்கள்
வருவார்கள்.

19"கர்த்தராகிய நான் எனக்குள்ளே கூறி
னேன், 'நான் உங்களை எனது சொந்தப்
பிள்ளைகளைப் போன்று நடத்த விரும்புகி
றேன். நான் உங்களுக்கு ஒரு சுநத்தரமான
நாட்டைக் கொடுக்க விரும்புகிறேன். மற்ற
நாடுகளைவிட இனிமையான நாட்டைத்தர
விரும்புகிறேன், நீ என்னை 'தந்தையே'
என்று அழைப்பாய் என எண்ணினேன்.
நீ என்னை எப்பொழுதும் பின்பற்றுவாய்
என எண்ணினேன்.

20ஆனால் நீ, தன் கணவனுக்கு, நம்பிக்
கையற்ற ஒரு பெண்ணைப் போன்று
இருக்கிறாய். இஸ்ரவேல் குடும்பமே நீ
என்மீது விசுவாசம் இல்லாமல் இருக்கி
றாய்!" என்று கர்த்தர் சொல்லுகிறார்.

21நீ மலைகளின் மேல் அழுகையைக்
கேட்கமுடியும். இஸ்ரவேல் ஜனங்கள் இரக்கத்
திற்காக அழுதுகொண்டும் ஜெபித்துக்கொண்
டும் இருக்கிறார்கள். அவர்கள் மிகவும்
கெட்டவர்களானார்கள். அவர்கள் தங்கள்
தேவனாகிய கர்த்தரை மறந்தனர்.

22கர்த்தர் மேலும் இவ்வாறு சொன்னார்:
"இஸ்ரவேல் ஜனங்களே, நீங்கள் என்மீது
விசுவாசம் இல்லாமல் உள்ளீர்கள். ஆனால்,
என்னிடம் திரும்பி வாருங்கள்! என்னிடம்
விசுவாசம் இல்லாமல் போனதற்கு நான்

**சீயோன்** மலையின் தென்பகுதி. இதன் மேல் எருசலேம் கட்டப்பட்டுள்ளது. ஜனங்களின் தேவன் வாழும் இடம்.

உங்களை மன்னிப்பேன். திரும்பி வாருங்
கள்."* அதற்கு ஜனங்கள், "ஆம், நாங்கள்
உம்மிடம் வருவோம். நீரே எங்களது தேவ
னாகிய கர்த்தர்.
23மலையின் மேலுள்ள விக்கிரகங்களைத்
தொழுதுகொள்வது, முட்டாள்தனம். மலை
யின் மேல் கேட்கும்விருந்து கேளிக்கை
களின் பேரொலிகள் எல்லாம் தவறானவை.
நிச்சயமாக இஸ்ரவேலுக்கு இரட்சிப்பு வரு
வது நமது தேவனாகிய கர்த்தரிடமிருந்தே
வருகிறது.
24அந்தப் பயங்கரமான பாகால் என்னும்
பொய்த் தெய்வம், எங்கள் தந்தைக்கு சொந்த
மானவற்றைத் தின்றது. நாங்கள் சிறுவர்
களாக இருந்தது முதல் இது நடக்கிறது.
அந்தப் பயங்கரமான பொய்த் தெய்வங்கள
எங்கள் தந்தைகளின் ஆடுகளையும் மாடுக
ளையும், அவர்களின் மகன்களையும், மகள்
களையும், எடுத்துக் கொண்டது.
25எங்களது வெட்கத்தில் நாங்கள் படுத்
துக்கிடப்போம், எங்களது அவமானத்தை
ஒரு போர்வையைப் போல்மூடிக்கொள்ள
விடுங்கள். எங்களது தேவனாகிய கர்த்த
ருக்கு எதிராகப்பாவம் செய்திருக்கிறோம்.
நாங்களும், எங்கள் தந்தைகளும், பாவம்
செய்திருக்கிறோம். நாங்கள் சிறுவர்களாக
இருந்த நாள் முதலாய், எங்கள் தேவனாகிய
கர்த்தருக்குக் கீழ்ப்படியவில்லை" என்று
சொல்லவேண்டும்.

4 "இஸ்ரவேலே, நீ திரும்பி வர வேண்டு
மென்று விரும்பினால் என்னிடம் திரு
ம்பி வா. உனது விக்கிரகங்களைத் தூர
எறி. என்னை விட்டுத் தூரமாக அலை
யாதே.
2நீ அவற்றைச் செய்தால், பிறகு நீ
எனது நாமத்தைப் பயன்படுத்தி, வாக்கு
கொடுக்க வல்லமை பெறுவாய், 'கர்த்தர்
வாழ்கிறதுபோல' என்று நீ சொல்லும்
வல்லமை பெறுவாய். அந்த வார்த்தைகளை
உண்மையோடும், நியாயத்தோடும், நீதி
யோடும், பயன்படுத்தும் வல்லமை பெறு
வாய்; நீ இவற்றைச் செய்தால், பிறகு
கர்த்தரால் தேசங்கள் ஆசீர்வதிக்கப்படும்.
அவர்கள் கர்த்தர் செய்திருக்கிறவற்றைப்
பற்றி, மேன்மை பாராட்டுவார்கள்" என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
3எருசலேம் மற்றும் யூதாவின் மனிதருக்கு,
கர்த்தர் சொல்லுகிறது இதுதான்: "உங்கள்
வயல்கள் உழப்படவில்லை, அவற்றை
உழுங்கள், முட்களுக்கு இடையில் விதை
களை தூவாதீர்கள்.
4கர்த்தருடைய ஜனங்களயிருங்கள். உங்
கள் இதயங்களை மாற்றுங்கள்! யூதா ஜனங்
களே, எருசலேம் ஜனங்களே! நீங்கள் மாற்றா
விட்டால் பிறகு நான் மிகவும் கோபம்
அடைவேன். எனது கோபம் நெருப்பைப்
போன்று வேகமாகப் பரவும். எனது கோபம்
உங்களை எரித்துப்போடும் .எவராலும்
அந்த நெருப்பை அணைக்க முடியாது.
இது ஏன் நிகழும் என்றால், நீங்கள் தீங்
கான செயல்கள் செய்திருக்கிறீர்கள்."

### வடக்கிலிருந்து வரும் அழிவு

5"யூதா ஜனங்களுக்கு இந்தச் செய்தியைக்
கொடுங்கள். எருசலேம் நகரத்திலுள்ள ஒவ்
வொருவரிடமும் சொல், 'நாடு முழுவதும்
எக்காளம் ஊதுங்கள்.' உரக்கச் சத்தமிட்டு,
'ஒன்று சேர்ந்து வாருங்கள்!' என்று சொல்
லுங்கள். நாம் அனைவரும் பாதுகாப்புக்காக
உறுதியான நகரங்களுக்குத் தப்புவோம்.'
6சீயோனை நோக்கி அடையாளக்கொ
டியை ஏற்றுங்கள். உங்கள் வாழ்வுக்காக
ஓடுங்கள்! காத்திருக்காதீர்கள். இதனைச் செய்
யுங்கள். ஏனென்றால், நான் வடக்கிலிருந்து
பேரழிவைக் கொண்டு வந்துகொண்டிருக்கி
றேன். நான் பயங்கரமான பேரழிவைக்
கொண்டுவருகிறேன்."
7ஒரு "சிங்கம்" அதன் குகையை விட்டு
வெளியே வந்திருக்கிறது. தேசங்களை அழிப்
பவன் நடைபோடத்தொடங்கியிருக்கிறான்.
அவன் உங்கள் நாட்டை அழிக்க அவனது
வீட்டை விட்டு புறப்பட்டிருக்கிறான். உங்
கள் நகரங்கள் அழிக்கப்படும், அவற்றில்
ஒருவன் கூட உயிர்வாழும்படி விடப்பட
மாட்டான்.
8எனவே, சாக்குத் துணியைக்கட்டிக்
கொள்ளுங்கள். சத்தமாய் அழுது புலம்புங்
கள். ஏனென்றால், கர்த்தர் நம்மிடம் கோப
மாக இருக்கிறார்."
9கர்த்தர் இவ்வாறு சொல்கிறார், "இது
நிகழும் காலத்தில் அரசனும், அவனது
அதிகாரிகளும், தம் தைரியத்தை
இழப்பார்கள். ஆசாரியர்கள் அஞ்சுவார்கள்,
தீர்க்கதரிசிகள் அதிர்ச் சியடைவார்கள்."
10பிறகு எரேமியாவாகிய நான், "எனது
கர்த்தராகிய ஆண்டவரே! நீர் உண்மையி
லேயே எருசலேம் மற்றும் யூதா ஜனங்
களிடம் தந்திரம் செய்திருக்கிறீர். நீர்
அவர்களிடம், 'நீங்கள் சமாதானம் பெறுவீர்
கள்' எனச் சொன்னீர், ஆனால் இப்போது
அவர்களின் கழுத்துக்கு நேராக வாள்
குறிபார்த்துக் கொண்டிருக்கிறது" என்று
சொன்னேன்.
11அந்த நேரத்தில், யூதா மற்றும் எருசலேம்
ஜனங்களுக்கு ஒரு செய்தி கொடுக்கப்படும்.
"வறண்ட மலைகளிலிருந்து, ஒரு சூடான
காற்று வீசுகிறது. இது எனது ஜனங்களிடம்
வனாந்தரத்திலிருந்து வருகிறது. இது, உழ
வர்கள் தமது தானியங்களைப் பதரி
லிருந்து,* பிரித்தெடுக்கப் பயன்படுத்தும்
காற்றைப் போன்றில்லை.

---

**மன்னிப்பேன்** குணப்படுத்துவேன்.

**பதர்** பயனற்ற சருகு.

12இது அதனைவிட பலமுடையதாக இருக்
கிறது. இது என்னிடமிருந்து வருகிறது.
இப்பொழுது, யூதாவின் ஜனங்களுக்கு எதி
ரான எனது தீர்ப்பை நான் அறிவிப்பேன்."
13பாருங்கள்! பகைவன் மேகத்தைப்
போன்று எழும்பியிருக்கிறான். அவனது
இரதங்கள் புயல்காற்றைப்போன்று தோன்று
கின்றன. அவனது குதிரைகள் கழுகுகளை
விட வேகமுடையதாயுள்ளன. இது நமக்கு
மிகவும் கேடாயிருக்கும். நாம் அழிக்கப்படு
கிறோம்.
14எருசலேம் ஜனங்களே, உங்கள் இருதயங்
களிலிருந்து, தீமையானவற்றைக் கழுவுங்கள்.
உங்கள், இருதயங்களைச் சுத்தப்படுத்துங்கள்.
அதனால் காப்பாற்றப் படுவீர்கள். தீய
திட்டங்களைத் தீட்டுவதைத் தொடராதீர்கள்.
15கவனியுங்கள். தாண்* நாட்டிலிருந்து
வந்ததூதுவனின் குரல் பேசிக்கொண்டிருக்கி
றது. எப்பிராயீம்,* என்ற மலை நாட்
டிலிருந்து ஒருவன் கெட்ட செய்திகளைக்
கொண்டுவந்து கொண்டிருக்கிறான்.
16"இந்த நாட்டு ஜனங்களிடம், இதனைச்
சொல்லுங்கள். எருசலேமிலுள்ள ஜனங்களி
டம் இந்தச்செய்தியைப் பரப்புங்கள். பகை
வர்கள் தூர நாட்டிலிருந்து வந்துகொண்டி
ருக்கிறார்கள். அந்தப் பகைவர்கள், யூதாவின்
நகரங்களுக்கு எதிராகப்போர் செய்வதுபற்றி
சத்தமிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.
17எருசலேமைச் சுற்றிலும் பகைவர் வய
லைக்காவல் செய்யும் மனிதனைப் போன்று,
வளைத்துக் கொண்டனர். யூதாவே, நீ
எனக்கு எதிராக திரும்பி விட்டாய்!
எனவே, உனக்கு எதிராகப் பகைவர்கள்
வந்துகொண்டிருக்கிறார்கள்" என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
18"நீங்கள் வாழ்ந்த வழியும் நீங்கள் செய்த
செயல்களும், உங்களுக்கு இந்தத் தொல்லை
யைக் கொண்டுவந்துள்ளது, உங்களது தீமை
யானது, உங்கள் வாழ்க்கையைக் கடின
மாக்கியிருக்கிறது. உங்கள் தீமை கொடிய
ஆபத்தைக் கொண்டு வந்தது. இது உங்கள்
இதயத்தை ஆழமாகக் காயப்படுத்திவிட்டது."

### எரேமியாவின் அழுகை

19எனது துக்கமும், கவலையும், எனது
வயிற்றைத் தாக்கிக்கொண்டிருக்கிறது. நான்
வலியால் வேதனையடைந்து விட்டேன்.
நான் மிகவும் பயப்படுகிறேன். எனது இத
யம் எனக்குள் வேதனைப்படுகிறது. என்
னால் சும்மா இருக்க முடியாது. ஏனென்றால்
நான் எக்காளசத்தத்தைக் கேட்டிருக்கிறேன்,
எக்காளமானது போருக்காகப் படையை
அழைத்துக்கொண்டிருக்கிறது.
20அழிவைத் தொடர்ந்து பேரழிவு வருகி
றது. நாடு முழுவதும் அழிக்கப்படுகிறது.
எனது கூடாரங்கள் திடீரென்று அழிக்கப்படு
கின்றன. எனது திரைச் சீலைகள் கிழிக்கப்
படுகின்றன.
21என் கர்த்தாவே எவ்வளவு காலமாக
நான்போர்க் கொடிகளைப் பார்க்கவேண்டும்!
எவ்வளவு காலமாக நான், போர் எக்கா
ளத்தைக் கேட்கவேண்டும்?
22தேவன், "என்னுடைய ஜனங்கள் அறிவு
கெட்டவர்கள். அவர்கள் என்னை அறிந்து
கொள்ளவில்லை. அவர்கள் அறிவில்லாதப்
பிள்ளைகள். அவர்கள் புரிந்துகொள்வ
தில்லை. அவர்கள் தீமை செய்வதில் வல்ல
வர்கள். ஆனால் அவர்களுக்கு நன்மையை
எப்படிசெய்ய வேண்டும் என்று தெரியாது"
என்று சொன்னார்.

### அழிவு வந்துகொண்டிருக்கிறது

23நான் பூமியை நோக்கிப் பார்த்தேன்.
பூமி வெறுமையாய் இருந்தது. பூமியின்மேல்
ஒன்றுமில்லாமலிருந்தது. நான் வானத்தை
நோக்கிப் பார்த்தேன். அதன் ஒளி போய்
விட்டது.
24நான் மலைகளைப் பார்த்தேன், அவை
நடுங்கிக்கொண்டிருந்தன. மலைகள் எல்லாம்
அசைந்தன.
25நான் பார்க்கும்போது அங்கே ஜனங்கள்
இல்லை. வானத்துப் பறவைகள் எல்லாம்
பறந்து போய்விட்டன.
26நான் பார்க்கும்போது, நல்ல நிலம்
வனாந்தரமாகி விட்டிருந்தது. அந்த நாட்டி
லுள்ள நகரங்கள் எல்லாம் அழிக்கப்பட்டன.
கர்த்தர் இதனைச் செய்தார். கர்த்தரும்
அவரது பெருங்கோபமும் தான் இதனைச்
செய்தது.
27"தேசம் முழுவதும் அழிக்கப்படும்
(ஆனால் நான் நாட்டை முழுவதுமாக
அழிக்கமாட்டேன்).
28எனவே, இந்த நாட்டிலுள்ள ஜனங்கள்
மரித்துப்போன ஜனங்களுக்காகக் கதறுவார்
கள். வானம் இருண்டுபோகும் நான் சொல்
லியிருக்கிறேன். அதனை மாற்ற மாட்டேன்.
நான் ஏற்கனவே முடிவு செய்திருக்கிறேன்.
நான் எனது மனதை மாற்ற மாட்டேன்"
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
29யூதாவின் ஜனங்கள் குதிரை வீரர்களின்
சத்தத்தையும் வில் வீரர்களின் சத்தத்தையும்
கேட்பார்கள். ஜனங்கள் ஓடிப் போவார்கள்!
சில ஜனங்கள் குகைகளுக்குள் ஒளிந்துக்
கொள்வார்கள். சில ஜனங்கள் புதர்களுக்குள்
ஒளிந்துக்கொள்வார்கள். சில ஜனங்கள்
பாறைகளுக்கு மேல் ஏறிக்கொள்வார்கள்.
யூதா நகரங்கள் எல்லாம் காலியாகிப்
போகும். அவற்றில் எவரும் வாழ
மாட்டார்கள்.

---

**தாண்** தாண் வம்சத்தார் வாழும் இடம். வட இஸ்ரவேலின் எல்லையில் உள்ளது. அவர்களே வடக்கிருந்து வருவோரால் முதலில் தாக்கபடுவார்கள்.

**எப்பிராயீம்** இது நாட்டின் மத்திய பகுதி. இஸ்ரவேலின் வட இராஜ்யமாக இருந்தது.

[30]யூதாவே! நீ அழிக்கப்பட்டிருக்கிறாய்.
எனவே, நீ இப்பொழுது என்னசெய்து
கொண்டிருக்கிறாய்? நீ அழகான சிவப்பு
ஆடைகளை, ஏன் அணிந்துகொண்டிருக்கி
றாய்? நீ தங்க நகைகளை ஏன் அணிந்து
கொண்டிருக்கிறாய்? நீ கண்ணுக்கு மை
யிட்டு ஏன் அழகுபடுத்திக் கொண்
டிருக்கிறாய். நீ உன்னை அழகு செய்கிறாய்.
ஆனால் இது வீணாகும். உனது நேசர்கள்
உன்னை வெறுக்கின்றனர். அவர்கள்
உன்னைக் கொலை செய்ய முயல்கின்றனர்.
[31]பிரசவ வேதனைப்படும் பெண்ணின்
குரலைப் போன்ற கதறலைக் கேட்கிறேன்.
அது முதல் குழந்தையைப் பிரசவிக்கும்
பெண்ணின் கதறல் போன்றிருந்தது.
சீயோனின் மகளின்* கதறலாய் இது இருக்கி
றது. அவள் தனது கைகளை விரித்து, "ஓ!
நான் எதிர்த்து போரிடமுடியாமல், மயங்கி
விழப்போகிறேன். என்னைச் சுற்றி லும்
கொலைக்காரர்கள் இருக்கிறார்கள்!" என்று
ஜெபிக்கிறாள்.

## யூதாவின் ஜனங்களின் தீமை

5 "எருசலேம் தெருக்களில் நடவுங்கள்.
சுற்றிப் பார்த்து இவற்றைப் பற்றி எண்
ணுங்கள். நகரத்தின் பொது சதுக்கங்களைத்
தேடுங்கள். உங்களால் ஒரு நல்ல மனிதனைக்
கண்டுபிடிக்க முடியுமானால் பாருங்கள்.
அவன் நேர்மையான காரியங்களைச் செய்கி
றவனாகவும் உண்மையைத் தேடுகிறவனாக
வும் இருக்கவேண்டும். உங்களால் ஒரு
நல்ல மனிதனைக் கண்டுபிடிக்க முடியுமா
னால் நான் எருசலேமை மன்னிப்பேன்!
[2]ஜனங்கள் வாக்குறுதிச் செய்து 'ஜீவனுள்ள
கர்த்தரைக் கொண்டு சொல்லுகிறோம்' என்
கிறார்கள், ஆனால் நடைமுறையில் தங்கள்
வாக்குறுதியை நிறைவேற்றும் எண்ணம்
அவர்களிடம் இல்லை" என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
[3]கர்த்தாவே! உமது ஜனங்கள் உமக்கு
உண்மையாக இருக்கவேண்டும் என்று நீர்
விரும்புவதை நான் அறிகிறேன். நீர் யூதா
ஜனங்களைத் தாக்குகிறீர். ஆனால், அவர்கள்
எவ்வித வலியையும் உணர்ந்து கொள்வ
தில்லை. அவர்களை நீர் அழித்தீர். ஆனால்
அவர்கள் தங்கள் பாடத்தைக் கற்றுக்கொள்ள
வில்லை. அவர்கள் மிகவும் பிடிவாதமாகி
விட்டனர். அவர்கள் தாம் செய்த கெட்ட
செயல்களுக்கு, வருத்தப்பட மறுத்தனர்.
[4]ஆனால் நான் (எரேமியா) எனக்குள்
சொன்னேன். "ஏழைகள் மட்டுமே முட்டா
ளாக இருக்க வேண்டும். கர்த்தருடைய
வழியை ஏழை ஜனங்கள் கற்றுக்கொண்டி
ருக்கவில்லை. ஏழை ஜனங்கள் அவர்களது
தேவனுடைய போதனைகளை அறியாமல்
இருக்கிறார்கள்.

[5]ஆகவே நான் யூதாவின் தலைவர்களிடம்
போவேன். நான் அவர்களோடு பேசுவேன்.
அந்தத் தலைவர்களுக்கு நிச்சயமாக கர்த்த
ருடைய வழி தெரியும். அவர்களுக்கு தமது
தேவனுடைய சட்டங்கள் தெரியும், என்ப
தில் நான் உறுதியாக இருக்கிறேன்."
ஆனால், அந்தத் தலைவர்கள், அனைவரும்
கர்த்த ருக்குச் சேவை செய்வதிலிருந்து
விடுபட ஒன்று சேர்ந்திருக்கிறார்கள்.
[6]அவர்கள் தேவனுக்கு எதிராகத் திரும்
பினார்கள். எனவே காட்டிலிருந்து ஒரு
சிங்கம் வந்து அவர்களைத் தாக்கும். வனாந்
தரத்திலிருந்து ஒரு நரி வந்து அவர்களைக்
கொல்லும். அவர்களின் நகரங்களுக்கு
அருகில், சிறுத்தை ஒளிந்துகொண்டிருக்கி
றது. நகரத்திலிருந்து வெளியே வரும்
எவரையும் அந்தச் சிறுத்தை துண்டுத்
துண்டாகக் கிழித்துப்போடும். இது நிகழும்
ஏனென்றால், யூதா ஜனங்கள் மீண்டும்,
மீண்டும், பாவம் செய்திருக்கிறார்கள். அவர்
கள் பலமுறை கர்த்தரிடமிருந்து விலகி,
அலைந்திருக்கிறார்கள்.
[7]"யூதாவே! உன்னை நான் எதற்காக
மன்னிக்கவேண்டும், என்று ஒரு நல்ல
காரணத்தைக் எனக்குக் கொடு, உனது
பிள்ளைகள் என்னை விட்டுவிட்டார்கள்.
அவர்கள் விக்கிரகங்களுக்கு, வாக்குறுதி
செய்தனர். அந்த விக்கிரகங்கள் உண்மையில்
தெய்வங்கள் அல்ல! நான் உனது பிள்ளை
களுக்குத் தேவையான அனைத்தையும்
கொடுத்தேன். ஆனால் அவர்கள் இன்னும்
எனக்கு உண்மையில்லாதவர்களாக இருக்கி
றார்கள் !அவர்கள் வேசிகளோடு மிகுதியான
காலத்தைச் செலவழிக்கிறார்கள்.
[8]அவர்கள் குதிரைகளைப் போன்று
இருக்கிறார்கள். அவர்கள் மிகுதியாக உணவு
உண்கின்றனர். துணையோடு உறவு
கொள்ள தயாராகின்றனர். அவர்கள் அயலா
னின் மனைவியை இச்சையோடு அழைக்கிற
குதிரைகளைப் போன்று, இருக்கிறார்கள்.
[9]இவற்றைச் செய்வதற்காக யூதா ஜனங்
களை நான் தண்டிக்க வேண்டாமா?"
என்று கர்த்தர் சொல்லுகிறார். "ஆம்!
இதுபோல வாழ்கிற ஒரு நாட்டை நான்
தண்டிக்க வேண்டும் என்பதை நீங்கள்
அறிவீர்கள். நான் அவர்களுக்கு ஏற்ற
தண்டனையையே கொடுப்பேன்.
[10]"யூதாவின் திராட்சைத்* தோட்டவரி
சைகளுக்குச் செல்லுங்கள், கொடிகளை
வெட்டிப் போடுங்கள், (ஆனால் முழுவது
மாக அவற்றை அழிக்காதீர்கள்) அவற்றின்
கிளைகளையெல்லாம் வெட்டுங்கள். ஏனென்
றால், இந்தக் கிளைகள் கர்த்தருக்கு உரிமை
உடையவை அல்ல.

---

**சீயோனின் மகள்** எருசலேம்.

**யூதாவின் திராட்சை** யூதா நாட்டு ஜனங்கள் திராட்சைக் கொடிகளுக்கு ஒப்பிடப்படுகிறார்கள்.

11ஒவ்வொரு வழியிலும் இஸ்ரவேல்
குடும்பமும் யூதா குடும்பமும் எனக்கு
உண்மையற்றவர்களாகஇருந்திருக்கிறார்கள்”
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
12“அந்த ஜனங்கள் கர்த்தரைப்பற்றி பொய்
யுரைத்திருக்கின்றனர். அவர்கள், ‘கர்த்தர்
எங்களுக்கு எதுவும் செய்யமாட்டார். தீமை
எதுவும் நமக்கு ஏற்படாது. ஒரு படை
நம்மைத் தாக்குவதை நாம் எப்பொழுதும்
காண்பதில்லை. நாம் எப்பொழுதும் பட்டி
னியாக இருப்பதில்லை.’
13“கள்ளத்தீர்க்கதரிசிகள் வெறுமையான
காற்றைப் போன்றவர்கள். தேவனுடைய
வார்த்தை அவர்களில ் இல்லை. அவர்
களுக்குத் தீயவை ஏற்படும்.”
14“அந்த ஜனங்கள், நான் அவர்களைத்
தண்டிக்கமாட்டேன் என்று கூறினார்கள்.
ஆகையால் எரேமியாவே, நான் உனக்குக்
கொடுத்த வார்த்தைகள் நெருப்பைப் போன்
றிருக்கும். அந்த ஜனங்கள் மரத்துண்டு
களைப் போன்றிருப்பார்கள். அந்த நெருப்பு
அவர்களை முழுமையாக எரித்துப்போடும்!”
என்று சர்வ வல்லமையுள்ள தேவனாகிய
கர்த்தர் சொல்லுகிறார்.
15இஸ்ரவேல் குடும்பத்தாரே! “நான் உங்
களைத் தாக்குவதற்காகத், தொலை தூரத்தி
லிருந்து, விரைவில் ஒரு தேசத்தைக் கொண்
டுவருவேன். அது ஒரு வல்லமை மிக்க
ஜனமாக இருக்கிறது. இது பழமையான
தேசமாக இருக்கிறது. அந்தத் தேசத்தின்
ஜனங்கள் நீங்கள் அறியாத ஒரு மொழியைப்
பேசுகிறார்கள். அவர்கள் என்ன சொல்கிறார்
கள் என்பதை உங்களால் புரிந்துகொள்ள
முடியாது
16அவர்களின் அம்புப்பைகள் திறந்த
சவக்குழிகளைப் போன்றிருக்கும். அவர்க
ளது ஆண்கள் எல்லாம் வலிமையான
வீரர்களாக இருக்கிறார்கள்.
17நீங்கள் சேகரித்து வைத்த விளைச்சலை
எல்லாம் அந்தப் படைவீரர்கள் உண்பார்கள்.
உங்கள் உணவு முழுவதையும் அவர்கள்
உண்பார்கள். அவர்கள் உங்களது மகன்
களையும் மகள்களையும் உண்பார்கள்
(அழிப்பார்கள்). அவர்கள் உங்கள் ஆடுகளை
யும் உங்கள் மாடுகளையும் உண்பார்கள்.
அவர்கள் உங்கள் திராட்சைப் பழங்களை
யும், அத்திப் பழங்களையும் உண்பார்கள்.
அவர்கள் தமது வாள்களால் உங்களது
பலமான நகரங்களை அழிப்பார்கள். நீங்கள்
நம்பிக்கை வைத்த உங்களது பலமான
நகரங்களை அவர்கள் அழிப்பார்கள்!”
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
18“ஆனால் அந்தப் பயங்கரமான நாட்கள்
வரும்போது யூதாவே, நான் உன்னை
முழுவதுமாக அழிக்கமாட்டேன்” என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
19யூதாவிலுள்ள ஜனங்கள் உன்னிடம்,
நமது தேவனாகிய கர்த்தர் இந்தத் தீயச்செயல்
களை நமக்கு ஏன் செய்திருக்கிறார்?’ என்று
கேட்டால். நீ அவர்களிடம், ‘யூதாவின்
ஜனங்களாகிய நீங்கள் கர்த்தரை விட்டு
விலகினீர்கள். உங்கள் சொந்த நாட்டில்,
அந்நிய நாட்டு விக்கிரகங்களுக்குச் சேவை
செய்திருக்கிறீர்கள். நீங்கள் அச்செயல்களைச்
செய்தபடியால், இப்பொழுதும், உங்களுக்கு
சொந்தமில்லாத நாட்டில் அந்நியருக்கு
சேவை செய்வீர்கள்’” என்று சொல்.

20கர்த்தர் என்னிடம், “யாக்கோபின் குடும்
பத்தரையும், யூதா நாட்டினரையும் நோக்கி:
21‘நீங்கள் மதிகேடர்கள், உங்களுக்குக்
கண்கள் இருக்கின்றன, ஆனால் நீங்கள்
பார்க்கிற தில்லை! உங்களுக்குக் காதுகள்
இருக்கின்றன ஆனால் நீங்கள் கேட்கிற
தில்லை!
22நிச்சயமாக நீங்கள் எனக்குப் பயப்ப
டுகிறீர்கள்’ என சொல்” என்றார். “எனக்கு
முன்னால் நீங்கள் பயத்தால் நடுங்க வேண்
டும். கடலுக்குக் கரைகளை எல்லையாக
உண்டாக்கியவர் நானே. இந்த வழியில்
என்றென்றைக்கும் தண்ணீரானது அதனு
டைய இடத்தில் இருக்குமாறு செய்தேன்.
கரையை அலைகள் தாக்கலாம். ஆனால்
அவை அதனை அழிக்க முடியாது. அலை
கள் இரைந்து கொண்டு வரலாம். ஆனால்
அது கரையைக் கடந்துபோக முடியாது.
23மறுபடியும் யூதாவின் ஜனங்கள் பிடி
வாதமாக இருக்கிறார்கள். எனக்கு எதிராகத்
திரும்ப அவர்கள் எப்பொழுதும் திட்டம்
தீட்டுகிறார்கள். அவர்கள் என்னிடமிருந்து
திரும்பி என்னை விட்டு விலகி விட்டார்
கள்.
24யூதாவின் ஜனங்கள் தங்களுக்குள்
இவ்வாறு சொல்ல மாட்டார்கள். ‘எங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு பயப்படுவோம்,
மரியாதை செய்வோம். நமக்கு அவர் சரி
யான காலங்களில் மழையையும், முன்மாரி
யையும், பின்மாரியையும் கொடுக்கிறார்.
நாம் சரியான காலத்தில் அறுவடையைப்
பெறுவோம் என்று அவர் உறுதி செய்கி
றார்.
25யூதாவின் ஜனங்களே! நீங்கள் தவறு
செய்திருக்கிறீர்கள். எனவே மழையும் அறு
வடையும் வரவில்லை. கர்த்தரிடமிருந்து
வரும் அந்த நன்மையை அனுபவிக்க
உங்கள் பாவங்கள் தடுத்துவிட்டன.
26என்னுடைய ஜனங்களிடையில் கெட்ட
மனிதரும் இருக்கின்றனர். அந்தக் கெட்ட
மனிதர்கள் பறவைகளைப் பிடிக்க வலை
களைச் செய்பவர்களை போன்றவர்கள்.
இந்த மனிதர்கள் தமது கண்ணிகளை வைப்
பார்கள். ஆனால் அவர்கள் பறவைகளுக்குப்
பதிலாக மனிதர்களைப் பிடிப்பார்கள்.
27கூண்டுக்குள்ளே பறவைகள் இருப்பது
போன்று, இத்தீய ஜனங்களின் வீடுகளில்

கபடங்கள் நிறைந்திருக்கும். அவர்களின்
கபடங்கள் அவர்களைச் செல்வந்தர்களாக
வும், வலிமையுள்ளவர்களாகவும் ஆக்கின.
28 அவர்கள் தாம் செய்த தீமைகளால்
பெரிதாக வளர்ந்து கொழுத்துப் போயிருக்
கிறார்கள். அவர்கள் செய்யும் தீமைகளுக்கு
முடிவே இல்லை. பெற்றோர்கள் இல்லா
திருக்கிற பிள்ளைகளின் வழக்கில் பரிந்து
பேசுவதில்லை. அந்த அனாதைகளுக்கு
அவர்கள் உதவுவதில்லை. ஏழை ஜனங்கள்
நியாயமான தீர்ப்புப் பெற விடுவதில்லை.
29 இவற்றையெல்லாம் செய்துகொண்டிருக்கிற
யூதாவின் ஜனங்களை நான் தண்டிக்க
வேண்டுமா?” என்று கர்த்தர் சொல்லு
கிறார். “இது போன்ற ஒரு தேசத்தாரை
நான் தண்டிக்கவேண்டும், என்று உங்க
ளுக்குத் தெரியும். அவர்களுக்குப் பொருத்த
மான தண்டனைகளையே நான் தரவேண்
டும்.” 30 கர்த்தர், “யூதா நாட்டிலே ஒரு
பயங்கரமான நடுங்கத்தக்க செயல் நடந்தி
ருக்கிறது.
31 தீர்க்கதரிசிகள், பொய்களைக் கூறுகி
றார்கள். ஆசாரியர்கள் எதற்காகத் தேர்ந்தெ
டுக்கப்பட்டார்களோ அச்செயல்களைச் செய்
வதில்லை. என்னுடைய ஜனங்கள் இந்நி
லையை விரும்புகிறார்கள்! ஆனால், உங்கள்
தண்டனை வரும்போது நீங்கள் என்ன
செய்யப் போகிறீர்கள்?” என்று சொல்லுகி
றார்.

**பகைவர் எருசலேமை சுற்றிவளைத்தனர்**

6 பென்யமீன் ஜனங்களே! உங்கள் உயி
ருக்காக ஓடுங்கள். எருசலேம் நகரத்தை
விட்டுத் தூர ஓடுங்கள்! தெக்கோவா நகரில்
போர் எக்காளத்தை ஊதுங்கள்! பெத்கேரேம்
நகரில் எச்சரிக்கை கொடியை ஏற்றுங்கள்!
நீங்கள் இவற்றை செய்யுங்கள். ஏனென்றால்,
வடக்கிலிருந்து பேரழிவானது வந்துகொண்
டிருக்கிறது. பயங்கரமான பேரழிவு உங்க
ளுக்கு வந்துகொண்டிருக்கிறது.
2 சீயோனின் மகளே, நீ ஒரு அழகான
மென்மையான பெண் போன்றுள்ளாய்.
3 மேய்ப்பர்கள் எருசலேமிற்கு வருகிறார்
கள், அவர்கள் தம் ஆட்டு மந்தையைக்
கொண்டு வருகிறார்கள். எருசலேமைச் சுற்றி
தங்கள் கூடாரங்களை அமைத்தனர். ஒவ்
வொரு மேய்ப்பனும், அவனது சொந்த
மந்தையைக் கவனிக்கின்றனர்.
4 “எருசலேமிற்கு எதிராகப் போராடத்
தயாராகுங்கள். எழுந்திருங்கள்! நாம் மதிய
நேரத்தில் நகரத்தைத் தாக்குவோம்; ஆனால்
ஏற்கனவே தாமதமாகிவிட்டது. மாலை
நிழல் நீளமாக வளர்ந்து கொண்டிருக்கின்
றது.
5 எனவே, புறப்பாடுங்கள்! இரவில் நக
ரத்தை நாம் தாக்குவோம்! எருசலேமைச்
சுற்றியிருக்கின்ற உறுதியான சுவர்களை
அழிப்போம்.”
6 சர்வ வல்லமையுள்ள கர்த்தர், “எருச
லேமை சுற்றியுள்ள மரங்களைவெட்டிப்
போடுங்கள், அதன் சுவருக்கு எதிராக
எடுசுவரை* எழுப்புங்கள். இந்த நகரம்
தண்டிக்கப்பட வேண்டும்! இந்த நகரத்தின்
உட்பகுதியில் கொடுமையைத்தவிர வேறு
எதுவுமில்லை 7 ஒரு கிணறு தனது தண்
ணீரைப் புதிதாகச் சுரக்கிறது, இதுபோலவே
எருசலேமும் தனது தீங்கைச்சுரக்கப் பண்ணு
கிறது, நகரத்திற்குள் எல்லா நேரத்திலும்,
கொடுமையும், வன்முறையும் நிகழ்வதை
நான் கேள்விப்படுகிறேன். எருசலேமிற்குள்
எப்பொழுதும் துன்பமும், நோயும் இருப்
பதைப் பார்க்கிறேன்.
8 எருசலேமே! இந்த எச்சரிக்கையைக்
கவனி! நீ கவனிக்காவிட்டால், பிறகு
நான் உனக்கு எனது முதுகைத் திருப்பு
வேன், உனது நாட்டை ஒரு வெறும்
வனாந்தரமாக நான் செய்வேன். அங்கு
வெரும் வாழமுடியாமல் போகும்” என்று
கூறுகிறார்.
9 சர்வ வல்லமையுள்ள கர்த்தர், “தங்கள்
தேசத்தில் விடப்பட்டிருந்த இஸ்ரவேல் ஜனங்
களை ஒன்று சேருங்கள், நீங்கள் திராட்சைத்
தோட்டத்தில் இறுதியில் பழுத்த பழங்களைச்
சேகரிப்பது போன்று அவர்களை ஒன்று
சேருங்கள். ஒரு வேலைக்காரன் ஒவ்வொரு
திராட்சைப்பழத்தையும் பறிக்குமுன் சோதிப்
பதுபோன்று சோதியுங்கள்” என்று கூறுகி
றார்.

10 நான் யாரோடு பேசுவேன்? நான் யாரை
எச்சரிக்க முடியும்? நான் சொல்வதை
யார் கேட்பார்கள்? இஸ்ரவேல் ஜனங்கள்
தம் காதுகளை மூடிக்கொண்டார்கள். என
வே, எனது எச்சரிக்கைகளை அவர்களால்
கேட்க முடியாது. ஜனங்கள் கர்த்தருடைய
போதனைகளை விரும்புகிறதில்லை, அவரது
செய்தியை அவர்கள் கேட்க விரும்ப
வில்லை.
11 ஆனால் நான், (எரேமியா) கர்த்தருடைய
கோபத்தால் முழுமையாக நிறைந்திருக்கி
றேன்! நான் அதனைத் தாங்குவதில்
சோர்ந்து போனேன். “தெருவில்
விளையாடிக் கொண்டிருக்கும் பிள்ளைகள்
மீது கர்த்தருடைய கோபத்தை ஊற்றுங்கள்.
கூடுகின்ற இளைஞர் மேல் கர்த்தருடைய
கோபத்தை ஊற்றுங்கள். ஒரு ஆணும்
அவனது மனைவியும் சேர்த்து கைபற்றப்
படுவார்கள். வயதான ஜனங்கள்
அனைவரும் கைபற்றப் படுவார்கள்.
12 அவர்களின் வீடுகள் மற்றவர்களுக்குக்
கொடுக்கப்படும். அவர்களின் வயல்களும்

**எடுசுவர் (கொத்தளம்)** பகைவர்கள் கோட்டை மதிலுக்குள் செல்வதற்காக முற்றிகையிடுவோரால் எழுப்பப்படும் கட்டுமானம் இங்கு ‘எடுசுவர்’ என்று குறிக்கப்படுகிறது. என்னும் தொடரின் சொல்லாக்கம்.

மனைவிகளும் மற்றவர்களுக்குக் கொடுக்கப்ப
டும். நான் என்னுடைய கையை உயர்த்தி
யூதாவின் ஜனங்களைத் தண்டிப்பேன்”
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
13 “இஸ்ரவேலில் உள்ள அனைத்து ஜனங்
களும்மேலும் மேலும் பணத்தை விரும்பு
கின்றனர். முக்கியத்துவம் குறைந்த ஜனங்க
ளிலிருந்து முக்கியத்துவம் மிகுந்த ஜனங்கள்
வரை அனைத்து ஜனங்களும், இதுபோலவே
இருக்கின்றனர். தீர்க்கதரிசிகளிலிருந்து ஆசா
ரியர்கள் வரை, அனைத்து ஜனங்களும்
பொய்களைக் கூறுகின்றனர்.
14 என்னுடைய ஜனங்கள் மிக மோசமாகப்
பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். தீர்க்கதரிசிக
ளும், ஆசாரியர்களும், அந்தக்காயங்களுக்குக்
கட்டுப் போடவேண்டும். அவர்கள் சிறிய
காயங்களுக்கு, சிகிச்சைசெய்வது போன்று,
அவர்கள் புண்களுக்கு சிகிச்சை செய்கின்
றனர். ‘இது சரியாக இருக்கிறது, எல்லாம்
சரியாக இருக்கிறது!’ என்று கூறுகிறார்கள்.
ஆனால் அது சரியாக இல்லை!*
15 தீர்க்கதரிசிகளும், ஆசாரியர்களும், தாங்
கள் செய்கிற தீயச்செயல்களுக்காக வெட்
கப்படவேண்டும். ஆனால், அவர்கள் கொஞ்
சமும் வெட்கப்படுவதில்லை தங்கள் பாவங்
களுக்காக வெட்கப்படும் அளவிற்கு அவர்
களுக்கு போதிய அறிவில்லை; எனவே,
அவர்கள் ஒவ்வொருவரும் தண்டிக்கப்
படுவார்கள். .நான் ஜனங்களைத் தண்டிக்கும்
போது, அவர்கள் தரையில் வீசியெறியப்ப
டுவார்கள்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.

16 கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்: “வழி
களில் நின்று கவனி. பழையசாலை எங்கே
என்று கேள். நல்ல சாலை எங்கே
என்று கேள். அந்தச் சாலையில் நட. நீ
செய்தால், உனக்குள் நீ ஓய்வைக் கண்டு
பிடிப்பாய். ஆனால் நீங்களோ, ‘நாங்கள்
நல்ல சாலைகளில நடக்க மாட்டோம்!’
என்று கூறினீர்கள்.
17 உங்களைக்கவனிக்க காவல்காரர்களைத்
தேர்ந்தெடுத்தேன். நான் அவர்களிடம், ‘போர்
எக்காள சத்தத்தை கவனியுங்கள்’ என்று
கூறினேன். ஆனால் அவர்களோ, ‘நாங்கள்
கவனிக்கமாட்டோம்!’ என்று கூறினார்கள்.
18 எனவே, தேசத்திலுள்ளவர்களே! கேளுங்
கள். சபையே 19 பூமியின் ஜனங்களே, யூதா
ஜனங்களுக்கு நான் பேரழிவைக் கொண்டு
வருவேன். ஏனென்றால், அவர்கள் எல்லா
தீயச்செயல்களுக்கும் திட்டமிடுகிறார்கள்.
அவர்கள் என் வார்த்தையை உதாசினப்
படுத்தினார்கள். அந்த ஜனங்கள் என்
சட்டங்களுக்கு அடிபணிய மறுத்தனர்.”

**இது … இல்லை** நகல்படி ‘அங்கு சமாதானம் இல்லாதிருக்கையில், சமாதானம் என்று வாக்குறுதி அளிப்பார்’ என்பதாகும்.

20 கர்த்தர் அவர்களிடம், “ஏன் நீங்கள்
சேபா* நாட்டிலுள்ள நறுமணப் பொருட்க
ளையும், தொலை நாடுகளிலுள்ள சுகந்தப்
பட்டைகளையும் எனக்குக் கொண்டு
வருகிறீர்கள்? உங்களது சர்வாங்கத் தகன
பலிகள் எனக்கு மகிழ்ச்சியளிப்பதில்லை,
உங்களது பலிகள் எனக்கு இன்பமாயிராது”
என்று கூறினார்.
21 எனவே இதுதான் கர்த்தர் கூறுவது:
“யூதாவிலுள்ள ஜனங்களுக்கு நான் சிக்கல்
களை கொண்டுவருவேன். அவை ஜனங்
களை விழச் செய்யும் கற்களைப் போன்று
இருக்கும். தந்தைகளும் மகன்களும் ஒருவர்
மேல் ஒருவர் இடறி விழுவார்கள். நண்பர்க
ளும் அருகில் உள்ளவர்களும் மரித்துப்
போவார்கள்.”
22 கர்த்தர் சொல்லுகிறதாவது: “ஒரு படை
யானது வடக்கிலிருந்து வந்துகொண்டிருக்கி
றது. பூமியிலிலுள்ள, தொலைதூர இடங்
களிலிருந்து ஒரு பெரிய தேசம் வந்து
கொண்டிருக்கிறது.
23 வீரர்கள் வில்லையும் ஈட்டியையும்
கொண்டு வருகின்றனர். அவர்கள் கொடுமை
யானவர்கள். அவர்களிடம் இரக்கம் இல்லை.
அவர்கள் மிகவும் சக்தி வாய்ந்தவர்கள்,
அவர்கள், குதிரைகள் மேல் சவாரி செய்து
வரும்போது, இரைகின்ற கடலைப் போன்று
சத்தம் எழுப்புகிறார்கள். சண்டை செய்வ
தற்கு தயாராக அப்படைவந்துகொண்டி
ருக்கிறது. சீயோனின் குமாரத்தியே! அந்தப்
படை உங்களை தாக்கிட வந்துகொண்டி
ருக்கிறது.”

24 அந்தப் படையைப் பற்றியச் செய்தி
யைக் கேள்விப்பட்டிருக்கிறோம். எங்களின்
துன்ப வலையில் மாட்டிக்கொண்டதாக
உணர்கிறோம். பயத்தினால் ஒன்றும் செய்ய
முடியாதவர்களாக இருக்கிறோம். பிரசவிக்
கும் பெண்ணைப்போன்று வேதனையில்
இருக்கிறோம்.
25 வெளியே வயல்களுக்குப் போகாதீர்கள்.
சாலைகளில் போகாதீர்கள், ஏனென்றால்!
பகைவர்கள் வாள் வைத்திருக்கின்றனர்.
எல்லா இடங்களிலும் ஆபத்து இருக்கிறது.
26 என் சாக்கு ஆடையை அணிந்து
கொள்ளுங்கள். சாம்பலில் புரளுங்கள். மரித்த
ஜனங்களுக்காக உரக்க அழுங்கள். ஒரே
மகனை இழந்ததைப் போன்று அழுங்கள்,
இவற்றையெல்லாம் செய்யுங்கள்; ஏனென்
றால், நமக்கு எதிரியான, அழிவுக்காரன்
மிகவேகமாக வந்துகொண்டிருக்கிறான்.
27 “எரேமியா! நான், (கர்த்தர்) உன்னை
உலோகத்தைச் சோதித்துப்பார்க்கும் வேலை
யாளாக வைத்தேன், நீ எனது ஜனங்களை

**சேபா** தென் இஸ்ரவேலில் உள்ளது. இன்றைக்குள்ள சவுதி அரேபியாவிற்கு அருகில் உள்ளது. இது வாசனைப்பொருள் வியாபாரத்தைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்தது.

சோதிப்பாய்; அவர்கள் எவ்வாறு வாழ்
கின்றார்கள் என்று கவனிப்பாய்.
28என்னுடைய ஜனங்களே, எனக்கு
எதிராக திரும்பியிருக்கின்றனர், அவர்கள்
மிகவும் கடினமானவர்கள். அவர்கள் ஜனங்
களைப்பற்றி தவறானவற்றைச் சொல்கிறார்
கள், ஜனங்களைப்பற்றி கெட்டவற்றைச்
சொல்கிறார்கள். துருவும் கறையும் கொண்ட
அவர்கள் எல்லோரும் தீயவர்கள். அவர்கள்
வெண்கலத்தை போன்றும் இரும்பை
போன்றும் இருக்கின்றனர்.
29அவர்கள் வெள்ளியைச் சுத்தப்படுத்த
முயலும் வேலைக்காரர்களைப் போன்றுள்
ளனர். துருத்திகள் பலமாக ஊதப்படுகின்
றன. நெருப்பு மேலும் சூடாகின்றது. ஆனால்
நெருப்பிலிருந்து ஈயம்மட்டும் வருகின்றது.
அந்த வெள்ளியைச் சுத்தப்படுத்துவதில்
வேலையாள் தனது காலத்தை வீணாக்கி
விட்டான். இதுபோலவே, எனது ஜனங்
களிடமிருந்து தீயவை விலக்கப்படவில்லை.
30என்னுடைய ஜனங்கள் ‘தள்ளுபடியான
வெள்ளி’ என்று அழைக்கப்படுவார்கள்,
அவர்களுக்கு அந்தப் பெயர் கொடுக்
கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், கர்த்தர்
அவர்களை ஏற்றுக்கொள்ளவில்லை.”

### எரேமியாவின் ஆலயத்துப் பிரசங்கம்

7 எரேமியாவிற்கான கர்த்தருடைய செய்தி
இது: 2எரேமியா, தேவனுடைய வீட்டுக்
கதவருகில் நில். வாசலில் இந்த செய்தியைப்
பிரசங்கம் செய்; “யூதா நாட்டிலுள்ள
அனைத்து ஜனங்களே! கர்த்தரிடமிருந்து
வந்த செய்தியைக் கேளுங்கள்! இந்த வாசல்
வழியாகக் கர்த்தரை ஆராதிக்க வருகின்ற
ஜனங்களே, இந்தச் செய்தியைக் கேளுங்கள்.
3இஸ்ரவேல் ஜனங்களின் தேவனாகிய
கர்த்தர் இருக்கிறார். சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் இதைத் தான் சொல்கிறார்; ‘உங்க
ளது வாழ்க்கையை மாற்றுங்கள். நல்ல
வற்றைச் செய்யுங்கள், இதனை நீங்கள்
செய்தால், நான் உங்களை இந்த இடத்தில்
வாழவிடுவேன். 4சில ஜனங்கள் கூறுகிற
பொய்களில் நம்பிக்கை வைக்காதீர்கள். “இது
தான் கர்த்தருடைய ஆலயம், கர்த்தருடைய
ஆலயம், கர்த்தருடைய ஆலயம்” என்று
அவர்கள் கூறுகின்றனர். 5நீங்கள் உங்களது
வாழ்க்கையை மாற்றிக்கொண்டு நற்செயல்
களைச் செய்தால், நான் உங்களை இந்த
இடத்தில் வாழவிடுவேன். நீங்கள் ஒருவருக்கு
ஒருவர் நியாயமாக இருக்கவேண்டும். 6நீங்கள்
அந்நியர்களுக்கும் நியாயமாக இருக்க
வேண்டும். நீங்கள் விதவைகளுக்கும் அநா
தைகளுக்கும் நல்லவற்றைச் செய்யவேண்
டும். ஒன்றுமறியாத ஜனங்களைக் கொல்ல
வேண்டாம். மற்ற தெய்வங்களைப் பின்பற்ற
வேண்டாம். ஏனென்றால் அவை உங்கள்
வாழ்வை அழித்துவிடும். 7நீங்கள் எனக்குக்
கீழ்படிந்தால், நான் உங்களை இந்த இடத்தில்
வாழவிடுவேன்; நான் உங்களது முற்பிதாக்க
ளுக்கு இந்த நாட்டை என்றென்றைக்கும்
வைத்திருக்கும்படி கொடுத்தேன்.
8“‘ஆனால் நீங்கள் பொய்களை நம்பிக்
கொண்டிருக்கிறீர்கள். அந்தப் பொய்கள் பய
னில்லாதவை. 9நீங்கள் களவும், கொலையும்
செய்வீர்களா? நீங்கள் விபச்சாரம் என்னும்
பாவத்தை செய்வீர்களா? நீங்கள் மற்றவர்கள்
மேல் பொய்வழக்கு போடுவீர்களா? நீங்கள்
பொய்த் தெய்வமான பாகாலைத் தொழுது
கொண்டு, உங்களால் அறியப்படாத அந்நிய
தெய்வங்களைப் பின்பற்றுவீர்களா? 10நீங்கள்
அந்தப் பாவங்களைச் செய்தால், எனது
நாமத்தால் அழைக்கப்படும். இந்த வீட்டில்
எனக்கு முன்னால் நிற்க முடியும் என்று
நினைக்கிறீர்களா? நீங்கள் இது போன்ற
கெட்ட செயல்களையெல்லாம் செய்து
கொண்டு, எனக்கு முன்னால் நின்று “நாங்
கள் பாதுகாப்பாக இருக்கிறோம்” என்று
சொல்லிக்கொண்டே தீய செயல்களைத்
தொடர்ந்து செய்யலாம் என்று நினைக்கிறீர்
களா? 11இந்த ஆலயம் எனது நாமத்தால்
அழைக்கப்படுகின்றது. இந்த ஆலயம் உங்க
ளுக்கு, கள்ளர் பதுங்கும் இடமே ஒழிய,
வேறு எதுவுமில்லையா? நான் உங்களைக்
கவனித்துக் கொண்டிருக்கிறேன்’” என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
12“யூதாவின் ஜனங்களே! இப்பொழுது
சீலோ என்னும் நகரத்திற்குப் போங்கள்.
நான் முதலில் எந்த இடத்தில் எனது
நாமத்தால் ஒரு வீட்டை அமைத்தேனோ
அங்கு போங்கள். இஸ்ரவேல் ஜனங்களும்
தீயச்செயல்களைச் செய்தனர். அவர்கள்
செய்த தீயச்செயல்களுக்கு நான் அந்த
இடத்துக்குச் செய்தவற்றைப் போய் பாருங்
கள். 13யூதா ஜனங்களாகிய நீங்கள், இத்தீயச்
செயல்களையெல்லாம் செய்தீர்கள்” என்று
கர்த்தர் சொல்லுகிறார். “நான் உங்களிடம்
மீண்டும் மீண்டும் பேசினேன், ஆனால்
நீங்கள் என்னைக் கவனிக்க மறுத்துவிட்டீர்
கள். நான் உங்களை அழைத்தேன். ஆனால்
நீங்கள் பதில் சொல்லவில்லை. 14எனவே,
எருசலேமில் எனது நாமத்தால் அழைக்கப்
பட்ட வீட்டை அழிப்பேன். நான் சீலோவை
அழித்தது போன்று, அந்த ஆலயத்தையும்
அழிப்பேன். எனது நாமத்தால் அழைக்கப்
படும் எருசலேமில் உள்ள அந்த வீடு, நீங்கள்
நம்பிக்கை வைத்த ஆலயம். நான் அந்த
இடத்தை உங்களுக்கும் உங்கள் முற்
பிதாக்களுக்கும் கொடுத்தேன். 15எப்பிராயீமி
லுள்ள உங்கள் சகோதர்களை நான் தூர
எறிந்ததைப்போன்று, உங்களையும் என்னை
விட்டுத் தூர எறிவேன்.
16“எரேமியா, யூதாவிலுள்ள இந்த ஜனங்க
ளுக்காக நீ விண்ணப்பம் செய்யவேண்டாம்.
அவர்களுக்காக நீ ஜெபிக்கவும், கெஞ்சவும்
வேண்டாம், அவர்களுக்கு உதவி செய்ய
வேண்டும் என்று என்னிடம் மன்றாட

வேண்டாம். அவர்களுக்கான உனது ஜெபத்
தை நான் கேட்க மாட்டேன். 17யூதாவின்
நகரங்களில் அந்த ஜனங்கள் என்ன செய்து
கொண்டிருக்கிறார்கள் என்பதை நீ பார்க்
கிறாய் என்பதை நான் அறிவேன். எருச
லேம் நகரத்து வீதிகளில் அவர்கள் என்ன
செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதை
உன்னால் பார்க்க முடியும். 18யூதாவிலுள்ள
ஜனங்கள் செய்துகொண்டிருப்பது இது
தான். பிள்ளைகள் மரக்கட்டைகளைச்
சேகரிக்கின்றனர். தந்தைகள் நெருப்புக்காக
அந்த மரக்கட்டைகளைப் பயன்படுத்துகின்ற
னர். பெண்கள், வானராக்கினிக்கும்*
பலியிட அப்பங்களைச் சுடுகிறார்கள். அந்
நிய தெய்வங்களை தொழுவதற்காக யூதா
ஜனங்கள் பானங்களின் காணிக்கைகளை
ஊற்றுகின்றனர். எனக்குக் கோபம் ஏற்படும்
படி அவர்கள் இதனைச் செய்கின்றனர்.
19ஆனால் யூதா ஜனங்கள் உண்மையிலேயே
என்னைப் புண்படுத்தவில்லை” என்று
கர்த்தர் சொல்லுகிறார். “அவர்கள் தங்க
ளையே புண்படுத்திக்கொள்கிறார்கள். அவர்
கள் தங்களுக்கே அவமானத்தை வரவழைத்
துக் கொள்கிறார்கள்.”
20எனவே கர்த்தர் அவர்களிடம், “நான்
இந்த இடத்துக்கு எதிராக எனது கோபத்
தைக் காட்டுவேன். நான் ஜனங்களையும்
மிருகங்களையும் தண்டிப்பேன். நான் வெளி
யிலுள்ள மரங்களையும் தரையிலுள்ள
விளைச்சலையும் தண்டிப்பேன். எனது
கோபம் சூடான நெருப்பைப் போன்
றிருக்கும். எவராலும் அதனைத் தடுக்க
முடியாது” என்று கூறுகிறார்.

### கர்த்தர் பலிகளைவிட கீழ்ப்படிதலையே விரும்புகிறார்

21இஸ்ரவேலின் சர்வ வல்லமையுள்ள
தேவனாகிய கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்;
“போங்கள். உங்கள் விருப்பப்படி எத்தனை
மிகுதியாகத் தகன பலிகளையும், மற்ற
பலிகளையும் செலுத்த முடியுமோ செலுத்
துங்கள். அப்பலிகளின் இறைச்சியை நீங்
களே உண்ணுங்கள். 22எகிப்துக்கு வெளியே
உங்களது முற்பிதாக்களைக் கொண்டுவந்
தேன். நான் அவர்களோடு பேசினேன்,
ஆனால் தகனபலிகள் மற்றும் மற்ற பலிகள்
பற்றி எந்தக் கட்டளையையும் இடவில்லை.
23நான் இந்தக் கட்டளையை மட்டும் கொடுத்
தேன். ‘எனக்குக் கீழ்ப்படியுங்கள். அப்பொ
ழுது நான் உங்களது தேவனாக இருப்பேன்.
நீங்கள் என் ஜனமாய் இருப்பீர்கள். நான்
கட்டளையிட்ட அனைத்தும் செய்யுங்கள்.
உங்களுக்கு நன்மைகள் ஏற்படும்.’
24“ஆனால் உங்களது முற்பிதாக்கள் என்
னைக் கவனிக்கவில்லை. அவர்கள் நான்
சொன்னதில் கவனம் வைக்கவில்லை, அவர்
கள் முரட்டாட்டமாக இருந்தார்கள். அவர்
கள் விரும்பியதையே செய்தார்கள். அவர்கள்
நல்லவர்கள் ஆகவில்லை. அவர்கள் மேலும்
தீயவர்கள் ஆனார்கள். அவர்கள் முன்னுக்கு
வராமல் பின்னுக்குப் போனார்கள். 25உங்க
ளது முற்பிதாக்கள் எகிப்தை விட்டு விலகிய
நாள் முதல், இன்றுவரை நான் உங்களிடம்
எனது சேவகர்களை அனுப்பியிருக்கிறேன்.
தீர்க்கதரிசிகளே எனது சேவகர்கள். நான்
அவர்களை மீண்டும், மீண்டும் உங்களிடம்
அனுப்பினேன். 26ஆனால், உங்களது முற்
பிதாக்கள் நான் சொன்னதற்குச் செவி
சாய்க்கவில்லை. அவர்கள் என்மீது கவனம்
வைக்கவில்லை. அவர்கள் மிகுந்த பிடிவாத
மானவர்களாக இருந்தார்கள். அவர்கள் தம்
தந்தையரைவிட மோசமான தீமைகளைச்
செய்தனர்.
27“எரேமியா! நீ யூதா ஜனங்களிடம்
இவற்றை எல்லாம் சொல்லுவாய். ஆனால்
அவர்கள் நீ சொல்வதைக் கவனிக்கமாட்டார்
கள்! நீ அவர்களை அழைப்பாய். ஆனால்
அவர்கள் பதில் சொல்லமாட்டார்கள். 28என
வே, நீ அவர்களிடம் இவற்றைச் சொல்ல
வேண்டும். நமது தேவனாகிய கர்த்தருக்குக்
கீழ்ப்படியாத தேசம் இதுதான். தேவனுடைய
போதனைகளை அதன் ஜனங்கள் கவனிக்க
வில்லை, இந்த ஜனங்கள் உண்மையான
போதனைகளை அறியவில்லை.

### கொலையின் பள்ளத்தாக்கு

29“எரேமியா, உனது தலைமுடியை
வெட்டி எறிந்துபோடு.* பாறையின் உச்
சிக்குப் போய் அழு. ஏனென்றால், கர்த்தர்
இந்த தலைமுறை ஜனங்களை மறுத்தி
ருக்கிறார். இந்த ஜனங்களுக்கு கர்த்தர் தனது
முதுகைத் திருப்பிக் கொண்டார்.
கோபத்துடன் அவர்களைத் தண்டிப்பார்.
30இவற்றைச் செய். ஏனென்றால், யூதா
ஜனங்கள் தீமை செய்வதை நான் பார்த்திருக்
கிறேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
“அவர்கள் தம் விக்கிரகங்களை அமைத்தி
ருக்கிறார்கள், அதனை எனது நாமத்தால்
அழைக்கப்படுகிற ஆலயத்தில் அவர்கள்
அந்த விக்கிரகங்களை வைத்திருக்கிறார்கள்.
அவற்றை நான் வெறுக்கிறேன். அவர்கள்
எனது வீட்டை ‘தீட்டு’ செய்திருக்கிறார்கள்!
31யூதா ஜனங்கள், பென் இன்னோமின்
பள்ளத்தாக்கினிலுள்ள தோப்பேத்தின்
மேடைகளைக் கட்டியிருக்கிறார்கள். அந்த
இடங்களில் அவர்கள் தமது மகன்களையும்,

---

**வானராக்கினி** பொய்த் தெய்வங்கள் அஸ்தரே இவள் போர் மற்றும் காமத் தொய்வம். மெசெப்பெட்டோமிய ஜனங்கள் தொழுது வந்தனர். வீனஸ் கிரகம் போல் வானத்தில் தோன்றுவது என ஜனங்கள் நினைத்தனர்.

**எரேமியா … போடு** எரேமியா தேசத்தின் குடிகளிடம். அவர்களது மோசமான நினைவினிமித்தம் புலம்பி அழும்படி கூறுகிறான். தலை முடியை வெட்டுவது, துக்கத்தையும் துயரத்தையும் வெளிப்படுத்தும் ஒரு செயலாக இருந்தது.

*மகள்களையும் கொன்று, பலியாக எரித்தார்*
*கள். இவற்றைச் செய்யுமாறு நான் கட்டளை*
*யிடவில்லை. இவை போன்றவற்றை நான்*
*மனதிலே நினைத்துப் பார்க்கவுமில்லை.*
32*எனவே, நான் உன்னை எச்சரிக்கிறேன்.*
*நாட்கள் வந்து கொண்டிருக்கின்றன" என்று*
*கர்த்தர் சொல்லுகிறார். "ஜனங்கள் இந்த*
*இடத்தை தொப்பேத் என்னும் பென் இன்*
*னோமின் பள்ளத்தாக்கு என்று அழைக்கப்*
*போவதில்லை. அவர்கள் இதனைச் "சங்*
*காரப் பள்ளத்தாக்கு" என்று அழைப்பார்கள்.*
*அவர்கள் இதற்கு இந்தப் பெயரை இடு*
*வார்கள். ஏனென்றால் மரித்தவர்களை அவர்*
*கள் தோப்பேத்தில் இனி புதைக்க இட*
*மில்லை என்று கூறுமளவுக்குப் புதைப்*
*பார்கள்.* 33*பிறகு, மரித்தவர்களின் உடல்கள்*
*பூமிக்கு மேலே கிடக்கும், வானத்து பறவைக*
*ளுக்கு உணவாகும். அந்த ஜனங்களின்*
*உடல்களைக் காட்டு மிருகங்கள் உண்ணும்.*
*அந்தப் பறவைகள் அல்லது மிருகங்களைத்*
*துரத்திட அங்கு எவரும் உயிரோடு இருக்க*
*மாட்டார்கள்.* 34*எருசலேமின் தெருக்களிலும்,*
*யூதாவின் நகரங்களிலும் உள்ள, சந்தோஷம்*
*மகிழ்ச்சி ஆகியவற்றின் ஒலிகளை ஒரு*
*முடிவுக்குக் கொண்டுவருவேன். எருசலேம்*
*அல்லது யூதாவில் இனிமேல் மணவாளன்*
*மற்றும் மணவாட்டியின் சத்தமும் இனிமேல்*
*இருக்காது. இந்த நாடு ஒரு பாழடைந்த*
*பாலைவனமாகும்."*

8 *கர்த்தர் சொல்லுகிறதாவது: "அந்தக்*
*காலத்தில் மனிதர்கள் யூதாவின் அர*
*சர்கள் மற்றும் முக்கிய ஆள்வோர்களின்*
*எலும்புகளை அவர்களின் கல்லறையிலி*
*ருந்து எடுத்துக்கொள்வார்கள். ஆசாரியர்கள்,*
*மற்றும் தீர்க்கதரிசிகளின் எலும்புகளையும்,*
*அவர்களின் கல்லறையிலிருந்து எடுத்துக்*
*கொள்வார்கள். எருசலேமின் அனைத்து*
*ஜனங்களின் எலும்புகளையும், அவர்களின்*
*கல்லறைகளிலிருந்து அவர்கள் எடுத்துக்*
*கொள்வார்கள்.* 2*அவர்கள் அந்த எலும்பு*
*களை தரையின் மீது சூரியன், சந்திரன்,*
*நட்சத்திரங்களுக்கு அடியில் பரப்பி வைப்*
*பார்கள். எருசலேம் ஜனங்கள் சூரியன்,*
*சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவற்றை*
*நேசித்து, பின்தொடர்ந்து, குறிகேட்டு தொழு*
*துகொண்டனர். எவரும் அந்த எலும்*
*புகளைச் சேகரித்து மீண்டும் அடக்கம் செய்ய*
*மாட்டார்கள் எனவே, அந்த ஜனங்களின்*
*எலும்புகள், பூமியின் மேல் எருவைப்*
*போன்று எறியப்படும்.*
3*"யூதாவின் பொல்லாத ஜனங்களை நான்*
*கட்டாயப்படுத்தி அவர்களது வீட்டை விட்*
*டும் நாட்டை விட்டும் போகும்படிச் செய்*
*வேன். ஜனங்கள் அந்நிய நாடுகளுக்குக்*
*கொண்டு செல்லப்படுவார்கள். போரில்*
*கொல்லப்படாத யூதா ஜனங்களில் சிலர் தாம்*
*கொல்லப்பட விரும்புவார்கள்" இந்தச் செய்தி*
*கர்த்தரிடமிருந்து வருகிறது.*

### பாவமும் தண்டனையும்

4*எரேமியா! யூதா ஜனங்களிடம் நீ*
*சொல்லவேண்டியதாவது:*
*கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்: "ஒரு*
*மனிதன் கீழே விழுந்தால் மீண்டும் அவன்*
*எழுவான் என்பதை நீ அறிவாய். ஒரு*
*மனிதன் தவறான வழியில் போனால்,*
*அவன் திரும்பி வருவான்.*
5*யூதா ஜனங்கள் தவறான வழியில்*
*சென்றனர். (வாழ்ந்தனர்) ஆனால் எருசலேமி*
*லுள்ள அந்த ஜனங்கள் ஏன் தவறான*
*வழியில் தொடர்ந்து போய்க்கொண்டிருக்*
*கின்றனர்? அவர்கள் தங்கள் சொந்தப்*
*பொய்யையே நம்புகின்றனர். அவர்கள்*
*திரும்பி என்னிடம் வர மறுக்கின்றனர்.*
6*நான் அவர்களை மிகக் கவனமாகக்*
*கேட்டிருக்கிறேன். ஆனால் எது சரியன்று*
*அவர்கள் சொல்கிறதில்லை. ஜனங்கள் தம்*
*பாவங்களுக்காக வறுத்தப்படுவதில்லை.*
*அவர்கள் தாங்கள் செய்தது தீயச் செயல்கள்*
*என்று எண்ணுவதில்லை; ஜனங்கள் எண்*
*ணிப் பார்க்காமலேயே செயல்களைச் செய்கி*
*றார்கள். போரில் ஓடும் குதிரைகளைப்*
*போன்று அவர்கள் இருக்கிறார்கள்.*

7*வானத்து பறவைகளுக்குக் கூடச் செயல்*
*களைச் செய்வதற்கான சரியான நேரம்*
*தெரியும். நாரைகள், புறாக்கள், தகைவிலான்*
*குருவிகள் ஆகியவற்றுக்கு புதிய கூட்டிற்குப்*
*பறந்துசெல்லவேண்டிய நேரம் தெரியும்.*
*ஆனால், எனது ஜனங்களுக்குத் தாங்கள்*
*என்ன செய்ய வேண்டுமென்று கர்த்தர்*
*விரும்புகிறார் என்பது தெரியாது.*
8*"'எங்களிடம் கர்த்தருடைய போதனை*
*கள் இருக்கிறது. எனவே, நாங்கள் ஞானி*
*கள்' என்று சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள்.*
*ஆனால் அது உண்மையன்று, ஏனென்றால்,*
*வேதபாரகர்கள்* தம் எழுத்தாணிகளால்*
*பொய்யுரைத்தனர்.*
9*கர்த்தருடைய போதனைகளை, அந்த*
*'ஞானமுள்ள ஜனங்கள் கவனிக்க மறுத்து*
*விட்டனர். எனவே உண்மையில் அவர்கள*
*ஞானம் உடையவர்கள் அல்ல. அந்த 'ஞான*
*முள்ள ஜனங்கள்' பிடிபட்டுள்ளனர். அவர்*
*கள் அதிர்ச்சியும் அவமானமும் அடைந்*
*துள்ளனர்.*
10*எனவே, நான் அவர்களது மனைவி*
*யரை மற்றவர்களுக்குக் கொடுப்பேன், நான்*
*அவர்களது வயல்களைப் புதிய உரிமையா*
*ளர்களுக்குக் கொடுப்பேன். இஸ்ரவேலில்*
*உள்ள அனைத்து ஜனங்களும் மேலும்*
*மேலும் பணத்தை விரும்புகின்றனர். முக்கி*
*யத்துவம் குறைந்த ஜனங்களிலிருந்து முக்கி*
*யத்துவம் மிகுந்த ஜனங்கள் வரை, அவர்கள்*
*அனைவரும் அதனை விரும்புகின்றனர்.*

---

**வேத பாரகர்கள்** *எழுத்துக்களை நகல் எடுப்பவர்கள்.*

தீர்க்கதரிசிகளிலிருந்து ஆசாரியர்கள் வரை
அனைவரும் பொய் சொல்லுகின்றனர்.
11 எனது ஜனங்கள் மிக மோசமாகக்
காயப்பட்டிருக்கிறார்கள். தீர்க்கதரிசிகளும்,
ஆசாரியர்களும், அந்தக் காயங்களுக்குக்
கட்டுப்போடவேண்டும். ஆனால் சிறு காயங்
களுக்குச் சிகிச்சைசெய்வது போன்று அவர்
கள் சிகிச்சை செய்கின்றனர். 'இது சரியாக
இருக்கிறது, என்று கூறுகிறார்கள். ஆனால்
அது சரியாகவில்லை.
12 அவர்கள் தாம் செய்கிற தீயச் செயல்க
ளுக்காக அவமானப்பட வேண்டும். ஆனால்
அவர்கள் கொஞ்சமும் வெட்கப்படுவ
தில்லை. அவர்கள் தங்களது பாவங்களுக்
காக வெட்கங்கொள்ள அறியாதவர்கள்.
எனவே, அவர்கள் ஒவ்வொருவரும் தண்டிக்
கப்பட வேண்டியவர்கள். நான் ஜனங்களைத்
தண்டிக்கும்போது அவர்கள் தரையில் வீசி
எறியப்படுவார்கள்" கர்த்தர் இவற்றையெல்
லாம் சொன்னார்.
13 "நான் அவர்களுடைய பழங்களையும்
விளைச்சலையும் எடுத்துக்கொள்வேன்.
எனவே, அங்கே அறுவடை இருக்காது"
என்று கர்த்தர் சொல்லுகிறார். "திராட்சைத்
தோட்டத்தில் பழங்கள் இராது. அத்திமரத்தில்
அத்திப்பழங்கள் இராது. இலைகள்கூட
காய்ந்து உதிர்ந்துவிடும். நான் அவர்களுக்
குக் கொடுத்தப் பொருட்களையெல்லாம்
எடுத்துக் கொள்வேன்.
14 "எதற்காக நாம் இங்கே சும்மா உட்
கார்ந்து இருக்கிறோம். வாருங்கள், பலமான
நகரங்களுக்கு ஓடுவோம். நமது தேவனாகிய
கர்த்தர் நம்மை மரிக்க செய்வாரேயானால்,
நாம் அங்கேயே மரித்துப்போவோம். நாம்
கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்தோம்"
எனவே, தேவனாகிய கர்த்தர் நாம் குடிப்ப
தற்கு விஷமுள்ள தண்ணீரைக் கொடுத்தார்.
15 நாம் சமாதானம் அடைவோம் என்று
நம்பினோம். ஆனால் நன்மை எதுவும்
வரவில்லை. அவர் நம்மை மன்னிப்பார்
என்று எதிர்பார்த்தோம். ஆனால் பேரழிவு
மாத்திரமே வந்தது.
16 தானின் கோத்திரத்தைச் சேர்ந்த நாட்
டிலிருந்து பகைவர்களின் குதிரைகளது மூச்
சுசத்தம் கேட்கிறது. அவர்களது குதிரைக
ளின் கணைப்பொலியால் பூமி அதிர்கின்றது.
அவர்கள் இந்த நாட்டையும் இதிலுள்ள
அனைத்தையும் அழிக்க வந்துள்ளனர். அவர்
கள் இந்த நகரத்தையும் இதில் வாழும்
ஜனங்களையும் அழிக்க வந்திருக்கிறார்கள்.
17 "யூதாவின் ஜனங்களே! உங்களைத்தாக்க
விஷமுள்ள பாம்புகளை அனுப்பிக் கொண்டி
ருக்கிறேன். அந்தப் பாம்புகளைக் கட்டுப்
படுத்த முடியாது. அந்தப் பாம்புகள் உங்க
ளைக் கடிக்கும்" என்று கர்த்தர் சொல்லு
கிறார்.
18 "தேவனே, நான் மிகவும் வருத்தத்
தோடும், பெருந்துயரத்தோடும் இருக்கிறேன்.
19 எனது ஜனங்கள் சொல்வதை கேளும்"
"இந்த நாட்டின் எல்லா இடங்களிலும்
ஜனங்கள் உதவிக்காக அழுதுகொண்டிருக்கி
றார்கள். அவர்கள், "சீயோனில் கர்த்தர்
இன்னும் இருக்கிறாரா? சீயோனின் அரசர்
இன்னும் இருக்கிறாரா?" என்று கூறுகிறார்
கள்.
ஆனால் தேவன் கூறுகிறார், "யூதாவின்
ஜனங்கள் அவர்களது பயனற்ற அந்நிய
விக்கிரகங்களைத் தொழுதுகொண்டனர்.
அது என்னைக் கோபங்கொள்ளச் செய்தது!
அவர்கள் எதற்காக செய்தார்கள்?" என்று
கேட்டார்.
20 ஜனங்கள் சொல்கிறார்கள், "அறுவடை
காலம் முடிந்து விட்டது, கோடைகாலம்
போய் விட்டது, நாம் இன்னும் காப்பாற்றப்
படவில்லை."
21 எனது ஜனங்கள் காயப்பட்டிருக்கிறார்
கள். எனவே நானும் காயப்பட்டிருக்கிறேன்.
நான் பேசுவதற்கு மிகவும் வருந்துகிறேன்.
22 உறுதியாக கீலேயாத்தில் கொஞ்சம்
மருந்து உள்ளது. உறுதியாக கீலேயாத்தில்
ஒரு மருத்துவர் இருக்கிறார். எனவே, ஏன்?
எனது ஜனங்களின் காயங்கள் குணமா
கவில்லை?

9 எனது தலை தண்ணீரால் நிறைக்கப்
பட்டால், எனது கண்கள் கண்ணீரின்
ஊற்றாக இருந்தால் நான் இரவும் பகலும்,
அழிந்துபோன எனது ஜனங்களுக்காக அழ
முடியும்!
2 வழிபோக்கர்கள் இரவிலே தங்குவதற்கு,
வனாந்தரத்திலே எனக்கென்றொரு வீடு
இருந்திருக்குமானால் நல்லது. அப்பொழுது
நான் எனது ஜனங்களை விட்டுப்போவேன்.
நான் அந்த ஜனங்களிலிருந்து தூரப்போய்
விடுவேன். ஏனென்றால், அவர்கள் தேவன்
மேல் விசுவாசம் இல்லாதவர்கள். அவர்கள்
அனைவரும் அவருக்கு எதிராகத் திரும்பி
யிருக்கிறார்கள்.
3 "அந்த ஜனங்கள் தங்களது நாக்குகளை
வில்லைப்போன்று பயன்படுத்துகின்றனர்.
அவர்களது வாய்களிலிருந்து பொய்கள்
அம்புகளைப்போன்று பறக்கின்றன. இந்த
நாட்டில் உண்மைகளல்ல பொய்கள் மிகப்
பலமாக வளர்ந்திருக்கின்றன. ஜனங்கள் ஒரு
பாவத்திலிருந்து இன்னொரு பாவத்திற்குப்
போகிறார்கள். அவர்களுக்கு என்னைத்
தெரியாது" கர்த்தர் இவற்றைச் சொல்கிறார்,
4 கர்த்தர், "உனது அண்டைவீட்டாரை
கவனியுங்கள்! உனது சொந்தச் சகோதரர்க
ளையும் நம்பாதீர்கள்! ஏனென்றால், ஒவ்
வொரு சகோதரனும் ஏமாற்றுக்காரனாய்
இருக்கிறான். ஒவ்வொரு அண்டைவீட்டா
னும், உனது முதுகுக்குப் பின்னால் பேசு
கிறான்.
5 ஒவ்வொருவனும் தனது அண்டை
வீட்டானுக்கு பொய்யனாக இருக்கிறான்.

எவனும் உண்மையைப் பேசுவதில்லை.
யூதாவின் ஜனங்கள் தம் நாக்குகளுக்கு
பொய்யையே கற்றுக் கொடுத்திருக்கின்றனர்.
சோர்ந்து போகிற அளவுக்கு பாவம் செய்
தார்கள்.
6ஒரு கெட்டச் செயலை இன்னொன்று
தொடர்கிறது. பொய்கள், பொய்களைத்
தொடர்கின்றன. ஜனங்கள் என்னை அறிய
மறுக்கின்றனர்" என்று கர்த்தர் கூறினார்
7எனவே, சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கூறுகிறார்; "ஒரு வேலையாள், ஒரு உலோ
கத்தை அது சுத்தமாயிருக்கிறதா என்று
சோதனை செய்வதற்காக நெருப்பிலே
சூடுபடுத்துகிறான். அதுபோல நான் யூதா
ஜனங்களைச் சோதனைச் செய்கிறேன்.
எனக்கு வேறுவழி தெரிந்திருக்கவில்லை.
எனது ஜனங்கள் பாவம் செய்திருக்கிறார்
கள்.
8யூதா ஜனங்கள் அம்புகளைப் போன்ற
கூர்மையான நாக்குகளை வைத்திருக்கிறார்
கள். அவர்களது வாய்கள் பொய்யைப்
பேசுகின்றன. ஒவ்வொரு நபரும் தனது
அயலானிடம் சமாதானமாய் பேசுகிறான்.
ஆனால், அவன் இரகசியமாக தனது அய
லானைத் தாக்குவதற்குத் திட்டமிட்டுக்
கொண்டிருக்கிறான்.
9யூதா ஜனங்களை நான் தண்டிக்க வேண்
டும்" என்று கர்த்தர் சொல்லுகிறார். "அந்த
வகையான ஜனங்களை நான் தண்டிக்க
வேண்டும் என்று நீ அறிவாய். அவர்களுக்கு
ஏற்ற தண்டனையை நான் அவர்களுக்கு
கொடுக்க வேண்டும்."
10நான் (எரேமியா) மலைகளுக்காக உரக்க
அழுவேன். காலியான வயல்களுக்காக நான்
ஒப்பாரிப் பாடலைப்பாடுவேன். ஏனென்
றால், உயிர் வாழ்வன அனைத்தும் எடுக்கப்
பட்டுவிடும். இப்பொழுது எவரும் அங்கு
பயணம்செய்ய மாட்டார்கள். ஆடுமாடுகளின்
சத்தத்தை அங்கே கேட்க முடியாது. பறவை
கள் பறந்து போயிருக்கின்றன. மிருகங்கள்
போய்விட்டன.
11"நான் (கர்த்தர்) எருசலேம் நகரத்தை
குப்பைமேடாக்குவேன். அது ஓநாய்களின்
வீடாகும். யூதா நாட்டிலுள்ள நகரங்களை
நான் அழிப்பேன், அதனால் அங்கே எவரும்
வாழ முடியாது."
12இவற்றையெல்லாம் அறிந்துகொள்ளுகிற
அளவிற்கு ஒரு ஞானமுள்ள மனிதன் அங்கே
இருக்கிறானா? கர்த்தரால் கற்பிக்கப்பட்டி
ருக்கிற சிலர் அங்கே இருக்கிறார்களா?
கர்த்தருடைய செய்தியை எவரொருவரா
லும் விளக்கமுடியுமா? அந்தப் பூமி ஏன்
வீணாயிற்று? எந்த மனிதரும் போகமுடியாத
அளவிற்கு அது ஏன் வெறுமையான
வனாந்தரமாயிற்று?
13கர்த்தர் இந்த வினாக்களுக்கு விடை
சொன்னார். அவர் கூறினார்: "இது ஏனென்
றால், யூதாவின் ஜனங்கள் எனது போதனை
களைப் பின்பற்றுவதை விட்டுவிட்டார்கள்.
நான் எனது போதனைகளைக் கொடுத்தேன்.
ஆனால், அவர்கள் நான் சொல்வதைக்கேட்க
மறுத்துவிட்டனர்.
14யூதாவின் ஜனங்கள் தங்கள் சொந்த
வழியிலேயே வாழ்ந்தார்கள். அவர்கள்
பிடிவாதக்காரர்கள், அவர்கள் பொய்த்
தெய்வமான பாகாலைத் தொழுதுகொள்கி
றார்கள். அவர்களின் தந்தைகள் அந்தப்
பொய்த் தெய்வங்களைத் தொழுதுகொள்ள
சொல்லித் தந்தனர்."
15"எனவே, இஸ்ரவேலின் சர்வ வல்லமை
யுள்ள தேவனாகிய கர்த்தர் கூறுகிறார்:
நான் விரைவில் யூதா ஜனங்களைத் தண்டிப்
பேன்.*
16நான் யூதாவின் ஜனங்களை பல
நாடுகளிலும் சிதறும்படி செய்வேன். அவர்
கள் புறஜாதிகளுக்குள் வாழ்வார்கள். அவர்
களும் அவர்களது தந்தைகளும் அந்த
நாடுகளைப்பற்றி எப்பொழுதும் அறிந்திருக்க
மாட்டார்கள். நான் பட்டயங்களுடன்
ஆட்களை அனுப்புவேன். அவர்கள் யூதா
வின் ஜனங்களைக் கொல்வார்கள். ஜனங்கள்
முடிந்து போகுமட்டும் அவர்கள் அவர்
களைக் கொல்வார்கள்."
17சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இதைத்
தான் கூறுகிறார்: "இப்பொழுது, இவற்றைப்
பற்றி எண்ணுங்கள்! நீங்கள், சாவில்
கூலிக்காக அழுவதில் திறமைவாய்ந்த பெண்
களைக் கூப்பிடுங்கள். அந்த வேலையில்
கெட்டிக்காரிகளை ஜனங்களுக்காக சொல்லி
அனுப்புங்கள்.
18ஜனங்கள் சொல்கிறார்கள், 'அந்தப்
பெண்கள் விரைவாக வந்து, நமக்காக
அழட்டும், பிறகு நமது கண்கள் கண்ணீரால்
நிறையும். நமது கண்களிலிருந்து நீரோடை
வரும்.'
19"சீயோனிலிருந்து உரத்த அழுகையின்
சத்தம் கேட்டுக்கொண்டிருக்கிறது. 'நாம்
உண்மையிலேயே அழிக்கப்பட்டிருக்கிறோம்.
நாம் உண்மையிலேயே வெட்கப்படுகிறோம்!
நாம் நமது நாட்டைவிட்டு விலக வேண்டும்.
ஏனென்றால், நமது வீடுகள் அழிக்கப்பட்டி
ருக்கின்றன. இப்பொழுது நமது வீடுகள்
கற்குவியல்களாக இருக்கின்றன.'"
20யூதாவின் ஸ்திரீகளே! இப்பொழுது, கர்த்
தரிடமிருந்து வரும் செய்தியைக் கேளுங்கள்.
கர்த்தருடைய வாயிலிருந்து வருகிற வார்த்
தைகளைக் கேளுங்கள். கர்த்தர், "உங்கள்
பெண்பிள்ளைகளுக்கு எவ்வாறு உரக்க
அழுவது என்று கற்றுக்கொடுங்கள். ஒவ்
வொரு பெண்ணும் ஒப்பாரிப்பாடலை பாடக்
கற்றுக்கொள்ள வேண்டும்.

---

**நான் … தண்டிப்பேன்** "யூதா ஜனங்கள் உண்பதற்கு கசப்பான உணவை விரைவில் நான் கொடுப்பேன். அவர்கள் நஞ்சுகலந்த தண்ணீரை குடிக்கும்படி செய்வேன்."

21‘மரணம் வந்திருக்கிறது. நமது ஜன்னல்
கள் வழியாக மரணம் ஏறியிருக்கிறது.
நமது அரண்மனைகளுக்குள் மரணம் வந்தி
ருக்கிறது. தெருவில் விளையாடிக் கொண்
டிருக்கும், நமது பிள்ளைகளிடம் மரணம்
வந்திருக்கிறது. பொது இடங்களில் நாம்
சந்திக்கிற இளைஞர்களிடம் மரணம்
வந்திருக்கிறது.’
22“‘கர்த்தர் எரேமியாவை நோக்கி, மரித்த
உடல்கள் வயல் வெளிகளின்மேல் எருவைப்
போன்று கிடக்கும். அவர்களின் உடல்கள்,
விவசாயி அறுத்துப் போட்ட அரியைப்
போன்று தரையில் கிடக்கும். ஆனால்
அவற்றைச் சேகரிக்க எவரும் இருக்க
மாட்டார்கள்’” என்று சொல் என்றார்.
23கர்த்தர், “ஞானம் உள்ளவர்கள் தமது
ஞானத்தைப்பற்றி பெருமை பேசவேண்டாம்.
பலம் உள்ளவர்கள் தமது பலத்தைப்பற்றி
பெருமை பேசவேண்டாம். செல்வம் உடைய
வர்கள் தமது செல்வத்தைப்பற்றி பெருமை
பேச வேண்டாம்.
24ஆனால் எவராவது பெருமைபேச
விரும்பினால், அவன் இதைப்பற்றி பெருமை
பட்டுக் கொள்ளட்டும். என்னைப்பற்றி
அவன் அறிந்துகொண்டதைக் குறித்து பெரு
மைபடட்டும். நானே கர்த்தர் என்றும்,
நான் தயவும் நியாயமும் கொண்டவன்
என்றும், நான் பூமியில் நன்மையைச்
செய்கிறவன் என்றும் புரிந்துகொண்டவன்
பெருமைபடட்டும். நான் அவற்றை
நேசிக்கிறேன்” என்று கர்த்தர் சொல்லுகி
றார்.
25“சரீரத்தில் மட்டும் விருத்தசேதனம்
பண்ணிக்கொண்டவர்களை நான் தண்டிக்
கப்போகிற காலம் வந்துகொண்டிருக்கிறது.
26எகிப்து, யூதா, ஏதோம், அம்மோன்,
மோவாப் மற்றும் வனாந்திரத்தில் வாழ்கிற
அனைத்து ஜனங்களையும்பற்றி நான் பேசிக்
கொண்டிருக்கிறேன், பாலைவனக் குடிகள்
தங்கள் தாடி ஓரங்களை வெட்டினார்கள்.
இந்த நாடுகளில் உள்ள அனைத்து ஜனங்
களும் சரீரத்தில் விருத்தசேதனம் பண்ணிக்
கொள்ளாதவர்கள். ஆனால், இஸ்ரவேல்
குடும்பத்தில் வந்த ஜனங்களோ, தங்கள்
இதயத்தில் விருத்தசேதனம் செய்து கொள்ள
வில்லை என்று கர்த்தர் சொல்லுகிறார்.

### கர்த்தரும், விக்கிரகங்களும்

10 இஸ்ரவேல் குடும்பத்தாரே! உங்களைக்
குறித்து கர்த்தர் சொன்னதை கவ
னித்து கேளுங்கள்!
2“மற்ற நாடுகளில் உள்ள ஜனங்களைப்
போன்று வாழாதீர்கள்! வானத்தில் தோன்
றும் சிறப்பான அடையாளங்களைக் கண்டு
பயப்படாதீர்கள்! அயல்நாடுகளில் உள்ளவர்
கள் தாம் வானத்தில் காண்கின்றவற்றைப்
பற்றி பயப்படுகிறார்கள். ஆனால் அவற்றைப்
பற்றி நீங்கள் பயப்பட வேண்டாம்!
3மற்ற ஜனங்களின் பழக்கவழக்கங்கள்
பயனற்றவை. ஏனெனில், அவர்களது விக்
கிரகங்கள் காட்டிலுள்ள மரக்கட்டைகளைத்
தவிர, வேறில்லை. அவர்களின் விக்கிரகங்
கள் வேலையாளால் உளியால் செதுக்கப்
பட்டவை.
4அவர்கள் தமது விக்கிரகங்களைப் பொன்
னாலும் வெள்ளியாலும் அழகு படுத்துகின்
றனர். அவர்கள் ஆணிகளையும், சுத்திகளை
யும் பயன்படுத்தி, விக்கிரகங்கள் விழாமல்
செய்கிறார்கள். எனவே, அவை விழுவ
தில்லை.
5அயல்நாடுகளில் உள்ள விக்கிரகங்கள்
வெள்ளரிக்காய் வயலிலே, குருவிகளை
விரட்டுவதற்காக வைக்கப்பட்ட கொல்லை
பொம்மையைப் போன்றுள்ளன. அவர்களின்
விக்கிரகங்களால் பேசமுடியாது, அவர்களின்
விக்கிரகங்களால் நடக்கமுடியாது. ஜனங்கள்
அந்த விக்கிரகங்களைத் தூக்கிச் செல்ல
வேண்டும். அவற்றுக்கு நீங்கள் பயப்பட
வேண்டாம். அவைகளால் உங்களைக் காயப்
படுத்த முடியாது. அவை உங்களுக்கு உதவி
யும் செய்யாது” என்று கர்த்தர் சொல்லு
கிறார்.
6கர்த்தாவே, உம்மைப் போன்று எவரும்
இல்லை! நீர் பெரியவர்! உமது நாமம்
மகிமையும் பெருமையும் வல்லமையும்
வாய்ந்தது!
7தேவனே! எல்லோரும் உமக்கு மரி
யாதைச் செலுத்த வேண்டும். அனைத்து
தேசத்தாருக்கும் நீரே அரசன். அவர்களின்
மரியாதைக்கு நீர் பாத்திரர். அந்த நாடு
களுக்கிடையில் பல ஞானமுள்ளவர்கள்
இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் எவரும்
உம்மைப் போன்று ஞானமுள்ளவர்கள்
இல்லை.
8வேறு நாடுகளில் உள்ள, அனைத்து
ஜனங்களும், அறியாமையும், மூடத்தனமும்
கொண்டவர்கள். அவர்களின் போதனைகள்
பயனற்றவை. அவர்களின் தெய்வங்கள் மரச்
சிலைகளே.
9அவர்கள் தர்ஷீசிலிருந்து கொண்டுவந்த
வெள்ளியையும் ஊப்பாசிலிருந்து கொண்டு
வந்த பொன்னையும் வைத்து அந்தச் சிலை
களைச்செய்திருக்கின்றனர். அந்த விக்கிரகங்
கள், தச்சன்களாலும், தட்டான்களாலும்
செய்யப்பட்டவை. அவர்கள் அந்த
விக்கிரகங்களுக்கு, இளநீலமும், ஊதா
ஆடையும் அணிவிக்கிறார்கள்.
“ஞானமுள்ளவர்கள்” அந்தக் “தெய்வங்
களைச்”செய்கின்றனர்.
10ஆனால் கர்த்தர்தான் உண்மையான ஒரே
தேவன். உண்மையில் ஜீவனுள்ள ஒரே
தேவன் அவர்தான்! அவர் என்றென்றும்
ஆளுகின்ற அரசன்! தேவன் கோபங்கொண்
டால் பூமி அதிர்கிறது, தேசங்களிலுள்ள
ஜனங்களால் அவரது கோபத்தை தாங்க
முடியாது.

11 “அந்த ஜனங்களிடம் இந்தச்செய்தியைக்
கூறுங்கள், ‘அந்தப் பொய்த் தெய்வங்கள்
பரலோகத்தையும் பூமியையும் படைக்க
வில்லை. அந்தப் பொய்த் தெய்வங்கள்
அழிக்கப்படுவார்கள். வானம் மற்றும் பூமி
யிலிருந்து மறைவார்கள்’” என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
12 தேவன் ஒருவரே தமது வல்லமையால்
பூமியைச் செய்தார். தேவன் தனது ஞானத்
தைப் பயன்படுத்தி பூமியை உண்டாக்
கினார். தேவன் தமது ஞானத்தினால் பூமி
யின்மேல் வானத்தை விரியச் செய்தார்.
13 சத்தமான இடிக்கும் தேவனே காரணமா
கிறார். வானத்திலிருந்து பெருவெள்ளம்
பொழியவும் அவரே காரணமாகிறார். அவர்
பூமியின் அனைத்து இடங்களிலிருந்தும்
வானத்திற்கு மேகம் எழும்பும்படி செய்கி
றார். அவர் மின்னலுடன் மழையை அனுப்
புகிறார். அவர் தமது பண்டகச் சாலை
யிலிருந்து காற்றை அனுப்புகிறார்.
14 ஜனங்கள் மூடர்களாக இருக்கிறார்கள்!
உலோகச் சிற்பிகள் தாங்கள் செய்த விக்கிர
கங்களைக் கொண்டு அவமானத்துக்குள்ளா
கின்றனர். அந்தச் சிலைகள் வெறும் பொய்
என்று அவர்கள் அறிவார்கள். அந்த விக்கி
ரகங்களுக்கு உயிர் இல்லை.*
15 அந்தச் விக்கிரகங்கள் பயனற்றவை.
அவை பொய்யானவை. வஞ்சிக்கும்படியாக
செய்யப்பட்டவை. நியாயத்தீர்ப்புக் காலத்
தில், அவ்விக்கிரகங்கள் அழிக்கப்படும்.
16 ஆனால் யாக்கோபின் தேவன், அந்த
விக்கிரகங்களைப் போன்றவரல்ல. தேவன்
எல்லாவற்றையும் படைத்தார், தேவன் தமது
சொந்த ஜனங்கள் என்று இஸ்ரவேல் ஜனங்
களை தேர்ந்தெடுத்தார். “சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர்” என்பது தேவனுடைய
நாமம்.

### அழிவு வந்துகொண்டிருக்கிறது

17 உனக்குச் சொந்தமானவற்றையெல்லாம்
சேர்த்துக்கொள். புறப்படத் தயாராகு. யூதா
வின் ஜனங்களாகிய நீங்கள் பட்டணத்தில்
பிடிபடுவீர்கள். இதனை பகைவர்கள் சுற்றி
வளைத்து கொள்வார்கள்.
18 “இந்த முறை, யூதாவின் ஜனங்களை
நாட்டை விட்டு வெளியே எறிவேன்.
நான் அவர்களுக்கு வலியும், துன்பமும்
கொண்டு வருவேன். நான் இதனைச் செய்வ
தன் மூலம் அவர்கள் பாடம் கற்றுக்கொள்
வார்கள்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
19 ஓ! நான் (எரேமியா) மோசமாகக் காயப்
பட்டேன், நான் புண்பட்டேன், என்னால்
குணமாக முடியவில்லை எனக்குள் நான்
இவ்வாறு சொல்லிக்கொண்டேன் என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
“இதுதான் என்னுடைய நோய். இதன்
மூலம் நான் துன்பப்பட வேண்டும்.”
20 எனது கூடாரம் அழிக்கப்பட்டது.
கூடாரக் கயிறுகள் எல்லாம் அறுபட்டன.
எனது பிள்ளைகள் என்னை விட்டு விட்ட
னர். அவர்கள் போய்விட்டார்கள். எனது
கூடாரத்தை அமைப்பதற்கு எவனும் இருக்க
வில்லை, எனக்கான இருப்பிடத்தை உரு
வாக்கிடயாரும் இல்லை.
21 மேய்ப்பர்கள் (தலைவர்கள்) மூடர்கள்,
அவர்கள் கர்த்தரைத் தேட முயற்சி செய்வ
தில்லை. அவர்களுக்கு ஞானம் இல்லை.
எனவே அவரது மந்தைகள் (ஜனங்கள்)
சிதறிக் காணாமல் போகின்றன.
22 உரத்த சத்தத்தைக் கேளுங்கள்! இந்த
உரத்த சத்தம் வடக்கிலிருந்து வருகிறது.
அது யூதாவின் நகரங்களை அழிக்கும்.
யூதா ஒரு வெறுமையான வனாந்தரமாகும்,
அது ஓநாய்களுக்கான வீடாகும்.
23 கர்த்தாவே! ஜனங்கள் உண்மையில்
தங்களது வாழ்வைக் கட்டுப்படுத்தவோ,
அல்லது தங்கள் எதிர்காலத்தை திட்ட
மிடவோ முடியாது, என்பதை நான் அறி
வேன். வாழ்வதற்கான சரியான வழியை
ஜனங்கள் உண்மையில் அறிந்துகொள்ள
வில்லை.
24 கர்த்தாவே! எங்களைத் திருத்தும். நீதி
யாய் இரும். கோபத்தில் எங்களைத் தண்டிக்
காமல் இரும், இல்லையேல் நீர் எங்களை
அழிக்கக் கூடும்.
25 நீர் கோபத்தோடு இருந்தால், பின்
அந்நியநாடுகளைத் தண்டியும். அவர்கள்
உம்மை அறிவதில்லை, மதிப்பதுமில்லை.
அந்த ஜனங்கள் உம்மைத் தொழுதுகொள்
வதுமில்லை. அந்த நாடுகள் யாக்கோபின்
குடும்பத்தை அழித்தது, அவர்கள் இஸ்ர
வேலை முழுமையாக அழித்தனர், அவர்கள்
இஸ்ரவேலரின் தாய் நாட்டையும் அழித்
தனர்.

### உடன்படிக்கை உடைக்கப்படுகிறது

11 எரேமியாவிற்கு வந்த கர்த்தருடைய
வார்த்தை இதுதான். 2 “எரேமியா, இந்த
உடன்படிக்கையின் வார்த்தைகளைக் கேள்.
யூதாவின் ஜனங்களிடம் இவற்றைப்பற்றி
கூறு. எருசலேமில் வாழ்ந்துக்கொண்டிருக்
கிற ஜனங்களிடம் இவற்றைப்பற்றி கூறு.
3 இதைத்தான், இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் கூறுகிறார்; ‘இந்த உடன்படிக்கைக்கு
அடிபணியாத எந்தவொரு நபருக்கும்
கெட்டவை ஏற்படும்.’ 4 நான் உங்கள் முற்பி
தாக்களோடு செய்துகொண்ட உடன்
படிக்கையைப்பற்றி பேசிக்கொண்டிருக்கி
றேன். நான் அவர்களை எகிப்திலிருந்து
வெளியே கொண்டு வந்தபோது அவர்க

---

**உலோக ... இல்லை** “அவைகளுக்கு ஆவி இல்லை.” அதாவது அவற்றில் ஜீவ ஆத்மா அல்லது தேவ ஆவி இல்லை, என்பதாகும்.

ளோடு இந்த உடன்படிக்கையைச் செய்து
கொண்டேன். எகிப்து பல துன்பங்க
ளுக்குரிய இடமாக இருந்தது. அது இரும்பை
இளகச் செய்யும் அளவிற்கு சூடான
வாணலியைப்போன்று இருந்தது. அந்த
ஜனங்களிடம், “எனக்குக் கீழ்ப்படியுங்கள்.
நான் உங்களுக்குக் கட்டளையிடுகின்ற
வற்றைச் செய்யுங்கள். நீங்கள் இவற்றைச்
செய்தால் நீங்கள் என்னுடைய ஜனங்களாக
வும், நான் உங்களது தேவனாகவும் இருப்
பேன் என்று சொன்னேன்.
5“நான் உங்களது முற்பிதாக்களுக்குச்
செய்த வாக்குறுதியைக் காப்பாற்றுவதற்
காகவே இதனைச் செய்தேன். மிகவும்
செழிப்பான பாலும் தேனும் ஓடுகிற பூமி
யைத் தருவதாக நான் அவர்களுக்கு உறுதி
செய்தேன். நீங்கள் இன்று அத்தகைய நாட்
டில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்” நான்
(எரேமியா) “ஆமென்* கர்த்தாவே” என்
றேன்.
6கர்த்தர் என்னிடம், “எரேமியா எருச
லேமின் தெருக்களிலும், யூதாவின் நகரங்
களிலும் இச்செய்தியைப் பிரச்சாரம் செய்.
என்று சொன்னார். அவர் “இந்த உடன்
படிக்கையின் வார்த்தையை கவனியுங்கள்.
அதன் சட்டங்களுக்கு அடிபணியுங்கள். 7உங்
களது முற்பிதாக்களுக்கு நான் அவர்களை
எகிப்திலிருந்து வெளியே கொண்டு வந்த
போது, ஒரு எச்சரிக்கைக் கொடுத்தேன்.
இந்நாள்வரை நான் அவர்களை மீண்டும்,
மீண்டும், எச்சரிக்கை செய்தேன், எனக்கு
கீழ்ப்படியுமாறு நான் அவர்களுக்குச்
சொன்னேன். 8ஆனால் உங்களது முற்
பிதாக்கள் எனக்குக் கீழ்ப்படியவில்லை.
அவர்கள் பிடிவாதமாக இருந்து அவர்களது
தீய மனம் விரும்புகிறபடி செய்தனர். அவர்
கள் எனக்கு அடிபணியாவிட்டால் கெட்
டவை ஏற்படும், என்று உடன்படிக்கைக்
கூறுகிறது, எனவே, நான் அவர்களுக்கு
அனைத்து கெட்டவற்றையும் ஏற்படும்படிச்
செய்கிறேன். உடன்படிக்கைக்குக் கீழ்ப்படி
யும்படி நான் அவர்களுக்கு கட்டளையிட்
டேன். ஆனால் அவர்கள் செய்யவில்லை.”

9கர்த்தர் என்னிடம், “எரேமியா! யூதா
வின் ஜனங்களும் எருசலேமில் வாழ்கிற
ஜனங்களும் இரகசியமாக திட்டங்கள் போடு
கிறார்கள் என்று தெரியும். 10அந்த ஜனங்கள்
தம் முற்பிதாக்கள் செய்த அதே பாவங்
களைச் செய்கிறார்கள். அவர்களின் முற்
பிதாக்கள் எனது செய்தியை கேட்க மறுத்த
னர். அவர்கள் அந்நிய தெய்வங்களை
தொழுதுகொள்ளவும், பின்பற்றவும் செய்த
னர். நான் அவர்களது முற்பிதாக்களோடு
செய்த உடன்படிக்கையை இஸ்ரவேலின்
குடும்பத்தாரும், யூதாவின் குடும்பத்தாரும்,
உடைத்து விட்டனர்” என்று கூறினார்.
11எனவே கர்த்தர், “யூதாவின் ஜனங்க
ளுக்கு விரைவில் பயங்கரமான சில காரி
யங்கள் ஏற்படும்படி செய்வேன். அவர்களால்
அவற்றிலிருந்து தப்பிக்க முடியாது. அவர்
கள் வருத்தப்படுவார்கள். அவர்கள் என்னி
டம் உதவிக்காக அழுவார்கள். ஆனால்
நான் அவர்களை கவனிக்கமாட்டேன். 12யூதா
வில் உள்ள ஜனங்களும், எருசலேமில்
உள்ள ஜனங்களும், தங்கள் விக்கிரகங்
களிடம் போய் உதவிக்காக ஜெபிப்பார்கள்.
அந்த விக்கிரகங்களுக்கு முன் நறுமணப்
பொருட்களை எரிக்கின்றனர். அந்தப் பயங்க
ரமான காலம் வரும்போது அந்த விக்கிர
கங்களால் யூதாவின் ஜனங்களுக்கு உதவி
செய்ய முடியாது.
13“யூதாவின் ஜனங்களே! உங்களிடம்
ஏராளமான விக்கிரகங்கள் உள்ளன, யூதா
வில் உள்ள நகரங்களைப் போன்றே, உங்க
ளிடம் பல விக்கிரகங்கள் உள்ளன. பொய்
யான பாகால் தெய்வத்திற்கு நீங்கள் பல
பலிபீடங்களை தொழுதுகொள்வதற்காகக்
கட்டியிருக்கிறீர்கள். அவை எருசலேமி
லுள்ள, தெருக்களின் எண்ணிக்கை
போன்று, அதிக எண்ணிக்கையாக உள்ளன
என்று சொல்லுகிறார்.
14“எரேமியா, யூதாவின் இந்த ஜனங்களுக்
காக நீ ஜெபம் செய்யவேண்டாம். அவர்
களுக்காக கெஞ்ச வேண்டாம். அவர்
களுக்காக ஜெபம் செய்யவேண்டாம். நான்
கேட்கமாட்டேன். அந்த ஜனங்கள் துன்
பப்படத் தொடங்குவார்கள். பிறகு அவர்கள்
என்னை உதவிக்காக அழைப்பார்கள்.
ஆனால் நான் அவர்களைக் கவனிக்க
மாட்டேன்.
15“ஏன் எனது பிரியமானவள் (யூதா)
எனது வீட்டில் (ஆலயத்தில்) இருக்கிறாள்?
அங்கே இருக்க அவளுக்கு உரிமை இல்லை.
அவள் பல தீய செயல்களைச் செய்திருக்கி
றாள். யூதாவே, சிறப்பான வாக்குறுதிகளும்
மிருகபலிகளும் உன்னை அழிவிலிருந்து
காப்பாற்றும் என்று நினைக்கிறாயா? எனக்
குப் பலிகள் கொடுப்பதன் மூலம் தண்டனை
யிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியும்
என்று நினைக்கிறாயா?”
16கர்த்தர் உனக்கு ஒரு பெயரைக் கொடுத்
தார். உன்னை அழைத்து, ‘பசுமையான
ஒலிவ மரம். பார்க்க அழகானது’ என்றார்.
ஆனால் ஒரு பெரும் புயலுடன், கர்த்தர்
அந்த மரத்தை நெருப்பில் தள்ளிவிடுவார்.
அதன் கிளைகள் எரிக்கப்படும்.
17சர்வ வல்லமையுள்ள கர்த்தர் உன்னை
நட்டு வைத்தார். அழிவு உனக்கு வரு
மென்று அவர் சொன்னார். ஏனென்றால்,
இஸ்ரவேலின் குடும்பமும், யூதாவின்
குடும்பமும், கெட்ட செயல்களைச் செய்தி
ருக்கின்றன. அவர்கள் பாகாலுக்குப் பலி

**ஆமென்** ‘உண்மையாக’ அல்லது அப்படியே ஆகக்கடவது.

களைக் கொடுத்தனர்" அது எனக்குக்
கோபத்தை உண்டு பண்ணியது!

### எரேமியாவிற்கு எதிராக தீய திட்டங்கள்

18 ஆனதோத்திலுள்ள மனிதர்கள்* எனக்கு
எதிராக திட்டங்கள் போடுவதை, கர்த்தர்
எனக்குக் காட்டினார். அவர்கள் செய்து
கொண்டிருந்த செயல்களை எனக்குக் கர்த்தர்
காட்டினார். எனவே நான், அவர்கள்
எனக்கு எதிரானவர்கள் என்பதை அறிந்
தேன். 19 அந்த ஜனங்கள் எனக்கு எதிராக
இருந்தார்கள் என்று கர்த்தர் எனக்குக்
காட்டுமுன் நான் அடிக்கப்படுவதற்காகக்
கொண்டு போகப்படும் சாதுவான ஆட்டுக்
குட்டியைப் போன்று இருந்தேன். அவர்கள்
எனக்கு எதிரானவர்கள் என்பதை அறிந்து
கொள்ளவில்லை. அவர்கள் என்னைப்பற்றி
இவற்றைச் சொல்லிகொண்டிருந்தார்கள்,
"இந்த மரத்தையும், அதன் கனிகளையும்
அழித்து, அவனைக் கொல்லலாம் வாருங்
கள். பிறகு ஜனங்கள் அவனை மறப்பார்
கள்." 20 ஆனால் கர்த்தாவே! நீர் நியாயமான
நீதிபதி, மனிதர்களின் மனதையும், இதயத்தை
யும், எப்படி சோதிக்க வேண்டும் என்பதை
அறிவீர். என்னுடைய வாதங்களை நான்
உமக்குச் சொல்வேன். நான் அவர்களுக்கு
ஏற்ற தண்டனையைக் கொடுக்கும்படி
உம்மை அனுமதிப்பேன்.
21 ஆனதோத்திலுள்ள மனிதர்கள் எரேமியா
வைக் கொல்லத் திட்டம் போட்டனர்.
அந்த மனிதர்கள் எரேமியாவிடம் சொன்
னார்கள், "கர்த்தருடைய நாமத்தால் தீர்க்க
தரிசனம் சொல்லாதே. அல்லது நாங்கள்
உன்னைக் கொல்வோம்" ஆனதோத்திலி
ருக்கும், மனிதர்களைப்பற்றி கர்த்தர் ஒரு
முடிவு செய்தார். 22 சர்வ வல்லமையுள்ள
கர்த்தர், "ஆனதோத்திலுள்ள மனிதர்களை
நான் விரைவில் தண்டிப்பேன். அவர்களின்
இளைஞர்கள் போரில் மரிப்பார்கள். அவர்
களது மகன்களும் மகள்களும் பசியில்
மரிப்பார்கள். 23 ஆனதோத் நகரத்தில் உள்ள
எவரும் விடப்படுவதில்லை. எவரும் உயிர்
வாழ மாட்டார்கள். நான் அவர்களைத்
தண்டிப்பேன். அவர்களுக்குத் தீயவை
நேரும்படி நான் காரணமாவேன்" என்றார்.

### எரேமியா தேவனிடம் முறையிடுகிறான்

12 கர்த்தாவே, நான் உம்மோடு வாதம்
செய்தால் நீர் எப்பொழுதும் சரியா
கவே இருப்பீர்! ஆனால், நான் உம்மிடம்
சரியாக தோன்றாத சிலவற்றைப்பற்றி கேட்க
விரும்புகிறேன். கெட்டவர்கள் ஏன் சித்தி
பெறுகிறார்கள்? உம்மால் நம்பமுடியாதவர்
கள், ஏன் இத்தகைய இலகுவான வாழ்க்
கையைப் பெறுகிறார்கள்?
2 நீர் அந்த கெட்ட ஜனங்களை இங்கே
வைத்திருக்கிறீர், அவர்கள் பலமான வேர்க
ளையுடைய செடிகளைப்போல் உள்ளனர்.
அவர்கள் வளர்ந்து கனிகளை உற்பத்தி
செய்கின்றனர். அவர்கள் தம் வாயில் நீர்
அவர்களோடு அன்பாகவும் நெருக்கமாகவும்
இருப்பதாகக் கூறுகிறார்கள்; ஆனால், அவர்
கள் இதயத்தில் உண்மையில் உம்மை
விட்டுத் தூரத்தில் உள்ளனர்.
3 ஆனால், கர்த்தாவே! நீர் என் இதயத்தை
அறிவீர், நீர் என்னைப் பார்க்கிறீர். என்
மனதைச் சோதிக்கிறீர். வெட்டுவதற்கு இழுத்
துச் செல்லப்படும் ஆடுகளைப் போன்று
அந்தத் தீய ஜனங்களை வெளியே
இழுத்துப்போடும். அவர்களை வெட்டுவதற்
குரிய நாளைத் தேர்ந்தெடும்.
4 இந்தப் பூமி இன்னும் எவ்வளவு காலத்
திற்கு வறண்டிருக்கும்? இந்தப் புல் நிலங்கள்
இன்னும் எவ்வளவு காலத்திற்குக் காய்ந்து
மடிந்திருக்கும்? இந்தப்பூமியிலுள்ள மிருகங்க
ளும், பறவைகளும், செத்திருக்கின்றன. இது
தீய ஜனங்களின் குற்றமாகும், எனினும்
அத்தீய ஜனங்கள், "எரேமியா நமக்கு
நிகழப்போவதைப் பார்க்க நீண்டகாலம்
உயிர்வாழமாட்டான்" என்று சொல்லிக்
கொண்டிருக்கிறார்கள்.

### எரேமியாவிற்குத் தேவனுடைய பதில்

5 "எரேமியா! நீ மனிதர்களோடு ஓடும்
பந்தயத்திலேயே சோர்வடைந்து விட்டால்,
குதிரைகளோடு பந்தயத்தில் எப்படி ஓடு
வாய்? பாதுகாப்பான இடங்களிலேயே நீ
சோர்வடைந்து விட்டால், ஆபத்தான இடங்
களில் நீ என்ன செய்யப் போகிறாய்?
யோர்தான் ஆற்றோரங்களில் வளர்ந்துள்ள
முட்புதர்களின் மத்தியில் நீ என்ன செய்யப்
போகிறாய்?
6 இந்த மனிதர்கள் உனது சொந்தச் சகோ
தரர்கள், உனது சொந்தக் குடும்பத்து உறுப்
பினர்களே உனக்கு எதிராகத் திட்டங்
களைப் போடுகிறார்கள். உனது சொந்தக்
குடும்பத்து ஜனங்களே உனக்கெதிராய் கூச்
சல் போடுகிறார்கள். அவர்கள் நண்பர்க
ளைப்போன்று பேசினாலும் கூட நம்பாதே."

### கர்த்தர் தமது ஜனங்களான யூதாவை ஏற்க மறுக்கிறார்

7 "நான் (கர்த்தர்) எனது வீட்டைதள்ளி
விட்டிருக்கிறேன். நான் எனது சொந்த
சொத்தை விட்டு விட்டேன். நான் நேசம்
வைத்த ஒன்றை (யூதா) அவளின் பகைவர்க
ளிடமே விட்டு கொடுத்திருக்கிறேன்.
8 ஒரு காட்டுச் சிங்கத்தைப் போன்று,
எனது சொந்த ஜனங்கள் எனக்கு எதிராகத்
திரும்பினார்கள். அவர்கள் என் மீது
கர்ச்சிக்கிறார்கள். எனவே நான் அவர்
களிடமிருந்து திரும்பி வந்துவிட்டேன்.

---

**ஆனதோத்திலுள்ள மனிதர்கள்** எரேமியாவின் பிறந்த ஊர் அவனது சொந்தக்காரர்கள்.

9எனது சொந்த ஜனங்கள், கருடகழுகுக
ளின் நடுவிலே சூழப்பட்ட, மரிக்கிற
மிருகத்தைப் போல ஆனார்கள். அப்பறவை
கள் அவனைச்சுற்றி பறக்கின்றன. காட்டு
மிருகங்களே வாருங்கள். நீங்கள் உண்பதற்
குப் பெற்றுக்கொள்ளுங்கள். 10பல மேய்ப்பர்
கள் (தலைவர்கள்) எனது திராட்சைத்
தோட்டங்களை அழித்திருக்கின்றனர். அந்த
மேய்ப்பர்கள் எனது வயல்களில் அந்தச்
செடிகளின் மேல் நடந்திருந்தார்கள்; அந்த
மேய்ப்பர்கள் எனது அழகிய வயலைவெறு
மையான வனாந்தரமாக ஆக்கிவிட்டனர்.
11அவர்கள் எனது வயலை வனாந்தரமாக்
கினார்கள். இது காய்ந்து செத்துப்போனது.
எந்த ஜனங்களும் அங்கே வாழவில்லை.
நாடு முழுவதும் ஒரு வறுமையான வனாந்
தரமாக ஆயிற்று. அந்த வயலைக் கவனித்
துக்கொள்ள எவரும் விடப்படவில்லை.
12வனாந்தரத்தின் பசுஞ்சோலையைக்
கொள்ளையடிக் கசிப்பாய்கள் வந்தனர்.
தேசத்தைத் தண்டிக்கும்படி கர்த்தர் அந்தப்ப
டைகளை பயன்படுத்தினார். தேசத்தின் ஒரு
முனைமுதல் மறுமுனைவரை ஜனங்கள்
தண்டிக்கப்பட்டனர். ஒருவனும் பத்திரமாக
இருக்கவில்லை.
13ஜனங்கள் கோதுமையை விதைப்பார்
கள். ஆனால் அவர்கள் முட்களையே அறு
வடை செய்வார்கள். அவர்கள் களைத்து
போகிறவரை கடுமையாக உழைப்பார்கள்.
ஆனால் அவர்கள் தமது வேலைக்காகஎதை
யும் பெறமாட்டார்கள். அவர்கள் தங்கள்
விளைச்சலுக்காக வெட்கப்படுவார்கள். கர்த்
தருடைய கோபம் அவற்றுக்குக் காரணமா
யிற்று."

### இஸ்ரவேலர்களின் அயலார்களுக்குக் கர்த்தருடைய வாக்குறுதி

14இது தான் கர்த்தர் சொன்னது; "இஸ்ர
வேல் நாட்டைச்சுற்றி வாழும் அனைத்து
ஜனங்களுக்கும் நான் என்ன செய்வேன்
என்பதை நான் சொல்வேன். அந்த ஜனங்கள்
மிகவும் கெட்டவர்கள். நான் இஸ்ரவேல்
ஜனங்களுக்குக் கொடுத்த பூமியை அவர்கள்
அழித்திருக்கின்றனர். நான் அந்தத் தீய
ஜனங்களை இழுத்து, அவர்களின் நாட்டுக்கு
வெளியே போடுவேன்; நான் யூதா ஜனங்க
ளையும் அவர்களோடு இழுப்பேன். 15ஆனால்
அந்த ஜனங்களை நான் அவர்களின் நாடு
களிலிருந்து வெளியே இழுத்தப்பிறகு நான்
அவர்களுக்காக வருத்தப்படுவேன். நான்
ஒவ்வொரு குடும்பத்தையும் அவர்களின்
சொந்த சொத்துக்கும் பூமிக்கும் திரும்பக்
கொண்டுவருவேன். 16அந்த ஜனங்கள், என்
ஜனங்களின் வழிகளை நன்றாகக் கற்றுக்
கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்,
கடந்த காலத்தில் அந்த ஜனங்கள் எனது
ஜனங்களுக்கு, வாக்குறுதிச் செய்வதற்குப்
பாகாலின் பெயரைப் பயன்படுத்த கற்றுக்
கொடுத்தனர். இப்பொழுது, அந்த ஜனங்கள்
தங்கள் பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்
டும் என்று நான் விரும்புகிறேன்; அந்த
ஜனங்கள் என் பெயரைப் பயன்படுத்த
கற்றுக்கொள்ள வேண்டும் என்று நான்
விரும்புகிறேன். அந்த ஜனங்கள் 'கர்த்தரு
டைய ஜீவனைக் கொண்டு' ஆணையிட
வேண்டும் என்று விரும்புகிறேன். அந்த
ஜனங்கள் இதனைச் செய்தால், நான் அவர்
களை வெற்றிபெற அனுமதிப்பேன். அவர்
கள் என் ஜனங்களோடு வாழ விடுவேன்.
17ஆனால், எனது செய்தியை எந்த நாடா
வது கேளாமல் போனால், அதனை நான்
முழுமையாக அழிப்பேன். செத்துப்போன
செடியைப் போன்று நான் அதனை பிடுங்கு
வேன்" என்று கர்த்தர் சொல்லுகிறார்.

### அடையாளமான இடுப்புத்துணி

13 இதுதான் கர்த்தர் என்னிடம் கூறுகி
றது: "எரேமியா போய் ஒரு சணல்
இடுப்புத்துணியை வாங்கு. பிறகு அதனை
உன் இடுப்பிலே கட்டிக்கொள். அந்த
இடுப்புத்துணி நனையும்படி விடாதே."
2எனவே நான், கர்த்தர் என்னிடம்
செய்யச் சொன்னபடி ஒரு சணல் இடுப்புத்து
ணியை வாங்கினேன், அதனை என்
இடுப்பிலே கட்டினேன். 3பிறகு கர்த்தருடைய
செய்தி என்னிடம் இரண்டாவது முறையாக
வந்தது. 4இது தான் செய்தி: "எரேமியா
நீ வாங்கினதும் இடுப்பிலே கட்டியிருக்கிறது
மான துணியை எடுத்துக்கொண்டு பேராத்
துக்குப்* போ. அதை அங்கே பாறையின்
வெடிப்பிலே மறைத்துவை."
5எனவே, நான் பேராத்துக்குப் போய்
அங்கே கர்த்தர் என்னிடம் செய்யச் சொன்ன
படி இடுப்புத்துணியை மறைத்து வைத்தேன்.
6பல நாட்கள் கழிந்தது; கர்த்தர் என்னிடம்,
"இப்பொழுது எரேமியா! பேராத்துக்குப்
போ. நான் மறைத்து வைக்கச் சொன்ன
இடுப்புத்துணியை எடுத்துக்கொள்" என்று
சொன்னார்.
7எனவே, நான் பேராத்துக்குச் சென்று
இடுப்புத்துணியை தோண்டி எடுத்தேன்,
ஆனால், இப்பொழுது என்னால் அதனை
இடுப்பிலே கட்ட முடியவில்லை. ஏனென்
றால், அது மிகப் பழமையாகிப் போயிருந்
தது. அது எதற்கும் பயன்படும் அளவில்
நன்றாயில்லை.
8பிறகு கர்த்தருடைய வார்த்தை என்னி
டம் வந்தது. 9இதுதான் கர்த்தர் என்னிடம்
சொன்னது: "இடுப்புத்துணி கெட்டுப்
போயிற்று, அதனை எதற்கும் பயன்படுத்த
முடியாது. இதைப்போலவே, எருசலேமிலும்
யூதாவிலும் உள்ள வீண்பெருமை கொண்ட

---

**பேராத்** எருசலேம் அருகிலுள்ள கிராமம் என்று கருதப்படுகிறது. யோசுவா 18:23ல் பென்யமீன் கோத்திரம் பெற்ற ஊர்களில் ஒன்று. பேரேதாத் என்பதற்கு ஐப்பிநராத் நதி என்றும் அர்த்தமாகும்.

*ஜனங்களை அழிப்பேன். 10யூதாவிலுள்ள
வீண் பெருமையும், தீமையும் கொண்ட
ஜனங்களை, நான் அழிப்பேன். அவர்கள்
எனது வார்த்தையைக் கேட்க மறுத்தனர்.
அவர்கள் பிடிவாதமுள்ளவர்களாக விரும்பு
கின்றவற்றை மட்டுமே செய்தனர். அவர்கள்
அந்நிய தெய்வங்களைப் பின்பற்றி தொழுது
கொண்டனர். யூதாவிலுள்ள அந்த ஜனங்கள்
இந்தச் சணல் இடுப்புத்துணியைப் போன்று
ஆவார்கள். அவர்கள் அழிக்கப்பட்டு எதற்
கும் பயனற்றுப் போவார்கள். 11ஒரு இடுப்
புத்துணியை ஒரு மனிதன் இடுப்பைச்சுற்றி
இறுக்கமாக கட்டுகிறான். இதைப்போலவே
நான் என்னைச் சுற்றிலும் இஸ்ரவேல்
குடும்பத்தையும் யூதாவின் குடும்பத்தையும்
கட்டினேன்" என்று கர்த்தர் சொல்லுகிறார்.
"நான் அதைச் செய்தேன். எனவே, அந்த
ஜனங்கள் என் ஜனங்களாவார்கள் பிறகு,
எனது ஜனங்கள் கணமும் துதியும் மகிமை
யும் எனக்குக் கொண்டு வருவார்கள்.
ஆனால் எனது ஜனங்கள் என்னைக் கவனிக்
கவில்லை."*

### யூதாவிற்கு எச்சரிக்கை

*12"எரேமியா! யூதாவின் ஜனங்களிடம்
சொல்: 'இதுதான் கர்த்தர், இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தர் சொல்கிறது: ஒவ்வொரு
திராட்சை ஜாடிகளும், திராட்சைரசத்தால்
நிரப்பப்பட வேண்டும்' அந்த ஜனங்கள்
சிரிப்பார்கள். உன்னிடம், 'நிச்சயமாக, ஒவ்
வொரு திராட்சை ஜாடியும், திராட்சை
ரசத்தால் தான் நிரப்பப்பட வேண்டும்
என்று எங்களுக்குத் தெரியும்' என்பார்கள்.
13பிறகு நீ அவர்களிடம், இதுதான் கர்த்தர்
சொல்வது. இந்த நாட்டில் வாழ்கிற ஒவ்
வொரு மனிதனையும் குடிகாரனைப்
போன்று உதவியற்றவனாகச் செய்வேன்.
நான் தாவீதின் சிங்காசனத்தில் அமர்ந்தி
ருக்கிற அரசர்களைப்பற்றி பேசிக்கொண்டி
ருக்கிறேன். நான் ஆசாரியர்கள், தீர்க்கதரிசி
கள் மற்றும் எருசலேமில் வாழும் அனைத்து
ஜனங்களையும் பற்றி பேசிக்கொண்டிருக்கி
றேன். 14நான் யூதாவின் ஜனங்களை ஒருவர்
மீது ஒருவர் மோதி விழும்படி பண்ணுவேன்.
தந்தைகளும் மகன்களும் ஒருவர் மேல்
ஒருவர் விழுவார்கள்" என்று கூறுவாய்.
என்று கர்த்தர் சொல்லுகிறார். "'நான்
அவர்களுக்காக வருத்தமோ இரக்கமோ
அடைவது இல்லை. நான் யூதாவின் ஜனங்
களை அழிப்பதிலிருந்து நிறுத்த, இரக்கத்தை
அனுமதிக்கமாட்டேன்.'"
15கேள் உன் கவனத்தைச் செலுத்து.
கர்த்தர் உன்னோடு பேசியிருக்கிறார். வீண்
பெருமை கொள்ளாதே.
16உனது தேவனாகிய கர்த்தரை மகிமைப்
படுத்து, அவரைத் துதி. இல்லையெனில்
அவர் இருளைக் கொண்டுவருவார். இரு
ளான குன்றுகளின்மேல் விழுமுன், அவ
ரைத் துதி. இல்லாவிட்டால் யூதாவின்
ஜனங்களாகிய நீங்கள் ஒளிக்காக எதிர்
பார்த்து காத்துக்கொண்டிருக்கிறீர்கள்.
ஆனால், கர்த்தர் அடர்த்தியான இருளைக்
கொண்டு வருவார். கர்த்தர் ஒளியை மிக
அடர்த்தியான இருளாக மாற்றி விடுவார்.
17யூதாவின் ஜனங்களாகிய நீங்கள் கர்த்தர்
கூறுவதைக் கேட்காவிட்டால், உங்களது
வீண்பெருமை எனது அழுகைக்குக் கார
ணம் ஆகும். நான் என் முகத்தை மறைத்து
மிகக்கடுமையாக அழுவேன். எனது கண்கள்
கண்ணீரால் நிரம்பும், ஏனென்றால், கர்த்த
ருடைய மந்தை* சிறைப்பிடிக்கப்படும்.
18அரசனிடமும் அவனது மனைவியிட
மும் இவற்றைக்கூறு: "உங்களது சிங்காச
னங்களில் இருந்து இறங்கி வாருங்கள்,
உங்களது அழகான கிரீடங்கள் உம் தலை
களிலிருந்து விழுந்திருக்கிறது."
19நெகேவ் வனாந்தரத்தின்* நகரங்கள்
பூட்டப்பட்டுவிட்டன. எவராலும் அவற்
றைத் திறக்க முடியாது. யூதாவிலுள்ள
அனைத்து ஜனங்களும் சிறைபிடிக்கப்பட்டு
அவர்களைக் கைதிகளாகவெளியே கொண்டு
சென்றனர்.
20எருசலேமே! பார். பகைவன்வடக்கிலி
ருந்து வந்துகொண்டிருக்கிறான். உனது
மந்தை எங்கே? தேவன் உனக்கு அந்த
அழகிய மந்தையைக் கொடுத்தார். நீங்கள்
அந்த மந்தையைக் கவனித்துக்கொள்ள
வேண்டியவர்கள்.
21அந்த மந்தையை குறித்து கணக்கு
சொல்லவேண்டுமென்று கர்த்தர் கேட்டால்,
நீங்கள் என்ன சொல்லுவீர்கள்? நீங்கள்
ஜனங்களுக்குக் தேவனைப்பற்றி கற்பிக்க
வேண்டியவர்கள். உங்கள் தலைவர்கள்
ஜனங்களை வழிநடத்திச்செல்ல வேண்டிய
வர்கள். ஆனால், அவர்கள் தங்கள் வேலை
யைச் செய்யவில்லை. எனவே உங்களுக்கு
மிகுதியான துன்பங்களும் கஷ்டங்களும்
இருக்கும். நீங்கள் குழந்தையைப் பிரச
விக்கும் பெண்ணைப்போன்று இருப்பீர்கள்.
22நீங்கள் உங்களுக்குள்ளேயே கேட்கலாம்.
"ஏன் எனக்கு இத்தீமைகள் ஏற்பட்டன?"
அவை, உங்களது பல பாவங்களாலேயே
ஏற்பட்டன. உங்களது பாவங்களால் உங்கள்
உள்ளாடைகள் கிழிக்கப்பட்டன. உங்களது
பாதரட்சைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன.
அவர்கள் உங்களை அவமானப் படுத்துவதற்
காக இவற்றைச் செய்தனர்.
23ஒரு கறுப்பு மனிதன் தனது தோலின்
நிறத்தை மாற்றிக்கொள்ள முடியாது. ஒரு
சிறுத்தை தனது புள்ளிகளை மாற்றிக்
கொள்ள முடியாது. இதைப்போலவே, எருச
லேமே, நீயும் உன்னை மாற்றி நன்மை*

---

**கர்த்தருடைய மந்தை** *யூதா ஜனங்கள்.*

**நெகேவ் வனாந்தரம்** *யூதா இராஜ்யத்தின் தென் பகுதி.*

செய்ய முடியாது. நீ எப்போதும் தீமையே
செய்கிறாய்.
**24**“உங்களது வீட்டை விட்டு விலகும்படி
நான் உங்களைக் கட்டாயப் படுத்துவேன்.
நீங்கள் எல்லா திசைகளிலும் ஓடுவீர்கள்.
நீங்கள் வனாந்தரக்காற்றால் பறக்கடிக்கப்
படும் துரும்பைப் போன்றிருப்பீர்கள்.
**25**இக்காரியங்கள் எல்லாம் உங்களுக்கு
ஏற்படும். எனது திட்டங்களில் இதுவே
உங்கள் பங்கு” என்று கர்த்தர் சொல்லு
கிறார். “இது ஏன் நிகழும்? ஏனென்றால்,
நீ என்னை மறந்தாய். பொய்த் தெய்வங்க
ளிடம் நம்பிக்கை வைத்தாய்.
**26**எருசலேமே! நான் உனது உள்ளா
டையை உன் முகத்தின்மேல் போடுவேன்.
ஒவ்வொருவரும் உன்னைப் பார்ப்பார்கள்.
நீ அவமானம் அடைவாய்.
**27**நீ செய்த பயங்கரமான செயல்களை
எல்லாம் நான் பார்த்தேன். நீ சிரித்ததைப்
பார்த்தேன். உனது நேசர்களுடன் நீ
கொண்ட பாலின உறவுகளையும் பார்த்
தேன். நீ ஒரு வேசியைப்போன்று, போட்டுக்
கொண்ட திட்டங்களை நான் அறிவேன்.
மலைகளின் மேலும், வயல்களிலும் நான்
உன்னைப் பார்த்திருக்கிறேன். எருசலேமே,
இது உனக்கு கெட்டதாக இருக்கும். நீ
இன்னும் எவ்வளவு காலத்திற்கு உனது
தீட்டான பாவங்களைத் தொடர்ந்து செய்து
கொண்டிருப்பாய் என நான் யோசிக்
கிறேன்.”

### வறட்சியும், கள்ளத் தீர்க்கதரிசிகளும்

**14** வறட்சிப் பற்றி எரேமியாவிற்கு வந்த
கர்த்தருடைய வார்த்தை இது:
**2**“யூதா நாடு மரித்துப்போன ஜனங்களுக்
காக அழுகிறது. யூதா நகரங்களில் உள்ள
ஜனங்கள், மேலும், மேலும், பலவீனர்களா
கிக்கொண்டிருக்கிறார்கள். அந்த ஜனங்கள்
தரையிலே கிடக்கிறார்கள். எருசலேமிலுள்ள
ஜனங்கள் உதவிக்காகத் தேவனிடம் அழுகி
றார்கள்.
**3**ஜனங்களின் தலைவர்கள், வேலைக்காரர்
களை நீர் கொண்டு வருவதற்காக அனுப்பி
னார்கள், வேலையாட்கள் நீர் தேக்கிவைத்தி
ருக்கும் இடங்களுக்குச் சென்றனர். அங்கே
எந்த தண்ணீரையும் கண்டு கொள்ள
வில்லை. வேலைக்காரர்கள் காலி ஜாடிக
ளோடு திரும்பி வருவார்கள். எனவே
அவர்கள், அவமானமும், சங்கடமும் அடை
கின்றனர். அவர்கள அவமானத்தால் தங்கள்
தலையைமூடிக் கொள்ளுகின்றனர்.
**4**எவரும் பயிர் செய்ய பூமியைத்தயார்
செய்வதில்லை. தரையில் மழை ஏதும்
விழவில்லை. விவசாயிகள் வெட்கப்படுகி
றார்கள். எனவே, அவர்கள் வெட்கத்தால்
தலைகளைமூடிக் கொள்கிறார்கள்.
**5**நிலத்தில் இருக்கும் தாய்மான் கூட
புதிதாகப் பிறந்த குட்டியை தனியாக
விட்டுவிட்டுப் போய் விடும். அங்கே புல்
இல்லாததால் அது அவ்வாறு செய்கிறது.
**6**காட்டுக் கழுதைகள் மொட்டைப்பா
றைகள் மீது நிற்கும். அது ஓநாய்களைப்
போன்று காற்றை உட்கொள்ளுகின்றன.
ஆனால், அவற்றின் கண்கள் எந்த உணவை
யும் கண்டுகொள்ள முடியவில்லை. ஏனென்
றால், அங்கே தின்ன எந்தச் செடிகளும்
இல்லை.”

### உதவிக்காக தேவனிடம் ஒரு ஜெபம்

**7**அவற்றுக்கு எங்கள் குற்றங்களே கார
ணம் என்பது எங்களுக்குத் தெரியும்; நமது
பாவங்களால் நாம் இப்போது கஷ்டப் பட்டுக்
கொண்டிருக்கிறோம். கர்த்தாவே, உமது
நாமத்தின் நன்மைக்காக எங்களுக்கு உதவ
ஏதாவதுச் செய்யும். நாங்கள் உம்மை
விட்டுப் பலமுறை போனோம். நாங்கள்
உமக்கு எதிராகப் பாவம்செய்தோம் என்
பதை நாங்கள் ஒப்புக்கொள்கிறோம்.
**8**தேவனே, நீரே இஸ்ரவேலின் நம்பிக்கை
ஆவீர்! துன்பக் காலங்களில் இஸ்ரவேலர்
களை நீர் காப்பாற்றுகிறீர். ஆனால், இப்
போது நீர் இந்த நாட்டில் அந்நியனைப்
போன்று இருக்கிறீர். ஒருநாள் இரவு மட்டும்
தங்குகிற பயணியைப்போன்று நீர் இருக்
கிறீர்.
**9**ஆச்சரியத்தால் தாக்கப்பட்ட ஒரு மனித
னைப்போன்று நீர் தோன்றுகிறீர். எவரொரு
வரையும் காப்பாற்ற முடியாத, ஒரு போர்
வீரனைப் போன்று நீர் காட்சி தருகிறீர்.
கர்த்தாவே! நீர் எங்களோடு இருக்கிறீர்.
நாங்கள் உமது நாமத்தால் அழைக்கப்படு
கிறோம். எனவே உதவி இல்லாமல் எங்
களை விட்டுவிடாதிரும்!”

### யூதாவிற்கான கர்த்தருடையச் செய்தி

**10**யூதாவின் ஜனங்களைப்பற்றி கர்த்தர்
சொன்னது இதுதான்: “யூதாவின் ஜனங்கள்
உண்மையில் என்னை விட்டுவிலக விரும்பி
னார்கள். அந்த ஜனங்கள் என்னை விட்டு
விலகுவதை நிறுத்திக் கொள்ளவில்லை.
எனவே, இப்பொழுது, கர்த்தர் அவர்களை
ஏற்றுக்கொள்ள மாட்டார். இப்போது அவர்
கள் செய்த தீயச் செயல்களைக் கர்த்தர்
நினைப்பார். அவர்களது பாவங்களுக்காகக்
கர்த்தர் அவர்களைத் தண்டிப்பார்.” **11**பிறகு
கர்த்தர் என்னிடம், “எரேமியா! யூதாவின்
ஜனங்களுக்கு நற்காரியங்கள் ஏற்பட
வேண்டும் என்று என்னிடம் ஜெபம் செய்
யாதே. **12**யூதாவின் ஜனங்கள் உபவாச
மிருந்து என்னிடம் ஜெபிக்கத் தொடங்கு
வார்கள். ஆனால், நான் அவர்களது ஜெபத்
தைக் கேட்கமாட்டேன். அவர்கள் எனக்கு
தகன பலிகளையும் தானியக் காணிக்கை
களையும் கொடுத்தாலும் நான் அந்த
ஜனங்களை ஏற்பதில்லை. நான் யூதாவின்

ஜனங்களைப் போரில் அழிக்கப்போகிறேன்.
நான் அவர்களின் உணவை எடுத்துக்
கொள்வேன். யூதாவின் ஜனங்கள் மரணம்
வரை முழு பட்டினியாக இருப்பார்கள்.
நான் அவர்களைப் பயங்கரமான நோய்க
ளால் அழிப்பேன்” என்றார்.
13 ஆனால் நான் கர்த்தரிடம் கூறினேன்,
“எனது கர்த்தராகிய ஆண்டவரே, தீர்க்கதரி
சிகள் ஜனங்களிடம் சில வித்தியாசமான
வற்றைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்,
அவர்கள் யூதாவின் ஜனங்களிடம், ‘பகைவ
னின் வாளால் நீங்கள் துன்பப்பட மாட்டீர்
கள். நீங்கள் பசியாலும் துன்பப்படமாட்டீர்
கள். இந்த நாட்டில் கர்த்தர் உங்களுக்குச்
சமாதானத்தைக் கொடுப்பார்.’”
14 பிறகு, கர்த்தர் என்னிடம், “எரேமியா,
அந்தத் தீர்க்கதரிசிகள் எனது நாமத்தால்
பொய்களைப் பரப்புகிறார்கள். அந்தத் தீர்க்க
தரிசிகளை நான் அனுப்பவில்லை. நான்
அவர்களுக்குக் கட்டளைக் கொடுக்கவோ
அவர்களோடு பேசவோ இல்லை. அந்தத்
தீர்க்கதரிசிகள், பொய்ச் சாட்சிகளையும்,
பயனற்ற மந்திரங்களையும், சொந்த ஆசை
களையும் பரப்பியிருக்கிறார்கள். 15 எனவே,
நான் இதைத்தான் என் நாமத்தால் பிரச்சாரம்
செய்துகொண்டிருப்பவர்களைப் பற்றிக்
கூறுவது, அத்தீர்க்கதரிசிகளை நான் அனுப்ப
வில்லை. அந்தத் தீர்க்கதரிசிகள் சொன்னார்
கள், ‘இந்த நாட்டைப் பகைவர்கள் எவரும்
வாளால் தாக்க மாட்டார்கள், இந்த நாட்டில்
எப்பொழுதும் பசி இருக்காது.’ அத்தீர்க்கத
ரிசிகள் பசியால் மரிப்பார்கள். பகைவரின்
வாள் அவர்களைக் கொல்லும். 16 அத்தீர்க்க
திரிசிகள் பேசுகிற ஜனங்களும் வீதிகளில்
எறியப்படுவார்கள். அந்த ஜனங்கள் பசியா
லும், பகைவரின் வாளாலும் மரிப்பார்கள்.
அந்த ஜனங்களையும் அவர்களது மனைவி
களையும், மகன்களையும், மகள்களையும்
புதைக்க எவரும் இருக்கமாட்டார்கள்.
அவர்கள் செய்த தீமையைக் கொண்டே
நான் அவர்களைத் தண்டிப்பேன்.
17 “எரேமியா, யூதாவின் ஜனங்களிடம்
இச்செய்தியைக் கூறு, ‘எனது கண்கள்
கண்ணீரால் நிரம்பியுள்ளன. நான் இரவும்
பகலும் நிறுத்தாமல் அழுவேன். நான்
எனது மகளான கன்னிக்கு* அழுவேன்.
நான் எனது ஜனங்களுக்காக அழுவேன்.
ஏனென்றால், யாரோ ஒருவர் அவர்களைத்
தாக்குவர், அவர்களை நசுக்குவர், அவர்கள்
மிக மோசமாகக் காயப்படுவார்கள்.
18 நான் நாட்டிற்குள் போனால் வாள்களால்
கொல்லப்படுகிற ஜனங்களைக் காண்பேன்.
நான் நகரத்திற்குள் போனால், நான் மிகுதி
யான நோயைப் பார்ப்பேன். ஏனென்றால்,
ஜனங்களுக்கு உணவு இல்லை, ஆசாரியர்க
ளும், தீர்க்கதரிசிகளும் ஒரு அந்நியதேசத்
திற்கு எடுத்துக்கொண்டு போகப்பட்டனர்’”
என்றார்.
19 கர்த்தாவே, யூதா நாட்டை நீர் முழு
மையாக ஒதுக்கி விட்டீரா? கர்த்தரே நீர்
சீயோனை வெறுக்கிறீரா? நாங்கள் மீண்டும்
குணம் அடைய முடியாதபடி நீர் எங்களை
பலமாகத் தாக்கியுள்ளீர். ஏன் அதனைச்
செய்தீர்? நாங்கள் சமாதானத்தை எதிர்பார்த்
துக் கொண்டிருந்தோம். ஆனால் நன்மை
எதுவும் வரவில்லை. குணமாவதற்குரிய
காலத்தை நாங்கள் நம்பிக்கொண்டிருக்கி
றோம். ஆனால் பயங்கரமே வருகிறது.
20 கர்த்தாவே! நாங்கள் தீயவர்கள் என்பது
எங்களுக்குத் தெரியும், எங்கள் முற்
பிதாக்களும் தீமையைச் செய்தார்கள் என்
பதை நாங்கள் அறிவோம், ஆம், உமக்கு
எதிராக நாங்கள் பாவம் செய்தோம்.
21 கர்த்தாவே உமது நாமத்திற்கு நன்மைக்
காக, எங்களை வெளியே தள்ளாதிரும்.
உமது மகிமையின் சிங்காசனத்திலிருந்து
மேன்மையை விலக்காதிரும். எங்களோடு
உள்ள உடன்படிக்கையை நினையும். அந்த
உடன்படிக்கையை உடைக்க வேண்டாம்.
22 அயல்நாட்டு விக்கிரகங்களுக்கு மழை
யைகொண்டு வரும் வல்லமை கிடையாது.
வானத்திற்கு மழையைப் பொழியச் செய்யும்
அதிகாரம் இல்லை. நீரே எங்களது ஒரே
நம்பிக்கை, நீர் ஒருவரே இவை அனைத்தை
யும் செய்தவர்.”

15 கர்த்தர் என்னிடம், “எரேமியா இப்
பொழுது மோசேயும் சாமுவேலும்
இருந்து யூதாவின் ஜனங்களுக்காக ஜெபம்
செய்தாலும் நான் இந்த ஜனங்களுக்காக
இரக்கப்படுவதில்லை. என்னைவிட்டு யூத
ஜனங்களை தூர அனுப்பு, அவர்களைப்
போகும்படி சொல். 2 அந்த ஜனங்கள் உன்
னைக் கேட்கலாம், ‘நாங்கள் எங்கே
போவோம்?’ என்று நீ அவர்களுக்கு இத
னைச் சொல். என்றார். இதுதான் கர்த்தர்
சொன்னது:
‘சில ஜனங்களை மரிப்பதற்குத் தேர்ந்
தெடுத்திருக்கிறேன், அந்த ஜனங்கள் மரிப்
பார்கள், சில ஜனங்களை வாளால் கொல்வ
தற்காகத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். அந்த
ஜனங்கள் வாளால் கொல்லப்படுவார்கள்.
நான் சில ஜனங்களை பசியால் மரிக்க
தேர்ந்தெடுத்திருக்கிறேன். அந்த ஜனங்கள்
பசியால் மரிப்பார்கள். நான் சில ஜனங்
களைச் சிறை பிடிக்கப்பட்டு அந்நியநாட்டிற்
குக் கொண்டு போகத் தேர்ந்தெடுத்தி
ருக்கிறேன். அவர்கள் அந்நியநாடுகளில்
கைதி களாக இருப்பார்கள்
3 நான் அவர்களுக்கு எதிராக நான்கு
வகை அழிவு சக்திகளை அனுப்புவேன்
’இந்தச் செய்தி கர்த்தரிடமிருந்து வருகி றது.
‘நான் எதிரியை ஒரு வாளோடு
கொல்வதற்கு அனுப்புவேன். நான் நாய்

---

**கன்னிமகள்** எருசலேம்.

களை அவர்களது உடல்களை வெளியே
இழுத்துவர அனுப்புவேன். நான் வானத்து
பறவைகளையும், காட்டு மிருகங்களையும்
அவர்களது உடல்களைத் உண்ணவும்
அழிக்கவும் அனுப்புவேன்.
4நான் யூதாவின் ஜனங்களை பூமியிலுள்ள
அனைத்து ஜனங்களுக்கும் ஒரு பயங்கரமான
செயலுக்கான உதாரணமாகச் செய்வேன்.
நான் இதனை யூதா ஜனங்களுக்காகச் செய்
வேன். ஏனென்றால், மனாசே எருசலேமில்
செய்ததுதான். மனாசே எசேக்கியா அரச
னின் மகன். மனாசே யூதாவின் அரசன்.'
5"உனக்காக எவனும் வருத்தப்படமாட்
டான். எருசலேம் நகரமே, எவனும் உனக்
காக பரிதாபப்படவோ அழவோ மாட்டான்.
எவனும் 'நீ எப்படி இருக்கிறாய்?' என்று
கேட்க தனது வழியிலிருந்து திரும்பிக்
கேட்கமாட்டான்!
6எருசலேமே, நீ என்னை விட்டு வில
கினாய்" இந்தச் செய்தி கர்த்தரிடமிருந்து
வருகிறது; "மீண்டும் மீண்டும் என்னை
விட்டு விலகினாய் எனவே, நான்
உன்னைத் தண்டித்து அழிப்பேன். நான்
உனது தண்டனையை நிறுத்தி
வைத்தேகளைத்துப் போனேன்.
7நான் எனது தூற்றுக் கட்டையால்
யூதா ஜனங்களைத் தனியாகப் பிரித்துப்
போடுவேன். நான் அவர்களை நகர
வாசல்களில் சிதறச் செய்வேன். எனது
ஜனங்கள் மாறவில்லை. எனவே, நான்
அவர்களை அழிப்பேன். நான் அவர்களது
பிள்ளைகளை வெளியே எடுப்பேன்.
8பல பெண்கள் தம் கணவனை இழப்பார்
கள். கடற்கரையில் உள்ள மணல்களை
விட விதவைகள் மிகுதியாக இருப்பார்கள்.
மதிய வேளையில் நான் அழிக்கிறவனை
அழைத்து வருவேன். யூதாவிலுள்ள
இளைஞர்களின் தாய்மார்களை அழிக்கிற
வன் தாக்குவான். நான் யூதா ஜனங்களுக்கு
துன்பத்தையும் பயத்தையும் கொண்டு
வருவேன். மிகவிரைவில் இது நிகழுமாறு
நான் செய்வேன்.
9எதிரி தன் வாள்களால் தாக்கி ஜனங்க
ளைக் கொல்வான். யூதாவிலுள்ள மீதியிருப்
பவர்களை அவர்கள் கொல்வார்கள். ஒரு
பெண்ணுக்கு ஏழு மகன்கள் இருக்கலாம்.
ஆனாலும் அவர்கள் மரித்துப்போவார்கள்.
அவள் பலவீனமாகி மூச்சு விடமுடியாத
நிலை அடையும்வரை அழுவாள். அவள்
திகைப்பும் குழப்பமும் அடைவாள். அவளது
ஒளிமயமான பகல் துன்பமான இருட்டா
கும்."

### எரேமியா மீண்டும் தேவனிடம் முறையிடுகிறான்

10தாயே! நீ எனக்கு பிறப்பைக் கொடுத்த
தற்காக நான் (எரேமியா) வருந்துகிறேன்.
தேசத்துக்கெல்லாம் வாதும் வழக்கும் உள்ள
வனாக நான் இருக்கிறேன். நான் கடன்
கொடுத்ததுமில்லை, கடன் வாங்கியது
மில்லை. ஆனால் ஒவ்வொருவனும் என்னை
சபிக்கிறான்.
11உண்மையாக கர்த்தாவே, நான் உனக்கு
நன்கு தொண்டு செய்துள்ளேன். நெருக்கடி
நேரத்தில் என் பகைவர்களைக்குறிந்து உன்
னிடம் ஜெபம் செய்தேன்.

### தேவன் எரேமியாவிற்குப் பதிலளிக்கிறார்

12"எரேமியா எவராலும் ஒரு இரும்
புத்துண்டைக்கூட உடைக்க முடியாது என்
பதை நீ அறிவாய். வடக்கிலிருந்து வருகிற
அந்த விதமான இரும்பைக் குறித்து நான்
குறிப்பிடுகிறேன். எவராலும் ஒரு வெண்
கலத் துண்டையும் உடைக்க முடியாது.
13யூதாவின் ஜனங்களுக்குப் பலபொக்கி
ஷங்கள் உள்ளன. நான் அவற்றை மற்ற
ஜனங்களுக்குக் கொடுப்பேன். அந்த மற்ற
வர்கள் அச்செல்வத்தை விலைக்கு வாங்க
வேண்டாம். நான் அவர்களுக்கு அச்செல்வத்
தைக் கொடுப்பேன். ஏனென்றால் யூதாவிடம்
பல பாவங்கள் உள்ளன. யூதாவின் ஒவ்
வொரு பகுதியிலும் ஜனங்கள் பாவம்
செய்தனர்.
14யூதாவின் ஜனங்களே! நான் உங்களை
உமது பகைவர்களின் அடிமைகளாக்குவேன்.
நீங்கள் எப்போதும் அறிந்திராத நாடுகளில்
அடிமைகளாக இருப்பீர்கள். நான் மிகக்
கோபமாக இருக்கிறேன். எனது கோபம்
சூடான நெருப்புபோல் உள்ளது. நீ எரிக்கப்
படுவாய்."
15கர்த்தாவே! நீர் என்னை அறிவீர்.
என்னை நினைவில் வைத்துள்ளீர். என்
னைக் கவனித்துக்கொள்வீர். ஜனங்கள் என்
னைப் புண்படுத்துகிறார்கள். அந்த ஜனங்
களுக்கு ஏற்ற தண்டனையை அவர்களுக்கு
கொடும். நீர் ஜனங்களோடு பொறுமையாக
இருக்கிறீர். நீர் அவர்களுடன் பொறுமையாக
இருப்பதால் என்னை அழித்து விடாதேயும்.
என்னை நினைத்துப் பாரும். கர்த்தாவே
நான் உமக்காக அடைந்தவலியை எண்ணிப்
பாரும்.
16உமது செய்தி எனக்கு வந்தது. நான்
உமது வார்த்தைகளை உண்டேன். உமது
செய்தி என்னை மகிழ்ச்சிக்குள்ளாக்கிற்று.
நான் உமது நாமத்தால் அழைக்கப்படுவதில்
மகிழ்ந்தேன். உமது நாமம் சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர்.
17நான் சிரிப்பும் வேடிக்கையும் செய்கிற
கூட்டத்தில் ஒருபோதும் இருந்ததில்லை.
உமது நோக்கம் என்மேல் இருப்பதால் நான்
எப்போதும் தனியாகவே இருக்கிறேன்.
என்னைச் சுற்றிலும் தீமை நடக்கும்போது,
நீர் என்னைக் கோபத்தால் நிரப்பினீர்.
18நான் ஏன் இன்னும் காயப்படுத்தப்படுகி
றேன்? என்று எனக்குப் புரியவில்லை.
எனது காயங்கள் ஏன் இன்னும் குணமாக

வில்லை? அல்லது குணப்படுத்த முடிய
வில்லை? என்பது எனக்குப் புரியவில்லை.
கர்த்தாவே! நீர் மாறியிருக்கிறீர் என நினைக்
கிறேன். நீர் ஊற்று வறண்டு போனதுபோல
இருக்கிறீர். நீர் ஊற்று ஒன்று நின்று
விட்டதுபோல இருக்கிறீர்.
19பிறகு, கர்த்தர், "எரேமியா, நீ மாறி
என்னிடம் திரும்பிவந்தால், பிறகு நான்
உன்னைத் தண்டிக்க மாட்டேன். நீ மாறி
என்னிடம் திரும்பிவந்தால், நீ எனக்குச்
சேவை செய்யலாம். நீ பயனற்ற வார்த்தை
களைப் பேசாமல், முக்கியமானவற்றைப்
பற்றி பேசினால் பின் நீ எனக்காகப்
பேசமுடியும். யூதாவின் ஜனங்கள் மாறி
உன்னிடம் திரும்பி வருவார்கள். ஆனால்
நீ மாறி அவர்களைப் போல் இருக்க
வேண்டாம்.
20நான் உன்னைப் பலமுள்ளவனாகச் செய்
வேன். அந்த ஜனங்கள் உன்னை பலமுடைய
வர்களாக, வெண்கலத்தாலான சுவறைப்
போன்று எண்ணுவார்கள். யூதாவின்
ஜனங்கன் உனக்கு எதிராகப் போரிடுவார்
கள். ஆனால்? அவர்கள் உன்னைத் தோற்க
டிக்கமாட்டார்கள். ஏனென்றால், நான் உன்
னோடு இருக்கிறேன். நான் உனக்கு உதவு
வேன். நான் உன்னைக் காப்பாற்றுவேன்"
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
21"நான் உன்னை அத்தீய ஜனங்
களிடமிருந்து காப்பாற்றுவேன். அந்த ஜனங்
கள் உன்னை பயப்படுத்துவார்கள். ஆனால்
நான் உன்னை அவர்களிடமிருந்து காப்
பேன்."

## அழிவு நாள்

16 கர்த்தருடைய செய்தி எனக்கு வந்தது:
2"எரேமியா. நீ திருமணம் செய்து
கொள்ள கூடாது. இந்த இடத்தில் உனக்கு
மகன்களோ, மகள்களோ இருக்க வேண்
டாம்."
3கர்த்தர், யூதா நாட்டில் பிறந்த மகன்
களையும் மகள்களையும் பற்றி இவ்வாறு
சொன்னார். அப்பிள்ளைகளின் தாய்களைப்
பற்றியும், தந்தைகளைப் பற்றியும் கர்த்தர்
சொன்னது இதுதான்: 4"அந்த ஜனங்கள்
ஒரு பயங்கரமான மரணத்தை அடைவார்
கள். அந்த ஜனங்களுக்காக எவரும் அழமாட்
டார்கள். அவர்களை எவரும் புதைக்க
மாட்டார்கள். அவர்களது உடல்கள் தரை
யில் எருவைப் போன்று கிடக்கும். அந்த
ஜனங்கள் பகைவரின் வாளால் மரிப்பார்கள்.
அவர்கள் பஞ்சத்தால் மரிப்பார்கள். அவர்
களது மரித்த உடல்கள், வானத்துப் பறவைக
ளுக்கும் காட்டு மிருகங்களுக்கும் உணவா
கும்."
5எனவே கர்த்தர், "எரேமியா, மரண
உணவு உண்ணும் வீட்டிற்குள் செல்ல
வேண்டாம். மரித்தவர்களுக்காக அழவும்
உனது சோகத்தைக் காட்டவும் நீ போக
வேண்டாம். நீ இவற்றை செய்ய வேண்டாம்.
ஏனென்றால், நான் எனது ஆசீர்வாதத்தைத்
திரும்ப எடுத்துகொண்டிருக்கிறேன். நான்
யூதாவின் ஜனங்களிடம் இரக்கமாக இருக்க
மாட்டேன். நான் அவர்களுக்காக வருத்தப்
படமாட்டேன்" என்று கர்த்தர் சொல்லு
கிறார்.
6"யூதா நாட்டிலுள்ள முக்கிய ஜனங்களும்
பொது ஜனங்களும் மரிப்பார்கள். அந்த
ஜனங்களை எவரும் புதைக்க மாட்டார்கள்;
அவர்களுக்காக அழவும் மாட்டார்கள். அந்த
ஜனங்களுக்காக வருத்தம் தெரிவிக்கும்படி
எவரும் தம்மைத்தாமே வெட்டிக்கொள்
ளவோ, தலையை மொட்டையடித்துக்
கொள்ளவோ மாட்டார்கள். 7மரித்தவர்களுக்
காக அழுகிறவர்களுக்கு எவரும் உணவு
கொண்டுவர மாட்டார்கள். தம் தாயையோ
தந்தையையோ இழந்தவர்களுக்கு எவரும்
ஆறுதல் சொல்லமாட்டார்கள். மரித்தவர்க
ளுக்காக அழுகின்றவர்களுக்கு எவரும் குடிக்
கவும் கொடுக்கமாட்டார்கள்.
8"எரேமியா, விருந்து நடக்கும் வீடுகளுக்
குள் நீ போகாதே. அந்த வீடுகளுக்குப் போய்
உட்கார்ந்து உண்ணவோ குடிக்கவோ
செய்யாதே. 9நமது இஸ்ரவேலின் சர்வ
வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர் இவற்
றைக் கூறுகிறார்: 'களியாட்டு மனிதரின்
சத்தத்தை விரைவில் நிறுத்துவேன்.திருமண
விருந்துகளில் எழுப்பப்படும் மகிழ்ச்சி
ஒலிகளை விரைவில் நான் நிறுத்துவேன்.
உமது வாழ்நாளில் இவை நடைபெறும்.
நான் விரைவில் இவற்றைச் செய்வேன்.'
10"எரேமியா, யூதாவின் ஜனங்களிடம்
நீ இவற்றைக் கூறு. ஜனங்கள் உன்னிடம்
கேட்பார்கள், 'கர்த்தர் எங்களுக்கு ஏன்
இத்தகைய பயங்கரமானவற்றைச் சொன்
னார்? நாங்கள் என்ன தவறு செய்தோம்?
எங்கள் தேவனாகிய கர்த்தருக்கு எதிராக
நாங்கள் என்ன பாவம் செய்தோம்?' 11நீ
அந்த ஜனங்களிடம் இவற்றையெல்லாம்
சொல்ல வேண்டும், 'உங்கள் முற்பிதாக்க
ளால், பயங்கரமானவை உங்களுக்கு ஏற்
படும் ஏனென்றால், அவர்கள் என்னைப்
பின்பற்றுவதை விட்டுவிட்டனர்' என்று
கர்த்தர் சொல்லுகிறார். 'அவர்கள் என்னைப்
பின்பற்றுவதை விட்டு, அந்நிய தெய்வங்
களுக்குச் சேவை செய்யத் தொடங்கினார்
கள். அவர்கள் அந்த அந்நிய தெய்வங்களைத்
தொழுதுகொண்டனர். உங்கள் முற்பிதாக்கள்
என்னைவிட்டு விலகினார்கள். எனது
சட்டங்களுக்கு அடிபணிய மறுத்தனர்.
12ஆனால் நீங்களோ உங்கள் முற்பிதாக்களை
விட மோசமான பாவம் செய்திருக் கிறீர்கள்.
நீங்கள் மிகவும் பிடிவாதமானவர்கள் நீங்கள்
விரும்புவதையே செய்து கொண்டிருக்கிறீர்
கள். நீங்கள் எனக்கு கீழ்ப்படிகிறதில்லை.
நீங்கள் செய்ய விரும்புவதை மட்டுமே

*செய்கிறீர்கள். [13]எனவே, நான் உங்களை
இந்த நாட்டுக்கு வெளியே எறிவேன். உங்
களை அயல்நாடுகளுக்குப் போகும்படி
கட்டாயப்படுத்துவேன். நீங் களும் உங்கள்
முற்பிதாக்களும், அறிந்திராத நாட்டிற்குப்
போவீர்கள். அந்த நாட்டில் நீங்கள் விரும்பும்
அந்நிய தெய்வங்களை இரவும் பகலும்
சேவிப்பீர்கள். நான் உங்க ளுக்கு உதவியோ
நன்மையோ செய்ய மாட்டேன்.’*
[14]*“ஜனங்கள் வாக்குறுதிச் செய்கிறார்கள்,
‘கர்த்தர் உயிரோடு இருப்பது எவ்வளவு
உறுதியோ அவ்வளவு, கர்த்தர் ஒருவரே
எகிப்து நாட்டுக்கு வெளியே இஸ்ரவேல்
ஜனங்களை அழைத்து வந்தார்’ என்பார்கள்.
ஆனால் காலம் வந்துகொண்டிருக்கிறது”
என்று கர்த்தர் சொல்லுகிறார். “அந்தச்
செய்திகளை ஜனங்கள் சொல்லமாட்டார்கள்,*
[15]*ஜனங்கள் புதியவற்றைச் சொல்வார்கள்.
அவர்கள், ‘கர்த்தர் உயிரோடு இருப்பது
எவ்வளவு உறுதியோ அவ்வளவு அவர்
ஒருவரே வட நாடுகளுக்கு வெளியே இஸ்ர
வேல் ஜனங்களை அழைத்து வந்தார்.
அவர்களை அவர் அனுப்பியிருந்த
அனைத்து நாடுகளிலிருந்தும் வெளியே
அழைத்து வந்தார்’ என்றனர். ஏன் ஜனங்கள்
இவற்றைச் சொல்வார்கள்? ஏனென்றால்,
நான் இஸ்ரவேல் ஜனங்களை அவர்களது
முற்பிதாக்களுக்குக் கொடுத்த நாட்டிற்குத்
திரும்ப அழைத்து வருவேன்.*
[16]*“நான் விரைவில் பல மீன் பிடிப்பவர்
களை இந்த நாட்டிற்கு வரும்படி அனுப்பு
வேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
“அந்த மீனவர்கள் யூதாவின் ஜனங்களைப்
பிடிப்பார்கள். அது நிகழ்ந்த பிறகு, இந்த
நாட்டுக்கு சில வேட்டைக்காரர்களை அனுப்
புவேன். அந்த வேட்டைக்காரர்கள் ஒவ்
வொரு மலையிலும், குன்றிலும், பாறை
பிளவுகளிலும், யூதா ஜனங்களை வேட்டை
யாடுவர். [17]அவர்கள் செய்து கொண்டிருக்கிற
அனைத்தையும் நான் பார்க்கிறேன். யூதா
ஜனங்கள் தாம் செய்கின்றவற்றை என்னிடம்
மறைக்க முடியாது. அவர்களது பாவம்
என்னிடம் மறைக்கப்படாமல் போகும்.*
[18]*நான் யூதா ஜனங்களுக்கு அவர்கள் செய்கி
ன்றவற்றுக்குத் திருப்பிக் கொடுப்பேன்.
அவர்களது ஒவ்வொரு பாவத்திற்கும் நான்
இருமடங்கு தண்டிப்பேன். நான் இதனைச்
செய்வேன். ஏனென்றால், அவர்கள் எனது
நாட்டை அருவருப்பான விக்கிரகங்களால்
‘தீட்டு’ ஆக்கி விட்டனர். நான் அந்த
விக்கிரகங்களை வெறுக்கிறேன். ஆனால்
அவர்கள் எனது நாட்டை அந்த விக்கிரகங்க
ளால் நிறைத்து விட்டனர்.”*

### தேவனிடம் ஒரு ஜெபம்

[19]*கர்த்தாவே, நீரே எனது பலமும் காவ
லும்! நீரே துன்பக்காலத்தில் நான் ஓடி
வரத்தக்கப் பாதுகாப்பான இடம். உலகம்
முழுவதிலுமிருந்து நாடுகள் உம்மிடம் வரும்.
அவர்கள், “எங்கள் தந்தையர்கள் அந்நிய
தெய்வங்களை வைத்திருந்தனர். அவர்கள்
அந்தப் பயனற்ற விக்கிரகங்களை தொழுது
கொண்டனர். ஆனால் அந்த விக்கிரகங்கள்
அவர்களுக்குக் கொஞ்சமும் உதவவில்லை”
என்பார்கள்.*
[20]*ஜனங்கள் உண்மையான தெய்வங்களை
தங்களுக்கென உருவாக்க முடியுமா?
இல்லை! அவர்கள் சிலைகளைச் செய்து
கொள்ளலாம். ஆனால் அச்சிலைகள் உண்
மையில் தெய்வங்கள் இல்லை.*
[21]*கர்த்தர், “எனவே, விக்கிரகங்களை உரு
வாக்கும் அவர்களுக்கு நான் பாடம் கற்
பிப்பேன். இப்போது நான் அவர்களுக்கு
எனது அதிகாரம் மற்றும் பலம் பற்றி
கற்பிப்பேன். பிறகு, அவர்கள் நானே தேவன்
என்பதை அறிந்துகொள்வார்கள். நானே
கர்த்தர் என்பதை அவர்கள் அறிந்துகொள்
வார்கள்” என்று கூறுகிறார்.*

### இதயத்தில் எழுதப்பட்ட குற்றம்

17 *“யூதா ஜனங்களின் பாவம், அவர்க
ளால் அழிக்க முடியாத இடத்தில்
எழுதப்பட்டிருக்கிறது. அந்தப் பாவங்கள்
இரும்பு எழுத்தாணியால் கல்லில் வெட்டப்
பட்டுள்ளது. அவர்களின் பாவங்கள் வைர
முனையிலுள்ள எழுத்தாணியால் கல்லில்
வெட்டப்பட்டுள்ளன. அந்தக் கல்தான்
அவர்களது இதயம். அப்பாவங்கள் அவர்
களது பலிபீடங்களில் உள்ள கொம்புகளில்
வெட்டப்பட்டுள்ளன.*
[2]*அவர்களின் பிள்ளைகள் அஷேரா**
*தேவதைக்காக அர்ப்பணிக்கப்பட்ட பலி
பீடங்களை நினைவுகொள்வார்கள். அவர்
கள் அஷேராவிற்குச் சமர்ப்பிக்கப்பட்ட மரத்
தூண்களை நினைத்துகொள்கிறார்கள். அவர்
கள் பச்சை மரங்களுக்குக் கீழேயும், பாறைக
ளுக்கு மேலேயும் உள்ள பீடங்களை நினைத்
துகொள்கிறார்கள்.*
[3]*சிறந்த நாடுகளில் உள்ள மலைகளில்
மேலே உள்ளவற்றை அவர்கள் நினைக்கி
றார்கள். யூதாவின் ஜனங்களுக்கு பல கரு
வூலங்கள் உள்ளன. நான் மற்ற ஜனங்களுக்கு
அவற்றைக் கொடுப்பேன். ஜனங்கள், உங்கள்
நாட்டிலுள்ள அனைத்து மேடைகளையும்
அழிப்பார்கள். நீங்கள் அந்த இடங்களில்
சிலைகளைத் தொழுதுகொண்டீர்கள். அது
ஒரு பாவம்.*
[4]*நான் கொடுத்த நாட்டை நீங்கள்
இழப்பீர்கள். உங்கள் பகைவர்கள் உங்களை
சிறைபிடிக்க நான் அனுமதிப்பேன். நீங்கள்
அறியாத தேசத்தில் அவர்களது அடிமை
களாக இருப்பீர்கள். ஏனென்றால், நான்*

---

**அஷேரா** *கானானியரின் பொய்த் தேவதை. பாகாலின் மனைவியாக ஜனங்கள் கருதினார்கள்.*

*கோபத்தோடு இருக்கிறேன். எனது கோபம் சூடான நெருப்பைப் போன்றது. நீங்கள் என்றென்றும் எரிக்கப்படுவீர்கள்."*

## ஜனங்களிடம் நம்பிக்கை மற்றும் தேவனிடம் நம்பிக்கை

5 *கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்: "மற்ற ஜனங்கள் மீது மட்டும் நம்பிக்கை வைக்கின்றவர்களுக்கு தீமை ஏற்படும். மற்ற ஜனங்களை பலத்துக்காகச் சார்ந்திருக்கிறவர்களுக்குத் தீமை ஏற்படும். ஏனென்றால், அந்த ஜனங்கள் கர்த்தருடைய மீது நம்பிக்கை வைப்பதை நிறுத்தினார்கள்.*
6 *அந்த ஜனங்கள் வனாந்தரத்திலே உள்ள புதரைப் போன்றவர்கள். அப்புதர் ஜனங்களே வாழாத வனாந்தரத்திலே உள்ளது. அப்புதர் வெப்பமும் வறட்சியும் உள்ள பூமியில் உள்ளது. அப்புதர் கெட்ட மண்ணில் உள்ளது. அப்புதர் தேவனால் தர முடிகிற நல்லவற்றைப்பற்றி அறியாதது.*
7 *ஆனால், கர்த்தருக்குள் நம்பிக்கை வைக்கிறவன் ஆசீர்வதிக்கப்படுவான். ஏனென்றால், கர்த்தர் நம்பத்தகுந்தவர் என்பதை காட்டுவார்.*
8 *அந்த மனிதன் தண்ணீர்க் கரையில் நடப்பட்ட மரத்தைப் போன்றபலத்தோடு இருப்பான். அந்த மரம் தண்ணீரைக் கண்டு கொள்கிறவேர்களை உடையதாக இருக்கும். அந்த மரம் கோடைகாலம் வரும்போது உளர்ந்துபோவதில்லை. அதன் இலைகள் எப்போதும் பசுமையாக இருக்கும். மழை பெய்யாத ஆண்டுகளில் அது கவலைப்படுவதில்லை. அந்த மரம் எப்பொழுதும் பழங்களை உற்பத்தி செய்யும்.*
9 *"ஒருவனின் இருதயம் மிகவும் தந்திரமானது! இருதயம் மிகவும் சுகவீனம் அடையக் கூடும். உண்மையில் எவரும் ஒருவனின் இருதயத்தை புரிந்துகொள்வதில்லை.*
10 *ஆனால், நானே கர்த்தர். என்னால் ஒருவனின் இருதயத்தைப் பார்க்க முடியும். நான் ஒருவனின் மனதைச் சோதிக்க முடியும். ஒவ்வொருவனிடமும் என்ன இருக்கிறது என்பதை என்னால் முடிவு செய்ய முடியும். என்னால், ஒவ்வொருவருக்கும் அவர்களின் செயல்களுக்கு ஏற்ப சரியான கூலியைக் கொடுக்க முடியும்.*
11 *சில நேரங்களில் ஒரு பறவை தான் இடாத முட்டையைக் குஞ்சு பொரிக்க வைக்கும். ஏமாற்றி பொருள் சம்பாதிக்கிற ஒவ்வொரு இப்பறவையைப் போன்றவன். அவனது வாழ்க்கை பாதியில் இருக்கும் போதே அவன் அப்பணத்தை இழப்பான். அவனது வாழ்வின் இறுதியில், அவன் ஒரு முட்டாளாக இருந்தான் என்பது தெளிவாகும்."*
12 *தொடக்கத்திலிருந்தே, தேவனுக்கு நமது ஆலயமே மகிமையான சிங்காசனமாக இருந்தது. இது மிக முக்கியமான இடமாகும்.*
13 *கர்த்தாவே, இஸ்ரவேலர்களின் நம்பிக்கையே நீர்தான். கர்த்தாவே, நீர் ஜீவனுள்ள தண்ணீரின் ஊற்றைப் போன்றவர். ஒருவன் கர்த்தரைப் பின்பற்றுவதை நிறுத்தினால் அவன் இகழப்பட்டு அவனது வாழ்வு குறுகியதாக்கப்படும்.*

## எரேமியாவின் மூன்றாவது முறையீடு

14 *கர்த்தாவே, நீர் என்னைக் குணப்படுத்தினால் நான் உண்மையில் சுகமாவேன். என்னைக் காப்பாற்றும், நான் உண்மையில் காப்பாற்றப்படுவேன். கர்த்தாவே, நான் உம்மைத் துதிக்கிறேன்!*
15 *யூதாவின் ஜனங்கள் என்னிடம் தொடர்ந்து கேள்விகளைக் கேட்கிறார்கள். அவர்கள் "எரேமியா, கர்த்தரிடமிருந்து வந்த செய்தி என்ன? அச்செய்தி எப்பொழுது நிறைவேறும்?" என்கின்றனர்.*
16 *கர்த்தாவே, நான் உம்மை விட்டு ஓடிப்போகவில்லை. நான் உம்மைப் பின்தொடர்ந்தேன். நீர் விரும்புகிற மேய்ப்பனாக நான் இருந்தேன். ஒரு பயங்கரமான நாள் வருவதை நான் விரும்பவில்லை. கர்த்தாவே, நான் சொன்னவற்றை நீர் அறிவீர். எல்லாம் நிகழ்ந்துகொண்டிருப்பதை நீர் பார்க்கிறீர்.*
17 *கர்த்தாவே, என்னை அழித்து விடாதீர். துன்பக்காலத்தில் நான் உம்மை நம்பியிருக்கிறேன்.*
18 *ஜனங்கள் என்னைக் கொடுமைப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அந்த ஜனங்களை அவமானப்படும்படி செய்யும். என்னை மனந்தளர விடாதீர். அந்த ஜனங்களை பயப்படச் செய்யும். ஆனால் என்னை பயப்படச் செய்யாதிரும். எனது பகைவர்களுக்கு அந்தப் பயங்கரமான நாளை வரப் பண்ணும். அவர்களை உடையும், அவர்களை மீண்டும் உடையும்.*

## ஓய்வு நாளைப் பரிசுத்தப்படுத்தல்

19 *கர்த்தர் என்னிடம் இவற்றைச் சொன்னார்; "எரேமியா, யூதாவின் அரசர்கள் வந்துபோகிற எருசலேமின் ஜனங்கள் வாசலுக்குப்போய் நில். எனது வார்த்தையை ஜனங்களிடம் கூறு. பிறகு எருசலேமின் மற்ற வாசல்களுக்கும் போ. அதே செயலைச் செய்.*
20 *"அந்த ஜனங்களிடம் சொல்: 'கர்த்தருடைய செய்தியைக் கேளுங்கள்! யூதாவின் அரசர்களே, கேளுங்கள்! யூதாவின் ஜனங்களே, கேளுங்கள்! இந்த வாசல்கள் வழியாக எருசலேமிற்குள் வருகின்ற ஜனங்களே,*
*என்னைக் கவனியுங்கள்!* 21 *கர்த்தர் இவற்றைச் சொல்கிறார்; ஓய்வுநாளில் சுமைகளைத் தூக்கிச் செல்லாதபடிக்கு எச்சரிக்கையாக இருங்கள். ஓய்வுநாளில் எருசலேமின் வாசல்கள் வழியாகச் சுமையைத் தூக்கி*

வராதீர்கள். 22 ஓய்வுநாளில் உங்கள் வீட்டுக்கு
வெளியே சுமையைத் தூக்கி வராதீர்கள்.
அந்த நாளில் எந்த வேலையும் செய்யா
தீர்கள். நீங்கள் ஓய்வுநாளை ஒரு பரிசுத்த
நாளாக்க வேண்டும். நான் இதே
கட்டளையை உங்கள் முற்பிதாக்களுக்குக்
கொடுத்தேன். 23 ஆனால் உங்கள் முற்பிதாக்
கள் எனக்குக் கீழ்ப்படியவில்லை. அவர்கள்
என் மீது கவனம் செலுத்தவில்லை. உங்கள்
முற்பிதாக்கள் மிகவும் பிடிவாதமாக இருந்
தார்கள். நான் அவர்களைத் தண்டித்தேன்.
ஆனால் அது அவர்களுக்கு எவ்வித நன்மை
யையும் செய்யவில்லை. அவர்கள் என்
னைக் கவனிக்கவில்லை. 24 ஆனால் நீங்கள்
எனக்குக் கீழ்ப்படிவதில் எச்சரிக்கையாக
இருக்கவேண்டும்.” இந்த வார்த்தை கர்த்த
ரிடமிருந்து வருகிறது. “‘ஓய்வுநாளில் நீங்கள்
எருசலேமின் வாசல்கள் வழியாக சுமை
யைக் கொண்டு வராதீர்கள். நீங்கள் ஓய்வு
நாளைப் பரிசுத்தமாக வேண்டும். அந்நாளில்
எவ்வித வேலையும் செய்யாமல் இருப்பதே
ஓய்வுநாளை பரிசுத்தமான நாளாக வைப்ப
தாகும்.
25 “நீங்கள் இந்தக் கட்டளைக்கு அடிபணிந்
தால், பிறகு தாவீதின் சிங்காசனத்தில்
அமர்ந்திருக்கிற அரசர்கள் எருசலேமின்
வாசல்கள் வழியாக வருவார்கள். அந்த
அரசர்கள் இரதங்களின் மீதும் குதிரைகள்
மீதும் வருவார்கள். அந்த அரசர்களோடு
யூதாவின் மற்றும் எருசலேமின் தலைவர்கள்
இருப்பார்கள். எருசலேம் நகரம் என்றென்
றும் ஜனங்கள் வாழும் இடமாகும்! 26 யூதா
வின் நகரங்களில் இருந்து ஜனங்கள் எருச
லேமிற்கு வருவார்கள். எருசலேமிற்கு
அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலிருந்து
ஜனங்கள் வருவார்கள். பென்யமீன் கோத்தி
ரங்களில் உள்ளவர்கள் வாழும் நகரங்க
ளிலிருந்து ஜனங்கள் வருவார்கள். மேற்கு
மலை அடிவாரங்களிலிருந்தும், மலை நாடு
களிலிருந்தும் ஜனங்கள் வருவார்கள்.
நெகேவ்விலிருந்தும் ஜனங்கள் வருவார்கள்.
அந்த ஜனங்கள் எல்லோரும் தகன பலி
களையும் தானியக் காணிக்கைகளையும்
நறுமணப் பொருட்களையும், ஸ்தோத்திர
பலிகளையும் கொண்டு வருவார்கள். கர்த்த
ருடைய ஆலயத்திற்கு அவர்கள் இந்தப்
பலிகளையும் காணிக்கைகளையும் கொண்டு
வருவார்கள்.
27 “ஆனால்,நீங்கள் என்னைக் கவனிக்காம
லும் அடிபணியாமலும் இருந்தால் பிறகு
தீயவை நிகழும். ஓய்வுநாளில் நீங்கள் எரு
சலேமிற்குள் சுமைகளைக் கொண்டு வந்தால்
பின் நீங்கள் அந்நாளைப் பரிசுத்தப்படுத்த
வில்லை. எனவே, உங்களால் அணைக்க
முடியாத ஒரு தீயை பற்றவைப்பேன். எருச
லேமின் வாசலிலிருந்து அந்த நெருப்பு
தொடங்கும். அது அரண்மனைகள் வரை
பற்றி எரியும்.”

## குயவனும் களிமண்ணும்

18 இந்தச் வார்த்தை எரேமியாவிற்குக்
கர்த்தரிடமிருந்து வந்தது: 2 “எரேமியா,
குயவனின் வீட்டிற்குப் போ. அந்தக் குயவ
னின் வீட்டில் எனது வார்த்தையை உனக்
குக் கொடுப்பேன்.”
3 எனவே, நான் கீழே குயவனின்
வீட்டிற்குப் போனேன். குயவன் சக்கரத்தில்
களிமண்ணை வைத்து வேலை செய்து
கொண்டிருப்பதை நான் பார்த்தேன். 4 அவன்
களிமண்ணிலிருந்து ஒரு பானையை செய்து
கொண்டிருந்தான். ஆனால் அந்தப் பானை
யில் ஏதோ தவறு இருந்தது. எனவே,
அந்தக் குயவன் அக்களிமண்ணை மீண்டும்
பயன்படுத்தி வேறொரு பானை செய்தான்.
தான் விரும்பின வகையில் அந்தப் பானை
யை வடிவமைக்கும்படி அவன் தனது
கைகளைப் பயன்படுத்தினான்.

5 அப்போது கர்த்தரிடமிருந்து எனக்கு
வார்த்தை வந்தது; 6 “இஸ்ரவேல் குடும்பத்தி
னரே! உங்களோடு தேவனாகிய நானும்
அதே செயலைச் செய்யமுடியும் என்பது
உங்களுக்குத் தெரியும். குயவனின் கைகளில்
இருக்கிற களிமண்ணைப் போன்று நீங்கள்
இருக்கிறீர்கள். நான் குயவனைப் போன்றுள்
ளேன். 7 ஒரு காலம் வரும். அப்போது, நான்
ஒரு தேசத்தையோ அல்லது ஒரு
அரசாட்சியையோ குறித்து பேசுவேன்.
அத்தேசத்தை உயர்த்துவேன் என்று நான்
சொல்லலாம். அத்தேசத்தைக் கீழே இழுத்துப்
போடுவேன். அத்தேசத்தை அல்லது அர
சாங்கத்தை அழிப்பேன் என்று சொல்லலாம்.
8 ஆனால், அத்தேசத்து ஜனங்கள் தங்கள்
இதயத்தையும் வாழ்க்கையையும் மாற்றலாம்.
அத்தேசத்து ஜனங்கள் தங்கள் தீயச் செயல்
களை நிறுத்தலாம். பிறகு என் மனதை
நான் மாற்றுவேன். அத்தேசத்திற்கு அழி
வைக் கொண்டுவரும் எனது திட்டத்தை
நான் பின்பற்ற மாட்டேன். 9 இன்னொரு
காலம் வரலாம். அப்போது ஒரு தேசத்தைப்
பற்றிப் பேசுவேன். நான் அத்தேசத்தைக்
கட்டி எழுப்புவேன் என்று சொல்லலாம்.
10 ஆனால், அத்தேசம் தீயவற்றைச் செய்து
எனக்குக் கீழ்ப்படியாமல் போவதை நான்
பார்க்கலாம். பிறகு, நான் அத்தேசத்திற்கு
நன்மை செய்ய வேண்டும் என்று போட்டி
ருந்த திட்டங்களுக்காக வருந்தி அவற்றை
எதிராக மாற்றிப்போடுவேன்.
11 “எனவே, எரேமியா, யூதாவின் ஜனங்
களிடமும் எருசலேமில் வாழ்கிற ஜனங்
களிடமும் கூறு. ‘இது தான் கர்த்தர் கூறு
வது: நான் இப்போதிருந்தே உங்களுக்குத்
தொல்லைகளை தயாரித்துக் கொண்டிருக்கி
றேன். நான் உங்களுக்கு எதிராகத் திட்ட
மிட்டுக்கொண்டிருக்கிறேன். எனவே, நீங்
கள் செய்துகொண்டிருக்கிற தீயச் செயல்
களை நிறுத்துங்கள். ஒவ்வொரு நபரும்

மாற வேண்டும், நல்லவற்றைச் செய்யத் தொடங்க வேண்டும்!’ 12ஆனால் யூதாவின் ஜனங்கள் பதில் கூறுவார்கள், ‘மாற்றம் செய்வதற்கான முயற்சி எடுப்பதால் பயனில்லை. நாங்கள் விரும்புகிறபடியே தொடர்ந்து செய்வோம். எங்களில் ஒவ்வொருவரும் தங்கள் பிடிவாதத்தின்படியே தீய இருதயம் விரும்புகிறபடியே செய்யப் போகிறோம்,’”

13கர்த்தர் சொல்கிறவற்றைக்கவனியுங்கள். “மற்ற தேசத்தாரிடம் இந்தக் கேள்வியைக் கேளுங்கள். ‘இஸ்ரவேல் செய்திருக்கிற தீயச் செயல்களை எவராவது செய்ததாக நீங்கள் எப்பொழுதாவது கேள்விபட்டிருக்கிறீர்களா?’ தேவனுக்கு இஸ்ரவேலர் சிறப்புக்குரியவர்கள். இஸ்ரவேலர் தேவனுடைய மணமகளைப்போன்றவள்!

14லீபனோனில் உள்ள மலை உச்சியில் படிந்த பனி உருகுவதில்லை என்பது உங்களுக்குத் தெரியும். குளிர்ச்சியாக பாய்கின்ற நீரோடைகள் வறண்டு விடுவதில்லை என்பது உங்களுக்கு தெரியும்.

15ஆனால் எனது ஜனங்கள் என்னைப் மறந்திருக்கிறார்கள். பயனற்ற விக்கிரகங்களுக்கு அவர்கள் பலிகளைக் கொடுக்கிறார்கள். எனது ஜனங்கள் தாம் செய்கின்றவற்றில் தடுமாற்றமாக இருக்கிறார்கள். அவர்களின் தடுமாற்றம் தமது முற்பிதாக்களின் பழைய வழிகளைப் பற்றியதாக உள்ளது. எனது ஜனங்கள் என்னைப் பின்பற்றி நல்ல சாலைகளில் வருவதைவிட, பின் சாலைகளிலும் மோசமான நெடும் பாதைகளிலும் நடப்பார்கள்.

16எனவே, யூதாவின் நாடு காலியான வனாந்தரம் போன்றதாகும். அதைக் கடந்து செல்லும் ஜனங்கள் பிரமித்து தங்கள் தலைகளை அசைப்பார்கள். இந்நாடு எவ்வாறு அழிக்கப்பட்டது என்று அதிர்ச்சி அடைவார்கள்.

17நான் யூதாவின் ஜனங்களைச்சிதறும்படி செய்வேன். அவர்கள் பகைவர்களிடமிருந்து ஓடிப் போவார்கள். கிழக்குக் காற்று பொருட்களைச் சிதறடிப்பதுபோன்று நான் யூதா ஜனங்களைச் சிதறடிப்பேன். நான் அந்த ஜனங்களை அழிப்பேன் நான் அவர்களுக்கு உதவி செய்ய வருவதைப்பார்க்க மாட்டார்கள். இல்லை நான் விலகிச் செல்வதை அவர்கள் பார்ப்பார்கள்.”

## எரேமியாவின் நான்காவது முறையீடு

18பிறகு, எரேமியாவின் பகைவர்கள் சொன்னார்கள், “வாருங்கள் எரேமியாவிற்கு எதிராகத் திட்டங்கள் தீட்ட எங்களை அனுமதியுங்கள். ஆசாரியரால் இயற்றப்படும் சட்டம் பற்றிய போதனைகள் தொலைந்து போகாது. ஞானமுள்ள மனிதரின் ஆலோசனைகள் நம்மோடு கூட இருக்கும். தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளை நாம் இன்னும் வைத்திருப்போம். எனவே அவனைப்பற்றி பொய் சொல்ல எங்களை விடுங்கள். அது அவனை அழிக்கும். அவன் சொல்லுகிற எதையும் நாங்கள் கவனிக்கமாட்டோம்.”

19கர்த்தாவே என்னைக் கேட்டருளும்! என் வாதங்களைக் கேளும் யார் சரியானவர் என்பதை முடிவு செய்யும்.

20ஜனங்கள் நன்மைக்கு தீமையை செய்வார்களா? இல்லை. நீர் அவர்களை தண்டிக்கக்கூடாது என்பதற்காக நான் உம்முன் நின்று அவர்களைப்பற்றி நல்ல காரியங்களை கூறியதை நினைவுகூரும். ஆனால், அவர்கள் எனக்குத் தீமையைச்செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் என்னை வலைக்குட்படுத்தி கொல்ல முயற்சி செய்கிறார்கள்.

21அவர்களது பிள்ளைகள் பஞ்சத்தால் துன்புறும்படிச் செய்யும். அவர்களின் பகைவர்களால் அவர்கள் கொல்லப்படும்படிச் செய்யும். அவர்களது மனைவிகள், குழந்தைகள் இழந்துபோகட்டும். யூதாவின் ஆண்கள் மரணத்தில் விழட்டும். அவர்களது மனைவியர் விதவைகள் ஆகட்டும். யூதாவில் உள்ள ஆண்கள் மரணத்தில் விழட்டும். இளைஞர்கள் போரில் கொல்லப்படட்டும்.

22அவர்களது வீடுகளில் அழுகை வரட்டும். அவர்களுக்கு எதிராகத் திடீரென்று எதிரியை வரவழைக்கும்போது அவர்கள் கதறட்டும். எனது பகைவர்கள் என்னை (வலைக்குள்) சிக்கவைக்க முயன்றனர். எனவே, இவையெல்லாம் நிகழட்டும்.

23கர்த்தாவே, அவர்கள் என்னைக் கொல்வதற்குயிட்ட திட்டங்களை நீர் அறிவீர். அவர்களது பொல்லாங்குகளை மன்னியாதிரும். அவர்களது பாவங்களை அழிக்காதிரும். எனது பகைவர்கள் உமக்கு முன்பாக இடறி விழட்டும். நீர் கோபமாக இருக்கும் போது அந்த ஜனங்களைத் தண்டியும்.

## உடைந்த ஜாடி

19 கர்த்தர் என்னிடம், “எரேமியா போய் ஒரு குயவனிடமிருந்து மண்ஜாடியை வாங்கிவா. 2உடைந்த பானைத் துண்டுகளை எரியும் வாசலுக்கு முன்னாலுள்ள பென் இன்னோமுடைய பள்ளத்தாக்குக்குப் போ. உன்னோடு ஜனங்களில் சில மூப்பர்களையும், சில ஆசாரியர்களையும் அழைத்துப் போ என்று சொன்னார். நான் சொல்கிறவற்றை 3உன்னோடு இருக்கிற அந்த ஜனங்களிடம் சொல், ‘யூதாவின் அரசனே, எருசலேமின் ஜனங்களே, கர்த்தரிடமிருந்து வருகிற இந்த வார்த்தையைக் கேளுங்கள்! இதுதான் சர்வ வல்லமையுள்ள கர்த்தரும் இஸ்ரவேல் ஜனங்களின் தேவனுமானவர் கூறுவது: நான் இந்த இடத்தில் விரைவில் ஒரு பயங்கரத்தை நிகழச்செய்வேன். இதைப் பற்றி கேள்விப்படுகிற ஒவ்வொருவனும்

அதிர்ச்சியும் அச்சமும் அடைவான். 4நான்
இவற்றைச் செய்வேன். ஏனென்றால் யூதா
வின் ஜனங்கள் என்னைப் பின்பற்றுவதை
விட்டுவிட்டனர். அவர்கள் இந்த இடத்தை
அயல்நாட்டுத் தெய்வங்களுக்கு உரியதாகச்
செய்துவிட்டனர். அவர்கள் இந்த இடத்தில்
வேறு தெய்வங்களுக்குத் தகனபலிகளை
அளித்தனர். நீண்ட காலத்திற்கு முன்பு
அந்தத் தெய்வங்களைத் தொழுதுகொள்ள
வில்லை. அவர்களின் முற்பிதாக்களும்
அத்தெய்வங்களைத் தொழுதுகொள்ளவில்
லை. இவை அந்நிய நாடுகளிலிருந்து வந்தப்
புதிய தெய்வங்கள். யூதாவின் அரசர்கள்
ஒன்றுமறியாத குழந்தைகளின் இரத்தத்தால்
இந்த இடத்தை நிரப்புகிறார்கள். 5யூதாவின்
அரசர்கள் பாகால் தேவனுக்காக மேடை
யைக் கட்டினார்கள். அவர்கள் அந்த
இடங்களைத் தங்கள் மகன்களை எரிக்கப்
பயன்படுத்தினார்கள். பாகால் தெய்வத்
திற்குத் தங்கள் மகன்களைத் தகனபலியாகக்
கொடுத்தனர். நான் அவ்வாறு செய்யும்படி
சொல்லவில்லை. உங்கள் மகன்களைப் பலி
யாகக் கொடுக்கும்படி நான் கேட்கவில்லை.
நான் அதைப்பற்றி நினைத்துக்கூடப் பார்க்க
வில்லை. 6இப்பொழுது, ஜனங்கள் இந்த
இடத்தை இன்னோமின் பள்ளத்தாக்கு
என்றும் 'தோப்பேத்' என்றும் அழைக்கின்ற
னர். ஆனால், நான் இந்த எச்சரிக்கையைக்
கொடுக்கிறேன். நாட்கள் வந்துகொண்டிருக்
கின்றன. இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து
வருகிறது: ஜனங்கள் இந்த இடத்தை
'கொலையின் பள்ளத்தாக்கு' என்று அழைக்
கும் நாள் வருகிறது. 7இந்த இடத்தில்,
யூதா மற்றும் எருசலேம் ஜனங்களின்
திட்டங்களை நாசமாக்குவேன். பகைவர்கள்
இந்த ஜனங்களைத் துரத்துவார்கள். இந்த
இடத்தில் யூதாவின் ஜனங்கள் வாளால்
கொல்லப்படுமாறு விடுவேன். அவர்களது
மரித்த உடல்களைப் பறவைகளுக்கும் காட்டு
மிருகங்களுக்கும் உணவாக்குவேன். 8இந்நக
ரத்தை நான் முழுமையாக அழிப்பேன்.
ஜனங்கள் எருசலேமைக் கடந்துபோகும்
போது பிரமித்து, தலையை அசைப்பார்கள்.
இந்நகரம் எவ்வாறு அழிக்கப்பட்டது என்
பதை அறியும்போது, அவர்கள் அதிர்ச்சி
அடைவார்கள். 9பகைவர்கள் நகரத்தைச்சுற்றி
தம் படைகளை அழைத்து வருவார்கள்.
அப்படை ஜனங்கள் வெளியே சென்று
உணவு பெறுவதை அனுமதிக்காது. எனவே,
நகரத்தில் உள்ள ஜனங்கள் பட்டினியாக
இருப்பார்கள். அவர்கள் தம் சொந்த மகன்
கள் மற்றும் மகள்களின் உடலை உண்ணும்
அளவிற்குப் பசியை அடைவார்கள். அவர்
கள் ஒருவரை ஒருவர் உண்ணத் தொடங்
குவார்கள்.'
10"எரேமியா, நீ இவற்றையெல்லாம் ஜனங்
களுக்குச் சொல். அவர்கள் கவனித்துக்
கொண்டிருக்கும்போது ஜாடியை உடைத்து
விடு. 11அப்போது இவற்றைச் சொல்; 'சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார், நான்
யூதா நாட்டையும் எருசலேமையும், ஒருவன்
மண்ஜாடியை உடைப்பது போன்று
உடைப்பேன். இந்த ஜாடியை மீண்டும்
பழையபடி ஆக்க முடியாது. யூதா
நாட்டுக்கும் இதுபோல் ஆகும். வேறு
இடமில்லை என்று சொல்லுகிற வரையில்
தோப்பேத்தில் மரித்த ஜனங்கள் புதைக்கப்
படுவார்கள்' இந்த வார்த்தை கர்த்தரிடம்
உள்ளது. 12இவைகளை நான் இந்த ஜனங்
களுக்கும் இந்த இடத்துக்கும் செய்வேன்.
இந்த நகரத்தை தோப்பேத்தைப் போலச்
செய்வேன்' இந்த வார்த்தை கர்த்தரிட
மிருந்து வருகிறது. 13'எருசலேமில் உள்ள
வீடுகள் தோப்பேத்தைப் போன்று "அசுத்த
மாகும்" அரசர்களின் அரண்மனைகள் தோப்
பேத்தைப் போன்று அழிக்கப்படும். ஏனென்
றால், அவ்வீடுகளின் கூறையில் பொய்த்
தெய்வங்களை வைத்துத் தொழுதுகொள்கி
றார்கள். அவர்கள் நட்சத்திரங்களைத் தொழு
துகொள்கின்றனர். அவர்களை மகிமைப்
படுத்தத் தகன பலிகளைக் கொடுக்கின்றனர்.
அவர்கள் பொய்த் தெய்வங்களுக்குப் பானங்
களின் காணிக்கை கொடுத்தனர்.'"
14பிறகு, எரேமியா தோப்பேத்தை விட்டு
கர்த்தர் பிரசங்கம் பண்ணுமாறு சொன்ன
இடத்துக்குச் சென்றான். எரேமியா கர்த்தரு
டைய ஆலயத்திற்குச் சென்று, ஆலயத்தின்
பிரகாரத்தில் நின்றான். எரேமியா அனைத்து
ஜனங்களிடமும் சொன்னான். 15"இதுதான்
சர்வ வல்லமையுள்ள இஸ்ரவேலரின் தேவ
னாகிய கர்த்தர் சொல்கிறது: 'நான் எருச
லேம் மற்றும் அதைச் சுற்றியுள்ள கிராமங்
களுக்கும் பேரழிவைக் கொண்டு வருவேன்
என்று சொன்னேன். நான் விரைவில்
அவை நிகழுமாறு செய்வேன். ஏனென்றால்,
ஜனங்கள் மிகவும் பிடிவாதமானவர்கள்,
அவர்கள் என்னைக் கவனிக்கவும், எனக்குக்
கீழ்ப்படியவும் மறுத்துவிட்டனர்.'"

### எரேமியா மற்றும் பஸ்கூர்

20 பஸ்கூர் என்ற பெயருள்ள ஒருவன்
ஆசாரியனாக இருந்தான். கர்த்தரு
டைய ஆலயத்தில் முக்கியமான அதிகாரி
யாக இருந்தான். பஸ்கூர், இம்மேர் என்ற
பெயருடையவனின் மகனாக இருந்தான்.
பஸ்கூர் எரேமியாவின் பிரசங்கத்தைக் ஆல
யப் பிரகாரத்தில் வைத்துக்கேட்டான்.
2எனவே அவன் எரேமியா தீர்க்கதரிசியை
அடித்தான். ஆலயத்தில் பென்யமீனின் மேல்
வாசலருகே அவனது கைகளிலும் கால்களி
லும் பெரிய மரத்தடிகளால் விலங்கிட்டான்.
3மறுநாள் பஸ்கூர் எரேமியாவை மரக்
காவலில் இருந்து வெளியேற்றினான். பிறகு
எரேமியா பஸ்கூரிடம் சொன்னான். "கர்த்த

ருக்கு உன் பெயர் பஸ்கூர் அல்ல. இப்போது
கர்த்தர் உனக்கு, ஒவ்வொரு பக்கத்திலும்
பயங்கரம் என்ற பெயரை வைத்துள்ளார்.
4அதுதான் உனது பெயர். ஏனென்றால்
கர்த்தர்: 'உனக்கு உன்னையே பயங்கரமான
வனாக விரைவில் செய்வேன்! நான்
உன்னை உனது அனைத்து நண்பர்களுக்கும்
ஒரு பயங்கரமாகச் செய்வேன். உனது
நண்பர்களை சத்துருக்கள் வாளால் கொல்லு
கிறதை நீ பார்ப்பாய். நான் யூதாவின்
அனைத்து ஜனங்களையும் பாபிலோன்
அரசனிடம் கொடுப்பேன். அவன் யூதாவின்
ஜனங்களை பாபிலோன் நாட்டுக்குக் கொண்
டுச் செல்வான். யூதாவின் ஜனங்களை
அவனது படை வாள்களால் கொல்வார்கள்.
5எருசலேம் ஜனங்கள் கடினமாக உழைத்து
செல்வம் சேர்த்தனர். ஆனால், நான் அவற்
றையெல்லாம் அவர்களது பகைவர்களுக்குக்
கொடுப்பேன். எருசலேமில் அரசனுக்குப்
பல பொக்கிஷங்கள் உள்ளன. ஆனால்
நான் அந்தப் பொக்கிஷங்கள் அனைத்தையும்
பகைவர்களுக்குக் கொடுப்பேன். பகைவர்கள்
அவற்றை எடுத்து பாபிலோன் நாட்டிற்குக்
கொண்டு செல்வார்கள். 6பஸ்கூர், நீயும்
உன்னோடு வீட்டில் உள்ள அனைவரும்
கொண்டு செல்லப்படுவீர்கள். நீங்கள் பலவந்
தமாகப் பாபிலோன் நாட்டில் வாழவைக்கப்
படுவீர்கள். நீ பாபிலோனில் மரிப்பாய்.
அந்த அயல்நாட்டில் நீ புதைக்கப்படுவாய்.
நீ உனது நண்பர்களுக்குப் பொய்யைப்
பிரச்சாரம் செய்தாய். நீ இவை நிகழாது
என்று சொன்னாய். ஆனால், உனது
அனைத்து நண்பர்களும் மரித்து பாபிலோ
னில் புதைக்கப்படுவார்கள்.'"

### எரேமியாவின் ஐந்தாவது முறையீடு

7கர்த்தாவே, நீர் என்னிடம் தந்திரம்
செய்தீர். நான் ஒரு முட்டாளாக இருந்தேன்.
நீர் என்னைவிட பலமுள்ளவர். எனவே
நீர் வென்றீர். நான் வேடிக்கைக்குரிய பொரு
ளானேன். ஜனங்கள் என்னைப் பார்த்து
சிரித்தனர். நாள் முழுவதும் என்னை
வேடிக்கை செய்தனர்.
8ஒவ்வொரு முறையும் நான் பேசும்போது
கதறுகிறேன். நான் எப்பொழுதும் வன்முறை
மற்றும் பேரழிவு பற்றி சத்தமிடுகிறேன். நான்
கர்த்தரிடமிருந்து பெற்ற வார்த்தையைப்
பற்றி ஜனங்களிடம் சொல்கிறேன். ஆனால்,
ஜனங்கள் என்னை அவமானப்படுத்துகி
றார்கள்; என்னை வேடிக்கை செய்கிறார்கள்.
9சில நேரங்களில் நான் எனக்குள்
சொல்கிறேன். "நான் கர்த்தரைப்பற்றி மறப்
பேன். நான் மேலும் கர்த்தருடைய நாமத்
தால் பேசமாட்டேன்!" ஆனால் நான் இத
னைச் சொன்னால், பிறகு கர்த்தருடைய
வார்த்தை அக்கினியைப்போன்று எனக்குள்
எரிந்துகொண்டு இருக்கிறது, எனது எலும்
புக்குள் அது ஆழமாக எரிவதுபோன்று
எனக்குத் தோன்றுகிறது! எனக்குள் கர்த்தரு
டைய செய்தியைத் தாங்கிக்கொள்வதில்
நான் சோர்வு அடைகிறேன்! இறுதியாக
அதனை உள்ளே வைத்துக்கொள்ள முடியா
மல் ஆகிறது.
10ஜனங்கள் எனக்கு எதிராக முணுமுணுப்
பதை நான் கேட்கிறேன். எங்கெங்கும்
என்னைப் பயப்படுத்தும் செய்தியைக் கேட்
கிறேன். என் நண்பர்களும் கூட, "அவனைப்
பற்றி அதிகாரிகளிடம் புகார் செய்வோம்"
என கூறிக் கொண்டிருக்கிறார்கள். ஜனங்கள்
நான் தவறு செய்வேன் என்று காத்திருக்
கிறார்கள். அவர்கள், "எங்களைப் பொய்
சொல்லவிடுங்கள். அவன் தீயவற்றைச் செய்
தான் என்று சொல்லவிடுங்கள். நாங்கள்
எரேமியாவிடம் தந்திரம்செய்ய முடியும்.
பிறகு அவனைப் பெறுவோம். இறுதியாக
நாங்கள் அவனைத் தொலைத்து ஒழிப்போம்.
பிறகு அவனை இறுகப்பிடிப்போம். அவன்
மேலுள்ள வஞ்சத்தை தீர்த்துக்கொள்வோம்"
என்றார்கள்.
11ஆனால், கர்த்தர் என்னோடு இருக்கிறார்;
கர்த்தர் பலமான போர் வீரனைப் போன்றி
ருக்கிறார். எனவே, என்னைத் துரத்துகிற
வீரர்கள் விழுவார்கள். அந்த ஜனங்கள்
என்னைத் தோற்கடிக்க மாட்டார்கள் அந்த
ஜனங்கள் தோற்பார்கள். அவர்கள் ஏமாந்து
போவார்கள். அந்த ஜனங்கள் அவமான
மடைவார்கள். ஜனங்கள் அந்த அவமா
னத்தை என்றென்றும் மறக்க மாட்டார்கள்.
12சர்வ வல்லமையுள்ள கர்த்தாவே, நீர்
நல்ல ஜனங்களைச் சோதிக்கிறீர். ஒருவனின்
மனதை நீர் பார்க்கிறீர். அந்த ஜனங்களுக்கு
எதிரான எனது வாதங்களை நான் உம்மி
டம் சொன்னேன். எனவே அவர்களுக்கு
ஏற்ற தண்டனையை நீர் அளிப்பதை என்
னைப் பார்க்கப் பண்ணும்
.13கர்த்தரிடம் பாடுங்கள்! கர்த்தரைத் துதி
யுங்கள்! கர்த்தர் ஏழைகளின் வாழ்வைக்
காப்பாற்றுவார்! அவர் அவர்களைத் தீய
வர்களிடமிருந்து காப்பாற்றுவார்!

### எரேமியாவின் ஆறாவது முறையீடு

14நான் பிறந்த நாள் சபிக்கப்படுவதாக!
என் தாய் என்னைப் பெற்ற நாளை
ஆசீர்வதிக்க வேண்டும்.
15நான் பிறந்துவிட்ட செய்தியை என்
தந்தையிடம் சொன்னவன் சபிக்கப்படட்டும்.
"உனக்கொரு மகன் பிறந்திருக்கிறான்,
அவன் ஒரு ஆண்பிள்ளை" என்று அவன்
சொன்னான். அவன் அந்தச் செய்தியைச்
சொல்லி என் தந்தையை மிகவும் மகிழச்
செய்தான்.
16கர்த்தர் அழித்துப்போட்ட பட்டணங்
களைப்போன்று அந்த மனிதன் ஆவானாக.
கர்த்தர் அந்தப் பட்டணங்கள் மீது எவ்வித

இரக்கமும் கொள்ளவில்லை. காலையில்
அம்மனிதன் போரின் ஒலிகளைக் கேட்கட்
டும். மதிய வேளையில் அவன் போர்க்க
தறல்களைக் கேட்கட்டும்.
17ஏனென்றால், நான் எனது தாயின்
கருவில் இருக்கும்போது அம்மனிதன் என்
னைக் கொல்லவில்லை. அந்த நேரத்தில்
அவன் என்னைக் கொன்றிருந்தால் என்
தாயின் கர்ப்பப்பையே கல்லறை ஆகியி
ருக்கும். நான் பிறந்திருக்கவே மாட்டேன்.
18நான் ஏன் அந்த உடலைவிட்டு வந்
தேன்? நான் பார்த்திருப்பதெல்லாம் தொல்
லையும் துன்பமும்தான். என் வாழ்க்கை
அவமானத்தில் முடியும்.

### தேவன் சிதேக்கியா ராஜாவின் வேண்டுகோளை ஏற்க மறுக்கிறார்

21 எரேமியாவிற்கு கர்த்தரிடமிருந்து
வார்த்தை வந்தது, யூதாவின் அரச
னான சிதேக்கியா பஸ்கூர் என்ற மனிதனை
யும், செப்பனியா என்ற ஆசாரியனையும்
எரேமியாவிடம் அனுப்பியபோது இந்த
வார்த்தை வந்தது. பஸ்கூர் மல்கியா என்ற
பெயருள்ளவனின் மகன். செப்பனியா,
மாசெயா என்ற பெயருள்ளவனின் மகன்.
பஸ்கூரும் செப்பனியாவும் எரேமியாவிற்கு
வார்த்தையைக் கொண்டுவந்தனர். 2பஸ்கூரும்
செப்பனியாவும் எரேமியாவிடம், "எங்களுக்
காகக் கர்த்தரிடம் ஜெபம் செய். என்ன
நிகழும் என்று கர்த்தரிடம் கேள். நாங்கள்
அறிந்துகொள்ள விரும்புகிறோம். ஏனென்
றால் பாபிலோனின் அரசனான நேபுகாத்
நேச்சர் எங்களைத் தாக்கி கொண்டிருக்கி
றான். கர்த்தர் கடந்த காலத்தில் செய்தது
போன்று எங்களுக்குப் பெருஞ்செயல்களை
ஒருவேளை செய்வார். நேபுகாத்நேச்சார்
எங்களைத் தாக்குவதை நிறுத்தி விலகும்படி
கர்த்தர் செய்வார்" என்றனர்.
3பிறகு எரேமியா, பஸ்கூருக்கும் செப்பனி
யாவிற்கும் பதில் சொன்னான். அவன்,
"சிதேக்கியா அரசனுக்குச் சொல்லுங்கள்.
4இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் சொல்
வது இது தான்: 'உங்கள் கைகளில்
போருக்கான ஆயுதங்கள் உள்ளன. நீங்கள்
அந்த ஆயுதங்களை பாபிலோனின் அரசன்
மற்றும் பாபிலோனியர்களிடமிருந்து உங்க
ளைக் காத்துக் கொள்ளுகிறீர்கள். ஆனால்,
நான் அந்த ஆயுதங்களைப் பயனற்றுப்
போகும்படிச் செய்வேன். "'நகரச்சுவர்க
ளுக்கு வெளியே பாபிலோனியப் படை
உள்ளது. அப்படை நகரைச் சுற்றிலும்
உள்ளது. நான் விரைவில் அப்படையை
எருசலேமிற்குள் கொண்டுவருவேன். 5யூதா
வின் ஜனங்களே, உங்களுக்கு எதிராக
நானே போரிடுவேன். உங்களுக்கு எதிராக
நான் என் சொந்த வல்லமையான கரத்தினா
லேயே போரிடுவேன். உங்களுக்கு எதிராக
நான் மிகக் கடுமையாகப் போரிடுவேன்.
நான் எவ்வளவு கோபமாக உள்ளேன்
என்பதைக் காட்டுவேன். 6எருசலேமில் வாழ்
கிற ஜனங்களை நான் கொல்வேன். நான்
ஜனங்களையும் மிருகங்களையும் கொல்
வேன். நகரம் முழுவதும் பரவும் பயங்கர
மான நோயால் அவர்கள் மரிப்பார்கள். 7அது
நிகழ்ந்த பிறகு, இந்த வார்த்தை
கர்த்தரிடமிருந்து வத்தது, "'நான் யூதாவின்
அரசனான சிதேக்கியாவைப் பாபிலோனின்
அரசனான நேபுகாத்நேச்சாரிடம் கொடுப்
பேன். நான் சிதேக்கியாவின் அதிகாரிகளை
யும் நேபுகாத்நேச்சாரிடம் கொடுப்பேன்.
எருசலேமில் உள்ள சில ஜனங்கள் பயங்க
ரமான நோயால் மரிக்கமாட்டார்கள். சில
ஜனங்கள் வாளால் கொல்லப்பட மாட்டார்
கள். சிலர் பசியால் மரிக்கமாட்டார்கள்.
ஆனால் நான் அந்த ஜனங்களை நேபுகாத்
நேச்சாரிடம் கொடுப்பேன். நான் யூதாவின்
பகைவர்களை வெல்லவிடுவேன். நேபுகாத்
நேச்சாரின் படை யூதாவின் ஜனங்களைக்
கொல்ல விரும்புகிறது. எனவே, யூதாவின்
ஜனங்களும் எருசலேமின் ஜனங்களும்
வாளால் கொல்லப்படுவார்கள். நேபுகாத்
நேச்சார் எவ்வித இரக்கமும் காட்ட
மாட்டான். அவன் அந்த ஜனங்களுக்காக
வருத்தப்படமாட் டான்.'

8"எருசலேம் ஜனங்களுக்கு இவற்றையும்
சொல்லுங்கள். கர்த்தர் இவற்றைக் கூறுகி
றார்; 'நீங்கள் வாழ்வதா அல்லது மரிப்பதா
என்பதைத் தேர்ந்தெடுக்க நானே அனுமதிப்
பேன்.' 9எருசலேமில் தங்குகிற எவனும்
மரிப்பான். அந்த நபர் வாளால் மரிப்பான்
அல்லது பசியால் மரிப்பான் அல்லது
பயங்கரமான நோயால் மரிப்பான். ஆனால்,
எவன் ஒருவன் எருசலேமிற்கு வெளியே
போகிறானோ, பாபிலோனில் படையிடம்
சரணடைகிறானோ அவன் உயிர் வாழ்
வான். நகரத்தைச்சுற்றி படை உள்ளது.
எனவே, நகரத்திற்குள் எவனும் உணவைக்
கொண்டுவர முடியாது. ஆனால், எவன்
ஒருவன் நகரத்தை விட்டுப் போகிறானோ
அவனது வாழ்வு பாதுகாக்கப்படும். 10எருச
லேம் நகரத்திற்குத் தொல்லை கொடுக்க
நான் முடிவு செய்தேன். நான் நகரத்திற்கு
உதவி செய்யமாட்டேன்'" இந்த வார்த்தை
கர்த்தரிடமிருந்து வருகிறது. "'நான் எருச
லேம் நகரத்தைப் பாபிலோன் அரசனிடம்
கொடுப்பேன். அவன் அதனை நெருப்பால்
எரிப்பான்.'
11"யூதாவின் அரசக் குடும்பத்தில் இவற்
றைக் கூறுங்கள். கர்த்தரிடமிருந்து வரும்
வார்த்தையைக் கவனி.
12தாவீதின் குடும்பத்தினரே, கர்த்தர்
இவற்றைக் கூறுகிறார்: 'ஒவ்வொரு நாளும்
நீங்கள் சரியாக ஜனங்களை நியாயம் தீர்க்க
வேண்டும். இரக்கமற்ற ஒடுக்குபவர்களிட

மிருந்து ஒடுக்கப்படுபவர்களைக் காப்பாற்
றுங்கள். நீங்கள் இதனைச் செய்யாவிட்
டால் நான் பிறகு கோபம் கொள்வேன்.
எனது கோபம் நெருப்பைப் போன்றது
எவரும் அதனை அணைக்க முடியாது.
இது நிகழும். ஏனென்றால், நீங்கள் தீயவற்
றைச் செய்திருக்கிறீர்கள்.’
13“எருசலேமே, நான் உனக்கு எதிராக
இருக்கிறேன். நீ மலையின் உச்சியில் உட்
கார்ந்து இருக்கிறாய். இந்தப் பள்ளத்தாக்கின்
மீதுள்ள அரசியைப்போன்று நீ உட்கார்ந்து
இருக்கிறாய். எருசலேமில் ஜனங்களாகிய
நீங்கள், ‘எவராலும் எங்களைத் தாக்க
முடியாது! எங்கள் பலமான நகரத்திற்குள்
எவராலும் வர இயலாது’ என்று கூறு
கிறீர்கள். ஆனால், கர்த்தரிடமிருந்து வருகிற
இந்த வார்த்தையைக் கேளுங்கள்.
14‘உங்களுக்கு ஏற்ற தண்டனையை
நீங்கள் பெறுவீர்கள். உங்கள் காடுகளில்
ஒரு நெருப்பைத் தொடங்குவேன். அது
உங்களைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும்
எரித்துவிடும்.’”

## தீய அரசர்களுக்கு எதிரான நியாயத்தீர்ப்பு

22 கர்த்தர், “எரேமியா, அரசனுடைய
அரண்மனைக்குப் போ. யூதாவின்
அரசனிடம் போ. அங்கு இந்த வார்த்தையைப்
பிரச்சாரம் செய்; 2‘கர்த்தரிடமிருந்து வருகிற
வார்த்தையை யூதாவின் அரசனே, கேள்.
நீ தாவீதின் சிங்காசனத்திலிருந்து ஆள்கி
றாய். எனவே, கேள். அரசனே, நீயும்
உன் அதிகாரிகளும் நன்றாகக் கேட்கவேண்
டும். எருசலேமின் வாசல் வழியாக வருகிற
அனைத்து ஜனங்களும் கர்த்தரிடமிருந்து
வருகிற இந்த வார்த்தையைக் கேட்க
வேண்டும். 3கர்த்தர் கூறுகிறார்: நியாயமான
வற்றையும் சரியானவற்றையும் செய்யுங்கள்.
களவாடுகிறவனிடமிருந்து களவாடப்படுகிற
மனிதனைக் காப்பாற்றுங்கள். அனாதைகள்
அல்லது விதவைகளுக்குக் காயமோ அல்லது
வேறு எதுவுமோ செய்யாதீர்கள். அப்பாவி
ஜனங்களைக் கொல்லாதீர்கள். 4இந்தக் கட்ட
ளைகளுக்கு நீங்கள் கீழ்ப்படிந்தால் பிறகு
இதுதான் நடக்கும். தாவீதின் சிங்காசனத்தின்
மேல் இருக்கிற அரசர்கள் எருசலேம் நகர
வாசல்கள் வழியாக வருவார்கள். அந்த
அரசர்கள் தங்கள் அதிகாரிகளோடு வாசல்
கள் வழியாக வருவார்கள். அந்த அரசர்கள்,
அவர்களின் அதிகாரிகள், அவர்களின் ஜனங்
கள், இரதங்களிலும், குதிரைகளிலும் சவாரி
செய்துகொண்டு வருவார்கள். 5ஆனால்,
நீங்கள் இந்தக் கட்டளைகளுக்கு அடிபணியா
விட்டால், இது தான் கர்த்தர் சொல்கிறது:
“கர்த்தராகிய நான் வாக்குறுதியளிக்கிறேன்,
இந்த அரசர்களின் அரண்மனைகள் அழிக்கப்
படும். அது கற்குவியல் ஆகும்’” என்றார்.
6யூதாவின் அரசர்கள் வாழ்கிற அரண்மனை
யைப்பற்றி கர்த்தர் இவற்றைத்தான் கூறுகி
றார்: “அரண்மனை உயரமானது. கீலேயாத்
காடுகளைப் போன்று உயரமானது. லீப
னோனின் மலையைப் போன்று அரண்
மனை உயரமானது. ஆனால் நான் அதனை
வனாந்தரம்போன்று ஆக்குவேன். இந்த
அரண்மனை ஆளில்லாத நகரத்தைப்
போன்று காலியாகும்.
7அரண்மனையை அழிக்க நான் ஆட்
களை அனுப்புவேன். ஒவ்வொரு மனிதனும்
ஆயுதங்களை வைத்திருப்பான். அந்த ஆயுதங்
களை அவன் அரண்மனையை அழிக்கப்
பயன்படுத்துவான். அம்மனிதர்கள் உங்களது
பலமான அழகான கேதுரு தூண்களை
வெட்டி எறிவார்கள். அம்மனிதர்கள் அத்
தூண்களை நெருப்பில் போடுவார்கள்.
8“பலநாடுகளில் உள்ள ஜனங்கள் இந்த
கரத்தின் வழியாக கடந்துபோவார்கள்.
அவர்கள் ஒவ்வொருவரையும் கேட்பார்கள்.
‘ஏன் கர்த்தர் எருசலேம் நகரத்திற்கு இந்தப்
பயங்கரமான காரியத்தைச் செய்தார்? எருச
லேம் ஒரு மாபெரும் நகரமாக இருந்ததே.’
9அந்த வினாவிற்கு இது தான் பதில்;
‘தேவன் எருசலேமை அழித்தார். ஏனென்
றால், யூதாவின் ஜனங்கள் அவர்களின்
தேவனாகிய கர்த்தருடைய உடன்படிக்
கையைப் பின்பற்றாமல் விட்டுவிட்டனர்.
அந்த ஜனங்கள் அந்நிய தெய்வங்களைத்
தொழுதுகொண்டு சேவை செய்தனர்.’”

## யோவாகாஸ் ராஜாவிற்கு எதிரான நியாயத் தீர்ப்பு

10மரித்துப்போன அரசனுக்காகஅழவேண்
டாம். அவனுக்காக அழவேண்டாம். ஆனால்
இந்த இடத்தை விட்டு விலக வேண்டிய
அரசனுக்காகக் கடினமாக அழுங்கள். அவ
னுக்காக அழுங்கள். ஏனென்றால், அவன்
மீண்டும் வரமாட்டான். தன் தாய் நாட்டை
ஒருபோதும் மீண்டும் பார்க்கமாட்டான்.
11இது தான் கர்த்தர் யோசியாவின் மக
னான சல்லூம் (யோவாகாஸ்) பற்றி கூறுகி
றது. (சல்லூம் அவனது தந்தை யோசியா
மரித்த பிறகு யூதாவின் அரசன் ஆனான்.)
“யோவாகாஸ் எருசலேமிலிருந்து வெளியே
போயிருக்கிறான். அவன் மீண்டும் எருச
லேமிற்கு திரும்பி வரமாட்டான். 12யோவா
காஸ் எகிப்தியர்களால் தான் கொண்டு
போகப்பட்ட இடத்திலேயே மரிப்பான்.
அவன் மீண்டும் இந்த நாட்டைப் பார்க்க
மாட்டான்.”

## யோயாக்கீம் அரசனுக்கு எதிரான தீர்ப்பு

13யோயாக்கீம் அரசனுக்கு இது மிகவும்
தீயதாக இருக்கும். அவன் தீயவற்றைச்
செய்துகொண்டிருக்கிறான். எனவே, அவ
னால் அவனது அரண்மனையைக் கட்ட
முடியும். அவன் ஜனங்களை ஏமாற்றிக்
கொண்டிருக்கிறான். எனவே, அவனால்
மேல்மாடியில் அறைகளைக் கட்டமுடியும்.

அவன் தனது சொந்த ஜனங்களை வீணாக
வேலை செய்ய வைப்பான். அவன் அவர்க
ளது வேலைக்குச் சம்பளம் தரமாட்டான்.
14யோயாக்கீம், "நான் எனக்காகப் பெரிய
அரண்மனையைக் கட்டுவேன். எனக்கு
பெரிய மேல்மாடி அறைகள் இருக்கும்"
என்கிறான். எனவே, அவன் பெரிய ஜன்
னல்களோடு வீடு கட்டுகிறான். அவன்
கேதுரு மரங்களைத் தூணுக்கு சிவப்பு
வண்ணத்தைப் பூசுகிறான்.
15யோயாக்கீமும், உனது வீட்டில் ஏராள
மாகக் கேதுரு மரங்களை வைத்திருக்கிறாய்.
அவை உன்னைப் பெரிய அரசனாக்காது.
உன் தந்தை யோசியா உணவும்
தண்ணீரும்பெற்று திருப்தி அடைந்தான்.
எது சரியானதோ நியாயமானதோ, அதைச்
செய்தான். யோசியா அதனைச் செய்தான்.
அதனால் அவனுக்கு எல்லாமும் சரியாகப்
போனது.
16யோசியா ஏழைகளுக்கும் யாருக்கெல்
லாம் தேவை இருந்ததோ அவர்களுக்கும்
உதவினான். ஆகையால், அவனுக்கு
அனைத்துக் காரியங்களும் எளிமையாக
நடந்தன. யோயாக்கீம், 'தேவனை அறிவது'
என்பதன் பொருள் என்ன? இதன் பொருள்
சரியாக வாழு, நியாயமாக இரு, ஏழை
எளியோருக்கு உதவு. என்னை அறிவது
என்பதன் பொருள் இதுதான். இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.
17யோயாக்கீம், உனது கண்கள் உனக்குப்
பயனுள்ளவற்றை மட்டுமே பார்க்கின்றன.
நீ எப்பொழுதும் உனக்கு மிகுதியாகத்
தேவையானதைப் பற்றியே நினைத்துக்
கொண்டிருக்கிறாய். உன் இருதயம் அப்பாவி
ஜனங்களைக் கொல்ல திட்டமிட்டிருக்கிறது.
மற்ற ஜனங்களின் பொருட்களை நீ திருட
விரும்புகிறாய்.
18எனவே, கர்த்தர் இதைத்தான் யோசியா
வின் மகனான, அரசன் யோயாக்கீமிடம்
கூறுகிறார். "யூதாவின் ஜனங்கள் யோயாக்கீ
மிற்காக அழமாட்டார்கள். அவர்கள் மற்றவர்
களிடம்; 'ஓ, எனது சகோதரனே. யோயாக்
கீம் பற்றி வருந்துகிறேன்! ஓ, எனது
சகோதரியே, நான் யோயாக்கீம் பற்றி
மிகவும் வருந்துகிறேன்!' என்று சொல்ல
மாட்டார்கள். யோயாக்கிமிற்காக யூதா
ஜனங்கள் அழமாட்டார்கள். அவர்கள் அவ
னைப்பற்றி, 'ஓ, எஜமானே. நான் சோகமாக
இருக்கிறேன்! ஓ, அரசனே. நான் சோகமாக
இருக்கிறேன்!' என்று சொல்லமாட்டார்
கள்.
19எருசலேம் ஜனங்கள் யோயாக்கீமை
ஒரு கழுதையை அடக்கம் செய்வதுபோன்று
அடக்கம் செய்வார்கள். அவர்கள் அவனது
உடலை இழுத்துச் செல்வார்கள். அவர்கள்
அவனது உடலை எருசலேமின் வாசல்க
ளுக்கு வெளியே வீசுவார்கள்.
20"யூதா, லீபனோன் மலைகளுக்கு மேலே
செல், அழு. பாசான் மலைகளில் உனது
ஓசை கேட்கட்டும். அபரீமின் மலைகளில்
அழு. ஏனென்றால், உனது 'நேசர்கள்'
அனைவரும் அழிக்கப்படுவார்கள்.
21"யூதா, நீ பாதுகாப்பை உணர்ந்தாய்.
ஆனால் நான் உன்னை எச்சரித்தேன்!
ஆனால் நீ கேட்க மறுத்தாய். நீ இவ்வாறு
உனது இளமைகாலம் முதல் வாழ்ந்திருக்கி
றாய். உனது இளமை காலத்திலிருந்து நீ
எனக்கு கீழ்ப்படியவில்லை.
22யூதா, நான் தரும் தண்டனை ஒரு
புயலைப் போன்று வரும். அது உங்கள்
மேய்ப்பர்களை அடித்துச் செல்லும். சில
அந்நியநாடுகள் உதவும் என்று நினைத்தாய்.
ஆனால் அந்நாடுகளும் தோற்கடிக்கப்படும்.
பிறகு நீ உண்மையிலேயே ஏமாறுவாய்.
நீ செய்த தீயவற்றுக்காக அவமானம் அடை
வாய்.
23"அரசனே. நீ கேதுரு மரங்களாலான
உனது வீட்டில் உயரமான மலையின்மேல்
வாழ்கிறாய். நீ ஏறக்குறைய அம்மரங்கள்
இருந்த லீபனோனில் இருப்பதுபோல் உள்
ளாய். நீ உனது பெரிய வீட்டில் மலையின்
மேல் பாதுகாப்பாக இருப்பதாய் நினைக்கி
றாய். ஆனால் உனது தண்டனை வரும்
போது நீ புலம்புவாய். நீ பிரசவிக்கும்
பெண்ணைப் போன்றுபெரும் வேதனையில்
இருப்பாய்."

### யோயாக்கீமின் அரசனுக்கு எதிரான தீர்ப்பு

24"நான் வாழ்வது எவ்வளவு உண்
மையோ அது போன்று" இந்த வார்த்தை
கர்த்தரிடமிருந்து வருகிறது. "நான் இதனை
உனக்குச் செய்வேன் யோயாக்கீமின்
மகனான யோயாக்கீமின் யூதாவின் அரசனே.
நீ எனது வலது கை முத்திரை மோதி
ரமாய்* இருந்தாலும், நான் உன்னைக்
கழற்றிப்போடுவேன். 25யோயாக்கீமின், நான்
உன்னைப் பாபிலோனின் அரசனான; நேபு
காத்நேச்சாரிடமும் பாபிலோனியர்களிடமும்
கொடுப்பேன். அவர்கள் நீ அஞ்சுகின்ற
ஜனங்கள் ஆவர். அந்த ஜனங்கள் உன்னைக்
கொல்ல விரும்புகின்றனர். 26நீங்கள் யாரும்
பிறந்திருக்காத வேறு நாட்டில் உன்னையும்,
உனது தாயையும் வீசுவேன். அந்த நாட்டில்
நீயும், உன் தாயும் மரிப்பீர்கள். 27யோயாக்
கீமின், நீ உனது நாட்டுக்குத் திரும்பிவர
விரும்புவாய். ஆனால் நீ திரும்பிவர அனும
திக்கப்படமாட்டாய்."
28யோயாக்கீமின் (கோனியா) யாரோ
எறிந்ததால் உடைந்த ஜாடியைப் போன்ற
வன். எவராலும் விரும்பப்படாத ஜாடியைப்
போன்றவன். யோயாக்கீமின் அவனது பிள்

---

**முத்திரை மோதிரம்** அரசனின் அணியும் சிறப்பு மோதிரம். இதன் மூலம் முத்திரை இட லாம். இது அரசனது கையெழுத்தாகக் கருதப்படும்.

ளைகளும் ஏன் எறியப்பட்டார்கள்? ஏன் அவர்கள் அந்நியநாட்டில் வீசி எறியப்பட்டார்கள்?

29யூதாவின் நாடே! கர்த்தருடைய செய்தியைக் கேள்:

30கர்த்தர் கூறுகிறார், "யோயாக்கீமின் பற்றி இதனை எழுதிக்கொள்ளுங்கள். 'அவன் இனிமேல் குழந்தைகளே இல்லாதவன். யோயாக்கீமின் இனி வாழ்நாள் முழுவதும் கிர்த்தி பெறமாட்டான். தாவீதின் சிங்காசனத்தில் அவனது பிள்ளைகள் எவரும் அமரமாட்டார்கள். அவனது பிள்ளைகள் எவரும் யூதாவை ஆளமாட்டார்கள்.'"

23 "இது யூதா ஜனங்களின் மேய்ப்பர்களுக்கு (தலைவர்களுக்கு) மிகவும் கெட்டதாகும். அம்மேய்ப்பர்கள் ஆடுகளை அழித்துக்கொண்டிருக்கிறார்கள். எல்லா திசைகளிலும் என் மேய்ச்சல் நிலத்திலிருந்து ஆடுகளை ஓட வைக்கிறார்கள்" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.

2எனது ஜனங்களுக்கு அம்மேய்ப்பர்களே பொறுப்பானவர்கள். இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் அம்மேய்ப்பர்களுக்கு இதனைச் சொல்கிறார்; "மேய்ப்பர்களாகிய நீங்கள் எனது ஆடுகளை எல்லாத் திசைகளிலும் ஓடச்செய்கிறீர்கள். அவை போகுமாறு நீங்கள் பலவந்தப்படுத்துகிறீர்கள். நீங்கள் அவற்றைப்பற்றி அக்கறை எடுத்துக்கொள்வதில்லை. ஆனால், நான் உங்களைப்பற்றி அக்கறை எடுத்துக்கொள்வேன். நீங்கள் செய்த தீமைக்காக நான் உங்களைத் தண்டிப்பேன்." இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து
வருகிறது. 3"நான் எனது ஆடுகளை வேறு நாடுகளுக்கு அனுப்பினேன். ஆனால், விடுபட்ட ஆடுகளை நான் சேகரிப்பேன். நான் அவற்றை மீண்டும் அவற்றின் மேய்ச்சல் நிலத்திற்குக் கொண்டுவருவேன். எனது ஆடுகள் தம் மேய்ச்சல் நிலத்திற்குத் திரும்பியதும், அவற்றுக்கு நிறைய குட்டிகள் வர
அவை எண்ணிக்கையில் பெருகும். 4நான் எனது ஆடுகளுக்குப் புதிய மேய்ப்பர்களை ஏற்படுத்துவேன். அம்மேய்ப்பர்கள் எனது ஆடுகளை அக்கறையோடு பார்த்துக்கொள்வார்கள். எனது ஆடுகள் பயப்படவோ, கலங்கவோ செய்யாது. எனது ஆடுகள் எதுவும் காணாமல் போகாது" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.

## நீதியுள்ள "துளிர்"

5இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது: "காலம் வந்து கொண்டு இருக்கிறது. நான் ஒரு நல்ல 'துளிரை' எழுப்புவேன். அவன் அரசன் ஆவான். அவன் ஞான வழியில் ஆள்வான். நாட்டில் எது சரியோ நியாயமானதோ, அதைச் செய்வான்.

6நல்ல 'துளிருள்ள' காலத்தில், யூதாவின் ஜனங்கள் காப்பாற்றப்படுவார்கள். இஸ்ரவேலர்கள் பாதுகாப்பாக வாழ்வார்கள். இது அவரது நாமமாக இருக்கும்: கர்த்தர் நமது நன்மை.

7"எனவே, காலம் வந்துகொண்டிருக்கிறது" இச்செய்தி கர்த்தரிடமிருந்து வந்தது. "ஜனங்கள் பழைய வாக்குறுதியை எப்பொழுதும் சொல்ல மாட்டார்கள். பழைய வாக்குறுதியானது; 'கர்த்தர் உயிரோடு இருப்பது எவ்வளவு உறுதியானதோ அவ்வளவு உறுதியாக, கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களை எகிப்து நாட்டிலிருந்து வெளியே கொண்டு
வந்தவர்.' 8ஆனால் ஜனங்கள் புதிதாகச் சொல்வார்கள்: 'கர்த்தர் உயிரோடிருப்பது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாக, இஸ்ரவேல் ஜனங்களை வட நாட்டிலிருந்து கொண்டுவந்தார். ஏற்கனவே, அவர்களை அனுப்பிய அனைத்து நாடுகளிலிருந்தும் அழைத்துக் கொண்டுவந்தார்.' பிறகு இஸ்ரவேல் ஜனங்கள் தம் சொந்த நாட்டில் வாழ்வார்கள்."

## கள்ள தீர்க்கதரிசிகளுக்கு எதிரான தீர்ப்பு

9தீர்க்கதரிசிகளுக்கான ஒரு செய்தி: நான் மிகவும் சோகமாக இருக்கிறேன். என் இருதயம் உடைந்திருக்கிறது. எனது அனைத்து எலும்புகளும் அசைகின்றன. நான் (எரேமியா) குடிகாரன் போல் இருக்கிறேன். கர்த்தரினிமித்தமும் அவரது பரிசுத்த வார்த்தைகளினிமித்தமும்.

10யூதா நாடு முழுவதும் வேசிதனம் என்னும் பாவம் செய்த ஜனங்களால் நிறைந்துள்ளது. அவர்கள் பல வழிகளில் விசுவாசமற்றவர்களாக இருக்கிறார்கள். கர்த்தர் அந்த நாட்டைச் சபித்தார். அது மிகவும் வறண்டுபோயிற்று. செடிகள் வாடி மேய்ச்சல் நிலங்கள் செத்துப்போயின. வயல்கள் வனாந்தரங்களைப்போன்று ஆயின. தீர்க்கதரிசிகள் எல்லாம் தீயவர்கள். அத்தீர்க்கதரிசிகள் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி தவறான வழிகளில் அதிகாரத்தைச் செலுத்தினார்கள்.

11"தீர்க்கதரிசிகளும், ஆசாரியர்களும் கூடத் தீயவர்கள் ஆனார்கள். அவர்கள் எனது சொந்த ஆலயத்தில் தீயவற்றைச் செய்வதைப் பார்த்திருக்கிறேன்" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.

12"எனது செய்தியை அவர்களுக்குக் கொடுப்பதை நான் நிறுத்துவேன் இது அவர்கள் இருட்டில் நடப்பதைப் போன்றது. இது அந்தத் தீர்க்கதரிசிகளுக்கும் ஆசாரியர்களுக்கும் வழுக்குகின்ற சாலையைப் போன்றது. அவர்கள் அந்த இருளில் விழுவார்கள். அவர்களுக்கு நான் துரதிர்ஷ்டம் கொண்டு வருவேன். நான் அந்தத் தீர்க்கதரிசிகளையும் ஆசாரியர்களையும் தண்டிப்பேன்" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.

[13]"சமாரியா* தீர்க்கதரிசிகள் தவறுகள்
செய்வதை நான் பார்த்தேன். பொய்த்
தெய்வமாகிய பாகாலின் பெயரால்
அத்தீர்க்கதரிசிகள் தீர்க்கதரிசனம் சொல்
வதைப் பார்த்தேன். அத்தீர்க்கதரிசிகள் இஸ்ர
வேல் ஜனங்களைக், கர்த்தரை விட்டு
வெளியே வழிநடத்திச் சென்றனர்.
[14]இப்போது நான் யூதாவிலுள்ள தீர்க்க
தரிசிகள் எருசலேமில் பயங்கரமான செயல்
கள் செய்வதைப் பார்க்கிறேன். இத்தீர்க்க
தரிசிகள் வேசிதனம் என்னும் பாவத்தைச்
செய்கின்றனர். அவர்கள் பொய்களைக் கேட்
கின்றனர். அவர்கள் பொய்யான போதனைக
ளுக்கு அடிபணிகிறார்கள். அவர்கள் தீய
வர்கள் தொடர்ந்து தீயச் செயல்களைச்
செய்ய ஊக்குவிக்கப்படுகிறார்கள். எனவே,
ஜனங்கள் பாவம் செய்வதை நிறுத்தவில்லை.
அவர்கள் சோதோமின் ஜனங்களைப்
போன்று இருக்கிறார்கள். இப்போது எருச
லேம் எனக்குக் கொமோரா* போன்று
உள்ளது."
[15]எனவே, தீர்க்கதரிசிகளைப்பற்றி சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறது இதுதான்:
"நான் அத்தீர்க்கதரிசிகளை தண்டிப்பேன்.
தண்டனையானது விஷமுள்ள உணவை
உண்பது போலவும், விஷத்தண்ணீரை குடிப்
பது போன்றும் இருக்கும். தீர்க்கதரிசிகளுக்கு
ஆன்மீக நோய் ஏற்பட்டது. அந்நோய்
நாடு முழுவதும் பரவியது. எனவே, அத்தீர்க்
கதரிசிகளை நான் தண்டிப்பேன். அந்நோய்
எருசலேமிலிருக்கும்தீர்க்கதரிசிகளிடமிருந்து
வந்தது."
[16]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைக்
கூறுகிறார்; "உங்களில் அத்தீர்க்கதரிசிகள்
சொல்பவற்றில் கவனம் செலுத்தாதீர்கள்.
அவர்கள் உங்களை முட்டாளாக்க முயல்கி
றார்கள். அத்தீர்க்கதரிசிகள் தரிசனங்களைப்
பற்றி பேசுகிறார்கள். ஆனால் அவர்கள்
என்னிடமிருந்து அத்தரிசனங்களைப் பெற
வில்லை. அவர்களின் தரிசனங்கள் அவர்
களது சொந்த மனதிலிருந்தே வருகின்றன.
[17]கர்த்தரிடமிருந்து வந்த உண்மையான
செய்தியைச் சிலர் வெறுக்கிறார்கள்.
எனவே, அத்தீர்க்கதரிசிகள் ஜனங்களுக்கு
வேறுபட்டச் செய்தியைக் கூறுகிறார்கள்.
அவர்கள், 'உங்களுக்குச் சமாதானம் இருக்
கும்' என்று கூறுகிறார்கள். சில ஜனங்கள்
மிகவும் பிடிவாதமாக இருக்கிறார்கள்.
அவர்கள் தாங்கள் செய்ய விரும்புவதை
மட்டுமே செய்கிறார்கள். எனவே அத்தீர்க்க
தரிசிகள், 'உங்களுக்கு எந்தத் தீமையும்
ஏற்படாது!' என்று கூறுகிறார்கள்.

[18]ஆனால் அத்தீர்க்கதரிசிகளில் எவரும்
பரலோகச்சபையில் நின்றிருக்க மாட்டார்
கள். அவர்களில் எவரும் கர்த்தருடைய
செய்தியைப் பார்த்திருக்கவோ கேட்டிருக்
கவோ மாட்டார்கள். அவர்கள் எவரும்
கர்த்தருடைய செய்தியை கூர்ந்து கவனமா
கக் கேட்டிருக்க மாட்டார்கள்.
[19]இப்பொழுது கர்த்தருடைய தண்டனை
புயலைப் போன்று வரும். கர்த்தருடைய
கோபம் கொடிய புயலைப் போன்றிருக்கும்.
கெட்ட மனிதர்களின் தலைகளை மோதித்
தள்ளவரும்.
[20]கர்த்தருடைய கோபம், அவர் என்ன
செய்ய வேண்டும் என்று திட்டமிட்டிருந்
தாரோ அவற்றைச் செய்து முடிக்கும்வரை
நிற்காது. அந்த நாட்களின் முடிவில் நீங்கள்
தெளிவாக அறிந்துகொள்வீர்கள்.
[21]அத்தீர்க்கதரிசிகளை நான் அனுப்ப
வில்லை. ஆனால், அவர்கள் செய்தியைச்
சொல்ல ஓடினார்கள். நான் அவர்களோடு
பேசவில்லை. ஆனால் அவர்கள் என்
நாமத்தில் பிரசங்கம் செய்தனர்.
[22]அவர்கள் எனது பரலோகச்சபையில்
நின்றிருந்தால், பிறகு யூதாவின் ஜனங்க
ளுக்கு என் செய்தியைச் சொல்லியிருப்
பார்கள். அவர்கள் தீயசெயல் செய்யாமல்
ஜனங்களைத் தடுத்திருப்பார்கள். அவர்கள்
பாவம் செய்யாதபடி ஜனங்களைத் தடுத்தி
ருப்பார்கள்."
[23]"நான் தேவன்! நான் எப்பொழுதும்
அருகில் இருக்கிறேன்!" இந்த வார்த்தை
கர்த்தரிடத்திலிருந்து வருகிறது. "நான் தூரத்
தில் இல்லை.
[24]சில மறைவிடங்களில் ஒருவன் என்
னிடமிருந்து ஒளிய முயலலாம். ஆனால்,
அவனைப் பார்ப்பது எனக்கு எளிதாகும்.
ஏனென்றால், நான் பரலோம் பூமி என்று
எல்லா இடங்களிலும் இருக்கிறேன்!" கர்த்தர்
இவற்றைச் சொன்னார்.
[25]"என் நாமத்தில் பொய்யைப் பிரசங்கம்
செய்யும் தீர்க்கதரிசிகள் இருக்கிறார்கள்.
அவர்கள், 'எனக்கு ஒரு கனவு வந்தது.
எனக்கு ஒரு கனவு வந்தது' என்றார்கள்.
அவர்கள் இவற்றைச் சொல்வதை நான்
கேட்டேன். [26]இது இன்னும் எவ்வளவு
காலம் செல்லும்? அத்தீர்க்கதரிசிகள்
பொய்களை நினைக்கின்றனர். பிறகு
அப்பொய்களை ஜனங்களுக்குப் போதிக்
கிறார்கள். [27]இத்தீர்க்க தரிசிகள் ஜனங்கள்
என் நாமத்தை மறக்கச் செய்ய முயற்சி
செய்துகொண்டிருக்கிறார்கள். இப்பொய்
யான கனவுகளை அவர்கள் ஒருவருக்
கொருவர் சொல்லி இதனைச் செய்கிறார்கள்.
அவர்களது முற்பிதாக்கள் என்னை மறந்தது
போலவே, எனது ஜனங்கள் என்னை
மறக்கும்படி அவர்கள் செய்ய முயல்கிறார்
கள். அவர்களின் முற்பிதாக்கள் என்னை
மறந்துவிட்டு பொய்யான பாகால்

---

**சமாரியா** இஸ்ரவேலின் வட இராஜ்ய தலைநகரம்.
**சோதோம், கொமோரா** தேவனால் அழிக் கப்பட்ட இரு நகரங்கள்.

தெய்வத்தை தொழுதனர். [28]வைக்கோல் கோதுமையைப் போன்று ஆகாது. இதுபோலவே, அத்தீர்க்கதரிசிகளின் கனவுகள் எல்லாம் என்னிடமிருந்து வரும் செய்திகள் ஆகாது. ஒருவன் தனது கனவுகளைப் பற்றிச் சொல்ல விரும்பினால், அவன் சொல்லட்டும். ஆனால், எனது நற் செய்தியை கேட்கட்டும் நற்செய்தியைக் கேட்கிற மனிதன் எனது செய்தியை உண்மையுடன் கூறட்டும். [29]எனது செய்தி அக்கினியைப் போன்றது" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது. "இது பாறையை நொறுக்கும் சம்மட்டியைப் போன்றது.

[30]* "எனவே நான் கள்ள தீர்க்கதரிசிகளுக்கு எதிரானவர்." இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது. "இத்தீர்க்கதரிசிகள் ஒருவரிடமிருந்து ஒருவர் என் வார்த்தைகளைத் திருடுகிறார்கள். [31]நான் பொய்யான தீர்க்கதரிசிகளுக்கு எதிரானவர்" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது. "அவர்கள் தம் சொந்த வார்த்தைகளைப் பயன்படுத்துகிறார்கள். அவர்கள் அச்செய்தியை என்னிடமிருந்து வருவதாக நடிக்கின்றனர். [32]பொய்க் கனவுகளைப் பரப்பும் பொய்த் தீர்க்கதரிசிகளுக்கு நான் எதிரானாவர். இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது. "அவர்கள் எனது ஜனங்களைப் பொய்யாலும், போய் போதனைகளாலும் தவறாக வழிகாட்டுகின்றனர். ஜனங்களுக்குப் போதிக்க நான் இத்தீர்க்கதரிசிகளை அனுப்பவில்லை. எனக்காக எதையும் செய்யும்படி நான் அவர்களுக்குக் கட்டளை இடவில்லை. யூதாவின் ஜனங்களுக்கு அவர்களால் உதவி செய்யவே முடியாது" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது.

### கர்த்தரிடமிருந்து வரும் சோகச் செய்தி

[33]"யூதாவின் ஜனங்களே, ஒரு தீர்க்கதரிசியோ, ஒரு ஆசாரியரோ உன்னிடம் 'கர்த்தருடைய அறிக்கை என்ன என்று கேட்கும்போது' நீ அவர்களுக்கு, "நீங்கள் கர்த்தருக்குப் பெரும் பாரமாக இருக்கிறீர்கள். நான் இப்பாரத்தைத் தூக்கிப் போடுவேன்'" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது என்று சொல்.

[34]"ஒரு தீர்க்கதரிசி அல்லது ஆசாரியன், அல்லது ஜனங்களில் ஒருவன் சொல்லலாம். 'இதுதான் கர்த்தருடைய அறிக்கை' அம்மனிதன் பொய் சொன்னான். அவனையும் அவனது குடும்பத்தையும் நான் தண்டிப்பேன். [35]இதைத்தான் ஒருவரிடம் ஒருவர் நீங்கள் கேட்க வேண்டும். 'கர்த்தருடைய பதில் என்ன?' அல்லது 'கர்த்தர் என்ன பதில் சொன்னார்?' [36]"'கர்த்தருடைய அறிவிப்பு' பெருஞ்சுமையானது" என்று ஒரு போதும் மீண்டும் சொல்லமாட்டாய். ஏனென்றால், கர்த்தருடைய நற்செய்தி யாருக்கும் பெருஞ்சுமையாக இருக்கக்கூடாது. ஆனால் நீ எங்கள் தேவனுடைய வார்த்தையை மாற்றினாய். அவரே ஜீவனுள்ள தேவன். சர்வ வல்லமையுள்ள கர்த்தர்!

[37]"நீ தேவனுடைய வார்த்தையைக் கற்றுக் கொள்ள வேண்டுமென்று விரும்பினால் ஒரு தீர்க்கதரிசியைக் கேள். 'கர்த்தர் என்ன பதிலைக் கொடுத்தார்?' அல்லது 'கர்த்தர் என்ன சொன்னார்?' [38]ஆனால் 'கர்த்தரிடமிருந்து வந்த அறிக்கை (பெருஞ்சுமை) என்ன' என்று சொல்ல வேண்டாம். நீங்கள் இந்த வார்த்தைகளைப் பயன்படுத்தினால் பிறகு, கர்த்தர் இவற்றை உனக்குச் சொல்வார், 'எனது செய்தியைக் 'கர்த்தரிடமிருந்து வந்த அறிவிப்பு' பாரமானது என்று சொல்ல வேண்டாம்.' இவ்வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம் என்று நான் உனக்குச் சொன்னேன். [39]ஆனால், நீ எனது செய்தியை பெருஞ்சுமை என்று அழைத்தாய். எனவே, நான் உன்னைப் பெருஞ்சுமையைப் போன்று தூக்கித் தூர எறிவேன். உங்கள் முற்பிதாக்களுக்கு எருசலேம் நகரத்தைக் கொடுத்தேன். ஆனால், நான் உன்னையும் அந்நகரத்தையும் என்னை விட்டுத் தூர எறிவேன். [40]உன்னை முடிவற்ற அவமானத்திற்கு உள்ளாக்குவேன். உன் அவமானத்தை ஒருபோதும் நீ மறக்கமாட்டாய்.'"

### நல்ல அத்திகளும் கெட்ட அத்திகளும்

24 கர்த்தர் என்னிடம் இவற்றைக் காட்டினார்: கர்த்தருடைய ஆலயத்திற்கு முன்பு இரண்டு கூடைகள் நிறைய அத்திப் பழங்கள் அடுக்கப்பட்டிருப்பதைப் பார்த்தேன். (பாபிலோனிய அரசனான நேபுகாத்நேச்சார் எகொனியாவைச் சிறைபிடித்துச் சென்றபின் இக்காட்சியைக் கண்டேன். எகொனியா, யோகாக்கீம் அரசனின் மகனாவான். எருசலேமிலிருந்து எகொனியாவையும்* அவனது அதிகாரிகளையும் அழைத்துச் சென்றனர். அவர்கள் பாபிலோனுக்குக் கொண்டு செல்லப்பட்டனர். நேபுகாத்நேச்சார் யூதாவிலுள்ள அனைத்து தச்சர்களையும் கொல்லர்களையும் கொண்டு சென்றான்.) [2]ஒரு கூடையில் நல்ல அத்திப் பழங்கள் இருந்தன. அந்த அத்திப் பழங்கள் பருவத்தின் முதலில் பறித்த நல்லப் பழங்களாய் இருந்தன. ஆனால், அடுத்தக் கூடையில் அழுகிய பழங்கள் இருந்தன. அவை உண்ண முடியாத அளவிற்கு மிகவும் அழுகியதாக இருந்தன.

---

**கள்ள தீர்க்கதரிசிகள்** உண்மையான தீர்க்கதரிசிகளின் சொற்களைப் போன்றும் நடவடிக்கைகள் போன்றும் போலியாக நடித்து, உண்மையான தீர்க்கதரிசி யார்? கள்ள தீர்க்கதரிசி யார்? என்ற வேறுபாட்டினைக் கண்டறியமுடியாத சா தாரண ஜனங்களை ஏமாற்றுவதைக் குறிக்கலாம்.

**எகோனியா** யோயாக்கீமின் இன்னொரு பெயர்.

[3]கர்த்தர் என்னிடம், "நீ என்ன பார்க்கி
றாய், எரேமியா?" என்று கேட்டார். நான்,
"நான் அத்திப்பழங்களைப் பார்க்கிறேன்.
நல்லப் பழங்கள் மிகவும் நன்றாக உள்ளன.
அழுகிய பழங்கள் மிகவும் அழுகியதாக
உள்ளன. அவை உண்ண முடியாத அள
விற்கு அழுகியுள்ளன" என்று பதில் சொன்
னேன்.
[4]பிறகு, கர்த்தரிடமிருந்து எனக்கு வார்த்
தை வந்தது. [5]இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் கூறினார், "யூதாவின் ஜனங்கள்
அவர்களின் நாட்டிலிருந்து எடுத்துச்
செல்லப்பட்டனர். அவர்கள் பகைவர்கள்
அவர்களைப் பாபிலோனுக்குக் கொண்டு
வந்தனர். அந்த ஜனங்கள் இந்த நல்ல
அத்திப்பழங்களைப் போன்றவர்கள். நான்
அந்த ஜனங்களிடம் இரக்கத்துடன் இருப்
பேன். [6]நான் அவர்களைக் காப்பாற்றுவேன்.
நான் அவர்களை யூதா நாட்டிற்குக் கொண்டு
வருவேன். நான் அவர்களைக் கிழித்துப்
போடமாட்டேன். நான் அவர்களைக் கட்டு
வேன். நான் அவர்களை பிடுங்கமாட்டேன்.
நான் அவர்களை நட்டுவைப்பேன். அதனால்
அவர்கள் வளர முடியும். [7]நான் அவர்களை
என்னை அறிந்துகொள்ள விரும்புமாறு
செய்வேன். நானே கர்த்தர் என்பதை அவர்
கள் அறிவார்கள். அவர்கள் எனது ஜனங்
களாக இருப்பார்கள். நான் அவர்களின்
தேவனாக இருப்பேன். நான் இவற்றைச்
செய்வேன். ஏனென்றால், பாபிலோனில்
உள்ள அதிகாரிகள் தம் முழு மனதோடு
என்னிடம் திரும்புவார்கள்
[8]"ஆனால் யூதாவின் அரசனான சிதேக்
கியா உண்ண முடியாத அளவிற்கு அழுகிப்
போன அத்திப்பழங்களைப் போன்றவர்கள்.
சிதேக்கியா, அவனது உயர் அதிகாரிகள்
எருசலேமில் விடப்பட்ட ஜனங்கள் மற்றும்
எகிப்தில் வாழும் யூதாவிலுள்ள ஜனங்கள்
அனைவரும் அழுகிய அத்திப்பழங்களைப்
போன்றவர்கள்.
[9]"நான் அந்த ஜனங்களைத் தண்டிப்பேன்.
பூமியுலுள்ள அனைத்து ஜனங்களையும் அது
அதிர்ச்சிப்படுத்தும். யூதாவிலிருந்து வந்த
ஜனங்களை மற்ற ஜனங்கள் பரிகாசம்
செய்வார்கள். நான் சிதறடித்த அவர்களை,
எல்லா இடங்களிலும் ஜனங்கள் சபிப்பார்
கள். [10]நான் அவர்களுக்கு எதிராக வாள்,
பசி, நோய் ஆகியவற்றை அனுப்புவேன்.
நான், அவர்கள் அனைவரும் அழிக்கப்படும்
வரை தாக்குவேன். நான் அவர்களுக்கும்
அவர்களது முற்பிதாக்களுக்கும் கொடுத்த
நாட்டில் அவர்கள் என்றும் இல்லாமல்
போவார்கள்."

### எரேமியாவின் பிரசங்கத்தின் சுருக்கம்

25 யூதாவின் ஜனங்களைக் குறித்து எரே
மியாவிற்கு வந்த வார்த்தை இதுதான்.
யூதாவின் அரசனாக யோயாக்கீம் ஆண்ட
நான்காவது ஆண்டில் இந்த வார்த்தை
வந்தது. யோயாக்கீம் யோசியாவின் மகன்.
அவன் அரசனான நான்காவது ஆண்டு,
பாபிலோனின் அரசனான நேபுகாத்நேச்சா
ருக்கு முதல் ஆண்டாக இருந்தது. [2]எருச
லேமிலுள்ள அனைத்து ஜனங்களிடமும்
யூதாவிலுள்ள அனைத்து ஜனங்களிடமும்
எரேமியா தீர்க்கதரிசி பேசிய செய்தி
இதுதான். [3]கடந்த 23 ஆண்டுகளாக நான்
மீண்டும் மீண்டும் கர்த்தருடைய வார்த்தை
களைக் கொடுத்திருக்கிறேன். ஆமோனின்
மகனான யோசியா யூதாவில் அரசனாக
13 ஆண்டுகளாக நானும் தீர்க்கதரிசியாக
இருக்கிறேன். அந்தக் காலத்திலிருந்து இன்று
வரை உங்களுக்குக் கர்த்தரிடமிருந்து செய்
தியை நான் சொல்லி வருகிறேன். ஆனால்
நீங்கள் கவனிக்கவில்லை. [4]கர்த்தர் அவரது
வேலைக்காரராகிய தீர்க்கதரிசிகளை உங்க
ளிடம் மீண்டும் மீண்டும் அனுப்பிக்
கொண்டே இருக்கிறார். ஆனால் நீங்கள்
அவர்களைக் கவனிக்கவில்லை. நீங்கள்
அவர்களிடம் எவ்விதக் கவனமும் செலுத்த
வில்லை.
[5]அத்தீர்க்கதரிசிகள், "உங்கள் வாழ்க்
கையை மாற்றுங்கள். அத்தீயச் செயல்
களைச் செய்வதை நிறுத்துங்கள்! நீங்கள்
மாறினால், பிறகு, கர்த்தர் உங்களுக்கும்
உங்கள் முற்பிதாக்களுக்கும நீண்ட காலத்
திற்கு முன்பே கொடுத்த நாட்டிற்குத் திரும்பி
வருவீர்கள். அவர் அந்த நாட்டை நீங்கள்
என்றென்றும் வாழும்படி தந்தார். [6]அந்நிய
தெய்வங்களைப் பின்பற்ற வேண்டாம்.
அவர்களைத் தொழுதுகொள்ளவோ அவர்க
ளுக்குச் சேவை செய்யவோ வேண்டாம்.
யாரோ ஒருவர் செய்த விக்கிரகங்களைத்
தொழுதுகொள்ள வேண்டாம். அது உங்கள்
மீது எனக்குக் கோபத்தை மட்டும் ஊட்டும்.
இவ்வாறு செய்வது உங்களை மட்டுமே
பாதிக்கும்."
[7]"ஆனால் நீங்கள் என்னைக் கவனிக்க
வில்லை" இந்த வார்த்தை கர்த்தரிடமி
ருந்து வருகிறது. "யாரோ ஒருவரால்
செய்யப்பட்ட விக்கிரகங்களை நீங்கள்
தொழுதுகொண்டீர்கள். அது என்னைக்
கோபங்கொள்ளச் செய்தது. அது உங்
களையே பாதித்தது.
[8]எனவே, சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
சொல்வது இதுதான்: "நீங்கள் எனது
வார்த்தைகளைக் கவனித்துக்கொள்ள
வில்லை. [9]எனவே நான் வடக்கில் உள்ள
அனைத்து கோத்திரங்களையும் அனுப்பு
வேன்" இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து
வருகிறது. "நான் விரைவில் பாபிலோனின்
அரசனான நேபுகாத்நேச்சாரை அனுப்பு
வேன். அவன் எனது தாசன். நான்
அவர்களை யூதா நாட்டிற்கும் யூதாவின்
ஜனங்களுக்கும் எதிராக அனுப்புவேன்.

உங்களைச் சுற்றியுள்ள அனைத்து நாடுக
ளுக்கும் எதிராக அவர்களைக் கொண்டு
வருவேன். அந்நாடுகளை எல்லாம் நான்
அழிப்பேன். அந்நாடுகளை நான் என்றென்
றும் வனாந்தரமாகும்படிச் செய்வேன். அந்
நாடுகளை எல்லாம் ஜனங்களை பார்த்து
அவை எவ்வாறு அழிக்கப்பட்டன என்று
இகழ்ச்சியாக பிரமித்துப் பேசிக்கொள்வார்
கள். 10அவ்விடங்களில் உள்ள மகிழ்ச்சியான
மற்றும் சந்தோஷமான ஓசைகளை ஒரு
முடிவுக்குக் கொண்டு வருவேன். அங்கு
இனிமேல் மணமகள் மற்றும் மண மகன்
களின் மகிழ்ச்சி ஆரவாரம் இருக்காது.
ஜனங்கள் உணவுப் பொருளை அரைக்கும்
ஒலியை எடுத்து விடுவேன். விளக்கு
ஒளியையும் நான் எடுத்து விடுவேன்.
11அந்த இடம் முழுவதும் காலியான
வனாந்தரம் போன்று ஆகும். அந்த ஜனங்கள்
அனைவரும் பாபிலோன் அரசனுக்கு 70
ஆண்டுகளுக்கு அடிமைகளாக இருப்பார்கள்.
12“ஆனால் 70 ஆண்டுகள் ஆனதும் நான்
பாபிலோன் அரசனைத் தண்டிப்பேன். நான்
பாபிலோன் நாட்டையும் தண்டிப்பேன்.”
இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது.
“நான் பாபிலோனியர் நாட்டை அவர்களது
பாவங்களுக்காகத் தண்டிப்பேன். நான் அந்த
நாட்டினை என்றென்றும் வனாந்தர
மாக்குவேன். 13நான் பாபிலோனுக்குப் பல
தீமைகள் வரும் என்று சொல்லி இருந்தேன்.
அவை அனைத்தும் ஏற்படும். எரேமியா
அந்த அயல் நாடுகளைப்பற்றி தீர்க்கதரிசனம்
சொன்னான். அந்த எச்சரிக்கைகள் எல்லாம்
இந்தப் புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கின்றன.
14ஆம். பாபிலோனில் உள்ள ஜனங்கள்
பல நாடுகளுக்கும் பல பெரிய அரசர்க
ளுக்கும் சேவை செய்வார்கள். அவர்கள்
செய்யப்போகும் அனைத்துச் செயல்களுக்
கும் உரிய தண்டனையை நான் கொடுப்
பேன்.”

### உலகிலுள்ள நாடுகளுக்கான தீர்ப்புகள்

15கர்த்தரும் இஸ்ரவேலின் தேவனாகிய
கர்த்தர் என்னிடம் சொன்னது: “எரேமியா,
எனது கையிலுள்ள ஒரு கோப்பைத்
திராட்சைரசத்தை எடுத்துக்கொள். இது
எனது கோபமாகிய திராட்சைரசம். நான்
உன்னை வேறுபட்ட நாடுகளுக்கு அனுப்பிக்
கொண்டிருக்கிறேன். இந்தக் கோப்
பையிலிருந்து குடிக்குமாறு அந்நாடுகளைச்
செய். 16அவர்கள் இந்தத் திராட்சைரசத்தைக்
குடிக்கட்டும். பிறகு அவர்கள் வாந்தி எடுத்து
புத்தி கெட்டவர்களைப்போல் நடப்பார்கள்.
அவர்கள் இதனைச் செய்வார்கள். ஏனென்
றால், அவர்களுக்கு எதிராக நான் பட்ட
யத்தை விரைவில் அனுப்புவேன்.”
17எனவே, கர்த்தருடைய கையிலிருந்த
திராட்சைரசக் கோப்பையை நான் எடுத்துக்
கொண்டு, கர்த்தர் என்னை அனுப்பிய
எல்லா நாடுகளுக்கும் நான் சென்றேன்.
ஜனங்களை அக்கோப்பையிலிருந்து குடிக்
கும்படிச் செய்தேன். 18நான் இந்தத் திராட்சை
ரசத்தை எருசலேம் மற்றும் யூதா ஜனங்க
ளுக்கு ஊற்றினேன். யூதா அரசர்களையும்
தலைவர்களையும் கோப்பையிலிருந்து
குடிக்கச் செய்தேன். நான் இதனைச் செய்
தேன். எனவே அவர்கள் காலியான வனாந்
தரமாவார்கள். நான் இதனைச் செய்தேன்.
எனவே, அந்த இடம் மிக மோசமாக
அழிக்கப்படும். ஜனங்கள் அதைப்பற்றி
இகழ்ச்சியாகப் பேசி பிரமிப்பார்கள். அந்த
இடத்தைப்பற்றி சபிப்பார்கள். இது நிகழ்ந்
தது. யூதா இப்பொழுது அப்படித்தான்
இருக்கிறது.
19எகிப்தின் அரசனான பார்வோனையும்
அக்கோப்பையிலிருந்து குடிக்கச் செய்தேன்.
கர்த்தருடைய கோபமாகிய கோப்பையை
அவனது அதிகாரிகள், அவனது முக்கிய
மான தலைவர்கள் மற்றும் அவனது
அனைத்து ஜனங்கள் ஆகியோரைக் குடிக்கச்
செய்தேன்.
20அரேபியர்கள் அனைவரையும் ஊத்ஸ்
நாட்டிலுள்ள எல்லா அரசர்களையும் அக்
கோப்பையிலிருந்து குடிக்கச் செய்தேன்.
பெலிஸ்தியர்களின் நாட்டிலுள்ள அனைத்து
அரசர்களையும் கோப்பையிலிருந்து குடிக்க
வைத்தேன். அஸ்கலோன், காசா, எக்ரோன்,
அஸ்தோத் ஆகிய நகரங்களில் உள்ள அரசர்
கள் அவர்கள்.
21பிறகு, நான் ஏதோம், மோவாப்,
அம்மோன் ஆகிய ஜனங்களை கோப்பையி
லிருந்து குடிக்கச் செய்தேன்.
22தீரு மற்றும் சீதோனிலுள்ள அனைத்து
அரசர்களையும் கோப்பையிலிருந்து குடிக்கச்
செய்தேன். தொலைதூர நாடுகளிலுள்ள அர
சர்களையும் கோப்பையிலிருந்து குடிக்கச்
செய்தேன்.
23தேதான், தேமா, பூசு ஆகிய ஜனங்
களையும் கோப்பையிலிருந்து குடிக்கச் செய்
தேன். தங்கள் நெற்றிப்பக்கங்களில் தலை
முடியை வெட்டிக்கொண்ட அனைவரையும்
கோப்பையிலிருந்து குடிக்கச் செய்தேன்.
24அரபியாவிலுள்ள அனைத்து அரசர்
களையும் கோப்பையிலிருந்து குடிக்கச் செய்
தேன். இந்த அரசர்கள் வனாந்தரங்களில்
வாழ்கிறார்கள். 25சிம்ரி, ஏலாம், மேதியா
ஆகிய நாடுகளிலுள்ள அனைத்து அரசர்
களையும் கோப்பையிலிருந்து குடிக்கச்
செய்தேன். 26வடநாட்டிலுள்ள அருகிலும்
தொலைவிலுமுள்ள அனைத்து அரசர்களை
யும் கோப்பையிலிருந்து குடிக்கச் செய்தேன்.
அவர்களை ஒருவருக்குப் பின் ஒருவராகக்
குடிக்கச் செய்தேன். பூமியிலுள்ள அனைத்து
ராஜ்யங்களையும் கர்த்தருடைய கோபமாகிய
கோப்பையைக் குடிக்கும்படிச் செய்தேன்.
ஆனால் “சேசாக்கு” (பாபிலோன்) அரசன்

அனைத்து நாடுகளுக்கும் பிறகு இக்கோப்
பையிலிருந்து குடிப்பான்.
27"எரேமியா, அந்நாடுகளிடம் சொல். இது
தான் சர்வ வல்லமையுள்ள கர்த்தரும்
இஸ்ரவேல் ஜனங்களின் தேவனுமானவர்
சொல்கிறது, 'எனது கோபமாகிய இக்கோப்
பையைக் குடி. இதிலிருந்து குடி. வாந்தி
எடு! கீழே விழு. எழ வேண்டாம். ஏனென்
றால் உன்னைக் கொல்ல ஒரு பட்டயத்தை
அனுப்பிக்கொண்டிருக்கிறேன்.'
28"அந்த ஜனங்கள் உமது கையிலிருந்து
கோப்பையை எடுத்துக்கொள்ள மறுப்பார்
கள். அவர்கள் அதைக் குடிக்க மறுப்பார்கள்.
ஆனால் நீ அவர்களிடம், 'சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் இவற்றைச் சொல்கிறார்;
நீங்கள் இக்கோப்பையிலிருந்து குடித்துத்தீர
வேண்டும்! 29எனது நாமத்தால் அழைக்கப்
படுகிற எருசலேம் நகரத்திற்கு நான்
ஏற்கனவே இத்தீமைகளை ஏற்படுத்தி
விட்டேன். நீங்கள் தண்டிக்கப்படாமல் இருக்
கலாம் என்று ஒரு வேளை நினைக்கலாம்.
ஆனால் நீங்கள் நினைப்பது தவறு. நீங்கள்
தண்டிக்கப்ப டுவீர்கள். பூமியில் உள்ள
அனைத்து ஜனங்களையும் தாக்க நான்
ஒரு வாளை அழைத்துக் கொண்டிருக்
கிறேன்' என்கிறார்" என்பாய். இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது.

30"எரேமியா, நீ அவர்களுக்கு இச்செய்தி
யைக் கொடுப்பாய், 'கர்த்தர் மேலிருந்து
சத்தமிடுகிறார். அவர் அவரது பரிசுத்தமான
ஆலயத்தில் இருந்து சத்தமிடுகிறார்! கர்த்தர்
அவரது மேய்ச்சலிடம் (ஜனங்களிடம்)
சத்தமிடுகிறார்! அவரது சத்தங்கள் திராட்
சைப்பழங்களில் ரசமெடுக்க நடப்பவர்க
ளின் பாடலைப் போன்றுசத்தமாக இருக்கி
றது.
31பூமியிலுள்ள அனைத்து ஜனங்களிடமும்
அச்சத்தம் பரவுகிறது. அனைத்து சத்தம்
எதைக் குறித்துள்ளது? எல்லா நாடுகளில்
உள்ள ஜனங்களையும் கர்த்தர் தண்டித்துக்
கொண்டிருக்கிறார். கர்த்தர் ஜனங்களுக்கு
எதிராக தம் வாதங்களைச் சொன்னார்.
அவர் ஜனங்களை நியாயந்தீர்த்தார்.
இப்பொழுது அவர் தீய ஜனங்களை
பட்டயத்தால் கொன்று கொண்டிருக்கிறார்'"
இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது.
32இதைத்தான் சர்வ வல்லமையுள்ள கர்த்
தர் கூறுகிறார்: "நாடு விட்டு நாடு பேரழிவு
விரைவில் பரவும். அவை ஒரு வல்லமை
வாய்ந்த புயலைப்போன்று பூமியிலுள்ள
எல்லா தொலைதூர இடங்களுக்கு பரவும்!"
33நாட்டின் ஒரு எல்லையிலிருந்து இன்
னொரு எல்லைக்கு ஜனங்களின் மரித்த
உடல்கள் போய்ச் சேரும். மரித்த ஜனங்க
ளுக்காக எவரும் அழமாட்டார்கள். எவரும்
அந்த உடல்களை சேகரித்து அடக்கம்
செய்யமாட்டார்கள். அவை தரையில்
எருவைப் போன்று கிடக்குமாறு விடப்
படும்.
34மேய்ப்பர்களே (தலைவர்களே) நீங்கள்
ஆடுகளை (ஜனங்களை) வழிநடத்த வேண்
டும். பெருந்தலைவர்களே, நீங்கள் கதறத்
தொடங்குங்கள். வலியில் தரை மீது உரு
ளுங்கள்; ஆடுகளின் (ஜனங்களின்) தலைவர்
களே. ஏனென்றால், இது உங்களை
வெட்டுவதற்கான காலம். எங்கும் சிதறிப்
போகும், உடைந்த ஜாடியின் துண்டுகளைப்
போன்று, கர்த்தர் உங்களை முறித்து சித
றடிப்பார்.
35மேய்ப்பர்கள் ஒளிந்துகொள்ள எங்கும்
இடமில்லை. அத்தலைவர்கள் தப்பித்துக்
கொள்ள முடியாது.
36நான் மேய்ப்பர்கள் (தலைவர்கள்) சத்தமி
டுவதைக் கேட்கிறேன். ஆடுகளின் (ஜனங்
கள்) தலைவர்களின் புலம்பலை நான்
கேட்கிறேன். கர்த்தர் மேய்ச்சலிடங்களை
(நாட்டை) அழித்துக்கொண்டிருக்கிறார்.
37அந்த சமாதானமான மேய்ச்சல் நிலங்கள்
(அரண்மனைகள்) அழிக்கப்பட்டு காலியான
வனாந்தரங்களைப்போன்று ஆனது. இது
நிகழ்ந்தது, ஏனென்றால், கர்த்தர் கோபமாக
இருக்கிறார்.
38கர்த்தர், தன் குகையை விட்டுவெளியே
வரும் ஆபத்தான சிங்கத்தைப்போன்று இருக்
கிறார். கர்த்தர் கோபமாக இருக்கிறார்! அந்த
கோபம் அந்த ஜனங்களைப் பாதிக்கும்.
அவர்களின் நாடு காலியானவனாந்தரம்
போன்று ஆகும்.

### ஆலயத்தில் எரேமியாவின் பாடம்

26 யூதாவின் அரசனாக யோயாக்கீம்
வந்த முதலாம் ஆட்சி ஆண்டில்
கர்த்தரிடமிருந்து இந்த வார்த்தை வந்தது.
யோயாக்கீம் யோசியாவின் மகனாக இருந்
தான். 2கர்த்தர், "எரேமியா, கர்த்தருடைய
ஆலயப் பிரகாரத்தில் எழுந்து நில். கர்த்த
ருடைய ஆலயத்திற்குத் தொழுதுகொள்ள
வரும் யூதாவின் ஜனங்கள் அனைவரிடமும்
இந்த வார்த்தையைக் கூறு. நான் சொல்லச்
சொன்ன எல்லாவற்றையும் அவர்களுக்குச்
சொல். எனது வார்த்தையில் எந்தப் பகுதி
யையும் விட்டுவிடாதே. 3ஒருவேளை எனது
வார்த்தையை அவர்கள் கேட்டு அதற்கு
அடிபணியலாம். ஒருவேளை அவர்கள் தமது
தீயவாழ்வை நிறுத்தலாம். அவர்கள்
மாறினால், பிறகு நான் அவர்களைத் தண்
டிப்பதற்காக வைத்திருக்கும் திட்டங்களை
யும் மாற்றுவேன். அந்த ஜனங்கள்
ஏற்கனவே செய்த தீயச்செயல்களுக்காகத்
தான் நான் அவர்களைத் தண்டிக்க வேண்
டும் எனத் திட்டமிட்டேன். 4நீ அவர்களிடம்
சொல்லுவாய், "இதுதான் கர்த்தர் சொன்
னது; நான் உங்களிடம் எனது போதனைக
ளைக் கொடுத்தேன். நீங்கள் எனக்குக்

கீழ்ப்படிந்து, என் போதனைகளைப் பின்
பற்ற வேண்டும். 5எனது ஊழியக்காரர்கள்
சொல்லுகிறவற்றை நீங்கள் கேட்க வேண்
டும். (தீர்க்கதரிசிகள் எனது ஊழியக்காரர்
கள்.) நான் தீர்க்கதரிசிகளை மீண்டும்
மீண்டும் உங்களிடம் அனுப்பியிருக்கிறேன்.
ஆனால் நீங்கள் அவர்களைக் கவனிக்க
வில்லை. 6நீங்கள் எனக்குக் கீழ்ப்படியா
விட்டால், பிறகு நான் எருசலேமிலுள்ள
என் ஆலயத்தை, சீலோவிலுள்ள எனது
பரிசுத்தக் கூடாரத்தைப் போன்றுச் செய்
வேன். உலகம் முழுவதிலும் உள்ள ஜனங்
கள், மற்ற நகரங்களுக்குக் கேடுகள் ஏற்படும்
படி வேண்டும்போது எருசலேமை நினைத்
துக்கொள்வார்கள்'" என்றார்.

7ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும் மற்றும்
அனைத்து ஜனங்களும் எரேமியா கர்த்தரு
டைய ஆலயத்தில் இவ்வார்த்தைகளைச்
சொல்வதைக் கேட்டனர். 8கர்த்தர் கட்டளை
இட்டிருந்தபடி ஜனங்களிடம் சொல்ல வேண்
டியவற்றையெல்லாம் எரேமியா சொல்லி
முடித்தான். பிறகு ஆசாரியர்களும் தீர்க்க
தரிசிகளும் அனைத்து ஜனங்களும் எரே
மியாவைப் பிடித்தனர். அவர்கள் "இத்தகைய
பயங்கரமானவற்றை நீ சொன்னதற்காக
மரிக்க வேண்டும்" என்றனர். 9கர்த்தருடைய
நாமத்தால் இத்தகைய பயங்கரமானவற்றைச்
சொல்ல உனக்கு எவ்வளவு தைரியம்
இருக்க வேண்டும். 'இவ்வாலயம் சீலோவி
லுள்ளதைப் போன்று அழிக்கப்படும் என்று
சொல்ல எவ்வளவு தைரியம் இருக்க
வேண்டும். இந்த ஜனங்களும் வாழாதபடி
எருசலேம் வனாந்தரமாகிவிடும் என்று எப்
படி தைரியமாக சொல்வாய்?" என்றனர்.
ஜனங்கள் எல்லோரும் கர்த்தருடைய ஆலயத்
தில் எரேமியாவைச் சுற்றிக்கூடினார்கள்.

10இங்கு நடந்த அனைத்தையும் யூதாவை
ஆள்பவர்கள் கேள்விப்பட்டனர். எனவே,
அவர்கள் அரசனின் அரண்மனையை விட்டு
வெளியே வந்தனர். அவர்கள் கர்த்தருடைய
ஆலயத்திற்குச் சென்றனர். அங்கே அவர்கள்
புதிய வாயிலின் முகப்பில் தங்கள் இடத்தில்
அமர்ந்தனர். புதிய வாசல் கர்த்தருடைய
ஆலயத்திற்குள் வழிநடத்தும் வாசல். 11பிறகு
ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும் ஆள்வோர்
களிடமும் ஜனங்களிடமும் பேசினார்கள்.
அவர்கள், "எரேமியா கொல்லப்பட வேண்
டும். அவன் எருசலேமைப்பற்றி கெட்ட
வற்றைக் கூறினான். அவன் சொன்னவற்றை
யெல்லாம் நீங்கள் கேட்டிருக்கிறீர்கள்" என்ற
னர்.

12பிறகு எரேமியா, யூதாவின் ஆள்வோர்க
ளிடமும் மற்ற ஜனங்களிடமும் பேசினான்.
அவன், சொன்னான், "இவ்வாலயம் மற்றும்
நகரைப்பற்றி இவற்றைச் சொல்ல என்னைக்
கர்த்தர் அனுப்பினார். நீங்கள் கேட்ட
அனைத்தும் கர்த்தரிடமிருந்து வந்தது.
13ஜனங்களே, உங்கள் வாழ்க்கையை மாற்
றுங்கள்! நல்லவற்றைச் செய்யத் தொடங்குங்
கள்! உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு
நீங்கள் கீழ்ப்படிய வேண்டும். நீங்கள் அவ்
வாறு செய்தால், கர்த்தர் தமது மனதை
மாற்றுவார். உங்களுக்குச் சொன்ன தீயச்
செயல்களைக் கர்த்தர் செய்யமாட்டார்.
14என்னைப் பொறுத்தவரை, நான் உங்கள்
அதிகாரத்தில் இருக்கிறேன். நீங்கள் உங்க
ளுக்குத் தோன்றினபடி நல்லது என்று
எதை எண்ணுகிறீர்களோ அதை எனக்குச்
செய்யுங்கள். 15ஆனால் நீங்கள் என்னைக்
கொன்றால், ஒன்றை உறுதியாக வைத்துக்
கொள்ளுங்கள். ஒரு அப்பாவி மனிதனைக்
கொன்ற குற்றம் உங்களைச் சேரும். நீங்கள்
இந்த நகரத்தையும் இதில் வாழும் ஜனங்க
ளையும் குற்றமுடையவர்களாக ஆக்குகிறீர்
கள். உண்மையாகவே கர்த்தர் என்னை
உங்களிடம் அனுப்பினார். உண்மையாகவே
நீங்கள் கேட்ட செய்திகள் எல்லாம் கர்த்த
ருடையவை."

16பிறகு, ஆள்வோர்களும் அனைத்து
ஜனங்களும் பேசினார்கள். அந்த ஜனங்கள்
ஆசாரியர்களிடமும் தீர்க்கதரிசிகளிடமும்
பேசினார்கள். "எரேமியா கொல்லப்படக்
கூடாது. எரேமியா சொன்னவை எல்லாம்
நமது தேவனாகிய கர்த்தரிடமிருந்து வந்
தது."

17பிறகு, சில மூப்பர்கள் (தலைவர்கள்)
எழுந்து, அனைத்து ஜனங்களிடமும் பேசி
னார்கள். 18அவர்கள், "மொரேசா நகரிலி
ருந்து மீகா என்னும் தீர்க்கதரிசி வந்தான்.
யூதாவின் அரசனாக எசேக்கியா இருந்த
காலத்தில், மீகா தீர்க்கதரிசியாக இருந்தான்.
யூதாவிலுள்ள அனைத்து ஜனங்களிடமும்
மீகா இச்செய்திகளைக் கூறினான். 'சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்;
"சீயோன்" அழிக்கப்படும். அது உழப்பட்டவ
யல் போன்று ஆகும். எருசலேம் பாறைக
ளின் குவியலாகும். ஆலயம் இருக்கிற
குன்றானது புதர்கள் மூடின ஒரு காலி
குன்றாகும்."

19"எசேக்கியா யூதாவின் அரசனாக
இருந்தான். எசேக்கியா மீகாவைக் கொல்ல
வில்லை. யூதாவிலுள்ள எந்த ஜனங்களும்
மீகாவைக் கொல்லவில்லை. எசேக்கியா
கர்த்தரை மதித்தான் என்பது உங்களுக்குத்
தெரியும். அவன் கர்த்தருக்குப் பிரியமான
தைச் செய்ய விரும்பினான். யூதாவிற்குத்
தீமை செய்வேன் என்று கர்த்தர் கூறியி
ருந்தார். ஆனால் எசேக்கியா கர்த்தரிடம்
ஜெபித்தான். கர்த்தர் அவரது மனதை
மாற்றிக்கொண்டார். கர்த்தர் அந்தத் தீமை
களைச் செய்யவில்லை. நாம் எரேமி
யாவைத் தாக்கினால் நமக்கு நாமே பல
தொல்லைகளை வரவழைத்துக் கொண்டவர்
களாவோம். அத்தொல்லைகளுக்கு நாமே
காரணம் ஆவோம்."

20கடந்த காலத்தில், கர்த்தருடைய
வார்த்தையைப் பிரச்சாரம் செய்ய இன்
னொரு மனிதன் இருந்தான். அவனது
பெயர் உரியா. அவன் செமாயாவின் மகன்.
உரியா கீரியாத்யாரீம் என்ற ஊரைச்
சேர்ந்தவன். எரேமியா செய்தது போன்றே
அவனும் இந்நகரத்திற்கும் தேசத்திற்கும்
எதிராக தீர்க்கதரிசனம் கூறினான். 21உரியா
பிரச்சாரம் செய்வதை யோயாக்கீம் அரச
னும் அவனது படை அதிகாரிகளும் யூதா
வின் தலைவர்களும் கேட்டனர். அவர்கள்
கோபம் கொண்டனர். யோயாக்கீம் அரசன்
உரியாவைக் கொல்ல விரும்பினான்.
ஆனால் உரியா யோயாக்கீம் தன்னைக்
கொல்ல விரும்புவதைப்பற்றி அறிந்தான்.
உரியா பயந்தான். எனவே எகிப்து நாட்
டிற்குத் தப்பித்து ஓடினான். 22ஆனால்,
யோயாக்கீம் அரசன் எகிப்துக்கு எல்நாத்
தானையும் இன்னும் சிலரையும் அனுப்பி
னான். எல்நாத்தான் அக்போர் என்ற பெயர்
உள்ளவனின் மகன். 23அவர்கள் உரியாவை
எகிப்திலிருந்து கொண்டுவந்தனர். பிறகு,
அவர்கள் உரியாவை அரசன் யோயாக்
கீமிடம் கொண்டு போனார்கள். உரியா
பட்டயத்தால் கொல்லப்பட வேண்டும் என்று
யோயாக்கீம் அரசன் கட்டளையிட் டான்.
உரியாவின் உடல் ஏழை ஜனங்கள்
புதைக்கப்படுகிற சுடுகாட்டில் வீசப்பட்டது.
24ஒரு முக்கியமான மனிதன் அகீக்காம்
என்ற பெயருடன் இருந்தான். அவன்
சாப்பானுடைய மகன். அகீக்காம் எரேமியா
விற்கு உதவியாக இருந்தான். ஆசாரியர்களா
லும் தீர்க்கதரிசிகளாலும் எரேமியா கொல்
லப்படாமல், அகீக்காம் அவனைக் காப்பாற்
றினான்.

### கர்த்தர் நேபுகாத்நேச்சாரை ஆளுபவனாக ஏற்படுத்தினார்

27 எரேமியாவிற்குக் கர்த்தரிடமிருந்து
ஒரு வார்த்தை வந்தது. யூதாவின்
அரசனாக சிதேக்கியா ஆன நான்காம்
ஆட்சி ஆண்டில் இது வந்தது. சிதேக்கியா,
யோசியா அரசனின் மகன். 2இதுதான்
கர்த்தர் என்னிடம் சொன்னது: “எரேமியா,
நீ பட்டையான வார் மற்றும் கம்பங்
களையும் கொண்டு ஒரு நுகத்தடி செய்.
அதை உன் கழுத்தின் பின்னால் பூட்டிக்
கொள். 3பிறகு நீ ஏதோம், மோவாப்,
அம்மோன், தீரு, சீதோன் ஆகிய அரசர்
களுக்குச் செய்தியை (அது போன்று
நுகத்தை) அனுப்பு. எருசலேமுக்கு வந்துள்ள
இந்த அரசர்களின் தூதுவர்களிடம் யூதாவின்
அரசர்களான சிதேக்கியாவைப் பார்க்கும்படி
செய்திகள் அனுப்பு. 4அந்தத் தூதுவர்களிடம்
அவர்களது எஜமானர்களிடம் செய்தியைக்
கூறுமாறுச் சொல். அவர்களிடம் சொல்:
‘சர்வ வல்லமையுள்ள கர்த்தர், இஸ்ரவேலின்
தேவன் சொல்கிறார்: நான் பூமியையும்
அதன்மேல் ஜனங்களையும் உண்டாக்கி
னேன் என்று சொல். 5நான் பூமியின்
மேல் அனைத்து மிருகங்களையும் உண்
டாக்கினேன். நான் இவற்றை எனது பெரும்
வல்லமையாலும் பலமான கையாலும்
செய்தேன். இந்தப் பூமியை நான் விரும்புகிற
யாருக்கு வேண்டுமானாலும் கொடுப்பேன்.
6நான் இப்பொழுது பாபிலோனின் அரச
னான நேபுகாத்நேச்சாரிடம் உங்கள் நாடுகள்
அனைத்தையும் கொடுத்திருக்கிறேன். அவன்
எனது வேலையாள். அவனுக்குக் காட்டு
மிருகங்கள்கூட பணியும்படிச் செய்வேன்.
7அனைத்து நாடுகளும் நேபுகாத்நேச்சாருக்குச்
சேவை செய்யும். அவனது மகனுக்கும்
பேரனுக்கும் சேவை செய்யும். பிறகு பாபி
லோன் தோற்கடிக்கப்படக் கூடிய காலம்
வரும். பல நாடுகளும் பெரும் அரசர்களும்
பாபிலோனைத் தம் வேலையாளாக வைப்
பார்கள்.
8“‘ஆனால், இப்பொழுது சில நாடுகளும்
இராஜ்யங்களும் பாபிலோன் அரசனான
நேபுகாத்நேச்சாருக்கு சேவை செய்ய மறுக்கி
றது. அவர்கள் நுகங்களைத் தம் கழுத்தில்
மாட்டிக்கொள்ள மறுக்கலாம். அது நிகழ்ந்
தால், நான் செய்வது இதுதான். அந்த
நாட்டை நான் பட்டயம், பசி மற்றும்
பயங்கரமான நோயால் தண்டிப்பேன்’” இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது.
“நான் அந்த நாட்டை அழித்து முடிக்கும்
வரை இதனைச் செய்வேன். நேபுகாத்நேச்சா
ருக்கு எதிராகச் சண்டையிட்ட நாடுகளை
அழிக்க நான் அவனைப் பயன்படுத்துவேன்.
9எனவே, உங்கள் தீர்க்கதரிசிகள் சொல்
வதைக் கேட்காதீர்கள். எதிர்காலத்தில்
என்ன நடக்கும் என்பதைச் சொல்ல மந்திரத்
தைப் பயன்படுத்தும் ஆட்கள் சொல்வதைக்
கேட்காதீர்கள். தங்கள் கனவுகளுக்கு விளக்
கங்கள் கூறுபவர்கள் சொல்வதைக் கேட்கா
தீர்கள். மரித்தவர்களோடும் மந்திரம் பயிற்சி
செய்வோர்களோடும் பேசுபவர்கள் சொல்
வதைக் கேட்காதீர்கள். அந்த ஜனங்கள்
எல்லாம் உங்களிடம், “பாபிலோன் அரச
னுக்கு அடிமையாகமாட்டீர்கள்” என்று
சொல்கிறார்கள். 10ஆனால் அந்த ஜனங்கள்
உங்களிடம் பொய் சொல்லிக்கொண்டிருக்கி
றார்கள். நீங்கள் உங்கள் தாய் நாட்டிலிருந்து
தூரநாட்டிற்குக் கொண்டு போகப்பட அவர்
கள் காரணமாக இருக்கிறார்கள். நான்
உங்களை வீட்டிலிருந்து போகும்படி வற்
புறுத்துவேன். நீங்கள் வேறு நாட்டில்
மரிப்பீர்கள்.
11“‘ஆனால் பாபிலோன் அரசனின் நுகத்
திற்குள் தங்கள் கழுத்தை மாட்டிக்கொண்டு
அவனுக்குக் கீழ்ப்படிபவர்களாக வாழ்வர்.
நான் அந்நாட்டாரைத் தங்கள் சொந்த
நாட்டிலேயே இருந்து பாபிலோன் அரச
னுக்குச் சேவை செய்யச் செய்வேன்’”
இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.

“அந்நாடுகளில் உள்ள ஜனங்கள் தம் சொந்த
நாட்டில் வாழ்ந்து பயிர் செய்வார்கள்.
12“நான் யூதாவின் அரசனான சிதேக்கியா
விற்கு அதே செய்தியைக் கொடுத்தேன்.
நான், “சிதேக்கியா, நீ பாபிலோன் அரசனது
நுகத்திற்குள் உன் கழுத்தை மாட்டிக்
கொண்டு அவனுக்குக் கீழ்ப்படிந்து போக
வேண்டும். நீ பாபிலோன் அரசனுக்கும்
அவனது ஜனங்களுக்கும் சேவை செய்தால்,
பிறகு நீ வாழ்வாய். 13பாபிலோன் அரச
னுக்குச் சேவை செய்ய மறுக்கும் ஜனங்கள்
பகைவரின் வாள், பசி, பயங்கரமான
நோய் ஆகியவற்றால் மரிப்பார்கள். பாபி
லோனிய அரசனுக்குப் பணிபுரிய மறுக்கும்
ஜனங்களுக்கு இவை எல்லாம் நிகழும்.
கர்த்தர் இக்காரியங்கள் நடக்கும் என்று
கூறினார். 14ஆனால் கள்ளத் தீர்க்கதரிசி
களோ, பாபிலோன் அரசனுக்கு நீங்கள்
என்றென்றும் அடிமையாக மாட்டீர்கள்
என்று சொல்கிறார்கள். “‘அத்தீர்க்கதரிசிகள்
சொல்வதைக் கேட்காதீர்கள். ஏனென்றால்,
அவர்கள் உங்களிடம் பொய்யைப் பிரச்
சாரம் செய்கின்றனர். 15நான் அத்தீர்க்க
தரிசிகளை அனுப்பவில்லை!” இந்த வார்த்
தை கர்த்தரிடமிருந்து வருகிறது “அவர்கள்
பொய்களைப் போதிக்கிறார்கள். இது என்
னிடமிருந்து வந்ததாகச் சொல்கிறார்கள்.
எனவே, யூதாவின் ஜனங்களாகிய உங்களை
வெளியே அனுப்புவேன். நீங்களும் மரிப்
பீர்கள். உங்களிடம் கள்ள தீர்க்கதரிசனம்
உரைத்த அத்தீர்க்கதரிசிகளும் மரிப்பார்கள்.”

16பிறகு, நான் (எரேமியா) ஆசாரியர்களிட
மும் அனைத்து ஜனங்களிடமும் சொன்
னேன். “கர்த்தர் சொல்கிறார்: அந்த கள்ளத்
தீர்க்கதரிசிகள் சொல்லிக்கொண்டிருக்கி
றார்கள். ‘பாபிலோனியர்கள் கர்த்தருடைய
ஆலயத்தில் இருந்து பலப் பொருட்களை
எடுத்தனர். அப்பொருட்கள் மீண்டும் விரை
வில் திரும்பக் கொண்டுவரப்படும்.’ அத்
தீர்க்கதரிசிகள் சொல்வதைக் கேளாதீர்கள்.
ஏனென்றால், அவர்கள் உங்களிடம் பொய்
யைப் பிரசங்கம் செய்துகொண்டிருக்கி
றார்கள். 17அத்தீர்க்கதரிசிகளைக் கவனிக்
காதீர்கள். பாபிலோன் அரசனுக்குச் சேவை
செய்யுங்கள். உங்கள் தண்டனையை ஏற்றுக்
கொள்ளுங்கள். நீங்கள் வாழ்வீர்கள். எருச
லேம் நகரம் அழிக்கப்பட நீங்கள் காரணமாக
இராதீர்கள். 18அம்மனிதர்கள் தீர்க்கதரிசிக
ளாக இருந்தால், கர்த்தரிடமிருந்து வார்த்தை
யைப் பெற்றிருந்தால், அவர்களை ஜெபிக்க
விடுங்கள். கர்த்தருடைய ஆலயத்தில் இருக்
கும் பொருட்களுக்காக அவர்களை ஜெபிக்க
விடுங்கள். அரசனது அரண்மனையில்
இன்னும் இருக்கும் பொருட்களுக்காக அவர்
களை ஜெபிக்க விடுங்கள். எருசலேமில்
இன்னும் இருக்கின்ற பொருட்களுக்காக
அவர்களை ஜெபிக்க விடுங்கள். இவ்வ
னைத்து பொருட்களும் பாபிலோனுக்கு
எடுத்துச் செல்லாமல் இருக்கும்படி அத்தீர்க்க
தரிசிகளை ஜெபிக்க விடுங்கள்.”
19சர்வ வல்லமையுள்ள கர்த்தர் எருச
லேமில் இன்னும் விடப்பட்டுள்ள பொருட்
களைப்பற்றிக் கூறுகிறார். ஆலயத்தில்
தூண்களும் கடல் தொட்டியும் ஆதாரங்களும்
மற்ற பணிமூட்டுகளும் உள்ளன. பாபி
லோனின் அரசன் நேபுகாத்நேச்சார் எருச
லேமில் இவற்றை விட்டுவைத்தான். 20நேபு
காத்நேச்சார், அரசன் யோயாக்கீமின் சிறைக்
கைதியாக வெளியே கொண்டு சென்ற
போது, இப்பொருட்களை எடுத்துச் செல்ல
வில்லை. யோயாக்கீமின் அரசனின் மகன்
எகொனியா யூதாவிலிருந்தும், எருசலேமிலி
ருந்தும் சில முக்கியமான ஜனங்களையும்
நேபுகாத்நேச்சார் கொண்டு சென்றான்.
21சர்வ வல்லமையுள்ள கர்த்தர், இஸ்ரவேல்
ஜனங்களின் தேவன், கர்த்தருடைய ஆலயத்
திலும் அரசனின் அரண்மனையிலும் எருச
லேமிலும் விடப்பட்டுள்ள பொருட்களைப்
பற்றி கூறுகிறார்: “அப்பொருட்கள் அனைத்
தும் பாபிலோனுக்கு எடுத்துச் செல்லப்படும்.
22அவற்றைப் பெறுவதற்காக நான் போகும்
காலத்தில் அப்பொருட்கள் மீண்டும் கொண்
டுவரப்படும்.” இந்த வார்த்தை கர்த்தரிட
மிருந்து வந்தது. “பிறகு நான் அப்பொருட்
களைத் திரும்ப கொண்டுவருவேன். இந்த
இடத்தில் அப்பொருட்களை மீண்டும் வைப்
பேன்.”

### பொய்த் தீர்க்கதரிசி அனனியா

28 யூதாவின் அரசனாகிய சிதேக்கியா
வின் ஆட்சியாண்டான நாலாம் வரு
ஷம் ஐந்தாம் மாதம், அனனியா என்னும்
தீர்க்கதரிசி என்னிடம் பேசினான். அன
னியா அசூர் என்பவனின் மகன். அனனியா
கிபியோன் என்னும் நகரத்தினன். அனனியா
என்னிடம் பேசும்போது, அவன் கர்த்தரு
டைய ஆலயத்தில் இருந்தான். ஆசாரியர்க
ளும் மற்ற ஜனங்களும் அங்கு இருந்தனர்
அனனியா சொன்னது இதுதான்: 2“சர்வ
வல்லமையுள்ள கர்த்தர், இஸ்ரவேல் ஜனங்
களின் தேவன் சொல்கிறார்: ‘யூதா ஜனங்
களின் மேல் பாபிலோன் அரசனால் போடப்
பட்ட நுகத்தை நான் உடைப்பேன். 3இரண்டு
ஆண்டுகள் முடிவதற்கு முன்னால், பாபிலோ
னின் அரசனான நேபுகாத்நேச்சார் கர்த்த
ருடைய ஆலயத்தில் இருந்து எடுத்துச்
சென்ற எல்லாப் பொருட்களையும் திரும்பக்
கொண்டுவருவேன். நேபுகாத்நேச்சார் அப்
பொருட்களை பாபிலோனிர்கு எடுத்துச்
சென்றிருக்கிறான். ஆனால் நான் அப்பொ
ருட்களை இங்கே எருசலேமிற்குக் கொண்டு
வருவேன். 4நான் யூதாவின் அரசனான
எகொனியாவையும் இந்த இடத்திற்குத் திரும்
பக் கொண்டு வருவேன். எகொனியா

யோயாக்கீமின் மகன், நேபுகாத்நேச்சார் பல
வந்தப்படுத்தி வீட்டைவிட்டு அழைத்து
பாபிலோனுக்குச் சென்ற ஜனங்கள் அனை
வரையும் திரும்பக் கொண்டுவருவேன்' இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.
'எனவே யூதாவின் ஜனங்கள் மீது பாபி
லோன் அரசனால் போடப்பட்ட நுகத்தை
நான் உடைப்பேன்!'"
5 பிறகு எரேமியா தீர்க்கதரிசி அனனியா
தீர்க்கதரிசிக்கு பதில் சொன்னான். அவர்கள்
கர்த்தருடைய ஆலயத்தில் நின்று கொண்டி
ருந்தனர். எரேமியாவின் பதிலை ஆசாரியர்
களும் அங்குள்ள அனைத்து ஜனங்களும்
கேட்க முடிந்தது. 6 எரேமியா அனனியா
விடம் "ஆமென்! கர்த்தர் இவற்றைச் செய்
வார் என்று நான் உண்மையில் நம்புகி
றேன்! நீ பிரச்சாரம் செய்கிற இச்செய்தி
யைக் கர்த்தர் உண்மையாகும்படி செய்வார்.
பாபிலோனிலிருந்து கர்த்தருடைய ஆலயத்
தில் உள்ள பொருட்களை எல்லாம் திரும்பக்
கொண்டுவருவார் என்று நம்புகிறேன். தங்
கள் வீடுகளிலிருந்து பலவந்தமாக அழைத்
துச் செல்லப்பட்ட அனைத்து ஜனங்களை
யும் இந்த இடத்திற்குத் திரும்பவும் கர்த்தர்
கொண்டுவருவார் என்று நான் நம்புகிறேன்.
7 "ஆனால் நான் சொல்லவேண்டியதைக்
கவனி, அனனியா, ஜனங்கள் அனைவருக்
கும் நான் என்ன சொல்கிறேன் என்பதையும்
கவனி. 8 நீயும் நானும் தீர்க்கதரிசிகளாக
வருவதற்கு வெகுகாலத்திற்கு முன்பு சில
தீர்க்கதரிசிகள் இருந்தனர். போர், பசி,
பயங்கரமான நோய் ஆகியவை பல நாடுக
ளுக்கும், பெரும் இராஜ்யங்களுக்கும் ஏற்படும்
என்று அவர்கள் பிரச்சாரம் செய்தனர்.
9 ஆனால் பிரச்சாரம் செய்கிற தீர்க்கதரிசி
நமக்கு சமாதானம் வரும் என்று சொன்
னால் அவன் கர்த்தரால் அனுப்பப்பட்ட
வனா என்பதை நாம் சோதித்து பார்க்க
வேண்டும். தீர்க்கதரிசி சொன்ன செய்தி
உண்மையானால் பிறகு ஜனங்கள் அவன்
உண்மையில் கர்த்தரால் அனுப்பப்பட்டவன்
என்பதை அறிவார்கள்."
10 எரேமியா தன் கழுத்தைச்சுற்றி நுகத்தை
அணிந்துகொண்டான். பிறகு அனனியா
தீர்க்கதரிசி அந்த நுகத்தை எரேமியாவின்
கழுத்திலிருந்து எடுத்தான். அனனியா அந்
நுகத்தை உடைத்தான். 11 பிறகு அனனியா
உரக்கப் பேசினான், எனவே அனைத்து
ஜனங்களாலும் கேட்க முடிந்தது. அவன்,
"கர்த்தர் கூறுகிறார்: 'இதே மாதிரி நான்
பாபிலோன் அரசன் நேபுகாத்நேச்சாரின்
ஆட்சியை உடைப்பேன். அவன் அந்
நுகத்தை உலகிலுள்ள அனைத்து நாடுகள்
மேலும் வைத்தான். இரண்டு ஆண்டுகள்
முடியுமுன்னால் நான் அந்நுகத்தை உடைப்
பேன்'" என்றான். அதனை அனனியா
சொன்ன பிறகு, எரேமியா ஆலயத்தை
விட்டுச் சென்றான்.

12 பிறகு கர்த்தருடைய செய்தி எரேமியா
விற்கு வந்தது. இது, அனனியா எரேமியா
வின் கழுத்திலிருந்து நுகத்தை எடுத்து
உடைத்தப் பிறகு நிகழ்ந்தது. 13 கர்த்தர்
எரேமியாவிடம் சொன்னார், "போய் அன
னியாவிடம் சொல். 'இதைத்தான் கர்த்தர்
கூறுகிறார். நீ ஒரு மரநுகத்தை உடைத்து
விட்டாய் நான் மரநுகத்தின் இடத்தில்
இரும்பாலான நுகத்தை வைப்பேன்.' 14 சர்வ
வல்லமையுள்ள இஸ்ரவேலரின் தேவனாகிய
கர்த்தர் கூறுகிறார்: 'இந்த அனைத்து
நாடுகளின் கழுத்துகளிலும் இரும்பு நுகத்
தைப் பூட்டுவேன். அவர்கள் அனைவரும்
பாபிலோனின் அரசனான நேபுகாத்நேச்
சருக்குச் சேவை செய்யும்படிச் செய்வேன்.
அவர்கள் அவனுக்கு அடிமைகளாக இருப்
பார்கள். நேபுகாத்நேச்சருக்குக் காட்டுமிருகங்
களையும் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைக்
கொடுப்பேன்.'"

15 பிறகு எரேமியா தீர்க்கதரிசி அனனியா
தீர்க்கதரிசியிடம் சொன்னான், "அனனியா,
கவனி! கர்த்தர் உன்னை அனுப்பவில்லை.
ஆனால் நீ யூதாவின் ஜனங்களைப் பொய்
யை நம்பச்செய்தாய். 16 எனவே கர்த்தர்
இதைத்தான் சொல்கிறார்: 'அனனியா,
உன்னை இந்த உலகத்தை விட்டு விரைவில்
எடுத்துவிடுவேன். இந்த ஆண்டில் நீ மரிப்
பாய். ஏனென்றால் நீ ஜனங்களைக் கர்த்த
ருக்கு எதிராகத் திரும்பும்படிக் கற்பித்தாய்.'"
17 அனனியா அதே ஆண்டில் ஏழாவது
மாதத்தில் மரித்தான்.

### பாபிலோனிலுள்ள யூதா கைதிகளுக்கு ஒரு கடிதம்

29 எரேமியா பாபிலோனிலுள்ள யூதா
கைதிகளுக்கு ஒரு கடிதம் அனுப்பி
னான். பாபிலோனில் உள்ள மூப்பர்களுக்கும்
(தலைவர்கள்) ஆசாரியர்களுக்கும் தீர்க்கதரிசி
களுக்கும் மற்ற ஜனங்களுக்கும் அவன்
அதனை அனுப்பினான். இந்த ஜனங்க
ளெல்லாம் நேபுகாத்நேச்சாரால் எருசலேமிலி
ருந்து சிறைபிடிக்கப்பட்டு பாபிலோனுக்குக்
கொண்டு செல்லப்பட்டவர்கள். 2 (இந்தக்
கடிதம், எகொனியா அரசனும் அரச மாதா
வும், அதிகாரிகளும், யூதா, எருசலேம்
மற்றும் யூதா தலைவர்களும், தச்சர்களும்
கொல்லர்களும் எருசலேமிலிருந்து கொண்டு
செல்லப்பட்டப் பிறகு அனுப்பப்பட்டது.)
3 சிதேக்கியா எலெயாசா மற்றும் கெமரி
யாவை நேபுகாத்நேச்சார் அரசனிடம் அனுப்
பினான். சிதேக்கியா யூதாவின் அரசன்.
எலெயாசா சாப்பானின் மகன். கெமரியா
இல்க்கியாவின் மகன். எரேமியா அவர்களி
டம் பாபிலோனுக்கு கொண்டு செல்லுமாறு
கடிதத்தைக் கொடுத்தான். கடிதம் சொன்னது
இதுதான்:

4சர்வ வல்லமையுள்ள இஸ்ரவேல
ரின் தேவனாகிய கர்த்தர், எருசலேமிலி
ருந்து பாபிலோனுக்கு சிறைக்கைதிக
ளாக அனுப்பப்பட்ட அனைவருக்கும்
இதைக் கூறுகிறார்: 5“வீடுகளைக் கட்டி
அவற்றில் வாழுங்கள். நாட்டில் குடியி
ருங்கள். தோட்டங்களை அமைத்து
அதில் வளர்ந்த கனிகளை உண்ணுங்
கள். 6திருமணம் செய்துகொண்டு மகன்
கள் மற்றும் மகள்களைப் பெற்றுக்
கொள்ளுங்கள். உங்கள் மகன்களுக்கு
மனைவியர்களைக் கண்டுகொள்ளுங்
கள். உங்கள் மகள்கள் மணந்துகொள்
ளும்படிச் செய்யுங்கள். அவ்வாறு செய்
தால், அவர்களுக்கும் மகன்களும் மகள்
களும் பிறப்பார்கள். பல குழந்தை
களைப் பெற்று பாபிலோனில் எண்
ணிக்கையைக் கூட்டுங்கள். எண்ணிக்
கையில் குறைவாக இருக்காதீர்கள்.
7நான் உங்களை அனுப்பிய நகரத்திற்கு
நல்லவற்றைச் செய்யுங்கள். நீங்கள்
வாழ்ந்துகொண்டிருக்கிற நகரத்திற்காக
கர்த்தரிடம் ஜெபம் செய்யுங்கள்.
ஏனென்றால், அந்நகரத்தில் சமாதானம்
இருந்தால், நீங்களும் சமாதானமாக
இருக்கலாம்.” 8சர்வ வல்லமையுள்ள
கர்த்தரும் இஸ்ரவேல் ஜனங்களின்
தேவனுமானவர் கூறுகிறார். “உங்களது
தீர்க்கதரிசிகளும் மந்திரம் பழகும் ஜனங்
களும் உங்களை முட்டாள் ஆக்காமல்
பார்த்துக்கொள்ளுங்கள். அவர்கள்
வைத்துள்ள கனவுகளைக் கேட்காதீர்
கள். 9அவர்கள் பொய்களைப் பிரச்
சாரம் செய்கிறார்கள். அச்செய்தி என்
னிடமிருந்து வந்ததாக அவர்கள் சொல்
லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால்
அந்தத் தீர்க்கதரிசிகளை நான் அனுப்ப
வில்லை” என்று கர்த்தர் சொல்லு
கிறார்.

10இதுதான் கர்த்தர் சொல்லுகிறது:
“பாபிலோன் 70 ஆண்டுகளுக்கு வல்ல
மையுடையதாக இருக்கும். அக்
காலத்திற்குப் பிறகு, பாபிலோனில்
வாழ்கிற உங்களிடம் வருவேன். என்
னுடைய நல்ல வாக்குறுதியை நான்
காப்பாற்றுவேன். உங்களை எருச
லேமிற்கு மீண்டும் கொண்டுவருவேன்.
11நான் இதனைக் கூறுகிறேன் ஏனென்
றால், உங்களுக்காக நான் வைத்துள்ள
திட்டங்களை நானறிவேன்” இச்செய்தி
கர்த்தரிடமிருந்து வருகிறது. “நான்
உங்களுக்காக நல்ல திட்டங்களை
வைத்திருக்கிறேன். நான் உங்களை
துன்புறுத்தும் வகையில் திட்டமிட
மாட்டேன். உங்களுக்கு நம்பிக்கை
யைத் தரவும் நல்ல எதிர்காலம்
அமையவும் நான் திட்டமிடுகிறேன்.
12பிறகு, ஜனங்களாகிய நீங்கள் எனது
நாமத்தை அழைப்பீர்கள். நீங்கள் என்
னிடம் வருவீர்கள்; ஜெபம் செய்வீர்கள்,
நான் உங்களைக் கவனிப்பேன். 13நீங்
கள் என்னைத் தேடுவீர்கள். நீங்கள்
முழு மனத்தோடு என்னைத் தேடினால்
என்னைக் கண்டுபிடிக்கலாம். 14நீங்கள்
என்னைக் கண்டுபிடிக்க அனுமதிப்
பேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
“உங்கள் சிறையிலிருந்து திரும்பவும்
நான் உங்களைக் கொண்டுவருவேன்.
இந்த இடத்திலிருந்து போகும்படி நான்
உங்களை கட்டாயப் படுத்தினேன்.
ஆனால் உங்களை எங்கெங்கு அனுப்பி
னேனோ அங்கங்கிருந்தெல்லாம்
அழைத்துச் சேர்ப்பேன். உங்களைக்
கைதிகளாய் கொண்டுபோகச் செய்த
இந்த இடத்திற்கே மீண்டும் உங்களைக்
கொண்டுவருவேன்” என்று கர்த்தர்
சொல்லுகிறார்.

15நீங்கள், “ஆனால் கர்த்தர் இங்கே
பாபிலோனில் தீர்க்கதரிசிகளைக்
கொடுத்திருக்கிறார்” என்று சொல்ல
லாம். 16ஆனால் கர்த்தர் பாபிலோனுக்
குக் கொண்டு செல்லப்படாத உறவினர்
களைப்பற்றி இவற்றைக் கூறுகிறார்.
நான், இப்பொழுது தாவீதின் சிங்கா
சனத்தில் இருக்கிற அரசனைப் பற்றி
யும் எருசலேம் நகரிலுள்ள ஜனங்க
ளைப்பற்றியும் பேசிக்கொண்டிருக்கி
றேன். 17சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கூறுகிறார்: “நான் விரைவில் பட்டயம்,
பசி மற்றும் பயங்கரமான நோயை
எருசலேமின் இன்னும் வாழும் ஜனங்
களுக்கு எதிராக அனுப்புவேன். நான்
அவர்களைத் உண்ணவே முடியாத
அளவிற்கு அழுகிப்போன கெட்ட
அத்திப் பழங்களைப் போன்று ஆக்கு
வேன். 18நான், இன்னும் எருசலேமில்
வாழ்கிற ஜனங்களை பட்டயம், பசி,
மற்றும் பயங்கரமான நோயால் துரத்து
வேன். நான் இதனைச் செய்வேன்.
அதனால் அந்த ஜனங்களுக்கு என்ன
நிகழ்ந்தது என்பதைப் பார்த்து பூமியில்
உள்ள அனைத்து இராஜ்யங்களும்
பயப்படும். அந்த ஜனங்கள் அழிக்கப்
படுவார்கள். நிகழ்ந்தவற்றைப்பற்றி
அவர்கள் கேள்விப்படும்போது ஜனங்
கள் ஆச்சரியத்துடன் பிரமிப்பார்கள்.
அவர்கள், ஜனங்களுக்குத் தீயவை
நடைபெறட்டும் என்று கேட்கும்போது
ஜனங்கள் அவர்களை ஒரு எடுத்துக்
காட்டாக பயன்படுத்துவர். அந்த
ஜனங்களை நான் போகும்படி வற்புறுத்
தும் போதெல்லாம் ஜனங்கள் அவர்
களை நிந்திப்பார்கள். 19அவையெல்
லாம் நடக்கும்படி நான் செய்வேன்.
ஏனென்றால், எருசலேமிலுள்ள அந்த
ஜனங்கள் எனது வார்த்தையைக்

கேட்கவில்லை” என்று கர்த்தர்
சொல்லுகிறார். “நான் அவர்களுக்கு
எனது செய்தியை மீண்டும் மீண்டும்
அனுப்பினேன். நான் அந்த ஜனங்
களுக்கு எனது வேலைக்காரர்களாகிய
தீர்க்கதரிசிகளைப் பயன்படுத்தி எனது
செய்தியைக் கொடுத்தேன். ஆனால்
ஜனங்கள் கேட்கவில்லை” இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வந்தது.
20“ஜனங்களாகிய நீங்கள் கைதிகள்.
நான் உங்களை எருசலேமிலிருந்து
பாபிலோனுக்குப் போகும்படி கட்டா
யப்படுத்தினேன். எனவே கர்த்தரிட
முள்ள செய்தியைக் கேளுங்கள்.”
21சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கொலாயாவின் மகனான ஆகாப் மற்
றும் மாசெயாவின் மகனான சிதேக்
கியாவைப் பற்றியும் கூறுகிறார்: “உங்க
ளிடம் இவ்விருவரும் பொய்யைப்
பிரச்சாரம் செய்தனர். அவர்களின்
செய்தி என்னிடம் இருந்து வந்தது
என்று சொல்லியிருக்கிறார்கள்.
ஆனால் அவர்கள் பொய்யுரைத்தனர்.
நான் அவ்விரண்டுதீர்க்கதரிசிகளையும்
பாபிலோன் அரசனான நேபுகாத்நேச்
சாரிடம் கொடுப்பேன். நேபுகாத்நேச்
சார் அவ்விரண்டு தீர்க்கதரிசிகளையும்
கைதிகளாய் உங்கள் முன்னால் கொல்
லுவான். 22அனைத்து யூதா கைதிகளி
லும் மற்றவர்களுக்குத் தீயவை
ஏற்படட்டும் என்று கேட்கும் போதெல்
லாம் அம்மனிதர்களை எடுத்துக்
காட்டுகளாக வைத்துக் கொள்வார்கள்.
அக்கைதிகள் சொல்லுவார்கள்: ‘சிதேக்
கியா மற்றும் ஆகாப் போன்று கர்த்தர்
உன்னை நடத்தட்டும். பாபிலோனின்
அரசன் அவ்விருவரையும் நெருப்பில்
எரித்தான்.’ 23இஸ்ரவேல் ஜனங்களி
டையே அவ்விரண்டு தீர்க்கதரிசிகளும்
மிகவும் கெட்டவற்றைச் செய்தனர்.
அவர்கள் தங்கள் அயலவர் மனைவிக
ளோடு சோரம் என்னும் பாவத்தைச்
செய்தனர். அவர்களும் பொய்களைப்
பேசினார்கள். அத்துடன் அப்பொய்கள்
கர்த்தராகிய என்னிடமிருந்து வந்தது
என்றும் கூறினர். அவற்றைச் செய்யும்
படி நானே அவர்களுக்கு சொல்ல
வில்லை. அவர்கள் என்ன செய்திருக்கி
றார்கள் என்று எனக்குத் தெரியும்.
நானே ஒரு சாட்சி” என்று கர்த்தர்
சொல்லுகிறார்.

### செமாயாவுக்குத் தேவனுடைய செய்தி

24செமாயாவுக்கும் ஒரு செய்தியைக்
கொடு. செமாயா நெகெலாமிய குடும்பத்தில்
உள்ளவன். 25சர்வ வல்லமையுள்ள இஸ்ர
வேலரின் தேவனாகிய கர்த்தர் கூறுகிறார்:
“செமாயா, எருசலேமிலுள்ள அனைத்து
ஜனங்களுக்கும் கடிதங்களை அனுப்பினாய்.
மாசெயாவின் மகனான செப்பனியா ஆசாரி
யர்களுக்கும் கடிதங்களை அனுப்பினாய்.
நீயும் அனைத்து ஆசாரியர்களுக்கும் கூட
கடிதங்களை அனுப்பினாய். அக்கடிதங்களை
நீ கர்த்தருடைய அதிகாரத்தால் அல்லாமல்
உனது சொந்தப் பெயரில் அனுப்பினாய்.
26செமாயா, செப்பனியாவிற்கான கடிதத்தில்
நீ சொன்னது இதுதான்: ‘செப்பனியா, கர்த்தர்
உன்னை யோய்தாவின் இடத்தில்
ஆசாரியனாக ஆக்கியிருக்கிறார். கர்த்தரு
டைய ஆலயத்தின் பொறுப்பாளனாக நீ
இருக்கிறாய். பைத்தியம் போலவும் தீர்க்க
தரிசி போலவும் நடிக்கின்ற எவரையும் நீ
கைது செய்யலாம். நீ அவர்களின் கால்
களுக்கு இடையில் மரக்கட்டைகளையும்
கழுத்தில் இரும்புச் சங்கிலிகளையும்
மாட்டலாம். 27இப்பொழுது எரேமியா தீர்க்க
தரிசி போன்று நடிக்கிறான். எனவே,
அவனை ஏன் கைது செய்யாமல் இருக்
கிறாய்? 28எரேமியா பாபிலோனிலுள்ள எங்
களுக்கு அவனது செய்தியை அனுப்பி
யிருக்கிறான்: “பாபிலோனில் உள்ள ஜனங்க
ளாகிய நீங்கள் அங்கேயே நீண்டகாலம்
இருப்பீர்கள். எனவே, வீடுகளைக்கட்டி அங்
கேயே குடியிருங்கள். தோட்டங்களை ஏற்ப
டுத்தி நீங்கள் வளர்த்தவற்றை உண்ணுங்கள்.”
29செப்பனியா ஆசாரியன் எரேமியா தீர்க்
கதரிசியிடம் கடிதத்தை வாசித்தான். 30பிறகு
கர்த்தரிடமிருந்து வார்த்தை எரேமியாவிற்கு
வந்தது: 31“எரேமியா, இந்த வார்த்தையை
பாபிலோனில் உள்ள அனைத்து சிறைக்கை
திகளுக்கும் அனுப்பு, ‘நெகெலாமியனாகிய
செமாயாவைப்பற்றி கர்த்தர் கூறுவது
இதுதான்: செமாயா உங்களிடம் பிரசங்கம்
செய்திருக்கிறான். ஆனால் நான் அவனை
அனுப்பவில்லை. செமாயா உங்களை ஒரு
பொய்யை நம்பும்படி செய்திருந்தான். 32ஏனெ
ன்றால், செமாயா அதனைச் செய்திருந்தான்.
இதுதான் கர்த்தர் சொல்கிறது: நான்
விரைவில் நெகெலாமியனாகிய செமாயா
வைத் தண்டிப்பேன். நான் அவனது குடும்
பம் முழுவதையும் அழிப்பேன். நான் எனது
ஜனங்களுக்குச் செய்யப் போகிற நன்மை
களில் அவன் பங்கு கொள்ளமாட்டான்’”
என்று கர்த்தர் சொல்லுகிறார். “நான்
செமாயாவைத் தண்டிப்பேன். ஏனென்றால்
அவன் கர்த்தருக்கு எதிராகத் திரும்பும்படி
ஜனங்களுக்குக் கற்றுத்தந்தான்.”

### நம்பிக்கையின் வாக்குறுதிகள்

30 இதுதான் கர்த்தரிடமிருந்து எரேமியா
விற்கு வந்த வார்த்தை. 2இஸ்ர
வேலரின் தேவனாகிய கர்த்தர் கூறினார்:
“எரேமியா நான் உன்னிடம் பேசியிருக்
கின்றவற்றையெல்லாம் நீ புத்தகத்தில் எழுது.

இப்புத்தகத்தை உனக்காக எழுது. 3இதைச்
செய். ஏனென்றால் நாட்கள் வரும்” என்று
கர்த்தர் சொல்லுகிறார். “நான் எனது
ஜனங்களை, இஸ்ரவேல் மற்றும் யூதாவை
சிறையிருப்பிலிருந்து அழைத்து வரும்
போது” இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து
வருகிறது. “நான் அவர்களது முற்பிதாக்க
ளுக்கு அளித்த நாட்டிற்குள் திரும்பவும்
அவர்களைக் குடியேறவைப்பேன். பிறகு,
எனது ஜனங்கள் மீண்டும் அந்த நாட்டைச்
சொந்தமாக்கிக் கொள்வார்கள்.”
4இஸ்ரவேல் மற்றும் யூதா ஜனங்களைப்
பற்றி கர்த்தர் இச்செய்தியைப் பேசினார்.
5கர்த்தர் கூறியது இதுதான்: நான்
ஜனங்கள் பயத்தால் அலறிக்கொண்டிருப்
பதைக் கேட்கிறோம்! ஜனங்கள் பயந்திருக்
கின்றனர்! சமாதானம் இல்லை!
6“இக்கேள்வியைக் கேள். இதனை சிந்
தித்துக் கொள். ஒரு ஆண் குழந்தை பெற
முடியுமா? நிச்சயமாக முடியாது! பிறகு
ஏன் ஒவ்வொரு பலமுள்ள ஆணும் தம்
கையை வயிற்றில், பிரசவ வேதனைப்
படுகிற பெண்ணைப்போன்று வைத்திருக்கி
றார்கள்? ஏன் ஒவ்வொருவரின் முகமும்
மரித்த மனிதனைப்போன்று வெளுப்பாக
மாறியுள்ளது? ஏனென்றால், அந்த ஆண்கள்
மிகவும் பயந்துள்ளனர்.
7“இது யாக்கோபுக்கு மிகவும் முக்கியமான
நேரம். இது பெருந்துன்பத்திற்கான நேரம்
இதுபோல் இன்னொரு நேரம் இராது.
ஆனால் யாக்கோபு காப்பாற்றப்படுவான்.
8“அந்நேரத்தில், இந்த வார்த்தை சர்வ
வல்லமையுள்ள கர்த்தரிடமிருந்து வந்தது.
“நான் இஸ்ரவேல் மற்றும் யூதா ஜனங்களின்
கழுத்தில் உள்ள நுகத்தை உடைப்பேன்.
உங்களைக் கட்டியுள்ள கயிறுகளை அறுப்
பேன். அயல்நாடுகளில் உள்ள ஜனங்கள்
எனது ஜனங்களை மீண்டும் அடிமையாகும்
படி பலவந்தப்படுத்த மாட்டார்கள். 9இஸ்ர
வேல் மற்றும் யூதா ஜனங்கள் அயல்நாடு
களுக்குச் சேவை செய்யமாட்டார்கள்.
இல்லை. அவர்கள் தமது தேவனாகிய
கர்த்தருக்குச் சேவை செய்வார்கள். அவர்கள்
தமது அரசனான தாவீதுக்கு சேவை செய்
வார்கள். நான் அந்த அரசனை அவர்களிடம்
அனுப்புவேன்.
10“எனவே, எனது தாசனாகிய
யாக்கோபுவே, பயப்படவேண்டாம்!” இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது.
“இஸ்ரவேலே, பயப்படவேண்டாம். நான்
உன்னை தொலைதூர இடத்திலிருந்து காப்
பாற்றுவேன். நீங்கள் தொலைதூர நாடுகளில்
கைதிகளாக இருந்தீர்கள். ஆனால் உங்கள்
சந்ததிகளை நான் காப்பாற்றுவேன். நான்
அவர்களை சிறையிருப்பிலிருந்து மீண்டும்
அழைத்து வருவேன். யாக்கோபுக்கு மீண்டும்
சமாதானம் உண்டாகும். ஒரு எதிரியும்
அவனை இனி தொந்தரவு செய்யவோ
பயப்படுத்தவோமாட்டான். ஆதலால் அவன்
பத்திரமாகவும் பாதுகாப்பாகவும் இருப்பான்.
11இஸ்ரவேல் மற்றும் யூதா ஜனங்களே.
நான் உங்களோடு இருக்கிறேன்” இந்த
வார்த்தை கர்த்தரிடமிருந்து வருகிறது “நான்
உங்களைக் காப்பேன். நான் அந்நாடுகளுக்கு
உங்களை அனுப்பினேன். ஆனால் நான்
அந்நாடுகளை முழுமையாக அழிப்பேன்.
இது உண்மை. நான் அந்நாடுகளை அழிப்
பேன். ஆனால் உங்களை அழிக்கமாட்டேன்.
நீங்கள் செய்த தீயவற்றுக்காக நீங்கள் தண்
டிக்கப்பட வேண்டும் ஆனால் நான் சரியாக
உங்களை ஒழுங்குப் படுத்துவேன்.”
12கர்த்தர் கூறுகிறார்: “இஸ்ரவேல் மற்றும்
யூதா ஜனங்களே! ஆற்ற முடியாத காயத்தை
நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். குணப்படுத்த
முடியாத ஒருகாயத்தைப் பெற்றிருக்கிறீர்கள்.
13உங்கள் புண்களைப்பற்றி அக்கறை
எடுக்க யாருமில்லை. எனவே நீங்கள்
குணம் பெறமாட்டீர்கள்.
14நீங்கள் பல நாடுகளோடு நட்பு கொண்
டீர்கள். ஆனால் அந்நாடுகள் உங்களைப்பற்றி
கவலைப்படுவதில்லை. உங்கள் நண்பர்கள்
உங்களை மறந்துவிட்டனர். நான் உங்க
ளைப் பகைவனைப்போன்று தண்டித்தேன்.
நான் உங்களை மிகக் கடுமையாகத்
தண்டித்தேன். உங்களது அநேக குற்றங்க
ளால் நான இதனைச் செய்தேன். உங்களது
எண்ணிலடங்கா பாவங்களால் நான்
இதனைச் செய்தேன்.

15இஸ்ரவேல் மற்றும் யூதாவே, உங்களது
காயங்களைப்பற்றி ஏன் அழுகிறீர்கள்?
உங்கள் காயங்கள் வலியுடையன. அவற்
றுக்கு மருந்து இல்லை. கர்த்தராகிய நான்
இதனைச் செய்தேன். காரணம் உங்கள்
பெரும் குற்றம்தான். உங்களது பல பாவங்
களின் காரணமாக கர்த்தராகிய நான்
இதனைச் செய்தேன்.
16அந்நாடுகள் உங்களை அழித்தனர்.
ஆனால் இப்பொழுது அந்நாடுகள் அழிக்கப்
பட்டிருக்கின்றன. இஸ்ரவேல் மற்றும்
யூதாவே, உங்கள் பகைவர்கள் கைதிக
ளாவார்கள். அந்த ஜனங்கள் உங்களிட
மிருந்து திருடினார்கள். ஆனால் அவர்களிட
மிருந்து மற்றவர்கள் திருடுவார்கள். அந்த
ஜனங்கள் போரில் உங்களிடமிருந்து
பொருட்களை எடுத்துக்கொண்டனர்.
ஆனால் போரில் பிறர் அவர்களை கொள்
ளையடிப்பார்கள்.
17நான் உங்களது உடல் நலத்தைத் திரும்ப
கொண்டு வருவேன். நான் உங்களது காயங்
களைக் குணப்படுத்துவேன்” என்று கர்த்தர்
சொல்லுகிறார். “ஏனென்றால், மற்ற ஜனங்
கள் உங்களை தள்ளுண்டவர்கள் என்று
சொன்னார்கள். அந்த ஜனங்கள் ‘சீயோ
னைப்பற்றி யாரும் அக்கறை கொள்ளமாட்
டார்கள்’ என்று சொன்னார்கள்.

18 கர்த்தர் கூறுகிறார்: “யாக்கோபின் ஜனங்
கள் இப்போது சிறையிருப்பில் இருக்கிறார்
கள். ஆனால் அவர்கள் திரும்ப வருவார்கள்.
யாக்கோபின் வீடுகளில் நான் இரக்கம்
கொள்வேன். இப்பொழுது நகரம் காலியான
குன்றுபோல அழிந்த கட்டிடங்களோடு
இருக்கின்றது. ஆனால் நகரம் மீண்டும்
கட்டப்படும். அரசனின் வீடும் மீண்டும்
எங்கிருக்கவேண்டுமோ அங்கே கட்டப்படும்.
19 அவ்விடங்களில் உள்ள ஜனங்கள் துதிப்
பாடல்களைப் பாடுவார்கள். அங்கே சந்
தோஷத்தின் ஆரவார ஓசை இருக்கும்.
நான் அவர்களுக்குப் பல குழந்தைகளைக்
கொடுப்பேன். இஸ்ரவேல் மற்றும் யூதா
சிறியவை ஆகாது. நான் அவர்களுக்கு
மேன்மையை கொண்டு வருவேன். எவரும்
அதனை கீழாகப் பார்க்க முடியாது.
20 “யாக்கோபுவின் குடும்பம் முன்பு
இஸ்ரவேல் குடும்பம் இருந்ததுபோல ஆகும்.
நான் இஸ்ரவேல் மற்றும் யூதாவை பல
முள்ளதாக்குவேன். அவர்களைப் புண்படுத்
தியவர்களை நான் தண்டிப்பேன்.

21 அந்த ஜனங்களின் சொந்தத்தில் ஒரு
வனே அவர்களை வழிநடத்திச் செல்வான்.
அந்த அரசன் எனது ஜனங்களிடமிருந்து
வருவான். ஜனங்களை நான் அழைத்தால்
அவர்கள் நெருக்கமாக வரமுடியும். எனவே,
நான் அந்தத் தலைவனை என் அருகில்
வரச்சொல்லுவேன். அவன் எனக்கு நெருக்
கமாக வருவான்.
22 நீங்கள் எனது ஜனங்களாக இருப்பீர்கள்.
நான் உங்களது தேவனாக இருப்பேன்.”
23 “கர்த்தர் மிகவும் கோபமாக இருந்தார்!
அவர் ஜனங்களைத் தண்டித்தார். அத்தண்ட
னைப் புயலைப் போன்று வந்தது. அத்தீய
ஜனங்களுக்கு எதிராகத் தண்டனையானது
பெருங்காற்றாக அடித்தது.
24 கர்த்தர் அந்த ஜனங்களைத் தண்டித்து
முடிக்கும்வரை கோபமாக இருப்பார். கர்த்தர்
திட்டமிட்டபடி தனது தண்டனையை முடிக்
கும்வரை அவர் கோபமாக இருப்பார்.
அந்தக் கால முடிவில் யூதா ஜனங்களா
கிய நீங்கள் புரிந்துகொள்வீர்கள்.”

## புதிய இஸ்ரவேல்

31 கர்த்தர், “அந்த நேரத்தில் நான்
இஸ்ரவேலின் அனைத்து கோத்திரங்க
ளுக்கும் தேவனாக இருப்பேன். அவர்கள்
என்னுடைய ஜனங்களாக இருப்பார்கள்”
என்றார்.
2 கர்த்தர் கூறுகிறார்: “ஜனங்களில் சிலர்ப
கைவரின் வாளால் கொல்லப்படவில்லை.
அந்த ஜனங்கள் வனாந்தரத்திற்குத் தப்பி
ஓடி, ஆறுதலடைவார்கள், இஸ்ரவேலர்
இளைப்பாறுதலைத் தேடி அங்கு போவார்
கள்.”
3 வெகு தொலைவில் இருந்து கர்த்தர்
அவரது ஜனங்களுக்கு தோன்றுவார். கர்த்தர்
கூறுகிறார்: “ஜனங்களே, நான் உங்களை
நேசிக்கிறேன். எனது அன்பு என்றென்றும்
நீடித்திருக்கும். ஆகையால் தான் தொடர்ந்து
உங்களுக்கு அன்பு காட்டினேன்.
4 “இஸ்ரவேலே, எனது மணப்பெண்ணே.
நான் உன்னை மீண்டும் கட்டுவேன். நீ
மீண்டும் ஒரு நாடாவாய். நீ உனது மேள
வாத்தியங்களை மீண்டும் எடுத்துக்கொள்
வாய். நீ மகிழ்ச்சியூட்டும் மற்ற ஜனங்களோடு
சேர்ந்து மகிழ்ச்சியடைாய்.
5 இஸ்ரவேலின் விவசாயிகளாகிய நீங்கள்
மீண்டும் திராட்சைத் தோட்டங்களைப்பயிர்
செய்வீர்கள். சமாரியா நகரைச் சுற்றிலும்
மலைப்பகுதிகளில்திராட்சைகளைப் பயிரிடு
வாய். அவ்விவசாயிகள் அத்திராட்சைத்
தோட்டங்களிலிருந்து பழங்களைத் தின்று
மகிழ்வார்கள்.
6 காவல்காரன் இச்செய்தியைச் சத்தமிடும்
ஒரு காலம் வரும். ‘வாருங்கள், நமது
தேவனாகிய கர்த்தரை தொழுதுகொள்ள
சீயோனுக்குப் போகலாம்!’ எப்பிராயீம்
நாட்டு மலையில் உள்ள காவல்காரன்கூட
இச்செய்தியைச் சத்தமிட்டுச் சொல்வான்.”
7 கர்த்தர் கூறுகிறார்: “மகிழ்ச்சியாக இருங்
கள். யாக்கோபுக்காகப்* பாடுங்கள்! இஸ்ர
வேலுக்காகச் சத்தமிடுங்கள். அது ஜாதி
களிலேயே மகா பெரிய ஜனம் ஆகும்!
உங்கள் துதிகளைப் பாடி சத்தமிடுங்கள்,
‘கர்த்தர் அவரது ஜனங்களைக் காப்பாற்றி
னார்! அவர் இஸ்ரவேல் நாட்டில் உயிரோடு
விடப்பட்டுள்ள ஜனங்களைக் காப்பாற்றி
யிருக்கிறார்.’
8 நினைவுகொள்ளுங்கள். வடக்கில் உள்ள
அந்த நாட்டிலிருந்து இஸ்ரவேலை நான்
கொண்டு வருவேன். பூமியில் வெகு தொலை
தூர இடங்களில் உள்ள இஸ்ரவேல்
ஜனங்களை எல்லாம் சேர்ப்பேன். ஜனங்க
ளில் சிலர் குருடாகவும் நொண்டியாகவும்
இருப்பார்கள். பெண்களில் சிலர் கர்ப்பமாக
இருப்பார்கள், குழந்தை பெறுவதற்குத்
தயாராக இருப்பார்கள். ஆனால் அதிகமதிக
மான ஜனங்கள் திரும்ப வருவார்கள்.
9 அந்த ஜனங்கள் அழுதுகொண்டே
திரும்பி வருவார்கள். ஆனால் நான் அவர்
களை வழிநடத்தி ஆறுதல் செய்வேன். நான்
அவர்களை வழிநடத்திச் சென்று
நீரோடைக்கு அழைத்துச் செல்வேன். அவர்
களை நான் எளிதான பாதையில் நடத்திச்
செல்வேன். எனவே, அவர்கள் இடற
மாட்டார்கள். நான் அந்த வழியிலே அவர்
களை வழிநடத்திச் செல்வேன். ஏனென்றால்,
நான் இஸ்ரவேலின் தந்தை. எப்பிராயீம்
எனது முதலில் பிறந்த மகன்.

---

**யாக்கோபு** எருசலேமின் இன்னொரு பெயர்.

10“நாடுகளே! கர்த்தரிடமிருந்து வரும் இந்த
வார்த்தையைக் கேளுங்கள். கடல் மூலமாக
தொலைதூர நாடுகளுக்கும் அச்செய்தியைக்
கூறுங்கள், ‘தேவன் இஸ்ரவேல் ஜனங்களைச்
சிதறச் செய்தார். ஆனால் தேவன் அவர்க
ளைத் திரும்பவும் ஒன்று சேர்ப்பார். அவர்
தனது மந்தையை (ஜனங்களை) ஒரு மேய்ப்
பனைப் போன்று கவனித்துக்கொள்வார்.’
11கர்த்தர் யாக்கோபை மீண்டும் கொண்டு
வருவார். கர்த்தர் தனது ஜனங்களை அவர்
களை விட பலமானவர்களிடமிருந்து காப்
பாற்றுவார்.
12இஸ்ரவேல் ஜனங்கள் சீயோனின் உச்
சிக்கு வருவார்கள். அவர்கள் மகிழ்ச்சியில்
கத்துவார்கள். அவர்களது முகம் மகிழ்ச்சி
யால் பிரகாசிக்கும். கர்த்தர் அவர்களுக்கு
அளித்த நல்லவற்றுக்காக மகிழ்வார்கள்.
கர்த்தர் அவர்களுக்குப் புதிய தானியம்,
புதிய திராட்சைரசம், ஒலிவ எண்ணெய்,
இளம் ஆடு, பசுக்கள் ஆகியவற்றைக்
கொடுப்பார். அவர்கள் நல்ல தண்ணீர்
வளமுள்ள தோட்டத்தைப் போன்று இருப்
பார்கள். இஸ்ரவேல் ஜனங்கள் இனி
என்றைக்கும் துன்புறமாட்டார்கள்.

13பிறகு இஸ்ரவேலின் இளம் பெண்கள்
மகிழ்வார்கள், நடனம் ஆடுவார்கள். அந்த
ஆட்டத்தில் இளம் ஆண்களும் முதிய ஆண்
களும் கலந்துகொள்வார்கள். நான் அவர்
களது சோகத்தை மகிழ்ச்சியாக மாற்று
வேன். இஸ்ரவேல் ஜனங்களுக்கு நான்
ஆறுதல் செய்வேன். நான் அவர்களது
சோகத்தை மகிழ்ச்சியாக மாற்றுவேன்.
14நான் ஆசாரியர்களுக்கு மிகுதியான
உணவைக் கொடுப்பேன். நான் அவர்க
ளுக்குக் கொடுக்கிற நல்லவற்றால் எனது
ஜனங்கள் நிறைந்து திருப்தி அடைவார்கள்”
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
15கர்த்தர் கூறுகிறார், “ராமாவில் ஒரு
சத்தம் கேட்கும். இது மிகவும் துக்கக் கத
றலாய் மிகுந்த சோகத்துடன் இருக்கும்.
ராகேல் தனது பிள்ளைகளுக்காக அழுது
கொண்டிருப்பாள். ராகேல் ஆறுதல் பெற
மறுப்பாள். ஏனென்றால், அவளது பிள்ளை
கள் மரித்துவிட்டனர்.”
16ஆனால் கர்த்தர் கூறுகிறார், “அழு
கையை நிறுத்துங்கள்! உங்கள் கண்களை
கண்ணீரால் நிறைக்காதீர்கள்! உங்கள்
வேலைக்காக நீங்கள் பரிசளிக்கப்படு
வீர்கள்!” “இஸ்ரவேல் ஜனங்கள் தம் பகை
வரது நாடுகளிலிருந்து திரும்ப வருவார்கள்.
17இஸ்ரவேலே, உனக்கு நம்பிக்கை
இருக்கிறது” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
“உன் பிள்ளைகள் அவர்களது சொந்தநாட்
டிற்கு வருவார்கள்.
18எப்பிராயீமின் அழுகையை நான்
கேட்டிருக்கிறேன். எப்பிராயீம் இவற்றைச்
சொல்கிறதை நான் கேட்டேன். ‘கர்த்தாவே!
உண்மையில் நீர் என்னைத் தண்டித்து
விட்டீர். நான் எனது பாடத்தைக் கற்றுக்
கொண்டேன். நான் என்றென்றும் பயிற்சி
பெறா தகன்றுக்குட்டியைப் போன்று இருந்
தேன். தயவுசெய்து என்னைத் தண்டிப்பதை
நிறுத்தும். நான் திரும்ப உம்மிடம் வரு
வேன். நீர் உண்மையில் எனது தேவனாகிய
கர்த்தர் தான்.
19கர்த்தாவே, நான் உம்மை விட்டு
அலைந்து திரிந்தேன். ஆனால் நான் செய்த
தீயவற்றைப்பற்றி கற்றுக்கொண்டேன்.
எனவே நான் எனது வாழ்வையும் மனதை
யும் மாற்றிக் கொண்டேன். நான் இளமை
யாக இருந்தபோது செய்த முட்டாள்தனமான
செயல்களை எண்ணி நான் அவமானமும்
நிந்தையும் அடைகிறேன்’” என்றான்.
20தேவன், “எப்பிராயீம் எனது அன்
பான மகன் என்பதை நீ அறிகிறாய்.
நான் அந்தப் பிள்ளையை நேசிக்கிறேன்.
ஆம். நான் அவ்வப்போது எப்பிராயீமை
குறை கண்டு பிடித்தேன். ஆனால், அவனை
இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறேன்.
நான் அவனை மிகவும் நேசிக்கிறேன்.
நான் உண்மையில் அவனுக்கு ஆறுதல்
அளிக்க விரும்புகிறேன்” என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
21“இஸ்ரவேல் ஜனங்களே சாலை அடை
யாளங்களை வையுங்கள். வீட்டிற்கான வழி
யைக் காட்டும் அடையாளங்களை வையுங்
கள். சாலையைக் கவனியுங்கள். நீங்கள்
நடந்த வழியை நினைவுகொள்ளுங்கள். இஸ்ர
வேலே, எனது மணமகளே, வீட்டிற்கு வா.
உனது பட்டணங்களுக்குத் திரும்பி வா.
22உண்மையில்லாத மகளே, இன்னும்
எவ்வளவு காலம் நீ சுற்றித் திரிவாய்? நீ
எப்பொழுது வீட்டிற்குத் திரும்ப வரு
வாய்?’” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
கர்த்தர் இந்நாட்டில் ஏதாவது புதியதைச்
செய்யும்போது, பெண் ஆணைச் சூழ்ந்து
கொள்வது போன்றது”
23சர்வ வல்லமையுள்ள இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தர் கூறுகிறதாவது: “நான்
மீண்டும் யூதா ஜனங்களுக்கு நன்மை செய்
வேன். சிறைக்கைதிகளாக எடுக்கப்பட்ட
ஜனங்களை நான் திரும்பக்கொண்டு
வருவேன். அந்த நேரத்தில், யூதா நாட்டிலும்
நகரங்களிலுமுள்ள ஜனங்கள் மீண்டும்
இவ்வார்த்தைகளைப் பயன்படுத்துவார்கள்.
‘கர்த்தர் உன்னையும் வீட்டையும் பரிசுத்த
மான மலையையும் ஆசீர்வதிக்கட்டும்.’
24“யூதாவின் அனைத்து நகரங்களிலும்
வாழ்கின்ற ஜனங்கள் ஒன்று சேர்ந்து சமா
தானத்தோடு வாழ்வார்கள். விவசாயிகளும்
தங்கள் மந்தைகளோடு சுற்றி அலைகிற
மேய்ப்பர்களும் ஒன்று சேர்ந்து யூதாவில்
சமாதானமாக வாழ்வார்கள். 25நான் பலவீ
னமும் சோர்வும் அடைந்த ஜனங்களுக்கு
வலிமையையும் ஓய்வையும் கொடுப்பேன்.”

26 இதனைக் கேட்டப் பிறகு, நான்
(எரேமியா) எழுந்து சுற்றிலும் பார்த்தேன்.
அது ஒரு மிக இனிய உறக்கமாக இருந்தது.
27 “நாட்கள் வந்துகொண்டிருக்கின்றன
என்று கர்த்தர் சொல்லுகிறார். நான்
இஸ்ரவேல் மற்றும் யூதா குடும்பம் பெருக
உதவுவேன். நான் அவர்களது பிள்ளைகளும்
மிருகங்களும் பெருக உதவுவேன். ஒரு
செடியை நட்டு வளர்கின்றவனைப் போன்று
நான் இருப்பேன். 28 கடந்த காலத்தில், நான்
இஸ்ரவேலையும் யூதாவையும் கண்காணித்
தேன். ஆனால், நான் அவர்களை வெளியே
பிடுங்கிப்போடும் காலத்துக்காகவும் பார்த்தி
ருந்தேன். நான் அவர்களைக் கிழித்துப்
போட்டேன். நான் அவர்களை அழித்தேன்.
நான் அவர்களுக்குப் பல தொல்லைகளைக்
கொடுத்தேன். ஆனால், இப்பொழுது நான்
அவர்களைக் கட்டவும் பலமாகச் செய்யவும்
கவனிப்பேன்” என்று கர்த்தர் சொல்லுகி
றார்.
29 “ஜனங்கள் என்றைக்கும் இந்த
பழமொழியைச் சொல்லமாட்டார்கள்: பெற்
றோர்கள் புளித்த திராட்சைகளைத் தின்ற
னர். ஆனால் பிள்ளைகள் புளிப்புச் சுவை
யைப் பெற்றனர்.
30 இல்லை. ஒவ்வொருவனும் தனது சொந்
தப் பாவத்திற்காக சாவான். புளித்த திராட்
சையைத் உண்ணும் ஒருவன் புளிப்புச்
சுவையைப் பெறுவான்.”

### புதிய உடன்படிக்கை

31 கர்த்தர், “இஸ்ரவேலின் குடும்பத்தோடும்
யூதாவின் குடும்பத்தோடும் புதிய உடன்
படிக்கையைச் செய்யக்கூடிய நேரம் வந்து
கொண்டிருக்கிறது. 32 இது அவர்களது முற்
பிதாக்களிடம் ஏற்படுத்திய உடன்படிக்கை
போன்றதல்ல. அது, அவர்களை நான்
கையில் எடுத்து எகிப்துக்கு வெளியே
கொண்டு வந்தபோது செய்தது. நான்
அவர்களுக்கு ஆண்டவராக இருந்தேன்.
ஆனால், அவர்கள் அந்த உடன்படிக்கையை
உடைத்தனர்” என்றார். இந்த வார்த்தை
கர்த்தரிடமிருந்து வந்தது.
33 “எதிர்காலத்தில், நான் இஸ்ரவேல் ஜனங்
களிடம் இந்த உடன்படிக்கையைச் செய்
வேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
“நான் எனது போதனைகளை அவர்களது
மனதில் வைப்பேன். நான் அவற்றை
அவர்களின் இருதயத்தின் மேல் எழுதுவேன்.
நான் அவர்களது தேவனாக இருப்பேன்.
அவர்கள் எனது ஜனங்களாக இருப்பார்கள்.
34 ஜனங்கள் தமது அயலவர்க்கும் உறவினர்க்
கும் கர்த்தரை அறிந்துகொள்ள கற்பிக்க
மாட்டார்கள். ஏனென்றால், முக்கியத்துவம்
குறைந்த ஜனங்களிலிருந்து முக்கியத்துவம்
மிகுந்த ஜனங்கள் வரை என்னை அறிவர்”
என்று கர்த்தர் சொல்லுகிறார். “நான்
அவர்களை அவர்கள் செய்த தீயவற்றுக்காக
மன்னிப்பேன். நான் அவர்களது பாவங்
களை நினைவுகொள்ளமாட்டேன்.”

### கர்த்தர் இஸ்ரவேலை விடமாட்டார்

35 கர்த்தர் கூறுகிறார், “கர்த்தர் பகலில்
சூரியனைப் பிரகாசிக்கும்படிச் செய்தார்.
கர்த்தர் சந்திரன் மற்றும் நட்சத்திரங்களை
இரவில் பிரகாசிக்கும்படிச் செய்தார். கர்த்தர்
கடலை கலக்குகிறார். அதனால் அதன்
அலைகள் கரையில் மோதுகின்றன. சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் என்பது அவரது
நாமம்.”
36 கர்த்தர், “இஸ்ரவேலின் சந்ததியார் ஒரு
நாடாக இருப்பது ஒருபோதும் முடிவுறாது.
சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் மற்றும்
கடலின் மேலுள்ள எனது ஆதிக்கத்தை
இழந்தால் மாத்திரமே அப்படி நிகழும்”
என்றார்.
37 கர்த்தர் கூறுகிறார்: இஸ்ரவேலின் சந்ததி
யாரை நான் ஒருபோதும் தூக்கி எறிய
மாட்டேன். மேலே ஆகாயத்தை அளக்கவும்,
பூமியின் இரகசியங்களை புரிந்துகொள்ளவும்
ஜனங்களால் முடியுமானால் இது நிகழும்.
இஸ்ரவேல் செய்த தீமையினிமித்தம்
மட்டுமே நான் அவர்களைத் தள்ளுவேன்”
என்று கர்த்தர் சொல்லுகிறார்.

### புதிய எருசலேம்

38 இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வரு
கிறது, “கர்த்தருக்காக எருசலேம் மீண்டும்
கட்டப்படும் நாட்கள் வந்து கொண்டிருக்
கின்றன. முழு நகரமும் அனானெயேலின்
கோபுரம் முதல் மூலைவாசல் வரை மீண்டும்
கட்டப்படும். 39 அளவு நூலானது மூலை
வாசலில் இருந்து நேராக காரேப் குன்று
வரைப் போய் பிறகு, கோரா எனும்
இடத்துக்குத் திரும்பும். 40 மரித்த உடல்களும்
சாம்பல்களும் எறியப்பட்ட அப்பள்ளத்தாக்கு
கர்த்தருக்கு பரிசுத்தமாய் இருக்கும். கீதரோன்
பள்ளத்தாக்கின் பீடபூமி முதல் குதிரை
வாசலின் மூலைவரை அனைத்து வழியும்
கர்த்தருக்குப் பரிசுத்த இடமாக கருதப்படும்.
எருசலேம் நகரம் மீண்டும் என்றைக்கும்
கீழே இழுக்கப்படவோ அழிக்கப்படவோ
ஆகாது.”

### எரேமியா ஒரு வயலை வாங்குகிறான்

32 யூதாவின் அரசனான சிதேக்கியாவின்
ஆட்சியின் பத்தாம் ஆண்டில் கர்த்த
ருடைய வார்த்தை எரேமியாவிற்கு வந்தது:
சிதேக்கியாவின் பத்தாவது ஆட்சியாண்
டானது நேபுகாத்நேச்சாருக்கு 18வது ஆட்சி
ஆண்டாகும். 2 அந்த நேரத்தில், பாபிலோன்
அரசனின் படை எருசலேம் நகரத்தைச்சுற்றி
வளைத்துக் கொண்டது. எரேமியா கைது
செய்யப்பட்டு யூதா அரசனின் அரண்மனை
முற்றத்தில் காவலர்களின் பொறுப்பில்
விடப்பட்டிருந்தான். 3 (யூதா அரசனான

சிதேக்கியா அந்த அரண்மனையின் சிறை
யில் எரேமியாவை வைத்தான். சிதேக்கியா
எரேமியாவின் தீர்க்கதரிசனத்தை விரும்ப
வில்லை. எரேமியா சொல்லுகிறதாவது,
“கர்த்தர் கூறுகிறார்; ‘நான் விரைவில்
பாபிலோன் அரசனிடம் எருசலேம் நகரத்
தைக் கொடுப்பேன். நேபுகாத்நேச்சார் இந்த
கரத்தைக் கைப்பற்றுவான். 4யூதாவின்
அரசனான சிதேக்கியா பாபிலோனியர்க
ளின் படைகளிடமிருந்து தப்பிக்க முடியாது.
அவன் உறுதியாக பாபிலோன் அரசனிடம்
கொடுக்கப்படுவான். சிதேக்கியா பாபிலோன்
அரசனிடம் நேருக்கு நேர் பேசுவான்.
சிதேக்கியா அவனைத் தனது சொந்தக்
கண்களால் காண்பான். 5பாபிலோன் அரசன்
சிதேக்கியாவைப் பாபிலோனுக்குக்
கொண்டு செல்வான். நான் அவனைத்
தண்டிக்கும் வரை சிதேக்கியா அங்கே
தங்குவான்.’ இந்த வார்த்தை கர்த்தரிட
மிருந்து வந்தது. ‘பாபிலோனியர்களின்
படைகளுக்கு எதிராக நீங்கள் போரிட்டால்
நீங்கள் வெல்லமுடியாது.’”

6எரேமியா கைதியாக இருந்தபோது
அவன், “கர்த்தரிடமிருந்து இந்த வார்த்தை
என்னிடம் வந்தது. இதுதான் செய்தி:
7எரேமியா, உனது பெரியப்பாவின் மகன்
அனாமெயேல் விரைவில் உன்னிடம் வரு
வான். அவன் உனது பெரியப்பா சல்லூமின்
மகன். அனாமெயேல் உன்னிடம், ‘எரே
மியா, அனாதோத் அருகிலுள்ள எனது
வயலை வாங்கிக்கொள். அதை விலைக்கு
வாங்கு. ஏனென்றால் நீதான் எனக்கு மிக
நெருங்கிய உறவினன். இது உனது உரிமை.
அந்த வயலை வாங்குவது உனது
பொறுப்புமாகும்’ என்பான்.

8“பிறகு, கர்த்தர் சொன்னது போன்று
அப்படியே நிகழ்ந்தது. எனது பெரியப்பா
வின் மகன் அனாமெயேல் என்னிடம்
சிறைச்சாலையில் முற்றத்திற்கு வந்தான்.
அனாமெயேல் என்னிடம், ‘எரேமியா,
ஆனதோத் நகரத்தின் அருகில் உள்ள எனது
வயலை விலைக்கு வாங்கிக்கொள். பென்ய
மீன் கோத்திரத்தில் உள்ளவர்களின் நாட்டில்
இவ்வயல் உள்ளது. அந்நிலம் உனக்கு
உரியது. ஏனென்றால், அது உனது உரிமை,
எனவே அதைச் சொந்தமாக்கிக் கொள்’”
என்றான். எனவே, நான் இதுதான் கர்த்தரிட
மிருந்து வந்த வார்த்தை என்று அறிந்தேன்.

9நான் எனது பெரியப்பாவின் மகன்
அனாமெயேலிடமிருந்து வயலை வாங்கி
னேன். நான் அவனுக்காக 17 சேக்கல்
வெள்ளியை எடை போட்டுக் கொடுத்தேன்.
10நான் பத்திரத்தில் கையெழுத்து இட்டேன்.
முத்திரையிட்ட பத்திரத்தின் நகல் ஒன்று
என்னிடம் இருந்தது. நான் செய்தவற்றுக்குச்
சாட்சியாக சிலர் இருந்தனர். அளவுபடியில்
வெள்ளியை எடை போட்டேன். 11பிறகு
நான் முத்திரையிட்ட பத்திர நகலையும்
முத்திரையிடப்படாத நகலையும் எடுத்தேன்.
12நான் அவற்றை எனது பெரியப்பாவின்
மகனாக பாருக்கினிடம் கொடுத்தேன்.
பாருக், நேரியாவின் மகன். நேரியா, மாசெ
யாவின் மகன். எதிரில் முத்திரையிட்ட
பத்திர நகலில் நான் விலைக்கு வாங்கியதின்
விவரங்களும் கட்டளைகளும் இருந்தன.
எனது மாமன் அனாமெயேலும் மற்றவர்க
ளும் சாட்சியாக இருக்கும்போதே, நான்
பத்திரத்தைப் பாருக்கிடம் கொடுத்தேன்.
அச்சாட்சிகளும் பத்திரத்தில் கையெழுத்து
இட்டனர். யூதாவின் ஜனங்கள் பலரும்
முற்றத்தில் இருந்து நான் பத்திரத்தைப்
பாருக்கிடம் கொடுப்பதைப் பார்த்தனர்.

13அனைத்து ஜனங்களும் பார்த்துக்
கொண்டிருக்கும்போது நான் பாருக்கிடம்,
14“சர்வ வல்லமையுள்ள இஸ்ரவேலின் தேவ
னாகிய கர்த்தர் கூறுகிறார்: ‘நீ முத்திரை
யிடப்பட்டதும் முத்திரையிடப்படாததுமான
இரண்டு பத்திர நகல்களையும் எடுத்து
மண்ஜாடிக்குள் போடு. இதைச் செய். அத
னால் இப்பத்திரங்கள் நீண்டகாலம் இருக்
கும்.’ 15இஸ்ரவேலின் சர்வ வல்லமையுள்ள
தேவனாகிய கர்த்தர் கூறுகிறார். ‘எதிர்
காலத்தில், எனது ஜனங்கள் மீண்டும் ஒரு
முறை வீடுகளையும் வயல்களையும் திராட்
சைத் தோட்டங்களையும் இஸ்ரவேல் நாட்
டில் வாங்குவார்கள்’”

16நான் நேரியாவின் மகன் பாருக்கிடம்
பத்திரத்தைக் கொடுத்தப் பிறகு, நான் கர்த்
தரிடம் ஜெபம் செய்தேன். நான் சொன்
னேன்:

17“தேவனாகிய கர்த்தாவே, நீர்
வானத்தையும் பூமியையும் படைத்தீர்.
நீர் அதனை உமது பெரும் வல்லமை
யால் படைத்தீர். உமக்குச் செய்திட
ஆச்சரியகரமானது எதுவும் இல்லை.
18கர்த்தாவே, ஆயிரக்கணக்கான ஜனங்க
ளுக்கு நீர் உண்மையாகவும் தயவாக
வும் இருக்கிறீர். ஆனால், தந்தைகளின்
பாவங்களுக்காக நீர் பிள்ளைகளுக்குத்
தண்டனை கொண்டு வருகிறீர். பெரு
மையும் வல்லமையும் கொண்ட
தேவனே, உமது நாமம் சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர். 19நீர் திட்டமிட்டு பெருஞ்
செயல்களைச் செய்கிறீர். கர்த்தாவே
ஜனங்கள் செய்கிற அனைத்தையும் நீர்
பார்க்கிறீர். நல்லவற்றைச் செய்கிற
வர்களுக்குப் பரிசுகளைக் கொடுக்கிறீர்.
தீயவற்றைச் செய்கிறவர்களுக்குத் தண்
டனையைக் கொடுக்கிறீர். அவர்களுக்கு
எது ஏற்றதோ அதனை நீர் கொடுக்
கிறீர். 20கர்த்தாவே, எகிப்து நாட்டிலே
நீர் வல்லமை வாய்ந்த அற்புதங்களைச்
செய்தீர். இன்றுவரை நீர் வல்லமை
மிக்க அற்புதங்களைச் செய்திருக்கிறீர்.
நீர் இவற்றை இஸ்ரவேலிலும் செய்தீர்.

எங்கெல்லாம் ஜனங்கள் இருக்கிறார்
களோ அங்கெல்லாம் நீர் இவற்றைச்
செய்தீர். நீர் இவற்றால் பெரும் புகழை
அடைந்திருக்கிறீர். 21 கர்த்தாவே, வல்ல
மைமிக்க அற்புதங்களைப் பயன்படுத்தி,
உமது இஸ்ரவேல் ஜனங்களை எகிப்
துக்கு வெளியே கொண்டுவந்தீர். நீர்
உமது சொந்த வல்லமைமிக்க கையைப்
பயன்படுத்தி இவற்றைச் செய்தீர். உமது
வல்லமை ஆச்சரியமானது!
22 "கர்த்தாவே, இந்தத் தேசத்தை நீர்
இஸ்ரவேல் ஜனங்களுக்குக் கொடுத்தீர்.
இந்தத் தேசத்தைக் கொடுப்பதாக நீண்ட
காலத்திற்கு முன்பே அவர்களது முற்
பிதாக்களுக்கு வாக்களித்துள்ளீர். இது
மிகவும் சிறந்த தேசம். இது பல நல்
லவை உள்ள நல்ல தேசம். 23 இஸ்ரவேல்
ஜனங்கள் இந்நாட்டிற்குள் வந்தனர்.
அவர்கள் இதனைச் சொந்தமாக எடுத்
தனர். ஆனால் அந்த ஜனங்கள் உமக்கு
அடிபணியவில்லை. அவர்கள் உமது
போதனைகளைப் பின்பற்றவில்லை. நீர்
கட்டளையிட்டவற்றை அவர்கள் செய்
யவில்லை. எனவே, நீர் இத்தகைய
பயங்கரமானவற்றை இஸ்ரவேல் ஜனங்
களுக்கு ஏற்படுத்தினீர்.
24 "இப்பொழுது, நகரத்தைப் பகைவர்
கள் சூழ்ந்துகொண்டனர். அவர்கள்
எடுசுவர்களைக் கட்டிக் கொண்டிருக்கி
றார்கள். எனவே அவர்கள் எருசலேம்
சுவர்களைத்தாண்டி கைப்பற்றிவிடுவார்
கள். அவர்கள் தம் பட்டயங்களைப்
பயன்படுத்தியும் பசியாலும் பயங்கர
மான நோயாலும் பாபிலோனியர்கள்
எருசலேம் நகரைத் தோற்கடித்துவிடு
வார்கள். இப்போது பாபிலோனி
யப்படை எருசலேம் நகரை தாக்கிக்
கொண்டிருக்கிறது. கர்த்தாவே, நீர்
சொன்னவை நிகழும் இப்பொழுது
இது நிகழ்ந்துகொண்டிருப்பதை நீர்
பார்க்கிறீர்.
25 "எனது கர்த்தராகிய ஆண்டவரே,
அத்தீயச் செயல்கள் எல்லாம் நடந்து
கொண்டிருக்கின்றன. ஆனால் நீர்
இப்பொழுது, 'எரேமியா, வெள்ளியால்
வயலை வாங்கு, வாங்கும்போது சில
ரைச் சாட்சியாக வைத்துக்கொள்'
என்று சொல்கிறீர். பாபிலோனியர்
படை இந்நகரைக் கைப்பற்ற தயாராக
இருக்கும்போது நீர் எனக்குச் சொல்லிக்
கொண்டிருக்கிறீர். இவ்வாறு எனது
பணத்தை நான் ஏன் வீணாக்க வேண்
டும்?"

26 பிறகு கர்த்தரிடமிருந்து எரேமியாவிற்
குச் வார்த்தை வந்தது. 27 "எரேமியா, நானே
கர்த்தர். பூமியில் உள்ள ஒவ்வொருவருக்கும்
நான் தேவன். எரேமியா, என்னால் முடி
யாதது ஒன்றுமில்லை என்பது உனக்குத்
தெரியும்" 28 கர்த்தர் மேலும் கூறினார், "நான்
விரைவில் எருசலேம் நகரைப் பாபிலோ
னியப் படைகளுக்கும் பாபிலோன் அரசன்
நேபுகாத்நேச்சாருக்கும் கொடுப்பேன். படை
யானது நகரைக் கைப்பற்றும். 29 பாபிலோ
னியப் படை ஏற்கனவே எருசலேமைத்
தாக்கிக் கொண்டிருக்கிறது. அவர்கள்
விரைவில் நகருக்குள் நுழைந்து நெருப்பிடத்
தொடங்குவார்கள். அவர்கள் இந்நகரத்தை
எரித்துப்போடுவார்கள். நகரத்திற்குள் பல
வீடுகள் உள்ளன. அவற்றின் உச்சியிலிருந்து
எனக்குக் கோபமூட்டும்படி பொய்த் தெய்வ
மாகிய பாகாலுக்குப் பலிகளைக் கொடுத்த
னர். அந்நிய தெய்வங்களின் விக்கிரகங்
களுக்கும் அவர்கள் பானங்களின் காணிக்
கைக் கொடுத்தனர். பாபிலோனிய படை
அவ்வீடுகளை எரித்துப்போடும். 30 நான்
இஸ்ரவேல் ஜனங்களையும் யூதாவின் ஜனங்
களையும் கவனித்திருந்தேன். அவர்கள் செய்
தது எல்லாம் தீயவையே. அவர்கள் இளமை
யிலிருந்துத் தீயவற்றைச் செய்திருந்தனர்.
இஸ்ரவேல் ஜனங்கள் என்னைக் கோபம்
கொள்ளச் செய்திருக்கின்றனர். அவர்கள் தம்
சொந்தக் கைகளால் செய்த விக்கிரகங்
களைத் தொழுதுகொண்டு என்னைக்
கோபம் அடையச் செய்தனர்" இந்த வார்த்
தை கர்த்தரிடமிருந்து வந்தது. 31 "எருசலேம்
கட்டப்பட்ட நாளிலிருந்து இன்றுவரை,
நகரத்திலுள்ள ஜனங்கள் என்னைக் கோபம்
அடையச் செய்தனர். இந்நகரம் எனக்குக்
கோபம் ஊட்டியிருக்கிறது. எனவே இதனை
எனது பார்வையிலிருந்து விலக்குவேன்.
32 நான் எருசலேமை அழிப்பேன். காரணம்
இஸ்ரவேல் மற்றும் யூதாவின் ஜனங்கள்
செய்திருக்கிற தீமைதான். ஜனங்களும் அவர்
களின் அரசர்களும் தலைவர்களும் ஆசாரியர்
களும் தீர்க்கதரிசிகளும் யூதா மற்றும் எருச
லேம் ஜனங்களும் என அனைவரும் என்
னைக் கோபமடையச் செய்தனர்.
33 "அந்த ஜனங்கள் உதவிக்காக என்னிடம்
வந்திருக்கவேண்டும். ஆனால், அவர்கள்
எனக்கு முதுகைக் காட்டினார்கள். நான்
அவர்களுக்குக் கற்பிக்க மீண்டும் மீண்டும்
முயன்றேன். ஆனால் அவர்கள் என்னைக்
கவனிக்கவேயில்லை. நான் அவர்களைத்
திருத்த முயன்றேன். ஆனால் அவர்கள்
என்னைக் கவனிக்கவே இல்லை. 34 அந்த
ஜனங்கள் தம் விக்கிரகங்களைச் செய்திருக்
கின்றனர். நான் அவற்றை வெறுக்கிறேன்.
எனது நாமத்தால் அழைக்கப்படுகிற
ஆலயத்தில் அவர்கள் அந்த விக்கிரகங்களை
வைத்தனர். இவ்வாறு அவர்கள் எனது
ஆலயத்தைத் 'தீட்டுப்படுத்தினார்கள்.'
35 "பென் இன்னோமுடைய பள்ளத்தாக்கில்
அந்த ஜனங்கள் பொய்த் தெய்வமாகிய
பாகாலுக்கு மேடைகளைக் கட்டினார்கள்.
அவர்கள் அந்த தொழுகை இடங்களைக்

கட்டினார்கள். எனவே அவர்கள் தம்
மகன்களையும் மகள்களையும் மோளேக்கு
என்ற பொய்த் தெய்வத்திற்கு குழந்தைப்
பலியாக கொடுத்தனர். இப்பயங்கரமான
காரியங்களைச் செய்யும்படி நான் கட்ட
ளையிடவில்லை. நான் யூதாவின் ஜனங்கள்
இத்தகைய பயங்கரமான செயலைச் செய்ய
வேண்டும் என்று என்றைக்கும் நினைத்தது
கூட இல்லை.
36“ஜனங்களாகிய நீங்கள், ‘பாபிலோன்
அரசன் எருசலேமைக் கைப்பற்றுவான்.
அவன் பட்டயங்கள், பசி, பயங்கரமான
நோய்களைப் பயன்படுத்தி நகரைத் தோற்
கடித்து விடுவான்’ என்று சொல்லிக்
கொண்டிருக்கிறார்கள். ஆனால் இஸ்ர
வேலின் தேவனாகிய கர்த்தர் சொல்கிறார்,
37‘இஸ்ரவேல் மற்றும் யூதாவின் ஜனங்கள்
தங்கள் நாட்டைவிட்டு போகும்படி நான்
வற்புறுத்தினேன். அந்த ஜனங்களோடு நான்
கோபமாக இருந்தேன். ஆனால், நான்
அவர்களை மீண்டும் இந்த இடத்திற்குக்
கொண்டுவருவேன். நான் எங்கே போகும்
படி வற்புறுத்தினேனோ அங்கே அவர்களை
மீண்டும் சேகரிப்பேன். இந்த இடத்திற்கு
நான் மீண்டும் கொண்டு வருவேன்.
அவர்களைச் சமாதானத்தோடும் பாதுகாப்
போடும் வாழவிடுவேன். 38இஸ்ரவேல்
மற்றும் யூதா ஜனங்கள் எனது ஜனங்கள்
ஆவார்கள். நான் அவர்களது தேவன்
ஆவேன். 39நான் அவர்கள் உண்மையாக
ஒரே ஜனங்களாக இருப்பதற்கான ஆசை
யைக் கொடுப்பேன். அவர்களுக்கு ஒரே
நோக்கம் இருக்கும். தம் வாழ்நாள் முழுவதும்
என்னை உண்மையாக வழிபட விரும்பு
வார்கள். அவர்கள் உண்மையாகவே அதைச்
செய்ய விரும்புவார்கள். அவர்கள் பிள்ளை
களும் அவ்வாறே செய்வார்கள்.
40“‘நான் இஸ்ரவேல் மற்றும் யூதாவின்
ஜனங்களோடு ஒரு உடன்படிக்கைச் செய்
வேன். இந்த உன்படிக்கை என்றென்றும்
இருக்கும். இந்த உடன்படிக்கையில் நான்
அந்த ஜனங்களிடம் இருந்து என்றென்றும்,
திரும்பமாட்டேன். நான் எப்பொழுதும்
அவர்களுக்கு நல்லவனாக இருப்பேன். அவர்
கள் என்னை மதிக்க விரும்பும்படிச் செய்
வேன். பிறகு அவர்கள் என்னிடமிருந்து
விலகமாட்டார்கள். 41அவர்கள் என்னை
மகிழ்ச்சி அடையும்படிச் செய்வார்கள். நான்
அவர்களுக்கு நன்மை செய்வதில்
மகிழ்வேன். நான் அவர்களை இந்தத் தேசத்
தில் உறுதியாகவே நட்டு வளரும்படிச்
செய்வேன். நான் இதனை எனது மனப்பூர்வ
மாகவும் ஆத்மபூர்வமாகவும் செய்வேன்.’”
42இதுதான் கர்த்தர் சொல்கிறது: “இஸ்ர
வேல் மற்றும் யூதா ஜனங்களுக்கு நான்
இந்த பெரும் அழிவைக் கொண்டு வந்திருக்
கிறேன். அதே வழியில் அவர்களுக்கு
நான் நன்மையை செய்வேன். நான் அவர்க
ளுக்கு நன்மை செய்வதாக உறுதி கூறுகி
றேன். 43ஜனங்களாகிய நீங்கள் கூறுகிறீர்கள்,
இத்தேசம் ஒரு காலியான வனாந்தரம்.
இங்கே ஜனங்களோ மிருகங்களோ இல்லை.
பாபிலோனிய படை இந்நாட்டை அழித்து
விட்டது.’ ஆனால் எதிர்காலத்தில், ஜனங்கள்
மீண்டும் ஒருமுறை வயல்களை விலைக்கு
வாங்குவார்கள். 44ஜனங்கள் தம்பணத்தைப்
பயன்படுத்தி வயல்களை வாங்குவார்கள்”
அவர்கள் கையெழுத்திட்டு தம் உடன்படிக்
கையை முத்திரையிடுவார்கள். ஜனங்களது
பத்திரங்களுக்கு ஜனங்கள் சாட்சி ஆவார்கள்.
ஜனங்கள் மீண்டும் இத்தேசத்தில் வயல்களை
வாங்குவார்கள். இது பென்யமீன் கோத்திரம்
வாழ்கிற இடம். எருசலேமைச் சுற்றியுள்ள
இடங்களில் அவர்கள் வயலை வாங்குவார்
கள். யூதா தேசத்திலுள்ள நகரங்களிலும்
மலை நாட்டிலும் வடக்கு மலை அடி
வாரங்களிலும் தென் வனாந்தரப் பகுதிகளி
லும் அவர்கள் வயல்களை வாங்குவர். அது
நிகழும். ஏனென்றால், நான் உங்கள்
ஜனங்களை மீண்டும் இங்கே கொண்டு
வருவேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.

## தேவனுடைய வாக்குறுதி

33 கர்த்தரிடமிருந்து வார்த்தை இரண்டா
வது முறையாக எரேமியாவிற்கு
வந்தது. எரேமியா இன்னும் காவல் முற்றத்
தில் சிறைபட்டிருக்கிறான். 2கர்த்தர் பூமியைச்
செய்தார், அவர் அதனைப் பாதுகாப்பாக
வைத்திருக்கிறார். கர்த்தர் என்பது அவரது
நாமம். கர்த்தர் கூறுகிறார்: 3“யூதாவே,
என்னிடம் ஜெபம் செய். நான் பதில்
கூறுவேன். நான் முக்கியமான இரகசியங்க
ளைக் கூறுவேன். நீ இதற்கு முன்
இப்படிப்பட்ட காரியத்தை கேட்டதில்லை.
4இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் எருச
லேமில் உள்ள வீடுகளைப்பற்றியும் யூதாவி
லுள்ள அரசர்களின் அரண்மனைகளைப்
பற்றியும் கர்த்தர் கூறுகிறார்: பகைவர்கள்
அவ்வீடுகளை இடித்துத் தள்ளுவார்கள்.
நகரச்சுவர்களில் உயரமான எடுசுவர்களைக்
கட்டுவார்கள். பகைவர்கள் வாள்களைப்
பயன்படுத்துவார்கள். இந்நகரங்களில் உள்ள
ஜனங்களோடு சண்டையிடுவார்கள்.
5“எருசலேமில் உள்ள ஜனங்கள் பல
தீமைகளைச் செய்திருக்கின்றனர். நான் அந்த
ஜனங்கள் மீது கோபமாக இருக்கிறேன்.
நான் அவர்களுக்கு எதிராகத் திரும்பி
யிருக்கிறேன். எனவே நான் அங்கே பலப்
பல ஜனங்களைக் கொல்வேன். பாபிலோ
னிய படை எருசலேமிற்கு எதிராகப்
போரிட வரும். எருசலேமின் வீடுகளில்
பற்பல மரித்த உடல்கள் கிடக்கும்.
6“ஆனால் பிறகு அந்நகரில் உள்ள ஜனங்
களை நான் குணப்படுத்துவேன் (மன்னிப்
பேன்). அந்த ஜனங்கள் சமாதானத்தையும்
பாதுகாப்பையும் அனுபவிக்கும்படிச் செய்

வேன். 7 இஸ்ரவேல் மற்றும் யூதா ஜனங்களை
மீண்டும் கொண்டு வருவேன். அந்த
ஜனங்களை முன்புபோல பலமுள்ளவர்க
ளாகச் செய்வேன். 8 அவர்கள் எனக்கு
எதிராகப் பாவம் செய்தனர். ஆனால் நான்
அப்பாவத்தைக் கழுவுவேன். அவர்கள்
எனக்கு எதிராகச் சண்டையிட்டனர்.
ஆனால் அவர்களை நான் மன்னிப்பேன்.
9 எருசலேம் ஒரு அற்புதமான இடமாகும்.
ஜனங்கள் மகிழ்ச்சி அடைவார்கள். மற்ற
நாடுகளில் உள்ள ஜனங்களும் அதனைப்
புகழுவார்கள். அந்த ஜனங்கள் அங்கே
நல்லவை நடைபெறுவதைப்பற்றிக் கேள்விப்
படும்போது இது நிகழும். எருசலேமிற்காக
நான் செய்து கொண்டிருக்கும் நல்லவற்
றைப்பற்றி அவர்கள் கேட்பார்கள்.

10 “‘நமது நாடு வெறுமையான வனாந்தர
மாக இருக்கிறது. அங்கே ஜனங்களோ
மிருகங்களோ வாழவில்லை’ என்று நீங்கள்
சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். எருசலேம்
தெருக்களும் யூதா நகரங்களும் இப்போது
அமைதியாக இருக்கின்றன. ஆனால் விரை
வில் அங்கு ஆரவாரம் ஏற்படும். 11 அங்கே
மகிழ்ச்சிக்கும் சந்தோஷத்திற்கும் உரிய
ஓசைகள் கேட்கும். அங்கு மணமகள் மற்றும்
மணமகனின் மகிழ்ச்சிகரமான ஓசை
கேட்கும். கர்த்தருடைய ஆலயத்திற்கு ஜனங்
கள் காணிக்கைகளைக் கொண்டு வரும்
ஓசை கேட்கும். அந்த ஜனங்கள், ‘சர்வ
வல்லமையுள்ள கர்த்தரைத் துதியுங்கள்.
கர்த்தர் நல்லவர். கர்த்தருடைய தயவு
என்றென்றும் தொடரும்’ என்று கூறுவார்
கள். ஜனங்கள் இதனைக் கூறுவார்கள்.
ஏனென்றால் நான் மீண்டும் யூதாவிற்கு
நல்லவற்றைச் செய்வேன். இது தொடக்கத்
தைப் போன்று இருக்கும்.” கர்த்தர் இவற்றைக்
கூறினார்.

12 சர்வ வல்லமையுள்ள கர்த்தர், “இந்த
இடம் இப்போது காலியாக இருக்கிறது.
அங்கே மனிதர்களோ மிருகங்களோ வாழ
வில்லை. ஆனால், யூதாவின் எல்லா நகரங்
களிலும் ஜனங்கள் இருப்பார்கள். அங்கு
மேய்ப்பர்கள் இருப்பார்கள். மந்தைகள் ஓய்வு
கொள்கிற மேய்ச்சல் நிலங்கள் இருக்கும்.
13 மேய்ப்பர்கள் தம் ஆடுகளை அவை
அவர்கள் முன்பு இருக்கும்போது எண்ணு
கின்றனர். ஜனங்கள் தம் ஆடுகளை நாட்
டைச் சுற்றிலும் மலைநாட்டிலும் மேற்கு
மலை அடிவாரங்களிலும் நெகேவிலும் யூதா
வின் மற்ற நகரங்களிலும் எண்ணுவார்கள்”
என்று கூறுகிறார்.

### நல்ல கிளை

14 இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து வரு
கிறது. “நான் இஸ்ரவேல் மற்றும் யூதாவின்
ஜனங்களுக்கு விசேஷ வாக்குறுதியைச்
செய்தேன். நான் வாக்குறுதி அளித்த காரி
யங்களை நிறைவேற்றும் நேரம் வந்து
கொண்டிருக்கிறது. 15 அந்த நேரத்தில்,
தாவீதின் குடும்பத்திலிருந்து ஒரு நல்ல
‘கிளை’ வளரும்படிச் செய்வேன். அந்த
நல்ல ‘கிளை’ தேசத்திற்கு நல்லதும்
சரியானதுமானவற்றைச் செய்யும்.
16 அந்தக்கிளை இருக்கும் போது யூதாவின்
ஜனங்கள் காப்பாற்றப் படுவார்கள்.
ஜனங்கள் எருசலேமில் பாதுகாப்பாக
வாழ்வார்கள். அக்கிளையின் பெயர்: ‘கர்த்தர்
நல்லவர்’” 17 கர்த்தர் கூறுகிறார், “தாவீதின்
குடும்பத்திலுள்ள ஒருவனே எப்பொழுதும்
சிங்காசனத்தில் இருந்து இஸ்ரவேல்
குடும்பத்தை ஆள்வான். 18 லேவியின்
வம்சத்திலிருந்தே எப்போதும் ஆசாரி யர்கள்
இருப்பார்கள். அந்த ஆசாரியர்கள்
எப்பொழுதும் எனக்கு முன்னால் நின்று
தகனபலியையும் தானியக் காணிக்கைகளை
யும், பலிகளையும் கொடுப்பார்கள்.”

19 இந்த வார்த்தை கர்த்தரிடமிருந்து எரே
மியாவிற்கு வந்தது. 20 கர்த்தர் கூறுகிறார்:
“பகலோடும் இரவோடும் நான் ஒரு
உடன்படிக்கை செய்திருக்கிறேன். அவை
என்றென்றும் தொடர்ந்து இருக்கும் என
நான் ஒப்புக்கொண்டேன். அந்த உடன்படிக்
கையை உன்னால் மாற்ற முடியாது. இரவும்
பகலும் எப்பொழுதும் சரியான நேரத்தில்
வரும். நீ அந்த உடன்படிக்கையை மாற்ற
முடியுமானால் 21 பிறகு நீ நான் தாவீது
மற்றும் லேவியோடு செய்து கொண்ட
உடன்படிக்கையை மாற்ற முடியும். பிறகு
தாவீதின் சந்ததியார் அரசனாகமாட்டார்கள்.
லேவியின் சந்ததியார் ஆசாரியானாக
மாட்டார்கள். 22 ஆனால் நான் எனது வேலை
யாள் தாவீதிற்கு நிறைய சந்ததிகளைக்
கொடுப்பேன். லேவியின் கோத்திரத்திற்கும்
கொடுப்பேன். அவர்கள் வானத்தில் உள்ள
நட்சத்திரங்களைப் போன்று நிறைய இருப்
பார்கள். அத்தனை நட்சத்திரங்களையும் எவ
ராலும் எண்ண முடியாது. அவர்கள் கடற்
கரையில் உள்ள மணலைப்போன்று ஏராள
மாக இருப்பார்கள். அம்மணல் துண்டுகளை
எவராலும் எண்ண முடியாது” என்கிறார்.

23 கர்த்தரிடமிருந்து எரேமியா இந்த
வார்த்தையைப் பெற்றான்: 24 “எரேமியா,
ஜனங்கள் என்ன சொல்லிக்கொண்டிருக்
கிறார்கள் என்று பார்த்தாயா? அந்த ஜனங்
கள் சொல்லுகிறார்கள். ‘கர்த்தர் இஸ்ரவேல்
மற்றும் யூதா என்னும் வம்சங்களை விட்டுக்
கர்த்தர் திரும்பிவிட்டார். அந்த ஜனங்களைக்
கர்த்தர் தேர்ந்தெடுத்தார். ஆனால், இப்போது
அவர் அதனைத் தேசமாக ஏற்றுக்கொள்ள
வில்லை நிராகரித்துவிட்டார்.”

25 கர்த்தர் சொல்லுகிறார்: “இரவுடனும்
பகலுடனும் நான் கொண்ட உடன்படிக்கை
தொடராவிட்டால், வானத்திற்கும் பூமிக்கு
முள்ள சட்டங்களை நான் அமைக்கா
விட்டால், பிறகு நான் அந்த ஜனங்களை
விட்டு விலகலாம். 26 பிறகு, யாக்கோபின்

சந்ததிகளிடமிருந்து நான் ஒருவேளை
விலகலாம். ஒருவேளை ஆபிரகாம், ஈசாக்கு
மற்றும் யாக்கோபின் சந்ததிகளைத் தாவீதின்
சந்ததிகளை அனுமதிக்கமாட்டேன். ஆனால்
தாவீது எனது தாசன். நான் அந்த
ஜனங்களிடம் தயவோடு இருப்பேன். அந்த
ஜனங்களுக்கு மீண்டும் நல்லவை
ஏற்படச்செய்வேன்.

### யூதாவின் அரசனான சிதேக்கியாவிற்கு எச்சரிக்கை

34 எரேமியாவிற்குக் கர்த்தரிடமிருந்து
வார்த்தை வந்தது. நேபுகாத்நேச்சார்
பாபிலோனின் அரசனாக இருந்தபோது
வார்த்தை வந்தது. அவன் எருசலேமிற்கும்
அதைச்சுற்றிலும் உள்ள நகரங்களுக்கு
எதிராகச் சண்டையிட்டுக் கொண்டிருந்
தான். நேபுகாத்நேச்சார் தன்னோடு தனது
படை முழுவதையும் ஜனங்களிடமும் அவ
னுடைய ஆளுகைக்குட்பட்ட பூமியின் சகல
இராஜ்யங்களுக்கும் உரிய படைகளையும்
வைத்திருந்தான்.
2 இதுதான் செய்தி: “இதைத் தான்
கர்த்தரும் இஸ்ரவேல் ஜனங்களின் தேவனு
மானவர் கூறுகிறார்: எரேமியா, யூதாவின்
அரசனான சிதேக்கியாவிடம் போ, அவ
னிடம் இந்தச் செய்தியைக் கொடு, ‘சிதேக்
கியா, இதைத்தான் கர்த்தர் கூறுகிறார். நான்
விரைவில் பாபிலோனின் அரசனுக்கு
எருசலேம் நகரத்தைக் கொடுப்பேன். அவன்
அதனை எரிப்பான்.
3 சிதேக்கியா, பாபி
லோன் அரசனிடமிருந்து நீ தப்பிக்கவே
முடியாது. நீ உறுதியாகப் பிடிபடுவாய்.
அவனிடம் கொடுக்கப்படுவாய். பாபிலோன்
அரசனை நீயே உன் சொந்தக் கண்களால்
பார்ப்பாய். அவன் உன்னோடு நேருக்கு
நேராகப் பேசுவான். நீ பாபிலோனிடம்
போவாய்.
4 ஆனால் கர்த்தருடைய வாக்கு
றுதிபற்றி யூதாவின் அரசனான சிதேக்கி
யாவே கவனி. இது தான் கர்த்தர் உன்னைப்
பற்றி சொன்னது. நீ வாளால் கொல்லப்பட
மாட்டாய்.
5 நீ சமாதானமான வழியில்
மரிப்பாய். ஜனங்கள் இறுதி சடங்குக்கான
நெருப்பை உருவாக்கி நீ அரசனாகுமுன்
ஆண்ட அரசர்களான உன் முற்பிதாக்களைப்
பெருமைபடுத்தினார்கள். இதே வழியில்,
உன்னைப் பெருமைபடுத்தவும் ஜனங்கள்
இறுதி சடங்கு நெருப்பை* மூட்டுவார்கள்,
அவர்கள் உனக்காக அழுவார்கள். அவர்கள்
சோகத்தோடு, ‘ஓ எஜமானனே” என்பார்கள்.
“நான் நானே உமக்கு இந்த வாக்குறுதியைச்
செய்கிறேன்” இந்த வார்த்தைக் கர்த்தரிட
மிருந்து வந்தது.

6 எனவே, எரேமியா இச்செய்தியைக்
கர்த்தரிடமிருந்து எருசலேமில் சிதேக்கியா
விற்குக் கொடுத்தான்.
7 பாபிலோனது அரச
னின் படை எருசலேமிற்கு எதிராகச்
சண்டையிட்ட போது இது இருந்தது.
பாபிலோனின் படையும் யூதாவின் கைப்
பற்றப்படாத நகரங்களுக்கு எதிராகச்
சண்டையிட்டனர். லாகீசும் அசெக்காவும்
அந்நகரங்களாகும். யூதா தேசத்தில் மீதிசி
யுள்ள கோட்டைகளால் அமைந்த நகரங்கள்
இவை.

### ஜனங்கள் தங்களது ஒப்பந்தத்தை உடைக்கின்றனர்

8 அனைத்து எருசலேம் ஜனங்களோடும்
சிதேக்கியா அரசன் அனைத்து எபிரெய
அடிமைகளுக்கும் விடுதலை தருவதாக
ஒப்பந்தம் செய்திருந்தான். சிதேக்கியா அந்த
ஒப்பந்தம் செய்த பிறகு கர்த்தரிடமிருந்து
எரேமியாவிற்கு வார்த்தை வந்தது.
9 ஒவ்வொருவனும் எபிரெய அடிமையையும்
விடுதலை செய்யவேண்டும். ஆணும் பெண்
ணுமான எபிரெய அடிமைகள் விடுதலை
செய்யப்படவேண்டும். எவரும் இன்னொரு
யூதா கோத்திரத்தில் உள்ளவனை அடிமை
யாக வைத்திருக்கக்கூடாது.
10 எனவே யூதா
வில் உள்ள அனைத்துத் தலைவர்களும்
ஜனங்களனைவரும் இந்த ஒப்பந்தத்தை
ஏற்றுக்கொண்டனர். ஒவ்வொருவனும் ஆண்
மற்றும் பெண் அடிமைகளை விடு தலை
செய்வார்கள். அவர்களை இனிமேலும்
அடிமையாக வைத்திருக்க முடியாது. ஒவ்
வொருவரும் ஏற்றுக்கொண்டனர். எனவே,
அனைத்து அடிமைகளும் விடுதலை செய்யப்
பட்டனர்.
11 ஆனால், அதற்குப் பிறகு, அடி
மைகளை வைத்து இருந்த ஜனங்கள் தங்கள்
மனதை மாற்றிக்கொண்டனர். எனவே,
விடுவிக்கப்பட்ட ஜனங்களை எடுத்து மீண்
டும் அடிமைகளாக்கிக் கொண்டனர்.
12 பிறகு கர்த்தரிடமிருந்து எரேமியாவிற்
குச் வார்த்தை வந்தது.
13 எரேமியா, இஸ்ரவே
லின் தேவனாகிய கர்த்தர் சொன்னது
இதுதான்: “நான் உங்கள் முற்பிதாக்களை
அடிமையாயிருந்த எகிப்துக்கு வெளியே
கொண்டுவந்தேன். நான் அதைச் செய்த
போது நான் அவர்களோடு உடன்படிக்கைச்
செய்து கொண்டேன்.
14 நான் உங்கள் முற்
பிதாக்களுக்குச் சொன்னேன். ‘ஒவ்வொரு
ஏழு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஒவ்வொரு
வனும் தனது எபிரெய அடிமையையும்
விடுவிக்க வேண்டும். உங்களிடம் ஒரு
எபிரெய அடிமை தன்னையே விற்றுக்
கொண்டவன் இருந்தால் அவன் உனக்கு
ஆறு ஆண்டுகள் சேவை செய்த பிறகு நீ
அவனை விடுதலை செய்ய வேண்டும்.
ஆனால், உங்கள் முற்பிதாக்கள் என்னைக்
கவனிக்கவில்லை. என் பேச்சைக் கேட்க

---

**சடங்கு நெருப்பு** அடக்கத்திற்கு முன் தூபம் எரிப்பது ஒரு சடங்காக இருந்தது. யூதர்கள் மரித்தவர் சடலத்தை எரிப்பதில்லை, புதைப்பார்கள் இது யூத சடங்கு.

வில்லை. 15கொஞ்ச காலத்துக்கு முன் சரி
யானது எதுவோ அதனைச் செய்ய உங்கள்
மனதை மாற்றினீர்கள். உங்களில் ஒவ்வொ
ருவரும் அடிமையாயிருந்த எபிரெய
நபருக்கு விடுதலை கொடுத்தீர்கள். என்
நாமத்தால் அழைக்கப்படுகிற ஆலயத்தில்
எனக்கு முன் ஒரு உடன்படிக்கை நீங்கள்
செய்தீர்கள். 16ஆனால் இப்போது, நீங்கள்
உங்கள் மனங்களை மாற்றியுள்ளீர்கள். நீங்
கள் என் நாமத்தை மகிமைப்படுத்தவில்லை
என்பதைக் காட்டினீர்கள். எப்படி நீங்கள்
இதனைச் செய்தீர்கள். நீங்கள் விடுவித்திருக்
கிற ஒவ்வொருவரும் ஆண் மற்றும் பெண்
அடிமைகளைத் திரும்ப எடுத்திருக்கிறீர்கள்.
அவர்களை மீண்டும் அடிமைகளாகும்படி
வற்புறுத்தியிருக்கிறீர்கள்.
17“எனவே இதுதான் கர்த்தர் சொல்கிறது:
‘ஜனங்களாகிய நீங்கள் எனக்கு அடிபணிய
வில்லை. நீங்கள் உங்கள் எபிரெய அடிமைக
ளுக்கு விடுதலை கொடுக்கவில்லை. ஏனென்
றால் நான் “விடுதலை’” கொடுப்பேன்.
என்ற உங்கள் உடன்படிக்கையைக் காக்க
வில்லை, இது கர்த்தருடைய வார்த்தை.
உங்களைக் கொல்வதற்காக வாள், பயங்கர
நோய், பசி ஆகியவற்றுக்கு “விடுதலை”
கொடுப்பேன். அவர்கள் உன்னைப் பற்றி
கேள்விப்படும்போது, நான் உன்னைப்
பூமியிலுள்ள இராஜ்யங்களிலேயே அஞ்சத்
தக்க உதாரணமாகச் செய்வேன். 18எனக்கு
முன்னால் செய்த வாக்குறுதியை காப்
பாற்றாத, உடன்படிக்கையை முறித்த மனிதர்
களை நான் ஒப்புக் கொடுப்பேன். அந்த
மனிதர்கள் ஒரு கன்றுக்குட்டியை இரண்டாக
எனக்கு முன் வெட்டினார்கள்; இரண்டு
துண்டுகளுக்கு இடையில் நடந்தனர். 19கன்
றின் இரண்டு துண்டுகளுக்கு இடையில்
நடந்தவர்கள் இவர்கள் தான். யூதா மற்றும்
எருசலேமின் தலைவர்கள்; சபையின்
முக்கியமான அதிகாரிகள், ஆசாரியர்கள்
மற்றும் தேசத்தின் ஜனங்கள். 20எனவே, நான்
அந்த ஜனங்களை அவர்களது பகைவர்
களிடமும் அவர்களைக் கொல்ல விரும்புகிற
ஒவ்வொருவரிடமும் கொடுப்பேன். அந்த
ஜனங்களின் உடல்கள் வானத்துப் பறவைக
ளுக்கும் காட்டு மிருகங்களுக்கும் உண
வாகும். 21நான் யூதாவின் அரசனான சிதேக்
கியாவையும் அவனது அலுவலக அதிகாரி
களை அவர்களது பகைவருக்கும் அவர்க
ளைக் கொல்ல விரும்புகிற ஒவ்வொருவ
ருக்கும் கொடுப்பேன். நான் சிதேக்கியாவை
யும் அவனது ஜனங்களையும் பாபிலோன்
அரசனது படைக்கு, அப்படை எருசலேமை
விட்டு விலகி இருந்தாலும் கொடுப்பேன்.
22ஆனால், நான் பாபிலோன் படை எருச
லேமிற்குத் திரும்பி வருமாறு ஆணையிடு
வேன்’ என்று கர்த்தர் சொல்லுகிறார்.
அப்படை எருசலேமிற்கு எதிராகச் சண்
டையிடும். அவர்கள் அதைப் பிடித்து
நெருப்பிட்டு எரித்துப் போடுவார்கள். நான்
யூதா தேசத்திலுள்ள நகரங்களை அழித்துப்
போடுவேன். அந்நகரங்கள் வெறுமை
வனாந்தரங்கள் ஆகும். ஜனங்கள் எவரும்
வாழமாட்டார்கள்.”

### ரேகாபியர் வம்சத்தின் நல்ல எடுத்துக்காட்டு

35 யூதாவின் அரசனாக யோயாக்கீம்
இருந்தபோது, எரேமியாவிற்கு கர்த்
தரிடமிருந்து வார்த்தை வந்தது. யோயாக்கீம்
யோசியாவின் மகன். கர்த்தரிடமிருந்து வந்த
செய்தி இதுதான். 2“எரேமியா ரேகாபியரது
வீட்டுக்குப்போ. கர்த்தருடைய ஆலயத்தின்
பக்கத்து அறைகள் ஒன்றுக்கு அவர்கள்
வருமாறு வரவழை. அவர்கள் குடிக்கத்
திராட்சைரசத்தைக் கொடு.”
3எனவே நான் (எரேமியா) யசினியாவை
அழைக்கப்போனேன். யசினியா எரேமியா
என்பவனின் மகன். அந்த எரேமியா
அபசினியாவின் மகன். நான் யசினியாவின்
அனைத்து சகோதரர்களையும் மகன்களை
யும் பெற்றேன். நான் ரேகாபியரது வம்சத்
தார் அனைவரையும் பெற்றேன். 4கர்த்தரு
டைய ஆலயத்திற்கு ரேகாபியருடைய குடும்
பத்தாரை அழைத்துவந்தேன். அனானின்
மகன்களது அறை என்று அழைக்கப்படும்
அறைக்குள் நாங்கள் சென்றோம். அனான்
இத்தலியாவின் மகன். அனான் தேவனு
டைய மனிதனாக இருந்தான். அந்த அறை
யூதாவின் இளவரசன் தங்கும் அறைக்கு
அடுத்ததாக இருந்தது. சல்லூமின் மகனான
மாசெயாவின் அறையின் மேலே உள்ளது.
மாசெயா ஆலயத்தின் வாசல் காவலன்.
5பிறகு நான் (எரேமியா) சில கோப்பைக
ளைத் திராட்சைரசத்தால் ரேகாபியர் வம்சத்
தாருக்கு முன்னால் நிரப்பினேன். நான்
அவர்களிடம், “கொஞ்சம் திராட்சைரசம்
குடியுங்கள்” என்று சொன்னேன்.
6ஆனால் ரேகாபியர் ஜனங்களோ,
“நாங்கள் எப்பொழுதும் திராட்சைரசம்
குடிப்பதில்லை. இதனை நாங்கள்
எப்பொழுதும் குடிப்பதில்லை. ஏனென்றால்,
எங்கள் முற்பிதாவான ரேகாபின் மகனான
யோனதாப் இந்தக் கட்டளையைக் கொடுத்
தார். ‘நீயும் உனது சந்ததியாரும் என்
றைக்கும் திராட்சைரசத்தைக் குடிக்க வேண்
டாம். 7நீங்கள் எப்பொழுதும் வீடுகளைக்
கட்ட வேண்டாம், விதைகளை நடவேண்
டாம், அல்லது திராட்சை கொடிகளைப்
பயிரிட வேண்டாம். நீங்கள் இக்காரியங்கள்
எதுவும் செய்யவேண்டாம். நீங்கள் கூடாரங்
களில் மட்டுமே வாழ வேண்டும். நீங்கள்
இவ்வாறு செய்தால் பிறகு நீங்கள் நீண்ட
காலம் இடம் விட்டு இடம் போய் வாழ்வீர்
கள்.’ 8எனவே, ரேகாபியராகிய நாங்கள்
எங்கள் முற்பிதாவான யோனதாபின் கட்ட
ளைக்குக் கீழ்ப்படிவோம். நாங்கள் என்றைக்

கும் திராட்சைரசம் குடிக்க மாட்டோம்.
எங்கள் மனைவிகளும், மகன்களும், மகள்க
ளும் என்றென்றும் திராட்சைரசம் குடிக்க
மாட்டார்கள். 9நாங்கள் வாழ்வதற்காக வீடு
கட்டவில்லை. நாங்கள் திராட்சைத் தோட்
டங்களையோ வயல்களையோ சொந்தமாக்கி
யதில்லை. நாங்கள் என்றென்றும் அறு
வடை செய்ததுமில்லை. 10நாங்கள் கூடாரங்
களில் வாழ்ந்திருக்கிறோம். எங்கள் முற்பிதா
யோனதாப்பின் கட்டளையின்படி கீழ்ப்ப
டிந்திருக்கிறோம். 11ஆனால் பாபிலோன் அர
சனான நேபுகாத்நேச்சார் யூதா நாட்டை
தாக்கியபோது, நாங்கள் எருசலேமிற்குள்
சென்றோம். நாங்கள் எங்களுக்குள், 'வாருங்
கள், நாம் எருசலேம் நகருக்குள் நுழை
வோம். எனவே, நாம் பாபிலோனியரின்
படையிடமிருந்தும் அராமியரின் படையிட
மிருந்தும் தப்பிக்கலாம்' என்று சொன்
னோம். எனவே நாங்கள் எருசலேமில்
தங்கியிருக்கிறோம்."
12பிறகு எரேமியாவிற்குக் கர்த்தரிட
மிருந்து வார்த்தை வந்தது. 13இஸ்ரவேலின்
தேவனாகிய சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
சொல்லுகிறது: "எரேமியா, யூதாவின்
ஆண்களிடமும் எருசலேம் ஜனங்களிடமும்
போய் இந்த வார்த்தையைச் சொல். ஜனங்க
ளாகிய நீங்கள் ஒரு பாடம் கற்றுக் கொண்டு
எனது செய்திக்குக் கீழ்ப்படிய வேண்டும்"
இந்த வார்த்தைக் கர்த்தரிடம் இருந்து வருகி
றது. 14"ரேகாப்பின் மகனான யோனதாப்
அவரது மகன்களிடம் திராட்சைரசத்தைக்
குடிக்க வேண்டாம் என்று கட்டளையிட்
டார். அக்கட்டளை கீழ்படியப்பட்டிருக்கி
றது. இன்றுவரை, யோனதாபின் சந்ததி
யார் முற்பிதாவின் கட்டளைக்குக் கீழ்ப்ப
டிந்திருக்கின்றனர். அவர்கள் திராட்சைரசம்
குடிப்பதில்லை. ஆனால் நானே கர்த்தர். நான்
யூதாவின் ஜனங்களாகிய உங்களுக்குச்
செய்தியை மீண்டும் மீண்டும் கொடுத்திருக்கி
றேன். ஆனால் நீ எனக்குக் கீழ்ப்படிய
வில்லை. 15இஸ்ரவேல் மற்றும் யூதாவின்
ஜனங்களாகிய உங்களிடம் எனது வேலைக்
காரர்களான தீர்க்கதரிசிகளை அனுப்பி
னேன். நான் அவர்களை மீண்டும் மீண்டும்
அனுப்பினேன். அத்தீர்க்கதரிசிகள் உங்களி
டம், 'இஸ்ரவேல் மற்றும் யூதாவிலுள்ள
ஒவ்வொருவரும் தீயவை செய்வதை நிறுத்த
வேண்டும். நீங்கள் நல்லவர்களாக இருக்க
வேண்டும். அந்நிய தெய்வங்களைப் பின்
பற்ற வேண்டாம். அவர்களைத் தொழுது
கொள்ளவோ சேவை செய்யவோ வேண்
டாம். நீங்கள் எனக்குக் கீழ்ப்படிந்தால்
பிறகு நீங்கள், நான் உங்களுக்கும் உங்கள்
முற்பிதாக்களுக்கும் கொடுத்த நாட்டில்
வாழ்வீர்கள்' ஆனால் ஜனங்களாகிய நீங்கள்
எனது வார்த்தையைக் கவனிக்கவில்லை.
16யோனதாப்பின் சந்ததியார் தங்கள் முற்பிதா
கொடுத்த கட்டளைக்குக் கீழ்ப்படிந்தனர்.
ஆனால் யூதாவின் ஜனங்கள் எனக்குக்
கீழ்ப்படியவில்லை" என்றார்.
17எனவே, இஸ்ரவேலின் தேவனாகிய
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் சொல்லுகிறார்.
"யூதா மற்றும் எருசலேமிற்குப் பல தீமைகள்
ஏற்படும் என்று சொன்னேன். நான் விரை
வில் அத்தீமைகள் ஏற்படும்படிச் செய்வேன்.
நான் அந்த ஜனங்களிடம் பேசினேன்,
ஆனால், அவர்கள் கவனிக்க மறுத்தனர்.
நான் அவர்களை அழைத்தேன். ஆனால்
அவர்கள் எனக்குப் பதில் சொல்லவில்லை."
18பிறகு எரேமியா ரேகாபியருடைய வம்
சத்து ஜனங்களிடம் கூறினான். "இஸ்ரவே
லின் தேவனாகிய சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் கூறுகிறார், 'நீங்கள் உங்களது
முற்பிதா யோனதாபின் கட்டளைக்குக்
கீழ்ப்படிந்தீர்கள். யோனாதாபின் அனைத்து
போதனைகளையும் பின்பற்றினீர்கள். அவன்
கட்டளையிட்ட அனைத்தையும் செய்தீர்கள்.
19எனவே, இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்: ரேகா
பின் மகனான யோனதாபின் சந்ததி எனக்
குச் சேவைசெய்ய எப்பொழுதும் இருக்கும்.'"

### எரேமியாவின் புத்தகச்சுருளை யோயாக்கீம் எரிக்கிறான்

36 கர்த்தரிடமிருந்து வார்த்தை எரேமி
யாவிற்கு வந்தது. யூதாவின் அரச
னாக யோசியாவின் மகன் யோயாக்கீம்
ஆன நான்காம் ஆட்சி ஆண்டில் இது
நடந்தது. கர்த்தரிடமிருந்து வந்த செய்தி
இதுதான்: 2எரேமியா, ஒரு புத்தகச்சுருளை
எடு. நான் உன்னிடம் சொன்ன அனைத்து
செய்திகளையும் அதில் எழுது. நான் உன்
னிடம் இஸ்ரவேல் மற்றும் யூதா மற்றும்
அனைத்து தேசங்களைப்பற்றிக் கூறியிருக்கி
றேன். யோசியா அரசனாக இருந்த காலம்
முதல் இன்று வரை நான் உனக்குச்
சொன்ன அனைத்தையும் எழுது. 3நான்
அவர்களுக்காக செய்ய திட்டமிட்டுக்
கொண்டிருப்பதை ஒரு வேளை யூத ஜனங்
கள் கேட்கலாம். அப்போது ஒவ்வொருவ
னும் தன்னுடைய தீயச் செயல்களை நிறுத்
திவிடலாம். அவர்கள் அவ்வாறு செய்தால்,
நான் அவர்கள் ஏற்கனவே செய்த பாவங்
களை மன்னிப்பேன்."
4எனவே எரேமியா, பாருக் என்ற
பெயருள்ளவனை அழைத்தான். பாருக் நேரி
யாவின் மகன். எரேமியா கர்த்தர் கூறிய
வார்த்தையைச் சொன்னான். எரேமியா
பேசிக் கொண்டிருக்கும் போது, பாருக்
புத்தகச் சுருளில் அச்செய்திகளை எழுதி
னான். 5பிறகு எரேமியா பாருக்கிடம்,
"என்னால் கர்த்தருடைய ஆலயத்திற்குப்
போக முடியாது. அங்கே நான் போவதற்கு
அனுமதியில்லை. 6எனவே, நீ கர்த்தருடைய
ஆலயத்திற்குள் போக வேண்டுமென்று
விரும்புகிறேன். உபவாச நாளில் நீ அங்கே

போ. புத்தகச் சுருளில் உள்ளவற்றை ஜனங்க
ளுக்கு வாசி. கர்த்தரிடமிருந்து கேட்ட
செய்தியை நான் சொல்ல நீ புத்தகச்
சுருளில் எழுதியவற்றை வாசி. தாங்கள்
வாழும் பட்டணங்களிலிருந்து எருசலே
மிற்கு வந்த யூதாவின் அனைத்து ஜனங்க
ளுக்கும் அச்செய்தியை வாசி. 7ஒரு வேளை
அந்த ஜனங்கள் கர்த்தர் தங்களுக்கு உதவ
வேண்டுமென கேட்பார்கள். ஒரு வேளை
ஒவ்வொருவனும் தன்னுடைய தீய செயல்
செய்வதை நிறுத்தி விடலாம். கர்த்தர்
அந்த ஜனங்களுடன் கோபமுள்ளவராக
இருக்கிறார் என்பதை அறிவித்திருக்கிறார்.
8எனவே, நேரியாவின் மகனான பாருக்
தீர்க்கதரிசியான எரேமியா சொன்னபடி
எல்லாவற்றையும் செய்தான். பாருக், கர்த்தரு
டைய செய்தி எழுதப்பட்டிருந்த புத்தகச்
சுருளை உரக்க வாசித்தான். அவன் அத
னைக்கர்த்தருடைய ஆலயத்தில் வாசித்தான்.
9யோயாக்கீம் அரசனான ஐந்தாம்
ஆண்டின் ஒன்பதாவது மாதத்தில் ஒரு
உபவாசம் அறிவிக்கப்பட்டது. எருசலேம்
நகரத்தில் வாழ்கின்ற அனைத்து ஜனங்களும்
யூதாவின் பட்டணங்களிலிருந்து எருசலே
மிற்கு வந்த ஒவ்வொருவரும் கர்த்தருக்கு
முன்னால் உபவாசம் இருக்க வேண்டும்.
10அப்போது, எரேமியாவின் வார்த்தைகள்
உள்ள புத்தகச் சுருளைப் பாருக் வாசித்தான்.
அவன் புத்தகச் சுருளைக் கர்த்தருடைய
ஆலயத்தில் வாசித்தான். கர்த்தருடைய ஆல
யத்தில் இருந்த எல்லா ஜனங்களின் முன்பும்
பாருக் புத்தகச் சுருளை வாசித்தான். பாருக்,
புத்தகச் சுருளில் உள்ளவற்றை வாசிக்கும்
போது மேற்பிரகாரத்திலுள்ள கெமரியாவின்
அறையில் இருந்தான். அந்த அறை
ஆலயத்தின் புதிய வாசல் நுழைவில் இருந்
தது. கெமரியா சாப்பானின் மகன். கெமரியா
ஆலயத்தில் எழுத்தாளானாக இருந்தான்.
11மிகாயா என்ற பெயருடைய ஒருவன்
கர்த்தரிடமுள்ள எல்லாச் செய்திகளையும்
புத்தகச் சுருளில் பாருக் வாசிப்பதிலிருந்து
கேட்டான். மிகாயா, கெமரியாவின் மகன்.
கெமரியா, சாப்பானின் மகன். 12மிகாயா
புத்தகச் சுருளிலுள்ள செய்திகளை கேட்ட
தும் அரசனின் அரண்மனையில் உள்ள
செயலாளனின் அறைக்குச் சென்றான்.
அரசனின் அரண்மனையில் எல்லா அரச
அதிகாரிகளும் உட்கார்ந்திருந்தனர். அந்த
அதிகாரிகளின் பெயர்களாவன: செயலாள
னாகிய எலிசாமா, செமாயாவின் மகனாகிய
தெலாயா, அக்போரின் மகனான எல்நாத்
தான், சாப்பானின் மகனான கெமரியா,
அனனியாவின் மகனான சிதேக்கியா,
மற்றும் பல பிரபுக்களும் அங்கே இருந்தனர்.
13மிகாயா, பாருக் புத்தகச் சுருளில் வாசித்து
கேட்ட அனைத்தையும் அதிகாரிகளிடம்
சொன்னான்.
14பிறகு அனைத்து அதிகாரிகளும் யெகுதி
என்னும் பெயருள்ள ஒருவனை பாருக்கிடம்
அனுப்பினர். யெகுதி நெத்தானியாவின்
மகன். நெத்தானியா செலேமியாவின் மகன்.
செலேமியா கூஷியின் மகன். யெகுதி பாருக்
கிடம், “நீ வாசித்த புத்தகச் சுருளை எடுத்துக்
கொண்டு என்னுடன் வா” என்றான்.
நேரியாவின் மகனான பாருக் புத்தகச்
சுருளை எடுத்துக்கொண்டு யெகுதியோடு
அதிகாரிகளிடம் சென்றான்.
15பிறகு அந்த அதிகாரிகள் பாருக்கிடம்,
“உட்கார், எங்களிடம் புத்தகச் சுருளை
வாசி” என்றனர். எனவே, பாருக் அவர்க
ளுக்குப் புத்தகச் சுருளை வாசித்தான்.
16அந்த அரச அதிகாரிகள் புத்தகச் சுரு
ளில் உள்ள அனைத்து செய்திகளையும்
கேட்டனர். பிறகு அவர்கள் பயந்தனர்.
ஒருவரையொருவர் பார்த்தனர். அவர்கள்
பாருக்கிடம், “நாங்கள் புத்தகச் சுருளில்
உள்ள செய்திகளை அரசன் யோயாக்கீமிடம்
கூற வேண்டும்” என்றனர். 17பிறகு அந்த
அதிகாரிகள் பாருக்கிடம் ஒரு கேள்வி
கேட்டார்கள். அவர்கள், “பாருக், எங்க
ளிடம் சொல். புத்தகச் சுருளில் எழுதப்
பட்டுள்ள செய்திகளை நீ எங்கிருந்து
பெற்றாய்? எரேமியா சொன்னவற்றை நீ
எழுதினாயா?” என்று கேட்டனர்.
18பாருக், “ஆம்” எரேமியா சொன் னான்.
நான் மையால் இப்புத்தகச் சுருளில்
எழுதினேன்” என்று பதில் சொன்னான்.
19பிறகு அரச அதிகாரிகள் பாருக்கிடம்,
“நீயும் எரேமியாவும் போய் ஒளிந்துக்
கொள்ளுங்கள். எங்கே ஒளிந்திருக்கிறீர்கள்
என்று யாரிடமும் சொல்லாதீர்கள்” என்ற
னர்.
20பிறகு அரச அதிகாரிகள் அப்புத்தகச்
சுருளை எழுத்தாளனான எலிசாமாவின்
அறையிலே வைத்தனர். அவர்கள் அரச
னான யோயாக்கீமிடம் சென்றனர். அவர்கள்
அவனிடம் புத்தகச் சுருளைப்பற்றிச் சொன்
னார்கள்.
21எனவே, அரசன் யோயாக்கீம் யெகு
தியை அனுப்பி புத்தகச் சுருளை வரவழைத்
தான். யெகுதி எழுத்தாளனான எலிசாமா
வின் அறையிலிருந்த புத்தகச் சுருளைக்
கொண்டுவந்தான். பிறகு யெகுதி அரசனிடம்
புத்தகச் சுருளை வாசித்தான். அரசனைச்
சுற்றி அனைத்து அதிகாரிகளும் நின்றனர்.
22இது நடந்த காலம் ஒன்பதாவது மாதம்.
எனவே, அரசன் யோயாக்கீம் குளிர்காலத்
துக்கான அறையில் உட்கார்ந்திருந்தான்.
அரசனுக்கு முன்னால் நெருப்புக் குண்டத்
தில் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது.
23யெகுதி புத்தகச் சுருளை வாசிக்கத்
தொடங்கினான். அவன் இரண்டு மூன்று
பத்திகள் வாசித்ததும் அரசனான யோயாக்
கீம் புத்தகச் சுருளைப் பிடுங்கினான். பிறகு
அவன் அந்தப் பத்திகள் எழுதப்பட்டிருந்த
புத்தகச் சுருளைச் சிறிய கத்தியால் வெட்டி

*நெருப்பிற்குள் போட்டான். இறுதியாக
புத்தகச் சுருள் முழுவதும் நெருப்பில் எரிந்து
போயிற்று. 24அரசன் யோயாக்கீம் அவனது
வேலைக்காரர்களும் புத்தகச் சுருளில் உள்ள
வற்றை வாசிக்கக் கேட்டபோது அவர்கள்
பயப்படவில்லை. அவர்கள் தாங்கள் செய்த
தப்புக்காக வருத்தத்தைக் காட்ட தங்கள்
ஆடைகளைக் கிழிக்கவில்லை.*

*25எல்நாத்தன், தெலாயா மற்றும் கெமரியா
அரசன் யோயாக்கீமிடம் புத்தகச் சுருளை
எரிக்க வேண்டாம் என்று சொல்ல முயன்
றனர். ஆனால் அரசன் அவர்கள் சொன்ன
தைக் கேட்கவில்லை. 26யோயாக்கீம் அரசன்
சிலரிடம் எழுத்தாளனான பாருக்கையும்
தீர்க்கதரிசி எரேமியாவையும் கைது
செய்யும்படிக் கட்டளையிட்டான். அவர்கள்,
அரசனின் மகன் யெரமெயேல், அஸ்ரியே
லின் மகன் செராயா, அப்தெயேலின் மக
னான செலேமியாவும் ஆவார்கள். ஆனால்
அவர்களால் பாருக்கையும் எரேமியாவை
யும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஏனென்
றால், கர்த்தர் அவர்களை மறைத்துவிட்டார்.*

*27கர்த்தரிடமிருந்து எரேமியாவிற்குச்
செய்தி வந்தது. இது, கர்த்தரிடமிருந்து
வந்தச் செய்தி முழுவதும் எழுதப்பட்ட
புத்தகச்சுருள் அரசன் யோயாக்கீமால் எரிக்
கப்பட்டப்பிறகு வந்தது. எரேமியா பாருக்
கிடம் பேசியிருந்தான். பாருக் அவற்றைப்
புத்தகச் சுருளில் எழுதியிருந்தான். கர்த்தரிட
மிருந்து எரேமியாவிற்கு வந்தச் செய்தி
இதுதான்:*

*28"எரேமியா, இன்னோரு புத்தகச் சுருளை
எடு. முதல் புத்தகச் சுருளில் இருந்த
அனைத்து செய்திகளையும் இதில் எழுது.
அந்தச் சுருள் அரசன் யோயாக்கீமால்
எரிக்கப்பட்டது. 29எரேமியா, யூதா அரசன்
யோயாக்கீமிடம் இவற்றையும் சொல்,
'கர்த்தர் சொல்கிறது இதுதான்: யோயாக்கீம்,
அப்புத்தகச் சுருளை எரித்தாய். நீ, "பாபி
லோன் அரசன் உறுதியாக வந்து இந்
நாட்டை அழிப்பான் என்று எரேமியா
ஏன் எழுதினான்? பாபிலோன் அரசன்
இத்தேசத்திலுள்ள மனிதர்களையும் மிருகங்
களையும் அழிப்பான் என்று ஏன் அவன்
சொல்கிறான்?" என்று சொன்னாய்.
30எனவே, யூதாவின் அரசனான யோயாக்கீம்
பற்றி கர்த்தர் சொன்னது இதுதான்.
யோயாக்கீமின் சந்ததியார் தாவீதின் சிங்காச
னத்தில் உட்காரமாட்டார்கள். யோயாக்கீம்
மரிக்கும்போது, அவன் அரசனுக்குரிய
அடக்க ஆராதனையைப் பெறமாட்டான்.
ஆனால் அவனது உடல் தரையில் வீசி
எறியப்படும். அவனது உடல் பகலின்
வெப்பத்திலும் இரவில் குளிரிலும் கிடக்
கும்படி விடப்படும். 31கர்த்தராகிய நான்,
யோயாக்கீமையும் அவனது பிள்ளைகளை
யும் தண்டிப்பேன். அவனது அதிகாரிக
ளையும் நான் தண்டிப்பேன். நான் இவற்
றைச் செய்வேன். ஏனென்றால் அவர்கள்
துன்மார்க்கர்கள். பயங்கரமான பேரழிவு
அவர்களுக்குக் கொண்டுவருவதாக நான்
வாக்குறுதி செய்திருக்கிறேன். எருசலேமில்
வாழ்கிற ஜனங்களுக்கும் யூதாவில் வாழ்கிற
ஜனங்களுக்கும் வரும். நான் வாக்குறுதி
அளித்தபடி அவர்களுக்கு அனைத்து தீய
வற்றையும் கொண்டுவருவேன். ஏனென்
றால், அவர்கள் நான் சொல்வதைக் கேட்க
வில்லை.'"*

*32பிறகு எரேமியா இன்னொரு புத்தகச்
சுருளை எடுத்தான். அவன் அதனை எழுத்
தாளன் நேரியாவின் மகனான பாருக்கிடம்
கொடுத்தான். எரேமியா சொன்னபடி, பாருக்
புத்தகச் சுருளில் எழுதினான். அதில் அரசன்
யோயாக்கீமால் நெருப்பில் எரிக்கப்பட்ட
அதே செய்திகளை எழுதினான். அச்செய்திக
ளைப் போன்ற பல்வேறு வார்த்தைகளும்
இரண்டாவது புத்தகச் சுருளில் சேர்க்கப்
பட்டன.*

### எரேமியா சிறையில் போடப்படுகிறான்

*37 நேபுகாத்நேச்சார் பாபிலோனின் அர
சன். நேபுகாத்நேச்சார் யோயாக்கீமின்
மகன் கோனியாவின் இடத்தில் சிதேக்கி
யாவை யூதாவின் அரசனாக நியமித்தான்.
சிதேக்கியா யோசியா அரசனின் மகன்.
2ஆனால் சிதேக்கியா, தீர்க்கதரிசி எரேமியா
விற்குப் பிரசங்கத்திற்காகக் கர்த்தர் கொடுத்
திருந்த செய்திகளைப் பொருட்படுத்த
வில்லை. சிதேக்கியாவின் வேலைக்காரர்
களும் யூதாவின் ஜனங்களும் கர்த்தருடைய
செய்திகளுக்கு கவனம் செலுத்தவில்லை.*

*3சிதேக்கியா அரசன், யூகால் என்ற
பெயருடையவனையும் ஆசாரியன் செப்பனி
யாவையும் ஒரு செய்தியுடன் எரேமியா
விடம் அனுப்பினான். யூகால் செலேமியா
வின் மகன். ஆசாரியன் செப்பனியா, மாசெ
யாவின் மகன். அவர் எரேமியாவிற்குக்
கொண்டுவந்த செய்தி: "எரேமியா, எங்களுக்
காக நமது தேவனாகிய கர்த்தரிடம் ஜெபம்
செய்."*

*4(அந்நேரத்தில், எரேமியாவைச் சிறையில்
போட்டிருக்கவில்லை. எனவே அவன்
விரும்பிய இடத்துக்குப் போகச் சுதந்திரம்
உடையவனாக இருந்தான். 5அதே நேரத்தில்
பார்வோனின் படையானது எகிப்திலிருந்து
யூதாவிற்குப் புறப்பட்டது. எருசலேமைச்
சுற்றி அதைத் தோற்கடிப்பதற்காக பாபிலோ
னியாவின் படையானது முற்றுகையிட்டது.
பிறகு, அவர்கள் எகிப்திலிருந்து படை
புறப்பட்டு வருவதாக கேள்விப்பட்டனர்.
எனவே, பாபிலோனியப் படை எருசலே
மைவிட்டுப் போய் எகிப்திலிருந்து வந்த
படையோடு சண்டையிடப்போனது.)*

*6தீர்க்கதரிசி எரேமியாவிற்குக் கர்த்தரிடமி
ருந்து வார்த்தை வந்தது. 7"இதுதான் இஸ்ர*

வேலின் தேவனாகிய கர்த்தர் சொல்வது:
‘யூகாலே, செப்பனியா, யூதாவின் அரசனான
சிதேக்கியா என்னிடம் சில கேள்விகள்
கேட்க உன்னை அனுப்பியதை நான்
அறிவேன். அரசன் சிதேக்கியாவிடம் இதைக்
கூறு. பாபிலோனியன் படைக்கு எதிராக
உனக்கு உதவ பார்வோனின் படை எகிப்தி
லிருந்து வந்து கொண்டிருக்கிறது. ஆனால்
பார்வோனின் படை திரும்பிப் போகும்.
8அதற்குப் பிறகு பாபிலோனின் படை
இங்கே திரும்பி வரும். அவர்கள் எருச
லேமைத் தாக்குவார்கள். பிறகு பாபிலோ
னிலிருந்து வந்தப் படை எருசலேமைப்
பிடித்து நெருப்பிடுவார்கள்.’ 9இதுதான்
கர்த்தர் சொல்கிறது: ‘எருசலேம் ஜனங்களே
உங்களை முட்டாள்களாக்காதீர்கள். நீங்கள்
உங்களுக்குள், “பாபிலோனின் படை உறு
தியாக நம்மைத் தனியே விடும்” என்று
சொல்லவேண்டாம். அவர்கள் வேறிடத்திற்கு
போகமாட்டார்கள். 10எருசலேம் ஜனங்களே
உங்களைத் தாக்கும் பாபிலோனியப் படை
முழுவதையும் நீங்கள் தோற்கடித்தாலும்
அங்கே கூடாரத்தில் காயப்பட்டவர்கள் சிலர்
இருக்கத்தான் செய்வார்கள். அந்தச் சில
காயப்பட்டவர்களும் கூடத் தம் கூடாரத்தை
விட்டு வெளியே வந்து எருசலேமை எரித்
துப் போடுவார்கள்.’”

11பாபிலோனியப் படை எகிப்தின் பார்
வோனின் படையோடு போரிடச் சென்ற
போது, 12எரேமியா எருசலேமிலிருந்து
பென்யமீன் தேசத்திற்குப் பயணம் செய்ய
விரும்பினான். அங்கே அவன் தனது குடும்
பத்திற்குரிய சொத்தைப் பங்கு வைப்பதற்
காகப் போய்க் கொண்டிருந்தான். 13ஆனால்
எரேமியா எருசலேமின் பென்யமீன் வாச
லுக்குப் போனபோது காவலர்களின் தலை
வன் அவனைக் கைது செய்தான். தள
பதியின் பெயர் யெரியா. யெரியா செலேமி
யாவின் மகன். செலேமியா அனானியாவின்
மகன். எனவே தளபதி யெரியா எரேமியா
வைக் கைது செய்தான். அவன் “எரேமியா,
நீ பாபிலோனியர் பக்கம் சேரும்படி விலகிக்
கொண்டிருக்கிறாய்” என்று சொன்னான்.

14எரேமியா யெரியாவிடம், “அது உண்
மையன்று. பாபிலோனியரிடம் சேருவதற்
காக நான் விலகிப் போகவில்லை” என்
றான். ஆனால் யெரியா எரேமியா சொல்வ
தைக் கேட்க மறுத்தான். யெரியா எரேமியா
வைக் கைது செய்து, எருசலேமில் உள்ள
அரச அதிகாரிகளிடம் கொண்டுபோனான்.
15அந்த அதிகாரிகள் எரேமியாவிடம் மிகவும்
கோபமாக இருந்தனர். எரேமியாவை அடிக்
கும்படி அவர்கள் கட்டளை கொடுத்தனர்.
பிறகு அவர்கள் எரேமியாவைச் சிறைக்குள்
போட்டனர். சிறையானது யோனத்தான்
என்ற பெயருடைய வீட்டில் இருந்தது.
யூதாவின் அரசனுக்கு யோனத்தான் ஒரு
எழுத்தாளனாக இருந்தான். யோனத்தான்
வீடு சிறையாக ஆக்கப்பட்டிருந்தது. 16அந்த
ஜனங்கள் எரேமியாவை யோனத்தானின்
வீட்டின் அடியிலுள்ள பள்ளத்திலே போட்ட
னர். அந்த அறை ஆழமான பள்ளத்திலே
இருந்தது. எரேமியா அங்கே நீண்ட காலம்
இருந்தான்.

17பிறகு சிதேக்கியா அரசன் ஒரு ஆளை
அனுப்பி அரசனின் வீட்டிற்கு எரேமியாவை
அழைத்து வரச்செய்தான். சிதேக்கியா எரே
மியாவிடம், தனியாக பேசினான் அவன்
எரேமியாவிடம், “கர்த்தரிடமிருந்து ஏதாவது
வார்த்தை வந்திருக்கிறதா?” என்று
கேட்டான்.

18எரேமியா, “ஆம். கர்த்தரிடமிருந்து ஒரு
வார்த்தை வந்திருக்கிறது. சிதேக்கியா,
பாபிலோன் அரசனிடம் நீ கொடுக்கப்படு
வாய்” என்று பதில் சொன்னான். பிறகு
எரேமியா அரசன் சிதேக்கியாவிடம், “நான்
என்ன தவறு செய்தேன்? உனக்கு எதிராக
நான் என்ன குற்றம் செய்தேன்? அல்லது
உனது அதிகாரிகளுக்கு அல்லது எருசலேம்
ஜனங்களுக்கு எதிராக என்ன குற்றம்
செய்தேன்? என்னை எதற்காகச் சிறையி
லிட்டாய்? 19சிதேக்கியா அரசனே, உனது
தீர்க்கதரிசிகள் இப்பொழுது எங்கே? அந்தத்
தீர்க்கதரிசிகள் உன்னிடம் பொய்யைச்
சொன்னார்கள். அவர்கள், ‘பாபிலோன் அர
சன் உன்னையோ இந்த யூதா தேசத்தையோ
தாக்கமாட்டான்’ என்றார்கள். 20ஆனால்,
இப்பொழுது யூதாவின் அரசனே நான்
சொல்வதைக் கேள். என் விண்ணப்பத்தைத்
தயவுசெய்து கேள். இதுதான் நான் கேட்பது.
என்னைத் திரும்ப எழுத்தாளனான யோ
னாத்தானின் வீட்டிற்கு அனுப்பவேண் டாம்.
நீர் என்னை அங்கு அனுப்பினால் நான்
அங்கே மரிப்பேன்” என்று சொன்னான்.

21எனவே சிதேக்கியா அரசன் எரேமியா
வைக் காவற்சாலையின் முற்றத்திலே வைக்
குமாறு கட்டளையிட்டான். அவனுக்குத்
தெருவிலே அப்பஞ்சுடுகிறவர்களிடமிருந்து
அப்பத்தை வாங்கிக் கொடுக்கச் சொன்
னான். நகரத்திலே அப்பம் இருக்கும்வரை
எரேமியாவிற்கு வாங்கிக் கொடுக்கப்பட் டது.
எனவே அப்படியே எரேமியா காவற்
சாலையின் முற்றத்திலே இருந்தான்.

### எரேமியா தண்ணீர்க்குழியிலே போடப்படுகிறான்

38 அரச அதிகாரிகளில் சிலர் எரேமியா
வின் பிரசங்கத்தை கேட்டனர். அவர்
கள், மாத்தானின் மகனாகிய செப்பத்தியா,
பஸ்கூரின் மகனாகிய கெதலியா, செலேமியா
வின் மகனாகிய யூகால், மல்கியாவின்
மகனாகிய பஸ்கூரும் ஆவார்கள். எரேமியா
இச்செய்தியை அனைத்து ஜனங்களுக்கும்
சொன்னான். 2இதுதான் கர்த்தர் சொல்கிறது:
‘எருசலேமில் வாழ்கிற ஒவ்வொருவரும்
வாள் அல்லது பசி அல்லது பயங்கரமான

நோயால் மரிப்பார்கள். ஆனால் பாபிலோ
னியப் படையிடம் சரண் அடைபவர் கள்
பிழைத்துக்கொள்வார்கள். அந்த ஜனங் கள்
தாம் உயிரோடு தப்பித்துக் கொள்வார் கள்.'
3இதுதான் கர்த்தர் சொல்கிறது: 'இந்த
எருசலேம் நகரமானது பாபிலோன் அரச
னின் படையிடம் உறுதியாகக் கொடுக்கப்
படும். அவன் இந்நகரத்தைக் கைப்பற்று
வான்."
4பிறகு அந்த அரச அதிகாரிகள் ஜனங்க
ளுக்கு எரேமியா சொல்லிக் கொண்டிருந்
ததைக் கேட்டுவிட்டு சிதேக்கியா அரசனிடம்
சென்றனர். அவர்கள் அரசனிடம், "எரே
மியா சாகடிக்கப்பட வேண்டும். இந்த நக
ரத்தில் இன்னும் இருக்கிற வீரர்களை அவன்
அதைரியப்படுத்திக் கொண்டிருக்கிறான்.
எரேமியா தான் சொல்லிக் கொண்டிருப்ப
வற்றால் ஒவ்வொருவரையும் அதைரியப்ப
டுத்திக் கொண்டிருக்கிறான். எரேமியா
நமக்கு நன்மை நிகழ்வதை விரும்பவில்லை.
அவன் எருசலேம் ஜனங்களை அழித்து விட
விரும்புகிறான்" என்றனர்.
5எனவே, சிதேக்கியா அரசன் அந்த
அதிகாரிகளிடம், "எரேமியா உங்கள் கட்டு
பாட்டுக்குள் இருக்கிறான். உங்களைத் தடுக்க
என்னால் எதுவும் செய்ய முடியாது"
என்றான்.
6எனவே, அந்த அதிகாரிகள் எரேமி
யாவைக் கொண்டுபோய் மல்கியாவின் தண்
ணீர்க்குழியில் அடைத்தனர். (மல்கியா
அரசனின் மகன்.) அந்த தண்ணீர்க்குழி
ஆலயப் பிரகாரத்தில் அரசனின் காவலர்கள்
தங்கும் இடத்தில் இருந்தது. அந்த அதிகாரி
கள் எரேமியாவைக் கயிற்றில் கட்டி தண்
ணீர்க்குழியில் இறக்கினார்கள். அந்த தண்
ணீர்க்குழியில் தண்ணீர் எதுவுமில்லை.
ஆனால் சேறு மட்டுமே இருந்தது. எரேமியா
சேற்றுக்குள் புதைந்தான்.
7ஆனால், எபெத்மெலேக் என்ற பெயரு
டையவன் எரேமியாவை தண்ணீர்க் குழி
யில் அடைத்ததைப்பற்றி கேள்விப்பட்டான்.
எபெத்மெலேக் எத்தியோப்பியாவிலிருந்து
வந்தவன். அவன் அரசனின் வீட்டில் பிர
தானியாக இருந்தான். சிதேக்கியா அரசன்
பென்யமீன் வாசலில் இருந்தான். எனவே
எபெத்மெலேக் அரசனின் வீட்டை விட்டுப்
போய் வாசலில் உள்ள அரசனிடம் பேசப்
போனான். 8-9எபெத்மெலேக், "எனது பிர
புவே, அரசனே, அந்த அதிகாரிகள் கெட்ட
வழியில் நடந்திருக்கிறார்கள். அவர்கள் தீர்க்
கதரிசி எரேமியாவை மோசமாக நடத்து
கிறார்கள். அவர்கள் அவனை தண்ணீர்
குழியில் எறிந்துவிட்டனர். அங்கேயே பட்டி
னியால் மரிக்கவிடுவார்கள்" என்றான்.
10பிறகு சிதேக்கியா அரசன் எத்தோப்பி
யனான எபெத்மெலேக்கிற்கு ஒரு கட்டளை
கொடுத்தான். இதுதான் கட்டளை: "எபெத்
மெலேக், அரசனது வீட்டிலிருந்து மூன்று
பேரை உன்னோடு அழைத்துக்கொள். போய்
எரேமியாவை அவன் மரிப்பதற்கு முன்பு
தண்ணீர்க்குழியிலிருந்து வெளியே எடு."
11எனவே, எபெத்மெலேக் ஆட்களைத்
தன்னோடு அழைத்தான். ஆனால் முதலில்
அவன் அரசனது வீட்டிலுள்ள சாமான்
அறைக்குக் கீழுள்ள அறைக்குச் சென்றான்.
அவன் கிழிந்த பழைய புடவைகளையும்,
கந்தைத் துணிகளையும் எடுத்தான். பின்னர்
தண்ணீர்க் குழியில் அத்துணிகளையும்
கயிறுகளையும் இறக்கினான். 12எத்தோப்பி
யனான எபெத்மெலேக் எரேமியாவிடம்,
"இப்பழையத் துணிகளையும் கந்தைத்துணி
களையும் உன் கைகளுக்குக் கீழே கட்டிக்
கொள். நாங்கள் உன்னை இழுக்கும்போது
இந்தத் துணிகளை கைகளுக்கு இடையில்
அடங்க வைத்துக்கொள். பிறகு இந்தக்
கயிறுகள் உன்னை சேதப்படுத்தாது"
எனவே, எரேமியா எபெத்மெலேக் சொன்ன
படிச் செய்தான். 13அம்மனிதர்கள் எரேமி
யாவை வெளியே எடுத்தனர். எரேமியா
ஆலயப் பிரகாரத்தில் காவல் சாலையின்
முற்றத்தில் தங்கினான்.

### சிதேக்கியா எரேமியாவிடம் மீண்டும் சில கேள்விகளைக் கேட்கிறான்

14பிறகு, அரசன் சிதேக்கியா ஒருவனை
தீர்க்கதரிசி எரேமியாவிடம் அனுப்பினான்.
கர்த்தருடைய ஆலயத்தின் மூன்றாவது வாச
லுக்கு அவன் எரேமியாவை அழைத்தான்.
பிறகு அரசன், "எரேமியா, நான் உன்னிடம்
சிலவற்றைக் கேட்கப்போகிறேன். என்னிட
மிருந்து எதனையும் மறைக்க வேண்டாம்.
எல்லாவற்றையும் நேர்மையாக எனக்குக்
கூறு" என்றான்.
15எரேமியா சிதேக்கியாவிடம், "நான்
உனக்குப் பதில் சொன்னால் நீ உண்மையில்
என்னைக் கொல்வாய். நான் உனக்கு
அறிவுரைச் சொன்னாலும் நான் சொல்வதை
நீ கேட்கமாட்டாய்" என்றான்.
16ஆனால் சிதேக்கியா அரசன் இரகசிய
மாக எரேமியாவிடம் ஒரு உறுதிமொழி
செய்து கொடுத்தான். சிதேக்கியா, "கர்த்தர்
நமக்கு ஜீவனும் ஆத்துமவைக் கொடுத்தி
ருக்கிறார். கர்த்தர் ஜீவனோடு இருப்பது
எவ்வளவு உண்மையோ அவ்வளவு
உண்மை. நான் உன்னைக்
கொல்லமாட்டேன் என்பதும். உன்னைக்
கொல்லவிரும்புகிற அந்த அதிகாரிகளிடம்
உன்னைக் கொடுக்க மாட்டேன் என்றும்
நான் வாக்குறுதி அளிக்கிறேன்" என்றான்.
17பிறகு எரேமியா சிதேக்கியா அரச
னிடம், " இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ
வல்லமையுள்ள கர்த்தர், கூறுகிறார், 'நீ
பாபிலோன் அரசனின் அதிகாரிகளிடம்
சரணடைந்தால் உனது வாழ்க்கை
காப்பாற்றப்படும். எருசலேம் எரிக்கப்படா

மல் இருக்கும். நீயும் உனது குடும்பமும்
காக்கப்படுவீர்கள் 18ஆனால் நீ சரணடைய
மறுத்தால், பிறகு பாபிலோனியப் படை
யிடம் எருசலேம் கொடுக்கப்படும். அவர்கள்
எருசலேமை எரிப்பார்கள். நீ அவர்களிட
மிருந்து தப்பிக்க முடியாது’” என்றான்.
19ஆனால் அரசன் சிதேக்கிய எரேமி
யாவிடம், “ஆனால் நான் பாபிலோனியப்
படையுடன் ஏற்கனவே சேர்ந்துவிட்ட
யூதாவின் ஆட்களைப்பற்றிப் பயப்படுகி
றேன். வீரர்கள் என்னை அந்த யூதாவின்
ஆட்களிடம் கொடுப்பார்கள் என்று நான்
பயப்படுகிறேன். அவர்கள் என்னை
மோசமாக நடத்தி என்னைத் தாக்குவார்கள்”
என்றான்.
20ஆனால் எரேமியா பதிலாக, “யூதாவின்
ஆட்களிடம் அவ்வீரர்கள் உன்னைக் கொடுக்
கமாட்டார்கள். சிதேக்கியா அரசனே, நான்
என்ன சொல்கிறேனோ அதன்படி கர்த்த
ருக்கு கீழ்ப்படி. பிறகு எல்லாம் உனக்கு
நன்மையாகும். உனது வாழ்வு காப்பாற்
றப்படும். 21ஆனால் பாபிலோனிய படைக்குச்
சரணடைய மறுத்தால், கர்த்தர் எனக்கு
என்ன நடக்கும் என்பதைக் காட்டியிருக்
கிறார். இதுதான் கர்த்தர் எனக்குச் சொன்
னது. 22யூதா அரசனின் வீட்டில் விடப்பட்
டுள்ள ஸ்திரீகள் எல்லாம் வெளியே கொண்
டுவரப்படுவார்கள். அவர்கள் பாபிலோன்
அரசனின் முக்கிய அதிகாரிகளிடம் கொண்
டுவரப்படுவார்கள். உங்கள் ஸ்திரீகள் ஒரு
பாடலால் பரிகாசம் செய்வார்கள். இதுதான்
அப்பெண்கள் சொல்வது: “உங்கள் நல்ல
நண்பர்கள் உனக்கு தந்திரம் செய்தார்கள்.
தீயக்காரியங்களை செய்யும்படி உன்னை
மாற்றுகின்றனர். உங்கள் கால்கள் சேற்றில்
சிக்கிக்கொண்டன. பின்னர் உன்னை
தன்னந்தனியே அவர்கள் விட்டுவிட்டனர்.”
23உன் மனைவிகளும் குழந்தைகளும்
வெளியே கொண்டுவரப்படுவார்கள். அவர்
கள் பாபிலோனியப் படையிடம் கொடுக்கப்
படுவார்கள். நீங்கள் பாபிலோன் படையிட
மிருந்து தப்பிக்க முடியாது. நீ பாபிலோன்
அரசனால் கைப்பற்றப்படுவாய். எருசலேம்
எரிக்கப்படும்” என்றான். 24பிறகு சிதேக்கியா
எரேமியாவிடம், “நீ எவரிடமும் நான்
உன்னோடு பேசினேன் என்று சொல்ல
வேண்டாம். நீ அவ்வாறு செய்தால் நீ
மரிப்பாய்” என்றான்.
25அந்த அதிகாரிகள் நான் உன்னிடம்
பேசியதைக் கண்டு பிடித்துவிடலாம். பிறகு
அவர்கள் உன்னிடம் வந்து, ‘எரேமியா, நீ
அரசன் சிதேக்கியாவிடம் என்ன சொன்
னாய் என்பதை எங்களிடம் கூறு. அரசன்
சிதேக்கியா உன்னிடம் என்ன சொன்னான்
என்பதையும் எங்களிடம் கூறு. எங்களோடு
நேர்மையாக இருந்து எல்லாவற்றையும்
சொல் அல்லது நாங்கள் உன்னைக் கொல்
வோம்’ என்று சொல்வார்கள். 26அவர்கள்
இதனை உன்னிடம் சொன்னால், அவர்களி
டம் சொல், ‘நான் அரசனிடம் மீண்டும்
என்னை யோனத்தானின் வீட்டின் அடியில்
உள்ள பள்ளத்திற்குள் அனுப்பவேண்டாம்.
நான் அங்கே திரும்பப்போனால் நான்
மரித்து விடுவேன்’” என்று கெஞ்சிக்
கொண்டிருந்தேன்.
27இது நிகழ்ந்தது. அந்த அரச அதிகாரிகள்
எரேமியாவிடம் கேள்விகள் கேட்க வந்தனர்.
அரசன் என்ன பதில் சொல்லவேண்டும்
என்று கட்டளையிட்டிருந்தானோ அத
னையே சொன்னான். பிறகு எரேமியாவை
அந்த அதிகாரிகள் தனியே விட்டனர்.
எவரும் எரேமியாவும் அரசனும் என்ன
பேசினார்கள் என்று கேட்கவில்லை.
28எனவே எரேமியா ஆலய பிரகாரத்தின்
காவல் அறையில் எருசலேம் கைப்பற்
றப்படும்வரை இருந்தான்.

### எருசலேமின் வீழ்ச்சி

39 எருசலேம் கைப்பற்றப்பட்டது இப்ப
டித்தான்: யூதாவின் அரசனாக சிதேக்
கியா ஒன்பதாவது ஆண்டின் பத்தாவது
மாதத்தில் பாபிலோனின் அரசனான
நேபுகாத்நேச்சார் எருசலேமிற்கு எதிராகத்
தனது முழுப்படையுடன் புறப்பட்டான்.
அந்நகரைத் தோற்கடிக்க முற்றுகையிட்டனர்.
2சிதேக்கியாவின் பதினொன்றாவது ஆண்
டின் நாலாவது மாதத்தின் ஒன்பதாவது
நாளில் எருசலேமின் சுவர் உடைக்
கப்பட்டது. 3பிறகு பாபிலோன் அரசனின்
அதிகாரிகள் எருசலேம் நகருக்குள் வந்தனர்.
அவர்கள் உள்ளே வந்து மத்திய வாசலில்
உட்கார்ந்து கொண்டனர். அந்த அதிகா
ரிகளின் பெயர்கள் இவை: நெர்கல்
சரேத்சேர், சம்கார்நேபோ மாவட்டத்து
ஆளுநர், ஒரு மிக உயர்ந்த அதிகாரி,
நெபோசர்சேகிம், இன்னோரு உயர் அதிகாரி
மற்றும் பல்வேறு முக்கிய அதிகாரிகளும்
இருந்தனர்.
4யூதாவின் அரசனான சிதேக்கியா பாபி
லோன் அதிகாரிகளைப் பார்த்தான். அவன்
தனது படை வீரர்களோடு ஓடிப்போனான்.
அவர்கள் இரவில் எருசலேமை விட்டனர்.
அவர்கள் அரசனது தோட்டத்தின் வழியாகச்
சென்றனர். இரண்டு சுவர்களுக்கு இடையில்
இருந்த வாசல் வழியாகச் சென்றனர். பிறகு
அவர்கள் வனாந்தரத்தை நோக்கிப் போனார்
கள். 5பாபிலோனியப் படை சிதேக்கியாவை
யும் அவனோடு சென்ற வீரர்களையும்
துரத்தியது. எரிகோவின் சமவெளியில்
அவர்கள் சிதேக்கியாவைப் பிடித்தனர்.
அவனை பாபிலோன் அரசனான நேபுகாத்
நேச்சாரிடம் கொண்டு போனார்கள்.
நேபுகாத்நேச்சார் ஆமாத் தேசத்து ரிப்லா
பட்டணத்தில் இருந்தான். அந்த இடத்தில்
நேபுகாத்நேச்சார் சிதேக்கியாவை என்ன

செய்யலாம் என்று முடிவு செய்தான்.
6அங்கே ரிப்லா பட்டணத்தில், பாபிலோன்
அரசன் சிதேக்கியாவின் மகனை சிதேக்கியா
பார்க்கும் போதே கொன்றான். நேபுகாத்
நேச்சார் யூதாவின் அரச அதிகாரிகளை
சிதேக்கியா பார்த்துக் கொண்டிருக்கும்
போதே கொன்றான். 7பிறகு, நேபுகாத்
நேச்சார் சிதேக்கியாவின் கண்களை
குருடாக்கினான். அவனுக்கு வெண்கலச்
சங்கிலியைப் போட்டு பாபிலோனுக்குக்
கொண்டு போனான்.

8பாபிலோன் படையானது அரசனின்
வீட்டையும் எருசலேம் ஜனங்களின் வீட்
டையும் நெருப்பிட்டனர். அவர்கள் எருச
லேமின் சுவர்களை உடைத்தனர். 9நேபுசரா
தான் பாபிலோனிய அரசனின் சிறப்புக்
காவலர்களின் தளபதியாக இருந்தான். எருச
லேமில் மீதியிருந்த ஜனங்களைப் பிடித்துக்
கொண்டு போய் சிறையிட்டான். அவர்
களைப் பாபிலோனுக்குக் கொண்டு
போனான். ஏற்கெனவே, அவனிடம் சரண
டைந்த எருசலேம் ஜனங்களையும் கைதிக
ளாக பாபிலோனுக்கு கொண்டுபோனான்.
10ஆனால் சிறப்புக் காவலர்களின் தளபதி
யான நேபுசராதான் யூதாவின் சில ஏழை
ஜனங்களை விட்டுவிட்டுச் சென்றான். அந்த
ஜனங்கள் சொந்தமாக எதுவும் இல்லாதவர்
கள். எனவே, அந்த நாளில் நேபுசராதான்
அவ்வேழை ஜனங்களுக்குத் திராட்சைத்
தோட்டங்களையும் வயல்களையும் கொடுத்
தான்.

11ஆனால், நேபுகாத்நேச்சார் நேபுசராதா
னுக்கு எரேமியாவைப்பற்றி சில கட்டளைக
ளைக் கொடுத்தான். நேபுசராதான் நேபுகாத்
நேச்சாரின் சிறப்புக காவலர்களின் தலை
வன். இவைதான் கட்டளைகள்: 12“எரேமியா
வைக் கண்டுபிடி. அவனைக் கவனித்துக்
கொள். அவனைத் தாக்காதே. அவன் என்ன
கேட்கிறானோ அவற்றைக் கொடு.”

13எனவே அரசனின் சிறப்புக் காவலர்
தளபதியான நேபுசராதான், பாபிலோனின்
தலைமைப் படை அதிகாரியான நேபுசராதா
னையும் ஒரு உயர் அதிகாரியான நெர்கல்ச
ரேத்சேரையும் மற்றும் மற்றப் படை அதிகா
ரிகளையும் எரேமியாவைத் தேட அனுப்பி
னான். 14அவர்கள் எரேமியாவைக் கண்
டனர். ஆலய முற்றத்திலிருந்து யூதா அரச
னின் காவலரிடமிருந்து வெளியே எடுத்த
னர். பாபிலோனது படையின் அவ்வதிகா
ரிகள் எரேமியாவை கெதலியாவினிடம்
ஒப்படைத்தனர். கெதலியா அகிக்காமின்
மகன். அகிக்காம் சாப்பானுடைய மகன்.
கெதலியா எரேமியாவை வீட்டிற்குத் திரும்
பக் கொண்டுபோகும் கட்டளைகளைப்
பெற்றிருந்தான். எனவே, எரேமியா வீட்
டிற்குக் கொண்டு போகப்பட்டான். அவன்
தன் சொந்த மனிதர்களோடு தங்கினான்.

## எபெத்மெலேக்குவிற்குக் கர்த்தரிடமிருந்து ஒரு செய்தி

15எரேமியா ஆலயப் பிரகாரத்தில் காவலர்
பாதுகாப்பில் இருந்தபோது கர்த்தரிடமிருந்து
வார்த்தை அவனுக்கு வந்தது. 16“எரேமியா,
போய் எத்தியோப்பியனான எபெத் மெலேக்
குவிடம் இதைச் சொல்! ‘இஸ்ரவேலின்
தேவனாகிய சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கூறுகிறார். மிக விரைவில் எருசலேம்
நகரைப்பற்றி நான் சொன்ன செய்திகள்
உண்மையாகும்படிச் செய்வேன். எனது
செய்தி பேரழிவின் மூலமே உண்மையா
குமே தவிர நல்லவற்றின் மூலம் அன்று.
நீ உனது சொந்தக் கண்களால் அது
உண்மையாவதை பார்ப்பாய். 17ஆனால்,
அந்நாளில் எபெத் மெலேக்கே நான் உன்
னைக் காப்பாற்றுவேன்’ என்று கர்த்தர்
சொல்லுகிறார். ‘நீ பயப்படுகிற ஜனங்களி
டம் கொடுக்கப்படமாட்டாய். 18நான்
உன்னைக் காப்பாற்றுவேன். எபெத்மெ
லேக்கே, நீ வாளால் மரிக்கமாட்டாய்.
ஆனால் நீ தப்பித்து வாழ்வாய். இது நிக
ழும். ஏனென்றால் நீ என்னிடம் நம்பிக்கை
வைத்தாய்’” என்று கர்த்தர் சொல்லுகிறார்.

## எரேமியா விடுதலை செய்யப்படல்

40ராமா நகரத்தில் எரேமியா விடுதலை
செய்யப்பட்டப் பிறகு கர்த்தரிடமி
ருந்து வார்த்தை வந்தது. நேபுசராதான்
எனும் பாபிலோனிய அரசனது சிறப்புக்
காவலாளிகளின் தளபதி ராமா நகரில்
எரேமியாவைக் கண்டான். எரேமியா சங்கி
லிகளால் கட்டப்பட்டிருந்தான். அவன் எருச
லேம் மற்றும் யூதாவின் கைதிகளுக்கு
இடையில் இருந்தான். அக்கைதிகள் பாபி
லோனுக்குக் கொண்டு போவதற்காக
இருந்தனர். 2தளபதியான நேபுசராதான் எரே
மியாவைக் கண்டதும் அவனிடம் பேசி
னான். அவன், “எரேமியா, உனது தேவ
னாகிய கர்த்தர் இந்த இடத்துக்கு இப் பேரழிவு
வரும் என்று ஏற்கனவே அறி
வித்திருக்கிறார். 3கர்த்தர், தான் செய்வேன்
என்று சொன்னபடியே எல்லாவற்றையும்
செய்திருக்கிறார். இப்பேரழிவு நடந்தது.
ஏனென்றால், யூதா ஜனங்களாகிய நீங்கள்
கர்த்தருக்கு எதிராக பாவம் செய்து கீழ்ப்படி
யவில்லை. 4ஆனால் இப்போது, எரேமியா,
நான் உன்னை விடுதலை செய்கிறேன். நான்
உனது மணிக்கட்டுகளிலிருந்து சங்கிலி
களை எடுத்து விடுவேன். நீ என்னோடு
பாபிலோனுக்கு வர விரும்பினால் நான்
உன்னை நன்றாக கவனித்துக் கொள்வேன்.
ஆனால், நீ என்னோடு வர விரும்பவில்லை
என்றால் வரவேண்டாம். பார், நாடு
முழுவதும் உனக்காகத் திறந்திருக்கிறது. நீ
விரும்புகிற எங்கு வேண்டுமானாலும் போக
லாம். 5அல்லது சாப்பானின் மகனான
அகிக்காமின் மகனான கெதலியாவிடம்

திரும்பிப் போகலாம். பாபிலோன் அரசன்
கெதலியாவை யூதாவின் நகரங்களுக்கு ஆளு
நராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார். போய் ஜனங்
களுக்கிடையில் கெதலியாவோடு வாழு.
அல்லது நீ விரும்புகிற எந்த இடத்துக்கும்
போகலாம்” என்று சொன்னான். பிறகு
நேபுசராதான் எரேமியாவிற்கு கொஞ்சம்
உணவும் பரிசுப் பொருட்களும் கொடுத்து
போகச்செய்தான். 6எனவே, எரேமியா அகீக்
காமின் மகனான கெதலியாவிடம் மிஸ்பா
வுக்குப் போனான். எரேமியா கெதலியா
வோடு, யூதா தேசத்தில் விடப்பட்டுள்ள
ஜனங்களோடு தங்கினான்.

### கெதலியாவின் குறுகிய ஆட்சி

7எருசலேம் அழிக்கப்பட்டபோது, யூதா
வின் படையிலுள்ள சில வீரர்களும் அதிகா
ரிகளும் அவர்களுடைய ஆட்களும் அத்தி
றந்த நாட்டிலேயே, விடுபட்டனர். அந்த
வீரர்கள், அகீக்காமின் மகனான கெதலி
யாவைப் பாபிலோன் அரசன் தேசத்தில்
விடுபட்டுள்ளவர்களின் ஆளுநராக நியமிக்
கப்பட்டுள்ளதை அறிந்தனர். விடுபட்டுள்ள
ஜனங்களில் ஆண்கள், பெண்கள், சிறுவர்கள்
என ஏழைகளாக இருந்தனர். இவர்கள்
கைதிகளாகப் பாபிலோனுக்குக் கொண்டு
போகப்படாமல் இருந்தனர். 8எனவே
அவ்வீரர்கள் மிஸ்பாவிலுள்ள கெதலியாவி
டம் வந்தனர். அவ்வீரர்கள்: நெத்தானியா
வின் மகனான இஸ்மவேல், யோகனான்,
அவனுடைய சகோதரன் யோனத்தான்,
கரேயாவின் குமாரர்கள், தன் கூமேத்தின்
மகனான செராயா, நெத்தோபாத் ஊரின்
எப்பாயின் குமாரர்கள், மாகாத்தியாவை
சார்ந்தவனின் மகன் யெசனியா, மற்றும்
அவர்களோடு இருந்த மனிதர்கள்.
9சாப்பானின் மகனான அகிக்காமின்
மகனான கெதலியா, வந்த வீரர்களும்
அவர்களோடு வந்தவர்களும் பாதுகாப்பை
உணருமாறு பிரமாணம் செய்தான். கெத
லியா சொன்னது இதுதான்: “வீரர்களாகிய
நீங்கள், பாபிலோனிய ஜனங்களுக்குச்
சேவை செய்ய பயப்படவேண்டாம். இந்நாட்
டில் குடியிருந்து, பாபிலோனிய அரச
னுக்குச் சேவை செய்யுங்கள். நீங்கள் இதைச்
செய்தால் எல்லாம் நல்லபடியாக இருக்கும்.
10நானும் மிஸ்பாவில் வாழ்வேன். நான்
உங்களுக்காக இங்கே வந்த கல்தேயரிடம்
பேசுவேன். நீங்கள் அந்த வேலையை
எனக்கு விட்டுவிடுங்கள். நீங்கள் திராட்சை
களை அறுவடை செய்ய வேண்டும்.
கோடைப் பழங்களையும். எண்ணெயையும்
எடுக்க வேண்டும். நீங்கள் எதை அறுவடை
செய்கிறீர்களோ அவற்றை உங்கள் சேமிப்பு
ஜாடிகளில் போட்டு வையுங்கள். உங்கள்
கட்டுப்பாட்டுக்குள் உள்ள நகரங்களில்
வாழுங்கள்.” 11மோவாப், அம்மோன், ஏதோம்
மற்றும் மற்ற நாடுகளில் உள்ள அனைத்து
யூதா ஜனங்களும் பாபிலோன் அரசன்
யூதா தேசத்தில் யூதா ஜனங்கள் சிலரை
விட்டுவிட்டுப் போயிருக்கிறான் என்று
கேள்விப்பட்டனர். பாபிலோன் அரசன் சாப்
பானின் மகனான அகிக்காமின் மகனான
கெதலியாவை அவர்களின் ஆளுநராகத்
தேர்ந்தெடுத்திருப்பதைப் பற்றியும் கேள்விப்
பட்டனர். 12அந்த ஜனங்களின் இச்செய்தி
களைக் கேள்விப்பட்டதும் அவர்கள் யூதா
தேசத்திற்கு வந்தனர். அவர்கள் சிதறிக்கிடந்த
நாடுகளில் இருந்து மிஸ்பாவிலுள்ள கெதலி
யாவிடம் திரும்பி வந்தனர். எனவே அவர்
கள் திரும்பி வந்து திராட்சை அறுவடை
யையும் கோடைப் பழங்களையும் சேகரித்த
னர்.
13கரேயாவின் மகனான யோகனானும்
மற்ற எல்லா யூதா படையின் அதிகாரிகளும்
திறந்த நாட்டிலுள்ள அனைவரும் கெதலி
யாவிடம் வந்தனர். கெதலியா மிஸ்பா
பட்டணத்தில் இருந்தான். 14யோகனானும்
அவனோடிருந்த அதிகாரிகளும் கெதலியா
விடம் சொன்னார்கள். “அம்மோனிய ஜனங்
களின் அரசனான பாலிஸ் உன்னைக்
கொல்ல விரும்புகிறான் என்பது உனக்குத்
தெரியுமா? அவன் நெத்தானியாவின்
மகனான இஸ்மவேலை அனுப்பியிருக்கி
றான்.” ஆனால் அகிக்காமின் மகனான
கெதலியா அவர்களை நம்பவில்லை.
15பிறகு கரேயாவின் மகனான யோக
னான் மிஸ்பாவில் கெதலியாவிடம் தனி
யாகப் பேசினான். யோகனான் கெதலியா
விடம், “நான் போய் நெத்தானியாவின்
மகனாகிய இஸ்மவேலைக் கொல்லட்டுமா?
இதைப்பற்றி எவரும் அறிந்து கொள்ளமாட்
டார்கள். இஸ்மவேல் உன்னைக் கொல்
லும்படிவிடக்கூடாது. அது மீண்டும் உன்
னைச் சுற்றியுள்ள அனைத்து யூதா
ஜனங்களையும் பல்வேறு நாடுகளுக்குச்
சிதறும்படிச் செய்யும். அதாவது யூதாவின்
சில மீந்தவர்களும் அழியும்படி நேரும்”
என்றான்.
16ஆனால், அகிக்காமின் மகனான கெத
லியா கரேயாவின் மகனான யோகனானி
டம், “இஸ்மவேலைக் கொல்லாதே. நீ
இஸ்மவேலைப் பற்றிச் சொல்வது எல்லாம்
உண்மை அல்ல” என்றான்.

41 ஏழாவது மாதத்தில், நெத்தானியா
வின் மகனான இஸ்மவேல் அகிக்கா
மின் மகனான கெதலியாவிடம் வந்தான்.
(நெத்தானியா எலிசாமாவின் மகன்.) இஸ்ம
வேல் அவனது பத்து ஆட்களோடு வந்தான்.
அந்த ஆட்கள் மிஸ்பா பட்டணத்துக்கு
வந்தனர். இஸ்மவேல் அரச குடும்பத்தில் ஒரு
உறுப்பினன். அவன் யூதா அரசனிடம் ஒரு
அதிகாரியாக இருந்தவன். இஸ்மவேலும்
அவனது ஆட்களும் கெதலியாவோடு
உணவு உண்டனர். 2அவர்கள் சேர்ந்து
உண்ணும்பொழுது, இஸ்மவேலும் அவ

னோடு வந்த பத்துபேரும் திடீரென்று
எழுந்து அகிக்காமின் மகனான கெதலி
யாவை வாளால் கொன்றனர். கெதலியா
பாபிலோன் அரசனால் யூதாவின் ஆளு
நராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவன். 3இஸ்ம
வேல், கெதலியாவோடு மிஸ்பாவில் இருந்த
மற்ற ஜனங்களையும் கொன்றுவிட்டான்.
இஸ்மவேல் கெதலியாவோடு இருந்த பாபி
லோனிய வீரர்களையும் கொன்றான்.
4-5கெதலியா கொலை செய்யப்பட்ட அந்
நாளுக்குப் பிறகு, 80 பேர் மிஸ்பாவுக்கு
வந்தனர். அவர்கள் தானியக் காணிக்கை
களையும் நறுமணப் பொருட்களையும் கர்த்த
ருடைய ஆலயத்திற்குக் கொண்டு வந்தனர்.
அந்த 80 பேரும் தங்கள் தாடிகளை
சிரைத்திருந்தனர், தம் ஆடைகளைக்
கிழித்திருந்தனர்,தம்மைத்தாமே காயப்படுத்தி
யிருந்தனர். அவர்கள் சீகேம், சீலோ,
சமாரியா ஆகிய இடங்களிலிருந்து வந்தனர்.
அவர்களில் எவருக்கும் கெதலியா கொலை
செய்யப்பட்டது தெரியாது. 6இஸ்மவேல்
மிஸ்பாவை விட்டு அந்த 80 பேரையும்
சந்திக்கப்போனான். அவர்களைச் சந்திக்க
நடந்து போகும்போது அவன் அழுதான்.
இஸ்மவேல் அந்த 80 பேரையும் சந்தித்து
அவர்களிடம், "என்னோடு வந்து அகிக்
காமின் மகனான கெதலியாவைச் சந்தியுங்
கள்" என்றான். 7அந்த 80 பேரும் அவனோடு
மிஸ்பாவுக்குச் சென்றனர். பிறகு இஸ்ம
வேலும் அவனது ஆட்களும் அந்த 80
பேரைக் கொன்று அந்த 80 பேரின்
உடல்களையும் ஆழமான ஒரு குழிக்குள்
போடத் துவங்கினார்கள். 8ஆனால் அவர்
களுள் 10 பேர் இஸ்மவேலிடம், "எங்களைக்
கொல்லாதே. எங்களிடம் கோதுமையும்
பார்லியும் உள்ளன. எங்களிடம் எண்
ணெயும் தேனும் உள்ளன. நாங்கள்
அவற்றை வயல்களில் மறைத்து வைத்துள்
ளோம். அவற்றை உனக்குக் கொடுக்க
விரும்புகிறோம்" என்றனர். எனவே
இஸ்மவேல் அந்தப் பத்துப் பேரையும்
தனியாக விட்டுவிட்டான். அவன் அவர்
களை மற்றவர்களோடு கொல்லவில்லை.
9(அந்த அகழி மிகப் பெரியது. இது ஆசா
என்னும் யூதா அரசனால் கட்டப்பட்டது.
ஆசா அரசன் இந்த அகழியைக் கட்டினான்.
எனவே போர்க் காலங்களில் அதில்
தண்ணீர் இருக்கும். இஸ்ரவேல் அரசனான
பாஷாவிடமிருந்து நகரத்தைக் காப்பாற்ற
இதனைச் செய்தான். இது நிரம்பும்வரை
இஸ்மவேல் மரித்த உடல்களைப்
போட்டான்.)
10இஸ்மவேல், மிஸ்பா நகரத்தில் இருந்த
அனைத்து ஜனங்களையும் கைப்பற்றினான்.
பின்னர் அம்மோனியர் வாழ்ந்த நகரத்தை
கடக்கப் புறப்பட்டான். அவர்களில் அரச
னது மகள்களும் மற்ற விடுபட்ட மனிதர்க
ளும் இருந்தனர். இவர்களைக் கெதலியா
கவனித்துக் கொள்ளும்படி நேபுசராதானால்
தேர்ந்தெடுக்கப்பட்டவன். நேபுசராதான்,
பாபிலோன் அரசனின் சிறப்புக் காவல்
படையின் தளபதி.
11கரேயாவின் மகனான யோகனானும்
அவனோடு இருந்த படை அதிகாரிகளும்
இஸ்மவேல் செய்த அனைத்து கெட்டச்
செயல்களைப் பற்றியும் கேள்விப்பட்டனர்.
12எனவே யோகனானும் படை அதிகாரிக
ளும் பல ஆட்களும் நெத்தானியாவின்
மகனான இஸ்மவேலோடு சண்டையிடப்
போனார்கள். அவர்கள் கிபியோன் நகரத்தி
லுள்ள பெருங்குளத்து தண்ணீர் அருகில்
அவனைப்பிடித்தனர். 13இஸ்மவேலால் கைது
செய்யப்பட்டவர்கள் யோகனானையும் அவ
னோடு இருந்த படை அதிகாரிகளையும்
பார்த்தனர். அந்த ஜனங்கள் மிகவும் மகிழ்ச்சி
அடைந்தனர். 14பிறகு இஸ்மவேலால் சிறை
பிடிக்கப்பட்ட அந்த ஜனங்கள் அனைவரும்
கரேயாவின் மகனான யோகனானிடம் ஓடிச்
சென்றனர். 15ஆனால் இஸ்மவேலும் அவனது
எட்டு ஆட்களும் யோகனானிடமிருந்து தப்
பித்துக் கொண்டனர். அவர்கள் அம்
மோனிய ஜனங்களிடம் ஓடிப் போனார்கள்.
16எனவே, கரேயாவின் மகனான யோக
னானும் அவனது படையதிகாரிகளும் கைதி
களை விடுவித்தனர். இஸ்மவேல் கெதலி
யாவைக் கொலை செய்திருந்தான். மிஸ்பா
விலுள்ள ஜனங்களைக் கைப்பற்றியி
ருந்தான். மீதியிருந்தவர்களில் வீரர்கள்,
பெண்கள், குழந்தைகள், சபை அதிகாரிகள்
என இருந்தனர். யோகனான் அவர்களை
கிபியோன் நகரிலிருந்து திரும்பக் கொண்டு
வந்தான்.

### எகிப்திற்குத் தப்பித்தல்

17-18யோகனானும் மற்றப் படை அதி
காரிகளும் கல்தேயர்களுக்கு பயந்தனர். பாபி
லோனின் அரசன் கெதலியாவை யூதாவின்
ஆளுநராகத் தேர்ந்தெடுத்திருந்தான். ஆனால்
இஸ்மவேல் கெதலியாவைக் கொலை செய்து
விட்டான். யோகனான், கல்தேயர்கள் கோப
மாக இருப்பார்கள் என்று அஞ்சினான்.
எனவே அவர்கள் எகிப்துக்கு ஓடிப்போக
முடிவு செய்தனர். எகிப்துக்குப் போகும்
வழியில் அவர்கள் கெருத் கிம்காமினில்
தங்கினார்கள். கெருத் கிம்காமினின் பெத்
லேகம் நகருக்கு அருகில் இருக்கிறது.
42 அவர்கள் கெருத் கிம்காமினில் இருக்
கும்போது, யோகனானும் ஓசாயா
வின் மகனான யெசனியாவும் தீர்க்கதரிசி
எரேமியாவிடம் சென்றனர். எல்லாப் படை
அதிகாரிகளும் யோகனான் மற்றும் யெச
னியாவுடன் சென்றனர். முக்கியத்துவம்
குறைந்த ஜனங்களில் இருந்து முக்கியத்துவம்
மிகுந்த ஜனங்கள் வரை அனைத்து ஜனங்
களும் எரேமியாவிடம் சென்றனர். 2அந்த

ஜனங்களனைவரும் எரேமியாவிடம், "எரே
மியா, நாங்கள் என்ன சொல்கிறோம் என்ப
தைத் தயவுசெய்து கேளும். யூதாவின்
வம்சத்திலிருந்து தப்பிப் பிழைத்த இந்த
ஜனங்களுக்காக உமது தேவனாகிய கர்த்த
ரிடம் ஜெபம் செய்யும். எரேமியா, எங்களில்
நிறைய பேர் மீதியாக இருக்கவில்லை
என்பதை நீர் பார்க்கமுடியும். ஒரு காலத்தில்
நாங்கள் ஏராளமாக இருந்தோம். 3எரேமியா,
நாங்கள் எங்கே போக வேண்டும், நாங்கள்
என்ன செய்ய வேண்டும் என்று உமது
தேவனாகிய கர்த்தர் என்ன கூறுகிறார்
என்று கர்த்தரிடம் ஜெபம் செய்துகேளும்"
என்றனர்.

4பிறகு, எரேமியா தீர்க்கதரிசி, "நான்
என்ன செய்ய வேண்டும் என நீங்கள்
விரும்புகிறீர்கள் என்பதைப் புரிந்துகொள்கி
றேன். நீங்கள் கேட்டுக் கொண்டபடி நான்
உங்கள் தேவனாகிய கர்த்தரிடம் ஜெபம்
செய்கிறேன். கர்த்தர் சொல்கிற எல்லாவற்
றையும் நான் உங்களுக்குச் சொல்வேன்.
நான் உங்களிடமிருந்து எதையும் மறைக்க
மாட்டேன்" என்றான்.

5பிறகு, அந்த ஜனங்கள் எரேமியாவிடம்,
"நாங்கள், உமது தேவனாகிய கர்த்தர்
சொன்னபடி செய்யாவிட்டால், பிறகு
கர்த்தரே எங்களுக்கு எதிரான உண்மை
யான நம்பிக்கையுள்ள சாட்சியாக இருப்பார்
என்று நம்புவோம். உமது தேவனாகிய
கர்த்தர் நாங்கள் என்ன செய்ய வேண்டும்
என்று சொல்லவே உம்மை அனுப்பியுள்
ளார் என அறிகிறோம். 6நாங்கள் அச்
செய்தியை விரும்புகிறோமா அல்லது அச்
செய்தியை விரும்பவில்லையா என்பது
ஒரு பொருட்டன்று. நமது தேவனாகிய
கர்த்தருக்கு நாங்கள் அடிபணிவோம். நாங்
கள் உம்மை எங்களுக்கான செய்தியை
அறியவே அனுப்புகிறோம். அவர் என்ன
சொல்கிறாரோ அதற்கு நாங்கள் அடிபணி
வோம். பிறகு எங்களுக்கு நல்லவை நடக்
கும். ஆம் நாங்கள் எங்கள் தேவனாகிய
கர்த்தருக்கு அடிபணிவோம்" என்றனர்.

7பத்து நாட்கள் முடிந்ததும், கர்த்தரிட
மிருந்து செய்தி எரேமியாவிற்கு வந்தது.
8பிறகு எரேமியா, கரேயாவின் மகனான
யோகனானையும் அவனுடனிருந்த படை
அதிகாரிகளையும் சேர்ந்து அழைத்தான்.
எரேமியா, முக்கியத்துவம் குறைந்த ஆட்க
ளிலிருந்து முக்கியத்துவம் மிகுந்த ஆட்கள்
வரை அனைத்து ஜனங்களையும் அழைத்
தான். 9பிறகு அவர்களிடம் எரேமியா,
"இஸ்ரவேலர்களின் தேவனாகிய ஆண்டவர்
கூறுவது இதுதான், நீங்கள் என்னை அவ
ரிடம் அனுப்பினீர்கள். நான் தேவனோடு
வழக்காடி நான் அவரிடத்தில் நீங்கள்
கேட்க விரும்பியதை கேட்டேன். கர்த்தர்
சொல்கிறது இதுதான். 10'ஜனங்களாகிய நீங்
கள் யூதாவில் தங்கினால் நான் உங்களைப்
பலமுள்ளவர்களாகச் செய்வேன். நான் உங்
களை அழிக்கமாட்டேன். நான் உங்களை
நடுவேன். நான் உங்களைத் தள்ளமாட்டேன்.
நான் இவற்றைச் செய்வேன். ஏனென்றால்,
நான் உங்களுக்கு ஏற்படுத்திய பயங்கரமான
செயல்களுக்காக வருத்தப்படுகிறேன். 11இப்
போது நீங்கள் பாபிலோன் அரசனுக்குப்
பயப்படுகிறீர்கள். ஆனால் பாபிலோன் அரச
னுக்கு நீங்கள் பயப்பட வேண்டாம்' இது
தான் கர்த்தருடைய வார்த்தை, 'ஏனென்றால்
நான் உங்களுடன் இருக்கிறேன். நான்
உங்களைக் காப்பாற்றுவேன். நான் உங்
களை விடுவிப்பேன். நான் உங்களை
அவனுடைய கைகளிலிருந்து தப்புவிப்பேன்.
12நான் உங்களிடம் தயவாய் இருப்பேன்.
பாபிலோனின் அரசனும் உங்களை இரக்கத்
தோடு நடத்துவான். அவன் உங்களை
திரும்பவும் உங்கள் நாட்டுக்குக் கொண்டு
வருவான்.' 13ஆனால் நீங்கள், 'நாங்கள்
யூதாவில் தங்கமாட்டோம்' என்று சொல்ல
லாம். அவ்வாறு நீங்கள் சொன்னால் நீங்கள்
உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு அடிபணிய
மறுக்கிறீர்கள். 14நீங்கள், 'இல்லை. நாங்கள்
போய் எகிப்தில் வாழ்வோம். எகிப்திலே
நாங்கள் போரினிமித்தமாக கவலைப்பட
மாட்டோம். நாங்கள் எக்காளத்தின் சத்தத்
தைக் கேட்கமாட்டோம். எகிப்தில் நாங்கள்
பசியோடு இருக்கமாட்டோம்' என்று
சொல்லலாம். 15நீங்கள் அவ்வாறு சொன்
னால், பிறகு கர்த்தர் சொல்லும் வார்த்தை
யைக் கேளுங்கள். யூதாவில் உயிர் பிழைத்
தவர்களே கேளுங்கள். இதுதான் இஸ்ரவே
லின் தேவனாகிய சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் சொல்வது: 'நீங்கள் எகிப்துக்குப்
போய் வாழ வேண்டும் என்று முடிவு
செய்தால் பிறகு இவை எல்லாம் நிகழும்.
16நீங்கள் போரின் வாளுக்கு அஞ்சுகிறீர்கள்.
ஆனால் இது அங்கே உங்களைத் தோற்கடிக்
கும். நீங்கள் பசியைப் பற்றி கவலைப்
படுகிறீர்கள். ஆனால் எகிப்தில் நீங்கள்
பசியோடு இருப்பீர்கள். நீங்கள் அங்கே
மரிப்பீர்கள். 17எகிப்துக்குச் செல்லவேண்டும்
என்று முடிவு செய்த ஒவ்வொருவரும்
வாள் அல்லது பசி அல்லது பயங்கர
நோயால் மரிப்பார்கள். எகிப்துக்குப்
போகிற ஒருவனும் உயிர் பிழைக்க
மாட்டான். நான் அவர்களுக்குக் கொண்டு
வருகிற பயங்கரமானவற்றிலிருந்து ஒருவன்
கூட தப்பிக்கமாட்டான்.'

18இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ வல்ல
மையுள்ள கர்த்தர் கூறுகிறார்: 'எருச
லேமிற்கு எதிராக கோபத்தை நான் காண்
பித்தேன். எருசலேமில் வாழ்ந்த ஜனங்களை
நான் தண்டித்தேன். அதே வழியில் எகிப்
திற்குச் செல்கிற ஒவ்வொருவரிடம் எனது
கோபத்தைக் காட்டுவேன். மற்றவர்களுக்குத்
தீமை ஏற்படுவதைப்பற்றி ஜனங்கள் பேசும்

போது உங்கள் சான்றாகக் காட்டுவார்கள்.
நீங்கள் ஒரு சாப வார்த்தைப் போன்று
ஆவீர்கள். ஜனங்கள் உங்களை எண்ணி
அவமானம் அடைவார்கள். ஜனங்கள்
உங்களை நிந்திப்பார்கள். நீங்கள் யூதாவை
மீண்டும் பார்க்க மாட்டீர்கள்.’ 19“யூதாவில்
உயிர் பிழைத்தவர்களே, கர்த்தர் உங்களுக்கு
‘எகிப்திற்குப் போக வேண்டாம்’ என்று
சொன்னார். நான் இப்பொழுது எச்சரிக்கி
றேன். 20நீங்கள் தவறு செய்து கொண்டி
ருக்கிறீர்கள். இது உங்கள் மரணத்துக்குக்
காரணம் ஆகும். நீங்கள் என்னிடம், ‘எங்க
ளுக்காக எங்கள் தேவனாகிய கர்த்தரிடம்
ஜெபம் செய். கர்த்தர் என்ன செய்ய
வேண்டுமென்று சொல்கிறாரோ அனைத்
தையும் சொல். நாங்கள் கர்த்தருக்குக்
கீழ்ப்படிகிறோம்’ என்றீர்கள். 21எனவே
இன்று, நான் உங்களிடம் கர்த்தருடைய
செய்தியைச் சொல்லியிருக்கிறேன். ஆனால்,
நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருக்குக்
கீழ்படியவில்லை. அவர் என்னை உங்க
ளிடம் அனுப்பி வைத்து நீங்கள் செய்ய
வேண்டியவற்றை உங்களுக்கு சொல்ல
சொன்னதை எல்லாம் நீங்கள் செய்யாமலி
ருக்கிறீர்கள். 22எனவே, இப்போது நீங்கள்
உறுதியாக புரிந்துகொள்ளுங்கள். நீங்கள்
எகிப்திற்குச் சென்று வாழ விரும்புகீறீர்கள்.
ஆனால் எகிப்தில் இவை எல்லாம் உங்க
ளுக்கு ஏற்படும். நீங்கள் வாள் அல்லது
பசி அல்லது பயங்கரமான நோயால் மரிப்
பீர்கள்” என்றான்.

43 எனவே எரேமியா ஜனங்களுக்கு
அவர்களது தேவனாகிய கர்த்தர்
சொன்ன வார்த்தையைச் சொல்லி முடித்
தான். கர்த்தர் ஜனங்களுக்குச் சொல்லும்படி
எரேமியாவை அனுப்பியவாறு எல்லா
வற்றையும் சொன்னான்.

2ஓசாயாவின் மகனாகிய அசரியாவும்
கரேயாவின் மகனான யோகனானும் மற்றும்
சிலரும் இறுமாப்போடும் பிடிவாதமானவர்க
ளாகவும் இருந்தனர். அவர்கள் எரேமியா
விடம் கோபம் கொண்டனர். அவர்கள்
எரேமியாவிடம், “எரேமியா, நீ பொய்
சொல்லுகிறாய். எங்கள் தேவனாகிய கர்த்தர்
உன்னை ‘நீங்கள் எகிப்துக்கு வாழ போக
வேண்டாம்’ என்று எங்களிடம் சொல்ல
அனுப்பவில்லை. 3எரேமியா, நேரியாவின்
மகனான பாருக் எங்களுக்கு எதிராக
உன்னை ஏவியிருக்கிறான் என்று நாங்கள்
நினைக்கிறோம். எங்களை பாபிலோனிய
ஜனங்களிடம் கொடுக்குமாறு அவன் விரும்
புகிறான். நீ இதனைச் செய்யுமாறு அவன்
விரும்புகிறான். அதனால் அவர்கள் எங்க
ளைக் கொல்ல முடியும். அல்லது நீ இத
னைச் செய்யுமாறு விரும்புகிறான். அதனால்
அவர்கள் எங்களைக் கைதிகளாக்கிப் பாபி
லோனுக்குக் கொண்டு போகமுடியும்” என்று
சொன்னார்கள்.

4எனவே யோகனான், படை அதிகாரிகள்
மற்றும் அனைத்து ஜனங்களும் கர்த்தரு
டைய கட்டளைக்கு அடிபணியவில்லை.
கர்த்தர் அவர்களுக்கு யூதாவில் தங்கும்படி
கட்டளையிட்டிருந்தார். 5ஆனால் கர்த்தருக்கு
அடிபணிவதற்குப் பதிலாக, யோகனான்
மற்றும் படை அதிகாரிகளும் தப்பியவர்
களை யூதாவில் இருந்து எகிப்துக்குக்
கொண்டு சென்றனர். கடந்த காலத்தில்
பகைவர் பிற நாடுகளுக்கு அவர்களை
எடுத்துச்சென்றனர். ஆனால் அவர்கள்
யூதாவிற்குத் திரும்பினார்கள். 6இப்பொழுது
யோகனான் மற்றும் அனைத்து படையதி
காரிகளும் எல்லா ஆண்கள், பெண்கள்,
குழந்தைகள் ஆகியோரை எகிப்துக்கு வழி
நடத்திக் கொண்டு சென்றனர். அந்த
ஜனங்களுடன் அரசனின் மகள்களும் இருந்
தனர். (நேபுசராதான் அவர்களைக் கவனித்
துக்கொள்ளும்படி கெதலியாவை நியமித்
தான். நேபுசராதான் பாபிலோனிய அரச
னின் சிறப்புக் காவல் படையின் தளபதியாக
இருந்தான்.) யோகனான் தீர்க்கதரிசி எரேமி
யாவையும் நேரியாவின் மகனான பாருக்கை
யும் அழைத்துப் போனான். 7அந்த ஜனங்கள்
கர்த்தர் சொன்னவற்றைக் கேட்கவில்லை.
எனவே அனைத்து ஜனங்களும் எகிப்துக்குச்
சென்றனர். அவர்கள் தக்பானேஸ் எனும்
நகரத்திற்குச் சென்றனர்.

8தக்பானேஸ் நகரத்தில், கர்த்தரிடமிருந்து
எரேமியா இந்த வார்த்தையைப் பெற்றான்.
9“எரேமியா, சில பெரிய கற்களை எடுத்து
தக்பானேஸ் நகரத்தில், அவற்றைப் பார்வோ,
னுடைய அரண்மனைக்கு முன்னால் ஒளிமுக
வாசலில் செங்கல் நடைபாதையில் களி
மண்ணுக்குள் புதைத்துவை. யூதாவின் ஆட்
கள் எல்லோரும் பார்க்கும்போதே நீ
இவற்றைச் செய். 10பிறகு, உன்னைக் கவ
னித்துக்கொண்டிருக்கிற யூதாவின் ஆட்
களிடம் கூறு: ‘இதுதான் இஸ்ரவேலின்
தேவனாகிய சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கூறுவது. நான் பாபிலோன் அரசனான
நேபுகாத்நேச்சாரை இங்கே வர அனுப்பு
வேன். அவன் எனது வேலைக்காரன்.
நான் புதைத்து வைத்த இக்கல்லின் மேல்
அவனது சிங்காசனத்தை வைக்கச் செய்
வேன். அவன் தனது இராஜ கூடாரத்தை
அதன் மேல் விரிப்பான். 11நேபுகாத்நேச்சார்
இங்கே வந்து எகிப்தைத் தாக்குவான். மரிக்க
வேண்டியவர்களுக்கு அவன் மரணத் தைக்
கொண்டுவருவான். அவன் அடிமைத்த
னத்திற்கு ஏதுவானவர்களை சிறையிருக்கச்
செய்வான். வாளால் கொல்லப்படத்தக்கவர்
களைக் கொல்ல வாளை அவன் கொண்டு
வருவான். 12நேபுகாத்நேச்சார் எகிப்திலுள்ள
பொய்த் தெய்வங்களின் கோயிலில்
நெருப்பை மூட்டுவான். அவன் அக்கோயில்
களை எரிப்பான். அவன் அந்த விக்கிரகங்
களை வெளியே எடுத்துப் போடுவான்.

ஒரு மேய்ப்பன் தனது ஆடையைச் சுத்தப்
படுத்துவதற்கு அதில் உள்ள மூட்டைப்பூச்சி
களையும் ஒட்டுப்பூச்சிகளையும் எடுப்பான்.
அதே வழியில் நேபுகாத்நேச்சார் எகிப்தைச்
சுத்தப்படுத்துவான். பிறகு அவன் பத்திரமாக
எகிப்தை விடுவான். 13நேபுகாத்நேச்சார்
எகிப்தின் சூரியத்தேவன் ஆலயத்திலுள்ள
நினைவுக் கற்களை அழிப்பான். எகிப்தில்
உள்ள பொய்த் தெய்வங்களின் ஆலயங்களை
அவன் எரித்துப் போடுவான்'" என்றான்.

## எகிப்திலுள்ள யூதா ஜனங்களுக்குக் கர்த்தருடைய வார்த்தை

44 கர்த்தரிடமிருந்து எரேமியா ஒரு
வார்த்தையைப் பெற்றான். எகிப்தில்
வாழுகிற அனைத்து யூதா ஜனங்களுக்கும்
இந்த வார்த்தை உரிதானது. இந்த வார்த்தை
மிக்தோல், தக்பானேஸ், நோப்பில், பத்ரோன்
போன்ற இடங்களில் வாழும் யூதாவின்
ஜனங்களுக்கானது. இதுதான் செய்தி:
2"இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் கூறுவதாவது, "ஜனங்களாகிய
நீங்கள் யூதாவின் நகரங்களிலும் எருச
லேமிலும் நான் ஏற்படுத்திய பயங்கரமான
வற்றைப் பார்த்தீர்கள். அந்த நகரங்கள்
எல்லாம் இன்று காலியான கற்தூண்களாக
உள்ளன. 3அந்த இடங்கள் எல்லாம் அழிக்கப்
பட்டன. ஏனென்றால், அதில் வாழ்ந்த
ஜனங்கள் கெட்டவற்றைச் செய்தனர். அவர்
கள் அந்நிய தெய்வங்களுக்கு பலிகளைக்
கொடுத்தனர். அது எனக்குக் கோபத்தைத்
தந்தது. கடந்த காலத்தில் நீங்களும் உங்கள்
முற்பிதாக்களும் அத்தெய்வங்களைத் தொழு
துகொள்ளவில்லை. 4மீண்டும் மீண்டும்
எனது தீர்க்கதரிசிகளை அவர்களிடம்
அனுப்பினேன். அத்தீர்க்கதரிசிகள் எனது
வேலைக்காரர்களாக இருந்தனர். அத்தீர்க்க
தரிசிகள் எனது செய்திகளைப் பேசினார்
கள். அந்த ஜனங்களிடம், 'இப்பயங்கரமா
னவற்றைச் செய்யாதீர்கள். விக்கிரகங்களை
நீங்கள் வழிபடுவதை நான் வெறுக்கிறேன்'
என்றனர். 5ஆனால் அந்த ஜனங்கள் தீர்க்க
தரிசிகள் சொன்னதைக் கேட்கவில்லை.
அவர்கள் அத்தீர்க்கதரிசிகளிடம் தம் கவ
னத்தைச் செலுத்தவில்லை. அந்த ஜனங்கள்
கெட்டவற்றைச் செய்வதை நிறுத்தவில்லை.
அவர்கள் அந்நிய தெய்வங்களுக்கு பலிகள்
கொடுப்பதை நிறுத்தவில்லை. 6எனவே நான்
அந்த ஜனங்களுக்கு எதிராக என் கோபத்
தைக் காட்டினேன். நான் யூதாவின்
பட்டணங்களையும் எருசலேமின் தெருக்
களையும் தண்டித்தேன். எனது கோபம்,
எருசலேமையும் யூதாவின் பட்டணங்களை
யும் இன்றைக்குள்ள வெறுமையான கற்கு
வியல்களாக்கிவிட்டது."

7எனவே, இஸ்ரவேலின் சர்வ வல்லமை
யுள்ள தேவனாகிய கர்த்தர் கூறுகிறார்.
"தொடர்ந்து விக்கிரகங்களைத் தொழுது
கொண்டு நீங்கள் உங்களையே ஏன்
காயப்படுத்திக்கொள்கிறீர்கள். நீங்கள்
ஆண்களையும் பெண்களையும் சிறுவர்களை
யும் குழந்தைகளையும் யூதாவின் வம்சத்தி
லிருந்து பிரித்துக்கொண்டிருக்கிறீர்கள். உங்
களை ஒன்றுமில்லாதவர்களைபோல ஆக்க
நீங்களே காரணமாகுகிறீர்கள். 8ஜனங்க
ளாகிய நீங்கள் விக்கிரகங்களைச் செய்து
எனக்கு ஏன் கோபத்தை உண்டு பண்ணுகி
றீர்கள்? இப்பொழுது நீங்கள் எகிப்தில்
வாழ்கிறீர்கள். எகிப்திலுள்ள பொய்த்
தெய்வங்களுக்கு பலிகள் கொடுப்பதன் மூலம்
இப்போது நீங்கள் என்னைக் கோபமூட்டிக்
கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் உங்களையே
அழிப்பீர்கள். இது உங்களுடைய தவறு.
நீங்கள் எல்லா ஜாதிகள் மத்தியிலும் ஒரு
சாபச்சொல்லாகவும், அவமானப்பட்டவர்க
ளாகவும் ஆவீர்கள். அடுத்த நாட்டு ஜனங்கள்
அதைக் கெட்டதாகப் பேசுவார்கள். பூமியில்
உள்ள மற்ற நாட்டினர் உங்களை கேலி
செய்வார்கள். 9உங்கள் முற்பிதாக்கள் செய்த
பொல்லாப்புகளை நீங்கள் மறந்து விட்டீர்
களா? யூதாவின் அரசர்களும் அரசிகளும்
செய்த பொல்லாப்புகளை மறந்து விட்டீர்
களா? யூதாவிலும் எருசலேம் வீதிகளிலும்
நீங்களும் உங்கள் மனைவியரும் செய்த
பொல்லாப்புகளை மறந்து விட்டீர்களா?
10இந்த நாளிலும் கூட யூதாவின் ஜனங்கள்
தங்களைத் தாங்கள் தாழ்த்தி கொள்ள
வில்லை. அவர்கள் எனக்கு எவ்வித மரியா
தையும் செய்யவில்லை. அந்த ஜனங்கள்
எனது போதனைகளைப் பின்பற்றவில்லை.
நான் உங்களுக்கும் உங்கள் முன்னோர்களுக்
கும் கொடுத்த சட்டங்களுக்குக் கீழ்ப்படிய
வில்லை."

11எனவே, இதுதான் இஸ்ரவேலின் தேவ
னாகிய சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
சொல்வது: "உங்களுக்கு பயங்கரமானவை
நிகழவேண்டும் என்று முடிவு செய்து
விட்டேன். யூதாவின் வம்சம் முழுவதையும்
நான் அழிப்பேன். 12உயிர் பிழைத்தவர்கள்
சிலர் மட்டுமே உள்ளனர். அந்த ஜனங்களும்
எகிப்துக்கு வந்தனர். யூதாவின் வம்சத்தி
லுள்ள அந்தச் சிலரையும் நான் அழிப்பேன்.
அவர்கள் வாளால் கொல்லப்படுவார்கள்
அல்லது பசியால் மரிப்பார்கள். அவர்க
ளுக்கு நடப்பதைக் கேள்விப்பட்டு மற்ற
நாடுகள் அஞ்சும். மற்றவர்கள் அவரை
சபித்து நிந்தனைக்குள்ளாக்கிடுவார்கள்.
அந்த யூத ஜனங்களை அவர்கள் அவ
மதிப்பார்கள். 13எகிப்தில் வாழ்வதற்குப்
போன அந்த ஜனங்களை நான் தண்டிப்
பேன். நான் வாள்கள், பசி மற்றும்
பயங்கரமான நோய்கள் ஆகியவற்றைப்
பயன்படுத்தி அவர்களைத் தண்டிப்பேன்.
நான் எருசலேம் நகரத்தைத் தண்டித்தது

போன்று அந்த ஜனங்களை நான் தண்டிப்
பேன். 14யூதாவிலிருந்து தப்பிப் பிழைத்து
எகிப்திற்கு வாழப் போனவர்களில் ஒருவர்
கூட எனது தண்டனையிலிருந்து தப்பிக்க
முடியாது. அந்த ஜனங்கள் யூதாவிற்குத்
திரும்பி வந்து அங்கே வாழ விரும்பு
கின்றனர். ஆனால் ஒருவரும் யூதாவுக்குத்
திரும்பிப் போகமாட்டார்கள். ஒருவேளை
சிலர் மட்டும் தப்பித்துக் கொள்ளலாம்.”

15யூதாவின் பெண்களில் பலர் எகிப்தில்
வாழும்போது அந்நிய தெய்வங்களுக்குப்
பலிகள் கொடுத்துக் கொண்டிருந்தனர்.
அவர்களது கணவர்களுக்கு இது தெரியும்.
ஆனால் அவர்களை தடுத்த நிறுத்தவில்லை.
யூதாவின் ஜனங்களில் பெரிய கூட்டத்தினர்
ஒன்று கூடுகின்றனர். அவர்கள் எகிப்தின்
தென்பகுதியில் வாழுகின்ற யூதா ஜனங்
களாவார்கள். மற்ற தெய்வங்களுக்கு பலிகள்
கொடுத்துக் கொண்டிருக்கிற அப்பெண்க
ளின் கணவர்கள் எரேமியாவிடம். 16“நீ
எங்களுக்குச் சொன்ன கர்த்தருடைய வார்த்
தையை நாங்கள் கேட்கமாட்டோம். 17வான
ராக்கினிக்கு பலிகள் கொடுப்பதாக நாங்கள்
வாக்குறுதி கொடுத்திருக்கிறோம். நாங்கள்
வாக்குறுதி அளித்தபடி எல்லாவற்றையும்
செய்வோம். நாங்கள் அவளைத் தொழுது
கொள்ள பலிகள் கொடுப்போம். பானங்
களின் காணிக்கையை ஊற்றுவோம். நாங்
கள் இதனைக் கடந்த காலத்தில் செய்தோம்.
எங்கள் முற்பிதாக்கள், எங்கள் அரசர்கள்,
எங்கள் அதிகாரிகள் கடந்த காலத்தில்
இதனைச் செய்தனர். யூதாவின் நகரங்
களிலும் எருசலேமின் தெருக்களிலும் நாங்
கள் அவற்றைச் செய்தோம். சொர்க்கத்தின்
அரசியை நாங்கள் தொழுதுவந்த அந்நேரத்
தில் எங்களிடம் நிறைய உணவு இருந்தது.
நாங்கள் வெற்றிகரமாக இருந்தோம். கெட்ட
வை எதுவும் நடக்கவில்லை. 18ஆனால்
நாங்கள் வானராக்கினிக்கு தொழுதுகொள்
வதை நிறுத்தினோம். அவளுக்குப் பானப்
பலிகள் ஊற்றுவதை நிறுத்தினோம். அவ
ளுக்கு தொழுகைகள் செய்வதை நிறுத்திய
திலிருந்து எங்களுக்குப் பிரச்சனைகள் ஏற்
பட்டிருக்கின்றன. எங்களது ஜனங்கள் வாள்
களாலும் பசியாலும் கொல்லப்பட்டிருக்
கின்றனர்” என்றனர்.

19பிறகு பெண்கள் பேசினார்கள். அவர்கள்
எரேமியாவிடம், “நாங்கள் செய்துகொண்டி
ருந்ததை எங்கள் கணவர்கள் அறிவார்கள்.
வானராக்கினிக்கு பலிகள் கொடுக்க
எங்களுக்கு அவர்களின் அனுமதி இருந்தது.
அவளுக்குப் பானங்களின் காணிக்கை
ஊற்ற எங்களுக்கு அவர்களின் அனுமதி
இருந்தது. அவளைப் போன்ற அப்பங்களை
நாங்கள் செய்துகொண்டிருந்ததை எங்கள்
கணவர்களும் அறிவார்கள்” என்றனர்.

20பிறகு எரேமியா எல்லா ஆண்கள்
மற்றும் பெண்களுடன் பேசினான். இவற்றை
யெல்லாம் இப்பொழுதுதான் சொன்ன அவர்
களுடன் எரேமியா பேசினான். 21எரேமியா
அந்த ஜனங்களிடம், “யூதாவின் நகரங்க
ளிலும் எருசலேமின் வீதிகளிலும் நீங்கள்,
பலிகள் செய்ததைக் கர்த்தர் நினைவுப்
படுத்தினார். நீங்களும் உங்கள் முற்பிதாக்
களும், உங்கள் அரசர்களும், உங்கள் அதி
காரிகளும், தேசத்தின் ஜனங்களும் இதனைச்
செய்தனர். நீங்கள் என்ன செய்தீர்கள்
என்பதைக் கர்த்தர் நினைவுபடுத்தினார்.
அதைப்பற்றி நினைத்தார். 22பிறகு கர்த்த
ருக்கு உங்களோடு அதற்கு மேல் பொறுமை
யாக இருக்க முடியவில்லை. நீங்கள் செய்த
பயங்கரமான காரியங்களைக் கர்த்தர்
வெறுத்தார். எனவே கர்த்தர் தேசத்தைக்
காலியான வனாந்தரமாக்கினார். இப்பொ
ழுது அங்கே எவரும் வாழவில்லை.
மற்றவர்கள் அத்தேசத்தைப் பற்றி அருவருப்
பாகப் பேசுகிறார்கள். 23அந்த தீமையெல்லாம்
உங்களுக்கு ஏற்பட்டன. ஏனென்றால்,
நீங்கள் அந்நிய தெய்வங்களுக்குப் பலிகள்
கொடுத் தீர்கள். கர்த்தருக்கு எதிராக நீங்கள்
பாவம் செய்தீர்கள். நீங்கள் கர்த்தருக்குக்
கீழ்ப்படிய வில்லை. நீங்கள் அவரது
போதனைக ளையும் அவர் உங்களுக்குக்
கொடுத்த சட்டங்களையும் பின்பற்றவில்லை.
உங்கள் உடன்படிக்கையயின் பகுதியை
நீங்கள் பாதுகாக்கவில்லை” என்று
பதிலளித்தான்.

24பிறகு எரேமியா எல்லா ஆண்கள்
மற்றும் பெண்களிடமும் பேசினான். எரே
மியா சொன்னான், “யூதா ஜனங்களாகிய
நீங்கள், இப்பொழுது எகிப்தில் இருக்கிறீர்
கள். கர்த்தருடைய வார்த்தையைக் கவனி
யுங்கள்: 25இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்: ‘பெண்
களாகிய நீங்கள் சொன்னதையே செய்தீர்கள்.
நீங்கள், “நாங்கள் செய்த வாக்குறுதிகளைக்
காப்பாற்றுவோம். பலிகள் கொடுப்பதாகவும்
பானபலி ஊற்றுவதாகவும் வாக்குறுதி
அளித்தோம்” என்றீர்கள். எனவே அவ்
வாறே செய்யுங்கள். நீங்கள் செய்வதாக
வாக்குறுதி கொடுத்தவற்றைச் செய்துவிடுங்
கள். உங்கள் வாக்குறுதிகளைக் காப்
பாற்றுங்கள். 26ஆனால் கர்த்தரிடமிருந்து
வந்த வார்த்தையைக் கேளுங்கள். எகிப்தில்
வாழ்ந்துகொண்டிருக்கிற யூதாவிலுள்ள
அனைத்து ஜனங்களே! நான் எனது பெரும்
பெயரைப் பயன்படுத்தி இந்த வாக்குறு
தியைச் செய்கிறேன். யூதாவிலுள்ள ஜனங்
களில் எகிப்தில் இப்பொழுது வாழ்ந்து
கொண்டிருக்கிற எவரும் என் நாமத்தால்
மீண்டும் வாக்குறுதி செய்யமாட்டார்கள்
என்று நான் வாக்குறுதி அளிக்கிறேன்.
அவர்கள் மீண்டும், “இதோ கர்த்தருடைய
ஜீவனைக் கொண்டு” சத்தியம் செய்ய
மாட்டார்கள்.

[27]"'நான் யூதாவின் ஜனங்கள் மேல் கவனமாயிருக்கிறேன். ஆனால் நான் அவர்களின்மேல் நன்மைக்காக கவனித்துக் கொண்டிருக்கவில்லை. நான் அவர்கள் மேல் தீமை செய்வதற்காகவே கவனித்துக் கொண்டிருக்கிறேன். எகிப்தில் வாழ்கிற யூதாவின் ஜனங்கள் பசியால் மரிப்பார்கள்; அவர்கள் பட்டயத்தால் கொல்லப்படுவார்கள். அவர்கள் முடிந்து போகும்வரை தொடர்ந்து மரித்துக்கொண்டிருப்பார்கள். [28]யூதா ஜனங்களில் சிலர் வாளால் கொல்லப்படுவதிலிருந்து தப்புவார்கள். அவர்கள் எகிப்திலிருந்து யூதாவிற்குத் திரும்பி வருவார்கள். ஆனால் தப்பி வருகிற யூதாவின் ஜனங்கள் மிகச்சிலராக இருப்பார்கள். பிறகு தப்பிப் பிழைத்த அந்த யூத ஜனங்கள், எகிப்தில் வாழ்பவர்கள், யாருடைய வார்த்தை உண்மையாகிறது என்பதை அறிந்துகொள்வார்கள். எனது வார்த்தையா அல்லது அவர்களின் வார்த்தையா எது உண்மையானது என்பதை அவர்கள் அறிவார்கள். [29]'நான் உங்களுக்கு அடையாளத்தைத் தருவேன்' இது கர்த்தருடையச் வார்த்தை, 'எகிப்தில் நான் உங்களைத் தண்டிப்பேன். பிறகு நான் உங்களைத் தண்டிப்பேன் என்ற எனது வாக்கு உண்மையாக நடப்பதை நீங்கள் அறிவீர்கள். [30]நான் என்ன சொன்னேனோ அதைச் செய்வேன் என்பதற்கு இதுவே உங்களது சான்றாகும்' கர்த்தர் சொல்லுவது என்னவெனில் 'பார்வோன் ஒப்பிரா எகிப்தின் அரசன். அவனது பகைவர்கள் அவனைக் கொல்ல விரும்புகின்றனர். நான் பார்வோன் ஒப்பிராவை அவனது பகைவர்களிடம் கொடுப்பேன். யூதாவின் அரசனாக சிதேக்கியா இருந்தான். நேபுகாத்நேச்சார் சிதேக்கியாவின் பகைவனாக இருந்தான். நான் சிதேக்கியாவை அவனது பகைவனிடம் கொடுத்தேன். அதே வழியில் நான் பார்வோன் ஒப்பிராவை அவனது பகைவரிடம் கொடுப்பேன்'" என்று சொன்னான்.

### பாருக்குக்கு ஒரு செய்தி

45 யோயாக்கீம் யோசியாவின் மகன். யூதாவில் யோயாக்கீமின் நான்காவது ஆட்சியாண்டில் தீர்க்கதரிசியான எரேமியா நேரியாவின் மகனான பாருக்கிடம் இவற்றைச் சொன்னான். பாருக் ஒரு புத்தகச் சுருளில் இவற்றை எழுதினான். எரேமியா பாருக்கிடம் சொன்னது இதுதான்: [2]"இது தான் இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் உனக்குச் சொல்வது: [3]'பாருக், நீ, இது எனக்கு மிகவும் கொடூரமானது. கர்த்தர் எனக்குத் துக்கத்தை வேதனையோடு கொடுத்திருக்கிறார். நான் மிகவும் களைத்துப் போனேன். எனது கஷ்டத்தால் நான் தோய்ந்து போனேன். நான் இளைப்பாற முடியவில்லை'" என்று சொன்னாய். [4]கர்த்தர் சென்னார்: "எரேமியா, பாருக்கிடம் இதனைச் சொல். 'இதுதான் கர்த்தர் கூறுகிறது. நான் கட்டியவற்றை இடித்துப்போடுவேன். நான் நாட்டியிருக்கின்றவற்றையே பிடுங்கிப்போடுவேன். யூதாவின் எல்லா இடங்களிலும் நான் இதனைச் செய்வேன். [5]பாருக், நீ உனக்காக பெருஞ்செயலுக்காக எதிர்பார்த்திருக்கிறாய். ஆனால் அவற்றை எதிர்பார்க்காதே. ஏனென்றால், அனைத்து ஜனங்களுக்கும் பயங்கரமானவை நிகழும்படிச் செய்வேன்' கர்த்தர். 'பல இடங்களுக்கு நீ போகவேண்டியிருக்கும். ஆனால், நீ எங்கே போனாலும் உன்னை உயிரோடு தப்பிக்கும்படி நான் செய்வேன்'" என்று கூறினார்.

### தேசங்களைப்பற்றி கர்த்தரிடமிருந்து வந்த செய்திகள்

46 தீர்க்கதரிசியான எரேமியாவிற்கு இச்செய்திகள் வந்தன. இச்செய்திகள் பல்வேறு தேசங்களைப் பற்றியவை.

### எகிப்தைப்பற்றிய செய்திகள்

[2]எகிப்து தேசத்தைப்பற்றிய செய்தி இது. பார்வோன் நேகோவின் படையைப்பற்றிய செய்தி இது. நேகோ எகிப்தின் அரசனாக இருந்தான். அவனது படை கர்கேமிசிலே தோற்கடிக்கப்பட்டது. கர்கேமிஷ் ஐபிராத்து நதிக்கரையில் இருக்கிறது. யோயாக்கீம் யூதாவின் அரசனாக இருந்த நான்காவது ஆட்சியாண்டில் கர்கேமிஷிலே பாபிலோன் அரசனான நேபுகாத்நேச்சாரின் படை பார்வோன்நேகோவின் படையை தோற்கடித்தது. யோயாக்கீம் அரசன் யோசியாவின் மகன். எகிப்துக்குக் கர்த்தருடைய வார்த்தை இதுதான். [3]"உங்களது பெரியதும் சிறியதுமான கேடயங்களைத் தயார் செய்துகொள்ளுங்கள். போருக்கு வாருங்கள்.

[4]குதிரைகளைத் தயார் செய்யுங்கள். வீரர்களே, உங்கள் குதிரைகள் மீது ஏறுங்கள் .போருக்கு உங்கள் இடத்துக்குப் போங்கள். உங்கள் தலைக்கவசங்களை அணிந்துகொள்ளுங்கள். உங்கள் ஈட்டிகளைக் கூர்மைப்படுத்துங்கள். உங்கள் கவசங்களை அணிந்து கொள்ளுங்கள்.

[5]நான் என்ன பார்க்கிறேன்? அந்தப்படை பயந்திருக்கிறது வீரர்கள் ஓடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் தைரியமான வீரர்கள் தோற்கடிக்கப்பட்டனர். அவர்கள் அவசரமாக ஓடினார்கள். அவர்கள் திரும்பிப் பார்க்கவில்லை. அவர்களைச் சுற்றிலும் ஆபத்து இருக்கிறது" கர்த்தர் இவற்றைக் கூறினார்.

[6]"வேகமாக ஓடுகிறவன் ஓடவேண்டாம். பலமுடைய வீரர்கள் தப்பித்துக்கொள்ள

வேண்டாம். அவர்கள் அனைவரும் இடறி
விழுவார்கள்.இது ஐப்பிராத்து நதிக்கரையில்
வடக்கில் நிகழும். 7யார் நைல் நதியைப்
போன்று வந்துகொண்டிருக்கிறார்கள். யார்
அந்தப் பலமும் வேகமும் கொண்ட நதியைப்
போன்று வந்துகொண்டிருக்கிறார்கள்.
8எகிப்து நைல் நதியைப் போன்று
புரண்டு வருகிறான். அந்த ஆற்றின்
பலத்தையும் வேகத்தையும் போன்று எகிப்து
வருகிறான். எகிப்து, ‘நான் வந்து பூமியை
மூடுவேன். நான் நகரங்களையும் அவற்றில்
உள்ள ஜனங்களையும் அழிப்பேன்’ என்று
கூறுகிறான்.
9குதிரை வீரர்களே, போருக்குப் போய்
ஏறுங்கள். தேரோட்டிகளே, வேகமாக ஓட்
டுங்கள். தைரியமான வீரர்களே புறப்படுங்
கள். கஷ் மற்றும் பூத்திலிருந்து வந்த
வீரர்களே! உங்கள் கேடயங்களை எடுத்துக்
கொள்ளுங்கள். லீதிய வீரர்களே! உங்கள்
வில்லைப் பயன்படுத்துங்கள்.
10ஆனால் அந்த நேரத்தில், எங்கள் சர்வ
வல்லமையுள்ள கர்த்தரகிய ஆண்டவர்
வெல்லுவார். அந்த நேரத்தில் அவர்களுக்கு
ஏதுவான தண்டனையை அவர் கொடுப்
பார். கர்த்தருடைய பகைவர்கள் அவர்க
ளுக்கு உரிய தண்டனையைப் பெறுவார்கள்.
அது முடியும்வரை பட்டயம் பட்சிக்கும்.
அதன் இரத்தத்தாகம் தீர்ந்து திருப்தி
அடையும்வரை பட்டயம் பட்சிக்கும். இது
நிறைவேறும். ஏனென்றால், எங்கள் சர்வ
வல்லமையுள்ள கர்த்தராகிய ஆண்டவருக்
கான பலி இது. அப்பலி, வடக்குத்
தேசத்தில் ஐப்பிராத்து நதியின் எகிப்தியப்
படை ஆகும்.
11“எகிப்தே, கீலேயாத்துக்குப் போய்
கொஞ்சம் மருந்தை பெற்றுக்கொள். பலமருந்
துகளை நீ தயார் செய்வாய். ஆனால்
அவை உதவாது. நீ குணமாக்கப்பட
மாட்டாய்.
12தேசங்கள் உனது அழுகையைக் கேட்
கும். உங்கள் அழுகை பூமி முழுவதும்
கேட்கும். ஒரு ‘தைரியமான வீரன்’ இன்
னோரு ‘தைரியமான வீரன்’ மேல் மோது
வான். இரண்டு தைரியமான வீரர்களும்
ஒருவர்மேல் ஒருவர் விழுவார்கள்.”
13தீர்க்கதரிசியான எரேமியாவிடம் கர்த்தர்
சொன்ன வார்த்தைகள் இதுதான். இந்த
வார்த்தைகள் பாபிலோனிய அரசனான
நேபுகாத்நேச்சார் எகிப்தைத் தாக்கவருவது
பற்றியதாகும்.
14“எகிப்தில் இச்செய்தியை அறிவி.
மிக்தோ நகரில் இதனைச் சொல். நோப்பி
லும் தக்பானேசிலும் இதைச் சொல்.
‘போருக்குத் தயாராகுங்கள். ஏனென்றால்,
உன்னைச் சுற்றியுள்ள ஜனங்கள்
வாள்களால் கொல்லப்படுகிறார்கள்.’
15“எகிப்தே உனது பலமான வீரர்கள்
கொல்லப்படுவார்கள். அவர்களால் நிற்க
முடியாது. ஏனென்றால், கர்த்தர் அவர்
களைக் கீழே தள்ளுவார்.
16அவ்வீரர்கள் மீண்டும் மீண்டும் இடறு
வார்கள், அவர்கள் ஒருவர் மேல் ஒருவர்
விழுவார்கள். அவர்கள், ‘எழு நம் சொந்த
ஜனங்களிடம் திரும்பிச் செல்லுவோம். நம்
தாய் நாட்டிற்கு போகலாம். நம் பகைவர்கள்
நம்மைத் தோற்கடித்துக்கொண்டிருக்கிறார்
கள். நாம் வெளியேற வேண்டும்’ என்று
சொல்லுவார்கள்.
17அவர்களின் தாய்நாடுகளில் அவ்வீரர்கள்
சொல்வார்கள், ‘எகிப்திய அரசனான பார்
வோன் வெறும் ஆரவாரமாக இருக்கிறான்.
அவனது மகிமைக்குரிய காலம் முடிந்து
விட்டது.”
18இந்த வார்த்தை அரசரிடமிருந்து வந்தது.
அந்த அரசர் சர்வ வல்லமையுள்ள கர்த்தர்.
“நான் என் ஜீவனில் ஆணையிட்டுச் சொல்
கிறேன். ஒரு வல்லமை மிக்கத் தலைவன்
வருவான். அவன் கடலருகில் உள்ள
தாபோர்மலை மற்றும் கர்மேல் மலையைப்
போன்றும் இருப்பான்.
19எகிப்திய ஜனங்களே,உங்கள் பொருட்
களை கட்டுங்கள். சிறைபிடிக்கப்படத் தயா
ராகுங்கள். ஏனென்றால், நோப் காலியான
தேசமாக அழிக்கப்பட்டிருக்கிறது. அந்நகரங்
கள் அழிக்கப்படும். அங்கேஎவரும் வாழ
மாட்டார்கள்.
20“எகிப்து அழகான பசுவைப் போன்று
இருக்கிறது. ஆனால் குதிரை கொசுவானது
அதனைத் துன்புறுத்துவதற்கு வடக்கே
இருந்து வந்துகொண்டிருக்கிறது.

21எகிப்தின் படையில் உள்ள கூலிவீரர்கள்
கொழுத்த காளை கன்றுகளைப் போன்றிருக்
கிறார்கள். அவர்கள் திரும்பி ஓடுவார்கள்.
அவர்கள் தாக்குதலை எதிர்த்துபலமாக
நிற்கமாட்டார்கள். அவர்களின் அழிவுக்
காலம் வந்துகொண்டிருக்கிறது. அவர்கள
விரைவில் தண்டிக்கப்படுவார்கள்.
22எகிப்து, தப்பிக்க முயலும்போது சுபசத்
தமிடுகிற பாம்பைப் போல் உள்ளது.
பகைவன் நெருங்கி வந்துகொண்டிருக்கி
றான். எகிப்தியப் படை தப்பித்து ஓட
முயன்று கொண்டிருக்கிறது. எகிப்தைப்
பகைவர்கள் கோடரியால் தாக்குவார்கள்.
அது மரங்களை மனிதர்கள் வெட்டுவது
போன்றிருக்கும்.”
23கர்த்தர் இவற்றைச் சொல்கிறார்: “அவர்
கள் எகிப்திய காடுகளை வெட்டித் தள்ளு
வார்கள். அந்தக்காட்டில் (படை) ஏராளமான
மரங்கள் (வீரர்கள்) இருக்கிறது. ஆனால்
அவை அனைத்தும் வெட்டித் தள்ளப்படும்.
பகை வீரர்கள் வெட்டுக்கிளிகளை விட
அதிக எண்ணிக்கை உடையவர்களாக
இருக்கிறார்கள். எவராலும் எண்ண முடியா
தபடி அவர்கள் ஏராளமான வீரர்களாக
இருக்கிறார்கள்.

24எகிப்து அவமானப்படும். அவளை
வடக்கேயிருந்து வரும் பகைவன் தோற்கடிப்
பான்.
25இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்: "தீப்ஸின்
தெய்வமான அமோனை நான் விரைவில்
தண்டிப்பேன், நான் பார்வோன் எகிப்து
மற்றும் அவர்களின் தெய்வங்களையும் தண்
டிப்பேன். நான் எகிப்திய அரசர்களைத்
தண்டிப்பேன். நான் பார்வோனைச் சார்ந்
துள்ள ஜனங்களையும் தண்டிப்பேன். 26நான்
எல்லா ஜனங்களையும் அவர்களது பகைவர்
களாலும் அவர்களைக் கொல்ல விரும்புகி
றவர்களாலும் தோற்கடிக்கப்படச் செய்
வேன். நான் அவர்களை நேபுகாத்நேச்சா
ரான பாபிலோனின் அரசனிடம் அவனது
வேலைக்காரர்களிடமும் கொடுப்பேன்"
"நீண்ட காலத்துக்கு முன்னால், எகிப்து
சமாதானமாக வாழ்ந்தது. இவ்வெல்லா துன்
பங்களுக்கும் பிறகு, அது பழையபடி
சமாதானமாக மீண்டும் வாழும்" என்று
கர்த்தர் சொல்லுகிறார்.

### வட இஸ்ரவேலுக்கு ஒரு செய்தி

27"யாக்கோபே, என் ஊழியக்காரனே,
பயப்படாதே! இஸ்ரவேலே! அஞ்ச வேண்
டாம்! அந்தத் தூரமான இடங்களிலிருந்து
நான் உன்னைக் காப்பாற்றுவேன். சிறைப்
பட்டிருக்கிற நாடுகளிலிருந்து நான் உன்
பிள்ளைகளை மீட்பேன். யாக்கோபு மீண்டும்
சமாதானமும் பாதுகாப்பும் பெறுவான்.
அவனை எவரும் பயமுறுத்த முடியாது."
28கர்த்தர் இவற்றைக் கூறுகிறார், "யாக்
கோபே, என் வேலைக்காரனே பயப்படாதே.
நான் உன்னோடு இருக்கிறேன். நான்
உன்னைப் பல்வேறு நாடுகளுக்கு அனுப்பு
வேன். ஆனால் உன்னை நான் முழுவதுமாக
அழிக்க மாட்டேன். ஆனால் அந்த நாடுகளை
எல்லாம் அழிப்பேன். நீ செய்த தீயச்
செயல்களுக்காகத் தண்டிக்கப்பட வேண்டும்.
எனவே நான் உன்னைத் தண்டனையி
லிருந்து தப்பிக்கும்படி விடமாட்டேன். நான்
உன்னை ஒழுங்குபடுத்துவேன் ஆனால் நான்
நியாயமாக இருப்பேன்."

### பெலிஸ்திய ஜனங்களைப்பற்றியச் செய்தி

47 தீர்க்கதரிசியான எரேமியாவிற்குக்
கர்த்தரிடமிருந்து வந்த வார்த்தை.
பெலிஸ்தியர்களைப் பற்றிய செய்தி இது.
பார்வோன் காத்சா நகரைத் தாக்குவதற்கு
முன்னால் இச்செய்தி வந்தது.
2கர்த்தர் கூறுகிறார், "வடக்கில் பகை
வீரர்களைப் பார். எல்லாம் ஒன்று கூடிக்
கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வேகமான
ஆறு கரையை மோதிக்கொண்டு வருவது
போன்று வருவார்கள். அவர்கள் நாடு
முழுவதையும் வெள்ளம் போன்று மூடு
வார்கள். அவர்கள் பட்டணங்களையும்
அதில் வாழும் ஜனங்களையும் மூடுவார்கள்.
அந்நாட்டில் வாழும் ஒவ்வொருவரும்
உதவிக்காக அழுவார்கள்.
3"அவர்கள் ஓடுகின்ற குதிரைகளின் ஓசை
யைக் கேட்பார்கள். அவர்கள் இரதங்களின்
ஓசையைக் கேட்பார்கள். அவர்கள் சக்கரங்
களின் இரைச்சலையும் கேட்பார்கள். தந்தை
களால் பிள்ளைகளைக் காப்பாற்ற முடி
யாமல் போகும். அவர்கள் உதவ முடியாமல்
மிகவும் பலவீனமாவார்கள்.
4"பெலிஸ்தியர்கள் எல்லோரையும் அழிக்
கின்றநேரம் வந்திருக்கின்றது. தீரு மற்றும்
சீதோனில் மிச்சமுள்ளவர்களை அழிக்கும்
காலம் வந்திருக்கிறது. பெலிஸ்தியர்களைக்
கர்த்தர் மிக விரைவில் அழிப்பார்.
கிரெட்டே தீவிலுள்ள தப்பிப்பிழைத்த ஜனங்
களை அவர் அழிப்பார்.
5காத்சாவில் உள்ள ஜனங்கள் சோகம்
அடைந்து தங்கள் தலைகளை மழித்துக்
கொள்வார்கள். அஸ்கலோனிலிருந்து வந்த
ஜனங்கள் மௌனமாக்கப்படுவார்கள். பள்ளத்
தாக்கிலிருந்து தப்பிப்பிழைத்தவர்களே! நீங்
கள் உங்களையே இன்னும் எவ்வளவுகாலம்
வெட்டுவீர்கள்?
6"கர்த்தருடைய பட்டயமே! நீ இன்னும்
விடவில்லை. நீ எவ்வளவு காலத்துக்குச்
சண்டையிட்டுக்கொண்டே இருப்பாய்? நீ
உனது உறைக்குள்ளே திரும்பிப்போ. ஓய்ந்
திரு!
7ஆனால் கர்த்தருடைய பட்டயம் எவ்
வாறு ஓயும்? கர்த்தர் அதற்கு அஸ்கலோன்
மற்றும் கடற்கரைகளையும் தாக்கும்படி
கட்டளையிட்டார்."

### மோவாப் பற்றிய செய்தி

48 இது மோவாப்பைப் பற்றிய செய்தி.
இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ வல்
லமையுள்ள கர்த்தர் சொல்கிறது: "நேபோ
மலைக்கு கேடு வரும். நேபோ மலை
அழிக்கப்படும். கீரியாத்தாயீம் தாழ்மைப்ப
டும். இது கைப்பற்றப்படும். பலமான இடம்
தழ்மைப்படும். இது நொறுக்கப்படும்.
2மோவாப் மீண்டும் பாராட்டப்படாது.
மோவாப்பின் தோல்விக்கு எஸ்போனின்
ஆட்கள் திட்டமிடுவார்கள். அவர்கள், 'வா,
அந்த நாட்டிற்கு ஒரு முடிவு செய்வோம்'
என்று சொல்வார்கள். மத்மேனே, நீ மௌன
மாக்கப்படுவாய். பட்டயம் உன்னைத் துரத்
தும்.
3ஒரோனாயிமிலிருந்து வரும் கதறல்
களைக் கேள். அவை குழப்பமும் பேரழிவு
முள்ள கதறல்களாக இருக்கும்.
4மோவாப் அழிக்கப்படும். அவளது சிறு
குழந்தை உதவிக்காக அழும்.
5மோவாப்பின் ஜனங்கள் லூகித்துக்குச்
செல்லும் பாதையில் செல்வார்கள். அவர்கள்
போகும்போது மிக மோசமாக அழுது
கொண்டிருப்பார்கள். ஒரோனாயிமுக்குச்

செல்லும் இறக்கமானபாதையில் வேதனை மற்றும் துன்பத்தின் அழுகையொலி கேட்கலாம்.
6ஓடுங்கள்! உங்கள் உயிருக்காக ஓடுங்கள்! வனாந்தரத்தில் காற்றில் அடித்துச் செல்லும் முட்செடியைப் போல ஓடுங்கள்!
7“நீங்கள் உங்களால் செய்யப்பட்ட பொருளின்மீதும், உங்கள் செல்வத்தின்மீதும் நம்பிக்கை வைத்தீர்கள். எனவே, நீங்கள் கைப்பற்றப்படுவீர்கள். கேமோஷ் தெய்வம் சிறையெடுக்கப்படும். அதனோடு அதன் ஆசாரியர்களும் அதிகாரிகளும் கொண்டு செல்லப்படுவார்கள்.
8ஒவ்வொரு பட்டணத்துக்கு எதிராகவும் அழிக்கிறவன் வருவான். ஒரு பட்டணம் கூட தப்பிக்காது. பள்ளத்தாக்கு அழிக்கப்படும். மேட்டு நிலமும் அழிக்கப்படும். இது நிகழும் என்று கர்த்தர் சொன்னார். எனவே, இது நடக்கும்.
9மோவாபின் வயல்களின் மேல் உப்பைத் தூவுங்கள். அந்நாடு காலியான வனந்தரமாகும். மோவாபின் பட்டணங்கள் காலியாகும். அவற்றில் ஜனங்கள் எவரும் வாழமாட்டார்கள்.
10கர்த்தர் சொல்வதின்படி ஒருவன் செய்யாவிட்டால், அவரது பட்டயத்தைப் பயன்படுத்தி அந்த ஜனங்களைக் கொல்லாவிட்டால் பிறகு அந்த மனிதனுக்கு தீயக் காரியங்கள் நிகழும்.
11“மோவாப் என்றைக்கும் துன்பங்களை அறிந்ததில்லை. மோவாப் அடியில் தங்கும்படிவிட்ட திராட்சைரசத்தைப் போன்றது. அது ஒரு பாத்திரத்தில் இருந்து இன்னொரு பாத்திரத்திற்கு ஊற்றப்படாமல் இருந்தது. அது சிறைபிடிக்கப்படாமல் இருந்தது. அது முன்பு போலவே சுவைக்கப்பட்டது. அதன் வாசனை மாறாமல் இருக்கிறது.”
12கர்த்தர் இவற்றைக் கூறுகிறார், “ஆனால் நான் விரைவில் உங்களை உங்கள் பாத்திரத்திலிருந்து ஊற்றி ஆட்களை அனுப்புவேன். பிறகு அவர்கள் அப்பாத்திரங்களைக் காலிச்செய்து உடைத்துப் போடுவார்கள்.”
13பிறகு மோவாப் ஜனங்கள் தம் கேமோஷ் எனும் அந்நிய தெய்வத்துக்காக அவமானம் அடைவார்கள். இஸ்ரவேல் ஜனங்கள் அந்த அந்நிய தெய்வத்தை பெத்தேலில் நம்பினார்கள். அந்த அந்நிய தெய்வம் உதவி செய்யவில்லை என்று இஸ்ரவேல் ஜனங்கள் வெட்கப்பட்டனர். மோவாபும் அது போலாகும்.
14“உங்களால் ‘நாங்கள் நல்ல வீரர்கள். போரில் நாங்கள் தைரியமான ஆட்கள்’ என்று சொல்லமுடியாது.
15பகைவர்கள் மோவாபைத் தாக்குவார்கள். பகைவர்கள் அப்பட்டணங்களுக்குள் நுழைந்து அவற்றை அழிப்பார்கள். அவளது சிறந்த இளைஞர்கள் வெட்டப்படுவார்கள்” இந்த வார்த்தை அரசரிடமிருந்து வந்தது அந்த அரசனின் நாமம் சர்வ வல்லமையுள்ள கர்த்தர்.
16“மோவாபின் முடிவு அருகில் உள்ளது. மோவாப் விரைவில் அழிக்கப்படும்.”
17மோவாபைச் சுற்றியுள்ள இடங்களில் வாழ்கின்ற ஜனங்களாகிய நீங்கள் அந்நாட்டிற்காக அழுவீர்கள். மோவாப் எவ்வளவு புகழுடையதாக இருக்கிறது என்று உங்களுக்குத் தெரியும். எனவே அதற்காக அழுங்கள். ‘ஆள்வோனின் வல்லமை உடைக்கப்பட்டது. மோவாபின் வல்லமையும் மகிமையும் போய்விட்டன’ என்று சோகப் பாட்டைப் பாடுங்கள்.
18“தீபோனில் வாழ்கின்ற ஜனங்களே, உங்களது மகிமையுள்ள இடத்தைவிட்டு கீழே இறங்கி வாருங்கள். புழுதித்தரையில் உட்காருங்கள். ஏனென்றால், மோவாபை அழித்தவன வந்து கொண்டிருக்கிறான். அவன் உங்களது பலமான நகரங்களை அழிப்பான்.
19கர்த்தர், “ஆரோவேரில் வாழ்கின்ற ஜனங்களே சாலையிலே நின்று கவனித்துக் கொண்டிருங்கள். மனிதன் வெளியே ஓடிக் கொண்டிருப்பதைப் பாருங்கள். பெண்கள் ஓடிக்கொண்டிருப்பதைப் பாருங்கள். என்ன நடந்தது என்று அவர்களைக் கேளுங்கள்.
20மோவாப் அழிக்கப்படும். வெட்கத்தால் நிறையும் மோவாப் மேலும் மேலும் அழும். மோவாப் அழிக்கப்படுகிறது என்று ஆர்னோன் நதிக்கரையில் அறிவியுங்கள்.
21மேட்டுச் சமவெளியில் வாழ்கின்ற ஜனங்கள் தண்டிக்கப்படுவார்கள். ஓலோன், யாத்சா, மேப்காத் ஆகிய பட்டணங்களுக்குத் தீர்ப்பு வந்திருக்கிறது.
22தீபோன், நேபோ, பெத்லாத்தாயீம் ஆகிய பட்டணங்களுக்குத் தீர்ப்பு வந்திருக்கிறது.
23கீரியாத்தாயீம், பேத்கமூல், பெத் மெயோன் ஆகிய பட்டணங்களுக்கும் தீர்ப்பு வந்திருக்கிறது.
24கீரியோத் மற்றும் போஸ்றா பட்டணங்களுக்கும் தீர்ப்பு வந்திருக்கிறது. மோவாபின் பக்கத்திலும் தூரத்திலுமுள்ள அனைத்து பட்டணங்களுக்கும் தீர்ப்பு வந்திருக்கிறது.
25மோவாபின் பலம் வெட்டப்பட்டிருக்கிறது. மோவாபின் கை உடைந்திருக்கிறது” என்று சொன்னார்.
26“மோவாப் தன்னைக் கர்த்தரை விட முக்கியமானவனாக நினைத்தான். எனவே அவன் குடிகாரனைப் போன்று தடுமாறுகிறவரை தண்டியுங்கள். மோவாப் விழுந்து தனது வாந்தியிலேயே உருளட்டும். ஜனங்கள் மோவாபைக் கேலிசெய்யட்டும்.
27“மோவாபே, ஒரு திருடர் கூட்டத்தால் இஸ்ரவேல் சிறைபிடிக்கப்பட்டபோது நீ அதனால் சந்தோஷப்பட்டு இஸ்ரவேலைக் கேலிசெய்தாய். நீ இஸ்ரவேலைப் பற்றி

ஒவ்வொரு முறையும் பேசும்போது, உன்
தலையை உதறி இஸ்ரவேலைவிட நீ சிறந்த
வன் என்பது போல நடித்தாய்.
28மோவாபின் ஜனங்களே, உங்கள் பட்ட
ணங்களை விட்டு விலகுங்கள். பாறைக
ளுக்கு இடையில் வாழப் போங்கள். குகைப்
பிளவுகளில் புறாக்கள் கூடுகட்டியிருப்பது
போல அமைத்துகொள்ளுங்கள்."
29"நாங்கள் மோவாபின் பெருமையைப்
பற்றி கேள்விப்பட்டிருக்கிறோம். அவன்
மிகப் பெருமிதம் உடையவனாக இருந்தான்.
அவன் தன்னை முக்கியமானவன் என்று
நினைத்தான். அவன் எப்பொழுதும்
பெருமை பேசினான். அவன் மிகமிகப்
பெருமை உடையவன்."
30கர்த்தர் கூறுகிறார்: "எந்தக் காரணமுமில்
லாமல் மோவாப் கோபங்கொண்டு வீம்பு
பேசுகிறது என்று நான் அறிவேன். ஆனால்
அவன் வீண் பெருமைகள் பொய்யானவை.
அவன் சொல்வதை அவனால் செய்ய
முடியாது.
31எனவே, நான் மோவாபிற்காக அழுகி
றேன். நான் மோவாபிலுள்ள ஒவ்வொரு
வருக்காகவும் அழுகிறேன். நான் கீராரேஸ்
ஸிலிருந்து வந்தவர்களுக்காகவும் அழு
கிறேன்.
32நான் யாசேருக்காக யாசேர் ஜனங்க
ளோடு சேர்ந்து அழுகிறேன் சிப்மாவூர்
கடந்தகாலத்தில் உனது திராட்சைக்
கொடிகள் கடலைக் கடந்து பரவின. அது
வெகு தொலைவிலுள்ள நகரமானயாசேரை
அடைந்தது. ஆனால் அழிக்கிறவன் உனது
பழங்களையும் திராட்சைகளையும் எடுத்தி
ருக்கிறான்.
33மகிழ்ச்சியும், சந்தோஷமும் மோவாபின்
பெரிய திராட்சைத் தோட்டங்களிலிருந்து
முடிவடைந்தன. திராட்சை ஆலைகளில்
இருந்து திராட்சைரசம் பாய்வதை நான்
நிறுத்தினேன். அங்கே திராட்சைரசத்துக்
காகத் திராட்சை ஆலையை மிதிக்கிறவர்
களின் பாடலும் ஆடலும் இல்லை.
மகிழ்ச்சியின் சத்தங்கள் இல்லை.
34கர்த்தர், "எஸ்போன், எலெயாலே நகரங்
களில் உள்ள ஜனங்கள் அழுதுகொண்டிருக்
கிறார்கள். அவர்களின் அழுகை வெகு
தொலைவில் உள்ள யாகாஸ் வரைக்கும்
கேட்கிறது. அவர்களின் அழுகை சோவாரி
லிருந்து கேட்கிறது. அது வெகு தொலை
வில் உள்ள ஒரோனாயிம் மற்றும் எக்லாத்
செலிஷியாத் வரைக்கும் கேட்கிறது. நிம்ரீ
மின் தண்ணீரும் வற்றிப்போகும். 35மோவாப்
தேசத்து மேடைகளில் தகனபலிகள் இடு
வதை நான் தடுப்பேன். அவர்கள் தம்
தெய்வங்களுக்குப் பலிகள் கொடுப்பதை
நான் நிறுத்துவேன்" என்று கூறினார்.
36"நான் மோவாபிற்காக மிகவும் வருந்து
கிறேன். மரணப் பாடலில் புல்லாங்குழலில்
சோக ஒலியைப் போன்று எனது இதயம்
அழுகின்றது. கீராரேஷ் ஜனங்களுக்காக நான்
வருத்தப்படுகிறேன். அவர்களது பணமும்
செல்வமும் எல்லாம் எடுக்கப்பட்டன. 37ஒவ்
வொருவரும் தலையை மழித்திருந்தார்கள்.
ஒவ்வொருவரின் தாடியும் வெட்டப்பட்டி
ருந்தது. ஒவ்வொருவரின் கைகளும்
வெட்டப்பட்டு இரத்தம் கொட்டிக்
கொண்டிருந்தது. ஒவ்வொருவரும் தங்கள்
இடுப்பைச் சுற்றி சோகத்தின் ஆடையை
அணிந்து கொண்டிருக்கின்றனர். 38ஜனங்கள்,
மோவாப்பின் ஒவ்வொரு இடங்களிலும்
அனைத்து வீடுகளின் மேலும் தெருச்சது
ரங்களிலும் மரித்துப்போனவர்களுக்காக
அழுதுகொண்டிருந்தனர். அங்கே துயரம்
இருந்தது. ஏனென்றால், ஒரு காலியான
ஜாடியை உடைப்பது போன்று நான்
மோவாபை உடைத்துள்ளேன்" என்று
கர்த்தர் சொன்னார்.
39"மோவாப் சிதறடிக்கப்படுகிறது. ஜனங்
கள் அழுதுகொண்டிருக்கிறார்கள். மோவாப்
சரணடைந்தது. இப்பொழுது மோவாப்
அவமானப்படுகிறது. ஜனங்கள் மோவாபைக்
கேலிசெய்கிறார்கள். ஆனால் நடந்தவைகள்
அவர்களிடம் பயத்தை நிரப்பியுள்ளன."
40கர்த்தர் கூறுகிறார், "பார் ஒரு கழுகு
வானத்திலிருந்து கீழே பறந்து வந்து
கொண்டிருக்கிறது. அது மோவாபின் மேல்
தன் இறக்கைகளை விரித்துக்கொண்டிருக்கி
றது.
41மோவாபின் பட்டணங்கள் கைப்பற்றப்
படும். பலமான மறைவிடங்கள் தோற்க
டிக்கப்படும். அப்போது மோவாபின் வீரர்
கள் ஒரு ஸ்திரீ பிள்ளையை பெறுகிற
சமயத்தில் பயப்படுவது போல பயப்படு
வார்கள்.
42மோவாப் தேசம் அழிக்கப்படும். ஏனென்
றால், அவர்கள் தம்மைக் கர்த்தரைவிட
முக்கியமானவர்களாக நினைத்தனர்."
43கர்த்தர் இவற்றைக் கூறுகிறார். "மோவா
பின் ஜனங்களே, பயமும், ஆழமான
குழிகளும், கண்ணிகளும் உனக்காகக் காத்தி
ருக்கின்றன.
44ஜனங்கள் பயந்து வெளியே ஓடுவார்கள்.
அவர்கள் ஆழமான குழிகளில் விழுவார்கள்.
எவராவது ஆழமான குழிகளில் இருந்து
வெளியே ஏறிவந்தால் அவன் கண்ணிகளில்
சிக்குவான். நான் மோவாபிற்குத் தண்டனை
ஆண்டைக்கொண்டு வருவேன்" என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
45"ஜனங்கள் வல்லமை மிக்க பகைவரிட
மிருந்து ஓடினார்கள். அவர்கள் பாதுகாப்
புக்காக எஸ்போனுக்கு ஓடினார்கள்.(ஆனால்
அங்கே பாதுகாப்பு இல்லை.) எஸ்போனில்
நெருப்பு பற்றியது. சீகோனில் பட்டணத்தி
லும் நெருப்பு பிடித்தது. மோவாபின்
தலைவர்களையும் அது அழிக்கிறது. இது
அந்த வீண்பெருமையுள்ள ஜனங்களையும்
அழித்துகொண்டிருக்கிறது.

[46]மோவாபே, இது உனக்குக் கேடாகும். கேமோஷின் ஜனங்கள் அழிக்கப்படுகின்றனர். உனது மகன்களும் மகள்களும் கைதிகளாகச் சிறைபிடிக்கப்பட்டு அடிமைத் தனத்திற்கு கொண்டு போகப்படுகின்றனர்.
[47]“மோவாபின் ஜனங்கள் கைதிகளாகச் சிறைபிடிக்கப்பட்டு அவர்களை அடிமைகளாக அழைத்துச் செல்வார்கள். ஆனால் நாட்கள் வரும்போது நான் மோவாபின் ஜனங்களைத் திரும்பக்கொண்டு வருவேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார். மோவாபின் தீர்ப்பு இத்துடன் முடிந்தது.

### அம்மோனைப் பற்றிய செய்தி

49 அம்மோனியர்களைப் பற்றி கர்த்தர் இதைக் கூறுகிறார், “அம்மோனிய ஜனங்களே, இஸ்ரவேல் ஜனங்களுக்குக் பிள்ளைகள் இல்லையென்று நினைக்கிறீர்களா? பெற்றோர்கள் மரித்தப்போது நாட்டை சுதந்தரித்துக்கொள்ள பிள்ளைகள் இல்லை என்று நினைக்கிறீர்களா? ஒரு வேளை அதற்காகவே தான் மில்காம் காத்தின் நாட்டை எடுத்துக்கொண்டிருக்கலாம்.”
[2]கர்த்தர் கூறுகிறார், “அம்மோனின் ரப்பாவிலே ஒரு காலம் வரும். அப்போது ஜனங்கள் போரின் சத்தங்களைக் கேட்பார்கள். அம்மோனின்ரப்பா அழிக்கப்படும். அது அழிந்த கட்டிடங்கள் நிறைந்தவெற்று மலையாகும். அதைச் சுற்றியுள்ள பட்டணங்கள் எரிக்கப்படும். அந்த ஜனங்கள் இஸ்ரவேல் ஜனங்களைத்தம் சொந்த நாட்டை விலகும்படி பலவந்தப்படுத்தினார்கள். ஆனால் பிறகு, இஸ்ரவேல் அவர்களை விலகும்படி வற்புறுத்தி அவர்கள் தேசத்தை சுதந்தரிப்பர்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
[3]“எஸ்போன் ஜனங்களே அழுது புலம்புங்கள்! ஏனென்றால், ஆயி பட்டணம் அழிந்துகொண்டிருக்கிறது. அம்மோனது ராப்பாவின் பெண்களே அழுங்கள் !சோகத் துக்குரிய ஆடையை அணிந்துகொண்டு அழுங்கள். பாதுகாப்புக்காக நகரத்திற்கு ஓடுங்கள். ஏனென்றால், பகைவன் வந்துகொண்டிருக்கிறான். அவர்கள் மில்காம் என்ற தெய்வத்தை எடுத்துச் செல்வார்கள். அவர்கள் மில்காமின் ஆசாரியர்களையும் அதிகாரிகளையும் எடுத்துச் செல்வார்கள்.
[4]நீ உனது பலத்தைப்பற்றி பெருமைபட்டாய். ஆனால் நீ உனது பலத்தை இழந்து கொண்டிருக்கிறாய். உனது பணம் உன்னை பாதுகாக்கும் என்று நம்புகிறாய். எவரும் உன்னைத் தாக்கிட நினைக்கவும் மாட்டார்கள் என்று நினைக்கிறாய்.”
[5]ஆனால் சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இதனைக் கூறுகிறார்: “எல்லாப் பக்கங்களிலுமிருந்தும் உனக்கு கஷ்டங்களை வரப்பண்ணுவேன். நீங்கள் அனைவரும் ஓடுவீர்கள். எவராலும் உங்கள் அனைவரையும் ஒன்று சேர்க்க முடியாது.”
[6]“அம்மோனிய ஜனங்கள் கைதிகளாகச் சிறைபிடிக்கப்பட்டு அடிமைத்தனத்திற்குக் கொண்டு போகப்படுவார்கள். ஆனால் நேரம் வரும். அப்போது நான் அம்மோனிய ஜனங்களைத் திரும்பக் கொண்டுவருவேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.

### ஏதோம் பற்றிய செய்தி

[7]இச்செய்தி ஏதோமைப் பற்றியது. சர்வ வல்லமையுள்ள கர்த்தர் சொல்கிறார்: “தேமானில் இனி ஞானமில்லையா? ஏதோமில் உள்ள ஞானிகள் நல்ல ஆலோசனைக்கூற முடிவதில்லையோ? அவர்கள் தம் ஞானத்தை இழந்துவிட்டார்கள்.
[8]தேதானில் வாழ்கிற ஜனங்களே ஓடிப் போங்கள்! ஒளிந்துக் கொள்ளுங்கள். ஏனென்றால், நான் ஏசாவை அவர்களின் தீமைகளுக்குத் தண்டிப்பேன்.
[9]“வேலைக்காரர்கள் திராட்சைக் கொடிகளில் இருந்து திராட்சையைப் பறிக்கிறார்கள். ஆனால் அவர்கள் கொடியில் சில திராட்சைகளை விட்டு விடுவார்கள். இரவில் திருடர்கள் வந்தால் அவர்கள் எல்லாவற்றையும் எடுக்கமாட்டார்கள்.
[10]நான் ஏசாவிலிருந்து எல்லாவற்றையும் எடுப்பேன். நான் அவர்களின் அனைத்து மறைவிடங்களையும் கண்டு கொள்வேன். அவன் என்னிடமிருந்து ஒளிந்துக்கொள்ள முடியாது. அவனது பிள்ளைகள், உறவினர்கள், அயலார்கள் அனைவரும் மரிப்பார்கள்.
[11]தன் பிள்ளைகளை பராமரிக்க யாரும் இருக்கமாட்டார்கள். அவனுடைய மனைவிகள் தாங்கள் சார்ந்திருக்கஎவரும் இல்லாதிருப்பார்கள்.”
[12]இதுதான் கர்த்தர் சொல்கிறது: “சில ஜனங்கள் தண்டிக்கப் படத்தக்கவர் அல்ல. ஆனால் அவர்கள் துன்புறுகிறார்கள். ஆனால் ஏதோம் நீ தண்டிக்கப்படத் தகுதி உள்ளவன். எனவே, நீ உண்மையாகத் தண்டிக்கப்படுவாய். உனக்கேற்ற தண்டனையிலிருந்து நீ தப்பிக்கமாட்டாய் நீ தண்டிக்கப்படுவாய்.” [13]கர்த்தர் கூறுகிறார், “எனது சொந்த வல்லமையினால், நான் இந்த வாக்குறுதியைச் செய்கிறேன். போஸ்றா பட்டணம் அழியப்போகிறது என்று நான் வாக்குக் கொடுக்கிறேன். அந்த பட்டணம் பாறைக் குவியலாக அழியும். ஜனங்கள் மற்ற நகரங்களுக்கு ஏற்படும் அழிவுகளைப்பற்றி சொல்லும் போது இதனை எடுத்துக்காட்டாகக் கூறுவார்கள். ஜனங்கள் அப்பட்டணத்தை நிந்திப்பார்கள். போஸ்றாவைச் சுற்றியுள்ள அனைத்து பட்டணங்களும் என்றென்றும் அழிக்கப்படும்.”
[14]நான் கர்த்தரிடமிருந்து இந்த வார்த்தையைக் கேட்டேன். கர்த்தர் நாடுகளுக்கு ஒரு தூதுவனை அனுப்பினார். 'உங்கள்

படைகளை ஒன்று சேருங்கள்! போருக்குத்
தயாராகுங்கள்! ஏதோம் நாட்டிற்கு எதிராகச்
செல்லுங்கள்! என்று கர்த்தர் சொல்லுகிறார்.
15 "ஏதோமே, நான் உன்னை ஜனங்களுக்
குள்ளே முக்கியமற்றவனாகச் செய்வேன்.
ஒவ்வொருவரும் உன்னை வெறுப்பார்கள்.
16 ஏதோமே, நீ மற்ற தேசங்களை பயமுறுத்
தினாய். எனவே நீ முக்கியமானவன் என்று
நினைத்தாய். ஆனால் நீ முட்டாளானாய் உன்
பெருமை உன்னை வஞ்சித்திருக்கிறது.
ஏதோமே, நீ மலைகளின் உச்சியில்
இருக்கிறாய். நீ பாறைகளும் குன்றுகளும்
பாதுகாப்பாக இருக்கிற இடத்தில்
இருக்கிறாய். ஆனால், நீ உனது வீட்டை
கழுகின் கூட்டைப்போன்று உயரத்தில்
கட்டினாலும் நான் உன்னைப் பிடிப்பேன்.
நான் உன்னை அங்கிருந்து கீழே கொண்டு
வருவேன்" என்று கர்த்தர் சொல்லுகிறார்.

17 "ஏதோம் அழிக்கப்படும். ஜனங்கள்
அழிந்த நகரங்களைப் பார்த்து அதிர்ச்சி
அடைவார்கள். அந்த அழிந்த நகரங்களில்
ஜனங்கள் பிரமித்து பிரமிப்பார்கள்.
18 சோதோம் கொமோரா மற்றும் அதைச்
சுற்றியுள்ள நகரங்களைப்போன்று ஏதோம்
அழிக்கப்படும். அங்கே ஜனங்கள் எவரும்
வாழமாட்டார்கள்" என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
19 "யோர்தான் ஆற்றின் கரையிலுள்ள
அடர்த்தியான புதர்களில் இருந்து சில
வேளைகளில் சிங்கம் வரும். ஜனங்கள்
தங்கள் ஆடுகளையும் மாடுகளையும் விட்டி
ருக்கிற வயல்களில் அச்சிங்கம் போகும்.
நான் அந்தச் சிங்கத்தைப் போன்றிருக்கி
றேன். நான் ஏதோமுக்குப் போவேன்.
நான் அந்த ஜனங்களைப் பயப்படுத்துவேன்.
அவர்களை ஓடும்படிச்செய்வேன். அவர்
களது இளைஞர்கள் யாரும் என்னைத்
தடுக்க முடியாது. எவரும் என்னைப்போல
இரார். எவரும் எனக்குச் சவால் விட
முடியாது. அவர்களில் எந்த மேய்ப்பர்களும்
(தலைவர்கள்) எனக்கு எதிரே நிற்க
முடியாது."
20 எனவே, ஏதோம் ஜனங்களுக்கு என்ன
செய்யவேண்டும் என்று கர்த்தர் திட்டமிட்
டுள்ளாரோ அதைக் கவனி! தீமான் ஜனங்க
ளுக்குக் கர்த்தர் என்ன செய்யவேண்டும்
என்று முடிவு செய்தாரோ,அதைக் கவனி!
ஏதோமின் மந்தையில் (ஜனங்கள்) உள்ள
குட்டிகளைப் பகைவர்கள் இழுத்துப்
போடுவார்கள். ஏதோமின் மேய்ச்சல் நிலம்
அவர்கள்என்ன செய்தார்களோ அதினி
மித்தம் வெறுமையாய் விடும்.
21 ஏதோமின் வீழ்ச்சியின் ஓசையில் பூமி
அதிரும். அவர்களின் அழுகை செங் கடல்
வழி முழுவதும் கேட்கும்.
22 கர்த்தர், மிருகத்தைத் தாக்கப்போகிற
கழுகு மேலே பறப்பது போன்று இருப்பார்.
போஸ்ராவின் மேல் சிறகை விரிக்கிற
கழுகைப் போன்று கர்த்தர் இருப்பார்.
அந்நேரத்தில் ஏதோமின் வீரர்கள் மிகவும்
அஞ்சுவார்கள். குழந்தையைப் பெறுகிற
பெண்ணைப் போன்று அவர்கள் பயத்தால்
அழுவார்கள்.

### தமஸ்குவைப்பற்றியச் செய்தி

23 இச்செய்தி தமஸ்குவைப்பற்றியது:
"ஆமாத், அர்ப்பாத் ஆகிய பட்டணங்கள்
அஞ்சுகின்றன. அவர்கள் பயப்படுகிறார்கள்.
ஏனென்றால், அவர்கள் கெட்டச் செய்தி
களைக் கேட்டனர். அவர்கள் அதைரியப்
படுகிறார்கள். அவர்கள் கவலைப்படுகிறார்
கள், பயப்படுகிறார்கள்.
24 தமஸ்கு நகரம் பலவீனமாயிற்று. ஜனங்
கள் ஓட விரும்புகின்றனர். ஜனங்கள் திகில்
அடைய தயாராகின்றனர். குழந்தை பெறும்
பெண்களைப் போன்று ஜனங்கள் வலியும்
துன்பமும் அடைகின்றனர்.
25 "தமஸ்கு மகிழ்ச்சியுள்ள நகரமாயி
ருக்கிறது. ஜனங்கள் அந்த 'மகிழ்ச்சி நகரை'
இன்னும்விட்டுப் போகவில்லை.
26 எனவே, இளைஞர்கள் நகரின் பொதுச்ச
துரங்களில் மரிப்பார்கள். அந்த நேரத்தில்
அவளது வீரர்கள் எல்லோரும் கொல்லப்படு
வார்கள்." சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைச் சொன்னார்.
27 "தமஸ்குவின் சுவர்களில் நான்
நெருப்பை வைப்பேன். அது பெனாதாத்தின்
பலமான கோட்டைகளை முழுவதுமாக
எரிக்கும்."

### கேதார் மற்றும் காத்சோர் பற்றியச் செய்தி

28 இது கேதார் மற்றும் காத்சோர் கோத்தி
ரத்தை ஆள்வோர்களைப்பற்றிய செய்தி.
பாபிலோன் அரசனின் நேபுகாத்நேச்சார்
அவர்களைத் தோற்கடித்தான். கர்த்தர் கூறு
கிறார். "போய் கேதாரின் கோத்திரத்தை
தாக்கு.கிழக்கின் ஜனங்களை அழியுங்கள்.
29 அவர்களின் கூடாரங்களும் மந்தைகளும்
எடுக்கப்படும். அவர்களின் கூடாரம் மற்றும்
அவர்களின் செல்வமெல்லாம் எடுக்கப்படும்.
பகைவர்கள் அவர்களது ஒட்டகங்களை
எடுப்பார்கள். இதனை ஆண்கள் அவர்களி
டம் சத்தமிடுவார்கள். 'நம்மைச் சுற்றிலும்
பயங்கரமானவை நிகழ்ந்துகொண்டிருக்கின்
றன.'
30 வேகமாக ஓடுங்கள்! காத்சோரின் ஜனங்
களே, ஒளிந்துக்கொள்ள நல்ல இடத்தைப்
பாருங்கள்" என்று கர்த்தர் சொல்லுகிறார்.
'நேபுகாத்நேச்சார் உனக்கு எதிராக திட்ட
மிட்டான். உன்னைத் தோற்கடிக்க அவன்
ஒருநல்ல திட்டத்தை நினைத்தான்.
31 "பாதுகாப்பை உணர்கிற ஒரு தேசம்
இருக்கிறது. அத்தேசம் பாதுகாப்பை உணர்
கிறது. அந்தத் தேசத்திற்கு வாசலோ வேலி

யோ பாதுகாப்புக்கு இல்லை. அவற்றின்
அருகில் எவரும் இல்லை. கர்த்தர், ‘அத்
தேசத்தைத் தாக்குங்கள்!’ என்றார்.
32பகைவர்கள் அவர்களின் ஒட்டகங்
களைத் திருடுவார்கள், அவர்களின் பெரிய
மந்தையை எடுத்துக்கொள்வார்கள். நான்
பூமியின் மூலைகளுக்கு அவர்களை ஓடச்
செய்வேன். நான் அவர்களுக்குப் பயங்கர
மான துன்பங்களை எல்லா பக்கத்திலி
ருந்தும் கொண்டுவருவேன்” என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
33“ஆசோர் தேசம், காட்டு நாய்கள் மட்டும்
வாழத்தக்க இடமாக மாறும். அந்த இடத்தில்
எவரும் வாழ்வதில்லை. அது என்றென்றும்
காலியான வனாந்தரமாக இருக்கும்.”

### ஏலாமைப் பற்றியச் செய்தி

34யூதாவின் அரசனான சிதேக்கியாவின்
ஆட்சியின் ஆரம்ப நாட்களில், தீர்க்கதரிசி
எரேமியா கர்த்தரிடமிருந்து ஒரு செய்தி
யைப் பெற்றான். அச்செய்தி ஏலாம் தேசத்
தைப்பற்றியது.
35சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்.
“நான் விரைவில் ஏலாமின் வில்லை
உடைப்பேன். வில் ஏலாமின் பலமான
ஆயுதம்.
36நான் ஏலாமிற்கு எதிராக நான்கு காற்று
களைக் கொண்டு வருவேன். நான் அவற்றை
வானத்தின் நான்கு மூலைகளில் இருந்தும்
கொண்டுவருவேன். நான்கு காற்றுகளும்
வீசுகிற பூமியின் அனைத்து இடங்களுக்கும்
ஏலாம் ஜனங்களை அனுப்புவேன். எல்லா
தேசங்களுக்கும் ஏலாமின் கைதிகள்கொண்டு
செல்லப்படுவார்கள்.
37நான் ஏலாமை, அவர்களின் பகைவர்கள்
கவனிக்கும்போதே துண்டுகளாக உடைப்
பேன். அவர்களைக் கொல்ல விரும்பும்
ஜனங்களின் முன்னால் ஏலாமை நான்
உடைப்பேன். நான் அவர்களுக்குப்
பயங்கரமானவற்றைக் கொண்டுவருவேன்.
நான் எவ்வளவு கோபமாக இருக்கிறேன்
என்பதைக் காட்டுவேன்” என்று கர்த்தர்
சொல்லுகிறார். “நான் ஏலாமைத் துரத்தும்
படி வாளை அனுப்புவேன். நான் அவர்கள்
அனைவரையும் கொல்லும்வரை அந்த வாள்
அவர்களைத் துரத்தும்
38“நான் கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறேன்
என்பதை ஏலாமிற்குக் காட்டுவேன். நான்
அவளது அரசனையும் அவளது அதிகாரிக
ளையும் அழிப்பேன்” என்று கர்த்தர் சொல்
லுகிறார்.
39“ஆனால் எதிர்காலத்தில், நான்
ஏலாமிற்கு நன்மை நடக்கும்படிச்
செய்வேன்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.

### பாபிலோன் பற்றியச் செய்தி

50 பாபிலோனைப் பற்றியும் பாபி
லோனிய ஜனங்களைப் பற்றியும்
கர்த்தர் பேசிய வார்த்தை இது. கர்த்தர்
இந்த வார்த்தையை எரேமியா மூலமாகப்
பேசினார்:
2“அனைத்து தேசங்களுக்கும் இதனை
அறிவியுங்கள்! ஒரு கொடியைத் தூக்கிச்
செய்தியை அறிவியுங்கள்!
முழுச் செய்தியையும் பேசுங்கள்; சொல்
லுங்கள்: ‘பாபிலோன் தேசம் கைப்பற்றப்
படும். அந்நிய தெய்வமாகிய பேல் தெய்வம்
அவமானம் அடைவான். பொய்த் தெய்வ
மாரிய மெரொதாக் தெய்வம் மிகவும் பயப்
படுவான். பாபிலோனின் விக்கிரகங்கள்
அவமானம் அடையும். அவளது தெய்வங்க
ளின் விக்கிரகங்கள் பயங்கரத்தால் நிறைந்
திருக்கும்.’
3வடக்கிலிருந்து ஒரு தேசம் பாபிலோ
னைத் தாக்கும். அத்தேசம் பாபிலோனைக்
காலியான வனாந்தரம் போலாக்கும். அங்கே
எவரும் வாழமாட்டார்கள். அங்கிருந்து
மனிதர்களும் மிருகங்களும் வெளியே ஓடு
வார்கள்.”

4கர்த்தர் கூறுகிறார்: “அந்த நேரத்தில்,
இஸ்ரவேல் ஜனங்களும் யூதாவின் ஜனங்
களும் சேர்வார்கள். அவர்கள் அழுவார்கள்.
அவர்கள் கூடி அழுவார்கள். அவர்களுடைய
தேவனாகிய கர்த்தரைத் தேட அவர்கள்
போவார்கள்.
5சீயோனுக்கு எப்படி போகவேண்டும்
என்று அந்த ஜனங்கள் கேட்பார்கள். அந்தத்
திசையில் அவர்கள் போகத் தொடங்கு
வார்கள். ஜனங்கள் சொல்லுவார்கள்,
‘வாருங்கள், கர்த்தருடன் நாம் ஒன்று சேர்
வோம். நாம் என்றென்றும் நிலைத் திருக்கும்
படி ஒரு ஒப்பந்தம் செய்துகொள்வோம்.
என்றென்றும் மறக்கமுடியாதபடி ஒரு ஒப்பந்
தத்தை நாம் செய்வோம்.”
6“எனது ஜனங்கள் காணமல் போன
ஆட்டைப் போன்று இருக்கிறீர்கள். அவற்
றின் மேய்ப்பர்கள் (தலைவர்கள்) தவறான
வழியில் வழிநடத்துகின்றனர். அவர்களின்
தலைவர்கள் அவர்களை மலைகளிலும்
குன்றுகளிலும் அலைய வைத்தார்கள். அவர்
களது ஆறுதலுக்குரிய இடம் எதுவென்று
அவர்கள் மறந்தார்கள்.
7எவர்கள் என் ஜனங்களைக் கண்டார்
களோ அவர்களை காயப்படுத்தினார்கள்.
அப்பகைவர்கள் ‘நாங்கள் தவறு எதுவும்
செய்யவில்லை’ என்று சொன்னார்கள்.
அந்த ஜனங்கள் கர்த்தருக்கு எதிராகப்பாவம்
செய்தார்கள். கர்த்தர் தாமே அவர்களுடைய
உண்மையான இளைப்பாறும் இடம். கர்த்தர்
தாமே அவர்களது முற்பிதாக்கள் நம்பின
தேவன்.
8“பாபிலோனை விட்டு ஓடுங்கள்.
பாபிலோனிய ஜனங்களின் தேசத்தை விட்டு
விலகுங்கள். மந்தையை வழிநடத்திச் செல்
லும் வெள்ளாடுகளைப் போன்று இருங்கள்.

9நான் வடக்கிலிருந்து பல தேசங்களைப்
ஒன்று சேர்ப்பேன். இந்தத் தேசங்களின்
குழு பாபிலோனுக்கு எதிராகச் சண்
டையிடத் தயாராகும். வடக்கிலிருந்து வரும்
ஜனங்களால் பாபிலோன் கைப்பற்றப்படும்.
இத்தேசங்கள் பாபிலோன் மேல் பல அம்
புகளை எய்யும் அந்த அம்புகள் போரி
லிருந்து வெறுங்கைகளோடு திரும்பிவராத
வீரர்களைப் போன்றிருக்கும்.
10பகைவர்கள் கல்தேயர் ஜனங்களின்
செல்வமெல்லாவற்றையும் எடுப்பார்கள்.
அவ்வீரர்கள் அவர்கள் விரும்பும் எல்லா
வற்றையும் எடுப்பார்கள்" என்று கர்த்தர்
சொல்லுகிறார்.
11"பாபிலோனே, நீ சந்தோஷமும் மகிழ்ச்
சியும் அடைந்தாய். நீ என் நாட்டை
எடுத்தாய். நீ ஒரு இளம்பசு தானியங்க
ளுக்குள் புகுந்தது போன்று சுற்றிலும்
ஆடுகிறாய். குதிரைகள் செய்வது போன்று
உனது சிரிப்புசந்தோஷ ஒலியாக உள்ளது.
12"ஆனால் உனது தாய் மிகவும்
அவமானம் அடைவாள் உன்னைப் பெற்ற
பெண் சங்கடம் அடைவாள். எல்லா தேசங்
களையும் விட பாபிலோன் குறைந்த முக்கி
யத்துவம் உடையது. அவள் காலியான,
வறண்ட வனாந்தரம்போல் ஆவாள்.
13கர்த்தர் அவரது கோபத்தைக் காட்டு
வார். எனவே அங்கே ஜனங்கள் எவரும்
வாழமாட்டார்கள். பாபிலோன் முழுவதும்
காலியாகும். "பாபிலோனைக் கடந்து
போகும் எவரும் பயப்படுவார்கள். அது
எவ்வளவு மோசமாக அழிக்கப்பட்டி
ருக்கிறதைப் பார்க்கும்போது அவர்கள் தங்
கள் தலைகளை அசைப்பார்கள்.
14"பாபிலோனுக்கு எதிராகப் போரிடத்
தயாராகுங்கள். வில்லோடுள்ள வீரர்கள்
அனைவரும் பாபிலோன் மேல் அம்பை
எய்யுங்கள். உங்கள் அம்புகளில் எதையும்
சேமிக்க வேண்டாம். பாபிலோன் கர்த்த
ருக்கு எதிராகப் பாவம் செய்திருக்கிறது.
15பாபிலோனைச் சுற்றியுள்ள வீரர்களே
வெற்றிகுரலை எழுப்புங்கள்! பாபிலோன்
முற்றுகையிடப்பட்டிருக்கிறது! அவளது
சுவர்களும் கோபுரங்களும் கீழே தள்ளப்
படும்! கர்த்தர் அவர்களுக்கு உரிய தண்ட
னையைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.
தேசங்களாகிய நீங்கள் பாபிலோனுக்கு
பொருத்தமான தண்டனையைக் கொடுக்க
வேண்டும். மற்ற தேசங்களுக்கு அவள்
என்ன செய்தாளோ அவற்றை அவளுக்குச்
செய்யுங்கள்.
16பாபிலோனில் உள்ள ஜனங்களைத்
தங்கள் விதையை விதைக்கவிடாதீர். அவர்
களை அறுவடையைச் சேகரிக்கவிடாதீர்.
பாபிலோனின் வீரர்கள் தம் நகரத்திற்கு பல
கைதிகளைக் கொண்டு வந்திருக்கின் றனர்.
இப்போது பகைவரது வீரர்கள் வந்
திருக்கிறார்கள். எனவே, அந்தக் கைதிகள்
திரும்பப்போயிருக்கிறார்கள். அக்கைதிகள்
தங்கள் சொந்த நாடுகளுக்குத் திரும்பி
ஓடிக்கொண்டிருக்கிறார்கள்.
17"நாடு முழுவதும் சிதறி இருக்கிற
மந்தையைப் போன்று இஸ்ரவேல் சிதறி
இருக்கிறது. இஸ்ரவேல் சிங்கங்களால்
துரத்தப்படுகின்ற ஆடு போன்று உள்ளது.
அசீரியா அரசன் தாக்குவது முதல் சிங்கம்
தாக்குவது போன்றது. பாபிலோன் அரசன்
நேபுகாத்நேச்சார் கடைசி சிங்கத்தைப்
போன்று தாக்கி அதன் எலும்புகளை
நொறுக்குவான்.
18எனவே, இஸ்ரவேலின் தேவனாகிய
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"நான் விரைவில் பாபிலோன் அரசனையும்
அவனது நாட்டையும் தண்டிப்பேன். நான்
அசீரியா அரசனைத் தண்டித்தது போன்று
அவனைத் தண்டிப்பேன்."
19"நான் இஸ்ரவேலை அவர்களின் சொந்த
வயல்களுக்கு மீண்டும் கொண்டு வருவேன்.
அப்பொழுது அவன் கர்மேல் மலையிலும்
பாசான் நாட்டிலும் விளைந்த உணவை
உண்ணுவான். அவன் உண்டு நிறைவு
பெறுவான். எப்பிராயீமின் மலைகளிலும்
கீலேயாத்திலும் அவன் உண்ணுவான்."
20கர்த்தர் கூறுகிறார், "அந்த நேரத்தில்,
இஸ்ரவேலின் குற்றத்தைக் கண்டுபிடிக்க
ஜனங்கள் மிகக் கடுமையாக முயலுவார்கள்.
ஆனால் அங்கே குற்றம் இருக்காது. யூதாவின்
பாவங்களை கண்டுபிடிக்க அவர்கள் முயலு
வார்கள். ஆனால் எந்தப் பாவத்தையும்
கண்டுபிடிக்க முடியவில்லை. ஏனென்றால்,
நான் இஸ்ரவேல் மற்றும் யூதாவிலிருந்து
உயிர் பிழைத்தவர்களை நான் காப்பாற்றிக்
கொண்டிருக்கிறேன். அவர்களது அனைத்
துப் பாவங்களையும் நான் மன்னித்து
விடுகிறேன்."
21கர்த்தர் கூறுகிறார்: "மெரதாயீம் தேசத்
தைத் தாக்கு! பேகோடில் வாழ்கின்ற
ஜனங்களைத் தாக்கு! அவர்களைத் தாக்கு!
அவர்களைக் கொல்! அவர்களை முழுமை
யாக அழி! நான் உனக்குக் கட்டளையிட்ட
அனைத்தையும் செய்.
22"நாடு முழுவதிலும் யுத்தத்தின் போரொ
லியைக் கேட்கலாம். அது பேரழிவின்
ஓசையாகும்.
23பாபிலோன், 'பூமியின் சம்மட்டி' என்று
அழைக்கப்பட்டது. ஆனால் இப்போது 'சம்
மட்டி' உடைக்கப்படுகிறது. எல்லா தேசங்
களையும்விட அதிகமாக அழிக்கப்பட்ட
தேசம் பாபிலோன்.
24பாபிலோனே, நான் உனக்காகக் கண்ணி
வைத்தேன். அதனைத் தெரிந்துகொள்வதற்கு
முன்னால் நீ மாட்டிக்கொண்டாய். நீ கர்த்த
ருக்கு எதிராகச் சண்டையிட்டாய். எனவே
நீ கண்டுபிடிக்கப்பட்டு பிடிப்பட்டாய்.
25கர்த்தர் தமது பொருட்கள் சேமிக்கும்
அறையைத் திறந்திருக்கிறார். கர்த்தர் அவரு

டைய கோபத்தின் ஆயுதங்களை வெளியே
கொண்டு வந்தார். சர்வ வல்லமையுள்ள
தேவனாகிய கர்த்தர் அந்த ஆயுதங்களைக்
கொண்டு வந்தார். ஏனென்றால், அவர்
செய்யவேண்டிய வேலை இருக்கிறது. கல்
தேய ஜனங்களின் தேசத்தில் அவர் செய்ய
வேண்டிய வேலை இருக்கிறது.
26"பாபிலோனுக்கு எதிராகத் தொலை
தூரத்திலிருந்து வா. அவள் தனது தானி
யங்களைச் சேகரித்து வைத்திருக்கிற அறை
களை உடைத்துத் திற. பாபிலோனை முழு
மையாக அழி. எவரையும் உயிரோடு
விடாதே. அவர்களது உடல்களைத் தானியக்
கதிர்களைக் குவியலாக்குவதுபோல் குவிய
லாக்கு.
27பாபிலோனில் உள்ள எல்லா
இளங்காளையும் (இளைஞரையும்) கொல்.
அவர்கள் வெட்டப்படட்டும். அவர்கள்
தோற்கடிக்கப் படுவதற்கானநேரம் வந்திருக்
கிறது. எனவே இது அவர்களுக்கு மிகக்
கேடாகும். இது அவர்கள் தண்டிக்கப்
படுவதற்குரிய காலம்.
28ஜனங்கள் பாபிலோனை விட்டு ஓடிக்
கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தேசத்திலி
ருந்து தப்பித்துக்கொண்டிருக்கிறார்கள்.
அந்த ஜனங்கள் சீயோனுக்கு வந்துகொண்டி
ருக்கிறார்கள். அந்த ஜனங்கள் ஒவ்வொ
ருவரிடமும் கர்த்தர் செய்தவற்றைச்
சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். கர்த்தர்
பாபிலோனுக்கு ஏற்ற தண்டனையைக்
கொடுத்துக் கொண்டிருக்கிறார் என்று
ஜனங்கள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.
பாபிலோன் கர்த்தருடைய ஆலயத்தை அழித்
தது. எனவே இப்போது கர்த்தர் பாபி
லோனை அழித்துகொண்டிருக்கிறார்.

29"அம்புகளை எய்யும் ஆட்களைக்
கூப்பிடு. பாபிலோனைத் தாக்கும்படி அவர்
களிடம் சொல். நகரத்தை முற்றுகையிடும்படி
அவர்களிடம் சொல். எவரையும் தப்பிக்க
விடாதே. அவள் செய்த தீமைக்கு, திருப்பிக்
கொடுங்கள். அவள் மற்ற தேசங்களுக்கு
எவற்றைச் செய்தாளோ அவற்றை அவ
ளுக்குச் செய்யுங்கள். பாபிலோன் கர்த்த
ருக்கு மரியாதை செய்யவில்லை. பாபி
லோன் இஸ்ரவேலின் பரிசுத்த
மானவரிடம் மிகவும் மோசமாக நடந்து
கொண்டது. எனவே பாபிலோனைத்
தண்டித்துவிடு.
30பாபிலோனின் இளைஞர்கள் தெருவில்
கொல்லப்படுவார்கள். அந்த நாளில் அவளது
வீரர்கள் எல்லாம் கொல்லப்படுவார்கள்"
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
31"பாபிலோனே, நீ மிகவும் வீண்பெருமை
உள்ளவள். நான் உனக்கு எதிராக இருக்
கிறேன்" எங்கள் சர்வ வல்லமையுள்ள
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறுகி
றார். "நான் உங்களுக்கு எதிராக
இருக்கிறேன். நீங்கள் தண்டிக்கப் படுவதற்
குரிய காலம் வந்திருக்கிறது.
32வீண் பெருமையுள்ள பாபிலோனே
இடறி விழுவாய். நீ எழ எவரும்
உதவி செய்யமாட்டார்கள். நான் அவளது
பட்டணங்களில் நெருப்பை வைப்பேன்.
அவளைச் சுற்றியுள்ள எல்லோரையும்
நெருப்பு முழுமையாக எரிக்கும்."
33சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"இஸ்ரவேல் ஜனங்களும் யூதா ஜனங்களும்
அடிமைகளாக இருக்கிறார்கள். பகைவர்
அவர்களைக் கைப்பற்றினார்கள். பகைவர்
இஸ்ரவேலைப் போக விடமாட்டார்கள்.
34ஆனால் தேவன் அந்த ஜனங்களைத்
திரும்பக் கொண்டுவருவார். அவரது நாமம்
சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர்
அவர் அவர்களைப் பலமாகப் பாதுகாப்பார்!
அவர்களை அவர் பாதுகாப்பார். அதனால்
அவர் அந்த தேசத்தை ஓய்வுகொள்ளச்
செய்வார். ஆனால் அங்கே பாபிலோனில்
வாழ்கிற ஜனங்களுக்கு ஓய்வு இராது."
35கர்த்தர் கூறுகிறாா, "வாளே, பாபிலோ
னில் வாழ்கிற ஜனங்களைக் கொல். வாளே,
அரசனின் அதிகாரிகளையும் பாபிலோனின்
ஞானிகளையும் கொல்'

36வாளே, பாபிலோனின் ஆசாரியர்களை
யும், கள்ளத் தீர்க்கதரிசிகளையும் கொல்.
அவர்கள் முட்டாள்களைப் போன்று ஆவார்
கள். வாளே, பாபிலோனின் வீரர்களைக்
கொல். அவர்கள் பயங்கரத்தினால் நிறைந்தி
ருப்பார்கள். 37வாளே, பாபிலோனின் குதிரை
களைக் கொன்றுப்போட்டு பாபிலோனிய
இரதங்களை அழித்துப்போடு. வாளே, பிற
தேசங்களில் இருந்து கூலிக்குக் கொண்டு
வரப்பட்ட வீரர்களையும் கொல். அவ்வீரர்
கள் பயந்தப் பெண்களைப் போன்றுள்
ளார்கள். வாளே, பாபிலோனின் பொக்கிஷங்
களை அழி. அப்பொக்கிஷங்கள் எடுத்துச்
செல்லப்படும்.
38வாளே, பாபிலோனின் தண்ணீரைத்
தாக்கு. அத்தண்ணீர் வற்றிப்போகும். பாபி
லோனில் நிறைய நிறைய விக்கிரகங்கள்
உள்ளன. பாபிலோன் ஜனங்கள் முட்டாள்
கள் என்பதை அந்த விக்கிரகங்கள் காட்டு
கிறது. எனவே அந்த ஜனங்களுக்குத் தீமை
ஏற்படும்.
39"பாபிலோன் மீண்டும் ஜனங்களால்
நிறையாது. காட்டு நாய்கள், நெருப்புக்
கோழிகள், பிற காட்டு மிருகங்கள் அங்கு
வாழும். ஆனால் ஒருக்காலம் மீண்டும்
மனிதர்கள் அங்கே வாழமாட்டார்கள்.
40தேவன் முழுமையாக சோதோம்
கொமோராமற்றும் அவற்றைச் சுற்றியுள்ள
நகரங்களையும் அழித்தார். இப்பொழுது
அந்நகரங்களில் ஜனங்கள் எவரும் வாழ
வில்லை. அதே வழியில் பாபிலோனில்
ஜனங்கள் எவரும் வாழவில்லை. அங்கே

வாழ ஜனங்கள் எவரும் என்றென்றும் போகமாட்டார்கள்.

41 “பார்! வடக்கிலிருந்து ஜனங்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வல்லமையான நாட்டிலிருந்து வருகிறார்கள். உலகின் சுற்றிலும் உள்ள பல அரசர்கள்சேர்ந்து வந்து கொண்டிருக்கிறார்கள்.

42 அவர்களது படைகள் வில்லும் ஈட்டிகளும் வைத்திருக்கிறார்கள். வீரர்கள் கொடுமையானவர்கள். அவர்களிடம் இரக்கம் இல்லை. வீரர்கள் தங்கள் குதிரைகளின் மேல் சவாரி செய்கிறார்கள். அந்த ஓசை இரைச்சலிடுகிற கடலைப் போன்றுள்ளது. அவர்கள் தம் இடங்களில் நிற்கிறார்கள். போருக்குத் தயாராக இருக்கிறார்கள். அவர்கள் பாபிலோன் நகரமே, உன்னைத் தாக்கத் தயாராக இருக்கிறார்கள்.

43 பாபிலோன் அரசன் அப்படைகளைப் பற்றிக் கேள்விபட்டான். அவன் மிகவும் பயம் அடைந்தான். அவன் கைகள் நகர முடியாத அளவிற்குப் பயந்தான். குழந்தை பெறுகிற பெண்ணின் வயிறு போன்று அவனது வயிறு வலித்தது.”

44 கர்த்தர் கூறுகிறார்: “சில நேரங்களில் யோர்தான் நதிக் கரையிலுள்ள அடர்ந்த புதர்களிலிருந்து சிங்கம் வரும். ஜனங்கள் தங்கள் மிருகங்களை விட்டிருக்கிற வயல்களில் சிங்கம் நடந்துபோகும் .(அங்குள்ள மிருகங்கள் வெளியே ஓடும்.) நான் அந்தச் சிங்கத்தைப் போன்று இருப்பேன். நான் பாபிலோனை அதன் தேசத்திலிருந்து விரட்டுவேன். இதைச் செய்வதற்கும் நான் யாரைத் தேர்ந்தெடுப்பேன். என்னைப்போல் எவரும் இல்லை. எனக்குச் சவால்விட எவரும் இல்லை. (எனவே நானே இதனைச் செய்வேன்.) எந்த மேய்ப்பனும் வந்து என்னைத் துரத்திடான். நான் பாபிலோன் ஜனங்களைத் துரத்துவேன்.”

45 பாபிலோனுக்கு என்ன செய்யவேண்டும் என்று கர்த்தர் திட்டமிட்டிருக்கிறார் என்பதைக் கவனி.பாபிலோனிய ஜனங்களுக்கு கர்த்தர் செய்யவேண்டுமென முடிவு செய்திருப்பதைக் கவனி. பகைவர்கள் பாபிலோனின் மந்தையிலிருந்து (ஜனங்கள்) சிறிய குட்டிகளை இழுத்துச் செல்வான். பாபிலோனின் மேய்ச்சல் நிலங்கள் கர்த்தரால் முழுவதுமாக அழிக்கப்படும்.

46 பாபிலோன் விழும். அந்த வீழ்ச்சி பூமியை அதிரச்செய்யும் பாபிலோனின் அழுகையின் சத்தத்தை அனைத்து நாடுகளிலும் உள்ள ஜனங்கள் கேள்விப்படுவார்கள்.

51 கர்த்தர் கூறுகிறார்: “வல்லமையான ஒரு காற்றை நான் வீசச் செய்வேன். நான் அதனைப் பாபிலோனுக்கும் கல்தேயாவின் தலைவர்களுக்கும் எதிராக வீசச் செய்வேன்.

2 நான் பாபிலோனுக்கு அயல்நாட்டவரை அனுப்புவேன். அவர்கள் பாபிலோனைத் தூற்றுவார்கள். அந்த ஜனங்கள் பாபிலோனிலிருந்து எல்லாவற்றையும் எடுத்துக் கொள்வார்கள். நகரத்தைப் படைகள் முற்றுகையிடும். பயங்கரமான பேரழிவு ஏற்படும்.

3 பாபிலோன் வீரர்கள் தங்கள் வில்லையும் அம்பையும் பயன்படுத்தமாட்டார்கள். அவ்வீரர்கள் தங்கள் கவசங்களையும் கூட அணிந்துகொள்ள மாட்டார்கள். பாபிலோனிய இளைஞர்களுக்காக இரக்கம் கொள்ளாதே. அவளது படையை முழுவதுமாக அழித்துவிடு.

4 கல்தேயர்களின் தேசத்தில் பாபிலோனிய வீரர்கள் கொல்லப்படுவார்கள் அவர்கள் மோசமாகப் பாபிலோன் தெருக்களில் காயம் அடைவார்கள்.”

5 சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இஸ்ரவேல் மற்றும் யூதாவைத் தனியாகக் கணவனை இழந்த விதவைப் பெண்ணைப் போன்று விடமாட்டார். தேவன் அந்த ஜனங்களை விட்டு விடமாட்டார். இல்லை, அந்த ஜனங்கள் இஸ்ரவேலின் பரிசுத்தமானவரை விட்டு விலகின குற்றவாளிகள். அவர்கள் அவரை விட்டு விலகினார்கள். ஆனால் அவர் அவர்களை விட்டு விலகவில்லை.

6 பாபிலோனை விட்டு ஓடுங்கள்! உங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடுங்கள்! தங்காதீர்கள். பாபிலோனின் பாவத்தால் கொல்லப்படாதீர்கள் பாபிலோனின் ஜனங்களை அவர்கள் செய்த தீமைக்காக கர்த்தரால் தண்டிக்கப்படக்கூடிய காலம் இது! பாபிலோன் அவளுக்கு ஏற்றதான தண்டனையை பெறும்.

7 பாபிலோன் கர்த்தருடைய கையிலுள்ளதங்கக் கிண்ணத்தைப் போன்றிருந்தது. பாபிலோன் உலகம் முழுவதையும் குடிக்கும்படி செய்தது. தசங்கள் பாபிலோனின் திராட்சைரசத்தைக் குடித்தது. எனவே அவை புத்திமயங்கிப் போயின.

8 ஆனால் பாபிலோன் திடீரென்று விழுந்து உடைந்துபோகும். அவளுக்காக அழுங்கள்! அவளது வலிக்கு மருந்து வாங்குங்கள்! ஒரு வேளை அவள் குணம் பெறலாம்!

9 நான் பாபிலோன் குணமடைய முயன்றோம். ஆனால் அவளால் குணம் பெற முடியாது. எனவே, அவளை விட்டு விடுங்கள். நம் சொந்த நாட்டுக்கும் நம்மில் ஒவ்வொருவரும் போக விடுங்கள். பரலோகத்திலுள்ள தேவன் பாபிலோனின் தண்டனையை முடிவு செய்வார். பாபிலோனுக்கு என்ன நேரும் என்பதையும் அவர் முடிவு செய்வார்.

10 கர்த்தர் நமக்காக காரியங்களைச் சரி செய்துள்ளார். வாருங்கள், நமது தேவனாகிய கர்த்தர் செய்திருக்கிறவற்றை பற்றி சீயோனில் எடுத்துச் சொல்லுவோம்.

11அம்புகளைக் கூர்மைப்படுத்துங்கள்! கேடயங்களை வாங்குங்கள்! கர்த்தர் மேதிய ருடைய அரசர்களின் ஆவியை எழுப்பி னார். ஏனென்றால், அவர் பாபிலோனை அழிக்க விரும்புகிறார். பாபிலோனிய ஜனங் களுக்கு ஏற்ற தண்டனையைக் கர்த்தர் கொடுப்பார். எருசலேமில் கர்த்தருடைய ஆலயத்தைப் பாபிலோன் படை அழித்தது. எனவே கர்த்தர் அவர்களுக்குரிய தண்ட னையை கொடுப்பார்.
12பாபிலோன் சுவர்களுக்கு எதிராகக் கொடியை உயர்த்துங்கள் மேலும் காவலாளி களைக்கொண்டு வாருங்கள். அவர்களின் இடங்களில் காவல்காரர்களைப் போடுங்கள். இரகசிய தாக்குதலுக்குத் தயாராகுங்கள். கர்த்தர், தான் திட்டமிட்டப்படிச் செய்வார். பாபிலோன் ஜனங்களுக்கு எதிராக எதைச் செய்வேன் என்று சொன்னாரோ அதைச் செய்வார்.
13பாபிலோனே, நீ மிகுந்த தண்ணீருக்கு அருகில் வாழ்கிறாய். நீ பொக்கிஷங்களோடு செல்வத்துடன் இருக்கிறாய். ஆனால் உனது முடிவு வந்திருக்கிறது. உனது அழிவுக்கான காலம் வந்திருக்கிறது.

14சர்வ வல்லமையுள்ள கர்த்தர் தன் நாமத்தைப் பயன்படுத்தி இந்த வாக்குறுதி யைச் செய்தார். "பாபிலோனே, நான் உன்னைப் பல பகை வீரர்களால் நிரப்பு வேன். அவர்கள் வெட்டுக்கிளியின் கூட்டத் தைப் போன்றிருப்பார்கள். உனக்கு எதி ராகப் போரில் அவர்கள் வெல்வார்கள். அவர்கள் உனக்கு மேல் நின்றுகொண்டு வெற்றி முழக்கம் செய்வார்கள்."
15கர்த்தர் தனது பெரும் வல்லமையைப் பயன்படுத்தி பூமியை உண்டாக்கினார். அவர் தனது ஞானத்தைப் பயன்படுத்தி உலகத்தைப் படைத்தார். அவர் தனது பேரறிவினால் வானத்தை விரித்தார்.
16அவர் சத்தமிடுகையில், வானத்திலுள்ள தண்ணீர் இரைந்தது. அவர் பூமி முழுவதும் மேகங்களை அனுப்பினார். அவர் மழை யோடு மின்னல்களை அனுப்பினார். அவர் தனது சேமிப்பு அறையிலிருந்து காற்றைக் கொண்டு வந்தார்.
17ஆனால் ஜனங்கள் மிகவும் முட் டாள்களாக இருக்கிறார்கள். தேவன் என்ன செய்திருக்கிறார் என்று அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. திறமையுள்ள தொழிலாளிகள் பொய் தெய்வங்களின் விக்கிரகங்களைச் செய்தனர். அவ்விக்கிரகங் கள் மாயையான தெய்வங்களே. எனவே, அந்த விக்கிரகங்கள் அவைகளை உருவாக் கின தொழிலாளிகளின் முட்டாள்தனத்திற்கு சான்றாக இருக்கின்றன. அந்த விக்கிரகங்கள் உயிரற்றவை.
18அந்த விக்கிரகங்கள் பயனற்றவை. ஜனங்கள் அந்த விக்கிரகங்களைச் செய்தனர். அவை மாயை என்பதைத் தவிரவேறு எதுவுமில்லை. நியாயத்தீர்ப்புக்கான காலம் வரும். அந்த விக்கிரகங்கள் அழிக்கப்படும்.
19ஆனால் யாக்கோபுவின் பங்கு (தேவன்) அப்பயனற்ற விக்கிரகங்களைப் போன்றவ றில்லை. ஜனங்கள் தேவனை உருவாக்க வில்லை தேவனே தன் ஜனங்களை உருவாக்கினார். தேவன் எல்லாவற்றையும் உருவாக்கினார். அவரது நாமம் சர்வ வல்லமையுள்ள கர்த்தர்.
20கர்த்தர் கூறுகிறார், "பாபிலோனே, நீ எனது தண்டாயுதம். நான் உன்னைப் பயன்படுத்தி தேசங்களை நொறுக்கினேன். இராஜ்யங்களை அழிக்க நான் உன்னைப் பயன்படுத்தினேன்.
21நான் குதிரையையும், அதை ஓட்டுபவ னையும் நொறுக்க உன்னைப் பயன்படுத்தி னேன். இரத்ததையும் தேரோட்டியையும் நொறுக்க நான் உன்னைப் பயன்படுத்தி னேன்.
22ஆண்களையும் பெண்களையும் நொ றுக்க நான் உன்னைப் பயன்படுத்தினேன். இளைஞர்களையும் முதியவர்களையும் நொறுக்க நான் உன்னைப் பயன்படுத்தி னேன். இளம் ஆண்களையும் பெண்களையும் நொறுக்கநான் உன்னைப் பயன்படுத்தி னேன்.
23மேய்ப்பர்களையும் ஆடுகளையும் நொ றுக்க நான் உன்னைப் பயன்படுத்தினேன். விவசாயிகளையும் பசுக்களையும் நொறுக்க நான் உன்னைப் பயன்படுத்தினேன். ஆளுநர் களையும் முக்கிய அதிகாரிகளையும் நொறுக்க நான் உன்னைப் பயன்படுத்தி னேன்.

24ஆனால் பாபிலோனுக்குத் திருப்பிக் கொடுப்பேன். நான் பாபிலோனிய ஜனங்கள் அனைவருக்கும் திருப்பிக் கொடுப்பேன். அவர்கள் சீயோனுக்குச் செய்த அத்தனை தீமைகளுக்கும் திருப்பிக் கொடுப்பேன். யூதாவே, உனக்கு எதிரில் தானே நான் அவர்களைத் தண்டிப்பேன்" கர்த்தர் இவற் றைச் சொன்னார்.
25கர்த்தர் கூறுகிறார்: "பாபிலோனே, நீ ஒரு அழிக்கும் மலை. நான் உனக்கு எதிராக இருக்கிறேன். பாபிலோனே, முழு நாட்டையும் அழித்துவிட்டாய். நான் உனக்கு எதிராக இருக்கிறேன். நான் எனது கையை உனக்கு எதிராக வைப்பேன். நான் உன்னைக் கன்மலையிலிருந்து உருட்டுவேன். நான் உன்னை எரிந்துபோன மலையாக்குவேன்.
26ஜனங்கள் கட்டிடத்திற்கு அஸ்திவாரம் ஆக்கபாபிலோனிலிருந்து எந்த கல்லையும் எடுக்கமாட்டார்கள். ஜனங்கள் மூலைக்கல் லுக்குப் போதுமான அளவு பெரிய கல்லைக்கண்டு பிடிக்கமாட்டார்கள். ஏனென் றால், உனது நகரமானது கற்களின் குவி

யலாக என்றென்றைக்கும் இருக்கும்” கர்த்தர் இவற்றைக் கூறினார்.

27“இந்நாட்டில் போர்க்கொடியை ஏற்றுங்கள்! அனைத்து நாடுகளிலும் எக்காளத்தை ஊதுங்கள்! பாபிலோனுக்கு எதிராகச் சண்டை செய்ய தேசங்களைத் தயார் செய்யுங்கள்!

அந்த இராஜ்யங்களைப் பாபிலோனுக்கு எதிராகப் போரிட அழையுங்கள். ஆரராத், மின்னி, அஸ்கெனாஸ். அதற்கு எதிராகப் படை நடத்திச் செல்ல ஒரு தளபதியைத் தேர்ந்தெடு. வெட்டுக்கிளிக் கூட்டத்தைப் போன்ற குதிரைகளை ஏராளமாக அனுப்பு.
28அவளுக்கு எதிராகப் போரிட தேசங்களைத் தயார் செய். மேதியா தேசத்தின் அரசர்களைத் தயார் செய். அவர்களின் ஆளுநர்களையும் முக்கிய அதிகாரிகளையும் தயார் செய்.

பாபிலோனுக்கு எதிராகப் போரிட அவர்கள் ஆளும் தேசங்களைத் தயார் செய்.
29நிலமானது வலியோடு இருப்பது போன்று அசைந்து நடுங்குகிறது. கர்த்தர் தனது திட்டப்படி பாபிலோனுக்குச் செய்யும் போது தேசம் நடுங்கும். கர்த்தருடைய திட்டம் பாபிலோன் தேசத்தை காலியான வனாந்தரமாக்குவதே. அங்கே எவரும் வாழ மாட்டார்கள்.
30பாபிலோனிய வீரர்கள் சண்டையிடுவதை நிறுத்தினார்கள். அவர்கள் தங்கள் கோட்டைகளில் தங்கினார்கள். அவர்களின் பலம் போயிருக்கிறது. அவர்கள் திகிலடைந்த பெண்களைப் போன்று இருக்கிறார்கள். பாபிலோனின் வீடுகள் எரிந்து கொண்டிருக்கின்றன. அவளது கதவின் கட்டைகள் உடைக்கப்படுகின்றன.
31ஒரு தூதுவன் இன்னொருவனைப் பின் தொடருகிறான். அவர்கள் பாபிலோன் அரசனிடம் அவனதுநாடு முழுவதும் கைப்பற்றப்பட்டது என்று தெரிவிக்கின்றனர்.
32ஆற்றைக் கடக்கும் வழிகளை எல்லாம் கைப்பற்றப்பட்டிருக்கின்றன. சகதியான நிலம் எரிந்துகொண்டிருக்கின்றன. பாபிலோனிய வீரர்கள் அனைவரும் அஞ்சுகின்றனர்.”

33இஸ்ரவேலின் தேவனாகிய சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார், “பாபிலோன் மிதிக்கப்படும் களத்தைப்போன்று உள்ளது. அறுவடை காலத்தில் ஜனங்கள் பதரிலிருந்து தானியத்தைப் பிரிக்க அடிப்பார்கள். பாபிலோனை அடிக்கவேண்டிய காலம் விரைவாக வந்துகொண்டிருக்கிறது.”
34சீயோன் ஜனங்கள் இவ்வாறு கூறுவார்கள், “பாபிலோன் அரசனான நேபுகாத்நேச்சார் கடந்த காலத்தில் எங்களை அழித்தான். கடந்த காலத்தில் நேபுகாத்நேச்சார் எங்களைத் தாக்கினான். கடந்த காலத்தில் அவன் எங்கள் ஜனங்களைக் கொண்டு போனான். நாங்கள் காலியான ஜாடியைப் போன்றிருந்தோம். எங்களிடமிருந்த சிறந்தவற்றை அவன் எடுத்தான். அவன் பெரிய ராட்சதனைப் போன்று வயிறுநிறையும் வரை தின்று கொண்டிருந்தான். எங்களிடமுள்ள சிறந்தவற்றை எடுத்துக்கொண்டு எங்களை எரிந்து விட்டான்.
35எங்களைத் தாக்க பாபிலோன் பயங்கரமானவற்றைச் செய்தது. அவை இப்பொழுது பாபிலோனுக்கு ஏற்படவேண்டுமென்று நான் விரும்புகிறேன்.” சீயோனில் வாழ்கின்ற ஜனங்கள் அவற்றைச் சொல்வார்கள்: “பாபிலோனிய ஜனங்கள் எங்கள் ஜனங்களைக் கொன்ற குற்றம் உள்ளவர்கள். இப்பொழுது அவர்கள் தாம் செய்த தவறுக்குத் தண்டிக்கப்படுகிறார்கள்” எருசலேம் நகரம் அவற்றைச் சொல்லும்.
36எனவே கர்த்தர் கூறுகிறார், “யூதா உன்னை நான் பாதுகாப்பேன். பாபிலோன் தண்டிக்கப்படும் என்பதை நான் உறுதி செய்வேன். பாபிலோன் கடலை நான் வற்றச் செய்வேன். நான் அவளது நீரூற்றுக் களை வற்றச் செய்வேன்.
37பாபிலோன் அழிந்த கட்டிடங்களின் குவியலாக ஆகும். பாபிலோன் காட்டு நாய்கள் வாழத்தக்க இடமாகும். ஜனங்கள் கற்குவியலைப் பார்த்து ஆச்சரியப்படுவார்கள். அவர்கள் பாபிலோனைப் பற்றி நினைக்கும்போது தங்கள் தலைகளை அசைப்பார்கள் ஜனங்கள் எவரும் வாழாத இடமாக பாபிலோன் ஆகும்.

38“பாபிலோன் ஜனங்கள் கர்ச்சிக்கிற இளம் சிங்கங்களைப் போன்றவர்கள். அவர்களது சத்தம் சிங்கக் குட்டிகளைப் போன்றிருக்கும்.
39அந்த ஜனங்கள் வல்லமை மிக்க சிங்கங்களைப்போன்று நடித்துக் கொண்டிருக்கிறார்கள். நான் அவர்களுக்கு ஒரு விருந்து கொடுப்பேன். நான் அவர்களைக் குடிபோதையேறினவர்களாக்குவேன். அவர்கள் சிரிப்பார்கள். நல்ல நேரத்தைப் பெறுவார்கள். பிறகு அவர்கள் என்றென்றும் தூங்குவார்கள். அவர்கள் என்றும் விழிக்கமாட்டார்கள்” என்று கர்த்தர் சொல்லுகிறார்.
40“பாபிலோன் கொல்லப்படுவதற்காகக் காத்திருக்கும். ஆட்டுக்குட்டிகள், ஆட்டுக் கடாக்கள், வெள்ளாடுகள் போன்றிருக்கும். நான் அவற்றை வெட்டுவதற்குக் கொண்டு செல்வேன்.
41“சேசாக்கு” தோற்கடிக்கப்படும். பூமியிலே சிறந்ததும் கர்வமுள்ள நாடு எவ்வாறு சிறைப்பிடிக்கப்படும். மற்ற தேசங்களில் உள்ள ஜனங்கள் பாபிலோன் பாழாய்ப் போவதைக் கவனித்துப் பார்ப்பார்கள். அவர்கள் பார்க்கின்றவை அவர்களைப் பயப்படுத்தும்.
42பாபிலோன் மீது கடல் எழும்பும்.

அதன் இரைச்சலான அலைகள் அவளை
மூடும்.
43பாபிலோன் நகரங்கள் அழிக்கப்பட்டு
காலியாகும். பாபிலோன் வறண்ட வனாந்
தரமாகும். அது ஜனங்கள் வாழாத தேச
மாகும். ஜனங்கள் பாபிலோன் வழியாகப்பய
ணம் கூட செய்யமாட்டார்கள்.
44பாபிலோனிலுள்ள பொய்த் தெய்வமான
பேலைத் தண்டிப்பேன். அவன் விழுங்கிய
ஜனங்களைவாந்தி பண்ணும்படி செய்வேன்.
பாபிலோனைச் சுற்றியுள்ள சுவர்கள் கீழே
விழும். மற்ற தேசத்தார்கள் பாபிலோனுக்கு
வருவதை நிறுத்துவார்கள்.
45எனது ஜனங்களே, பாபிலோன் நக
ரத்தைவிட்டு வெளியே வாருங்கள். உங்கள்
உயிரைக் காப்பாற்ற ஓடுங்கள். கர்த்தருடைய
பெருங்கோபத்திலிருந்து ஓடுங்கள்.
46“எனது ஜனங்களே, பயந்து நடுங்க
வேண்டாம். வதந்திகள் பரவும் ஆனால்
பயப்பட வேண்டாம்! இந்த ஆண்டு ஒரு
வதந்தி வரும் அடுத்த ஆண்டு இன்னொரு
வதந்தி வரும். நாட்டில் நடக்கும் பயங்கர
மான சண்டையைப்பற்றி வதந்திகள் இருக்
கும். ஆள்வோர்கள் மற்ற ஆள்வோர்களுக்கு
எதிராகச் சண்டையிடுவதைப் பற்றி வதந்தி
கள் இருக்கும்.
47நேரம் நிச்சயம் வரும். பாபிலோனில்
உள்ள பொய்த் தெய்வங்களை நான் தண்டிப்
பேன். பாபிலோன் நாடு முழுவதும் வெட்கப்
படுத்தப்படும். ஏராளமாகச் மரித்த ஜனங்கள்
அந்நகரத் தெருக்களில் கிடப்பார்கள்.
48பிறகு பாபிலோனைப்பற்றி பரலோகமும்
பூமியும் அவற்றில் உள்ளனவும் மகிழ்ச்சியு
டன் சத்தமிடும். அவர்கள் சத்தமிடுவார்கள்.
ஏனென்றால், வடக்கிலிருந்து படை வந்து
பாபிலோனுக்கு எதிராகச் சண்டையிட்டது”
கர்த்தர் இவற்றைச் சொன்னார்.
49“இஸ்ரவேலில் உள்ள ஜனங்களைப்
பாபிலோன் கொன்றது. பூமியின் ஒவ்வொரு
இடத்திலும் உள்ள ஜனங்களைப் பாபி
லோன் கொன்றது. எனவே பாபிலோன்
விழவேண்டும்!
50வாளுக்குத் தப்பியவர்களே, வேகமாகப்
பாபிலோனை விட்டு விலகுங்கள். காத்தி
ருக்காதீர்கள்! நீங்கள் தொலைதூர நாட்டில்
இருக்கிறீர்கள். ஆனால், நீங்கள் எங்கே
இருந்தாலும் கர்த்தரை நினையுங்கள். எருச
லேமை நினையுங்கள்.
51“யூதாவின் ஜனங்களாகிய நாங்கள் அவ
மானமடைகிறோம். நாங்கள் நிந்திக்கப்பட்டி
ருக்கிறோம். ஏனென்றால், அந்நியர்கள் கர்த்த
ருடைய ஆலயத்தின் பரிசுத்தமான இடங்க
ளுக்குள் போயிருக்கிறார்கள்.”
52கர்த்தர் கூறுகிறார்: “நேரம் வந்து
கொண்டிருக்கிறது, நான் பாபிலோனின்
விக்கிரகங்களைத் தண்டிப்பேன் அப்போது,
புண்பட்ட ஜனங்கள் வலியுடன் நாட்டின்
எல்லா இடங்களிலும் அழுவார்கள்.
53பாபிலோன் வானத்தைத் தொடுகின்ற
வரை வளரலாம். பாபிலோன் தனது
கோட்டைகளைப் பலப்படுத்தலாம். ஆனால்
அந்நகரத்தை எதிர்த்து போரிடுமாறு நான்
ஜனங்களை அனுப்புவேன். அந்த ஜனங்கள்
அவளை அழிப்பார்கள்” கர்த்தர் இவற்றைக்
கூறினார்.
54“பாபிலோனில் ஜனங்கள் அழுது
கொண்டிருப்பதை நாங்கள் கேட்க முடியும்.
பாபிலோன் தேசத்தில் ஜனங்கள் பொருட்
களை அழித்துகொண்டிருக்கும் ஓசையைக்
கேட்க முடியும்.
55விரைவில் கர்த்தர் பாபிலோனை அழிப்
பார். அந்த நகரில் உள்ள உரத்த ஓசைகளை
அவர் நிறுத்துவார். பகைவர்கள் இரைகின்ற
அலைகளைப்போன்று வருவார்கள். சுற்றி
லும் உள்ள ஜனங்கள் அந்த இரைச்சலைக்
கேட்பார்கள். 56படை வந்து பாபிலோனை
அழிக்கும். பாபிலோனின் வீரர்கள் கைப்பற்
றப்படுவார்கள் அவர்களின் அம்புகள்
உடைக்கப்படும். ஏனென்றால், கர்த்தர்
ஜனங்கள் செய்த தீயசெயல்களுக்கு தண்ட
னையைக் கொடுக்கிறார். கர்த்தர் அவர்க
ளுக்கேற்ற முழு தண்டனையையும் கொடுக்
கிறார்.
57நான் பாபிலோனின் ஞானிகளையும்
முக்கியமான அதிகாரிகளையும் குடிமயக்கத்
துக்குள்ளாக்குவேன். நான் ஆளுநர்களையும்
அதிகாரிகளையும் வீரர்களையும்கூடக் குடிக்
கச்செய்வேன்.
பிறகு அவர்கள் என்றென்றைக்கும்
உறங்குவார்கள். அவர்கள் எப்பொழுதும்
எழ மாட்டார்கள்” அரசர் இவற்றைச்
சொன்னார். அவரது நாமம் சர்வ வல்
லமையுள்ள கர்த்தர்.
58சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்,
“பாபிலோனின் அகலமான வலிமையான
சுவர்கீழே தள்ளப்படும். அவளது உயர்ந்த
வாசல்கள் எரிக்கப்படும். பாபிலோன் ஜனங்
கள் கடினமான வேலை செய்வார்கள்.
ஆனால் அது உதவாது. அவர் நகரைக்
காப்பாற்ற முயல்வதில் சோர்ந்து போவார்
கள். ஆனால் அவர்கள் எரியும் நெருப்புக்கு
எண்ணெய் போன்று ஆவார்கள்.”

### எரேமியா பாபிலோனுக்குச் செய்தி அனுப்புகிறான்

59இதுதான் எரேமியா அதிகாரி செராயா
விற்குக் கொடுத்த செய்தி. செராயா நேரியா
வின் மகன். நேரியா மசெயாவின் மகன்.
செரேயா யூதாவின் அரசன் சிதேக்கியா
வோடு பாபிலோனுக்குப் போனான். இது
சிதேக்கியா யூதாவின் அரசனாக இருந்த
நான்காவது ஆட்சியாண்டில் நடந்தது. அப்
போது, எரேமியா இச்செய்தியை அதிகாரி
யான செரேயாவிடம் கொடுத்தான். 60எரே
மியா பாபிலோனுக்கு ஏற்படக் கூடிய
பயங்கரங்களைப்பற்றி புத்தகச் சுருளில்

எழுதியிருந்தான். அவர் பாபிலோனைப்
பற்றி எல்லாவற்றையும் எழுதியிருந்தான்.
61எரேமியா செராயாவிடம் சொன்னான்,
“செராயா, பாபிலோனுக்குப் போ, இச்செய்
தியை வாசிப்பதைப்பற்றி உறுதி செய்துக்
கொள். எனவே எல்லா ஜனங்களும் உன்
னைக் கேட்பார்கள். 62பிறகு சொல், ‘கர்த்
தாவே, இந்த இடத்தை அழிக்கப் போவதாகச்
சொன்னீர். நீர் அழிப்பீர். எனவே
மனிதர்களோ மிருகங்களோ இதில் வாழாது
இந்த இடம் என்றென்றும் காலியான அழி
விடமாக இருக்கும்.’ 63இப்புத்தகச் சுருளை
வாசித்து முடிந்த பிறகு இதில் ஒரு
கல்லைக்கட்டு. பிறகு இந்தப் புத்தகச் சுருளை
ஐபிராத்து நதியில் போடு. 64பிறகு சொல்,
‘இதே வழியில் பாபிலோன் மூழ்கும்,
பாபிலோன் என்றும் எழாது. பாபிலோ
னியர் மூழ்கிப் போவார்கள் ஏனென்றால்,
நான் இங்கே பயங்கரமானவை நிகழும்படிச்
செய்வேன்” எரேமியாவின் வார்த்தைகள்
இங்கே முடிகிறது.

### எருசலேமின் வீழ்ச்சி

52 சிதேக்கியா யூதாவின் அரசனான
போது அவனது வயது 21.
சிதேக்கியா எருசலேமை பதினோரு
ஆண்டுகள் ஆண் டான். அவளது தாயின்
பெயர் அமூத்தாள். அவள் எரேமியாவின்
மகள். அவனது குடும்பம் லீப்னா
ஊரிலிருந்து வந்தது. 2சிதேக்கியா
பொல்லாப்புகளை யோயாக்கீம்
போலச்செய்தான். சிதேக்கியா பொல்லாப்பு
களைச் செய்வதைக் கர்த்தர் விரும்ப
வில்லை. 3எருசலேமுக்கும் யூதாவுக்கும்
பயங்கரமானவை நேர்ந்தது. ஏனென்றால்
கர்த்தர் அவர்களுடன் கோபமாக இருந்தார்.
இறுதியாக, கர்த்தர் அவரது பார்வையிலி
ருந்து எருசலேம் மற்றும் யூதா ஜனங்களைத்
தூர எறிந்தார். சிதேக்கியா பாபிலோன்
அரசனுக்கு எதிராகத் திரும்பினான்.
4எனவே, சிதேக்கியாவின் 9வது ஆட்சி
யாண்டின் பத்தாவது மாதத்தின் பத்தாவது
நாளில் பாபிலோன் அரசனான நேபுகாத்
நேச்சார் எருசலேமிற்கு எதிராகப் படை
யெடுத்தான். நேபுகாத்நேச்சாரோடு அவனது
முழுப்படையும் இருந்தது. பாபிலோனின்
படையானது எருசலேமிற்கு வெளியே முகா
மிட்டது. நகரச்சுவரைச் சுற்றிலும் அவர்கள்
மதிற்சுவர்களைக் கட்டினார்கள். எனவே
அவர்களால் சுவரைத் தாண்ட முடிந்தது.
5எருசலேம் நகரமானது பாபிலோன் படை
யால் சிதேக்கியாவின் பதினோராவது
ஆட்சியாண்டு வரை முற்றுகையிடப்
பட்டது. 6அந்த ஆண்டின் நாலாவது
மாதத்தின் ஒன்பதாவது நாளில் நகரில்
பசியானது மிக அதிகமாக இருந்தது. நகர
ஜனங்கள் உண்பதற்கு உணவு எதுவும்
மீதியில்லை. 7அந்த நாளில் பாபிலோனின்
படை எருசலேமிற்குள் நுழைந்தது. எருசலே
மிலுள்ள வீரர்கள் வெளியே ஓடினார்கள்.
அவர்கள் இரவில் நகரைவிட்டு ஓடினார்கள்.
இரண்டு சுவர்களுக்கு இடையில் உள்ள
வாசல் வழியாக அவர்கள் போனார்கள்.
அந்த வாசல் அரசனின் தோட்டத்திற்கு
அருகில் இருந்தது. பாபிலோனின் படை
நகரை முற்றுகையிட்டிருந்தபோதிலும் எருச
லேம் வீரர்கள் மேலும் ஓடிக்கொண்டிருந்
தனர். அவர்கள் வனாந்தரத்தின் வழியாக
ஓடிப்போனார்கள்.

8ஆனால் பாபிலோனியப்படை அரசன்
சிதேக்கியாவைத் துரத்தியது. எரிகோ சம
வெளியில் அவர்கள் அவனைப் பிடித்தனர்.
அவனோடு வந்த வீரர்கள் ஓடிப்போய்
விட்டனர். 9பாபிலோன் படை அரசன்
சிதேக்கியாவைக் கைப்பற்றினர். அவர்கள்
அவனை ரிப்லா நகரத்திற்குக் கொண்டு
போயினர். ரிப்லா, ஆமாத் நாட்டில் இருக்
கிறது. ரிப்லாவில் பாபிலோன் அரசன்
சிதேக்கியா பற்றிய தீர்ப்பை அறிவித்தான்.
10ரிப்லா நகரத்தில் சிதேக்கியாவின் மகன்
களை பாபிலோன் அரசன் கொன்றான். தன்
மகன்கள் கொல்லப்படுவதைக் கவனிக்
கும்படி சிதேக்கியா வற்புறுத்தப்பட்டான்.
பாபிலோன் அரசன் யூதாவின் எல்லா
அதிகாரிகளையும் கொன்றான். 11பிறகு
பாபிலோன் அரசன் சிதேக்கியாவின் கண்
களைப் பிடுங்கினான். அவன் அவனுக்கு
வெண்கல சங்கிலிகளைப் போட்டான்.
பிறகு அவன் பாபிலோனுக்கு சிதேக்கி
யாவைக் கொண்டு போனான். பாபிலோ
னில் அவன் சிறையில் சிதேக்கியாவை
அடைத்தான். சிதேக்கியா மரித்துப்போகும்
வரை சிறையிலேயே இருந்தான்.

12நேபுசராதான், பாபிலோன் அரசனது
சிறப்பு காவல் படையின் தளபதி. அவன்
எருசலேமிற்கு வந்தான். நேபுகாத்நேச்சாரின்
19வது ஆட்சியாண்டின் ஐந்தாவது மாதத்
தின் 10வது நாளில் இது நடந்தது. பாபி
லோனில் நேபுசராதான் ஒரு முக்கியமான
தலைவன். 13நேபுசராதான் கர்த்தருடைய
ஆலயத்தை எரித்தான். அவன் எருசலேமில்
அரசனது அரண்மனையையும் இன்னும்
பல வீடுகளையும் எரித்தான். எருசலேமில்
உள்ள ஒவ்வொரு முக்கிய கட்டிடத்தையும்
எரித்தான். 14பாபிலோனியப்படை முழு
வதும் எருசலேமைச் சுற்றியுள்ள சுவர்களை
உடைத்தது. அப்படை அரசரது சிறப்புப்
படையின் தளபதியின்கீழ் இருந்தது. 15நேபுச
ராதான், தளபதி, எருசலேமில் மீதியாக
இருந்த ஜனங்களைக் கைதிகளாகச் சிறைப
டுத்தினான். பாபிலோன் அரசனிடம் சர
ணடைந்தவர்களையும் அவன் அழைத்துக்
கொண்டு போனான். எருசலேமில் மீதியாக
இருந்த கைவினைக் கலைஞர்களையும்
அவன் அழைத்துக் கொண்டு போனான்.
16ஆனால் நேபுசராதான் அந்நாட்டில் சில

ஏழைகளை மட்டும் விட்டுவிட்டுப்
போனான். திராட்சைத் தோட்டத்திலும்
வயல்களிலும் வேலை செய்யுமாறு அவர்
களை விட்டுவிட்டுப் போனான்.

17 பாபிலோனியப்படை ஆலயத்தில் உள்ள
வெண்கலத்தூண்களை உடைத்தார்கள். கர்த்
தருடைய ஆலயத்தில் உள்ள தாங்கிகளை
யும் வெண்கலத்தொட்டியையும் உடைத்தார்
கள். அவர்கள் பாபிலோனுக்கு அவ்வெண்
கலத்தைக் கொண்டுபோனார்கள். 18 பாபி
லோனியப்படை ஆலயத்திலிருந்து கீழ்க்
கண்டவற்றைக் கொண்டு போனது. செப்புச்
சட்டிகள், சாம்பல் எடுக்கும் கரண்டிகள்,
வெட்டுக்கத்திகள், கலங்கள், கலயங்கள்,
ஆராதனைக்குரிய சகல வெண்கலப்பணி
மூட்டுகள், 19 அரசனது சிறப்புக் காவல்
படையின் தளபதி இவற்றையும் கொண்டு
போனான். கிண்ணங்கள், நெருப்புத்தட்டுகள்,
கலங்கள், சட்டிகள், விளக்குத்தண்டுகள்,
கலயங்கள், கரகங்கள், பானபங்களின்
காணிக்கை மற்றும் வெள்ளியாலும் பொன்
னாலுமான எல்லாவற்றையும் அவன் எடுத்
தான். 20 இரண்டு தூண்கள், கடல் தொட்டியும்
அதனடியில் உள்ள பன்னிரெண்டு வெண்கல
காளைகளும் நகரும் தாங்கிகளும் மிக
கனமானவை. சாலொமோன் அரசன் கர்த்த
ருடைய ஆலயத்திற்காக செய்தான். எடை
பார்க்க முடியாத அளவுள்ள வெண்கலத்தை
இப்பொருட்கள் செய்ய பயன்படுத்தினான்.
21 ஒவ்வொரு வெண்கலத் தூணும் 31 அடி
உயரமுடையது. ஒவ்வொரு தூணும் 21
அடி சுற்றளவு உள்ளது. ஒவ்வொரு தூணும்
உள்ளே வெற்றிடம் கொண்டது. ஒவ்வொரு
தூணின் சுவரும் 3 அங்குலம் உடையது.
22 முதல் தூணின் மேலிருந்த குமிழின் உயரம்
8 அடி உயரம் உடையது. அதைச்சுற்றிலும்
வலைப் பின்னல்களாலும் மாதளம் பழங்
களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அடுத்
தத் தூணிலும் மாதளம்பழ அலங்காரம்
உண்டு. அது முதல் தூணைப்போன்றிருந்து
23 மொத்தம் 96 மாதுளம்பழங்கள் தூணின்
பக்கங்களில் தொங்கின. ஆக மொத்தம்
100 மாதுளம்பழங்கள். வலைப் பின்னலில்
தூண்களைச் சுற்றி இருந்தன.

24 அரசனின் சிறப்புக் காவல்படை தளபதி
செராயா மற்றும் செப்பனியாவை கைதி
களாகச் சிறைப்பிடித்தான். செராயா
தலைமை ஆசாரியன், செப்பனியா அடுத்த
ஆசாரியன். மூன்று வாயில் காவலர்களும்
சிறை பிடிக்கப்பட்டனர். 25 அரசனின் சிறப்
புக் காவல் படைத் தளபதி சண்டையிடு
வோரின் மேலதிகாரியைச் சிறைபிடித்தான்.
அவர் அரசனின் ஏழு ஆலோசகர்களையும்
சிறைபிடித்தான். எருசலேமில் அவர்கள்
அப்பொழுதும் இருந்தனர். படையில்
சேர்க்கின்ற எழுத்தாளனையும் அவன் பிடித்
தான். அவன் நகரில் இருந்த சாதாரண
ஆட்கள் 60 பேரையும் பிடித்தான். 26-27 நேபுச
ராதான் தளபதி இந்த அதிகாரிகள் எல்லோ
ரையும் பிடித்தான். அவன் அவர்களைப்
பாபிலோன் அரசனிடம் கொண்டு வந்தான்.
பாபிலோன் அரசன் ரிப்லா நகரில்
இருந்தான். ரிப்லா ஆமாத் நாட்டில் இருக்
கிறது. அந்த ரிப்லா நகரில், அரசன்
அதிகாரிகளையெல்லாம் கொல்லும்படி
கட்டளையிட்டான். எனவே யூதா ஜனங்கள்
தமது நாட்டிலிருந்து பிடித்து செல்லப்பட்
டனர். 28 நேபுகாத்நேச்சார் எத்தனை ஜனங்க
ளைக் கைது செய்தான் என்னும் பட்டியல்
இது:

> நேபுகாத்நேச்சாரின் ஏழாவது ஆட்சி
> யாண்டில் யூதாவிலிருந்து 3,023 ஆண்
> கள் கொண்டு செல்லப்பட்டனர்.
> 29 நேபுகாத்நேச்சாரின் 18வது ஆட்சி
> யாண்டில் 832 ஜனங்கள் கொண்டு
> செல்லப்பட்டனர். 30 நேபுகாத்நேச்சாரின்
> 23வது ஆட்சியாண்டில் நேபுசராதான்
> 745 பேரைக் கைது செய்து கொண்டு
> போனான். நேபுசராதான் அரசனின்
> சிறப்புக் காவல் படையின் தளபதி.
> மொத்தம் 4,600 ஜனங்கள் சிறை
> செய்யப்பட்டனர்.

### யோயக்கீன் விடுதலை செய்யப்படுகிறான்

31 யோயாக்கீன் யூதாவின் அரசன். இவன்
பாபிலோனில் 37 ஆண்டுகள் சிறையில்
இருந்தான். பாபிலோனின் அரசனான ஏவில்
மெரொதாக் யோயாக்கீனுடன் இரக்கமாயி
ருந்தான். அவ்வாண்டில் யோயாக்கீனை
சிறையைவிட்டு விடுவித்தான். இதே
ஆண்டில்தான் ஏவில்மெரொதாக் பாபிலோ
னின் அரசன் ஆனான். ஏவில்மெரொதாக்
12வது மாதத்தின் 25ஆம் நாளன்று யோயாக்
கீனை சிறையிலிருந்து விடுவித்தான்.
32 ஏவில்மெரொதாக் யோயாக்கீனுடன் இரக்
கமான வழியில் பேசினான். பாபிலோனில்
தன்னோடு இருந்த மற்ற அரசர்களுக்கு
ரியதைவிட கௌரவமான இடத்தைக்
கொடுத்தான். 33 எனவே யோயாக்கீன் தனது
சிறை உடையை நீக்கினான். மீதியுள்ள
வாழ்நாளில், அரசனின் மேசையில் ஒழுங்
காகச் சாப்பிட்டான். 34 ஒவ்வொரு நாளும்
பாபிலோன் அரசன் யோயாக்கீனுக்கு
உதவித்தொகை கொடுத்தான். யோயாக்கீன்
மரிக்கும்வரை இது தொடர்ந்தது.

# எரேமியாவின் புலம்பல்

### எருசலேம் அவளது அழிவிற்காக அழுகிறாள்

1 எருசலேம் ஒரு காலத்தில் ஜனங்கள்
நிறைந்த நகரமாக இருந்தது. ஆனால்
இப்போது, இந்த நகரம் வனாந்தரமாயுள்ளது!
எருசலேம் உலகத்தில் பெரிய நகரங்களுள்
ஒன்றாயிருந்தது. ஆனால் இப்போது, அவள்
ஒரு விதவையைப் போன்றிருக்கிறாள்.
அவள் ஒரு காலத்தில் நகரங்களில் இளவரசி
யைப் போன்றிருந்தாள். ஆனால் இப்பொ
ழுது அடிமையாக்கப்பட்டிருக்கிறாள்.
2 அவள் இரவில் பரிதாபமாக அழுகிறாள்.
அவளது கண்ணீர் அவளின் கன்னங்களில்
உள்ளது. இப்பொழுது யாருமே அவளைத்
தேற்றுவாரில்லை. பல நாடுகள் அவளிடம்
நட்புடனிருந்தன. இப்பொழுது யாரும் அவ
ளுக்கு ஆறுதல் அளிக்கவில்லை. அவளது
அனைத்து நண்பர்களும் அவளுக்கு முது
கைத் திருப்பிக் கொண்டனர். அவளது
நண்பர்கள் அவளின் எதிரிகளானார்கள்.

3 யூதா மிகவும் துன்புற்றது. பிறகு, யூதா
சிறையெடுக்கப்பட்டது. யூதா மற்ற
நாடுகளுக்கு மத்தியில் வாழ்கிறது. ஆனால்,
அவள் ஓய்வைப் பெற்றிருக்கவில்லை.
ஜனங்கள் அவளைத் துரத்திப் பிடித்தார்கள்.
அவர்கள் அவளைக் குறுகலான பள்ளத்
தாக்குகளில் பிடித்தனர்.
4 சீயோனுக்குப் போகிற சாலைகள் மிக
வும் துக்கப்படுகின்றன. ஏனென்றால், விடு
முறை நாட்களைக் கழிக்க எவரும் இனிமேல்
வருவதில்லை. சீயோனின் அனைத்து வாசல்
களும் அழிக்கப்பட்டன. சீயோனின்
அனைத்து ஆசாரியர்களும் தவிக்கிறார்கள்.
சீயோனின் இளம்பெண்கள் கடத்திக்
கொண்டு போகப்பட்டனர். இவை அனைத்
தும் சீயோனுக்கு துக்கத்தை ஏற்படுத்து
கிறது.
5 எருசலேமின் பகைவர்கள் வெற்றி
பெற்றார்கள். அவளது பகைவர்கள் வள
மடைந்தனர். இது ஏன் நிகழ்ந்தது. என்றால்,
கர்த்தர் அவளைத் தண்டித்தார். அவர்
எருசலேமை அவளது பல பாவங்களுக்காகத்
தண்டித்தார். அவளது பிள்ளைகள் வெளி
யேறிவிட்டனர். அவர்களது பகைவர்கள்
அவர்களைக் கைப்பற்றி பிடித்துக்கொண்டு
போனார்கள்.
6 சீயோன் மகளது* அழகு போய்விட்டது.
அவளது இளவரசர்கள் மான்களைப் போலா
னார்கள். அவர்கள் மேய்ச்சல் இடத்தைக்
கண்டு பிடியாத மானைப் போலானார்கள்.
அவர்கள் பலமில்லாமல் ஓடிப்போனார்கள்.
அவர்கள் தம்மை துரத்துகிறவனை விட்டு
ஓடிப்போனார்கள்.
7 எருசலேம் பின்னோக்கி நினைத்துப்
பார்கிறாள், எருசலேம் தான் பாதிக்கப்பட்டு
தன் வீடுகளை இழந்த காலத்தை நினைக்
கிறாள். அவள் கடந்த காலத்தில் தான்
பெற்றிருந்த இனிய காரியங்களை எண்ணிப்
பார்க்கிறாள். அவள் பழைய நாட்களில்
பெற்ற சிறந்தவற்றை நினைத்துப் பார்க்
கிறாள். அவள் தனது ஜனங்கள் எதிரிகளால்
சிறைபிடிக்கப்பட்டதை எண்ணிப் பார்க்
கிறாள். அவள் தனக்கு உதவ எவரும்
இல்லாத நிலையை எண்ணுகிறாள். அவளை
அவளது பகைவர்கள் பார்க்கும்போது சிரித்
தார்கள். ஏனென்றால், அவள் அழிக்கப்
பட்டாள்.
8 எருசலேம் மிக மோசமான பாவங்களைச்
செய்தாள். எருசலேம் பாவம் செய்ததால்,
அவள் அழிக்கப்பட்ட நகரமானாள். ஜனங்
கள் அவளது நிலையைக் கண்டு தங்களின்
தலைகளை அசைத்து மறுதலிக்கிறார்கள்.
கடந்த காலத்தில் ஜனங்கள் அவளை மதித்த
னர். இப்போது ஜனங்கள் அவளை வெறுக்
கின்றனர். ஏனென்றால், அவர்கள் அவளை
அவமானப்படுத்தினார்கள். எருசலேம் பெரு
மூச்சு விட்டு பின்னிட்டுத் திரும்பினாள்.
9 எருசலேமின் ஆடைகள் அழுக்காயின.
அவளுக்கு என்ன நிகழப்போகிறது என்ப
தைப் பற்றி அவள் எண்ணிப் பார்க்க
வில்லை. பார் நான் எப்படி காயப்பட்டேன்!
அவளது வீழ்ச்சி அதிசயமானது. அவளுக்கு
ஆறுதல் சொல்ல எவருமில்லை. “கர்த்
தாவே! நான் எவ்வாறு காயப்பட்டேன்
என்பதைப்பாரும்.எனது பகைவன் தன்னை
எவ்வளவு பெரியவனாக நினைக்கிறான்
என்பதைப் பாரும்!” என்று சொன்னாள்.
10 பகைவன் தனது கையை நீட்டினான்.
அவன் அவளது இன்பமான அனைத்தையும்
எடுத்துக்கொண்டான். உண்மையில், அவள்
தனது ஆலயத்திற்குள் அயல்நாட்டவர்கள்
நுழைவதைப் பார்த்தாள். கர்த்தாவே, அந்த

---

**சீயோன் மகள்** எருசலேமின் மற்றொரு பெயர்.

ஜனங்கள் எங்கள் சபையில் சேர முடியாது
என்று நீர் சொன்னீர்!
11எருசலேமின் அனைத்து ஜனங்களும்
தவிக்கிறார்கள். அவர்கள் உணவுக்காக
அலைகிறார்கள். அவர்கள் தங்கள் நல்ல
பொருட்களை உணவுக்காக மாற்றிக் கொண்
டார்கள். அவர்கள் உயிர் வாழ்வதற்காக
இவற்றைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.
எருசலேம் சொல்கிறது: "கர்த்தாவே என்
னைப் பாரும்! ஜனங்கள் என்னை எப்படி
வெறுக்கிறார்கள் பாரும்.
12சாலை வழியாகக் கடந்து செல்லும்
ஜனங்களே, நீங்கள் எனக்காக கவலை
படுகின்றவர்களாக தெரியவில்லை. ஆனால்
என்னைப் பாருங்கள். எனது வலியைப்
போன்று வேறு வலி உண்டோ? எனக்கு
வந்திருக்கிற வலியைப்போன்று வேறு வலி
இருக்கிறதா? கர்த்தர் என்னைத் தண்டித்
திருக்கிறது போன்ற வலி வேறு உள்ளதோ?
அவர் தனது பெருங்கோபமான நாளில்
என்னைத் தண்டித்திருக்கிறார்.
13கர்த்தர் மேலிருந்து நெருப்பை அனுப்பி
னார், அந்த நெருப்பு எனது எலும்பு
களுக்குள் சென்றது. அவர் எனது கால்
களுக்கு வலையை விரித்தார். என்னைப்
பின்னிட்டு விழப் பண்ணினார். என்னைப்
பாழ்நிலமாகப் பண்ணினார். நாள் முழுவதும்
நான் நோயுற்றிருந்தேன்.
14"எனது பாவங்கள் நுகத்தைப்போன்று
கட்டப்பட்டுள்ளது, எனது பாவங்கள் கர்த்த
ருடைய கைகளில் கட்டப்பட்டுள்ளது. கர்த்த
ருடைய நுகம் என் கழுத்தில் இருக்கிறது.
கர்த்தர் என்னை பலவீனமாக்கியுள்ளார்.
நான் எதிர்த்து நிற்க முடியாதபடி கர்த்தர்
என்னை ஒடுக்குகிற ஜனங்களின் கையில்
கொடுத்திருக்கிறார்.
15"கர்த்தர் எனது பலமான படை வீரர்
களை மறுத்துவிட்டார். அவ்வீரர்கள் நகரத்
திற்குள்ளே இருந்தனர், பிறகு கர்த்தர் ஒரு
ஜனக்குழுவை எனக்கு எதிராக கொண்டு
வந்தார். என்னுடைய இளம் வீரர்களைக்
கொல்வதற்காக அவர்களைக் கொண்டு
வந்தார். கர்த்தர் ஆலைக்குள்ளே திராட்
சைப் பழங்களை மதிப்பதுபோல யூதா
குமாரத்தியாகிய கன்னிகையை மதித்தார்.
16"நான் இவை அனைத்தின் நிமித்தம்
அழுகிறேன். எனது கண்களில் கண்ணீர்
ஓடுகிறது. எனக்கருகில் ஆறுதல் எதுவு
மில்லை. என்னைத் தேற்ற எவருமில்லை.
எனது பிள்ளைகள் பாழான நிலத்தைப்
போன்றிருக்கிறார்கள். அவர்கள் அவ்வாறு
இருக்கின்றனர். ஏனென்றால் பகைவர்கள்
வென்றிருக்கின்றனர்."
17சீயோன் தனது கைகளை விரித்தாள்.
அவளுக்கு ஆறுதல் சொல்ல எவருமில்லை.
கர்த்தர் யாக்கோபின் பகைவர்களுக்கு கட்ட
ளை கொடுத்திருக்கிறார். கர்த்தர் யாக்கோ
பின் பகைவர்களுக்கு நகரத்தைச் சுற்றி
வளைக்கும்படி கட்டளையிட்டார். எருச
லேம் அசுத்தமாகியிருக்கிறது. அந்தப் பகை
வர்களுக்கு மத்தியில் எருசலேம் அசுத்த
மாயிற்று.
18இப்போது எருசலேம் கூறுகிறாள்: "நான்
கர்த்தருக்கு செவிகொடுக்க மறுத்தேன்.
எனவே, கர்த்தர் இவற்றையெல்லாம் செய்
யும் உரிமையைப் பெற்றார். எனவே ஜனங்
களே, கவனியுங்கள்! எனது வேதனையைப்
பாருங்கள்! எனது இளம் பெண்களும்
ஆண்களும் சிறை பிடிக்கப்பட்டிருக்கிறார்
கள்.
19நான் எனது நேசர்களை கூப்பிட்டேன்.
ஆனால் அவர்கள் என்னை மோசம் பண்ணி
னார்கள். எனது ஆசாரியர்களும், முதியவர்
களும் இந்நகரத்தில் மரித்திருக்கின்றனர்.
அவர்கள் உணவுக்காக அலைந்திருக்கிறார்
கள். அவர்கள் உயிரோடு வாழ விரும்பி
யிருக்கிறார்கள்.
20"என்னைப் பாரும் கர்த்தாவே, நான்
மிக்க துன்பத்தில் இருக்கிறேன்! எனது
உள்மனம் கலங்குகிறது! எனது இதயம்
மேலிருந்து கீழ்ப்பக்கம் திரும்பினதுபோல்
உள்ளது! என்னுடைய கசப்பான அனுபவங்
களின் காரணமாக என் இதயம் இப்படி
உணர்கிறது! வீதிகளில் வாள் எனது
பிள்ளைகளைக் கொன்றது. வீடுகளுக்குள்
மரணம் இருந்தது.
21"என்னைக் கவனியுங்கள்! ஏனென்றால்,
நான் தவித்துக்கொண்டிருக்கிறேன். எனக்கு
ஆறுதல் சொல்ல எவரும் இல்லை! எனது
பகைவர்கள் எல்லாரும் என் துன்பத்தைக்
கேள்விப்பட்டு, அவர்கள் மகிழ்ச்சியோடு
இருக்கின்றனர். நீர் இவற்றை எனக்குச்
செய்ததால், அவர்கள் மகிழ்ச்சியாக இருக்
கிறார்கள். தண்டனைக்குரிய காலம் வரும்
என்று நீர் சொன்னீர். எனது பகைவர்
களைத் தண்டிப்பதாகச் சொன்னீர். நீர்
என்ன சொன்னீரோ அதை இப்பொழுது
செய்யும். நான் இப்பொழுது இருப்பது
போன்று என் பகைவரும் இருக்கட்டும்.
22"எனது பகைவர்கள் எவ்வளவு கொடிய
வர்கள் எனப்பாரும். எனது பாவங்களுக்
கெல்லாம் எனக்கு எவ்வாறு செய்தீரோ
அதே வழியில் அவர்களுக்கும் செய்யும்.
இதனைச் செய்யும். ஏனென்றால், நான்
மேலும் மேலும் வேதனையடைகிறேன்.
ஏனென்றால், எனது இதயம் நோயுற்றிருக்
கிறது."

### கர்த்தர் எருசலேமை அழித்தார்

2 கர்த்தர் சீயோன் மகளை ஒரு மேகத்தின்
கீழ் எவ்வாறு மூடி வைத்திருக்கிறார்
என்பதை பார். அவர் இஸ்ரவேலின் மகிமை
யை வானத்திலிருந்து பூமிக்கு எறிந்திருக்
கிறார். கர்த்தர் அவரது கோப நாளில்
இஸ்ரவேல் அவரது பாதபீடம் என்பதை தன்
மனதில் வைக்கவில்லை.

2கர்த்தர் யாக்கோபின் வீடுகளை அழித்
தார். அவர் அவற்றை இரக்கமில்லாமல்
அழித்தார். அவர் அவரது கோபத்தில்
யூதா மகளின்* கோட்டைகளை அழித்தார்.
கர்த்தர் யூதாவின் இராஜ்யத்தையும் அதன்
அரசர்களையும் தரையில் தூக்கி எறிந்தார்.
அவர் யூதாவின் இராஜ்யத்தை அழித்தார்.
3கர்த்தர் கோபமாக இருந்து இஸ்ரவேலின்
பலத்தை அழித்தார். அவர் தனது வலது
கையை இஸ்ரவேலிலிருந்து எடுத்தார். பகை
வர்கள் வந்தபோது அவர் இதனைச்செய்தார்.
அவர் யாக்கோபில் அக்கினி ஜூவாலைப்
போல் எரித்தார். அவர் சுற்றிலும் உள்ள
வற்றை எரிக்கிற நெருப்பைப்போன்று இருந்
தார்.
4கர்த்தர் தனது வில்லை ஒரு பகை
வனைப்போன்று வளைத்தார். அவர் தனது
வாளை வலது கையில் ஏந்தினார். அவர்
யூதாவினுள் கண்ணுக்கு அழகான ஆண்
களை எல்லாம் கொன்றார். கர்த்தர் ஒரு
பகைவனைப்போன்று அவர்களைக் கொன்
றார். கர்த்தர் தனது கோபத்தை ஊற்றினார்.
அவர் சீயோனின் கூடாரங்களில் அதனை
ஊற்றினார்.
5கர்த்தர் ஒரு பகைவனைப்போன்று ஆகி
யிருக்கிறார். அவர் இஸ்ரவேலை விழுங்கி
யிருக்கிறார். அவர் அவளது அரண்மனை
களையெல்லாம் விழுங்கினார். அவர்
அவளது கோட்டைகளையெல்லாம் விழுங்கி
னார். அவர் யூதா மகளின் மரித்த ஜனங்
களுக்காக மிகவும் துக்கமும் அழுகையும்
உண்டாக்கினார்.
6கர்த்தர் தனது சொந்த கூடாரத்தை
ஒரு தோட்டத்தின் செடிகளைப் பிடுங்கு
வதைப் போன்று பிடுங்கிப்போட்டார்.
ஜனங்கள் போய் கூடி அவரை தொழு
வதற்காக இருந்த இடத்தை அவர் அழித்
திருந்தார். கர்த்தர் சீயோனில் சிறப்பு சபைக்
கூட்டங்களையும், ஓய்வு நாட்களையும்
மறக்கப்பண்ணினார். கர்த்தர் அரசன் மற்றும்
ஆசாரியர்களை நிராகரித்தார். அவர் கோபங்
கொண்டு அவர்களை நிராகரித்தார்.
7கர்த்தர் அவரது பலிபீடத்தையும் தனது
தொழுவதற்குரிய பரிசுத்தமான இடத்தைப்
புறக்கணித்தார். அவர் எருசலேமின் அரண்
மனை சுவர்களை இடித்துப்போடும்படி பகை
வர்களை அனுமதித்தார். பண்டிகை நாளில்
ஆரவாரம் செய்வதுபோல் கர்த்தருடைய
ஆலயத்தில் ஆரவாரம் பண்ணினர்.
8சீயோன் மகளின் சுவர்களை அழித்திட
கர்த்தர் திட்டமிட்டார். அவர் ஒரு அளவு
கோட்டை சுவரில் குறித்து, அதுவரை
இடித்துப்போட வேண்டும் என்று காட்டி
னார். அவர் அழிப்பதிலிருந்து தன்னை
நிறுத்தவில்லை. எனவே, அவர் அனைத்து
சுவர்களையும் துக்கத்தில் அழும்படிச் செய்
தார். அவை எல்லாம் முற்றிலும் ஒன்றுக்கும்
உதவாது அழிந்துபோயின.
9எருசலேமின் வாசல்கள் தரையில்
அமிழ்ந்து கிடந்தன. அவர் அதன் தாழ்ப்பாள்
களை உடைத்து நொறுக்கிப் போட்டார்.
அவரது அரசன் மற்றும் இளவரசர்கள்
அயல் நாடுகளில் இருக்கிறார்கள். அங்கே
அவர்களுக்கு இனி வேறு போதனைகள்
எதுவுமில்லை. எருசலேமின் தீர்க்கதரிசி
களும் கூட கர்த்தரிடமிருந்து எந்தவித
மான தரிசனத்தையும் பெறவில்லை.
10சீயோனின் முதியவர்கள் தரையில் இருக்
கின்றனர். அவர்கள் தரையில் அமர்ந்து
மௌனமாக இருக்கிறார்கள். தம்தலையில்
அவர்கள் தூசியைப் போட்டனர். அவர்கள்
கோணியைப் போட்டுக் கொள்கிறார்கள்.
எருசலேமின் இளம்பெண்கள் துக்கத்தில்
தலைகளைக் குனிந்து தரையைப்
பார்க்கின்றனர்.
11எனது கண்கள் கண்ணீரால் களைத்துப்
போயின! எனது உள்மனம் கலங்குகிறது!
எனது இதயம் தரையில் ஊற்றப்பட்டது
போன்று உணர்கின்றது! எனது ஜனங்
களின் அழிவைக்கண்டு நான் இவ்வாறு
உணர்கிறேன். பிள்ளைகளும் குழந்தைகளும்
நகரத்தின் பொது வீதிகளின் மூலைகளிலும்
மயக்கமடைந்து கிடக்கின்றனர்.
12அப்பிள்ளைகள் தம் தாய்மார்களிடம்,
“அப்பமும் திராட்சைரசமும் எங்கே?” எனக்
கேட்கின்றனர். அவர்கள் இக்கேள்வியைக்
கேட்ட வண்ணமாகவே அவர்களின் தாயின்
மடியிலே மரிக்கின்றனர்.
13சீயோன் மகளே, நான் எதனோடு
உன்னை ஒப்பிட முடியும்? சீயோனின்
கன்னிகையே, நான் உன்னை எதனோடு
ஒப்பிடமுடியும்? நான் உன்னை எப்படி
ஆறுதல் செய்ய முடியும்? உனது அழி
வானது கடலைப்போன்று அவ்வளவு பெரி
தாக இருக்கிறது. எவரும் உன்னை குணப்
படுத்த முடியும் என்று நான் நினைக்க
வில்லை.
14உனது தீர்க்கதரிசிகள் உனக்காகத் தரி
சனம் கண்டார்கள். ஆனால் அவர்களது
தரிசனங்கள் எல்லாம் பயனற்றவை
காளாயின. அவர்கள் உனது பாவங்களுக்கு
எதிராகப் பேசவில்லை. அவர்கள் காரியங்
களைச் சரிபண்ண முயற்சி செய்யவில்லை.
அவர்கள் உனக்கு செய்திகளைப் பிரசங்கித்
தனர். ஆனால் அவை உன்னை ஏமாற்றும்
செய்திகள்.
15சாலையில் உன்னைக் கடந்துபோகும்
ஜனங்கள் உன்னைப்பார்த்து கைதட்டுகிறார்
கள். அவர்கள் பிரமித்து எருசலேம் மகளைப்
பார்த்து தலையாட்டுகிறார்கள். அவர்கள்,
“இதுதானா, ‘முழுமையான அழகுடைய
நகரம்’ ‘பூமியிலே எல்லோருக்கும் மகிழ்ச்சி
யளிப்பது’ என்று ஜனங்களால் அழைக்கப்
பட்ட நகரம்?” என்று கேட்கிறார்கள்.

---

**யூதா மகள்** யூதா கோத்திரம்.

[16]உனது எல்லா பகைவர்களும் உன்னைப் பார்த்து நகைப்பார்கள். அவர்கள் உன்னைப் பார்த்து பிரமித்து தம் பற்களைக் கடிக்கிறார்கள். அவர்கள், “நாங்கள் அவர்களை விழுங்கியிருக்கிறோம்! நாங்கள் உண்மையிலேயே இந்த நாளுக்காகவே நம்பிக்கொண்டிருந்தோம். நாங்கள் இறுதியாக இது நிகழ்வதைப் பார்த்திருக்கிறோம்” என்பார்கள்.

[17]கர்த்தர் தான் திட்டமிட்டபடியே செய்தார். அவர் எதைச் செய்வேன் என்று சொன்னாரோ அதையே செய்திருக்கிறார். நீண்ட காலத்திற்கு முன்பிருந்தே அவர் எதைக் கட்டளையிட்டாரோ அதைச் செய்திருக்கிறார். அவர் அழித்தார். அவரிடம் இரக்கம் இல்லை. உனக்கு ஏற்பட்டவற்றுக்காக அவர் உனது பகைவர்களை மகிழ்ச்சிப்படுத்தினார். அவர் உனது பகைவர்களைப் பலப்படுத்தினார்.

[18]கர்த்தரிடம் உனது இதயத்தை ஊற்றி கதறு! சீயோன் மகளின் சுவரே, ஒரு நதியைப் போன்று கண்ணீர் விடு! இரவும் பகலும் உன் கண்ணீரை வடிய விடு! நிறுத்தாதே! உனது கண்ணின் கறுப்புவிழி சும்மா இருக்கும்படிச் செய்யாதே!

[19]எழுந்திரு! இரவில் கதறு! இரவின் முதற்சாமத்தில் கதறு! உனது இதயத்தைத் தண்ணீரைப் போன்று ஊற்று! கர்த்தருக்கு முன்னால் உன் இதயத்தை ஊற்று! கர்த்தரிடம் ஜெபம் செய்வதற்கு உன் கைகளை மேலே தூக்கு. உன் குழந்தைகளை வாழவிடும்படி அவரிடம் கேள். பசியினால் மயங்கிக்கொண்டிருந்த உனது பிள்ளைகள் வாழும்படி நீ அவரிடம் கேள். நகரத்தின் எல்லா தெருக்களிலும் அவர்கள் பசியால் மயங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

[20]கர்த்தாவே, என்னைப்பாரும்! இந்த வழியில் யாரை நீர் நடத்தியிருக்கிறீர் என்று பாரும்! என்னை இக்கேள்வியைக் கேட்கவிடும்; பெண்கள் தாம் பெற்ற பிள்ளைகளையே தின்னவேண்டுமா? பெண்கள் தாம் கவனித்துக்கொள்ள வேண்டிய பிள்ளைகளையே தின்னவேண்டுமா? கர்த்தருடைய ஆலயத்தில் ஆசாரியரும் தீர்க்கதரிசியும் கொல்லப்படவேண்டுமா?

[21]நகர வீதிகளின் தரைகளில் இளைய ஆண்களும் முதிய ஆண்களும் விழுந்து கிடக்கின்றனர். கர்த்தாவே, நீர் அவர்களை உமது கோபத்தின் நாளில் கொன்றீர்! அவர்களை இரக்கமில்லாமல் கொன்றீர்!

[22]நீர் எல்லா இடங்களிலிருந்தும் பயங்கரங்களை என்மேல் வரசெய்தீர். பண்டிகை நாட்களுக்கு வரவழைப்பது போன்று நீர் பயங்கரங்களை வரவழைத்தீர். கர்த்தருடைய கோபநாளில் எவரும் தப்பவில்லை. நான் வளர்த்து ஆளாக்கியவர்களை என் பகைவன் கொன்றிருக்கிறான்.

### துன்பங்களின் அர்த்தம்

3 நான் அதிகமான துன்பங்களைப் பார்த்திருக்கிற மனிதன். கர்த்தர் கம்பால் எங்களை அடித்தார். நான் இது நிகழ்ந்ததைப் பார்த்தேன்!

[2]கர்த்தர் என்னை வெளிச்சத்தில் அல்ல இருட்டில் வழிநடத்தி கொண்டு வந்தார்.

[3]கர்த்தர் தனது கையை எனக்கு எதிராகத் திரும்பினார். அவர் நாள்முழுதும் இதனை மீண்டும் மீண்டும் செய்தார்.

[4]அவர் எனது சதையையும் தோலையும் முற்றலாக்கினார். அவர் எனது எலும்புகளை உடைத்தார்.

[5]கர்த்தர் எனக்கு எதிராகக் கசப்பையும் வருத்தத்தையும் ஏற்படுத்தினார். அவர் கசப்பையும் வருத்தத்தையும் என்னைச் சுற்றிலும் வரும்படி செய்தார்.

[6]அவர் என்னை இருட்டில் இருக்கும்படிச் செய்தார். நீண்ட காலமாகச் செத்துக்கிடக்கிற சிலரைப்போல என்னை அவர் செய்தார்.

[7]கர்த்தர் என்னை உள்ளே வைத்து பூட்டினார். என்னால் வெளியே வர முடியவில்லை. அவர் என்மீது கனமான சங்கிலிகளைப் போட்டார்.

[8]நான் கதறினாலும் உதவி கேட்டாலும் கர்த்தர் எனது ஜெபத்தைக் கேட்பதில்லை.

[9]அவர் எனது பாதையைக் கற்களால் அடைத்து விட்டார். அவர் எனது பாதையைத் கோணலாக்கினார்.

[10]கர்த்தர் என்னைத் தாக்க வரும் கரடியாய் இருக்கிறார். அவர் மறைவிடத்திலுள்ள சிங்கம் போலவும் இருக்கிறார்.

[11]கர்த்தர் என் பாதையின் மீது முட்களைப் பரப்பினார். அவர் என்னைத் துண்டு துண்டாகக் கிழித்துப்போட்டார். அவர் என்னை பாழாக்கினார்.

[12]அவர் தனது வில்லை தயார் செய்தார். அவரது அம்புகளுக்கு என்னை இலக்காக்கினார்.

[13]அவர் தனது அம்பை என்னுடைய வயிற்றில் எய்தார்.

[14]நான் எனது ஜனங்கள் அனைவருக்கும் ஒரு வேடிக்கையாகிப் போயிருக்கிறேன். நாள் முழுவதும் அவர்கள் என்னைப்பற்றி பாடல் பாடி என்னைக் கேலிச் செய்கிறார்கள்.

[15]கர்த்தர் இந்த விஷத்தை (தண்டனையை) நான் குடிக்கும்படி கொடுத்திருக்கிறார். அவர் என்னை இந்தக் கசப்பான பானத்தால் நிரப்பினார்.

[16]கர்த்தர் பாறை நிலத்தில் என் பற்களைத் தள்ளினார். அவர் என்னைத் தூசியில் தள்ளினார்.

[17]நான் மீண்டும் அமைதி பெறப்போவதில்லை என்று நினைத்தேன். நான் நல்லவற்றைப் பற்றி மறந்துவிட்டேன்.

18நான் எனக்குள். “கர்த்தர் எனக்கு
உதவி செய்வார் என்ற நம்பிக்கை யை
நான் இழந்து விட்டேன்” என்றேன்.
19கர்த்தாவே, என்னை நினைத்தருளும்.
நான் மிகவும் வருத்தமாய் இருக்கிறேன்.
எனக்கு வீடு இல்லை. நீர் எனக்குக்
கொடுத்த கசப்பான விஷத்தை (தண்ட
னையை) நினைத்துப்பாரும்.
20நான் எனது எல்லாத் துன்பங்களையும்
நினைத்துப் பார்க்கிறேன். நான் மிகவும்
துக்கமாய் இருக்கிறேன்.
21ஆனால் பிறகு, ஏதோ சிலதைப் பற்றி
நினைக்கிறேன். பின்னர் நான் நம்பிக்கை
பெறுகிறேன். நான் என்ன நினைக்கிறேன்
என்பது இதுதான்.
22கர்த்தருடைய அன்பு மற்றும் கரு
ணைக்கு முடிவில்லை. கர்த்தருடைய இரக்
கம் எப்பொழுதும் முடிவதில்லை.
23ஒவ்வொரு காலையிலும் அவர் அதை
புதிய வழிகளில் காண்பிக்கிறார்! கர்த்தாவே,
உமது உண்மையும், பற்றுதலும் மிகப்
பெரியது!
24நான் எனக்குள், “கர்த்தரே எனது
தேவனாயிருக்கிறார், ஆகவே நான் அவரை
நம்புவேன்” என்கிறேன்.
25கர்த்தர் தனக்காகக் காத்திருக்கும் ஜனங்
களுக்கு நல்லவராய் இருக்கிறார். கர்த்தர்
அவரைத் தேடும் ஜனங்களுக்கு நல்லவராய்
இருக்கிறார்.
26ஒருவன் தன்னை இரட்சித்துக்கொள்ள
கர்த்தருக்காக அமைதியாகக் காத்திருப்பது
நல்லது.
27ஒருவன் கர்த்தருடைய நுகத்தை
அணிந்துகொள்ளுவது நல்லது. ஒருவன், தன்
இளமை காலத்திலிருந்தே அந்த நுகத்
தடியைச் சுமப்பது நல்லது.
28கர்த்தர் நுகத்தை அவன் மீது வைக்கும்
போது, அந்த மனிதன் தனியாகவும் அமை
தியாகவும் இருப்பான்.

29அம்மனிதன் கர்த்தருக்கு முன் தன்
முகம் தரையில் படும்படி குப்புற விழுந்து
வணங்கவேண்டும். அதில் இன்னும் நம்பிக்
கை இருக்கலாம்.
30அம்மனிதன் தன் ஒரு கன்னத்தில்
அடிக்கிறவனுக்கு மறுகன்னத்தைத் திருப்ப
வேண்டும். அம்மனிதன் ஜனங்கள் தன்னை
நிந்திக்கும்படி அனுமதிக்க வேண்டும்.
31கர்த்தர் என்றென்றும் ஜனங்களை
புறக்கணிக்கமாட்டார் என்பதை அம்மனிதன்
நினைவில் கொள்ளவேண்டும்.
32கர்த்தர் தண்டிக்கும்போது அவனுக்கும்
இரக்கத்தையும் வெளிபடுத்துகிறார். அவரது
பேரன்பாலும் கருணையாலும் அன்பாலும்
அவனுக்கு இரக்கம் வெளிப்படுகிறது.
33கர்த்தர் ஜனங்களைத் தண்டிக்க விரும்பு
வதில்லை. அவர் ஜனங்கள் மகிழ்ச்சியற்று
இருப்பதை விரும்புவதில்லை.
34கர்த்தர் இவற்றை விரும்புவதில்லை.
யாரோ ஒருவன் பூமியிலுள்ள அனைத்து
சிறைக் கைதிகளையும் தன் காலுக்கடியில்
நசுக்குவதை அவர் விரும்புவதில்லை.
35யாரோ ஒருவன் இன்னொருவனுக்கு
அநியாயமானவனாக இருப்பதை அவர்
விரும்புவதில்லை. ஆனால் சில ஜனங்கள்
உன்னதமான தேவனுக்கு முன்பாக அத்தீய
வற்றைச் செய்கிறார்கள்.
36கர்த்தர், ஒருவன் இன்னொருவனை
ஏமாற்றுவதை விரும்புவதில்லை. கர்த்தர்
இத்தகைய எவற்றையுமே விரும்புவதில்லை.
37ஏதாவது நிகழவேண்டும் என்று கர்த்தர்
கட்டளையிட்டால் எவராலும் சொல்லவும்
முடியாது, நிகழச் செய்யவும் முடியாது.
38உன்னதமான தேவனே நல்லதும் தீயதும்
நிகழும்படி கட்டளையிடுகிறார்.
39ஒருவனது பாவங்களுக்காகக் கர்த்தர்
தண்டிக்கும்போது உயிரோடுள்ள எவனும்
புகார் கூற முடியாது.
40நாம் நம்முடைய செயல்களைச்
சோதித்து ஆராய்வோம். பிறகு கர்த்தரிடம்
திரும்புவோம்.
41பரலோகத்தின் தேவனிடம் நமது கை
களோடு இதயத்தையும் ஏறெடுப்போம்.
42நாம் அவரிடம், “நாங்கள் பாவம் செய்
தோம், பிடிவாதமாயிருந்தோம். இதனால்
எங்களை நீர் மன்னிக்காமல் இருந்தீர்.
43நீர் கோபத்தால் மூடப்பட்டு எங்களைத்
துரத்தினீர். நீர் எங்களை இரக்கமில்லாமல்
கொன்றீர்!
44நீர் ஜெபம் எதுவும் வந்து சேராதபடி
நீர் உம்மை மேகத்தால் மூடிக்கொண்டீர்.
45மற்ற நாட்டு ஜனங்களுக்கிடையே எங்
களை குப்பையாகவும் அருவருக்கத்தக்க
வர்களாகவும் ஆக்கினீர்.
46எங்களது பகைவர்கள் எல்லாம் எங்
களுடன் கோபத்தோடு பேசுகிறார்கள்.
47நாங்கள் பயந்திருந்திருக்கிறோம். நாங்கள்
குழியில் விழுந்திருக்கிறோம். நாங்கள் மோச
மாகப் பாதிக்கப்பட்டிருக்கிறோம்! நாங்கள்
உடைந்திருக்கிறோம்!” என்கிறேன்.
48எனது கண்களில் கண்ணீர் ஓடை
பாய்கின்றது! எனது ஜனங்களின் அழி
வினால் நான் அழுகிறேன்!
49எனது கண்களில் கண்ணீர் நிறுத்தப்
படாமல் பாய்ந்து கொண்டிருக்கின்றன!
நான் அழுதுகொண்டேயிருக்கிறேன்!
50கர்த்தாவே, நீர் என்னைக் கீழே
பார்க்கிறவரை, நான் தொடர்ந்து அழுதுகொ
ண்டிருப்பேன்! நீர் பரலோகத்திலிருந்து
பார்க்கிற வரை நான் தொடர்ந்து அழுது
கொண்டிருப்பேன்!
51எனது நகரத்தில் பெண்களுக்கு என்ன
ஏற்பட்டது என்று பார்க்கும்போது! என்
கண்கள் என்னைத் துக்கமுறச் செய்தன.
52அந்த ஜனங்கள் காரணம் இல்லாமலேயே
எனக்குப் பகைவர்கள் ஆனார்கள். ஆனால்

அவர்கள் என்னைப் பறவையைப்போன்று வேட்டையாடினார்கள்.

53 நான் உயிரோடு இருக்கும்போதே என்னைப் பள்ளத்தில் போட்டார்கள். அவர்கள் என்மீது கல்லையும் எறிந்தார்கள்.

54 என் தலைக்கு மேலே தண்ணீர் வந்தது. “நான் முடிந்து போனேன்” என்று எனக்குள் சொன்னேன்.

55 கர்த்தாவே, நான் உமது நாமத்தை அழைத்தேன். நான் பள்ளத்திற்குள்ளிருந்து உமது நாமத்தைச் சொல்லி அழைத்தேன்.

56 நீர் எனது சத்தத்தைக் கேட்டீர். நீர் உமது காதுகளை மூடவில்லை. நீர் என்னை மீட்பதற்கு மறுக்கவில்லை.

57 நான் உம்மை அழைத்த நாளன்று நீர் என்னிடம் வந்தீர். “பயப்படாதே” என்று நீர் என்னிடம் சொன்னீர்.

58 கர்த்தாவே, நீர் என்னைக் காப்பாற்றினீர். நீர் எனது உயிரை மீண்டும் எனக்காக மீட்டுக்கொண்டு வந்தீர்.

59 கர்த்தாவே, நீர் எனது துன்பங்களைப் பார்த்தீர். இப்பொழுது எனக்காக எனது வழக்கை நியாயந்தீரும்.

60 எனது பகைவர்கள் எவ்வாறு என்னைக் காயப்படுத்தியிருக்கிறார்கள் என்பதைப் பார்த்திருக்கிறீர். அவர்கள் எனக்கு எதிராகச் செய்த அனைத்து தீயத் திட்டங்களையெல்லாம் நீர் பார்த்திருக்கிறீர்.

61 கர்த்தாவே, அவர்கள் என்னை நிந்தித்ததைக் கேட்டீர். அவர்கள் எனக்கு எதிராகச் செய்த அனைத்து தீயத்திட்டங்களைப்பற்றி கேள்விப்பட்டீர்.

62 எல்லா நேரத்திலும் எனது பகைவர்களின் வார்த்தைகளும் எண்ணங்களும் எனக்கு எதிராக இருக்கின்றன.

63 கர்த்தாவே, அவர்கள் உட்காரும்போதும், எழுந்திருக்கும் போதும், என்னை எவ்வாறு பரிகாசம் செய்கிறார்கள் என்று பாரும்!

64 கர்த்தாவே, அவர்கள் கைகள் செய்ததிற்கு ஏற்ற தண்டனையை அவர்களுக்கு கொடும்! அவர்கள் செய்திருப்பதை அவர்களுக்குத் திருப்பிக்கொடும்!

65 அவர்களுக்கு கடினமான இதயத்தைக் கொடும்! பிறகு, அவர்கள் மீது உமது சாபத்தைக் கொடும்!

66 அவர்களைக் கோபத்தோடு துரத்தும்! அழியும்! கர்த்தாவே, வானத்தின் கீழே அவர்களை அழித்துவிடும்!

### எருசலேம் மீதான தாக்குதலின் பயங்கரங்கள்

4 தங்கம் எவ்வளவு ஒளி மங்கி இருக்கிறது என்று பார். நல்ல தங்கமானது எப்படி மாறியிருக்கிறது எனப் பார். எல்லா இடங்களிலும் நகைகள் சிதறி கிடக்கின்றன. ஒவ்வொரு தெரு முனையிலும் அவை சிதறி கிடக்கின்றன.

2 சீயோனின் ஜனங்கள் மிகுதியான நன்மதிப்புள்ளவர்களாயிருந்தார்கள். அவர்கள் தங்கத்தின் எடைக்குச் சமமான எடையுள்ளவர்களாக இருந்தனர். ஆனால் இப்பொழுது பகைவர்கள் அந்த ஜனங்களை பழைய மண்பாத்திரங்களைப் போன்று கருதுகின்றனர். பகைவர்கள், குயவனால் செய்யப்பட்ட மண் பாத்திரங்களைப் போன்று இவர்களைக் கருதுகிறார்கள்.

3 காட்டுநாய் கூடத் தன் குட்டிகளுக்கு உணவூட்டுகின்றன. ஓநாய் கூடத் தன் குட்டிகள் மார்பில் பால் குடிக்கும்படி விடும். ஆனால் எனது ஜனங்களின் குமாரத்தியோ கொடூரமானவள். அவள் வனாந்தரத்தில் வாழும் நெருப்புக்கோழியைப் போன்றவள்.

4 சிறு குழந்தைகளின் நாக்கானது, தாகத்தால் வாயின்மேல் அன்னத்தோடு ஒட்டிக்கொள்கிறது. சிறு குழந்தைகள் அப்பம் கேட்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு எவரும் அப்பம் கொடுக்கவில்லை.

5 ஒரு காலத்தில், செல்வமான உணவை உண்ட ஜனங்கள் இப்போது, வீதிகளில் மரித்துக் கிடக்கின்றனர். மென்மையான சிவப்பு ஆடைகளை அணிந்த ஜனங்கள் இப்போது குப்பைமேடுகளை பொறுக்குகிறார்கள்.

6 எனது ஜனங்களின் மகள்* செய்த பாவம் மிகப்பெரியது. அவளின் பாவம் சோதோமும் கொமோராவும்* செய்த பாவத்தைவிடப் பெரியது. சோதோமும் கொமோராவும் திடிரென அழிக்கப்பட்டது. எந்த மனிதனின் கையும் அழிவுக்கு காரணமாயிருக்க முடியவில்லை.

7 யூதாவிலுள்ள சில புருஷர்கள் விசேஷ முறையில் தேவனுக்கு அர்ப்பணிக்கப்பட்டனர். அம்மனிதர் மிகவும் பரிசுத்தமானவர்கள் அவர்கள் பனியைவிட வெள்ளையானவர்கள். அவர்கள் பாலைவிட வெண்மையானவர்கள். அவர்களின் உடல்கள் பவளத்தைப் போன்று சிவந்தவை. அவர்களின் தாடிகள் இந்திர நீலக் கற்களாயிருந்தன.

8 ஆனால் இப்பொழுது, அவர்களின் முகங்கள் கரியைவிட கருத்துப்போயின. வீதியில் எவராலும் அவர்களை அடையாளம் காண முடியவில்லை. அவர்களின் தோல் எலும்புகளோடு ஒட்டிக்கொண்டது. அவர்களின் தோல் மரத்தைப் போலுள்ளது.

9 வாளால் கொல்லப்பட்ட ஜனங்கள் பஞ்சத்தால் கொல்லப்பட்ட ஜனங்களைவிடச் சிறந்தவர்கள். பட்டினியாக இருந்த ஜனங்கள் மிக துக்கமாக இருந்தார்கள். அவர்கள் பாதிக்கப்பட்டார்கள். அவர்கள்

---

**ஜனங்களின் மகள்** எருசலேம் ஜனங்கள்.

**சோதோம் மற்றும் கொமொரா** இரு நகரங்கள் தம் பாவத்தால் தேவனால் அழிக்கப்பட்டது.

வயலிலிருந்து எந்த உணவையும் பெறாத
தால் மரித்தனர்.
10 அப்பொழுது, மிக மெல்லிய இயல்
புடைய பெண்களும் கூடத் தம் சொந்தக்
குழந்தைகளைச் சமைத்தனர். அக்குழந்தை
கள் தம் தாய்மார்களின் உணவாயிற்று.
என் ஜனங்கள் எல்லாம் அழிக்கப்பட்ட
போது இது நிகழ்ந்தது.
11 கர்த்தர் தனது கோபம் அனைத்தையும்
பயன்படுத்தினார். அவர் தனது கோபம்
முழுவதையும் கொட்டித் தீர்த்தார். அவர்
சீயோனில் ஒரு நெருப்பை உண்டாக்கினார்.
அந்த நெருப்பு சீயோனை அதன் அஸ்தி
வாரம் வரைக்கும் எரித்துபோட்டது.
12 பூமியிலுள்ள அரசர்கள் என்ன நிகழ்ந்
தது என்பதைப்பற்றி நம்ப முடியவில்லை.
உலகில் உள்ள ஜனங்களால் என்ன நடந்தது
என்பதை நம்ப முடியவில்லை. பகைவர்
களால் எருசலேமின் நகர வாசல்கள் மூல
மாக நுழைய முடியும் என்பதை அவர்களால்
நம்ப முடியவில்லை.
13 எருசலேமில் உள்ள தீர்க்கதரிசிகள்
செய்த பாவத்தால் இது நிகழ்ந்தது. எருச
லேமில் உள்ள ஆசாரியர்கள் செய்த தீயச்
செயல்களால் இது நிகழ்ந்தது. எருசலேம்
நகரில் அந்த ஜனங்கள் இரத்தம் வடித்துக்
கொண்டிருந்தார்கள். நல்ல ஜனங்களின்
இரத்தத்தை அவர்கள் சிந்திக் கொண்டிருந்
தார்கள்.
14 தீர்க்கதரிசிகளும் ஆசாரியர்களும் வீதி
களில் குருட்டு மனிதர்களைப்போன்று
நடந்து திரிந்துகொண்டிருந்தார்கள். அவர்கள்
இரத்தத்தினால் அழுக்காயிருந்தார்கள்.
அவர்களது அழுக்கால் எவரும் அவர்
களுடைய ஆடையை தொடமுடியாதபடி
இருந்தனர்.
15 “வெளியே போ! வெளியே போ!
எங்களைத் தொட வேண்டாம்” என்று
ஜனங்கள் சத்தமிட்டனர். அந்த ஜனங்கள்
சுற்றி அலைந்தனர். அவர்களுக்கு வீடு
இல்லை. மற்ற நாடுகளிலுள்ள ஜனங்கள்,
“அவர்கள் எங்களோடு வாழ்வதை நாங்கள்
விரும்பவில்லை” என்றனர்.
16 கர்த்தர் தாமே அந்த ஜனங்களை
அழித்தார். அதற்குப் பிறகு அவர்களை
அவர் பாதுகாக்கவில்லை. அவர் ஆசாரியர்
களை மதிக்கவில்லை. யூதாவிலுள்ள மூப்பர்
களுடன் அவர் சிநேகம் வைக்கவில்லை.
17 நாங்கள் உதவிக்காகக் காத்திருந்து எங்
கள் கண்கள் களைத்துப் பழுதாயிற்று.
ஆனால் எந்த உதவியும் வரவில்லை. எங்
களைக் காப்பாற்றபோகிற ஒரு தேசத்திற்காக
நாங்கள் காத்திருந்தோம். நாங்கள் பார்வை
கோபுரத்திலிருந்து பார்த்து கொண்டிருந்
தோம். ஆனால் எந்தத் தேசமும் எங்களுக்கு
உதவ வரவில்லை.
18 எங்கள் பகைவர்கள் எப்பொழுதும் எங்
களை வேட்டையாடினார்கள். எங்களால்
வீதிகளுக்குக் கூடப் போகமுடியவில்லை.
எங்கள் முடிவு அருகில் நெருங்கி வந்தது.
எங்கள் காலம் போய்விட்டது. எங்கள் முடிவு
வந்தது!
19 எங்களைத் துரத்துகிற மனிதர்கள்
வானத்தில் பறக்கும் கழுகுகளைவிட விரை
வாக இருந்தனர். அம்மனிதர்கள் எங்களை
மலைகளுக்குத் துரத்தினார்கள். எங்களைப்
பிடிப்பதற்காக அவர்கள் வனாந்தரத்தில்
மறைந்திருந்தனர்.
20 அரசன் எங்களுக்கு மிக முக்கியமான
வனாக இருந்தான். எங்கள் நாசியின்
சுவாசத்தைப்போல் இருந்தான். ஆனால்
அரசன் அவர்களால் வலைக்குட்படுத்த
பட்டிருந்தான். இந்த அரசன் கர்த்தராலேயே
தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தான். அரசனைப்
பற்றி நாம், “நாங்கள் அவனது நிழலில்
வாழ்வோம். அவன் எங்களை பிற தேசங்
களிடமிருந்து காப்பாற்றுகிறான்” என்று
சொல்லியிருந்தோம்.
21 ஏதோம் ஜனங்களே, மகிழ்ச்சியாய் இருங்
கள். ஊத்ஸ் நாட்டில் வாழும் ஜனங்களே,
மகிழ்ச்சியாய் இருங்கள். ஆனால் நினைத்துக்
கொள், கர்த்தருடைய கோபமாகிய கிண்
ணம் உங்களைச் சுற்றிலும் கூட வரும்.
நீ கிண்ணத்திலிருந்து (தண்டனை) குடிக்கும்
போது நீ குடிகாரனாவாய். உன்னை நீயே
நிர்வாணமாக்கிக் கொள்வாய்.
22 சீயோனே, உனது தண்டனை முடிந்தது.
நீ மீண்டும் சிறைகைதியாக மாட்டாய்.
ஆனால் ஏதோம் ஜனங்களே கர்த்தர் உனது
பாவங்களைத் தண்டிப்பார். அவர் உனது
பாவங்களை வெளிப்படுத்துவார்.

### கர்த்தருக்கு ஒரு ஜெபம்

5 கர்த்தாவே, எங்களுக்கு என்ன நடந்தது
என்று எண்ணிப்பாரும், எங்களது அவ
மானத்தை நோக்கிப்பாரும்!
2 எங்கள் நாடு அந்நியர்களுக்கு உரியதான
சொத்தாக மாறிற்று. எங்கள் வீடுகள் அயல்
நாட்டுக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்
கிறது.
3 நாங்கள் அநாதைகளாயிருக்கிறோம். எங்
களுக்குத் தந்தை இல்லை. எங்கள் தாய்
மார்கள் விதவைகளைப்போன்று ஆனார்கள்.
4 நாங்கள் குடிக்கிற தண்ணீரையும்
விலைக்கு வாங்க வேண்டியதிருக்கிறது.
நாங்கள் பயன்படுத்துகிற விறகுக்கும் விலை
கொடுக்க வேண்டியதிருக்கிறது.
5 எங்கள் கழுத்துகளில் நுகத்தைப் பூட்டிக்
கொள்ள வற்புறுத்தப்படுகிறோம். நாங்கள்
களைத்துப்போகிறோம். எங்களுக்கு ஓய்
வில்லை.
6 நாங்கள் எகிப்தோடு ஒரு ஒப்பந்தம்
செய்திருக்கிறோம். நாங்கள் போதுமான
அப்பங்களைப் பெற அசீரியாவோடு ஒப்பந்
தம் செய்திருக்கிறோம்.
7 எங்கள் முற்பிதாக்கள் உமக்கு எதிராகப்

பாவம் செய்தனர். இப்போது அவர்கள் மரித்துப்போனார்கள். இப்பொழுது நாங்கள் அவர்கள் செய்த பாவத்துக்காகத் துன்பப்படு கிறோம்.
8அடிமைகள் எங்களது ஆள்வோர்களாக ஆகியிருக்கின்றனர். அவர்களிடமிருந்து எவ ராலும் எங்களைக் காப்பாற்ற முடிய வில்லை.
9நாங்கள் உணவைப்பெற வாழ்க்கையில் அபாயத்தை எதிர்கொள்கிறோம். வனாந் திரத்தில் மனிதர்கள் வாள்களோடு நின்று கொண்டிருக்கின்றனர்.
10எங்கள் தோல் வறுக்கும் சட்டியைப் போன்று சூடாக உள்ளது. எங்களுக்கு பசியினால் அதிகமாய் காய்ச்சல் உள்ளது.
11பகைவர்கள் சீயோன் பெண்களை கற்பழித்தனர். யூதாவின் நகரங்களில் அவர் கள் பெண்களை கற்பழித்தனர்.
12பகைவர்கள் எங்கள் இளவரசர்களை தூக்கிலிட்டனர். எங்கள் மூப்பர்களை அவர் கள் கௌரவிக்கவில்லை.
13பகைவர்கள் எங்கள் இளைஞர்களை எந்திர ஆலைகளில் தானியத்தை அரைக்கும் படிச் செய்தனர். எங்கள் இளைஞர்கள் மரத்தடிகளின் சுமையால் கீழே இடறி விழுந்தார்கள்.
14மூப்பர்கள் இனி நகரவாசல்களில் உட் காருவதில்லை. இளைஞர்கள் இனி இசை எழுப்புவதில்லை.
15எங்கள் இதயத்தில் இனி மகிழ்ச்சியே இல்லை. எங்கள் நடனம் மரித்தவர்களுக் கான ஒப்பாரியாக மாறிவிட்டது.
16எங்கள் தலையிலிருந்து கிரீடம் கீழே விழுந்துவிட்டது. எங்களுக்கு எங்கள் பாவங்களால் நிலைமை மோசமாகிக் கொண்டிருக்கிறது.
17இவற்றால் எங்கள் இதயம் நோயுற்றிருக் கிறது. எங்கள் கண்களால் தெளிவாகப் பார்க்க முடியவில்லை.
18சீயோன் மலை வெறு நிலமாகிவிட்டது. சீயோன் மலையைச் சுற்றி நரிகள் ஓடித் திரிகின்றன.
19ஆனால் கர்த்தாவே, நீர் என்றென்றும் ஆள்கிறீர், உமது இராஜ சிங்காசனம் என் றென்றும் நிலைத்து நிற்கும்.

20கர்த்தாவே, நீர் என்றென்றைக்கும் எங் களை மறந்துவிட்டது போன்று இருக்கின் றீர். எங்களை நெடுங்காலமாக தனியே விட்டுவிட்டது போன்று இருக்கின்றீர்.
21கர்த்தாவே, உம்மிடம் மீண்டும் எங் களைக் கொண்டு வாரும். நாங்கள் மகிழ்ச்சி யோடு உம்மிடம் திரும்பி வருவோம். எங்கள் வாழ்க்கையை முன்பு இருந்தது போன்று ஆக்கும்.
22நீர் எங்கள் பேரில் கடுங்கோபமாக இருந்தீரே. எங்களை நீர் முழுமையாக நிராகரித்துவிட்டீரா?

# எசேக்கியேல் தீர்க்கதரிசியின் புத்தகம்

### முன்னுரை

**1** **1-3**நான் ஆசாரியன், பூசியின் மகனான
எசேக்கியேல். நான் நாடு கடத்தப்பட்டு
பாபிலோனின் கேபார் ஆற்றின் அருகில்
இருந்தபோது வானங்கள் திறந்தன. நான்
தேவ தரிசனங்களைக்* கண்டேன். இது
முப்பதாம் ஆண்டின் நான்காம் (ஜூலை)
மாதத்தில் ஐந்தாம் தேதியாக இருந்தது.
யோயாக்கீன் அரசன் சிறையிலிருந்து
ஐந்தாவது ஆண்டில் ஐந்தாவது மாதத்தில்
கர்த்தருடைய வார்த்தை எசேக்கியேலிடம்
வந்தது. அந்த இடத்தில் கர்த்தருடைய
வல்லமை அவன்மேல் வந்தது.

### கர்த்தருடைய இரதம் தேவனுடைய சிங்காசனம்

**4**நான் (எசேக்கியேல்) வடக்கிலிருந்து
பெரிய புயல் வருவதைப் பார்த்தேன். அது
பெரும் மேகமாய் பலமான காற்றையு
டையதாய் இருந்தது. அதிலிருந்து நெருப்பு
பளிச்சிட்டது. அதைச் சுற்றிலும் வெளிச்ச
மும் இருந்தது. இது நெருப்புக்குள்ளே பழுத்
துக்கொண்டிருக்கும் உலோகம்போல் இருந்
தது. **5**அதற்குள்ளே நான்கு ஜீவன்கள் இருந்
தன. அவை மனிதர்களைப்போன்று காணப்
பட்டன. **6**ஆனால், ஒவ்வொரு ஜீவன்களுக்கும்
நான்கு முகங்களும் நான்கு சிறகுகளும்
இருந்தன. **7**அவற்றின் கால்கள் நேராக
இருந்தன. அவற்றின் பாதங்கள் பசுக்களின்
பாதங்களைப் போன்றிருந்தன. அவை துலக்
கப்பட்ட வெண்கலத்தைப் போன்று பளப
ளப்பாக இருந்தன. **8**அவற்றின் சிறகுகளுக்க
டியில் மனித கைகள் இருந்தன. அங்கே
நான்கு ஜீவன்கள் இருந்தன.
ஒவ்வொன்றிற்கும் நான்கு முகங்களும் நான்கு
சிறகுகளும் இருந்தன. **9**ஒவ்வொரு ஜீவனின்
இறக்கைகளும் மற்ற ஜீவனின் இறக்கைக
ளை ஒவ்வொரு பக்கமும் தொட்டன. ஜீவன்
கள் அசையும்போது அவை திரும்பவில்
லை. அவை எந்தத் திசையைப் பார்த்துக்
கொண்டிருந்தனவோ அத்திசையிலேயே
சென்றன.

**10**ஒவ்வொரு ஜீவனுக்கும் நான்கு முகங்
கள் இருந்தன. முன்பக்கத்தில் ஒவ்வொன்
றுக்கும் மனித முகம் இருந்தது. வலது
பக்கத்தில் உள்ளவை சிங்கங்களின் முகங்
களாக இருந்தன. இடது பக்கத்தில் உள்ள
வை காளைகளின் முகங்களாக இருந்தன.
பின்பக்கத்தில் அவற்றிற்கு கழுகின் முகங்
களாக இருந்தன. **11**ஜீவன்கள் தம்மை சிறகு
களால் மூடிக்கொண்டன. அவை இரண்டு
சிறகுகளால் தம் அருகிலிருக்கும் ஜீவனைத்
தொட நீட்டின. இரண்டு சிறகுகளால் தம்
உடலை மறைத்துக்கொண்டன. **12**அவை
எந்தத் திசையைப் பார்த்துக்கொண்டிருந்
தனவோ அந்தத் திசையிலேயே சென்றன.
காற்று அவற்றை எத்திசையில் செலுத்து
கின்றதோ அத்திசையிலேயே சென்றன.
அந்த ஜீவன்கள் நகரும்போது திரும்புவ
தில்லை. **13**அந்த ஜீவன்கள் அப்படித்தான்
காணப்பட்டன.
ஜீவன்களுக்குள் இருந்த இடைவெளியில்
ஏதோ எரிகின்ற நெருப்பு கரிதுண்டுகளைப்
போலிருந்தது. இந்த நெருப்பானது சிறு
தீபங்களைப்போல ஜீவன்களைச் சுற்றி
அசைந்துகொண்டிருந்தது. அது பிரகாசமாக
மின்னலைப்போன்று ஒளியைப் பரப்பிக்
கொண்டிருந்தது! **14**அந்த ஜீவன்கள் மின்ன
லைப்போன்று ஓடித்திரிந்தன!
**15-16**நான் அந்த ஜீவன்களைப் பார்த்துக்
கொண்டிருக்கும்போதே நான்கு சக்கரங்க
ளைக் கண்டேன். ஒவ்வொரு ஜீவனுக்கும்
ஒரு சக்கரம் இருந்தது. அச்சக்கரங்கள்
தரையைத் தொட்டுக்கொண்டிருந்தன. அச்சக்
கரங்கள் மஞ்சள் நகையால் செய்யப்பட்டது
போன்று தோன்றின. சக்கரத்திற்குள் சக்கரம்
இருப்பது போன்று அவை தோன்றின.
**17**சக்கரங்கள் எத்திசையிலும் (திரும்ப)
அசைய முடிந்தது, ஆனால் ஜீவன்களோ
அவை அசைந்தபோது திரும்பவில்லை.
**18**இப்பொழுது நான் அவற்றின் பின்பாகத்
தைப்பற்றி சொல்லுவேன்! சக்கரங்களின்
ஓரங்கள் உயரமாகவும் பயங்கரமாகவும் இருந்
தன. நான்கு சக்கரங்களின் ஓரங்கள் முழு
வதிலும் கண்கள் இருந்தன.
**19**அச்சக்கரங்கள் எப்பொழுதும் ஜீவன்
களோடேயே நகர்ந்தன. ஜீவன்கள் காற் றில்
மேலேறிப் பறந்தால் அச்சக்கரங்களும்

---

***தரிசனம்*** தேவன் மனிதனோடு பேசுவது, கனவு போன்றது.

அவற்றோடு சென்றன. [20]காற்றானது* அவற்
றை எங்கெங்கு செலுத்த விரும்புகிறதோ
அங்கே அவற்றோடு சக்கரங்களும் சென்றன.
ஏனென்றால், ஜீவன்களின் வல்லமையானது
அவற்றின் சக்கரத்தில் உள்ளன. [21]எனவே,
ஜீவன்கள் நகர்ந்தால் சக்கரங்களும் நகர்ந்தன.
ஜீவன்கள் நின்றால் சக்கரங்களும் நின்றன.
சக்கரங்கள் காற்றில் பறந்துபோனால் ஜீவன்
களும் அவற்றோடு போயின. ஏனென்றால்,
சக்கரங்களுக்குள் காற்று இருந்தது.

[22]ஜீவன்களின் தலைகளின்மேல் வியப்ப
டையச் செய்யும் ஒன்று இருந்தது. அது
தலை கீழாகத் திருப்பப்பட்ட ஒரு கிண்ணம்
போல் இருந்தது. அப்பாத்திரம் படிகக்கட்டி
யைப்போன்று தெளிவாக இருந்தது. இது
ஜீவன்களின் தலைக்குமேல் காற்றில்
தொங்கிக்கொண்டிருந்தது! [23]பாத்திரத்திற்குக்
கீழே, ஒவ்வொரு ஜீவனுக்கும் நான்கு நேரான
சிறகுகள் இருந்தன. இரண்டு சிறகு கள்
விரிக்கப்பட்டு அருகிலிருக்கும் ஜீவனின்
சிறகுகளை நோக்கி நீட்டப்பட்டிருந்தன.
இரண்டு சிறகுகள் மற்ற திசையில் விரிக்கப்
பட்டு ஜீவனின் உடலை மூடியிருந்தன.

[24]பிறகு, நான் சிறகுகளின் சத்தம் கேட்
டேன். ஜீவன்கள் ஒவ்வொரு முறை நகரும்
போதும் அதன் சிறகுகள் பெருஞ்சத்தத்தை
எழுப்பின. அச்சத்தம் வெள்ளப்பெருக்கின்
சத்தத்தைப் போன்றிருந்தது. சர்வ வல்லமை
யுள்ள தேவனுடைய குரல் போல் இருந்தது.
அது ஒரு படை அல்லது ஜனங்கள்
கூட்டத்தின் சத்தத்தைப்போலவும் இருந்தது.
ஜீவன்கள் நகர்வதை நிறுத்தும்போது தம்
சிறகுகளை பக்கவாட்டில் வைத்துக்
கொள்ளும்.

[25]ஜீவன்கள் நகர்வதை நிறுத்தின. தமது
சிறகுகளைத் தாழ்த்தின. இன்னொரு பெருஞ்
சத்தம் கேட்டது, அது அவற்றின் தலைக்கு
மேலிருந்த கிண்ணத்திலிருந்து கேட்டது.
[26]பாத்திரத்திற்கு மேலே ஏதோ இருந்தது. அது
சிங்காசனத்தைப்போல் இருந்தது. அது நீல
வண்ணத்தில் ரத்தினம்போல் இருந்தது.
அந்தச் சிங்காசனத்தில் யாரோ ஒரு மனிதர்
உட்கார்ந்திருப்பது போன்று தோன்றியது.
[27]நான் அவரை இடுப்பிலிருந்து மேல்
நோக்கிப் பார்த்தேன். அவர் சூடான உலோ
கத்தைப் போன்று இருந்தார். அவரைச்
சுற்றிலும் நெருப்பு இருப்பதைப் போன்றிருந்
தது. நான் அவரை இடுப்பிலிருந்து கீழ்
நோக்கிப் பார்த்தேன். அது நெருப்பைப்
போன்றிருந்தது. அவரைச் சுற்றிலும் அது
மின்னியது. [28]அவரைச் சுற்றிலும் மின்னிக்
கொண்டிருந்த வெளிச்சமானது வானவில்
லைப் போன்றிருந்தது. அது கர்த்தருடைய
மகிமை. அதைப் பார்த்த உடனே நான்
தரையிலே விழுந்தேன். என் முகம் தரை
யிலே படும்படிக் குனிந்தேன். பின்னர்
ஒரு குரல் என்னோடு பேசுவதைக் கேட்
டேன்.

2 குரலானது, "மனுபுத்திரனே,* எழுந்து
நில், நான் உன்னோடு பேசப்போகிறேன்"
என்று சொன்னது.
[2]பிறகு, ஒரு காற்று வந்து என்னை
நிற்கும்படி செய்தது. என்னோடு பேசிய
அந்த நபருக்கு (தேவன்) செவிசாய்த்தேன்.
[3]அவர் என்னிடம், "மனுபுத்திரனே, இஸ்ர
வேல் குடும்பத்தோடு பேசுவதற்கு நான்
உன்னை அனுப்புகிறேன். அந்த ஜனங்கள்
எனக்கு எதிராகப் பலமுறை திரும்பினார்
கள். அவர்களது முற்பிதாக்களும் எனக்கு
எதிராகத்திரும்பினார்கள். அவர்கள் எனக்கு
எதிராகப் பலமுறை பாவம் செய்திருக்கின்ற
னர். அவர்கள் இன்றும் பாவம் செய்து
கொண்டிருக்கின்றனர். [4]அந்த ஜனங்களோடு
பேசவே உன்னை நான் அனுப்புகிறேன்.
ஆனால் அவர்கள் மிகக் கடினமானவர்களாக
இருக்கின்றனர். அவர்கள் கடினமான மனதை
உடையவர்கள். ஆனால் நீ அந்த ஜனங்க
ளோடு பேசவேண்டும். 'நமது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார்' என்று
நீ சொல்லவேண்டும். [5]ஆனால் அந்த ஜனங்
கள் நீ சொல்வதைக் கவனிக்கமாட்டார்கள்.
அவர்கள் எனக்கு எதிராகப் பாவம் செய்
வதை நிறுத்தமாட்டார்கள். ஏனென்றால்,
அவர்கள் மோசமான கலகக்காரர்கள். அவர்
கள் எப்பொழுதும் எனக்கு எதிராக திரும்பு
கின்றார்கள். ஆனால் நீ அவற்றைச் சொல்ல
வேண்டும். எனவே, அவர்கள் மத்தியில் ஒரு
தீர்க்கதரிசி இருப்பதை அறிந்து கொள்
வார்கள்.

[6]"மனுபுத்திரனே, அந்த ஜனங்களுக்குப்
பயப்படாதே, அவர்கள் சொல்கின்றவற்றுக்
கும் பயப்படாதே. இது உண்மை. அவர்கள்
உனக்கு எதிராகத் திரும்பி உன்னைக்
காயப்படுத்த விரும்புவார்கள். அவர்கள்
முட்களைப் போன்றிருப்பார்கள். நீ தேள்
களோடு இருப்பதைப்போன்று நினைப்பாய்.
ஆனால் அவர்கள் சொல்கின்ற வற்றுக்கு
நீ பயப்படாதே. அவர்கள் கலகக்காரர்கள்.
அவர்களுக்குப் பயப்படாதே! [7]நான் சொல்
கின்றவற்றை நீ அவர்களிடம் சொல்லவேண்
டும். அவர்கள், நீ சொல்வதைக் கவனிக்க
மாட்டார்கள் என்பதை நான் அறிவேன்.
எனக்கு எதிராகப் பாவம் செய்வதை
நிறுத்தமாட்டார்கள். ஏனென்றால், அவர்கள்
கலகக் காரர்கள்.

[8]"மனுபுத்திரனே நான் உனக்குச் சொல்
கின்றவற்றை நீ கவனிக்கவேண்டும். அக்
கலகக்கார ஜனங்களைப்போன்று நீ எனக்கு
எதிராகத் திரும்பவேண்டாம். உன் வாயைத்
திறந்து நான் தரும் வார்த்தைகளை ஏற்றுக்
கொள். பின்னர் அவ்வார்த்தைகளை அந்த

---

**காற்று** அல்லது "ஆவி."

**மனுபுத்திரன்** ஆள், மனிதன். இங்கு எசேக்கியேல்.

ஜனங்களிடம் பேசு, இவ்வார்த்தை களை
சாப்பிடு" என்றார்.
9 பின்னர் நான் (எசேக்கியேல்) என்னிடம்
ஒரு கை நீட்டப்படுவதைக் கண்டேன்.
அதனிடம் எழுதப்பட்ட சுருள் ஒன்று
இருந்தது. 10 நான் அச்சுருளைத் திறந்து
முன்னும் பின்னும், எழுதப்பட்டிருப்பதைப்
பார்த்தேன். அனைத்தும் துக்கப் பாடல்களா
கவும் துக்கக் கதைகளாகவும் எச்சரிக்கை
களாகவும் இருந்தன.

3 தேவன் என்னிடம் சொன்னார்: "மனு
புத்திரனே, நீ எதைப் பார்க்கிறாயோ
அதை சாப்பிடு. இச்சுருளையும் சாப்பிடு.
பின்னர் போய் இஸ்ரவேல் குடும்பத்தாரிடம்
இவற்றைச் சொல்."
2 எனவே, நான் எனது வாயைத் திறந்
தேன். அவர் என் வாய்க்குள் சுருளைப்
போட்டார். 3 பின்னர் தேவன், "மனுபுத்தி
ரனே, நான் இந்தச் சுருளைக் கொடுக்கிறேன்,
இதை விழுங்கு. இது உன் உடலை நிரப்
பட்டும்" என்றார்.

எனவே நான் சுருளைச் சாப்பிட்டேன்.
அது வாயிலே தேனைப்போன்று சுவையாக
இருந்தது.
4 பின்னர் தேவன் என்னிடம், "மனுபுத்திர
னே, இஸ்ரவேல் குடும்பத்தாரிடம் செல்.
என் வார்த்தைகளை அவர்களிடம் பேசு.
5 நீ புரிந்துகொள்ள இயலாத அந்நிய நாட்டுக்
காரர்களிடம் உன்னை அனுப்பவில்லை.
நீ இன்னொரு மொழியைக் கற்றுக்கொள்ள
வேண்டியதில்லை. நான் உன்னை இஸ்ர
வேல் குடும்பத்தாரிடம் அனுப்புகிறேன்!
6 நான் உன்னை உன்னால் புரிந்துகொள்ள
முடியாத மொழிகளைப் பேசுகிற பல்வேறு
நாடுகளுக்கு அனுப்பவில்லை. நீ அந்த
ஜனங்களிடம் சென்று அவர்களோடு பேசி
னால் அவர்கள் நீ சொல்வதைக் கவனிப்
பார்கள். ஆனால் நீ அந்த கடினமான
மொழியைக் கற்க வேண்டியதில்லை.
7 இல்லை! நான் உன்னை இஸ்ரவேல் குடும்
பத்தாரிடம் அனுப்புகிறேன். இந்த ஜனங்கள்
மட்டுமே கடினமான மனங்களை உடையவர்
கள். அவர்கள் மிகவும் பிடிவாதமுள்ளவர்
கள். இஸ்ரவேல் ஜனங்கள் நீ சொல்
வதைக் கவனிக்க மறுப்பார்கள். அவர்கள்
என்னைக் கவனிக்க விரும்புவதில்லை.
8 ஆனால் அவர்களைப் போன்று உன்னை
யும் அவ்வளவு கடினமுள்ளவனாகச் செய்
வேன். அவர்களுடையதைப் போன்றே
உனது மனமும் அவ்வளவு கடினமானதாக
இருக்கும். 9 வைரமானது கன்மலையைவிடக்
கடினமானது. அதைப்போலவே உனது மன
மானது அவர்களைவிடக் கடினமாகும். நீ
அதைவிட மிகக்கடினமாக இருப்பாய். என
வே, அந்த ஜனங்களுக்கு நீ பயப்படமாட்
டாய். எப்பொழுதும் எனக்கு எதிராகத்
திரும்புகிற அந்த ஜனங்களுக்குப் பயப்பட
மாட்டாய்" என்றார்.

10 பின்னர் தேவன் என்னிடம், "மனுபுத்தி
ரனே, நான் உன்னிடம் சொல்லுகிற ஒவ்
வொரு வார்த்தையையும் நீ கவனிக்கவேண்
டும். நீ அவ்வார்த்தைகளை நினைவு
கொள்ள வேண்டும். 11 பிறகு, நீ நாடு
கடத்தப்பட்ட உனது ஜனங்களிடம் சென்று,
'நமது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொல்கிறார்' என்று சொல்லவேண்டும்.
அவர்கள் நீ சொல்வதைக் கேட்கமாட்டார்
கள். அவர்கள் பாவம் செய்வதை நிறுத்த
மாட்டார்கள். ஆனால், நீ அவர்களிடம்
இவற்றைச் சொல்ல வேண்டும்" என்றார்.
12 பிறகு காற்று என்னைத் தூக்கியது.
பிறகு நான் எனக்குப் பின்னால் ஒரு
சத்தத்தைக் கேட்டேன். அது இடியைப்
போன்று பெருஞ்சத்தமாக இருந்தது. அது
"கர்த்தருடைய மகிமை ஆசீர்வதிக்கப் படுவ
தாக" என்று சொன்னது. 13 பின்னர் ஜீவன்
களின் சிறகுகள் நகரத் தொடங்கின. சிறகு
கள் ஒன்றை ஒன்று தொட்டு விடுவது
போன்று பெருஞ்சத்தத்தை எழுப்பின. அவற்
றின் முன்னால் இருந்த சக்கரங்கள் இடியைப்
போன்று பெருஞ்சத்தத்தை எழுப்பின.
14 காற்று என்னைத் தூக்கிக்கொண்டு போய்
விட்டது. நான் அந்த இடத்தை விட்டு
விலகினேன். எனது ஆவி மிகவும் துக்கமும்
கலக்கமுமடைந்தது. கர்த்தருடைய வல்லமை
என்மீது மிகவும் பலமாக இருந்தது. 15 இஸ்ர
வேலை விட்டு கட்டாயமாக, தெலாபீபிலே,
கேபார்கால்வாய் அருகில் வாழச்சென்ற
ஜனங்களிடம் போனேன். அவர்களுடன்
நான் ஏழு நாட்கள் தங்கினேன். அந்த
நாட்களில் நான் அதிர்ச்சி அடைந்த நிலை
யில் பேச முடியாதவனாக இருந்தேன்.

16 ஏழு நாட்கள் ஆன பிறகு, கர்த்தருடைய
வார்த்தை என்னிடம் வந்தது. அவர், 17 "மனு
புத்திரனே, நான் உன்னை இஸ்ரவேலின்
காவல்காரனாக ஆக்கினேன். அவர்களுக்கு
ஏற்படப்போகும் தீயவற்றைப் பற்றி நான்
உனக்குச் சொல்வேன். நீ அவற்றைப் பற்றி
இஸ்ரவேலை எச்சரிக்கவேண்டும். 18 'இந்தக்
கெட்ட மனிதன் மரிப்பான்!' என்று நான்
சொன்னால் பிறகு, நீ அவனை எச்சரிக்க
வேண்டும். அவன் தனது வாழ்வை மாற்றி
தீமை செய்வதை நிறுத்தவேண்டும். நீ
அவனை எச்சரிக்காவிட்டால் அவன் மரிப்
பான். அவன் தனது பாவத்தால் மரிப்பான்!
ஆனால் நான் அவனது மரணத்திற்கு
உன்னையும் பொறுப்பாளி ஆக்குவேன்.
ஏனென்றால், நீ அவனிடம் சென்று அவ
னது வாழ்க்கையைக் காப்பாற்றவில்லை.
19 "ஒருவேளை அந்த மனிதனை நீ எச்ச
ரித்து அவன் தனது வாழ்வை மாற்றிக்
கொண்டு தீயவற்றைச் செய்வதை நிறுத்தும்
படிச் சொல்லியிருக்கலாம். அவன் நீ சொல்
வதைக் கவனிக்க மறுத்ததால் அவன்
மரிப்பான். அவன் பாவம் செய்ததால்

மரிப்பான். நான் அவன் மரணத்திற்கு
உன்னைப் பொறுப்பாளியாக்க மாட்டேன்.
ஏனென்றால், நீ அவனை எச்சரித்தாய், நீ
உனது வாழ்க்கையைக் காப்பாற்றினாய்.
20“அல்லது ஒரு நல்லவன் தனது நற்
செயலை நிறுத்திவிடலாம். அவனுக்கு முன்
னால் நான் சில தடைகளை வைப்பேன்.
அது அவன் விழக் (பாவஞ்செய்ய) காரண
மாகலாம். அவன் தீயவற்றைச் செய்யத்
தொடங்கலாம். அவன் பாவம் செய்வதால்
மரிப்பான். நீ அவனை எச்சரிக்கவில்லை.
அவனது மரணத்திற்கு உன்னைப் பொறுப்
பாளியாக்குவேன். ஜனங்கள் அவன் செய்த
நன்மைகளை நினைக்கமாட்டார்கள்.
21“ஆனால், நீ ஒரு நல்ல மனிதனை
எச்சரித்து பாவத்தை நிறுத்தும்படிச் சொல்ல
அவனும் பாவம் செய்வதை நிறுத்தி
விட்டால் பின்னர் அவன் மரிக்கமாட்டான்.
ஏனென்றால், நீ அவனை எச்சரித்தாய்,
அவனும் உன்னைக் கவனித்தான். இவ்
வழியில் நீ உனது சொந்த உயிரைக்
காப்பாற்றினாய்” என்றார்.
22பின்னர் கர்த்தருடைய வல்லமை என்
னிடம் அங்கு வந்தது. அவர் என்னிடம்,
“எழுந்து பள்ளத்தாக்குக்குப் போ, அங்கே
நான் உன்னிடம் பேசுவேன்” என்றார்.
23எனவே, நான் எழுந்து பள்ளத்தாக்
குக்குப் போனேன். கர்த்தருடைய மகிமை
அங்கே இருந்தது. கேபார் ஆற்றங்கரையில்
இருந்தது போன்றிருந்தது. எனவே, நான்
தரையில் என் முகம் படும்படிக் குனிந்தேன்.
24ஆனால் காற்று வந்து நான் நிற்குமாறு
என்னைத் தூக்கியது. அவர் என்னிடம்,
“உன்வீட்டிற்குப் போய் உனது வீட்டிற்குள்
அங்கே உன்னைப் பூட்டிக்கொள். 25“மனு
புத்திரனே, ஜனங்கள் கயிறுகளோடு வந்து
உன்னைக் கட்டிப்போடு வார்கள். ஜனங்
களிடம் போக உன்னை அனுமதிக்க
மாட்டார்கள். 26நான் உனது நாக்கை மேல்
அண்ணத்தோடு ஒட்டிக்கொள் ளும்படிச்
செய்வேன். உன்னால் பேசமுடியா மல்
போகும். எனவே அந்த ஜனங்கள், அவர்கள்
தவறு செய்கிறார்கள் என்று கற்றுத்தர
ஆள் இல்லாமல் போவார்கள். ஏனென்றால்,
அந்த ஜனங்கள் எப்பொழுதும் எனக்கு
எதிராகத் திரும்புகின்றனர். 27ஆனால் நான்
உன்னிடம் பேசுவேன். பின்னர் நான்
உன்னைப் பேச அனுமதிப்பேன். ஆனால்
நீ அவர்களிடம் பேசவேண்டும். ‘நமது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொல்
கிறார்.’ ஒருவன் இதனைக் கேட்க விரும்பி
னால் நல்லது. ஒருவன் கேட்க விரும்பா
விட்டாலும் நல்லது. ஆனால் அந்த ஜனங்
கள் எப்பொழுதும் எனக்கு எதிராகத்
திரும்புகின்றனர்.

4 “மனுபுத்திரனே, ஒரு செங்கல்லை எடு.
அதன் மீது எருசலேம் நகரத்தின்
படத்தை வரை. 2பிறகு நகரத்தைச் சுற்றி
முற்றுகையிடும் படை போல நடி. நகரத்
தைத் தாக்க உதவுவதற்கு, அதைச் சுற்றி
மதிலைக் கட்டு. நகரத்தின் சுவர்வரை
போகும் ஒரு மண் பாதையைப் போடு,
இடிக்கும் கருவிகளைக் கொண்டு வா.
நகரத்தைச் சுற்றிப் படை முகாம்களை
ஏற்படுத்து. 3பிறகு ஒரு இரும்பு தகட்டினை
எடுத்து உனக்கும் நகரத்திற்கும் இடையில்
வை, அது உன்னையும் நகரத்தையும்
பிரிக்கின்ற இருப்புச் சுவரைப் போன்றது.
இவ்வாறு நீ நகரத்திற்கு எதிரானவன்
என்பதைக் காட்டுவாய். நீ முற்றுகையிட்டு
நகரத்தைத் தாக்குவாய். ஏனென்றால், இது
இஸ்ரவேல் குடும்பத்தாருக்கு ஒரு எடுத்துக்
காட்டாகும். நான் (தேவன்) எருசலேமை
அழிப்பேன் என்பதை இது காட்டும்.
4“பின்னர் நீ உனது இடதுபக்கத்தில்
படுக்கவேண்டும். உனக்குக் காட்டுகிறபடி
நீ செய்யவேண்டும். இஸ்ரவேல் ஜனங்கள்
செய்த பாவத்தை நீயே சுமக்கவேண்டும்.
நீ இடதுபுறமாக எவ்வளவு நாட்கள் படுத்
திருக்கிறாயோ அத்தனை நாட்கள் நீ
அவர்களின் குற்றத்தைச் சுமப்பாய். 5நீ
390 நாட்கள் இஸ்ரவேலரின் குற்றங்களைச்
சுமக்கவேண்டும். இவ்வாறு, நான் இஸ்ர
வேல் எவ்வளவு காலம் தண்டிக்கப்படும்
என்பதை ஒரு நாள், ஒரு ஆண்டுக்குச்
சமமாகக் கணக்கிட்டுச் சொல்வேன்.
6“அதற்குப் பிறகு, 40 நாட்கள் நீ உனது
வலதுபுறமாகப் படுப்பாய். இம்முறை நீ
யூதாவின் குற்றங்களை சுமப்பாய். ஒரு
நாள் ஓராண்டுக்குச் சமம். எவ்வளவு காலத்
திற்கு யூதா தண்டிக்கப்படும் என்பதை
நான் சொல்கிறேன்” என்றார்.
7தேவன் மீண்டும் பேசினார். அவர்,
“இப்பொழுது, நீ உனது சட்டை கைகளைச்
சுருட்டிக்கொள், செங்கலுக்கு மேலாக உன்
கரத்தை உயர்த்து. எருசலேம் நகரத்தைத்
தாக்குவது போன்று நடி. நீ ஜனங்களிடம்
எனது தூதுவனைப்போன்று பேசுகிறாய்
என்பதைக் காட்ட இதனைச் செய். 8இப்
பொழுது பார். நான் உன் மேல் கயிற்றைக்
கட்டுகிறேன். நகரத்திற்கு எதிராக உனது
தாக்குதல் முடியுமட்டும் உன்னால் ஒரு
பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்திற்கு
உருளமுடியாது” என்றார்.
9தேவன் மேலும் சொன்னார்:“நீ ரொட்டி
செய்வதற்கு கொஞ்சம் தானியத்தைப் பெற
வேண்டும். கொஞ்சம் கோதுமை, வாற்
கோதுமை, மொச்சை, அவரைக்காய்,
தினை, கம்பு ஆகியவற்றையும் பெறு, ஒரு
பாத்திரத்தில் எல்லாவற்றையும் போட்டு
கலந்து மாவாக்கு. நீ இதனை ரொட்டி
செய்யப் பயன்படுத்து. நீ 390 நாட்கள்
ஒரு பக்கமாகப் படுத்திருக்கும்போது இந்த
ரொட்டியையே உண்பாய். 10இம்மாவில் ஒரு
நாளைக்கு ஒரு கோப்பை மட்டுமே ரொட்டி
செய்யப் பயன்படுத்த அனுமதிக்கப்படுவாய்.

நீ வேளா வேளைக்கு அந்த உணவை
உண்பாய். 11நீ ஒவ்வொரு நாளும் 3
கோப்பை தண்ணீரை மட்டுமே குடிக்க
அனுமதிக்கப்படுவாய். இதை நீ ஒவ்வொரு
நாளும் வேளாவேளைக்குக் குடிக்க அனு
மதிக்கப்படுவாய். 12உனது உணவை நீயே
ஒவ்வொரு நாளும் தயாரிக்கவேண்டும். நீ
காய்ந்த மனித மலத்தை எரித்து ரொட்
டியைச் சுடவேண்டும். இந்த ரொட்டியை
நீ ஜனங்களுக்கு முன்னால் சுட்டு உண்ண
வேண்டும்." 13பின்னர் கர்த்தர் சொன்னார்:
"இஸ்ரவேல் குடும்பத்தார் வெளிநாடுகளில்
சுத்தமற்ற ரொட்டியை உண்பார்கள் என்
பதை இது காட்டும். அவர்கள் அத்தகைய
நாடுகளுக்குப் போகும்படி நான் பலவந்தப்
படுத்தினேன்.

14பிறகு நான் (எசேக்கியேல்) சொன்னேன்:
"ஓ, எனது கர்த்தராகிய ஆண்டவர், நான்
என்றைக்கும் அசுத்தமான உணவை உண்ட
தில்லை. நான் இதுவரை நோயால் மரித்த
அல்லது காட்டுமிருகத்தால் கொல்லப்பட்ட
மிருகத்தின் இறைச்சியைத் தின்ற தில்லை.
நான் சிறுவனாய் இருந்த நாள் முதல்
இன்றுவரை அசுத்தமான இறைச்சியைத்
தின்றதில்லை, இத்தகைய மோசமான
இறைச்சி என் வாய்க்குள் நுழைந்ததில்லை."

15பிறகு தேவன் என்னிடம் சொன்னார்;
"சரி! நான் உனது அப்பத்தைச் சுடுவதற்கு
உலர்ந்த மாட்டுச் சாணத்தைப் பயன்படுத்த
அனுமதிக்கிறேன். நீ காய்ந்த மனிதமலத்தைப்
பயன்படுத்த வேண்டாம்."

16பிறகு தேவன் என்னிடம் சொன்னார்:
"மனுபுத்திரனே, எருசலேமிற்கு விநியோகம்
ஆகும் உணவை அழிக்கிறேன். ஜனங்களிடம்
உண்பதற்குச் சிறிதளவு உணவு உள்ளது.
அவர்கள் தமது உணவு விநியோகத் தைப்
பற்றிக் கவலையோடு இருப்பார்கள்.
அவர்களிடம் குடிப்பதற்குச் சிறிது அளவு
தண்ணீர் மட்டுமே இருக்கும். அவர்கள்
அந்தத் தண்ணீரைக் குடிக்கும்போது மிகவும்
பயப்படுவார்கள். 17ஏனென்றால், ஜனங்க
ளுக்குப் போதிய அளவு உணவும் தண்
ணீரும் இருக்காது. ஜனங்கள் தமது பாவங்
களுக்காக, ஒருவருக்கொருவர் பயந்து
வாடிப்போவார்கள்.

5 1-2"மனுபுத்திரனே, நகரத்தின்மேல் உனது
தாக்குதலுக்குப் பிறகு, நீ இவற்றைச்
செய்யவேண்டும். நீ கூர்மையான ஒரு
வாளை எடுத்துக்கொள். அதனை சவரக
னின் கத்தியைப் போன்று பயன்படுத்தி
உனது முடியையும் தாடியையும் மழித்துவிடு.
மழித்த முடியைத்தராசில் போட்டு நிறுத்திப்
பார். உனது முடியை சமமான மூன்று
பாகங்களாகப் பிரி, அதில் மூன்றில் ஒரு
பாகத்தை நகரத்தின் (செங்கல்) மேல் வை,
அந்நகரத்தில் முடியை எரி. சில ஜனங்கள்
நகரத்திற்குள் மரிப்பார்கள் என்பதை இது
காட்டும். பிறகு வாளைப் பயன்படுத்தி
மூன்றில் ஒரு பாகமுள்ள முடியைச் சிறு
துண்டுகளாக வெட்டு. அவற்றை நகரைச்
(செங்கல்) சுற்றிலும் போடு. இது, சில
ஜனங்கள் நகரத்திற்கு வெளியே மரிப்பார்கள்
என்பதைக் காட்டும். பிறகு மூன்றில் ஒரு
பங்கு முடியைக் காற்றில் தூவு. காற்று
அவற்றைப் பரவலாக்கட்டும். நான் என்
வாளை வெளியிலெடுத்து அந்த ஜனங்களுள்
சிலரைப் பிற தூர நாடுகளுக்குத் துரத்து
வேன் என்பதை இது காட்டும். 3ஆனால்
பிறகு, நீ போய் சில முடிகளை எடுத்து
வரவேண்டும். அவற்றை உன்மேல் சட்டை
யில் சுற்றிவைத்துப் பாதுகாக்க வேண்டும்.
நான் என் ஜனங்கள் சிலரைக் காப்பாற்று
வேன் என்பதை இது காட்டும். 4பிறகு
பறந்துபோன இன்னும் கொஞ்சம் முடியை
எடுத்து வரவேண்டும். அவற்றை நெருப்பில்
போடவேண்டும். அங்கு நெருப்பொன்று
எரிய ஆரம்பித்து இஸ்ரவேல் வீடு முழு
வதையும் அழிக்கும் என்பதை இது
காட்டுகிறது."

5பிறகு, எனது கர்த்தராகிய ஆண்டவர்
கூறினார்; "அந்தச் செங்கல் எருசலேமைக்
குறிக்கிறது. நான் எருசலேமை மற்ற தேசங்
களுக்கு நடுவில் இருக்கச்செய்தேன். அவ
ளைச் சுற்றிலும் மற்ற நாடுகள் உள்ளன.
6எருசலேம் ஜனங்கள் எனது கட்டளை
களுக்கு எதிராகக் கலகம் செய்தனர். அவர்
கள் மற்ற நாடுகளைவிட மோசமாக இருக்
கின்றனர்! அவர்களைச் சுற்றியுள்ள நாட்டி
லுள்ளவர்களைவிட அவர்கள் எனது
பெரும்பாலான சட்டங்களை மீறிவிட்டனர்.
எனது கட்டளைகளைக் கேட்கவும், சட்டங்
களுக்கு அடிபணியவும் மறுத்துவிட்டனர்."

7எனவே எனது கர்த்தராகிய ஆண்டவர்
கூறுகிறார்: "நான் உனக்குப் பயங்கரமான
வற்றைச் செய்வேன். ஏனென்றால், நீ
எனது சட்டங்களுக்கு அடிபணியவில்லை.
நீ எனது கட்டளைகளுக்கு அடிபணிய
வில்லை. உன்னைச் சுற்றியுள்ள ஜனங்களை
விட நீ எனது சட்டங்களை அதிகமாக
மீறினாய்! உன்னைச் சுற்றியிருக்கும் நாடுகள்
தவறு என கருதும் குற்றங்களையும் கூட
நீ செய்தாய்!" 8எனவே, எனது கர்த்தராகிய
ஆண்டவர் கூறுகிறார்: "எனவே இப்பொ
ழுது, நானும்கூட உனக்கு எதிரானேன்!
மற்ற ஜனங்கள் பார்க்கும்படி நான் உன்
னைத் தண்டிப்பேன். 9நான் இதற்கு
முன்னால் செய்யாதவற்றை உனக்குச் செய்
வேன். நான் பயங்கரமானவற்றை மீண்டும்
செய்யமாட்டேன்! ஏனென்றால், நீ ஏராள
மான கொடூரமானச் செயல்களைச் செய்
தாய். 10பெற்றோர் தம் குழந்தைகளைத்
தின்பார்கள். அத்தகைய பசியில் எருசலேம்
ஜனங்கள் இருப்பார்கள். பிள்ளைகளும் தம்
சொந்த பெற்றோர்களைத் தின்பார்கள். நான்
உன்னைப் பல வழிகளில் தண்டிப்பேன்!

மீதி வாழ்கிற ஜனங்களை நான் காற்றிலே
தூவுவேன்.”
11 எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகி
றார்: “எருசலேமே, நான் உன்னைத் தண்டிப்
பேன் என்று என் உயிரின்மேல் சத்தியம்
செய்கிறேன். ஏனென்றால், எனது பரிசுத்த
மான இடத்தில் நீ கொடூரமான செயலைச்
செய்தாய். அதனைத் தீட்டுப்படுத்துமாறு
நீ அருவருப்பான செயல்களைச் செய்தாய்!
நான் உன்னைத் தண்டிப்பேன். நான் உன்
னிடம் இரக்கம் கொள்ளமாட்டேன். நான்
உனக்காக வருத்தப்படமாட்டேன். 12 உனது
ஜனங்களில் மூன்றில் ஒரு பங்கினர் நகரத்திற்
குள் பசியாலும், கொள்ளை நோயாலும்
மரிப்பார்கள். உனது ஜனங்களில் மூன்றில்
ஒரு பங்கினர் நகரத்திற்கு வெளியில் போரில்
மரிப்பார்கள். உனது ஜனங்களில் மூன்றில்
ஒரு பங்கினரை எனது வாளை வெளி
யிலெடுத்து அவர்களை தூரதேசங்களுக்கு
விரட்டுவேன். 13 அதற்குப் பிறகுதான் நான்
உங்கள் மீதுள்ள கோபத்தை நிறுத்துவேன்.
அவர்கள் எனக்குச் செய்த தீமைகளுக்காகத்
தண்டிக்கப்பட்டனர் என்று அறிவேன். நான்
கர்த்தர், அவர்கள் மேலுள்ள ஆழ்ந்த அன்பி
னால் நான் அவர்களிடம் பேசினேன்
என்பதை அவர்கள் அறிவார்கள்.”
14 கர்த்தர் கூறினார்: “எருசலேமே, நான்
உன்னை அழிப்பேன். நீ ஒன்றுமில்லாமல்
வெறும் கற்களின் குவியலாவாய். உன்னைக்
கடந்து செல்லும் ஜனங்கள் கேலிசெய்வார்
கள். 15 உன்னைச் சுற்றிலும் உள்ளவர்கள்
உன்னைக் கேலிசெய்வார்கள். ஆனால்
அவர்களுக்கு நீ ஒரு பாடமாக இருப்பாய்.
நான் கோபங்கொண்டு உன்னைத் தண்டித்து
விட்டதை அவர்கள் காண்பார்கள். நான்
மிகவும் கோபமாக இருந்தேன் உன்னை
எச்சரித்தேன். என்னால் என்ன செய்ய
முடியும் என்று கர்த்தராகிய நான் சொன்
னேன்! 16 உனக்கு பயங்கரமான பஞ்சத்தை
அனுப்புவேன் என்று சொன்னேன். உன்
னை அழிக்கக்கூடியவற்றை அனுப்புவேன்
என்று நான் சொன்னேன். அப்பஞ்ச காலம்
மீண்டும் மீண்டும் வரும். நான் உனக்குக்
கொடுக்கப்படும் உணவுப் பொருள்களை
நிறுத்திவிடுவேன் என்று சொன்னேன்.
17 நான் பஞ்சகாலத்தின்போது உங்கள் குழந்
தைகளைக் கொல்லும் காட்டு மிருகங்களை
உங்களுக்கு எதிராக அனுப்புவேன் என்று
சொன்னேன். நகரம் முழுவதும் நோயும்
சாவுமாக இருக்கும். அந்தப் பகை படை
வீரர்களை உங்களோடு சண்டையிட
அழைப்பேன். கர்த்தராகிய நான் உனக்கு
இவையெல்லாம் நிகழும் என்று சொன்
னேன், அவையெல்லாம் நடக்கும்!”

6 பின்னர் கர்த்தருடைய வார்த்தை மீண்
டும் என்னிடம் வந்தது. 2 அவர் சொன்
னார், “மனுபுத்திரனே, இஸ்ரவேலின் மலை
களை நோக்கித் திரும்பு! எனக்காக அவற்
றுக்கு எதிராகப் பேசு. 3 அம்மலைகளிடம்
இவற்றைக் கூறு;
‘இஸ்ரவேலின் மலைகளே, எனது கர்த்த
ராகிய ஆண்டவரிடமிருந்து வந்த செய்தி
யைக் கேளுங்கள். எனது கர்த்தராகிய
ஆண்டவர் இந்த மலைகளிடமும், குன்றுகளி
டமும் மலைச்சந்துகளிடமும் பள்ளத்தாக்கிட
மும் கூறுவது இதுதான். பாருங்கள்!
தேவனாகிய நான், உனக்கு எதிராகச்
சண்டையிட பகைவரைக் கொண்டுவருகி
றேன். நான் உனது உயர்ந்த மேடைகளை
அழிப்பேன். 4 உனது பலிபீடங்கள் துண்டு
துண்டாக உடைக்கப்படும்! உனது நறு
மணப் பீடங்கள் நொறுக்கப்படும்! நான்
உனது மரித்த உடல்களை நரகலான சிலை
களுக்கு முன்னால் எறிவேன். 5 நான்
இஸ்ரவேல் ஜனங்களின் மரித்த உடல்களை
உங்களது நரகலான சிலைகளுக்கு முன்னால்
போடுவேன். உங்களது பலிபீடங்களைச்
சுற்றிலும் உங்கள் எலும்புகளைப் போடு
வேன். 6 உங்களது ஜனங்கள் எங்கெல்லாம்
வாழ்கிறார்களோ அங்கெல்லாம் தீமை
ஏற்படும். அவர்களது நகரங்கள் கற்களின்
குவியலாகும். அவர்களது மேடைகள்
அழிக்கப்படும். ஏனென்றால், வழிபாட்டிற்
குரிய அவ்விடங்கள் மீண்டும் பயன்படக்
கூடாது. அப்பலிபீடங்கள் எல்லாம் அழிக்கப்
படும். ஜனங்கள் நரகலான அச்சிலைகளை
மீண்டும் வழிபடமாட்டார்கள். அச்சிலைகள்
தகர்க்கப்படும். நீ செய்த அனைத்தும் அழிக்
கப்படும்! 7 உங்கள் ஜனங்கள் கொல்லப்படு
வார்கள். பிறகு, நான் கர்த்தர் என்று நீ
அறிவாய்!’”
8 தேவன் கூறினார்: “ஆனால் நான் உங்கள்
ஜனங்களில் சிலரைத் தப்பிக்க வைப்பேன்,
அவர்கள் கொஞ்சக் காலத்திற்கு வெளிநாட்
டில் வாழ்வார்கள். அவர்களை வேறுநாடு
களில் சிதறி வாழும்படி நான் வற்புறுத்து
வேன். 9 பின்னர் தப்பிப்போன அவர்கள்
சிறைபிடிக்கப்படுவார்கள். அவர்கள் வேறு
நாடுகளில் வாழும்படி கட்டாயப்படுத்தப்படு
வார்கள். ஆனால் தப்பிப்போன அவர்கள்
என்னை ஞாபகப்படுத்திக்கொள்வார்கள்.
நான் அவர்களின் ஆத்துமாவை உடைத்
தேன். அவர்கள் தாம் செய்த தீமைக்காகத்
தம்மையே வெறுப்பார்கள். கடந்த காலத்தில்,
அவர்கள் என்னைவிட்டு விலகிப் போனார்
கள். அவர்கள் தம் நரகலான சிலைகளைத்
துரத்திச் சென்றனர். அவர்கள் தம் கண
வனை விட்டுவிட்டு இன்னொருவனோடு
சோரம் போகிற பெண்களைப் போன்றவர்
கள். அவர்கள் பல பயங்கரமானவற்றைச்
செய்தனர். 10 ஆனால் நான் தான் கர்த்தர்
என்பதை அவர்கள் அறிவார்கள்! நான்
சொன்னால் சொன்னபடி செய்வேன் என்
பதை அவர்கள் அறிவார்கள். அவர்களுக்கு
ஏற்பட்ட எல்லாத் தீமைகளுக்கும் நானே
காரணம் என்பதை அறிவார்கள்.”

11பிறகு, எனது கர்த்தராகிய ஆண்டவர்
கூறினார், “உங்கள் கைகளைத் தட்டுங்கள்,
கால்களை உதையுங்கள். இஸ்ரவேல் ஜனங்
கள் செய்த கொடூரமான காரியங்களைப்
பற்றிப் பேசுங்கள். அவர்கள் நோயாலும்
பசியாலும் கொல்லப்படுவார்கள் என்று
எச்சரிக்கை செய். அவர்கள் போரில் கொல்
லப்படுவார்கள் என்று சொல். 12தொலை
தூரங்களில் ஜனங்கள் நோயால் மரிப்பார்
கள். இந்த இடத்திற்கு அருகில் உள்ள
ஜனங்கள் வாள்களால் கொல்லப்படுவார்கள்.
இந்நகரத்தில் மீதியாக தங்கும் ஜனங்கள்
பட்டினியால் மரிப்பார்கள். பிறகுதான் நான்
என் கோபத்தை நிறுத்துவேன். 13பிறகுதான்,
நான் கர்த்தர் என்பதை நீ அறிவாய்.
உங்களது மரித்த உடல்கள் நரகலான
சிலைகளுக்கு முன்னாலும் பலிபீடங்களுக்கு
அருகிலும் கிடக்கும்போது நீ அறிவாய்.
அந்த உடல்கள், உங்களது ஒவ்வொரு
வழிபாட்டு இடங்களிலும், உயர்ந்த குன்று
களிலும், மலைகளிலும், ஒவ்வொரு பச்சை
மரங்கள் மற்றும் இலைகளுடனுள்ள ஒக்
மரங்களின் அடியிலும், கிடக்கும். அந்த
இடங்களில் எல்லாம் நீ பலிகளைச் செலுத்தி
னாய். அங்கே, அவை உன்னுடைய,
நரகலானசிலைகளுக்கு இனிய வாசனையை
வெளிப்படுத்தியது. 14ஆனால் ஜனங்களாகிய
உங்கள்மேல் என் கரத்தை உயர்த்தி நீங்கள்
எங்கு குடியிருந்தாலும் தண்டிப்பேன்!
உங்கள் நாட்டை அழிப்பேன்! அது திப்லாத்
வனாந்தரத்தைவிட மிகவும் வெறுமையாக
இருக்கும். பிறகு நானே கர்த்தர் என்பதை
அவர்கள் அறிவார்கள்!”

7 பின்னர் கர்த்தருடைய வார்த்தை என்னி
டம் வந்தது. 2அவர் சொன்னார்;
“இப்பொழுது, மனுபுத்திரனே, இதைச் சொல்:
எனது கர்த்தராகிய ஆண்டவரிடமிருந்து
ஒரு செய்தி வந்திருக்கிறது. இச்செய்தி
இஸ்ரவேல் நாட்டுக்குரியது! முடிவு வந்திருக்
கிறது. நாடு முழுவதும் அழிக்கப்படுகிறது.
3இப்பொழுது உன் முடிவு வந்துகொண்டி
ருக்கிறது! நான் உன் மீது எவ்வளவு
கோபத்தோடு இருக்கிறேன் என்பதைக்
காட்டுவேன். நீ செய்த தீமைகளுக்காக நான்
உன்னைத் தண்டிப்பேன். நீ செய்த
பயங்கரமானவற்றுக்கெல்லாம் உன்னை
விலை கொடுக்கும்படிச் செய்வேன்.
4நான் உன்னிடம் எவ்வித இரக்கமும்
காட்டமாட்டேன். நான் உனக்காக வருத்தப்
படமாட்டேன். நீ செய்த தீமைகளுக்காக
நான் உன்னைத் தண்டிக்கிறேன். நீ அத்
தகைய பயங்கரமானவற்றைச் செய்திருக்கி
றாய். இப்பொழுது நானே கர்த்தர் என்பதை
நீ அறிவாய்.”
5எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறினார்; “ஒரு கேட்டிற்குப் பின்
இன்னொரு கேடு ஏற்படும்! 6முடிவு
வருகிறது, அது விரைவில் நிகழும்! 7இஸ்ர
வேலில் குடியிருக்கும் ஜனங்களே
மகிட்ச்சியின் குரலைக் கேட்டிருக்கிறீர்களா?
பகைவன் வருகிறான். தண்டனைக் காலம்
மிகவிரை வில் வருகிறது! பகைவரின்
சத்தம் மலைகளில் மேலும் மேலும்
அதிகரிக்கிறது. 8இப்பொழுது மிக விரைவில்
நான் எனது கோபத்தைக் காட்டுவேன்.
உனக்கு எதிரான எனது கோபம்
முழுவதையும் நான் காட்டு வேன். நீ
செய்த தீயவற்றுக்காக நான் உன்னைத்
தண்டிப்பேன். நீ செய்த பயங்கர
செயலுக்காக விலை கொடுக்கச் செய்வேன்.
9நான் எவ்வித இரக்கமும் காட்டமாட்டேன்.
நான் உனக்காக வருத்தப்படமாட்டேன்.
நீங்கள் அத்தகைய பயங்கரங்களைச் செய்தி
ருக்கிறீர்கள். இப்பொழுது, உங்களை அடிக்
கும், நானே கர்த்தர் என்பதை நீங்கள்
அறிவீர்கள்.
10“ஒரு செடி துளிர்ந்து, மொட்டுவிட்டு,
பூப்பதுபோல், தண்டனைக் காலம் வந்திருக்
கிறது. தேவன் அடையாளம் கொடுத்துவிட்
டார். பகைவன் தயாராகிவிட்டான். பெரு
மைகொண்ட அரசனான நேபுகாத்நேச்சார்
ஏற்கனவே வல்லமை வாய்ந்தவனாகிக்
கொண்டிருக்கிறான். 11மூர்க்கத்தனமான மனி
தன் கெட்ட ஜனங்களைத் தண்டிக்கத்
தயாராகி இருக்கிறான். இஸ்ரவேலில் நிறைய
மனிதர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவன்
அவர்களில் ஒருவன் அல்ல. அந்தக் கூட்டத்
தில் ஒருவனாக அவன் இல்லை. அவன்
அந்த ஜனங்களில் உள்ள முக்கியதலைவர்
களில் ஒருவன் அல்ல.
12“அந்தத் தண்டனைக் காலம் வந்திருக்
கிறது, அந்த நாள் இதோ இருக்கிறது.
பொருட்களை வாங்குகிறவன் மகிழ்ச்சியாக
இருக்கமாட்டான். பொருட்களை விற்பவ
னும் விற்பதைப்பற்றி துக்கப்படமாட்டான்.
ஏனென்றால், அப்பயங்கரமான தண்டனை
ஒவ்வொருவருக்கும் கிடைக்கும். 13தம்
சொத்தை விற்கிற ஜனங்கள் திரும்பவும்
அங்கே வருவதில்லை. ஒருவன் உயிர்
தப்பிப் பிழைத்தாலும் அவன் தன் சொத்
தைப் பெற திரும்பப் போகமாட்டான்.
ஏனென்றால், இந்த தரிசனம் ஜனங்கள்
கூட்டம் முழுவதற்குரியதாகும். எனவே,
ஒருவன் தப்பி உயிர் பிழைத்தாலும் ஜனங்
கள் பலமிருப்பதாக உணரமாட்டார்கள்.
14“அவர்கள் ஜனங்களை எச்சரிக்க
எக்காளத்தை ஊதுவார்கள். ஜனங்கள் போ
ருக்குத் தயாராவார்கள். ஆனால் அவர்கள்
போர் செய்யமாட்டார்கள். ஏனென்றால்,
அந்தக் கூட்டத்தின்மேல் நான் எவ்வளவு
கோபங்கொண்டிருக்கிறேன் என்பதைக் காட்
டுவேன். 15பகைவன் தனது வாளோடு
நகரத்திற்கு வெளியே இருக்கிறான். நோயும்
பசியும் நகரத்திற்குள்ளே இருக்கின்றன.
ஒருவன் நகரத்திற்கு வெளியே போனால்
பகைவரின் போர்வீரன் கொல்வான். அவன்

நகரில் தங்கினால் பசியும் நோயும் அவனை
அழிக்கும்.
16 "ஆனால் சில ஜனங்கள் தப்பித்துக்கொள்
வார்கள். அவர்கள் மலைகளுக்கு ஓடுவார்
கள். ஆனால் அவர்கள் மகிழ்ச்சியாக இருக்க
மாட்டார்கள். அவர்கள் தமது அனைத்து
பாவங்களுக்காகவும் வருந்துவார்கள். அவர்
கள் அழுவார்கள். புறாக்களைப் போன்ற
துயர ஒலிகளை எழுப்புவார்கள். 17 ஜனங்கள்
தம் கைகளை உயர்த்துவதற்குச் சோர்வும்
துக்கமும் அடைவார்கள். அவர்களது கால்
கள் தண்ணீரைப் போன்றிருக்கும். 18 அவர்
கள் துக்கத்திற்குரிய ஆடைகளை அணி
வார்கள். பயத்தால் மூடப்படுவார்கள். ஒவ்
வொரு முகத்திலும் நீ அவமானத்தைக்
காண்பாய். அவர்கள் தம் துயரத்தைக்
காட்ட தலையை மழித்துக்கொள்வார்கள்.
19 அவர்கள் தமது தங்கத்தாலும் வெள்ளி
யாலுமான சிலைகளை வீதிகளில்
எறிவார்கள். ஏனென்றால், கர்த்தர் அவர்கள்
மீது தன் கோபத்தைக் காட்டும்போது
அச்சிலைகளால் அவர்களுக்கு உதவ முடி
யாமல் இருக்கும். அச்சிலைகள் அவர்களைப்
பாவத்தில் விழச்செய்கிற வலையல்லாமல்
வேறு எதுவுமில்லை. அச்சிலைகள் ஜனங்
களுக்கு உணவைக் கொடுப்பது இல்லை.
அச்சிலைகள் அவர்கள் வயிற்றில் உணவை
வைப்பதுமில்லை.
20 "அந்த ஜனங்கள் தம் அழகான நகை
களைப் பயன்படுத்தி ஒரு சிலையைச்
செய்தனர். அவர்கள் அச்சிலைக்காகப் பெரு
மைப்பட்டனர். அவர்கள் தமது வெறுக்கத்
தக்க சிலைகளைச் செய்தனர்! அவர்கள்
நரகலான அவற்றைச் செய்தனர். எனவே
நான் (தேவன்) அவர்களை அழுக்கு நிறைந்த
கந்தையைப்போல் வெளியே எறிவேன்.
21 அவர்களை அந்நியர்கள் எடுத்துச்செல்லும்
படி அனுமதிப்பேன். அந்நியர்கள் அவர்
களைக் கேலி செய்வார்கள். அந்த அந்நியர்
கள் சில ஜனங்களைக் கொன்று மற்றவர்
களைக் கைதிகளாகச் சிறை பிடிப்பார்கள்.
22 அவர்களிடமிருந்து நான் என் தலையைத்
திருப்புவேன். நான் அவர்களைப் பார்க்
கமாட்டேன். அந்த அந்நியர்கள் என் ஆல
யத்தை அழிப்பார்கள். அவர்கள் அப்பரிசுத்த
மான கட்டிடத்தின் மறைக்கப்பட்ட பகுதிக
ளுக்குள் சென்று அவற்றைப் பரிசுத்தமற்ற
தாகச் செய்வார்கள்.
23 "சிறைக்கைதிகளுக்காகச்சங்கிலிகளைச்
செய்யுங்கள்! ஏனென்றால், மற்றவர்களைக்
கொல்லுகிற ஜனங்கள் தண்டிக்கப்படு
வார்கள். நகரத்தின் ஒவ்வொரு இடத்திலும்
வன்முறை நிகழும். 24 நான் மற்ற நாடுகளில்
உள்ள கெட்ட ஜனங்களை அழைத்து
வருவேன். அக்கெட்ட ஜனங்கள் இஸ்ர
வேலில் உள்ள அனைத்து வீடுகளையும்
அபகரித்துக் கொள்வார்கள். நான் உங்களது
பலம் வாய்ந்த ஜனங்கள் பெருமைப்படுவதை
நிறுத்துவேன். வெளிநாடுகளிலுள்ள அந்த
ஜனங்கள் நீங்கள் தொழுகை செய்யும்
இடங்களை எல்லாம் அபகரிப்பார்கள்.
25 "ஜனங்களாகிய நீங்கள் அச்சத்தால்
நடுங்குவீர்கள். நீங்கள் சமாதானத்தைத் தேடு
வீர்கள், ஆனாலும் அது இருக்காது. 26 நீங்கள்
ஒன்றுக்குப்பின் ஒன்றாகத் துன்பக் கதை
களைக் கேட்பீர்கள். நீங்கள் கெட்ட செய்தி
களைத் தவிர வேறு எதையும் கேட்க
மாட்டீர்கள். நீங்கள் தீர்க்கதரிசியைத் தேடி
அவனிடம் தரிசனம் பற்றி கேட்பீர்கள்,
ஆனால் அது கிடைக்காது. ஆசாரியர்
களிடம் உங்களுக்குக் கற்றுத்தர எதுவும்
இருக்காது. மூப்பர்களிடம் உங்களுக்கு
ஆலோசனை சொல்ல எதுவும் இருக்காது.
27 உங்கள் அரசன் மரித்துப்போன ஜனங்க
ளுக்காக அழுதுகொண்டிருப்பான். தலைவர்
துக்கத்திற்குரிய ஆடையை அணிந்திருப்
பார்கள். பொது ஜனங்கள் மிகவும் பயந்து
போயிருப்பார்கள். ஏனென்றால், நான்
அவர்களுடைய தீயசெயல்களுக்கு ஏற்றவண்
ணம் திருப்பிக்கொடுப்பேன். அவர்களுக்கு
ரிய தண்டனையை நான் தீர்மானிப்பேன்.
நான் அவர்களைத் தண்டிப்பேன். பிறகு
அந்த ஜனங்கள் நானே கர்த்தர் என்பதை
அறிந்துகொள்வார்கள்."
8 ஒரு நாள் நான் (எசேக்கியேல்) என்
வீட்டில் உட்கார்ந்து கொண்டிருந்தேன்.
யூதாவின் மூப்பர்கள் (தலைவர்கள்) எனக்கு
முன்னால் உட்கார்ந்திருந்தார்கள். இது
நாடுகடத்தப்பட்ட ஆறாம் ஆண்டின் ஆறாம்
மாதத்தின் ஐந்தாம் நாளாக இருந்தது. திடீ
ரென்று எனது கர்த்தராகிய ஆண்டவரு
டைய வல்லமை என்மேல் வந்தது. 2 நெருப்பு
போன்ற ஒன்றை நான் பார்த்தேன். அது
மனித உடலைப் போன்றும் இருந்தது.
இடுப்புக்குக் கீழே அது நெருப்பைப்
போன்றிருந்தது. இடுப்புக்கு மேலே நெருப்
பிலே பழுத்த உலோகம் போன்று மின்னிக்
கொண்டிருந்தது. 3 பிறகு நான் கையைப்
போன்று தோன்றிய ஒன்றைப் பார்த்தேன்.
அவர் தன் கையை நீட்டி என் தலைம
யிரைப் பிடித்துத் தூக்கினார். பின்னர்
ஆவியானவர் என்னைத் தூக்கிக்கொண்டு,
தேவ தரிசனத்திலே என்னை எருசலே
மிற்குக் கொண்டுபோனார். அவர் வடதி
சைக்கு எதிரான உள்வாசலின் நடையில்
விட்டார். தேவனுக்கு எரிச்சலுண்டாக்குகிற
சிலையும் அங்கே இருந்தது. 4 ஆனால்
இஸ்ரவேலின் தேவனுடைய மகிமையும்
அங்கே இருந்தது. அம்மகிமையானது நான்
பள்ளத்தாக்கிலே கண்டிருந்த தரிசனத்திற்கு
ஒத்ததாக இருந்தது.
5 தேவன் என்னிடம் பேசினார். அவர்
சொன்னார்: "மனுபுத்திரனே, வடக்கை
நோக்கிப் பார்." எனவே, நான் வடக்கு
நோக்கிப் பார்த்தேன்! அங்கே, பலிபீடத்தின்
வாசலுக்கு வடக்கே, நடையிலே தேவனுக்கு

எரிச்சலை உண்டாக்குகிற சிலை இருந்தது.
6 பிறகு தேவன் என்னிடம் சொன்னார்:
“மனுபுத்திரனே, இஸ்ரவேல் ஜனங்கள்
செய்கிற வெறுக்கத்தக்க காரியங்களை நீ
காண்கிறாயா? அவர்கள் இங்கே எனது
ஆலயத்தை அடுத்து அந்த பயங்கரமான
சிலையைக் கட்டியிருக்கிறார்கள்! நீ என்
னோடு வந்தால், இதைவிடப் பயங்கரமான
வற்றையெல்லாம் நீ பார்க்கலாம்!”

7 எனவே, நான் பிரகாரத்தின் வாசலுக்குப்
போனேன். நான் சுவற்றில் ஒரு துவா
ரத்தைப் பார்த்தேன். 8 தேவன் என்னிடம்,
“மனுபுத்திரனே, சுவற்றில் ஒரு துவாரம்
செய்” என்றார். எனவே, நான் சுவற்றில்
ஒரு துவாரம் செய்தேன். அங்கே நான் ஒரு
கதவைப் பார்த்தேன். 9 பிறகு தேவன்
என்னிடம் சொன்னார்: “உள்ளே போய்
ஜனங்கள் செய்யும் வெறுக்கத்தக்கதும்
கெட்டதுமானவற்றையெல்லாம் பார்.” 10 என
வே, நான் உள்ளே போய் பார்த்தேன். நீங்கள்
நினைத்துப் பார்க்கவே வெறுக்கின்ற
ஊர்கின்ற மற்றும் ஒடுகின்ற மிருகங்களின்
சிலைகள் இருந்தன. அவை இஸ்ரவேல்
ஜனங்களால் வழிபடப்படுகிற அருவருப்
பான சிலைகள். அந்த நரகலான சிலைகள்
சுவற்றில் செதுக்கப்பட்டிருந்தன!

11 பின்னர், நான் இஸ்ரவேல் வம்சத்தாரின்
மூப்பரில் (தலைவர்கள்) எழுபது பேரும்
அவர்களின் நடுவிலே சாப்பானுடைய மக
னாகிய யசனியாவும் தொழுதுகொண்டு
இருப்பதைக் கவனித்தேன். அவர்கள் ஜனங்
களுக்கு முன்னால் இருந்தனர்! ஒவ்வொரு
தலைவரும் தன் கையிலே தூப கலசத்தை
வைத்திருந்தனர். அவற்றிலிருந்து வெளிவந்த
புகை காற்றில் எழும்பியது: 12 பிறகு தேவன்
என்னிடம் சொன்னார். “மனுபுத்திரனே,
இருளிலே இஸ்ரவேலின் மூப்பர்கள் என்ன
செய்கிறார்கள் என்பதைப் பார்த்தாயா? ஒவ்
வொருவனும் தமது பொய்த் தெய்வத்துக்கு
ஒரு சிறப்பான அறை வைத்திருக்கிறான்.
அம்மனிதர்கள் தங்களுக்குள், ‘கர்த்தரால்
நம்மைப் பார்க்க முடியாது. கர்த்தர் இந்
நாட்டை விட்டு விலகிப்போய் விட்டார்’
என்கின்றனர்.” 13 பிறகு தேவன் என்னிடம்:
“நீ என்னோடு வந்தால், அம்மனிதர்கள்
இதைவிடப் பயங்க ரமானவற்றைச் செய்
வதை நீ காணலாம்” என்றார்.

14 பிறகு தேவன், கர்த்தருடைய ஆலய
வாசலுக்கு அழைத்துச் சென்றார். இந்த
வாசல் வடப்பக்கத்தில் இருந்தது. அங்கே
பெண்கள் அமர்ந்து அழுதுகொண்டிருப்ப
தைப் பார்த்தேன். அவர்கள் பொய்த் தெய்
வமான தம்மூஸுக்காகத்* துக்கப்பட்டுக்
கொண்டிருந்தனர்.

15 தேவன் என்னிடம் சொன்னார்: “மனு
புத்திரனே, இப்பயங்கரமானவற்றைப் பார்த்
தாயா? என்னோடு வா. இதைவிட மிக
மோசமானவற்றை நீ பார்ப்பாய்!” என்றார்.
16 பிறகு கர்த்தருடைய ஆலயத்திலுள்ள உட்
பிரகாரத்திற்கு அழைத்துச் சென்றார். அந்த
இடத்தில் 25 பேர் குனிந்து தொழுதுகொண்
டிருந்ததைப் பார்த்தேன். அவர்கள் கர்த்தரு
டைய ஆலயத்தின் வாசல் நடையிலே
மண்டபத்துக்கும் பலிபீடத்துக்கும் நடுவிலே
தவறான திசை நோக்கி இருந்தனர்! அவர்
களின் முதுகுகள் பரிசுத்த இடத்தின் பக்கம்
திரும்பியிருக்க அவர்கள் சூரியனைப்
பார்த்து குனிந்து வணங்கிக்கொண்டிருந்
தார்கள்!

17 பிறகு தேவன் சொன்னார்: “மனுபுத்தி
ரனே, இதனைப் பார்த்தாயா? யூதா ஜனங்கள்
எனது ஆலயத்தை முக்கியமானதாகக் கருதா
மல், என் ஆலயத்தில் இவ்வாறு பயங்கர
மான காரியங்களைச் செய்கின்றனர்! இந்
நாடு வன்முறையால் நிறைந்துள்ளது. என்
னைக் கோபப்படுத்தும்படியான காரியங்
களை எப்பொழுதும் செய்கின்றனர். பார்!
தம் மூக்கில் வளையங்களை சந்திரன்
எனும் பொய்த் தெய்வத்தை கௌரவப்
படுத்துவதற்காக அணிந்துள்ளனர்! 18 நான்
எனது கோபத்தைக் காட்டுவேன். நான்
அவர்களிடம் எவ்வித இரக்கமும் காட்ட
மாட்டேன்! நான் அவர்களுக்காக வருத்தப்
படமாட்டேன்! அவர்கள் அழுது, சத்தமானக்
குரலில் என்னைக் கூப்பிடுவார்கள்! ஆனால்
நான் அவற்றைக் கவனிக்க மறுக்கிறேன்!”

9 பின்னர் தேவன், தண்டனைக்குப் பொ
றுப்பாக இருந்த தலைவர்களிடம் சத்த
மிட்டார். ஒவ்வொரு தலைவரும் தமது
கையில் கொலைக்குரிய ஆயுதங்களை
வைத்திருந்தனர். 2 பிறகு உயர்ந்த வாசலிலி
ருந்து ஆறு மனிதர்கள் சாலையில் நடந்து
வருவதை நான் பார்த்தேன். அவ்வாசல்
வடபகுதியில் இருக்கிறது. ஒவ்வொருவரும்
தமது கையில் வெட்டுகிற ஆயுதத்தை
வைத்திருந்தனர். ஒரு மனிதன் சணல் நூல்
ஆடை அணிந்திருந்தான். அவன் தன்
இடுப்பில் நகலரின் எழுது கோலையும்
மைக் கூட்டையும் வைத்திருந்தான். அம்மனி
தர்கள் ஆலயத்தில் உள்ள வெண்கல பலி
பீடத்தின் அருகில் நின்றனர். 3 பிறகு இஸ்ர
வேலின் தேவனுடைய மகிமை கேருபீன்
மேலிருந்து எழும்பியது. பிறகு அந்த
மகிமை ஆலயத்தின் வாசலுக்குச் சென்றது.
அங்கே நின்று, அம்மகிமை சணல்
நூலாடை அணிந்து மைக்கூடும் எழுதுகோ
லும் வைத்திருக்கிற மனிதனைக் கூப்பிட்
டது.

4 பிறகு அவனிடம் கர்த்தர் (மகிமை)
சொன்னார்: “எருசலேம் நகரத்தின் வழி
யாகப் போ. நகரில் ஜனங்கள் செய்யும்

---

**தம்மூஸ்** பொய்த் தெய்வம். மரித்துப்போன இது அழுதால் திரும்ப உயிர் பெறும் என்பது நம்பிக்கை.

எல்லா பயங்கரமான காரியங்களையும் பற்றி
பெருமூச்சு விட்டு அழுகிறவர்களின் நெற்றிக
ளில் அடையாளம் போடு.”
5-6 பிறகு தேவன் மற்றவர்களிடம் கூறுகிற
தைக் கேட்டேன்: “நீங்கள் முதல் மனிதனைப்
பின்பற்ற வேண்டும் என நான் விரும்புகி
றேன். தன் நெற்றியில் அடையாளம் இல்லாத
ஒவ்வொருவரையும் நீங்கள் கொல்லவேண்
டும். நீங்கள் யார் மேலும் பரிதாபப்பட
வேண்டாம். நெற்றியில் அடையாளம் இல்
லாத மூப்பர்கள் (தலைவர்கள்) இளைஞர்
கள், இளம் பெண்கள், குழந்தைகள், பிள்ளை
கள் தாய்மார்கள் உள்பட எல்லோரையும்
கொல்லுங்கள். உங்கள் ஆயுதங்களால் அவர்
களைக் கொல்லவேண்டும். அவர்களிடம்
இரக்கம் காட்ட வேண்டாம். எவருக்காகவும்
வருத்தப்பட வேண்டாம். எனது ஆலயத்திலி
ருந்தே தொடங்குங்கள்.” எனவே, ஆலயத்
தின் முன்னாலிருந்து மூப்பர்களோடு ஆரம்
பித்தார்கள்.
7 தேவன் அவர்களிடம் சொன்னார்: “இந்த
ஆலயத்தை தீட்டுப்படுத்துங்கள். இப்பிரகாரங்
களைச் மரித்த உடல்களால் நிரப்புங்கள்!
இப்பொழுது போங்கள்!” எனவே, அவர்கள்
நகருக்குள் போய் ஜனங்களைக் கொன்றார்
கள்.
8 அம்மனிதர்கள் போய் ஜனங்களைக்
கொல்லும்போது நான் அங்கே தங்கினேன்.
நான் என் முகம் தரையில் படும்படிக்
குனிந்து வணங்கிச் சொன்னேன். “எனது
கர்த்தராகிய ஆண்டவரே, எருசலேமின் மீது
தனது கோபத்தைக் காட்டுகிறவரே, இஸ்ர
வேலில் தப்பிப்பிழைத்த அனைவரையும்
கொல்லப் போகிறீரா?”
9 தேவன் சொன்னார்: “இஸ்ரவேல் வம்சத்
தாரும் யூதா வம்சத்தாரும் மிகவும்
மோசமான பாவங்களைச் செய்திருக்கின்ற
னர்! நாட்டில் ஒவ்வொரு இடங்களிலும்
ஜனங்கள் கொலை செய்யப்பட்டிருக்கின்ற
னர். நகரம் குற்றங்களால் நிறைந்திருக்கின்
றது. ஏனென்றால், ஜனங்கள் தங்களுக்குள்
‘கர்த்தர் நாட்டை விட்டு விலகினார்.
நாம் செய்கின்றவற்றை அவரால் பார்க்க
முடியாது’ என்று கூறுகின்றனர். 10 நான்
எவ்வித இரக்கமும் காட்டமாட்டேன். நான்
இந்த ஜனங்களுக்காக வருத்தப்படமாட்டேன்.
அவர்கள் இதனைத் தாமாகவே கொண்டு
வந்தனர். நான் அவர்களுக்கு ஏற்ற தண்ட
னையையே கொடுக்கிறேன்!”
11 பிறகு சணல் நூலாடை அணிந்து நக
லரின் எழுது கோலும் மைக் கூடும்
வைத்திருந்தவன் பேசினான். அவன், “நீர்
கட்டளையிட்டபடி நான் செய்திருக்கிறேன்”
என்றான்.

10 பிறகு நான் கேருபீன்களுடைய
தலைக்கு மேலிருந்த கிண்ணம்
போன்ற வட்டத்தைப் பார்த்தேன். அது
இந்திர நீல ரத்தினம் போன்று
காணப்பட்டது. அதற்குமேல் ஒரு சிங்காச
னம் இருப்பது போலவும் தோன்றியது.
2 பிறகு சிங்காசனத்தின்மேல் உட்கார்ந்
திருந்தவர் சணல் நூலாடை அணிந்த
மனிதனிடம் சொன்னார்: “சக்கரங்களுக்கு
இடையில் வா, கேருபீனின் கீழ் உள்ள
பகுதிக்கு வா, கேருபீன்களின் நடுவிலே
எரிந்துகொண்டிருந்த நெருப்புத் தழலைக்
கை நிறைய எடு. அவற்றை எருசலேம்
நகரத்தின்மேல் எறி.”
அந்த மனிதன் என்னைக் கடந்து
போனான். 3 அந்த மனிதன் மேகங்களுக்குள்
நடந்து போனபோது கேருபீன்கள் ஆலயத்
தின் வலது புறத்தில் நின்றன. அந்த
மேகம் உட்பிரகாரத்தை நிரப்பியது. 4 பிறகு
பிரகாரத்திலும் ஆலயத்தின் வாசலிலும்
நின்றுகொண்டிருந்த கேருபீன்களின் மேலி
ருந்து கர்த்தருடைய மகிமை எழும்பியது.
பிறகு மேகம் ஆலயத்தை நிரப்பிற்று. கர்த்த
ருடைய மகிமையின் பிரகாசத்தினால்
ஆலயப் பிரகாரம் நிரம்பியது. 5 பின்னர்
நான் கேருபீன்களுடைய சிறகுகளின் சத்தத்
தைக் கேட்டேன். அச்சத்தமானது, சர்வ
வல்லமையுள்ள தேவன் பேசும்போது ஏற்
படும் இடியோசை போன்றிருந்தது. சிறகுக
ளின் சத்தத்தை வெளிப்பிரகாரம்வரை
கேட்க முடிந்தது.
6 தேவன் சணல் நூலாடை அணிந்திருந்த
மனிதனைப் பார்த்து, ஒரு கட்டளையிட்
டார். தேவன் அவனிடம் சக்கரத்திற்குள்ளே
போய் கேருபீன்களிடையிலுள்ள நெருப்புத்
தழலை எடுத்து வரும்படிச் சொல்லியிருந்
தார். எனவே அந்த மனிதன் உள்ளே
நுழைந்து சக்கரத்தின் அருகிலே நின்றான்.
7 அப்போது ஒரு கேருபீன் தன் கையை
கேருபீன்களுக்கிடையில் உள்ள நெருப்பு
வரை நீட்டி எடுத்தது. அம்மனிதனின்
கைகளில் நெருப்புத் துண்டுகளை இட்டது.
அம்மனிதன் போனான். (8 கேருபீனின் சிறகு
களுக்கடியில் மனித கையைப்போன்று
காணப்பட்டது)
9 பிறகு நான் நான்கு சக்கரங்கள் இருப்ப
தைக் கவனித்தேன். ஒவ்வொரு கேருபீனுக்
கும் ஒரு சக்கரம் இருந்தது. சக்கரங்கள்
ஒவ்வொன்றும் ஒளிமிக்க மஞ்சள் நிற
இரத்தினக்கல் போலிருந்தது. 10 அங்கே
நான்கு சக்கரங்கள் இருந்தன. அனைத்து
சக்கரங்களும் ஒன்றுபோல காணப்பட்டன.
ஒரு சக்கரத்திற்குள் இன்னொரு சக்கரம்
இருப்பதுபோல் தோன்றியது. 11 அவை நக
ரும் போதெல்லாம் நான்கும் ஒரே நேரத்தில்
நகர்ந்தன. ஆனால் அவை நகரும்போது
கேருபீன் திரும்பாது. தலைபார்க்கும் திசை
யிலேயே அவை சென்றன. அவை நகரும்
போது திரும்பவில்லை. 12 அவற்றின் உட
லெல்லாம் கண்கள் இருந்தன. அவற்றின்
பின்புறத்திலும், கைகளிலும் சிறகுகளிலும்

சக்கரங்களிலும் கண்கள் இருந்தன. ஆம்,
நான்கு சக்கரங்களிலும் கண்கள் இருந்தன.
13சக்கரங்கள் "சுழலும் சக்கரங்கள்" என்று
அழைக்கப்படுவதை நான் கேட்டேன்.
14-15ஒவ்வொரு கேருபீனுக்கும் நான்கு
முகங்கள் இருந்தன. முதல் முகம் கேருபீன்
முகமாக இருந்தது. இரண்டாவது முகம்
மனிதமுகமாக இருந்தது. மூன்றாவது முகம்
சிங்கமுகமாக இருந்தது. நான்காவது முகம்
கழுகின் முகமாக இருந்தது. நான் கேபார்
ஆற்றருகில் தரிசனத்தில் கண்ட ஜீவன்கள்
கேருபீன்கள் என்பதை அறிந்துகொண்டேன்.
கேருபீன்கள் மேலே எழும்பின. 16அவற்
றோடு சக்கரங்களும் எழும்பின. கேருபீன்கள்
மேலே எழும்பிக் காற்றில் பறந்தபோது
சக்கரங்கள் திசை மாறவில்லை. 17கேருபீன்
கள் காற்றில் பறக்கும்போது சக்கரங்கள்
அவற்றோடு சென்றன. கேருபீன்கள் அசை
யாமல் நின்றபோது சக்கரங்களும் நின்றன.
ஏனென்றால், ஜீவனுடைய ஆவி (வல்லமை)
அவற்றில் இருந்தது.
18பிறகு கர்த்தருடைய மகிமை ஆலயத்தின்
வாசற்படியில் இருந்து கேருபீன்களின்
மேலிருந்த இடத்திற்குச் சென்று நின்றது.
19அப்பொழுது கேருபீன்கள் தம் சிறகுகளை
விரித்துக் காற்றில் பறந்தன. அவை ஆல
யத்தை விட்டுப் போவதைப் பார்த்தேன்.
சக்கரங்கள் அவற்றோடு சென்றன. பின்னர்
அவை கர்த்தருடைய ஆலயத்தின் கிழக்கு
வாசலில் நின்றன. இஸ்ரவேல் தேவனுடைய
மகிமையானது அவற்றின்மேல் காற்றில்
இருந்தது.
20பிறகு நான், கேபார் ஆற்றின் அருகில்
கண்ட தரிசனத்தில் இஸ்ரவேல் தேவனு
டைய மகிமைக்கடியில் தெரிந்த ஜீவன்
களை நினைத்துப்பார்த்தேன். நான், அவ்வி
லங்குகள் கேருபீன்கள் என்பதை அறிந்து
கொண்டேன். 21ஒவ்வொரு ஜீவனுக்கும்
நான்கு முகங்களும் நான்கு சிறகுகளும்
சிறகுகளுக்கடியில் மனித கரங்களைப்
போன்று மறைந்தும் இருந்தன. 22கேருபீன்க
ளின் முகங்கள் கேபார் ஆற்றின் அருகில்
தரிசனத்தில் கண்ட ஜீவன்களின் முகங்
களைப் போன்றிருந்தன. அவை ஒவ்வொன்
றும் தமது முகம் இருந்த திசையை
நோக்கிச் சென்றன.

11 பிறகு ஆவியானவர் என்னைக் கர்த்த
ருடைய ஆலயத்தின் கிழக்கு வாசலுக்
குத் தூக்கிச் சென்றார். இந்த வாசல் சூரி
யன் உதிக்கிற கிழக்கு நோக்கி இருந்தது.
நுழை வாசலில் 25 பேர் இருப்பதை
நான் பார்த்தேன். அம்மனிதர்களோடு ஆசூ
ரின் மகனான யசனியா இருந்தான். பெனா
யாவின் மகனான பெலத்தியாவும் இருந்தான்.
பெலத்தியா ஜனங்களின் தலைவனாயிருந்
தான்.
2பிறகு, தேவன் என்னிடம் பேசினார்.
அவர் சொன்னார்: "மனுபுத்திரனே, இவர்கள்
தான் நகரத்திற்குக் கேடான திட்டங்களைத்
தீட்டுகிறவர்கள். இம்மனிதர்கள் எப்பொழு
தும் ஜனங்களிடம் கெட்டவற்றைச் செய்
யும்படிக் கூறுகிறார்கள். 3இம்மனிதர்கள்,
'நாங்கள் விரைவில் எங்களது வீடுகளை
கட்டப்போகிறோம். நாங்கள் இந்நகரத்தில்
பாத்திரத்திற்குள் இருக்கிற இறைச்சி
போன்று பத்திரமாக இருக்கிறோம்' என்கின்
றனர். 4அவர்கள் இப்பொய்களைச் சொல்
லிக்கொண்டிருக்கிறார்கள். எனவே, எனக்
காக நீ ஜனங்களிடம் பேசவேண்டும். மனு
புத்திரனே, ஜனங்களுக்கு தீர்க்கதரிசனம்
சொல்லப் போ."
5பிறகு கர்த்தருடைய ஆவி என்மேல்
வந்தார். அவர் என்னிடம் சொன்னார்:
"கர்த்தர் இவற்றைச் சொன்னார் என்று
அவர்களிடம் கூறு: இஸ்ரவேல் குடும்பமே,
நீ பெரியவற்றைத் திட்டமிட்டுக் கொண்டி
ருக்கிறாய். ஆனால் நீ என்ன நினைத்து
கொண்டிருக்கிறாய் என்பதை நான்
அறிவேன்! 6நீ இந்நகரத்தில் பலரைக் கொன்
றிருக்கிறாய் நீ தெருக்களைப் பிணங்களால்
நிறைத்திருக்கிறாய். 7இப்போது நமது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறுகி
றார்: 'மரித்த உடல்களே இறைச்சியாகும்.
நகரமே பானையாகும். ஆனால் அவன்
(நேபுகாத்நேச்சார்) வந்து உன்னைப் பாது
காப்பான பானையிலே இருந்து வெளியே
எடுப்பான்! 8நீ வாளுக்குப் பயப்படுகிறாய்.
ஆனால் நான் உனக்கு எதிராக வாளைக்
கொண்டு வருகிறேன்!'" நமது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார். எனவே
அவை நிகழும்!

9தேவன் மேலும் சொன்னார்: "நான்
ஜனங்களாகிய உங்களை நகரத்திலிருந்து
வெளியேற்றுவேன். நான் அந்நியர்களிடம்
உங்களைக் கொடுப்பேன் உங்களைக் கடு
மையாகத் தண்டிப்பேன்! 10நீங்கள் வாளால்
மரணம் அடைவீர்கள். நான் உங்களை
இங்கே இஸ்ரவேலில் தண்டிப்பேன். எனவே,
உங்களைத் தண்டிக்கிறவர் நானே என்பதை
நீங்கள் அறிவீர்கள். நானே கர்த்தர். 11ஆம்,
இந்த இடம் சமையல் பானையாக இருக்கும்.
அதற்குள் வேகும் இறைச்சி நீங்களே! நான்
உங்களை இஸ்ரவேலில் தண்டிப்பேன்.
12பிறகு நானே கர்த்தர் என்பதை நீங்கள்
அறிவீர்கள். நீங்கள் மீறியது எனது சட்டம்!
நீங்கள் எனது ஆணைகளுக்கு அடிபணிய
வில்லை. உங்களைச் சுற்றிலும் உள்ள
நாட்டினரைப் போன்று நீங்கள் வாழ
முடிவு செய்தீர்கள்."
13நான் தீர்க்கதரிசனம் சொல்லி முடிக்கும்
போது, பெனாயாவின் மகனான பெலத்தியா
மரித்தான்! நான் தரையில் விழுந்தேன்.
என் முகம் தரையில் படும்படி குனிந்து,
"ஓ, எனது கர்த்தராகிய ஆண்டவரே, இஸ்ர
வேலில் வாழ்கிற மீதியான உயிர் தப்பி

யோர் அனைவரையும் நீர் அழித்துகொண்டி
ருக்கிறீர்!” என்று உரத்த குரலெழுப்பினேன்.
14 ஆனால், கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்: 15 “மனு
புத்திரனே, உனது சகோதரர்களை நினைத்
துப்பார். இஸ்ரவேல் குடும்பத்தாரையும்
இந்நகரை விட்டு வெளியேற்றப்பட்டவர்க
ளையும் நினைத்துப்பார்! அந்த ஜனங்கள்
இந்நாட்டிலிருந்து தொலை தூரத்தில் வாழ்கி
றார்கள். ஆனால் எருசலேமில் வாழ்கிற
ஜனங்களே அவர்களிடம் கூறுகிறார்கள்:
‘கர்த்தரிடமிருந்து விலகி தூரத்தில் இருங்
கள். இந்த நிலம் எங்களுக்குக் கொடுக்
கப்பட்டது, இது எங்களுடையது!’”
16 “எனவே, ஜனங்களிடம் இவற்றைப்
பற்றிச் சொல்; எனது கர்த்தராகிய ஆண்ட
வர் கூறுகிறார்; ‘இது உண்மை. நான்
எனது ஜனங்களை அந்நியநாடுகளுக்குப்
போகும்படி கட்டாயப்படுத்தினேன். பல
நாடுகளில் அவர்களைச் சிதறும்படிச் செய்
தேன். அவர்கள் அங்குத் தங்கும்பொழுது,
குறுகிய காலத்திற்கு நான் அவர்களுடைய
ஆலயமாயிருப்பேன். 17 எனவே நீ அந்த
ஜனங்களிடம் அவர்களது கர்த்தராகிய ஆண்
டவர், அவர்களைத் திரும்ப கொண்டு
வருவார் என்று சொல்லவேண்டும். உங்
களைப் பல நாடுகளில் சிதறடித்திருந்தேன்.
ஆனால் நான் உங்களைச் சேர்த்து அந்நாடு
களில் இருந்து திரும்ப அழைப்பேன். நான்
இஸ்ரவேல் நாட்டை உங்களுக்கு திரும்பத்
தருவேன்! 18 எனது ஜனங்கள் திரும்பி
வரும்போது அவர்களுடைய வெறுக்கத்தக்க
அருவருக்கத் தக்கச் சிலைகளை அழிப்பார்
கள். 19 நான் அவர்களை ஒன்று சேர்த்து
ஒரே ஆள் போன்று செய்வேன். நான்
அவர்களுக்குப் புதிய ஆவியைக் கொடுப்
பேன். நான் அவர்களிடமுள்ள கல்போன்ற
இருதயத்தை எடுத்துவிட்டு அந்த இடத்தில்
உண்மையான இருதயத்தை வைப்பேன்.
20 பின்னர் அவர்கள் எனது சட்டங்களுக்குப்
பணிவார்கள். நான் அவர்களிடம் சொல்
வதைச் செய்வார்கள். அவர்கள் எனது
உண்மையான ஜனங்களாக இருப்பார்கள்.
நான் அவர்களின் தேவனாக இருப்பேன்.’”
21 பிறகு தேவன் சொன்னார்: “ஆனால்,
இப்போது அவர்கள் இருதயம் அந்த வெறுக்
கத்தக்க அருவருக்கத்தக்கச் சிலைகளுக்குரிய
தாக இருக்கிறது. நான், அவர்கள் செய்த
தீயச்செயல்களுக்காக தண்டிப்பேன்.” எனது
கர்த்தராகிய ஆண்டவர் அவற்றைச் சொன்
னார். 22 பிறகு கேருபீன்கள் தம் சிறகை
விரித்து காற்றில் பறக்க ஆரம்பித்தன, சக்
கரங்களும் அவற்றோடு இருந்தன. இஸ்ரவேல்
தேவனுடைய மகிமை அதற்குமேல் இருந்
தது. 23 கர்த்தருடைய மகிமை காற்றில்
எழுந்து எருசலேமை விட்டு வெளியேறி
யது. அது நகரத்துக்குக் கிழக்கே இருக்கிற
மலையின்மேல் நின்றது. 24 பிறகு ஆவியான
வர் என்னை மேலே தூக்கி பாபிலோ
னியாவிற்கு இஸ்ரவேலை விட்டுக் கட்டாய
மாக வெளியே அனுப்பப்பட்ட ஜனங்
களிடம் திரும்பக் கொண்டுவந்தார். நான்
அதையெல்லாம் தேவ தரிசனத்தில் கண்
டேன். பின்னர் நான் தரிசனத்தில் கண்ட
அவர் காற்றில் எழுந்து என்னை விட்டுப்
போனார். 25 பிறகு நான் நாடுகடத்தப்பட்ட
ஜனங்களிடம் பேசினேன். கர்த்தர் எனக்குக்
காட்டிய எல்லாவற்றையும் நான் சொன்
னேன்.

12 பின்னர் கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்;
2 “மனுபுத்திரனே, நீ கலகக்காரர்களின்
மத்தியில் வாழ்கிறாய். அவர்கள் எப்பொழு
தும் எனக்கு எதிராகத் திரும்புகின்றனர்.
நான் அவர்களுக்காகச் செய்ததைப் பார்க்க
அவர்களிடம் கண்கள் இருக்கின்றன.
ஆனால் அவர்கள் அவற்றைப் பார்க்க
வில்லை. நான் அவர்களிடம் செய்யச்
சொல்வதைக் கேட்க அவர்களிடம் காதுகள்
இருக்கின்றன. ஆனால் அவர்கள் எனது
ஆணைகளைக் கேட்கவில்லை. ஏனென்றால்,
அவர்கள் கலகக்காரர்கள். 3 எனவே,
மனுபுத்திரனே, உனது பைகளைக்கட்டு. நீ
தொலைதூர நாட்டிற்குப் போவது போன்று
நடி. இவ்வாறு செய். இதனால் உன்னை
ஜனங்கள் பார்க்க முடியும். அவர்கள்
உன்னைப் பார்க்கலாம், ஆனால் அவர்கள்
கலகக்காரர்கள்.
4 “பகல் நேரத்தில், உனது பைகளை
வெளியே வை, அதனால் உன்னை ஜனங்
கள் பார்க்கமுடியும். பிறகு மாலையில்,
ஒரு கைதி தொலைதூர நாட்டிற்குப் போவது
போன்று நீ புறப்படு. 5 ஜனங்கள் கவனித்துக்
கொண்டிருக்கும்போது சுவற்றில் ஒரு
துவாரமிட்டு, அத்துவாரத்தின் வழியாக
வெளியே போ. 6 இரவில், உனது பைகளைத்
தோளில் போட்டுக்கொண்டு விலகிப்போ.
உன் முகத்தை மூடிக்கொள். அதனால் நீ
போகும்போது உன்னால் பார்க்க முடியாமல்
போகும். நீ இவற்றையெல்லாம் செய்யவேண்
டும். எனவே ஜனங்கள் உன்னைப் பார்க்க
முடியும். ஏனென்றால், இஸ்ரவேல் குடும்பத்
துக்கு உன்னை ஒரு எடுத்துக்காட்டாகப்
பயன்படுத்துவேன்.”
7 எனவே நான் (எசேக்கியேல்) கட்ட
ளையிடப்பட்டபடி செய்தேன். பகல் பொழு
தில், எனது பைகளை எடுத்துகொண்டு
தூரநாடுகளுக்குப் போவது போன்று புறப்
பட்டேன். அன்று மாலையில் நான் என்
கையால் சுவரில் துவாரமிட்டேன். இரவில்
நான் என் தோளில் பைகளைப் போட்டுக்
கொண்டு விலகினேன். நான் இதனைச்
செய்தேன். எனவே ஜனங்களால் என்னைப்
பார்க்கமுடிந்தது.
8 மறுநாள் காலையில், கர்த்தருடைய
வார்த்தை என்னிடம் வந்தது. அவர் சொன்

னார்; 9“மனுபுத்திரனே, நீ என்ன செய்து
கொண்டிருக்கிறாய் என்று இஸ்ரவேலின்
கலகக்காரர்கள் உன்னைப் பார்த்துக் கேட்
டார்கள் அல்லவா? 10அவர்களது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைக் கூறினார்
என்று அவர்களிடம் கூறு. இந்தத் துயரச்
செய்தியானது எருசலேமின் தலைவரையும்
இஸ்ரவேலில் வாழ்கிற அனைத்து ஜனங்
களையும் பற்றியது. 11அவர்களிடம், ‘நான்
(எசேக்கியேல்) ஜனங்களாகிய உங்கள்
அனைவருக்கும் எடுத்துக்காட்டாக இருக்கி
றேன். நான் செய்திருகின்றவையெல்லாம்
நிச்சயம் உங்களுக்கு ஏற்படும்’ என்று சொல்.
நீங்கள் சிறைக் கைதிகளாகத் தூர
நாடுகளுக்குப் பலவந்தமாக அனுப்பப்படுவீர்
கள். 12உங்கள் தலைவன் சுவற்றில் துவார
மிட்டு அவற்றின் வழியாக நழுவிப்
போய்விடுவார்கள். அவன் தனது முகத்தை
மூடுவான். எனவே, ஜனங் களால் அவனை
அடையாளம் காணமுடியாது. அவன் எங்கே
போகிறான் என்பதை அவனது கண்களால்
கண்டுகொள்ள முடியாது. 13அவன் தப்பித்
துக்கொள்ள முயல்வான். ஆனால் நான்
(தேவன்) அவனைப் பிடித்துக்கொள்வேன்!
அவன் என் வலைக்குள் பிடிக்கப்படுவான்.
நான் அவனை கல்தேயர் வாழும் பாபிலோ
னுக்கு கொண்டு போவேன். ஆனாலும்
அவன் பாபிலோனைப் பார்க்க முடியாது.
பகைவர்கள் அவனது கண்களைக் குத்திக்
குருடாக்குவார்கள். பிறகு அவன் அங்கு
மரிப்பான். 14இஸ்ரவேலைச் சுற்றியுள்ள நாடு
களில் வாழும்படி நான் அரசனின் ஜனங்
களைப் பலவந்தப்படுத்துவேன். நான் அவ
னது படையைக் காற்றில் சிதறடிப்பேன்.
பகைவரின் படைவீரர்கள் அவர்களைத்
துரத்துவார்கள். 15பிறகு அந்த ஜனங்கள்,
நானே கர்த்தர் என்பதை அறிந்துகொள்
வார்கள். நான் அவர்களைப் பல நாடுகளில்
சிதறடித்தேன் என்பதையும் அறிவார்கள்.
அவர்களை வேறு நாடுகளுக்குச் செல்லும்
படி நான் கட்டாயப்படுத்தினேன் என்பதை
யும் அவர்கள் அறிவார்கள்.

16“ஆனால், கொஞ்சம் ஜனங்களை நான்
வாழும்படி அனுமதித்தேன். அவர்கள்
நோயாலும் பசியாலும் போராலும் மரிக்க
மாட்டார்கள். நான் அந்த ஜனங்களை
வாழவிடுவேன், அதனால் அவர்கள் எனக்கு
எதிராகச் செய்த பயங்கரமான காரியங்
களைப்பற்றிப் பிற ஜனங்களுக்குச் சொல்ல
முடியும், பிறகு, நானே கர்த்தர் என்பதை
அவர்கள் அறிவார்கள்.”

17பிறகு கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்: 18“மனு
புத்திரனே, நீ பயந்தவனைப் போன்று
நடக்கவேண்டும். நீ உணவை உண்ணும்
போது நடுங்கவேண்டும். நீ உனது தண்
ணீரைக் குடிக்கும்போது கவலையும் அச்
சமும் கொண்டவனைப் போன்று நடந்து
கொள்ள வேண்டும். 19நீ இதனைப் பொது
ஜனங்களுக்குச் சொல்ல வேண்டும். நீ,
இவ்வாறு சொல்லவேண்டும்.எருசலேமிலும்
இஸ்ரவேலின் மற்றப் பகுதிகளிலும் வாழ்கிற
ஜனங்களுக்கு, ‘நமது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார். உங்கள் உணவை
நீங்கள் உண்ணும்போது ஜனங்களாகிய நீங்
கள் மிகவும் கவலைப்படுவீர்கள், நீங்கள்
உங்கள் தண்ணீரைக் குடிக்கும்போது திகி
லடைவீர்கள். ஏனென்றால், உங்கள் நாட்டி
லுள்ள அனைத்துப் பொருட்களும் அழிக்கப்
படும்! அங்கே வாழ்ந்துகொண்டிருக்கும்
ஜனங்களிடம் பகைவர்கள் கொடூரமாக
நடந்துகொள்வார்கள். 20இப்பொழுது உங்கள்
நகரங்களில் ஏராளமான ஜனங்கள் வாழ்கி
றார்கள். ஆனால் அந்நகரங்கள் அழிக்கப்ப
டும். உங்கள் நாடு முழுவதும் பாழாக்கப்ப
டும். பிறகு நானே கர்த்தர் என்பதை நீங்
கள் அறிந்துகொள்வீர்கள்.’”

21பிறகு, கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்: 22“மனு
புத்திரனே, இஸ்ரவேல் நாட்டைப்பற்றி
ஜனங்கள் இந்தப் பாடலை ஏன் பாடுகின்
றனர்?

துன்பம் விரைவில் வராது,
தரிசனம் நிகழாது.

23“அவர்களின் கர்த்தராகிரய ஆண்டவர்
இப்பாடலை நிறுத்துவார் என்று அந்த
ஜனங்களிடம் சொல். இனிமேல் அவர்கள்
இஸ்ரவேலைப்பற்றி அவற்றைச் சொல்ல
மாட்டார்கள். இப்பொழுது அவர்கள்
இப்பாடலைச் சொல்லுவார்கள்;

துன்பம் விரைவில் வரும்,
தரிசனம் நிகழும்.

24“இது உண்மை. இனிமேல் பொய்யான
தரிசனங்கள் இஸ்ரவேலில் இராது. மந்திரவா
திகளின் நிறைவேறாத குறிகளும் இனிமேல்
இராது. 25ஏனென்றால், நானே கர்த்தர்.
என்ன சொல்ல விரும்புகிறேனோ அதையே
சொல்வேன். அவை நிகழும்! நான் அதன்
காலத்தை நீட்டிக்கச் செய்யமாட்டேன்.
அத்துன்பங்கள் உன் சொந்த வாழ்நாளி
லேயே விரைவில் வரும்! கலகக்காரர்களே,
நான் எதையாவது சொல்லும்போது அது
நடக்கும்படிச் செய்வேன்.” எனது கர்த்தரா
கிய ஆண்டவர் அவற்றைச் சொன்னார்.

26பிறகு கர்த்தருடைய வார்த்தை என்னி
டம் வந்தது. அவர் சொன்னார்: 27“மனு
புத்திரனே, இஸ்ரவேல் ஜனங்கள் நான்
உனக்குக் கொடுக்கும் தரிசனங்கள் நிகழ
அநேக நாட்கள் ஆகும் என்று எண்ணு
கிறார்கள். பல, வருஷங்கள் கழித்து நடக்கப்
போகும் காரியங்களைப்பற்றி நீ பேசுவதாக

அவர்கள் நினைக்கிறார்கள். 28எனவே நீ
அவர்களிடம் இவற்றைச் சொல்லவேண்டும்;
‘எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகிறார்:
நான் இனி தாமதிக்கமாட்டேன். ஏதாவது
நிகழும் என்று நான் சொன்னால் அது
நிகழும்!’” எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைச் சொன்னார்.

13 பிறகு கர்த்தருடைய வார்த்தை என்னி
டம் வந்தது. அவர் சொன்னார்;
2“மனுபுத்திரனே, நீ எனக்காக இஸ்ரவேலின்
தீர்க்கதரிசிகளிடம் பேசவேண்டும், அத்தீர்க்க
தரிசிகள் உண்மையில் எனக்காகப் பேச
வில்லை, அவர்கள் தாம் சொல்ல விரும்பு
வதையே சொல்கிறார்கள். எனவே நீ
அவர்களிடம் பேசவேண்டும். அவர்களிடம்
இவற்றைப் பேசு, ‘கர்த்தரிடமிருந்து வந்த
இச்செய்தியைக் கேளுங்கள்! 3எனது கர்த்தரா
கிய ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்.
மூடத் தீர்க்கதரிசிகளே, உங்களுக்குத் தீயவை
ஏற்படும். நீங்கள் உங்களது சொந்த ஆவி
களைப் பின்பற்றுகிறீர்கள். நீங்கள் உண்மை
யில் எவற்றைத் தரிசிக்கிறீர்களோ அவற்றை
ஜனங்களிடம் கூறுவதில்லை.

4“‘இஸ்ரவேலே, உங்கள் தீர்க்கதரிசிகள்
வனாந்தரங்களிலும் பாழடைந்த கட்டிடங்
களிலும் வாழும் நரிகளுக்கு ஒப்பானவர்கள்.
5நீங்கள் நகரத்தின் உடைந்த சுவர்களுக்கு
அருகில் படைவீரர்களை நிறுத்தி வைக்க
வில்லை. நீங்கள் இஸ்ரவேல் வம்சத்தாரைப்
பாதுகாப்பதற்காக சுவர்களைக் கட்டியிருக்க
வில்லை. எனவே கர்த்தர் உங்களைத்
தண்டிக்கும் காலம் வரும்போது நீங்கள்
போரை இழப்பீர்கள்!

6“‘பொய்த் தீர்க்கதரிசிகள் தரிசனங்களைக்
கண்டதாகக் கூறினார்கள். அவர்கள் தம்
மந்திரங்களைச் செய்தார்கள். அவர்கள் எதிர்
காலத்தைக் குறித்து தீர்க்கதரிசனம் சொன்
னார்கள். ஆனால் அவர்கள் பொய் சொன்
னார்கள். அவர்கள் தம்மைக் கர்த்தர் அனுப்
பியதாகச் சொன்னார்கள். ஆனால் அவர்கள்
பொய் சொன்னார்கள். அவர்கள் இன்னும்
தாம் கூறிய பொய்கள் உண்மையாவதற்காக
காத்திருக்கிறார்கள்.

7“‘பொய்த் தீர்க்கதரிசிகளே, நீங்கள் கண்ட
தரிசனங்களெல்லாம் உண்மையல்ல. நீங்கள்
உங்கள் மந்திரங்களைச் செய்தீர்கள். சில
நிகழும் என்றீர்கள். ஆனால் நீங்கள் பொய்
சொன்னீர்கள்! கர்த்தர் அவற்றைக் கூறியதாக
நீங்கள் சொன்னீர்கள். ஆனால் நான் உங்க
ளிடம் பேசவில்லை!’”

8எனவே இப்போது, எனது கர்த்தராகிய
ஆண்டவர் உண்மையிலேயே பேசுவார்!
அவர் கூறுகிறார்; “நீங்கள் பொய்களைச்
சொன்னீர்கள். நீங்கள் உண்மையற்ற
தரிசனங்களைப் பார்த்தீர்கள். எனவே நான்
(தேவன்) இப்பொழுது உங்களுக்கு எதிராக
இருக்கிறேன்.” எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இதனைச் சொன்னார். 9கர்த்தர் கூறுகி
றார்; “பொய்த் தரிசனங்களைப் பார்த்து
பொய் சொன்ன தீர்க்கதரிசிகளை நான்
தண்டிப்பேன். அவர்களை என் ஜனங்களிட
மிருந்து விலக்குவேன். இஸ்ரவேல் வம்சத்தா
ரின் பட்டியலில் அவர்களின் பெயர்கள்
இருக்காது. அவர்கள் மீண்டும் இஸ்ரவேல்
நாட்டிற்கு வரமாட்டார்கள். பிறகு, நான்தான்
கர்த்தராகிய ஆண்டவர் என்றும், நீங்கள்
அறிவீர்கள்!

10“மீண்டும் மீண்டும் அந்தப் பொய்த்
தீர்க்கதரிசிகள் என் ஜனங்களிடம் பொய்
சொல்கிறார்கள். சமாதானம் இருக்கிறது
என்று தீர்க்கதரிசிகள் சொன்னார்கள்.
ஆனால் அங்கே சமாதானம் இல்லை.
ஜனங்களுக்கு சுவரை நிர்மாணித்து போர்
செய்ய தயாராகிட அவசியம் இருந்தது.
ஆனால் அவர்கள் உடைந்த சுவரின்மேல்
ஒரு மெல்லிய பூச்சை மட்டுமே பூசினார்கள்.
11நான் கல் மழையையும் பெருமழையையும்
(பகைவர் படை) அனுப்புவேன் என்று
அம்மனிதர்களிடம் சொல். காற்று கடுமை
யாக அடிக்கும். புயல் காற்றும் வரும். 12பிறகு
அந்தச் சுவர் கீழே விழும். ஜனங்கள்
தீர்க்கதரிசிகளிடம், ‘சுவரில் நீங்கள் பூசிய
பூச்சு என்னவாயிற்று?’ என்று கேட்பார்
கள்.” 13எனது கர்த்தராகிய ஆண்டவர்
கூறுகிறார்: “நான் கோபமாக இருக்கிறேன்.
நான் உனக்கு எதிராகப் பலமான புயல்
காற்றை அனுப்புவேன். நான் கோபமாக
இருக்கிறேன். நான் உனக்கு எதிராகப்
பெருமழையை அனுப்புவேன். நான் கோப
மாக இருக்கிறேன். நான் வானத்திலிருந்து
பெருங்கல் மழையைப் பொழியச் செய்து
உன்னை முழுமையாக அழிப்பேன்! 14நீங்கள்
அவற்றிலே பூச்சு பூசினீர்கள். ஆனால் நான்
முழுச் சுவற்றையும் அழித்துவிட்டேன்.
அதைத் தரையிலே விழப்பண்ணுவேன். அச்
சுவர் உன்மீது விழும். பிறகு, நான்தான்
கர்த்தர் என்பதை நீங்கள் அறிந்துகொள்வீர்
கள். 15நான் சுவருக்கும் சாந்து பூசினவர்
களுக்கும் எதிரான எனது கோபத்தை
முடிப்பேன். பிறகு நான் சொல்லுவேன்;
‘சுவரும் இல்லை, சாந்து பூசின வேலைக்
காரர்களும் இல்லை.’

16“இஸ்ரவேலில் உள்ள பொய்த் தீர்க்க
தரிசிகளுக்கு இவை எல்லாம் ஏற்படும்.
அத்தீர்க்கதரிசிகள் எருசலேம் ஜனங்களிடம்
பேசுகிறார்கள். அத்தீர்க்கதரிசிகள் சமாதானம்
உண்டென்று சொல்கிறார்கள். ஆனால்
சமாதானம் இல்லை.” எனது கர்த்தராகிய
ஆண்டவர் அவற்றைச் சொன்னார்.

17தேவன் சொன்னார்; “மனுபுத்திரனே,
இஸ்ரவேலில் உள்ள பெண் தீர்க்கதரிசி
களைப் பாருங்கள். அப்பெண் தீர்க்கதரிசிகள்
எனக்காகப் பேசுவதில்லை. அவர்கள் விரும்
புவதையே சொல்லுகிறார்கள். எனவே
அவர்களுக்கு எதிராக நீ எனக்காக அவர்

களிடம் பேசவேண்டும். 18‘எனது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைச் சொல்கிறார்:
பெண்களாகிய உங்களுக்குத் தீமைகள்
ஏற்படும். நீங்கள், ஜனங்கள் தம் கையில்
அணிந்துகொள்ளத் தாயத்துகளைச்
செய்கிறீர்கள். ஜனங்கள், தம் தலையில்
அணிந்துகொள்ள சிறப்பான முக்காட்டுச்
சேலைகளை உண்டாக்குகிறீர்கள். ஜனங்க
ளது வாழ்வை அடக்கி ஆள மந்திரசக்தி
இவற்றில் உள்ளதாகக் கூறுகிறீர்கள். உங்க
ளது வாழ்வுக்காக அந்த ஜனங்களை நீங்கள்
வேட்டையாடுகிறீர்கள்! 19நான் முக்கிய
மானவனில்லை என்று ஜனங்களை நினைக்
கும்படிச் செய்கிறீர்கள். சில பிடி வாற்கோ
துமைக்காகவும் அப்பத்துண்டுகளுக்காகவும்
அவர்களை எனக்கு எதிராக நீங்கள்
திருப்புகிறீர்கள். நீங்கள் என் ஜனங்களிடம்
பொய் கூறுகிறீர்கள். அவர்கள் பொய்களைக்
கேட்க விரும்புகிறார்கள். வாழவேண்டிய
ஜனங்களைக் கொல்லுகிறீர்கள். மரிக்கவேண்
டிய ஜனங்களை வாழ வைக்கிறீர்கள்.
20எனவே கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறுகிறார்: நீங்கள் துணியையும் தாயத்துக்க
ளையும் ஜனங்களை வலைக்குட்படுத்த
உருவாக்குகிறீர்கள். ஆனால் நான் அந்த
ஜனங்களை விடுவிப்பேன். அவர் கைகளிலி
ருந்து அத்தாயத்துகளைப் பிய்த்து எறிவேன்.
ஜனங்கள் உங்களிடமிருந்து விடுதலை பெறு
வார்கள். அவர்கள் வலையிலிருந்து பறக்கும்
பறவைகளைப் போன்று இருப்பார்கள்!
21நான் உங்கள் முக்காட்டுச் சேலைகளைக்
கிழித்து உங்கள் வல்லமையிலிருந்து என்
ஜனங்களைக் காப்பேன். அந்த ஜனங்கள்
உங்கள் வலைகளிலிருந்து தப்புவார்கள்.
நானே கர்த்தர் என்பதை நீங்கள் அறிவீர்கள்.
22“‘தீர்க்கதரிசிகளாகிய நீங்கள் பொய்
களைச் சொல்கிறீர்கள். உங்களது பொய்கள்
நல்ல ஜனங்களைப் புண்படுத்துகின்றன.
அந்த நல்ல ஜனங்கள் புண்படுவதை நான்
விரும்புவதில்லை. நீங்கள் கெட்ட ஜனங்
களை ஆதரிக்கிறீர்கள், உற்சாகப்படுத்துகிறீர்
கள். அவர்களின் வாழ்வை மாற்றும்படி
நீங்கள் அவர்களிடம் சொல்வதில்லை.
அவர்களின் வாழ்வைக் காப்பாற்ற நீங்கள்
முயல்வதில்லை! 23எனவே இனி நீங்கள்
பயனற்ற தரிசனங்களைக் காண்பதில்லை.
இனிமேல் நீங்கள் எவ்வித மந்திரமும்
செய்யப் போவதில்லை. நான் எனது
ஜனங்களை உங்களது சக்திகளிலிருந்து
காப்பாற்றுவேன். நானே கர்த்தர் என்பதை
நீங்கள் அறிவீர்கள்.’”

14 இஸ்ரவேலின் மூப்பர்கள் என்னிடம்
வந்தார்கள். அவர்கள் என்னோடு
பேச உட்கார்ந்தார்கள். 2கர்த்தருடைய
வார்த்தை என்னிடம் வந்தது. அவர் சொன்
னார்; 3“மனுபுத்திரனே, இம்மனிதர்கள் உன்
னோடு பேச வந்திருக்கிறார்கள். என்னிடம்
ஆலோசனை கேட்க அவர்கள் விரும்புகி
றார்கள். ஆனால் அம்மனிதர்கள் இன்னும்
தங்கள் அசுத்தமான விக்கிரகங்களை வைத்தி
ருக்கிறார்கள். அவர்களிடம் பாவத்தை உண்
டுபண்ணுபவற்றை வைத்திருக்கிறார்கள்.
அவர்கள் அந்தச் சிலைகளை இன்னும்
வழிபடுகிறார்கள். எனவே, என்னிடம்
ஆலோசனை கேட்க எதற்காக அவர்கள்
வரவேண்டும்? அவர்களது கேள்விகளுக்கு
நான் பதில் சொல்வேனா? இல்லை! 4ஆனால்
நான் ஒரு பதிலைச் சொல்வேன். நான்
அவர்களைத் தண்டிப்பேன்! நீ அவர்களிடம்
இவற்றைக் கூறவேண்டும். ‘எனது கர்த்தரா
கிய ஆண்டவர் கூறுகிறார்; எந்த இஸ்ர
வேலராவது ஒரு தீர்க்கதரிசியிடம் வந்து
என்னிடம் ஆலோசனை கேட்டால், அவ
னுக்கு அத்தீர்க்கதரிசி பதில் சொல்லமாட்
டான். அவனது கேள்விக்கு நானே பதில்
கூறுவேன். இன்னும் அவனிடம் அந்த
அசுத்தமான விக்கிரகங்கள் இருந்தாலும்,
இன்னும் அவன் அச்சிலைகளை வணங்கி
வந்தாலும், இன்னும் அவர்கள் பாவத்தைச்
செய்யத் தூண்டும் பொருட்களை வைத்தி
ருந்தாலும் நான் பதில் சொல்வேன். அவ
னுடைய அசுத்த விக்கிரகங்கள் இன்னும்
இருந்தபொழுதும் நான் அவனுடன் பேசு
வேன். 5ஏனென்றால், நான் அவர்களின்
இதயத்தைத் தொட விரும்புகிறேன். என்ன
தான் அவர்கள் அசுத்தமான விக்கிரகங்களை
வணங்க என்னை விட்டு விலகினாலும்,
நான் அவர்களை நேசிக்கிறேன் என்பதைக்
காட்டவேண்டும்.’
6“எனவே, இஸ்ரவேல் குடும்பத்தாரிடம்
இவற்றைச் சொல், ‘எனது கர்த்தராகிய
ஆண்டவர் கூறுகிறார்: என்னிடம் திரும்பி
வாருங்கள், உங்கள் அசுத்த விக்கிரகங்களை
விட்டுவிடுங்கள். அப்பொய்யான தெய்வங்
களை விட்டு விலகிப்போங்கள். 7இஸ்ரவே
லில் வாழும் இஸ்ரவேலனோ அல்லது
அயல்நாட்டுக்காரனோ என்னிடம் ஆலோ
சனை கேட்க வந்தால். நான் அவனுக்குப்
பதில் சொல்வேன். அவன் இன்னும் அந்த
அசுத்த விக்கிரகங்களை வைத்திருந்தாலும்,
இன்னும் அவன் பாவத்தை உண்டுபண்ணு
கின்றவற்றை வைத்திருந்தாலும். இன்னும்
அவன் அச்சிலைகளை வணங்கினாலும்,
நான் அவனுக்கு பதில் சொல்வேன். அவ
னுக்கு நான்தரும் பதில் இதுதான். 8நான்
அவனுக்கு எதிராகத் திரும்புவேன். நான்
அவனை அழிப்பேன். அவன் மற்ற ஜனங்க
ளுக்கு ஒரு எடுத்துக்காட்டாக இருப்பான்.
ஜனங்கள் அவனைப் பார்த்துச் சிரிப்பார்கள்.
நான் அவனை எனது ஜனங்களிலிருந்து
விலக்குவேன். பிறகு நானே கர்த்தர் என்
பதை நீங்கள் அறிந்துகொள்வீர்கள்! 9ஒரு
தீர்க்கதரிசி முட்டாளைப்போன்று தன் சொந்
தமாக ஒரு பதிலைச் சொன்னால், அப்பொ
ழுது நான் அவன் எவ்வளவு மதியீனன்

என்பதை அவனுக்குக் காட்டுவேன். நான்
அவனுக்கு எதிராக எனது வல்லமையைக்
காட்டுவேன்! நான் அவனை அழித்து
எனது இஸ்ரவேல் ஜனங்களிலிருந்து விலக்
குவேன். 10எனவே, ஆலோசனைக்கு வருப
வன் பதில் சொல்லும் தீர்க்கதரிசி, என
இருவரும் ஒரே தண்டனையைப் பெறுவார்
கள். 11ஏன்? எனது ஜனங்களை என்னிட
மிருந்து வழிதப்பிப் போக அந்தத்
தீர்க்கதரிசிகள் தூண்டுவதை நிறுத்தவேண்
டும். எனவே எனது ஜனங்கள் அவர்கள்
பாவங்களால் அசுத்தமாகாமல் தடுக்கப்படு
வார்கள். பின்னர் அவர்கள் எனது சிறப்
புக்குரிய ஜனங்களாவார்கள். நான் அவர்க
ளின் தேவனாய் இருப்பேன்.” எனது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.
12பிறகு, கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்; 13“மனு
புத்திரனே, என்னைவிட்டு விலகி எனக்கு
எதிராகப் பாவம் செய்யும் எந்த நாட்டையும்
நான் தண்டிப்பேன். நான் அவர்களுக்கு
உணவு கொடுக்கப்படுவதை நிறுத்துவேன்.
நான் பசி காலத்திற்குக் காரணம் ஆவேன்.
அந்நாட்டை விட்டு மனிதர்களையும் விலங்
குகளையும் விலக்குவேன். 14நான் அந்
நாட்டை அங்கு நோவா, தானியேல், யோபு
போன்றவர்கள் வாழ்ந்தாலும்கூடத் தண்டிப்
பேன். தங்கள் நற்குணத்தினால் அம்மனிதர்
கள் தம் சொந்த உயிரைக் காப்பாற்ற
முடியும். ஆனால் அவர்களால் முழு நாட்டை
யும் காப்பாற்ற முடியாது.” எனது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.
15தேவன் சொன்னார்: “அல்லது நான்
காட்டு விலங்குகளை அந்நாட்டிற்கு அனுப்பு
வேன். அவ்விலங்குகள் அனைத்து ஜனங்க
ளையும் கொல்லும், அக்காட்டு விலங்குக
ளால் எவரும் அந்நாட்டின் வழியாகப்
பயணம் செய்ய முடியாது. 16நோவா, தானி
யேல், யோபு ஆகியோர் வாழ்ந்தால் நான்
அம்மூன்று பேரையும் காப்பாற்றுவேன்.
அம்மூன்று பேரும் தம் சொந்த உயிரைக்
காப்பாற்றுவார்கள். ஆனால் நான் என்
வாழ்வில் வாக்களித்தபடி, அவர்களால்
மற்றவர்களின் உயிரை காப்பாற்ற முடியது.
அது அவர்களது சொந்த மகன்கள் அல்லது
மகள்களாக இருந்தாலும் காப்பாற்ற முடி
யாது! அத்தீய நாடு அழிக்கப்படும்!” எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்
னார்.
17தேவன் சொன்னார்; “அல்லது அந்நாட்
டுக்கு எதிராகப் போரிட ஒரு பகைப்படை
யை அனுப்பலாம். அவ்வீரர்கள் அந்நாட்டை
அழிக்கலாம். நான் அந்நாட்டிலுள்ள
அனைத்து ஜனங்களையும் விலங்குகளையும்
விலக்குவேன். 18நோவா, தானியேல், யோபு
ஆகியோர் அங்கே வாழ்ந்தாலும் நான்
அம்மூன்று நல்லவர்களை மட்டுமே காப்பாற்
றுவேன். அம்மூன்றுபேராலும் தங்கள் உயி
ரைத்தான் காப்பாற்ற முடியும். ஆனால்
நான் என் உயிரின்மேல் அளித்த வாக்கு
றுதிப்படி அவர்களால் மற்றவர்களின் உயி
ரை, அது அவர்களது மகன்களாக அல்லது
மகள்களாக இருந்தாலும் காப்பாற்ற
முடியாது! அத்தீய நாடு அழிக்கப்படும்!”
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார்.
19தேவன் சொன்னார்; “அல்லது அந்நாட்
டிற்கு எதிராக நான் கொள்ளை நோயை
அனுப்பலாம். நான் என் கடுங்கோபத்தை
அதன் மீது இரத்தச் சிந்துதலுடன் ஊற்று
வேன். நான் அந்நாட்டிலுள்ள எல்லா
ஜனங்களையும் விலங்குகளையும் விலக்கு
வேன். 20நோவா, தானியேல், யோபு ஆகி
யோர் அங்கு வாழ்ந்தாலும், நான் அம்
மூன்று பேரை மட்டும் காப்பாற்றுவேன்.
ஏனென்றால் அவர்கள் நல்லவர்கள். அம்
மூன்று பேராலும் தங்கள் உயிரை மட்டுமே
காப்பாற்ற முடியும். ஆனால் நான் என்
உயிரின்மேல் வாக்களிக்கிறேன், அவர்
களால் மற்றவர்களின் உயிரை, அது அவர்
களது மகன்களாவோ, மகள்களாகவோ இருந்
தாலும் காப்பாற்ற முடியாது!” எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவ்வாறு கூறினார்.
21பிறகு எனது கர்த்தராகிய ஆண்டவர்
மேலும் சொன்னார். “எனவே எருச
லேமிற்கு இது எவ்வளவு கேடானது என்று
எண்ணிப்பார். நான் இந்த நகரத்திற்கு
எதிராக இந்நான்கு தண்டனைகளையும்
அனுப்புவேன். நான் பகைவரின் படை,
பசி, நோய், காட்டுமிருகங்கள் ஆகியவற்றை
நகருக்கெதிராக அனுப்புவேன். நான் அந்
நாட்டிலுள்ள ஜனங்களையும் விலங்குகளை
யும் வெளியே அனுப்புவேன்! 22ஜனங்களில்
சிலர் அந்நாட்டிலிருந்து தப்பித்துக்கொள்
வார்கள். அவர்கள் உதவிக்காகத் தம்
மகன்களையும் மகள்களையும் உன்னிடம்
அழைத்து வருவார்கள். பின்னர் அவர்கள்
உண்மையில் எவ்வளவு மோசமானவர்கள்
என்பதை நீ அறிவாய். நான் எருசலேமிற்குக்
கொடுத்த துன்பங்கள் எல்லாம் பரவா
யில்லை என்று நீ உணர்வாய். 23அவர்கள்
வாழும் வாழ்வையும் செய்யும் தீமையையும்
நீ பார்ப்பாய். பிறகு, நான் அவர்களைத்
தண்டித்ததற்குச் சரியான காரணம் உண்
டென்று நீ அறிவாய்” எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.

15 பிறகு கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது, அவர் சொன்னார்;
2“மனுபுத்திரனே, காட்டிலுள்ள மரங்களிலி
ருந்து வெட்டப்பட்டக் கிளைகளை விட
திராட்சைக் கிளைகளின் குச்சி சிறந்ததா?
இல்லை! 3திராட்சைக் கொடியிலிருக்கும்
மரத்துண்டை நீ எதற்காவது பயன்படுத்த
முடியுமா? இல்லை! அந்த மரத்தைக்கொண்டு
பாத்திரங்களைத் தொங்கவிடும் முளை
களைச் செய்யமுடியுமா? இல்லை! 4ஜனங்கள்

அவற்றை தீயில்தான் போடுவார்கள். சில
குச்சிகள் முனைகளில் எரியத்தொடங்கும்.
நடுப்பகுதி நெருப்பால் கறுப்பாகும். அக்குச்
சிகள் முழுவதும் எரியாது. அக்குச்சிகளை
நீ வேறு எதற்கும் பயன்படுத்த முடியுமா?
5அவை எரிவதற்கு முன்னமே அவற்றைப்
பயன்படுத்த முடியாது என்றால், பிறகு
அவை எரிந்தபின் அவற்றைப் பயன்படுத்
தவே முடியாது! 6எனவே திராட்சைக்
கொடியிலுள்ள குச்சிகளும் காட்டிலுள்ள
மற்ற மரங்களின் குச்சிகளைப் போன்றவை
தான். ஜனங்கள் அம்மரத்துண்டுகளை
நெருப்பில் எரிவார்கள்." நெருப்பு அவற்றை
எரிக்கும்! அதுபோலவே, நானும் எருசலே
மில் வாழ்கிற ஜனங்களை நெருப்பில்
எரிவேன். எனது கர்த்தராகிய ஆண்டவர்
இதைச் சொன்னார். 7"நான் அந்த ஜனங்க
ளைத் தண்டிப்பேன். ஆனால் ஜனங்களில்
சிலர் முழுவதும் எரியாத குச்சிகளைப்
போன்றுள்ளனர். அவர்கள் தண்டிக்கப்படு
வார்கள். ஆனால் அவர்கள் முழுவதுமாக
அழிக்கப்படவில்லை. அந்த ஜனங்களை
நான் தண்டித்தேன் என்பதை நீ பார்ப்பாய்.
நானே கர்த்தர் என்பதை நீ அறிவாய்!
8நான் அந்த நாட்டை அழிப்பேன். ஏனென்
றால் ஜனங்கள் பொய்த் தெய்வங்களை
வணங்க என்னை விட்டு விலகினார்கள்."
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார்.

16 பிறகு கர்த்தருடைய வார்த்தை
என்னிடம் வந்தது. அவர் சொன்னார்:
2"மனுபுத்திரனே, எருசலேம் ஜனங்களிடம்
அவர்கள் செய்திருக்கிற வெறுக்கத்தக்க
செயல்களைப்பற்றி சொல். 3நீ சொல்லவேண்
டியது, 'எனது கர்த்தராகிய ஆண்டவர்
எருசலேமிற்கு இவற்றைச் சொல்கிறார்; உன்
வரலாற்றைப் பார், நீ கானான் தேசத்தில்
பிறந்தாய். உனது தந்தை எமோரியன்;
உனது தாய் எத்தித்தி. 4எருசலேமே, உன்
பிறந்த நாளில் உன் தொப்புள் கொடியை
அறுக்க யாருமில்லை, உன் மீது உப்பினைப்
போட்டு உன்னைக் கழுவிச் சுத்தப்படுத்திட
எவருமில்லை. எவரும் உன்னைத் துணியில்
சுற்றவில்லை. 5எருசலேமே, நீ தனிமையாக
இருந்தாய். உனக்காக எவரும் வருத்தப்பட
வில்லை. உன்னை ஆதரிக்க எவருமில்லை.
எருசலேமே, நீ பிறந்த நாளிலே உன்
பெற்றோர் உன்னை வயல்வெளியில் வீசி
னார்கள். நீ அப்பொழுதும் பிறந்தவுடன்
உன் மேலுள்ள இரத்தத்தில் கிடப்பதைப்
பார்த்தேன்.

6"'பிறகு நான் (தேவன்) கடந்து
போனேன். அங்கே நீ இரத்தத்தில் கிடப்
பதைப் பார்த்தேன். நீ இரத்தத்தால் மூடப்பட்
டிருந்தாய். நான் "நீ பிழைத்திரு!" என்றேன்.
ஆம் நீ இரத்தத்தால் மூடப்பட்டிருந்தாய்.
ஆனால் நான் "நீ பிழைத்திரு!" என்று
சொன்னேன். 7வயலில் வளரும் செடியைப்
போன்று நீ வளர நான் உதவினேன். நீ
இளம் பெண்ணானாய். நீ மேலும் மேலும்
வளர்ந்தாய். உனது மாதவிலக்குத் தொடங்கி
யது. உனது மார்புகள் வளர்ந்தன. உனது
முடி வளரத்தொடங்கியது. ஆனால் நீ
அப்பொழுதும் நிர்வாணமாக இருந்தாய்.
8நான் உன்னை முழுவதாய் பார்த்தேன். நீ
மணம் செய்ய தயாராக இருப்பதைப்
பார்த்தேன். எனவே நான் எனது ஆடை
களை உன்மேல் விரித்து உனது நிர்வா
ணத்தை மறைத்தேன். நான் உன்னை
மணந்துகொள்வதாய் வாக்களித்தேன். நான்
உன்னோடு ஒரு உடன்படிக்கையைச் செய்
தேன். நீ என்னுடையவளானாய்.'" எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்
னார். 9"'நான் உன்னை தண்ணீரில் கழுவி
னேன். நான் உன் இரத்தத்தைக் கழுவி
னேன். உன் தோல்மீது எண்ணை தடவி
னேன். 10நான் உனக்கு சித்திரத் தையல்
வேலை பொருந்திய ஆடையைக் கொடுத்
தேன்: மென்மையான தோல் பாதரட்சை
ளைக் கொடுத்தேன். நான் உனக்கு மெல்லிய
புடவையையும் மூடிக்கொள்ள பட்டுச்
சால்வையையும் கொடுத்தேன். 11பிறகு, நான்
உனக்கு சில நகைகளைக் கொடுத்தேன்.
நான் உனது கைகளில் கையணியையும்,
கழுத்துக்கு மாலையையும் கொடுத்தேன்.
12நான் உனக்கு மூக்கு வளையத்தையும்,
சில காதணிகளையும், அழகான கிரீடத்தை
யும் கொடுத்தேன். 13நீ உனது தங்கம்
மற்றும் வெள்ளி நகைகளில் அழகாக
இருந்தாய். நீ மெல்லிய புடவையையும்
பட்டையும் சித்திர வேலைப் பாடுகளுள்ள
ஆடைகளையும் அணிந்தாய். நல்ல உண
வினை உண்டாய். நீ மிக மிக அழகு
பெற்றாய். நீ அரசி ஆனாய்!" 14நீ உன்
அழகில் புகழ் பெற்றாய். ஏனென்றால், நான்
உன்னை அழகாகவும் மகிமையாகவும்
ஆக்கியிருந்தேன்!'" எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.

15தேவன் சொன்னார்: "ஆனால் நீ உனது
அழகை நம்பத்தொடங்கினாய். நீ உனது
நல்ல பெயரைப் பயன்படுத்தி எனக்கு
உண்மையற்றவளாக ஆனாய். உன்னைக்
கடந்து செல்லும் ஒவ்வொருவரிடமும் நீ
வேசியைப் போன்று நடந்துகொண்
டாய். அவர்கள் அனைவருக்கும் நீ உன்னை
யே கொடுத்தாய். 16நீ உனது ஆடைகளை
எடுத்து தொழுகை இடங்களை அலங்கரிக்
கப் பயன்படுத்தினாய். நீ அந்த இடங்களில்
வேசியைப் போன்று நடந்துகொண்
டாய். அங்கே வரும் அனைவருக்கும் நீ
உன்னைக் கொடுத்தாய்! 17பிறகு நீ உன்
அழகான, நான் கொடுத்த நகைகளை
எடுத்து, வெள்ளியாலும் தங்கத்தாலும் ஆன
அந்நகைகளை ஆண் உருவங்களைச் செய்
யப் பயன்படுத்தினாய். நீ அவர்களோடு
பாலின உறவு வைத்துக்கொண்டாய். 18பிறகு

நீ உனது அழகான ஆடைகளை எடுத்து
அச்சிலைகளுக்குப் பயன்படுத்தினாய். நான்
உனக்குக் கொடுத்த நறுமணப்பொருட்களை
யும் தூபவர்க்கத்தையும் அவ்வுருவச் சிலை
களுக்கு முன்னால் வைத்தாய். [19]நான்
உனக்கு அப்பம், தேன், எண்ணெய் ஆகிய
வற்றைக் கொடுத்தேன். ஆனால் நீ அவற்றை
அந்த விக்கிரகங்களுக்கு கொடுத்தாய். உனது
பொய்த் தெய்வங்களை மகிழ்ச்சிப்படுத்த நீ
இனிய மணப்பொருட்களை வழங்கினாய்!
அப்பொய்த் தெய்வங்களிடம் நீ ஒரு
வேசியைப் போன்று நடந்து கொண்டாய்!"
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார்.

[20]தேவன் சொன்னார்; "நீ எனக்குப்
பெற்ற உன் மகன்களையும், உன் மகள்களை
ளயும் எடுத்து, அவர்களைக் கொன்று
அப்பொய்த் தெய்வங்களிடம் கொடுத்து
விட்டாய்! ஆனால், நீ என்னை ஏமாற்றி
விட்டு அப்பொய்த் தெய்வங்களிடம் போன
போது நீ செய்த கெட்டக்காரியங்களில்
இவைச் சில மாத்திரமே. [21]நீ எனது
மகன்களை நெருப்பின் மூலம் கொன்று
அப்பொய்த் தெய்வங்களுக்கு பலியாகக்
கொடுத்தாய். [22]நீ என்னை விட்டு விலகி
பயங்கரமானவற்றைச் செய்தாய். நீ இளமை
யாக இருந்த காலத்தைப்பற்றி நினைக்க
வில்லை. நான் உன்னைக் கண்டபோது,
நீ நிர்வாணமாக இரத்தம் படிந்து கிடந்ததை
நினைப்பதில்லை.

[23]"அனைத்துத் தீய செயல்களுக்கும் பிறகு,
ஓ எருசலேமே, உனக்கு மிகுந்த கேடு
வரும்!" எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றையெல்லாம் கூறினார். [24]"அவை
அனைத்துக்கும் பிறகு அந்தப் பொய்த்
தெய்வத்தை தொழுதுகொள்ள நீ மேடை
யைக் கட்டினாய். ஒவ்வொரு தெரு முனை
யிலும் பொய்த் தெய்வங்களைத் தொழுது
கொள்ள நீ அவ்விடங்களைக் கட்டினாய்.
[25]ஒவ்வொரு சாலையின் முனையிலும் நீ
உயர்ந்த மேடைகளைக் கட்டினாய். பிறகு
நீ உன் அழகை கேவலப்படுத்திக் கொண்
டாய். அவ்வழியாகப் போவோரைப் பிடிக்க
அதனைப் பயன்படுத்தினாய். நீ உனது
பாவாடையைத் தூக்கினாய். அதனால்
அவர்களால் உன் கால்களைக் காண
முடிந்தது. பின் அம்மனிதர்களோடு வேசி
களைப் போன்று நடந்துகொண்டாய்.
[26]பிறகு நீ எகிப்துக்குப் போனாய். ஏனென்
றால் அவனிடம் பெரிய ஆணுறுப்பு
இருந்தது. எனக்குக் கோபம் ஊட்டுவதற்காக
நீ அவனோடு பலமுறை பாலின உறவு
வைத்துக்கொண்டாய். [27]எனவே நான்
உன்னைத் தண்டித்தேன். நான் உனது
சம்பளத்தின் (நிலம்) ஒரு பகுதியை எடுத்துக்
கொண்டேன். உனது பகைவர்களான
பெலிஸ்தருடைய குமாரத்திகள் (நகரங்கள்)
அவர்கள் விருப்பப்படி உனக்கு வேண்டி
யதைச் செய்ய அனுமதித்தேன். அவர்கள்
கூட உனது முறைகேடான செயல்களைப்
பார்த்து வெட்கப்பட்டார்கள். [28]பிறகு நீ
அசீரியாவோடு பாலின உறுவு செய்தாய்.
உனக்குப் போதுமானதை பெற முடிய
வில்லை, நீ எப்பொழுதும் திருப்திபட்ட
தில்லை. [29]எனவே நீ கானான் பக்கம்
திரும்பினாய், பிறகு பாபிலோனியா இருந்
தும் நீ திருப்தி அடையவில்லை. [30]நீ
உன்னுடைய தீய வழிகளினால் பெலவீனம
டைந்தாய். பாவம் செய்வதற்கு மற்ற
அனைத்து ஆண்களையும் நீ அனுமதித்தாய்.
நீ ஒரு வெட்கமற்ற வேசியைப் போலவே
நடந்து கொண்டாய்." எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.

[31]தேவன் சொன்னார், "ஆனால் நீ ஒரு
சரியான வேசியாக இருக்கவில்லை. ஒவ்
வொரு சாலை முனைகளிலும் நீ மேடை
களைக் கட்டினாய். ஒவ்வொரு தெருமுனை
யிலும் நீ வழிபடுவதற்கான இடங்களைக்
கட்டினாய். நீ அம்மனிதர்கள் அனைவருட
னும் வேசித்தனம் செய்தாய். ஆனால் நீ
வேசியைப் போன்று அவர்களிடம் பணம்
கேட்கவில்லை. [32]நீ சோரம் போன பெண்.
நீ உன் சொந்தக் கணவனை விட்டுவிட்டு
அந்நிய ஆண்களோடு பாலின உறவு
கொள்வதை விரும்புகிறவள். [33]பெரும்பா
லான வேசிகள் பாலின உறவுக்காக
பணத்தை வற்புறுத்திக் கேட்பார்கள்.
ஆனால் நீ உனது நேசர்களுக்கு உன்னையே
கொடுத்தாய். நீ உன்னுடைய நேசர்களுக்குப்
பணத்தைக் கொடுத்து உன்னோடு பாலின
உறவுகொள்ள வரும்படி அழைத்தாய். [34]நீ
வேசிகளுக்கு எதிர்மாறாக இருக்கிறாய்.
வேசிகள் வேசித்தனம் செய்ய பணம் கேட்டு
வற்புறுத்துவார்கள். ஆனால் நீயோ உன்
னோடு உடலுறவு வைத்துக்கொள்பவர்களுக்
குப் பணம் கொடுக்கிறாய்."

[35]வேசியே, கர்த்தரிடமிருந்து வந்த செய்
தியைக் கேள். [36]எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைக் கூறுகிறார்; "நீ உனது
பணத்தைச் செலவழித்தாய். உனது நேசித்த
வர்களும் பொய்த் தெய்வங்களும் உனது
நிர்வாணத்தைக் காணவும் உன்னோடு
பாலின உறவுகொள்ளவும் அனுமதித்தாய்.
நீ உனது குழந்தைகளைக் கொன்றிருக்கி
றாய். அவர்களது இரத்தத்தைச் சிந்தினாய்.
அப்போலிக் தெய்வங்களுக்கு இது நீயளித்த
பரிசாகும். [37]எனவே நான் உனது நேசித்த
யாவரையும் ஒன்று கூட்டுவேன். உன்னை
நேசித்த எல்லா ஆண்களையும், நீ வெறுத்த
எல்லா ஆண்களையும் ஒன்று கூட்டுவேன்.
அவர்கள் அனைவரையும் ஒன்று கூட்டி
உனது நிர்வாணத்தைப் பார்க்கும்படிச்
செய்வேன். அவர்கள் உனது முழு நிர்வா
ணத்தையும் பார்ப்பார்கள். [38]பிறகு நான்
உன்னைத் தண்டிப்பேன். நான் உன்னைக்
கொலைகாரியாகவும் சோரம் போனவளா

கவும் தண்டிப்பேன். ஒரு கோபமும்
பொறாமையும் கொண்ட கணவனால் பழி
தீர்க்கப்படுவதுபோல் தண்டிப்பேன். 39உனது
நேசித்தவர்களிடம் உன்னை ஒப்படைப்
பேன். அவர்கள் உனது மேடைகளை
அழிப்பார்கள். அவர்கள் உனது தொழுது
கொள்ளும் இடங்களை எரிப்பார்கள், அவர்
கள் உன்னுடைய உயர்ந்த ஆராதனை
மேடைகளை உடைத்துப்போடுவார்கள்.
அவர்கள் உனது ஆடைகளை கிழித்தெறி
வார்கள். உனது அழகான நகைகளை
எடுத்துக்கொள்வார்கள். நான் உன்னை
முதலில் பார்த்தபோது இருந்ததைப் போன்று
அவர்கள் உன்னை நிர்வாணமாக விட்
டுவிட்டுப் போவார்கள். 40அவர்கள் ஜனங்
கள் கூட்டத்தைக் கூட்டி வந்து உன்மேல்
கல்லை எறிந்து கொல்ல முயல்வார்கள்,
பிறகு அவர்கள் தம் வாள்களால் உன்னைத்
துண்டுகளாக வெட்டிப் போடுவார்கள்.
41அவர்கள் உனது வீட்டை (ஆலயத்தை)
எரிப்பார்கள். பிற பெண்கள் பார்த்துக்
கொண்டிருக்கும்பொழுது அவர்கள் உன்
னைத் தண்டிப்பார்கள். நீ ஒரு
வேசியைப்போல வாழ்வதை நான்
தடுப்பேன். நீ உனது நேசர்களுக்குப் பணம்
கொடுப்பதையும் நான் தடுப்பேன். 42பிறகு
நான் கோபமும் பொறாமையும் அடைவதை
நிறுத்துவேன். நான் அமைதி அடைவேன்.
நான் இனிக் கோபங்கொள்ள மாட்டேன்.
43ஏன் இவை எல்லாம் நிகழ் கின்றன? நீ
இளமையில் எவ்வாறு இருந்தாய் என்பதை
நினைக்காததால் இவையெல்லாம் உனக்கு
நிகழும். நீ அனைத்து தீயச்செயல் களையும்
செய்து என்னைக் கோபமூட்டு கிறாய்.
அதனால் நான் உன்னைத் தீயச்
செயல்களுக்காகத் தண்டித்தேன். ஆனால்
நீ இன்னும் பயங்கரமான செயல்களைச்
செய்யத் திட்டமிட்டுள்ளாய்." எனது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.
44"உன்னைப்பற்றி பேசுகிற ஜனங்கள்
எல்லாரும் பேச் இன்னுமொன்று உள்ளது.
அவர்கள், 'தாயைப்போல மகள்' என்று
சொல்வார்கள். 45நீ உனது தாயின் மகள். நீ
உனது கணவன் அல்லது குழந்தைகளைப்
பற்றி கவலைப்படுவதில்லை. நீ உனது
சகோதரியைப் போன்றிருக்கிறாய். நீங்கள்
இருவரும் கணவனையும் குழந்தைகளையும்
வெறுத்தீர்கள். நீ உனது பெற்றோர்களைப்
போன்றிருக்கிறாய். உனது தாய் ஏத்தித்தி,
உன் தகப்பன் எமோரியன். 46உனது மூத்த
சகோதரி சமாரியா. அவள் உனது வட
புறத்தில் தன் மகள்களோடு (நகரங்கள்)
வாழ்ந்தாள். உன் இளைய சகோதரி சோ
தோம். அவள் உனது தென்புறத்தின் தனது
மகள்களோடு (நகரங்கள்) வாழ்ந்தாள்.
47அவர் கள் செய்த அனைத்து
பயங்கரங்களையும் நீயும் செய்தாய். ஆனால்
நீ அவற்றை விடவும் மோசமாகச் செய்தாய்.
48நானே கர்த்தரும், ஆண்டவரும் ஆவேன்.
நான் உயிரோடு இருக்கிறேன். என் உயிரைக்
கொண்டு நான் வாக்குரைக்கிறேன். உன்
சகோதரி சோதோமும் அவளது மகள்களும்
நீயும் உனது மகள்களும் செய்தது போன்று
அவ்வளவு தீயச்செயல்களைச் செய்ய
வில்லை."
49தேவன் சொன்னார்: "உனது சகோதரி
சோதோமும் அவளது மகள்களும் தற்
பெருமை கொண்டவர்கள். அவர்கள் அதி
கமாக உண்டார்கள். அதிகமான நேரத்தை
வீணாக செலவழித்தனர். அவர்கள் ஏழைக
ளுக்கும் ஆதரவற்றவர்களுக்கும் உதவ
வில்லை. 50சோதோமும் அவளது மகள்களும்
மிகவும் தற்பெருமை கொண்டவர்களாகி
எனக்கு முன்னால் தீமைகளைச் செய்யத்
தொடங்கினார்கள். அவர்கள் அவற்றைச்
செய்வதைக் கண்டபோதெல்லாம் நான் தண்
டித்தேன்."
51தேவன் சொன்னார்: "நீ செய்த தீயச்
செயல்களில் பாதி அளவு கூடச் சமாரியா
செய்யவில்லை. நீ சமாரியாவை விடப்
பல மடங்கு தீமைகளைச் செய்திருக்கிறாய்.
நீ உன் சகோதரிகளை விடப் பல மடங்கு
பாவங்களைச்செய்திருக்கிறாய். சோதோமும்
சமாரியாவும் உன்னோடு ஒப்பிடும்போது
நல்லவர்களாகத் தோன்றுகிறார்கள். 52என
வே, உனது அவமானத்தை நீ தாங்கிக்
கொள்ள வேண்டும். உன்னோடு ஒப்பிடும்
போது உனது சகோதரிகளை நீ நல்லவர்கள்
ஆக்கிவிடுகிறாய். நீ பயங்கரமான பாவங்க
ளைச் செயதிருக்கிறாய். எனவே, நீ அவமா
னப்படவேண்டும்."
53தேவன் சொன்னார்; "நான் சோதோமை
யும் அதனைச் சுற்றியுள்ள நகரங்களையும்
அழித்தேன். நான் சமாரியாவையும் அத
னைச் சுற்றியுள்ளவற்றையும் அழித்தேன்.
எருசலேமே, உன்னையும் நான் அழிப்பேன்.
ஆனால் அந்நகரங்களை நான் மீண்டும்
கட்டுவேன். எருசலேமே உன்னையும் நான்
கட்டுவேன். 54நான் உனக்கு ஆறுதல் அளிப்
பேன். பிறகு நீ செய்த பயங்கரமான
காரியங்களை நினைவுபடுத்துவாய். நீ
அதற்கு அவமானப்படுவாய். 55எனவே, நீயும்
உன் சகோதரிகளும் மீண்டும் கட்டப்
படுவீர்கள். சோதோமும் அதைச் சுற்றியுள்ள
நகரங்களும் சமரியாவும் அதைச் சுற்றியுள்ள
நகரங்களும், நீயும் உன்னைச் சுற்றியுள்ள
நகரங்களும், மீண்டும் கட்டப்படுவீர்கள்."
56தேவன் சொன்னார், "முன்பு, நீ தற்
பெருமை கொண்டு சோதோமைக் கேலி
செய்தாய். ஆனால் நீ அவற்றை மீண்டும்
செய்யமாட்டாய். 57நீ தண்டிக்கப்படுவதற்கு
முன்பும் உனது அயலவர்கள் உன்னைக்
கேலிசெய்வதற்கு முன்பும் நீ அவற்றைச்
செய்தாய். ஏதோமின் மகள்களும் (நகரங்கள்)
பெலிஸ்தியாவும் உன்னை இப்போது கேலி
செய்கிறார்கள். 58இப்பொழுது நீ செய்த

பயங்கரச் செயல்களுக்காக வருத்தப்பட
வேண்டும்." கர்த்தர் இவற்றைச் சொன்னார்.
59எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைச் சொன்னார், "நீ என்னை நடத்தின
வண்ணம் நான் உன்னை நடத்துவேன்!
நீ உனது திருமண உடன்படிக்கையை
உடைத்தாய். நீ நமது உடன்படிக்கையை
மதிக்கவில்லை. 60ஆனால் நான் உனது
இளமையில் செய்த உடன்படிக்கையை
ஞாபகப் படுத்திக்கொள்வேன். நான் என்
றென்றும் தொடரும் ஒரு உடன்படிக்கை
உன்னோடு செய்தேன்! 61நான் உன்
சகோதரிகளை உன்னிடம் அழைத்து வந்
தேன். நான் அவர்களை உனது மகள்களாக
ஆக்குவேன். அது நமது உடன்படிக்கையில்
இல்லை. ஆனால் அதனை உனக்காகச்
செய்வேன். பிறகு நீ உனது தீய வழிகளை
நினைத்து அதற்காக அவமானமடைவாய்.
62எனவே நான் எனது உடன்படிக்கையை
உன்னுடன் செய்வேன். நானே கர்த்தர்
என்பதை நீ அறிவாய். 63நான் உன்னிடம்
நல்லபடி இருப்பேன். எனவே என்னை நீ
நினைவுகொள்வாய். நீ செய்த தீமைகளுக்
காக வெட்கப்படுவாய். உன்னால் ஒன்றும்
சொல்லமுடியாது. ஆனால் நான் உன்னை
தூய்மையாக்குவேன். நீ மீண்டும் வெட்கம
டையமாட்டாய்!" எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.

17 பிறகு கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்;
2"மனுபுத்திரனே, இஸ்ரவேல் குடும்பத்தாரி
டம் இக்கதையைக் கூறு. இதன் பொருள்
என்னவென்று கேள். 3அவர்களிடம் சொல்:
ஒரு பெரிய கழுகு (நேபுகாத்நேச்சார்)
பெருஞ்சிறகுகளுடன் லீபனோனுக்கு வந்தது.
அக்கழுகு புள்ளிகளைக் கொண்ட இறகு
களை கொண்டிருந்தது.
4அக்கழுகு பெரிய கேதுரு மரத்தின்
உச்சியை (லீபனோன்) உடைத்தது; கானா
னுக்குக் கொண்டுவந்தது. கழுகு வியாபாரி
களின் பட்டணத்திற்கு கிளையைக் கொண்
டுவந்தது.
5பிறகு கழுகு கானானிலிருந்து சில
விதைகளை (ஜனங்கள்) எடுத்தது. அது
அவற்றை நல்ல மண்ணில் நட்டுவைத்தது.
அது நல்ல ஆற்றங்கரையில் நட்டது.
6அவ்விதைகள் வளர்ந்து திராட்சை
கொடியானது. இது ஒரு நல்ல கொடி.
இக்கொடி உயரமாக இல்லை. ஆனால் அது
படர்ந்து பெரும் இடத்தை அடைத்தது.
அக்கொடிகளுக்கு வேர்கள் வளர்ந்தன. சிறு
கொடிகள் மிக நீளமாக வளர்ந்தன.
7இன்னொரு பெரிய கழுகு தன் பெருஞ்
சிறகுடன் இக்கொடியைப் பார்த்தது. அக்க
ழுகுக்கு நிறைய இறகுகள் இருந்தன. அத்தி
ராட்சைக் கொடி, இக்கழுகு தன்னைப்
பராமரிக்க வேண்டும் என்று விரும்பியது.
எனவே இக்கழுகை நோக்கித் தன் வேர்
களை வளர்த்தது. அதன் கிளைகளும் இக்
கழுகை நோக்கி நீண்டன. கிளைகள் தன்னை
நட்டுவைத்த நிலத்தை விட்டு வெளியே
வளர்ந்தன. திராட்சைக் கொடி இக்கழுகு
தனக்குத் தண்ணீர் ஊற்றவேண்டும் என
விரும்பியது.
8திராட்சைக் கொடியானது நல்ல நிலத்தில்
நடப்பட்டிருந்தது. ஏராளமான தண்ணீரின்
அருகில் இது நடப்பட்டிருந்தது. அதில்
கிளைகளும் பழங்களும் வளர்ந்திருந்தன.
அது நல்ல திராட்சைக் கொடியாக இருந்தி
ருக்கலாம்."
9எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைச் சொன்னார்; "அக்கொடி தொடர்ந்து
செழித்து வளரும் என்று நினைக்கிறாயா?
இல்லை! புதிய கழுகு திராட்சைக் கொடி
யைப் பூமியில் இருந்து பிடுங்கும். அப்ப
றவை கொடியின் வேர்களை உடைக்கும்.
அது எல்லா திராட்சைகளையும் உண்ணும்.
பிறகு புதிய இலைகள் வாடி உதிரும்.
அக்கொடி மிகவும் பலவீனமாகும். பலம்
வாய்ந்த புயத்தோடும் வல்லமைவாய்ந்த
ஜனங்களோடும் வந்து அதனைப் பிடுங்கிப்
போடத்தேவையில்லை.

10கொடியை நட்ட இடத்தில் அது வள
ருமா? இல்லை! சூடான கிழக்குக் காற்று
வீசும். அதில் அது வாடி உலர்ந்துபோகும்.
அது நட்டுவைத்த இடத்திலேயே வாடிப்
போகும்."
11'கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்; 12"இஸ்ரவேல்
ஜனங்களிடம் இக்கதையைக் விவரித்துக்
கூறு. அவர்கள் எப்பொழுதும் எனக்கு
எதிராகத் திரும்புகிறார்கள். அவர்களிடம்
இவற்றைச் சொல். முதல் கழுகு என்பது
பாபிலோனிய அரசனான நேபுகாத்நேச்சார்.
அவன் எருசலேமிற்கு வந்தான். அரசனை
யும் தலைவர்களையும் பிடித்தான். அவன்
அவர்களைப் பாபிலோனுக்குக் கொண்டு
போனான். 13பிறகு நேபுகாத்நேச்சார் அரச
குடும்பத்திலுள்ள ஒருவனிடம் ஒப்பந்தம்
செய்துகொண்டான். நேபுகாத்நேச்சார் அம்ம
னிதனை வற்புறுத்தி ஒரு வாக்குறுதியைச்
செய்ய வைத்தான். எனவே அவன் நேபுகாத்
நேச்சாருக்கு உண்மையாக இருப்பதாக
வாக்களித்தான். நேபுகாத்நேச்சார் அவனை
யூதாவின் புதிய அரசனாக ஆக்கினான்,
பிறகு அவன் ஆற்றல்மிக்க மனிதர்களை
யெல்லாம் யூதாவை விட்டு வெளியேற்றி
னான். 14எனவே யூதா ஒரு பலவீனமான
அரசானது. நேபுகாத்நேச்சாருக்கு எதிராகத்
திரும்ப முடியாது போயிற்று. புதிய அரச
னோடு செய்த ஒப்பந்தத்தை ஜனங்கள்
பின்பற்றும்படி வற்புறுத்தப்பட்டனர்.
15ஆனால் புதிய அரசன் எப்படியாவது
நேபுகாத்நேச்சாருக்கு எதிராகக் கலகம்
செய்ய விரும்பினான்! அவன் உதவி

வேண்டி எகிப்துக்குத் தூதுவர்களை
அனுப்பினான். புதிய அரசன் ஏராளமான
குதிரைகளையும், வீரர்களையும் கேட்டான்.
இப்பொழுது, யூதாவின் புதிய அரசன்
வெற்றி பெறுவான் என்று நினைக்கிறீர்
களா? இப்புதிய அரசன் போதிய ஆற்றலைப்
பெற்று ஒப்பந்தத்தை உடைத்து தண்டனை
யில் இருந்து தப்புவான் என்று நினைக்
கின்றீர்களா?”
16எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகி
றார்: “என் உயிரின்மேல் உறுதியாகச்
சொல்கிறேன்! புதிய அரசன் பாபிலோனில்
மரிப்பான். நேபுகாத்நேச்சார் இப்புதியவனை
யூதாவின் அரசனாக ஆக்கினான். ஆனால்
இவன் தான் நேபுகாத்நேச்சாரோடுச் செய்த
வாக்குறுதியை உடைத்தான். இப்புதிய
அரசன் ஒப்பந்தத்தை அசட்டை செய்தான்.
17எகிப்தின் அரசன் யூதாவின் அரசனைக்
காப்பாற்ற முடியாது. அவன் வேண்டு
மானால் ஏராளமான வீரர்களை அனுப்ப
லாம். ஆனால் எகிப்தின் பெரும் பலம்
யூதாவைக் காப்பாற்றாது. நேபுகாத்நேச்சா
ரின் படை நகரத்தைக் கைப்பற்றுவதற்காக
மண்சாலைகளையும், முற்றுகைச் சுவர்களை
யும் கட்டுவார்கள். ஏராளமானவர்கள் மரிப்
பார்கள். 18ஆனால் யூதாவின் அரசன் தப்பிக்
கமாட்டான். ஏனென்றால் அவன் தன்
ஒப்பந்தத்தை அசட்டை செய்தான். அவன்
நேபுகாத்நேச்சாரோடு செய்த வாக்குறுதியை
உடைத்தான். 19எனது ஆண்டவரான கர்த்தர்
இந்த வாக்குறுதியைச் செய்கிறார்: “எனது
உயிரின்மேல், நான் யூதாவின் அரசனைத்
தண்டிப்பதாக வாக்குரைத்தேன். ஏனென்
றால் அவன் எனது எச்சரிக்கையை
அசட்டை செய்தான். அவன் எங்கள் ஒப்
பந்தத்தை உடைத்தான். 20நான் எனது
வலையைப் போடுவேன். அவன் அதில்
அகப்படுவான். நான் அவனை பாபிலோ
னுக்குக் கொண்டுவருவேன். அவன் அங்கே
தண்டிக்கப்படுவான். ஏனென்றால் அவன்
எனக்கு எதிராகத் திரும்பினான். 21நான்
அவனது படையை அழிப்பேன். நான்
அவனது சிறந்த போர் வீரர்களை அழிப்
பேன், தப்பிப் பிழைப்பவர்களை நான்
காற்றில் சிதறடிப்பேன். பிறகு நானே கர்த்தர்
என்று நீங்கள் அறிவீர்கள். நான் இவற்றை
உங்களுக்குச் சொன்னேன்.”
22எனது கர்த்தராகிய ஆண்டவர் இதைக்
கூறினார்: “நான் உயர்ந்த கேதுரு மரத்திலி
ருந்து ஒரு கிளையை எடுப்பேன். நான் மர
உச்சியிலிருந்து ஒரு சிறு கிளையை
எடுப்பேன். நானே அதனை உயரமான
மலையில் நடுவேன்.
23நானே அதனை இஸ்ரவேலின் மலையில்
நடுவேன். அக்கிளை மரமாக வளரும்.
அது கிளைகளாக வளர்ந்து கனிதரும்.
அது அழகான கேதுரு மரமாகும். பல
பறவைகள் அதன் கிளைகளில் அமரும்.
பல பறவைகள் அதன் கிளைகளின் அடியி
லுள்ள நிழலில் தங்கும்.
24“பிறகு மற்ற மரங்கள், நான் உயரமான
மரங்களைத் தரையில் வீழ்த்துவேன், குட்
டையான மரங்களை உயரமாக வளர்ப்பேன்
என்பதை அறியும். நான் பச்சைமரங்களை
உலரச் செய்வேன். உலர்ந்த மரங்களைத்
தளிர்க்கச் செய்வேன். நானே கர்த்தர்.
நான் சிலவற்றைச் செய்வதாகச் சொன்னால்
செய்வேன்!”

18 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்; 2“ஜனங்க
ளாகிய நீங்கள் இப்பழமொழியை மீண்டும்
மீண்டும் சொல்கிறீர்கள். ஏன்? நீங்கள்
பெற்றோர்கள் புளித்த திராட்சை தின்றார்
கள். ஆனால் குழந்தைகள் புளிப்புச் சுவை
யைப் பெறுகிறார்கள், என்று சொல்லு
கிறீர்கள்.
நீங்கள் பாவம் செய்தால் எதிர்காலத்தில்
எவராவது தண்டனை அனுபவிப்பார்கள்
என்று நீங்கள் நினைக்கிறீர்கள். 3ஆனால்
எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகிறார்:
“எனது உயிரைக் கொண்டு நான் இஸ்ர
வேல் ஜனங்களுக்கு வாக்களிக்கிறேன். இப்
பழமொழி இனிமேல் உண்மையாக இருக்
காது. 4நான் ஒவ்வொரு மனிதனையும்
அவ்வாறே நடத்துகிறேன். அவன் பெற்ற
வனா, பிள்ளையா என்பதைப்பற்றி கவலை
யில்லை. பாவம் செய்கிற ஒருவன் அதற்
கேற்றபடி மரிப்பான்!”
5“ஒருவன் நல்லவனாக இருந்தால் அவன்
நன்றாக வாழ்வான்! அந்நல்லவன் ஜனங்க
ளிடம் நியாயமாக இருக்கிறான். 6அந்நல்ல
வன் மலைகளுக்குச் சென்று பொய்த்
தெய்வங்களுக்கு உணவு காணிக்கை தர
வில்லை. இஸ்ரவேலில் உள்ள அசுத்த
பொய்த் தெய்வங்களிடம் வேண்டுதல் செய்ய
வில்லை. அவன் அயலானின் மனைவி
யோடு விபச்சாரப் பாவத்தைச் செய்ய
வில்லை. அவன் தனது மனைவியுடன்
அவளது விலக்குக் காலத்தில் பாலின
உறவு வைத்துக்கொள்ளவில்லை. 7அந்நல்ல
வன் பிறரை தன் நன்மைக்காகப் பயன்
படுத்தவில்லை. எவராவது அவனிடமிருந்து
பணம் கடன் வாங்கினால் திருப்பித் தரும்
போது அடமானத்தைத் திருப்பிக் கொடுத்து
விடுகிறான். அந்நல்லவன் பசித்தவர்களுக்கு
உணவைத் தருகிறான். தேவையானவர்க
ளுக்கு ஆடை கொடுக்கிறான். 8ஒருவன்
அந்நல்லவனிடம் கடன் வாங்க விரும்பி
னால் அவன் கடன் கொடுப்பான். அவன்
அந்தக் கடனுக்காக வட்டி பெறவில்லை.
அவன் வஞ்சகமாக நடந்துகொள்ளவில்லை.
அவன் எல்லோரிடமும் நேர்மையாக நடந்து
கொள்கிறான். ஜனங்கள் அவனை நம்பலாம்.
9அவன் எனது சட்டங்களுக்கு அடிபணிகி
றான், அவன் எனது முடிவுகளைப்பற்றி
எண்ணுகிறான், நியாயமாக இருக்கக் கற்றி

ருக்கிறான். அவன் நல்லவன், அதனால்
வாழ்வான்.
10"ஆனால் அந்நல்லவனுக்கு ஒரு மகன்
பிறந்து அவன் தன் தந்தையைப்போல்
இந்நற்காரியங்களில் எதையும் செய்யா
தவனாக இருக்கலாம். அந்த மகன் பொருட்
களைத் திருடலாம், பிறரைக் கொலை
செய்யலாம். 11அம்மகன் இத்தீமைகளில் எதை
வேண்டுமானாலும் செய்யலாம். அவன்
மலைகளுக்குப் போய் பொய்த் தெய்வங்க
ளுக்கு உணவுக் காணிக்கை தரலாம்.
அப்பாவியாகிய மகன் அயலான் மனைவி
யோடு கள்ள உறவு வைத்திருக்கலாம்.
12அவன் ஏழைகளையும் ஆதரவற்றவர்களை
யும் தவறாக நடத்தலாம். அவன் ஜனங்களை
ஏமாற்றி பயன்பெறலாம். ஒருவன் தனது
கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது
அவன் அடமானத்தைத் திருப்பிக் கொடுக்
காமல் இருக்கலாம். அந்தப் பாவி மகன்
அந்த ஆபாசமான விக்கிரகங்களுக்கு பிரார்த்
தனை செய்து வேறு பயங்கரமான செயல்
களைச் செய்யலாம். 13ஒருவனுக்கு இப்பாவி
மகனிடம் இருந்து பணம் கடன் வாங்கும்
தேவை ஏற்படலாம். அம்மகன் அவனுக்குக்
கடன் கொடுக்கலாம். ஆனால் அவன்
அக்கடனுக்கு வட்டி கொடுக்கும்படி வற்பு
றுத்துவான். எனவே அப்பாவி மகன்
வாழமாட்டான். அவன் எல்லா அரு
வருப்பான செயல்களையும் செய்தான்.
அதனால் மரணம் அடைவான். அவனது
மரணத்திற்கு அவனே பொறுப்பாவான்.
14"இப்பொழுது, இப்பாவி மகனுக்கு ஒரு
மகன் பிறந்திருக்கலாம். ஆனால் இந்த
மகன் தன் தந்தை செய்த எல்லாப் பாவங்க
ளையும் பார்த்து அவன் தந்தையைப்
போன்று வாழ மறுக்கலாம். அந்த நல்ல
மகன் ஜனங்களை நியாயமாக நடத்தலாம்.
15அந்நல்ல மகன் மலைகளுக்குப் போய்
தனது உணவைப் பொய்த் தெய்வங்களுக்கு
பகிர்ந்து கொடுப்பதில்லை. இஸ்ரவேலில்
அசுத்தத் தெய்வங்களிடம் அவன் விண்ணப்
பம் செய்வதில்லை. அவன் அயலானின்
மனைவியோடு விபச்சாரம் செய்வதில்லை.
16அந்நல்ல மகன் ஜனங்களை ஒடுக்குவ
தில்லை. ஒருவன் இவனிடம் வந்து கடன்
கேட்டால் இவன் அடமானத்தைப் பெற்றுக்
கொண்டு கடன் கொடுக்கிறான். அவன்
கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது
அடமானத்தை இவன் திருப்பிக் கொடுக்கி
றான். இந்நல்ல மகன் பசித்தவர்களுக்கு
உணவு கொடுக்கிறான். தேவையானவர்க
ளுக்கு ஆடை கொடுக்கிறான். 17இவன்
ஏழைகளுக்கு உதவுகிறான். ஒருவன் இவனி
டம் பணம் கடன் கேட்க விரும்பினால்
கடன் கொடுக்கிறான். இவன் அக்கடனுக்கு
வட்டி வசூலிக்கவில்லை. இந்நல்ல மகன்
எனது நியாயங்களுக்கு அடிபணிந்து எனது
நியாயங்களைப் பின்பற்றுகிறான். இந்நல்ல
மகன் தந்தையின் பாவங்களுக்காக மரண
மடையமாட்டான். இந்நல்ல மகன் வாழ்
வான். 18இத்தந்தை ஜனங்களுக்குக் கொடுமை
செய்து அவர்களின் பொருட்களைத்
திருடியிருக்கலாம். அவன் தனது ஜனங்க
ளுக்கு எவ்வித நன்மையும் செய்யாமல்
இருக்கலாம். இத்தந்தை தனது சொந்தப்
பாவங்களுக்காகச் மரிப்பான். ஆனால்
அம்மகன் தனது தந்தையின் பாவங்களுக்
காகத் தண்டிக்கப்படமாட்டான்.
19"நீ, 'அம்மகன் தந்தையின் பாவங்களுக்
காக ஏன் தண்டிக்கப்படவில்லை?' என்று
கேட்கலாம், மகன் நல்லவனாக இருந்து
நன்மையைச் செய்தான் என்பதுதான்
காரணம்! அவன் வெகு கவனமாக எனது
நியாயங்களுக்குக் கீழ்ப்படிந்தான்! எனவே
அவன் வாழ்வான். 20பாவங்கள் செய்கிற
ஒருவனே மரணத்திற்கு ஆளாவான். ஒரு
மகன் தனது தந்தையின் பாவங்களுக்காகத்
தண்டிக்கப்படமாட்டான். ஒரு தந்தை தன்
மகனது பாவங்களுக்காகத் தண்டிக்கப்பட
மாட்டான். ஒரு நல்லவனின் நன்மை
அவனை மட்டுமே சேரும். ஒரு கெட்டவ
னின் பாவங்கள் அவனை மட்டுமே சேரும்.
21"இப்பொழுது, தீயவன் தனது வாழ்க்கை
முறையை மாற்றினால் பிறகு அவன்
மரிக்கமாட்டான் வாழ்வான். அவன் தான்
செய்த பாவங்களை நிறுத்திவிடலாம் அவன்
எனது சட்டங்களுக்கு கவனமாகக் கீழ்ப்ப
டியலாம். அவன் நல்லவனாகவும் நியாயமா
னவனாகவும் ஆகலாம். 22தேவன் அவன்
செய்த தீயவைகளை நினைக்கமாட்டார்.
தேவன் அவனது நன்மைகளை மட்டுமே
நினைப்பார்! எனவே அம்மனிதன் வாழ்
வான்!"
23எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறு
கிறார்; "நான் தீயவர்கள் மரிப்பதை விரும்ப
வில்லை. நான் அவர்கள் தம் வாழ்வை
மாற்றுவதை விரும்புகிறேன். எனவே, அவர்
கள் வாழ முடியும்!
24"இப்பொழுது, ஒரு நல்ல மனிதன்
தனது நற்செயல்களை நிறுத்தலாம். அவன்
தன் வாழ்வை மாற்றி முன்பு தீயவர்கள்
என்னென்ன பாவங்களைச் செய்தார்களோ
அவற்றைச் செய்யத் தொடங்கலாம். (அத்தீய
வன் மாறினான் எனவே அவன் வாழமுடி
யும்.) எனவே, அந்நல்ல மனிதன் மாறிப்
தீயவனானால் பிறகு தேவன் அவன் செய்த
நன்மைகளைப்பற்றி நினைக்கமாட்டார்.
அவன் அவருக்கு எதிராக மாறி பாவம்
செய்யத் தொடங்கிவிட்டான் என்பதையே
நினைப்பார். எனவே அம்மனிதன் தனது
பாவங்களுக்காகச் மரிப்பான்."
25தேவன் சொன்னார்; "நீங்கள், 'எனது
தேவனாகிய ஆண்டவர் நியாயமானவராக
இல்லை!' என்று சொல்லலாம். ஆனால்,
கவனியுங்கள், இஸ்ரவேல் குடும்பத்தாரே,
நியாயமற்றவர்கள் நீங்கள்தான்! 26ஒரு நல்ல

மனிதன் மாறிப் பாவம் செய்யத் தொடங்கி
னால் அவன் தனது பாவங்களுக்காகச்
மரிப்பான். 27ஒரு தீயமனிதன் மாறி நன்மை
செய்யத் தொடங்கினால், பிறகு அவன்
தனது வாழ்வைக் காப்பாற்றுவான். அவன்
வாழ்வான்! 28அந்த மனிதன், எவ்வளவு
தீயவனாக இருந்தான், அவன், தான் எவ்
வளவு மோசமானவன் என்று உணர்ந்து
என்னிடம் திரும்பிவரத் தீர்மானித்தான்.
அவன் கடந்த காலத்தில் செய்த பாவத்தை
நிறுத்தினான். எனவே அவன் வாழ்வான்,
மரிக்கமாட்டான்!"

29இஸ்ரவேல் ஜனங்கள் சொன்னார்கள்;
"அது செம்மையில்லை! எனது கர்த்தராகிய
ஆண்டவர் அவ்வாறு இருக்கக்கூடாது!"

தேவன் சொன்னார்: "நான் நியாயமாகவே
இருக்கிறேன். நீங்களே நியாயமற்றவர்கள்!
30ஏனென்றால், இஸ்ரவேல் வம்சத்தாரே, நான்
ஒவ்வொரு மனிதரையும் அவர்கள் செய்தவற்
றுக்காகவே நியாயம் தீர்க்கிறேன்!" எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார். "எனவே என்னிடம் திரும்பி வாருங்
கள்! பாவம் செய்வதை நிறுத்துங்கள்! அந்த
அருவருப்பான பொருட்கள் (விக்கிர கங்கள்)
உங்களைப் பாவம் செய்யத் தூண்ட
அனுமதிக்காதீர்கள்! 31எல்லா அருவருப்பான
பொருட்களையும் தூர எறியுங்கள். அவை
நீங்கள் செய்தவை. அவையே உங்களது
பாவங்களுக்கெல்லாம் காரணம்! உங்களது
இருதயங்களையும் ஆவிகளையும் புதுப்பித்
துக்கொள்ளுங்கள்! இஸ்ரவேல் ஜனங்களே,
உங்களது மரணத்தை ஏன் நீங்களே வர
வழைத்துக்கொள்கிறீர்கள்? 32நான் உங்களைக்
கொல்ல விரும்பவில்லை. தயவுசெய்து
திரும்பிவந்து வாழ்ந்திருங்கள்!" எனது
கர்த்தராகிய ஆண்டவர் அவற்றைக் கூறி
னார்.

19 தேவன் என்னிடம் கூறினார்: "இஸ்ர
வேல் தலைவர்களைப்பற்றிய இந்த
சோகப்பாடலை நீ பாடவேண்டும்.

2"'உன்னுடைய தாய், அங்கு ஆண்
சிங்கங்களுடன் படுத்திருக்கும் பெண் சிங்கத்
தைப் போலிருக்கிறாள். அவள், இளம் ஆண்
சிங்கங்களுடன் படுக்கச் சென்றாள் பல
குட்டிகளை பெற்றெடுத்தாள்.

3தனது குட்டிகளில் ஒன்று எழும்புகிறது.
அது பலமான இளஞ்சிங்மாக வளர்ந்திருக்கி
றது. அது தனது உணவைப் பிடிக்கக்
கற்றிருக்கிறது. அது மனிதனைக் கொன்று
தின்றது.

4அது கர்ச்சிப்பதை ஜனங்கள் கேட்டனர்.
அவர்கள் அதனை வலையில் பிடித்தனர்!
அதன் வாயில் கொக்கிகளைப் போட்டனர்;
அதனை எகிப்துக்குக் கொண்டு போனார்
கள்.

5"'அக்குட்டி தலைவனாகும் என்று
தாய்ச்சிங்கம் நம்பிக்கை வைத்திருந்தது.
ஆனால் இப்போது அது நம்பிக்கையிழந்து
விட்டது. எனவே அது தனது அடுத்த
குட்டியை எடுத்தது. சிங்கமாவதற்குரிய
பயிற்சியைக் கொடுத்தது.

6அது பெரிய சிங்கத்தோடு வேட்டைக்குப்
போனது. அது பலமான இளம் சிங்கமா
யிற்று. அது தனது உணவைப் பிடிக்கக்
கற்றது. அது மனிதனைக் கொன்று தின்றது.
7அது அரண்மனைகளைத் தாக்கியது.
அது நகரங்களை அழித்தது. அந்நாட்டி
லுள்ள ஒவ்வொருவரும் அதன் கர்ச்சினை
யைக் கேட்டு பேசப் பயந்தனர்.

8பிறகு அதனைச் சுற்றி வாழ்ந்த ஜனங்கள்
அதற்கு ஒரு வலை அமைத்தனர். அவர்கள்
அதனைத் தம் வலையில் பிடித்தனர்.

9அவர்கள் கொக்கிகளைப் போட்டு
அதனைப் பூட்டினார்கள். அவர்கள் அதனை
வலைக்குள் வைத்தனர். எனவே அவர்கள்
பாபிலோன் அரசனிடம் கொண்டு போனார்
கள். இப்பொழுது அதன் கர்ச்சினையை
இஸ்ரவேல் மலைப் பகுதிகளில், நீங்கள்
கேட்க முடியாது,

10"'உனது தாய் தண்ணீர் கரையில்
நடப்பட்ட திராட்சைக் கொடியைப் போன்ற
வள். அவளுக்கு மிகுதியான தண்ணீர்
இருந்தது. எனவே அவள் தழைத்த
திராட்சை கொடியாயிருந்தாள்.

11பிறகு அவள் நிறைய கிளைகளோடு
வளர்ந்தாள். அந்தக் கிளைகள் கைத்தடி
களைப் போன்றிருந்தன. அக்கிளைகள் அரச
னின் செங்கோலைப் போன்றிருந்தன. அத்
திராட்சைக் கொடி மேலும் மேலும்
உயரமாக வளர்ந்தது, அது பல கிளை
களைப் பெற்று மேகங்களைத் தொட்டன.

12ஆனால் அக்கொடி வேரோடு பிடுங்கப்
பட்டு தரையில் வீசியெறியப்பட்டது.
சூடான கிழக்குக் காற்று வந்து பழங்களை
காயவைத்தது. பலமான கிளைகள் ஒடிந்தன.
அவை நெருப்பில் எறியப்பட்டன.

13இப்போது திராட்சைக் கொடி வனாந்
தரத்தில் நடப்படுகிறது. இது வறண்ட
தாகமுள்ள நிலம்.

14பெரிய கிளையிலிருந்து நெருப்பு
பரவியது. அந்நெருப்பு அதன் கிளைகளை
யும் பழங்களையும் எரித்தது. எனவே
இனிமேல் அதில் கைத்தடி இல்லை. அரச
னின் செங்கோலும் இல்லை.' இது மரணத்
தைப்பற்றிய சோகப் பாடல். இது மரணத்
தைப்பற்றிய துன்பப் பாடலாகப் பாடப்
பட்டது."

20 ஒரு நாள், சில மூப்பர்கள் (தலை
வர்கள்) இஸ்ரவேலில் இருந்து, கர்த்த
ரிடம் ஆலோசனை கேட்க என்னிடம்
வந்தனர். இது கைதியான ஏழாம் ஆண்டு
ஐந்தாம் மாதம் பத்தாம் நாள். அம்மூப்பர்கள்
(தலைவர்கள்) எனக்கு முன்னால் உட்கார்ந்
தார்கள்.

2பிறகு கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்;

"மனுபுத்திரனே, இஸ்ரவேலின் மூப்பர்க
ளிடம் (தலைவர்கள்) கூறு. அவர்களிடம்
'எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொல்கிறார்: என்னிடம் ஆலோசனை கேட்க
வந்திருக்கிறீர்களா? அது அவ்வாறானால்
நான் அதனைத் தரமாட்டேன். எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்
னார்.' 4"அவர்களை நியாயம்தீர்க்க வேண்
டுமா? மனுபுத்திரனே, நீ அவர்களை நியாயம்
தீர்க்கிறாயா? அவர்கள் பிதாக்கள் செய்த
அருவருப்பான பாவங்களைப்பற்றி நீ சொல்
லவேண்டும். 5நீ அவர்களிடம் சொல்ல
வேண்டும்: 'எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்; நான் இஸ்ரவேலைத்
தேர்ந்தெடுத்த நாளில், நான் யாக்கோபின்
குடும்பத்தின்மேல் என் கையை உயர்த்தி,
நான் அவர்களுக்கு முன்னால், எகிப்தில்,
என்னை வெளிப்படுத்தினேன். என் கையை
உயர்த்தி நான் சொன்னேன்; "நானே உமது
தேவனாகிய கர்த்தர். 6அந்நாளில் உன்னை
எகிப்தைவிட்டு வெளியே எடுத்துச்செல்
வேன் என்று வாக்களித்தேன்; நான் உங்க
ளுக்குக் கொடுத்த நாட்டிற்கு அழைத்துச்
செல்வேன். இது பல நன்மைகள் நிறைந்த
நல்ல நாடு. இது எல்லா நாடுகளையும்விட
அழகான நாடு!

7"நான் இஸ்ரவேல் குடும்பத்தாரிடம்
அவர்களது அருவருப்பான விக்கிரகங்களை
எறிந்துவிடும்படிச் சொன்னேன். எகிப்தில்
உள்ள அசுத்தமான சிலைகளோடு சேர்ந்து
தீட்டுப்படுத்திக் கொள்ளாதீர்கள் என்று
சொன்னேன். நானே உங்களது தேவனாகிய
கர்த்தர்." 8ஆனால் அவர்கள் எனக்கு எதி
ராகத் திரும்பி என் சொல்லைக் கேட்க
மறுத்து விட்டார்கள். அவர்கள் தம்
அருவருப்பான விக்கிரகங்களை எறிய
வில்லை. ஆனால் அவர்கள் எகிப்தியரின்
அந்த ஆபாசமான சிலைகள விடவில்லை.
எனவே நான் (தேவன்) எகிப்தில் அவர்
களையும் அழித்திட முடிவு செய்தேன்.
எனது கோபத்தின் முழு சக்தியையும்
அவர்கள் உணருமாறுச் செய்தேன். 9ஆனால்
நான் அவர்களை அழிக்கவில்லை. அவர்
களை எகிப்தைவிட்டு வெளியே கொண்டு
வருவேன் என்று அவர்கள் வாழ்ந்துகொண்
டிருந்த நாட்டில் ஏற்கனவே நான் சொல்
லியிருந்தேன். நான் எனது நல்ல பெயரை
அழிக்கவில்லை. எனவே, மற்ற ஜனங்களின்
முன்பு இஸ்ரவேலை நான் அழிக்கவில்லை.
10நான் இஸ்ரவேல் குடும்பத்தாரை எகிப்திற்கு
வெளியே கொண்டுவந்தேன். நான் அவர்
களை வனாந்தரத்தில் வழி நடத்தினேன்.
11பிறகு நான் எனது சட்டங்களைக் கொடுத்
தேன். எனது விதிகளை எல்லாம் அவர்களி
டம் சொன்னேன். ஒருவன் அந்த விதிக
ளுக்குக் கீழ்ப்படிந்தால் அவன் வாழ்வான்.
12நான் அவர்களுக்கு ஓய்வுக்குரிய சிறப்பான
நாட்களைப்பற்றியும் சொன்னேன். அவ்விடு
முறை நாட்கள் எனக்கும் அவர்களுக்கும்
இடையில் உள்ள அடையாளங்கள் ஆகும்.
நானே கர்த்தர் நான் அவர்களை எனக்குப்
பரிசுத்தமாக்கிக் கொண்டிருந்தேன் என
அவை காட்டும். எனக்குரிய சிறப்பாக
அவற்றைச் செய்தேன்.
13"'ஆனால் இஸ்ரவேல் குடும்பத்தார்
வனாந்தரத்தில் எனக்கு எதிராகத் திரும்பி
னார்கள். அவர்கள் எனது சட்டங்களுக்குக்
கீழ்ப்படியவில்லை. அவர்கள் எனது விதிக
ளுக்குக் கீழ்ப்படிய மறுத்தனர். அவை
நல்ல விதிகள். ஒருவன் அவ்விதிகளுக்குக்
கீழ்ப்படிந்தால் அவன் வாழ்வான். அவர்கள்
ஓய்வுக்குரிய சிறப்பான நாட்களை எல்லாம்
முக்கியமற்றதாகக் கருதினார்கள். அவர்கள்
அந்நாட்களில் பலமுறை வேலை செய்தனர்.
நான் அவர்களை வனாந்தரத்திலேயே
அழிக்க வேண்டுமென முடிவெடுத்தேன். என்
கோபத்தின் முழு சக்தியையும் அவர்கள்
உணர்ந்துக்கொள்ள வேண்டுமென நினைத்
தேன். 14ஆனால் அவர்களை நான் அழிக்க
வில்லை. நான் இஸ்ரவேலரை எகிப்தை
விட்டு வெளியே கொண்டு வந்ததை மற்ற
நாடுகள் பார்த்தன. நான் எனது நல்ல
பெயரை அழிக்க விரும்பவில்லை எனவே
மற்றவர்கள் முன்பு நான் இஸ்ரவேலரை
அழிக்கவில்லை. 15வனாந்தரத்தில் அந்த
ஜனங்களுக்கு இன்னொரு வாக்கு கொடுத்
தேன். நான் கொடுத்திருந்த நாட்டிற்கு
அவர்களை அழைத்து வரமாட்டேன் என்று
சொன்னேன். அது நன்மைகள் நிறைந்த
நல்ல நாடு. எல்லா நாடுகளையும் விட அது
அழகான நாடு!
16"இஸ்ரவேல் ஜனங்கள் எனது விதி
களுக்குக் கீழ்ப்படிய மறுத்தனர். என் சட்
டங்களை அவர்கள் பின்பற்றவில்லை.
அவர்கள் எனது ஓய்வுக்குரிய சிறப்பான
நாட்களை முக்கியமற்றதாகக் கருதினார்கள்.
அவர்கள் இவற்றையெல்லாம் செய்தனர்.
ஏனென்றால், அவர்கள் இருதயங்கள் அந்த
அசுத்த விக்கிரங்களுக்குச் சொந்தமாயிருந்
தன. 17ஆனால் நான் அவர்களுக்காக வருத்
தப்பட்டேன். நான் அவர்களை அழிக்க
வில்லை. நான் வனாந்தரத்தில் அவர்களை
முழுமையாக அழிக்கவில்லை. 18வனாந்திரத்
தில் நான் அவர்களது பிள்ளைகளோடு
பேசினேன். "உங்கள் பெற்றோர்களைப்
போன்று இருக்க வேண்டாம். நீங்கள்
அசுத்த சிலைகளோடு சேர்ந்து அசுத்தமாக
வேண்டாம். அவர்களின் சட்டங்களைப்
பின்பற்றவேண்டாம். அவர்களது கட்டளை
களுக்குக் கீழ்ப்படியவேண்டாம். 19நானே
கர்த்தர். நானே உங்கள் தேவன். எனது
சட்டங்களுக்குக் கீழ்படிந்திருங்கள். எனது
கட்டளைகளைக் கைக்கொள்ளுங்கள். நான்
சொன்னபடி செய்யுங்கள். 20எனது ஓய்வுக்
குரிய நாட்கள் எல்லாம் முக்கியமானவை

*என்று காட்டுங்கள். எனக்கும் உங்களுக்கும்
இடையே அவை சிறப்பான அடையாளங்க
ளாக இருப்பதை நினைவுகொள்ளுங்கள்.
நானே கர்த்தர். அவ்விடுமுறைகள் நானே
உங்கள் தேவன் என்பதைக் காட்டும்.”*
21“‘*ஆனால் அப்பிள்ளைகள் எனக்கு
எதிராகத் திரும்பினார்கள். அவர்கள் எனது
சட்டங்களுக்குக் கீழ்ப்படியவில்லை. அவர்
கள் எனது கட்டளைகளைக் கைக்கொள்ள
வில்லை. நான் சொன்னபடி அவர்கள்
செய்யவில்லை. அவை நல்ல சட்டங்கள்.
ஒருவன் அவற்றுக்குக் கீழ்ப்படிந்தால் அவன்
வாழ்வான். அவர்கள் எனது சிறப்பிற்குரிய
ஓய்வு நாட்களை முக்கியமற்றவையாகக்
கருதினர். எனவே அவர்களை வனாந்திரத்
தில் நான் முழுமையாக அழிக்க விரும்பி
னேன். அவர்கள் எனது கோபத்தின் முழு
வல்லமையையும் உணர்ந்து கொள்ளவேண்
டும் என்று விரும்பினேன். 22ஆனால் நான்
என்னைக் கட்டுப்படுத்தினேன். நான் இஸ்ர
வேலரை எகிப்திலிருந்து வெளியே கொண்
டுவந்ததை மற்ற நாட்டினர் பார்த்தனர்.
நான் எனது நல்ல பெயரை அழிக்க
விரும்பவில்லை. எனவே மற்ற நாடுகளின்
முன்னால் நான் இஸ்ரவேலரை அழிக்க
வில்லை. 23எனவே வனாந்திரத்தில் அந்த
ஜனங்களுக்கு வேறொரு வாக்கு தந்தேன்.
அவர்களைப் பல்வேறு நாடுகளில் சிதறடிப்
பேன் என்று வாக்குறுதி செய்தேன்.*
24“*இஸ்ரவேல் ஜனங்கள் எனது கட்டளை
களுக்குக் கீழ்படியவில்லை. எனது கட்டளை
களுக்குக் கீழ்ப்படிய மறுத்தனர். அவர்கள்
எனது சிறப்புக்குரிய ஓய்வு நாட்களை
முக்கியமற்றதாகக் கருதினார்கள். அவர்கள்
தம் தந்தையர்களுடைய அசுத்த விக்கிரகங்
களை தொழுதுகொண்டனர். 25எனவே நான்
அவர்களுக்கு நன்மையற்ற சட்டங்களைக்
கொடுத்தேன். வாழ்வு தராத கட்டளைகளை
அவர்களுக்குக் கொடுத்தேன். 26நான் அவர்
கள் தமது அன்பளிப்புகளால் (அவர்கள்
விக்கிரகங்களுக்கு படைத்தவை) தங்களை
யே தீட்டுப்படுத்திக்கொள்ள இடங்கொடுத்
தேன். அவர்கள் தம் முதல் குழந்தைகளைக்
கூட பலியிடத் தொடங்கினார்கள். இவ்வழி
யில், அந்த ஜனங்களை அழிப்பேன். பிறகு
அவர்கள் நானே கர்த்தர் என்பதை அறி
வார்கள்.’ 27எனவே இப்பொழுது, மனு
புத்திரனே இஸ்ரவேல் குடும்பத்தாரிடம் பேசு.
அவர்களிடம், ‘எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைக் கூறுகிறார்: இஸ்ரவேல்
ஜனங்கள் என்னைப்பற்றி கெட்டவற்றைச்
சொன்னார்கள். எனக்கு எதிராகத் தீயத்திட்
டங்களைப் போட்டனர். 28ஆனால் நான்
வாக்களித்த நாட்டிற்கு அவர்களை
அழைத்து வந்தேன். அவர்கள் அனைத்து
குன்றுகளையும் பச்சை மரங்களையும்
பார்த்தனர். அவர்கள் அந்த இடங்களுக்கு
தொழுகைச் செய்யச் சென்றனர். அவர்கள்
தம் பலிகளையும் எனக்குக் கோப
பலியையும்* கொண்டு சென்றனர். அவர்கள்
பலிகளைக் கொடுத்தனர். அது இனிய
மணத்தைக் கொடுத்தது. அந்த இடங்களில்
எல்லாம் அவர்கள் பானங்களின் காணிக்கை
யைக் கொடுத்தனர். 29நான் அந்த ஜனங்
களிடம் அந்த மேடான இடங்களுக்கு
ஏன் போகிறீர்கள் என்று கேட்டேன்
இன்றும் அம்மேடான இடங்கள் அங்கு
இருக்கின்றான’ என்று சொல்.”*
30*தேவன் சொன்னார்; “இஸ்ரவேல் ஜனங்
கள் அனைத்துப் பாவங்களையும் செய்தனர்.
எனவே இஸ்ரவேல் குடும்பத்தாரிடம் பேசு.
‘என் கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறுகிறார்: உங்கள் முற்பிதாக்களைப்
போன்று தீமைகளைச் செய்து நீங்கள்
உங்களை அசுத்தமாக்கிக் கொண்டீர்கள்.
நீங்கள் வேசியைப்போன்று நடந்து கொண்
டீர்கள். நீங்கள் உங்கள் முன்னோர்கள்
வழிபட்ட அருவருப்பான தெய்வங்களை
வணங்க என்னை விட்டு விலகினீர்கள்.*
31*நீங்கள் அதேபோன்று அன்பளிப்புகளைக்
கொடுக்கிறீர்கள். நீங்கள் உங்கள் குழந்தை
களைப் பொய்த் தெய்வங்களுக்குப் பலியாக
நெருப்பில் போடுகிறீர்கள். இன்றுவரை
நீங்கள் அசுத்த விக்கிரகங்களோடு சேர்ந்து
உங்களை தீட்டாக்கிக் கொண்டீர்கள்! நான்
உங்களை என்னிடம் ஆலோசனை கேட்க
வரவிடவேண்டும் என்று நீங்கள் உண்மை
யிலேயே நினைக்கிறீர்களா? நானே ஆண்ட
வரும் கர்த்தருமாயிருக்கிறேன். என் உயிரின்
மூலம் நான் வாக்களிக்கிறேன், நான் உங்கள்
கேள்விகளுக்குப் பதில் சொல்லமாட்டேன்.
உங்களுக்கு ஆலோசனை தரமாட்டேன்!*
32*நீங்கள் வேறு நாட்டினரைப்போன்று இருப்
போம் என்று சொல்கிறீர்கள். நீங்கள் பிற
நாட்டினரைப்போன்று வாழ்கிறீர்கள். நீங்கள்
மரத்துண்டுகளையும் கல்லையும் (சிலைகள்)
சேவிக்கிறீர்கள்.’”*

33*எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறு
கிறார்; “என் உயிரைக் கொண்டு நான்
வாக்களிக்கிறேன், நான் உங்களை அர
சனைப் போன்று ஆள்வேன். ஆனால்
நான் என் வல்லமை வாய்ந்த கையை
உயர்த்தி உங்களைத் தண்டிப்பேன். நான்
உங்களுக்கு எதிரான எனது கோபத்தைக்
காட்டுவேன்! 34உங்களை நான் சிதறடித்த
நாடுகளிலிருந்து வெளியே கொண்டுவரு
வேன். நான் உங்களை ஒன்று சேர்ப்பேன்.
இந்நாடுகளிலிருந்து உங்களை மீண்டும்
கொண்டுவருவேன். ஆனால், நான் எனது
வல்லமைவாய்ந்த கரத்தை உங்களுக்கு
எதிராக உயர்த்தி உங்களைத் தண்டிப்பேன்.
உங்களுக்கு எதிரான எனது கோபத்தைக்*

---

***கோப பலி*** *ஜனங்கள் இந்த உணவை சாமதன பலி என்று சொல்லுவார்கள். ஆனால் எசேக்கியேல், இந்த உணவு தேவனைக் கோபம்தான் மூட்டுகிறதென்று பரிகாசம் செய்கிறான்.*

காட்டுவேன்! 35நான் உங்களை முன்பு
போல் வனாந்திரத்தில் வழிநடத்துவேன்.
ஆனால் இது மற்ற நாட்டினர் வாழும்
இடம். நாம் நேருக்கு நேராக நிற்போம்.
நான் உங்களை நியாயந்தீர்ப்பேன். 36நான்
எகிப்தின் அருகில் உள்ள வனாந்திரத்தில்
உங்கள் முன்னோர்களை நியாயந்தீர்த்தது
போன்று உங்களை நியாயந்தீர்ப்பேன்”
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறினார்.
37“நான் உடன்படிக்கையின் உங்கள்
குற்றங்களை நியாயம் தீர்த்து தண்டிப்பேன்.
38நான் எனக்கு எதிராகத் திரும்பி பாவம்
செய்தவர்களை விலக்குவேன். நான் அவர்
களை உங்கள் தாய்நாட்டிலிருந்து விலக்கு
வேன். அவர்கள் மீண்டும் இஸ்ரவேல்
நாட்டிற்கு வரமாட்டார்கள். பிறகு, நானே
கர்த்தர் என்பதை நீங்கள் அறிந்துகொள்
வீர்கள்.”

39“இப்பொழுது, இஸ்ரவேல் குடும்பத்தி
னரே, எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: “எவராவது தம்
அசுத்த விக்கிரகங்களை தொழுதுகொள்ள
வேண்டுமா னால், அவன் போய்
தொழுதுகொள்ளட்டும். ஆனால் பிறகு,
என்னிடமிருந்து ஆலோசனை கிடைக்கும்
என்று எண்ண வேண் டாம்! இனிமேலும்
எனது நாமத்தை உங்கள் அன்பளிப்பு
களாலும், உங்கள் விக்கிரகங்களாலும்
நீங்கள் தீட்டுப்படுத்த முடியாது.”
40எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறு
கிறார்: “ஜனங்கள் எனது பரிசுத்தமான
மலைகளுக்கு இஸ்ரவேலிலுள்ள உயரமான
மலையில் எனக்குச் சேவை செய்ய வர
வேண்டும்! இஸ்ரவேலின் எல்லா வம்சத்தாரு
மாகிய அனைவரும் உங்கள் நிலத்தில்
(தேசத்தில்) இருப்பீர்கள். என்னிடம் வந்து
ஆலோசனை கேட்கக்கூடிய இடம் அதுதான்.
நீங்கள் அந்த இடத்திற்கு உங்கள் காணிக்கை
களை எடுத்துக்கொண்டு வரவேண்டும்.
உங்கள் விளைச்சலின் முதல் பகுதியை
அந்த இடத்திற்கு நீங்கள் கொண்டு வர
வேண்டும். உங்கள் பரிசுத்த அன்பளிப்புகள்
அனைத்தையும் அந்த இடத்திற்கு நீங்கள்
கொண்டு வரவேண்டும். 41பிறகு நான்
உங்கள் பலிகளின் இனிய மணத்தால்
பிரியமாய் இருப்பேன். நான் உங்களைத்
திரும்ப அழைத்து வரும்போது அது நிகழும்.
நான் உங்களைப் பல தேசங்களில் சிதற
அடித்திருந்தேன். ஆனால் நான் உங்களைக்
கூட்டிச் சேர்ப்பேன். நான் உங்களை எனது
சிறப்புக்குரிய ஜனங்களாக மீண்டும் செய்
வேன். அந்நாடுகள் எல்லாம் இதனைப்
பார்க்கும். 42பிறகு நானே கர்த்தர் என்பதை
நீங்கள் அறிவீர்கள். நான் உங்களை மீண்டும்
இஸ்ரவேல் நாட்டிற்குக் கொண்டுவரும்
போது இதனை அறிவீர்கள். உங்கள்
முற்பிதாக்களிடம் அந்த நாட்டையே உங்க
ளுக்குத் தருவதாக வாக்களித்திருந்தேன்.
43அந்நாட்டில் உங்களை அசுத்தமாக்கிய நீங்
கள் செய்த பாவங்களை நினைப்பீர்கள்.
நீங்கள் உங்கள் தீய வழிகளினிமித்தம்
வெட்கப்பட்டுப்போவீர்கள். 44இஸ்ரவேல்
குடும்பத்தாரே, நீங்கள் பல கெட்டக்காரியங்
களைச் செய்தீர்கள். அத்தீயக்காரியங்களால்
நீங்கள் அழிக்கப்பட்டிருக்க வேண்டும்.
ஆனால் எனது நற்பெயரைக் காப்பாற்றிக்
கொள்ள உங்களுக்கேற்ற அத்தண்டனை
களை நான் தரவில்லை. பிறகு நானே
கர்த்தர் என்பதை நீங்கள் அறிவீர்கள்.
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார்.”
45பிறகு கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்: 46“மனு
புத்திரனே, யூதாவின் தென் பகுதியிலுள்ள
நெகேவைப் பார். நெகேவ் காட்டிற்கு*
எதிராகப் பேசு. 47நெகேவ் காட்டிடம் சொல்,
‘கர்த்தருடைய வார்த்தையைக் கேள். எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறினார்:
பார். உன் காட்டில் நெருப்பிட நான்
தயாராக இருக்கிறேன். நெருப்பானது எல்லா
பச்சை மரங்களையும் எல்லா காய்ந்த
மரங்களையும் அழிக்கும். எரியும் ஜீவா
லையை அணைக்க முடியாது. தெற்கிலி
ருந்து வடக்கு வரையுள்ள அனைத்து
நிலமும் எரியும். 48பிறகு எல்லா ஜனங்களும்
கர்த்தராகிய நானே நெருப்பு வைத்தேன்
என அறிவார்கள். அந்நெருப்பு அணைக்
கப்படாது!’”
49பிறகு நான் (எசேக்கியேல்)
சொன்னேன், “ஓ, எனது கர்த்தராகிய
ஆண்டவர்! நான் இவற்றைச் சொன்னால்,
பிறகு ஜனங்கள் நான் கதைகளை மட்டும்
சொல்வதாக நினைப்பார்கள். இது
உண்மையில் நிகழும் என்று அவர்கள்
நினைக்கமாட்டார்கள்!”

21 எனவே கர்த்தருடைய வார்த்தை
மீண்டும் என்னிடம் வந்தது. அவர்
சொன்னார்: 2“மனுபுத்திரனே, எருசலேமை
நோக்கிப் பார். அதன் பரிசுத்தமான இடங்க
ளுக்கு எதிராகப் பேசு. எனக்காக இஸ்ரவேல்
நாட்டிற்கு எதிராகப்பேசு. 3இஸ்ரவேல் நாட்டி
டம் கூறு, ‘கர்த்தர் இவற்றைச் சொன்னார்;
நான் உனக்கு எதிரானவன்! நான் எனது
வாளை அதன் உறையிலிருந்து எடுப்பேன்!
நல்லவர்கள் தீயவர்கள் ஆகிய எல்லா
ஜனங்களையும் உன்னிடமிருந்து விலக்கு
வேன். 4நான் நல்ல ஜனங்களையும், தீய
ஜனங்களையும் உன்னிடமிருந்து துண்டிப்
பேன்! நான் எனது வாளை அதன்
உறையிலிருந்து உருவி தெற்கிலிருந்து

---

**நெகேவ் காடு** பாலைவனப் பகுதி. இங்கே காடு இல்லை. ஒருவேளை தேவன் இதை விளையாட்டிற்காக சொல்லியிருக்கலாம்.

வடக்கு வரையுள்ள அனைத்து ஜனங்க
ளுக்கும் எதிராகப் பயன்படுத்துவேன். 5பிறகு
நானே கர்த்தர் என்பதை எல்லா ஜனங்களும்
அறிந்துகொள்வார்கள். நானே எனது
வாளை உறையிலிருந்து உருவியிருக்கிறேன்
என்பதையும் அவர்கள் அறிந்துகொள்வார்
கள். எனது வாள் தன்வேலையை முடிக்கும்
வரை தன் உறைக்குள் திரும்பப் போகாது.'"
6தேவன் என்னிடம் சொன்னார், "மனு
புத்திரனே, துக்கமான மனிதனைப்போன்று
உடைந்த உள்ளத்துடன் துக்க ஒலிகளை
எழுப்பு. இத்துயர ஒலிகளை ஜனங்களுக்கு
முன்னால் எழுப்பு. 7பிறகு அவர்கள்
உன்னை 'ஏன் இத்தகைய துக்க ஒலிகளை
எழுப்புகிறாய்' எனக் கேட்பார்கள். பிறகு
நீ, 'துக்கச்செய்தி வரப்போகிறது, ஒவ்வொரு
இதயமும் பயத்தால் உருகப்போகிறது,
எல்லா கைகளும் பலவீனமடையப்போகி
றது. எல்லா ஆவியும் சோர்ந்துபோகும்.
எல்லா முழங்கால்களும் தண்ணீரைப்
போன்று ஆகும்' என்று சொல்லவேண்டும்.
பார், கெட்ட செய்தி வந்துகொண்டிருக்கிறது
இவை எல்லாம் நிகழும்! எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்."

## வாள் தயாராயிருக்கிறது

8கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 9"மனுபுத்திரனே,
எனக்காக ஜனங்களிடம் பேசு. இவற்றைக்
கூறு, 'எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்:
"பார், ஒரு வாள், கூர்மையான வாள்,
வாள் தீட்டப்பட்டிருக்கிறது.
10வாள் கொல்வதற்காகக் கூர்மையாக்கப்
பட்டிருக்கிறது இது மின்னலைப் போன்று
பளிச்சிட கூர்மையாக்கப்பட்டிருக்கிறது.
"'என் மகனே, நான் உன்னைத் தண்டிக்க
வரும் பிரம்பிடமிருந்து ஓடிவிட்டாய். அம்ம
ரத்தடியால் தண்டிக்கப்படுவதற்கு நீ
மறுக்கிறாய்.
11எனவே, வாள் கூர்மையாக்கப்பட்டிருக்
கிறது. இப்போது இதனைப் பயன்படுத்த
முடியும். வாள் கூர்மையாகவும் பளபளப்பாக
வும் ஆக்கப்பட்டிருக்கிறது. இப்போது இது
கொலையாளியின் கையில் கொடுக்கப்பட்டி
ருக்கிறது.
12"'கதறியழு, கத்து, மனுபுத்திரனே! ஏனெ
ன்றால், இந்த வாள் எனது ஜனங்களுக்கும்
இஸ்ரவேலை ஆள்வோர்களுக்கும் எதிராகப்
பயன்படுத்தப்படும்! அந்த ஆள்வோர்கள்
போரை விரும்பினார்கள். எனவே, வாள்
வரும்போது அவர்கள் எனது ஜனங்களோடு
இருப்பார்கள்! எனவே உனது தொடையிலே
அடித்துகொண்டு, உன் துக்கத்தைக் காட்ட
ஒலி எழுப்பு! 13ஏனென்றால், இது ஒரு
சோதனை அன்று! மரத்தடியால் தண்டிக்கப்
பட நீ மறுத்தாய் எனவே, நான் உன்னை
வேறு எதனால் தண்டிக்க முடியும்? ஆம்
வாளால் தான்" எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறினார். 14தேவன்
சொன்னார்: "மனுபுத்திரனே, உன் கை
களைத் தட்டு. எனக்காக ஜனங்களிடம்
பேசு. "இந்த வாள் கீழே இரண்டு முறை
வரட்டும்! மூன்று முறை வரட்டும். இந்த
வாள் ஜனங்களைக் கொல்வதற்குரியது!
இந்த வாள் பெருங் கொலைக்குரியது.
இந்த வாள் ஜனங்களுக்குள் ஊடுருவுமாறு
செருகப்பட்டிருக்கிறது.
15அவர்களின் இதயங்கள் அச்சத்தால்
உருகும். மிகுதியான ஜனங்கள் கீழே
விழுவார்கள். நகரவாசல்களில் இந்த வாள்
பலரைக் கொல்லும். ஆம் இந்த வாள்
மின்னலைப்போன்று பளிச்சிடும். இது
ஜனங்களைக் கொல்லத் தீட்டப்பட்டிருக்கி
றது!
16வாளே, கூர்மையாக இரு! வலது
பக்கத்தை வெட்டு. நேராக மேலே வெட்டு.
இடது பக்கத்தை வெட்டு. உனது முனை
தேர்ந்தெடுத்த இடங்களில் எல்லாம் போ!
17"பிறகு நானும் எனது கைகளைத்
தட்டுவேன். என் கோபத்தைக் காட்டுவதை
நிறுத்துவேன். கர்த்தராகிய நான் பேசி
னேன்!"

## எருசலேமிற்கான வழியைத் தேர்ந்தெடுத்தல்

18கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 19"மனுபுத்திரனே,
பாபிலோனிய அரசனின் வாள் இஸ்ரவே
லுக்கு வரத்தக்கதாக இரண்டு பாதைகளைக்
வரைந்துக்கொள். இரண்டு சாலைகளும் ஒரே
தேசத்திலிருந்து (பாபிலோன்) வரவேண்டும்.
சாலையின் ஆரம்பத்தில் ஒரு குறிப்பை
எழுது. 20அடையாளத்தைப் பயன்படுத்தி
எந்த வழியில் வாள் வருமென்று காட்டு.
ஒருவழி அம்மோனியரின் நகரமாகிய
ரப்பாவுக்குக் கொண்டுபோகும். இன்னொரு
வழி யூதாவில் இருக்கிற பாதுகாக்கப்பட்ட
நகரம் எருசலேமிற்கு கொண்டுபோகும்!
21பாபிலோனிய அரசன் தாக்குவதற்காகத்
தான் போக விரும்பும் வழியைத் திட்
டமிட்டிருக்கிறான். என்பதை இது காட்டும்.
பாபிலோன் அரசன் இரு வழிகளும் பிரிகிற
இடத்திற்கு வந்திருக்கிறான். பாபிலோன்
அரசன் எதிர் காலத்தை அறிய மந்திர
அடையாளங்களைப் பயன்படுத்தியிருக்கி
றான். அவன் சில அம்புகளை ஆட்டினான்.
அவன் குடும்ப விக்கிரகங்களிடம் கேள்வி
கள் கேட்டான். அவன் தான் கொன்ற
விலங்கின் ஈரலைப் பார்த்தான்.
22"அடையாளமானது வலது பக்கமாக
எருசலேமிற்குப் போகும் வழியில் போகச்
சொல்லும்! அவன் வாசலை இடிக்கும்
எந்திரங்களைக் கொண்டுவர திட்டமிடுகி
றான். அவன் கட்டளை இடுவான். அவனது
வீரர்கள் கொல்லத் தொடங்குவார்கள். அவர்

கள் போர் ஆரவாரத்தைச் செய்வார்கள்.
பிறகு அவர்கள் நகரத்தைச் சுற்றி சுவரைக்
கட்டுவார்கள், மணசாலைகளை அமைப்பார்
கள். நகரத்தைத் தாக்க அவர்கள் மரக்கோ
புரங்களைக் கட்டுவார்கள். 23அச்செயல்களை
வெறும் பயனற்ற மந்திர வித்தைகளாக
இஸ்ரவேல் ஜனங்கள் கருதினார்கள். அவர்
கள் தங்களுக்குள் விசுவாசப் பிரமாணம்
எடுத்துக்கொண்டனர். ஆனால் கர்த்தர்
அவர்களது பாவங்களை நினைப்பார்! பிறகு
இஸ்ரவேலர்கள் சிறைபிடிக்கப்படுவார்கள்.”
24எனது கர்த்தாராகிய ஆண்டவர். இத
னைக் கூறுகிறார்: “நீ பல பாவங்களைச்
செய்திருக்கிறாய். உன் பாவங்கள் வெளிப்
படையாகத் தெரிகின்றன. நீ குற்றவாளி
என்பதை அவை எனக்கு நினைப்பூட்டுகின்
றன. எனவே எதிரி தன் கையில் உன்னைப்
பிடித்துக்கொள்வான். 25இஸ்ரவேலின் தீய
தலைவனான நீ கொல்லப்படுவாய். உன்
தண்டனைக் காலம் வந்திருக்கிறது. இங்கே
முடிவு இருக்கிறது!”
26எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: “உன் தலைப்
பாகையை எடு! உன் கிரீடத்தை எடுத்து
விடு. காலம் மாறி இருக்கிறது முக்கியமான
தலைவர்கள் தாழ்த்தப்படுவார்கள். முக்கி
யமற்றவர்கள் தலைவர்கள் ஆவார்கள்.
27நான் அந்த நகரத்தை முழுமையாக
அழிப்பேன்! ஆனால் சரியான மனிதன்
புதிய அரசன் ஆகும்வரை இது நிகழாது.
பிறகு நான் அவனை (பாபிலோன் அர
சனை) இந்நகரத்தை வைத்துக்கொள்ள
விடுவேன்.”

## அம்மோனுக்கு எதிரான தீர்க்கதரிசனம்

28தேவன் சொன்னார்: “மனுபுத்திரனே,
எனக்காக ஜனங்களிடம் கூறு, இவற்றைச்
சொல், ‘எனது கர்த்தராகிய ஆண்டவர்
அம்மோன் ஜனங்களிடமும் அவர்களின்
அவமானத்திற்குரிய பொய்த் தேவனிடமும்
இவற்றைச் சொல்கிறார்: “‘பார், ஒரு வாள்!
வாள் உறையிலிருந்து வெளியே உள்ளது.
வாள் கூர்மையாக்கப்பட்டிருக்கிறது! வாள்
கொலை செய்யத் தயாராக இருக்கிறது.
இது மின்னலைப்போன்று ஒளிவிட கூர்மை
யாக்கப்பட்டுள்ளது!
29உங்கள் தரிசனங்கள் பயனற்றவை உங்
கள் மந்திரம் உங்களுக்கு உதவாது. இது
பொய்களின் கொத்து மட்டுமே. இவ்வாள்
இப்பொழுது தீய மனிதர்களின் தொண்டை
யில் உள்ளது. அவர்கள் மரித்த உடல்களாக
விரைவில் ஆவார்கள். அவர்களின் நேரம்
வந்திருக்கிறது. அவர்களின் தீமை முடிவடை
யும் நேரம் வந்திருக்கிறது.

## பாபிலோனுக்கு எதிரான தீர்க்கதரிசனம்

30“‘உனது வாளை (பாபிலோன்) உறை
யிலே போடு, பாபிலோனே, நீ எந்த
இடத்தில் உருவாக்கப்பட்டாயோ, எந்த
இடத்தில் பிறந்தாயோ அங்கே நான்
உன்னை நியாயந்தீர்ப்பேன். 31எனது
கோபத்தை நான் உனக்கு எதிராகக் கொட்டு
வேன். எனது கோபம் உன்னை ஒரு
சூடான காற்றைப்போன்று அழிக்கும். நான்
உன்னைத் தீய மனிதர்களிடம் ஒப்படைப்
பேன். அவர்கள் ஜனங்களைக் கொல்வதில்
திறமை உடையவர்கள். 32நீங்கள் நெருப்புக்
கான எண்ணையைப் போன்றவர்கள். உங்
கள் இரத்தம் பூமியின் ஆழம்வரை பாயும்.
ஜனங்கள் உன்னை மீண்டும் நினைக்கமாட்
டார்கள். கர்த்தராகிய நான் பேசினேன்!’”

## எசேக்கியேல் எருசலேமிற்கு எதிராகப் பேசுகிறான்

22 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 2“மனு
புத்திரனே, நீ நியாயம் தீர்ப்பாயா? கொலை
காரர்களின் நகரத்தை (எருசலேம்) நியாயம்
தீர்ப்பாயா? நீ அவளிடம் அவள் செய்த
அருவருப்புகளை எல்லாம் சொல்வாயா?
3நீ கூறவேண்டும், ‘எனது கர்த்தராகிய
ஆண்டர் இவற்றைக் கூறுகிறார்: இந்நகரம்
கொலைகாரர்களால் நிறைந்திருக்கிறது.
எனவே அவளது தண்டனைக்காலம்
வந்திருக்கிறது. அவள் தனக்குள் அசுத்த
விக்கிரகங்களைச் செய்தாள். அவை
அவளை தீட்டுப் படுத்தின.
4“எருசலேம் ஜனங்களே, நீங்கள் பல
ஜனங்களைக் கொன்றீர்கள், நீங்கள் அசுத்த
விக்கிரகங்களைச் செய்தீர்கள். நீங்கள்
குற்றவாளிகள், தண்டனைக் காலம் வந்திருக்
கிறது. உங்கள் முடிவு வந்திருக்கிறது. மற்ற
நாடுகள் உங்களைக் கேலிசெய்கின்றன.
அந்நாடுகள் உங்களைப் பார்த்துச் சிரிக்கின்
றன. 5தொலைவிலும் அருகிலும் உள்ள
ஜனங்கள் உங்களைக் கேலிசெய்கின்றனர்.
நீங்கள் உங்கள் பெயர்களை அழித்தீர்கள்.
நீங்கள் உரத்த சிரிப்பைக் கேட்க முடியும்.
6“பாருங்கள்! எருசலேமில் எல்லா
ஆள்வோர்களும் தம்மைப் பலப்படுத்தினர்.
எனவே, அவர்கள் மற்ற ஜனங்களைக்
கொல்லமுடியும். 7எருசலேமில் உள்ள ஜனங்
கள் தம் பெற்றோரை மதிப்பதில்லை.
அந்நகரத்தில் அவர்கள் அயல் நாட்டினரைத்
துன்புறுத்தினார்கள். அந்த இடத்தில்
அவர்கள் அநாதைகளையும் விதவைகளை
யும் ஏமாற்றினார்கள். 8நீங்கள் என் பரி
சுத்தமான பொருட்களை வெறுக்கிறீர்கள்.
எனது சிறப்பிற்குரிய ஓய்வு நாட்களை
நீங்கள் முக்கியமற்றவையாகக் கருதினீர்கள்.
9எருசலேமில் உள்ள ஜனங்கள் மற்ற
ஜனங்களைப்பற்றிப் பொய் சொல்கிறார்கள்.
அவர்கள் அப்பாவி ஜனங்களைக் கொல்வ
தற்காக இவ்வாறு செய்கின்றனர். ஜனங்கள்
பொய்த் தெய்வங்களைத் தொழுதுகொள்ள

*மலைகளுக்குப் போகிறார்கள். பிறகு அவர்களின் ஐக்கிய உணவை உண்ண எருசலேமிற்கு வருகிறார்கள்.*

*"'எருசலேமில், ஜனங்கள் பல பாலின உறவு பாவங்களைச் செய்கின்றனர்.* 10*எருசலேமில் ஜனங்கள் தம் தந்தையின் மனைவியோடு பாலின உறவு கொள்கின்றனர். எருசலேமில் ஆண்கள் பெண்களின் மாதவிலக்கு நாட்களிலும் பலவந்தமாக பாலின உறவு கொள்கின்றனர்.* 11*ஒருவன் அருவருக்கத்தக்க இப்பாவத்தை தன் அயலானின் மனைவியோடேயே செய்கிறான். இன்னொருவன் தன் சொந்த மருமகளிடமே பாலின உறவு கொண்டு அவளைத் தீட்டுப்படுத்துகிறான். இன்னொருவன் தன் தந்தைக்குப் பிறந்த மகளை தன் சொந்த சகோதரியைக் கற்பழிக்கிறான்.*

12*"'எருசலேமில், நீங்கள் ஜனங்களைக் கொல்வதற்குப் பணம் பெறுகிறீர்கள். நீங்கள் கடன் கொடுத்து அவற்றுக்கு வட்டி வசூலிக்கிறீர்கள். நீங்கள் சிறிது பணம் பெறுவதற்காகப் உங்கள் நண்பர்களை ஏமாற்றுகிறீர்கள். நீங்கள் என்னை மறந்திருக்கிறீர்கள்.'" எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறினார்.*

13*தேவன் சொன்னார்: "இப்போது பார்! நான் எனது கையை நீட்டி உன்னைத் தடுக்கிறேன். நீ ஜனங்களை ஏமாற்றியதற்கும் கொன்றதற்கும் நான் உன்னைத் தண்டிப்பேன்.* 14*பிறகு தைரியமாக இருப்பாயா? நான் உன்னைத் தண்டிக்க வரும் காலத்தில் நீ பலமுடையவனாக இருப்பாயா? இல்லை! நானே கர்த்தர். நான் பேசியிருக்கிறேன்! நான் சொன்னவற்றைச் செய்வேன்.* 15*நான் உங்களைப் பலநாடுகளில் சிதறடிப்பேன் நீங்கள் பலநாடுகளுக்குப் போகும்படி நான் உங்களைப் பலவந்தப்படுத்துவேன். இந்நகரிலுள்ள தீட்டானவைகளை நான் முழுவதுமாக அழிப்பேன்.* 16*ஆனால் எருசலேமே, நீ தீட்டாவாய். இவை எல்லாம் நிகழ்வதை மற்ற நாடுகள் எல்லாம் பார்க்கும். பிறகு நானே கர்த்தர் என்பதை நீ அறிவாய்."*

## இஸ்ரவேல் பயனற்ற பொருள் போலாகிறது

17*கர்த்தருடைய வார்த்தை என்னிடம் வந்தது. அவர் சொன்னார்:* 18*"மனுபுத்திரனே, பித்தளை, தகரம், இரும்பு, ஈயம் ஆகியவற்றை வெள்ளியோடு ஒப்பிடும்போது அவை பயன் குறைந்தவை. வெள்ளியைச் சுத்தப்படுத்த நெருப்பிலே போடுவார்கள். வெள்ளி உருகிய பின் அதிலுள்ள அசுத்தத்தை வேலைக்காரர்கள் நீக்குவார்கள். இஸ்ரவேல் நாடு அந்த உதவாத மீதியான அழுக்கைப் போலாயிற்று.* 19*எனவே எனது ஆண்டவரும் கர்த்தருமானவர் இவற்றைக் கூறுகிறார்: 'நீங்கள் எல்லோரும் பயனற்றவை ஆவீர்கள். நான் உங்களை எருசலேமிற்குள் கூட்டிச் சேர்ப்பேன்.* 20*வேலைக்காரர்கள் வெள்ளி, பித்தளை, இரும்பு, ஈயம் போன்றவற்றை நெருப்பிலே போடுவார்கள். அது வெப்பம் அடைய காற்றை ஊதுவார்கள். பிறகு அந்த உலோகங்கள் உருக ஆரம்பிக்கும். அதுபோலவே, நான் உங்களை என் நெருப்பில்போட்டு உருக வைப்பேன். அந்நெருப்புதான் என் கோபம்.* 21*நான் உன்னை அந்நெருப்பில் போடுவேன். என் கோபத்தீயில் காற்று ஊதுவேன். நீ உருகத் தொடங்குவாய்.* 22*வெள்ளி நெருப்பில் உருகும். வேலைக்காரர்கள் வெள்ளியை மட்டும் தனியே ஊற்றி அதனைக் காப்பாற்றுவார்கள். அதுபோலவே நகரில் நீ உருகுவாய். பிறகு நானே கர்த்தர் என்பதை அறிவாய். அதோடு என் கோபத்தை உனக்கு எதிராக ஊற்றியதையும் நீ அறிவாய்.'"*

## எசேக்கியேல் எருசலேமிற்கு எதிராகப் பேசியது

23*கர்த்தருடைய வார்த்தை என்னிடம் வந்தது. அவர் சொன்னார்:* 24*"மனுபுத்திரனே, இஸ்ரவேலிடம் பேசு. அவள் பரிசுத்தமாக இல்லை என்பதைக் கூறு. அந்நாட்டின் மீது நான் கோபமாக இருக்கிறேன். எனவே அந்நாடு அதன் மழையைப் பெறவில்லை.* 25*எருசலேமில் உள்ள தீர்க்கதரிசிகள் பாவத் திட்டங்களை இடுகிறார்கள். அவர்கள் சிங்கத்தைப் போன்றவர்கள். அது தான் பிடித்த விலங்கைத் தின்னத் தொடங்கும்போது கர்ச்சிக்கும். அத்தீர்க்கதரிசிகள் பலரது வாழ்வை அழித்திருக்கின்றனர். அவர்கள் பல விலைமதிப்புள்ள பொருட்களை எடுத்திருக்கின்றனர். எருசலேமில் பல பெண்கள் விதவையாவதற்குக் காரணமாக இருந்திருக்கின்றனர்.*

26*"ஆசாரியர்கள் உண்மையில் எனது போதனைகளைத் சிதைத்துவிட்டனர். எனது பரிசுத்தமானவற்றை அவர்கள் சரியாக வைத்துக்கொள்ளவில்லை. அவற்றை அவர்கள் முக்கியமானதாகக் காண்பிப்பதில்லை. பரிசுத்தமானவற்றை பரிசுத்தமற்றவை போன்று நடத்துகிறார்கள். அவர்கள் சுத்தமானவற்றைச் சுத்தமற்றவற்றைப் போல் நடத்துகிறார்கள். அவர்கள் ஜனங்களுக்கு இதைப்பற்றி கற்றுத் தரவில்லை. எனது சிறப்புக்குரிய ஓய்வு நாட்களுக்கு மதிப்பு மறுக்கிறார்கள். அவர்கள் என்னை முக்கியமற்றவராக நடத்தினார்கள்.*

27*"எருசலேமில் தலைவர்கள் எல்லாம் தான் பிடித்த இரையைத் தின்கிற ஓநாய்களைப் போன்றவர்கள். அத்தலைவர்கள் செல்வம் பெறுவதற்காக ஜனங்களைப் பிடித்துக்கொல்கின்றனர்.*

28*"தீர்க்கதரிசிகள் ஜனங்களை எச்சரிப்பதில்லை. அவர்கள் உண்மையை மூடினார்கள். அவர்கள் சுவர் கட்டத்தெரியாத வேலைக்காரர்களைப் போன்றவர்கள். அவர்*

கள் துவாரங்களில் சாந்தை மட்டும் பூசுகிற
வர்கள். அவர்கள் பொய்களை மட்டும்
பேசுகிறார்கள். அவர்கள் எதிர்காலத்தை
அறிந்துகொள்ள மந்திரத்தைப் பயன்படுத்து
கிறார்கள். அவர்கள் 'எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்' என்று
சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் பொய்
களை மட்டும் சொல்கிறார்கள். கர்த்தர்
அவர்களோடு பேசவில்லை!
29"பொது ஜனங்கள் ஒருவரையொருவர்
பயன்படுத்திக்கொள்கிறார்கள். ஒருவரை ஒரு
வர் ஏமாற்றுகிறார்கள்; ஒருவரை ஒருவர்
திருடுகின்றனர். அவர்கள் ஏழைகளையும்
ஆதரவற்றவர்களையும் பிச்சைக்காரர்களை
யும் தங்கள் உபயோகத்திற்காகப் பயன்
படுத்திக்கொள்கின்றனர். அவர் அந்நியநாட்
டவரை ஏமாற்றுகின்றனர், அவர்களுக்கு
எதிராக எந்த நியாயமும் இல்லை என்பது
போன்று நடந்து கொள்கின்றனர்!
30"நான் ஜனங்களிடம் அவர்களது
வாழ்க்கையை மாற்றும்படியும் நாட்டைக்
காப்பாற்றும்படியும் கேட்டேன். நான்
ஜனங்களிடம் சுவரைப் இணைக்கும்படி
கேட்டேன். அவர்கள் திறப்புகளில் நின்று
பகைவருடன் சண்டையிட்டு நகரைக்
காப்பாற்றவேண்டும் என்று விரும்பினேன்.
ஆனால் எவரும் உதவிக்கு வரவில்லை!
31எனவே, நான் என் கோபத்தைக் காட்டு
வேன். நான் அவர்களை முழுமையாக
அழிப்பேன். அவர்கள் செய்திருக்கிற தீயவை
களுக்காக நான் அவர்களைத் தண்டிப்பேன்.
இதெல்லாம் அவர்களுடைய தவறு!" எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார்.

23 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 2"மனுபுத்
திரனே, சமாரியா மற்றும் எருசலேம் பற்றிய
இந்தக் கதையைக் கேள். இரண்டு சகோதரி
கள் இருந்தனர். அவர்கள் ஒரே தாயின்
மகள்கள். 3அவர்கள் இளமையாக இருக்கும்
போதே எகிப்தில் வேசிகள் ஆனார்கள்,
எகிப்தில் அவர்கள் முதலில் வேசித்தனம்
செய்தனர். ஆண்கள் தம்மார்புகளைத் தொட
வும் அமுக்கவும் அனுமதித்தனர். 4மூத்த
வளின் பெயர் அகோலாள்:* அவள்
தங்கையின் பெயர் அகோலிபாள்.* அந்தச்
சகோதரிகள் எனது மனைவிகள் ஆனார்கள்.
எங்களுக்குப் பிள்ளைகள் இருந்தனர். (அகோ
லாள் உண்மையில் சமாரியா. அகோலிபாள்
உண்மையில் எருசலேம்.)
5"பிறகு அகோலாள் எனக்கு நம்பிக்கை
யற்றவள் ஆனாள். அவள் வேசியைப்
போன்று வாழத் தொடங்கினாள். அவள்
தனது நேசர்களை விரும்பத் தொடங்கினாள்.
அவள் அசீரிய படைவீரர்களை 6அவர்களது
நீல வண்ணச் சீருடையில் பார்த்தாள்.
அவர்கள் குதிரைமேல் சவாரி செய்கிற
விரும்பத்தக்க இளம் வீரர்கள். அவர்கள்
தலைவர்களாகவும் அதிகாரிகளாகவும்
இருந்தனர். 7அகோலாள் அவர்கள் அனைவ
ருக்கும் தன்னையே கொடுத்தாள். அவர்கள்
அனைவரும் அசீரியப் படையில் தேர்ந்
தெடுக்கப்பட்ட வீரர்கள். அவள் அவர்கள்
அனைவரையும் விரும்பினாள். அவள்
அவர்களது தீட்டான சிலைகளோடு சேர்ந்து
தீட்டானாள். 8இதோடுகூட, அவள் எகிப்து
மீது கொண்ட நேசம் மோகத்தையும் நிறுத்த
வில்லை. அவள் இளமையாக இருந்தபோது
எகிப்து அவளோடு நேசம் செய்தது. அவ
ளது இளம் மார்பங்களைத் தொட்ட முதல்
நேசன் எகிப்துதான். எகிப்து தனது
உண்மையற்ற நேசத்தை அவள் மீது ஊற்றி
யது. 9எனவே நான் அவளைக் நேசர்கள்
வைத்துக்கொள்ளும்படி விட்டுவிட்டேன்.
அவள் அசீரியாவை விரும்பினாள். எனவே,
நான் அவளை அவர்களுக்குக் கொடுத்தேன்.
10அவர்கள் அவளைக் கற்பழித்தனர். அவ
ளது குழந்தைகளை எடுத்தனர். அவர்கள்
அவளைக் கடுமையாகத் தண்டித்தனர்.
அவளை வாளால் கொன்றனர். பெண்கள்
இன்றும் அவளைப்பற்றிப் பேசுகிறார்கள்.
11"அவளது இளைய சகோதரி அகோலி
பாள் இவை எல்லாம் நடப்பதைப் பார்த்
தாள். ஆனாலும் அவள் தன் அக்காளைவிட
மிகுதியாகப் பாவங்களைச் செய்தாள்!
அவள் அகோலாளைவிட மிகவும் நம்பிக்கை
யற்றவள் ஆனாள், 12அவள் அசீரியத் தலை
வர்களையும், அதிகாரிகளையும் விரும்பி
னாள். அவள் நீலவண்ணச் சீருடையில்
குதிரையில் சவாரி செய்துவரும் இளம்
வீரர்களை விரும்பினாள். அவர்கள் அனை
வரும் விரும்பத்தக்க இளம் ஆண்கள்.
13அவர்கள் இருவரும் அதே தவறால் தம்
வாழ்வை தீட்டுப்படுத்திக் கொண்டதை நான்
பார்த்தேன்.
14"அகோலிபாள் தன் சோரத்தைத்
தொடர்ந்தாள். பாபிலோனில், சுவரில் ஆண்
கள் உருவம் செதுக்கப்பட்டிருப்பதைப்
பார்த்தாள். அவை சிவப்புச் சீருடை
அணிந்த கல்தேயரின்* உருவங்கள். 15அவர்
கள் தம் இடுப்பைச்சுற்றி கச்சை அணிந்திருந்
தனர். தலையில் நீண்ட தலைப்பாகை
அணிந்தனர். அவர்கள் அனைவரும்
தேரோட்டிகளைப் போன்று காட்சி தந்தனர்.
அவர்கள் அனைவரும் பாபிலோனில் பிறந்
தவர்களின் சாயலில் இருந்தனர். 16அகோ
லிபாள் அவர்களை விரும்பினாள். அதனால்
அவள் தூதர்களை கல்தேயாவுக்கு அவர்
களிடம் அனுப்பினாள். 17எனவே பாபி
லோனியர்கள் அவளது நேசம் படுக்கைக்கு
வந்து அவளோடு பாலின உறவு கொண்ட

---

**அகோலாள்** கூடாரம், ஜனங்கள் வழிபடும் இடம்.

**அகோலிபாள்** என் கூடாரம் அவளது நாடு.

**கல்தேயர்** பாபிலோனிலுள்ள கோத்திரம்.

னர். அவர்கள் அவளைப் பயன்படுத்தி
மிகவும் தீட்டுப்படுத்தியதினால் அவள்
அவர்கள் மேல் வெறுப்படைந்தாள்!
18“அகோலிபாள் இவ்வாறு என்னிடம்
விசுவாசமற்றவளாக இருந்ததை யாவரும்
காணும்படிச் செய்தாள். பலர் அவளது
நிர்வாணத்தை அனுபவிக்கும்படி அனுமதித்
தாள். நான் அவளது அக்காளோடு வெறுப்
படைந்ததுபோல அவளோடும் வெறுப்ப
டைந்தேன். 19மீண்டும் மீண்டும் அகோலிபாள்
எனக்குத் துரோகம் செய்தாள். பிறகு அவள்
தான் இளம்பெண்ணாக எகிப்தில் இருந்த
பொழுது நடந்த வேசித்தனத்தை நினைவு
படுத்திக் கொண்டாள். 20கழுதைக் குறிகள்
போன்ற தன் நேசர்களின் ஆண் குறிகள்
மீதும், குதிரைகளினுடையதைப் போன்ற
தன் நேசர்களின் விந்துப் பெருக்கின் மீதும்
தனக்கிருந்த ஆசையை அவள் நினைத்துக்
கொண்டாள்.

21“அகோலிபாளே, நீ உன் இளமையைப்
பற்றி கனவு கண்டு கொண்டிருக்கிறாய்.
அக்காலத்தில் உன் நேசர்கள் உன் மார்பகங்
களைத் தொட்டு வருடினார்கள். 22எனவே,
அகோலிபாளே, எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைக் கூறுகிறார்: நீ உன்
நேசர்கள்மேல் வெறுப்படைந்தாய், ஆனால்
நான் இங்கு உன் நேசர்களைக் கொண்டு
வருவேன். அவர்கள் உன்னை முற்றுகை
யிடுவார்கள். 23நான் பாபிலோனில் உள்ள
அனைத்து ஆண்களையும் குறிப்பாகக் கல்தே
யர்களையும் அழைப்பேன். நான் பேகோடு,
சோவா, கோவா ஆகிய தேசங்களில் உள்ள
வர்களையும் அழைப்பேன். நான் அசீரியா
வில் உள்ள ஆண்களையும் அழைப்பேன்.
நான் அனைத்துத் தலைவர்களையும் அதி
காரிகளையும் அழைப்பேன். அவர்கள்
எல்லோரும் குதிரை மீது சவாரிசெய்யும்
விரும்பத்தக்க இளம் ஆண்கள், அதிகாரிகள்,
சேனாதிபதிகள், மேலும் முக்கிய நபர்க
ளாகவும் இருந்தனர். 24அந்த ஆண்களின்
கூட்டம் உன்னிடம் வரும். அவர்கள் தமது
இரதங்களிலும் குதிரைகளிலும் ஏறி வரு
வார்கள். அவர்கள் எண்ணிக்கையில் மிகு
தியாக இருப்பார்கள். அவர்கள் தமது
ஈட்டிகள், கேடயங்கள், தலைக்கவசங்கள்
ஆகியவற்றை அணிந்திருப்பார்கள். அவர்கள்
உன்னைச்சுற்றி நிற்பார்கள். நான் அவர்
களிடம் நீ எனக்குச் செய்திருந்ததைச்
சொல்வேன். அவர்கள் தம் சொந்த முறையி
லேயே உன்னைத் தண்டிப்பார்கள். 25நான்
எவ்வளவு பொறாமையுள்ளவன் என்பதை
உனக்குக் காட்டுவேன். அவர்கள் மிகவும்
கோபம் கொண்டு உன்னைத் துன்புறுத்து
வார்கள். அவர்கள் உனது மூக்கையும்
காதுகளையும் வெட்டுவார்கள். அவர்கள்
வாளைப் பயன்படுத்தி உன்னைக் கொல்லு
வார்கள். பிறகு உனது பிள்ளைகளை
எடுத்துக்கொள்வார்கள். பிறகு விடுபட்டுள்ள
உனக்குரியவற்றை எரிப்பார்கள். 26அவர்கள்
உனக்குரிய மெல்லிய ஆடைகளையும் நகை
களையும் எடுத்துக்கொள்வார்கள். 27நான்
உனது எகிப்தோடுள்ள வேசித்தனம் பற்றிய
கனவை நிறுத்துவேன். அவற்றை நீ மீண்டும்
தேடமாட்டாய். அவர்களை மீண்டும் நீ
நினைக்கமாட்டாய்!’”

28எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “நீ வெறுக்கிற ஆண்களி
டம் நான் உன்னைக் கொடுக்கிறேன். நீ
அருவருப்படைந்த ஆண்களிடம் நான்
உன்னைக் கொடுக்கிறேன். 29அவர்கள்
உன்னை எவ்வளவு தூரம் வெறுக்கிறார்கள்
என்பதைக் காட்டுவார்கள். அவர்கள் உன்
உழைப்பின் பலனை எல்லாம் எடுத்துக்
கொள்வார்கள். அவர்கள் உன்னை வெறு
மையாகவும் நிர்வாணமாகவும் விட்டுவிடு
வார்கள். ஜனங்கள் உன் பாவங்களைத்
தெளிவாகக் காண்பார்கள். அவர்கள், நீ
வேசியைப்போன்று நடந்துகொண்டதையும்
கெட்ட கனவுகள் கண்டதையும் காண்பார்
கள். 30நீ என்னை விட்டுவிட்டு மற்ற
நாடுகளைத் துரத்திக்கொண்டு போனபோது
அப்பாவங்களைச் செய்தாய். அவர்களது
அசுத்த விக்கிரகங்களை தொழுதுகொள்ளத்
தொடங்கும்போது அப்பாவங்களைச் செய்
தாய். அவற்றினால் நீ உன்னையே
தீட்டுப்படுத்திக் கொண்டாய். 31நீ உன்
அக்காவைப் பின்பற்றி அவளைப்போன்று
வாழ்ந்தாய். நீயே அவளுடைய விஷக்கோப்
பையை எடுத்து உனது கைகளில் பிடித்துக்
கொண்டாய். உனது தண்டனைக்கு நீயே
காரணம் ஆனாய்.” 32எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்:

“நீ உன் சகோதரியின் விஷக் கோப்
பையை குடிப்பாய். இது உயரமும் அகலமும்
கொண்ட விஷக்கோப்பை. அக்கோப்பையில்
மிகுதியான விஷம் (தண்டனை) உள்ளது.
ஜனங்கள் உன்னைப் பார்த்துச் சிரித்துக்
கேலிசெய்வார்கள்.

33நீ ஒரு குடிகாரனைப் போன்று தடுமாறு
வாய். நீ மிகவும் சஞ்சலம் அடைவாய். அது
அழிவும் பாழ்க்கடிப்பும் உள்ள கோப்பை.
இது உன் சகோதரி குடித்த கோப்பையைப்
(தண்டனை) போன்றது.

34அக்கோப்பையிலுள்ள விஷத்தை நீ
குடிப்பாய். அதிலுள்ள கடைசி சொட்டை
யும் நீ குடிப்பாய். நீ அந்தக் கோப்பையை
எறிந்து துண்டு துண்டாக்குவாய். நீ வேத
னையினால் உன் மார்பகங்களைக் கிழிப்
பாய். இவை நிகழும், ஏனென்றால், நானே
ஆண்டவரும் கர்த்தருமாய் இருக்கிறேன்.
நான் இவற்றைக் கூறினேன்.

35எனவே எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறினார்: ‘எருசலேமே, என்னை
மறந்துவிட்டாய். நீ என்னை தூர எறிந்து
விட்டு என்னை விட்டுப் போய் விட்டாய்.
எனவே இப்போது என்னை விட்டு

விலகியதற்காக நீ துன்பப்பட வேண்டும்,
வேசியைப்போன்று வாழ்கிறாய். உனது
கெட்ட கனவுகளுக்காகவும் உன் வேசித்
தனங்களுக்காகவும் நீ துன்பப்படவேண்டும்.'"

### அகோலாள், அகோலிபாள் ஆகியோருக்கு எதிரான நியாயத்தீர்ப்பு

36எனது கர்த்தராகிய ஆண்டவர் என்
னிடம் சொன்னார்: "மனுபுத்திரனே, அகோ
லாவையும் அகோலிபாளையும் நியாயம்
தீர்க்கப்போகிறாயா? அவர்கள் செய்திருக்கிற
அருவருப்பான செயல்களைப்பற்றி அவர்
களிடம் கூறு, 37அவர்கள் விபச்சாரமாகிய
பாவத்தைச் செய்தனர். அவர்கள் கொலைக்
குற்றவாளிகள். அவர்கள் வேசிகளைப்
போன்று நடந்துகொண்டனர். அவர்கள்
அசுத்த விக்கிரகங்களுக்காக என்னை விட்டு
விட்டனர். அவர்கள் என் மூலம் குழந்தை
களைப் பெற்றனர். ஆனால் அவர்களைக்
கட்டாயப்படுத்தி தீக்குள்ளாக்கி அந்த அசுத்த
விக்கிரகங்களுக்கு போஜனப்பலியாகக்
கொடுத்தனர். 38மேலும் அவர்கள் என்னு
டைய ஆலயத்தைத் தீட்டுப்படுத்தி என்
சிறப்பான ஓய்வுநாட்களை முக்கியமற்றதாக
நடத்தினார்கள். 39அவர்கள் தம் விக்கிரகங்
களுக்காகக் குழந்தைகளைக் கொன்றார்கள்.
அவர்கள் எனது பரிசுத்தமான இடத்திற்குச்
சென்று அவற்றையும் அருவருப்பானதாக
ஆக்கினார்கள்! அவர்கள் இதனை என்
ஆலயத்திற்குள் செய்தார்கள்!

40"அவர்கள் தொலைதூர நாடுகளிலிருந்து
ஆண்களை அழைக்க அனுப்பியிருந்தனர்.
நீ இம்மனிதர்களிடம் தூதுவனை அனுப்பி
னாய். அம்மனிதர்கள் உன்னைப் பார்க்க
வந்தனர். அவர்களுக்காக நீ குளித்தாய்.
கண்ணுக்கு மைதீட்டினாய். நகைகளை
அணிந்துகொண்டாய். 41நீ அழகான படுக்
கையில் அமர்ந்து அதனருகில் மேசை
யைப் போட்டாய். எனது வாசனைப்
பொருட்களையும் எனது எண்ணையையும்
மேசைமேல் வைத்தாய்.

42"எருசலேமில் உள்ள சத்தம் விருந்துண்
ணும் ஒரு கும்பலின் இரைச்சலைப்போன்று
கேட்டது. பல மனிதர்கள் விருந்துக்கு
வந்தனர். அவர்கள் வனாந்தரத்திலிருந்து
வந்தது போன்று ஏற்கனவே குடித்திருந்தனர்.
அவர்கள் அப்பெண்களுக்கு கைவளைகளை
யும் கிரீடங்களையும் கொடுத்தனர். 43பிறகு
நான் விபச்சாரத்தால் களைத்துப் பழுதான
ஒரு பெண்ணிடம் பேசினேன். நான்
அவளிடம், 'அவர்கள் உன்னோடும் நீ
அவர்களோடும் தொடர்ந்து பாலின உறவு
வைத்துக்கொள்வீர்களா?' என்று கேட்டேன்.
44ஆனால் அவர்கள் வேசிகளிடம் போவது
போன்று அவளோடு போய்க்கொண்டிருந்
தார்கள். ஆம், அவர்கள் மீண்டும் மீண்டும்
அந்த முறைகேடான பெண்களான அகோலா
ளிடமும் அகோலிபாளிடமும் போனார்கள்.

45"ஆனால் நல்லவர்கள் அவர்களைக்
குற்றவாளியாக நியாயந்தீர்ப்பார்கள். அவர்
கள் அப்பெண்களை அவர்களது விபச்சாரம்
மற்றும் கொலை பாவங்களுக்காக நியாயந்
தீர்ப்பார்கள். ஏனென்றால், அவர்கள் அகோ
லாளிடமும் அகோலிபாளிடமும் விபச்சாரப்
பாவம் செய்தனர். அவர்களால் கொல்லப்
பட்டவர்களின் இரத்தம் அவர்களது கையில்
இன்னும் இருக்கிறது.'

46எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைச் சொன்னார்: "ஜனங்களை ஒன்று
சேருங்கள். அந்த ஜனங்கள் அகோலாவை
யும் அகோலிபாளையும் தண்டிக்க அனு
மதியுங்கள். அந்த ஜனங்கள் குழு இரண்டு
பெண்களையும் தண்டித்துக் கேலி பேசும்.
47பிறகு அந்த ஜனங்கள் குழு அவர்கள்
மீது கல்லை வீசிக் கொல்லும், பிறகு
அவர்கள் தம் வாள்களால் அப்பெண்களைத்
துண்டுகளாக்குவார்கள். அவர்கள் அப்பெண்
களின் பிள்ளைகளையும் கொல்வார்கள்.
அவர்களின் வீடுகளையும் எரிப்பார்கள்.
48இப்படியாக, நான் இந்நாட்டில் உள்ள
அவமானத்தைப் போக்குவேன். நீங்கள் செய்
தது போன்ற அவமானகரமான செய்கை
களைச் செய்யவேண்டாம் என்று எல்லாப்
பெண்களும் எச்சரிக்கப்படுவார்கள். 49நீங்கள்
செய்த முறைகேடான செயல்களுக்காக
அவர்கள் உன்னைத் தண்டிப்பார்கள். நீங்கள்
உங்கள் அசுத்த விக்கிரகங்களைத் தொழுது
கொண்டதற்காக தண்டிக்கப்படுவீர்கள்.
பிறகு நானே கர்த்தரும் ஆண்டவருமாயிருக்
கிறேன் என்றும் நீங்கள் அறிவீர்கள்."

### பானையும் இறைச்சியும்

24 எனது கர்த்தராகிய ஆண்டவருடைய
வார்த்தை என்னிடம் வந்தது. இது
சிறைப்பட்ட ஒன்பதாம் ஆண்டின் பத்தாம்
மாதத்தின் (டிசம்பர்) பத்தாம் நாளில் நடந்
தது, அவர் சொன்னார்: 2"மனுபுத்திரனே,
இந்த நாளின் தேதியையும் இந்தக்
குறிப்பையும் நீ எழுதிவை. 'இந்த நாளில்
பாபிலோன் அரசனது படை எருசலேமை
முற்றுகையிட்டது.' 3இந்தக் கதையைக் கீழ்ப்
படிய மறுக்கும் குடும்பத்தாரிடம் (இஸ்ர
வேல்) கூறு. அவர்களிடம் இவற்றைக்
கூறு 'எனது கர்த்தராகிய ஆண்டவர் இத
னைக் கூறுகிறார்:

"பாத்திரத்தை அடுப்பிலே வை, பாத்தி
ரத்தை வைத்து அதில் தண்ணீரை ஊற்று.

4அதில் இறைச்சித் துண்டுகளைப் போடு.
தொடை மற்றும் தோள்களில் உள்ள நல்ல
கறிகளைப் போடு, நல்ல எலும்புகளாலும்
பாத்திரத்தை நிரப்பு.

5மந்தையில் நல்ல ஆடுகளை பயன்படுத்து
பாத்திரத்திற்குக் கீழே விறகுகளை அடுக்கு
இறைச்சித் துண்டுகளைக் கொதிக்க வை.
எலும்புகளும் வேகும்வரை பொங்கக்
காய்ச்சு!

6எனவே எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: "'இது எருச
லேமிற்குக் கேடாகும். கொலைகாரர்களின்
நகரத்திற்கு இது கேடாகும் எருசலேம் துரு
ஏறிய ஒரு பாத்திரத்தைப் போன்றது.
அத்துரு நீக்க முடியாதது! அப்பாத்திரம்
சுத்தமானதாக இல்லை, எனவே நீ அப்பாத்தி
ரத்திலுள்ள எல்லாக் கறித் துண்டுகளையும்
வெளியே எடுத்துப் போடவேண்டும்! அக்
கறியைத் தின்ன வேண்டாம்! அக்கெட்டுப்
போன இறைச்சியில் ஆசாரியர்கள் எதையும்
தேர்ந்தெடுக்க அனுமதிக்க வேண்டாம்.

7எருசலேம் துருவோடுள்ள பாத்திரத்தைப்
போன்றது. ஏனென்றால் கொலைகளினால்
ஏற்பட்ட இரத்தம் இன்னும் உள்ளது! அவள்
வெறும் பாறையில் இரத்தத்தைப் போட்
டாள்! அவள் இரத்தத்தை நிலத்தில் ஊற்றி
அதைப் புழுதியினால் மூடவில்லை.
8நான் அவள் இரத்தத்தை வெறும் பாறை
யில் வைத்தேன். எனவே இது மறைக்
கப்படாது. நான் இதனைச் செய்தேன்,
எனவே ஜனங்கள் கோபப்படுவார்கள், அப்
பாவி ஜனங்களைக் கொன்றதற்காக
அவளைத் தண்டிப்பார்கள்.'"
9எனவே, எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: "கொலைகாரர்கள்
நிறைந்த இந்நகரத்துக்கு இது கேடாகும்!
நான் நெருப்புக்காக நிறைய விறகுகளை
அடுக்குவேன்.
10பாத்திரத்திற்குக் கீழே நிறைய விறகு
களை அடுக்கு. நெருப்பு வை, இறைச்சியை
நன்றாக வேகவை! மசாலாவைக் கலந்
துவை. எலும்புகளையும் எரித்துவிடு!
11பிறகு பாத்திரத்தைக் காலியாக்கி நெருப்
பின்மேல் வை. அதன் கறைகள் உருகத்
தொடங்கும்வரை சூடாக்கு. அதன் கறைகள்
உருகிவிடும், துருவும் அழிக்கப்படும்.

12எருசலேம், அழுக்கினை போக்க கடுமை
யாக வேலை செய்யவேண்டும். ஆனாலும்
'துரு' போகாது! நெருப்பு (தண் டனை)
மட்டுமே துருவை அகற்றும்!
13நீ எனக்கு எதிராகப் பாவம் செய்தாய்.
அதனால் பாவக்கறையோடு உள்ளாய். நான்
உன்னைக் கழுவிச் சுத்தமாக்க விரும்பி
னேன். ஆனால் அழுக்கு வெளியேறவில்லை.
எனது கோபநெருப்பு தனியும்வரை நான்
மீண்டும் உன்னைக் கழுவ முயற்சி
செய்யமாட்டேன்!
14"நானே கர்த்தர், உனது தண்டனை
வரும் என்று நான் சொன்னேன். நான்
அது வரும்படிச் செய்வேன். நான் தண்ட
னையை நிறுத்தி வைப்பதில்லை. நான்
உனக்காக வருத்தப்படுவதில்லை. நீ செய்த
பாவங்களுக்காக நான் உன்னைத் தண்டிப்
பேன்." எனது கர்த்தராகிய ஆண்டவர்
அவற்றைச் சொன்னார்.

### எசேக்கியேல் மனைவியின் மரணம்

15பிறகு கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்:
16"மனுபுத்திரனே, நீ உன் மனைவியைப்
அதிகமாய் நேசிக்கிறாய். ஆனால் நான்
அவளை உன்னிடமிருந்து எடுத்துக்கொள்
ளப் போகிறேன். உன் மனைவி திடீரென்று
மரிப்பாள். ஆனால் உனது துக்கத்தை நீ
காட்டக் கூடாது. நீ உரக்க அழவேண்டாம்.
நீ அழுவாய். உன் கண்ணீர் கீழே விழும்.
17ஆனால் உனது துயரத்தை அமைதியாக
வெளிப்படுத்த வேண்டும். உனது மரித்த
மனைவிக்காக நீ உரக்க அழாதே. நீ
வழக்கமாக அணிகிற ஆடையையே அணிய
வேண்டும். உனது தலைப்பாகையையும்
பாதரட்சைகளையும் அணியவேண்டும்.
உனது துயரத்தைக் காட்ட மீசையை
மறைக்க வேண்டாம். உறவினர் மரித்துப்
போனால் வழக்கமாக மற்றவர்கள் உண்ணும்
உணவை நீ உண்ண வேண்டாம்."
18மறுநாள் காலையில் ஜனங்களிடம்
தேவன் சொன்னதைச் சொன்னேன். அன்று
மாலையில் எனது மனைவி மரித்தாள்.
மறுநாள் காலையில் தேவனுடைய கட்ட
ளைபடி நான் செய்தேன்: 19பிறகு ஜனங்கள்
என்னிடம் சொன்னார்கள்; "ஏன் இவ்வாறு
செய்கிறீர்? இதன் பொருள் என்ன?"
20பிறகு நான் அவர்களிடம் சொன்னேன்;
"கர்த்தருடைய வார்த்தை என்னிடம் வந்தது.
அவர் 21இஸ்ரவேல் குடும்பத்தாரிடம் சொல்
லச் சொன்னார். எனது கர்த்தராகிய
ஆண்டவர் சொன்னார்; 'பார், நான் எனது
பரிசுத்தமான இடத்தை அழிப்பேன். அந்த
இடத்தைப்பற்றி பெருமைப்படுகிறீர்கள்.
அதைப்பற்றிப் புகழ்ந்து பாடுகிறீர்கள். அந்த
இடத்தைப் பார்க்க ஆசைப்படுகிறீர்கள். நீங்
கள் உண்மையில் அந்த இடத்தை நேசிக்
கிறீர்கள். ஆனால் நான் அந்த இடத்தை
அழிப்பேன். நீங்கள் விட்டுச் செல்லும்
உங்கள் பிள்ளைகளைப் போரில் கொல்
வேன். 22ஆனால், நான் என் மனைவிக்குச்
செய்ததையே நீங்கள் செய்வீர்கள். உங்கள்
துக்கத்தைக் காட்ட மீசையை மறைக்
கமாட்டீர்கள். ஒருவன் மரித்ததற்காக வழக்க
மாக உண்ணும் உணவை நீங்கள் உண்ண
மாட்டீர்கள். 23நீங்கள் உங்கள் தலைப்பாகை
யையும் பாதரட்சைகளையும் அணிந்து
கொள்வீர்கள். நீங்கள் உங்கள் துக்கத்தைக்
காட்டமாட்டீர்கள். நீங்கள் அழமாட்டீர்கள்.
ஆனால் உங்களது பாவங்களால் நீங்கள்
வீணாக்கப் படுவீர்கள். நீங்கள் உங்களது
துயர ஒலிகளை ஒருவருக்கொருவர் அமைதி
யாக வெளிப்படுத்திக்கொள்வீர்கள், 24எனவே
எசேக்கியேல் உங்களுக்கு ஒரு எடுத்துக்
காட்டு, அவன் செய்ததை எல்லாம் நீங்கள்
செய்வீர்கள். அந்தத் தண்டனைக் காலம்
வரும். பிறகு நானே கர்த்தர் என்பதை
நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.'"

[25-26]“மனுபுத்திரனே, நான் ஜனங்களிட
மிருந்து அப்பாதுகாப்பான இடத்தை (எருச
லேம்) எடுத்துக்கொள்வேன். அந்த அழகிய
இடம் அவர்களை மகிழ்ச்சியடையச் செய்கி
றது. அவர் அந்த இடத்தைப் பார்க்க
அதிகமாக விரும்புகின்றனர். அவர்கள்
உண்மையில் அந்த இடத்தை நேசிக்கிறார்
கள். ஆனால் அந்த நேரத்தில் நான் அந்த
நகரத்தையும் அவர்களது பிள்ளைகளையும்
எடுத்துக்கொள்வேன். தப்பிப் பிழைத்த ஒரு
வன் எருசலேம் பற்றிய கெட்ட செய்தியைச்
சொல்வதற்கு வருவான். [27]அப்பொழுது
அவனோடு பேச உன்னால் முடியும். நீ
இனிமேலும் மௌனமாய் இருக்கமாட்டாய்.
இதுபோலவே நீ அவர்களுக்கு எடுத்துக்
காட்டாக இருப்பாய். பிறகு அவர்கள்
நானே கர்த்தர் என்பதை அறிவார்கள்.”

### அம்மோனுக்கு எதிரான தீர்க்கதரிசனம்

25 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: [2]“மனு
புத்திரனே, அம்மோன் ஜனங்களை நோக்கி
அவர்களுக்கு எதிராக எனக்காகப் பேசு.
[3]அம்மோன் ஜனங்களிடம் சொல்: ‘எனது
கர்த்தராகிய ஆண்டவருடைய வார்த்தை
யைக் கேளுங்கள்! எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்: எனது
பரிசுத்தமான இடங்கள் அழிக்கப்பட்டபோது
நீங்கள் மகிழ்ச்சி அடைந்தீர்கள். இஸ்ரவேல்
தேசம் பாழாக்கப்படுகிறபோது அதற்கு
விரோதமாக இருந்தீர்கள். யூதாவின் குடும்பத்
தினர் சிறைபிடிக்கப்பட்டபோது, அவர்க
ளுக்கு விரோதமாக இருந்தீர்கள். [4]எனவே
கிழக்கே உள்ள ஜனங்களிடம் உன்னைக்
கொடுப்பேன். அவர்கள் உன் தேசத்தை
எடுத்துக்கொள்வார்கள். அவர்களது படைவீ
ரர்கள் உனது நாட்டில் தம் கூடாரங்களை
அமைப்பார்கள். அவர்கள் உங்களிடையே
வாழ்வார்கள். அவர்கள் உங்கள் பழங்களைத்
தின்று உங்கள் பாலைக் குடிப்பார்கள்.

[5]“‘நான் ரப்பா நகரத்தை ஒட்டகங்களின்
மேய்ச்சல் நிலமாகவும் நாட்டை ஆட்டுக்
கிடையாகவும் ஆக்குவேன். பிறகு நானே
கர்த்தர் என்பதை நீ அறிந்துகொள்வாய்.
[6]கர்த்தர் இவற்றைச் சொல்கிறார்: இஸ்ரவேல்
அழிக்கப்பட்டதற்காக நீ மகிழ்ச்சி அடைந்
தாய். நீ உன் கைகளைத் தட்டி கால்களால்
மிதித்தாய். நீ இஸ்ரவேல் தேசத்தை கேலி
செய்து அவமதித்தாய். [7]எனவே, நான்
உன்னைத் தண்டிப்பேன். நீ, போரில் வீரர்
கள் கைப்பற்றத்தக்க விலைமதிப்புள்ள
பொருட்களாவாய். நீ உனது நிலத்தை
இழப்பாய். தொலைதூர நாடுகளில் நீ
மரித்துப்போவாய். நான் உனது நாட்டை
அழிப்பேன்! பிறகு நானே கர்த்தர் என்பதை
நீ அறிவாய்.’”

### மோவாப் மற்றும் சேயீருக்கு எதிரான தீர்க்கதரிசனம்

[8]எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “மோவாபும் சேயீரும்
(ஏதோம்) சொல்கின்றன, ‘யூத வம்சமானது
மற்ற நாடுகளைப் போன்றது.’ [9]மோவாபின்
தோள்களை நான் வெட்டுவேன். அதன்
எல்லையோரங்களில் உள்ள நகரங்களை
நான் எடுத்துக்கொள்வேன். தேசத்தின் மகி
மையையும் பெத்யெசிமோத்தையும், பாகால்
மெயோனையும் கீரியாத்தாயீமையும் எடுத்
துக்கொள்வேன். [10]பிறகு நான் இந்நகரங்
களை கிழக்கே உள்ள ஜனங்களுக்குக்
கொடுப்பேன். அவர்கள் உன் நாட்டைப்
பெற்றுக்கொள்வார்கள். கிழக்கே உள்ள
ஜனங்கள் அம்மோன் ஜனங்களை அழிக்கும்
படி நான் அனுமதிப்பேன். அம்மோன்
என்று ஒரு தேசம் இருந்ததை எல்லோரும்
மறந்துவிடுவார்கள். [11]எனவே, நான்
மோவபைத் தண்டிப்பேன். பிறகு அவர்கள்
நானே கர்த்தர் என்பதை அறிவார்கள்.”

### ஏதோமிற்கு விரோதமான தீர்க்கதரிசனம்

[12]எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “ஏதோம் ஜனங்கள் யூதா
வம்சத்தாருக்கு விரோதமாகத் திரும்பினார்
கள். அவர்கள் பழி வாங்கினார்கள். ஏதோம்
ஜனங்கள் குற்றவாளிகள்.” [13]எனவே எனது
கர்த்தராகிய ஆண்டவர் கூறுகிறார்: “நான்
ஏதோமைத் தண்டிப்பேன். நான் ஏதோமி
லுள்ள மனிதர்களையும் விலங்குகளையும்
அழிப்பேன். நான் தேமான் முதல் தேதான்
வரையுள்ள ஏதோம் நாடு முழுவதையும்
அழிப்பேன். ஏதோமியர்கள் போரில்
கொல்லப்படுவார்கள். [14]நான் இஸ்ரவேலர்க
ளாகிய என் ஜனங்களைப் பயன்படுத்தி,
ஏதோமைப் பழி வாங்குவேன். இவ்வாறு
இஸ்ரவேல் ஜனங்கள் ஏதோமிற்கு விரோத
மாக என் கோபத்தைக் காட்டுவார்கள்,
பிறகு ஏதோம் ஜனங்கள், அவர்களை நான்
தண்டித்ததை அறிவார்கள்” எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார்.

### பெலிஸ்தியர்களுக்கு விரோதமான தீர்க்கதரிசனம்

[15]எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “பெலிஸ்தியர்கள் பழி
வாங்க முயன்றனர். அவர்கள் மிகவும்
கொடூரமானவர்கள். அவர்கள் தமக்குள்
கோபத்தை நீண்ட காலமாக எரியவிட்
டனர்!” [16]எனவே எனது கர்த்தராகிய
ஆணடவர் கூறினார்: “நான் பெலிஸ்தியர்
களைத் தண்டிப்பேன், ஆம். நான் கிரேத்தா
விலிருந்து வந்த அந்த ஜனங்களை
அழிப்பேன். கடற்கரையோரமாக வாழ்கிற
அனைவரையும் நான் அழிப்பேன். [17]நான்
அந்த ஜனங்களைத் தண்டிப்பேன். நான்

பழிவாங்குவேன். எனது கோபம் அவர்
களுக்கு ஒரு பாடத்தை கற்பிக்கும்படி
நான் செய்வேன். பிறகு அவர்கள் நானே
கர்த்தர் என்பதை அறிவார்கள்!”

### தீருவைப் பற்றிய துக்கச் செய்தி

26 பதினோராம் ஆண்டின் முதல் தேதி
யில் கர்த்தருடைய வார்த்தை என்னி
டம் வந்தது. அவர் சொன்னார்: 2“மனு
புத்திரனே, எருசலேமைப்பற்றி தீரு கெட்ட
வற்றைச் சொன்னது: ‘ஆ, ஆ! ஜனங்களைப்
பாதுகாக்கிற நகரவாசல் அழிக்கப்பட்டது!
நகரவாசல் எனக்காகத் திறக்கப்பட்டிருக்கி
றது. இந்நகரம் (எருசலேம்) அழிக்கப்படு
கிறது எனவே அதிலிருந்து எனக்கு ஏராள
மான விலைமதிப்புள்ள பொருட்கள் கிடைக்
கும்!”’

3ஆகையால் எனது கர்த்தராகிய ஆண்ட
வர் கூறுகிறார்: “தீரு! நான் உனக்கு
விரோதமானவன். உனக்கு எதிராகச் சண்
டையிட பல நாடுகளை அழைத்து வரு
வேன். அவர்கள் மீண்டும் மீண்டும் கடற்
கரை அலைகளைப்போன்று வருவார்கள்.”

4தேவன் சொன்னார்: “அந்தப் பகைவீரர்
கள் தீருவின் சுவர்களை அழிப்பார்கள்,
கோபுரங்களை இடித்துத் தள்ளுவார்கள்,
நானும் அந்நாட்டின் மேல்மண்ணைத்
துடைப்பேன். தீருவை வெறும் பாறையைப்
போன்று ஆக்குவேன். 5தீருவானது மீன்
பிடிப்பதற்கான வலைகள் விரித்து வைப்
பதற்குரிய இடமாக ஆகும். நான் இதைச்
சொன்னேன்!” எனது கர்த்தராகிய ஆண்ட
வர் கூறுகிறார்: “தீரு, போரில் வீரர்கள்
எடுக்கத்தக்கதான விலைமதிப்புள்ள பொரு
ளாகும். 6அவளது மகள்கள் (சிறு நகரங்கள்),
முக்கிய பிராதான நிலத்தில் போரில்
கொல்லப்படுவார்கள். பிறகு அவர்கள்
நானே கர்த்தர் என்று அறிவார்கள்.”

### தீருவை நேபுகாத்நேச்சார் தாக்குவான்

7எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “நான் தீருவுக்கு விரோத
மாக வடக்கிலிருந்து பகைவரை வரவழைப்
பேன். அப்பகைவன், பாபிலோன் அரச
னான நேபுகாத்நேச்சார்! அவன் பெரும்ப
டையைக் கொண்டுவருவான். அதில்
குதிரைகள், இரதங்கள், குதிரைவீரர்கள், மற்
றும் ஏராளமான வீரர்களும் இருப்பார்கள்!
அவ்வீரர்கள் பல்வேறு நாடுகளில் உள்ள
வர்கள். 8நேபுகாத்நேச்சார் உனது முக்கிய
மான நிலத்திலுள்ள மகள்களை (சிறு
நகரங்களை) கொல்வான். உன் பட்டணத்
தைத் தாக்க அவன் கோபுரங்களைக்
கட்டுவான். உன் நகரைச் சுற்றி மண்
பாதை போடுவான். அவன் மதில் சுவர்
வரை போகும் வழிகளை அமைப்பான்.
9உனது சுவர்களை இடிக்க பெருந்தடிகளைக்
கொண்டுவருவான். அவன் கடப்பாரை
களைப் பயன்படுத்தி உனது கோபுரங்களை
இடிப்பான். 10அங்கு ஏராளமாக குதிரைகள்
இருக்கும். அவற்றிலுள்ள புழுதி உன்னை
மூடும். குதிரை வீரர்கள், வாகனங்கள்,
இரதங்கள் ஆகியவற்றுடன் பாபிலோன் அர
சன் நகரவாசல் வழியாக நுழையும்போது
எழும் சத்தத்தால் உன் சுவர்கள் நடுங்கும்,
ஆம், அவர்கள் உன் நகரத்திற்குள்ளே
வரு வார்கள். ஏனென்றால், அதன் சுவர்கள்
இடித்துத் தள்ளப்படும். 11பாபிலோன் அரசன்
நகரவாசல் வழியாக நகரத்திற்குள் சவாரி
செய்து வருவான். அவனது குதிரைகளின்
குளம்புகளினால் உன் வீதிகளை எல்லாம்
மிதிப்பான். அவன் உன் ஜனங்களை வாள்க
ளால் கொல்லுவான். உன் நகரில் உள்ள
பலமான தூண்கள் தரையில் விழுந்துபோ
கும். 12உனது செல்வங்களை நேபுகாத்நேச்
சாரின் ஆட்கள் எடுத்துக்கொள்வார்கள். நீ
விற்க விரும்புகிற பொருட்களை அவர்கள்
எடுத்துக்கொள்வார்கள். அவர்கள் உன்
சுவர்களை உடைத்தெறிவார்கள், கல்லாலும்
மரத்தாலுமான இன்பமான வீடுகளை அழித்
துக் குப்பையைப்போன்று கடலில் எறிவார்
கள். 13எனவே, நான் உனது மகிழ்ச்சியான
பாடல் ஒலியை நிறுத்துவேன். ஜனங்கள்
உனது சுரமண்டல ஒலியை இனிக் கேட்க
மாட்டார்கள். 14நான் உன்னை வெறுமை
யான பாறையாக்குவேன். நீ மீன் பிடிக்கும்
வலையைப் பரப்புவதற்குரிய இடமாவாய்!
நீ மீண்டும் கட்டப்படமாட்டாய். ஏனென்
றால், கர்த்தராகிய நான் பேசினேன்!”
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறினார்.

### பிற நாடுகள் தீருக்காக அழும்

15எனது கர்த்தராகிய ஆண்டவர் தீருக்கு
இதைக் கூறுகிறார்: “மத்தியதரை கடலோரங்
களிலுள்ள நகரங்கள் எல்லாம் நீ விழுகிற
சப்தம் கேட்டு நடுங்கும். உன் ஜனங்கள்
காயமும் மரணமும் அடையும்போது இது
நிகழும். 16பிறகு அந்நாடுகளில் உள்ள
தலைவர்கள் தம் சிங்காசனத்தை விட்டு
இறங்கி தம் துக்கத்தை வெளிப்படுத்து
வார்கள். அவர்கள் தம் சிறப்பிற்குரிய
ஆடைகளை அகற்றி விடுவார்கள். அவர்கள்
தம் அழகான ஆடைகளை அகற்றுவார்கள்.
பிறகு அவர்கள் தம் நடுக்கமாகிய ஆடையை
(பயம்) அணிந்துகொள்வார்கள். அவர்கள்
தரையில் அமர்ந்து அச்சத்தால் நடுங்கு
வார்கள். நீ இவ்வளவு விரைவாக அழிக்கப்
பட்டதை எண்ணி அவர்கள் பிரமிப்பார்கள்.
17அவர்கள் உன்னைப் பற்றி இச்சோகப்
பாடலைப் பாடுவார்கள்:

“‘ஓ தீருவே, நீ புகழ்பெற்ற நகரமாக
இருந்தாய் ஜனங்கள் உன்னிடம் வாழக்
கடல் கடந்து வந்தனர். நீ புகழோடு
இருந்தாய். இப்போது நீ போய் விட்டாய்!
கடலில் நீ பலத்தோடு இருந்தாய். உன்னில்

வாழ்பவர்களும் அப்படியே இருந்தார்கள்.
முக்கிய நிலத்தில் வாழ்பவர்களையெல்லாம்
பயமுறுத்தினாய்.
18இப்பொழுது நீ விழும் நாளில் தீவுகளில்
உள்ள நாடுகள் அச்சத்தால் நடுங்குகின்றன.
நீ பல குடியிருப்புக் கூட்டங்களைக் கடலோ
ரமாகத் தொடங்கினாய். இப்பொழுது, நீ
வீழ்ச்சியடையும் அன்று கடலோர நாடுகள்
அச்சத்தால் நடுங்குவார்கள்.'"
19எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "தீரு, நான் உன்னை
அழிப்பேன். நீ ஒரு பழைய வெறுமையான
நகரமாவாய். அங்கு எவரும் வாழமாட்டார்
கள். கடல் பொங்கி உன்மேல் பாயும்படி
செய்வேன். பெருங்கடல் உன்னை மூடி
விடும். 20நான் உன்னை மரித்த மனிதர்கள்
இருக்கின்ற ஆழமான பாதாளத்திற்கு அனுப்
புவேன். நீ நீண்ட காலத்திற்கு முன்னால்
மரித்தவர்களோடு சேர்வாய். நீ குடியேறாமல்
இருக்கும்படி தொடக்க காலம் முதல் பாழாயி
ருக்கிற பூமியின் தாழ்விடங்களிலே குழியில்
இறங்குகிறவர்களோடு நான் உன்னைத்
தங்கச் செய்வேன். பிறகு உன்னில் எவரும்
வாழ மாட்டார்கள். உயிர்கள் வாழும்
இடத்தில் நீ இருக்கமாட்டாய்! 21பிற ஜனங்
கள் உனக்கு ஏற்பட்டதைப் பார்த்து அஞ்சு
வார்கள். நீ முடிந்து போவாய். ஜனங்கள்
உன்னைத் தேடுவார்கள். அவர்கள் உன்னை
மீண்டும் காணமாட்டார்கள்!" எனது கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்வது இதுதான்.

### கடல் வியாபாரத்தின் மையமாக இருந்த தீரு

27 கர்த்தருடைய வார்த்தை மீண்டும்
என்னிடம் வந்தது. அவர் சொன்னார்:
2"மனுபுத்திரனே, தீருவைப் பற்றிய இச்
சோகப் பாடலைப் பாடு. 3தீருவைப் பற்றி
இவற்றைக் கூறு:
"'தீரு, நீ கடல்களுக்குக் கதவாக இருக்கி
றாய், பல நாடுகளுக்கு நீ வியாபாரி.
கடற்கரையோரமாக உள்ள பல நாடு
களுக்குப் பயணம் செய்கிறாய். எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறு
கிறார்: "'தீருவே, நீ மிக அழகானவள் என்று
எண்ணுகிறாய். நீ முழுமையான
அழகுடையவள் என்று எண்ணுகிறாய்!
4உனது நகரைச் சுற்றி மத்திய தரைக்கடல்
எல்லையாக இருக்கிறது. உன்னைக் கட்டி
னவர்கள் உன்னிடமிருந்து புறப்படும் கப்
பலைப் போன்று முழு அழகோடு கட்டி
னார்கள்.
5சேனீர் மலைகளிலிருந்து வந்த தேவதாரு
மரங்களால் உன் கப்பலின் தளத்திற்கான
பலகைகளைச் செய்தார்கள். லீபனோனிலி
ருந்து கொண்டு வந்த கேதுரு மரங்களால்
பாய்மரங்களைச் செய்தார்கள்.
6பாசானின் கர்வாலி மரங்களினால் உன்
துடுப்புகளைச் செய்தார்கள். சீப்புரு* தீவுகளி
லிருந்து கொண்டு பைன்மரத்தால் உன்
கப்பல் தளத்தை செய்தார்கள். அதனை
அவர்கள் தந்தங்களால் அலங்காரம் செய்த
னர்.
7உன் பாய்க்காக எகிப்திலிருந்து வந்த
சித்திரத்தையல் உள்ள சணல் நூல் புடவை
யைப் பயன்படுத்தினார்கள். அந்தப் பாய்
தான் உன் கொடியாக இருந்தது. உன்
அறையின் திரைச்சீலை நீலமும் சிவப்புமாக
இருந்தது. அவை சீப்புரு தீவிலிருந்து வந்
தது.
8உனது படகுகளைச் சீதோன் அர்வாத்
என்னும் நகரங்களின் ஜனங்கள் உங்க
ளுக்காக ஓட்டினார்கள். தீரு, உன் ஞானிகள்
உனது கப்பலில் மாலுமிகளாக இருப்பார்
கள்.
9கேபாரின் நகரத்து மூப்பர்களும் ஞானிக
ளும் கப்பலில் உள்ள பலகைகளை ஒன்றோ
டொன்றை ஓட்டிக்கொண்டிருந்தார்கள். கட
லில் உள்ள அனைத்து கப்பல்களும் அவற்
றிலுள்ள மாலுமிகளும் உன்னுடன் வியாப
ாரம் செய்வதற்காக உன்னிடத்தில் இருந்தார்
கள்.'
10"உனது படையில் பெர்சியரும் லூதிய
ரும் பூத்தியரும் இருந்தனர். அவர்கள் உனது
போர் வீரர்கள். அவர்கள் தமது கேடயங்க
ளையும் தலைக்கவசங்களையும் உன்
சுவர்களில் தொங்க விட்டனர். அவர்கள் உன்
நகரத்திற்கு பெருமையும், மகிமையும்
கொண்டுவந்தனர். 11அர்வாத் மற்றும்
சிலிசியாவின் ஆண்கள் உனது சுவரைச்
சுற்றிலும் காவல் காத்தார்கள். கம்மாத்
ஆண்கள் உன் கோபுரங்களில் இருந்தனர்.
அவர்கள் தம் கேடயங்களை உனது நகரைச்
சுற்றியுள்ள சுவர்களில் தொங்கவிட்டனர்.
அவர்கள் உனது அழகை முழுமையாக்கினர்.
12"தர்ஷீஸ்* ஊரார் உன்னுடைய சிறந்த
வாடிக்கையாளர்கள். அவர்கள் வெள்ளி,
இரும்பு, தகரம், ஈயம் மற்றும் நீ விற்பனை
செய்த சிறந்த பொருட்களை வியாபாரம்
செய்தனர். 13கிரீஸ், துருக்கி, கருங்கடலைச்
சுற்றியுள்ள பகுதி ஜனங்கள் உன்னோடு
வணிகம் செய்தனர். அவர்கள் அடிமைகளை
யும் வெண்கலப் பாத்திரங்களையும் வியாபா
ரம் செய்தனர். 14தொகர்மா சந்ததியினர் நீ
விற்ற பொருள்களுக்காக போர்க் குதிரைக
ளையும் கோவேறு கழுதைகளையும் கொண்
டுவந்தனர். 15தேதான் ஜனங்கள் உன்
வியாபாரிகளாய் இருந்தார்கள். நீ உன்
பொருட்களைப் பல இடங்களில் விற்றாய்.
ஜனங்கள் யானைத் தந்தங்களையும் கருங்
காலி மரங்களையும் அவற்றுக்குப் பதிலாகக்
கொண்டுவந்தனர். 16அராம் உன்னோடு
வியாபாரம் செய்ய வந்தது. ஏனென்றால்,
உன்னிடம் பல நல்ல பொருட்கள் இருந்தன.

---

**சீப்பு** கிரேக்க தீவுகள்.

**தர்ஷீஸ்** ஸ்பெயினிலுள்ள நகரம்.

அராம் ஜனங்கள் மரகதங்களையும். இரத்தாம்
பரங்களையும், சித்திரத்தையலாடைகளை
யும், உயர்ந்த ஆடைகளையும், பவளங்களை
யும், பளிங்கையும், உன் சந்தைகளில் விற்க
வந்தார்கள்.
17 “யூதா ஜனங்களும், இஸ்ரவேல் ஜனங்
களும் உன்னுடன் வியாபாரம் செய்ய
வந்தனர். கோதுமை, தேன், எண்ணெய்,
பிசின் தைலம் ஆகியவற்றை உன்னிடம்
வாங்க வந்தனர். 18 தமஸ்கு சிறந்த வாடிக்கை
யாளர். உன்னிடமிருந்த அற்புதமான
பொருட்களுக்காக உன்னோடு வியாபாரம்
செய்ய வந்தார்கள். கெல்போனின் திராட்சை
ரசத்தையும், வெண்மையான ஆட்டு மயிரை
யும் உனக்கு விற்றார்கள். 19 தமஸ்கு உசேரில்
உள்ள திராட்சைரசத்தை உன் பொருட்க
ளுக்காகக் கொடுத்தனர். அவர்கள்
துலக்கப்பட்ட இரும்பையும், இலவங்கத்தை
யும், வசம்பையும் உன் சந்தைகளில் விற்
றார்கள். 20 தேதானின் ஆட்கள் நல்ல வியா
பாரம் செய்தனர். அவர்கள் இரதங்களுக்குப்
போடுகிற இரத்தினக் கம்பளங்களை உன்
னோடு வியாபாரம் பண்ணினார்கள். 21 அரபி
யரும் கேதாரின் எல்லா தலைவர்களும்
வாடிக்கையாளர்கள். அவர்கள் ஆட்டுக்குட்டி
களையும், ஆட்டுக் கடாக்களையும் உன்
னோடு வியாபாரம் செய்தனர். 22 சேபா,
ராமா நகரங்களில் உள்ளவர்கள் உன்னுடன்
வியாபாரம் செய்தனர். மேல்தரமான எல்லா
மணப்பொருட்களையும், எல்லா இரத்தினக்
கற்களையும், பொன்னையும் உன் சந்தைக்
குக் கொண்டுவந்தார்கள். 23 ஆரான், கன்னே,
ஏதேன் என்னும் பட்டணத்தார்களும் சேபா
வின் வியாபாரிகளும், அசீரியரும், கில்மாத்
பட்டணத்தாரும் உன்னோடு வியாபாரம்
செய்தனர். 24 இவர்கள் எல்லாவித உயர்ந்த
சரக்குகளையும், இளநீலப் பட்டுகளும் விசித்
திரத் தையலாடைகளும் அடங்கிய புடவைக்
கட்டுக்களையும் விலை உயர்ந்த துணிகள்
வைக்கப்பட்டு கயிறுகளால் கட்டியிருக்கும்
கேதுருமரப் பெட்டிகளையும் கொண்டுவந்து
உன்னோடு வியாபாரம் செய்தனர். இவைக
ளையே அவர்கள் உன்னோடு வியாபாரம்
செய்தனர். 25 தர்ஷீசின் கப்பல்கள் நீ விற்றப்
பொருட்களைக் கொண்டு போனார்கள்.

“தீரு, நீயும் ஒரு சரக்குக் கப்பலைப்
போன்றவள். நீ கடலில் செல்வங்கள் ஏற்றப்
பட்ட கப்பல்.
26 கப்பலைச் செலுத்துகிறவர்கள் ஆழமான
தண்ணீரில் உன்னை அழைத்துக்கொண்டு
போனார்கள். ஆனால் கடலில் உன் கப்பலை
பலமான கிழக்குக் காற்று அழித்தது.
27 உனது செல்வங்கள் எல்லாம் கடலுக்
குள் மூழ்கும். நீ விற்கவைத்திருந்த செல்வ
மும் வாங்கிய செல்வமும் கடலுக்குள்
மூழ்கும். உனது கப்பலாட்களும், மாலுமிக
ளும், கப்பலைச் செப்பனிடுகிறவர்களும்
உன் வியாபாரிகளும் உன்னில் உள்ள
எல்லாப் போர் வீரர்களும் கடலுக்குள்
மூழ்குவார்கள். இது, நீ அழியும் நாளில்
நிகழும்!
28 “நீ உனது வியாபாரிகளைத் தொலை
தூர நாடுகளுக்கு அனுப்பினாய். அந்த
இடங்கள் உனது மாலுமியின் அழுகுரலைக்
கேட்டு அச்சத்தால் நடுங்கும்!
29 கப்பலைச் செலுத்தும் முழுக் குழுவும்
கப்பலை விட்டுக் குதிக்கும். கப்பலாட்களும்
கடல் மாலுமிகள் அனைவரும் தம் கப்பல்
களை விட்டுக் குதித்து கரையை அடைவார்
கள்.
30 அவர்கள் உன்னைப்பற்றி துக்கப்படு
வார்கள். அவர்கள் அழுவார்கள் அவர்கள்
தம் தலையில் மண்ணை வாரிப்போடு
வார்கள். அவர்கள் சாம்பலில் புரளுவார்கள்.
31 அவர்கள் உனக்காகத் தம் தலையை
மொட்டையடிப்பார்கள் அவர்கள் துக்கத்தின்
ஆடையை அணிவார்கள். அவர்கள் உனக்
காக மரித்துப்போனவர்களுக்காக அழுவது
போன்று அழுவார்கள்.
32 “அவர்கள் தம் பலத்த அழுகையில்,
உன்னைப்பற்றிய இந்தச் சோகப் பாடலைப்
பாடி உனக்காக அழுவார்கள். “தீருவைப்
போன்று யாருமில்லை! தீரு கடல் நடுவில்
அழிக்கப்படுகிறது!
33 உன் வியாபாரிகள் கடல் கடந்து
போனார்கள். உனது பெருஞ்செல்வம் மற்
றும் உன் சந்தையின் மூலம் நீ பலரைத்
திருப்திப்படுத்தினாய். நீ பூமியின் அரசர்
களைச் செல்வர்கள் ஆக்கினாய்!
34 ஆனால் இப்பொழுது கடல் அலைகளால்
ஆழங்களில் உடைக்கப்பட்டாய். நீ விற்ற
அனைத்துப் பொருட்களும் உனது ஆட்க
ளும் விழுந்துவிட்டனர்!
35 கடலோரங்களில் வாழும் ஜனங்கள்
உன்னைப்பற்றி அறிந்து திகைக்கிறார்கள்.
அவர்களின் அரசர்கள் மிகவும் பயந்திருக்கி
றார்கள். அவர்களின் முகங்கள் அதிர்ச்சியை
காண்பிக்கின்றன.
36 பிற நாடுகளில் உள்ள வியாபாரிகள்
உனக்காக பரிகசிப்பார்கள். உனக்கு
நிகழ்ந்தவை ஜனங்களைப் பயப்படச் செய்
யும், ஏனென்றால், நீ முடிந்துபோனாய். நீ
இனி இருக்கமாட்டாய்.”

### தீரு தன்னைத்தானே ஒரு தேவன் என்று நினைக்கிறது

28 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 2 “மனு
புத்திரனே, தீருவின் அரசனிடம் கூறு:
‘எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறுகிறார்:

“‘நீ மிகவும் பெருமை கொண்டவன்!
நீ சொல்கிறாய்; “நான் தெய்வம்! கடல்களின்
நடுவே தெய்வங்கள் வாழும் இடங்களில்
நான் அமருவேன்.” “‘நீ ஒரு மனிதன்.

தெய்வம் அல்ல! நீ தேவன் என்று மட்டும்
நினைக்கிறாய்.
3நீ தானியேலை* விட புத்திசாலி என்று
நினைக்கிறாய்! உன்னால் எல்லா இரகசியங்
களையும் கண்டுபிடிக்க முடியும் என்று
நினைக்கிறாய்!
4உனது ஞானத்தாலும், புத்தியினாலும்
நீ உனது செல்வத்தை பெற்றாய். நீ
பொன்னையும் வெள்ளியையும் உன் செல்
வத்தில் சேர்த்துக்கொண்டாய்.
5உன் ஞானத்தாலும் வியாபாரத்தாலும்
செல்வத்தை வளரச்செய்தாய். அச்செல்வத்
தால் இப்பொழுது பெருமை கொள்கிறாய்.
6"'எனவே எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவ்வற்றைக் கூறுகிறார்: தீரு, நீ ஒரு
தேவனை போன்று உன்னை நினைத்தாய்.
7உனக்கு எதிராகச் சண்டையிட நான்
அந்நியரை அழைப்பேன். அவர்கள், நாடுகளி
லேயே மிகவும் கொடூரமானவர்கள்! அவர்
கள் தம் வாளை உருவி, உனது ஞானத்தால்
கொண்டுவந்த அழகிய பொருட்களுக்கு
எதிராகப் பயன்படுத்துவார்கள். அவர்கள்
உன் சிறப்பைக் குலைப்பார்கள்.
8அவர்கள் உன்னைக் குழியிலே விழத்
தள்ளுவார்கள். நீ கடலின் நடுவே கொலை
யுண்டு மரிக்கிற பயணிகளைப்போன்று
மரிப்பாய்.
9அம்மனிதன் உன்னைக் கொல்வான்.
"நான் ஒரு தேவன்" என்று இனியும்
சொல்வாயா? இல்லை! அவன் தனது
வல்லமையால் உன்னை அடைவான். நீ
தேவனில்லை, மனிதன் என்பதை நீ அறி
வாய்.
10அந்நியர்கள் உன்னை வெளிநாட்டவ
ரைப்போல நடத்தி கொல்லை செய்வார்கள்!
அவை நிகழும், ஏனென்றால், நான் கட்ட
ளையிட்டேன்!" எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைக் கூறினார்.
11கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 12"மனுபுத்திரனே,
தீரு அரசனைப்பற்றிய சோகப் பாடலை நீ
பாடு. அவனிடம் சொல், 'எனது கர்த் தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்:
"'நீ உயர்ந்த (இலட்சிய) மனிதனாக
இருந்தாய். நீ ஞானம் நிறைந்தவன். நீ
முழுமையான அழகுள்ளவன்.
13நீ ஏதேனில் இருந்தாய். அது தேவ
னுடைய தோட்டம். உன்னிடம் எல்லா
விலையுயர்ந்த கற்களும் பத்மராகம், புஷ்ப
ராகம், வைரம், படிகப்பச்சை, கோமேதகம்,
யஸ்பி, இந்திரநீலம், மரகதம், மாணிக்கம்
ஆகியவற்றை வைத்திருந்தாய். இவை
அனைத்தும் பொன்னில் வைக்கப்பட்டி
ருந்தன. நீ படைக்கப்பட்ட நாளிலேயே
இவ்வழகுகள் உனக்குக் கொடுக்கப்பட்டன.
தேவன் உன்னை பலமுள்ளதாகச் செய்தார்.
14நீ தேர்ந்தெடுக்கப்பட்ட கேரூப்களில்
ஒருவன் உனது சிறகுகள் என் சிங்காச
னத்தின்மேல் விரிந்தன. நான் உன்னை
தேவனுடைய பரிசுத்த மலையில் வைத்
தேன். நீ அந்த இடத்திற்குப் பொறுப்
பாளியாயிருந்தாய். நீ நெருப்பைப்போன்று
ஒளிவீசும் நகைகளின் மத்தியில் நடந்தாய்.
15நான் உன்னைப் படைக்கும்போது நீ
நல்லவனாகவும் நேர்மையானவனாகவும்
இருந்தாய். ஆனால் பிறகு கெட்டவனானாய்.
16உனது வியாபாரம் உனக்குப் பெருஞ்
செல்வத்தைத் தந்தது. ஆனால் அவை
உனக்குள் கொடூரத்தை வைத்தன. நீ பாவம்
செய்தாய். எனவே நான் உன்னைச்
சுத்தமற்ற ஒன்றாக நடத்தினேன். நான்
உன்னைத் தேவனுடைய மலையில் இருந்து
அப்பால் எறிந்தேன். நீ சிறப்புக்குரிய
கேருபீன்களில் ஒருவன். உனது சிறகுகள்
என் சிங்காசனத்தின்மேல் விரிந்தன.
ஆனால் நான் உன்னை நெருப்பைபோன்று
ஒளிவீசும்நகைகளைவிட்டுவிலகச்செய்தேன்.
17உனது அழகு உன்னைப் பெருமை
கொள்ளச் செய்தது. உனது மகிமை உன்
ஞானத்தை அழித்தது. எனவே உன்னைத்
தரையில் எறிவேன். இப்பொழுது மற்ற
அரசர்கள் உன்னை முறைத்துப் பார்க்கின்ற
னர்.
18நீ பல பாவங்களைச் செய்தாய். நீ
அநீதியான வியாபாரியாக இருந்தாய். இவ்
வாறு நீ பரிசுத்தமான இடங்களை
அசுத்தமாக்கினாய். எனவே உனக்குள்ளி
ருந்து நெருப்பை நான் கொண்டுவந்தேன்.
இது உன்னை எரித்தது! நீ தரையில்
எரிந்து சாம்பலானாய். இப்பொழுது ஒவ்
வொருவரும் உன் அவமானத்தைப் பார்க்க
முடியும்.
19மற்ற நாடுகளில் உள்ள ஜனங்கள்
அனைவரும் உனக்கு என்ன நடந்தது
என்பதை அறிந்து திகைத்தார்கள். உனக்கு
நடந்தது ஜனங்களை அஞ்சும்படிச் செய்யும்.
நீ முடிவடைந்தாய்!'"

### சீதோனுக்கு எதிரான செய்தி

20கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 21"மனுபுத்திரனே,
சீதோனுக்கு எதிராகத் திரும்பி எனக்காகத்
தீர்க்கதரிசனம் சொல். 22'எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்; என்று
சொல்.
"'சீதோனே நான் உனக்கு எதிராக
இருக்கிறேன்! உன் ஜனங்கள் என்னை
மதிக்க கற்பார்கள். நான் சீதோனைத் தண்
டிப்பேன். பிறகு, நானே கர்த்தர் என்பதை
ஜனங்கள் அறிவார்கள். பிறகு, நான் பரிசுத்த
மானவர் என்று அறிவார்கள். அவ்வாறே
என்னை அவர்கள் மதிப்பார்கள்.
23நான் சீதோனுக்கு நோயையும் மரணத்
தையும் அனுப்புவேன். நகரத்தில் பலர்

**தானியேல்** ஞானி.

மரிப்பார்கள். பலர் (பகைவீரர்) வாளால்
நகரத்திற்கு வெளியில் கொல்லப்படுவார்கள்.
பிறகு நானே கர்த்தர் என்பதை அவர்கள்
அறிவார்கள்!'"

### இஸ்ரவேலைக் கேலி செய்வதை நாடுகள் நிறுத்தும்

24"'இஸ்ரவேலைச் சுற்றிலுள்ள நாடுகள்
அவளை வெறுத்தனர். ஆனால் அந்நாடுக
ளுக்குத் தீமைகள் ஏற்படும். பிறகு அங்கே
இஸ்ரவேல் வம்சத்தாரைப் புண்படுத்தும்
முட்களும் துன்புறுத்தும் நெருஞ்சிலும் இல்
லாமல் போகும். அப்பொழுது நானே அவர்
களுடைய கர்த்தராகிய ஆண்டவர் என்று
அறிந்துகொள்ளுவார்கள்.'"
25கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார்: "நான் இஸ்ரவேல் ஜனங்களை மற்ற
நாடுகளில் சிதறடித்தேன். வைப்பேன்.
ஆனால் மீண்டும் இஸ்ரவேல் வம்சத்தாரை
ஒன்று சேர்ப்பேன். பிறகு அந்நாடுகள்
நான் பரிசுத்தமானவர் என்பதை அறிந்து
அவ்வாறு என்னை மதிப்பார்கள். அந்நேரத்
தில், இஸ்ரவேலர்கள் தம் நாட்டில் வாழ்
வார்கள், நான் அந்த நாட்டை என்
தாசனாகிய யாக்கோபுக்குக் கொடுத்தேன்.
26அவர்கள் தம் நாட்டில் பாதுகாப்பாக
இருப்பார்கள். அவர்கள் வீடுகட்டுவார்கள்.
திராட்சை தோட்டங்களை அமைப்பார்கள்.
அதனை வெறுக்கிற, சுற்றிலும் உள்ள
அனைத்து நாட்டினரையும் நான் தண்டிப்
பேன். பிறகு இஸ்ரவேலர்கள் பாதுகாப்பாக
வாழ்வார்கள். நானே அவர்களுடைய தேவ
னாகிய கர்த்தர் என்பதை அவர்கள் அறி
வார்கள்."

### எகிப்துக்கு விரோதமான செய்தி

29 பத்தாம் ஆண்டின் பத்தாம் மாதம்
பன்னிரண்டாம் தேதியிலே எனது
கர்த்தராகிய ஆண்டவருடைய வார்த்தை
என்னிடம் வந்தது. அவர் சொன்னார்:
2"மனுபுத்திரனே, எகிப்து மன்னனான பார்
வோனைப் பார். அவனுக்கும் எகிப்துக்கும்
எதிராக எனக்காகப் பேசு. 3'எனது கர்த்தரா
கிய ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்.
"'எகிப்து மன்னனான பார்வோனே,
நான் உனக்கு விரோதமானவன். நீ நைல்
நதியின் நடுவிலே பெரிய பூதம் போன்று
படுத்துக்கொண்டு, "இது என்னுடைய நதி!
நான் இந்த நதியை உண்டாக்கினேன்!"
என்று சொல்கிறாய்.
4-5"'ஆனால் நான் உனது வாயில் கொக்
கியைப் போடுவேன். நைல் நதியிலுள்ள
மீன் உன் செதில்களில் ஒட்டிக்கொள்ளும்.
நான் உன்னையும் உனது மீனையும் நதியை
விட்டு வெளியே இழுத்து, வறண்ட நிலத்
தில் போடுவேன். நீ தரையில் விழுவாய்.
உன்னை எவரும் எடுக்கவோ புதைக்கவோ
மாட்டார்கள். நான் உன்னைக் காட்டு
மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் கொடுப்
பேன். நீ அவற்றின் உணவு ஆவாய்.
6பிறகு எகிப்தில் வாழ்கிற அனைத்து
ஜனங்களும் நானே கர்த்தர் என்பதை அறி
வார்கள்! "'ஏன் நான் இவற்றைச் செய்கி
றேன்? இஸ்ரவேலர்கள் உதவிக்காக எகிப்த்
தைச் சார்ந்திருந்தார்கள். ஆனால் அந்த
உதவி நாணல் கோலைப் போன்று பலவீன
மாக இருந்தது!
7இஸ்ரவேல் ஜனங்கள் உதவிக்காக எகிப்
தைச் சார்ந்திருந்தார்கள். ஆனால் எகிப்து
அவர்களது கைகளையும் தோள்களையும்
கிழித்தது. அவர்கள் உதவிக்காக உன்மேல்
சாய்ந்தார்கள். ஆனால் நீ அவர்களின்
இடுப்பை திருப்பி முறிந்துபோகப் பண்ணி
னாய்.'"
8எனவே எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: "நான் உனக்கு
எதிராக ஒரு வாளைக் கொண்டுவருவேன்.
நான் உனது ஜனங்களையும் மிருகங்களை
யும் அழிப்பேன்.
9எகிப்து வெறுமையாகி அழியும். பிறகு
நானே கர்த்தர் என்பதை அவர்கள் அறிவார்
கள்."
தேவன் சொன்னார்: "ஏன் நான்
இவற்றைச் செய்யப்போகிறேன்? நீ, 'இது
எனது நதி. நான் இந்த நதியை உண்டாக்
கினேன்' என்று கூறினாய். 10எனவே,
நான் (தேவன்) உனக்கு விரோதமாக
இருக்கிறேன். உன் நைல் நதியின் பலகிளைக
ளுக்கும் நான் விரோதமானவன். நான்
எகிப்தை முழுமையாக அழிப்பேன். நகரங்
கள் மிக்தோலிலிருந்து செவெனேவரை,
எத்தியோப்பியா எல்லைவரை வெறுமையா
கும். 11எந்த மனிதரும் மிருகமும் எகிப்து
வழியாகப் போக முடியாது. எதுவும் 40
ஆண்டுகளுக்கு எகிப்தில் வாழ முடியாது.
12நான் எகிப்தை அழிப்பேன். நகரங்கள் 40
ஆண்டுகளுக்கு அழிந்த நிலையிலேயே
இருக்கும். நான் எகிப்தியர்களைப் பல
நாடுகளில் சிதறடிப்பேன். நான் அவர்களை
அயல்நாடுகளில் அந்நியர்களாக்குவேன்."
13எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "நான் எகிப்தியர்களைப்
பல நாடுகளில் சிதறடிப்பேன். ஆனால் 40
ஆண்டுகள் முடிந்ததும் அவர்களை மீண்டும்
கூட்டுவேன். 14நான் எகிப்திய கைதிகளை
மீண்டும் கொண்டு வருவேன். நான் எகிப்தி
யர்களை மீண்டும் அவர்கள் பிறந்த நாடான
பத்ரோசுக்குக் கொண்டு வருவேன். ஆனால்
அவர்களது அரசு முக்கியமற்றிருக்கும், 15இது
மிக அற்பமான அரசாக இருக்கும். இது
மற்ற நாடுகளைவிட மேலாக என்றும்
உயராது. நான் அதனை வேறு நாடுகளை
ஆள முடியாதபடி மிகச் சிறிதாக்குவேன்.
16இஸ்ரவேல் வம்சத்தார் மீண்டும் எகிப்தைச்
சார்ந்திருக்கமாட்டார்கள். இஸ்ரவேலர்கள்
தம் பாவத்தை நினைப்பார்கள். அவர்கள்

தேவனை நோக்கித் திரும்பாமல், உதவிக்காக
எகிப்திடம் திரும்பினார்கள். அவர்கள்
நானே கர்த்தரும் ஆண்டவருமாயிருக்கிறேன்
என்பதை அறிவார்கள்."

### பாபிலோன் எகிப்தைக் கைப்பற்றும்

17 இருபத்தேழாம் ஆண்டின் முதலாம் மாதம்
(ஏப்ரல்) முதலாம் நாளில் கர்த்தருடைய
வார்த்தை என்னிடம் வந்தது. அவர் சொன்
னார்: 18 "மனுபுத்திரனே, பாபிலோன் அரச
னான நேபுகாத்நேச்சார், தீருவுக்கு எதிராகத்
தன் படையைக் கடுமையாகப் போரிடுமாறு
செய்தான். அவர்கள் எல்ல வீரர்களின்
தலைகளையும் மொட்டையடித்தனர். ஒவ்
வொருவரின் தோளும் பாரமான தடிகள்
சுமந்து தோல் உரிந்துபோனது, நேபுகாத்
நேச்சாரும் அவனது படையும் தீருவைத்
தோற்கடிக்கக் கடுமையாக வேலை செய்தது.
ஆனால் அக்கடும் வேலையால் அவர்கள்
எதையும் பெறவில்லை." 19 எனவே எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொல்கி
றார்: "நான் எகிப்து நாட்டை பாபிலோன்
அரசனான நேபுகாத்நேச்சாருக்குக் கொடுப்
பேன். நேபுகாத்நேச்சார் எகிப்தியர்களைச்
சிறை எடுத்துச்செல்வான். நேபுகாத்நேச்சார்
எகிப்திலிருந்து பல விலை மதிப்புள்ள
பொருட்களை எடுத்துச்செல்வான். இது
நேபுகாத்நேச்சாரின் படைகளுக்கான கூலி
யாகும். 20 நான் நேபுகாத்நேச்சாருக்கு அவ
னது கடுமையான உழைப்புக்குப் அன்பளிப்
பாக எகிப்தைக் கொடுப்பேன். ஏனென்றால்,
அவர்கள் எனக்காக உழைத்தார்கள்!" எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்
னார்!
21 "அந்த நாளில் நான் இஸ்ரவேல்
வம்சத்தாரைப் பலமுள்ளவர்களாக்குவேன்.
பிறகு உன் ஜனங்கள் எகிப்தியரைப் பார்த்
துச் சிரிப்பார்கள். அவர்கள் நானே
கர்த்தர் என்பதை அறிவார்கள்."*

### பாபிலோன் படை எகிப்தைத் தாக்கும்

30 கர்த்தருடைய வார்த்தை மீண்டும்
என்னிடம் வந்தது. அவர் சொன்னார்,
2 "மனுபுத்திரனே, எனக்காகப் பேசு. 'எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறுகி
றார்.

"'அழுதுகொண்டே சொல்: "அந்தப் பயங்
கரமான நாள் வருகிறது."
3 அந்த நாள் அருகில் உள்ளது! ஆம்,
கர்த்தருடைய நியாயத்தீர்ப்புநாள் அருகில்
உள்ளது. அது மேகமூடிய நாள். இது
நாடுகளை நியாயந்தீர்க்கும் காலமாக
இருக்கும்!
4 எகிப்திற்கு எதிராக ஒரு வாள் வரு
கிறது! எத்தியோப்பியாவிலுள்ள ஜனங்கள்
பயத்தால் நடுங்குவார்கள், அந்த நேரத்தில்
எகிப்து விழும். பாபிலோனின் படை
எகிப்திய ஜனங்களைச் சிறை பிடித்துச்
செல்லும். எகிப்தின் அடித்தளம் உடைந்து
போகும்!
5 "'பல ஜனங்கள் எகிப்தோடு சமாதான
உடன்படிக்கை செய்தனர். ஆனால் எத்தி
யோப்பியா, பூத், லூத், அரேபியா, லிபியா
மற்றும் இஸ்ரவேலர்கள் அழிக்கப்படுவார்
கள்!
6 எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "எகிப்திற்கு ஆதரவளிக்
கும் ஜனங்கள் வீழ்வார்கள்! அவளது
பலத்தின் பெருமை அழியும். மிக்தோல் முதல்
செவெனே வரைக்குமுள்ள எகிப்திய
ஜனங்கள் போரில் கொல்லப்படுவார்கள்."
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறுகிறார்!
7 எகிப்து அழிக்கப்பட்ட மற்ற நாடுக
ளோடு சேரும். எகிப்தும் வெறுமையான
நாடுகளில் ஒன்றாகும்.
8 நான் எகிப்தில் ஒரு நெருப்பைக் கொளுத்
துவேன் அவளது ஆதரவாளர்கள் எல்லோ
ரும் அழிக்கப்படுவார்கள். பிறகு நானே
கர்த்தர் என்பதை அவர்கள் அறிவார்கள்!
9 "'அந்த நேரத்தில், நான் தூதுவர்களை
அனுப்புவேன். அவர்கள் கெட்ட செய்தி
யோடு எத்தியோப்பியாவிற்குக் கப்பலில்
போவார்கள். எத்தியோப்பியா இப்போது
பாதுகாப்பை உணர்கிறது. எகிப்து தண்டிக்
கப்படும்போது, எத்தியோப்பியர்கள் பயத்தி
னால் நடுங்குவார்கள்! அந்த நேரம் வருகி
றது.
10 எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: "நான் பாபிலோன்
அரசனைப் பயன்படுத்துவேன். நான் நேபு
காத்நேச்சாரை எகிப்து ஜனங்களை அழிக்
கப் பயன்படுத்துவேன்.
11 நேபுகாத்நேச்சாரும் அவனது ஜனங்க
ளும் நாடுகளிலேயே மிகவும் கொடூரமான
வர்கள். நான் எகிப்தை அழிக்க அவர்களைக்
கொண்டு வருவேன். அவர்கள் தம் வாள்
களை எகிப்திற்கு எதிராக உருவுவார்கள்.
அவர்கள் அத்தேசத்தை மரித்த உடல்களால்
நிரப்புவார்கள்.
12 நான் நைல் நதியை வறண்ட நிலமாக்கு
வேன். பிறகு நான் வறண்ட நிலத்தைத்
தீயவர்களுக்கு விற்பேன். நான் அந்நியர்
களைப் பயன்படுத்தி அந்நாட்டைக் காலி
பண்ணுவேன்! கர்த்தராகிய நான் பேசியி
ருக்கிறேன்."

### எகிப்தின் விக்கிரகங்கள் அழிக்கப்படும்

13 எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார். "நான் எகிப்திலுள்ள
விக்கிரகங்களை அழிப்பேன். நான்

---

**பிறகு ... அறிவார்கள்** இஸ்ரவேல் ஜனங்கள்,
எசேக்கியேலின் தீர்க்கதரிசனம் நிறைவேறியது
என்று எப்பொழுது உணர்கிறார்களோ, அப்
போது அவருக்குச் செவிசாய்க்க விரும்புவார்கள்.

நோப்பின் சிலைகளை வெளியே அப்புறப்
படுத்துவேன். எகிப்து நாட்டில் இனிமேல்
ஒரு தலைவனும் இருக்கமாட்டான். நான்
எகிப்து நாட்டில் அச்சத்தை வைப்பேன்.
14நான் பத்ரோசைக் காலி பண்ணுவேன்.
நான் சோவானில் நெருப்பைக் கொளுத்து
வேன். நான் நோ நகரைத் தண்டிப்பேன்.
15நான் எகிப்தின் கோட்டையான சீனுக்கு
விரோதமாக எனது கோபத்தை ஊற்று
வேன். நான் நோ ஜனங்களை அழிப்பேன்!
16நான் எகிப்தில் நெருப்பைக் கொளுத்து
வேன். சீன் என்னும் பெயருள்ள நகரம்
துன்பத்தில் இருக்கும். நோ நகரத்திற்குள்
வீரர்கள் நுழைவார்கள். நோப்புக்கு ஒவ்
வொருநாளும் புதிய துன்பங்களை அனுப
விக்கும்.
17ஆவென், பிபேசெத் ஆகிய நகரங்களின்
இளைஞர்கள் போரில் மரிப்பார்கள். பெண்
கள் சிறை பிடிக்கப்பட்டு கொண்டு செல்
லப்படுவார்கள்.
18நான் எகிப்தின் நுகங்களை முறிக்கும்
போது தக்பானேசிலே பகல் இருண்டு
போகும். எகிப்தின் பெருமையான பலம்
முடிந்து போகும்! எகிப்தை ஒரு மேகம்
மூடும். அவளது மகள்கள் சிறைபிடிக்கப்
பட்டு கொண்டு செல்லப்படுவார்கள்.
19எனவே நான் எகிப்தைத் தண்டிப்பேன்.
பிறகு நானே கர்த்தர் என்பதை அவர்கள்
அறிவார்கள்!"

### எகிப்து என்றென்றும் பலவீனமாகும்

20சிறைபிடிக்கப்பட்ட பதினொன்றாவது
ஆண்டின் முதல் மாதத்து (ஏப்ரல்) ஏழாம்
நாள் கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 21"மனுபுத்திரனே,
நான் எகிப்து மன்னனான பார்வோனின்
கையை (பலம்) உடைத்திருக்கிறேன். எவ
ரும் அவனது கையில் கட்டுப் போட
முடியாது. அது குணமாவதில்லை. எனவே
அவனது கையானது வாளைத் தாங்கும்
அளவிற்குப் பலம் பெறுவதில்லை." 22எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறுகி
றார்: "நான் எகிப்து மன்னனான பார்வோ
னுக்கு விரோதமானவன். அவனது இரண்டு
கைகளையும் நான் உடைப்பேன். அவற்றில்
ஒன்று ஏற்கனவே உடைந்தது; இன்னொன்று
பலமுள்ளது. நான் அவனது கையிலிருந்து
வாளானது விழும்படிச் செய்வேன். 23நான்
எகிப்தியர்களை நாடுகளிடையே சிதற
டிப்பேன். 24நான் பாபிலோன் அரசனது
கையைப் பலப்படுத்துவேன். நான் எனது
வாளை அவனது கையில் கொடுப்பேன்.
ஆனால் நான் பார்வோனின் கைகளை
உடைப்பேன். பிறகு பார்வோன் வலியால்
கதறுவான். அவனது கதறல் மரிக்கிறவனின்
கதறல் போன்றிருக்கும். 25எனவே நான்
பாபிலோன் அரசனின் கைகளைப் பலப்
படுத்துவேன். ஆனால் பார்வோனின் கைகள்
கீழே விழும். பிறகு நானே கர்த்தர் என்பதை
அவர்கள் அறிவார்கள்! "நான் பாபிலோன்
அரசனது கையில் என் வாளைக் கொடுப்
பேன். பிறகு அவன் எகிப்து நாட்டிற்கு
எதிராக வாளை நீட்டுவான். 26நான் நாடு
களில் எகிப்தியர்களைச் சிதறடிப்பேன்,
பிறகு நானே கர்த்தர் என்பதை அவர்கள்
அறிவார்கள்."

### அசீரியா கேதுரு மரத்தைப் போன்றது

31 சிறைபிடிக்கப்பட்ட பதினொன்றா
வது ஆண்டின் மூன்றாவது மாதத்து
(ஜூன்) முதல் நாளில் கர்த்தருடைய
வார்த்தை என்னிடம் வந்தது. அவர் சொன்
னார்: 2"மனுபுத்திரனே, எகிப்திய அரசனான
பார்வோனிடமும் அவனது ஜனங்களிடமும்
இவற்றைக் கூறு:
"'உனது மகத்துவத்தில், உன்னுடன்
யாரை நான் ஒப்பிட முடியும்?
3அசீரியா, அழகான கிளைகளுடன்,
காட்டு நிழலோடு உயரமாக உள்ள லீப
னோனின் கேதுரு மரம். அதன் உச்சி
மேகங்களுக்கிடையில் உள்ளது!
4தண்ணீர் மரத்தை வளரச் செய்கிறது.
ஆழமான நதி மரத்தை உயரமாக்கியது.
நதிகள் நடப்பட்ட மரத்தை சுற்றி ஓடுகின்
றன. ஒரு மரத்திலிருந்து மற்ற மரங்களுக்கு
சிறு ஓடைகள் மட்டுமே பாய்கின்றன.
5எனவே காட்டிலுள்ள மற்ற மரங்களை
விட அம்மரம் உயரமாக இருக்கின்றது.
இதில் பல கிளைகள் வளர்ந்துள்ளன. அங்கே
தண்ணீர் மிகுதியாக உள்ளது, எனவே
கிளைகள் பரந்து வளர்ந்துள்ளன.
6அம்மரத்தின் கிளைகளில் வானத்துப்
பறவைகள் எல்லாம் தம் கூடுகளைக் கட்டிக்
கொண்டன. காட்டிலுள்ள விலங்குகள் எல்
லாம் அம்மரத்துக் கிளைகளின் அடியிலேயே
குட்டி போட்டன. அம்மரத்தின் அடியி
லேயே எல்லா பெருநாடுகளும் வாழ்ந்தன.
7அந்த மரம் அழகாக இருந்தது. அது
பெரிதாக இருந்தது, அதற்கு அவ்வளவு
பெரிய கிளைகள் இருந்தன. அதன் வேர்க
ளுக்கு மிகுதியான நீர் இருந்தது!
8தேவனுடைய தோட்டத்தில் உள்ள
கேதுரு மரங்கள் கூட இம்மரத்தைப்போன்று
இவ்வளவு பெரிதாக இல்லை. தேவதாரு
மரங்களுக்கு இவ்வளவு கிளைகள் இல்லை.
அர்மோன் மரங்களுக்கு அதைப்போன்று
கிளைகள் இல்லை. இந்த மரத்தைப்
போன்று தேவனுடைய தோட்டத்தில் உள்ள
எந்த மரமும் அழகானதாக இல்லை.
9நான் இதற்குப் பல கிளைகளைக்
கொடுத்தேன், அதனை அழகுடையதாக ஆக்
கினேன். தேவன் தோட்டமான ஏதேனி
லுள்ள அனைத்து மரங்களும் பொறா
மைபட்டன.!"'
10எனவே, எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறினார்: "இம்மரம் உயரமாக

வளர்ந்திருக்கிறது. இது தனது உச்சியை
மேகங்களிடையே வைத்தது. இம்மரத்திற்குத்
தான் வளர்ந்திருந்ததால் பெருமை இருந்தது!
11 எனவே ஒரு பலம்வாய்ந்த அரசன் அந்த
மரத்தைக் கைப்பற்றும்படிச் செய்தேன். அந்த
அரசன் மரம் செய்த தீமைகளுக்காக அத
னைத் தண்டித்தான். நான் அந்த மரத்தை
என் தோட்டத்தில் இருந்து வெளி
யேற்றினேன். 12 உலகிலேயே மிகக்கொடூ
ரமான ஜனங்கள் அதனை வெட்டிப் போட்
டார்கள். அந்தமரக்கிளைகள் மலைகளின்
மீதும் பள்ளத்தாக்குகளின் மீதும் விழுந்தன.
அதன் முறிந்த கிளைகள் ஆறுகளால் பல
இடங்களுக்கும் இழுத்துச் செல்லப்பட்டன.
இனிமேல் மரத்தின் கீழே நிழல் இருக்காது.
எனவே எல்லா ஜனங்களும் வெளியேறினர்.
13 இப்பொழுது விழுந்த மரத்தில் பறவைகள்
வாழ்கின்றன. காட்டு மிருகங்கள் விழுந்த
கிளைகளின் மேல் நடக்கின்றன.
14 "இப்பொழுது, தண்ணீர்க் கரையிலுள்ள
எந்த மரமும் பெருமை கொள்ள முடியாது.
அவை மேகங்களைத் தொட முயற்சி செய்வ
தில்லை. தண்ணீரைக் குடித்துப் பலம்
கொண்ட எந்த மரமும் தான் உயரமாக
இருப்பதைப் பற்றி பெருமை கொள்வ
தில்லை. ஏனென்றால், அனைத்தும் மரிக்க
ஒப்புக்கொடுக்கப்பட்டுள்ளன. அவை எல்
லாம் உலகத்திற்குக் கீழே சீயோல் என்னும்
மரண இடத்திற்குப் போகும். அவை மரித்து
ஆழமான குழிகளுக்குள் போன மற்ற ஜனங்
களோடு போய் சேரும்."

15 எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "அந்த மரம் சீயோலுக்குள்
இறங்கும் நாளிலே. எல்லோரையும்
அதற்காகத் துக்கப்படும்படிச் செய்தேன்.
லீபனோன் அதற்காகத் துக்கப்பட்டது.
வயல்வெளியி லுள்ள எல்லா மரங்களும்
அதன் வீழ்ச்சி யைக் கேட்டு துக்கமும்
அதிர்ச்சியும் அடைந் தன. ஆழ்கடல் தன்
தண்ணீர் ஓட்டத்தையும் அதன் ஆறு
களையும் நிறுத்தியது. 16 நான் அந்த மரத்தை
விழச் செய்தேன். நாடுகள் அது விழும்
சத்தத்தைக் கேட்டு பயத்தால் நடுங்கின.
நான் அந்த மரத்தை மரண இடத்திற்குப்
போகும்படிச் செய்தேன். அது ஏற்கனவே
மரித்தவர்கள் சென்ற ஆழமான இடத்திற்குப்
போனது. கடந்த காலத்தில், ஏதேனில்
உள்ள அனைத்து மரங்களும் லீபனோனின்
சிறந்த மேன்மையான மரங்களும் அந்த
தண்ணீரைக் குடித்தன. அம்மரங்கள் கீழ்
உலகத்தில் ஆறுதல் அடைந் தன. 17 ஆம்,
அம்மரங்கள் கூட, பெரிய மரத்தோடு மரண
இடத்திற்குச் சென்றன. போரில் கொல்லப்
பட்டவர்களோடு அவை சேர்ந்தன. அந்தப்
பெரியமரம் மற்ற மரங்களைப் பலமடையச்
செய்தது. அம்மரங்கள் அப்பெரிய மரத்தின்
நிழலில் நாடுகளுக்கிடையில் வாழ்ந்தன.
18 "எனவே எகிப்தே, ஏதேனில் உள்ள
பெரிய வல்லமையுள்ள மரங்களில் எத
னோடு உன்னை ஒப்பிடவேண்டும்? ஏதே
னின் மரங்களோடு நீயும் பூமியின் தாழ்
விடங்களில் மரிக்கப்படுவாய்! அந்த அந்நிய
மனிதர்களோடும் போரில் மரித்தவர்களோ
டும் மரணத்தின் இடத்தில் நீ படுத்திருப்பாய்.
"ஆம் அது பார்வோனுக்கும் அவனது
அனைத்து ஜனங்களுக்கும் ஏற்படும்!" எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார்.

### பார்வோன்: ஒரு சிங்கமா அல்லது முதலையா?

32 சிறைபிடிக்கப்பட்ட பன்னிரெண்டாம்
ஆண்டு பன்னிரண்டாம் மாதம்
(மார்ச்) முதலாம் தேதியில் கர்த்தருடைய
வார்த்தை என்னிடம் வந்தது. அவர் கூறி
னார்: 2 "மனுபுத்திரனே, எகிப்து அரசனான
பார்வோனைப் பற்றிய இச்சோகப் பாட
லைப் பாடு. அவனிடம் கூறு:
"'நீ நாடுகளிடையில் பெருமையோடு
நடைபோட்ட பலம் வாய்ந்த இளம் சிங்கம்
என்று உன்னை நினைத்தாய். ஆனால்
உண்மையில் நீ ஏரிகளில் கிடக்கிற முத
லையைப் போன்றவன். நீ உனது வழியை
ஓடைகளில் தள்ளிச் சென்றாய். நீ உன்
கால்களால் தண்ணீரைக் கலக்குகிறாய். நீ
எகிப்து நதிகளை குழப்புகிறாய்.'"
3 எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "நான் பல ஜனங்களை
ஒன்று கூட்டினேன். இப்போது நான் என்
வலையை உன் மேல் வீசுவேன். அந்த
ஜனங்கள் உன்னை உள்ளே இழுப்பார்கள்.
4 பிறகு நான் உன்னை வெறுந்தரையில்
விடுவேன். நான் உன்னை வயலில் எறி
வேன். எல்லாப் பறவைகளும் வந்து உன்
னைத் உண்ணும்படிச் செய்வேன். காட்டு
மிருகங்கள் எல்லா இடங்களிலுமிருந்து
வந்து வயிறு நிறையும் வரை உன்னைத்
உண்ணும்.
5 நான் உனது உடலை மலைகளில்
சிதறவைப்பேன். நான் பள்ளத்தாக்குகளை
உனது மரித்த உடலால் நிரப்புவேன்.
6 நான் உனது இரத்தத்தை மலைகளில்
சிதறுவேன் அது தரைக்குள் ஊறிச்செல்
லும். நதிகள் உன்னால் நிறையும்.
7 நான் உன்னை மறையும்படி செய்வேன்.
நான் வானத்தை மூடி நட்சத்திரங்களை
இருளச் செய்வேன். நான் சூரியனை மேகத்
தால் மூடுவேன், நிலவு ஒளிவிடாது.
8 நான் வானத்தில் ஒளிவிடும் எல்லா
விளக்குகளையும் உன்மேல் இருண்டு போகச்
செய்வேன். நான் உன் நாடு முழுவதும்
இருண்டுபோகக் காரணம் ஆவேன். எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார்.

9"நான் உன்னை அழிக்கப் பகைவரைக்
கொண்டு வரும்போது பல ஜனங்கள்
வருந்தி கலக்கமடையும்படிச் செய்வேன்.
உனக்குத் தெரியாத நாடுகள் கூடத் துக்கப்
படும். 10 உன்னைப் பற்றி பல ஜனங்கள்
அறிந்து திகைக்கும்படி நான் செய்வேன்.
அவர்களின் அரசர்கள் நான் அவர்கள்
முன் வாள் வீசும் போது பயங்கரமாக
அஞ்சுவார்கள். நீ விழுகின்ற நாளில் அரசர்
கள் ஒவ்வொரு நிமிடமும் பயத்தால் நடுங்கு
வார்கள். ஒவ்வொரு அரசனும் தன் சொந்த
வாழ்க்கைக்காகப் பயப்படுவான்."
11ஏனென்றால், எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்: "பாபி
லோன் அரசனது வாள் உனக்கு எதிராகச்
சண்டையிட வரும். 12நான் அவ்வீரர்களை
உன் ஜனங்களைப் போரில் கொல்லப்
பயன்படுத்துவேன். அவ்வீரர்கள் மிகக்
கொடூரமான நாடுகளிலிருந்து வருகின்றனர்.
அவர்கள் எகிப்து பெருமைப்பட்டுக் கொண்
டிருப்பவற்றைக் கொள்ளையடிப்பார்கள்.
எகிப்து ஜனங்கள் அழிக்கப்படுவார்கள்.
13எகிப்தில் ஆற்றங்கரையில் பல மிருகங்கு
கள் உள்ளன. நான் அந்த மிருகங்களையும்
அழிப்பேன். ஜனங்கள் இனிமேல் தங்கள்
கால்களால் தண்ணீரைக் கலக்க முடியாது.
இனிமேல் பசுக்களின் குளம்புகளும் தண்ணீ
ரைக் கலக்க முடியாது. 14எனவே நான்
எகிப்தில் உள்ள தண்ணீரை அமைதிப்
படுத்துவேன். நான் நதிகளை மெதுவாக
ஓடச்செய்வேன். அவை எண்ணையைப்
போன்று ஓடும்" எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைக் கூறினார். 15"நான் எகிப்து
நாட்டைக் காலி பண்ணுவேன். அத்தேசம்
எல்லாவற்றையும் இழக்கும். எகிப்தில்
வாழ்கிற எல்லா ஜனங்களையும் தண்டிப்
பேன். பிறகு அவர்கள் நானே கர்த்தராகிய
ஆண்டவர் என்று அறிவார்கள்!
16"ஜனங்கள் எகிப்திற்காகப் பாடவேண்
டிய சோகப் பாடல் இதுதான். வேறு
நாடுக ளில் உள்ள மகள்கள் (நகரங்கள்)
எகிப்திற் காக இச்சோகப் பாடலைப்
பாடுவார்கள். இது அவர்கள் எகிப்திற்கா
கவும் அதன் ஜனங்களுக்காகவும் பாடுகிற
சோகப் பாடல்." எனது கர்த்தராகிய
ஆண்டவர் அவற்றைக் கூறினார்.

### எகிப்து அழிக்கப்படும்

17சிறைபிடிக்கப்பட்ட பன்னிரண்டாவது
ஆண்டு அந்த மாதத்தின் பதினைந்தாம்
தேதியன்று, கர்த்தருடைய வார்த்தை என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்:" 18"மனு
புத்திரனே, எகிப்து ஜனங்களுக்காக புலம்பு.
எகிப்தையும் அந்த மகள்களையும் பலம்
வாய்ந்த நாடுகளிலிருந்து கல்லறைக்கு வழி
நடத்து. அவர்களைக் கீழ் உலகத்திற்கு
ஏற்கனவே ஆழமான குழிகளில் இருக்கிறவர்
களோடு அனுப்பு. 19எகிப்தே, வேறு எவ
ரையும் விட நீ சிறந்ததில்லை! மரண
இடத்திற்கு இறங்கிப்போ. அந்த அந்நியர்க
ளோடு படுத்துக்கொள்.
20"எகிப்து போரில் கொல்லப்பட்ட
மனிதர்களோடு சேரும். பகைவன் அவளை
யும் அவளது ஜனங்களையும் வெளியே
இழுத்துக்கொண்டான்.
21"போரில் பலமும் ஆற்றலுமிக்க மனிதர்
கள் கொல்லப்பட்டனர். அந்த அந்நி யர்கள்
மரண இடத்திற்குச் சென்றனர். அந்த இடத்தி
லிருந்து, அந்த மனிதர்கள் எகிப்தோடும்
அதன் ஆதரவாளர்களோடும் பேசுவார்கள்,
அவர்களும் போரில் கொல்லப் படுவார்கள்.
22-23"அசூரும் அதன் படையும் மரண
இடத்தில் இருக்கும் அவர்களின் கல்லறைகள்
ஆழமான குழிக்குள் செல்லும். அந்த அசூரிய
வீரர்கள் போரில் கொல்லப்படுவார்கள்.
அசூரியப் படையானது அதன் கல்ல
றையைச் சுற்றி உள்ளது. அவர்கள் உயிரோ
டிருந்த போது ஜனங்களை பயப்படுத்தி
னார்கள். ஆனால் இப்பொழுது எல்லாம்
அமைதியாகிவிட்டது. அவர்கள் அனை
வரும் போரில் கொல்லப்பட்டனர்.

24"ஏலாமும் இங்கே இருக்கிறது. அதன்
படை அவள் கல்லறையைச் சுற்றியிருக்கி
றது. அவர்கள் அனைவரும் போரில் கொல்
லப்பட்டனர். அந்த அந்நியர்கள் பூமிக்குக்
கீழே போய்விட்டார்கள். அவர்கள் உயி
ரோடு இருந்தபோது ஜனங்களை பயப்படுத்
தினார்கள். ஆனால் அவர்கள் தம்மோடு
அவமானத்தை எடுத்துக்கொண்டு ஆழமான
குழிகளுக்குள் சென்றுவிட்டார்கள். 25அவர்
கள் ஏலாமுக்கும் போரில் மரித்த அவர்
களின் அனைத்து வீரர்களுக்கும் படுக்கை
போட்டிருக்கிறார்கள். ஏலாமின் படை அதன்
கல்லறையைச் சுற்றியிருக்கிறது. அந்த
அந்நியர்கள் அனைவரும் போர்க்களத்தில்
கொல்லப்பட்டார்கள். அவர்கள் உயிரோடு
இருந்தபோது, ஜனங்களை பயப்படுத்தினார்
கள். ஆனால் அவர்கள் தம் அவமானத்தை
எடுத்துக்கொண்டு ஆழமான குழிக்குள்
சென்றார்கள். அவர்கள் கொல்லப்பட்ட மற்ற
ஜனங்களோடு சேர்த்து வைக்கப்பட்டுள்ளார்
கள்.
26"மேசேக், தூபால் மற்றும் அவற்றின்
படைகளும் அங்கே உள்ளன. அவர்களின்
கல்லறைகள் அதைச் சுற்றியுள்ளன. அந்த
அந்நியர்களும் போரில் கொல்லப்பட்டார்
கள். அவர்கள் உயிரோடு இருந்தபோது
ஜனங்களை பயப்படுத்தினார்கள். 27ஆனால்,
இப்பொழுது நீண்ட காலத்துக்கு முன்னால்
மரித்துப்போன, வல்லமையான மனிதர்க
ளோடு படுத்துக்கிடக்கிறார்கள். அவர்கள்
தம் போர்க் கருவிகளோடு புதைக்கப்
பட்டார்கள். அவர்களின் வாள்கள் அவர்க
ளின் தலைகளுக்குக் கீழ் வைக்கப்படும்.

ஆனால் அவர்களின் பாவங்கள் அவர்களின்
எலும்பில் உள்ளன. ஏனென்றால், அவர்கள்
உயிரோடு இருக்கும்போது ஜனங்களை
பயப்படுத்தினார்கள்.
28“எகிப்தே, நீயும் அழிக்கப்படுவாய். அந்த
அந்நியர்களால் நீ வீழ்த்தப்படுவாய். போரில்
கொல்லப்பட்ட வீரர்களோடு கிடப்பாய்.
29“ஏதோமும் அங்கே இருக்கிறது. அவ
னோடு அரசர்களும் மற்ற தலைவர்களும்
அங்கே இருக்கிறார்கள். அவர்கள் பலம்
பொருந்திய வீரர்களாகவும் இருந்தனர்.
ஆனால் இப்பொழுது போரில் கொல்லப்
பட்ட மற்றவர்களோடு கிடக்கிறார்கள்.
அவர்கள் அந்த அந்நியர்களுடன் கிடக்கிறார்
கள். அவர்கள் ஆழமான குழிக்குள் கிடக்கும்
மற்ற ஜனங்களுடன் இருக்கின்றனர்.
30“வடக்கில் உள்ள அரசர்கள் அனை
வரும் அங்கே இருக்கின்றனர்! சீதோனில்
உள்ள அனைத்து வீரர்களும் அங்கே
இருக்கின்றனர். அவர்களது பலம் ஜனங்க
ளைப் பயப்படுத்தியது. ஆனால், அவர்கள்
அதனால் அவமானமடைகிறார்கள். அந்த
அந்நியர்கள் போரில் கொல்லப்பட்டவர்க
ளோடு கிடக்கிறார்கள். அவர்கள் தம்
அவமானத்தோடு அக்குழிக்குள் சென்றார்
கள்.
31“பார்வோன் மரண இடத்திற்குச் சென்ற
ஜனங்களை பார்ப்பான். அவனும் அவனோ
டுள்ள அனைத்து ஜனங்களும் ஆறுதல்
பெறுவார்கள். ஆம், பார்வோனும் அவனது
அனைத்துப் படைகளும் போரில் கொல்லப்
படுவார்கள்.” எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறினார்.
32“பார்வோன் உயிரோடு இருக்கும்போது,
ஜனங்கள் அவனுக்குப் பயப்படும்படிச் செய்
தேன். ஆனால் இப்போது, அவன் அந்த
அந்நியர்களோடு விழுந்து கிடக்கிறான்.
பார்வோனும் அவனது படையும் ஏற்கனவே
போரில் கொல்லப்பட்ட வீரர்களோடு
விழுந்து கிடப்பார்கள்.” எனது கர்த்தராகிய
ஆண்டவர் அவற்றைச் சொன்னார்.

### தேவன் இஸ்ரவேலின் காவல்காரனாக எசேக்கியேலைத் தெரிந்தெடுக்கிறார்

33 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 2“மனு
புத்திரனே, உன் ஜனங்களிடம் பேசு. அவர்
களிடம் கூறு, ‘நான் இந்த நாட்டிற்கு
விரோதமாகப் போரிட பகைவரைக் கொண்
டுவருவேன். அது நிகழும்போது, ஜனங்கள்
ஒரு மனிதனைத் தங்கள் காவல்காரனாகத்
தேர்ந்தெடுத்தனர். 3இந்தக் காவல்காரன், பகை
வீரர்கள் வருவதைப் பார்க்கும்போதும்
எக்காளத்தை ஊதி ஜனங்களை எச்சரிப்
பான். 4ஜனங்கள் எச்சரிக்கையைக் கேட்டா
லும் அதனைப் புறக்கணித்தால். எதிரிகள்
அவர்களைக் கைப்பற்றிச் சிறையெடுத்துச்
செல்வார்கள். அவனது சொந்த மரணத்திற்கு
அவனே பொறுப்பாவான். 5அவன் எக்கா
ளத்தைக் கேட்டான், ஆனால் எச்சரிக்கை
யைப் புறக்கணித்தான். எனவே அவனது
மரணத்திற்கு அவனே காரணமாகிறான்.
அவன் எச்சரிக்கையில் கவனம் செலுத்தியி
ருந்தால், பிறகு அவன் தன் சொந்த
வாழ்க்கையைக் காப்பாற்றியிருக்க முடியும்.
6“‘ஆனால் காவல்காரன் பகை வீரர்கள்
வருவதைக் கண்டும் அவன் எக்காளம்
ஊதவில்லை என்றால், அவன் ஜனங்களை
எச்சரிக்கவில்லை, பகைவன் அவர்களைக்
கைப்பற்றிச் சிறையெடுத்துச் செல்வான்.
அந்த மனிதன் கொல்லப்படலாம். ஏனென்
றால், அவன் பாவம் செய்திருக்கிறான்.
ஆனால் காவல்காரனும் அந்த ஆளின்
மரணத்திற்குப் பொறுப்பாளி ஆவான்.’”
7“இப்பொழுது, மனுபுத்திரனே, இஸ்ரவேல்
குடும்பத்துக்கு உன்னைக் காவல்காரனாக
நான் தேர்ந்தெடுக்கிறேன். எனது வாயிலி
ருந்து செய்தியை நீ கேட்டால், எனக்காக
ஜனங்களை எச்சரிக்க வேண்டும். 8நான்
உனக்குச் சொல்லலாம்: ‘இந்தக் கெட்ட
மனிதன் மரிப்பான்.’ பிறகு நீ எனக்காகப்
போய் அவனை எச்சரிக்க வேண்டும். நீ
அந்தப் பாவியை எச்சரிக்காமல் அவனது
வாழ்க்கையை மாற்றிக்கொள்ளும்படி சொல்
லாவிட்டால், பிறகு அவன் தான் செய்த
பாவத்துக்காக மரிப்பான். ஆனால் அவனது
மரணத்திற்கு நான் உன்னைப் பொறுப்பாளி
யாக்குவேன். 9ஆனால் நீ அந்தப் பாவியைத்
தன் வாழ்க்கையை மாற்றிக்கொள்ளும்படி
யும், பாவம் செய்வதை நிறுத்தும்படியும்
எச்சரிக்கை செய்தும் அவன் பாவம்
செய்வதை நிறுத்த மறுத்துவிட்டால், பின்
அவன் மரிப்பான். ஏனென்றால், அவன்
பாவம் செய்தவன். ஆனால் நீ உன்னுடைய
வாழ்க்கையைக் காப்பாற்றியிருக்கிறாய்.

### ஜனங்களை அழிக்க தேவன் விரும்புகிறதில்லை

10“எனவே, மனுபுத்திரனே, எனக்காக
இஸ்ரவேல் வம்சத்தாரிடம் பேசு. அந்த
ஜனங்கள் சொல்லலாம்: ‘நாங்கள் பாவம்
செய்து சட்டங்களை மீறினோம். எங்கள்
பாவங்கள் தாங்க முடியாத அளவிற்குப்
பாரமானவை. அந்தப் பாவங்களால் நாங்கள்
கெட்டுப்போனோம். நாங்கள் உயிர் வாழ
என்ன செய்ய வேண்டும்?’
11“நீ அவர்களிடம் சொல்ல வேண்டும்.
‘எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறுகிறார்: என் உயிரின் மேல் ஆணையிடு
கிறேன், நான் ஜனங்கள் மரிப்பதை, பாவி
கள் கூட மரிப்பதைப் பார்ப்பதில் மகிழ்ச்
சியடைவதில்லை. அவர்கள் மரிப்பதை நான்
விரும்புவதில்லை. அந்தப்பாவி ஜனங்க
ளும் என்னிடம் திரும்பி வருவதையே
நான் விரும்புகிறேன். நான், அவர்கள்
வாழ்வை மாற்றிக்கொண்டு உண்மையான

வாழ்க்கை வாழ்வதை விரும்புகிறேன்.
எனவே என்னிடம் திரும்பி வா. தீமை
செய்வதை நிறுத்து. இஸ்ரவேல் வம்சத்தாரே
நீங்கள் ஏன் மரிக்க வேண்டும்?'
12"மனுபுத்திரனே, உன் ஜனங்களிடம்
சொல்; 'ஒருவன் தீயவனாக மாறிப் பாவம்
செய்யத் தொடங்குவானேயானால் அவன்
முன்பு செய்த நன்மைகள் எல்லாம் அவ
னைக் காப்பாற்றாது. ஒருவன் தீமையி
லிருந்து மாறிவிடுவானேயானால் அவன்
முன்பு செய்த தீமைகள் அவனை அழிக்காது.
எனவே, ஒருவன் பாவம் செய்யத் தொடங்கி
னால் அவன் முன்பு செய்த நன்மைகள்
அவனைக் காப்பாற்றாது என்பதை நினை
வில் வைத்துக்கொள்.'
13"நான் ஒரு நல்லவனிடம் நீ வாழவேண்
டும் என்று சொல்லலாம். ஒருவேளை
அவன் தான் முன்பு செய்த நன்மைகள்
தன்னைக் காப்பாற்றும் என்று நினைக்க
லாம். எனவே, அவன் தீமைகள் செய்யத்
தொடங்கலாம். நான் அவன் முன்பு செய்த
நன்மைகளை நினைத்துப் பார்க்கமாட்டேன்!
இல்லை, அவன் தான் செய்யத் தொடங்கி
விட்ட பாவத்தால் மரிப்பான்.
14"அல்லது நான் ஒரு தீயவனிடம் அவன்
மரிப்பான் என்று சொல்லலாம். ஆனால்,
அவன் தன் வாழ்க்கையை மாற்றலாம்.
அவன் பாவம் செய்வதை நிறுத்தி, சரியான
வழியில் வாழத் தொடங்கலாம். அவன்
நல்லவனாகவும் நியாயமானவனாகவும் ஆக
லாம். 15அவன் கடன் கொடுத்தபோது
பெற்ற பொருட்களைத் திருப்பிக் கொடுத்து
விடலாம். அவன் திருடிய பொருளையும்
திருப்பிக் கொடுக்கலாம். அவன் வாழ்வைத்
தருகிற நியாயப் பிரமாணங்களைப் பின்
பற்றத் தொடங்கலாம். அவன் தீமை செய்
வதை நிறுத்திவிடுகிறான். பிறகு அவன்
நிச்சயம் வாழ்வான். அவன் மரிக்கமாட்
டான், 16அவன் முன்பு செய்த தீமைகளை
நான் நினைத்துப் பார்க்கமாட்டேன். ஏனென்
றால், அவன் இப்பொழுது நல்லவனாகவும்
நேர்மையானவனாகவும் இருக்கிறான்.
எனவே அவன் வாழ்வான்!
17"ஆனால் உங்கள் ஜனங்கள், 'அது
சரியன்று! எனது கர்த்தராகிய ஆண்டவர்
அவ்வாறு இருக்க முடியாது!' என்கிறார்கள்.
"ஆனால் அவர்களோ நேர்மையில்லாத
ஜனங்களாய் இருக்கிறார்கள். அவர்களே
மாற வேண்டிய ஜனங்களாக இருக்கிறார்கள்.
18ஒரு நல்லவன் தான் செய்யும் நன்மைகளை
நிறுத்திப் பாவம் செய்யத் தொடங்கினால்,
பிறகு அவன் தன் பாவத்தாலேயே மரிப்
பான். 19ஒரு பாவி தான் செய்யும் தீமைகளை
நிறுத்தி நல்லவனாகவும் நேர்மையானவனாக
வும் வாழத் தொடங்கினால் பிறகு அவன்
வாழ்வான். 20ஆனாலும் நீங்கள் நான்
நேர்மையாக இல்லை என்று இன்னும்
சொல்கிறீர்கள். ஆனால் நான் உங்களுக்கு
உண்மையைக் கூறுகிறேன். இஸ்ரவேல்
குடும்பத்தாரே, ஒவ்வொருவனும் தான்
செய்த காரியங்களுக்காகவே நியாயந்தீர்க்
கப்படுவான்!"

### எருசலேம் எடுத்துக் கொள்ளப்பட்டது

21எங்கள் சிறையிருப்பின் பன்னிரண்
டாம் ஆண்டு பத்தாம் மாதம் (ஜனவரி)
ஐந்தாம் நாளில் எருசலேமிலிருந்து ஒருவன்
என்னிடம் வந்தான். அங்குள்ள போரிலி
ருந்து அவன் தப்பித்து வந்தான். அவன்,
"அந்நகரம் (எருசலேம்) எடுக்கப்பட்டது!"
என்றான்.
22இப்பொழுது, எனது கர்த்தராகிய ஆண்
டவரின் வல்லமை, அந்த ஆள் என்னிடம்
வருவதற்கு முன் மாலையில், என் மேல்
வந்திருந்தது, தேவன் என்னை பேச முடி
யாதவாறு செய்திருந்தார். அந்த ஆள் என்னி
டம் வந்தபோது, கர்த்தர் என் வாயைத்
திறந்து மீண்டும் என்னைப் பேசும்படிச்
செய்தார். 23பிறகு கர்த்தருடைய வார்த்தை
என்னிடம் வந்தது. அவர் சொன்னார்,
24மனுபுத்திரனே, இஸ்ரவேலின் அழிந்த
நகரங்களில் இஸ்ரவேல் ஜனங்கள் வாழ்கின்
றனர். அந்த ஜனங்கள், 'ஆபிரகாம் ஒருவனா
யிருந்தான். தேவன் அவனிடம் இந்த நாடு
முழுவதையும் கொடுத்தார். இப்பொழுது
நாங்கள் பலராக இருக்கிறோம். எனவே
உறுதியாக இந்நாடு எங்களுக்குச் சொந்தம்!
இது எங்கள் நாடு!' என்கிறார்கள்.
25"கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார் என்று நீ சொல்ல வேண்டும்:
'நீ இன்னும் இரத்தம் நீக்கப்படாத இறைச்
சியைத் தின்கிறாய். உதவிக்காக நீ விக்கி
ரகங்களை நோக்கிப் பார்க்கிறாய். நீ ஜனங்
களைக் கொன்றாய். எனவே, நான் உனக்கு
இந்நாட்டை ஏன் கொடுக்க வேண்டும்?
26நீ உன் சொந்த வாளை நம்பியிருக்கிறாய்.
நீங்கள் ஒவ்வொருவரும் அருவருக்கத்தக்கச்
செயல்களைச் செய்கிறீர்கள். நீங்கள் ஒவ்வொ
ருவரும் அயலான் மனைவியோடு பாலின
உறவு பாவத்தைச் செய்கிறீர்கள். எனவே
உங்களுக்கு இந்நாடு கிடைக்காது!'
27"'கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார் என்று நீ அவர்களிடம் சொல்ல
வேண்டும். என் உயிரின்மேல் ஆணை,
அழிந்துபோன நகரங்களில் வாழும் அந்த
ஜனங்கள் வாளால் கொல்லப்படுவார்கள்
என்று நான் வாக்களித்தேன். எவனாவது
நாட்டை விட்டு வெளியே இருந்தால், நான்
அவனை மிருகங்கள் கொன்று தின்னச்
செய்வேன். ஜனங்கள் கோட்டைகளுக்குள்
ளும் குகைகளுக்குள்ளும் மறைந்திருந்தால்.
அவர்கள் நோயால் மரிப்பார்கள். 28நான்
அந்நாட்டை வெறுமையானதாகவும் பயனற்
றதாகவும் செய்வேன். அந்த நாடு தான்
பெருமைப்பட்டுக் கொண்டவற்றையெல்லாம்
இழக்கும். இஸ்ரவேல் மலைகள் எல்லாம்

காலியாகும். அந்த இடத்தின் வழியாக
எவரும் கடந்து செல்லமாட்டார்கள். 29அந்த
ஜனங்கள் பல அருவருப்பானக் காரியங்
களைச் செய்திருக்கின்றனர். எனவே நான்
அந்நாட்டை வெறுமையான நாடாகச் செய்
வேன். பிறகு இந்த ஜனங்கள் நானே
கர்த்தர் என்பதை அறிவார்கள்.'

30"இப்பொழுது, மனுபுத்திரனே, உன்
னைப்பற்றிக் கூறுகிறேன். உன் ஜனங்கள்
சுவர் ஓரங்களிலும் வீட்டு வாசல்களிலும்
உன்னைக் குறித்துப் பேசுகிறார்கள். அவர்
கள் ஒருவருக்கொருவர், 'வாருங்கள். கர்த்தரி
டமிருந்து புறப்பட்ட வார்த்தை என்ன
வென்று கேட்போம்' என்கிறார்கள்.
31எனவே அவர்கள் உன்னிடம் எனது
ஜனங்களைப் போல வருகிறார்கள். அவர்
கள் எனது ஜனங்களைப்போன்று உன்
முன்னால் அமருகிறார்கள். அவர்கள் உன்
வார்த்தைகளைக் கேட்கிறார்கள். ஆனால்
அவர்கள் நீ சொல்வதைச் செய்யமாட்டார்
கள். அவர்கள் தாம் நல்லதென்று எதை
உணருகின்றார்களோ அவற்றையே செய்கி
றார்கள். அவர்கள் பிற ஜனங்களை ஏமாற்
றிப் பணம் சேர்க்கமட்டுமே விரும்புகி
றார்கள்.

32"இந்த ஜனங்களுக்கு நீ ஒன்றுமில்லை.
ஆனால் நீ அவர்களுக்கு இன்பப்பாட்டு
பாடுகிற பாடகனாய் இருக்கிறாய். உன்
னிடம் இனிய குரல் உள்ளது. நீ உனது
கருவிகளை நன்றாக இசைக்கிறாய். அவர்
கள் உன் வார்த்தைகளைக் கேட்கிறார்கள்.
ஆனால் நீ சொன்னபடி அவர்கள் நடக்க
மாட்டார்கள். 33ஆனால் நீ பாடுவதெல்லாம்
உண்மையாக நடக்கும். பிறகு ஜனங்கள்
உண்மையில் அவர்கள் மத்தியில் ஒரு
தீர்க்கதரிசி வாழ்ந்தான் என்று அறிவார்
கள்!"

### இஸ்ரவேல் ஒரு ஆட்டு மந்தைப் போன்றது

34 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 2"மனுபுத்
திரனே, எனக்காக இஸ்ரவேலின் மேய்ப்பர்க
ளுக்கு (தலைவர்கள்) விரோதமாகப் பேசு.
எனக்காக நீ அவர்களிடம் பேசு. எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்
னார் என்று அவர்களிடம் கூறு: 'இஸ்ர
வேலின் மேய்ப்பர்களாகிய நீங்கள் உங்க
ளுக்கு மட்டுமே உணவு ஊட்டுகிறீர்கள். இது
உங்களுக்கு மிகத் தீமையாகும்! நீங்கள் ஏன்
உங்கள் மந்தையை மேய்க்கவில்லை?
3நீங்கள் கொழுத்த ஆடுகளைத் தின்றுவிட்டு
அதன் மயிரால் உங்களுக்குக் கம்பளி செய்து
கொள்கிறீர்கள். நீங்கள் கொழுத்த ஆடுகளைக்
கொன்று உண்கிறீர்கள். நீங்கள் மந்தைக்கு
உணவளிப்பதில்லை. 4நீங்கள் பலவீனமான
ஆடுகளைப் பலப்படுத்துவதில்லை. நீங்கள்
நோயுற்ற ஆடுகளைப்பற்றிக் கவலைப்படுவ
தில்லை. நீங்கள் காயம்பட்ட ஆடுகளுக்குக்
கட்டுப்போடுவதில்லை. சில ஆடுகள் எங்கோ
அலைந்து காணாமல் போகும். அவற்றைத்
தேடிப் போய் நீங்கள் திரும்பக் கொண்டு
வருவதில்லை. காணாமல் போன
ஆடுகளைத் தேடி நீங்கள் போகவில்லை.
இல்லை. நீங்கள் கொடூரமானவர்களாகவும்
கடுமையானவர்களாகவும் இருந்தீர்கள். இவ்
வாறுதான் நீங்கள் உங்கள் ஆடுகளை வழி
நடத்தினீர்கள்!

5"'இப்பொழுது மேய்ப்பன் இல்லாததால்
ஆடுகள் சிதறிப் போய்விட்டன. அவை
ஒவ்வொரு காட்டு மிருகங்களுக்கும் உணவா
யின. எனவே அவை சிதறிப்போயின. 6என்
மந்தை எல்லா மலைகளிலும் உயர மான
குன்றுகளிலும் அலைந்து திரிகின்றது,
பூமியின் எல்லாப் பாகங்களிலும் எனது
மந்தை சிதறிப்போயிற்று. அவற்றைத் தேடிப்
போவதற்கும் கவனித்துக்கொள்ளவும் யாரு
மில்லை."'

7ஆகையால், மேய்ப்பர்களே, கர்த்த
ருடைய வார்த்தையைக் கேளுங்கள். எனது
கர்த்தராகிய ஆண்டவர் கூறுகிறார், 8"என்
உயிரைக் கொண்டு, நான் உனக்கு இந்த
வாக்கையளிக்கிறேன். காட்டு மிருகங்கள்
என் மந்தையைப் பிடித்தது. ஆம், எனது
மந்தை காட்டு மிருகங்களுக்கு உணவா
கியது. ஏனென்றால், அவற்றுக்கு உண்
மையான மேய்ப்பன் இல்லை. எனது
மேய்ப்பர்கள் எனது மந்தையை கவனிக்க
வில்லை. இல்லை, அம்மேய்ப்பர்கள் ஆடு
களைத் தின்று தமக்கு உணவாக்கிக்
கொண்டார்கள். அவர்கள் என் மந்தையை
மேய்க்கவில்லை."

9எனவே, மேய்ப்பர்களே, கர்த்தருடைய
வார்த்தையைக் கேளுங்கள்! 10கர்த்தர் கூறுகி
றார்; "நான் அம்மேய்ப்பர்களுக்கு விரோதமா
னவன்! நான் என் ஆடுகளை அவர்களிட
மிருந்து வற்புறுத்தி உரிமையுடன் கேட்
பேன்! நான் அவர்களை வேலையைவிட்டு
நீக்குவேன். அவர்கள் இனி என் மேய்ப்பர்க
ளாக இருக்கமாட்டார்கள். எனவே மேய்ப்
பர்களால் தங்களுக்கே உணவளித்துக்
கொள்ளமுடியாது. நான் அவர்களின் வாயி
லிருந்து என் மந்தையைக் காப்பேன்.
பிறகு என் மந்தை அவர்களுக்கு உணவா
காது."

11எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகி
றார்: "நான், நானே, அவர்களின் மேய்ப்பன்
ஆவேன். நான் என் ஆடுகளைத் தேடுவேன்.
நான் அவர்களைக் கவனிப்பேன். 12மேய்ப்
பன் தன் ஆடுகளோடு இருக்கும் போது
ஆடுகள் வழிதவறிப் போனால் அவன்
அவற்றைத் தேடி அலைவான். அதைப்
போன்று நானும் என் ஆடுகளைத் தேடு
வேன். நான் என் ஆடுகளைக் காப்பாற்று
வேன். அந்த இருளான, மங்கலான நாட்க

ளில் அவர்கள் சிதறிப்போன எல்லா இடங்
களிலிருந்தும் அவர்களை நான் திரும்பக்
கொண்டு வருவேன். 13நான் அவற்றை
அந்நாடுகளிலிருந்து கொண்டுவருவேன்.
நான் அந்நாடுகளிலிருந்து அவற்றை ஒன்று
சேர்ப்பேன். நான் அவற்றைத் தம் சொந்த
நாட்டுக்குக் கொண்டுவருவேன். நான்
அவற்றை இஸ்ரவேல் மலைகளிலும், ஓடைக்
கரைகளிலும், ஜனங்கள் வாழ்கிற இடங்க
ளிலும் மேய்ப்பேன். 14நான் அவற்றைப்
புல்வெளிகளுக்கு வழிநடத்துவேன். அவை
இஸ்ரவேல் மலைகளின் உச்சிக்குப் போகும்.
அங்கே அவை தரையில் படுத்துக்கிடந்து
புல்லை மேயும். அவை இஸ்ரவேல் மலை
களில் உள்ள வளமான புல்லை மேயும்.
15ஆம், நான் என் மந்தையை நன்றாக
மேய்த்து ஓய்விடங்களுக்கு நடத்திச் செல்
வேன்.” எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறினார்.

16“நான் காணாமல்போன ஆடுகளைத்
தேடுவேன். நான் சிதறிப்போன ஆடுகளைத்
திரும்பக் கொண்டுவருவேன். நான் புண்
பட்ட ஆடுகளுக்குக்கட்டுப் போடுவேன்.
நான் பலவீனமான ஆடுகளைப் பலப்படுத்து
வேன். ஆனால் நான் கொழுத்த ஆற்ற
லுடைய மேய்ப்பர்களை அழிப்பேன். நான்
அவர்களுக்கு ஏற்ற தண்டனையைக் கொடுப்
பேன்.”

17எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “என் மந்தையே, நான்
ஒரு ஆட்டுக்கும் இன்னொரு ஆட்டுக்கும்
நியாயந்தீர்ப்பேன். நான் ஒரு ஆட்டுக்கடாவுக்
கும் வெள்ளாட்டு கடாவுக்கும் நியாயம்
தீர்ப்பேன். 18நீங்கள் நல்ல நிலத்தில் வளர்ந்த
புல்லை உண்ணலாம். ஆனால் நீங்கள்
எதற்காக இன்னொரு ஆடு உண்ண விரும்பு
கிற புல்லை மிதித்துத் துவைக்கிறீர்கள்.
நீங்கள் ஏராளமான தெளிந்த தண்ணீரைக்
குடிக்கலாம். ஆனால், நீங்கள் எதற்காக
மற்ற ஆடுகள் குடிக்கிற தண்ணீரைக் கலக்கு
கிறீர்கள்? 19எனது ஆடுகள் உங்களால்
மிதித்து துவைக்கப்பட்டப் புல்லை மேய
வேண்டும். அவை உங்களால் கலக்கப்பட்ட
தண்ணீரைக் குடிக்க வேண்டும்!”

20எனவே, எனது கர்த்தராகிய ஆண்டவர்
அவற்றிடம் கூறுகிறார்: “நான், நானே
கொழுத்த ஆட்டிற்கும் மெலிந்த ஆட்டிற்கும்
இடையில் நியாயம் தீர்ப்பேன்! 21நீங்கள்
பக்கவாட்டினாலும் தோள்களாலும் தள்ளுகி
றீர்கள். நீங்கள் உங்கள் கொம்புகளால்
பலவீனமான ஆடுகளை முட்டித் தள்ளுகிறீர்
கள். நீங்கள் அவை வெளியேறும்வரை
தள்ளுகிறீர்கள். 22எனவே நான் எனது
மந்தையைக் காப்பேன். அவை இனி காட்டு
மிருகங்களால் கைப்பற்றப்படாது, நான் ஒரு
ஆட்டுடிற்கும் இன்னொரு ஆட்டிற்கும்
இடையில் நியாயம் தீர்ப்பேன். 23பிறகு
நான் அவற்றுக்கு மேலாக ஒரு மேய்ப்பனை
நியமிப்பேன். அவனே என் தாசனாகிய
தாவீது. அவன் அவற்றுக்கு உணவளித்து
அவர்கள் மேய்ப்பனாக இருப்பான். 24பிறகு
கர்த்தரும் ஆண்டவருமான நான் அவர்களின்
தேவனாயிருப்பேன். என் தாசனாகிய
தாவீது அவர்களிடையில் வாழ்கிற அதிபதி
யாவான். கர்த்தராகிய நான் பேசினேன்.

25“நான் எனது ஆடுகளோடு ஒரு சமாதான
உடன்படிக்கையைச் செய்வேன். நான் தீமை
தருகிற மிருகங்களை அந்த இடத்தை விட்டு
அகற்றுவேன். பிறகு அந்த ஆடுகள் வனாந்
தரத்தில் பாதுகாப்பாக இருக்கும், காடுகளில்
நன்றாகத் தூங்கும். 26நான் ஆடுகளை ஆசீர்வ
திப்பேன். எனது மலையைச் (எருசலேம்)
சுற்றியுள்ள இடங்களையும் ஆசீர்வதிப்பேன்.
சரியான நேரத்தில் நான் மழையைப் பொழி
யச் செய்வேன். அவை அவர்கள்மேல்
ஆசீர்வாதத்தைப் பொழியும். 27வயல்களில்
வளர்ந்த மரங்கள் கனிகளைத் தரும். பூமி
தன் விளைச்சலைத் தரும். எனவே ஆடுகள்
தன் நிலத்தில் பாதுகாப்பாக இருக்கும்.
நான் அவற்றின் நுகத்தை உடைப்பேன்.
நான் அவற்றை அடிமையாக்கிய ஜனங்
களின் வல்லமையிலிருந்து காப்பேன். பின்
நானே கர்த்தர் என்பதை அறிவார்கள்.
28அவர்கள் எந்த நாடுகளாலும் மிருகங்களை
போன்று பிடிக்கப்படமாட்டார்கள். அந்த
மிருகங்கள் இனி இவற்றைத் உண்ணது.
ஆனால் அவை பாதுகாப்பாக வாழும்.
எவரும் அவற்றைப் பயப்படுத்தமுடியாது.
29நான் அவர்களுக்குத் தோட்டம் இடத்தக்க
நல்ல நிலத்தைக் கொடுப்பேன். பிறகு அவர்
கள் பசியால் துன்பப்பட வேண்டாம்.
பிற நாட்டினர் செய்யும் நிந்தனைகளை
இனி அவர்கள் தாங்க வேண்டாம். 30பின்
அவர்கள் நானே கர்த்தர் என்பதை அறி
வார்கள். நான் அவர்களோடு இருக்கிறேன்
என்பதையும் அறிவார்கள். இஸ்ரவேல்
வம்சத்தார் எனது ஜனங்கள் என்பதையும்
அவர்கள் அறிவார்கள்!” எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறினார்!

31“நீங்கள் எனது ஆடுகள். என் புல்வெ
ளியில் மேய்கிற ஆடுகள். நீங்கள் மனிதர்கள்.
நான் உங்கள் தேவன்.” எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறினார்.

## ஏதோமுக்கு விரோதமான செய்தி

35 கர்த்தருடைய வார்த்தை என்னிடம்
வந்தது. அவர் சொன்னார்: 2“மனு
புத்திரனே, சேயீர் மலையைப் பார். அதற்கு
விரோதமாக எனக்காகப் பேசு. 3அதனிடம்
சொல், ‘எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்.

“‘சேயீர் மலையே, நான் உனக்கு விரோத
மானவன்! நான் உன்னைத் தண்டிப்பேன்.
நான் உன்னை வெறுமையான நிலமாக்கு
வேன்.

4நான் உன் நகரங்களை அழிப்பேன். நீ
வெறுமை ஆவாய். பிறகு நானே கர்த்தர்
என்பதை நீ அறிவாய்.
5ஏனென்றால், நீ எப்பொழுதும் எனது
ஜனங்களுக்கு விரோதமாக இருந்தாய். நீ
உனது வாளை இஸ்ரவேலுக்கு எதிராக
அவர்களின் ஆபத்து காலத்தில் அவர்களின்
இறுதித் தண்டனை காலத்தில் பயன்படுத்தி
னாய்!'"
6எனவே, எனது கர்த்தராகிய ஆண்டவர்
கூறுகிறார்: "என் உயிரைக் கொண்டு,
உனக்கு மரணம் வரும்படி ஆணையிடுகி
றேன். மரணம் உன்னைத் துரத்தும். நீ
ஜனங்களைக் கொல்லுவதை வெறுப்ப
தில்லை. எனவே மரணம் உன்னைத்
துரத்தும். 7நான் சேயீர் மலையைப் பாழான
இடமாக்குவேன். அந்த நகரத்திலிருந்து வரும்
ஒவ்வொருவரையும் நான் கொல்லுவேன்.
அந்த நகரத்திற்குள் செல்ல விரும்பும் ஒவ்
வொருவரையும் நான் கொல்லுவேன். 8நான்
இதன் மலைகளை மரித்த உடல்களால்
நிரப்புவேன். உனது குன்றுகள் முழுவதும்
மரித்த உடல்களால் நிரம்பும். உனது
பள்ளதாக்குகளிலும், உனது ஆற்றுப்படுகை
களிலும், உடல்கள் கிடக்கும். 9நான் உன்னை
என்றென்றும் வெறுமையாக்குவேன். உன்
நகரங்களில் எவரும் வாழமாட்டார்கள்.
பிறகு நானே கர்த்தர் என்பதை நீ அறிவாய்."
10நீ சொன்னாய், "இந்த இரண்டு குலங்க
ளும், நாடுகளும் (இஸ்ரவேலும் யூதாவும்)
என்னுடையதாக இருக்கும். நாங்கள்
அவர்களைச் சொந்தமாக எடுத்துக்கொள்
வோம்."
ஆனால் கர்த்தர் அங்கே இருக்கிறார்!
11எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகிறார்:
"நீ என் ஜனங்கள் மேல் பொறாமையோடு
இருந்தாய். நீ அவர்கள் மீது கோபத்தோடு
இருந்தாய். நீ அவர்களை வெறுத்தாய்,
எனவே எனது உயிரைக் கொண்டு ஆணை
யிடுகிறேன், நீ அவர்களைப் புண்படுத்திய
அதே முறையில் நான் உன்னை. தண்டிப்
பேன். நான் உன்னைத் தண்டித்து நான்
அவர்களோடு இருப்பதை ஜனங்கள்
அறியும்படிச்செய்வேன். 12நான் உனது
நிந்தைகளையெல்லாம் கேள்விப்பட்டிருக்கி
றேன் என்பதை நீ பிறகு அறிந்துகொள்வாய்.
இஸ்ரவேல் மலைக்கு விரோதமாகப் பல
தீயவற்றை நீ சொன்னாய். நீ சொன்னாய்,
'இஸ்ரவேல் அழிக்கப்பட்டிருக்கிறது! நான்
அவர்களை உணவைப்போன்று சுவைப்
பேன்!' 13நீ பெருமை கொண்டு, எனக்கு
விரோதமானவற்றைச் சொன்னாய். நீ பல
தடவை சொன்னாய், நீ சொன்ன ஒவ்வொரு
வார்த்தையையும் கேட்டிருக்கிறேன். ஆம்,
நீ சொன்னதைக் கேட்டேன்."
14எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "நான் உன்னை அழிக்கும்
போது பூமி முழுவதும் மகிழும். 15இஸ்ரவேல்
நாடு அழிக்கப்பட்டபோது நீ மகிழ்ச்சியாக
இருந்தாய். நானும் உன்னை அதைப்
போலவே நடத்துவேன். சேயீர் மலையும்
ஏதோம் நாடு முழுவதும் அழிக்கப்படும்!
பிறகு நானே கர்த்தர் என்பதை நீ அறிவாய்."

### இஸ்ரவேல் நாடு மீண்டும் கட்டப்படும்

36 "மனுபுத்திரனே, எனக்காக இஸ்ரவேல்
மலைகளிடம் பேசு. கர்த்தருடைய
வார்த்தையைக் கேட்குமாறு இஸ்ரவேல்
மலைகளிடம் கூறு. 2கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார் என்று அவர்களிடம்
கூறு: 'பகைவர்கள் உனக்கு விரோதமாகத்
தீயவற்றைச் சொன்னார்கள். அவர்கள்
சொன்னார்கள்: ஆ, ஆ! இஸ்ரவேலின்
பழங்காலத்து மலைகள் எங்கள் வசமாகும்!'"
3"எனக்காக இஸ்ரவேல் மலைகளிடம்
பேசு. கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறுகிறார் என்று அவர்களிடம் சொல்:
'பகைவர்கள் உன் நகரங்களை அழித்தனர்.
அவர்கள் உன்னைச் சுற்றிலும் எல்லாத்
திசைகளிலும் நின்று தாக்கினார்கள். அவர்
கள் இதனைச் செய்தனர். எனவே நீ பிற
நாடுகளுக்கு உரியவனானாய். பிறகு ஜனங்
கள் உன்னைப்பற்றி பேசி அவதூறு உரைத்
தனர்."
4எனவே, இஸ்ரவேல் மலைகளே, எனது
கர்த்தரும் ஆண்டவருமானவரின் வார்த்தை
யைக் கேளுங்கள்! கர்த்தரும் ஆண்டவருமா
னவர் கொள்ளையடிக்கப்பட்டு, சுற்றியுள்ள
நாடுகளால் பரிகாசம் செய்யப்பட்ட
மலைகளுக்கும் குன்றுகளுக்கும், ஓடைகளுக்
கும், பள்ளத்தாக்குகளுக்கும், பாழாக்கப்பட்ட
இடங்களுக்கும் வெறுமையாய் விடப்பட்ட
நகரங்களுக்கும் இவற்றைக் கூறுகிறார்.
5எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகிறார்:
"நான் எனது பலமான உணர்ச்சிகளை
எனக்காகப் பேச அனுமதிப்பேன்! நான்,
ஏதோமையும் மற்ற நாடுகளையும் என்
கோபத்தை உணரச்செய்வேன். ஏதோம்
ஜனங்கள் எனது நாட்டை அழிக்கும்
நோக்கத்துடன் எடுத்துக்கொண்டனர்.
அவர்கள் அந்த நாட்டை வெறுப்பதில்
மகிழ்ச்சி அடைந்தனர். அவர்கள் இஸ்ரவேல்
ஜனங்களைப்பற்றிக் கவலைப்படவில்லை.
அவர்கள் அந்நாட்டை அழிப்பதற்காக
தமக்கே எடுத்துக் கொண்டனர்!"
6எனவே எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: "எனவே இஸ்ரவே
லின் நாட்டிடம் எனக்காகப் பேசு. மலை
களுக்கும், குன்றுகளுக்கும், ஆறுகளுக்கும்,
பள்ளத்தாக்குகளுக்கும் சொல். கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார் என்று
கூறு: 'நான் என் எரிச்சலினாலும் உக்கிரத்
தினாலும் பேசுவேன். ஏனென்றால், அந்நாடு
கள் செய்த நிந்தையினால் துன்பப்பட்டீர்
கள்.'"
7எனவே எனது கர்த்தராகிய ஆண்டவர்

இவற்றைக் கூறுகிறார்: “உங்களைச் சுற்றி
லும் இருக்கிற நாடுகள் அந்த நிந்தைக
ளுக்காக துன்பப்பட வேண்டும் என்று
நானே வாக்களிக்கிறேன்!
8“ஆனால் இஸ்ரவேல் மலைகளே, நீங்கள்
புதிய மரங்களை வளர்த்து என் இஸ்ரவேல்
ஜனங்களுக்குப் பழங்களைக் கொடுப்பீர்கள்.
என் ஜனங்கள் விரைவில் திரும்பி வரு
வார்கள். 9நான் உங்களோடு இருப்பேன்.
நான் உங்களுக்கு உதவுவேன். ஜனங்கள்
உங்கள் மண்ணைப் பண்படுத்துவார்கள்.
ஜனங்கள் உங்களில் விதைகளை விதைப்
பார்கள். 10உங்களில் ஏராளமான ஜனங்கள்
வாழ்வார்கள். இஸ்ரவேல் வம்சத்தார் முழு
வதும் அங்கே வாழ்வார்கள். நகரங்களில்
ஜனங்கள் குடியேற்றப்படுவார்கள். அழிந்து
போன இடங்கள் புதிதாகக் கட்டப்படும்.
11நான் உங்களுக்குப் பல ஜனங்களையும்,
மிருகங்களையும் கொடுப்பேன். அவர்கள்
மேலும் பெருகுவார்கள். முற்காலத்தில் இருந்
தது போல, வாழ்வதற்காக ஜனங்களை
இங்கு நான் கொண்டு வருவேன். நான்
உங்களைத் தொடக்கத்தில் இருந்ததைவிட
சிறப்பாகச் செய்வேன். பின்னர் நான்
கர்த்தர் என்பதை நீங்கள் அறிவீர்கள்.
12ஆம், நான் என் ஜனங்கள் பலரையும்
உன் நாட்டிற்கு, வழிநடத்துவேன். அவர்கள்
உன்னை எடுத்துக்கொள்வார்கள். நீ அவர்
களுக்கு உரியவளாவாய். நீ மீண்டும் என்
றும் என் ஜனங்கள் மீது மரணத்தைக்
கொண்டுவரமாட்டாய்.”
13எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “இஸ்ரவேல் பூமியே,
ஜனங்கள் உன்னிடம் கெட்டவற்றைக் கூறுகி
றார்கள். நீ உனது ஜனங்களை அழித்து
விட்டதாகக் கூறுகிறார்கள். நீ உனது
பிள்ளைகளைச் மரிக்க கொடுத்தாய் என்று
கூறுகிறார்கள். 14நீ இனிமேல் ஜனங்களை
அழிக்கமாட்டாய். நீ இனிமேல் உன் பிள்ளை
களை மரிக்க கொடுப்பதில்லை” எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார்: 15“நான் இனிமேல் பிற நாட்டார்
உன்னை அவமானம் செய்யும்படி விடமாட்
டேன். நீ இனிமேல் அந்த ஜனங்களால்
பாதிக்கப்படமாட்டாய். நீ அவர்களை இனி
மேல் குழந்தை இல்லாமல் இருக்கும்படிச்
செய்யமாட்டாய்.” எனது கர்த்தராகிய ஆண்
டவர் இவற்றைச் சொன்னார்.

### கர்த்தர் அவரது சொந்த நல்ல நாமத்தைக் காத்துக்கொள்வார்

16பிறகு கர்த்தருடைய வார்த்தை என்னி
டம் வந்தது. அவர் சொன்னார்: 17“மனுபுத்
திரனே, இஸ்ரவேல் வம்சத்தார் தம் சொந்த
நாட்டில் வாழ்ந்தார்கள். ஆனால் அவர்கள்
அந்த நாட்டை தமது கெட்டச் செயல்களால்
தீட்டுப்படுத்தினார்கள். எனக்கு அவர்கள்
மாத விலக்கால் தீட்டான பெண்ணைப்
போன்று இருந்தார்கள். 18அவர்கள் அந்த
நாட்டில் ஜனங்களைக் கொன்றபோது இரத்
தத்தை தரையில் சிந்தினார்கள். அவர்கள்
அந்த நாட்டைத் தங்கள் அசுத்த விக்கிரகங்க
ளால் தீட்டாக்கினார்கள். எனவே நான்
எவ்வளவு கோபமாய் இருக்கிறேன் என்ப
தைக் காட்டினேன். 19நான் பிற நாடுக
ளுக்குள்ளே அவர்களைச் சிதறடித்தேன்.
பல தேசங்களில் அவர்கள் தூற்றிப் போடப்
பட்டார்கள். அவர்கள் செய்த கெட்ட
செயல்களுக்காக நான் தண்டித்தேன். 20அவர்
கள் பிற நாடுகளுக்குச் சென்றனர். அவர்கள்
அந்த நாடுகளிலும் என் நாமத்தைக்
கெடுத்தார்கள் எப்படி? அந்நாடுகளில் உள்ள
வர்கள் இவர்களைப் பற்றிப் பேசினார்கள்.
அவர்கள், ‘இவர்கள் கர்த்தருடைய ஜனங்
கள். ஆனால் அவர்கள் அவரது நாட்டை
விட்டு வந்தார்கள். அதனால் கர்த்தரிடம்
ஏதோ தவறு இருக்கவேண்டும்!’ என்று
பேசினார்கள்.
21“இஸ்ரவேல் ஜனங்கள் அவர்கள்
சிதறடிக்கப்பட்டிருந்த நாடுகளில் எனது
பரிசுத்தமான நாமத்தை பாழாக்கினார்கள்.
நான் என் நாமத்திற்காக வருத்தப்பட்டேன்.
22எனவே, இஸ்ரவேல் வம்சத்தாரிடம், கர்த்த
ரும் ஆண்டவருமானவர் இவற்றைக் கூறுகி
றார், என்று சொல்: ‘இஸ்ரவேல் வம்சத்
தாரே, நீங்கள் எங்கெல்லாம் போனீர்களோ
அங்கெல்லாம் என் பரிசுத்தமான நாமத்தைக்
கெடுத்தீர்கள். இதனை நிறுத்த நான் சில
வற்றைச் செய்யப்போகிறேன். இஸ்ரவேலே
நான் இதனை உனக்காகச் செய்யவில்லை.
நான் இதனை எனது பரிசுத்தமான நாமத்திற்
காகவே செய்வேன். 23எனது பெரும் நாமம்
உண்மையில் பரிசுத்தமானது என்பதை
அந்த நாடுகளுக்குக் காட்டப்போகிறேன்.
நீங்கள் அந்நாடுகளில் என் நாமத்தைப்
பாழாக்கீனீர்கள். ஆனால் நான் பரிசுத்தமான
வர் என்பதை காட்டுவேன். நீங்கள் என்
நாமத்தை மதிக்கும்படி செய்வேன். பிறகு
அந்த நாட்டவர்கள் நானே கர்த்தர் என்பதை
அறிவார்கள்.’” எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைச் சொன்னார்.
24தேவன் சொன்னார்: “நான் அந்நாடுகளி
லிருந்து உங்களை வெளியே கொண்டுவந்து,
ஒன்று சேர்த்து, உங்கள் சொந்த நாட்டிற்கு
அழைத்து வருவேன். 25பின்னர் நான் உங்கள்
மேல் சுத்தமான தண்ணீரைத் தெளிப்பேன்.
நான் உங்களை சுத்தமாக்குவேன். நான்
உங்களது எல்லா அசுத்தங்களையும் கழுவு
வேன். நான் உங்களது பாவங்களாலும்,
அருவருப்பான விக்கிரகங்களாலும் வந்த
அசுத்தத்தையும் கழுவுவேன்.”
26தேவன் சொன்னார்: “நான் உங்களில்
புதிய ஆவியை வைத்து, உங்கள் சிந்தனை
முறையையும் மாற்றுவேன். நான் உங்கள்
உடலில் உள்ள கல்போன்ற இருதயத்தை

எடுத்துவிட்டு மென்மையான மனித இருத
யத்தைக் கொடுப்பேன். 27நான் உங்களுக்குள்
எனது ஆவியை வைப்பேன். நான்
உங்களை மாற்றுவேன். எனவே நீங்கள்
என் சட்டங்களுக்கு அடிபணிவீர்கள். நீங்கள்
கவனமாக என் கட்டளைகளுக்கு அடிபணி
வீர்கள். 28பின்னர் நீங்கள் உங்கள் முற்பிதாக்
களுக்குக் கொடுக்கப்பட்ட நாட்டில் வாழ்வீர்
கள். நீங்கள் என் ஜனங்களாயிருப்பீர்கள்.
நான் உங்களது தேவனாயிருப்பேன்."
29தேவன் சொன்னார்: "நான் உங்களைப்
பாதுகாப்பேன், அசுத்தமாகாமல் இரட்சிப்
பேன். நான் தானியத்தை முளைக்கும்படி
கட்டளையிடுவேன். உங்களுக்கு விரோத
மாகப் பஞ்சம் ஏற்படும்படிச் செய்யமாட்
டேன். 30நான் உங்கள் மரங்களிலிருந்து
நிறைய பழங்கள் கிடைக்கும்படியும் உங்கள்
வயல்களிலிருந்து நல்ல விளைச்சல் கிடைக்
கும்படியும் செய்வேன். எனவே நீங்கள்
பிற நாடுகளில் பசியால் அவமானப்
பட்டதைப் போன்று இனிமேல் மீண்டும்
படமாட்டீர்கள். 31நீங்கள் செய்த கெட்ட
வற்றை நினைப்பீர்கள். நீங்கள் அவை
நல்லவை அல்ல என நினைப்பீர்கள். பிறகு
நீங்களே உங்களை வெறுப்பீர்கள். ஏனென்
றால், நீங்கள் செய்த பாவங்களும் பயங்க
ரமான செயல்களும் மிகுதி."
32எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறுகி
றார்: "நீங்கள் இவற்றை நினைவுகொள்ள
வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.
நான் இவற்றை உங்கள் நன்மைக்காக
செய்யவில்லை! எனது நல்ல நாமத்திற்
காகவே நான் இதனைச் செய்தேன்! எனவே
இஸ்ரவேல் வம்சத்தாரே, நீங்கள் வாழ்ந்த
முறையை எண்ணி வெட்கப்படுங்கள்!"
33எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார், "நான் உங்கள் பாவங்க
ளைக் கழுவும் நாளில் நான் உங்களை
உங்களது நாட்டிற்குத் திரும்பக் கொண்டு
வருவேன். அந்த அழிந்துபோன நகரங்கள்
மீண்டும் கட்டப்படும். 34காலியான நிலங்கள்
பயிரிடப்படும் அந்த வழியாகப் போகிறவர்க
ளின் பார்வையில் இனி பாழாக இராது.
35அவர்கள் சொல்வார்கள், 'முன்பு இந்நிலம்
பாழாகக் கிடந்தது, ஆனால் இப்பொழுது
ஏதேன் தோட்டம் போல் ஆகியிருக்கிறது.
நகரங்கள் அழிக்கப்பட்டிருந்தன. அவை
பாழாகி வெறுமையாயிற்று. ஆனால் இப்
பொழுது அவை பாதுகாக்கப்பட்டன.
அவற்றில் ஜனங்கள் வாழ்கின்றனர்.'"
36தேவன் சொன்னார்: "பின்னர் உன்
னைச் சுற்றியுள்ள அந்நாடுகள் நானே
கர்த்தர் என்பதையும் நான் பாழான இடங்
களை மீண்டும் கட்டினேன் என்பதையும்
அறிவார்கள். காலியாக இருந்த இந்த
நிலத்தில் நான் நட்டுவைத்தேன். நானே
கர்த்தர் நான் இவற்றைக் கூறினேன் இவை
நடக்கும்படிச் செய்வேன்!"
37எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "இஸ்ரவேல் ஜனங்களை
யும் கூட என்னிடம் வந்து தங்களுக்கு
என்ன செய்ய வேண்டும் என்று கேட்க
அனுமதிப்பேன். அவர்கள் மேலும் மேலும்
பெருகும்படிச் செய்வேன். அவர்கள் ஆட்டு
மந்தைகளைப் போன்றிருப்பார்கள். 38எருச
லேமில் அதன் சிறப்பான திருவிழாக்களில்
வருகிற மந்தைக் கூட்டம் போன்று ஜனங்
கள் மிகுதியாக இருப்பார்கள். அதைப்
போலவே நகரங்களும் பாழான இடங்களும்
ஜனங்கள் கூட்டத்தால் நிரம்பும். பின்னர்
அவர்கள் நானே கர்த்தர் என்பதை அறி
வார்கள்."

### காய்ந்த எலும்புகளின் தரிசனம்

37 கர்த்தருடைய வல்லமை என்மேல்
வந்தது. கர்த்தருடைய ஆவி என்னை
நகரத்திலிருந்து தூக்கி ஒரு பள்ளத்தாக்கின்
நடுவிலே கொண்டுபோய் விட்டது. அப்பள்
ளத்தாக்கு மரித்துப்போன மனிதர்களின்
எலும்புகளால் நிறைந்திருந்தது. 2பள்ளத்தாக்
கின் வெட்ட வெளியில் அந்த எலும்புகள்
மிகுதியாகக் கிடந்தன. என்னை அந்த
எலும்புகள் நடுவே நடக்குமாறு கர்த்தர்
செய்தார். நான் அவ்வெலும்புகள் மிகவும்
காய்ந்து கிடந்ததைக் கண்டேன்.
3பிறகு எனது கர்த்தராகிய ஆண்டவர்
என்னிடம் கேட்டார்: "மனுபுத்திரனே, இந்த
எலும்புகளுக்கு உயிர்வருமா?"
நான் சொன்னேன், "எனது கர்த்தராகிய
ஆண்டவரே, உமக்கு மட்டுமே இந்தக்
கேள்விக்குப் பதில் தெரியும்."
4எனது கர்த்தராகிய ஆண்டவர் என்
னிடம் சொன்னார்: "அவ்வெலும்புகளிடம்
எனக்காகப் பேசு. அவ்வெலும்புகளிடம்
சொல், 'காய்ந்த எலும்புகளே, கர்த்தருடைய
வார்த்தையைக் கவனியுங்கள்! 5எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றை உங்க
ளுக்குக் கூறுகிறார். உங்களுக்குள் உயிர்
மூச்சு வரும்படிச் செய்வேன். நீங்கள் உயிர்
பெறுவீர்கள்! 6நான் உங்களில் தசைநார்க
ளையும், தசைகளையும் வைப்பேன். நான்
உங்களைத் தோலால் மூடுவேன். பின்னர்,
நான் உங்களுக்குள் மூச்சுக்காற்றை வைப்
பேன். நீங்கள் திரும்ப உயிர் பெறுவீர்கள்!
பிறகு, நானே கர்த்தராகிய ஆண்டவர்
என்பதை அறிவீர்கள்."
7எனவே, நான் கர்த்தருக்காக எலும்புக
ளிடம் அவர் சொன்னது போல் பேசினேன்.
நான் இன்னும் பேசிக்கொண்டிருந்தபோது,
உரத்த சத்தம் கேட்டது, எலும்புகள்
அசைந்து ஒன்றோடு ஒன்று சேர்ந்துகொண்
டன. 8அங்கே என் கண்முன்னால் எலும்புக
ளின் மேல் தசைநார்களும், தசைகளும்
சேர்ந்தன. அவற்றைத் தோல் மூடிக்கொண்
டது. ஆனால் உடல்கள் அசையவில்லை.
அவற்றில் மூச்சுக்காற்று இல்லை.

9பிறகு எனது கர்த்தராகிய ஆண்டவர்
என்னிடம் கூறினார்: “எனக்காகக் காற்றிடம்
பேசு. மனுபுத்திரனே, எனக்காகக் காற்றிடம்
பேசு. கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார் என்று காற்றிடம் சொல்:
‘காற்றே, எல்லா திசைகளிலுமிருந்து வா,
மரித்த உடல்களுக்குள் மூச்சுக் காற்றை
ஊது! அவர்கள் மீண்டும் உயிர்பெறட்டும்!’”
10எனவே நான் கர்த்தருக்காகக் காற்றிடம்
அவர் சொன்னது போன்று பேசினேன்.
மரித்த உடல்களுக்குள் ஆவி புகுந்தது.
அவர்கள் உயிர் பெற்று எழுந்து
நின்றார்கள். அவர்கள் எண்ணிக்கையில்
மிகமிக அதிகமான பெருஞ்சேனையைப்
போன்று நின்றார்கள்!
11பிறகு, எனது கர்த்தராகிய ஆண்டவர்
என்னிடம் கூறினார்: “மனுபுத்திரனே, இவ்
வெலும்புகள் இஸ்ரவேல் வம்சத்தார் அனை
வருமே, இஸ்ரவேல் ஜனங்கள் சொல்கி
றார்கள்: ‘எங்கள் எலும்புகள் காய்ந்து
விட்டன. எங்கள் நம்பிக்கை போய்விட்டது.
நாங்கள் முழுமையாக அழிக்கப்பட்டிருக்கி
றோம்!’ 12எனவே, எனக்காக அவர்களிடம்
பேசு, கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார் என்று சொல்: ‘எனது
ஜனங்களே, நான் உங்கள் கல்லறைகளைத்
திறந்து உங்களை வெளியே கொண்டு
வருவேன்! பின்னர் உங்களை நான்
இஸ்ரவேல் நிலத்திற்குக் கொண்டுவருவேன்.
13என் ஜனங்களே, நான் உங்கள் கல்லறை
களைத் திறந்து உங்களை வெளியேகொண்டு
வருவேன். பிறகு, நானே கர்த்தர் என்பதை
நீங்கள் அறிவீர்கள். 14நான் உங்களில் எனது
ஆவியை வைப்பேன். நீங்கள் மீண்டும்
உயிர் பெறுவீர்கள். பின்னர் நான் உங்களை
உங்களது சொந்த நாட்டிற்கு வழிநடத்திச்
செல்வேன். பிறகு, நானே கர்த்தர் என்பதை
நீங்கள் அறிந்துகொள்வீர்கள். நான் இவற்
றைச் சொன்னேன் என்பதையும் இவை
நடக்கும்படிச் செய்வேன் என்பதையும்
நீங்கள் அறிவீர்கள்.’” கர்த்தர் அவற்றைச்
சொன்னார்.

## யூதாவும் இஸ்ரவேலும் மீண்டும் ஒன்றாகுதல்

15கர்த்தருடைய வார்த்தை மீண்டும் என்
னிடம் வந்தது. அவர் சொன்னார்; 16“மனு
புத்திரனே, ஒரு கோலை எடுத்து இதனை
எழுதிவை: ‘இந்த கோல் யூதாவுக்கும் அதன்
நண்பர்களான இஸ்ரவேல் ஜனங்களுக்கும்
உரியது’ பின்னர் இன்னொரு கோலை
எடுத்து இதனை எழுதிவை. ‘இந்தக்கோல்
யோசேப்புக்கும் அவன் நண்பர்களாகிய
இஸ்ரவேல் ஜனங்களுக்கும் சொந்தம்.’ அத
னுடைய பெயர்: “எப்பிராயீமின் கோல்.”
17பின்னர் இரண்டு கோல்களையும் ஒன்று
சேர்த்துவிடு. உன் கையில் இரண்டும்
ஒன்றாக இருக்கும்.

18“அதன் பொருள் என்னவென்று விளக்
கும்படி உன் ஜனங்கள் உன்னிடம் கேட்
பார்கள். 19கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைச்
சொன்னார் என்று அவர்களிடம் சொல்:
‘நான் எப்பீராயீம் கையிலும் அவன்
நண்பர்களாகிய இஸ்ரவேல் ஜனங்கள்
கையிலும் இருக்கும் யோசேப்பின் கோலை
எடுத்து, அக்கோலை யூதாவின் கோலோடு
சேர்த்து அவற்றை ஒரே கோலாக்குவேன்.
என் கையில் அவை ஒரே கோலாக
இருக்கும்!’
20“அக்கோல்களை உன் கையில் அவர்க
ளுக்கு முன்பாகப் பிடி. நீ அக்கோல்களில்
அப்பெயர்களை எழுதினாய். 21கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார் என்று
ஜனங்களிடம் சொல்; ‘நான் இஸ்ரவேல்
ஜனங்களை அவர்கள் சென்ற நாடுகளிலி
ருந்து அழைத்து வருவேன். நான் அவர்
களைச் சுற்றிலுமுள்ள நாடுகளிலிருந்து
சேகரித்து அவர்களது சொந்த நாட்டிற்குக்
கொண்டு வருவேன். 22நான் அவர்களை
மலைகளின் தேசமாகிய இஸ்ரவேலில் ஒரே
நாடாக்குவேன். அவர்கள் அனைவருக்கும்
ஒரே அரசன் இருப்பான். அவர்கள் இரு
நாட்டினராக இருக்க மாட்டார்கள். அவர்கள்
இனிமேல் இரண்டு அரசுகளாக இருக்க
மாட்டார்கள். 23அவர்கள் இனிமேல் அரு
வருப்பான சிலைகளையும், விக்கிரகங்
களையும் வணங்கித் தங்களைத் தீட்டாக்கிக்
கொள்ள மாட்டார்கள். அல்லது, வேறு
குற்றங்களையும் செய்யமாட்டார்கள்.
ஆனால் நான் அவர்கள் பாவம் செய்த
எல்லா இடங்களிலிருந்தும் அவர்களைக்
காப்பாற்றுவேன். நான் அவர்களைக்
கழுவிச் சுத்தமாக்குவேன். அவர்கள் எனது
ஜனங்களாக இருப்பார்கள். நான் அவர்களின்
தேவனாக இருப்பேன்.

24“‘அவர்களுக்கு எனது தாசனாகிய
தாவீது அரசனாக இருப்பான். அவர்கள்
அனைவருக்கும் ஒரே மேய்ப்பன் இருப்பான்.
அவர்கள் எனது நியாயங்களில் நடந்து
என் கட்டளைகளைக் கடைபிடிப்பார்கள்.
அவர்கள் நான் சொன்னவற்றின்படியே
நடப்பார்கள். 25நான் எனது தாசனாகிய
யாக்கோபுக்குக் கொடுத்த நாட்டிலேயே
அவர்கள் வாழ்வார்கள். உங்கள் முற்பிதாக்
கள் அந்த இடத்தில் வாழ்ந்தார்கள். என்
ஜனங்களும் அங்கே வாழ்வார்கள். அவர்
களும் அவர்களது பிள்ளைகளும் அவர்களது
பேரப்பிள்ளைகளும் அங்கே என்றென்றும்
வாழ்வார்கள். எனது தாசனாகிய தாவீது
என்றென்றும் அவர்களின் தலைவனாயி
ருப்பான். 26நான் அவர்களோடு ஒரு
சமாதான உடன்படிக்கையைச் செய்துகொள்
வேன். இந்த உடன்படிக்கை என்றென்றும்
தொடர்ந்து இருக்கும். நான் அவர்களது
நாட்டை அவர்களிடம் கொடுக்க ஒப்புக்

கொள்கிறேன். நான் அவர்கள் மேலும்
மேலும் பெருக ஒப்புக்கொண்டேன். நான்
எனது பரிசுத்தமான இடத்தை அங்கே
அவர்களுடன் என்றென்றும் வைக்க ஒப்புக்
கொண்டேன். 27 என் பரிசுத்தமான கூடாரம்
அவர்களோடு இருக்கும். ஆம், நான்
அவர்களது தேவனாக இருப்பேன். அவர்கள்
எனது ஜனங்களாக இருப்பார்கள். 28 மற்ற
நாடுகளும் நானே கர்த்தர் என்பதை அறிந்து
கொள்வார்கள். எனது பரிசுத்தமான இடத்
தினை இஸ்ரவேலர்களிடம் என்றென்றும்
இருக்கச் செய்வதன் மூலம் அவர்களை
எனது சிறப்புக்குரிய ஜனங்களாக்கினேன்
என்பதை அவர்கள் அறிவார்கள்.'"

## கோகுக்கு விரோதமான செய்தி

38 கர்த்தருடைய செய்தி என்னிடம் வந்
தது. அவர் சொன்னார்: 2 "மனுபுத்தி
ரனே, மாகோகு நாட்டில், கோகைப் பார்.
அவன் மேசேக், தூபால் நாட்டினரின்
முக்கியமான தலைவன். கோகுக்கு விரோத
மாக எனக்காகப் பேசு. 3 கர்த்தரும் ஆண்ட
வருமானவர் இவற்றைச் சொன்னார் என்று
அவனிடம் சொல், 'கோகே, நீ மேசேக்,
தூபால் ஆகிய நாடுகளின் முக்கியமான
தலைவன்! ஆனால் நான் உனக்கு விரோத
மானவன். 4 நான் உன்னைக் கைப்பற்றி
மீண்டும் இங்கே கொண்டுவருவேன். உனது
படையில் உள்ள அனைவரையும் இங்கே
கொண்டுவருவேன். நான் எல்லாக் குதிரை
களையும் குதிரை வீரர்களையும் திரும்பக்
கொண்டுவருவேன். நான் உங்கள் வாய்
களில் கொக்கிகளைப் போட்டு இங்கே
திரும்பக் கொண்டுவருவேன். எல்லா வீரர்க
ளும் தங்கள் சீருடைகளையும் கேடயங்களை
யும் வாள்களையும் அணிந்திருப்பார்கள்.
5 பெர்சியா, எத்தியோப்பியா, லீபியா ஆகிய
நாட்டுவீரர்கள் அவர்களோடு இருப்பார்கள்.
அவர்கள் அனைவரும் தம் கேடயங்களை
யும் தலைக்கவசங்களையும் அணிந்திருப்பார்
கள். 6 கோமேரும் அவனுடைய எல்லாப்
படைகளும் அங்கே இருப்பார்கள். வடதிசை
யிலுள்ள தோகர்மா வம்சத்தாரும் அவர்க
ளது படைகளும் இருப்பார்கள். கைதிகளா
கிய கூட்டம் கூட்டமான ஜனங்களும் அங்கே
இருப்பார்கள்.
7 "'தயாராக இரு. ஆம், உன்னைத்
தயார்படுத்திக் கொண்டு உன்னோடுள்ள
படைகளையும் தயார்படுத்து. நீ அவர்
களுக்குக் காவலனாகத் தயாராக இரு.
8 நீண்ட காலத்துக்குப் பிறகு நீ கடமைக்காக
அழைக்கப்பட்டாய். பின்வரும் ஆண்டுகளில்
போரிலிருந்து குணமான நாட்டிற்கு வரு
வாய். மலைகளுள்ள இஸ்ரவேலுக்குப் பல
நாடுகளில் உள்ள ஜனங்கள் கூடித் திரண்டு
திரும்பி வருவார்கள். முன்பு மலைகளுள்ள
இஸ்ரவேல் மீண்டும் மீண்டும் அழிக்கப்
பட்டது. ஆனால் இந்த ஜனங்கள் பல
நாடுகளிலிருந்து திரும்பி வருவார்கள்.
அவர்கள் அனைவரும் பாதுகாப்பாக இருப்
பார்கள். 9 ஆனால் நீங்கள் அவர்களைத்
தாக்க வருவீர்கள். நீங்கள் புயலைப்
போன்று வருவீர்கள். நீங்கள் பூமியை
மூட வருகிற இடியுடைய மேகம் போன்று
வருவீர்கள். இந்த ஜனங்களைத் தாக்க
நீயும் உனது படைவீரர்களும் பல நாடுகளி
லிருந்து வருவீர்கள்."'
10 எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "அப்பொழுது, உங்கள்
மனதில் ஒரு திட்டம் வரும். ஒரு கெட்டத்
திட்டத்தை நீங்கள் தொடங்குவீர்கள்.
11 நீங்கள் சொல்வீர்கள்: 'சுவர்கள் இல்லாத
நகரங்களை உடைய அந்த நாட்டுக்கு
(இஸ்ரவேல்), விரோதமாக நான் தாக்கப்போ
வேன். அந்த ஜனங்கள் சமாதானமாய்
வாழ்கின்றார்கள். அவர்கள் பாதுகாப்பாக
இருப்பதாக நினைக்கிறார்கள். அங்கே அவர்
களைக் காப்பதற்கு எந்தச் சுவர்களும்
இல்லை. அவர்களுடைய கதவுகளுக்கு எந்
தப் பூட்டுகளும் இல்லை. அவர்களுக்குக்
கதவுகளும் இல்லை! 12 நான் அவர்களைத்
தோற்கடித்து அவர்களிடமுள்ள அனைத்து
விலைமதிப்புடைய பொருட்களையும்
எடுத்து வருவேன். கடந்தகாலத்தில் அழிக்
கப் பட்டு, ஆனால், இப்போது ஜனங்கள்
குடியே றியிருக்கும் இடங்களுக்கு விரோத
மாக நான் சண்டையிடுவேன். ஆனால்,
ஜனங்கள் அங்கே வாழ்கிறார்கள். நான்
அந்த ஜனங்களுக்கு (இஸ்ரவேல்) விரோத
மாகப் போரிடு வேன். அவர்கள் பல
நாடுகளில் இருந்து சேகரிக்கப்பட்டனர்.
இப்பொழுது அந்த ஜனங்கள் ஆடுமாடுகளும்
சொத்துக்களும் வைத்திருக்கின்றனர். அவர்
கள் உலகின் சாலை சந்திப்புக்களில் வாழ்
கின்றனர். பலம் வாய்ந்த நாடுகள் இந்த
இடத்தின் வழியா கத்தான் மற்ற பலம்
வாய்ந்த நாடுகளுக்குப் போகவேண்டும்.'
13 "சேபா, தேதான், ஆகிய நகரஜனங்களும்
தர்ஷீசின் வியாபாரிகளும் அவர்களோடு
வியாபாரம் செய்யும் நகரங்களும் உன்னிடம்
கேட்பார்கள்: 'நீ விலைமதிப்புடைய
பொருட்களைக் கைப்பற்ற வந்தாயா? நல்ல
பொருட்களைப் பறித்துக்கொள்ளவும், வெள்
ளியையும், பொன்னையும், ஆடுமாடுகளை
யும், சொத்துக்களையும் எடுத்துக்கொள்ள
உன் வீரர்களை அழைத்து வந்தாயா?
இவ்விலை மதிப்புடைய பொருட்கள் எல்லா
வற்றையும் எடுத்துச் செல்ல நீ வந்தாயா?'"
14 தேவன் சொன்னார்: "மனுபுத்திரனே,
எனக்காக கோகிடம் பேசு. கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார் என்று
அவனிடம் சொல்: 'என் ஜனங்கள் சமாதா
னமாகவும் பாதுகாப்பாகவும் வாழும்போது
நீ அவர்களைத் தாக்குவதற்கு வருவாய்.
15 நீ வடதிசையில் உள்ள உனது இடத்
திலிருந்து வருவாய். நீ உன்னோடு பலரை

அழைத்து வருவாய். அவர்கள் அனைவரும்
குதிரையின் மேல் வருவார்கள். நீ பெரியதும்
ஆற்றல் உடையதுமான படையாக இருப்
பாய். 16எனது இஸ்ரவேல் ஜனங்களுக்கு
எதிராகப் போரிட நீ வருவாய். நீ பூமியை
மூடவரும் இடிமேகம் போன்று வருவாய்.
அந்த நேரம் வரும்போது, என் நாட்டிற்கு
எதிராகப் போரிட நான் உன்னை அழைப்
பேன். பிறகு கோகே, நான் எவ்வளவு
வல்லமை உடையவர் என்பதை நாடுகள்
அறிந்துகொள்ளும். அவர்கள் என்னை
மதிக்கக் கற்றுக்கொள்வார்கள். நான் பரிசுத்த
மானவர் என்பதை தெரிந்துகொள்வார்கள்.
நான் உனக்கு என்ன செய்வேன் என்பதை
அவர்கள் பார்ப்பார்கள்!'"

17எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைச் சொல்கிறார்: "அந்நேரத்தில், முன்பு
நான் உன்னைப்பற்றி பேசினேன் என்பதை
ஜனங்கள் நினைவுகொள்வார்கள். நான்
எனது வேலையாட்களாகிய இஸ்ரவேலின்
தீர்க்கதரிசிகளைப் பயன்படுத்தினேன் என்
பதை நினைவுகொள்வார்கள். இஸ்ரவேலின்
தீர்க்கதரிசிகள் முன்பு எனக்காகப் பேசினார்
கள் என்பதை அவர்கள் நினைவுகொள்வார்
கள், அவர்களுக்கு எதிராகச் சண்டையிட
நான் உங்களைக் கொண்டுவருவேன் என்று
சொன்னார்கள்."

18எனது கர்த்தராகிய ஆண்டவர் சொன்
னார்: "அந்நேரத்தில் இஸ்ரவேல் நாட்டுக்கு
விரோதமாகச் சண்டையிட கோகு வரு
வான். நான் என் கோபத்தைக் காட்டுவேன்.
19நான் எனது கோபத்திலும் பலமான
உணர்ச்சியிலும் இந்த ஆணையைச் செய்
வேன். இஸ்ரவேல் நாட்டில் பெரும் நில
அதிர்ச்சி ஏற்படும் என்று ஆணை செய்
தேன். 20அந்த நேரத்தில், வாழுகின்ற எல்லா
உயிர்களும் அச்சத்தால் நடுங்கும். கடலி
லுள்ள மீன்கள், வானத்துப் பறவைகள்,
காட்டிலிலுள்ள மிருகங்கள், தரையில் ஊரு
கின்ற சின்னஞ்சிறு உயிர்கள், மேலும்
எல்லா மனித உயிர்களும் அச்சத்தால்
நடுங்கும். மலைகள் இடியும், மதில்கள்
தரையிலே விழும், எல்லாச் சுவர்களும்
தரையிலே விழும்!"

21எனது கர்த்தராகிய ஆண்டவர் கூறு
கிறார்: "இஸ்ரவேலின் மலைகள் மேல்,
பட்டயத்தை கோகுக்கு விரோதமாக வரவ
ழைப்பேன். அவனது வீரர்கள் பயந்து
ஒருவரையொருவர் தாக்கி ஒருவரையொரு
வர் தம் வாளால் கொல்வார்கள். 22நான்
கோகை நோயாலும் மரணத்தாலும் தண்டிப்
பேன். நான் கோகின் மேலும் அவனது
வெவ்வேறு நாடுகளைச் சார்ந்த வீரர்களின்
மேலும் கல்மழையையும், நெருப்பையும்,
கந்தகத்தையும் பொழியச்செய்வேன். 23பிறகு
நான் எவ்வளவு பெரியவர் என்பதைக்
காட்டுவேன். நான் பரிசுத்தமானவர் என்
பதை நிரூபிப்பேன். நான் செய்வதை பல
நாடுகள் பார்த்து நான் யாரென்பதைக்
கற்றுக்கொள்ளும். பின்னர் அவர்கள் நான்
கர்த்தர் என்பதை அறிந்துகொள்வார்கள்."

### கோகும் அவனது படையும் மரணமடைதல்

39 "மனுபுத்திரனே, எனக்காகக்
கோகிற்கு விரோதமாகப் பேசு. கர்த்
தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்
என்று அவனிடம் சொல், 'கோகே, நீ
மேசேக், தூபால் ஆகிய இரு நாடுகளிலும்
மிக முக்கியமான தலைவன்! ஆனால்,
நான் உனக்கு விரோதமானவன். 2நான்
உன்னைக் கைப்பற்றி இங்கே கொண்டு
வருவேன். நான் உன்னை வட திசையி
லிருந்து கொண்டுவருவேன். நான் உன்னை
இஸ்ரவேலின் மலைகளுக்கு விரோதமாகப்
போரிட அழைப்பேன். 3ஆனால் நான்
உனது இடது கையிலுள்ள வில்லைத்
தட்டிவிடுவேன். நான் உனது வலது
கையிலுள்ள அம்புகளைத் தட்டிவிடுவேன்.
4நீ இஸ்ரவேலின் மலைகளில் கொல்லப்
படுவாய். அப்போரில் நீயும் உன்னோடுள்ள
படை வீரர்களும், உன்னோடுள்ள பிற
நாட்டவர்களும் கொல்லப்படுவார்கள். நான்
உங்களை இறைச்சியைத் தின்னுகிற எல்லா
வகைப் பறவைகளுக்கும் காட்டு மிருகங்க
ளுக்கும் உணவாகக் கொடுப்பேன். 5நீ
நகரத்திற்குள் நுழையமாட்டாய். நீ வெளியே
திறந்த வெளியில் கொல்லப்படுவாய். நான்
சொன்னேன்!" எனது கர்த்தராகிய ஆண்
டவர் அவற்றைச் சொன்னார்.

6தேவன் சொன்னார்: "நான் மாகோகுக்கு
விரோதமாகவும் தீவுகளில் பாதுகாப்பாக
வாழ்கிற ஜனங்களுக்கு விரோதமாகவும்
நெருப்பை அனுப்புவேன். பிறகு அவர்கள்
நானே கர்த்தர் என்பதை அறிவார்கள்.
7நான் எனது பரிசுத்தமான நாமம் இஸ்ரவேல்
ஜனங்களிடம் தெரியும்படிச் செய்வேன்.
நான் இனிமேல் என் நாமத்தை ஜனங்கள்
அழிக்கும்படி விடமாட்டேன். நானே கர்த்தர்
என்பதை நாடுகள் அறியும். நான் இஸ்ர
வேலில் பரிசுத்தமானவர் என்பதை அவர்
கள் அறிந்துகொள்வார்கள். 8அந்தக்காலம்
வருகின்றது! இது நிகழும்!" கர்த்தர் இவற்
றைச் சொன்னார்: "நான் பேசுகிறது அந்த
நாளைப்பற்றித்தான்.

9"அந்த நேரத்தில், இஸ்ரவேல் நகரங்களில்
வாழ்கின்ற ஜனங்கள் வயல்களைவிட்டு
வெளியே செல்வார்கள். அவர்கள் பகைவர்க
ளின் ஆயுதங்களைப் பொறுக்கி அவற்றை
எரிப்பார்கள். அவர்கள் எல்லா கேடயங்க
ளையும், வில்லம்புகளையும், வளை தடிக
ளையும், ஈட்டிகளையும் எரிப்பார்கள். அவர்
கள் ஏழு ஆண்டுகளுக்கு அவற்றை விற
காகப் பயன்படுத்துவார்கள். 10அவர்கள்
வயல்களில் விறகு பொறுக்குவதையோ
அல்லது காடுகளில் விறகு வெட்டவோமாட்

டார்கள். ஏனென்றால், அவர்கள் ஆயுதங்
களை விறகாகப் பயன்படுத்துவார்கள்.
அவர்கள் தம்மைக் கொள்ளையிட்ட வீரர்க
ளிடமிருந்து விலை உயர்ந்த பொருட்களை
கொள்ளையடிப்பார்கள். தங்களிடமிருந்து
நல்ல பொருட்களைச் சூறையாடியவர்களிட
மிருந்து, நல்ல பொருட்களை அவர்கள்
சூறையாடுவார்கள்." எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.

11தேவன் சொன்னார்: "அந்நாளில், நான்
இஸ்ரவேலில் கோகைப் புதைக்கிற இடத்
தைத் தேர்ந்தெடுப்பேன். அவன், சவக்
கடலின் கிழக்கே பயணக்காரர்களின்
பள்ளத்தாக்கில் புதைக்கப்படுவான். அது
பயணிகளின் வழியை அடைக்கும். ஏனென்
றால், கோகும் அவனது படையும் அந்த
இடத்தில் புதைக்கப்படுவார்கள். ஜனங்கள்
இதனை 'ஆமோன்கோகின் பள்ளத்தாக்கு'
என்று அழைப்பார்கள். 12இஸ்ரவேல் வம்சத்
தார் அவர்கள் புதைத்து பூமியைச் சுத்தப்
படுத்த ஏழு மாதங்கள் ஆகும். 13பொது
ஜனங்கள் அந்த பகைவீரர்களைப் புதைப்
பார்கள். நானே எனக்கு மகிமைக் கொண்டு
வரும், அந்த நாளில் அவர்கள் புகழடை
வார்கள்." எனது கர்த்தராகிய ஆண்டவர்
அவற்றை கூறினார்.

14தேவன் சொன்னார்: "ஜனங்கள்
வேலைக்காரர்களுக்கு மரித்த வீரர்களைப்
புதைக்க முழுநாள் வேலையைக் கொடுப்பார்
கள். இவ்வாறு, அவர்கள் பூமியைச் சுத்தம்
செய்தார்கள். வேலைக்காரர்கள் ஏழு
மாதங்கள் வேலை செய்வார்கள். அவர்கள்
மரித்த உடல்களைத் தேடி சுற்றிலும் அலை
வார்கள். 15அவ்வேலைக்காரர்கள் தேடியலை
வார்கள். அவர்களில் ஒருவன் எலும்பைப்
பார்த்தால் அவன் அதில் ஒரு அடையாளம்
இடுவான். அந்த அடையாளமானது கல்ல
றைக்குழி தோண்டுகிறவர்கள் வந்து அந்த
எலும்பை கோகின் பள்ளத்தாக்கில் புதைக்
கும் வரை இருக்கும். 16மரித்த ஜனங்களின்
நகரமானது ஆமோனா* என்று அழைக்கப்
படும். இவ்வாறு அவர்கள் நாட்டைத்
தூய்மைப்படுத்துவார்கள்."

17எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறினார்: "மனுபுத்திரனே, எனக்காக
எல்லாப் பறவைகளிடமும் காட்டு மிருகங்
களிடமும் பேசு: 'இங்கே வாருங்கள்! இங்கே
வாருங்கள்! சுற்றிலும் கூடுங்கள். நான்
உங்களுக்காகத் தயார் செய்து வைத்த
இந்தப் பலியை உண்ணுங்கள், இஸ்ரவேலின்
மலைகளில் மிகப் பெரிய பலி இருக்கும்.
வாருங்கள் இறைச்சியைத் தின்று இரத்தத்
தைக் குடியுங்கள். 18நீங்கள் பலமான வீரர்
களின் உடல்களிலுள்ள இறைச்சியைத் தின்
பீர்கள். உலகத்தலைவர்களின் இரத்தத்தை
நீங்கள் குடிப்பீர்கள். அவர்கள் பாசானிலே
கொழுத்துப்போன ஆட்டுக் கடாக்களுக்கும்,
ஆட்டுக் குட்டிகளுக்கும், வெள்ளாட்டுக்
கடாக்களுக்கும், காளைகளுக்கும் சமமா
னவர்கள். 19நீங்கள் உங்கள் விருப்பம் போல்
கொழுப்பை எல்லாம் உண்ணலாம். நீங்கள்
வயிறு நிறைய இரத்தம் குடிக்கலாம். நான்
உங்களுக்காகக் கொன்ற எனது பலிகளிலி
ருந்து நீங்கள் உண்பீர்கள், குடிப்பீர்கள்.
20எனது மேசையில் உங்களுக்கு உண்ண
நிறைய ஏராளமாக இறைச்சி இருக்கும்.
அங்கே குதிரைகளும், இரதமோட்டிகளும்,
ஆற்றலுடைய வீரர்களும், போர் வீரர்களும்
இருப்பார்கள்.'" எனது கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைச் சொன்னார்.

21தேவன் சொன்னார்: "நான் என்ன
செய்திருக்கிறேன் என்பதை பிற நாட்டின
ரைப் பார்க்கச்செய்வேன். அந்த நாடுகள்
என்னை மதிக்கத் தொடங்கும்! அவர்கள்
எனது வல்லமையைப் பார்ப்பார்கள். இந்த
வல்லமை அந்தப் பகைவனுக்கு எதிராகப்
பயன்படுத்தியது. 22பிறகு அந்நாளிலிருந்து
இஸ்ரவேல் வம்சத்தார் நானே அவர்களது
கர்த்தராகிய ஆண்டவர் என்பதை அறிவார்
கள். 23அந்நாடுகள் இஸ்ரவேல் வம்சத்தார்
ஏன் பிற நாடுகளுக்குச் சிறைபிடிக்கப்பட்டு
கொண்டு போகப்பட்டார்கள் என்பதை
அறியும். என் ஜனங்கள் எனக்கு விரோத
மாக மாறினார்கள் என்பதை அவர்கள்
அறிவார்கள். எனவே நான் அவர்களிடமி
ருந்து விலகினேன். நான் அவர்களை
அவர்களது பகைவர்கள் தோற்கடிக்கும்படிச்
செய்தேன். எனவே, என் ஜனங்கள் போரில்
கொல்லப்பட்டார்கள். 24அவர்கள் பாவம்
செய்து தம்மைத்தாமே அசுத்தம் செய்து
கொண்டார்கள். எனவே அவர்கள் செய்த
வற்றிற்காக நான் அவர்களைத் தண்டித்தேன்.
நான் அவர்களிடமிருந்து விலகி அவர்
களுக்கு உதவி செய்ய மறுத்தேன்."

25எனவே, எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார்: "இப்பொழுது நான்
யாக்கோபு வம்சத்தாரை சிறையிருப்பி
லிருந்து கொண்டுவருவேன். நான் இஸ்ர
வேல் வம்சத்தார் எல்லோர் மீது இரக்கம்
கொள்வேன். நான் எனது பரிசுத்தமான
நாமத்திற்காக பலமான உணர்ச்சியைக் காட்
டுவேன். 26ஜனங்கள் கடந்தகாலத்தில் எனக்கு
விரோதமாகச் செய்தத் தீயச்செயல்களுக்காக
வெட்கப்படுவார்கள். அவர்கள் சொந்த நாட்
டில் பாதுகாப்பாக இருப்பார்கள். எவரும்
அவர்களை அச்சப்படுத்தமுடியாது. 27நான்
மற்ற நாடுகளிலிருந்து என் ஜனங்களைத்
திரும்பக் கொண்டுவருவேன். அவர்களின்
பகைவரது நாடுகளிலிருந்து அவர்களை
ஒன்று கூட்டுவேன். பிறகு, பல நாடுகள்
நான் எவ்வளவு பரிசுத்தமானவர் என்பதைக்
காணும். 28அவர்கள் நானே அவர்களது
தேவனாகிய கர்த்தர் என்பதை அறிவார்கள்.

---

**ஆமோனா** இந்த எபிரெய வார்த்தையின் அர்த்தம் "கூட்டம்" என்பதாகும்.

ஏனென்றால், நான் அவர்களைத் தம் சொந்த
வீட்டினை விட்டு நாடு கடத்தபட்டு சிறை
இருக்கச் செய்தேன். நான் அவர்களை
ஒன்று கூட்டி அவர்களது நாட்டுக்குத்
திரும்பக் கொண்டுவந்தேன். எந்த இஸ்ர
வேலனும் சிறையிருப்பில் இருக்கமாட்டான்.
29 நான் எனது ஆவியை இஸ்ரவேல் வம்சத்தா
ரிடம் ஊற்றுவேன். அதற்குப் பிறகு, நான்
மீண்டும் என் ஜனங்களைவிட்டு விலகமாட்
டேன்” எனது கர்த்தராகிய ஆண்டவர்
அவற்றைச் சொன்னார்.

### புதிய ஆலயம்

40 நாங்கள் சிறைப்பட்ட 25ஆம் ஆண்
டின் தொடக்கத்தில் முதலாம் மாதம்
(அக்டோபர்) பத்தாம் நாளன்று கர்த்தரு
டைய வல்லமை என்மேல் வந்தது.
பாபிலோனியர்கள் எருசலேமைப் பிடித்து
14 ஆண்டுகளாயிற்று, ஒரு தரிசனத்தில்
கர்த்தர் என்னை அங்கே எடுத்துக்கொண்டு
போனார்.
2 தரிசனத்தில், தேவன் என்னை இஸ்ர
வேல் நாட்டுக்குக் கொண்டுபோனார். ஒரு
உயரமான மலையில் என்னை அவர்
வைத்தார். மலையின் மேல் ஒரு கட்டிடம்
நகரைத்தைப் போன்று காட்சியளித்தது.
அந்நகரம் கிழக்கு நோக்கி இருந்தது. 3 கர்த்தர்
என்னை அங்கே கொண்டுபோனார். அங்கே
ஒரு மனிதன் இருந்தான். அவன்
துலக்கப்பட்ட வெண்கலத்தைப் போன்று
பளபளப்பாக இருந்தான். அவன் கையில்
சணல்கயிறும, அளவு கோலும் இருந்தன.
அவன் வாசலருகில் நின்றுகொண்டிருந்
தான். 4 அம்மனிதன் என்னிடம் சொன்னான்,
“மனுபுத்திரனே, உன் கண்களையும், காது
களையும் பயன்படுத்து. இவற்றைப் பார்,
என்னைக் கவனி! நான் காட்டுகிற எல்லா
வற்றிலும் உன் கவனத்தைச் செலுத்து.
ஏனென்றால், நீ கொண்டுவரப்பட்டாய்.
எனவே நான் உனக்கு இவற்றைக் காட்டுகி
றேன். நீ பார்த்தவற்றையெல்லாம் பற்றி
இஸ்ரவேல் வம்சத்தாரிடம் கூற வேண்டும்.”
5 நான் ஆலயத்தைச் சுற்றிலும் கட்டப்
பட்ட ஒரு சுவரைக் கண்டேன். அந்த
மனிதனின் கையில் ஒரு அளவு கோல்
இருந்தது, அது ஆறு முழ நீளமுள்ளதாக
(10’6’’) இருந்தது. எனவே அம்மனிதன்
அச்சுவரின் கனத்தை அளந்தான். அது
ஒரு அளவுகோலின் (10’6’’) கனமுள்ளதாக
இருந்தது. அம்மனிதன் சுவரின் உயரத்தை
அளந்தான். அது ஒரு அளவுகோல் உயர
முடையதாக (10’6’’) இருந்தது.
6 பிறகு அம்மனிதன் கிழக்கு வாசலுக்குச்
சென்றான். அம்மனிதன் படிகளில் ஏறிப்
போய் வாசலின் இடைவெளியை அளந்
தான். அது ஒரு அளவு கோல் (10’6’’)
அகலமுடையதாக இருந்தது. மறுவாசற்படி
யையும் ஒரு அளவு கோல் (10’6’’) அகல
முடையதாக அளந்தான். 7 காவலாளிகளுக்
குரிய அறைகள் ஒரு அளவு கோல்
(10’6’’) நீளமுடையதாகவும் ஒரு அளவு
கோல் (10’6’’) அகலமுடையதாகவும் இருந்
தன. அறைகளுக்கு இடையில் 5 முழ
(8’9’’) இடமிருந்தது. மண்டபத்தருகேயுள்ள
இடைவெளி, ஆலயத்தை எதிர்நோக்கியி
ருந்த வாசல் வழியின் கடைசியிலிருந்தது.
அங்கும் ஒரு அளவு கோல் (10’6’’) அகல
முடையதாக இருந்தது. 8 பிறகு அம்மனிதன்
வாசலின் மண்டபத்தையும் உள்ளே ஒரு
கோல் (10’6’’) அகலமுடையதாக அளந்தான்.
9 பிறகு அம்மனிதன் வாசலின் மண்டபத்தை
அளந்தான். அது எட்டு முழமுடையதாக
(14’) இருந்தது. அம்மனிதன் வாசலின்
ஒவ்வொரு பக்கதிலிருந்த சுவர்களை அளந்
தான். ஒவ்வொரு பக்கமும் 2 முழம்
(3’6’’) கொண்டதாக இருந்தது. வாசலின்
மண்டபம் ஆலயத்தை எதிர்நோக்கியிருந்த
வாசல் வழியின் கடைசியிலிருந்தது. 10 வாச
லின் ஒவ்வொரு பக்கத்திலும் மூன்று சிறிய
அறைகள் இருந்தன. இம்மூன்று சிறு
அறைகளும் ஒவ்வொரு பக்கத்திலும் சம
அளவுடையதாக இருந்தன. இருபக்கங்களி
லும் இருந்த பக்கச்சுவர்கள் சம அள
வுடையதாக இருந்தது. 11 அம்மனிதன் வாசல்
கதவுகளின் அகலத்தை அளந்தான். அவை
10 முழம் (17’6’’) அகலமுடையதாக இருந்
தன. அந்த முழு வாசலும் 13 முழம்
நீளம் உடையதாக இருந்தன. 12 ஒவ்வொரு
அறையின் முன்பும் சிறு சுவர் இருந்தது.
அச்சுவர் 1 முழம் (1’6’’) உயரமும் 1
முழம் (1’6’’) கனமும் உடையதாக இருந்தது.
அவ்வறைகள் 6 முழம் (10’6’’) நீளமுடைய
தாக ஒவ்வொரு பக்கத்திலும் இருந்தன.
13 அம்மனிதன் வாசலில் இருந்து அறை
யின் மெத்தையினின்றும் மற்ற அறையின்
மெத்தை மட்டும் அளந்தார். அது 25 முழ
மாக (43’9’’) இருந்தது. ஒவ்வொரு கதவும்
இன்னொரு கதவிற்கு நேர் எதிராக இருந்தது.
14 அம்மனிதன் முற்றத்திலிருந்து மண்டபத்தின்
இரு பக்கங்களிலிருந்த பக்கச்சுவர்கள்
உள்பட எல்லா பக்கச்சுவர்களின் முன்புறங்
களையும் அளந்தான். அது மொத்தம் 60
முழம். 15 வெளிவாயிலின் உட்புற முனையி
லிருந்து மண்டபத்தின் கடைசி முனைவரை
50 முழங்களாகும். 16 எல்லா அறைகளிலும்,
பக்கச்சுவர்களின் மேலும் வாயில் மண்
டபங்களின் மேலும் சிறு சிறு ஜன்னல்கள்
இருந்தன. ஜன்னல்களின் அகலப்பகுதி நுழை
வாயிலை நோக்கியிருந்தது. நுழைவாயிலின்
இரு பக்கங்களிலும் உள்ள சுவர்களில்
பேரீச்ச மரங்கள் செதுக்கப்பட்டிருந்தன.

### வெளிப்பிரகாரம்

17 பிறகு, அம்மனிதன் என்னை வெளிப்பி
ரகாரத்திற்கு அழைத்து வந்தான். நான்
அறைகளையும் தளவரிசைகளையும் பார்த்

தேன். அவை பிரகாரத்தைச் சுற்றிலும்
இருந்தன. சுவற்றின் வழியே நடைபாதையை
உள்நோக்கி 30 அறைகள் இருந்தன. 18அத்தள
வரிசை வாசலின் பக்கம் வரை சென்றது.
தளவரிசை வாசல்களின் நீளத்திற்கு இருந்
தது. இது தாழ்ந்த தளவரிசையாக இருந்தது.
19பிறகு அம்மனிதன் கீழ் வாசலின் உள்பக்
கத்திலிருந்து உள்முற்றத்தின் வெளிப்பக்கம்
வரையுள்ள அகலத்தை அளந்தான். அது
கிழக்குப்பக்கமும் வடக்குப்பக்கமும் 100
முழம் அளவு இருந்தது.
20வெளிப் பிரகாரத்தைச் சுற்றியுள்ள சுவ
ரில் வடக்கு வாசலின் நீளத்தையும் அகலத்
தையும் அம்மனிதன் அளந்தான். 21அது
இரு பக்கங்களிலும் மூன்று அறைகளுடை
யதாக இருந்தது. அதன் வாசல் தூண்களும்
மண்டபமும் முதல் வாசலின் அளவுகளைப்
போன்றே இருந்தன. அது 50 முழம்
(87'6'') நீளமும் 25 முழம் (43'9'') அகலமும்
உடையதாக இருந்தது. 22அதன் ஜன்னல்க
ளும் மண்டபமும் பேரிச்ச மரச் செதுக்கல்க
ளும் கிழக்கு நோக்கியிருந்த வாசலை
போன்றதாகவே இருந்தது. வாசலை நோக்கி
ஏழு படிகள் மேலே போயின. வாசலின்
மண்டபம் நுழை வாயிலின் உள்பக்கம்
கடைசியில் இருந்தது. 23வடக்கு நுழைவா
யிலிலிருந்து முற்றத்துக்குக் குறுக்கே
உள்முற்றத்துக்கு ஒரு நுழைவாயில் இருந்தது.
அது கிழக்கில் இருந்த நுழைவாயிலைப்
போன்றிருந்தது. ஒரு நுழைவாயிலிருந்து
இன்னொரு நுழைவாயில்வரை அளந்தான்.
அது 100 முழம் (175') அகலம் இருந்தது.
24பிறகு அம்மனிதன் என்னைத் தெற்கே
நடத்திச் சென்றான். நான் தெற்கே ஒரு
வாசலைக் கண்டேன். அம்மனிதன் பக்கச்
சுவர்களையும் மண்டபத்தையும் அளந்தான்.
அவை மற்ற வாசல்களைப் போன்றே
அளவுடையதாக இருந்தன. 25வாசலும் அதன்
மண்டபமும் மற்ற வாசல்களைப் போன்றே
ஜன்னல்கள் உடையதாக இருந்தன. அவை
50 முழம் (87'6'') நீளமும் 25 முழம்
(43'9'') அகலமும் கொண்டதாக இருந்தன.
26வாசலில் ஏழு படிகள் மேல் நோக்கிச்
சென்றன. அதன் மண்டபம் நுழைவாயிலின்
உட்புறமாக கடைசியில் இருந்தது. சுவர்கள்
மேல் இருபக்கமும் பேரீச்ச மர உருவங்கள்
செதுக்கப்பட்டிருந்தன. 27உட்பிரகாரத்தின்
தென் பக்கமும் ஒரு வாசல் இருந்தது.
அம்மனிதன் தெற்கு நோக்கி உள் வாசலில்
இருந்து இன்னொரு வாசலுக்கு அளந்தான்.
அது 100 முழம் (175') அகலமுடையதாக
இருந்தது.

### உட்பிரகாரம்

28பிறகு, அம்மனிதன் என்னைத் தெற்கு
வாசல் வழியாக உட்பிரகாரத்திற்கு அழைத்
துப் போனான். அவன் இந்த வாசலை
அளந்தான். அத்தெற்கு வாசலும் மற்ற
வாசல்களைப் போன்று அளவுடையதாக
இருந்தது. 29தெற்கு வாசலில் உள்ள அறை
கள், அதன் பக்கச்சுவர்கள், அதன் மண்டபம்
ஆகியவை மற்ற வாசல்களில் உள்ள
அளவையே கொண்டிருந்தன. வாசலையும்
மண்டபத்தையும் சுற்றி ஜன்னல்கள் இருந்
தன. வாசல் 50 முழம் (87'6'') நீளமும் 25
முழம் (43'9'') அகலமும் இருந்தது.
30மண்டபம் 25 முழம் (43'9'') அகலமும் 5
முழம் (8'9'') நீளமும் இருந்தது. 31தென்பக்க
வாசல் மண்டபம் வெளிப் பிரகாரத்தை
நோக்கி இருந்தது. நுழைவாயிலின் இரு
பக்கச்சுவர்களிலும் பேரீச்ச மர உருவங்கள்
செதுக்கப்பட்டிருந்தன. அதில் ஏறிட 8
படிகளும் இருந்தன.
32அம்மனிதன் என்னை கிழக்குப் புற
முள்ள உட்பிரகாரத்திற்கு அழைத்து வந்
தான். அவன் வாசலை அளந்தான். அது
மற்ற வாசல்களைப் போன்றே அளவுடைய
தாக இருந்தது. 33கிழக்கு வாசலின் அறைக
ளும், பக்கச்சுவர்களும், மண்டபமும் மற்ற
வாசல்களைப் போன்றே அளக்கப்பட்டன.
வாசலையும் அதன் மண்டபத்தையும் சுற்றி
ஜன்னல்கள் இருந்தன. கிழக்கு வாசல் 50
முழம் (87'6'') நீளமும் 25 முழம் (43'9'')
அகலமும் உடையதாக இருந்தது. 34அதன்
மண்டபம் வெளிப் பிரகாரத்தை நோக்கி
இருந்தது. நுழைவாயிலின் இருபக்கச்சுவர்க
ளிலும் பேரீச்ச மர உருவங்கள் செதுக்கப்
பட்டிருந்தன. அதற்குப் போக எட்டுப்படிகள்
இருந்தன.
35பிறகு அந்த மனிதன் என்னை வடக்கு
வாசலுக்கு அழைத்து வந்தான். அவன்
அதை அளந்தான். அது மற்ற வாசல்களைப்
போன்று அதே அளவுடையதாக இருந்தது.
36இதன் அறைகள், இதன் பக்கச்சுவர்களும்,
வாயில் மண்டபமும் கூட, மற்ற நுழைவா
யில்களின் அளவுடையதாக இருந்தன.
வாசலைச் சுற்றி ஜன்னல்கள் இருந்தன.
இது 50 முழம் (87'6'') நீளமும் 25 முழம்
(43'9'') அகலமும் கொண்டதாக இருந்தது.
37இதன் வாயில் மண்டபம், நுழைவாயிலின்
கடைசியில் வெளிமுற்றத்திற்குப் பக்கத்தில்
இருந்தது. நுழைவாயிலின் இருபக்கச்சுவர்
களிலும் பேரீச்ச மர உருவங்கள் செதுக்
கப்பட்டிருந்தன. இதில் மேலே போக 8
படிகள் இருந்தன.

### பலிகளை ஆயத்தப்படுத்தும் அறைகள்

38வாயில் மண்டபத்தில் கதவுள்ள ஒரு
அறை இருந்தது. இதுதான் ஆசாரியர்கள்
தம் தகனபலிக்காக மிருகங்களைக் கழுவும்
இடம். 39மண்டபத்தின் கதவின் இரண்டு
பக்கத்திலும் இரண்டு மேசைகள் இருந்தன.
தகனபலி, பாவநிவாரண பலியை, குற்ற
நிவாரணப் பலி ஆகியவற்றின் மிருகங்களை
மேசைமேல் வைத்துக் கொல்லுவார்கள்.
40மண்டபத்துக்கு வெளியே, வடக்கு வாசல்

திறந்திருக்கிற இடத்தில், இரண்டு மேசைகள் இருந்தன. இம் மண்டபத்தின் வெளிவாசலின் ஒவ்வொரு பக்கத்திலும் இரண்டு மேசைகள் இருந்தன. [41]இவ்வாறு உள்ளே நான்கு மேசைகள் இருந்தன. வெளியே நான்கு மேசைகள் இருந்தன. இந்த எட்டு மேசைகளின் மேல் ஆசாரியர்கள் பலிகளுக்கான மிருகங்களைக் கொன்றார்கள். [42]நான்கு மேசைகள் தகனபலிக்காகக் கல்லால் செய்யப்பட்டிருந்தன. இம்மேசைகள் 1 1/2 முழம் (2'7 1/2'') நீளமும் 1 1/2 முழம் (2'7 1/2'') அகலமும் 1 முழம் (1'6'') உயரமும் உள்ளதாக இருந்தன. மேசைகளின்மேல் ஆசாரியர்கள் தகன பலிகள் மற்றும் இதர பலிகளுக்கான மிருகங்களைக் கொல்வதற்கான கருவிகளை வைத்திருந்தார்கள். [43]கொக்கிகள் 1 சாண் (3'') நீளமுள்ள இறைச்சிக் கொக்கிகள் இப்பகுதியிலுள்ள எல்லாச் சுவர்களிலும் அடிக்கப்பட்டிருந்தன. காணிக்கைகளின் இறைச்சி மேசைமேல் வைக்கப்பட்டது.

### ஆசாரியர்களின் அறைகள்

[44]உட்புற முற்றத்தில் இரண்டு அறைகள் இருந்தன. ஒன்று வடக்கு வாசலில் இருந்தது. அது தெற்கு நோக்கி இருந்தது. இன்னொன்று தெற்கு வாசலில் இருந்தது. அது வடக்கு நோக்கி இருந்தது. [45]அம்மனிதன் என்னிடம் சொன்னான், "தெற்கு நோக்கி இருக்கும் இந்த அறை ஆலயத்தில் பணியிலிருந்து சேவை செய்கிற ஆசாரியரின் அறை. [46]ஆனால் வடக்கு நோக்கி இருக்கும் அறை பலிபீடத்தில் பணிசெய்கிற ஆசாரியரின் அறையாகும். இந்த ஆசாரியர்கள் லேவியின் தலைமுறையைச் சார்ந்தவர்கள். ஆனால் இந்த இரண்டாவது ஆசாரியக் குழு சாதோக்கின் வாரிசுகள். அவர்கள் மாத்திரமே பலிகளை பலிபீடத்திற்குச் சுமந்து சென்று கர்த்தருக்குச் சேவை செய்ய முடியும்."

[47]அம்மனிதன் பிரகாரத்தை அளந்தான். அது சரியான சதுரமாக இருந்தது. இது 100 முழம் (175') நீளமும் 100 முழம் (175') அகலமும் உடையதாக இருந்தது. பலிபீடம் ஆலயத்தின் முன்னால் இருந்தது.

### ஆலயத்தின் மண்டபம்

[48]பிறகு, அம்மனிதன் என்னை ஆலய மண்டபத்துக்குக் கொண்டுபோனான். மண்டபத்தின் இரு பக்கங்களிலும் இருந்த சுவர்களை அளந்தான். ஒவ்வொரு பக்கச்சுவரின் கனம் 5 முழமாகவும் அகலம் 3 முழமாகவும் இருந்தது. அவைகளுக்குள் இருந்த இடைவெளி 14 முழமாயிருந்தது. [49]மண்டபம் 20 முழம் (35') நீளமும் 12 முழம் (19'3'') அகலமும் உள்ளது. மண்டபத்தின் மேலே செல்ல 10 படிகள் இருந்தன. தூணாதரங்களிலே இந்தப் புறத்தில் ஒரு தூணும் அந்தப்புறத்தில் ஒரு தூணும் இருந்தது.

### ஆலயத்தின் பரிசுத்த இடம்

41 பின்பு அவன் என்னை ஒரு அறைக்கு (பரிசுத்தமான இடத்திற்கு) அழைத்துக் கொண்டுபோனான். அவன் அறையின் இருபுறமுள்ள சுவர்களை அளந்தான். அவை 6 முழம் (10'6'') கனமுடையதாக ஒவ்வொரு பக்கமும் இருந்தன் [2]கதவானது 10 முழம் (17'6'') அகலமுடையதாக இருந்தது. வாசல் நடையின் பக்கங்கள் ஒவ்வொரு புறத்திலும் 5 முழம் (8'9'') உடையன. அம்மனிதன் அந்த அறையை அளந்தான். அது 40 முழம் (70') நீளமும் 20 முழம் (35') அகலமும் கொண்டது.

### ஆலயத்தின் மகா பரிசுத்த இடம்

[3]பிறகு, அவன் கடைசி அறைக்குள் சென்றான். அவன் வாசலின் இருபக்கச்சுவர்களையும் அளந்தான். ஒவ்வொரு பக்கச்சுவரும் 2 முழம் கனமாகவும் 7 முழம் அகலமாகவும் இருந்தது. வாசல் வழியானது 6 முழம் அகலமுடையதாயிருந்தது. [4]பிறகு, அம்மனிதன் அறையின் நீளத்தை அளந்தான். அது 20 முழம் (35') நீளமும் 20 முழம் (35') அகலமுமாக ஆலயத்தின் முன்புறத்தில் அளந்தான். அம்மனிதன் என்னிடம், "இது மிகவும் பரிசுத்தமான இடம்" என்றான்.

### ஆலயத்தைச் சுற்றியுள்ள மற்ற அறைகள்

[5]பிறகு அம்மனிதன் ஆலயத்தின் சுவரை அளந்தான். அது 6 முழம் கனமாகயிருந்தது. ஆலயத்தைச் சுற்றிலும் பக்கத்து அறைகள் இருந்தன. இவை 4 முழம் (7') அகலமுடையதாக இருந்தன. [6]இந்த பக்கத்து அறைகள் மூன்று வேறுபட்ட தளங்களில் இருந்தன. அவை ஒன்றின் மேல் ஒன்றாக இருந்தன. ஒவ்வொரு தளத்திலும் 30 அறைகள் இருந்தன. இந்தப் பக்கத்து அறைகள் சுற்றிலும் உள்ள சுவரால் தாங்கப்பட்டிருந்தன. எனவே ஆலயச் சுவர் தானாக அறைகளைத் தாங்கவில்லை. [7]ஆலயத்தைச் சுற்றிலும் பக்கத்து அறைகளின் ஒவ்வொரு தளமும் கீழே உள்ள தளத்தை விட அகலம் அதிகமாயிருந்தது. ஆலயத்தைச் சுற்றியுள்ள உயர மேடையானது ஒவ்வொரு தளத்திலும் ஆலயத்தைச் சுற்றிப் பரந்திருந்தது, எனவே, மேல் தளங்களின் அறைகள் அகலமாயிருந்தன. ஆதலால் கீழ்த்தளத்திலிருந்து நடுத்தளம் வழியாய் மேல் தளத்திற்கு ஏறும் வழி இருந்தது.

[8]ஆலயத்தைச் சுற்றி உயர்த்தப்பட்ட அடிப்பாகம் இருப்பதைப் பார்த்தேன். அது பக்கத்து அறைகளுக்கு அஸ்திவாரமாக இருந்தது. அது ஒரு முழுக் கோலின் உயரம்

கொண்டதாயிருந்தது. 9பக்கத்து அறை
களின் வெளிச் சுவரின் அகலம் 5 முழமாக
(8'9'') இருந்தது. ஆலயத்தின் பக்கத்து
அறைகளுக்கும் ஆசாரியரின் அறைகளுக்கும்
இடையே ஒரு திறந்தவெளி இருந்தது.
10அது ஆலயத்தைச் சுற்றிலும் 20 முழம்
(35') அகலமாக இருந்தது. 11பக்கத்து
அறைகளின் கதவுகள், உயர்த்தப்பட்ட
அடிப்பாகத்தை நோக்கித் திறந்திருந்தன.
ஒரு வாசல்நடை வடக்கேயும் ஒரு
வாசல்நடை தெற்கேயும் இருந்தன.
உயர்த்தப்பட்ட அடிப்பாகத்தின் அகலம் 5
முழமாய் (8'9'') சுற்றிலும் இருந்தது.
12தடைசெய்யப்பட்ட ஆலய முற்றத்தின்
முன்பிருந்த மேற்கு திசையிலுள்ள கட்டிடம்
70 முழம் (122'6'') அகலமுடையதாய் இருந்
தது, அக்கட்டிடத்தின் சுற்றுச் சுவர்கள் 5
முழம் (8'9'') கனமுடையதாய் இருந்தன.
அது 90 முழம் (157'6'') நீளமுடையது.
13பிறகு அம்மனிதன் ஆலயத்தை அளந்தான்.
அது 100 முழம் (175') நீளமுடையது.
தடைசெய்யப்பட்ட பரப்பையும், கட்டிடத்
தையும், அதன் சுவர்களையும் 100 முழம்
(175') அகலமுடையதாக அளந்தான். 14ஆல
யத்தின் முற்புறமும் கிழக்குக்கு எதிரான
தடைச்செய்யப்பட்ட பரப்பும் 100 முழம்
(175') அகலமுடையதாக இருந்தது.
15அம்மனிதன் தடைசெய்யப்பட்ட பரப்
பின் பின்புறமாக அதற்கு எதிரே இருந்த
கட்டிடத்தின் நீளத்தையும் அதற்கு இரு
புறத்திலும் இருந்த நடை பந்தல்களையும்
அளந்தான். அது 100 முழம் (175') நீளமுடை
யது.

மகா பரிசுத்த இடமும், பரிசுத்த இடமும்,
மண்டபமும், உள்அறையை நோக்கியிருந்
தன. 16அவற்றின் சுவர்கள் முழுவதும்
மரப்பலகைகளால் மூடப்பட்டிருந்தன.
மூன்று பக்கங்களிலும் சுற்றி ஜன்னல்கள்
இருந்தன. வாசல்களுக்கு எதிரான நடைப்
பந்தல்களும் சுற்றிலும் தரை தொடங்கி
ஜன்னல்கள் வரை பலகை அடித்திருந்தது.
ஜன்னல்கள் மூடப்பட்டிருந்தன. 17வாசலின்
மேலே தொடங்கி,

ஆலயத்தின் உட்புறமும் வெளிப்புறமும்
பலகைகளால் மூடப்பட்டிருந்தன. சுற்றிலும்
சுவரின் உட்புறமும் வெளிப்புறமும் 18கேரு
பீன்களும் பேரீச்ச மரங்களும் செதுக்கப்
பட்டிருந்தன. கேருபீன்களுக்கு இடையில்
பேரீச்சமரம் இருந்தது. ஒவ்வொரு கேருபீ
னுக்கும் இரு முகங்கள் இருந்தன. 19ஒரு
முகம் மனிதமுகமாய் பேரீச்ச மரத்தின்
ஒரு பக்கத்தைப் பார்த்தவாறு இருந்தது.
இன்னொரு முகம் சிங்க முகமாய் பேரீச்ச
மரத்தின் இன்னொரு பக்கத்தைப் பார்த்த
வாறு இருந்தது. அவை ஆலயத்தைச் சுற்றி
லும் செதுக்கப்பட்டிருந்தன. 20தரையிலிருந்து
வாசலின் மேல்புறம் வரை பரிசுத்த
இடத்தின் சுவர்களில் கேருபீன்களும் பேரீச்ச
மரங்களும் சித்தரிக்கப்பட்டிருந்தன.
21பரிசுத்த இடத்தின் இருபக்கத்திலும்
இருந்த சுவர்கள் சதுரமானவை. மகாபரிசுத்த
மான இடத்துக்கு எதிரில் ஏதோ ஒன்று
பலிபீடத்தைப்போலக் காணப்பட்டது. 22அது
மரத்தால் செய்யப்பட்ட பலிபீடத்தைப்
போன்றிருந்தது. அது 3 முழம் உயரமும்
2 முழம் நீளமுமாயிருந்தது. அதன் மூலைகள்,
அடிப்பாகம், பக்கங்கள் எல்லாம் மரத்தால்
ஆனவை. அம்மனிதன் என்னிடம், "இது
தான் கர்த்தருக்கு முன்னால் உள்ள மேசை"
என்றான்.
23நடு அறையும் (பரிசுத்தமான இடமும்)
மிகப் பரிசுத்தமான இடமும் இரட்டைக்
கதவுகளைக் கொண்டவை. 24வாசல்களுக்கு
மடக்குக் கதவுகளாகிய இரட்டைக் கதவுகள்
இருந்தன. ஒவ்வொரு வாசலுக்கும் இரண்டு
சிறு கதவுகளும் இருந்தன. 25பரிசுத்த இடத்
தின் கதவுகளிலும் கேருபீன்களும் பேரிச்ச
மரங்களும் செதுக்கப்பட்டிருந்தன. அவை
சுவற்றில் செதுக்கப்பட்டிருந்தவை போன்றி
ருந்தன. வெளியே மண்டபத்தின் முன்பாக
உத்திரங்கள் வைக்கப்பட்டிருந்தன. மண்டபத்
தின்முன் பாகத்திற்குமேல் ஒரு மரக்கூரையி
ருந்தது. 26இருபுறங்களிலும் ஆலயத்தின் சுற்
றுக் கட்டுக்களிலும் சட்டங்கள் பொருந்திய
ஜன்னல்கள் இருந்தன. சுவர்களிலும் ஆலயத்
தைச் சுற்றியுள்ள அறைகளிலும் வரையப்
பட்ட பேரீச்ச மரங்களும் இருந்தன.

### ஆசாரியர்களின் அறை

42 பிறகு அம்மனிதன் என்னை வட
திசையின் வழியாக வெளிப்பிரகாரத்
திற்கு அழைத்துப் போனான். தடைசெய்யப்
பட்ட பரப்பிற்கு மேற்கேயிருந்த அறைக்கும்
வடக்கே இருந்த கட்டிடத்திற்கும்
போனோம். 2வடக்கே இருந்த கட்டிடமானது
100 முழம் (175') நீளமும் 50 முழம்
(87'6'') அகலமும் கொண்டது. 3இக்கட்
டத்தில் மூன்று முன்மண்டபங்களுடைய
மேல்மாடிகள் இருந்தன. 20 முழம் அளவுள்ள
உள்முற்றம், கட்டிடத்திற்கும் ஆலயத்திற்கும்
இடையில் இருந்தது. இன்னொரு பக்கம்,
அறைகள் வெளிமுற்றத்தின் நடைபாதையை
நோக்கியிருந்தன. 4அறைகளுக்கு முன்னால்
ஒரு வழி இருந்தது. அது உள்ளே சென்றது.
இது 10 முழம் (17'6'') அகலமும் 100
முழம் (175') நீளமும் உடையதாக இருந்தது.
அவற்றின் கதவுகள் வடக்கே இருந்தன. 5-
6கட்டிடம் 3 மாடி உயரமுள்ளதாகவும்,
வெளிமுற்றத்தைப்போல தூண்கள் இல்லா
ததாலும், மேல் அறைகள் நடுமாடியிலும்,
முதல் தளத்திலும் இருந்த அறைகளைவிட
சற்றுப் பின்னால் இருந்தன. மேல்தளம்,
நடுத்தளத்தையும், அடித்தளத்தையும் விட
குறுகலாயிருந்தது. ஏனெனில், மேல்மாடிகள்
இவ்விடங்களை பயன்படுத்தியிருந்தன.

7வெளியே ஒரு மதில் இருந்தது. அது
அறைகளுக்கு இணையாக இருந்தது. அது
வெளிப்பிரகாரத்தைச் சுற்றிலும் அமைந்தி
ருந்தது. அது அறைகளுக்கு எதிரே இருந்தது.
அதன் நீளம் 50 முழம் (87’6’’) இருந்தது.
8வெளிப்பிரகாரத்தில் உள்ள அறைகளும்
50 முழம் (87’6’’) நீளமுடையதாக இருந்தன.
கட்டிடத்தின் முழு நீளம், ஆலயத்தின் பக்
கம் 100 முழம் நீளமாயிருந்தது. 9கிழக்கே
வெளிப் பிரகாரத்திலிருந்து அந்த அறைக
ளுக்குள் செல்லுகிற நடை அவற்றின் கீழே
இருந்தது. 10உள்ளே நுழையும் வாசல்,
முற்றத்தின் பக்கத்திலுள்ள சுவரின் ஆரம்பத்
திலிருந்தது.

தடைசெய்யப்பட்ட பரப்பிற்கும் கட்டி
டத்திற்கும் தெற்குப் பக்கத்திலும் அறைகள்
இருந்தன. 11அவைகளுக்கு முன்னால் ஒரு
பாதை இருந்தது. அவை வடக்கே உள்ள
அறைகள் போன்றவை. அவை அதே நீள
மும் அகலமும் கொண்டவையாகவும் அதே
மாதிரியான கதவுகளைக் கொண்டவையாக
வும் இருந்தன. 12கீழ் அறைகளுக்குப் போகும்
நுழைவாசல் கட்டிடத்தின் கிழக்குப்பகுதி
யின் கடைசியிலிருந்தது. இதனால் ஜனங்கள்
சுவரின் பக்கம் இருந்த பாதையின் முடிவில்
திறந்தவழியாகப் போகமுடியும்.
13அம்மனிதன் என்னிடம், “தடைசெய்யப்
பட்ட பரப்பிற்கு முன்னிருக்கிற வடபுறமான
அறைகளும் தென்புறமான அறைகளும் பரி
சுத்தமான அறைகள். இந்த அறைகள் கர்த்த
ருக்குப் பலிகள் படைக்கிற ஆசாரியர்க
ளுடையவை. அவ்வாசாரியர்கள் இவ்வறை
களில்தான் மிகப் பரிசுத்தமான உணவை
உண்பார்கள். அங்குதான் அவர்கள் மிகப்
பரிசுத்தமான பலிகளை எல்லாம் வைக்
கிறார்கள். ஏனென்றால், அந்த இடம் பரிசுத்த
மானது. தானிய காணிக்கை, பாவப்பரிகார
பலியை, குற்ற நிவாரண பலியை, ஆகி
யவை மிகப் பரிசுத்தமான காணிக்கை
களாகும். 14பரிசுத்தமான பகுதிக்குள் நுழை
யும் ஆசாரியர்கள் பரிசுத்த இடத்திலிருந்து
வெளிப்பிரகாரத்திற்கு வருவதற்கு முன்பே
ஆராதனை செயயும்போது அணிந்திருந்த
உடைகளைக் கழற்றி வைப்பார்கள். ஏனென்
றால், அந்த உடைகள் பரிசுத்தமானவை.
ஆசாரியர் ஜனங்கள் இருக்கும் பிரகாரத்துக்
குப் போக விரும்பினால் வேறு உடைகளை
அணிந்துகொண்டு போவார்கள்.

### ஆலயத்தின் வெளிமுற்றம்

15அம்மனிதன் ஆலயத்தின் உள்பக்கத்தை
அளந்து முடித்த பிறகு அவன் என்னை
கீழ்த் திசைக்கு எதிரான வாசல் வழியாக
வெளியே அழைத்துக்கொண்டு போனான்.
அவன் ஆலயத்தின் வெளிப்புறத்தில் சுற்றி
லும் அளந்தான். 16அவன் அளவு கோலால்
கிழக்குப் பகுதியை அளந்தான். அது 500
முழம் (875’) நீளமிருந்தது. 17அவன் வடப்
பகுதியை அளந்தான். அது 500 முழம்
(875’) இருந்தது. 18அவன் தெற்குப்பகுதியை
அளந்தான். அது 500 முழம் (875’) இருந்தது.
19அவன் சுற்றிக் கொண்டு மேற்குப்
பகுதிக்குப் போய் அளந்தான். அது 500
முழம் (875’) இருந்தது. 20அவன் ஆலயத்தின்
நான்கு புறங்களையும் அளந்தான். ஆலயத்
தைச் சுற்றி மதில் சுவர் இருந்தது. அது
500 முழம் நீளமும் 500 முழம் அகலமு
மாயிருந்தது. அது பரிசுத்தமற்ற இடத்திலி
ருந்து அப்பரிசுத்தமான இடத்தைப் பிரித்தது.

### கர்த்தர் தமது ஜனங்களுக்கு மத்தியில் வாழ்வார்

43 அம்மனிதன் என்னைக் கிழக்கு
வாசலுக்கு அழைத்துக் கொண்டு
போனான். 2அங்கே இஸ்ரவேலின் தேவனு
டைய மகிமை கீழ்த்திசையிலிருந்து வந்தது.
தேவனுடைய சத்தம் கடலின் இரைச்சலைப்
போன்றிருந்தது. தேவ மகிமையால் பூமி
பிரகாசித்தது. 3நான் பார்த்த தரிசனம்
கேபார் ஆற்றங்கரையில் கண்ட தரிசனத்
தைப் போன்று இருந்தது. நான் தரையில்
முகங்குப்புற விழுந்தேன். 4கர்த்தருடைய
மகிமை கீழ்த்திசைக்கு எதிரான வாசல்
வழியாக ஆலயத்தின் உள்ளே நுழைந்தது.
5அப்பொழுது என்னை ஆவியானவர்
எடுத்துக்கொண்டு போய் உட்பிரகாரத்தில்
விட்டார். கர்த்தருடைய மகிமை ஆலயத்தை
நிரப்பியது. 6என்னிடம் யாரோ ஆலயத்திற்
குள்ளிருந்து பேசுவதைப் போன்று கேட்
டேன். இன்னும் அந்த மனிதன் என்னுடன்
இருந்தான். 7ஆலயத்திற்குள்ளிருந்து வந்த
குரல் என்னிடம் சொன்னது, “மனுபுத்தி
ரனே, இந்த இடத்தில்தான் எனது சிங்காச
னமும் பாதபீடமும் உள்ளன. நான் என்றென்
றும் இஸ்ரவேல் ஜனங்கள் மத்தியில் இந்த
இடத்தில் வாழ்வேன். இஸ்ரவேல் வம்சத்தார்
இனிமேல் என் நாமத்தைப் பாழாக்கமாட்
டார்கள். அரசர்களும் அவரது ஜனங்களும்
தங்கள் வேசித்தனங்களாலும் இங்கே தங்கள்
அரசர்களின் உடல்களைப் புதைப்பதின்
மூலமும் எனது நாமத்தைத் தீட்டுப்படுத்துவ
தில்லை. 8அவர்கள், என் கதவு நிலைக்கு
அடுத்து அவர்கள் கதவு நிலையை வைத்தும்
தங்கள் வாசற்படியை என் வாசற்படியருகில்
கட்டியும் என் நாமத்திற்கு அவமானத்தைக்
கொண்டுவரமாட்டார்கள். முன்பு ஒரு சுவர்
என்னை அவர்களிடமிருந்து பிரித்தது.
எனவே அவர்கள் ஒவ்வொரு முறை பாவம்
செய்யும்போதும் அருவருப்பான செயல்
களைச் செய்யும்போதும் என் நாமத்திற்கு
அவமானத்தைக் கொண்டு வந்தார்கள்.
அதற்காகத்தான் நான் கோபம் கொண்டு
அவர்களை அழித்தேன். 9இப்பொழுது அவர்
கள் தங்கள் பாலின உறவு பாவங்களையும்,

தங்கள் அரசர்களின் மரித்த உடல்களையும்
என்னைவிட்டுத் தூரமாய் எடுத்துச்
செல்லட்டும். பிறகு, நான் அவர்கள்
மத்தியில் என்றென்றும் வாழ்வேன்.
10“இப்பொழுது, மனுபுத்திரனே, ஆலயத்
தைப்பற்றி இஸ்ரவேல் வம்சத்தாரிடம் சொல்.
பிறகு, அவர்கள் தம் பாவங்களுக்காக
வெட்கப்படுவார்கள். அவர்கள் ஆலயத்துக்
கான திட்டங்களைப்பற்றி அறிந்துகொள்
வார்கள். 11அவர்கள் தாம் செய்த தீமைகளுக்
காக வெட்கப்படுவார்கள். அவர்கள் ஆலயத்
தின் வடிவத்தைப்பற்றித் தெரிந்துகொள்ளட்
டும். அவர்கள் ஆலயத்தை எவ்வாறு
கட்டுவது என்பதைத் தெரிந்துகொள்ளட்டும்.
எங்கே அதன் நுழைவாசல்களையும் எங்கே
அதன் பின் வாசல்களையும் வைப்பது
என்பது பற்றி அறியட்டும். அதன் எல்லா
சட்டதிட்டங்களையும் கற்றுக்கொடு. இவற்
றையெல்லாம் எழுதிவை அவர்கள் பார்த்து
ஆலயத்தின் எல்லா விதிகளையும் கைக்
கொள்ளுவார்ாகள். பிறகு அவர்களால் அவற்
றைச் செய்யமுடியும். 12இதுதான் ஆலயத்தின்
சட்டம்: மலை உச்சியின் மேல் சுற்றிலும்
அதன் எல்லையெங்கும் மிகவும் பரிசுத்தமாக
இருக்கும். இதுவே ஆலயத்தின் சட்டம்.

### பலிபீடம்

13“இவை பலிபீடத்தின் அளவுகள். இவை
முழக் கோல்களால் அளக்கப்பட்டவை. பலி
பீடத்தின் அடிப்பாகத்தைச் சுற்றிலும் ஒரு
முழம் (1'9'') ஆழமும் ஒரு முழம் (1'9'')
அகலமும் கொண்ட வாய்க்கால் இருந்தது.
அதன் ஓரத்தைச் சுற்றியுள்ள விளிம்பு ஒரு
சாண் (9'') உயரமாயிருக்கும். இதுதான்
பலிபீடத்தின் உயரமாக இருந்தது. 14தரை
யிலே இருக்கிற ஆதாரம் முதல் கீழ்
நிலை மட்டும் 2 முழம் (3"6'') இருந்தது.
அதன் அகலம் ஒரு முழம் (1'9'') இருந்தது.
சின்ன விளிம்பு முதல் பெரிய விளிம்பு
வரை நான்கு முழம் அளவு (7') இருந்தது.
அதன் அகலம் 2 முழம் (3.6"). 15பலிபீடத்தின்
நெருப்பு வைக்கிற இடம் 4 முழம் (7')
உயரமாயிருந்தது. பலிபீடத்தின் ஒவ்வொரு
மூலையில் ஒன்றாக 4 கொம்புகள் இருந்தன.
16பலிபீடத்தின் நெருப்பு வைக்கிற இடம்
12 முழம் நீளமும் 12 முழம் (21') அகலமுமாய்
இருந்தன. இது சரியான நாற்சதுரம். 17அதன்
சட்டமும் சதுரமானது. அது 14 முழம்
(24'6'') நீளமும் 14 முழம் (24'6'') அகலமும்
கொண்டது. அதைச் சுற்றிலும் உள்ள
விளிம்பு அரை முழம் (10 1/2') அகல
மாயிருந்தது. அதனைச் சுற்றியுள்ள ஆதாரம்
2 முழம் (3'6'') ஆக இருக்கும். பீடத்திற்கு
போகும் படிகள் கிழக்குப்பக்கம் இருந்தன."
18பிறகு அம்மனிதன் என்னிடம் சொன்
னான்: "மனுபுத்திரனே, கர்த்தராகிய ஆண்ட
வர் இவற்றைக் கூறுகிறார்: 'இதுதான்
பலிபீடத்துக்கான விதிகள். இதனைக் கட்டும்
நாளிலே அதன் மேல் தகனபலியிடவும்
அதன் மேல் இரத்தம் தெளிக்கவும் அமைக்
கப்படும். 19நீ ஒரு இளங்காளையை பாவப்
பரிகாரப் பலியாக சாதோக்கின் குடும்பத்தில்
ஒருவனுக்குக் கொடுக்க வேண்டும். இந்த
ஆட்கள் லேவியர் வம்சத்திலிருந்து வந்தவர்
கள். அவர்கள் ஆசாரியர்களாக இருக்கி
றார்கள்.'" எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைச் சொன்னார்: 20"நீ காளையின்
இரத்தத்தை எடுத்து பலிபீடத்தின் நான்கு
கொம்புகளிலும், சட்டத்தின் நான்கு கொடி
களிலும், சுற்றியிருக்கிற விளிம்பிலும் பூசி
பாவநிவர்த்தி செய்யலாம். இவ்வாறு நீ
பலிபீடத்தை சுத்தப் படுத்துவாய். 21நீ பாவப்
பரிகார பலிக்குக் காளையைக் கொண்டு
வந்து அதை ஆலயத்திற்கு வெளியில்
அதற்குரிய இடத்தில் சுட்டெரிக்க வேண்டும்.
22இரண்டாவது நாளிலே பழுதற்ற ஒரு
வெள்ளாட்டுக்கடாவைப் பாவப்பரிகார பலி
யாக பலியிடு. ஆசாரியர்கள் முன்பு காளை
பலிக்குச் செய்ததுபோலவே இதற்கும் பலி
பீடத்தைப் பரிசுத்தப்படுத்தவேண்டும். 23நீ
பலிபீடத்தை பரிசுத்தப்படுத்தின பின்பு, பழு
தற்ற ஒரு இளங்காளையையும், மந்தையி
லிருந்து பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவையும்
பலியாக்கு. 24பிறகு நீ அவற்றைக் கர்த்தருக்கு
முன் பலியிடு. ஆசாரியர்கள் அதன் மேல்
உப்பைத் தூவுவார்கள். பிறகு ஆசாரியர்கள்
காளையையும் கடாவையும் கர்த்தருக்குத்
தகன பலியாகக் கொடுப்பார்கள். 25ஏழு
நாட்களுக்குத் தொடர்ந்து தினம் பாவப்பரி
காரத்திற்காக ஒரு வெள்ளாட்டுக் கடாவைத்
தயார் செய். அதோடு மந்தையிலிருந்து ஒரு
காளையையும் ஆட்டுக்கடாவையும்
தயார் செய். காளைக்கும் ஆட்டுக்காடா
வுக்கும் எவ்விதப் பழுதும் இருக்கக்கூடாது.
26ஏழு நாட்களுக்கு ஆசாரியர்கள் பலிபீடத்
தைச் சுத்தமாக வைத்து, சுத்திகரித்து
அர்ப்பணிக்கவேண்டும்.27அந்நாட்கள் முடிந்த
பின்பு எட்டாம் நாள் முதல் ஆசாரியர்கள்
பலிபீடத்தின் மேல் உங்கள் தகன பலிகளை
யும், சமாதான பலிகளையும் படைக்க
வேண்டும். அப்பொழுது நான் உன்னை
ஏற்றுக்கொள்வேன்." எனது கர்த்தராகிய
ஆண்டவர் இதைச் சொன்னார்.

### வெளிவாசல்

44 பிறகு அம்மனிதன் என்னை ஆலயத்
தின் கிழக்கு வாசலுக்கு அழைத்து
வந்தான். அது பூட்டப்பட்டிருந்தது. 2கர்த்தர்
என்னிடம் சொன்னார்: "இந்த வாசல்
திறக்கப்படாது. இது எப்பொழுதும் பூட்டப்
பட்டிருக்கும். இதன் வழியாக எவரும்
நுழைய முடியாது. ஏனென்றால், இஸ்ரவே
லின் கர்த்தர் இதன் வழியாக நுழைந்தி
ருக்கிறார். எனவே இது எப்போதும் பூட்டப்
பட்டிருக்கும். 3இந்த வாசலில் உட்கார
ஜனங்களின் அதிபதிக்கு மாத்திரமே உரிமை

யுண்டு. கர்த்தருடைய சந்நிதியில் உணவு
உண்ணும்போது உட்காரலாம். அவன்
வாசல் மண்டபக்கதவு வழியாக நுழைந்து
அதே வழியாக வெளியேற வேண்டும்."

### ஆலயத்தின் பரிசுத்தம்

4 பிறகு அந்த மனிதன் என்னை வடக்கு
வாசல் வழியாக ஆலயத்தின் முன்புறத்திற்கு
அழைத்து வந்தான். நான் கர்த்தருடைய
மகிமை கர்த்தருடைய ஆலயத்தில் நிறைந்தி
ருப்பதைக் கண்டேன். நான் தரையில்
முகம்குப்புற விழுந்தேன். 5 கர்த்தர் என்னிடம்
சொன்னார்: "மனுபுத்திரனே, கவனமாகப்
பார்! உன் கண்களையும் காதுகளையும்
பயன்படுத்து. இவற்றைக் கவனி. நான்
உனக்குக் கர்த்தருடைய ஆலயத்தின் சகல
விதிகளையும் அதன் சகல சட்டங்களையும்
பற்றிச் சொல்வதைக் கவனமாகக் கேள்.
ஆலயத்தின் எல்லா நுழை வாசல்களையும்
பரிசுத்த இடத்திலிருந்து வெளியேறும்
வாசல்களையும் கவனமாகப் பார். 6 பிறகு
இந்தச் செய்தியை எனக்குக் கீழ்படிய
மறுத்த இஸ்ரவேல் ஜனங்களுக்குக் கொடு.
அவர்களிடம் சொல்: 'எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறுகிறார்: இஸ்ர
வேல் வம்சத்தாரே, நீங்கள் செய்த எல்லா
அருவருப்புகளும் போதும்! 7 நீங்கள் எனது
ஆலயத்திற்குள் அந்நியரை அழைத்து
வந்தீர்கள். அந்த ஜனங்கள் உண்மையாகவே
விருத்தசேதனம் செய்துகொள்ளவில்லை.
அவர்கள் தம்மை எனக்கு முழுமையாகக்
கொடுக்கவில்லை. இவ்வாறு நீங்கள் என்
ஆலயத்தை அசுத்தம் செய்தீர்கள். நீங்கள்
நமது உடன்படிக்கையை உடைத்தீர்கள்.
நீங்கள் அருவருப்பான செயல்களைச் செய்
தீர்கள். பிறகு நீங்கள் அப்பம், கொழுப்பு,
இரத்தம் ஆகிய காணிக்கைகளைக் கொடுத்
தீர்கள். ஆனால், இவைகளே என் ஆலயத்தை
அசுத்தமாக்கின. 8 நீங்கள் எனது பரிசுத்தமான
பொருட்களைக் கவனித்துக்கொள்ளவில்லை.
நீங்கள் எனது பரிசுத்த இடத்தின்
பொறுப்பை அந்நியர்களிடம் விட்டுவிட்டீர்
கள்!'"

9 எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "உண்மையான விருத்த
சேதனம் செய்துகொள்ளாத அந்நியன் என்
ஆலயத்திற்குள் வரக்கூடாது. இஸ்ரவேலர்
மத்தியில் நிரந்தரமாக வாழும் அந்நியனும்
என் ஆலயத்திற்குள் வருவதற்கு முன்
விருத்தசேதனம் செய்துகொண்டு தன்னை
எனக்கு முழுமையாகத் தரவேண்டும்.
10 கடந்த காலத்தில் இஸ்ரவேலர்கள் என்னை
விட்டு விலகியபோது லேவியர்கள் என்னை
விட்டு விலகினார்கள். இஸ்ரவேலர்கள் தம்
விக்கிரகங்களை பின்பற்றுவதற்காக என்னி
டமிருந்து விலகினார்கள். லேவியர்கள் தம்
பாவங்களுக்காகத் தண்டிக்கப்படுவார்கள்.
11 லேவியர்கள் எனது பரிசுத்தமான இடத்தில்
சேவை செய்வதற்காகத் தேர்ந்தெடுக்கப்
பட்டார்கள். அவர்கள் ஆலயத்தின் வாச
லைக் காவல் செய்தார்கள். அவர்கள்
ஆலயத்திற்குள் சேவை செய்தார்கள். அவர்
கள் பலியிடுவதற்காக மிருகங்களைக் கொன்
றார்கள். ஜனங்களுக்காகத் தகன பலிகளைச்
செய்தார்கள். அவர்கள் ஜனங்களுக்கு உதவு
வதற்காகவும் சேவை செய்வதற்காகவும்
தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். 12 ஆனால் அந்த
லேவியர்கள் எனக்கு விரோதமாகப் பாவம்
செய்வதற்கு உதவினார்கள்! அவர்கள், விக்கி
ரகங்களைத் தொழுதுகொள்ள ஜனங்களுக்கு
உதவி செய்தார்கள்! எனவே நான் அவர்க
ளுக்கு விரோதமாக இந்த ஆணையைச்
செய்கிறேன்: 'அவர்கள் தமது பாவங்களுக்
காகத் தண்டிக்கப்படுவார்கள்." எனது கர்த்த
ராகிய ஆண்டவர் இவற்றைச் சொன்னார்.

13 "எனவே ஆசாரியர்களைப் போன்று
லேவியர்கள் காணிக்கைகளை எனக்குக்
கொண்டு வரமாட்டார்கள். அவர்கள் எனது
பரிசுத்தமான பொருட்களுக்கு அருகிலே
வரமாட்டார்கள். அல்லது மிகப் பரிசுத்த
பொருட்களுக்கு அருகிலும் வரமாட்டார்கள்.
அவர்கள் தாங்கள் செய்த அருவருப்பான
செயல்களுக்காக அவமானங்களைச் சுமக்க
வேண்டும். 14 ஆனால், அவர்கள் ஆலயத்தின்
பொறுப்பை எடுத்துக்கொள்ள அனுமதிப்
பேன். அவர்கள் ஆலயத்திற்குள் வேலை
செய்வார்கள். செய்யவேண்டிய எல்லாவற்
றையும் செய்வார்கள்.

15 "ஆசாரியர்கள் அனைவரும் லேவியர்
வம்சத்திலிருந்து வந்தவர்கள். ஆனால் இஸ்ர
வேலர்கள் என்னை விட்டு விலகிப் போன
போது, சாதோக்கின் குடும்பத்திலிருந்து
வந்த ஆசாரியர்கள் மட்டுமே எனது பரிசுத்
தமான இடத்தைக் கவனிக்கும் பொறுப்பை
எடுத்துக்கொண்டார்கள். எனவே சாதோக்
கின் குடும்பத்தார் மட்டுமே எனக்கு
காணிக்கை கொண்டுவரவேண்டும். அவர்
கள் எனக்கு முன்னே நின்று கொழுப்பையும்
இரத்தத்தையும் செலுத்துவார்கள்" எனது
கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறி
னார். 16 "அவர்கள் எனது பரிசுத்தமான
இடத்திற்குள் நுழைவார்கள். எனக்குச்
சேவை செய்ய என் பீடத்தின் அருகில்
வருவார்கள். நான் அவர்களுக்குக் கொடுத்த
பொருள்களைக் கவனித்துக்கொள்வார்கள்.
17 அவர்கள் உள் பிரகாரத்தின் வாசலுக்குள்
நுழைகிறபோது சணல்நூல் ஆடைகளை
அணிந்துகொள்வார்கள். அவர்கள் உட்பி
ரகாரத்தின் வாசல்களிலும் உள்ளேயும்
ஆராதனை செய்யும்போது ஆட்டுமயிர்
ஆடையை அணியக்கூடாது. 18 அவர்கள்
தம் தலையில் சணல் தலைப்பாகை அணி
வார்கள். அவர்கள் தம் இடைகளில் சணல்
நூல் உள்ளாடைகளைக் கட்டுவார்கள்.
வியர்வை உண்டாக்கத்தக்க எந்த ஆடை
களையும் அவர்கள் அணிய மாட்டார்கள்.

[19]அவர்கள் வெளிப்பிரகாரமாகிய புறமுற்றத்
திலுள்ள ஜனங்களிடம் போகும்போது,
தாங்கள் ஆராதனை செய்யும்போது அணிந்
திருந்த ஆடைகளைக் கழற்றி விடுவார்கள்.
அவற்றை பரிசுத்த அறைகளில் வைப்பார்
கள். பிறகு அவர்கள் வேறு ஆடைகளை
அணிவார்கள், இவ்வாறு அவர்கள் தம்
பரிசுத்தமான ஆடைகளை ஜனங்கள் தொட
விடமாட்டார்கள்.
[20]“இந்த ஆசாரியர்கள் தம் தலைகளைச்
சிரைக்கவோ தங்கள் மயிரை நீளமாக
வளர்க்கவோ மாட்டார்கள். இவ்வாறு செய்
தால் அவர்கள் சோகமாய் இருப்பதாகக்
காட்டும். கர்த்தருக்குச் சேவை செய்யும்
போது மகிழ்ச்சியாக இருக்க வேண்டும்.
எனவே அவர்கள் தங்கள் தலைமுடியைக்*
கத்தரித்துக்கொள்ள வேண்டும். [21]அவர்கள்
உட்பிரகாரத்திற்குள் செல்லும்போது எந்த
ஆசாரியரும் திராட்சைரசம் குடித்திருக்கக்
கூடாது. [22]ஆசாரியர்கள் ஒரு விதவை
யையோ, விவாகரத்து பெற்றவளையோ
மணக்கக்கூடாது. அவர்கள் இஸ்ரவேல்
வம்சத்திலுள்ள கன்னிப் பெண்களையோ
அல்லது மரித்துப்போன ஆசாரியனின் வித
வையையோ மாத்திரம் மணந்துகொள்ள
லாம்.
[23]“அதோடு ஆசாரியர்கள் ஜனங்களுக்குப்
பரிசுத்தமானவை எவை என்றும் பரிசுத்த
மற்றவை எவை என்றும் கற்பிக்க
வேண்டும். அவர்கள், எனது ஜனங்கள்
சுத்தமானவை எவையென்றும், சுத்தமற்
றவை எவை என்றும் தெரிந்துகொள்ள
உதவவேண்டும். [24]ஆசாரியர்கள் நீதிமன்
றங்களில் நீதிபதிகளாக இருப்பார்கள்.
எனவே, ஜனங்களை அவர்கள் நியாயம்
தீர்க்கும்போது எனது சட்டங்களைக்
கடைப்பிடிக்க வேண்டும். எனது அனைத்து
சிறப்புப் பண்டிகைகளிலும் அவர்கள் என்
நியாயப்பிரமாணங்களையும் கட்டளைகளை
யுமே கடைப்பிடிக்க வேண்டும். அவர்கள்
எனது சிறப்பு ஓய்வு நாட்களை மதித்து
அவற்றைப் பரிசுத்தமாகக் கைக்கொள்ள
வேண்டும். [25]அவர்கள் மரித்த உடல்களுக்கு
அருகில் போய்த் தங்களைத் தீட்டுப்படுத்திக்
கொள்ளக்கூடாது, ஆனால் மரித்துப்போன
வர்கள் ஆசாரியரின் தந்தை, தாய், மகன்,
மகள், சகோதரன் அல்லது மணமாகாத
சகோதரியாக இருந்தால் அவர்கள் அதன்
மூலம் தீட்டடைந்தாலும் அதன் அருகில்
போகலாம். [26]அது ஆசாரியனை தீட்டுப்
படுத்தும். பிறகு, ஆசாரியன் தன்னைச்
சுத்தப்படுத்திக்கொண்ட பிறகு ஏழு நாட்கள்
காத்திருக்க வேண்டும். [27]பிறகே அவனால்
பரிசுத்தமான இடத்திற்குத் திரும்பிப் போகமு
டியும். ஆனால் அவன் உட்பிரகாரத்திற்குள்
ஆராதனைக்குச் செல்லும் நாளில் அவன்
தனக்காகப் பாவப்பரிகாரப் பலியைக்
கொடுக்க வேண்டும்.” எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறினார்.
[28]“லேவியர்களுக்குரிய நிலங்களைப்
பற்றியது: நானே அவர்களின் சொத்து.
நீங்கள் இஸ்ரவேலில் லேவியர்களுக்கென்று
எந்தச் சொத்தும் கொடுக்க வேண்டாம்.
நானே இஸ்ரவேலில் அவர்களின் பங்கு.
[29]அவர்கள் உண்பதற்காக தானியக்கா
ணிக்கை, பாவப்பரிகாரப் பலி, குற்றநிவார
ணபலி ஆகியவற்றைப் பெறுவார்கள். இஸ்ர
வேல் ஜனங்கள் கர்த்தருக்கென்று கொடுக்
கும் அனைத்தும் அவர்களுக்கு உரியதாகும்.
[30]எல்லாவகை விளைச்சலிலும் உள்ள முதல்
அறுவடை ஆசாரியர்களுக்கு உரியதாகும்.
நீங்களும் உங்களது பிசைந்த மாவின்
முதல் பகுதியைக் கொடுப்பீர்கள். அது
உங்கள் வீட்டிற்கு ஆசீர்வாதத்தைக் கொண்டு
வரும். [31]ஆசாரியர்கள் இயற்கையாக மரித்
துப்போன எந்தப் பறவைகளையோ மிருகங்
களையோ உண்ணக்கூடாது. காட்டு மிருகங்
களால் துண்டுத் துண்டாகக் கிழித்தெ
றியப்பட்டவற்றையும் அவர்கள் உண்ணக்
கூடாது.

### பரிசுத்த பயன் பாட்டிற்காக நிலம் பிரிக்கப்படுதல்

45 “நீங்கள் சீட்டுப் போட்டு இஸ்ரவேல்
வம்சத்தாருக்காக நிலங்களைப் பங்கு
வைத்துகொள்ள வேண்டும். அந்த நேரத்தில்
நிலத்தின் ஒரு பகுதியைத் தனியாகப் பிரிக்க
வேண்டும். இது கர்த்தருக்குரிய பரிசுத்தமான
பகுதியாகும். அந்நிலம் 25,000 முழம் (8.3
மைல்) நீளமும் 20,000 முழம் (6.6 மைல்)
அகலமும் உடையதாக இருக்கவேண்டும்.
இந்நிலம் முழுவதும் பரிசுத்தமானதாக இருக்
கும். [2]500 முழம் (875’) சதுரமுள்ள இடம்
ஆலயத்துக்குரியது, 50 முழம் (875’) அகல
முடைய திறந்த வெளி இடம் ஆலயத்தைச்
சுற்றிலும் இருக்கவேண்டும். [3]பரிசுத்தமான
இடத்தில் 25,000 முழம் (8.3மைல்) நீளமும்
10,000 முழம் (3.3 மைல்) அகலமும் கொண்ட
இடம் அளந்தெ டுக்கவேண்டும். அந்தப்
பகுதியில் ஆலயம் அமைக்கவேண்டும்.
ஆலயப்பகுதி மிகவும் பரிசுத்தமான இடமாக
இருக்கும்.
[4]“நிலத்தின் பரிசுத்தமான பகுதியானது,
ஆசாரியர்களுக்கும் கர்த்தருக்கு அருகில்
போய் ஆராதனை செய்யும் ஆலயப் பணி
யாளர்களுக்கும் உரியது. இது ஆசாரியர்க
ளின் வீடுகளுக்கும் ஆலயத்திற்கும் உரியது.
[5]இன்னொரு பகுதி 25,000 முழம் (8.3
மைல்) நீளமும் 10,000 முழம் (3.3. மைல்)
அகலமும் உடையதாக ஆலயத்தில் பணி
புரியும் லேவியர்களுக்காக இருக்கவேண்டும்.

---

**தலைமுடியை** தலைமுடியை சிரைப்பது வருத்தத்திற்கும், துக்கத்திற்கும் அறிகுறி. ஆசாரியர் கர்த்தரைச் சேவிப்பதில் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்த வேண்டும்.

இந்த நிலமும் லேவியர்கள் வாழ்வதற்குரிய
இடமாக இருக்கும்.
6“நீங்கள் நகரத்துக்கென்று 5,000 முழம்
(1.6 மைல்) அகலமும் 25,000 முழம் (8.3
மைல்) நீளமும் கொண்ட இடம் தர
வேண்டும். இது பரிசுத்தமான பகுதிக்கு
அருகிலேயே இருக்க வேண்டும். இது
இஸ்ரவேல் வம்சத்தார் அனைவருக்கும்
உரியதாக இருக்கும். 7அதிபதி பரிசுத்தமான
பகுதியின் இருபக்கங்களிலுள்ள நிலத்தையும்
நகரத்திற்குச் சொந்தமான நிலத்தையும் பெறு
வான். இது பரிசுத்தமான பகுதிக்கும்
நகரப்பகுதிக்கும் இடையில் இருக்கும். இது
வம்சத்தாருக்குரிய பகுதியின் பரப்பைப்
போன்ற அளவுடையதாக இருக்க வேண்டும்.
இதன் நீளம் மேல் எல்லை தொடங்கி
கீழ் எல்லை மட்டும் இருக்கும். 8இது
இஸ்ரவேலில் அதிபதியின் சொத்தாக இருக்
கும். எனவே அதிபதி எனது ஜனங்களை
என்றைக்கும் துன்பப்படுத்த வேண்டிய
தேவையில்லை. ஆனால், அவர்கள் அந்த
நிலத்தை இஸ்ரவேல் வம்சத்தாருக்கு அவர்
களின் கோத்திரங்களுக்குத் தக்கதாகக்
கொடுப்பார்கள்!”
9எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறினார்: “போதும் இஸ்ரவேல்
அதிபதிகளே! கொடூரமாக இருப்பதை நிறுத்
துங்கள்! ஜனங்களிடம் கொள்ளையடிப்
பதை நிறுத்துங்கள்! நேர்மையாக இருங்கள்.
நன்மையைச் செய்யுங்கள். என் ஜனங்களை
வீட்டை விட்டு வெளியேறும்படி வற்புறுத்
தாதீர்கள்!” எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறினார்.
10“ஜனங்களை ஏமாற்றுவதை விடுங்கள்.
சரியான படிக்கற்களையும் அளவு கோல்க
ளையும் பயன்படுத்துங்கள்! 11மரக்காலும்
அளவுகுடமும் ஒரே அளவாய் இருக்கட்டும்.
மரக்கால் கலத்திலே பத்தில் ஒரு பங்கும்
அளவுக்குடம் கலத்திலே பத்தில் ஒரு பங்கும்
பிடிக்கட்டும். கலத்தின்படியே அதன் அளவு
நிர்ணயிக்கப்படட்டும். 12ஒரு சேக்கல் இருபது
கேரா, ஒரு மினா 60 சேக்கலுக்கு இணை
யாக வேண்டும். 20 சேக்கலுடன் 25
சேக்கலைச் சேர்த்து, அதோடு 15 சேக்கலைச்
சேர்த்தால், அதற்கு இணையாக வேண்டும்.
13“இது நீங்கள் கொடுக்க வேண்டிய சிறப்
புக் காணிக்கை.
ஒரு கலம் (6 சேக்கல்) கோதுமையிலே
ஒரு மரக்காலில் 1/6 பங்கையும் (14
கோப்பைகள்), ஒரு கலம் (6 சேக்கல்)
வாற்கோதுமையிலே ஒரு மரக்காலில் 1/6
பங்கைப் (14 கோப்பைகள்) படைக்க
வேண்டும்;
14அளவு குடத்தால் அளக்கவேண்டிய
எண்ணெயின் கட்டளை; பத்து குடம்
பிடிக்கிற கலத்துக்குச் சரியான ஒரு ஜாடி
(55 கேலன்) எண்ணெயில் 1/10 பங்கை (1/2
கேலன்) படைக்க வேண்டும்.
15இஸ்ரவேல் நாட்டிலே நல்ல மேய்ச்சல்
மேய்கிற மந்தையிலே 200 ஆடுகளில் ஒரு
ஆடு கொடுக்க வேண்டும்.
“இச்சிறப்பு காணிக்கை தானிய காணிக்
கைக்காகவும் தகனபலியாகவும் சமாதானக்
பலியாகவும் அமையும். இக்காணிக்கைகள்
ஜனங்களைப் பரிசுத்தப்படுத்த உதவும்”
எனது கர்த்தராகிய ஆண்டவர் இதனைக்
கூறினார்.
16“நாட்டிலுள்ள ஒவ்வொருவனும் அதிப
திக்கு இக்காணிக்கைகளைக் கொடுக்க
வேண்டும். 17ஆனால் அதிபதி சிறப்பான
பரிசுத்த விடுமுறைகளுக்குத் தேவையான
பொருட்களைக் கொடுக்க வேண்டும்.
அதிபதி தகனபலிகள் தானியக்காணிக்கை
கள், பானங்களின் காணிக்கைகள் ஆகிய
வற்றைக் கொடுக்கவேண்டும். இவற்றைப்
பண்டிகை நாட்களிலும் அமாவாசை
(மாதப்பிறப்பு) நாட்களிலும், ஓய்வு நாட்
களிலும், இஸ்ரவேல் குடும்பத்தாரின் மற்ற
எல்லாச் சிறப்புப் பண்டிகை நாட்களிலும்
கொடுக்க வேண்டும். அதிபதி பாவப்பரி
காரக் பலிகளையும், தானியக் காணிக்கை
களையும், தகனபலிகளையும், சமாதான பலி
களையும் இஸ்ரவேல் வம்சத்தாரை பரிசுத்தப்
படுத்துவதற்காகக் கொடுக்கவேண்டும்.”
18எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: “முதல் மாதத்தின், முதல்
நாளில், பழுதற்ற ஒரு இளங்காளையை
எடுக்க வேண்டும். நீங்கள் அதனை
ஆலயத்தைப் பரிசுத்தப் படுத்துவதற்காகப்
பயன்படுத்தவேண்டும். 19ஆசாரியன் பாவப்
பரிகார இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து
ஆலயத்தின் வாசல் தூண்களிலும் பலி
பீடத்தின் சட்டத்து நான்கு மூலைகளிலும்
உட்பிரகாரத்தின் வாசல் நிலைகளிலும் பூச
வேண்டும். 20நீங்கள் இதேபோன்று மாதத்
தின் ஏழாவது நாளிலும் தவறுதலாகவோ
அல்லது தெரியாமலோ பாவம் செய்த
ஒருவனுக்காகச் செய்யலாம். இவ்வாறு
நீங்கள் ஆலயத்தைப் பரிசுத்தப்படுத்தலாம்.

### பஸ்கா பண்டிகையின் போது கொடுக்கவேண்டிய காணிக்கைகள்

21“முதல் மாதத்தின் 14வது நாளன்று
நீங்கள் பஸ்காவைக் கொண்டாடவேண்டும்.
இந்த நேரத்தில் புளிப்பில்லாத அப்பப்பண்
டிகை தொடங்கும். அப்பண்டிகை ஏழுநாட்
கள் தொடரும். 22அந்த நேரத்தில் அதிபதி
தானே ஒரு இளங்காளையை அவனுக்காக
வும், எல்லா இஸ்ரவேல் ஜனங்களுக்காகவும்
பாவப்பரிகாரம் செய்வதற்காகக் கொடுப்
பான். 23ஏழு நாள் பண்டிகையின் போது
அதிபதி ஏழு இளங்காளைகளையும் ஏழு
ஆட்டுக்கடாக்களையும் பழுதற்றதாகக்
கொடுக்க வேண்டும். அவை கர்த்தருக்குரிய
தகனபலியாக அமையும். ஏழு நாள் பண்டி

கையில் ஒவ்வொரு நாளும் ஒரு இளங்
காளையைக் கொடுப்பான். அவன் ஒவ்
வொரு நாளும் ஒரு ஆட்டுக்கடாவை பாவப்
பரிகார பலியாக கொடுப்பான். 24ஒவ்வொரு
காளையோடும் ஒரு மரக்கால் மாவையும்
ஒவ்வொரு ஆட்டுக்கடாவோடு ஒரு எப்பா
வாற்கோதுமை மாவையும் கொடுப்பான்.
அதிபதி ஒருபடி (1 கேலன்) எண்ணெயையும்
கொடுப்பான். 25ஏழாம் மாதம் பதினைந்தாம்
நாளில் தொடங்குகிற கூடாரப் பண்டி
கையிலே அவன் அப்படியே ஏழு நாளும்
அதற்குச் சரியானபடிச் செய்ய வேண்டும்.
அப்பலிகள் பாவப்பரிகாரப் பலியாகவும்
தகனபலியாகவும் தானியக் காணிக்கையா
கவும் எண்ணெய் காணிக்கையாகவும்
அமையவேண்டும்.”

## அதிபதியும் பண்டிகைகளும்

46 எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றைக் கூறுகிறார். “உட்பிரகாரத்
தின் கிழக்கு வாசல் ஆறு வேலை நாட்க
ளிலும் பூட்டப்பட்டிருக்கும், அது ஓய்வு
நாளிலும், அமாவாசை நாளிலும் திறக்கப்
படும். 2அப்பொழுது அதிபதி வெளிவாசல்
மண்டபத்தின் வழியாக நுழைந்து வாசல
ருகில் நிற்பான். பிறகு ஆசாரியர்கள் அதிபதி
யுடைய தகன பலிகளையும், சமாதான
பலிகளையும் படைப்பார்கள். அதிபதி
வாசல்படியிலேயே தொழுகை செய்வான்.
பிறகு அவன் வெளியேறுவான். அந்த
வாசல் மாலைவரை பூட்டப்படாமல் இருக்
கும். 3பொது ஜனங்கள் ஓய்வு நாளிலும்
அமாவாசை நாளிலும் அந்த வாசலின்
நடையிலே கர்த்தருடைய சந்நிதியில்
தொழுகை நடத்துவார்கள்.
4“அதிபதி ஓய்வு நாளிலே கர்த்தருக்குப்
பலியிடும் தகனபலியைத் தருவான். அவன்
பழுதற்ற ஆறு ஆட்டுக்குட்டிகளும் பழுதற்ற
ஒரு ஆட்டுக்கடாவுமே தருவான். 5ஆட்டுக்
கடாவோடு தானியக் காணிக்கையாக ஒரு
மரக்கால் மாவைக் கொடுக்க வேண்டும்.
ஆட்டுக் குட்டிகளோடே தானியக் காணிக்
கையாக தன்னால் முடிந்தவரை கொடுக்க
வேண்டும். அவன் ஒவ்வொரு மரக்கால்
மாவோடே ஒரு படி எண்ணெயையும்
கொடுக்கவேண்டும்.
6“அமாவாசை நாளிலோ, பழுதற்ற இளங்
காளையை அவன் கொடுக்க வேண்டும்.
அவன் பழுதற்ற ஆறு ஆட்டுக் குட்டிகளை
யும் ஒரு ஆட்டுக்கடாவையும் பலிகொடுக்க
வேண்டும். 7தானியக் காணிக்கையாக
இளங்காளையோடு ஒரு மரக்கால் மாவைக்
கொடுக்கவேண்டும். அவன் ஆட்டுக் குட்டி
களோடு தானியக்காணிக்கையை தனக்கு
முடிந்தவரை கொடுக்கவேண்டும். அவன்
ஒவ்வொரு மரக்கால் மாவோடு ஒருபடி
எண்ணெயையும் கொடுக்கவேண்டும்.
8அதிபதி வருகிறபோது, கிழக்கு வாசலின்
மண்டபத்தின் வழியாய் நுழைந்து அதன்
வழியாகத் திரும்பிப்போக வேண்டும்.
9பொது ஜனங்கள் சிறப்புப் பண்டிகை
நாட்களில் கர்த்தருடைய சந்நிதியில் வரும்
போது, தொழுகை செய்ய வடக்கு வாசல்
வழியாக வந்து தெற்கு வாசல் வழியாகப்
போக வேண்டும். அவன் தான் நுழைந்த
வாசல் வழியாக திரும்பிப் போகாமல்
தனக்கு எதிரான வழியாய்ப் புறப்பட்டுப்
போகவேண்டும். 10அவர்கள் நுழையும்போது
அதிபதி அவர்கள் நடுவிலே அவர்களோடு
கூட நுழைய வேண்டும். அவர்கள் புறப்
படும்போது அவனும் அவர்களோடு கூடப்
புறப்பட்டு போக வேண்டும்.

11“பண்டிகைகளிலும் குறிக்கப்பட்ட சிறப்
புக் கூட்டங்களிலும் அவன் படைக்கும்
தானியக் காணிக்கையாவது: அவன் ஒவ்
வொரு இளங்காளையோடு ஒரு மரக்கால்
மாவு கொடுக்கவேண்டும். ஒவ்வொரு
ஆட்டுக் கடாவோடும், ஒரு மரக்கால் மாவு
கொடுக்கவேண்டும். அவன் ஆட்டுக்குட்டிக
ளோடு அவனால் முடிந்தவரை தானியக்
காணிக்கையைக்கொடுக்கவேண்டும். அவன்
ஒவ்வொரு மரக்கால் மாவோடும் ஒரு படி
எண்ணெய் கொடுக்கவேண்டும்.
12“அதிபதி சுயவிருப்பக் காணிக்கையைக்
கர்த்தருக்குச் செலுத்தும்போது அது தகன
பலியாயிருக்கலாம், அல்லது சமாதான பலி
யாயிருக்கலாம். அல்லது சுயவிருப்பக்
காணிக்கையாயிருக்கலாம். அவனுக்குக்
கிழக்கு வாசல் திறக்கப்படவேண்டும். அப்
பொழுது அவன் ஓய்வு நாட்களில் செய்கி
றதுபோல தன் தகனபலியையும் சமாதான
பலியையும் செலுத்தி பின்பு புறப்பட
வேண்டும். அவன் புறப்பட்ட பின்பு வாசல்
பூட்டப்படவேண்டும்.

## தினசரி காணிக்கை

13“நீ ஒரு வயது நிரம்பிய பழுதற்ற
ஆட்டுக்குட்டியைக் கொடுப்பாய். இது ஒவ்
வொரு நாளும் கர்த்தருக்குத் தகன பலியாக
இருக்கும். நீ இதனை ஒவ்வொரு நாள்
காலையிலும் கொடுப்பாய். 14அதோடு ஒவ்
வொரு நாள் காலையிலும் நீ ஆட்டுக்
குட்டியோடு தானியக் காணிக்கையாக ஒரு
மரக்கால் மாவிலே 1/6 பங்கு (14 கோப்பை)
ஒரு படி எண்ணெயிலே 1/ 3 பங்கு (1/ 3
கேலன்) எண்ணெயை மாவைப் பிசைவதற்
காகவும் கொடுக்க வேண்டும். இது கர்த்த
ருக்குத் தினந்தோறும் கொடுக்க வேண்டிய
தானியக் காணிக்கையாகும். 15எனவே அவர்
கள் ஒவ்வொரு நாள் காலையிலும் தகன
பலியாக ஆட்டுக்குட்டியையும் எண்ணெ
யையும் தானியக் காணிக்கையையும்
செலுத்த வேண்டும்.”

### அதிபதிக்குரிய வாரிசுச் சட்டங்கள்

16கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக் கூறு
கிறார்: “ஒரு அதிபதி தனது நிலத்திலுள்ள
ஒரு பங்கைத் தன் மகன்களில் ஒருவனுக்குக்
கொடுத்தால் அது அம்மகனுக்குரியதாகும்.
அது அவனுடைய சொத்தாகும். 17ஆனால்
அவன் தன் அடிமைகளில் ஒருவனுக்குத்
தன் நிலத்தில் ஒரு பங்கைக் கொடுத்தால்
அது விடுதலையடையும் ஆண்டுவரை
(யூபிலிவரை) அவனுடையதாக இருக்கும்.
பிறகு, அது திரும்பவும் அதிபதியின் உட
மையாகும். அதிபதி மகன்களுக்கு மட்டுமே
அது உரியதாகும். அது அவர்களுடையதாக
இருக்கும். 18அதிபதி தன் ஜனங்களின்
நிலத்தை எடுத்துக்கொள்ள முடியாது. அல்
லது அவன் அவர்களைப் பலவந்தமாக
நிலத்தைவிட்டு வெளியேற்ற முடியாது.
அவன் தன் சொந்த நிலத்தையே தன்
மகன்களுக்கு கொடுக்க வேண்டும். இவ்வாறு
எனது ஜனங்கள் தம் நிலத்தை இழக்கும்படி
பலவந்தப் படுத்தப்படமாட்டார்கள்.”

### சிறப்பான சமயலறைகள்

19அம்மனிதன் வாசலின் பக்கத்தில் இருந்த
நடைவழியாய் என்னை அழைத்துப்
போனான். அவன் என்னை வடக்குக்கு
எதிரான ஆசாரியர்களுடைய பரிசுத்தமான
அறைகளுக்கு அழைத்துப்போனான். அங்கே
பாதைக்கு மேற்புறக் கடைசியில் ஒரு
இடம் இருப்பதைப் பார்த்தேன். 20அம்மனிதன்
என்னிடம் சொன்னான்: “இந்த இடம்தான்
ஆசாரியர்கள் குற்றநிவாரணப் பலியையும்
பாவப்பரிகார பலியையும்,தானியக் காணிக்
கையையும் சமைக்கிற இடம். ஏனென்றால்,
வெளிப்பிரகாரத்திலே கொண்டுபோய் இந்த
காணிக்கைகளை ஜனங்களிடம் காட்ட
வேண்டிய தேவையில்லை. எனவே, அவர்
கள் பரிசுத்தமான இப்பொருட்களைப் பொது
ஜனங்கள் இருக்கிற இடத்திற்குக் கொண்டு
வரமாட்டார்கள்.”
21பிறகு, அம்மனிதன் என்னை வெளிப்
பிரகாரத்திற்கு அழைத்துக் கொண்டு
போனான். என்னைப் பிரகாரத்தின் நாலு
மூலைகளையும் கடந்து போகச் செய்தான்.
பெரிய முற்றத்தின் ஒவ்வொரு மூலையிலும்
சிறிய முற்றங்கள் இருப்பதைக் கண்டேன்.
22பிரகாரத்தின் நாலு மூலைகளிலும் வேலி
யடைக்கப்பட்ட சிறுபகுதி இருந்தது. ஒவ்
வொரு முற்றமும் 40 முழம் (70’) நீளமும்
30 முழம் (52’6”) அகலமும் உடையது.
நான்கு மூலைகளும் ஒரே அளவுடையதாக
இருந்தன. 23உள்ளே இந்த நாலு சிறு
முற்றங்களைச் சுற்றிலும் செங்கல் சுவர்கள்
இருந்தன. இந்தச் சுவர்களுக்குள் சமைப்பதற்
கான இடங்கள் கட்டப்பட்டிருந்தன. 24அம்
மனிதன் என்னிடம் சொன்னான்: “இவை,
ஜனங்கள் தரும் பலிகளை ஆலயத்தின்
வேலைக்காரர்கள் சமைக்கிற சமையலறை
கள்.”

### ஆலயத்திலிருந்து வெளியே வழிந்தோடும் தண்ணீர்

47 அம்மனிதன் என்னை ஆலயத்தின்
வாசலுக்குத் திரும்ப வரச்செய்தான்.
ஆலயத்தின் கிழக்குவாசலின் கீழிருந்து தண்
ணீர் கிழக்கே ஓடுவதைப் பார்த்தேன்.
ஆலயத்தின் முகப்பு கிழக்கு நோக்கியிருந்தது.
அந்தத் தண்ணீர் ஆலயத்தின் வலதுபுறமாய்
பலிபீடத்திற்குத் தெற்கே பாய்ந்தது. 2அம்
மனிதன் என்னை வடக்கு வாசல் வழியாக
வெளியே நடத்திச் சென்றான். அவன்
என்னை வெளியே கீழ்த்திசையின் புறவா
சல் வரை சுற்றி நடத்திக்கொண்டு போனான்.
அங்கே தண்ணீர் வாசலின் தெற்கே
பாய்ந்தது.
3அம்மனிதன் தனது கையில் நூலைப்
பிடித்துக்கொண்டு கிழக்கே நடந்தான்.
அவன் 1000 முழம் (1/3 மைல்) அங்கே
அளந்தான். பிறகு அவன் என்னிடம் அந்த
இடத்தில் தண்ணீரைக் கடக்கச் சொன்னான்.
அத்தண்ணீர் என் கணுக்கால் அளவுக்கு
இருந்தது. 4அம்மனிதன் இன்னும் 1000
முழம் (1/3 மைல்) அளந்தான். அங்கே
அவன் என்னைத் தண்ணீரைக் கடக்கும்
படிச் சொன்னான். அங்கே தண்ணீர் முழங்
கால் அளவாய் இருந்தது. பிறகு, அவன்
இன்னொரு 1000 முழம் (1/3 மைல்) அளந்து,
அந்த இடத்தில் என்னிடம் தண்ணீ
ரைக் கடக்கும்படிச் சொன்னான். அங்கே
தண்ணீர் என் இடுப்பளவிற்கு இருந்தது.
5அம்மனிதன் இன்னும் 1000 முழம் (1/3
மைல்) அளந்தான். ஆனால் அங்கே தண்ணீர்
கடக்க முடியாத அளவிற்கு ஆழமாக
இருந்தது. அது ஆறு போல இருந்தது.
அந்தத் தண்ணீர் நீந்துகிற அளவிற்கு ஆழமா
யிருந்தது. 6பிறகு அம்மனிதன் என்னிடம்,
“மனுபுத்திரனே, நீ பார்த்ததை உன்னிப்பாகக்
கவனித்தாயா?” என்றான்.
பிறகு என்னை, நதியோரமாகத் திரும்ப
நடத்திக்கொண்டு போனான். 7நான் நடந்து
வரும்போது இதோ நதியோரத்தில் இக்கரை
யிலும் அக்கரையிலும் அநேக மரங்கள்
இருந்தன. 8அம்மனிதன் என்னிடம், “இந்தத்
தண்ணீர் புறப்பட்டு கிழக்கே போய், கீழே
அரபா பள்ளத்தாக்கிற்கு போகிறது. 9இந்தத்
தண்ணீர் சவக்கடலுக்குள் பாயும். அதனால்
அக்கடலிலுள்ள தண்ணீர் புத்துயிரும்
சுத்தமும் அடையும். இத்தண்ணீரில் ஏராள
மான மீன்கள் உள்ளன. இந்த ஆறு
போகிற இடங்களில் எல்லாம் எல்லா
வகை மிருகங்களும் உள்ளன. 10என்கேதி
முதல் எனெக்லாயிம் வரை மீன் பிடிக்
கிறவர்கள் ஆற்றங்கரையில் நிற்பதை நீ
பார்க்கமுடியும். அவர்கள் தம் வலையை
வீசி பலவகை மீன்கள் பிடிப்பதை நீ

பார்க்கமுடியும். சவக்கடலிலுள்ள மீன்கள்
மத்திய தரைக்கடலில் உள்ள மீன்களைப்
போன்று பலவகைகளாகவும் மிகுதியாகவும்
இருக்கும். [11]ஆனாலும் அதனுடைய உளை
யான பள்ளங்களும் மேடுகளும் வளம்
பெறாமல் உப்பு நிலமாகவே விடப்படும்.
[12]எல்லாவகையான பழமரங்களும் ஆற்றின்
இருகரைகளிலும் வளரும். அவற்றின்
இலைகள் காய்ந்து உதிர்வதில்லை. அம்மரங்
களில் பழங்கள் பழுப்பது நிற்பதில்லை.
ஒவ்வொரு மாதமும் மரங்களில் பழங்கள்
வரும். ஏனென்றால், இம்மரங்களுக்கான
தண்ணீர் ஆலயத்திலிருந்து வருகின்றது.
அம்மரங்களின் கனிகள் உணவாகவும் அவற்
றின் இலைகள் மருந்தாகவும் பயன்படும்."

### கோத்திரங்களுக்கான நிலப் பாகுபாடுகள்

[13]"எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "இஸ்ரவேலின் 12
கோத்திரங்களுடைய எண்ணிக்கைப்படியே
நாட்டில் குறிக்கவேண்டிய எல்லையாவது:
யோசேப்பு இரண்டு பங்குகளைப் பெறு
வான். [14]நீ தேசத்தை சமமாகப் பங்கிட
வேண்டும். நான் இந்தத் தேசத்தை உங்களது
முற்பிதாக்களுக்குத் தருவதாக வாக்களித்
தேன். ஆகையால் இந்தத் தேசத்தை உங்க
ளுக்குக் கொடுப்பேன்.
[15]தேசத்தின் எல்லையாவது: வடபுறம்
மத்தியதரைக் கடலில் இருந்து தொடங்கி
சேதாதுக்குப்போகிற எத்லோன் வழியாய்
இருக்கிறது. [16]ஆமாத்தும் பேரொத்தாவும்
தமஸ்குவின் எல்லைக்கும் ஆமாத்தின் எல்
லைக்கும் நடுவான சிப்ராயிமும் ஆப்ரானின்
எல்லையோடே சேர்ந்த ஆத்சார் அத்தீகோ
னுமானது. [17]அப்படியே எல்லை கடலி
லிருந்து தமஸ்குவின் வட எல்லையான
ஆத்சார் ஏனான் மற்றும் ஆமாத்திற்குப்
போகும். இது வடபுறத்தில் இருக்கும்.
[18]"கிழக்குப்பக்கத்தில்,எல்லையானது ஆத்
சார் ஏனானிலிருந்து ஆப்ரானுக்கும் தமஸ்கு
வுக்கும் இடையில் சென்று யோர் தான்
நதியின் ஓரமாக கீலேயாத்துக்கும் இஸ்ரவேல்
தேசத்துக்கும் இடையில் கிழக் குக்கலுக்குச்
சென்று தாமார்வரை செல்லுகிறது. இது
கிழக்கு எல்லையாக இருக்கும்.
[19]"தென் புறத்தில், எல்லையானது, தாமார்
தொடங்கி மெரிபா காதேஷின் பாலைவனச்
சோலை வரை இருக்கும். பிறகு இது
எகிப்து ஆற்றிலிருந்து மத்தியதரை கடல்
வரை போகும். இது தென்னெல்லையாக
இருக்கும்.
[20]"மேற்கு புறத்தில், மத்தியத்தரைக்கடல்
லேபோ ஆமாத்தின் முன் இருக்கும் எல்லா
நிலப்பரப்புவரையும் மேற்கெல்லையாக
இருக்கும்.
[21]"எனவே நீங்கள் இஸ்ரவேல் கோத்திரங்க
ளின்படியே உங்களுக்குள்ளே தேசத்தைப்
பங்கிட்டுக்கொள்வீர்களாக. [22]நீங்கள் நிலத்
தைச் சொத்தாக, உங்களுக்கும், தங்கள்
பிள்ளைகளுடன் உங்கள் மத்தியில் வாழும்
அந்நியர்களுக்கும் பங்குபோடுவீர்கள். அந்த
அந்நியர்கள் ஜனங்கள் இஸ்ரவேலில் பிறந்
தவர்கள் போலவே ஜனங்கள் ஆவார்கள்.
இஸ்ரவேலின் கோத்திரங்களின் மத்தியில்
நீங்கள் அவர்களுக்குக் கொஞ்சம் நிலத்தை
பங்குபோடுவீர்கள். [23]எந்தக் கோத்திரத்தோடு
அந்த அந்நியன் தங்கியிருக்கிறானோ அவர்
கள் அவனுக்குரிய கொஞ்சம் நிலத்தைக்
கொடுக்கவேண்டும்." எனது கர்த்தராகிய
ஆண்டவர் இவற்றைக் கூறினார்.

### இஸ்ரவேலின் கோத்திரங்களுக்குரிய நிலம்

48 [1-7]வடக்கெல்லையானது, மத்தியதரைக்
கடலிலிருந்து கிழக்கு நோக்கி எத்
லோன் வழியாக ஆமாத்துக்குப் போகும்.
பிறகு அது ஆத்சார் ஏனானுக்குப் போகும்.
இது தமஸ்குவுக்கும் ஆமாத்துக்கும் இடை
யிலுள்ள எல்லை. கிழக்கு எல்லையிலிருந்து
மேற்கு எல்லைவரை இத்தேசம் கோத்திரங்
களுக்கு உரியதாகும். வடக்கிலிருந்து தெற்கு
வரை இப்பகுதி தாண், ஆசேர், நப்தலி,
மனாசே, எப்பிராயீம், ரூபன், யூதா ஆகிய
கோத்திரங்களுக்குரியதாகும்.

### தேசத்தின் சிறப்பான பகுதி

[8]"தேசத்தின் அடுத்த பகுதியானது சிறப்
புப் பயன்பாட்டுக்கு உரியதாகும். இது
யூதா நிலத்தின் தென்பகுதியாகும். இப்பகுதி
25,000 முழம் (8.3 மைல்) நீளமாக வடக்கி
லிருந்து தெற்குவரை உள்ளது. கிழக்கி
லிருந்து மேற்காக இருக்கிற பங்குகளில்
மற்றக் கோத்திரங்களுக்குச் சொந்தமான
நிலத்தின் அகல அளவே இருக்கும். இந்தப்
பகுதியின் நடுவில் ஆலயம் இருக்க வேண்
டும். [9]நீங்கள் இந்தப் பங்கைக் கர்த்தருக்கு
அர்ப்பணிக்க வேண்டும். இது 25,000 முழம்
(8.3 மைல்) நீளமும் 20,000 முழம் (6.6
மைல்) அகலமும் உடையதாக இருக்க
வேண்டும். [10]இத்தனியான பகுதி ஆசாரியர்
களுக்கும் லேவியர்களுக்கும் பங்கிட்டுக்
கொடுக்கப்படவேண்டும்.
"ஆசாரியர்கள் இதன் ஒரு பகுதியைப்
பெறுவார்கள். இப்பகுதி 25,000 முழம் (8.3
மைல்) நீளமாக வடபுறத்திலும் 10,000
முழம் (3.3 மைல்) அகலமாக மேற்கு
புறத்திலும் 10,000 முழம் (3.3 மைல்) அக
லமாக கிழக்குப் புறத்திலும் 25,000 முழம்
(8.3 மைல்) நீளமாக தெற்கு புறத்திலும்
இருக்கும். இப்பகுதியின் நடுவில் கர்த்த
ருடைய ஆலயம் அமைக்கப்படும். [11]இப்பகுதி
சாதோக்கின் சந்ததிகளான ஆசாரியர்களுக்கு
உரியது. இவர்கள் எனது பரிசுத்தமான
ஆசாரியர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.
ஏனென்றால், இஸ்ரவேலின் ஜனங்கள் வழி
தப்பிப்போகையில், லேவியர் வழி தப்பிப்

போனது போன்று சாதோக்கின் குடும்பம்
போகவில்லை. 12நிலத்தின் இந்தப் பரிசுத்
தமான பகுதியிலிருக்கும் இந்தச்சிறப்பான
பங்கானது ஆசாரியர்களுக்குரியது. இது
லேவியரின் நிலத்திற்குப் பக்கத்தில் இருக்
கும்.
13“ஆசாரியர்களின் பங்குக்கு அடுத்து
லேவியரின் பங்கு இருக்கும். அது 25,000
முழம் (8.3 மைல்) நீளமும் 10,000 முழம்
(3.3 மைல்) அகலமும் உடையது. அவர்கள்
25,000 முழம் (8.3 மைல்) நீளமும் 20,000
முழம் (6.6 மைல்) அகலமும் உடைய
முழு நீளமும் அகலமும் உள்ள நிலத்தைப்
பெறுவார்கள். 14லேவியர்கள் இந்தப் பங்கை
விற்கவோ மாற்றவோ முடியாது. அவர்கள்
இதனை மற்றவர்களுக்குக் கொடுக்கவும்
முடியாது! ஏனென்றால், இப்பகுதி கர்த்தருக்
குரியது. இது தனிச் சிறப்புடையது. இது
தேசத்தின் சிறந்த பகுதியாக இருக்கும்.

### நகரச் சொத்திற்குப் பங்குகள்

15“5,000 முழம் (1.6 மைல்) அகலமும் 25,000
முழம் (8.3 மைல்) நீளமும் கொண்ட
நிலப்பகுதி ஆசாரியர்களுக்காகவும் லேவியர்
களுக்காகவும் கொடுத்த நிலத்தின் மீதியாகும்.
இது நகரத்துக்கும் மிருகங்களின் மேய்ச்ச
லுக்கும் வீடுகள் கட்டுவதற்கும் உதவும்
போது ஜனங்கள் இதனைப் பயன்படுத்தலாம்.
இதன் மத்தியில் நகரம் அமையும். 16இவை
தான் நகரத்தின் அளவுகள்: வடப்பக்கம்
4,500 முழம் (1.5 மைல்): தென் பக்கம்
4,500 முழம் (1.5 மைல்). கிழக்குப் பக்கம்
4,500 முழம் (1.5 மைல்). மேற்குப் பக்கம்
4,500 முழம் (1.5 மைல்). 17நகரத்தில் புல்வெளி
இருக்கும். இது 250 முழம் (437’6”) வடக்கு
பக்கத்திலும், 250 முழம் (437’6”) தெற்குப்
பக்கத்திலும், 250 முழம் (437’6”) கிழக்குப்
பக்கத்திலும் 250 முழம் (437’6”) மேற்குப்
பக்கத்திலும் இருக்கும். 18பரிசுத்தமான
பரப்பிற்குப் பக்கம் ஓடும் நீள அளவு
எவ்வளவு விடப்பட்டிருக்கிறதோ அது
10,000 முழம் (3.3 மைல்) கிழக்கிலும்
10,000 முழம் (3.3 மைல்) மேற்கிலும்
இருக்கும். இது பரிசுத்தமான பரப்பிற்கு
பக்கவாட்டிலிருக்கும். இந்நிலத்தில் நகர
வேலைக்காரர்களுக்காக உணவு விளையும்.
19நகர வேலைக்காரர்கள் இந்த நிலத்தை
உழுவார்கள். அவர்கள் எல்லா கோத்திரங்
களிலிருந்தும் இருப்பார்கள்.
20“இத்தனிச் சிறப்புகுரிய பகுதி சதுரமாக
இருக்கும். இது 25,000 முழம் (8.3 மைல்)
நீளமும் 25,000 முழம் (8.3 மைல்) அகலமும்
உடையது. இதன் ஒரு பகுதி ஆசாரியர்க
ளுக்கும் இன்னொரு பகுதி லேவியர்களுக்கும்
உரியதாகும். ஒரு பகுதி நகரத்திற்குரியது.
21-22“ஒரு பகுதி அதிபதிக்குரியது. அது
சதுரமாயிருக்கும் 25,000 முழம் நீளமும்
25,000 முழம் அகலமுமானது. சிறப்பான
நிலத்தின் ஒரு பகுதி ஆசாரியருக்குரியதும்.
ஒரு பகுதி லேவியருக்குமாகும். இப்பரப்பின்
நடுவில் ஆலயம் இருக்கிறது. மீதியுள்ள
நிலப்பகுதி நாட்டின் அதிபதிக்கு உரியதா
கும். அதிபதி பென்யமீனின் நிலத்திற்கும்
யூதா நிலத்திற்கும் இடைப்பட்ட பகுதியைப்
பெற்றுக்கொள்வான்.
23-27“சிறப்பான பகுதிக்குத் தெற்கே உள்ள
பகுதி யோர்தான் ஆற்றுக்கு கிழக்குப்
பகுதியில் வாழும் கோத்திரங்களுக்கு உரிய
தாகும். ஒவ்வொரு கோத்திரமும் கிழக்கு
எல்லையிலிருந்து மத்தியதரைக் கடல்
வரைக்கும் வடக்கும் தெற்கும் உள்ள
பகுதியில் தம் பிரிவைப் பெறுவார்கள்.
பென்யமீன், சிமியோன், இசக்கார், செபு
லோன், காத் ஆகியோர் வடக்கிலிருந்து
தெற்குவரையுள்ள கோத்திரங்களாவார்கள்.
28“காத்தின் நிலப்பகுதிக்கு தெற்கு எல்லை
யானது தாமாரில் தொடங்கி மெரிபா-
காதேஷ் பாலைவனச்சோலை வழியாக
எகிப்தின் சிற்றாறு வழியாக மத்தியதரைக்
கடல்வரை போகும். 29அந்த நிலப்பகுதிதான்
இஸ்ரவேலின் கோத்திரங்களாகிய நீங்கள்
பங்கிடப் போகும் பகுதி. ஒவ்வொரு கோத்
திரமும் பெறப்போகும் பகுதியும் இதுதான்!”
எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்றைக்
கூறினார்!

### நகரத்தின் வாசல்கள்

30“இவை நகரத்தின் வாசல்களாகும். இவ்
வாசல்கள் இஸ்ரவேல் கோத்திரங்களின்
பெயர்களைப் பெறும்.
“நகரத்தின் வட பகுதி 4,500 முழம்
(1.5 மைல்) நீளம் உடையது. 31அங்கே
மூன்று வாசல்கள் இருக்கும்: அவை ரூப
னின் வாசல், யூதாவின் வாசல், லேவியின்
வாசல்.
32“நகரத்தின் கிழக்குப் பகுதி 4,500 முழம்
(1.5 மைல்) நீளம் உடையது. அங்கே
மூன்று வாசல்கள் இருக்கும்: அவை
யோசேப்பின் வாசல், பென்யமீனின் வாசல்,
தாணின் வாசல்.
33“நகரத்தின் தென் பகுதி 4,500 முழம்
(1.5 மைல்) நீளம் உடையது அங்கே
மூன்று வாசல்கள் இருக்கும். அவை: சிமி
யோனின் வாசல், இசக்காரின் வாசல்,
செபுலோனின் வாசல்.
34“நகரத்தின் மேற்கு பகுதி 4,500 முழம்
(1.5 மைல்) நீளம் உடையது. அங்கே
மூன்று வாசல்கள் இருக்கும். அவை: காத்
தின் வாசல், ஆசேரின் வாசல், நப்தலியின்
வாசல்.
35“நகரத்தைச் சுற்றிலும் உள்ள
அளவானது 18,000 முழம் (6 மைல்)
ஆகும். இப்போ திருந்து அந்த நகரத்தின்
பெயர்: **கர்த்தர் அங்கே இருக்கிறார்.**

# தானியேலின் புத்தகம்

### தானியேல் பாபிலோனுக்குக் கொண்டு செல்லுதல்

1 நேபுகாத்நேச்சார் பாபிலோனின் அரச
னாக இருந்தான். நேபுகாத்நேச்சார் எருச
லேமிற்கு வந்தான். நேபுகாத்நேச்சார் அவ
னது படையுடன் எருசலேமை முற்றுகை
யிட்டான். யூதாவின் அரசனாகிய யோயாக்
கீமின் ஆட்சியின் மூன்றாம் ஆண்டில்*
இது நடந்தது. 2 கர்த்தர் யூதாவின் அரசனான
யோயாக்கீமை, நேபுகாத்நேச்சார் தோற்கடிக்
கும்படி அனுமதித்தார். தேவனுடைய ஆல
யத்திலிருந்து நேபுகாத்நேச்சார் அனைத்துப்
பாத்திரங்களையும் மற்ற பொருட்களையும்
எடுத்துக்கொண்டான். நேபுகாத்நேச்சார்
அவற்றைப் பாபிலோனுக்குக் கொண்டுபோ
னான். நேபுகாத்நேச்சார் அப்பொருட்களை
அவனது விக்கிரக தெய்வங்களின் ஆலயத்
தில் வைத்தான்.

3 பிறகு அரசனான நேபுகாத்நேச்சார் அஸ்
பேனாஸ் என்பவனுக்கு ஒரு கட்டளை
கொடுத்தான். (அஸ்பேனாஸ், அரசனுக்குப்
பணிவிடை செய்யும் அலிகளில் மிக முக்கி
யமான தலைவன்.) அரசன், அஸ்பேனாசிடம்
அவனது வீட்டிற்கு சில யூதர்களை அழைத்
துவரும்படி சொன்னான். நேபுகாத்நேச்சார்
முக்கியமான குடும்பங்களிலிருந்தும் இஸ்ர
வேல் அரச குடும்பங்களிலிருந்தும், யூதர்
களை விரும்பினான். 4 அரசனான நேபுகாத்
நேச்சார் ஆரோக்கியமான இளம் யூதர்களை
மட்டுமே விரும்பினான். தம் உடம்பில்
தழும்போ, காயமோ, குறைபாடுகளோ இல்
லாத இளைஞர்களை அரசன் விரும்பினான்.
அரசன் அழகான சுறுசுறுப்பான இளைஞர்
களை விரும்பினான். இளைஞர்களில் எல்
லாவற்றையும் எளிதாகவும், வேகமாகவும்,
கற்றுக்கொள்ளும் ஆற்றலுடையவர்களை
அரசன் விரும்பினான். அரசன், தன் வீட்டில்
வேலைசெய்யத் தகுதியுள்ள இளைஞர்களை
விரும்பினான். அரசன் அஸ்பேனாசிடம்,
அந்த இஸ்ரவேல் இளைஞர்களுக்குக் கல்
தேயரின்* எழுத்தையும், மொழியையும்
கற்றுக்கொடுக்கும்படி கூறினான்.

5 அரசனான நேபுகாத்நேச்சார் ஒரு குறிப்
பிட்ட அளவுள்ள உணவையும் திராட்சை
ரசத்தையும் இளைஞர்களுக்குக் கொடுத்தான்.
அது அரசன் உண்ணும் உணவின் தரத்தில்
இருந்தது. அரசன் இஸ்ரவேலிலிருந்து
கொண்டுவரப்பட்ட இளைஞர்கள் மூன்று
ஆண்டுகள் பயிற்சிபெற வேண்டும் என
விரும்பினான். மூன்று ஆண்டுகளுக்குப்
பிறகு அந்த இளைஞர்கள் பாபிலோன்
அரசனது பணியாட்களாக இருக்கவேண்டும்.
6 அந்த இளைஞர்களுள் தானியேல், அன
னியா, மீஷாவேல், அசரியா என்பவர்கள்
இருந்தார்கள். இந்த இளைஞர்களெல்லாம்
யூதா கோத்திரத்தைச் சேந்தவர்களாக இருந்
தனர்.

7 அஸ்பேனாஸ் அந்த இளைஞர்களுக்கு
வேறு பெயர்களைக் கொடுத்தான். தானியே
லுக்குப் பெல்தெஷாத்சார் என்றும், அனனி
யாவுக்குச் சாத்ராக் என்றும், மீஷாவேலுக்கு
மேஷாக் என்றும், அசரியாவுக்கு ஆபேத்
நேகோ என்றும் புதிய பெயர்கள் கொடுக்
கப்பட்டன.

8 தானியேல் அரசனது வளமான உணவை
யும், திராட்சைரசத்தையும் உண்ண விரும்ப
வில்லை. தானியேல் அந்த உணவினாலும்
திராட்சைரசத்தாலும் தன்னைத்தானே அசுத்
தப்படுத்திக்கொள்ள விரும்பவில்லை. என
வே, அவன் அஸ்பேனாசிடம் தனனைத்
தானே அசுத்தப்படுத்திக்கொள்ளாமல் இருக்க
அனுமதி கேட்டான்.

9 தேவன், அஸ்பேனாஸ் தானியேலிடம்
தயவும் இரக்கமும் கொள்ளும்படி செய்தார்.
10 ஆனால் அஸ்பேனாஸ் தானியேலிடம்,
“நான் என் அரசரான எஜமானருக்குப்
பயப்படுகிறேன். அரசர் இந்த உணவையும்,
திராட்சைரசத்தையும் உனக்குத் தரும்படி
கட்டளையிட்டிருக்கிறார். நீ இந்த உணவை
உண்ணாவிட்டால், நீ பலவீனமுடையவனா
கவும், நோயாளியாகவும் ஆவாய். நீ உன்
வயதுள்ள மற்ற இளைஞர்களைவிட மோச
மான நிலையில் இருப்பாய். அரசர் இதனைப்
பார்த்து என் மீது கோபங்கொள்வார்.
அவர் என் தலையை வெட்டிவிடலாம்!
ஆனால் இதற்கு உனது தவறே காரணமா
கும்” எனறு சொன்னான்.

---

**ஆட்சியின் மூன்றாம் ஆண்டு** கி.மு. 605.

**கல்தேயர்கள்** பாபிலோனில் உள்ள முக்கியமான வம்சத்தினர். பாபிலோனின் அரசனும் இவர்களின் வழி வந்தவன். இவர்கள் கற்ற ஜனங்கள். இவர்கள் விஞ்ஞானம், வரலாறு, மொழிகள், வானவியல் போன்றவற்றில் அறிவுள்ளவர்கள். ஆனால் மந்திரங்களிலும் நட்சத்திரங்களிலும் நம்பிக்கை உடையவர்கள்.

11பிறகு தானியேல் அவர்களது காவல
னிடமும் பேசினான். அஸ்பேனாசு அந்தக்
காவலனிடம் தானியேல், அனனியா, மீஷா
வேல், அசரியா ஆகியோரைக் கவனித்துக்
கொள்ளும்படி கட்டளையிட்டிருந்தான்.
12தானியேல் காவலனிடம்: "தயவுசெய்து
பின்வரும் சோதனையைப் பத்து நாட்
களுக்கு எங்களுக்குத் தாரும். எங்களுக்கு
உண்ண காய்கறிகளும், குடிக்கத் தண்ணீரும்
தவிர வேறு எதுவும் தரவேண்டாம். 13பத்து
நாட்களுக்குப் பின்னர் அரசனது உணவை
உண்ணும் மற்றவர்களோடு எங்களை
ஒப்பிட்டுப் பார்த்து, யார் ஆரோக்கியமாக
இருக்கிறார்கள் எனப்பாரும். பிறகு நீர்
எங்களை எவ்வாறு நடத்துவது என்று
முடிவு செய்யலாம். நாங்கள் உமது பணி
யாளர்கள்" என்று சொன்னான்.
14எனவே, காவலன் பத்து நாட்களுக்குத்
தானியேல், அனனியா, மீஷாவேல், அசரியா
ஆகியோரைச் சோதிக்க ஒப்புக்கொண்டான்.
15பத்து நாட்களுக்குப்பிறகு, தானியேலும்
அவனது நண்பர்களும் அரசனது உணவை
உண்டுவந்த மற்றவர்களைவிட ஆரோக்கிய
மாகக் காணப்பட்டனர். 16எனவே, காவலன்
அரசனது உணவையும் திராட்சைரசத்தை
யும் தொடர்ந்து கொடுப்பதை நிறுத்தினான்.
அதற்குப்பதிலாக அவன் தானியேல், அன
னியா, மீஷாவேல், அசரியா ஆகியோருக்குக்
காய்கறிகளைக் கொடுத்தான்.
17தேவன், தானியேல், அனனியா, மீஷா
வேல், அசரியா ஆகியோருக்கு ஞானத்தை
யும், பலவித எழுத்துக்களையும், அறிவிய
லையும் கற்றுக்கொள்ளும் திறமையையும்
கொடுத்தார். தானியேல், பலவித தரிசனங்
களையும் கனவுகளையும் புரிந்துகொள்ள
முடிந்தது.
18அரசன் அனைத்து இளைஞர்களும்
மூன்று ஆண்டுகளுக்குப் பயிற்சி பெறவேண்
டும் என்று விரும்பினான். அக்கால முடிவில்
அரசனான நேபுகாத்நேச்சாரின் முன்பு
எல்லா இளைஞர்களையும் அஸ்பேனாஸ்
கொண்டுவந்தான். 19அரசன் அவர்களோடு
பேசினான். அரசன் அந்த இளைஞர்களில்
எவரும் தானியேல், அனனியா, மீஷாவேல்,
அசரியா ஆகியவர்களைப் போன்று சிறந்த
வர்களாக இல்லை என்பதைக் கண்டு
கொண்டான். எனவே அந்த நான்கு இளை
ஞர்களும் அரசனின் பணியாட்கள் ஆயினர்.
20ஒவ்வொரு முறையும் அரசன் அவர்களிடம்
கேட்கும் முக்கியமான கேள்விகளுக்கு
அவர்கள் மிகுந்த ஞானத்தையும் புத்தியை
யும் காட்டினார்கள். அரசன் அவனது
அரசாங்கத்தில் உள்ள மந்திரவாதிகளையும்
ஞானிகளையும்விட இவர்கள் பத்துமடங்கு
சிறந்தவர்கள் என்று கண்டான். 21எனவே
தானியேல் தொடர்ந்து அரசனது பணி
யாளாக கோரேஸ் ஆண்ட முதலாம்
ஆண்டு* மட்டும் இருந்தான்.

## நேபுகாத்நேச்சாரின் கனவு

2 நேபுகாத்நேச்சாரின் ஆட்சியின் இரண்டா
வது ஆண்டில் அவனுக்குச் சில கனவு
கள் வந்தன. அக்கனவுகள் அவனை மிகவும்
துன்புறுத்தின. அவனால் தூங்க முடிய
வில்லை. 2எனவே அரசன், தனது அறிஞர்
களைத் தன்னிடம் அழைத்தான். அவர்கள்
தங்கள் மந்திர தந்திரங்களைப் பயன்படுத்தி
னார்கள். அவர்கள் நட்சத்திரங்களைக் கவ
னித்தனர். அவர்கள் கனவுகளின் பலனைச்
சொல்லவும் எதிர்காலத்தில் நடக்கக்கூடி
யதைக் கூறவுமே இவ்வாறு செய்தனர்.
தனது கனவைப்பற்றி தனக்குச் சொல்ல
வேண்டும் என்று அரசன் அவர்களிடம்
கேட்டான். எனவே அவர்கள் வந்து அரச
னின் முன்னால் நின்றார்கள்.
3அரசன் அவர்களிடம்: "நான் ஒரு கனவு
கண்டேன். அது என்னைத் தொல்லைப்ப
டுத்துகிறது. நான் கனவின் பொருளை
அறிந்துகொள்ள விரும்புகிறேன்" என்றான்.
4பிறகு கல்தேயர்கள் அரசனுக்குப் பதில்
சொன்னார்கள். அவர்கள் அராமிக் மொழி
யில்* பேசினார்கள். அவர்கள்: "அரசே,
நீர் என்றென்றும் வாழ்க. நாங்கள் உமது
வேலைக்காரர்கள். தயவுசெய்து உமது
கனவைக் கூறும். பிறகு அதன் அர்த்தம்
என்னவென்று நாங்கள் கூறுவோம்" என்று
சொன்னார்கள்.
5பிறகு அரசன் நேபுகாத்நேச்சார் அவர்
களிடம், "இல்லை, நீங்கள் எனது கனவைச்
சொல்லவேண்டும். பிறகு அதன் பொருள்
என்னவென்றும் சொல்லவேண்டும். நீங்கள்
இவற்றைச் செய்யாவிட்டால் உங்களைத்
துண்டுதுண்டாக வெட்டிப் போடும்படிக்
கட்டளையிடுவேன். அதோடு உங்கள் வீடு
கள் குப்பைமேடுகளாக அழிக்கும்படிக்
கட்டளையிடுவேன். 6ஆனால் நீங்கள் எனது
கனவையும் அதன் பொருளையும் சொல்லி
விட்டால் நான் உங்களுக்கு பரிசுகளையும்,
அன்பளிப்புகளையும், மரியாதையும் தரு
வேன். எனவே என் கனவையும் அதன்
பொருளையும் கூறுங்கள்" என்றான்.
7மீண்டும் அந்த ஞானிகள் அரசனிடம்,
"தயவுசெய்து கனவை எங்களுக்குச் சொல்
லும். பிறகு நாங்கள் அதன் பொருளைக்
கூறுகிறோம்" என்றனர்.
8பிறகு அரசனான நேபுகாத்நேச்சார், "நீங்
கள் காலதாமதம் செய்யப்பார்க்கின்றீர்கள்
என்று எனக்குத் தெரிகிறது: நான் என்ன
சொன்னேன் என்பதின் கருத்தை நீங்கள்
அறிவீர்கள். 9எனது கனவைப்பற்றிச்
சொல்லாவிட்டால் நீங்கள் தண்டிக்கப்படுவீர்

---

**கோரேஷ் முதலாம் ஆட்சி ஆண்டு** *கி.மு.* 539-538

**அராமிக் மொழி** *பாபிலோன் நாட்டின் ஆட்சிமொழி. பல நாட்டு ஜனங்களும் அதிகாரப்பூர்வமான கடிதங்களை இம்மொழியிலேயே எழுதுவர். இந்தத் தானியேலின் பிரதி இது முதல் 7:28வரை இம் மொழியில் உள்ளது.*

கள் என்பதை நீங்களும் அறிவீர்கள்! எனவே
நீங்கள் அனைவரும் என்னிடம் பொய்
சொல்ல உடன்பட்டிருக்கிறீர்கள். நீங்கள்
காலதாமதம் செய்கின்றீர்கள். நீங்கள் நான்
செய்யவிரும்புவதை மறந்துவிடுவேன்
என்று நம்புகிறீர்கள். இப்பொழுது எனது
கனவைக் கூறுங்கள். உங்களால் எனது
கனவைக் கூறமுடியுமானால் அதன் பொரு
ளையும் கூறமுடியும் என்று நான் அறிவேன்"
என்றான்.

10 கல்தேயர்கள் அரசனுக்குப் பதிலாக:
"அரசர் கேட்பவற்றைச் சொல்லக்கூடிய
மனிதன் பூமியில் எவனுமில்லை. இதுவரை
எந்த அரசரும் இப்படிப்பட்ட ஒன்றை
ஒரு மந்திரவாதியிடமோ, ஒரு சோதிடனி
டமோ, ஒரு கல்தேயனிடமோ கேட்டதி
ல்லை. மிகச்சிறந்தவனும், வலிமை பொருந்
தியவனுமான எந்த அரசனும் இதுவரை
இவ்வாறு அறிவாளிகளிடம் கேட்டதில்லை.
11 அரசர் மிகக்கடினமான ஒன்றைச் செய்யும்
படிக் கேட்கிறீர். தெய்வங்களால் மட்டுமே
அரசரது கனவையும், அக்கனவின் பொரு
ளையும் கூறமுடியும். ஆனால் தெய்வங்கள்
மனிதர்களோடு வாழ்வதில்லை" என்றனர்.
12 அரசன் இதனைக் கேட்டபோது மிகவும்
கோபமடைந்தான். எனவே அவன் பாபி
லோனில் உள்ள எல்லா ஞானிகளையும்
கொலை செய்யும்படிக் கட்டளையிட்டான்.
13 அரசனான நேபுகாத்நேச்சாரின் கட்டளை
அறிவிக்கப்பட்டது. எல்லா ஞானிகளும்
கொல்லப்படவிருந்தனர். அரசனது ஆட்கள்
தானியேலையும் அவனது நண்பர்களையும்
கொலை செய்வதற்காகத் தேடினார்கள்.

14 அரசனது காவலர்களுக்கு ஆரியோகு
தலைவனாக இருந்தான். அவன் பாபிலோனி
லுள்ள ஞானிகளைக் கொல்வதற்குப் போ
னான். ஆனால் தானியேல் அவனிடம்
புத்திசாலித்தனமாகவும், சாதுர்யமாகவும்
பேசினான். 15 தானியேல் ஆரியோகுவிடம்:
"அரசர் எதற்காக, இத்தகைய பயங்கரத்
தண்டனையைக் கொடுத்தார்" என்று
கேட்டான். பிறகு ஆரியோகு அரசனது
கனவைப்பற்றிய முழு செய்தியையும் சொன்
னான். உடனே தானியேல் புரிந்து கொண்
டான்.

16 தானியேல் இச்செய்தியை அறிந்ததும்
அரசனான நேபுகாத்நேச்சரிடம் சென்றான்.
தானியேல் அரசனிடம் இன்னும் கொஞ்சம்
கால அவகாசம் கொடுக்கும்படி கேட்டான்.
பிறகு அவனால் அரசனது கனவையும்
அதன் பொருளையும் சொல்லமுடியும் என்
றான்.
17 பின்னர் தானியேல் தனது வீட்டிற்குப்
போனான். அவன் தனது நண்பர்களான
அனனியா, மீஷாவேல், அசரியா ஆகியோரி
டம் எல்லாவற்றையும் சொன்னான்.
18 தானியேல் அவனது நண்பர்களிடம்
பரலோகத் தேவனிடம் ஜெபிக்குமாறு
வேண்டினான். தானியேல் அவர்களிடம்
இந்த இரகசியத்தை அறிந்துகொள்ள உதவ
கருணைகாட்டுமாறு தேவனிடம் விண்ணப்
பிக்கும்படி வேண்டினான். இதனால் பாபி
லோனிலுள்ள ஞானிகளோடு தானியேலும்
அவனது நண்பர்களும் கொல்லப்படாமல்
இருப்பார்கள்.
19 இரவில், தேவன் தானியேலுக்குத் தரிச
னத்தின் மூலம் இரகசியத்தை விளக்கினார்.
பின்னர் தானியேல் பரலோகத்தின் தேவ
னைப் புகழ்ந்து போற்றினான். 20 தானியேல்
"என்றென்றும் தேவனுடைய நாமத்தைப்
போற்றுங்கள். அதிகாரமும் ஞானமும் அவ
ரோடுள்ளன.
21 அவர் காலத்தையும் பருவத்தையும் மாற்
றுகிறார். அவர் அரசர்களை மாற்றுகிறார்.
அவர் அரசர்களுக்கு அதிகாரத்தைக் கொடுக்
கிறார். அதோடு அரசர்களின் அதிகாரத்தை
எடுத்தும் விடுகிறார். அவர் ஜனங்களுக்கு
ஞானத்தைக் கொடுக்கிறார். எனவே அவர்
கள் ஞானம் பெறுகின்றனர். அவர் ஜனங்கள்
பலவற்றைக் கற்று ஞானிகளாக அனுமதிக்
கிறார்.
22 அவர் புரிந்துகொள்வதற்குக் கடினமான
இரகசியங்களைத் தெரிந்திருக்கிறார். அவரி
டம் ஒளி வாழ்கிறது. எனவே அவருக்கு
இருட்டிலும் இரகசியமான இடத்திலும் இருப்
பது தெரிகிறது.
23 என் முற்பிதாக்களின் தேவனே நான்
நன்றி சொல்லி உம்மைப் போற்றுகிறேன்.
நீர் எனக்கு ஞானமும் பலமும் கொடுத்தீர்.
நாங்கள் கேட்டவற்றை நீர் சொன்னீர். நீர்
அரசனது கனவைப்பற்றி எங்களுக்குச்
சொன்னீர்" என்றான்.

## தானியேல் கனவின் பொருளைக் கூறுகிறான்

24 பின்னர் தானியேல், ஆரியோகுவிடம்
சென்றான். அரசனான நேபுகாத்நேச்சார்
பாபிலோனிலுள்ள ஞானிகளைக் கொல்ல
ஆரியோகுவைத் தேர்ந்தெடுத்திருந்தான்.
தானியேல் ஆரியோகிடம், "பாபிலோனி
லுள்ள ஞானிகளைக் கொல்லவேண்டாம்.
என்னை அரசனிடம் கொண்டுபோங்கள்.
நான் அவரிடம் அவரது கனவையும் அதன்
பொருளையும் கூறுவேன்" என்றான்.
25 எனவே ஆரியோகு தானியேலை மிக
விரைவாக அரசனிடம் அழைத்துச் சென்
றான். ஆரியோகு அரசனிடம், "நான் யூதாவி
லுள்ள கைதிகளில் ஒருவனைக் கண்டுபிடித்
திருக்கிறேன். அவன் அரசனிடம் அவரது
கனவைப்பற்றிச் சொல்லமுடியும்" என்றான்.
26 அரசன் தானியேலிடம்: (பெல்தெஷாத்
சார்), "உன்னால் எனது கனவையும் அதன்
பொருளையும் பற்றி சொல்லமுடியுமா?"
என்று கேட்டான்.

27தானியேல்: "அரசரான நேபுகாத்நேச்
சாரே, எந்த ஞானிகளாலும், எந்த ஜோசிய
ர்களாலும், எந்தக் கல்தேயர்களாலும் அரச
னின் இரகசியம் குறித்த கேள்விக்குப் பதில்
சொல்லமுடியாது. 28ஆனால் பரலோகத்தில்
இரகசியங்களைப்பற்றிச் சொல்ல ஒரு
தேவன் இருக்கிறார். தேவன் அரசரான
நேபுகாத்நேச்சாருக்கு வருங்காலத்தில் என்ன
நடைபெறும் என்பதைக் காட்ட கனவு
களைக் கொடுத்தார். இதுதான் உமது கனவு.
உமது படுக்கையில் படுத்துக்கொண்டு நீர்
பார்த்தவை இவைதான். 29அரசரே, நீர்
உமது படுக்கையில் படுத்துக்கொண்டிருந்தீர்.
நீர் வருங்காலத்தைப்பற்றி எண்ணிப்
பார்க்கத் தொடங்கினீர். எதிர்காலத்தைக்
குறித்த இரகசியங்களைத் தேவன் ஜனங்க
ளுக்குச் சொல்லமுடியும். அவர் உமக்கு
வருங்காலத்தில் என்ன நிகழும் என்பதைக்
காட்டினார். 30தேவன் என்னிடம் இந்த
இரகசியத்தைச் சொன்னார். ஏன்? நான்
மற்றவர்களைவிட ஞானம் கொண்டவன்
என்பதற்காக அல்ல. அரசரான நீர் அந்தக்
கனவின் பொருளை அறிந்துகொள்ள வேண்
டும் என்பதற்காக தேவன் என்னிடம்
சொன்னார். அதே வழியில், உம் மனதில்
ஓடிய நினைவுகளையும் நீர் புரிந்துகொள்வீர்.

31"அரசரே, உமது கனவில் உமக்கு
முன்னால் ஒரு பெரிய சிலையைக் கண்டீர்.
அச்சிலை மிகப்பெரியதும், பளபளப்பான
தும், மனதைக் கிளர்ச்சியூட்டக் கூடியதாக
வும் இருந்தது. அது ஒருவனின் கண்களை
வியப்பால் விரியச் செய்யத்தக்கது.
32அச்சிலையின் தலையானது சுத்தமான
தங்கத்தால் செய்யப்பட்டிருந்தது. அச்சிலை
யின் மார்பும், கைகளும் வெள்ளியால்
செய்யப்பட்டிருந்தன. அச்சிலையின் வயி
றும், கால்களின் மேல்பகுதியும் வெண்
கலத்தால் செய்யப்பட்டிருந்தன. 33அச்சிலை
யின் கால்களின் கீழ்ப்பகுதி இரும்பால்
செய்யப்பட்டிருந்தது. அச்சிலையின் பாதங்
கள் கொஞ்சம் இரும்பாலும், கொஞ்சம்
களிமண்ணாலும் செய்யப்பட்டிருந்தது. 34நீர்
அந்தச் சிலையைப் பார்த்துக் கொண்டி
ருக்கும்போதே நீர் ஒரு பாறையைப் பார்த்தீர்.
கைகளால் பெயர்க்கப்படாத அக்கல்
பெயர்ந்து உருண்டுவந்தது. அக்கல் காற்று
வழியாக உருண்டுவந்து இரும்பாலும் களி
மண்ணாலும் ஆன அச்சிலையின் பாதங்
களில் மோதி அதின் பாதங்களை நொறுக்
கியது. 35பிறகு அந்த இரும்பு, களிமண்,
வெண்கலம், வெள்ளி, தங்கம் எல்லாம்
ஒரே நேரத்தில் துண்டுத் துண்டாக நொறுங்
கியது. அவை, கோடைக்காலத்தில் போரடிக்
கிற களத்திலிருந்து பறந்துபோகிற பதரைப்
போன்று இருந்தன. அவற்றில், எதுவும்
மிச்சமில்லாமல் அவை காற்றினால் அடித்
துக்கொண்டு போகப்பட்டது. அங்கு ஒரு
சிலை இருந்தது என்று எவராலும் சொல்ல
முடியாதபடி இருந்தது. பிறகு சிலையைத்
தாக்கிய அக்கல் பெரிய மலையாகி அந்தப்
பூமி முழுவதையும் நிரப்பியது.
36"இதுவே உமது கனவு. இப்பொழுது
அரசரிடம் அதன் பொருள் என்னவென்று
நான் கூறுவேன். 37அரசரே, நீர் மிக முக்
கியமான அரசராக இருக்கிறீர். பரலோ
கத்தின் தேவன் உமக்கு இராஜ்யம், அதி
காரம், பலம், மகிமை எல்லாம் கொடுத்தி
ருக்கிறார். 38தேவன் உமக்குக் கட்டுப்படுத்
தும் ஆற்றலைக் கொடுத்திருக்கிறார். உமக்கு
மனிதர்களையும், மிருகங்களையும், பறவைக
ளையும், ஆளும் வல்லமையையும் கொடுத்தி
ருக்கிறார். அவை எங்கே வாழ்ந்தாலும்
அவற்றை ஆளும்படி உம்மை தேவன்
செய்திருக்கிறார். அரசரான நேபுகாத்நேச்
சாரே, நீர் தான் அந்தத் தங்கத்தாலான
சிலையின் தலையைப் போன்றவர்.
39"உமக்குப் பிறகு இன்னொரு இராஜ்யம்
வரும். அது வெள்ளியைப் போன்றது.
ஆனால் அந்த இராஜ்யம் உமது இராஜ்
யத்தைப்போன்று அவ்வளவு உயர்வுடைய
தாக இராது. அதன் பின்னர் மூன்றா
வது இராஜ்யமானது பூமி முழுவதையும்
ஆளுகைச் செய்யும். அது வெண்கலப்
பகுதி. 40பிறகு நான்காவது இராஜ்யம்
வரும். அது இரும்பைப்போன்று வலிமை
உடையதாக இருக்கும். இரும்பானது எவ்
வாறு உடைத்து தூள்தூளாக்குமோ அது
போன்று நான்காவது இராஜ்யமும் மற்ற
இராஜ்யங்களை நொறுக்கிப்போடும்.
41"சிலையின் பாதங்கள் கொஞ்சம்
இரும்பாலும், கொஞ்சம் களிமண்ணாலும்
செய்யப்பட்டிருந்ததை நீர் பார்த்தீர். அதன்
பொருள் அந்த நான்காவது இராஜ்யம்
பிரிக்கப்பட்டதாயிருக்கும். அதில் இரும்பும்
களிமண்ணும் கலந்திருப்பதால் இரும்பின்
உறுதி கொஞ்சம் இருக்கும். 42சிலையின்
கால்விரல்கள் பாதி இரும்பாகவும், பாதி
களிமண்ணாகவும் இருந்தது. எனவே நான்
காவது இராஜ்யமும் இரும்பைப்போல
கொஞ்சம் பலமுள்ளதாகவும், களிமண்ணைப்
போல கொஞ்சம் பலவீனமுள்ளதாகவும்
உடையதாக இருக்கும். 43இரும்பு களிமண்
ணோடு கலந்திருந்ததை நீர் பார்த்தீர். ஆனால்
இரும்பும் களிமண்ணும் முழு மையாகக்
கலக்காது. இதுபோல, நான்காவது இராஜ்
யத்தில் ஜனங்கள் கலவையாக இருப்பார்கள்.
அந்த ஜனங்கள் ஒரே ஜனங்களாக இணைய
மாட்டார்கள்.
44"நான்காவது இராஜ்யத்தில் அரசர்கள்
இருக்கும்போது, பரலோகத்தின் தேவன்
வேறொரு இராஜ்யத்தை உருவாக்குவார்.
இந்த இராஜ்யம் என்றென்றும் இருக்கும்.
இது அழிக்கப்படாது. இந்த இராஜ்யம்
இன்னொரு ஜனங்கள் கூட்டத்திற்குக்
கொடுக்கப்படுவதில்லை. இந்த இராஜ்யம்

மற்ற இராஜ்யங்களை நொறுக்கும். இது
அந்த இராஜ்யங்களை ஒரு முடிவிற்குக்
கொண்டுவரும். ஆனால் இந்த இராஜ்யம்
என்றென்றும் தொடர்ந்திருக்கும்.
45 "அரசரான நேபுகாத்நேச்சாரே, ஒரு
மலையிலிருந்து ஒரு கல் எவராலும் பெயர்க்
கப்படாமல் பெயர்ந்து வந்ததை நீர் பார்த்தீர்.
அக்கல் இரும்பு, வெண்கலம், களிமண்,
வெள்ளி, தங்கம் ஆகியவற்றைத் தூள்தூளாக்
கியது. இதேபோல் தேவன் வருங்காலத்தில்
என்ன நிகழும் என்று உமக்குக் காட்டினார்.
அந்தக் கனவு உண்மையானது. நீர் இந்த
விளக்கத்தை நம்பலாம்" என்றான்.
46 அப்போது அரசனான நேபுகாத்நேச்சார்
தானியேலின்முன் தரையில் விழுந்து வணங்
கினான். அரசன் தானியேலைப் போற்றி
னான். அரசன் தானியேலைப் பெருமைப்ப
டுத்துவதற்குக் காணிக்கை கொடுக்கவும்,
தூபம் காட்டவும் கட்டளையிட்டான்.
47 பிறகு அரசன் தானியேலிடம், "உனது
தேவன் உண்மையிலேயே அதி முக்கியமா
னவரும், வல்லமை உடையவருமானவர்
என்பதை அறிவேன். அவர் அனைத்து
அரசர்களுக்கும் கர்த்தராக இருக்கிறார்.
ஜனங்கள் அறியாதவற்றை அவர்களுக்கு
அவர் கூறுகிறார். இது உண்மை என்பது
எனக்குத் தெரியும். ஏனென்றால் நீ இந்த
இரகசியத்தை என்னிடம் சொல்லும் தகுதி
பெற்றிருக்கிறாய்" என்றான்.
48 பிறகு அரசன் தானியேலுக்கு தனது
இராஜ்யத்தில் மிக முக்கியமான ஒரு பத
வியைக் கொடுத்தான். அதோடு அரசன்
தானியேலுக்கு விலையுயர்ந்த பரிசுகளைக்
கொடுத்தான். நேபுகாத்நேச்சார் தானியே
லைப் பாபிலோன் மாகாணத்தின் ஆளுநராக
வும் உயர்த்தினான். அதோடு அரசன் தானி
யேலைப் பாபிலோன் தேசத்தின் ஞானி
களுக்கெல்லாம் அதிகாரியாகவும் ஆக்கி
னான். 49 தானியேல் அரசனிடம் சாத்ராக்கை
யும், மேஷாக்கையும், ஆபேத்நேகோவையும்
பாபிலோன் மாகாணத்தின் காரியங்களை
விசாரிக்கும் அதிகாரிகளாக்கும்படி வேண்டி
னான். தானியேல் வேண்டியபடியே அரசன்
செய்தான். தானியேலும் அரசன் அருகிலே
இருக்கும் முக்கியமானவர்களில் ஒருவனா
னான்.

### தங்க விக்கிரகமும் நெருப்புச் சூளையும்

3 நேபுகாத்நேச்சார் அரசனிடம் தங்கத்
தினால் செய்த ஒரு விக்கிரகம் இருந்தது.
அந்த விக்கிரகம் 60 முழம் உயரமும், 6
முழம் அகலமுமானது. பிறகு அவன் அந்த
விக்கிரகத்தைப் பாபிலோன் மாகாணத்
திலிருக்கிற தூரா என்னும் சமவெளியில்
நிறுத்திவைத்தான். 2 பின்னர் அரசன் தேசாதி
பதிகளையும், அதிகாரிகளையும், தலைவரை
யும், நியாயாதிபதிகளையும், கருவூலக்கார
ரையும், ஆலோசகரையும், ஆளுநரையும்,
நாடுகளிலுள்ள அதிகாரிகள் அனைவரை
யும் கூடி வருமாறு அழைத்தான். அரசன்,
அவர்கள் அனைவரும் விக்கிரகத்தின் பிர
திஷ்டை நிகழ்ச்சிக்கு வரவேண்டும் என்று
விரும்பினான்.
3 எனவே அவர்களெல்லாம் அரசனான
நேபுகாத்நேச்சார் அமைத்திருந்த விக்கிரகத்
தின் முன் வந்து நின்றார்கள். 4 பிறகு அர
சனுக்காக அறிவிப்பு செய்யும் கட்டியக்
காரன் உரத்தக்குரலில்: "பல தேசங்களிலி
ருந்தும், பல மொழி இனங்களிலிருந்தும்
வந்துள்ள ஜனங்களே, நான் சொல்வதைக்
கேளுங்கள். 5 நீங்கள் எல்லா இசைக்கருவிக
ளின் சப்தங்களைக் கேட்டதும் பணிந்து
வணங்கவேண்டும். எக்காளம், நாகசுரம்,
கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புரு
மற்றும் மற்ற இசைக்கருவிகளின் ஒலியைக்
கேட்கும்போது, நீங்கள் தங்க விக்கிரகத்தை
தொழுதுகொள்ள வேண்டும். அரசனான
நேபுகாத்நேச்சார் இந்த விக்கிரகத்தை
அமைத்திருக்கிறார். 6 எவனாவது கீழே
விழுந்து தங்க விக்கிரகத்தை தொழாமலிருந்
தால் அவன் சீக்கிரமாக அதிக வெப்பமுள்ள
எரிகிற அக்கினிச் சூளையிலே போடப்படு
வான். இது அனைவருக்குமுரிய அரச
கட்டளையாகும்" என்றான்.
7 எனவே அவர்கள், எக்காளம், நாகசுரம்,
கின்னரம், வீணை, சுரமண்டலம் முதலான
இசைக்கருவிகளின் ஒலியைக் கேட்டதும்
மிக விரைவாக கீழே விழுந்து தங்க விக்
கிரகத்தைக் தொழுதுகொண்டார்கள். சகல
தேசத்தாரும், இனத்தாரும், மொழிக்காரர்க
ளும் கீழே விழுந்து அரசனான நேபுகாத்
நேச்சார் நிறுவிய தங்க விக்கிரகத்தைத்
தொழுதுகொண்டார்கள்.
8 பின்னர், சில கல்தேயர்கள் அரசனிடம்
வந்தனர். அந்த ஆட்கள் யூதர்களுக்கு
விரோதமாகப் பேசத்தொடங்கினர். 9 அவர்
கள் அரசனான நேபுகாத்நேச்சாரிடம்:
"அரசே! நீர் என்றும் வாழ்க 10 அரசரே,
நீ ஒரு கட்டளை கொடுத்தீர். எக்காளம்,
நாகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம்,
தம்புரு முதலான சகல இசைக்கருவிகளின்
ஒலியைக் கேட்டதும் ஒவ்வொருவரும் இந்தத்
தங்க விக்கிரகத்தைப் பணிந்து தொழுது
கொள்ள வேண்டும் என்று சொன்னீர்.
11 அதோடு, எவனாவதுதங்க விக்கிரகத்தைப்
பணிந்து தொழுதுகொள்ளாமலிருந்தால்
அவன் அதிக வெப்பமுள்ள எரிகிற அக்கி
னிச் சூளையில் போடப்படுவான் என்றும்
நீர் கட்டளையிட்டீர். 12 சில யூதர்கள் அரச
ரான உமது கட்டளையில் கவனம் செலுத்
தாமல் இருக்கின்றனர். நீர் அந்த யூதர்களை
பாபிலோன் மாகாணத்தின் முக்கியமான
அதிகாரிகளாக ஆக்கினீர். அவர்கள் பெயர்
களாவன: சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ.
அவர்கள் உமது தெய்வத்தைத் தொழு
வதில்லை. அவர்கள் உம்மால் நிறுவப்பட்ட

தங்க விக்கிரகத்தைப் பணிந்து வணங்க
வில்லை” என்று புகார் கூறினார்கள்.
13நேபுகாத்நேச்சார் மிகவும் கோபங்
கொண்டான். அவன் சாத்ராக், மேஷாக்,
ஆபேத்நேகோ ஆகியோரை அழைத்தான்.
எனவே அவர்கள் அரசன் முன்பு கொண்டு
வரப்பட்டார்கள். 14நேபுகாத்நேச்சார் அவர்க
ளிடம்: “சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகா
ஆகியோரே நீங்கள் எனது தெய்வத்தைத்
தொழவில்லை என்பது உண்மையா? நீங்
கள், என்னால் நிறுவப்பட்ட தங்க விக்கிரக
த்தைத் தொழவில்லை என்பது உண்மையா?
15இப்பொழுது நீங்கள் எக்காளம், நாககசுரம்,
கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புரு
ஆகிய இசைக்கருவிகளின் ஒலியைக் கேட்ட
தும் நான் நிறுவிய தங்க விக்கிரகத்தைப்
பணிந்து தொழவேண்டும். நான் செய்திருக்
கிற இவ்விக்கிரகத்தை நீங்கள் பணிந்து
கொள்ள ஆயத்தமாயிருந்தால் நல்லது.
ஆனால், நீங்கள் இதனைத் தொழாவிட்டால்,
மிகவும் சூடான எரிகிற அக்கினிச் சூளை
யில் போடப்படுவீர்கள். பிறகு உங்களை
என் அதிகாரத்திலிருந்து எந்தத் தேவனா
லும் காப்பாற்ற முடியாது” என்றான்.

16சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்
பவர்கள் அரசனிடம்: “நேபுகாத்நேச்சாரே,
நாங்கள் உம்மிடம் இவற்றைப்பற்றி விளக்
கிடத் தேவையில்லை. 17நீர் எங்களை
எரிகிற அக்கினி சூளையில் போட்டால்
நாங்கள் சேவிக்கிற எங்கள் தேவன் எங்
களைக் காப்பாற்றுவார். அவர் விரும்பி
னால் உமது வல்லமையிலிருந்தும் எங்க
ளைக் காப்பாற்றுவார். 18ஆனால் எங்களை
அவர் காப்பாற்றாவிட்டாலும்கூட, நாங்கள்
உமது தெய்வங்களைச் சேவிக்கமாட்டோம்;
நீர் நிறுவிய தங்க விக்கிரகத்தை தொழ
மாட்டோம். இது அரசனாகிய உனக்குத்
தெரிந்திருக்கவேண்டும்” என்றார்கள்.
19பின்னர் நேபுகாத்நேச்சார் மிகவும்
கோபங்கொண்டான். சாத்ராக், மேஷாக்,
ஆபேத்நேகோ, என்பவர்களுக்கெதிரான
கோபம் அவனது முகத்தில் வெளிப்பட்டது.
அவன், வழக்கத்தைவிடச் சூளையை ஏழு
மடங்கு மிகுதியாகச் சூடாக்கும்படிக்
கட்டளையிட்டான். 20பிறகு நேபுகாத்
நேச்சார் தனது வீரர்களில் மிகவும் பலமான
வர்களிடம் சாத்ராக், மேஷாக், ஆபத்நேகோ
ஆகியோரை நன்றாகக் கட்டும்படி கட்டளை
யிட்டான். அரசன் சாத்ராக், மேஷாக்,
ஆபேத்நேகோ ஆகியோரை அக்கினி சூளை
யிலே போடும்படி வீரர்களிடம் கட்டளை
யிட்டான்.
21எனவே சாத்ராக், மேஷாக், ஆபத்நேகோ
ஆகியோர் கட்டப்பட்டு அக்கினி சூளை
யிலே போடப்பட்டனர். அவர்கள் சால்வை,
நிசார், தலைப்பாகை, மற்றும் ஆடைகளை
அணிந்திருந்தனர். 22அரசன் கட்டளையிடும்
போது மிகவும் கோபமுடையவனாக இருந்
தான். எனவே அவர்கள் சூளையைச்
சீக்கிரமாக சூடாக்கினார்கள். அந்நெருப்பு
பலமான வீரர்களையும் எரிக்கும் அளவில்
மிகவும் சூடாக இருந்தது. அவர்கள் சாத்ராக்,
மேஷாக், ஆபேத்நேகோ ஆகியோரைத்
தூக்கிச்சென்று அக்கினிச் சூளையில் போடு
வதற்கு அருகில் சென்றபோது அவ்வீரர்
களை நெருப்பு அழித்துப்போட்டது. 23சாத்
ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்பவர்கள்
இறுகக் கட்டப்பட்ட நிலையில் நெருப்பில்
விழுந்தனர்.
24பின்னர் அரசனான நேபுகாத்நேச்சார்
குதித்து எழுந்தான். அவன் மிகவும் வியப்
புற்று தனது ஆலோசகர்களிடம்: “நாம்
மூன்றுபேரை மட்டுமே கட்டி நெருப்பில்
போட்டோம். இது சரிதானா?” என்றான்.
அவனது ஆலோசகர்கள்: “ஆம் அரசே”
என்றனர்.
25அரசன் அவர்களிடம், “பாருங்கள். நான்
குபேர் நெருப்பிற்குள் நடமாடுவதை நான்
பார்க்கிறேன். அவர்கள் கட்டப்பட்டிருக்க
வில்லை. அவர்கள் நெருப்பால் எரிக்கப்பட
வில்லை. நான்காவது ஆள் ஒரு தேவபுத்தி
ரனைப் போன்று இருக்கிறார்” என்றான்.
26பிறகு நேபுகாத்நேச்சார் அக்கினிச்
சூளையின் வாசலருகே சென்று உரத்த
குரலில், “சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ
என்பவர்களே வெளியே வாருங்கள்!
உன்னதமான தேவனுடைய பணியாட்களே,
வெளியே வாருங்கள்” என்றான்.
எனவே சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ
ஆகியோர் நெருப்பிலிருந்து வெளியே
வந்தனர். 27அவர்கள் வெளியே வரும்போது,
அவர்களைச் சுற்றி தேசாதிபதிகளும், அதி
காரிகளும், தலைவரும், அரசனின் மந்திரிக
ளும் சூழ்ந்து நின்றனர். நெருப்பானது
சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ ஆகியோ
ரைச் சுடாமலிருந்ததை அவர்களால் பார்க்க
முடிந்தது. அவர்களின் உடல்கள் வெந்து
போகவில்லை. அவர்களின்தலைமயிர் கருக
வில்லை. அவர்களின் சால்வைகள் எரிக்
கப்படவில்லை. அவர்கள்மேல் அக்கினியின்
மணம் வீசவில்லை.
28பிறகு நேபுகாத்நேச்சார்: “சாத்ராக்,
மேஷாக், ஆபேத்நேகோ ஆகியோரின் தேவ
னைப் போற்றுங்கள். அவர்களின் தேவன்,
தூதனை அனுப்பி அவர்களைக் காப்பாற்றி
விட்டார். இந்த மூன்றுபேரும் அவர்களின்
தேவனை நம்பினார்கள். அவர்கள் எனது
கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தனர். அவர்
கள் மற்ற தெய்வங்களுக்குப் பணி விடைச்
செய்து தொழுவதைவிட மரித்துப்போகத்
தயாராக இருந்தனர். 29எனவே, நான் இப்
போது இந்தச் சட்டத்தைச் ஏற்படுத்துகிறேன்:
எந்த தேசத்தினராகவும், மொழியினராகவும்
உள்ள என் ஜனங்கள் சாத்ராக், மேஷாக்,
ஆபேத்நேகோ ஆகியோரின் தேவனுக்கு எதி

ராக ஏதாவது சொன்னால் அவர்களைத்
துண்டு துண்டாக வெட்டுவேன். அவர்களது
வீட்டை எருக்களமாகிப் போடுவேன். வேறு
எந்த தேவனும் தம் ஜனங்களை இதுபோல்
காப்பாற்ற முடியாது" என்றான். 30பிறகு
அரசன் சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ
ஆகியோரைப் பாபிலோன் மாகாணத்தின்
முக்கிய அதிகாரிகளாக்கினான்.

### நேபுகாத்நேச்சாரின் மரம் பற்றிய கனவு

4 அரசனான நேபுகாத்நேச்சார் உலக
மெங்கிலும் வாழும் சகல தேசத்தா
ருக்கும் ஜாதியாருக்கும், மொழிக்காரர்களுக்
கும், பின்வரும் கடிதத்தை அனுப்பினான்.
வாழ்த்துக்கள்:

2மிக உன்னதமான தேவன் எனக்
காகச் செய்த அற்புதமும் ஆச்சரியமும்
கொண்ட செயல்களை உங்களுக்குச்
சொல்வதில் நான் மிகவும் மகிழ்ச்சி
யடைகிறேன்.
3தேவன் வியக்கத்தக்க அற்புதங்
களைச் செய்திருக்கிறார். தேவன் வல்ல
மைமிக்க அற்புதங்களைச் செய்திருக்கி
றார். தேவனுடைய இராஜ்யம் என்
றென்றும் தொடர்கிறது. தேவனுடைய
ஆட்சி அனைத்துத் தலைமுறைகளுக்
கும் தொடரும்.
4நேபுகாத்நேச்சாராகிய நான் எனது
அரண்மனையில் மகிழ்ச்சியுடனும்,
வெற்றியோடும் இருந்தேன். 5என்னை
அச்சுறுத்தும் ஒரு கனவை நான்
கண்டேன். நான் என் படுக்கையில்
படுத்திருந்தேன். என் மனதில் படங்க
ளையும், தரிசனங்களையும் பார்த்தேன்.
அவை என்னை மிகவும் அச்சுறுத்தின.
6எனவே என் கனவிற்குரிய பொரு
ளைக் கூறும்படி நான் பாபிலோனி
லுள்ள அனைத்து ஞானிகளையும்
அழைத்துவருமாறு கட்டளையிட்
டேன். 7சாஸ்திரிகளும் கல்தேயர்களும்
வந்தபோது நான் அவர்களிடம் என்
கனவைப்பற்றிச் சொன்னேன். ஆனால்
அவர்களால் கனவின் பொருளைச்
சொல்ல முடியவில்லை. 8இறுதியாக,
தானியேல் என்னிடம் வந்தான் (நான்
தானியேலுக்கு என் தேவனைப்
பெருமைப்படுத்தும்படி பெல்தெஷாத்
சார் என்று பெயரிட்டிருந்தேன். பரி
சுத்த தெய்வங்களின் ஆவி அவனிட
மிருந்தது.) நான் தானியேலிடம் எனது
கனவைச் சொன்னேன்:
9"பெல்தெஷாத்சார், நீ சாஸ்திரிகளி
லேயே மிகவும் முக்கியமானவன். நான்,
உன்னிடம் பரிசுத்த தெய்வங்களின்
ஆவி இருப்பதை நான் அறிவேன்.
உன்னால் புரிந்துகொள்ள முடியாத
கடுமையான இரகசியம் இல்லை என்
பதை அறிவேன். நான் கண்ட கனவு
இதுதான். என்னிடம் இதன் பொருள்
என்னவென்று சொல். 10நான் எனது
படுக்கையில் படுத்திருக்கும்போது
கண்ட தரிசனங்கள் இதுதான். என்
முன்னால் பூமியின் மத்தியில் ஒரு
மரம் நின்றுக் கொண்டிருப்பதைப்
பார்த்தேன். அந்த மரம் மிக உயரமாக
இருந்தது. 11அம்மரம் பெரிதாகவும் பல
முடையதாகவும் வளர்ந்தது. அம்மரத்
தின் உச்சி வானத்தைத் தொட்டது.
அதனை பூமியின் எந்த இடத்தில்
இருந்தும்பார்க்கமுடியும். 12அம்மரத்தின்
இலைகள் மிக அழகானவை. அதில்
ஏராளமான நல்ல பழங்கள் இருந்தன.
அம்மரத்தில் ஒவ்வொருவருக்கும் ஏரா
ளமான உணவு இருந்தது. அம்மரத்தின்
அடியில் காட்டு மிருகங்கள் தங்கின.
அதன் கிளைகளில் பறவைகள் வசித்
தன. ஒவ்வொரு மிருகங்களும் அம்மரத்
திலிருந்து சாப்பிட்டன.
13"நான் படுக்கையில் படுத்திருந்த
போது நான் அவற்றைக் காட்சிகளாகப்
பார்த்துக்கொண்டிருந்தேன். பிறகு
நான், ஒரு பரிசுத்தமான தேவதூதன்
பரலோகத்திலிருந்து இறங்கிவருவ
தைப் பார்த்தேன். 14அவன் உரத்தகுர
லில்: 'மரத்தை வெட்டிப்போடுங்கள்.
அதன் கிளைகளை வெட்டிப் போடுங்
கள். அதன் இலைகளை உதிர்த்துவிடுங்
கள். அதன் பழங்களைச் சிதறடியுங்கள்.
அம்மரத்தின் அடியிலுள்ள மிருகங்கள்
ஓடிப்போகும். அதன் கிளைகளில்
உள்ள பறவைகள் பறந்துபோகும்.
15ஆனால் அதன் தண்டையும், வேர்க
ளையும், மண்ணிலே இருக்கவிடுங்கள்.
அதைச் சுற்றி இரும்பாலும், வெண்
கலத்தாலுமான விலங்கைப் போடுங்
கள். அதின் தண்டும் வேர்களும் தம்
மைச் சுற்றிலும் புல்லிருக்கின்ற வெளி
யில் இருக்கும். அது காட்டுமிருகங்கள்
மற்றும் பறவைகளுக்கு மத்தியில்
இருக்கும். அது பனியில் நனையும்.
16அவன் ஒரு மனிதனைப்போல சிந்திக்
கமாட்டான். அவன் ஒரு மிருகத்தின்
மனதைப் பெறுவான். அவன் இவ்
வாறு இருக்கையில் ஏழு பருவங்களும்
கடந்துபோகும்' என்று கூறினான்.
17"பரிசுத்த தேவதூதன் இத்தண்ட
னையை அறிவித்தது ஏன்? அதனால்
பூமியிலுள்ள அனைத்து ஜனங்களும்
மனிதர்களின் இராஜ்யங்களை மிக உன்
னதமான தேவன் ஆளுகிறார் என்று
அறிந்துகெள்வார்கள். தேவன் அந்த
இராஜ்யங்களை தாம் விரும்புகிற எவ
ருக்கு வேண்டுமானாலும் கொடுக்கி
றார். தேவன் அந்த இராஜ்யங்களை

ஆள பணிவானவர்களைத் தேர்ந்தெடுக்
கிறார்.
18“நேபுகாத்நேச்சாராகிய நான்
கண்ட கனவு இதுதான். இப்பொழுது
பெல்தெஷாத்சாரே (தானியேல்), இதன்
பொருள் என்னவென்று சொல். எனக்
காக என் இராஜ்யத்தில் உள்ள எந்த
ஞானிக்கும் இதற்கு விளக்கம் சொல்ல
முடியவில்லை. ஆனால் பெல்தெஷாத்
சாரே, நீ இதற்கு விளக்கமளிக்க முடி
யும். ஏனென்றால் பரிசுத்த தேவ
னுடைய ஆவி உன்னில் இருக்கிறது.

19தானியேல் (பெல்தெஷாத்சார்) ஒரு
மணிநேரத்திற்கு மிகவும் அமைதியாக இருந்
தான். அவனது சிந்தனை அவனைப் பாதித்
தது. எனவே, அரசன் அவனிடம்: “பெல்
தெஷாத்சாரே (தானியேல்) கனவோ அல்லது
அதன் பொருளோ உன்னைக் கலங்கப்
பண்ண வேண்டியதில்லை” என்றான்.
பிறகு பெல்தெஷாத்சார் (தானியேல்) அரச
னுக்குப் பதில் சொன்னான்: “என் எஜமா
னரே! அந்தக் கனவு உமது பகைவரைக்
குறித்தாய் இருக்க வேண்டும் என நான்
விரும்புகிறேன். அந்தக் கனவின் பொருளும்
உமக்கு விரோதமானவர்களைக் குறித்ததாக
இருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன்.
20-21நீர் உமது கனவில் ஒரு மரத்தைப்
பார்த்தீர். அம்மரம் பெரிதாகவும் பலமானதா
கவும் வளர்ந்தது. அதின் உச்சி வானத்தைத்
தொட்டது. அது பூமியின் எல்லா இடங்க
ளிலிருந்தும் பார்க்கக்கூடியதாக இருந்தது.
அதன் இலைகள் அழகாய் இருந்தன. அதில்
ஏராளமாகப் பழங்கள் இருந்தன. அப்பழங்கள்
ஏராளமானவர்களுக்கு உணவாகியது. அது
காட்டுமிருகங்களுக்கு வீடாகியது. அதன்
கிளைகள் பறவைகளுக்குக் கூடாகியது. நீர்
பார்த்த மரம் இதுதான். 22அரசே, நீரே
அந்த மரம். நீர் சிறப்பும், வல்லமையும்
பெற்றிருக்கிறீர். நீர் வானத்தைத் தொடும்
மரத்தைப்போன்று உயர்ந்து உமது வல்
லமை பூமியின் அனைத்துப் பாகங்களையும்
போய் அடைந்திருக்கிறது.
23“அரசே, நீர் பரலோகத்திலிருந்து ஒரு
பரிசுத்தமான தேவதூதன் வருவதைப் பார்த்
தீர். அவன், இம்மரத்தை வெட்டு, இதனை
அழித்துப்போடு, அதற்கு இரும்பாலும்
வெண்கலத்தாலுமான விலங்கைப் போடு.
அதன் தண்டையும் வேர்களையும் பூமியி
லேயே விட்டுவிடு. அதனைப் புல் வெளியில்
விட்டுவிடு. அது பனியில் நனையும். அவன்
காட்டுமிருகத்தைப் போன்று வாழ்வான்.
ஏழு பருவங்கள் (காலங்கள்) அவன்
இவ்வாறு இருக்கும்போதே கடந்துபோகும்.
24“கனவின் பொருள் இதுதான்: அரசே,
மிக உன்னதமான தேவன் அரசருக்கு
இவை ஏற்படும்படி கட்டளையிட்டார்:
25அரசரான நேபுகாத்நேச்சாரே, நீர் ஜனங்
களை விட்டுப் போகும்படி வற்புறுத்தப்
படுவீர். நீர் காட்டுமிருகங்களுக்கு மத்தியில்
வாழ்வீர். நீர் மாடுகளைப் போன்று புல்லைத்
தின்பீர். நீர் பனியில் நனைவீர். ஏழு
பருவங்கள் (ஆண்டுகள்) கடந்துபோகும்.
பிறகு நீர் உன்னதமான தேவனே மனித
இராஜ்யங்களை ஆள்கிறார் என்பதையும்,
உன்னதமான தேவன் தான் விரும்புகிற
எவருக்கும் இராஜ்யங்களைக் கொடுப்பார்
என்பதையும் கற்றுக்கொள்வீர்.
26“மரத்தின் தண்டையும் வேர்களையும்
பூமியில் விடவேண்டும் என்பதன் பொருள்
இதுதான்: உமது இராஜ்யம் உம்மிடம்
திருப்பிக் கொடுக்கப்படும். உமது இராஜ்
யத்தை உன்னதமான தேவன் ஆளுகிறார்
என்பதை நீர் கற்கும்போது இது நிகழும்.
27எனவே, அரசே, எனது ஆலோசனையை
ஏற்றுக்கொள்ளும். நீர் பாவம் செய்வதை
நிறுத்தி சரியானவற்றைச் செய்யவேண்டும்
என்று ஆலோசனை கூறுகிறேன். தீமை
செய்வதை நிறுத்தும். ஏழை ஜனங்களிடம்
இரக்கமாயிரும். பிறகு நீர் வெற்றியுள்ள
வராக இருப்பீர்.”
28அவை யாவும் அரசன் நேபுகாத்நேச்
சாருக்கு ஏற்பட்டன. 29-30கனவுக்கண்ட 12
மாதத்திற்குப் பிறகு அரசனான நேபுகாத்
நேச்சார் பாபிலோனிலுள்ள தன் அரண்ம
னையின் மாடியின் மேல் நடந்துகொண்டி
ருந்தான். அவன் மாடியிலிருந்துக் கொண்டு:
“பாபிலோனைப் பார்! நான் இந்தப்
பெரியநகரத்தைக் கட்டினேன். இது எனது
அரண்மனை! எனது வலிமையினால் நான்
இந்த அரண்மனையைக் கட்டினேன். நான்
எவ்வளவு பெரியவன் என்று காட்டுவதற்
காக இந்த இடத்தைக் கட்டினேன்” என்று
கூறினான்.
31இந்த வார்த்தைகள் அரசனின் வாயில்
இருக்கும்போதே பரலோகத்திலிருந்து ஒரு
சத்தம் உண்டானது. அச்சத்தம் சொன்னது:
“அரசனான நேபுகாத்நேச்சாரே, இவையெல்
லாம் உனக்கு நிகழும். உன்னிடமிருந்து
அரசன் என்னும் அதிகாரம் எடுத்துக்
கொள்ளப்படும். 32நீ ஜனங்களிடமிருந்து
பலவந்தமாக வெளியேற்றப்படுவாய். நீ காட்
டுமிருகங்களோடு வாழ்வாய். நீ பசுவைப்
போன்று புல்லைத் தின்பாய். ஏழு பருவங்
கள் (ஆண்டுகள்), நீ உனது பாடத்தைக்
கற்றுக்கொள்ளும் முன் கடந்துபோகும்.
பிறகு உன்னதமான தேவன் மனிதரின்
இராஜ்யங்களை ஆளுகிறார் என்பதை நீ
கற்பாய். அந்த உன்னதமான தேவன் அவர்
விரும்புகிறவர்களுக்கு இராஜ்யங்களைக்
கொடுக்கிறார்.”
33அக்காரியங்கள் உடனே நிகழ்ந்தன. நேபு
காத்நேச்சார் ஜனங்களைவிட்டு வெளியேற்
றப்பட்டான். அவன் பசுவைப்போன்று
புல்லைத் உண்ணத்தொடங்கினான். அவன்
பனியால் நனைந்தான். அவனது தலைமுடி

கழுகின் சிறகுகள் போன்று நீளமாக வளர்ந்
தன. அவனது நகங்கள் பறவையின் நகத்
தைப்போன்று வளர்ந்தது.
34 பிறகு காலத்தின் முடிவில், நேபுகாத்நேச்
சாராகிய நான் பரலோகத்தை நோக்கிப்
பார்த்தேன். என் புத்தி எனக்குத் திரும்பிவந்
தது. பிறகு நான் உன்னதமான தேவனைப்
போற்றினேன். நான் அவருக்கு மதிப்பையும்
மகிமையையும் என்றென்றும் கொடுத்தேன்.
தேவன் என்றென்றும் ஆளுகிறார். அவ
ரது இராஜ்யம் எல்லா தலைமுறைகளுக்கும்
தொடருகிறது.
35 பூமியிலுள்ள ஜனங்கள் உண்மையி
லேயே முக்கியமானவர்களல்ல. பரலோகத்
தின் வல்லமைகளோடும், பூமியின் ஜனங்க
ளோடும் தேவன் என்ன செய்ய விரும்புகி
றாரோ அதைச் செய்கிறார். எவராலும்
அவரது அதிகாரமுள்ள கையை நிறுத்த
முடியாது. எவராலும் அவரது செயல்க
ளைக் கேள்விகேட்க முடியாது.

36 எனவே, அந்த நேரத்தில், தேவன்
எனது சரியான புத்தியை எனக்குக்
கொடுத்தார். அவர் எனக்கு சிறந்த
மதிப்பையும், அரசன் என்ற வல்லமை
யையும் திரும்பக் கொடுத்தார். எனது
ஆலோசகர்களும், பிரபுக்களும் மீண்டும்
எனது ஆலோசனைகளைக் கேட்கத்
தொடங்கினார்கள். நான் மீண்டும் அரச
னானேன். நான் முன்பைவிட இன்னும்
சிறந்தவனாகவும் மிகுந்த வல்லமையுள்
ளவனாகவும் ஆனேன். 37 இப்பொழுது,
நேபுகாத்நேச்சாராகிய நான் பரலோக
அரசருக்கு புகழ்ச்சி, கனம், மகிமை
ஆகியவற்றைக் கொடுக்கிறேன். அவர்
செய்கிறவை எல்லாம் சரியானது.
அவர் எப்பொழுதும் நேர்மையானவர்.
அவரால் அகந்தையாய் நடக்கிறவர்
களைத் தாழ்த்தமுடியும்.

### சுவரின் மேல் எழுதிய கை

5 அரசனான பெல்ஷாத்சார் தனது அதி
காரிகளில் 1,000 பேருக்கு விருந்து
கொடுத்தான். அரசன் அவர்களோடு திரா
ட்சைரசம் குடித்துக்கொண்டிருந்தான். 2 பெல்
ஷாத்சார் திராட்சைரசம் குடித்துக்கொண்டி
ருக்கும்போதே அவன் தனது வேலைக்காரர்
களுக்குத் தங்கத்தாலும் வெள்ளியாலுமான
கிண்ணங்களைக் கொண்டுவரக் கட்டளை
யிட்டான். இந்தக் கிண்ணங்கள் அவனது
தந்தையான நேபுகாத்நேச்சாரால் எருச
லேமின் ஆலயத்திலிருந்து எடுத்துக்கொண்டு
வரப்பட்டவை. அரசனான பெல்ஷாத்சார்,
தனது பிரபுக்களும், மனைவிகளும், அடி
மைப் பெண்களும் அந்தக் கிண்ணங்களிலி
ருந்து குடிக்கவேண்டும் என்று விரும்பி
னான். 3 எனவே அவர்கள் எருசலேமின்
தேவாலயத்திலிருந்து கொண்டுவரப்பட்டக்
கிண்ணங்களைக் கொண்டுவந்தனர். அரச
னும், அவனது அதிகாரிகளும், மனைவிக
ளும், அடிமைப் பெண்களும் அவற்றில்
குடித்தனர். 4 அவர்கள் குடித்துக்கொண்டே
தங்கள் விக்கிரக தெய்வங்களைப் போற்றி
னார்கள், அவர்கள் தங்கம், வெள்ளி, வெண்
கலம், இரும்பு, கல், மண் போன்றவற்றால்
செய்யப்பட்ட வெறும் சிலைகளைப் போற்
றினார்கள்.
5 பிறகு திடீரென்று ஒரு மனிதக் கை
தோன்றி சுவரில் எழுதத் தொடங்கியது.
விரல்கள் சுவரிலுள்ள சாந்துபூச்சின் மீது
எழுதிற்று. அந்தக் கை அரசனது அரண்
மனையில் விளக்குக்கு எதிராயிருந்த சுவரில்
எழுதியது. அரசன் அந்தக் கை எழுதும்
போது கவனித்துக்கொண்டிருந்தான்.
6 அரசனான பெல்ஷாத்சார் மிகவும் பயந்
தான். அவனது முகம் பயத்தால் வெளி
றிற்று. அவனது முழங்கால்கள் நடுங்கி
இடித்துக்கொண்டன. அவனால் எழுந்துநிற்க
முடியவில்லை. ஏனென்றால் அவனது கால்
கள் அவ்வளவு பலவீனமாக இருந்தன.
7 அரசன் ஜோசியர்களையும், கல்தேயர்களை
யும் தன்னிடம் வருமாறு அழைத்தான்.
அவன் அந்த ஞானிகளிடம்: “இந்த எழுத்தை
வாசித்து இதன் பொருளை எனக்கு
விளக்கும் எவருக்கும் நான் பரிசளிப்பேன்.
அவனுக்கு இரத்தாம்பர ஆடை அணிவித்து,
அவன் கழுத்தில் பொன்மாலை அணிவிப்
பேன். நான் அவனை எனது இராஜ்யத்தில்
மூன்றாவது நிலையில் உள்ள ஆளுநராக
ஆக்குவேன்” என்றான்.
8 எனவே, அரசனின் எல்லா ஞானிகளும்
உள்ளே வந்தனர். அவர்களால் அந்த எழுத்
துக்களை வாசிக்கமுடியவில்லை. 9 பெல்ஷாத்
சாரின் அதிகாரிகள் குழப்பம் அடைந்தனர்.
அதோடு அரசன் மேலும் பயந்து கவலைப்
பட்டான். அவனது முகம் அச்சத்தால்
வெளிறியது.
10 பிறகு அரசனின் தாய் விருந்து நடை
பெற்ற அந்த இடத்திற்கு வந்தாள். அவள்
அரசன் மற்றும் அவனது அதிகாரிகளின்
குரல்களைக் கேட்டபின்: “ஓ அரசனே! நீ
என்றென்றும் வாழ்க. நீ பயப்படவேண்டாம்.
உனது முகம் பயத்தால் வெளிறவேண்டாம்.
11 உனது இராஜ்யத்தில் ஒருவன் இருக்கிறான்.
அவனிடம் பரிசுத்தமான தேவர்களின் ஆவி
உள்ளது. உன் தந்தையின் நாட்களில்
அவனால் பல இரகசியங்களைச் சொல்ல
முடிந்தது. அவன் தன்னைச் சுறுசுறுப்பும்
ஞானமும் உள்ளவனாகக் காட்டினான்.
அவன் இவ்விஷயங்களில் தேவர்களைப்
போன்றிருந்தான். உன் தந்தையான நேபுகாத்
நேச்சார் அந்த மனிதனை ஞானிகளுக்கெல்
லாம் பொறுப்பதிகாரியாக வைத்திருந்தார்.
அவன் ஜோசியர்களையும், கல்தேயர்களை
யும் ஆண்டான். 12 நான் சொல்லிக்கொண்டி
ருக்கிற அவனுடைய பெயர் தானியேல்.

*அரசர் அவனுக்கு பெல்தெஷாத்சார் என்று
பெயரிட்டார். பெல்தெஷாத்சார் மிக சுறுசு
றுப்புடையவன். அவனுக்குப் பல செய்திகள்
தெரியும். அவனால் கனவின் பலன்களும்,
இரகசியங்களின் விளக்கமும், கடினமான
விஷயங்களுக்குத் தீர்வுகளும் தெரியும்.
தானியேலைக் கூப்பிடு, அவனால் சுவர்
மேல் எழுதியுள்ளவற்றுக்கு விளக்கம் சொல்
லமுடியும்" என்றான்.*

13 *எனவே அவர்கள் தானியேலை அரச
னிடம் அழைத்துவந்தனர். அரசன் தானியே
லிடம்: "உனது பெயர் தானியேல்தானா?
யூதாவிலிருந்து என் தந்தையால் சிறை
பிடிக்கப்பட்டு கொண்டுவரப்பட்டவர்களில் நீ
ஒருவனா?*
14 *தேவர்களின் ஆவி உன்
னிடம் இருப்பதாக நான் அறிந்தேன்.
அதோடு நீ இரகசியங்களைப் புரிந்துகொள்
ளக் கூடியவன், வெளிச்சமும், புத்தியும்,
ஞானமும் கொண்டவன் என்றும் உன்னைப்
பற்றி நான் கேள்விப்பட்டேன்.*
15 *ஞானிகளும்,
சோதிடர்களும் என்னிடம் அழைத்துவரப்
பட்டு சுவரில் எழுதப்பட்டவற்றை வாசிக்
கச் சொன்னேன். இந்த எழுத்துக்களின்
பொருள் என்னவென்று அம்மனிதர்கள்
சொல்லவேண்டும் என்று விரும்பினேன்.
ஆனால் அவர்களால் சுவரில் எழுதப்
பட்டுள்ளவற்றுக்கானவிளக்கத்தை எனக்குச்
சொல்ல முடியவில்லை.*
16 *ஒவ்வொரு பொரு
ளின் அர்த்தத்தையும் உன்னால் விளக்க
முடியும் என்றும் மிகக் கடினமான பிரச்ச
னைகளுக்கும் உன்னால் பதில் சொல்ல
முடியும் என்றும் நான் உன்னைப்பற்றிக்
கேள்விப்பட்டேன். உன்னால் இச்சுவரில்
எழுதப்பட்டுள்ளவற்றை வாசித்து அதன்
பொருளை எனக்கு விளக்கமுடியுமானால்
நான் உனக்கு இரத்தாம்பர ஆடையைக்
கொடுப்பேன். நான் உனது கழுத்தில் பொன்
மாலையை அணிவிப்பேன். பிறகு நீ இந்த
இராஜ்யத்தின் மூன்றாவது உயர் ஆளுநராக
ஆகலாம்" என்றான்.*

17 *தானியேல் அரசனிடம், "பெல்ஷாத்சார்
அரசரே, உமது அன்பளிப்புகளை நீர்
உம்மிடமே வைத்துக்கொள்ளும். அல்லது
நீர் உமது பரிசுகளை வேறு யாருக்காவது
கொடும். ஆனால் நான் உமக்காகச் சுவரில்
எழுதப்பட்டுள்ளவற்றை வாசிப்பேன். நான்
அதன் பொருள் என்னவென்றும் உமக்கு
விளக்குவேன்.*

18 *"அரசே, உன்னதமான தேவன், உமது
தந்தையான நேபுகாத்நேச்சாரை சிறப்பும்,
வல்லமையும்கொண்ட அரசனாக ஆக்கினார்.
தேவன் அவரை மிக முக்கியமானவராக
ஆக்கினார்.*
19 *பல நாடுகளில் உள்ள ஜனங்
களும், பல மொழி பேசும் ஜனங்களும்
நேபுகாத்நேச்சாருக்கு அஞ்சினார்கள். ஏனெ
ன்றால் உன்னதமான தேவன் அவரை
மிக முக்கியமான அரசனாக்கினார். நேபுகாத்
நேச்சார் ஒருவன் மரிக்கவேண்டும் என்று
விரும்பினால் உடனே அவனைக் கொன்று
விடுவார். அவர் ஒருவன் வாழவேண்டும்
என்று விரும்பினால், அவனை வாழவிடு
வார். அவர் ஜனங்களை முக்கியப்படுத்த
வேண்டும் என்று விரும்பினால் அவர்களை
முக்கியப்படுத்துவார். அவர் ஜனங்களை
முக்கியமற்றவர்களாக்க வேண்டும் என்று
விரும்பினால் அவர்களை முக்கியமற்றவர்
களாக்குவார்.*

20 *ஆனால் நேபுகாத்நேச்சார் அகந்தையும்
கடின மனமும் கொண்டவரானார். எனவே,
அவரது வல்லமை அவரிடமிருந்து எடுத்துக்
கொள்ளப்பட்டது. அவரது இராஜ சிங்காச
னம் பறிக்கப்பட்டது; அவருடைய மகிமை
அகற்றப்பட்டது.*
21 *பிறகு நேபுகாத்நேச்சார்
ஜனங்களைவிட்டு வெளியேறும்படி வற்
புறுத்தப்பட்டார். அவருடைய மனது மிரு
கத்தின் மனதுபோலாயிற்று. அவர் காட்டுக்
கழுதைகளோடு வாழ்ந்து பசுவைப்போன்று
புல்லைத் தின்றார். அவர் பனியில் நனைந்
தார். அவர் தனது பாடத்தைக் கற்றுக்
கொள்ளும்வரை இவை நிகழ்ந்தன. பின்னர்
அவர் உன்னதமான தேவன் மனிதர்களின்
இராஜ்யங்களை ஆளுகிறார், அதோடு உன்ன
தமான தேவன் தான் விரும்புகிற எவரையும்
இராஜ்யத்தை ஆளவைப்பார் என்பதைக்
கற்றுக்கொண்டார்.*

22 *"ஆனால் பெல்ஷாத்சாரே, உமக்கு ஏற்க
னவே இவை தெரியும். நீர் நேபுகாத்நேச்
சாரின் மகன். ஆனாலும் நீர் உம்மை
இன்னும் பணிவுள்ளவராக்கிக்கொள்ள
வில்லை.*
23 *இல்லை, நீர் பணிவுள்ளவராக
வில்லை. அதற்குப் பதிலாக பரலோகத்தின்
கர்த்தருக்கு எதிராகத் திரும்பினீர். கர்த்த
ருடைய ஆலயத்திலுள்ள கிண்ணங்களைக்
குடிப்பதற்குக் கொண்டுவரும்படிக் கட்டளை
யிட்டீர். நீரும், உமது அரசு அதிகாரிகளும்,
உமது மனைவியரும், அடிமைப்பெண்களும்,
அக்கிண்ணங்களில் திராட்சைரசத்தைக்
குடித்தீர்கள். நீர் பொன்னாலும், வெள்ளியா
லும், வெண்கலத்தாலும், இரும்பாலும்,
மரத்தாலும், கல்லாலும் ஆன தெய்வங்
களைப் போற்றினீர். அவை உண்மையில்
தெய்வங்கள் அல்ல. அவற்றால் பார்க்கவோ,
கேட்கவோ, புரிந்துகொள்ளவோ முடியாது.
ஆனால் உமது வாழ்க்கை மீதும், உமது
செயல்கள் மீதும் அதிகாரம் படைத்த
தேவனை நீர் மகிமைப்படுத்தவில்லை.*
24 *அத
னால், தேவன் சுவர்மேல் எழுதுகிற கையை
அனுப்பினார்.*
25 *சுவரில் எழுதப்பட்டுள்ள
வார்த்தைகள் இவைதான்:*

***மெனே, மெனே, தெக்கேல், உப்பார்சின்,***

26 *"இதுதான்அவ்வார்த்தைகளின் பொருள்:*

***மெனே:*** *உன் ஆளுகை முடியும். நாட்
களைத் தேவன் எண்ணி வைத்திருக்கிறார்.*
27 ***தெக்கேல்:*** *நீ தராசிலே நிறுக்கப்பட்டுக்
குறைவாய் காணப்பட்டாய்.*

28 **உப்பார்சின்:** உன் ஆளுகை உன்னிட
மிருந்து எடுக்கப்பட்டு, அது மேதியருக்கும்
பெர்சியருக்கும் பங்கிட்டுக் கொடுக்கப்படும்"
என்றான்.
29 பின்னர் பெல்ஷாத்சார் தானியேலுக்கு
இரத்தாம்பரத்தை அணிவித்து, அவனது
கழுத்தில் பொன்மாலையைப் போட்டான்.
அவன் இராஜ்யத்தின் மூன்றாம் ஆளுநராக
உயர்த்தப்பட்டான். 30 அதே இரவில் பாபி
லோனின் அரசனான பெல்ஷாத்சார் கொல்
லப்பட்டான். 31 தரியு என்னும் மேதியன்
புதிய அரசனானான். தரியு 62 வய
துடையவனாக இருந்தான்.

## தானியேலும் சிங்கங்களும்

6 தரியு தனது இராஜ்யம் முழுவதையும்
ஆளுவதற்கு 120 தேசாதிபதிகளைத் தேர்ந்
தெடுப்பது நல்ல திட்டமென்று எண்ணி
னான். 2 அவன் அந்த 120 தேசாதிபதிக
ளையும் கட்டுப்படுத்த மூன்றுபேரைத் தேர்ந்
தெடுத்தான். இந்த மூன்று மேற்பார்வை
யாளர்களில் தானியேலும் ஒருவன். அரசன்
இவ்வாறு ஓர் ஏற்பாடு செய்துவிட்டதால்
எவரும் அவனை ஏமாற்ற முடியாது.
அதோடு அவன் தனது இராஜ்யத்தில் எதை
யும் இழக்கமாட்டான். 3 தானியேல் தன்னை
மற்ற மேற்பார்வையாளர்களைவிடச் சிறந்த
வனாகக் காட்டினான். தானியேல் இதனைத்
தனது நற்குணங்கள் மூலமும், நல்ல திறமை
கள் மூலமும் செய்தான். அரசன் தானி
யேலின்மேல் மிகவும் வியப்படைந்தான்.
அவன் தானியேலை இராஜ்யம் முழுவதற்கும்
ஆளுநராக்கிவிடலாம் என்று திட்டமிட்
டான். 4 ஆனால் மற்ற மேற்பார்வையாளர்
களும், மற்ற தேசாதிபதிகளும் இதனை
அறிந்ததும் மிகவும் பொறாமை கொண்ட
னர். அவர்கள் தானியேலை குற்றஞ்சாட்ட
காரணங்களைத் தேடினர். எனவே அவர்கள்
தானியேல் அரசு பணிகளைச் செய்யும்
போது மிகக் கவனமாகக் கவனித்தனர்.
ஆனால் அவர்களால் தானியேலிடம் எந்தக்
குறையையும் கண்டுபிடிக்க முடியவில்லை.
தானியேல் நேர்மையாளனாகவும், நம்பிக்
கைக்குரியவனாகவும் இருந்தான். அவன்
அரசனை ஏமாற்றாமல் மிகக் கடுமையாக
வேலை செய்துவந்தான்.
5 இறுதியாக அந்த ஆட்கள், "நாம் தானி
யேலை குற்றம் கண்டுபிடிக்கும்படி தவறான
எதையும் அவன் செய்யமாட்டான். எனவே
நாம் அவனது தேவனுடைய சட்ட விஷ
யத்தில் குற்றம் காணவேண்டும்" என்று
பேசிக்கொண்டனர்.
6 எனவே, அந்த மேற்பார்வையாளர்களும்,
தேசாதிபதிகளும் ஒரு குழுவாக அரசனிடம்
சென்றனர். அவர்கள் அரசனை நோக்கி,
"தரியு அரசனே, என்றென்றும் வாழ்வீராக.
7 மேற்பார்வையாளர்களும், தேசாதிபதிகளும்,
பிரபுக்களும், மந்திரிமார்களும், தலைவர்க
ளும் ஒரு விஷயத்தை ஒப்புக்கொண்டார்கள்.
அதாவது நாங்கள் அரசன் ஒரு சட்டத்தைச்
இயற்றவேண்டும் என்று எண்ணுகிறோம்.
எல்லோரும் அதற்கு அடிபணியவேண்டும்.
இதுதான் அந்தச் சட்டம்: எவராவது இன்
னும் 30 நாட்களுக்கு அரசனாகிய உம்மைத்
தவிர வேறெந்த தேவனையோ, மனித
ரையோ நோக்கி எந்த ஒரு காரியத்திற்கும்
ஜெபம் செய்தால் அவன் சிங்கக்கூண்டிலே
போடப்படுவான். 8 இப்பொழுது இதனைச்
சட்டமாக்கி இந்தத் தாளிலே கையெழுத்துப்
போடும். இவ்வாறு இந்தச் சட்டம் மாற்ற
முடியாதபடி இருக்கும். ஏனென்றால் மேதியர்
கள் மற்றும் பெர்சியர்களின் சட்டங்கள்
விலக்கவோ மாற்றவோ முடியாதவை"
என்றனர். 9 அவர்கள் சொன்னபடி அரச
னான தரியு இச்சட்டத்தை இயற்றி
கையெழுத்துப் போட்டான்.
10 தானியேல் ஒவ்வொரு நாளும் தேவ
னிடம் மூன்றுமுறை ஜெபம் செய்வான்.
தானியேல் ஒவ்வொரு நாளும் மூன்றுமுறை
முழங்காலில் நின்று தேவனிடம் ஜெபித்து
அவரைப் போற்றுவான். தானியேல் இப்
புதிய சட்டத்தைக் கேள்விப்பட்டதும் தனது
வீட்டிற்குப் போய் தனது அறையில் உள்ள
மாடியின்மீது ஏறினான். தானியேல் எருச
லேமை நோக்கியிருக்கிற ஜன்னல் அருகில்
போய் முழங்காலிட்டு எப்பொழுதும் செய்
வதுபோன்று ஜெபித்தான்.
11 அந்த ஆட்கள் குழுவாகச் சென்று
தானியேலைக் கண்டுபிடித்தனர். அவர்கள்
தானியேல் தேவனிடம் உதவிகேட்டு ஜெபிப்
பதக் கண்டனர். 12 எனவே அந்த ஆட்கள்
அரசனிடம் சென்றனர். அவர்கள் அவனிடம்
அவன் இயற்றிய சட்டத்தைப்பற்றி பேசினர்.
அவர்கள், "தரியு அரசே, எந்த மனிதனும்
30 நாள்வரையிலும் அரசராகிய உம்மைத்
தவிர வேறு எந்தத் தேவனையும், ஆளையும்
நோக்கி யாதொரு காரியத்தைக் குறித்தும்
ஜெபம் செய்தால் அவனைச் சிங்கக்கூண்
டிலே போடவேண்டும் என்று நீர் கட்டளைப்
பத்திரத்திலே கையெழுத்திட்டீர் அல்லவா?"
எனறனர்.

அதற்கு அரசன், "ஆமாம். நான் அந்தச்
சட்டத்தில் கையெழுத்திட்டேன். அதோடு
மேதியர்கள் மற்றும் பெர்சியாகளுக்கு இருக்
கும் மாறாத சட்டத்தின்படி அது ரத்து
செய்யப்படவோ அல்லது மாற்றப்படவோ
கூடாது" என்றான்.
13 அந்த ஆட்கள் அரசனிடம், "தானியேல்
என்ற பெயருடைய அந்த மனிதன் உமக்கு
மரியாதை செலுத்துவதில்லை. தானியேல்
யூதாவிலிருந்து கொண்டுவரப்பட்ட கைதிக
ளில் ஒருவன். தானியேல் நீர் கையெழுத்
திட்ட சட்டத்தைப்பற்றி கவலைப்படவில்
லை. தானியேல் ஒவ்வொரு நாளும் மூன்று
முறை தன் தேவனிடத்தில் ஜெபம் பண்ணி
உதவிக்காக மன்றாடுகிறான்" என்றனர்.

14 அரசன் இதனைக் கேள்விப்பட்டதும்
மிக வருத்தப்பட்டு கலக்கமடைந்தான். அர
சன் தானியேலைக் காப்பாற்றவேண்டும்
என்று முடிவுசெய்தான். அவன் மாலைவரை
இதற்கான ஒரு திட்டத்தைப்பற்றியே எண்
ணினான். 15 பிறகு அந்த ஆட்கள் ஒரு
குழுவாக அரசனிடம் சென்றனர். அவர்கள்
அவனிடம், “அரசே, நினைத்துப்பாரும்.
மேதியர் மற்றும் பெர்சியரின் சட்டமானது,
அரசனால் கையெழுத்திடப்பட்ட கட்ட
ளையோ அல்லது சட்டமோ விலக்கப்
படவோ மாற்றப்படவோ முடியாது என்று
கூறுகிறது” என்றார்கள்.
16 எனவே, தரியு அரசன் கட்டளையிட்
டான். அவர்கள் தானியேலை அழைத்து
வந்து சிங்கங்களின் கூண்டில் போட்டனர்.
அரசன் தானியேலிடம், “நீ தொழுது
கொள்ளும் தேவன் உன்னைக் காப்பாற்று
வார் என்று நான் நம்புகிறேன்” என்று
சொன்னான். 17 ஒரு பெரிய பாறாங்கல்லைக்
கொண்டுவந்து சிங்கக் குகையின் வாசலை
மூடினார்கள். பிறகு அரசன் தனது
மோதிரத்தைப் பயன்படுத்தி பாறையின்மேல்
முத்திரையிட்டான். பிறகு அவன் தன்
அதிகாரிகளின் மோதிரங்களாலும் பாறை
யின்மேல் முத்திரையிட்டான். இது, எவரா
லும் பாறாங்கல்லைத் திறந்து தானியேலை
கூண்டிலிருந்து வெளியே கொண்டுவர
முடியாது என்று காட்டியது. 18 பிறகு அரச
னான தரியு தன் வீட்டிற்குத் திரும்பிப்
போனான். அரசன் அன்றிரவு உணவு
உண்ணவில்லை, அவன் யாரும் வந்து
வேடிக்கை செய்து மகிழ்வூட்டுவதை விரும்ப
வில்லை. அரசனால் இரவு முழுவதும் தூங்க
முடியவில்லை.
19 மறுநாள் காலையில் கிழக்கு வெளுக்
கும்போது அரசனான தரியு எழுந்து சிங்கங்
களின் குகைக்கு ஓடினான். 20 அரசன் மிகத்து
யரமாக இருந்தான். அவன் சிங்கங்களின்
குகைக்கருகில் போய்: தானியேலைக்
கூப் பிட்டான். அரசன், “தானியேலே ஜீவ
னுள்ள தேவனுடைய ஊழியனே, நீ எப்பொ
ழுதும் உன் தேவனுக்குச் சேவைசெய்கி
றாயே, உனது தேவனால் உன்னைச் சிங்கங்
களிடமிருந்து காப்பாற்றமுடிந்ததா?” என்
றான்.
21 தானியேல் அதற்குப் பதிலாக, “அரசே,
நீர் என்றென்றும் வாழ்க. 22 தேவன் என்
னைக் காக்கத் தூதனை அனுப்பினார்.
தூதன் சிங்கங்களின் வாயை அடைத்தான்.
சிங்கங்கள் என்னைக் காயப்படுத்தவில்லை.
ஏனென்றால், நான் குற்றமறியாதவன் என்று
தேவன் அறிவார். அரசே நான் உமக்கு
எதிராக எந்தக் கேடும் செய்யவில்லை”
என்றான்.
23 அரசனான தரியு மிகுந்த மகிழ்ச்சிய
டைந்தான். அவன் தனது வேலைக்காரர்களி
டம் சிங்கக்குகையிலிருந்து தானியேலை
வெளியேற்றும்படிச் சொன்னான். தானி
யேலைச் சிங்கக்குகையிலிருந்து வெளியே
அழைத்தபோது அவர்கள் அவன் உடலில்
எவ்வித காயத்தையும் காணவில்லை. தானி
யேல் சிங்கங்களால் காயப்படுத்தப்பட
வில்லை, ஏனென்றால் அவன் தேவனிடம்
விசுவாசம் வைத்தான்.
24 பிறகு அரசன், தானியேல்மீது குற்றம்
சாட்டி அவனைச் சிங்கக்குகைக்குள் அனுப்
பியவர்களைக் கொண்டுவரும்படிக் கட்ட
ளையிட்டான். அம்மனிதர்களும் அவர்களது
மனைவிகளும் குழந்தைகளும் சிங்கக்குகைக்
குள் தள்ளப்பட்டனர். அவர்கள் குகையின்
தரைக்குள் விழுவதற்குமுன்பே சிங்கங்கள்
அவர்கள் மேல் பாய்ந்து, அவர்களது உடல்
களைக் கிழித்து எலும்புகளை மென்று
உண்டன.
25 பிறகு அரசனான தரியு பின்வரும்
கடிதத்தை உலகம் முழுவதிலும் உள்ள
பல்வேறு மொழி பேசுகிற அனைத்து
ஜனங்களுக்கும் எழுதினான்:
26 “வாழ்த்துக்கள். நான் ஒரு புதிய சட்ட
த்தை இயற்றியிருக்கிறேன். இச்சட்டம் என்
இராஜ்யத்தில் உள்ள எல்லாப் பகுதி
ஜனங்களுக்கும் உரியது. நீங்கள் எல்லோரும்
தானியேலின் தேவனுக்கு அஞ்சி மரியாதை
செய்யவேண்டும்.

தானியேலின் தேவன் ஜீவனுள்ள தேவன்,
தேவன் என்றென்றும் இருக்கிறார். அவரது
இராஜ்யம் என்றென்றும் அழியாதது. அவ
ரது ஆட்சி முடிவில்லாதது.
27 தேவன் ஜனங்களுக்கு உதவிசெய்து காப்
பாற்றுகிறார். தேவன் பரலோகத்திலும் பூமி
யிலும் அற்புதங்களைச் செய்கிறார். ஆண்ட
வர் தானியேலைச் சிங்கங்களிடமிருந்து
காப்பாற்றினார்.
28 எனவே தானியேல், தரியு அரசனாக
இருந்த காலத்திலும், பெர்சியனாகிய கோரே
சுடைய ஆட்சியிலும் வெற்றிகரமாக வாழ்ந்
தான்.

## நான்கு மிருகங்களைப் பற்றிய தானியேலின் கனவு

7 பாபிலோனின் அரசனாகிய பெல்ஷாத்சா
ரின் ஆட்சியின் முதல் ஆண்டில்*
தானியேல் ஒரு கனவுகண்டான். தானியேல்
தனது படுக்கையில் படுத்திருந்தபோது இந்
தத் தரிசனங்களைக் கண்டான். தானியேல்
தான் கண்ட கனவைப்பற்றி எழுதினான்.
2 தானியேல் சொன்னான்: “நான் தரிச
னத்தை இரவில் கண்டேன். அந்தத் தரிச
னத்தில் நான்கு திசைகளிலிருந்தும் காற்ற
டித்துக் கொண்டிருந்தது. அக்காற்றுகள் கட
லைக் கொந்தளிக்கச் செய்தது. 3 நான் நான்கு
பெரிய மிருகங்களைப் பார்த்தேன். அவை

---

**பெல்ஷாத்சாரின் ஆட்சியின் முதல் ஆண்டு** கி.மு. 553.

ஒவ்வொன்றும் இன்னொன்றிலிருந்து வேறு
பட்டதாக இருந்தது. அந்த நான்கு மிருகங்
களும் கடலிலிருந்து வெளியே வந்தன.
4 "முதல் மிருகம் ஒரு சிங்கத்தைப் போன்றி
ருந்தது. அதற்குக் கழுகைப்போன்று சிறகுக
ளும் இருந்தன. நான் இந்த மிருகத்தைக்
கவனித்தேன். பிறகு அதன் சிறகுகள்
பிடுங்கப்பட்டன. அது தரையிலிருந்து எடுக்
கப்பட்டு மனிதனைப்போன்று இரண்டு
காலில் நின்றது. மனித இருதயம் அதற்குக்
கொடுக்கப்பட்டது.
5 "பிறகு நான் எனக்கு முன்னால் இரண்
டாவது மிருகத்தைப் பார்த்தேன். இந்த
மிருகம் கரடியைப் போன்றிருந்தது. அது
ஒரு பக்கமாக சாய்ந்து நின்றது. அது
தனது வாயின் பற்களுக்குள்ளே மூன்று
விலா எலும்புகளைக் கவ்விக்கொண்டி
ருந்தது. 'எழுந்திரு. நீ விரும்புகிற எல்லா
இறைச்சியையும் சாப்பிடு' என்று அதற்குச்
சொல்லப்பட்டது.
6 "அதன் பிறகு நான் இன்னொரு
மிருகத்தைக் கண்டேன். இந்த மிருகம்
ஒரு சிவிங்கியைப் போன்றிருந்தது. அதன்
முதுகின்மேல் நான்கு சிறகுகள் இருந்தன.
அச்சிறகுகள் பறவைகளின் சிறகுகளைப்
போன்றிருந்தன. இந்த மிருகத்திற்கு நான்கு
தலைகள் இருந்தன. இதற்கு ஆட்சிசெய்யும்
உரிமை கொடுக்கப்பட்டது.
7 "அதன் பிறகு இரவில் தரிசனத்தில்
என் முன்பு நான்காவது மிருகத்தைக்
கண்டேன். இந்த மிருகம் மிக பயங்கரமும்,
பலமும் உடையதாக இருந்தது. இது மிகப்
பலமுடையதாகத் தோன்றியது. இதற்கு
பெரிய இரும்புப் பற்கள் இருந்தன. இந்த
மிருகம் தன் இரையைப் பிடித்து நொறுக்கி
தின்றது. இந்த மிருகம் மிச்சமுள்ளவற்றைக்
காலால் மிதித்து துவைத்தது. இந்த
நாலாவது மிருகம் நான் பார்த்த மற்ற
மிருகங்களைவிட வேறுபட்டதாக இருந்தது.
இந்த மிருகத்திற்குப் பத்துக் கொம்புகள்
இருந்தன.
8 "நான் அந்தக் கொம்புகளைப் பார்த்துக்
கொண்டிருந்தேன். பிறகு அக்கொம்புகளுக்கி
டையில் இன்னொரு கொம்பு முளைத்தது.
இது சிறிய கொம்பாக இருந்தது. இச்சிறிய
கொம்பில் மனித கண்களைப்போன்று கண்
கள் இருந்தன. இச்சிறிய கொம்பில் வாயும்
இருந்தது. அந்த வாய் பேசியது. சிறு
கொம்பானது மற்ற கொம்புகளில் மூன்றைப்
பிடுங்கியது.

### நான்காவது விலங்கின் தீர்ப்பு

9 "நான் பார்த்துக்கொண்டிருந்தபோது, சிங்
காசனங்கள் அவற்றின் இடத்தில் வைக்கப்
பட்டன. நீண்ட ஆயுசுள்ள அரசர் ஒருவர்
அவரது சிங்காசனத்தில் அமர்ந்திருந்தார்.
அவரது ஆடைகள் மிகவும் வெண்மையாக
இருந்தன. அவை பனியைப் போன்று
வெண்மையாக இருந்தன. அவரது தலை
முடியும் வெண்மையாக இருந்தது. அது
கம்பளியைப்போன்று வெண்மையாக இருந்
தது. அவரது சிங்காசனம் நெருப்பினால்
செய்யப்பட்டிருந்தது. அச்சிங்காசனத்தின் சக்
கரங்கள் ஜுவாலைகளால் செய்யப்பட்டிருந்
தன.
10 நீண்ட ஆயுசுள்ள அரசருக்கு முன்னால்
ஒரு நெருப்பு ஆறு ஓடிக்கொண்டிருந்தது.
பல லட்சம்பேர் அரசருக்குப் பணி விடைச்
செய்தனர். அவருக்கு முன்னால் கோடா
கோடிபேர்* நின்றார்கள். இது செயல்படத்
துவங்கும் நீதிமன்றம்போல், புத்தகங்
களெல்லாம் திறந்துவைக்கப்பட்டிருந்தன.
11 "நான் பார்த்துக்கொண்டே இருந்தேன்.
ஏனென்றால் சிறிய கொம்பு வீண்பெருமை
பேசிக்கொண்டிருந்தது. நான்காவது மிருகம்
கொல்லப்படும்வரை நான் பார்த்துக் கொண்
டிருந்தேன். அதன் உடல் அழிக்கப்பட்டு,
அது எரிகின்ற நெருப்பில் வீசி எறியப்
பட்டது. 12 மற்ற மிருகங்களின் அதிகாரமும்
ஆட்சியும் அவற்றிடமிருந்து பிடுங்கப்
பட்டன. ஆனால் அவை குறிப்பிட்ட
காலம்வரை வாழ அனுமதிக்கப்பட்டன.
13 "இரவில் என் தரிசனத்தில் நான் பார்த்த
போது எனக்கு முன்னால் மனிதனைப்போல்
காணப்பட்ட ஒருவரைப் பார்த்தேன். அவர்
வானத்து மேகங்களின்மேல் வந்துகொண்டி
ருந்தார். அவர் நித்திய ஆயுசுள்ள அரசரிடம்
வந்தார். அவர்கள் அவரை அரசருக்கருகில்
கொண்டுவந்தனர்.
14 "மனிதனைப்போன்று தோற்றமளித்த
அவரிடம் அதிகாரம், மகிமை, ஆட்சி
உரிமை கொடுக்கப்பட்டன. எல்லா ஜனங்
களும் எல்லா மொழிக்காரர்களும் அவரைத்
தொழவேண்டும். அவரது ஆட்சி என்
றென்றும் நிலைத்திருக்கும். அவரது இரா
ஜ்யம் என்றென்றும் தொடரும். இது என்
றைக்கும் அழிக்கப்படாமல் இருக்கும்.

### நான்காவது மிருகத்தைப் பற்றிய கனவின் விளக்கம்

15 "தானியேலாகிய நான் குழம்பி கவலைப்
பட்டேன். அத்தரிசனங்கள் என் மனதிற்குள்
போய் என்னைத் துன்புறுத்தியது. 16 நான்
அங்கே நின்றுகொண்டிருந்த ஒருவன் அரு
கில் சென்றேன். இதன்பொருள் என்ன
வென்று நான் அவனிடம் கேட்டேன்.
அவன் இதன் பொருள் என்னவென்று
எனக்கு விளக்கினான். 17 அவன் சொன்
னான்: 'நான்கு மிருகங்களும் நான்கு
இராஜ்யங்களாகும். இந்த நான்கு இராஜ்யங்க
ளும் பூமியிலிருந்து வந்திருக்கின்றன.
18 ஆனால் தேவனுடைய விசேஷ ஜனங்கள்

---

**கோடாகோடிபேர்** இவர்கள் தேவதூதரும், விண்
ணுலகின் சேனைகளும் ஆகும்.

இராஜ்யத்தைப் பெறுவார்கள். அவர்கள்
இந்த இராஜ்யத்தை என்றென்றும் வைத்தி
ருப்பார்கள்” என்றான்.
19“பிறகு, நான் நான்காவது மிருகம்
எதைக் குறிக்கும்? அதன் பொருள் என்ன?
என்பதை அறிந்துகொள்ள விரும்பினேன்.
அந்த நான்காவது மிருகமானது மற்ற
மிருகங்களிடமிருந்து வித்தியாசமானது. இது
மிகப்பயங்கரமானது. இதற்கு இரும்புப்பல்
லும் வெண்கல நகங்களும் இருந்தன. அது
தன் இரையைப் பிடித்து நொறுக்கி முழுமை
யாகத் தின்றது. மற்றவர்களை அது காலால்
மிதித்துத் துவைத்தது. 20நான், நான்காவது
மிருகத்தின் தலைமீது முளைத்த பத்துக்
கொம்புகளைப்பற்றி அறிந்துகொள்ள விரும்
பினேன். அதில் முளைத்த சிறிய கொம்பைப்
பற்றியும் அறிந்துகொள்ள விரும்பினேன்.
அச்சிறிய கொம்பு மற்ற பத்துக் கொம்பு
களில் மூன்றைப் பிடுங்கியது. அச்சிறு
கொம்பிற்கு மனிதக்கண்கள் இருந்தன. அது
தொடர்ந்து இறுமாப்பாய்ப் பேசியது. மற்றக்
கொம்புகளைவிடவும் இது குரூரமானதாகக்
காணப்பட்டது. 21நான் கவனித்துக்கொண்
டிருக்கும்போதே, இச்சிறு கொம்பு தேவனு
டைய சிறப்பான ஜனங்களுக்கு எதிராகச்
சண்டையிடத் துவங்கியது. அக்கொம்பு
அவர்களைக் கொன்றது. 22சிறு கொம்
பானது, தேவனுடைய விசேஷமான ஜனங்
களைத் நித்திய ஆயுசுள்ள அரசர் வந்து
நியாயம்தீர்க்கும்வரை கொலை செய்து
கொண்டிருந்தது. நித்திய ஆயுசுள்ள அரசர்
சிறிய கொம்பினை நியாயந்தீர்த்தார். இத்
தீர்ப்பு தேவனுடைய விசேஷ ஜனங்களுக்கு
உதவியாக இருந்தது. அவர்கள் இராஜ்யத்
தைப் பெற்றனர்.
23அவன் இதனை என்னிடம் விளக்கி
னான்: ‘நான்காவது மிருகம் என்பது பூமி
யில் வரவிருக்கும் நான்காவது இராஜ்யம்.
இது மற்ற இராஜ்யங்களைவிட வேறுபட்
டது. நான்காவது இராஜ்யமானது உலகில்
தன்னைச் சுற்றியுள்ள ஜனங்கள் அனைவரை
யும் அழிக்கும். அது நடந்து உலகில்
தன்னைச் சுற்றியுள்ள நாடுகளை மிதித்து
நசுக்கும். 24இதில் பத்துக் கொம்புகள் என்பது
இந்த நான்காவது இராஜ்யத்தில் வரப்
போகும் பத்து அரசர்களைக் குறிக்கும்.
இந்தப் பத்து அரசர்களும் போனபின்பு
அடுத்த அரசன் வருவான். அவன் அவ
னுக்கு முன்பு ஆண்ட அரசர்களைவிட
வேறுபட்டவனாக இருப்பான். அவன் மற்ற
அரசர்களில் மூன்றுபேரைத் தோற்கடிப்பான்.
25இந்தச் விசேஷ அரசன் மிக உன்னதமான
தேவனுக்கு எதிராகப் பேசுவான். அந்த
அரசன் தேவனுடைய விசேஷ ஜனங்களைக்
காயப்படுத்தவும் கொல்லவும் செய்வான்.
அந்த அரசன் ஏற்கெனவே அமைக்கப்பட்ட
காலங்களையும் பிரமாணங்களையும் மாற்ற
முயல்வான். தேவனுடைய விசேஷ ஜனங்
கள் மூன்றரை வருடங்களுக்கு அவன்
கையில் ஒப்புக்கொடுக்கப்படுவார்கள்.
26“ஆனாலும் என்ன நிகழும் என்பதை
நியாயசபை முடிவுசெய்யும். அந்த அரசனின்
வல்லமை எடுத்துக் கொள்ளப்படும். அவ
னது இராஜ்யம் முழுமையாக முடிவடையும்.
27பிறகு தேவனுடைய விசேஷ ஜனங்கள்
இராஜ்யத்தை ஆளுவார்கள். அவர்கள்
பூமியிலுள்ள அனைத்து இராஜ்யங்களையும்
ஆள்வார்கள். இந்த இராஜ்யம் என்றென்றும்
இருக்கும். அவர்களுக்கு எல்லா இராஜ்யங்
களில் உள்ள ஜனங்களும் மதிப்பளித்து,
சேவை செய்வார்கள்.’
28“அதுதான் கனவின் முடிவாகும். தானி
யேலாகிய நான் மிகவும் பயந்தேன். எனது
முகம் பயத்தால் வெளுத்துப்போனது. நான்
கண்டவற்றையும், கேட்டவற்றையும் பற்றி
மற்ற ஜனங்களிடம் சொல்லவில்லை”
என்றான்.

## செம்மறியாட்டுக்கடா மற்றும் வெள்ளாடு பற்றிய தானியேலின் கனவு

8 பெல்ஷாத்சாரின் மூன்றாம் ஆட்சியாண்
டில் நான் இந்தத் தரிசனத்தைப் பார்த்
தேன். இது முதலில் காண்பிக்கப்பட்ட
தரிசனத்திற்குப் பிறகு உள்ளது. 2இந்த
தரிசனத்தில் நான் சூசான்* என்ற
நகரத்தில் இருந்தேன். சூசான் என்பது
ஏலாம் என்னும் மாநிலத்தின் தலைநகரம்.
நான் ஊலாய் ஆற்றின் கரையில் நின்று
கொண்டிருந்தேன். 3நான் கண்களை ஏறெடுத்
துப் பார்த்தேன். ஒரு செம்மறியாட்டுக்கடா
ஊலாய் ஆற்றின் கரையில் நிற்பதை நான்
பார்த்தேன். அந்த ஆட்டுக்கடாவிற்கு
இரண்டு நீண்ட கொம்புகள் இருந்தன.
ஒன்று இன்னொன்றைவிட நீளமானது. ஒரு
கொம்பு இன்னொன்றைவிட பின்னாலிருந்
தது. 4அந்த செம்மறியாட்டுக்கடா தனது
கொம்புகளோடு பாய்ந்ததைப் பார்த்தேன்.
அந்த ஆட்டுக்கடா மேற்கிலும் வடக்கிலும்
தெற்கிலுமாக ஓடியதை நான் கவனித்தேன்.
எந்த மிருகத்தினாலும் இதனைத் தடுக்க
முடியவில்லை. மற்ற மிருகங்களை எவரா
லும் காப்பாற்ற முடியவில்லை. அந்த
ஆட்டுக்கடாவால் தன் விருப்பம்போல்
செய்யமுடிந்தது. எனவே ஆட்டுக்கடா வல்
லமை பெற்றது.
5நான் செம்மறியாட்டுக்கடாவைப்பற்றி
நினைத்தேன். நான் நினைத்துகொண்டிருக்
கும்போது மேற்கிலிருந்து ஒரு வெள்ளாட்டுக்
கடா வருவதைப் பார்த்தேன். வெள்ளாட்டுக்
கடாவிற்கு எளிதில் பார்க்கும் வகையில்
ஒரு பெரிய கொம்பு இருந்தது. அந்த
வெள்ளாடு பூமி முழுவதும் ஓடியது. இந்த
வெள்ளாட்டுக்கடாவின் கால்கள் தரையில்
படவேயில்லை.

---

**சூசான்** பெர்சியாவின் தலைநகரம்.

[6]அந்த வெள்ளாட்டுக்கடா 2 கொம்புக
ளையுடைய செம்மறியாட்டுக்கடாவிடம்
வந்தது. இந்த ஆட்டுகடாதான் நான் ஊலாய்
ஆற்றின் கரையில் பார்த்தது; வெள்ளாட்
டுக்கடா கோபமாக இருந்தது. இது செம்மறி
ஆட்டுக்கடாவை நோக்கி ஓடியது. [7]வெள்
ளாட்டுக்கடா கோபமாக இருந்தது. இது
செம்மறியாட்டுக்கடாவின் இரண்டு கொம்பு
களையும் ஒடித்தது. செம்மறியாட்டுக்கடா
வால் வெள்ளாட்டுக்கடாவைத் தடுக்கமுடிய
வில்லை. வெள்ளாட்டுக்கடா, செம்மறியாட்
டுக்கடாவைத் தரையில் வீழ்த்தியது. பிறகு
வெள்ளாட்டுக்கடா செம்மறியாட்டுக்கடா
வின்மேல் மிதித்தது. வெள்ளாட்டுக்கடாவிட
மிருந்து செம்மறியாட்டுக்கடாவைக் காப்
பாற்ற அங்கே யாருமில்லை.
[8]எனவே வெள்ளாட்டுக்கடா மிகவும் வல்
லமை பெற்றது. ஆனால் அது வல்லமை
உடையதாக இருக்கும்போதே அதன் ஒரு
பெரிய கொம்பு உடைந்தது. அந்த ஒரு
கொம்பிருந்த இடத்தில் நான்கு கொம்புகள்
வளர்ந்தன. அந்த நான்கு கொம்புகளும்
எளிதில் பார்க்கும்படியாக இருந்தன. அந்த
நான்கு கொம்புகளும் நான்கு வெவ்வேறு
திசைகளையும் பார்ப்பதாக இருந்தன.

[9]பிறகு நான்கு கொம்புகளில் ஒன்றி
லிருந்து ஒரு சிறியக் கொம்பு முளைத்தது.
அந்தச் சிறியக் கொம்பு வளர்ந்து பெரிய
கொம்பாக மாறியது. இது தென்கிழக்கை
நோக்கி வளர்ந்தது. இது அழகான தேசத்தை
நோக்கி வளர்ந்தது. [10]அந்தச் சிறியக் கொம்பு
மிகப் பெரியதாயிற்று. அது வானத்தை
தொடும்வரை வளர்ந்தது. இந்தச் சிறியக்
கொம்பு வானத்தின் நட்சத்திரங்கள் சிலவற்
றையும் தரையிலே வீழ்த்தியது. இது அந்த
நட்சத்திரங்கள் மீது மிதித்து நடந்தது.
[11]அந்தச் சிறியக் கொம்பு மிகவும் வல்லமை
உடையதாகியது. பிறகு இது நட்சத்தி
ரங்களை ஆள்பவருக்கு (தேவன்) எதிராகத்
திரும்பியது. இந்த சிறியக் கொம்பு ஆளு
பவருக்கு (தேவன்) அளிக்கப்படும் தினப்பலி
யைத் தடுத்தது. ஆளுபவரை தொழுவதற்கு
ஜனங்கள் கூடும் இடம் இடித்துத் தள்ளப்
பட்டது. [12]சிறியக் கொம்பு பாவம் செய்து
தினப்பலியை நிறுத்தியது. இது சத்தியத்தை
தரையிலே வீசியது. சிறியக் கொம்பு இவற்
றைச் செய்து வெற்றிகரமாக விளங்கியது.
[13]பிறகு நான் பரிசுத்தமான ஒருவர்
பேசுவதைக் கேட்டேன். பிறகு இன்னொரு
பரிசுத்தமானவர் முதலாமவருக்குப் பதில்
சொல்வதைக் கேட்டேன். முதலாம் பரிசுத்த
மானவர்: "இந்தத் தரிசனமானது தினபலி
எவ்வாறு ஆகும் என்பதைக் காட்டுகிறது.
இது அழிவுக்குண்டான பயங்கரமான
பாவத்தைப் பற்றியது. இது, ஆளுபவரை
தொழுதுகொள்ளும் இடத்தை அழித்தால்
என்ன ஏற்படும் என்பதையும் காட்டு
கிறது. அந்த ஜனங்கள் அந்த இடம்
முழுவதையும், அந்த நட்சத்திரங்களையும்
மிதிக்கும்போது என்ன நிகழும் என்பதையும்
இது காட்டுகிறது. ஆனால் இவையெல்லாம்
இன்னும் எவ்வளவு காலம் நடக்கும்?"
என்றார்.
[14]இன்னொரு பரிசுத்தமானவர்: "இது 2,300
நாட்களுக்கு நடக்கும் பிறகு பரிசுத்தமான
இடமானது சுத்திகரிக் கப்படும்" என்றார்.

### தானியேலிடம் தரிசனம் விளக்கப்படுகிறது

[15]தானியேலாகிய நான், இந்தத் தரிசனத்
தைப் பார்த்தேன். இதன் பொருள் என்ன
வென்று புரிந்துகொள்ள முயன்றேன். நான்
தரிசனத்தைப்பற்றிநினைத்துக்கொண்டிருந்த
போது, மனிதனைப்போன்று தோன்றியவர்
திடீரென்று என் முன் எழுந்துநின்றார்.
[16]பிறகு நான் மனிதனின் குரலைக் கேட்
டேன். இந்தக்குரல் ஊலாய் ஆற்றுக்கு
மேலிருந்து வந்தது. இந்தக்குரல், "காபிரி
யேலே, இந்த மனிதனிடம் தரிசனத்தை
விளக்கு" என்றது.
[17]எனவேமனிதனைப்போன்று தோன்றிய
காபிரியேல் தேவதூதன், என்னிடம் வந்
தான். நான் மிகவும் பயந்து தரையில்
விழுந்தேன். ஆனால் காபிரியேல் என்னிடம்,
"மனிதனே, இந்தத் தரிசனமானது முடிவு
காலத்தைக் குறித்தது" என்றான்.
[18]காபிரியேல் பேசிக்கொண்டிருக்கும்
போது நான் தரையில் விழுந்து தூங்கிவிட்
டேன். அது ஆழ்ந்த உறக்கம். பிறகு
காபிரியேல் என்னைத் தொட்டு நிற்கும்படி
யாகத் தூக்கிவிட்டான். [19]காபிரியேல்,
"இப்பொழுது, நான் தரிசனம்பற்றி
விளக்குவேன். வருங்காலத்தில் என்ன நடக்
கும் என்பதை நான் சொல்வேன். உனது
தரிசனம் காலத்தின் முடிவைப்பற்றியது.
[20]"நீ இரண்டு கொம்புள்ள செம்மறியாட்
டுக்கடாவைப் பார்த்தாய். அக்கொம்புகள்
மேதியா, பெர்சியா எனும் தேசங்களாகும்.
[21]வெள்ளாட்டுக்கடா கிரேக்கதேசத்தின் அர
சன். இரண்டு கண்களுக்கு மத்தியில்
முளைத்த கொம்பானது முதல் அரசனாகும்.
[22]அந்தக் கொம்பு உடைந்தது. அந்த இடத்தில்
நான்கு கொம்புகள் முளைத்தன. அந்த
நான்கு கொம்புகளும் நான்கு இராஜ்யங்களா
கும். அந்த நான்கு இராஜ்யங்களும் முதல்
அரசனின் தேசத்திலிருந்து வரும். ஆனால்
அந்த நான்கு தேசங்களும் முதல் அரசனைப்
போன்று அவ்வளவு பலமுடையதாக
இல்லை.
[23]"அந்த இராஜ்யங்களுக்கு முடிவு நெருங்
கும்போது, அங்கு தைரியமும் கொடுமையும்
வாய்ந்த ஒரு அரசன் தோன்றுவான். இந்த
அரசன் மிகவும் தந்திரசாலியாக இருப்பான்.
ஏராளமாக மேலும் மேலும் ஜனங்கள்

பாவம் செய்யும்போது இது நிகழும். 24இந்த
அரசன் மிகவும் வல்லமையுடையவனாக
இருப்பான். ஆனால் இந்த வல்லமை
இவனிடத்திலிருந்து வருவதாக இருக்காது.
இந்த அரசன் பயங்கரமான அழிவுக்குக்
காரணமாக இருப்பான். அவன் செய்கிற
எல்லாவற்றிலும் வெற்றிகரமாக விளங்கு
வான். அவன் வல்லமைமிக்க ஜனங்களையும்
தேவனுடைய விசேஷ ஜனங்களையும்
அழிப்பான்.
25இந்த அரசன் மிகவும் உபாயமும் தந்தி
ரமும் உடையவனாக இருப்பான். அவன்
வெற்றி பெறுவதற்காகத் தனது ஞானத்தை
யும், பொய்களையும் பயன்படுத்துவான்.
அவன் தன்னை மிகவும் முக்கியமானவன்
என்று நினைப்பான். அவன் பல ஜனங்
களை அவர்கள் எதிர்பார்த்திராத நேரத்தில்
அழிப்பான். அவன் அதிபதிகளுக்கெல்லாம்
அதிபதியானவரோடு (தேவன்) போரிட
முயற்சி செய்வான். ஆனால் கொடுமையான
அரசனின் வல்லமை அழிக்கப்படும். அவ
னை அழிக்கப்போவது மனிதக் கைகளாக
இருக்காது. 26அந்தக் காலங்களைப்பற்றிய
தரிசனமும் நான் சொன்னவையும் உண்மை
யானவை. ஆனால் தரிசனத்தை நீ முத்திரை
யிட்டு வை. அதற்கு இன்னும் அநேக காலம்
ஆகும்” என்றான்.
27தானியேலாகிய நான் மிகவும் பலவீ
னனாகிவிட்டேன். அந்தத் தரிசனத்திற்குப்
பிறகு பல நாட்கள் நான் நோயுற்றேன்.
பிறகு நான் எழுந்து அரசனுக்காக வேலை
செய்யப்போனேன். ஆனால் நான் அந்தத்
தரிசனத்தால் கலங்கிக்கொண்டிருந்தேன். தரி
சனத்தின் பொருள் என்னவென்று நான்
புரியாமல் இருந்தேன்.

### தானியேலின் ஜெபம்

9 தரியு அரசனான முதலாம் ஆண்டில்
இவை நிகழ்ந்தன. தரியு அகாஸ்வேரு
என்னும் பெயருடையவனின் மகன். தரியு
மேதிய குலத்தை சேர்ந்தவன். அவன் பாபி
லோனின் அரசனானான். 2தரியு அரசனாக
இருந்த முதலாம் ஆண்டில் தானியேலான
நான், சில புத்தகங்களை வாசித்துக்கொண்டி
ருந்தேன். அப்புத்தகங்களில், கர்த்தர் எரே
மியா தீர்க்கதரிசியிடம் எருசலேம் மீண்டும்
கட்டப்படுவதற்கு முன் எத்தனை வருடங்
கள் கடந்துசெல்லும் என்று சொல்லியிருந்
ததை நான் பார்த்தேன். கர்த்தர் 70 ஆண்டு
கள் கடந்து செல்லும் என்று கூறினார்.
3பிறகு நான் என் தேவனாகிய ஆண்ட
வரிடம் திரும்பி, ஜெபம் செய்து உதவி
செய்யுமாறு அவரிடம் வேண்டினேன். நான்
எந்த உணவையும் உண்ணவில்லை. நான்
துக்கத்தைக் காட்டும் ஆடையை அணிந்
தேன். நான் என் தலையில் புழுதியைப்
போட்டுக்கொண்டேன். 4நான் என் தேவ
னாகிய கர்த்தரிடம் ஜெபித்தேன். நான்
எனது எல்லாப் பாவங்களையும் அவரிடம்
சொன்னேன். நான், “கர்த்தாவே, நீர்
மகத்துவமும் பயங்கரமும் வாய்ந்த தேவன்.
நீர் உம்மிடம் அன்பு செய்கிற ஜனங்களிடம்
உமது அன்பும் கருணையும் உள்ள உடன்ப
டிக்கையைக் கடைப்பிடிக்கிறீர். உமது கற்ப
னைகளுக்கு அடிபணிகிறவர்களுக்கு உமது
உடன்படிக்கையைக் காப்பாற்றுகிறீர்.

5“ஆனால் கர்த்தாவே, நாங்கள் பாவம்
செய்திருக்கிறோம். நாங்கள் தவறு செய்திருக்
கிறோம். நாங்கள் உமக்கு எதிராகத் திரும்பி
னோம். நாங்கள் உமது கற்பனைகளையும்
சரியான நியாயங்களையும் விட்டு விலகிப்
போனோம். 6நாங்கள் தீர்க்கதரிசிகளுக்குக்
காதுகொடுத்து கவனிக்கவில்லை. அவர்கள்
உமது ஊழியர்கள். தீர்க்கதரிசிகள் உமக்
காகப் பேசினார்கள். அவர்கள் எங்கள்
அரசர்களிடமும், எங்கள் தலைவர்களிடமும்,
எங்கள் தந்தைகளிடமும் பேசினார்கள்.
அவர்கள் இஸ்ரவேலிலுள்ள எல்லா ஜனங்
களிடமும் பேசினார்கள். ஆனால் நாங்கள்
அத்தீர்க்கதரிசிகள் சொன்னவற்றைக் கவனிக்
கவில்லை.
7“கர்த்தாவே, நீர் நல்லவர். நீதி உமக்கே
உரியது. ஆனால் இன்று வெட்கக்கேடு
எங்களுக்கு உரியதாயிற்று. யூதா மற்றும்
எருசலேமிலுள்ள ஜனங்களுக்கு அவமானம்
உரியதாயிற்று. அவமானம் இஸ்ரவேலில்
உள்ள அனைத்து ஜனங்களுக்கும் உமக்கு
அருகிலே உள்ள ஜனங்களுக்கும் உமக்குத்
தொலைவிலே உள்ள ஜனங்களுக்கும் உரிய
தாயிற்று. கர்த்தாவே, அந்த ஜனங்களை
நீர் பலதேசங்களில் சிதறடித்தீர். அத்தேசங்க
ளிளுள்ள இஸ்ரவேல் ஜனங்கள் அவமானப்ப
டுவார்களாக. கர்த்தாவே, அவர்கள் உமக்கு
எதிராகச் செய்த அனைத்து கேடுகளுக்கும்
அவமானப்படுவார்களாக.
8“கர்த்தாவே, நாங்கள் எல்லோரும்
அவமானப்படவேண்டும். எங்களது எல்லா
அரசர்களும் தலைவர்களும் அவமானப்பட
வேண்டும். எங்கள் முற்பிதாக்களும அவ
மானப்படவேண்டும். ஏனென்றால், நாங்கள்
உமக்கு எதிராகப் பாவங்கள் செய்தோம்.
9“ஆனாலும் கர்த்தாவே, நீர் தயவுடைய
வர் நீர் ஜனங்கள் செய்த தீமைகளை
மன்னித்துவிடுகிறீர். நாங்கள் உண்மையில்
உமக்கு எதிராகத் திரும்பினோம். 10நாங்கள்
எங்கள் தேவனாகிய கர்த்தருக்கு அடிபணிய
வில்லை. கர்த்தர் தமது ஊழியர்களாகிய
தீர்க்கதரிசிகளை அனுப்பி எங்களுக்குச்
சட்டங்களைக் கொடுத்தார். ஆனால் நாங்கள்
அவற்றுக்குக் கீழ்ப்படியவில்லை. 11இஸ்ர
வேலில் உள்ள எந்த ஜனங்களும் உமது
போதனைகளுக்குக் கீழ்ப்படியவில்லை.
அவர்கள் அனைவரும் திரும்பிவிட்டனர்.
அவர்கள் உமக்குக் கீழ்ப்படியவில்லை.
மோசேயின் சட்டத்தில் சாபங்களும் வாக்குத்

தத்தங்களும் எழுதப்பட்டிருக்கின்றன. (மோசே தேவனுடைய ஊழியன்.) அச்சாபங்களும் வாக்குத்தத்தங்களும் சட்டத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்குரிய தண்டனையைப் பற்றிக் கூறுகிறது. அவையெல்லாம் எங்களுக்கு ஏற்பட்டிருக்கின்றன. ஏனென்றால் நாங்கள் கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்தோம்.

12தேவன், எங்களுக்கும் எங்கள் தலைவர்க
ளுக்கும் இவை ஏற்படும் என்று சொன்னார்.
அவர் அவை எங்களுக்கு ஏற்படும்படிச்
செய்தார். அவர், எங்களுக்குப் பயங்கரமா
னவை ஏற்படும்படிச் செய்தார். எருசலேம்
துன்பப்பட்டது போன்று வேறெந்த நகரமும்
துன்பப்பட்டதில்லை. 13அந்தப் பயங்கரமா
னவை எல்லாம் எங்களுக்கு ஏற்பட்டன.
மோசேயின் சட்டத்தில் எழுதப்பட்டிருந்த
படியே இவை நிகழ்ந்தன. ஆனால் நாங்கள்
இன்னும் கர்த்தரிடம் உதவி கேட்கவில்லை.
நாங்கள் இன்னும் பாவம் செய்வதை நிறுத்த
வில்லை. கர்த்தாவே நாங்கள் உமது சத்தியத்
தில் கவனம் செலுத்தவில்லை. 14கர்த்தர்
எங்களுக்காகப் பயங்கரமானவற்றைத் தயார்
செய்து வைத்திருந்தார். அவை எங்களுக்கு
ஏற்படும்படி அவர் செய்தார். கர்த்தர் இத
னைச் செய்தார். ஏனென்றால் அவர் செய்
கிற எல்லாவற்றிலும் நியாயமாக இருந்தார்.
ஆனால் நாங்கள் இன்னும் அவருக்குக்
கீழ்ப்படியாமல் இருந்திருக்கிறோம்.

15“கர்த்தாவே, எங்கள் தேவனே, உமது
வல்லமையைப் பயன்படுத்தி எங்களை
எகிப்திலிருந்து வெளியே கொண்டுவந்தீர்.
நாங்கள் உமது ஜனங்கள். இதன் மூலம்
இன்றும் நீர் புகழ்பெற்று விளங்குகிறீர்.
கர்த்தாவே நாங்கள் பாவம் செய்திருக்
கிறோம். நாங்கள் பயங்கரமானவற்றைச்
செய்திருக்கிறோம். 16கர்த்தாவே, எருசலேம்
மீது கொண்ட கோபத்தை நிறுத்தும். எருச
லேம் உமது பரிசுத்தமான மலையின் மீது
இருக்கிறது. நீர் சரியானவற்றையே செய்
கிறீர். எனவே எருசலேம் மீதுள்ள கோபத்
தை நிறுத்தும். எங்களைச் சுற்றியுள்ள
ஜனங்கள் எங்களை அவமதிக்கிறார்கள்.
அவர்கள் உமது ஜனங்களைக் கேலி செய்
கிறார்கள். ஏனென்றால் நாங்களும் எங்கள்
முற்பிதாக்களும் உமக்கு எதிராகப் பாவம்
செய்தோம்.

17“இப்பொழுதும், கர்த்தாவே, எனது
ஜெபத்தைக் கேளும். நான் உமது ஊழியன்.
உதவிக்கான என்னுடைய ஜெபத்தைக்
கேளும். உமது பரிசுத்தமான இடத்திற்கு
நன்மையைச் செய்யும். அந்தக் கட்டிடம்
அழிக்கப்பட்டது. ஆனாலும் ஆண்டவரே,
உமது பரிசுத்தமான இடத்தினிமித்தம் இந்நன்
மையைச் செய்யும். 18என் தேவனே, என்
னைக் கவனித்துக் கேளும்! உமது கண்
களைத் திறந்து, எங்களுக்கு ஏற்பட்ட
கொடூரங்களைப் பாரும். உமது நாமத்தால்
அழைக்கப்பட்ட நகரத்திற்கு என்ன நேரிட்
டது என்று பாரும்! நாங்கள் நல்ல
ஜனங்கள் என்று நான் சொல்லவில்லை.
அதற்காகத்தான் நான் இவற்றையெல்லாம்
கேட்கவில்லை. நான் இவற்றைக் கேட்கி
றேன். ஏனென்றால் நான் உமது இரக்கத்தை
அறிவேன். 19கர்த்தாவே, என்னைக் கவனித்
துக் கேளும். கர்த்தாவே எங்களை மன்னி
யும். கர்த்தாவே கவனித்து, ஏதாவது செய்
யும். காத்திருக்கவேண்டாம். இப்பொழுது
ஏதாவது செய்யும். இதனை உமது மகிமைக்
காகச் செய்யும். என் தேவனே, இப்பொழுது
உமது நாமத்தால் அழைக்கப்படுகிற உமது
நகரத்துக்காகவும் உமது ஜனங்களுக்காகவும்
ஏதாவது செய்யும்” என்றேன்.

## 70 வாரங்கள் பற்றிய தரிசனம்

20நான் எனது ஜெபத்தில் தேவனிடம்
இவற்றைச் சொன்னேன். நான் எனது
பாவங்களைப்பற்றியும், இஸ்ரவேல் ஜனங்க
ளின் பாவங்களைப்பற்றியும் சொல்லிக்கொ
ண்டிருந்தேன். நான் தேவனுடைய பரிசுத்
தமான மலைக்காக ஜெபித்துக்கொண்டி
ருந்தேன். 21நான் ஜெபித்துக்கொண்டிருக்கும்
போது, காபிரியேல் என்ற தூதன் என்
னிடம் வந்தான். காபிரியேல் நான் தரிசனத்
தில் பார்த்த மனிதன். காபிரியேல் விரை
வாக என்னிடம் பறந்துவந்தான். அவன்
மாலைப்பலி நேரத்தில் வந்தான். 22காபிரி
யேல், நான் அறிய விரும்பியவற்றை நான்
புரிந்துகொள்ள உதவினான். காபிரியேல்
என்னிடம், “தானியேலே, நான் உனக்கு
ஞானத்தையும், அறிவையும் கொடுக்க வந்தி
ருக்கிறேன். 23நீ முதலில் ஜெபிக்க ஆரம்பித்த
போதே எனக்குக் கட்டளை கொடுக்கப்
பட்டது. நான் உன்னிடம் சொல்ல வந்தேன்.
தேவன் உன்னை மிகவும் நேசிக்கிறார்.
இந்தக் கட்டளையை நீ புரிந்துகொள்வாய்.
நீ இந்தத் தரிசனத்தைப் புரிந்துகொள்வாய்.
24“தேவன் 70 வாரங்களை உனது ஜனங்
களுக்கும் உனது பரிசுத்தமான நகரத்திற்கும்
அனுமதித்தார். தீமைகள் செய்வதை நிறுத்து
வதற்கும், பாவங்கள் செய்வதை நிறுத்து
வதற்கும், ஜனங்களைச் சுத்தப்படுத்துவதற்
கும், என்றென்றும் நிலைத்திருக்கிற நன்மை
யைக் கொண்டு வருவதற்கும், தரிசனங்
களையும் தீர்க்கதரிசிகளையும் முத்திரையிடு
வதற்கும், மிகப்பரிசுத்தமான இடத்தை
அர்ப்பணிப்பதற்கும் இந்த 70 வாரங்கள்
நியமிக்கப்பட்டன.

25“தானியேலே, இவற்றைக் கற்றுக்கொள்.
இவற்றைப் புரிந்துகொள், எருசலேமைத்
திரும்ப எடுப்பித்துக் கட்டுவதற்கான கட்
டளை தரப்பட்டதுமுதல் தேர்ந்தெடுக்கப்
பட்ட அரசன் வரும்வரை ஏழு வாரங்களா
கும். எருசலேம் மீண்டும் கட்டப்பட்டு
கூட்டம் கூடுவதற்கான இடங்கள் ஏற்படுத்தப்
படும். பாதுகாப்பிற்காக நகரத்தைச் சுற்றி

ஒரு பள்ளம் தோண்டப்படும். எருசலேமா
னது 62 வாரங்களில் கட்டப்படும்; ஆனால்
அந்நேரத்தில் அநேக துன்பங்கள் நேரிடும்.
26 62 வாரங்கள் சென்றபிறகு தேர்ந்தெடுக்கப்
பட்ட நபர் கொல்லப்படுவான். அவன்
போய்விடுவான். பிறகு வருங்காலத் தலை
வனின் ஜனங்கள் நகரத்தையும் பரிசுத்தமான
இடத்தையும் அழிப்பார்கள். அம்முடிவானது
வெள்ளத்தைப்போன்று வரும். போரானது
முடிவுவரை தொடரும். அந்த இடம் முழுமை
யாக அழிக்கப்படவேண்டும் என்று தேவன்
கட்டளை கொடுத்திருக்கிறார்.
27 பிறகு, வருங்கால அரசன் பல ஜனங்க
ளோடு ஒரு ஒப்பந்தம் செய்துகொள்வான்.
அந்த ஒப்பந்தம் ஒரு வாரத்திற்கு நீடிக்கும்.
அரை வாரத்திற்குப் பலிகளும் காணிக்கைக
ளும் நிறுத்தப்படும். பாழாக்குகிறவன் வரு
வான். அவன் பயங்கரங்களையும், அழிவுக்கு
ரியக் காரியங்களையும் செய்வான். ஆனால்
தேவன், அந்த பாழாக்குகிறவன் முழுமை
யாக அழிக்கப்படவேண்டும் என்று கட்ட
ளையிட்டிருக்கிறார்" என்றான்.

## இதெக்கேல் நதிக்கரையில் தானியேலின் தரிசனம்

10 கோரேசு பெர்சியாவின் அரசன். கோ
ரேசின் மூன்றாவது ஆட்சியாண்டில்,
தானியேல் இவற்றைக் கற்றுக்கொண்டான்.
(தானியேலின் இன்னொரு பெயர் பெல்தெ
ஷாத்சார்.) இவை உண்மையானவை,
ஆனால் இவை புரிந்துகொள்வதற்குக் கடின
மானது. ஆனால் தானியேல் இவற்றைப்
புரிந்துகொண்டான். இவையெல்லாம் அவ
னுக்கு ஒரு தரிசனத்தில் விளக்கப்பட்டது.
2 தானியேல் சொல்கிறதாவது: "அந்தக்
காலத்தில், தானியேலாகிய நான் மூன்று
வாரங்களுக்குத் துக்கமாக இருந்தேன். 3 அந்த
மூன்று வாரங்களில் நான் எவ்வித ருசிகர
மான உணவையும் உண்ணவில்லை. நான்
எவ்வித இறைச்சியையும் உண்ணவில்லை.
நான் எவ்வித திராட்சைரசத்தையும் குடிக்க
வில்லை. நான் என் தலையில் எவ்வித
எண்ணெயையும் தடவவில்லை. நான் இவ்
விதச் செயல்கள் எவற்றையும் மூன்று
வாரங்களுக்குச் செய்யவில்லை.
4 "அந்த ஆண்டின் முதல் மாதத்தின்
28வது நாளில் நான் இதெக்கேல் நதிக்கரை
யில் நின்றுகொண்டிருந்தேன். 5 நான் அங்கே
நின்றுகொண்டிருந்தபோது, ஏறிட்டுப் பார்த்
தேன். எனக்கு முன்னால் ஒருவர் நின்று
கொண்டிருந்தார். அவர் மெல்லிய சணல்
ஆடை அணிந்திருந்தார். அவரது இடுப்பில்
சுத்தமான தங்கக் கச்சையைக் கட்டியி
ருந்தார். 6 அவரது உடலானது ஒளிவீசும்
மிருதுவான கல்லைப் போன்றிருந்தது. அவ
ரது முகம் மின்னலைப் போன்று ஒளி
வீசியது. அவரது கண்கள் தீயின் நாவுகள்
போன்றிருந்தன. அவரது கைகளும் கால்க
ளும் துலக்கப்பட்ட வெண்கலம் போன்று
இருந்தது. அவரது குரலானது ஜனங்கள்
கூட்டத்தின் ஆரவாரம்போல் இருந்தது.
7 "தானியேலாகிய நான் ஒருவன் மட்டும்
தான் அந்தத் தரிசனத்தைப் பார்த்தேன்.
என்னோடு இருந்த மனிதர்கள் அந்தத் தரி
சனத்தைப் பார்க்கவில்லை. ஆனாலும் அவர்
கள் பயந்தார்கள். அவர்கள் அவ்வளவாகப்
பயந்ததால் ஓடி ஒளிந்துகொண்டனர். 8 என
வே நான் தனியாக விடப்பட்டேன். நான்
இந்தத் தரிசனத்தைக் பார்த்துக்கொண்டிருந்
தேன். இது எனக்கு அச்சமூட்டியது. நான்
என் பலத்தை இழந்தேன். எனது முகம்
செத்தவனின் முகத்தைப்போன்று வெளுத்
தது. நான் உதவியற்றவன் ஆனேன். 9 பிறகு
நான் தரிசனத்தில் அம்மனிதன் பேசுவதைக்
கேட்டேன். நான் அவரது குரலைக் கேட்ட
தும் நான் ஆழ்ந்த உறக்கத்தில் விழுந்தேன்.
நான் முகம் குப்புற தரையில் விழுந்து
கிடந்தேன்.
10 "பிறகு ஒரு கை என்னைத் தொட்டது.
அது நடந்ததும் என் முழங்கால்களும், என்
உள்ளங்கைகளும் தரையை ஊன்றியி
ருக்க என்னைத் தூக்கியது. நான் மிகவும்
பயந்து நடுங்கினேன். 11 தரிசனத்தில் அம்மனி
தன் என்னிடம் சொன்னான்: "'தானியேலே,
தேவன் உன்னை மிகவும் நேசிக்கிறார்.
நான் உன்னிடம் பேசும் வார்த்தைகளை
மிகவும் கவனமாகச் சிந்தனைசெய். எழுந்து
நில், நான் உன்னிடம் அனுப்பப்பட்டிருக்கி
றேன்.' அவன் இதைச் சொன்னதும் நான்
எழுந்து நின்றேன். நான் இன்னும் நடுங்கிக்
கொண்டிருந்தேன். ஏனென்றால் நான் பயந்
தேன். 12 பிறகு அந்த மனிதன் தரிசனத்
தில் மீண்டும் பேசத்தொடங்கினான். அவன்,
'தானியேலே, பயப்படாதே. முதல்
நாளிலேயே நீ ஞானம்பெற முடிவுச்
செய்தாய். தேவனுக்கு முன்னால் பணிவாக
இருக்க முடிவுசெய்தாய். அவர் உனது
ஜெபங்களைக் கேட்டிருக்கிறார். நான் உன்
னிடம் வந்தேன். ஏனென்றால் நீ ஜெபம்
செய்திருக்கிறாய். 13 ஆனால் பெர்சியாவின்
அதிபதி (சாத்தானின் தூதன்) இருபத்தொரு
நாள் எனக்கு எதிராக போரிட்டு எனக்குத்
தொந்தரவு கொடுத்தான். பிறகு முக்கியமான
தேவதூதர்களில் ஒருவனான மிகாவேல்
உதவிசெய்ய என்னிடம் வந்தான். ஏனென்
றால் நான் ஒருவன்தான் அங்கு பெர்சியா
அரசனிடமிருந்து வரமுடியாமல் இருந்தேன்.
14 இப்பொழுதும் தானியேலே, உன்னிடம்
வருங்காலத்தில் உன் ஜனங்களுக்கு என்ன
ஏற்படும் என்று சொல்ல நான் உன்னிடம்
வந்திருக்கிறேன். தரிசனதுமானது நிறைவேற
இன்னும் நாளாகும்" என்றான்.
15 "அவன் என்னோடு இதனைப் பேசிக்
கொண்டிருக்கும்போது, என் முகம் தரை
யைத் தொடும்படி நான் தலை கவிழ்ந்து

குனிந்தேன். என்னால் பேச முடியவில்லை.
16 பிறகு மனிதனைப்போன்று தோற்றமளித்த
ஒருவன் என் உதடுகளைத் தொட்டான்.
நான் வாயைத்திறந்து பேச ஆரம்பித்தேன்.
எனக்கு முன்னால் நின்றுகொண்டிருந்தவனி
டம் நான்: ‘ஐயா, நான் கலக்கமடைந்தேன்;
பயப்படுகிறேன். ஏனென்றால், நான் பார்த்த
தரிசனம் இத்தகையது. நான் உதவியற்றவ
னாக உணருகிறேன். 17 ஐயா, நான் உமது
ஊழியனான தானியேல். நான் உம்மோடு
எப்படிப் பேசமுடியும்? எனது பலம் போய்
விட்டது. எனக்கு மூச்சுவிடவே கடினமாக
இருக்கிறது’ என்றேன்.
18 “மனிதனைப் போன்று தோற்றமளித்
தவன் என்னை மீண்டும் தொட்டான்.
அவன் என்னைத் தொட்டபின் நான்
திடமாக உணர்ந்தேன். 19 பிறகு அவன்
என்னிடம்: ‘தானியேலே, பயப்படாதே
தேவன் உன்னை மிகவும் நேசிக்கிறார்.
சமாதானம் உன்னுடன் இருப்பதாக. இப்போ
தும் திடங்கொள்’ என்றான்.
“அவன் என்னோடு பேசியபோது நான்
பலமடைந்தேன். பிறகு நான்: ‘ஐயா, நீர்
எனக்குப் பலத்தைக் கொடுத்தீர். இப்பொழுது
நீர் பேசலாம்’ என்றேன்.
20 “அவன், என்னிடம், ‘தானியேலே, நான்
உன்னிடம் எதற்காக வந்தேன் என்று
உனக்குத் தெரியுமா? நான் பெர்சியா அதி
பதிக்கு எதிராகச் சண்டையிட விரைவில்
திரும்பிப் போகவேண்டும். நான் போகும்
போது, கிரேக்க அதிபதி வருவான்.
21 ஆனால் தானியேலே, நான் போகும்
முன், சத்தியமாகிய புத்தகத்திலே என்ன
எழுதப்பட்டிருக்கிறது என்பதை முதலில்
உனக்குச் சொல்லவேண்டும். மிகாவேலைத்
தவிர வேறுயாரும் அத்தீய தூதர்களுக்
கெதிராக என்னுடன் நிற்பதில்லை. மிகா
வேல் உன் ஜனங்களின் அதிபதியாக
ஆளுகை செய்கிறான்.

11 மேதியனாகிய தரியுவின் முதலாம்
ஆட்சியாண்டில்,* மிகாவேல், பெர்
சியா அதிபதிக்கு எதிராகப் போர் செய்த
போது நான் அவனுக்கு உதவியாக நின்
றேன்.
2 “‘இப்பொழுதும், தானியேலே, நான்
உண்மையைச் சொல்கிறேன். பெர்சியாவில்
மேலும் மூன்று அரசர்கள் ஆளுகைச் செய்
வார்கள். பிறகு நாலாவது அரசன் ஒருவன்
வருவான். அந்த நாலாவது அரசன் பெர்சி
யாவை இதற்கு முன் ஆண்ட எல்லா
அரசர்களைவிட செல்வந்தனாக இருப்பான்.
அந்த நாலாவது அரசன் வல்லமையைப்
பெறுவதற்கு தனது செல்வத்தைப் பயன்
படுத்துவான். அவன், எல்லோரும் கிரேக்க
இராஜ்யத்திற்கு எதிராக இருக்கக் காரண
மாவான். 3 பிறகு மிகவும் பலமும், வல்லமை
யும் கொண்ட அரசன் வருவான். அவன்
பெரும் வல்லமையுடன் ஆள்வான். அவன்
விரும்புகிற எதையும் செய்வான். 4 அதற்குப்
பிறகு அவனது இராஜ்யம் உடைந்துபோகும்.
உலகின் நான்கு பாகங்களாக அவனது
இராஜ்யம் பங்கு வைக்கப்படும். அவனது
இராஜ்யம் அவனது பிள்ளைகளுக்கோ,
பேரப்பிள்ளைகளுக்கோ பங்கு வைக்கப்பட
மாட்டாது. அவன் பெற்ற வல்லமையை
அவனது இராஜ்யம் பெறாது. ஏனென்றால்
அவனது இராஜ்யம் பிடுங்கப்பட்டு மற்றவர்
களுக்குக் கொடுக்கப்படும்.
5 “‘தெற்கிலுள்ள அரசன் பலமுள்ளவனா
வான். ஆனால் அவனது தளபதிகளில்
ஒருவன் தெற்கிலுள்ள அரசனைத் தோற்கடிப்
பான். அந்தத் தளபதி ஆளத்தொடங்குவான்.
அவன் மிகவும் வல்லமையுடையவனாக
இருப்பான்.
6 “‘பிறகு சில ஆண்டுகள் கழிந்ததும்
தென்பகுதி அரசனும், அந்தத் தளபதியும்
ஒரு ஒப்பந்தம் செய்துகொள்வார்கள். தென்
பகுதி அரசனின் மகள், வடபகுதி அரசனை
மணந்துகொள்வாள். அவள் சமாதானத்தைக்
கொண்டுவருவதற்காக இதனைச் செய்வாள்.
ஆனால் அவளும், தென்பகுதி அரசனும்
போதுமான வல்லமையுடையவர்களாக
இருக்கமாட்டார்கள். ஜனங்கள் அவளுக்கு
எதிராகவும், அவளை அந்நாட்டுக்குக்
கொண்டுவந்தவனுக்கு எதிராகவும் திரும்பு
வார்கள். அந்த ஜனங்கள் அவளது குழந்
தைக்கு எதிராகவும், அவளுக்கு உதவியவ
னுக்கு எதிராகவும் திரும்புவார்கள்.
7 “‘ஆனால் அவளது குடும்பத்திலிருந்து
ஒருவன் வந்து தென்பகுதி அரசனின் இடத்
தைப் பிடிக்க வருவான். அவன் வடபகுதி
அரசனின் படையைத் தாக்கி, அவனது
பலம்வாய்ந்த கோட்டைக்குள் நுழைவான்.
அவன் போர்செய்து வெல்வான். 8 அவன்
அவர்கள் தெய்வங்களின் விக்கிரகங்களை
எடுப்பான். அவன் அவர்களின் உலோக
விக்கிரகங்களைஎடுப்பான். வெள்ளியாலும்,
பொன்னாலுமான விலைமதிப்புள்ளவற்றை
யும் எடுப்பான். அவன் அவற்றை எகிப்
துக்கு எடுத்துச்செல்வான். அவன் சில
ஆண்டுகள் வடபகுதி அரசனுக்குத்
தொல்லை கொடுக்கமாட்டான். 9 வடபகுதி
அரசன், தெற்கு இராஜ்யத்தைத் தாக்குவான்.
ஆனால் அவன் தோல்வியடைந்து தனது
சொந்தநாட்டிற்குப் போவான்.
10 “‘வடபகுதி அரசனின் மகன்கள்
போருக்குத் தயார் செய்வார்கள். அவர்கள்
ஒரு பெரும்படையைச் சேர்ப்பார்கள். அந்தப்
படை நாட்டை வெள்ளம்போல் வேகமாகக்
கடக்கும். அந்தப்படை தெற்கத்தி அரசனின்
பலமான கோட்டைவரை தாக்கும். 11 பிறகு
தென்பகுதி அரசன் மிகவும் கோபங்கொள்
வான். அவன் வடபகுதி அரசனோடு
போரிட படையை நடத்திச் செல்வான்.

---

**தரியுவின் முதலாம் ஆட்சி ஆண்டு** கி.மு. 521.

வடபகுதி அரசனுக்குப் பெரும்படை இருக்
கும். ஆனால் அவன் போரில் தோல்வியடை
வான். 12வடபகுதி படை தோற்கடிக்கப்படும்.
அவ்வீரர்கள் சிறை பிடிக்கப்படுவார்கள்.
தென்பகுதி அரசன் மிகவும் பெருமை
கொள்வான். அவர்கள் வடபகுதிப் படை
யில் ஆயிரக்கணக்கானவர்களைக் கொல்
வான். ஆனால் அவன் தொடர்ந்து வெற்றி
பெறமாட்டான். 13வடபகுதி அரசன் இன்
னொரு படையைப் பெறுவான். அப்படை
முந்திய படையைவிட மிகப் பெரியதாக
இருக்கும். பல ஆண்டுகளுக்குப்பிறகு அவன்
தாக்குவான். அப்படைக்கு ஏராளமான
ஆயுதங்கள் இருக்கும். அப்படை போரிடத்
தயாராக இருக்கும்.

14“‘அந்தக் காலங்களில், பல ஜனங்கள்
தென்பகுதி அரசனுக்கு எதிராக மாறுவார்
கள். உனது சொந்த ஜனங்களில் சிலர்
போரை நேசிப்பவர்கள் தென்பகுதி அரச
னுக்கு எதிராகக் கலகம் செய்வார்கள்.
அவர்கள் வெல்லமாட்டார்கள். ஆனால்,
அவர்கள் இதைச் செய்யும்போது இந்தத்
தரிசனத்தை உண்மையாக்குவார்கள். 15பிறகு
வடபகுதி அரசன் வந்து நகரத்தின் மதில்
களுக்கெதிராகக் கொத்தளங்களைக் கட்டு
வான். பிறகு பலமான நகரத்தைப் பிடிப்
பான். தென்பகுதி படைக்குத் திரும்பவும்
போரிட வல்லமை இராது. தென்பகுதிப்
படையிலுள்ள சிறந்த வீரர்களும் வடபகுதிப்
படையைத் தடுக்கிற வல்லமை இல்லாமல்
இருப்பார்கள்.

16“‘வடபகுதி அரசன் தான் விரும்பியதை
யெல்லாம் செய்வான். எவரும் அவனைத்
தடுத்து நிறுத்த முடியாது. அவன் வல்லமை
பெற்று அழகான நாட்டை தன் அதிகாரத்
திற்குள் கொண்டுவருவான். அவன் அதை
அழிக்கிற வல்லமையையும் பெற்றிருப்பான்.
17வடபகுதி அரசன் தனது வல்லமை
அனைத்தையும் பயன்படுத்தி தென்பகுதி
அரசனோடு போரிட முடிவு செய்வான்.
அவன் தென்பகுதி அரசனோடு ஒரு ஒப்
பந்தம் செய்துகொள்வான். வடபகுதி அரசன்
தனது மகள்களுள் ஒருத்தியைத் தென்பகுதி
அரசனை மணந்துகொள்ளச் செய்வான்.
வடபகுதி அரசன் தென்பகுதி அரசனைத்
தோற்கடித்துவிடலாம் என்ற எண்ணத்தில்
இவ்வாறு செய்வான்; ஆனால் அத்திட்டங்
கள் வெற்றியடையாது, அவன் திட்டங்கள்
அவனுக்கு உதவாது.

18“‘பிறகு வடபகுதி அரசன் தன் கவ
னத்தை மத்தியத் தரைக்கடல் கரையோர
நாடுகளுக்கு நேராகத் திருப்புவான். அங்கு
ள்ள பல நகரங்களை அவன் தோற்
கடிப்பான். ஆனால் பிறகு ஒரு தளபதி
அவனது பெருமைக்கும், கலகச் செயல்க
ளுக்கும் ஒரு முடிவு காண்பான். அந்த
தளபதி, வடபகுதி அரசன் வெட்கமடையும்
படிச் செய்வான்.

19“‘அது நடந்தபிறகு, வடபகுதி அரசன்
பலமான அரண்களுடைய தனது சொந்த
நாட்டிற்குத் திரும்பிப்போவான். ஆனால்
அவன் பலவீனமுடையவனாக இருப்பான்.
அவன் விழுவான். அவன் முடிவடைவான்.

20“‘அந்த வடபகுதி அரசனுக்குப்பிறகு
ஒரு புதிய அரசன் வருவான். அந்த அர
சன் ஒரு வரிவசூலிப்பவனை அனுப்புவான்.
அந்த அரசன் தான் வளமான வழியில்
வாழ போதிய செல்வம் உடையவனாக
இருக்க இதனைச் செய்வான். ஆனால்
சில ஆண்டுகளில் அந்த அரசன் அழிக்
கப்படுவான். ஆனால் அவன் போரில்
மரிக்கமாட்டான்.

21“‘அந்த அரசனைப் பின்தொடர்ந்து ஒரு
கொடுமையான வெறுக்கத்தக்க மனிதன்
வருவான். அவனுக்கு அரச குடும்பத்தவன்
என்ற பெருமை இருக்காது. அவன் தந்திர
மான வழியில் அரசன் ஆவான். ஜனங்கள்
பாதுகாப்பாக இருப்பதாக உணரும்போது
அவன் இராஜ்யத்தைத் தாக்குவான். 22அவன்
பெரிய வல்லமை மிக்கப் படைகளைத்
தோற்கடிப்பான். அவன் ஒப்பந்தம் உடைய
தலைவனையும் தோற்கடிப்பான். 23பல நாடு
கள் இந்தக் கொடூரமான வெறுக்கத்தக்க
அரசனோடு ஒப்பந்தத்தைச் செய்துகொள்
வார்கள். ஆனால் அவன் அவர்களிடம்
பொய்பேசி ஏமாற்றிவிடுவான். அவன்
பெரும் பலத்தைப் பெறுவான். ஆனால்
வெகு சிலர் மட்டுமே அவனுக்கு ஆதரவாக
இருப்பார்கள்.

24“‘வளமான நாடுகள் பாதுகாப்பை
உணரும்போது கொடூரமும் வெறுக்கத்தக்க்
குணமும்கொண்ட அந்த அரசன் போய்
தாக்குவான். அவன் சரியான காலத்தில்
தாக்கி அவனது பிதாக்கள் வெற்றிபெறாத
இடங்களில் தான் வெற்றிபெறுவான். அவன்
தோற்கடித்த நாடுகளிலிருந்து பொருட்களை
எடுத்துக்கொள்வான். அவன் அப்பொருட்க
ளைத் தன்னைப் பின்பற்றுகிறவர்களுக்குக்
கொடுப்பான். அவன் பலமான நகரங்களைத்
தோற்கடித்து அழிக்கத் திட்டம் போடுவான்.
அவன் வெற்றிபெறுவான். ஆனால் அது
குறுகிய காலத்திற்குத்தான்.

25“‘அந்தக் கொடூரமான வெறுக்கத்தக்க
அரசனுக்கு மிகப்பெரிய படை இருக்கும்.
அவன் அப்படையைப் பயன்படுத்தி தனது
வல்லமையையும் தைரியத்தையும் காட்டி
தென்பகுதி அரசனைத் தாக்குவான். தென்
பகுதி அரசன் மிகப்பெரியதும், வல்லமை
உடையதுமான படையைப் பெற்று போருக்
குப் போவான். ஆனால் அவனுக்கு எதிரான
ஜனங்கள் இரகசிய திட்டங்களை இடுவர்கள்.
தென்பகுதி அரசன் தோற்கடிக்கப்படுவான்.
26தென்பகுதி அரசனுக்கு நண்பர்களாக இருந்
தவர்கள் அவனை அழிக்க முயற்சி செய்
வார்கள். அவனது படை தோற்கடிக்கப்

படும். போரில் அவனது படைவீரர்களில்
பலர் கொல்லப்படுவார்கள். 27அந்த இரண்டு
அரசர்களும் ஒருவருக்கு ஒருவர் தீமைச்
செய்ய நினைப்பார்கள். அவர்கள் ஒரே
பந்தியில் உட்கார்ந்துக்கொண்டு ஒருவருக்கு
ஒருவர் பொய் சொல்வார்கள். அதனால்
இருவருக்கும் எந்த நன்மையும் விளைவ
தில்லை. ஏனென்றால் தேவன் அவர்களது
முடிவுகாலத்தைக் குறித்திருக்கிறார்.
28“வடபகுதி அரசன் பெருஞ்செல்வத்
தோடு தனது சொந்த நாட்டிற்குத் திரும்பிப்
போவான். பிறகு அவன் பரிசுத்தமான
உடன்படிக்கைக்கு எதிராக தீமைகளைச்
செய்ய அவன் முடிவுச்செய்வான். அவன்
தனது திட்டப்படி செய்தபிறகு, அவன்
தனது சொந்த நாட்டிற்குத் திரும்பிப்
போவான். 29ஏற்ற காலத்தில் வடபகுதி
அரசன் தென்பகுதி அரசனை மறுபடியும்
தாக்குவான். ஆனால் இந்தமுறை அவன்
முன்புபோல வெற்றிபெறமாட்டான். 30கித்தீமி
லிருந்து கப்பல்கள் வந்து வடபகுதி அரச
னுக்கு எதிராகப் போரிடும். அக்கப்பல்கள்
வந்து அவனை அச்சுறுத்துவதை அவன்
காண்பான். பிறகு அவன் திரும்பிப்போய்
பரிசுத்த உடன்படிக்கைக்கு விரோதமாகக்
கோபங்கொள்வான். அவன் திரும்பி, பரி
சுத்த உடன்படிக்கைகளைக் கைவிட்டவர்
களை ஆதரிப்பான். 31வடபகுதி அரசன்
தனது படையை எருசலேம் ஆலயத்தில்
பயங்கரமான செயல்களைச் செய்ய அனுப்பு
வான். அவர்கள் ஜனங்களைத் தினபலி
கொடுக்காதபடிக்குத் தடுப்பார்கள். பிறகு
அவர்கள் உண்மையிலேயே பயங்கரமான
செயல்களைச் செய்வார்கள். அழிவுக்குக்
காரணமாகும் அந்தப்பயங்கரமான காரி
யத்தை ஏற்படுத்துவார்கள்.
32“வடபகுதி அரசன் பொய்களையும்
இச்சகப்பேச்சையும் பயன்படுத்தி பரிசுத்த
உடன்படிக்கையைப் பின்பற்றுவதை யூதர்
கள் கைவிடும்படி செய்வான். அந்த யூதர்கள்
மீண்டும் மிக மோசமான பாவங்களைச்
செய்வார்கள். ஆனால் தேவனை அறிந்த,
அவருக்குக் கீழ்ப்படிகிற யூதர்கள் பலம்பெறு
வார்கள். அவர்கள் திரும்பி எதிர்த்து
போரிடுவார்கள்.
33“அந்த யூதர்களில் ஞானமுள்ளவர்கள்
பலருக்கு அறிவை உணர்த்துவார்கள். ஆனா
லும் ஞானிகள்கூட கொடுமைப்படுத்தப்
படுவார்கள். சில ஞானமுள்ள யூதர்கள்
வாள்களால் கொல்லப்படுவார்கள். அவர்க
ளில் சிலர் எரிக்கப்படுவார்கள், அல்லது
சிறைபடுத்தப்படுவார்கள். சில யூதர்களின்
சொத்துக்களும் வீடுகளும் கொள்ளையடிக்கப்
படும். 34அறிவுமிக்க யூதர்கள் தண்டிக்கப்படும்
போது, அவர்கள் கொஞ்சம் உதவியும்
பெறுவார்கள். ஆனால் அவர்களோடு சேரும்
அநேக யூதர்கள் போலிகளாக இருப்பார்கள்.
35அறிவுமிக்க யூதர்களில் சிலர் தவறுகள்
செய்து விழுவார்கள். ஆனாலும் கொடுமைக்
காலம் வரவேண்டும். ஏனென்றால் அப்பொ
ழுது அவர்கள் பலமுள்ளவர்களாகவும்,
தூய்மையானவர்களாகவும், குற்றமற்றவர்
களாகவும் ஆகமுடியும். இது முடிவுகாலம்
வரும்வரை இருக்கும். பிறகு, சரியான
நேரத்தில் முடிவுகாலம் வரும்.

### தன்னையே புகழும் அரசன்:

36“வடபகுதி அரசன் தான் விரும்புகி
றதையெல்லாம் செய்வான். அவன் தன்
னைப்பற்றியே பேசுவான். அவன் தன்
னையே புகழுவான்; தன்னைத் தேவனை
விட பெரியவனாக நினைப்பான். அவன்
இதுவரை எவரும் கேட்காதவற்றையெல்
லாம் பேசுவான். அவன் தெய்வங்களுக்கெல்
லாம் தேவனாயிருப்பவருக்கெதிராக அவ்
வாறு பேசுவான். அனைத்து தீமைகளும்
ஏற்படும்வரை அவன் வெற்றிபெறுவான்.
தேவன் என்ன திட்டமிட்டிருக்கிறாரோ அது
நடைபெறும்.
37“அந்த வடபகுதி அரசன் தனது
பிதாக்கள் தொழுத தெய்வங்களைப்பற்றி
கவலைப்படமாட்டான். அவன் பெண்களால்
தொழுகைச் செய்யப்படும் விக்கிரகங்களைப்
பற்றியும் கவலைப்படமாட்டான். அவன்
எந்த தேவனைப்பற்றியும் கவலைப்படமாட்
டான். அதற்குப் பதில் அவன் தன்னைத்
தானே புகழுவான். அவன் மற்ற தெய்வங்
களைவிடத் தன்னையே முக்கியமானவனாக
ஆக்கிக்கொள்வான். 38வடபகுதி அரசன்
எந்தத் தேவனையும் தொழுதுகொள்ள
மாட்டான். ஆனால் அவன் அதிகாரத்தைத்
தொழுதுகொள்வான். அதிகாரமும் வல்லமை
யுமே அவனது தெய்வங்கள். அவன் பிதாக்
கள் தன்னைப்போல் வல்லமையை நேசிக்க
வில்லை. அவன் அதிகாரமாகிய தேவனை
பொன்னாலும், வெள்ளியாலும் விலைமதிப்
புள்ள நகைகளாலும், அன்பளிப்புகளாலும்,
பெருமைப்படுத்துவான்.
39“அந்த வடபகுதி அரசன் பலம் வாய்ந்த
கோட்டைகளை அந்நிய தெய்வங்களின்
உதவியுடன் தாக்குவான். அவன் தன்னோடு
சேர்ந்த அயல்நாட்டு அரசர்களுக்கு மிகுந்த
மரியாதையைக் கொடுப்பான். அந்த அரசர்
களுக்குக் கீழே அவன் பல ஜனங்களை
வைப்பான். அவர்கள் ஆளும் நாடுகளுக்காக
வரி வசூலிப்பான்.
40“முடிவின் காலத்தில் தென்பகுதி அர
சன் வடபகுதி அரசனோடு போர் செய்
வான். வடபகுதி அரசன் அவனைத் தாக்கு
வான். இரதங்களோடும், குதிரைப்படை
வீரர்களோ டும், பல பெரிய கப்பல்களோடும்
வந்து தாக்குவான். வடபகுதி அரசன்
நாட்டை விட்டு வெள்ளத்தைப் போன்று
வேகமாக ஓடுவான். 41வடபகுதி அரசன்
அழகான தேசத்தைத் தாக்குவான். வடபகுதி
அரசனால் பல நாடுகள் தோற்கடிக்கப்படும்.

ஆனால் ஏதோம், மோவாப், அம்மோன்
தலைவர்கள் அவனிடமிருந்து காப்பாற்றப்
படுவர். 42வடபகுதி அரசன் பல நாடுகளில்
தன் வல்லமையைக் காட்டுவான். எகிப்தும்
தான் எவ்வளவு வல்லமையானவன் என்
பதை தெரிந்துகொள்ளும். 43அவன் எகிப்
திலுள்ள பொன்னும் வெள்ளியுமான
எல்லாச் செல்வங்களையும் பெறுவான். லீபி
யரும், எத்தியோப்பியரும் அவனுக்கு அடி
பணிவார்கள். 44ஆனால் வடக்கத்தி அரசன்
கிழக்கிலிருந்தும் வடக்கிலிருந்தும் அவனை
அச்சமும் கோபமும் கொள்ளத்தக்கச் செய்திக
ளைக் கேட்பான். அவன் பல தேசங்களை
முழுமையாக அழிக்கப் போவான். 45கடல்க
ளுக்கு இடையிலுள்ள அழகான பரிசுத்த
மலையில்* தனது இராஜ கூடாரத்தை
அமைத்துக்கொள்வான். ஆனால் இறுதியில்,
அத்தீய அரசன் சாவான். அவனது முடிவுகா
லம் வரும்போது அவனுக்கு உதவிச்செய்ய
யாரும் இருக்கமாட்டார்கள்.'"

12 "தரிசனத்தில் அந்த ஆள், 'தானியேலே,
அந்த நேரத்தில், பெரிய அதிபதியாகிய
மிகாவேல் தூதன் எழுந்துநிற்பான். மிகா
வேல் உனது யூதஜனங்களுக்கு பொறுப்
பானவன். மிகத் துன்பமான ஒரு காலம்
வரும். பூமியில் தேசங்கள் தோன்றிய நாள்
முதலாக இதுபோன்ற துன்பகாலம் ஏற்பட்டி
ருக்காது. ஆனால் தானியேலே, அந்த நேரத்
தில், உன் ஜனங்களில் எவருடைய பெயர்
புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறதோ அவர்
கள் பாதுகாக்கப்படுவார்கள். 2பூமியில் உள்ள
ஜனங்களில் செத்துப் புதைக்கப்பட்டவர்கள்
எல்லாரும் எழும்புவார்கள். அவர்களில்
சிலர் என்றென்றும் வாழ்வதற்காக எழுந்தி
ருப்பார்கள். ஆனால் சிலர் என்றென்றும்
வெட்கமும் வெறுப்பும் அடைவதற்காக
எழும்புவார்கள். 3ஞானமுள்ள ஜனங்கள்
வானத்து ஒளியைப் போன்று பிரகாசிப்பார்
கள். ஜனங்களை நல்லவழியில் வாழக்
கற்றுத்தந்த ஞானிகள் என்றென்றைக்கும்
வானத்து நட்சத்திரங்களைப் போன்று ஒளி
வீசுவார்கள்.
4 "'ஆனால் தானியேலாகிய நீ, இச்
செய்தியை இரகசியமாக வைத்துக்கொள்.
நீ இந்தப் புத்தகத்தை மூடிவை. நீ முடி
வுகாலம்வரை இந்த இரகசியத்தைக் காக்க
வேண்டும். அநேக ஜனங்கள் உண்மையான
அறிவைத் தேடி அங்கும் இங்கும் அலை
வார்கள். அவர்களுக்கு உண்மையான அறிவு
வளரும்.'
5 "'பிறகு தானியேலாகிய நான் வேறு
இரண்டு பேரைப் பார்த்தேன். ஒருவன்
ஆற்றங்கரையில் எனது பக்கம் நின்று
கொண்டிருந்தான். இன்னொருவன் ஆற்றின்
இன்னொரு கரையில் நின்றுகொண்டிருந்
தான். 6சணல் துணி அணிந்திருந்த ஒருவன்,
ஆற்றின் தண்ணீரின் மேல் நின்று கொண்
டிருந்தான். இருவரில் ஒருவன் அவனிடம்
சொன்னான்: 'இந்த அதிசயங்களெல்லாம்
உண்மையாவதற்கு எவ்வளவு காலமாகும்?'
7 "'சணல் ஆடை அணிந்து ஆற்றுத்
தண்ணீரின்மேல் நின்றவன் தனது வலது
கையையும், இடது கையையும் வானத்தை
நோக்கி நீட்டினான். அவன் என்றென்றும்
ஜீவித்திருக்கிற தேவனுடைய நாமத்தால்
ஆணையிட்டதை நான் கேட்டேன். அவன்
சொன்னான்: 'இது மூன்றும், அரை ஆண்டு
காலமும் இருக்கும். பரிசுத்த ஜனங்களின்
வல்லமை உடையும். இவை அனைத்தும்
இறுதியில் உண்மையாகும்.'

8 "'நான் பதிலைக் கேட்டேன். ஆனால்
உண்மையில் என்னால் புரிந்துகொள்ள
முடியவில்லை. எனவே நான் கேட்டேன்,
'ஐயா, இவை எல்லாம் உண்மையானதும்
என்ன நிகழும்?' என்று கேட்டேன்.
9 "அவன், என்னிடம், 'தானியேலே, உன்
வாழ்க்கையை நீ தொடர்ந்து நடத்து. இந்த
வார்த்தைகள் முடிவுகாலம் வரை இரகசிய
மாகவும் மறைக்கப்பட்டும் இருக்கும். 10பலர்
சுத்தமாக்கப்படுவார்கள். அவர்கள் தம்மைத்
தாமே சுத்தப்படுத்திக்கொள்வார்கள். ஆனால்
தீயவர்கள் தீமையில் தொடருவார்கள்.
அக்கெட்டவர்கள் இவற்றைப் புரிந்து
கொள்ளமாட்டார்கள். ஆனால் ஞானமுள்ள
வர்கள் இவற்றைப் புரிந்துகொள்வார்கள்.
11 "'தினபலிகள் நிறுத்தப்படும். அக்காலம்
முதல் அழிவை உண்டாக்கும் பயங்கரம்
ஏற்படுத்தப்பட்ட நாள்வரை 1,290 நாள்
செல்லும். 12 1,335 நாள்வரை காத்திருந்து
சேருகிறவன் பாக்கியவான்.
13 "'தானியேலே நீயோவென்றால் முடிவு
வருமட்டும் சென்று வாழ்ந்திரு. உனது
இளைப்பாறுதலை முடிவில் நீ பெறுவாய்.
மரணத்திலிருந்து எழும்பி, உனது பங்
கைப் பெறுவாய்.'" என்றான்.

---

**பரிசுத்த மலை** எருசலேம் கட்டப்பட்ட மலை.

# ஓசியா

## ஓசியாவின் மூலமாக தேவனாகிய கர்த்தருடைய செய்தி

1 பெயேரியின் மகனாகிய ஓசியாவுக்கு வந்த கர்த்தருடைய செய்தி இதுதான். இந்த வார்த்தை யூதாவின் அரசர்களாகிய உசியா, யோதாம், ஆகாஸ், எசேக்கியா ஆகியோர் இருந்தபோது வந்தது. இது, இஸ்ரவேலின் அரசனான யோவாசின் மகனான யெரொபெயாம் என்பவனின் காலத்தில் நடந்தது.
2 இது கர்த்தருடைய முதல் செய்தியாக ஓசியாவிற்கு வந்தது. கர்த்தர், "நீ போய், தன் வேசித்தனத்தினால் குழந்தைகளைப் பெற்றெடுத்த ஒரு வேசியை மணந்துகொள். ஏனென்றால் இந்த நாட்டிலுள்ள ஜனங்கள் எல்லோரும் வேசியைப் போன்று நடந்துக் கொள்கிறார்கள். அவர்கள் கர்த்தருக்கு விசுவாசமற்றவர்களாக இருந்திருக்கிறார்கள்" என்றார்.

### யெஸ்ரயேலின் பிறப்பு

3 எனவே ஓசியா திப்லாயிமின் மகளான கோமேரைத் திருமணம் செய்தான். கோமேர் கர்ப்பமடைந்து ஓசியாவிற்கு ஒரு ஆண்மகனைப் பெற்றாள்.
4 கர்த்தர் ஓசியாவிடம் "அவனுக்கு யெஸ்ரயேல்.* என்று பெயரிடு. ஏனென்றால் இன்னும் கொஞ்சக்காலத்தில் நான் ஏகூவின் வம்சத்தாரை அவன் யெஸ்ரயேல் பள்ளத்தாக்கில் சிந்திய இரத்தத்திற்காகத் தண்டிப்பேன். பிறகு இஸ்ரவேலின் இராஜ்யத்தை முடிவுக்குக் கொண்டுவருவேன்.
5 அந்த நேரத்தில் நான் இஸ்ரவேலின் வில்லை யெஸ்ரயேலின் பள்ளத்தாக்கிலே முறிப்பேன்" என்றார்.

### லோருகாமாவின் பிறப்பு

6 பின்னர் கோமேர் மீண்டும் கர்ப்பமடைந்து ஒரு பெண்குழந்தையைப் பெற்றாள். கர்த்தர் ஓசியாவிடம், "அவளுக்கு லோருகாமா* என்று பெயரிடு. ஏனென்றால் நான் இனி இஸ்ரவேல் வம்சத்தாருக்கு இரக்கம் காட்ட மாட்டேன். நான் அவர்களை மன்னிக்க மாட்டேன்.
7 ஆனால் நான் யூதாநாட்டின் மீது இரக்கம் காட்டுவேன். நான் யூதா நாட்டைக் காப்பாற்றுவேன். நான் அவர்களைக் காப்பாற்ற எனது வில்லையோ வாளையோ பயன்படுத்த மாட்டேன். நான் அவர்களைக் காப்பாற்ற போர் குதிரைகளையோ, வீரர்களையோ பயன்படுத்தமாட்டேன். நான் அவர்களை எனது சொந்த பலத்தால் காப்பாற்றுவேன்" என்றார்.

### லோகம்மியின் பிறப்பு

8 கோமேர் லோருகாமாவை பால்மறக்க செய்தபிறகு அவள் மீண்டும் கர்ப்பம் அடைந்தாள். அவள் ஒரு ஆண்குழந்தையைப் பெற்றாள்.
9 பிறகு கர்த்தர், "அவனுக்கு லோகம்மி* என்றுப் பெயரிடு. ஏனென்றால், நீங்கள் எனனுடைய ஜனங்களல்ல. நான் உங்களது தேவனல்ல" என்றார்.

### கர்த்தர் இஸ்ரவேலர்கள் அநேகராக இருப்பார்கள் என வாக்குறுதி அளிக்கிறார்

10 "எதிர்காலத்தில் இஸ்ரவேல் ஜனங்களின் எண்ணிக்கை கடற்கரையிலுள்ள மணலைப் போன்றிருக்கும். உங்களால் அம்மணலை அளக்கவோ, எண்ணவோ இயலாது. 'நீங்கள் என் ஜனங்களல்ல' என்று அவர்களுக்கு சொல்வதற்குப் பதிலாக, 'நீங்கள் ஜீவனுள்ள தேவனுடைய பிள்ளைகள்' என்று அவர்களுக்குச் சொல்லப்படும்.
11 "பிறகு யூதா ஜனங்களும் இஸ்ரவேல் ஜனங்களும் ஒன்று கூட்டப்படுவார்கள். அவர்களுக்கு ஓர் ஆட்சியாளனை தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். அவர்களது இராஜ்யம் பூமியில் மிகப் பெரியதாக இருக்கும். யெஸ்ரயேலின் நாள் உண்மையில் மிகப் பெரியதா யிருக்கும்."

2 "பிறகு உங்கள் சகோதரர்களிடம், 'நீங்கள் எனது ஜனங்கள்' என்பீர்கள். நீங்கள் உங்கள் சகோதரிகளிடம், 'உங்கள்மேல் அவர் இரக்கம் காட்டியிருக்கிறார்' என்பீர்கள்."

---

**யெஸ்ரயேல்** தேவன் விதைகளை விதைப்பார்.

**லோருகாமா** அவள் கருணைப் பெறாதவள்.

**லோகம்மி** என் மக்கள் அல்ல.

### கர்த்தர் இஸ்ரவேல் தேசத்திடம் பேசுகிறார்

2“உங்கள் தாயோடு வழக்காடுங்கள்.
ஏனென்றால் அவள் எனது மனைவியல்ல.
நான் அவளது கணவனும் அல்ல. அவளிடம்
ஒரு வேசியைப் போன்று நடந்துக்கொள்
வதை நிறுத்தவேண்டும் என்று சொல்
லுங்கள். அவளது மார்பகங்களில் இருந்து
தனது நேசர்களை விலக்கும்படி அவளுக்குச்
சொல்லுங்கள். 3அவள் தனது சோரத்தை
நிறுத்தாவிட்டால் நான் அவளை நிர்வா
ணமாக்குவேன். நான் அவளைத் தனது
பிறந்தநாளில் இருந்ததைப் போலாக்குவேன்.
நான் அவளது ஜனங்களை வெளியேற்
றுவேன். அவள் காலியான வறண்ட பாலை
வனம்போலாவாள். அவளை நான் தாகத்
தால் மரிக்கச்செய்வேன். 4நான் அவளது
பிள்ளைகள்மேல் இரக்கப்படமாட்டேன்.
ஏனென்றால் அவர்கள் வேசிப் பிள்ளைகள்.
5அவர்களின் தாய் ஒரு வேசியைப் போன்று
நடந்துக் கொண்டாள். அவர்களது தாய் தனது
செயல்களுக்காக அவமானம் அடைய
வேண்டும். அவள், ‘நான் என் நேசர்களி
டம் செல்வேன். என்னுடைய நேசர்கள்
எனக்கு உணவும் தண்ணீரும் கொடுப்பார்
கள். அவர்கள் எனக்குக் கம்பளியும்
ஆடையும் தருவார்கள். அவர்கள் எனக்குத்
திராட்சைரசத்தையும் ஒலிவ எண்ணை
யையும் தருவார்கள்’ என்றாள்.

6“எனவே, நான் (கர்த்தர்) உங்கள்
(இஸ்ரவேலின்) பாதையை முட்களால்
அடைப்பேன். நான் சுவர் எழுப்புவேன்.
பிறகு அவள் தனது பாதையைக் கண்டு
கொள்ள முடியாமல் போவாள். 7அவள்
தனது நேசர்களின் பின்னால் ஓடுவாள்.
ஆனால் அவளால் அவர்களைப் பிடிக்க
முடியாது. அவள் தன் நேசர்களுக்காகத்
தேடிக்கொண்டிருப்பாள். ஆனால் அவளால்
அவர்களைக் கண்டுகொள்ள முடியாது.
பிறகு அவள், ‘நான் எனது முதல் கண
வனிடம் (தேவன்) திரும்பிப்போவேன். நான்
அவரோடு இருந்த போது எனது வாழ்க்கை
நன்றாக இருந்தது. இப்பொழுது இருக்கிறதை
விட அன்று வாழ்க்கை நன்றாக இருந்தது’
என்பாள்.

8“அவள் (இஸ்ரவேல்), நான் (கர்த்தர்)
ஒருவர்தான் அவளுக்குத் தானியம், திராட்
சைரசம், எண்ணெய் ஆகியவற்றைக் கொடு
த்தேன் என்பதை அறியவில்லை. நான்
அவளுக்கு மேலும் மேலும் வெள்ளியும்
பொன்னும் கொடுத்துவந்தேன். ஆனால்
இஸ்ரவேலர்கள் அந்த வெள்ளியையும்
பொன்னையும் பயன்படுத்தி பாகாலுக்கான*
உருவச்சிலைகளைச் செய்தனர். 9எனவே
நான் (கர்த்தர்) திரும்பிவருவேன். நான்,
என் தானியத்தை அதன் அறுவடைக்
காலத்தில் திரும்ப எடுத்துக்கொள்வேன்.
நான் திராட்சைப்பழங்கள் தயாராக இருக்
கும்போது எனது திராட்சைரசத்தைத்
திரும்ப எடுத்துக்கொள்வேன். நான் எனது
கம்பளியையும், சணலையும் திரும்ப எடுத்
துக்கொள்வேன். இவற்றையெல்லாம் நான்
அவளது நிர்வாணத்தை மறைப்பதற்காகக்
கொடுத்தேன். 10இப்பொழுது நான் அவளது
ஆடைகளை நீக்குவேன். அவள் நிர்வாணமா
வாள். எனவே அவளது நேசர்கள் அவ
ளைப் பார்க்கமுடியும். எவராலும் எனது
அதிகாரத்திலிருந்து அவளைக் காப்பாற்ற
முடியாது. 11நான் (தேவன்) அவளுடைய
எல்லா மகிழ்ச்சியையும் எடுத்துக்கொள்
வேன். நான் அவளது பண்டிகைகளையும்,
மாதப்பிறப்பு நாட்களையும், ஓய்வு நாட்
களையும், சபை கூடுகிற எல்லா ஆசரிப்புக
ளையும் நிறுத்துவேன். 12நான் அவளது
திராட்சைத்தோட்டங்களையும் அத்திமரங்க
ளையும் அழிப்பேன். அவள், ‘எனது நேசர்
கள் இவற்றை எனக்குக் கொடுத்தனர்’
என்பாள். ஆனால் நான் அவளது தோட்ட
த்தைக் காடாகும்படி செய்வேன். காட்டுமிரு
கங்கள் வந்து அவற்றைத் தின்னும்.

13“அவள் பாகால்களுக்குச் சேவைசெய்
தாள். எனவே நான் அவளைத் தண்டிப்
பேன். அவள் பாகாலுக்கு நறுமணப்
பொருட்களை எரித்தாள். அவள் ஆடை
அணிவித்தாள், அவள் தனது நகைகளையும்,
மூக்குத்தியையும் அணிவித்தாள். பிறகு
அவள் தனது நேசர்களிடம் போய் என்னை
மறந்துவிட்டாள்” என்று கர்த்தர் சொல்லு
கிறார்.

14“எனவே, நான் (கர்த்தர்) அவளிடத்தில்
இனிமையான வார்த்தைகளால் பேசுவேன்.
நான் அவளை வனாந்தரத்திற்கு அழைத்துப்
போவேன். நான் அவளிடம் நயமாகப்
பேசுவேன். 15அங்கே நான் அவளுக்குத்
திராட்சைத் தோட்டங்களைக் கொடுப்பேன்.
நான் அவளுக்கு நம்பிக்கையின் வாசலைப்
போன்ற ஆகோர் பள்ளத்தாக்கைக் கொடுப்
பேன். பிறகு அவள் எகிப்து தேசத்திலிருந்து
வந்த சமயத்திலும் தன் வாலிப நாட்களிலும்
என்னோடு பேசினதுபோல் பதிலைத்
தருவாள்.” 16கர்த்தர் இதனைச் சொல்கிறார்.

“அந்த நேரத்தில் நீங்கள் என்னை ‘என்
கணவனே’ என்று அழைப்பீர்கள். நீங்கள்
என்னை ‘என் பாகாலே’ என்று அழைக்க
மாட்டீர்கள். 17நான் அவளது வாயிலிருந்து
பாகால்களின் பெயர்களை எடுத்துவிடு
வேன். பிறகு ஜனங்கள் மீண்டும் பாகால்க
ளின் பெயர்களைப் பயன்படுத்தமாட்டார்
கள்.

18“அப்போது நான் இஸ்ரவேலர்களுக்
காகக் காட்டுமிருகங்களோடும் வானத்துப்
பறவைகளோடும், தரையில் ஊரும் உயிர்க
ளோடும், ஒரு உடன்படிக்கைச் செய்துகொள்
வேன். நான் போருக்குரிய வில், வாள்,

---

**பாகால்** பொய்த் தெய்வம்.

ஆயுதம் போன்றவற்றை உடைப்பேன்.
தேசத்தில் எந்த ஆயுதமும் இல்லாதபடிச்
செய்வேன். நான் தேசத்தைப் பாதுகாப்பாக
இருக்கும்படிச் செய்வேன். எனவே இஸ்ர
வேல் ஜனங்களை சமாதானமாகப் படுக்கச்
செய்வேன். 19நான் (கர்த்தர்) உன்னை
என்றைக்குமான எனது மணப்பெண்ணாக்கு
வேன். நான் உன்னை நன்மை, நீதி,
அன்பு, இரக்கம், ஆகிய குணங்கள் உள்ள
என்னுடைய மணமகளாக்குவேன். 20நான்
உன்னை எனது உண்மைக்குரிய மணமக
ளாக்குவேன். பிறகு நீ கர்த்தரை உண்மையா
கவே அறிந்துகொள்வாய். 21அப்போது நான்
மறுமொழி தருவேன்.” கர்த்தர் இதனைச்
சொல்கிறார். “நான் வானங்களோடு பேசு
வேன் அவை பூமிக்கு மழையைக் கொடுக்
கும். 22பூமி தானியம், திராட்சைரசம், எண்
ணெய் ஆகியவற்றை உற்பத்தி செய்யும்
அவை யெஸ்ரயேலின் தேவைகளைப் பூர்த்
திச்செய்யும்,

23நான் அவளது தேசத்தில் பல விதை
களை நடுவேன். நான் லோருகாமாவுக்கு
இரக்கம் காட்டுவேன், நான் லோகம்மியிடம்,
‘நீங்கள் எனது ஜனங்கள்’ என்பேன். அவர்
கள் என்னிடம், ‘நீர் எங்களது தேவன்’
என்று சொல்வார்கள்.”

## ஓசியா கோமேரை அடிமைத்தனத்திலிருந்து திரும்ப வாங்குகிறான்

3 பிறகு கர்த்தர் மீண்டும் என்னிடம்:
“கோமேருக்குப் பல நேசர்கள்
இருக்கின்றார்கள். ஆனால் நீ தொடர்ந்து
அவளை நேசி. ஏனென்றால் அதுவே
கர்த்தருடைய அன்புக்கு ஒப்பானது. கர்த்தர்
இஸ்ரவேல் ஜனங்கள் மீது தொடர்ந்து
அன்பு செலுத்தி வருகின்றார். ஆனால்
அவர்கள் தொடர்ந்து அந்நியத் தெய்வங்
களை தொழுகின்றனர். அவர்கள் (உலர்ந்த)
திராட்சை அப்பத்தை உண்ண விரும்பு
கின்றனர்” என்றார்.

2எனவே நான் கோமேரைப் பதினைந்து
வெள்ளிக்காசுகளுக்கும், ஒன்றரைக் கலம்
வாற்கோதுமைக்கும் வாங்கினேன். 3பிறகு
நான் அவளிடம், “நீ என்னுடன் பல
நாட்கள் வீட்டில் தங்கவேண்டும். நீ ஒரு
வேசியைப் போன்று இருக்கக்கூடாது. நீ
இன்னொருவனோடு இருக்கக்கூடாது. நான்
உனது கணவனாக இருப்பேன்” என்று
சொன்னேன்.

4இவ்வாறே, இஸ்ரவேல் ஜனங்கள் வேறு
அரசனோ தலைவரோ இல்லாமல் இருப்பார்
கள். அவர்கள் பலி இல்லாமலும், நினைவுக்
கற்கள் இல்லாமலும் இருப்பார்கள். அவர்கள்
ஏபோத் ஆடை இல்லாமலும் வீட்டுத் தெய்
வங்கள் இல்லாமலும் இருப்பார்கள். 5இதற்
குப் பிறகு இஸ்ரவேல் ஜனங்கள் திரும்பி
வருவார்கள். பிறகு அவர்கள் தம் தேவ
னாகிய கர்த்தரையும் அரசனாகிய தாவீதை
யும் காண வருவார்கள். இறுதி நாட்களில்
அவர்கள் கர்த்தரையும் அவரது நன்மைக
ளையும் பெருமைப்படுத்த வருவார்கள்.

## கர்த்தர் இஸ்ரவேலுக்கு எதிராகக் கோபமாயிருக்கிறார்

4 இஸ்ரவேல் ஜனங்களே, கர்த்தருடைய
செய்தியைக் கேளுங்கள். கர்த்தர் இந்த
நாட்டில் வாழ்கிற ஜனங்களுக்கு எதிராகத்
தன் வாதங்களைச் சொல்லுவார். “இந்நாட்
டிலுள்ள ஜனங்கள் உண்மையில் தேவனை
அறிந்துகொள்ளவில்லை. ஜனங்கள் தேவ
னுக்கு உண்மையாகவும் விசுவாசமாகவும்
இல்லை. 2ஜனங்கள் பொய்யாணையும்,
பொய்யும், கொலையும், திருட்டும் செய்கின்
றார்கள். அவர்கள் விபச்சாரமும் செய்கின்
றார்கள்; அதனால் குழந்தைகளையும் வைத்தி
ருக்கின்றார்கள். ஜனங்கள் மீண்டும் மீண்டும்
கொலை செய்கின்றனர். 3எனவே, அந்த
நாடானது ஒரு மனிதன் செத்தவர்களுக்காக
புலம்புவதுபோல் இருக்கிறது. அதன் ஜனங்
கள் அனைவரும் பலவீனமுடையவர்களாக
இருக்கின்றனர். காடுகளில் உள்ள மிருகங்
களும் வானத்துப் பறவைகளும் கடலிலுள்ள
மீன்களும் மரித்துக்கொண்டிருக்கின்றன.
4எவனொருவனும் இன்னொருவனோடு
வாதம் செய்வதோ அல்லது பழி சொல்
வதோ கூடாது. ஆசாரியரே, எனது வாதம்
உங்களோடு உள்ளது. 5நீங்கள் (ஆசாரியர்
கள்) பகல் நேரத்தில் இடறி விழுவீர்கள்.
இரவில் தீர்க்கதரிசியும் உங்களோடு விழு
வான். நான் உங்கள் தாயை அழிப்பேன்.

6“எனது ஜனங்கள் அழிக்கப்படுகிறார்கள்.
ஏனென்றால் அவர்களுக்கு அறிவில்லை.
நீ கற்றுக்கொள்ள மறுத்திருக்கிறாய்.
எனவே, நீ எனக்கு ஆசாரியனாக இருக்
கிறதை நான் மறுப்பேன். நீ உனது
தேவனுடைய சட்டங்களை மறந்திருக்கிறாய்.
எனவே நான் உன் பிள்ளைகளை மறப்
பேன். 7அவர்கள் தற்பெருமை கொண்டார்
கள். அவர்கள் எனக்கு எதிராக மேலும்
மேலும் பாவங்கள் செய்தார்கள். எனவே
நான் அவர்களது மகிமையை அவமானமாக்
குவேன்.

8“ஆசாரியர்கள் ஜனங்களின் பாவத்தில்
சேர்ந்துகொண்டார்கள். அவர்கள் அப்பாவங்
களை மேலும் மேலும் விரும்பினார்கள்.
9எனவே, ஆசாரியர்கள் எவ்விதத்திலும்
ஜனங்களை விட வித்தியாசமானவர்களாக
இல்லை. நான் அவர்களை அவர்கள் செய்த
வற்றுக்காகத் தண்டிப்பேன். அவர்கள் செய்த
தீயச்செயல்களுக்காக அதற்குரிய பலனை
அளிப்பேன். 10அவர்கள் உண்பார்கள்.
ஆனால் அது அவர்களுக்குத் திருப்தியைத்
தராது. அவர்கள் பாலினஉறவு பாவத்தைச்
செய்வார்கள். ஆனால் குழந்தைகள்
பெறமாட்டார்கள். ஏனென்றால் அவர்கள்

கர்த்தரை விட்டு விலகி விபச்சாரிகளைப்
போன்று ஆகிவிட்டார்கள்.
11 “வேசித்தனமும், பலமான குடியும், புதிய
திராட்சைரசமும் ஒருவனின் சிந்தனைச
சக்தியை அழித்துவிடும். 12 எனது ஜனங்கள்
மரக்கட்டைகளிடம் ஆலோசனை கேட்கின்
றார்கள். அவர்கள் அக்கட்டைகள் பதில்
சொல்லும் என்று எண்ணுகிறார்கள். ஏனெ
ன்றால் அவர்கள் வேசிகளைப் போன்று
அந்நியத் தெய்வங்களை துரத்திக்கொண்டு
போயிருக்கிறார்கள். அவர்கள் தமது
தேவனை விட்டுவிட்டு வேசிகளைப்
போன்று ஆனார்கள். 13 அவர்கள் மலைகளின்
உச்சியில் பலிகளைக் கொடுக்கிறார்கள்.
அவர்கள்கர்வாலிமரங்கள், புன்னைமரங்கள்,
அரசமரங்கள் ஆகியவற்றின் கீழே நறுமணத்
தூபங்களை எரிக்கிறார்கள். அம்மரங்களின்
நிழல்கள் பார்வைக்கு அழகாக இருக்கின்றன.
எனவே உங்கள் மகள்கள் விபசாரிகளைப்
போன்று அம்மரங்களுக்கு அடியில் படுத்துக்
கொள்கின்றனர். உங்கள் மருமகள்களும்
விபச்சாரம் செய்கின்றார்கள்.
14 “நான் உங்கள் மகள்கள் வேசிகளைப்
போன்று நடந்துக்கொள்வதையும் உங்கள்
மருமகள்கள் விபச்சாரம் செய்வதையும் குற்
றம் சொல்லமாட்டேன். ஆண்கள் போய்
வேசிகளோடு படுத்துக்கொள்கின்றாாகள்.
அவர்கள் கோவில் வேசிகளோடு பலிகள்
இடுகிறார்கள்.எனவே அம்முட்டாள் ஜனங்கள்
தம்மைத்தாமே அழித்துகொள்கின்றார்கள்。

### இஸ்ரவேலர்களின் அவமானத்துக்குரிய பாவங்கள்

15 “இஸ்ரவேலே, நீ ஒரு வேசியைப்
போன்று நடந்துக்கொள்கிறாய். ஆனால்
யூதாவை அக்குற்றத்துக்கு ஆளாக்காதே.
கில்காலுக்குப்* போகாதே. பெத்தாவேனுக்
கும் போகாதே. ஆணையிடுவதற்குக் கர்த்தரு
டைய நாமத்தைப் பயன்படுத்தாதே. ‘கர்த்தரு
டைய ஜீவனைக் கொண்டு...’ என்று
ஆணையிடாதே. 16 கர்த்தர் இஸ்ரவேலுக்கு
ஏராளமா னவற்றைக் கொடுத்திருக்கிறார்.
அவர் தம் ஆடுகளை ஏராளம் புல்லுள்ள
சமவெளிக்குக் கூட்டிப்போகும் நல்ல மேய்ப்
பனைப் போன்றவர். ஆனால் இஸ்ரவேல்
பிடிவாதமாக இருக்கிறது. இஸ்ரவேல் அடங்
காமல் மீண்டும் மீண்டும் ஓடும் கன்றுக்குட்டி
யைப் போன்றிருக்கிறது. 17 எப்பிராயீம்*
விக்கிரகங்களோடு இணைந்திருக்கிறான்.
எனவே அவனைத் தனியே விட்டு விடு.
18 “எப்பிராயீம் குடித்தவர்களோடு சேர்ந்து
கொண்டு விபசாரிகளைப்போல செயல்படு
கிறன். அவர்கள் தங்கள் நேசர்களுடன்
இருக்கட்டும். 19 அவர்கள் அத்தேவர்களிடம்
பாதுகாப்புக்காகச் சென்றார்கள். அவர்கள்
தம் சிந்தனையின் வலிமையை இழந்து
விட்டார்கள். அவர்களது பலிகள் அவர்
களுக்கு அவமானத்தைக் கொண்டு வருகின்
றன.”

### இஸ்ரவேலும் யூதாவும் பாவஞ்செய்ய தலைவர்களே காரணமாகுதல்

5 “ஆசாரியர்களே, இஸ்ரவேல் தேசமே,
அரசகுடும்பத்து ஜனங்களே, நான் சொல்
வதைக் கேளுங்கள். நீங்கள் குற்றவாளிகளாக
நியாயந்தீர்க்கப்பட்டுள்ளீர்கள். நீங்கள் மிஸ்
பாவில்* கண்ணியைப் போன்றிருந்தீர்கள்.
நீங்கள் தாபோரில்* தரைமேல் விரிக்கப்
பட்ட வலையைப் போன்றிருக்கிறீர்கள்.
2 நீங்கள் பல தீமைகளைச் செய்திருக்கிறீர்கள்.
எனவே நான் உங்கள் அனைவரையும்
தண்டிப்பேன். 3 நான் எப்பிராயீமை அறி
வேன். இஸ்ரவேல் செய்திருக்கிற செயல்க
ளையும் நான் அறிவேன். எப்பிராயீமே,
இப்பொழுது நீ ஒரு வேசியைப்போல்
நடந்துக்கொள்கிறாய். இஸ்ரவேல் பாவங்க
ளால் அழுக்கடைந்தது. 4 இஸ்ரவேல் ஜனங்
கள் பல தீமைகளைச் செய்திருக்கின்றார்கள்.
அத்தீமைகள் அவர்களை அவர்களுடைய
தேவனிடம் மறுபடியும் வராமல் தடுக்கின்
றன. அவர்கள் எப்பொழுதும் அந்நிய
தெய்வங்களைத் பின்பற்றும் வழிகளையே
நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள்
கர்த்தரை அறியாதிருந்தார்கள். 5 இஸ்ரவே
லின் அகந்தை அவர்களுக்கு எதிரான
சாட்சியாக உள்ளது. எனவே, இஸ்ர
வேலும் எப்பிராயீமும் தமது பாவங்களில்
இடறி விழுவார்கள். ஆனால் யூதாவும்
அவர்களோடு இடறி விழும்.
6 “ஜனங்களின் தலைவர்கள் கர்த்தரைத்
தேடி போவார்கள். அவர்கள் தங்களோடு
‘ஆடுகளையும்’ ‘பசுக்களையும்’ எடுத்துச்
செல்வார்கள். ஆனால் அவர்கள் கர்த்தரைக்
கண்டுக்கொள்ள மாட்டார்கள். ஏனென்றால்,
அவர் அவர்களைவிட்டு விலகினார். 7 அவர்
கள் கர்த்தருக்கு விசுவாசமானவர்களாக
இல்லை. அவர்களின் பிள்ளைகள் ஏதோ
அந்நியனிடமிருந்து வந்தவர்கள். இப்பொ
ழுது அவர் மீண்டும் அவர்களையும் அவர்க
ளது நாட்டையும் அழிப்பார்.”

### இஸ்ரவேலின் அழிவு பற்றிய தீர்க்கதரிசனம்

8 “கிபியாவிலே பூரிகையை ஊதுங்கள்.
ராமாவிலே எக்காளத்தை ஊதுங்கள். பெத்
தாவேனிலே* எச்சரிக்கைக் கொடுங்கள்.

---

**கில்கால்** இஸ்ரவேலின் நகரம்.

**எப்பிராயீம்** யோசேப்பின் இளைய மகன். அவன் பெயரில் இஸ்ரவேலின் வடபகுதியில் உள்ள இராஜ்யம் அழைக்கப்படுகிறது.

**மிஸ்பா** இஸ்ரவேலிலுள்ள ஒரு மலை.

**தாபோர்** இஸ்ரவேலிலுள்ல ஒரு மலை.

**பெத்தாவே** ‘பாவத்தின் வீடு.’

*பென்யமீனே, பகைவன் உனக்குப் பின்னால்
உள்ளான்.
**9**எப்பிராயீம் தண்டனை காலத்தில் வெறு
மையாகி விடும். நான் (தேவன்) இஸ்ரவேல்
குடும்பங்களுக்கு நிச்சயமாக வரப்போவ
தைக் கூறி எச்சரிப்பேன்.
**10**யூதாவின் தலைவர்கள் திருடர்களைப்
போன்று மற்றவர்களின் சொத்துக்களைத்
திருட முயற்சிக்கிறார்கள். எனவே நான்
(தேவன்) தண்ணீரைப் போன்று எனது
கோபத்தை அவர்கள் மீது ஊற்றுவேன்.
**11**எப்பிராயீம் தண்டிக்கப்படுவான். அவன்
திராட்சைப் பழத்தைப் போன்று நசுக்கிப்
பிழியப்படுவான். ஏனென்றால் அவன் அரு
வருப்பானவற்றைப் பின்பற்ற முடிவு
செய்தான்.
**12**நான் எப்பிராயீமை பொட்டரிப்பு துணி
யை அழிப்பது போன்று அழிப்பேன்.
நான் யூதாவை மரத்துண்டை அழிக்கும்
உளுப்பைப் போன்று அழிப்பேன்.
**13**எப்பிராயீம் தனது நோயைப் பார்த்தான்.
யூதா தனது காயத்தைப் பார்த்தான். எனவே
அவர்கள் அசீரியாவிடம் உதவிக்குச் சென்
றார்கள். அவர்கள் பேரரசனிடம் தங்கள்
பிரச்சனைகளைச் சொன்னார்கள். ஆனால்
அந்த அரசன் உங்களைக் குணப்படுத்த
முடியாது. அவன் உங்கள் புண்களை குணப்
படுத்த முடியாது.
**14**ஏனென்றால் நான் எப்பிராயீமுக்கு ஒரு
சிங்கத்தைப் போன்றிருப்பேன். நான் யூதா
நாட்டிற்கு ஒரு இளம் சிங்கத்தைப் போன்று
இருப்பேன். நான், ஆம் நான் (கர்த்தர்)
அவர்களைத் துண்டு துண்டாக்குவேன்.
நான் அவர்களை எடுத்துச் செல்வேன்.
அவர்களை என்னிடமிருந்து எவரும் காப்
பாற்ற முடியாது.
**15**அவர்கள் தங்களைக் குற்றவாளிக
ளென்று ஏற்றுக்கொள்ளும்வரை, அவர்கள்
என்னைத் தேடும்வரை நான் எனது
இடத்திற்குத் திரும்பிப் போவேன். ஆம்,
அவர்கள் தம் ஆபத்தில் என்னைத் தேடக்
கடுமையாக முயற்சி செய்வார்கள்."*

### கர்த்தரிடம் திரும்பி வருவதன் பலன்கள்

*# 6 "வா, நாம் கர்த்தரிடம் திரும்பிப் போ
வோம். அவர் நம்மைப் புண்படுத்தினார்.
ஆனால் அவர் நம்மைக் குணப்படுத்துவார்.
அவர் நம்மைக் காயப்படுத்தினார். ஆனால்
அவர் நமக்குக் கட்டுகளைப் போடுவார்.
**2**இரண்டு நாட்களுக்குப் பிறகு நமக்கு
அவர் திரும்பவும் உயிரைக் கொண்டுவரு
வார். அவர் மூன்றாவது நாள் நம்மை
எழுப்புவார். பிறகு நாம் அவரருகில் வாழ
முடியும்.
**3**கர்த்தரைப் பற்றி கற்றுக்கொள்வோம்.
கர்த்தரை அறிந்துக்கொள்ள மிகக் கடு
மையாக முயல்வோம். அவர் வந்துக்கொண்
டிருக்கிறார் என்பதை நாம் காலைநேரம்
வந்துகொண்டிருக்கிறது என்பதைப்போன்று
அறிகிறோம். கர்த்தர் நம்மிடம் பூமியை
நனைக்க வரும் மழையைப்போன்று
வருவார்."*

### ஜனங்கள் விசுவாசமற்றவர்கள்

*__4__"எப்பிராயீமே, நான் உன்னை என்ன
செய்வது? யூதா, நான் உன்னை என்ன
செய்வது? உனது விசுவாசம் காலை
மூடுபனியைப் போன்று உள்ளது. உனது
விசுவாசத் தன்மை காலையில் மறையும்
பனித்துளியைப் போன்று உள்ளது.
**5**நான் தீர்க்கதரிசிகளைப் பயன்படுத்தி
ஜனங்களுக்காக சட்டங்களைச் செய்தேன்.
எனது கட்டளைகளால் ஜனங்கள் கொல்லப்
பட்டார்கள். ஆனால் அந்த முடிவுகளி
லிருந்து நன்மைகள் வரும்.
**6**ஏனென்றால் நான் பலிகளை அல்ல,
விசுவாசமுள்ள அன்பையே விரும்புகிறேன்.
நான் ஜனங்கள் தகன பலிகளை கொண்டு
வருவதையல்ல ஜனங்கள் தேவனை அறிந்
துகொள்வதையே விரும்புகிறேன்.
**7**ஆனால் ஜனங்கள் ஆதாமைப் போன்று
உடன்படிக்கையை உடைத்தார்கள். அவர்
கள் தமது நாட்டில் எனக்கு விசுவாசம்
இல்லாதவர்களாய் இருந்தார்கள்.
**8**கீலேயாத், தீமை செய்கிறவர்களின்
நகரமாயிருக்கிறது. அங்கு ஜனங்கள் மற்றவர்
களைத் தந்திரம் செய்து கொல்லுகிறார்கள்.
**9**வழிப்பறிக்காரர்கள் மறைந்திருந்து மற்
றவர்களைத் தாக்கக் காத்திருக்கிறார்கள்.
அதைப்போலவே, சீகேமுக்குப் போகும்
சாலையில் அவ்வழியில் செல்லும் ஜனங்க
ளைத் தாக்க ஆசாரியர்கள் காத்திருக்கின்
றார்கள். அவர்கள் தீமைகளைச் செய்தி
ருக்கிறார்கள்.
**10**நான் இஸ்ரவேல் நாட்டில் பயங்கரமா
னவற்றைப் பார்த்திருக்கிறேன். எப்பிராயீம்
தேவனுக்கு விசுவாசம் இல்லாமல் போ
னான். இஸ்ரவேல் பாவத்தால் அழுக்கானது.
**11**யூதா, உனக்கும் அறுவடைக்காலம்
இருக்கிறது. நான் எனது ஜனங்களைச்
சிறைமீட்டு வரும்போது இது நிகழும்."*

*# 7 "நான் இஸ்ரவேலைக் குணப்படுத்து
வேன். பிறகு ஜனங்கள் எப்பிராயீம்
பாவம் செய்ததை அறிவார்கள். ஜனங்கள்
சமாரியாவின் பொய்களை அறிவார்கள்.
ஜனங்கள் நகரத்திற்குள் வந்துபோகிற
திருடர்களைப் பற்றி அறிவார்கள்.
**2**அந்த ஜனங்கள் நான் அவர்களின்
குற்றங்களை நினைப்பேன் என்பதை நம்ப
மாட்டார்கள். அவர்கள் செய்த கெட்ட
வைகளெல்லாம் சுற்றிலும் உள்ளன. நான்
அவர்களது பாவங்களைத் தெளிவாகப்
பார்க்கமுடியும். **3**அவர்களது தீமை அவர்
களின் அரசனை மகிழ்ச்சிப்படுத்துகிறது.*

அவர்களது அந்நியத் தெய்வங்கள் அவர்க
ளின் தலைவர்களை மகிழ்ச்சிப்படுத்தும்.
4அப்பம் சுடுகிறவன் அப்பம் சுடுவதற்காக
அடுப்பை எரிக்கிறான். அவன் அடுப்பில்
அப்பத்தை வைக்கிறான். அப்பத்தின் மாவு
புளித்துக்கொண்டிருக்கும்போது அப்பம்
சுடுபவன் அடுப்பில் அளவுக்கு அதிகமான
நெருப்பைப் போடமாட்டான். ஆனால்
இஸ்ரவேல் ஜனங்கள் அவ்வாறு இல்லை.
இஸ்ரவேல் ஜனங்கள் எப்பொழுதும் தம்
நெருப்பை மேலும் சூடாக்குகின்றனர்.
5நம்முடைய அரசனின் நாளில் அவர்கள்
தம் நெருப்பை மேலும் சூடாக்குகின்றனர்.
அவர்கள் குடி விருந்துகளைக் கொடுக்கிறார்
கள். தலைவர்கள் திராட்சைரசத்தின் சூட்
டால் நோயடைகின்றனர். எனவே அரசர்
கள் தேவனைப் பரிகாசம் செய்யும் ஜனங்க
ளோடு சேருகின்றார்கள்.
6ஜனங்கள் தமது இரகசிய திட்டங்களைப்
போடுகிறார்கள். அவர்களது இதயங்கள்
சூட்டடுப்பைப் போன்று கிளர்ச்சியடை
கின்றன. அவர்களின் ஆர்வம் இரவு முழு
வதும் எரியும். காலையில் அது நெருப்பாய்
எரியும்.
7அவர்கள் அனைவரும் எரியும் சூட்ட
டுப்பாய் இருக்கிறார்கள். அவர்கள் தமது
ஆட்சியாளர்களை அழித்தார்கள். அவர்
களின் அரசர்கள் அனைவரும் விழுந்தார்கள்.
அவர்களில் ஒருவரும் என்னை உதவிக்கு
அழைக்கவில்லை.”

## தான் அழியப் போவதைப்பற்றி இஸ்ரவேலின் அறியாமை

8“எப்பிராயீம் மற்ற தேசங்களோடு கலக்கி
றான். எப்பிராயீம் இரண்டு பக்கமும் வேகாத
அப்பத்தைப் போன்று இருக்கிறான்.
9அந்நியர்கள் எப்பிராயீமின் பலத்தை
அழிக்கிறார்கள். ஆனால் எப்பிராயீம் இதை
அறியவில்லை. எப்பிராயீம் மேல் நரை
மயிர்கள் தெளிக்கப்பட்டுள்ளன. ஆனால்
எப்பிராயீம் இதனை அறியவில்லை. 10எப்
பிராயீமின் பெருமை அவனுக்கு எதிராகப்
பேசுகிறது. ஜனங்களுக்குப் பற்பல தொல்
லைகள் இருக்கின்றன. ஆனால் அவர்கள்
இன்னும் தமது தேவனாகிய கர்த்தரிடம்
திரும்பிப் போகவில்லை. ஜனங்கள் உத
விக்கு அவரை நோக்கிப் பார்க்கவில்லை
11எனவே, எப்பிராயீம் புரிந்துகொள்ளாத
பேதையான சிறிய புறாவைப் போலானான்.
ஜனங்கள் எகிப்திடம் உதவி கேட்டார்கள்.
ஜனங்கள் அசீரியாவிடம் உதவிகேட்டுப்
போனார்கள்.
12அவர்கள் அந்நாடுகளுக்கு உதவிகேட்டுப்
போனார்கள். ஆனால் நான் அவர்களை
கண்ணியில் சிக்கவைப்பேன். நான் எனது
வலையை அவர்கள் மேல் வீசுவேன்.
நான் அவர்களை வானத்துப்பறவைகளைப்
போன்று பிடித்து அவர்களை கீழேகொண்டு
வருவேன். நான் அவர்களை அவர்களது
உடன்படிக்கைகளுக்காகத் தண்டிப்பேன்.
13இது அவர்களுக்குக் கேடாகும். அவர்கள்
என்னை விட்டு விலகினார்கள். அவர்கள்
எனக்கு அடிபணிய மறுத்தார்கள். எனவே
அவர்கள் அழிக்கப்படுவார்கள். நான் அந்த
ஜனங்களைக் காப்பாற்றினேன். ஆனால்
எனக்கு எதிராக அவர்கள் பொய்களைப்
பேசுகின்றார்கள்.
14அவர்கள் தம் மனப்பூர்வமாக என்னை
எப்பொழுதும் அழைக்கிறதில்லை. ஆம்,
அவர்கள் தங்கள் படுக்கையிலிருந்து
அழுகின்றார்கள். தானியத்திற்காகவும் புதுத்
திராட்சைரசத்திற்காகவும் கேட்கும் போது
தங்களைத் தாங்களே வெட்டிக்கொள்
கிறார்கள். ஆனால் அவர்களின் இதயங்களில்
அவர்கள் என்னிடமிருந்து விலகியிருக்கி
றார்கள்.
15நான் அவர்களுக்குப் பயிற்சியளித்து
அவர்கள் கைகளைப் பலப்படுத்தினேன்.
ஆனால் அவர்கள் எனக்கு எதிராகத் தீய
திட்டங்களைப் போட்டிருக்கிறார்கள்.
16ஆனால் அவர்கள் வளைந்த தடியைப்
போல இருந்தார்கள் அவர்கள் தங்கள்
திசைகளை மாற்றிக்கொண்டார்கள். ஆனால்
என்னிடம் திரும்பி வரவில்லை. அவர்கள்
தலைவர்கள் தங்கள் பலத்தைப்பற்றி
பெருமை பேசுகிறார்கள். ஆனால் அவர்கள்
வாள்களால் கொல்லப்படுவார்கள். பிறகு
எகிப்து ஜனங்கள் அவர்களைப் பார்த்து
சிரிப்பார்கள்.

## விக்கிரக ஆராதனை அழிவுக்கு வழி நடத்தும்

8 “உன் வாயிலே எக்காளத்தை வை.
எச்சரிக்கை செய். கர்த்தருடைய வீட்டின்
மேல் ஒரு கழுகைப்போன்றிரு. இஸ்ரவே
லர்கள் எனது உடன்படிக்கையை உடைத்து
விட்டார்கள். அவர்கள் எனது சட்டங்
களுக்கு அடிபணியவில்லை. 2அவர்கள்,
‘எங்கள் தேவனே, இஸ்ரவேலில் உள்ள
நாங்கள் உம்மை அறிவோம்!’ என்று
கூப்பிடுகின்றார்கள். 3ஆனால் இஸ்ரவேல்
நன்மைகளை மறுத்தான். எனவே பகைவன்
அவனைத் துரத்துகிறான். 4இஸ்ரவேலர்கள்
அவர்களது அரசர்களைத் தேர்ந்தெடுத்
தார்கள். ஆனால் அவர்கள் என்னிடம்
ஆலோசனைக்கு வரவில்லை. இஸ்ரவே
லர்கள் தலைவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள்.
ஆனால் அவர்கள் நானறிந்த மனிதர்களைத்
தேர்ந்தெடுக்கவில்லை. இஸ்ரவேலர்கள் தமது
வெள்ளியையும்,பொன்னையும் பயன்படுத்தி
தங்களுக்கு விக்கிரகங்களைச் செய்தார்கள்.
எனவே அவர்கள் அழிக்கப்படுவார்கள். 5-
6சமாரியாவே, கர்த்தர் உனது கன்றுகுட்
டியை மறுத்துவிட்டார். தேவன் சொன்னார்:

“நான் இஸ்ரவேலர்களுக்கு எதிராக மிகவும்
கோபத்துடன் இருக்கிறேன். இஸ்ரவேல்
ஜனங்கள் தமது பாவத்திற்காகத் தண்டிக்கப்ப
டுவார்கள். யாரோ வேலைக்காரன் அச்சி
லைகளைச் செய்தான். அவை தேவன்
அல்ல. சமாரியாவின் கன்றுகுட்டி துண்டு
துண்டாக உடைக்கப்படும். 7இஸ்ரவேலர்கள்
காற்றில் விதை விதைக்க முயல்வது
போன்ற ஒரு முட்டாள்தனமான வேலை
யைச் செய்தார்கள். ஆனால் அவர்கள்
தொல்லைகளை மட்டுமே பெறுவார்கள்.
அவர்கள் சூறைக் காற்றை அறுவடை
செய்வார்கள். வயல்களில் பயிர்கள் வளரும்.
ஆனால் அது தானியத்தைக் கொடுக்காது.
அதில் ஏதாவது தானியம் விளைந்தாலும்
அந்நியர்கள் அதனைத் தின்றுவிடுவார்கள்.
8இஸ்ரவேல் அழிக்கப்பட்டிருந்தது. இதனு
டைய ஜனங்கள் தங்கள் நாடுகளுக்குள்ளே
தேவையற்ற கிண்ணத்தை வெளியே தூக்கி
எறியப்படும் கிண்ணத்தைப்போல சிதற
டிக்கப்பட்டார்கள்.
9எப்பிராயீம் அவனுடைய ‘நேசர்களிடம்’
சென்றான். அவன் ஒரு காட்டுக்கழுதையைப்
போன்று அசீரியாவில் அலைந்துத் திரிந்
தான்.
10இஸ்ரவேல் பல நாடுகளில் உள்ள
தனது ‘நேசர்களிடம்’ சென்றான். ஆனால்
நான் இஸ்ரவேலர்களை ஒன்று சேர்ப்பேன்.
ஆனால் வல்லமையான அரசன் சுமத்தும்
சுமைகளினால் அவர்கள் சிறிது துன்பப்பட
வேண்டும்.

## இஸ்ரவேல் தேவனை மறந்து விக்கிரகங்களை வணங்குகிறது

11எப்பிராயீம் மேலும் மேலும் பலிபீடங்
களைக் கட்டியது. அது பாவமானது.
அப்பலிபீடங்கள் எப்பிராயீமின் பாவப்
பலிபீடங்களாக இருந்திருக்கின்றன.”
12நான் எப்பிராயீமிற்காக 10,000 சட்டங்
களை எழுதினாலும், அவன் அவற்றை
யாரோ அந்நியர்களுக்குரியதாகவே கருது
வான்.
13இஸ்ரவேலர்கள் பலிகளை விரும்புகின்
றார்கள். அவர்கள் இறைச்சியைப் படைத்து
உண்ணுகிறார்கள். கர்த்தர் அவர்களது
பலிகளை ஏற்றுக்கொள்வதில்லை. அவர்க
ளது பாவங்களை அவர் நினைவில் வைத்தி
ருக்கிறார்.
அவர்களை அவர் தண்டிப்பார். அவர்கள்
எகிப்திற்குக் கைதிகளாகக்கொண்டுச் செல்
லப்படுவார்கள்.
14இஸ்ரவேல் அரசர்களின் வீடுகளைக்
கட்டினார்கள். ஆனால் இஸ்ரவேல் அதனை
உருவாக்கியவரை மறந்துவிட்டது. இப்
போது யூதா கோவில்களைக் கட்டுகின்றது.
ஆனால் நான் யூதாவின் நகரங்களுக்கு
நெருப்பை அனுப்புவேன். நெருப்பானது
அதன் கோட்டைகளை அழிக்கும்!”

## நாடு கடத்தலின் துக்கம்

9 இஸ்ரவேலே, பிற நாடுகள் செய்வது
போன்று விழா கொண்டாடாதே. மகிழ்ச்
சியாய் இராதே. நீ ஒரு வேசியைப்போன்று
நடந்து உனது தேவனை விட்டு விலகினாய்.
தானியம் அடிக்கிற எல்லாக்களங்களிலும்
நீ பாலினஉறவு பாவத்தைச் செய்தாய்.
2ஆனால் தானியம் அடிக்கிற களத்தில்
உள்ள தானியம் இஸ்ரவேலுக்குப் போது
மான உணவாக இருக்காது. இஸரவேலுக்குப்
போதுமான திராட்சைரசமும் இருக்காது.
3இஸ்ரவேலர்கள் கர்த்தருடைய நாட்டில்
தங்கமாட்டார்கள். எப்பிராயீம் எகிப்திற்குத்
திரும்புவான். அசீரியாவில் அவர்கள் உண்
ணக்கூடாத உணவை உண்பார்கள். 4இஸ்ர
வேலர்கள் கர்த்தருக்குத் திராட்சைரசத்தைப்
பானங்களின் காணிக்கையாக அளிப்ப
தில்லை. அவருக்கு அவர்கள் பலிகள்
கொடுப்பதுமில்லை. அவர்கள் கொடுக்கிற
பலிகள் மரித்தவர் வீட்டில் கொடுக்கிற
உணவைப்போலிருக்கும். அதைச் சாப்பிடு
கிறவர்கள் அசுத்தமடைவார்கள். அவர்கள்
அப்பம் கர்த்தருடைய ஆலயத்திற்குள்
போகாது. அவர்களே அதை உண்ண
வேண்டியதிருக்கும். 5அவர்கள் (இஸ்ர
வேலர்கள்) கர்த்தருடைய ஓய்வுநாட்கள்
அல்லது பண்டிகைகளைக் கொண்டாட
முடியாதவர்களாக இருப்பார்கள்.
6இஸ்ரவேலர்கள் போய்விட்டார்கள்.
ஏனெனில் அவர்களுடைய விரோதி அவர்
களுக்குண்டான எல்லாவற்றையும் தானா
கவே எடுத்துச் சென்றுவிட்டான். ஆனால்
எகிப்து அவர்களுடைய ஜனங்களை எடுத்
துக்கொள்ளும். மெம்பிஸில்* அவர்களைப்
புதைப்பார்கள். அவர்களின் வெள்ளிப்
பொக்கிஷங்கள் மேல் களைகள் வளரும்.
அவர்கள் வாழ்ந்த இடங்களில் முட்செடி
கள் முளைக்கும்.

## இஸ்ரவேல் உண்மையான தீர்க்கதரிசிகளை ஏற்க மறுத்தது

7தீர்க்கதரிசி, “இஸ்ரவேலே, இவற்றைக்
கற்றுக்கொள். தண்டனைக் காலம் வந்து
விட்டது. நீ செய்த பாவங்களுக்கு விலை
செலுத்தவேண்டிய காலம் வந்திருக்கிறது”
என்கிறார். ஆனால் இஸ்ரவேல் ஜனங்களோ,
“தீர்க்கதரிசி ஒரு முட்டாள். தேவனுடைய
ஆவியோடு இருக்கிற இம்மனிதன் பைத்தியக்
காரன்” என்று கூறுகிறார்கள். தீர்க்கதரிசி,
“நீ உனது கொடிய பாவங்களுக்காகத்
தண்டிக்கப்படுவாய். நீ உனது வெறுப்
பிற்காகத் தண்டிக்கப்படுவாய்” என்று சொல்
கிறார். 8தேவனும் தீர்க்கதரிசியும் எப்பிரா
யீமை காவல் காக்கிற காவலர்களைப்
போன்றவர்கள். ஆனால் வழியெங்கும் பல
கண்ணிகள் உள்ளன. ஜனங்கள் தீர்க்க

---

**மெம்பிஸ்** எகிப்தின் முக்கிய நகரம்.

தரிசியை தேவனுடைய வீட்டில் கூட
வெறுக்கின்றனர்.
9 இஸ்ரவேலர்கள் கிபியாவின்* நாட்க
ளைப் போன்று அழிவின் ஆழத்திற்குச்
சென்றுவிட்டார்கள். கர்த்தர் இஸ்ரவேலர்க
ளின் பாவங்களை நினைவுகொள்வார். அவர்
அவர்களது பாவங்களைத் தண்டிப்பார்.

### இஸ்ரவேல் அதன் விக்கிரக ஆராதனையால் சேதமடைந்திருக்கிறது

10 நான் இஸ்ரவேலரைக் கண்டுக்கொண்ட
போது, அவர்கள் வனாந்திரத்தில் இருக்கும்
புதிய திராட்சைப்பழத்தைப் போன்று இருந்
தார்கள். அத்திமரத்தில் பருவகாலத்தில் முதல்
முதலாகப் பழுத்தப்பழங்களைப் போன்று
இருந்தார்கள். ஆனால் அவர்கள் அதன்பிறகு
பாகால்பேயோருக்கு வந்தார்கள். அவர்கள்
மாறினார்கள். நான் அவர்களை அழுகிப்
போன பழங்களை வெட்டுவதைப் போன்று
(அழிப்பதுபோன்று) வெட்ட வேண்டிய
தாயிருந்தது. அவர்கள் அவர்களால்
நேசிக்கப்படுகிற பயங்கரமான பொருட்களை
(அந்நிய தெய்வங்கள்) போன்று ஆனார்கள்.

### இஸ்ரவேலர்களுக்குக் குழந்தைகள் இருக்காது

11 ஒரு பறவையைப் போன்று, எப்பிராயீ
மின் மகிமை பறந்துபோகும். இனிமேல்
கர்ப்பமுறுதல் இல்லாமல் போகும். பிறப்பு
களும் பிள்ளைகளும் இல்லாமல் போகும்.
12 ஆனால் இஸ்ரவேலர்கள் தம்பிள்ளைகளை
வளர்த்தாலும் அது அவர்களுக்கு உதவாது.
நான் அவர்களிடமிருந்து அவர்களது பிள்
ளைகளை எடுத்துக்கொள்வேன். நான் அவர்
களை விட்டுவிடுவேன். அவர்களுக்குத்
தொல்லைகளைத் தவிர வேறு எதுவும்
இருக்காது.
13 எப்பிராயீம் தன் குழந்தைகளைக் கண்
ணிகளுக்கு வழிநடத்திச் செல்வதை நான்
பார்க்க முடிகிறது. எப்பிராயீம் தன் பிள்ளை
களைக் கொலைக்காரர்களிடம் அழைத்து
வருகிறான். 14 கர்த்தாவே, நீர் அவர்களுக்குக்
கொடுப்பதைக் கொடும். நீர் அவாகளுக்குக்
குழந்தைகளை இழக்கிற கர்ப்பத்தையும் பால்
கொடுக்க முடியாத முலைகளையும் கொடும்.
15 அவர்கள் பொல்லாப்பு கில்காலில் இருக்
கிறது. நான் அங்கே அவர்களை வெறுக்கத்
தொடங்கினேன். நான் அவர்களை என்
வீட்டை விட்டுப் போகும்படி வற்புறுத்து
வேன். ஏனென்றால் அவர்கள் பொல்லாப்பு
களைச் செய்துள்ளார்கள். நான் இனிமேல்
அவர்களை நேசிக்கமாட்டேன். அவர்கள்
தலைவர்கள் கலகக்காரர்கள். அவர்கள்
எனக்கு எதிராகத் திரும்பியிருக்
கின்றார்கள்.
16 எப்பிராயீம் தண்டிக்கப்படுவான். அவர்
கள் வேர் செத்துக்கொண்டிருக்கிறது. அவர்
களுக்கு இனிமேல் குழந்தைகள் இருக்காது.
அவர்கள் குழந்தைகள் பெறலாம். ஆனால்
நான் அவர்களது உடலிருந்து வருகிற
குழந்தைகளைக் கொல்வேன்.
17 அந்த ஜனங்கள் என்னுடைய தேவன்
சொல்வதைக் கேட்கமாட்டார்கள். எனவே
அவர் அவர்கள் சொல்வதைக் கேட்கமறுப்
பார். அவர்கள் வீடு இல்லாமல் தேசங்கள்
முழுவதும் அலைந்து திரிவார்கள்.

### இஸ்ரவேலின் செல்வமே, விக்கிரகத் தொழுகைக்கு வழி நடத்தியது

10 இஸ்ரவேல் ஏராளமாகக் கனிகளைக்
கொடுக்கிற திராட்சைக்கொடியைப்
போன்றவன். ஆனால் இஸ்ரவேல் மேலும்
மேலும் மிகுதியாகப் பொருட்களைப் பெற்ற
தும் அந்நிய தெய்வங்களைக் கௌரவிக்க
மென்மேலும் பலிபீடங்களைக் கட்டினான்.
அவனுடைய நாடு மேலும் மேலும் வளம்
பெற்றது. ஆகவே அவன் மேலும் மேலும்
அந்நிய தெய்வத்தை கௌரவிக்கக் கற்களை
அமைத்தான்.
2 இஸ்ரவேல் ஜனங்கள் தேவனை ஏமாற்ற
முயன்றார்கள். ஆனால் இப்போது அவர்கள்
தங்கள் குற்றங்களை ஒப்புக்கொள்ள வேண்
டும். கர்த்தர் அவர்கள் பலிபீடங்களை
உடைப்பார். அவர் அவர்கள் நினைவு
கற்களை அழிப்பார்.

### இஸ்ரவேலர்களின் பொல்லாத முடிவுகள்

3 இப்போது இஸ்ரவேலர்கள் கூறுகிறார்
கள்: “நமக்கு அரசன் இல்லை நாம் கர்த்
தரை கௌரவிப்பதில்லை. அவருடைய
அரசன் நம்மை ஒன்றும் செய்யமுடியாது!”
4 அவர்கள் வாக்குறுதிகளைச் செய்கின்
றனர். ஆனால் அவர்கள் பொய்களை மட்
டுமே சொல்கின்றனர். அவர்கள் தமது
வாக்குறுதிகளைக் காப்பாற்றுவதில்லை.
அவர்கள் மற்ற நாடுகளோடு உடன்படிக்கை
செய்துகொள்கின்றார்கள். தேவன் அந்த
உடன்படிக்கையை விரும்பவில்லை. நீதி
பதிகள் உழுத வயல்களில் முளைத்திருக்கும்
விஷத்தன்மையுள்ள களைகள் போன்று
உள்ளார்கள்.
5 சமாரியா ஜனங்கள் பெத்தாவேனிலுள்ள
கன்றுக்குட்டியை ஆராதிக்கிறார்கள். அந்த
ஜனங்கள் உண்மையில் அழுவார்கள். அந்த
ஆசாரியர்கள் உண்மையில் அழுவார்கள்.
ஏனென்றால் அவர்களது அழகான விக்கி
ரகம் போய்விட்டது. அது தூக்கிச் செல்லப்
பட்டது. 6 அசீரியாவின் பேரரசனுக்கு
அன்பளிப்பாக அவ்விக்கிரகம் கொண்டு
போகப்பட்டது. அவன் எப்பிராயீமின் அவ
மானகரமான விக்கிரகத்தை வைத்துக்கொள்

**கிபியா** இந்த இடத்தில் பென்யமீன் குடும்பத்தினர் பெரிய பாவம் செய்தனர்.

வான். இஸ்ரவேல் அதன் விக்கிரகத்தி
னிமித்தம் அவமானம் அடையும். 7 சமாரியா
வின் அந்நிய தெய்வம் அழிக்கப்படும். இது
நீர்ப்பரப்பின் மேலே மிதக்கும் மரத்
துண்டைப்போன்று இருக்கும்.
8 இஸ்ரவேல் பாவம் செய்தது. பல உயர்
மேடைகளைக் கட்டியது. ஆபேனின் மேடை
கள் அழிக்கப்படும். அவர்கள் பலிபீடங்களில்
முட்செடிகளும், களைகளும் வளரும். பிறகு
அவர்கள் மலைகளிடம், “எங்களை மூடுங்
கள்!” என்றும் குன்றுகளிடம் “எங்கள்மேல்
விழுங்கள்” என்றும் கூறுவார்கள்.

### இஸ்ரவேல் பாவத்துக்கு விலை கொடுக்கும்

9 இஸ்ரவேலே, நீ கிபியாவின் காலத்தி
லிருந்து பாவம் செய்தாய். (அந்த ஜனங்கள்
அங்கே தொடர்ந்து பாவம் செய்துக்கொண்
டிருக்கிறார்கள்.) கிபியாவில் அப்பொல்லாத
ஜனங்களை யுத்தம் உண்மையாகவே
கைப்பற்றும். 10 நான் அவர்களைத் தண்டிக்க
வருவேன். படைகள் அவர்களுக்கு எதிராகச்
சேர்ந்துவரும். அவர்கள் இஸ்ரவேலர்களை
அவர்களது இரண்டு பாவங்களுக்காகத் தண்
டிப்பார்கள்.
11 எப்பிராயீம் நன்றாகப் பழக்கப்படுத்தப்
பட்ட, போரடிக்கும் களத்திலுள்ள தானியங்
களின் மேல் நடக்க விரும்பும், இளம்
காளையைப் போன்றவன். அவன் கழுத்தில்
நான் ஒரு நல்ல நுகத்தடியை மாட்டுவேன்.
நான் எப்பிராயீமை கயிற்றால் கட்டுவேன்.
பிறகு யூதா உழுவுசெய்யத் தொடங்குவான்.
யாக்கோபு தானாகவே பரம்படிப்பான்.
12 நீ நன்மையை நட்டால் உண்மையான
அன்பை அறுவடை செய்வாய். உன்
நிலத்தை உழு, கர்த்தரோடு நீ அறுவடை
செய்வாய். அவர் வருவார், அவர் உன்
மீது நன்மையை மழைப் போன்று பொழியச்
செய்வார்.
13 ஆனால் நீ தீமையை நட்டாய். நீ
துன்பத்தை அறுவடை செய்தாய். நீ உன்
பொய்களின் கனியை உண்டாய். ஏனென்
றால் நீ உன் அதிகாரத்தையும் உன் வீரர்
களையும் நம்பியிருந்தாய். 14 எனவே உனது
படைகள் யுத்தத்தின் பேரொலியைக் கேட்
கும். உனது எல்லா அரண்களும் அழிக்கப்
படும். இது பெத்தார்பேலைச் சல்மான்
அழித்ததுபோல் இருக்கும். அப்போர்க் காலத்
தில் தாய்மார்கள் தம் குழந்தைகளோடு
கொல்லப்பட்டார்கள். 15 உனக்கு அது பெத்
தேலில் ஏற்படும். ஏனென்றால் நீ ஏராளமான
பாவங்களைச் செய்தாய். அந்த நாள் தொடங்
கும்போது இஸ்ரவேலின் அரசன் முழுமை
யாக அழிக்கப்படுவான்.

### இஸ்ரவேல் கர்த்தரை மறந்துவிட்டது

11 கர்த்தர், “இஸ்ரவேல் குழந்தையாக
இருக்கும்போது நான் (கர்த்தர்)
அவனை நேசித்தேன். நான் என் மகனை
எகிப்தை விட்டு வெளியே அழைத்தேன்.
2 ஆனால் நான் இஸ்ரவேலர்களை மிகுதி
யாக அழைக்க அவர்களும் என்னை விட்டு
மிகுதியாக விலகினார்கள். இஸ்ரவேலர்கள்
பாகாலுக்குப் பலிகளைக் கொடுத்தார்கள்.
அவர்கள் விக்கிரகங்களுக்கு நறுமணப்
பொருட்களை எரித்தார்கள்.
3 ஆனால் எப்பிராயீமை கைப்பிடித்து
நடக்கப் பழக்கியது நான். நான் இஸ்ரவேலர்
களை என் கைகளில் எடுத்தேன் அவர்
களைக் குணப்படுத்தினேன். ஆனால் அவர்
கள் அதனை அறியாமலிருக்கி றார்கள்.
4 நான் அவர்களைக் கயிறுகளால் வழி
நடத்தினேன். ஆனால் அவை அன்பு
என்னும் கயிறுகள். நான் விடுதலை
அளிக்கும் மனிதனைப் போன்றவன். நான்
கீழே குனிந்து அவர்களுக்கு ஆகாரம்
கொடுத்தேன்.

5 “இஸ்ரவேலர்கள் தேவனிடம் திரும்ப
மறுக்கிறார்கள். எனவே அவர்கள் எகிப்
துக்குச் செல்வார்கள். அசீரியாவின் அரசன்
அவர்கள் அரசனாவான். 6 அவர்களது நகரங்
களின் மேல் வாளானது தொங்கிக்கொண்
டிருக்கும். அது அவர்களது பலமுள்ள
மனிதர்களைக் கொல்லும். அது அவர்களது
தலைவர்களை அழிக்கும்.
7 “எனது ஜனங்கள் நான் திரும்பிவரு
வதை எதிர்பார்க்கின்றார்கள். அவர்கள்
மேல் நோக்கி தேவனை அழைப்பார்கள்.
ஆனால் தேவன் அவாகளுக்கு உதவமாட்
டார்.”

### கர்த்தர் இஸ்ரவேலை அழிக்க விரும்பவில்லை

8 “எப்பிராயீமே, நான் உன்னைக் கைவிட
விரும்பவில்லை. இஸ்ரவேலே நான் உன்
னைப் பாதுகாக்க விரும்புகிறேன். நான்
உன்னை அத்மாவைப்* போலாக்க விரும்ப
வில்லை. நான் உன்னை செபோயீமைப்*
போலாக்க விரும்பவில்லை. நான் என்
மனதை மாற்றிக் கொண்டிருக்கிறேன். உனக்
கான எனது அன்பு பலமானது.
9 நான் எனது பயங்கரமான கோபம்
வெல்லுமாறு விடமாட்டேன். நான் மீண்
டும் எப்பிராயீமை அழிக்கமாட்டேன். நான்
தேவன், மனிதனல்ல. நானே பரிசுத்தமான
வர். நான் உன்னோடு இருக்கிறேன. நான்
எனது கோபத்தைக் காட்டமாட்டேன்.
10 நான் சிங்கத்தைப் போன்று கெர்ச்சிப்பேன்.
நான் கெர்ச்சிப்பேன். அப்போது எனது
பிள்ளைகள் என்னைப் பின்தொடர்ந்து வரு
வார்கள். எனது பிள்ளைகள் மேற்கிலிருந்து
பயத்தால் நடுங்கிக்கொண்டே வருவார்கள்.

---

**அத்மா** இந்நகரம் தேவனால் அழிக்கப்பட்டது.

**செம்பாயீம்** இந்நகரம் தேவனால் அழிக்கப்பட்டது.

[11]அவர்கள்எகிப்திலிருந்து பறவைகளைப்
போன்று நடுங்கிக்கொண்டே வருவார்கள்.
அவர்கள் அசீரியாவிலிருந்து புறாக்களைப்
போன்று நடுங்கிக்கொண்டே வருவார்கள்.
அவர்களை அவர்களுடைய தாய் நாட்டிற்கு
எடுத்துச் செல்வேன்.” கர்த்தர் அதனைச்
சொன்னார்.
[12]எப்பிராயீம் அந்நிய தெய்வங்களால்
என்னைச் சூழ்ந்தான். இஸ்ரவேல் ஜனங்கள்
எனக்கு எதிராகத் திரும்பினார்கள். அவர்
கள் அழிக்கப்பட்டார்கள். ஆனால் யூதா
இன்னும் தேவனோடு நடந்துக்கொண்டிருக்கி
றான். யூதா பரிசுத்தமானவர்களோடு உண்
மையாய் இருக்கிறான்.”

## கர்த்தர் இஸ்ரவேலுக்கு எதிராக இருக்கிறார்

12 எப்பிராயீம் தனது காலத்தை வீணாக்
கிக்கொண்டிருக்கிறான். இஸ்ரவேல்
நாள் முழுவதும் “காற்றைத் துரத்திக்கொண்
டிருக்கிறான்.” ஜனங்கள் மேலும் மேலும்
பொய்களைச் சொல்கிறார்கள். அவர்கள்
மேலும் மேலும் களவு செய்கிறார்கள்.
அவர்கள் அசீரியாவோடு ஒப்பந்தங்களைச்
செய்துகொண்டார்கள். அவர்கள் தங்கள்
ஒலிவ எண்ணையை எகிப்துக்கு எடுத்துச்
சென்றுக்கொண்டிருக்கிறார்கள்.
[2]கர்த்தர் கூறுகிறார்: “என்னிடம் இஸ்ரவே
லுக்கு எதிராக ஒரு வாக்குவாதம் உண்டு.
யாக்கோபு தான் செய்த செயலுக்காகத்
தண்டிக்கப்படவேண்டும். அவன் செய்த
தீயவற்றுக்காக அவன் தண்டிக்கப்பட
வேண்டும். [3]யாக்கோபு இன்னும் தன் தாயின்
வயிற்றில் இருக்கும்போதே தன் சகோதர
னோடு தந்திரம் செய்யத் தொடங்கினான்.
யாக்கோபு ஒரு பலமான இளைஞனாக
இருந்தான். அந்தக் காலத்தில் அவன் தேவ
னோடு போராடினான். [4]யாக்கோபு தேவ
னுடைய தூதனோடு போராடி வென்றான்.
அவன் உதவி கேட்டுக் கதறினான். அது
பெத்தேலில் நடந்தது. அந்த இடத்தில்
அவன் நம்மோடு பேசினான். [5]ஆம்,
யேகோவா படைகளின் தேவன். அவரது
பெயர் யேகோவா (கர்த்தர்). [6]எனவே,
உனது தேவனிடம் திரும்பி வா. அவருக்கு
விசுவாசமாக இரு. நல்லவற்றைச் செய்!
நீ எப்பொழுதும் உன் தேவனிடம் நம்பிக்
கையாய் இரு!
[7]“யாக்கோபு ஓர் உண்மையான வியா
பாரி. அவன் தன் நண்பனைக்கூட
ஏமாற்றுகிறான். அவனது தராசும் கள்ளத்
தராசு. [8]எப்பிராயீம் சொன்னான் ‘நான்
செல்வந்தன்! நான் உண்மையான செல்
வத்தைக் கண்டுபிடித்துள்ளேன்! எனது
குற்றங்களை யாரும் கண்டுகொள்ள முடி
யாது. யாரும் எனது பாவங்களைத்
தெரிந்துகொள்ளமாட்டான்.
[9]“ஆனால் நீ எகிப்து தேசத்திலிருந்த
நாள் முதல், நான் உன் தேவனாகிய
கர்த்தராயிருந்திருக்கிறேன். நான் உன்னைப்
பண்டிகை நாட்களைப் போன்று (ஆசரிப்புக்
கூடார நாட்களைப் போல்) கூடாரங்களில்
தங்கச்செய்வேன். [10]நான் தீர்க்கதரிசிகளோடு
பேசினேன். நான் அவர்களுக்குப் பல
தரிசனங்களைக் கொடுத்தேன். எனது பாடங்
களை உனக்குக் கற்பிக்கப் பல வழிகளைத்
தீர்க்கதரிசிகளுக்குக் கொடுத்தேன். [11]ஆனால்
கீலேயாத் ஜனங்கள் பாவம் செய்தார்கள்.
அந்த இடத்தில் ஏராளமான பயங்கர விக்கி
ரகங்கள் இருக்கின்றன. ஜனங்கள் கில்காலில்
காளைகளுக்குப் பலிகளைக் கொடுக்கிறார்
கள். அந்த ஜனங்களுக்கு ஏராளமான பலி
பீடங்கள் இருக்கின்றன. வயல் வரப்புகளில்
உள்ள கல் குவியல்களைப் போன்று வரிசை
வரிசையாகப் பலிபீடங்கள் இருக்கின்றன.
[12]“யாக்கோபு ஆராம் நாட்டுக்கு ஓடிப்
போனான். அந்த இடத்தில் இஸ்ரவேல்
ஒரு மனைவிக்காக வேலை செய்தான்.
இன்னொரு மனைவிக்காக அவன் ஆடு
மேய்த்தான். [13]ஆனால் கர்த்தர் தீர்க்கதரிசியை
உபயோகித்து இஸ்ரவேலை எகிப்திலிருந்து
வெளியே கொண்டுவந்தார். கர்த்தர் ஒரு
தீர்க்கதரிசியைப்பயன்படுத்தி இஸ்ரவேலைப்
பத்திரமாகப் பாதுகாத்தார். [14]ஆனால் எப்பி
ராயீம் கர்த்தருடைய மிகுந்த கோபத்துக்குக்
காரணமாக இருந்தான். எப்பிராயீம் பலரைக்
கொன்றான். எனவே அவன் தன் குற்றங்
களுக்காகத் தண்டிக்கப்படுவான். அவனது
ஆண்டவர் (கர்த்தர்) அவன் அவமானம்
அடையும்படிச் செய்வார்.”

## இஸ்ரவேல் தன்னைத்தானே அழித்திருக்கிறான்

13 “எப்பிராயீம் இஸ்ரவேலில் தன்னைத்
தானே முக்கியமானவனாகச் செய்துக்
கொண்டான். எப்பிராயீம் பேசினான். ஜனங்
கள் பயந்து நடுங்கினார்கள். ஆனால்
எப்பிராயீம் பாவம் செய்தான். பாகாலை
தொழத்தொடங்கினான். [2]இப்பொழுது இஸ்ர
வேலர்கள் மேலும் மேலும் பாவம் செய்கி
றார்கள். அவர்கள் தாங்களாகவே விக்கிர
கங்களைச் செய்துக்கொள்கிறார்கள். வேலை
க்காரர்கள் வெள்ளியால் அந்த அழகான
சிலைகளைச் செய்கிறார்கள். பிறகு அவர்
கள் தம் சிலைகளோடு அடிக்கடி பேசுகி
றார்கள். அவர்கள் அந்தச் சிலைகளுக்குப்
பலி கொடுக்கிறார்கள். அவர்கள் அந்தத்
தங்கக் கன்றுகுட்டிச் சிலைகளை முத்தமிடு
கிறார்கள். [3]அதனால்தான் அந்த ஜனங்கள்
விரைவில் மறைந்து விடுகிறார்கள். அவர்
கள் காலையில் காணும் மூடுபனியைப்
போன்றும், விரைவில் மறையும் பனியைப்
போன்றும் மறைவார்கள். இஸ்ரவேலர்
காற்று வீசும்போது களத்திலிருந்து பறக்கிற

பதரைப் போன்றும், ஒரு புகைக் கூண்டி
லிருந்து எழும்பி மறைந்துபோகும்
புகையைப் போன்றும் இருப்பார்கள்.
4"நீங்கள் எகிப்து தேசத்திலிருந்த நாள்
முதலாக நான் உன் தேவனாகிய கர்த்தராக
இருக்கிறேன். நீங்கள் என்னைத் தவிர
வேறு தெய்வங்களை அறியவில்லை. நானே
உங்களை இரட்சித்தவர். 5நான் உங்களை
வனாந்தரத்திலேயே அறிவேன். நான்
உங்களை வறண்ட நிலத்திலும் அறிவேன்.
6நான் இஸ்ரவேலர்களுக்கு உணவு கொடுத்
தேன். அவர்கள் அந்த உணவை
உண்டார்கள். அவர்கள் தம் வயிறு
நிறைந்து திருப்தி அடைந்தார்கள். அவர்கள்
வீண் பெருமை அடைந்தார்கள். அவர்கள்
என்னை மறந்தார்கள்!
7"அதனால்தான் நான் அவர்களுக்கு ஒரு
சிங்கத்தைப் போலிருப்பேன். நான் சாலை
யில் காத்திருக்கிற சிறுத்தையைப் போன்று
இருப்பேன். 8நான் தன் குட்டிகளை இழந்த
கரடியைப் போன்று அவர்களைத் தாக்கு
வேன். நான் அவர்களின் நெஞ்சைப் பிளப்
பேன். நான் ஒரு சிங்கம் அல்லது வேறொரு
காட்டுமிருகம் தன் வேட்டையின்
உணவைக் கிழித்துத் தின்பது போல்
இருப்பேன்."

### தேவ கோபத்திலிருந்து இஸ்ரவேலை எவராலும் காப்பாற்ற முடியாது

9"இஸ்ரவேலே, நான் உனக்கு உதவி
னேன். ஆனால் நீ எனக்கு எதிராகத்
திரும்பினாய். எனவே, இப்போது நான்
உன்னை அழிப்பேன். 10உங்களது அரசன்
எங்கே? அவன் உங்களது நகரங்கள் எதிலும்
உங்களைக் காப்பாற்றமுடியாது. உங்களது
நீதிபதிகள் எங்கே? நீ அவர்களுக்காக,
"ஒரு அரசனையும் தலைவர்களையும்
தாரும்" என்று கேட்டாய். 11நான் என்
கோபத்திலே உங்களுக்கு 'ஒரு ராஜாவைக்
கொடுத்தேன்.' மிகவும் கோபமடைந்தபோது
அவனை எடுத்துக்கொண்டேன்.
12"எப்பிராயீம் தனது குற்றங்களை
மறைக்க முயன்றான். அவன் தனது
பாவங்கள் இரகசியமானவை என்று எண்
ணினான். ஆனால் அவன் அவற்றுக்காகத்
தண்டிக்கப் படுவான்.
13அவனது தண்டனை ஒரு பெண் பிரசவ
காலத்தில் உணரும் வலியைப் போன்றது.
அவன் அறிவுள்ள மகனாக இருக்கமாட்
டான். அவனது பிறப்புக்கான காலம்
வரும். அவன் பிழைக்கமாட்டான்.
14"நான் அவர்களைக் கல்லறையிலிருந்து
காப்பாற்றுவேன். நான் அவர்களை மரணத்
திலிருந்து காப்பாற்றுவேன். மரணமே,
உனது நோய்கள் எங்கே? கல்லறையே,
உனது வல்லமை எங்கே? நான் பழிவாங்கப்
பார்க்கவில்லை.

15இஸ்ரவேல் தனது சகோதரர்களுக்கிடை
யில் வளர்கிறான். ஆனால் வல்லமைமிக்க
கிழக்குக்காற்று வரும். கர்த்தருடைய காற்று
வனாந்தரத்திலிருந்து வீசும். பிறகு இஸ்ர
வேலின் கிணறுகள் வறண்டுபோகும். அதன்
நீரூற்றுகள் வற்றிப்போகும். இஸ்ரவேலின்
விலைமதிப்புள்ள எல்லாவற்றையும் காற்று
அடித்துக்கொண்டு போகும்.

16சமாரியா தண்டிக்கப்பட வேண்டும்.
ஏனென்றால், அவள் தன் தேவனுக்கு
எதிராகத் திரும்பினாள். இஸ்ரவேலர்கள்
வாள்களால் கொல்லப்படுவார்கள். அவர்
களது பிள்ளைகள் துண்டுகளாகக் கிழிக்கப்
படுவார்கள்" அவர்களது கர்ப்பமுற்ற பெண்
கள் கீறி கிழிக்கப்படுவார்கள்."

### கர்த்தரிடம் திரும்பு

14 இஸ்ரவேலே, நீ விழுந்தாய், தேவ
னுக்கு எதிராகப் பாவம் செய்தாய்.
எனவே உனது தேவனாகிய கர்த்தரிடம்
திரும்பி வா. 2நீ சொல்லப் போவதைப்பற்றி
நினைத்துப் பார். கர்த்தரிடம் திரும்பி
வா. அவரிடம், "எங்கள் பாவங்களை
எடுத்துவிடும். நாங்கள் செய்யும் நன்மை
களை ஏற்றுக்கொள்ளும். நாங்கள் எங்கள்
உதடுகளிலிருந்து துதிகளை செலுத்துகி
றோம்.
3அசீரியா எங்களைக் காப்பாற்றாது.
நாங்கள் போர்க் குதிரைகளில் சவாரி
செய்யமாட்டோம். நாங்கள் மீண்டும் ஒரு
போதும் 'எங்கள் தேவன்' என்று எங்கள்
கைகளால் செய்யப்பட்டப் பொருட்களைக்
கூறமாட்டோம். ஏனென்றால் நீர் ஒருவர்
தான் அனாதைகள் மீது இரக்கங்காட்டுகி
றவர்."

### கர்த்தர் இஸ்ரவேலை மன்னிப்பார்

4கர்த்தர் கூறுகிறார்: "என்னைவிட்டு
அவர்கள் விலகியதை நான் மன்னிப்பேன்.
நான் அவர்களைத் தடையின்றி நேசிப்பேன்.
ஏனெனில் அவர்களுடன் கோபங்கொண்
டதை நிறுத்திவிட்டேன்.
5நான் இஸ்ரவேலுக்குப் பனியைப் போலி
ருப்பேன். இஸ்ரவேல் லீலிப் புஷ்பத்தைப்
போன்று மலருவான். அவன் லீபனோனின்
கேதுரு மரங்களைப்போன்று வளருவான்.
6அவனது கிளைகள் வளரும். அவன்
அழகான ஒலிவ மரத்தைப் போன்றிருப்பான்.
அவன் லீபனோனின் கேதுரு மரங்களிலி
ருந்து வரும் இனிய மணத்தைப் போன்று
இருப்பான்.
7இஸ்ரவேல் ஜனங்கள் மீண்டும் எனது
பாதுகாப்பின் கீழ் வாழ்வார்கள். அவர்கள்
தானியத்தைப் போன்று வளருவார்கள்.
அவர்கள் திராட்சைக்கொடியைப் போன்று

*மலருவார்கள். அவர்கள் லீபனோனின்*
*திராட்சைரசம் போல் இருப்பார்கள்.”*

**கர்த்தர் விக்கிரகங்களைப் பற்றி இஸ்ரவேலை எச்சரிக்கிறார்**

8 *“எப்பிராயீமே, நான் (கர்த்தர்) இனி*
*விக்கிரகங்களோடு எந்தத் தொடர்பும் கொள்*
*ளமாட்டேன். நான் ஒருவனே உங்களது*
*ஜெபங்களுக்கு பதில் அளிக்கிறவர். நான்*
*ஒருவனே உன்னைக் கவனித்து வருபவர்.*
*நான் எப்பொழுதும் பசுமையாக இருக்கும்*
*தேவதாரு மரத்தைப் போன்றவர். உன்*
*கனி என்னிடமிருந்து வருகிறது.”*

**இறுதி அறிவுரை**

9 *அறிவுள்ள ஒருவன் இவற்றைப் புரிந்து*
*கொள்கிறான். விழிப்புள்ள ஒருவன் இவற்*
*றைக் கற்றுக்கொள்ள வேண்டும். கர்த்த*
*ருடைய வழிகள் சரியாக இருக்கின்றன.*
*அவற்றில் நல்லவர்கள் நடப்பார்கள். பாவி*
*களோ அவற்றில் இடறிவிழுந்து மரிப்*
*பார்கள்.*

# யோவேல்

### வெட்டுக்கிளிகள் விளைச்சலை அழிக்கும்

1 பெத்துவேலின் மகனாகிய யோவேல்
கர்த்தரிடமிருந்து இந்த செய்தியைப் பெற்
றான்.
2 தலைவர்களே, இந்தச் செய்தியைக்
கேளுங்கள். இந்த நாட்டில் வாழ்கின்ற
ஜனங்களே, நான் சொல்வதைக் கேளுங்கள்.
உங்கள் வாழ்நாளில் இதற்கு முன்பு இது
போல் நடந்திருக்கிறதா? இல்லை. உங்கள்
தந்தைகளின் வாழ்நாளில் இதுபோல் நடந்தி
ருக்கிறதா? இல்லை.
3 நீங்கள் உங்கள் பிள்ளைகளிடம் இவ
ற்றைக் கூறுங்கள். உங்கள் பிள்ளைகள்
அவர்களின் பிள்ளைகளிடம் சொல்லட்டும்.
உங்கள் பேரக்குழந்தைகள் அதற்கு அடுத்தத்
தலைமுறையிடம் சொல்வார்கள்.
4 பச்சைப்புழு விட்டதை வெட்டுக்கிளி
தின்றது. வெட்டுக்கிளி விட்டதைப் பச்சைக்
கிளி தின்றது. பச்சைக்கிளி விட்டதை,
முசுக்கட்டைப் பூச்சி தின்றது.

### வெட்டுக்கிளிகளின் வருகை

5 குடியர்களே, விழித்து எழுந்து அழுங்கள்.
திராட்சைரசத்தைக் குடிக்கும் ஜனங்களே
அழுங்கள். ஏனென்றால் உங்கள் இனிமை
யான திராட்சைரசம் முடிந்தது, நீங்கள்
இன்னொரு முறை அந்தத் திராட்சைரசத்தின்
சுவையைப் பெறமாட்டீர்கள்.
6 எனது தேசத்திற்கு எதிராகப் போரிட
ஒரு பெரிய வல்லமை வாய்ந்த நாடு வந்
தது. அதன் வீரர்கள் எண்ணமுடியாத
அளவிற்கு அநேகராக இருந்தார்கள், அவர்க
ளது ஆயுதங்கள் சிங்கத்தின் பற்களைப்
போன்று கூர்மையுள்ளதாகவும், சிங்கத்தின்
தாடையைப்போன்று வல்லமையுள்ளதாக
வும் இருந்தது.
7 அது என் திராட்சைச் செடியை அழித்
தது. அதன் நல்ல கொடிகள் வாடி அழிந்தது.
அது என் அத்தி மரத்தை அழித்தது. பட்
டைகளை உரித்து எறிந்து விட்டது.

### ஜனங்களின் அழுகை

8 மணமுடிப்பதற்குத் தயாராக இருந்த இளம்
பெண் மரித்துப்போன தன் மணவாளனுக்
காக அழுவது போன்று அழுங்கள்.
9 ஆசாரியர்களே, கர்த்தருடைய பணியா
ளர்களே, அழுங்கள்: ஏனென்றால், கர்த்த
ருடைய ஆலயத்தில் இனிமேல் தானியக்
காணிக்கையும், பானங்களின்காணிக்கையும்
இருக்கப்போவதில்லை.
10 வயல்வெளிகள் பாழாயின. பூமி கூட
அழுது கொண்டிருக்கிறது. ஏனென்றால்
தானியம் அழிக்கப்பட்டிருக்கிறது. புதிய
திராட்சைரசம் வறண்டிருக்கிறது. ஒலிவ
எண்ணெய் போய்விட்டது.
11 உழவர்களே, துக்கமாயிருங்கள். திராட்
சை விவசாயிகளே சத்தமாக அழுங்கள்.
கோதுமைக்காகவும் பார்லிக்காகவும்* அழுங்
கள். ஏனென்றால் வயல்வெளியில் அறு
வடை இல்லாமல் போனது.
12 திராட்சைக்கொடிகள் காய்ந்துவிட்டன.
அத்திமரம் அழிந்துகொண்டிருக்கிறது. மாது
ளை, பேரீச்சை, கிச்சிலி மற்றும் அனைத்து
மரங்களும் வாடிவிட்டன. ஜனங்களின் மகிழ்
ச்சி மரித்துப்போயிற்று.
13 ஆசாரியர்களே, உங்களது துக்கத்திற்
குரிய ஆடையை அணிந்துகொண்டு உரக்க
அழுங்கள். பலிபீடத்தின் பணியாளர்களே,
உரக்க அழுங்கள். எனது தேவனுடைய
பணியாளர்களே, நீங்கள் துக்கத்தின் ஆடை
களோடு தூங்குவீர்கள். ஏனென்றால் தேவனு
டைய ஆலயத்தில் இனிமேல் தானியக்
காணிக்கையும் பானங்களின் காணிக்கையும்
இருப்பதில்லை.

### வெட்டுக்கிளிகளின் பேரழிவு

14 உபவாசமிருக்க வேண்டிய சிறப்பு நேரம்
இருக்குமென்று ஜனங்களுக்கு அறிவியுங்கள்.
ஒரு சிறப்புக் கூட்டத்திற்கு ஜனங்களைக்
கூட்டுங்கள். தலைவர்களைக் கூப்பிடுங்கள்.
நாட்டில் வாழ்கிற எல்லா ஜனங்களையும்
சேர்த்துக் கூப்பிடுங்கள். அவர்கள் அனைவ
ரையும் உங்கள் தேவனாகிய கர்த்தருடைய
ஆலயத்திற்கு வரவழைத்து கர்த்தரிடம்
ஜெபம் செய்யுங்கள்.
15 துக்கமாயிருங்கள். ஏனென்றால் கர்த்த
ருடைய சிறப்புக்குரிய நாள் அருகில்
இருக்கிறது. அப்போது, தண்டனையானது
சர்வ வல்லமையுள்ள தேவனிடமிருந்து ஒரு
சங்காரம் போன்று வரும். 16 நமது உணவு
போய்விட்டது. நமது தேவனுடைய ஆலயத்
திலிருந்து மகிழ்ச்சியும் சந்தோஷமும் போய்
விட்டன. 17 நாங்கள் விதைகளை விதைத்

---

**பார்லி** ஒருவகை தானியம்.

தோம். ஆனால் விதைகள் மண்ணில்
காய்ந்து மரித்துக் கிடக்கின்றன. நமது
செடிகள் எல்லாம் காய்ந்து மரித்துப்
போயின. நமது களஞ்சியங்கள் வெறுமையா
கவும் விழுந்தும் கிடக்கின்றன.
18 மிருகங்கள் பசியோடு தவிக்கின்றன.
மாட்டுமந்தைகள், அலைந்து திரிந்து கலங்கு
கின்றன. அவற்றுக்கு மேய்வதற்கு புல்
இல்லை. ஆட்டு மந்தைகளும் மரித்துக்கொண்
டிருக்கின்றன.* 19 கர்த்தாவே நான் உம்மை
உதவிக்காக அழைக்கின்றேன். நெருப்பானது
நமது பசுமையான வயல்களை வனாந்
தரமாக்கிவிட்டது. வயல்வெளிகளில் உள்ள
மரங்களை எல்லாம் நெருப்புச் ஜூவாலைகள்
எரித்துவிட்டன. 20 காட்டுமிருகங்கள் கூட
உமது உதவியை நாடுகின்றன. ஓடைகள்
வற்றிவிட்டன. அங்கு தண்ணீரில்லை.
நெருப்பானது நமது பச்சை வயல்வெளி
களை வனாந்தரமாக்கிவிட்டது.

### வந்துகொண்டிருக்கும் கர்த்தருடைய நாள்

2 சீயோனில் எக்காளம் ஊதுங்கள். என்
பரிசுத்தமான மலையின் மேல் எச்ச
ரிக்கை சத்தமிடுங்கள். இந்நாட்டில் வாழ்கிற
எல்லா ஜனங்களும் பயத்தால் நடுங்கட்டும்.
கர்த்தருடைய சிறப்பான நாள் வந்துகொண்
டிருக்கிறது. கர்த்தருடைய சிறப்பு நாள்
அருகில் உள்ளது.
2 அது இருண்ட அந்தகாரமான நாளாக
இருக்கும். அது இருளும் மந்தாரமுமான
நாளாக இருக்கும். சூரிய உதயத்தின் போது
நீங்கள் மலை முழுவதும் படை பரவியி
ருப்பதைப் பார்ப்பீர்கள். அப்படை சிறந்த
தாகவும் வல்லமையுடையதாகவும் இருக்கும்.
இதற்கு முன்னால் எதுவும் இதுபோல்
இருந்ததில்லை. இதற்கு பிறகு எதுவும்
இதுபோல் இருப்பதில்லை.
3 படையானது எரியும் நெருப்பைப்
போன்று நாட்டை அழிக்கும். அவைகளின்
முன்னால் அந்நாடு ஏதேன் தோட்டம்
போன்றிருக்கும். அதற்குப்பிறகு நாடானது
வெற்று வனாந்தரம் போன்றிருக்கும். அவை
களிடமிருந்து எதுவும் தப்பமுடியாது.
4 வெட்டுக்கிளிகள் குதிரைகளைப் போன்
று தோன்றும். அவை போர்க் குதிரைக
ளைப் போன்று ஓடும்.
5 அவைகளுக்குச் செவிகொடுங்கள்: இது
மலைகளின் மேல்வரும் இரதங்களின் ஒலி
போல் உள்ளது. இது பதரை* எரிக்கும்
நெருப்பின் ஒலிபோல் உள்ளது. அவர்கள்
வல்லமை வாய்ந்த ஜனங்கள். அவர்கள்
போருக்குத் தயாராக இருக்கிறார்கள்.
6 இந்தப் படைக்கு முன்னால் ஜனங்கள்
அச்சத்தால் நடுங்குகிறார்கள். அவர்களின்
முகங்கள் அச்சத்தால் வெளுத்தன.
7 வீரர்கள் விரைவாக ஓடுகிறார்கள். வீரர்
கள் சுவர்களில் ஏறுகிறார்கள். ஒவ்வொரு
வீரனும் நேராகச் செல்கிறான். அவர்கள்
தம் பாதையில் இருந்து விலகமாட்டார்கள்.
8 அவர்கள் ஒருவரை ஒருவர் விழச்செய்ய
மாட்டார்கள். ஒவ்வொரு வீரனும் தன்
சொந்தப் பாதையில் நடக்கிறான். வீரர்களில்
ஒருவன் மோதிக் கீழே விழுந்தாலும் மற்றவர்
கள் தொடர்ந்து நடந்துகொண்டிருப்பார்கள்.
9 அவர்கள் நகரத்திற்கு ஓடுகிறார்கள். அவர்
கள் விரைவாகச் சுவர்மேல் ஏறுகிறார்கள்.
அவர்கள் வீடுகளுக்குள் ஏறுகிறார்கள்.
அவர்கள் ஜன்னல் வழியாகத் திருடர்களைப்
போல் ஏறுகின்றனர்.
10 அவர்களுக்கு முன்பு, பூமியும் வானமும்
நடுங்குகிறது. சூரியனும் சந்திரனும் இருளாகி
விடுகின்றன. நட்சத்திரங்கள் ஒளிவீசுவதை
நிறுத்துகின்றன.
11 கர்த்தர் தனது படையை உரக்க அழைக்
கிறார். அவரது பாளையம் மிகப்பெரியது.
அப்படை அவரது கட்டளைக்கு அடிபணிகி
றது. அப்படை மிகவும் வல்லமையுடையது.
கர்த்தருடைய சிறப்புநாள் உயர்வானதாகவும்
பயங்கரமானதாகவும் உள்ளது. ஒருவரும்
இதை நிறுத்த முடியாது.

### கர்த்தர் ஜனங்களிடம் மாறும்படிக் கூறுகிறார்

12 இது கர்த்தருடைய செய்தி: “உங்கள்
முழுமனதோடு இப்பொழுது என்னிடம்
திரும்பி வாருங்கள். நீங்கள் தீமை செய்தீர்
கள், அழுங்கள், உணவு உண்ணவேண்டாம்.
13 உங்கள் ஆடைகளையல்ல, இதயத்தைக்
கிழியுங்கள்”* உங்கள் தேவனாகிய கர்த்
தரிடம் திரும்பி வாருங்கள். அவர் இரக்கமும்
கருணையும் உள்ளவர். அவர் விரைவாகக்
கோபப்படமாட்டார். அவரிடம் மிகுந்த
அன்பு உண்டு. ஒருவேளை அவர் தனது
மனதை, திட்டமிட்டிருந்த பயங்கரமான
தண்டனையிலிருந்து மாற்றிக்கொள்ளலாம்.
14 யாருக்குத் தெரியும். கர்த்தர் தனது
மனதை மாற்றிக்கொள்ளலாம். ஒருவேளை
அவர் உங்களுக்காக ஆசீர்வாதத்தை விட்டு
வைத்திருக்கலாம். பிறகு நீங்கள் உங்கள்
தேவனாகிய கர்த்தருக்கு தானியக் காணிக்
கைகளும் பானங்களின் காணிக்கைகளும்
தரலாம்.

---

**மரித்துக்கொண்டிருக்கின்றன** எழுத்தின் பிகாரமாக, “தண்டிக்கப்படுகின்றனர்” எனப் பொருள்படும்.

**பதர்** விதையை மூடியுள்ள உமி, இதனை கோதுமை அல்லது பார்லியிலிருந்து நீக்கி விடுவார்கள். விவசாயிகள் விதைகளைப் பாதுகாப்பார்கள். ஆனால் பதரைக் காற்றில் தூற்றிவிடுவார்கள்.

**உங்கள் ஆடைகளையல்ல இதயத்தைக் கிழியுங்கள்** ஜனங்கள் தமது துக்கத்தை வெளிப்படுத்த ஆடைகளைக் கிழித்தனர். இங்கே தேவன் ஜனங்கள் தாம் செய்கிற தீயச் செயல்களுக்கு உண்மையில் துக்கப்படவேண்டும் என விரும்புகிறார்.

### கர்த்தரிடம் ஜெபியுங்கள்

15சீயோனில் எக்காளம் ஊதுங்கள். சிறப்
புக் கூட்டத்திற்குக் கூப்பிடுங்கள். ஒரு உப
வாச காலத்துக்காகக் கூப்பிடுங்கள்.
16ஜனங்களைக் கூட்டிச் சேருங்கள். சிறப்
புக் கூட்டத்திற்குக் கூப்பிடுங்கள். வயதான
வர்களைக் கூட்டிச் சேருங்கள். குழந்தைக
ளையும் கூட்டிச் சேருங்கள். இன்னும் தாயின்
மார்பில் பால்குடிக்கும் சிறுகுழந்தைகளை
யும் சேர்த்துக் கொண்டுவாருங்கள். தங்களது
படுக்கை அறையிலிருந்து புதிதாய்த் திரு
மணமான மணமகனும் மணமகளும்
வரட்டும்.
17மண்டபத்துக்கும்* பலிபீடத்திற்கும்
இடையில் நின்று ஆசாரியர்களும், கர்த்தரு
டைய பணியாளர்களும் அழுது புலம்பட்
டும். அந்த ஜனங்கள் அனைவரும் இவற்
றைச் சொல்லவேண்டும். "கர்த்தாவே, உமது
ஜனங்கள் மீது இரக்கம் காட்டும். உமது
ஜனங்களை அவமானப்பட விடாதிரும். மற்ற
ஜனங்கள் உமது ஜனங்களைக் கேலிச்
செய்யும்படி விடாதிரும். மற்ற நாடுகளின்
ஜனங்கள் 'அவர்களின் தேவன் எங்கே
இருக்கிறார்?' என்று கேட்டுச் சிரிக்கும்படிச்
செய்யாதிரும்."

### கர்த்தர் நாட்டை பழைய நிலைக்குக் கொண்டு வருவார்

18பிறகு கர்த்தர் தனது நாட்டைப்பற்றி
பரவசம் கொண்டார். அவர் ஜனங்களுக்காக
வருத்தப்பட்டார். 19கர்த்தர் தமது ஜனங்களி
டம், "நான் உங்களுக்குத் தானியம், திராட்
சைரசம், எண்ணெய் இவற்றை அனுப்பு
வேன். உங்களுக்கு ஏறாளமாக இருக்கும்.
நான் உங்களை மற்ற நாடுகளுக்கிடையில்
இனிமேல் அவமானம் அடையவிடமாட்
டேன்.
20இல்லை. வடக்கிலுள்ள ஜனங்களை
உங்கள் நாட்டைவிட்டு போகும்படி வற்
புறுத்துவேன். நான் அவர்களை வறண்ட
வெறுமையான நாட்டுக்குப் போகச்செய்
வேன். அவர்களில் சிலர் கீழ்க்கடலுக்குப்
போவார்கள். அவர்களில் சிலர் மேற்கடலுக்
குப் போவார்கள். அந்த ஜனங்கள் இத்த
கைய பயங்கரச் செயல்களைச் செய்தார்கள்.
ஆனால் அவர்கள் மரித்து அழுகிப்போன
வற்றைப் போலாவார்கள். அங்கே பயங்கர
மான துர்வாசனை இருக்கும்!" என்று
சொன்னார்.

### இந்த நாடு மீண்டும் புதிதாக்கப்படும்

21தேசமே, பயப்படாதே, சந்தோஷமாக
இரு. முழுமையாகக் களிகூரு. கர்த்தர் பெரிய
காரியங்களைச் செய்வார்.
22வெளியின் மிருகங்களே, பயப்படவேண்
டாம். வனாந்தரத்தில் மேய்ச்சல்கள் உண்டா
கும். மரங்கள் கனிகளைத்தரும். அத்திமரங்
களும் திராட்சைக்கொடிகளும் மிகுதியான
பழங்களைத்தரும்.
23எனவே மகிழ்ச்சியாய் இருங்கள்,
சீயோன் ஜனங்களே உங்கள் தேவனாகிய
கர்த்தரிடம் சந்தோஷமாய் இருங்கள், அவர்
நல்லவர். அவர் உங்களுக்கு மழையைத்
தருவார். அவர் உங்களுக்கு முன்போலவே
முன்மாரியையும் பின்மாரியையும் அனுப்பு
வார்.
24களங்கள் தானியத்தால் நிரம்பும். குடங்
கள் திராட்சைரசத்தாலும், எண்ணெயாலும்
நிரம்பி வழியும்.
25"கர்த்தராகிய நான் உங்களுக்கு எதிராக
எனது படையை அனுப்பினேன். உங்க
ளுக்குரிய எல்லாவற்றையும் வெட்டுக்கிளிக
ளும், பச்சைக்கிளிகளும் முசுக்கட்டைப்
பூச்சிகளும், பச்சைப் புழுக்களும் தின்றுவிட்
டன. ஆனால் கர்த்தராகிய நான், அத்துன்பக்
காலத்துக்கானவற்றைத் திருப்பிக் கொடுப்
பேன்.
26பிறகு உங்களுக்கு உண்ண ஏராளம்
இருக்கும். நீங்கள் நிறைவு அடைவீர்கள்.
நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருடைய
நாமத்தைப் போற்றுவீர்கள். அவர் உங்களுக்
காக அற்புதமானவற்றைச் செய்திருக்கிறார்.
எனது ஜனங்கள் இனி ஒருபோதும்
வெட்கப்பட்டுப் போவதில்லை.
27நான் இஸ்ரவேலோடு இருப்பதை நீங்கள்
அறிவீர்கள். நானே உங்கள் தேவனாகிய
கர்த்தர் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.
வேறு தேவன் இல்லை. எனது ஜனங்கள்
மீண்டும் அவமானம் அடையமாட்டார்கள்."

### அனைத்து ஜனங்களுக்கும் தேவன் தனது ஆவியை கொடுப்பார்

28"இதற்குப் பிறகு நான் எனது ஆவியை
அனைத்து ஜனங்கள் மேலும் ஊற்றுவேன்.
உங்கள் மகன்களும், மகள்களும் தீர்க்கத
ரிசனம்உரைப்பார்கள். உங்கள் முதியவர்கள்
கனவுகளைக் காண்பார்கள். உங்கள் இளை
ஞர்கள் தரிசனங்களைக் காண்பார்கள்.
29அப்போது, நான் பணியாட்கள் மேலும்
பணிப்பெண்கள் மேலும் என் ஆவியை
ஊற்றுவேன்.
30நான் வானத்திலும் பூமியிலும் இரத்தம்,
நெருப்பு, அடர்ந்த புகைபோன்ற அதிசயங்
களைக் காட்டுவேன்.
31சூரியன் இருட்டாக மாற்றப்படும். சந்தி
ரன் இரத்தமாக மாற்றப்படும். பிறகு கர்த்தரு
டைய பெரிதும் பயங்கரமுமான நாள்வரும்.
32பிறகு, கர்த்தருடைய நாமத்தை கூப்பிடு
கிற எவரும் இரட்சிக்கப்படுவார்கள்.
சீயோன் மலையின் மேலும், எருசலேமிலும்
காப்பாற்றப்பட்ட ஜனங்கள் இருப்பார்கள்.

---

**மண்டபம்** ஆலயத்தின் முன்னர் உள்ள திறந்த வெலி.

இது கர்த்தர் சொன்னது போன்று நிகழும். ஆம். கர்த்தரால் அழைக்கப்பட்ட மீதியிருக்கும் ஜனங்கள் திரும்பி வருவார்கள்.

### யூதாவின் பகைவர்கள் தண்டிக்கப்படுவார்கள்

3 “ஆம் அந்த வேளையில், நான் யூதாவை
யும் எருசலேமையும் சிறையிருப்பிலி
ருந்து மீட்டுவருவேன். 2நான் அனைத்து
நாட்டு ஜனங்களையும் ஒன்று சேர்ப்பேன்.
நான் யோசபாத்தின் பள்ளத்தாக்கிலே*
அனைத்து நாட்டு ஜனங்களையும் அழைத்து
வருவேன் அங்கே நான் அவர்களை
நியாயம் தீர்ப்பேன். அந்நாடுகள் என் இஸ்ர
வேல் ஜனங்களைச் சிதறடித்தன. அவைகள்
அவர்களை வேறு நாடுகளில் வாழும்படி
வற்புறுத்தின. எனவே நான் அந்நாடுகளைத்
தண்டிப்பேன். அந்நாடுகள் எனது நிலத்தை
பிரித்தன. 3அவர்கள் எனது ஜனங்களுக்
காகச் சீட்டுப் போட்டார்கள். அவர்கள் ஆண்
குழந்தைகளை விபச்சாரிகளை வாங்
குவதற்காக விற்றார்கள். அவர்கள் திராட்சை
ரசத்தை வாங்கிக்குடிப்பதற்காகப் பெண்
குழந்தைகளை விற்றார்கள்.
4“தீருவே, சீதோனே, பெலிஸ்தியாவின்
அனைத்து எல்லைகளே, நீங்கள் எனக்கு
முக்கியமானவர்கள் அல்ல. நான் செய்த
ஏதோ சில காரியங்களுக்காக நீங்கள் என்
னைத் தண்டிக்கப் போகிறீர்களா? என்னைத்
தண்டித்துக்கொண்டிருப்பதாக நீங்கள் நினை
க்கலாம். ஆனால், நான் உங்களை விரைவில்
தண்டிப்பேன். 5நீங்கள் எனது பொன்னையும்
வெள்ளியையும் எடுத்துக்கொண்டீர்கள்.
எனது விலையுயர்ந்த பொக்கிஷங்களைக்
கொண்டுபோய் உங்கள் அந்நிய தெய்வங்க
ளின் கோவில்களில் வைத்துக்கொண்டீர்கள்.
6“நீங்கள் யூதா மற்றும் எருசலேம்
ஜனங்களைக் கிரேக்கர்களுக்கு விற்றீர்கள்.
அவ்வாறு நீங்கள் அவர்களை அவர்கள்
நாட்டிலிருந்து வெகுதூரம் கொண்டு செல்ல
முடிந்தது. 7நீங்கள் எனது ஜனங்களை
அத்தொலை தூர நாடுகளுக்கு அனுப்பினீர்
கள். ஆனால் நான் அவர்களை மீண்டும்
கொண்டுவருவேன். நான் உங்களை நீங்கள்
செய்தவற்றுக்காகத் தண்டிப்பேன். 8நான்
உங்களது மகன்களையும், மகள்களையும்
யூத ஜனங்களுக்கு விற்கப்போகிறேன். பிறகு
அவர்கள் உங்களைத் தொலைவிலுள்ள சபே
யரிடத்தில் விற்பர்” என்று கர்த்தர்
சொன்னார்.

### போருக்காக ஆயத்தப்படுதல்

9நாடுகளுக்கு இவற்றை அறிவியுங்கள்.
போருக்குத் தயாராகுங்கள். வலிமையுள்ள
வர்களை எழுப்புங்கள். போர்வீரர்கள் எல்
லாரும் நெருங்கி வரட்டும். அவர்கள் மேலே
வரட்டும்.
10உங்கள் மண்வெட்டிகளை வாள்களாக
அடியுங்கள். உங்கள் அரிவாள்களை ஈட்டி
களாகச் செய்யுங்கள். பலவீனமான மனிதன்
“நான் வலிமையான போர்வீரன்” என்று
சொல்லட்டும்.
11அனைத்து நாட்டினரே, விரையுங்கள்.
அந்த இடத்திற்குச் சேர்ந்து வாருங்கள்.
கர்த்தாவே உமது வலிமையுள்ள வீரர்களைக்
கொண்டுவாரும்.
12நாடுகளே எழும்புங்கள். யோசபாத்தின்
பள்ளத்தாக்குக்கு வாருங்கள். சுற்றியுள்ள
அனைத்து நாடுகளையும் நியாயந்தீர்க்க
நான் அங்கே உட்காருவேன்.
13அரிவாளைக் கொண்டு வாருங்கள்.
ஏனென்றால் அறுவடை தயாராகிவிட்டது.
வாருங்கள், திராட்சைகளை மிதியுங்கள்.
ஏனென்றால் திராட்சை ஆலை நிரம்பியுள்
ளது. தொட்டிகள் நிரம்பி வழிகின்றன.
ஏனென்றால் அவர்களின் தீமை பெரிது.
14நியாயத்தீர்ப்பின் பள்ளத்தாக்கிலே* ஏரா
ளமான ஜனங்கள் இருக்கிறார்கள். கர்த்த
ருடைய சிறப்புக்குரிய நாள் விரைவில்
வரும். இது நியாயத்தீர்ப்பின் பள்ளத்தாக்கில்
நடைபெறும்.
15சூரியனும் சந்திரனும் இருண்டுவிடும்.
நட்சத்திரங்கள் ஒளி வீசாமல் போகும்.
16தேவனாகிய கர்த்தர் சீயோனிலிருந்தும்
எருசலேமிலிருந்தும் சத்தமிடுவார். ஆகாய
மும் பூமியும் நடுங்கும். ஆனால் தேவனாகிய
கர்த்தர் அவரது ஜனங்களுக்குப் பாதுகாப்
பின் இடமாக இருப்பார். அவர் இஸ்ரவேல்
ஜனங்களுக்குப் பாதுகாப்பான இடமாக
இருப்பார்.
17“பின்னர் நீங்கள் நானே உங்கள் தேவ
னாகிய கர்த்தர் என்பதை அறிவீர்கள்.
நான் சீயோனில் வசிக்கிறேன். அது எனது
பரிசுத்தமான மலை. எருசலேம் பரிசுத்த
மாகும். அந்நியர்கள் மீண்டும் அந்நகரத்தை
ஊடுருவிச் செல்லமாட்டார்கள்.”

### யூதாவிற்கு ஒரு புதிய வாழ்க்கை வாக்களிக்கப்பட்டது

18“அந்த நாளில் மலைகள் இனிய திராட்
சைரசத்தைப் பொழியும். குன்றுகளில் பால்
வழிந்து ஓடும். யூதாவின் வெறுமையான
ஆறுகளில் தண்ணீர் நிரம்பி ஓடும். கர்த்தரு
டைய ஆலயத்தில் இருந்து நீரூற்று பெருக்
கெடுக்கும். அது அகாசியா பள்ளத்தாக்குக்கு
தண்ணீரைக் கொடுக்கும்.

**யோசபாத்தின் பள்ளத்தாக்கு** இந்தப் பெயருக்கு “கர்த்தர் தீர்ப்பளித்தார்” என்று அர்த்தம்.

**நியாயத்தீர்ப்பின் பள்ளத்தாக்கு** இது யோசபாத் பள்ளத்தாக்கைப் போன்றதொரு பெயராகும்.

19எகிப்து வெறுமையாகும். ஏதோம்
வெறுமையான பாலைவனமாகும். ஏனென்
றால் அவை யூதா ஜனங்களுக்குக் கொடுமை
செய்தன. அவை அவர்கள் நாட்டில் அப்பா
விகளைக் கொன்றார்கள்.
20ஆனால் யூதாவில் எப்பொழுதும் ஜனங்
கள் வாழ்வார்கள். ஜனங்கள் எருசலேமில்
பல தலைமுறைகளுக்கு வாழ்வார்கள்.
21அந்த ஜனங்கள் எனது ஜனங்களைக்
கொன்றார்கள். எனவே அந்த ஜனங்களை
நான் உண்மையில் தண்டிப்பேன்" தேவ
னாகிய கர்த்தர் சீயோனில் வாழ்வார்.

# ஆமோஸ்

### முன்னுரை

1 இது ஆமோஸின் செய்தி, ஆமோஸ்
தெக்கோவா நகரைச் சேர்ந்த மேய்ப்பர்க
ளில் ஒருவன். ஆமோஸ் இஸ்ரவேலைப்
பற்றி, யூதாவின் அரசனாக உசியா இருந்த
காலத்திலும் இஸ்ரவேலின் அரசனாக யோ
வாசின் மகன் யெரொபெயாமின் காலத்தி
லும் தரிசனங்களைக் கண்டான். இது
பூமி அதிர்ச்சி ஏற்படுவதற்கு இரண்டு ஆண்டு
களுக்கு முன்பு நடந்தது.

### சீரியாவிற்கு எதிரான தண்டனை

2 ஆமோஸ் சொன்னான்: கர்த்தர் சீயோ
னில் ஒரு சிங்கத்தைப் போன்று சத்தமிடு
வார். அவரது உரத்த சப்தம் எருசலேமி
லிருந்து கெர்ச்சிக்கும். மேய்ப்பர்களின் பசு
மையான மேய்ச்சல் இடம் வரண்டு மடியும்.
கர்மேல் மலையும் காய்ந்து போகும்.
3 கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்: "நான்
தமஸ்குவின் ஜனங்களை அவர்கள் செய்த
பல குற்றங்களுக்காக நிச்சயம் தண்டிப்பேன்.
ஏனென்றால் அவர்கள் கீலேயாத் ஜனங்
களை இரும்பு ஆயுதங்களினால் நசுக்கினார்
கள். 4 எனவே நான் ஆசகேலின்* வீட்டில்
நெருப்பைப் பற்றவைப்பேன். அந்த நெருப்பு
பெனாதாதின்* மிகப்பெரிய அரண்மனை
களை அழிக்கும்.
5 "நான் தமஸ்குவின் வாசலில் போடப்
பட்டுள்ள தாழ்ப்பாளை உடைப்பேன். நான்
ஆவேன் பள்ளத்தாக்கின் சிங்காசனத்தில்
உட்கார்ந்திருப்பவனை அழிப்பேன். நான்
பெத்ஏதேனிலிருந்து வல்லமையின் சின்
னத்தை விலக்கிப்போடுவேன். சீரியாவின்
ஜனங்கள் தோற்கடிக்கப்படுவார்கள். ஜனங்
கள் அவர்களைக் கீர் நாட்டுக்குக் கொண்டு
செல்வார்கள்" என்று கர்த்தர் கூறினார்.

### பெலிஸ்தியர்களுக்கான தண்டனை

6 கர்த்தர் இதனைக் கூறுகிறார்: "நான்
நிச்சயமாக காத்சா* ஜனங்களை அவர்களின்
பல குற்றங்களுக்காகத் தண்டிப்பேன். ஏனெ
ன்றால் அவர்கள் நாட்டு ஜனங்களையெல்
லாம் சிறைபிடித்து ஏதோமுக்குக் கைதிக
ளாகக் கொண்டுபோனார்கள். 7 எனவே நான்
காத்சாவின் மதிலுக்குள் நெருப்பை அனுப்பு
வேன். இந்த நெருப்பு காத்சாவின் உயர்ந்த
கோபுரங்களை அழிக்கும். 8 நான் அஸ்தோத்
தின்* சிங்காசனத்தில் இருப்பவனை அழிப்
பேன். நான் அஸ்கலோனின்* செங்கோலைத்
தாங்கியிருப்பவனை அழிப்பேன். நான் எக்
ரோன்* ஜனங்களைத் தண்டிப்பேன். பிறகு
மீதமுள்ள பெலிஸ்தியர்களும் மரிப்பார்கள்."
தேவனாகிய கர்த்தர் கூறினார்.

### பொனிசியாவின் தண்டனை

9 கர்த்தர் இவற்றைச் சொல்கிறார்: "நான்
நிச்சயமாக தீரு* ஜனங்களை அவர்களது
பல குற்றங்களுக்காகத் தண்டிப்பேன். ஏனெ
ன்றால் அவர்கள் ஒரு நாடு முழுவதையும்
சிறைபிடித்து ஏதோமுக்கு அடிமைகளாக
அனுப்பினார்கள். அவர்கள் தம் சகோதரர்
களோடு (இஸ்ரவேல்) செய்த உடன்படிக்
கையை நினைவு கொள்ளவில்லை. 10 என
வே நான் தீருவின் சுவர்களில் நெருப்பைப்
பற்றவைப்பேன். அந்த நெருப்பு தீருவின்
உயர்ந்த கோபுரங்களை அழிக்கும்."

### ஏதோமியர்களுக்கான தண்டனை

11 கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்: "நான்
ஏதோம் ஜனங்களை அவர்களின் பல
குற்றங்களுக்காக நிச்சயம் தண்டிப்பேன்.
ஏனென்றால் ஏதோம் தன் சகோதரன்
இஸ்ரவேலை வாளோடு துரத்தினான்.
ஏதோம் இரக்கம் காட்டவில்லை. ஏதோமின்
கோபம் இடைவிடாமல் தொடர்ந்து காட்டு
மிருகங்களைப்போல இஸ்ரவேலர்களைக்
கிழித்துக் கொண்டிருந்தான். 12 எனவே, நான்
தேமானில் நெருப்பைப் பற்றவைப்பேன்.
அந்நெருப்பு போஸ்றாவின் உயர்ந்த கோபு
ரங்களை எரித்துப் போடும்."

### அம்மோனியர்களுக்கான தண்டனை

13 கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்: "நான்

---

**ஆசகேல்** சிரியாவின் அரசன்.

**பெனாதாத்** ஆசகேலின் மகன்.

**காத்சா** பெலிஸ்தியர்களின் முக்கிய நகரம்.

**அஸ்தோத்** பெலிஸ்தியர்களின் இன்னொரு முக்கிய நகரம்.

**அஸ்கோலோன்** பெலிஸ்தியர்களின் இன்னொரு முக்கிய நகரம்.

**எக்ரோன்** பெலிஸ்தியர்களின் இன்னொரு முக்கிய நகரம்.

**தீரு** பொனிசியாவின் தலைநகரம்.

*நிச்சயமாக அம்மோன் ஜனங்களை அவர்கள்*
*செய்த பல குற்றங்களுக்காகத் தண்டிப்பேன்.*
*ஏனென்றால் அவர்கள் கீலேயாத் நாட்டில்*
*கர்ப்பிணிப் பெண்களைக் கொன்றார்கள்.*
*அம்மோனியர்கள் இதனைச் செய்து தங்கள்*
*நாட்டு எல்லைகளை விரித்தார்கள். 14என*
*வே நான் ரப்பாவின்* மதிலில் நெருப்பைப்*
*பற்றவைப்பேன். அந்நெருப்பு ரப்பாவின்*
*உயர்ந்த கோபுரங்களை எரித்து அழிக்கும்.*
*அவர்களின் நாட்டிற்குள் துன்பமானது சுழல்*
*காற்றைப்போன்று வரும், 15பிறகு அவர்*
*களின் அரசனும் தலைவர்களும் சிறைபி*
*டிக்கப்படுவார்கள். அவர்கள் அனைவரும்*
*ஒன்றாகப் பிடிக்கப்படுவார்கள்." என்று*
*கர்த்தர் கூறினார்.*

### மோவாபின் தண்டனை

2 *கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்:*
*"நான் நிச்சயமாக மோவாப் ஜனங்களை*
*அவர்கள் செய்த பல குற்றங்களுக்காகத்*
*தண்டிப்பேன். ஏனென்றால் மோவாபியர்,*
*ஏதோம் அரசனின் எலும்புகளைச் சுண்*
*ணாம்பில் எரித்தார்கள். 2எனவே நான்*
*மோவாப் நாட்டில் நெருப்பைப் பற்றவைப்*
*பேன். அந்த நெருப்பு கீரியோத்தின்* உயர்ந்த*
*கோபுரங்களை அழிக்கும். அங்கே பயங்கர*
*சத்தமும், எக்காளச் சத்தமும் கேட்க அவர்*
*கள் மரிப்பார்கள். 3எனவே நான் மோவா*
*பின் அரசர்களுக்கு ஒரு முடிவைக் கொண்*
*டுவருவேன். நான் மோவாபின் அனைத்துத்*
*தலைவர்களையும் நான் கொல்வேன்" கர்த்*
*தர் இதனைக் கூறினார்.*

### யூதாவுக்கான தண்டனை

4*கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்: "நான்*
*நிச்சயமாக யூதாவை அவர்களது பல*
*குற்றங்களுக்காகத் தண்டிப்பேன். ஏனென்*
*றால் அவர்கள் கர்த்தருடைய கட்டளைக*
*ளுக்கு அடிபணிய மறுத்தார்கள். அவர்கள்*
*அவரது கட்டளைகளைக் கைக்கொள்ள*
*வில்லை. அவர்கள் முற்பிதாக்கள் பொய்*
*களை நம்பினார்கள், அதே பொய்கள்*
*யூதாவின் ஜனங்கள் தேவனைப் பின்பற்று*
*வதை நிறுத்தக் காரணமாயிருந்தது. 5என*
*வே, நான் யூதாவில் நெருப்பை பற்ற*
*வைப்பேன். அந்த நெருப்பு எருசலேமிலுள்ள*
*உயர்ந்த கோபுரங்களை அழிக்கும்."*

### இஸ்ரவேலுக்கான தண்டனை

6*கர்த்தர் இதனைக் கூறுகிறார்: "நான்*
*நிச்சயமாக இஸ்ரவேலர்களை அவர்களது*
*பல குற்றங்களுக்காகத் தண்டிப்பேன். ஏனெ*
*ன்றால் அவர்கள் கொஞ்சம் வெள்ளிக்காக*
*அப்பாவி ஜனங்களை விற்றார்கள். அவர்கள்*
*ஏழை ஜனங்களை பாதரட்சைகளுக்காக*
*விற்றார்கள். 7அவர்கள் ஏழை ஜனங்களை*
*முகம் குப்புற தரையில் தள்ளி அவர்கள்*
*மேல் நடந்தார்கள். அவர்கள் துன்பப்படுகிற*
*ஜனங்களின் சத்தத்தைக் கேட்பதை நிறுத்தி*
*னர். தந்தைகளும் மகன்களும் ஒரே பெண்*
*ணிடம் பாலினஉறவு கொள்கிறார்கள். அவர்*
*கள் எனது பரிசுத்தமான நாமத்தை பாழாக்கி*
*விட்டார்கள். 8அவர்கள் ஏழைகளிடமிருந்து*
*ஆடைகளை எடுத்து அந்த ஆடைகளின்*
*மேல் உட்கார்ந்து அவர்கள் பலி பீடங்களில்*
*ஆராதிக்கிறார்கள். அவர்கள் ஏழை ஜனங்*
*களுக்குக் கடன் தந்து அவர்கள் ஆடைகளை*
*அடைமானமாக எடுத்தார்கள். அவர்கள்*
*ஜனங்கள் அபராதம் செலுத்தும்படிச் செய்*
*தார்கள். அப்பணத்தில் மது வாங்கி*
*அவர்கள் பொய் தெய்வத்தின் கோயிலில்*
*குடித்து மகிழ்ந்தார்கள். 9"ஆனால்*
*அவர்களுக்கு முன்பாகவே எமோரியர்களை*
*அழித்தது நான். எமோரியர்கள் கேதுருமரங்*
*களைப் போன்று உயரமானவர்கள். அவர்*
*கள் கர்வாலிமரங்களைப் போல் வைர*
*மாயிருதவர்கள். ஆனால் நான் அவர்களது*
*மேலே உள்ள பழங்களையும் கீழேயுள்ள*
*வேர்களையும் அழித்தேன்.*
10*"நானே உங்களை எகிப்து நாட்டின்*
*அடிமைத்தனத்திலிருந்து மீட்டு வந்தேன்.*
*நான் 40 வருடங்கள் உங்களை வனாந்தரத்*
*தில் வழிநடத்தினேன். நீங்கள் எமோரியரின்*
*நாட்டை எடுத்துக்கொள்ள உதவினேன்.*
11*"நான் உங்கள் மகன்களில் சிலரைத் தீர்க்க*
*தரிசிகள் ஆக்கினேன். நான் உங்களது*
*இளைஞர்களில் சிலரை நசரேயர்களாக**
*ஆக்கினேன். இஸ்ரவேல் ஜனங்களே, இது*
*உண்மை" என்று கர்த்தர் சொல்லுகிறார்.*
12*"ஆனால் நீங்கள் நசரேயர்களை மது*
*குடிக்கச் செய்தீர்கள். நீங்கள் தீர்க்கதரிசி*
*களை தீர்க்கதரிசனம் சொல்லவேண்டும்*
*என்று சொன்னீர்கள். 13நீங்கள் எனக்குப்*
*பெரிய பாரத்தைப் போன்றவர்கள். நான்*
*பாரம் ஏற்றப்பட்ட வண்டியைப் போன்று*
*வளைந்திருக்கிறேன். 14என்னிடமிருந்து எவ*
*ரும், வேகமான ஓட்டக்காரன் கூடத் தப்பிக்க*
*முடியாது. பலவான்களுக்குப் போதுமான*
*பலம் இருக்காது. படைவீரர்கள் தம்மைத்*
*தாம் காப்பாற்றிக்கொள்ள முடியாது. 15ஜனங்*
*கள் வில்லோடும் அம்போடும் இருந்தும்*
*உயிர் பிழைப்பதில்லை. வேகமாக ஓடுபவ*
*னும் தப்ப முடியாது. குதிரையில் வருகி*
*றவர்களும் உயிரோடு தப்ப முடியாது.*
*அப்போது மிகத் தைரியமான வீரனும்*
*ஓடிப்போவான். அவர்கள் தம் ஆடைகளை*
*அணிந்துகொள்ளக்கூட நேரம் எடுத்துக்*
*கொள்ள மாட்டார்கள்" என்று கர்த்தர்*
*கூறினார்.*

---

***ரப்பா*** *அம்மோனியர்களின் தலைநகரம்.*

***கீரியோத்*** *மோவாப்பின் நகரம்.*

**நசரேயர்** *தேவனுக்கு சிறப்பான வாக்குறுதி செய்தவன்.*

### இஸ்ரவேலுக்கான எச்சரிக்கை

3 இஸ்ரவேல் ஜனங்களே, இந்தச் செய்தி
யைக் கவனியுங்கள். இஸ்ரவேலே உங்க
ளைப் பற்றி கர்த்தர் இவற்றைச் கூறினார்.
இந்தச் செய்தி நான் எகிப்திலிருந்து அழைத்
துக்கொண்டுவந்த எல்லாக் குடும்பங்களை
யும் (இஸ்ரவேல்) பற்றியது. 2 “பூமியில்
அநேகக் குடும்பங்கள் இருந்தன. ஆனால்
உன்னுடைய ஒரே குடும்பத்தைதான் சிறப்
பான வழியில் அறிந்துகொள்ள நான்
தேர்ந்தெடுத்தேன். நீ எனக்கு எதிராகத்
திரும்பினாய். எனவே, நான் உனது எல்லா
பாவங்களுக்காக உன்னைத் தண்டிப்பேன்.”

### இஸ்ரவேலின் தண்டனைக்கான காரணம்

3 இரண்டு பேர் ஒத்துப்போனாலொழிய
ஒரேவழியில் நடக்க முடியாது. 4 காட்டிலுள்ள
சிங்கம், ஒரு மிருகத்தைப் பிடித்த பிறகுதான்
கெர்ச்சிக்கும். ஒரு இளஞ்சிங்கம் தன்
குகையில் கெர்ச்சிக்கிறது என்றால், அது
ஏதோ ஒன்றைப் பிடித்து விட்டது என்று
அர்த்தம். 5 கண்ணிக்குள்ளே உணவு இல்லா
விட்டால் ஒரு பறவை தரையிலுள்ள
கண்ணிக்குள் பறக்காது. கண்ணி மூடினால்
அது பறவையைப் பிடிக்கும். 6 எக்காளம்
எச்சரிக்கையாக ஊதினால், ஜனங்கள்
நிச்சயம் பயத்தால் நடுங்குவார்கள். நகரத்
திற்கு துன்பம் வந்தால், அதற்கு கர்த்தர்
காரணமாவார். 7 எனது கர்த்தராகிய
ஆண்டவர் சிலவற்றைச் செய்ய முடிவு
செய்வார். ஆனால் அவர் எதையும் செய்யும்
முன்னால் அவர் தனது தீர்க்கதரிசிகளிடம்
சொல்வார். 8 ஒரு சிங்கம் கெர்ச்சித்தால்
ஜனங்கள் பயப்படுவார்கள். கர்த்தர் பேசி
னால் தீர்க்கதரிசிகள் தீர்க்கதரிசனம் சொல்
வார்கள்.
9-10 நீங்கள் அஸ்தோத்தின் கோபுரங்களுக்
கும், எகிப்துக்கும் போய் இச்செய்தியைக்
கூறுங்கள்: “சமாரியாவின் மலைகளுக்கு
வாருங்கள். நீங்கள் அங்கே பெருங்குழப்பத்
தைக் காண்பீர்கள். ஏனென்றால் ஜனங்க
ளுக்குச் சரியாக வாழ்வது எப்படி என்று
தெரியாது. அந்த ஜனங்கள் மற்ற ஜனங்களி
டம் கொடூரமாக இருந்தார்கள். அவர்கள்
மற்றவர்களிடமிருந்து பொருட்களை எடுத்
துத் தங்கள் கோபுரங்களில் ஒளித்து வைத்
தார்கள். அவர்கள் போரில் எடுத்த பொருட்
களால் அவர்களது கருவூலங்கள் நிறைந்தி
ருக்கின்றன.”
11 எனவே கர்த்தர் சொல்கிறார்: “ஒரு
பகைவன் அந்த நாட்டிற்கு வருவான். அந்தப்
பகைவன் உன் பலத்தை எடுத்துப்
போடுவான்” நீ உயர்ந்த கோபுரங்களில்
ஒளித்து வைத்த பொருட்களை அவன்
எடுப்பான்.”
12 கர்த்தர் கூறுகிறார், “ஒரு சிங்கம் ஒரு
ஆட்டுக்குட்டியை தாக்கலாம், மேய்ப்பன்
அந்த ஆட்டைக் காப்பாற்ற முயற்சி செய்ய
லாம். ஆனால் மேய்ப்பன் ஆட்டுக்குட்டியின்
ஒரு பகுதியைத்தான் காப்பாற்றுவான்.
அவன் சிங்கத்தின் வாயிலிருந்து இரண்டு
கால்கள் அல்லது காதின் ஒரு பகுதியை
மட்டும் பிடுங்க முடியும். அவ்வாறே இஸ்ர
வேலின் பெரும்பாலான ஜனங்கள் காப்பாற்
றப்படமாட்டார்கள். சமாரியாவில் வாழ்கிற
ஜனங்கள் படுக்கையின் ஒரு மூலையையோ
அல்லது ஒரு மஞ்சத்தின் மேலிருக்கும்
துணியின் ஒரு துண்டையோ காப்பாற்றிக்
கொள்வார்கள்.”
13 என் ஆண்டவரும், சர்வ வல்லமையுள்ள
தேவனாகிய கர்த்தர் இவற்றைக் கூறுகிறார்:
“யாக்கோபின் குடும்பத்தை (இஸ்ரவேல்)
எச்சரிக்கை செய். 14 இஸ்ரவேல் பாவம்
செய்தது. நான் அவர்களைத் தங்களுடைய
பாவங்களுக்காகத் தண்டிப்பேன். நான்
பெத்தேலில் உள்ள பலிபீடங்களையும் அழிப்
பேன். பலிபீடத்தின் கொம்புகள் வெட்டப்
பட்டு தரையில் கிடக்கும். 15 நான் மழைக்கால
வீட்டைக் கோடைகால வீட்டோடு அழிப்
பேன். தந்தத்தால் ஆன வீடுகள் அழிக்கப்
படும். பல வீடுகள் அழிக்கப்படும்” என்று
கர்த்தர் கூறுகிறார்.

### இன்பத்தை விரும்பும் பெண்கள்

4 சமாரியாவின் மலைகளிலுள்ள பாசா
னின் மாடுகளே என்னைக் கவனியுங்
கள், நீங்கள் ஏழைகளைத் துன்புறுத்து
கிறீர்கள். நீங்கள் அந்த ஏழைகளை நசுக்கு
கிறீர்கள். நீங்கள், “எங்களுக்குக் குடிக்கக்
கொஞ்சம் கொண்டு வாருங்கள்” என்று
உங்கள் கணவர்களிடம் கூறுகிறீர்கள்.
2 கர்த்தராகிய ஆண்டவர் வாக்குறுதி
கொடுத்தார். அத்துன்பங்கள் உங்களுக்கு
வரும் என்று அவர் தமது பரிசுத்தத்தால்
வாக்களித்தார். ஜனங்கள் கொக்கிகளைப்
பயன்படுத்தி உங்களைச் சிறைப்பிடிப்பார்
கள். அவர்கள் மீன் தூண்டிலைப் பயன்
படுத்தி உங்கள் பிள்ளைகளைப் பிடிப்பார்
கள். 3 உங்கள் நகரம் அழிக்கப்படும். பெண்
கள் நகரச்சுவர்களிலுள்ள வெடிப்புகள்
வழியே அவசரமாக வெளியேறி பிணக்
குவியல்களின் மேல் விழுவார்கள். கர்த்தர்
இவற்றை கூறுகிறார்.
4 “பெத்தேலுக்குப் போய் பாவம் செய்
யுங்கள்! கில்காலுக்குப் போய் மேலும்
பாவம் செய்யுங்கள். உங்களது பலிகளை
காலை நேரத்தில் செலுத்துங்கள். மூன்று
நாள் விடுமுறைக்கு உங்கள் விளைச்சலில்
பத்தில் ஒருபாகத்தைக் கொண்டு வாருங்கள்.
5 புளித்த மாவுள்ள நன்றிக் காணிக்கையைக்
கொடுங்கள். ஒவ்வொருவரிடமும் சுயசித்தக்
காணிக்கைகளைப் பற்றிக் கூறுங்கள்.

இஸ்ரவேலே, அவற்றைச் செய்ய நீ விரும்
புகிறாய். எனவே போய் அவற்றைச் செய்."
கர்த்தர் இவற்றைக் கூறினார்.
6 "நான், உங்களை என்னிடம் வரச்செய்ய
வேண்டுமென பலவற்றை முயற்சி செய்
தேன். நான் நீங்கள் உண்ண எந்த உண
வையும் தரவில்லை. உங்கள் நகரங்கள்
எதிலும் உண்ண உணவு கிடைக்கவில்லை.
ஆனால் நீங்கள் என்னிடம் திரும்பி வர
வில்லை" என்று கர்த்தர் கூறினார்.
7 "நான் அறுவடைக்கு மூன்று மாதத்திற்கு
முன்பு மழையையும் நிறுத்தினேன். எனவே
விளைச்சல் விளையவில்லை. பிறகு நான்
ஒரு நகரத்தில் மழைபெய்யும்படிச் செய்தேன்.
ஆனால் அடுத்த நகரில் மழை பெய்ய
வில்லை. நாட்டின் ஒரு பகுதியில் மழை
பெய்தது. ஆனால் நாட்டின் அடுத்தப் பகுதி
யில் வறட்சி ஏற்பட்டது. 8 எனவே இரண்டு
அல்லது மூன்று நகரங்களிலுள்ள ஜனங்கள்
அடுத்த நகருக்கு தண்ணீர் எடுப்பதற்காகச்
சென்றனர். ஆனால் எல்லோருக்கும் அங்கு
தண்ணீர் போதுமானதாக இல்லை.
இருந்தாலும் நீங்கள் உதவிக்காக என்னிடம்
வரவில்லை" என்று கர்த்தர் கூறினார்.

9 "நான் உங்கள் விளைச்சலை வெப்பத்தா
லும் நோயாலும் மரிக்கும்படிச் செய்தேன்.
நான் உங்களது தோட்டங்களையும் திரா
ட்சத் தோட்டங்களையும் அழித்தேன். உங்க
ளது அத்தி மரங்களையும் ஒலிவ மரங்க
ளையும் வெட்டுக்கிளிகள் தின்றன. ஆனா
லும் நீங்கள் உதவிக்காக என்னிடம் வர
வில்லை" என்று கர்த்தர் கூறினார்.
10 "நான் எகிப்திற்குச் செய்ததுபோல உங்க
ளுக்கு எதிராக வியாதிகளை அனுப்பினேன்.
நான் உங்களது இளைஞர்களை வாள்களால்
கொன்றேன். நான் உங்கள் குதிரைகளை
எடுத்துக் கொண்டேன். நான் உங்கள்
பாளயம் பிணங்களால் துர்நாற்றம் வீசும்
படிச் செய்தேன். ஆனாலும் நீங்கள் என்னி
டம் உதவிக்காக வரவில்லை" என்று
கர்த்தர் கூறினார்.
11 "நான் சோதோமையும் கொமோராவை
யும் அழித்ததுபோன்று உங்களை அழித்
தேன். அந்நகரங்கள் முழுவதுமாக அழிந்தன.
நீங்கள் நெருப்பிலிருந்து வெளியே இழுக்கப்
பட்ட எரிந்த குச்சியைப் போன்றவர்கள்.
ஆனாலும் நீங்கள் என்னிடம் உதவிக்காக
வரவில்லை" என்று கர்த்தர் கூறினார்.
12 "எனவே இஸ்ரவேலே, நான் இவற்றை
உனக்குச் செய்வேன். இஸ்ரவேலே, உனது
தேவனை சந்திக்கத் தயாராக இரு. 13 நான்
யார்? நானே மலைகளைப் படைத்தவர். நான்
உங்கள் இருதயங்களையும் உண்டாக்கி
னவர். நான் ஜனங்களுக்கு எவ்வாறு
பேசவேண்டும் என்று கற்றுக்கொடுத்தேன்.
நான் இருளை விடியற்காலையாக மாற்றி
னேன். நான் பூமியின் மேலுள்ள மலைகளின்
மேல் நடக்கிறேன். நான் யார்? எனது
நாமம் சேனைகளின் தேவனாகிய கர்த்தர்."

### இஸ்ரவேலுக்கான சோகப்பாடல்

5 இஸ்ரவேல் ஜனங்களே, இந்தப் பாட
லைக் கேளுங்கள். இந்தச் மரணப் பாடல்
உங்களைப் பற்றியதுதான்.
2 இஸ்ரவேல் கன்னி* விழுந்தாள். அவள்
இனிமேல் எழ மாட்டாள். அவள் தனியாக
விடப்பட்டாள், புழுதியில் கிடக்கிறாள்.
அவளைத் தூக்கி விட எவருமில்லை.
3 எனது கர்த்தராகிய ஆண்டவர் இவற்
றைக் கூறுகிறார்: "1000 ஆட்களோடு நகரை
விட்டுப்போன அதிகாரிகள், 100 ஆட்க
ளோடு திரும்பி வருவார்கள், 100 ஆட்க
ளோடு நகரை விட்டுப்போன அதிகாரிகள்
10 ஆட்களோடு திரும்பி வருவார்கள்.

### கர்த்தர் இஸ்ரவேலரைத் திரும்பிவர உற்சாகப்படுத்துகிறார்

4 கர்த்தர் இதனை இஸ்ரவேல் நாட்டிடம்
கூறுகிறார்: "என்னைத் தேடிவந்து, வாழுங்
கள்.
5 ஆனால் பெத்தேலைப் பார்க்காதீர்கள்.
கில்காலுக்கும் போகாதீர்கள். எல்லையைக்
கடந்து பெயர்செபாவிற்குப் போகாதீர்கள்.
கில்காலிலுள்ள ஜனங்கள் சிறைபிடிக்கப்படு
வார்கள். பெத்தேல் அழிக்கப்படும்.
6 கர்த்தரிடம் போய் வாழுங்கள். நீங்கள்
கர்த்தரிடம் போகாவிட்டால் பிறகு யோசேப்
பின் வீட்டில் நெருப்பு பற்றும். அந்நெருப்பு
யோசேப்பின் வீட்டை அழிக்கும். பெத்தே
லில் அந்நெருப்பை எவராலும் நிறுத்த
முடியாது.
7-9 நீங்கள் உதவிக்காகக் கர்த்தரிடம் போக
வேண்டும். தேவன் நட்சத்திரக் கூட்டங்
களைப் படைத்தார். அவர் இருளைக்
காலை ஒளியாக மாற்றுகிறார். அவர் பகல்
ஒளியை இரவின் இருளாக மாற்றுகிறார்.
அவர் கடலிலுள்ள தண்ணீரை அழைத்து,
அதனை பூமியில் ஊற்றுகிறார். அவரது
நாமம் யேகோவா. அவர் ஒரு பலமான
நகரைப் பாதுகாப்பாக வைத்து இன்னொரு
பலமான நகரை அழியவிடுகிறார்."

### இஸ்ரவேலர்கள் செய்த பாவச் செயல்கள்

நீங்கள் நன்மையை விஷமாக மாற்றுகிறீர்
கள். நீங்கள் நீதியைக் கொல்லுகிறீர்கள்;
கொன்று தரையில் விழவிடுகிறீர்கள்.
10 தீர்க்கதரிசிகளே, பொது இடங்களுக்குச்
சென்று ஜனங்கள் செய்கிற தீமைகளுக்கு
எதிராகப் பேசுங்கள். அத்தீர்க்கதரிசிகள் நன்
மையான எளிய உண்மைகளைப் போதிக்கி
றார்கள். ஜனங்கள் அத்தீர்க்கதரிசிகளை
வெறுக்கிறார்கள்.

---

**இஸ்ரவேல் கன்னி:** சமாரியா நகரம்.

11“நீங்கள் நியாயமற்ற வரிகளை எளிய
ஜனங்களிடம் வசுலிக்கிறீர்கள். நீங்கள் கோ
துமையைச் சுமைச் சுமையாக அவர்களிடமி
ருந்து எடுக்கிறீர்கள். நீங்கள் செதுக்கப்பட்ட
கற்களால் அழகான வீடுகளைக் கட்டுகி
றீர்கள். ஆனால் அவ்வீடுகளில் நீங்கள்
வாழமாட்டீர்கள். நீங்கள் அழகான திராட்
சைத் தோட்டங்களைப் பயிர் செய்கிறீர்கள்.
ஆனால் நீங்கள் அவற்றிலிருந்து மதுவைக்
குடிக்கமாட்டீர்கள்.
12ஏனென்றால் நான் உங்களது அநேகப்
பாவங்களை அறிவேன். நீங்கள் சில தீயச்
செயல்களைச் செய்திருக்கிறீர்கள். நீங்கள்
நேர்மையானவர்களைப் புண்படுத்துகிறீர்கள்.
நீங்கள் தீமை செய்யப் பணம் வாங்குகிறீர்
கள். நீங்கள் ஏழைகளுக்கு வழக்கு மன்றங்க
ளில் நீதி வழங்குவதில்லை.
13அப்போது ஞானமிக்க ஆசிரியர்கள்
அமைதியாக இருப்பார்கள். ஏனென்றால்
இது கெட்ட நேரம்.
14நீங்கள் தேவன் உங்களோடு இருப்ப
தாகச் சொல்கிறீர்கள். எனவே நீங்கள்
தீமையையல்ல, நன்மையைச் செய்யவேண்
டும். அப்போது நீங்கள் வாழ்வீர்கள். சர்வ
வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர்
உண்மையில் உங்களோடு இருப்பார்.
15தீமையை வெறுத்து, நன்மையை விரும்
புங்கள். வழக்கு மன்றங்களுக்கு நியாயத்தைக்
கொண்டு வாருங்கள். பிறகு சர்வ வல்லமை
யுள்ள தேவனாகிய கர்த்தர் யோசேப்பு
குடும்பத்தில் மீதியிருப்பவர்களிடம் இரக்கமா
யிருப்பார்.

### பெருந்துக்க காலம் வந்து கொண்டிருக்கிறது

16என் ஆண்டவராகிய சர்வ வல்லமை
யுள்ள தேவன் கூறுகிறார்: “ஜனங்கள் பொது
இடங்களில் அழுது கொண்டிருப்பார் கள்.
ஜனங்கள் தெருக்களில் அழுதுகொண்டி
ருப்பார்கள். ஜனங்கள் ஒப்பாரிவைப்பவர்
களை வாடகைக்கு அமர்த்துவார்கள்.
17ஜனங்கள் திராட்சைத் தோட்டங்களில்
அழுதுகொண்டிருப்பார்கள். ஏனென்றால்
நான் அவ்வழியே கடந்துபோய் உன்னைத்
தண்டிப்பேன்” என்று கர்த்தர் கூறினார்.
18உங்களில் சிலர் கர்த்தருடைய நியாயத்
தீர்ப்புக்குரிய நாளைப்பார்க்க விரும்புகிறீர்
கள். நீங்கள் அந்நாளை ஏன் பார்க்க
விரும்புகிறீர்கள்? கர்த்தருடைய அந்தச் சிற
ப்பு நாள் ஒளியை அல்ல அந்தகாரத்தையே
கொண்டு வரும்.
19நீங்கள், சிங்கத்திடமிருந்து தப்பி ஓடிவந்த
ஒருவன், கரடியால் தாக்கப்பட்டது போன்று
ஆவீர்கள். நீங்கள், ஒருவன் பாதுகாப்பிற்
காகத் தன் வீட்டிற்குள் நுழைந்து சுவற்றில்
சாய்ந்தபோது, பாம்பால் கடிக்கப்பட்டவ
னைப் போன்று இருப்பீர்கள்.
20கர்த்தருடைய சிறப்பு நாள் ஒளியை
அல்ல அந்தகாரத்தைக் கொண்டு வரும்.
அந்நாள் மகிழ்ச்சியை கொண்டு வராது
ஆனால் துக்கத்தைக் கொண்டு வரும்.
அந்நாள் கொஞ்சமும் ஒளி இல்லாத
அந்தகாரமான நாளாயிருக்கும்.

### இஸ்ரவேலின் தொழுதுகொள்ளுதலை கர்த்தர் ஏற்க மறுக்கிறார்

21“நான் உங்கள் விடுமுறை நாட்களை
வெறுக்கிறேன். நான் அவற்றை ஏற்கமாட்
டேன். நான் உங்கள் ஆன்மீகக் கூட்டங்க
ளால் மகிழவில்லை.
22நீங்கள் தகனபலியையும் தானியக் காணி
க்கையையும் எனக்குக் கொடுத்தாலும் நான்
ஏற்றுக்கொள்ளமாட்டேன். நீங்கள் தரும்
சாமதான பலியில் உள்ள கொழுத்த மிருகங்
களைப் பார்க்கக்கூடமாட்டேன்.
23நீங்கள் இங்கிருந்து உங்கள் இரைச்ச
லான பாடல்களை அகற்றுங்கள். நான்
உங்கள் வீணைகளில் வரும் இசையைக்
கேட்கமாட்டேன்.
24நீங்கள் உங்கள் நாட்டில் நியாயத்தை
ஆற்றைப் போன்று ஓடவிடவேண்டும். நன்
மையானது ஓடையைப் போன்று உங்கள்
நாட்டில் வற்றாமல் ஓடட்டும்.
25இஸ்ரவேலே, நீங்கள் எனக்கு பலிகளை
யும் காணிக்கைகளையும் வனாந்தரத்தில்
40 ஆண்டுகளாகக் கொடுத்தீர்கள்.
26ஆனால் நீங்கள உங்கள் அரசனான
சக்கூத், கைவான் சிலைகளையும் சுமந்தீர்
கள். நீங்களாக நட்சத்திரத்தை உங்கள்
தெய்வமாக்கினீர்கள்.
27எனவே நான் உங்களை தமஸ்குவுக்கு
அப்பால் சிறையாகச் செல்லச் செய்வேன்”
என்று கர்த்தர் சொல்லுகிறார். அவரது
நாமம் சர்வ வல்லமையுள்ள தேவன்.

### இஸ்ரவேலிலிருந்து நல்ல காலங்கள் அகற்றப்படும்

6 சீயோனில் வாழ்க்கையை மிகவும் எளி
தாக எடுத்துக்கொண்டு சமாரியா மலை
யில் மிகவும் பாதுகாப்பு இருப்பதாக எண்
ணும் ஜனங்களே, உங்களுக்கு மிகுந்த
கேடுவரும். நீங்கள் மிக “முக்கியமான”
நாட்டின் முக்கியமான தலைவர்கள். “இஸ்ர
வேல் வீட்டார்” உங்களிடம் ஆலோச
னைக்காக வருகிறார்கள்.
2கல்னேவுக்குப் போய்ப் பாருங்கள். அங்கி
ருந்து ஆமாத்* என்னும் பெருநகருக்குப்
போங்கள் பெலிஸ்தியர்களின்காத் நகருக்குப்
போங்கள். நீங்கள் இந்த இராஜ்யங்களை
விடச் சிறந்தவர்களா? இல்லை. அவர்கள்
நாடுகள் உங்கள் நாட்டைவிட பெரியவை?
3நீங்கள் அந்தத் தண்டனை தரும் நாளை
நோக்கி விரைகிறீர்கள். அந்த வன்முறை

---

**ஆமாத்** சிரியாவின் பலம் பொருந்திய நகரம்.

ஆட்சியை மிகவும் பக்கத்தில் கொண்டு
வருகிறீர்கள்.
4 ஆனால் இப்போது, நீங்கள் எல்லா
வசதிகளையும் அனுபவிக்கிறீர்கள். நீங்கள்
தந்தக் கட்டில்களில் படுக்கிறீர்கள், நீங்கள்
மஞ்சங்களில் நீட்டி நிமிர்ந்து கிடக்கிறீர்கள்.
நீங்கள் மந்தையிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட
இளம் ஆட்டுக் குட்டிகளையும் மாட்டுத்
தொழுவத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டக்
கன்றுக் குட்டிகளையும் உண்கிறீர்கள்.
5 நீங்கள் உங்கள் வீணைகளை மீட்டு
கிறீர்கள். தாவீதைப் போன்று உங்கள்
இசைக் கருவிகளில் பயிற்சி செய்கிறீர்கள்.
6 நீங்கள் அழகான கிண்ணங்களில் மது
குடிக்கிறீர்கள். நீங்கள் சிறந்த மணப் பொருட்
களை பயன்படுத்துகிறீர்கள். யோசேப்பின்
குடும்பம் அழிக்கப்படுவதைக்கண்டு கொஞ்
சமும் கவலைப்படாமல் இருக்கிறீர்கள்."
7 அந்த ஜனங்கள் இப்பொழுது மஞ்சங்க
ளில் வசதியாகப் படுத்திருக்கிறார்கள்.
ஆனால் அவர்களின் நல்ல நேரங்கள் முடி
வடையும். அவர்கள் அந்நிய நாட்டுக்குக்
கைதிகளைப்போன்று கொண்டுசெல்லப்படு
வார்கள். எடுத்துக்கொள்ளப்படுகிறவர்களில்
இவர்கள் முதன்மையானவர்களாக இருப்பார்
கள். 8 எனது கர்த்தராகிய ஆண்டவர் அவரது
சொந்தப் நாமத்தைப் பயன்படுத்தி வாக்கு
றுதி கொடுத்தார். சர்வ வல்லமையுள்ள
தேவனாகிய கர்த்தர் இந்த வாக்குறுதியை
அளித்தார்.
"நான், யாக்கோபு பெருமைக் கொள்கிற
காரியங்களை வெறுக்கிறேன். நான்
அவனது பலமுள்ள கோபுரங்களை வெறுக்
கிறேன். எனவே நான் பகைவன் இந்த
நகரத்தையும் அதிலுள்ள எல்லாப் பொருட்
களையும் எடுத்துக்கொள்ள விடுவேன்."

### கொஞ்சம் இஸ்ரவேலர்களே உயிரோடு விடப்படுவர்

9 அப்போது, சில வீடுகளில் பத்துபேர்
உயிர் பிழைக்கலாம், ஆனால் அவர்களும்
மரித்துப்போவார்கள். 10 ஒருவன் மரிக்கும்
போது ஒரு உறவினன் வந்து உடலைப்
பெற்று வெளியே எடுத்துக்கொண்டு எரிக்க
வருவான். உறவினன், எலும்பை வெளியே
கொண்டுபோக வருவான். வீட்டின் உட்புறத்
திலே மறைந்திருக்கிற யாரையாவது
அழைப்பான்.
"உன்னோடு வேறு மரித்த உடல்கள்
உள்ளனவா?" என்று கேட்பான். அந்த
மனிதன், "இல்லை" என்று பதில் சொல்லு
வான். ஆனால் அந்த உறவினன், "நீ
மௌனமாயிரு! நாம் கர்த்தருடைய நாமத்
தைச் சொல்லக்கூடாது" என்று சொல்வான்.
11 பார், தேவனாகிய கர்த்தர் கட்டளை
கொடுப்பார். பெரிய வீடுகள் துண்டுகளாக
உடைக்கப்படும். சிறிய வீடுகள் சிறிய
துண்டுகளாக உடைக்கப்படும.
12 ஜனங்கள் குதிரைகளைத் தளர்ந்த பாறை
களின் மேல் ஓடும்படிச் செய்வார்களா?
இல்லை. ஜனங்கள் பசுக்களைப் உழுவதற்கு
பயன்படுத்துவார்களா? இல்லை. ஆனால்
நீங்கள் எல்லாவற்றையும் தலைகீழாகத்
திருப்பினீர்கள். நீங்கள் நன்மையையும்
நேர்மையையும் விஷமாக மாற்றினீர்கள்.
13 நீங்கள் லோடேபரில் மகிழ்ச்சியாக
இருக்கிறீர்கள். நீங்கள், "நாங்கள் எங்கள்
சொந்த பலத்தால் கர்ணாயீமை எடுத்துக்
கொண்டோம்" என்று சொல்கிறீர்கள்.
14 ஆனால் இஸ்ரவேலே, "நான் உங்களுக்கு
எதிராக ஒரு நாட்டைக் கொண்டு வருவேன்.
அந்நாடு உன் முழு நாட்டுக்கும் அது
லெபோ ஆமாத் முதல் அரபா ஓடைவரை
துன்பங்களைக் கொண்டு வரும்." சர்வ
வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர் இவற்
றைக் கூறினார்.

### வெட்டுக்கிளிகளின் தரிசனம்

7 கர்த்தர் என்னிடம் இதனைக் காட்டினார்.
அரசனின் முதல் அறுவடைக்குப் பின்
இரண்டாவது விளைச்சல் தொடங்குகிற
காலத்தில் அவர் வெட்டுக்கிளிகளை உரு
வாக்கினார். 2 வெட்டுக் கிளிகள் நாட்டி லுள்ள
புல் அனைத்தையும் தின்றன. அதற் குப்
பிறகு நான், "எனது கர்த்தராகிய
ஆண்டவரே, உம்மைக் கெஞ்சுகிறேன். எங்
களை மன்னியும்! யாக்கோபு உயிர்ப்
பிழைக்க முடியாது. அவன் மிகவும் சிறி
யவன்!" என்று சொன்னேன்.
3 பிறகு கர்த்தர் இதைப்பற்றி அவரது
மனதை மாற்றினார். கர்த்தர் "அந்தக் காரியம்
நடைபெறாது" என்றார்.

### நெருப்பின் தரிசனம்

4 எனது கர்த்தராகிய ஆண்டவரே,
என்னிடம் இவற்றைக் காட்டினார்: நான்
அக்கினியாலே நியாயத்தீர்ப்புக்காகக் கூப்பி
டுகிற தேவனாகிய கர்த்தரை பார்த்தேன்.
நெருப்பு பெரிய ஆழியை அழித்தது. நெருப்பு
நாட்டை அழிக்கத் தொடங்கியது. 5 ஆனால்
நான், "தேவனாகிய கர்த்தாவே, நிறுத்தும்,
நான் உம்மைக் கெஞ்சுகிறேன். யாக்கோபு
உயிரோடு வாழ முடியாது. அவன் மிகவும்
சிறியவன்!" என்றேன்.
6 பிறகு கர்த்தர் இதைப்பற்றி தம் மனதை
மாற்றிக்கொண்டார். தேவனாகிய கர்த்தர்,
"அந்தக் காரியமும் நடைபெறாது" என்றார்.

### தூக்குநூலின் தரிசனம்

7 கர்த்தர் எனக்கு இதனைக் காட்டினார்:
கர்த்தர் ஒரு சுவரின் பக்கத்தில் தூக்கு
நூலைத் தம் கரத்தில் பிடித்துக்கொண்டு
நின்றார். (அச்சுவர் தூக்கு நூலினால் குறிக்
கப்பட்டிருந்தது.) 8 கர்த்தர், "ஆமோஸ், என்ன

பார்க்கிறாய்?" என்று கேட்டார். நான் "ஒரு
தூக்கு நூல்" என்றேன்.
பிறகு என் ஆண்டவர், "பார், என்
இஸ்ரவேல் ஜனங்களிடம் தூக்கு நூலை நான்
விடுவேன். நான் அவர்களது 'கோணல்
தன்மை' இனிமேலும் பரிசோதனையைக்
கடந்து செல்ல விடமாட்டேன். நான் அந்தக்
கெட்ட பகுதிகளை நீக்குவேன். 9ஈசாக்கின்
மேடைகள் அழிக்கப்படும். இஸ்ரவேலின்
பரிசுத்த இடங்கள் கற்குவியல்கள் ஆக்கப்
படும். நான் யெரொபெயாம் குடும்பத்தை
வாளால் தாக்கிக்கொல்வேன்" என்றார்.

### அமத்சியா, ஆமோசைத் தடுக்க முயல்கிறான்

10பெத்தேலின் ஆசாரியன் அமத்சியா,
இஸ்ரவேலின் அரசனான யெரோபெயா
முக்கு இச்செய்தியை அனுப்பினான்:
"ஆமோஸ் உனக்கு எதிராகத் திட்டங்கள்
தீட்டுகிறான். அவன், இஸ்ரவேல் உனக்கு
எதிராகப் போராட முயற்சி செய்கிறான்.
இந்த நாடு அவனது வார்த்தைகளை
யெல்லாம் சகித்துக்கொள்ளாது. 11ஆமோஸ்,
'யெரொபெயாம் வாளால் கொல்லப்ப
டுவான். இஸ்ரவேல் ஜனங்கள் அவர்களது
நட்டிலிருந்து சிறைகளாகச் செல்வார்கள்'
என்று சொல்லியிருக்கிறான்."
12அமத்சியாவும் ஆமோஸிடம் சொன்
னான்: "தீர்க்கதரிசியே போ, யூதாவுக்குப்
போய் அங்கு சாப்பிடு. அங்கே உனது
பிரச்சாரத்தைச் செய். 13ஆனால் இனிமேல்
பெத்தேலில் தீர்க்கதரிசனம் சொல்லாதே. இது
யெரொபெயாமின் பரிசுத்தமான இடம்.
இது இஸ்ரவேலின் ஆலயம்!"

14பிறகு ஆமோஸ் அமத்சியாவுக்குப் பதில்
சொன்னான்: "நான் தொழில்ரீதியான தீர்க்க
தரிசி இல்லை. நான் தீர்க்கதரிசியின் குடும்
பத்திலிருந்து வரவில்லை. நான் மந்தையைப்
பாதுகாக்கிறவன். நான் காட்டத்தி மரங்
களைக் கவனித்து வருபவன். 15நான் ஒரு
மேய்ப்பன், நான் மந்தையின் பின்னால்
போகிறபோது கர்த்தர் என்னை அழைத்தார்.
கர்த்தர், "போ, எனது இஸ்ரவேல் ஜனங்
களுக்குத் தீர்க்கதரிசனம் கூறு' என்று
என்னிடம் சென்னார், 16எனவே கர்த்தரு
டைய செய்தியைக் கேள். 'இஸ்ரவேலுக்கு
எதிராகத் தீர்க்கதரிசனம் சொல்ல வேண்
டாம். ஈசாக்கின் குடும்பத்துக்கு எதிராகப்
பிரச்சாரம் செய்யாதே' என்று நீ
சொல்கிறாய். 17ஆனால் கர்த்தர் கூறுகிறார்:
உன் மனைவி நகரத்தில் விபச்சாரி ஆவாள்.
உனது மகன்களும் மகள்களும் வாளால்
கொல்லப்படுவார்கள். மற்ற ஜனங்கள் உனது
நாட்டை எடுத்து தங்களுக்குள் பகிர்ந்து
கொள்வார்கள். நீ அயல் நாட்டில் மரண
மடைவாய். இஸ்ரவேல் ஜனங்கள் நிச்சயமாக
இந்த நாட்டை விட்டுச் சிறையெடுக்கப்
படுவார்கள்."'

### பழுத்த கனியின் தரிசனம்

8 கர்த்தர் இதனை எனக்குக் காட்டினார்:
நான் கோடைகால கனியுள்ள கூடை
யைப் பார்த்தேன். 2"ஆமோஸ் நீ என்ன
பார்க்கிறாய்?" என்று என்னிடம் கேட்
டார்?" நான், "ஒரு கோடைக் கனியுள்ள
கூடை" என்றேன். பிறகு கர்த்தர் என்னிடம்,
"எனது இஸ்ரவேல் ஜனங்களுக்கு முடிவு
வந்துவிட்டது. இனி அவர்களின் பாவங்
களை நான் கவனிக்காமல் விடமாட்டேன்.
3ஆலயப் பாடல்கள் மரணப் பாடல்களாக
மாறும். எனது கர்த்தராகிய ஆண்டவர்
இவற்றை கூறினார். எல்லா இடங்களிலும்
மரித்த உடல்கள் கிடக்கும். மௌனமாக,
ஜனங்கள் மரித்த உடல்களை எடுத்துப்போய்
குவியலாக எறிவார்கள்" என்றார்.

### இஸ்ரவேல் வியாபாரிகள் பணம் சம்பாதிப்பதில் மட்டுமே ஆர்வமாக இருக்கிறார்கள்

4எனக்குச் செவி கொடுங்கள்! நீங்கள்
உதவியற்ற ஜனங்கள் மீது நடக்கிறீர்கள்.
நீங்கள் இந்த நாட்டிலுள்ள ஏழை ஜனங்களை
அழிக்க முயற்சி செய்கிறீர்கள்.
5வியாபாரிகளாகிய நீங்கள் கூறுகிறீர்கள்:
"நாங்கள் தானியம் விற்க அமாவாசை
எப்பொழுது முடியும்? நாங்கள் கோது
மையை விற்கக் கொண்டுவர ஓய்வுநாள்
எப்பொழுது முடியும்? எங்களால் விலையை
ஏற்றி அளவைக் குறைக்க முடியும். அளவுக்
கருவிகளை நமக்கு அதிகம் லாபம் கிடைக்
கிற விதத்தில் மாற்றி ஜனங்களை ஏமாற்று
வோம்.
6ஏழை ஜனங்களால் தம் கடன்களைச்
செலுத்த முடியாது, எனவே நாங்கள் அவர்
களை அடிமைகளாக வாங்குவோம். நாங்கள்
ஒரு ஜோடி பாதரட்சைக்குரிய பணத்தால்
அந்த உதவியற்ற ஜனங்களை வாங்குவோம்.
ஓ, நாங்கள் நிலத்தில் சிதறிக் கிடக்கிற
கோதுமைகளை விற்க முடியும்."
7கர்த்தர் ஒரு வாக்குறுதி செய்தார். அவர்
யாக்கோபின் பெருமை, என்ற தமது
நாமத்தை, பயன்படுத்தி இந்த வாக்குறுதி
யைச் செய்தார்.
"நான் அந்த ஜனங்கள் செய்தவற்றை
மறக்க மாட்டேன். 8அவற்றால் முழு நாடும்
நடுங்கும். இந்நாட்டிலுள்ள ஒவ்வொருவரும்
மரித்துப்போனவர்களுக்காக அழுவார்கள்.
முழு நாடும் எகிப்திலுள்ள நைல் நதியைப்
போன்று உயர்ந்து தாழும். இந்த நாடு
தடுமாறிப் போகும்."
9கர்த்தர் இவற்றையும் கூறினார்: "அந்த
வேளையில் நான் சூரியனை நடுப்பகலில்

*மறையச் செய்வேன். நான் பகல் வேளையில் பூமியை இருளச் செய்வேன்.*

10 *நான் உங்கள் விடுமுறை நாட்களை மரித்தவர்களுக்காக ஒப்பாரி வைக்கும் நாளாக்குவேன். உங்கள் பாடல்கள் எல்லாம் மரித்த ஜனங்களுக்காகப் பாடப்படும் சோகப் பாடல்களாகும். நான் ஒவ்வொருவர் மீதும் துக்கத்திற்கான ஆடையை அணிவிப்பேன். நான் எல்லாத் தலைகளையும் வழுக்கையாக்குவேன். நான், மரித்துப்போன ஒரே மகனுக்காக அழும் ஒப்பாரியைப் போன்று ஆக்குவேன். இது ஒரு மிகவும் கசப்பான முடிவாயிருக்கும்.”*

### தேவனுடைய வார்த்தை கிடைக்காத கொடிய பஞ்சம் வந்துகொண்டிருக்கிறது

11 *கர்த்தர் கூறுகிறார்: “பார், தேசத்தின் மேல் பஞ்சத்தை அனுப்பும் நாட்கள் வரும். ஜனங்கள் அப்பத்துக்காகப் பசித்திருக்க மாட்டார்கள். தண்ணீருக்காகத் தவித்திருக்க மாட்டார்கள். இல்லை, கர்த்தரிடமிருந்து வரும் வார்த்தைகளுக்காக ஜனங்கள் பசியோடு இருப்பார்கள்.*

12 *ஜனங்கள் சவக்கடலிலிருந்து மத்தியத் தரை கடலுக்கும் வடக்கிலிருந்து கிழக்குக்கும் அலைவார்கள். ஜனங்கள் கர்த்தருடைய வார்த்தைகளுக்காக அங்கும் இங்கும் அலைவார்கள். ஆனால் அவர்கள் அதைக் கண்டுகொள்ள மாட்டார்கள்.*

13 *அந்த நேரத்தில் அழகான ஆண்களும் பெண்களும் தாகத்தால் பலவீனம் அடைவார்கள். அந்த ஜனங்கள் சமாரியாவின் பாவத்தின் பேரில் வாக்குறுதி செய்தனர். அவர்கள், “தாணே, உன் தேவனுடைய உயிரின் மேல் வாக்குறுதி அளிக்கிறோம்” என்றார்கள். மேலும் அவர்கள், “பெயெர்செபாவின் தேவனுடைய உயிரின்மேல் நாங்கள் வாக்குறுதி அளிக்கிறோம்” என்றார்கள். ஆனால் அந்த ஜனங்கள் வீழ்வார்கள். அவர்கள் மீண்டும் எழமாட்டார்கள்.*

### பலிபீடத்தின் அருகில் கர்த்தர் நிற்கும் தரிசனம்

9 *நான் என் ஆண்டவர் பலிபீடத்தின் அருகில் நிற்பதைக் கண்டேன். அவர், “நீ, வாசல் நிலைகள் அசையும்படி தூண்களை அடித்து, அவற்றை அவர்கள் எல்லாருடைய தலையின் மேலும் விழ உடைத்துப்போடு. ஜனங்களில் எவராவது உயிரோடு மீந்தால், பிறகு நான் அவர்களை வாளால் கொல்வேன். ஒருவன் வெளியே ஓடிவிடலாம். ஆனாலும் அவன் தப்ப முடியாது. ஜனங்களில் ஒருவரும் தப்ப இயலாது.*

2 *அவர்கள் தரையில் ஆழமாகத் தோண்டிப் போனாலும் நான் அவர்களை அங்கிருந்து வெளியே எடுப்பேன். அவர்கள் வானம் வரை ஏறிப் போனாலும் நான் அவர்களை அங்கிருந்து தரைக்குக் கொண்டுவருவேன்.*

3 *அவர்கள் கர்மேல் மலையின் உச்சியில் ஒளிந்தாலும் நான் அவர்களை அங்கே காண்பேன். நான் அவர்களை அங்கிருந்து எடுப்பேன். அவர்கள் என்னிடமிருந்து ஓடிக் கடலின் ஆழத்திற்குப் போனாலும் நான் பாம்புக்கு கட்டளையிடுவேன், அது அவர்களைக் கடிக்கும்.*

4 *அவர்கள் கைது செய்யப்பட்டு அவர்கள் பகைவர்களால் கொண்டு செல்லப்பட்டால் நான் வாளுக்குக் கட்டளையிடுவேன், அது அங்கே அவர்களைக் கொல்லும். ஆம் நான் அவர்களைக் கவனிப்பேன். ஆனால் நான் அவர்களுக்குத் துன்பம் தரும் வழிகளைக் கொடுப்பதற்கே பார்ப்பேனேயல்லாமல் நன்மையைத் தருவதற்கல்ல” என்றார்.*

### தண்டனை ஜனங்களை அழிக்கும்

5 *எனது சர்வ வல்லமையுள்ள கர்த்தராகிய ஆண்டவர் பூமியைத் தொட அது உருகும். பிறகு நாட்டில் உள்ள ஜனங்கள் எல்லோரும் மரித்துப்போன ஜனங்களுக்காக அழுவார்கள். நாடானது எகிப்தின் நைல் நதி போன்று உயர்ந்து தாழும்.*

6 *கர்த்தர் ஆகாயங்களுக்கு மேல் தனது உயர்ந்த அறைகளைக் கட்டினார். அவர் பூமிக்குமேல் தன் ஆகாயத்தை வைத்தார். அவர் கடலின் தண்ணீரை அழைத்து பூமியின் மேல் மழையாக அதனைக் கொட்டுகிறார். யேகோவா என்பது அவரது நாமம்.*

### இஸ்ரவேல் அழியும் என்று கர்த்தர் வாக்குறுதியளிக்கிறார்

7 *கர்த்தர் இதனைச் சொல்கிறார்: “இஸ்ரவேலே நீ எனக்கு எத்தியோப்பியர்களைப் போன்றிருக்கிறாய். நான் இஸ்ரவேலரை எகிப்து நாட்டிலிருந்து கொண்டு வந்தேன். நான் கப்தோரிலிருந்து* பெலிஸ்தியரைக் கொண்டு வந்தேன். கீரிலிருந்து சீரியரைக் கொண்டு வந்தேன்.”*

8 *எனது கர்த்தராகிய ஆண்டவர் பாவமுள்ள இராஜ்யத்தை (இஸ்ரவேல்) கவனித்துக் கொண்டிருக்கிறார். கர்த்தர் சொன்னார்: “பூமியின்முகத்திலிருந்து இஸ்ரவேலர்களைத் துடைப்பேன். ஆனால் நான் யாக்கோபின் குடும்பத்தை முழுமையாக அழிக்க மாட்டேன்.*

9 *நான் இஸ்ரவேல் நாட்டை அழிப்பதற்குக் கட்டளை கொடுத்துக் கொண்டிருக்கிறேன். நான் இஸ்ரவேல் ஜனங்களை அனைத்து நாடுகளிலும் சிதறவைப்பேன். ஆனால் இது ஒருவன் மாவை ஜல்லடையில் சலிப்பது போன்றது. அவன் ஜல்லடையில் சலிக்கும் போது, நல்ல மாவு கீழே விழுந்துவிடும், ஆனால் கோதுமை உமி பிடிபடும். யாக்*

---

**கப்தோர்** *சைபிரஸ்.*

*கோபின் குடும்பத்திற்கும் இவ்விதமாகவே*
*இருக்கும்.*
10*என் ஜனங்களிலுள்ள பாவிகள், 'நமக்கு*
*எந்தக் கேடும் ஏற்படாது' என்கிறார்கள்.*
*ஆனால் அந்த ஜனங்கள் அனைவரும்*
*வாளால் கொல்லப் படுவார்கள்."*

**இராஜ்யத்தை மீண்டும் நிறுவுவதாக தேவன் வாக்குறுதியளிக்கிறார்**

11"*தாவீதின் கூடாரம் விழுந்திருக்கிறது.*
*ஆனால் அந்நேரத்தில், நான் மீண்டும் அவன்*
*கூடாரத்தை அமைப்பேன். நான் சுவர்களில்*
*உள்ள துவாரங்களைச் சரிசெய்வேன். நான்*
*அழிந்துபோன கட்டிடங்களை மீண்டும்*
*கட்டுவேன். நான் அவற்றை முன்பு இருந்தது*
*போன்று கட்டுவேன்.*
12*பிறகு ஏதோமில் உயிருடன் விடப்பட்ட*
*வர்களும், என் நாமத்தால் அழைக்கப்பட்ட*
*எல்லோரும் கர்த்தரிடம் உதவிக்காக வரு*
*வார்கள்." கர்த்தர் அவற்றைச் சொன்னார்,*
*அவர் அவை நடக்கும்படிச் செய்வார்.*
13*கர்த்தர் கூறுகிறார்: "நிலத்தை உழுகிற*
*வன், அறுவடை செய்பவனை முந்திச்*
*செல்லும் காலம் வரும். திராட்சை*
*ஆலையை வைத்திருப்பவன் திராட்சை*
*பயிரிட்டு பழங்களைப் பறிப்பவனைத் தேடி*
*வரும் காலம் வரும். இனிய மதுவானது*
*குன்றுகளிலும் மலைகளிலும் கொட்டும்.*
14*இஸ்ரவேலே நான் என் ஜனங்களை*
*அடிமைத்தனத்திலிருந்து மீட்டு வருவேன்.*
*அவர்கள் அழிந்த நகரங்களை மீண்டும்*
*கட்டுவார்கள். அவர்கள் அந்நகரங்களில்*
*வாழ்வார்கள். அவர்கள் திராட்சைகளைப்*
*பயிரிடுவார்கள். அவர்கள் அவற்றிலிருந்து*
*வரும் மதுவை குடிப்பார்கள். அவர்கள்*
*தோட்டங்களைப் பயிரிடுவார்கள். அவர்கள்*
*அவற்றிலுள்ள அறுவடையை உண்பார்கள்.*
15*நான் என் ஜனங்களை அவர்கள் நிலத்*
*தில் நாட்டுவேன். அவர்கள் மீண்டும் பிடுங்*
*கப்படமாட்டார்கள். அவர்கள் நான்*
*கொடுத்த நாட்டிலேயே இருப்பார்கள்"*
*என்று உங்கள் தேவனாகிய கர்த்தர் கூறுகி*
*றார்.*

# ஒபதியா

### ஏதோம் தண்டிக்கப்படும்
இது ஒபதியாவின் தரிசனம். என்
கர்த்தராகிய ஆண்டவர் ஏதோம்* நாட்டைப்
பற்றி இதனைக் கூறுகிறார்: நாங்கள் தேவ
னாகிய கர்த்தரிடமிருந்து ஒரு அறிக்கை
யைக் கேட்டோம். ஒரு தூதுவர் நாடுகளுக்கு
அனுப்பப்பட்டார். அவர், "நாம் போய்
ஏதோமுக்கு எதிராகச் சண்டையிடுவோம்"
என்று கூறினார்.

### கர்த்தர் ஏதோமிடம் பேசுகிறார்
2 "ஏதோமே, நான் உன்னை மிகவும் சிறிய
நாடாக்குவேன். ஜனங்கள் உன்னை மிகவும்
வெறுப்பார்கள்.
3 உன் பெருமை உன்னை ஏமாற்றி
விட்டது. கன்மலை உச்சியிலுள்ள குகை
களில் நீ வசிக்கிறாய். உன் வீடு மலைகளின்
உச்சியில் உள்ளது. எனவே நீ உனக்குள்
ளேயே, 'எவராலும் என்னைத் தரைக்குக்
கொண்டு வரமுடியாது'" என்கிறாய்.

### ஏதோம் கீழே கொண்டு வரப்படும்
4 தேவனாகிய கர்த்தர்: "நீ கழுகைப்
போன்று உயரப்போனாலும் நட்சத்திரங்க
ளுக்கிடையில் உன் கூட்டைக் கட்டினாலும்,
நான் அங்கிருந்து உன்னைக் கீழே கொண்டு
வருவேன்" என்று கூறுகிறார்.
5 நீ உண்மையில் அழிக்கப்படுவாய்.
திருடர்கள் உன்னிடம் வருவார்கள். கள்
ளர்கள் இரவில் வருவார்கள். அத்திருடர்கள்
தாம் விரும்புகிற அனைத்தையும் எடுத்துக்
கொள்வார்கள். வேலைக்காரர்கள் உங்கள்
வயல்களில் திராட்சையைப் பறிக்கும்போது
சில திராட்சைப் பழங்களை விட்டு
வைப்பார்கள்.
6 ஆனால் பகைவன் ஏசாவினுடைய
மறைக்கப்பட்ட கருவூலங்களைத் தீவிரமாகத்
தேடுவான். அவர்கள் அவையனைத்தையும்
கண்டுப்பிடிப்பார்கள்.
7 உன் நண்பர்களான அனைத்து ஜனங்
களும் நாட்டை விட்டு வெளியேற
உன்னை வற்புறுத்துவார்கள். உன்னோடு
சமாதானமாக உள்ள ஜனங்கள் (நல்ல
நண்பர்கள்) தந்திரம் செய்து உன்னைத்
தோற்கடிப்பார்கள். உன் நண்பர்கள் உனக்
காக ஒரு கண்ணியைத் திட்டமிடுகிறார்கள்.
'அவன் ஒன்றையும் எதிர்பார்க்கவில்லை'
என்று அவர்கள் சொல்லுகிறார்கள்.
8 கர்த்தர் கூறுகிறார்: "அந்த நாளில்,
நான் ஏதோமிலுள்ள ஞானிகளை அழிப்
பேன். ஏசாவின் மலைகளில்* உள்ள புத்தி
மான்களை அழிப்பேன்.
9 தேமானே,* உனது பலவான்கள் பயப்படு
வார்கள். ஏசாவின் மலையில் உள்ள ஒவ்
வொருவரும் அழிக்கப்படுவார்கள். அநேக
ஜனங்கள் கொல்லப்படுவார்கள்.
10 நீ அவமானத்தால் மூடப்பட்டிருப்பாய்.
நீ என்றென்றைக்கும் அழிக்கப்படுவாய்.
ஏனென்றால், நீ உனது சகோதரனான
யாக்கோபுடன் கொடூரமாக இருந்தாய்.
11 நீ இஸ்ரவேலின் பகைவரோடு சேர்ந்
தாய். அந்நியர்கள் இஸ்ரவேலின் கருவூலங்
களை எடுத்துச் சென்றார்கள். அயல்நாட்டுக்
காரர்கள் இஸ்ரவேலின் நகரவாசலில் நுழைந்
தனர். அந்த அயல்நாட்டுக்காரர்கள் எருச
லேமின் எந்தப் பகுதி அவர்களுக்கு வரும்
என்று சீட்டுப் போட்டனர். அவர்களில்
நீயும் ஒருவனாக உன் பங்கைப் பெறக்
காத்திருந்தாய்.
12 நீ உன் சகோதரனின் துன்பத்தைக்
கண்டு சிரித்தாய். நீ அதனைச் செய்திருக்கக்
கூடாது. ஜனங்கள் யூதாவை அழிக்கும்போது
நீ மகிழ்ந்தாய். நீ அதனைச் செய்திருக்கக்
கூடாது. நீ அவர்களின் துன்பத்தில் வீண்
புகழ்ச்சி கொண்டாய். நீ அதனைச் செய்தி
ருக்கக் கூடாது.
13 நீ என் ஜனங்களின் நகரவாசலில்
நுழைந்து. அவர்களின் துன்பத்தைக் கண்டு
சிரித்தாய். நீ அதனைச் செய்திருக்கக்
கூடாது. அவர்களின் துன்பநேரத்தில் நீ
அவர்களுடைய கருவூலங்களை எடுத்துக்
கொண்டாய். நீ அதனைச் செய்திருக்கக்
கூடாது.
14 சாலைகள் சந்திக்கும் இடத்தில் நீ நின்று
தப்பிச் செல்ல முயல்கிறவர்களை அழித்தாய்.
நீ அதனைச் செய்திருக்கக் கூடாது. நீ

---

**ஏதோம்** யூதாவின் தென்கிழக்கில் உள்ள நாடு. ஏதோம் ஜனங்கள் ஏசா வம்சத்தினர். அவன் யாக்கோபின் இரட்டைச் சகோதரன். அவர்கள் இஸ்ரவேலின் பகைவர்கள்.

**ஏசாவின் மலை** சேயீர் மலை.

**தேமான்** ஏதோமின் முக்கிய நகரங்களுள் ஒன்று.

*உயிரோடு தப்பியவர்களைக் கைது செய்*
*தாய். நீ அதனைச் செய்திருக்கக் கூடாது.*

### அனைத்து நாடுகளிலும் நியாயத்தீர்ப்பு வந்தது

15 *கர்த்தருடைய நாள் விரைவில் அனை*
*த்து நாடுகளுக்கும் வருகிறது. நீ மற்றவர்*
*களுக்குத் தீமை செய்தாய். அத்தீமைகள்*
*உனக்கு ஏற்படும். அதே தீமைகள் உன்*
*சொந்த தலை மேலேயே விழும்.*
16 *ஏனென்றால் எனது பரிசுத்தமான மலை*
*யில்* நீ குடித்ததுபோல, மற்ற நாட்டு*
*ஜனங்களும் உன்னில் குடித்துப் புரளு*
*வார்கள். நீ என்றுமே இருந்ததில்லை என்*
*பதுபோன்று எனது முடிவு வரும்.*
17 *ஆனால் சீயோன் மலையின் மேல்*
*தப்பிப் பிழைத்தோர் இருப்பார்கள். அவர்கள்*
*எனது சிறப்பான ஜனங்களாக இருப்பார்கள்.*
*யாக்கோபின் நாடு தனக்குரியவற்றைத்*
*திரும்ப எடுத்துக்கொள்ளும்.*
18 *யாக்கோபின் குடும்பம் நெருப்பைப்*
*போன்றிருக்கும். யோசேப்பின் நாடானது*
*சுவாலையைப் போன்றிருக்கும். ஆனால்*
*ஏசாவின் நாடு சாம்பலைப் போன்றிருக்கும்.*
*யூதா ஜனங்கள் ஏதோமை எரிப்பார்கள்.*
*யூதா ஜனங்கள் ஏதோமை அழிப்பார்கள்.*
*அதன் பிறகு ஏசாவின் நாட்டில் தப்பிப்பி*
*ழைத்தோர் ஒருவரும் இருக்கமாட்டார்கள்.*
*ஏனென்றால் தேவனாகிய கர்த்தர் இதைக்*
*கூறினார்.*
19 *பிறகு ஏசா மலைமீது, நெகேவ்* ஜனங்*
*கள் வாழ்வார்கள். மலை அடிவாரத்திலுள்ள*
*ஜனங்கள் பெலிஸ்தியர்களின் நிலங்களை*
*எடுத்துக் கொள்வார்கள். எப்பிராயீம் மற்*
*றும் சமாரியா நாடுகளில் அந்த ஜனங்கள்*
*வாழ்வார்கள். கீலேயாத் பென்யமீனுக்கு*
*உரியதாகும்.*
20 *இஸ்ரவேலிலுள்ள ஜனங்கள் தங்கள்*
*வீடுகளை விட்டு வெளியேறும்படி வற்புறுத்*
*தப்பட்டவர்கள். ஆனால் அந்த ஜனங்கள்*
*சாரிபாத் வரையுள்ள கானான் நாட்டை*
*எடுத்துக்கொள்வார்கள். யூதா ஜனங்கள்*
*எருசலேமை விட்டு வெளியேறி சேப்பாரா*
*தத்தில் வாழும்படி வற்புறுத்தப்படுவார்கள்.*
*ஆனால் அவர்கள் நெகேவ் நகரங்களை*
*எடுத்துக்கொள்வார்கள்.*
21 *விடுவிக்கிக்கப்பட்டவர்கள் சீயோன்*
*மலைக்குப்போய் ஏசா மலையில் வாழும்*
*ஜனங்களை நியாயம் தீர்த்து ஆட்சி செய்*
*வார்கள். இராஜ்யம் கர்த்தருக்கு உரியதா*
*கும்.”*

---

**பரிசுத்தமான மலை** *சீயோன் மலை எருசலேமி லுள்ள மலைகளில் ஒன்று.*

**நெகேவ்** *யூதாவின் தென் பகுதியிலுள்ள வனாந்தரம்.*

# யோனா

## தேவன் அழைக்கிறார், யோனா ஓடுகிறான்

1 கர்த்தர் அமித்தாயின் மகனான யோனா
வோடு பேசினார். கர்த்தர், 2"நினிவே*
ஒரு பெரிய நகரம். நான் அங்கே மக்கள்
செய்து கொண்டிருக்கிற அநேக தீமைகளைப்
பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன். எனவே
அந்நகரத்திற்குப் போய். அம்மக்களிடம் அத்தீ
மைகளை நிறுத்தும்படிச் சொல்" என்றார்.
3யோனா தேவனுக்குக் கீழ்ப்படிய விரும்ப
வில்லை. எனவே யோனா கர்த்தரிடமிருந்து
விலகி ஓடிவிட முயற்சித்தான். யோப்பா
பட்டணத்திற்குப் போனான். யோனா
அங்கே தர்ஷீசுக்குப் போகும் படகு ஒன்றைக்
கண்டான். யோனா பயணத்துக்காக பணம்
கொடுத்து படகில் ஏறினான். யோனா
அம்மக்களோடு தர்ஷிசுக்குப் பயணம் செய்து
கர்த்தரை விட்டு விலகி ஓடிப்போக விரும்பி
னான்.

## பெரும்புயல்

4ஆனால் கர்த்தர் கடலில் ஒரு பெரும்
புயலை உருவாக்கினார். காற்றானது கட
லைக் கொந்தளிக்கச் செய்தது. புயல் மிகவும்
பலமாக வீச, படகு இரண்டு பகுதியாக
உடைந்துவிடும் போலத் தோன்றியது.
5பணியாட்கள் படகை மூழ்குவதிலிருந்து
காப்பாற்ற அதன் கனத்தைக் குறைக்க
விரும்பினார்கள். எனவே அவர்கள் கடலுக்
குள் சரக்குகளைத்* தூக்கி எறிந்தனர்.
படகோட்டிகள் மிகவும் பயந்தார்கள். ஒவ்
வொருவரும் தனது தேவனிடம் ஜெபம்
செய்யத் தொடங்கினார்கள்.
யோனா படகின் கீழ்த்தளத்திற்குச்
சென்று படுத்து தூங்கிக்கொண்டிருந்தான்.
6படகின் தலைவன் யோனாவிடம், "எழுந்
திரு! ஏன் தூங்கிக்கொண்டிருக்கிறாய்?
உனது தேவனிடம் ஜெபம் செய். ஒரு
வேளை உனது தேவன் உன் ஜெபத்தைக்
கேட்டு நம்மைக் காப்பாற்றலாம்!" என்றான்.

## புயல் வரக் காரணம் என்ன?

7பிறகு அவர்கள் ஒருவரோடு ஒருவர்,
"நாம் சீட்டுக்குலுக்கிப்போட்டு இத்துன்பம்
வரக்காரணம் என்னவென்று பார்ப்போம்"
என்று பேசிக்கொண்டார்கள்.
எனவே அவர்கள் சீட்டுப் போட்டார்கள்.
யோனாவால் இந்தத் துன்பம் வந்தது
என்பதை அது காட்டியது. 8பிறகு அவர்கள்
யோனாவிடம், "உனது குற்றத்தால்தான்
எங்களுக்கு இந்த பயங்கரமான துன்பம்
ஏற்பட்டிருக்கிறது. எனவே நீ என்ன செய்
திருக்கிறாய் என்று எங்களிடம் சொல்.
உனது தொழில் என்ன? நீ எங்கிருந்து
வருகிறாய்? உனது நாடு எது? உனது
மக்கள் யார்?" என்று கேட்டார்கள்.
9யோனா அவர்களிடம், "நான் ஒரு
எபிரேயன் (யூதன்). நான் பரலோகத்தின்
தேவனாகிய கர்த்தரை ஆராதிக்கிறேன்.
அவரே கடலையும் நிலத்தையும் படைத்த
தேவன்" என்றான்.
10யோனா, தான் கர்த்தரிடமிருந்து ஓடிவந்
ததாகச் சொன்னான். அவர்கள் அதனை
அறிந்ததும் மிகவும் பயந்தார்கள். அவர்கள்
யோனாவிடம், "உனது தேவனுக்கு எதிராக
எந்த பயங்கரமான செயலைச் செய்தாய்?"
என்று கேட்டார்கள்.
11காற்றும் கடல் அலைகளும் மேலும்
மேலும் பலமடைந்தன. எனவே அவர்கள்
யோனாவிடம், "நாங்கள் எங்களைக் காப்
பாற்றிக்கொள்ள என்ன செய்யவேண்டும்?
நாங்கள் கடலை அமைதிப் படுத்த உனக்கு
என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டார்
கள்.
12யோனா அவர்களிடம், "நான் குற்றம்
செய்துவிட்டேன் என்று எனக்குத் தெரியும்.
என்னால்தான் இந்தப் புயல் வந்துள்ளது
என்று எனக்குத் தெரியும். எனவே என்
னைக் கடலுக்குள் எறியுங்கள். கடல்
அமைதி அடையும்" என்றான்.
13ஆனால் அவர்கள் யோனாவைக் கடலுக்
குள் எறிய விரும்பவில்லை. அவர்கள்
கப்பலைத் மறுபடியும் கரைக்குக் கொண்டுப்
போக முயற்சி செய்தார்கள். ஆனால்

---

***நினிவே*** *அசீரியாவின் தலைநகரம்.*

***சரக்கு*** *இந்த எபிரெய சொல்லுக்கு "உணவு வகைகள், ஜாடிகள் அல்லது கருவிகள்" எனப் பொருள்படும். இங்கு இதற்கு தர்ஷீசுக்கு படகில் கொண்டுபோன எல்லா ஜாடிகளும் பொட்டிகளும் என்று பொருள் கொள்ளலாம் அல்லது படகில் உள்ள தளவாடங்களுக்கும் கனமான கருவிகளும் என்றும் பொருள் கொள்ளலாம்.*

அவர்களால் முடியவில்லை. காற்றும், கடல் அலைகளும் மேலும் மேலும் பலமடைந்தன.

### யோனாவின் தண்டனை

14 எனவே அவர்கள் கர்த்தரிடம், "கர்த்தாவே, நாங்கள் இவனை அவன் செய்த தவறுக்காகக் கடலில் தூக்கி எறிகிறோம். எனவே, ஒரு அப்பாவி மனிதனைக் கொன்றோம் என்று எங்களைக் குற்றப்படுத்தாதிரும். நாங்கள் அவனைக் கொன்றதற்காக எங்களை மரிக்கச் செய்யாதிரும். நீர்தான் கர்த்தர், நீர் என்ன செய்ய விரும்புகிறீரோ அதைச் செய்வீர் என்பதை நாங்கள் அறிகிறோம். ஆனால் தயவு செய்து எங்களிடம் இரக்கமாய் இரும்" என்று அழுதார்கள்.
15 அவர்கள் யோனாவைக் கடலுக்குள் வீசினார்கள். புயல் நின்று கடல் அமைதியானது.
16 இதனைப் பார்த்த அவர்கள் பயப்படத்தொடங்கி கர்த்தரிடம் மரியாதை செலுத்தத்தொடங்கினார்கள். அவர்கள் பலி கொடுத்து கர்த்தருக்குச் சிறப்பான வாக்குறுதிகளைச் செய்தார்கள்.
17 யோனா கடலுக்குள் விழுந்தவுடன், கர்த்தர் ஒரு பெரிய மீனைத் தேர்ந்தெடுத்து, யோனாவை விழுங்கும்படிச் செய்தார். யோனா அந்த மீனின் வயிற்றுக்குள் மூன்று பகல்களும், மூன்று இரவுகளும் இருந்தான்.

2 யோனா மீனின் வயிற்றுக்குள் இருந்தபோது, அவன் தனது தேவனாகிய கர்த்தரிடம் ஜெபம் செய்தான். யோனா,
2 "நான் மிக மோசமான துன்பத்தில் இருந்தேன். நான் உதவிக்காகக் கர்த்தரை வேண்டினேன். அவர் எனக்குப் பதில் கொடுத்தார். நான் பாதாளத்தின் ஆழத்தில் இருந்தேன். கர்த்தாவே, நான் உம்மிடம் கதறினேன். நீர் எனது குரலைக் கேட்டீர்.
3 "நீர் என்னைக் கடலுக்குள் எறிந்தீர். உமது வல்லமையுடைய அலைகள் என்மேல் வீசின. நான் கடலுக்குள் மேலும் மேலும் ஆழத்திற்குள் சென்றேன். என்னைச் சுற்றிலும் தண்ணீர் இருந்தது,
4 "பிறகு நான் நினைத்தேன், 'இப்போது நான் உம் பார்வையிலிருந்து விரட்டியடிக்கப்பட்டுள்ளேன்.' ஆனால், நான் தொடர்ந்து உதவிக்காக உமது பரிசுத்த ஆலயத்தையே பார்த்துக்கொண்டிருந்தேன்.
5 "கடல் தண்ணீர் என்னை மூடியது. தண்ணீரானது எனது வாயை நிறைத்தது. என்னால் சுவாசிக்க முடியவில்லை.* நான் கடலுக்குள் மேலும் மேலும் ஆழமாகச் சென்றேன். கடற்பாசி என் தலையைச் சுற்றிக்கொண்டது.
6 நான் மலைகள் துவங்குகிற கடலின் ஆழத்திற்குச் சென்றேன். நான் இந்தச் சிறைக்குள் என்றென்றும் இருப்பேனோ என்று நினைத்தேன். ஆனால் எனது கல்லறையிலிருந்து என்னை என் தேவனாகிய கர்த்தர் மீட்டார். தேவனே, நீர் எனக்கு மீண்டும் உயிர்கொடுத்தீர்.
7 "எனது ஆத்துமா எல்லா நம்பிக்கையையும் இழந்தது. ஆனால், பிறகு நான் கர்த்தரை நினைத்தேன். கர்த்தாவே, நான் உம்மிடம் ஜெபம் செய்தேன், நீர் உமது பரிசுத்தமான ஆலயத்திலிருந்து எனது ஜெபத்தைக் கேட்டீர்.
8 "சிலர் பயனற்ற விக்கிரகங்களை தொழுகின்றார்கள். ஆனால், அந்தச் சிலைகள் அவர்களுக்கு உதவுவதில்லை.*
9 கர்த்தர் ஒருவரிடமிருந்தே இரட்சிப்பு வருகிறது, கர்த்தாவே, நான் உமக்குப் பலிகளை கொடுப்பேன். நான் உம்மைத் துதித்து, உமக்கு நன்றி சொல்வேன். நான் உம்மிடம் சிறப்பு வாக்குறுதிகளைச் செய்வேன், நான் வாக்குறுதிப்படி செய்வேன்" என்றான்.
10 பிறகு கர்த்தர் மீனோடு பேசினார். மீன் யோனாவை தன் வயிற்றிலிருந்து உலர்ந்த நிலத்தில் கக்கிவிட்டது.

### தேவன் அழைக்கிறார், யோனா கீழ்ப்படிகிறான்

3 பிறகு கர்த்தர் யோனாவிடம் மறுபடியும் பேசினார். கர்த்தர்,
2 "அந்த பெரிய நினிவே நகரத்திற்குப் போ, நான் உனக்குச் சொன்னவற்றைப் பிரசங்கம் செய்" என்றார்.
3 எனவே யோனா கர்த்தருக்குக் கீழ்ப்படிந்தான், அவன் நினிவே நகரத்திற்குப் போனான். நினிவே ஒரு மிகப்பெரிய நகரம். ஒருவன் இந்நகரத்தைக் கடந்துபோக மூன்று நாட்கள் நடக்கவேண்டும்.
4 யோனா நினிவே நகரத்தின் நடு இடத்திற்குச்சென்று பிரசங்கம் செய்ய ஆரம்பித்தான். யோனா, "40 நாட்களுக்குப் பிறகு நினிவே நகரம் அழிக்கப்படும்!" என்றார்.
5 நினிவேயின் மக்கள் தேவனிடமிருந்து வந்த செய்தியை நம்பினார்கள். மக்கள் சாப்பிடாமல் உபவாசம் இருந்து அவர்களின் பாவங்களை நினைத்து மனந்திரும்ப முடிவு செய்தார்கள். மக்கள் சிறப்பான ஆடையை அணிந்து தங்கள் மன வருத்தத்தைக் காட்டினார்கள். அந்நகரிலுள்ள மக்கள் அனைவரும் இதனைச் செய்தார்கள். மிகமுக்கியமான மக்களும், முக்கியமற்ற மக்களும் இதனைச்செய்தார்கள்.
6 நினிவேயின் அரசன் இவற்றைக் கேள்விப்பட்டான், அரசனும் தான் செய்த

**தண்ணீர் … முடியவில்லை** அல்லது "தண்ணீர் என்னைச் சூழ்ந்து ஆத்துமா வரை நிறைந்து." எபிரெய சொல்லான ஆத்மாவுக்கு "வாழ்க்கை, சுயம், விருப்பம்" என்றும் "தொண்டை அல்லது வாய்" எனப் பொருள்படும்.

**சிலர் பயனற்ற … உதவுவதில்லை** அல்லது "பயனற்ற பொருட்களை வழிபடுகிற ஜனங்கள். அவர்கள் மீது கருணையுள்ள ஒருவரை விட்டு விலகியிருந்தனர்.

தீங்குகளுக்காக வருத்தப்பட்டான், எனவே
அரசன் தனது சிம்மாசனத்தை விட்டு
இறங்கினான். அரசன் தனது அரசனுக்குரிய
ஆடையைக் கழற்றிப் போட்டுவிட்டு துக்கத்
தைக் காட்டுவதற்குரிய சிறப்பு ஆடையை
அணிந்துகொண்டான். பிறகு அரசன்
சாம்பல்மேல் உட்கார்ந்தான், 7அரசன் ஒரு
சிறப்புச்செய்தியை எழுதி நகரம் முழுவதிற்
கும் அனுப்பினான்.

அரசனிடமிருந்தும் அவனது முக்கிய
மந்திரிகளிடமிருந்தும் வரும் கட்டளை:

கொஞ்சகாலத்திற்கு எம்மனிதனும் மிருக
மும் உண்ணக் கூடாது. மாடுகளும் ஆடு
களும் கூட வயலுக்குப் போகக்கூடாது.
நினிவேயில் வாழ்கிற எதுவும் உணவு
உண்ணவோ தண்ணீர் குடிக்கவோ கூடாது.
8ஆனால் ஒவ்வொரு மனிதனும் மிருகமும்
துக்கத்தைக் காட்டும் சிறப்பு ஆடையால்
தன்னை மூடிக்கொள்ள வேண்டும். மக்கள்
தேவனிடம் உரக்கக் கதறவேண்டும். ஒவ்வொ
ருவரும் தனது வாழ்வை மாற்றித் தீங்கு
செய்வதை நிறுத்த வேண்டும். 9பிறகு
தேவன் மனம்மாறி தாம் திட்டமிட்ட செயல்
களைச் செய்யாமல் விடலாம். தேவன்
ஒருவேளை தன்னை மாற்றிக்கொண்டு நம்
மீது கோபமில்லாமல் இருக்கலாம். அப்
போது நாம் தண்டிக்கப்படாமல் இருக்க
லாம்.”

10தேவன் மக்கள் செய்தவற்றைப் பார்த்
தார். மக்கள் தீமைகள் செய்வதை நிறுத்திய
தைப் பார்த்தார். எனவே தேவன் மாறித்
தனது திட்டத்தைச் செயல்படுத்தவில்லை.
தேவன் மக்களைத் தண்டிக்கவில்லை.

### தேவனுடைய இரக்கம் யோனாவைக் கோபமடையச்செய்கிறது

4 தேவன் நகரத்தை காப்பாற்றியதைக்
குறித்து யோனா மகிழ்ச்சி அடைய
வில்லை, யோனா கோபம் அடைந்தான்.
2யோனா கர்த்தரிடம் முறையிட்டு, “நான்
இது நடக்குமென்று அறிவேன்! நான்
எனது சொந்த நாட்டில் இருந்தேன், நீர்
என்னை இங்கு வரச்சொன்னீர். அந்த
நேரத்தில், இப்பாவ நகரத்திலுள்ள மக்களை
நீர் மன்னிப்பீர் என்பதை நான் அறிவேன்.
எனவே நான் தர்ஷிசுக்கு ஓடிப்போக முடிவு
செய்தேன். நீர் இரக்கமுள்ள தேவன் என்பது
எனக்குத் தெரியும்! நீர் இரக்கங்காட்டி
மக்களைத் தண்டிக்கமாட்டீர் என்பதை நான்
அறிவேன்! நீர் கருணை நிறைந்தவர் என்
பதை அறிவேன். இம்மக்கள் பாவம்
செய்வதை நிறுத்தினால், நீர் அவர்களை
அழிக்க வேண்டும் என்னும் திட்டத்தை
மாற்றிக்கொள்வீர் என்றும் நான் அறிவேன்.
3எனவே நான் இப்பொழுது உம்மை வேண்
டுகிறேன், கர்த்தாவே, தயவுசெய்து என்
னைக் கொன்றுவிடும், நான் உயிரோடு
இருப்பதைவிடச் மரித்துப்போவது நல்லது!”
என்றான்.
4பிறகு, கர்த்தர், “நான் அம்மக்களை
அழிக்கவில்லை என்பற்காக நீ என்னிடம்
கோபம் கொள்வது சரியென்று நினைக்கி
றாயா?” என்று கேட்டார்.
5யோனா இவை எல்லாவற்றுக்காகவும்
கோபத்தோடு இருந்தான். எனவே அவன்
நகரத்தை விட்டுப்போனான். யோனா, நகரத்
திற்குக் கிழக்குப்பகுதியிலுள்ள ஒரு இடத்
திற்குச் சென்று, தனக்கென்று ஒரு இருப்பிட
த்தை அமைத்துக்கொண்டான். பிறகு அவன்
அங்கே நிழலில் உட்கார்ந்து, நகரத்திற்கு
என்ன நடக்கப்போகிறது என்று பார்க்கக்
காத்துக்கொண்டிருந்தான்.

### ஆமணக்குச் செடியும், ஒரு புழுவும்

6கர்த்தர் ஒரு ஆமணக்குச் செடியை
யோனாவுக்கு மேல் வேகமாக வளரச்
செய்தார். இது யோனா உட்காருவதற்குரிய
நல்ல குளிர்ந்த நிழலைத் தந்தது. இது
யோனாவிற்கு மேலும் வசதியாக இருக்க
உதவியது. யோனா அந்தச் செடிக்காக
மிகவும் மகிழ்ச்சியடைந்தான்.
7மறுநாள் காலையில், தேவன் அச்செடி
யைத் தின்பதற்கு ஒரு புழுவை அனுப்பி
னார். அப்புழு செடியைத் தின்னத்
தொடங்கியது, செடி செத்துப்போனது.

8சூரியன் வானத்தில் உயரமாக வந்த
போது, தேவன் சூடான கிழக்குக் காற்று
வீசச் செய்தார். சூரியன் யோனாவின்
தலையை மிகச்சூடாக்கியது. யோனா
மிகமிகப் பலவீனமானான், யோனா தன்னை
மரிக்கவிடும்படி தேவனிடம் வேண்டினான்.
யோனா, “நான் உயிர் வாழ்வதைவிடச்
மரிப்பதே நல்லது” என்றான்.
9ஆனால் தேவன் யோனாவிடம், “இந்தச்
செடி செத்ததற்காக நீ என் மீது கோபப்படு
வது சரியென்று நினைக்கிறாயா?” என்று
கேட்டார்.

யோனா, “ஆம், நான் கோபப்படுவது
சரிதான், நான் சாகிற அளவிற்குக் கோப
மாக இருக்கிறேன்!” என்றார்.
10கர்த்தர், “நீ அச்செடிக்காக எதுவும்
செய்யவில்லை! நீ அதனை வளரச்செய்ய
வில்லை. அது இரவில் வளர்ந்தது, மறுநாள்
அது செத்தது. இப்பொழுது நீ அச்செ
டியைப்பற்றி துக்கப்படுகிறாய். 11நீ ஒரு
செடிக்காகக் கவலைப்படுவதானால், நிச்ச
யமாக நான் நினிவே போன்ற பெரிய
நகரத்திற்காக வருத்தப்படலாம். நகரத்தில்
ஏராளமான மனிதர்களும் மிருகங்களும்
இருக்கிறார்கள். அந்த நகரத்தில் தாங்கள்
தீமைசெய்து கொண்டிருந்ததை அறியாத
1,20,000க்கும் மேலான மக்கள் இருக்கிறார்
கள்!” என்றார்.

# மீகா

### சமாரியாவும் இஸ்ரவேலும் தண்டிக்கப்பட வேண்டும்

1 கர்த்தருடைய வார்த்தை மீகாவிடம் வந்
தது. இது யோதாம், ஆகாஸ், எசேக்கியா
எனும் அரசர்களின் காலங்களில் நிகழ்ந்தது.
இவர்கள் யூதாவின் அரசர்கள். மீகா, மொ
ரேசா என்னும் ஊரைச் சேர்ந்தவன். மீகா
இந்தத் தரிசனத்தைச் சமாரியாவையும்
எருசலேமையும் குறித்துப் பார்த்தான்.
2 அனைத்து ஜனங்களே, கவனியுங்கள்!
பூமியே அதிலுள்ள உயிர்களே, கவனியுங்
கள், எனது கர்த்தராகிய ஆண்டவர் அவரது
பரிசுத்த ஆலயத்திலிருந்து வருவார். எனது
ஆண்டவர் உங்களுக்கு எதிரான சாட்சியாக
வருவார்.
3 பாருங்கள், கர்த்தர் அவரது இடத்திலி
ருந்து வந்துகொண்டிருக்கிறார். அவர்
இறங்கி வந்து பூமியிலுள்ள உயர்ந்த மேடை
களை மிதிப்பார்.
4 அவருக்குக் கீழே மலைகள் உருகும்.
அவை நெருப்புக்கு முன்னாலுள்ள மெழு
கைப் போன்று உருகும். பள்ளத்தாக்குகள்
பிளந்து மலைகளிலிருந்து தண்ணீர் பாயும்.
5 ஏனென்றால், இதற்குக் காரணம் யாக்கோ
பின் பாவம். இதற்கு இஸ்ரவேல் நாடு
செய்த பாவங்களும் காரணமாகும்.

### சமாரியா, பாவத்தின் காரணம்

யாக்கோபு செய்த பாவத்திற்கு காரணம்
என்ன? அது சமாரியா, யூதாவிலுள்ள,
வழிபாட்டிற்குரிய இடம் எங்கே? அது
எருசலேம்.
6 எனவே, நான் சமாரியாவை வயலி
லுள்ள குன்றுகளின் குவியலாக்குவேன்.
அது திராட்சைக் கொடி நடுவதற்கான
இடம்போல் ஆகும். நான் சமாரியாவின்
கற்களைப் பள்ளத்தாக்கில் புரண்டு விழப்
பண்ணுவேன். நான் அவளது அஸ்திபாரங்
களை தவிர எல்லாவற்றையும் அழிப்பேன்.
7 அவளது அனைத்து விக்கிரகங்களும்
துண்டுகளாக உடைக்கப்படும். அவள்
வேசித்தனத்தின் சம்பளம் (விக்கிரகங்கள்)
நெருப்பில் எரிக்கப்படும். நான் அவளது
அந்நிய தெய்வங்களின் விக்கிரகங்கள்
அனைத்தையும் அழிப்பேன். ஏனென்றால்
சமாரியா எனக்கு விசுவாசமற்ற முறையில்
அச்செல்வத்தைப் பெற்றாள். எனவே அவை
எனக்கு விசுவாசம் அற்றவர்களாலேயே
எடுத்துக்கொள்ளப்படும்.

### மீகாவின் பெருந்துக்கம்

8 என்ன நிகழும் என்பதைப்பற்றி நான்
மிகவும் துக்கப்படுவேன். நான் பாதரட்சை
யும் ஆடையும் இல்லாமல் போவேன்.
நான் ஒரு நாயைப்போன்று அழுவேன்.
நான் ஒரு பறவையைப்போன்று துக்கங்
கொள்வேன்.
9 சமாரியாவின்* காயங்கள் குணப்படுத்
தப்பட இயலாது. அவளது (பாவ) நோய்
யூதா முழுவதும் பரவியிருக்கிறது. இது
எனது ஜனங்களின் நகரவாசலை அடைந்தி
ருக்கிறது. எருசலேமின் எல்லாவழிகளிலும்
பரவியிருக்கிறது.
10 இதனைக் காத்திடம் சொல்லவேண்டாம்.
அக்கோ என்னுமிடத்தில் கதறவேண்டாம்.
பெத் அப்ராவிலே புழுதியில் நீ புரளு.
11 சாப்பீரில் குடியிருக்கிறவர்களே வெட்
கத்துடன் நிர்வாணமாய் உங்கள் வழியிலே
போங்கள். சாயனானில் குடியிருக்கிறவர்கள்
வெளியே வரமாட்டார்கள். பெத்ஏசேலில்
வாழ்கிறவர்கள் கதறுவார்கள். உங்களின்
உதவியை எடுத்துக்கொள்வார்கள்.
12 மாரோத்தில் குடியிருக்கிறவளே பலவீ
னமாகி நல்ல செய்தி வருமென்று எதிர்ப்
பார்த்திருந்தார்கள். ஏனென்றால், துன்பமா
னது கர்த்தரிடமிருந்து எருசலேமின் நகரவா
சலுக்கு வந்திருக்கிறது.
13 லாகீசில் குடியிருக்கிறவளே, உங்கள்
இரதத்தில் விரைவாகச் செல்லும் குதிரை
யைப் பூட்டு. சீயோனின் பாவம் லாகீசில்
தொடங்கியது. ஏனென்றால் நீ இஸ்ரவேலின்
பாவங்களைப் பின்பற்றுகிறாய்.
14 எனவே, நீ மோர்ஷேக் காத்தினிடத்திற்கு
கட்டாயமாக பிரிவு உபச்சார வெகுமதி
களைக் கொடுக்கவேண்டும். அக்சீபின்
வீடுகள் இஸ்ரவேல் அரசர்களிடம் வஞ்சனை
செய்யும்.
15 மரேஷாவில்* குடியிருக்கிறவளே, நான்
உனக்கு எதிராக ஒருவனைக் கொண்டு
வருவேன். அவன் உனக்கு உரிய
பொருட்களை எடுத்துக்கொள்வான்.

---

**சமாரியா** இஸ்ரவேலின் வடக்கேயுள்ள பத்து கோத்திரங்களின் தலைநகரம்.

**மெரோஷா** மீகாவின் பிறந்த ஊர்.

*அதுல்லாமிற்குள்* இஸ்ரவேலின் மகிமை*
*(தேவன்) வரும்.*
16*எனவே உனது முடியை வெட்டு,*
*உன்னை மொட்டையாக்கிக்கொள். ஏனென்*
*றால், நீ அன்பு செலுத்துகிற உன் குழந்தை*
*களுக்காக நீ கதறுவாய். நீ கழுகைப்போன்று*
*முழுமொட்டையாக இருந்து உனது துக்கத்*
*தைக் காட்டு. ஏனென்றால் உனது பிள்ளை*
*கள் உன்னிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படு*
*வார்கள்.*

### ஜனங்களின் தீயத்திட்டங்கள்

2 *பாவம் செய்யத் திட்டமிட்டிருந்த ஜனங்*
*களுக்குத் துன்பங்கள் வரும். அந்த*
*ஜனங்கள் தம் படுக்கையில் கிடந்த வண்ணம்*
*தீய திட்டங்களைத் தீட்டினார்கள். பிறகு*
*காலை வெளிச்சம் வந்ததும் தங்களது*
*திட்டத்தைச் செயல்படுத்த முனைந்தனர்.*
*ஏனென்றால், அவர்களுக்குத் தாங்கள்*
*விரும்பியதைச் செய்யும் வல்லமை இருந்தது.*
2*அவர்கள் வயல்களை விரும்பினார்கள்,*
*எடுத்துக்கொண்டனர். அவர்கள் வீடுகளை*
*விரும்பினார்கள், அதை எடுத்துக்கொண்ட*
*னர். அவர்கள் ஒரு மனிதனை ஏமாற்றி*
*அவனது வீட்டை எடுத்தனர். அவர்கள்*
*ஒரு மனிதனை ஏமாற்றி அவனது நிலத்தை*
*எடுத்தனர்.*

### அந்த ஜனங்களைத் தண்டிக்கக் கர்த்தருடைய திட்டங்கள்

3*அதனால், கர்த்தர் இவற்றைச் சொல்*
*கிறார்: "பார், நான் இந்தக் குடும்பத்திற்கு*
*எதிராக துன்பத்தைக் கொடுக்க திட்ட*
*மிட்டுக் கொண்டிருக்கிறேன். நீங்கள் உங்க*
*ளைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது.*
*நீங்கள் வீண் பெருமைகொள்வதை விடுவீர்*
*கள். ஏனென்றால் தீமைகள் வந்து கொண்டி*
*ருக்கின்றன.*
4*பிறகு ஜனங்கள் உன்னைப்பற்றி பாட்டு*
*இயற்றுவார்கள். ஜனங்கள் இந்தச் சோகப்*
*பாடலைப் பாடுவார்கள்: நாங்கள் அழிக்கப்*
*படுகிறோம். கர்த்தர் எங்களது நிலத்தை*
*எடுத்துக் கொண்டார். அவர் அதனை*
*மற்றவர்களுக்குக் கொடுத்தார். ஆமாம், அவர்*
*எனது நிலங்களை என்னிடமிருந்து எடுத்*
*தார். கர்த்தர் நமது வயல்களைப் பகை*
*வர்களுக்குப் பகிர்ந்து கொடுத்திருக்கிறார்.*
5*எனவே நாம் நிலத்தை அளந்து, கர்த்த*
*ருடைய ஜனங்களுக்குள் பகிர்ந்துக்கொள்ள*
*இயலாது."*

### பிரசங்கம் செய்ய வேண்டாம் என மீகா கேட்டுக் கொள்ளப்படுகிறான்

6*ஜனங்கள் கூறுகிறார்கள்: "எங்களுக்குப்*
*பிரசங்கிக்க வேண்டாம். எங்களைப் பற்றிய*
*அந்தத் தீயவற்றைச் சொல்லவேண்டாம்.*
*எங்களுக்குத் தீயவை எதுவும் ஏற்படாது."*
7*ஆனால் யாக்கோபின் ஜனங்களே, நான்*
*இவற்றை கட்டாயம் சொல்ல வேண்டும்.*
*கர்த்தர் அவரது பொறுமையை இழந்து*
*கொண்டிருக்கிறார். ஏனென்றால் நீங்கள்*
*தீமை செய்திருக்கிறீர்கள். நீங்கள் சரியான*
*படி வாழ்ந்தால் பிறகு நான் உங்களிடம்*
*இனிமையாகப் பேசமுடியும்.*
8*ஆனால் என் ஜனங்களுக்கு, அவர்கள்*
*விரோதியைப்போல் ஆகிறார்கள். நீங்கள்*
*கடந்து செல்லுகிறவர்களின் ஆடைகளைக்*
*களவாடுகிறீர்கள். அந்த ஜனங்கள் தாங்கள்*
*பாதுகாப்பாய் இருப்பதாக நினைக்கிறீர்கள்.*
*ஆனால் நீங்கள் அவர்களிடமிருந்து யுத்தத்*
*தின் கைதிகளிடமிருந்து எடுப்பதுபோல*
*பொருள்களைப் பறித்துகொள்கிறீர்கள்.*
9*நீங்கள் எனது ஜனங்களிலுள்ள பெண்*
*களிடமிருந்து அழகான வீடுகளை எடுத்துக்*
*கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எனது செல்*
*வத்தை அவர்களின் சிறிய பிள்ளை*
*களிடமிருந்து எடுத்துக்கொண்டிருக்கிறீர்கள்.*
10*எழுங்கள், புறப்பட்டுப் போங்கள். இது*
*நீங்கள் ஓய்வெடுக்கும் இடமாக இராது.*
*ஏனென்றால், இந்த இடத்தை நீங்கள் அழித்*
*தீர்கள். இதனை நீங்கள் அசுத்தம் செய்தீர்கள்.*
*எனவே, இது அழிக்கப்படும். இது பயங்*
*கரமான அழிவாக இருக்கும்.*
11*இந்த ஜனங்கள், நான் சொல்வதைக்*
*கேட்க விரும்புவதில்லை. ஆனால் ஒருவன்*
*பொய்களைச் சொல்லிக்கொண்டு வந்தால்,*
*பிறகு, அவனை அவர்கள் ஏற்றுக்கொள்*
*வார்கள். அவர்கள் ஒரு பொய் தீர்க்கத்*
*தரிசியை ஏற்றுக்கொண்டு, அவன் வந்து,*
*"அப்பொழுது வருங்காலம் நல்லகாலமாக*
*தோன்றும், அப்பொழுது திராட்சைரசமும்*
*மதுபானமும் ஏராளமாக கிடைக்கும்"*
*என்று சொன்னதும் அவனையும் ஏற்றுக்*
*கொள்வார்கள்.*

### கர்த்தர் தனது ஜனங்களை ஒன்று சேர்ப்பார்

12*ஆமாம், யாக்கோபின் ஜனங்களே, நான்*
*உங்கள் அனைவரையும் ஒன்று சேர்ப்பேன்.*
*இஸ்ரவேலின் தப்பிப் பிழைத்தவர்கள்*
*அனைவரையும் நான் ஒன்று சேர்ப்பேன்.*
*நான் அவர்களை ஆட்டு மந்தையில் உள்ள*
*ஆடுகளைப்போன்றும் தொழுவத்தில் உள்ள*
*மந்தைகளைப்போன்றும் ஒன்று சேர்ப்பேன்.*
*பிறகு அந்த இடமானது அநேக ஜனங்களின்*
*ஓசைகளால் நிறைந்திருக்கும்.*
13*"தடைகளை உடைப்பவர்" அவர்களை*
*நடத்தி அவர்கள் முன்னே நடந்து செல்*
*கிறார். அவர்கள் தடைகளை நீக்கி,*
*வாசலால் நுழைந்து கடந்து போவார்கள்.*
*அவர்களின் அரசன் அவர்களின் முன்பு*
*நடந்து போவான். கர்த்தர் அவரது ஜனங்க*
*ளுக்கு முன்னால் இருப்பார்.*

---

**அதுல்லாம்** *தாவீது ஒளிந்திருந்த குகை.*

### இஸ்ரவேலின் தலைவர்கள் தீயச் செயல்களை செய்தக் குற்றவாளிகள்

3 பிறகு நான் சொன்னேன்: "இஸ்ரவேல்
நாட்டின் தலைவர்களே! மற்றும் இஸ்ர
வேல் நாட்டின் அதிகாரிகளே, இப்போது
கவனியுங்கள் நீதி என்றால் என்ன என்று
உங்களுக்கு தெரியவேண்டும்.
2ஆனால் நீங்கள் நல்லவற்றை வெறுத்து
தீமையை நேசிக்கிறீர்கள். நீங்கள் ஜனங்க
ளின் தோலை உரிப்பீர்கள், அவர்களின்
எலும்புகளில் உள்ள தசையைப் பிடுங்குவீர்
கள்.
3நீங்கள் எனது ஜனங்களை அழித்தீர்கள்.
அவர்களின் தோலை நீக்குவீர்கள். அவர்
களின் எலும்பை உடைத்தீர்கள். நீங்கள்
அவர்களது சதையை பானையில் போடப்
படும் மாமிசத்தைப்போன்று துண்டு
பண்ணினீர்கள்.
4எனவே, நீங்கள் கர்த்தரிடம் பிரார்த்
தனை செய்யலாம். ஆனால் அவர் பதில்
சொல்லமாட்டார். இல்லை, கர்த்தர் உங்களி
டமிருந்து தன் முகத்தை மறைத்துக்
கொள்வார். ஏனென்றால் நீங்கள் தீயவற்றைச்
செய்கிறீர்கள்!"

### பொய்த் தீர்க்கதரிசிகள்

5சில பொய்த் தீர்க்கதரிசிகள் கர்த்தரு
டைய ஜனங்களிடம் பொய் சொல்கிறார்கள்.
கர்த்தர் அந்தத் தீர்க்கதரிசிகளைப் பற்றி
இதனைச் சொல்கிறார். "இந்தத் தீர்க்க
தரிசிகள் வயற்றுக்காக உழைக்கிறவர்கள்.
உணவு கொடுக்கும் ஜனங்களுக்குச் சமா
தானம் வரும் என்று உறுதி கூறுவார்கள்.
ஆனால் உணவு கொடுக்காதவர்களிடத்தில்
அவர்களுக்கு எதிராக போர் வரும் என்று
உறுதி கூறுவார்கள்.
6அதனால்தான் இது உங்களுக்கு இரவைப்
போன்றது. அதனால்தான் உங்களுக்குத்
தரிசனம் கிடைப்பதில்லை. எதிர்காலத்தில்
என்ன நிகழும் என்பதைப் பற்றிய தரி
சனத்தை நீங்கள் பார்க்கமுடியாது. எனவே
இது உனக்கு அந்தகாரம் போன்றது. இந்தச்
சூரியன் தீர்க்கதரிசிகள் மேல் அஸ்தமித்தி
ருக்கிறது. அவர்களால் எதிர்காலத்தில்
என்ன நடக்கும் என்று பார்க்க முடியாது.
எனவே, இது அவர்களுக்கு அந்தகாரம்
போன்றிருக்கும்.
7தீர்க்கதரிசிகள் வெட்கப்படுகிறார்கள்.
எதிர்காலத்தை குறித்து சொல்கிறவர்கள்
அவமானப்படுகிறார்கள். அவர்கள் எதுவும்
சொல்ல மாட்டார்கள். ஏனென்றால் தேவன்
அவர்களோடு பேசமாட்டார்.

### மீகா ஆண்டவரின் ஒரு நேர்மையான தீர்க்கத்தரிசி

8ஆனால் கர்த்தருடைய ஆவி என்னை
நன்மையினாலும், பலத்தினாலும், வல்லமை
யினாலும் நிரப்பியிருக்கிறது. ஏன்? அத
னால் நான் யாக்கோபிடம் அவனது பாவங்
களைச் சொல்லுவேன். ஆமாம், நான்
இஸ்ரவேலிடம் அவனது பாவங்களைச்
சொல்லுவேன்!"

### இஸ்ரவேலின் தலைவர்கள் பழி சொல்லல்

9யாக்கோபின் தலைவர்களே, இஸ்ரவே
லின் ஆள்வோர்களே, என்னைக் கவனியுங்
கள். நீங்கள் முறையான வாழ்வை வெறுக்
கிறீர்கள். ஏதாவது ஒன்று நேராக இருந்தால்
நீங்கள் அதை கோணலாக மாற்றுகிறீர்கள்.
10நீங்கள் ஜனங்களைக் கொன்று, சீயோ
னைக் கட்டுகிறீர்கள். ஜனங்களை ஏமாற்றி
எருசலேமைக் கட்டுகிறீர்கள்.
11எருசலேமில் உள்ள நீதிபதிகள் வழக்கு
மன்றத்தில் யார் வெல்வார்கள் என்று
சொல்ல உதவிட லஞ்சம் பெறுகிறார்கள்.
எருசலேமில் உள்ள ஆசாரியர்கள் ஜனங்க
ளுக்குக் கற்பிப்பதற்கு முன்னால் பணம்
பெறுகிறார்கள். ஜனங்களின் தீர்க்கதரிசிக
ளுக்கு எதிர்காலம் பற்றி தெரிந்துகொள்
வதற்கு முன்னால் பணம் கொடுக்கவேண்
டும். பிறகு அந்தத் தலைவர்கள் கர்த்தரு
டைய உதவியை எதிர்ப்பார்க்கிறார்கள்"
அவர்கள், "எங்களுக்கு தீயவை எதுவும்
நடக்காது கர்த்தர் எங்களோடு வாழ்கிறார்"
என்றனர்.
12தலைவர்களே, உங்களால், சீயோன்
அழிக்கப்படும். இது உழப்பட்ட வயல்
போன்றிருக்கும். எருசலேம் கற்களின் குவிய
லாய் மாறும். ஆலயம் உள்ள மலைகள்
காட்டு முட்புதர்கள் அதிகம் வளர்ந்து
வெறுமையான மலையாகும்.

### சட்டம் எருசலேமிலிருந்து வரும்

4 இறுதி நாட்களில், கர்த்தருடைய ஆலயம்
அனைத்து மலைகளையும் விட மிக
உயரத்தில் இருக்கும். அந்தக் குன்று மலைக
ளையும் விட உயரமாக உயர்த்தப்பட்டு
இருக்கும். அங்கு எப்போதும் ஜனங்கள்
கூட்டம் சென்று கொண்டிருக்கும்.
2பல நாடுகளிலிருந்து ஜனங்கள் அங்கே
போவார்கள். அவர்கள், "வாருங்கள் கர்த்தரு
டைய பர்வதத்திற்குப் போகலாம். யாக்
கோபின் தேவனுடைய ஆலயத்திற்குப் போ
வோம், பிறகு தேவன் நமக்கு வாழும்
வழியைக் கற்பிப்பார். நாம் அவரைப்
பின்பற்றுவோம்" என்பார்கள். தேவனிட
மிருந்து வரும் பாடங்கள் கர்த்தருடைய
செய்தி சீயோன் குன்றுமேல் உள்ள எருசலே
மில் தொடங்கி உலகம் முழுவதும் செல்லும்.
3பிறகு தேவன் அனைத்து நாடுகளிலும்
உள்ள ஜனங்களுக்கு அவர் நீதிபதியாக
இருப்பார். தேவன் தூர தேசங்களைச்
சேர்ந்த பல ஜனங்களின் விவாதங்களை
முடிப்பார். அந்த ஜனங்கள் போருக்கு
ஆயுதங்களைப் பயன்படுத்துவதை நிறுத்து
வார்கள். அவர்கள் தமது வாள்களிலிருந்து

*கொழுக்களைச் செய்வார்கள். அவர்கள் தம் ஈட்டிகளைச் செடிகளை வெட்டும் கருவி களாகப் பயன்படுத்துவார்கள். ஜனங்கள் மற்றவர்களோடு சண்டையிடுவதை நிறுத்து வார்கள். ஜனங்கள் போரிடுவதற்கு மீண்டும் பயிற்சிபெற மாட்டார்கள்.*

4 *ஒவ்வொருவரும் தமது திராட்சைக் கொடி மற்றும் அத்தி மரங்களின் கீழும் அமர்ந்திருப்பார்கள். எவரும் அவர்களைப் பயப்படும்படிச் செய்யமாட்டார்கள். ஏனென் றால், சர்வ வல்லமையுள்ள கர்த்தர் சொன் னதுபோல நடக்கும்.*

5 *மற்ற நாடுகளில் உள்ள ஜனங்கள் அனை வரும் தமது சொந்தத் தெய்வங்களைப் பின்பற்றுகின்றார்கள். ஆனால் நாங்கள் எங்கள் தேவனாகிய கர்த்தருடைய வழியில் என்றென்றைக்கும் நடப்போம்.*

### இராஜ்யம் திரும்பித் தரப்படும்

6 *கர்த்தர் கூறுகிறார்: "எருசலேம் புண் பட்டு நொண்டியானது. எருசலேம் தூர எறியப்பட்டது. எருசலேம் காயப்படுத்தப் பட்டு தண்டிக்கப்பட்டது. ஆனால் நான் அவளை என்னிடம் திரும்ப கொண்டு வருவேன்.*

7 *அந்'நொண்டி' நகரின் ஜனங்கள், மீதி யான ஜனங்களாவார்கள். சென்றுவிடும்படி நகர ஜனங்கள் பலவந்தப் படுத்தப்பட்டனர். ஆனால் நான் அவர்களை ஒரு வலிமையான நாடாக்குவேன். கர்த்தர் அவர்களுடைய ராஜாவாய் இருப்பார். அவர் என்றென்றும் சீயோன் பர்வதத்திலிருந்து ஆளுவார்.*
8 *மந்தையின் துருகமே,* உங்கள் காலம் வரும். சீயோன், மலையான ஆப்பேலே நீ மீண்டும் ஆட்சி பீடத்தில் அமருவாய். ஆமாம், முற்காலத்தைப்போன்று எருசலே மின் ராஜாங்கம் இருக்கும்."*

### இஸ்ரவேலர்கள் எதற்காக பாபிலோனுக்குப் போகவேண்டும்

9 *இப்பொழுது எதற்காக நீ உரக்க கதறுகி றாய். உங்கள் அரசன் போய்விட்டானா? உங்கள் தலைவரை இழந்து விட்டீர்களா? நீங்கள் பிரசவ வேதனைப்படும் பெண் ணைப் போன்று துன்பப்படுகிறீர்கள்.*

10 *சீயோன் மகளே, வலியை உணர்ந்து கொண்டு உங்கள் "குழந்தையை" பெற்றெ டுங்கள். நீங்கள் நகரை விட்டு (எருசலேம்) வெளியே போகவேண்டும். நீங்கள் வயல் வெளியில் போவீர்கள். நீங்கள் பாபிலோ னுக்குப் போகவேண்டும் எனக் கருதுகி றேன். ஆனால் நீங்கள் அந்த இடத்திலிருந்து கப்பாற்றப்படுவீர்கள். கர்த்தர் அங்கே போய் உங்களைக் காப்பார். அவர் உங்களை உங்கள் எதிரிகளிடமிருந்து எடுப்பார்.*

### கர்த்தர் மற்ற நாடுகளை அழிப்பார்

11 *பல நாட்டினர் உங்களுக்கு எதிராகப் போரிட வந்திருக்கின்றனர். அவர்கள், "பாரு ங்கள், அங்கே சீயோன் இருக்கிறது. அவ ளைத் தாக்குவோம்!" என்கிறார்கள்.*

12 *அந்த ஜனங்கள் அவர்களின் திட்டங் களை வைத்துள்ளனர். ஆனால் கர்த்தர் என்ன திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார் என்பதை அவர்கள் அறியமாட்டார்கள். கர்த்தர் அந்த ஜனங்களை ஒரு சிறப்பான நோக்கத்திற்காக இங்கே கொண்டு வந்தார். அந்த ஜனங்கள் அரவை எந்திரத்தில் போடப்பட்ட தானியத்தைப் போன்று நசுக் கப்படுவார்கள்.*

### இஸ்ரவேல் அதன் எதிரிகளைத் தோற்கடித்து வெல்வார்கள்

13 *"சீயோன் குமாரத்தியே,* எழுந்து அந்த ஜனங்களை நசுக்கு. நான் உன்னைப் பலமுள்ளதாக்குவேன். உனக்கு இரும்பி னாலான கொம்புகளும், வெண்கலத்தாலான குளம்புகள் உள்ளது போன்றும் இருக்கும். நீ பல மக்களை அடித்துச் சிறிய துண்டு களாக்குவாய். அவர்களின் செல்வத்தை கர்த்தருக்குக் கொடுப்பாய். பூமிக்கெல்லாம் கர்த்தராய் இருப்பவர்க்கு அவர்களுடைய பொக்கிஷத்தை நீ கொடுப்பாய்."*

5 *இப்பொழுது வலிமையான நகரமே, உனது வீரர்களை கூட்டு. அவர்கள் நம்மைத் தாக்குவதற்கு நம்மை சுற்றி இருக் கிறார்கள். அவர்கள் இஸ்ரவேலின் நீதிபதி யைத் தன் தடியால் கன்னத்தில் அடிப்பார் கள்.*

### பெத்லேகேமில் மேசியா பிறப்பார்

2 *எப்பிராத்தா என்று அழைக்கப்படும் பெத்லேகேமே, நீ தான் யூதாவிலேயே சிறிய நகரம். உனது குடும்பம் எண்ண முடியாத அளவிற்குச்சிறியது. ஆனால் "இஸ்ரவேலை ஆள்பவர்" எனக்காக உங்களி டமிருந்து வருவார். அவரது துவக்கங்கள் நீண்டகலாத்திற்கு முன்பாகவும் பழங்காலத்தி லிருந்து இருக்கின்றன.*

3 *வாக்குதத்தம் பண்ணப்பட்ட அரசனான குழந்தையை, அந்தப்பெண் பெற்றெடுக்கும் வரை கர்த்தர் தமது ஜனங்களை கைவிட்டு விடுவார். பிறகு மீதியுள்ள அவனது மற்ற சகோதரர்கள் இஸ்ரவேலுக்கு திரும்பி வருவார்கள்.*

4 *பின்னர் இஸ்ரவேலை ஆள்பவர் நின்று மந்தைகளை மேய்ப்பார். அவர் அவர்களை கர்த்தருடைய ஆற்றலால், தேவனாகிய கர்த்த ருடைய அற்புதமான நாமத்தால் அவர்களை வழி நடத்துவார். ஆம், அவர்கள் சமாதா னமாக வாழ்வார்கள். ஏனென்றால் அந்த*

---

***மந்தையின் துருகம்*** *எருசலேமின் ஒரு பகுதி.*

***சீயோன் மகள்*** *எருசலேமின் இன்னொரு பெயர்.*

நேரத்தில், அவரது மகிமை பூமியின் எல்லை
வரை செல்லும்.
5ஆமாம், நமது நாட்டிற்குள் அசீரியன்
படை வரும். அப்படை நமது பெரிய
வீடுகளை அழிக்கும். ஆனால், இஸ்ரவே
லரின் ஆள்பவர் ஏழு மேய்ப்பர்களையும்
அவர் எட்டுத்தலைவர்களையும் தேர்ந்தெடுப்
பார்.
6அவர்கள் தமது வாள்களைப் பயன்
படுத்தி அசீரியர்களை ஆள்வார்கள். அவர்
கள் கையில் வாள்களுடன் நிம்ரோதின்*
தேசத்தை ஆள்வார்கள். அவர்கள் அந்த
ஜனங்களை ஆள தமது வாள்களைப்
பயன்படுத்துவார்கள். பின்னர் இஸ்ரவேலை
ஆள்பவர், நமது நாட்டிற்குள் வந்து எல்லை
களையும் நிலங்களையும் வீடுகளை மிதிக்கும்
அசீரியர்களிடமிருந்து நம்மைக் காப்பாற்று
வார்.
7பிறகு யாக்கோபிலே மீதியானவர்கள்
கர்த்தரிடமிருந்து வருகிற பனியைப்போன்று
ஜனங்களிடையே சிதறிப்போவார்கள். அவர்
கள், புல்லின்மேல் விழுகிற பனியைப்
போன்று ஜனங்களிடையே இருப்பார்கள்.
அவர்கள் எவருக்காகவும் காத்திருக்கமாட்
டார்கள். அவர்கள் எவருக்காகவும் எந்த
மனிதன் மேலும் சார்ந்திருக்கமாட்டார்கள்.
8யாக்கோபிலே மீதமானவர்கள், காட்டு
மிருகங்களிடையே உள்ள சிங்கத்தைப்
போன்று பல தேசங்களிடையே இருப்பார்
கள். அவர்கள் ஆட்டு மந்தைகளிடையே
உள்ள இளஞ் சிங்கத்தைப்போன்று இருப்
பார்கள். சிங்கம் கடந்துபோனாலும் அது
தான் விரும்பிய இடத்துக்குப் போகும்.
அது ஒரு மிருகத்தைத் தாக்கினால், எவரா
லும் அந்த மிருகத்தைக் காப்பாற்ற முடியாது.
மீதமானவர்களும் அவ்வாறே இருப்பார்கள்.
9நீங்கள் உங்களது பகைவருக்கு எதிராகக்
கைகளைத் தூக்கி அவர்களை அழிப்பீர்கள்.

### ஜனங்கள் தேவனைச் சார்ந்திருப்பார்கள்

10கர்த்தர், "நான் அந்த வேளையில்
உங்கள் குதிரைகளை உங்களிடமிருந்து அப
கரிப்பேன். நான் உங்கள் இரதங்களை
அழிப்பேன்.
11நான் உங்கள் நாட்டிலுள்ள நகரங்களை
அழிப்பேன். நான் உங்கள் கோட்டைகளை
யெல்லாம் நொறுக்குவேன்.
12நீங்கள் இனிமேல் சூன்ய வித்தைகளை
செய்ய மாட்டீர்கள். நீங்கள் இனிமேல்
எதிர்காலத்தைப்பற்றி குறி சொல்லும்
ஆட்களைப் பெற்றிருக்க மாட்டீர்கள்.
13நான் உங்களது அந்நிய தெய்வங்களின்
உருவச் சிலைகளை உடைத்தெறிவேன்.
சிலைகளை அழிப்பேன். அந்நிய தெய்வங்
களை நினைவுப்படுத்தும் கற்களை நான்
உடைத்தெறிவேன். உங்கள் கைகளால்
செய்யப்பட்டவற்றை நீங்கள் வழிபட
மாட்டீர்கள்.
14நான் உன் அஷ்ரா சிலைக் கம்பங்கள்
வழிபடாதவாறு அழிப்பேன். நான் உனது
அந்நிய தெய்வங்களை அழிப்பேன்.
15சில ஜனங்கள் நான் சொல்வதைக்
கேட்கமாட்டார்கள். நான் எனது கோபத்
தைக் காட்டுவேன். நான் அந்த தேசங்களைப்
பழிவாங்குவேன்."

### கர்த்தருடைய முறையீடு

6 இப்பொழுது கர்த்தர் என்ன சொல்கிறார்
எனக் கேளுங்கள். உனது வழக்கை
மலைகளுக்கு முன் சொல். அம்மலைகள்
உங்களது வழக்கையைக் கேட்கட்டும்.
2கர்த்தர் தமது ஜனங்களுக்கு எதிராக
முறையிடுகிறார். மலைகளே, கர்த்தருடைய
முறையீட்டைக் கேளுங்கள். பூமியின் அஸ்தி
பரங்களே, கர்த்தர் சொல்கிறதைக் கேளுங்
கள். இஸ்ரவேல் தவறானது என்று அவர்
நிரூபிப்பார்.
3கர்த்தர் கூறுகிறார், "என் ஜனங்களே,
நான் செய்தவற்றைச் சொல்லுங்கள். நான்
உங்களுக்கு எதிராக ஏதாவது செய்தேனா?
நான் உங்களது வாழ்வைக் கடினமானதாக்கி
னேனா?
4நான் செய்தவற்றை உங்களிடம் சொல்லு
வேன். நான் உங்களிடம் மோசே, ஆரோன்,
மீரியாம் ஆகியோரை அனுப்பினேன். நான்
உங்களை எகிப்து தேசத்திலிருந்து கொண்டு
வந்தேன், நான் உங்களை அடிமைத்தனத்தில்
இருந்து விடுதலை செய்தேன்.
5என் ஜனங்களே, மோவாப்பின் அரச
னான பாலாக்கினுடைய தீயத் திட்டங்களை
நினைத்துப்பாருங்கள். பேயோரின் மகனான
பிலேயாம் பாலாக்கிடம் சொன்னவற்றை
நினைத்துப்பாருங்கள். அகாசியாவிலிருந்து
கில்கால் வரை நடந்தவற்றை நினைத்துப்பா
ருங்கள். அவற்றை நினைத்துப்பாருங்கள்.
கர்த்தர் சரியானவர் என்று அறிவீர்கள்."

### நம்மிடமிருந்து தேவன் என்ன விரும்புகிறார்

6நான் கர்த்தரை சந்திக்க வரும்போது
என்ன கொண்டு வரவேண்டும். நான்
தேவனைப் பணியும்போது என்ன செய்ய
வேண்டும். நான் கர்த்தருக்கு தகன பலியும்
ஓராண்டு நிறைந்தக் கன்றுக்குட்டியையும்
கொண்டு வரவேண்டுமா?
7கர்த்தர் 1,000 ஆட்டுக்குட்டிகளாலும்
10,000 ஆறுகளில் ஓடும் எண்ணையாலும்
திருப்தி அடைவாரா? நான் எனது முதல்
குழந்தையை என் பாவங்களுக்குப் பரிகார
மாகத் தரட்டுமா? என் சரீரத்திலிருந்து
வந்த குழந்தையை நான் பாவத்துக்குப்
பரிகாரமாகத் தரட்டுமா?
8மனிதனே, நன்மை எதுவென்று கர்த்தர்
உன்னிடம் சொல்லியிருக்கிறார். கர்த்தர்

---

**நிம்ரோத்** அசிரியாவின் இன்னொரு பெயர்.

உன்னிடமிருந்து இதைத்தான் விரும்புகிறார்.
மற்றவர்களிடம் நியாயமாய் இரு. கருணை
யோடும் நம்பிக்கையோடும் நேசி. உனது
தேவனோடு தாழ்மையாய் இரு. நீ அவரை
பொக்கிஷத்தினால் கவர முயலாதே.

## இஸ்ரவேலர்கள் என்ன செய்துகொண்டிருந்தார்கள்

9கர்த்தருடைய சத்தம் நகரத்தை நோக்கிக்
கூப்பிடுகிறது. ஞானவான் கர்த்தருடைய
நாமத்தை உயர்த்துகிறான். எனவே தண்ட
னையின் தடியைக் கவனியுங்கள், தண்ட
னையின் தடியைப் பிடிப்பவரையும் கவனி
யுங்கள்.
10தீயவர்கள் தாம் திருடிய சொத்துக்களை
இன்னும் மறைத்துவைப்பார்களா?தீயவர்கள்
வியாபாரத்தில் மிகச் சிறியக் கூடைகளை
வைத்து இன்னும் ஜனங்களை ஏமாற்
றுவார்களா? ஆம் இந்த செயல்களெல்லாம்
இன்னும் நடக்கிறது.
11இன்னும் தமது எடைக்கற்களாலும்
அளவு கோல்களாலும் ஜனங்களை ஏமாற்று
கிறவர்களை, நான் மன்னிப்பேனா? கள்ளத்
தராசும், கள்ளப் படிக்கற்களுள்ள பையும்
வைத்து தவறாக அளக்கிறவர்களை நான்
மன்னிப்பேனே? இல்லை.
12செல்வந்தர்கள் நகரத்தில் இன்னும்
கொடுமை செய்கிறார்கள். அந்நகர ஜனங்கள்
இன்னும் பொய்ச்சொல்கிறார்கள். ஆமாம்,
அந்த ஜனங்கள் தம் பொய்களைச் சொல்
கின்றனர்.
13எனவே நான் உன்னைத் தண்டிக்கத்
தொடங்கினேன். நான் உன்னுடைய பாவங்
களினிமித்தம் உன்னை அழிப்பேன்.
14நீ உண்பாய், ஆனால் உன் வயிறு
நிறையாது. நீ இன்னும் பசியாகவும் வெறு
மையாகவும் இருப்பாய். நீ பாதுகாப்புக்காக
ஜனங்களை அழைத்துவர முயற்சி செய்
வாய். யாரைப் பாதுகாத்தாயோ, அவர்களை
யும் நான் பட்டயத்துக்கு ஒப்புகொடுப்பேன்.
15விதைகளை விதைப்பாய், ஆனால்
உணவை அறுவடை செய்யமாட்டாய். நீ
உனது ஒலிவ மரங்களிருந்து எண்ணெய்
எடுக்க அவற்றை பிழிவாய். ஆனால் எண்
ணெய் பெறமாட்டாய். நீ திராட்சைப்
பழங்களை பிழிவாய். ஆனால் போதுமான
திராட்சைரசம் குடிக்கக் கிடைக்காது.
16ஏனென்றால் நீ ஓம்ரியின்* சட்டங்க
ளுக்குக் கீழ்படிவாய். நீ ஆகாப் குடும்பம்
செய்தத் தீயவற்றைச் செய்வாய். நீ
அவர்களின் உபதேசங்களைப் பின்பற்று
வாய். எனவே நான் உன்னை அழியும்படி
விடுவேன். ஜனங்கள் உனது அழிந்த நகரங்
களைக் காணும்போது பரிகசித்து ஆச்
சரியப்படுவார்கள். அந்நிய நாட்டு ஜனங்
களின் நிந்தையை நீங்கள் சுமப்பீர்கள்.

## மீகா ஜனங்கள் செய்த பாவங்களால் கலக்கமடைந்தான்

7 நான் கலக்கமடைந்தேன். ஏனென்றால்,
நான் சேகரிக்கப்பட்டிருக்கிற பழங்க
ளைப் போன்றவன். பறிக்கப்பட்டத் திராட்
சைப் பழங்களைப் போன்றவன். உண்ப
தற்குத் திராட்சைகள் இல்லாமல் போகும்.
நான் விரும்பும் அத்திப் பழங்கள் இல்லாமல்
போகும்.
2நான் கூறுவது என்னவெனில் நம்பிக்
கைக்குரிய ஜனங்கள் எல்லாம் போய்விட்
டார்கள். நாட்டில் நல்ல ஜனங்கள் எவரும்
மீதியாகவில்லை. ஒவ்வொருவரும் மற்றவர்
களைக் கொல்ல காத்துக்கொண்டிருக்கின்ற
னர். ஒவ்வொருவரும் தம் சகோதரர்களை
வலையில் பிடிக்க விரும்புகின்றனர்.
3ஜனங்கள் தங்களின் இரண்டு கைகளி
னால் தீமை செய்ய நல்லவர்களாக இருக்கி
றார்கள். அதிகாரிகள் வஞ்சத்தைக் கேட்கி
றார்கள். வழக்கு மன்றத்தில் தீர்ப்பை மாற்ற
நீதிபதிகள் பணம் பெறுகிறார்கள். "முக்கிய
மான தலைவர்கள்" நல்லதும் நேர்மையான
துமான முடிவுகளைச் செய்கிறதில்லை.
அவர்கள் எதை விரும்புகிறார்களோ அத
னைச் செய்வார்கள்.
4அவர்களில் நல்லவர் கூட முட்புதர்
போன்றுள்ளனர். அவர்களில் மிகச் சிறந்
தவர்கள் கூட பின்னிப்பிணைந்து கிடக்கும்
முட்புதரைவிட வஞ்சகர்களாக இருக்கிறார்
கள்.

## தண்டனை நாள் வருகிறது

இந்த நாள் வரும் என்று உங்களுடைய
தீர்க்கதரிசிகள் சொன்னார்கள். உங்களது
காவற்காரரின் நாள் வந்திருக்கிறது. இப்
பொழுது நீங்கள் தண்டிக்கப்படுவீர்கள். இப்
பொழுது நீங்கள் குழம்பிப்போய் இருக்கிறீர்
கள்.
5உங்களது அயலாரை நம்பாதீர்கள். நண்
பர்களை நம்பாதீர்கள். உங்கள் மனைவியிட
மும் உண்மையைப் பேசாதீர்கள்.
6ஒருவரின் எதிரிகள் அவனது சொந்த
வீட்டுக்குள்ளேயே இருப்பார்கள். ஒரு மகன்
அவனது தந்தையை மதிக்கமாட்டான். ஒரு
மகள் தன் தாய்க்கு எதிராகத் திரும்புவாள்.
ஒரு மருமகள் தன் மாமியார்க்கு எதிராகத்
திரும்புவாள்.

## கர்த்தரே இரட்சகர்

7எனவே, நான் கர்த்தரிடம் உதவிக்காக
வேண்டுவேன். நான், தேவன் என்னைக்
காப்பாற்றுவார் எனக் காத்திருந்தேன். என்
தேவன் நான் சொல்வதைக் கேட்பார்.
8நான் விழுந்திருக்கிறேன். ஆனால் பகை
வனே, என்னைப்பார்த்துச் சிரிக்காதே, நான்

---

**ஓம்ரி** இஸ்ரவேலின் அரசன் பொய்த் தெய்வங்களை தன் நாட்டில் வழிபடச் செய்தவன்.

மீண்டும் எழுந்திருப்பேன். நான் இப்பொழுது இருளில் அமர்ந்திருக்கிறேன். ஆனால் கர்த்தர் எனக்கு ஒளியாக இருப்பார்.

### கர்த்தர் மன்னிக்கிறார்

9நான் கர்த்தருக்கு விரோதமாகப் பாவம் செய்தேன். எனவே அவர் என்னோடு கோபமாக இருந்தார். ஆனால் அவர் வழக்கு மன்றத்தில் எனக்காக வாதாடுவார். அவர் எனக்குச் சரியானவற்றை செய்வார். பின்னர் அவர் என்னை வெளிச்சத்திற்குள் கொண்டு வருவார். அவர் சரியானவர் என்று நான் பார்ப்பேன்.
10என் எதிரி என்னிடம், “உன் தேவனாகிய கர்த்தர் எங்கே?” என்றாள். ஆனால் என் எதிரி இதனைப் பார்ப்பாள். அவள் அவமானம் அடைவாள். அந்த நேரத்தில், நான் அவளைப் பார்த்து சிரிப்பேன். ஜனங்கள் அவளுக்கு மேலே தெருவிலுள்ள புழுதியைப் போன்று நடப்பார்கள்.

### திரும்புகிற யூதர்கள்

11காலம் வரும், உங்களது சுவர்கள் மீண்டும் கட்டப்படும். அந்த நேரத்தில் நாடு வளரும்.
12உனது ஜனங்கள் உன் நாட்டிற்குத் திரும்புவார்கள். அவர்கள் அசீரியாவிலிருந்தும் எகிப்தின் நகரங்களிலிருந்தும் திரும்பி வருவார்கள். உனது ஜனங்கள் எகிப்திலிருந்தும் ஐபிராத்து ஆற்றின் அடுத்தப் பக்கத்திலிருந்தும் வருவார்கள். அவர்கள் மேற்கிலுள்ள கடல் பகுதியிலிருந்தும் கிழக்கிலுள்ள மலைகளிலிருந்தும் வருவார்கள்.
13அந்த நிலமானது அங்கு வாழ்ந்த ஜனங்களின் தீய செயல்களால் அழிக்கப்பட்டது.
14எனவே உனது ஜனங்களை நீ கோலினால் ஆட்சி செய். உனக்குச் சொந்தமான உன் ஜனங்கள் கூட்டத்தை நீ ஆட்சிசெய். அக்கூட்டம் காடுகளிலும், கர்மேல் மலையிலும் தனியாக வாழ்கின்றது. பாசானிலும், கீலேயாத்திலும் வாழ்கிற ஜனங்கள் முன்பு மேய்ந்தது போலவே மேய்வார்களாக.

### இஸ்ரவேல் பகைவர்களை வெல்லும்

15நான் உங்களை எகிப்திலிருந்து மீட்டு வரும்போது பல அற்புதங்களைச் செய்தேன். நான் அவற்றைப்போன்று நீங்கள் பல அற்புதங்களைப் பார்க்கும்படிச் செய்வேன்.
16அந்நாடுகள் அந்த அற்புதங்களைப் பார்க்கும். அவர்கள் அவமானம் அடைவார்கள். அவர்களின் “வல்லமை” என்னோடு ஒப்பிட இயலாது என்பதை அவர்கள் காண்பார்கள். அவர்கள் ஆச்சரியத்தோடு தமது கைகளை வாயில் வைத்துக்கொள்வார்கள். அவர்கள் கவனிக்க மறுத்து தங்கள் காதுகளைக் மூடிக்கொள்வார்கள்.
17அவர்கள் பாம்புகளைப்போன்று மண்ணை நக்குவார்கள். அவர்கள் பயத்தால் நடுங்குவார்கள். அவர்கள் தரையின் துவாரங்களில் உள்ள ஊர்வனவற்றைப்போன்று வெளியேவந்து தேவனாகிய கர்த்தரை அடைவார்கள். தேவனே, அவர்கள் அஞ்சி உம்மை மதிப்பார்கள்.

### கர்த்தருக்குத் துதி

18உம்மைப்போன்று வேறு தேவன் இல்லை. ஜனங்களின் குற்றங்களை நீர் அகற்றி விடுகிறீர். தேவன் தமது சுதந்தரத்தில் மீதியானவர்களை மன்னிக்கிறார். தேவன் என்றென்றும் கோபத்தோடு இரார். ஏனென்றால் அவர் கருணையோடு இருப்பதில் மகிழ்கிறார்.
19தேவன், மீண்டும் திரும்பி வருவார், நமக்கு ஆறுதல் தருவார். நமது பாவங்களை, குற்றங்களை நீக்கி (நசுக்கி) எல்லாவற்றையும் ஆழமான கடலுக்குள் எறிந்துவிடுவார்.
20தேவனே, யாக்கோபுக்கு உண்மையாய் இருப்பீர். ஆபிரகாமிடம் உமது உண்மையும் அன்பையும் காட்டுவீர். நீண்ட காலத்துக்கு முன்னால் நீர் எங்கள் முற்பிதாக்களுக்கு வாக்களித்தபடி செய்யும்.

# நாகூம்

1 இந்தப்புத்தகம் எல்கோசனாகிய நாகூமின்
தரிசனம். இது நினிவே* நகரத்தைப்
பற்றிய துயரமான இறைவாக்கு.

**கர்த்தர் நினிவே மேல் கோபமாயிருக்கிறார்.**

2 கர்த்தர் ஒரு எரிச்சலுள்ள தேவன்,
கர்த்தர் குற்றமுடையவர்களைத் தண்டிக்கி
றார். கர்த்தர் குற்றம் செய்தவர்களைத்
தண்டிக்கிறவரும், மிகவும் கோபமான
வருமாயிருக்கிறார்! கர்த்தர் தனது பகை
வர்களைத் தண்டிக்கிறார். அவர் தனது
பகைவர்கள் மீது கோபத்தை வைத்திருக்
கிறார்.
3 கர்த்தர் பொறுமையானவர். ஆனால்
அவர் வல்லமையுடையவராகவும் இருக்கி
றார். கர்த்தர் குற்றம் செய்கிறவர்களைத்
தண்டிப்பார். அவர் அவர்களை விடுதலை
பெற விடமாட்டார். கர்த்தர் தீயவர்களைத்
தண்டிக்க வந்துகொண்டிருக்கிறார். அவர்
தமது ஆற்றலைக் காட்டுவதற்காகப் புயலை
யும் சுழற்காற்றையும் பயன்படுத்துவார். ஒரு
மனிதன் தரையின் மேலும் புழுதியின்
மேலும் நடக்கிறான். ஆனால் கர்த்தரோ
மேகங்களின்மேல் நடக்கிறார்.
4 கர்த்தர் கடலிடம் அதட்டி பேசுவார்.
அது வறண்டுபோகும். அவர் அனைத்து
ஆறுகளையும் வற்றச்செய்வார். வளமான
நிலமுடைய பாசானும் கர்மேலும் வறண்டு
போகும். லீபனோனின் மலர்கள் வாடிப்
போகும்.
5 கர்த்தர் வருவார், குன்றுகள் அச்சத்தால்
நடுங்கும், மலைகள் உருகிப்போகும். கர்த்தர்
வருவார், பூமி அச்சத்தால் நடுங்கும். உலக
மும் அதிலுள்ள ஒவ்வொருவரும் அச்சத்தால்
நடுங்குவார்கள்.
6 கர்த்தருடைய பெருங்கோபத்திற்கு எதி
ராக எவரும் நிற்கமுடியாது. எவராலும்
அவரது பயங்கரக் கோபத்தைத் தாங்க
முடியாது. அவரது கோபம் நெருப்பைப்
போன்று எரியும். அவர் வரும்போது
கல்மலைகள் பேர்க்கப்படும்.
7 கர்த்தர் நல்லவர். அவர் இக்கட்டான
காலங்களில் நாம் செல்லக்கூடிய பாதுகாப்
பான இடம். அவர் தன்னை நம்புகிறவரைக்
கவனிக்கிறார்.
8 ஆனால் அவர் அவரது எதிரிகளை
முழுவதுமாக அழிப்பார். அவர் ஒரு
வெள்ளத்தைப் போன்று அவர்களை அழிப்
பார். அவர் தமது எதிரிகளை இருளுக்குள்
துரத்துவார்.
9 நீங்கள் ஏன் கர்த்தருக்கு எதிராகத்
திட்டமிடுகிறீர்கள். அவர் முழுமையான
அழிவைக் கொண்டுவருவார், எனவே நீங்
கள் மீண்டும் துன்பங்களுக்கு காரணராக
மாட்டீர்கள்.
10 முட்செடிகள் பானையின் கீழ் எறிந்து
அழிவதுபோல நீங்கள் முற்றிலும் அழிக்கப்
படுவீர்கள். காய்ந்துப்போன பதர் வேகமாக
எரிவதுபோன்று நீங்கள் வெகு விரைவாக
அழிக்கப்படுவீர்கள்.
11 அசீரியாவே, உன்னிடமிருந்து ஒரு மனி
தன் வந்தான். அவன் கர்த்தருக்கு எதிராகத்
தீயவற்றை திட்டமிட்டான். அவன் தீய
ஆலோசனைகளைத் தந்தான்.
12 கர்த்தர் யூதாவுக்கு இதனைச் சொன்னார்:
“அசீரியாவின் ஜனங்கள் முழுபலத்தோடு
இருக்கிறார்கள். அவர்களிடம் ஏராளமான
வீரர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள்
அனைவரும் வெட்டி எறியப்படுவார்கள்.
அவர்கள் அனைவரும் முறியடிக்கப்
படுவார்கள். என் ஜனங்களே, நான் உங்
களைத் துன்புறுத்தினேன். ஆனால் நான்
இனிமேல் உங்களைத் துன்புறுத்தமாட்டேன்.
13 இப்பொழுது நான் உங்களை அசீரி
யாவின் அதிகாரத்தில் இருந்து விடுதலை
செய்வேன். நான் உங்கள் கழுத்தில் உள்ள
அந்த நுகத்தை* எடுப்பேன். நான் உங்க
ளைக் கட்டியிருக்கிற சங்கிலிகளை அறுப்
பேன்.
14 அசீரியாவின் அரசனே, கர்த்தர் உன்
னைக் குறித்து இந்தக் கட்டளையை கொடுத்
தார்:
“உன் பெயரை வைத்துக்கொள்ள சந்ததி
யார் யாரும் உனக்கு இருக்கமாட்டார்கள்.
நான் உன் தெய்வங்களின் ஆலயங்களில்
உள்ள செதுக்கப்பட்ட விக்கிரகங்களையும்
உலோகச் சிலைகளையும் அழிப்பேன். நான்

---

**நினிவே** அசீரியா நாட்டின் தலைநகரம். அசீரியா இஸ்ரவேலை கி.மு. 722-721ல் அழித்தது.

**நுகம்** ஜனங்கள் தம் தோள்களில் பொருள்களைத் தூக்கிச் செல்ல பயன்படுத்தும் தடி. இது ஒருவன் அடிமையாக இருந்தான் என்பதைக் காட்டும்.

உனக்காக உனது கல்லறையைத் தயாரித்துக்
கொண்டிருக்கிறேன். உனது முடிவு விரை
வில் வர இருக்கிறது.
15 யூதாவே, பார்! அங்கே பார், குன்று
களுக்குமேல் வருவதைப் பார். இங்கே நல்ல
செய்தியைத் தாங்கிக்கொண்டு தூது வன்
வருகிறான். அங்கே சமாதானம் இருக் கிறது
என்று அவன் சொல்கிறான். யூதாவே,
உனது விடுமுறை நாட்களைக் கொண்டாடு.
யூதாவே, நீ வாக்களித்தவற்றைச் செய்.
தீய ஜனங்கள் உன்னை மீண்டும் தாக்கித்
தோற்கடிக்கமாட்டார்கள். ஏனெனில் அந்தத்
தீய ஜனங்கள் அனைவரும் அழிக்கப்ப
டுவார்கள்.

## நினிவே அழிக்கப்படும்

2 ஒரு பகைவன் உன்னைத் தாக்க வந்து
கொண்டிருக்கிறான். எனவே உன்
நகரத்தின் வலிமையான பகுதிகளைக்
காவல் செய். சாலைகளைக் காவல் காத்திடு.
போருக்குத் தயாராக இரு. யுத்தத்திற்கான
ஏற்பாடுகளைச் செய்.
2 ஆம், கர்த்தர் யாக்கோபின் மகிமையை
மாற்றினார். இது இஸ்ரவேலரின் மகிமை
போன்றிருக்கும். பகைவன் அவற்றை அழித்
தான்; அவர்களின் திராட்சைக் கொடிகளை
அழித்தான்.
3 அவ்வீரர்களின் கேடயங்கள் சிவந்திருக்கி
றது. அவர்களின் சீருடைகள் பிரகாசமான
சிவப்பாக உள்ளது. அவர்களின் இரதங்கள்
போருக்கு வரிசையாக உள்ளன, நெருப்பின்
ஜீவாலையைப்போன்று மின்னுகின்றன.
அவர்களின் குதிரைகள் போவதற்கு தயா
ராக உள்ளன.
4 அவர்களின் இரதங்கள் தெருக்களில்
போட்டியிட்டு ஓடுகின்றன. தெருக்களின்
இடது சாரியாகவும் வலதுசாரியாகவும்
ஓடுகின்றன. அவை எரியும் பந்தங்களைப்
போன்றும், அங்குமிங்கும் மின்னும்
மின்னலைப் போலவும் காணப்படுகின்றன.
5 விரோதி தனது சிறந்த வீரர்களை
அழைக்கிறான். ஆனால் அவர்கள் மதிற்சு
வரை நோக்கி ஓடி, அங்குள்ள சுவர்களைத்
தகர்க்கும் கருவியின்மேல் அவர்களின் கேட
யத்தை நிறுவுகிறார்கள்.
6 ஆனால் ஆற்றின் மதகுகள் திறக்கப்படு
கின்றன. எதிரிகள் அவ்வழியாக வந்து
அரசனின் வீட்டை அழிக்கிறார்கள்.
7 பகைவர்கள் ராணியைப் பிடித்துச்செல்
வார்கள். அவளது அடிமைப்பெண்கள் புறாக்
களைப்போன்று துக்கத்துடன் அழுவார்கள்.
அவர்கள் தம் மார்பில் அடித்துக் கொண்டு
தமது துக்கத்தைக் காட்டுவார்கள்.
8 நினிவே, தண்ணீர் வற்றிப்போன குளத்
தைப்போன்று இருக்கிறது. ஜனங்கள், "நிறுத்
துங்கள்! ஓடுவதை நிறுத்துங்கள்!" என்று
சொன்னார்கள். ஆனால் அது பயன்
தரவில்லை.
9 நினிவேயை அழிக்கப்போகும் வீரர்களா
கிய நீங்கள், வெள்ளியை எடுங்கள்!
தங்கத்தை எடுங்கள்! அங்கே எடுப்பதற்கு
ஏராளமாக உள்ளன. அங்கே ஏராளமான
கருவூலங்கள் உள்ளன.
10 இப்பொழுது, நினிவே காலியாக இருக்
கிறது, எல்லாம் திருடப்பட்டன. நகரம்
அழிக்கப்பட்டது. ஜனங்கள் தங்கள் தைரி
யத்தை இழந்தனர். அவர்களது இதயங்கள்
அச்சத்தால் உருகின. அவர்களது முழங்கால்
கள் ஒன்றோடொன்று இடித்துக்கொண்டன,
அவர்களது உடல்கள் நடுங்குகின்றன, அவர்
களது முகங்கள் அச்சத்தால் வெளுத்தன.
11 இப்பொழுது சிங்கத்தின் குகை (நினிவே)
எங்கே? ஆண்சிங்கமும் பெண்சிங்கமும் அங்
கே வாழ்ந்தன. அவற்றின் குட்டிகள் அஞ்ச
வில்லை. 12 சிங்கமானது (நினிவேயின் அர
சன்) தனது குட்டிகளுக்கும் பெண்சிங்கத்திற்
கும் உணவு கொடுப்பதற்காக ஏராளமான
ஜனங்களைக் கொன்று அழித்தது. அது
தனது குகையை (நினிவே) ஆண்களின்
உடல்களால் நிறைத்தது. அது தான் கொன்ற
பெண்களின் உடல்களால் குகையை நிறைத்
தது.
13 சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்;
"நினிவே, நான் உனக்கு எதிராக இருக்கி
றேன். நான் உனது இரதங்களை எரிப்பேன்.
நான் உனது 'இளஞ்சிங்கங்களைப்' போரில்
கொல்வேன். நீ இந்த பூமியில் மீண்டும்
எவரையும் வேட்டையாடமாட்டாய் ஜனங்
கள் உனது தூதுவர்களிடமிருந்து மீண்டும்
கெட்ட செய்திகளைக் கேட்கமாட்டார்கள்."

## நினிவேவுக்குக் கெட்டச் செய்தி

3 அந்த கொலைகாரர்களின் நகரத்திற்கு
இது மிகவும் கெட்டதாக இருக்கும்.
நினிவே, பொய்கள் நிறைந்த நகரமாக
இருக்கிறது. இது மற்ற நாடுகளில் இருந்து
எடுக்கப்பட்ட பொருட்களால் நிறைந்திருக்
கிறது. இந்நகரம், கொன்றும், கொள்ளைய
டித்து கொண்டுவந்த ஜனங்களாலும் அதிக
மாக நிறைந்துள்ளது.
2 நீங்கள், சவுக்குகளின் ஓசையையும்,
சக்கரங்களின் அதிர்ச்சியையும், குதிரைக
ளின் பாய்ச்சலையும், இரதங்களின் ஓடுகிற
சத்தத்தையும் கேட்கமுடியும். 3 குதிரைமேல்
வந்த வீரர்கள் தாக்குகின்றனர். அவர்களின்
வாள்கள் மின்னுகின்றன. அவர்களின் ஈட்டி
கள் மின்னுகின்றன. அங்கே, ஏராளமான
மரித்த ஜனங்கள், மரித்த உடல்கள் குவிந்
துள்ளன. எண்ணுவதற்கு முடியாத ஏராள
மான உடல்கள் உள்ளன. ஜனங்கள் மரித்த
உடல்களில் தடுக்கி விழுகின்றனர்.
4 இவை அனைத்தும் நினிவேயால் ஏற்பட்
டன. நினிவே, ஒரு வேசியைப் போன்றவள்.
அவளுக்குத் திருப்தி இல்லை. அவள் மேலும்
மேலும் விரும்பினாள். அவள் தன்னைத்
தானே பல நாடுகளுக்கு விற்றாள். அவள்

அவர்களைத் தன் அடிமையாக்க மந்திரத்
தைப் பயன்படுத்தினாள்.
5சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
“நினிவே, நான் உனக்கு எதிராக இருக்கி
றேன். நான் உனது ஆடைகளை* உன்
முகம்மட்டும் தூக்குவேன். நான் உனது
நிர்வாண உடலை தேசங்கள் பார்க்கும்படிச்
செய்வேன். அந்த இராஜ்யங்கள் உனது
அவமானத்தைக் காணும்.
6நான் உன்மேல் அசுத்தமானவற்றை எறி
வேன். நான் உன்னை வெறுக்கத்தக்க
முறையில் நடத்துவேன். ஜனங்கள் உன்
னைப்பார்த்து சிரிப்பார்கள்.
7உன்னைப் பார்க்கிற ஒவ்வொருவரும்
அதிர்ச்சி அடைவார்கள். அவர்கள், ‘நினி
வே அழிக்கப்படுகிறது. அவளுக்காக யார்
அழுவார்கள்?’ என்பார்கள். நினிவே, என்
னால் உன்னை ஆறுதல் படுத்தும் எவரை
யும் கண்டுபிடிக்க முடியாது என்று எனக்
குத் தெரியும்.”
8நினிவே, நீ நல்ல ஆற்றங்கரையிலுள்ள
தீப்ஸைவிடச் சிறந்ததா? இல்லை! தீப்
ஸும்* தன்னைச் சுற்றி தண்ணீர் நிறைந்துள்
ளது. தீப்ஸ் தன்னைப் பகைவர்களிடமிருந்து
காப்பாற்றிக்கொள்ள தண்ணீரைப் பயன்
படுத்துகிறது. அவள் தண்ணீரைச் சுவரைப்
போன்று பயன்படுத்துகிறாள். 9எத்தியோப்பி
யாவும், எகிப்தும் தீப்ஸுக்கு மிகுந்த
பலத்தைக் கொடுத்தன; சூடான், லிபியா
தேசங்கள் அவளுக்கு உதவின. 10ஆனால்,
தீப்ஸ் தோற்கடிக்கப்பட்டது. அவளது ஜனங்
கள் அந்நிய நாடுகளுக்குக் கைதிகளாகக்
கொண்டுச் செல்லப்பட்டனர். வீரர்கள்
ஒவ்வொரு தெரு முனையிலும் அவளது
சிறு குழந்தைகளைக் கொல்வதற்காக அடித்த
னர். அவர்கள் சீட்டுப்போட்டு முக்கியமான
ஜனங்களை யார் அடிமைகளாக வைத்துக்
கொள்வது என்பது பற்றி முடிவெடுத்தனர்.
தீப்ஸில் உள்ள முக்கியமானவர்கள் மீது
சங்கிலிகளைப் பூட்டினார்கள்.
11எனவே நினிவே, நீயும் ஒரு குடிகார
னைப் போன்று விழுவாய். நீ ஒளிந்துக்
கொள்ள முயல்வாய். நீ பகைவரிடமிருந்து
மறைய ஒரு பாதுகாப்பான இடத்தைத்
தேடுவாய். 12ஆனால் நினிவே, உனது பல
முள்ள அனைத்து இடங்களும் அத்திமரங்
களைப் போன்றவை புதியப்பழங்கள் பழுக்
கும். ஒருவன் வந்து மரத்தை உலுக்குவான்.
அந்த அத்திப்பழங்கள் அவனது வாயில்
விழும். அவன் அவற்றை உண்பான்.
அவைகள் தீர்ந்துவிட்டன.
13நினிவே, உன் ஜனங்கள் அனைவரும்
பெண்களைப் போன்றிருக்கின்றனர், பகை
வீரர்கள் அவர்களை எடுத்துச்செல்லத் தயா
ராக இருப்பார்கள். உங்கள் நாட்டின் வாசல்
கள் எதிரிகள் நுழைவதற்காகத் திறந்தே
கிடக்கும், வாசலின் குறுக்காகக் கிடக்கும்
மரச்சட்டங்களை நெருப்பு அழித்திருக்கிறது.
14நீங்கள் தண்ணீரை உங்களது நகருக்குள்
சேமியுங்கள். ஏனென்றால், பகைவீரர்கள்
உங்கள் நகரை முற்றுகையிடுவார்கள். அவர்
கள் எவரையும் தண்ணீரும் உணவும்
நகருக்குள் கொண்டுசெல்ல விடமாட்டார்
கள், நீங்கள் உங்களது அரண்களைப்
பலப்படுத்துங்கள். அதிகமான செங்கல்க
ளைச் செய்ய களிமண்ணைக் கொண்டு
வாருங்கள். சாந்தைக் கலந்து செங்கல்களுக்கு
உருவம் அளிக்கும் பொருளை பெற்றுக்
கொள்ளுங்கள். 15நீங்கள் எல்லாவற்றையும்
செய்யலாம். ஆனால் நெருப்பு அவற்றை
முழுமையாக அழித்துவிடும். வாள் உங்க
ளைக் கொல்லும். உங்கள் நிலம் பச்சைக்
கிளிகள் வந்து எல்லாவற்றையும் சாப்பிட்
டதுபோல் ஆகும்.

நினிவே, நீ மேலும் மேலும் வளர்வாய்.
நீ பச்சைக்கிளிகளைப்போல மாறுவாய்.
முன்பு நீ வெட்டுக்கிளியைப் போன்றிருந்
தாய். 16உன்னிடம் ஒவ்வொரு இடங்களுக்கும்
போய் பொருட்களை வாங்குகிற வியாபாரி
கள் அதிகமாக உள்ளனர். அவர்கள் வானத்
தில் உள்ள நட்சத்திரங்களைப்போன்று எண்
ணிக்கை உடையவர்கள். அவர்கள் வெட்டுக்
கிளிகளைப் போன்று வந்து எல்லாம்
அழியும்வரை உண்டு, பின் சென்று விடு
வார்கள். 17உங்களது அரசு அதிகாரிகளும்
வெட்டுக்கிளிகளைப் போன்றவர்கள். அவர்
கள் குளிர் நாளில் சுவர்களுக்குமேல் இருக்
கும் வெட்டுக்கிளிகளைப் போன்றுள்ளனர்.
ஆனால் சூரியன் மேலே வந்தபோது, பாறை
கள் சூடாகும். வெட்டுக்கிளிகள் வெளியே
பறந்துப்போகும். ஒருவரும் எங்கே என்று
அறியமாட்டார்கள். உங்களது அதிகாரிகளும்
அத்தகையவர்களே.
18அசீரியாவின் அரசனே, உங்களது
மேய்ப்பர்கள் (தலைவர்கள்) தூங்கிவிழுந்த
னர். அப்பலமிக்க மனிதர்கள் தூங்கிக்
கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது உங்கள்
ஆடுகள் (ஜனங்கள்) குன்றுகளின்மேல்
அலைந்திருக்கின்றன. அவற்றைத் திருப்பிக்
கொண்டுவர எவருமில்லை. 19நினிவே, நீ
மிக மோசமாகப் பாதிக்கப்பட்டிருக்கிறாய்.
உன் காயத்தை எவராலும் குணப்படுத்த
முடியாது. உனது அழிவைப்பற்றி கேள்
விப்படுகிற ஒவ்வொருவரும் கைத்தட்டு
வார்கள். அவர்கள் அனைவரும் மகிழ்கின்
றனர். ஏனென்றால் அவர்கள் அனைவரும்
உன்னால் எப்பொழுதும் ஏற்பட்ட வலியை
உணர்ந்தவர்கள்.

---

**உனது ஆடைகளை** இது எபிரெய மொழியில் வார்த்தை விளையாட்டு. எபிரெய மொழியில் இந்த சொல்லுக்கு “ஒரு நாட்டை அழித்து அதன் ஜனங்களை அடிமைகளாக அடுத்த நாட்டிற் குக் கொண்டு சென்றனர்” எனப் பொருள்படும்.

**தீப்ஸும்** எகிப்தில் உள்ள ஒரு நகரம். இது அசீரிய படையால் கி.மு. 666ல் அழிக்கப்பட்டது.

# ஆபகூக்

### ஆபகூக் தேவனிடம் முறையிடுகின்றான்

1 ஆபகூக் எனும் தீர்க்கதரிசிக்கு கொடுக்கப்
பட்ட செய்தி இதுதான்.
2 கர்த்தாவே, நான் தொடர்ந்து உம்முடைய
உதவியை வேண்டுகிறேன். எப்பொழுது
எனக்கு செவிகொடுப்பீர். நான் வன்முறை
யைப்பற்றி உம்மிடம் அழுதேன். ஆனால்
நீர் எதுவும் செய்யவில்லை. 3 ஜனங்கள்
திருடிக்கொண்டும், மற்றவர்களை காயப்படுத்
திக்கொண்டும், விவாதித்துக்கொண்டும்,
சண்டையிட்டுக்கொண்டும் இருக்கிறார்கள்.
நீர் ஏன் என்னை இவற்றையெல்லாம்
பார்க்கும்படிச் செய்கிறீர். 4 சட்டமானது பல
வீனமுடையதாகவும், ஜனங்களுக்கு நேர்மை
யில்லாததாகவும் உள்ளது. தீய ஜனங்கள்,
நல்ல ஜனங்களுக்கு எதிராகப்போரிட்டு
வெற்றி பெறுகிறார்கள். எனவே, சட்டம்
எப்பொழுதும் நேர்மையானதாக இருப்ப
தில்லை. நீதி எப்பொழுதும் வெற்றி பெறுகி
றதில்லை.

### தேவன் ஆபகூக்குக்குப் பதிலளிக்கிறார்

5 கர்த்தர், "மற்ற நாடுகளைப் பாருங்கள்.
அவர்களைக் கவனியுங்கள். நீங்கள் ஆச்
சரியப்படுவீர்கள். நான் உங்கள் வாழ்
நாட்களுக்குள் சிலவற்றைச் செய்வேன்.
அவை உங்களை ஆச்சரியப்படுத்தும். நீங்கள்
அவற்றைக் கண்டபின்தான் நம்புவீர்கள்.
அதை உங்களுக்குச் சொல்லியிருந்தால் நம்ப
மாட்டீர்கள். 6 நான் பாபிலோனிய ஜனங்
களை ஒரு பலமுள்ள நாட்டினராகச் செய்
வேன். அந்த ஜனங்கள் இழிவான, வல்லமை
பொருந்திய போராளிகளாக இருப்பார்கள்.
அவர்கள் பூமியைக் கடந்து செல்வார்கள்.
அவர்கள் தங்களுக்கு உரிமையில்லாத வீடுக
ளையும் நகரங்களையும் எடுத்துக்கொள்வார்
கள். 7 பாபிலோனிய ஜனங்கள் பிற ஜனங்
களை பயமுறுத்துவார்கள். பாபிலோனிய
ஜனங்கள் தாம் விரும்புவதைச் செய்வார்கள்,
தாம் போகவிரும்பும் இடத்துக்குப் போவார்
கள். 8 அவர்களின் குதிரைகள் சிறுத்தையை
விட வேகமாகச் செல்லும், மாலைநேரத்து
ஓநாய்களை விடவும் கொடியதானவராக
இருப்பார்கள். அவர்களின் குதிரைவீரர்கள்
தொலை தூரங்களிலிருந்து வருவார்கள்.
அவர்கள் தங்கள் பகைவர்களை வானத்திலி
ருந்து பாய்ந்து தாக்கும் பசிகொண்ட
கழுகுகளைப்போன்று தாக்குவார்கள். 9 அவர்
கள் விரும்பும் ஒரே செயல் சண்டையிடுவது
தான். அவர்களது படைகள் பாலைவனத்து
காற்றைப்போன்று வேகமாகச் செல்லும்.
பாபிலோனிய வீரர்கள் பல சிறைக்கைதி
களை மணல்போன்ற எண்ணிக்கையில்
கைபற்றுவார்கள்.
10 "பாபிலோனிய வீரர்கள் பிறநாடுகளில்
உள்ள அரசர்களைப் பார்த்து நகைப்பார்கள்.
அந்நிய ஆளுநர்கள் இவர்களுக்குப் பரிகாசத்
துக்குரியவர்களாவார்கள். பாபிலோனிய
வீரர்கள் நகரங்களில் உயர்ந்த உறுதியான
சுவர்களைப் பார்த்து சிரிப்பார்கள். வீரர்கள்
மண்மேடுகளை சுவர்களின் உச்சிவரை
குவித்து எளிதாக நகரங்களை தோற்
கடிப்பார்கள். 11 பிறகு அவர்கள் காற்றைப்
போன்று விரைந்துசென்று, மற்ற இடங்க
ளில் போரிடச் செல்வார்கள். பாபிலோ
னியர்கள் தம் சொந்த பலத்தையே தொழுது
கொள்வார்கள்" என்று பதில் சொன்னார்.

### ஆபகூக்கின் இரண்டாவது முறையீடு

12 பிறகு ஆபகூக் சொன்னான், "கர்த்தாவே,
நீரே என்றென்றும் வாழ்கிற கர்த்தர். நீர்
என்றென்றும் மரணமடையாத என் பரிசுத்
தமான தேவன்.* கர்த்தாவே, நீர் பாபி
லோனிய ஜனங்களை எதைச்செய்ய வேண்
டுமோ அதற்காகப் படைத்தீர். எங்கள்
அடைக்கலப் பாறையே* நீர் அவர்களை
யூதாவிலுள்ள ஜனங்களை தண்டிப்பதற்
காகப் படைத்தீர்.
13 உம்முடைய கண்கள் மிகவும் பரிசுத்தமா
னதால் அவை தீமையை நோக்குவதில்லை.
ஜனங்கள் பாவம் செய்வதை உம்மால்
பார்த்துக்கொண்டிருக்க முடியாது. எனவே,
இத்தீய ஜனங்கள் வெற்றிப்பெறுவதை எப்
படி உம்மால் பார்த்துக்கொண்டிருக்க முடி
யும். தீய ஜனங்கள் நல்லவர்களை அழிப்
பதைக்கண்டு ஒன்றும் செய்யாமல் நீர்
எப்படி பார்த்திருக்கக்கூடும்?

---

**கர்த்தாவே ... தேவன்** அல்லது "கர்த்தாவே, நீரே எங்களது தேவனாக எப்போதும் இருக்கிறீர். நிச்சயமாக நாங்கள் மரிக்கமாட்டோம்."

**பாறை** இது தேவனுக்குரிய ஒரு நாமம். அவர் ஒரு கோட்டையைப் போன்றவர். அல்லது பாதுகாப்புக்குரிய பலமான இடம் என்று இது காட்டுகிறது.

14“நீர் ஜனங்களை கடலில் உள்ள மீன்க
ளைப் போலவும், கடலில் உள்ள தலைவ
னற்ற சிறிய உயிரினங்களைப்போன்றும்
படைத்துள்ளீர்.
15பகைவர் அவர்களனைவரையும் தூண்டி
லாலும் வலைகளாலும் பிடிப்பார்கள்.
பகைவன் தனது வலையால் அவர்களை
பிடித்து இழுத்துப்போவான். பகைவன் தான்
கைப் பற்றியது பற்றி மகிழுவான்.
16அவனது வலை அவன் செல்வந்தனாக
வாழ்ந்து நல்ல உணவை உண்டு மகிழ
உதவுகிறது. எனவே பகைவன் தனது
வலைகளை தொழுதுகொள்கிறான், அவன்
தனது வலையைக் கௌரவப்படுத்த பலி
களை செலுத்தி நறுமணப் பொருட்களையும்
எரிக்கிறான்.
17அவன் தனது வலையுடன் செல்வத்தைத்
தொடர்ந்து எடுப்பானா? அவன் தொடர்ந்து
இரக்கமில்லாமல் ஜனங்களை அழிப்பானா?

2 “நான் ஒரு காவலாளியைப்போன்று
நின்று கவனிப்பேன். கர்த்தர் என்னிடம்
என்ன சொல்லப்போகிறார் என்று காண
நான் காத்திருப்பேன். அவர் எவ்வாறு
என் வினாக்களுக்கு பதில் சொல்கிறார்
என்பதைக் காத்திருந்து கவனிப்பேன்.”

### தேவன் ஆபகூக்குக்கு பதிலளிக்கிறார்

2கர்த்தர் எனக்குப் பதிலாக, “நான் உனக்
குக் காண்பிக்கின்றவற்றை கற்பலகையில்
எழுது. அதனை ஜனங்கள் எளிதாகப்
படிக்க முடியும்படி அவற்றை தெளிவாக
எழுது. 3இச்செய்தியானது வருங்காலத்தில்
உள்ள ஒரு சிறப்பான காலம் பற்றியது.
இந்தச்செய்தி முடிவை பற்றியது; இப்பொ
ழுது இது உண்மையாகும். அது என்றென்
றும் வராது என்பது போல தோன்றுகிறது.
ஆனால் பொறுமையாக அதற்குக் காத்திரு.
அந்த நேரம் வரும். இது தாமதம் ஆகாது.
4இச்செய்தி ஜனங்களுக்கு கேட்க மறுக்கின்ற
வர்களுக்கு உதவாது. ஆனால் ஒரு நல்லவன்
இச்செய்தியை நம்புவான். நல்லவன் தனது
விசுவாசத்தினால் ஜீவிப்பான்” என்றார்.
5தேவன் “மதுபானம் எத்தனை அதிகமாக
ஒரு அகங்காரம் உள்ள மனிதனை ஏமாற்
றுகிறது. அதே வழியில், வலிமையான
ஒருவனின் பேராசை அவனை முட்டா
ளாக்கும். ஆனால் அவன் சமாதானத்தைப்
பெறமாட்டான். அவன் மரணத்தைப் போன்
றவன். அவன் எப்போதும் அதிகமாக
சேர்க்க விரும்புகிறான். அவன் மரணத்தைப்
போன்று எப்பொழுதும் திருப்தியடைய
மாட்டான். அவன் தொடர்ந்துப் பிற நாடுக
ளைத் தோற்கடிப்பான். அவன் தொடர்ந்து
அந்த ஜனங்களைச் சிறைகைதிகளாக்கு
வான். 6ஆனால் ஜனங்கள் அவனைப்
பார்த்து விரைவில் நகைப்பார்கள். அவர்கள்
அவனது தோல்வியைப்பற்றி நகைத்து
சொல்வார்கள், ‘இது மிகவும் மோசமானது.
அந்த மனிதன் பலவற்றை எடுத்தான்,
அவன் தனக்கு உரிமையில்லாதவற்றை
எடுத்தான், அவன் அதிகமான கடன்களை
வசூலித்து அதினால் செல்வந்தனானான்.’
7“பலவானே, நீ ஜனங்களிடமிருந்து பணத்
தை எடுத்திருக்கிறாய். ஒருநாள் அந்த
ஜனங்கள் விழித்தெழுந்து என்ன நடந்து
கொண்டிருக்கிறது என்று உணர்வார்கள்.
அவர்கள் உனக்கு எதிராக நிற்பார்கள்.
பிறகு அவர்கள் உன்னிடமிருந்து பொருட்
களை எடுத்துக்கொள்வார்கள். நீ மிகவும்
அஞ்சுவாய். 8நீ பல நாடுகளிலிருந்து
பொருட்களை எடுத்திருக்கிறாய். எனவே,
அந்த ஜனங்கள் உன்னிடமிருந்து மிகுதியாக
எடுப்பார்கள். நீ ஏராளமான ஜனங்களைக்
கொன்றிருக்கிறாய். நீ நிலங்களையும்
நகரங்களையும் அழித்திருக்கிறாய். அங்கே
உள்ள அனைத்து ஜனங்களையும் கொன்றி
ருக்கிறாய். 9ஆமாம், தவறான காரியங்களால்
செல்வம் சேர்த்தவனுக்குப் பெருங்கேடு
ஏற்படும். அம்மனிதன் பாதுகாப்பான இடத்
தில் வாழ்வதற்கு அவற்றைச் செய்கிறான்.
அவனிடமிருந்து மற்ற ஜனங்கள் பொருட்
களைத் திருடாமல் தடுக்கமுடியும் என்று
நினைக்கிறான். ஆனால் அவனுக்கு கேடுகள்
ஏற்படும்.
10“நீ (பலமுள்ளவன்) ஏராளமான ஜனங்க
ளைக் கொல்ல திட்டமிட்டிருக்கிறாய். ஆ
னால் அத்திட்டங்கள் உன் வீட்டிற்கு அவ
மானத்தைக் கொண்டு வரும். நீ கேடான
காரியங்களைச் செய்திருக்கிறாய். நீ உனது
வாழ்க்கையை இழப்பாய். 11உனக்கு எதிராக
சுவர்களிலுள்ள கற்களும் அழும். உன்
சொந்த வீட்டிலுள்ள மர உத்திரங்களும்*
உனக்கெதிராக குற்றஞ்சாட்டும்.
12“ஒரு நகரத்தை உருவாக்குவதற்காக
ஜனங்களுக்குத் தீமைச் செய்து அவர்களைக்
கொலை செய்கிற தலைவனுக்குப் பெருங்
கேடு ஏற்படும். 13சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் நகரைக்கட்டுவதற்காக ஜனங்கள்
உழைத்த உழைப்பை தீயினால் எரித்துப்
போடும்படி தீர்மானம் செய்திருக்கிறார்.
அவர்களது அனைத்து வேலைகளும் வீணா
கும். 14பிறகு எல்லா இடங்களிலும் உள்ள
ஜனங்கள் கர்த்தருடைய மகிமையை அறி
வார்கள். கடலுக்குள் தண்ணீர் பரவுவது
போல இச்செய்தி பரவும். 15தன்னுடைய
நண்பர்களுக்குப் போதைஏற்றுகிறவனுக்குக்
கேடு விளையும். அவன் திராட்சரசத்தோடு
விஷத்தைக் கலக்கிறான். பிறகு அவர்களது
நிர்வாணத்தைப் பார்க்கிறான்.
16“ஆனால், அந்த மனிதன் கர்த்தருடைய
கோபத்தை அறிவான். அக்கோபமானது
கர்த்தருடைய வலதுகையில் உள்ள விஷம்
நிறைந்த கிண்ணத்தைப் போன்றது.
அம்மனிதன் அக்கோபத்தைச் சுவைப்பான்.

---

**உத்திரங்கள்** கூரையைத் தாங்கும் தடிகள்.

அவன் குடிகாரனைப்போன்று கீழே
தரையில் விழுவான்.
“தீமையான அரசனே, நீ அக்கிண்ணத்
திலிருந்து குடிப்பாய். நீ மகிமையை அல்ல
அவமானத்தைப் பெறுவாய். 17லீபனோனில்
உள்ள பலஜனங்கள் உன்னால் பாதிக்கப்பட்
டனர். நீ அங்கே பல மிருகங்களைத்
திருடினாய். எனவே, நீ அஞ்சுகிறாய்.
ஏனென்றால் மரித்துப்போன ஜனங்களும்
அந் நாட்டில் நீ செய்த அக்கிரமங்களும்
இதற்குக் காரணமாகும். நீ அந்த நகரங்களுக்
கும், அவற்றில் வாழ்ந்த ஜனங்களுக்கும்
பயப்படுவாய்” என்றார்.

### விக்கிரகங்கள் பற்றிய செய்தி

18அந்த நபரின் விக்கிரகங்கள் அவனைக்
காப்பாற்றுவதில்லை. ஏனென்றால், அது
வெறுமனே உலோகத்தால் மூடப்பட்ட
சிலைதான். அது சிலை மட்டும்தான்;
எனவே, அந்தச் சிலையைச் செய்த நபர்
அந்த சிலையினிடத்திலிருந்து உதவிகி
டைக்கும் என்று எதிர்பார்க்க முடியாது.
அந்தச் சிலையால் பேசக்கூட முடியாது.
19மரச்சிலையைப் பார்த்து “எழும்பு!” என்று
சொல்கிறவன் மிகவும் மோசமானவன்.
பேசமுடியாத ஒரு கற்சிலையிடம் ஒருவன்
“விழித்தெழு!” என்று கூறுவது அவனுக்கு
மிகவும் கேடானது. அவை அவனுக்கு
உதவாது. அச்சிலை வேண்டுமானால்
பொன்னாலும் வெள்ளியாலும் மூடப்பட்டி
ருக்கலாம், ஆனால் அச்சிலைக்குள் உயி
ரில்லை.
20ஆனால் கர்த்தர் வித்தியாசமானவர்.
கர்த்தர் தனது பரிசுத்தமான ஆலயத்தில்
உள்ளார். எனவே, பூமிமுழுவதும் அமைதி
யாக இருந்து கர்த்தருக்கு முன் மரியாதை
காட்டட்டும்.

### ஆபகூக்கின் ஜெபம்

3 ஆபகூக் தீர்க்கதரிசி சிகாயோனில் செய்த
ஜெபம்.
2கர்த்தாவே,நான்உம்மைப்பற்றிய செய்தி
களைக் கேட்டிருக்கிறேன். கர்த்தாவே, நீர்
கடந்த காலத்தில் செய்த வல்லமைமிக்க
செயல்களால் ஆச்சரியப்படுகிறேன். இப்பொ
ழுது நான், நீர் எங்கள் காலத்தில் பெருஞ்
செயல்கள் செய்ய வேண்டும் என்று ஜெபிக்
கிறேன். தயவுசெய்து அச்செயல்கள் எங்கள்
காலத்தில் நிகழுமாறு செய்யும். ஆனால்
நீர் கோபங்கொள்ளும்போதும் எங்கள் மீது
இரக்கம் காட்ட நினைத்துக்கொள்ளும்.
3தேவன் தேமானிலிருந்து வந்துகொண்டி
ருக்கிறார், பரிசுத்தமானவர் பாரான் மலையி
லிருந்து வந்துகொண்டிருக்கிறார். கர்த்தரு
டைய மகிமை பரலோகங்களை நிறைத்
துள்ளது. அவரது துதி பூமியில் நிறைந்
துள்ளது.
4அவரது கையிலிருந்து பிரகாசமான
கதிர்கள் வரும். இது பிரகாசமான வெளிச்
சம் போன்றது. அத்தகைய வல்லமை அவ
ரது கையில் மறைந்துகொண்டிருக்கும்.
5அவருக்கு முன்னால் கொள்ளைநோய்
போனது. அழிப்பவன் அவரைப் பின்
தொடர்வான்.
6கர்த்தர் நின்று பூமியை அசைத்தார்.
அவர் அனைத்து நாடுகளிலும் உள்ள
ஜனங்களைப் பார்த்தார். அவர்கள் அச்
சத்துடன் நடுங்கினார்கள். பல ஆண்டுக
ளாகக் குன்றுகள் பலமாக நின்றுக்கொண்
டிருக்கின்றன. ஆனால் அக்குன்றுகள்
விழுந்து துண்டுகளாயின. பழைய குன்றுகள்
விழுந்து விட்டது. தேவன் எப்பொழுதும்
அப்படியே இருந்திருக்கிறார்.
7நான் குஷான் நகரங்கள் துன்பத்தில்
இருப்பதைப் பார்த்தேன் மீதியான் வீடுகள்
அச்சத்தால் நடுங்கின.
8கர்த்தாவே, உமக்கு நதிகள் மீது
கோபமா? தண்ணீரோடைகள் மீது உமக்குக்
கோபமா? கடல் மீது உமக்குக் கோபமா?
உம்முடைய குதிரைகள் மீதும், உமது இர
தங்கள் மீதும் வெற்றிநோக்கி பவனி சென்ற
போது கோபப்பட்டீரா?
9அதற்குப்பிறகும் நீர் உமது வானவி
ல்லைக் காட்டினீர். பூமியில் உள்ள குடும்பத்
தினருடன் உமது உடன்படிக்கைக்கு இது
சான்றாயிற்று. வறண்ட நிலம் ஆறுகளைப்
பிளந்தன.
10மலைகள் உம்மை பார்த்து அதிர்ந்தன.
தண்ணீர் நிலத்தில் பாய்ந்து வடிந்துபோனது.
கடலில் உள்ள தண்ணீர் தனது பூமியின்
மேலிருந்த அதிகாரத்தை இழந்து விட்டதாக
உரத்த சத்தம் எழுப்பியது.
11சூரியனும் சந்திரனும் தங்கள் பிரகா
சத்தை இழந்தன. அவை உமது மின்னல்க
ளின் பிரகாசத்தைப் பார்த்து வெளிச்சத்தை
நிறுத்திக்கொண்டன. மின்னலானது காற்று
வழியாகப் பாயும் அம்புகளைப்போன்றும்,
ஈட்டிகளைப்போன்றும் உள்ளன.
12நீர் கோபத்துடன் பூமியின்மேல் நடந்தீர்;
பல தேசங்களைத் தண்டித்தீர்.
13நீர் உமது ஜனங்களைக் காப்பாற்ற
வந்தீர். நீர் தேர்ந்தெடுத்த அரசனை வெற்றி
நோக்கி நடத்த வந்தீர். ஒவ்வொரு தீமை
செய்கிற குடும்பத்திலும் உள்ள தலைவர்
களை, முக்கியமானவர்களானாலும் முக்கிய
மற்றவர்களானாலும் அவர்கள் கொன்றீர்.
14நீர் மோசேயின் கைத்தடியைப் பயன்
படுத்தி பகை வீரர்களைத் தடுத்தீர். அவ்வீரர்
கள் எனக்கெதிராகப் போரிட வல்லமை
மிக்கப் புயலைப்போல் வந்தார்கள். ஒரு
ஏழையை ரகசியமாகக் கொள்ளையிடுவது
போல் எங்களை எளிதாக வெல்லமுடியு
மென எண்ணினார்கள்.
15ஆனால் நீர் உம் குதிரைகளை ஆழமான
தண்ணீர் வழியாக மண்ணைக் கலங்கும்படி
நடக்கச் செய்தீர்.

16நான் அந்தக் கதையைக் கேட்டபோது
என் உடல் முழுவதும் நடுங்கியது. நான்
உரக்க பரிகசித்தேன். நான் என் எலும்புக
ளின் பலவீனத்தை உணர்ந்தேன். நான்
அங்கே நின்று நடுங்கிக்கொண்டிருந்தேன்.
எனவே நான் பகைவர் வந்து தாக்கும்
அந்த அழிவின் நாளுக்காகக் காத்திருப்பேன்.

### கர்த்தருக்குள் எப்பொழுதும் மகிழ்ச்சியாயிருங்கள்

17அத்திமரங்களில் அத்திப்பழங்கள் வள
ராமலிருக்கலாம். திராட்சைக்கொடிகளில்
திராட்சைப்பழங்கள் வளராமலிருக்கலாம்.
ஒலிவ மரங்களில் ஒலிவ பழங்கள் வளராம
லிருக்கலாம், வயல்களில் தானியம் விளை
யாமலிருக்கலாம், கிடையில் ஆட்டுமந்தை
கள் இல்லாமல் இருக்கலாம், தொழுவத்தில்
மாடுகள் இல்லாமல் இருக்கலாம்,
18ஆனால், கர்த்தருக்குள் நான் இன்னும்
மகிழ்ச்சியோடு இருப்பேன். எனது இரட்ச
கரான தேவனில் நான் மகிழ்வேன்.
19எனக்கு அதிகாரியான என் கர்த்தர்
எனக்குப் பலத்தைக் கொடுக்கிறார். அவர்
என்னை மானைப்போன்று ஓட உதவுகிறார்.
அவர் என்னைக் குன்றுகளில் பாதுகாப்பாக
வழிநடத்துகிறார்.

### இது இசையமைப்பாளருக்கு எனது நரம்பு வாத்தியங்களில் வாசிக்கவேண்டியது

# செப்பனியா

1 கர்த்தர் செப்பனியாவுக்குக் கொடுத்தச்
செய்தி இது. செப்பனியா இச்செய்தியை
யூதாவின் அரசனான ஆமோனின் மகனான
யோசியா ஆண்டபோது பெற்றான். செப்ப
னியா கூஷின் மகன். கூஷ் கெதலியாவின்
மகன். கெதலியா ஆமரியாவின் மகன்.
ஆமரியா எஸ்கியாவின் மகன்.

### ஜனங்களைத் தீர்ப்பளிக்கும் கர்த்தருடைய நாள்

2 கர்த்தர் கூறுகிறார்: "நான் பூமியில்
உள்ள எல்லாவற்றையும் அழிப்பேன். 3 நான்
அனைத்து ஜனங்களையும், அனைத்து
விலங்குகளையும் அழிப்பேன், வானில்
உள்ள பறவைகளையும், கடலிலுள்ள மீன்க
ளையும் அழிப்பேன். நான் தீய ஜனங்
களையும், அவர்களைப் பாவம் செய்யத்
தூண்டும் அனைத்தையும் அழிப்பேன். நான்
பூமியிலுள்ள அனைத்து ஜனங்களையும்
அகற்றுவேன்." கர்த்தர் இவற்றைக் கூறினார்.
4 கர்த்தர், "நான் யூதாவையும், எருசலேமில்
வாழ்கிற ஜனங்களையும் தண்டிப்பேன். நான்
அந்த இடத்திலிருந்து எல்லாவற்றையும்
அகற்றுவேன். நான் பாகால் வழிபாட்டின்
இறுதி அடையாளங்களை அகற்றுவேன்.
நான் ஆசாரியர்களையும் அகற்றுவேன்.
5 நான் நட்சத்திரங்களை* வழிபடச் செல்ல
கூரையின்மேல் செல்லும் ஜனங்களை அகற்
றுவேன். ஜனங்கள் அப்பொய் ஆசாரியர்
களை மறப்பார்கள். சில ஜனங்கள் என்னை
ஆராதிப்பதாகச் சொல்கிறார்கள். அந்த
ஜனங்கள் என்னை வழிபடுவதாக வாக்கு
றுதி அளித்தனர். ஆனால் இப்பொழுது
அவர்கள் பொய்த் தெய்வமான மல்காமை*
வழிபடுகின்றனர். எனவே, நான் அந்த
ஜனங்களை அந்த இடத்திலிருந்து நீக்கு
வேன். 6 சில ஜனங்கள் கர்த்தரிடமிருந்து
விலகினார்கள். அவர்கள் என்னைப்
பின்பற்றுவதை விட்டனர். அந்த ஜனங்கள்
கர்த்தரிடம் உதவி கேட்பதை நிறுத்தி
னார்கள் எனவே, நான் அந்த இடத்திலிருந்து
அந்த ஜனங்களை நீக்குவேன்" என்றார்.

7 எனது கர்த்தராகிய ஆண்டவர் முன்னால்
அமைதியாயிரு. ஏனென்றால், கர்த்தருடைய
நியாத்தீர்ப்பின் நாள் விரைவில் வந்து
கொண்டிருக்கிறது. கர்த்தர் பலியைத்
தயாரித்திருக்கிறார். அவர் தனது அழைக்
கப்பட்ட விருந்தினர்களை ஆயத்தப்படும்
படிச் சொல்லியிருக்கிறார்.
8 கர்த்தர், "கர்த்தருடைய பலிநாளில், நான்
அரசனின் மகன்களையும் மற்ற தலைவர்
களையும் தண்டிப்பேன். நான் வேறு
நாடுகளிலிருந்து வந்த துணிகளை அணிந்த
ஜனங்களைத் தண்டிப்பேன். 9 அந்த நேரத்தில்,
நான் வாசற்படியைத் தாண்டிய ஜனங்களை
யும் தண்டிப்பேன். நான் தம் அதிகாரியயின்
வீடுகளைப் பொய்களாலும், வன்முறை
யாலும் நிரப்புகிற ஜனங்களைத் தண்டிப்
பேன்" என்றார்.
10 கர்த்தரும், "அந்த வேளையில் எருச
லேமில் மீன்வாசல் அருகே உள்ள ஜனங்கள்
என்னிடம் உதவிக்கு அழைப்பார்கள். பட்ட
ணத்தின் மற்றப் பகுதிகளில் உள்ள ஜனங்கள்
அழுவார்கள். நகரத்தைச் சுற்றியுள்ள குன்று
களில் இருந்து பொருட்கள் அழிக்கப்படுகிற
சத்தங்களை ஜனங்கள் கேட்பார்கள். 11 பட்
டணத்தின் தாழ்வான பகுதிகளில் வாழும்
ஜனங்கள் அழுவார்கள். ஏனென்றால் எல்லா
வியாபாரிகளும், பணக்காரர்களும் அழிக்கப்
படுவார்கள்.
12 "அந்த வேளையில், நான் ஒரு விளக்கை
எடுத்து எருசலேம் முழுவதும் தேடுவேன்.
நான் தம் வழியில் செல்வதில் திருப்தி
காணும் ஜனங்களைக் கண்டுகொள்வேன்.
அந்த ஜனங்கள், 'கர்த்தர் எதுவும் செய்
வதில்லை. அவர் உதவுவதில்லை. அவர்
காயப்படுத்துவதில்லை!' நான் அவர்களைக்
கண்டுபிடித்து தண்டிப்பேன்" என்று கூறு
கின்றார். 13 பிறகு மற்ற ஜனங்கள் அவர்களின்
செல்வத்தை எடுத்துக்கொண்டு வீடுகளை
அழிப்பார்கள். அந்த நேரத்தில், வீடுகட்டிய
ஜனங்கள் அதில் வாழமாட்டார்கள். திரா
ட்சை கொடிகளை நட்டவர்கள் அதன்
ரசத்தைக் குடிக்கமாட்டார்கள். மற்ற ஜனங்
கள் அவற்றைப் பெறுவார்கள்."
14 கர்த்தருடைய நியாயத்தீர்ப்பின் நாள்
விரைவில் வரும். அந்நாள் அருகாமையில்
உள்ளது; விரைவில் வரும். கர்த்தருடைய
நியாயத் தீர்ப்பின் நாளில் ஜனங்கள் சோகக்

---

**நட்சத்திரங்கள்** எழுத்தின் பிரகாரமாக, "சொர்க்கத்தின் படை" நட்சத்திரங்களும், கிரகங்களும், அல்லது தூதுர்கள் எனப் பொருள்படும்.

**மல்காம்** அம்மோனியர்களின் தெய்வம்.

குரல்களைக் கேட்பார்கள். வலிமையான
வீரர்கள் கூட அழுவார்கள். 15தேவன்
அந்நேரத்தில் தன் கோபத்தைக் காட்டுவார்.
அது பயங்கரமான துன்பங்களுக்குரிய
நேரமாக இருக்கும். இது அழிவுக்கான
நேரம்தான். இது இருண்ட கருத்த மேகமும்,
புயலுமுள்ள நாளாக இருக்கும். 16இது
போருக்குரிய காலத்தைப் போன்றிருக்கும்.
ஜனங்கள் எக்காளம் மற்றும் பூரிகை சத்தங்
களை கோபுரங்கள் மற்றும் பாதுகாப்புக்
குரிய நகரங்களிலிருந்து கேட்பார்கள்.
17கர்த்தர், “நான் ஜனங்களின் வாழ்க்கை
யைக் கடினமானதாகச் செய்வேன். ஜனங்கள்
குருடர்களைப்போன்று எங்கே போகிறோம்
என்று தெரியாமல் அலைந்துக் கொண்டி
ருப்பார்கள். ஏனென்றால், அந்த ஜனங்கள்
கர்த்தருக்கு எதிராகப் பாவம் செய்தனர்.
ஏராளமான ஜனங்கள் கொல்லப்படுவார்கள்.
அவர்களின் இரத்தம் தரையில் சிந்தும்.
அவர்களின் மரித்த உடல்கள் தரையில்
சாணத்தைப்போன்றுக் கிடக்கும். 18அவர்
களது பொன்னும், வெள்ளியும் அவர்களுக்கு
உதவாது. அந்த நேரத்தில் கர்த்தர் எரிச்
சலும், கோபமும் கொள்வார். கர்த்தர் உலகம்
முழுவதையும் அழிப்பார். கர்த்தர் உலகில்
உள்ள ஒவ்வொன்றையும் முழுவ துமாக
அழிப்பார்” என்றார்.

### தேவன் ஜனங்களிடம் தமது வாழ்வை மாற்றும்படி கேட்கிறார்

2 வெட்கமற்ற ஜனங்களே, உங்கள் வாழ்க்
கையை, 2நீங்கள் உதிர்ந்த பூக்களைப்
போன்று வாடும்முன்னால் மாற்றுங்கள்.
பகலின் வெப்பத்தால் பூவானது வாடி
உதிரும். நீயும் அதைப்போன்று கர்த்தர்
கோபத்தைக் காட்டும்போது ஆவாய்.
எனவே கர்த்தருடைய கோபத்தின் நாள்
உங்கள் மீது வரும் முன்னே உங்கள்
வாழ்க்கையை மாற்றுங்கள். 3பணிவான
ஜனங்களே, அனைவரும் கர்த்தரிடம் வாருங்
கள். அவருடைய சட்டங்களுக்கு அடிபணி
யுங்கள். நல்லவற்றைச் செய்யக் கற்றுக்கொள்
ளுங்கள். பணிவாக இருக்கக் கற்றுக்கொள்
ளுங்கள். அதனால் ஒரு வேளை நீங்கள்
கர்த்தர் தனது கோபத்தைக் காட்டும்போது
பாதுகாப்பு பெறலாம்.

### இஸ்ரவேலின் அண்டை நாட்டினரைக் கர்த்தர் தண்டிப்பார்

4காத்சாவில் எவரும் விடுபடமாட்
டார்கள். அஸ்கலோன் அழிக்கப்படும். அஸ்
தோத்தை விட்டுப் போகும்படி மதியத்திற்
குள் பலவந்தப்படுத்தப்படுவார்கள். எக்ரோன்
காலியாகும். 5பெலிஸ்தரின் தேச ஜனங்களே,
கடற்கரையில் வாழும் ஜனங்களே, கர்த்தரிட
மிருந்து வந்த இச்செய்தி உங்களுக்குரியது.
கானான் தேசமே, பெலிஸ்தரின் தேசமே,
நீங்கள் அழிக்கப்படுவீர்கள். அங்கே எவரும்
வாழமாட்டார்கள். 6கடற்கரையில் உள்ள
உங்கள் நிலங்கள் மேய்ப்பர்களுக்கும், ஆடு
களுக்கும் தங்கும் இடங்களாகும். 7பிறகு
அந்த தேசம் யூதாவிலிருந்துத் தப்பிப் பிழைத்
தவர்களுக்கு உரியதாகும். கர்த்தர் அந்த
யூதாவிலுள்ள ஜனங்களை நினைவில்
வைத்திருப்பார். அந்த ஜனங்கள் அயல்
நாடுகளில் கைதிகளாக இருப்பார்கள்.
ஆனால் கர்த்தர் அவர்களைத் திரும்ப
அழைத்து வருவார். பிறகு யூதா ஜனங்கள்
தமது ஆடுகளை அவ்வயல்களில் உள்ள
புல்லை மேயச்செய்வார்கள். மாலை நேரங்க
ளில் அவர்கள் அஸ்கலோனின் காலியான
வீடுகளில் படுத்துக்கொள்வார்கள்.
8கர்த்தர் கூறுகின்றார்: “மோவாப் ஜனங்க
ளும், ஆமோன் ஜனங்களும் என்ன செய்த
னர் என்று எனக்குத் தெரியும். அந்த
ஜனங்கள் எனது ஜனங்களை நிந்தைக்குள்
ளாக்கினார்கள். அந்த ஜனங்கள் தம் சொந்த
நாட்டைப் பெரிதாக்க இத்தேசத்தை எடுத்
துக்கொண்டார்கள். 9எனவே, நான் வாழ்
வது எவ்வளவு உறுதியோ அவ்வாறே,
மோவாப் மற்றும் ஆமோனின் ஜனங்கள்,
சோதோம் மற்றும் கொமோராவைப்போல்*
அழிக்கப்படுவார்கள். நான் சர்வ வல்லமை
யுள்ள இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்.
நான் அந்நாடுகள் எல்லாம் என்றென்
றைக்கும் முழுமையாக அழிக்கப்படுமென்று
வாக்குறுதி அளிக்கிறேன். அவர்களது
நிலத்தில் முட்செடிகள் வளரும். அவர்களது
நிலமானது சவக்கடலினால் உப்பாக்கப்
பட்ட நிலம் போன்றிருக்கும். எனது ஜனங்
களில் மீதியாக இருப்பவர்கள் அந்த நிலத்
தையும் அதில் உள்ளவற்றையும் எடுத்துக்
கொள்வார்கள்.”
10மோவாப் மற்றும் அம்மோன் ஜனங்
களுக்கு அவை நிகழும். ஏனென்றால்,
அவர்கள் பெருமைமிக்கவர்கள். சர்வ வல்ல
மையுள்ள கர்த்தருடைய ஜனங்களைக்
கொடுமைப்படுத்தி, அவமானமடையவும்,
வெட்கமடையவும் செய்தார்கள். 11“அந்த
ஜனங்கள் கர்த்தருக்கு அஞ்சுவார்கள். ஏனெ
ன்றால், கர்த்தர் அவர்களது தெய்வங்களை
அழிப்பார். பிறகு தூரதேசங்களில் உள்ள
ஜனங்கள் அனைவரும் கர்த்தரைத் தொழுது
கொள்வார்கள். 12எத்தியோப்பியா ஜனங்
களே, இது உங்களுக்கும் பொருந்தும்.
கர்த்தருடைய பட்டயம் உமது ஜனங்களை
யும் கொல்லும். 13கர்த்தர் வடக்கே திரும்பி
அசீரியாவையும் தண்டிப்பார். அவர்
நினிவேயையும் அழிப்பார். அந்நகரமானது
காலியான வறண்ட பாலைவனம் போலா
கும். 14பிறகு அந்த அழிந்த நகரத்தில்
ஆடுகளும், காட்டு மிருகங்களும் மட்டுமே

**சோதோம் மற்றும் கொமோரா** ஜனங்கள் மிகவும் தீயவர்களானதால் தேவனால் அழிக்கப்பட்ட இரு நகரங்கள்.

வாழும். விட்டுப்போன தூண்களின்மேல்
கோட்டான்களும், நாரைகளும் இருக்கும்.
அவர்களின் கூக்குரல் ஜன்னல் வழியாக
வந்து கேட்கப்படும். வாசல்படிகளில் காகங்
கள் இருக்கும். கருப்பு பறவைகள் காலியான
வீடுகளில் இருக்கும். 15இப்பொழுது நினிவே
மிகவும் பெருமிதமாக உள்ளது. இது அத்
தகைய மகிழ்ச்சிகரமான நகரம். ஜனங்கள்
தாம் பாதுகாப்புடன் இருப்பதாக நினைக்
கிறார்கள். அவர்கள் நினிவேதான் உலகத்தி
லேயே மிகச் சிறந்த இடம் என்று நினைக்
கிறார்கள். ஆனால் அந்நகரம் அழிக்கப்படும்.
இது காலியான இடமாகி காட்டு மிருகங்கள்
மட்டுமே ஓய்வெடுக்கச் செல்லும். ஜனங்கள்
அந்த வழியாகக் கடந்து செல்லும்போது
அதைப் பார்த்து பரிகசிப்பார்கள். அந்நகரம்
எவ்வளவு மோசமாக அழிக்கப்பட்டிருக்
கிறது என்று சொல்லி தங்கள் தலையை
குலுக்குவார்கள்.

## எருசலேமின் எதிர்காலம்

3 எருசலேமே, உனது ஜனங்கள் தேவ
னுக்கு எதிராகப் போரிட்டனர். உனது
ஜனங்கள் மற்ற ஜனங்களை துன்புறுத்தினர்.
நீ பாவத்தினால் கறைபட்டிருந்தாய். 2உனது
ஜனங்கள் என்னைக் கவனிக்கவில்லை.
அவர்கள் என்னுடைய உபதேசங்களை
கேட்பதில்லை. எருசலேம் கர்த்தரை நம்புவ
தில்லை. எருசலேம் அவளது தேவனிடம்
செல்வதில்லை. 3எருசலேமின் தலைவர்கள்
கர்ச்சிக்கிற சிங்கங்களைப் போன்றவர்கள்.
அவளது நீதிபதிகள் பசித்த ஓநாய்களைப்
போன்றவர்கள். அவை மாலையில் ஆடு
களைத் தாக்க வரும். காலையில் எதுவும்
மீதியாவதில்லை. 4அவளது பொறுப்பற்ற
தீர்க்கதரிசிகள் மேலும் மேலும் சேர்ப்
பதற்காக எப்போதும் ரகசியத் திட்டங்களை
வைத்திருப்பார்கள். அவளது ஆசாரியர்க
ளெல்லாம் பரிசுத்தமானவற்றையெல்லாம்
பரிசுத்தம் இல்லாததுபோன்று கருதுவார்கள்.
அவர்கள் தேவனுடைய உபதேசங்களுக்கு
தீமைகளையே செய்துள்ளனர். 5ஆனால்
தேவன் இன்னும் அந்நகரத்தில் உள்ளார்.
அவர் தொடர்ந்து நல்லவராகவே உள்ளார்.
தேவன் எந்த அநீதியையும் செய்யவில்லை.
தேவன் தொடர்ந்து தன் ஜனங்களுக்கு
உதவுகிறார். காலைதோறும் அவர் தமது
ஜனங்கள் நல்ல முடிவுகள் எடுக்குமாறு
உதவுகிறார். ஆனால், அந்தத் தீய ஜனங்கள்
தாம் செய்யும் தீயச்செயல்களுக்கு அவமா
னம் அடைவதில்லை.
6தேவன் கூறுகிறார்: “நான் நாடுகள்
முழுவதையும் அழித்திருக்கிறேன். நான்
அவர்களது கோட்டைகளை அழித்தேன்.
நான் அவர்களது தெருக்களை அழித்தேன்.
அங்கு இனிமேல் எவரும் போகமாட்டார்
கள். அவர்களின் நகரங்கள் எல்லாம்
காலியாயின இனி அங்கே எவரும் வாழ
மாட்டார்கள். 7நான் இவற்றை உன்னிடம்
சொல்கிறேன். நீ இதிலிருந்து பாடம் கற்றுக்
கொள்ளலாம். நீங்கள் எனக்கு அஞ்சி மரியா
தை செலுத்த வேண்டும் என விரும்புகி
றேன். நீங்கள் இதனைச் செய்தால் பின்னர்
உங்கள் வீடு அழிக்கப்படாது. நீங்கள் இத
னைச் செய்தால் பின்னர் நான் திட்டமிட்ட
படி உங்களைத் தண்டிக்கமாட்டேன்”
ஆனால் அந்தத் தீய ஜனங்கள் ஏற்கனவே
செய்த தீயச்செயல்களை மேலும் செய்ய
விரும்பினார்கள்.
8கர்த்தர், “எனவே, காத்திருங்கள்! நான்
வந்து நின்று தீர்ப்பளிக்கும்வரை காத்திருங்
கள். நான் பல நாடுகளிலிருந்து ஜனங்களை
அழைத்துவந்து உன்னைத் தண்டிப்பதற்கு
அதிகாரம் உடையவன். நான் எனது கோப
த்தை உனக்கு எதிராகக் காட்ட அவர்
களைப் பயன்படுத்துவேன். நான் எவ்வளவு
கோபம் கொண்டேன் என்பதைக் காட்ட
அவர்களைப் பயன்படுத்துவேன். நாடு முழு
வதும் அழிக்கப்படும். 9பிறகு, நான், தெளி
வாகப் பேசும்படி பிற நாடுகளிலுள்ள
ஜனங்களை மாற்றுவேன். அவர்கள் அனை
வரும் கர்த்தருடைய நாமத்தை கூப்பிடு
வார்கள். அவர்கள் எல்லோரும் சேர்ந்து
என்னை தொழுதுகொள்வார்கள். 10ஜனங்கள்
எத்தியோப்பியாவில் ஆற்றுக்கு மறு
கரையிலிருந்து வருவார்கள். எனது சிதறிக்
கிடக்கும் ஜனங்கள் என்னிடம் வருவார்கள்.
என்னை தொழுதுகொள்பவர்கள் என்னிடம்
காணிக்கைகளைக் கொண்டு வருவார்கள்.
11“பிறகு, எருசலேமே, எனக்கு எதிராக
உன் ஜனங்கள் செய்த தீயச்செயல்களுக்காக
இனி நீ அவமானம் கொள்வதில்லை. ஏனெ
ன்றால், எருசலேமிலிருந்து தீய ஜனங்களை
எல்லாம் அகற்றுவேன். நான் அந்த
பெருமைகொள்கிற ஜனங்களை அழிப்பேன்.
என் பரிசுத்த பர்வதத்திலே தற்பெருமை
யுள்ள ஜனங்கள் இனி இருக்கமாட்டார்கள்.
12நான் பணிவும், அடக்கமும் உள்ள
ஜனங்களை என் நகரத்தில் (எருசலேமில்)
விட்டு வைப்பேன். அவர்கள் கர்த்தருடைய
நாமத்தில் நம்பிக்கை வைப்பார்கள். 13இஸ்ர
வேலில் மீதியுள்ளவர்கள் தீயச் செயல்களைச்
செய்யமாட்டார்கள். அவர்கள் பொய்ச்
சொல்லமாட்டார்கள். அவர்கள் ஜனங்களி
டம் பொய்ச் சொல்லி ஏமாற்றமாட்டார்கள்.
அவர்கள் ஆடுகளைப்போன்று உண்டு சமா
தானமாகப் படுத்திருப்பார்கள். யாரும் அவர்
களைத் துன்புறுத்தமாட்டார்கள்” என்றார்.

## மகிழ்ச்சிகரமான பாட்டு

14எருசலேமே, பாடு, மகிழ்ச்சியாக இரு,
இஸ்ரவேலே சந்தோஷமாகச் சத்தமிடு. எருச
லேமே, மகிழ்ச்சியாக இரு, களிகூறு.
15ஏனென்றால், கர்த்தர் உனது தண்ட

*னையை நிறுத்தி விட்டார். அவர் உனது*
*பகைவர்களின் உறுதியான கோபுரங்களை*
*அழித்தார். இஸ்ரவேலின் அரசனே, கர்த்தர்*
*உன்னோடு உள்ளார். எத்தீமையும் நிகழு*
*வதைக்குறித்து நீ கவலைபட வேண்டாம்.*
**16***அந்த நேரத்தில், எருசலேமிற்குச் சொல்*
*லப்படுவது என்னவென்றால் "உறுதியாக*
*இரு, அஞ்ச வேண்டாம்!*
**17***உனது தேவனாகிய கர்த்தர் உன்னோடு*
*உள்ளார், அவர் பலம் பொருந்திய வீரரைப்*
*போன்றவர். அவர் உன்னைக் காப்பாற்று*
*வார். அவர், தான் எவ்வளவு தூரம்*
*உன்னில் அன்பு செலுத்துகிறார் எனக்*
*காட்டுவார். அவர் உன்னோடு எவ்வளவு*
*மகிழ்ச்சியாய் உள்ளார் எனக் காட்டுவார்.*
*விழாவிருந்தில் கலந்துகொள்ளும் ஜனங்*
*களைப்போல அவர் உன்னைப்பற்றி மகிழ்ச்*
*சியடைவார்."*
**18***கர்த்தர்: "நான் உனது அவமானத்தை*
*எடுத்து விடுவேன். நான் அந்த ஜனங்கள்*
*உன்னைக் காயப்படுத்தாதபடிச் செய்வேன்.*
**19***அந்தக் காலத்தில், நான் உன்னைக் காயப்*
*படுத்திய ஜனங்களைத் தண்டிப்பேன். நான்*
*எனது பாதிக்கப்பட்ட ஜனங்களைக் காப்*
*பேன். நான் பலவந்தமாகத் துரத்தப்பட்ட*
*ஜனங்களை மீண்டும் அழைத்துவருவேன்.*
*அவர்களை புகழ்ச்சியுடையவர்களாக்கு*
*வேன். ஒவ்வொரு இடங்களிலும் உள்ளவர்*
*கள் அவர்களைப் போற்றுவார்கள்.*

**20***அந்த நேரத்தில், உன்னை மீண்டும்*
*அழைத்துக்கொண்டு வந்து சேர்ப்பேன். நான்*
*உங்களைப் புகழுக்குரியவர்களாக்குவேன்.*
*ஒவ்வொரு இடங்களிலும் உள்ளவர்கள் உங்*
*களைப் போற்றுவார்கள். நான் உங்களின்*
*சொந்த கண்களுக்கு முன்னால் கைதிகளை*
*கொண்டு வரும்போது அது நிகழும்!"*
*என்று சொன்னார்.*

# ஆகாய்

### ஆலயம் கட்டும் நேரம் இது

1 அரசனாகிய தரியு ஆட்சிப்பொறுப்பேற்ற
இரண்டாம் ஆண்டு, ஆறாம் மாதம் முத
லாம் தேதியிலே, கர்த்தருடைய செய்தி
ஆகாய்க்கு வந்தது. இச்செய்தி செருபாபே
லுக்கு உரியது. இவன் செயல்த்தியேலின்
மகன். யோத்சதாக்கின் மகன் யோசுவா.
செருபாபேல் யூதாவின் ஆளுநர், யோசுவா
தலைமை ஆசாரியன். இதுதான் செய்தி:
2 சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"கர்த்தருடைய ஆலயத்தை கட்டுவதற்கான
சரியான நேரம் இது அல்ல என்று
ஜனங்கள் சொல்கிறார்கள்."
3 மீண்டும் ஆகாய் கர்த்தரிடமிருந்து ஒரு
செய்தியைப் பெற்றான். ஆகாய், 4 "நல்ல
வீடுகளில் வாழும் சரியான நேரம் இது
என்று ஜனங்களாகிய நீங்கள் நினைக்
கின்றீர்கள். நீங்கள் சுவரில் மரப்பலகைகள்
பொறுத்தப்பட்ட வீடுகளில் வாழ்ந்துக்
கொண்டிருக்கிறீர்கள். ஆனால் கர்த்தருடைய
வீடு இன்னும் அழிவிலிருக்கிறது. 5 இப்பொ
ழுது, சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகி
றார்: என்ன நிகழ்ந்துக்கொண்டிருக்கிறது
என்பதை நினைத்துப் பார்! 6 நீ ஏராளமான
விதைகளை விதைத்தாய். ஆனால், நீ
குறைந்த அளவு அறுவடையையே
பெற்றாய். உன்னிடம் உண்ண உணவு
இருக்கும். ஆனால் அதனால் வயிறு நிறை
யாது. உனக்குக் குடிக்கக் ஏதாவது இருக்கும்.
ஆனால் முழுமையாகக் குடிக்கப் போதாது.
உன்னிடம் குறைந்த அளவு ஆடை அணிய
இருக்கும், ஆனால் அவை குளிர் தாங்க
உதவாது. நீ குறைந்த பணத்தைச் சம்பாதிப்
பாய். ஆனால் உன் பணம் எங்கே போகிறது
என்று உனக்குத் தெரியாது. உனது பையில்
ஓட்டை விழுந்ததுபோல் இருக்கும்*" என்
றார்.
7 "சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகி
றார்: 'நீங்கள் என்ன செய்துக்கொண்டி
ருக்கிறீர்கள் என்பதைப்பற்றி சிந்தியுங்கள்.
8 மரங்களைக் கொண்டு வருவதற்கு குன்று
களின்மேல் ஏறுங்கள். ஆலயத்தைக் கட்டுங்
கள். பிறகு நான் ஆலயத்தின்மேல் திருப்தி
அடைவேன். நான் கனத்தை பெறுவேன்."
கர்த்தர் இவற்றைச் சொன்னார்.
9 சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"ஜனங்களாகிய நீங்கள் பெரும் அறுவ
டையை எதிர் பார்த்திருக்கிறீர்கள். ஆனால்
நீங்கள் அறுவடைப் பொருட்களை எடுக்கப்
போகும்போது அங்கே கொஞ்சம்தான் தானி
யம் இருக்கிறது. எனவே அந்தத் தானியத்தை
வீட்டிற்குக் கொண்டுவருகிறீர்கள். பிறகு
நான் காற்றை அனுப்புகிறேன் அதனை
அது அடித்துச்செல்லும். ஏன் இவை நிகழு
கின்றன. ஏனென்றால் நீங்கள் எல்லாரும்
அவரவர் வீட்டை கவனித்துக்கொள்ள ஓடிப்
போகும்போது எனது வீடு இன்னும் அழிந்த
நிலையில் உள்ளது. 10 அதனால் தான் வானம்
பனியைப் வரப்பண்ணாமல் இருக்கிறது.
அதனால் தான் பூமி விளைச்சலைத் தராமல்
உள்ளது."
11 கர்த்தர் கூறுகிறார்: "நான் நிலங்களும்
குன்றுகளும் வறண்டுபோகும்படிக் கட்டளை
கொடுத்தேன். தானியம், புதிய திராட்சை
ரசம், ஒலிவ எண்ணெய், பூமி உற்பத்தி
செய்கிற அனைத்தும் அழிக்கப்பட்டன.
அனைத்து ஜனங்களும், அனைத்து விலங்கு
களும் பலவீனமாவார்கள். மனிதரின்
அனைத்து உழைப்பும் பயனற்றுப்போகும்."

### புதிய ஆலயத்தில் வேலைகள் தொடங்குகின்றன

12 தேவனாகிய கர்த்தர் செயல்த்தியேலின்
குமாரனாகிய செருபாபேலும், யோத்சதாக்
கின் மகனாகிய யோசுவா என்னும் தலை
மை ஆசாரியனும் கேட்க, பேசிட ஆகாயை
அனுப்பினார். எனவே இம்மனிதர்களும்,
அனைத்து ஜனங்களும் தங்கள் தேவனாகிய
கர்த்தருடைய குரலுக்கும், அவர் அனுப்பின
ஆகாய் என்னும் தீர்க்கதரிசியினுடைய
வார்த்தைகளுக்கும் செவிகொடுத்தார்கள்.
ஜனங்கள் கர்த்தருக்கு முன்னால் பயந்து
அவருக்கு மரியாதை செலுத்தினார்கள்.
13 இச்செய்தியை ஜனங்களுக்குச் சொல்ல
தேவனாகிய கர்த்தர் அனுப்பிய தூதுவன்
தான் ஆகாய். கர்த்தர், "நான் உன்னோடு
இருக்கிறேன்" என்கிறார்.
14 பிறகு தேவனாகிய கர்த்தர் ஜனங்கள்
ஆலயம் கட்டுவதைக் குறித்து உற்சாகப்படும்
படிச் செய்தார். செயல்த்தியேலின் மகனாகிய

---

***நீ ஏராளமான ... இருக்கும்*** அல்லது, "பணத்தை சேமிக்கிற ஒருவன் அவற்றை ஓட்டைகளுள்ள பையில் போட்டதுபோல் ஆகும்."

செருபாபேல் யூதாவின் ஆளுநராக இருந்
தான். கர்த்தர் அவனையும் பரவசப்படும்
படிச் செய்தார். யோத்சதாக்கின் மகனான
யோசுவா தலைமை ஆசாரியனாக இருந்
தான். கர்த்தர் அவனையும் பரவசப்படும்
படிச் செய்தார். கர்த்தர் அனைத்து ஜனங்
களையும் ஆலயம் கட்டுவதுபற்றி பரவசப்
படும்படிச் செய்தார். எனவே அவர்களின்
சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்த
ருக்கு ஆலயம் கட்டத்தொடங்கினார்கள்.
15 அவர்கள் தரியு அரசனின் இரண்டாம்
ஆண்டு ஆறாம் மாதம் இருபத்தி நான்காம்
நாள் வேலைச் செய்யத் தொடங்கினார்கள்.

### கர்த்தர் ஜனங்களை உற்சாகப்படுத்துகிறார்

2 ஏழாவது மாதத்தின் இருபத்தியோராம்
நாளன்று, கர்த்தரிடமிருந்து ஆகாய்க்கு
ஒரு செய்தி வந்தது. 2 யூதாவின் ஆளுநரும்,
செயல்த்தியேலின் மகனுமான செருபாபே
லுக்கும் தலைமை ஆசாரியனான யோத்ச
தாக்கின் மகன் யோசுவாவுக்கும், மற்று
முள்ள அனைத்து ஜனங்களுக்கும் இவற்றைச்
சொல்: 3 "உங்களில் எத்தனை பேர் இந்த
ஆலயத்தை பார்த்து, ஏற்கனவே அழிக்
கப்பட்ட ஆலயத்தோடு ஒப்பிடுவீர்கள்? நீங்
கள் என்ன நினைக்கிறீர்கள்? நீங்கள் முதல்
ஆலயத்தோடு ஒப்பிடும்போது இந்த ஆலயம்
ஒன்றுமில்லை என்று எண்ணுகிறீர்களா?
4 ஆனால் இப்பொழுது, செருபாபேலே,
'அதைரியப்பட வேண்டாம்!' என்று கர்த்தர்
கூறுகிறார். தலைமை ஆசாரியனாகிய யோத்
சதாக்கின் மகனாகிய யோசுவாவே, 'அதை
ரியப்பட வேண்டாம்!' அனைத்து ஜனங்
களே, 'மனம் தளர வேண்டாம். இந்த
வேலையைத் தொடர்ந்து செய்யுங்கள்.
ஏனென்றால் நான் உங்களோடு இருக்கி
றேன்.' சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்
றைச் சொன்னார்.
5 கர்த்தர் கூறுகிறார்: "நீங்கள் எகிப்தை
விட்டு வரும்போது நான் உங்களோடு ஒரு
உடன்படிக்கை செய்தேன். நான் எனது
வாக்குறுதியைக் காப்பாற்றியிருக்கிறேன்.
எனது ஆவி உங்களோடு இருக்கிறது.
எனவே அச்சப்பட வேண்டாம்! 6 ஏனென்
றால் சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்
றைச் சொல்லிக்கொண்டிருக்கிறார். கொஞ்ச
காலத்திற்குள்ளே, நான் மீண்டும் எல்லாவற்
றையும் அசையச் செய்வேன். நான் பர
லோகத்தையும் பூமியையும் அசையச் செய்
வேன். நான் கடலையும் வறண்ட நிலத்தை
யும் அசையச் செய்வேன். 7 நான் தேசங்
களையும் அசையச் செய்வேன். ஒவ்வொரு
தேசத்திலிருந்தும் செல்வத்துடன் ஜனங்கள்
உன்னிடம் வருவார்கள். பிறகு நான் இந்த
ஆலயத்தை மகிமையால் நிரப்புவேன். சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைக் கூறிக்
கொண்டிருக்கிறார். 8 அவர்களின் வெள்ளி
முழுவதும் எனக்குச் சொந்தமானது. தங்கம்
முழுவதும் எனக்குரியது. சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் இவற்றைக் கூறிக்கொண்டி
ருக்கிறார். 9 சர்வ வல்லமையுள்ள கர்த்தர்,
இந்த ஆலயம் முந்தைய ஆலயத்தைவிட மிக
அழகுள்ளதாகவும், மாட்சிமை பொருந்
தியதாகவும் இருக்கும். நான் இந்த இடத்
துக்குச் சமாதானத்தைக் கொண்டுவருவேன்.
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைக்
கூறிக்கொண்டிருக்கிறார் என்பதை நினைவு
படுத்திக்கொள்!"

### வேலை தொடங்கியிருக்கிறது ஆசீர்வாதம் வரும்

10 பெர்சியாவின் அரசனான தரியுவின்
இரண்டாம் ஆண்டில் ஒன்பதாம் மாதம்
இருபத்தி நான்காம் தேதியில், ஆகாய்
என்னும் தீர்க்கதரிசியின் மூலமாகக் கர்த்தரு
டைய வார்த்தை வந்தது. 11 சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர், நீ ஆசாரியர்களிடத்தில்
நியாயப்பிரமாணம் இதைப்பற்றி என்ன
சொல்லுகிறது என்று கேட்க கட்டளை
யிடுகிறார். 12 "ஒருவேளை ஒருவன் தன்
ஆடை மடிப்புக்குள் கொஞ்சம் இறைச்சி
யைக் கொண்டு போகிறான். அந்த இறைச்சி
பலிக்குரிய பகுதியாகும். எனவே அது
பரிசுத்தமாகிறது. அந்த ஆடைகள் கொஞ்சம்
அப்பத்தையோ, சமைத்த உணவையோ,
திராட்சைரசம், எண்ணெய் அல்லது மற்ற
உணவையோ தொட்டால் பரிசுத்தமாகுமா?
ஆடைப்பட்ட அந்தப் பொருட்களும் பரிசுத்த
மாகுமா?"

ஆசாரியர்கள் "இல்லை" என்றனர்.
13 பிறகு ஆகாய், "ஒருவன் மரித்த உட
லைத் தொட்டால் பின்னர் அவன் தீட்டா
கிறான். இப்பொழுது, அவன் எதையாவது
தொட்டால், அவையும் தீட்டாகுமா?" என்று
கேட்டான்.

ஆசாரியர், "ஆமாம், அவையும் தீட்ட
ாகும்" என்றனர்.
14 பிறகு ஆகாய், "தேவனாகிய கர்த்தர்
இவற்றைக் கூறுகிறார்: 'இந்த ஜனங்களைக்
குறிக்கும் இது உண்மையாகும். அவர்கள்
எனக்கு முன்னால் தூய்மையும் பரிசுத்தமும்
இல்லாதவர்கள். எனவே அவர்கள் கை
களால் தொடுகிற எதுவுமே தீட்டாகும்.
பலிபீடத்திற்கு கொண்டு வருகிற எதுவுமே
தீட்டாகும். 15 இன்றைக்கு முன்பு நடந்த
இவற்றைப்பற்றி நினைத்துப்பாருங்கள். கர்த்
தருடைய ஆலயத்தை நீங்கள் கட்டுவதற்கு
முன் உள்ளதை நினைத்துப்பாருங்கள்.
16 ஜனங்கள் 20 மரக்கலம் தானியம்
இருக்குமென்று விரும்பினார்கள். ஆனால்
அம்பாரத்தில் 10 மரக்கலம் தானியம்தான்
இருந்தது. ஜனங்கள் 50 ஜாடி திராட்சைரசம்
இருக்குமென்று விரும்பினார்கள். ஆனால்
20 ஜாடி இரசமே ஆலையின் தொட்டியில்
இருந்தது. 17 ஏனென்றால், நான் உங்களைத்
தண்டித்தேன். உங்கள் பயிர்களை அழிப்பதற்

குரிய நோய்களை அனுப்பினேன். நான்
கல்மழையை உங்கள் கைகளால் செய்த
வற்றை அழிக்க அனுப்பினேன். நான்
இவற்றைச் செய்தேன். ஆனால் நீங்கள்
இன்னமும் என்னிடம் வரவில்லை.’ கர்த்
தரே இவற்றைச் சொன்னார்” என்றான்.
[18]கர்த்தர், “இன்று ஒன்பதாம் மாதம்
இருபத்தி நான்காம்தேதி. நீங்கள் கர்த்தரு
டைய ஆலயத்தின் அஸ்திபாரத்தைப் போட்
டு முடித்திருக்கிறீர்கள். எனவே இன்றிலி
ருந்து என்ன நடக்கப்போகிறது என்று
பாருங்கள். [19]அம்பாரத்தில் இன்னும் தானி
யம் இருக்கிறதா? இல்லை. திராட்சை கொடி
கள், அத்தி மரங்கள், மாதளஞ் செடிகள்,
ஒலிவமரங்கள் ஆகியவற்றைப் பாருங்கள்.
அவை பழங்களைத் தருகின்றனவா? இல்
லை. ஆனால் இன்று முதல் நான் உங்களை
ஆசீர்வதிப்பேன்!” என்றார்.
[20]இன்னொரு செய்தி கர்த்தரிடமிருந்து
ஆகாய்க்கு இம்மாதத்தின் இருபத்தி நான்காம்
நாள் வந்தது. இதுதான் செய்தி: [21]“யூதாவின்
ஆளுநரான செருபாபேலிடம் செல்லுங்கள்.
நான் பரலோகத்தையும், பூமியையும் அசைப்
பேன் என்று அவனிடம் சொல்லுங்கள்.
[22]நான் பல அரசர்களையும் அரசுகளையும்
தூக்கி எறிவேன். இவ்வரசுகளின் வலிமை
யை நான் அழித்துப்போடுவேன். நான்
இரதங்களையும், அதில் பயணம் செய்வோ
ரையும் அழித்துப்போடுவேன். அந்தப் படை
வீரர்கள் இப்பொழுது நண்பர்களாய் இருக்கி
றார்கள். ஆனால் அவர்கள் வரும் நாட்களில்
எதிரிகளாக வாளினால் ஒருவரையொருவர்
கொன்றுப்போடுவார்கள். [23]சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் இவற்றைக் கூறிக்கொண்டி
ருக்கிறார். செயல்த்தியேலின் மகனாகிய
செருபாபேலே, நீ என்னுடைய வேலைக்கா
ரன். நான் உன்னைத் தேர்ந்தெடுத்திருக்கி
றேன். அந்நேரத்தில், நான் உன்னை முத்
திரை மோதிரமாகச்* செய்வேன் நான்
இவற்றைச் செய்திருக்கிறேன் என்பதற்கு
நீயே அத்தாட்சியாக இருபபாய்!” என்று
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் சொன்னார்.

---

**முத்திரை மோதிரம்** மோதிரத்தில் சொந்தக்காரரின் பெயர் அல்லது அடையாளம் இருக்கும். இதனை களிமண் அல்லது மெழுகில் அழுத்துவார்கள். இதன் மூலம் இந்தப் பொருள், மோதிரத்தை உடையவருக்குச் சொந்தமானது என்பதை நிரூபிக்கும்.

# சகரியா

### கர்த்தர் தமது ஜனங்கள் திரும்பவேண்டும் என விரும்புகிறார்

1 கர்த்தரிடமிருந்து பெரகியாவின் மகன்
சகரியாவுக்கு ஒரு செய்தி வந்தது. இது
தரியு பெர்சியாவை அரசாண்ட இரண்டாம்
ஆண்டு எட்டாம் மாதம். (சகரியா பெரகியா
வின் மகன். பெரகியா தீர்க்கதரிசியான
இத்தோவின் மகன்.) இதுதான் அந்த செய்தி.
2 கர்த்தர் உங்களது முற்பிதாக்கள் மேல்
மிகவும் கோபங்கொண்டவரானார். 3 நீங்கள்
இவற்றை ஜனங்களிடம் சொல்லவேண்டும்.
கர்த்தர், “என்னிடம் திரும்பி வாருங்கள்.
நான் உங்களிடம் திரும்பி வருவேன்”
என்கிறார். சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைச் சொன்னார்.
4 கர்த்தர், “நீங்கள் உங்கள் முற்பிதாக்க
ளைப் போன்றிருக்கக் கூடாது. கடந்த
காலத்தில், தீர்க்கதரிசிகள் அவர்களிடம்,
‘சர்வ வல்லமையுள்ள கர்த்தர் நீங்கள்
உங்களது தீய வாழ்க்கை முறையை மாற்ற
வேண்டும் என விரும்புகிறார். தீயவற்றைச்
செய்வதை நிறுத்துங்கள்!’ என்றார்கள்.
ஆனால், உங்கள் முற்பிதாக்கள் நான் சொன்
னதைக் கேட்கவில்லை” என்றார். கர்த்தர்
இவற்றைச் சொன்னார்.
5 கர்த்தர், “உங்கள் முற்பிதாக்கள் போய்
விட்டனர். அந்தத் தீர்க்கதரிசிகள் என்றென்
றைக்கும் வாழவில்லை. 6 தீர்க்கதரிசிகள்
எனது வேலைக்காரர்கள். நான் எனது
வார்த்தைகளையும், சட்டங்களையும், போத
னைகளையும் அவர்களைப் பயன்படுத்தி
உன் முற்பிதாக்களுக்குச் சொன்னேன்.
உனது முற்பிதாக்கள் இறுதியில் தங்கள்
பாடங்களைக் கற்றனர். அவர்கள், ‘சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் தான் எவற்றைச்
செய்யவேண்டும் எனச் சென்னாரோ
அதைச் செய்தார். நாங்கள் வாழ்ந்த
வாழ்க்கை முறைக்காகவும், நாங்கள் செய்த
தீமைக்காகவும் அவர் எங்களைத் தண்டித்
தார்’ என்றார்கள். எனவே அவர்கள் தேவ
னிடம் திரும்பி வந்தனர்” என்றார்.

### நான்கு குதிரைகள்

7 தரியு அரசாண்ட இரண்டாம் ஆண்டு.*
சேபாத் மாதமாகிய பதினோராம் மாதம்
இருபத்து நாலாந்தேதியிலே கர்த்தரிடமிருந்து
சகரியாவுக்கு இன்னொரு செய்தி வந்தது.
(தீர்க்கதரிசி இத்தோவின் மகன் பெரகியா.
இவனது மகன் சகரியா.) இதுதான் செய்தி.
8 இரவில், நான் ஒரு மனிதன் சிவப்புக்
குதிரையில் ஏறி வருவதைப் பார்த்தேன்.
அவன் பள்ளத்தாக்கில் இருந்த நறுமணப்
புதருக்குள் செடிகளுக்கிடையே நின்றான்.
அவனுக்குப் பின் சிவப்பும், மங்கின நிறமும்,
வெண்மையுமான குதிரைகள் நின்றன.
9 நான், “ஐயா இந்தக் குதிரைகள் எதற்காக?”
என்று கேட்டேன்.
பிறகு என்னிடம் பேசின தேவதூதன்,
“இந்தக் குதிரைகள் எதற்காக உள்ளன
என்பதை நான் உனக்குக் காட்டுவேன்”
என்றான்.
10 பிறகு புதருக்குள் நின்ற அந்த மனிதன்,
“கர்த்தர் இந்தக் குதிரைகளைப் பூமியில்
அங்கும் இங்கும் போவதற்காக அனுப்பி
னார்” என்றான்.
11 அதன் பிறகு நறுமணப் புதருக்குள்
நின்ற கர்த்தருடைய தூதனிடத்தில் குதிரை
கள், “நாங்கள் பூமி முழுதும் சுற்றித்திரிந்
தோம், எல்லாம் அமைதியாக இருக்கிறது”
என்றன.

12 பின்னர் கர்த்தருடைய தூதன், “கர்த்
தாவே, நீர் இன்னும் எவ்வளவு காலத்துக்கு
எருசலேமையும் யூதாவின் நகரங்களையும்
ஆறுதல் படுத்தாமலிருப்பீர்? எழுபது ஆண்டு
களாக இந்நகரங்களின் மேல் நீர் உமது
கோபத்தைக் காட்டினீர்” என்றான்.
13 பின்னர் கர்த்தர், என்னோடு பேசிக்
கொண்டிருந்த தேவதூதனிடம், கர்த்தர் நல்ல
ஆறுதலான வார்த்தைகளைப் பேசினார்.
14 பின்னர் தூதன் ஜனங்களிடம் இவற்றைச்
சொல்லவேண்டும் என்று சொன்னான். சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்: “நான்
எருசலேம் மற்றும் சீயோன் மீது உறுதியான
அன்பு கொண்டிருந்தேன்.
15 நான், தாங்கள் பாதுகாப்பாக இருக்கி
றோம் என்று எண்ணும் நாடுகள் மீது
மிகவும் கோபமாக இருக்கிறேன். நான்
கொஞ்சம் கோபம் கொண்டிருந்தபோது என்
ஜனங்களைத் தண்டிக்க அந்த நாடுகளைப்
பயன்படுத்தினேன். ஆனால் அந்த நாடுகள்
பெருஞ்சேதத்திற்குக் காரணமாயின.”

---

**தரியு அரசாண்ட இரண்டாம் ஆண்டு** ஏறக்குறைய கி.மு. 520.

16எனவே கர்த்தர் கூறுகிறார்: “நான்
எருசலேமிற்குத் திரும்பி வருவேன். அவ
ளுக்கு ஆறுதல் கூறுவேன்.” சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் கூறுகிறார்: “எருசலேமை
மீண்டும் கட்டுவேன். எனது வீடு அங்கே
கட்டப்படும்.”
17தூதன் கூட, “‘எனது நகரங்கள் மீண்டும்
வளம்பெறும். நான் சீயோனுக்கு ஆறுதல்
அளிப்பேன். நான் எனது சிறப்புக்குரிய
நகரமாக எருசலேமைத் தேர்ந்தெடுப்பேன்’
என்று சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகி
றார்” என்றான்.

## நான்கு கொம்புகளும் நான்கு தொழிலாளிகளும்

18பிறகு நான் மேலே பார்த்தேன். நான்கு
கொம்புகளைக் கண்டேன். 19பிறகு நான்
என்னோடு பேசிக்கொண்டிருந்த தூதனிடம்,
“இக்கொம்புகளின் அர்த்தம் என்ன?” என்று
கேட்டேன்.
அவர், “இக்கொம்புகள் இஸ்ரவேல், யூதா
மற்றும் எருசலேம் ஜனங்களை அன்னிய
நாடுகளுக்குத் துரத்தின” என்றார்.
20பிறகு கர்த்தர் நான்கு தொழிலாளிகளைக்
காட்டினார். 21நான் அவரிடம், “இந்த நான்கு
ஆட்களும் என்ன செய்ய வந்திருக்கிறார்
கள்?” எனக் கேட்டேன்.
அவர், “இம்மனிதர்கள் இக்கொம்புகளை
அச்சுறுத்தி வெளியில் எறிந்துபோட வந்தி
ருக்கின்றனர். அக்கொம்புகள் யூதாவின்
ஜனங்களை அயல்நாடுகளுக்குப் பலவந்த
மாக தூக்கி ‘எறிந்தன.’ அக்கொம்பு கள்
எவரிடமும் இரக்கம் காட்டவில்லை.
அக்கொம்புகள் யூதா ஜனங்களை அயல்நாடு
களுக்குத் தூக்கி எறிவதின் அடையாளமாக
உள்ளன” என்றார்.

## எருசலேமின் அளவுகள்

2 பிறகு நான் பார்த்தேன், நான் ஒரு
மனிதன், அளவு கயிற்றினை எடுத்துக்
கொண்டு நிற்பதைக் கண்டேன். 2நான்
அவனிடம், “எங்கே போய்கொண்டிருக்கி
றாய்?” என்று கேட்டேன்.
அவன் என்னிடம், “நான் எருசலேமை
அளந்து எவ்வளவு நீளம் எவ்வளவு அகலம்
எனப் பார்க்கப்போகிறேன்” என்றான்.
3பிறகு என்னோடு பேசிக்கொண்டிருந்த
தூதன் விலகினான். இன்னொரு தூதன்
அவனோடு பேசப்போனான். 4அவன்
அவனிடம், “ஓடிப்போய் அந்த இளைஞனி
டம் எருசலேமானது அளக்க முடியாத
வகையில் பெரிதாக உள்ளது என்று சொல்.
அவனிடம் இவற்றைச் சொல்! ‘எருசலேம்
சுவர்களில்லாத நகரமாகும். ஏனென்றால்
அங்கே ஏராளமான ஜனங்களும் மிருகங்க
ளும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.’
5கர்த்தர் கூறுகிறார்: ‘நான் அவளைக்
காப்பாற்றுவதற்கு அவளைச் சுற்றி நெருப்
புச்சுவராக இருப்பேன். அந்நகரத்திற்கு மகி
மையைக் கொண்டுவர நான் அங்கே
குடியிருப்பேன்’” என்றான்.

## தேவன் தமது ஜனங்களை வீட்டிற்கு அழைக்கின்றார்

கர்த்தர் கூறுகிறார்: 6“சீக்கிரம்! வடக்கே
உள்ள நிலத்திலிருந்து ஓடு. ஆம், நான்
உங்கள் ஜனங்களை எல்லாத் திசைகளுக்கும்
சிதறடித்தேன் என்பது உண்மை.
7சீயோனிலிருந்து உனது ஜனங்கள் பாபி
லோனில் கைதிகளாக இருக்கிறார்கள்.
ஆனால் இப்பொழுது தப்பி, அந்த நகரத்தி
லிருந்து வெளியே ஓடுங்கள்!” சர்வ வல்ல
மையுள்ள கர்த்தர் இவற்றைச் சொன்னார்.
உன்னிடமிருந்து திருடிய ஜனங்களிடத்திற்கு
என்னை அனுப்பினார். உங்களைக் கனப்
படுத்தும்படி என்னை அனுப்பினார்.
8ஏனென்றால், யார் உன்னைக் காயப்படுத்
தினாலும், அது தேவனுடைய கண்மணி
யைக் காயப்படுத்துவது போன்றதாகும்.
9பாபிலோனியர், என் ஜனங்களை
அடிமைப்படுத்தினார்கள். ஆனால் நான்
அவர்களைப் பலமாக அடிப்பேன், அவர்கள்
என் ஜனங்களின் அடிமைகளாவார்கள்,
பிறகு சர்வ வல்லமையுள்ள கர்த்தர் என்னை
அனுப்பினார் என்பதை அறிவார்கள்.
10கர்த்தர் கூறுகிறார்: “சீயோனே, மகிழ்ச்சி
யோடு இரு. ஏனென்றால், நான் வந்து
கொண்டிருக்கிறேன். நான் உங்கள் நகரத்தில்
வாழ்வேன்.
11அந்த நேரத்தில், பல நாடுகளிலிருந்து
ஜனங்கள் என்னிடம் வருவார்கள். அவர்கள்
எனது ஜனங்களாவார்கள். நான் உங்கள்
நகரில் வாழ்வேன்.” பிறகு, சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் என்னை அனுப்பினார்
என்பதை நீங்கள் அறிவீர்கள்.
12கர்த்தர் எருசலேமைத் தனது சிறப்
புக்குரிய நகரமாகத் தேர்ந்தெடுப்பார். யூதா
பரிசுத்தமான நாடாக, அவரது பங்காகச்
சேரும்.
13ஒவ்வொருவரும் அமைதியாக இருப்பார்
கள். கர்த்தர் அவரது பரிசுத்தமான வீட்டை
விட்டு வெளியே வருவார்.

## தலைமை ஆசாரியன்

3 பிறகு தலைமை ஆசாரியனாகிய யோசு
வாவை எனக்கு தூதன் காட்டினான்.
யோசுவா கர்த்தருடைய தூதனுக்கு முன்
னால் நின்றுக்கொண்டிருந்தான். சாத்தான்,
யோசுவாவைக் குற்றஞ்சாட்டும்படி அவன்
வலது பக்கத்திலே இருந்தான். 2பிறகு கர்த்த
ருடைய தூதன், “சாத்தானே, கர்த்தர் உன்
னை தொடர்ந்து குற்றஞ்சாட்டுவார். கர்த்தர்

*உன்னைத் தொடர்ந்து குற்றஞ்சாட்டுவார்.
கர்த்தர் எருசலேமைத் தனது சிறப்புக்குரிய
நகரமாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார். அவர்
நகரைக் காப்பாற்றினார். இது எரிகின்ற
நெருப்பிலிருந்து கட்டையை உருவி எடுப்
பது போன்றதாகும்” என்றான்.*
3 *யோசுவா தூதனுக்கு முன் நின்று
கொண்டிருந்தான். யோசுவா ஒரு அழுக்கான
ஆடையை அணிந்திருந்தான்.* 4 *பிறகு, அந்த
தூதன் தன்னருகில் நின்றுகொண்டிருந்
தவர்களை நோக்கி, “யோசுவாவின் அழுக்கு
ஆடைகளை எடுத்துப்போடுங்கள்” என்
றான். பிறகு தூதன் யோசுவாவிடம், “இப்
பொழுது நான் உனது குற்றங்களை
நீக்கியிருக்கிறேன், நான் உனக்கு புதிய
ஆடையை தருகிறேன்” என்றான்.*
5 *பிறகு நான், “அவனது தலைமேல்
சுத்தமான தலைப்பாகையை அணிவி” என்
றேன். எனவே அவர்கள் அவன் தலைமேல்
சுத்தமான தலைப்பாகையை அணிவித்தார்
கள். கர்த்தருடைய தூதன் அங்கே நிற்கும்
போது, அவர்கள் அவன்மேல் சுத்தமான
ஆடையை வைத்தார்கள்.* 6 *பிறகு கர்த்தரு
டைய தூதன் யோசுவாவிடம் இவற்றைச்
சொன்னான்.*
7 *சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைச்
சொன்னார்: “நான் சொல்கிற வழியில் வாழ்.
நான் சொன்னவற்றைச் செய். என்
ஆலயத்தின் பொறுப்பாளராக நீ அதன்
பிரகாரங்களைக் காவல் செய்வாய். இங்கு
நிற்கும் தூதர்களைப் போல ஆலயத்தின்
எவ்விடத்திற்கும் போகலாம் என்று நான்
உனக்கு அனுமதி தருவேன்.*
8 *எனவே யோசுவா, நீயும் உன் முன்னால்
அமர்ந்திருக்கும் உடன் ஆசாரியர்களும் நான்
சொல்வதைக் கேட்கவேண்டும். நீயே
தலைமை ஆசாரியன். உன்னோடு இருக்கிற
ஜனங்கள் நான் என்னுடைய சிறப்பு வே
லைக்காரனைக் கொண்டு வரும்போது செய்
யப்போகும் செயல்களைக் காட்டும் உதார
ணங்களாக இருக்கிறார்கள். நான் உண்மை
யாக என் சிறப்பு வேலைக்காரனைக்
கொண்டு வருவேன். அவன்கிளை என
அழைக்கப்படுகிறான்.*
9 *பார், நான் யோசுவாவின் முன்பு ஒரு
சிறப்பான கல்லை வைத்தேன். அக்கல்லில்
ஏழு பக்கங்கள்* இருக்கின்றன. நான் அந்தக்
கல்லில் சிறப்புச் செய்தியைச் செதுக்கு
வேன். நான் இந்த நாட்டில் உள்ள அனைத்து
குற்றங்களையும் ஒரே நாளில் எடுத்து
விடுவேன் என்பதனை இது காட்டும்.”*
10 *சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
“அந்த வேளையில், ஜனங்கள் தமது நண்பர்
களோடும் அயலார்களோடும் அமர்ந்து பேசு
வார்கள். அத்திமரம் மற்றும் திராட்சை
கொடிகளுக்குக் கீழ் அமர ஒருவரையொ
ருவர் அழைப்பார்கள்.”*

## விளக்குத் தண்டும் இரண்டு ஒலிவ மரங்களும்

4 *பிறகு என்னோடு பேசிக்கொண்டிருந்த
தூதன் என்னிடம் வந்து என்னை
எழுப்பினான். நான் தூக்கத்திலிருந்து
எழுந்தவனைப் போன்றிருந்தேன்.* 2 *பிறகு
அந்தத் தூதன், “நீ என்ன பார்க்கிறாய்?”
என்று என்னிடம் கேட்டான்.*
*நான், “நான் முழுவதும் பொன்னாலான
விளக்குத் தண்டைப் பார்க்கிறேன். விளக்குத்
தண்டின்மேல் ஏழு விளக்குகள் இருந்தன.
விளக்குத் தண்டின் உச்சியில் ஒரு அகல்
இருக்கிறது. அந்த அகலிலிருந்து ஏழு
குழாய்கள் வந்துகொண்டிருந்தன. ஒவ்
வொரு குழாயும் ஒவ்வொரு விளக்குக்கும்
போகின்றன. குழாய்கள் ஒவ்வொரு விளக்
கும் அகலிலிருந்து எண்ணெயைக் கொண்டு
வருகின்றது.* 3 *அகலின் வலது பக்கம் ஒன்
றும், இடது பக்கம் ஒன்றுமாக இரண்டு
ஒலிவ மரங்கள் இருக்கின்றன. இந்த மரங்கள்
அகல் விளக்குகளுக்கு வேண்டிய எண்ணெ
யைக் கொடுக்கின்றன” என்றேன்.* 4 *பிறகு
நான் என்னோடு பேசிக்கொண்டிருந்த தூத
னிடம், “ஐயா, இவற்றின் பொருள் என்ன?”
என்று கேட்டேன்.*
5 *என்னோடு பேசிக்கொண்டிருந்த தூதன்,
“இவை என்னவென்று உனக்குத் தெரி
யாதா?” எனக்கேட்டான்.*
*நான், “இல்லை ஐயா” என்றேன்.*
6 *பிறகு அவன் என்னிடம், “இதுதான்
கர்த்தரிடமிருந்து செருபாபேலுக்குச் சொல்
லப்பட்டச் செய்தி: ‘உனக்கான உதவி,
உனது பலம் மற்றும் வல்லமையிலிருந்து
வராது. இல்லை, எனது ஆவியிலிருந்தே
உனக்கு உதவி வரும்’ சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் இவற்றைச் சொன்னார்!* 7 *அந்த
உயரமான குன்று செருபாபேலுக்கு முன்
னால் சமநிலமாகும். அவன் ஆலயத்தைக்
கட்டுவான். அந்த இடத்தில் மிகவும்
முக்கியமான கல்லை வைக்கும்போது
ஜனங்கள்: ‘அழகாயிருக்கிறது! அழகாயிருக்
கிறது!’ என்று சத்தமிடுவார்கள்.”*
8 *எனக்கு மேலும் வந்த கர்த்தருடைய
செய்தியானது,* 9 *“செருபாபேல் எனது ஆல
யத்துக்கான அஸ்திபாரக்கல்லை இடுவான்.
செருபாபேலே ஆலயம் கட்டும் வேலையை
முடிப்பான். பிறகு, சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் என்னை ஜனங்களிடம் அனுப்பி
னார் என்பதை நீங்கள் அறிவீர்கள்.*
10 *ஜனங்கள் சிறுதொடக்கத்துக்காக அவமா
னம் அடையவேண்டாம். செருபாபேல்
தூக்கு நூலோடு கட்டி முடித்த ஆலயத்தை
அளந்து சோதிப்பதைப் பார்க்கும்போது
ஜனங்கள் உண்மையிலேயே மகிழ்வார்கள்.
இப்பொழுது நீ பார்த்த ஏழு பக்கமுள்ள*

---

**பக்கங்கள்** *எழுத்தின் பிரகாரமாக, “கண்கள்” எனப் பொருள்படும்.*

*கல் கர்த்தருடைய ஒவ்வொரு திசையிலும்
பார்க்கிற கண்களை குறிக்கும், அவை
பூமியின் மேலே எல்லாவற்றையும் பார்க்கின்
றன.”*
11*பிறகு நான் (சகரியா) அவனிடம்,
“நான் விளக்குத் தண்டின் வலது பக்கத்தில்
ஒன்றும், இடது பக்கத்தில் ஒன்றுமாக
ஒலிவ மரங்களைப் பார்த்தேன். அந்த
இரண்டு ஒலிவ மரங்களின் அர்த்தம் என்ன?”
எனக் கேட்டேன்.* 12*நான் அவனிடம்,
“இரண்டு தங்கக் குழாய்களின் வழியாகத்
தொங்கி, தங்கநிற எண்ணெயைத் தங்களிட
மிருந்து இறங்கச் செய்யும் ஒலிவ மரங்களின்
இரண்டு கிளைகளின் அர்த்தம் என்ன?”
என்றும் கேட்டேன்.*
13*பின்னர் அந்தத் தூதன் என்னிடம்,
“இவற்றின் பொருள் என்னவென்று தெரி
யாதா?” எனக் கேட்டான். நான், “இல்லை
ஐயா” என்றேன்.*
14*எனவே அவன், “உலகம் முழுவதும்
கர்த்தருக்கு சேவை செய்யத் தேர்ந்தெடுக்கப்
பட்ட இருவரை அவை குறிக்கின்றன”
என்றான்.*

### பறக்கும் ஓலைச்சுருள்

5 *நான் மறுபடியும் மேலே பார்த்தேன்.
நான் ஒரு பறக்கும் புத்தகச்சுருளைப்
பார்த்தேன்.* 2*தூதன் என்னிடம், “என்ன
பார்க்கிறாய்?” எனக் கேட்டான்.*
*“நான் ஒரு பறக்கும் புத்தகச்சுருளைப்
பார்க்கிறேன். அந்த புத்தகச்சுருள் 30 அடி
நீளமும் 15 அடி அகலமும் கொண்டது”
என்று நான் சொன்னேன்.*
3*பின்னர் தூதன் என்னிடம் சொன்னான்:
“அந்த புத்தகச்சுருளில் சாபம் எழுதப்பட்
டிருக்கிறது. புத்தகசுருளின் ஒரு பக்கத்தில்
திருடிய ஜனங்களுக்கான சாபம் எழுதப்பட்
டுள்ளது. புத்தகச்சுருளின் இன்னொரு பக்கத்
தில் வாக்குறுதி அளிக்கும்போது பொய்
சொன்ன ஜனங்களுக்கான சாபம் எழுதப்
பட்டுள்ளது.* 4*சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கூறுகிறார்: நான் இந்தப் புத்தகச்சுருளை
திருடர்களின் வீடுகளுக்கும் கர்த்தருடைய
நாமத்தால் பொய்சத்தியம் செய்தவர்களின்
வீடுகளுக்கும் அனுப்புவேன். அந்தப் புத்தகச்
சுருள் அங்கே தங்கி அது அவ்வீடுகளை
அழிக்கும். அவ்வீட்டிலுள்ள கற்களும்
மரத்தூண்களும் அழிக்கப்படும்.”*

### பெண்ணும் வாளியும்

5*பின்னர் என்னோடு பேசிக்கொண்டிருந்த
தூதன் வெளியே போனான். அவன் என்
னிடம், “பார்! என்ன வருகிறதென்று
காண்கிறாய்?” என்று கேட்டான்.*
6*நான் “இது என்னவென்று அறியேன்”
என சொன்னேன்.*
*அவன், “இது ஒரு அளவுபார்க்கும்
வாளி” என்று சொன்னான். அதோடு
அவன், “அந்த வாளி இந்த நாட்டிலுள்ள
ஜனங்களின் பாவங்களை அளக்கும் வாளி”
என்று சொன்னான்.*
7*வாளியை மூடியிருந்த ஈயத்தினாலான
மூடி அகற்றப்பட்டது. வாளிக்குள் ஒரு
பெண் உட்கார்ந்துகொண்டிருந்தாள்.* 8*தூதன்,
“இப்பெண் பாவத்தின் பிரதிநிதியாய்
இருக்கிறாள்” என்றான். பின்னர் தூதன்
அப்பெண்ணை வாளிக்குள் தள்ளி, கனத்த
மூடியினால் அதை மூடிப்போட்டான். இது
பாவங்கள் மிகக் கனமானவை என்பதைக்
காட்டும்.* 9*பின்னர் நான் ஏறிட்டுப் பார்த்
தேன். நான் இரண்டு பெண்கள் நாரையைப்
போன்ற சிறகுகளுடன் இருப்பதைப் பார்த்
தேன். அவர்கள் பறந்து போனார்கள்.
சிறகுகளிலுள்ள காற்றால் வாளியை தூக்கிப்
போயினர். அவர்கள் வாளியை தூக்கிக்
கொண்டு காற்றில் பறந்தனர்.* 10*பின்னர்
நான் என்னோடு பேசிக்கொண்டிருந்த தூத
னிடம், “அவர்கள் வாளியைத் தூக்கிக்
கொண்டு எங்கே போகிறார்கள்?” என்றேன்.*
11*தூதன் என்னிடம், “அவர்கள் சிநெயா
ரிலே* அதற்கு ஒரு வீட்டைக்கட்டப் போய்
கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அந்த
வீட்டைக் கட்டிய பிறகு, அந்த வாளியை
அங்கே வைப்பார்கள்” என்றான்.*

### நான்கு இரதங்கள்

6 *பின்னர் நான் சுற்றி திரும்பினேன்.
நான் மேலே பார்த்தேன். நான் நான்கு
இரதங்கள் இரண்டு வெண்கல மலைக
ளுக்கிடையில் செல்வதைக் கண்டேன்.*
2*சிவப்புக் குதிரைகள் முதல் இரதத்தை,
இழுத்துக்கொண்டு சென்றன. இரண்டாவது
இரதத்தை, கருப்புக் குதிரைகள் இழுத்துக்
கொண்டு சென்றன.* 3*வெள்ளைக் குதிரைகள்,
மூன்றாவது இரதத்தை இழுத்துச் சென்றன.
சிவப்புப் புள்ளிகளை உடைய குதிரைகள்,
நான்காவது இரதத்தை இழுத்துச் சென்றன.*
4*பின்னர் என்னோடு பேசிக்கொண்டிருந்த
தூதனிடம், “ஐயா, இவற்றின் பொருள்
என்ன?” என்று கேட்டேன்.*
5*தூதன், “இவை நான்கு காற்றுகள்.
அவை இப்பொழுது தான் உலகம் முழுவதற்
கும் ஆண்டவராக இருக்கிறவரிடத்திலி
ருந்து வந்திருக்கின்றன.* 6*கருப்பு குதிரைகள்
வடக்கே செல்லும். சிவப்புக் குதிரைகள்
கிழக்கே செல்லும். வெள்ளைக் குதிரைகள்
மேற்கே செல்லும் சிவப்பு புள்ளிகளையு
டைய குதிரைகள் தெற்கே செல்லும்”
என்றான்.*
7*சிவப்பு புள்ளிகளையுடைய குதிரைகள்
புறப்பட்டுப்போய் பூமியில் அவைகளுக்கான
பகுதிகளைக் காண ஆவலாய் இருந்தன.*

---

**சிநெயார்** *பாபேல் கோபுரம் உள்ள சமவெளி. (ஆதி. 11:2) பாபிலோன் நகரம் இதில் கட்டப்பட்டது.*

எனவே தூதன் அவைகளிடம், “பூமி முழு
வதும் போங்கள்” என்றான். எனவே அவை
பூமியில் தங்கள் பகுதிகளில் நடந்து
சென்றன.
8 பின்னர் கர்த்தர் என்னைக் கூப்பிட்டார்.
அவர், “பார், வடக்கே செல்லும் குதிரைகள்
பாபிலோனில் தம் வேலையை முடித்து
விட்டன. அவை எனது ஆவியை அமைதி
படுத்திவிட்டன. இப்பொழுது நான் கோப
மாக இல்லை!” என்றார்.

### ஆசாரியன் யோசுவா ஒரு கிரீடத்தைப் பெறுகிறான்

9 பின்னர், நான் கர்த்தரிடமிருந்து இன்
னொரு செய்தியைப் பெற்றேன். அவர்,
10 “எல்தாயும், தொபியாவும், யெதாயாவும்
பாபிலோனின் சிறைகைதிகளாய் இருந்து
வந்திருக்கின்றனர். அம்மனிதர்களிடமிருந்து
வெள்ளியையும், தங்கத்தையும் பெறு. பிறகு
செப்பனியாவின் மகனாகிய யோசியாவின்
வீட்டுக்குப் போ. 11 அந்தப் பொன்னையும்
வெள்ளியையும் பயன்படுத்தி கிரீடம் செய்.
அந்தக் கிரீடத்தை யோசுவாவின் தலையில்
வை. (யோசுவா தலைமை ஆசாரியனாக
இருந்தான். யோசுவா யோத்சதாக்கின் மகன்.)
பிறகு யோசுவாவிடம் இவற்றைச் சொல்:
12 சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைக்
கூறுகிறார்: “கிளை என்று அழைக்கப்படும்
மனிதன் இருக்கிறான். அவன் பலத்துடன்
வளருவான். அவன் கர்த்தருடைய ஆல
யத்தை கட்டுவான்.
13 அவன் கர்த்தருடைய ஆலயத்தைக்கட்டி,
அதற்குரியப் பெருமையைப் பெறுவான்.
அவன் தனது சிங்காசனத்தில் அமர்ந்து
ஆள்பவனாவான். ஒரு ஆசாரியன் அவன
ருகில் நிற்பான். இவ்விரண்டுபேரும் சேர்ந்து
சமாதானத்துடன் பணிசெய்வார்கள்.
14 “அவர்கள் இந்தக் கிரீடத்தை ஜனங்க
ளுக்கு நினைவூட்டுவதற்காக ஆலயத்தில்
வைப்பார்கள். அந்தக் கிரீடம் எல்தாய்,
தொபியா, யெதயா, செப்பனியாவின் மகன்
யோசுவா ஆகியோருக்கு நினைவூட்டும் சின்
னமாக இருக்கும். யோசியா, இது அரசனின்
வல்லமை தேவனிடத்திலிருந்து வருகிறது
என்பதை அவர்களுக்கு நினைவூட்டும்.
15 தொலைதூரத்தில் வாழும் ஜனங்களும்
வந்து அங்கு ஆலயம் கட்டுவார்கள். பின்னர்
கர்த்தர் என்னை உங்களுக்காக அனுப்பி
னார் என்பதை உணர்வீர்கள். கர்த்தர்
சொல்லுகிறபடி நீங்கள் செய்தால் இவை
நிகழும்.”

### கர்த்தர் இரக்கத்தையும் கருணையையும் விரும்புகிறார்

7 தரியுவின் நான்காவது ஆட்சியாண்டில்
கர்த்தரிடமிருந்து சகரியாவுக்கு ஒரு
செய்தி வந்தது. இது ஒன்பதாவது மாதத்தின்
நான்காம் நாள். (அது கிஸ்லே எனப்படும்.)
2 பெத்தேல் ஜனங்கள் சரேத்சேரையும்,
ரெகெம்மெலேகும், அவனது ஆட்களையும்
சில கேள்விகள் கேட்க கர்த்தரிடம் அனுப்
பினார்கள். 3 அவர்கள் தீர்க்கதரிசிகளிடமும்,
சர்வ வல்லமையுள்ள கர்த்தருடைய ஆலயத்
தில் உள்ள ஆசாரியர்களிடமும் சென்றனர்.
அம்மனிதர்கள் அவர்களிடம் இந்த கேள்
வியைக் கேட்டனர்: “பல ஆண்டுகளாக
ஆலயத்தின் அழிவுக்காக நாங்கள் துக்கம்
கொண்டோம். ஒவ்வொரு ஆண்டின் ஐந்தா
வது மாதத்திலும் நாங்கள் அழுவதற்கும்,
உபவாசிப்பதற்கும் தனியான காலத்தை
நியமித்திருந்தோம். நாங்கள் இதனைத் தொட
ரவேண்டுமா?”
4 நான் சர்வ வல்லமையுள்ள கர்த்தரிட
மிருந்து இந்தச் செய்தியைப் பெற்றேன்:
5 “ஆசாரியர்களுக்கும் இந்த நாட்டிலுள்ள
பிறருக்கும் இதனைக் கூறு: நீங்கள் ஐந்தாவது
மாதத்திலும், ஏழாவது மாதத்திலும், உப
வாசம் இருந்து 70 வருடங்கள் உங்கள்
துக்கத்தைக் காட்டினீர்கள். ஆனால் அந்த
உபவாசம் எனக்காகவா? 6 இல்லை. நீங்கள்
உண்ணுவதும், குடிப்பதும் எனக்காகவா?
இல்லை. இது உங்கள் சொந்த நலனுக்காக.
7 தேவன் முற்கால தீர்க்கதரிசிகளைக்
கொண்டு இதே செய்தியைச் சொல்லியிருக்கி
றார். எருசலேம் ஒரு வளமான நகரமாக
ஜனங்களால் நிறைந்திருந்தபோது அவர்
இவற்றைச் சொன்னார். எருசலேமைச் சுற்றி
யுள்ள நகரங்களிலும் நெகேவ், மேற்க்கத்திய
மலை அடிவாரங்களிளும் ஜனங்கள் வாழ்ந்த
காலத்தில் தேவன் இவற்றைச் சொன்னார்.”
8 இதுதான் சகரியாவுக்கான கர்த்தருடைய
செய்தி.
9 சர்வ வல்லமையுள்ள கர்த்தர், “எது
நன்மையும் நேர்மையும் கொண்டதோ அவற்
றை நீ செய்யவேண்டும். நீங்கள் ஒருவருக்
கொருவர் கருணையும் இரக்கமும் கொள்ள
வேண்டும்.
10 விதவைகளைம், அநாதைகளையும்,
அயல்நாட்டாரையும், ஏழைகளையும் துன்பு
றுத்தாதேயுங்கள். ஒருவருக்கொருவர் தீமைச்
செய்ய எண்ணவும் வேண்டாம்!” என்றார்.
11 ஆனால் அந்த ஜனங்கள் கேட்க
மறுத்தனர். அவர்கள் அவர் விரும்பியதை
செய்ய மறுத்தனர். அவர்கள் தங்கள் காது
களை மூடினார்கள். எனவே, தேவன்
என்ன சொல்கிறார் என்பதை கேட்க
முடிய வில்லை.
12 அவர்கள் மிகவும் கடின மனமுடை
யவர்கள். அவர்கள் சட்டங்களுக்கு அடிபணி
வதில்லை. சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
தனது ஆவியைக் கொண்டு தனது ஜனங்
களுக்குத் தீர்க்கதரிசிகள் மூலமாக செய்தி
களை அனுப்பினார். ஆனால் ஜனங்கள்
கேட்கவில்லை. எனவே, சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் மிகவும் கோபமுற்றார்.

[13]ஆகவே சர்வ வல்லமையுள்ள கர்த்தர்,
"நான் அவர்களைக் கூப்பிட்டேன். அவர்கள்
பதில் சொல்லவில்லை. இப்பொழுது அவர்
கள் என்னைக் கூப்பிட்டால், நான் பதில்
சொல்லமாட்டேன்.
[14]நான் மற்ற நாடுகளை, ஒரு புயலைப்
போன்று அவர்களுக்கு எதிராகக் கொண்டு
வருவேன். அவர்கள் அந்த நாடுகளை
அறிய மாட்டார்கள். ஆனால், இந்த நாடு
பிற நாடுகள் வந்துபோன பிறகு அழிக்
கப்படும். இந்த செழிப்பான நாடு அழிக்
கப்படும்" என்றார்.

### எருசலேமை ஆசீர்வதிக்க கர்த்தர் வாக்குறுதி அளிக்கிறார்

8 இதுதான் சர்வ வல்லமையுள்ள கர்த்தரிட
மிருந்து வருகிற செய்தி. [2]சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்: "நான்
சீயோனை உண்மையாக நேசிக்கிறேன்.
அவள் என்னை விசுவாசிக்காதபோது நான்
மிகவும் கோபங்கொள்ளும் அளவுக்கு
அதிகமாக அவளை நேசித்தேன்." [3]கர்த்தர்
கூறுகிறார், "நான் சீயோனுக்கு திரும்ப
வந்திருக்கிறேன். நான் எருசலேமில் வாழ்ந்து
கொண்டிருக்கிறேன். எருசலேம் விசுவாச
முள்ள நகரம் என்று அழைக்கப்படும்.
சர்வ வல்லமையுள்ள கர்த்தருடைய மலை
யானது பரிசுத்தமான மலை என அழைக்
கப்படும்."
[4]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"எருசலேமின் பொது இடங்களில் வயதான
ஆண்களும், பெண்களும் மீண்டும் காணப்படு
வார்கள். ஜனங்கள் நீண்டகாலம் கைதடியின்
தேவை வரும்வரை வாழ்வார்கள். [5]நகரமா
னது தெருக்களில் விளையாடும் குழந்தை
களால் நிறைந்திருக்கும். [6]தப்பிப் பிழைத்த
வர்கள் இதனை ஆச்சரியமானது என்று
நினைப்பார்கள். நானும் இதை ஆச்சரியமா
னது என்றே நினைப்பேன்!"
[7]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"பார், நான் கிழக்கிலும் மேற்கிலும் உள்ள
நாடுகளிலிருந்து என் ஜனங்களை மீட்டுக்
கொண்டிருக்கிறேன். [8]அவர்களை இங்கே
மீண்டும் அழைத்து வருவேன். அவர்கள்
எருசலேமில் வாழ்வார்கள். அவர்கள் எனது
ஜனங்களாக இருப்பார்கள்.நான் அவர்களின்
நல்ல உண்மையுள்ள தேவனாக இருப்பேன்."
[9]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"பலமாயிருங்கள். இன்று ஜனங்களாகிய
நீங்கள் அதே செய்தியைக் கேட்டுக்கொண்டி
ருக்கிறீர்கள். இது, சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் தனது ஆலயத்தை மீண்டும் கட்ட
முதல் அஸ்திபாரக் கல்லைப் போட்டபோது
சொன்னது. [10]அந்த நேரத்துக்கு முன்பு,
கூலிக்கு வேலை ஆட்களையும், வாடகைக்கு
மிருகங்களையும் அமர்த்த மனிதர்களிடம்
பணம் இல்லாமல் இருந்தது. ஜனங்களுக்கு
வந்து போவது பாதுகாப்பானதாக இல்லை.
அவர்களுக்கு எல்லா துன்பங்களிலிருந்தும்
விடுதலை இல்லாமல் இருந்தது. நான்
ஒவ்வொருவரையும் தன் அயலாருக்கு
எதிராக மாற்றியிருக்கிறேன். [11]ஆனால் இப்
பொழுது அது போன்றில்லை. மீதியா
னவர்களுக்கு நான் முன்புபோன்று இருக்க
மாட்டேன்." சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைச் சொன்னார்.
[12]"இந்த ஜனங்கள் சமாதானத்தோடு
நடுவார்கள். அவர்களின் திராட்சைக் கொடி
கள் திராட்சைகளைத் தரும். நிலம் நல்ல
விளைச்சலைக் கொடுக்கும். மேகங்கள்
மழையைத்தரும். நான் எனது ஜனங்களுக்கு
இவற்றையெல்லாம் தருவேன். [13]ஜனங்கள்
தமது சாபங்களில் இஸ்ரவேல் மற்றும்
யூதாவின் பெயர்களைப் பயன்படுத்தத்
தொடங்கினார்கள். ஆனால் நான் இஸ்ர
வேலையும், யூதாவையும் காப்பாற்றுவேன்.
அவற்றின் பெயர்கள் ஆசீர்வாதங்களாக
மாறும். எனவே அஞ்ச வேண்டாம். உறுதி
யாய் இருங்கள்."
[14]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"உங்களது முற்பிதாக்கள் என்னைக் கோப
மூட்டினார்கள். எனவே, நான் அவர்களை
அழிக்க முடிவு செய்தேன். எனது மனதை
மாற்றிக்கொள்ளக் கூடாது என்று முடிவு
செய்தேன்" சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைக் கூறுகிறார்: [15]"ஆனால் இப்பொ
ழுது நான் என் மனதை மாற்றிக்
கொண்டேன். அதே வழியில் நான் எருச
லேமிற்கும், யூதஜனங்களுக்கும் நன்மை
செய்யவேண்டும் என்று முடிவு செய்திருக்கி
றேன். எனவே அஞ்சவேண்டாம். [16]ஆனால்
நீங்கள் இவற்றைச் செய்ய வேண்டும்.
நீங்கள் அயலாரிடம் உண்மையைச் சொல்
லுங்கள். உங்கள் நகரங்களில் நீங்கள்
முடிவெடுக்கும்போது உண்மையானவற்றை
யும் சரியானவற்றையும் செய்யுங்கள். அது
சமாதானத்தைக் கொண்டுவரும். [17]உனது
அயலார்களைத் துன்புறுத்த ரகசியத் திட்டங்
களைப் போடவேண்டாம். பொய்யான
வாக்குறுதிகளை செய்யவேண்டாம். நீங்கள்
அவற்றைச் செய்து மகிழ்ச்சி அடையக்
கூடாது. ஏனென்றால், நான் அவற்றை
வெறுக்கிறேன்" கர்த்தர் இவற்றைக்
கூறினார்.
[18]நான் சர்வ வல்லமையுள்ள கர்த்தரிட
மிருந்து இச்செய்தியைப் பெற்றேன். [19]சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார், "உங்க
ளுக்குத் துக்கம் கொள்ளவும், உபவாசம்
இருக்கவும், நாலாவது மாதத்திலும், ஐந்தா
வது மாதத்திலும், ஏழாவது மாதத்திலும்,
பத்தாவது மாதத்திலும் சிறப்பான நாட்கள்
இருக்கும். அந்தத் துக்கத்துக்குரிய நாட்களை
மகிழ்ச்சிக்குரிய நாட்களாக மாற்றவேண்டும்.
அவை நல்ல மகிழ்ச்சிகரமான நாட்களாக
இருக்கும். நீங்கள் உண்மையையும் சமா
தானத்தையும் நேசிக்க வேண்டும்."

[20]சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்,
“எதிர் காலத்தில், எருசலேமிற்கு பல நகரங்க
ளிலிருந்து ஜனங்கள் வருவார்கள்.
[21]வேறுபட்ட நகரங்களிலிருந்து ஜனங்கள்
ஒருவரையொருவர் வாழ்த்துதல் செல்லு
வார்கள். அவர்கள், ‘நாங்கள் சர்வ வல்ல
மையுள்ள கர்த்தரை தொழுதுகொள்ளப்
போகிறோம்’ என்பார்கள். மேலும் மற்றவன்
‘நான் உன்னோடு வரவிரும்புகிறேன்’ என்
பான்.”
[22]சர்வ வல்லமையுள்ள கர்த்தரைப் பார்ப்ப
தற்காக அநேக நாடுகளிலிருந்து அநேக
ஜனங்கள் வருவார்கள். அவர்கள் அவரை
தொழுதுகொள்வதற்காக வருவார்கள். [23]சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்: “அந்த
வேளையில், வேறுவேறு மொழிகளைப்
பேசுகிற ஜனங்கள் யூதரிடம் வருவார்கள்.
பல அன்னிய நாட்டினர் ஒரு யூதனின்
உடையின் ஓரத்தைப் (வஸ்திரத்தொங்கலை)
பிடித்துக்கொள்வார்கள். அவர்கள், ‘தேவன்
உங்களோடு இருக்கிறார் என்பதைக் கேள்
விப்பட்டோம். நாங்கள் அவரை தொழுது
கொள்ள உங்களோடு வரலாமா?’ என்று
கேட்பார்கள்.”

## பிற நாடுகளுக்கு எதிரான நியாயத் தீர்ப்பு

9 தேவனிடம் இருந்து ஒரு செய்தி, ஆதிராக்
நாட்டைப் பற்றியும், அவனது தமஸ்கு
தலைநகரத்தைப் பற்றியும் எதிராக உள்ள
கர்த்தருடைய செய்தி. “இஸ்ரவேலின் சகல
கோத்திரங்களில் உள்ள ஜனங்கள் மட்டுமே
தேவனைப்பற்றித் தெரிந்தவர்களல்ல. அவரி
டம் ஒவ்வொருவரும் உதவி கேட்கிறார்கள்.
[2]ஆமாத், ஆதிராக் நாட்டின் எல்லை. தீரு,
சீதோன் நகரத்தார் திறமையும், மதிநுட்பமும்
உடையவர்களாக இருந்தபோதிலும், இச்
செய்தி அவர்களுக்கு எதிரானது. [3]தீரு
ஒரு கோட்டையைப் போன்று கட்டப்
பட்டது. அங்குள்ள ஜனங்கள் வெள்ளியை
வசூல் செய்தார்கள். அது புழுதியைப்போல்
மிகுதியாக இருந்தது. பொன்னானது களி
மண்ணைப் போன்று சாதாரணமாக இருந்
தது, [4]ஆனால் நமது அதிகாரியாகிய கர்த்தர்
அவற்றை எடுத்துக்கொள்வார். அவர்
ஆற்றல்மிக்க கப்பல் படையை அழிப்பார்.
நகரமானது நெருப்பால் அழிக்கப்படும்.
[5]“அஸ்கலோனில் உள்ள ஜனங்கள்
அவற்றைப் பார்ப்பார்கள். அவர்கள் அஞ்சு
வார்கள். காத்சா ஜனங்கள் அச்சத்தால்
நடுங்குவார்கள். எக்ரோன் ஜனங்கள் நிகழ்
வதைப் பார்த்து நம்பிக்கையை
இழப்பார்கள். காத்சாவில் எந்த அரசனும்
விடுபடமாட்டான். அஸ்கலோனில் எவரும்
வாழமாட்டார்கள். [6]அஸ்தோத்தில் உள்ள
ஜனங்கள் தங்களது உண்மையான தந்தை
யாரென்று அறியமாட்டார்கள். நான்
தற்பெருமைமிக்க பெலிஸ்திய ஜனங்களை
முழுவதுமாக அழிப்பேன். [7]அவர்கள்
இரத்தமுள்ள இறைச்சியை உண்ணமாட்டார்
கள். வேறு உண்ணக்கூடாத உணவையும்
உண்ணமாட்டார்கள். மீதியுள்ள பெலிஸ்திய
ஜனங்கள் என் ஜனங்களின் ஒரு பகுதியாக
இருப்பார்கள். அவர்கள் யூதாவின்
மற்றுமொரு கோத்திரமாக இருப்பார்கள்.
எக்ரோன் ஜனங்கள் என் ஜனங்களின்
ஒரு பகுதியாக எபூசியர்களைப்போல இருப்
பார்கள். நான் எனது நாட்டைக் காப்பாற்று
வேன். [8]நான் பகைவர்கள் படைகளை
என் நாட்டின் வழியாகப் போக அனுமதிக்க
மாட்டேன். நான் அவர்கள் என்
ஜனங்களைத் துன்புறுத்தும்படி விடமாட்
டேன். என் சொந்தக் கண்களால் எனது
ஜனங்கள் கடந்த காலத்தில் எவ்வளவு
துன்புற்றார்கள் எனப் பார்த்தேன்.”

## வருங்கால அரசன்

[9]சீயோன் நகரமே, மகிழ்ச்சியாயிரு. எருச
லேம் ஜனங்களே, மகிழ்ச்சியோடு கூவுங்கள்.
பார், உனது அரசன் உன்னிடம் வருகிறார்.
அவர் நல்லவர், வெற்றிபெற்ற அரசன்.
ஆனால் அவர் பணிவுள்ளவர். அவர் கழுதை
மேல் வந்துகொண்டிருக்கிறார். இது வேலை
செய்யக்கூடிய கழுதைக்கு பிறந்த இளங்
கழுதை. [10]அரசன் கூறுகிறார்: “நான் எப்
பிராயீமின் இரதங்களை அழித்தேன். எருச
லேமின் குதிரைவீரர்களை அழித்தேன். நான்
போரில் பயன்படும் வில்களை அழித்தேன்.”
அவ்வரசன் சமாதானத்தின் செய்தியை
நாடுகளுக்கு அறிவிப்பான். அவன் கடல்
விட்டு கடலையும் ஐபிராத்து நதிதொடங்கி
பூமியிலுள்ள தொலைதூர இடங்களையும்
ஆள்வான்.

## கர்த்தர் தனது ஜனங்களைக் காப்பாற்றுவார்

[11]எருசலேமே, உனது உடன்படிக்கையை
நாம் இரத்தத்தால் முத்தரித்தோம். எனவே,
நான் தரையில் துவாரங்களில் அடைப்பட்ட
ஜனங்களை விடுதலை பண்ணுவேன்.
[12]கைதிகளே, வீட்டிற்குப் போங்கள். இப்
பொழுது நீங்கள் நம்பிக்கைக்கொள்ள இட
முண்டு. நான் திரும்பி உங்களிடம் வருவேன்
என்று இப்பொழுது சொல்கிறேன்.
[13]யூதாவே, நான் உன்னை வில்லைப்
போல் பயன்படுத்துவேன். எப்பிராயீமே,
நான் உன்னை அம்பாகப் பயன்படுத்து
வேன். நான் உங்களை கிரேக்க நாட்டா
ருக்கு எதிராக வலிமையுள்ள வாளாகப்
பயன்படுத்துவேன்.
[14]கர்த்தர் அவர்களிடம் தோன்றுவார்.
அவர் தமது அம்புகளை மின்னலைப்
போன்று எய்வார். எனது அதிகாரியாகிய
கர்த்தர் எக்காளம் ஊதுவார். படையானது
பாலைவனப் புயல்போல் விரையும்.

15 சர்வ வல்லமையுள்ள கர்த்தர் அவர்
களைக் காப்பார். வீரர்கள் பகைவர்களைத்
தோற்கடிப்பதற்காகக் கற்களையும், கவண்
களையும் பயன்படுத்துவார்கள். அவர்கள்
பகைவரின் இரத்தத்தை வடியச் செய்வார்
கள். அது திராட்சைரசத்தைப் போன்று
பாயும். அது பலிபீடத்தின் மூலைகளில்
வழியும் இரத்தத்தைப் போன்று இருக்கும்.
16 அந்த நேரத்தில், அவர்களின் தேவ
னாகிய கர்த்தர், மேய்ப்பன் ஆடுகளைக்
காப்பதுபோல காப்பார். அவருக்கு அவர்கள்
விலைமதிப்பற்றவர்கள். அவர்கள் அவரது
நாட்டில் ஒளிவீசும் நகைகளைப் போன்ற
வர்கள்.
17 எல்லாம் நல்லதாகவும், அழகானதாகவும்
இருக்கும். அங்கே அற்புதமான அறுவடை
இருக்கும். ஆனால் அது உணவாகவும்,
திராட்சைரசமாகவும் இருக்காது. இல்லை,
இது இளம் ஆண்களும், பெண்களுமாய்
இருக்கும்.

### கர்த்தருடைய வாக்குறுதிகள்

10 மழைக்காலத்தில் மழைக்காகக் கர்த்
தரிடம் ஜெபம் செய். கர்த்தர் மின்
னலை அனுப்புவார், மழை விழும். ஒவ்வொ
ருவரின் வயலிலும் தேவன் செடிகளை
வளரச் செய்வார்.
2 ஜனங்கள், தங்கள் சிறிய சிலைகளையும்,
மந்திரத்தையும் பயன்படுத்தி வருங்காலத்தை
அறிந்துக்கொள்ள முயல்வார்கள். ஆனால்
அவை பயனற்றதாகும். அந்த ஜனங்கள்
தரிசனங்களைப் பார்த்து, அவர்கள் கனவு
களைப்பற்றி சொல்வார்கள். ஆனால் இது
வீணானது. அவைகள் பொய்கள். எனவே
ஜனங்கள் உதவிக்காக அங்கும் இங்கும்
அலைந்து ஆடுகளைப்போல கதறுவார்கள்.
ஆனால் அவர்களை வழிகாட்டி அழைத்துச்
செல்ல மேய்ப்பன் எவரும் இருக்கமாட்
டார்கள்.
3 கர்த்தர் கூறுகிறார்: “நான் மேய்ப்பர்கள்
மீது (தலைவர்கள்) கோபமாக இருக்கிறேன்.
எனது ஆடுகளுக்கு (ஜனங்கள்) என்ன
நிகழ்கிறதோ அவற்றுக்கு அத்தலைவர்
களைப் பொறுப்பாளர்களாக ஆக்கினேன்.”
(யூதாவின் ஜனங்கள் தேவனுடைய மந்தை.
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் உண்மையி
லேயே தமது மந்தையைப் பற்றி அக்கறை
கொள்வார். ஒரு போர்வீரன் தனது அழகிய
போர்க்குதிரையைக் காப்பது போன்று
அவர் காப்பார்.)
4 “யூதாவிலிருந்து மூலைக்கல், கூடார
முனை, போர்வில், முன்னேறும் வீரர்கள்
எல்லாம் சேர்ந்து வரும். 5 அவர்கள் தம்
பகைவரை வெல்வார்கள். இது வீரர்கள்,
தெருவில் உள்ள சேற்றில் செல்வதுபோல்
இருக்கும். அவர்கள் போரிடுவார்கள். கர்த்தர்
அவர்களோடு இருக்கும்வரை அவர்கள்
குதிரை வீரர்களைக் கூடத் தோற்கடிப்
பார்கள். 6 நான் யூதாவின் குடும்பத்தை
வலிமை உள்ளவர்களாக்குவேன். போரில்
யோசேப்பிற்கு வெற்றிப்பெற நான்
உதவுவேன். நான் அவர்களைப் பாதுகாப்
போடு திரும்பக் கொண்டு வருவேன்.
நான் அவர்களை ஆறுதல்படுத்துவேன். இது
நான் அவர்களை என்றும் புறம்பாக்
கிவிடாமல் இருப்பவர்களைப்போல் இருப்
பார்கள். நான் அவர்களின் தேவனாகிய
கர்த்தர். நான் அவர்களுக்கு உதவுவேன்.
7 எப்பிராயீமின்* ஜனங்கள் அளவுக்கு மீறி
மதுபானம் குடித்த வீரர்களைப்போன்று
மகிழ்ச்சியாக இருப்பார்கள். அவர்களது
குழந்தைகளும் கூட மகிழுவார்கள். அவர்கள்
இதயம் கர்த்தருக்குள் மகிழ்ச்சியடையும்.
8 “நான் அவர்களைப் பார்த்து பரிகசிப்
பேன். நான் அவர்கள் அனைவரையும்
ஒன்று சேர்ப்பேன். நான் உண்மையாக
அவர்களைக் காப்பாற்றுவேன். அங்கே
ஏராளமான ஜனங்கள் இருப்பார்கள். 9 ஆம்,
நான் எனது ஜனங்களை நாடுகள் முழுவதும்
சிதறடித்திருக்கிறேன். ஆனால் அத்தொலை
நாடுகளிலிருந்து அவர்கள் என்னை
நினைவுகூருவார்கள். அவர்களும்
அவர்களது பிள்ளைகளும் வாழுவார்கள்.
அவர்கள் திரும்ப வருவார்கள். 10 நான்
எகிப்திலிருந்தும், அசீரியாவிலிருந்தும்
அவர்களை மீண்டும் அழைத்து வருவேன்.
நான் அவர்களை கீலேயாத் பகுதிக்கு
கொண்டு வருவேன். அவர்களுக்கு இடம்
போதாமல் போவதால், நான் அவர்களை
அருகிலுள்ள லீபனோனிலும் வாழச்
செய்வேன்.” 11 “தேவன் முன்பு அவர்களை
எகிப்திலிருந்து வெளியே கொண்டு
வந்தபோது இருந்ததுபோல் இருக்கும். அவர்
கடலின் அலைகளை அடிப்பார். கடல்
பிளக்கும், ஜனங்கள் துன்பக்கடலை நடந்து
கடப்பார்கள். கர்த்தர் நதியின் ஓடைகளை
வறளச்செய்வார். அவர் அசீரியாவின்
கர்வத்தையும், எகிப்தின் அதிகாரத்தையும்
அழிப்பார்.” 12 கர்த்தர் தமது ஜனங்களைப்
பலமுள்ளவராகச் செய்வார். அவர்கள் அவ
ருக்காக அவரது நாமத்தில் வாழ்வார்கள்.
கர்த்தர் இவற்றைச் சொன்னார்.

### தேவன் மற்ற நாடுகளைத் தண்டிப்பார்

11 லீபனோனே, உன் வாசலைத் திற.
அதனால் நெருப்பு அதன் வழியாக
வந்துஉன் கேதுரு மரங்களை* எரிக்கும்.

---

**எப்பிராயீம்** இஸ்ரவேலின் வடக்கு இராஜ்யத்தின் இன்னொரு பெயர்.

**கேதுரு மரங்கள்** இந்தப் பாடல், மரங்கள், புதர்கள், மிருகங்கள் எல்லாம் யூதாவை சுற்றியுள்ள நாடுகளின் தலைவர்களை அடையாளப் படுத்துகின்றன.

2 சைபிரஸ் மரங்கள் அழும். ஏனென்றால்
கேதுரு மரங்கள் விழுந்திருக்கும். அந்தப்
பலமான மரங்கள் எடுத்துச் செல்லப்படும்.
பாஷானிலுள்ள ஓக் மரங்கள், வெட்டப்பட்ட
காடுகளுக்காக கதறும்.
3 அழுது கொண்டிருக்கும் மேய்ப்பர்களைக்
கவனி. அவர்களின் ஆற்றல்மிக்க தலை
வர்கள் கொண்டு போகப்பட்டனர். கெர்ச்
சித்துக் கொண்டிருக்கும் இளஞ் சிங்கங்
களைக் கவனி. அவற்றின் அடர்ந்த புதர்கள்
யோர்தான் நதிக்கரையில் இருந்தன. அவை
அழிந்துப்போயின.
4 எனது தேவனாகிய கர்த்தர் கூறுகிறார்:
“கொலைசெய்யப்படுவதற்குறிய ஆடுகளைப்
பொறுப்புடன் கவனித்துக்கொள்ளுங்கள்.
5 அவர்களின் தலைவர்கள் சொந்தக்காரர்க
ளையும், வியாபாரிகளையும்போல உள்ள
னர். சொந்தக்காரர்கள் தமது ஆடுகளைக்
கொல்கிறார்கள், ஆனால் தண்டிக்கப்ப
டுவதில்லை. வியாபாரிகள் ஆட்டினை
விற்று, “கர்த்தரைத் துதியுங்கள். நான்
செல்வந்தன் ஆனேன்!” என்பார்கள். மேய்ப்
பர்கள் தம் ஆடுகளுக்காக வருத்தப்படுவ
தில்லை. 6 நான் இந்நாட்டில் வாழ்கிற
ஜனங்களுக்காக வருத்தப்படுவதில்லை” கர்த்
தர் இவற்றைச் சொன்னார்: “பார், நான்
ஒவ்வொருவரையும் அவர்களது அயலகத்
தாரும், அரசனும் அடக்கியாண்டு அவர்
களது நாட்டினை அழிக்கும்படி விடுவேன்.
அப்போது நான் அவர்களைத் தடுப்ப
தில்லை!”

7 எனவே, நான் கொல்லப்படுவதற்குரிய
அந்தப் பரிதாபத்துக்குரிய ஆடுகளை மேய்ப்
பேன். நான் இரண்டு கோல்களை கண்
டெடுப்பேன். ஒன்றிற்கு அனுக்கிரகம் என்
றும் இன்னொன்றிற்கு ஒற்றுமை என்றும்
பேரிடுவேன். பின்னர், நான் ஆடுகளை
மேய்க்கத் தொடங்குவேன். 8 நான் ஒரே
மாதத்தில் மூன்று மேய்ப்பர்களைக் கொன்று
போட்டேன். நான் ஆடுகளின்மேல் கோபமு
ற்றேன். அவை என்னை வெறுக்க
தொடங்கின. 9 பின்னர், “நான் உங்களை
கவனியாமல் நிறுத்திவிடுவேன். நான்
உங்களை இனிமேல் மேய்ப்பதில்லை. நான்
அவற்றில் மரிக்க விரும்புகிறவர்களை மரிக்
கட்டும் என்று விடுவேன். நான் அவற்றில்
அழிய விரும்புகிறவர்கள் அழியட்டும்
என்று விடுவேன். மீதியானவை ஒன்றை
ஒன்று அழிக்கும்.” 10 பிறகு நான் அனுக்கிரகம்
என்ற கோலை எடுத்தேன். நான் அதனை
உடைத்தேன். தேவன் அனைத்து ஜனங்க
ளோடும் செய்த உடன்படிக்கை உடைந்து
போனது என்பதைக் காட்டவே இதனைச்
செய்தேன். 11 அந்நாளில் உடன்படிக்கை
முடிந்தது. எனக்காகக் காத்திருந்த பரிதாபத்
திற்குரிய ஆடுகள், இச்செய்தி கர்த்தரிட
மிருந்து வந்தது என்பதை அறிந்தன.

12 பிறகு நான் சொன்னேன், “நீங்கள்
எனக்குக் கூலி கொடுக்க விரும்பினால்
கொடுங்கள். இல்லாவிட்டால் வேண்டாம்.”
எனவே அவர்கள் எனக்கு 30 வெள்ளிக்
காசுகளைக் கொடுத்தார்கள். 13 பிறகு கர்த்தர்
என்னிடம், “நான் இவ்வளவே மதிப்புள்ள
வன் என்று அவர்கள் நினைக்கிறார்கள்.
எனவே அத்தொகையைக் ஆலயக்
கருவூலத்தில் எறி” என்றார். எனவே நான்
முப்பது வெள்ளிகாசுகளை எடுத்து கர்த்தரு
டைய ஆலயக் கருவூலத்தில் எறிந்தேன்.
14 பின்னர் நான் ஒற்றுமை என்ற கோலை,
இரண்டு துண்டுகளாக உடைத்தேன். யூதா
வும், இஸ்ரவேலும் கொண்ட ஒற்றுமை
உடைந்தது என்று காட்டவே இவ்வாறு
செய்தேன்.

15 பிறகு கர்த்தர் என்னிடம், “மதியற்ற
மேய்ப்பனொருவன் பயன்படுத்தும் பொருட்
களை இப்பொழுது நீ எடுத்துக்கொள்.
16 இது நான் இந்த நாட்டுக்குப் புதிய
மேய்ப்பனை ஏற்படுத்துவேன் என்பதைக்
காட்டும். ஆனால் இந்த இளைஞனால்
இழந்துபோன ஆடுகளைப் பேணிக்காக்க
இயலாது. அவனால் காயப்பட்ட ஆடுகளைக்
குணப்படுத்தவும் முடியாது. அவனால்
மெலிந்தவற்றுக்கு ஊட்ட முடியாது. அவன்
கொழுத்தவற்றை முழுமையாக உண்பான்.
அவற்றின் குளம்புகள் மட்டுமே மீதியகும்”
என்றார்.
17 ஓ! எனது பயனற்ற மேய்ப்பனே. நீ
என் மந்தையைக் கைவிட்டாய். அவனைத்
தண்டித்து விடு. அவனது வலது கண்
ணையும், கையையும் வாளால் வெட்டு.
அவனது வலது கை பயனற்றுப்போகும்.
அவனது வலது கண் குருடாகும்.

### யூதாவைச் சுற்றியுள்ள நாடுகளைப் பற்றிய தரிசனங்கள்

12 இஸ்ரவேலைப்பற்றி கர்த்தரிடமிருந்து
வந்த துக்கச் செய்தி. கர்த்தர் வானத்
தையும், பூமியையும் படைத்தார். அவர்
மனிதனின் ஆவியை அவனுக்குள் வைத்தார்.
கர்த்தர், 2 “பார், நான் சுற்றியுள்ள நாடுகளுக்கு
எருசலேமை நச்சு கிண்ணமாகச் செய்வேன்.
நாடுகள் வந்து அந்நகரத்தைத் தாக்கும்.
யூதா முழுவதும் வலைக்குள் அகப்படும்.
3 ஆனால் நான் எருசலேமைக் கணமான
பாறையாக்குவேன். அதனைத் எடுக்க முயல்
பவன் சிதைக்கப்படுவான். அந்த ஜனங்கள்
உண்மையாகவே சிதைக்கப்பட்டு சிதறடிக்
கப்படுவார்கள். ஆனால், பூமியிலுள்ள
அனைத்து நாடுகளும் எருசலேமிற்கு எதி
ராகச் சண்டையிடக் கூடுவார்கள். 4 ஆனால்
அந்நேரத்தில் நான் குதிரைகளையும், அதன்
மேல் வீரர்களையும் மயக்கமுறச் செய்வேன்.
நான் பகைவர்களின் குதிரைகளையும்,
குதிரை வீரர்களையும் பயத்தினால் பேத

லிக்கச் செய்வேன். ஆனால் என் கண்கள்
திறக்கும். நான் யூதாவின் குடும்பத்தைக்
கவனித்துக் கொண்டிருப்பேன். 5யூதாவில்
உள்ள குடும்பத் தலைவர்கள் ஜனங்களை
உற்சாகப்படுத்துவார்கள். அவர்கள், 'சர்வ
வல்லமையுள்ள கர்த்தாவே உங்களது
தேவன். அவர் நம்மை பலமுள்ளவர்களாக்கு
கிறார்' என்றார்கள். 6அந்நேரத்தில், நான்
யூதாவிலுள்ள குடும்பத் தலைவர்களை
காட்டில் எரியும் நெருப்பாக்குவேன். அவர்
கள் தம் பகைவரை வைக்கோலை எரிக்கும்
நெருப்புபோல அழிப்பார்கள். அவர்கள்
தம்மைச் சுற்றியுள்ள பகைவர்களை எல்லாம்
அழிப்பார்கள். எருசலேம் ஜனங்கள் திரும்ப
வும் தம் இடமாகிய எருசலேமில் ஓய்ந்தி
ருந்து குடியிருப்பார்கள்" என்றார்.
7கர்த்தர் முதலில் யூதா ஜனங்களைக்
காப்பாற்றுவார். எனவே, எருசலேம் ஜனங்
கள் அதிகமாகத் தற்பெருமை கொள்ள
முடியாது. எருசலேமிலுள்ள தாவீதின் குடும்
பமும், மற்ற ஜனங்களும் யூதாவின் ஜனங்க
ளைவிடத் தம்மைப் பெரியவர்களாகப்
புகழ்ந்துக்கொள்ள முடியாது. 8ஆனால்,
கர்த்தர் எருசலேமில் உள்ள ஜனங்களைக்
காப்பார். அங்குள்ள தள்ளாடுகின்ற மனி
தனும் கூடத் தாவீதைப்போன்று பெரும்
வீரனாவான். தாவீதின் குடும்பத்திலுள்ள
ஜனங்கள் இரதங்களைப் போன்றும், ஜனங்
களை வழிநடத்தும் கர்த்தருடைய சொந்தத்
தூதர்களைப் போன்றும் இருப்பார்கள்.

9கர்த்தர் கூறுகிறார்: "அந்நேரத்தில்,
எருசலேமிற்கு எதிராகப் போரிட வரும்
நாடுகளை நான் அழிப்பேன். 10நான் எருச
லேமில் உள்ள தாவீதின் குடும்பத்தாரையும்
மற்ற ஜனங்களையும் கருணையின் ஆவியா
லும், இரக்கத்தின் ஆவியாலும் நிரப்புவேன்.
அவர்கள் தாங்கள் குத்தின ஒருவரான
என்னைப் பார்ப்பார்கள். அவர்கள் மிகவும்
துக்கமாக இருப்பார்கள். அவர்கள், ஒருவன்
தன் ஒரே மகனின் மரணத்துக்காக அழுகிற
வனைப் போன்றும், ஒருவன் தன் மூத்த
மகனின் மரணத்துக்காக அழுகிறவனைப்
போன்றும் துக்கம் கொள்வார்கள். 11எருச
லேமில் பெருந்துக்கத்துக்கும், அழுகைக்கும்
உரியகாலம் இருக்கும். இது மெகிதோன்
பட்டணத்து பள்ளத்தாக்கின் ஊராகிய
ஆதாத்ரிம்மோனின் புலம்பலைப் போன்றி
ருக்கும், 12அங்குள்ள ஒவ்வொரு குடும்பத்தி
னரும் தங்களுக்குள் அழுவார்கள். தாவீதின்
குடும்பத்திலுள்ள ஆடவர்கள் தங்களுக்குள்
அழுவார்கள். அவர்களின் மனைவியரும்
தங்களுக்குள் அழுவார்கள். நாத்தானின் குடு
ம்பத்திலுள்ள ஆண்கள் தங்களுக்குள் அழு
வார்கள். அவர்களின் மனைவியரும் தங்க
ளுக்குள் அழுவார்கள். சீமேயின் குடும்பத்து
ஆண்களும் தங்களுக்குள் அழுவார்கள். அவர்
மனைவியரும் தங்களுக்குள் அழுவார்கள்.
13லேவியின் குடும்பத்திலுள்ள ஆண்கள் தங்க
ளுக்குள் அழுவார்கள். அவர்களின் மனைவி
யரும் தங்களுக்குள் அழுவார்கள். சிமியோன்
குடும்பத்திலுள்ள ஆண்களும், அவர்களின்
மனைவியரும் தங்களுக்குள் அழுவார்கள்.
14அங்குள்ள மற்ற கோத்திரங்களிலும் இது
போல் நிகழும். ஆண்களும் பெண்களும்
தங்களுக்குள் அழுவார்கள்."

13 ஆனால் அந்நேரத்தில், தாவீதின் குடும்
பத்தாருக்கும், எருசலேமின் குடிமக்க
ளுக்கும் ஒரு புதிய நீரூற்று திறக்கப்படும்.
அந்த ஊற்று அவர்களின் பாவத்தைக்
கழுவி அந்த ஜனங்களைச் சுத்தப்படுத்தும்.

### இனி கள்ளத் தீர்க்கதரிசிகள் இருக்கமாட்டார்கள்

2சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"அந்நேரத்தில் நான் பூமியிலுள்ள அனைத்து
விக்கிரகங்களையும் நீக்குவேன். ஜனங்கள்
அவற்றின் பெயர்களைக் கூட நினைவில்
வைத்திருக்கமாட்டார்கள். நான் பூமியிலி
ருந்து கள்ளத் தீர்க்கதரிசிகளையும், சுத்தமற்ற
ஆவிகளையும் நீக்குவேன். 3ஒருவன்
தொடர்ந்து தீர்க்கதரிசனம் சொன்னால் பின்
னர் அவன் தண்டிக்கப்படுவான். அவன்
பெற்றோர்கள் அவனது சொந்த தாயும்
தந்தையும் அவனிடம், 'நீ கர்த்தர் நாமத்தால்
பொய் சொன்னாய். எனவே நீ மரிக்க
வேண்டும்!' என்று சொல்வார்கள். அவனது
சொந்த தாயும் தந்தையும் அவனைத் தீர்க்க
தரிசனம் சொன்னதற்காகக் குத்திக்கொல்
வார்கள். 4அந்நேரத்தில், தீர்க்கதரிசிகள் தமது
தரிசனங்களுக்காகவும், தீர்க்கதரிசனங்களுக்
காகவும் வெட்கப்படுவார்கள். அவர்கள் தாம்
தீர்க்கதரிசிகள் என்பதைக் காட்டும் முரட்டு
ஆடையை அணியமாட்டார்கள். கள்ளத்
தீர்க்கதரிசனங்களால் ஜனங்களை ஏமாற்று
வதற்கு அவர்கள் அவ்வாடைகளை அணிவ
தில்லை. 5அந்த ஜனங்கள் சொல்வார்கள்:
'நான் தீர்க்கதரிசி அல்ல. நான் ஒரு
விவசாயி. நான் குழந்தைப் பருவத்தி
லிருந்தே விவசாய வேலையைச் செய்து
வருகிறேன்.' 6ஆனால் மற்ற ஜனங்களோ,
'உங்கள் கைகளில் ஏன் இந்த காயங்கள்?'
என்று கேட்பர். அவனோ, 'நான் என்
நண்பனின் வீட்டில் அடிக்கப்பட்டேன்'
என்பான்.
7சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"வாளே, மேய்ப்பனைத் தாக்கு. என்
நண்பனைத் தாக்கும் மேய்ப்பனைத் தாக்கு.
அந்த மந்தை ஓடிச் செல்லும். நான்
அந்தச் சிறியவர்களையும் தண்டிப்பேன்.
8இந்த நாட்டிலுள்ள மூன்றில் இரண்டு
பங்கு ஜனங்கள் காயப்பட்டு மரிப்பார்கள்.
ஆனால் மூன்றில் ஒரு பங்கினர் பிழைப்
பார்கள். 9பின்னர் நான் மீதியானவர்களைச்
சோதிப்பேன். நான் அவர்களுக்கு அநேக

*துன்பங்களைக் கொடுப்பேன். அத்துன்பங்கள் வெள்ளியைச் சுத்தமான வெள்ளி என்று நிரூபிக்கும் நெருப்பைப் போன்றிருக்கும். ஒருவன் தங்கத்தைச் சோதிப்பது போல நான் அவர்களைச் சோதிப்பேன். பின்னர், அவர்கள் என்னை உதவிக்காக வேண்டுவார்கள். நான் அவர்களுக்குப் பதிலுரைப்பேன். நான், 'நீங்கள் எனது ஜனங்கள்' என்பேன். அவர்கள், 'கர்த்தர் எங்கள் தேவன்' என்பார்கள்.*

### நியாயத்தீர்ப்பு நாள்

14 *பார், கர்த்தருக்கு நியாயந்தீர்க்க
சிறப்பான நாள் இருக்கிறது. நீங்கள்
அள்ளி வந்த செல்வங்கள் உங்கள் நகரில்
பங்கிடப்படும்.* 2*நான் எல்லா தேசங்களையும்
எருசலேமிற்கு எதிராகப் போரிட கூட்டு
வேன். அவர்கள் நகரைக் கைப்பற்றி வீடு
களை அழிப்பார்கள். பெண்கள் கற்பழிக்கப்
படுவார்கள். ஜனங்களின் பாதிபேர் கைதி
களாக கொண்டுபோகப்படுவார்கள். ஆனால்
மீதியுள்ளர்கள், நகருக்கு வெளியே கொண்டு
செல்லப்படமாட்டார்கள்.* 3*பின்னர் கர்த்தர்
அந்நாடுகளோடு போரிடச் செய்வார். இது
உண்மையான போராக இருக்கும்.*
4*அந்நேரத்தில், அவர் எருசலேமிற்கு கிழக்கே
உள்ள ஒலிவ மலைமேல் நிற்பார். ஒலிவ
மலை பிளக்கும். அதன் ஒரு பகுதி
வடக்குக்கும் மற்றொரு பகுதி தெற்கிற்கும்
நகரும். ஒரு ஆழமான பள்ளத்தாக்கு
கிழக்கிலிருந்து மேற்காக திறந்துக்கொள்ளும்.*
5*அம்மலைப் பள்ளத்தாக்கு உங்களை
நெருங்க நெருங்க நீங்கள் தப்பி ஓட
முயல்வீர்கள். நீங்கள் யூதாவின் அரசனான
உசியாவின் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்ட
பூகம்பத்திற்குப் பயந்து ஓடியது போன்று
ஓடுவீர்கள். ஆனால் எனது தேவனாகிய
கர்த்தர் வருவார். அவரோடு அவரது
பரிசுத்தமானவர்களும் வருவார்கள்.*
6-7*அது மிகவும் விசேஷமான நாளாக
இருக்கும். அங்கு வெளிச்சமும், குளிரும்,
மப்பும் இருக்கிறது. கர்த்தர் மட்டுமே அந்த
நாளை அறிவார். ஆனால் அங்கே இரவோ,
பகலோ இருக்காது. பின்னர், வழக்கமாக
இருள் வரும் நேரத்தில் இன்னும் வெளிச்சம்
இருக்கும்.* 8*அந்நேரத்தில், எருசலேமிலிருந்து
தொடர்ந்து தண்ணீர் பாயும். அந்த தண்
ணீரோடை இரண்டாகப் பிரிந்து ஒன்று
கிழக்காகவும், இன்னொன்று மேற்கே மத்
தியதரைக் கடலுக்கும் பாயும். இது ஆண்டு
முழுவதும் கோடைகாலத்திலும், மழைகாலத்
திலும் பாய்ந்து கொண்டிருக்கும்* 9*அந்நேரத்
தில் உலகம் முழுவதிற்கும் கர்த்தரே அரச
ராக இருப்பார். கர்த்தர் ஒருவரே, அவரது
நாமம் ஒன்றே.* 10*அந்நேரத்தில், எருசலேமைச்
சுற்றியுள்ள பகுதி முழுவதும் அரபா பாலை
வனமாக காலியாக இருக்கும். நாடானது
கேபா தொடங்கி எருசலேமிற்கு தெற்
கேயுள்ள ரிம்மோன் வரைக்கும் பாலைவ
னமாகும். ஆனால் எருசலேம் நகரம் முழு
வதும் மீண்டும் கட்டப்படும். பென்யமீன்
வாசல் தொடங்கி முதல்வாசல் (மூலை
வாசல்) வரைக்கும் அனானெயேல் கோபுரம்
தொடங்கி ராஜாவின் திராட்சை ஆலைகள்
வரை குடியேற்றப்பட்டிருக்கும்."* 11*ஜனங்கள்
அங்கே வாழப்போவார்கள். இனிமேல் அவர்
களை எந்தப் பகைவரும் அழிக்க வரமாட்
டார்கள். எருசலேம் பாதுகாப்பாக இருக்கும்.*
12*ஆனால் எருசலேமிற்கு எதிராக
போரிட்ட நாடுகளை கர்த்தர் தண்டிப்பார்.
அவர்களுக்குப் பயங்கரமான நோய் ஏற்பட
காரணமாக இருப்பார். அங்கு ஜனங்கள்
இன்னும் நின்றுகொண்டிருக்கும்போதே
அவர்களின் தோல் அழுகும். அவர்களின்
கண்கள் இமைக்குள்ளும் நாக்குகள் வாய்க்
குள்ளும் அழுகிப்போகும்.* 13-15*அந்தப் பயங்கர
மான நோய் எதிரியின் கூடாரத்தில் இருக்
கும். அவர்களின் குதிரைகள் கோவேறு
கழுதைகள், ஒட்டகங்கள், கழுதைகள் எல்
லாம் அந்நோயால் பீடிக்கப்படும்.*

*அந்நேரத்தில், அந்த ஜனங்கள் கர்த்தருக்கு உண்மையில் பயப்படுவார்கள். அவர்கள் ஒருவரையொருவர் பிடித்து பற்றிக்கொண்டு சண்டையிடுவார்கள். யூதாவின் ஜனங்கள் எருசலேமில் போரிடுவார்கள். ஆனால், அவர்கள் நகரத்தைச் சுற்றியுள்ள நாடுகளிலிருந்து செல்வத்தைப் பெறுவார்கள். அவர்கள் மிகுதியாக பொன், வெள்ளி, ஆடை
ஆகியவற்றைப் பெறுவார்கள்.* 16*எருசலேமில்
போரிட வந்த ஜனங்களில் சிலர் பிழைப்பார்
கள். ஒவ்வொரு ஆண்டும் அவர்கள் அரச
னான சர்வ வல்லமையுள்ள கர்த்தரை
தொழுதிட வருவார்கள். அவர்கள் அடைக்
கல கூடாரப் பண்டிக்கையை கொண்டாட
வருவார்கள்.* 17*பூமியிலுள்ள எந்த ஒரு
குடும்பத்திலுள்ள ஜனங்களும் அரசனை,
சர்வ வல்லமையுள்ள கர்த்தரை தொழுதிட
எருசலேம் செல்லாமல் இருந்தால், பிறகு
கர்த்தர் அவர்கள் மழை பெறாமல் போகும்
படிச் செய்வார்.* 18*எகிப்திலுள்ள குடும்பத்
தார்கள் எவரும் அடைக்கல கூடார பண்டி
கை கொண்டாட வராமல் போனால்,
பின்னர் கர்த்தர் பகைவரது நாடுகளுக்குக்
கொடுத்த நோயை அவர்கள் பெறும்படிச்
செய்வார்.* 19*அதுதான் எகிப்துக்கான தண்ட
னையாக இருக்கும். அடைக்கல கூடார
பண்டிகையைக் கொண்டாட வராத மற்ற
நாடுகளுக்கும் இதுதான் தண்டனை.*

20*அந்நேரத்தில், அனைத்தும் தேவனுக்கு
உரியதாகும். குதிரைகளின் மணிகளில் கூட
கர்த்தருக்குப் பரிசுத்தம் என்று பொறிக்
கப்பட்டிருக்கும். கர்த்தருடைய ஆலயத்தில்
பயன்படுத்தப்படும் அனைத்து பானைகளும்
பலிபீடத்திற்கு முன்பாக இருக்கும் பாத்தி
ரங்களைப் போன்று முக்கியமானதாக இருக்*

கும். 
21உண்மையில், யூதாவிலும் எருச
லேமிலுள்ள ஒவ்வொரு பானைகளும் சர்வ
வல்லமையுள்ள கர்த்தருக்கு ‘பரிசுத்தம்’
என்ற முத்திரையிருக்கும். கர்த்தருக்கு தகன
பலிகளை செலுத்தும் ஒவ்வொருவரும் வந்து
அவற்றில் சமைத்து உண்ணமுடியும்.
அந்நேரத்தில், அங்கு வியாபாரிகள் எவ
ரும் சர்வ வல்லமையுள்ள கர்த்தருடைய
ஆலயத்தில் பொருட்களை விற்கவும் வாங்க
வும் மாட்டார்கள்.

# மல்கியா

1 தேவனிடமிருந்து ஒரு செய்தி. இது
கர்த்தரிடமிருந்து வந்த செய்தி. மல்கியா
இச்செய்தியை இஸ்ரவேலுக்குக் கொடுத்தார்.

### தேவன் இஸ்ரவேலை நேசிக்கிறார்

2 கர்த்தர், "ஜனங்களே நான் உங்களை
நேசிக்கிறேன்" என்றார்.
ஆனால் நீங்கள், "நீர் எங்களை நேசிப்
பதை எது காட்டும்?" என்று கேட்டீர்கள்.
கர்த்தர், "ஏசா யாக்கோபின் சகோதரன்.
சரியா? ஆனால் நான் யாக்கோபைத் தேர்ந்
தெடுத்தேன். 3 நான் ஏசாவை ஏற்றுக்கொள்ள
வில்லை,* நான் ஏசாவின் மலைநாட்டை*
அழித்தேன். ஏசாவின் நாடு அழிக்கப்பட்டது.
இப்பொழுது அங்கே காட்டு நாய்கள்*
மட்டுமே வாழ்கின்றன" என்றார்.
4 ஏதோமின் ஜனங்கள், "நாங்கள் அழிக்கப்
பட்டோம். ஆனால் நாங்கள் திரும்பிப்போய்
மீண்டும் எங்கள் நகரங்களைக் கட்டுவோம்"
என்று சொல்லலாம்.
ஆனால் சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
கூறுகிறார்: "அவர்கள் மீண்டும் அந்நகரங்க
ளைக் கட்டினால் பிறகு நான் மீண்டும்
அவைகளை அழிப்பேன்!" எனவே ஜனங்
கள் ஏதோமை ஒரு கேட்டின் நாடு என்கின்
றனர். கர்த்தர் என்றென்றும் வெறுக்கும்
ஒரு தேசம்.
5 ஜனங்களாகிய நீங்கள் இவற்றைப்
பார்த்து. நீங்கள் "கர்த்தர் பெரியவர், இஸ்ர
வேலுக்கு வெளியிலும் பெரியவர்" என்றீர்
கள்.

### ஜனங்கள் தேவனை மதிப்பதில்லை

6 சர்வ வல்லமையுள்ள கர்த்தர், "பிள்ளை
கள் தமது பெற்றோரை மதிப்பார்கள்.
வேலைக்காரர்கள் தம் எஜமானரை மதிப்
பார்கள். நான் உனது தந்தை. நீ ஏன்
என்னை மதிப்பதில்லை? நான் உனது
ஆண்டவர். நீ ஏன் எனக்கு மரியாதை
தருவதில்லை. ஆசாரியர்களாகிய நீங்கள்
என் பெயரை மதிப்பதில்லை" என்றார்.

ஆனால் நீங்கள், "நாங்கள் உமது பெயரு
க்கு மரியாதை தரவில்லை என்று எச்செயல்
மூலம் கூறுகின்றீர்?" எனக்கேட்கிறீர்கள்.
7 கர்த்தர், "நீங்கள் எனது பலிபீடத்திற்கு
சுத்தமற்ற அப்பத்தைக் கொண்டு வரு
கிறீர்கள்" என்றார்.
ஆனால் நீங்கள், "அந்த அப்பத்தைச்
சுத்தமற்றதாகச் செய்கிறது எது?" என்று
கேட்கீறீர்கள்.
கர்த்தர், "நீங்கள் எனது மேஜைக்கு
(பலிபீடம்) மரியாதை காட்டுவதில்லை.
8 நீங்கள் குருட்டு விலங்குகளைப் பலியாக
கொண்டு வருகிறீர்கள். அது தவறு. நீங்கள்
நோயுற்றதும் நொண்டியானதுமான விலங்கு
களைக் பலியாக கொண்டு வருகிறீர்கள்.
அது தவறு. அந்நோயுற்ற விலங்குகளை
உங்கள் ஆளுநருக்கு அன்பளிப்பாகக்
கொடுக்க முயலுங்கள். அவன் நோயுற்ற
விலங்குகளை அன்பளிப்பாக ஏற்றுக்கொள்
வானா? இல்லை. அவன் அந்த அன்பளிப்பு
களை ஏற்றுக்கொள்ளமாட்டான்" என்றார்.
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைச்
சொன்னார்.
9 "ஆசாரியர்களே, நீங்கள் எங்களிடம்
நல்லவராக இருக்கும்படி கர்த்தரிடம் கேளுங்
கள். ஆனால் அவர் நீங்கள் சொல்வதைக்
கேட்கமாட்டார். இது எல்லாம் உங்களுடைய
தவறு." சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைக் கூறினார்.
10 "உறுதியாக, ஆசாரியர்களுள் சிலர்
ஆலய கதவுகளை அடைத்து சரியாக
நெருப்பைக் கொளுத்தமுடியும். நான்
உங்களிடம் மகிழ்ச்சியாக இருக்க மாட்டேன்.
நான் உங்கள் அன்பளிப்புகளை ஏற்றுக்
கொள்ளமாட்டேன்." சர்வ வல்லமையுள்ள
கர்த்தர் இவற்றைக் கூறினார்.
11 "உலகைச் சுற்றிலும் உள்ள ஜனங்கள்
எனது நாமத்தை மதிக்கிறார்கள். உலகைச்
சுற்றிலும் உள்ள ஜனங்கள் எனக்கு நல்ல
அன்பளிப்புகளைக் கொண்டு வருவார்கள்.
அவர்கள் எனக்கு நறுமணப் பொருட்களை*
அன்பளிப்பாக எரிக்கிறார்கள். ஏனென்றால்
எனது நாமம் அந்த ஜனங்கள் அனை

---

**ஏற்றுக்கொள்ளவில்லை** அல்லது "வெறுத்தேன்."

**ஏசாவின் மலை நாடு** ஏதோம் நாடு.

**காட்டு நாய்கள்** எழுத்தின் பிரகாரமாக, "ஓநாய்கள்" எனப் பொருள்படும்.

**நறுமணப் பொருட்கள்** சிறப்புக்குரிய காயவைக்கப்பட்ட மரத்துண்டுகள். இதனை எரித்து இனிய மணமிகுந்த புகையை எழுப்புவார்கள். இதனை தேவனுக்கு அன்பளிப்பாக செலுத்தினார்கள்.

வருக்கும் மிக முக்கியமானது” சர்வ வல்ல
மையுள்ள கர்த்தர் இவற்றைச் சொன்னார்.
12“ஆனால் நீங்கள் என் நாமத்தை மதிப்
பதில்லை. கர்த்தருடைய மேசை (பலிபீடம்)
சுத்தமற்றதாக உள்ளது என்று நீங்கள்
சொல்கிறீர்கள். 13நீங்கள் அந்த மேசையில்
உள்ள உணவை விரும்புவதில்லை. நீங்கள்
அந்த உணவை நுகர்ந்து பார்த்து அதனை
உண்ண மறுப்பீர்கள். அது கெட்டது
என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால் அது
உண்மை இல்லை. பிறகு நீங்கள் நோயுள்ள
தும், நொண்டியானதும், களவாடப்பட்டது
மான மிருகங்களை என்னிடம் கொண்டு
வருகிறீர்கள். நீங்கள் எனக்கு நோயுற்ற
விலங்குகளைப் பலியாகக் கொடுக்க முயல்
கிறீர்கள். நான் உங்களிடமிருந்து அந்நோ
யுற்ற விலங்குகளை ஏற்றுக்கொள்ளமாட்
டேன். 14சில ஜனங்கள் நல்ல ஆண்
மிருகங்களை வைத்திருப்பார்கள். அவர்
களால் அவற்றை பலியாக கொடுக்கமுடியும்.
ஆனால் அவர்கள் அந்நல்ல மிருகங்களை
எனக்குப் பலியாக கொடுக்கமாட்டார்கள்.
சிலர் எனக்கு நல்ல மிருகங்களைக் கொண்டு
வருவார்கள். அவர்கள் அந்த ஆரோக்
கியமான மிருகங்குகளை எனக்குத் தரு
வதாக வாக்குறுதியளிப்பார்கள். ஆனால்
அவர்கள் ரகசியமாக அந்நல்ல மிருகங்கு
களை மாற்றி விட்டு எனக்கு நோயுற்ற
மிருகங்குகளைத் தருவார்கள். அந்த ஜனங்
களுக்குத் தீமைகள் ஏற்படும். நானே
பேரரசன். நீங்கள் என்னை மதிக்க வேண்
டும். உலகம் முழுவதுமுள்ள ஜனங்கள்
என்னை மதிக்கின்றனர்!” சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் இவற்றைக் கூறினார்.

### ஆசாரியர்களுக்கான விதிகள்

2 “ஆசாரியர்களே, இந்த விதி உங்க
ளுக்குரியது. என்னைக் கவனியுங்கள்!
நான் சொல்கின்றவற்றில் கவனம் செலுத்
துங்கள்! எனது பேரைக் கனம் பண்
ணுங்கள். 2நீங்கள் என் நாமத்தை
மதிக்காவிட்டால் பிறகு உங்களுக்குத் தீமை
ஏற்படும். நீங்கள் ஆசீர்வாதம் சொல்வீர்கள்.
ஆனால் அவை சாபங்களாகும். நான்
உங்களுக்குத் தீமை ஏற்படும்படிச் செய்வேன்.
ஏனென்றால் நீங்கள் என் நாமத்திற்கு மரி
யாதை செய்யவில்லை!” சர்வ வல்லமை
யுள்ள கர்த்தர் இவற்றைச் சொன்னார்.
3“பாருங்கள். நான் உங்கள் சந்ததிகளைத்
தண்டிப்பேன். விடுமுறையில் உங்கள் ஆசா
ரியர்கள் எனக்குப் பலி கொடுக்கிறார்கள்.
நீங்கள் மரித்த மிருகங்குகளின் சாணத்தையும்
மற்ற பகுதிகளையும் எடுத்து வெளியே
எறிகிறீர்கள். நான் அந்தச் சாணத்தை
உங்கள் முகத்தில் இறைப்பேன். நீங்கள்
அதனோடு வெளியே எறியப்படுவீர்கள்.
4பின்னர் நான் ஏன் இந்தக் கட்டளையைக்
கொடுத்தேன் என்பதைக் கற்றுக்கொள்வாய்.
நான் இவற்றை உனக்குச் சொல்லிக்
கொண்டிருக்கிறேன். லேவியோடு நான்
கொண்ட எனது உடன்படிக்கைத் தொட
ரும்” சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைச் சொன்னார்.
5கர்த்தர், “நான் அந்த உடன்படிக்கையை
லேவியோடு செய்தேன். நான் அவனுக்கு
வாழ்வையும், சமாதானத்தையும் கொடுப்ப
தாக வாக்குறுதியளித்தேன். நான் அவனுக்கு
அவற்றைக் கொடுத்தேன். லேவி என்னை
மதித்தான். அவன் எனது நாமத்திற்கு
மரியாதைச் செலுத்தினான். 6லேவி சத்திய
வேதத்தைப் போதித்தான். அவன் பொய்
யானவற்றை போதிக்கவில்லை. லேவி
நேர்மையானவன். அவன் சமாதானத்தை
நேசித்தான். லேவி என்னைப் பின் தொடர்ந்
தான். அநேகர் தங்கள் பாவ வழிகளை
விட்டு விலகச் செய்தான். அவர்களைக்
காப்பாற்றினான். 7ஒரு ஆசாரியன் தேவனு
டைய போதனைகளை கற்றிருக்க வேண்டும்.
ஜனங்கள் ஆசாரியனிடம் சென்று தேவனு
டைய போதனைகளை கற்றுக்கொள்ள
வேண்டும். ஒரு ஆசாரியன் தேவனுடைய
தூதுவனாக ஜனங்களுக்கு இருக்க
வேண்டும்” என்றார்.
8கர்த்தர், “ஆசாரியர்களாகிய நீங்கள்
என்னைப் பின்பற்றுவதை நிறுத்தினீர்கள்.
நீங்கள் பலர் தவறு செய்வதற்காக போதனை
களைப் பயன்படுத்தினீர்கள். நீங்கள் லேவி
யோடு செய்த உடன்படிக்கையை அழித்தீர்
கள்” என்றார். சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைச் சொன்னார். 9“நீங்கள் நான்
சொன்ன வழியில் வாழவில்லை. நீங்கள்
என் போதனைகளை ஜனங்களுக்குப் போதி
க்கையில் பட்சபாதம் காண்பித்தீர்கள்.
எனவே நான் உங்களை முக்கியமற்றவர்
களாகச் செய்வேன். ஜனங்கள் உங்களுக்கு
மரியாதை செலுத்தமாட்டார்கள்.”

### யூதா தேவனுக்கு உண்மையாக இல்லை

10நாங்கள் அனைவரும் ஒரே தந்தையை
(தேவன்) உடையவர்கள். அதே தேவன்
எங்கள் ஒவ்வொருவரையும் படைத்தார்.
எனவே ஜனங்கள் தமது சகோதரர்களை
எதற்கு ஏமாற்ற வேண்டும்? அந்த ஜனங்கள்
தம் உடன்படிக்கையை மதிக்கவில்லை
என்பதை காட்டுகிறார்கள். அவர்கள் நமது
முற்பிதாக்கள் தேவனோடு செய்த உடன்
படிக்கையை மதிக்கவில்லை. 11யூதாவின்
ஜனங்கள் மற்ற ஜனங்களை ஏமாற்றி
னார்கள். எருசலேமிலும் இஸ்ரவேலிலும்
உள்ள ஜனங்கள் பயங்கரமான காரியங்
களைச் செய்தனர். யூதாவிலுள்ள ஜனங்கள்
கர்த்தருடைய பரிசுத்தமான ஆலயத்தை
மதிக்கவில்லை. தேவன் அந்த இடத்தை
நேசிக்கிறார். யூதாவின் ஜனங்கள் அயல்
நாட்டு தேவதைகளை தொழுதிடத் தொடங்

*கினார்கள்.* 12*கர்த்தர் யூதாவின் குடும்பத்தி*
*லிருந்து அந்த ஜனங்களை நீக்குவார்.*
*அந்த ஜனங்கள் கர்த்தருக்கு அன்பளிப்பு*
*களைக் கொண்டுவரலாம். ஆனால் அது*
*உதவாது.* 13*நீங்கள் அழுமுடியும். கர்த்தரு*
*டைய பலிபீடத்தை கண்ணீரால் மூட*
*முடியும். ஆனால் கர்த்தர் உங்கள் அன்பளிப்*
*புகளை ஏற்றுக்கொள்ளமாட்டார். கர்த்தர்*
*நீங்கள் கொண்டு வருகிற பொருட்களால்*
*திருப்தி அடையமாட்டார்.*
14*நீங்கள் "கர்த்தரால் எங்கள் காணிக்கை*
*கள் ஏன் ஏற்றுக்கொள்ளப்படவில்லை?"*
*என்று கேட்கிறீர்கள். ஏனென்றால் நீங்கள்*
*செய்த தீமைகளைக் கர்த்தர் பார்த்தார்.*
*அவர் உங்களுக்கு எதிரான சாட்சி. நீங்கள்*
*உங்கள் மனைவியரை ஏமாற்றியதை அவர்*
*பார்த்தார். நீ இளமையாய் இருக்கும்போதே*
*அப்பெண்ணை மணந்துகொண்டிருக்கிறாய்.*
*அவள் உனது பெண் சிநேகிதியாய் இருந்*
*தாள். பிறகு நீங்கள் ஒருவருக்கொருவர்*
*ஒப்பந்தம் செய்துக்கொண்டீர்கள். அவள்*
*உனது மனைவியானாள். ஆனால் நீ அவ*
*ளை ஏமாற்றினாய்.* 15*தேவன் கணவர்களும்*
*மனைவிகளும் ஒரே உடலாகவும் ஒரே*
*ஆவியாகவும் இருக்கவேண்டுமென விரும்பி*
*னார். ஏன்? அதனால் தான் அவர்கள்*
*பரிசுத்தமான குழந்தைகளைப் பெறமுடியும்.*
*எனவே அந்த ஆவிக்குரிய கூடிவருதலை*
*பாதுகாத்துக்கொள். உன் மனைவியை நீ*
*ஏமாற்றாதே. அவள் உனது இளமைகாலம்*
*முதற்கொண்டே உன் மனைவியாக இருக்கி*
*றாள்.*
16*இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர்,*
*"நான் விவாகரத்தை வெறுக்கிறேன். நான்*
*ஆண்கள் செய்யும் கொடூரங்களை வெறுக்கி*
*றேன். எனவே உன் ஆவிக்குரிய கூடிவரு*
*தலை காப்பாற்று. உன் மனைவியை ஏமாற்*
*றாதே" என்று கூறுகிறார்.*

### *நியாயத்தீர்ப்புக்கான சிறப்பான காலம்*

17*நீ தவறானவற்றைக் கற்றுத் தந்திருக்கி*
*றாய். அத்தவறான போதனைகள் கர்த்தரை*
*மிகவும் துக்கமடையச் செய்தன. தீயவற்றைச்*
*செய்யும் ஜனங்களை தேவன் விரும்புகிறார்*
*என்று சொன்னீர்கள். அந்த ஜனங்கள்*
*நல்லவர்கள் என்று தேவன் நினைப்பதாய்*
*சொன்னீர்கள். தீயவற்றைச் செய்யும் ஜனங்*
*களை தேவன் தண்டிக்கமாட்டார் என்று*
*சொன்னீர்கள்.*

3 *சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:*
*"நான் என் தூதனை அனுப்பிக்கொண்டி*
*ருக்கிறேன். அவர் எனக்காகப் பாதையைத்*
*ஆயத்தம் செய்வார். திடீரென்று அவர்*
*தமது ஆலயத்துக்கு வருவார். அவரே*
*நீங்கள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற*
*ஆண்டவர். அவரே நீங்கள் விரும்பும்*
*புதிய உடன்படிக்கைக்கான தூதர். உண்மை*
*யில் அவர் வந்துகொண்டிருக்கிறார்" சர்வ*
*வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைக் கூறினார்.*
2*"எவனொருவனும் அந்த நேரத்திற்காக*
*தயார் செய்யமுடியாது. அவர் வரும்போது*
*எவரொருவரும் அவருக்கு எதிரே நிற்க*
*முடியாது. அவர் எரியும் நெருப்பைப்*
*போன்றவர். அவர் ஜனங்கள் பொருட்க*
*ளைச் சுத்தப்படுத்திட பயன்படுத்தும் சவக்*
*காரம் போன்றவர்.* 3*அவர் லேவியர்களைச்*
*சுத்தமாக்குவார். அவர் நெருப்பினால் வெள்*
*ளியைச் சுத்தமாக்குவதுபோன்று அவர்*
*களைச் சுத்தமாக்குவார். அவர் அவர்களை*
*சுத்தமான பொன்னையும், வெள்ளியையும்*
*போன்று செய்வார். பிறகு அவர்கள் கர்த்த*
*ருக்கு அன்பளிப்புகளைக் கொண்டு வருவார்*
*கள். அவர்கள் எல்லாவற்றையும் சரியான*
*வழியில் செய்வார்கள்.* 4*பிறகு கர்த்தர்*
*யூதாவிலும் எருசலேமிலும் இருந்து வருகிற*
*அன்பளிப்புகளை ஏற்றுக்கொள்வர். இது*
*கடந்த காலத்தில் உள்ளதுபோல் இருக்கும்.*
*இது வெகு காலத்திற்கு முன்னால் உள்*
*ளதைப் போன்றிருக்கும்.* 5*பிறகு நான்*
*உங்களிடம் வருவேன். நான் சரியானவற்*
*றைச் செய்வேன். நான் ஜனங்கள் செய்த*
*தீமைகளை குறித்து சொல்லுகிறவர்போன்று*
*இருப்பேன். சிலர் தீய மந்திரங்களைச்*
*செய்கிறார்கள். சிலர் விபச்சாரப் பாவத்தைச்*
*செய்கிறார்கள். சிலர் பொய்யான வாக்குறு*
*திகளைச் செய்கின்றனர். சிலர் தமது*
*வேலைக்காரர்களை ஏமாற்றுகின்றனர்.*
*அவர்கள் தாம் வாக்குறுதியளித்தது*
*போன்று பணம் கொடுப்பதில்லை. ஜனங்கள்*
*விதவைகளுக்கும், அநாதைகளுக்கும் உதவுவ*
*தில்லை. ஜனங்கள் பரதேசிகளுக்கு உதவுவ*
*தில்லை. ஜனங்கள் என்னை மதிப்ப*
*தில்லை!" சர்வ வல்லமையுள்ள கர்த்தர்*
*இவற்றைக் கூறினார்.*

### தேவனிடமிருந்து திருடுவது

6*"நானே கர்த்தர். நான் மாறமாட்டேன்.*
*நீங்கள் யாக்கோபுவின் குழந்தைகள். நீங்கள்*
*முழுமையாக அழிக்கப்படவில்லை.* 7*"ஆ*
*னால் நீங்கள் எனது சட்டங்களுக்கு அடி*
*பணியவில்லை. உங்கள் முற்பிதாக்களும்*
*கூட என்னைப் பின்பற்றுவதை விட்டு*
*விட்டார்கள். என்னிடம் திரும்பி வாருங்கள்.*
*நானும் உங்களிடம் திரும்பி வருவேன்."*
*சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்றை*
*சொன்னார்.*
*நீங்கள், "நாங்கள் எவ்வாறு திரும்பி*
*வருவது?" என்று கேட்கிறீர்கள்.*
8*தேவனிடமிருந்து திருடுவதை நிறுத்துங்*
*கள். ஜனங்கள் தேவனிடமிருந்து திருடக்*
*கூடாது. ஆனால் நீங்கள் என்னிடமிருந்து*
*திருடினீர்கள்!"*
*நீங்கள், "நாங்கள் உம்மிடமிருந்து எதைத்*
*திருடினோம்?" என்று கேட்கிறீர்கள்.*

"நீங்கள் உங்களது பொருட்களில் பத்தில்
ஒரு பங்கை எனக்குக் கொடுத்திருக்க வேண்
டும். நீங்கள் எனக்குச் சிறப்பான காணிக்கை
களையையும் கொடுத்திருக்க வேண்டும்.
ஆனால் நீங்கள் அவற்றை எனக்குக் கொடுக்
கவில்லை. 9 இந்த வழியில் உங்கள் நாடு
முழுவதும் என்னிடமிருந்து திருடினீர்கள்.
எனவே உங்களுக்குத் தீயவை ஏற்படுகிறது."
சர்வ வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைச்
சொன்னார்.

10 சர்வ வல்லமையுள்ள கர்த்தர் கூறுகிறார்:
"இந்தச் சோதனையை முயற்சிச் செய்து
பார். உன்னிடமுள்ளவற்றில் பத்தில் ஒரு
பங்கை என்னிடம் கொண்டு வா. அவற்
றைக் கருவூலத்தில் போடு. என் வீட்டிற்கு
உணவு கொண்டு வா. என்னைச் சோதனை
செய். நீ அவற்றைச் செய்தால் பின்னர்
நான் உண்மையாக உன்னை ஆசீர்வதிப்
பேன். வானத்திலிருந்து மழை பெய்வது
போன்று நல்லவை உன்னிடம் வரும்.
உனக்கு தேவைக்கு அதிகமாகவே பொருள்
வரும். 11 நான் உங்கள் விளைச்சலை அழிக்
கும் பூச்சிகளை அனுமதிக்கமாட்டேன். உங்
கள் திராட்சைக்கொடிகள் எல்லாம் திராட்
சைகளை விளையச்செய்யும்." சர்வ வல்ல
மையுள்ள கர்த்தர் இவற்றைக் கூறினார்.

12 "பிற நாடுகளிலுள்ள ஜனங்கள் உங்க
ளுக்கு நல்லவர்களாக இருப்பார்கள். நீங்கள்
உண்மையில் ஓர் அற்புதமான நாட்டைப்
பெறுவீர்கள்" சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைக் கூறினார்.

### நியாயத்தீர்ப்புக்கான சிறப்பு நேரம்

13 கர்த்தர் "நீங்கள் என்னிடம் அற்பமான
வற்றைப் பேசினீர்கள்" என்றார்.

ஆனால் நீங்கள், "நாங்கள் உம்மைப்பற்றி
என்ன பேசினோம்?" என்று கேட்டீர்கள்.

14 நீங்கள், "கர்த்தரை தொழுதுகொள்வது
பயனற்றது. கர்த்தர் எங்களிடம் சொன்ன
வற்றை நாங்கள் செய்தோம். ஆனால் நாங்
கள் எந்த நன்மையும் பெறவில்லை. நாங்கள்
எங்கள் பாவங்களுக்காக மரித்துப்போன
வார்கள் வீட்டில் ஜனங்கள் அழுவதுபோல்
கதறினோம். ஆனால் அது எங்களுக்கு
உதவவில்லை என்று கூறினாய். 15 நாங்கள்
தற்பெருமையுடையவர்கள் மகிழ்ச் சியாக
இருக்கிறார்கள் என்று நாங்கள் நினைக்
கிறோம். தீயவர்கள் வெற்றி பெறுகிறார்கள்.
தேவனுடைய பொறுமையைச் சோதிக்க
அவர்கள் தீயவற்றைச் செய்கிறார்கள்.
தேவன் அவர்களைத் தண்டிக்கிறதில்லை."

16 தேவனை பின்பற்றுகிறவர்கள் ஒருவருக்
கொருவர் பேசினார்கள். கர்த்தர் அவர்கள்
பேசுவதைக் கேட்டார். அவருக்கு முன்பாக
ஒரு புத்தகம் இருக்கிறது. அப்புத்தகத்தில்
தேவனை பின்பற்றுகிறவர்களின் பெயர்கள்
உள்ளன. அவர்கள் கர்த்தருடைய நாமத்தை
மதிக்கின்றவர்கள்.

17 கர்த்தர், "அந்த ஜனங்கள் எனக்குரி
யவர்கள். நான் அவர்களிடம் கருணையோடு
இருப்பேன். ஒருவன் தனக்குக் கீழ்ப்படிகிற
குழந்தைகளிடம் கருணையோடு இருப்பான்.
அதே முறையில் நான், என்னைப் பின்பற்
றுகிறவர்களுடன் கருணையோடு இருப்
பேன். 18 நீங்கள் என்னிடம் திரும்ப வாருங்
கள். நீங்கள் நல்லதுக்கும் தீயவற்றிற்கும்
உள்ள வேறுபாட்டைக் கற்றுக்கொள்வீர்கள்.
நீங்கள் தேவனை பின்பற்றுகிறவனுக்கும்,
தேவனைப் பின்பற்றாதவனுக்கும் உள்ள
வேறுபாட்டை அறிந்துகொள்வீர்கள்.

4 "நியாயத்தீர்ப்புக்கான காலம் வந்து
கொண்டிருக்கிறது. இது ஒரு வெப்
பமான சூளை போன்றது. தற்பெருமையு
டைய ஜனங்கள் எல்லாம் தண்டிக்கப்படு
வார்கள். தீயவர்கள் எல்லோரும் வைக்கோ
லைப்போல் எரிக்கப்படுவார்கள். அந்தக்கா
லத்தில், அவர்கள் நெருப்பில் எரிகிற
பதரைப் போன்றிருப்பார்கள். அதிலுள்ள
கிளையோ வேரோ விடுபடாமல்போகும்"
என்றார். சர்வ வல்லமையுள்ள கர்த்தர்
இவற்றைக் கூறினார்.

2 "ஆனால், என்னைப் பின்பற்றுகிறவர்
களே, உங்களுக்கு நன்மையானது உதய
சூரியனைப்போன்று ஒளி வீசும். இது
சூரியக்கதிர்களைப் போன்று குணப்படுத்தும்
ஆற்றலைக் கொண்டுவரும். நீங்கள் தொழு
வத்திலிருந்து* விடுபட்ட கன்று குட்டி
களைப்போன்று சுதந்திரமும், மகிழ்ச்சியும்
அடைவீர்கள். 3 பின்னர் அத்தீய ஜனங்கள்
மேல் நடந்து செல்வீர்கள். அவர்கள் உங்கள்
காலடியில் சாம்பலைப்போன்று கிடப்பார்
கள். நியாயத்தீர்ப்புக்கான காலத்தில் நான்
அவற்றை நிகழும்படிச் செய்வேன்." சர்வ
வல்லமையுள்ள கர்த்தர் இவற்றைக் கூறினார்!

4 "மோசேயின் சட்டங்களை நினைவு
கொண்டு கீழ்படியுங்கள். மோசே எனது
ஊழியக்காரனாக இருந்தான். நான் அவனுக்கு
ஓரேப் மலையிலே (சீனாய்) அந்த சட்டங்
களை கொடுத்தேன். அந்தச் சட்டங்கள்
இஸ்ரவேலின் அனைத்து ஜனங்களுக்கும்
உரியது."

5 கர்த்தர், "பாருங்கள், நான் எலியா
தீர்க்கதரிசியை உங்களிடம் அனுப்புவேன்.
அவன் கர்த்தருடைய நியாயத்தீர்ப்புக்குரிய
பயங்கரமான நாளுக்கு முன்னால் வருவான்.
6 எலியா, தமது பிள்ளைகளுடன் நெருக்க
மாயிருக்கிற பெற்றோருக்கும் தமது பெற்றோ
ருடன் நெருக்கமாயிருக்கிற பிள்ளைகளுக்
கும் உதவுவான். இது நிகழவேண்டும்,
அல்லது நான் (தேவன்) வந்து உங்கள்
நாடு முழுவதையும் அழிப்பேன்!"

---

**தொழுவம்** சிறு அறைகள் அல்லது ஜனங்கள் தம் விலங்குகளை கட்டுவதற்குரிய வேலியிடப் பட்ட சிறு இடம்.

# License Agreement for Bible Texts

***World Bible Translation Center***
***Last Updated: September 21, 2006***



**These Scriptures:**

- Are copyrighted by World Bible Translation Center.
- Are not public domain.
- May not be altered or modified in any form.
- May not be sold or offered for sale in any form.
- May not be used for commercial purposes (including, but not limited to, use in advertising or Web banners used for the purpose of selling online add space).
- May be distributed without modification in electronic form for non-commercial use. However, they may not be hosted on any kind of server (including a Web or ftp server) without written permission. A copy of this license (without modification) must also be included.
- May be quoted for any purpose, up to 1,000 verses, without written permission. However, the extent of quotation must not comprise a complete book nor should it amount to more than 50% of the work in which it is quoted. A copyright notice must appear on the title or copyright page using this pattern: "Taken from the HOLY BIBLE: EASY-TO-READ VERSION™ © 2006 by World Bible Translation Center, Inc. and used by permission." If the text quoted is from one of WBTC's non-English versions, the printed title of the actual text quoted will be substituted for "HOLY BIBLE: EASY-TO-READ VERSION™." The copyright notice must appear in English or be translated into another language. When quotations from WBTC's text are used in non-saleable media, such as church bulletins, orders of service, posters, transparencies or similar media, a complete copyright notice is not required, but the initials of the version (such as "ERV" for the Easy-to-Read Version™ in English) must appear at the end of each quotation.

Any use of these Scriptures other than those listed above is prohibited. For additional rights and permission for usage, such as the use of WBTC's text on a Web site, or for clarification of any of the above, please contact World Bible Translation Center in writing or by email at distribution@wbtc.com.

World Bible Translation Center
P.O. Box 820648
Fort Worth, Texas 76182, USA
Telephone: 1-817-595-1664
Toll-Free in US: 1-888-54-BIBLE
E-mail: info@wbtc.com

**WBTC's web site –** World Bible Translation Center's web site: http://www.wbtc.org

**Order online –** To order a copy of our texts online, go to: http://www.wbtc.org

**Current license agreement –** *This license is subject to change without notice. The current license can be found at:* http://www.wbtc.org/downloads/biblelicense.htm

**Trouble viewing this file –** If the text in this document does not display correctly, use Adobe Acrobat Reader 5.0 or higher. Download Adobe Acrobat Reader from: http://www.adobe.com/products/acrobat/readstep2.html

**Viewing Chinese or Korean PDFs –** To view the Chinese or Korean PDFs, it may be necessary to download the Chinese Simplified or Korean font pack from Adobe. Download the font packs from: http://www.adobe.com/products/acrobat/acrrasianfontpack.html